# சத்தியவேதம்

இதிலே

## பழைய ஏற்பாடும் புதிய ஏற்பாடும்

அடங்கியிருக்கின்றன



இது

இங்கிலாந்து முதலிய சர்வதேச சத்தியவேத சங்கத்தாருடைய

அநுமதியின்படி

மூலபாஷைகளிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட

முந்தின மொழிபெயர்ப்புகளைக்கொண்டு பரிசோதிக்கப்பட்டது

சென்னபட்டணத்து சத்தியவேத சங்கத்தாரால்

௧௯௧௪ - ௵

அச்சிற் பதிப்பிக்கப்பட்டது

THE

# HOLY BIBLE

CONTAINING THE

## OLD AND NEW TESTAMENTS

TRANSLATED OUT OF

**THE ORIGINAL TONGUES INTO TAMIL**

AND

*WITH FORMER TRANSLATIONS DILIGENTLY COMPARED AND REVISED*

UNDER THE AUSPICES OF

The British and Foreign Bible Society




BRITISH AND FOREIGN BIBLE SOCIETY
MADRAS AUXILIARY

1914

*Super Royal 8vo.* *Small Pica, References*

THE

# OLD TESTAMENT

TRANSLATED INTO TAMIL FROM THE ORIGINAL HEBREW

AND WITH FORMER TRANSLATIONS DILIGENTLY

COMPARED AND REVISED

---

மனுஷர்கள் இரட்சிக்கப்படுவதற்காக

சர்வலோக தயாபரரான கர்த்தர் அருளிச்செய்த சத்தியவேதமென்கிற

# பழைய ஏற்பாடு

இது

மூலபாஷையாகிய எபிரேயு பாஷையிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு,

மற்ற மொழிபெயர்ப்புகளோடே ஒத்திட்டுப் பரிசோதிக்கப்பட்டு,

சென்னபட்டணத்து

சத்தியவேத சங்கத்தாரால்

௧௯௧௪ - ௵

அச்சிற் பதிப்பிக்கப்பட்டது



BRITISH AND FOREIGN BIBLE SOCIETY

MADRAS AUXILIARY

---

1914

# பழைய ஏற்பாட்டிலும் புதிய ஏற்பாட்டிலும் அடங்கிய ஆகமங்களின் பெயர், முறை, அதிகாரங்களின் தொகை

## THE BOOKS OF THE OLD TESTAMENT

## பழைய ஏற்பாட்டின் ஆகமங்கள்

| ஆகமம் | அதிகாரம் |
|---|---|
| ஆதியாகமம் | 50 |
| யாத்திராகமம் | 40 |
| லேவியராகமம் | 27 |
| எண்ணாகமம் | 36 |
| உபாகமம் | 34 |
| யோசுவா | 24 |
| நியாயாதிபதிகள் | 21 |
| ரூத் | 4 |
| I. சாமுவேல் | 31 |
| II. சாமுவேல் | 24 |
| I. இராஜாக்கள் | 22 |
| II. இராஜாக்கள் | 25 |
| I. நாளாகமம் | 29 |
| II. நாளாகமம் | 36 |
| எஸ்றா | 10 |
| நெகேமியா | 13 |
| எஸ்தர் | 10 |
| யோபு | 42 |
| சங்கீதம் | 150 |
| நீதிமொழிகள் | 31 |
| பிரசங்கி | 12 |
| உன்னதப்பாட்டு | 8 |
| ஏசாயா | 66 |
| எரேமியா | 52 |
| புலம்பல் | 5 |
| எசேக்கியேல் | 48 |
| தானியேல் | 12 |
| ஓசியா | 14 |
| யோவேல் | 3 |
| ஆமோஸ் | 9 |
| ஒபதியா | 1 |
| யோனா | 4 |
| மீகா | 7 |
| நாகூம் | 3 |
| ஆபகூக் | 3 |
| செப்பனியா | 3 |
| ஆகாய் | 2 |
| சகரியா | 14 |
| மல்கியா | 4 |

## THE BOOKS OF THE NEW TESTAMENT

## புதிய ஏற்பாட்டின் ஆகமங்கள்

| ஆகமம் | அதிகாரம் |
|---|---|
| மத்தேயு | 28 |
| மாற்கு | 16 |
| லூக்கா | 24 |
| யோவான் | 21 |
| அப்போஸ்தலருடைய நடபடிகள் | 28 |
| ரோமர் | 16 |
| I. கொரிந்தியர் | 16 |
| II. கொரிந்தியர் | 13 |
| கலாத்தியர் | 6 |
| எபேசியர் | 6 |
| பிலிப்பியர் | 4 |
| கொலோசெயர் | 4 |
| I. தெசலோனிக்கேயர் | 5 |
| II. தெசலோனிக்கேயர் | 3 |
| I. தீமோத்தேயு | 6 |
| II. தீமோத்தேயு | 4 |
| தீத்து | 3 |
| பிலேமோன் | 1 |
| எபிரெயர் | 13 |
| யாக்கோபு | 5 |
| I. பேதுரு | 5 |
| II. பேதுரு | 3 |
| I. யோவான் | 5 |
| II. யோவான் | 1 |
| III. யோவான் | 1 |
| யூதா | 1 |
| வெளிப்படுத்தின விசேஷம் | 22 |

# THE BOOK OF GENESIS

# ஆதியாகமம்

1 ஆதியிலே *தேவன் [1]வானத்தையும் பூமி
2 யையும் சிருஷ்டித்தார். பூமியானது ஒழுங்
கின்மையும் [2]வெறுமையுமாய் இருந்தது; ஆழத்
தின்மேல் இருள் இருந்தது; [3]தேவ ஆவியா
னவர் ஜலத்தின்மேல் அசைவாடிக்கொண்
3 டிருந்தார். தேவன் [4]வெளிச்சம் உண்டாகக்
கடவது என்றார், வெளிச்சம் உண்டாயிற்று.
4 வெளிச்சம் நல்லது என்று தேவன் கண்டார்;
வெளிச்சத்தையும் இருளையும் தேவன் வெவ்
5 வேறாகப் பிரித்தார். தேவன் [5]வெளிச்சத்
துக்குப் பகல் என்று பேரிட்டார், இருளுக்கு
இரவு என்று பேரிட்டார்; சாயங்காலமும்
விடியற்காலமுமாகி முதலாம் நாள் ஆயிற்று.
6 பின்பு தேவன்: [6]ஜலத்தின் மத்தியில் ஆகாய
விரிவு உண்டாகக்கடவது என்றும், அது
ஜலத்தினின்று ஜலத்தைப் பிரிக்கக்கடவது
7 என்றும் சொன்னார். தேவன் ஆகாயவிரிவை
உண்டுபண்ணி, ஆகாயவிரிவுக்குக் கீழே
இருக்கிற ஜலத்திற்கும் ஆகாயவிரிவுக்கு
மேலே இருக்கிற ஜலத்திற்கும் [7]பிரிவுண்டாக்
8 கினார்; அது அப்படியே ஆயிற்று. தேவன்
ஆகாயவிரிவுக்கு வானம் என்று பேரிட்டார்;
சாயங்காலமும் விடியற்காலமுமாகி இரண்
டாம் நாள் ஆயிற்று.
9 பின்பு தேவன்: [8]வானத்தின் கீழே இருக்
கிற ஜலம் ஓரிடத்தில் சேரவும், வெட்டாந்
தரை காணப்படவும் கடவது என்றார்; அது
10 அப்படியே ஆயிற்று. தேவன் வெட்டாந்
தரைக்குப் பூமி என்றும், சேர்ந்த ஜலத்திற்குச்
சமுத்திரம் என்றும் பேரிட்டார்; தேவன் அது
11 நல்லது என்று கண்டார். அப்பொழுது
தேவன்: பூமியானது [9]புல்லையும், விதையைப்
பிறப்பிக்கும் பூண்டுகளையும், பூமியின்மேல்
தங்களில் தங்கள் விதையையுடைய கனிக
ளைத் தங்கள் தங்கள் ஜாதியின்படியே கொடுக்
கும் கனிவிருட்சங்களையும் முளைப்பிக்கக்கட
வது என்றார்; அது அப்படியே ஆயிற்று.
12 பூமியானது புல்லையும், தங்கள் தங்கள் ஜாதி
யின்படியே விதையைப் பிறப்பிக்கும் பூண்டு
களையும், தங்கள் தங்கள் ஜாதியின்படியே
தங்களில் தங்கள் விதையையுடைய கனிகளைக்
கொடுக்கும் விருட்சங்களையும் முளைப்பித்தது;
தேவன் அது நல்லது என்று கண்டார்.

* எலோகிம்.
1 யோ. 1. 1-3. யோபு 38. 4. சங். 33. 6; 102. 25. ஏசா. 44. 24. எரே. 10. 12. அப். 14. 15; 17. 24. ரோ. 1. 20. எபிரெ. 1. 16. எபி. 1. 10; 11. 3. வெளி. 4. 11
2 எரே. 4. 23.
3 சங். 33. 6; 104. 30
4 சங். 33. 9. 2 கொ. 4. 6. யாக். 1. 17
5 சங். 74. 16
6 யோபு 37. 18
7 நீதி. 8. 28
8 யோபு 26. 10; 38. 8-11. சங். 33. 7; 104. 9. எரே. 5. 22. 2 பேது. 3. 5
9 மத். 6. 30. லூ. 6. 44
10 உபா. 4. 19. சங். 74. 17; 136. 7-9
11 சங். 8. 3; 148. 3-5
12 யோபு 38. 7
13 எரே. 31. 35
14 ஆதி. 8. 17

சாயங்காலமும் விடியற்காலமுமாகி மூன்றாம் 13
நாள் ஆயிற்று.
பின்பு தேவன்: பகலுக்கும் இரவுக்கும் வித் 14
தியாசம் உண்டாகத்தக்கதாக வானம் என்கிற
ஆகாயவிரிவிலே [10]சுடர்கள் உண்டாகக்கட
வது, அவைகள் அடையாளங்களுக்காகவும்
காலங்களையும் நாட்களையும் வருஷங்களையும்
குறிக்கிறதற்காகவும் இருக்கக்கடவது என்
றார். அவைகள் பூமியின்மேல் பிரகாசிக்கும் 15
படிக்கு வானம் என்கிற ஆகாயவிரிவிலே
சுடர்களாயிருக்கக்கடவது என்றார்; அது அப்
படியே ஆயிற்று. தேவன், [11]பகலை ஆளப் 16
பெரிய சுடரும், [12]இரவை ஆளச் சிறிய சுட
ரும் ஆகிய இரண்டு மகத்தான சுடர்களையும்,
நட்சத்திரங்களையும் உண்டாக்கினார். அவை 17
கள் பூமியின்மேல் பிரகாசிக்கவும், [13]பகலையும் 18
இரவையும் ஆளவும், வெளிச்சத்துக்கும் இரு
ளுக்கும் வித்தியாசம் உண்டாக்கவும், தேவன்
அவைகளை வானம் என்கிற ஆகாயவிரிவிலே
வைத்தார்; தேவன் அது நல்லது என்று கண்
டார். சாயங்காலமும் விடியற்காலமுமாகி 19
நாலாம் நாள் ஆயிற்று.
பின்பு தேவன்: நீந்தும் ஜீவஜந்துக்களையும், 20
பூமியின்மேல் வானம் என்கிற ஆகாயவிரி
விலே பறக்கும் பறவைகளையும், ஜலமானது
திரளாய் ஜநிப்பிக்கக்கடவது என்றார்.
தேவன், மகா மச்சங்களையும், ஜலத்தில் தங் 21
கள் தங்கள் ஜாதியின்படியே திரளாய் ஜநிப்
பிக்கப்பட்ட சகலவித நீர்வாழும் ஜந்துக்களை
யும், சிறகுள்ள ஜாதிஜாதியான சகலவிதப்
பட்சிகளையும் சிருஷ்டித்தார்; தேவன் அது
நல்லது என்று கண்டார். தேவன் அவை 22
களை ஆசீர்வதித்து, [14]நீங்கள் பலுகிப் பெருகி,
சமுத்திர ஜலத்தை நிரப்புங்கள் என்றும், பற
வைகள் பூமியில் பெருகக்கடவது என்றும்
சொன்னார். சாயங்காலமும் விடியற்காலமு 23
மாகி ஐந்தாம் நாள் ஆயிற்று.
பின்பு தேவன்: பூமியானது ஜாதிஜாதி 24
யான ஜீவஜந்துக்களாகிய காட்டு மிருகங்களை
யும், ஊரும் பிராணிகளையும், காட்டு மிருகங்
களையும், ஜாதிஜாதியாகப் பிறப்பிக்கக்கடவது
என்றார்; அது அப்படியே ஆயிற்று. தேவன் 25
பூமியிலுள்ள ஜாதிஜாதியான காட்டு மிருகங்க

ளையும், ஜாதிஜாதியான நாட்டு மிருகங்களை
யும், பூமியில் ஊரும் பிராணிகள் எல்லாவற்
றையும் உண்டாக்கினார்; தேவன் அது நல்லது
26 என்று கண்டார். பின்பு தேவன்: [1]நமது
சாயலாகவும் நமது ரூபத்தின்படியேயும் *மனு
ஷனை உண்டாக்குவோமாக; அவர்கள் சமுத்
திரத்தின் மச்சங்களையும், ஆகாயத்துப் பற
வைகளையும், மிருகஜீவன்களையும், பூமியனைத்
தையும், பூமியின்மேல் ஊரும் சகலப் பிராணி
27 களையும் ஆளக்கடவர்கள் என்றார். தேவன்
தம்முடைய சாயலாக மனுஷனைச் சிருஷ்டித்
தார், [2]அவனைத் தேவசாயலாகவே சிருஷ்டித்
தார்; [3]ஆணும் பெண்ணுமாக அவர்களைச்
28 சிருஷ்டித்தார். பின்பு தேவன் அவர்களை
நோக்கி: [4]நீங்கள் பலுகிப் பெருகி, பூமியை
நிரப்பி, அதைக் கீழ்ப்படுத்தி, சமுத்திரத்தின்
மச்சங்களையும் ஆகாயத்துப் பறவைகளையும்,
பூமியின்மேல் நடமாடுகிற சகல ஜீவஜந்துக்க
ளையும் ஆண்டுகொள்ளுங்கள் என்று சொல்லி,
29 தேவன் அவர்களை ஆசீர்வதித்தார். பின்னும்
தேவன்: இதோ, பூமியின்மேல் எங்கும் விதை
தரும் சகலவிதப் பூண்டுகளையும், விதைதரும்
கனிமரங்களாகிய சகலவித விருட்சங்களையும்
உங்களுக்குக் கொடுத்தேன், [5]அவைகள் உங்
30 களுக்கு ஆகாரமாயிருக்கக்கடவது; பூமியி
லுள்ள [6]சகல மிருகஜீவன்களுக்கும், ஆகாயத்
திலுள்ள சகல பறவைகளுக்கும், பூமியின்
மேல் ஊரும் பிராணிகள் எல்லாவற்றிற்கும்
பசுமையான சகல பூண்டுகளையும் ஆகாரமா
கக் கொடுத்தேன் என்றார்; அது அப்படியே
31 ஆயிற்று. அப்பொழுது [7]தேவன் தாம் உண்
டாக்கின எல்லாவற்றையும் பார்த்தார், அது
மிகவும் நன்றாயிருந்தது; சாயங்காலமும் விடி
யற்காலமுமாகி ஆறாம் நாள் ஆயிற்று.

## 2

இவ்விதமாக வானமும் பூமியும், அவைக
ளின் †சர்வசேனையும் உண்டாக்கப்பட்டுத்
2 தீர்ந்தன. [8]தேவன் தாம் செய்த தம்முடைய
கிரியையை ஏழாம் நாளிலே நிறைவேற்றி,
தாம் உண்டாக்கின தம்முடைய கிரியைகளை
யெல்லாம் முடித்தபின்பு, ஏழாம் நாளிலே
3 ஓய்ந்திருந்தார். தேவன் தாம் சிருஷ்டித்து
உண்டுபண்ணின தம்முடைய கிரியைகளை
யெல்லாம் முடித்தபின்பு [9]அதிலே ஓய்ந்திருந்
தபடியால், தேவன் ஏழாம்நாளை ஆசீர்வதித்து,
அதைப் பரிசுத்தமாக்கினார்.
4 தேவனாகிய ‡கர்த்தர் பூமியையும் வானத்
தையும் உண்டாக்கின நாளிலே, வானமும்
பூமியும் சிருஷ்டிக்கப்பட்ட வரலாறு இவை
5 களே. [10]நிலத்தினுடைய சகலவிதச் செடி
களும் பூமியின்மேல் இன்னும் உண்டாக
வில்லை, நிலத்தினுடைய சகலவிதப் பூண்டு
களும் இன்னும் முளைக்கவில்லை; ஏனெனில்
தேவனாகிய [11]கர்த்தர் பூமியின்மேல் இன்னும்
மழையைப் பெய்யப்பண்ணவில்லை; நிலத்
தைப் பண்படுத்த மனுஷனும் இருந்ததில்லை.
6 அப்பொழுது மூடுபனி பூமியிலிருந்து எழும்
7 பி, பூமியையெல்லாம் நனைத்தது. தேவனா
கிய கர்த்தர் மனுஷனைப் [12]பூமியின் மண்ணி
னாலே உருவாக்கி, [13]ஜீவசுவாசத்தை அவன்
நாசியிலே ஊதினார், [14]மனுஷன் ஜீவாத்துமா
வானான்.
தேவனாகிய கர்த்தர் கிழக்கே §ஏதேன் 8
என்னும் ஒரு தோட்டத்தை உண்டாக்கி, தாம்
உருவாக்கின மனுஷனை அதிலே வைத்தார்.
தேவனாகிய கர்த்தர், [15]பார்வைக்கு அழகும் 9
புசிப்புக்கு நலமுமான சகலவித விருட்சங்க
ளையும், தோட்டத்தின் நடுவிலே ஜீவவிருட்
சத்தையும், நன்மை தீமை அறியத்தக்க விருட்
சத்தையும் பூமியிலிருந்து முளைக்கப்பண்ணி
னார். தோட்டத்துக்குத் தண்ணீர் பாயும்படி 10
ஏதேனிலிருந்து ஒரு நதி ஓடி, அங்கேயிருந்து
பிரிந்து நாலு பெரிய ஆறுகளாயிற்று. முத 11
லாம் ஆற்றுக்குப் பைசோன் என்று பேர்,
[16]அது ஆவிலா தேசம் முழுவதையும் சுற்றி
ஓடும்; அவ்விடத்திலே பொன் விளையும். அந் 12
தத் தேசத்தின் பொன் நல்லது; அவ்விடத்
திலே ‖பிதோலாகும், கோமேதகக் கல்லும்
உண்டு. இரண்டாம் ஆற்றுக்குக் கீகோன் 13
என்று பேர், அது ¶எத்தியோப்பியா தேசம்
முழுவதையும் சுற்றி ஓடும். மூன்றாம் ஆற் 14
றுக்கு [17]இதெக்கேல் என்று பேர், அது அசீரி
யாவுக்குக் கிழக்கே ஓடும்; நாலாம் ஆற்றுக்கு
ஐபிராத்து என்று பேர். தேவனாகிய கர்த்தர் 15
மனுஷனை ஏதேன் தோட்டத்தில் அழைத்துக்
கொண்டுவந்து, அதைப் பண்படுத்தவும் காக்
கவும் வைத்தார். தேவனாகிய கர்த்தர் மனு 16
ஷனை நோக்கி: நீ தோட்டத்திலுள்ள சகல
விருட்சத்தின் கனியையும் புசிக்கவே புசிக்க
லாம். ஆனாலும் [18]நன்மை தீமை அறியத்தக்க 17
விருட்சத்தின் கனியைப் புசிக்கவேண்டாம்;
அதை நீ புசிக்கும் நாளில் [19]சாகவே சாவாய்
என்று கட்டளையிட்டார்.
பின்பு, தேவனாகிய கர்த்தர்: மனுஷன் 18
தனிமையாயிருப்பது நல்லதல்ல, [20]ஏற்ற துணை
யை அவனுக்கு உண்டாக்குவேன் என்றார்.
தேவனாகிய கர்த்தர் வெளியின் சகலவித மிரு 19
கங்களையும், ஆகாயத்தின் சகலவிதப் பறவை
களையும் [21]மண்ணினாலே உருவாக்கி, **ஆதாம்
அவைகளுக்கு என்ன பேரிடுவான் என்று
பார்க்கும்படி [22]அவைகளை அவனிடத்தில்
கொண்டுவந்தார்; அந்தந்த ஜீவஜந்துக்கு ஆதா
ம் எந்தெந்தப் பேரிட்டானோ அதுவே அதற்
குப் பேராயிற்று. அப்படியே ஆதாம் சகல 20
வித நாட்டு மிருகங்களுக்கும், ஆகாயத்துப்
பறவைகளுக்கும், சகலவிதக் காட்டு மிருகங்
களுக்கும் பேரிட்டான்; ஆதாமுக்கோ ஏற்ற
துணை இன்னும் காணப்படவில்லை. அப் 21
பொழுது தேவனாகிய கர்த்தர் ஆதாமுக்கு
[23]அயர்ந்த நித்திரையை வரப்பண்ணினார், அ
வன் நித்திரையடைந்தான்; அவர் அவன் விலா
எலும்புகளில் ஒன்றை எடுத்து, அந்த இடத்
தைச் சதையினால் அடைத்தார். தேவனாகிய 22
கர்த்தர் தாம் மனுஷனில் எடுத்த விலா எலும்
பை மனுஷியாக உருவாக்கி, [24]அவளை மனுஷ

1 ஆதி. 5. 1; 9. 2, 6. சங். 100. 3. 8. 6
* ஆதாமை = மனுஷனை.
2 பிர. 7. 20. அப். 17. 26-29
3 1 கொ. 11. 7. எபே. 4. 24. மத். 19. 4. மாக். 3. 9. மல். 2. 15
4 ஆதி. 8. 17; 9. 1, 7
5 ஆதி. 9. 3. சங். 104. 14, 15. அப். 14. 17
6 சங். 145. 15, 16; 147. 9. யோபு 38. 41
7 சங். 104. 24. உபா. 32. 4. 1 தீமோ. 4. 4
† சர்வசமூகம். சங். 33. 6
8 யாத். 16. 22, 23; 20. 11; 31. 17. எபி. 4. 4
9 நெகே. 9. 14. ஏசா. 58. 13. மாற். 2. 27. அப். 20. 7. 1 கொ. 16. 2. வெளி. 1. 10
‡ யேகோவா. ஆதி. 1. 1. சங். 90. 1, 2
10 ஆதி. 1. 12; 3. 23
11 யோபு 38. 26-28
12 ஆதி. 3. 19, 23. சங். 103. 14. பிர. 12. 7. ஏசா. 64. 8. 1 கொ. 15. 47
13 யோபு 33. 4. அப். 17. 25. ஏசா. 2. 22
14 1 கொ. 15. 45
§ இன்பம். ஆதி. 13. 10. ஏசா. 57. 3. எசே. 28. 13
15 எசே. 31. 8, 9. ஆதி. 3. 18, 22; 11. 31. வெளி. 2. 7; 22. 2, 14
16 ஆதி. 25. 18
‖ முத்து. எண். 11. 7
¶ கூஷ்.
17 தானி. 10. 4
18 ஆதி. 3. 1, 3, 11, 17
19 ரோ. 5. 12; 6. 23. 1 கொ. 15. 26
20 1 கொ. 11. 8, 9. 1 தீமோ. 2. 13
21 ஆதி. 1. 20, 24
** மனுஷன.
22 சங். 8. 6
23 ஆதி. 15. 12
24 நீதி. 18. 22, எபி. 13. 4

23 வீட்டத்தில் கொண்டுவந்தார். அப்பொழுது
ஆதாம்: இவள் [1]என் எலும்பில் எலும்பும்,
என் மாம்சத்தில் மாம்சமுமாய் இருக்கிறாள்;
இவள் *மனுஷனில் எடுக்கப்பட்டபடியினால்
24 மனுஷி என்னப்படுவாள் என்றான். [2]இதி
னிமித்தம் புருஷன் தன் தகப்பனையும் தன்
தாயையும் விட்டு, தன் மனைவியோடே இசைந்
திருப்பான்; அவர்கள் ஒரே மாம்சமாயிருப்
25 பார்கள். ஆதாமும் அவன் மனைவியுமாகிய
இருவரும் [3]நிர்வாணிகளாயிருந்தும், [4]வெட்
கப்படாதிருந்தார்கள்.

3 தேவனாகிய கர்த்தர் உண்டாக்கின சகல
காட்டு ஜீவன்களைப்பார்க்கிலும் [5]சர்ப்பமா
னது தந்திரமுள்ளதாயிருந்தது. அது ஸ்திரீ
யை நோக்கி: நீங்கள் தோட்டத்திலுள்ள சகல
விருட்சங்களின் கனியையும் புசிக்கவேண்
டாம் என்று தேவன் சொன்னது உண்டோ
2 என்றது. ஸ்திரீ சர்ப்பத்தைப் பார்த்து: நாங்
கள் தோட்டத்திலுள்ள விருட்சங்களின் கனி
3 களைப் புசிக்கலாம்; ஆனாலும், [6]தோட்டத்
தின் நடுவில் இருக்கிற விருட்சத்தின் கனி
யைக்குறித்து, தேவன்: நீங்கள் சாகாதபடிக்கு
அதைப் புசிக்கவும் அதைத் தொடவும் வேண்
4 டாம் என்று சொன்னார் என்றாள். அப்பொ
ழுது [7]சர்ப்பம் ஸ்திரீயை நோக்கி: நீங்கள்
5 சாகவே சாவதில்லை; நீங்கள் இதைப் புசிக்
கும் நாளிலே [8]உங்கள் கண்கள் திறக்கப்படும்
என்றும், நீங்கள் நன்மை தீமை அறிந்து †தே
வர்களைப்போல் இருப்பீர்கள் என்றும் தே
6 வன் அறிவார் என்றது. அப்பொழுது ஸ்திரீ
யானவள், அந்த விருட்சம் புசிப்புக்கு நல்ல
தும், பார்வைக்கு இன்பமும், புத்தியைத் தெ
ளிவிக்கிறதற்கு இச்சிக்கப்படத்தக்க விருட்ச
முமாய் இருக்கிறது என்று கண்டு, அதின்
கனியைப் பறித்து, [9]புசித்து, தன் புருஷ
னுக்கும் கொடுத்தாள்; அவனும் புசித்தான்.
7 அப்பொழுது அவர்கள் இருவருடைய கண்
களும் திறக்கப்பட்டது; [10]அவர்கள் தாங்கள்
நிர்வாணிகள் என்று அறிந்து, அத்தியிலைக
ளைத் தைத்து, தங்களுக்கு அரைக்கச்சைகளை
8 உண்டுபண்ணினார்கள். பகலில் குளிர்ச்சி
யான வேளையிலே தோட்டத்தில் உலாவுகிற
தேவனாகிய கர்த்தருடைய [11]சத்தத்தை அவர்
கள் கேட்டார்கள். அப்பொழுது ஆதாமும்
அவன் மனைவியும் தேவனாகிய கர்த்தருடைய
சந்நிதிக்கு விலகி, தோட்டத்தின் விருட்சங்க
9 ளுக்குள்ளே ஒளித்துக்கொண்டார்கள். அப்
பொழுது தேவனாகிய கர்த்தர் ஆதாமைக் கூப்
10 பிட்டு நீ எங்கே இருக்கிறாய் என்றார். அத
ற்கு அவன்: நான் தேவரீருடைய சத்தத்தைத்
தோட்டத்திலே கேட்டு, நான் நிர்வாணியா
யிருப்பதினால் [12]பயந்து, ஒளித்துக்கொண்டே
11 ன் என்றான். அப்பொழுது அவர்: நீ நிர்
வாணி என்று உனக்கு அறிவித்தவன் யார்?
புசிக்கவேண்டாம் என்று நான் உனக்கு விலக்
கின விருட்சத்தின் கனியைப் புசித்தாயோ
12 என்றார். அதற்கு ஆதாம்: என்னுடனே இ
ருக்கும்படி தேவரீர் தந்த [13]ஸ்திரீயானவள் அவ்
விருட்சத்தின் கனியை எனக்குக் கொடுத்
தாள், நான் புசித்தேன் என்றான். அப்பொ 13
ழுது தேவனாகிய கர்த்தர் ஸ்திரீயை நோக்கி:
நீ இப்படிச் செய்தது என்ன என்றார். ஸ்திரீ
யானவள்: [14]சர்ப்பம் என்னை வஞ்சித்தது,
நான் புசித்தேன் என்றாள். அப்பொழுது 14
தேவனாகிய கர்த்தர் சர்ப்பத்தைப் பார்த்து:
[15]நீ இதைச் செய்தபடியால் சகல நாட்டு மிரு
கங்களிலும் சகல காட்டு மிருகங்களிலும் சபிக்
கப்பட்டிருப்பாய், நீ உன் வயிற்றினால் நகர்
ந்து, உயிரோடிருக்கும் நாளெல்லாம் மண்
ணைத் தின்பாய்; [16]உனக்கும் ஸ்திரீக்கும், 15
உன் வித்துக்கும் அவள் வித்துக்கும் பகை
உண்டாக்குவேன்; [17]அவர் உன் தலையை நசுக்
குவார், நீ அவர் குதிங்காலை நசுக்குவாய் என்
றார். அவர் ஸ்திரீயை நோக்கி: நீ கர்ப்பவதி 16
யாயிருக்கும்போது உன் வேதனையை மிக
வும் பெருகப்பண்ணுவேன்; [18]வேதனையோ
டே பிள்ளை பெறுவாய்; உன் ஆசை உன்
புருஷனைப் பற்றியிருக்கும், [19]அவன் உன்னை
ஆண்டுகொள்ளுவான் என்றார். பின்பு அவர் 17
ஆதாமை நோக்கி: நீ உன் மனைவியின் வார்த்
தைக்குச் செவிகொடுத்து, புசிக்கவேண்டாம்
என்று நான் உனக்கு விலக்கின விருட்சத்
தின் கனியைப் புசித்தபடியினாலே, [20]பூமி
உன் நிமித்தம் சபிக்கப்பட்டிருக்கும்; [21]நீ உயி
ரோடிருக்கும் நாளெல்லாம் வருத்தத்தோடே
அதின் பலனைப் புசிப்பாய். அது உனக்கு 18
[22]முள்ளும் குருக்கும் முளைப்பிக்கும்; வெளி
யின் பயிர்வகைகளைப் புசிப்பாய். நீ பூமியி 19
லிருந்து எடுக்கப்பட்டபடியால், நீ பூமிக்குத்
திரும்புமட்டும் [23]உன் முகத்தின் வேர்வை
யால் ஆகாரம் புசிப்பாய்; [24]நீ மண்ணாயிருக்கி
றாய், மண்ணுக்குத் திரும்புவாய் என்றார்.
ஆதாம் தன் மனைவிக்கு ‡ஏவாள் என்று பேரி 20
ட்டான்; ஏனெனில், அவள் ஜீவனுள்ளோ
ருக்கெல்லாம் தாயானவள், தேவனாகிய கர் 21
த்தர் ஆதாமுக்கும் அவன் மனைவிக்கும்
தோல் §உடைகளை உண்டாக்கி அவர்களுக்கு
உடுத்தினார்.

பின்பு தேவனாகிய கர்த்தர்: [25]இதோ, மனு 22
ஷன் நன்மை தீமை அறியத்தக்கவனாய் நம்
மில் ஒருவரைப்போல் ஆனான்; இப்பொழு
தும் அவன் தன் கையை நீட்டி ஜீவவிருட்சத்
தின் கனியையும் பறித்து, புசித்து, என்றைக்
கும் உயிரோடிராதபடிக்குச் செய்யவேண்டும்
என்று, அவன் எடுக்கப்பட்ட [26]மண்ணைப் 23
பண்படுத்த தேவனாகிய கர்த்தர் அவனை
ஏதேன் தோட்டத்திலிருந்து அனுப்பிவிட்
டார். அவர் மனுஷனைத் துரத்திவிட்டு ஜீவ 24
விருட்சத்துக்குப் போம் வழியைக் காவல்
செய்ய ஏதேன் தோட்டத்துக்குக் [27]கிழக்கே
[28]கேருபீன்களையும் வீசிக்கொண்டிருக்கிற சுட
ரொளி பட்டயத்தையும் வைத்தார்.

4 ஆதாம் தன் மனைவியாகிய ஏவாளை அறிந்
தான்; அவள் கர்ப்பவதியாகி ‖காயீனைப் பெற்

1 ஆதி. 29. 14. எபே. 5. 30. 1 கொ. 11. 8
* நரன்=நாரி.
2 சங். 45. 10. மத். 19. 4-6. 1 கொ. 6. 16. எபே. 5. 28, 31
3 ஆதி. 3. 7, 10, 11
4 யாத். 32. 25. ஏசா. 47. 3
5 வெளி. 12. 9; 20. 2. மத். 10. 16. 2 கொ. 11. 3
6 ஆதி. 2. 17
7 யோ. 8. 44. 2 கொ. 11. 3
8 அப். 26. 18
† தேவனை.
9 1 தீமோ. 2. 14
10 ஆதி. 2. 25
11 யோபு 31. 33. எரே. 23. 24. ஆமோஸ் 9. 3
12 ஆதி. 2. 25. யாத். 3. 6. யோ. 3. 20
13 ஆதி. 2. 18. நீதி. 28. 13
14 2 கொ. 11. 3. 1 தீமோ. 2. 14
15 ஏசா. 65. 25. மீகா. 7. 17.
16 மத். 3. 7; 13. 38. 23. 33. யோ. 8. 44. அப். 13. 10. 1 யோ. 3. 8
17 ஏசா. 7. 14. மத். 1. 23, 25. லூக். 1. 34, 35. கலா. 4. 4, 5. ரோ. 16. 20. எபி. 2. 14. வெளி. 12. 7, 17
18 சங். 48. 6. யோ. 16. 21. 1 தீமோ. 2. 15
19 1 கொ. 11. 3; 14. 34. எபே. 5. 22–24
20 பிர. 1. 2, 3. ரோ. 8. 20
21 யோபு 5. 7
22 யோபு 31. 40
23 பிர. 1. 13. 2 தெச. 3. 10
24 ஆதி. 2. 7; 18. 27. யோபு 21. 26. சங். 104. 29. பிர. 3. 20. ரோ. 5l. 2
‡ ஜீவன். அப். 17. 26
§ அங்கிகளை. ஏசா. 61. 10
25 5 வசனம். ஆதி. 2. 9. வெளி. 2. 7
26 19 வசனம். ஆதி. 4. 2; 9. 20
27 ஆதி. 2. 8
28 சங். 80. 1; 104. 4. எபி. 1. 7
‖ சுதந்திரம்.

று, கர்த்தரால் ஒரு மனுஷனைப் பெற்றேன்
2 என்றாள். பின்பு அவனுடைய சகோதரனா
கிய *ஆபேலைப் பெற்றாள்; ஆபேல் [1]ஆடுகளை
மேய்க்கிறவனானான், காயீன் [2]நிலத்தைப் பயி
3 ரிடுகிறவனானான். †சிலநாள் சென்றபின்பு,
காயீன் [3]நிலத்தின் கனிகளைக் கர்த்தருக்குக்
4 காணிக்கையாகக் கொண்டுவந்தான். ஆபே
லும் [4]தன் மந்தையின் தலையீற்றுகளிலும்
அவைகளில் கொழுமையானவைகளிலும் சில
வற்றைக் கொண்டுவந்தான். ஆபேலையும்
அவன் காணிக்கையையும் கர்த்தர் ‡அங்கி
5 கரித்தார். காயீனையும் அவன் காணிக்கையை
யும் அவர் அங்கிகரிக்கவில்லை. அப்பொழுது
காயீனுக்கு மிகவும் எரிச்சல் உண்டாகி,
6 [5]அவன் முகநாடி வேறுபட்டது. அப்பொ
ழுது கர்த்தர் காயீனை நோக்கி: உனக்கு என்
எரிச்சல் உண்டாயிற்று? உன் முகநாடி என்
7 வேறுபட்டது? நீ நன்மை செய்தால் [6]மேன்
மை இல்லையோ? நீ நன்மை செய்யாதிருந்தால்
§பாவம் வாசற்படியில் படுத்திருக்கும்; அவன்
ஆசை உன்னைப் பற்றியிருக்கும், நீ அவனை
8 ஆண்டுகொள்ளுவாய் என்றார். காயீன் தன்
சகோதரனாகிய ஆபேலோடே பேசினான்;
அவர்கள் வயல்வெளியில் இருக்கும் சமயத்
தில், காயீன் தன் சகோதரனாகிய ஆபேலுக்கு
விரோதமாய் எழும்பி, [7]அவனைக் கொலை
9 செய்தான். கர்த்தர் காயீனை நோக்கி: [8]உன்
சகோதரனாகிய ஆபேல் எங்கே என்றார்;
அதற்கு அவன்: [9]நான் அறியேன்; என் சகோ
தரனுக்கு நான் காவலாளியோ என்றான்.
10 அதற்கு அவர்: என்ன செய்தாய்? உன் சகோ
தரனுடைய [10]இரத்தத்தின் சத்தம் பூமியிலி
11 ருந்து என்னை நோக்கிக் கூப்பிடுகிறது. இப்
பொழுது உன் சகோதரனுடைய இரத்தத்தை
உன் கையிலே வாங்கிக்கொள்ள தன் வாயைத்
திறந்த இந்தப் பூமியில் நீ சபிக்கப்பட்டிருப்
12 பாய். நீ நிலத்தைப் பயிரிடும்போது, அது
தன் பலனை இனி உனக்குக் கொடாது; நீ
பூமியில் நிலையற்று அலைகிறவனாயிருப்பாய்
13 என்றார். அப்பொழுது காயீன் கர்த்தரை
நோக்கி: ‖எனக்கு இட்ட தண்டனை என்
14 னால் சகிக்க முடியாது. இன்று என்னை
[11]இந்தத் தேசத்திலிருந்து துரத்திவிடுகிறீர்;
[12]நான் உமது சமுகத்துக்கு விலகி மறைந்து,
பூமியில் நிலையற்று அலைகிறவனாயிருப்பேன்;
[13]என்னைக் கண்டுபிடிக்கிறவன் எவனும் என்
15 னைக் கொன்றுபோடுவானே என்றான். அப்
பொழுது கர்த்தர் அவனை நோக்கி: காயீனைக்
கொல்லுகிற எவன்மேலும் [14]ஏழுபழி சுமரும்
என்று சொல்லி; காயீனைக் கண்டுபிடிக்கிற
வன் எவனும் அவனைக் கொன்றுபோடாத
படிக்குக் கர்த்தர் அவன்மேல் [15]ஒரு அடை
யாளத்தைப் போட்டார்.
16 அப்படியே காயீன் கர்த்தருடைய [16]சந்நிதி
யை விட்டுப் புறப்பட்டு, ஏதேனுக்குக் கிழக்
கான நோத் என்னும் தேசத்தில் குடியிருந்
17 தான். காயீன் தன் மனைவியை அறிந்தான்;
அவள் கர்ப்பவதியாகி, ஏனோக்கைப் பெற்
றாள்; அப்பொழுது அவன் ஒரு பட்டணத்
தைக் கட்டி, அந்தப் பட்டணத்துக்குத் [illegible]
குமாரனாகிய ஏனோக்குடைய பேரை இட்
டான். ஏனோக்குக்கு ஈராத் பிறந்தான்; ஈராத் 18
மெகுயவேலைப் பெற்றான்; மெகுய[illegible]
மெத்தூசவேலைப் பெற்றான்; மெத்தூச[illegible]
லாமேக்கைப் பெற்றான். லாமேக்கு [illegible]
ஸ்திரீகளை விவாகம்பண்ணினான்; ஒ[illegible]
ஆதாள் என்று பேர், மற்றொருத்திக்[illegible]
லாள் என்று பேர். ஆதாள் யாபா[illegible]
றாள்; அவன் கூடாரங்களில் வாச[illegible]
கிறவர்களுக்கும் மந்தைமேய்க்கிறவர்[illegible]
தகப்பனானான். அவன் சகோதர[illegible]
பேர் யூபால்; அவன் கின்னரக்[illegible]
சுரக்காரர் யாவருக்கும் தகப்பன[illegible]
ளாளும் தூபால் காயீனைப் பெற்[illegible]
பித்தளை இரும்பு முதலியவற்[illegible]
ளர் யாவருக்கும் ஆசாரியனா[illegible]
காயீனுடைய சகோதரி நா[illegible]
தன் மனைவிகளைப் பார்த்[illegible]
ளாளே, நான் சொல்[illegible]
லாமேக்கின் மனைவிக[illegible]
செவிகொடுங்கள்; எ[illegible]
ஒரு மனுஷனைக் [illegible]
தழும்புண்டாக ஒ[illegible]கொலைசெய்
தேன்; காயீனுக்[illegible]சுமருமானால், 24
லாமேக்குக்காக [illegible]ழுபழி சுமரும்
என்றான். பின்[illegible]ன் மனைவியை 25
அறிந்தான்; அ[illegible]னைப் பெற்று:
காயீன் கொ[illegible]லுக்குப் பதிலாக,
தேவன் எ[illegible] புத்திரனைக் கொ
டுத்தார் எ[illegible] அவனுக்குச் ¶சேத்
என்று பே[illegible]சேத்துக்கும் ஒரு குமா 26
ரன் பி[illegible]க்கு ஏனோஸ் என்று
பேரி[illegible]ழுது மனுஷர் கர்த்த
ரை[illegible]**தொழுதுகொள்ள ஆரம்
பித்[illegible]

[illegible]சவரலாறு: தேவன் மனு 5
[illegible]டித்த நாளிலே அவனைத்
[illegible] உண்டாக்கினார். அவர்களை 2
[illegible]ணுமாகச் சிருஷ்டித்து, அவர்
[illegible]தித்து, அவர்களைச் சிருஷ்டித்த
[illegible] அவர்களுக்கு ††மனுஷர் என்று
[illegible]ர். ஆதாம் நூற்று முப்ப[illegible] வய 3
தானபோது, தன் சாயலாகத் தன் ரூபத்தின்
படியே ஒரு குமாரனைப் பெற்று, [19]அவனுக்
குச் சேத் என்று பேரிட்டான். ஆதாம் சேத் 4
தைப் பெற்றபின், எண்ணூறு வருஷம் உயி
ரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும்
பெற்றான். ஆதாம் உயிரோடிருந்த நாளெல் 5
லாம் தொளாயிரத்து முப்பது வருஷம்;
[20]அவன் மரித்தான்.
சேத் நூற்றைந்து வயதானபோது, [21]ஏனோ 6
சைப் பெற்றான். சேத் ஏனோசைப் பெற்ற 7
பின், எண்ணூற்றேழு வருஷம் உயிரோடி
ருந்து, குமாரரையும் குமாரத்திகளையும் பெற்

* அழலம்.
1 ஆதி. 46. 34
2 3. 23. 9. 20
† நாட்களின் முடிவிலே.
3 எண். 18. 12
4 எண். 18. 17. எபி. 11. 4
‡ கடாட்சித்தார்.
5 ஆதி. 31. 2
6 எபி. 11. 4
§ பழி.
7 மத். 23. 34. 1 யோ. 3. 12. யூதா 11
8 சங். 9. 12
9 யோ. 8. 44
10 எபி. 12. 24. வெளி. 6. 10
‖ என் அக்கிரமம் மன்னிக்கப்படாதபடி பெரிதாயிருக்கிறது. மத். 12. 31
11 யோபு 15. 20–24. நீதி. 28. 1
12 சங். 51. 11
13 ஆதி. 9. 6. எண். 35. 19, 21, 27
14 சங். 79. 12
15 எசே. 9. 4, 6
16 2 இரா. 13. 23
¶ நியமகம்.
** நாமத்தைத்தொழுதுகொள்ள. உபா. 26. 17. 1 இரா. 18. 24. சங். 116. 17. யோவேல் 2. 32. 1 கொ. 1. 2
17 1 நாளா. 1. 1. லூக். 3. 38
18 ஆதி. 1. 27. 1 கொ. 11. 7. எபே. 4. 24
†† ஆதாம் = மனுஷன்.
19 ஆதி. 4. 25. யோபு 25. 4. யோ. 3, 6. 1 கொ. 15. 39
20 ஆதி. 3. 19. எபி. 1. 27
21 ஆதி. 4. 26

8 றான். சேத்துடைய நாளெல்லாம் தொளா
யிரத்துப்பன்னிரண்டு வருஷம்; அவன் மரித்
தான்.
9 ஏனோஸ் தொண்ணூறு வயதானபோது,
10 கேனானைப் பெற்றான். ஏனோஸ் கேனா
னைப் பெற்றபின், எண்ணூற்றுப் பதினைந்து
வருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமா
11 ரத்திகளையும் பெற்றான். ஏனோசுடைய நா
ளெல்லாம் தொளாயிரத்து ஐந்து வருஷம்;
அவன் மரித்தான்.
12 கேனான் எழுபது வயதானபோது மகலா
13 லெயேலைப் பெற்றான். கேனான் மகலாலெ
யேலைப் பெற்றபின் எண்ணூற்று நாற்பது
வருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமா
14 ரத்திகளையும் பெற்றான். கேனானுடைய நா
ளெல்லாம் தொளாயிரத்துப் பத்து வருஷம்;
அவன் மரித்தான்.
15 மகலாலெயேல் அறுபத்தைந்து வயதான
16 போது, யாரேதைப் பெற்றான். மகலாலெ
யேல் யாரேதைப் பெற்றபின், எண்ணூற்று
முப்பது வருஷம் உயிரோடிருந்து, குமாரரை
17 யும் குமாரத்திகளையும் பெற்றான். மகலாலெ
யேலுடைய நாளெல்லாம் எண்ணூற்றுத்
தொண்ணூற்று ஐந்து வருஷம்; அவன் மரித்
தான்.
18 யாரேத் நூற்று அறுபத்திரண்டு வயதான
19 போது, [1]ஏனோக்கைப் பெற்றான். யாரேத்
ஏனோக்கைப் பெற்றபின், எண்ணூறு வரு
ஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்
20 திகளையும் பெற்றான். யாரேதுடைய நாளெல்
லாம் தொளாயிரத்து அறுபத்திரண்டு வரு
ஷம்; அவன் மரித்தான்.
21 ஏனோக்கு அறுபத்தைந்து வயதானபோது,
22 மெத்தூசலாவைப் பெற்றான். ஏனோக்கு
மெத்தூசலாவைப் பெற்றபின், முந்நூறு வரு
ஷம் தேவனோடே *சஞ்சரித்துக்கொண்டி
ருந்து, குமாரரையும் குமாரத்திகளையும் பெற்
23 றான். ஏனோக்குடைய நாளெல்லாம் முந்
24 நூற்று அறுபத்தைந்து வருஷம். [2]ஏனோக்கு
தேவனோடே சஞ்சரித்துக்கொண்டிருக்கை
யில், †காணப்படாமற் போனான்; தேவன்
அவனை எடுத்துக்கொண்டார்.
25 மெத்தூசலா நூற்றெண்பத்தேழு வயதான
26 போது, லாமேக்கைப் பெற்றான். மெத்தூ
சலா லாமேக்கைப் பெற்றபின், எழுநூற்று
எண்பத்திரண்டு வருஷம் உயிரோடிருந்து,
குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்,
27 மெத்தூசலாவுடைய நாளெல்லாம் தொளாயி
ரத்து அறுபத்தொன்பது வருஷம்; அவன்
மரித்தான்.
28 லாமேக்கு நூற்றெண்பத்திரண்டு வயதான
29 போது, ஒரு குமாரனைப் பெற்று, **கர்த்தர்**
சபித்த பூமியிலே நமக்கு உண்டான வேலை
யிலும், நம்முடைய கைகளின் பிரயாசத்தி
லும், இவன் நம்மைத் தேற்றுவான் என்று
சொல்லி, அவனுக்கு ‡நோவா என்று பேரிட்
30 டான். லாமேக்கு நோவாவைப் பெற்றபின்,
ஐந்நூற்றுத் தொண்ணூற்று ஐந்து வருஷம்
உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளை
யும் பெற்றான். லாமேக்குடைய நாளெல் 31
லாம் எழுநூற்று எழுபத்தேழு வருஷம்;
அவன் மரித்தான்.
நோவா ஐந்நூறு வயதானபோது, [3]சேம் 32
காம் [4]யாப்பேத் என்பவர்களைப் பெற்றான்.

**6**

[5]மனுஷர் பூமியின்மேல் பெருகத் துவக்கி,
அவர்களுக்குக் குமாரத்திகள் பிறந்தபோது:
தேவகுமாரர் மனுஷகுமாரத்திகளை அதிக 2
சௌந்தரியமுள்ளவர்களென்று கண்டு, அவர்
களுக்குள்ளே தங்களுக்குப் [6]பெண்களைத்
தெரிந்துகொண்டார்கள். அப்பொழுது **கர்த்** 3
**தர்**: [7]என் ஆவி என்றைக்கும் மனுஷனோடே
போராடுவதில்லை; அவன் §மாம்சந்தானே,
அவன் இருக்கப்போகிற நாட்கள் நூற்றிரு
பது வருஷம் என்றார். அந்நாட்களில் இராட் 4
சதர் பூமியிலே இருந்தார்கள்; பின்பு தேவகு
மாரர் மனுஷகுமாரத்திகளோடே கூடுகிறதி
னால், இவர்கள் அவர்களுக்குப் பிள்ளைகளைப்
பெற்றபோது, இவர்களும் பூர்வத்தில் பேர்
பெற்ற மனுஷராகிய பலவான்களானார்கள்.
மனுஷனுடைய அக்கிரமம் பூமியிலே பெரு 5
கினது என்றும், அவன் [8]இருதயத்து நினைவு
களின் தோற்றமெல்லாம் [9]நித்தமும் பொல்லா
ததே என்றும், **கர்த்தர்** கண்டு, தாம் பூமி 6
யிலே மனுஷனை உண்டாக்கினதற்காகக் **கர்த்**
**தர்** [10]மனஸ்தாபப்பட்டார்; அது அவர் இருத
யத்துக்கு [11]விசனமாயிருந்தது. அப்பொழுது 7
**கர்த்தர்**: நான் சிருஷ்டித்த மனுஷனைப் பூமி
யின்மேல் வைக்காமல், மனுஷன் முதற்கொ
ண்டு, மிருகங்கள் ஊரும் பிராணிகள் ஆகாயத்
துப் பறவைகள் பரியந்தமும் உண்டாயிருக்கி
றவைகளை நிக்கிரகம்பண்ணுவேன்; நான்
அவர்களை உண்டாக்கினது எனக்கு மனஸ்
தாபமாயிருக்கிறது என்றார். நோவாவுக்கோ, 8
**கர்த்தருடைய** கண்களில் [12]கிருபை கிடைத்
தது.
நோவாவின் வம்சவரலாறு: நோவா தன் 9
காலத்தில் இருந்தவர்களுக்குள்ளே நீதிமானும்
உத்தமனுமாயிருந்தான்; நோவா தேவனோடே
[13]சஞ்சரித்துக்கொண்டிருந்தான். நோவா சேம் 10
காம் யாப்பேத் என்னும் மூன்று குமாரரைப்
பெற்றான். [14]பூமியானது தேவனுக்கு முன் 11
பாகச் சீர்கெட்டதாயிருந்தது; பூமி கொடுமை
யினால் நிறைந்திருந்தது. தேவன் பூமியைப் 12
பார்த்தார்; இதோ அது சீர்கெட்டதாயிருந்
தது; மாம்சமான யாவரும் பூமியின்மேல் தங்
கள் வழியைக் கெடுத்துக்கொண்டிருந்தார்கள்.
அப்பொழுது தேவன் நோவாவை நோக்கி: 13
[15]மாம்சமான யாவரின் முடிவும் எனக்கு முன்
பாக வந்தது; அவர்களாலே பூமி கொடுமை
யினால் நிறைந்தது; நான் அவர்களைப் பூமி
யோடுங்கூட அழித்துப்போடுவேன். நீ கொப் 14
பேர் மரத்தால் உனக்கு ஒரு ||பேழையை
உண்டாக்கு; அந்தப் பேழையிலே அறைகளை
உண்டுபண்ணி, அதை உள்ளும் புறம்புமாகக்

[1] யூதா 14, 15
* அந்நியோந்நியமாயிருந்து. ஆதி. 6. 9. 2 இரா. 20. 13. சங். 16. 8. 116. 9. மீகா. 6. 8. மல்கி. 2. 6
[2] 2 இரா. 2. 11. எபி. 11. 5
† அநித்ய லோக மடைந்தான்.
‡ தேற்றுதல். எபி. 11. 7. 1 பே. 3. 20
[3] ஆதி. 6. 10
[4] ஆதி 10. 21
[5] ஆதி. 1. 28
[6] உபா. 7. 3, 4. 2 கொ. 6. 14
[7] ஏசா. 6. 3-10. அப். 7. 51. கலா. 5. 16, 17. 1 பே. 3. 19, 20
§ மாம்சதேகி. சங். 78. 39
[8] ஆதி. 8. 21. உபா. 29. 19. மத். 15. 19
[9] சங். 14. 2
[10] எண். 23. 19. 1 சாமு. 15. 11, 29. 2 சாமு. 24. 16. யாக். 1. 17
[11] ஏசா. 63. 10
[12] ஆதி. 1. 30. எபி. 11. 7
[13] ஆதி. 5. 22
[14] ரோ. 2. 13; 3. 19
[15] 1 பே. 4. 7
|| [illegible]

15 கில் பூசு. நீ அதைப் பண்ணவேண்டிய விதம்
என்னவென்றால், பேழையின் நீளம் முந்
நூறு முழமும், அதின் அகலம் ஐம்பது முழ
மும், அதின் உயரம் முப்பது முழமுமாய்
16 இருக்கவேண்டும். நீ பேழைக்கு ஓர் *ஜன்
னலை உண்டுபண்ணி, மேல்தட்டுக்கு ஒரு
முழத் தாழ்த்தியிலே அதைச் செய்து முடித்து,
பேழையின் கதவை அதின் பக்கத்தில் வை
த்து, கீழ்அறைகளையும், இரண்டாம் தட்டின்
அறைகளையும், மூன்றாம் தட்டின் அறைகளை
17 யும் பண்ணவேண்டும். [1]வானத்தின்கீழே
ஜீவசுவாசமுள்ள சகல மாம்ச ஜந்துக்களையும்
அழிக்க நான் பூமியின்மேல் ஜலப்பிரளயத்
தை வரப்பண்ணுவேன்; பூமியிலுள்ள யாவும்
18 மாண்டுபோம். ஆனாலும் உன்னுடனே என்
உடன்படிக்கையை ஏற்படுத்துவேன்; நீயும்,
உன்னோடேகூட உன் குமாரரும், உன் மனை
வியும், உன் குமாரரின் மனைவிகளும், பேழைக்
19 குள் பிரவேசியுங்கள். சகலவித மாம்சமான
ஜீவன்களிலும் ஆணும் பெண்ணுமாக வகை
ஒன்றுக்கு ஒவ்வொரு ஜோடு உன்னுடன் உயி
ரோடே காக்கப்படுவதற்கு, பேழைக்குள்ளே
20 சேர்த்துக்கொள். ஜாதிஜாதியான பறவைக
ளிலும், ஜாதிஜாதியான மிருகங்களிலும், பூமி
யிலுள்ள சகல ஜாதிஜாதியான ஊரும் பிரா
ணிகளிலும், வகை ஒன்றுக்கு ஒவ்வொரு
ஜோடு உயிரோடே காக்கப்படுவதற்கு உன்
21 னிடத்திலே வரக்கடவது. உனக்கும் அவை
களுக்கும் ஆகாரமாகச் சகலவித போஜனப
தார்த்தங்களையும் சேர்த்து, உன்னிடத்தில்
22 வைத்துக்கொள் என்றார். [2]நோவா அப்படி
யே செய்தான்; தேவன் தனக்குக் கட்டளை
யிட்டபடியெல்லாம் அவன் செய்து முடித்
தான்.

**7** **கர்த்தர்** நோவாவை நோக்கி: [3]நீயும் உன்
வீட்டார் அனைவரும் பேழைக்குள் பிரவே
சியுங்கள்; இந்தச் சந்ததியில் உன்னை எனக்கு
2 முன்பாக நீதிமானாகக் கண்டேன். பூமியின்
மீதெங்கும் வித்தை உயிரோடே காக்கும்பொ
ருட்டு, நீ [4]சுத்தமான சகல மிருகங்களிலும்,
ஆணும் பெண்ணுமாக எவ்வேழு ஜோடும், சுத்
தமல்லாத மிருகங்களில் ஆணும் பெண்ணு
3 மாக ஒவ்வொரு ஜோடும், ஆகாயத்துப் பற
வைகளிலும், சேவலும் பேடுமாக எவ்வேழு
ஜோடும் உன்னிடத்தில் சேர்த்துக்கொள்.
4 இன்னும் ஏழுநாள் சென்றபின்பு, நாற்பது
நாள் இரவும் பகலும் பூமியின்மேல் மழை
யை வருஷிக்கப்பண்ணி, நான் உண்டாக்கின
ஜீவஜந்துக்கள் அனைத்தையும் பூமியின்மேல்
இராதபடிக்கு நிக்கிரகம்பண்ணுவேன் என்
5 றார். நோவா தனக்குக் **கர்த்தர்** கட்டளை
யிட்டபடியெல்லாம் செய்தான்.
6 ஜலப்பிரளயம் பூமியின்மேல் உண்டான
போது, நோவா அறுநூறு வயதாயிருந்தான்.
7 ஜலப்பிரளயத்துக்குத் தப்பும்படி நோவாவும்
அவனுடனேகூட அவன் குமாரரும், அவன்
மனைவியும், அவன் குமாரரின் மனைவிகளும்

பேழைக்குள் பிரவேசித்தார்கள். தேவன் 8
நோவாவுக்குக் கட்டளையிட்டபடியே, சுத்த
மான மிருகங்களிலும் சுத்தமல்லாத மிருகங்
களிலும், பூமியின்மேல் ஊரும் பிராணிகள்
எல்லாவற்றிலும், ஆணும் பெண்ணும் ஜோடு 9
ஜோடாக நோவாவிடத்தில் பேழைக்குட்பட்
டன. ஏழுநாள் சென்றபின்பு பூமியின்மேல் 10
ஜலப்பிரளயம் உண்டாயிற்று. நோவாவுக்கு 11
அறுநூறாம் வயதாகும் வருஷம் இரண்டாம்
மாதம் பதினேழாம் தேதியாகிய அந்நாளிலே,
[5]மகா ஆழத்தின் ஊற்றுக்கண்களெல்லாம்
†பிளந்தன; வானத்தின் மதகுகளும் திறவுண்
டன. நாற்பதுநாள் இரவும் பகலும் பூமி 12
யின்மேல் பெருமழை பெய்தது. அன்றைத் 13
தினமே [6]நோவாவும், நோவாவின் குமாரரா
கிய சேமும் காமும் யாப்பேத்தும், அவர்க
ளுடனேகூட நோவாவின் மனைவியும், அவன்
குமாரரின் மூன்று மனைவிகளும், பேழைக்
குள் பிரவேசித்தார்கள். அவர்களோடு ஜாதி 14
ஜாதியான சகலவிதக் காட்டு மிருகங்களும்,
ஜாதிஜாதியான சகலவித நாட்டு மிருகங்க
ளும், பூமியின்மேல் ஊருகிற ஜாதிஜாதியான
சகலவித ஊரும் பிராணிகளும், ஜாதிஜாதி
யான சகலவிதப் பறவைகளும், பலவிதமான
சிறகுகளுள்ள சகலவிதப் பட்சிகளும் பிரவே
சித்தன. இப்படியே ஜீவசுவாசமுள்ள மாம்ச 15
ஜந்துக்களெல்லாம் ஜோடுஜோடாக நோவா
விடத்தில் பேழைக்குள் பிரவேசித்தன. தே 16
வன் அவனுக்குக் கட்டளையிட்டபடியே,
[7]ஆணும் பெண்ணுமாக சகலவித மாம்ச ஜந்
துக்களும் உள்ளே பிரவேசித்தன; அப்பொ
ழுது **கர்த்தர்** அவனை உள்ளே விட்டுக் கதவை
அடைத்தார். ஜலப்பிரளயம் நாற்பதுநாள் பூமி 17
யின்மேல் உண்டானபோது, ஜலம் பெருகி,
பேழையைக் கிளம்பப்பண்ணிற்று; அது
பூமிக்குமேல் மிதந்தது. ஜலம் பெருவெள்ள 18
மாகி, பூமியின்மேல் மிகவும் பெருகிற்று;
பேழையானது ஜலத்தின்மேல் மிதந்துகொண்
டிருந்தது. ஜலம் பூமியின்மேல் மிகவும் அதி 19
கமாய்ப் பெருகினதினால், [8]வானத்தின்கீழ்
எங்குமுள்ள உயர்ந்த மலைகளெல்லாம் மூடப்
பட்டன. மூடப்பட்ட மலைகளுக்கு மேலா 20
ய்ப் பதினைந்துமுழ உயரத்திற்கு ஜலம் பெரு
கிற்று. [9]அப்பொழுது மாம்ச ஜந்துக்களாகிய 21
பறவைகளும், நாட்டு மிருகங்களும், காட்டு
மிருகங்களும், பூமியின்மேல் ஊரும் பிராணி
கள் யாவும், எல்லா நரஜீவன்களும், பூமியின்
மேல் சஞ்சரிக்கிறவைகள் யாவும் மாண்டன.
வெட்டாந்தரையில் உண்டான எல்லாவற்றி 22
லும் [10]நாசியிலே ஜீவசுவாசமுள்ளவைகள் எல்
லாம் மாண்டுபோயின. [11]மனுஷர் முதல், 23
மிருகங்கள், ஊரும் பிராணிகள், ஆகாயத்துப்
பறவைகள் பரியந்தமும், பூமியின்மேல் இரு
ந்த உயிருள்ள வஸ்துக்கள் யாவும் அழிந்து,
அவைகள் பூமியில் இராதபடிக்கு நிக்கிரக
மாயின; நோவாவும் அவனோடே பேழையி
லிருந்த உயிர்களும் மாத்திரம் காக்கப்பட்டன.

* பலகணியை.
[1] 2 பே. 2. 5
[2] எபி. 11. 7
[3] மத். 24. 38. எபி. 11. 7. 1 பே. 3. 20. 2 பே. 2. 5, 9
[4] லேவி. 11. அதி. லேவி. 10. 10
[5] ஆதி. 8. 2. எசே. 26. 19
† பொங்கின.
[6] ஆதி. 6. 18. எபி. 11. 7
[7] சங். 46. 2
[8] சங். 104. 6. எரே. 3. 23
[9] யோபு 22. 16. லூ. 17. 27. 2 பே. 3. 6
[10] ஆதி. 2. 7
[11] எசே. 14. 20. மல்கி. 3. 17, 18. 1 பே. 3. 20. 2 பே. 2. 5; 3. 6

24 ஜலம் பூமியின்மேல் நூற்றைம்பதுநாள் மிக
வும் பிரவாகித்துக்கொண்டிருந்தது.

**8** தேவன் [1]நோவாவையும், அவனுடனே பே
ழையிலிருந்த சகல காட்டு மிருகங்களையும்,
சகல நாட்டு மிருகங்களையும் நினைத்தருளி
னார்; தேவன் பூமியின்மேல் [2]காற்றை வீசப்
பண்ணினார், அப்பொழுது ஜலம் அமர்ந்தது.
2 [3]ஆழத்தின் ஊற்றுக்கண்களும், வானத்தின்
மதகுகளும் அடைபட்டன; வானத்து மழை
3 யும் நின்றுபோயிற்று. ஜலம் பூமியிலிருந்து
நாளுக்குநாள் வற்றிக்கொண்டே வந்தது; நூற்
றைம்பது நாளுக்குப் பின்பு ஜலம் வடிந்தது.
4 ஏழாம்மாதம் பதினேழாம் தேதியிலே பேழை
அாராத் என்னும் மலைகளின்மேல் தங்கிற்று.
5 பத்தாம்மாதம் மட்டும் ஜலம் வடிந்துகொண்
டே வந்தது; பத்தாம்மாதம் முதல் தேதியிலே
6 மலைச்சிகரங்கள் காணப்பட்டன. நாற்பது
நாள் சென்றபின், நோவா தான் பேழையில்
7 செய்திருந்த ஜன்னலைத் திறந்து, ஒரு காக
த்தை வெளியே விட்டான்; அது புறப்பட்டுப்
பூமியின்மேல் இருந்த ஜலம் வற்றிப்போகும்
வரைக்கும் போகிறதும் வருகிறதுமாய் இருந்
8 தது. பின்பு பூமியின்மேல் ஜலம் *குறைந்து
போயிற்றோ என்று அறியும்படி, ஒரு புறா
வைத் தன்னிடத்திலிருந்து வெளியே விட்
9 டான். பூமியின்மீதெங்கும் ஜலம் இருந்த
படியால், அந்தப் புறா தன் உள்ளங்கால்
வைத்து இளைப்பாற இடம் காணாமல், திரும்
பிப் பேழையிலே அவனிடத்தில் வந்தது,
அவன் தன் கையை நீட்டி அதைப் பிடித்துத்
தன்னிடமாகப் பேழைக்குள் சேர்த்துக்கொ
10 ண்டான். பின்னும் ஏழுநாள் பொறுத்து,
மறுபடியும் புறாவைப் பேழையிலிருந்து வெ
11 ளியே விட்டான். அந்தப் புறா சாயங்காலத்
தில் அவனிடத்தில் வந்து சேர்ந்தது; இதோ
அது கொத்திக்கொண்டு வந்த ஒரு ஒலிவமரத்
தின் இலை அதின் வாயில் இருந்தது; அதி
னாலே நோவா பூமியின்மேல் ஜலம் குறைந்து
12 போயிற்று என்று அறிந்தான். பின்னும் ஏழு
நாள் பொறுத்து, அவன் புறாவை வெளியே
விட்டான்; அது அவனிடத்திற்குத் திரும்பி
13 வரவில்லை. அவனுக்கு அறுநூற்றொரு வய
தாகும் வருஷத்தில், முதல்மாதம் முதல் தேதி
யிலே பூமியின்மேல் இருந்த ஜலம் வற்றிப்
போயிற்று; நோவா பேழையின் மேல்தட்டை
எடுத்துப்பார்த்தான்; பூமியின்மேல் ஜலம் இல்
14 லாதிருந்தது. இரண்டாம்மாதம் இருபத்தே
ழாம் தேதியிலே பூமி காய்ந்திருந்தது.
15 அப்பொழுது தேவன் நோவாவை நோக்கி:
16 நீயும், [4]உன்னோடேகூட உன் மனைவியும்,
உன் குமாரரும், உன் குமாரரின் மனைவிக
17 ளும் பேழையை விட்டுப் புறப்படுங்கள். உன்
னிடத்தில் இருக்கிற [5]சகலவித மாம்ச ஜந்துக்
களாகிய பறவைகளையும், மிருகங்களையும்,
பூமியின்மேல் ஊருகிற சகல பிராணிகளை
யும் உன்னோடே வெளியே வரவிடு; அவை
கள் பூமியிலே திரளாய் வர்த்தித்து, [6]பூமி
யின்மேல் பலுகிப் பெருகக்கடவது என்றார்.
அப்பொழுது நோவாவும், அவன் குமாரரும், 18
அவன் மனைவியும், அவன் குமாரரின் மனைவி
களும் புறப்பட்டு வந்தார்கள். பூமியின்மேல் 19
நடமாடுகிற சகல மிருகங்களும், ஊருகிற
சகல பிராணிகளும், சகல பறவைகளும் ஜாதி
ஜாதியாய்ப் பேழையிலிருந்து புறப்பட்டுவந்
தன. அப்பொழுது நோவா **கர்த்தருக்கு** ஒரு 20
பலிபீடம் கட்டி, [7]சுத்தமான சகல மிருகங்க
ளிலும், சுத்தமான சகல பறவைகளிலும் சில
வற்றைத் தெரிந்துகொண்டு, அவைகளைப்
பலிபீடத்தின்மேல் தகனபலிகளாகப் பலி
யிட்டான். [8]சுகந்தவாசனையைக் **கர்த்தர்** முக 21
ர்ந்தார். அப்பொழுது **கர்த்தர்**: இனி நான்
மனுஷன் நிமித்தம் பூமியைச் சபிப்பதில்லை;
மனுஷனுடைய [9]இருதயத்தின் நினைவுகள்
அவன் சிறுவயது தொடங்கி பொல்லாததாயி
ருக்கிறது; நான் இப்பொழுது செய்தது
போல, இனி சகல ஜீவன்களையும் சங்கரிப்ப
தில்லை. [10]பூமியுள்ள நாளளவும் விதைப்பும் 22
அறுப்பும், சீதளமும் உஷ்ணமும், கோடை
காலமும் மாரிகாலமும், பகலும் இரவும் ஒழி
வதில்லை என்று தம்முடைய உள்ளத்தில்
சொன்னார். பின்பு தேவன் நோவாவையும், **9**
அவன் குமாரரையும் ஆசீர்வதித்து: [11]நீங்கள்
பலுகிப் பெருகி, பூமியை நிரப்புங்கள். [12]உங் 2
களைப்பற்றிய பயமும் அச்சமும் பூமியிலுள்ள
சகல மிருகங்களுக்கும், ஆகாயத்திலுள்ள சகல
பறவைகளுக்கும் உண்டாயிருக்கும்; பூமியிலே
நடமாடுகிற யாவும், சமுத்திரத்தின் மச்சங்
கள் யாவும், உங்களுக்குக் கையளிக்கப்பட்
டன. [13]நடமாடுகிற ஜீவஜந்துக்கள் யாவும், 3
உங்களுக்கு ஆகாரமாய் இருப்பதாக; [14]பசும்
பூண்டுகளை உங்களுக்குத் தந்தது போல,
அவைகள் எல்லாவற்றையும் உங்களுக்குத் தந்
தேன். [15]மாம்சத்தை அதின் உயிராகிய இரத் 4
தத்தோடே புசிக்கவேண்டாம். உங்களுக்கு 5
உயிராயிருக்கிற உங்கள் இரத்தத்திற்காகப்
பழிவாங்குவேன்; [16]சகல ஜீவஜந்துக்களிடத்
திலும் [17]மனுஷனிடத்திலும் பழிவாங்கு
வேன்; மனுஷனுடைய உயிருக்காக அவ
னவன் சகோதரனிடத்தில் பழிவாங்குவேன்.
மனுஷன் தேவசாயலில் உண்டாக்கப்பட்ட 6
படியால், மனுஷனுடைய இரத்தத்தை எவன்
சிந்துகிறானோ, அவனுடைய இரத்தம் மனு
ஷனாலே சிந்தப்படக்கடவது. நீங்கள் பலு 7
கிப் பெருகி, பூமியிலே திரளாய் வர்த்தித்து
விர்த்தியாகுங்கள் என்றார்.
பின்னும் தேவன் நோவாவையும், அவன் 8
குமாரரையும் நோக்கி: நான் [18]உங்களோடும், 9
உங்களுக்குப் பின்வரும் உங்கள் சந்ததியோ
டும், உங்களோடே [19]பேழையிலிருந்து புறப் 10
பட்ட சகல ஜீவஜந்துக்கள் முதல் இனிப்
பூமியில் உண்டாகப்போகிற சகல ஜீவஜந்
துக்கள் பரியந்தம், பறவைகளோடும், நாட்டு
மிருகங்களோடும், உங்களிடத்தில் இருக்கிற
பூமியிலுள்ள சகல காட்டு மிருகங்களோடும்

[1] ஆதி. 19. 29. யாத். 2. 24. 1 சாமு. 1. 19. சங். 106. 4, 5
[2] யாத். 14. 21
[3] ஆதி. 7. 11
* வடிந்து.
[4] ஆதி. 7. 13
[5] ஆதி. 7. 15
[6] ஆதி. 1. 22
[7] லேவி. 11. அதி.
[8] லேவி. 1. 9. எசே. 20. 41. 2 கொ. 2. 15. எபே. 5. 2
[9] போபு 14. 4. எரே. 17. 9. மத். 15. 19. ரோ. 1. 21
[10] ஏசா. 54, 9. எரே. 33. 20, 25
[11] ஆதி. 1. 28; 8. 17; 10. 32
[12] சங். 8. 6. ஓசி. 2. 18. யாக். 3. 7
[13] உபா. 12. 15; 14. 4. ஓ. அப். 10. 12, 14
[14] ரோ. 14. 14, 20. 1 கொ. 10. 28, 26. 1 தீமோ. 4. 3, 4
[15] லேவி. 17. 10–14; 19. 26. உபா. 12. 23. 1 சாமு. 14. 33. அப். 15. 20, 29
[16] யாத். 21. 28. சங். 9. 12
[17] யாத். 21. 12, 14. லேவி. 24. 17. மத். 26. 52. வெளி. 13. 10
[18] ஆதி. 6. 18
[19] ஏசா. 54. 9

என் உடன்படிக்கையை ஏற்படுத்துகிறேன்.
11 இனி மாம்சமானவைகளெல்லாம் ஜலப்பிர
ளயத்தினுல் சங்கரிக்கப்படுவதில்லையென்றும்,
பூமியை அழிக்க இனி ஜலப்பிரளயம் உண்டா
வதில்லையென்றும், உங்களோடே என் உடன்
படிக்கையை ஏற்படுத்துகிறேன் என்ருர்.
12 அன்றியும் தேவன்: [1]எனக்கும் உங்களுக்கும்,
உங்களிடத்தில் இருக்கும் சகல ஜீவஜந்துக்
களுக்கும், நித்திய தலைமுறைகளுக்கென்று
நான் செய்கிற உடன்படிக்கையின் அடை
13 யாளமாக: நான் [2]என் வில்லை மேகத்தில்
வைத்தேன்; அது எனக்கும் பூமிக்கும் உண்
டான உடன்படிக்கைக்கு அடையாளமாயி
14 ருக்கும். நான் பூமிக்கு மேலாய் மேகத்தை
வருவிக்கும்போது, அந்த வில் மேகத்தில்
15 தோன்றும். அப்பொழுது எல்லா மாம்ச
ஜீவன்களையும் அழிக்க இனி ஜலமானது பிர
ளயமாய்ப் பெருகாதபடிக்கு எனக்கும் உங்
களுக்கும் மாம்சமான சகல ஜீவஜந்துக்களுக்
கும் உண்டான [3]என் உடன்படிக்கையை
16 நினைவுகூருவேன். அந்த வில் மேகத்தில்
தோன்றும்போது, தேவனுக்கும் பூமியின்மே
லுள்ள சகலவித மாம்சஜீவன்களுக்கும் உண்
டான [4]நித்திய உடன்படிக்கையை நான் நினை
வுகூரும்படிக்கு அதை நோக்கிப் பார்ப்பேன்.
17 இது எனக்கும், பூமியின்மேலுள்ள மாம்ச
மான யாவுக்கும், நான் ஏற்படுத்தின உடன்
படிக்கையின் அடையாளம் என்று நோவா
வோடே சொன்னர்.
18 பேழையிலிருந்து புறப்பட்ட நோவாவின்
குமாரர், [5]சேம் காம் யாப்பேத் என்பவர்களே.
19 காம் கானுனுக்குத் தகப்பன். இம்மூவரும்
[6]நோவாவின் குமாரர்; இவர்களாலே பூமி
யெங்கும் ஜனங்கள் பரம்பினர்கள்.
20 நோவா [7]பயிரிடுகிறவனுகி, திராட்சத்தோட்
21 டத்தை நாட்டினுன். அவன் திராட்சரசத்
தைக் குடித்து, [8]வெறிகொண்டு, தன் கூடா
ரத்தில் வஸ்திரம் விலகிப் படுத்திருந்தான்.
22 அப்பொழுது கானுனுக்குத் தகப்பனுகிய காம்
தன் தகப்பனுடைய நிர்வாணத்தைக் கண்டு,
வெளியில் இருந்த தன் சகோதரர் இருவருக்
23 கும் அறிவித்தான். அப்பொழுது [9]சேமும்
யாப்பேத்தும் ஒரு வஸ்திரத்தை எடுத்துத் தங்
கள் இருவருடைய தோள்மேலும் போட்டுக்
கொண்டு, பின்னிட்டு வந்து, தங்கள் தகப்
பனுடைய நிர்வாணத்தை மூடினர்கள்; அவர்
கள் எதிர்முகமாய்ப் போகாதபடியினுல், தங்
கள் தகப்பனுடைய நிர்வாணத்தைக் காண
24 வில்லை. நோவா திராட்சரசத்தின் வெறி
தெளிந்து விழித்தபோது, தன் இளைய குமா
25 ரன் தனக்குச் செய்ததை அறிந்து: [10]கானுன்
சபிக்கப்பட்டவன், தன் சகோதரரிடத்தில்
அடிமைகளுக்கு அடிமையாயிருப்பான் என்
26 ருன். சேமுடைய தேவனுகிய **கர்த்தருக்கு**
[11]ஸ்தோத்திரம் உண்டாவதாக; கானுன் அவ
27 னுக்கு அடிமையாயிருப்பான். யாப்பேத்தை
தேவன் விர்த்தியாக்குவார்; [12]அவன் சேமு
டைய கூடாரங்களில் குடியிருப்பான்; கானுன்
அவனுக்கு அடிமையாயிருப்பான் என்ருன்.
ஜலப்பிரளயத்துக்குப் பின்பு நோவா முந் 28
நூற்று ஐம்பது வருஷம் உயிரோடிருந்தான்.
நோவாவின் நாட்களெல்லாம் தொளாயிரத்து 29
ஐம்பது வருஷம்; அவன் மரித்தான்.

நோவாவின் [13]குமாரராகிய சேம் காம் **10**
யாப்பேத் என்பவர்களின் வம்சவரலாறு:
ஜலப்பிரளயத்துக்குப் பின்பு அவர்களுக்குக்
குமாரர் பிறந்தார்கள். யாப்பேத்தின் குமா 2
ரர், [14]கோமர், மாகோகு, மாதாய், யாவான்,
தூபால், மேசேக்கு, தீராஸ் என்பவர்கள்.
கோமரின் குமாரர், அஸ்கினஸ், ரீப்பாத்து, 3
தொகர்மா என்பவர்கள். யாவானின் குமா 4
ரர், எலீசா, தர்ஷீஸ், கித்தீம், தொதானீம்
என்பவர்கள். இவர்களால் [15]ஜாதிகளுடைய 5
தீவுகள், அவனவன் பாஷையின்படியேயும்,
அவரவர்கள் கோத்திரத்தின்படியேயும், ஜாதி
யின்படியேயும், வேறுவேறு தேசங்களாய்ப்
பகுக்கப்பட்டன.

காமுடைய குமாரர், கூஷ், மிஸ்ராயீம், 6
பூத், கானுன் என்பவர்கள். கூஷுடைய 7
குமாரர், சேபா, ஆவிலா, சப்தா, ராமா, சப்
திகா என்பவர்கள். ராமாவின் குமாரர்,
சேபா, திதான் என்பவர்கள். கூஷ் நிம்ரோ 8
தைப் பெற்ருன்; இவன் பூமியிலே பராக்கி
ரமசாலியானுன். இவன் [16]**கர்த்தருக்கு** முன் 9
பாகப் பலத்த வேட்டைக்காரனுயிருந்தான்;
ஆகையால், **கர்த்தருக்கு** முன்பாகப் பலத்த
வேட்டைக்காரனுன நிம்ரோதைப்போல என்
னும் வழக்கச்சொல் உண்டாயிற்று. சிநெ 10
யார் தேசத்திலுள்ள *பாபேல், ஏரேக், அக்
காத், கல்னே என்னும் இடங்கள் அவன்
ஆண்ட ராஜ்யத்திற்கு [17]ஆதிஸ்தானங்கள்.
அந்தத் தேசத்திலிருந்து அசூர் புறப்பட்டுப் 11
போய், நினிவேயையும், ரெகொபோத் பட்
டணத்தையும், காலாகையும், நினிவேக்கும் 12
காலாகுக்கும் நடுவாக ரெசேனையும் கட்டி
னுன்; இது பெரிய பட்டணம். மிஸ்ராயீம், 13
லூதீமையும், அனாமீமையும், லெகாபீமையும்,
நப்தூகீமையும், பத்ருசீமையும், [18]பெலிஸ்த 14
ரின் சந்ததிக்குத் தலைவனுகிய கஸ்லூகீமை
யும், கப்தொரீமையும் பெற்ருன்.

கானுன் தன் மூத்த மகனுகிய சீதோனை 15
யும், கேத்தையும், எபூசியனையும், எமோரி 16
யனையும், கிர்காசியனையும், ஏவியனையும், 17
அர்கீரியனையும், சீநியனையும், அர்வாதிய 18
னையும், செமாரியனையும், காமாத்தியனையும்
பெற்ருன்; பின்பு கானுனியரின் வம்சத்தார்
எங்கும் பரவினர்கள். கானுனியரின் எல்லை, 19
[19]சீதோன் முதல் கேரார் வழியாய்க் காசாமட்
டுக்கும், அதுமுதல் சோதோம், கொமோரா,
அத்மா, செபோயிம் வழியாய் லாசாமட்டுக்
கும் இருந்தது. இவர்கள் தங்கள் தேசங்களி 20
லும், தங்கள் ஜாதிகளிலுமுள்ள தங்கள் வம்
சங்களின்படியேயும், தங்கள் பாஷைகளின்
படியேயும் காமுடைய சந்ததியார்.

1 ஆதி. 17. 11
2 வெளி. 4. 3
3 யாத். 28. 12. லேவி. 26. 42, 45. எசே. 16. 60
4 ஆதி. 17. 13, 19
5 ஆதி. 10. 6
6 ஆதி. 5. 32; 10. 32
7 ஆதி. 3. 19, 23; 4. 2. சநீ. 12. 11
8 சநீ. 20. 1. 1 கொ. 10. 12
9 யாத். 20. 12. கலா. 6. 1
10 உபா. 27. 16. யோசு. 9. 23
11 சங். 144. 15. எபி. 11. 16
12 எபே. 2. 13, 14; 3. 6
13 ஆதி. 5. 32
14 1 நாளா. 1. 5. ழ
15 சங். 72. 10. எரே. 2. 10. செப். 2. 11
16 எரே. 16. 16. மீகா. 7. 2
* பாபிலோன்.
17 மீகா. 5. 6
18 1 நாளா. 1. 12
19 ஆதி. 13. 12. ழ 15. 18–21. எண். 34. 2–12. யோசு. 12. 7, 8

21 சேமுக்கும் பிள்ளைகள் பிறந்தார்கள்; அவன்
ஏபேருடைய சந்ததியார் எல்லாருக்கும் தகப்
பனும், மூத்தவனாகிய யாப்பேத்துக்குத் தம்
22 பியுமாய் இருந்தான். சேமுடைய குமாரர்,
[1]ஏலாம்; அசூர், அர்பக்சாத், லூத், ஆராம்
23 என்பவர்கள். ஆராமுடைய குமாரர், ஊத்ஸ்,
24 கூல், கேத்தெர், மாஸ் என்பவர்கள். அர்பக்
சாத் சாலாவைப் பெற்றான்; [2]சாலா ஏபே
25 ரைப் பெற்றான். ஏபேருக்கு இரண்டு குமா
ரர் பிறந்தார்கள்; ஒருவனுக்குப் பேலேகு
என்று பேர்; ஏனெனில் அவனுடைய நாட்
களில் பூமி பகுக்கப்பட்டது; அவனுடைய
26 சகோதரன் பேர் யொக்தான். யொக்தான்
அல்மோதாதையும், சாலேப்பையும், அசர்மா
27 வேத்தையும், யேராகையும், அதோராமை
28 யும், ஊசாலையும், திக்லாவையும், ஓபாலே
29 யும், அபிமாவேலையும், சேபாவையும், ஓப்
பீரையும், ஆவிலாவையும், யோபாபையும்
பெற்றான்; இவர்கள் அனைவரும் யொக்தா
30 னுடைய குமாரர். இவர்களுடைய குடியி
ருப்பு மேசா துவக்கி, கிழக்கேயுள்ள மலையா
கிய செப்பாருக்குப் போகிற வழிமட்டும்
31 இருந்தது. இவர்களே தங்கள் தேசங்களி
லும், தங்கள் ஜாதிகளிலுமுள்ள தங்கள் வம்
சங்களின்படியேயும், தங்கள் பாஷைகளின்
32 படியேயும் சேமுடைய சந்ததியார். தங்கள்
ஜாதிகளிலுள்ள [3]தங்களுடைய சந்ததிகளின்
படியே நோவாவுடைய குமாரரின் வம்சங்
கள் இவைகளே; ஜலப்பிரளயத்துக்குப் பின்பு
இவர்களால் பூமியிலே ஜாதிகள் பிரிந்தன.

11 பூமியெங்கும் ஒரே பாஷையும், ஒரேவித
2 மான பேச்சும் இருந்தது. ஜனங்கள் கிழக்
கேயிருந்து பிரயாணம்பண்ணுகையில், சிநெ
யார் தேசத்திலே சமபூமியைக் கண்டு, அங்
3 கே குடியிருந்தார்கள். அப்பொழுது அவர்
கள்: நாம் செங்கல் அறுத்து, அதை நன்றா
ய்ச் சுடுவோம் வாருங்கள் என்று ஒருவரோ
டொருவர் பேசிக்கொண்டார்கள்; கல்லுக்
குப் பதிலாக செங்கலும், சாந்துக்குப் பதி
லாக நிலக்கீலும் அவர்களுக்கு இருந்தது.
4 பின்னும் அவர்கள்: நாம் பூமியின்மீதெங்கும்
சிதறிப்போகாதபடிக்கு, நமக்கு ஒரு நகரத்
தையும், [4]வானத்தை அளாவும் சிகரமுள்ள
ஒரு கோபுரத்தையும் கட்டி, நமக்குப் பேர்
உண்டாகப் பண்ணுவோம் வாருங்கள் என்று
5 சொல்லிக்கொண்டார்கள். மனுபுத்திரர் [5]கட்
டுகிற நகரத்தையும் கோபுரத்தையும் பார்க்கிற
6 தற்குக் **கர்த்தர்** இறங்கினார். அப்பொழுது
**கர்த்தர்**: இதோ, [6]ஜனங்கள் ஒரே கூட்ட
மாய் இருக்கிறார்கள்; அவர்கள் அனைவருக்
கும் ஒரே பாஷையும் இருக்கிறது; அவர்கள்
இதைச் செய்யத் தொடங்கினார்கள்; இப்பொ
ழுதும் தாங்கள் செய்ய நினைத்தது ஒன்றும்
தடைபடமாட்டாது என்று இருக்கிறார்கள்.
7 நாம் இறங்கிப்போய், [7]ஒருவர் பேசுவதை
மற்றொருவர் அறியாதபடிக்கு, அங்கே அவர்
கள் பாஷையைத் தாறுமாறாக்குவோம் என்

றார். அப்படியே **கர்த்தர்** அவர்களை அவ் 8
விடத்திலிருந்து பூமியின்மீதெங்கும் [8]சிதறிப்
போகப்பண்ணினார்; அப்பொழுது நகரம் கட்
டுகிறதை விட்டுவிட்டார்கள். பூமியெங்கும் 9
வழங்கின பாஷையைக் **கர்த்தர்** அவ்விடத்
தில் [9]தாறுமாறாக்கினபடியால், அதின் பேர்
*பாபேல் என்னப்பட்டது; **கர்த்தர்** அவர்
களை அவ்விடத்திலிருந்து பூமியின்மீதெங்
கும் சிதறிப்போகப்பண்ணினார்.

சேமுடைய [10]வம்சவரலாறு: ஜலப்பிரளயம் 10
உண்டாய் இரண்டு வருஷத்திற்குப் பின்பு,
சேம் நூறுவயதானபோது, அர்பக்சாத்தைப்
பெற்றான். சேம் அர்பக்சாத்தைப் பெற்ற 11
பின் ஐந்நூறு வருஷம் உயிரோடிருந்து, குமா
ரரையும் குமாரத்திகளையும் பெற்றான். அர் 12
பக்சாத் முப்பத்தைந்து வயதானபோது சாலா
வைப் பெற்றான். சாலாவைப் பெற்றபின் 13
அர்பக்சாத் நானூற்று மூன்று வருஷம் உயி
ரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளை
யும் பெற்றான். சாலா முப்பது வயதான 14
போது, ஏபேரைப் பெற்றான். ஏபேரைப் 15
பெற்றபின் சாலா நானூற்று மூன்று வருஷம்
உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளை
யும் பெற்றான். ஏபேர் முப்பத்துநாலு வயதா 16
னபோது, [11]பேலேகைப் பெற்றான். பேலே 17
கைப் பெற்றபின் ஏபேர் நானூற்று முப்பது
வருஷம் உயிரோடிருந்து; குமாரரையும் குமா
ரத்திகளையும் பெற்றான். பேலேகு முப்பது 18
வயதானபோது, ரெகூவைப் பெற்றான்.
ரெகூவைப் பெற்றபின் பேலேகு இருநூற் 19
றொன்பது வருஷம் உயிரோடிருந்து, குமார
ரையும் குமாரத்திகளையும் பெற்றான். ரெகூ 20
முப்பத்திரண்டு வயதானபோது, செரூகைப்
பெற்றான். செரூகைப் பெற்றபின் ரெகூ 21
இருநூற்றேழு வருஷம் உயிரோடிருந்து,
குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.
செரூகு முப்பது வயதானபோது, நாகோ 22
ரைப் பெற்றான். நாகோரைப் பெற்றபின் 23
செரூகு இருநூறு வருஷம் உயிரோடிருந்து,
குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.
நாகோர் இருபத்தொன்பது வயதானபோது, 24
தேராகைப் பெற்றான். தேராகைப் பெற்ற 25
பின் நாகோர் நூற்றுப்பத்தொன்பது வருஷம்
உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளை
யும் பெற்றான். தேராகு எழுபது வயதான 26
போது, ஆபிராம், நாகோர், ஆரான் என்பவர்
களைப் பெற்றான்.

தேராகுடைய வம்சவரலாறு: தேராகு †ஆபி 27
ராம், நாகோர், ஆரான் என்பவர்களைப் பெற்
றான்; ஆரான் லோத்தைப் பெற்றான். ஆரான் 28
தன் ஜந்மபூமியாகிய ஊர் என்கிற கல்தேயர்
தேசத்துப் பட்டணத்திலே தன் தகப்பனா
கிய தேராகு மரிக்குமுன்னே மரித்தான். ஆபி 29
ராமும் நாகோரும் தங்களுக்குப் பெண் கொண்
டார்கள்; ஆபிராமுடைய மனைவிக்குச் ‡சாராய்
என்று பேர்; நாகோருடைய மனைவிக்கு மில்க்
காள் என்று பேர்; இவள் ஆரானுடைய குமா

[1] 1 நாளா. 1. 17.
[2] ஆதி. 11. 12
[3] ஆதி. 9. 19
[4] உபா. 1. 28
[5] ஆதி. 18. 21
[6] ஆதி. 9. 19. அப். 17. 26. சங். 2. 1
[7] ஆதி. 42. 23. சங். 55. 9. எரே. 5. 15. அப். 2. 4-6. 1 கொ. 14. 2, 11
[8] லூக். 1. 51
[9] 1 கொ. 14. 2, 3
* தாறுமாறு.
[10] ஆதி. 10. 22. 1 நாளா. 1. 17
[11] 1 நாளா. 1. 19
† [illegible]
‡ என் நாயகி. ஆதி. 17. 15. 20. 12. 22. 20

ரத்தி; அந்த ஆரான் மில்க்காளுக்கும் இஸ்கா
30 ளுக்கும் தகப்பன். சாராய்க்குப் [1]பிள்ளை
31 யில்லை; மலடியாயிருந்தாள். தேராகு [2]தன்
குமாரனாகிய ஆபிராமையும், ஆரானுடைய
குமாரனும் தன் பேரனுமாயிருந்த லோத்தை
யும், தன் குமாரன் ஆபிராமுடைய மனைவியா
கிய தன் மருமகள் சாராயையும் அழைத்துக்
கொண்டு, அவர்களுடனே [3]ஊர் என்கிற கல்
தேயருடைய பட்டணத்தை விட்டு, கானான்
தேசத்துக்குப் போகப் புறப்பட்டான்; அவர்
கள் *ஆரான்மட்டும் வந்தபோது, அங்கே
32 இருந்துவிட்டார்கள். தேராகுடைய ஆயுசு
நாட்கள் இருநூற்றைந்து வருஷம்; தேராகு
ஆரானிலே மரித்தான்.

12 கர்த்தர் ஆபிராமை நோக்கி: [4]நீ உன் தேசத்
தையும், உன் இனத்தையும், உன் தகப்பனு
டைய வீட்டையும் விட்டுப் புறப்பட்டு, நான்
உனக்குக் காண்பிக்கும் தேசத்துக்குப் போ.
2 நான் உன்னைப் [5]பெரிய ஜாதியாக்கி, உன்னை
ஆசீர்வதித்து, உன் பேரைப் பெருமைப்படுத்
துவேன்; நீ ஆசீர்வாதமாய் இருப்பாய்.
3 உன்னை [6]ஆசீர்வதிக்கிறவர்களை ஆசீர்வதிப்
பேன், உன்னைச் சபிக்கிறவனைச் சபிப்பேன்;
பூமியிலுள்ள வம்சங்களெல்லாம் உனக்குள்
4 ஆசீர்வதிக்கப்படும் என்றார். கர்த்தர் ஆபி
ராமுக்குச் சொன்னபடியே அவன் புறப்பட்
டுப் போனான்; லோத்தும் அவனோடேகூ
டப் போனான். ஆபிராம் ஆரானை விட்டுப்
புறப்பட்டபோது, எழுபத்தைந்து வயதுள்ள
5 வனாயிருந்தான். ஆபிராம் தன் மனைவியா
கிய சாராயையும், தன் சகோதரனுடைய குமா
ரனாகிய லோத்தையும், தாங்கள் சம்பாதித்தி
ருந்த தங்கள் சம்பத்தெல்லாவற்றையும், [7]ஆரா
னிலே சவதரித்த ஜனங்களையும் கூட்டிக்கொ
ண்டு, அவர்கள் கானான் தேசத்துக்குப் புறப்
பட்டுப்போய், கானான் தேசத்தில் சேர்ந்தார்
6 கள். ஆபிராம் அந்தத் தேசத்தில் சுற்றித்
திரிந்து [8]சீகேம் என்னும் இடத்துக்குச் சமீப
மான [9]மோரே என்னும் சமபூமிமட்டும் வந்
தான்; அக்காலத்திலே [10]கானானியர் அத்தே
7 சத்தில் இருந்தார்கள். கர்த்தர் [11]ஆபிராமுக்
குத் தரிசனமாகி: உன் சந்ததிக்கு இந்தத் தே
சத்தைக் கொடுப்பேன் என்றார். அப்பொ
ழுது அவன் தனக்குத் தரிசனமான கர்த்த
ருக்கு அங்கே ஒரு பலிபீடத்தைக் கட்டினான்.
8 பின்பு அவன் அவ்விடம் விட்டுப் பெயர்ந்து,
பெத்தேலுக்குக் கிழக்கே இருக்கும் மலைக்குப்
போய், பெத்தேல் தனக்கு மேற்காகவும் ஆயி
கிழக்காகவும் இருக்கக் கூடாரம் போட்டு,
அங்கே கர்த்தருக்கு ஒரு பலிபீடத்தைக் கட்டி,
கர்த்தருடைய [12]நாமத்தைத் தொழுதுகொண்
9 டான். அதின்பின் ஆபிராம் புறப்பட்டு, தெற்
கே பிரயாணம் பண்ணிக்கொண்டு போனான்.
10 அத்தேசத்திலே [13]பஞ்சம் உண்டாயிற்று;
தேசத்திலே பஞ்சம் கொடிதாயிருந்தபடியால்,
ஆபிராம் எகிப்து தேசத்திலே தங்கும்படி அவ்
11 விடத்துக்குப் போனான். அவன் எகிப்துக்
குச் சமீபமாய் வந்தபோது, தன் மனைவி சாரா
யைப் பார்த்து: [14]நீ பார்வைக்கு அழகுள்ள
ஸ்திரீ என்று அறிவேன். எகிப்தியர் உன் 12
னைக் காணும்போது, இவள் அவனுடைய
மனைவி என்று சொல்லி, என்னைக் கொன்று
போட்டு, உன்னை உயிரோடே வைப்பார்கள்.
ஆகையால், உன்நிமித்தம் எனக்கு நன்மை 13
உண்டாகும்படிக்கும், உன்னாலே என் உயிர்
பிழைக்கும்படிக்கும், [15]நீ உன்னை என் சகோ
தரி என்று சொல் என்றான். ஆபிராம் எகிப் 14
திலே வந்தபோது, எகிப்தியர் அந்த ஸ்திரீயை
[16]மிகுந்த அழகுள்ளவளென்று கண்டார்கள்.
பார்வோனுடைய பிரபுக்களும் அவளைக் 15
கண்டு, பார்வோனுக்கு முன்பாக அவளைப்
புகழ்ந்தார்கள். அப்பொழுது அந்த ஸ்திரீ
பார்வோனுடைய [17]அரமனைக்குக் கொண்டு
போகப்பட்டாள். அவள் நிமித்தம் அவன் 16
ஆபிராமுக்குத் [18]தயை பாராட்டினான்; அவ
னுக்கு ஆடுமாடுகளும், கழுதைகளும், வேலைக்
காரரும், வேலைக்காரிகளும், கோளிகைக் கழு
தைகளும், ஒட்டகங்களும் கிடைத்தது. ஆபி 17
ராமுடைய மனைவியாகிய சாராயின் நிமித்
தம் கர்த்தர் பார்வோனையும், அவன் வீட்டா
ரையும் [19]மகா வாதைகளால் வாதித்தார். அப் 18
பொழுது பார்வோன் ஆபிராமை அழைத்து:
[20]நீ எனக்கு என் இப்படிச் செய்தாய்? இவள்
உன் மனைவியென்று நீ எனக்கு அறிவியாமற்
போனதென்ன? இவளை உன் சகோதரி 19
என்று நீ சொல்லவேண்டுவது என்ன?
இவளை நான் எனக்கு மனைவியாகக் கொண்
டிருப்பேனே; இதோ உன் மனைவி; இவளை
அழைத்துக்கொண்டுபோ என்று சொன்னான்.
பார்வோன் [21]அவனைக்குறித்துத் தன் மனுஷ 20
ருக்குக் கட்டளை கொடுத்தான்; அவர்கள்
அவனையும், அவன் மனைவியையும் அவனுக்கு
உண்டான எல்லாவற்றையும் அனுப்பிவிட்
டார்கள்.

ஆபிராமும், அவன் மனைவியும், அவனுக்கு 13
உண்டான் யாவும், அவனுடனே லோத்தும்,
எகிப்தை விட்டு, [22]தென்திசையில் வந்தார்
கள். ஆபிராம் [23]மிருகஜீவன்களும் வெள்ளி 2
யும் பொன்னுமான ஆஸ்திகளை உடைய சீமா
னாயிருந்தான். அவன் தன் பிரயாணங்க 3
ளிலே [24]தெற்கேயிருந்து பெத்தேல்மட்டும்,
பெத்தேலுக்கும் ஆயீக்கும் நடுவாகத் தான்
முன்பு கூடாரம் போட்டதும், தான் முதல் 4
முதல் ஒரு [25]பலிபீடத்தை உண்டாக்கினது
மான ஸ்தலமட்டும் போனான்; அங்கே ஆபி
ராம் கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொ
ண்டான். ஆபிராமுடனே வந்த லோத்துக் 5
கும் ஆடுமாடுகளும் கூடாரங்களும் இருந்தன.
அவர்கள் ஒருமித்துக் குடியிருக்க [26]அந்தப் பூமி 6
அவர்களைத் தாங்கக்கூடாதிருந்தது; அவர்களு
டைய ஆஸ்தி மிகுதியாயிருந்தபடியால், அவர்
கள் ஒருமித்து வாசம்பண்ண ஏதுவில்லாமற்
போயிற்று. ஆபிராமுடைய மந்தைமேய்ப்ப 7
ருக்கும் லோத்துடைய மந்தைமேய்ப்பருக்கும்

[1] ஆதி. 16. 1, 2: 18. 11, 12.
[2] ஆதி. 12. 1: 15. 7
[3] அப். 7. 4
* அப். 7. 8
[4] ஆதி. 15. 7. நெகே. 9. 7. ஏசா. 41. 2. அப். 7. 3. எபி. 11. 8
[5] ஆதி. 17. 6: 18. 18: 24. 35: 28. 4
[6] அப். 3. 25. கலா. 3. 8-16
[7] ஆதி. 11. 31
[8] எபி. 11. 8, 9
[9] உபா. 11. 30. நியா. 7. 1
[10] ஆதி. 10. 18, 19. 13. 15
[11] ஆதி. 17. 1, 8. சங். 105. 9, 11
[12] ஆதி. 13. 4: 21. 33
[13] ஆதி. 26. 1: 43. 1
[14] ஆதி. 26. 7
[15] ஆதி. 11. 29: 20. 2, 5, 13: 26. 7
[16] அப். 7. 20
[17] ஆதி. 20. 2. சங். 105. 14. நீதி. 6. 29
[18] ஆதி. 20. 14
[19] ஆதி. 20. 18. எபி. 13. 4
[20] ஆதி. 20. 9: 26. 10
[21] நீதி. 21. 3
[22] ஆதி. 12. 9
[23] ஆதி. 24. 35. சங். 112. 3. நீதி. 10. 22
[24] ஆதி. 12. 8, 9
[25] ஆதி. 12. 7, 8. சங். 116. 17
[26] ஆதி. 36. 7

[1]வாக்குவாதம் உண்டாயிற்று. அக்காலத்திலே
காஞனியரும் பெரிசியரும் அத்தேசத்தில்
8 குடியிருந்தார்கள். ஆபிராம் லோத்தை நோ
க்கி: எனக்கும் உனக்கும், என் மேய்ப்பருக்
கும் உன் மேய்ப்பருக்கும் [2]வாக்குவாதம்
9 வேண்டாம்; [3]நாம் சகோதரர். இந்தத் தேச
மெல்லாம் [4]உனக்குமுன் இருக்கிறது அல்
லவா? நீ என்னைவிட்டுப் பிரிந்துபோகலாம்;
நீ இடதுபுறம் போனால், நான் வலதுபுறம்
போகிறேன்; [5]நீ வலதுபுறம் போனால், நான்
10 இடதுபுறம் போகிறேன் என்றான். அப்
பொழுது லோத்து தன் கண்களை ஏறெடுத்
துப் பார்த்து: யோர்தான் நதிக்கு [6]அருகான
சமபூமி முழுவதும் நீர்வளம் பொருந்தினதாயி
ருக்கக் கண்டான். கர்த்தர் சோதோமையும்
கொமோராவையும் அழிக்கும்முன்னே,
சோவாருக்குப் போம் வழிமட்டும் அது கர்த்
தருடைய *தோட்டத்தைப்போலவும் எகிப்து
11 தேசத்தைப்போலவும் இருந்தது: அப்பொ
ழுது லோத்து யோர்தானுக்கு அருகான
சமபூமி முழுவதையும் தெரிந்துகொண்டு,
கிழக்கே பிரயாணப்பட்டுப் போனான்; [7]இப்
படி அவர்கள் ஒருவரை ஒருவர் விட்டுப் பிரிந்
12 தார்கள். ஆபிராம் கானான் தேசத்தில் குடி
யிருந்தான்; லோத்து [8]அந்த யோர்தானுக்கு
அருகான சமபூமியிலுள்ள பட்டணங்களில்
வாசம்பண்ணி, சோதோமுக்கு நேரே கூடா
13 ரம் போட்டான். சோதோமின் [9]ஜனங்கள்
பொல்லாதவர்களும் கர்த்தருக்கு முன்பாக
14 மகா பாவிகளுமாய் இருந்தார்கள். லோத்து
ஆபிராமைவிட்டுப் [10]பிரிந்தபின்பு, கர்த்தர்
ஆபிராமை நோக்கி: உன் கண்களை ஏறெடு
த்து, நீ இருக்கிற இடத்திலிருந்து வடக்கே
யும், தெற்கேயும், கிழக்கேயும், மேற்கேயும்
15 நோக்கிப் பார். நீ பார்க்கிற இந்தப் பூமி முழு
வதையும் நான் [11]உனக்கும் உன் சந்ததிக்கும்
16 என்றைக்கும் இருக்கும்படி கொடுத்து, உன்
[12]சந்ததியைப் பூமியின் தூளைப்போலப் பெரு
கப்பண்ணுவேன்; ஒருவன் பூமியின் தூளை
எண்ணக்கூடுமானால், உன் சந்ததியும் எண்
17 ணப்படும். நீ எழுந்து தேசத்தின் நீளமும்
அகலமும் எம்மட்டோ, அம்மட்டும் நடந்து
திரி; உனக்கு அதைத் தருவேன் என்றார்.
18 அப்பொழுது ஆபிராம் [13]கூடாரத்தைப் பெ
யர்த்துக் கொண்டுபோய், எபிரோனிலிருக்
கும் மம்ரேயின் சமபூமியில் சேர்ந்து குடியி
ருந்து, அங்கே கர்த்தருக்கு ஒரு பலிபீடத்
தைக் கட்டினான்.

**14** சிநெயாரின் ராஜாவாகிய அம்ராப்பே
லும், ஏலாசாரின் ராஜாவாகிய அரியோகும்,
ஏலாமின் ராஜாவாகிய கெதர்லாகோமேரும்,
ஜாதிகளின் ராஜாவாகிய திதியாலும் இருந்த
2 நாட்களில்; அவர்கள் சோதோமின் ராஜா
வாகிய பேராவோடும், கொமோராவின் ராஜா
வாகிய பிர்சாவோடும், [14]அத்மாவின் ராஜாவா
கிய சிநெயாவோடும், செபோயீமின் ராஜாவா
கிய செமேபேரோடும், சோவார் என்னும் பே
லாவின் ராஜாவோடும் யுத்தம்பண்ணினார்கள்.
இவர்களெல்லாரும் [15]உப்புக்கடலாகிய சித் 3
தீம் பள்ளத்தாக்கிலே கூடினார்கள். இவர்கள் 4
பன்னிரண்டு வருஷம் கெதர்லாகோமேரைச்
சேவித்து, பதின்மூன்றாம் வருஷத்திலே கல
கம்பண்ணினார்கள். பதினாலாம் வருஷத் 5
திலே கெதர்லாகோமேரும், அவனோடே
கூடியிருந்த ராஜாக்களும் வந்து, அஸ்தரோத்
கர்னாயீமிலே இருந்த ரெப்பாயீமியரையும்,
காமிலே இருந்த சூசிமியரையும், [16]சாவேகீரி
யத்தாயீமிலே இருந்த ஏமியரையும், சேயீர் 6
மலைகளில் இருந்த [17]ஓரியரையும், வனாந்தரத்
துக்கு அருகான எல்பாரான்மட்டும் முறிய
டித்து, திரும்பிக் காதேஸ் என்னும் என்மிஸ் 7
பாத்துக்கு வந்து, அமலேக்கியருடைய நாட
னைத்தையும், அத்சாத்சோன் தாமாரிலே குடி
யிருந்த எமோரியரையும் கூடச் சங்கரித்தார்
கள். அப்பொழுது சோதோமின் ராஜாவும், 8
கொமோராவின் ராஜாவும், அத்மாவின் ராஜா
வும், செபோயீமின் ராஜாவும், சோவார் என்
னும் பேலாவின் ராஜாவும் புறப்பட்டுச் சித்
தீம் பள்ளத்தாக்கிலே; ஏலாமின் ராஜாவா 9
கிய கெதர்லாகோமேரோடும், ஜாதிகளின்
ராஜாவாகிய திதியாலோடும், சிநெயாரின்
ராஜாவாகிய அம்ராப்பேலோடும், ஏலாசாரின்
ராஜாவாகிய அரியோகோடும் யுத்தம்பண்
ணப் புறப்பட்டு, அந்த ஐந்து ராஜாக்களோ
டும் இந்த நாலு ராஜாக்களும் யுத்தம்பண்ணி
னார்கள். அந்தச் சித்தீம் பள்ளத்தாக்கு எங் 10
கும் [18]நிலக்கீல் உண்டாகும் கேணிகள் இருந்
தது. சோதோம் கொமோராவின் ராஜாக்கள்
முறிந்தோடி அங்கே விழுந்தார்கள்; மீந்தவர்
கள் மலைகளுக்கு ஓடிப்போனார்கள். அப் 11
பொழுது அவர்கள் சோதோமிலும் கொமோ
ராவிலுமுள்ள பொருள்கள் எல்லாவற்றை
யும், போஜனபதார்த்தங்கள் எல்லாவற்றை
யும் எடுத்துக்கொண்டு போய்விட்டார்கள்.
ஆபிராமின் [19]சகோதரனுடைய குமாரனாகிய 12
லோத்து சோதோமிலே குடியிருந்தபடியால்,
அவனையும், அவன் பொருள்களையும் கொண்
டுபோய்விட்டார்கள். தப்பியோடின ஒருவன் 13
எபிரெயனாகிய ஆபிராமிடத்தில் வந்து அதை
அறிவித்தான்; ஆபிராம் தன்னோடே உடன்
படிக்கை செய்திருந்த மனிதராகிய எஸ்கோ
லுக்கும் ஆநேருக்கும் சகோதரனாகிய [20]மம்ரே
என்னும் எமோரியனுடைய சமபூமியிலே
அப்பொழுது குடியிருந்தான். தன் [21]சகோ 14
தரன் சிறையாகக் கொண்டுபோகப்பட்டதை
ஆபிராம் கேள்விப்பட்டபோது, அவன் தன்
வீட்டிலே பிறந்த கைபடிந்தவர்களாகிய முந்
நூற்றுப் பதினெட்டு ஆட்களுக்கும் ஆயுதம்
தரிப்பித்து, தாண் என்னும் ஊர்மட்டும் அவர்
களைத் தொடர்ந்து, இராக்காலத்திலே அவ 15
னும் அவன் வேலைக்காரரும் பிரிந்து, பவிஞ்
சுகளாய் அவர்கள்மேல் விழுந்து, அவர்களை
[22]முறியடித்து, தமஸ்குவுக்கு இடதுபுறமான
ஓபாமட்டும் துரத்தி, சகல பொருள்களையும் 16

[1] ஆதி. 26. 20. 12. 6
[2] 1 கொ. 6. 7
[3] யாத். 2. 13 அப். 7. 26
[4] ஆதி. 20. 15
[5] சே. 12. 18. யாக். 3. 17
[6] ஆதி. 19. 17, 24, 25; 2. 10. ஏசா. 51. 3
* [illegible]
[7] ஆதி. 27. 10
[8] ஆதி. 19. 29 [illegible] 2. 2 பே. 2. 7, 8
[9] ஆதி. 18. 20. எசே. 16. 49
[10] அப். 7. 5
[11] ஆதி. 12. 7
[12] ஆதி. 15. 5. [illegible]. 5. 16–18 எபி. 11. 12
[13] ஆதி. 14. 13. 35. 27; 37. 14
[14] உபா. 29. 23
[15] உபா. 3. 17. யோசு. 3. 16
[16] யோசு. 12. 4
[17] உபா. 2. 12, 22
[18] ஆதி. 11. 3. 19. 17, 30
[19] ஆதி. 12. 5. 13. 12
[20] ஆதி. 13. 18
[21] ஆதி. 15. 3. பிர. 2. 7
[22] ஏசா. 41. 2, 3

[1]திருப்பிக்கொண்டு வந்தான்; தன் சகோதர
ஞகிய லோத்தையும், அவனுடைய பொருள்
களையும், ஸ்திரீகளையும், ஜனங்களையும் திருப்
17 பிக்கொண்டு வந்தான். அவன் கெதர்லாகோ
மேரையும், அவனோடிருந்த ராஜாக்களையும்
முறியடித்துத் திரும்பிவருகிறபோது, சோ
தோமின் ராஜா புறப்பட்டு, ராஜாவின் பள்
ளத்தாக்கு என்னும் சாவே பள்ளத்தாக்குமட்
டும் அவனுக்கு [2]எதிர்கொண்டு போனான்.
18 அன்றியும், உன்னதமான தேவனுடைய ஆசா
ரியனாயிருந்த சாலேமின் ராஜாவாகிய *மெல்
கிசேதேக்கு அப்பமும் திராட்சரசமும் கொண்
19 டுவந்து, அவனை ஆசீர்வதித்து: வானத்தை
யும் பூமியையும் உடையவராகிய உன்னத
மான தேவனுடைய ஆசீர்வாதம் ஆபிராமுக்கு
20 உண்டாவதாக. உன் சத்துருக்களை உன்
கையில் ஒப்புக்கொடுத்த உன்னதமான தேவ
னுக்கு ஸ்தோத்திரம் என்று சொன்னான். இவ
னுக்கு ஆபிராம் எல்லாவற்றிலும் †தசமபாகம்
21 கொடுத்தான். சோதோமின் ராஜா ஆபிராமை
நோக்கி: ஜனங்களை எனக்குத் தாரும், பொ
ருள்களை நீர் எடுத்துக்கொள்ளும் என்றான்.
22 அதற்கு, ஆபிராம் சோதோமின் ராஜாவைப்
பார்த்து: ஆபிராமை ஐசுவரியவானாக்கினேன்
[3]என்று நீர் சொல்லாதபடிக்கு நான் ஒரு சாட்
டையாகிலும் பாதரட்சையின் வாராகி
லும், உமக்கு உண்டானவைகளில் யாதொன்
றையாகிலும் எடுத்துக்கொள்ளேன் என்று,
23 வானத்தையும் பூமியையும் உடையவராகிய
உன்னதமான தேவனாகிய கர்த்தருக்கு நேராக
24 என்கையை ‡உயர்த்துகிறேன். வாலிபர் சாப்
பிட்டதுபோக, [4]என்னுடனே வந்த ஆநேர்,
எஸ்கோல், மம்ரே என்னும் புருஷருடைய
பங்குமாத்திரமே வரவேண்டும்; இவர்கள் தங்
கள் பங்கை எடுத்துக்கொள்ளட்டும் என்றான்.

**15** இந்தக் காரியங்கள் நடந்தபின்பு, கர்த்தரு
டைய வார்த்தை ஆபிராமுக்குத் [5]தரிசனத்
திலே உண்டாகி, அவர்: ஆபிராமே, [6]நீ பயப்
படாதே; நான் [7]உனக்குக் கேடகமும், உன
க்கு மகா பெரிய பலனுமாயிருக்கிறேன் என்
2 றார். அதற்கு ஆபிராம்: கர்த்தராகிய §ஆண்
டவரே, அடியேனுக்கு என்ன தருவீர்? நான்
[8]பிள்ளையில்லாமல் இருக்கிறேனே; தமஸ்கு
ஊரானாகிய இந்த எலியேசர் என் வீட்டு
விசாரணைக் கர்த்தனாய் இருக்கிறானே என்
3 றான். பின்னும் ஆபிராம்: தேவரீர் எனக்குப்
புத்திரசந்தானம் அருளவில்லை; இதோ [9]என்
வீட்டிலே பிறந்த பிள்ளை எனக்குச் சுதந்தர
4 வாளியாய் இருக்கிறான் என்றான். அப்பொ
ழுது கர்த்தருடைய வார்த்தை அவனுக்கு
உண்டாகி: இவன் உனக்குச் சுதந்தரவாளி
யல்ல, [10]உன் கர்ப்பப் பிறப்பாயிருப்பவனே
உனக்குச் சுதந்தரவாளியாவான் என்று சொ
5 ல்லி, அவர் அவனை வெளியே அழைத்து: நீ
வானத்தை அண்ணாந்து பார், [11]நட்சத்திரங்
களை எண்ண உன்னாலே கூடுமானால், அவை
களை எண்ணு என்று சொல்லி; பின்பு அவனை
நோக்கி: உன் சந்ததி இவ்வண்ணமாய் இருக்
கும் என்றார். அவன் கர்த்தரை [12]விசுவாசித் 6
தான், அதை அவர் அவனுக்கு நீதியாக எண்
ணினார். பின்னும் அவர் அவனை நோக்கி: 7
[13]இந்தத் தேசத்தை உனக்குச் சுதந்தரமாகக்
கொடுக்கும்பொருட்டு, உன்னை ஊர் என்கிற
கல்தேயருடைய பட்டணத்திலிருந்து அழைத்
துவந்த கர்த்தர் நானே என்றார். அதற்கு 8
அவன்: கர்த்தராகிய ஆண்டவரே, [14]நான்
அதைச் சுதந்தரித்துக்கொள்வேன் என்று எதி
னால் அறிவேன் என்றான். அதற்கு அவர்: 9
மூன்று வயதுக் கிடாரியையும், மூன்று வயது
வெள்ளாட்டையும், மூன்று வயது ஆட்டுக்
கடாவையும், ஒரு காட்டுப்புறாவையும், ஒரு
புறாக்குஞ்சையும், என்னிடத்தில் கொண்டு
வா என்றார். அவன் அவைகள் எல்லாவற்றை 10
யும் அவரிடத்தில் கொண்டுவந்து, [15]அவை
களை நடுவாகத் துண்டித்து, துண்டங்களை ஒன்
றுக்கொன்று எதிராக வைத்தான்; பட்சிகளை
அவன் துண்டிக்கவில்லை. பறவைகள் அந்த 11
உடல்களின்மேல் இறங்கின; அவைகளை ஆபி
ராம் துரத்தினான். சூரியன் அஸ்தமிக்கும் 12
போது, ஆபிராமுக்கு [16]அயர்ந்த நித்திரை வந்
தது; திகிலும் காரிருளும் அவனை மூடிக்
கொண்டது. அப்பொழுது அவர் ஆபிராமை 13
நோக்கி: [17]உன் சந்ததியார் தங்களுடையதல்
லாத அந்நிய தேசத்திலே பரதேசிகளாயிரு
ந்து, அத்தேசத்தாரைச் சேவிப்பார்கள் என்
றும், அவர்களால் நானூறு வருஷம் உபத்திர
வப்படுவார்கள் என்றும், நீ நிச்சயமாய் அறி
யக்கடவாய். இவர்கள் சேவிக்கும் ஜாதிகளை 14
[18]நான் நியாயந்தீர்ப்பேன்; பின்பு மிகுந்த
பொருள்களுடனே புறப்பட்டு வருவார்கள்.
நீ சமாதானத்தோடே [19]உன் பிதாக்களிடத் 15
தில் சேருவாய்; நல்ல முதிர்வயதிலே அடக்
கம்பண்ணப்படுவாய். [20]நாலாம் தலைமுறை 16
யிலே அவர்கள் இவ்விடத்துக்குத் திரும்ப
வருவார்கள்; ஏனென்றால் எமோரியருடைய
அக்கிரமம் இன்னும் நிறைவாகவில்லை என்
றார். சூரியன் அஸ்தமித்து காரிருள் உண் 17
டானபின்பு, இதோ, புகைகிற சூளையும்,
அந்தத் துண்டங்களின் நடுவே கடந்துபோ
கிற [21]அக்கினிஜுவாலையும் தோன்றின. அந் 18
நாளிலே கர்த்தர் ஆபிராமோடே [22]உடன்ப
டிக்கைபண்ணி, எகிப்தின் நதிதுவக்கி ஐபிரா
த்து நதி என்னும் பெரிய நதிமட்டுமுள்ளதும்,
கேனியரும், கெனிசியரும், கத்மோனியரும், 19
ஏத்தியரும், பெரிசியரும், ரெப்பாயீமியரும், 20
எமோரியரும், கானானியரும், கிர்காசியரும், 21
எபூசியரும் என்பவர்கள் இருக்கிறதுமான
இந்தத் தேசத்தை [23]உன் சந்ததிக்குக் கொடுத்
தேன் என்றார்.

ஆபிராமுடைய மனைவியாகிய [24]சாராய்க் **16**
குப் பிள்ளையில்லாதிருந்தது. [25]எகிப்துதேசத்
தாளாகிய ஆகார் என்னும் பேர்கொண்ட ஒரு
அடிமைப்பெண் அவளுக்கு இருந்தாள்.
சாராய் [26]ஆபிராமை நோக்கி: நான் பிள்ளை 2

1 11, 12. உபாகமம்.
2 1 சாமு. 18. 6. 18.
* நீதியின் ராஜா. சங். 110. 4. எபி. 5. 6; 7. 1, 3, 11. நீதி. 6. 6. அப். 16. 17.
† பத்தில் ஒரு பங்கு.
3 எஸ்தர் 9. 15, 16.
‡ ஆணையிடுகிறேன். யாத். 6. 8. தானி. 12. 7. வெளி. 10. 5, 6, 7.
4 13. உபாக. 1 இரா. 5. 18.
5 தானி. 10. 1. 12. அப். 10. 10, 11.
6 ஆதி. 24. 21. தா. 1. 13, 30.
7 சங். 3. 3. 16. 5. 58. 11. நீதி. 11. 18.
§ ஆண்டவர்.
8 ஆதி. 30. 1. 1 சாமு. 1. 6. அப். 7. 5.
9 நீதி. 29. 21.
10 ஆதி. 17. 16.
11 உபா. 1. 10. எபி. 11. 12. எரே. 33. 22.
12 ரோ. 4. 3. கலா. 3. 6. யாக். 2. 23. சங். 106. 31.
13 ஆதி. 12. 1, 11. 28, 31. சங். 105. 42. ரோ. 4. 13.
14 ஆதி. 24. 13, 14. லூக். 1. 18.
15 எரே. 34. 18, 19. வெளி. 1. 17.
16 ஆதி. 2. 21. யோபு 4. 13.
17 யாத். 12. 40. அப். 7. 6. சங். 105. 25.
18 யாத். 6. 6; 12. 36.
19 ஆதி. 25. 8. யோபு 5. 26. அப். 13. 36.
20 யாத். 12. 40. மத். 23. 32. 1 தெச. 2. 16.
21 யாத். 3. 2.
22 ஆதி. 24. 7.
23 ஆதி. 12. 7.
24 ஆதி. 15. 2, 3; 21. 9.
25 கலா. 4. 24.
26 ஆதி. 20. 18; 30. 2, 3.

பெறாதபடிக்குக் கர்த்தர் என் கர்ப்பத்தை
அடைத்திருக்கிறார்; என் அடிமைப் பெண்
ணோடே சேரும், ஒருவேளை அவளால் என்
*வீடு கட்டப்படும் என்றாள். சாராயின் வார்த்
3 தைக்கு ஆபிராம் செவிகொடுத்தான். ஆபி
ராம் கானான் தேசத்தில் [1]பத்து வருஷம்
குடியிருந்த பின்பு, ஆபிராமின் மனைவியா
கிய சாராய் எகிப்து தேசத்தாளான தன் அடி
மைப்பெண்ணாகிய ஆகாரை அழைத்து, அவ
ளைத் தன் புருஷனாகிய ஆபிராமுக்கு மறும
4 னையாட்டியாகக் கொடுத்தாள். அவன் ஆகா
ரோடே சேர்ந்தபோது, அவள் கர்ப்பந்தரித்
தாள்; [2]அவள் தான் கர்ப்பவதியானதைக் கண்
டபோது, தன் நாச்சியாரை அற்பமாக எண்
5 ணினாள். அப்பொழுது சாராய் ஆபிராமை
நோக்கி: [3]எனக்கு நேரிட்ட அநியாயம் உம
துமேல் சுமரும்; என் அடிமைப் பெண்ணை
உம்முடைய மடியிலே கொடுத்தேன்; அவள்
தான் கர்ப்பவதியானதைக் கண்டு என்னை
அற்பமாக எண்ணுகிறாள்; கர்த்தர் எனக்கும்
உமக்கும் நடுவின்று நியாயந்தீர்ப்பாராக என்
6 றாள். அதற்கு ஆபிராம் சாராயை நோக்கி:
[4]இதோ, உன் அடிமைப்பெண் உன் கைக்
குள் இருக்கிறாள்; உன் பார்வைக்கு நலமா
னபடி அவளுக்குச் செய் என்றான். அப்
பொழுது சாராய் அவளைக் கடினமாய் நடத்
தினபடியால் அவள் அவளைவிட்டு ஓடிப்போ
7 னாள். கர்த்தருடைய தூதனானவர் அவளை
வனாந்தரத்திலே [5]சூருக்குப் போகிற வழிய
ருகே இருக்கிற நீரூற்றண்டையில் கண்டு:
8 சாராயின் அடிமைப்பெண்ணாகிய ஆகாரே,
எங்கேயிருந்து வருகிறாய்? எங்கே போகி
றாய்? என்று கேட்டார்; அவள்: நான் என்
நாச்சியாராகிய சாராயைவிட்டு ஓடிப்போகி
9 றேன் என்றாள். அப்பொழுது கர்த்தரு
டைய தூதனானவர்: நீ உன் நாச்சியாரண்
டைக்குத் திரும்பிப்போய், அவள் கையின்
10 கீழ் [6]அடங்கியிரு என்றார். பின்னும் கர்த்
தருடைய தூதனானவர் அவளை நோக்கி: [7]உன்
சந்ததியை மிகவும் பெருகப்பண்ணுவேன்;
அது பெருகி, எண்ணிமுடியாததாயிருக்கும்
11 என்றார். பின்னும் கர்த்தருடைய தூதனா
வர் அவளை நோக்கி: நீ கர்ப்பவதியாயிருக்கி
றாய், ஒரு குமாரனைப் பெறுவாய்; கர்த்தர்
உன் அங்கலாய்ப்பைக் கேட்டபடியினால்,
அவனுக்கு †இஸ்மவேல் என்று பெயரிடுவா
12 யாக. அவன் [8]துஷ்ட மனுஷனாயிருப்பான்,
அவனுடைய கை எல்லாருக்கும் விரோதமாக
வும், எல்லாருடைய கையும் அவனுக்கு
விரோதமாகவும் இருக்கும்; தன் சகோதரர்
எல்லாருக்கும் எதிராகக் குடியிருப்பான் என்
13 றார். அப்பொழுது அவள்: [9]என்னைக் காண்
பவரை நானும் இவ்விடத்தில் கண்டேன்
அல்லவா என்று சொல்லி, தன்னோடே
பேசின கர்த்தருக்கு நீர் என்னைக் காண்கிற
14 தேவன் என்று பேரிட்டாள். ஆகையால்,
அந்தத் துரவு ‡பெயர்லகாய்ரோயீ எனப்

பட்டது; அது காதேசுக்கும் பாரேத்துக்கும்
நடுவே இருக்கிறது. [10]ஆகார் ஆபிராமுக்கு 15
ஒரு குமாரனைப் பெற்றாள்; ஆபிராம் ஆகார்
பெற்ற தன் குமாரனுக்கு இஸ்மவேல் என்று
பேரிட்டான். ஆகார் ஆபிராமுக்கு இஸ்ம 16
வேலைப் பெற்றபோது, ஆபிராம் எண்பத்
தாறு வயதாயிருந்தான்.

ஆபிராம் தொண்ணூற்றொன்பது வயதா 17
னபோது, கர்த்தர் ஆபிராமுக்குத் [11]தரிசன
மாகி: [12]நான் சர்வ வல்லமையுள்ள தேவன்;
[13]நீ எனக்கு முன்பாக நடந்துகொண்டு [14]உத்த
மனாயிரு. நான் உனக்கும் எனக்கும் நடுவாக 2
என் உடன்படிக்கையை ஏற்படுத்தி, [15]உன்னை
மிகவும் திரளாய்ப் பெருகப்பண்ணுவேன்
என்றார். அப்பொழுது ஆபிராம் [16]முகங்குப் 3
புற விழுந்து வணங்கினான். தேவன் அவ
னோடே பேசி: நான் உன்னோடே பண்ணு 4
கிற என் உடன்படிக்கை என்னவென்றால்,
[17]நீ திரளான ஜாதிகளுக்குத் தகப்பனாவாய்.
இனி உன் பேர் ஆபிராம் என்னப்படாமல், 5
நான் உன்னைத் திரளான ஜாதிகளுக்குத் தகப்
பனாக ஏற்படுத்தினபடியால், உன் பேர் §ஆபி
ரகாம் என்னப்படும். உன்னை மிகவும் அதிக 6
மாய்ப் பலுகப்பண்ணி, உன்னிலே [18]ஜாதி
களை உண்டாக்குவேன்; உன்னிடத்திலிரு
ந்து ராஜாக்கள் தோன்றுவார்கள். உனக்கும் 7
உனக்குப் பின்வரும் உன் சந்ததிக்கும் நான்
தேவனாயிருக்கும்படி எனக்கும் உனக்கும்,
உனக்குப்பின் தலைமுறை தலைமுறையாக
வரும் உன் சந்ததிக்கும் நடுவே, [19]என் உடன்
படிக்கையை நித்திய உடன்படிக்கையாக
ஸ்தாபிப்பேன். நீ [20]பரதேசியாய்த் தங்கிவ 8
ருகிற கானான் தேசமுழுவதையும், உனக்கும்
உனக்குப் பின்வரும் உன் சந்ததிக்கும் நித்
திய சுதந்தரமாகக் கொடுத்து, [21]நான் அவர்க
ளுக்குத் தேவனாயிருப்பேன் என்றார். பின் 9
னும் தேவன் ஆபிரகாமை நோக்கி: இப்பொ
ழுது நீயும், உனக்குப்பின் தலைமுறை தலை
முறையாக வரும் உன் சந்ததியும், என் உடன்
படிக்கையைக் கைக்கொள்ளுங்கள். எனக் 10
கும் உங்களுக்கும், உனக்குப் பின்வரும் உன்
சந்ததிக்கும் நடுவே உண்டாகிறதும், நீங்கள்
கைக்கொள்ள வேண்டியதுமான என் உடன்
படிக்கை என்னவென்றால், உங்களுக்குள்
பிறக்கும் சகல ஆண்பிள்ளைகளும் ||விருத்த
சேதனம் பண்ணப்படவேண்டும்; உங்கள் 11
நுனித்தோலின் மாம்சத்தை விருத்தசேதனம்
பண்ணக்கடவீர்கள்; அது எனக்கும் உங்க
ளுக்குமுள்ள உடன்படிக்கைக்கு [22]அடையா
ளமாயிருக்கும். உங்களில் தலைமுறை தலை 12
முறையாகப் பிறக்கும் ஆண்பிள்ளைகளெல்
லாம் எட்டாம் நாளிலே விருத்தசேதனம்
பண்ணப்படவேண்டும்; வீட்டிலே பிறந்த
பிள்ளையும் உன் வித்தல்லாத அந்நியனிடத்
தில் பணத்திற்குக் கொள்ளப்பட்ட எந்தப்
பிள்ளையும், அப்படியே [23]விருத்தசேதனம்
பண்ணப்படவேண்டும். உன் வீட்டிலே 13

* குமாரர் வாய்த்திடு
ரும்.
[1] ஆதி. 12. 5
[2] நீதி. 30. 23
[3] ஆதி. 31. 53. 1 சாமு. 24. 12, 15
[4] நீதி. 15. 1. 1 பே. 3. 7
[5] ஆதி. 25. 18. யாத். 15. 22
[6] தீத். 2. 9, 10. 1 பே. 2. 18
[7] ஆதி. 17. 20
† தேவன் கேட்பார். ஆதி. 17, 19, மத். 1, 21. லூக். 1. 13, 31
[8] ஆதி. 21. 20. 25. 18
[9] ஆதி. 31. 42. நீதி. 5. 21
‡ என்னைக் காண்கிற ஜீவனுள்ளவரின் துரவு. ஆதி. 24. 62; 25. 11
[10] கலா. 4. 22
[11] ஆதி. 12. 1; 18. 1
[12] ஆதி. 28. 3. யாத். 6. 3
[13] ஆதி. 6. 9
[14] மத். 5. 48
[15] ஆதி. 9. 9. கலா. 3. 17, 18
[16] 17. வசனம்.
[17] ரோ. 4. 11. கலா. 3. 29
§ பலஜாதிகளுக்குத் தகப்பன். நெகே. 9. 7. ரோ. 4. 17
[18] ஆதி. 35. 11. மத். 1. 6
[19] கலா. 3. 17. எபி. 11. 16. ரோ. 9. 10
[20] ஆதி. 12. 7; 48. 4
[21] யாத். 6. 7. வெளி. 21. 3
|| சுன்னத்து. அப். 7. 8
[22] ரோ. 4. 11
[23] லேவி. 12. 3. லூக். 2. 21. யோ. 7. 22. பிலி. 3. 5

பிறந்த பிள்ளையும், உன் பணத்திற்குக் கொள்
ளப்பட்டவனும், விருத்தசேதனம் பண்ணப்
படவேண்டியது அவசியம்; இப்படி என்
உடன்படிக்கை உங்கள் மாம்சத்திலே நித்திய
14 உடன்படிக்கையாக இருக்கக்கடவது. நுனித்
தோலின் மாம்சம் விருத்தசேதனம் பண்ணப்
படாதிருக்கிற நுனித்தோலுள்ள ஆண்பிள்
ளையிருந்தால், *அந்த ஆத்துமா என் உடன்
படிக்கையை மீறினபடியால், தன் ஜனத்தில்
இராதபடிக்கு [1]அறுப்புண்டு போவான் என்
றார்.
15 பின்னும் தேவன் ஆபிரகாமை நோக்கி:
உன் மனைவி சாராயை இனி சாராய் என்று
அழையாதிருப்பாயாக; †சாராள் என்பது அவ
16 ளுக்குப் பேராயிருக்கும். நான் அவளை ஆசீர்
வதித்து, அவளாலே உனக்கு [2]ஒரு குமார
னையும் தருவேன்; [3]அவள் ஜாதிகளுக்குத்
தாயாகவும், அவளாலே ஜாதிகளின் ராஜாக்
கள் உண்டாகவும், அவளை ஆசீர்வதிப்பேன்
17 என்றார். அப்பொழுது ஆபிரகாம் முகங்
குப்புற விழுந்து [4]நகைத்து: நூறுவயதானவ
னுக்குப் பிள்ளை பிறக்குமோ? தொண்ணூறு
வயதான சாராள் பிள்ளை பெறுவாளோ?
என்று தன் இருதயத்திலே சொல்லிக்கொ
18 ண்டு, இஸ்மவேல் உமக்கு முன்பாகப்
பிழைப்பானாக! என்று ஆபிரகாம் தேவனி
19 டத்தில் விண்ணப்பம்பண்ணினான். அப்பொ
ழுது தேவன்: உன் மனைவியாகிய [5]சாராள்
நிச்சயமாய் உனக்கு ஒரு குமாரனைப் பெறு
வாள், அவனுக்கு ‡ஈசாக்கு என்று பேரிடுவா
யாக; என் உடன்படிக்கையை அவனுக்கும்
அவனுக்குப் பின்வரும் அவன் சந்ததிக்கும்
நித்திய உடன்படிக்கையாக ஸ்தாபிப்பேன்.
20 இஸ்மவேலுக்காகவும் நீ செய்த விண்ணப்
பத்தைக் கேட்டேன்; நான் அவனை ஆசீர்வ
தித்து, அவனை மிகவும் அதிகமாகப் [6]பலுக
வும் பெருகவும் பண்ணுவேன்; [7]அவன் பன்
னிரண்டு பிரபுக்களைப் பெறுவான்; [8]அவ
21 னைப் பெரிய ஜாதியாக்குவேன். வருகிற
வருஷத்தில் குறித்த காலத்திலே [9]சாராள்
உனக்குப் பெறப்போகிற ஈசாக்கோடே நான்
என் உடன்படிக்கையை ஏற்படுத்துவேன்
22 என்றார். தேவன் ஆபிரகாமோடே பேசி
முடிந்தபின்பு, அவர் அவனைவிட்டு எழுந்
23 தருளினார். அப்பொழுது ஆபிரகாம் தன்
குமாரனாகிய இஸ்மவேலையும், தன் வீட்டிலே
பிறந்த யாவரையும், தான் பணத்திற்குக்
கொண்ட அனைவருமாகிய தன் வீட்டிலுள்ள
ஆண்பிள்ளைகள் எல்லாரையும் சேர்த்து, தே
வன் தனக்குச் சொன்னபடி, அவர்கள் நுனித்
தோலின் மாம்சத்தை அந்நாளிலேதானே
24 விருத்தசேதனம் பண்ணினான். ஆபிரகா
முடைய நுனித்தோலின் மாம்சம் விருத்தசே
தனம் பண்ணப்படும்போது, அவன் தொண்
25 ணூற்றொன்பது வயதாயிருந்தான். அவனு
டைய குமாரன் இஸ்மவேலுடைய நுனித்
தோலின் மாம்சம் விருத்தசேதனம் பண்ணப்

* அவன்.
[1] யாத். 4. 24
† நாயகி.
[2] ஆதி. 18. 10; 35. 11
[3] கலா. 4. 31. 1 பே. 3. 6
[4] ஆதி. 18. 12; 21. 6
[5] ஆதி. 18. 10; 21. 2. கலா. 4. 23
‡ நகைப்பு.
[6] ஆதி. 16. 10
[7] ஆதி. 25. 12, 16
[8] ஆதி. 21. 18
[9] ஆதி. 21. 2
[10] ஆதி. 18. 19
[11] ஆதி. 13. 18; 14. 13
[12] ஆதி. 19. 1. எபி. 13. 2. 1 பே. 4. 9
[13] ஆதி. 19. 2. 43. 24
[14] நியா. 6. 18; 19. 5. சங். 104. 15
[15] 2 இரா. 4. 16
[16] ஆதி. 17. 19, 21; 21. 2. ரோ. 9. 9. கலா. 4. 23
[17] ஆதி. 17. 17. ரோ. 4. 19. எபி. 11. 11. 12
[18] ஆதி. 31. 35
[19] ஆதி. 21. 6
[20] லூ. 1. 18
§ நாயகன். 1 பே. 3. 6

படும்போது, அவன் பதின்மூன்று வயதாயி
ருந்தான். ஒரேநாளில் ஆபிரகாமும் அவன் 26
குமாரன் இஸ்மவேலும் விருத்தசேதனம் பண்
ணப்பட்டார்கள். வீட்டிலே [10]பிறந்தவர்க 27
ளும் அந்நியரிடத்திலே பணத்திற்குக் கொள்
ளப்பட்டவர்களுமாகிய அவன் வீட்டு மனு
ஷர்கள் எல்லாரும் அவனோடேகூட விருத்த
சேதனம் பண்ணப்பட்டார்கள்.

பின்பு கர்த்தர் [11]மம்ரேயின் சமபூமியிலே **18**
அவனுக்குத் தரிசனமானார். அவன் பக
லின் உஷ்ணவேளையில் கூடாரவாசலிலே
உட்கார்ந்திருந்து, [12]தன் கண்களை ஏறெடுத் 2
துப் பார்க்கும்போது, இதோ, மூன்று புரு
ஷர் அவனுக்கு எதிரே நின்றார்கள்; அவர்
களைக் கண்டவுடனே, அவன் கூடாரவாசலி
லிருந்து அவர்களுக்கு எதிர்கொண்டு ஓடித்
தரைமட்டும் குனிந்து: ஆண்டவரே, உம்மு 3
டைய கண்களில் எனக்குக் கிருபை கிடைத்த
தானால், நீர் உமது அடியேனை விட்டுக் கடந்து
போகவேண்டாம். [13]கொஞ்சம் தண்ணீர் 4
கொண்டுவரட்டும், உங்கள் கால்களைக் கழுவி,
மரத்தடியில் சாய்ந்துகொண்டிருங்கள். நீங் 5
கள் உங்கள் இருதயங்களைத் திடப்படுத்தக்
[14]கொஞ்சம் அப்பம் கொண்டுவருகிறேன்;
அப்புறம் நீங்கள் உங்கள் வழியே போகலாம்;
இதற்காகவே அடியேன் இடம்வரைக்கும்
வந்தீர்கள் என்றான். அதற்கு அவர்கள்: நீ
சொன்னபடி செய் என்றார்கள். அப்பொ 6
ழுது ஆபிரகாம் தீவிரமாய்க் கூடாரத்தில்
சாராளிடத்திற்குப் போய்: நீ சீக்கிரமாய்
மூன்றுபடி மெல்லிய மாவு எடுத்துப் பிசை
ந்து, அப்பம் சுடு என்றான். ஆபிரகாம் 7
மாட்டுமந்தைக்கு ஓடி, ஒரு நல்ல இளங்கன்
றைப் பிடித்து, வேலைக்காரன் கையிலே கொ
டுத்தான்; அவன் அதைச் சீக்கிரத்தில் சமைத்
தான். ஆபிரகாம் வெண்ணெயையும் பாலை 8
யும் சமைப்பித்த கன்றையும் எடுத்துவந்து,
அவர்கள் முன்பாக வைத்து, அவர்கள் அருகே
மரத்தடியில் நின்றுகொண்டிருந்தான்; அவர்
கள் புசித்தார்கள். அவர்கள் அவனை நோக்கி: 9
உன் மனைவி சாராள் எங்கே என்றார்கள்?
அதோ கூடாரத்தில் இருக்கிறாள் என்றான்.
அப்பொழுது அவர்: [15]ஒரு உற்பவகாலத்திட் 10
டத்தில் நிச்சயமாய் உன்னிடத்திற்குத் திரும்ப
வருவேன்; அப்பொழுது உன் மனைவியாகிய
[16]சாராளுக்கு ஒரு குமாரன் இருப்பான் என்
றார். சாராள் அவருக்குப் பின்புறமாய்க் கூடா
ரவாசலில் இதைக் கேட்டுக்கொண்டிருந்தாள்.
ஆபிரகாமும் [17]சாராளும் வயதுசென்று முதிர்ந் 11
தவர்களாயிருந்தார்கள்; [18]ஸ்திரீகளுக்குள்ள
வழிபாடு சாராளுக்கு நின்றுபோயிற்று.
ஆகையால், [19]சாராள் தன் உள்ளத்திலே நகை 12
த்து: நான் [20]கிழவியும், என் §ஆண்டவன்
முதிர்ந்த வயதுள்ளவருமானபின்பு, எனக்கு
இன்பம் உண்டாயிருக்குமோ என்றாள். அப் 13
பொழுது கர்த்தர் ஆபிரகாமை நோக்கி:
சாராள் நகைத்து, நான் கிழவியாயிருக்கப்

பிள்ளை பெறுவது மெய்யோ என்று சொல்
14 வானேன்? கர்த்தரால் [1]ஆகாத காரியம்
உண்டோ? உற்பவகாலத்திட்டத்தில் உன்னி
டத்திற்குத் திரும்ப வருவேன்; அப்பொழுது
சாராளுக்கு ஒரு குமாரன் இருப்பான் என்
15 றார், சாராள் பயந்து, நான் நகைக்கவில்லை
என்று மறுத்தாள். அதற்கு அவர்: இல்லை,
நீ நகைத்தாய் என்றார்.
16 பின்பு அந்தப் புருஷர் எழுந்து அவ்விடம்
விட்டு, சோதோமை நோக்கிப் போனார்கள்;
ஆபிரகாமும் அவர்களோடே கூடப்போய்
17 வழிவிட்டனுப்பினான். அப்பொழுது கர்த்
தர்: [2]ஆபிரகாம் பெரிய பலத்த ஜாதியாவதி
னாலும், அவனுக்குள் பூமியிலுள்ள சகல
ஜாதிகளும் ஆசீர்வதிக்கப்படுவதினாலும்,
18 [3]நான் செய்யப்போகிறதை ஆபிரகாமுக்கு
19 மறைப்பேனோ? கர்த்தர் ஆபிரகாமுக்குச்
சொன்னதை நிறைவேற்றும்படியாய் அவன்
தன் பிள்ளைகளுக்கும், தனக்குப் பின்வரும்
தன் வீட்டாருக்கும்: நீங்கள் நீதியையும் நியா
யத்தையும் செய்து, கர்த்தருடைய வழியைக்
காத்து நடவுங்கள் என்று கட்டளையிடுவான்
20 என்பதை அறிந்திருக்கிறேன் என்றார். பின்பு
கர்த்தர் [4]சோதோம் கொமோராவின் கூக்கு
ரல் பெரிதாயிருப்பதினாலும், அவைகளின்
பாவம் மிகவும் கொடிதாயிருப்பதினாலும்,
21 நான் [5]இறங்கிப்போய், என்னிடத்தில் வந்து
எட்டின அதின் கூக்குரலின்படியே அவர்
கள் செய்திருக்கிறார்களோ இல்லையோ என்று
22 பார்த்து [6]அறிவேன் என்றார். அப்பொழுது
அந்தப் புருஷர் அவ்விடம் விட்டுச் சோதோ
மை நோக்கிப் போனார்கள்; ஆபிரகாமோ
பின்னும் கர்த்தருக்கு முன்பாக நின்றுகொண்
23 டிருந்தான். அப்பொழுது ஆபிரகாம் [7]சமீ
பமாய்ச் சேர்ந்து: [8]துன்மார்க்கனோடே நீதி
24 மானையும் அழிப்பீரோ? [9]பட்டணத்துக்குள்
ளே ஒருவேளை ஐம்பது நீதிமான்கள் இருப்
பார்கள், அதற்குள் இருக்கும் அந்த ஐம்பது
நீதிமான்கள் நிமித்தம் இரட்சியாமல் அந்த
25 ஸ்தலத்தை அழிப்பீரோ? துன்மார்க்கனோ
டே நீதிமானையும் சங்கரிப்பது உமக்குத் தூர
மாயிருப்பதாக; [10]நீதிமானையும் துன்மார்க்க
னையும் சமமாய் நடப்பிப்பது உமக்குத் தூர
மாயிருப்பதாக; [11]சர்வலோக நியாயாதிபதி
26 நீதிசெய்யாதிருப்பாரோ என்றான். அதற்குக்
கர்த்தர்: [12]நான் சோதோமில் ஐம்பது நீதிமான்
களைக் கண்டால், அவர்கள் நிமித்தம் அந்த
ஸ்தலமுழுதையும் இரட்சிப்பேன் என்றார்.
27 அப்பொழுது ஆபிரகாம் பிரதியுத்தரமாக:
[13]இதோ, தூளும் சாம்பலுமாயிருக்கிற அடி
யேன் ஆண்டவரோடே பேசத்துணிந்தேன்.
28 ஒருவேளை ஐம்பது நீதிமான்களுக்கு ஐந்து
பேர் குறைந்திருப்பார்கள்; அந்த ஐந்துபோ
நிமித்தம் பட்டணமுழுதையும் அழிப்பீரோ
என்றான். அதற்கு அவர்: நான் நாற்பத்தைந்து
நீதிமான்களை அங்கே கண்டால், அதை அழி
29 ப்பதில்லை என்றார். அவன் பின்னும் அவ
ரோடே பேசி: நாற்பது நீதிமான்கள் அங்கே
காணப்பட்டாலோ என்றான். அதற்கு அவர்:
நாற்பது நீதிமான்கள் நிமித்தம் அதை அழிப்
பதில்லை என்றார். அப்பொழுது அவன்: 30
நான் இன்னும் பேசுகிறேன், ஆண்டவருக்
குக் கோபம் வராமலிருப்பதாக; முப்பது நீதி
மான்கள் அங்கே காணப்பட்டாலோ என்
றான். அதற்கு அவர்: நான் முப்பது நீதி
மான்களை அங்கே கண்டால், அதை அழிப்
பதில்லை என்றார். அப்பொழுது அவன்: 31
இதோ, ஆண்டவரோடே பேசத்துணிந்
தேன்; இருபது நீதிமான்கள் அங்கே காணப்
பட்டாலோ என்றான். அதற்கு அவர்: இரு
பது நீதிமான்கள் நிமித்தம் அதை அழிப்ப
தில்லை என்றார். அப்பொழுது அவன்: [14]ஆண் 32
டவருக்குக் கோபம் வராதிருப்பதாக, நான்
இன்னும் இந்த ஒருவிசைமாத்திரம் பேசுகி
றேன்; பத்து நீதிமான்கள் அங்கே காணப்
பட்டாலோ என்றான். அதற்கு அவர்: பத்து
நீதிமான்கள் நிமித்தம் அதை அழிப்பதில்லை
என்றார். கர்த்தர் ஆபிரகாமோடே பேசி 33
முடிந்தபின்பு போய்விட்டார்; ஆபிரகாமும்
தன்னுடைய இடத்துக்குத் திரும்பினான்.

அந்த இரண்டு [15]தூதரும் சாயங்காலத் 19
திலே சோதோமுக்கு வந்தார்கள்; லோத்து
சோதோமின் வாசலிலே உட்கார்ந்திருந்தான்.
அவர்களைக் கண்டு, லோத்து எழுந்து எதிர்
கொண்டு தரைமட்டும் குனிந்து: ஆண்டவன் 2
மார்களே, அடியேனுடைய [16]வீட்டுமுகமாய்
நீங்கள் திரும்பி, உங்கள் கால்களைக் கழுவி,
இராத்தங்கி, காலையில் எழுந்து பிரயாணப்
பட்டுப் போகலாம் என்றான். அதற்கு அவர்
கள்: அப்படியல்ல, வீதியிலே இராத்தங்கு
வோம் என்றார்கள். அவன் அவர்களை மிக 3
வும் வருந்திக் கேட்டுக்கொண்டான்; அப்பொ
ழுது அவனிடத்திற்குத் திரும்பி, அவன் வீட்
டிலே பிரவேசித்தார்கள். அவன் புளிப்பில்லா
அப்பங்களைச் சுட்டு, [17]அவர்களுக்கு விருந்து
பண்ணினான், அவர்கள் புசித்தார்கள். அவர் 4
கள் படுக்கும் முன்னே, சோதோம் பட்டண
த்து மனிதராகிய வாலிபர்முதல் கிழவர்மட்டு
முள்ள ஜனங்கள் அனைவரும் நாலுதிசைகளி
லுமிருந்து வந்து, வீட்டைச் சூழ்ந்துகொண்டு,
லோத்தைக் [18]கூப்பிட்டு: இந்த இராத்திரி உன் 5
னிடத்தில் வந்த மனுஷர் எங்கே? [19]நாங்கள்
அவர்களை அறியும்படிக்கு அவர்களை எங்க
ளிடத்தில் வெளியே கொண்டுவா என்றார்
கள். அப்பொழுது லோத்து வாசலுக்கு வெ 6
ளியே வந்து, தனக்குப் பின்னாலே கதவைப்
பூட்டி, அவர்களிடத்தில் போய்: சகோத 7
ரரே, [20]இந்த அக்கிரமம் செய்யவேண்டாம்.
இதோ, [21]புருஷனை அறியாத இரண்டு குமா 8
ரத்திகள் எனக்கு உண்டு; அவர்களை உங்களி
டத்திற்கு வெளியே கொண்டுவருகிறேன்,
அவர்களுக்கு உங்கள் இஷ்டப்படி செய்யுங்
கள்; [22]இந்தப் புருஷர் என் கூரையின் நிழ
லிலே வந்தபடியால், இவர்களுக்குமாத்திரம்

1 எண். 11. 23. எரே. 32. 17. மத். 3. 9; 19. 26
2 ஆதி. 12. 3; 22. 18. அப். 3. 25. கலா. 3. 8
3 சங். 25. 14. ஆமோ. 3. 7. யோ. 15. 15
4 ஆதி. 4. 10; 13. 13; 19. 13. யாக். 5. 4
5 ஆதி. 11. 5. யாத். 3. 8
6 யோசு. 22. 22. சங். 139. 1. எரே. 17. 10. லூக். 16. 15. 2 கொ. 11. 11
7 எபி. 10. 22
8 எண். 16. 22. 2 சாமு. 24. 17
9 எரே. 5. 1
10 யோபு 8. 3, 20; 34. 17
11 சங். 58. 11; 94. 2. அப். 17. 31. ரோ. 3. 6
12 எசே. 22. 30
13 ஆதி. 3. 19. யோபு 4. 19. பிர. 12. 7. லூக். 18. 1
14 நியா. 6. 39. யாக். 5. 16
15 ஆதி. 18. 1, 22
16 எபி. 13. 2
17 ஆதி. 18. 8
18 ஏசா. 3. 9
19 நியா. 19. 22. ரோ. 1. 24, 27. யூதா 7
20 நியா. 1 19.
21 நியா. 19. 24
22 ஆதி. 18. 5

9 ஒன்றும் செய்யவேண்டாம் என்றான். அத
ற்கு அவர்கள்: அப்பாலே போ; [1]பரதேசி
யாய் வந்த இவனா நியாயம் பேசுகிறது? இப்
பொழுது அவர்களுக்குச் செய்வதைப்பார்க்
கிலும் உனக்கு அதிக பொல்லாப்புச் செய்
வோம் என்று சொல்லி, லோத்து என்பவனை
மிகவும் நெருக்கிக் கதவை உடைக்கக் கிட்டி
10 னார்கள். அப்பொழுது அந்தப் புருஷர்கள்
தங்கள் கைகளை வெளியே நீட்டி, லோத்தைத்
தங்கள் அண்டைக்கு வீட்டுக்குள் இழுத்துக்
11 கொண்டு, கதவைப்பூட்டி, தெருவாசலிலி
ருந்த [2]சிறியோரும் பெரியோருமாகிய மனி
தருக்குக் குருட்டாட்டம் பிடிக்கப் பண்ணி
னார்கள்; அப்பொழுது அவர்கள் வாசலைத்
12 தேடித் தேடி அலுத்துப்போனார்கள். பின்பு
அந்தப் புருஷர் லோத்தை நோக்கி: இவ்வி
டத்தில் இன்னும் உனக்கு யார் இருக்கிறார்
கள்? மருமகனாவது, உன் குமாரராவது, உன்
குமாரத்திகளாவது, பட்டணத்தில் உனக்கு
ரிய எவர்களாவது இருந்தால், அவர்களை
இந்த ஸ்தலத்திலிருந்து வெளியே அழைத்துக்
13 கொண்டுபோ. நாங்கள் இந்த ஸ்தலத்தை
அழிக்கப்போகிறோம்; இவர்கள் [3]கூக்குரல்
**கர்த்தருடைய** சமுகத்தில் பெரிதாயிருக்கிறது;
இதை அழிக்கக் **கர்த்தர்** எங்களை அனுப்பி
14 னார் என்றார்கள். அப்பொழுது லோத்து
புறப்பட்டு, தன் குமாரத்திகளை விவாகம்பண்
ணப்போகிற தன் மருமக்கள்மாரோடே பேசி:
[4]நீங்கள் எழுந்து இந்த ஸ்தலத்தை விட்டுப்
புறப்படுங்கள்; **கர்த்தர்** இந்தப் பட்டணத்தை
அழிக்கப்போகிறார் என்றான்; அவனுடைய
மருமக்கள்மாரின் பார்வைக்கு [5]அவன் பரி
15 யாசம் பண்ணுகிறதாகக் கண்டது. கிழக்கு
வெளுக்கும்போது அந்தத் தூதர் லோத்தை
நோக்கி: பட்டணத்திற்கு வரும் தண்டனை
யில் நீ அழியாதபடிக்கு [6]எழுந்து, உன் மனை
வியையும், இங்கே இருக்கிற உன் இரண்டு
குமாரத்திகளையும் அழைத்துக்கொண்டுபோ
என்று சொல்லி, அவனைத் துரிதப்படுத்தினார்
16 கள். அவன் தாமதித்துக்கொண்டிருக்கும்
போது [7]**கர்த்தர்** அவன்மேல் வைத்த இரக்
கத்தினாலே, அந்தப் புருஷர் அவன் கையை
யும், அவன் மனைவியின் கையையும் அவன்
இரண்டு குமாரத்திகளின் கையையும் பிடி
த்து, அவனைப் [8]பட்டணத்திற்கு வெளியே
17 கொண்டுபோய் விட்டார்கள். அவர்களை
வெளியேகொண்டுபோய்விட்டபின்பு, அவர்:
[9]உன் ஜீவன் தப்ப ஓடிப்போ, [10]பின்னிட்
டுப் பாராதே; இந்தச் சமபூமியில் எங்கும் நில்
லாதே; நீ அழியாதபடிக்கு மலைக்கு ஓடிப்போ
18 என்றார். அதற்கு லோத்து: [11]அப்படி யல்ல
19 ஆண்டவரே, உமது கண்களில் உமது அடி
யேனுக்குக் கிருபை கிடைத்ததே; என் பிரா
ணனைக் காக்கத் தேவரீர் எனக்குச் செய்த
கிருபையைப் பெரிதாக விளங்கப்பண்ணி
னீர்; மலைக்கு ஓடிப்போக என்னால் முடி
யாது, தீங்கு என்னைத் தொடரும், நான் மரித்
துப்போவேன். அதோ, அந்த ஊர் இருக் 20
கிறதே, நான் அதற்கு ஓடிப்போகத்தக்கதாய்
அது கிட்ட இருக்கிறது, சின்னதுமாய் இருக்
கிறது; என் பிராணன் பிழைக்க நான் அங்கே
ஓடிப்போகட்டும், அது சின்ன ஊர்தானே
என்றான். அதற்கு அவர்: நீ கேட்டுக்கொ 21
ண்ட ஊரை நான் கவிழ்த்துப்போடாதபடி
க்கு, [12]இந்த விஷயத்திலும் உனக்கு அநுக்
கிரகம் பண்ணினேன். தீவிரமாய் அங்கே 22
ஓடித் தப்பித்துக்கொள்; [13]நீ அங்கே போய்ச்
சேருமட்டும் நான் ஒன்றும செய்யக்கூடாது
என்றார்; ஆகையால் அந்த ஊர் சோவார் என்
னப்பட்டது. லோத்து *சோவாருக்குள் வரும் 23
போது பூமியின்மேல் சூரியன் உதித்தது.
அப்பொழுது **கர்த்தர்** சோதோமின்மேலும் 24
கொமோராவின்மேலும், [14]**கர்த்தரா**லே வான
த்திலிருந்து கந்தகத்தையும் அக்கினியையும்
வருஷிக்கப்பண்ணி, அந்தப் பட்டணங்களை 25
யும், அந்தச் சமபூமியனைத்தையும், அந்தப்
பட்டணங்களின் எல்லாக் குடிகளையும், [15]பூமி
யின் பயிரையும் அழித்துப்போட்டார். அவன் 26
மனைவியோ பின்னிட்டுப் பார்த்து, [16]உப்புத்
தூண் ஆனாள். விடியற்காலத்தில் ஆபிரகாம் 27
எழுந்து, தான் [17]**கர்த்தருக்கு** முன்பாக நின்ற
இடத்திற்குப் போய், சோதோம் கொமோரா 28
பட்டணங்களின் திசையையும், சமபூமியாகிய
தேசம் முழுவதையும் நோக்கிப் பார்த்தான்;
அந்தப் பூமியின் [18]புகை சூளையின் புகையைப்
போல எழும்பிற்று.

தேவன் அந்தச் சமபூமியின் பட்டணங்களை 29
அழிக்கும்போது, தேவன் [19]ஆபிரகாமை
நினைத்து, லோத்து குடியிருந்த பட்டணங்க
ளைத் தாம் கவிழ்த்துப்போடுகையில், லோத்
தை அந்த அழிவின் நடுவிலிருந்து தப்பிப்
போகும்படி அனுப்பிவிட்டார்.

பின்பு லோத்து சோவாரிலே குடியிருக்கப் 30
பயந்து, சோவாரை விட்டுப் போய், அவனும்
அவனோடேகூட அவனுடைய இரண்டு குமா
ரத்திகளும், மலையிலே [20]வாசம்பண்ணினார்
கள்; அங்கே அவனும் அவனுடைய இரண்டு
குமாரத்திகளும் ஒரு கெபியிலே குடியிருந்
தார்கள். அப்பொழுது மூத்தவள் இளையவ 31
ளைப் பார்த்து: நம்முடைய தகப்பன் முதிர்
வயதானார், [21]பூமியெங்கும் நடக்கிற முறை
மையின்படியே நம்மோடே சேரப் பூமியிலே
ஒரு புருஷனும் இல்லை. நம்முடைய தகப் 32
பனால் [22]சந்ததி உண்டாகும்படிக்கு, அவருக்கு
மதுவைக் குடிக்கக் கொடுத்து, அவரோடே
சயனிப்போம் வா என்றாள். அப்படியே 33
அன்று இரவிலே, தங்கள் தகப்பனுக்கு மது
வைக் குடிக்கக் கொடுத்தார்கள். மூத்தவள்
போய், தன் தகப்பனோடே சயனித்தாள்;
அவள் சயனித்ததையும் எழுந்திருந்ததையும்
அவன் உணராதிருந்தான். மறுநாளிலே மூத் 34
தவள் இளையவளைப் பார்த்து: நேற்று ராத்திரி
நான் தகப்பனோடே சயனித்தேன்; இன்று
ராத்திரியும் மதுவைக் குடிக்கக்கொடுப்போம்;

1 யாத். 2. 14. 2 பே. 2. 7, 8
2 2 இரா. 6. 18. அப். 13. 11
3 ஆதி. 18. 20
4 எண். 16. 26
5 யாத். 9. 21. எரே. 51. 6. லூக். 17. 28; 24. 11
6 வெளி. 18. 4
7 நெ. 9. 15, 16
8 சங். 34. 22
9 1 சாமு. 19. 11. 1 இரா. 19. 3
10 மத். 24. 16. லூக். 9. 62. பிலி. 3. 13, 14
11 அப். 10. 14
12 யோபு 24. 8, 9. சங். 145. 19
13 ஆதி. 32. 25, 26. யாத். 32. 10. மாற். 6. 6
* சிறுமை.
14 உபா. 29. 23. ஏசா. 13. 19. எரே. 20. 16; 50. 40. புல. 4. 11. ஓசி. 2. 9. 2 பே. 2. 6. யூதா 7
15 சங். 107. 34
16 லூக். 17. 32
17 ஆதி. 18. 22
18 வெளி. 18. 9
19 ஆதி. 8. 1; 18. 23
20 17, 19. வசனம்.
21 ஆதி. 38. 8, 9. உபா. 25. 5
22 மாற். 12. 19

நம்முடைய தகப்பனால் சந்ததி உண்டாகும்
படி நீ போய் அவரோடே சயனி என்றாள்.
35 அப்படியே அன்று ராத்திரியிலும் தங்கள் தகப்
பனுக்கு மதுவைக் குடிக்கக் கொடுத்தார்கள்.
அப்பொழுது இளையவள் எழுந்துபோய், அவ
னோடே சயனித்தாள்; அவள் சயனித்ததை
யும் எழுந்திருந்ததையும் அவன் உணராதிருந்
36 தான். இவ்விதமாய் லோத்தின் குமாரத்தி
கள் இருவரும் தங்கள் தகப்பனாலே கர்ப்பவ
37 தியானார்கள். மூத்தவள் ஒரு குமாரனைப்
பெற்று, அவனுக்கு மோவாப் என்று பேரிட்
டாள்; அவன் இந்நாள்வரைக்கும் இருக்கிற
38 [1]மோவாபியருக்குத் தகப்பன். இளையவளும்
ஒரு குமாரனைப் பெற்று, அவனுக்குப் பென்
னம்மி என்று பேரிட்டாள்; அவன் இந்நாள்
வரைக்கும் இருக்கிற [2]அம்மோன் புத்திரருக்
குத் தகப்பன்.

20 ஆபிரகாம் [3]அவ்விடம் விட்டு, தென்தே
சத்திற்குப் பிரயாணம்பண்ணி, [4]காதேசுக்
கும் சூருக்கும் நடுவாகக் குடியேறி, கேரா
2 ரிலே [5]தங்கினான். அங்கே ஆபிரகாம் தன்
மனைவியாகிய சாராளைத் [6]தன் சகோதரி
என்று சொன்னதினாலே, கேராரின் ராஜா
வாகிய அபிமெலேக்கு ஆள் அனுப்பிச்
3 சாராளை அழைப்பித்தான். தேவன் இரா
விலே [7]அபிமெலேக்குக்குச் சொப்பனத்திலே
தோன்றி: நீ அழைப்பித்த ஸ்திரீயின் நிமித்
தம் நீ செத்தாய்; அவள் ஒருவனுடைய மனை
4 வியாயிருக்கிறாளே என்றார். அபிமெலேக்கு
அவளைச் சேராதிருந்தான். ஆகையால் அவன்:
ஆண்டவரே, [8]நீதியுள்ள ஜனங்களை அழிப்
5 பீரோ? இவள் தன் சகோதரி என்று அவன்
என்னோடே சொல்லவில்லையா? அவள் தன்
சகோதரன் என்று இவளும் சொன்னாளே;
[9]உத்தம இருதயத்தோடும் சுத்தமான கைக
ளோடும் இதைச் செய்தேன் என்று சொன்
6 னான். அப்பொழுது தேவன்: உத்தம இரு
தயத்தோடே நீ இதைச் செய்தாய் என்று நான்
அறிந்திருக்கிறேன்; நீ [10]எனக்கு விரோதமா
கப் பாவம் செய்யாதபடிக்கு உன்னைத் தடுத்
தேன்; ஆகையால், நீ அவளைத் தொட நான்
7 உனக்கு இடங்கொடுக்கவில்லை. அந்த மனு
ஷனுடைய மனைவியை அவனிடத்திற்கு
அனுப்பிவிடு; அவன் ஒரு *தீர்க்கதரிசி; நீ
பிழைக்கும்படிக்கு அவன் உனக்காக வேண்
டுதல் செய்வான்; நீ அவளை அனுப்பிவிடா
திருந்தால், நீயும் உன்னைச் சேர்ந்த யாவரும்
சாகவே சாவீர்கள் என்று அறிவாயாக என்று
சொப்பனத்திலே அவனுக்குச் சொன்னார்.
8 அபிமெலேக்கு அதிகாலையில் எழுந்து, தன்
ஊழியக்காரரையெல்லாம் அழைப்பித்து, இந்
தச் சங்கதிகளையெல்லாம் அவர்கள் கேட்கும்
படி சொன்னான்; அந்த மனுஷர் மிகவும் பயந்
9 தார்கள். அப்பொழுது அபிமெலேக்கு ஆபிர
காமை அழைப்பித்து: நீ எங்களுக்கு என்ன
காரியஞ்செய்தாய், [11]நீ என்மேலும், என் ராஜ்
யத்தின்மேலும் கொடிய பாவம் சுமரப்பண்
ணுகிறதற்கு உனக்கு நான் என்ன குற்றம்
செய்தேன்? [12]செய்யத்தகாத காரியங்களை
என்னிடத்தில் செய்தாயே என்றான். பின் 10
னும் அபிமெலேக்கு ஆபிரகாமை நோக்கி:
என்னத்தைக் கண்டு நீ இந்தக் காரியத்தைச்
செய்தாய் என்றான். அதற்கு ஆபிரகாம்: 11
இவ்விடத்தில் [13]தெய்வபயம்* இல்லையென்
றும், என் மனைவியினிமித்தம் என்னைக்
கொன்றுபோடுவார்கள் என்றும் நான் நினைத்
தேன். அவள் [14]என் சகோதரி என்பதும் 12
மெய்தான்; அவள் என் தகப்பனுக்குக் குமா
ரத்தி, என் தாய்க்குக் குமாரத்தியல்ல; அவள்
எனக்கு மனைவியானாள். என் தகப்பன் வீட் 13
டைவிட்டுத் தேவன் [15]என்னைத் தேசாந்தரி
யாய்த் திரியும்படி செய்தபோது, நான் அவளை
நோக்கி: நாம் போகும் இடமெங்கும், நீ என்
னைச் சகோதரன் என்று சொல்வது நீ எனக்
குச் செய்யவேண்டிய தயை என்று அவளி
டத்தில் சொல்லியிருந்தேன் என்றான். அப் 14
பொழுது அபிமெலேக்கு ஆடுமாடுகளையும்,
வேலைக்காரரையும், வேலைக்காரிகளையும் ஆபி
ரகாமுக்குக் கொடுத்து, அவன் மனைவியாகிய
சாராளையும் அவனிடத்தில் திரும்ப ஒப்புவித்
தான். பின்னும் அபிமெலேக்கு: இதோ, 15
என் தேசம் உனக்கு முன்பாக இருக்கிறது;
உன் பார்வைக்குச் சம்மதியான இடத்திலே
குடியிரு என்று சொன்னான். பின்பு சாராளை 16
நோக்கி: உன் சகோதரனுக்கு ஆயிரம் வெள்
ளிக்காசு கொடுத்தேன்; இதோ, உன்னோடி
ருக்கிற எல்லார் முன்பாகவும், மற்ற யாவர்
முன்பாகவும், இது உன் [16]முகத்து முக்காட்
டுக்காவதாக என்றான்; இப்படி அவள் கடிந்து
கொள்ளப்பட்டாள். ஆபிரகாமுடைய மனை 17
வியாகிய சாராளின் நிமித்தம் **கர்த்தர்**, அபி
மெலேக்குடைய [17]வீட்டாரின் கர்ப்பங்களை
யெல்லாம் அடைத்திருந்தபடியால், ஆபிர 18
காம் தேவனை [18]நோக்கி வேண்டிக்கொண்
டான்; அப்பொழுது தேவன் அபிமெலேக்
கையும், அவன் மனைவியையும், அவன்
வேலைக்காரிகளையும் குணமாக்கி, பிள்ளைபெ
றும்படி அநுக்கிரகம்பண்ணினார்.

**கர்த்தர்** தாம் சொல்லியிருந்தபடி சாராள் 21
பேரில் [19]கடாட்சமானார்; **கர்த்தர்** தாம் உரைத்
தபடியே சாராளுக்குச் செய்தருளினார். ஆபி 2
ரகாம் முதிர்வயதாயிருக்கையில், சாராள்
[20]கர்ப்பவதியாகி, தேவன் குறித்திருந்த காலத்
திலே அவனுக்கு ஒரு குமாரனைப் பெற்றாள்.
அப்பொழுது ஆபிரகாம் தனக்குச் சாராள் 3
பெற்ற குமாரனுக்கு [21]ஈசாக்கு என்று பேரிட்
டான். தன் குமாரனாகிய ஈசாக்கு பிறந்த 4
எட்டாம் நாளிலே, ஆபிரகாம் தனக்குத் [22]தே
வன் கட்டளையிட்டிருந்தபடி [23]அவனுக்கு
விருத்தசேதனம் பண்ணினான். தன் குமார 5
னாகிய ஈசாக்கு பிறந்தபோது ஆபிரகாம் நூறு
வயதாயிருந்தான். அப்பொழுது சாராள்: 6
தேவன் [24]என்னை நகைக்கப்பண்ணினார்;
இதைக் கேட்கிற யாவரும் என்னோடேகூட

1 உபா. 2. 9
2 உபா. 2. 19
3 ஆதி. 18. 1
4 ஆதி. 16. 7, 14
5 ஆதி. 26. 6
6 ஆதி. 12. 13; 26. 7
7 யோபு 33. 15. சங். 105. 14
8 ஆதி. 18. 28
9 2 இரா. 20. 3. 2 கொ. 1. 12. 1 தீமோ. 1. 13
10 ஆதி. 31. 7; 35. 5. சங். 51. 4
* 1 சாமு. 7. 5. யோபு 42. 8. யாக். 5. 14, 15
11 யாத். 32. 21. ரோம. 7. 25
12 ஆதி. 34. 7
13 ஆதி. 42. 18. நெகே. 5. 15. சங். 36. 1. நீதி. 16. 6
14 ஆதி. 11. 29
15 ஆதி. 12. 1. எபி. 11. 8
16 ஆதி. 26. 11. நீதி. 12. 1; 25. 12. வெளி. 3. 19
17 ஆதி. 12. 17
18 யோபு 42. 9, 10
19 1 சாமு. 2. 21. கலா. 4. 23
20 அப். 7. 8. எபி. 11. 11
21 ஆதி. 17. 19
22 ஆதி. 17. 1, 10, 12
23 யாத். 12. 48. அப். 7. 8
24 சங். 126. 2. ஏசா. 54. 1. கலா. 4. 27. லூக். 1. 58

7 நகைப்பார்கள். சாராள் பிள்ளைகளுக்குப்
பால் கொடுப்பாள் என்று ஆபிரகாமுக்கு
எவன் சொல்லுவான்? அவருடைய முதிர்வ
யதிலே [1]அவருக்கு ஒரு குமாரனைப் பெற்
றேனே என்றாள்.
8 பிள்ளை வளர்ந்து, பால் மறந்தது; ஈசாக்கு
பால் மறந்தநாளிலே ஆபிரகாம் பெரிய விருந்
9 துபண்ணினான். பின்பு [2]எகிப்துதேசத்தாளா
கிய ஆகார் ஆபிரகாமுக்குப் பெற்ற குமாரன்
[3]பரியாசம்பண்ணுகிறதைச் சாராள் கண்டு,
10 ஆபிரகாமை நோக்கி: [4]இந்த அடிமைப்
பெண்ணையும் அவள் மகனையும் புறம்பே தள்
ளும்; இந்த அடிமைப் பெண்ணின் மகன்
என் குமாரனாகிய ஈசாக்கோடே சுதந்தரவா
11 ளியாயிருப்பதில்லை என்றாள். [5]தன் மகனைக்
குறித்துச் சொல்லப்பட்ட இந்தக் காரியம்
ஆபிரகாமுக்கு மிகவும் துக்கமாயிருந்தது.
12 அப்பொழுது தேவன் ஆபிரகாமை நோக்கி:
அந்தப் பிள்ளையையும், உன் அடிமைப் பெண்
ணையும் குறித்துச் சொல்லப்பட்டது உனக்
குத் துக்கமாயிருக்கவேண்டாம்; [6]ஈசாக்கினி
டத்தில் உன் சந்ததி விளங்கும்; ஆதலால்
சாராள் உனக்குச் சொல்வதெல்லாவற்றை
13 யும் கேள். அடிமைப் பெண்ணின் மகனும்
உன் வித்தாயிருக்கிறபடியால், அவனையும்
14 ஒரு [7]ஜாதியாக்குவேன் என்றார். ஆபிரகாம்
அதிகாலையில் எழுந்து, அப்பத்தையும் ஒரு
துருத்தி தண்ணீரையும் எடுத்து, ஆகாருடைய
தோளின்மேல் வைத்து, பிள்ளையையும் ஒப்
புக்கொடுத்து, அவளை [8]அனுப்பிவிட்டான்;
அவள் புறப்பட்டுப் போய், பெயெர்செபா
வின் வனாந்தரத்திலே அலைந்து திரிந்தாள்.
15 துருத்தியிலிருந்த தண்ணீர் செலவழிந்த
பின்பு, அவள் பிள்ளையை ஒரு செடியின்
16 கீழே விட்டு, பிள்ளை சாகிறதை நான் பார்க்
கமாட்டேன் என்று, எதிராக அம்பு பாயும்
தூரத்திலே போய் உட்கார்ந்து சத்தமிட்டு
17 அழுதாள். தேவன் பிள்ளையின் [9]சத்தத்தைக்
கேட்டார்; தேவதூதன் வானத்திலிருந்து
ஆகாரைக் கூப்பிட்டு: ஆகாரே, உனக்கு
என்ன சம்பவித்தது, பயப்படாதே, பிள்ளை
யிருக்கும் இடத்திலே தேவன் அவன் சத்தத்
18 தைக் கேட்டார். நீ எழுந்து பிள்ளையை
எடுத்து அவனை உன் கையினால் பிடித்துக்
கொண்டு போ, அவனைப் [10]பெரிய ஜாதியாக்
19 குவேன் என்றார். தேவன் [11]அவளுடைய
கண்களைத் திறந்தார்; அப்பொழுது அவள்
ஒரு தண்ணீர்த் துரவைக் கண்டு, போய்,
துருத்தியிலே தண்ணீர் நிரப்பி, பிள்ளைக்குக்
20 குடிக்கக் கொடுத்தாள். தேவன் பிள்ளையுட
னே இருந்தார்; அவன் வளர்ந்து வனாந்தரத்
திலே குடியிருந்து, [12]வில்வித்தையிலே வல்
21 லவனானான். அவன் பாரான் வனாந்தரத்
திலே குடியிருக்கையில், அவனுடைய தாய்
எகிப்துதேசத்தாளாகிய ஒரு பெண்ணை அவ
னுக்கு விவாகம் பண்ணுவித்தாள்.
22 அக்காலத்தில் அபிமெலேக்கும் அவன் சே
னாபதியாகிய பிகோலும் ஆபிரகாமை நோக்கி:
நீ செய்கிற காரியங்கள் எல்லாவற்றிலும்
தேவன் [13]உன்னுடனே இருக்கிறார். ஆகை 23
யால், நீ எனக்காவது, என் குமாரனுக்காவது,
என் பேரனுக்காவது வஞ்சனை செய்யாமல்,
நான் உனக்குச் செய்த தயவின்படியே, நீ
எனக்கும், நீ தங்கியிருக்கிற இந்தத் தேசத்திற்
கும், தயவு செய்வேன் என்று இங்கே தேவன்
பேரில் எனக்கு [14]ஆணையிட்டுக் கொடு என்
றான். அதற்கு ஆபிரகாம்: நான் ஆணையிட் 24
டுக் கொடுக்கிறேன் என்றான். ஆனாலும், 25
[15]அபிமெலேக்குடைய வேலைக்காரர் கைவச
ப்படுத்திக்கொண்ட துரவின் நிமித்தம் ஆபி
ராகாம் அபிமெலேக்கைக் கடிந்துகொண்டான்.
அதற்கு அபிமெலேக்கு: இந்தக் காரியத்தைச் 26
செய்தவன் இன்னான் என்று எனக்குத் தெரி
யாது, நீயும் எனக்கு அறிவிக்கவில்லை; இன்று
நான் அதைக் கேட்டதேயன்றி, இதற்குமுன்
அதை நான் கேள்விப்பட்டதே இல்லை என்
றான். அப்பொழுது ஆபிரகாம் ஆடுமாடுக 27
ளைக் கொண்டுவந்து அபிமெலேக்குக்குக்
கொடுத்தான்; அவர்கள் இருவரும் [16]உடன்
படிக்கை பண்ணிக்கொண்டார்கள். ஆபிர 28
காம் ஏழு பெண்ணாட்டுக்குட்டிகளைத் தனியே
நிறுத்தினான். அப்பொழுது அபிமெலேக்கு 29
ஆபிரகாமை நோக்கி: நீ தனியே நிறுத்தின
இந்த [17]ஏழு பெண்ணாட்டுக்குட்டிகள் என்னத்
திற்கு என்று கேட்டான். அதற்கு அவன்: 30
நான் இந்தத் துரவு தோண்டினதைக்குறித்து,
நீர் [18]சாட்சியாக இந்த ஏழு பெண்ணாட்டுக்
குட்டிகளை என் கையில் வாங்கிக்கொள்ள
வேண்டும் என்றான். அவர்கள் இருவரும் 31
அவ்விடத்தில் ஆணையிட்டுக்கொண்டபடி
யால், அந்த இடம் *பெயெர்செபா என்னப்
பட்டது. அவர்கள் பெயெர்செபாவிலே 32
உடன்படிக்கை பண்ணிக்கொண்டபின் அபி
மெலேக்கும், அவன் சேனாபதியாகிய பிகோ
லும் எழுந்து பெலிஸ்தருடைய தேசத்திற்
குத் திரும்பிப்போனார்கள். ஆபிரகாம் பெ 33
யெர்செபாவிலே ஒரு தோப்பை உண்டாக்கி,
[19]சதாகாலமுமுள்ள தேவனாகிய **கர்த்தருடைய**
நாமத்தை அவ்விடத்தில் தொழுதுகொண்
டான். ஆபிரகாம் பெலிஸ்தருடைய தேசத் 34
தில் அநேகநாள் தங்கியிருந்தான்.

இந்தக் காரியங்கள் நடந்தபின்பு, தேவன் **22**
ஆபிரகாமைச் [20]சோதித்தார்; எப்படியெ
னில், அவர் அவனை நோக்கி: ஆபிரகாமே
என்றார்; அவன்: இதோ அடியேன் என்
றான். அப்பொழுது அவர்: [21]உன் புத்திரனும் 2
உன் ஏகசுதனும் உன் நேசகுமாரனுமாகிய
ஈசாக்கை நீ இப்பொழுது அழைத்துக்கொ
ண்டு, மோரியா தேசத்துக்குப் போய், அங்கே
நான் உனக்குக் குறிக்கும் மலைகள் ஒன்றின்
மேல் அவனைத் தகனபலியாகப் பலியிடு என்
றார். ஆபிரகாம் அதிகாலையில் எழுந்து, தன் 3
கழுதையின்மேல் சேணங்கட்டி, தன் வேலைக்
காரரில் இரண்டுபேரையும் தன் குமாரன்

[1] ஆதி. 18. 11, 12. எபே. 3. 20
[2] ஆதி. 16. 1, 15
[3] கலா. 4. 29
[4] ஆதி. 25. 6. கலா. 4. 30
[5] ஆதி. 17. 18
[6] ரோ. 9. 7, 8. எபி. 11. 18
[7] ஆதி. 16. 10
[8] யோ. 8. 35
[9] யாத். 3. 7
[10] ஆதி. 17. 20
[11] எண். 22. 31. 2 இரா. 6. 17-20. லூ. 24. 16, 31
[12] ஆதி. 16. 12
[13] ஆதி. 26. 28
[14] யோசு. 2. 12. 1 சாமு. 24. 21
[15] ஆதி. 26. 5, 15, 22
[16] ஆதி. 26. 31
[17] ஆதி. 33. 8
[18] ஆதி. 31. 48, 52
* ஆணையின்கிணறு. ஆதி. 26 28, 33
[19] உபா. 33. 27. ஏசா. 40. 28. ரோ. 16. 26. 1 தீமோ. 1. 17
[20] உபா. 8. 2. எபி. 11. 17. யாக். 1. 12. 1 பே. 1. 7
[21] 2 நாளா. 3. 1

ஈசாக்கையும் கூட்டிக்கொண்டு, தகனபலிக்
குக்கட்டைகளையும் பிளந்துகொண்டு, தேவன்
தனக்குக் குறித்த இடத்திற்குப் புறப்பட்டுப்
4 போனான். மூன்றாம்நாளில் ஆபிரகாம் தன்
கண்களை ஏறெடுத்துப் பார்த்து, தூரத்திலே
5 அந்த இடத்தைக் கண்டான். அப்பொழுது
ஆபிரகாம் தன் வேலைக்காரரை நோக்கி: நீங்
கள் கழுதையை நிறுத்தி இங்கே காத்திருங்
கள், நானும் பிள்ளையாண்டானும் அவ்விட
மட்டும் போய், தொழுதுகொண்டு, உங்களி
டத்துக்குத் திரும்பி வருவோம் என்றான்;
6 ஆபிரகாம் தகனபலிக்குக் கட்டைகளை எடு
த்து, தன் குமாரனாகிய ஈசாக்கின்மேல்
[1]வைத்து, தன் கையிலே நெருப்பையும் கத்தி
யையும் எடுத்துக்கொண்டான்; இருவரும்
7 கூடிப் போனார்கள். அப்பொழுது ஈசாக்கு
தன் தகப்பனாகிய ஆபிரகாமை நோக்கி: என்
தகப்பனே என்றான்; அதற்கு அவன்: என்
மகனே, இதோ, இருக்கிறேன் என்றான்;
அப்பொழுது அவன்: இதோ, நெருப்பும் கட்
டையும் இருக்கிறது, தகனபலிக்கு ஆட்டுக்
8 குட்டி எங்கே என்றான். அதற்கு ஆபிரகாம்:
என் மகனே, [2]தேவன் தமக்குத் தகனபலிக்
கான ஆட்டுக்குட்டியைப் பார்த்துக்கொள்
வார் என்றான்; அப்புறம் இருவரும் கூடிப்
9 போய், தேவன் அவனுக்குச் சொல்லியிருந்த
இடத்துக்கு வந்தார்கள்; அங்கே ஆபிரகாம்
ஒரு பலிபீடத்தை உண்டாக்கி, கட்டைகளை
அடுக்கி, தன் குமாரனாகிய ஈசாக்கைக் கட்டி,
அந்தப் பலிபீடத்தில் அடுக்கிய கட்டைகளின்
10 மேல் அவனைக் [3]கிடத்தினான். பின்பு ஆபிர
காம் தன் குமாரனை வெட்டும்படிக்குத் தன்
11 கையை நீட்டிக் கத்தியை எடுத்தான். அப்
பொழுது **கர்த்தருடைய** தூதனானவர் வானத்
திலிருந்து, ஆபிரகாமே, ஆபிரகாமே என்று
கூப்பிட்டார்; அவன்: இதோ, அடியேன்
12 என்றான். அப்பொழுது அவர்: [4]பிள்ளை
யாண்டான்மேல் உன் கையைப் போடாதே,
அவனுக்கு ஒன்றும் செய்யாதே; நீ அவனை
உன் புத்திரன் என்றும், உன் ஏகசுதன் என்
றும் பாராமல் எனக்காக ஒப்புக்கொடுத்தபடி
யினால் [5]நீ தேவனுக்குப் பயப்படுகிறவன்
என்று இப்பொழுது அறிந்திருக்கிறேன் என்
13 றார். ஆபிரகாம் தன் கண்களை ஏறெடுத்துப்
பார்க்கும்போது, இதோ, பின்னாகப் புதரிலே
தன் கொம்புகள் சிக்கிக்கொண்டிருந்த ஒரு
ஆட்டுக்கடாவைக் கண்டான்; அப்பொழுது
ஆபிரகாம் போய், கடாவைப் பிடித்து,
அதைத் தன் குமாரனுக்குப் பதிலாகத் தகன
14 பலியிட்டான். ஆபிரகாம் அந்த இடத்துக்கு
யேகோவாயீரே என்று பேரிட்டான்; [6]அதி
னாலே **கர்த்தருடைய** பர்வதத்திலே பார்த்துக்
கொள்ளப்படும் என்று இந்நாள்வரைக்கும்
15 சொல்லப்பட்டு வருகிறது. **கர்த்தருடைய**
தூதனானவர் இரண்டாந்தரம் வானத்திலி
16 ருந்து ஆபிரகாமைக் கூப்பிட்டு: நீ உன் புத்
திரன் என்றும், உன் ஏகசுதன் என்றும் பாரா
மல் அவனை ஒப்புக்கொடுத்து இந்தக் காரியத்
தைச் செய்தபடியால்; நான் உன்னை [7]ஆசீர் 17
வதிக்கவே ஆசீர்வதித்து, உன் சந்ததியை
வானத்து நட்சத்திரங்களைப்போலவும், கடற்
கரை மணலைப்போலவும் பெருகவே பெரு
கப்பண்ணுவேன் என்றும், உன் சந்ததியார்
தங்கள் சத்துருக்களின் *வாசல்களைச் சுதந்த
ரித்துக்கொள்ளுவார்கள் என்றும், நீ என் 18
சொல்லுக்குக் கீழ்ப்படிந்தபடியினால், [8]உன்
சந்ததிக்குள் பூமியிலுள்ள சகல ஜாதிகளும்
ஆசீர்வதிக்கப்படும் என்றும் என் பேரில்
[9]ஆணையிட்டேன் என்று **கர்த்தர்** சொல்லு
கிறார் என்றார். ஆபிரகாம் தன் வேலைக்கா 19
ரரிடத்துக்குத் திரும்பி வந்தான்; அவர்கள்
எழுந்து புறப்பட்டு, ஏகமாய்ப் பெயெர்செபா
வுக்குப் போனார்கள்; ஆபிரகாம் பெயெர்செ
பாவிலே குடியிருந்தான்.

இந்தக் காரியங்கள் நடந்தபின்பு, ஒருவன் 20
ஆபிரகாமிடத்தில் வந்து: [10]மில்க்காளும் உன்
சகோதரனாகிய நாகோருக்குப் பிள்ளைகளைப்
பெற்றாள்; அவர்கள் யாரென்றால், [11]முதற் 21
பேறான ஊத்ஸ், அவன் தம்பியாகிய பூஸ்,
ஆராமுக்குத் தகப்பனாகிய கேமுவேல், கே 22
சேத், ஆசோ, பில்தாஸ், இத்லாப், பெத்து
வேல் என்பவர்கள்; [12]பெத்துவேல் ரெபெக்
காளைப் பெற்றான் என்று அறிவித்தான். அந்த 23
எட்டுப்பேரை மில்க்காள் ஆபிரகாமுடைய
சகோதரனாகிய நாகோருக்குப் பெற்றாள்.
ரேயுமாள் என்று பேர்கொண்ட அவனு 24
டைய மறுமனையாட்டியும், தேபா, காகாம்,
தாகாஸ், மாகா என்பவர்களைப் பெற்றாள்.

சாராள் நூற்று இருபத்தேழு வருஷம் **23**
உயிரோடிருந்தாள்; இவ்வளவே சாராளு
டைய வயது. கானான்தேசத்திலுள்ள [13]எபி 2
ரோன் என்னும் [14]கீரியாத்அர்பாவிலே
சாராள் மரித்தாள்; அப்பொழுது ஆபிரகாம்
வந்து, சாராளுக்காகப் புலம்பி அழுதான்.
பின்பு ஆபிரகாம் பிரேதம் இருந்த இடத்திலி 3
ருந்து எழுந்துபோய், ஏத்தின் புத்திரரோடே
பேசி: நான் உங்களிடத்தில் [15]அந்நியனும் 4
பரதேசியுமாய் இருக்கிறேன்; என்னிடத்தி
லிருக்கிற இந்தப் பிரேதம் என் கண்முன்
இராதபடிக்கு நான் அதை அடக்கம்பண்ணு
வதற்கு, உங்களிடத்தில் எனக்குச் [16]சொந்த
மாக ஒரு கல்லறைப் பூமியைத் தரவேண்டும்
என்றான். அதற்கு ஏத்தின் புத்திரர் ஆபிர 5
காமுக்குப் பிரதியுத்தரமாக: எங்கள் ஆண்ட 6
வனே, நாங்கள் சொல்லுகிறதைக் கேளும்;
எங்களுக்குள்ளே நீர் [17]மகா பிரபு; எங்கள் கல்
லறைகளில் முக்கியமானதிலே பிரேதத்தை
அடக்கம்பண்ணும்; நீர் பிரேதத்தை அடக்
கம்பண்ண எங்களில் ஒருவனும் தன் கல்ல
றையை உமக்குத் தடைசெய்வதில்லை என்
றார்கள். அப்பொழுது ஆபிரகாம் எழுந்தி 7
ருந்து, ஏத்தின் புத்திரராகிய அத்தேசத்தாரு
க்கு வந்தனம் செய்து, அவர்களோடே பேசி: 8
என்னிடத்திலிருக்கிற பிரேதம் என் கண்முன்

[1] யோ. 19. 17
[2] யோ. 1. 29. வெளி. 5. 6
[3] சங். 118. 27. யோ. 10. 17, 18. எபி. 11. 17. யாக். 2. 21
[4] 1 சமு. 15. 22. மீகா. 6. 6, 7, 8
[5] ஆதி. 26. 4, 5. யாக். 2. 22. சங். 25. 12. மல். 2. 2
[6] சங். 22. 4, 5. தானி. 3. 17. ழ
[7] உபா. 1. 10. எரே. 33. 22
* பிரதான ஸ்தலங்களை.
[8] ஆதி. 12. 3; 18. 17. அப். 3. 25. கலா. 3. 8. ழ
[9] லூக். 1. 72. எபி. 6. 13, 14
[10] ஆதி. 11. 29
[11] யோபு 1. 1; 32. 2
[12] ஆதி. 24. 15
[13] ஆதி. 13. 18
[14] யோசு. 14. 15. நியா. 1. 10
[15] ஆதி. 17. 8. 1 நாளா. 29. 15. சங். 39. 12. எபி. 11. 9, 13
[16] அப். 7. 5
[17] ஆதி. 13. 2; 14. 14

இராதபடிக்கு, நான் அதை அடக்கம்பண்ண
உங்களுக்குச் சம்மதியானால், நீங்கள் என்
வார்த்தையைக் கேட்டு, சோகாருடைய குமா
9 ரனாகிய எப்பெரோன், தன் நிலத்தின் கடை
சியிலே இருக்கிற மக்பேலா என்னப்பட்ட
குகையை எனக்குச் சொந்தமான கல்லறைப்
பூமியாயிருக்கும்படி தரவேண்டும் என்று, அவ
ரிடத்தில் எனக்காக வேண்டிக்கொள்ளுங்
கள்; அது பெறுமான விலைக்கு அவர் அதைத்
தருவாராக என்றான்.
10 எப்பெரோன் ஏத்தின் புத்திரர் நடுவிலே
உட்கார்ந்திருந்தான்; அப்பொழுது ஏத்தியனா
கிய எப்பெரோன் [1]தன் ஊர்வாசலுக்குள்
பிரவேசிக்கிற ஏத்தின் புத்திரர் அனைவரும்
11 கேட்க ஆபிரகாமுக்குப் பிரதியுத்தரமாக: அப்
படியல்ல, [2]என் ஆண்டவனே, என் வார்த்
தையைக் கேளும்; அந்த நிலத்தை உமக்குத்
தருகிறேன், அதிலிருக்கும் குகையையும்
உமக்குத் தருகிறேன், என் ஜனப்புத்திரரு
டைய கண்களுக்கு முன்பாக அதை உமக்குத்
தருகிறேன், உம்மிடத்திலிருக்கிற பிரேதத்
12 தை அடக்கம்பண்ணும் என்றான். அப்பொ
ழுது ஆபிரகாம் அத்தேசத்தாருக்கு வந்தனம்
13 செய்து, தேசத்து ஜனங்கள் கேட்க, எப்பெ
ரோனை நோக்கி: கொடுக்க உமக்கு மனதா
னால் என் வார்த்தையைக் கேளும்; நிலத்தின்
விலையைத் தருகிறேன்; என் கையில் அதை
வாங்கிக்கொள்ளும்; அப்பொழுது என்னிடத்
திலிருக்கிற பிரேதத்தை அவ்விடத்தில் அடக்
14 கம்பண்ணுவேன் என்றான். அதற்கு எப்பெ
15 ரோன் ஆபிரகாமுக்குப் பிரதியுத்தரமாக: என்
ஆண்டவனே, நான் சொல்லுகிறதைக் கே
ளும்; அந்த நிலம் [3]நானூறு சேக்கல் நிறை
வெள்ளி பெறும்; எனக்கும் உமக்கும் அது
எவ்வளவு காரியம்; நீர் உம்மிடத்திலிருக்கிற
பிரேதத்தை அடக்கம்பண்ணும் என்றான்.
16 அப்பொழுது ஆபிரகாம் எப்பெரோனின்
சொல்லைக் கேட்டு, ஏத்தின் புத்திரருக்கு முன்
பாக எப்பெரோன் சொன்னபடியே, வர்த்த
கரிடத்தில் செல்லும்படியான நானூறு சேக்
கல் நிறை வெள்ளியை அவனுக்கு [4]நிறுத்துக்
17 கொடுத்தான். இந்தப்பிரகாரம் [5]மம்ரேக்கு
எதிரே மக்பேலாவிலுள்ள எப்பெரோனு
டைய நிலமாகிய அந்தப் பூமியும், அதிலுள்ள
குகையும், நிலத்தின் எல்லையெங்கும் சூழ்ந்தி
18 ருக்கிற மரங்கள் அடங்கலும், அவனுடைய
ஊர்வாசலுக்குள் பிரவேசிக்கும் ஏத்தின் புத்
திரர் எல்லாரும் அறிய ஆபிரகாமுக்குச் சொந்
19 தமாக உறுதிப்படுத்தப்பட்டது. அதற்குப்பின்
ஆபிரகாம் தன் மனைவியாகிய சாராளைக் கானா
ன்தேசத்தில் எப்பெரோன் ஊர் பூமியான
மம்ரேக்கு எதிரே இருக்கிற மக்பேலா என்
னும் நிலத்தின் குகையிலே அடக்கம்பண்
20 ணினான். இப்படி ஏத்தின் புத்திரர் கையில்
கொள்ளப்பட்ட அந்த நிலமும், அதிலுள்ள
குகையும், [6]ஆபிரகாமுக்குச் சொந்த கல்ல
றைப் பூமியாக உறுதிப்படுத்தப்பட்டது.

ஆபிரகாம் [7]வயதுசென்று முதிர்ந்தவனா **24**
னான். **கர்த்தர்** ஆபிரகாமைச் சகல காரியங்
களிலும் [8]ஆசீர்வதித்துவந்தார். அப்பொழுது 2
ஆபிரகாம் தன் வீட்டிலுள்ளவர்களில் வயதில்
மூத்தவனும், தனக்கு உண்டான எல்லாவற்
றிற்கும் அதிகாரியுமாகிய தன் [9]ஊழியக்கா
ரனை நோக்கி: நான் குடியிருக்கிற [10]கானானி 3
யருடைய குமாரத்திகளில் நீ என் குமாரனுக்
குப் பெண் கொள்ளாமல்; நீ [11]என் தேசத் 4
துக்கும் என் இனத்தாரிடத்துக்கும் போய்,
என் குமாரனாகிய ஈசாக்குக்குப் பெண் கொள்
வேன் என்று, [12]வானத்துக்குத் தேவனும்
பூமிக்குத் தேவனுமாகிய **கர்த்தர்**பேரில் என
க்கு ஆணையிட்டுக் கொடுக்கும்படிக்கு, நீ உன்
கையை என் தொடையின்கீழ் வை என்
றான். அதற்கு அந்த ஊழியக்காரன்: அவ்வி 5
டத்துப் பெண் என் பின்னே இந்தத் தேசத்
துக்கு வர மனதில்லாதிருந்தால், நீர் விட்டு
வந்த தேசத்திற்குத் தானே உம்முடைய குமா
ரனை மறுபடியும் அழைத்துப் போகவேண்
டுமோ என்று கேட்டான். அதற்கு ஆபிர 6
காம்: நீ என் குமாரனை மறுபடியும் அங்கே
அழைத்துக்கொண்டு போகாதபடிக்கு எச்ச
ரிக்கையாயிரு. என்னை [13]என் தகப்பனு 7
டைய வீட்டிலும் என் இனத்தார் இருக்கிற
தேசத்திலுமிருந்து அழைத்து வந்தவரும்,
உன் சந்ததிக்கு இந்தத் தேசத்தைத் தருவேன்
என்று எனக்குச் சொல்லி ஆணையிட்டவரு
மான வானத்துக்குத் தேவனாகிய **கர்த்தர்**,
நீ அங்கேயிருந்து என் குமாரனுக்கு ஒரு
பெண்ணைக் கொண்டுவரும்படிக்கு, தம்மு
டைய தூதனை உனக்கு முன்பாக அனுப்பு
வார். பெண் உன் பின்னே வர மனதில்லா 8
திருந்தாளேயாகில், அப்பொழுது நீ இந்த
என் [14]ஆணைக்கு நீங்கலாயிருப்பாய்; அங்கே
மாத்திரம் என் குமாரனை மறுபடியும் அழைத்
துக்கொண்டு போகவேண்டாம் என்றான்.
அப்பொழுது அந்த ஊழியக்காரன் தன் 9
கையைத் தன் எஜமானாகிய ஆபிரகாமுடைய
தொடையின்கீழ் வைத்து, இந்தக் காரியத்
தைக்குறித்து அவனுக்கு ஆணையிட்டுக் கொ
டுத்தான். பின்பு அந்த ஊழியக்காரன் தன் 10
எஜமானுடைய ஒட்டகங்களில் பத்து ஒட்ட
கங்களைத் தன்னுடனே கொண்டுபோனான்;
தன் எஜமானுடைய சகலவித உச்சிதமான
பொருள்களும் அவன் கையில் இருந்தன;
அவன் எழுந்து புறப்பட்டுப் போய், மெசொ
ப்பொத்தாமியாவிலே நாகோருடைய ஊரில்
சேர்ந்து, [15]ஊருக்குப் புறம்பே ஒரு தண் 11
ணீர்த்துரவண்டையிலே, தண்ணீர் *மொள்ள
ஸ்திரீகள் புறப்படுகிற சாயங்கால வேளையி
லே, ஒட்டகங்களை மடக்கி, தனக்குள்ளே
சொல்லிக்கொண்டது என்னவென்றால்:
என் [16]எஜமானாகிய ஆபிரகாமுக்குத் தேவனா 12
யிருக்கிற **கர்த்தா**வே, இன்றைக்கு நீர் எனக்
குக் [17]காரியம் சித்திக்கப்பண்ணி, என் எஜ
மானாகிய ஆபிரகாமுக்குத் தயவுசெய்தருளும்.

[1] ஆதி. 34. 20, 24. ரூத். 4. 4
[2] 2 சாமு. 24. 21-24
[3] யாத். 30. 13. எசே. 26. 15
[4] எரே. 32. 9
[5] ஆதி. 25. 9; 49. 30. அப். 7. 16
[6] ரூத். 4. 7. எரே. 32. 10, 11
[7] ஆதி. 18. 11
[8] சங். 112. 1, 3. நீதி. 10. 22
[9] ஆதி. 15. 2; 39. 4, 5
[10] ஆதி. 6. 2. உபா. 7. 3
[11] ஆதி. 28. 2; 12. 1
[12] ஆதி. 14. 23. உபா. 6. 13
[13] ஆதி. 12. 1; 13. 15
[14] யோசு. 2. 18, 20
[15] யாத். 2. 16. 1 சாமு. 9. 11
* முகக்க.
[16] ஆதி. 26. 24. யாத். 3. 6, 15
[17] நெகே. 1. 11. சங். 37. 5; 86. 17. நீதி. 3. 4

13 இதோ, நான் இந்தத் தண்ணீர்த்துரவண்டை
யிலே நிற்கிறேன், இந்த ஊராருடைய பெண்
கள் தண்ணீர் மொள்ளப் புறப்பட்டு வருவார்
14 களே. நான் குடிக்க உன் குடத்தைச் சாய்க்
கவேண்டும் என்று நான் சொல்லும்போது:
குடி என்றும், உன் ஒட்டகங்களும் குடிக்கும்
படி வார்ப்பேன் என்றும் சொல்லும் பெண்
எவளோ, அவளே நீர் உம்முடைய ஊழியக்
காரனாகிய ஈசாக்குக்கு நியமித்தவளாயிருக்க
வும், என் எஜமானுக்கு [1]அநுக்கிரகம் செய்தீர்
என்று நான் அதினாலே அறியவும் செய்தரு
15 ளும் என்றான். அவன் இப்படிச் சொல்லி
முடிக்கும்முன்னே, இதோ, ஆபிரகாமுடைய
சகோதரனாகிய நாகோரின் மனைவி [2]மில்க்கா
ளுடைய குமாரனாயிருக்கிற பெத்துவேலுக்
குப் பிறந்த ரெபெக்காள் குடத்தைத் தோள்
மேல் வைத்துக்கொண்டு புறப்பட்டு வந்தாள்.
16 அந்தப் பெண் [3]மகா ரூபவதியும், புருஷனை
அறியாத கன்னிகையுமாய் இருந்தாள்; அவள்
துரவில் இறங்கி, தன் குடத்தை நிரப்பிக்
17 கொண்டு ஏறிவந்தாள். அப்பொழுது அந்த
ஊழியக்காரன், அவளுக்கு எதிர்கொண்
டோடி: உன் குடத்திலிருக்கிற தண்ணீரில்
கொஞ்சம் குடிக்கத் தரவேண்டும் என்றான்.
18 அதற்கு அவள்: [4]குடியும் என் ஆண்டவனே
என்று சீக்கிரமாய்க் குடத்தைத் தன் கையில்
இறக்கிக்கொண்டு, அவனுக்குக் குடிக்கக்
19 கொடுத்தாள். கொடுத்தபின், உம்முடைய
ஒட்டகங்களும் குடித்துத் தீருமட்டும் அவைக
ளுக்கும் மொண்டு வார்ப்பேன் என்று சொ
20 ல்லி; சீக்கிரமாய்த் தன் குடத்துத் தண்ணீ
ரைத் தொட்டியிலே ஊற்றிவிட்டு, இன்னும்
மொண்டுவரத் துரவண்டையில் ஓடி, அவனு
டைய ஒட்டகங்களுக்கெல்லாம் மொண்டு
21 வார்த்தாள். அந்த மனிதன் அவளைக்குறித்து
ஆச்சரியப்பட்டு, **கர்த்தர்** தன் பிரயாணத்தை
வாய்க்கப்பண்ணினாரோ இல்லையோ என்று
22 அறியும்பொருட்டு மவுனமாயிருந்தான். ஒட்
டகங்கள் குடித்துத் தீர்ந்தபின், அந்த மனி
தன் அரைச்சேக்கல் எடையுள்ள [5]பொற்காத
ணியையும், அவள் கைகளுக்குப் பத்துச் சேக்
கல் எடைப் பொன்னுள்ள இரண்டு கடகங்க
23 ளையும் எடுத்துக் கொடுத்து, நீ யாருடைய
மகள், எனக்குச் சொல்லவேண்டும்; நாங்கள்
உன் தகப்பன் வீட்டில் இராத்தங்க இடம்
24 உண்டா என்றான். அதற்கு அவள்: [6]நான்
நாகோருக்கு மில்க்காள் பெற்ற குமாரனாகிய
பெத்துவேலின் மகள் என்று சொன்னது
25 மன்றி, எங்களிடத்தில் வைக்கோலும் *தீவன
மும் வேண்டியமட்டும் இருக்கிறது; இராத்
26 தங்க இடமும் உண்டு என்றாள். அப்பொ
ழுது அந்த மனிதன் [7]தலை குனிந்து, **கர்த்த**
27 **ரைப்** பணிந்துகொண்டு, என் எஜமானாகிய
ஆபிரகாமின் தேவனாயிருக்கிற [8]**கர்த்தருக்கு**
ஸ்தோத்திரம்; அவர் தம்முடைய கிருபையை
யும், தம்முடைய உண்மையையும் என் எஜ
மானை விட்டு நீக்கவில்லை; நான் பிரயாணம்

[1] நியா. 6. 17, 37. 2 இரா. 20. 9
[2] ஆதி. 11. 29; 22. 23 ஏசா. 65. 24. தானி. 9. 21
[3] ஆதி. 26. 7
[4] 1 பே. 4. 9
[5] யாத். 32. 2, 3. ஏசா. 3. 19. எசே. 16. 11, 12
[6] ஆதி. 22. 23
* தீனி.
[7] யாத். 4. 31
[8] யாத். 18. 10. ரூத். 4. 14. லூக். 1. 68
[9] சங். 98. 3
[10] ஆதி. 29. 5
[11] ஆதி. 26. 29. நியா. 17. 2. ரூத். 3. 10. சங். 115. 15
[12] ஆதி. 43. 24. நியா. 19. 21
[13] யோபு 23. 12. யோ. 4. 34. எபே. 6. 5-7
[14] ஆதி. 13. 2
[15] ஆதி. 21. 2; 25. 5

பண்ணிவருகையில், [9]**கர்த்தர்** என் எஜமானு
டைய சகோதரர் வீட்டுக்கு என்னை அழைத்
துக்கொண்டு வந்தார் என்றான். அந்தப் 28
பெண் ஓடி, இந்தக் காரியங்களைத் தன் தாயின்
வீட்டிலுள்ளவர்களுக்கு அறிவித்தாள். ரெ 29
பெக்காளுக்கு ஒரு சகோதரன் இருந்தான்;
அவனுக்கு [10]லாபான் என்று பேர்; அந்த
லாபான் வெளியே துரவண்டையில் இருந்த
அந்த மனிதனிடத்துக்கு ஓடினான். அவன் 30
தன் சகோதரி தரித்திருந்த அந்தக் காதணி
யையும், அவள் கைகளில் போட்டிருந்த கட
கங்களையும் பார்த்து, இன்ன இன்னபடி அந்த
மனிதன் என்னோடே பேசினானென்று தன்
சகோதரி ரெபெக்காள் சொன்ன வார்த்தை
களைக் கேட்டமாத்திரத்தில், அந்த மனிதனி
டத்தில் வந்தான்; அவன் துரவு அருகே ஒட்
டகங்கள் அண்டையில் நின்றுகொண்டிருந்
தான். அப்பொழுது அவன்: [11]**கர்த்தரால்** 31
ஆசீர்வதிக்கப்பட்டவரே, உள்ளே வாரும்; நீர்
வெளியே நிற்பானேன்? உமக்கு வீடும், ஒட்
டகங்களுக்கு இடமும் ஆயத்தம்பண்ணியிருக்
கிறேன் என்றான். அப்பொழுது அந்த மனி 32
தன் வீட்டுக்குப் போனான். லாபான் ஒட்ட
கங்களின் கட்டவிழ்த்து, [12]ஒட்டகங்களுக்கு
வைக்கோலும் தீவனமும் போட்டு, அவனும்,
அவனோடே வந்தவர்களும் தங்கள் கால்களைக்
கழுவிக்கொள்ள தண்ணீர் கொடுத்தான்.
பின்பு, அவனுக்கு முன்பாகப் போஜனம் 33
வைக்கப்பட்டது. அப்பொழுது அவன்:
[13]நான் வந்த காரியத்தைச் சொல்லுமுன்னே
புசிக்கமாட்டேன் என்றான். அதற்கு அவன்,
சொல்லும் என்றான். அப்பொழுது அவன்: 34
நான் ஆபிரகாமுடைய ஊழியக்காரன். **கர்த்** 35
**தர்** [14]என் எஜமானை மிகவும் ஆசீர்வதித்திருக்
கிறார், அவர் சீமானாயிருக்கிறார்; **கர்த்தர்** அவ
ருக்கு ஆடுமாடுகளையும், வெள்ளியையும்,
பொன்னையும், வேலைக்காரரையும், வேலைக்
காரிகளையும், ஒட்டகங்களையும், கழுதைகளை
யும் கொடுத்திருக்கிறார். என் எஜமானுடைய 36
மனைவியாகிய [15]சாராள் முதிர்வயதானபோது,
என் எஜமானுக்கு ஒரு குமாரனைப் பெற்றாள்;
அவர் தமக்கு உண்டான யாவையும் அவனுக்
குக்கொடுத்திருக்கிறார். என் எஜமான் என்னை 37
நோக்கி: நான் குடியிருக்கிற கானான் தேசத்
தாருடைய குமாரத்திகளில் நீ என் குமார
னுக்குப் பெண் கொள்ளாமல், நீ என் தகப் 38
பன் வீட்டுக்கும், என் இனத்தாரிடத்துக்கும்
போய், என் குமாரனுக்குப் பெண் கொள்ள
வேண்டும் என்று ஆணையிட்டுக் கொடுக்கும்
படி சொன்னார். அப்பொழுது நான் என் எஜ 39
மானை நோக்கி: ஒருவேளை அந்தப் பெண்
என். பின்னே வாராதேபோனாலோ என்று
கேட்டதற்கு, அவர்: நான் வழிபடும் **கர்த்தர்** 40
உன்னோடே தம்முடைய தூதனை அனுப்பி,
உன் பிரயாணத்தை வாய்க்கப்பண்ணுவார்;
என் இனத்தாரிடத்திலும், என் தகப்பன் வீட்
டிலும் நீ என் குமாரனுக்குப் பெண் கொள்

41 வாய். நீ என் இனத்தாரிடத்துக்குப் போ
னால், என் ஆணைக்கு நீங்கலாயிருப்பாய்; அவர்
கள் உனக்குப் பெண் கொடாமற்போனாலும்,
நீ என் ஆணைக்கு நீங்கலாயிருப்பாய் என்றார்.
42 அப்படியே நான் இன்று துரவண்டையிலே
வந்து: [1]என் எஜமானாகிய ஆபிரகாமின் தேவ
னாகிய **கர்த்தரே**, என் பிரயாணத்தை நீர்
இப்பொழுது வாய்க்கப்பண்ணுவீரானால்,
43 இதோ, நான் தண்ணீர்த்துரவண்டையிலே
நிற்கிறேன், தண்ணீர் மொள்ள வரப்போகிற
கன்னிகையை நான் நோக்கி: உன் குடத்தி
லிருக்கிற தண்ணீரில் கொஞ்சம் எனக்குக்
குடிக்கத் தரவேண்டும் என்று கேட்கும்
44 போது: நீ குடி என்றும், [2]உன் ஒட்டகங்க
ளுக்கும் மொண்டு வார்ப்பேன் என்றும்
சொல்லும் பெண்ணே **கர்த்தர்** என் எஜமா
னுடைய குமாரனுக்கு நியமித்த ஸ்திரீயாக
45 வேண்டும் என்றேன். நான் இதை என்
இருதயத்தில் சொல்லி [3]முடிக்குமுன்னே,
இதோ, ரெபெக்காள் தன் குடத்தைத் தோள்
மேல் வைத்துக்கொண்டு புறப்பட்டு வந்து,
துரவில் இறங்கிப்போய்த் தண்ணீர் மொண்
டாள். அப்பொழுது நான்: எனக்குக் குடிக்
46 கத் தரவேண்டும் என்றேன், அவள் சீக்கிர
மாய்த் தன் தோள்மேலிருந்த குடத்தை இற
க்கி, குடியும், உம்முடைய ஒட்டகங்களுக்
கும் வார்ப்பேன் என்றாள். நான் குடித்தேன்;
47 ஒட்டகங்களுக்கும் வார்த்தாள். அப்பொழுது:
நீ யாருடைய மகள் என்று அவளைக் கேட்
டேன்; அதற்கு அவள், நான் மில்க்காள்
நாகோருக்குப் பெற்ற குமாரனாகிய பெத்து
வேலின் மகள் என்றாள்; அப்பொழுது [4]அவ
ளுக்குக் காதணியையும், அவள் கைகளிலே
48 கடகங்களையும் போட்டு; தலைகுனிந்து, **கர்த்**
**தரைப்** பணிந்துகொண்டு, நான் என் எஜமா
னுடைய [5]சகோதரன் குமாரத்தியை அவர்
குமாரனுக்குக் கொள்ள என்னை நேர்வழி
யாய் நடத்திவந்த என் எஜமானாகிய ஆபிரகா
மின் தேவனாயிருக்கிற **கர்த்தரை** ஸ்தோத்தி
49 ரித்தேன். இப்பொழுதும் நீங்களும் என் எஜ
மானுக்குத் [6]தயையும் உண்மையும் உடைய
வர்களாய் நடக்க மனதுள்ளவர்களானால்,
எனக்குச் சொல்லுங்கள்; இல்லையென்றால்
அதையும் எனக்குச் சொல்லுங்கள், அப்பொ
ழுது நான் வலதுபுறத்தையாகிலும் இடது
புறத்தையாகிலும் நோக்கிப் போவேன் என்
50 றான். அப்பொழுது லாபானும் பெத்துவே
லும் பிரதியுத்தரமாக: [7]இந்தக் காரியம் **கர்த்**
**தரால்** வந்தது, [8]உமக்கு நாங்கள் நலம் பொ
51 லம் ஒன்றும் சொல்லக்கூடாது. இதோ,
ரெபெக்காள் உமக்கு முன்பாக இருக்கிறாள்;
**கர்த்தர்** சொன்னபடியே அவள் உமது எஜ
மானுடைய குமாரனுக்கு மனைவியாகும்படி
க்கு, அவளை அழைத்துக்கொண்டு போம் என்
52 றார்கள். ஆபிரகாமின் ஊழியக்காரன் அவர்
கள் வார்த்தைகளைக் கேட்டபோது, தரைமட்
டும் குனிந்து, **கர்த்தரைப்** பணிந்துகொண்

1 நெகே. 1. 7. சங். 90. 17
2 நீதி. 19. 14
3 1 சாமு. 1. 13. நெகே. 2. 4
4 எசே. 16. 11, 12
5 ஆதி. 22. 23
6 ஆதி. 47. 29. யோசு. 2. 14
7 சங். 118. 23
8 ஆதி. 31. 24
9 யாத். 3. 22; 11. 2; 12. 35
10 ஏசா. 48. 15
11 சங். 45. 10
12 ஆதி. 35. 8
13 ஆதி. 17. 16; 22. 17. ரூத். 4. 11, 12
14 ஆதி. 16. 14; 25. 11
15 யோசு. 1. 8. சங். 1. 2; 77. 12; 119. 15; 143. 5
16 யோசு. 15. 18
17 ஆதி. 38. 12. 1 தெச. 4. 13

டான். பின்பு அந்த ஊழியக்காரன் [9]வெள் 53
ளியுடைமைகளையும், பொன்னுடைமைகளை
யும், வஸ்திரங்களையும் எடுத்து, ரெபெக்கா
ளுக்குக் கொடுத்ததுமன்றி, அவளுடைய
சகோதரனுக்கும் தாய்க்கும் சில உச்சிதங்களை
யும் கொடுத்தான். பின்பு அவனும் அவனோ 54
டிருந்த மனிதரும் புசித்துக் குடித்து, இராத்
தங்கினார்கள்; காலையிலே எழுந்திருந்து,
அவன்: என் எஜமானிடத்துக்கு என்னை
அனுப்பிவிடுங்கள் என்றான். அப்பொழுது 55
அவள் சகோதரனும் அவள் தாயும், பத்து
நாளாகிலும் பெண் எங்களோடிருக்கட்டும்,
பிற்பாடு போகலாம் என்றார்கள். அதற்கு 56
அவன்: [10]**கர்த்தர்** என் பிரயாணத்தை வாய்க்
கப்பண்ணியிருக்க, நீங்கள் எனக்குத் தடை
செய்யாதிருங்கள்; நான் என் எஜமானிடத்
துக்குப் போக என்னை அனுப்பிவிடவேண்
டும் என்றான். அப்பொழுது அவர்கள்: 57
பெண்ணை அழைத்து, அவள் வாய்ப்பிறப்
பைக் கேட்போம் என்று சொல்லி, ரெபெக் 58
காளை அழைத்து: [11]நீ இந்த மனிதனோடேகூ
டப் போகிறாயா என்று கேட்டார்கள். அவள்:
போகிறேன் என்றாள். அப்படியே அவர்கள் 59
தங்கள் சகோதரியாகிய ரெபெக்காளையும்,
[12]அவள் தாதியையும், ஆபிரகாமின் ஊழியக்
காரனையும், அவன் மனிதரையும் அனுப்புவி
த்து, ரெபெக்காளை வாழ்த்தி: [13]எங்கள் சகோ 60
தரியே, நீ கோடாகோடியாய்ப் பெருகுவா
யாக; உன் சந்ததியார் தங்கள் பகைஞருடைய
வாசல்களைச் சுதந்தரித்துக்கொள்வார்களாக
என்று ஆசீர்வதித்தார்கள். அப்பொழுது 61
ரெபெக்காளும் அவள் வேலைக்காரிகளும் எழு
ந்து ஒட்டகங்கள்மேல் ஏறி, அந்த மனித
னோடேகூடப் போனார்கள். ஊழியக்காரன்
ரெபெக்காளை அழைத்துக்கொண்டு போ
னான். ஈசாக்கு தென்தேசத்தில் குடியிருந் 62
தான். அப்பொழுது அவன்: [14]லகாய்ரோயீ
என்னப்பட்ட துரவின் வழியாய்ப் புறப்பட்டு
வந்தான். ஈசாக்கு சாயங்காலவேளையிலே 63
[15]தியானம்பண்ண வெளியிலே போயிருந்து,
தன் கண்களை ஏறெடுத்துப் பார்த்தபோது,
ஒட்டகங்கள் வரக் கண்டான். ரெபெக்காளும் 64
தன் கண்களை ஏறெடுத்து ஈசாக்கைக் கண்ட
போது, ஊழியக்காரனை நோக்கி: அங்கே 65
வெளியிலே நமக்கு எதிராக நடந்துவருகிற
அந்த மனிதன் யார் என்று கேட்டாள். அவர்
தான் என் எஜமான் என்று ஊழியக்காரன்
சொன்னான். [16]அப்பொழுது அவள் ஒட்டக
த்தை விட்டிறங்கி முக்காடிட்டுக்கொண்டாள்.
ஊழியக்காரன் தான் செய்த சகல காரியங்க 66
ளையும் ஈசாக்குக்கு விவரித்துச் சொன்னான்.
அப்பொழுது ஈசாக்கு ரெபெக்காளைத் தன் 67
தாய் சாராளுடைய கூடாரத்துக்கு அழைத்
துக்கொண்டுபோய், அவளைத் தனக்கு மனை
வியாக்கிக்கொண்டு, அவளை நேசித்தான்.
[17]ஈசாக்கு தன் தாய்க்காகக் கொண்டிருந்த துக்
கம் நீங்கி ஆறுதல் அடைந்தான்.

**25** ஆபிரகாம் கேத்தூராள் என்னும் பேர்
கொண்ட ஒரு ஸ்திரீயையும் விவாகம்பண்
2 ணியிருந்தான். அவள் அவனுக்குச் [1]சிம்ரா
னையும், யக்ஷானையும், மேதானையும், மீதி
யானையும், இஸ்பாக்கையும், சூவாகையும் பெற்
3 ருள். யக்ஷான் சேபாவையும், தேதானை
யும் பெற்ருன்; தேதானுடைய குமாரர் அசூ
4 ரீம், லெத்தூசீம், லெயூமீம் என்பவர்கள். மீதி
யானுடைய குமாரர் எப்பா, எப்பேர், ஆனோ
க்கு, அபீதா, எல்தாகா என்பவர்கள்; இவர்
கள் எல்லாரும் கேத்தூராளின் பிள்ளைகள்.
5 ஆபிரகாம் [2]தனக்கு உண்டான யாவையும்
6 ஈசாக்குக்குக் கொடுத்தான். ஆபிரகாமுக்கு
இருந்த மறுமனையாட்டிகளின் பிள்ளைகளு
க்கோ ஆபிரகாம் நன்கொடைகளைக் கொடுத்து,
தான் உயிரோடிருக்கும்போதே அவர்களைத்
தன் குமாரனாகிய ஈசாக்கைவிட்டுக் கிழக்கே
போகக் கீழ்தேசத்துக்கு [3]அனுப்பிவிட்டான்.
7 ஆபிரகாம் உயிரோடிருந்த ஆயுசுநாட்கள் நூற்று
8 எழுபத்தைந்து வருஷம். பிற்பாடு [4]ஆபிர
காம் நல்ல நரைவயதிலும், முதிர்ந்த பூரண
ஆயுசிலும் பிராணன் போய் மரித்து, தன்
9 ஜனத்தாரோடே சேர்க்கப்பட்டான். [5]அவன்
குமாரராகிய ஈசாக்கும் இஸ்மவேலும் மம்
ரேக்கு எதிரே எத்தியனான சோகாரின் குமா
ரனாகிய எப்பெரோனின் நிலத்திலுள்ள மக்
பேலா என்னப்பட்ட குகையிலே அவனை
10 அடக்கம்பண்ணினார்கள். அந்த நிலத்தை
[6]ஏத்தின் புத்திரர் கையிலே ஆபிரகாம் வாங்
கியிருந்தான்; அங்கே ஆபிரகாமும் அவன்
மனைவியாகிய சாராளும் அடக்கம்பண்ணப்
11 பட்டார்கள். ஆபிரகாம் மரித்தபின் தேவன்
அவன் குமாரனாகிய ஈசாக்கை ஆசீர்வதித்தார்.
[7]லகாய்ரோயீ என்னும் துரவுக்குச் சமீபமாய்
ஈசாக்கு குடியிருந்தான்.
12 சாராளுடைய அடிமைப்பெண்ணாகிய எகி
ப்து தேசத்தாளான [8]ஆகார் ஆபிரகாமுக்குப்
பெற்ற குமாரனாகிய இஸ்மவேலின் வம்சவா
13 லாறு: பற்பல [9]சந்ததிகளாய்ப் பிரிந்த இஸ்
மவேலின் புத்திரருடைய நாமங்களாவன;
இஸ்மவேலுடைய மூத்த மகன் நெபாயோத்;
14 பின்பு கேதார், அத்பியேல், மிப்சாம், மிஷ்
15 மா, தூமா, மாசா, ஆதார், தேமா, யெத்தூர்,
16 நாபீஸ், கேத்மா என்பவைகளே. தங்கள் கிரா
மங்களிலும் அரண்களிலும் குடியிருந்த தங்
கள் ஜனத்தாருக்குப் [10]பன்னிரண்டு பிரபுக்க
ளாகிய இஸ்மவேலின் குமாரர்கள் இவர்களே,
இவர்களுடைய நாமங்களும் இவைகளே.
17 இஸ்மவேலின் வயது நூற்று முப்பத்தேழு.
பின்பு அவன் பிராணன் போய் மரித்து, தன்
18 ஜனத்தாரோடே சேர்க்கப்பட்டான். அவர்
கள் [11]ஆவிலாதுவக்கி எகிப்துக்கு எதிராக அசீ
ரியாவுக்குப் போகிற வழியிலிருக்கும் சூர்மட்
டும் வாசம்பண்ணினார்கள். இது அவன்
[12]சகோதரர் எல்லாருக்கும் முன்பாக அவன்
குடியேறின பூமி.
19 ஆபிரகாமின் குமாரனாகிய ஈசாக்குடைய

[1] 1 நாளா. 1. 32
[2] ஆதி. 24. 36
[3] ஆதி. 21. 14. நியா. 6. 3. சங். 17. 14
[4] ஆதி. 15. 15: 49. 29. யோபு 5. 26
[5] ஆதி. 35. 29: 50. 13
[6] ஆதி. 23. 16: 49. 31
[7] ஆதி. 16. 14
[8] ஆதி. 16. 15
[9] 1 நாளா. 1. 29
[10] ஆதி. 17. 20
[11] 1 சாமு. 15. 7
[12] ஆதி. 16. 12
[13] மத். 1. 2
[14] ஆதி. 22. 23: 24. 29
[15] 1 சாமு. 1. 11. நா. 1. 13. எஸ்றா. 8. 23
[16] ரோ. 9. 10
[17] 1 சாமு. 9. 9: 10. 22
[18] ஆதி. 24. 60: 27. 29
[19] மல். 1. 2-4. ரோ. 9. 10-12
[20] ஓசி. 12. 3
[21] ஆதி. 27. 36
[22] ஆதி. 27. 3-5
[23] எபி. 11. 9
[24] ஆதி. 27. 6, 19. ...
[25] யோபு 21. 15, மல். 3. 14
[26] எபி. 12. 16

வம்சவரலாறு: [13]ஆபிரகாம் ஈசாக்கைப் பெற்
ருன். ஈசாக்கு [14]ரெபெக்காளை விவாகம் 20
பண்ணுகிறபோது நாற்பதுவயதாயிருந்தான்;
இவள் பதான் அராம் என்னும் சீரியா தேசத்
தானாகிய பெத்துவேலுக்குக் குமாரத்தியும்,
சீரியா தேசத்தானாகிய லாபானுக்குச் சகோ
தரியுமானவள். மலடியாயிருந்த தன் மனை 21
விக்காக ஈசாக்கு [15]கர்த்தரை நோக்கி வேண்
டுதல் செய்தான்; கர்த்தர் அவன் வேண்டுத
லைக் கேட்டருளினார்; [16]அவன் மனைவி ரெ
பெக்காள் கர்ப்பந்தரித்தாள். அவள் கர்ப்பத் 22
திலே பிள்ளைகள் ஒன்றோடொன்று மோதிக்
கொண்டிருந்தன; அப்பொழுது அவள்: இப்
படியானால் எனக்கு எப்படியோ என்று
சொல்லி, [17]கர்த்தரிடத்தில் விசாரிக்கும்படி
போனாள். அதற்குக் கர்த்தர்: [18]இரண்டு 23
ஜாதிகள் உன் கர்ப்பத்தில் உண்டாயிருக்கி
றது; இரண்டுவித ஜனங்கள் உன் வயிற்றிலி
ருந்து பிரியும், அவர்களில் ஒரு ஜனத்தார்
மற்ற ஜனத்தாரைப்பார்க்கிலும் பலத்திருப்பார்
கள், [19]மூத்தவன் இளையவனைச் சேவிப்பான்
என்றார். பிரசவகாலம் பூரணமானபோது, 24
அவள் கர்ப்பத்தில் இரட்டைப் பிள்ளைகள்
இருந்தது. மூத்தவன் சிவந்த நிறமுள்ளவனா 25
யும் சர்வாங்கமும் ரோம அங்கி போர்த்தவன்
போலவும் வெளிப்பட்டான்; அவனுக்கு ஏசா
என்று பேரிட்டார்கள். பின்பு, அவன் சகோ 26
தரன் தன் கையினாலே [20]ஏசாவின் குதிங்கா
லைப் பிடித்துக்கொண்டு வெளிப்பட்டான்;
அவனுக்கு [21]யாக்கோபு என்று பேரிட்டார்
கள்; இவர்களை அவள் பெற்றபோது ஈசாக்கு
அறுபது வயதாயிருந்தான். இந்தப் பிள்ளை 27
கள் பெரியவர்களானபோது, [22]ஏசா வேட்
டையில் வல்லவனும் வனசஞ்சாரியுமாய் இரு
ந்தான்; யாக்கோபு குணசாலியும் [23]கூடார
வாசியுமாய் இருந்தான். ஏசா வேட்டையா 28
டிக் கொண்டுவருகிறது [24]ஈசாக்கினுடைய
வாய்க்கு ருசிகரமாயிருந்ததினாலே ஏசாவின்
மேல் பட்சமாயிருந்தான்; ரெபெக்காளோ
யாக்கோபின்மேல் பட்சமாயிருந்தாள். ஒரு 29
நாள் ஏசா வெளியிலிருந்து களைத்து வந்த
போது, யாக்கோபு கூழ் சமைத்துக்கொண்டி
ருந்தான். அப்பொழுது ஏசா யாக்கோபை 30
நோக்கி: அந்தச் சிவப்பான கூழிலே நான்
சாப்பிடக் கொஞ்சம் தா, இளைத்திருக்கிறேன்
என்றான்; இதனாலே அவனுக்கு ஏதோம் என்
கிற பேர் உண்டாயிற்று. அப்பொழுது யாக் 31
கோபு: உன் சேஷ்ட புத்திரபாகத்தை இன்று
எனக்கு விற்றுப்போடு என்றான். அதற்கு 32
ஏசா: இதோ, [25]நான் சாகப்போகிறேனே,
இந்தச் சேஷ்ட புத்திரபாகம் எனக்கு என்
னத்திற்கு என்றான். அப்பொழுது யாக் 33
கோபு: இன்று எனக்கு ஆணையிட்டுக் கொடு
என்றான்; அவன் யாக்கோபுக்கு ஆணையிட்டு,
தன் [26]சேஷ்ட புத்திரபாகத்தை அவனுக்கு
விற்றுப்போட்டான். அப்பொழுது யாக்கோபு 34
ஏசாவுக்கு அப்பத்தையும் பயற்றங் கூழையும்

கொடுத்தான்; [1]அவன் புசித்துக் குடித்து எழுந்
திருந்து போய்விட்டான். இப்படி ஏசா தன்
சேஷ்ட புத்திரபாகத்தை அலட்சியம் பண்
ணினான்.

**26** ஆபிரகாமின் நாட்களில் உண்டான பஞ்
சத்தை அல்லாமல், பின்னும் ஒரு [2]பஞ்சம்
தேசத்தில் உண்டாயிற்று; அப்பொழுது ஈசா
க்கு பெலிஸ்தருக்கு ராஜாவாகிய அபிமெலேக்
2 கினிடத்தில் கேராருக்குப் போனான். **கர்த்தர்**
அவனுக்குத் தரிசனமாகி: நீ எகிப்துக்குப்
போகாமல், நான் [3]உனக்குச் சொல்லும் தே
3 சத்திலே குடியிரு. இந்தத் [4]தேசத்திலே
வாசம்பண்ணு; நான் உன்னோடேகூட இரு
ந்து, உன்னை ஆசீர்வதிப்பேன்; நான் உனக்
கும் உன் சந்ததிக்கும் இந்தத் தேசங்கள்
யாவையும் தந்து, உன் தகப்பனாகிய ஆபிர
காமுக்கு நான் இட்ட ஆணையை நிறைவேற்
4 றுவேன். ஆபிரகாம் என் சொல்லுக்குக் [5]கீழ்ப்
படிந்து, என் விதிகளையும், என் கற்பனைகளை
யும், என் நியமங்களையும், என் பிரமாணங்
5 களையும் கைக்கொண்டபடியினால், நான் [6]உன்
சந்ததியை வானத்தின் நட்சத்திரங்களைப்போ
லப் பெருகப்பண்ணி, உன் சந்ததிக்கு இந்தத்
தேசங்கள் யாவையும் தருவேன்; உன் சந்ததிக்
குள் பூமியிலுள்ள சகல ஜாதிகளும் ஆசீர்வ
6 திக்கப்படும் என்றார். ஈசாக்கு கேராரிலே
7 குடியிருந்தான். அவ்விடத்து மனிதர்கள்
அவன் மனைவியைக்குறித்து விசாரித்தபோது:
[7]இவள் என் சகோதரி என்றான். ரெபெக்
காள் பார்வைக்கு அழகுள்ளவளானபடியால்,
அவ்விடத்து மனிதர்கள் அவள்நிமித்தம் தன்
னைக் கொல்லுவார்கள் என்று எண்ணி, அவ
ளைத் தன் மனைவி என்று சொல்லப் பயந்
8 தான். அவன் அங்கே நெடுநாள் தங்கியிருக்
கையில், பெலிஸ்தருக்கு ராஜாவாகிய அபி
மெலேக்கு ஜன்னல் வழியாய்ப் பார்க்கும்
போது, ஈசாக்கு தன் மனைவியாகிய ரெபெக்
காளோடே விளையாடிக்கொண்டிருக்கிறதைக்
9 கண்டான். அபிமெலேக்கு ஈசாக்கை அழை
த்து: அவள் உன் மனைவியாயிருக்கிறாளே!
பின்னை என் அவளை உன் சகோதரி என்று
சொன்னாய் என்றான். அதற்கு ஈசாக்கு:
அவள்நிமித்தம் நான் சாகாதபடிக்கு, இப்ப
10 டிச் சொன்னேன் என்றான். அதற்கு அபி
மெலேக்கு: எங்களிடத்தில் ஏன் இப்படிச்
செய்தாய்? ஜனங்களுக்குள் யாராகிலும் உன்
மனைவியோடே சயனிக்கவும், எங்கள்மேல்
[8]பழி சுமரவும் நீ இடமுண்டாக்கினாயே என்
11 றான். பின்பு, அபிமெலேக்கு: இந்தப் புரு
ஷனையாகிலும் இவன் [9]மனைவியையாகிலும்
தொடுகிறவன் நிச்சயமாய்க் கொலைசெய்யப்
படுவான் என்று எல்லா ஜனங்களும் அறியச்
12 சொன்னான். ஈசாக்கு அந்தத் தேசத்தில்
விதை விதைத்தான்; கர்த்தர் அவனை ஆசீர்வ
தித்ததினால் [10]அந்த வருஷத்தில் நூறுமடங்கு
13 பலன் அடைந்தான்; அவன் [11]ஐசுவரியவா
னாகி, வரவர விருத்தியடைந்து, மகா பெரிய
வனானான். அவனுக்கு ஆட்டுமந்தையும், மாட் 14
டுமந்தையும், அநேக பணிவிடைக்காரரும்
இருந்தபடியினாலே பெலிஸ்தர் அவன்பேரில்
[12]பொறாமைகொண்டு, அவன் தகப்பனாகிய 15
[13]ஆபிரகாமின் நாட்களில் அவனுடைய வே
லைக்காரர் வெட்டின துரவுகளையெல்லாம்
தூர்த்து மண்ணினால் நிரப்பிப்போட்டார்கள்.
அபிமெலேக்கு ஈசாக்கை நோக்கி: நீ எங்களை 16
விட்டுப் போய்விடு; [14]எங்களைப்பார்க்கிலும்
மிகவும் பலத்தவனானாய் என்றான். அப்பொ 17
ழுது ஈசாக்கு அவ்விடம் விட்டுப் புறப்பட்டு,
கேராரின் பள்ளத்தாக்கிலே கூடாரம்போட்டு,
அங்கே குடியிருந்து, தன் தகப்பனாகிய ஆபி 18
ரகாமின் நாட்களில் வெட்டினவைகளும்,
ஆபிரகாம் மரித்தபின் பெலிஸ்தர் தூர்த்துப்
போட்டவைகளுமான துரவுகளை மறுபடியும்
தோண்டி, [15]தன் தகப்பன் அவைகளுக்கு
இட்டிருந்த பேர்களின்படியே அவைகளுக்
குப் பேரிட்டான். ஈசாக்குடைய வேலைக் 19
காரர் பள்ளத்தாக்கிலே வெட்டி, அங்கே சுரக்
கும் நீரூற்றைக் கண்டார்கள். கேராரூர் 20
மேய்ப்பர் [16]இந்தத் தண்ணீர் தங்களுடையது
என்று சொல்லி, ஈசாக்குடைய மேய்ப்பரு
டனே வாக்குவாதம் பண்ணினார்கள்; அவர்
கள் தன்னோடே வாக்குவாதம் பண்ணினப
டியால், அந்தத் துரவுக்கு *ஏசேக்கு என்று
பேரிட்டான். வேறொரு துரவை வெட்டி 21
னார்கள்; அதைக்குறித்தும் வாக்குவாதம் பண்
ணினார்கள்; ஆகையால் அதற்கு †சித்னா
என்று பேரிட்டான். பின்பு அவ்விடம்விட் 22
டுப் பெயர்ந்துபோய், வேறொரு துரவை
வெட்டினான்; அதைக்குறித்து அவர்கள்
வாக்குவாதம் பண்ணவில்லை; அப்பொழுது
அவன்: நாம் தேசத்தில் [17]பலுகும்படிக்கு, இப்
பொழுது **கர்த்தர்** நமக்கு இடம் உண்டாக்
கினார் என்று சொல்லி, அதற்கு ‡ரெகொ
போத் என்று பேரிட்டான். அங்கேயிருந்து 23
பெயெர்செபாவுக்குப் போனான். அன்று ராத் 24
திரியிலே **கர்த்தர்** அவனுக்குத் தரிசனமாகி:
[18]நான் உன் தகப்பனாகிய ஆபிரகாமுடைய
தேவன், பயப்படாதே, நான் உன்னோடே
கூட இருந்து, என் ஊழியக்காரனாகிய ஆபிர
காமினிமித்தம் உன்னை ஆசீர்வதித்து, உன்
சந்ததியைப் பெருகப்பண்ணுவேன் என்றார்.
அங்கே அவன் [19]ஒரு பலிபீடத்தைக் கட்டி, 25
[20]**கர்த்தருடைய** நாமத்தைத்தொழுதுகொண்டு,
அங்கே தன் கூடாரத்தைப் போட்டான்.
அவ்விடத்தில் ஈசாக்கின் வேலைக்காரர் ஒரு
துரவை வெட்டினார்கள். அபிமெலேக்கும் 26
அவன் சிநேகிதனாகிய அகுசாத்தும் அவன்
சேனாபதியாகிய [21]பிகோலும், கேராரிலிருந்து
அவனிடத்துக்கு வந்தார்கள். அப்பொழுது 27
ஈசாக்கு அவர்களை நோக்கி: ஏன் என்னிடத்
தில் வந்தீர்கள்? நீங்கள் [22]என்னைப் பகைத்து,
என்னை உங்களிடத்தில் இராதபடிக்குத் துரத்
திவிட்டீர்களே என்றான். அதற்கு அவர்கள்: 28
நிச்சயமாய் [23]**கர்த்தர்** உம்மோடேகூட இருக்

1 ஏசா. 12. 13. 1 கொ. 15. 32
2 ஆதி. 12. 10
3 ஆதி. 12. 1
4 ஆதி. 20. 1; 22 16. எபி. 11. 9
5 ஆதி. 22. 18
6 ஆதி. 15. 5
7 ஆதி. 12. 13; 20. 2, 3; 24. 16. நீதி. 29. 25
8 ஆதி. 20. 9
9 சங். 105. 15. நீதி. 6. 29
10 மத். 13. 8
11 ஆதி. 24. 35. சங். 122. 3. நீதி. 10. 22
12 ஆதி. 37. 11. பிர. 4. 4
13 ஆதி. 21. 30
14 யாத். 1. 9
15 ஆதி. 21. 31
16 ஆதி. 21. 15
* வாக்குவாதம்.
† பகை.
17 ஆதி. 17. 6; 28. 3
‡ இடம்.
18 ஆதி. 17. 7; 24. 12; 15. 1. யாத். 3. 6. அப். 7. 32
19 ஆதி. 12. 7; 13. 18
20 சங். 116. 17
21 ஆதி. 21. 22
22 நியா. 11. 7
23 ஆதி. 21. 22, 23

கிறீர் என்று கண்டோம்; ஆகையால் எங்க
ளுக்கும் உமக்கும் ஒரு ஆணை ஏற்பாடு உண்
டாகவேண்டும் என்று நாங்கள் நிர்ணயம்பண்
29 ணினோம். நாங்கள் உம்மைத் தொடாமல்,
நன்மையையே உமக்குச் செய்து, உம்மைச்
சமாதானத்தோடே அனுப்பிவிட்டதுபோல,
நீரும் எங்களுக்குத் தீங்குசெய்யாதபடிக்கு உம்
மோடே உடன்படிக்கை பண்ணிக்கொள்ள
வந்தோம்; நீர் **கர்த்தரால்** [1]ஆசீர்வதிக்கப்பட்
30 டவராமே என்றார்கள். அவன் [2]அவர்களுக்கு
விருந்துபண்ணினான், அவர்கள் புசித்துக்
31 குடித்தார்கள். அதிகாலையில் எழுந்து ஒரு
வருக்கொருவர் [3]ஆணையிட்டுக்கொண்டார்
கள். பின்பு ஈசாக்கு அவர்களை அனுப்பி
விட்டான்; அவர்கள் அவனிடத்திலிருந்து
32 சமாதானத்தோடே போய்விட்டார்கள். அந்
நாளில்தானே ஈசாக்கின் வேலைக்காரர் வந்து,
தாங்கள் துரவு வெட்டின செய்தியை அவ
னுக்கு அறிவித்து, தண்ணீர் கண்டோம் என்
33 றார்கள். அதற்கு *சேபா என்று பேரிட்
டான்; ஆகையால் அந்த ஊரின் பேர் இந்
நாள்வரைக்கும் †பெயெர்செபா என்னப்படு
34 கிறது. ஏசா [4]நாற்பது வயதானபோது, ஏத்
தியனான பெயேரியினுடைய குமாரத்தியா
கிய யூதீத்தையும், ஏத்தியனான ஏலோனுடைய
குமாரத்தியாகிய பஸ்மாத்தையும் விவாகம்
35 பண்ணினான். அவர்கள் ஈசாக்குக்கும் ரெ
பெக்காளுக்கும் [5]மனநோவாயிருந்தார்கள்.

**27** ஈசாக்கு முதிர்வயதானதினால் அவன்
[6]கண்கள் இருளடைந்து பார்வையற்றுப்
போனபோது, அவன் தன் மூத்த குமாரனாகிய
ஏசாவை அழைத்து, என் மகனே என்றான்;
அவன், இதோ, இருக்கிறேன் என்றான்.
2 அப்பொழுது அவன்: நான் முதிர்வயதா
னேன், [7]என் மரணம் இன்ன நாளில் என்று
3 அறியேன். ஆகையால், நீ [8]உன் ஆயுதங்க
ளாகிய உன் அம்பறாத்தூணியையும் உன்
வில்லையும் எடுத்துக்கொண்டு வனத்துக்குப்
4 போய், எனக்காக வேட்டையாடி, அதை
எனக்குப் பிரியமாயிருக்கிற ருசியுள்ள பதார்த்
தங்களாகச் சமைத்து, நான் புசிக்கவும், நான்
மரணமடையுமுன்னே என் ஆத்துமா உன்னை
ஆசீர்வதிக்கவும், என்னிடத்தில் கொண்டுவா
5 என்றான். ஈசாக்கு தன் குமாரனாகிய ஏசா
வோடே பேசுகையில், ரெபெக்காள் கேட்டுக்
கொண்டிருந்தாள். ஏசா வேட்டையாடிக்
கொண்டுவரும்படி வனத்துக்குப் போனான்.
6 அப்பொழுது ரெபெக்காள் தன் குமாரனாகிய
யாக்கோபை நோக்கி: உன் தகப்பன் உன்
7 சகோதரனாகிய ஏசாவை அழைத்து: நான்
புசித்து, எனக்கு மரணம் வருமுன்னே, **கர்**
**த்தரை** முன்னிட்டு உன்னை ஆசீர்வதிக்கும்
படி, நீ எனக்காக வேட்டையாடி, அதை
எனக்கு ருசியுள்ள பதார்த்தங்களாகச் சமைத்
துக்கொண்டுவா என்று சொல்லக்கேட்டேன்.
8 ஆகையால், என் மகனே, [9]என் சொல்லைக்
கேட்டு, நான் உனக்குக் கற்பிக்கிறபடி செய்.

நீ ஆட்டுமந்தைக்குப் போய், இரண்டு நல்ல 9
வெள்ளாட்டுக்குட்டிகளைக் கொண்டுவா; நான்
அவைகளை உன் தகப்பனுக்குப் பிரியமான
படி ருசியுள்ள பதார்த்தங்களாகச் சமைப்
பேன். உன் தகப்பன் தாம் மரணமடையு 10
முன்னே உன்னை ஆசீர்வதிக்கும்படி அவர்
புசிப்பதற்கு நீ அதை அவரிடத்தில் கொண்டு
போகவேண்டும் என்றாள். அதற்கு யாக்கோபு 11
தன் தாயாகிய ரெபெக்காளை நோக்கி: [10]என்
சகோதரனாகிய ஏசா ரோமம் மிகுத்தவன்,
நான் ரோமமில்லாதவன். ஒருவேளை என் 12
தகப்பன் என்னைத் தடவிப்பார்ப்பார்; அப்
பொழுது நான் அவருக்கு எத்தனாய்க் காணப்
பட்டு, என்மேல் [11]ஆசீர்வாதத்தை அல்ல,
சாபத்தை வரப்பண்ணிக்கொள்வேனே என்
றான். அதற்கு அவன் தாய்: என் மகனே, 13
உன்மேல் வரும் சாபம் [12]என்மேல் வரட்டும்;
என் சொல்லைமாத்திரம் கேட்டு, நீ போய்,
அவைகளை என்னிடத்தில் கொண்டுவா என்
றாள். அவன் போய் அவைகளைப் பிடித்து, 14
தன் தாயினிடத்தில் கொண்டுவந்தான்; அவ
னுடைய தாய் அவன் தகப்பனுக்குப் பிரிய
மானபடி ருசியுள்ள பதார்த்தங்களைச் சமைத்
தாள். பின்பு, ரெபெக்காள் வீட்டிலே தன் 15
னிடத்தில் இருந்த தன் மூத்த மகனாகிய ஏசா
வின் நல்ல வஸ்திரங்களை எடுத்து, தன் இளைய
மகனாகிய யாக்கோபுக்கு உடுத்தி, வெள்ளாட் 16
டுக்குட்டிகளின் தோலை அவன் கைகளிலே
யும் ரோமமில்லாத அவன் கழுத்திலேயும்
போட்டு; தான் சமைத்த ருசியுள்ள பதார்த் 17
தங்களையும் அப்பங்களையும் தன் குமாரனாகிய
யாக்கோபின் கையிலே கொடுத்தாள். அவன் 18
தன் தகப்பனிடத்தில் வந்து, என் தகப்பனே
என்றான்; அதற்கு அவன்: இதோ, இருக்கி
றேன்; நீ யார், என் மகனே என்றான். அப் 19
பொழுது யாக்கோபு தன் தகப்பனை நோக்கி:
[13]நான் உமது மூத்த மகனாகிய ஏசா; நீர்
எனக்குச் சொன்னபடியே செய்தேன்; உம்
முடைய ஆத்துமா என்னை ஆசீர்வதிக்கும்
படி, நீர் எழுந்து உட்கார்ந்து, நான் வேட்
டையாடிக் கொண்டுவந்ததைப் புசியும் என்
றான். அப்பொழுது ஈசாக்குத் தன் குமா 20
ரனை நோக்கி: [14]என் மகனே, இது உனக்கு
இத்தனை சீக்கிரமாய் எப்படி அகப்பட்டது
என்றான். அவன்: உம்முடைய தேவனாகிய
**கர்த்தர்** எனக்கு நேரிடப்பண்ணினார் என்
றான். அப்பொழுது ஈசாக்கு யாக்கோபை 21
நோக்கி: என் மகனே, நீ என் குமாரனாகிய
ஏசாதானோ அல்லவோ என்று நான் உன்னைத்
தடவிப்பார்க்கும்படி கிட்ட வா என்றான்.
யாக்கோபு தன் தகப்பனாகிய ஈசாக்கண்டை 22
யில் கிட்டப் போனான்; அவன் இவனைத் தட
விப்பார்த்து: சத்தம் யாக்கோபின் சத்தம்,
கைகளோ ஏசாவின் கைகள் என்று சொல்லி,
அவனுடைய கைகள் அவன் சகோதரனாகிய 23
ஏசாவின் கைகளைப்போல ரோமமுள்ளவை
களாயிருந்தபடியினாலே, இன்னான் என்று

[1] ஆதி. 24. 31. சங். 115. 15
[2] ஆதி. 19. 3; 31. 54
[3] ஆதி. 21. 31
* ஆணை.
† ஆணையின் கிணறு. ஆதி. 21. 31
[4] ஆதி. 36. 2
[5] ஆதி. 27. 46; 28. 1, 8
[6] ஆதி. 48. 10. 1 சாமு. 3. 2
[7] நீதி. 27. 1. யாக். 4. 14
[8] ஆதி. 48. 9; 49. 28. உபா. 33. 1
[9] 13. வசனம்.
[10] ஆதி. 25. 25
[11] ஆதி. 9. 25. உபா. 27. 18
[12] ஆதி. 43. 9. 1 சாமு. 25. 24. 2 சாமு. 14. 9. மத். 27. 25
[13] 1 இரா. 13. 18; 14. 2. ஏசா. 28. 15. சக. 13. 4
[14] யாத். 20. 7. யோபு 13. 7

24 அறியாமல், அவனை ஆசீர்வதித்து, நீ என்
குமாரனாகிய ஏசாதானோ என்றான்; அவன்:
25 [1]நான்தான் என்றான். அப்பொழுது அவன்:
என் குமாரனே, நீ வேட்டையாடிக் கொண்
டுவந்ததை நான் புசித்து, என் ஆத்துமா
உன்னை ஆசீர்வதிக்கும்படி அதை என் கிட்
டக் கொண்டுவா என்றான்; அவன் அதைக்
கிட்டக் கொண்டுபோனான்; அப்பொழுது
அவன் புசித்தான்; பிற்பாடு, திராட்சரசம்
அவனுக்குக் கொண்டுவந்து கொடுத்தான்,
26 அவன் குடித்தான். அப்பொழுது அவன்
தகப்பனாகிய ஈசாக்கு அவனை நோக்கி: என்
மகனே, நீ கிட்ட வந்து என்னை முத்தஞ்செய்
27 என்றான். அவன் கிட்டப் போய், அவனை
முத்தஞ்செய்தான்; அப்பொழுது அவனு
டைய வஸ்திரங்களின் வாசனையை மோந்து:
இதோ, என் குமாரனுடைய [2]வாசனை கர்த்தர்
ஆசீர்வதித்த வயல்வெளியின் வாசனையைப்
28 போல் இருக்கிறது. தேவன் [3]உனக்கு வானத்
துப் பனியையும் பூமியின் கொழுமையையும்
கொடுத்து, மிகுந்த தானியத்தையும் திராட்
29 சரசத்தையும் தந்தருளுவாராக. ஜனங்கள்
[4]உன்னைச் சேவிக்கவும் ஜாதிகள் உன்னை
வணங்கவும் கடவர்கள்; உன் சகோதரருக்கு
எஜமானாயிருப்பாய்; உன் தாயின் பிள்ளைகள்
உன்னை வணங்குவார்கள்; உன்னைச் சபிக்கிற
வர்கள் சபிக்கப்பட்டவர்களும், உன்னை ஆசீர்
வதிக்கிறவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்களு
மாய் இருப்பார்கள் என்று சொல்லி அவனை
30 [5]ஆசீர்வதித்தான். ஈசாக்கு யாக்கோபை ஆசீர்
வதித்து முடிந்தபோது, யாக்கோபு தன் தகப்
பனாகிய ஈசாக்கின் சமுகத்தை விட்டுப் புறப்
பட்டவுடனே, அவன் சகோதரனாகிய ஏசா
31 வேட்டையாடி வந்து சேர்ந்தான். அவனும்
ருசியுள்ள பதார்த்தங்களைச் சமைத்து, தன்
தகப்பனண்டைக்குக் கொண்டுவந்து, தகப்
பனை நோக்கி: உம்முடைய ஆத்துமா என்னை
ஆசீர்வதிக்கும்படி, என் தகப்பனார் எழுந்தி
ருந்து, உம்முடைய குமாரனாகிய நான் வேட்
டையாடிக் கொண்டுவந்ததைப் புசிப்பாராக
32 என்றான். அப்பொழுது அவன் தகப்பனா
கிய ஈசாக்கு: நீ யார் என்றான்; அதற்கு
அவன்: நான் உமது மூத்த மகனாகிய ஏசா
33 என்றான். அப்பொழுது ஈசாக்கு மிகவும்
பிரமித்து நடுங்கி: வேட்டையாடி எனக்குக்
கொண்டுவந்தானே, அவன் யார்? நீ வரு
முன்னே அவை யெல்லாவற்றிலும் நான்
புசித்து அவனை ஆசீர்வதித்தேனே, [6]அவன்
ஆசீர்வதிக்கப்பட்டவனாகவும் இருப்பான் என்
34 றான். ஏசா தன் தகப்பனுடைய வார்த்தைக
ளைக் கேட்டவுடனே, [7]மிகவும் மனங்கசந்து
உரத்த சத்தமிட்டு அலறி, தன் தகப்பனை
நோக்கி: என் தகப்பனே, என்னையும் ஆசீர்வ
35 தியும் என்றான். அதற்கு அவன்: உன் சகோ
தரன் தந்திரமாய் வந்து, உன்னுடைய ஆசீர்
வாதத்தைப் பெற்றுக்கொண்டான் என்றான்.
36 அப்பொழுது அவன்: அவன் பெயர் [8]யாக்
கோபு என்னப்படுவது சரியல்லவா? இதோ
டே இரண்டுதரம் என்னை மோசம்போக்கி
னான்; என் சேஷ்டபுத்திரபாகத்தை எடுத்
துக்கொண்டான்; இதோ, இப்பொழுது என்
ஆசீர்வாதத்தையும் வாங்கிக்கொண்டான் என்
று சொல்லி; நீர் எனக்கு ஒரு ஆசீர்வாதத்தை
யாகிலும் வைத்துவைக்கவில்லையா என்றான்.
ஈசாக்கு ஏசாவுக்குப் பிரதியுத்தரமாக: இதோ, 37
[9]நான் அவனை உனக்கு எஜமானாக வைத்
தேன்; அவன் சகோதரர் எல்லாரையும் அவ
னுக்கு ஊழியக்காரராகக் கொடுத்து, அவ
னைத் தானியத்தினாலும் திராட்சரசத்தினாலும்
ஆதரித்தேன்; இப்பொழுதும் என் மகனே,
நான் உனக்கு என்னசெய்வேன் என்றான்.
ஏசா தன் தகப்பனை நோக்கி: என் தகப்பனே, 38
இந்த ஒரே ஆசீர்வாதம்மாத்திரமா உம்மிடத்
தில் உண்டு? என் தகப்பனே, என்னையும்
ஆசீர்வதியும் என்று சொல்லி, [10]ஏசா சத்த
மிட்டு அழுதான். அப்பொழுது அவன் தகப் 39
பனாகிய ஈசாக்கு அவனுக்குப் பிரதியுத்தர
மாக: [11]உன் வாசஸ்தலம் பூமியின் சாரத்தோ
டும் உயர வானத்திலிருந்து இறங்கும் பனி
யோடும் இருக்கும். உன் பட்டயத்தினாலே 40
நீ பிழைத்து, [12]உன் சகோதரனைச் சேவிப்
பாய்; [13]நீ மேற்கொள்ளும் காலம் வரும்போ
தோ, உன் கழுத்தில் இருக்கிற அவனுடைய
நுகத்தடியை முறித்துப்போடுவாய் என்றான்.
யாக்கோபைத் தன் தகப்பன் ஆசீர்வதித்தநி 41
மித்தம் ஏசா யாக்கோபைப் [14]பகைத்து:
என் தகப்பனுக்காகத் துக்கிக்கும் நாட்கள்
சீக்கிரமாய் வரும், [15]அப்பொழுது என் சகோ
தரனாகிய யாக்கோபைக் கொன்றுபோடுவேன்
என்று ஏசா தன் இருதயத்திலே சொல்லிக்
கொண்டான். மூத்த மகனாகிய ஏசாவின் 42
வார்த்தைகள் ரெபெக்காளுக்கு அறிவிக்கப்
பட்டது; அப்பொழுது அவள் தன் இளைய மக
னாகிய யாக்கோபை அழைத்து: உன் சகோ
தரனாகிய ஏசா உன்னைக் கொன்றுபோட
நினைத்து, [16]தன்னைத் தேற்றிக்கொள்ளுகி
றான். ஆகையால், என் மகனே, நான் சொல் 43
வதைக் கேட்டு, எழுந்து புறப்பட்டு, [17]ஆரா
னில் இருக்கிற என் சகோதரனாகிய லாபா
னிடத்துக்கு ஓடிப்போய், உன் சகோதரனு 44
டைய கோபம் தணியுமட்டும் சிலநாள் அவனி
டத்திலே இரு. உன் சகோதரன் உன்மேல் 45
வைத்த கோபம் தணிந்து, நீ அவனுக்குச்
செய்ததை அவன் மறந்தபின், நான் ஆள்
அனுப்பி, அவ்விடத்திலிருந்து உன்னை
அழைப்பிப்பேன்; நான் ஒரேநாளில் உங்கள்
இருவரையும் ஏன் இழந்துபோகவேண்டும்
என்றாள்.

பின்பு, ரெபெக்காள் ஈசாக்கை நோக்கி: 46
ஏத்தின் குமாரத்திகளினிமித்தம் [18]என் உயிர்
எனக்கு வெறுப்பாயிருக்கிறது; இந்தத் தேசத்
துப் பெண்களாகிய ஏத்தின் குமாரத்திகளில்
[19]யாக்கோபு ஒரு பெண்ணைக் கொள்வானா
னால் என் உயிர் இருந்து ஆவதென்ன என்

1 நீதி. 12. 19, 22. எபே. 4. 25
2 ஓசி. 14. 6
3 உபா. 33. 13, 28: 33. 28. 2 சாமு. 1. 21. சங். 133. 3. மீகா. 5. 7
4 ஆதி. 9. 25; 49. 8. எண். 24. 9
5 எபி. 11. 20
6 ஆதி. 28. 3, 4. ரோ. 11. 29
7 எபி. 12. 17
8 ஆதி. 25. 26, 33
9 2 சாமு. 8. 14
10 ஏசா. 65. 14. எபி. 12. 17
11 எபி. 11. 20
12 ஆதி. 25. 23. 2 சாமு. 8. 14. ஒபதி. 18–20. வசனம்.
13 2 இரா. 8. 20
14 ஆதி. 4. 5; 37. 4, 8
15 ஒபதி. 10. வசனம்.
16 யோபு 20. 12. சங். 64. 5
17 ஆதி. 11. 31
18 ஆதி. 26. 35; 28. 8
19 ஆதி. 24. 3

**28** றாள். ஈசாக்கு யாக்கோபை அழைத்து,
அவனை ஆசீர்வதித்து, [1]நீ கானானியருடைய
2 குமாரத்திகளில் பெண் கொள்ளாமல், எழு
ந்து [2]புறப்பட்டு, [3]பதான் அராமிலிருக்கிற
உன் தாயினுடைய தகப்பனாகிய [4]பெத்துவே
லுடைய வீட்டுக்குப் போய், அவ்விடத்தில்
உன் தாயின் சகோதரனாகிய [5]லாபானின்
குமாரத்திகளுக்குள் பெண் கொள் என்று
3 அவனுக்குக் கட்டளையிட்டான். சர்வவல்ல
மையுள்ள தேவன் [6]உன்னை ஆசீர்வதித்து, நீ
பல ஜனக்கூட்டமாகும்படி உன்னைப் பலுக
4 வும் பெருகவும்பண்ணி; தேவன் [7]ஆபிரகா
முக்குக் கொடுத்ததும் நீ பரதேசியாய்த் தங்
குகிறதுமான தேசத்தை நீ சுதந்தரித்துக்
கொள்ளும்படி ஆபிரகாமுக்கு அருளிய ஆசீர்
வாதத்தை உனக்கும் உன் சந்ததிக்கும் அருளு
5 வாராக என்று சொல்லி; ஈசாக்கு யாக்
கோபை அனுப்பிவிட்டான். அப்பொழுது
அவன் பதான் அராமிலிருக்கும் சீரியாதேசத்
தானாகிய பெத்துவேலுடைய குமாரனும்,
தனக்கும் ஏசாவுக்கும் தாயாகிய ரெபெக்
காளின் சகோதரனுமான லாபானிடத்துக்
6 குப் போகப் புறப்பட்டான். ஈசாக்கு யாக்
கோபை ஆசீர்வதித்து, ஒரு பெண்ணைக்
கொள்ளும்படி அவனைப் பதான் அராமு
க்கு அனுப்பினதையும், அவனை ஆசீர்வதிக்
கையில்: நீ கானானியருடைய குமாரத்திக
ளில் பெண் கொள்ளவேண்டாம் என்று
7 அவனுக்குக் கட்டளையிட்டதையும், யாக்
கோபு தன் தகப்பனுக்கும் தன் தாய்க்கும்
கீழ்ப்படிந்து, பதான் அராமுக்குப் புறப்பட்
டுப்போனதையும் ஏசா கண்டதினாலும்,
8 கானானியருடைய [8]குமாரத்திகள் தன் தகப்ப
னாகிய ஈசாக்கின் பார்வைக்கு ஆகாதவர்கள்
9 என்பதை ஏசா அறிந்ததினாலும், ஏசா இஸ்ம
வேலிடத்துக்குப் போய், தனக்கு முன்னி
ருந்த மனைவிகளுமன்றி, ஆபிரகாமுடைய
குமாரனாகிய இஸ்மவேலின் குமாரத்தியும்
நெபாயோத்தின் சகோதரியுமாகிய [9]மகலாத்
தையும் விவாகம் பண்ணினான்.
10 யாக்கோபு பெயெர்செபாவை விட்டுப் [10]புற
ப்பட்டு ஆரானுக்குப் போகப் பிரயாணம்
11 பண்ணி, ஒரு இடத்திலே வந்து, சூரியன்
அஸ்தமித்தபடியினால், அங்கே ராத்தங்கி, அவ்
விடத்துக் கற்களில் ஒன்றை எடுத்து, தன்
தலையின்கீழ் வைத்து, அங்கே நித்திரை செய்
12 யும்படி படுத்துக்கொண்டான். அங்கே அவன்
[11]ஒரு சொப்பனங்கண்டான்; இதோ, ஒரு
ஏணி பூமியிலே வைக்கப்பட்டிருந்தது, அதின்
நுனி வானத்தை எட்டியிருந்தது, அதிலே
[12]தேவதூதர் ஏறுகிறவர்களும் இறங்குகிறவர்
13 களுமாய் இருந்தார்கள். அதற்கு மேலாகக்
**கர்த்தர்** நின்று: [13]நான் உன் தகப்பனாகிய
ஆபிரகாமின் தேவனும் ஈசாக்கின் தேவனு
மாகிய கர்த்தர்; நீ படுத்திருக்கிற பூமியை
14 உனக்கும் உன் சந்ததிக்கும் தருவேன். உன்
சந்ததி [14]பூமியின் தூளைப்போலிருக்கும்; நீ

மேற்கேயும், கிழக்கேயும், வடக்கேயும், தெற்
கேயும் பரம்புவாய்; உனக்குள்ளும் உன் சந்
ததிக்குள்ளும் பூமியின் வம்சங்களெல்லாம்
ஆசீர்வதிக்கப்படும். [15]நான் உன்னோடே 15
இருந்து, நீ போகிற இடத்திலெல்லாம் உன்
னைக் காத்து, இந்தத் தேசத்துக்கு உன்னைத்
திரும்பிவரப்பண்ணுவேன்; நான் உனக்குச்
சொன்னதைச் செய்யுமளவும் உன்னைக் [16]கை
விடுவதில்லை என்றார். யாக்கோபு நித்திரை 16
தெளிந்து விழித்தபோது: [17]மெய்யாகவே **கர்த்
தர்** இந்த ஸ்தலத்தில் இருக்கிறார்; இதை
நான் அறியாதிருந்தேன் என்றான். அவன் 17
பயந்து, இந்த ஸ்தலம் எவ்வளவு பயங்கரமா
யிருக்கிறது! இது தேவனுடைய வீடேயல்
லாமல் வேறல்ல, இது வானத்தின் வாசல்
என்றான்.
அதிகாலையிலே யாக்கோபு எழுந்து, தன் 18
தலையின்கீழ் வைத்திருந்த கல்லை எடுத்து,
[18]அதைத் தூணாக நிறுத்தி, அதின்மேல் எண்
ணெய் வார்த்து, அந்த ஸ்தலத்திற்குப் *பெத் 19
தேல் என்று பேரிட்டான்; அதற்குமுன்னே
அவ்வூருக்கு [19]லூஸ் என்னும் பேர் இருந்
தது. அப்பொழுது யாக்கோபு: [20]தேவன் 20
என்னோடே இருந்து, நான் போகிற இந்த
வழியிலே என்னைக் காப்பாற்றி, [21]உண்ண
ஆகாரமும், உடுக்க வஸ்திரமும் எனக்குத்
தந்து, என்னை என் தகப்பன் வீட்டுக்குச் 21
சமாதானத்தோடே [22]திரும்பிவரப் பண்ணு
வாரானால், **கர்த்தர்** எனக்குத் தேவனாயிருப்
பார்; நான் தூணாக நிறுத்தின இந்தக் கல் 22
தேவனுக்கு [23]வீடாகும்; தேவரீர் எனக்குத்
தரும் எல்லாவற்றிலும் உமக்குத் [24]தசமபாகம்
செலுத்துவேன் என்று சொல்லிப் பொருத்
தனைபண்ணிக்கொண்டான்.
யாக்கோபு பிரயாணம்பண்ணி, [25]கீழ்த் **29**
திசையாரின் தேசத்தில் போய்ச் சேர்ந்
தான். அங்கே வயல்வெளியிலே ஒரு கிணற் 2
றையும், அதின் அருகே மடக்கியிருக்கிற
மூன்று ஆட்டுமந்தைகளையும் கண்டான்; அந்
தக் கிணற்றிலே மந்தைகளுக்குத் தண்ணீர்
காட்டுவார்கள்; அந்தக் கிணற்றின் வாய் ஒரு
பெரிய கல்லினால் அடைக்கப்பட்டிருந்தது.
அவ்விடத்தில் மந்தைகள் எல்லாம் சேர்ந்த 3
பின் கிணற்றின் வாயிலிருக்கும் கல்லை மேய்ப்
பர் புரட்டி, ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டி,
மறுபடியும் கல்லை முன்னிருந்தபடி கிணற்
றின் வாயில் வைப்பார்கள். யாக்கோபு அவர் 4
களைப் பார்த்து: சகோதரரே, நீங்கள் எவ்வி
டத்தார் என்றான்; அவர்கள், நாங்கள் ஆரான்
ஊரார் என்றார்கள். அப்பொழுது அவன்: 5
நாகோரின் குமாரனாகிய லாபானை அறிவீர்
களா என்று கேட்டான்; அறிவோம் என்றார்
கள். அவன் [26]சுகமாயிருக்கிறானா என்று விசா 6
ரித்தான்; அதற்கு அவர்கள்: சுகமாயிருக்கி
றான்; அவன் குமாரத்தியாகிய ராகேல்,
அதோ, ஆடுகளை ஓட்டிக்கொண்டு வருகிறாள்
என்று சொன்னார்கள். அப்பொழுது அவன்: 7

1 ஆதி. 24. 3
2 ஓசி. 12. 12
3 ஆதி. 24. 29; 25. 20
4 ஆதி. 22. 23
5 ஆதி. 24. 29
6 ஆதி. 17. 4, 6
7 ஆதி. 12. 2; 17. 8
8 ஆதி. 24. 3; 26. 35
9 ஆதி. 36. 3
10 அப். 7. 2
11 ஆதி. 41. 1. எண். 12. 6. யோபு 4. 13; 33. 16
12 யோ. 1. 51. எபி. 1. 14
13 ஆதி. 26. 24. யாத். 3. 6. மத். 22. 32
14 ஆதி. 13. 14, 16
15 ஆதி. 26. 24; 48. 16
16 சங். 121. 5-8. எபி. 13. 5
17 யாத். 3. 5. யோசு. 5. 15
18 எண். 7. 1
* தேவவீடு.
19 நியா. 1. 23, 26. ஓசி. 12. 4
20 2 சாமு. 15. 8
21 1 தீமோ. 6. 8
22 உபா. 26. 17
23 ஆதி. 35. 7, 14
24 லேவி. 27. 30
25 எண். 23. 7. ஓசி. 12. 12
26 ஆதி. 43. 27

இன்னும் வெகு பொழுதிருக்கிறதே; இது
மந்தைகளைச் சேர்க்கிற வேளை அல்லவே,
ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டி, இன்னும்
8 மேயவிடலாம் என்றான். அதற்கு அவர்கள்:
எல்லா மந்தைகளும் சேருமுன்னே அப்ப
டிச் செய்யக்கூடாது; சேர்ந்தபின் கிணற்றின்
வாயிலுள்ள கல்லைப் புரட்டுவார்கள்; அப்
பொழுது ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டு
9 வோம் என்றார்கள். அவர்களோடே அவன்
பேசிக்கொண்டிருக்கும்போதே; [1]தன் தகப்ப
னுடைய ஆடுகளை மேய்த்துக்கொண்டிருந்த
ராகேல் அந்த ஆடுகளை ஓட்டிக்கொண்டு வந்
10 தாள். யாக்கோபு தன் தாயின் சகோதரனை
லாபானுடைய குமாரத்தியாகிய ராகேலையும்,
தன் தாயின் சகோதரனாகிய லாபானின் ஆடு
களையும் கண்டபோது, யாக்கோபு போய்,
[2]கிணற்றின் வாயிலிருந்த கல்லைப் புரட்டி,
தன் தாயின் சகோதரனாகிய லாபானின் ஆடு
11 களுக்குத் தண்ணீர் காட்டினான். பின்பு யாக்
கோபு [3]ராகேலை முத்தஞ்செய்து, சத்தமிட்டு
12 அழுது, தான் அவள் [4]தகப்பனுடைய மருமக
னென்றும், ரெபெக்காளின் குமாரனென்றும்
ராகேலுக்கு அறிவித்தான். அவள் ஓடிப்
போய்த் தன் தகப்பனுக்கு அறிவித்தாள்.
13 லாபான் தன் சகோதரியின் குமாரனாகிய யாக்
கோபுடைய செய்தியைக் கேட்டபோது, அவ
னுக்கு எதிர்கொண்டோடி, அவனைக் கட்டிக்
கொண்டு முத்தஞ்செய்து, தன் வீட்டுக்கு
அழைத்துக்கொண்டுபோனான்; அவன் தன்
காரியங்களையெல்லாம் விவரமாய் லாபானுக்
14 குச் சொன்னான். அப்பொழுது லாபான்:
நீ [5]என் எலும்பும் என் மாம்சமுமானவன்
என்றான். ஒரு மாதம்வரைக்கும் யாக்கோபு
15 அவனிடத்தில் தங்கினான். பின்பு லாபான்
யாக்கோபை நோக்கி: நீ என் மருமகனாயிருப்
பதினால், சும்மா எனக்கு வேலை செய்யலாமா?
சம்பளம் எவ்வளவு கேட்கிறாய், சொல் என்
16 றான். லாபானுக்கு இரண்டு குமாரத்திகள்
இருந்தார்கள்; மூத்தவள் பேர் லேயாள், இளை
17 யவள் பேர் ராகேல். லேயாளுடைய கண்
கள் கூச்சப் பார்வையாயிருந்தது; ராகேலோ
ரூபவதியும் பார்வைக்கு அழகானவளுமாயிருந்
18 தாள். யாக்கோபு ராகேல்பேரில் பிரியப்
பட்டு: [6]உம்முடைய இளைய குமாரத்தியாகிய
ராகேலுக்காக உம்மிடத்தில் ஏழு வருஷம்
19 வேலைசெய்கிறேன் என்றான். அதற்கு
லாபான்: நான் அவளை அந்நிய புருஷனுக்குக்
கொடுக்கிறதைப்பார்க்கிலும், அவளை உனக்
குக் கொடுக்கிறது உத்தமம், என்னிடத்தில்
20 தரித்திரு என்றான். அந்தப்படியே யாக்
கோபு ராகேலுக்காக [7]ஏழு வருஷம் வேலை
செய்தான்; அவள்பேரில் இருந்த பிரியத்தி
னாலே அந்த வருஷங்கள் அவனுக்குக் கொஞ்
21 சநாளாகத் தோன்றினது. பின்பு யாக்கோபு
லாபானை நோக்கி: என் நாட்கள் நிறைவேறின
படியால், [8]என் மனைவியிடத்தில் நான்
சேரும்படி அவளை எனக்குத் தரவேண்டும்

1 யாத். 2. 16
2 யாத். 2. 17
3 ஆதி. 33. 4; 45. 14
4 ஆதி. 13. 8; 14. 14, 16
5 நியா. 9. 2; 2 சாமு. 5. 1; 19. 12
6 ஆதி. 31. 41. 2 சாமு. 3. 14
7 ஆதி. 30. 26. ஓசி. 12. 12
8 நியா. 15. 1
9 நியா. 14. 10. யோ. 2. 1, 2
10 நியா. 14. 12
11 உபா. 21. 15
12 சங். 127. 3
* பார்க்குதல்.
† கேட்குதல்.
‡ சேருதல். எண். 18. 2, 4.
§ துதி. மத். 1. 2
13 ஆதி. 29. 31; 37. 11. 1 செச. 8. 3
14 யோபு 5. 2

என்றான். அப்பொழுது லாபான் அவ்வி 22
டத்து மனிதர் எல்லாரையும் கூடிவரச்செய்து
[9]விருந்துபண்ணினான். அன்று இராவிலே 23
அவன் தன் குமாரத்தியாகிய லேயாளை
அழைத்துக்கொண்டுபோய், அவனிடத்
தில் விட்டான்; அவளை அவன் சேர்ந்தான்.
லாபான் தன் வேலைக்காரியாகிய சில்பாளை 24
தன் குமாரத்தியாகிய லேயாளுக்கு வேலைக்
காரியாகக் கொடுத்தான். காலையிலே, இதோ, 25
அவள் லேயாள் என்று யாக்கோபு கண்டு,
லாபானை நோக்கி: ஏன் எனக்கு இப்படிச்
செய்தீர்? ராகேலுக்காக அல்லவா உம்மிடத்
தில் வேலைசெய்தேன்; பின்னை ஏன் எனக்கு
வஞ்சகம்பண்ணினீர் என்றான். அதற்கு 26
லாபான்: மூத்தவள் இருக்க இளையவளைக்
கொடுப்பது இவ்விடத்து வழக்கம் அல்ல.
இவளுடைய [10]ஏழு நாளை நிறைவேற்று; அவ 27
ளையும் உனக்குத் தருவேன்; அவளுக்காகவும்
நீ இன்னும் ஏழு வருஷம் என்னிடத்தில்
வேலைசெய் என்றான். அந்தப்படியே யாக் 28
கோபு, இவளுடைய ஏழுநாளை நிறைவேற்றி
னான். அப்பொழுது தன் குமாரத்தியாகிய
ராகேலையும் அவனுக்கு மனைவியாகக் கொடுத்
தான். மேலும் லாபான் தன் வேலைக்காரி 29
யாகிய பில்காளைத் தன் குமாரத்தியாகிய ராகே
லுக்கு வேலைக்காரியாகக் கொடுத்தான். யாக் 30
கோபு ராகேலையும் சேர்ந்தான்; லேயாளைப்
பார்க்கிலும் [11]ராகேலை அவன் அதிகமாய்
நேசித்து, பின்னும் ஏழு வருஷம் அவனிடத்
தில் சேவித்தான்.

லேயாள் அற்பமாய் எண்ணப்பட்டாள் 31
என்று கர்த்தர் கண்டு, [12]அவள் கர்ப்பந்தரிக்
கும்படி செய்தார்; ராகேலோ மலடியாயிருந்
தாள். லேயாள் கர்ப்பவதியாகி ஒரு குமார 32
னைப் பெற்று: கர்த்தர் என் சிறுமையைப்
பார்த்தருளினார்; இப்பொழுது என் புருஷன்
என்னை நேசிப்பார் என்று சொல்லி, அவ
னுக்கு *ரூபன் என்று பேரிட்டாள். மறுபடி 33
யும் அவள் கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப்
பெற்று: நான் அற்பமாய் எண்ணப்பட்ட
தைக் கர்த்தர் கேட்டருளி, இவனையும் எனக்
குத் தந்தார் என்று சொல்லி, அவனுக்குச்
†சிமியோன் என்று பேரிட்டாள். பின்னும் 34
அவள் கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப்பெற்று:
என் புருஷனுக்கு மூன்று குமாரரைப் பெற்
றபடியால் அவர் இப்பொழுது என்னோடே
சேர்ந்திருப்பார் என்று சொல்லி, அவனுக்கு
‡லேவி என்று பேரிட்டாள். மறுபடியும் அவள் 35
கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெற்று: இப்
பொழுது கர்த்தரைத் துதிப்பேன் என்று
சொல்லி, அவனுக்கு §யூதா என்று பேரிட்
டாள்; பிற்பாடு அவளுக்குப் பிள்ளைப்பேறு
நின்றுபோயிற்று.

ராகேல் தான் யாக்கோபுக்குப் [13]பிள்ளை **30**
களைப் பெறாததைக் கண்டு, தன் சகோதரி
யின்மேல் பொறாமைகொண்டு, யாக்கோபை
நோக்கி: [14]எனக்குப் பிள்ளை கொடும், இல்லா

2 விட்டால் நான் சாகிறேன் என்றாள். அப்
பொழுது யாக்கோபு ராகேலின்மேல் கோபங்
கொண்டு: [1]தேவனல்லோ உன் கர்ப்பத்தை
அடைத்திருக்கிறார், நான் தேவனா? என்றான்.
3 அப்பொழுது அவள்: இதோ, [2]என் வேலைக்
காரியாகிய பில்காள் இருக்கிறாளே; அவள்
என் மடிக்குப் பிள்ளைகளைப் பெறவும், அவ
ளாலாகிலும் என் வீடு கட்டப்படவும் அவ
4 ளிடத்தில் சேரும் என்று சொல்லி, அவ
னுக்குத் தன் வேலைக்காரியாகிய பில்காளை
மனைவியாகக் கொடுத்தாள்; அப்படியே யாக்
5 கோபு அவளைச் சேர்ந்தான். பில்காள் கர்ப்
பவதியாகி, யாக்கோபுக்கு ஒரு குமாரனைப்
6 பெற்றாள். அப்பொழுது ராகேல்: [3]தேவன்
என் வழக்கைத் தீர்த்து, என் சத்தத்தையும்
கேட்டு, எனக்கு ஒரு குமாரனைக் கொடுத்
தார் என்று சொல்லி, அவனுக்குத் *தாண்
7 என்று பேரிட்டாள். மறுபடியும் ராகேலின்
வேலைக்காரியாகிய பில்காள் கர்ப்பவதியாகி,
யாக்கோபுக்கு இரண்டாம் குமாரனைப் பெற்
8 றாள். அப்பொழுது ராகேல்: நான் மகா
போராட்டமாய் என் சகோதரியோடே போ
ராடி மேற்கொண்டேன் என்று சொல்லி,
அவனுக்கு †நப்தலி என்று பேரிட்டாள்.
9 லேயாள் தான் பிள்ளைபெறுகிறது நின்று
போனதைக் கண்டு, தன் வேலைக்காரியாகிய
சில்பாளை அழைத்து, அவளை யாக்கோபுக்கு
10 மனைவியாகக் கொடுத்தாள். லேயாளின்
வேலைக்காரியாகிய சில்பாள் யாக்கோபுக்கு
11 ஒரு குமாரனைப் பெற்றாள். அப்பொழுது
லேயாள்: ஏராளமாகிறதென்று சொல்லி, அவ
12 னுக்குக் ‡காத் என்று பேரிட்டாள். பின்பு
லேயாளின் வேலைக்காரியாகிய சில்பாள் யாக்
கோபுக்கு இரண்டாம் குமாரனைப் பெற்றாள்.
13 அப்பொழுது லேயாள்: நான் [4]பாக்கியவதி,
ஸ்திரீகள் என்னைப் பாக்கியவதி என்பார்கள்
என்று சொல்லி, அவனுக்கு §ஆசேர் என்று
14 பேரிட்டாள். கோதுமை அறுப்பு நாட்களி
லே ரூபன் வயல்வெளியிலே போய், தூதா
யீம் கனிகளைக் கண்டெடுத்து, அவைகளைக்
கொண்டுவந்து தன் தாயாகிய லேயாளிடத்
தில் கொடுத்தான். அப்பொழுது ராகேல்
லேயாளை நோக்கி: உன் குமாரனுடைய
[5]தூதாயீம் கனியில் எனக்குக் கொஞ்சம் தா
15 என்றாள். அதற்கு அவள்: நீ என் புருஷனை
எடுத்துக்கொண்டது [6]அற்பகாரியமா? என்
குமாரனுடைய தூதாயீம் கனிகளையும் எடுத்
துக்கொள்ளவேண்டுமோ என்றாள்; அதற்கு
ராகேல்: உன் குமாரனுடைய தூதாயீம் கனி
களுக்கு ஈடாக இன்று இரவு அவர் உன்
16 னோடே சயனிக்கட்டும் என்றாள். சாயங்
காலத்தில் யாக்கோபு வெளியிலிருந்து வரு
கையில் லேயாள் புறப்பட்டு அவனுக்கு எதிர்
கொண்டுபோய்: என் குமாரனுடைய தூதா
யீம் கனிகளால் உம்மைக் கொண்டேன்;
ஆகையால், நீர் என்னிடத்தில் வரவேண்டும்
என்றாள்; அவன் அன்று இரவு அவளோடே

சயனித்தான். தேவன் லேயாளுக்குச் செவி 17
கொடுத்தார். அவள் கர்ப்பவதியாகி யாக்கோ
புக்கு ஐந்தாம் குமாரனைப் பெற்றாள். அப் 18
பொழுது லேயாள்: நான் என் வேலைக்கா
ரியை என் புருஷனுக்குக் கொடுத்த பல
னைத் தேவன் எனக்குத் தந்தார் என்று
சொல்லி, அவனுக்கு ‖இசக்கார் என்று
பேரிட்டாள். அப்புறம் லேயாள் கர்ப்பவதி 19
யாகி யாக்கோபுக்கு ஆறாம் குமாரனைப் பெற்
றாள். அப்பொழுது லேயாள்: தேவன் என 20
க்கு நல்ல ஈவைத் தந்தார்; என் புருஷனுக்கு
நான் ஆறு குமாரரைப் பெற்றபடியால், இப்
பொழுது அவர் என்னுடனே வாசம்பண்ணு
வார் என்று சொல்லி, அவனுக்குச் ¶செபு
லோன் என்று பேரிட்டாள். பின்பு அவள் 21
ஒரு குமாரத்தியையும் பெற்று, அவளுக்குத்
**தீனாள் என்று பேரிட்டாள். தேவன் 22
ராகேலை நினைத்தருளினார்; அவளுக்குத் தே
வன் செவிகொடுத்து, அவள் கர்ப்பந்தரிக்கும்
படி செய்தார். அவள் கர்ப்பவதியாகி ஒரு 23
குமாரனைப் பெற்று: தேவன் [7]என் நிந்தையை
நீக்கிவிட்டார் என்றும், இன்னும் ஒரு குமார 24
னைக் **கர்த்தர்** எனக்குத் தருவார் என்றும்
சொல்லி, அவனுக்கு ††யோசேப்பு என்று
பேரிட்டாள்.

ராகேல் யோசேப்பைப் பெற்றபின், யாக் 25
கோபு லாபானை நோக்கி: [8]நான் என் ஸ்தா
னத்திற்கும் என் தேசத்திற்கும் போக என்னை
அனுப்பிவிடும். நான் உமக்கு ஊழியஞ் 26
செய்து சம்பாதித்த என் மனைவிகளையும் என்
பிள்ளைகளையும் எனக்குத் தாரும்; நான் போ
வேன், [9]நான் உம்மிடத்தில் சேவித்த சேவ
கத்தை நீர் அறிந்திருக்கிறீர் என்றான். அப் 27
பொழுது லாபான்: உன் கண்களில் எனக்
குத் தயவு கிடைத்ததேயானால் நீ இரு; [10]உன்
நிமித்தம் கர்த்தர் என்னை ஆசீர்வதித்தார்
என்று குறிப்பினால் அறிந்தேன். உன் சம் 28
பளம் இன்னதென்று எனக்குச் சொல்,
[11]நான் அதைத் தருவேன் என்றான். அதற்கு 29
அவன்: நான் உம்மைச் சேவித்த விதமும்,
[12]உம்முடைய மந்தை என்னிடத்தில் இருந்த
விதமும் அறிந்திருக்கிறீர். நான் வருமுன்னே 30
உமக்கு இருந்தது கொஞ்சம்; நான் வந்
தபின் **கர்த்தர்** உம்மை ஆசீர்வதித்ததினால்
அது மிகவும் பெருகியிருக்கிறது; இனி நான்
என் [13]குடும்பத்துக்குச் சம்பாத்தியம்பண்ணு
வது எப்பொழுது என்றான். அதற்கு அவன்: 31
நான் உனக்கு என்ன தரவேண்டும் என்
றான்; யாக்கோபு: நீர் எனக்கு ஒன்றும் தர
வேண்டியதில்லை; நான் சொல்லுகிறபடி நீர்
எனக்குச் செய்தால், உம்முடைய மந்தை
யைத் திரும்ப மேய்த்துக் காப்பேன். நான் 32
இன்றைக்குப் போய், உம்முடைய மந்தைக
ளையெல்லாம் பார்வையிட்டு, அவைகளில் புள்
ளியும் வரியும் கறுப்புமுள்ள செம்மறியாடுக
ளையும், வரியும் புள்ளியுமுள்ள வெள்ளாடுகளை
யும் பிரித்துவிடுகிறேன்; [14]அப்படிப்பட்டவை

[1] ஆதி. 16. 2. 1 சாமு. 1. 5
[2] ஆதி. 16. 2
[3] சங். 35. 24; 43. 1. புலம்பல் 3. 59
* நியாயத்தீர்த்தல்.
† போராட்டம்.
‡ ஏராளம்.
[4] நீதி. 31. 28. லூ. 1. 48
§ ஆசி = பாக்கியம்.
[5] உன்னத. 7. 13
[6] எண். 16. 9, 13. ஏசா. 7. 13
‖ பலன் = கூலி.
¶ வாசஸ்தலம். மத். 4. 13
** நியாயத்தீர்ப்பு.
[7] 1 சாமு. 1. 6. ஏசா. 4. 1
†† கூட்டுதல்.
[8] ஆதி. 24. 54; 31. 55
[9] ஆதி. 29. 20, 30
[10] ஆதி. 39. 3, 5. சங். 1. 3. ஏசா. 61. 9
[11] ஆதி. 29. 15
[12] மத். 24. 45. தீத். 2. 10
[13] 1 தீமோ. 5. 8
[14] ஆதி. 31. 8

33 இனி எனக்குச் சம்பளமாயிருக்கட்டும். அப்ப
டியே இனிமேல் என் சம்பளமாகிய இவற்றை
நீர் பார்வையிடும்போது, [1]என் நீதி விளங்
கும்; புள்ளியும் வரியுமில்லாத வெள்ளாடுக
ளும், கறுப்பான செம்மறியாடுகளும் என்
வசத்தில் இருந்தால், அவையெல்லாம் என்
னால் திருடிக்கொள்ளப்பட்டவைகளாய் எண்
34 ணப்படட்டும் என்றான். அதற்கு லாபான்:
நீ சொன்னபடியே ஆகட்டும் என்று சொல்லி,
35 அந்நாளிலே கலப்பு நிறமும் வரியுமுள்ள
வெள்ளாட்டுக் கடாக்களையும், புள்ளியும் வரியு
முள்ள வெள்ளாடுகள் யாவையும், சற்று வெ
ண்மையும் கருமையுமுள்ள செம்மறியாடுகள்
யாவையும் பிரித்து, தன் குமாரரிடத்தில் ஒப்பு
36 வித்து, தனக்கும் யாக்கோபுக்கும் இடை
யிலே மூன்று நாள் பிரயாண தூரத்தில் இருக்
கும்படி வைத்தான். லாபானுடைய மற்ற
37 ஆடுகளை யாக்கோபு மேய்த்தான். பின்பு யாக்
கோபு [2]பச்சையாயிருக்கிற புன்னை, வாது
மை, அர்மோன் என்னும் மரங்களின் கொப்
புகளை வெட்டி; இடையிடையே வெண்மை
38 தோன்றும்படி, பட்டையை உரித்து, தான்
உரித்த கொப்புகளை ஆடுகள் தண்ணீர் குடிக்க
வரும் கால்வாய்களிலும் தொட்டிகளிலும் ஆடு
களுக்கு எதிராகப் போட்டுவைப்பான்; ஆடு
கள் தண்ணீர் குடிக்க வரும்போது பொலிவ
39 துண்டு. ஆடுகள் அந்தக் கொப்புகளுக்கு முன்
பாகப் பொலிந்தபடியால், அவைகள் கலப்பு
நிறமுள்ளதும் புள்ளியுள்ளதும் வரியுள்ளது
40 மான குட்டிகளைப் போட்டது. அந்த ஆட்
டுக்குட்டிகளை யாக்கோபு பிரித்துக்கொண்டு,
ஆடுகளை லாபானுடைய மந்தையிலிருக்கும்
கலப்பு நிறமானவைகளுக்கும் கறுப்பானவை
களெல்லாவற்றிற்கும் எதிராக நிறுத்தி, தன்
ஆடுகளை லாபானுடைய மந்தையோடே
சேர்க்காமல், தனிப்புறமாக வைத்துக்கொள்
41 வான். பலத்த ஆடுகள் பொலியும்போது, அந்
தக் கொப்புகளுக்கு எதிரே பொலியும்படி
யாக்கோபு அவைகளை அந்த ஆடுகளின் கண்
களுக்கு முன்பாகக் கால்வாய்களிலே போட்
42 டுவைப்பான். பலவீனமான ஆடுகள் பொலி
யும்போது, அவைகளைப் போடாமலிருப்
பான்; இதனால் பலவீனமானவைகள் லாபா
னையும், பலமுள்ளவைகள் யாக்கோபையும்
43 சேர்ந்தன. இவ்விதமாய் [3]அந்தப் புருஷன்
மிகவும் விருத்தியடைந்து, திரளான ஆடுக
ளும், வேலைக்காரிகளும், வேலைக்காரரும்,
ஒட்டகங்களும், கழுதைகளும் உடையவனா
னான்.

31 பின்பு, லாபானுடைய குமாரர்: எங்கள்
தகப்பனுக்கு உண்டானவைகள் யாவையும்
யாக்கோபு எடுத்துக்கொண்டான் என்றும்,
எங்கள் தகப்பனுடைய பொருளினாலே இந்
தச் [4]செல்வத்தை யெல்லாம் அடைந்தான்
என்றும் சொன்ன வார்த்தைகளை யாக்கோபு
2 கேட்டான். லாபானின் முகத்தை யாக்கோபு
பார்த்தபோது, [5]அது நேற்று முந்தைநாள்

[1] சங். 18. 24; 37. 6
[2] ஆதி. 31. 9–12
[3] ஆதி. 13. 2; 24. 35; 26. 13, 14
[4] சங். 49. 16, பிர. 4. 4. 1 தீமோ. 6. 4
[5] ஆதி. 4. 5, உபா. 28. 54
[6] ஆதி. 28. 15
[7] எண். 14. 22. யோபு 19. 3. சகரி. 8. 23
[8] ஆதி. 20. 6. யோபு 1. 10. சங். 37. 28; 105. 14
[9] ஆதி. 30. 32
[10] ஆதி. 48. 16
[11] யாத். 3. 7
[12] ஆதி. 28. 18, 22
[13] ஆதி. 2. 24
[14] ஆதி. 29. 15, 27
* பொருளை.

இருந்ததுபோல் இராமல் வேறுபட்டிருக்கக்
கண்டான். கர்த்தர் யாக்கோபை நோக்கி: 3
[6]உன் பிதாக்களுடைய தேசத்திற்கும் உன்
இனத்தாரிடத்திற்கும் நீ திரும்பிப் போ; நான்
உன்னோடேகூட இருப்பேன் என்றார். அப் 4
பொழுது யாக்கோபு, ராகேலையும் லேயாளை
யும் வெளியிலே தன் மந்தையிடத்தில் அழைப்
பித்து, அவர்களை நோக்கி: உங்கள் தகப்பனு 5
டைய முகம் நேற்று முந்தைநாள் இருந்தது
போல இருக்கவில்லை என்று எனக்குத் தோன்
றுகிறது; ஆனாலும் என் தகப்பனுடைய தே
வன் என்னோடேகூட இருக்கிறார். என்னால் 6
இயன்றமட்டும் நான் உங்கள் தகப்பனுக்கு
ஊழியஞ்செய்தேன் என்று நீங்கள் அறிந்தி
ருக்கிறீர்கள். உங்கள் தகப்பனோ, [7]என்னை 7
வஞ்சித்து, என் சம்பளத்தைப் பத்துமுறை
மாற்றினான்; ஆனாலும் அவன் எனக்குத் தீங்கு
செய்ய தேவன் [8]அவனுக்கு இடங்கொடுக்க
வில்லை. புள்ளியுள்ளவைகள் உன் சம்பள 8
மாயிருக்கும் என்று அவன் சொன்னபோது,
ஆடுகளெல்லாம் புள்ளியுள்ள குட்டிகளைப்
போட்டது; [9]கலப்புநிறமானவைகள் உன் சம்
பளமாயிருக்கும் என்று அவன் சொன்ன
போது, ஆடுகளெல்லாம் கலப்புநிறக் குட்டி
களைப் போட்டது. இவ்விதமாய் தேவன் உங் 9
கள் தகப்பனுடைய ஆடுகளை எடுத்து, எனக்
குத் தந்தார். ஆடுகள் பொலியும் காலத்திலே 10
நான் கண்ட சொப்பனத்தில் என் கண்களை
ஏறெடுத்துப் பார்க்கும்போது, ஆடுகளோடே
பொலியும் கடாக்கள் கலப்புநிறமும் புள்ளி
யும் வரியும் உள்ளவைகளாயிருக்கக் கண்
டேன். அன்றியும் தேவதூதன் [10]ஒருவர் 11
சொப்பனத்தில்: யாக்கோபே என்றார்:
இதோ, இருக்கிறேன் என்றேன். அப்பொ 12
ழுது அவர்: உன் கண்களை ஏறெடுத்துப்பார்;
ஆடுகளோடே பொலியும் கடாக்களெல்லாம்
கலப்புநிறமும் புள்ளியும் வரியுமுள்ளவைக
ளாய் இருக்கிறது; [11]லாபான் உனக்குச் செய்
கிற யாவையும் கண்டேன். நீ தூணுக்கு அபி 13
ஷேகஞ்செய்து, [12]எனக்கு ஒரு பொருத்தனை
யைப்பண்ணின பெத்தேலிலே உனக்குத்
தரிசனமான தேவன் நானே; இப்பொழுது
நீ எழுந்து, இந்தத் தேசத்தை விட்டுப் புறப்
பட்டு, உன் இனத்தாரிருக்கிற தேசத்திற்குத்
திரும்பிப்போ என்று சொன்னார் என்றான்.
அதற்கு ராகேலும் லேயாளும்: எங்கள் தகப் 14
பன் வீட்டிலே [13]இனி எங்களுக்குப் பங்கும்
சுதந்தரமும் உண்டோ? அவரால் நாங்கள் 15
அந்நியராய் எண்ணப்படவில்லையா? [14]அவர்
எங்களை விற்று, எங்கள் *பணத்தையும் வாயி
லே போட்டுக்கொண்டார். ஆகையால் தே 16
வன் எங்கள் தகப்பனிடத்திலிருந்து எடுத்த
ஐசுவரியம் எல்லாம் நமக்கும் நம்முடைய
பிள்ளைகளுக்கும் உரியது; இப்படியிருக்கத்
தேவன் உமக்குச் சொன்னபடியெல்லாம் செய்
யும் என்றார்கள். அப்பொழுது யாக்கோபு 17
எழுந்து, தன் பிள்ளைகளையும் தன் மனைவி

18 களையும் ஒட்டகங்கள்மேல் ஏற்றி, தான்
பதான் அராமிலே சம்பாதித்த மிருகஜீவன்
களாகிய மந்தைகள் அனைத்தையும் தன் பொ
ருள்கள் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு,
கானான்தேசத்தில் இருக்கிற தன் தகப்பனாகிய
ஈசாக்கினிடத்துக்குப் போகப் புறப்பட்டான்.
19 லாபான், தன் ஆடுகளை மயிர் கத்தரிக்கப்
போயிருந்தான்; அந்தச் சமயத்திலே ராகேல்
தன் தகப்பனுடைய *சுரூபங்களைத் திருடிக்
20 கொண்டாள். யாக்கோபு தான் ஓடிப்போ
கிறதைச் சீரியனாகிய லாபானுக்கு அறிவி
யாமல், திருட்டளவாய்ப் போய்விட்டான்.
21 இப்படியே அவன் தனக்கு உண்டானவை
களையெல்லாம் எடுத்துக்கொண்டு, ஆற்றைக்
கடந்து, கீலேயாத்து மலையை நோக்கி ஓடிப்
போனான்.
22 யாக்கோபு ஓடிப்போனது மூன்றாம் நாளி
23 லே லாபானுக்கு அறிவிக்கப்பட்டது. அப்
பொழுது அவன், தன் சகோதரரைக் கூட்டிக்
கொண்டு, ஏழுநாள் பிரயாணபரியந்தம் அவ
னைத் தொடர்ந்துபோய், கீலேயாத் மலையிலே
24 அவனைக் கண்டுபிடித்தான். அன்று ராத்திரி
தேவன் [1]சீரியாதேசத்தானாகிய லாபானுக்
குச் சொப்பனத்தில் தோன்றி: நீ யாக்கோ
போடே நன்மையே அன்றித் தீமை ஒன்
றும் பேசாதபடிக்கு எச்சரிக்கையாயிரு என்
25 றார். லாபான் யாக்கோபினிடத்தில் வந்
தான்; யாக்கோபு மலையிலே தன் கூடாரத்
தைப்போட்டிருந்தான்; லாபானும் தன் சகோ
தரரோடேகூடக் கீலேயாத் மலையிலே கூடா
26 ரம் போட்டான். அப்பொழுது லாபான் யாக்
கோபை நோக்கி: நீ திருட்டளவாய்ப் புறப்
பட்டு, என் குமாரத்திகளை யுத்தத்தில் பிடித்த
[2]சிறைகளைப்போலக் கொண்டுவந்தது என்ன
27 செய்கை? நீ ஓடிப்போவதை மறைத்து,
எனக்கு அறிவியாமல், திருட்டளவாய் என்
னிடத்திலிருந்து வந்துவிட்டது என்ன? நான்
உன்னைச் சந்தோஷமாய், சங்கீதம் மேளதாளம்
கின்னர முழக்கத்துடனே அனுப்புவேனே.
28 என் பிள்ளைகளையும் என் குமாரத்திகளை
யும் நான் [3]முத்தஞ்செய்ய விடாமல் போன
தென்ன? இந்தச் செய்கையை நீ மதியில்லா
29 மல் செய்தாய். உங்களுக்குப் பொல்லாப்புச்
செய்ய எனக்கு வல்லமை உண்டு; ஆகிலும்,
உங்கள் தகப்பனுடைய தேவன்: [4]நீ யாக்கோ
போடே நன்மையே அன்றித் தீமை ஒன்
றும் பேசாதபடிக்கு எச்சரிக்கையாயிரு என்று
நேற்று ராத்திரி என்னோடே சொன்னார்.
30 இப்பொழுதும் உன் தகப்பனுடைய வீட்டின்
மேலுள்ள வாஞ்சையினால் நீ புறப்பட்டுப்
போகிறதானால் போகலாம், [5]என் தெய்வங்
களை ஏன் திருடிக்கொண்டுபோகிறாய் என்று
31 கேட்டான். யாக்கோபு லாபானுக்குப் பிரதி
யுத்தரமாக: உம்முடைய குமாரத்திகளைப்
பலாத்காரமாய்ப் பிடித்து வைத்துக்கொள்வீர்
என்று நான் அஞ்சினதினாலே இப்படி வந்து
32 விட்டேன். ஆனாலும் யாரிடத்தில் உம்மு
டைய தெய்வங்களைக் கண்டுபிடிக்கிறீரோ,
[6]அவனை உயிரோடே விடவேண்டாம்; உம்மு
டைய பொருள்கள் ஏதாவது என் வசத்தில்
உண்டானால் நீர் அதை நம்முடைய சகோத
ரருக்கு முன்பாகப் பரிசோதித்தறிந்து, அதை
எடுத்துக்கொள்ளும் என்றான். ராகேல்
அவைகளைத் திருடிக்கொண்டு வந்ததை யாக்
கோபு அறியாதிருந்தான். அப்பொழுது 33
லாபான் யாக்கோபின் கூடாரத்திலும், லேயா
ளின் கூடாரத்திலும், இரண்டு வேலைக்காரி
களின் கூடாரத்திலும் பிரவேசித்துப் பார்த்தும்
ஒன்றும் கண்டுபிடிக்கவில்லை; பின்பு, லேயா
ளின் கூடாரத்தை விட்டு ராகேலின் கூடா
ரத்துக்குப் போனான். ராகேல் அந்தச் சுரூ 34
பங்களை எடுத்து, ஒட்டகச் சேணத்தின்கீழ்
வைத்து, அதின்மேல் உட்கார்ந்திருந்தாள்.
லாபான் கூடாரம் எங்கும் தடவிப்பார்த்தும்,
அவைகளைக் கண்டுபிடிக்கவில்லை. அவள் 35
தன் தகப்பனை நோக்கி: என் ஆண்டவனாகிய
உமக்கு முன்பாக நான் எழுந்திராததைக்கு
றித்துக் கோபங்கொள்ளவேண்டாம்; [7]ஸ்திரீ
களுக்குள்ள வழிபாடு எனக்கு உண்டாயிருக்
கிறது என்றாள்; அப்படியே அவன் அந்தச்
சுரூபங்களைத் தேடியும் கண்டுபிடிக்கவில்லை.
அப்பொழுது யாக்கோபுக்குக் கோபம் எழு 36
ம்பி, லாபானோடே வாக்குவாதம்பண்ணி: நீர்
என்னை இவ்வளவு உக்கிரமாய்த் தொடர்ந்து
வரும்படிக்கு நான் செய்த தப்பிதம் என்ன?
நான் செய்த துரோகம் என்ன? என் தட்டு 37
முட்டுகளையெல்லாம் தடவிப்பார்த்தீரே; உம்
முடைய வீட்டுத் தட்டுமுட்டுகளில் என்னத்
தைக் கண்டுபிடித்தீர்? அதை என்னுடைய
சகோதரருக்கும் உம்முடைய சகோதரருக்கும்
முன்பாக இங்கே வையும்; [8]அவர்கள் எனக்
கும் உமக்கும் நடுத்தீர்க்கட்டும். இந்த இரு 38
பது வருஷகாலமாய் நான் உம்மிடத்தில்
இருந்தேன்; உம்முடைய செம்மறியாடுகளும்
வெள்ளாடுகளும் சினையழியவில்லை; உம்மு
டைய மந்தையின் கடாக்களை நான் தின்னவி
ல்லை. பீறுண்டதை நான் உம்மிடத்துக்குக் 39
கொண்டுவராமல், [9]அதற்காக நான் உத்தர
வாதம்பண்ணினேன்; பகலில் களவுபோன
தையும், இரவில் களவுபோனதையும் என்
கையில் கேட்டு வாங்கினீர். பகலிலே வெயி 40
லும் இரவிலே குளிரும் என்னைப் பட்சித்
தது; நித்திரை என் கண்களுக்குத் தூரமாயி
ருந்தது; இவ்விதமாய்ப் பாடுபட்டேன். இந்த 41
இருபது வருஷகாலம் உம்முடைய வீட்டிலே
இருந்தேன்; [10]பதினாலு வருஷம் உம்முடைய
இரண்டு குமாரத்திகளுக்காகவும், ஆறு வரு
ஷம் உம்முடைய மந்தைக்காகவும் உம்மிடத்
தில் சேவித்தேன்; பத்துமுறை என் சம்ப
ளத்தை மாற்றினீர். என் பிதாவின் தேவனா 42
கிய [11]ஆபிரகாமின் தேவனும் [12]ஈசாக்கின் பய
பக்திக்குரியவரும் என்னோடிராமற்போனால்,
நீர் இப்பொழுது என்னை வெறுமையாய்
அனுப்பிவிட்டிருப்பீர்: தேவன் என் [13]சிறுமை

*தேராபீன்கள். நியா. 17. 5. 1 சாமு. 19. 13. ஓசி. 3. 4
[1] ஆதி. 20. 3. யோபு 33. 15. மத். 1. 20
[2] 1 சாமு. 30. 2
[3] ரூத் 1. 9, 14. 1 இரா. 19. 20. அப். 20. 38
[4] ஆதி. 28. 13
[5] நியா. 18. 24
[6] ஆதி. 44. 9
[7] யாத். 20. 12. லேவி. 19. 32
[8] 1 கொ. 6. 5
[9] யாத். 22. 10, 12
[10] ஆதி. 29. 27, 28
[11] சங். 124. 1, 2
[12] 53. வசனம். ஏசா. 8. 13
[13] யாத். 3. 7

யையும் என் கைப்பிரயாசத்தையும் பார்த்து,
[1]நேற்று ராத்திரி உம்மைக் கடிந்துகொண்டார்
43 என்று சொன்னான். அப்பொழுது லாபான்
யாக்கோபுக்குப் பிரதியுத்தரமாக: இந்தக் குமா
ரத்திகள் என் குமாரத்திகள், இந்தப் பிள்ளை
கள் என் பிள்ளைகள், இந்த மந்தை என்
மந்தை; நீ காண்கிற யாவும் என்னுடையவை
கள்; என் குமாரத்திகளாகிய * இவர்களையும்,
இவர்கள் பெற்ற பிள்ளைகளையும் இன்று நான்
44 என்ன செய்யக்கூடும்? இப்பொழுதும் எனக்
கும் [2]உனக்கும் சாட்சியாயிருக்கும்பொருட்டு,
நீயும் நானும் [3]உடன்படிக்கை பண்ணிக்
45 கொள்ளக்கடவோம் என்றான். அப்பொ
ழுது யாக்கோபு ஒரு [4]கல்லை எடுத்து, அதைத்
46 தூணாக நிறுத்தினான். பின்னும் யாக்கோபு
தன் சகோதரரைப் பார்த்து, கற்களைக் குவியு
ங்கள் என்றான்; அவர்கள் கற்களை
எடுத்துக்கொண்டுவந்து; ஒரு குவியலாக்கி,
அந்தக் குவியலின்மேல் போஜனம்பண்ணி
47 னார்கள். லாபான் அதற்கு ஜெகர்சகதூதா
என்று பேரிட்டான்; யாக்கோபு அதற்குக்
48 கலயெத் என்று பேரிட்டான். [5]இந்தக் குவி
யல் இன்று எனக்கும் உனக்கும் சாட்சி
என்று லாபான் சொன்னபடியினாலே; அதின்
49 பேர் கலயெத் என்னப்பட்டது. அல்லாம
லும் அவன்: நாம் ஒருவரை ஒருவர் விட்டு
மறைந்தபின், நீ என் குமாரத்திகளைத் துயரப்
படுத்தி, அவர்களையல்லாமல் வேறே ஸ்திரீ
களை விவாகம்பண்ணினாயானால், கர்த்தர்
எனக்கும் உனக்கும் நடுநின்று கண்காணிக்
50 கக்கடவர்; நம்முடனே ஒருவரும் இல்லை;
பார், தேவனே எனக்கும் உனக்கும் சாட்சி
என்று சொன்னபடியால், அது [6]மிஸ்பா
51 என்னும் பேர்பெற்றது. பின்னும் லாபான்
யாக்கோபை நோக்கி: இதோ, இந்தக் குவிய
லையும் எனக்கும் உனக்கும் நடுவாக நான்
52 நிறுத்தின தூணையும் பார். தீங்குசெய்ய நான்
இந்தக் குவியலைக் கடந்து உன்னிடத்துக்கு
வாராதபடிக்கும், நீ இந்தக் குவியலையும் இந்
தத் தூணையும் கடந்து என்னிடத்துக்கு வாரா
தபடிக்கும் இந்தக் குவியலும் சாட்சி, இந்தத்
53 தூணும் சாட்சி. ஆபிரகாமின் தேவனும்
நாகோரின் தேவனும் அவர்கள் பிதாக்களின்
தேவனுமாயிருக்கிறவர் [7]நமக்குள்ளே நடு
நின்று நியாயந்தீர்ப்பாராக என்றான். அப்
பொழுது யாக்கோபு தன் தகப்பனாகிய ஈசாக்
கின் [8]பயபக்திக்குரியவர்மேல் ஆணையிட்
54 டான். பின்பு யாக்கோபு மலையின்மேல்
பலியிட்டு, போஜனம்பண்ணும்படி தன்
சகோதரரை அழைத்தான்; அப்படியே அவர்
கள் போஜனம்பண்ணி மலையிலே இராத்தங்
55 கினார்கள். லாபான் அதிகாலமே எழுந்தி
ருந்து, தன் குமாரரையும் தன் குமாரத்திகளை
யும் முத்தஞ்செய்து, அவர்களை [9]ஆசீர்வதித்
தான். பின்பு லாபான் புறப்பட்டு, [10]தன்
32 இடத்துக்குத் திரும்பிப்போனான். யாக்
கோபு பிரயாணம் பண்ணுகையில், [11]தேவ

[1] 1 நாளா. 12. 17. யூதா 9
* இவர்களுக்கும் பிள்ளைகளுக்கும்.
[2] யோசு. 24. 27
[3] ஆதி. 26. 28
[4] ஆதி. 28. 18
[5] யோசு. 24. 27
[6] நியா. 11. 29. 1 சாமு. 7. 5
[7] ஆதி. 16. 5; 21. 23
[8] 42. வசனம்.
[9] ஆதி. 28. 1
[10] ஆதி. 30. 25. எண். 24. 25
[11] சங். 91. 11. எபி. 1. 14
[12] யோசு. 5. 14. சங். 34. 7; 103. 21; 148. 2. லூக். 2. 13
† இரண்டு சேனை. யோசு. 21. 38
[13] உபா. 2. 5
[14] லூக். 14. 31, 32
[15] நீதி. 15. 1
[16] ஆதி. 30. 43
[17] ஆதி. 33. 8, 15
[18] ஆதி. 33. 1
[19] ஆதி. 35. 3
[20] சங். 50. 15; 91. 15
[21] ஆதி. 31. 3, 13
[22] ஆதி. 24. 27. சங். 86. 5
[23] யோபு 8. 7. சங். 18. 35
[24] சங். 59. 1, 2
[25] ஓசி. 10. 14
[26] ஆதி. 28. 13, 15
[27] நீதி. 18. 16

தூதர்கள் அவனைச் சந்தித்தார்கள். யாக்கோபு 2
அவர்களைக் கண்டபோது: இது தேவனு
டைய [12]சேனை என்று சொல்லி, அந்த ஸ்த
லத்திற்கு †மக்னாயீம் என்று பேரிட்டான்.
பின்பு, யாக்கோபு ஏதோம் சீமையாகிய 3
[13]சேயீர்தேசத்திலிருக்கிற தன் சகோதரனாகிய
[14]ஏசாவினிடத்துக்குப் போகும்படி ஆட்களை
அழைப்பித்து: நீங்கள் என் [15]ஆண்டவனாகிய 4
ஏசாவினிடத்தில் போய், நான் இதுவரைக்
கும் லாபானிடத்தில் தங்கியிருந்தேன் என்
றும், எனக்கு [16]எருதுகளும், கழுதைகளும், 5
ஆடுகளும், வேலைக்காரரும், வேலைக்காரிக
ளும் உண்டென்றும், உம்முடைய கண்களில்
எனக்குத் [17]தயவுகிடைக்கத்தக்கதாக ஆண்ட
வனாகிய உமக்கு இதை அறிவிக்கும்படி ஆட்
களை அனுப்பினேன் என்றும் உம்முடைய
தாசனாகிய யாக்கோபு சொல்லச் சொன்னான்
என்று சொல்லும்படிக் கட்டளைகொடுத்துத்
தனக்கு முன்னாக அவர்களை அனுப்பினான்.
அந்த ஆட்கள் யாக்கோபினிடத்துக்குத் திரும் 6
பிவந்து: நாங்கள் உம்முடைய சகோதரனாகிய
ஏசாவினிடத்துக்குப் போய்வந்தோம்; அவ
ரும் நானூறுபேரோடே உம்மை [18]எதிர்கொள்
ள வருகிறார் என்றார்கள். அப்பொழுது யாக் 7
கோபு மிகவும் பயந்து, [19]வியாகுலப்பட்டு,
தன்னிடத்திலிருந்த ஜனங்களையும் ஆடுமாடு
களையும் ஒட்டகங்களையும் இரண்டு பகுதியா
கப் பிரித்து: ஏசா ஒரு பகுதியின்மேல் 8
விழுந்து அதை முறிய அடித்தாலும், மற்றப்ப
குதி தப்பித்துக்கொள்ள இடம் உண்டு என்
றான். பின்பு யாக்கோபு: [20]என் தகப்பனாகிய 9
ஆபிரகாமின் தேவனும், என் தகப்பனாகிய
ஈசாக்கின் தேவனுமாய் இருக்கிறவரே: [21]உன்
தேசத்துக்கும் உன் இனத்தாரிடத்துக்கும்
திரும்பிப்போ, உனக்கு நன்மை செய்வேன்
என்று என்னுடனே சொல்லியிருக்கிற கர்த்
தாவே, அடியேனுக்குத் தேவரீர் காண்பித்த 10
எல்லா தயவுக்கும் எல்லா சத்தியத்துக்கும்
[22]நான் எவ்வளவேனும் பாத்திரன் அல்ல,
நான் கோலும் கையுமாய் இந்த யோர்தானைக்
கடந்துபோனேன்; [23]இப்பொழுது இவ்வி
ரண்டு பரிவாரங்களையும் உடையவனானேன்.
என் சகோதரனாகிய ஏசாவின் கைக்கு [24]என் 11
னைத் தப்புவியும், அவன் வந்து என்னையும்
பிள்ளைகளையும் [25]தாய்மார்களையும் முறிய
அடிப்பான் என்று அவனுக்கு நான் பயந்தி
ருக்கிறேன். தேவரீரோ: நான் உனக்கு 12
[26]மெய்யாகவே நன்மை செய்து, உன் சந்ததி
யை எண்ணிமுடியாத கடற்கரை மணலைப்
போல மிகவும் பெருகப்பண்ணுவேன் என்று
சொன்னீரே என்றான். அன்று ராத்திரி அ 13
வன் அங்கே தங்கி, தன் கைக்கு உதவினவை
களிலே தன் சகோதரனாகிய ஏசாவுக்கு [27]வெ
குமானமாக, இருநூறு வெள்ளாடுகளையும் 14
இருபது வெள்ளாட்டுக்கடாக்களையும், இரு
நூறு செம்மறியாடுகளையும், இருபது ஆட்டுக்
கடாக்களையும், பால் கொடுக்கிற முப்பது 15

ஒட்டகங்களையும், அவைகளின் குட்டிகளை
யும், நாற்பது கடாரிகளையும், பத்துக் காளை
களையும், இருபது கோளிகைக் கழுதைகளை
யும், பத்துக் கழுதைக் குட்டிகளையும் பிரித்
16 தெடுத்து, வேலைக்காரர் கையில் ஒவ்வொரு
மந்தையை தனித்தனியாக ஒப்புவித்து, நீங்கள்
மந்தை மந்தைக்கு முன்னும் பின்னுமாக
இடம்விட்டு எனக்கு முன்னாக ஓட்டிக்
கொண்டுபோங்கள் என்று தன் வேலைக்கா
17 ருக்குச் சொல்லி; முன்னே போகிறவனை
நோக்கி: என் சகோதரனாகிய ஏசா உனக்கு
எதிர்ப்பட்டு: நீ யாருடையவன்? எங்கே போ
கிறாய்? உனக்கு முன் போகிற மந்தை யாரு
18 டையது? என்று உன்னைக் கேட்டால், நீ:
இது உமது அடியானாகிய யாக்கோபுடையது;
இது என் ஆண்டவனாகிய ஏசாவுக்கு அனுப்
பப்படுகிற வெகுமதி; இதோ, அவனும் எங்
கள் பின்னே வருகிறான் என்று சொல் என்
19 றான். இரண்டாம் மூன்றாம் வேலைக்கார
னையும், மந்தைகளின் பின்னாலே போகிற
அனைவரையும் நோக்கி: நீங்களும் ஏசாவைக்
காணும்போது, இந்தப்பிரகாரமாக அவ
20 னோடே சொல்லி, இதோ, உமது அடியா
னாகிய யாக்கோபு எங்கள் பின்னாலே வருகி
றான் என்றும் சொல்லுங்கள் என்று கட்டளை
யிட்டான்; முன்னே வெகுமதியை அனுப்பி,
அவனை [1]சாந்தப்படுத்திக்கொண்டு, பின்பு
அவன் முகத்தைப் பார்ப்பேன், அப்பொழுது
ஒருவேளை என்பேரில் தயவாயிருப்பான்
என்றான்.
21 அந்தப்படியே வெகுமதி அவனுக்கு முன்
போயிற்று; அவனோ அன்று ராத்திரி பாளை
22 யத்திலே தங்கி, இராத்திரியில் எழுந்திருந்து,
தன் இரண்டு மனைவிகளையும், தன் இரண்டு
பணிவிடைக்காரிகளையும், தன்னுடைய பதி
னொரு குமாரரையும் கூட்டிக்கொண்டு, [2]யாப்
போக்கு என்கிற ஆற்றின் துறையைக் கடந்
23 தான். அவர்களையும் சேர்த்து, ஆற்றைக்
கடக்கப்பண்ணி, தனக்கு உண்டான யாவை
24 யும் அக்கரைப்படுத்தினான். யாக்கோபு பின்
தித் தனித்திருந்தான்; அப்பொழுது ஒரு
[3]புருஷன் பொழுது விடியுமளவும் அவனு
25 டனே போராடி, அவனை மேற்கொள்ளாத
தைக் கண்டு, அவனுடைய தொடைச் சந்
தைத் தொட்டார்; அதினால் அவருடனே
போராடுகையில் யாக்கோபின் [4]தொடைச்
26 சந்து சுளுக்கிற்று. அவர்: நான் போகட்
டும், பொழுது விடிகிறது என்றார். அதற்கு
அவன். [5]நீர் என்னை ஆசீர்வதித்தாலொழிய
27 உம்மைப் போகவிடேன் என்றான். அவர்:
உன் பேர் என்ன என்று கேட்டார்; யாக்
28 கோபு என்றான். அப்பொழுது அவர்: [6]உன்
பேர் இனி யாக்கோபு என்னப்படாமல் *இஸ்
ரவேல் என்னப்படும்; தேவனோடும் மனித
ரோடும் போராடி மேற்கொண்டாயே என்
29 றார். அப்பொழுது யாக்கோபு: உம்முடைய
நாமத்தை எனக்கு அறிவிக்கவேண்டும் என்று

கேட்டான்; அதற்கு அவர்: [7]நீ என் நாமத்
தைக் கேட்பானேன் என்று சொல்லி, அங்கே
அவனை ஆசீர்வதித்தார். அப்பொழுது யாக் 30
கோபு: நான் தேவனை முகமுகமாய்க் கண்
டேன், உயிர்தப்பிப் பிழைத்தேன் என்று
சொல்லி, அந்த ஸ்தலத்துக்கு †பெனியேல்
என்று பேரிட்டான். அவன் பெனியேலைக் 31
கடந்துபோகையில், சூரியன் உதயமாயிற்று;
அவன் தொடைச்சுளுக்கினாலே நொண்டி
நொண்டி நடந்தான். அவர் யாக்கோபுடைய 32
தொடைச்சந்து நரம்பைத் தொட்டபடியால்,
இஸ்ரவேல் புத்திரர் இந்நாள்வரைக்கும் தொ
டைச்சந்து நரம்பைப் புசிக்கிறதில்லை.

யாக்கோபு தன் கண்களை ஏறெடுத்து, 33
இதோ, [8]ஏசாவும் அவனோடேகூட நானூறு
மனிதரும் வருகிறதைக் கண்டு, பிள்ளைகளை
லேயாளிடத்திலும் ராகேலிடத்திலும் இரண்டு
பணிவிடைக்காரிகளிடத்திலும் வெவ்வேறா
கப் பிரித்துவைத்து, பணிவிடைக்காரிகளை 2
யும் அவர்கள் பிள்ளைகளையும் முதலிலும்,
லேயாளையும் அவள் பிள்ளைகளையும் இடை
யிலும், ராகேலையும் யோசேப்பையும் கடை
யிலும் நிறுத்தி: தான் அவர்களுக்கு முன் 3
னாக நடந்துபோய், [9]ஏழுவிசை தரைமட்டும்
குனிந்து வணங்கி, தன் சகோதரன் கிட்டச்
சேர்ந்தான். அப்பொழுது ஏசா எதிர்கொண்டு 4
ஓடிவந்து, [10]அவனைத் தழுவி, அவன் கழுத்
தைக் கட்டிக்கொண்டு, அவனை முத்தஞ்செய்
தான்; இருவரும் அழுதார்கள். அவன் தன் 5
கண்களை ஏறெடுத்து, ஸ்திரீகளையும் பிள்ளை
களையும் கண்டு: உன்னோடிருக்கிற இவர்கள்
யார் என்றான்? அதற்கு அவன்: தேவன்
[11]உமது அடியானுக்கு அருளின பிள்ளைகள்
என்றான். அப்பொழுது பணிவிடைக்காரி 6
களும் அவர்கள் பிள்ளைகளும் சேர்ந்துவந்து
வணங்கினார்கள். லேயாளும் அவள் பிள்ளை 7
களும் சேர்ந்துவந்து வணங்கினார்கள்; பின்பு
யோசேப்பும் ராகேலும் சேர்ந்துவந்து வணங்
கினார்கள். அப்பொழுது அவன்: எனக்கு 8
எதிர்கொண்டுவந்த அந்த மந்தையெல்லாம்
என்னத்துக்கு என்றான். அதற்கு அவன்:
[12]என் ஆண்டவனுடைய கண்களில் எனக்
குத் தயவு கிடைக்கிறதற்கு என்றான். அதற்கு 9
ஏசா: என் சகோதரனே, எனக்குப் போது
மானது உண்டு; உன்னுடையது உனக்கு இருக்
கட்டும் என்றான். அதற்கு யாக்கோபு: அப் 10
படி அல்ல, உம்முடைய கண்களில் எனக்
குத் தயவு கிடைத்ததேயானால், என் வெகு
மதியை என் கையிலிருந்து ஏற்றுக்கொள்
ளும், நீர் என்மேல் பிரியமானீர், [13]நான்
உம்முடைய முகத்தைக் கண்டது தேவனு
டைய முகத்தைக் கண்டதுபோல இருக்கி
றது. தேவன் எனக்கு அநுக்கிரகம் செய் 11
திருக்கிறார்; வேண்டியதெல்லாம் எனக்கு
உண்டு; ஆகையால் உமக்குக் கொண்டுவரப்
பட்ட [14]என் காணிக்கையை ஏற்றுக்கொள்
ளும் என்று சொல்லி, [15]அவனை வருந்திக்

1 நீதி. 21. 14. பேபு 42. 8, 9
2 உபா. 3. 16
3 ஓசி. 12. 3, 4. எபே. 6. 12
4 மத். 26. 41. 2 கொ. 12. 7
5 லூ. 24. 48. ஓசி. 12. 3, 4
6 ஆதி. 35. 10. 2 இரா. 17. 34
* தேவப்பிரபு.
7 நியா. 13. 18
† தேவமுகம். யாத். 33. 20. உபா. 5. 24. நியா. 6. 22. ஏசா. 6. 5. யோ. 1. 18. கொலோ. 1. 15. எபி. 11. 27
8 ஆதி. 32. 6
9 ஆதி. 18. 2; 42. 6; 43. 26
10 ஆதி. 32. 28; 45. 14
11 ஆதி. 48. 9. சங். 127. 3. ஏசா. 8. 18
12 ஆதி. 32. 5, 16
13 ஆதி. 43. 3. 2 சாமு. 3. 13. மத். 18. 10
14 1 சாமு. 25. 27. 2 இரா. 5. 15
15 2 இரா. 5. 6, 23

கேட்டுக்கொண்டான்; அப்பொழுது அவன்
12 அதை ஏற்றுக்கொண்டான். பின்பு அவன்:
நாம் புறப்பட்டுப் போவோம் வா, நான்
13 உனக்கு முன் நடப்பேன் என்றான். அதற்கு
அவன்: பிள்ளைகள் இளம்பிள்ளைகள் என்றும்,
கறவையான ஆடுமாடுகள் என்னிடத்தில்
இருக்கிறது என்றும் என் ஆண்டவனுக்குத்
தெரியும்; அவைகளை ஒரு நாளாவது துரித
மாய் ஓட்டினால், மந்தையெல்லாம் மாண்டு
14 போம். என் ஆண்டவனாகிய நீர் உமது அடி
யானுக்கு முன்னே போம்; [1]நான் சேயீருக்கு
என் ஆண்டவனிடத்தில் வருமளவும், எனக்கு
முன் நடக்கிற மந்தைகளின் கால்நடைக்கும்
பிள்ளைகளின் கால்நடைக்கும் தக்கதாக, மெது
வாய் அவைகளை நடத்திக்கொண்டு வருகி
15 றேன் என்றான். அப்பொழுது ஏசா: என்
னிடத்திலிருக்கிற ஜனங்களில் சிலரை நான்
உன்னிடத்தில் நிறுத்திவிட்டுப் போகட்டுமா
என்றான். அதற்கு அவன்: அது என்னத்
திற்கு, என் [2]ஆண்டவனுடைய கண்களில்
எனக்குத் தயவுகிடைத்தால்மாத்திரம் போதும்
16 என்றான். அன்றைத்தினம் ஏசா திரும்பித்
தான் வந்தவழியே சேயீருக்குப் போனான்.
17 யாக்கோபு [3]சுக்கோத்திற்குப் பிரயாணம்
பண்ணி, தனக்கு ஒரு வீடு கட்டி, தன் மிருக
ஜீவன்களுக்குக் கொட்டாரங்களைப் போட்
டான்; அதினாலே அந்த ஸ்தலத்துக்குச் சுக்
கோத் என்று பேரிட்டான்.
18 யாக்கோபு பதான் அராமிலிருந்து வந்த
பின் கானான்தேசத்திலிருக்கிற [4]சாலேம் என்
னும் [5]சீகேமுடைய பட்டணத்திற்கு அருகே
சென்று பட்டணத்திற்கு எதிரே கூடாரம்
19 போட்டான். தான் கூடாரம் போட்ட
வெளியின் நிலத்தைச் சீகேமின் தகப்பனாகிய
ஏமோரின் புத்திரர் [6]கையிலே நூறு வெள்
20 ளிக்காசுக்குக் கொண்டு, அங்கே ஒரு பலி
பீடத்தைக் கட்டி, அதற்கு [*]ஏல் எல்லோகே
இஸ்ரவேல் என்று பேரிட்டான்.

34 லேயாள் யாக்கோபுக்குப் பெற்ற குமா
ரத்தியாகிய [7]தீனாள் [8]தேசத்துப் பெண்க
2 ளைப் பார்க்கப் புறப்பட்டாள். அவளை ஏவி
யனான ஏமோரின் குமாரனும் [9]அத்தேசத்
தின் பிரபுவுமாகிய சீகேம் என்பவன் கண்டு,
அவளைக் கொண்டுபோய், அவளோடே சய
3 னித்து, †அவளைத் தீட்டுப்படுத்தினான். அவ
னுடைய மனம் யாக்கோபின் குமாரத்தியா
கிய தீனாள்மேல் பற்றுதலாயிருந்தது; அவன்
அந்தப் பெண்ணை நேசித்து, அந்தப் பெண்
ணின் மனதுக்கு இன்பமாய்ப் பேசினான்.
4 சீகேம் தன் தகப்பனாகிய ஏமோரை நோக்கி:
[10]இந்தப் பெண்ணை எனக்குக் கொள்ளவேண்
5 டும் என்று சொன்னான். தன் குமாரத்தியா
கிய தீனாளை அவன் தீட்டுப்படுத்தினதை
யாக்கோபு கேள்விப்பட்டபோது, அவன்
குமாரர் அவனுடைய மந்தையினிடத்தில்
வெளியிலே இருந்தார்கள்; அவர்கள் வருமள
6 வும் யாக்கோபு [11]பேசாமலிருந்தான். அத்

[1] ஆதி. 32. 3
[2] ஆதி. 34. 11. ரூத் 2. 13
[3] யோசு. 13. 27. நியா. 8. 5
[4] யோ. 3. 23
[5] அப். 7. 16. யோசு. 24. 1. நியா. 9. 1
[6] யோசு. 24. 32. யோ. 4. 5
[*] தேவனாகிய இஸ்ரவேலின் தேவன்.
[7] ஆதி. 30. 21
[8] தீத். 2. 5
[9] நியா. 14. 1. 2 சாமு. 11. 2
† கற்பழித்தான். உபா. 22. 29
[10] நியா. 14. 2
[11] 1 சாமு 10, 27. 2 சாமு. 13. 22
[12] உபா. 23. 17. 2 சாமு. 13. 21
[13] யோசு. 7. 15. நியா 20. 6
[14] ஆதி. 49. 7. 2 சாமு. 13. 12
[15] ஆதி. 13. 9
[16] யாத். 22. 16, 17. 1 சாமு 18. 25
[17] நீதி. 26. 25
[18] யோசு. 5. 9
[19] 2 இரா. 5. 1

தருணத்தில் சீகேமின் தகப்பனாகிய ஏமோர்
புறப்பட்டு, யாக்கோபோடே பேசும்படி அவ
னிடத்தில் வந்தான். யாக்கோபின் குமாரர் 7
இந்தச் செய்தியைக் கேட்டவுடனே, வெளி
யிலிருந்து வந்தார்கள். அவன் யாக்கோபின்
குமாரத்தியோடே சயனித்து, [12]செய்யத்த
காத [13]மதிகெட்ட காரியத்தை இஸ்ரவேலில்
செய்ததினாலே, அந்த மனிதர் மனங்கொதித்து
[14]மிகவும் கோபங்கொண்டார்கள். ஏமோர் 8
அவர்களோடே பேசி: என் குமாரனாகிய
சீகேமின் மனது உங்கள் குமாரத்தியின்மேல்
பற்றுதலாயிருக்கிறது; அவளை அவனுக்கு
மனைவியாகக் கொடுங்கள். நீங்கள் எங்க 9
ளோடே சம்பந்தங் கலந்து, உங்கள் குமா
ரத்திகளை எங்களுக்குக் கொடுத்து, எங்கள்
குமாரத்திகளை உங்களுக்குக் கொண்டு, எங்க 10
ளோடே வாசம்பண்ணுங்கள்; தேசம் உங்கள்
முன்பாக இருக்கிறது; [15]இதிலே குடியிருந்து,
வியாபாரம்பண்ணி, பொருள் சம்பாதித்து,
அதைக் கையாண்டு கொண்டிருங்கள் என்
றான். சீகேமும் அவள் தகப்பனையும் அவள் 11
சகோதரரையும் நோக்கி: உங்கள் கண்களில்
எனக்குத் தயவுகிடைக்கவேண்டும்; நீங்கள்
என்னிடத்தில் எதைக் கேட்டாலும் தருகி
றேன்; பரிசமும் [16]வெகுமதியும் நீங்கள் எவ் 12
வளவு கேட்டாலும், உங்கள் சொற்படி தரு
கிறேன்; அந்தப் பெண்ணைமாத்திரம் எனக்கு
மனைவியாகக் கொடுக்கவேண்டும் என்றான்.
அப்பொழுது யாக்கோபின் குமாரர் தங்கள் 13
சகோதரியாகிய தீனாளைச் சீகேம் என்பவன்
தீட்டுப்படுத்தினபடியால், அவனுக்கும் அவன்
தகப்பனாகிய ஏமோருக்கும் [17]வஞ்சகமான மறு
மொழியாக: விருத்தசேதனமில்லாத புருஷ 14
னுக்கு நாங்கள் எங்கள் சகோதரியைக் கொடுக்
கலாகாது; அது எங்களுக்கு [18]நிந்தையாயிருக்
கும். நீங்களும், உங்களுக்குள்ளிருக்கும் ஆண் 15
மக்கள் யாவரும் விருத்தசேதனம் பண்ணப்
பட்டு எங்களைப்போலானீர்களானால், நாங்கள்
சம்மதித்து, உங்களுக்கு எங்கள் குமாரத்தி 16
களைக் கொடுத்து, உங்கள் குமாரத்திகளை எங்
களுக்குக் கொண்டு, உங்களோடே குடியி
ருந்து, ஏகஜனமாயிருப்போம். விருத்தசேத 17
னம் பண்ணிக்கொள்வதற்கு எங்கள் சொல்
கேளாமற்போனீர்களானால், நாங்கள் எங்கள்
குமாரத்தியை அழைத்துக்கொண்டுபோய்விடு
வோம் என்று சொன்னார்கள். அவர்களு 18
டைய வார்த்தைகள் ஏமோருக்கும் ஏமோரின்
குமாரனாகிய சீகேமுக்கும் நலமாய்த் தோன்
றினது. அந்த வாலிபன் யாக்கோபுடைய 19
குமாரத்தியின்மேல் பிரியம் வைத்திருந்தபடி
யால், அந்தக் காரியத்தைச் செய்ய அவன்
தாமதம் பண்ணவில்லை. அவன் தன் தகப்
பன் வீட்டார் [19]அனைவருக்குள்ளும் மேன்மை
யுள்ளவனாயிருந்தான். ஏமோரும் அவன் குமா 20
ரன் சீகேமும் தங்கள் பட்டணத்து வாசலில்
வந்து, தங்கள் பட்டணத்து மனிதரோடே
பேசி: இந்த மனிதர் நம்மோடே சமாதான 21

மாயிருக்கிறார்கள்; ஆகையால், அவர்கள் இக்
தத் தேசத்தில் வாசம்பண்ணி, இதிலே வியா
பாரம் பண்ணட்டும்; அவர்களும் வாசம்பண்
ணுகிறதற்குத் தேசம் விஸ்தாரமாயிருக்கிறது;
அவர்களுடைய குமாரத்திகளை நமக்கு மனை
விகளாகக் கொண்டு, நம்முடைய குமாரத்தி
22 களை அவர்களுக்குக் கொடுப்போம். அந்த
மனிதர் விருத்தசேதனம் பண்ணப்பட்டவர்க
ளாயிருக்கிறதுபோல, நம்மிலுள்ள ஆண்மக்
கள் யாவரும் விருத்தசேதனம் பண்ணப்பட்
டால், அவர்கள் ஏகஜனமாக நம்மோடே வாச
23 ம்பண்ணச் சம்மதிப்பார்கள். அவர்களுடைய
ஆடுமாடுகள் ஆஸ்திகள் மிருகஜீவன்கள் எல்
லாம் நம்மைச் சேருமல்லவா? அவர்களுக்குச்
சம்மதிப்போமானால், அவர்கள் நம்முடனே
வாசம்பண்ணுவார்கள் என்று சொன்னார்கள்.
24 அப்பொழுது ஏமோரின் பட்டணத்து வாச
லில் புறப்பட்டுவரும் அனைவரும் அவன்
சொல்லையும் அவன் குமாரனாகிய சீகேமின்
சொல்லையும் கேட்டு, அவனுடைய [1]பட்டணத்
து வாசலில் புறப்பட்டுவரும் ஆண்மக்கள் யாவ
ரும் விருத்தசேதனம் பண்ணப்பட்டார்கள்.
25 மூன்றாம் நாளில் அவர்களுக்கு நோவெடுத்
துக்கொண்டபோது, யாக்கோபின் குமாரரும்
தீனாளின் சகோதரருமான [2]சிமியோன் லேவி
என்னும் இவ்விரண்டுபேரும் தன் தன் பட்
டயத்தை எடுத்துக்கொண்டு, துணிகரமாய்ப்
பட்டணத்தின்மேல் பாய்ந்து, ஆண்மக்கள்
26 யாவரையும் கொன்றுபோட்டார்கள். ஏமோ
ரையும் அவன் குமாரன் சீகேமையும் பட்ட
யக்கருக்காலே கொன்று, சீகேமின் வீட்டிலி
ருந்த தீனாளை அழைத்துக்கொண்டு போய்
27 விட்டார்கள். மேலும், யாக்கோபின் குமாரர்
வெட்டுண்டவர்களிடத்தில் வந்து, தங்கள்
சகோதரியை அவர்கள் தீட்டுப்படுத்தினதற்கா
28 கப் பட்டணத்தைக் கொள்ளையிட்டு, அவர்
களுடைய ஆடுமாடுகளையும் கழுதைகளையும்,
பட்டணத்திலும் வயல்வெளியிலும் இருந்த
29 வைகள் யாவையும், அவர்களுடைய எல்லாத்
தட்டுமுட்டுகளையும் எடுத்துக்கொண்டு, அவர்
களுடைய எல்லாக் குழந்தைகளையும் ஸ்திரீக
ளையும் சிறைபிடித்து, வீட்டிலிருந்த எல்லா
30 வற்றையும் கொள்ளையிட்டார்கள். அப்பொ
ழுது யாக்கோபு சிமியோனையும் லேவியையும்
பார்த்து: இந்தத் தேசத்தில் குடியிருக்கிற கா
னானியரிடத்திலும் பெரிசியரிடத்திலும் [3]என்
வாசனையை நீங்கள் கெடுத்ததினாலே [4]என்
னைக் கலங்கப்பண்ணினீர்கள்; [5]நான் கொஞ்ச
ஜனமுள்ளவன்; அவர்கள் எனக்கு விரோத
மாய்க் கூட்டங் கூடி, நானும் என் குடும்ப
மும் அழியும்படி என்னை வெட்டிப்போடு
31 வார்களே என்றான். அதற்கு அவர்கள்: எங்
கள் சகோதரியை அவர்கள் ஒரு வேசியைப்
போல நடத்தலாமோ என்றார்கள்.

35 தேவன் யாக்கோபை நோக்கி: நீ எழுந்து
[6]பெத்தேலுக்குப் போய், அங்கே குடியிருந்
து, நீ உன் சகோதரனாகிய ஏசாவின் முகத்
திற்கு விலகி ஓடிப்போகிறபோது, உனக்குத்
தரிசனமான தேவனுக்கு அங்கே ஒரு பலி
பீடத்தை உண்டாக்கு என்றார். அப்பொ 2
ழுது யாக்கோபு தன் [7]வீட்டாரையும் தன்
னோடேகூட இருந்த மற்ற அனைவரையும்
நோக்கி: உங்களிடத்தில் இருக்கிற [8]அந்நிய
தெய்வங்களை விலக்கிப்போட்டு, உங்களைச்
[9]சுத்தம் பண்ணிக்கொண்டு, உங்கள் வஸ்தி
ரங்களை மாற்றுங்கள். நாம் எழுந்து பெத் 3
தேலுக்குப் போவோம் வாருங்கள்; எனக்கு
ஆபத்து நேரிட்ட நாளில் [10]என் விண்ணப்பத்
துக்கு உத்தரவு அருளிச்செய்து, [11]நான் நடந்த
வழியிலே என்னோடேகூட இருந்த தேவ
னுக்கு அங்கே ஒரு பலிபீடத்தை உண்டாக்
குவேன் என்றான். அப்பொழுது அவர்கள் 4
தங்கள் கையில் இருந்த எல்லா அந்நிய தெய்
வங்களையும், [12]தங்கள் காதணிகளையும் யாக்
கோபிடத்தில் கொடுத்தார்கள்; யாக்கோபு
அவைகளைச் சீகேம் ஊர் அருகே இருந்த
ஒரு கர்வாலி [13]மரத்தின்கீழே புதைத்துப்
போட்டான். பின்பு பிரயாணம் புறப்பட் 5
டார்கள்; அவர்களைச் சுற்றிலும் இருந்த பட்
டணத்தாருக்குத் [14]தேவனாலே பயங்கரம் உண்
டானதினால், அவர்கள் யாக்கோபின் குமா
ரரைப் பின்தொடராதிருந்தார்கள். யாக்கோ 6
பும் அவனோடேகூட இருந்த எல்லா ஜனங்
களும் கானான்தேசத்திலுள்ள பெத்தேல் என்
னும் [15]லூசுக்கு வந்தார்கள். அங்கே அவன் 7
ஒரு [16]பலிபீடத்தைக் கட்டி, தன் சகோதர
னுடைய முகத்துக்குத் தப்பி ஓடினபோது,
அங்கே தனக்குத் தேவன் தரிசனமானபடி
யால், அந்த ஸ்தலத்திற்கு *எல்பெத்தேல்
என்று பேரிட்டான். ரெபெக்காளின் தாதியா 8
கிய [17]தெபொராள் மரித்து, பெத்தேலுக்குச்
சமீபமாயிருந்த ஒரு கர்வாலி மரத்தின் கீழ்
அடக்கம் பண்ணப்பட்டாள்; அதற்கு †அல்
லோன்பாகூத் என்னும் பேர் உண்டாயிற்று.
யாக்கோபு பதான் அராமிலிருந்து வந்த 9
பின்பு தேவன் [18]அவனுக்கு மறுபடியும் தரி
சனமாகி, அவனை ஆசீர்வதித்து: இப்பொ 10
ழுது உன் பேர் யாக்கோபு, இனி உன் பேர்
யாக்கோபு என்னப்படாமல், இஸ்ரவேல்
என்று உனக்குப் பேர் வழங்கும் என்று
சொல்லி, [19]அவனுக்கு இஸ்ரவேல் என்று
பேரிட்டார். பின்னும் தேவன் அவனை 11
நோக்கி: [20]நான் சர்வவல்லமையுள்ள தேவன்,
நீ பலுகிப் பெருகுவாயாக; ஒரு ஜாதியும்
பற்பல ஜாதிகளின் கூட்டங்களும் உன்னிலி
ருந்து உண்டாகும்; ராஜாக்களும் உன் சந்த
தியில் பிறப்பார்கள். நான் ஆபிரகாமுக்கும் 12
ஈசாக்குக்கும் கொடுத்த [21]தேசத்தை உனக்குக்
கொடுப்பேன்; உனக்குப்பின் உன் சந்ததிக்
கும் இந்தத் தேசத்தைக் கொடுப்பேன் என்று
சொல்லி, தேவன் அவனோடே [22]பேசின 13
ஸ்தலத்திலிருந்து அவனை விட்டு எழுந்தரு
ளிப்போனார். அப்பொழுது யாக்கோபு தன் 14
னோடே அவர் பேசின ஸ்தலத்திலே ஒரு

[1] ஆதி. 23. 18
[2] ஆதி. 49. 5, 7
[3] யாத். 5. 21. 1 சாமு. 13. 4
[4] யோசு. 7. 25
[5] உபா. 4. 27. சங். 105. 12
[6] ஆதி. 28. 19
[7] ஆதி. 18. 19. யோசு. 24. 15. சங். 101. 2, 7
[8] ஆதி. 31. 19. யோசு. 24. 23. 1 சாமு. 7. 3
[9] யாத். 19. 10
[10] ஆதி. 32. 7, 24. சங். 107. 6
[11] ஆதி. 28. 20: 31. 3, 42
[12] யாத். 32. 3, 4. ஓசி. 2. 13
[13] நியா. 9. 6
[14] யாத். 15. 16: 23. 27. உபா. 11. 25. யோசு. 2. 9
[15] ஆதி. 28. 19, 22
[16] பிர. 5. 4
* பெத்தேலின் தேவன். ஆதி. 28. 13
[17] ஆதி. 24. 59
† புலம்பலின் கர்வாலி மரம்.
[18] ஓசி. 12. 4
[19] ஆதி. 32. 28
[20] ஆதி. 17. 1: 48. 3, 4. யாத். 6. 3
[21] ஆதி. 12. 7: 13. 15: 28. 13
[22] ஆதி. 17. 22

[1]கற்றூணை நிறுத்தி, அதின்மேல் பானபலி
யை ஊற்றி, எண்ணெயையும் வார்த்தான்.
15 தேவன் தன்னோடே பேசின அந்த ஸ்தலத்
திற்கு யாக்கோபு பெத்தேல் என்று பேரிட்
16 டான். பின்பு, பெத்தேலை விட்டுப் பிரயா
ணம் புறப்பட்டார்கள். எப்பிராத்தாவுக்கு
வர இன்னும் கொஞ்சம் தூரமிருக்கும்போது,
ராகேல் பிள்ளை பெற்றாள்; பிரசவத்தில் அவ
17 ளுக்குக் கடும் வேதனை உண்டாயிற்று. பிரச
விக்கும்போது, அவளுக்குக் கடும் வேதனை
யாயிருக்கையில், [2]மருத்துவச்சி அவளைப்
பார்த்து: பயப்படாதே, இந்த முறையும் புத்
18 திரனைப் பெறுவாய் என்றாள். மரணகாலத்
தில் அவள் ஆத்துமா பிரியும்போது, அவள்
அவனுக்கு *பெனோனி என்று பேரிட்டாள்;
அவன் தகப்பனோ, அவனுக்கு †பென்யமீன்
19 என்று பேரிட்டான். ராகேல் [3]மரித்து,
பெத்லகேம் என்னும் [4]எப்பிராத்தா ஊருக்
குப் போகிற வழியிலே அடக்கம் பண்ணப்
20 பட்டாள். அவள் கல்லறையின்மேல் யாக்
கோபு ஒரு தூணை நிறுத்தினான்; அதுவே
[5]இந்நாள்வரைக்கும் இருக்கிற ராகேலுடைய
21 கல்லறையின் தூண். இஸ்ரவேல் பிரயா
ணம்பண்ணி, [6]ஏதேர் என்கிற கோபுரத்
திற்கு அப்புறத்தில் கூடாரம் போட்டான்.
22 இஸ்ரவேல் அந்தத் தேசத்தில் தங்கிக் குடி
யிருக்கும்போது, ரூபன் போய், தன் தகப்
பனுடைய மறுமனையாட்டியாகிய [7]பில்கா
ளோடே சயனித்தான்; அதை இஸ்ரவேல்
கேள்விப்பட்டான்.
23 யாக்கோபின் குமாரர் பன்னிரண்டுபேர்.
யாக்கோபின் [8]மூத்தமகனாகிய ரூபன், சிமி
யோன், லேவி, யூதா, இசக்கார், செபுலோன்
24 என்பவர்கள் லேயாள் பெற்ற குமாரர். யோ
சேப்பு, பென்யமீன் என்பவர்கள் ராகேல்
25 பெற்ற குமாரர். தாண், நப்தலி என்பவர்கள்
ராகேலுடைய பணிவிடைக்காரியாகிய பில்
26 காள் பெற்ற குமாரர். காத், ஆசேர் என்பவர்
கள் லேயாளின் பணிவிடைக்காரியாகிய சில்
பாள் பெற்ற குமாரர்; இவர்களே யாக்கோ
புக்குப் பதான் அராமிலே பிறந்த குமாரர்.
27 பின்பு, யாக்கோபு [9]அர்பாவின் ஊராகிய
[10]மம்ரேக்கு தன் தகப்பனாகிய ஈசாக்கினிடத்
தில் வந்தான்; அது ஆபிரகாமும் ஈசாக்கும்
28 தங்கியிருந்த எபிரோன் என்னும் ஊர். ஈசாக்கு
விருத்தாப்பியமும் பூரண ஆயுசுமுள்ளவனாகி,
29 நூற்றெண்பது வருஷம் ஜீவித்திருந்து, பிரா
ணன்போய் மரித்து, [11]தன் ஜனத்தாரோடே
சேர்க்கப்பட்டான். [12]அவன் குமாரராகிய ஏசா
வும் யாக்கோபும் அவனை அடக்கம்பண்ணி
னார்கள்.
36 [13]ஏதோமியரின் தகப்பனாகிய ஏசாவின்
2 வம்சவரலாறு: [14]ஏசா கானான்தேசத்துப்பெண்
களில் ஏத்தியனான ஏலோனின் குமாரத்தி
யாகிய ஆதாளையும், ஏவியனாகிய சிபியோ
னின் ‡குமாரத்தியும் ஆனாகின் குமாரத்தியு
3 மாகிய அகோலிபாமாளையும், இஸ்மவேலின்
குமாரத்தியும் நெபாயோத்தின் சகோதரியுமா
கிய [15]பஸ்மாத்தையும் விவாகம் பண்ணியிருந்
தான். ஆதாள் [16]ஏசாவுக்கு எலீப்பாசைப் பெற் 4
றாள்; பஸ்மாத்து ரெகுவேலைப் பெற்றாள்; 5
அகோலிபாமாள் எயூஷையும், யாலாமையும்,
கோராகையும் பெற்றாள்; இவர்களே ஏசாவுக்
குக் கானான்தேசத்திலே பிறந்த குமாரர். ஏசா 6
தன் மனைவிகளையும், தன் குமாரரையும், தன்
குமாரத்திகளையும், தன் வீட்டிலுள்ள யாவ
ரையும், தன் ஆடுமாடுகளையும், மற்ற ஜீவஜந்
துக்கள் யாவையும், தான் கானான்தேசத்திலே
சம்பாதித்த ஆஸ்தி முழுவதையும் சேர்த்துக்
கொண்டு, தன் சகோதரனாகிய யாக்கோபை
விட்டுப் பிரிந்து வேறே தேசத்துக்குப் போ
னான். அவர்களுடைய [17]சம்பத்து மிகுதியா 7
யிருந்தபடியினால் அவர்கள் ஒருமித்துக் குடி
யிருக்கக் கூடாமற்போயிற்று; அவர்களுடைய
மந்தைகளினிமித்தமாய் அவர்கள் தங்கியிருந்த
பூமி அவர்களைத் தாங்கக்கூடாததாயிருந்தது.
ஆதலால் [18]ஏசா சேயீர்மலையில் குடியேறி 8
னான்; ஏசாவுக்கு ஏதோம் என்றும் பேர்.
சேயீர்மலையில் இருக்கிற ஏதோமியருடைய 9
தகப்பனாகிய ஏசாவின் சந்ததிகளும், ஏசா 10
வின் குமாரருடைய நாமங்களுமாவன: ஏசா
வின் மனைவியாகிய ஆதாளுடைய குமார
னுக்கு எலீப்பாஸ் என்று பேர்; ஏசாவின்
மனைவியாகிய பஸ்மாத்துடைய குமாரனுக்கு
ரெகுவேல் என்று பேர். எலீப்பாசின் குமா 11
ரர், தேமான், ஓமார், செப்போ, கத்தாம்,
கேனாஸ் என்பவர்கள். திம்னாள் ஏசாவின் 12
குமாரனாகிய எலீப்பாசுக்கு மறுமனையாட்டி
யாயிருந்து, எலீப்பாசுக்கு [19]அமலேக்கைப்
பெற்றாள்; இவர்களே ஏசாவின் மனைவியா
கிய ஆதாளுடைய புத்திரர். ரெகுவேலு 13
டைய குமாரர், நகாத், செராகு, சம்மா, மீசா
என்பவர்கள்; இவர்களே ஏசாவின் மனைவி
யாகிய பஸ்மாத்தின் புத்திரர். சிபியோனின் 14
குமாரத்தியும் ஆனாகின் குமாரத்தியுமான
அகோலிபாமாள் என்கிற ஏசாவின் மனைவி
எயூஷ், யாலாம், கோராகு என்னும் புத்தி
ரரை ஏசாவுக்குப் பெற்றாள். ஏசாவின் குமா 15
ரரில் தோன்றிய பிரபுக்களாவன: ஏசாவுக்கு
மூத்தமகனாகிய எலீப்பாசுடைய குமாரரில்
தேமான் பிரபு, ஓமார் பிரபு, செப்போ பிரபு,
கேனாஸ் பிரபு, கோராகு பிரபு, கத்தாம் 16
பிரபு, அமலேக்கு பிரபு என்பவர்கள்; இவர்
கள் ஏதோம் தேசத்தில் எலீப்பாசின் சந்ததி
யும் ஆதாளின் குமாரருமாயிருந்த பிரபுக்கள்.
ஏசாவின் குமாரனாகிய ரெகுவேலின் புத்திர 17
ரில் நகாத் பிரபு, செராகு பிரபு, சம்மா
பிரபு, மீசா பிரபு என்பவர்கள்; இவர்கள்
ஏதோம் தேசத்தில் ரெகுவேலின் சந்ததி
யும் ஏசாவின் மனைவியாகிய பஸ்மாத்தின்
குமாரருமாயிருந்த பிரபுக்கள். ஏசாவின் 18
மனைவியாகிய அகோலிபாமாளின் குமாரர்,
எயூஷ் பிரபு, யாலாம் பிரபு, கோராகு பிரபு
என்பவர்கள்; இவர்கள் ஆனாகின் குமாரத்தி

1 ஆதி. 28. 18, 19
2 ஆதி. 30. 24. 1 சாமு. 4. 20
* விசாரபுத்திரன்.
† வலதுகரபுத்திரன்.
3 ஆதி. 48. 7
4 ரூத். 1. 2; 4. 11. மீகா. 5 2. மத். 2. 6
5 1 சாமு. 10. 2
6 மீகா. 4. 8
7 ஆதி. 49. 4. 1 நாளா. 5. 1. 1 கொ. 5. 1
8 ஆதி. 46. 8. யாத். 1. 2
9 யோசு. 14. 15
10 ஆதி. 13. 18
11 ஆதி. 15. 15; 25. 8
12 ஆதி. 25. 9; 49. 31. யோபு 5. 26
13 ஆதி. 25. 30
14 ஆதி. 26. 34
‡ பேத்தி.
15 ஆதி. 28. 9
16 1 நாளா. 1. 35
17 ஆதி. 13. 6, 11; 17. 8
18 உபா. 2. 5
19 யாத். 17. 8, 14. எண். 24. 20. 1 சாமு. 15. 2

யும் ஏசாவுடைய மனைவியுமாகிய அகோ
லிபாமாளின் சந்ததியாயிருந்த பிரபுக்கள்.
19 இவர்களே ஏதோம் என்னும் ஏசாவின் சந்
ததி; இவர்களே அவர்களிலிருந்த பிரபுக்கள்.
20 அந்தத் தேசத்தின் குடிகளாகிய [1]ஓரிய
னன சேயீரின் குமாரர், லோத்தான், சோ
21 பால், சிபியோன், ஆனாகு, திஷோன், எத்
சேர், திஷான் என்பவர்கள்; இவர்களே
ஏதோம்தேசத்தில் சேயீரின் புத்திரராகிய
ஓரியருடைய சந்ததியாயிருந்த பிரபுக்கள்.
22 லோத்தானுடைய குமாரர், ஓரி, எமாம் என்
பவர்கள்; லோத்தானின் சகோதரி திம்னாள்
23 என்பவள். சோபாலின் குமாரர், அல்வான்,
மானகாத், ஏபால், செப்போ, ஓனாம் என்ப
24 வர்கள். சிபியோனின் குமாரர், அயா,
ஆனாகு என்பவர்கள்; வனாந்தரத்திலே தன்
தகப்பனாகிய சிபியோனின் கழுதைகளை
மேய்க்கையில், [2]கோவேறு *கழுதைகளைக்
25 கண்டுபிடித்த ஆனாகு இவன்தான். ஆனா
கின் பிள்ளைகள், திஷோன், அகோலிபாமாள்
என்பவர்கள்; இந்த அகோலிபாமாள் ஆனா
26 கின் குமாரத்தி. திஷோனுடைய குமாரர்,
எம்தான், எஸ்பான், இத்தரான், கெரான்
27 என்பவர்கள். எத்சேருடைய குமாரர், பில்
கான், சகவான், அக்கான் என்பவர்கள்.
28 திஷானுடைய குமாரர், ஊத்ஸ், அரான் என்
29 பவர்கள். ஓரியரின் சந்ததியில் தோன்றிய
பிரபுக்கள், லோத்தான் பிரபு, சோபால் பிரபு,
30 சிபியோன் பிரபு, ஆனாகு பிரபு, திஷோன்
பிரபு, எத்சேர் பிரபு, திஷான் பிரபு என்ப
வர்கள்; இவர்களே சேயீர் தேசத்திலே தங்கள்
தங்கள் இடங்களில் இருந்த ஓரியர் சந்ததி
யான பிரபுக்கள்.
31 இஸ்ரவேல் புத்திரர்மேல் [3]ராஜாக்கள் அர
சாளுகிறதற்கு முன்னே, ஏதோம் தேசத்திலே
32 ஆண்ட ராஜாக்களாவன: பேயோருடைய
குமாரனாகிய பேலா ஏதோமிலே அரசாண்
டான், அவனுடைய பட்டணத்துக்குத் தின்
33 காபா என்று பேர். பேலா மரித்தபின்,
போஸ்றா பட்டணத்தானாகிய சேராகுடைய
குமாரனாகிய யோபாப் அவன் பட்டத்திற்கு
34 வந்தான். யோபாப் மரித்தபின், தேமானிய
தேசத்தானாகிய உஷாம் அவன் பட்டத்திற்கு
35 வந்தான். உஷாம் மரித்தபின், மோவாபின்
நாட்டிலே மீதியானியரை முறிய அடித்த
பேதாதின் குமாரனாகிய ஆதாத் அவன் பட்
டத்திற்கு வந்தான்; அவனுடைய பட்டணத்
36 துக்கு ஆவீத் என்று பேர். ஆதாத் மரித்த
பின், மஸ்ரேக்கா ஊரானாகிய சம்லா அவனு
37 டைய பட்டத்திற்கு வந்தான். சம்லா மரித்த
பின் அங்கே இருக்கிற நதிக்குச் சமீபமான
ரெகொபோத் என்னும் ஊரானாகிய சவுல்
38 அவனுடைய பட்டத்திற்கு வந்தான். சவுல்
மரித்தபின், அக்போருடைய குமாரனாகிய
பாகால்கானான் அவனுடைய பட்டத்திற்கு
39 வந்தான். அக்போருடைய குமாரனாகிய பா
கால்கானான் மரித்தபின், ஆதார் அவனுடைய
பட்டத்திற்கு வந்தான்; அவனுடைய பட்ட
ணத்துக்குப் பாகு என்று பேர்; அவன் மனை
வியின்பேர் மெகேதபேல்; அவள் மத்ரேத்து
டைய குமாரத்தியும் மேசகாவின் †குமாரத்
தியுமாய் இருந்தாள். தங்கள் பற்பல வம்சங் 40
களின்படியேயும் வாசஸ்தலங்களின்படியே
யும் நாமதேயங்களின்படியேயும் ஏசாவின்
சந்ததியில் தோன்றிய பிரபுக்களுடைய நாம
ங்களாவன: திம்னா பிரபு, அல்வா பிரபு,
ஏதேத் பிரபு, அகோலிபாமா பிரபு, ஏலா 41
பிரபு, பினோன் பிரபு, கேனாஸ் பிரபு, தேமான் 42
பிரபு, மிப்சார் பிரபு, மக்தியேல் பிரபு, ஈராம் 43
பிரபு; இவர்களே தங்கள் சொந்தமான தேசத்
திலே பற்பல இடங்களில் குடியிருந்த ஏதோம்
சந்ததிப் பிரபுக்கள்; இந்த ஏதோமியருக்குத்
தகப்பன் ஏசா.

யாக்கோபு [4]தன் தகப்பன் தங்கியிருந்த 37
கானான்தேசத்திலே குடியிருந்தான். யாக் 2
கோபுடைய சந்ததியின் வரலாறு: யோசேப்பு
பதினேழு வயதிலே தன் சகோதரருடனே
ஆடுகளை மேய்த்துக்கொண்டிருந்தான்; அந்த
இளைஞன் பில்காள் சில்பாள் என்னும் தன்
தகப்பனுடைய மறுமனையாட்டிகளின் குமார
ரோடே இருந்து, [5]அவர்களுடைய துன்மார்க்
கத்தைத் தன் தகப்பனுக்குச் சொல்லிவரு
வான். இஸ்ரவேலின் முதிர்வயதிலே யோ 3
சேப்புத் தனக்குப் பிறந்ததினால், இஸ்ரவேல்
தன் குமாரர் எல்லாரிலும் [6]அவனை அதிகமாய்
நேசித்து, அவனுக்குப் [7]பலவருணமான அங்கி
யைச் செய்வித்தான். அவனுடைய சகோ 4
தரர் எல்லாரிலும் அவனைத் தங்கள் தகப்பன்
அதிகமாய் நேசிக்கிறதை அவன் சகோதரர்
கண்டபோது, அவனோடே பட்சமாய்ப் பேசா
மல் [8]அவனைப் பகைத்தார்கள். யோசேப்பு 5
ஒரு சொப்பனம் கண்டு, அதைத் தன்
சகோதரருக்கு அறிவித்தான்; அதினிமித்தம்
அவனை இன்னும் அதிகமாய்ப் பகைத்தார்கள்.
அவன் அவர்களை நோக்கி: நான் கண்ட 6
சொப்பனத்தைக் கேளுங்கள்: நாம் வயலில் 7
அறுத்த அரிகளைக் கட்டிக்கொண்டிருந்தோம்;
அப்பொழுது என்னுடைய அரிக்கட்டு நிமிர்ந்
திருந்தது; உங்கள் அரிக்கட்டுகள் என் அரிக்
கட்டைச் சுற்றி வணங்கி நின்றது என்றான்.
அப்பொழுது அவன் சகோதரர் அவனைப் 8
பார்த்து: நீ எங்கள்மேல் துரைத்தனம்பண்
ணுவாயோ? நீ எங்களை ஆளப்போகிறாயோ?
என்று சொல்லி, அவனை அவன் சொப்பனங்
களின் நிமித்தமும், அவன் வார்த்தைகளின்
நிமித்தமும் இன்னும் அதிகமாய்ப் பகைத்
தார்கள். அவன் வேறொரு சொப்பனம் 9
கண்டு, தன் சகோதரரை நோக்கி: நான் இன்
னும் ஒரு சொப்பனத்தைக் கண்டேன்; [9]சூரி
யனும் சந்திரனும் பதினொரு நட்சத்திரங்க
ளும் என்னை வணங்கினது என்றான். இதை 10
அவன் தன் தகப்பனுக்கும் தன் சகோதரருக்
கும் சொன்னபோது, அவன் தகப்பன் அவ
னைப் பார்த்து: நீ கண்ட இந்தச் சொப்பனம்

[1] ஆதி. 14. 6. உபா. 2. 12, 22
[2] லேவி. 19. 19
* வெந்நீரூற்றுகளை.
[3] 1 நாளா. 1. 43
† பேத்தி.
[4] ஆதி. 17. 8; 23. 4; 28. 4. எபி. 11. 9-16
[5] 1 சாமு. 2. 22, 24. 1 கொ. 1. 11
[6] ஆதி. 44. 20
[7] நியா. 5. 30. 2 சாமு. 13. 18
[8] ஆதி. 27. 41; 49. 23
[9] ஆதி. 46. 29

என்ன? நானும் உன் தாயாரும் உன் சகோ
தாரும் [1]தரைமட்டும் குனிந்து உன்னை
வணக்க வருவோமோ? என்று அவனைக்
11 கடிந்துகொண்டான். அவன் சகோதரர் அ
வன்மேல் [2]பொறாமைகொண்டார்கள்; அவன்
தகப்பனே அவன் சொன்னதை [3]மனதிலே
12 வைத்துக்கொண்டான். பின்பு, அவன்
சகோதரர் சீகேமிலே தங்கள் தகப்பனுடைய
13 ஆடுகளை மேய்க்கப் போனார்கள். அப்பொ
ழுது இஸ்ரவேல் யோசேப்பை நோக்கி: உன்
சகோதரர் சீகேமிலே ஆடுகளை மேய்க்கிறார்
கள் அல்லவா? உன்னை அவர்களிடத்துக்கு
அனுப்பப்போகிறேன், வா என்றான். அவன்:
14 இதோ, போகிறேன் என்றான். அப்பொ
ழுது அவன்: நீ போய், உன் சகோதர
ருடைய க்ஷேமம் எப்படி என்றும், ஆடுகள்
எப்படி இருக்கிறது என்றும் பார்த்து, எனக்கு
மறுசெய்தி கொண்டுவா என்று அவனுக்குச்
சொல்லி, [4]எபிரோன் பள்ளத்தாக்கிலே இரு
ந்து அவனை அனுப்பினான்; அந்தப்படியே
15 அவன் சீகேமுக்குப் போனான். அப்பொ
ழுது ஒரு மனிதன் அவன் வெளியிலே
வழிதப்பித் திரிகிறதைக் கண்டு, என்ன தேடு
16 கிறாய்? என்று அவனைக் கேட்டான். அத
ற்கு அவன்: என் சகோதரரைத் தேடுகி
றேன், [5]அவர்கள் எங்கே ஆடு மேய்க்கிறார்
17 கள், சொல்லும் என்றான். அந்த மனிதன்:
அவர்கள் இவ்விடத்திலிருந்து போய்விட்டார்
கள், [6]தோத்தானுக்குப் போவோம் என்று
அவர்கள் சொல்லக் கேட்டேன் என்றான்;
அப்பொழுது யோசேப்பு தன் சகோதரரைத்
தொடர்ந்து போய், அவர்களைத் தோத்தா
18 னிலே கண்டுபிடித்தான். அவர்கள் அவ
னைத் தூரத்தில் வரக் கண்டு, அவன் தங்களுக்
குச் சமீபமாய் வருமுன்னே, அவனைக்
கொலைசெய்யும்படி [7]சதியோசனை பண்ணி,
19 ஒருவரை ஒருவர் நோக்கி: இதோ, சொப்
20 பனக்காரன் வருகிறான், நாம் அவனைக்
[8]கொன்று, இந்தக் குழிகள் ஒன்றிலே அவ
னைப் போட்டு, ஒரு துஷ்டமிருகம் அவனைப்
பட்சித்தது என்று சொல்லுவோம் வாருங்கள்;
அவனுடைய சொப்பனங்கள் எப்படி முடி
21 யும் பார்ப்போம் என்றார்கள். ரூபன் [9]அ
தைக் கேட்டு, அவனை அவர்கள் கைக்குத்
தப்புவித்து, அவனை அவன் தகப்பனிடத்துக்
குத் திரும்பவும் கொண்டுபோக மனதுள்ள
22 வனாய், அவர்களை நோக்கி: அவனைக் கொல்ல
வேண்டாம், நீங்கள் இரத்தம் சிந்தலாகாது;
நீங்கள் அவன்மேல் கை வையாமல், அவனை
வனாந்தரத்திலுள்ள இந்தக் குழியிலே போட்டு
விடுங்கள் என்று சொல்லி, இவ்விதமாய்
ரூபன் அவனை அவர்கள் கைக்குத் தப்புவித்
23 தான். யோசேப்பு தன் சகோதரரிடத்தில்
சேர்ந்தபோது, யோசேப்பு உடுத்திக்கொண்
டிருந்த பலவருண அங்கியை அவர்கள்
24 கழற்றி, அவனை எடுத்து, அந்தக் குழியிலே
போட்டார்கள்; அது தண்ணீரில்லாத வெறுங்

குழியாயிருந்தது. பின்பு, [10]அவர்கள் போ 25
ஜனஞ்செய்யும்படி உட்கார்ந்தார்கள்; அவர்
கள் தங்கள் கண்களை ஏறெடுக்கும்போது,
இதோ, கீலேயாத்திலிருந்து வருகிற இஸ்ம
வேலருடைய கூட்டத்தைக் கண்டார்கள்;
அவர்கள் எகிப்துக்குக் கொண்டுபோகும்படி
கந்தவர்க்கங்களையும் [11]பிசின் தைலத்தையும்,
வெள்ளைப்போளத்தையும் ஒட்டகங்கள்மேல்
ஏற்றிக்கொண்டு வந்தார்கள். அப்பொழுது 26
யூதா தன் சகோதரரை நோக்கி: நாம் நம்மு
டைய சகோதரனைக் கொன்று, [12]அவன் இரத்
தத்தை மறைப்பதினால் லாபம் என்ன? அவனை 27
இந்த இஸ்மவேலருக்கு விற்றுப்போடுவோம்
வாருங்கள்; [13]நமது கை அவன்மேல் படா
திருப்பதாக; அவன் நம்முடைய [14]சகோதர
னும் நம்முடைய மாம்சமுமாய் இருக்கிறானே
என்றான். அவன் சகோதரர் அவன் சொல்
லுக்கு இணங்கினார்கள். அந்த வர்த்தகரான 28
[15]மீதியானியர் கடந்துபோகிறபோது, அவர்
கள் யோசேப்பை அந்தக் குழியிலிருந்து
தூக்கியெடுத்து, அவனை இஸ்மவேலர் கையில்
[16]இருபது வெள்ளிக்காசுக்கு [17]விற்றுப்போட்
டார்கள். அவர்கள் யோசேப்பை எகிப்திற்
குக் கொண்டுபோனார்கள். பின்பு, ரூபன் 29
அந்தக் குழியினிடத்துக்குத் திரும்பிப் போன
போது, யோசேப்பு குழியில் இல்லையென்று
கண்டு, தன் [18]வஸ்திரங்களைக் கிழித்துக்
கொண்டு, தன் சகோதரரிடத்துக்குத் திரும்பி 30
வந்து: [19]இளைஞன் இல்லையே, ஐயோ! நான்
எங்கே போவேன் என்றான். அவர்கள் 31
யோசேப்பின் [20]அங்கியை எடுத்து, ஒரு வெள்
ளாட்டுக்கடாவை அடித்து, அந்த அங்கியை
இரத்தத்திலே தோய்த்து, பலவருணமான 32
அந்த அங்கியைத் தங்கள் தகப்பனிடத்துக்கு
அனுப்பி: இதை நாங்கள் கண்டெடுத்தோம்,
இது உம்முடைய குமாரன் அங்கியோ, அல்
லவோ, பாரும் என்று சொல்லச்சொன்னார்
கள். யாக்கோபு அதைக் கண்டு, இது என் 33
குமாரனுடைய அங்கிதான், [21]ஒரு துஷ்ட
மிருகம் அவனைப் பட்சித்துப்போட்டது,
யோசேப்பு பீறுண்டுபோனான் என்று புலம்பி,
தன் வஸ்திரங்களைக் கிழித்து, தன் அரையில் 34
இரட்டுக் கட்டிக்கொண்டு, [22]அநேகநாள் தன்
குமாரனுக்காகத் துக்கித்துக்கொண்டிருந்தான்.
அவனுடைய குமாரர் குமாரத்திகள் எல்லா 35
ரும் அவனுக்கு [23]ஆறுதல் சொல்ல வந்து
நின்றார்கள்; ஆனாலும் அவன் ஆறுதலுக்கு
இடங்கொடாமல், நான் துக்கத்தோடே என்
குமாரனிடத்தில் பாதாளத்தில் [24]இறங்கு
வேன் என்றான். இவ்விதமாய் அவனுடைய
தகப்பன் அவனுக்காக அழுதுகொண்டிருந்
தான். அந்த மீதியானியர் யோசேப்பை 36
எகிப்திலே பார்வோனின் பிரதானியும் தலை
யாரிகளுக்கு அதிபதியுமாகிய போத்திப்பார்
என்பவனிடத்தில் விற்றார்கள்.

அக்காலத்திலே யூதா தன் சகோதரரை **38**
விட்டு, அதுல்லாம் ஊராளுகிய ஈரா என்

[1] ஆதி. 27. 29
[2] அப். 7. 9
[3] தானி. 7. 28. லூ 2. 19, 51
[4] ஆதி. 35. 27
[5] உன்னத. 1. 7
[6] 2 இரா. 6. 13
[7] 1 சாமு. 19. 1. சங். 31. 13. மத். 27. 1. யோ. 11. 53. அப். 23. 12
[8] நீதி. 1. 11, 16; 6. 17; 27. 4
[9] ஆதி. 42. 22
[10] நீதி. 30. 20. ஆமோஸ் 6. 6
[11] எரே. 8. 22
[12] ஆதி. 4. 10. யோபு 16. 18
[13] 1சாமு. 18. 17
[14] ஆதி. 42. 21; 29. 14
[15] நியா. 6. 3
[16] மத். 27. 9
[17] ஆதி. 45. 4, 5. சங். 105. 17. அப். 7. 9
[18] யோபு 1. 20
[19] ஆதி. 42. 13, 36. எரே. 31. 15
[20] 23. வசனம்.
[21] ஆதி. 44. 28
[22] 2 சாமு. 3. 31. 2 இரா. 19. 1. ஏசா. 32. 11. யோனா. 3. 5
[23] 2 சாமு. 12. 17
[24] ஆதி. 42. 38

னும் ஒரு மனிதனிடத்தில் போய்ச் சேர்ந்
2 தான். அங்கே யூதா, சூவா என்னும்
பேருள்ள ஒரு கானானியனுடைய குமாரத்தி
யைக் கண்டு, அவளை விவாகம்பண்ணி, அவ
3 ளோடே சேர்ந்தான். அவள் கர்ப்பவதியாகி
ஒரு குமாரனைப் பெற்றாள்; அவனுக்கு ஏர்
4 என்று பேரிட்டான். அவள் மறுபடியும்
கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெற்று, அவ
5 னுக்கு ஓனான் என்று பேரிட்டாள். அவள்
மறுபடியும் கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப்
பெற்று, அவனுக்குச் சேலா என்று பேரிட்
டாள்; அவள் இவனைப் பெறுகிறபோது,
6 அவன் கெசீபிலே இருந்தான். யூதா தன்
மூத்த மகனாகிய ஏர் என்பவனுக்குத் தாமார்
என்னும் பேருள்ள ஒரு பெண்ணைக் கொண்
7 டான். யூதாவின் மூத்த மகனாகிய ஏர் என்
பவன் **கர்த்தரின்** பார்வைக்குப் பொல்லாத
வனாயிருந்ததினால், **கர்த்தர்** அவனை [1]அழித்
8 துப்போட்டார். அப்பொழுது யூதா ஓனானை
நோக்கி: நீ உன் தமையன் மனைவியைச்
சேர்ந்து, [2]அவளை மைத்துனச் சுதந்தரமாய்ப்
படைத்து, உன் தமையனுக்குச் சந்ததியை
9 உண்டாக்கு என்றான். அந்தச் சந்ததி தன்
[3]சந்ததியாயிராதென்று ஓனான் அறிந்தபடியி
னாலே, அவன் தன் தமையனுடைய மனைவி
யைச் சேரும்போது, தன் தமையனுக்குச்
சந்ததி உண்டாகாதபடிக்குத் தன் வித்தைத்
10 தரையிலே விழவிட்டுக் கெடுத்தான். அவன்
செய்தது **கர்த்தரின்** பார்வைக்குப் பொல்லா
ததாயிருந்ததினால், அவனையும் அவர் அழித்
11 துப்போட்டார். அப்பொழுது யூதா, தன்
குமாரனாகிய சேலாவும் அவன் சகோதரர்
செத்ததுபோலச் சாவான் என்று அஞ்சி,
தன் மருமகளாகிய தாமாரை நோக்கி: என்
குமாரனாகிய சேலா பெரியவனாகுமட்டும், நீ
உன் தகப்பன் வீட்டிலே [4]கைம்பெண்ணாய்த்
தங்கியிரு என்று சொன்னான்; அந்தப்படியே
தாமார் போய்த் [5]தன் தகப்பன் வீட்டிலே
12 தங்கியிருந்தாள். அநேகநாள் சென்றபின்,
சூவாவின் குமாரத்தியாகிய யூதாவின் மனைவி
மரித்தாள். யூதாவினுடைய துக்கம் ஆறின
பின், அவன் அதுல்லாம் ஊரானாகிய தன்
சிநேகிதன் ஈராவுடனே திம்னாவிலே தன்
ஆடுகளை மயிர் கத்தரிக்கிறவர்களிடத்திற்குப்
13 போனான். அப்பொழுது: உன் மாமனார் தம்
முடைய ஆடுகளை மயிர்கத்தரிக்கத் [6]திம்னாவுக்
குப் போகிறார் என்று தாமாருக்கு அறிவிக்கப்
14 பட்டது. சேலா பெரியவனாகியும் தான் அவ
னுக்கு மனைவியாகக் கொடுக்கப்படவில்லை
என்று அவள் கண்டபடியால், தன் கைம்பெண்
மைக்குரிய வஸ்திரங்களைக் களைந்துபோட்டு,
முக்காடிட்டுத் தன்னை மூடிக்கொண்டு, திம்னா
வுக்குப் போகிற வழியிலிருக்கிற [7]நீரூற்று
15 களுக்கு முன்பாக உட்கார்ந்தாள். யூதா அவ
ளைக் கண்டு, அவள் தன் முகத்தை மூடியிருந்த
படியால், அவள் ஒரு வேசி என்று நினைத்து,
16 அந்த வழியாய் அவளிடத்தில் போய், அவள்

1 1 நாளா. 2. 3
2 உபா. 25. 5. மத். 22. 24
3 உபா. 25. 6
4 ரூத் 1. 13
5 லேவி. 22. 13
6 யோசு. 15. 10, 57. நியா. 14. 1
7 நீதி. 7. 12
8 எசே. 16. 33
9 நியா. 19. 2. ஓசி. 8. 3
10 லேவி. 21. 9. உபா. 22. 21
11 18. வசனம்.
12 1 சாமு. 24. 17
13 யோபு 34. 31, 32. சங். 18. 12. தீத். 2. 11, 12

தன் மருமகள் என்று அறியாமல்: நான் உன்னி
டத்தில் சேரும்படி வருவாயா என்றான்.
அதற்கு அவள்: நீர் என்னிடத்தில் சேரும்படி,
எனக்கு என்ன தருவீர் என்றாள். அதற்கு 17
அவன்: நான் மந்தையிலிருந்து [8]ஒரு வெள்
ளாட்டுக்குட்டியை அனுப்புகிறேன் என்றான்.
அதற்கு அவள்: நீர் அதை அனுப்புமளவும்
ஒரு அடைமானம் கொடுப்பீரா என்றாள்.
அப்பொழுது அவன்: நான் உனக்கு அடை 18
மானமாக என்ன கொடுக்கவேண்டும் என்று
கேட்டான். அதற்கு அவள்: உம்முடைய
முத்திரைமோதிரமும் உம்முடைய ஆரமும்
உம்முடைய கைக்கோலும் கொடுக்கவேண்டும்
என்றாள். அவன் அவைகளை அவளுக்குக்
கொடுத்து, அவளிடத்தில் சேர்ந்தான்; அவள்
அவனாலே கர்ப்பவதியாகி, எழுந்துபோய், 19
தன் முக்காட்டைக் களைந்து, தன் கைம்பெண்
மைக்குரிய வஸ்திரங்களை உடுத்திக்கொண்
டாள். யூதா அந்த ஸ்திரீயினிடத்தில் இருந்த 20
அடைமானத்தை வாங்கிக்கொண்டு வரும்படி
அதுல்லாம் ஊரானாகிய தன் சிநேகிதன்
கையிலே ஒரு வெள்ளாட்டுக்குட்டியைக்
கொடுத்தனுப்பினான்; அவன் அவளைக் காணா
மல், அவ்விடத்து மனிதரை நோக்கி: வழி 21
யண்டை நீரூற்றுகள் அருகே இருந்த தாசி
எங்கே என்று கேட்டான்; அதற்கு அவர்கள்:
இங்கே தாசி இல்லை என்றார்கள். அவன் 22
யூதாவினிடத்தில் திரும்பிவந்து: அவளைக்
காணேம், அங்கே தாசி இல்லையென்று அவ்
விடத்து மனிதரும் சொல்லுகிறார்கள் என்
றான். அப்பொழுது யூதா: இதோ, இந்த ஆட் 23
டுக்குட்டியை அனுப்பினேன், நீ அவளைக்
காணவில்லை; நமக்கு அவகீர்த்தி வராதபடி
க்கு, அவள் அதைக் கொண்டுபோனால் போக
ட்டும் என்றான். ஏறக்குறைய மூன்று மாதம் 24
சென்றபின்பு: உன் மருமகளாகிய தாமார்
[9]வேசித்தனம்பண்ணினாள், அந்த வேசித்தனத்
தினால் கர்ப்பவதியுமானாள் என்று யூதாவுக்கு
அறிவிக்கப்பட்டது, அப்பொழுது யூதா: அவ
ளை வெளியே கொண்டுவாருங்கள், [10]அவள்
சுட்டெரிக்கப்படவேண்டும் என்றான். அவள் 25
வெளியே கொண்டுவரப்பட்டபோது, அவள்
தன் மாமனிடத்துக்கு அந்த அடைமானத்தை
அனுப்பி: இந்தப் பொருட்களை உடையவன்
எவனோ அவனாலே நான் கர்ப்பவதியானேன்;
இந்த [11]முத்திரைமோதிரமும் இந்த ஆரமும்
இந்தக் கோலும் யாருடையவைகள் பாரும்
என்று சொல்லி அனுப்பினாள். யூதா அவை 26
களைப் பார்த்தறிந்து: [12]என்னிலும் அவள் நீதி
யுள்ளவள்; அவளை என் குமாரனாகிய சேலா
வுக்குக் கொடாமற்போனேனே என்றான்.
[13]அப்புறம் அவன் அவளைச் சேரவில்லை. அவ 27
ளுக்குப் பிரசவகாலம் வந்தபோது, அவள்
கர்ப்பத்தில் இரட்டைப்பிள்ளைகள் இருந்தன.
அவள் பெறுகிறபோது, ஒரு பிள்ளை கையை 28
நீட்டினது; அப்பொழுது மருத்துவச்சி அதின்
கையைப் பிடித்து, அதில் சிவப்பு நூலைக்

கட்டி, இது முதலாவது வெளிப்பட்டது
29 என்றாள். அது தன் கையைத் திரும்ப
உள்ளே வாங்கிக்கொண்டபோது, அதின்
சகோதரன் வெளிப்பட்டான். அப்பொழுது
அவள்: நீ மீறிவந்ததென்ன, இந்த மீறுதல்
உன்மேல் நிற்கும் என்றாள்; அதினாலே அவ
னுக்குப் [1]பாரேஸ் என்று பேரிடப்பட்டது.
30 பிற்பாடு கையில் சிவப்புநூல் கட்டியிருந்த
அவனுடைய தம்பி வெளிப்பட்டான்; அவ
னுக்கு சேரா என்று பேரிடப்பட்டது.

**39** யோசேப்பு எகிப்துக்குக் கொண்டுபோ
கப்பட்டான். பார்வோனுடைய பிரதானி
யும் தலையாரிகளுக்கு அதிபதியுமாகிய [2]போத்
திபார் என்னும் எகிப்து தேசத்தான் அவனை
அவ்விடத்திற்குக் கொண்டுவந்த இஸ்மவேல
2 ரிடத்தில் விலைக்கு வாங்கினான். **கர்த்தர்**
யோசேப்போடே இருந்தார், [3]அவன் காரிய
சித்தியுள்ளவனானான்; அவன் எகிப்தியனாகிய
தன் எஜமானுடைய வீட்டிலே இருந்தான்.
3 **கர்த்தர்** அவனோடே இருக்கிறார் என்றும்,
அவன் செய்கிற யாவையும் **கர்த்தர்** [4]வாய்க்கப்
பண்ணுகிறார் என்றும், அவன் எஜமான்
4 கண்டு; யோசேப்பினிடத்தில் [5]தயவுவைத்து,
அவனைத் தனக்கு ஊழியக்காரனும் தன் வீட்
டுக்கு [6]விசாரணைக்காரனுமாக்கி, தனக்கு உண்
டான யாவற்றையும் அவன் கையில் ஒப்புவித்
5 தான். அவனைத் தன் வீட்டுக்கும் தனக்கு
உண்டான எல்லாவற்றிற்கும் விசாரணைக்கார
னாக்கினது முதற்கொண்டு, **கர்த்தர்** யோசேப்
பினிமித்தம் அந்த எகிப்தியன் வீட்டை [7]ஆசீர்
வதித்தார்; வீட்டிலும் வெளியிலும் அவனுக்கு
உண்டானவைகள் எல்லாவற்றிலும் **கர்த்தரு**
6 **டைய** ஆசீர்வாதம் இருந்தது. ஆகையால்,
அவன் தனக்கு உண்டானதெல்லாம் யோசே
ப்பின் கையிலே ஒப்புக்கொடுத்துவிட்டு, தான்
புசிக்கிற போசனம்தவிர தன்னிடத்திலிருந்த
மற்றொன்றைக்குறித்தும் விசாரியாதிருந்தான்.
யோசேப்பு [8]அழகான ரூபமும் சௌந்தரிய
7 முகமும் உள்ளவனாயிருந்தான். சிலநாள்
சென்றபின், அவனுடையஎஜமானின்மனைவி
யோசேப்பின்மேல் கண்போட்டு, [9]என்னோ
8 டே சயனி என்றாள். அவனோ தன் எஜமா
னுடைய மனைவியின் சொல்லுக்கு இணங்கா
மல், அவளை நோக்கி: இதோ, வீட்டிலே என்
னிடத்தில் இருக்கிறவைகளில் யாதொன்றை
க்குறித்தும் என் ஆண்டவன் விசாரியாமல்,
தமக்கு உண்டான எல்லாவற்றையும் என்
9 கையில் ஒப்பித்திருக்கிறார். இந்த வீட்டிலே
என்னிலும் பெரியவன் இல்லை; நீ அவரு
டைய மனைவியாயிருக்கிறபடியால் உன்னைத்
தவிர வேறொன்றையும் அவர் எனக்கு விலக்
கிவைக்கவில்லை; இப்படியிருக்க, நான் இத்
தனை [10]பெரிய பொல்லாங்குக்கு உடன்பட்டு,
தேவனுக்கு [11]விரோதமாய்ப் பாவம் செய்வது
10 எப்படி என்றான். அவள் நித்தம் நித்தம்
யோசேப்போடே இப்படிப் பேசிக்கொண்டு
வந்தும், அவன் அவளுடனே சயனிக்கவும்
அவளுடனே இருக்கவும் சம்மதிக்கவில்லை.
இப்படியிருக்கும்போது, ஒருநாள் அவன் தன் 11
வேலையைச் செய்கிறதற்கு வீட்டுக்குள் போ
னான்; வீட்டு மனிதரில் ஒருவரும் வீட்டில்
இல்லை. அப்பொழுது அவள் [12]அவனுடைய 12
வஸ்திரத்தைப் பற்றிப் பிடித்து, என்னோடே
சயனி என்றாள். அவனோ தன் வஸ்திரத்தை
அவள் கையிலே விட்டு வெளியே ஓடிப்போ
னான். அவன் தன் வஸ்திரத்தை அவள் கை 13
யிலே விட்டு வெளியே ஓடிப்போனதை
அவள் கண்டபோது, அவள் தன் வீட்டு மனி 14
தரைக் கூப்பிட்டு: பாருங்கள், எபிரெய மனு
ஷன் நம்மிடத்தில் சரசம்பண்ணும்படிக்கு
அவனை நமக்குள் கொண்டுவந்தார், அவன்
என்னோடே சயனிக்கும்படிக்கு என்னிடத்
தில் வந்தான்; நான் மிகுந்த சத்தமிட்டுக் கூப்
பிட்டேன். நான் சத்தமிட்டுக் கூப்பிடுகிறதை 15
அவன் கேட்டு, தன் வஸ்திரத்தை என்னிடத்
தில் விட்டு, வெளியே ஓடிப்போய்விட்டான்
என்று சொன்னாள். அவனுடைய எஜமான் 16
வீட்டுக்கு வருமளவும் அவனுடைய வஸ்திரத்
தைத் தன்னிடத்தில் வைத்திருந்து, அவனை 17
நோக்கி: [13]நீர் நம்மிடத்தில் கொண்டுவந்த
அந்தஎபிரெயவேலைக்காரன் சரசம்பண்ணும்
படிக்கு என்னிடத்தில் வந்தான். அப்பொ 18
ழுது நான் சத்தமிட்டுக் கூப்பிட்டேன், அவன்
தன் வஸ்திரத்தை என்னிடத்தில் விட்டு வெ
ளியே ஓடிப்போனான் என்றாள். உம்மு 19
டைய வேலைக்காரன் எனக்கு இப்படிச் செய்
தான் என்று தன் மனைவி தன்னோடே
சொன்ன வார்த்தைகளை அவனுடைய எஜ
மான் கேட்டபோது, [14]அவனுக்குக் கோ
பம் மூண்டது. யோசேப்பின் எஜமான் அவ 20
னைப் பிடித்து, [15]ராஜாவின் கட்டளையால் கா
வலில் வைக்கப்பட்டவர்கள் இருக்கும் சிறைச்
சாலையிலே அவனை ஒப்புவித்தான். அந்தச்
சிறைச்சாலையில் அவன் இருந்தான். **கர்த்த** 21
**ரோ** யோசேப்போடே இருந்து, அவன்மேல்
கிருபைவைத்து, [16]சிறைச்சாலைத் தலைவனு
டைய தயவு அவனுக்குக் கிடைக்கும்படி
செய்தார். சிறைச்சாலைத் தலைவன் சிறைச்சா 22
லையில் வைக்கப்பட்ட யாவரையும் யோசேப்
பின் கையிலே ஒப்புவித்தான்; அங்கே அவர்
கள் செய்வதெல்லாவற்றையும் யோசேப்பு
செய்வித்தான். **கர்த்தர்** அவனோடே இருந்த 23
படியினாலும், அவன் எதைச் செய்தானோ
அதைக் **கர்த்தர்** வாய்க்கப்பண்ணினபடியினா
லும், அவன் வசமாயிருந்த யாதொன்றையும்
குறித்துச் சிறைச்சாலைத் தலைவன் விசாரிக்க
வில்லை.

இந்த நடபடிகளுக்குப் பின்பு, எகிப்து **40**
ராஜாவுக்குப் [17]பானபாத்திரக்காரனும் சுயம்
பாகியும் எகிப்து ராஜாவாகிய தங்கள் ஆண்
டவனுக்குக் குற்றம் செய்தார்கள். பார்வோ 2
[18]தன் பானபாத்திரக்காரரின் தலைவனும் சுயம்
பாகிகளின் தலைவனும் ஆகிய இவ்விரண்டு
பிரதானிகள்மேலும் கடுங்கோபங்கொண்டு,

1 லூக். 26. 20. 1 நாளா. 2. 4. மத். 1. 3
2 ஆதி. 37. 36. சங். 105. 17
3 1 சாமு. 16. 18. அப். 7. 9
4 சங். 1. 3
5 1 சாமு. 16. 22
6 ஆதி. 24. 2
7 ஆதி. 30. 27
8 1 சாமு. 16. 12
9 2 சாமு. 13. 11
10 லேவி. 20. 10. நீதி. 6. 29, 32
11 ஆதி. 20. 6. லேவி. 6. 2. 2 சாமு. 12. 13. சங். 51. 4
12 நீதி. 7. 13. ழ
13 யாத். 23. 1. சங். 37. 14; 120. 3. நீதி. 12. 19
14 நீதி. 6. 34, 35
15 ஆதி. 41. 14. சங். 105. 18
16 யாத். 12. 36. சங். 106. 46. நீதி. 16. 7. தானி. 1. 9. அப். 7. 10
17 நெகே. 1. 11
18 நீதி. 16. 14; 19. 19

3 அவர்களை யோசேப்பு வைக்கப்பட்டிருந்த
இடமும் தலையாரிகளின் அதிபதியின் வீடுமா
கிய [1]சிறைச்சாலையிலே காவல் பண்ணுவித்
4 தான். தலையாரிகளின் அதிபதி அவர்களை
விசாரிக்கும்படி யோசேப்பின் வசத்தில் ஒப்பு
வித்தான்; அவன் அவர்களை விசாரித்துவந்
தான்; அவர்கள் அநேகநாள் காவலில் இருந்
5 தார்கள். எகிப்து ராஜாவுக்குப் பானபாத்திரக்
காரனும் சுயம்பாகியுமாகிய அவ்விரண்டுபே
ரும் சிறைச்சாலையில் இருக்கும்போது, ஒரே
ராத்திரியிலே வெவ்வேறு பொருள்கொண்ட
6 [2]சொப்பனம் கண்டார்கள். காலமே யோ
சேப்பு அவர்களிடத்தில் போய், அவர்களைப்
பார்க்கும்போது, அவர்கள் [3]கலங்கியிருந்தார்
7 கள். அப்பொழுது அவன் தன் எஜமானுடைய
வீட்டில் தன்னோடே காவல்பண்ணப்பட்டி
ருந்த பார்வோனுடைய பிரதானிகளை நோக்கி:
உங்கள் முகங்கள் இன்று [4]துக்கமாயிருக்கிறது
8 என்ன என்று கேட்டான். அதற்கு அவர்
கள்: சொப்பனம் கண்டோம், அதற்கு அர்த்
தம் சொல்லுகிறவன் ஒருவனும் இல்லை என்
றார்கள். அதற்கு யோசேப்பு: [5]சொப்பனத்
துக்கு அர்த்தம் சொல்லுதல் தேவனுக்குரிய
தல்லவா? அவைகளை என்னிடத்தில் சொல்
9 லுங்கள் என்றான். அப்பொழுது பானபாத்
திரக்காரரின் தலைவன் யோசேப்பை நோக்கி:
என் சொப்பனத்திலே [6]ஒரு திராட்சச்செடி
10 எனக்கு முன்பாக இருக்கக் கண்டேன். அந்
தத் திராட்சச்செடியிலே மூன்று கொடிகள்
இருந்தது; அது துளிர்க்கிறதாயிருந்தது;
அதில் பூக்கள் மலர்ந்திருந்தது; அதின் குலை
11 கள் பழுத்த பழங்களாயிருந்தது. பார்வோ
னுடைய பாத்திரம் என் கையிலே இருந்தது;
நான் அந்தப் பழங்களைப் பறித்து, அவைக
ளைப் பார்வோனுடைய பாத்திரத்தில் பிழிந்து,
அந்தப் பாத்திரத்தைப் பார்வோனுடைய கை
யிலே கொடுத்தேன் என்று, தன் சொப்பனத்
12 தைச் சொன்னான். [7]அதற்கு யோசேப்பு:
அந்த மூன்று கொடிகளும் மூன்று நா
13 ளாம். மூன்று நாளைக்குள்ளே [8]பார்வோன்
உன் தலையை உயர்த்தி, உன்னை மறுபடியும்
உன் நிலையிலே நிறுத்துவார்; முன்னே அவ
ருக்குப் பானம் கொடுத்துவந்த வழக்கத்தின்
படி பார்வோனின் பாத்திரத்தை அவர் கையி
14 லே கொடுப்பாய்; இதுதான் அதின் அர்த்தம்
என்று சொன்னதும் அன்றி, நீ வாழ்வடைந்
திருக்கும்போது, [9]என்னை நினைத்து, [10]என்
மேல் தயவுவைத்து, என் காரியத்தைப் பார்
வோனுக்கு அறிவித்து, இந்த இடத்திலிருந்து
15 என்னை விடுதலையாக்கவேண்டும். நான் எபி
ரெயருடைய தேசத்திலிருந்து களவாய்க்
கொண்டுவரப்பட்டேன்; என்னை இந்தக் கா
வல் கிடங்கில் வைக்கும்படிக்கும் நான் [11]இவ்
விடத்தில் ஒன்றும் செய்யவில்லை என்றும்
16 சொன்னான். அர்த்தம் நன்றாயிருக்கிறது
என்று சுயம்பாகிகளின் தலைவன் கண்டு, யோ
சேப்பை நோக்கி: நானும் என் சொப்பனத்

1 ஆதி. 39. 20, 23
2 யோபு 33. 15, 16
3 தானி. 4. 5
4 நெகே. 2. 2
5 ஆதி. 41. 16. தானி. 2. 11, 28
6 நியா. 7. 13
7 ஆதி. 41. 12, 25. தானி. 2. 36
8 2 இரா. 25. 27. எரே. 52. 31
9 1 சாமு. 20. 14, 15. 1 இரா. 2. 7. லூ. 23. 42
10 யோசு. 2. 12
11 ஆதி. 39. 20. சங். 59. 3, 4. தானி. 6. 22
12 மத். 14. 6. மாற். 6. 21
13 நெகே. 2. 1
14 யோபு 19. 14. சங். 31. 12. பிர. 9. 15, 16. ஆமோஸ் 6. 6
15 தானி. 2. 1
16 தானி. 4. 5, 19; 7. 28; 8. 27
17 யாத். 7. 11. ஏசா. 29. 14. தானி. 2. 2
18 மத். 2. 1

தில் மூன்று வெள்ளைக் கூடைகள் என் தலை
யின்மேல் இருக்கக் கண்டேன்; மேற்கூடை 17
யிலே பார்வோனுக்காக சமைக்கப்பட்ட சகல
வித பலகாரங்களிலும் கொஞ்சம் கொஞ்சம்
இருந்தது; என் தலையின்மேல் கூடையில்
இருந்தவைகளைப் பறவைகள் வந்து பட்சித்
தது என்றான். அதற்கு யோசேப்பு: அந்த 18
மூன்று கூடைகளும் மூன்று நாளாம். இன் 19
னும் மூன்று நாளைக்குள்ளே பார்வோன் உன்
தலையை உயர்த்தி, உன்னை மரத்திலே தூக்
கிப்போடுவார்; அப்பொழுது பறவைகள் உன்
மாம்சத்தைத் தின்னும், இதுதான் அதின்
அர்த்தம் என்று சொன்னான். மூன்றாம் நாள் 20
பார்வோனுடைய [12]ஜன்மநாளாயிருந்தது;
அவன் தன் ஊழியக்காரர் எல்லாருக்கும்
விருந்துபண்ணி, பானபாத்திரக்காரருடைய
தலைவன் தலையையும் சுயம்பாகிகளுடைய
தலைவன் தலையையும் தன் உத்தியோகஸ்தரின்
நடுவே உயர்த்தி, பானபாத்திரக்காரரின் 21
தலைவனைப் பானங்கொடுக்கிற தன் உத்தியோ
கத்திலே மறுபடியும் வைத்தான்; அந்தப்ப
டியே அவன் பார்வோனுடைய கையிலே [13]பா
த்திரத்தைக் கொடுத்தான். சுயம்பாகிகளின் 22
தலைவனையோ தூக்கிப்போட்டான். யோ
சேப்பு அவர்களுக்குச் சொன்ன அர்த்தத்தின்
படியே சம்பவித்தது. ஆனாலும் பானபாத்தி 23
ரக்காரரின் தலைவன் யோசேப்பை நினையா
மல் [14]அவனை மறந்துவிட்டான்.

இரண்டு வருஷம் சென்றபின்பு, பார் 41
வோன் ஒரு [15]சொப்பனம் கண்டான்; அது
என்னவென்றால், அவன் நதியண்டையிலே
நின்றுகொண்டிருந்தான். அப்பொழுது 2
அழகும் புஷ்டியுமான ஏழு பசுக்கள் நதியிலி
ருந்து ஏறிவந்து புல் மேய்ந்தது. அவைகளின் 3
பின் அவலட்சணமும் கேவலமுமான வேறே
ஏழு பசுக்கள் நதியிலிருந்து ஏறிவந்து, நதி
ஓரத்தில் மற்றப் பசுக்களண்டையிலே நின்
றது. அவலட்சணமும் கேவலமுமான பசுக் 4
கள் அழகும் புஷ்டியுமான ஏழு பசுக்களையும்
பட்சித்துப்போட்டது; இப்படிப் பார்வோன்
கண்டு விழித்துக்கொண்டான். மறுபடியும் 5
அவன் நித்திரைசெய்து, இரண்டாம்விசை
ஒரு சொப்பனம் கண்டான்; நல்ல செழுமை
யான ஏழு கதிர்கள் ஒரே தாளிலிருந்து ஓங்கி
வளர்ந்தது. பின்பு, சாவியானதும் கீழ்காற் 6
றினால் தீய்ந்ததுமான ஏழு கதிர்கள் முளைத்
தது. சாவியான கதிர்கள் செழுமையும் நிறை 7
மேனியுமான அந்த ஏழு கதிர்களையும் விழுங்
கிப்போட்டது; அப்பொழுது பார்வோன்
விழித்துக்கொண்டு, அது சொப்பனம் என்று
அறிந்தான். காலமே பார்வோனுடைய [16]மனம் 8
கலக்கங்கொண்டிருந்தது, அப்பொழுது
அவன் எகிப்திலுள்ள சகல [17]மந்திரவாதிகளை
யும் சகல [18]சாஸ்திரிகளையும் அழைப்பித்து,
அவர்களுக்குத் தன் சொப்பனத்தைச் சொன்
னான்; ஒருவராலும் அதின் அர்த்தத்தைப் பார்
வோனுக்குச் சொல்லக்கூடாமற்போயிற்று.

9 அப்பொழுது பானபாத்திரக்காரரின் தலை
வன் பார்வோனை நோக்கி: நான் செய்த குற்
றம் இன்றுதான் என் நினைவில் வந்தது.
10 பார்வோன் தம்முடைய ஊழியக்காரர்மேல்
[1]கடுங்கோபங்கொண்டு, என்னையும் சுயம்பாகி
களின் தலைவனையும் தலையாரிகளின் அதிபதி
வீடாகிய சிறைச்சாலையிலே வைத்திருந்தகா
11 லத்தில், நானும் அவனும் ஒரே ராத்திரியிலே
வெவ்வேறு பொருள்கொண்ட [2]சொப்பனம்
12 கண்டோம். அப்பொழுது தலையாரிகளின்
அதிபதிக்கு வேலைக்காரனாகிய எபிரெய பிள்
ளையாண்டான் ஒருவன் அங்கே எங்களோ
டே இருந்தான்; அவனிடத்தில் அவைகளைச்
சொன்னோம், அவன் நாங்கள் கண்ட சொப்
பனங்களுக்குரிய வெவ்வேறு அர்த்தத்தின்
படியே எங்கள் சொப்பனத்தின் பயனைச்
13 சொன்னான். அவன் எங்களுக்குச் சொல்லிய
அர்த்தத்தின்படியே நடந்தது; என்னைத்
திரும்ப என் நிலையிலே நிறுத்தி, அவனைத்
14 தூக்கிப்போடுவித்தார் என்றான். அப்பொ
ழுது பார்வோன் யோசேப்பை [3]அழைப்பித்
தான்; அவனைத் தீவிரமாய்க் காவல்கிடங்கிலி
ருந்து கொண்டுவந்தார்கள். அவன் சவரம்
பண்ணிக்கொண்டு, வேறு வஸ்திரம் தரித்து,
15 பார்வோனிடத்தில் வந்தான். பார்வோன்
யோசேப்பை நோக்கி: ஒரு சொப்பனம் கண்
டேன்; அதின் அர்த்தத்தைச் சொல்ல ஒரு
வரும் இல்லை; நீ ஒரு சொப்பனத்தைக் கேட்
டால், அதின் அர்த்தத்தைச் சொல்லுவாய்
என்று [4]உன்னைக்குறித்து நான் கேள்விப்பட்
16 டேன் என்றான். அப்பொழுது யோசேப்பு
பார்வோனுக்குப் பிரதியுத்தரமாக: [5]நான்
அல்ல, [6]தேவனே பார்வோனுக்கு மங்கள
மான உத்தரவு அருளிச்செய்வார் என்றான்.
17 பார்வோன் யோசேப்பை நோக்கி: என் சொப்
பனத்திலே, நான் நதி ஓரத்தில் நின்று
18 கொண்டிருந்தேன். அழகும் புஷ்டியுமான
ஏழு பசுக்கள் நதியிலிருந்து ஏறிவந்து புல்
19 மேய்ந்தது. அவைகளின் பின் இளைத்ததும்
மகா அவலட்சணமும் கேவலமுமான வேறே
ஏழு பசுக்கள் ஏறிவந்தது; இவைகளைப்போல
அவலட்சணமான பசுக்களை எகிப்துதேசமெங்
20 கும் நான் கண்டதில்லை. கேவலமும் அவ
லட்சணமுமான பசுக்கள் கொழுமையான
முந்தின ஏழு பசுக்களையும் பட்சித்துப்போட்
21 டது. அவைகள் இவைகளின் வயிற்றுக்
குள் போயும், வயிற்றுக்குள் போயிற்றென்று
தோன்றாமல், முன் இருந்ததுபோலவே அவ
லட்சணமாயிருந்தது; இப்படிக் கண்டு விழித்
22 துக்கொண்டேன். பின்னும் நான் என்
சொப்பனத்திலே, நிறைமேனியுள்ள ஏழு
நல்ல கதிர்கள் ஒரே தாளிலிருந்து ஓங்கி வள
23 ரக்கண்டேன். பின்பு சாவியானவைகளும்
கீழ்காற்றினால் தீய்ந்து பதரானவைகளுமான
24 ஏழு கதிர்கள் முளைத்தது. சாவியான கதிர்
கள் அந்த ஏழு நல்ல கதிர்களையும் விழுங்கிப்
போட்டது. இதை [7]மந்திரவாதிகளிடத்தில்

[1] ஆதி. 40. 2
[2] ஆதி. 40. 5
[3] 1 சாமு. 2·8. சங். 105. 20
[4] ஆதி. 40. 8. தானி. 2. 30. 2 கொ. 3. 5
[5] அப். 3. 12
[6] ஆதி. 40. 8. தானி. 2. 22; 4. 2
[7] தானி. 4. 7
[8] தானி. 2. 28, 29, 45. வெளி. 4. 1
[9] 2 இரா. 8. 1
[10] ஆதி. 47. 13
[11] எண். 23. 19. ஏசா. 46. 10
[12] நீதி. 6. 6–8
[13] சங். 105. 9. அப். 7. 10
[14] எண். 27. 18. யோபு 32. 8. நீதி. 2. 6. தானி. 4. 8, 18; 5. 11

சொன்னேன்; இதின் பொருளை எனக்கு
விடுவிக்கிறவன் ஒருவனும் இல்லை என்
றான். அப்பொழுது யோசேப்பு பார்வோனை 25
நோக்கி: பார்வோனின் சொப்பனம் ஒன்று
தான்; [8]தேவன் தாம் செய்யப்போகிறது
இன்னதென்று பார்வோனுக்கு அறிவித்தி
ருக்கிறார். அந்த ஏழு நல்ல பசுக்களும் ஏழு 26
வருஷமாம்; அந்த ஏழு நல்ல கதிர்களும் ஏழு
வருஷமாம்; சொப்பனம் ஒன்றே, அவைக 27
ளின் பின் ஏறிவந்த கேவலமும் அவலட்சண
முமான ஏழு பசுக்களும் ஏழு வருஷமாம்;
கீழ்காற்றினால் தீய்ந்து சாவியான ஏழு கதிர்
களும் ஏழு வருஷமாம்; இவைகள் பஞ்ச
முள்ள [9]ஏழு வருஷமாம். பார்வோனுக்கு 28
நான் சொல்லவேண்டிய காரியம் இதுவே;
தேவன் தாம் செய்யப்போகிறதைப் பார்வோ
னுக்குக் காண்பித்திருக்கிறார். எகிப்துதேச 29
மெங்கும் பரிபூரணமான விளைவு உண்டா
யிருக்கும் ஏழு வருஷம் வரும். அதன்பின் 30
பஞ்சமுண்டாயிருக்கும் ஏழு வருஷம் வரும்;
அப்பொழுது எகிப்துதேசத்தில் அந்தப் பரி
பூரணமெல்லாம் மறக்கப்பட்டுப்போம்; [10]அந்
தப் பஞ்சம் தேசத்தைப் பாழாக்கும். வரப் 31
போகிற மகா கொடுமையான பஞ்சத்தால்
தேசத்தில் முன்னிருந்த பரிபூரணமெல்லாம்
ஒழிந்துபோம். இந்தக் காரியம் தேவனால் 32
[11]நிச்சயிக்கப்பட்டிருக்கிறது என்பதையும், தே
வன் இதைச் சீக்கிரத்தில் செய்வார் என்
பதையும் குறிக்கும்பொருட்டு, இந்தச் சொப்
பனம் பார்வோனுக்கு இரட்டித்தது. ஆகை 33
யால், விவேகமும் ஞானமுமுள்ள ஒரு மனு
ஷனைத் தேடி, அவனை எகிப்துதேசத்தில்
அதிகாரியாகப் பார்வோன் ஏற்படுத்துவாராக.
இப்படிப் பார்வோன் செய்து, தேசத்தின் 34
மேல் விசாரணைக்காரரை வைத்து, [12]பரிபூர
ணமுள்ள ஏழு வருஷங்களில் எகிப்துதேசத்
திலே விளையும் விளைச்சலில் ஐந்தில் ஒரு
பங்கை வாங்கும்படி செய்வாராக. அவர்கள் 35
வரப்போகிற நல்ல வருஷங்களில் விளையும்
தானியங்களையெல்லாம் சேர்த்து, பட்டணங்
களில் ஆகாரம் உண்டாயிருக்கும்படிக்கு, பார்
வோனுடைய அதிகாரத்துக்குள்ளாகத் தானி
யங்களைப் பத்திரப்படுத்தி வைத்து வைப்பார்
களாக. தேசம் பஞ்சத்தினால் அழிந்துபோ 36
காதபடிக்கு, அந்த தானியம் இனி எகிப்து
தேசத்தில் உண்டாகும் பஞ்சமுள்ள ஏழு
வருஷங்களுக்காகத் தேசத்திற்கு ஒரு வைப்
பாயிருப்பதாக என்றான். இந்த வார்த்தை 37
[13]பார்வோனுடைய பார்வைக்கும் அவன் ஊழி
யக்காரர் எல்லாருடைய பார்வைக்கும் நன்
றாய்க் கண்டது. அப்பொழுது பார்வோன் 38
தன் ஊழியக்காரரை நோக்கி: [14]தேவ ஆவி
யைப் பெற்ற இந்த மனுஷனைப்போல வே
றொருவன் உண்டோ என்றான். பின்பு, 39
பார்வோன் யோசேப்பை நோக்கி: தேவன்
இவையெல்லாவற்றையும் உனக்கு வெளிப்
படுத்தி இருக்கிறபடியால், உன்னைப்போல

விவேகமும் ஞானமுமுள்ளவன் வேறொருவ
40 னும் இல்லை. நீ [1]என் அரமனைக்கு அதிகாரி
யாயிருப்பாய்; உன் வாக்கின்படியே என்
ஜனங்கள் எல்லாரும் அடங்கி நடக்கக்கடவர்
கள்; சிங்காசனத்தில்மாத்திரம் உன்னிலும்
நான் பெரியவனாய் இருப்பேன் என்றான்.
41 பின்னும் பார்வோன் யோசேப்பை நோக்கி:
பார், [2]எகிப்துதேசம் முழுமைக்கும் உன்னை
42 அதிகாரியாக்கினேன் என்று சொல்லி, பார்
வோன் தன் கையில் போட்டிருந்த தன் [3]முத்
திரை மோதிரத்தைக் கழற்றி, அதை யோ
சேப்பின் கையிலே போட்டு, மெல்லிய வஸ்
திரங்களை அவனுக்கு உடுத்தி, [4]பொன் சரப்
43 பணியை அவன் கழுத்திலே தரித்து, தன்னு
டைய இரண்டாம் இரதத்தின்மேல் அவனை
ஏற்றி, *தெண்டனிட்டுப் பணியுங்கள் என்று
அவனுக்கு முன்பாகக் கூறுவித்து; [5]எகிப்து
தேசம் முழுமைக்கும் அவனை அதிகாரியாக்கி
44 னான்; பின்னும் பார்வோன் யோசேப்பை
நோக்கி: நான் பார்வோன்; ஆனாலும் எகிப்து
தேசத்திலுள்ளவர்களில் ஒருவனும் உன் உத்
தரவில்லாமல் தன் கையையாவது தன் காலை
45 யாவது அசைக்கக்கூடாது என்றான். மே
லும், பார்வோன் யோசேப்புக்கு †சாப்நாத்
பன்னேயா என்கிற பெயரையிட்டு; ஓன்
பட்டணத்து ‡ஆசாரியனாகிய போத்திபிரா
வின் குமாரத்தியாகிய ஆஸ்நாத்தை அவனுக்கு
மனைவியாகக் கொடுத்தான். யோசேப்பு
எகிப்துதேசத்தைச் சுற்றிப்பார்க்கும்படி புறப்
46 பட்டான். யோசேப்பு எகிப்தின் ராஜாவா
கிய பார்வோனுக்கு முன்பாக நிற்கும்போது
[6]முப்பது வயதாயிருந்தான்; யோசேப்பு பார்
வோனுடைய சந்நிதியிலிருந்து புறப்பட்டு,
எகிப்துதேசம் எங்கும் போய்ச் சுற்றிப்பார்த்
47 தான். பரிபூரணமுள்ள ஏழு வருஷங்களி
லும் பூமி மிகுதியான பலனைக் கொடுத்தது.
48 அவ்வேழு வருஷங்களில் எகிப்துதேசத்தில்
விளைந்த தானியங்களையெல்லாம் அவன்
சேர்த்து, அந்தத் தானியங்களைப் பட்டணங்
களில் கட்டிவைத்தான்; அந்தந்தப் பட்டணத்
தில் அதினதின் சுற்றுப்புறத்துத் தானியங்
49 களைக் கட்டிவைத்தான். இப்படி யோசேப்பு
அளவிறந்ததாய்க் கடற்கரை மணலைப்போல
மிகுதியாக [7]தானியத்தைச் சேர்த்துவைத்
தான்; அது அளவுக்கு அடங்காததாயிருந்தது.
50 பஞ்சமுள்ள வருஷங்கள் வருவதற்குமுன்னே
யோசேப்புக்கு இரண்டு [8]குமாரர் பிறந்தார்
கள்; அவர்களை ஓன்பட்டணத்து §ஆசாரிய
னாகிய போத்திபிராவின் குமாரத்தியாகிய
51 ஆஸ்நாத்து அவனுக்குப் பெற்றாள். யோ
சேப்பு: என் வருத்தம் யாவையும் என் தகப்ப
னுடைய குடும்பம் அனைத்தையும் நான் மறக்
கும்படி தேவன் பண்ணினார் என்று சொல்லி,
மூத்தவனுக்கு ||மனாசே என்று பேரிட்டான்.
52 நான் சிறுமைப்பட்டிருந்த தேசத்தில் தேவன்
என்னைப்பலுகப்பண்ணினார்என்று சொல்லி,
இளையவனுக்கு ¶எப்பிராயீம் என்று பேரிட்
டான். எகிப்துதேசத்தில் வந்த பரிபூரண 53
முள்ள ஏழு வருஷங்களும் முடிந்தபின்,
யோசேப்பு சொல்லியபடி [9]ஏழு வருஷம் 54
பஞ்சம் தொடங்கினது; சகல தேசங்களிலும்
பஞ்சம் உண்டாயிற்று; ஆனாலும் எகிப்து
தேசமெங்கும் ஆகாரம் இருந்தது. எகிப்து 55
தேசமெங்கும் பஞ்சம் உண்டானபோது,
ஜனங்கள் உணவுக்காகப் பார்வோனை நோக்கி
ஓலமிட்டார்கள்; அதற்குப் பார்வோன்: நீங்
கள் யோசேப்பினிடத்துக்குப் போய், அவன்
உங்களுக்குச் சொல்லுகிறபடி செய்யுங்கள்
என்று எகிப்தியர் எல்லாருக்கும் சொன்னான்.
தேசமெங்கும் பஞ்சம் உண்டானபடியால், 56
யோசேப்பு களஞ்சியங்களையெல்லாம் திறந்து,
எகிப்தியருக்கு விற்றான்; பஞ்சம் எகிப்து
தேசத்தில் வரவரக் கொடிதாயிற்று. சகல 57
தேசங்களிலும் பஞ்சம் கொடிதாயிருந்தபடி
யால், சகல தேசத்தார்களும் யோசேப்பினி
டத்தில் தானியம் கொள்ளும்படி எகிப்துக்கு
வந்தார்கள்.

எகிப்திலே தானியம் உண்டென்று **42**
[10]யாக்கோபு அறிந்து, தன் குமாரரை நோக்கி:
நீங்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்
கொண்டிருக்கிறது என்ன? எகிப்திலே தானி 2
யம் உண்டென்று கேள்விப்படுகிறேன்; [11]நாம்
சாகாமல் உயிரோடிருக்கும்படி நீங்கள் அவ்
விடத்துக்குப் போய், நமக்காகத் தானியம்
கொள்ளுங்கள் என்றான். யோசேப்பின் 3
சகோதரர் பத்துப்பேர் தானியங்கொள்ள எகிப்
துக்குப் போனார்கள். யோசேப்பின் தம்பி 4
யாகிய பென்யமீனுக்கு ஏதோ மோசம் வரும்
என்று சொல்லி, யாக்கோபு அவனை அவன்
சகோதரரோடே அனுப்பவில்லை. கானான் 5
தேசத்திலே [12]பஞ்சம் உண்டாயிருந்தபடி
யால், தானியம் கொள்ளப்போகிறவர்களுட
னேகூட இஸ்ரவேலின் குமாரரும் போனார்
கள். யோசேப்பு அத்தேசத்துக்கு [13]அதிபதி 6
யாயிருந்து, தேசத்தின் ஜனங்கள் யாவருக்
கும் விற்றான். யோசேப்பின் சகோதரர்
வந்து, [14]முகங்குப்புறத் தரையிலே விழுந்து
அவனை வணங்கினார்கள். யோசேப்பு அவர் 7
களைப் பார்த்து, தன் சகோதரர் என்று அறிந்
துகொண்டான்; அறிந்தும் அறியாதவன்போ
லக் கடினமாய் அவர்களோடே பேசி: நீங்கள்
எங்கேயிருந்து வந்தீர்கள் என்று கேட்டான்;
அதற்கு அவர்கள்: கானான்தேசத்திலிருந்து
தானியம் கொள்ள வந்தோம் என்றார்கள்.
யோசேப்பு அவர்களைத் தன் சகோதரர் என்று 8
அறிந்தும், அவர்கள் அவனை அறியவில்லை.
யோசேப்பு அவர்களைக் குறித்துத் [15]தான் 9
கண்ட சொப்பனங்களை நினைத்து, அவர்களை
நோக்கி: நீங்கள் வேவுகாரர், தேசம் எங்கே
திறந்துகிடக்கிறது என்று பார்க்கவந்தீர்கள்
என்றான். அதற்கு அவர்கள்: அப்படியல்ல, 10
ஆண்டவனே, உமது அடியாராகிய நாங்கள் தா
னியம் கொள்ள வந்தோம். நாங்கள் எல்லாரும் 11
ஒரு தகப்பனுடைய பிள்ளைகள்; நாங்கள் நிசஸ்

1 சங். 105. 21. அப். 7. 10
2 தானி. 6. 3
3 எஸ்தர் 3. 10; 8. 2, 8, 15
4 தானி. 5. 27, 29
* அப்ரேக் = கட்டிடம்.
5 ஆதி. 45. 8, 26. அப். 7. 10
† இரகசியங்களை வெளிப்படுத்துகிறவன்.
‡ பிரபு. யாத். 2. 16. 2 சாமு. 8. 18
6 1 சாமு. 16. 21. தானி. 1. 19. லூ. 21. 36
7 ஆதி. 22. 17. நியா. 7. 12. 1 சாமு. 13. 5. சங். 78. 27
8 ஆதி. 46. 20; 48. 5
§ பிரபு.
|| மறதி.
¶ கனிபெருக்கம். ஆதி. 49. 22
9 சங். 105. 16. அப். 7. 11
10 அப். 7. 12
11 ஆதி. 43. 8. சங். 118. 17
12 அப். 7. 11
13 ஆதி. 41. 41
14 ஆதி. 37. 7
15 ஆதி. 37. 5, 9.

தர்; உமது அடியார் வேவுகாரர் அல்ல என்றார்
12 கள். அதற்கு அவன்: அப்படியல்ல, தேசம் எங்
கே திறந்துகிடக்கிறது என்று பார்க்கவே வந்தீர்
13 கள் என்றான். அப்பொழுது அவர்கள்: உமது
அடியாராகிய நாங்கள் பன்னிரண்டு சகோ
தரர்; கானான்தேசத்தில் இருக்கிற ஒரு தகப்
பன் புத்திரர்; இளையவன் இப்பொழுது எங்
கள் தகப்பனிடத்தில் இருக்கிறான்; [1]ஒருவன்
14 காணாமற்போனான் என்றார்கள். யோசேப்பு
அவர்களை நோக்கி: உங்களை வேவுகாரர் என்று
15 நான் சொன்னது சரி. உங்கள் இளைய சகோ
தரன் இங்கே வந்தாலொழிய நீங்கள் இங்கே
யிருந்து புறப்படுவது இல்லை என்று பார்வோ
னின் ஜீவனைக்கொண்டு [2]ஆணையிட்டுச்
16 சொல்லுகிறேன். இதினாலே நீங்கள் சோதிக்
கப்படுவீர்கள்; உங்கள் சகோதரனை அழைத்து
வரும்படி உங்களில் ஒருவனை அனுப்புங்கள்;
உங்களிடத்தில் உண்மை உண்டோ இல்லை
யோ என்று உங்கள் வார்த்தைகள் சோதிக்கப்
படுமளவும், நீங்கள் காவலில் இருக்கவேண்
டும்; இல்லாவிட்டால், நீங்கள் வேவுகாரர்
தான் என்று பார்வோனின் ஜீவனைக்கொண்டு
ஆணையிட்டுச் சொல்லுகிறேன் என்று
17 சொல்லி, அவர்கள் எல்லாரையும் மூன்று
18 நாள் காவலிலே வைத்தான். மூன்றாம்நா
ளிலே யோசேப்பு அவர்களை நோக்கி: [3]நான்
தேவனுக்குப் பயப்படுகிறவன்; நீங்கள் உயி
ரோடே இருக்கும்படிக்கு ஒன்று செய்யுங்கள்.
19 நீங்கள் நிசஸ்தரானால், சகோதரராகிய உங்க
ளில் ஒருவன் காவற்கூடத்தில் கட்டுண்டிருக்
கட்டும்; மற்றவர்கள் புறப்பட்டு, பஞ்சத்தி
னால் வருந்துகிற உங்கள் குடும்பத்துக்குத் தா
20 னியம் கொண்டுபோய்க் கொடுத்து, உங்கள்
[4]இளைய சகோதரனை என்னிடத்துக்கு அழைத்
துக்கொண்டு வாருங்கள்; அப்பொழுது உங்
கள் வார்த்தைகள் மெய்யென்று விளங்கும்;
நீங்கள் சாவதில்லை என்றான். அவர்கள் அப்
21 படிச் செய்கிறதற்கு இசைந்து: நம்முடைய
சகோதரனுக்கு நாம் செய்த துரோகம் [5]நம்
மேல் சுமந்தது; அவன் நம்மைக் கெஞ்சி வேண்
டிக்கொண்டபோது, அவனுடைய மன வியா
குலத்தை நாம் கண்டும், அவனுக்குச் செவி
கொடாமற்போனோமே; ஆகையால், [6]இந்த
ஆபத்து நமக்கு நேரிட்டது என்று ஒருவரை
ஒருவர் பார்த்துச் சொல்லிக்கொண்டார்கள்:
22 அப்பொழுது ரூபன் அவர்களைப் பார்த்து:
[7]இளைஞனுக்கு விரோதமாகப் பாவஞ்செய்யா
திருங்கள் என்று நான் உங்களுக்குச் சொல்ல
வில்லையா? நீங்கள் கேளாமற் போனீர்கள்;
இப்பொழுது, இதோ, [8]அவன் இரத்தப்பழி
நம்மிடத்தில் வாங்கப்படுகிறது என்றான்.
23 யோசேப்பு துபாசியைக்கொண்டு அவர்களி
டத்தில் பேசினபடியால், தாங்கள் சொன்
னது அவனுக்குத் தெரியும் என்று அறியாதி
24 ருந்தார்கள். அவன் அவர்களை விட்டு அப்பு
றம் போய் அழுது, திரும்ப அவர்களிடத்தில்
வந்து, அவர்களோடே பேசி, அவர்களில்
சிமியோனைப் பிடித்து, அவர்கள் கண்களுக்கு
முன்பாகக் கட்டுவித்தான். பின்பு, அவர்கள் 25
சாக்குகளைத் தானியத்தால் நிரப்பவும், அவர்
கள் பணத்தைத் திரும்ப அவனவன் சாக்கி
லே போடவும், வழிக்கு வேண்டிய ஆகாரத்
தைக் கொடுக்கவும் யோசேப்பு கட்டளையிட்
டான்; [9]அப்படியே அவர்களுக்குச் செய்யப்
பட்டது. அவர்கள் அந்தத் தானியத்தைத் 26
தங்கள் கழுதைகள்மேல் ஏற்றிக்கொண்டு,
அவ்விடம்விட்டுப் புறப்பட்டுப் போனார்கள்.
தங்குகிற இடத்திலே அவர்களில் [10]ஒருவன் 27
தன் கழுதைக்குத் தீவனம் போடத் தன் சாக்
கைத் திறந்தபோது, சாக்கின் வாயிலே தன்
பணம் இருக்கிறதைக் கண்டு, தன் சகோத 28
ரரைப் பார்த்து, என் பணம் திரும்ப வந்தி
ருக்கிறது; இதோ, அது என் சாக்கிலே இருக்
கிறது என்றான். அப்பொழுது அவர்களு
டைய இருதயம் சோர்ந்துபோய், அவர்கள்
பயந்து, ஒருவரை ஒருவர் பார்த்து, தேவன்
நமக்கு இப்படிச் செய்தது என்ன என்றார்கள்.
அவர்கள் கானான்தேசத்திலுள்ள தங்கள் தகப் 29
பனாகிய யாக்கோபினிடத்தில் வந்து, தங்க
ளுக்குச் சம்பவித்தவைகளையெல்லாம் அவ
னுக்கு அறிவித்து: தேசத்துக்கு அதிபதியா 30
யிருக்கிறவன் எங்களைத் தேசத்தை வேவு
பார்க்க வந்தவர்கள் என்று எண்ணி எங்களோ
டே கடினமாய்ப் பேசினான். நாங்களோ 31
அவனை நோக்கி: நாங்கள் நிசஸ்தர், வேவுகாரர்
அல்ல. நாங்கள் பன்னிரண்டு சகோதரர், 32
ஒரு தகப்பன் புத்திரர், ஒருவன் காணாமற்
போனான், இளையவன் இப்பொழுது கானான்
தேசத்தில் எங்கள் தகப்பனிடத்தில் இருக்கி
றான் என்றோம். அப்பொழுது தேசத்தின் 33
அதிபதியானவன்: நீங்கள் நிசஸ்தர் என்பதை
நான் அறியும்படி உங்கள் சகோதரரில் ஒரு
வனை நீங்கள் என்னிடத்தில் விட்டு, பஞ்சத்
தினால் வருந்துகிற உங்கள் குடும்பத்துக்குத்
தானியம் வாங்கிக்கொண்டுபோய்க் கொடுத்து,
உங்கள் இளைய சகோதரனை என்னிடத்தில் 34
அழைத்துக்கொண்டுவாருங்கள்; அதினாலே
நீங்கள் வேவுகாரர் அல்ல, நிசஸ்தர் என்பதை
நான் அறிந்துகொண்டு, உங்கள் சகோதரனை
விடுதலைசெய்வேன்; நீங்கள் இந்தத் தேசத்
திலே [11]வியாபாரமும் பண்ணலாம் என்றான்
என்று சொன்னார்கள். அவர்கள் தங்கள் சாக் 35
குகளிலுள்ள தானியத்தைக் கொட்டுகையில்,
இதோ, அவனவன் சாக்கிலே [12]அவனவன்
பணமுடிப்பு இருந்தது; அந்தப் பணமுடிப்பு
களை அவர்களும் அவர்கள் தகப்பனும் கண்டு
பயந்தார்கள். அவர்கள் தகப்பனாகிய யாக் 36
கோபு அவர்களை நோக்கி: [13]என்னைப் பிள்ளை
யற்றவனாக்குகிறீர்கள்; யோசேப்பும் இல்லை,
சிமியோனும் இல்லை; பென்யமீனையும் கொ
ண்டுபோகப் பார்க்கிறீர்கள்; இதெல்லாம்
எனக்கு விரோதமாய் நேரிடுகிறது என்றான்.
அப்பொழுது ரூபன் தன் தகப்பனைப் பார்த்து, 37
அவனை என் கையில் ஒப்புவியும், நான் அவ

1 ஆதி. 37. 30. புலம்பல் 5. 7
2 உபா. 6. 13. 1 சாமு. 1. 26; 17. 55
3 லேவி. 25. 43. நெகே. 5. 15. லூ. 18. 2, 4
4 ஆதி. 43. 5; 44. 23
5 எண். 32. 23. 1 இரா. 17. 18. யோபு 36. 8, 9. ஓசி. 5. 15
6 நீதி. 21. 13. மத். 7. 2
7 ஆதி. 37. 21
8 ஆதி. 9. 5. 1 இரா. 2. 32. சங். 9. 12. லூ. 11. 50, 51
9 மத். 5. 44. ரோ. 12. 17, 20, 21
10 ஆதி. 43. 21
11 ஆதி. 34. 10
12 ஆதி. 43. 21
13 ஆதி. 43. 14

னைத் திரும்ப உம்மிடத்தில் கொண்டுவரு
வேன்; அவனைக் கொண்டுவராவிட்டால்,
என் இரண்டு குமாரரையும் கொன்றுபோடும்
38 என்று சொன்னான். அதற்கு அவன்: என்
மகன் உங்களோடே கூடப் போவதில்லை;
அவன் [1]தமையன் இறந்துபோனான், இவன்
ஒருவன் மீதியாயிருக்கிறான்; நீங்கள் போ
கும் வழியில் இவனுக்கு மோசம் நேரிட்
டால், நீங்கள் என் நரைமயிரைச் சஞ்சலத்
தோடே பாதாளத்தில் இறங்கப்பண்ணுவீர்
கள் என்றான்.

**43** தேசத்திலே [2]பஞ்சம் கொடிதாயிருந்
2 தது. எகிப்திலிருந்து அவர்கள் கொண்டுவந்த
தானியம் செலவழிந்தபோது, அவர்கள் தகப்
பன் அவர்களை நோக்கி: நீங்கள் திரும்பப்
போய், நமக்குக் கொஞ்சம் தானியம் வாங்கிக்
3 கொண்டு வாருங்கள் என்றான். அதற்கு
யூதா: [3]உங்கள் சகோதரன் உங்களோடேகூட
வராவிட்டால், நீங்கள் என் முகத்தைக் காண்
பதில்லை என்று அந்த மனிதன் எங்களுக்குச்
4 சத்தியமாய்ச் சொன்னான். எங்கள் சகோத
ரனை நீர் எங்களோடேகூட அனுப்பினால்,
நாங்கள் போய், உமக்குத் தானியம் வாங்கிக்
5 கொண்டு வருவோம். அனுப்பாவிட்டால்,
நாங்கள் போகமாட்டோம்; உங்கள் சகோதரன்
உங்களோடேகூட வராவிட்டால், நீங்கள் என்
முகத்தைக் காண்பதில்லை என்று அந்த மனி
தன் எங்களோடே சொல்லியிருக்கிறான் என்
6 றான். அதற்கு இஸ்ரவேல்: உங்களுக்கு
இன்னும் ஒரு சகோதரன் உண்டென்று நீங்
கள் அந்த மனிதனுக்குச் சொல்லி, என்
எனக்கு இந்தத் துன்பத்தை வருவித்தீர்கள்
7 என்றான். அதற்கு அவர்கள்: அந்த மனிதன்,
உங்கள் தகப்பன் இன்னும் உயிரோடிருக்கி
றாரா? உங்களுக்கு இன்னும் ஒரு சகோதரன்
உண்டா? என்று எங்களையும் எங்கள் வம்சத்
தையும் குறித்து விபரமாய் விசாரித்தான்;
அந்தக் கேள்விகளுக்குத்தக்கதாக உள்ளபடி
அவனுக்குச் சொன்னோம்; உங்கள் சகோத
ரனை உங்களோடேகூட இங்கே கொண்டுவா
ருங்கள் என்று அவன் சொல்லுவான் என்
பதை நாங்கள் அறிந்திருந்தோமா என்றார்கள்.
8 பின்னும், யூதா தன் தகப்பனாகிய இஸ்ரவேலை
நோக்கி: நீரும் நாங்களும் எங்கள் குழந்தை
களும் சாகாமல் உயிரோடிருக்கும்படி, நாங்
கள் புறப்பட்டுப்போகிறோம், பிள்ளையாண்
9 டானை என்னோடே அனுப்பும். அவனுக்காக
[4]நான் உத்தரவாதம்பண்ணுவேன்; அவனை
என்னிடத்திலே கேளும், நான் அவனை உம்
மிடத்தில் கொண்டுவந்து, உமக்குமுன்பாக
நிறுத்தாமற்போனால், எந்நாளும் அந்தக் குற்
10 றம் என்மேல் இருப்பதாக. நாங்கள் தாம
தியாதிருந்தோமானால், இதற்குள்ளே இரண்
டாந்தரம் போய்த் திரும்பிவந்திருப்போமே
11 என்றான். அதற்கு அவர்கள் தகப்பனாகிய
இஸ்ரவேல்: அப்படியானால், ஒன்று செய்யுங்
கள்; இந்தத் தேசத்தின் உச்சிதமான வஸ்துக்
களில் கொஞ்சம் பிசின் தைலமும், கொஞ்சம்
தேனும், கந்தவர்க்கங்களும், வெள்ளைப்போள
மும், தெரபிந்து கொட்டைகளும், வாதுமைக்
கொட்டைகளும் உங்கள் சாக்குகளில் போ
ட்டு, அந்த மனிதனுக்குக் [5]காணிக்கையாகக்
கொண்டுபோய்க் கொடுங்கள். பணத்தை 12
இரட்டிப்பாய் உங்கள் கைகளில் கொண்டு
போங்கள், [6]சாக்குகளின் வாயிலே திரும்பக்
கொண்டுவந்த பணத்தையும் கொண்டுபோங்
கள்; அது கைப்பிசகாய் வந்திருக்கும். உங் 13
கள் சகோதரனையும் கூட்டிக்கொண்டு, அந்த
மனிதனிடத்துக்கு மறுபடியும் போங்கள்.
அந்த மனிதன் அங்கிருக்கிற உங்கள் மற்றச் 14
சகோதரனையும் பென்யமீனையும் உங்களுட
னே அனுப்பிவிடும்படிக்கு, [7]சர்வவல்லமை
யுள்ள தேவன் அவன் சமுகத்தில் உங்களுக்கு
இரக்கங்கிடைக்கப் பண்ணுவாராக; [8]நானோ
பிள்ளையற்றுப் போனவனைப்போல் இருப்
பேன் என்றான்.

அப்பொழுது அவர்கள் காணிக்கையையும் 15
தங்கள் கைகளில் இரட்டிப்பான பணத்தை
யும் எடுத்துக்கொண்டு, பென்யமீனையும் கூட்
டிக்கொண்டு, பிரயாணப்பட்டு, எகிப்துக்குப்
போய், யோசேப்பின் சமுகத்தில் வந்து நின்
றார்கள். பென்யமீன் அவர்களோடேகூட 16
வந்திருக்கிறதை யோசேப்பு கண்டு, தன்
வீட்டு [9]விசாரணைக்காரனை நோக்கி: நீ இந்த
மனிதரை வீட்டுக்கு அழைத்துப்போய், சாப்
பாட்டுக்கு வேண்டியவைகளை அடித்து, ஆயத்
தம்பண்ணு, மத்தியானத்திலே இந்த மனி
தர் என்னோடே சாப்பிடுவார்கள் என்றான்.
அவன் தனக்கு யோசேப்பு சொன்னபடியே 17
செய்து, அந்த மனிதரை யோசேப்பின் வீட்
டுக்கு அழைத்துக்கொண்டுபோனான். தாங் 18
கள் யோசேப்பின் வீட்டுக்குக் கொண்டுபோ
கப்படுகிறதை அவர்கள் கண்டு பயந்து,
முன்னே நம்முடைய சாக்குகளில் இருந்த
பணத்தினிமித்தம் நம்மேல் [10]குற்றம் சுமத்தி,
நம்மைப் பிடித்துச் சிறைகளாக்கி, நம்முடைய
கழுதைகளை எடுத்துக்கொள்ளும்படி நம்மைக்
கொண்டுபோகிறார்கள் என்று சொல்லி, யோ 19
சேப்பின் வீட்டு விசாரணைக்காரனண்டையில்
சேர்ந்து, வீட்டு வாசற்படியிலே அவனோடே
பேசி: ஆண்டவனே, நாங்கள் தானியம் 20
கொள்ளும்படி [11]முன்னே வந்துபோனோமே;
நாங்கள் தங்கும் இடத்தில் போய் எங்கள் 21
சாக்குகளைத் திறந்தபோது, நாங்கள் நிறுத்துக்
கொடுத்த நிறையின்படியே அவனவன் பணம்
அவனவன் சாக்கின் வாயிலே இருக்கக்கண்
டோம்; அதை நாங்கள் திரும்பவும் எங்கள்
கையிலே கொண்டுவந்திருக்கிறோம். மேலும், 22
தானியம் கொள்ளும்படி வேறே பணமும்
எங்கள் கையில் கொண்டுவந்திருக்கிறோம்;
நாங்கள் முன் கொடுத்த பணத்தை எங்கள்
சாக்குகளில் போட்டது இன்னார் என்று
அறியோம் என்றார்கள். அதற்கு அவன்: 23
உங்களுக்குச் [12]சமாதானம்; பயப்படவேண்

1 ஆதி. 37. 33; 44. 28, 29, 31
2 ஆதி. 41. 54, 57. புலம்பல் 5. 10
3 ஆதி. 42. 20
4 ஆதி. 44. 32. சங். 119. 122. பிலேமோன் 18, 19
5 ஆதி. 32. 20; 37. 25. நீதி. 18. 16. எரே. 8. 22
6 ஆதி. 42. 25, 35
7 நெகே. 1. 11. சங். 37. 5
8 எஸ்தர் 4. 16
9 ஆதி. 44. 1
10 யோபு 30. 14
11 ஆதி. 42. 3, 10, 27, 35
12 நியா. 6. 23. 1 சாமு. 25. 6. லூ. 24. 36

டாம்; உங்கள் தேவனும் உங்கள் தகப்பனு
டைய தேவனுமாயிருக்கிறவர் உங்கள் சாக்கு
களில் அதை உங்களுக்குப் புதையலாகக்
கட்டளையிட்டார்; நீங்கள் கொடுத்த பணம்
என்னிடத்தில் வந்து சேர்ந்தது என்று
சொல்லி, சிமியோனை வெளியே அழைத்து
24 வந்து, அவர்களிடத்தில் விட்டான். மேலும்,
அந்த மனிதன் அவர்களை யோசேப்பின்
வீட்டுக்குள்ளே கூட்டிக்கொண்டுபோய், அவர்
கள் தங்கள் [1]கால்களைக் கழுவும்படி தண்ணீர்
கொடுத்து, அவர்களுடைய கழுதைகளுக்குத்
25 தீவனம்போட்டான். தாங்கள் அங்கே போஜ
னம் செய்யப்போகிறதை அவர்கள் கேள்விப்
பட்டபடியால், மத்தியானத்தில் யோசேப்பு
வருமளவும் காணிக்கையை ஆயத்தமாய்
26 வைத்துக் காத்துக்கொண்டிருந்தார்கள். யோ
சேப்பு வீட்டுக்கு வந்தபோது, அவர்கள் தங்
கள் கையில் இருந்த காணிக்கையை வீட்டுக்
குள் அவனிடத்தில் கொண்டுபோய் வைத்து,
[2]தரைமட்டும் குனிந்து, அவனை வணங்கினார்
27 கள். அப்பொழுது அவன்: அவர்கள் [3]சுக
செய்தியை விசாரித்து, நீங்கள் சொன்ன
முதிர்வயதான உங்கள் தகப்பன் சுகமாயிருக்
கிறாரா? அவர் இன்னும் உயிரோடிருக்கி
றாரா? என்று அவர்களிடத்தில் விசாரித்தான்.
28 அதற்கு அவர்கள்: எங்கள் தகப்பனாராகிய
உமது அடியான் சுகமாயிருக்கிறார், இன்னும்
உயிரோடிருக்கிறார் என்று சொல்லி, [4]குனி
29 ந்து வணங்கினார்கள். அவன் தன் கண்களை
ஏறெடுத்து, [5]தன் தாய் பெற்ற குமாரனாகிய
தன் சகோதரன் பென்யமீனைக் கண்டு, நீங்
கள் எனக்குச் சொன்ன உங்கள் இளைய
சகோதரன் இவன்தானா என்று கேட்டு,
[6]மகனே, தேவன் உனக்குக் கிருபை செய்யக்
30 கடவர் என்றான். யோசேப்பின் [7]உள்ளம்
தன் சகோதரனுக்காகப் பொங்கினபடியால்,
அவன் அழுகிறதற்கு இடம்தேடி, துரிதமாய்
அறைக்குள்ளே போய், [8]அங்கே அழுதான்.
31 பின்பு, அவன் தன் முகத்தைக் கழுவி
வெளியே வந்து, தன்னை அடக்கிக்கொண்டு,
32 போஜனம் வையுங்கள் என்றான். எகிப்தியர்
எபிரெயரோடே சாப்பிடமாட்டார்கள்; [9]அப்
படிச் செய்வது எகிப்தியருக்கு அருவருப்பா
யிருக்கும்; ஆகையால், அவனுக்குத் தனிப்
படவும், அவர்களுக்குத் தனிப்படவும், அவ
னோடே சாப்பிடுகிற எகிப்தியருக்குத் தனிப்
33 படவும் வைத்தார்கள். அவனுக்கு முன்பாக,
மூத்தவன் முதல் இளையவன்வரைக்கும் அவ
னவன் வயதின்படியே அவர்களை உட்கார
வைத்தார்கள்; அதற்காக அவர்கள், ஒருவரை
34 ஒருவர் பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். அவன்
தனக்குமுன் வைக்கப்பட்டிருந்த போஜனத்
தில் அவர்களுக்குப் பங்கிட்டு அனுப்பினான்;
அவர்கள் எல்லாருடைய பங்குகளைப்பார்க்கி
லும் பென்யமீனுடைய பங்கு [10]ஐந்து மடங்கு
அதிகமாயிருந்தது; அவர்கள் பானம்பண்ணி,
அவனுடனே [11]சந்தோஷமாயிருந்தார்கள்.

1 ஆதி. 18. 4; 24. 32
2 ஆதி. 37. 7, 10
3 ஆதி. 37. 14; 42. 11, 13
4 ஆதி. 37. 7, 10
5 ஆதி. 35. 17, 18; 42. 13
6 யோசு. 7. 19. மத். 9. 2
7 1 இரா. 3. 26. எரே. 31. 18. பிலி. 1. 8. கொலோ. 3. 12
8 ஆதி. 42. 24
9 ஆதி. 46. 34. யாத். 8. 26
10 ஆதி. 45. 22
11 பிர. 9. 7. மத். 11. 19. யோ. 2. 10
12 நீதி. 17. 13
* அவர் குறிபார்க்கிறது அதினால் அல்லவா?
13 யோசு. 22. 22. 2 இரா. 8. 13
14 ஆதி. 43. 21
15 ஆதி. 31. 32
16 யாத். 22. 3
17 ஆதி. 37. 29, 34. எண். 14. 6. 2 சாமு. 1. 11
18 ஆதி. 37. 7

பின்பு, அவன் தன் வீட்டு விசாரணைக் 44
காரனை நோக்கி: நீ இந்த மனிதருடைய
சாக்குகளை அவர்கள் ஏற்றிக்கொண்டு போகத்
தக்க பாரமாய்த் தானியத்தினாலே நிரப்பி,
அவனவன் பணத்தை அவனவன் சாக்கின்
வாயிலே போட்டு, இளையவனுடைய சாக் 2
கின் வாயிலே வெள்ளிப்பாத்திரமாகிய என்
பானபாத்திரத்தையும் தானியத்துக்கு அவன்
கொடுத்த பணத்தையும் போடு என்று கட்
டளையிட்டான், யோசேப்பு சொன்னபடியே
அவன் செய்தான். அதிகாலையிலே அந்த 3
மனிதர்கள் தங்கள் கழுதைகளை ஓட்டிக்
கொண்டு போகும்படி அனுப்பிவிடப்பட்டார்
கள். அவர்கள் பட்டணத்தை விட்டுப் புறப் 4
பட்டு, வெகுதூரம் போவதற்கு முன்னே,
யோசேப்பு தன் வீட்டு விசாரணைக்காரனை
நோக்கி: நீ புறப்பட்டுப் போய், அந்த மனி
தரைப் பின்தொடர்ந்து, அவர்களைப் பிடித்து:
[12]நீங்கள் நன்மைக்குத் தீமை செய்தது என்ன?
அது என் எஜமான் பானம் பண்ணுகிற பாத் 5
திரம் அல்லவா? *அது போன வகை ஞான
திருஷ்டியால் அவருக்குத் தெரியாதா? நீங்கள்
செய்தது தகாதகாரியம் என்று அவர்களோடே
சொல் என்றான். அவன் அவர்களைத் தொ 6
டர்ந்து பிடித்து, தன்னிடத்தில் சொல்லி
யிருந்த வார்த்தைகளை அவர்களுக்குச் சொன்
னான். அதற்கு அவர்கள்: எங்கள் ஆண்ட 7
வன் இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்லு
கிறது என்ன? [13]இப்படிப்பட்ட காரியத்துக்
கும் உம்முடைய அடியாராகிய எங்களுக்கும்
வெகுதூரம். எங்கள் சாக்குகளின் வாயிலே 8
நாங்கள் கண்ட [14]பணத்தைக் கானான்தேசத்தி
லிருந்து திரும்ப உம்மிடத்துக்குக் கொண்டு
வந்தோமே; நாங்கள் உம்முடைய எஜமானின்
வீட்டிலிருந்து வெள்ளியையாகிலும் பொன்
னையாகிலும் திருடிக்கொண்டு போவோமா?
உம்முடைய அடியாருக்குள்ளே அது எவ 9
னிடத்தில் காணப்படுமோ [15]அவன் கொலை
யுண்ணக்கடவன்; நாங்களும் எங்கள் ஆண்
டவனுக்கு அடிமைகளாவோம் என்றார்கள்.
அதற்கு அவன்: நீங்கள் சொன்னபடியே 10
ஆகட்டும்; எவனிடத்தில் அது காணப்படு
மோ, [16]அவன் எனக்கு அடிமையாவான்; நீங்
கள் குற்றமற்றிருப்பீர்கள் என்றான். அப் 11
பொழுது அவர்கள் துரிதமாய் அவனவன்
தன்தன் சாக்கைத் தரையிலே இறக்கி, தங்கள்
சாக்குகளைத் திறந்துவைத்தார்கள். மூத்தவன் 12
சாக்குமுதல் இளையவன் சாக்குமட்டும் அவன்
சோதிக்கும்போது, அந்தப் பாத்திரம் பென்ய
மீனுடைய சாக்கிலே கண்டுபிடிக்கப்பட்டது.
அப்பொழுது அவர்கள் தங்கள் [17]வஸ்திரங் 13
களைக் கிழித்துக்கொண்டு, அவனவன் கழு
தையின்மேல் பொதியை ஏற்றிக்கொண்டு,
பட்டணத்திற்குத் திரும்பினார்கள். யூதாவும் 14
அவன் சகோதரரும் யோசேப்பின் வீட்டுக்
குப் போனார்கள். யோசேப்பு அதுவரையும்
அங்கே இருந்தான்; [18]அவனுக்கு முன்பாகத்

15 தரையிலே விழுந்தார்கள். யோசேப்பு அவர்
களை நோக்கி: நீங்கள் என்ன காரியம் செய்
தீர்கள்? [1]என்னைப்போலொத்த மனிதனுக்கு
ஞானதிருஷ்டியினால் காரியம் தெரியவரும்
என்று அறியாமல் போனீர்களா என்றான்.
16 அதற்கு யூதா: என் ஆண்டவனாகிய உம்மிடத்
தில் நாங்கள் என்ன சொல்லுவோம்? என்
னத்தைப் பேசுவோம்? எதினாலே எங்கள்
நீதியை விளங்கப்பண்ணுவோம்? உம்முடைய
அடியாரின் அக்கிரமத்தைத் தேவன் விளங்
கப்பண்ணினார்; பாத்திரத்தை வைத்திருக்கிற
வனும் நாங்களும் என் ஆண்டவனுக்கு அடி
17 மைகள் என்றான். அதற்கு அவன்: [2]அப்
படிப்பட்ட செய்கை எனக்குத் தூரமாயிருப்
பதாக; எவன் வசத்தில் பாத்திரம் கண்டுபிடிக்
கப்பட்டதோ, அவனே எனக்கு அடிமையா
யிருப்பான்; நீங்களோ சமாதானத்தோடே
உங்கள் தகப்பனிடத்துக்குப் போங்கள் என்
றான்.
18 அப்பொழுது யூதா அவனண்டையிலே
சேர்ந்து: ஆ, என் ஆண்டவனே, உமது
அடியேன் உம்முடைய செவிகள் கேட்க
ஒரு வார்த்தை சொல்லுகிறேன் கேட்பீராக;
[3]அடியேன்மேல் உமது கோபம் மூளாதிருப்ப
தாக; நீர் பார்வோனுக்கு ஒப்பாயிருக்கிறீர்.
19 உங்களுக்குத் தகப்பனாவது சகோதரனாவது
உண்டா என்று என் ஆண்டவன் உம்முடைய
20 அடியாரிடத்தில் கேட்டீர். அதற்கு நாங்கள்:
எங்களுக்கு முதிர்வயதுள்ள தகப்பனாரும்,
[4]அவருக்கு முதிர்வயதிலே பிறந்த ஒரு இளை
ஞனும் உண்டு என்றும், அவனுடைய தமை
யன் இறந்துபோனான் என்றும், அவன் ஒரு
வன்மாத்திரமே அவனைப் பெற்ற தாயாருக்கு
இருப்பதினால் தகப்பனார் அவன்மேல் பட்
சமாயிருக்கிறார் என்றும் என் ஆண்டவனுக்
21 குச் சொன்னோம். அப்பொழுது நீர் அவனை
[5]என்னிடத்துக்குக் கொண்டுவாருங்கள்; என்
கண்களினால் அவனைப் பார்க்கவேண்டும்
22 என்று உமது அடியாருக்குச் சொன்னீர். நாங்
கள் ஆண்டவனை நோக்கி: [6]அந்த இளைஞன்
தன் தகப்பனை விட்டுப் பிரியக்கூடாது, பிரிந்
தால் அவர் இறந்துபோவார் என்று சொன்
23 னோம். அதற்கு நீர்: உங்கள் இளைய சகோ
தரனைக் கொண்டுவராவிட்டால், நீங்கள் இனி
என் முகத்தைக் காண்பதில்லை என்று உமது
24 அடியாருக்குச் சொன்னீர். நாங்கள் உமது
அடியானாகிய என் தகப்பனாரிடத்துக்குப்
போனபோது, என் ஆண்டவனுடைய வார்த்
25 தைகளை அவருக்கு அறிவித்தோம். எங்கள்
தகப்பனார் எங்களை நோக்கி: [7]நீங்கள் திரும்பப்
போய், நமக்குக் கொஞ்சம் தானியம் கொள்
26 ளுங்கள் என்று சொன்னார். அதற்கு: [8]நாங்
கள் போகக்கூடாது; எங்கள் இளைய சகோ
தரன் எங்களோடே வந்தால் போவோம்;
எங்கள் இளைய சகோதரன் எங்களோடே
வராவிட்டால், நாங்கள் அந்தப் புருஷனு
டைய முகத்தைக் காணக்கூடாது என்றோம்.

[1] 5. உசனம்.
[2] நீதி. 17. 15
[3] ஆதி. 18. 30, 32. யாத். 32. 22
[4] ஆதி. 37. 3
[5] ஆதி. 42. 15, 20
[6] ஆதி. 42. 3, 5
[7] ஆதி. 43. 2
[8] ஞா. 11. 7
[9] ஆதி. 30. 23. 46. 19
[10] ஆதி. 37. 33
[11] ஆதி. 42. 36, 38
[12] 1 சாமு. 18. 1
[13] ஆதி. 43. 9
[14] யாத். 32. 32
[15] யாத். 18. 8. யோபு 31. 29. சங். 116. 3; 119. 143
[16] எண். 14. 1
[17] அப். 7. 13
[18] யோபு 4. 5; 23. 15. மத். 14. 26
[19] ஆதி. 37. 28

அப்பொழுது உம்முடைய அடியானாகிய என் 27
தகப்பனார்: [9]என் மனைவி எனக்கு இரண்டு
பிள்ளைகளைப் பெற்றாள்; அவர்களில் ஒரு 28
வன் என்னிடத்திலிருந்து போய்விட்டான்,
[10]அவன் பீறுண்டுபோயிருப்பான் என்றிருந்
தேன், இதுவரைக்கும் அவனைக் காணாதிருக்
கிறேன், இதெல்லாம் நீங்கள் அறிந்திருக்
கிறீர்கள். நீங்கள் இவனையும் [11]என்னை விட் 29
டுப் பிரித்து அழைத்துப்போகுமிடத்தில் இவ
னுக்கு மோசம் நேரிட்டால், என் நரைமயிரை
வியாகுலத்தோடே பாதாளத்தில் இறங்கப்
பண்ணுவீர்கள் என்றார். ஆகையால் இளைய 30
வனை விட்டு, நான் என் தகப்பனாகிய உமது
அடியானிடத்துக்குப் போனால், [12]அவரு
டைய ஜீவன் இவனுடைய ஜீவனோடே ஒன்
றாய் இணைக்கப்பட்டிருக்கிறபடியினால், அவர் 31
இளையவன் வரவில்லை என்று அறிந்தமாத்
திரத்தில் இறந்துபோவார்; இப்படி உமது
அடியாராகிய நாங்கள் உமது அடியானாகிய
எங்கள் தகப்பனுடைய நரைமயிரை வியா
குலத்துடனே பாதாளத்தில் இறங்கப்பண்ணு
வோம். இந்த இளையவனுக்காக உமது அடி 32
யானாகிய நான் என் தகப்பனுக்கு [13]உத்தர
வாதி; அன்றியும், நான் இவனை உம்மிடத்
துக்குக் கொண்டுவராவிட்டால், நான் என்நா
ளும் உமக்கு முன்பாகக் குற்றவாளியாயிருப்
பேன் என்று அவருக்குச் சொல்லியிருக்கி
றேன். இப்படியிருக்க, இளையவன் தன் சகோ 33
தரரோடேகூடப் போகவிடும்படி மன்றாடு
கிறேன்; [14]உம்முடைய அடியானாகிய நான்
இளையவனுக்குப் பதிலாக இங்கே என் ஆண்
டவனுக்கு அடிமையாயிருக்கிறேன். இளை 34
யவனை விட்டு, எப்படி என் தகப்பனிடத்
துக்குப் போவேன்? போனால் என் தகப்ப
னுக்கு நேரிடும் [15]தீங்கை நான் எப்படிக்
காண்பேன் என்றான்.

அப்பொழுது யோசேப்பு தன் அருகே **45**
நின்ற எல்லாருக்கும் முன்பாகத் தன்னை
அடக்கிக்கொண்டிருக்கக்கூடாமல்: யாவரை
யும் என்னைவிட்டு வெளியே போகப்பண்
ணுங்கள் என்று கட்டளையிட்டான். யோ
சேப்பு தன் சகோதரருக்குத் தன்னை வெளிப்
படுத்துகையில், ஒருவரும் அவன் அருகில்
நிற்கவில்லை. அவன் சத்தமிட்டு [16]அழுதான்; 2
அதை எகிப்தியர் கேட்டார்கள், பார்வோ
னின் வீட்டாரும் கேட்டார்கள். யோசேப்பு 3
தன் சகோதரரைப் பார்த்து: [17]நான் யோசேப்பு;
என் தகப்பனார் இன்னும் உயிரோடே இருக்
கிறாரா என்றான். அவனுடைய சகோதரர்
அவனுக்கு முன்பாகக் [18]கலக்கமுற்றிருந்ததி
னாலே, அவனுக்கு உத்தரம் சொல்லக்கூடா
மல் இருந்தார்கள். அப்பொழுது யோசேப்பு 4
தன் சகோதரரை நோக்கி: என் கிட்ட வாருங்
கள் என்றான். அவர்கள் கிட்டப் போனார்
கள்; அப்பொழுது அவன்: [19]நீங்கள் எகிப்துக்
குப் போகிறவர்களிடத்தில் விற்றுப்போட்ட
உங்கள் சகோதரனாகிய யோசேப்பு நான்தான்.

5 என்னை இவ்விடத்தில் வரும்படி விற்றுப்
போட்டதினால், நீங்கள் [1]சஞ்சலப்படவேண்
டாம்; அது உங்களுக்கு விசனமாயிருக்கவும்
வேண்டாம்; ஜீவரட்சணை செய்யும்படிக்குத்
தேவன் [2]என்னை உங்களுக்கு முன்னே அனுப்
6 பினார். தேசத்தில் இப்பொழுது இரண்டு
வருஷமாகப் பஞ்சம் உண்டாயிருக்கிறது;
இன்னும் ஐந்து வருஷம் உழவும் அறுப்பும்
7 இல்லாமல் பஞ்சம் இருக்கும். பூமியிலே
உங்கள் வம்சம் ஒழியாமலிருக்க உங்களை ஆத
ரிக்கிறதற்காகவும், [3]பெரிய இரட்சிப்பினால்
உங்களை உயிரோடே காப்பதற்காகவும் தேவன்
என்னை உங்களுக்கு முன்னமே அனுப்பினார்.-
8 ஆதலால் நீங்கள் அல்ல, [4]தேவனே என்னை
இவ்விடத்துக்கு அனுப்பி, என்னைப் பார்வோ
னுக்குத் [5]தகப்பனாகவும், அவர் குடும்பம்
அனைத்திற்கும் கர்த்தனாகவும், எகிப்துதேசம்
9 முழுதுக்கும் அதிபதியாகவும் வைத்தார். நீங்
கள் சீக்கிரமாய் என் தகப்பனிடத்தில் போய்:
தேவன் என்னை எகிப்துதேசம் முழுதுக்
கும் அதிபதியாக வைத்தார்; என்னிடத்தில்
10 வாரும், தாமதிக்கவேண்டாம். நீரும், உம்மு
டைய பிள்ளைகளும், அவர்களுடைய பிள்ளை
களும், உம்முடைய ஆடுமாடுகளோடும் உமக்கு
உண்டாயிருக்கிற யாவற்றோடும் [6]கோசேன்
நாட்டில் வாசம்பண்ணி, என் சமீபத்தில்
11 இருக்கலாம். உமக்கும் உம்முடைய குடும்
பத்தாருக்கும் உமக்கு இருக்கிற யாவற்றிற்கும்
வறுமை வராதபடிக்கு, அங்கே உம்மைப் பரா
மரிப்பேன்; இன்னும் ஐந்து வருஷம் பஞ்சம்
இருக்கும் என்று, உம்முடைய குமாரனாகிய
யோசேப்பு சொல்லச்சொன்னான் என்று
12 சொல்லுங்கள். இதோ, உங்களோடே பேசு
கிற வாய் என் வாய்தான் என்பதை உங்கள்
[7]கண்களும் என் தம்பியாகிய பென்யமீனின்
13 கண்களும் காண்கிறதே. எகிப்திலே எனக்கு
உண்டாயிருக்கிற சகல மகிமையையும், நீங்
கள் கண்ட யாவையும் என் தகப்பனுக்கு
அறிவித்து, [8]அவர் சீக்கிரமாய் இவ்விடத்
துக்கு வரும்படி செய்யுங்கள் என்று சொல்லி;
14 தன் தம்பியாகிய பென்யமீனின் கழுத்தைக்
கட்டிக்கொண்டு அழுதான்; பென்யமீனும்
அவன் கழுத்தைக் கட்டிக்கொண்டு அழுதான்.
15 பின்பு தன் சகோதரர் யாவரையும் முத்தஞ்
செய்து, அவர்களையும் கட்டிக்கொண்டு அழு
தான். அதற்குப்பின் அவன் சகோதரர் அவ
னோடே சம்பாஷித்தார்கள்.
16 யோசேப்பின் சகோதரர் வந்தார்கள் என்
கிற சமாசாரம் பார்வோன் அரமனையில் பிர
சித்தமானபோது, [9]பார்வோனும் அவனு
டைய ஊழியக்காரரும் சந்தோஷம் அடைந்
17 தார்கள். பார்வோன் யோசேப்பை நோக்கி:
நீ உன் சகோதரரோடே சொல்லவேண்டியது
என்னவென்றால்: உங்கள் கழுதைகளின்
மேல் பொதியேற்றிக்கொண்டு புறப்பட்டு,
18 கானான்தேசத்துக்குப் போய், உங்கள் தகப்
பனையும் உங்கள் குடும்பத்தாரையும் கூட்டிக்

1 எசா. 40. 2. 2 கொ. 2. 7
2 ஆதி. 50. 20. சங். 105 16, 17. அப். 4. 27, 28
3 1 ராஜா. 11. 14. சங். 18. 50
4 யோ. 19. 11
5 ஆதி. 41. 43. நியா. 17. 10. யோபு 29. 16
6 ஆதி. 47. 1, 4. யாத். 8. 22
7 லூ. 24. 39
8 அப். 7. 14
9 ஆதி. 41. 37
10 ஆதி. 27. 28. எண். 18. 12, 29. உபா. 32. 14
11 எண். 3. 16
12 ஆதி. 43. 34
13 யோபு 9. 16; 29. 24. சங். 126. 1. லூ. 24. 11, 41
14 சங். 85. 6
15 ஆதி. 21. 33. 28. 10
16 ஆதி. 31. 42, 48
17 ஆதி. 15. 1. யோபு 33. 15

கொண்டு, என்னிடத்தில் வாருங்கள், நான்
உங்களுக்கு எகிப்துதேசத்தின் நன்மையைத்
தருவேன்; [10]தேசத்தின் கொழுமையைச் சாப்
பிடுவீர்கள். நீங்கள் உங்கள் குழந்தைகளுக் 19
காகவும் உங்கள் மனைவிகளுக்காகவும் வண்டி
களை எகிப்துதேசத்திலிருந்து கொண்டுபோய்,
அவர்களையும் உங்கள் தகப்பனுடனே ஏற்றிக்
கொண்டு வாருங்கள். உங்கள் தட்டுமுட்டு 20
களைக் குறித்துக் கவலைப்படவேண்டாம்;
எகிப்துதேசமெங்குமுள்ள நன்மை உங்களு
டையதாயிருக்கும் என்று சொல்லச்சொல்லி,
உனக்கு நான் இட்ட கட்டளைப்படியே செய்
என்றான். இஸ்ரவேலின் குமாரர் அப்ப 21
டியே செய்தார்கள். யோசேப்பு [11]பார்வோ
னுடைய கட்டளையின்படியே அவர்களுக்கு
வண்டிகளைக் கொடுத்ததுமன்றி, வழிக்கு
ஆகாரத்தையும், அவர்களில் ஒவ்வொருவனுக் 22
கும் மாற்று வஸ்திரங்களையும் கொடுத்தான்;
பென்யமீனுக்கோ முந்நூறு வெள்ளிக்காசை
யும் [12]ஐந்து மாற்று வஸ்திரங்களையும் கொடுத்
தான். அப்படியே தன் தகப்பனுக்குப் பத்துக் 23
கழுதைகளின்மேல் எகிப்தின் உச்சிதமான
பதார்த்தங்களும், பத்துக் கோளிகைக் கழுதை
களின்மேல் தன் தகப்பனுக்காக வழிக்குத்
தானியமும் அப்பமும் மற்றத் தின்பண்டங்க
ளும் ஏற்றி அனுப்பினான். மேலும், நீங்கள் 24
போகும் வழியிலே சண்டை பண்ணிக்கொள்
ளாதிருங்கள் என்று அவன் தன் சகோதரருக்
குச் சொல்லி அனுப்பினான்; அவர்கள் புறப்
பட்டுப்போனார்கள். அவர்கள் எகிப்திலிருந்து 25
போய், கானான்தேசத்திலே தங்கள் தகப்பனா
கிய யாக்கோபினிடத்தில் வந்து: யோசேப்பு 26
உயிரோடிருக்கிறான், அவன் எகிப்துதேசத்
துக்கெல்லாம் அதிபதியாயிருக்கிறான் என்று
அவனுக்கு அறிவித்தார்கள். [13]அவன் இரு
தயம் மூர்ச்சை அடைந்தது; அவன் அவர்களை
நம்பவில்லை. அவர்கள் யோசேப்பு தங்களு 27
டனே சொன்ன வார்த்தைகள் யாவையும்
அவனுக்குச் சொன்னபோதும்; தன்னை ஏற்
றிக்கொண்டு போகும்படி யோசேப்பு அனுப்
பின வண்டிகளை அவன் கண்டபோதும்,
அவர்களுடைய தகப்பனாகிய யாக்கோபின்
[14]ஆவி உயிர்த்தது அப்பொழுது இஸ்ரவேல்: 28
என் குமாரனாகிய யோசேப்பு இன்னும் உயி
ரோடிருக்கிறானே, இது போதும்; நான் மர
ணமடையுமுன்னே போய் அவனைப் பார்ப்
பேன் என்றான்.

இஸ்ரவேல் தனக்கு உண்டான யாவை 46
யும் சேர்த்துக்கொண்டு புறப்பட்டுப் [15]பெ
யெர்செபாவுக்குப் போய், தன் தகப்பனாகிய
ஈசாக்குடைய [16]தேவனுக்குப் பலியிட்டான்.
அன்று இராவிலே தேவன் இஸ்ரவேலுக்குத் 2
[17]தரிசனமாகி: யாக்கோபே, யாக்கோபே
என்று கூப்பிட்டார்; அவன் இதோ, அடி
யேன் என்றான். அப்பொழுது அவர்: நான் 3
தேவன், நான் உன் தகப்பனுடைய தேவன்;
நீ எகிப்துதேசத்துக்குப் போகப் பயப்பட

வேண்டாம்; [1]அங்கே உன்னைப் பெரிய ஜாதி
4 யாக்குவேன். நான் [2]உன்னுடனே எகிப்து
க்கு வருவேன்; [3]நான் உன்னைத் திரும்பவும்
வரப்பண்ணுவேன்; யோசேப்பு தன் கையால்
5 உன் கண்களை [4]மூடுவான் என்று சொன்னார்.
அதற்குப் பின்பு, யாக்கோபு பெயெர்செபா
விலிருந்து பிரயாணம் புறப்பட்டான். இஸ்ர
வேலின் குமாரர் தங்கள் தகப்பனாகிய யாக்
கோபையும் தங்கள் குழந்தைகளையும் தங்கள்
மனைவிகளையும் பார்வோன் அனுப்பின [5]வண்
6 டிகளின்மேல் ஏற்றிக்கொண்டு, தங்கள் ஆடு
மாடுகளையும், தாங்கள் கானான்தேசத்தில் சம்
பாதித்த தங்கள் பொருட்களையும் சேர்த்துக்
கொண்டு, [6]யாக்கோபும் அவன் சந்ததியார்
7 யாவரும் எகிப்துக்குப் போனார்கள். அவன்
தன் குமாரரையும் தன் குமாரரின் குமாரரை
யும் தன் குமாரத்திகளையும் தன் குமாரரின்
குமாரத்திகளையும் தன் சந்ததியார் அனைவரை
யும் எகிப்துக்குத் தன்னோடே அழைத்துக்
கொண்டுபோனான்.
8 எகிப்துக்கு வந்த இஸ்ரவேலரின் [7]நாமங்க
ளாவன: யாக்கோபும் அவனுடைய குமார
ரும்; யாக்கோபுடைய மூத்தகுமாரனான
9 ரூபன். ரூபனுடைய குமாரர் ஆனோக்கு,
10 பல்லூ, எஸ்ரோன், கர்மீ என்பவர்கள். சிமி
யோனுடைய குமாரர் எமுவேல், யாமின்,
ஓகாத், யாகீன், சோகார், கானானியஸ்திரீயின்
11 குமாரனாகிய சவுல் என்பவர்கள். லேவியி
னுடைய குமாரர் கெர்சோன், கோகாத்,
12 மெராரி என்பவர்கள். யூதாவினுடைய குமா
ரர் ஏர், ஓனான், சேலா, பாரேஸ், சேரா
என்பவர்கள்; அவர்களில் ஏரும் ஓனானும்
கானான்தேசத்தில் இறந்துபோனார்கள்; பாரே
சுடைய குமாரர் எஸ்ரோன், ஆமூல் என்ப
13 வர்கள். இசக்காருடைய குமாரர் தோலா,
14 பூவா, யோபு, சிம்ரோன் என்பவர்கள். செபு
லோனுடைய குமாரர் செரேத், ஏலோன்,
15 யக்லேல் என்பவர்கள். இவர்கள் லேயாளின்
சந்ததியார்; அவள் இவர்களையும் தீனாள் என்
னும் ஒரு குமாரத்தியையும் பதான்அராமிலே
யாக்கோபுக்குப் பெற்றாள்; அவள் குமாரரும்
அவள் குமாரத்திகளுமாகிய எல்லாரும் முப்
16 பத்து மூன்றுபேர். காத்துடைய குமாரர்
சிப்பியோன், அகி, சூனி, எஸ்போன், ஏரி,
17 அரோதி, அரேலி என்பவர்கள். ஆசேரு
டைய குமாரர் இம்னா, இஸ்வா, இஸ்வி, பெ
ரீயா என்பவர்கள்; இவர்களுடைய சகோதரி
சேராக்கு என்பவள்; பெரீயாவின் குமாரர்
18 ஏபேர், மல்கியேல் என்பவர்கள். இவர்கள்
லாபான் தன் குமாரத்தியாகிய லேயாளுக்குக்
கொடுத்த சில்பாளுடைய பிள்ளைகள்; அவள்
இந்தப் பதினாறுபேரையும் யாக்கோபுக்குப்
19 பெற்றாள். யாக்கோபின் மனைவியாகிய ராகே
லுடைய குமாரர் யோசேப்பு, பென்யமீன்
20 என்பவர்கள். யோசேப்புக்கு எகிப்துதேசத்
திலே மனாசேயும் எப்பிராயீமும் பிறந்தார்கள்;
அவர்களை ஓன் பட்டணத்து ஆசாரியனாகிய
போத்திபிராவின் குமாரத்தியாகிய ஆஸ்நாத்
அவனுக்குப் பெற்றாள். பென்யமீனுடைய 21
குமாரர் பேலா, பெகேர், அஸ்பேல், கேரா,
நாகமான், ஏகி, ரோஷ், முப்பீம், உப்பீம்,
ஆர்து என்பவர்கள். ராகேல் யாக்கோபுக்கு 22
பெற்ற குமாரராகிய இவர்கள் எல்லாரும்
பதினாலுபேர். தாணுடைய குமாரன் உசீம் 23
என்பவன். நப்தலியின் குமாரர் யாத்சியேல், 24
கூனி, எத்செர், சில்லேம் என்பவர்கள்.
இவர்கள் லாபான் தன் குமாரத்தியாகிய ராகே 25
லுக்குக் கொடுத்த பில்காள் யாக்கோபுக்குப்
பெற்றவர்கள்; இவர்கள் எல்லாரும் ஏழுபேர்.
யாக்கோபுடைய குமாரரின் மனைவிகளைத் 26
தவிர, அவனுடைய கர்ப்பப்பிறப்பாயிருந்து
அவன் மூலமாய் எகிப்திலே வந்தவர்கள் எல்
லாரும் [8]அறுபத்தாறுபேர். யோசேப்புக்கு 27
எகிப்திலே பிறந்த குமாரர் இரண்டுபேர்; ஆக
எகிப்துக்குப்போன யாக்கோபின் குடும்பத்
தார் [9]எழுபதுபேர்.
கோசேன் நாட்டிலே தன்னை யோசேப்பு 28
சந்திக்க வரும்படி சொல்ல, யூதாவைத்
தனக்கு முன்னாக அவனிடத்தில் யாக்கோபு
அனுப்பினான்; அவர்கள் கோசேனிலே சேர்ந்
தார்கள். யோசேப்பு தன் இரதத்தை ஆயத் 29
தப்படுத்தி, அதின்மேல் ஏறி, தன் தகப்ப
னாகிய இஸ்ரவேலைச் சந்திக்கும்படி போய்,
அவனைக் கண்டு, [10]அவனுடைய கழுத்தைக்
கட்டிக்கொண்டு, வெகுநேரம் அவன் கழுத்
தை விடாமல் அழுதான். அப்பொழுது இஸ் 30
ரவேல் யோசேப்பைப் பார்த்து: நீ இன்னும்
உயிரோடிருக்கிறாயே, நான் உன் முகத்தைக்
கண்டேன், [11]எனக்கு இப்போது மரணம் வந்
தாலும் வரட்டும் என்றான். பின்பு, யோ 31
சேப்பு தன் சகோதரரையும் தன் தகப்பனு
டைய குடும்பத்தாரையும் நோக்கி: நான் பார்
வோனிடத்துக்குப் போய், கானான் தேசத்தி
லிருந்து என் சகோதரரும் என் தகப்பன்
குடும்பத்தாரும் என்னிடத்தில் வந்திருக்கிறார்
கள். அவர்கள் மேய்ப்பர்கள், ஆடுமாடுகளை 32
மேய்க்கிறது அவர்கள் தொழில்; அவர்கள்
தங்கள் ஆடுமாடுகளையும் தங்களுக்கு உண்
டான எல்லாவற்றையும் கொண்டுவந்தார்கள்
என்று அவருக்குச் சொல்லுகிறேன். பார் 33
வோன் உங்களை அழைத்து, உங்கள் தொழில்
என்ன என்று கேட்டால், நீங்கள், கோசேன் 34
நாட்டிலே குடியிருக்கும்படி, அவனை நோக்கி:
எங்கள் பிதாக்களைப்போல, உமது அடியா
ராகிய நாங்களும் எங்கள் சிறுவயதுமுதல்
இதுவரைக்கும் மேய்ப்பர்களா யிருக்கிறோம்
என்று சொல்லுங்கள்; மேய்ப்பர்கள் எல்லா
ரும் எகிப்தியருக்கு [12]அருவருப்பாயிருக்கிறார்
கள் என்றான்.

**47** யோசேப்பு [13]பார்வோனிடத்தில் போய்:
1 என் தகப்பனும் என் சகோதரரும், தங்கள்
ஆடுமாடுகளோடும் தங்களுக்கு உண்டான எல்
லாவற்றோடுங்கூடக் கானான்தேசத்திலிருந்து
வந்தார்கள்; இப்பொழுது கோசேன் நாட்டில்

[1] ஆதி. 12. 2. உபா. 26. 5
[2] ஆதி. 15. 16. யாத். 3. 8
[3] ஆதி. 50. 1
[4] அப். 7. 15
[5] ஆதி. 45. 19, 21
[6] உபா. 26. 5. யோசு. 24. 4. சங். 105. 23. ஏசா. 52. 4
[7] யாத். 1. 1; 6. 14
[8] யாத். 1. 5
[9] உபா. 10. 22. அப். 7. 14
[10] ஆதி. 45. 14
[11] லூ. 2. 29, 30
[12] யாத். 8. 26
[13] ஆதி. 46. 31

2 இருக்கிறார்கள் என்று சொல்லி; தன் சகோ
தரரில் ஐந்துபேரைப் பார்வோனுக்கு முன்
3 பாகக் கொண்டுபோய் [1]நிறுத்தினான். பார்
வோன் அவனுடைய சகோதரரை நோக்கி:
உங்கள் [2]தொழில் என்ன என்று கேட்டான்;
அதற்கு அவர்கள்: உமது அடியாராகிய நாங்க
ளும் எங்கள் பிதாக்களும் [3]மந்தை மேய்க்கிற
வர்கள் என்று பார்வோனிடத்தில் சொன்
4 னதுமன்றி, கானான்தேசத்திலே பஞ்சம்
கொடிதாயிருக்கிறது; உமது அடியாரின் மந்
தைகளுக்கு மேய்ச்சல் இல்லாமையால், இத்
தேசத்திலே [4]தங்கவந்தோம்; உமது அடியா
ராகிய நாங்கள் கோசேன் நாட்டிலே குடி
யிருக்கும்படி தயவுசெய்யவேண்டும் என்று
5 வேண்டிக்கொண்டார்கள். அப்பொழுது பார்
வோன் யோசேப்பை நோக்கி: உன் தகப்ப
னும் உன் சகோதரரும் உன்னிடத்தில் வந்
6 திருக்கிறார்களே. எகிப்துதேசம் உனக்கு
முன்பாக இருக்கிறது; தேசத்திலுள்ள நல்ல
இடத்திலே உன் தகப்பனையும் உன் சகோ
தரரையும் குடியேறும்படி செய்; அவர்கள்
கோசேன் நாட்டிலே குடியிருக்கலாம்; அவர்
களுக்குள்ளே திறமையுள்ளவர்கள் உண்டெ
ன்று உனக்குத் தெரிந்திருந்தால், அவர்களை
என் ஆடுமாடுகளை விசாரிக்கிறதற்குத் [5]தலைவ
7 ராக வைக்கலாம் என்றான். பின்பு, யோ
சேப்பு தன் தகப்பனாகிய யாக்கோபை அழைத்
துக்கொண்டுவந்து, அவனைப் பார்வோனுக்கு
முன்பாக நிறுத்தினான். யாக்கோபு பார்
8 வோனை [6]ஆசீர்வதித்தான். பார்வோன் யாக்
கோபை நோக்கி: உமக்கு வயது என்ன என்று
9 கேட்டான். அதற்கு யாக்கோபு: [7]நான் பர
தேசியாய்ச் சஞ்சரித்த நாட்கள் நூற்று முப்
பது வருஷம்; என் [8]ஆயுசுநாட்கள் கொஞ்ச
மும் சஞ்சலமுள்ளதுமாயிருக்கிறது; அவை
கள் பரதேசிகளாய்ச் சஞ்சரித்த என் பிதாக்
களுடைய [9]ஆயுசு நாட்களுக்கு வந்து எட்ட
வில்லை என்று பார்வோனுடனே சொன்னான்.
10 பின்னும் யாக்கோபு பார்வோனை ஆசீர்வ
தித்து, அவன் சமுகத்தினின்று புறப்பட்டுப்
11 போனான். பார்வோன் கட்டளையிட்டபடி
யே, யோசேப்பு தன் தகப்பனுக்கும் தன்
சகோதரருக்கும் எகிப்துதேசத்திலே நல்ல நா
டாகிய [10]ராமசேஸ் என்னும் நாட்டிலே சுதந்
தரம் கொடுத்து, அவர்களைக் குடியேற்றினான்.
12 யோசேப்பு தன் தகப்பனையும் தன் சகோதர
ரையும் தன் தகப்பனுடைய குடும்பத்தார்
அனைவரையும், அவரவர்கள் குடும்பத்திற்குத்
தக்கதாய் ஆகாரம் கொடுத்து ஆதரித்துவந்தான்.
13 பஞ்சம் மிகவும் கொடிதாயிருந்தது; தேச
மெங்கும் [11]ஆகாரம் கிடையாமற்போயிற்று;
எகிப்துதேசமும் கானான்தேசமும் பஞ்சத்தி
14 னாலே மெலிந்துபோயிற்று. யோசேப்பு
எகிப்துதேசத்திலும் கானான்தேசத்திலுமுள்ள
[12]பணத்தையெல்லாம் தானியம் கொண்டவர்
களிடத்தில் வாங்கி, அதைப் பார்வோன்
அரமனையிலே கொண்டுபோய்ச் சேர்த்தான்.

எகிப்துதேசத்திலும் கானான்தேசத்திலுமுள்ள 15
பணம் செலவழிந்தபோது, எகிப்தியர் எல்லா
ரும் யோசேப்பினிடத்தில் வந்து: எங்களுக்கு
ஆகாரம் தாரும்; பணம் இல்லை, அதினால்
நாங்கள் உமது சமுகத்தில் சாகவேண்டுமோ
என்றார்கள். அதற்கு யோசேப்பு: உங்களி 16
டத்தில் பணம் இல்லாமற்போனால், உங்கள்
ஆடுமாடுகளைக் கொடுங்கள்; அவைகளுக்குப்
பதிலாக உங்களுக்குத் தானியம் கொடுக்கி
றேன் என்றான். அவர்கள் தங்கள் ஆடுமாடு 17
முதலானவைகளை யோசேப்பினிடத்தில்
கொண்டுவந்தார்கள்; யோசேப்பு குதிரைகளை
யும் ஆடுகளையும் மாடுகளையும் கழுதைகளையும்
வாங்கிக்கொண்டு, அந்த வருஷம் அவர்க
ளுடைய ஆடுமாடு முதலான எல்லாவற்றிற்
கும் பதிலாக அவர்களுக்கு ஆகாரம் கொடுத்து,
அவர்களை ஆதரித்தான். அந்த வருஷம் 18
முடிந்தபின், மறு வருஷத்திலே அவர்கள்
அவனிடத்தில் வந்து: பணமும் செலவழிந்து
போயிற்று; எங்கள் ஆடுமாடு முதலானவை
களும் எங்கள் ஆண்டவனைச் சேர்ந்தது; எங்
கள் சரீரமும் எங்கள் நிலமுமே ஒழிய, எங்
கள் ஆண்டவனுக்கு முன்பாக மீதியானது
ஒன்றும் இல்லை; இது எங்கள் ஆண்டவனுக்
குத் தெரியாத காரியம் அல்ல. நாங்களும் 19
எங்கள் நிலங்களும் உம்முடைய கண்களுக்கு
முன்பாக அழிந்துபோகலாமா? நீர் எங்களை
யும் எங்கள் நிலங்களையும் வாங்கிக்கொண்டு,
ஆகாரம் கொடுக்கவேண்டும்; நாங்களும் எங்
கள் நிலங்களும் பார்வோனுக்கு ஆதீனமாயி
ருப்போம்; நாங்கள் சாகாமல் உயிரோடிருக்
கவும், நிலங்கள் பாழாய்ப் போகாமலிருக்கவும்,
எங்களுக்கு விதைத் தானியத்தைத் தாரும்
என்றார்கள். அப்படியே எகிப்தியர் தங்களுக் 20
குப் பஞ்சம் மேலிட்டபடியால் அவரவர்
தங்கள் தங்கள் வயல் நிலங்களை விற்றார்கள்;
யோசேப்பு எகிப்தின் நிலங்கள் யாவையும்
பார்வோனுக்காகக் கொண்டான்; இவ்வித
மாய் அந்தப் பூமி பார்வோனுடையதாயிற்று.
மேலும் அவன் எகிப்தின் ஒரு எல்லைமுதல் 21
மறு எல்லைவரைக்குமுள்ள ஜனங்களை அந்தந்
தப் பட்டணங்களில் குடிமாறிப் போகப் பண்
ணினான். ஆசாரியருடைய நிலத்தைமாத்திரம் 22
அவன் கொள்ளவில்லை; அது பார்வோனாலே
ஆசாரியருக்கு மானியமாகக் கொடுக்கப்பட்
டிருந்ததினாலும், பார்வோன் அவர்களுக்குக்
கொடுத்த மானியத்தினாலே அவர்கள் ஜீவனம்
பண்ணிவந்ததினாலும், அவர்கள் தங்கள் நிலத்
தை விற்கவில்லை. பின்னும் யோசேப்பு 23
ஜனங்களை நோக்கி: இதோ, இன்று உங்களை
யும் உங்கள் நிலங்களையும் பார்வோனுக்காக
வாங்கிக்கொண்டேன்; இதோ, உங்களுக்குக்
கொடுக்கப்படுகிற விதைத் தானியம், இதை
நிலத்தில் விதையுங்கள். விளைவில் ஐந்தில் 24
ஒருபங்கைப் பார்வோனுக்குக்கொடுக்கவேண்
டும்; மற்ற நாலு பங்கும் வயலுக்கு விதையாக
வும் உங்களுக்கும் உங்கள் குடும்பத்தாருக்கும்

[1] அப். 7. 13
[2] யோனா 1. 8
[3] ஆமோ. 7. 14
[4] உபா. 26. 5. சங். 105. 23. ஏசா. 52. 4
[5] 1 நாளா. 27. 29. நீதி. 22. 29
[6] 1 சாமு. 15. 30. 1 நாளா. 29. 20. 1 பே. 2. 17
[7] சங். 39. 12. எபி. 11. 9, 13
[8] யோபு 14. 1
[9] ஆதி. 25. 7; 35. 28
[10] யாத். 1. 11
[11] ஆதி. 41. 30, 31. அப். 7. 11
[12] ஆதி. 41. 56

உங்கள் குழந்தைகளுக்கும் ஆகாரமாகவும் உங்
25 களுடையதாயிருக்கட்டும் என்றான். அப்பொ
ழுது அவர்கள்: நீர் எங்கள் பிராணனைக் காப்
பாற்றினீர்; எங்கள் ஆண்டவனுடைய கண்க
ளில் எங்களுக்குத் தயவு கிடைக்கவேண்டும்;
நாங்கள் பார்வோனுக்கு அடிமைகளாயிருக்கி
26 றோம் என்றார்கள். ஐந்தில் [1]ஒன்று பார்
வோனுக்குச் சேரும் வாரம் என்று யோசேப்பு
இட்ட கட்டளைப்படி எகிப்துதேசத்திலே
இந்நாள்வரைக்கும் நடந்துவருகிறது; ஆசாரி
யரின் நிலம்மாத்திரம் பார்வோனைச் சேராமல்
27 நீங்கலாயிருந்தது. இஸ்ரவேலர் எகிப்துதேசத்
திலுள்ள கோசேன் நாட்டிலே குடியிருந்தார்
கள்; அங்கே நிலங்களைக் கையாட்சி செய்து,
[2]மிகவும் பலுகிப் பெருகினார்கள்.
28 யாக்கோபு எகிப்துதேசத்திலே பதினேழு
வருஷம் இருந்தான்; யாக்கோபுடைய ஆயுசு
29 நாட்கள் நூற்றுநாற்பத்தேழு வருஷம். இஸ்
ரவேல் [3]மரணமடையும் காலம் சமீபித்தது.
அப்பொழுது அவன் தன் குமாரனாகிய யோ
சேப்பை வரவழைத்து, அவனை நோக்கி: என்
மேல் உனக்குத் தயவுண்டானால், உன் கையை
[4]என் தொடையின்கீழ் வைத்து என்மேல்
பட்சமும் உண்மையுமுள்ளவனாயிரு; என்னை
எகிப்திலே அடக்கம் பண்ணாதிருப்பாயாக.
30 நான் என் பிதாக்களோடே [5]படுத்துக்கொள்
ளவேண்டும்; ஆகையால், நீ என்னை எகிப்தி
லிருந்து எடுத்துக்கொண்டுபோய், அவர்களை
அடக்கம் பண்ணியிருக்கிற நிலத்திலே என்
னையும் அடக்கம் பண்ணு என்றான். அதற்கு
அவன்: உமது சொற்படி செய்வேன் என்
31 றான். அப்பொழுது அவன்: எனக்கு ஆணை
யிட்டுக்கொடு என்றான்; அவனுக்கு ஆணை
யிட்டுக் கொடுத்தான். அப்பொழுது இஸ்ர
வேல் கட்டிலின் தலைமாட்டிலே [6]சாய்ந்து
தொழுதுகொண்டான்.

**48** அதற்குப் பின்பு, உம்முடைய தகப்பனா
ருக்கு வருத்தமாயிருக்கிறது என்று யோசேப்
புக்குச் சொல்லப்பட்டது. அப்பொழுது
அவன் தன் இரண்டு குமாரராகிய மனாசே
யையும் எப்பிராயீமையும் தன்னோடேகூடக்
2 கொண்டுபோனான். இதோ, உம்முடைய
குமாரனாகிய யோசேப்பு உம்மிடத்தில் வந்தி
ருக்கிறார் என்று யாக்கோபுக்கு அறிவிக்கப்
பட்டது; அப்பொழுது இஸ்ரவேல் தன்னைத்
திடப்படுத்திக்கொண்டு, கட்டிலின்மேல் உட்
3 கார்ந்தான். யாக்கோபு யோசேப்பை நோக்கி:
[7]சர்வவல்லமையுள்ள தேவன் கானான்தேசத்
திலுள்ள லூஸ் என்னும் இடத்தில் எனக்குத்
4 தரிசனமாகி, என்னை ஆசீர்வதித்து: நான்
உன்னைப் பலுகவும் பெருகவும் பண்ணி,
உன்னைப் பல ஜனக்கூட்டமாக்கி, உனக்குப்
பின்வரும் உன் சந்ததிக்கு இந்தத் தேசத்தை
[8]நித்திய சுதந்தரமாகக் கொடுப்பேன் என்று
5 என்னோடே சொன்னார். நான் உன்னிடத்
தில் எகிப்துக்கு வருமுன்னே உனக்கு [9]எகிப்
துதேசத்தில் பிறந்த உன் இரண்டு குமாரரும்
என்னுடைய குமாரர்; ரூபன் சிமியோன்
என்பவர்களைப்போல, எப்பிராயீமும் மனாசே
யும் என்னுடையவர்கள். இவர்களுக்குப் 6
பின், நீ பெறும் பிள்ளைகள் உன்னுடையவர்
கள்; அவர்கள் தங்கள் தங்கள் சகோதரருடைய
பேரால் அழைக்கப்பட்டு அவர்களுக்குரிய
சுதந்தரத்தில் பங்கு பெறுவார்கள். நான் 7
பதானை விட்டு வருகையில், கானான்தேசத்
தில் எப்பிராத்தாவுக்குக் கொஞ்சம் தூரம்
இருக்கும்போது, வழியிலே [10]ராகேல் என்
னண்டையில் மரணமடைந்தாள்; அவளை
அங்கே பெத்லெகேம் என்னும் எப்பிராத்தா
ஊருக்குப் போகிற வழியிலே அடக்கம்பண்
ணினேன் என்றான். இஸ்ரவேல் யோசேப் 8
பின் குமாரரைப் பார்த்து: இவர்கள் யார்
என்று கேட்டான். யோசேப்பு தன் தகப்பனை 9
நோக்கி: இவர்கள் இவ்விடத்தில் தேவன்
எனக்கு அருளின குமாரர் என்றான். அப்
பொழுது அவன்: நான் அவர்களை [11]ஆசீர்வ
திக்கும்படி அவர்களை என் கிட்டக் கொண்டு
வா என்றான். முதிர்வயதினால் இஸ்ரவே 10
லின் கண்கள் [12]மங்கலாயிருந்தபடியால்,
அவன் நன்றாய்ப் பார்க்கக் கூடாதிருந்தது.
அவர்களை அவனண்டையிலே சேரப்பண்
ணினான்; அப்பொழுது அவன் அவர்களை
முத்தஞ்செய்து அணைத்துக்கொண்டான்.
இஸ்ரவேல் யோசேப்பை நோக்கி: [13]உன் 11
முகத்தைக் காண்பேன் என்று நான் நினைக்க
வில்லை; ஆனாலும், இதோ, உன் சந்ததி
யையும் காணும்படி தேவன் எனக்கு அருள்
செய்தார் என்றான். அப்பொழுது அவனு 12
டைய முழங்கால்கள் நடுவே இருந்த பிள்ளை
களை யோசேப்பு பின்னிடப்பண்ணி, அவ
னுடைய முகத்துக்கு முன்பாகத் தரைமட்டும்
குனிந்து வணங்கினான். பின்பு, யோசேப்பு 13
அவ்விருவரையும் கொண்டுவந்து, எப்பிராயீ
மைத் தன் வலதுகையினாலே இஸ்ரவேலின்
இடதுகைக்கு நேராகவும், மனாசேயைத் தன்
இடதுகையினாலே இஸ்ரவேலின் வலதுகை
க்கு நேராகவும் விட்டான். அப்பொழுது 14
இஸ்ரவேல், மனமறிய, தன் வலதுகையை
நீட்டி, இளையவனாகிய எப்பிராயீமுடைய
தலையின்மேலும், மனாசே மூத்தவனாயிருந்
தும், தன் இடதுகையை மனாசேயுடைய தலை
யின்மேலும் வைத்தான். அவன் யோசேப் 15
பை [14]ஆசீர்வதித்து: என் பிதாக்களாகிய ஆபிர
காமும் ஈசாக்கும் வழிபட்டு வணங்கிய தேவ
னும், நான் பிறந்த நாள்முதல் இந்நாள்வரைக்
கும் என்னை ஆதரித்துவந்த தேவனும், எல் 16
லாத் தீமைக்கும் [15]நீங்கலாக்கி என்னை மீட்ட
தூதனுமானவர் இந்தப் பிள்ளைகளை ஆசீர்வ
திப்பாராக, [16]என் பேரும் என் பிதாக்களாகிய
ஆபிரகாம் ஈசாக்கு என்பவர்களின் பேரும்
இவர்களுக்கு இடப்படக்கடவது; பூமியில்
இவர்கள் மிகுதியாய்ப் பெருகக்கடவர்கள்
என்றான். தகப்பன் தன் வலதுகையை எப் 17
பிராயீமுடைய தலையின்மேல் வைத்ததை

[1] எஸ்றா 7. 24
[2] யாத். 1. 7, 12. உபா. 10. 22. நெகே. 9. 23
[3] உபா. 31. 14. 1 இரா. 2. 1
[4] ஆதி. 24. 2
[5] ஆதி. 50. 5-13. எபி. 11. 22
[6] 1 இரா. 1. 47. எபி. 11. 21
[7] ஆதி. 28. 13, 19; 35. 6.
[8] ஆதி. 17. 8. உபா. 32. 8. ஆமோஸ் 9. 14, 15
[9] யோசு. 13. 7
[10] ஆதி. 35. 9, 16, 19
[11] ஆதி. 27. 4. எபி. 11. 21
[12] ஏசா. 6. 10. 59. 1
[13] ஆதி. 45. 26
[14] எபி. 11. 21
[15] ஆதி. 28. 15. சங். 34. 22
[16] ஆமோஸ் 9. 12. அப். 15. 17

யோசேப்பு கண்டு, அது தனக்குப் பிரியமில்
லாதபடியால், எப்பிராயீமுடைய தலையின்
மேல் இருந்த தன் தகப்பனுடைய கையை
மனாசேயினுடைய தலையின்மேல் வைக்கும்
18 படிக்கு எடுத்து: என் தகப்பனே, அப்படி
யல்ல இவன் மூத்தவன், இவனுடைய தலை
யின்மேல் உம்முடைய வலதுகையை வைக்க
19 வேண்டும் என்றான். அவன் தகப்பனோ
தடுத்து: அது எனக்குத் தெரியும், என் மக
னே, எனக்குத் தெரியும்; இவனும் ஒரு ஜனக்
கூட்டமாவான், இவனும் பெருகுவான்; [1]இவ
னுடைய தம்பியோ இவனிலும் அதிகமாய்ப்
பெருகுவான்; அவனுடைய சந்ததியார் திர
20 ளான ஜனங்களாவார்கள் என்றான். இவ்வி
தமாக அவன் அன்றைத்தினம் அவர்களை
ஆசீர்வதித்து: தேவன் உன்னை எப்பிராயீ
மைப்போலவும் மனாசேயைப்போலவும் ஆக்
குவாராக என்று [2]இஸ்ரவேலர் உன்னை முன்
னிட்டு வாழ்த்துவார்கள் என்று சொல்லி,
எப்பிராயீமை மனாசேக்கு முன்னே வைத்
21 தான். பின்பு, இஸ்ரவேல் யோசேப்பை
நோக்கி: இதோ, நான் மரணமடையப்போ
கிறேன்; [3]தேவன் உங்களோடே இருப்பார்;
அவர் உங்கள் பிதாக்களின் தேசத்துக்கு உங்
களைத் திரும்பவும் போகப்பண்ணுவார் என்
22 றும், உன் [4]சகோதரருக்குக் கொடுத்ததைப்
பார்க்கிலும், நான் என் பட்டயத்தாலும் என்
வில்லினாலும் [5]எமோரியர் கையிலிருந்து சம்
பாதித்த ஒரு நிலத்தை உனக்கு அதிகமான
பங்காகக் கொடுத்தேன் என்றும் சொன்னான்.

49 யாக்கோபு தன் குமாரரை அழைத்து: நீங்
கள் கூடிவாருங்கள், [6]கடைசிநாட்களில் உங்
களுக்கு நேரிடும் காரியங்களை அறிவிப்பேன்.
2 யாக்கோபின் குமாரரே, கூடிவந்து கேளுங்
கள்; உங்கள் தகப்பனாகிய இஸ்ரவேலுக்குச்
3 செவிகொடுங்கள். ரூபனே, நீ என் சேஷ்ட
புத்திரன்; நீ என் சத்துவமும், என் [7]முதற்
பெலனுமானவன்; நீ மேன்மையில் பிரதான
4 மும் வல்லமையில் விசேஷமுமானவன். தண்
ணீரைப்போல [8]தளம்பினவனே, நீ மேன்
மை அடையமாட்டாய்; [9]உன் தகப்பனுடைய
மஞ்சத்தின்மேல் ஏறினாய்; நீ அதைத் தீட்டுப்
படுத்தினாய்; என் படுக்கையின்மேல் ஏறினா
5 னே. சிமியோனும், [10]லேவியும் ஏக சகோத
ரர்; அவர்களுடைய பட்டயங்கள் கொடுமை
6 யின் கருவிகள். என் ஆத்துமாவே, [11]அவர்
களுடைய இரகசிய ஆலோசனைக்கு உடன்
படாதே; என் மேன்மையே, அவர்கள் கூட்
டத்தில் நீ சேராதே; அவர்கள் தங்கள் கோபத்
தினாலே ஒரு புருஷனைக் கொன்று, தங்கள்
அகங்காரத்தினாலே அரண்களை நிர்மூலமாக்கி
7 னார்களே. உக்கிரமான அவர்கள் கோபமும்
கொடுமையான அவர்கள் மூர்க்கமும் சபிக்கப்
படக்கடவது; யாக்கோபிலே [12]அவர்களைப்
பிரியவும், இஸ்ரவேலிலே அவர்களைச் சிதற
8 வும் பண்ணுவேன். யூதாவே, [13]சகோதரரால்
புகழப்படுபவன் நீயே; உன் கரம் உன் சத்
துருக்களுடைய பிடரியின்மேல் இருக்கும்;
உன் தகப்பனுடைய புத்திரர் உன்முன் [14]பணி
வார்கள். யூதா [15]பாலசிங்கம், நீ இரை கவர்ந்து 9
கொண்டு ஏறிப்போனாய், என் மகனே, சிங்
கம்போலும் கிழச்சிங்கம்போலும் மடங்கிப்
படுத்தான்; அவனை எழுப்புகிறவன் யார்?
*சமாதான கர்த்தர் வருமளவும் [16]செங்கோல் 10
யூதாவைவிட்டு நீங்குவதும் இல்லை, [17]நியாயப்
பிரமாணிக்கன் [18]அவன் பாதங்களைவிட்டு ஒழி
வதும் இல்லை; [19]ஜனங்கள் அவரிடத்தில் சேரு
வார்கள். அவன் தன் கழுதைக் குட்டியைத் 11
[20]திராட்சச்செடியிலும், தன் கோளிகைக் கழு
தையின் குட்டியை நற்குல திராட்சச்செடியி
லும் கட்டுவான்; திராட்சரசத்திலே தன் வஸ்தி
ரத்தையும், திராட்சப்பழங்களின் இரத்தத்தி
லே தன் அங்கியையும் தோய்ப்பான். அவன் 12
கண்கள் திராட்சரசத்தினால் சிவப்பாயும்,
அவன் பற்கள் பாலினால் வெண்மையாயும்
இருக்கும். செபுலோன் [21]கடல்துறை அரு 13
கே குடியிருப்பான்; அவன் கப்பல் துறை
முகமாய் இருப்பான்; அவன் எல்லை சீதோன்
வரைக்கும் இருக்கும். இசக்கார் இரண்டு 14
பொதியின் நடுவே படுத்துக்கொண்டிருக்கிற
பலத்த கழுதை. அவன், இளைப்பாறுதல் 15
நல்லது என்றும், நாடு வசதியானது என்றும்
கண்டு, சுமக்கிறதற்குத் தன் தோளைச் சாய்
த்து, பகுதி கட்டுகிறவனானான். தாண் [22]இஸ் 16
ரவேல் கோத்திரங்களில் ஒரு கோத்திரமாகி,
தன் ஜனத்தை நியாயம் விசாரிப்பான். தாண், 17
குதிரையின்மேல் ஏறியிருக்கிறவன் மல்லாந்து
விழும்படியாய் அதின் குதிகாலைக் கடிக்கிற
தற்கு வழியில் கிடக்கிற சர்ப்பத்தைப்போல
வும், பாதையில் இருக்கிற விரியனைப்போல
வும் இருப்பான். **கர்த்தாவே**, [23]உம்முடைய 18
இரட்சிப்புக்குக் காத்திருக்கிறேன். காத் [24]என் 19
பவன்மேல் இராணுவக்கூட்டம் பாய்ந்து வி
ழும்; அவனோ முடிவிலே அதின்மேல் பாய்ந்
து விழுவான். ஆசேருடைய [25]ஆகாரம் கொழு 20
மையாயிருக்கும்; ராஜாக்களுக்கு வேண்டிய
ருசிவர்க்கங்களை அவன் தருவான். நப்தலி 21
[26]விடுதலைபெற்ற பெண்மான்; இன்பமான
வசனங்களை வசனிப்பான். யோசேப்பு கனி 22
தரும் செடி; அவன் நீர் ஊற்றண்டையி
லுள்ள கனிதரும் செடி; அதின் கொடிகள்
சுவரின்மேல் படரும். வில்வீரர் [27]அவனை 23
மனமடிவாக்கி, அவன்மேல் எய்து, அவனைப்
பகைத்தார்கள். ஆனாலும், அவனுடைய [28]வில் 24
உறுதியாய் நின்றது; [29]அவன் புயங்கள் யாக்
கோபுடைய வல்லவரின் கரங்களால் பலத்
தன; இதினால் அவன் [30]மேய்ப்பனும் இஸ்ர
வேலின் [31]கன்மலையும் ஆனான். உன் தகப்ப 25
னுடைய தேவனாலே அப்படியாயிற்று, அவர்
உனக்குத் துணையாயிருப்பார்; சர்வ வல்லவ
ராலே அப்படியாயிற்று, [32]அவர் உயர வா
னத்திலிருந்து உண்டாகும் ஆசீர்வாதங்களினா
லும், கீழே ஆழத்தில் உண்டாகும் ஆசீர்வா
தங்களினாலும், ஸ்தனங்களுக்கும் கர்ப்பங்க

1 எண். 1. 33. உபா. 33. 17. வெளி. 7. 6, 8
2 ரூத் 4. 11, 12
3 ஆதி. 50. 24
4 யோசு. 24. 32. யோ. 4. 5
5 யோசு. 17. 14. ஷ
6 எண். 24. 14. உபா. 4. 30; 33. 1. ஏசா. 2. 2. எரே. 23. 20
7 உபா. 21. 17
8 1 நாளா. 5. 1
9 ஆதி. 35. 22. உபா. 27. 20
10 ஆதி. 29. 33, 34. நீதி. 18. 9
11 சங். 26. 9. நீதி. 1. 15, 16. எபே. 5. 11
12 யோசு. 21. 3
13 ஆதி. 29. 35. சங். 76. 1
14 1 நாளா. 5. 2. வெளி. 3. 9
15 ஓசி. 5. 14. வெளி. 5. 5
* ஷிலோ. சங். 72. 7. ஏசா. 9. 6, 7: 11. 1, 5. எசே. 21. 27. தானி. 9. 25. லூ. 1. 32, 33. எபே. 2. 17. மத். 21. 9
16 எண். 24. 17. எரே. 30. 21
17 சங். 60. 7. ஏசா. 33. 22
18 உபா. 28. 57
19 யோ. 11. 52: 12. 32. லூ. 2. 30, 32
20 2 இரா. 18. 32. ஏசா. 63. 1, 3
21 யோசு. 19. 10
22 நியா. 18. 2
23 சங். 25. 5: 40. 1. ஏசா. 25. 9: 26. 8
24 உபா. 33. 20. 1 நாளா. 5. 18
25 உபா. 33. 24. யோசு. 19. 24
26 உபா. 33. 23
27 ஆதி. 37. 4. சங். 118. 13
28 யோபு 29. 20. சங். 37. 14, 15
29 சங். 18. 32, 34
30 சங். 80. 1
31 ஏசா. 28. 16
32 உபா. 33. 13

ளுக்கும் உரிய ஆசீர்வாதங்களினாலும் உன்னை
26 ஆசீர்வதிப்பார். உன் தகப்பனுடைய ஆசீர்
வாதங்கள் என் பிதாக்களுடைய ஆசீர்வாதங்
களுக்கு மேற்பட்டதாயிருந்து, [1]நித்திய பர்வ
தங்களின் முடிவுமட்டும் எட்டுகின்றன, அவை
கள் யோசேப்புடைய சிரசின்மேலும், தன்
சகோதரரில் விசேஷித்தவனுடைய உச்சந்த
27 லையின்மேலும் வருவதாக. பென்யமீன் [2]பீறு
கிற ஓநாய்; காலையில் தன் இரையைப் பட்
சிப்பான், [3]மாலையில் தான் கொள்ளையிட்
டதைப் பங்கிடுவான் என்றான்.
28 இவர்கள் எல்லாரும் இஸ்ரவேலின் பன்னி
ரண்டு கோத்திரத்தார்; அவர்களுடைய தகப்
பன் அவர்களை ஆசீர்வதிக்கையில், அவர்களுக்
குச் சொன்னது இதுதான்; [4]அவனவனுக்
குரிய ஆசீர்வாதம் சொல்லி அவனவனை ஆசீர்
29 வதித்தான். பின்னும் அவன் அவர்களை நோ
க்கி: நான் என் ஜனத்தாரோடே சேர்க்கப்
படப்போகிறேன்; ஏத்தியனான எப்பெரோ
னின் நிலத்திலுள்ள குகையிலே என்னை என்
[5]பிதாக்களண்டையிலே அடக்கம்பண்ணுங்
30 கள் என்று கட்டளையிட்டு; அந்தக் குகை கா
னான்தேசத்திலே மம்ரேக்கு எதிராக மக்பேலா
என்னப்பட்ட நிலத்தில் இருக்கிறது; அதை
நமக்குச் சொந்தக் கல்லறை பூமியாயிருக்கும்
படி, [6]ஆபிரகாம் ஏத்தியனாகிய எப்பெரோன்
கையில் அதற்குரிய நிலத்துடனே வாங்கினார்.
31 அங்கே ஆபிரகாமையும் அவர் மனைவியாகிய
சாராளையும் அடக்கம்பண்ணினார்கள்; அங்கே
ஈசாக்கையும் அவர் மனைவியாகிய ரெபெக்கா
ளையும் அடக்கம்பண்ணினார்கள்; அங்கே லே
32 யாளையும் அடக்கம்பண்ணினேன். அந்த
நிலமும் அதில் இருக்கிற குகையும் ஏத்தின்
புத்திரர் கையில் கொள்ளப்பட்டது என்றான்.
33 யாக்கோபு தன் குமாரருக்குக் கட்டளையிட்டு
முடிந்தபின்பு, அவன் தன் கால்களைக் கட்டி
லின்மேல் மடக்கிக்கொண்டு [7]ஜீவித்துப்
போய், தன் ஜனத்தாரோடே சேர்க்கப்பட்
50 டான். அப்பொழுது யோசேப்பு தன்
தகப்பனுடைய முகத்தின்மேல் விழுந்து,
2 அழுது, [8]அவனை முத்தஞ்செய்தான். பின்பு,
தன் தகப்பனுக்குச் [9]சுகந்தவர்க்கமிடும்படி
யோசேப்பு தன் ஊழியக்காரராகிய வைத்திய
ருக்குக் கட்டளையிட்டான்; அப்படியே வைத்
தியர் இஸ்ரவேலுக்குச் சுகந்தவர்க்கமிட்டார்
3 கள். சுகந்தவர்க்கமிட நாற்பதுநாள் செல்
லும்; அப்படியே அந்த நாட்கள் நிறைவே
றின. எகிப்தியர் அவனுக்காக [10]எழுபதுநாள்
துக்கங்கொண்டாடினார்கள்.
4 துக்கங்கொண்டாடும் நாட்கள் முடிந்தபின்,
யோசேப்பு பார்வோனின் குடும்பத்தாரை
நோக்கி: உங்கள் கண்களில் எனக்குத் தயவு
கிடைத்ததானால், நீங்கள் பார்வோனுடைய
காது கேட்க அவருக்கு அறிவிக்கவேண்டி
5 யது என்னவென்றால், என் தகப்பனார் என்
னை நோக்கி: [11]இதோ, நான் மரணமடையப்
போகிறேன்; கானான்தேசத்திலே நான் [12]என
க்காக வெட்டிவைத்திருக்கிற கல்லறையிலே
என்னை அடக்கம்பண்ணுவாயாக என்று என்
னிடத்தில் சொல்லி, ஆணையிடுவித்துக்கொ
ண்டார்; நான் அங்கேபோய், என் தகப்பனை
அடக்கம்பண்ணி வருவதற்கு உத்தரவு
கொடுக்க வேண்டிக்கொள்ளுகிறேன் என்று
சொல்லுங்கள் என்றான். அதற்குப் பார் 6
வோன்: உன் தகப்பன் உன்னிடத்தில் ஆணை
யிடுவித்தபடியே, நீ போய், அவரை அடக்கம்
பண்ணிவா என்றான். அப்படியே யோசே 7
ப்பு தன் தகப்பனை அடக்கம்பண்ணப் போ
னான். பார்வோனுடைய அரமனையிலிருந்த
பெரியவர்களாகிய அவனுடைய சகல உத்தி
யோகஸ்தரும் எகிப்து தேசத்திலுள்ள சகல
பெரியோரும், யோசேப்பின் வீட்டார் யாவ 8
ரும், அவன் சகோதரரும், அவன் தகப்பன்
வீட்டாரும் அவனோடேகூடப் போனார்கள்.
தங்கள் குழந்தைகளையும், தங்கள் ஆடுமாடு
களையும் மாத்திரம் கோசேன் நாட்டிலே விட்
டுப் போனார்கள். இரதங்களும் குதிரை வீர 9
ரும் அவனோடே போனதினால், பரிவாரக்
கூட்டம் மிகவும் அதிகமாயிருந்தது. அவர்கள் 10
யோர்தானுக்கு அக்கரையில் இருக்கிற ஆத்
தாத்தின் போர்க்களத்தில் வந்தபோது, அவ்
விடத்திலே பெரும் புலம்பலாகப் [13]புலம்பி
னார்கள். அங்கே தன் தகப்பனுக்காக ஏழு
நாள் துக்கங்கொண்டாடினான். ஆத்தாத்தின் 11
களத்திலே துக்கங்கொண்டாடுகிறதை அத்
தேசத்தின் குடிகளாகிய கானானியர் கண்டு:
இது எகிப்தியருக்குப் பெரிய துக்கங்கொண்
டாடல் என்றார்கள். அதினால் யோர்தானு
க்கு அப்பால் இருக்கிற அந்த ஸ்தலத்திற்கு
*ஆபேல்மிஸ்ராயீம் என்னும் பேர் உண்டா
யிற்று. யாக்கோபின் குமாரர், தங்களுக் 12
குக் கட்டளையிட்டிருந்தபடியே, அவனைக் 13
[14]கானான் தேசத்துக்குக் கொண்டுபோய், ஆபி
ரகாம் மம்ரேக்கு எதிரே இருக்கிற மக்பேலா
என்னும் நிலத்திலே தனக்குச் சொந்தக் கல்
லறை பூமியாக ஏத்தியனாகிய எப்பெரோனி
டத்தில் வாங்கின நிலத்திலுள்ள குகையிலே
அவனை அடக்கம்பண்ணினார்கள்.
யோசேப்பு தன் தகப்பனை அடக்கம்பண் 14
ணினபின்பு, அவனும் அவன் சகோதரரும்,
அவனுடைய தகப்பனை அடக்கம்பண்ணுவ
தற்கு அவனோடேகூடப் போனவர்கள் யாவ
ரும் எகிப்துக்குத் திரும்பினார்கள். தங்கள் 15
தகப்பன் மரணமடைந்ததை யோசேப்பின்
சகோதரர் கண்டு: ஒருவேளை யோசேப்பு [15]நம்
மைப் பகைத்து, நாம் அவனுக்குச் செய்த எல்
லாப் பொல்லாங்குக்காகவும் நமக்குச் சரிக்குச்
சரிக்கட்டுவான் என்று சொல்லி, யோசேப்பி
னிடத்தில் ஆள் அனுப்பி, உம்முடைய சகோ 16
தரர் உமக்குப் [16]பொல்லாங்கு செய்திருந்தா
லும், அவர்கள் செய்த துரோகத்தையும் பாத
கத்தையும் நீர் தயவுசெய்து மன்னிக்கவேண்
டும் என்று உம்முடைய தகப்பனார் மரணம
டையுமுன்னே, உமக்குச் சொல்லும்படி கட்

[1] உபா. 33. 15, 16. ஆப. 3. 6
[2] நியா. 20. 21, 25. எசே. 22. 25, 27
[3] எசே. 39. 8, 10
[4] சே, 12. 6. ழ
[5] ஆதி. 47. 30. 2 சாமு. 19. 37
[6] ஆதி. 23. 16
[7] யோபு 14. 10
[8] 2 இரா. 13. 14
[9] 2 நாளா. 16. 14. மத். 26. 12. மாற். 14. 8; 16. 1. யோ. 12. 7
[10] எண். 20. 29. உபா. 34. 8
[11] ஆதி. 47. 29
[12] ஏசா. 22. 16, மத். 27. 60
[13] 2 சாமு. 1. 17. யோபு 2. 13. அப். 8. 2
* எகிப்தியரின் துக்கம்.
[14] ஆதி. 23. 16; 49. 29. அப். 7. 16
[15] யோபு 15. 21, 22
[16] நீதி. 28. 13

17 டளையிட்டார். ஆகையால், [1]உம்முடைய
தகப்பனுருடைய தேவனுக்கு ஊழியக்கார
ராகிய நாங்கள் செய்த துரோகத்தை மன்னிக்க
வேண்டும் என்று அவனுக்குச் சொல்லச்
சொன்னார்கள். அவர்கள் அதை யோசேப்
புக்குச் சொன்னபோது, அவன் அழுதான்.
18 பின்பு, அவனுடைய சகோதாரும் போய்,
அவனுக்கு முன்பாகத் தாழ [2]விழுந்து: இதோ,
நாங்கள் உமக்கு அடிமைகள் என்றூர்கள்.
19 யோசேப்பு அவர்களை நோக்கி: [3]பயப்படா
20 திருங்கள்; [4]நான் தேவனே; நீங்கள் எனக்குத்
[5]தீமைசெய்ய நினைத்தீர்கள்; [6]தேவனே, இப்
பொழுது நடந்துவருகிறபடியே, வெகு ஜனங்
களை உயிரோடே காக்கும்படிக்கு, அதை நன்
21 மையாக முடியப்பண்ணினர். ஆதலால் பயப்
படாதிருங்கள்; [7]நான் உங்களையும் உங்கள்
குழந்தைகளையும்பராமரிப்பேன் என்று, அவர்
களுக்கு ஆறுதல் சொல்லி, அவர்களோடே
பட்சமாய்ப் பேசினன்.
22 யோசேப்பும் அவன் தகப்பன் குடும்பத்
தாரும் எகிப்திலே குடியிருந்தார்கள். யோ
சேப்பு நூற்றுப்பத்து வருஷம் உயிரோடிருந்
தான். யோசேப்பு எப்பிராயீமுக்குப் பிறந்த 23
[8]மூன்றும் தலைமுறைப் பிள்ளைகளையும் கண்
டான்; மனுசேயின் குமாரனுகிய [9]மாகீரின்
பிள்ளைகளும் யோசேப்பின் மடியில் வளர்க்
கப்பட்டார்கள். யோசேப்பு தன் சகோதாரை 24
நோக்கி: நான் மாணமடையப்போகிறேன்;
ஆனாலும் தேவன் உங்களை நிச்சயமாய்ச் *சந்
தித்து, நீங்கள் இந்தத் தேசத்தை விட்டு, தாம்
ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்
கும் ஆணையிட்டுக் கொடுத்திருக்கிற தேசத்
துக்குப் போகப்பண்ணுவார் என்று சொன்
னதுமன்றி; தேவன் உங்களைச் சந்திக்கும் 25
போது, என் எலும்புகளை இவ்விடத்திலிருந்து
கொண்டுபோவீர்களாக என்றும் சொல்லி;
யோசேப்பு இஸ்ரவேல் புத்திரரிடத்தில்
[10]ஆணையிடுவித்துக்கொண்டான். யோசேப்பு 26
நூற்றுப்பத்து வயதுள்ளவனுய் மரித்தான்.
அவனுக்குச் சுகந்தவர்க்கமிட்டு, எகிப்துதே
சத்தில் அவனை ஒரு பெட்டியிலே வைத்து
வைத்தார்கள்.

[1] ஆதி. 49. 25
[2] ஆதி. 37. 7, 10
[3] ஆதி. 45. 5
[4] உபா. 32. 35. 2 இரா. 5. 7. ரோ. 12. 19. எபி. 10. 30
[5] சங். 56. 5. ஏசா. 10. 7
[6] ஆதி. 45. 5, 7. அப். 3. 13–15
[7] மத். 5. 44
[8] யோபு 42. 16
[9] எண். 32. 39
* கடாட்சித்து. யாத். 3. 16. எபி. 11. 22
[10] யாத். 13. 19. யோசு. 24. 32. அப். 7. 16. எபி. 11. 22

THE BOOK OF EXODUS

# யாத்திராகமம்

1 எகிப்துக்குப் போன இஸ்ரவேலுடைய
குமாரரின் [1]நாமங்களாவன: ரூபன், சிமி
2 யோன், லேவி, யூதா, இசக்கார், செபு
3 லோன், பென்யமீன், தாண், நப்தலி, காத்,
4 ஆசேர் என்பவைகளே. இவர்கள் யாக்கோ
புடனே தங்கள் தங்கள் குடும்பத்தோடுங்கூடப்
5 போனார்கள். யோசேப்போ அதற்கு முன்
னமே எகிப்தில் போயிருந்தான். யாக்கோபின்
கர்ப்பப்பிறப்பாகிய யாவரும் [2]எழுபது பேர்.
6 யோசேப்பும் அவனுடைய சகோதரர் யாவ
ரும், அந்தத் தலைமுறையார் எல்லாரும் [3]மா
7 ணமடைந்தார்கள். இஸ்ரவேல் புத்திரர் [4]மிகு
தியும் பலுகி, ஏராளமாய்ப் பெருகிப் பலத்
திருந்தார்கள்; தேசம் அவர்களால் நிறைந்தது.
8 யோசேப்பை அறியாத [5]புதிய ராஜன் ஒரு
9 வன் எகிப்தில் தோன்றினான். அவன் தன்
ஜனங்களை நோக்கி: இதோ, இஸ்ரவேல்
புத்திரராகிய ஜனங்கள் நம்மிலும் ஏராளமான
வர்களும், பலத்தவர்களுமாய் இருக்கிறார்கள்.
10 அவர்கள் பெருகாதபடிக்கும், ஒரு யுத்தம்
உண்டானால், அவர்களும் நம்முடைய பகைஞ
ரோடே கூடி, நமக்கு விரோதமாக யுத்தம்
பண்ணி, தேசத்தைவிட்டுப் புறப்பட்டுப்போ
காதபடிக்கும், நாம் அவர்களைக்குறித்து [6]ஒரு
11 உபாயம் பண்ணவேண்டும் என்றான். அப்ப
டியே அவர்களைச் சுமைசுமக்கிற வேலையி
னால் [7]ஒடுக்கும்படிக்கு, அவர்கள்மேல் விசார
ணைக்காரரை வைத்தார்கள்; அப்பொழுது
அவர்கள் பார்வோனுக்காகப் பித்தோம், ராம
சேஸ் என்னும் பண்டசாலைப் பட்டணங்க
12 ளைக் கட்டினார்கள். ஆனாலும் அவர்களை
எவ்வளவு ஒடுக்கினார்களோ அவ்வளவாய்
அவர்கள் பலுகிப் பெருகினார்கள். ஆகையால்
அவர்கள் இஸ்ரவேல் புத்திரரைக்குறித்து
13 எரிச்சல் அடைந்தார்கள். எகிப்தியர் இஸ்ர
வேல் புத்திரரைக் கொடுமையாய் வேலை
14 வாங்கினார்கள். சாந்தும் செங்கலுமாகிய
இவைகளைச் செய்யும் வேலையினாலும், வய
லில் செய்யும் சகலவித வேலையினாலும், அவர்
களுக்கு அவர்கள் ஜீவனையும் [8]கசப்பாக்கினார்
கள்; அவர்களைக்கொண்டு செய்வித்த மற்ற
எல்லா வேலைகளிலும், அவர்களைக் கொடுமை
யாய் நடத்தினார்கள்.

[1] ஆதி. 46. 8
[2] உபா. 10. 22
[3] ஆதி. 50. 26. அப். 7. 15
[4] ஆதி. 46. 3. உபா. 26. 5 சங். 105. 24
[5] பிர. 2. 19. அப். 7. 18
[6] சங். 83. 3, 4. யோபு 5. 13. நீதி. 1. 11; 21. 30. அப். 23. 12. 1 கொ. 3. 19. யாக். 3. 15
[7] ஆதி. 15. 13. உபா. 26. 6. சங். 81. 6
[8] எண். 20. 15. ரூத் 1. 20. அப். 7. 19, 34
[9] நீதி. 16. 6. தானி. 3. 18; 6. 13. அப். 5. 29
[10] யோசு. 2. 4. 2 சாமு. 17. 19
[11] நீதி. 11. 18. பிர. 8. 12. ஏசா. 3. 10 எபி. 6. 10
[12] 1 சாமு. 2. 35. 2 சாமு. 7. 11. 1 இரா. 2. 24. சங். 127. 1
[13] அப். 7. 19
[14] யாத். 6. 20
[15] அப். 7. 20. எபி. 11. 23
[16] யாத். 15. 20. எண். 26. 59
[17] அப். 7. 21

அதுவுமன்றி, எகிப்தின் ராஜா, சிப்பிராள் 15
பூவாள் என்னும் பேருடைய எபிரெய மருத்
துவச்சிகளோடே பேசி: நீங்கள் எபிரெய 16
ஸ்திரீகளுக்கு மருத்துவம் செய்யும்போது,
அவர்கள் மணையின்மேல் உட்கார்ந்திருக்கை
யில் பார்த்து, ஆண்பிள்ளையானால் கொன்று
போடுங்கள், பெண்பிள்ளையானால் உயிரோ
டிருக்கட்டும் என்றான். மருத்துவச்சிகளோ, 17
[9]தேவனுக்குப் பயந்ததினால், எகிப்தின் ராஜா
தங்களுக்கு இட்ட கட்டளைப்படி செய்யாமல்,
ஆண்பிள்ளைகளையும் உயிரோடே காப்பாற்றி
னார்கள். அதினால் எகிப்தின் ராஜா மருத்து 18
வச்சிகளை அழைப்பித்து: நீங்கள் ஆண்பிள்ளை
களை உயிரோடே காப்பாற்றுகிற காரியம்
என்ன என்று கேட்டான். அதற்கு மருத்து 19
வச்சிகள் பார்வோனை நோக்கி: [10]எபிரெய
ஸ்திரீகள் எகிப்திய ஸ்திரீகளைப்போல் அல்ல,
அவர்கள் நல்ல பலமுள்ளவர்கள்; மருத்து
வச்சி அவர்களிடத்துக்குப் போகும் முன்
னமே அவர்கள் பிரசவித்தாகும் என்றார்கள்.
இதினிமித்தம் [11]தேவன் மருத்துவச்சிகளுக்கு 20
நன்மை செய்தார். ஜனங்கள் பெருகி மிகுதி
யும் பலத்துப்போனார்கள். மருத்துவச்சிகள் 21
தேவனுக்குப் பயந்ததினால், அவர்களுடைய
[12]குடும்பங்கள் தழைக்கும்படி செய்தார். அப் 22
பொழுது பார்வோன், பிறக்கும் [13]ஆண்பிள்ளை
களையெல்லாம் நதியிலே போட்டுவிடவும்,
பெண்பிள்ளைகளையெல்லாம் உயிரோடே
வைக்கவும் தன் ஜனங்கள் எல்லாருக்கும் கட்
டளையிட்டான்.

லேவியின் [14]குடும்பத்தாரில் ஒருவன் லேவி 2
யின் குமாரத்திகளில் ஒருத்தியை விவாகம்
பண்ணினான். அந்த ஸ்திரீ கர்ப்பவதியாகி, 2
ஒரு ஆண்பிள்ளையைப் பெற்று, அது அழ
குள்ளது என்று கண்டு, [15]அதை மூன்று மாதம்
ஒளித்துவைத்தாள். அவள் அதை அப்புறம் 3
ஒளித்துவைக்கக் கூடாமல், ஒரு நாணற்பெட்
டியை எடுத்து, அதற்குப் பிசினும் கீலும் பூசி,
அதிலே பிள்ளையை வளர்த்தி, நதியோரமாய்
நாணலுக்குள்ளே வைத்தாள். அதற்கு என்ன 4
சம்பவிக்கும் என்பதை அறியும்படி அதின்
[16]தமக்கை தூரத்திலே நின்றுகொண்டிருக்
தாள். அப்பொழுது பார்வோனுடைய [17]குமா 5

ரத்தி நதியில் ஸ்நானம்பண்ண வந்தாள்; அவ
ளுடைய தாதிகள் நதியோரத்தில் உலாவினார்
கள்; அவள் நாணலுக்குள்ளே இருக்கிறபெட்
டியைக் கண்டு, தன் தாதியை அனுப்பி,
அதைக் கொண்டுவரும்படி செய்தாள்.
6 அதைத்திறந்தபோது பிள்ளையைக் கண்டாள்;
பிள்ளை அழுதது; அவள் அதின்மேல் இரக்க
முற்று, இது எபிரெயர் பிள்ளைகளில் ஒன்று
7 என்றாள். அப்பொழுது அதின் தமக்கை
பார்வோனின் குமாரத்தியை நோக்கி: உமக்கு
இந்தப் பிள்ளையை வளர்க்கும்படி எபிரெய
ஸ்திரீகளில் பால்கொடுக்கிற ஒருத்தியை நான்
போய் உம்மிடத்தில் அழைத்துக்கொண்டு
8 வரட்டுமா என்றாள். அதற்குப் பார்வோனு
டைய குமாரத்தி: அழைத்துக்கொண்டு வா
என்றாள். இந்தப் பெண் போய்ப் பிள்ளை
யின் தாயையே அழைத்துக்கொண்டு வந்தாள்.
9 பார்வோனுடைய குமாரத்தி அவளை நோக்கி:
நீ இந்தப் பிள்ளையை எடுத்துக்கொண்டு
போய், அதை எனக்கு [1]வளர்த்திடு, நான்
உனக்குச் சம்பளம் கொடுக்கிறேன் என்றாள்.
அந்த ஸ்திரீ பிள்ளையை எடுத்துக்கொண்டு
10 போய், அதை வளர்த்தாள். பிள்ளை பெரி
தானபோது, அவள் அதைப் பார்வோனு
டைய குமாரத்தியினிடத்தில் கொண்டுபோய்
விட்டாள். அவளுக்கு அவன் [2]குமாரனா
னான். அவள்: அவனை ஜலத்தினின்று எடுத்
தேன் என்று சொல்லி, அவனுக்கு மோசே
என்று பேரிட்டாள்.
11 மோசே [3]பெரியவனானகாலத்தில், அவன்
தன் சகோதரரிடத்தில்போய், அவர்கள் சுமை
சுமக்கிறதைப் பார்த்து, தன் சகோதரராகிய
எபிரெயரில் ஒருவனை ஒரு எகிப்தியன் அடிக்
12 கிறதைக் கண்டு, அங்கும் இங்கும் பார்த்து,
ஒருவரும் இல்லை என்று அறிந்து, எகிப்தி
யனை வெட்டி, அவனை மணலிலே புதைத்
13 துப் போட்டான். அவன் [4]மறுநாளிலும்
வெளியே போனபோது, எபிரெய மனுஷர்
இருவர் சண்டைபண்ணிக்கொண்டிருந்தார்
கள். அப்பொழுது அவன் அநியாயஞ்செய்
கிறவனை நோக்கி: நீ உன் தோழனை அடிக்கி
14 றது என்ன என்று கேட்டான். அதற்கு
அவன்: [5]எங்கள்மேல் உன்னை அதிகாரியாக
வும் நியாயாதிபதியாகவும் ஏற்படுத்தினவன்
யார்? நீ எகிப்தியனைக் கொன்றுபோட்டது
போல, என்னையும் கொன்றுபோட நினைக்
கிறாயோ என்றான். அப்பொழுது மோசே
காரியம் நிச்சயமாக வெளிப்பட்டது என்று
15 பயந்தான். பார்வோன் அந்தக் காரியத்தைக்
கேள்விப்பட்டபோது, மோசேயைக் கொலை
செய்ய வகைதேடினான். [6]மோசே பார்வோ
னிடத்தினின்று தப்பியோடி, மீதியான்தேசத்
தில் போய்த் தங்கி, ஒரு துரவண்டையிலே
16 உட்கார்ந்திருந்தான். மீதியான்தேசத்து ஆசா
ரியனுக்கு [7]ஏழு குமாரத்திகள் இருந்தார்
கள்; அவர்கள் தங்கள் தகப்பனுடைய ஆடு
களுக்குத் தண்ணீர் காட்டும்படிக்கு அங்கே
வந்து, தண்ணீர் மொண்டு, தொட்டிகளை
நிரப்பினார்கள். அப்பொழுது மேய்ப்பர்கள் 17
வந்து, அவர்களைத் துரத்தினார்கள்; மோசே
எழுந்திருந்து, அவர்களுக்குத் துணை நின்று,
[8]அவர்களுடைய ஆடுகளுக்குத் தண்ணீர்
காட்டினான். அவர்கள் தங்கள் தகப்பனாகிய 18
*ரெகுவேலிடத்தில் வந்தபோது, அவன்:
நீங்கள் இன்று இத்தனை சீக்கிரமாய் வந்
தது என்ன என்று கேட்டான். அதற்கு 19
அவர்கள்: எகிப்தியன் ஒருவன் மேய்ப்பரின்
கைகளுக்கு எங்களைத் தப்புவித்து, எங்களுக்
குத் தண்ணீர் மொண்டு கொடுத்து, ஆடுக
ளுக்கும் தண்ணீர் காட்டினான் என்றார்கள்.
அப்பொழுது அவன் தன் குமாரத்திகளைப் 20
பார்த்து: அவன் எங்கே? அந்த மனிதனை நீங்
கள் விட்டுவந்தது என்ன? [9]போஜனம்பண்
ணும்படிக்கு அவனை அழைத்துக்கொண்டு
வாருங்கள் என்றான். மோசே அந்த மனிதனி 21
டத்தில் தங்கியிருக்கச் சம்மதித்தான். அவன்
[10]சிப்போராள் என்னும் தன் குமாரத்தியை
மோசேக்குக் கொடுத்தான். அவள் ஒரு குமா 22
ரனைப் பெற்றாள். நான் அந்நியதேசத்தில்
[11]பரதேசியாய் இருக்கிறேன் என்று சொல்லி,
அவனுக்கு கெர்சோம் என்று பேரிட்டான்.
சிலகாலம் சென்றபின், எகிப்தின் ராஜா 23
மரித்தான். இஸ்ரவேல் புத்திரர் [12]அடிமைத்
தனத்தினால் தவித்து, முறையிட்டுக்கொண்
டிருந்தார்கள்; அவர்கள் அடிமைத்தனத்தி
லிருந்து முறையிடும் சத்தம் [13]தேவசந்நிதியில்
எட்டினது. தேவன் அவர்கள் பெருமூச் 24
சைக் கேட்டு, தாம் ஆபிரகாமோடும் ஈசாக்
கோடும்யாக்கோபோடும் செய்த [14]உடன்படிக்
கையை நினைவுகூர்ந்தார். தேவன் இஸ்ர 25
வேல் புத்திரரைக் [15]கண்ணோக்கினார்; தேவன்
அவர்களை நினைத்தருளினார்.
மோசே மீதியான்தேசத்து ஆசாரியனா 3
யிருந்த தன் மாமனாகிய எத்திரோவின் ஆடு
களை மேய்த்துவந்தான். அவன் ஆடுகளை
வனாந்தரத்தின் பின்புறத்திலே ஓட்டி, [16]தேவ
பர்வதமாகிய ஓரேப்மட்டும் வந்தான். அங்கே 2
கர்த்தருடைய [17]தூதனானவர் ஒரு முட்செடி
யின் நடுவிலிருந்து உண்டான அக்கினி
ஜுவாலையிலே நின்று அவனுக்குத் தரிசன
மானார். அப்பொழுது அவன் உற்றுப்பார்த்
தான்; முட்செடி அக்கினியால் ஜுவாலித்து
எரிந்தும், அது வெந்துபோகாமல் இருந்தது.
அப்பொழுது மோசே: இந்த முட்செடி 3
வெந்துபோகாதிருக்கிறது என்ன, நான் கிட்
டப்போய் இந்த [18]அற்புதகாட்சியைப் பார்ப்
பேன் என்றான். அவன் பார்க்கும்படி கிட்ட 4
வருகிறதைக் கர்த்தர் கண்டார். முட்செடி
யின் நடுவிலிருந்து தேவன் [19]அவனை நோக்கி:
மோசே, மோசே என்று கூப்பிட்டார்.
அவன்: இதோ, அடியேன் என்றான். அப் 5
பொழுது அவர்: இங்கே கிட்டிச் சேராயாக;
உன் கால்களில் இருக்கிற பாதரட்சையைக்
கழற்றிப்போடு; [20]நீ நிற்கிற இடம் பரிசுத்த

[1] சங். 27. 10
[2] அப். 7. 21
[3] அப். 7. 23. 24. எபி. 11. 25, 26
[4] அப். 7. 26
[5] அப். 7. 27, 28
[6] அப். 7. 29. எபி. 11. 27
[7] ஆதி. 24. 11; 29. 10. 1 சமு. 9. 11
[8] ஆதி. 29. 10
* எத்திரோ. 3. 1. எண். 10. 29
[9] ஆதி. 31. 54
[10] யாத். 4. 25; 18. 2
[11] அப். 7. 29. எபி. 11. 13, 14
[12] எண் 20. 16. உபா. 26. 7. சங். 12. 5
[13] உபா. 24. 15. எசா. 5. 7
[14] ஆதி. 15. 14; 46. 4. லூ. 1. 72
[15] லூ. 1. 25
[16] யாத். 18. 5. 1 இரா. 19. 8
[17] உபா. 33. 16. ஏசா. 63. 9. அப். 7. 30
[18] சங். 111. 2. அப். 7. 31
[19] உபா. 33. 16
[20] யாத். 19. 12. யோசு. 5. 15. பிர. 5. 1

6 பூமி என்றார். பின்னும் அவர்: [1]நான் ஆபிர
காமின் தேவனும் ஈசாக்கின் தேவனும் யாக்
கோபின் தேவனுமாகிய உன் பிதாக்களு
டைய தேவனாயிருக்கிறேன் என்றார். மோசே
தேவனை நோக்கிப்பார்க்கப் [2]பயந்ததினால்,
7 தன் முகத்தை மூடிக்கொண்டான். அப்பொ
ழுது கர்த்தர்: எகிப்திலிருக்கிற என் ஜனத்
தின் [3]உபத்திரவத்தை நான் பார்க்கவே
பார்த்து, ஆளோட்டிகளினிமித்தம் அவர்கள்
இடுகிற கூக்குரலைக் கேட்டேன், அவர்கள்
படுகிற [4]வேதனைகளையும் அறிந்திருக்கிறேன்.
8 அவர்களை எகிப்தியரின் கைக்கு விடுதலையாக்
கவும், அவர்களை அந்தத் தேசத்திலிருந்து
நீக்கி, கானானியரும் ஏத்தியரும் எமோரியரும்
பெரிசியரும் ஏவியரும் எபூசியரும் இருக்கிற
இடமாகிய பாலும் தேனும் ஓடுகிற நலமும்
[5]விசாலமுமான தேசத்தில் கொண்டுபோய்ச்
9 சேர்க்கவும் இறங்கினேன். இப்பொழுதும்
இஸ்ரவேல் புத்திரரின் கூக்குரல் என் சந்
நிதியில் வந்து எட்டினது; எகிப்தியர் அவர்
களை ஒடுக்குகிற ஒடுக்குதலையும் கண்டேன்.
10 நீ இஸ்ரவேல் புத்திரராகிய என் ஜனத்தை
எகிப்திலிருந்து அழைத்து வரும்படி உன்னைப்
பார்வோனிடத்திற்கு [6]அனுப்புவேன் வா
11 என்றார். அப்பொழுது மோசே தேவனை
நோக்கி: பார்வோனிடத்துக்குப் போகவும்,
இஸ்ரவேல் புத்திரரை எகிப்திலிருந்து அழை
த்துவரவும், [7]நான் எம்மாத்திரம் என்றான்.
12 அதற்கு அவர்: நான் [8]உன்னோடே இருப்
பேன்; நீ ஜனத்தை எகிப்திலிருந்து அழைத்து
வந்தபின், நீங்கள் இந்த மலையில் தேவனுக்கு
ஆராதனை செய்வீர்கள்; நான் உன்னை அனுப்
பினேன் என்பதற்கு இதுவே அடையாளம்
13 என்றார். அப்பொழுது மோசே தேவனை
நோக்கி: நான் இஸ்ரவேல் புத்திரரிடத்தில்
போய், உங்கள் பிதாக்களுடைய தேவன் உங்க
ளிடத்தில் என்னை அனுப்பினார் என்று அவர்
களுக்குச் சொல்லும்போது, அவருடைய
நாமம் என்ன என்று அவர்கள் என்னிடத்
தில் கேட்டால், நான் அவர்களுக்கு என்ன
14 சொல்லுவேன் என்றான். அதற்குத் தேவன்:
[9]**இருக்கிறவராக இருக்கிறேன்** என்று மோசே
யுடனே சொல்லி, இருக்கிறேன் என்பவர்
என்னை உங்களிடத்துக்கு அனுப்பினார் என்று
இஸ்ரவேல் புத்திரரோடே சொல்வாயாக
15 என்றார். மேலும், தேவன் மோசேயை
நோக்கி: ஆபிரகாமின் தேவனும் ஈசாக்கின்
தேவனும் யாக்கோபின் தேவனுமாயிருக்கிற
உங்கள் பிதாக்களுடைய தேவனாகிய கர்த்தர்
என்னை உங்களிடத்துக்கு அனுப்பினார் என்று
நீ இஸ்ரவேல் புத்திரருக்குச் சொல்வாயாக;
[10]என்றைக்கும் இதுவே என் நாமம், தலைமுறை
தலைமுறைதோறும் இதுவே என் பேர்ப்பிரஸ்
16 தாபம். நீ போய், இஸ்ரவேலின் மூப்பரைக்
கூட்டி, அவர்களிடத்தில்: ஆபிரகாம் ஈசாக்கு
யாக்கோபு என்பவர்களுடைய தேவனாயிருக்
கிற உங்கள் பிதாக்களுடைய தேவனாகிய கர்த்
தர் எனக்குத் தரிசனமாகி, [11]உங்களை நிச்சய
மாய்ச் சந்தித்து, எகிப்தில் உங்களுக்குச் செய்
யப்பட்டதைக் கண்டேன் என்றும், நான் 17
உங்களை எகிப்தின் [12]சிறுமையிலிருந்து நீக்கி,
பாலும் தேனும் ஓடுகிற தேசமாகிய கானானி
யர் ஏத்தியர் எமோரியர் பெரிசியர் ஏவியர்
எபூசியருடைய தேசத்துக்குக் கொண்டுபோ
வேன் என்றும் சொன்னேன் என்றார் என்று
சொல்லு. அவர்கள் உன் வாக்குக்குச் செவி 18
கொடுப்பார்கள்; அப்பொழுது நீயும் இஸ்ர
வேலின் மூப்பரும் எகிப்தின் ராஜாவினிடத்
தில் போய்: எபிரெயருடைய தேவனாகிய
கர்த்தர் எங்களைச் [13]சந்தித்தார்; இப்பொழுதும்
நாங்கள் வனாந்தரத்தில் மூன்றுநாள் பிரயா
ணம்போய், எங்கள் தேவனாகிய கர்த்தருக்குப்
பலியிடும்படி எங்களைப் போகவிடவேண்டு
மென்று சொல்லுங்கள். ஆனாலும், எகிப்தின் 19
ராஜா கைவல்லமை கண்டாலொழிய, உங்க
ளைப் போகவிடான் என்று நான் அறிவேன்.
ஆகையால், நான் என் கையை நீட்டி, எகிப் 20
தின் நடுவிலே நான் செய்யும் சகலவித [14]அற்பு
தங்களாலும் அதை வாதிப்பேன்; அதற்குப்
பின் அவன் உங்களைப் போகவிடுவான். அப் 21
பொழுது இந்த ஜனங்களுக்கு எகிப்தியரின்
[15]கண்களில் தயவு கிடைக்கப்பண்ணுவேன்;
நீங்கள் போகும்போது வெறுமையாய்ப் போவ
தில்லை. ஒவ்வொரு ஸ்திரீயும், தன்தன் அய 22
லகத்தாளிடத்திலும் தன்தன் வீட்டில் தங்கு
கிறவளிடத்திலும், வெள்ளியுடைமைகளையும்
பொன்னுடைமைகளையும் வஸ்திரங்களையும்
கேட்டு வாங்குவாள்; அவைகளை உங்கள் குமா
ரருக்கும் உங்கள் குமாரத்திகளுக்கும் தரிப்
பித்து, [16]எகிப்தியரைக் கொள்ளையிடுவீர்கள்
என்றார்.

அப்பொழுது மோசே: அவர்கள் என்னை 4
நம்பார்கள்; என் வாக்குக்குச் செவிகொடார்
கள்; கர்த்தர் உனக்குத் தரிசனமாகவில்லை
என்று சொல்லுவார்கள் என்றான். கர்த்தர் 2
அவனை நோக்கி: உன் கையிலிருக்கிறது
என்ன என்றார். ஒரு கோல் என்றான்.
அதைத் தரையிலே போடு என்றார்; அவன் 3
அதைத் தரையிலே போட்டபோது, அது
சர்ப்பமாயிற்று; மோசே அதற்கு விலகியோடி
னான். அப்பொழுது கர்த்தர் மோசேயை 4
நோக்கி: உன் கையை நீட்டி, அதின் வாலைப்
பிடி என்றார்; அவன் தன் கையை நீட்டி,
அதைப் பிடித்தபோது, அது அவன் கையிலே
கோலாயிற்று. ஆபிரகாமின் தேவனும் ஈசாக் 5
கின் தேவனும் யாக்கோபின் தேவனுமாயிருக்
கிற தங்கள் பிதாக்களுடைய தேவனாகிய கர்த்
தர் உனக்குத் தரிசனமானதை அவர்கள் [17]நம்
புவதற்கு இதுவே அடையாளம் என்றார்.
மேலும், கர்த்தர் அவனை நோக்கி: உன் 6
கையை உன் மடியிலே போடு என்றார்;
அவன் தன் கையைத் தன் மடியிலே போட்டு,
அதை வெளியே எடுக்கும்போது, இதோ,
அவன் கை உறைந்த மழையைப்போல

[1] ஆதி. 28. 13. 1 இரா. 18. 36. மத். 22 32. அப். 7 32
[2] நியா. 13. 22. ஏசா. 6. 5
[3] நெகே. 9. 9. சங். 106. 44. ஏசா. 63. 9
[4] சங். 145. 19
[5] உபா. 1. 25
[6] சங். 105. 26. மீகா. 6. 4
[7] 1 சாமு. 18. 18. ஏசா. 6 5, 8. எரே. 1. 6
[8] ஆதி. 31. 3. யோசு. 1. 5. ரோ. 8. 31
[9] யாத். 6. 3. யோவா. 8. 58. 2 கொ. 1. 20. எபி. 13. 8. வெளி. 1. 4
[10] சங். 102. 17. ஓசி. 12 5
[11] ஆதி. 50. 24. லூ. 1. 74
[12] ஆதி. 15. 13
[13] எண். 23. 3. மி
[14] உபா. 6 22. நெகே. 9. 10. சங். 105. 27. எரே. 32. 20. அப். 7. 36
[15] சங். 106. 46 நீதி. 16. 7
[16] யோபு 27. 17. நீதி. 13. 22 ஏசா. 33. 1
[17] யாத். 19. 9

7 [1]வெண்குஷ்டம் பிடித்திருந்தது. அவர்: உன்
கையைத் திரும்பவும் உன் மடியிலே போடு
என்றார். அவன் தன் கையைத் திரும்பத்
தன் மடியிலே போட்டு, தன் மடியிலிருந்து
அதை வெளியே எடுத்தபோது, [2]அது
திரும்ப அவனுடைய மற்றச் சதையைப்போ
8 லாயிற்று. அப்பொழுது அவர்: முந்தின
அடையாளத்தை அவர்கள் கண்டு, உன்னை
நம்பாமலும் உனக்குச் செவிகொடாமலும்
போனால், பிந்தின அடையாளத்தைக் கண்டு
9 நம்புவார்கள். இவ்விரண்டு அடையாளங்களை
யும் அவர்கள் நம்பாமலும், உன் வாக்குக்குச்
செவிகொடாமலும் இருப்பார்களானால், அப்
பொழுது நீ நதியின் தண்ணீரை மொண்டு
நிலத்தில் ஊற்றுவாயாக; நதியில் மொண்ட
தண்ணீர் வெட்டாந்தரையிலே இரத்தமாகும்
10 என்றார். அப்பொழுது மோசே கர்த்தரை
நோக்கி: ஆண்டவரே, இதற்கு முன்னாவது,
தேவரீர் உமது அடியேனோடே பேசினதற்
குப்பின்னாவது நான் வாக்குவல்லவன் அல்ல;
நான் திக்குவாயும் [3]மந்தநாவும் உள்ளவன் என்
11 றான். அப்பொழுது கர்த்தர் அவனை நோக்கி:
மனுஷனுக்கு [4]வாயை உண்டாக்கினவர் யார்?
ஊமையனையும் செவிடனையும் பார்வையுள்ள
வனையும் குருடனையும் உண்டாக்கினவர் யார்?
12 கர்த்தராகிய நான் அல்லவா? ஆதலால், நீ
போ; [5]நான் உன் வாயோடே இருந்து, நீ
பேசவேண்டியதை உனக்குப் போதிப்பேன்
13 என்றார். அதற்கு அவன்: ஆண்டவரே, நீர்
அனுப்பச் சித்தமாயிருக்கிற யாரையாகிலும்
14 அனுப்பும் என்றான். அப்பொழுது கர்த்தர்
மோசேயின்மேல் கோபம் மூண்டவராகி:
லேவியனாகிய ஆரோன் உன் சகோதரன்
அல்லவா? அவன் நன்றாய்ப் பேசுகிறவன்
என்று அறிவேன்; அவன் உன்னைச் சந்திக்
கப் புறப்பட்டுவருகிறான்; உன்னைக் காணும்
15 போது அவன் இருதயம் மகிழும். நீ அவ
னோடே பேசி, அவன் வாயில் வார்த்தைக
ளைப் போடு; நான் உன் வாயிலும் அவன்
வாயிலும் இருந்து, நீங்கள் செய்யவேண்டி
16 யதை உங்களுக்கு உணர்த்துவேன். அவன்
உனக்குப் பதிலாக ஜனங்களோடே பேசு
வான்; இவ்விதமாய் அவன் உனக்கு [6]வாயாக
இருப்பான்; நீ அவனுக்குத் *தேவனாக இருப்
17 பாய். இந்தக் கோலையும் உன் கையிலே பிடித்
துக் கொண்டுபோ, இதனால் நீ அடையாளங்
களைச் செய்வாய் என்றார்.
18 மோசே தன் மாமனாகிய எத்திரோவினிடத்
துக்கு வந்து: நான் எகிப்திலிருக்கிற என்
சகோதரரிடத்துக்குத் திரும்பிப் போய், அவர்
கள் இன்னும் உயிரோடே இருக்கிறார்களா
என்று பார்க்கும்படிப் புறப்பட்டுப்போக உத்
தரவு தரவேண்டும் என்றான். அப்பொழுது
எத்திரோ மோசேயை நோக்கி: சுகமாய்ப்
19 போய்வாரும் என்றான். பின்னும் கர்த்தர்
மீதியானிலே மோசேயை நோக்கி: நீ எகிப்
துக்குத் திரும்பிப் போ, [7]உன் பிராணனை
வாங்கத் தேடின மனிதர் எல்லாரும் இறந்து
போனார்கள் என்றார். அப்பொழுது மோசே 20
தன் மனைவியையும் தன் பிள்ளைகளையும் கழு
தையின்மேல் ஏற்றிக்கொண்டு, எகிப்துதே
சத்துக்குத் திரும்பினான்; [8]தேவனுடைய
கோலையும் மோசே தன் கையிலே பிடித்துக்
கொண்டுபோனான். அப்பொழுது கர்த்தர் 21
மோசேயை நோக்கி: நீ எகிப்திலே திரும்பிப்
போய்ச் சேர்ந்தபின், நான் உன் கையில்
அளித்திருக்கிற அற்புதங்கள் யாவையும் பார்
வோனுக்கு முன்பாகச் செய்யும்படி எச்சரிக்
கையாயிரு; ஆகிலும், [9]நான் அவன் இருதயத்
தைக் கடினப்படுத்துவேன்; அவன் ஜனத்
தைப் போகவிடான். அப்பொழுது நீ பார் 22
வோனோடே சொல்லவேண்டியது என்ன
வென்றால்: [10]இஸ்ரவேல் என்னுடைய குமா
ரன், என் சேஷ்ட புத்திரன். எனக்கு ஆரா 23
தனை செய்யும்படி என் குமாரனை அனுப்பி
விடு என்று கட்டளையிடுகிறேன்; அவனை
விடமாட்டேன் என்பாயாகில் நான் [11]உன்னு
டைய குமாரனை, உன் சேஷ்ட புத்திரனை,
சங்கரிப்பேன் என்று கர்த்தர் சொன்னார்
என்று சொல் என்றார். வழியிலே தங்கும் 24
இடத்தில் கர்த்தர் அவனுக்கு [12]எதிர்ப்பட்டு,
அவனைக் [13]கொல்லப்பார்த்தார். அப்பொழுது 25
சிப்போராள் கருக்கான ஒரு [14]கல்லை எடுத்து,
தன் புத்திரனுடைய நுனித்தோலை அறுத்து,
அதை அவன் கால்களுக்கு முன்பாக எறிந்து:
நீர் எனக்கு இரத்தசம்பந்தமான புருஷன்
என்றாள். பின்பு அவர் அவனை விட்டு வில 26
கினார். அப்பொழுது அவள்: விருத்தசேதன
த்தினிமித்தம் நீர் எனக்கு இரத்தசம்பந்தமான
புருஷன் என்றாள்.

கர்த்தர் ஆரோனை நோக்கி: நீ வனாந்தரத் 27
தில் மோசேக்கு எதிர்கொண்டுபோ என்றார்.
அவன் போய், [15]தேவபர்வதத்தில் அவனைச்
சந்தித்து, அவனை முத்தஞ்செய்தான். அப் 28
பொழுது மோசே தன்னை அனுப்பின கர்த்த
ருடைய சகல வார்த்தைகளையும் அவர் தனக்
குக் கட்டளையிட்ட சகல அடையாளங்களை
யும் ஆரோனுக்குத் தெரிவித்தான். மோசே 29
யும் ஆரோனும் போய், இஸ்ரவேல் புத்திர
ரின் மூப்பர் எல்லாரையும் கூடிவரச்செய்தார்
கள். கர்த்தர் மோசேக்குச் சொல்லிய சகல 30
வார்த்தைகளையும் ஆரோன் சொல்லி, ஜனங்
களின் கண்களுக்கு முன்பாக அந்த அடை
யாளங்களையும் செய்தான். ஜனங்கள் விசு 31
வாசித்தார்கள்; கர்த்தர் இஸ்ரவேல் புத்திர
ரைச் சந்தித்தார் என்றும், அவர்கள் படும்
உபத்திரவங்களைக் கண்ணோக்கிப் பார்த்தார்
என்றும், அவர்கள் கேட்டபோது, [16]தலைகு
னிந்து தொழுதுகொண்டார்கள். பின்பு, மோ 5
சேயும் ஆரோனும் பார்வோனிடத்தில் போய்:
இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் வனாந்
தரத்திலே எனக்குப் [17]பண்டிகை கொண்
டாடும்படி என் ஜனங்களைப் போகவிட
வேண்டும் என்று சொல்லுகிறார் என்றார்கள்.

1 எண். 12. 10. 2 இரா. 5. 27
2 உபா. 32. 39. 2 இரா. 5. 14. மத். 8. 3
3 எரே. 1. 6, 9
4 சங். 94. 9
5 ஏசா. 50. 4. எரே. 1. 9. மத். 10. 19
6 யாத். 7. 1; 18. 19
* எஜமான்.
7 யாத். 2. 15, 23. மத். 2. 20
8 யாத். 17. 9. எண். 20. 8, 9
9 உபா. 2. 30. யோசு. 11. 20. ஏசா. 6. 10; 63. 17. யோவா. 12. 40. ரோ. 9. 18
10 உபா. 14. 1. எரே. 31. 9. ஓசி. 11. 1. ரோ. 9. 4
11 யாத். 11. 5; 12. 29
12 எண். 22. 22
13 ஆதி. 17. 14
14 யோசு. 5. 2, 3
15 யாத். 3. 1
16 ஆதி. 17. 3; 24. 26. 1 நாளா. 29. 20
17 யாத். 10. 9

2 அதற்குப் பார்வோன்: நான் இஸ்ரவேலைப்
போகவிடக் **கர்த்தரின்** வார்த்தையைக் கேட்
கிறதற்கு [1]அவர் யார்? நான் **கர்த்தரை** அறி
யேன்; நான் இஸ்ரவேலைப் போகவிடுவ
3 தில்லை என்றான். அப்பொழுது அவர்கள்:
[2]எபிரெயருடைய தேவன் எங்களைச் சந்தித்
தார்; நாங்கள் வனாந்தரத்தில் மூன்றுநாள் பிர
யாணம் போய், எங்கள் தேவனாகிய **கர்த்தருக்**
**குப்** பலியிடும்படி போகவிடவேண்டும்; போ
காதிருந்தால், அவர் கொள்ளைநோயும் பட்ட
யமும் எங்கள்மேல் வரப்பண்ணுவார் என்றார்
4 கள். எகிப்தின் ராஜா அவர்களை நோக்கி:
மோசேயும் ஆரோனுமாகிய நீங்கள் ஜனங்க
ளைத் தங்கள் வேலைகளை விட்டுக் கலையப்பண்
ணுகிறது என்ன? உங்கள் சுமைகளைச் சுமக்
5 கப் போங்கள் என்றான். பின்னும் பார்
வோன்: இதோ, தேசத்தில் ஜனங்கள் மிகுதி
யாயிருக்கிறார்கள்; அவர்கள் சுமைசுமக்கிறதை
விட்டு ஓய்ந்திருக்கும்படி செய்கிறீர்களே என்
6 றான். அன்றியும், அந்நாளிலே பார்வோன்
ஜனங்களின் ஆளோட்டிகளையும் அவர்கள்
7 தலைவரையும் நோக்கி: செங்கல் வேலைக்கு
நீங்கள் முன்போல இனி ஜனங்களுக்கு
வைக்கோல் கொடுக்கவேண்டாம்; அவர்கள்
தாங்களே போய்த் தங்களுக்கு வைக்கோல்
8 சேர்க்கட்டும். அவர்கள் முன் செய்துகொ
டுத்த கணக்கின்படியே செங்கல் செய்யும்படி
சொல்லுங்கள்; அதிலே நீங்கள் ஒன்றும்
குறைக்கவேண்டாம், அவர்கள் சோம்பலா
யிருக்கிறார்கள்; அதினால் நாங்கள் போய் எங்
கள் தேவனுக்குப் பலியிடுவோம் என்று கூக்
9 குரலிடுகிறார்கள். அந்த மனிதர்மேல் முன்
னிலும் அதிக வேலையைச் சுமத்துங்கள்,
அதில் அவர்கள் கஷ்டப்படட்டும்; வீண்வார்
த்தைகளுக்கு அவர்கள் செவிகொடுக்க விடா
10 திருங்கள் என்று கட்டளையிட்டான். அப்
பொழுது ஜனங்களின் ஆளோட்டிகளும்
அவர்கள் தலைவர்களும் புறப்பட்டுப்போய்
ஜனங்களை நோக்கி: உங்களுக்கு வைக்கோல்
11 கொடுப்பதில்லை; நீங்களே போய் உங்க
ளுக்கு அகப்படுகிற இடங்களில் வைக்கோல்
சம்பாதியுங்கள்; ஆனாலும் உங்கள் வேலையில்
ஒன்றும் குறைக்கப்படுவதில்லை என்று பார்
12 வோன் சொல்லுகிறார் என்றார்கள். அப்
பொழுது வைக்கோலுக்குப் பதிலாகத் தாளடி
களைச் சேர்க்கும்படி ஜனங்கள் எகிப்துதேசம்
13 எங்கும் சிதறிப்போனார்கள். ஆளோட்டிகள்
அவர்களை நோக்கி: வைக்கோலிருந்தநாளில்
செய்தபடியே உங்கள் வேலைகளை ஒவ்வொரு
நாளிலும் செய்து முடியுங்கள் என்று சொல்
14 லி, அவர்களைத் துரிதப்படுத்தினார்கள். பார்
வோனுடைய ஆளோட்டிகள் இஸ்ரவேல்
புத்திரர்மேல் வைத்த அவர்களுடைய தலைவர்
களை நோக்கி: செங்கல் வேலையில் நீங்கள்
முன் செய்ததுபோல நேற்றும் இன்றும் ஏன்
செய்யவில்லை என்று கேட்டு, அவர்களை
15 அடித்தார்கள். அப்பொழுது இஸ்ரவேல் புத்
திரரின் தலைவர் பார்வோனிடத்தில் போய்ச்
சத்தமிட்டு: உமது அடியாருக்கு நீர் இப்படிச்
செய்கிறது என்ன? உமது அடியாருக்கு 16
வைக்கோல் கொடாதிருந்தும், செங்கல் அறுத்
துத் தீரவேண்டும் என்று எங்களுக்குச் சொல்
லுகிறார்கள்; உம்முடைய ஜனங்களிடத்தில்
குற்றம் இருக்க, உமது அடியாராகிய நாங்கள்
அடிக்கப்படுகிறோம் என்றார்கள். அதற்கு 17
அவன்: நீங்கள் சோம்பலாயிருக்கிறீர்கள்,
சோம்பலாயிருக்கிறீர்கள்; அதினால் தான்
போகவேண்டும், கர்த்தருக்குப் பலியிட
வேண்டும் என்கிறீர்கள். போய், வேலை 18
செய்யுங்கள், உங்களுக்கு வைக்கோல் கொடுக்
கப்படுவதில்லை; ஆனாலும் கணக்கின்படியே
நீங்கள் செங்கலை ஒப்புவிக்கவேண்டும் என்
றான். நீங்கள் ஒவ்வொரு நாளிலும் அறுத் 19
துத் தீரவேண்டிய செங்கலிலே ஒன்றும்
குறைக்கப்படாது என்று சொல்லப்பட்டதி
னாலே, இஸ்ரவேல் புத்திரரின் தலைவர் தங்க
ளுக்கு இக்கட்டு வந்தது என்று கண்டார்கள்.
அவர்கள் பார்வோனுடைய சமுகத்தை விட் 20
டுப் புறப்படுகையில், வழியில் நின்ற மோ
சேக்கும் ஆரோனுக்கும் எதிர்ப்பட்டு, அவர் 21
களை நோக்கி: நீங்கள் பார்வோனின் கண்க
ளுக்கு முன்பாகவும் அவருடைய ஊழியக்கா
ரரின் கண்களுக்கு முன்பாகவும் எங்கள் [3]வா
சனையைக் கெடுத்து, எங்களைக் கொல்லும்
படி அவர்கள் கையிலே பட்டயத்தைக் கொ
டுத்ததினிமித்தம், கர்த்தர் உங்களைப் பார்த்து
நியாயந்தீர்க்கக்கடவர் என்றார்கள். அப்பொ 22
ழுது மோசே **கர்த்தரிடத்தில்** திரும்பிப்
போய்: ஆண்டவரே, இந்த ஜனங்களுக்குத்
தீங்குவரப்பண்ணினதென்ன? ஏன் என்னை
அனுப்பினீர்? நான் உமது நாமத்தைக்கொ 23
ண்டு பேசும்படி பார்வோனிடத்தில் பிரவே
சித்ததுமுதல் அவன் இந்த ஜனங்களை உபத்
திரவப்படுத்துகிறான்; நீர் உம்முடைய ஜனங்
களை விடுதலையாக்கவில்லையே என்றான். அப் 6
பொழுது **கர்த்தர்** மோசேயை நோக்கி: நான்
பார்வோனுக்குச் செய்வதை இப்பொழுது
காண்பாய்; பலத்த கையைக் கண்டு அவர்
களைப் போகவிட்டு, பலத்த கையைக் கண்டு
அவர்களைத் தன் தேசத்திலிருந்து துரத்திவிடு
வான் என்றார்.

மேலும், தேவன் மோசேயை நோக்கி: 2
நான் *யேகோவா, சர்வவல்லமையுள்ள தே 3
வன் என்னும் நாமத்தினால் [4]நான் ஆபிரகா
முக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் தரிசன
மானேன்; ஆனாலும் †யேகோவா என்னும்
என் நாமத்தினால் நான் அவர்களுக்கு அறியப்
படவில்லை. அவர்கள் பரதேசிகளாய்த் தங் 4
கின தேசமாகிய கானான்தேசத்தை அவர்க
ளுக்குக் கொடுப்பேன் என்று நான் அவர்க
ளோடே என் [5]உடன்படிக்கையையும் ஏற்படு
த்தியிருக்கிறேன். எகிப்தியர் அடிமைகொள் 5
ளுகிற இஸ்ரவேல் புத்திரரின் [6]பெருமூச்சை
யும் நான் கேட்டு, என் உடன்படிக்கையை

[1] 2 இரா. 18. 35. யோபு 21. 15. சங். 12. 4
[2] யாத். 3. 18
[3] ஆதி. 34. 30. 1 சாமு. 13. 4. 2 சாமு. 10. 6. 1 நாளா. 19. 6
* கர்த்தர்.
[4] ஆதி. 17. 1; 35. 11
† தானாயிருக்கிறவர். 3. 14. சங். 68. 4; 83. 17. ஏசா. 42. 8. யோ. 8. 58. வெளி. 1. 4
[5] ஆதி. 17. 7, 8
[6] சங். 106. 44

6 நினைத்தேன். ஆதலால், இஸ்ரவேல் புத்திர
ரை நோக்கி: நானே **கர்த்தர்**; உங்கள்மேல்
எகிப்தியர் சுமத்தின சுமைகளை நீக்கி நான்
உங்களை [1]விடுவித்து, உங்களை அவர்கள் அடி
மைத்தனத்திற்கு நீங்கலாக்கி, [2]ஓங்கிய கையி
ஞலும், மகா தண்டனைகளினாலும் உங்களை
7 மீட்டு, உங்களை [3]எனக்கு ஜனங்களாகச் சேர்த்
துக்கொண்டு, உங்களுக்குத் தேவனாயிருப்
பேன்; உங்கள்மேல் எகிப்தியர் சுமத்தின
சுமைகளை நீக்கி உங்களை விடுவிக்கிற உங்கள்
தேவனாகிய **கர்த்தர்** நான் என்று அறிவீர்கள்.
8 ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்
கும் கொடுப்பேன் என்று நான் ஆணையிட்ட
தேசத்தில் உங்களைக் கொண்டுபோய், அதை
உங்களுக்குச்சுதந்தரமாகக்கொடுப்பேன்;நான்
**கர்த்தர்** என்று அவர்களுக்குச் சொல் என்
9 றார். இந்தப்பிரகாரமாக மோசே இஸ்ரவேல்
புத்திரருக்குச் சொன்னான்; அவர்களோ மன
மடிவினாலும் கொடுமையான வேலையினாலும்
மோசேக்குச் செவிகொடாமற் போனார்கள்.
10, 11 பின்பு, **கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ
எகிப்தின் ராஜாவாகிய பார்வோனிடத்தில்
போய், அவன் தன் தேசத்திலிருந்து இஸ்ர
வேல் புத்திரரைப் போகவிடும்படி அவனோ
12 டே பேசு என்றார். மோசே **கர்த்தருடைய**
சந்நிதானத்தில் நின்று, இஸ்ரவேல் புத்திரரே
எனக்குச் செவிகொடுக்கவில்லை; பார்வோன்
எனக்கு எப்படிச் செவிகொடுப்பான்? நான்
[4]விருத்தசேதனமில்லாத உதடுகளுள்ளவன்
13 என்றான். கர்த்தர் மோசேயோடும் ஆரோ
னோடும்பேசி, இஸ்ரவேல் புத்திரரை எகிப்து
தேசத்திலிருந்து அழைத்துக்கொண்டு போ
கும்படிக்கு, அவர்களை இஸ்ரவேல் புத்திர
ரிடத்துக்கும் எகிப்தின் ராஜாவாகிய பார்
வோனிடத்துக்கும் கட்டளைகொடுத்து அனுப்
பினார்.
14 அவர்களுடைய பிதாக்கள் வீட்டாரின் தலை
வர் யாரென்றால், [5]இஸ்ரவேலுக்கு முதல்
பிறந்தவனாகிய ரூபனுடைய குமாரர் ஆனோ
க்கு, பல்லூ, எஸ்ரோன், கர்மீ; இவர்கள் ரூப
15 னுடைய வம்சங்களின் தலைவர். சிமியோ
னின் [6]குமாரர் எமுவேல், யாமின், ஓகாத்,
யாகீன், சோகார், கானானிய ஸ்திரீயின் குமா
ரனாகிய சவுல்; சிமியோனுடைய வம்சங்க
16 ளின் தலைவர் இவர்களே. உற்பத்திக்கிரமப்
படி பிறந்த [7]லேவியின் குமாரருடைய நாமங்
களாவன, கெர்சோன், கோகாத், மெராரி என்
பவைகள். லேவி நூற்று முப்பத்தேழு வரு
17 ஷம் உயிரோடிருந்தான். அவரவர் வம்சங்
களின்படி* பிறந்த [8]கெர்சோனின் குமாரர்
18 லிப்னீ, சிமேயீ என்பவர்கள். கோகாத்தின்
[9]குமாரர் அம்ராம், இத்சேயார், எப்ரோன்,
ஊசியேல் என்பவர்கள்; கோகாத் நூற்று முப்
பத்துமூன்று வருஷம் உயிரோடிருந்தான்.
19 மெராரியின் [10]குமாரர் மகேலி, மூசி என்பவர்
கள்; அவரவர் சந்ததியின்படி லேவியினுடைய
20 வம்சங்களின் தலைவர் இவர்களே. அம்ராம்
[11]தன் *அத்தையாகிய யோகெபேத்தை விவா
கம்பண்ணினான்; அவள் அவனுக்கு ஆரோ
னையும் மோசேயையும் பெற்றாள்; அம்ராம்
நூற்று முப்பத்தேழு வருஷம் உயிரோடிருந்
தான். இத்சேயாரின் [12]குமாரர் கோராகு, 21
நெப்பேக், சித்ரி என்பவர்கள். ஊசியேலின் 22
[13]குமாரர் மீசவேல், எல்சாபான், சித்ரி என்ப
வர்கள். ஆரோன் [14]அம்மினதாபின் குமாரத்தி 23
யும் நகசோனின் சகோதரியுமாகிய எலிசபாளை
விவாகம்பண்ணினான்; இவள் அவனுக்கு
[15]நாதாபையும், அபியூவையும், எலெயாசாரை
யும், இத்தாமாரையும் பெற்றாள். கோராகின் 24
குமாரர் ஆசீர், எல்க்கானா, அபியாசாப் என்
பவர்கள்; கோராகியரின் வம்சத்தலைவர் இவர்
களே. ஆரோனின் குமாரனாகிய எலெயா 25
சார் பூத்தியேலுடைய குமாரத்திகளில் ஒருத்
தியை விவாகம்பண்ணினான், அவள் அவ
னுக்குப் [16]பினெகாசைப் பெற்றாள்; அவரவர்
வம்சங்களின்படி லேவியருடைய பிதாக்களா
கிய தலைவர் இவர்களே. இஸ்ரவேல் புத்தி 26
ரரை அணியணியாய் எகிப்துதேசத்திலிருந்து
நடத்திக்கொண்டு போவதற்குக் **கர்த்தரால்**
கட்டளை பெற்ற ஆரோனும் மோசேயும் இவர்
களே. இஸ்ரவேல புத்திரரை எகிப்திலிருந்து 27
நடத்திக்கொண்டுபோவதற்கு,எகிப்தின் ராஜா
வாகிய பார்வோனோடே பேசின மோசேயும்
ஆரோனும் இவர்களே.
**கர்த்தர்** எகிப்துதேசத்திலே மோசேயோ 28
டே பேசின நாளில்; கர்த்தர் மோசேயை 29
நோக்கி: நானே **கர்த்தர்**; நான் உன்னோடே
சொல்லுகிறவைகளையெல்லாம் நீ எகிப்து
ராஜாவாகிய பார்வோனுக்குச் சொல் என்று
சொன்னபோது, மோசே **கர்த்தருடைய** சந்நி 30
தானத்தில்: நான் [17]விருத்தசேதனமில்லாத
உதடுகளுள்ளவன்; பார்வோன் எனக்கு எப்
படிச் செவிகொடுப்பான் என்றான். **கர்த்தர்** **7**
மோசேயை நோக்கி: பார், உன்னை நான் பார்
வோனுக்குத் [18]தேவனாக்கினேன்; உன் சகோ
தரனாகிய ஆரோன் உன் தீர்க்கதரிசியாயிருப்
பான். நான் உனக்குக் கட்டளையிடும் யாவை 2
யும் நீ சொல்லவேண்டும்; பார்வோன் இஸ்ர
வேல் புத்திரரைத் தன் தேசத்திலிருந்து அனு
ப்பிவிடும்படி உன் சகோதரனாகிய ஆரோன்
அவனிடத்தில் பேசவேண்டும். நான் பார் 3
வோனின் இருதயத்தைக் கடினப்படுத்தி,
எகிப்துதேசத்தில் என் அடையாளங்களையும்
அற்புதங்களையும் மிகுதியாய் நடப்பிப்பேன்.
பார்வோன் உங்களுக்குச் செவிகொடுக்கமாட் 4
டான்; ஆகையால் எகிப்துக்கு விரோதமாக
நான் என் கையை நீட்டி, மகா தண்டனையி
னால் என் சேனைகளும் என் ஜனங்களுமாகிய
இஸ்ரவேல் புத்திரரை எகிப்துதேசத்திலிரு
ந்து புறப்படப்பண்ணுவேன். நான் எகிப் 5
தின்மேல் என் கையை நீட்டி, இஸ்ரவேல்
புத்திரரை அவர்கள் நடுவிலிருந்து புறப்படப்
பண்ணும்போது, [19]நானே **கர்த்தர்** என்று
எகிப்தியர் அறிவார்கள் என்றார். மோசே 6

1 உபா. 26. 8. சங். 81. 5
2 உபா. 7. 8. நெகே. 1. 10
3 உபா. 4. 20. 2 சாமு. 7. 24. எரே. 31. 33. ஓசி. 1. 10. வெளி. 21. 3, 7
4 லேவி. 26. 41. எரே. 9. 26. அப். 7. 51
5 ஆதி. 46. 9
6 1 நாளா. 4. 24
7 ஆதி. 46. 11. எண். 3. 17. 1 நாளா. 6. 1
8 1 நாளா. 6. 17
9 எண். 26. 57
10 1 நாளா. 6. 19
11 எண். 26. 59
* அல்லது சகோதர புத்திரி.
12 எண். 16. 1
13 லேவி. 10. 4
14 ரூத் 4. 19
15 1 நாளா. 6. 3
16 யோசு. 24. 33
17 யாத். 4. 10
18 சங். 82. 6. யோ. 10. 35
19 சங். 9. 16

யும் ஆரோனும் கர்த்தர் தங்களுக்குக் கட்டளை
7 யிட்டபடியே செய்தார்கள். அவர்கள் பார்
வோனோடே பேசும்போது, மோசேக்கு [1]எண்
பது வயதும், ஆரோனுக்கு எண்பத்துமூன்று
வயதுமாயிருந்தது.
8 கர்த்தர் மோசேயையும் ஆரோனையும் நோ
9 க்கி: உங்கள் பட்சத்திற்கு ஒரு [2]அற்புதம்
காட்டுங்கள் என்று பார்வோன் உங்களோடே
சொன்னால்; அப்பொழுது நீ ஆரோனை நோ
க்கி: உன் கோலை எடுத்து அதைப் பார்வோ
னுக்கு முன்பாகப் போடு என்பாயாக; அது
10 சர்ப்பமாகும் என்றார். மோசேயும் ஆரோ
னும் பார்வோனிடத்தில் போய், கர்த்தர்
தங்களுக்குக் கட்டளையிட்டபடி செய்தார்
கள். ஆரோன் பார்வோனுக்கு முன்பாக
வும், அவன் ஊழியக்காரருக்கு முன்பாகவும்
தன் கோலைப் போட்டான், அது சர்ப்பமா
11 யிற்று. அப்பொழுது பார்வோன் [3]சாஸ்திரி
களையும் சூனியக்காரரையும் அழைப்பித்தான்.
எகிப்தின் மந்திரவாதிகளும் தங்கள் மந்திர
12 வித்தையினால் அப்படிச் செய்தார்கள். அவர்
கள் ஒவ்வொருவனும் தன்தன் கோலைப்
போட்டபோது, அவைகள் சர்ப்பங்களாயின;
ஆரோனுடைய கோலோ அவர்களுடைய
13 கோல்களை விழுங்கிற்று. கர்த்தர் சொல்லி
யிருந்தபடி பார்வோனின் இருதயம் கடினப்
பட்டது, அவர்களுக்குச் செவிகொடாமற்
போனான்.
14 அப்பொழுது கர்த்தர் மோசேயை நோக்கி:
பார்வோனின் இருதயம் கடினமாயிற்று;
15 ஜனங்களை விடமாட்டேன் என்கிறான். கால
மே நீ பார்வோனிடத்துக்குப் போ, அவன்
நதிக்குப் புறப்பட்டுவருவான்; நீ அவனுக்கு
எதிராக நதியோரத்திலே நின்று, சர்ப்பமாக
மாறின கோலை உன் கையிலே பிடித்துக்கொ
16 ண்டு, அவனை நோக்கி: வனாந்தரத்தில் என
க்கு ஆராதனைசெய்ய என் ஜனங்களை அனுப்பி
விடவேண்டும் என்று சொல்லும்படி எபிரெய
ருடைய தேவனாகிய கர்த்தர் என்னை உம்மி
டத்துக்கு அனுப்பியும், இதுவரைக்கும் நீர்
17 கேளாமற்போனீர். இதோ, என் கையில்
இருக்கிற கோலினால் நதியில் இருக்கிற தண்
ணீர்மேல் அடிப்பேன்; அப்பொழுது அது
18 [4]இரத்தமாய் மாறி, நதியில் இருக்கிற மீன்கள்
செத்து, நதி நாறிப்போம்; அப்பொழுது நதி
யில் இருக்கிற தண்ணீரை எகிப்தியர் குடிக்
கக்கூடாமல் அரோசிப்பார்கள்; இதினால்
[5]நானே கர்த்தர் என்பதை அறிந்துகொள்
வாய் என்று கர்த்தர் சொல்லுகிறார் என்று
19 சொல் என்றார். மேலும், கர்த்தர் மோசே
யை நோக்கி: நீ ஆரோனிடத்தில் உன் கோலை
எடுத்துக்கொண்டு எகிப்தின் நீர் நிலைகளாகிய
அவர்கள் வாய்க்கால்கள்மேலும் நதிகள்மே
லும் குளங்கள்மேலும் தண்ணீர் நிற்கிற எல்
லா இடங்கள்மேலும், அவைகள் இரத்தமா
கும்படிக்கு, உன் கையை நீட்டு; அப்பொ
ழுது எகிப்துதேசம் எங்கும் மரப்பாத்திரங்களி
லும் கற்பாத்திரங்களிலும் இரத்தம் உண்டா
யிருக்கும் என்று சொல் என்றார். கர்த்தர் 20
கட்டளையிட்டபடி மோசேயும் ஆரோனும்
செய்தார்கள்; பார்வோனுடைய கண்களுக்கு
முன்பாகவும், அவன் ஊழியக்காரரின் கண்
களுக்கு முன்பாகவும் கோலை [6]ஓங்கி நதியி
லுள்ள தண்ணீரை அடிக்க, நதியிலுள்ள
தண்ணீர் எல்லாம் இரத்தமாய் மாறிப்போயி
ற்று. நதியின் மீன்கள் செத்து, நதி நாறிப் 21
போயிற்று; நதியின் தண்ணீரைக் குடிக்க எகி
ப்தியருக்குக் கூடாமற்போயிற்று; எகிப்து
தேசம் எங்கும் இரத்தமாயிருந்தது. எகிப் 22
தின் [7]மந்திரவாதிகளும் தங்கள் மந்திரவித்தை
யினால் அப்படிச் செய்தார்கள்; கர்த்தர் சொ
ல்லியிருந்தபடி பார்வோனின் இருதயம் கடி
னப்பட்டது; அவர்களுக்குச் செவிகொடா
மற்போனான். பார்வோன் இதையும் சிந்தியா 23
மல், தன் வீட்டிற்குத் திரும்பிப்போனான்.
நதியின் தண்ணீர் குடிக்க உதவாதபடியால், 24
குடிக்கத்தக்க தண்ணீருக்காக எகிப்தியர் எல்
லாரும் நதியோரத்தில் ஊற்றுத் தோண்டினார்
கள். கர்த்தர் நதியை அடித்து ஏழுநாள் 25
ஆயிற்று.

அப்பொழுது கர்த்தர் மோசேயை நோக்கி: **8**
நீ பார்வோனிடத்தில் போய்: எனக்கு ஆரா
தனைசெய்ய என் ஜனங்களை அனுப்பிவிடு.
நீ அவர்களை அனுப்பிவிடமாட்டேன் என்பா 2
யாகில், உன் எல்லை அடங்கலையும் [8]தவளை
களால் வாதிப்பேன். நதி தவளைகளைத் திர 3
ளாய்ப் பிறப்பிக்கும்; அவைகள் உன் வீட்
டிலும் உன் படுக்கை அறையிலும், உன் மஞ்
சத்தின்மேலும், உன் ஊழியக்காரர் வீடுகளி
லும், உன் ஜனங்களிடத்திலும், உன் அடுப்பு
களிலும் மாப்பிசைகிற உன் தொட்டிகளி
லும் வந்து ஏறும். அந்தத் தவளைகள் உன் 4
மேலும், உன் ஜனங்கள்மேலும், உன் ஊழி
யக்காரர் எல்லார்மேலும் வந்து ஏறும் என்று
கர்த்தர் சொல்லுகிறார் என்று சொல் என்றார்.
மேலும் கர்த்தர் மோசேயினிடத்தில்: நீ 5
ஆரோனை நோக்கி: நீ உன் கையில் இருக்கிற
கோலை நதிகள்மேலும் வாய்க்கால்கள்மேலும்
குளங்கள்மேலும் நீட்டி, எகிப்துதேசத்தின்
மேல் தவளைகளை வரும்படி செய் என்று
சொல் என்றார். அப்படியே ஆரோன் தன் 6
கையை எகிப்திலுள்ள தண்ணீர்கள்மேல் நீட்
டினான்; அப்பொழுது தவளைகள் வந்து, எகி
ப்துதேசத்தை மூடிக்கொண்டது. மந்திரவா 7
திகளும் தங்கள் மந்திரவித்தையினால் அப்படிச்
செய்து, எகிப்துதேசத்தின்மேல் [9]தவளைகளை
வரப்பண்ணினார்கள். பார்வோன் மோசேயை 8
யும் ஆரோனையும் அழைப்பித்து: அந்தத் தவ
ளைகள் என்னையும் என் ஜனங்களையும் விட்டு
நீங்கும்படி கர்த்தரை நோக்கி [10]வேண்டிக்
கொள்ளுங்கள்; கர்த்தருக்குப் பலியிடும்படி
ஜனங்களைப் போகவிடுவேன் என்றான். அப் 9
பொழுது மோசே பார்வோனை நோக்கி: தவ
ளைகள் நதியிலேமாத்திரம் இருக்கத்தக்கதாய்

[1] உபா. 29. 5. அப். 7. 23, 30
[2] ஏசா. 7. 11. மத். 12. 39. யோ. 2. 18; 6. 30
[3] 2 தீமோ. 3. 8
[4] வெளி. 16. 4, 6
[5] 1 சாமு. 17. 26. எசே. 29. 9
[6] எண். 20. 11
[7] 2 தீமோ. 3. 8
[8] வெளி. 16. 12, 13
[9] சங். 78. 45; 105. 30
[10] எண். 21. 7. 1 இரா. 13. 6. அப். 8. 24

அவைகளை உம்மிடத்திலும் உம்முடைய வீட்
டிலும் இல்லாமல் ஒழிந்துபோகும்படி செய்ய,
உமக்காகவும் உம்முடைய ஊழியக்காரருக்
காகவும் உம்முடைய ஜனங்களுக்காகவும்
நான் விண்ணப்பம் பண்ணவேண்டிய காலத்
தைக் குறிக்கும் மேன்மை உமக்கே இருப்ப
10 தாக என்றான். அதற்கு அவன்: நாளைக்கு
என்றான். அப்பொழுது இவன்: எங்கள்
தேவனாகிய **கர்த்தருக்கு** [1]ஒப்பானவர் இல்லை
என்பதை நீர் அறியும்படிக்கு உம்முடைய
11 வார்த்தையின்படி ஆகக்கடவது. தவளைகள்
உம்மையும் உம்முடைய வீட்டையும் உம்மு
டைய ஊழியக்காரரையும் உம்முடைய ஜனங்
களையும் விட்டு நீங்கி, நதியிலேமாத்திரம் இரு
12 க்கும் என்றான். மோசேயும் ஆரோனும் பார்
வோனைவிட்டுப் புறப்பட்டார்கள். பார்வோ
னுக்கு விரோதமாக வரப்பண்ணின தவளை
கள் நிமித்தம் மோசே **கர்த்தரை** நோக்கிக்
13 [2]கூப்பிட்டான். **கர்த்தர்** மோசேயின் சொற்
படி செய்தார்; வீடுகளிலும் முற்றங்களிலும்
வயல்களிலும் இருந்த தவளைகள் செத்துப்
14 போயிற்று. அவைகளைக் குவியல் குவியலா
கச் சேர்த்தார்கள்; அதினால் பூமியெங்கும்
15 நாற்றம் எடுத்தது. [3]இலகுவுண்டாயிற்றென்று
பார்வோன் கண்டபோதோ, தன் இருதயத்
தைக் கடினப்படுத்தி, அவர்களுக்குச் செவி
கொடாமற்போனான்; **கர்த்தர்** சொல்லியிருந்
தபடி ஆயிற்று.
16 அப்பொழுது **கர்த்தர்** மோசேயினிடத்தில்:
நீ ஆரோனை நோக்கி: உன் கோலை நீட்டி,
பூமியின் புழுதியின்மேல் அடி; அப்பொ
ழுது அது எகிப்துதேசம் எங்கும் பேன்களா
17 ய்ப் போம் என்று சொல் என்றார். அப்
படியே செய்தார்கள்; ஆரோன் தன் கையில்
இருந்த தன் கோலைநீட்டி, பூமியின் புழுதியின்
மேல் அடித்தான்; அப்பொழுது அது மனி
தர்மேலும் மிருகஜீவன்கள்மேலும் பேன்க
ளாய் [4]எகிப்துதேசம் எங்கும் பூமியின் புழுதி
18 யெல்லாம் பேன்களாயிற்று. மந்திரவாதிக
ளும் தங்கள் மந்திரவித்தையினால் பேன்க
ளைப் பிறப்பிக்கும்படிப் பிரயத்தனஞ் செய்
தார்கள்; செய்தும், [5]அவர்களால் கூடாமற்
போயிற்று; பேன்கள் மனிதர்மேலும் மிருக
19 ஜீவன்கள்மேலும் இருந்தது. அப்பொழுது
மந்திரவாதிகள் பார்வோனை நோக்கி: இது
தேவனுடைய *விரல் என்றார்கள். ஆனாலும்,
**கர்த்தர்** சொல்லியிருந்தபடி பார்வோனுடைய
இருதயம் கடினப்பட்டது; அவர்களுக்குச்
செவிகொடாமற்போனான்.
20 அப்பொழுது **கர்த்தர்** மோசேயை நோக்கி:
நாளை அதிகாலமே நீ எழுந்துபோய், பார்
வோன் நதிக்குப் புறப்பட்டு வரும்போது, அவ
னுக்கு முன்பாக நின்று: எனக்கு ஆராதனை
செய்யும்படி என் ஜனங்களைப் போகவிடு.
21 என் ஜனங்களைப் போகவிடாயாகில், நான்
உன்மேலும், உன் ஊழியக்காரர்மேலும், உன்
ஜனங்கள்மேலும், உன் வீடுகள்மேலும் பல
வித வண்டுகளை அனுப்புவேன்; எகிப்தியர்
வீடுகளும் அவர்கள் இருக்கிற தேசமும் அந்த
வண்டுகளால் நிறையும். பூமியின் நடுவில் 22
நானே **கர்த்தர்** என்பதை நீ அறியும்படி என்
ஜனங்கள் இருக்கிற கோசேன் நாட்டில் அந்
நாளிலே வண்டுகள் வராதபடிக்கு, அந்த நாட்
டை விசேஷப்படுத்தி, என் ஜனங்களுக்கும் 23
உன் ஜனங்களுக்கும் வித்தியாசம் உண்டா
கும்படி செய்வேன்; இந்த அடையாளம்
நாளைக்கு உண்டாகும் என்று **கர்த்தர்** சொல்
லுகிறார் என்று சொல் என்றார். அப்படியே 24
**கர்த்தர்** செய்தார்; [6]மகா திரளான வண்டு
ஜாதிகள் பார்வோன் வீட்டிலும், அவன் ஊழி
யக்காரர் வீடுகளிலும், எகிப்துதேசம் முழுவ
திலும் வந்தது; வண்டுகளினாலே தேசம் கெட்
டுப்போயிற்று. அப்பொழுது பார்வோன் 25
மோசேயையும் ஆரோனையும் அழைப்பித்து:
நீங்கள் போய், உங்கள் தேவனுக்கு தேசத்தி
லேதானே பலியிடுங்கள் என்றான். அதற்கு 26
மோசே: அப்படிச் செய்யத்தகாது; எங்கள்
தேவனாகிய **கர்த்தருக்கு** நாங்கள் எகிப்திய
ருடைய [7]அருவருப்பைப் பலியிடுகிறதா
யிருக்குமே; எகிப்தியருடைய அருவருப்
பை நாங்கள் அவர்கள் கண்களுக்கு முன்
பாகப் பலியிட்டால், எங்களைக் கல்லெறி
வார்கள் அல்லவா? நாங்கள் வனாந்தரத்தில் 27
மூன்றுநாள் பிரயாணம்போய், எங்கள் தேவ
னாகிய **கர்த்தர்** எங்களுக்கு விதிக்கிறபடியே
அவருக்குப் பலியிடுவோம் என்றான். அப் 28
பொழுது பார்வோன்: நீங்கள் உங்கள் தேவ
னாகிய **கர்த்தருக்கு** வனாந்தரத்தில் பலியிடும்
படிக்கு, நான் உங்களைப் போகவிடுவேன்;
ஆனாலும், நீங்கள் அதிக தூரமாய்ப் போக
வேண்டாம்; [8]எனக்காக வேண்டுதல் செய்யுங்
கள் என்றான். அதற்கு மோசே: நான் 29
உம்மை விட்டுப் புறப்பட்டபின், நாளைக்கு
வண்டுகள் பார்வோனையும் அவர் ஊழியக்கா
ரரையும் அவர் ஜனங்களையும் விட்டு நீங்கும்
படி, நான் **கர்த்தரை** நோக்கி வேண்டுதல்
செய்வேன்; ஆனாலும், **கர்த்தருக்குப்** பலி
யிடுகிறதற்கு ஜனங்களைப் போகவிடாதபடிப்
பார்வோன் இனி வஞ்சனை செய்யாதிருப்பா
ராக என்றான். மோசே பார்வோனை விட்டுப் 30
புறப்பட்டுப்போய், **கர்த்தரை** நோக்கி வேண்
டுதல் செய்தான். அப்பொழுது **கர்த்தர்** மோ 31
சேயின் சொற்படி, வண்டு ஜாதிகள் பார்வோ
னையும் அவன் ஊழியக்காரரையும் அவன்
ஜனங்களையும் விட்டு நீங்கும்படி செய்தார்;
ஒன்றாகிலும் மீந்திருக்கவில்லை. பார்வோனோ, 32
இந்த முறையும் தன் இருதயத்தைக் கடினப்
படுத்தி, ஜனங்களைப் போகவிடாதிருந்தான்.
பின்பு, **கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ **9**
பார்வோனிடத்தில் போய்: எனக்கு ஆராத
னைசெய்ய என் ஜனங்களைப் போகவிடு. நீ 2
அவர்களை விடமாட்டேன் என்று இன்னும்
நிறுத்திவைத்தாயாகில், **கர்த்தருடைய** கரம் 3
வெளியிலிருக்கிற உன் மிருகஜீவன்களாகிய

[1] உபா. 32. 11; 33. 26. 2 சாமு. 7. 22. சங். 83. 18. ஏசா. 40. 25. எரே. 10. 6, 7
[2] யாக். 5. 16–18
[3] பிர. 8. 11
[4] சங். 105. 31
[5] ஏசா. 19. 12. தானி. 2. 10
* கரம் = சக்தி. 1 சாமு. 6. 3, 9 சங். 8. 3. மத். 12. 28. லூ. 11. 29
[6] சங். 105. 31
[7] ஆதி. 43. 32. உபா. 7. 25. 1 இரா. 11. 5–7
[8] யாத். 9. 28. 1 இரா. 13. 6

குதிரைகளின்மேலும் கழுதைகளின்மேலும்
ஒட்டகங்களின்மேலும் ஆடுமாடுகளின்மேலும்
இருக்கும்; மகா கொடிதான கொள்ளைநோய்
4 உண்டாகும். **கர்த்தர்** இஸ்ரவேலரின் மிருக
ஜீவன்களுக்கும் எகிப்தியரின் மிருகஜீவன்க
ளுக்கும் வித்தியாசம்பண்ணுவார்; இஸ்ரவேல்
புத்திரருக்கு உரியவைகள் எல்லாவற்றிலும்
5 ஒன்றும் சாவதில்லை என்றார். மேலும், நாளைக்
குக் **கர்த்தர்** இந்தக் காரியத்தைத் தேசத்தில்
செய்வார் என்று சொல்லி, **கர்த்தர்** ஒரு கா
லத்தைக் குறித்தார் என்றும், எபிரெயருடைய
தேவனாகிய **கர்த்தர்** சொல்லுகிறார் என்றும்
6 அவனிடத்தில் சொல் என்றார். மறுநாளில்
**கர்த்தர்** அந்தக் காரியத்தைச் செய்தார்; எகிப்
தியருடைய [1]மிருகஜீவன்கள் எல்லாம் செத்
துப்போயிற்று; இஸ்ரவேல் புத்திரரின் மிருக
7 ஜீவன்களில் ஒன்றாகிலும் சாகவில்லை. பார்
வோன் விசாரித்து, இஸ்ரவேலரின் மிருக
ஜீவன்களில் ஒன்றாகிலும் சாகவில்லை என்று
அறிந்தான். பார்வோனுடைய இருதயமோ
கடினப்பட்டது; அவன் ஜனங்களைப் போக
விடவில்லை.
8 அப்பொழுது **கர்த்தர்** மோசேயையும் ஆ
ரோனையும் நோக்கி: உங்கள் கைப்பிடி நிறைய
சூளையின் சாம்பலை அள்ளிக்கொள்ளுங்கள்;
மோசே அதைப் பார்வோனுடைய கண்க
ளுக்குமுன் வானத்திற்கு நேராக இறைக்கக்
9 கடவன். அது எகிப்துதேசம் மீதெங்கும்
தூசியாகி, எகிப்துதேசமெங்கும் மனிதர்மே
லும் மிருகஜீவன்கள்மேலும் எரிபந்தமான
[2]கொப்புளங்களை எழும்பப்பண்ணும் என்றார்.
10 அப்படியே அவர்கள் சூளையின் சாம்பலை அள்
ளிக்கொண்டு, பார்வோனுக்கு முன்பாக வந்து
நின்றார்கள். மோசே அதை வானத்துக்கு
நேராக இறைத்தான்; அப்பொழுது மனிதர்
மேலும் மிருகஜீவன்கள்மேலும் எரிபந்தமான
11 கொப்புளங்கள் எழும்பிற்று. அந்தக் கொப்
புளங்கள் மந்திரவாதிகள்மேலும் எகிப்தியர்
எல்லார்மேலும் உண்டானதினால், அந்தக்
கொப்புளங்களின் நிமித்தம் [3]மந்திரவாதிகளும்
மோசேக்கு முன்பாக நிற்கக்கூடாதிருந்தது.
12 ஆனாலும், **கர்த்தர்** மோசேயோடே சொல்லி
யிருந்தபடியே, **கர்த்தர்** பார்வோனின் இரு
தயத்தைக் கடினப்படுத்தினார்; அவன் அவர்க
ளுக்குச் செவிகொடுக்கவில்லை.
13 அப்பொழுது **கர்த்தர்** மோசேயை நோக்கி:
நீ அதிகாலமே எழுந்திருந்து போய், பார்வோ
னுக்கு முன்பாக நின்று: எனக்கு ஆராதனை
14 செய்ய என் ஜனங்களை அனுப்பிவிடு. விடா
திருந்தால், பூமியெங்கும் என்னைப்போல
வேறொருவரும் இல்லை என்பதை நீ அறியும்
படிக்கு, இந்த முறை நான் சகலவித [4]வா
தைகளையும் உன் இருதயத்திலும், உன் ஊழி
யக்காரர்மேலும் உன் ஜனங்கள்மேலும் அனுப்
15 புவேன். நீ பூமியில் இராமல் நாசமாய்ப்
போகும்படி நான் என் கையை நீட்டி, உன்
னையும் உன் ஜனங்களையும் கொள்ளைநோயி
னால் வாதிப்பேன். என்னுடைய வல்லமை 16
யை உன்னிடத்தில் காண்பிக்கும்படியாகவும்,
என் நாமம் பூமியிலெங்கும் பிரஸ்தாபமாகும்
படியாகவும் உன்னை [5]நிலைநிறுத்தினேன். நீ 17
என் ஜனங்களைப் போகவிடாமல், இன்னும்
அவர்களுக்கு விரோதமாய் உன்னை [6]உயர்த்து
கிறாயா? எகிப்து தோன்றிய நாள்முதல் இது 18
வரைக்கும் அதில் பெய்யாத மிகவும் கொடிய
கல்மழையை நாளை இந்நேரம் பெய்யப்பண்
ணுவேன். இப்பொழுதே ஆள் அனுப்பி, 19
உன் மிருகஜீவன்களையும் வெளியில் உனக்கு
இருக்கிற யாவையும் சேர்த்துக்கொள்; வீட்டி
லே சேர்க்கப்படாமல் வெளியிலிருக்கும் ஒவ்
வொரு மனிதனும் மிருகமும் செத்துப்போ
கத்தக்கதாய் அந்தக் [7]கல்மழை பெய்யும்
என்று எபிரெயரின் தேவனாகிய **கர்த்தர்** சொ
ல்லுகிறார் என்று அவனுக்குச் சொல் என்றார்.
பார்வோனுடைய ஊழியக்காரரில் எவன் **கர்த்** 20
**தருடைய** [8]வார்த்தைக்குப் பயப்பட்டானோ,
அவன் தன் வேலைக்காரரையும் தன் மிருக
ஜீவன்களையும் வீடுகளுக்கு ஓடிவரப்பண்ணி
னான். எவன் **கர்த்தருடைய** வார்த்தையை 21
மதியாமற் போனானோ, அவன் தன் வேலைக்
காரரையும் தன் மிருகஜீவன்களையும் வெளி
யிலே விட்டுவிட்டான்.
அப்பொழுது **கர்த்தர்** மோசேயை நோக்கி: 22
எகிப்துதேசம் எங்கும் மனிதர்மேலும் மிருக
ஜீவன்கள்மேலும் எகிப்துதேசத்திலிருக்கிற
சகலவிதமான பயிர்வகைகள்மேலும் [9]கல்மழை
பெய்ய, உன் கையை வானத்திற்கு நேராக
நீட்டு என்றார். அப்படியே மோசே தன் 23
கோலை வானத்திற்கு நேராக நீட்டினான். அப்
பொழுது **கர்த்தர்** இடிமுழக்கங்களையும் [10]கல்
மழையையும் அனுப்பினார்; அக்கினி தரையின்
மேல் வேகமாய் ஓடிற்று; எகிப்துதேசத்தின்
மேல் **கர்த்தர்** கல்மழையைப் பெய்யப்பண்ணி
னார்; கல்மழையும் கல்மழையோடே கலந்த அக் 24
கினியும் மிகவும் கொடிதாயிருந்தது; எகிப்து
தேசம் குடியேற்றப்பட்ட நாள்முதல் அதில்
அப்படி ஒருபோதும் உண்டானதில்லை. எகிப் 25
துதேசம்எங்கும்மனிதரையும்மிருகஜீவன்களை
யும், வெளியிலே இருந்தவைகள் எவைகளோ
அவைகள் எல்லாவற்றையும் அந்தக் கல்மழை
[11]அழித்துப்போட்டது; அது வெளியின் பயிர்
வகைகளையெல்லாம் அழித்து, வெளியின் மரங்
களையெல்லாம் முறித்துப்போட்டது. இஸ்ர 26
வேல் புத்திரர் இருந்த [12]கோசேன் நாட்டிலே
மாத்திரம் கல்மழை இல்லாதிருந்தது. அப் 27
பொழுது பார்வோன் மோசேயையும் ஆரோ
னையும் அழைப்பித்து: நான் இந்த முறை
பாவம் செய்தேன்; **கர்த்தர்** [13]நீதியுள்ளவர்;
நானும் என் ஜனமும் துன்மார்க்கர். இது 28
போதும்; இந்த மகா இடிமுழக்கங்களும் கல்
மழையும் ஒழியும்படிக்கு, **கர்த்தரை** நோக்கி
[14]விண்ணப்பம்பண்ணுங்கள்; நான் உங்களைப்
போகவிடுவேன், இனி உங்களுக்குத் தடை
யில்லை என்றான். மோசே அவனை நோக்கி: 29

[1] சங். 78. 50
[2] உபா. 28. 27. யோபு 2. 7. வெளி. 16. 2
[3] ஏசா. 47. 12, 14. 2 தீமோ. 3. 8
[4] உபா. 28. 15. 1 சாமு. 4. 8. எரே. 19. 8. வெளி. 18. 8
[5] நீதி. 16. 4. ரோ. 9. 17. 1 பே. 2. 8, 9
[6] யோபு 9. 4
[7] சங். 83. 15
[8] நீதி. 16. 20
[9] வெளி. 16. 21
[10] யோசு. 10. 11. 1 சாமு. 12. 17, 18. யோபு 38. 22. சங். 18. 13. ஏசா. 30. 30. எசே. 38. 22. வெளி. 8. 7
[11] சங். 105. 33
[12] ஏசா. 32. 18, 19
[13] 2 நாளா. 12. 6. சங். 129. 4. புல. 1. 18. தானி. 9. 14
[14] அப். 8. 24

நான் பட்டணத்திலிருந்துபுறப்பட்டவுடனே,
என்கைகளைக் **கர்த்தருக்கு** [1]நேராகவிரிப்பேன்;
அப்பொழுது இடிமுழக்கங்கள் ஓய்ந்து கல்
மழை நின்றுபோம்; அதினால் [2]பூமி **கர்த்த**
30 **ருடையது** என்பதை நீர் அறிவீர்: ஆகிலும்,
நீரும் உம்முடைய ஊழியக்காரரும் இன்னும்
தேவனாகிய **கர்த்தருக்குப்** பயப்படமாட்டீர்
31 கள் [3]என்பதை அறிவேன் என்றான். அப்
பொழுதுவாற்கோதுமை கதிர்ப்பயிரும் சணல்
தாள்ப்பயிருமாயிருந்தது; அதினால் சணலும்
வாற்கோதுமையும் அழிக்கப்பட்டுப்போயிற்று.
32 கோதுமையும் கம்பும் கதிர்விடாதிருந்ததால்,
33 அவைகள் அழிக்கப்படவில்லை. மோசே பார்
வோனைவிட்டுப் பட்டணத்திலிருந்து புறப்
பட்டு, தன் கைகளைக் **கர்த்தருக்கு** நேராக விரித்
தான்; அப்பொழுது இடிமுழக்கமும் கல்மழை
யும்நின்றது; மழையும்பூமியில்பெய்யாமலிருந்
34 தது. மழையும் கல்மழையும் இடிமுழக்கமும்
நின்றுபோனதைப் பார்வோன் கண்டபோது,
அவனும் அவன் ஊழியக்காரரும் [4]பின்னும்
பாவம்செய்து, தங்கள் இருதயத்தைக் கடினப்
35 படுத்தினார்கள். **கர்த்தர்** மோசேயைக்கொண்டு
சொல்லியிருந்தபடியே, பார்வோனின் இரு
தயம் கடினப்பட்டது; அவன் இஸ்ரவேல்
புத்திரரைப் போகவிடவில்லை.

**10** பின்பு **கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ
பார்வோனிடத்தில் போ. அவர்கள் நடுவே
நான் இந்த என் அடையாளங்களைச் செய்யும்
2 படிக்கும், நான் எகிப்திலே நடப்பித்ததை
யும் நான் அவர்களுக்குள் செய்த என் அடை
யாளங்களையும், நீ உன் பிள்ளைகளின் செவி
கள் கேட்கவும், உன் பிள்ளைகளுடைய பிள்
ளைகளின் செவிகள் கேட்கவும் விவரித்துச்
சொல்லும்படிக்கும், [5]நானே **கர்த்தர்** என்
பதை நீங்கள் அறியும்படிக்கும், நான் அவன்
இருதயத்தையும் அவன் ஊழியக்காரரின் இரு
தயத்தையும் கடினப்படுத்தினேன் என்றார்.
3 அப்படியே மோசேயும் ஆரோனும் பார்வோ
னிடத்தில் வந்து: உன்னைத் தாழ்த்த [6]நீ எது
வரைக்கும் மனதில்லாதிருப்பாய்? என் சமு
கத்தில் எனக்கு ஆராதனைசெய்ய என் ஜனங்க
4 ளைப் போகவிடு. நீ என் ஜனங்களைப் போக
விடமாட்டேன் என்பாயாகில், நான் நாளை
க்கு உன் எல்லைகளுக்குள்ளே வெட்டுக்கிளி
5 களை வரப்பண்ணுவேன். தரைகாணாதபடிக்கு
அவைகள் பூமியின் முகத்தை மூடி, கல்ம
ழைக்குத் தப்பி மீதியாக வைக்கப்பட்டதைப்
[7]பட்சித்து, வெளியிலே துளிர்க்கிற செடிகளை
6 யெல்லாம் தின்றுபோடும். உன் வீடுகளும்
உன் ஊழியக்காரருடைய வீடுகளும் எகிப்தி
யரின் வீடுகளும் எல்லாம் அவைகளால் நிரம்
பும்; உன் பிதாக்களும் உன் பிதாக்களின்
பிதாக்களும் தாங்கள் பூமியில் தோன்றின
நாள்முதல் இந்நாள்வரைக்கும் அப்படிப்பட்ட
வைகளைக் கண்டதில்லை என்று எபிரெயரின்
தேவனாகிய **கர்த்தர்** சொல்லுகிறார் என்று
சொல்லி, திரும்பிக்கொண்டு பார்வோனை

[1] 1 இரா. 8. 38. சங். 143. 6. ஏசா. 1. 15
[2] சங். 24. 1. 1 கொ. 10. 26, 28
[3] ஏசா. 26. 10
[4] ரோ. 2. 4–6
[5] உபா. 4. 9. சங். 44. 1. யோவேல் 1. 3
[6] 1 இரா. 21. 29. யோபு 42. 6 எரே. 13. 18. யாக். 4. 10. 1 பே. 5. 6
[7] யோவேல் 1. 4. 2. 25
[*] [illegible], யோசு. 23. 13. 1 சாமு. 18. 21. நீதி. 29. 6. பிர. 7. 26. 1 கொ. 7. 35
[8] சங். 78. 46. 105. 34, 35
[9] யோவேல் 2. 2
[10] யாத். 9. 27, 28
[11] 1 இரா. 13. 6. ஏசா. 26. 16

விட்டுப் புறப்பட்டான். அப்பொழுது பார் 7
வோனுடைய ஊழியக்காரர் அவனை நோக்கி:
எந்தமட்டும் இந்த மனிதன் நமக்குக் [*]கண்
ணியாயிருப்பான்? தங்கள் தேவனாகிய **கர்த்**
**தருக்கு** ஆராதனைசெய்ய அந்த மனிதரைப்
போகவிடும்; எகிப்து அழிந்துபோனதை
நீர் இன்னும் அறியவில்லையா என்றார்கள்.
அப்பொழுது மோசேயும் ஆரோனும் பார் 8
வோனிடத்துக்குத் திரும்ப அழைக்கப்பட்
டார்கள். அவன் அவர்களை நோக்கி: நீங்கள்
போய் உங்கள் தேவனாகிய **கர்த்தருக்கு** ஆரா
தனை செய்யுங்கள் என்று சொல்லி; யாரார்
போகிறார்கள் என்று கேட்டான். அதற்கு 9
மோசே: எங்கள் இளைஞரோடும், எங்கள்
முதியோரோடும், எங்கள் குமாரரோடும், எங்
கள் குமாரத்திகளோடும், எங்கள் ஆடுகளையும்
எங்கள் மாடுகளையும் கூட்டிக்கொண்டு போ
வோம்; நாங்கள் **கர்த்தருக்குப்** பண்டிகை
கொண்டாடவேண்டும் என்றான். அப்பொ 10
ழுது அவன்: நான் உங்களையும் உங்கள் குழந்
தைகளையும் எப்படி விடுவேனோ, அப்படியே
**கர்த்தர்** உங்களோடிருப்பாராக; எச்சரிக்கை
யாயிருங்கள், உங்களுக்குப் பொல்லாப்பு நேரி
டும்; அப்படி வேண்டாம்; புருஷராகிய நீங் 11
கள் போய், **கர்த்தருக்கு** ஆராதனை செய்யுங்கள்;
இதுதானே நீங்கள் விரும்பிக் கேட்டது என்று
சொன்னான். அவர்கள் பார்வோன் சமுகத்
தினின்று துரத்திவிடப்பட்டார்கள்.
அப்பொழுது **கர்த்தர்** மோசேயை நோக்கி: 12
வெட்டுக்கிளிகள் எகிப்து தேசத்தின்மேல்
வந்து, கல்மழையினால் அழியாத பூமியின்
பயிர்வகைகளையெல்லாம் பட்சிக்கும்படிக்கு,
எகிப்துதேசத்தின்மேல் உன் கையை நீட்டு
என்றார். அப்படியே மோசே தன் கோலை 13
எகிப்துதேசத்தின்மேல் நீட்டினான்; அப்பொ
ழுது **கர்த்தர்** அன்று பகல் முழுவதும் அன்று
இராமுழுவதும் கீழ்காற்றைத் தேசத்தின்மேல்
வீசப்பண்ணினார்; விடியற்காலத்திலே கீழ்
காற்று வெட்டுக்கிளிகளைக் கொண்டுவந்தது.
வெட்டுக்கிளிகள் [8]எகிப்துதேசம் எங்கும் 14
பரம்பி, எகிப்தின் எல்லையில் எங்கும் மிகவும்
ஏராளமாய் இறங்கிற்று; அப்படிப்பட்ட வெட்
டுக்கிளிகள் [9]அதற்கு முன் இருந்ததும்
இல்லை, அதற்குப் பின் இருப்பதும் இல்லை.
அவைகள் பூமியின் முகம் முழுதையும் மூடி 15
ற்று; தேசம் அவைகளால் அந்தகாரப்பட்டது;
கல்மழைக்குத் தப்பியிருந்த நிலத்தின் பயிர்
வகைகள் யாவையும் மரங்களின் கனிகள்
யாவையும் அவைகள் பட்சித்துப்போட்டது;
எகிப்துதேசம் எங்குமுள்ள மரங்களிலும் வயல்
வெளியின் பயிர்வகைகளிலும் ஒரு பச்சிலை
யும் மீதியாயிருக்கவில்லை. அப்பொழுது பார் 16
வோன் மோசேயையும் ஆரோனையும் தீவிர
மாய் அழைப்பித்து: உங்கள் தேவனாகிய **கர்த்**
**தருக்கும்** உங்களுக்கும் [10]விரோதமாகப் பாவம்
செய்தேன். இந்த ஒருமுறைமாத்திரம் [11]நீ 17
என் பாவத்தை மன்னிக்கவேண்டும்; உங்கள்

தேவனாகிய **கர்த்தர்** இந்தச் சாவைமாத்திரம்
என்னை விட்டு விலக்க அவரை நோக்கி விண்
18 ணப்பம்பண்ணுங்கள் என்றான். அவன் பார்
வோனை விட்டுப் புறப்பட்டுப் போய், **கர்த்**
19 **தரை** நோக்கி விண்ணப்பம்பண்ணினான். அப்
பொழுது **கர்த்தர்** மகா பலத்த மேல்காற்றை
வீசும்படி செய்தார்; அது வெட்டுக்கிளிகளை
அடித்துக்கொண்டு போய் செங்கடலிலே
போட்டது; எகிப்தின் எல்லையில் எங்கும்
ஒரு வெட்டுக்கிளியாகிலும் மீதியாயிருந்த
20 தில்லை. **கர்த்தரோ** பார்வோனின் இருதயத்
தைக் கடினப்படுத்தினார்; அவன் இஸ்ரவேல்
புத்திரரைப் போகவிடவில்லை.
21 அப்பொழுது **கர்த்தர்** மோசேயை நோக்கி:
[1]தடவிக்கொண்டிருக்கத்தக்கதான இருள்
எகிப்துதேசத்தின்மேல் உண்டாகும்படிக்கு,
உன் கையை வானத்திற்கு நேராக நீட்டு என்
22 றார். மோசே தன் கையை வானத்திற்கு
நேராக நீட்டினான்; அப்பொழுது எகிப்துதே
சம் எங்கும் மூன்றுநாள்மட்டும் காரிருள் உண்
23 டாயிற்று. மூன்றுநாள்மட்டும் ஒருவரை ஒரு
வர் காணவும் இல்லை, ஒருவரும் தம்மிடத்தை
விட்டு எழுந்திருக்கவும் இல்லை; இஸ்ரவேல்
புத்திரர்: யாவருக்குமோவெனில் அவர்கள்
வாசஸ்தலங்களிலே வெளிச்சம் இருந்தது.
24 அப்பொழுது பார்வோன் மோசேயை அழை
ப்பித்து: நீங்கள் போய்க் **கர்த்தருக்கு** ஆராதனை
செய்யுங்கள்; உங்கள் ஆடுகளும் உங்கள் மாடு
களும்மாத்திரம் நிறுத்தப்படவேண்டும்; உங்
கள் குழந்தைகள் உங்களுடன் போகலாம்
25 என்றான். அதற்கு மோசே: நாங்கள் எங்கள்
தேவனாகிய **கர்த்தருக்குப்** படைக்கும் பலிக
ளையும் சர்வாங்க தகனபலிகளையும் நீர் எங்கள்
26 கையிலே கொடுக்கவேண்டும். எங்கள் [2]மிருக
ஜீவன்களும் எங்களோடேகூட வரவேண்டும்;
ஒரு குளம்பும் பின்வைக்கப்படுவதில்லை; எங்
கள் தேவனாகிய **கர்த்தருக்கு** ஆராதனை செய்
கிறதற்கு அவைகளிலிருந்து எடுக்கவேண்டும்;
இன்னதைக்கொண்டு **கர்த்தருக்கு** ஆராதனை
செய்வோம் என்பது நாங்கள் அங்கே போய்ச்
சேருமளவும் எங்களுக்குத் தெரியாது என்
27 றான். **கர்த்தர்** பார்வோனுடைய இருதயத்
தைக் கடினப்படுத்தினார்; அவன் அவர்களைப்
28 போகவிட மனதில்லாதிருந்தான். பார்வோன்
அவனை நோக்கி: என்னைவிட்டு அப்பாலே
போ; நீ இனி என் முகத்தைக் காணாதபடி
எச்சரிக்கையாயிரு. நீ இனி என் முகத்தைக்
29 காணும் நாளில் சாவாய் என்றான். அப்பொ
ழுது மோசே: நீர் சொன்னது சரி; [3]இனி
நான் உம்முடைய முகத்தைக் காண்பதில்லை
என்றான்.

**11** அப்பொழுது **கர்த்தர்** மோசேயை நோக்கி:
இன்னும் ஒரு வாதையைப் பார்வோன்மே
லும் எகிப்தின்மேலும் வரப்பண்ணுவேன்;
அதற்குப்பின் அவன் உங்களை இவ்விடத்தி
லிருந்து போகவிடுவான்; [4]சமூலமாய் உங்க
ளைப் போகவிடுவதும் அல்லாமல், உங்களை

1 சங். 35. 6; 105. 28. அப். 2. 14; 6. 4 வெளி. 8. 22
2 ஓசி. 5. 6. சகரி. 14. 20
3 எபி. 11. 27
4 யாத். 12. 36. சங். 106. 45
5 சங். 106. 46
6 2 சாமு. 7. 9. எஸ்தர் 9. 4
7 யோபு 34. 20. மீகா. 2. 10. சகரி. 14. 3
8 ஆமோஸ் 4. 10
9 யாத். 12. 30. ஆமோஸ் 5. 17
10 யோசு. 10. 21
11 ரோ. 2. 5; 9. 22
* பங்குனி. 13. 4 உபா. 16. 1

இவ்விடத்திலிருந்து துரத்தியும் விடுவான்.
இப்பொழுது ஒவ்வொருவனும் அவனவன் 2
அயலானிடத்திலும், ஒவ்வொருத்தியும் அவ
ளவள் அயலாளிடத்திலும் வெள்ளியுடைமை
களையும் பொன்னுடைமைகளையும் கேட்கும்
படி ஜனங்களுக்குச் சொல் என்றார். அப்ப 3
டியே **கர்த்தர்** ஜனங்களுக்கு [5]எகிப்தியரின்
கண்களில் தயவு கிடைக்கும்படி செய்தார்.
மோசே [6]என்பவன் எகிப்துதேசத்தில் பார்
வோனுடைய ஊழியக்காரரின் பார்வைக்கும்
ஜனங்களின் பார்வைக்கும் மிகவும் பெரியவ
னாயிருந்தான்.
அப்பொழுது மோசே: **கர்த்தர்** நடுராத்திரி 4
யிலே [7]நான் எகிப்தின் மத்தியில் புறப்பட்டுப்
போவேன். அப்பொழுது சிங்காசனத்தின் 5
மேல் வீற்றிருக்கும் பார்வோனுடைய [8]தலைப்
பிள்ளைமுதல் எந்திரம் அரைக்கும் அடிமைப்
பெண்ணுடைய தலைப்பிள்ளைவரைக்கும்,
எகிப்துதேசத்தி லிருக்கிற முதற்பேறனைத்
தும் மிருகஜீவன்களின் தலையீற்றனைத்தும்
சாகும் என்று உரைக்கிறார் என்று சொன்ன
துமன்றி, அதினால் எகிப்துதேசம் எங்கும் 6
முன்னும் பின்னும் ஒருக்காலும் உண்டாகாத
பெரிய [9]கூக்குரல் உண்டாகும். ஆனாலும் 7
**கர்த்தர்** எகிப்தியருக்கும் இஸ்ரவேலருக்கும்
பண்ணுகிற வித்தியாசத்தை நீங்கள் அறியும்
படிக்கு, இஸ்ரவேல் புத்திரர் அனைவருக்குள்
ளும் மனிதர் முதல் மிருகஜீவன்கள் வரைக்
கும் [10]ஒரு நாயாகிலும் தன் நாவை அசைப்ப
தில்லை. அப்பொழுது உம்முடைய ஊழியக் 8
காரராகிய இவர்கள் எல்லாரும் என்னிடத்
தில் வந்து, பணிந்து, நீயும் உன்னைப் பின்பற்
றுகிறவர்கள் யாவரும் புறப்பட்டுப் போங்கள்
என்று சொல்லுவார்கள்; அதின்பின் புறப்
படுவேன் என்று சொல்லி, உக்கிரமான கோ
பத்தோடே பார்வோனை விட்டுப் புறப்பட்
டான்.
**கர்த்தர்** மோசேயை நோக்கி: எகிப்துதேசத் 9
தில் என் அற்புதங்கள் அநேகமாகும்படிக்கு,
பார்வோன் உங்களுக்குச் செவிகொடுக்கமாட்
டான் என்று சொல்லியிருந்தார். மோசேயும் 10
ஆரோனும் இந்த அற்புதங்களையெல்லாம் பார்
வோனுக்கு முன்பாகச் செய்தார்கள். **கர்த்**
**தர்** [11]பார்வோனின் இருதயத்தைக் கடினப்ப
டுத்தினதினால், அவன் இஸ்ரவேல் புத்திர
ரைத் தன் தேசத்திலிருந்து போகவிடவில்லை.
**கர்த்தர்** எகிப்துதேசத்தில் மோசேயை **12**
யும் ஆரோனையும் நோக்கி: இந்த *மாதம் உங் 2
களுக்குப் பிரதான மாதம்; இது உங்களுக்கு
வருஷத்தின் முதலாம் மாதமாயிருப்பதாக.
நீங்கள் இஸ்ரவேல் சபையார் யாவரையும் 3
நோக்கி: இந்த மாதம் பத்தாம் தேதியில் வீட்
டுத் தலைவர்கள், வீட்டுக்கு ஒரு ஆட்டுக்குட்டி
யாக, ஒவ்வொருவரும் ஒவ்வொரு ஆட்டுக்குட்
டியைத் தெரிந்துகொள்ளக்கடவர்கள். ஒரு 4
வீட்டில் இருக்கிறவர்கள் ஒரு ஆட்டுக்குட்டி
யைப் புசிக்கிறதற்குப் போதுமானபேர்களா

யிராமற்போனால், அவனும் அவன் சமீபத்திலி
ருக்கிற அவனுடைய அயல்வீட்டுக்காரனும்,
தங்களிடத்திலுள்ள ஆத்துமாக்களின் இலக்கத்
திற்குத்தக்கதாக ஒரு ஆட்டுக்குட்டியைத் தெ
ரிந்துகொள்ளவேண்டும்; அவனவன் புசிப்புக்
குத்தக்கதாக இலக்கம் பார்த்து, ஆட்டுக்குட்டி
5 யைத் தெரிந்துகொள்ளவேண்டும். அந்த ஆட்
டுக்குட்டி [1]பழுதற்றதும் ஆணும் ஒரு வயதுள்
ளதுமாய் இருக்கவேண்டும்; செம்மறியாடுகளி
லாவது வெள்ளாடுகளிலாவது அதைத் தெரிந்
6 துகொள்ளலாம். அதை இந்த மாதம் [2]பதினா
லாம் தேதிவரைக்கும் வைத்திருந்து, இஸ்ர
வேல் சபையின் ஒவ்வொரு கூட்டத்தாரும்
7 [3]சாயங்காலத்தில் அதை அடித்து, அதின் இர
த்தத்தில் கொஞ்சம் எடுத்து, தாங்கள் அதைப்
புசிக்கும் வீட்டுவாசல் நிலைக்கால்கள் இரண்
டிலும் நிலையின் மேற்சட்டத்திலும் தெளித்து,
8 அன்று ராத்திரியிலே அதின் மாம்சத்தை நெ
ருப்பினால் சுட்டு, [4]புளிப்பில்லா அப்பத்தோ
டும் கசப்பான கீரையோடும் அதைப் புசிக்கக்
9 கடவர்கள். பச்சையாயும் தண்ணீரில் அவிக்
கப்பட்டதாயும் அல்ல; அதின் தலையையும்
அதின் தொடைகளையும் அதற்குள்ள யாவை
யும் ஏகமாய் நெருப்பினால் சுட்டதாய் அதைப்
10 புசிப்பீர்களாக. அதிலே ஒன்றையும் விடியற்
காலமட்டும் [5]மீதியாக வைக்காமல், விடியற்
காலமட்டும் அதிலே மீதியாய் இருக்கிறதை
11 அக்கினியால் சுட்டெரிப்பீர்களாக. அதைப்
புசிக்கவேண்டிய விதமாவது, நீங்கள் உங்கள்
அரைகளில் கச்சை கட்டிக்கொண்டும், உங்
கள் கால்களில் பாதரட்சை தொடுத்துக்
கொண்டும், உங்கள் கையில் தடி பிடித்துக்
கொண்டும் அதைத் தீவிரமாய்ப் புசிக்கக்கட
12 வீர்கள்; அது **கர்த்தருடைய** *பஸ்கா. அந்த
ராத்திரியிலே நான் எகிப்துதேசம் எங்கும்
[6]கடந்துபோய், எகிப்துதேசத்திலுள்ள மனிதர்
முதல் மிருகஜீவன்கள்மட்டும், முதற்பேறா
யிருக்கிறவைகளையெல்லாம் அதம்பண்ணி,
எகிப்து †தேவர்களின்மேல் நீதியைச் செலுத்
13 துவேன்; நானே **கர்த்தர்**. நீங்கள் இருக்கும்
வீடுகளில் அந்த இரத்தம் உங்களுக்காக அடை
யாளமாய் இருக்கும்; அந்த இரத்தத்தை நான்
கண்டு, உங்களைக் கடந்துபோவேன்; நான்
எகிப்துதேசத்தை அழிக்கும்போது, அழிக்
கும் வாதை உங்களுக்குள்ளே வராதிருக்கும்.
14 அந்த நாள் உங்களுக்கு நினைவுகூருதலான
நாளாய் இருக்கக்கடவது; அதைக் **கர்த்தருக்**
**கு**ப் [7]பண்டிகையாக ஆசரிப்பீர்களாக; அதை
உங்கள் தலைமுறைதோறும் நித்தியநியமமாக
15 ஆசரிக்கக்கடவீர்கள். புளிப்பில்லா அப்பத்
தை [8]ஏழுநாளளவும் புசிக்கக்கடவீர்கள்; முத
லாம் நாளில்தானே புளித்தமாவை உங்கள்
வீடுகளிலிருந்து நீக்கவேண்டும்; முதலாம்
நாள்தொடங்கி ஏழாம்நாள் வரைக்கும் புளித்த
அப்பம் புசிக்கிறவன் எவனோ அந்த [9]ஆத்து
மா இஸ்ரவேலரிலிருந்து அறுப்புண்டுபோ
16 வான். முதலாம் நாளில் பரிசுத்த [10]சபை
கூடுதலும், ஏழாம் நாளிலும் பரிசுத்த சபை
கூடுதலும் இருக்கவேண்டும்; அவைகளில்
ஒரு வேலையும் செய்யப்படலாகாது; அவரவர்
சாப்பிடுகிறதற்குத் தேவையானதுமாத்தி
ரம் உங்களால் செய்யப்படலாம். புளிப் 17
பில்லா அப்பப்பண்டிகையை ஆசரிப்பீர்க
ளாக; இந்த நாளில்தான் நான் உங்கள் ‡சேனை
களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்
ணினேன்; ஆகையால், உங்கள் தலைமுறை
தோறும் நித்தியநியமமாக இந்த நாளை ஆசரிக்
கக்கடவீர்கள். முதலாம் மாதம் பதினாலாம் 18
தேதி சாயங்காலந்தொடங்கி மாதத்தின் இரு
பத்தோராம் தேதி சாயங்காலம் வரைக்கும்
புளிப்பில்லா அப்பம் புசிக்கக்கடவீர்கள். ஏழு 19
நாளளவும் [11]உங்கள் வீடுகளில் புளித்த மா
காணப்படலாகாது; எவனாகிலும் புளிப்பிடப்
பட்டதைப் புசித்தால், அவன் பரதேசியானா
லும் சுதேசியானாலும், அந்த ஆத்துமா இஸ்ர
வேல் சபையில் இராமல் அறுப்புண்டுபோ
வான். புளிப்பிடப்பட்ட யாதொன்றையும் 20
நீங்கள் புசிக்கவேண்டாம்; உங்கள் வாசஸ்த
லங்களிலெல்லாம் புளிப்பில்லா அப்பம் புசிக்
கக்கடவீர்கள் என்று சொல் என்றார்.

அப்பொழுது மோசே இஸ்ரவேல் மூப்பர் 21
யாவரையும் அழைப்பித்து: நீங்கள் உங்கள்
குடும்பங்களுக்குத் தக்கதாக உங்களுக்கு ஆட்
டுக்குட்டியைத் தெரிந்தெடுத்துக்கொண்டு,
[12]பஸ்காவை அடித்து, ஈசோப்புக் [13]கொழுந் 22
துகளின் கொத்தை எடுத்து கிண்ணியில்
இருக்கும் இரத்தத்தில் தோய்த்து, [14]அதில்
இருக்கும் அந்த இரத்தத்தை வாசல் நிலைக்
கால்களின்மேல்சட்டத்திலும்வாசலின்நிலைக்
கால்கள் இரண்டிலும் தெளியுங்கள்; விடியற்
காலம்வரைக்கும் உங்களில் ஒருவரும் வீட்டு
வாசலை விட்டுப் புறப்படவேண்டாம். **கர்த்** 23
**தர்** எகிப்தியரை அதம்பண்ணுகிறதற்குக் கடந்
துவருவார்; நிலையின் மேல்சட்டத்திலும் வாச
லின் நிலைக்கால்கள் இரண்டிலும் அந்த [15]இரத்
தத்தைக் காணும்போது, **கர்த்தர்** [16]சங்காரக்கா
ரனை உங்கள் வீடுகளில் உங்களை அதம்பண்
ணுகிறதற்கு வரவொட்டாமல், வாசற்படியை
விலகிக் கடந்துபோவார். இந்தக் காரியத்தை 24
உங்களுக்கும் உங்கள் பிள்ளைகளுக்கும் நித்திய
நியமமாகக் கைக்கொள்ளக்கடவீர்கள். **கர்த்** 25
**தர்** உங்களுக்குத் தாம் சொன்னபடி கொடுக்
கப்போகிற தேசத்திலே நீங்கள் போய்ச்
சேரும்போது, இந்த ஆராதனையைக் கைக்
கொள்ளக்கடவீர்கள். அப்பொழுது உங்கள் 26
பிள்ளைகள்: [17]இந்த ஆராதனையின் கருத்து
என்ன என்று உங்களைக் கேட்டால், இது 27
**கர்த்தருடைய** பஸ்காவாகிய பலி; அவர் எகிப்
தியரை அதம்பண்ணி, நம்முடைய வீடுகளைத்
தப்பப்பண்ணினபோது, எகிப்திலிருந்து இஸ்
ரவேல் புத்திரருடைய வீடுகளைக் கடந்துபோ
னார் என்று நீங்கள் சொல்லவேண்டும் என்
றான். அப்பொழுது ஜனங்கள் [18]தலைவணங்கி
பணிந்துகொண்டார்கள். இஸ்ரவேல் புத்தி 28

[1] லேவி. 22. 1, 18–21. உபா. 17. 1. மல். 1. 8, 14. எபி. 9. 14. 1 பே. 1. 19

[2] லேவி. 23. 5. எண். 9. 3. உபா. 16. 1, 6

[3] யாத். 16. 12

[4] யாத். 34. 25. உபா. 16. 3, 7. 1 கொ. 5. 8

[5] யாத். 23. 18

* கடந்துபோதல். 27. வசனம். உபா. 16. 5

[6] யாத். 11. 4, 5. ஆமோஸ் 5. 17

† பிரபுக்களும். எண். 33. 4. சங். 82. 1. யோ. 10. 34, 35

[7] லேவி. 23. 4, 5. 2 இரா. 23. 21. 1 கொ. 5. 7, 8

[8] எண். 28. 17

[9] ஆதி. 17. 14. எண். 9. 13

[10] எண். 29. 12

‡ ஜனங்களை.

[11] உபா. 16. 3. 1 கொ. 5. 7, 8

[12] யோசு. 5. 10. 2 இரா. 23. 21. எஸ்று 6. 20. மத். 26. 18. லூக். 22. 7

[13] எபி. 11. 28

[14] லேவி. 14. 6, 7. சங். 51. 7. எபி. 9. 19

[15] எபி. 12. 24

[16] 2 சாமு. 24. 16. எசே. 9. 4, 6. வெளி. 7. 3; 9. 4

[17] யாத். 13. 8, 14. உபா. 32. 7. யோசு. 4. 6. சங். 78. 6

[18] யாத். 4. 31

ரர் போய் அப்படியே செய்தார்கள்; **கர்த்தர்**
மோசேக்கும் ஆரோனுக்கும் கட்டளையிட்ட
படியே செய்தார்கள்.
29 நடுராத்திரியிலே சிங்காசனத்தின்மேல் வீற்
றிருக்கும் பார்வோனுடைய தலைப்பிள்ளைமு
தல் காவல் கிடங்கிலிருக்கும் சிறைப்பட்டவ
னின் தலைப்பிள்ளைவரைக்கும், எகிப்துதேசத்
தில் இருந்த முதற்பேறனைத்தையும் மிருகஜீ
வன்களின் தலையீற்றனைத்தையும் **கர்த்தர்**
30 [1]அழித்தார். அப்பொழுது பார்வோனும் அவ
னுடைய சகல ஊழியக்காரரும் எகிப்தியர்
யாவரும் இராத்திரியிலே எழுந்திருந்தார்கள்;
[2]மகா கூக்குரல் எகிப்திலே உண்டாயிற்று;
31 சாவில்லாத ஒரு வீடும் இருந்ததில்லை. இராத்
திரியிலே அவன் மோசேயையும் ஆரோனை
யும் அழைப்பித்து: நீங்களும் இஸ்ரவேல் புத்
திரரும் எழுந்து, என் ஜனங்களை விட்டுப்
புறப்பட்டுப் போய், நீங்கள் சொன்னபடியே
32 **கர்த்தருக்கு** ஆராதனை செய்யுங்கள். நீங்கள்
சொன்னபடியே உங்கள் ஆடுமாடுகளையும்
ஓட்டிக்கொண்டு போங்கள்; [3]என்னையும்
33 ஆசீர்வதியுங்கள் என்றான். எகிப்தியர்: [4]நாங்
கள் எல்லாரும் சாகிறோமே என்று சொல்லி,
தீவிரமாய் அந்த ஜனங்களைத் தேசத்திலிருந்து
அனுப்பிவிட அவர்களை மிகவும் துரிதப்படுத்
34 தினார்கள். பிசைந்தமா புளிக்குமுன் ஜனங்
கள் அதைப் பாத்திரத்துடனே தங்கள் வஸ்தி
ரங்களில் கட்டி, தங்கள் தோள்மேல் எடுத்துக்
35 கொண்டு போனார்கள். மோசே சொல்லியி
ருந்தபடி இஸ்ரவேல் ஜனங்கள் எகிப்தியரி
டத்தில் [5]வெள்ளியுடைமைகளையும் பொன்
னுடைமைகளையும் வஸ்திரங்களையும் கேட்
36 டார்கள். **கர்த்தர்** ஜனங்களுக்கு எகிப்திய
ரின் கண்களில் தயவு கிடைக்கும்படி செய்த
தினால், கேட்டதை அவர்களுக்குக் கொடுத்
தார்கள்; இவ்விதமாய் அவர்கள் [6]எகிப்திய
ரைக் கொள்ளையிட்டார்கள்.
37. இஸ்ரவேல் புத்திரர் [7]ராமசேசை விட்டுக்
கால்நடையாய்ப் பிரயாணம்பண்ணி, சுக்
கோத்துக்குப் போனார்கள்; அவர்கள், பிள்ளை
கள் தவிர ஆறுலட்சம் புருஷராயிருந்தார்கள்.
38 அவர்களோடேகூடப் பல [8]ஜாதியான ஜனங்
கள் அநேகர் போனதும் அன்றி, மிகுதியான
ஆடுமாடுகள் முதலான மிருகஜீவன்களும்
39 போயிற்று. எகிப்திலிருந்து அவர்கள் கொண்
டுவந்த பிசைந்தமாவைப் புளிப்பில்லா அப்
பங்களாகச் சுட்டார்கள்; அவர்கள் எகிப்தில்
தரிக்கக்கூடாமல் துரத்திவிடப்பட்டதினால்,
அது புளியாதிருந்தது; அவர்கள் தங்களுக்கு
வழிக்கென்று ஒன்றும் ஆயத்தம்பண்ண
40 வில்லை. இஸ்ரவேல் புத்திரர் எகிப்திலே
குடியிருந்த காலம் [9]நானூற்று முப்பது வரு
41 ஷம். நானூற்று முப்பது வருஷம் முடிந்த
அன்றைத்தினமே **கர்த்தருடைய** சேனைகள்
எல்லாம் எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்
42 டது. **கர்த்தர்** அவர்களை எகிப்துதேசத்தி
லிருந்து புறப்படப்பண்ணினதினால், இது
அவருக்கென்று முக்கியமாய் [10]ஆசரிக்கத்தக்க
ராத்திரியாயிற்று; இஸ்ரவேல் சந்ததியார் எல்
லாரும் தங்கள் தலைமுறைதோறும் **கர்த்தருக்கு**
முக்கியமாய் ஆசரிக்கவேண்டிய ராத்திரி
இதுவே.
மேலும், **கர்த்தர்** மோசேயையும் ஆரோ 43
னையும் நோக்கி: பஸ்காவின் [11]நியமமாவது,
அந்நியபுத்திரன் ஒருவனும் அதைப் புசிக்க
வேண்டாம். பணத்தினால் கொள்ளப்பட்ட 44
அடிமையானவன் எவனும், நீ அவனுக்கு
[12]விருத்தசேதனம் பண்ணினபின், அவன்
அதைப் புசிக்கலாம். அந்நியனும் [13]கூலியா 45
ளும் அதிலே புசிக்கவேண்டாம். அதை ஒவ் 46
வொரு வீட்டிற்குள்ளும் புசிக்கவேண்டும்;
அந்த மாம்சத்தில் கொஞ்சமாகிலும் வீட்டி
லிருந்து வெளியே கொண்டுபோகக்கூடாது;
அதில் ஒரு [14]எலும்பையும் முறிக்கக்கூடாது.
இஸ்ரவேல் சபையார் எல்லாரும் அதை ஆச 47
ரிக்கக்கடவர்கள். அந்நியன் ஒருவன் உன் 48
னிடத்திலே தங்கி, **கர்த்தருக்குப்** பஸ்காவை
ஆசரிக்கவேண்டுமென்று இருந்தால், அவ
னைச்சேர்ந்த ஆண்பிள்ளைகள் யாவரும் விருத்த
சேதனம் பண்ணப்படவேண்டும்; பின்பு
அவன் சேர்ந்து அதை ஆசரிக்கவேண்டும்;
அவன் சுதேசியைப்போல் இருப்பான்; விருத்த
சேதனம் இல்லாத ஒருவனும் அதில் புசிக்க
வேண்டாம். சுதேசிக்கும் [15]உங்களிடத்தில் தங் 49
கும் பரதேசிக்கும் ஒரே பிரமாணம் இருக்கக்
கடவது என்றார். இப்படியே இஸ்ரவேல் 50
புத்திரர் எல்லாரும் செய்தார்கள்; **கர்த்தர்**
மோசேக்கும் ஆரோனுக்கும் கட்டளையிட்ட
படியே செய்தார்கள். அன்றைத்தினமே **கர்த்** 51
**தர்** இஸ்ரவேல் புத்திரரை [16]அணியணியாய்
எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணி
னார்.

**13** **கர்த்தர்** மோசேயை நோக்கி: இஸ்ர 2
வேல் புத்திரருக்குள் மனிதரிலும் மிருக
ஜீவன்களிலும் கர்ப்பந்திறந்து பிறக்கிற முதற்
பேறனைத்தையும் எனக்குப் [17]பரிசுத்தப்படு
த்து; அது என்னுடையது என்றார்.
அப்பொழுது மோசே ஜனங்களை நோக்கி: 3
நீங்கள் அடிமைத்தன வீடாகிய எகிப்திலிருந்து
புறப்பட்ட இந்த [18]நாளை நினையுங்கள்; **கர்த்**
**தர்** பலத்த கையினால் உங்களை அவ்விடத்தி
லிருந்து புறப்படப்பண்ணினார்; ஆகையால்,
நீங்கள் புளித்த அப்பம் புசிக்கவேண்டாம்.
ஆபிப் [19]மாதத்தின் இந்த நாளிலே நீங்கள் 4
புறப்பட்டீர்கள். ஆகையால், **கர்த்தர்** உனக் 5
குக் கொடுப்பேன் என்று உன் பிதாக்களுக்கு
[20]ஆணையிட்டதும், பாலும் தேனும் ஓடுகிறது
மான தேசமாகிய கானானியர், ஏத்தியர், எமோ
ரியர், ஏவியர், எபூசியர் என்பவர்களுடைய
தேசத்துக்கு உன்னை வரப்பண்ணும் காலத்
தில், நீ இந்த மாதத்திலே இந்த ஆராதனை
யைச் செய்வாயாக. புளிப்பில்லா [21]அப் 6
பத்தை ஏழுநாளளவும் புசிக்கக்கடவாய்; ஏழாம்
நாளிலே **கர்த்தருக்குப்** பண்டிகை ஆசரிக்கப்

[1] எண். 8. 1, 17. சங். 78. 51. எபி. 11. 28
[2] யாத். 11. 6. நீதி. 21. 13. ஆமோ. 5. 17. மத். 25. 6
[3] ஆதி. 27. 34
[4] சங். 105. 38
[5] யாத். 3. 22; 11. 2
[6] சங். 105. 37
[7] எண். 1. 46. 33. 3, 5
[8] எண். 11. 4
[9] ஆதி. 15. 13. அப். 7. 6. கலா. 3. 17
[10] உபா. 16. 6
[11] எண். 9. 14
[12] ஆதி. 17. 12
[13] லேவி. 22. 10. எபே. 2. 12
[14] எண். 9. 12. யோ. 19. 33, 36
[15] எண். 9. 13, 14. கலா. 3. 28. கொலோ. 3. 11
[16] யாத். 6. 26
[17] 12 [illegible] எண். 3. 13. உபா. 15. 19. லூ. 2. 23
[18] யாத். 12. 42
[19] யாத். 23. 15. உபா. 16. 1, 3
[20] ஆதி. 17. 8
[21] யாத். 12. 15

7 படுவதாக. அந்த ஏழுநாளும் புளிப்பில்லா
அப்பம் புசிக்கவேண்டும்; புளிப்புள்ள [1]அப்
பம் உன்னிடத்திலே காணப்படவேண்டாம்;
உன் எல்லைக்குள் எங்கும் புளித்தமாவும் உன்
8 னிடத்தில் காணப்படவேண்டாம். அக்கா
ளில் நீ உன் [2]புத்திரனை நோக்கி: நான்
எகிப்திலிருந்து புறப்படுகையில், **கர்த்தர்**
எனக்குச் செய்ததற்காக இப்படி நடப்பிக்கப்
9 படுகிறது என்று சொல். **கர்த்தரின்** நியாயப்
பிரமாணம் உன் வாயிலிருக்கும்படிக்கு, இது
உன் கையிலே ஒரு [3]அடையாளமாகவும் உன்
கண்களின் நடுவே நினைப்பூட்டுதலாகவும்
இருக்கக்கடவது; பலத்த கையினால் **கர்த்தர்**
உன்னை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணி
10 னார்; ஆகையால், நீ வருஷந்தோறும் குறித்த
காலத்தில் [4]இந்த நியமத்தை ஆசரித்து வரு
வாயாக.
11 மேலும், **கர்த்தர்** உனக்கும் உன் பிதாக்க
ளுக்கும் ஆணையிட்டபடியே, உன்னைக் கானா
னியரின் தேசத்திலே வரப்பண்ணி, அதை
12 உனக்குக் கொடுக்கும்போது, கர்ப்பந்திறந்து
[5]பிறக்கும் அனைத்தையும், உனக்கு இருக்கும்
மிருகஜீவன்களின் தலையீற்றனைத்தையும்,
**கர்த்தருக்கு** ஒப்புக்கொடுப்பாயாக; அவைகளி
13 லுள்ள ஆண்கள் **கர்த்தருடையவைகள்**. கழு
தையின் [6]தலையீற்றையெல்லாம் ஒரு ஆட்டுக்
குட்டியால் மீட்டுக்கொள்வாயாக; மீட்காவிட்
டால், அதின் கழுத்தை முறித்துப்போடு
உன் பிள்ளைகளில் முதற்பேறான சகல நர
14 ஜீவனையும் மீட்டுக்கொள்வாயாக. பிற்காலத்
தில் உன் குமாரன்: [7]இது என்ன என்று
உன்னைக் கேட்டால்; நீ அவனை நோக்கி:
**கர்த்தர்** எங்களைப் பலத்த கையினால் அடி
மைத்தன வீடாகிய எகிப்திலிருந்து புறப்
15 படப்பண்ணினார். எங்களை விடாதபடிக்கு,
பார்வோன் கடினப்பட்டிருக்கும்போது, **கர்த்
தர்** எகிப்துதேசத்தில் மனிதரின் தலைப்பிள்ளை
கள் முதல் மிருகஜீவன்களின் தலையீற்றுகள்
வரைக்கும் உண்டாயிருந்த முதற்பேறுகள்
யாவையும் கொன்றுபோட்டார்; ஆகையால்,
கர்ப்பந்திறந்து பிறக்கும் ஆணையெல்லாம் நான்
**கர்த்தருக்குப்** பலியிட்டு, என் பிள்ளைகளில்
முதற்பேறனைத்தையும் மீட்டுக்கொள்ளுகி
16 றேன். **கர்த்தர்** எங்களைப் பலத்த கையினால்
எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினதற்கு,
இது உன் கையில் அடையாளமாகவும், உன்
கண்களின் நடுவே ஞாபகக்குறியாகவும் இருக்
கக்கடவது என்று சொல்வாயாக என்றான்.
17 பார்வோன் ஜனங்களைப் போகவிட்டபின்:
[8]ஜனங்கள் யுத்தத்தைக் கண்டால் மனமடிந்து,
[9]எகிப்துக்குத்திரும்புவார்கள் என்று சொல்லி;
பெலிஸ்தரின் தேசவழியாய்ப் போவது சமீப
மானாலும், தேவன் அவர்களை அந்த வழியாய்
18 நடத்தாமல், சிவந்த சமுத்திரத்தின் வனாந்தர
வழியாய் ஜனங்களைச் [10]சுற்றிப் போகப்பண்
ணினார். இஸ்ரவேல் புத்திரர் எகிப்துதேசத்தி
லிருந்து அணியணியாய்ப் புறப்பட்டுப்போ

னார்கள். மோசே தன்னோடேகூட யோசேப் 19
பின் எலும்புகளை எடுத்துக்கொண்டுபோனான்.
[11]தேவன் நிச்சயமாய் உங்களைச் சந்திப்பார்;
அப்பொழுது உங்களோடேகூட என் எலும்பு
களை இவ்விடத்திலிருந்து கொண்டுபோங்கள்
என்று யோசேப்பு சொல்லி, இஸ்ரவேல்
புத்திரரை உறுதியாய் ஆணையிடும்படி செய்
திருந்தான். அவர்கள் சுக்கோத்திலிருந்து [12]பிர 20
யாணப்பட்டு, வனாந்தரத்தின் ஓரமாய் ஏத்தா
மிலே பாளயமிறங்கினார்கள். அவர்கள் இர 21
வும் பகலும் வழிநடக்கக்கூடும்படிக்கு, **கர்த்
தர்** [13]பகலில் அவர்களை வழிநடத்த மேகஸ்தம்
பத்திலும், இரவில் அவர்களுக்கு வெளிச்சங்
காட்ட அக்கினிஸ்தம்பத்திலும் அவர்களுக்கு
முன் சென்றார். பகலிலே மேகஸ்தம்பமும், 22
இரவிலே அக்கினிஸ்தம்பமும் ஜனங்களிடத்
திலிருந்து விலகிப்போகவில்லை.

**கர்த்தர்** மோசேயை நோக்கி: நீங்கள் 2 **14**
திரும்பி [14]மிக்தோலுக்கும் சமுத்திரத்துக்கும்
நடுவே பாகால்செபோனுக்கு முன்பாக இருக்
கிற [15]ஈரோத் பள்ளத்தாக்கின் முன்னடியிலே
பாளயமிறங்கவேண்டும் என்று இஸ்ரவேல்
புத்திரருக்குச் சொல்லு; அதற்கு எதிராகச்
சமுத்திரக்கரையிலே பாளயமிறங்குவீர்களாக.
அப்பொழுது பார்வோன் இஸ்ரவேல் புத்திர 3
ரைக்குறித்து: அவர்கள் தேசத்திலே [16]திகைத்
துத் திரிகிறார்கள்; வனாந்தரம் அவர்களை
அடைத்துப்போட்டது என்று சொல்லுவான்.
ஆகையால், பார்வோன் அவர்களைப் பின் 4
தொடரும்படிக்கு, நான் அவன் இருதயத்
தைக் [17]கடினப்படுத்தி, நானே **கர்த்தர்** என்
பதை எகிப்தியர் அறியும்படி, பார்வோனாலும்
அவனுடைய எல்லா ராணுவத்தாலும் மகி
மைப்படுவேன் என்றார்; அவர்கள் அப்படியே
செய்தார்கள். ஜனங்கள் ஓடிப்போய்விட்டார் 5
கள் என்று எகிப்தின் ராஜாவுக்கு அறிவிக்கப்
பட்டபோது, ஜனங்களுக்கு [18]விரோதமாகப்
பார்வோனும் அவன் ஊழியக்காரரும் மனம்
வேறுபட்டு நமக்கு வேலைசெய்யாதபடிக்கு நாம்
இஸ்ரவேலரைப் போகவிட்டது என்ன காரி
யம் என்றார்கள். அவன் தன் இரதத்தைப் 6
பூட்டி, தன் ஜனங்களைக் கூட்டிக்கொண்டு,
பிரதானமான [19]அறுநூறு இரதங்களையும், 7
எகிப்திலுள்ள மற்ற சகல இரதங்களையும்,
அவைகள் எல்லாவற்றிற்கும் அதிபதிகளான
வீரரையும் கூட்டிக்கொண்டுபோனான். **கர்த்** 8
**தர்** எகிப்தின் ராஜாவாகிய பார்வோனின் இரு
தயத்தைக் கடினப்படுத்தினார்; அவன் இஸ்ர
வேல் புத்திரரைப் பின்தொடர்ந்தான், இஸ்ர
வேல் புத்திரர் [20]பலத்த கையுடன் புறப்பட்டுப்
போனார்கள். எகிப்தியர் பார்வோனுடைய 9
சகல குதிரைகளோடும் இரதங்களோடும் அவ
னுடைய குதிரைவீரரோடும் சேனைகளோடும்
அவர்களைத் [21]தொடர்ந்துபோய், சமுத்திரத்
தண்டையிலே பாகால்செபோனுக்கு எதிரே
இருக்கிற ஈரோத் பள்ளத்தாக்கின் முன்னடி
யிலே பாளயமிறங்கியிருக்கிற அவர்களைக்

[1] யாத். 12. 19
[2] யாத். 12. 26
[3] உபா. 6. 8. நீதி. 1. 9. ஏசா. 23. 5
[4] யாத். 12. 14, 24
[5] லேவி. 27. 26. எண். 8. 17
[6] எண். 18. 15, 16
[7] உபா. 6. 20. யோசு. 4. 6, 21
[8] யாத். 14. 11, 12. எண். 14. 1-4
[9] உபா. 17. 16
[10] எண். 33. 6. உபா. 32. 10
[11] ஆதி. 50. 25. யோசு. 24. 32. அப். 7. 16
[12] எண். 33. 6
[13] எண். 9. 15, 23. உபா. 1. 33. நெகே. 9. 12, 19. சங். 78. 14. ஏசா. 4. 5. 1 கொ. 10. 2. வெளி. 10. 1
[14] எரே. 44. 1
[15] எண். 33. 7
[16] சங். 3. 2: 71. 11. எரே. 20. 10, 11
[17] யாத். 4. 21. ரோ. 9. 17
[18] சங். 105. 25
[19] யாத். 15. 4
[20] எண். 33. 3. உபா. 26. 8
[21] யாத். 15. 9. யோசு. 24. 6

10 கிட்டினார்கள். பார்வோன் சமீபித்து வரு
கிறபோது, இஸ்ரவேல் புத்திரர் தங்கள் கண்
களை ஏறெடுத்துப் பார்த்து, எகிப்தியர் தங்க
ளுக்குப் பின்னே வருகிறதைக் கண்டு, [1]மிக
வும் பயந்தார்கள்; அப்பொழுது இஸ்ரவேல்
புத்திரர் **கர்த்தரை** நோக்கிக் கூப்பிட்டார்கள்.
11 அன்றியும் அவர்கள் மோசேயை நோக்கி:
[2]எகிப்திலே பிரேதக்குழிகள் இல்லையென்று
வனாந்தரத்திலே சாகும்படிக்கு எங்களைக்
கொண்டுவந்தீர்? நீர் எங்களை எகிப்திலிருந்து
புறப்படப்பண்ணினதினால், எங்களுக்கு இப்
12 படிச் செய்தது என்ன? நாங்கள் எகிப்திலே
இருக்கும்போது, நாங்கள் எகிப்தியருக்கு
வேலைசெய்ய எங்களைச் சும்மா விட்டுவிடும்
என்று சொன்னோம் [3]அல்லவா? நாங்கள்
வனாந்தரத்திலே சாகிறதைப்பார்க்கிலும் எகி
ப்தியருக்கு வேலைசெய்கிறது எங்களுக்கு நல
13 மாயிருக்குமே என்றார்கள். அப்பொழுது
மோசே ஜனங்களை நோக்கி: [4]பயப்படாதிருங்
கள்; நீங்கள் நின்றுகொண்டு இன்றைக்குக்
**கர்த்தர்** உங்களுக்குச் செய்யும் இரட்சிப்பைப்
பாருங்கள்; இன்றைக்கு நீங்கள் காண்கிற
எகிப்தியரை இனி என்றைக்கும் காணமாட்
14 டீர்கள். **கர்த்தர்** உங்களுக்காக [5]யுத்தம்பண்
ணுவார்; நீங்கள் சும்மாயிருப்பீர்கள் என்றான்.
15 அப்பொழுது **கர்த்தர்** மோசேயை நோக்கி:
நீ என்னிடத்தில் முறையிடுகிறது என்ன?
புறப்பட்டுப் போங்கள் என்று இஸ்ரவேல்
16 புத்திரருக்குச் சொல்லு. நீ உன் கோலை
ஓங்கி, உன் கையைச் சமுத்திரத்தின்மேல்
நீட்டி, சமுத்திரத்தைப் பிளந்துவிடு; அப்பொ
ழுது இஸ்ரவேல் புத்திரர் சமுத்திரத்தின் நடு
வாக வெட்டாந்தரையிலே நடந்துபோவார்
17 கள். எகிப்தியர் உங்களைப் பின்தொடர்ந்து
வரும்படி நான் அவர்கள் இருதயத்தைக் கடி
னப்படுத்தி, பார்வோனாலும் அவன் இரதங்
கள் குதிரைவீரர் முதலாகிய அவனுடைய
எல்லா இராணுவத்தாலும் மகிமைப்படுவேன்.
18 இப்படி நான் பார்வோனாலும் அவன் இரதங்
களாலும் அவன் குதிரைவீரராலும் மகிமைப்
படும்போது, நானே **கர்த்தர்** என்பதை எகிப்
19 தியர் அறிவார்கள் என்றார். அப்பொழுது
[6]இஸ்ரவேலரின் சேனைக்கு முன்னாக நடந்த
தேவதூதனானவர் விலகி, அவர்களுக்குப் பின்
னாக நடந்தார்; அவர்களுக்குமுன் இருந்த
மேகஸ்தம்பமும் விலகி, அவர்கள் பின்னே
20 நின்றது. அது எகிப்தியரின் சேனையும் இஸ்
ரவேலரின் சேனையும் இராமுழுதும் ஒன்றோ
டொன்று சேராதபடி அவைகள் நடுவில் வந்
தது; எகிப்தியருக்கு [7]அது மேகமும் அந்த
காரமுமாய் இருந்தது, இஸ்ரவேலருக்கோ
21 அது இரவை வெளிச்சமாக்கிற்று. மோசே
தன் கையைச் சமுத்திரத்தின்மேல் நீட்டி
னான்; அப்பொழுது **கர்த்தர்** இராமுழுதும்
பலத்த கீழ்காற்றினால் [8]சமுத்திரம் ஒதுங்கும்
படி செய்து, அதை வறண்டுபோகப்பண்ணி
22 னார்; ஜலம் பிளந்து பிரிந்துபோயிற்று. இஸ்
ரவேல் புத்திரர் சமுத்திரத்தின் நடுவாக
[9]வெட்டாந்தரையிலே நடந்துபோனார்கள்;
அவர்கள் வலதுபுறத்திலும் அவர்கள் இடது
புறத்திலும் ஜலம் அவர்களுக்கு மதிலாக நின்
றது. அப்பொழுது எகிப்தியர் அவர்களைத் 23
தொடர்ந்து, பார்வோனுடைய சகல குதிரை
களோடும் இரதங்களோடும் குதிரைவீரரோ
டும் அவர்கள் பிறகாலே சமுத்திரத்தின்
நடுவே பிரவேசித்தார்கள். கிழக்கு வெளுத் 24
துவரும் ஜாமத்தில் [10]**கர்த்தர்** அக்கினியும்
மேகமுமான ஸ்தம்பத்திலிருந்து எகிப்திய
ரின் சேனையைப் பார்த்து, அவர்கள் சேனை
யைக் கலங்கடித்து, அவர்களுடைய இரதங் 25
களிலிருந்து உருளைகள் கழலவும், அவர்கள்
தங்கள் இரதங்களை வருத்தத்தோடே நடத்த
வும் பண்ணினார்; அப்பொழுது எகிப்தியர்:
இஸ்ரவேலரை விட்டு ஓடிப்போவோம், **கர்த்**
**தர்** அவர்களுக்குத் துணைநின்று எகிப்திய
ருக்கு விரோதமாய் யுத்தம்பண்ணுகிறார் என்
றார்கள்.

**கர்த்தர்** மோசேயை நோக்கி: ஜலம் எகிப் 26
தியர் மேலும் அவர்களுடைய இரதங்கள்
மேலும் அவர்களுடைய குதிரைவீரர் மேலும்
திரும்பும்படிக்கு, உன் கையைச் சமுத்திரத்
தின்மேல் நீட்டு என்றார். அப்படியே மோசே 27
தன் கையைச் சமுத்திரத்தின்மேல் நீட்டி
னான்; விடியற்காலத்தில் சமுத்திரம் [11]பல
மாய்த் திரும்பி வந்தது; எகிப்தியர் அதற்கு
எதிராக ஓடும்போது, **கர்த்தர்** அவர்களைக்
கடலின் நடுவே [12]கவிழ்த்துப்போட்டார். ஜலம் 28
திரும்பி [13]வந்து, இரதங்களையும் குதிரைவீர
ரையும், அவர்கள் பின்னாக சமுத்திரத்தில்
பிரவேசித்திருந்த பார்வோனுடைய இராணு
வம் அனைத்தையும் மூடிக்கொண்டது; அவர்
களில் ஒருவனாகிலும் தப்பவில்லை. இஸ்ர 29
வேல் புத்திரரோ சமுத்திரத்தின் நடுவாக
[14]வெட்டாந்தரையின் வழியாய் நடந்துபோ
னார்கள்; அவர்கள் வலதுபுறத்திலும் அவர்கள்
இடதுபுறத்திலும் ஜலம் அவர்களுக்கு மதி
லாக நின்றது. இவ்விதமாய்க் **கர்த்தர்** அந் 30
நாளிலே இஸ்ரவேலரை எகிப்தியரின் கைக்
குத் [15]தப்புவித்து இரட்சித்தார்; கடற்கரை
யிலே எகிப்தியர் செத்துக்கிடக்கிறதை இஸ்ர
வேலர் கண்டார்கள். **கர்த்தர்** எகிப்தியரில் 31
செய்த அந்த மகத்தான கிரியையை இஸ்ர
வேலர் கண்டார்கள்; அப்பொழுது ஜனங்கள்
**கர்த்தருக்குப்** பயந்து, **கர்த்தரிடத்திலும்** அவ
ருடைய ஊழியக்காரனாகிய மோசேயினிடத்
திலும் [16]விசுவாசம் வைத்தார்கள்.

அப்பொழுது மோசேயும் இஸ்ரவேல் புத் **15**
திரரும் **கர்த்தரைப்** புகழ்ந்து பாடின [17]பாட்டு:
**கர்த்தரைப்** பாடுவேன்; அவர் மகிமையாய்
வெற்றி சிறந்தார்; குதிரையையும் குதிரைவீர
னையும் கடலிலே தள்ளினார். **கர்த்தர்** என் 2
பெலனும் என் [18]கீதமுமானவர்; அவர் எனக்கு
இரட்சிப்புமானவர்; அவரே என் தேவன்,
அவருக்கு வாசஸ்தலத்தை ஆயத்தம்பண்ணு

1 யோசு. 24. 7. நெகே. 9. 9. சங். 34. 17
2 சங். 106. 7, 8.
3 யாத். 5. 21; 6. 9
4 எண். 14. 9. உபா. 20. 3. 2 இரா. 6. 16. 2 நாளா. 20. 15, 17. சங். 27. 1, 2. ஏசா. 41. 10–14
5 உபா. 1. 30. யோசு. 10. 14. நெகே. 4. 20. ஏசா. 30. 4, 15
6 எண். 20. 16. ஏசா. 63. 8, 9
7 ஏசா. 8. 14. 2 கொ. 4. 3
8 யோசு. 3. 16. சங். 66. 6
9 1 கொ. 10. 1. எபி. 11. 29
10 சங். 77. 17. ழ
11 யோசு. 4. 18
12 சங். 78. 53. எபி. 11. 29
13 ஆப. 3. 8, 13. சங். 106. 11
14 சங். 77. 20
15 சங். 106. 8, 10
16 யாத். 4. 31; 19. 9. யோவா. 2. 11; 11. 45
17 நியா. 5. 1. 2 சாமு. 22. 1. சங். 106. 12
18 உபா. 10. 21. சங். 18. 2; 118. 14. ஏசா. 12. 2

வேன்; அவரே என் தகப்பனுடைய தேவன்,
3 அவரை உயர்த்துவேன்; கர்த்தரே யுத்தத்தில்
[1]வல்லவர்; *கர்த்தர் என்பது அவருடைய
4 நாமம். பார்வோனின் இரதங்களையும் அவன்
சேனைகளையும் சமுத்திரத்திலே தள்ளிவிட்
டார்; அவனுடைய பிரதான அதிபதிகள்
சிவந்த சமுத்திரத்தில் அமிழ்ந்துபோனார்கள்.
5 ஆழி அவர்களை மூடிக்கொண்டது; கல்லைப்
போல ஆழங்களில் அமிழ்ந்துபோனார்கள்.
6 **கர்த்தாவே**, உம்முடைய [2]வலதுகரம் பலத்தி
னால் மகத்துவம் சிறந்திருக்கிறது; **கர்த்தாவே**,
உம்முடைய வலதுகரம் பகைஞனை நொறுக்
7 கிவிட்டது. உமக்கு விரோதமாய் எழும்பின
வர்களை உமது முக்கியத்தின் [3]மகத்துவத்தி
னாலே நிர்மூலமாக்கினீர்; உம்முடைய
கோபாக்கினியை அனுப்பினீர், அது அவர்
களைத் [4]தாளடியைப்போலப் பட்சித்தது.
8 உமது நாசியின் [5]சுவாசத்தினால் ஜலம் குவி
ந்து நின்றது; வெள்ளம் குவியலாக நிமிர்ந்து
நின்றது; ஆழமான ஜலம் நடுக்கடலிலே
9 உறைந்துபோயிற்று. தொடருவேன், [6]பிடிப்
பேன், கொள்ளையாடிப் பங்கிடுவேன், என்
ஆசை அவர்களிடத்தில் திர்ப்தியாகும், என்
பட்டயத்தை உருவுவேன், என் கை அவர்
களைச் சங்கரிக்கும் என்று பகைஞன் சொன்
10 னான். உம்முடைய காற்றை [7]வீசப்பண்ணி
னீர், கடல் அவர்களை மூடிக்கொண்டது;
திரளான தண்ணீர்களில் ஈயம்போல அமிழ்ந்
11 துபோனார்கள். **கர்த்தாவே**, †தேவர்களில்
உமக்கு [8]ஒப்பானவர் யார்? பரிசுத்தத்தில்
[9]மகத்துவமுள்ளவரும், துதிகளில் பயப்படத்
தக்கவரும், அற்புதங்களைச் செய்கிறவருமா
12 கிய உமக்கு ஒப்பானவர் யார்? நீர் உமது
வலதுகரத்தை நீட்டினீர்; பூமி அவர்களை
13 விழுங்கிப்போட்டது. நீர் மீட்டுக்கொண்ட
இந்த ஜனங்களை உமது கிருபையினாலே
[10]அழைத்துவந்தீர்; உம்முடைய பரிசுத்த வாச
ஸ்தலத்துக்கு நேராக அவர்களை உமது பலத்
14 தினால் வழி நடத்தினீர். ஜனங்கள் [11]அதைக்
கேட்டுத் தத்தளிப்பார்கள்; பெலிஸ்தியாவின்
15 குடிகளைத் திகில் பிடிக்கும். ஏதோமின் பிர
புக்கள் கலங்குவார்கள்; மோவாபின் பராக்கி
ரமசாலிகளை நடுக்கம் பிடிக்கும்; [12]கானானின்
16 குடிகள் யாவரும் கரைந்துபோவார்கள். பய
மும் திகிலும் [13]அவர்கள்மேல் விழும். **கர்த்**
**தாவே**, உமது ஜனங்கள் கடந்துபோகும்
வரையும், நீர் மீட்ட ஜனங்களே கடந்துபோ
கும்வரையும், அவர்கள் உம்முடைய புயத்தின்
மகத்துவத்தினால் [14]கல்லைப்போல அசைவற்
17 றிருப்பார்கள். நீர் அவர்களைக்கொண்டுபோய்,
**கர்த்தராகிய** தேவரீர் வாசம்பண்ணுவதற்கு
நியமித்த [15]ஸ்தானமாகிய உம்முடைய சுதந்த
ரத்தின் பர்வதத்திலும், ஆண்டவராகிய தேவரீ
ருடைய கரங்கள் ஸ்தாபித்த பரிசுத்த ஸ்தலத்
18 திலும் அவர்களை நாட்டுவீர். **கர்த்தர்** சதா
காலங்களாகிய [16]என்றென்றைக்கும் ராஜரிகம்
பண்ணுவார்.

1 சங். 24. 8; 45. 3. வெளி. 19. 11
* யேகோவா. 6. 3
2 சங். 118. 15, 16
3 உபா. 33. 26. சங். 68. 33
4 சங். 59. 13. ஏசா. 5. 24. மத். 3. 12
5 2 சாமு. 22. 16. யோபு 4. 9. 2 தெச. 2. 8
6 நியா. 5. 30. லூ. 11. 22
7 சங். 147. 18
† வல்லவர்களில்.
8 ஏசா. 40. 18
9 ஏசா. 6. 3
10 ஏசா. 63. 12, 13
11 எண். 14. 14
12 யோசு. 5. 1
13 உபா. 2. 25
14 சங். 74. 2. அப். 20. 28. 1 சாமு. 25. 37
15 சங். 44. 2; 78. 54
16 சங். 146. 10. தானி. 4. 3
17 நியா. 4. 4. 1 சாமு. 10. 5. சங். 68. 25; 150. 4
18 1. வசனம்.
19 ஆதி. 16. 7
20 எண். 33. 8
21 2 இரா. 2. 21; 4. 41
22 உபா. 7. 12, 15
23 உபா. 28. 27, 60
24 சங். 41. 4; 103. 3
25 எண். 33. 9
26 எசே. 30. 15
27 சங். 106. 25. 1 கொ. 10. 10
28 எண். 11. 4, 5

பார்வோனின் குதிரைகள் அவனுடைய 19
இரதங்களோடும் குதிரைவீரரோடும் சமுத்தி
ரத்தில் பிரவேசித்தது; **கர்த்தர்** சமுத்திரத்தின்
ஜலத்தை அவர்கள்மேல் திரும்பப்பண்ணி
னார்; இஸ்ரவேல் புத்திரரோ சமுத்திரத்தின்
நடுவே வெட்டாந்தரையிலே நடந்துபோனார்
கள் என்று பாடினார்கள். ஆரோனின் சகோ 20
தரியாகிய மிரியாம் என்னும் [17]தீர்க்கதரிசி
யானவளும் தன் கையிலே தம்புரை எடுத்துக்
கொண்டாள்; சகல ஸ்திரீகளும் தம்புருகளோ
டும் நடனத்தோடும் அவளுக்குப் பின்னே
புறப்பட்டுப் போனார்கள். மிரியாம் அவர் 21
களுக்குப் பிரதிவசனமாக: [18]**கர்த்தரைப்** பாடுங்
கள், அவர் மகிமையாய் வெற்றிசிறந்தார்;
குதிரையையும் குதிரைவீரனையும் கடலிலே
தள்ளினார் என்று பாடினாள்.

பின்பு மோசே இஸ்ரவேல் ஜனங்களைச் 22
சிவந்த சமுத்திரத்திலிருந்து பிரயாணப்படுத்
தினான். அவர்கள் [19]சூர்வனாந்தரத்துக்குப்
புறப்பட்டுப்போய், மூன்றுநாள் வனாந்தரத்தில்
தண்ணீர் கிடையாமல் நடந்தார்கள். அவர் 23
கள் [20]மாராவிலே வந்தபோது, மாராவின் தண்
ணீர் கசப்பாயிருந்ததினால் அதைக் குடிக்க
அவர்களுக்குக் கூடாதிருந்தது; அதினால் அவ்
விடத்துக்கு மாரா என்று பேரிடப்பட்டது.
அப்பொழுது ஜனங்கள் மோசேக்கு விரோத 24
மாய் முறுமுறுத்து: என்னத்தைக் குடிப்போம்
என்றார்கள். மோசே **கர்த்தரை** நோக்கிக் 25
கூப்பிட்டான்; அப்பொழுது **கர்த்தர்** மோ
சேக்கு ஒரு [21]மரத்தைக் காண்பித்தார்; அதை
அவன் தண்ணீரில் போட்டவுடனே, அது
மதுரமான தண்ணீராயிற்று. அவர் அங்கே
அவர்களுக்கு ஒரு நியமத்தையும் ஒரு நியாயத்
தையும் கட்டளையிட்டு, அங்கே அவர்களைச்
சோதித்து: நீ உன் தேவனாகிய **கர்த்தரின்** 26
[22]சத்தத்தைக் கவனமாய்க் கேட்டு, அவர் பார்
வைக்குச் செம்மையானவைகளைச் செய்து,
அவர் கட்டளைகளுக்குச் செவிகொடுத்து,
அவருடைய நியமங்கள் யாவையும் கைக்
கொண்டால், நான் எகிப்தியருக்கு வரப்பண்
ணின [23]வியாதிகளில் ஒன்றையும் உனக்கு
வரப்பண்ணேன்; நானே உன் [24]பரிகாரியா
கிய **கர்த்தர்** என்றார்.

பின்பு அவர்கள் [25]ஏலிமுக்கு வந்தார்கள்; 27
அங்கே பன்னிரண்டு நீரூற்றுகளும் எழுபது
பேரீச்சமரங்களும் இருந்தது; அங்கே தண்
ணீர் அருகே பாளயமிறங்கினார்கள். இஸ்ர **16**
வேல் புத்திரராகிய சபையார் எல்லாரும்
ஏலிமை விட்டுப் பிரயாணம்பண்ணி, எகிப்து
தேசத்திலிருந்து புறப்பட்ட இரண்டாம் மாதம்
பதினைந்தாம் தேதியிலே, ஏலிமுக்கும் சீனாய்க்
கும் நடுவே இருக்கிற [26]சீன்வனாந்தரத்தில்
சேர்ந்தார்கள். அந்த வனாந்தரத்திலே இஸ்ர 2
வேல் புத்திரராகிய சபையார் எல்லாரும்
மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாக
[27]முறுமுறுத்து: நாங்கள் இறைச்சிப் [28]பாத்தி 3
ரங்களண்டையிலே உட்கார்ந்து அப்பத்தைத்

திர்ப்தியாகச் சாப்பிட்ட எகிப்துதேசத்திலே,
**கர்த்தரின்** கையால் செத்துப்போனோமானால்
நலமாயிருக்கும்; இந்தக் கூட்டம் முழுவதையும் பட்
டினியினால் கொல்லும்படி நீங்கள் எங்களைப்
புறப்படப்பண்ணி, இந்த வனாந்தரத்திலே
அழைத்துவந்தீர்களே என்று அவர்களிடத்
4 தில் சொன்னார்கள். அப்பொழுது **கர்த்தர்**
மோசேயை நோக்கி: நான் உங்களுக்கு வானத்
திலிருந்து *அப்பம் [1]வருஷிக்கப்பண்ணு
வேன்; ஜனங்கள் போய், ஒவ்வொருநாளுக்கு
வேண்டியதை ஒவ்வொரு நாளிலும் சேர்த்
துக்கொள்ளவேண்டும்; அதினால் அவர்கள்
என் நியாயப்பிரமாணத்தின்படி நடப்பார்
களோ நடக்கமாட்டார்களோ என்று அவர்
5 களைச் [2]சோதிப்பேன். ஆறாம் நாளிலோ,
அவர்கள் நாள்தோறும் சேர்க்கிறதைப்பார்க்
கிலும் [3]இரண்டத்தனையாய்ச் சேர்த்து, அதை
ஆயத்தம்பண்ணிவைக்கக்கடவர்கள் என்றார்.
6 அப்பொழுது மோசேயும் ஆரோனும் இஸ்ர
வேல் புத்திரர் எல்லாரையும் நோக்கி: **கர்த்தர்**
உங்களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்
பண்ணினவர் என்பதைச் சாயங்காலத்தில்
7 அறிவீர்கள்; விடியற்காலத்தில் **கர்த்தருடைய**
[4]மகிமையையும் காண்பீர்கள்; **கர்த்தருக்கு**
விரோதமான உங்கள் முறுமுறுப்புகளை அவர்
கேட்டார்; நீங்கள் எங்களுக்கு விரோதமாய்
முறுமுறுக்கிறதற்கு நாங்கள் எம்மாத்திரம் என்
8 றார்கள். பின்னும் மோசே: சாயங்காலத்தில்
நீங்கள் புசிக்கிறதற்குக் **கர்த்தர்** உங்களுக்கு
இறைச்சியையும், விடியற்காலத்தில் நீங்கள்
திர்ப்தியடைகிறதற்கு அப்பத்தையும் கொடுக்
கையில் இது விளங்கும்; **கர்த்தருக்கு** விரோத
மாக நீங்கள் முறுமுறுத்த உங்கள் முறுமுறுப்பு
களை அவர் கேட்டார்; நாங்கள் எம்மாத்திரம்?
உங்கள் முறுமுறுப்புகள் எங்களுக்கு அல்ல,
[5]**கர்த்தருக்கே** விரோதமாய் இருக்கிறது என்
9 றான். அப்பொழுது மோசே ஆரோனைப்
பார்த்து; நீ இஸ்ரவேல் புத்திரராகிய சபை
யார் எல்லாரையும் நோக்கி: **கர்த்தருடைய**
சந்நிதியில் சேருங்கள், [6]அவர் உங்கள் முறு
முறுப்புகளைக் கேட்டார் என்று சொல் என்
றான்.
10 ஆரோன் இஸ்ரவேல் புத்திரராகிய சபை
யாருக்கெல்லாம் இதைச் சொல்லுகிறபோது,
அவர்கள் வனாந்தரதிசையாகத் திரும்பிப் பார்த்
தார்கள்; அப்பொழுது **கர்த்தருடைய** மகிமை
11 [7]மேகத்திலே காணப்பட்டது. **கர்த்தர்** மோ
12 சேயை நோக்கி: இஸ்ரவேல் புத்திரரின் முறு
முறுப்புகளைக் கேட்டிருக்கிறேன்; நீ அவர்
களோடே பேசி, நீங்கள் சாயங்காலத்தில்
இறைச்சியைப் புசித்து, விடியற்காலத்தில்
அப்பத்தால் திர்ப்தியாகி, நான் உங்கள் தேவ
னாகிய **கர்த்தர்** என்பதை அறிந்துகொள்வீர்
13 கள் என்று சொல் என்றார். சாயங்காலத்தில்
[8]காடைகள் வந்து விழுந்து பாளயத்தை மூடிக்
கொண்டது. விடியற்காலத்தில் பாளயத்தைச்
14 சுற்றி பனி பெய்திருந்தது. பெய்திருந்த பனி
நீங்கினபின், இதோ, வனாந்தரத்தின் மீதெங்
கும் [9]உருட்சியான ஒரு சிறிய வஸ்து உறைந்த
பனிக்கட்டிப் பொடியத்தனையாய்த் தரையின்
மேல் கிடந்தது. இஸ்ரவேல் புத்திரர் அதைக் 15
கண்டு, அது இன்னது என்று அறியாதிருந்து,
ஒருவரை ஒருவர் பார்த்து, †இது என்ன
என்றார்கள்; அப்பொழுது மோசே அவர்களை
நோக்கி: இது **கர்த்தர்** உங்களுக்குப் புசிக்கக்
கொடுத்த அப்பம். **கர்த்தர்** கட்டளையிடுகிறது 16
என்னவென்றால், அவரவர் புசிக்கும் அளவுக்
குத்தக்கதாக அதில் எடுத்துச் சேர்க்கக்கடவீர்
கள்; உங்களிலுள்ள ஆத்துமாக்களின் இலக்
கத்தின்படி, அவனவன் தன்தன் கூடாரத்
தில் இருக்கிறவர்களுக்காக தலைக்கு ஒரு
‡ஓமர் அளவு எடுத்துக்கொள்ளக்கடவன் என்
றான். இஸ்ரவேல் புத்திரர் அப்படியே 17
செய்து, சிலர் மிகுதியாயும் சிலர் கொஞ்சமா
யும் சேர்த்தார்கள். பின்பு, அதை ஓமரால் 18
அளந்தார்கள்: மிகுதியாய்ச் சேர்த்தவனுக்கு
[10]மீதியானதும் இல்லை, கொஞ்சமாய்ச் சேர்த்
தவனுக்குக் குறைவானதும் இல்லை; அவர
வர் தாங்கள் புசிக்கும் அளவுக்குத்தக்கதாகச்
சேர்த்தார்கள். மோசே அவர்களை நோக்கி: 19
ஒருவனும் [11]விடியற்காலம்மட்டும் அதில் ஒன்
றும் வைக்கக்கூடாது என்று அவர்களுக்குச்
சொல்லியும்; மோசேயின் சொல் கேளாமல், 20
சிலர் அதில் விடியற்காலம்மட்டும் கொஞ்சம்
மீதியாய் வைத்தார்கள்; அது பூச்சி பிடித்து
நாற்றமெடுத்தது. அவர்கள்மேல் மோசே
கோபங்கொண்டான். அதை விடியற்காலந் 21
தோறும் அவரவர் புசிக்கும் அளவுக்குத்தக்க
தாகச் சேர்த்தார்கள், வெயில் ஏறஏற அது
உருகிப்போம்.
ஆறாம் நாளில் தலைக்கு இரண்டு ஓமர் 22
வீதமாக இரண்டத்தனையாய் §ஆகாரம் சேர்த்
தார்கள்; அப்பொழுது சபையின் தலைவர்
எல்லாரும் வந்து, அதை மோசேக்கு அறி
வித்தார்கள். அவன் அவர்களை நோக்கி: **கர்த்** 23
**தர்** சொன்னது இதுதான்; [12]நாளைக்குக் **கர்த்த**
**ருக்குரிய** பரிசுத்த ஓய்வுநாளாகிய ஓய்வு; நீங்
கள் சுடவேண்டியதைச் சுட்டு, வேவிக்க
வேண்டியதை வேவித்து, மீதியாயிருக்கிறதை
யெல்லாம் நாளைமட்டும் உங்களுக்காக வைத்து
வையுங்கள் என்றான். மோசே கட்டளை 24
யிட்டபடியே, அதை மறுநாள் வரைக்கும்
வைத்து வைத்தார்கள்; அப்பொழுது அது
நாறவும் இல்லை, அதிலே பூச்சி பிடிக்கவும்
இல்லை. அப்பொழுது மோசே: அதை இன் 25
றைக்குப் புசியுங்கள்; இன்று **கர்த்தருக்குரிய**
ஓய்வுநாள்; இன்று நீங்கள் அதை வெளியிலே
காணமாட்டீர்கள். ஆறுநாளும் [13]அதைச் 26
சேர்ப்பீர்களாக; ஏழாம்நாள் ஓய்வுநாளா
யிருக்கிறது; அதிலே அது உண்டாயிராது
என்றான். ஏழாம்நாளில் ஜனங்களில் சிலர் 27
அதைச் சேர்க்கப் புறப்பட்டார்கள்; அவர்கள்
அதைக் காணவில்லை. அப்பொழுது **கர்த்தர்** 28
மோசேயை நோக்கி: என் கட்டளைகளையும்

* ஆகாரம்.
1 சங். 78. 24. யோ. 6. 31, 32. 1 கொ. 10. 3
2 உபா. 8. 16
3 லேவி. 25. 21
4 எண். 14. 10
5 1 சாமு. 8. 7. மத். 10. 40. லூ. 10. 16. ரோ. 13. 2
6 எண். 16. 16
7 எண். 14. 10. 1 இரா. 8. 10
8 எண். 11. 31. சங். 78. 27-31
9 எண். 11. 7. உபா. 8. 3. சங். 78. 24. 105. 40
† மன்னா. 31. வச. யோ. 6. 31, 49, 58. 1 கொ. 10. 3. எபி. 9. 4. வெளி. 2. 17
‡ படி.
10 2 கொ. 8. 15
11 மத். 6. 34
§ அப்பம். 4. வசனம்.
12 ஆதி. 2. 3 லேவி. 23. 3
13 யாத். 20. 9, 10

என் பிரமாணங்களையும் கைக்கொள்ள [1]எத்த
29 மட்டும் மனதில்லாதிருப்பீர்கள்? பாருங்கள்,
**கர்த்தர்** உங்களுக்கு ஓய்வுநாளை அருளின
படியால், அவர் உங்களுக்கு ஆரும் நாளில்
இரண்டுநாளுக்கு வேண்டிய ஆகாரத்தைக்
கொடுக்கிறார்; ஏழாம் நாளில் உங்களில் ஒரு
வனும் தன்தன் ஸ்தானத்திலிருந்து புறப்படா
மல், அவனவன் தன்தன் ஸ்தானத்திலே
30 இருக்கவேண்டும் என்றார். அப்படியே ஜனங்
31 கள் ஏழாம் நாளில் ஓய்ந்திருந்தார்கள். இஸ்ர
வேல் வம்சத்தார் அதற்கு மன்னா என்று
பேரிட்டார்கள்; [2]அது கொத்துமல்லி அள
வாயும் வெண்மைநிறமாயும் இருந்தது, அதின்
ருசி தேனிட்ட பணிகாரத்திற்கு ஒப்பாயிருந்
32 தது. அப்பொழுது மோசே: **கர்த்தர்** கட்
டளையிட்ட காரியம் என்னவென்றால், நான்
உங்களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்
பண்ணினபோது, வனாந்தரத்தில் உங்களுக்
குப் புசிக்கக் கொடுத்த அப்பத்தை உங்கள்
சந்ததியார் பார்க்கும்படிக்கு, அவர்களுக்காக
அதைக் காப்பதற்கு, அதிலே ஒரு ஓமர்
நிறைய எடுத்துவைக்கவேண்டும் என்றான்.
33 மேலும், மோசே ஆரோனை நோக்கி: நீ ஒரு
[3]கலசத்தை எடுத்து, அதிலே ஒரு ஓமர் அளவு
மன்னாவைப் போட்டு, அதை உங்கள் சந்ததி
யாருக்காகக் காப்பதற்கு **கர்த்தருடைய** சந்நிதி
34 யிலே வை என்றான். **கர்த்தர்** மோசேக்குக்
கட்டளையிட்டபடியே [4]அது காக்கப்படும்படி
ஆரோன் அதைச் சாட்சி சந்நிதியில் வைத்
35 தான். இஸ்ரவேல் புத்திரர் குடியிருப்பான
தேசத்துக்கு வருமட்டும் [5]நாற்பது வருஷமள
வும் மன்னாவைப் புசித்தார்கள்; அவர்கள்
கானான்தேசத்தின் [6]எல்லையில் சேரும்வரைக்
36 கும் மன்னாவைப் புசித்தார்கள். ஒரு *ஓம
ரானது †எப்பாவிலே பத்தில் ஒரு பங்கு.

**17** பின்பு இஸ்ரவேல் புத்திரராகிய [7]சபை
யார் எல்லாரும் **கர்த்தருடைய** கட்டளையின்
படியே சீன்வனாந்தரத்திலிருந்து புறப்பட்டு,
பிரயாணம்பண்ணி, ரெவிதீமிலே வந்து பாள
யமிறங்கினார்கள்; அங்கே ஜனங்களுக்குக்
2 குடிக்கத் தண்ணீர் இல்லாதிருந்தது. அப்
பொழுது ஜனங்கள் மோசேயோடே வாதாடி:
[8]நாங்கள் குடிக்கிறதற்கு எங்களுக்குத் தண்
ணீர் தரவேண்டும் என்றார்கள். அதற்கு
மோசே: என்னோடே ஏன் வாதாடுகிறீர்கள்,
[9]**கர்த்தரை** ஏன் பரிட்சைபார்க்கிறீர்கள் என்
3 றான். ஜனங்கள் அவ்விடத்திலே தண்ணீர்த்
தவனமாயிருந்தபடியால், அவர்கள் மோசேக்கு
விரோதமாய் முறுமுறுத்து: நீர் எங்களையும்
எங்கள் பிள்ளைகளையும் எங்கள் ஆடுமாடுகளை
யும் தண்ணீர்த் தவனத்தினால் கொன்றுபோட
எங்களை எகிப்திலிருந்து ஏன் கொண்டுவந்தீர்
4 என்றார்கள். மோசே **கர்த்தரை** நோக்கிக் கூப்
பிட்டு: இந்த ஜனங்களுக்கு நான் என்னசெய்
வேன், இவர்கள் என்மேல் [10]கல்லெறியப்
5 பார்க்கிறார்களே என்றான். அப்பொழுது
**கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ இஸ்ரவேல்
மூப்பரில் சிலரை உன்னோடே கூட்டிக்கொ
ண்டு, [11]நீ நதியை அடித்த உன் கோலை உன்
கையிலே பிடித்துக்கொண்டு, ஜனங்களுக்கு
முன்னே நடந்துபோ. அங்கே ஓரேபிலே 6
நான் உனக்கு முன்பாகக் [12]கல்மலையின்மேல்
நிற்பேன்; நீ அந்தக் கல்மலையை அடி; அப்
பொழுது ஜனங்கள் குடிக்க அதிலிருந்து தண்
ணீர் புறப்படும் என்றார்; அப்படியே மோசே
இஸ்ரவேல் மூப்பரின் கண்களுக்கு முன்பா
கச் செய்தான். இஸ்ரவேல் புத்திரர் வாதாடி 7
னதினிமித்தமும், **கர்த்தர்** எங்கள் நடுவில்
இருக்கிறாரா இல்லையா என்று அவர்கள்
**கர்த்தரைப்** பரிட்சை பார்த்ததினிமித்தமும்,
அவன் அந்த ஸ்தலத்திற்கு ‡மாசா என்றும்
§மேரிபா என்றும் பேரிட்டான்.

அமலேக்கியர் [13]வந்து ரெவிதீமிலே இஸ்ர 8
வேலரோடே யுத்தம்பண்ணினார்கள். அப் 9
பொழுது மோசே [14]யோசுவாவை நோக்கி: நீ
நமக்காக மனிதரைத் தெரிந்துகொண்டு, புறப்
பட்டு, அமலேக்கோடே யுத்தம்பண்ணு; நாளை
க்கு நான் மலையுச்சியில் தேவனுடைய கோலை
என் கையில் பிடித்துக்கொண்டு நிற்பேன்
என்றான். யோசுவா தனக்கு மோசே சொன் 10
னபடியே செய்து, அமலேக்கோடே யுத்தம்
பண்ணினான். மோசேயும் ஆரோனும் ஊர்
என்பவனும் மலையுச்சியில் ஏறினார்கள்.
மோசே [15]தன் கையை ஏறெடுத்திருக்கையில், 11
இஸ்ரவேலர் மேற்கொண்டார்கள்; அவன்
தன் கையைத் தாழவிடுகையில், அமலேக்கு
மேற்கொண்டான். மோசேயின் கைகள் அச 12
ந்துபோயிற்று, அப்பொழுது அவர்கள் ஒரு
கல்லைக் கொண்டுவந்து அவன் கீழே வைத்
தார்கள்; அதின்மேல் உட்கார்ந்தான்; ஆரோ
னும் ஊரும் ஒருவன் ஒரு பக்கத்திலும் ஒரு
வன் மறு பக்கத்திலும் இருந்து, அவன் கைக
ளைத் தாங்கினார்கள்; இவ்விதமாய் அவன்
கைகள் சூரியன் அஸ்தமிக்கும்வரைக்கும் ஒரே
நிலையாயிருந்தது. யோசுவா அமலேக்கையும் 13
அவன் ஜனங்களையும் பட்டயக்கருக்கினாலே
முறிய அடித்தான். பின்பு **கர்த்தர்** மோசே 14
யை நோக்கி: இதை நினைவுகூரும்பொருட்டு,
நீ ஒரு [16]புஸ்தகத்தில் எழுதி, யோசுவாவின்
செவி கேட்கும்படி வாசி. [17]அமலேக்கை
வானத்தின் கீழெங்கும் இராதபடிக்கு நாசம்
பண்ணுவேன் என்றார். மோசே ஒரு பலி 15
பீடத்தைக் கட்டி அதற்கு ||**யேகோவாநிசி**
என்று பேரிட்டு, அமலேக்கின் கை **கர்த்தரு** 16
**டைய** சிங்காசனத்துக்கு விரோதமாயிருந்தபடி
யால், தலைமுறை தலைமுறைதோறும் அவ
னுக்கு விரோதமாய் **கர்த்தரின்** யுத்தம் நடக்
கும் என்றான்.

தேவன் மோசேக்கும் தமது ஜனமாகிய **18**
இஸ்ரவேலுக்கும் செய்த யாவையும், **கர்த்தர்**
இஸ்ரவேலை எகிப்திலிருந்து புறப்படப்பண்
ணினதையும், மீதியானில் ஆசாரியனாயிருந்த
மோசேயின் மாமனாகிய [18]எத்திரோ கேள்விப்
பட்டபோது, மோசேயின் மாமனாகிய எத் 2

[1] 2 இரா. 17. 14. சங். 78. 10. எரே. 9. 6. எசே. 5. 6
[2] எண். 11. 7, 8
[3] எபி. 9. 4
[4] எண். 1. 50. 1 இரா. 8. 9
[5] எண். 33. 38. உபா. 8. 2, 3. யோ. 6. 31, 49
[6] யோசு. 5. 12. நெகே. 9. 15
* படி.
† மரக்கால்.
[7] எண். 33. 12, 14
[8] எண். 20. 3, 4
[9] உபா. 6. 16. சங். 78. 18. ஏசா. 7. 12. மத். 4. 7. 1 கொரி. 10. 9
[10] 1 சாமு. 30. 6. யோ. 8. 59. அப். 7. 59
[11] எண். 20. 8
[12] சங். 105. 41. 1 கொரி. 10. 4
‡ சோதனை.
§ வாக்குவாதம். சங். 81. 7. எபி. 3. 8
[13] ஆதி. 36. 12. எண். 24. 20
[14] அப். 7. 45. எபி. 4. 8
[15] யாக். 5. 16
[16] எண். 24. 20
[17] எண். 24. 20. உபா. 25. 19
|| கர்த்தர் என் கொடி.
[18] யாத். 2. 16

திரோ, மோசேயினுலே திரும்பி அனுப்பி
விடப்பட்டிருந்த [1]அவன் மனைவியாகிய சிப்
3 போராளையும், அவளுடைய இரண்டு குமா
ரரையும் கூட்டிக்கொண்டு பிரயாணப்பட்
டான். நான் அந்நிய தேசத்திலே பரதேசி
யானேன் என்று மோசே சொல்லி, ஒரு
மகனுக்குக் கெர்சோம் என்று பேரிட்டிருந்
4 தான்; என் பிதாவின் தேவன் எனக்குத்
துணைநின்று பார்வோனின் பட்டயத்துக்கு
என்னைத் தப்புவித்தார் என்று சொல்லி, மற்
றவனுக்கு எலியேசர் என்று பேரிட்டிருந்
5 தான். மோசேயின் மாமனுகிய எத்திரோ
மோசேயின் குமாரரோடும் அவன் மனைவி
யோடுங்கூட, அவன் பாளயமிறங்கியிருந்த
[2]தேவ பர்வதத்தினிடத்தில் வனாந்தரத்துக்கு
6 வந்து: எத்திரோ என்னும் உம்முடைய மாம
ணுகிய நானும், உம்முடைய மனைவியும், அவ
ளோடேகூட அவளுடைய இரண்டு குமா
ரும் உம்மிடத்திற்கு வந்திருக்கிறோம் என்று
7 மோசேக்குச் சொல்லியனுப்பினான். அப்
பொழுது மோசே தன் மாமனுக்கு எதிர்
கொண்டுபோய், அவனை [3]வணங்கி, முத்தஞ்
செய்தான்; ஒருவரை ஒருவர் சுகசெய்தி விசா
ரித்துக்கொண்டு, கூடாரத்துக்குள் பிரவேசித்
8 தார்கள். பின்பு மோசே **கர்த்தர்** இஸ்ரவே
லினிமித்தம் பார்வோனுக்கும் எகிப்தியருக்
கும் செய்த எல்லாவற்றையும், வழியிலே தங்
களுக்கு நேரிட்ட எல்லா வருத்தத்தையும்,
**கர்த்தர்** தங்களை [4]விடுவித்து இரட்சித்ததையும்
தன் மாமனுக்கு விவரித்துச் சொன்னான்.
9 **கர்த்தர்** இஸ்ரவேலரை எகிப்தியரின் கைக்
குத் தப்புவித்து, அவர்களுக்குச் செய்த சகல
நன்மைகளையுங்குறித்துஎத்திரோ[5]சந்தோஷப்
10 பட்டு: உங்களை எகிப்தியரின் கைக்கும் பார்
வோனின் கைக்கும் தப்புவித்து, எகிப்தியரு
டைய கையின் கீழிருந்த ஜனத்தை விடுவித்த
11 **கர்த்தருக்கு** [6]ஸ்தோத்திரம். **கர்த்தர்** [7]எல்
லாத் தேவர்களைப்பார்க்கிலும் பெரியவர் என்
பதை இப்பொழுது அறிந்திருக்கிறேன்; அவர்
கள் [8]இடும்புசெய்த காரியத்தில் அவர்களை
12 மேற்கொண்டார் என்று சொல்லி; மோசே
யின் மாமனுகிய எத்திரோ சர்வாங்க தகனப
லியையும் மற்றப் பலிகளையும் தேவனுக்குக்
கொண்டுவந்து செலுத்தினான். பின்பு ஆரோ
னும் இஸ்ரவேல் மூப்பர் அனைவரும் வந்து,
மோசேயின் மாமனுடனே [9]தேவசமுகத்தில்
13 போஜனம் பண்ணினார்கள். மறுநாள் மோசே
ஜனங்களை நியாயம் விசாரிக்க உட்கார்ந்
தான்; ஜனங்கள் காலமே துவக்கிச் சாயங்கா
லம்மட்டும் மோசேக்கு முன்பாக நின்றார்கள்.
14 ஜனங்களுக்கு அவன் செய்த யாவையும் மோ
சேயின் மாமன் கண்டு: நீர் ஜனங்களுக்குச்
செய்கிற இந்தக் காரியம் என்ன? நீர் ஒன்றி
யாய் உட்கார்ந்திருக்கவும், ஜனங்கள் எல்லா
ரும் காலமே துவக்கிச் சாயங்காலம்மட்டும் உம
க்கு முன்பாக நிற்கவும் வேண்டியது என்ன
15 என்றான். அப்பொழுது மோசே தன் மாமனை
நோக்கி: [10]தேவனிடத்தில் விசாரிக்கும்படி
ஜனங்கள் என்னிடத்தில் வருகிறார்கள். அவர் 16
களுக்கு [11]யாதொரு காரியம் உண்டானால்,
என்னிடத்தில் வருகிறார்கள்; நான் அவர்களுக்
குள்ள வழக்கைத் தீர்த்து, தேவகட்டளைகளை
யும் அவருடைய பிரமாணங்களையும் தெரிவிக்
கிறேன் என்றான். அதற்கு மோசேயின் மா 17
மன்: நீர் செய்கிற காரியம் நல்லதல்ல; நீரும் 18
உம்மோடே இருக்கிற ஜனங்களும் தொய்ந்து
போவீர்கள்; இது உமக்கு மிகவும் பாரமான
காரியம்; [12]நீர் ஒருவராய் அதைச் செய்ய உம்
மாலே கூடாது. இப்பொழுது என் சொல்லைக் 19
கேளும், உமக்கு ஒரு ஆலோசனை சொல்லுகி
றேன்; தேவனும் உம்மோடுகூட இருப்பார்,
[13]நீர் தேவசந்நிதியிலே ஜனங்களுக்காக இரும்;
விசேஷித்தவைகளைத் தேவனிடத்தில்கொண்
டுபோய்; கட்டளைகளையும் பிரமாணங்களையும் 20
[14]அவர்களுக்கு வெளிப்படுத்தி; அவர்கள் நடக்
கவேண்டிய வழியையும், அவர்கள் செய்ய
வேண்டிய காரியத்தையும் அவர்களுக்குத் தெ
ரியப்படுத்தும். ஜனங்கள் எல்லாருக்குள்ளும் 21
தேவனுக்குப் [15]பயந்தவர்களும் உண்மையுள்ள
வர்களும் பொருளாசையை வெறுக்கிறவர்க
ளுமான திறமையுள்ள மனிதரைத் தெரிந்து
கொண்டு, அவர்களை ஆயிரம்பேருக்கு அதி
பதிகளாகவும், நூறுபேருக்கு அதிபதிகளாக
வும், ஐம்பதுபேருக்கு அதிபதிகளாகவும், பத்
துப்பேருக்கு அதிபதிகளாகவும் ஏற்படுத்தும்.
அவர்கள் எப்பொழுதும் ஜனங்களை நியாயம் 22
விசாரித்து, பெரிய காரியங்கள் யாவையும்
உம்மிடத்தில் கொண்டுவரட்டும், சிறிய காரி
யங்கள் யாவையும் தாங்களே தீர்க்கட்டும்; இப்
படி அவர்கள் உம்மோடேகூட [16]இந்தப் பாரத்
தைச் சுமந்தால், உமக்கு இலகுவாயிருக்கும்.
இந்தப்பிரகாரம் நீர் செய்வதும், இப்படித் தே 23
வன் உமக்குக் கட்டளையிடுவதும் உண்டா
னால், உம்மாலே தாங்கக்கூடும்; இந்த ஜனங்
கள் எல்லாரும் தாங்கள் போகும் [17]இடத்துக்
குச் சுகமாய்ப் போய்ச் சேரலாம் என்றான்.
மோசே தன் மாமன் சொல் கேட்டு, அவன் 24
சொன்னபடியெல்லாம் செய்தான். மோசே 25
இஸ்ரவேலர் எல்லாரிலும் திறமையுள்ள மனி
தரைத் தெரிந்துகொண்டு, [18]அவர்களை ஆயிரம்
பேருக்கு அதிபதிகளாகவும், நூறுபேருக்கு
அதிபதிகளாகவும், ஐம்பதுபேருக்கு அதிபதி
களாகவும், பத்துப்பேருக்கு அதிபதிகளாகவும்
ஜனங்கள்மேல் தலைவராக்கினான். அவர்கள் 26
எப்பொழுதும் ஜனங்களை நியாயம் விசாரித்
தார்கள்; [19]வருத்தமான காரியங்களைமாத்திரம்
மோசேயினிடத்தில் கொண்டுவந்தார்கள்;
சிறிய காரியங்களையெல்லாம் தாங்களே தீர்த்
தார்கள். பின்பு மோசே தன் மாமனை அனுப் 27
பிவிட்டான்; [20]அவன் திரும்பத் தன் தேசத்
துக்குப் போய்விட்டான்.

இஸ்ரவேல் புத்திரர் எகிப்துதேசத்திலி **19**
ருந்து புறப்பட்ட மூன்றாம் மாதம் முதலாம்
நாளிலே, [21]சீனாய்வனாந்தரத்தில் சேர்ந்தார்

1 யாத். 4. 26
2 யாத். 3. 1, 12
3 ஆதி. 29. 13
4 சங். 106. 43
5 சேர. 12. 15
6 2 சாமு. 18. 28. லூ. 1. 68
7 சங். 95. 3
8 யோபு 40. 11. தானி. 4. 37
9 உபா. 13. 7. 1 கொ. 10. 21
10 எண். 15. 34. உபா. 17. 8, 9
11 அப். 18. 15. 1 கொ. 6. 1
12 உபா. 1. 9, 12
13 உபா. 5. 5
14 உபா. 4. 1. நெகே. 9. 14
15 உபா. 1. 15, 17. 2 சாமு. 23. 3. யோபு. 29. 16
16 எண். 11. 17
17 ஆதி. 30. 25
18 அப் 6. 5
19 யோபு 29. 16
20 எண். 10. 29, 30
21 எண். 33. 15

2 கள். அவர்கள் [1]ரெவிதீமிலிருந்து பிரயாணம்
புறப்பட்டு, சீனாய் வனாந்தரத்தில் சேர்ந்து,
அந்த வனாந்தரத்தில் பாளயமிறங்கினார்கள்;
இஸ்ரவேலர் அங்கே மலைக்கு எதிராக பாளய
3 மிறங்கினார்கள். மோசே தேவனிடத்திற்கு
[2]ஏறிப்போனான்; கர்த்தர் மலையிலிருந்து அவ
னைக் கூப்பிட்டு: நீ யாக்கோபு வம்சத்தாருக்
குச் சொல்லவும், இஸ்ரவேல் புத்திரருக்கு
அறிவிக்கவும் வேண்டியது என்னவென்றால்,
4 நான் [3]எகிப்தியருக்குச் செய்ததையும், நான்
உங்களைக் [4]கழுகுகளுடைய செட்டைகளின்
மேல் சுமந்து, உங்களை என்னண்டையிலே
சேர்த்துக்கொண்டதையும், நீங்கள் கண்டிருக்
5 கிறீர்கள். இப்பொழுது நீங்கள் என் வாக்
கை உள்ளபடி கேட்டு, என் உடன்படிக்கை
யைக் கைக்கொள்வீர்களானால், சகல ஜனங்
களிலும் நீங்களே எனக்குச் [5]சொந்த சம்பத்
தாயிருப்பீர்கள்; பூமியெல்லாம் என்னுடை
6 யது. நீங்கள் எனக்கு [6]ஆசாரிய ராஜ்யமும்
[7]பரிசுத்த ஜாதியுமாய் இருப்பீர்கள் என்று நீ
இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண்
7 டிய வார்த்தைகள் என்றார். மோசே வந்து
ஜனங்களின் மூப்பரை அழைப்பித்து, **கர்த்தர்**
தனக்குக் கற்பித்த வார்த்தைகளையெல்லாம்
8 அவர்களுக்கு முன்பாகச் சொன்னான். அத
ற்கு ஜனங்கள் எல்லாரும் [8]ஏகமாய், **கர்த்தர்**
சொன்னவைகளையெல்லாம் செய்வோம்
என்று பிரதியுத்தரம் சொன்னார்கள். ஜனங்
கள் சொன்ன வார்த்தைகளை மோசே **கர்த்த**
9 **ரிடத்தில்** தெரிவித்தான். அப்பொழுது **கர்த்**
**தர்** மோசேயை நோக்கி: நான் உன்னோடே
பேசும்போது ஜனங்கள் கேட்டு, உன்னை என்
றைக்கும் விசுவாசிக்கும்படி, [9]நான் கார்மேகத்
தில் உன்னிடத்திற்கு வருவேன் என்றார்.
ஜனங்கள் சொன்ன வார்த்தைகளை மோசே
10 **கர்த்தருக்குச்** சொன்னான். பின்னும் **கர்த்தர்**
மோசேயை நோக்கி: நீ ஜனங்களிடத்தில்
போய், இன்றைக்கும் நாளைக்கும் [10]அவர்களைப்
பரிசுத்தப்படுத்து; அவர்கள் தங்கள் வஸ்திரங்
11 களைத் தோய்த்து, மூன்றாம் நாளைக்கு ஆயத்
தப்பட்டிருக்கக்கடவர்கள்; மூன்றாம் நாளில்
**கர்த்தர்** சகல ஜனங்களுக்கும் பிரத்தியட்சமா
12 கச் சீனாய்மலையின்மேல் இறங்குவார். ஜனங்
களுக்குச் சுற்றிலும் நீ ஒரு எல்லை குறித்து,
அவர்கள் மலையில் ஏறாதபடிக்கும், அதின்
அடிவாரத்தைத் தொடாதபடிக்கும் எச்சரிக்
கையாய் இருங்கள் என்று அவர்களுக்குச்
சொல்; [11]மலையைத் தொடுகிறவன் எவனும்
13 நிச்சயமாகவே கொல்லப்படுவான். ஒரு கை
யும் அதைத் தொடலாகாது; தொட்டால், நிச்
சயமாகக் கல்லெறியுண்டு, அல்லது ஊடுருவ
எய்யுண்டு சாகவேண்டும்; மிருகமானாலும் சரி,
மனிதனானாலும் சரி, உயிரோடே வைக்கப்
படலாகாது; எக்காளம் நெடுந்தொனியாய்த்
தொனிக்கையில், அவர்கள் மலையின் அடி
14 வாரத்தில் வரக்கடவர்கள் என்றார். மோசே
மலையிலிருந்து இறங்கி, ஜனங்களிடத்தில்

[1] யாத். 17. 1, 8
[2] அப். 7. 38
[3] யாத். 7–11. அதி
[4] உபா. 1. 31, 32. 11. ஏசா. 40. 31 68. 9. வெளி. 12 14
[5] உபா. 7. 6. 1 இரா. 8. 53. சங். 135. 4. ஏசா. 41. 8 தீத். 2. 14
[6] உபா. 33. 2. 1 பே. 2. 5, 9. வெளி. 1. 6. 5. 10
[7] 1 கொ. 3. 17
[8] உபா. 5. 27. யோசு. 24. 24
[9] உபா. 4. 11. சங். 18. 11, 12. ஏசா. 19. 1. மத். 17. 5
[10] லேவி. 11. 44. எபி. 10. 22
[11] எபி. 12. 20
[12] 1 சாமு. 21. 4, 5. 1 கொ. 7. 5
[13] எபி. 12. 21
[14] உபா. 4. 11. நியா. 5. 5. சங். 68. 8. ஆப. 3. 3
[15] சங். 81. 7
[16] 1 சாமு. 6. 19
[17] லேவி. 10. 3
[18] உபா. 5. 4, 22
[19] லேவி. 26. 1, 13. சங். 81. 10
[20] 2 இரா. 17. 35. எரே. 25. 6. மத். 4. 10
[21] லேவி. 26. 1. உபா. 4. 16

வந்து, அவர்களைப் பரிசுத்தப்படுத்தினான்;
அவர்கள் தங்கள் வஸ்திரங்களைத் தோய்த்தார்
கள். அவன் ஜனங்களை நோக்கி: மூன்றாம் 15
நாளுக்கு ஆயத்தப்பட்டிருங்கள், [12]மனைவியி
னிடத்தில் சேராதிருங்கள் என்றான். மூன் 16
றாம் நாள் விடியற்காலத்தில் இடிமுழக்கங்
களும் மின்னல்களும், மலையின்மேல் கார்
மேகமும் [13]மகா பலத்த எக்காளசத்தமும் உண்
டாயிற்று; பாளயத்திலிருந்த ஜனங்கள் எல்
லாரும் நடுங்கினார்கள். அப்பொழுது ஜனங் 17
கள் தேவனுக்கு எதிர்கொண்டுபோக, மோசே
அவர்களைப் பாளயத்திலிருந்து புறப்படப்பண்
ணினான்; அவர்கள் மலையின் அடிவாரத்தில்
நின்றார்கள். **கர்த்தர்** சீனாய்மலையின்மேல் 18
[14]அக்கினியில் இறங்கினபடியால், அது முழு
வதும் புகைக்காடாய் இருந்தது; அந்தப் புகை
சூளையின் புகையைப்போல எழும்பிற்று; மலை
முழுவதும் மிகவும் அதிர்ந்தது. எக்காளசத் 19
தம் வரவர மிகவும் பலமாய்த் தொனித்தது;
மோசே பேசினான்; தேவன் அவனுக்கு [15]வாக்
கினால் மறுமொழி கொடுத்தார். **கர்த்தர்** 20
சீனாய்மலையிலுள்ள கொடுமுடியில் இறங்கின
போது, **கர்த்தர்** மோசேயை மலையின் கொடு
முடியிலே வரவழைத்தார்; மோசே ஏறிப்
போனான். அப்பொழுது **கர்த்தர்** மோசேயை 21
நோக்கி: ஜனங்கள் [16]பார்க்கிறதற்கு எல்லை
யைக் கடந்து **கர்த்தரிடத்தில்** வராதபடிக்கும்,
அவர்களில் அநேகர் அழிந்துபோகாதபடிக்
கும், நீ இறங்கிப்போய், அவர்களை உறுதி
யாக எச்சரி. **கர்த்தரின்** சமுகத்தில் வருகிற 22
ஆசாரியர்களும், **கர்த்தர்** தங்களுக்குள்ளே
சங்காரம்பண்ணாதபடி, [17]தங்களைப் பரிசுத்தப்
படுத்திக்கொள்ளவேண்டும் என்றார். அப் 23
பொழுது மோசே **கர்த்தரை** நோக்கி: மலை
யைச் சுற்றிலும் எல்லை குறித்து, அதைப்
பரிசுத்தப்படுத்துங்கள் என்று தேவரீர் எங்
களை உறுதியாக எச்சரித்திருக்கிறீர்; ஆகை
யால், ஜனங்கள் சீனாய்மலையின்மேல் ஏறிவர
மாட்டார்கள் என்றான். **கர்த்தர்** மோசேயை 24
நோக்கி: நீ இறங்கிப்போ; பின்பு நீயும் ஆரோ
னும் கூடி ஏறிவாருங்கள்; ஆசாரியர்களும்
ஜனங்களும், **கர்த்தர்** தங்களுக்குள்ளே சங்கா
ரம்பண்ணாதபடிக்கு, எல்லையைக் கடந்து
**கர்த்தரிடத்தில்** வராதிருக்கக்கடவர்கள் என்
றார். அப்படியே மோசே இறங்கி ஜனங்க 25
ளிடத்தில் போய், அதை அவர்களுக்குச்
சொன்னான்.

தேவன் பேசிச் சொல்லிய [18]சகல வார்த் **20**
தைகளுமாவன:

உன்னை [19]அடிமைத்தன வீடாகிய எகிப்து 2
தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின உன்
தேவனாகிய **கர்த்தர்** நானே.

என்னையன்றி [20]உனக்கு வேறே தேவர்கள் 3
உண்டாயிருக்கவேண்டாம்.

மேலே வானத்திலும், கீழே பூமியிலும், 4
பூமியின் கீழ்த் தண்ணீரிலும் உண்டாயிருக்
கிறவைகளுக்கு ஒப்பான [21]ஒரு சொரூபத்தை

யாகிலும் யாதொரு விக்கிரகத்தையாகிலும்
5 நீ உனக்கு உண்டாக்கவேண்டாம்; நீ அவை
களை [1]நமஸ்கரிக்கவும் சேவிக்கவும் வேண்
டாம்; உன் தேவனாகிய **கர்த்தராயிருக்கிற**
நான் [2]எரிச்சலுள்ள தேவனாயிருந்து, என்
னைப் பகைக்கிறவர்களைக்குறித்துப் பிதாக்க
ளுடைய [3]அக்கிரமத்தைப் பிள்ளைகளிடத்தில்
மூன்றாம் நான்காம் தலைமுறைமட்டும் விசா
6 ரிக்கிறவரா யிருக்கிறேன். என்னிடத்தில்
அன்புகூர்ந்து, என் கற்பனைகளைக் கைக்
கொள்ளுகிறவர்களுக்கோ [4]ஆயிரம் தலை
முறைமட்டும் இரக்கஞ்செய்கிறவரா யிருக்
கிறேன்.
7 உன் தேவனாகிய **கர்த்தருடைய** [5]நாமத்தை
வீணிலே வழங்காதிருப்பாயாக; **கர்த்தர்** தம்
முடைய நாமத்தை வீணிலே [6]வழங்குகிறவ
னைத் தண்டியாமல் விடார்.
8 ஓய்வுநாளைப் பரிசுத்தமாய் [7]ஆசரிக்க நினைப்
9 பாயாக; ஆறுநாளும் [8]நீ வேலைசெய்து, உன்
கிரியைகளையெல்லாம் நடப்பிப்பாயாக;
10 ஏழாம்நாளோ [9]உன் தேவனாகிய **கர்த்தரு
டைய** ஓய்வுநாள்; அதிலே நீயானாலும், உன்
குமாரனானாலும், உன் குமாரத்தியானாலும்,
உன் வேலைக்காரனானாலும், உன் வேலைக்
காரியானாலும், உன் மிருகஜீவனானாலும்,
உன் வாசல்களில் இருக்கிற அந்நியனானா
லும், [10]யாதொரு வேலையும் செய்யவேண்டாம்.
11 **கர்த்தர்** [11]ஆறு நாளைக்குள்ளே வானத்தையும்
பூமியையும் சமுத்திரத்தையும் அவைகளிலு
ள்ள எல்லாவற்றையும் உண்டாக்கி, ஏழாம்
நாளிலே ஓய்ந்திருந்தார்; ஆகையால், **கர்த்தர்**
ஓய்வுநாளை ஆசீர்வதித்து, அதைப் பரிசுத்த
மாக்கினார்.
12 உன் தேவனாகிய **கர்த்தர்** [12]உனக்குக்
கொடுக்கிற தேசத்திலே உன் நாட்கள் நீடித்தி
ருப்பதற்கு, உன் தகப்பனையும் உன் தாயையும்
கனம்பண்ணுவாயாக.
13 கொலை [13]செய்யாதிருப்பாயாக.
14 விபசாரம் [14]செய்யாதிருப்பாயாக.
15 களவு [15]செய்யாதிருப்பாயாக.
16 பிறனுக்கு விரோதமாகப் [16]பொய்ச்சாட்சி
சொல்லாதிருப்பாயாக.
17 பிறனுடைய வீட்டை [17]இச்சியாதிருப்பா
யாக; பிறனுடைய மனைவியையும், அவனு
டைய வேலைக்காரனையும், அவனுடைய
வேலைக்காரியையும், அவனுடைய எருதை
யும், அவனுடைய கழுதையையும், பின்னும்
பிறனுக்குள்ள யாதொன்றையும் இச்சியாதி
ருப்பாயாக என்றார்.
18 ஜனங்கள் எல்லாரும் [18]இடிமுழக்கங்களை
யும் மின்னல்களையும் எக்காளச் சத்தத்தையும்
மலை புகைகிறதையும் கண்டார்கள்; அதைக்
கண்டு, ஜனங்கள் பின்வாங்கி, தூரத்திலே
19 நின்று, மோசேயை நோக்கி: நீர் எங்களோ
டே பேசும், நாங்கள் கேட்போம்; தேவன் எங்
களோடே பேசாதிருப்பாராக, பேசினால் நாங்
20 கள் செத்துப்போவோம் என்றார்கள். மோசே
ஜனங்களை நோக்கி: [19]பயப்படாதிருங்கள்; உங்
களைச் [20]சோதிப்பதற்காகவும், நீங்கள் பாவஞ்
செய்யாதபடிக்குத் தம்மைப் பற்றும் பயம் உங்
கள் முகத்திற்கு முன்பாக இருப்பதற்காகவும்,
தேவன் *எழுந்தருளினார் என்றான். ஜனங் 21
கள் தூரத்திலே நின்றார்கள்; மோசே, தேவன்
இருந்த கார்மேகத்துக்குச் சமீபமாய்ச் சேர்ந்
தான்.
அப்பொழுது **கர்த்தர்** மோசேயை நோக்கி: 22
நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண்
டியது என்னவென்றால், நான் [21]வானத்திலி
ருந்து உங்களோடே பேசினேன் என்று கண்
டீர்கள். நீங்கள் எனக்கு ஒப்பாக [22]வெள்ளி 23
யினாலே தெய்வங்களையும் பொன்னினாலே
தெய்வங்களையும் உங்களுக்கு உண்டாக்கவே
வேண்டாம். மண்ணினாலே பலிபீடத்தை 24
எனக்கு உண்டாக்கி, அதின்மேல் உன் ஆடு
களையும் உன் மாடுகளையும் சர்வாங்க தகனபலி
யாகவும் சமாதானபலியாகவும் செலுத்துவா
யாக; நான் [23]என் நாமத்தைப் பிரஸ்தாபப்ப
டுத்தும் எந்த ஸ்தானத்திலும் உன்னிடத்தில்
வந்து, உன்னை ஆசீர்வதிப்பேன். எனக்குக் 25
கல்லினால் [24]பலிபீடத்தை உண்டாக்கவேண்டு
மாகில், அதை வெட்டின கல்லுகளால் கட்ட
வேண்டாம்; அதின்மேல் உளியிட்டவுடனே,
அதை அசுசிப்படுத்துவாய். என் பலிபீடத் 26
தின்மேல் உன் நிர்வாணம் காணப்படாத
படிக்கு, படிகளால் அதின்மேல் ஏறவும்
வேண்டாம்.
மேலும், நீ அவர்களுக்கு [25]அறிவிக்க **21**
வேண்டிய பிரமாணங்களாவன: எபிரெயரில் 2
[26]ஒரு அடிமையைக் கொண்டாயானால், அவன்
ஆறு வருஷம் சேவித்து, ஏழாம் வருஷத்
திலே ஒன்றும் கொடாமல் விடுதலைபெற்றுப்
போகக்கடவன். ஒன்றிக்காரனாய் வந்திருந் 3
தானானால், ஒன்றிக்காரனாய்ப் போகக்கட
வன், விவாகம்பண்ணினவனாய் வந்திருந்தா
னானால், அவன் பெண்ஜாதி அவனோடே
கூடப் போகக்கடவள். அவன் எஜமான் அவ 4
னுக்கு ஒரு பெண்ணை விவாகஞ்செய்து கொ
டுத்தும், அவள் அவனுக்கு ஆண்பிள்ளைகளை
யாவது பெண்பிள்ளைகளையாவது பெற்றும்
இருந்தால், அந்தப் பெண்ணும் அவள் பிள்
ளைகளும் அவள் எஜமானைச் சேரக்கடவர்கள்;
அவன்மாத்திரம் ஒன்றியாய்ப் போகக்கடவன்.
அந்த வேலைக்காரன்: என் எஜமானையும் என் 5
பெண்ஜாதியையும் என் பிள்ளைகளையும் நேசிக்
கிறேன்; நான் விடுதலைபெற்றுப் போக மன
தில்லை என்று [27]மனப்பூர்வமாய்ச் சொல்வா
னானால், அவன் எஜமான் அவனை நியாயாதி 6
பதிகளிடத்தில் அழைத்துக்கொண்டுபோய்,
அவனைக் கதவின் அருகேயாவது கதவுநிலை
யின் அருகேயாவது சேரப்பண்ணி, அங்கே
அவன் எஜமான் அவன் காதைக் கம்பியினாலே
குத்தக்கடவன்; பின்பு அவன் என்றைக்கும்
அவனிடத்திலே சேவித்துக்கொண்டிருக்கக்
கடவன்.

[1] யோசு. 23. 7. ஏசா. 44. 15, 19
[2] யோசு. 24. 19. நாகூம் 1. 2
[3] எண். 14. 18. யோபு 21. 19. எரே. 2. 9
[4] உபா. 7. 9. ரோ. 11. 28
[5] லேவி. 19. 12. உபா. 28. 58
[6] லேவி. 24. 16. சங். 139. 20
[7] உபா. 5. 12
[8] எசே. 20. 12. லூக். 13. 14
[9] ஆதி. 2. 2, 3. ஏசா. 58. 13
[10] நெகே. 13. 16
[11] ஆதி. 2. 2. மத். 12. 1, 12
[12] உபா. 27. 16. நீதி. 1. 8. எரே. 35. 18, 19. மத். 15. 4, 6. எபே. 6. 2
[13] ஆதி. 9. 6. மத். 5. 21
[14] மத். 5. 27, 28. ரோ. 13. 9
[15] மத். 19. 18. எபே. 4. 28. 1 தெச. 4. 6
[16] சங். 52. 3, 5. வெளி. 22. 15
[17] ஆப. 2. 9. மத். 5. 28. ரோ. 7. 7. 1 கொ. 6. 10. கொலோ. 3. 5
[18] எபி. 12. 18, 19
[19] ஏசா. 41. 10, 13
[20] உபா. 4. 10
* வந்தார்.
[21] நெகே. 9. 13
[22] எசே. 20. 39. தானி. 5. 4, 23 2 கொ. 6. 14–16
[23] 2 நாளா. 7. 16. மத். 18. 20
[24] உபா. 27. 5. யோசு. 8. 31
[25] உபா. 6. 1
[26] உபா. 15. 12. எரே. 34. 8–17
[27] உபா. 15. 16, 17

7 ஒருவன் தன் மகளை [1]வேலைக்காரியாக விற்
றுப்போட்டானானால், வேலைக்காரன் விடுதலை
பெற்றுப் போவதுபோல அவள் போகக்கூ
8 டாது. அவளைத் தனக்கு நியமித்துக்கொண்ட
எஜமானின் பார்வைக்கு அவள் [2]தகாதவளாய்ப்
போனால், அவள் மீட்கப்படலாம்; அவன்
அவளுக்குத் [3]துரோகம்பண்ணி, அவளை
அந்நியர் கையில் [3]விற்றுப்போட அவனுக்கு
9 அதிகாரம் இல்லை. அவன் தன் குமாரனுக்கு
அவளை நியமித்திருந்தானானால், தன் குமாரத்
திகளை நடத்துவதுபோல அவளையும் நடத்தக்
10 கடவன். அவன் வேறொரு பெண்ணைக்
கொண்டானாகில், இவளுக்குரிய அன்னவஸ்
திர விவாகக்கடமை ஆகிய இவைகளில் குறை
11 வுசெய்யாமல் இருப்பானாக. இம்மூன்றும்
அவன் அவளுக்குச் செய்யாமற்போனால்,
அவள் பணங்கொடாமல் விடுதலை பெற்றுப்
போகக்கடவள்.
12 ஒரு மனிதனைச் [4]சாகும்படி அடித்தவன்,
நிச்சயமாய்க் கொலைசெய்யப்படக்கடவன்.
13 ஒருவன் [5]பதிவிருந்து கொல்லாமல், தேவச்
செயலாய்த் தன் கைக்கு நேரிட்டவனைக்
கொன்றால், அவன் ஓடிப்போய்ச் சேரவேண்
டிய [6]ஸ்தலத்தை உனக்கு நியமிப்பேன்.
14 ஒருவன் பிறனுக்கு விரோதமாகச் [7]சதிமோச
ஞ்செய்து, அவனைத் துணிகரமாய்க் கொன்று
போட்டால், [8]அவனை என் பலிபீடத்திலிருந்
தும் பிடித்துக்கொண்டுபோய்க் கொலைசெய்ய
வேண்டும்.
15 தன் [9]தகப்பனையாவது தன் தாயையாவது
அடிக்கிறவன் நிச்சயமாய்க் கொலைசெய்யப்
படக்கடவன்.
16 ஒருவன் ஒரு மனிதனைத் [10]திருடி விற்றுப்
போட்டாலும், இவன் அவன் வசத்திலிருக்
கக் கண்டுபிடிக்கப்பட்டாலும், அவன் நிச்சய
மாய்க் கொலைசெய்யப்படக்கடவன்.
17 தன் தகப்பனையாவது தன் தாயையாவது
[11]சபிக்கிறவன் நிச்சயமாய்க் கொலைசெய்யப்
படக்கடவன்.
18 மனிதர் சண்டைபண்ணி, ஒருவன் மற்
றொருவனைக் கல்லால் எறிந்ததினாலாவது கை
யால் அடித்ததினாலாவது அவன் சாவாமல்
19 கட்டில்கிடையாய்க் கிடந்து, திரும்ப எழுந்
திருந்து வெளியிலே தன் ஊன்றுகோலைப்
பிடித்துக்கொண்டு நடமாடினால், அடித்தவன்
ஆக்கினைக்கு நீங்கலாயிருப்பான்; ஆனாலும்,
அவனுக்கு வேலையின்கெட்ட நஷ்டத்தைக்
கொடுத்து, அவனை நன்றாய்க் குணமாக்கு
விக்கக்கடவன்.
20 ஒருவன் தனக்கு அடிமையானவனையாவது,
தனக்கு அடிமையானவளையாவது, கோலால்
அடித்ததினாலே, அவன் கையால் இறந்துபோ
னால், பழிக்குப்பழி வாங்கப்படவேண்டும்.
21 ஒரு நாளாவது இரண்டு நாளாவது உயிரோ
டிருந்தால், அவர்கள் [12]அவனுடைய உடை
மையாகையால், பழிவாங்கவேண்டியதில்லை.
22 மனிதர் சண்டைபண்ணி, கர்ப்பவதியான
ஒரு ஸ்திரீயை அடித்ததினால், அவளுக்கு
வேறே சேதமில்லாமல் கர்ப்பம் விழுந்துபோ
னால், அடிபட்ட ஸ்திரீயின் புருஷன் அடித்
தவன்மேல் சுமத்துகிறதற்குத் தக்கதாயும் நியா
யாதிபதிகள் செய்யும் [13]தீர்ப்பின்படியும் தண்
டம் கொடுக்கவேண்டும். வேறே சேதமுண் 23
டானால், ஜீவனுக்கு ஜீவன், கண்ணுக்குக் 24
[14]கண், பல்லுக்குப் பல், கைக்குக் கை, காலு
க்குக் கால், சூட்டுக்குச் சூடு, காயத்துக்குக் 25
காயம், தழும்புக்குத் தழும்பு பழி கொடுக்க
வேண்டும்.
ஒருவன் தன் அடிமையானவன் [15]கண்ணை 26
யாகிலும் தன் அடிமைப்பெண்ணின் கண்
ணையாகிலும் அடித்ததினால் அதைக் கெடுத்
தால், அவன் கண்ணுக்குப் பதிலாக அவனை
விடுதலைபண்ணிவிடவேண்டும். அவன் தன் 27
அடிமையானவன் பல்லையாவது தன் அடி
மைப்பெண்ணின் பல்லையாவது உதிர அடி
த்தால், அவன் பல்லுக்குப் பதிலாக அவனை
விடுதலைபண்ணிவிடவேண்டும்.
ஒரு மாடு ஒரு [16]புருஷனையாவது ஒரு 28
ஸ்திரீயையாவது முட்டினதினால் சாவுண்டா
னால், அந்த மாடு கல்லெறியப்படவேண்டும்,
அதின் மாம்சம் புசிக்கப்படலாகாது; அப்
பொழுது மாட்டின் எஜமான் ஆக்கினைக்கு
நீங்கலாயிருப்பான். தன் மாடு வழக்கமாய் 29
முட்டுகிற மாடாயிருந்து, அது அதின் எஜ
மானுக்கு அறிவிக்கப்பட்டும், அவன் அதைக்
கட்டிவைக்காததினால், அது ஒரு புருஷனை
யாவது ஒரு ஸ்திரீயையாவது கொன்றுபோட்
டால், மாடும் கல்லெறியப்படவேண்டும்,
அதின் எஜமானும் கொலைசெய்யப்படவேண்
டும். அபராதம் கொடுக்கும்படி தீர்க்கப்பட்ட 30
தானால், [17]அவன் தன் ஜீவனை மீட்கும்பொரு
ளாக விதிக்கப்பட்ட அபராதத்தைக் கொடுக்
கக்கடவன். அது ஒருவன் மகனை முட்டினா 31
லும் சரி, ஒருவன் மகளை முட்டினாலும் சரி,
இந்தத் தீர்ப்பின்படியே அவனுக்குச் செய்யப்
படவேண்டும். அந்த மாடு ஒரு அடிமை 32
யானவனையாவது ஒரு அடிமைப் பெண்ணை
யாவது முட்டினால், அதற்கு உடையவன்
அவர்களுடைய எஜமானுக்கு [18]முப்பது சேக்
கல் நிறையான வெள்ளியைக் கொடுக்கக்
கடவன்; மாடு கல்லெறியப்படவேண்டும்.
ஒருவன் ஒரு குழியைத் திறந்துவைத்த 33
தினாலாவது, ஒரு குழியை வெட்டி அதை
மூடாதேபோனதினாலாவது, அதிலே ஒரு
மாடாவது ஒரு கழுதையாவது விழுந்தால்,
குழிக்கு உடையவன் அதற்கு ஈடாகப் 34
பணத்தை மிருகத்தின் எஜமானுக்குக் கொடுக்
கக்கடவன்; செத்ததோ அவனுடையதாக
வேண்டும்.
ஒருவனுடைய மாடு மற்றவனுடைய மாட் 35
டை முட்டினதினால் அது செத்தால், உயிரோ
டிருக்கிற மாட்டை அவர்கள் விற்று, அதின்
கிரயத்தைப் பங்கிட்டு, செத்ததையும் பங்
கிட்டுக்கொள்ளக்கடவர்கள். அந்த மாடு 36

[1] நெகே. 5. 5
[2] 1 கொ. 7. 5
[3] உபா. 21. 14
[4] ஆதி. 9. 6. லேவி. 24. 17. மத். 26. 52
[5] உபா. 19. 4, 5
[6] எண். 35. 11. யோசு. 20. 2
[7] எண். 15. 30
[8] உபா. 19. 11-13. 1 இரா. 2. 29-34
[9] 1 தீமோ. 1. 9
[10] நெகே. 18. 12, 13. உபா. 24. 7
[11] நீதி. 20. 20. மத். 15. 4
[12] லேவி. 25. 45, 46
[13] உபா. 16. 18
[14] லேவி. 24. 20. உபா. 19. 21. மத். 5. 38
[15] எபே. 6. 9. கொலோ. 4. 1
[16] ஆதி. 9. 5
[17] எண். 35. 31. நீதி. 13. 8
[18] சகரி. 11. 12, 13. மத். 26. 15. பிலி. 2. 7

முன்னமே முட்டுகிற மாடென்று அதின் எஜ
மான் அறிந்திருந்தும், அதைக் கட்டிவைக்கா
திருந்தால், அவன் மாட்டுக்கு மாட்டைக்
கொடுக்கக்கடவன்; செத்ததோ அவனுடைய
தாகவேண்டும்.

**22** ஒருவன் ஒரு மாட்டையாவது ஒரு ஆட்
டையாவது திருடி, அதைக் கொன்றால்,
அல்லது அதை விற்றால், [1]அவன் அந்த மாட்
டுக்கு ஐந்து மாடுகளையும், அந்த ஆட்டுக்கு
நாலு ஆடுகளையும் பதிலாகக் கொடுக்கக்கட
2 வன். திருடன் கன்னமிடுகையில் [2]கண்டு
பிடிக்கப்பட்டு, அடிக்கப்பட்டுச் செத்தால்,
3 அவன் நிமித்தம் இரத்தப்பழி சுமராது. சூரி
யன் அவன்மேல் உதித்திருந்ததானால், அவன்
நிமித்தம் இரத்தப்பழி சுமரும்; திருடன் பதில்
கொடுத்துத் தீர்க்கவேண்டும்; அவன் கையில்
ஒன்றும் இல்லாதிருந்தால், தான் செய்த
4 களவுக்காக விலைப்படக்கடவன். அவன் திரு
டின மாடாவது கழுதையாவது ஆடாவது
உயிருடனே அவன் கையில் கண்டுபிடிக்கப்
பட்டால், [3]இரட்டிப்பாய் அவன் கொடுக்க
வேண்டும்.
5 ஒருவன் பிறனுடைய வயலிலாவது திராட்
சத்தோட்டத்திலாவது தன் மிருகஜீவனை மேய
விட்டால், அவன் தன் சுய வயலிலும் திராட்
சத்தோட்டத்திலுமுள்ள பலனில் உத்தமமா
னதை எடுத்து, பதில் செலுத்தக்கடவன்.
6 அக்கினி எழும்பி, முள்ளுக்களில் பற்றி,
தானியப் போராயாவது, விளைந்த பயிராயா
வது, வயலிலுள்ள வேறே எதையாவது எரித்
துப்போட்டதேயானால், அக்கினியைக் கொ
ளுத்தினவன் அக்கினிச் சேதத்திற்கு உத்தர
வாதம் பண்ணவேண்டும்.
7 ஒருவன் பிறனுடைய வசத்தில் திரவியத்
தையாவது, உடைமைகளையாவது அடைக்
கலமாக வைத்திருக்கும்போது, அது அவன்
வீட்டிலிருந்து திருடப்பட்டுப்போனால், திரு
டன் அகப்பட்டானாகில், அவன் அதற்கு
8 இரட்டிப்பாகக் கொடுக்கவேண்டும். திரு
டன் அகப்படாதேபோனால், அந்த வீட்டுக்
காரன்தானே பிறனுடைய பொருளை அப
கரித்தானோ இல்லையோ என்று அறியும்படி
நியாயாதிபதிகளிடத்தில் அவனைக் கொண்டு
9 போகவேண்டும். காணாமற்போன மாடு, கழு
தை, ஆடு, வஸ்திரம் முதலியவைகளில்
யாதொன்றைப் பிறனொருவன் தன்னுடை
யது என்று சொல்லி குற்றஞ்சாற்றினால்,
[4]இருதிறத்தாருடைய வழக்கும் நியாயாதிபதிக
ளிடத்தில் வரக்கடவது; நியாயாதிபதிகள் எவ
னைக் குற்றவாளி என்று தீர்க்கிறார்களோ,
அவன் மற்றவனுக்கு இரட்டிப்பாகக் கொடுக்
கக்கடவன்.
10 ஒருவன் தன் கழுதையையாவது மாட்டை
யாவது ஆட்டையாவது மற்ற யாதொரு மிருக
ஜீவனையாவது பிறன் வசத்தில் விட்டிருக்கும்
போது, அது செத்தாலும், சேதப்பட்டுப்
போனாலும், ஒருவரும் காணாதபடி ஓட்டிக்
கொண்டு போகப்பட்டாலும், அவன் தான் 11
பிறனுடைய பொருளை அபகரிக்கவில்லை
யென்று **கர்த்தர்**பேரில் இடும் ஆணை [5]அவர்
கள் இருவருக்கும் நடுத்தீர்க்கக்கடவது; உடை
யவன் அதை அங்கிகரிக்கவேண்டும்; மற்ற
வன் பதிலளிக்கவேண்டுவதில்லை. அது அவன் 12
வசத்திலிருந்து திருடப்பட்டுப் போயிற்றா
னால், அவன் அதின் எஜமானுக்கு அதற்காக
உத்தரவாதம் பண்ணக்கடவன். அது பீறுண்டு 13
போயிற்றானால், அதற்குச் சாட்சியை ஒப்பு
விக்கவேண்டும். பீறுண்டதற்காக அவன்
உத்தரவாதம் பண்ணவேண்டுவதில்லை.
ஒருவன் பிறனிடத்தில் எதையாகிலும் 14
இரவலாக வாங்கினதுண்டானால், அதற்கு
உடையவன் கூட இராதபோது, அது சேதப்
பட்டாலும், செத்துப்போனாலும், அவன்
அதற்கு உத்தரவாதம் பண்ணவேண்டும்.
அதற்கு உடையவன் கூட இருந்தானாகில், 15
அவன் உத்தரவாதம் பண்ணவேண்டுவதில்லை;
அது வாடகைக்கு வாங்கப்பட்டிருந்தால், அது
அவன் வாடகைக்கு வந்த சேதம்.
நியமிக்கப்படாத [6]ஒரு கன்னிகையை ஒரு 16
வன் மோசம்போக்கி அவளோடே சயனித்
தால், அவன் அவளுக்காகப் பரிசம்கொடுத்து
அவளை விவாகம்பண்ணக்கடவன். அவள் 17
தகப்பன் அவளை அவனுக்குக் கொடுக்கமாட்
டேன் என்றானாகில், [7]கன்னிகைகளுக்கா
கக் கொடுக்கப்படும் பரிச முறைமையின்
படி அவன் பணத்தை நிறுத்துக் கொடுக்க
வேண்டும்.
சூனியக்காரியை [8]உயிரோடே வைக்க 18
வேண்டாம்.
மிருகத்தோடே புணருகிறவன் [9]எவனும் 19
கொல்லப்படவேண்டும்.
**கர்த்தர்** ஒருவருக்கே ஒழிய வேறே தேவர் 20
களுக்கும் [10]பலியிடுகிறவன் சங்கரிக்கப்படக்
கடவன். அந்நியனைச் [11]சிறுமைப்படுத்தாம 21
லும் ஒடுக்காமலும் இருப்பீர்களாக; நீங்களும்
எகிப்துதேசத்தில் அந்நியர்களாயிருந்தீர்களே.
[12]விதவையையும் திக்கற்ற பிள்ளையையும் ஒடுக் 22
காமல் இருப்பீர்களாக; அவர்களை எவ்வள 23
வாகிலும் ஒடுக்கும்போது, [13]அவர்கள் என்னை
நோக்கி முறையிட்டால், அவர்கள் முறையிடு
தலை நான் நிச்சயமாய்க் கேட்டு, கோபம் 24
மூண்டவராகி, உங்களைப் பட்டயத்தினால்
கொலைசெய்வேன்; உங்கள் மனைவிகள் [14]வித
வைகளும், உங்கள் பிள்ளைகள் திக்கற்ற பிள்
ளைகளுமாவார்கள்.
உங்களுக்குள் சிறுமைப்பட்டிருக்கிற என் 25
ஜனங்களில் ஒருவனுக்கு நீங்கள் பணம் கட
னாகக் கொடுத்திருந்தால், [15]வட்டிவாங்குகிற
வர்கள்போல அவனிடத்தில் வட்டி வாங்க
வேண்டாம். பிறனுடைய [16]வஸ்திரத்தை 26
ஈடாக வாங்கினால், பொழுதுபோகு முன்
னமே அதை அவனுக்குத் திரும்பக் கொடுத்து
விடுவாயாக. அவன் போர்வை அதுதானே, 27
அதுவே அவன் தன் உடம்பை மூடிக்கொள்

[1] 2 சாமு. 12. 6. நீதி. 6. 31. லூ. 19. 8
[2] எண். 35. 27. மத். 24. 43
[3] எரே. 16. 18. வெளி. 18. 6
[4] உபா. 25. 1. 2 நாளா. 19. 10
[5] எபி. 6. 16
[6] உபா. 22. 28, 29
[7] ஆதி. 34. 12. 1 சாமு. 18. 25
[8] லேவி. 20. 27. உபா. 18. 10. 1 சாமு. 28. 3, 9. வெளி. 22. 15
[9] லேவி. 18. 23–25
[10] உபா. 13. 1–11
[11] லேவி. 19. 33. சக. 7. 10
[12] உபா. 24. 17. சங். 94. 6, 7. ஏசா. 1. 17. எசே. 22. 7. யாக். 1. 27
[13] லூ. 18. 7. யாக். 5. 4
[14] எரே. 15. 8. புலம். 5. 3
[15] நெகே. 5. 7. சங். 15. 5. எசே. 18. 8, 17
[16] உபா. 24. 6. யோபு 22. 6

ளுகிற வஸ்திரம்; வேறு எதினுலே போர்த்
துப் படுத்துக்கொள்ளுவான்? அவன் என்னை
நோக்கி முறையிடும்போது, நான் அவனுக்
குச் செவிகொடுப்பேன், [1]நான் இரக்கமுள்ள
வராயிருக்கிறேன்.
28 நியாயாதிபதிகளைத் [2]தூஷியாமலும், உன்
ஜனத்தின் அதிபதியைச் சபியாமலும் இருப்
29 பாயாக. முதல்முதல் பழுக்கும் [3]உன் பழத்
தையும், வடியும் உன் இரசத்தையும் காணிக்
கையாகச் செலுத்தத் தாமதிக்கவேண்டாம்.
உன் குமாரரில் முதற்பேறானவனை எனக்குக்
30 கொடுப்பாயாக. உன் மாடுகளிலும் உன் ஆடு
களிலும் அப்படியே செய்வாயாக; குட்டியா
னது [4]ஏழுநாள் தன் தாயோடே இருக்கட்
டும்; எட்டாம் நாளிலே அதை எனக்குச்
31 செலுத்துவாயாக. நீங்கள் எனக்குப் [5]பரி
சுத்த மனுஷராயிருக்கக்கடவீர்கள்; வெளி
யிலே [6]பீறுண்ட மாம்சத்தைப் புசியாமல்,
அதை நாய்களுக்குப் போட்டுவிடுங்கள்.

**23** அபாண்டமான சொல்லை [7]ஏற்றுக்கொள்
ளாயாக; கொடுமையுள்ள [8]சாட்சிக்காரனயி
2 ருக்க ஆகாதவனோடே கலவாயாக. தீமை
செய்ய திரளானபேர்களைப் [9]பின்பற்றாதிருப்
பாயாக; வழக்கிலே நியாயத்தைப் புரட்ட
மிகுதியானவர்களின் பட்சத்தில் சாய்ந்து,
3 உத்தரவு சொல்லாதிருப்பாயாக. வியாச்சியத்
திலே [10]தரித்திரனுடைய முகத்தைப் பாரா
யாக.
4 உன் சத்துருவின் [11]மாடாவது அவனுடைய
கழுதையாவது தப்பிப்போகக் கண்டால்,
அதைத் திரும்ப அவனிடத்தில் கொண்டு
5 போய் விடுவாயாக. உன்னைப் பகைக்கிறவ
னுடைய கழுதை சுமையோடே விழுந்துகி
டக்கக் கண்டாயானால், அதற்கு உதவிசெய்
யாதிருக்கலாமா? அவசியமாய் அவனோடே
கூட அதற்கு உதவிசெய்வாயாக.
6 உன்னிடத்திலிருக்கிற [12]எளியவனுடைய
வியாச்சியத்தில் அவனுடைய நியாயத்தைப்
7 புரட்டாயாக. கள்ளக் காரியத்துக்குத் தூரமா
யிருப்பாயாக; குற்றமில்லாதவனையும் நீதிமா
னையும் கொலைசெய்யாயாக; நான் [13]துன்மார்க்
8 கனை நீதிமான் என்று தீர்க்கமாட்டேன். பரி
தானம் [14]வாங்காதிருப்பாயாக; பரிதானம் பார்
வையுள்ளவர்களைக் குருடாக்கி, நீதிமான்க
9 ளின் வார்த்தைகளைப் புரட்டும். அந்நியனை
ஒடுக்காயாக; எகிப்துதேசத்தில் அந்நியர்களா
யிருந்த நீங்கள் [15]அந்நியனுடைய இருதயத்தை
அறிந்திருக்கிறீர்களே.
10 ஆறு வருஷம் [16]நீ உன் நிலத்தில் பயிரிட்டு,
11 அதின் பலனைச் சேர்த்துக்கொள். ஏழாம்
வருஷத்தில் உன் ஜனத்திலுள்ள எளியவர்கள்
புசிக்கவும், மீதியானதை வெளியின் ஜந்
துக்கள் தின்னவும், அந்த நிலம் சும்மா கிடக்க
விட்டுவிடுவாயாக; உன் திராட்சத்தோட்டத்
தையும் உன் ஒலிவத்தோப்பையும் அப்படியே
12 செய்வாயாக. ஆறுநாள் உன் வேலையைச்
செய்து, ஏழாம்நாளிலே உன் மாடும் உன் கழு

தையும் இளைப்பாறவும், உன் அடிமைப்பெண்
ணின் பிள்ளையும் அந்நியனும் இளைப்பாறவும்
ஓய்ந்திருப்பாயாக. நான் உங்களுக்குச் சொன் 13
னவைகள் யாவற்றிலும் [17]சாவதானமாயிருங்
கள். [18]அந்நிய தேவர்களின் பேரைச் சொல்
லவேண்டாம்; அது உன் வாயிலிருந்து பிறக்
கக் கேட்கப்படவும் வேண்டாம்.
வருஷத்தில் மூன்றுதரம் எனக்குப் பண் 14
டிகை ஆசரிப்பாயாக. புளிப்பில்லா அப்பப் 15
பண்டிகையைக் கொண்டாடி, நான் உனக்
குக் கட்டளையிட்டபடியே ஆபிப் மாதத்தின்
குறித்தகாலத்தில் ஏழுநாள் புளிப்பில்லா அப்
பம் புசிப்பாயாக; அந்த மாதத்தில் எகிப்திலி
ருந்து புறப்பட்டாயே, என் சந்நிதியில்
வெறுங்கையாய் வரவேண்டாம். நீ வயலில் 16
விதைத்த உன் பயிர் வேலைகளின் முதற்பல
னைச் செலுத்துகிற அறுப்புக்கால பண்டிகை
யையும், வருஷ முடிவிலே நீ வயலில் உன்
வேலைகளின் பலனைச் சேர்த்துத் தீர்ந்த
போது, சேர்ப்புக்கால பண்டிகையையும் ஆச
ரிப்பாயாக. வருஷத்தில் மூன்றுதரம் உன் 17
ஆண்மக்கள் எல்லாரும் **கர்த்தராகிய** ஆண்ட
வருடைய சந்நிதியில் வரக்கடவர்கள்.
எனக்கு இடும் பலியின் இரத்தத்தைப் 18
புளித்தமாவுடன் செலுத்தவேண்டாம்; என
க்கு இடும் பலியின் கொழுப்பை விடியற்
காலம்வரைக்கும் வைக்கவும் வேண்டாம்.
உன் நிலத்தில் முதல் விளைச்சல்களில் முதற் 19
கனியை உன் தேவனாகிய **கர்த்தருடைய**
ஆலயத்துக்குக் கொண்டுவருவாயாக; வெள்
ளாட்டுக்குட்டியை [19]அதின் தாயின் பாலிலே
சமைக்கவேண்டாம்.
வழியில் உன்னைக் காக்கிறதற்கும், நான் 20
ஆயத்தம்பண்ணின ஸ்தானத்துக்கு உன்னைக்
கொண்டுபோய்ச் சேர்க்கிறதற்கும், இதோ,
நான் ஒரு [20]தூதனை உனக்கு முன்னே அனுப்
புகிறேன். அவர் சமுகத்தில் எச்சரிக்கையா 21
யிருந்து, அவர் வாக்குக்குச் செவிகொடு;
[21]அவரைக் கோபப்படுத்தாதே; உங்கள் துரோ
கங்களை அவர் பொறுப்பதில்லை; [22]என் நாமம்
அவர் உள்ளத்தில் இருக்கிறது. நீ அவர் 22
வாக்கை நன்றாய்க் கேட்டு, நான் சொல்வதை
யெல்லாம் செய்வாயாகில், [23]நான் உன் சத்து
ருக்களுக்குச் சத்துருவாயும், உன் விரோதி
களுக்கு விரோதியாயும் இருப்பேன். என் 23
தூதனானவர் [24]உனக்கு முன் சென்று, எமோ
ரியரும் ஏத்தியரும் பெரிசியரும் கானானிய
ரும் ஏவியரும் எபூசியரும் இருக்கிற இடத்
துக்கு உன்னை நடத்திக்கொண்டுபோவார்;
அவர்களை நான் அதம்பண்ணுவேன். நீ அவர் 24
களுடைய தேவர்களைப் பணிந்துகொள்ளாம
லும், [25]சேவியாமலும், அவர்கள் செய்கைக
ளின்படி செய்யாமலும், அவர்களை நிர்மூலம்
பண்ணி, அவர்களுடைய சிலைகளை உடைத்
துப்போடுவாயாக. உங்கள் தேவனாகிய **கர்த்** 25
**தரையே** [26]சேவிக்கக்கடவீர்கள்; [27]அவர் உன்
அப்பத்தையும் உன் தண்ணீரையும் ஆசீர்வ

[1] 2 நாளா. 30. 9
[2] அப். 23. 5, 5. யூதா 8
[3] மீகா. 7. 1
[4] லேவி. 22. 27
[5] லேவி. 19. 2. 1 பே. 1. 15, 16
[6] எசே. 4. 14
[7] சங். 15. 3
[8] நீதி. 19. 5. எபே. 4. 25
[9] 1 இரா. 19. 10. யோபு 31. 34
[10] 6. வசனம்.
[11] மத். 5. 44
[12] யோபு 31. 13-21. பிர. 5. 8. எரே. 5. 28. மல். 3. 5
[13] ரோ. 1. 18
[14] நீதி. 17. 23. ஏசா. 33. 15
[15] சங். 94. 6
[16] லேவி. 25. 3, 4
[17] உபா. 4. 9. எபே. 5. 15
[18] யோசு. 23. 7. சங். 16. 4. ஓசி. 2. 17
[19] உபா. 14. 21
[20] ஆதி. 48. 16. ஏசா. 63. 9
[21] எபே. 4. 30. எபி. 3. 10, 11-16
[22] ஏசா. 9. 6. யோ. 10. 30, 38
[23] ஆதி. 12. 3. உபா. 30. 7. சகரி. 2. 8
[24] யோசு. 5. 13; 24. 8, 11
[25] லேவி. 18. 3. உபா. 12. 30. சங். 101. 3
[26] யோசு. 22. 5
[27] உபா. 7. 13. ஏசா. 33. 16. மல். 3. 10, 11

திப்பார். [1]வியாதியை உன்னிலிருந்து விலக்
26 குவேன். கர்ப்பம் விழுகிறதும் மலடும் [2]உன்
தேசத்தில் இருப்பதில்லை; உன் [3]ஆயுசுநாட்க
27 ளைப் பூரணப்படுத்துவேன். எனக்குப் பயப்
படும் [4]பயத்தை உனக்கு முன்செல்லும்படி
செய்வேன். நீ செல்லும் இடமெங்குமுள்ள
ஜனங்கள் எல்லாரையும் கலங்கடித்து, உன்
சத்துருக்கள் எல்லாரையும் முதுகு காட்டப்
28 பண்ணுவேன். உன் முகத்திற்கு முன்னின்று
ஏவியரையும் கானானியரையும் ஏத்தியரையும்
துரத்திவிட, [5]குளவிகளை உனக்கு முன்னே
29 அனுப்புவேன். தேசம் பாழாய்ப்போகாம
லும், காட்டுமிருகங்கள் உனக்கு விரோத
மாய்ப் பெருகாமலும் இருக்கும்படி, நான்
அவர்களை ஒரே வருஷத்திற்குள்ளே உன்
30 முன்னின்று துரத்திவிடாமல், நீ விருத்தி
யடைந்து, தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்
ளும்வரைக்கும், அவர்களைக் கொஞ்சம் கொஞ்
சமாய் உன் முன்னின்று துரத்திவிடுவேன்.
31 சிவந்த [6]சமுத்திரம் தொடங்கி பெலிஸ்தரின்
சமுத்திரம்வரைக்கும், வனாந்தரம் தொடங்கி
நதிவரைக்கும் உன் [7]எல்லையாயிருக்கும்படி
செய்வேன்; நான் அந்தத் தேசத்தின் குடிகளை
உங்கள் கையில் ஒப்புக்கொடுப்பேன்; நீ அவர்
களை உன் முன்னின்று துரத்திவிடுவாய்.
32 அவர்களோடும் அவர்கள் தேவர்களோடும் [8]நீ
33 உடன்படிக்கை பண்ணாதிருப்பாயாக. அவர்
கள் உன்னை எனக்கு விரோதமாகப் பாவஞ்
செய்யப் பண்ணாதபடிக்கு உன் தேசத்திலே
குடியிருக்கவேண்டாம்; நீ அவர்கள் தேவர்க
ளைச் சேவித்தால், அது உனக்குக் [9]கண்ணியா
யிருக்கும் என்றார்.

24 பின்பு அவர் மோசேயை நோக்கி: நீயும்
ஆரோனும் நாதாபும் அபியூவும் இஸ்ரவே
லின் மூப்பரில் [10]எழுபதுபேரும் **கர்த்தரிடத்**
**தில்** ஏறிவந்து, தூரத்திலிருந்து பணிந்து
2 கொள்ளுங்கள். மோசேமாத்திரம் **கர்த்தரிட**
**த்தில்** சமீபித்து வரலாம்; அவர்கள் சமீபித்து
வரலாகாது; ஜனங்கள் அவனோடேகூட ஏறி
3 வரவேண்டாம் என்றார். மோசே வந்து,
**கர்த்தருடைய** வார்த்தைகள் யாவையும் நியா
யங்கள் யாவையும் ஜனங்களுக்கு அறிவித்
தான்; அப்பொழுது ஜனங்கள் எல்லாரும்
ஏகசத்தமாய்: **கர்த்தர்** அருளின எல்லா வார்த்
தைகளின்படியும் செய்வோம் [11]என்று பிரதி
4 யுத்தரம் சொன்னார்கள். மோசே **கர்த்தரு**
**டைய** வார்த்தைகளையெல்லாம் [12]எழுதிவை
த்து, அதிகாலமே எழுந்து, மலையின் அடியில்
ஒரு பலிபீடத்தைக் கட்டி, இஸ்ரவேலுடைய
பன்னிரண்டு கோத்திரங்களுடைய இலக்கத்
தின்படியே பன்னிரண்டு தூண்களை நிறுத்தி
5 னான். இஸ்ரவேல் புத்திரரின் வாலிபரை
அனுப்பினான்; அவர்கள் சர்வாங்க தகனபலி
களைச் செலுத்தி, **கர்த்தருக்குச்** சமாதானபலி
6 களாகக் காளைகளைப் பலியிட்டார்கள். அப்
பொழுது மோசே அந்த இரத்தத்தில் [13]பாதி
எடுத்து, பாத்திரங்களில் வார்த்து, பாதி இரத்
தத்தைப் பலிபீடத்தின்மேல் தெளித்து,
உடன்படிக்கையின் [14]புஸ்தகத்தை எடுத்து, 7
ஜனங்களின் காதுகேட்க வாசித்தான்; அவர்
கள் **கர்த்தர்** சொன்னபடியெல்லாம் செய்து,
கீழ்ப்படிந்து நடப்போம் என்றார்கள். அப் 8
பொழுது மோசே இரத்தத்தை எடுத்து, ஜன
ங்களின்மேல் தெளித்து, இந்த வார்த்தைகள்
யாவையுங்குறித்து **கர்த்தர்** உங்களோடே
பண்ணின [15]உடன்படிக்கையின் இரத்தம்
இதுவே என்றான். பின்பு மோசேயும் ஆரோ 9
னும் நாதாபும் அபியூவும், இஸ்ரவேலருடைய
மூப்பரில் எழுபதுபேரும் ஏறிப்போய், இஸ் 10
ரவேலின் தேவனைத் [16]தரிசித்தார்கள். அவ
ருடைய பாதத்தின்கீழே [17]நீலக்கல்லிழைத்த
வேலைக்கு ஒப்பாகவும் தெளிந்த [18]வானத்தின்
பிரபைக்கு ஒப்பாகவும் இருந்தது. அவர் 11
இஸ்ரவேல் புத்திரருடைய அதிபதிகள்மேல்
தம்முடைய கையை நீட்டவில்லை; அவர்கள்
தேவனைத் தரிசித்து, பின்பு [19]புசித்துக் குடித்
தார்கள்.

அப்பொழுது **கர்த்தர்** மோசேயை நோக்கி: 12
நீ மலையின்மேல் என்னிடத்திற்கு ஏறிவந்து,
அங்கே இரு; நான் உனக்குக் [20]கற்பலகை
களையும், நீ அவர்களுக்கு உபதேசிப்பதற்கு,
நான் எழுதின நியாயப்பிரமாணத்தையும் கற்
பனைகளையும் கொடுப்பேன் என்றார். அப்பொ 13
ழுது மோசே தன் ஊழியக்காரனாகிய யோசு
வாவோடே எழுந்துபோனான். மோசே தேவ
பர்வதத்தில் ஏறிப்போகையில், அவன் மூப் 14
பரை நோக்கி: நாங்கள் உங்களிடத்தில் திரும்பி
வருமட்டும், நீங்கள் இங்கே எங்களுக்காகக் காத்
திருங்கள்; ஆரோனும் ஊரும் உங்களிடத்தில்
இருக்கிறார்கள்; ஒருவனுக்கு யாதொரு காரி
யம் உண்டானால், அவன் அவர்களிடத்தில்
போகலாம் என்றான். மோசே மலையின்மேல் 15
ஏறினபோது, [21]ஒரு மேகம் மலையை மூடி
ற்று. **கர்த்தருடைய** மகிமை [22]சீனாய்மலையின் 16
மேல் தங்கியிருந்தது; மேகம் ஆறுநாள் அதை
மூடியிருந்தது; ஏழாம் நாளில் அவர் மேகத்
தின் நடுவிலிருந்து மோசேயைக் கூப்பிட்
டார். மலையின் கொடுமுடியிலே **கர்த்தரு** 17
**டைய** மகிமையின் காட்சி இஸ்ரவேல் புத்திர
ருடைய கண்களுக்குப் [23]பட்சிக்கிற அக்கினி
யைப்போல் இருந்தது. மோசே மேகத்தின் 18
நடுவிலே பிரவேசித்து, மலையின்மேல் ஏறி,
[24]இரவும் பகலும் நாற்பதுநாள் மலையில் இருந்
தான்.

**கர்த்தர்** மோசேயை நோக்கி: இஸ்ர 2 25
வேல் புத்திரர் எனக்குக் [25]காணிக்கையைக்
கொண்டுவரும்படி அவர்களுக்குச் சொல்லு;
மனப்பூர்வமாய் உற்சாகத்துடன் கொடுப்ப
வன் எவனோ அவனிடத்தில் எனக்குக் கா
ணிக்கையை வாங்குவீர்களாக. நீங்கள் அவர் 3
களிடத்தில் வாங்கவேண்டிய காணிக்கையா
வன, பொன்னும், வெள்ளியும், வெண்கல
மும், இளநீலநூலும், இரத்தாம்பரநூலும், 4
சிவப்புநூலும், மெல்லிய பஞ்சுநூலும், வெள்

1 சங். 103. 3
2 உபா. 28. 4
3 சங். 90. 10
4 யோசு. 2. 9, 11. 1 சாமு. 14. 15
5 உபா. 7. 20. யோசு. 24. 12
6 யோசு. 1. 4. சங். 72. 8
7 எண். 34. 3. உபா. 11. 24
8 சங். 106. 35. 2 கொ. 6. 15
9 நியா. 2. 3; 10. 7
10 எண். 11. 16
11 உபா. 5. 27. யோசு. 24. 22
12 உபா. 31. 9
13 எபி. 9. 18
14 எபி. 9. 19
15 எபி. 9. 20; 13. 20. 1 பே. 1. 2
16 1 இரா. 22. 19. ஏசா. 6. 1, 5. யோ. 1. 18. 1 தீமோ. 6. 16
17 எசே. 1. 26. வெளி. 4. 3; 21. 19
18 மத். 17. 2. வெளி. 1. 16
19 ஆதி. 18. 8. 1 கொ. 10. 18
20 உபா. 5. 22
21 மத். 17. 5
22 எண். 14. 10
23 உபா. 4. 36. எசே. 1. 27. நாகூ. 1. 6. ஆப. 3. 4, 5. எபி. 12. 18, 29
24 உபா. 9. 9
25 35. 5, 21. 2 கொ. 8. 12; 9. 7

5 ளாட்டுமயிரும், சிவப்புத்தீர்ந்த ஆட்டுக்கடாத்
தோலும், தகசுத்தோலும், சீத்திம் மரமும்,
6 விளக்கெண்ணெயும், அபிஷேக தைலத்துக்
குப் பரிமளவர்க்கங்களும், தூபத்துக்குச் சுகந்
7 தவர்க்கங்களும், ஏபோத்திலும் மார்ப்பதக்
கத்திலும் பதிக்கும் கோமேதகக் கற்களும்
8 இரத்தினங்களுமே. அவர்கள் [1]நடுவிலே
நான் வாசம்பண்ண, எனக்கு [2]ஒரு பரிசுத்த
9 ஸ்தலத்தை உண்டாக்குவார்களாக. நான்
உனக்குக் காண்பிக்கும் [3]வாசஸ்தலத்தின் மா
திரியின்படியும், அதினுடைய எல்லாத் தட்டு
முட்டுகளின் மாதிரியின்படியும் அதைச் செய்
வீர்களாக.

10 சீத்திம் [4]மரத்தினால் ஒரு பெட்டியைப்
பண்ணக்கடவர்கள்; அதின் நீளம் இரண்ட
ரை முழமும் அதின் அகலம் ஒன்றரை முழ
மும், அதின் உயரம் ஒன்றரை முழமுமாயிருப்
11 பதாக. அதை எங்கும் பசும்பொன் தகட்டால்
மூடுவாயாக; நீ அதின் உட்புறத்தையும் வெ
ளிப்புறத்தையும் அதினால் மூடி, அதின்மேல்
சுற்றிலும் பொன்னினால் திரணையை உண்
12 டாக்கி, அதற்கு நாலு பொன்வளையங்களை
வார்ப்பித்து, அவைகளை அதின் நாலு மூலைக
ளிலும் போட்டு, ஒரு பக்கத்தில் இரண்டு
வளையங்களும், மறுபக்கத்தில் இரண்டு வளை
13 யங்களும் இருக்கும்படி தைத்து, சீத்திம்
மரத்தால் தண்டுகளைச் செய்து, அவைகளைப்
14 பொன்தகட்டால் மூடி, அந்தத் தண்டுகளால்
பெட்டியைச் சுமக்கும்படி, அவைகளைப்
பெட்டியின் பக்கங்களிலிருக்கும் வளையங்க
15 ளிலே பாய்ச்சக்கடவாய். அந்தத் தண்டுகள்
பெட்டியிலிருந்து கழற்றப்படாமல், அதின்
16 வளையங்களிலே இருக்கவேண்டும். நான்
உனக்குக் கொடுக்கும் [5]சாட்சிப்பிரமாணத்
17 தை அந்தப் பெட்டியிலே வைப்பாயாக. பசும்
பொன்னினாலே கிருபாசனத்தைப் பண்ணு
வாயாக; அது இரண்டரை முழ நீளமும் ஒன்ற
ரை முழ அகலமுமாய் இருக்கக்கடவது.
18 பொன்னினால் இரண்டு கேருபீன்களைச் செய்
வாயாக; பொன்னைத் தகடாய் அடித்து,
அவைகளைச் செய்து, [6]கிருபாசனத்தின் இர
19 ண்டு ஓரங்களிலும் வைப்பாயாக. ஒரு புற
த்து ஓரத்தில் ஒரு கேருபீனையும் மறுபுறத்து
ஓரத்தில் மற்றக் கேருபீனையும் பண்ணிவை;
அந்தக் கேருபீன்கள் கிருபாசனத்தின் இர
ண்டு ஓரங்களிலும் அதனோடே ஏகவேலையா
யிருக்கும்படி, அவைகளைப் பண்ணக்கடவாய்.
20 அந்தக் கேருபீன்கள் [7]தங்கள் செட்டைகளை
உயர விரித்து, தங்கள் செட்டைகளால் கிரு
பாசனத்தை மூடுகிறவைகளும் ஒன்றுக்கொ
ன்று எதிர்முகமுள்ளவைகளுமாய் இருக்கக்
கடவது; கேருபீன்களின் முகங்கள் கிருபா
சனத்தை நோக்குகிறவைகளா யிருப்பதாக.
21 கிருபாசனத்தைப் பெட்டியின்மீதில் வைத்து,
பெட்டிக்குள்ளே நான் உனக்குக் கொடுக்கும்
22 சாட்சிப பிரமாணத்தை வைப்பாயாக. அங்
கே நான் [8]உன்னைச் சந்திப்பேன்; கிருபா
சனத்தின் மீதிலும் சாட்சிப் பெட்டியின்மேல்
நிற்கும் இரண்டு கேருபீன்களின் நடுவிலும்
இருந்து நான் இஸ்ரவேல் புத்திரருக்காக
உனக்குக் கற்பிக்கப்போகிறவைகளை யெல்
லாம் உன்னோடே சொல்லுவேன்.

சீத்திம் மரத்தால் [9]ஒரு மேசையையும் பண் 23
ணுவாயாக; அது இரண்டு முழ நீளமும் ஒரு
முழ அகலமும் ஒன்றரை முழ உயரமுமாய்
இருக்கக்கடவது. அதைப் பசும்பொன்தகட் 24
டால் மூடி, சுற்றிலும் அதற்குப் பொன்னி
னால் திரணையை உண்டாக்கி, சுற்றிலும் 25
அதற்கு நாலு விரற்கடையான சட்டத்தையும்,
அதின் சட்டத்திற்குச் சுற்றிலும் பொன்னி
னால் திரணையையும் உண்டாக்கி, அதற்கு 26
நாலு பொன்வளையங்களைப் பண்ணி, அவை
களை அதின் நாலு கால்களுக்கு இருக்கும்
நாலு மூலைகளிலும் தைக்கக்கடவாய். அந்த 27
வளையங்கள் மேசையைச் சுமக்கும் தண்டுக
ளுக்கு இடங்களாயிருக்கும்படி, சட்டத்தின்
அருகே இருக்கவேண்டும். அந்தத் தண்டு 28
களைச் சீத்திம் மரத்தினால் செய்து, அவைக
ளைப் பொன்தகட்டால் மூடக்கடவாய்; அவை
களால் மேசை சுமக்கப்படவேண்டும். அதற் 29
குரிய தட்டுகளையும், தூபக் கரண்டிகளையும்,
கிண்ணங்களையும், பானபலி கரகங்களையும்
பண்ணக்கடவாய்; அவைகளைப் பசும்பொன்
னினால் பண்ணக்கடவாய். மேசையின்மேல் 30
நித்தமும் என் சந்நிதியில் [10]சமுகத்தப்பங்களை
வைக்கக்கடவாய்.

பசும்பொன்னினால் ஒரு [11]குத்துவிளக்கை 31
யும் உண்டாக்குவாயாக; அது பொன்னினால்
அடிப்புவேலையாய்ச் செய்யப்படவேண்டும்;
அதின் தண்டும் கிளைகளும் மொக்குகளும்
பழங்களும் பூக்களும் பொன்னினால் செய்யப்
படவேண்டும். ஆறு கிளைகள் அதின் பக்கங் 32
களில் விடவேண்டும்; குத்துவிளக்கின் மூன்று
கிளைகள் அதின் ஒரு பக்கத்திலும், குத்து
விளக்கின் மூன்று கிளைகள் அதின் மறுபக்கத்
திலும் விடவேண்டும். ஒவ்வொரு கிளையிலே 33
வாதுமைக்கொட்டைக்கு ஒப்பான மூன்று
மொக்குகளும், ஒரு பழமும், ஒரு பூவும் இரு
ப்பதாக; குத்துவிளக்கிலிருந்து புறப்படும்
ஆறு கிளைகளிலும் அப்படியே இருக்கவேண்
டும். விளக்குத்தண்டிலோ, வாதுமைக்கொட் 34
டைக்கு ஒப்பான நாலு மொக்குகளும், பழங்
களும், பூக்களும் இருப்பதாக. அதிலிருந்து 35
புறப்படும் இரண்டு கிளைகளின்கீழ் ஒரு பழ
மும், வேறு இரண்டு கிளைகளின்கீழ் ஒரு பழ
மும், மற்ற இரண்டு கிளைகளின்கீழ் ஒரு பழ
மும் இருப்பதாக; விளக்குத்தண்டிலிருந்து
புறப்படும் ஆறு கிளைகளுக்கும் அப்படியே
இருக்கவேண்டும். அவைகளின் பழங்களும் 36
அவைகளின் கிளைகளும் பொன்னினால் உண்
டானவைகளாயிருப்பதாக; அவையெல்லாம்
தகடாய் அடித்த பசும்பொன்னால் செய்யப்
பட்ட ஒரே வேலையாயிருக்கவேண்டும். அதில் 37
[12]ஏழு அகல்களைச் செய்வாயாக; அதற்கு

[1] 2 கொ. 6. 16. வெளி. 21. 3
[2] எபி. 9. 1, 2
[3] எபி. 8. 5
[4] எபி. 9. 4
[5] 16. 34; 31. 18. உபா. 10. 2, 5. 1 இரா. 8. 9. எபி. 9. 4
[6] ரோ. 3. 25, 26. எபி. 9. 5
[7] 2 நாளா. 3. 10
[8] லேவி. 16. 2. எண். 7. 89. 1 சாமு. 4. 4. சங். 80. 1; 90. 1. ஏசா. 37. 16
[9] 1 இரா. 7. 48. எபி. 9. 2
[10] லேவி. 24. 5. 1 சாமு. 21. 6. மல். 1. 7, 12. மத். 12. 4
[11] 1 இரா. 7. 49. சகரி. 4. 2. எபி. 9. 2. வெளி. 1. 12
[12] சகரி. 4. 2. வெளி. 1. 4, 12

நேரெதிராய் எரியும்படிக்கு அவைகள் ஏற்றப்
38 படக்கடவது. அதின் கத்திரிகளும் சாம்பல்
பாத்திரங்களும் பசும்பொன்னினால் செய்யப்
39 படுவதாக. அதையும் அதற்குரிய பணிமுட்டு
கள் யாவையும் ஒரு தாலந்து பசும்பொன்னி
40 னால் பண்ணவேண்டும். மலையிலே [1]உனக்
குக் காண்பிக்கப்பட்ட மாதிரியின்படியே
அவைகளைச் செய்ய எச்சரிக்கையாயிரு.

**26** மேலும் திரித்த மெல்லிய பஞ்சுநூலினா
லும் இளநீலநூலினாலும் இரத்தாம்பரநூலி
னாலும்சிவப்புநூலினாலும்செய்யப்பட்ட பத்து
மூடுதிரைகளால் [2]வாசஸ்தலத்தை உண்டு
பண்ணுவாயாக; அவைகளில் விசித்திரவேலை
2 யாய்க் கேருபீன்களைச் செய்யக்கடவாய். ஒவ்
வொரு மூடுதிரையும் இருபத்தெட்டு முழ நீள
மும் நாலு முழ அகலமுமாயிருப்பதாக; மூடு
திரைகளெல்லாம் ஒரே அளவாயிருக்கவேண்
3 டும். ஐந்து மூடுதிரை ஒன்றோடொன்று
இணைக்கப்பட்டிருக்கவேண்டும்; மற்ற ஐந்து
மூடுதிரைகளும் ஒன்றோடொன்று இணைக்கப்
4 பட்டிருக்கவேண்டும். இணைக்கப்பட்ட ஒரு
மூடுதிரையின் கடை ஓரத்தில் இளநீலநூலால்
காதுகளை உண்டுபண்ணு; இணைக்கப்பட்ட
மற்ற மூடுதிரையின் கடை ஓரத்திலும் அப்
5 படியே செய்வாயாக. காதுகள் ஒன்றோ
டொன்று இணையும்படி ஒரு மூடுதிரையில்
ஐம்பது காதுகளையும், இணைக்கப்பட்ட மற்ற
மூடுதிரையின் ஓரத்தில் ஐம்பது காதுகளையும்
6 உண்டுபண்ணுவாயாக. ஐம்பது பொன் கொக்
கிகளையும் பண்ணி, மூடுதிரைகளை ஒன்றோ
டொன்று அந்தக் கொக்கிகளால் இணைத்து
விடுவாயாக. அப்பொழுது அது ஒரே வாசஸ்
7 தலமாகும். வாசஸ்தலத்தின்மேல் கூடாரமா
கப் போடும்படி ஆட்டுமயிரால் பதினொரு மூடு
8 திரைகளை உண்டுபண்ணுவாயாக. ஒவ்வொரு
மூடுதிரை முப்பது முழ நீளமும் நாலு முழ
அகலமுமாய் இருக்கவேண்டும்; பதினொரு
மூடுதிரைகளும் ஒரே அளவாயிருக்கவேண்
9 டும். ஐந்து மூடுதிரைகளை ஒன்றாகவும், ஆறு
மூடுதிரைகளை ஒன்றாகவும் இணைக்கவேண்
டும்; ஆறாம் மூடுதிரையைக் கூடாரத்தின்
முகப்பிற்கு முன்னே மடித்துப்போடுவாயாக.
10 இணைக்கப்பட்ட ஒரு மூடுதிரையின் கடை
ஓரத்தில் ஐம்பது காதுகளையும், இணைக்கப்
பட்ட மற்ற மூடுதிரையின் ஓரத்தில் ஐம்பது
11 காதுகளையும் உண்டுபண்ணி, ஐம்பது வெண்
கலக் கொக்கிகளைச் செய்து, கொக்கிகளைக்
காதுகளில் மாட்டி, ஒரே கூடாரமாகும்படி
12 அதை இணைத்துவிடுவாயாக. கூடாரத்தின்
மூடுதிரைகளில் மிச்சமான பாதி மூடுதிரை
வாசஸ்தலத்தின் பின்புறத்தில் தொங்கவேண்
13 டும். கூடாரத்தினுடைய மூடுதிரைகளின்
நீளத்திலே மீதியானதில், இந்தப்புறத்தில் ஒரு
முழமும் அந்தப்புறத்தில் ஒரு முழமும் வாச
ஸ்தலத்தை மூடும்படி அதின் பக்கங்களிலே
14 தொங்கவேண்டும். சிவப்புத்தீர்ந்த ஆட்டுக்க
டாத்தோலினால் கூடாரத்திற்கு ஒரு மூடி
யையும், அதின்மேல் தகசுத்தோலால் ஒரு
மூடியையும் உண்டுபண்ணுவாயாக.

வாசஸ்தலத்துக்கு நிமிர்ந்துநிற்கும் பலகை 15
களையும் சீத்திம் மரத்தால் உண்டுபண்ணுவா
யாக. ஒவ்வொரு பலகையும் பத்து முழ நீள 16
மும் ஒன்றரை முழ அகலமுமாய் இருக்க
வேண்டும். ஒவ்வொரு பலகைக்கும் ஒன்றோ 17
டொன்று ஒத்து இசைந்திருக்கும் இரண்டு
கழுந்துகள் இருக்கவேண்டும்; வாசஸ்தலத்
தின் பலகைகளுக்கெல்லாம் இப்படியே செய்
வாயாக. வாசஸ்தலத்துக்காகச் செய்யப்படு 18
கிற பலகைகளில் இருபது பலகை தெற்கே
தென்திசைக்கு எதிராக நிற்கக்கடவது. அந்த 19
இருபது பலகைகளின்கீழே வைக்கும் நாற்பது
வெள்ளிப்பாதங்களை உண்டுபண்ணுவாயாக;
ஒரு பலகையின்கீழ் அதின் இரண்டு கழுந்து
களுக்கும் இரண்டு பாதங்களும் மற்றப் பல
கையின்கீழ் அதின் இரண்டு கழுந்துகளுக்கும்
இரண்டு பாதங்களும் இருக்கவேண்டும். வாச 20
ஸ்தலத்தின் மறுபக்கமாகிய வடபுறத்திலும்
இருபது பலகைகளையும், அவைகளின்கீழ் 21
நாற்பது வெள்ளிப் பாதங்களையும் உண்டுபண்
ணுவாயாக; ஒரு பலகையின்கீழ் இரண்டு பாத
ங்களும், மற்றப் பலகையின்கீழ் இரண்டு பாத
ங்களும் இருக்கவேண்டும். வாசஸ்தலத்தின் 22
மேற்புறத்திற்கு ஆறு பலகைகளையும், வாச 23
ஸ்தலத்தின் இருபக்கத்திலுமுள்ள மூலைகளு
க்கு இரண்டு பலகைகளையும் உண்டுபண்ணு
வாயாக. அவைகள் கீழே [3]இசைக்கப்பட்டி 24
ருக்கவேண்டும்; மேலேயும் [4]ஒரு வளையத்தி
னால் இசைக்கப்பட்டிருக்கவேண்டும்; இர
ண்டு மூலைகளுக்கும் அப்படியே இருக்க
வேண்டும்; அவைகள் இரண்டு மூலைகளுக்கா
கும். அந்தப்படி எட்டுப் பலகைகள் இருக் 25
கவேண்டும்; ஒவ்வொரு பலகையின்கீழ்
இரண்டு இரண்டு பாதங்களாகப் பதினாறு
வெள்ளிப் பாதங்களும் இருக்கவேண்டும்.
சீத்திம் மரத்தால் வாசஸ்தலத்தின் ஒரு பக்கத் 26
துப் பலகைகளுக்கு ஐந்து தாழ்ப்பாள்களை
யும், வாசஸ்தலத்தின் மறுபக்கத்துப் பலகை 27
களுக்கு ஐந்து தாழ்ப்பாள்களையும், வாசஸ்த
லத்தின் மேற்புறமான பின்பக்கத்துப் பல
கைகளுக்கு ஐந்து தாழ்ப்பாள்களையும் பண்
ணுவாயாக. நடுத்தாழ்ப்பாள் ஒரு முனை 28
தொடங்கி மறுமுனைமட்டும் பலகைகளின்
மையத்தில் உருவப் பாய்ச்சப்பட்டிருக்க
வேண்டும். பலகைகளைப் பொன்தகட்டால் 29
மூடி, தாழ்ப்பாள்களின் இடங்களாகிய
அவைகளின் வளையங்களைப் பொன்னினால்
பண்ணி, தாழ்ப்பாள்களைப் பொன்தகட்டால்
மூடக்கடவாய். இவ்விதமாக மலையின்மேல் 30
உனக்குக் காண்பிக்கப்பட்ட [5]மாதிரியின்ப
டியே வாசஸ்தலத்தை நிறுத்துவாயாக.

இளநீலநூலும் இரத்தாம்பரநூலும் சிவப் 31
புநூலும் திரித்த மெல்லிய பஞ்சுநூலுமான
இவற்றால் ஒரு [6]திரைச்சீலையை உண்டுபண்
ணக்கடவாய்; அதிலே விசித்திரவேலையால்

[1] எண். 8. 4. அப். 7. 44. எபி. 8. 5
[2] 1 நாளா. 17. 1.
[3] 1 கொ. 3. 16. 1 பே. 2. 5
[4] எபே. 4. 16. கொலோ. 2. 19
[5] அப். 7. 44. எபி. 8. 5
[6] லேவி. 16. 2. 2 நாளா. 3. 14. மத். 27. 51. எபி. 9. 3, 8; 10. 20

செய்யப்பட்ட கேருபீன்கள் வைக்கப்பட
32 வேண்டும். சீத்திம் மரத்தினால் செய்து,
பொன்தகட்டால் மூடப்பட்ட நாலு தூண்களி
லே அதைத் தொங்கவிடு; அந்தத் தூண்கள் நாலு
வெள்ளிப் பாதங்கள்மேல் நிற்கவும், அவைக
ளின் கொக்கிகள் பொன்னினால் செய்யப்ப
33 டவும்வேண்டும். கொக்கிகளின் கீழே அந்
தத் திரைச்சீலையைத் தொங்கவிட்டு, சாட்சிப்
பெட்டியை அங்கே திரைக்குள்ளாக வைக்கக்
கடவாய்; அந்தத் திரைச்சீலை பரிசுத்த [1]ஸ்தலத்
திற்கும் மகா பரிசுத்த ஸ்தலத்திற்கும் பிரிவை
34 உண்டாக்கும். மகா பரிசுத்த ஸ்தலத்திலே
சாட்சிப்பெட்டியின் மீதில் கிருபாசனத்தை
35 வைப்பாயாக; திரைக்குப் புறம்பாக மேசை
யையும், மேசைக்கு எதிரே வாசஸ்தலத்தின்
தென்புறமாகக் குத்துவிளக்கையும் வைத்து,
36 மேசையை வடபுறமாக வைப்பாயாக. இள
நீலநூலும் இரத்தாம்பரநூலும் சிவப்புநூலும்
திரித்த மெல்லிய பஞ்சுநூலுமாகிய இவற்
றால் சித்திரத் தையல்வேலையான ஒரு தொங்
குதிரையும் கூடாரத்தின் வாசலுக்கு உண்
37 டாக்கி, அந்தத் தொங்குதிரைக்குச் சீத்திம்
மரத்தால் ஐந்து தூண்களைச் செய்து, அவை
களைப் பொன்தகட்டால் மூடி, அவைகளுக்
குப் பொன்கொக்கிகளை உண்டாக்கி, அவை
களுக்கு ஐந்து வெண்கலப் பாதங்களை வார்ப்
பிக்கக்கடவாய்.

**27** ஐந்து முழ நீளமும் ஐந்து முழ அகலமு
மாக சீத்திம் மரத்தால் [2]பலிபீடத்தையும்
உண்டுபண்ணுவாயாக; அது சதுரமும் மூன்று
2 முழ உயரமுமாயிருப்பதாக. அதின் நாலு
மூலைகளிலும் நாலு [3]கொம்புகளை உண்டாக்கு
வாயாக; அதின் கொம்புகள் அதனோடே
ஏகமாய் இருக்கவேண்டும்; அதை வெண்கலத்
3 தகட்டால் மூடவேண்டும். அதின் சாம்பலை
எடுக்கத்தக்க சட்டிகளையும் கரண்டிகளையும்
கிண்ணிகளையும் முள் துறடுகளையும் நெருப்
புச் சட்டிகளையும் உண்டாக்குவாயாக; அதின்
பணிமுட்டுகளையெல்லாம் [4]வெண்கலத்தால்
4 பண்ணுவாயாக. வலைப் பின்னல்போன்ற
ஒரு வெண்கலச் சல்லடையைப் பண்ணி,
அந்தச் சல்லடையின் நாலு மூலைகளிலும்
5 நாலு வெண்கல வளையங்களை உண்டாக்கி, அந்
தச் சல்லடை பலிபீடத்தின் பாதியுயரத்தில்
இருக்கும்படி அதைத் தாழப் பலிபீடத்தின்
6 சுற்றடைப்புக்குக் கீழாக வைப்பாயாக. பலி
பீடத்துக்குச் சீத்திம் மரத்தால் தண்டுகளையும்
பண்ணி, அவைகளை வெண்கலத் தகட்டால்
7 மூடுவாயாக. பலிபீடத்தைச் சுமக்கத்தக்க
தாக அந்தத் தண்டுகள் அதின் இரண்டு பக்
கங்களிலும் வளையங்களிலே பாய்ச்சப்பட்டி
8 ருக்கவேண்டும். அதை உள்வெளிவிட்டுப்
பலகைகளினாலே பண்ணவேண்டும்; மலையில்
உனக்குக் காண்பிக்கப்பட்டபடியே அதைப்
பண்ணக்கடவர்கள்.

9 வாசஸ்தலத்துக்குப் பிராகாரத்தையும் உண்
டுபண்ணுவாயாக; தெற்கே தென்திசைக்கு
எதிரான பிராகாரத்துக்குத் திரித்த மெல்லிய
பஞ்சுநூலால் செய்யப்பட்ட நூறு முழ நீள
மான தொங்குதிரைகள் இருக்கவேண்டும்.
அவைகளுக்கு வெண்கலத்தினாலே இருபது 10
தூண்களும், இருபது பாதங்களும் இருக்க
வேண்டும்; தூண்களின் கொக்கிகளும் அவை
களின் பூண்களும் வெள்ளியினால் செய்யப்
படவேண்டும். அப்படியே வடபக்கத்தின் 11
நீளத்திற்கும் நூறு முழ நீளமான தொங்குதி
ரைகள் இருக்கவேண்டும்; அவைகளுக்கு
இருபது தூண்களும், அவைகளுக்கு இருபது
பாதங்களும் வெண்கலமா யிருக்கவேண்டும்;
தூண்களின் கொக்கிகளும் பூண்களும் வெள்
ளியினால் செய்யப்படவேண்டும். பிராகாரத் 12
தின் மேற்பக்கமான அகலத்திற்கு ஐம்பது
முழ நீளமான தொங்குதிரைகள் இருக்கவேண்
டும்; அவைகளுக்குப் பத்துத் தூண்களும்,
அவைகளுக்குப் பத்துப் பாதங்களும் இருக்க
வேண்டும். சூரியன் உதிக்கிற திசையாகிய 13
கீழ்ப்பக்கத்தின் பிராகாரம் ஐம்பது முழ அக
லமா யிருக்கவேண்டும். அங்கே ஒரு புறத் 14
திற்குப் பதினைந்து முழ நீளமான தொங்குதி
ரைகளும், அவைகளுக்கு மூன்று தூண்களும்,
அவைகளுக்கு மூன்று பாதங்களும் இருக்க
வேண்டும. மறுபுறத்துக்குப் பதினைந்து முழ 15
நீளமான தொங்குதிரைகளும், அவைகளுக்கு
மூன்று தூண்களும், அவைகளுக்கு மூன்று
பாதங்களும் இருக்கவேண்டும். பிராகாரத் 16
தின் வாசலுக்கு இளநீலநூலாலும் இரத்தாம்
பரநூலாலும் சிவப்புநூலாலும் திரித்த மெல்
லிய பஞ்சுநூலாலும் சித்திரத் தையல்வேலை
யாய்ச் செய்யப்பட்ட இருபது முழ நீளமான
ஒரு தொங்குதிரையும் அதற்கு நாலு தூண்க
ளும், அவைகளுக்கு நாலு பாதங்களும் இருக்
கவேண்டும். சுற்றுப் பிராகாரத்தின் தூண்க 17
ளெல்லாம் வெள்ளியினால் பூண் கட்டப்பட்
டிருக்கவேண்டும்; அவைகளின் கொக்கிகள்
வெள்ளியினாலும் அவைகளின் பாதங்கள்
வெண்கலத்தினாலும் செய்யப்பட்டிருக்க
வேண்டும். பிராகாரத்தின் நீளம் நூறு முழ 18
மும், இருபுறத்து அகலம் ஐம்பது ஐம்பது
முழமும், உயரம் ஐந்து முழமுமாயிருப்
பதாக; அதின் தொங்கல்கள் திரித்த மெல்லிய
பஞ்சுநூலினால் செய்யப்பட்டு, அதின் தூண்
களின் பாதங்கள் வெண்கலமாயிருக்கவேண்
டும். வாசஸ்தலத்துக்கடுத்த சகல பணிவி 19
டைக்குத் தேவையான எல்லாப் பணிமுட்டு
களும், அதின் எல்லா முளைகளும், பிராகாரத்
தின் எல்லா முளைகளும், வெண்கலமாயிருக்
கவேண்டும்.

குத்துவிளக்கு எப்பொழுதும் எரிந்து 20
கொண்டிருக்கும்படி இடித்துப் பிழிந்த தெளி
வான [5]ஒலிவ எண்ணெயை உன்னிடத்தில்
கொண்டுவரும்படி இஸ்ரவேல் புத்திரருக்குக்
கட்டளையிடுவாயாக. ஆசரிப்புக் கூடாரத்தில் 21
சாட்சி சந்நிதிக்கு முன்னிருக்கும் திரைச்சீ
லைக்கு வெளிப்புறமாக ஆரோனும் அவன்

[1] 1 இரா. 1. 8–10
[2] யாத். 38. 1. 1 சாமு. 3. 3. 2 கால. 13. 11 லூ. 12. 35
[3] சங். 118. 27. எபி. 6. 18
[4] 1 இரா. 7. 45. எரே. 52. 20
[5] லேவி. 24. 2

குமாரரும் [1]சாயங்காலம் தொடங்கி விடியற்
காலம்மட்டும் கர்த்தருடைய சந்நிதானத்தில்
அந்த விளக்கை எரியவைக்கக்கடவர்கள்;
இது இஸ்ரவேல் புத்திரருக்கு தலைமுறை
தலைமுறையாக [2]நித்திய கட்டளையாயிருக்கக்
கடவது.

**28** உன் சகோதரனாகிய [3]ஆரோன் எனக்கு
ஆசாரிய ஊழியம் செய்யும்படிக்கு, நீ ஆரோ
னையும் அவனோடேகூட அவன் குமாரராகிய
நாதாப், அபியூ, எலெயாசார், இத்தாமார் என்
னும் ஆரோனின் குமாரரையும் இஸ்ரவேல்
புத்திரரிலிருந்து பிரித்து, உன்னிடத்தில் சேர்
2 த்துக்கொள்வாயாக. உன் சகோதரனாகிய
ஆரோனுக்கு, [4]மகிமையும் அலங்காரமுமாய்
இருக்கும்பொருட்டு, [5]பரிசுத்த வஸ்திரங்களை
3 உண்டுபண்ணுவாயாக. ஆரோன் எனக்கு
ஆசாரிய ஊழியம் செய்யத்தக்கதாக அவனைப்
பரிசுத்தப்படுத்தும்படி அவனுக்கு வஸ்திரங்
களை உண்டாக்கும்பொருட்டு, நான் ஞானத்
தின் ஆவியால் நிரப்பின [6]விவேகமான இரு
தயமுள்ள யாவரோடும் நீ சொல்லுவாயாக.
4 அவர்கள் உண்டாக்கவேண்டிய வஸ்திரங்க
ளாவன; [7]மார்ப்பதக்கமும், ஏபோத்தும், அங்
கியும், விசித்திரமான உள்சட்டையும், பாகை
யும், இடைக்கச்சையுமே. உன் சகோதரனாகிய
ஆரோன் எனக்கு ஆசாரிய ஊழியம் செய்யும்
படி, அவனுக்கும் அவன் குமாரருக்கும் பரி
சுத்த வஸ்திரங்களை உண்டுபண்ணவேண்டும்.
5 அவர்கள் பொன்னும் இளநீலநூலும் இரத்
தாம்பரநூலும் சிவப்புநூலும் மெல்லிய பஞ்சு
6 நூலும் சேகரிப்பார்களாக. ஏபோத்தைப்
பொன்னினாலும் இளநீலநூலாலும் இரத்தாம்
பரநூலாலும் சிவப்புநூலாலும் திரித்த மெல்
லிய பஞ்சுநூலாலும் விசித்திரவேலையாய்ச்
7 செய்யக்கடவர்கள். அது ஒன்றாக இணைக்
கப்படும்பொருட்டு, இரண்டு தோள்த் துண்டு
களின்மேலும் அதின் இரண்டு முனைகளும்
8 சேர்க்கப்படவேண்டும். அந்த ஏபோத்தின்
மேல் இருக்கவேண்டிய விசித்திரமான கச்சை
அந்த வேலைக்கு ஒப்பாகவே, பொன்னினா
லும் இளநீலநூலாலும் இரத்தாம்பரநூலாலும்
சிவப்புநூலாலும் திரித்த மெல்லிய பஞ்சுநூ
லாலும் பண்ணப்பட்டு, அதனோடே ஏகமாயி
9 ருக்கவேண்டும். பின்னும் நீ இரண்டு கோ
மேதகக் கற்களை எடுத்து, இஸ்ரவேல் புத்திர
ரின் நாமங்களை அவைகளில் வெட்டுவாயாக.
10 அவர்கள் பிறந்த வரிசையின்படியே, அவர்
களுடைய நாமங்களில் ஆறு நாமங்கள் ஒரு
கல்லிலும், மற்ற ஆறு நாமங்கள் மறு கல்வி
11 லும் இருக்கவேண்டும். இரத்தினங்களில்
முத்திரை வெட்டுகிறவர்கள் செய்யும் வேலை
க்கு ஒப்பாக அந்த இரண்டு கற்களிலும் இஸ்
ரவேல் புத்திரரின் நாமங்களை வெட்டி, அவை
களைப் பொன் குவளைகளில் பதிப்பாயாக.
12 ஆரோன் கர்த்தருக்கு முன்பாகத் தன் இரண்டு
தோள்களின்மேலும் இஸ்ரவேல் புத்திரரின்
நாமங்களை [8]ஞாபகக்குறியாகச் சுமந்துவர,

1 யாத். 30. 8. 1 சாமு. 3. 3. 2 நாளா. 13. 11. லூ. 12. 35
2 லேவி. 3. 17. எண். 18. 23. 1 சாமு. 30. 25
3 எண். 18. 7. எபி. 5. 1, 4
4 ஏசா. 61. 3, 10. வெளி. 5. 10
5 லேவி. 8. 7. எண். 20. 26, 28. சங். 132. 16
6 சங். 2. 6. 1 கொ. 12. 11
7 ஏசா. 59. 17. எபே. 6. 14
8 யோசு. 4. 7. சகரி. 6. 14
9 யாத். 39. 8. லேவி. 8. 8
10 வெளி. 21. 12

அந்த இரண்டு கற்களையும் ஏபோத்து தோள்
களின்மேல் அவர்களை நினைக்கும்படியான
கற்களாக வைக்கக்கடவாய். பொன்னினால் 13
வளையங்களைப் பண்ணி, சரியான அளவுக் 14
குப் பின்னல்வேலையான இரண்டு சங்கிலிக
ளையும் பசும்பொன்னினால் உண்டாக்கி, அந்
தச் சங்கிலிகளை அந்த வளையங்களில் பூட்டு
வாயாக. நியாயவிதி மார்ப்பதக்கத்தையும் 15
[9]விசித்திரவேலையாய்ச் செய்வாயாக; அதை
ஏபோத்து வேலைக்கு ஒப்பாகப் பொன்னி
னாலும் இளநீலநூலாலும் இரத்தாம்பரநூலா
லும் சிவப்புநூலாலும் திரித்த மெல்லிய பஞ்சு
நூலாலும் செய்வாயாக. அது சதுரமும் இரட் 16
டையும், ஒரு சாண் நீளமும் ஒரு சாண் அக
லமுமாய் இருக்கவேண்டும். அதிலே நாலு 17
பத்தி இரத்தினக் கற்களை நிறையப் பதிப்பா
யாக; முதலாம் பத்தி பத்மராகமும் புஷ்பராக
மும் மாணிக்கமும், இரண்டாம் பத்தி மரக 18
தமும் இந்திரநீலமும் வச்சிரமும், மூன்றாம் 19
பத்தி கெம்பும் வைடூரியமும் சுகந்தியும்,
நாலாம் பத்தி படிகப்பச்சையும் கோமேதகமும் 20
யஸ்பியுமாய் இருப்பதாக; இவைகள் அந்தந்
தப் பத்தியில் பொன்னினாலே பதித்திருக்க
வேண்டும். இந்தக் கற்கள் இஸ்ரவேல் புத்தி 21
ரருடைய நாமங்களின்படியே [10]பன்னிரண்
டும், அவர்களுடைய நாமங்கள் அவைகளில்
வெட்டப்பட்டவைகளுமாய் இருக்கவேண்
டும்; பன்னிரண்டு கோத்திரங்களில் ஒவ்
வொன்றினுடைய நாமம் ஒவ்வொன்றிலே
முத்திரை வெட்டாய் வெட்டியிருக்கவேண்
டும். மார்ப்பதக்கத்திற்கு அதின் பக்கங்க 22
ளிலே பின்னல்வேலையான பசும்பொன் சங்
கிலிகளையும் பண்ணி, அந்த மார்ப்பதக்கத் 23
திற்கு இரண்டு பொன்வளையங்களையும்
பண்ணி, அந்த இரண்டு வளையங்களையும்
மார்ப்பதக்கத்தின் இரண்டு பக்கங்களிலே
வைத்து, பொன்னினால்செய்த அந்த இரண்டு 24
பின்னல் வேலையான சங்கிலிகளையும் மார்ப்
பதக்கத்தின் பக்கங்களில் இருக்கிற இரண்டு
வளையங்களில் மாட்டி, அவ்விரண்டு பின்னல் 25
வேலையான சங்கிலிகளின் இரண்டு நுனிகளை
ஏபோத்துத் தோள்த்துண்டின்மேல் அதின்
முன்புறத்தில் இருக்கிற இரண்டு வளையங்க
ளில் மாட்டுவாயாக. நீ இரண்டு பொன்வ 26
ளையங்களைப் பண்ணி, அவைகளை ஏபோத்
தின் கீழ்ப்புறத்திற்கு எதிரான மார்ப்பதக்கத்
தினுடைய மற்ற இரண்டு பக்கங்களிலும் அதி
னுடைய ஓரத்திற்குள்ளாக வைத்து, வேறே 27
இரண்டு பொன்வளையங்களைப் பண்ணி,
அவைகளை ஏபோத்தின் முன்புறத்து இரண்டு
கீழ்ப்பக்கங்களில் அதின் இணைப்புக்கு எதிரா
கவும், ஏபோத்தின் விசித்திரமான கச்சைக்கு
மேலாகவும் வைத்து, மார்ப்பதக்கம் ஏபோத் 28
தின் விசித்திரமான கச்சைக்கு மேலாக இருக்
கும்படிக்கும், அது ஏபோத்திலிருந்து நீங்
காதபடிக்கும், அதை அதின் வளையங்களால்
ஏபோத்து வளையங்களோடே இளநீல நாடா

29 விஞல் கட்டவேண்டும். ஆரோன் பரிசுத்த
ஸ்தலத்திற்குள் பிரவேசிக்கும்போது, இஸ்ர
வேல் புத்திரரின் நாமங்களைத் தன் இருதயத்
தின்மேலிருக்கும் நியாயவிதி மார்ப்பதக்கத்
திலே **கர்த்தருடைய** சந்நிதானத்தில் ஞாப
கக்குறியாக எப்பொழுதும் தரித்துக்கொள்
30 ளக்கடவன். நியாயவிதி மார்ப்பதக்கத்திலே
*ஊரீம் தும்மீம் என்பவைகளை வைப்பாயாக;
ஆரோன் **கர்த்தருடைய** சந்நிதானத்தில் பிர
வேசிக்கும்போது, அவைகள் அவன் இருத
யத்தின்மேல் இருக்கவேண்டும்; ஆரோன்
தன் இருதயத்தின்மேல் இஸ்ரவேல் புத்திர
ருடைய நியாயவிதியைக் **கர்த்தருடைய** சந்
நிதானத்தில் எப்பொழுதும் தரித்துக்கொள்ள
வேண்டும்.
31 . ஏபோத்தின் கீழ் அங்கியை முழுவதும் இள
32 நீலநூலால் உண்டாக்கக்கடவாய். தலை நுழை
கிற அதின் துவாரம் அதின் நடுவில் இருக்க
வும், அதின் துவாரத்துக்கு நெய்யப்பட்ட
வேலையான ஒரு நாடா சுற்றிலும் இருக்கவும்
வேண்டும்; அது கிழியாதபடிக்கு மார்க்கவசத்
தின் துவாரத்துக்கு ஒத்ததாக இருக்கவேண்
33 டும். அதின் கீழோரங்களில் இளநீலநூல்
இரத்தாம்பரநூல் சிவப்புநூல் வேலையால்
செய்யப்பட்ட மாதளம்பழங்களையும், அவைக
ளுக்கு இடையிடையே சுற்றிலும் பொன்
மணிகளையும் அதின் ஓரங்களில் சுற்றிலும்
34 தொங்கும்படி பண்ணிவைக்கவேண்டும். அங்
கியின் ஓரங்களில் சுற்றிலும் ஒரு பொன்மணி
யும் ஒரு மாதளம்பழமும், ஒரு பொன்மணி
யும் ஒரு மாதளம்பழமுமாய்த் தொங்குவதாக.
35 ஆரோன் ஆராதனை செய்யக் **கர்த்தருடைய**[1]சந்
நிதியில் பரிசுத்த ஸ்தலத்துக்குள் பிரவேசிக்
கும்போதும், வெளியே வரும்போதும், அவன்
சாகாதபடிக்கு, அதின் சத்தம் கேட்கப்படும்
படி அதைத் தரித்துக்கொள்ளவேண்டும்.
36 பசும்பொன்னிஞல் ஒரு [2]பட்டத்தைப்
பண்ணி, **கர்த்தருக்குப் பரிசுத்தம்** என்று
37 அதிலே முத்திரைவெட்டாக வெட்டி, அது
பாகையிலிருக்கும்படி அதை இளநீல நாடா
விஞல் பாகையின் முகப்பிலே கட்டுவாயாக.
38 இஸ்ரவேல் புத்திரர் தங்கள் பரிசுத்த காணிக்
கைகளாகப் படைக்கும் பரிசுத்தமானவைக
ளின் [3]தோஷத்தை ஆரோன் சுமக்கும்படி,
அது ஆரோனுடைய நெற்றியின்மேல் இருப்
பதாக; **கர்த்தருடைய** சந்நிதியில் அவர்கள் அங்
கிகரிக்கப்படும்படி, அது எப்பொழுதும் அவன்
39 நெற்றியின்மேல் இருக்கவேண்டும். மெல்
லிய பஞ்சுநூலால் விசித்திரமான உள்சட்டை
யையும், மெல்லிய பஞ்சுநூலால் பாகையை
யும் உண்டாக்கி, இடைக்கச்சையைச் [4]சித்திரத்
40 தையல்வேலையாகப் பண்ணுவாயாக. ஆரோ
னுடைய குமாரருக்கும், மகிமையும் [5]அலங்கா
ரமுமா யிருக்கும்பொருட்டு, அங்கிகளையும்,
இடைக்கச்சைகளையும், குல்லாக்களையும் உண்
41 டுபண்ணுவாயாக. உன் சகோதரனுகிய ஆரோ
னும் அவனேடேகூட அவன் குமாரரும் என
க்கு ஆசாரிய ஊழியம் செய்யும்படிக்கு, நீ
அந்த வஸ்திரங்களை அவர்களுக்கு உடுத்தி,
அவர்களை [6]அபிஷேகஞ்செய்து, அவர்களைப்
[7]பிரதிஷ்டைபண்ணி, அவர்களைப் பரிசுத்
தப்படுத்துவாயாக. அவர்களுடைய நிர்வா 42
ணத்தை மூடும்படிக்கு, இடுப்புத்தொடங்கி
முழங்கால்மட்டும் உடுத்த சணல்நூல் [8]சல்ல
டங்களையும் உண்டுபண்ணுவாயாக. ஆரோ 43
னும் அவன் குமாரரும் பரிசுத்த ஸ்தலத்திலே
ஆராதனைசெய்ய ஆசரிப்புக் கூடாரத்திற்குள்
பிரவேசிக்கும்போதும், பலிபீடத்தண்டைக்
குச்சேரும்போதும், [9]அக்கிரமம் சுமந்து அவர்
கள் சாகாதபடிக்கு, அவைகளைத் தரித்திருக்க
வேண்டும்; இது அவனுக்கும் அவனுக்குப்
பின்வரும் சந்ததிக்கும் [10]நித்திய கட்டளை.

அவர்கள் எனக்கு ஆசாரிய ஊழியம் **29**
செய்யும்படி அவர்களைப் பரிசுத்தப்படுத்தும்
பொருட்டு, நீ அவர்களுக்குச் செய்யவேண்டி
யதாவது: [11]ஒரு காளையையும் பழுதற்ற இர
ண்டு ஆட்டுக்கடாக்களையும் தெரிந்துகொள்
வாயாக. புளிப்பில்லா அப்பத்தையும், எண் 2
ணெயிலே பிசைந்த புளிப்பில்லா அதிரசங்
களையும், எண்ணெய் பூசப்பட்ட புளிப்பில்
லா அடைகளையும் கோதுமையின் மெல்லிய
மாவிஞல் பண்ணி, அவைகளை ஒரு கூடை 3
யிலே வைத்து, கூடையோடே அவைகளை
யும் காளையையும் இரண்டு ஆட்டுக்கடாக்களை
யும் கொண்டுவந்து, ஆரோனையும் அவன் 4
குமாரரையும் ஆசரிப்புக் கூடாரத்தின் வாசல்
முன்பாகச் சேரப்பண்ணி, அவர்களைத் [12]தண்
ணீரிஞல் கழுவி, அந்த வஸ்திரங்களை எடுத்து, 5
ஆரோனுக்கு உள்சட்டையையும், ஏபோத்தின்
கீழ் அங்கியையும், ஏபோத்தையும், மார்ப்பதக்
கத்தையும் தரித்து, ஏபோத்தின் விசித்திர
மான கச்சையையும் அவனுக்குக் கட்டி,
அவன் தலையிலே பாகையையும் வைத்து, பரி 6
சுத்த கிரீடத்தைப் பாகையின்மேல் தரித்து,
அபிஷேக தைலத்தையும் எடுத்து, [13]அவன் 7
தலையின்மேல் வார்த்து, அவனை அபிஷேகஞ்
செய்வாயாக. பின்பு அவன் குமாரரைச்சேரப் 8
பண்ணி, [14]ஆசாரிய ஊழியம் அவர்களுக்கு
நித்திய கட்டளையாக இருக்கும்படி, அவர்க
ளுக்கும் அங்கிகளை உடுத்துவாயாக. ஆரோ 9
னுக்கும் அவன் குமாரருக்கும் இடைக்கச்சை
களைக் கட்டி, அவன் குமாரருக்குக் குல்லாக்
களையும் தரித்து, இப்படியே ஆரோனையும்
அவன் குமாரரையும் பிரதிஷ்டை பண்ணு
வாயாக. காளையை ஆசரிப்புக் கூடாரத்துக்கு. 10
முன்பாகக் கொண்டுவருவாயாக; அப்பொ
ழுது ஆரோனும் அவன் குமாரரும் தங்கள்
கைகளைக் [15]காளையினுடைய தலையின்மேல்
வைக்கக்கடவர்கள். பின்பு நீ அந்தக் காளை 11
யை ஆசரிப்புக் கூடாரத்து வாசலண்டை
யிலே **கர்த்தருடைய** சந்நிதானத்தில் அடித்து,
அதின் [16]இரத்தத்தில் கொஞ்சம் எடுத்து, உன் 12
விரலிஞல் பலிபீடத்தின் கொம்புகள்மேல்
இட்டு, மற்ற இரத்தம் முழுவதையும் பலிபீட

* வெளிச்சங்கள்—உத்தமங்கள். லேவி. 8. 8. எண். 27. 21. உபா. 33. 8. 1 சாமு. 28. 6. எஸ்றா 2. 63. நெகே. 7. 65. எபி. 9. 24
1 எபி. 9. 12
2 சங். 93. 5. சகரி. 14. 20. எபி. 7. 26. வெளி. 21. 27
3 லேவி. 10. 17. எண். 18. 1. ஏசா. 53. 6, 11. எசே. 4. 4–6. யோ. 1. 29. 2 கொ. 5. 21. எபி. 9. 28. 1 பே. 2. 24
4 சங். 45. 14
5 எசே. 44. 17, 18
6 லேவி. 10. 7. ஏசா. 61. 1
7 லேவி. 8. அதி. எபி. 5. 4
8 லேவி. 16. 4. எசே. 44. 18
9 லேவி. 5. 1, 17. எண். 9. 13
10 லேவி. 17. 7
11 லேவி. 8. 2. ம
12 லேவி. 8. 6. ம. எபி. 10. 22. 1 பே. 3. 21
13 லேவி. 10. 7. சங். 133. 2
14 எண். 18. 7. எபி. 5. 4
15 லேவி. 1. 4. ஏசா. 53. 6. 2 கொ. 5. 21
16 லேவி. 8. 15

13 த்தின் அடியிலே ஊற்றி, குடல்களை மூடிய
கொழுப்பு யாவையும், கல்லீரலின்மேலுள்ள
சவ்வையும், இரண்டு குண்டிக்காய்களையும்,
அவைகளின்மேலுள்ள கொழுப்பையும் எடு
த்து, பலிபீடத்தின்மேல் தகித்துப்போட்டு,
14 காளையின் மாம்சத்தையும் அதின் தோலையும்
அதின் சாணியையும் பாளயத்துக்குப் புறம்
பே [1]அக்கினியால் சுட்டெரிக்கக்கடவாய்;
15 இது பாவநிவாரணபலி. பின்பு அந்த ஆட்
டுக்கடாக்களில் ஒன்றைக் கொண்டுவந்து நிறு
த்துவாயாக; [2]அதினுடைய தலையின்மேல்
ஆரோனும் அவன் குமாரரும் தங்கள் கைகளை
16 வைக்கக்கடவர்கள். அந்தக் கடாவை அடி
த்து, அதின் இரத்தத்தைப் பிடித்து, பலி
17 பீடத்தின்மேல் சுற்றிலும் தெளித்து, ஆட்டுக்
கடாவைச் சந்துசந்தாகத் துண்டித்து, அதின்
குடல்களையும் அதின் தொடைகளையும் கழுவி,
அவைகளை அந்தத் துண்டங்களின்மேலும்
18 அதின் தலையின்மேலும் வைத்து, ஆட்டுக்
கடா முழுவதையும் பலிபீடத்தின்மேல் தகித்
துவிடுவாயாக; இது **கர்த்தருக்குச்** செலுத்தும்
சர்வாங்க தகனபலி; இது [3]சுகந்த வாசனையும்
**கர்த்தருக்குச்** செலுத்தும் தகனபலியுமாய்
19 இருக்கும். பின்பு மற்ற [4]ஆட்டுக்கடாவையும்
கொண்டுவந்து நிறுத்துவாயாக; அதினுடைய
தலையின்மேல் ஆரோனும் அவன் குமாரரும்
20 தங்கள் கைகளை வைக்கக்கடவர்கள். அப்பொ
ழுது அந்தக் கடாவை அடித்து, அதின் இரத்
தத்தில் கொஞ்சம் எடுத்து, ஆரோனின் [5]வல
துகாது மடலிலும், அவன் குமாரரின் வலது
காது மடலிலும், அவர்கள் வலதுகையின்
பெருவிரலிலும், அவர்கள் வலதுகாலின் பெரு
விரலிலும் இட்டு, மற்ற இரத்தத்தைப் பலிபீட
21 த்தின்மேல் சுற்றிலும் தெளித்து, பலிபீடத்
தின்மேலிருக்கும் இரத்தத்திலும் அபிஷேக
தைலத்திலும் கொஞ்சம் எடுத்து, ஆரோனும்
அவன் வஸ்திரங்களும் அவனுடைய குமார
ரும் அவர்களுடைய வஸ்திரங்களும் பரிசுத்த
மாக்கப்படும்படி, அவன்மேலும் அவன் வஸ்
திரங்கள்மேலும் அவனுடைய குமாரர்மேலும்
அவர்களுடைய வஸ்திரங்கள்மேலும் தெளிப்
22 பாயாக. அந்த ஆட்டுக்கடா பிரதிஷ்டையின்
ஆட்டுக்கடாவானதால், அதிலுள்ள கொழுப்
பையும் வாலையும் குடல்களை மூடிய கொழுப்
பையும் கல்லீரலின்மேலுள்ள சவ்வையும்
இரண்டு குண்டிக்காய்களையும் அவைகளின்
மேலுள்ள கொழுப்பையும் வலதுபக்கத்து
23 முன்னந்தொடையையும், **கர்த்தருடைய**
சந்நிதானத்தில் வைத்திருக்கிற [6]புளிப்பில்லா
அப்பங்களுள்ள கூடையில் ஒரு அப்பத்தை
யும் எண்ணெயிட்ட அப்பமாகிய ஒரு அதி
24 ரசத்தையும் ஒரு அடையையும் எடுத்து, அவை
கள் எல்லாவற்றையும் ஆரோனின் உள்ளங்
கைகளிலும் அவன் குமாரரின் உள்ளங்கை
களிலும் வைத்து, அவைகளைக் **கர்த்தருடைய**
சந்நிதானத்தில் அசைவாட்டப்படும் காணிக்
25 கையாக [7]அசைவாட்டி, பின்பு அவைகளை
அவர்கள் கைகளிலிருந்து எடுத்து, பலிபீடத்
தின்மேல் சர்வாங்க தகனபலியோடு வைத்து,
**கர்த்தருடைய** சந்நிதானத்தில் சுகந்த வாசனை
யாகத் தகிக்கக்கடவாய்; இது **கர்த்தருக்குச்**
செலுத்தப்படும் தகனபலி. ஆரோனுடைய 26
[8]பிரதிஷ்டையின் ஆட்டுக்கடாவிலே மார்க்
கண்டத்தை எடுத்து, அதைக் **கர்த்தருடைய**
சந்நிதானத்தில் அசைவாட்டப்படும் காணிக்
கையாக அசைவாட்டக்கடவாய்; அது உன்
பங்காயிருக்கும். மேலும், ஆரோனுடைய பிர 27
திஷ்டைக்கும் அவன் குமாரருடைய பிரதிஷ்
டைக்கும் நியமித்த ஆட்டுக்கடாவில் அசை
வாட்டப்படுகிற மார்க்கண்டத்தையும் [9]ஏறெடு
த்துப் படைக்கப்படுகிற முன்னந்தொடையை
யும் பரிசுத்தப்படுத்துவாயாக. அது ஏறெடு 28
த்துப் படைக்கிற படைப்பானதினால், இஸ்ர
வேல் புத்திரர் பலியிடுகிறவைகளில் அவை
களை [10]நித்தியகட்டளையாக ஆரோனையும்
அவன் குமாரரையும் சேர்வதாக; இஸ்ரவேல்
புத்திரர் **கர்த்தருடைய** சந்நிதானத்தில் ஏறெ
டுத்துப் படைக்கிற சமாதானபலிகளில் அவை
களை ஏறெடுத்துப் படைக்கும் படைப்பா
யிருக்கவேண்டும். ஆரோனின் பரிசுத்த வஸ் 29
திரங்கள், அவனுக்குப்பின், அவனுடைய
குமாரரைச் சேரும்; அவர்கள் அவைகளை உடு
த்திக்கொண்டு, [11]அபிஷேகம் பண்ணப்பட்டுப்
பிரதிஷ்டையாக்கப்படுவார்கள். அவனுடைய 30
குமாரரில் அவன் பட்டத்திற்கு வருகிற ஆசா
ரியன் பரிசுத்தஸ்தலத்தில் ஆராதனை செய்வ
தற்கு ஆசரிப்புக் கூடாரத்தில் பிரவேசிக்கும்
போது, அவைகளை [12]ஏழுநாள்மட்டும் உடுத்
திக்கொள்ளக்கடவன். பிரதிஷ்டையின் ஆட் 31
டுக்கடாவைக் கொண்டுவந்து, அதின் மாம்சத்
தைப் பரிசுத்த இடத்தில் வேவிப்பாயாக.
அந்த ஆட்டுக்கடாவின் மாம்சத்தையும், கூடை 32
யிலிருக்கிற [13]அப்பத்தையும், ஆரோனும்
அவன் குமாரரும் ஆசரிப்புக் கூடாரத்தின்
வாசலிலே புசிக்கக்கடவர்கள். அவர்களைப் 33
பிரதிஷ்டைபண்ணிப் பரிசுத்தப்படுத்தும்பொ
ருட்டு, அவைகளால் பாவநிவிர்த்தி செய்யப்
பட்டபடியால், [14]அவைகளை அவர்கள் புசிக்
கக்கடவர்கள்; அந்நியனோ அவைகளைப் புசிக்
கலாகாது; அவைகள் பரிசுத்தமானவைகள்.
பிரதிஷ்டையின் மாம்சத்திலும் அப்பத்திலும் 34
ஏதாகிலும் விடியற்காலம்மட்டும் மீந்திருந்த
தானால், அதை [15]அக்கினியாலே சுட்டெரிப்
பாயாக; அது புசிக்கப்படலாகாது, அது பரி
சுத்தமானது. இந்தப்பிரகாரம் நான் உனக் 35
குக் கட்டளையிட்டபடி எல்லாவற்றையும் நீ
ஆரோனுக்கும் அவன் குமாரருக்கும் செய்வா
யாக; ஏழுநாளளவும் நீ அவர்களைப் பிரதிஷ்
டைபண்ணி, பாவநிவிர்த்திக்காக ஒவ்வொரு 36
நாளிலும் [16]ஒவ்வொரு காளையைப் பாவநிவா
ரணபலியாக பலியிட்டு; பலிபீடத்துக்காகப்
பிராயச்சித்தம் செய்தபின், அந்தப் பலிபீட
த்தைச் சுத்திசெய்யவேண்டும்; அதைப் பரி
சுத்தப்படுத்தும்படி அதை அபிஷேகம் பண்

[1] லேவி. 4. 11, 12. எபி. 13. 11
[2] லேவி. 1. 4–9
[3] ஆதி. 8. 21. எபே. 5. 2. பிலி. 4. 18
[4] லேவி. 8. 22
[5] லேவி. 8. 24. எபி. 9. 22
[6] லேவி. 8. 26
[7] லேவி. 7. 30
[8] லேவி. 8. 29
[9] எண். 18. 11, 18. உபா. 18. 3
[10] லேவி. 10. 15
[11] எண். 18. 8
[12] லேவி. 8. 35
[13] மத். 12. 4
[14] லேவி. 10. 13, 18. யோ. 6. 53, 55
[15] லேவி. 7. 18; 8. 32
[16] எசே. 43. 27. எபி. 10. 11

37 ணக்கடவாய். ஏழுநாளளவும் பலிபீடத்திற்கா
கப் பிராயச்சித்தஞ்செய்து, அதைப் பரிசுத்த
மாக்கக்கடவாய்; பலிபீடமானது மகா பரிசுத்
தமாயிருக்கும்; [1]பலிபீடத்தைத் தொடுகிற
தெல்லாம் பரிசுத்தமாகும்.
38 பலிபீடத்தின்மேல் நீ [2]பலியிடவேண்டி
யது என்னவெனில்; இடைவிடாமல் ஒவ்
வொரு நாளிலும் ஒரு வயதான இரண்டு
39 ஆட்டுக்குட்டிகளைப் பலியிடவேண்டும். ஒரு
ஆட்டுக்குட்டியைக் காலையிலும், மற்ற ஆட்டுக்
40 குட்டியை மாலையிலும் பலியிடுவாயாக. ஒரு
மரக்காலிலே பத்திலொரு பங்கானதும், இடித்
துப் பிழிந்த காற்படி எண்ணெயிலே பிசைந்
ததுமாகிய மெல்லிய மாவையும், பானபலியா
கக் கால்படி திராட்சரசத்தையும், ஒரு ஆட்டுக்
41 குட்டியுடனே படைப்பாயாக. மற்ற ஆட்
டுக்குட்டியை மாலையிலே பலியிட்டு, காலை
யிலே செலுத்தின போஜனபலிக்கும் பானப
லிக்கும் ஒத்தபிரகாரம் அதைக் **கர்த்தருக்குச்**
சுகந்த வாசனையான தகனபலியாகப் படைக்
42 கக்கடவாய். உன்னுடனே பேசும்படி நான்
உங்களைச் [3]சந்திக்கும் இடமாயிருக்கிற ஆசரிப்
புக் கூடாரத்தினுடைய வாசலாகிய **கர்த்தரு
டைய** சந்நிதியிலே, உங்கள் தலைமுறைதோ
றும் செலுத்தப்படவேண்டிய [4]நித்திய சர்வா
43 ங்க தகனபலி இதுவே. அங்கே இஸ்ரவேல்
புத்திரரைச் சந்திப்பேன்; [5]அந்த ஸ்தலம் என்
னுடைய மகிமையினால் பரிசுத்தமாக்கப்படும்.
44 ஆசரிப்புக் கூடாரத்தையும் பலிபீடத்தையும்
நான் பரிசுத்தமாக்குவேன்; எனக்கு ஆசா
ரிய ஊழியம் செய்யும்படிக்கு, ஆரோனையும்
45 அவன் குமாரரையும் பரிசுத்தப்படுத்தி, இஸ்
ரவேல் புத்திரரின் நடுவே நான் வாசம்
பண்ணி, அவர்களுக்குத் தேவனாயிருப்பேன்.
46 தங்கள் நடுவே [6]நான் வாசம்பண்ணும்படி,
தங்களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்
பண்ணின நான் தங்கள் தேவனாகிய **கர்த்தர்**
என்று அவர்கள் அறிவார்கள்; நானே அவர்
கள் தேவனாகிய **கர்த்தர்**.

**30** தூபங்காட்டுகிறதற்கு ஒரு [7]தூபபீடத்தை
யும் சீத்திம் மரத்தினால் உண்டாக்குவாயாக.
2 அது ஒரு முழ நீளமும் ஒரு முழ அகலமு
மான சதுரமும், இரண்டு முழ உயரமுமாய்
இருக்கவேண்டும், அதின் கொம்புகள் அத
3 னோடே ஏகமுமாயிருக்கவேண்டும். அதின்
மேற்புறத்தையும் சுற்றுப்புறத்தையும் அதின்
கொம்புகளையும் பசும்பொன்தகட்டால் மூடி,
சுற்றிலும் அதற்குப் பொன்திரணையை உண்
4 டுபண்ணி, அந்தத் திரணையின்கீழே அதின்
இரண்டு பக்கங்களிலும் அதைச் சுமக்கும்
தண்டுகளின் இடங்களாகிய அதின் இரண்டு
பக்கத்து இரண்டு மூலைகளிலும் இரண்டு
5 பொன்வளையங்களை உண்டாக்குவாயாக. அந்
தத் தண்டுகளையும் சீத்திம் மரத்தால் பண்ணி,
அவைகளையும் பொன்தகட்டால் மூடக்கட
6 வாய். சாட்சிப்பெட்டிக்கு முன்னிருக்கும்
[8]திரைச்சீலைக்கும், நான் உன்னைச் சந்திக்கும்
இடமாகிய சாட்சி சந்நிதியின்மேலுள்ள [9]கிரு
பாசனத்துக்கும் முன்பாக அதை வைக்கக்கட
வாய். ஆரோன் [10]காலைதோறும் அதின்மேல் 7
சுகந்ததூபங் காட்டவேண்டும்; மாலையில் விளக்
கேற்றும்போதும் அதின்மேல் தூபங்காட்டக்
கடவன்; விளக்குகளை விளக்கும்போதும் அதி
ன்மேல் தூபங்காட்டவேண்டும். உங்கள் தலை 8
முறைதோறும் **கர்த்தருடைய** சந்நிதியில்
காட்டவேண்டிய நித்திய தூபம் இதுவே.
அதின்மேல் [11]அந்நிய தூபத்தையாகிலும், தக 9
னபலியையாகிலும், போஜனபலியையாகி
லும் படைக்கவேண்டாம்; அதின்மேல் பான
பலியை ஊற்றவும் வேண்டாம். வருஷத்தில் 10
[12]ஒருமுறை ஆரோன் பாவநிவாரணபலியின்
இரத்தத்தினால் அதின் கொம்புகளின்மேல்
பிராயச்சித்தம் பண்ணுவானாக; உங்கள் தலை
முறைதோறும் வருஷத்தில் ஒருமுறை அதின்
மேல் பிராயச்சித்தம் பண்ணுவானாக; அது
**கர்த்தருக்கு** மகா பரிசுத்தமானது என்றார்.
பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி: 11
நீ இஸ்ரவேல் புத்திரரை அவர்கள் இலக்கத் 12
தின்படி [13]கணக்குப் பார்க்கும்பொருட்டு,
அவர்களை எண்ணும்போது, [14]அவர்களுக்
குள்ளே ஒரு வாதை உண்டாகாதபடிக்கு,
அவர்களில் ஒவ்வொருவனும் எண்ணப்படும்
சமயத்தில் தன் தன் ஆத்துமாவுக்காகக் **கர்த்த
ருக்கு** [15]மீட்கும்பொருளைக் கொடுக்கக்கடவன்.
எண்ணப்படுகிறவர்களின் தொகையிலே சே 13
ருகிற ஒவ்வொருவனும் பரிசுத்த ஸ்தலத்துச்
சேக்கல் கணக்கின்படி அரைச்சேக்கல் கொ
டுக்கவேண்டும்; ஒரு சேக்கலுக்கு இருபது
கேரா; **கர்த்தருக்குச்** செலுத்தப்படுவது
அரைச்சேக்கல். எண்ணப்படுகிறவர்களின் 14
தொகையிலே [16]சேருகிற இருபது வயது
முதற்கொண்டு அதற்கு மேற்பட்ட ஒவ்வொ
ருவனும் அதைக் **கர்த்தருக்குச்** செலுத்தவேண்
டும். உங்கள் ஆத்துமாக்களுக்காகப் பாவ 15
நிவிர்த்தி பண்ணும்படி நீங்கள் **கர்த்தருக்குக்**
காணிக்கை செலுத்தும்போது, [17]ஐசுவரிய
வான் அரைச்சேக்கலுக்கு அதிகமாய்க்கொடுக்
கவும்வேண்டாம், தரித்திரன் அதற்குக் குறை
வாகக் கொடுக்கவும்வேண்டாம். அந்தப் பாவ 16
நிவிர்த்தி பணத்தை நீ இஸ்ரவேல் புத்திரர்
கையில் வாங்கி, அதை ஆசரிப்புக் கூடாரத்
தின் திருப்பணிக்குக் கொடுப்பாயாக; அது
**கர்த்தருடைய** சந்நிதியில் உங்கள் ஆத்துமாக்க
ளுக்காகப் பாவநிவிர்த்தி செய்யும்பொருட்டு,
இஸ்ரவேல் புத்திரருக்கு [18]ஞாபகக்குறியாயி
ருக்கும் என்றார்.
பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி: 17
கழுவுகிறதற்கு வெண்கலத்தால் [19]ஒரு தொட் 18
டியையும், வெண்கலத்தால் அதின் பாதத்தை
யும் உண்டாக்கி, அதை ஆசரிப்புக் கூடாரத்
திற்கும் பலிபீடத்திற்கும் நடுவே வைத்து,
அதிலே தண்ணீர் வார்ப்பாயாக. அதனிடத் 19
தில் ஆரோனும் அவன் குமாரரும் தங்கள்
[20]கைகளையும் தங்கள் கால்களையும் கழுவக்கட

1 மத். 23. 19
2 எண். 28. 3, 4. தானி. 9. 21, 27. யோ. 1. 29. வெளி. 5. 9, 12
3 எண். 17. 4
4 எண். 28. 6. தானி. 8. 11, 12, 13
5 2 நாளா. 5. 14. எசே. 43. 5. ஆகா. 2. 7, 9. மல். 3, 1
6 லேவி. 26. 12. சங். 68. 19. சகரி. 2. 10. யோ. 14. 17. 2 கொ. 6. 16. வெளி. 21. 3
7 யாத். 37. 25. வெளி. 8. 3
8 யாத். 26. 31. மத். 27. 51. எபி 9. 3
9 யாத். 25. 21
10 1 சாமு. 2. 28. 1 நாளா. 23. 13. லூ. 1. 9
11 லேவி. 10. 1
12 லேவி. 16. 18. எபி. 9. 7, 25
13 எண். 1. 2; 26. 2
14 2 சாமு. 24. 2, 15
15 எண். 31. 50. யோபு 33. 24. சங். 49. 7. மத். 20. 28. 1 தீமோ. 2. 6. 1 பே. 1. 18, 19
16 மத். 17. 24
17 யோபு 34. 19. நீதி. 22. 2. எபே. 6. 9. கொலோ. 3. 25
18 எண். 16. 40
19 யாத். 38. 8. 1 இரா. 7. 38
20 சங். 26. 6, 7. ஏசா. 52. 11. யோ. 13. 10. எபி. 10. 22

20 வர்கள். அவர்கள் ஆசரிப்புக் கூடாரத்திற்
குள் பிரவேசிக்கும்போதும், கர்த்தருக்குத் தக
னத்தைக் கொளுத்தவும் பலிபீடத்தினிடத்தில்
ஆராதனைசெய்யவும் சேரும்போதும், அவர்
கள் சாகாதபடிக்குத் தண்ணீரினால் தங்களைக்
21 கழுவக்கடவர்கள். அவர்கள் சாகாதபடிக்குத்
தங்கள் கைகளையும் தங்கள் கால்களையும் கழு
வக்கடவர்கள்; இது தலைமுறைதோறும் அவ
னுக்கும் அவன் சந்ததியாருக்கும் நித்திய கட்
டளையாயிருக்கும் என்றார்.
22 பின்னும் கர்த்தர் மோசேயை நோக்கி:
23 மேன்மையான [1]சுகந்தவர்க்கங்களாகிய சுத்த
மான வெள்ளைப்போளத்தில் பரிசுத்த ஸ்த
லத்தின் சேக்கலின்படி ஐந்நூறு சேக்கல்
இடையையும், சுகந்த கருவாப்பட்டையிலே
அதில் பாதியாகிய இருநூற்று ஐம்பது சேக்
கல் இடையையும், சுகந்த வசம்பில் இருநூற்று
24 ஐம்பது சேக்கல் இடையையும், இலவங்கப்
பட்டையில் ஐந்நூறு சேக்கல் இடையையும்,
ஒலிவ எண்ணெயில் ஒரு குடம் எண்ணெ
25 யையும் எடுத்து, அதனால், பரிமளதைலக்
காரன் செய்வதுபோல, கூட்டப்பட்ட பரிமள
தைலமாகிய சுத்தமான அபிஷேகதைலத்தை
உண்டுபண்ணுவாயாக; [2]அது பரிசுத்த அபி
26 ஷேகதைலமாயிருக்கக்கடவது. அதினாலே
ஆசரிப்புக் [3]கூடாரத்தையும், சாட்சிப்பெட்டி
27 யையும், மேசையையும், அதின் பணிமுட்
டுகள் எல்லாவற்றையும், குத்துவிளக்கையும்,
அதின் கருவிகளையும், தூபபீடத்தையும்,
28 தகனபலிபீடத்தையும், அதின் பணிமுட்டுகள்
எல்லாவற்றையும், தொட்டியையும், அதின்
29 பாதத்தையும் அபிஷேகம்பண்ணி, அவைகள்
மகா பரிசுத்தமாயிருக்கும்படிக்கு, அவைக
ளைப் பரிசுத்தப்படுத்துவாயாக; [4]அவைகளைத்
தொடுகிறதெல்லாம் பரிசுத்தமாயிருக்கும்.
30 ஆரோனும் அவன் குமாரரும் எனக்கு ஆசா
ரிய ஊழியம் செய்யும்படிக்கு, நீ அவர்களை
அபிஷேகம்பண்ணி, அவர்களைப் பரிசுத்தப்
31 படுத்துவாயாக. இஸ்ரவேல் புத்திரரோடே
நீ பேசிச் சொல்லவேண்டியதாவது: உங்கள்
தலைமுறைதோறும் இது எனக்குரிய பரிசுத்த
32 அபிஷேகதைலமாயிருக்கவேண்டும். இது
மனிதருடைய சரீரத்தின்மேல் வார்க்கப்பட
லாகாது; இது செய்யப்பட்ட முறையின்படி
அவர்கள் வேறொரு தைலத்தைச் செய்யவுங்
கூடாது; இது பரிசுத்தமானது, இது உங்
33 களுக்குப் பரிசுத்தமாயிருப்பதாக. இந்த முறை
யின்படியே தைலங்கூட்டுகிறவனும், அதில்
எடுத்து அந்நியன்மேல் வார்க்கிறவனும், தன்
ஜனத்தில் இராதபடிக்கு அறுப்புண்டு போகக்
கடவன் என்று சொல் என்றார்.
34 பின்னும் கர்த்தர் மோசேயை நோக்கி: சுத்த
வெள்ளைப்போளமும் குங்கிலியமும் அல்பான்
பிசினுமாகிய கந்தவர்க்கங்களையும் சுத்தமான
சாம்பிராணியையும் நீ சமநிறையாக எடுத்து,
35 தைலக்காரன் செய்கிறதுபோல அதற்குப்
பரிமளமேற்றி, துப்புரவான பரிசுத்த தூப

[1] உன்னத. 4. 14. எசே. 27. 22. சங். 45. 8. நீதி. 7.17. வெளி. 6.20
[2] சங். 89. 20
[3] லேவி. 8. 10
[4] யாத். 29. 37
[5] லேவி. 16. 2
[6] எசா. 45. 3, 4
[7] 1 இரா. 3. 9; 7. 14
[8] நீதி. 2. 6, 7
[9] யாத். 37, 38. அதி. எசே. 43. அதி
[10] லேவி. 19. 3, 30. எசே. 20. 12, 20
[11] உபா. 5. 12. எசா. 58. 13. எசே. 44. 24

வர்க்கமாக்கி, அதில் கொஞ்சம் எடுத்துப் 36
பொடியாக இடித்து, நான் உன்னைச் [5]சந்திக்
கும் ஆசரிப்புக் கூடாரத்திலிருக்கும் சாட்சி
சந்நிதியில் வைப்பாயாக; அது உங்களுக்கு
மகா பரிசுத்தமாயிருக்கக்கடவது. இந்தத் தூப 37
வர்க்கத்தை நீ செய்யவேண்டிய முறையின்
படி உங்களுக்காகச் செய்துகொள்ளலாகாது;
இது கர்த்தருக்கென்று உனக்குப் பரிசுத்தமா
யிருப்பதாக. இதற்கு ஒப்பானதை முகருகிற 38
தற்காகச் செய்கிறவன் தன் ஜனத்தில் இராத
படி அறுப்புண்டு போகக்கடவன் என்றார்.
பின்னும் கர்த்தர் மோசேயை நோக்கி: 31
நான் யூதாவின் கோத்திரத்தில் ஊருடைய 2
மகனான ஊரியின் குமாரன் பெசலெயேலைப்
[6]பேர்சொல்லி அழைத்து, விநோதமான 3
வேலைகளை அவன் யோசித்துச் செய்கிறதற்
கும், பொன்னிலும் வெள்ளியிலும் வெண்
கலத்திலும் வேலைசெய்கிறதற்கும், இரத்தி 4
னங்களை முத்திரைவெட்டாக வெட்டிப் பதிக்
கிறதற்கும், மரத்தில் சித்திரவேலைகளைச் செய்
கிறதற்கும், மற்றும் சகலவித வேலைகளையும் 5
யூகித்துச் செய்கிறதற்கும் வேண்டிய ஞான
மும் புத்தியும் அறிவும் அவனுக்கு உண்டாக,
[7]அவனைத் தேவஆவியினால் நிரப்பினேன்.
மேலும், தாண் கோத்திரத்திலுள்ள அகிசாமா 6
கின் குமாரனாகிய அகோலியாபையும் அவ
னோடே துணையாகக் கூட்டினதுமன்றி,
[8]ஞான இருதயமுள்ள யாவருடைய இருதய
த்திலும் ஞானத்தை அருளினேன்; நான் உன
க்குக் கட்டளையிட்ட யாவையும் [9]அவர்கள்
செய்வார்கள். ஆசரிப்புக் கூடாரத்தையும் 7
சாட்சிப்பெட்டியையும் அதின்மேலுள்ள கிரு
பாசனத்தையும், கூடாரத்திலுள்ள சகல பணி
முட்டுகளையும், மேசையையும் அதின் பணி 8
முட்டுகளையும், சுத்தமான குத்துவிளக்கையும்
அதின் சகல கருவிகளையும், தூபபீடத்தையும்,
தகனபலிபீடத்தையும் அதின் சகல பணி 9
முட்டுகளையும், தொட்டியையும் அதின் பாத
த்தையும், ஆராதனை வஸ்திரங்களையும், ஆசா 10
ரிய ஊழியம் செய்வதற்கான ஆசாரியனாகிய
ஆரோனின் பரிசுத்த வஸ்திரங்களையும்,
அவன் குமாரரின் வஸ்திரங்களையும், அபி 11
ஷேகதைலத்தையும், பரிசுத்த ஸ்தலத்துக்குச்
சுகந்த வர்க்கங்களாகிய தூபவர்க்கத்தையும்,
நான் உனக்குக் கட்டளையிட்டபடியே, அவர்
கள் செய்யவேண்டும் என்றார்.
மேலும், கர்த்தர் மோசேயினிடத்தில்: 12
நீ இஸ்ரவேல் புத்திரரை நோக்கி, நீங்கள் என் 13
ஓய்வுநாட்களை [10]ஆசரிக்கவேண்டும்; உங்களைப்
பரிசுத்தப்படுத்துகிற கர்த்தர் நான் என்பதை
நீங்கள் அறியும்படி, இது உங்கள் தலைமுறை
தோறும் எனக்கும் உங்களுக்கும் அடையாள
மாயிருக்கும். ஆகையால், ஓய்வுநாளை [11]ஆச 14
ரிப்பீர்களாக; அது உங்களுக்குப் பரிசுத்தமா
னது; அதைப் பரிசுத்தக் குலைச்சலாக்குகிற
வன் கொலையுண்கக்கடவன்; அதிலே வேலை
செய்கிற எந்த ஆத்துமாவும் தன் ஜனத்தின் நடு

வில் இராதபடிக்கு அறுப்புண்டுபோவான்.
15 ஆறுநாளும் வேலைசெய்யலாம்; ஏழாம் நாளோ
[1]வேலை ஒழிந்திருக்கும் ஓய்வுநாள்; அது **கர்த்தருக்குப்** பரிசுத்தமானது; ஓய்வுநாளில் வேலை
செய்கிறவன் எவனும் கொலைசெய்யப்பட
16 வேண்டும். ஆகையால், இஸ்ரவேல் புத்திரர்
தங்கள் தலைமுறைதோறும் ஓய்வுநாளை நித்திய
உடன்படிக்கையாக ஆசரிக்கும்படி, அதைக்
17 கைக்கொள்ளக் கடவர்கள். அது என்றைக்
கும் எனக்கும் இஸ்ரவேல் புத்திரருக்கும்
[2]அடையாளமாயிருக்கும்;[3]ஆறுநாளைக்குள்ளே
**கர்த்தர்** வானத்தையும் பூமியையும் உண்டா
க்கி, ஏழாம் நாளிலே ஓய்ந்திருந்து பூரித்தார்
என்றார்.
18 சீனாய்மலையில் அவர் மோசேயோடே பேசி
முடிந்தபின், தேவனுடைய விரலினால் எழு
தப்பட்ட கற்பலகைகளாகிய சாட்சியின் [4]இர
ண்டு பலகைகளை அவனிடத்தில் கொடுத்தார்.

**32** மோசே மலையிலிருந்து இறங்கிவரத்
[5]தாமதிக்கிறதை ஜனங்கள் கண்டபோது,
அவர்கள் ஆரோனிடத்தில் கூட்டங்கூடி,
அவனைநோக்கி: எகிப்துதேசத்திலிருந்து எங்
களை [6]அழைத்துக்கொண்டுவந்த அந்த மோசே
க்கு என்னசம்பவித்ததோ அறியோம்; ஆதலால்
நீர் எழுந்து, எங்களுக்கு முன்செல்லும் [7]தெய்
வங்களை எங்களுக்காக உண்டுபண்ணும் என்
2 றார்கள். அதற்கு ஆரோன்: உங்கள் மனைவி
கள் குமாரர் குமாரத்திகளுடைய காதுகளில்
இருக்கிற [8]பொன்னணிகளைக் கழற்றி, என்
னிடத்தில் கொண்டுவாருங்கள் என்றான்.
3 ஜனங்கள் எல்லாரும் தங்கள் காதுகளில்
இருந்த பொன்னணிகளைக் கழற்றி, ஆரோ
4 னிடத்தில் கொண்டுவந்தார்கள். அவர்கள்
கையிலிருந்து அவன் அந்தப் பொன்னை
வாங்கி, சிற்பக்கருவியினால் கருப்பிடித்து,
ஒரு [9]கன்றுக்குட்டியை வார்ப்பித்தான். அப்
பொழுது அவர்கள்: இஸ்ரவேலரே, உங்களை
எகிப்துதேசத்திலிருந்து அழைத்துக்கொண்டு
வந்த உங்கள் தெய்வங்கள் இவைகளே என்
5 றார்கள். ஆரோன் அதைப் பார்த்து, அதற்கு
முன்பாக ஒரு பலிபீடத்தைக் கட்டி, [10]நாளைக்
குக் **கர்த்தருக்குப்** பண்டிகை என்று கூறி
6 னான். மறுநாள் அவர்கள் அதிகாலையில் எழு
ந்து, சர்வாங்க தகனபலிகளை யிட்டு, சமாதான
பலிகளைச் செலுத்தினார்கள்; பின்பு, ஜனங்
கள் [11]புசிக்கவும் குடிக்கவும் உட்கார்ந்து, விளை
யாட எழுந்தார்கள்.
7 அப்பொழுது **கர்த்தர்** மோசேயை நோக்கி:
நீ இறங்கிப்போ; எகிப்துதேசத்திலிருந்து நீ
நடத்திக்கொண்டுவந்த உன் ஜனங்கள் தங்க
8 ளைக் [12]கெடுத்துக்கொண்டார்கள். அவர்களு
க்கு நான் விதித்த வழியை அவர்கள் சீக்கிர
மாய் விட்டு விலகினார்கள்; அவர்கள் தங்க
ளுக்கு ஒரு கன்றுக்குட்டியை வார்ப்பித்து,
அதைப் பணிந்துகொண்டு, அதற்குப் பலி
யிட்டு: இஸ்ரவேலரே, உங்களை எகிப்துதேச
த்திலிருந்து அழைத்துக்கொண்டுவந்த [13]உங்
கள் தெய்வங்கள் இவைகளே என்று சொன்
னார்கள் என்றார். பின்னும் **கர்த்தர்** மோசே 9
யை நோக்கி: இந்த ஜனங்களைப் பார்த்தேன்;
[14]இவர்கள் வணங்காக் கழுத்துள்ள ஜனங்கள்.
ஆகையால் என் கோபம் இவர்கள்மேல் மூள 10
வும், நான் இவர்களை அழித்துப்போடவும் நீ
என்னை விட்டுவிடு; [15]உன்னை ஒரு பெரிய
ஜாதியாக்குவேன் என்றார். மோசே தன் 11
தேவனாகிய **கர்த்தரை** நோக்கி: **கர்த்தாவே,**
தேவரீர் மகா பலத்தினாலும் வல்லமையுள்ள
கையினாலும் எகிப்துதேசத்திலிருந்து புறப்
படப்பண்ணின உம்முடைய ஜனங்களுக்கு
விரோதமாக உம்முடைய [16]கோபம் பற்றி
யெரிவதென்ன? மலைகளில் அவர்களைக் 12
கொன்றுபோடவும், பூமியின்மேல் இராத
படிக்கு அவர்களை நிர்மூலமாக்கவும், அவர்க
ளுக்குத் தீங்குசெய்யும்பொருட்டே [17]அவர்க
ளைப் புறப்படப்பண்ணினார் என்று எகிப்தி
யர் சொல்லுவானேன்? உம்முடைய கோபத்
தின் [18]உக்கிரத்தை விட்டுத் திரும்பி, உமது
ஜனங்களுக்குத் தீங்குசெய்யாதபடிக்கு, அவர்
கள்மேல் பரிதாபங்கொள்ளும். உமது தாச 13
ராகிய ஆபிரகாமையும் ஈசாக்கையும் இஸ்ர
வேலையும் நினைத்தருளும்: [19]உங்கள் சந்ததி
யை வானத்து நட்சத்திரங்களைப்போலப் பெரு
கப்பண்ணி, நான் சொன்ன இந்தத் தேசம்
முழுவதையும் உங்கள் சந்ததியார் என்றைக்
கும் சுதந்தரித்துக்கொள்ளும்படிக்கு, அவர்க
ளுக்குக் கொடுப்பேன் என்று உம்மைக்கொ
ண்டே அவர்களுக்கு ஆணையிட்டுச் சொன்
னீரே என்று கெஞ்சிப் பிரார்த்தித்தான்.
அப்பொழுது **கர்த்தர்** தமது ஜனங்களுக்குச் 14
செய்ய நினைத்த தீமையைச் செய்யாதபடிக்குப்
[20]பரிதாபங்கொண்டார்.
பின்பு மோசே மலையிலிருந்து இறங்கினான்; 15
சாட்சிப்பலகைகள் இரண்டும் அவன் கையில்
இருந்தது; அந்தப் பலகைகள் இருபுறமும்
எழுதப்பட்டிருந்தது, அவைகள் இந்தப்பக்கத்
திலும் அந்தப்பக்கத்திலும் எழுதப்பட்டிருந்
தது. அந்தப் பலகைகள் தேவனால் செய்யப் 16
பட்டதாயும், அவைகளிலே பதிந்த எழுத்து
[21]தேவனால் எழுதப்பட்ட எழுத்துமாயிருந்தது.
ஜனங்கள் ஆரவாரம்பண்ணுகிறதை யோசுவா 17
கேட்டு, மோசேயை நோக்கி: பாளயத்தில்
யுத்தத்தின் இரைச்சல் உண்டாயிருக்கிறது
என்றான். அதற்கு மோசே: அது ஜயதொனி 18
யாகிய சத்தமும் அல்ல, அபஜயதொனியா
கிய சத்தமும் அல்ல; பாடலின் சத்தம் எனக்
குக் கேட்கிறது என்றான். அவன் பாளயத் 19
துக்குச் சமீபித்து, அந்தக் கன்றுக்குட்டியை
யும் [22]நடனத்தையும் கண்டபோது, மோசே
கோபம் மூண்டவனாகி, தன் கையிலே இரு
ந்த பலகைகளை மலையின் அடியிலே எறிந்து
உடைத்துப்போட்டு; அவர்கள் உண்டுபண் 20
ணின கன்றுக்குட்டியை [23]எடுத்து, அக்கினி
யில் சுட்டெரித்து, அதைப் பொடியாக அரை
த்து, தண்ணீரின்மேல் தூவி, அதை இஸ்ர

1 ஆதி. 2. 2
2 எசே. 20. 12, 20
3 ஆதி. 1. 31; 2. 2
4 யாத். 24. 12. உபா. 4. 13. 2 கொ. 3. 3
5 யாத். 24. 18. உபா. 9. 9
6 எத். 24. 48. 2 பே. 3. 4
7 அப். 7. 40
8 ஆதி. 24. 22. நியா. 8. 24, 27. எசே. 16. 12, 17. ஓசி. 2. 8
9 யாத். 20. 23. உபா. 9. 16. நியா. 17. 3, 4. 1 இரா. 12. 28. நெகே. 9. 18. சங். 106. 19. ஏசா. 40. 18, 19. ரோ. 1. 23
10 2 இரா. 10. 20
11 1 கொ. 10. 7
12 ஆதி. 6. 11, 12. உபா. 4. 16. நியா. 2. 19. ஓசி. 9. 9
13 1 இரா. 12. 28
14 2 நாளா. 30. 8. ஏசா. 48. 4
15 எண். 14. 12. சங். 106. 23
16 உபா. 9. 18, 20. சங். 74. 1, 2
17 உபா. 32. 26, 27
18 சங். 90. 13
19 ஆதி. 22. 16. எபி. 6. 13
20 2 சாமு. 24. 16. சங். 106. 45. எரே. 18. 8. யோவேல் 2. 13
21 யாத். 31. 18. உபா. 9. 10. எபி. 8. 10
22 உபா. 9. 16, 17
23 உபா. 9. 21

வேல் புத்திரர் குடிக்கும்படி செய்தான்.
21 பின்பு, மோசே ஆரோனை நோக்கி: நீ இந்த
ஜனங்கள்மேல் இந்தப் பெரும்பாதகத்தைச்
சுமத்துகிறதற்கு, [1]இவர்கள் உனக்கு என்ன
22 செய்தார்கள் என்றான். அதற்கு ஆரோன்:
என் ஆண்டவனுக்குக் கோபம் மூளாதிருப்ப
தாக; [2]இது பொல்லாத ஜனம் என்று நீர்
23 அறிந்திருக்கிறீர். இவர்கள் என்னை நோக்கி:
எங்களுக்கு முன்செல்லும் தெய்வங்களை எங்
களுக்கு உண்டுபண்ணும்; எகிப்துதேசத்தி
லிருந்து எங்களை அழைத்துக்கொண்டுவந்த
அந்த மோசேக்கு என்ன சம்பவித்ததோ அறி
24 யோம் என்றார்கள். அப்பொழுது நான்:
பொன்னுடைமை உடையவர்கள் எவர்களோ
அவர்கள் அதைக் கழற்றித் தரக்கடவர்கள்
என்றேன்; அவர்கள் அப்படியே செய்தார்
கள்; அதை அக்கினியிலே போட்டேன்,
அதிலிருந்து இந்தக் கன்றுக்குட்டி வந்தது
என்றான்.
25 ஜனங்கள் தங்கள் பகைவருக்குள் அவமா
னப்படத்தக்கதாக [3]ஆரோன் அவர்களை நிர்வா
ணமாக்கியிருந்தான். அவர்கள் நிர்வாணமாயி
26 ருக்கிறதை மோசே கண்டு, பாளயத்தின்
வாசலில் நின்று: **கர்த்தருடைய** பட்சத்தில்
இருக்கிறவர்கள் யார்? அவர்கள் என்னிடத்
தில் சேரக்கடவர்கள் என்றான். அப்பொழுது
லேவியின் புத்திரர் எல்லாரும் அவனிடத்தில்
27 கூடிவந்தார்கள். அவன் அவர்களை நோக்கி:
உங்களில் ஒவ்வொருவனும் தன் பட்டயத்
தைத் தன் அரையிலே கட்டிக்கொண்டு, பாள
யமெங்கும் உள்ளும் புறம்பும் வாசலுக்கு
வாசல் போய், [4]ஒவ்வொருவனும் தன் தன்
சகோதரனையும் ஒவ்வொருவனும் தன் தன்
சிநேகிதனையும் ஒவ்வொருவனும் தன் தன்
அயலானையும் கொன்றுபோடக்கடவன்
என்று இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்**
28 சொல்லுகிறார் என்றான். லேவியின் புத்தி
ரர் [5]மோசே சொன்னபடியே செய்தார்கள்;
அந்நாளில் ஜனங்களில் ஏறக்குறைய மூவா
29 யிரம்பேர் விழுந்தார்கள். **கர்த்தர்** இன்றைக்கு
உங்களுக்கு [6]ஆசீர்வாதம் அளிக்கும்படி, இன்
றைக்கு நீங்கள் அவனவன் தன் தன் மகனுக்
கும் சகோதரனுக்கும் விரோதமாயிருக்கிறதி
னால், கர்த்தருக்கு உங்களைப் பிரதிஷ்டை
பண்ணுங்கள் என்று மோசே சொல்லியிருக்
30 தான். மறுநாளில் மோசே ஜனங்களை நோக்கி:
[7]நீங்கள் மகா பெரிய பாவம் செய்தீர்கள்;
உங்களுக்காகப் [8]பாவநிவிர்த்தி செய்யக்கூடு
மோ என்று அறிய இப்பொழுது நான் **கர்த்**
**தரிடத்துக்கு** ஏறிப்போகிறேன் என்றான்.
31 அப்படியே மோசே **கர்த்தரிடத்துக்குத்** திரும்
பிப் போய்: ஐயோ, இந்த ஜனங்கள் பொன்
னினால் தங்களுக்குத் தெய்வங்களை உண்
டாக்கி, மகா பெரிய பாவம் செய்திருக்கிறார்
32 கள். ஆகிலும், தேவரீர் அவர்கள் பாவத்தை
மன்னித்தருளுவீரானால் மன்னித்தருளும்;
இல்லாவிட்டால் [9]நீர் எழுதின உம்முடைய

1 ஆதி. 20. 9
2 உபா. 31. 27
3 யாத். 33. 4, 5 2 நாளா. 28. 19 ஏசா. 47. 3. மீகா 1. 11. வெளி. 3. 18
4 எண். 25. 5
5 உபா. 33. 9. மல். 2. 4-6
6 எண். 14. 12. சங். 106. 23
7 1 சாமு. 12. 20 23
8 எண். 25. 13. யோபு 42. 7, 8. ஆமோ. 5. 15. யாத். 5. 16
9 சங். 69. 28. தானி. 12. 1. ரோ. 9. 3. பிலி. 4. 3 வெளி. 3. 5
10 சங். 69. 28
11 யாத். 23. 20. எண். 20. 16. ஏசா. 63. 9
12 உபா. 32. 35. ஆமோஸ் 3. 14 ரோ. 2. 5, 6
13 2 சாமு. 12. 9. அப். 7. 41
14 ஆதி. 12. 7. யாத். 32. 7, 13
15 யாத். 32. 34
16 யோசு. 24. 11
17 யோபு 1. 20. ஏசா. 32. 11. எசே. 26. 16
18 யாத். 29. 42, 43
19 2 சாமு. 21. 1
20 சங். 99. 7

புஸ்தகத்திலிருந்து என் பேரைக் கிறுக்கிப்
போடும் என்றான். அப்பொழுது **கர்த்தர்** 33
மோசேயை நோக்கி: [10]எனக்கு விரோதமாய்ப்
பாவம்செய்தவன் எவனோ, அவன் பேரை
என் புஸ்தகத்திலிருந்து கிறுக்கிப்போடு
வேன். இப்பொழுது நீ போய், நான் உனக் 34
குச் சொன்ன இடத்துக்கு ஜனங்களை அழைத்
துக்கொண்டுபோ; என் [11]தூதனானவர் உனக்கு
முன் செல்லுவார்; ஆகிலும், நான் [12]விசா
ரிக்கும் நாளில் அவர்களுடைய பாவத்தை
அவர்களிடத்தில் விசாரிப்பேன் என்றார்.
ஆரோன் செய்த [13]கன்றுக்குட்டியை ஜனங் 35
கள் செய்வித்ததின் நிமித்தம் **கர்த்தர்** அவர்
களை உபாதித்தார்.

## 33

**கர்த்தர்** மோசேயை நோக்கி: [1]நீயும், எகி
ப்து தேசத்திலிருந்து நீ அழைத்துக்கொண்டு
வந்த ஜனங்களும் இவ்விடத்தை விட்டுப் புறப்
பட்டு, [14]உன் சந்ததிக்குக் கொடுப்பேன்
என்று நான் ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும்
யாக்கோபுக்கும் ஆணையிட்டுக்கொடுத்த பா
லும் தேனும் ஓடுகிற தேசத்துக்குப் போங்கள்.
நான் ஒரு [15]தூதனை உங்களுக்கு முன்பாக 2
அனுப்பி, [16]கானானியனையும் எமோரியனையும்
ஏத்தியனையும் பெரிசியனையும் ஏவியனையும்
எபூசியனையும் துரத்திவிடுவேன். ஆனாலும், 3
வழியிலே நான் உங்களை நிர்மூலம்பண்ணாத
படிக்கு, நான் உங்கள் நடுவே செல்லமாட்
டேன், நீங்கள் வணங்காக் கழுத்துள்ள ஜனங்
கள் என்றார். துக்கமான இவ்வார்த்தைகளை 4
ஜனங்கள் கேட்டபோது, ஒருவரும் தங்கள்
ஆபரணங்களைப் போட்டுக்கொள்ளாமல் துக்
கித்துக்கொண்டிருந்தார்கள். ஏனென்றால், 5
நீங்கள் வணங்காக் கழுத்துள்ள ஜனங்கள், நான்
ஒரு நிமிஷத்தில் உங்கள் நடுவில் எழும்பி,
உங்களை நிர்மூலம்பண்ணுவேன்; ஆகையால்,
நீங்கள் [17]போட்டிருக்கிற உங்கள் ஆபரணங்
களைக் கழற்றிப்போடுங்கள்; அப்பொழுது
நான் உங்களுக்குச் செய்யவேண்டியதை அறி
வேன் என்று இஸ்ரவேல் புத்திரருக்குச்
சொல் என்று **கர்த்தர்** மோசேயோடே சொல்
லியிருந்தார். ஆகையால், இஸ்ரவேல் புத் 6
திரர் ஓரேப் மலையருகே தங்கள் ஆபரணங்க
ளைக் கழற்றிப்போட்டார்கள்.
மோசே கூடாரத்தைப் பெயர்த்து, [18]அதைப் 7
பாளயத்துக்குப் புறம்பே தூரத்திலே போட்டு,
அதற்கு ஆசரிப்புக் கூடாரம் என்று பேரிட்
டான். **கர்த்தரைத்** தேடும் [19]யாவரும் பாளயத்
துக்குப் புறம்பான ஆசரிப்புக் கூடாரத்துக்
குப் போவார்கள். மோசே கூடாரத்துக்குப் 8
போகும்போது, ஜனங்கள் எல்லாரும் எழுந்
திருந்து, தங்கள் தங்கள் கூடாரவாசலில் நின்
றுகொண்டு, அவன் கூடாரத்துக்குள் பிரவே
சிக்குமட்டும், அவன் பின்னே பார்த்துக்கொ
ண்டிருந்தார்கள். மோசே கூடாரத்துக்குள் 9
பிரவேசிக்கையில், மேகஸ்தம்பம் இறங்கி,
கூடாரவாசலில் நின்றது; **கர்த்தர்** மோசே
யோடே [20]பேசினார். ஜனங்கள் எல்லாரும் 10

மேகஸ்தம்பம் கூடாரவாசலில் நிற்கக் கண்
டார்கள்; ஜனங்கள் எல்லாரும் எழுந்திருந்து,
தங்கள் தங்கள் கூடாரவாசலில் பணிந்துகொ
11 ண்டார்கள். ஒருவன் தன் [1]சிநேகிதனோடே
பேசுவதுபோல, **கர்த்தர்** மோசேயோடே
முகமுகமாய்ப் பேசினார்; பின்பு, அவன் பாள
யத்துக்குத் திரும்பினான்; நூனின் குமாரனா
கிய யோசுவா என்னும் அவனுடைய பணி
விடைக்காரனாகிய வாலிபன் ஆசரிப்புக்
கூடாரத்தை விட்டுப் பிரியாதிருந்தான்.
12 மோசே **கர்த்தரை** நோக்கி: தேவரீர் [2]இந்த
ஜனங்களை அழைத்துக்கொண்டுபோ என்று
சொன்னீர்; ஆகிலும், என்னோடேகூட இன்
னாரை அனுப்புவேன் என்பதை எனக்கு நீர்
அறிவிக்கவில்லை; என்றாலும், உன்னைப் [3]பேர்
சொல்லி அழைத்து அறிந்திருக்கிறேன் என்
றும், என் கண்களில் உனக்குக் கிருபை
கிடைத்தது என்றும், தேவரீர் சொன்ன
13 துண்டே; உம்முடையகண்களில் இப்பொ
ழுது எனக்குக் கிருபை கிடைத்ததானால்
நான் உம்மை அறிவதற்கும், உம்முடைய
[4]கண்களில் எனக்குக் கிருபை கிடைப்பதற்
கும், உம்முடைய வழியை எனக்கு அறிவி
யும்; இந்த ஜாதி உம்முடைய ஜனமென்று
14 நினைத்தருளும் என்றான். அதற்கு அவர்:
என் [5]சமுகம் உனக்கு முன்பாகச் செல்லும்,
நான் உனக்கு [6]இளைப்பாறுதல் தருவேன் என்
15 றார். அப்பொழுது அவன் அவரை நோக்கி:
உம்முடைய [7]சமுகம் என்னோடேகூடச்
செல்லாமற்போனால், எங்களை இவ்விடத்தி
16 லிருந்து கொண்டுபோகாதிரும். எனக்கும்
உமது ஜனங்களுக்கும் உம்முடைய கண்க
ளிலே கிருபை கிடைத்ததென்பது எதினால்
அறியப்படும்; நீர் எங்களோடே வருவதினால்
அல்லவா? [8]இப்படியே பூமியின்மேலுள்ள
ஜனங்கள் எல்லாரிலும், நானும் உம்முடைய
ஜனங்களும் விசேஷித்தவர்கள் என்று விளங்
கும் என்றான்.
17 அப்பொழுது **கர்த்தர்** மோசேயை நோக்கி:
[9]நீ சொன்ன இந்த வார்த்தையின்படியே செய்
வேன்; என் கண்களில் உனக்குக் கிருபை
கிடைத்தது; உன்னைப் பேர்சொல்லி அழை
18 த்து அறிந்திருக்கிறேன் என்றார். அப்பொ
ழுது அவன்: உம்முடைய [10]மகிமையை எனக்
19 குக் காண்பித்தருளும் என்றான். அதற்கு
அவர்: என்னுடைய [11]தயையை எல்லாம்
நான் உனக்கு முன்பாகக் கடந்துபோகப்
பண்ணி, **கர்த்தருடைய** நாமத்தை உனக்கு
முன்பாகக் கூறுவேன்; எவன்மேல் [12]கிரு
பையாயிருக்கச் சித்தமாயிருப்பேனோ, அவன்
மேல் கிருபையாயிருப்பேன்; எவன்மேல்
இரக்கமாயிருக்கச் சித்தமாயிருப்பேனோ,
அவன்மேல் இரக்கமாயிருப்பேன் என்று
20 சொல்லி, நீ என் முகத்தைக் காணமாட்
டாய், [13]ஒரு மனுஷனும் என்னைக் கண்டு
21 உயிரோடிருக்கக்கூடாது என்றார். பின்னும்
**கர்த்தர்**: இதோ, என்னண்டையில் ஒரு இடம்
உண்டு; நீ அங்கே கல்மலையில் நில்லு. என் 22
மகிமை கடந்துபோகும்போது, நான் உன்னை
அந்தக் கல்மலையின் [14]வெடிப்பிலே வைத்து,
நான் கடந்துபோகும்மட்டும் என் கரத்தினால்
[15]உன்னை மூடுவேன்; பின்பு, என் கரத்தை 23
எடுப்பேன்; அப்பொழுது என் பின்பக்கத்
தைக் காண்பாய்; [16]என் முகமோ காணப்ப
டாது என்றார்.
**கர்த்தர்** மோசேயை நோக்கி: [17]முந்தின **34**
கற்பலகைகளுக்கு ஒத்த இரண்டு கற்பலகை
களை இழைத்துக்கொள்; நீ உடைத்துப்போ
ட்ட முந்தின பலகைகளில் இருந்த வார்த்தை
களை அவைகளில் எழுதுவேன். விடியற்கா 2
லத்தில் நீ ஆயத்தமாகி, சீனாய்மலையில் ஏறி,
அங்கே மலையின் உச்சியில் காலமே என் சமு
கத்தில் வந்து நில். உன்னோடே ஒருவனும் 3
[18]அங்கே வரக்கூடாது; மலையிலெங்கும் ஒருவ
னும் காணப்படவுங்கூடாது; இந்த மலையின்
சமீபத்தில் ஆடுமாடு மேயவுங்கூடாது என்றார்.
அப்பொழுது மோசே முந்தின கற்பலகை 4
களுக்கு ஒத்த இரண்டு கற்பலகைகளை இழை
த்து, அதிகாலமே எழுந்திருந்து, **கர்த்தர்**
தனக்குக் கட்டளையிட்டபடியே அவ்விரண்டு
கற்பலகைகளையும் தன் கையிலே எடுத்துக்
கொண்டு, சீனாய்மலையில் ஏறினான். **கர்த்** 5
**தர்** ஒரு மேகத்தில் இறங்கி, அங்கே அவன்
அருகே நின்று, **கர்த்தருடைய** நாமத்தைக்
[19]கூறினார். **கர்த்தர்** அவனுக்கு முன்பாகக் 6
கடந்துபோகிறபோது, அவர்: **கர்த்தர்**, **கர்த்**
**தர்**; [20]இரக்கமும், கிருபையும், நீடிய சாந்த
மும், மகா தயையும், சத்தியமுமுள்ள தே
வன். ஆயிரம் தலைமுறைகளுக்கு இரக்கத் 7
தைக் காக்கிறவர்; அக்கிரமத்தையும் மீறுதலை
யும் பாவத்தையும் மன்னிக்கிறவர்; குற்றவாளி
யைக் குற்றமற்றவனாக விடாமல், [21]பிதாக்கள்
செய்த அக்கிரமத்தைப் பிள்ளைகளிடத்திலும்,
பிள்ளைகளுடைய பிள்ளைகளிடத்திலும் மூன்
றாம் நான்காம் தலைமுறைமட்டும் விசாரிக்கிற
வர் என்று கூறினார். மோசே தீவிரமாகத் 8
தரைமட்டும் குனிந்து பணிந்துகொண்டு:
ஆண்டவரே, உம்முடைய கண்களில் எனக் 9
குக் கிருபை கிடைத்ததானால், [22]எங்கள் நடு
வில் ஆண்டவர் எழுந்தருளவேண்டும்; இந்த
ஜனங்கள் வணங்காக் கழுத்துள்ளவர்கள்;
நீரோ, எங்கள் அக்கிரமத்தையும் எங்கள்
பாவத்தையும் மன்னித்து, எங்களை உமக்குச்
[23]சுதந்தரமாக ஏற்றுக்கொள்ளும் என்றான்.
அதற்கு அவர்: இதோ, நான் ஒரு [24]உடன் 10
படிக்கை பண்ணுகிறேன்; பூமி யெங்கும்
எந்த ஜாதிகளிடத்திலும் செய்யப்படாத [25]அதி
சயங்களை உன் ஜனங்கள் எல்லாருக்கு முன்
பாகவும் செய்வேன்; உன்னோடேகூட இருக்
கிற ஜனங்கள் எல்லாரும் **கர்த்தருடைய** செய்
கையைக் காண்பார்கள்; உன்னோடேகூட
இருந்து, நான் செய்யும் காரியம் [26]பயங்கா
மாயிருக்கும். இன்று நான் உனக்குக் கட் 11
டளையிடுகிறதைக் கைக்கொள்; [27]எமோரியனை

1 ஆதி. 32. 30. எண். 12. 8. உபா. 34. 10
2 யாத். 32. 34
3 ஏசா. 43. 1. எரே. 1. 5. யோ. 10. 14, 15. 2 தீமோ. 2. 19
4 சங். 86. 11. யோ. 14. 21, 23
5 ஏசா. 63. 9
6 யோசு. 23. 1. எரே. 6. 16
7 சங். 4. 6
8 உபா. 4. 7, 8, 34. 2 சாமு. 7. 23. சங். 147. 20. 2 சொ. 6. 17
9 ஆதி. 19. 21. யாக். 5. 16
10 1 தீமோ. 6. 16
11 யாத். 34. 5, 7. எரே. 31. 14
12 ரோ. 4. 4, 16; 9. 15, 18
13 யோ. 1. 18. 1 தீமோ. 6. 16. எபி. 1. 1-3
14 ஏசா. 2. 21
15 சங். 91. 1, 4
16 யோ. 1. 18
17 யாத். 32. 16, 19. உபா. 10. 1-4
18 யாத். 19. 12, 13
19 நீதி. 18. 10
20 எண். 14. 18. நெகே. 9. 17. சங். 86. 15; 103. 8. யோவேல் 2. 13. யோனா 4. 2. ரோ. 2. 4
21 யாத். 20. 5, 6
22 யாத். 33. 15, 16
23 உபா. 32. 9. சங். 33. 12. எரே. 10. 16. சக. 2. 12
24 உபா. 5. 2, 3
25 உபா. 4. 32-37. சங். 78. 12
26 சங். 65. 5
27 உபா. 7. 1, 19; 9. 4, 5

யும், கானானியனையும், ஏத்தியனையும், பெரிசி
யனையும், ஏவியனையும், எபூசியனையும் உனக்கு
12 முன்பாகத் துரத்திவிடுகிறேன். நீ போய்ச்
சேருகிற தேசத்தின் குடிகளோடு உடன்
படிக்கை பண்ணாதபடிக்கு எச்சரிக்கையா
யிரு; பண்ணினால் அது உன் நடுவில் [1]கண்
13 ணியாயிருக்கும். அவர்களுடைய பலிபீடங்
களை இடித்து, அவர்கள் சிலைகளைத் தகர்த்து,
அவர்கள் தோப்புகளை வெட்டிப்போடுங்கள்.
14 **கர்த்தருடைய** நாமம் [2]எரிச்சலுள்ளவர் என்
பது, அவர் எரிச்சலுள்ள தேவனே; [3]ஆகை
யால், அந்நியதேவனை நீ பணிந்துகொள்ள
15 வேண்டாம். அந்தத் தேசத்தின் குடிகளோடே
உடன்படிக்கை பண்ணுவாயானால், அவர்கள்
தங்கள் தேவர்களைச் சோரமார்க்கமாய்ப் பின்
பற்றி, தங்களுடைய தேவர்களுக்குப் பலி
யிடுவார்கள்; ஒருவன் உன்னை அழைக்கை
யில், நீ போய், அவன் பலியிட்டதிலே புசிப்
16 பாய்; அவர்கள் குமாரத்திகளில் [4]உன் குமா
ரருக்குப் பெண்களைக் கொள்ளுவாய்; அவர்
கள் குமாரத்திகள் தங்கள் தேவர்களைச் சோர
மார்க்கமாய்ப் பின்பற்றுவதும் அல்லாமல்,
உன் குமாரரையும் தங்கள் தேவர்களைச் சோர
மார்க்கமாய்ப் பின்பற்றும்படி செய்வார்கள்.
17 வார்ப்பிக்கப்பட்ட தெய்வங்களை உங்களுக்கு
18 உண்டாக்கவேண்டாம். புளிப்பில்லா [5]அப்
பப்பண்டிகையை நீங்கள் கைக்கொண்டு,
நான் உங்களுக்குக் கட்டளையிட்டபடியே,
ஆபீப் மாதத்தில் குறித்த காலத்திலே ஏழு
நாள் புளிப்பில்லா அப்பம் புசிக்கக்கடவீர்கள்;
ஆபீப் மாதத்திலே எகிப்திலிருந்து புறப்பட்
19 டாயே. கர்ப்பந்திறந்து [6]பிறக்கிற யாவும்,
உன் ஆடுமாடுகளின் தலையீற்றான ஆண்கள்
20 யாவும், என்னுடையவைகள். கழுதையின்
தலையீற்றை ஒரு [7]ஆட்டுக்குட்டியால் மீட்டுக்
கொள்வாயாக; அதை மீட்டுக்கொள்ளாதிருந்
தால் அதின் கழுத்தை முறித்துப்போடு; உன்
பிள்ளைகளில் முதற்பேறானவைகளையெல்
லாம் மீட்டுக்கொள்ளவேண்டும். [8]வெறுங்
கையோடே என் சந்நிதியில் ஒருவனும் வரக்
21 கூடாது. ஆறுநாள் வேலைசெய்து, [9]ஏழாம்
நாளிலே ஓய்ந்திருப்பாயாக; விதைப்புக்காலத்
திலும் அறுப்புக்காலத்திலும் ஓய்ந்திருப்பா
22 யாக. கோதுமை அறுப்பின் முதற்பலனைச்
செலுத்தும் ஏழு வாரங்களின் [10]பண்டிகை
யையும், வருஷமுடிவிலே சேர்ப்புக்காலபண்
23 டிகையையும் ஆசரிப்பாயாக. வருஷத்தில்
மூன்றுதரம் [11]உங்கள் ஆண்மக்கள் எல்லாரும்
இஸ்ரவேலின் தேவனாயிருக்கிற **கர்த்தராகிய**
ஆண்டவரின் சந்நிதியில் வரக்கடவர்கள்.
24 நான் [12]புறஜாதிகளை உங்கள் முன்னின்று
துரத்திவிட்டு, உங்கள் எல்லைகளை விஸ்தார
மாக்குவேன்; வருஷத்தில் மூன்றுதரம் உங்
கள் தேவனாகிய **கர்த்தருடைய** சந்நிதிக்கு
முன்பாகக் காணப்படப் போயிருக்கும்போது
[13]ஒருவரும் உங்கள் தேசத்தை இச்சிப்பதில்லை.
25 எனக்கு இடும் பலியின் இரத்தத்தைப் [14]புளித்
தமாவுடன் செலுத்தவேண்டாம்; பஸ்காபண்
டிகையின் பலியை விடியற்காலம்வரைக்கும்
வைக்கவும் வேண்டாம். உங்கள் நிலத்தில் 26
முதல் முதல் விளைந்த [15]முதற்பலத்தை உங்
கள் தேவனாகிய **கர்த்தரின்** ஆலயத்துக்குக்
கொண்டுவாருங்கள். [16]வெள்ளாட்டுக்குட்டி
யை அதின் தாயின் பாலிலே சமைக்கவேண்
டாம் என்றார். பின்னும் **கர்த்தர்** மோசேயை 27
நோக்கி: இந்த [17]வார்த்தைகளை நீ எழுது; இந்த
வார்த்தைகளின்படியே உன்னோடும் இஸ்ர
வேலோடும் உடன்படிக்கை பண்ணினேன்
என்றார். அங்கே அவன் அப்பம் புசியாமலும் 28
தண்ணீர் குடியாமலும் இரவும் பகலும் [18]நாற்
பதுநாள் **கர்த்தரோடே** இருந்தான்; அவன்
பத்துக் கற்பனைகளாகிய உடன்படிக்கையின்
வார்த்தைகளைப் [19]பலகைகளில் எழுதினான்.

மோசே சாட்சிப்பலகைகள் இரண்டையும் 29
தன் கையில் எடுத்துக்கொண்டு, சீனாய்மலையி
லிருந்து இறங்குகிறபோது, தன்னோடே
அவர் பேசினதினாலே தன் [20]முகம் பிரகாசித்
திருப்பதை அவன் அறியாதிருந்தான். ஆரோ 30
னும் இஸ்ரவேல் புத்திரர் எல்லாரும் மோசே
யைப் பார்க்கும்போது, அவன் முகம் பிர
காசித்திருப்பதைக் கண்டு, அவன் சமீபத்தில்
சேரப் பயந்தார்கள். மோசே அவர்களை 31
அழைத்தான்; அப்பொழுது ஆரோனும் சபை
யிலுள்ள பிரபுக்கள் யாவரும் அவனிடத்திற்
குத் திரும்பிவந்தார்கள்; மோசே அவர்களோ
டே பேசினான். பின்பு இஸ்ரவேல் புத்தி 32
ரர் எல்லாரும் அவனிடத்தில் சேர்ந்தார்கள்;
அப்பொழுது அவன் சீனாய்மலையில் **கர்த்தர்**
தன்னோடே பேசினவைகளையெல்லாம் அவர்
களுக்குக் [21]கற்பித்தான். மோசே அவர்க 33
ளோடே பேசி முடியுமளவும், தன் முகத்தின்
மேல் [22]முக்காடு போட்டிருந்தான். மோசே 34
**கர்த்தருடைய** சந்நிதியில் அவரோடே பேசும்
படிக்கு உட்பிரவேசித்ததுமுதல் வெளியே
புறப்படுமட்டும் முக்காடு போடாதிருந்தான்;
அவன் வெளியே வந்து தனக்குக் கற்பிக்கப்
பட்டதை இஸ்ரவேல் புத்திரரோடே சொல்
லும்போது, இஸ்ரவேல் புத்திரர் அவன் முகம் 35
பிரகாசித்திருப்பதைக் கண்டார்கள். மோசே
அவரோடே பேசும்படிக்கு உள்ளே பிரவே
சிக்கும்வரைக்கும், முக்காட்டைத் திரும்பத்
தன் முகத்தின்மேல் போட்டுக்கொள்ளுவான்.

மோசே இஸ்ரவேல் புத்திரராகிய சபை **35**
யார் எல்லாரையும் கூடிவரச்செய்து, அவர்
களை நோக்கி: நீங்கள் ஆறுநாள் [23]வேலை 2
செய்யவேண்டும், ஏழாம் நாளோ உங்களுக்
குப் பரிசுத்தநாளாய் இருப்பதாக; அது **கர்த்**
**தருக்கு** என்று ஓய்ந்திருக்கும் ஓய்வுநாள்; அதி
லே வேலைசெய்கிறவன் எவனும் கொலை
செய்யப்படக்கடவன். ஓய்வுநாளில் உங்கள் 3
வாசஸ்தலங்களில் எங்கும் நெருப்பு [24]மூட்
டாதிருப்பீர்களாக என்னும் இவ்வார்த்தைக
ளைக் கைக்கொள்ளும்படி **கர்த்தர்** கட்டளை
யிட்டார் என்றான்.

[1] பேர. 28. 12, 13
[2] யாத். 20. 5. செ. 9. 6
[3] மத் 4. 10
[4] எண். 25. 1, 2. எஸ்ற 9. 2. 2 கொ. 6. 14
[5] யாத். 12. 15. 23. 15
[6] யாத். 13. 2. எசே. 44. 20. லூ. 2. 23
[7] யாத். 13. 13
[8] உபா. 16. 16. 1 சாமு. 9. 7, 8
[9] உபா. 5. 12. லூ. 13. 14
[10] உபா. 16. 10, 13
[11] யாத். 23. 14. 17. உபா. 16. 16
[12] சங். 78. 55
[13] 2 நாளா. 17. 10. யோபு 1. 10
[14] யாத். 23. 18
[15] உபா. 26. 2, 10
[16] உபா. 14. 21
[17] உபா. 31. 9
[18] உபா. 9. 9, 18
[19] உபா. 4. 13
[20] மத். 17. 2. 2 கொ. 3. 7, 13
[21] யாத். 21. 1, 3. எண். 15. 40
[22] 2 கொ. 3. 13–16
[23] லேவி. 23. 3. லூ. 13, 14
[24] எண். 15. 32

4 பின்னும் மோசே இஸ்ரவேல் புத்திரராகிய
5 சபையார் எல்லாரையும் நோக்கி: உங்க
ளுக்கு உண்டானதிலே **கர்த்தருக்கு** ஒரு கா
ணிக்கையைக் கொண்டுவந்து செலுத்துங்கள்;
[1]மனமுள்ளவன் எவனோ, அவன் அதைக்
கொண்டுவரட்டும்; **கர்த்தருக்குச்** செலுத்தும்
காணிக்கை என்னவென்றால், பொன்னும்,
6 வெள்ளியும், வெண்கலமும், இளநீலநூலும்,
இரத்தாம்பரநூலும், சிவப்புநூலும், மெல்லிய
7 பஞ்சுநூலும், வெள்ளாட்டுமயிரும், சிவப்புத்
தீர்ந்த ஆட்டுக்கடாத்தோலும், தகசுத்தோலும்,
8 சீத்திம் மரமும், விளக்குக்கு எண்ணெயும்,
அபிஷேகதைலத்துக்குப் பரிமளவர்க்கங்க
9 ளும், தூபத்துக்குச் சுகந்தவர்க்கங்களும், ஆசா
ரியருடைய ஏபோத்திலும் மார்ப்பதக்கத்தி
லும் பதிக்கத்தக்க கோமேதகம் முதலிய இர
10 த்தினங்களுமே. உங்களில் ஞான இருதய
முள்ள அனைவரும் வந்து, **கர்த்தர்** கட்டளை
யிட்டவைகளையெல்லாம் செய்வார்களாக.
11 வாசஸ்தலத்தையும், அதின் கூடாரத்தையும்,
அதின் மூடியையும், அதின் கொக்கிகளையும்,
அதின் பலகைகளையும், அதின் தாழ்ப்பாள்
களையும், அதின் தூண்களையும், அதின் பாதங்
12 களையும், பெட்டியையும், [2]அதின் தண்டுக
ளையும், கிருபாசனத்தையும், மறைவின் திரைச்
13 சீலையையும், மேசையையும், அதின் தண்டுக
ளையும், அதின் சகல பணிமுட்டுகளையும், [3]சமு
14 கத்தப்பங்களையும், வெளிச்சங்கொடுக்கும் குத்
துவிளக்கையும், அதின் கருவிகளையும், அதின்
அகல்களையும், வெளிச்சத்துக்கு எண்ணெ
15 யையும், தூபபீடத்தையும், [4]அதின் தண்டு
களையும், அபிஷேகதைலத்தையும், சுகந்த
தூபவர்க்கத்தையும், வாசஸ்தலத்தின் வாச
16 லுக்குத் தொங்குதிரையையும், தகனபலிபீடத்
தையும், [5]அதின் வெண்கலச் சல்லடையை
யும், அதின் தண்டுகளையும், அதின் சகல
பணிமுட்டுகளையும், தொட்டியையும், அதின்
17 பாதத்தையும், பிராகாரத்தின் [6]தொங்குதிரை
களையும், அதின் தூண்களையும், அதின் பாதங்
களையும், பிராகாரத்துவாசலின் தொங்குதிரை
18 யையும், வாசஸ்தலத்தின் முளைகளையும், பிரா
காரத்தின் முளைகளையும், அவைகளின் கயிறு
19 களையும், பரிசுத்த ஸ்தலத்திலே ஆராதனை
செய்வதற்குரிய [7]வஸ்திரங்களையும், ஆசாரிய
ஊழியம்செய்கிற ஆரோனின் பரிசுத்த வஸ்
திரங்களையும், அவன் குமாரரின் வஸ்திரங்க
ளையும் அவர்கள் செய்யக்கடவர்கள் என்றான்.
20 அப்பொழுது இஸ்ரவேல் புத்திரராகிய
சபையார் எல்லாரும் மோசேயின் சமுகத்தை
21 விட்டுப் புறப்பட்டார்கள். பின்பு எவர்களை
அவர்கள் இருதயம் எழுப்பி, எவர்களை அவர்
கள் ஆவி உற்சாகப்படுத்தினதோ, [8]அவர்கள்
எல்லாரும் ஆசரிப்புக் கூடாரத்தின் வேலைக்
கும், அதின் சகல ஊழியத்துக்கும், பரிசுத்த
வஸ்திரங்களுக்கும் ஏற்றவைகளைக் **கர்த்தரு
க்குக்** காணிக்கையாகக் கொண்டுவந்தார்கள்.
22 மனப்பூர்வமுள்ள ஸ்திரீ புருஷர் யாவரும்,
அஸ்தகடகங்கள், காதணிகள், மோதிரங்கள்,
ஆரங்கள் முதலான சகலவித பொன்னாபர
ணங்களையும் கொண்டுவந்தார்கள்; **கர்த்தருக்
குக்** காணிக்கை செலுத்தின ஒவ்வொருவனும்
பொன்னைக் காணிக்கையாகச் செலுத்தினான்.
இளநீலநூலையும் இரத்தாம்பரநூலையும் சிவ 23
ப்புநூலையும் மெல்லிய பஞ்சுநூலையும் வெள்
ளாட்டு மயிரையும் சிவப்புத்தீர்ந்த ஆட்டுக்கடா
த்தோலையும் தகசுத்தோலையும் தங்களிடத்தில்
வைத்திருந்த யாவரும் அவைகளைக் கொண்டு
வந்தார்கள். வெள்ளியையும் வெண்கலத்தை 24
யும் கொடுக்கத்தக்க யாவரும் அவைகளைக் **கர்
த்தருக்குக்** காணிக்கையாகக் கொண்டுவந்தார்
கள். பற்பல வேலைகளுக்கு உதவும் சீத்திம்
மரத்தைத் தங்களிடத்தில் வைத்திருந்த யாவ
ரும் அவைகளைக் கொண்டுவந்தார்கள். ஞான 25
இருதயமுள்ள ஸ்திரீகள் எல்லாரும் [9]தங்கள்
கைகளினால் நூற்று, தாங்கள் நூற்ற இளநீல
நூலையும் இரத்தாம்பரநூலையும் சிவப்புநூலை
யும் மெல்லிய பஞ்சுநூலையும் கொண்டுவந்தார்
கள். எந்த ஸ்திரீகளுடைய இருதயம் ஞான 26
எழுப்புதல் அடைந்ததோ, அவர்கள் எல்லா
ரும் வெள்ளாட்டுமயிரைத் திரித்தார்கள். பிர 27
புக்கள் [10]ஏபோத்திலும் மார்ப்பதக்கத்திலும்
பதிக்கும் கோமேதகம் முதலிய இரத்தினங்க
ளையும், பரிமளவர்க்கங்களையும், [11]விளக்கெண் 28
ணெயையும், அபிஷேகதைலத்துக்கும் சுகந்த
வர்க்க தூபத்துக்கும் வேண்டியவைகளையும்
கொண்டுவந்தார்கள். செய்யப்படும்படி **கர்த் 29
தர்** மோசேயைக்கொண்டு கற்பித்த வேலைக்
குரிய யாவையும் கொண்டுவர, இஸ்ரவேல்
புத்திரருக்குள் தங்கள் இருதயத்தில் [12]உற்சாக
மடைந்த ஸ்திரீ புருஷர் யாவரும் **கர்த்தருக்
குக்** காணிக்கையை மனப்பூர்வமாய்க்கொண்டு
வந்தார்கள்.
பின்பு மோசே இஸ்ரவேல் புத்திரரை 30
நோக்கி: பாருங்கள், **கர்த்தர்** [13]யூதாவின் கோ
த்திரத்தில் ஊரின் மகனான ஊரியின் குமா
ரன் பெசலெயேலைப் பேர்சொல்லி அழை
த்து, அவன் விசித்திரமான வேலைகளை யோ 31
சித்துச் செய்யவும், பொன்னிலும் வெள்ளி
யிலும் வெண்கலத்திலும் வேலைசெய்யவும்,
இரத்தினங்களை முத்திரை வெட்டாக வெட் 32
டிப் பதிக்கவும், மரத்தில் சித்திரவேலைசெய்து
சகல விநோதமான வேலைகளைச் செய்யவும்,
அவனுக்கு ஞானத்தையும் புத்தியையும் அறி 33
வையும் அருளி, அவன் சகலவித வேலைகளை
யும் செய்யும்படி தேவஆவியினாலே அவனை
நிரப்பினார். அவன் இருதயத்திலும், தாண் 34
கோத்திரத்து அகிசாமாகின் குமாரனாகிய
அகோலியாபின் இருதயத்திலும், போதிக்கும்
வரத்தையும் அருளினார். சித்திரவேலையை 35
யும், சிற்பவேலையையும், இளநீலநூலாலும்
இரத்தாம்பரநூலாலும் சிவப்புநூலாலும் மெல்
லிய பஞ்சுநூலாலும் செய்யப்படும் விசித்திரத்
தையல்வேலையையும், சகல விசித்திர நெசவு
வேலைகளையும் விநோதமான வேலைகளை யூகிக்

[1] யாத். 25. 2. மாற். 12. 41, 44. 2 கொ. 8. 11, 12
[2] யாத். 25. 10
[3] லேவி. 24. 5, 6
[4] யாத். 30. 1. ழ
[5] யாத். 27. 1
[6] யாத். 27. 9
[7] யாத். 31. 10. எண். 4. 5, 7
[8] யாத். 5. 22. 1 நாளா. 28. 2. எஸ்றா 7. 27. 2 கொ. 8. 12
[9] யாத். 28. 3. 2 இரா. 23. 7. நீதி. 31. 19, 22, 24
[10] 1 நாளா. 29. 6. எஸ்றா 2. 68
[11] யாத். 30. 23
[12] 1 நாளா. 29. 9
[13] யாத். 31. 2. ழ

கிறவர்களும் செய்கிறவர்களும் நிறைவேற்றும்
சகலவித வேலைகளையும் செய்யும்படிக்கு அவர்
களுடைய இருதயத்தை [1]ஞானத்தினால் நிர
ப்பினார் என்றான்.

36 அப்பொழுது பரிசுத்த ஸ்தலத்துத் [2]திருப்
பணிகளுக்கடுத்த சகல வேலைகளையும், **கர்த்**
**தர்** கற்பித்தபடியெல்லாம், பெசலெயேலும்
அகோலியாபும், செய்ய அறியும்படிக்குக் **கர்**
**த்தரால்** ஞானமும் புத்தியும் பெற்ற விவேக
இருதயமுள்ள மற்ற அனைவரும் செய்யத்
2 தொடங்கினார்கள். பெசலெயேலையும் அகோ
லியாபையும், **கர்த்தரால்** ஞானயடைந்து
அந்த வேலைகளைச் செய்ய வரும்படி தங்கள்
இருதயத்தில் எழுப்புதலடைந்த [3]ஞான இரு
தயத்தாராகிய எல்லாரையும், மோசே வரவ
3 ழைத்தான். அவர்கள், இஸ்ரவேல் புத்திரர்
திருப்பணிக்கடுத்த சகல வேலைகளுக்காகவும்
கொண்டுவந்த காணிக்கைப் பொருள்களை
யெல்லாம், மோசேயினிடத்தில் வாங்கிக்கொ
ண்டார்கள். பின்னும் ஜனங்கள் காலைதோ
றும் தங்களுக்கு இஷ்டமான காணிக்கைகளை
4 அவனிடத்தில் கொண்டுவந்தார்கள். அப்பொ
ழுது பரிசுத்த ஸ்தலத்து வேலைகளைச் செய்
கிற விவேகிகள் யாவரும் அவரவர் செய்கிற
5 வேலையின் காரியமாய் வந்து, மோசேயை
நோக்கி: **கர்த்தர்** செய்யும்படி கற்பித்த வேலை
க்கு வேண்டியதற்கு [4]அதிகமான பொருள்
களை ஜனங்கள் கொண்டுவருகிறார்கள் என்
6 றார்கள். அப்பொழுது மோசே இனி புருஷர்
களாவது ஸ்திரீகளாவது பரிசுத்த ஸ்தலத்துக்
கென்று காணிக்கையாக ஒரு வேலையும் செய்
யவேண்டாம் என்று பாளயம் எங்கும் கூறும்
படி கட்டளையிட்டான்; இவ்விதமாய் ஜனங்
கள் கொண்டுவருகிறது நிறுத்தப்பட்டது.
7 செய்யவேண்டிய எல்லா வேலைகளுக்கும்
போதுமான [5]பொருள்கள் இருந்ததுமல்லா
மல் அதிகமாயும் இருந்தது.

8 வேலைசெய்கிறவர்களாகிய ஞான இருதய
முள்ள யாவரும் வாசஸ்தலத்தை உண்டாக்கி
னார்கள். அதற்குத் திரித்த மெல்லிய பஞ்சு
நூலாலும் இளநீலநூலாலும் இரத்தாம்பரநூ
லாலும் சிவப்புநூலாலும், விநோத நெசவு
வேலையாகிய கேருபீன்களுள்ள பத்து மூடு
9 திரைகளைப் பண்ணினான். ஒவ்வொரு மூடு
திரை இருபத்தெட்டு முழ நீளமும் நாலு முழ
அகலமுமாயிருந்தது; மூடுதிரைகளெல்லாம்
10 ஒரே அளவாயிருந்தது. ஐந்து மூடுதிரைகளை
ஒன்றோடொன்று இணைத்து, மற்ற ஐந்து
மூடுதிரைகளையும் ஒன்றோடொன்று இணைத்
11 தான். இணைக்கப்பட்ட ஒரு மூடுதிரையின்
ஓரத்தில் இளநீலநூலால் ஐம்பது காதுகளை
உண்டுபண்ணி, அப்படியே இணைக்கப்பட்ட
மற்ற மூடுதிரையின் ஓரத்திலும் உண்டுபண்
12 ணினான். காதுகள் [6]ஒன்றோடொன்று இணை
13 க்கப்பட்டவைகளாயிருந்தது. ஐம்பது பொன்
கொக்கிகளையும் பண்ணி, அந்த கொக்கிக
ளால் மூடுதிரைகளை ஒன்றோடொன்று இணை

[1] 1 இரா. 3. 12
7. 14. 2 நாளா.
2. 14. எசா. 28.
26

[2] யாத். 25. 8. எண்.
7. 5. எபி. 8. 2.

[3] 1 நாளா. 29. 5

[4] 2 கொரி. 8. 2, 3.
பிலி. 4. 17, 18

[5] 2 நாளா. 31. 10

[6] யாத். 26. 5

[7] யாத். 26. 7

[8] யாத். 26. 14

[9] யாத். 26. 15

[10] யாத். 26. 26

த்துவிட்டான். இவ்விதமாக ஒரே வாசஸ்தல
மாயிற்று. வாசஸ்தலத்தின்மேல் கூடாரமா 14
கப் போடும்படி [7]ஆட்டுமயிரினால் நெய்த பதி
னொரு மூடுதிரைகளையும் பண்ணினான். ஒவ் 15
வொரு மூடுதிரை முப்பது முழ நீளமும் நாலு
முழ அகலமுமாயிருந்தது. பதினொரு மூடுதி
ரைகளும் ஒரே அளவாயிருந்தது. ஐந்து மூடு 16
திரைகளை ஒன்றாகவும், மற்ற ஆறு மூடுதிரை
களை ஒன்றாகவும் இணைத்து, இணைக்கப்பட்ட 17
ஒரு மூடுதிரையின் ஓரத்தில் ஐம்பது காதுகளை
யும், இணைக்கப்பட்ட மற்ற மூடுதிரையின்
ஓரத்தில் ஐம்பது காதுகளையும் உண்டாக்கி,
கூடாரத்தை ஒன்றாய் இணைத்துவிட, ஐம்பது 18
வெண்கலக் கொக்கிகளையும் உண்டாக்கினான்.
சிவப்புத்தீர்ந்த ஆட்டுக்கடாத் தோலினால் 19
கூடாரத்துக்கு ஒரு மூடியையும் [8]அதின்மேல்
போடத் தகசுத்தோலினால் ஒரு மூடியையும்
உண்டுபண்ணினான்.

வாசஸ்தலத்துக்கு நிமிர்ந்து நிற்கும் [9]பல 20
கைகளையும் சீத்திம் மரத்தால் செய்தான்.
ஒவ்வொரு பலகையும் பத்து முழ நீளமும் 21
ஒன்றரை முழ அகலமுமாயிருந்தது. ஒவ் 22
வொரு பலகைக்கும் ஒன்றுக்கொன்று சமதூர
மான இரண்டு கழுந்துகள் இருந்தது; வாசஸ்
தலத்தின் பலகைகளுக்கெல்லாம் இப்படியே
செய்தான். வாசஸ்தலத்திற்காகச் செய்யப் 23
பட்ட பலகைகளில் தெற்கே தென்திசைக்கு
இருபது பலகைகளை உண்டாக்கி, அந்த 24
இருபது பலகைகளின்கீழே வைக்கும் நாற்
பது வெள்ளிப்பாதங்களையும் உண்டுபண்ணி
னான்; ஒரு பலகையின்கீழ் அதின் இரண்டு
கழுந்துகளுக்கும் இரண்டு பாதங்களையும்,
மற்றப் பலகையின்கீழ் அதின் இரண்டு
கழுந்துகளுக்கும் இரண்டு பாதங்களையும்
பண்ணிவைத்து; வாசஸ்தலத்தின் மறுபக்க 25
மாகிய வடபுறத்தில் இருபது பலகைகளை
யும், அவைகளுக்கு நாற்பது வெள்ளிப் பாதங்
களையும் செய்தான். ஒரு பலகையின்கீழ் 26
இரண்டு பாதங்களும் மற்றப் பலகையின்கீழ்
இரண்டு பாதங்களும் செய்தான். வாசஸ் 27
தலத்தின் மேல்புறத்திற்கு ஆறு பலகைகளை
யும், வாசஸ்தலத்தின் இருபக்கங்களிலுள்ள 28
மூலைகளுக்கு இரண்டு பலகைகளையும் செய்
தான். அவைகள் கீழே இசைக்கப்பட்டிருந் 29
தது, மேலேயும் ஒரு வளையத்தினால் இசைக்
கப்பட்டிருந்தது; இரண்டு மூலைகளிலுமுள்ள
அவ்விரண்டிற்கும் அப்படியே செய்தான்.
அப்படியே எட்டுப் பலகைகளும், அவைக 30
ளுடைய ஒவ்வொரு பலகையின்கீழ் இரண்
டிரண்டு பாதங்களாகப் பதினாறு வெள்ளிப்
பாதங்களும் இருந்தது. சீத்திம் மரத்தால் 31
வாசஸ்தலத்தின் ஒரு பக்கத்துப் பலகைக
ளுக்கு ஐந்து [10]தாழ்ப்பாள்களையும், வாசஸ்த 32
லத்தின் மறுபக்கத்துப் பலகைகளுக்கு ஐந்து
தாழ்ப்பாள்களையும், வாசஸ்தலத்தின் மேல்
புறமான பின்பக்கத்துப் பலகைகளுக்கு ஐந்து
தாழ்ப்பாள்களையும் பண்ணினான். நடுத் தாழ்ப் 33

பான் ஒரு முனைதொடங்கி மறுமுனைமட்டும்
பலகைகளின் மையத்தில் உருவப் பாயும்படி
34 செய்தான். பலகைகளைப் பொன்தகட்டால்
மூடி, தாழ்ப்பாள்களின் இடங்களாகிய அவை
களின் வளையங்களைப் பொன்னினால்
பண்ணி, தாழ்ப்பாள்களைப் பொன்தகட்டால்
மூடினான்.
35 இளநீலநூலாலும் இரத்தாம்பரநூலாலும்
சிவப்புநூலாலும் திரித்த மெல்லிய பஞ்சுநூ
லாலும் செய்யப்பட்டதும், விசித்திரவேலை
யாகிய கேருபீன்களுள்ளதுமான ஒரு [1]திரை
36 ச்சீலையை உண்டுபண்ணி, அதற்குச் சீத்தீம்
மரத்தினால் நாலு தூண்களைச் செய்து, அவை
களைப் பொன்தகட்டால் மூடி, அவைகளின்
கொக்கிகளைப் பொன்னினால் பண்ணி, அவை
களுக்கு நான்கு வெள்ளிப்பாதங்களை வார்ப்
பித்தான்.
37 கூடாரவாசலுக்கு இளநீலநூலாலும் இரத்
தாம்பரநூலாலும் சிவப்புநூலாலும் திரித்த
மெல்லிய பஞ்சுநூலாலும் செய்த சித்திரத்
தையல்வேலையான ஒரு [2]தொங்குதிரையை
38 யும், அதின் ஐந்து தூண்களையும், அவைக
ளின் வளைவாணிகளையும் உண்டாக்கி, அவை
களின் குமிழ்களையும் வளையங்களையும் பொன்
தகட்டால் மூடினான்; அவைகளின் ஐந்து
பாதங்களும் வெண்கலமாயிருந்தது.

**37** பெசலெயேல் சீத்தீம் மரத்தினால் [3]பெட்
டியை உண்டுபண்ணினான்; அதின் நீளம்
இரண்டரை முழமும் அதின் அகலம் ஒன்
றரை முழமும் அதின் உயரம் ஒன்றரை
2 முழமுமானது. அதை உள்ளும் புறம்பும்
பசும்பொன்தகட்டால் மூடி, சுற்றிலும் அதற்
3 குப் பொன்திரணையை உண்டாக்கி, அதற்கு
நான்கு பொன்வளையங்களை வார்ப்பித்து,
அவைகளை அதின் நாலு மூலைகளிலும் போ
ட்டு, ஒரு பக்கத்தில் இரண்டு வளையங்களும்
மறுபக்கத்தில் இரண்டு வளையங்களும் இருக்
4 கும்படி தைத்து, சீத்தீம் மரத்தினால் தண்
டுகளைச் செய்து, அவைகளைப் பொன்தகட்
5 டால் மூடி, அந்தத் தண்டுகளால் பெட்டி
யைச் சுமக்கும்படி, அவைகளைப் பெட்டியின்
பக்கங்களில் இருக்கும் வளையங்களிலே பாய்ச்
6 சினான். கிருபாசனத்தையும் பசும்பொன்னி
னால் பண்ணினான்; அது இரண்டரை முழ
7 நீளமும் ஒன்றரை முழ அகலமுமானது. தக
டாய் அடிக்கப்பட்ட பொன்னினால் இரண்டு
கேருபீன்களையும் உண்டாக்கி, கிருபாசனத்
8 தின் [4]இரண்டு ஓரங்களிலே, ஒரு புறத்து
ஓரத்தில் ஒரு கேருபீனும் மறுபுறத்து ஓரத்
தில் மற்றக் கேருபீனுமாக அந்தக் கேருபீன்
களைக் கிருபாசனத்தின் இரண்டு ஓரங்களி
லும் அதினோடே ஏக வேலைப்பாடாகவே
9 பண்ணினான். அந்தக் [5]கேருபீன்கள் தங்
கள் செட்டைகளை உயர விரித்து, தங்கள்
செட்டைகளால் கிருபாசனத்தை மூடுகிறவை
களும், ஒன்றுக்கொன்று எதிர்முக முள்ள
வைகளுமாயிருந்தது; கேருபீன்களின் முகங்
கள் கிருபாசனத்தை நோக்கிக்கொண்டிருந்
தது
மேசையையும் [6]சீத்தீம் மரத்தால் பண்ணி 10
னான்; அது இரண்டு முழ நீளமும் ஒரு முழ
அகலமும் ஒன்றரை முழ உயரமுமானது.
அதைப் பசும்பொன்தகட்டால் மூடி, சுற்றி 11
லும் அதற்குப் பொன்திரணையை உண்டாக்கி,
சுற்றிலும் அதற்கு நான்கு விரற்கடையான 12
சட்டத்தையும், அதின் சட்டத்திற்குச் சுற்றி
லும் பொன்திரணையையும் உண்டுபண்ணி,
அதற்கு நான்கு பொன்வளையங்களை வார்ப் 13
பித்து, அவைகளை அதின் நாலு கால்களுக்கு
இருக்கும் நாலு மூலைகளிலும் தைத்தான்.
அந்த வளையங்கள் மேசையைச் சுமக்கும் தண் 14
டுகளைப் பாய்ச்சும் இடங்களாயிருக்கும்படி
சட்டத்தின் அருகே இருந்தது. மேசையைச் 15
சுமக்கும் அந்தத் தண்டுகளைச் சீத்தீம் மரத்
தால் பண்ணி, அவைகளைப் பொன்தகட்
டால் மூடி, மேசையின் மேலிருக்கும் பாத் 16
திரங்களாகிய அதின் பணிமுட்டுகளையும்,
அதின் தட்டுகளையும், தூபக்கரண்டிகளையும்,
அதின் பானபலிகரகங்களையும், மூடுகிறதற்
கான அதின் கிண்ணங்களையும் பசும்பொன்
னினால் உண்டாக்கினான்.
குத்துவிளக்கையும் [7]பசும்பொன்னினால் 17
அடிப்புவேலையாய் உண்டாக்கினான்; அதின்
தண்டும் கிளைகளும் மொக்குகளும் பழங்களும்
பூக்களும் பொன்னினால் செய்யப்பட்டிருந்
தது. குத்துவிளக்கின் ஒருபக்கத்தில் மூன்று 18
கிளைகளும் அதின் மறுபக்கத்தில் மூன்று
கிளைகளுமாக அதின் பக்கங்களில் ஆறு கிளை
கள் செய்யப்பட்டது. ஒவ்வொரு கிளையிலே 19
வாதுமைக்கொட்டைக்கு ஒப்பான மூன்று
மொக்குகளும் ஒரு பழமும் ஒரு பூவும் இருந்
தது; குத்துவிளக்கில் செய்யப்பட்ட ஆறு
கிளைகளிலும் அப்படியே இருந்தது. விளக் 20
குத்தண்டில் வாதுமைக்கொட்டைக்கு ஒப்
பான நாலு மொக்குகளும் பழங்களும் பூக்க
ளும் இருந்தது. அதில் செய்யப்பட்ட இர 21
ண்டு கிளைகளின்கீழ் ஒரு பழமும், வேறு
இரண்டு கிளைகளின்கீழ் ஒரு பழமும், மற்ற
இரண்டு கிளைகளின்கீழ் ஒரு பழமும் இருந்
தது; விளக்குத்தண்டில் செய்யப்பட்ட ஆறு
கிளைகளுக்கும் அப்படியே இருந்தது. அவை 22
களின் பழங்களும் அவைகளின் கிளைகளும்
பசும்பொன்னினால் ஒரே அடிப்பு வேலை
யாய்ச் செய்யப்பட்டது. அதின் ஏழு அகல் 23
களையும், அதின் கத்தரிகளையும், சாம்பல் பாத்
திரங்களையும் பசும்பொன்னினால் செய்தான்.
அதையும் அதின் பணிமுட்டுகள் யாவையும் 24
ஒரு தாலந்து பசும்பொன்னினால் செய்தான்.
தூபபீடத்தையும் [8]சீத்தீம் மரத்தினால் உண் 25
டாக்கினான்; அது ஒரு முழ நீளமும் ஒரு முழ
அகலமுமான சதுரமும் இரண்டு முழ உயர
முமாய் இருந்தது; அதின் கொம்புகள் அத
னோடே ஏகவேலைப்பாடாயிருந்தது. அதின் 26
மேற்புறத்தையும், அதின் சுற்றுப்புறத்தையும்,

[1] யாத். 26. 31. மத். 27. 51. எபி. 10. 19, 20
[2] யாத். 26. 36
[3] யாத். 25. 10
[4] யாத். 25. 17. 1 இரா. 6, 23. சங். 80. 1
[5] ஆதி. 3. 24. ஏசா. 6. 2. எசே. 10. அதி
[6] யாத். 25. 23. மல். 1. 12
[7] யாத். 25. 31. சக. 4. 2, 11. எபி. 9. 2. வெளி. 1. 12, 20
[8] யாத். 30. 1. லூக். 1. 9, 10. வெளி. 8. 3, 4

அதின் கொம்புகளையும், பசும்பொன் தகட்டால்
மூடி, சுற்றிலும் அதற்குப் பொன்திரணையை
27 உண்டுபண்ணி, அந்தத் திரணையின்கீழ் அதின்
இரண்டு பக்கங்களில் இருக்கும் இரண்டு
மூலைகளிலும் இரண்டு பொன்வளையங்களைப்
பண்ணி, அதைச் சுமக்கும் தண்டுகளைப் பாய்ச்
28 சும் இடங்களாகத் தைத்து, சித்தீம் மரத்தால்
அந்தத் தண்டுகளைச் செய்து, அவைகளைப்
29 பொன்தகட்டால் மூடினான். பரிசுத்த அபி
ஷேகதைலத்தையும், [1]சுத்தமான சுகந்தங்க
ளின் தூபவர்க்கத்தையும், தைலக்காரன் வே
லைக்கு ஒப்பாக உண்டுபண்ணினான்.

38 தகனபலிபீடத்தையும் [2]சித்தீம் மரத்தால்
உண்டாக்கினான்; அது ஐந்து முழ நீளமும்
ஐந்து முழ அகலமும் சதுரவடிவும் மூன்று
2 முழ உயரமுமானது. அதின் நாலு மூலைக
ளிலும் அதனோடு ஏகமாயிருக்கிற அதின்
நாலு கொம்புகளையும் உண்டாக்கி, அதை
3 வெண்கலத்தகட்டால் மூடி, அந்தப் பீடத்தின்
சகல பணிமுட்டுகளாகிய சாம்பல் எடுக்கத்
தக்க சட்டிகளையும், கரண்டிகளையும், கின்
ணிகளையும், முள் துறடுகளையும், நெருப்புச்
சட்டிகளையும் உண்டாக்கினான்; அதின் பணி
முட்டுகளையெல்லாம் வெண்கலத்தினால் பண்
4 ணினான். வலைப்பின்னல்போன்ற ஒருவெண்
கலச் சல்லடையையும் பலிபீடத்திற்கு உண்
டாக்கி, அதை அந்தப் பீடத்தின் சுற்றுக்குக்
கீழே பாதி உயரத்தில் இருக்கத்தக்கதாக வைத்
5 து, அந்த வெண்கலச்சல்லடையின் நாலு
மூலைகளிலும் தண்டுகளைப் பாய்ச்சுகிறதற்கு
6 நாலு வளையங்களை வார்ப்பித்து, அந்தத் தண்டு
களைச் சித்தீம் மரத்தால் பண்ணி, அவைகளை
7 வெண்கலத்தகட்டால் மூடி, பலிபீடத்தை
அவைகளால் சுமக்கத்தக்கதாக, அதின் பக்கங்
களிலுள்ள வளையங்களில் பாய்ச்சினான்; பலி
பீடத்தை உள்வெளிவிட்டுப் பலகைகளினால்
செய்தான்.
8 ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலில் கூட்
டம் கூட்டமாய்க் கூடின ஸ்திரீகளின் தர்ப்ப
ணங்களாலே, வெண்கலத் தொட்டியையும்
[3]அதின் வெண்கலப் பாதத்தையும் உண்டாக்
கினான்.
9 பிராகாரத்தையும் [4]உண்டுபண்ணினான்.
தெற்கே தென்திசைக்கு எதிரான பிராகாரத்
துக்குத் திரித்த மெல்லிய பஞ்சுநூலால் நெய்த
நூறு முழ நீளமான தொங்குதிரைகளைச் செய்
10 தான். அவைகளின் தூண்கள் இருபது;
அவைகளின் வெண்கலப் பாதங்கள் இருபது;
தூண்களின் கொக்கிகளும் அவைகளின் பூண்
11 களும் வெள்ளி. வடபக்கத்துத் தொங்குதி
ரைகள் நூறு முழம்; அவைகளின் தூண்கள்
இருபது; அவைகளின் வெண்கலப் பாதங்கள்
இருபது; தூண்களின் கொக்கிகளும் பூண்
12 களும் வெள்ளி. மேற்பக்கத்துத் தொங்குதி
ரைகள் ஐம்பது முழம்; அவைகளின் தூண்கள்
பத்து; அவைகளின் பாதங்கள் பத்து; தூண்
களின் கொக்கிகளும் அவைகளின் பூண்
களும் வெள்ளி. சூரியன் உதிக்கிற திசை 13
பாகிய கீழ்பக்கத்துத் தொங்குதிரைகள் ஐம்
பது முழம். ஒருபுறத்துத் தொங்குதிரைகள் 14
பதினைந்து முழம்; அவைகளின் தூண்கள்
மூன்று; அவைகளின் பாதங்கள் மூன்று.
பிராகாரவாசலின் ஒருபுறத்துக்குச் சரியாக 15
மறுபுறத்திலும் தொங்குதிரைகள் பதினைந்து
முழம்; அவைகளின் தூண்கள் மூன்று; அவை
களின் பாதங்கள் மூன்று. சுற்றுப் பிரா 16
காரத்துத் தொங்குதிரைகளெல்லாம் மெல்லிய
பஞ்சுநூலால் நெய்யப்பட்டிருந்தது. தூண் 17
களின் பாதங்கள் வெண்கலம்; தூண்களின்
கொக்கிகளும் பூண்களும் வெள்ளி, அவை
களின் குமிழ்களை மூடிய தகடும் வெள்ளி;
பிராகாரத்தின் தூண்களெல்லாம் வெள்ளிப்
பூண்கள் போடப்பட்டவைகளுமாயிருந்தது.
பிராகாரவாசலின் தொங்குதிரை இளநீல 18
நூலாலும் இரத்தாம்பரநூலாலும் சிவப்பு
நூலாலும் திரித்த மெல்லிய பஞ்சுநூலாலும்
செய்யப்பட்ட விசித்திரத் தையல்வேலையா
யிருந்தது; அதின் நீளம் இருபது முழம்,
அதின் அகலமும் உயரமும் பிராகாரத்தின்
தொங்குதிரைகளுக்குச் சரியாய் ஐந்து முழம்.
அவைகளின் தூண்கள் நாலு; அவைகளின் 19
வெண்கலப் பாதங்கள் நாலு; அவைகளின்
கொக்கிகள் வெள்ளி; அவைகளின் குமிழ்
களை மூடிய தகடும் அவைகளின் பூண்களும்
வெள்ளி. வாசஸ்தலத்துக்கும் பிராகாரத்துக் 20
கும் சுற்றிலும் இருந்த [5]முளைகளெல்லாம்
வெண்கலம்.
மோசேயின் கட்டளைப்படி ஆசாரியனான 21
ஆரோனின் குமாரனாகிய இத்தாமாரின் கை
யிலே லேவியரின் ஊழியத்திற்கென்று எண்
ணிக் கொடுக்கப்பட்ட சாட்சியின் வாசஸ்
தலத்துப் பொருள்களின் [6]தொகை இதுவே.
யூதாவின் கோத்திரத்தில் ஊரின் மகனாகிய 22
ஊரியின் குமாரன் பெசலெயேல் கர்த்தர்
மோசேக்குக் கற்பித்ததை எல்லாம் செய்தான்.
அவனோடேகூடத் தாண் கோத்திரத்து அகி 23
சாமாகின் குமாரனாகிய அகோலியாப் சித்
திரக் கொத்து வேலைக்காரனும், விநோத
வேலைகளைச் செய்கிற தொழிலாளியும், இள
நீலநூலாலும் இரத்தாம்பரநூலாலும் சிவப்பு
நூலாலும் மெல்லிய பஞ்சுநூலாலும் சித்திரத்
தையல்வேலை செய்கிறவனுமாயிருந்தான்.
பரிசுத்த ஸ்தலத்தின் வேலைகள் யாவற்றிற் 24
கும் காணிக்கையாகக் கொடுக்கப்பட்டுச் செல
வான [7]பொன்னெல்லாம் பரிசுத்த ஸ்தலத்
தின் சேக்கலின்படி இருபத்தொன்பது தாலந்
தும் எழுநூற்று முப்பது சேக்கல் நிறையுமாய்
இருந்தது.
சபையில் எண்ணப்பட்டவர்கள் கொடுத்த 25
வெள்ளி பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கலின்படி
நூறு தாலந்தும், ஆயிரத்தெழுநூற்று எழுபத்
தைந்து சேக்கல் நிறையுமாய் இருந்தது.
எண்ணப்பட்டவர்களின் தொகையில் சேர்ந்த 26
இருபது வயது முதற்கொண்டு [8]அதற்கு மேற்

[1] யாத். 30. 23, 34
[2] யாத். 27. 1
[3] யாத். 30. 18
[4] யாத். 27. 9. 1 இரா. 6. 36. சங். 84. 2, 10
[5] யாத். 27. 19. எசா. 22. 23
[6] எண். 1. 50, 53. 2 நாளா. 24. 6. அப். 7. 44. வெளி. 11. 19
[7] 1 நாளா. 22. 14. ஆகா. 2. 8. வெளி. 21. 12
[8] எண். 1. 46

பட்ட ஆறுலட்சத்து மூவாயிரத்து ஐந்நூற்று
ஐம்பதுபேர்களில் ஒவ்வொரு தலைக்கு பரி
சுத்த ஸ்தலத்தின் சேக்கலின்படி அரைச்சேக்
கலாகிய [1]பெக்கா என்னும் விழுக்காடு சேர்ந்
27 தது. அந்த வெள்ளியில் நூறு தாலந்து வெள்
ளியினால் பரிசுத்த ஸ்தலத்தின் பாதங்களும்
திரையின் பாதங்களும் வார்ப்பிக்கப்பட்டது
பாதத்துக்கு ஒரு தாலந்து விழுக்காடு நூறு
பாதங்களுக்கு நூறு தாலந்து செலவாயிற்று
28 அந்த ஆயிரத்தெழுநூற்று எழுபத்தைந்து சேக்
கலால் தூண்களுக்குப் பூண்களைப் பண்ணி,
அவைகளின் குமிழ்களைத் தகடுகளால் மூடி
அவைகளுக்குப் பூண்களை உண்டாக்கினான்.
29 காணிக்கையாகச் செலுத்தப்பட்ட வெண்கல
மானது எழுபது தாலந்தும் இரண்டாயிரத்து
நானூறு சேக்கல் நிறையுமாய் இருந்தது.
30 அதினாலே ஆசரிப்புக் கூடாரவாசல் மறை
வின் பாதங்களையும் வெண்கலப் பலிபீடத்
தையும், அதின் வெண்கலச் சல்லடையை
யும், பலிபீடத்தின் சகல பணிமுட்டுகளையும்,
31 சுற்றுப்பிராகாரத்தின் பாதங்களையும், பிரா
காரவாசல் மறைவின் பாதங்களையும், வாசஸ்
தலத்தின் சகல முளைகளையும், சுற்றுப்பிரா
காரத்தின் சகல முளைகளையும் பண்ணினான்.

39 கர்த்தர் மோசேக்குக் [2]கற்பித்தபடியே,
அவர்கள் இளநீலநூலாலும் இரத்தாம்பர
நூலாலும் சிவப்புநூலாலும் பரிசுத்த ஸ்தலத்
தில் ஆராதனை செய்கிறதற்கு [3]வேண்டிய
வஸ்திரங்களையும், ஆரோனுக்குப் பரிசுத்த
வஸ்திரங்களையும் செய்தார்கள்.
2 ஏபோத்தைப் [4]பொன்னினாலும் இளநீல
நூலாலும் இரத்தாம்பரநூலாலும் சிவப்புநூலா
லும் திரித்த மெல்லிய பஞ்சுநூலாலும் செய்
3 தான். அந்தப் பொன்னை, இளநீலநூலோ
டும் இரத்தாம்பரநூலோடும் சிவப்புநூலோ
டும் மெல்லிய பஞ்சுநூலோடும் சேர்த்து விசித்
திரவேலையாய் நெய்யும்படிக்கு, மெல்லிய
தகடுகளாய் அடித்து, அவைகளைச் சரிகை
4 களாகப் பண்ணினார்கள். இரண்டு தோள்
களின்மேலுள்ள அதின் இரண்டு முனைகளை
யும் சேர்த்தார்கள்; அது ஒன்றாய் இணைக்
5 கப்பட்டிருந்தது. அந்த ஏபோத்தின்மேலி
ருக்கும் விசித்திரமான கச்சை, அந்தவேலைக்கு
ஒப்பாகவே பொன்னினாலும் இளநீலநூலா
லும் இரத்தாம்பரநூலாலும் சிவப்புநூலாலும்,
திரித்த மெல்லிய பஞ்சுநூலாலும், கர்த்தர் மோ
சேக்குக் கற்பித்தபடியே, செய்யப்பட்டது.
6 இஸ்ரவேல் புத்திரரின் நாமங்களை [5]முத்
திரை வெட்டுவேலையாகக் கோமேதகக் கற்
களில் வெட்டி, அவைகளைப் பொன் குவளை
7 களில் பதித்தார்கள். கர்த்தர் மோசேக்குக்
கற்பித்தபடியே, அவைகள் இஸ்ரவேல் புத்
திரரைக்குறித்து [6]ஞாபகக்குறிக் கற்களா
யிருக்கும்படி ஏபோத்துத் தோள்களின்மேல்
அவைகளை வைத்தான்.
8 மார்ப்பதக்கத்தை [7]ஏபோத்தின் வேலைக்கு
ஒத்த விசித்திரவேலையாகப் பொன்னினாலும்
இளநீலநூலாலும் இரத்தாம்பரநூலாலும்
சிவப்புநூலாலும் திரித்த மெல்லிய பஞ்சு
நூலாலும் செய்தான். அந்த மார்ப்பதக்கத் 9
தைச் சதுரமும் இரட்டையுமாய்ச் செய்து,
ஒரு சாண் நீளமும் ஒரு சாண் அகலமுமாக்கி,
அதிலே [8]நாலு பத்தி ரத்தினக்கற்களைப் பதித் 10
தார்கள்; முதலாம் பத்தி பத்மராகமும் புஷ்ப
ராகமும் மாணிக்கமும், இரண்டாம் பத்தி 11
மரகதமும் இந்திர நீலமும் வச்சிரமும், மூன் 12
றாம் பத்தி கெம்பும் வைடூரியமும் சுகந்தியும்,
நாலாம் பத்தி படிகப்பச்சையும் கோமேதக 13
மும் யஸ்பியுமானது. அவைகள் அந்தந்த
இடங்களிலே பொன்குவளைகளில் பதிக்கப்
பட்டிருந்தது. இந்தக் கற்கள் இஸ்ரவேல் 14
புத்திருடைய நாமங்களின்படியே பன்னி
ரண்டும், அவர்களுடைய நாமங்களுள்ளவை
களுமாயிருந்தது; பன்னிரண்டு கோத்திரங்
களில் ஒவ்வொரு கோத்திரத்தின் நாமம் ஒவ்
வொன்றில் முத்திரை வெட்டாய் வெட்டி
யிருந்தது. மார்ப்பதக்கத்துக்கு அதின் பக்கங் 15
களிலே பின்னல் வேலையான பசும்பொன்
சங்கிலிகளையும் பண்ணி, இரண்டு பொன் 16
குவளைகளையும் இரண்டு பொன்வளையங்களை
யும் செய்து, அந்த இரண்டு வளையங்களை மார்ப்
பதக்கத்தின் இரண்டு பக்கத்திலும் வைத்து,
பொன்னினால் செய்த பின்னல் வேலையான 17
அந்த இரண்டு சங்கிலிகளையும் மார்ப்பதக்கத்
தின் பக்கங்களில் இருக்கிற இரண்டு வளை
யங்களிலும் மாட்டி, பின்னல் வேலையான 18
அவ்விரண்டு சங்கிலிகளின் இரண்டு நுனி
களையும் ஏபோத்தின் தோள்புறத்துத் துண்டு
கள்மேல் முன்புறத்தில் இருக்கிற இரண்டு
குவளைகளிலும் மாட்டினார்கள். பின்னும் 19
இரண்டு வளையங்களைப் பண்ணி, அவைகளை
ஏபோத்தின் கீழ்ப்புறத்திற்கு எதிரான மார்ப்
பதக்கத்தின் மற்ற இரண்டு பக்கங்களிலும்
அதின் ஓரத்தில் வைத்து, வேறே இரண்டு 20
பொன்வளையங்களையும் பண்ணி, அவைகளை
ஏபோத்தின் முன்புறத்தின் இரண்டு கீழ்ப்பக்
கங்களில் அதின் இணைப்புக்கு எதிராகவும்,
ஏபோத்தின் விசித்திரமான கச்சைக்கு மேலாக
வும் வைத்து, மார்ப்பதக்கம் ஏபோத்தின் விசித் 21
திரமான கச்சைக்கு மேலாக இருக்கும்படிக்
கும், ஏபோத்திலிருந்து நீங்கிப்போகாதபடிக்
கும், அதை அதின் வளையங்களால் ஏபோத்தின்
வளையங்களோடே இளநீல நாடாவினாலே,
கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே, கட்டி
னார்கள். ஏபோத்தின் கீழ் அங்கியை [9]முழு 22
வதும் இளநீலநூலால் நெய்தான். அங்கி 23
யின் நடுவில் மார்க்கவசத் துவாரத்துக்கு
ஒப்பாக ஒரு துவாரமும், அது கிழியாத
படி அந்தத் துவாரத்தைச் சுற்றிலும் ஒரு
நாடாவும் தைத்திருந்தது. அங்கியின் கீழ் 24
ஓரங்களில் தொங்கத்தக்கதாகத் திரித்த இளநீல
நூலும் இரத்தாம்பரநூலும் சிவப்புநூலுமான
வேலையாக மாதளம்பழங்களைப் பண்ணி, பசும் 25
பொன்னினால் [10]மணிகளையும் பண்ணி, அந்த

[1] யாத். 30. 13, 15
[2] யாத். 28. 4. எசே. 42. 14
[3] யாத். 31. 10; 35. 19
[4] யாத். 28. 6. லேவி. 8. 7
[5] யாத். 28. 9, 12
[6] யாத். 28. 29. யோசு. 4. 7
[7] யாத். 28. 15, ழ
[8] வெளி. 21. 19, 20
[9] யாத். 28. 31
[10] யாத். 28. 33

மணிகளை அங்கியின் ஓரங்களில் சுற்றிலும்
மாதளம்பழங்களின் இடை இடையே தொங்க
26 வைத்தார்கள். **கர்த்தர்** மோசேக்குக் கற்பித்த
படியே ஆராதனைக்குரிய அங்கியின் ஓரத்தைச்
சுற்றிலும், ஒரு மணியும் ஒரு மாதளம்பழ
மும், ஒரு மணியும் ஒரு மாதளம்பழமுமாய்
இருந்தது.
27 ஆரோனுக்கும் அவன் குமாரருக்கும் மெல்
லிய பஞ்சுநூலால் நெசவுவேலையான [1]அங்கி
28 களையும், மெல்லிய பஞ்சுநூலால் [2]பாகையை
யும், அலங்காரமான குல்லாக்களையும், திரித்த
மெல்லிய சணல் நூலால் சல்லடங்களையும்,
29 திரித்த மெல்லிய பஞ்சுநூலாலும் இளநீல
நூலாலும் இரத்தாம்பரநூலாலும் சிவப்புநூலா
லும் சித்திரத் தையல்வேலையான [3]இடைக்கச்
சையையும், **கர்த்தர்** மோசேக்குக் கற்பித்த
படியே, செய்தார்கள்.
30 பரிசுத்த கிரீடத்தின் பட்டத்தையும் பசும்
பொன்னினாலே பண்ணி, **கர்த்தருக்குப் பரி
சுத்தம்** [4]என்னும் எழுத்துக்களை அதிலே முத்
31 திரை வெட்டாக வெட்டி, அதை உயரப்
பாகையின்மேல் கட்டும்படி, **கர்த்தர்** மோசேக்
குக் கற்பித்தபடியே, இளநீல நாடாவினால்
கட்டினார்கள்.
32 இப்படியே ஆசரிப்புக் கூடாரமாகிய வாசஸ்
தலத்தின் வேலையெல்லாம் முடிந்தது; **கர்த்தர்**
மோசேக்குக் கற்பித்தபடியெல்லாம் [5]இஸ்ர
வேல் புத்திரர் செய்தார்கள்.
33 பின்பு, வாசஸ்தலத்தை மோசேயினிடத்
தில் கொண்டுவந்தார்கள்; கூடாரத்தையும்,
அதற்குரிய எல்லாப் பணிமுட்டுகளையும்,
அதின் துறடுகளையும், அதின் பலகைகளை
யும், அதின் தாழ்ப்பாள்களையும், அதின் தூண்
34 களையும், அதின் பாதங்களையும், சிவப்புத்
தீர்ந்த ஆட்டுக்கடாத்தோல் மூடியையும், தக
சுத்தோல் மூடியையும், மறைவின் திரைச்சீலை
35 யையும், சாட்சிப்பெட்டியையும், அதின் தண்
36 டுகளையும், கிருபாசனத்தையும், மேசையை
யும், அதின் எல்லாப் பணிமுட்டுகளையும்,
37 சமுகத்தப்பங்களையும், சுத்தமான குத்துவிளக்
கையும், வரிசையாய் ஒழுங்குபடுத்தப்பட்ட
அதின் அகல்களையும், அதின் எல்லாப் பணி
முட்டுகளையும், வெளிச்சத்திற்கு எண்ணெ
38 யையும், பொற்பீடத்தையும், அபிஷேகதைலத்
தையும், சுகந்த தூபவர்க்கத்தையும், வாசஸ்
39 தலத்தின் வாசல் தொங்குதிரையையும், வெண்
கலப் பலிபீடத்தையும், அதின் வெண்கலச்
சல்லடையையும், அதின் தண்டுகளையும்,
அதின் சகல பணிமுட்டுகளையும், தொட்டி
40 யையும், அதின் பாதத்தையும், பிராகாரத்தின்
தொங்குதிரைகளையும், அதின் தூண்களையும்,
அதின் பாதங்களையும், பிராகாரத்து வாசல்
மறைவையும், அதின் கயிறுகளையும், அதின்
முளைகளையும், ஆசரிப்புக் கூடாரமான வாச
ஸ்தலத்தின் வேலைக்கடுத்த சகல பணிமுட்டு
41 களையும், பரிசுத்த ஸ்தலத்திலே செய்யும்
ஆராதனைக்கடுத்த வஸ்திரங்களையும், ஆசாரிய
ஊழியம்செய்கிற ஆரோனின் பரிசுத்த வஸ்
திரங்களையும், அவன் குமாரரின் வஸ்திரங்
களையும் கொண்டுவந்தார்கள். **கர்த்தர்** மோ 42
சேக்குக் கற்பித்தபடியெல்லாம் [6]இஸ்ரவேல்
புத்திரர் சகல வேலைகளையும் செய்தார்கள்.
மோசே அந்த வேலைகளையெல்லாம் பார்த் 43
தான்; **கர்த்தர்** கற்பித்தபடியே அதைச் செய்
திருந்தார்கள். மோசே அவர்களை [7]ஆசீர்வதித்
தான்.

**40**

**கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ முதலாம் 2
மாதம் [8]முதல் தேதியில் ஆசரிப்புக் கூடா
ரத்தின் வாசஸ்தலத்தை ஸ்தாபனம்பண்ணு.
அதிலே சாட்சிப்பெட்டியை வைத்து, பெட் 3
டியைத் திரையினால் மறைத்து, மேசையைக் 4
கொண்டுவந்து, அதில் வைக்கவேண்டியதைக்
[9]கிரமமாய் வைத்து, குத்துவிளக்கைக் கொண்டு
வந்து, அதின் விளக்குகளை யேற்றி, பொன் 5
தூபபீடத்தைச் சாட்சிப்பெட்டிக்கு முன்னே
வைத்து, வாசஸ்தலத்து வாசலின் தொங்குதி
ரையைத் தூக்கிவைக்கக்கடவாய். பின்பு, 6
தகனபலிபீடத்தை ஆசரிப்புக் கூடாரமாகிய
வாசஸ்தலத்தின் வாசலுக்கு முன்பாக வைத்து,
தொட்டியை [10]ஆசரிப்புக் கூடாரத்துக்கும் 7
பலிபீடத்துக்கும் நடுவே வைத்து, அதிலே
தண்ணீர் வார்த்து, சுற்றுப் பிராகாரத்தை 8
நிறுத்தி, பிராகாரவாசல் தொங்குதிரையைத்
தூக்கிவைத்து, அபிஷேகதைலத்தை எடுத்து, 9
வாசஸ்தலத்தையும் அதிலுள்ள யாவையும்
[11]அபிஷேகம்பண்ணி, அதையும் அதிலுள்ள
சகல பணிமுட்டுகளையும் பரிசுத்தப்படுத்துவா
யாக; அப்பொழுது பரிசுத்தமாயிருக்கும்.
தகனபலிபீடத்தையும் அதின் சகல பணிமுட் 10
டுகளையும் அபிஷேகம்பண்ணி, அதைப் பரி
சுத்தப்படுத்துவாயாக; அப்பொழுது அது மகா
[12]பரிசுத்தமான பலிபீடமாயிருக்கும். தொட் 11
டியையும் அதின் பாதத்தையும் அபிஷேகம்
பண்ணி, பரிசுத்தப்படுத்துவாயாக. பின்பு 12
ஆரோனையும் [13]அவன் குமாரரையும் ஆசரிப்
புக் கூடாரவாசலில் வரச்செய்து, அவர்களை
ஜலத்தினால் ஸ்நானம்பண்ணுவித்து, ஆரோ 13
னுக்குப் பரிசுத்த வஸ்திரங்களை உடுத்தி, என
க்கு ஆசாரிய ஊழியம் செய்யும்படிக்கு அவனை
[14]அபிஷேகம்பண்ணி, அவனைப் பரிசுத்தப்
படுத்துவாயாக. அவன் குமாரரையும் வரச் 14
செய்து, அவர்களுக்கு அங்கிகளை உடுத்தி,
அவர்கள் எனக்கு ஆசாரிய ஊழியம் செய் 15
யும்படி, அவர்களையும், அவர்கள் தகப்பனை
அபிஷேகம் பண்ணினபடியே, அபிஷேகம்
பண்ணுவாயாக; அவர்கள் பெறும் அந்த அபி
ஷேகம் தலைமுறைதோறும் [15]நித்திய ஆசாரி
யத்துவத்துக்கு ஏதுவாயிருக்கும் என்றார். **கர்** 16
**த்தர்** தனக்குக் கற்பித்தபடியெல்லாம் மோசே
செய்தான்.
இரண்டாம் வருஷம் முதலாம் மாதம் முதல் 17
தேதியில் வாசஸ்தலம் ஸ்தாபனம் பண்ணப்
பட்டது. மோசே கூடாரத்தை எடுப்பித்தான்; 18
அவன் அதின் பாதங்களை வைத்து, அதின்

[1] யாத். 28 39, 40
[2] யாத். 28. 4, 39. எசே. 44. 18
[3] யாத். 28 39
[4] சகரி. 14. 20
[5] யாத். 25. 40. உபா. 12. 32. 1 சாமு. 15. 22. மத். 28. 20, எபி. 8. 5
[6] யாத். 35. 10
[7] ஆதி. 14. 19. லேவி. 9. 22, 23 எண். 6. 23–27 யோசு. 22. 6. நெகே. 11. 2. லூ. 2. 34
[8] யாத். 12. 2. எண். 7. 1
[9] லேவி. 24. 5–8
[10] யாத். 30. 18
[11] யாத். 30. 26
[12] யாத். 29. 36, 37
[13] லேவி. 8. 1–18
[14] யாத். 28. 41. ஏசா. 61. 1. 1 யோவா. 2. 20
[15] எண். 25. 13. சங். 110. 4. எபி. 7. 17–24

பலகைகளை நிறுத்தி, அதின் தாழ்ப்பாள்களைப்
19 பாய்ச்சி, அதின் தூண்களை நாட்டி, வாசஸ்
தலத்தின்மேல் கூடாரத்தை விரித்து, அதின்
மேல் கூடாரத்தின் மூடியை, கர்த்தர் தனக்
20 குக் கற்பித்தபடியே, போட்டான். பின்பு,
**கர்த்தர்** மோசேக்குக் கற்பித்தபடியே, சாட்
சிப் பிரமாணத்தை [1]எடுத்து, அதைப் பெட்டி
யிலே வைத்து, பெட்டியில் தண்டுகளைப்
பாய்ச்சி, பெட்டியின்மேல் [2]கிருபாசன மூடி
21 யை வைத்து, பெட்டியை வாசஸ்தலத்துக்
குள்ளே கொண்டுபோய், மறைவின் [3]திரைச்
சீலையைத் தொங்கவைத்து, சாட்சிப்பெட்டி
22 யை மறைத்துவைத்தான். பின்பு, **கர்த்தர்**
மோசேக்குக் கற்பித்தபடியே, மேசையை
[4]ஆசரிப்புக் கூடாரத்தில் வாசஸ்தலத்தின் வட
23 புறமாய்த் திரைக்குப் புறம்பாக வைத்து, அதின்
மேல் **கர்த்தருடைய** சமுகத்தில் அப்பத்தை வரி
24 சையாக அடுக்கி வைத்தான். பின்பு **கர்த்தர்**
மோசேக்குக் கற்பித்தபடியே, குத்துவிளக்கை
ஆசரிப்புக் கூடாரத்தில் மேசைக்கு எதிராக
வாசஸ்தலத்தின் தென்புறத்திலே வைத்து,
25 **கர்த்தருடைய** சந்நிதியில் விளக்குகளை [5]ஏற்றி
26 னான். பின்பு, **கர்த்தர்** மோசேக்குக் கற்பித்த
படியே, ஆசரிப்புக் கூடாரத்தில் திரைக்கு
27 முன்பாகப் [6]பொற்பீடத்தை வைத்து, அதின்
மேல் சுகந்தவர்க்கத்தினால் [7]தூபங்காட்டி
28 னான். பின்பு, **கர்த்தர்** மோசேக்குக் கற்பித்
தபடியே, வாசஸ்தலத்தின் தொங்குதிரையைத்
29 தூக்கிவைத்து, தகனபலிபீடத்தை [8]ஆசரிப்
புக் கூடாரமான வாசஸ்தலத்தின் வாசலுக்கு
முன்பாக வைத்து, அதின்மேல் சர்வாங்க தக
னபலியையும் போஜனபலியையும் செலுத்தி
னான். அவன் ஆசரிப்புக் கூடாரத்துக்கும் 30
பலிபீடத்துக்கும் நடுவே [9]தொட்டியை வை
த்து, கழுவுகிறதற்கு அதிலே தண்ணீர் வார்த்
தான். அவ்விடத்திலே மோசேயும் ஆரோ 31
னும் அவன் குமாரரும் தங்கள் கைகளையும்
கால்களையும் கழுவினார்கள். **கர்த்தர்** மோசேக் 32
குக் கற்பித்தபடியே, அவர்கள் ஆசரிப்புக்
கூடாரத்துக்குள்ளே பிரவேசிக்கிறபோதும்,
பலிபீடத்தண்டையில்சேருகிறபோதும், அவர்
கள் [10]கழுவிக்கொள்ளுவார்கள். பின்பு, அவன் 33
வாசஸ்தலத்தையும் பலிபீடத்தையும் சுற்றிப்
[11]பிராகாரத்தை நிறுத்தி, பிராகாரத்தின் தொங்
குதிரையைத் தொங்கவைத்தான்; இவ்விதமாய்
மோசே வேலையை முடித்தான்.

அப்பொழுது [12]ஒரு மேகம் ஆசரிப்புக் கூடா 34
ரத்தை மூடினது; **கர்த்தருடைய** மகிமை வாச
ஸ்தலத்தை நிரப்பிற்று. மேகம் அதின்மேல் 35
தங்கி, **கர்த்தருடைய** மகிமை வாசஸ்தலத்தை
நிரப்பினதினால், மோசே ஆசரிப்புக் கூடாரத்
துக்குள் பிரவேசிக்கக் கூடாமல் இருந்தது.
வாசஸ்தலத்திலிருந்து மேகம் [13]மேலே எழும் 36
பும்போது, இஸ்ரவேல் புத்திரர் பிரயாணம்
பண்ணப் புறப்படுவார்கள். மேகம் எழும்பா 37
திருந்தால், அது எழும்பும் நாள் வரைக்கும்
[14]பிரயாணம் பண்ணாதிருப்பார்கள். இஸ்ர 38
வேல் வம்சத்தார் பண்ணும் எல்லாப் பிரயா
ணங்களிலும் அவர்களெல்லாருடைய கண்க
ளுக்கும் பிரத்தியட்சமாகப் பகலில் **கர்த்தரு
டைய** மேகமும், [15]இரவில் அக்கினியும், வாச
ஸ்தலத்தின்மேல் தங்கியிருந்தது.

1 யாத். 25. 16
2 யாத். 37. 6-9
3 யாத். 26. 33
4 யாத். 26. 35
5 யாத். 25. 37
6 யாத். 30. 6
7 யாத். 30. 7
8 யாத். 27. 1, 2
9 யாத். 30. 18
10 சங். 73. 13
11 யாத். 27. 9, 16
12 யாத். 13. 21, 22. 29. 43. லேவி. 16. 2. எண். 9. 15. 1 இரா. 8. 10. சங். 18. 10-12. ஏசா. 6. 4. ஆகாய் 2. 7, 9. வெளி. 15. 8
13 நெகே. 9. 19
14 சங். 31. 15
15 சங். 78. 14; 105. 39. ஏசா. 4. 5

# THE BOOK OF LEVITICUS

# லே வி ய ரா க ம ம்

1 **கர்த்தர்** ஆசரிப்புக் கூடாரத்திலிருந்து
[1]மோசேயைக் கூப்பிட்டு, அவனை நோக்கி:
2 நீ இஸ்ரவேல் புத்திரரிடத்தில் சொல்லவேண்
டியது என்னவென்றால், உங்களில் ஒருவன்
**கர்த்தருக்குப்** [2]பலிசெலுத்த வந்தால், மாட்டு
மந்தையிலாவது ஆட்டுமந்தையிலாவது ஒரு
மிருகத்தைத் தெரிந்தெடுத்து, பலிசெலுத்த
வேண்டும்.
3 அவன் செலுத்துவது மாட்டுமந்தையிலி
ருந்து எடுக்கப்பட்ட சர்வாங்க தகனபலியா
னால், அவன் [3]பழுதற்ற ஒரு காளையைச்
செலுத்துவானாக; **கர்த்தருடைய** சந்நிதியில்
தான் அங்கிகரிக்கப்படும்படி, அவன் அதை
ஆசரிப்புக் கூடாரவாசலில் கொண்டுவந்து,
4 அது [4]தன் பாவநிவிர்த்திக்கென்று அங்கிகரிக்
கப்படும்படி [5]தன் கையை அதின் தலையின்
5 மேல் வைத்து, **கர்த்தருடைய** சந்நிதியில்
அந்தக் காளையைக் கொல்லக்கடவன்; அப்
பொழுது ஆரோனின் குமாரராகிய ஆசாரி
யர்கள் அதின் இரத்தத்தை எடுத்து, அதை
ஆசரிப்புக் கூடாரவாசலில் இருக்கிற பலி
பீடத்தின்மேல் சுற்றிலும் [6]தெளிக்கக்கடவர்
6 கள். பின்பு அவன் அந்தச் சர்வாங்க தகன
பலியைத் தோலுரித்து, அதைச் சந்துசந்தா
7 கத் துண்டிக்கக்கடவன். அப்பொழுது ஆசா
ரியனாகிய ஆரோனின் குமாரர் பலிபீடத்தின்
மேல் அக்கினியைப் போட்டு, அக்கினியின்
8 மேல் கட்டைகளை அடுக்கி, அவன் குமார
ராகிய ஆசாரியர்கள், துண்டங்களையும் தலை
யையும் கொழுப்பையும் பலிபீடத்திலுள்ள
அக்கினியில் இருக்கிற கட்டைகளின்மேல்
9 அடுக்கிவைக்கக்கடவர்கள். அதின் குடல்களை
யும் தொடைகளையும் அவன் தண்ணீரினால்
கழுவுவானாக; அவைகளையெல்லாம் ஆசாரி
யன் பலிபீடத்தின்மேல் சர்வாங்க தகனபலி
யாகத் தகனிக்கக்கடவன்; இது **கர்த்தருக்குச்**
[7]சுகந்த வாசனையான தகனபலி.
10 அவன் செலுத்துவது செம்மறியாட்டு மந்
தையிலுள்ள ஆடுகளிலாவது வெள்ளாட்டு
மந்தையிலுள்ள ஆடுகளிலாவது எடுக்கப்பட்ட
சர்வாங்க தகனபலியானால், பழுதற்ற ஒரு
11 கடாவைக் கொண்டுவந்து, **கர்த்தருடைய** சந்
நிதியில் பலிபீடத்தின் வடபுறத்தில் [8]அதைக்
கொல்லக்கடவன்; அப்பொழுது ஆரோனின்
குமாரராகிய ஆசாரியர்கள் அதின் இரத்தத்
தைப் பலிபீடத்தின்மேல் சுற்றிலும் தெளிக்
கக்கடவர்கள். பின்பு அவன் அதைச் சந்து 12
சந்தாகத் துண்டித்து, அதின் தலையையும்
கொழுப்பையும் கூட வைப்பானாக; அவை
களை ஆசாரியன் பலிபீடத்திலுள்ள அக்கினி
யில் இருக்கிற கட்டைகளின்மேல் அடுக்கி
வைக்கக்கடவன். குடல்களையும் தொடை 13
களையும் அவன் தண்ணீரினால் கழுவுவானாக;
அவைகளையெல்லாம் ஆசாரியன் கொண்டு
வந்து பலிபீடத்தின்மேல் தகனிக்கக்கடவன்;
இது சர்வாங்க தகனபலி; இது **கர்த்தருக்குச்**
சுகந்த வாசனையான தகனபலி.
அவன் **கர்த்தருக்குச்** செலுத்துவது பற 14
வைகளிலிருந்து எடுக்கப்பட்ட சர்வாங்க தகன
பலியானால், காட்டுப்புறாக்களிலாவது [9]புறாக்
குஞ்சுகளிலாவது எடுத்துச் செலுத்தக்கடவன்.
அதை ஆசாரியன் பலிபீடத்தண்டையில் 15
கொண்டுவந்து, அதின் தலையைக் கிள்ளி, பலி
பீடத்தில் தகனித்து, அதின் இரத்தத்தைப்
பலிபீடத்தின் பக்கத்தில் சிந்தவிட்டு, அதின் 16
இரைப்பையை அதின் மலத்தோடுங்கூட எடு
த்து, அதைப் பலிபீடத்தண்டையில் கீழ்புற
மாகச் சாம்பல் இருக்கிற இடத்திலே எறிந்து
விட்டு, பின்பு அதின் செட்டைகளுடன் 17
அதை [10]இரண்டாக்காமல் பிளப்பானாக; பின்பு
ஆசாரியன் அதைப் பலிபீடத்திலுள்ள அக்கி
னியில் இருக்கிற கட்டைகளின்மேல் தகனிக்
கக்கடவன்; இது சர்வாங்க தகனபலி; இது
**கர்த்தருக்குச்** சுகந்த வாசனையான தகனபலி.
ஒருவன் போஜனபலியாகிய [11]காணிக்கை **2**
யைக் **கர்த்தருக்குச்** செலுத்தவேண்டுமானால்,
அவன் காணிக்கை மெல்லிய மாவாயிருப்ப
தாக; அவன் அதின்மேல் எண்ணெய் வார்
த்து, அதின்மேல் தூபவர்க்கம்போட்டு, அதை 2
ஆரோனின் குமாரராகிய ஆசாரியர்களிடத்
தில் கொண்டுவருவானாக; அப்பொழுது ஆசா
ரியன் அந்த மாவிலும் எண்ணெயிலும் ஒரு
கைப்பிடி நிறைய தூபவர்க்கம் எல்லாவற்
றோடும் எடுத்து, [12]அதைப் பலிபீடத்தின்மேல்
ஞாபகக்குறியாகத் தகனிக்கக்கடவன்; அது
**கர்த்தருக்குச்** சுகந்த வாசனையான தகனபலி.

[1] யாத். 19. 3; 40. 34. எண். 12. 4, 5
[2] லேவி. 22. 18, 19
[3] யாத். 12. 5. உபா. 15. 21. மல். 1. 14. லூ. 1. 35. யோ. 1. 36. எபே. 5. 27. எபி. 9. 14
[4] எண். 15. 25. ஏசா. 56. 7
[5] யாத். 29. 10, 15. எண். 8. 12. ஏசா. 53. 4–6. 2 கொ. 5. 21
[6] 2 நாளா. 35. 11. ஏசா. 52. 15. எபி. 12. 24
[7] ஆதி. 8. 21. எசே. 20. 28, 41. 2 கொ. 2. 15. எபே. 5. 2. பிலி. 4. 18
[8] யாத். 40. 22. எசே. 8. 5
[9] லேவி. 5. 7–12. லூ. 2. 24
[10] ஆதி. 15. 10
[11] லேவி. 6. 14. எண். 15. 4
[12] லேவி. 5. 12; 24. 7. ஏசா. 66. 3. அப். 10. 4

3 அந்தப் போஜனபலியில் [1]மீதியாயிருப்பது
ஆரோனையும் அவன் குமாரரையும் சேரும்;
**கர்த்தருக்கு** இடும் தகனபலிகளில் இது மகா
பரிசுத்தமானது.
4 நீ படைப்பது அடுப்பில் பாகம்பண்ணப்
பட்ட போஜனபலியானால், அது எண்ணெ
யிலே பிசைந்த மெல்லிய மாவினால் செய்த
புளிப்பில்லா அதிரசங்களாயாவது, [2]எண்
ணெய் பூசப்பட்ட புளிப்பில்லா அடைகளா
5 யாவது இருப்பதாக. நீ படைப்பது தட்டை
யான சட்டியில் பாகம்பண்ணப்பட்ட போஜ
னபலியானால், அது எண்ணெயிலே பிசைந்த
புளிப்பில்லா மெல்லிய மாவினால் செய்யப்
6 பட்டதாயிருப்பதாக. அதைத் துண்டு துண்
டாகப் பிட்டு, அதின்மேல் எண்ணெய் வார்ப்
7 பாயாக; இது ஒரு போஜனபலி. நீ படைப்
பது பொரிக்குஞ் சட்டியில் பாகம்பண்ணப்
பட்ட போஜனபலியானால், அது எண்ணெ
யிலே பிசைந்த மெல்லிய மாவினால் செய்யப்
8 படுவதாக. இப்படிச் செய்யப்பட்ட போஜன
பலியைக் **கர்த்தருக்குச்** செலுத்துவாயாக;
அது ஆசாரியனிடத்தில் கொண்டுவரப்படும்
போது, அவன் அதைப் பலிபீடத்தண்டை
9 யில் கொண்டுவந்து, அந்தப் போஜனபலியி
லிருந்து ஆசாரியன் ஞாபகக்குறியாக [3]ஒரு
பங்கை எடுத்துப் பலிபீடத்தின்மேல் தகனிக்
கக்கடவன்; இது **கர்த்தருக்குச்** சுகந்த வாசனை
10 யான தகனபலி. இந்தப் போஜனபலியில்
மீதியானது ஆரோனையும் அவன் குமாரரை
யும் சேரும்; **கர்த்தருக்கு** இடும் தகனங்களில்
11 இது மகா பரிசுத்தமானது. நீங்கள் **கர்த்த
ருக்குச்** செலுத்தும் எந்த போஜனபலியும்
[4]புளித்தமாவினால் செய்யப்படாதிருப்பதாக;
புளித்தமாவுள்ள தொன்றையும் தேனுள்ள
தொன்றையும் **கர்த்தருக்குத்** தகனபலியாகத்
12 தகனிக்கவேண்டாம். முதற்கனிகளைக் காணி
க்கையாகக் கொண்டுவந்து, [5]அவைகளைக் **கர்
த்தருக்குச்** செலுத்தலாம்; ஆனாலும், பலிபீடத்
தின்மேல் அவைகள் சுகந்த வாசனையாகத் தக
13 னிக்கப்படலாகாது. நீ படைக்கிற எந்தப்
போஜனபலியும் [6]உப்பினால் சாரமாக்கப்படுவ
தாக; உன் தேவனுடைய உடன்படிக்கையின்
உப்பை உன் போஜனபலியிலே குறைய
விடாமல், நீ படைப்பது எல்லாவற்றோடும்
14 உப்பையும் படைப்பாயாக. முதற்பலன்களை
போஜனபலியாக நீ **கர்த்தருக்குச்** செலுத்த
வந்தால், [7]நிறைந்த பச்சையான கதிர்களை
நெருப்பிலே வாட்டி உதிர்த்து, அதை உன்
முதற்பலனின் போஜனபலியாகக் கொண்டு
15 வரக்கடவாய். அதின்மேல் எண்ணெய் வார்
த்து, அதின்மேல் தூபவர்க்கத்தைப் போடுவா
16 யாக; இது ஒரு போஜனபலி. பின்பு ஆசாரி
யன், உதிர்த்த தானியத்திலும் எண்ணெயி
லும் எடுத்து, ஞாபகக்குறியான பங்கை
அதின் தூபவர்க்கம் எல்லாவற்றோடுங்கூடத்
தகனிக்கக்கடவன்; இது **கர்த்தருக்கு** இடும்
தகனபலி.

1 யாத். 29. 37
2 யாத். 29. 2
3 லேவி. 6. 15. யாத். 29. 18
4 லேவி. 6. 17. யாத். 12. 19, 20. மத். 16, 11, 12. மாற். 8. 15. லூ. 12. 1. 1 கொ. 5. 6-8.
5 லேவி. 23. 10. 11. யாத். 22. 29
6 எண். 18. 19. எஸ்றா 7. 22. எசே. 43. 24. மாற். 9. 49, 50
7 2 இரா. 4. 42
8 லேவி. 7. 11. 29: 22. 21
9 எண். 6. 14. மல். 1. 8, 14 எபி. 10. 22
10 லேவி. 1. 4, 5. யாத். 29. 10
11 யாத். 29. 10, 11, 13, 22
12 லேவி. 6. 12. 2 நாளா. 35. 14. எசே. 44. 15
13 1 இரா. 8. 62
14 லேவி. 4. 4
15 லேவி. 21. 6, 22. எண். 28. 2. எசே. 44. 7. மல். 1. 7, 12. 1 கொ. 10. 21

ஒருவன் [8]சமாதானபலியைப் படைக்க 3
வேண்டுமென்று, மாட்டுமந்தையில் எடுத்துச்
செலுத்துவானானால், அது காளையானாலும் சரி,
பசுவானாலும் சரி, [9]பழுதற்றிருப்பதைக் **கர்த்
தருடைய** சந்நிதியில் செலுத்தக்கடவன்.
அவன் தன் பலியின் தலைமேல் [10]தன் கையை 2
வைத்து, ஆசரிப்புக் கூடாரவாசலுக்கு
முன்பாக அதைக் கொல்லக்கடவன்; அப்
பொழுது ஆரோனின் குமாரராகிய ஆசாரி
யர் அதின் இரத்தத்தைப் பலிபீடத்தின்மேல்
சுற்றிலும் தெளிக்கக்கடவர்கள். பின்பு சமா 3
தானபலியிலே குடல்களை மூடிய [11]கொழுப்
பையும், குடல்களிலுள்ள கொழுப்பு முழுவ
தையும், இரண்டு குண்டிக்காய்களையும், 4
அவைகளின்மேல் சிறு குடல்களினிடத்தில்
இருக்கிற கொழுப்பையும், குண்டிக்காய்க
ளோடேகூடக் கல்லீரலின்மேல் இருக்கிற
சவ்வையும் எடுத்து, **கர்த்தருக்குத்** தகனபலி
யாகச் செலுத்துவானாக. அதை ஆரோனின் 5
குமாரர் [12]பலிபீடத்து அக்கினியிலுள்ள கட்
டைகளின்மேல் போட்டிருக்கும் சர்வாங்க
தகனபலியின்மீதில் போட்டுத் தகனிக்கக்கட
வர்கள்; இது **கர்த்தருக்குச்** சுகந்த வாசனை
யான தகனபலி.
அவன் **கர்த்தருக்குச்** சமாதானபலியைப் 6
படைக்கவேண்டுமென்று ஆட்டுமந்தையிலி
ருந்து எடுத்துச் செலுத்துவானானால், அது
ஆண் ஆனாலும் சரி, பெண் ஆனாலும் சரி, பழு
தற்றிருப்பதைச் செலுத்துவானாக. அவன் 7
ஆட்டுக்குட்டியைப் பலியாகச் செலுத்தவேண்
டுமானால், [13]அதைக் **கர்த்தருடைய** சந்நிதியில்
கொண்டுவந்து, தன் பலியின் [14]தலைமேல் 8
தன் கையை வைத்து, ஆசரிப்புக் கூடாரத்
துக்கு முன்பாக அதைக் கொல்லக்கடவன்;
அப்பொழுது ஆரோனின் குமாரர் அதின்
இரத்தத்தைப் பலிபீடத்தின்மேல் சுற்றிலும்
தெளிக்கக்கடவர்கள். பின்பு அவன் சமாதான 9
பலியிலே அதின் கொழுப்பையும், நடுவெலும்
பிலிருந்து எடுத்த முழு வாலையும், குடல்களை
மூடிய கொழுப்பையும், அவைகளின்மேல்
இருக்கிற கொழுப்பு முழுவதையும், இரண்டு 10
குண்டிக்காய்களையும், அவைகளின்மேல் சிறு
குடல்களினிடத்தில் இருக்கிற கொழுப்பை
யும், குண்டிக்காய்களோடேகூடக் கல்லீரலி
ன்மேல் இருக்கிற சவ்வையும் எடுத்து, **கர்த்
தருக்குத்** தகனபலியாகச் செலுத்தக்கடவன்.
அதை ஆசாரியன் பலிபீடத்தின்மேல் தகனிக் 11
கக்கடவன்; இது [15]**கர்த்தருக்கு** இடும் தகன
ஆகாரம்.
அவன் செலுத்துவது வெள்ளாடாயிருக்கு 12
மானால், அவன் அதைக் **கர்த்தருடைய** சந்நிதி
யில் கொண்டுவந்து, அதின் தலைமேல் தன் 13
கையை வைத்து, ஆசரிப்புக் கூடாரத்துக்கு
முன்பாக அதைக் கொல்லக்கடவன்; அப்
பொழுது ஆரோனின் குமாரர் அதின் இரத்தத்
தைப் பலிபீடத்தின்மேல் சுற்றிலும் தெளிக்
கக்கடவர்கள். அவன் அதிலே குடல்களை 14

மூடிய கொழுப்பையும், அவைகள்மேலிருக்
15 கிற கொழுப்பு முழுவதையும், இரண்டு குண்
டிக்காய்களையும், அவைகளின்மேல் சிறு குட
ல்களினிடத்தில் இருக்கிற கொழுப்பையும்,
குண்டிக் காய்களோடேகூடக் கல்லீரலின்
மேல் இருக்கிற சவ்வையும் எடுத்து, **கர்த்த
நுக்குத்** தகனபலியாகச் செலுத்தக்கடவன்.
16 ஆசாரியன் பலிபீடத்தின்மேல் அவைகளைத்
தகனிக்கக்கடவன்; இது சுகந்த வாசனையான
தகன ஆகாரம்; [1]கொழுப்பு முழுவதும் **கர்த்த
17 நுடையது**. கொழுப்பையாவது இரத்தத்தை
யாவது [2]நீங்கள் புசிக்கலாகாது; இது உங்கள்
வாசஸ்தலங்கள் எங்கும் உங்கள் தலைமுறை
தோறும் [3]நித்திய கட்டளையாயிருக்கும் என்று
சொல் என்றார்.

4 பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி:
2 நீ இஸ்ரவேல் புத்திரரிடத்தில் சொல்லவேண்
டியது என்னவென்றால், ஒருவன் கர்த்தரு
டைய கட்டளைகளில் யாதொன்றை [4]அறியா
மையினால் மீறி, செய்யத்தகாததைச் செய்து
பாவத்துக்கு உட்பட்டால் அறியவேண்டிய
3 தாவது: அபிஷேகம் பெற்ற [5]ஆசாரியன்,
ஜனங்கள் குற்றத்திற்கு உட்படத்தக்கதாகப்
பாவம்செய்தால், தான் செய்த பாவத்தினிமித்
தம் பழுதற்ற ஒரு இளங்காளையை பாவநிவா
ரணபலியாகக் **கர்த்தருடைய** சந்நிதியில் கொ
4 ண்டுவரக்கடவன். அவன் அந்தக் காளையை
[6]ஆசரிப்புக் கூடாரவாசலிலே **கர்த்தருடைய**
சந்நிதியில் கொண்டுவந்து, அதின் தலைமேல்
தன் கையை வைத்து, **கர்த்தருடைய** சந்நிதி
5 யில் அதைக் கொல்லக்கடவன். அப்பொ
ழுது, அபிஷேகம்பெற்ற ஆசாரியன் [7]அந்
தக் காளையின் இரத்தத்தில் கொஞ்சம் எடுத்து,
அதை ஆசரிப்புக் கூடாரத்தில் கொண்டுவந்து,
6 தன் விரலை இரத்தத்தில் தோய்த்து, பரிசுத்த
ஸ்தலத்தின் திரைக்கு எதிரே [8]**கர்த்தருடைய**
7 சந்நிதியில் ஏழுதரம் தெளிக்கக்கடவன். பின்
பு, ஆசாரியன் அந்த இரத்தத்தில் [9]கொஞ்சம்
எடுத்து, ஆசரிப்புக் கூடாரத்திலே **கர்த்தரு
டைய** சந்நிதியில் இருக்கும் சுகந்த தூபபீடத்
துக் கொம்புகளின்மேல் பூசி, காளையினுடைய
மற்ற இரத்தம் முழுவதையும் ஆசரிப்புக் கூடா
ரவாசலுக்கு முன்பாக இருக்கிற தகனபலிபீ
8 டத்தின் அடியிலே ஊற்றிவிட்டு, பாவநிவா
ரணபலியான காளையின் எல்லாக் கொழுப்பு
மாகிய குடல்களை மூடிய கொழுப்பையும்,
அவைகள்மேல் இருக்கிற கொழுப்பு முழுவ
9 தையும், இரண்டு குண்டிக்காய்களையும், அ
வைகள்மேல் சிறு குடல்களினிடத்தில் இருக்
கிற கொழுப்பையும், குண்டிக்காய்களோடே
கூடக் கல்லீரலின்மேல் இருக்கிற சவ்வை
10 யும், சமாதானபலியின் காளையிலிருந்து எடுக்
கிறதுபோல அதிலிருந்து எடுத்து, அவைக
ளைத் தகனபலிபீடத்தின்மேல் தகனிக்கக்கட
11 வன். காளையின் தோலையும், அதின் மாம்சம்
முழுவதையும், அதின் தலையையும், தொடை
களையும், அதின் குடல்களையும், அதின் சாணி

யையும், காளை முழுவதையும் [10]பாளயத்துக் 12
குப் புறம்பே சாம்பல் கொட்டுகிற சுத்தமான
இடத்திலே கொண்டுபோய், கட்டைகளின்
மேல் போட்டு, அக்கினியாலே சுட்டெரிக்
கக்கடவன்; சாம்பல் கொட்டியிருக்கிற இடத்
திலே அதைச் சுட்டெரிக்கக்கடவன்.

இஸ்ரவேல் சபையார் எல்லாரும் [11]அறியா 13
மையினால் பாவம்செய்து, காரியம் தங்கள்
கண்களுக்கு மறைவாயிருக்கிறதினால், **கர்த்த
ருடைய** கட்டளைகளில் யாதொன்றை மீறி,
செய்யத்தகாததைச் செய்து, பாவத்துக்குட்
பட்டுக் குற்றவாளிகளானால், அவர்கள் செய்த 14
பாவம் தெரியவரும்போது, சபையார் அந்
தப் பாவத்தினிமித்தம் ஒரு இளங்காளையை
ஆசரிப்புக் கூடாரத்துக்கு முன்பாகப் பலியி
டக் கொண்டுவரவேண்டும். சபையின் மூப் 15
பர் **கர்த்தருடைய** சந்நிதியில் தங்கள் கைகளை
அதின் தலைமேல் வைக்கக்கடவர்கள்; பின்பு
**கர்த்தருடைய** சந்நிதியில் அந்தக் காளையைக்
கொல்லவேண்டும். அப்பொழுது [12]அபிஷே 16
கம்பெற்ற ஆசாரியன் அதின் இரத்தத்தில்
கொஞ்சம் எடுத்து, ஆசரிப்புக் கூடாரத்தில்
கொண்டுவந்து, தன் விரலை இரத்தத்தில் 17
தோய்த்து, **கர்த்தருடைய** சந்நிதியில் திரைக்கு
எதிரே ஏழுதரம் தெளித்து, ஆசரிப்புக் கூடா 18
ரத்தில் **கர்த்தருடைய** சந்நிதியில் இருக்கும்
பலிபீடத்தின் கொம்புகளின்மேல் அந்த இரத்
தத்தில் கொஞ்சம் பூசி, மற்ற இரத்தமெல்லாம்
ஆசரிப்புக் கூடாரவாசலில் இருக்கிற தகனப
லிபீடத்தின் அடியிலே ஊற்றிவிட்டு, அதின் 19
கொழுப்பு முழுவதையும் அதிலிருந்து எடுத்
து, பலிபீடத்தின்மேல் தகனித்து, பாவநி 20
வாரணபலியின் காளையைச் செய்தபிரகாரம்
இந்தக் காளையையும் செய்து, இவ்வண்ண
மாய் ஆசாரியன் [13]அவர்களுக்குப் பாவநிவிர்த்தி
செய்யக்கடவன்; அப்பொழுது அது அவர்க
ளுக்கு மன்னிக்கப்படும். பின்பு காளையைப் 21
பாளயத்துக்குப் புறம்பே கொண்டுபோய், மூந்
தின காளையைச் சுட்டெரித்ததுபோலச் சுட்
டெரிக்கக்கடவன்; இது சபைக்காகச் செய்
யப்படும் பாவநிவாரணபலி.

ஒரு பிரபு தன் தேவனாகிய **கர்த்தருடைய**
கட்டளைகளில் யாதொன்றை மீறி, அறியா
மையினால் செய்யத்தகாததைச் செய்து, பாவத்
துக்குட்பட்டுக் குற்றவாளியானால், தான் 23
செய்தது பாவம் என்று தனக்குத் தெரியவ
ரும்போது, அவன் வெள்ளாடுகளில் பழு
தற்ற ஒரு இளங்கடாவைப் பலியாகக் கொண்
டுவந்து, அந்தக் கடாவின் தலைமேல் [14]தன் 24
கையை வைத்து, **கர்த்தருடைய** சந்நிதியில்
சர்வாங்க தகனபலி கொல்லப்படும் இடத்தில்
அதைக் கொல்லக்கடவன்; இது பாவநிவா
ரணபலி. அப்பொழுது ஆசாரியன் அதின் 25
இரத்தத்தில் கொஞ்சம் தன் விரலால் எடுத்து,
தகனபலிபீடத்துக் கொம்புகளின்மேல் பூசி,
மற்ற இரத்தத்தைத் தகனபலிபீடத்தின் அடி
யிலே ஊற்றிவிட்டு, அதின் கொழுப்பு முழு 26

[1] லேவி. 7. 28, 25. 1 சாமு. 2. 15.2 நாளா. 7.7
[2] ஆதி. 9. 4. உபா. 12. 16. 1 சாமு. 14.32,33. எசே. 14. 7, 15
[3] லேவி. 6. 18; 7. 36
[4] லேவி. 5.15,17. எண். 15.22, சங். 19. 12. எபி. 5. 2
[5] லேவி. 6. 12; 16. 6
[6] யாத். 29. 10, 11
[7] லேவி. 16. 14. எண். 19. 4
[8] லேவி. 14. 16, 27
[9] லேவி. 8. 15; 9. 9. யாத். 30. 1–10. சங். 118. 27
[10] லேவி. 6. 11. எபி. 13. 11
[11] எண். 15. 24. யோசு. 7. 11. 1 தீமோ. 1. 13
[12] எபி. 9. 12–14
[13] எண். 15. 25. தானி. 9.24. ரோ. 5. 11. கலா. 3. 13. எபி. 2. 17; 10. 10–12. 1 யோ. 1. 7; 2. 2
[14] ஏசா. 53. 6

வதையும், சமாதானபலியின் கொழுப்பைப்
போல, பலிபீடத்தின்மேல் தகனித்து, இவ்
வண்ணமாய் ஆசாரியன் அவன் செய்த பாவத்
தைக்குறித்து [1]அவனுக்காகப் பாவநிவிர்த்தி
செய்யக்கடவன்; அப்பொழுது அது அவனு
க்கு மன்னிக்கப்படும்.
27 சாதாரண ஜனங்களில் [2]ஒருவன் அறியா
மையினால் **கர்த்தரின்** கட்டளைகளில் யா
தொன்றை மீறி, செய்யத்தகாததைச் செய்து,
பாவத்துக்குட்பட்டுக் குற்றவாளியானால்,
28 தான் செய்தது பாவம் என்று தனக்குத் தெரி
யவரும்போது, அவன் தான் செய்த பாவத்தி
னிமித்தம் வெள்ளாடுகளில் பழுதற்ற ஒரு
பெண்குட்டியைப் பலியாகக் கொண்டுவந்து,
29 பாவநிவாரணபலியின் தலைமேல் தன் கையை
வைத்து, சர்வாங்க தகனபலியிடும் இடத்தில்
அந்தப் பாவநிவாரணபலியைக் கொல்லக்கட
30 வன். அப்பொழுது ஆசாரியன் அதின்
இரத்தத்தில் கொஞ்சம் தன் விரலால் எடுத்து,
தகனபலிபீடத்துக் கொம்புகளின்மேல் பூசி,
மற்ற இரத்தமெல்லாம் பலிபீடத்தின் அடி
31 யிலே ஊற்றிவிட்டு, சமாதானபலியிலிருந்து
கொழுப்பை எடுப்பதுபோல, அதின் கொழு
ப்பு முழுவதையும் எடுத்து, ஆசாரியன் பலி
பீடத்தின்மேல் **கர்த்தருக்குச்** [3]சுகந்த வாசனை
யாகத் தகனித்து, இவ்வண்ணமாய் அவனுக்
குப் பாவநிவிர்த்தி செய்யக்கடவன்; அப்பொ
ழுது அது அவனுக்கு மன்னிக்கப்படும்.
32 அவன் பாவநிவாரணபலியாக ஒரு ஆட்டுக்
குட்டியைக் கொண்டுவருவானாகில், பழுதற்ற
33 பெண்குட்டியைக் கொண்டுவந்து, அந்தப்
பாவநிவாரணபலியின் தலைமேல் தன் கையை
வைத்து, சர்வாங்க தகனபலி கொல்லப்படும்
இடத்தில் அதைப் பாவநிவாரணபலியாகக்
34 கொல்லக்கடவன். அப்பொழுது ஆசாரியன்
அந்தப் பாவநிவாரணபலியின் இரத்தத்தில்
கொஞ்சம் தன் விரலால் எடுத்து, தகனபலி
பீடத்துக் கொம்புகளின்மேல் பூசி, மற்ற
இரத்தமெல்லாம் பலிபீடத்தின் அடியிலே
35 ஊற்றிவிட்டு, சமாதானபலியான ஆட்டுக்
குட்டியின் கொழுப்பை எடுக்கிறதுபோல,
அதின் கொழுப்பு முழுவதையும் எடுத்து,
**கர்த்தருக்கு** இடப்படும் தகனபலிகளைப்
போல, பலிபீடத்தின்மேல் ஆசாரியன் தக
னிக்கவேண்டும்; இவ்வண்ணமாய் அவன்
செய்த பாவத்துக்கு ஆசாரியன் பாவநிவிர்த்தி
செய்யக்கடவன்; அப்பொழுது அது அவ
னுக்கு மன்னிக்கப்படும்.

**5** சாட்சியாகிய ஒருவன், இடப்பட்ட [4]ஆணை
யைக்கேட்டிருந்தும், தான் கண்டதையும்
அறிந்ததையும் தெரிவியாதிருந்து பாவம் செய்
தால், [5]அவன் தன் அக்கிரமத்தைச் சுமப்
2 பான். அசுத்தமான காட்டு மிருகத்தின் உட
லையாவது, அசுத்தமான நாட்டு மிருகத்தின்
உடலையாவது, அசுத்தமான ஊரும் பிராணி
களின் உடலையாவது, இவ்வித அசுத்தமான
யாதொரு வஸ்துவையாவது, [6]ஒருவன் அறி
யாமல் தொட்டால், அவன் தீட்டும் குற்ற
முமுள்ளவனாவான். அல்லது, [7]எந்த அசுத் 3
தத்தினாலாகிலும் தீட்டுப்பட்ட ஒரு மனிதனை
ஒருவன் அறியாமல் தொட்டு, பின்பு அதை
அறிந்துகொண்டால், அவன் குற்றமுள்ளவ
னாவான். மனிதர் பதறி ஆணையிடும் எந்தக் 4
காரியத்திலானாலும், ஒருவன் [8]தீமைசெய்கிற
தற்காவது நன்மைசெய்கிறதற்காவது, தன்
மனம் அறியாமல், தன் உதடுகளினால் பதறி
ஆணையிட்டு, பின்பு அவன் அதை அறிந்து
கொண்டால், அதைக்குறித்துக் குற்றமுள்ளவ
னாவான். இப்படிப்பட்டவைகள் ஒன்றில், 5
ஒருவன் குற்றமுள்ளவனாகும்போது, அவன்
தான் செய்தது [9]பாவம் என்று அறிக்கையிட்டு,
தான் செய்த பாவத்துக்குப் பாவநிவாரணபலி 6
யாக, ஆடுகளிலாவது வெள்ளாடுகளிலாவது,
ஒரு பெண்குட்டியைக் குற்றநிவாரணபலி
யாகக் **கர்த்தருடைய** சந்நிதியில் கொண்டுவர
வேண்டும்; அதினாலே ஆசாரியன் அவன்
செய்த பாவத்தைக்குறித்து அவனுக்காகப் பாவ
நிவிர்த்தி செய்யக்கடவன். ஆட்டுக்குட்டி 7
யைக் கொண்டுவர [10]அவனுக்குச் சக்தியில்லா
திருந்தால், அவன் செய்த குற்றத்தினிமித்தம்
இரண்டு காட்டுப் புறாக்களையாவது, இரண்டு
புறாக் குஞ்சுகளையாவது, ஒன்றைப் பாவநிவா
ரணபலியாகவும் மற்றொன்றைச் சர்வாங்க
தகனபலியாகவும், **கர்த்தருடைய** சந்நிதியில்
கொண்டுவரக்கடவன். அவைகளை ஆசாரிய 8
னிடத்தில் கொண்டுவருவானாக; அவன் பாவ
நிவாரணபலிக்கானதை முன்னே செலுத்தி,
அதின் தலையை அதின் கழுத்தினிடத்தில்
கிள்ளி, அதை இரண்டாக்காமல் வைத்து,
அதின் இரத்தத்தில் கொஞ்சம் எடுத்து, பலி 9
பீடத்தின் பக்கத்தில் தெளித்து, மீதியான
இரத்தத்தைப் பலிபீடத்தின் அடியிலே வடிய
விடுவானாக; இது பாவநிவாரணபலி. மற் 10
றதை நியமத்தின்படியே அவன் தகனபலி
யாய்ச் செலுத்தக்கடவன்; இவ்விதமாக அவன்
செய்த பாவத்தை ஆசாரியன் [11]நிவிர்த்திசெய்
யக்கடவன்; அப்பொழுது அது [12]அவனுக்கு
மன்னிக்கப்படும்.
இரண்டுகாட்டுப்புறாக்களையாவது இரண்டு 11
புறாக் குஞ்சுகளையாவது கொண்டுவர அவ
னுக்குச் சக்தியில்லாதிருந்தால், பாவம் செய்த
வன் பாவநிவாரணத்துக்காக ஒரு எப்பா அள
வான மெல்லிய மாவிலே பத்தில் ஒரு பங்
கைத் தன் காணிக்கையாகக் கொண்டுவருவா
னாக; அது பாவநிவாரண பலியாயிருப்பதி
னால், [13]அதின்மேல் எண்ணெய் வார்க்காம
லும் தூபவர்க்கம் போடாமலும் இருந்து,
அதை ஆசாரியனிடத்தில் கொண்டுவரவேண் 12
டும்; அதிலே ஆசாரியன் [14]ஞாபகக்குறியான
பங்காகத் தன் கைப்பிடி நிறைய எடுத்து,
**கர்த்தருக்கு** இடும் தகனபலிகளைப்போல, பலி
பீடத்தின்மேல் தகனிக்கக்கடவன்; இது பாவ
நிவாரணபலி. இவ்விதமாக மேற்சொல்லிய 13
காரியங்கள் ஒன்றில் அவன் செய்த பாவத்

[1] எண். 15. 28
[2] எண். 15. 27
[3] யாத். 29. 18. எஸ்ற 6. 10. ஏசா. 42. 21
[4] 1 இரா. 8. 31. நீதி. 29. 24. மத். 26. 63
[5] எண். 9. 13. சங். 38. 4. ஏசா. 53. 11. 1 பே. 2. 24
[6] எண். 19. 11, 16. ஆகாய் 2, 13
[7] 12, 13, 15. அதி
[8] 1 சாமு. 25. 22. அப். 23. 12. மாற். 6. 23
[9] லேவி. 26. 40. எண். 5. 7. யோசு. 7. 19. எஸ்ற 10. 11. சங். 32. 5. தானி. 9. 4. 2 கொ. 10. 10
[10] லேவி. 12. 8. 14. 21
[11] லேவி. 4. 26
[12] மாற். 5. 15
[13] எண். 5. 15
[14] எண். 5. 26. அப். 10. 4

துக்காக ஆசாரியன் பாவநிவிர்த்தி செய்யக்
கடவன்; அப்பொழுது அது அவனுக்கு மன்
னிக்கப்படும், மீதியானது போஜனபலியைப்
போல ஆசாரியனைச் சேரும் என்றார்.
14 பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி:
15 ஒருவன் **கர்த்தருக்குரிய** பரிசுத்தமானவைக
ளில் குற்றஞ்செய்து, [1]அறியாமையினால்
பாவத்துக்குட்பட்டால், [2]அவன் தன் குற்றத்
தினிமித்தம் பரிசுத்த [3]ஸ்தலத்துச் சேக்கல்
கணக்கின்படியே, நீ அவன்மேல் சுமத்தும்
அபராதம் எவ்வளவோ, அவ்வளவு வெள்ளிச்
சேக்கல் பெறும் பழுதற்ற ஒரு ஆட்டுக்கடா
வைக் குற்றநிவாரணபலியாகக் **கர்த்தருடைய**
16 சந்நிதியில் கொண்டுவந்து, பரிசுத்தமானதைக்
குறித்துத் தான் செய்த தப்பிதத்தினால் உண்
டான நஷ்டத்தைச் செலுத்தி, அதினோடு ஐந்
தில் ஒரு பங்கை [4]அதிகமாகக் கூட்டி, ஆசாரி
யனுக்குக் கொடுப்பானாக; குற்றநிவாரணபலி
யாகிய ஆட்டுக்கடாவினாலே அவனுக்காக ஆசா
ரியன் பாவநிவிர்த்தி செய்யக்கடவன்; அப்
பொழுது அது அவனுக்கு மன்னிக்கப்படும்.
17 ஒருவன் செய்யத்தகாதென்று **கர்த்தருடைய**
கட்டளைகளினால் விலக்கப்பட்ட யாதொன்
றைச் செய்து பாவத்துக்குட்பட்டால், [5]அதை
அவன் அறியாமையினால் செய்தாலும், அவன்
குற்றமுள்ளவனாயிருந்து, தன் அக்கிரமத்தைச்
18 சுமப்பான். அதினிமித்தம் அவன் குற்றநிவா
ரணபலியாக, உன் மதிப்புக்குச் சரியான
பழுதற்ற ஒரு ஆட்டுக்கடாவை ஆசாரியனி
டத்தில் கொண்டுவருவானாக; அவன் அறியா
மல் செய்த தப்பிதத்தை ஆசாரியன் அவனுக்
காக நிவிர்த்திசெய்யக்கடவன்; அப்பொழுது
19 அது அவனுக்கு மன்னிக்கப்படும். இது குற்ற
நிவாரணபலி; அவன் **கர்த்தருக்கு** விரோத
மாய்க் [6]குற்றஞ்செய்தான் என்பது நிச்சயம்
என்றார்.

6 பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி:
2 ஒருவன் **கர்த்தருக்கு** விரோதமாக அநியாயம்
செய்து, [7]தன் வசத்தில் ஒப்புவிக்கப்பட்ட
பொருளிலாவது, கொடுக்கல் வாங்கலிலாவது,
[8]தன் அயலானுக்கு மாறாட்டம்பண்ணி, அல்
லது ஒரு வஸ்துவைப் பலாத்காரமாய்ப் பறித்
துக்கொண்டு, அல்லது தன் அயலானுக்கு
3 [9]இடுக்கண்செய்து, அல்லது [10]காணாமல்
போனதைக் கண்டடைந்தும் அதை மறு
தலித்து, அதைக்குறித்துப் [11]பொய்யாணை
யிட்டு, மனிதர் செய்யும் இவை முதலான
யாதொரு காரியத்தில் பாவம் செய்தானேயா
4 கில், அவன் செய்த பாவத்தினாலே குற்ற
வாளியானபடியால், தான் பலாத்காரமாய்ப்
பறித்துக்கொண்டதையும், இடுக்கண் செய்து
பெற்றுக்கொண்டதையும், தன் வசத்திலே
ஒப்புவிக்கப்பட்டதையும், காணாமல் போயி
5 ருந்து தான் கண்டெடுத்ததையும், பொய்யா
ணையிட்டு சம்பாதித்த பொருளையும் [12]திரும்
பக் கொடுக்கக்கடவன்; அந்த முதலைக் கொடுக்
கிறதும் அல்லாமல், அதினோடு ஐந்தில் ஒரு

1 லேவி. 22. 14
1 எஸ்றா 10. 19
3 யாத். 30. 13
4 எண். 5. 7
5 சங். 19. 12. லூ. 12. 48
6 எஸ்றா 10. 2
7 யாத். 22. 7, 10
8 அப். 5. 4. கொலோ. 3. 9
9 வஞ்சனை. சரி. 24. 28; 26. 19
10 உபா. 22. 1-3
11 யாத். 22. 11. எரே. 7. 9. சகரி. 5. 4
12 எண். 5. 7. 1 சாமு. 12. 3. 2 சாமு. 12. 6. லூ. 19. 8
13 லேவி. 4. 33
14 யாத். 28. 39-43. எசே. 44. 17, 18
15 எசே. 44. 19
16 லேவி. 2. 1. எண். 15. 4
17 எண். 18. 10. எசே. 44. 29. 1 கொரி. 9. 13, 14

பங்கு அதிகமாகவுங் கூட்டி, அதைத் தான்
குற்றநிவாரணபலியை இடும் நாளில், அதற்
குரியவனுக்குக் கொடுத்துவிட்டு, தன் குற்ற 6
நிவாரணபலியாக, உன் மதிப்புக்குச் சரியான
பழுதற்ற ஆட்டுக்கடாவைக் **கர்த்தருக்குச்**
செலுத்தும்படி, அதை ஆசாரியனிடத்தில்
குற்றநிவாரணபலியாகக் கொண்டுவருவானாக.
**கர்த்தருடைய** சந்நிதியில் அவன் பாவத்தை 7
ஆசாரியன் [13]நிவிர்த்திசெய்யக்கடவன்; அப்
பொழுது அவன் குற்றவாளியாகச் செய்த
அப்படிப்பட்ட எந்தக் காரியமும் அவனுக்கு
மன்னிக்கப்படும் என்றார்.
பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி: 8
நீ ஆரோனுக்கும் அவன் குமாரருக்கும் கற் 9
பிக்கவேண்டிய சர்வாங்க தகனபலிக்குரிய பிர
மாணம் என்னவென்றால், சர்வாங்க தகன
பலியானது இராமுழுவதும் விடியற்கால
மட்டும் பலிபீடத்தின்மேல் எரியவேண்டும்;
பலிபீடத்தின்மேலுள்ள அக்கினி எரிந்து
கொண்டே இருக்கவேண்டும். ஆசாரியன் தன் 10
[14]சணல்நூல் அங்கியைத் தரித்து, தன் சணல்
நூல் ஜல்லடத்தை அரையில் போட்டுக்
கொண்டு, பலிபீடத்தின்மேல் அக்கினியில்
எரிந்த சர்வாங்க தகனபலியின் சாம்பலை
எடுத்து, பலிபீடத்துப் பக்கத்தில் கொட்டி,
பின்பு தன் [15]வஸ்திரங்களைக் கழற்றி, வேறு 11
வஸ்திரங்களை உடுத்திக்கொண்டு, அந்தச் சாம்
பலைப் பாளயத்துக்குப் புறம்பே சுத்தமான
ஒரு இடத்திலே கொண்டுபோய்க் கொட்டக்
கடவன். பலிபீடத்தின்மேலிருக்கிற அக்கினி 12
அவியாமல் எரிந்துகொண்டிருக்கவேண்டும்;
ஆசாரியன் காலைதோறும் அதின்மேல் எரியும்
படி கட்டைகளைப் போட்டு, அதின்மேல் சர்
வாங்க தகனபலியை வரிசையாக வைத்து,
அதின்மேல் சமாதானபலிகளின் கொழுப்
பைப் போட்டுத் தகனிக்கக்கடவன். பலி 13
பீடத்தின்மேல் அக்கினி எப்பொழுதும் எரிந்
துகொண்டிருக்கவேண்டும்; அது ஒருபொழு
தும் அவிந்துபோகலாகாது.
போஜனபலியின் [16]பிரமாணம் என்னவென் 14
றால், ஆரோனின் குமாரர் அதைக் **கர்த்த
ருடைய** சந்நிதியில் பலிபீடத்துக்கு முன்னே
படைக்கவேண்டும். அவன் போஜன பலியின் 15
மெல்லிய மாவிலும் அதின் எண்ணெயிலும்
தன் கைப்பிடி நிறைய எடுத்து, போஜனபலி
யின்மேலுள்ள தூபவர்க்கம் யாவற்றோடும்
கூட அதை ஞாபகக்குறியாகப் பலிபீடத்தின்
மேல் **கர்த்தருக்குச்** சுகந்த வாசனையாகத் தக
னிக்கக்கடவன். அதில் மீதியானதை [17]ஆரோ 16
னும் அவன் குமாரரும் புசிப்பார்களாக; அது
புளிப்பில்லா அப்பத்துடன் பரிசுத்த ஸ்தலத்
தில் புசிக்கப்படக்கடவது; ஆசரிப்புக் கூடா
ரத்தின் பிராகாரத்தில் அதைப் புசிக்கவேண்
டும். அதைப் புளித்தமாவுள்ளதாகப் பாகம் 17
பண்ணவேண்டாம்; அது எனக்கு இடப்படும்
தகனங்களில் நான் அவர்களுக்குக் கொடுத்த
அவர்களுடைய பங்கு; அது பாவநிவாரண

பலியைப்போலும் குற்றநிவாரணபலியைப்
18 போலும் [1]மகா பரிசுத்தமானது. ஆரோனின்
பிள்ளைகளில் ஆண்மக்கள் யாவரும் அதைப்
புசிப்பார்களாக; **கர்த்தருக்கு** இடப்படும் தக
னபலிகளில் அது உங்கள் தலைமுறைதோறும்
நித்திய கட்டளையாய் இருக்கக்கடவது; அவை
களைத் தொடுகிறவனெவனும் பரிசுத்தமாய்
இருப்பான் என்று சொல் என்றார்.
19 பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி:
20 ஆரோன் அபிஷேகம்பண்ணப்படும் நாளில்,
[2]அவனும் அவன் குமாரரும் **கர்த்தருக்குச்**
செலுத்தவேண்டிய படைப்பு என்னவென்
றால், ஒரு எப்பா அளவான மெல்லிய மாவி
லே பத்தில் ஒரு பங்கை, காலையில் பாதியும்
மாலையில் பாதியும், நித்திய போஜனபலியாகச்
21 செலுத்தக்கடவர்கள். அது சட்டியிலே எண்
ணெய்விட்டுப் பாகம் பண்ணப்படக்கடவது;
பாகம் பண்ணப்பட்டபின்பு அதைக் கொண்டு
வந்து, போஜனபலியாகப் பாகம்பண்ணப்ப
ட்ட துண்டுகளைக் **கர்த்தருக்குச்** சுகந்தவாசனை
22 யாகப் படைக்கக்கடவாய். அவன் குமாரரில்
அவனுடைய ஸ்தலத்திலே அபிஷேகம்பண்
ணப்படுகிற ஆசாரியனும் அப்படியே செய்யக்
கடவன்; [3]அது முழுவதும் தகனிக்கப்பட
வேண்டும்; அது **கர்த்தர்** நியமித்த நித்திய
23 கட்டளை. ஆசாரியனுக்காக இடப்படும் எந்தப்
போஜனபலியும் புசிக்கப்படாமல், முழுவதும்
தகனிக்கப்படவேண்டும் என்றார்.
24 பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி:
25 நீ ஆரோனோடும் அவன் குமாரரோடும் சொல்
லவேண்டியதாவது, [4]பாவநிவாரணபலியின்
பிரமாணம் என்னவென்றால், சர்வாங்க தகன
பலி கொல்லப்படும் இடத்தில் பாவநிவாரண
பலியும் **கர்த்தருடைய** சந்நிதியில் கொல்லப்
படக்கடவது; [5]அது மகா பரிசுத்தமானது.
26 பாவநிவிர்த்தி செய்ய அதைப் பலியிடுகிற
ஆசாரியன் அதைப் புசிக்கக்கடவன்; ஆசரிப்
புக் கூடாரத்தின் பிராகாரமாகிய [6]பரிசுத்த
ஸ்தலத்திலே அது புசிக்கப்படவேண்டும்.
27 அதின் யாம்சத்தில் [7]படுகிறது எதுவும் பரிசுத்
தமாயிருக்கும்; அதின் இரத்தத்திலே கொஞ்
சம் ஒரு வஸ்திரத்தில் தெறித்ததானால், இரத்
தந்தெறித்த வஸ்திரத்தைப் பரிசுத்த ஸ்தலத்
28 தில் கழுவவேண்டும். அது சமைக்கப்பட்ட
மண்பாண்டம் உடைக்கப்படவேண்டும்; செப்
புப்பானையில் சமைக்கப்பட்டதானால், அது
விளக்கப்பட்டுத் தண்ணீரில் கழுவப்படவே
29 ண்டும். ஆசாரியரில் ஆண்மக்கள் யாவரும்
அதைப் புசிப்பார்களாக; அது மகா பரிசுத்த
30 மானது. எந்தப் பாவநிவாரணபலியின் இர
த்தத்தில் கொஞ்சம் [8]பரிசுத்த ஸ்தலத்தில்
பாவநிவிர்த்தியின்பொருட்டு ஆசரிப்புக் கூடா
ரத்திற்குள்ளே கொண்டுவரப்பட்டதோ, அந்
தப் பலி புசிக்கப்படலாகாது, அது அக்கினி
யிலே தகனிக்கப்படவேண்டும்.

**7** குற்றநிவாரணபலியின் [9]பிரமாணம் என்
னவென்றால், அது மகா பரிசுத்தமானது.
சர்வாங்க தகனபலி கொல்லப்படும் இடத்தில், 2
[10]குற்றநிவாரணபலியும் கொல்லப்படவேண்
டும்; அதின் இரத்தத்தைப் பலிபீடத்தின்மேல்
சுற்றிலும் தெளித்து, அதினுடைய கொழுப்பு 3
[11]முழுவதையும், அதின் வாலையும், குடல்களை
மூடிய கொழுப்பையும், இரண்டு குண்டிக் 4
காய்களையும், அவைகளின்மேல் சிறு குடல்
களினிடத்திலிருக்கிற கொழுப்பையும், குண்
டிக்காய்களோடேகூடக் கல்லீரலின்மேல்
இருக்கிற சவ்வையும் எடுத்துச் செலுத்துவா
னாக. இவைகளை ஆசாரியன் பலிபீடத்தின் 5
மேல் **கர்த்தருக்குத்** தகனபலியாகத் தகனிக்கக்
கடவன்; அது குற்றநிவாரணபலி. ஆசாரிய 6
ரில் [12]ஆண்மக்கள் யாவரும் அதைப் புசிப்பார்
களாக; அது பரிசுத்த ஸ்தலத்தில் புசிக்கப்
படவேண்டும்; அது மகா பரிசுத்தமானது.
பாவநிவாரணபலி எப்படியோ [13]குற்றநிவா 7
ரணபலியும் அப்படியே; அவ்விரண்டிற்கும்
பிரமாணம் ஒன்றே; அதினாலே பாவநிவிர்த்தி
செய்த ஆசாரியனை அது சேரும். ஒருவனு 8
டைய சர்வாங்க தகனபலியைச் செலுத்தின
ஆசாரியன் தான் செலுத்தின தகனபலியின்
தோலைத் தனக்காக வைத்துக்கொள்ளவேண்
டும். அடுப்பிலே பாகம்பண்ணப்பட்டதும், 9
சட்டியிலும் தட்டின்மேலும் சமைக்கப்பட்
டதுமான [14]போஜன பலியாவும் அதைச் செலு
த்துகிற ஆசாரியனுடையவைகளாயிருக்கும்.
எண்ணெயிலே பிசைந்ததும் எண்ணெயிலே 10
பிசையாததுமான சகல போஜனபலியும்
ஆரோனுடைய குமாரர் யாவருக்கும் சரிபங்
காகச் சேரவேண்டும்.
**கர்த்தருக்குச்** செலுத்துகிற [15]சமாதானபலி 11
களின் பிரமாணம் என்னவென்றால், அதை 12
ஸ்தோத்திரத்துக்காகச் செலுத்துவானானால்,
அவன் ஸ்தோத்திரபலியோடுங்கூட எண்ணெ
யிலே பிசைந்த புளிப்பில்லா அதிரசங்களை
யும், எண்ணெய் பூசப்பட்ட புளிப்பில்லா
அடைகளையும், [16]எண்ணெயிலே பிசைந்து
வறுக்கப்பட்ட மெல்லிய மாவினால் செய்த
அதிரசங்களையும் படைக்கக்கடவன். அவை 13
களைப் படைக்கிறதும் அல்லாமல், புளித்த
மாவினால் செய்த [17]அப்பத்தையும், தன்னு
டைய சமாதானபலியாகிய ஸ்தோத்திரபலி
யோடுகூட படைக்கவேண்டும். அந்தப் படை 14
ப்பு முழுவதிலும் வகைக்கு ஒவ்வொன்றை
எடுத்துக் **கர்த்தருக்கு** ஏறெடுத்துப் படைக்கும்
பலியாகச் செலுத்துவானாக; [18]அது சமாதான
பலியின் இரத்தத்தைத் தெளித்த ஆசாரிய
னுடையதாகும். சமாதானபலியாகிய [19]ஸ்தோ 15
த்திரபலியின் மாம்சமானது செலுத்தப்பட்ட
அன்றைத்தினமே புசிக்கப்படவேண்டும்;
அதில் ஒன்றும் விடியற்காலமட்டும் வைக்கப்
படலாகாது. அவன் செலுத்தும் [20]பலி பொ 16
ருத்தனையாயாவது உற்சாகபலியாயாவது இரு
க்குமானால், அது செலுத்தப்படும் நாளிலும்,
அதில் மீதியானது மறுநாளிலும் புசிக்கப்பட
லாம். பலியின் மாம்சத்தில் மீதியாயிருக்கி 17

1 யாத். 29. 37
2 யாத். 29. 1, 2. எபி. 7. 27
3 யாத். 29. 25
4 லேவி. 4. 33
5 லேவி. 21. 22
6 லேவி. 10. 17, 18. எண். 18. 10. எசே. 44 29
7 யாத். 29. 37. மத். 9. 21. 14. 36
8 லேவி. 10. 18: 16. 27. எபி. 9 12
9 லேவி. 5. அதி. 6 1–7: 17. 25 21. 22
10 எண். 6. 12. எசே. 40. 39
11 யாத். 29. 13
12 லேவி. 6. 16, 18. எண். 18 9, 10
13 லேவி. 6. 25, 26: 14. 13
14 லேவி. 2. 3, 10. எசே. 44. 29
15 லேவி. 3. அதி
16 எண். 6. 15
17 ஆமோ. 4. 5
18 எண். 18. 8, 11, 19
19 லேவி. 22. 30
20 லேவி. 19. 6–8

றது மூன்றும் நாளில் அக்கினியிலே சுட்டெ
18 ரிக்கப்படக்கடவது. சமாதானபலியின் மாம்
சத்தில் மீதியானது மூன்றும் நாளில் புசிக்கப்
படுமானால், [1]அது அங்கிகரிக்கப்படாது;
அதைச் செலுத்தினவனுக்கு அது பலிக்காது;
[2]அது அருவருப்பாயிருக்கும்; அதைப் புசிக்
19 கிறவன் தன் அக்கிரமத்தைச் சுமப்பான். தீட்
டான எந்த வஸ்துவிலாவது அந்த மாம்சம் பட்
டதானால் அது புசிக்கப்படாமல் அக்கினியி
லே சுட்டெரிக்கப்படக்கடவது; மற்ற மாம்சத்
தையோ சுத்தமாயிருக்கிறவனெவனும் புசிக்க
20 லாம். ஒருவன் [3]தீட்டுள்ளவனாயிருக்கையில்
**கர்த்தருடைய** சமாதானபலியின் மாம்சத்தைப்
புசித்தால், அவன் தன் ஜனத்தாரில் இராத
படிக்கு அறுப்புண்டுபோவான்.
21 மனுஷருடைய [4]தீட்டையாவது, தீட்டான
மிருகத்தையாவது, அருவருக்கப்படத்தக்க
தீட்டான மற்ற எந்த வஸ்துவையாவது ஒரு
வன் தொட்டிருந்து, **கர்த்தருடைய** சமாதான
பலியின் மாம்சத்திலே புசித்தால், அவன் தன்
ஜனங்களில் இராதபடிக்கு அறுப்புண்டுபோ
வான் என்றார்.
22 பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி:
23 நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண்
டியது என்னவென்றால், மாடு ஆடு வெள்
ளாடு என்பவைகளின் கொழுப்பை நீங்கள்
24 புசிக்கலாகாது. தானாய்ச் செத்த மிருகத்தின்
கொழுப்பையும் பீறுண்ட மிருகத்தின் கொழு
ப்பையும் பலவித வேலைகளுக்கு வழங்கலாம்;
ஆனாலும் நீங்கள் [5]அதை ஒருபோதும் புசிக்
25 கலாகாது. **கர்த்தருக்குத்** தகனபலியாகச்
செலுத்தப்படும் மிருகத்தின் கொழுப்பைப்
புசிக்கிற எந்த ஆத்துமாவும் தன் ஜனங்களில்
26 இராதபடிக்கு அறுப்புண்டுபோவான். உங்
கள் வாசஸ்தலங்களில் எங்கும் யாதொரு பற
வையின் [6]இரத்தத்தையாவது, யாதொரு மிரு
கத்தின் இரத்தத்தையாவது புசிக்கலாகாது.
27 எவ்வித இரத்தத்தையாகிலும் புசிக்கிற எவனும்
தன் ஜனங்களில் இராதபடிக்கு அறுப்புண்டு
போவான் என்று சொல் என்றார்.
28 பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி:
29 நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண்
டியது என்னவென்றால், **கர்த்தருக்குச்** சமா
தானபலி செலுத்துகிறவன் தான் செலுத்தும்
[7]சமாதானபலியைக் **கர்த்தருடைய** சந்நிதியில்
30 கொண்டுவருவானாக. **கர்த்தருக்குத்** தகனபலி
யாகப் படைப்பவைகளை அவன் [8]கைகளே
கொண்டுவரவேண்டும்; மார்க்கண்டத்தையும்
அதனோடேகூட அதின்மேல் வைத்த கொழுப்
பையும் **கர்த்தருடைய** சந்நிதியில் அசைவாட்
டும் பலியாக அசைவாட்டும்படிக்குக் கொண்
31 டுவரக்கடவன். அப்பொழுது ஆசாரியன்
அந்தக் கொழுப்பைப் பலிபீடத்தின்மேல்
தகனிக்கவேண்டும்; மார்க்கண்டமோ ஆரோ
32 னையும் அவன் குமாரரையும் சேரும். உங்கள்
சமாதானபலிகளில் வலது முன்னந்தொடை
யை ஏறெடுத்துப் படைக்கும் பலியாகப் படை
க்கும்படி [9]ஆசாரியனிடத்தில் கொடுப்பீர்க
ளாக. ஆரோனுடைய குமாரரில், சமாதான 33
பலியின் இரத்தத்தையும் கொழுப்பையும்
செலுத்துகிறவனுக்கு, வலது முன்னந்தொ
டை பங்காகச் சேரும். இஸ்ரவேல் புத்திர 34
ரின் சமாதானபலிகளில் [10]அசைவாட்டும் மார்க்
கண்டத்தையும் ஏறெடுத்துப் படைக்கும் முன்
னந்தொடையையும் நான் அவர்கள் கையில்
வாங்கி, அவைகளை ஆசாரியனாகிய ஆரோனுக்
கும் அவன் குமாரருக்கும் இஸ்ரவேல் புத்தி
ரருக்குள் நடக்கும் நித்தியகட்டளையாகக் கொ
டுத்தேன் என்று சொல் என்றார். **கர்த்தருக்கு** 35
ஆசாரிய ஊழியம் செய்யும்படி ஆரோனும்
அவன் குமாரரும் நியமிக்கப்பட்ட நாளிலே,
இது அபிஷேகம் பண்ணப்பட்ட அவர்களுக்
குக் **கர்த்தருடைய** தகனபலிகளில் கிடைக்கு
ம்படி உண்டான கட்டளை. இப்படி அவர்க 36
ளுக்கு இஸ்ரவேல் புத்திரர் தங்கள் தலைமுறை
தோறும் நித்திய நியமமாகக் கொடுக்கும்படி
**கர்த்தர்** அவர்களை [11]அபிஷேகம்பண்ணின
நாளிலே கட்டளையிட்டார்.
சர்வாங்க தகனபலிக்கும் போஜனபலிக்கும் 37
பாவநிவாரணபலிக்கும் குற்றநிவாரணபலிக்
கும் பிரதிஷ்டைபலிகளுக்கும் சமாதானபலிக
ளுக்கும் அடுத்த பிரமாணம் இதுவே. **கர்த்தருக்** 38
**குத்** தங்கள் பலிகளைச் செலுத்தவேண்டும்
என்று அவர் இஸ்ரவேல் புத்திரருக்குச் சீனாய்
வனாந்தரத்திலே கற்பிக்கும்போது இவைகளை
மோசேக்குச் சீனாய்மலையில் கட்டளையிட்டார்.
**கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ [12]ஆரோ 2 **8**
னையும் அவன் குமாரரையும் வரவழைத்து, வஸ்
திரங்களையும், அபிஷேகதைலத்தையும், பாவநி
வாரணபலிக்கு ஒரு காளையையும், இரண்டு
ஆட்டுக்கடாக்களையும், ஒரு கூடையில் புளிப்
பில்லா அப்பங்களையும் கொண்டுவந்து, சபை 3
யையெல்லாம் ஆசரிப்புக் கூடாரவாசலுக்கு
முன்பாகக் கூடிவரச் செய் என்றார். **கர்த்** 4
**தர்** தனக்குக் கட்டளையிட்டபடியே மோசே
செய்தான்; சபை ஆசரிப்புக் கூடாரவாச
லுக்கு முன்பாகக் கூடினபோது, மோசே 5
சபையை நோக்கி: செய்யும்படி **கர்த்தர்** கட்
டளையிட்ட காரியம் இதுவே என்று சொல்லி,
**கர்த்தர்** தனக்குக் [13]கட்டளையிட்டபடியே, 6
மோசே ஆரோனையும் அவன் குமாரரையும்
வரவழைத்து, அவர்களை ஜலத்தினால் ஸ்நா
னம்பண்ணுவித்து, அவனுக்கு உள்ளங்கி 7
யைப் போட்டு, இடைக்கச்சையைக் கட்டி,
மேலங்கியை உடுத்தி, ஏபோத்தைத் தரித்து,
அதின்மேல் ஏபோத்தின் விசித்திரமான கச்
சையைக் கட்டி, அவனுக்கு மார்ப்பதக்கத்தை 8
அணிந்து, [14]மார்ப்பதக்கத்திலே ஊரீம் தும்மீம்
என்பவைகளையும் வைத்து, அவன் தலையிலே 9
[15]பாகையைத் தரித்து, பாகையின்மேல் அவன்
நெற்றியிலே பரிசுத்த கிரீடம் என்னும் பொற்
பட்டத்தைக் கட்டினான். பின்பு மோசே, 10
[16]அபிஷேகதைலத்தை எடுத்து, வாசஸ்தலத்
தையும் அதிலுள்ள யாவற்றையும் அபிஷேகம்

1 எண். 18. 27
2 லேவி. 11. 10, 41. 19. 7
3 லேவி. 15. 3. 1 கொ. 11. 28
4 யாத். 30. 24, 25
5 லேவி. 17. 15. உபா. 14. 21. எசே. 44. 31
6 ஆதி. 9. 4. லேவி. 3. 17. எசே. 33. 25. யோ. 6. 53. அப். 15. 20, 29
7 லேவி. 3. அதி.
8 யோ. 10. 18
9 எண். 6. 20
10 யாத். 29. 28
11 யாத். 40. 13, 15
12 யாத். 29. 1-3. 28. 2, 4. 30. 24, 25
13 யாத். 29. 4-7
14 யாத். 28. 15-30. எஸ்ரா 2. 63
15 யாத். 29. 6
16 யாத். 30. 26-29

11 பண்ணி, பரிசுத்தப்படுத்தி, அதில் கொஞ்
சம் எடுத்து, பலிபீடத்தின்மேல் ஏழுதரம்
தெளித்து, [1]பலிபீடத்தையும் அதின் சகல
பணிமுட்டுகளையும், தொட்டியையும் அதின்
பாதத்தையும் பரிசுத்தப்படுத்தும்படிக்கு அபி
12 ஷேகம்பண்ணி, அபிஷேகதைலத்திலே
[2]கொஞ்சம் ஆரோனுடைய சிரசின்மேல் வார்
த்து, அவனைப் பரிசுத்தப்படுத்தும்படி அபி
13 ஷேகம்பண்ணினான். பின்பு மோசே, கர்த்
தர் தனக்குக் கட்டளையிட்டபடியே, ஆரோ
னின் குமாரரை வரவழைத்து, அவர்களுக்கு
[3]அங்கிகளை உடுத்தி, இடைக்கச்சைகளைக்
14 கட்டி, குல்லாக்களைத் தரித்து, பாவநிவார
ணபலிக்கான காளையைக் கொண்டுவந்தான்;
அதினுடைய தலையின்மேல் ஆரோனும்
அவன் குமாரரும் [4]தங்கள் கைகளை வைத்தார்
15 கள்; அப்பொழுது அது கொல்லப்பட்டது;
மோசே அதின் [5]இரத்தத்தை எடுத்து, தன் விர
லினால் பலிபீடத்தின் கொம்புகளின்மேல்
சுற்றிலும் பூசி, பலிபீடத்திற்காகப் பிராயச்
சித்தஞ்செய்து, மற்ற இரத்தத்தைப் பலிபீடத்
தின் அடியில் ஊற்றிவிட்டு, அதின்மேல்
[6]பாவநிவிர்த்தி செய்யும்பொருட்டு அதைப்
16 பரிசுத்தப்படுத்தினான். பின்பு மோசே, கர்த்
தர் தனக்குக் [7]கட்டளையிட்டபடியே, குடல்
கள்மேல் இருந்த கொழுப்பு முழுவதையும்,
கல்லீரலின்மேல் இருந்த சவ்வையும், இரண்டு
குண்டிக்காய்களையும், அவைகளின் கொழுப்
பையும் எடுத்து, பலிபீடத்தின்மேல் தகனி
17 த்து, காளையையும் அதின் தோலையும் மாம்சத்
தையும் சாணியையும் [8]பாளயத்துக்குப் புறம்
18 பே அக்கினியிலே சுட்டெரித்தான். பின்பு
அவன் சர்வாங்க தகனபலிக்கு [9]ஆட்டுக்கடா
வைக் கொண்டுவந்தான்; அதின் தலையின்
மேல் ஆரோனும் அவன் குமாரரும் தங்கள்
19 கைகளை வைத்தார்கள். அப்பொழுது அது
கொல்லப்பட்டது; மோசே அதின் இரத்தத்
தைப் பலிபீடத்தின்மேல் சுற்றிலும் தெளித்
20 தான். ஆட்டுக்கடா சந்து சந்தாகத் துண்டிக்
கப்பட்டது; [10]கர்த்தர் தனக்குக் கட்டளையிட்
டபடியே, மோசே அதின் தலையையும் துண்
டங்களையும் கொழுப்பையும் தகனித்தான்.
21 குடல்களையும் தொடைகளையும் தண்ணீரால்
கழுவினபின், மோசே ஆட்டுக்கடா முழுவ
தையும் பலிபீடத்தின்மேல் கர்த்தருக்குச் [11]சுக
ந்த வாசனைக்கான சர்வாங்க தகனபலியாகத்
22 தகனித்தான். பின்பு பிரதிஷ்டைப்படுத்து
வதற்குரிய [12]மற்ற ஆட்டுக்கடாவைக் கொண்
டுவந்தான்; அதின் தலையின்மேல் ஆரோனும்
அவன் குமாரரும் தங்கள் கைகளை வைத்தார்
23 கள். பின்பு அது கொல்லப்பட்டது; மோசே
அதின் இரத்தத்தில் கொஞ்சம் எடுத்து, ஆரோ
னுடைய வலதுகாதின் மடலிலும் வலதுகை
யின் பெருவிரலிலும் வலதுகாலின் பெருவிர
24 லிலும் பூசினான். பின்பு ஆரோனுடைய குமார
ரையும் அழைத்தான்; மோசே அந்த இரத்தத்
திலே கொஞ்சம் அவர்களுடைய வலதுகா

[1] ஏசா. 52. 15 எசே. 36. 25. தீத். 3. 6
[2] லேவி. 21. 10, 12. சங். 133. 2
[3] யாத். 29. 8, 9
[4] எசே. 43. 19
[5] லேவி. 4. 7. எசே. 43. 20, 26. எபி. 9. 18-23
[6] எசே. 45. 20. தானி. 9. 24. 2 கொ. 5. 18. 21. எபே. 2. 16. கொலோ. 1. 21, 22. எபி. 2. 17
[7] யாத். 29. 13, 14
[8] எபி. 13. 11-13
[9] யாத். 29. 15
[10] யாத். 29. 18
[11] ஆதி. 8. 20, 21. எபே. 5. 2
[12] யாத். 29. 19-31
[13] எபி. 9. 22
[14] யாத். 29. 22. ழ
[15] எசே. 43. 25, 26
[16] எபி. 7. 16
[17] எண். 3. 7; 9. 19. உபா. 11. 1. 1 தீமோ. 1. 18. 5. 21; 6. 20. 2 தீமோ. 4. 1

தின் மடலிலும் வலதுகையின் பெருவிரலி
லும் வலதுகாலின் பெருவிரலிலும் பூசி,
[13]இரத்தத்தைப் பலிபீடத்தின்மேல் சுற்றிலும்
தெளித்து, கொழுப்பையும், [14]வாலையும், 25
குடல்கள்மேலிருந்த கொழுப்பு முழுவதையும்,
கல்லீரலின்மேலிருந்த சவ்வையும், இரண்டு
குண்டிக்காய்களையும், அவைகளின் கொழுப்
பையும், வலது முன்னந்தொடையையும் எடு
த்து, கர்த்தருடைய சந்நிதியில் வைத்திருந்த 26
புளிப்பில்லா அப்பங்களின் கூடையிலுள்ள
புளிப்பில்லா அதிரசத்தில் ஒன்றையும், எண்
ணெயிட்ட அப்பமாகிய அதிரசத்தில் ஒன்றை
யும், ஒரு அடையையும் எடுத்து, அந்தக் கொ
ழுப்பின்மேலும் முன்னந்தொடையின்மேலும்
வைத்து, அவைகளையெல்லாம் ஆரோனு 27
டைய உள்ளங்கைகளிலும் அவன் குமாரரு
டைய உள்ளங்கைகளிலும் வைத்து, அசை
வாட்டும் பலியாகக் கர்த்தருடைய சந்நிதியில்
அசைவாட்டி, பின்பு மோசே அவைகளை 28
அவர்கள் உள்ளங்கைகளிலிருந்து எடுத்து,
பலிபீடத்தின்மேலிருக்கிற தகனபலியின்
மேல் தகனித்தான்; அவைகள் சுகந்த வாசனை
யான பிரதிஷ்டைப்பலிகள்; இது கர்த்த
ருக்குத் தகனபலியானது. பின்பு மோசே 29
மார்க்கண்டத்தை எடுத்து, அதைக் கர்த்தரு
டைய சந்நிதியில் அசைவாட்டும் பலியாக
அசைவாட்டினான். கர்த்தர் மோசேக்குக்
கட்டளையிட்டபடியே பிரதிஷ்டையின் ஆட்
டுக்கடாவிலே அது மோசேயின் பங்காயிற்று.
மோசே அபிஷேகதைலத்திலும், பலிபீடத் 30
தின்மேலிருந்த இரத்தத்திலும் கொஞ்சம் எடு
த்து, ஆரோன்மேலும் அவன் வஸ்திரங்கள்
மேலும், அவன் குமாரர்மேலும் அவர்கள்
வஸ்திரங்கள்மேலும் தெளித்து, ஆரோனை
யும் அவன் வஸ்திரங்களையும், அவன் குமார
ரையும் அவன் குமாரரின் வஸ்திரங்களையும்
பரிசுத்தப்படுத்தினான்.
பின்பு மோசே ஆரோனையும் அவன் குமா 31
ரரையும் நோக்கி: நீங்கள் அந்த மாம்சத்தை
ஆசரிப்புக்கூடாரவாசலிலே வேவித்து, ஆரோ
னும் அவன் குமாரரும் அதைப் புசிப்பார்க
ளாக என்று கட்டளையிட்டிருக்கிறபடியே,
அங்கே அதையும் உங்கள் பிரதிஷ்டைப்பலி
களுள்ள கூடையில் இருக்கிற அப்பத்தையும்
புசித்து, மாம்சத்திலும் அப்பத்திலும் மீதியா 32
னதை அக்கினியிலே சுட்டெரித்து, பிரதிஷ் 33
டையின் நாட்கள் நிறைவேறுமளவாக்கும்,
ஏழுநாள் ஆசரிப்புக் கூடாரவாசலை விட்டுப்
புறப்படாதிருங்கள்; [15]ஏழுநாளளவும் நீங்கள்
பிரதிஷ்டைப் படுத்தப்படுவீர்கள். இன்று 34
செய்ததுபோல, [16]உங்கள் பாவநிவிர்த்திக்காக
இனிமேலும் செய்யவேண்டும் என்று கர்த்தர்
கட்டளையிட்டார். நீங்கள் சாகாதபடிக்கு 35
ஏழுநாள் இரவும்பகலும் ஆசரிப்புக் கூடார
வாசலிலிருந்து, கர்த்தருடைய [17]காவலைக் காக்
கக்கடவீர்கள்; இப்படி நான் கற்பிக்கப்பட்
டேன் என்றான். கர்த்தர் மோசேயைக் 36

கொண்டு கட்டளையிட்ட எல்லாக் காரியங்க
ளையும் ஆரோனும் அவன் குமாரரும் செய்
தார்கள்.
9 எட்டாம் [1]நாளிலே மோசே ஆரோனையும்
அவன் குமாரரையும் இஸ்ரவேலின் மூப்ப
2 ரையும் அழைத்து, ஆரோனை நோக்கி: நீ [2]பா
வநிவாரணபலியாகப் பழுதற்ற ஒரு கன்றுக்
குட்டியையும், [3]சர்வாங்க தகனபலியாகப் பழு
தற்ற ஒரு ஆட்டுக்கடாவையும் தெரிந்துகொ
ண்டு, **கர்த்தருடைய** சந்நிதியில் பலியிடக்கட
3 வாய். மேலும் இஸ்ரவேல் புத்திரரை நோக்கி:
**கர்த்தருடைய** சந்நிதியில் பலியிடும்படிக்கு,
நீங்கள் [4]பாவநிவாரணபலியாகப் பழுதற்ற
ஒரு வெள்ளாட்டுக்கடாவையும், [5]சர்வாங்க
தகனபலியாக ஒரு வயதான பழுதற்ற ஒரு
கன்றுக்குட்டியையும், ஒரு ஆட்டுக்குட்டியை
4 யும், சமாதானபலிகளாக [6]ஒரு காளையையும்
ஒரு ஆட்டுக்கடாவையும், எண்ணெயிலே
பிசைந்த போஜனபலியையும் கொண்டுவா
ருங்கள்; இன்று **கர்த்தர்** உங்களுக்குத் தரி
5 சனமாவார் என்று சொல் என்றான். மோ
சே கட்டளையிட்டவைகளை அவர்கள் ஆசரிப்
புக் கூடாரத்துக்கு முன்பாகக் கொண்டுவந்
தார்கள். சபையார் எல்லாரும் சேர்ந்து, **கர்த்**
6 **தருடைய** சந்நிதியில் நின்றார்கள். அப்பொ
ழுது மோசே: **கர்த்தர்** கட்டளையிட்ட இந்தக்
காரியத்தைச் செய்யுங்கள்; **கர்த்தருடைய** [7]மகி
மை உங்களுக்குக் காணப்படும் என்றான்.
7 மோசே ஆரோனை நோக்கி: நீ பலிபீடத்தண்
டையில் சேர்ந்து, **கர்த்தர்** கட்டளையிட்டபடி
யே, [8]உன் பாவநிவாரணபலியையும் உன்
சர்வாங்க தகனபலியையும் செலுத்தி, உனக்
காகவும் ஜனங்களுக்காகவும் பாவநிவிர்த்தி
செய்து, ஜனங்களுடைய பலியையும் செ
லுத்தி, அவர்களுக்காகவும் [9]பாவநிவிர்த்தி
8 செய் என்றான். அப்பொழுது ஆரோன் பலி
பீடத்தண்டையில் சேர்ந்து, தன் பாவநிவா
ரணபலியாகிய கன்றுக்குட்டியைக் கொன்
9 றான். ஆரோனின் குமாரர் அதின் இரத்
தத்தை அவனிடத்தில் கொண்டுவந்தார்கள்;
அவன் தன் விரலை அந்த ரத்தத்தில் தோ
ய்த்து, பலிபீடத்தின் [10]கொம்புகளின்மேல்
பூசி, மற்ற ரத்தத்தைப் பலிபீடத்தின் அடி
10 யிலே ஊற்றி, பாவநிவாரணபலியின் கொ
ழுப்பையும், குண்டிக்காய்களையும், கல்லீரலில்
எடுத்த சவ்வையும், **கர்த்தர்** மோசேக்குக்
[11]கட்டளையிட்டபடியே, பலிபீடத்தின்மேல்
11 தகனித்து, மாம்சத்தையும் தோலையும் பாள
யத்துக்குப் புறம்பே அக்கினியிலே சுட்டெ
12 ரித்தான். பின்பு சர்வாங்க தகனபலியையும்
கொன்றான்; ஆரோனின் குமாரர் அதின்
இரத்தத்தை அவனிடத்தில் கொண்டுவந்தார்
கள்; அதை அவன் [12]பலிபீடத்தின்மேல் சுற்
13 றிலும் தெளித்தான். சர்வாங்க தகனபலி
யின் துண்டங்களையும் தலையையும் அவனி
டத்தில் கொண்டுவந்தார்கள்; அவன் அவை
14 களைப் பலிபீடத்தின்மேல் தகனித்து, குடல்

1 எசே. 43. 27
2 யாத். 29. 1
3 லேவி. 8. 18
4 லேவி. 4. 23. எஸ்றா 6. 17
5 ஏசா. 53. 10. எபி. 9. 26
6 லேவி. 2. 4. எண். 15. 9
7 28. வசனம். யாத். 24. 16
8 1 சாமு. 3. 14. எபி. 5. 3; 7. 27; 9. 7
9 எபி. 5. 1
10 லேவி. 4. 7. எபி. 9. 22, 23
11 லேவி. 4. 8
12 லேவி. 1. 5; 8. 19
13 ஏசா. 53. 10. எபி. 2. 17; 5. 3
14 யாத். 29. 38
15 லேவி. 3. 1, மு
16 எண். 6. 23–27. உபா. 21. 5. சங். 72. 17. லூ. 24. 50
17 எண். 14. 10. 16. 19, 42
18 ஆதி. 4. 4. நியா. 6. 21. 1 இரா. 18. 38. 2 நாளா. 7. 1—3
19 எஸ்றா 3. 11
20 லேவி. 16. 12. யாத். 30. 9. எண். 16. 6
21 லேவி. 9. 24. எண். 16. 35. 2 இரா. 1. 10, 12
22 யாத். 19. 22. 1சாமு. 6. 20. சங். 89. 7. ஏசா. 52. 11. எபி. 12. 28
23 ஏசா. 49. 3. எசே. 28. 22. யோவா. 12. 28

களையும் தொடைகளையும் கழுவி, பலிபீடத்
தின்மேல் இருந்த சர்வாங்க தகனபலியின்
மேல் தகனித்தான். பின்பு அவன் ஜனங் 15
களின் [13]பலியைக் கொண்டுவந்து, ஜனங்க
ளின் பாவநிவிர்த்திக்குரிய வெள்ளாட்டுக்
கடாவைக் கொன்று, முந்தினதைப் பலியிட்
டதுபோல, அதைப் பாவநிவாரண பலி
யாக்கி, சர்வாங்க தகனபலியையும் கொண்டு 16
வந்து, நியமத்தின்படி அதைப் பலியிட்டு,
போஜனபலியையும் கொண்டுவந்து, அதில் 17
கைநிறைய எடுத்து, அதைக் [14]காலையில் செ
லுத்தும் சர்வாங்க தகனபலியுடனே பலிபீடத்
தின்மேல் தகனித்தான். பின்பு ஜனங்களின் 18
[15]சமாதானபலிகளாகிய காளையையும் ஆட்டுக்
கடாவையும் கொன்றான்; ஆரோனின் குமா
ரர் அதின் இரத்தத்தை அவனிடத்தில் கொண்
டுவந்தார்கள்; அவன் அதைப் பலிபீடத்தின்
மேல் சுற்றிலும் தெளித்து, காளையிலும் ஆட் 19
டுக்கடாவிலும் எடுத்த கொழுப்பையும், வாலை
யும், குடல்களை மூடிய சவ்வையும், குண்டிக்
காய்களையும், கல்லீரலின்மேல் இருந்த சவ்
வையும் கொண்டுவந்து, கொழுப்பை மார்க் 20
கண்டங்களின்மேல் வைத்தார்கள்; அந்தக்
கொழுப்பை பலிபீடத்தின்மேல் தகனித்
தான். மார்க்கண்டங்களையும் வலது முன்னங் 21
தொடையையும், மோசே கட்டளையிட்டபடி
யே, ஆரோன் **கர்த்தருடைய** சந்நிதியில்
அசைவாட்டும் பலியாக அசைவாட்டினான்.
பின்பு ஆரோன் ஜனங்களுக்கு நேராகத் தன் 22
கைகளை உயர்த்தி, [16]அவர்களை ஆசீர்வதித்து,
தான் பாவநிவாரணபலியையும், சர்வாங்க தக
னபலியையும், சமாதானபலிகளையும் செலுத்
தின இடத்திலிருந்து இறங்கினான். பின்பு 23
மோசேயும் ஆரோனும் ஆசரிப்புக் கூடாரத்
துக்குள் பிரவேசித்து, வெளியே வந்து, ஜனங்
களை ஆசீர்வதித்தார்கள்; அப்பொழுது **கர்த்த**
**ருடைய** மகிமை சகல [17]ஜனங்களுக்கும் கா
ணப்பட்டது. அன்றியும் **கர்த்தருடைய** சந் 24
நிதியிலிருந்து [18]அக்கினி புறப்பட்டு, பலிபீ
டத்தின்மேல் இருந்த சர்வாங்க தகனபலியை
யும் கொழுப்பையும் எரித்துவிட்டது; ஜனங்க
ளெல்லாரும் அதைக் கண்டபோது ஆரவா
ரித்து [19]முகங்குப்புற விழுந்தார்கள்.
பின்பு ஆரோனின் குமாரராகிய நாதாபும் 10
அபியூவும் தன்தன் தூபகலசத்தை எடுத்து,
அவைகளில் அக்கினியையும் அதின்மேல்
தூபவர்க்கத்தையும் போட்டு, **கர்த்தர்** தங்க
ளுக்குக் கட்டளையிடாத [20]அந்நிய அக்கினியை
அவருடைய சந்நிதியில் கொண்டுவந்தார்கள்.
அப்பொழுது [21]அக்கினி **கர்த்தருடைய** சந்நிதி 2
யிலிருந்து புறப்பட்டு, அவர்களைப் பட்சித்
தது; அவர்கள் **கர்த்தருடைய** சந்நிதியில் செத்
தார்கள். அப்பொழுது மோசே ஆரோனை 3
நோக்கி: என்னிடத்தில் சேருகிறவர்களால்
[22]நான் பரிசுத்தம் பண்ணப்பட்டு, சகல ஜனங்
களுக்கும் முன்பாக [23]நான் மகிமைப்படுவேன்
என்று **கர்த்தர்** சொன்னது இதுதான் என்

4 ளுன்; [1]ஆரோன் பேசாதிருந்தான். பின்பு
மோசே ஆரோனின் சிறிய தகப்பனுன ஊசி
யேலின் குமாரராகிய மீசவேலையும் எல்சா
பானையும் அழைத்து: நீங்கள் கிட்டவந்து, உங்
கள் சகோதரரைப் [2]பரிசுத்த ஸ்தலத்துக்கு
முன்னின்று எடுத்து, பாளயத்துக்குப் புறம்
5 பே கொண்டுபோங்கள் என்றான். மோசே
சொன்னபடி அவர்கள் கிட்டவந்து, அவர்
களை அவர்கள் உடுத்தியிருந்த சட்டைகளோ
டும் எடுத்துப் பாளயத்துக்குப் புறம்பேகொண்
6 டுபோனார்கள். மோசே ஆரோனையும் எலெ
யாசார் இத்தாமார் என்னும் அவன் குமார
ரையும் நோக்கி: நீங்கள் சாகாதபடிக்கும்,
சபையனைத்தின்மேலும் கடுங்கோபம் வராத
படிக்கும், நீங்கள் உங்கள் [3]தலைப்பாகையை
எடுத்துப்போடாமலும், உங்கள் வஸ்திரங்க
ளைக் கிழிக்காமலும் இருப்பீர்களாக; உங்கள்
சகோதரராகிய இஸ்ரவேல் குடும்பத்தார் யாவ
ரும் **கர்த்தர்** கொளுத்தின இந்த அக்கினிக்
7 காகப் புலம்புவார்களாக. நீங்கள் சாகாதபடி
க்கு [4]ஆசரிப்புக் கூடாரவாசலிலிருந்து புறப்
படாதிருங்கள்; **கர்த்தருடைய** [5]அபிஷேகதை
லம் உங்கள்மேல் இருக்கிறதே என்றான்;
அவர்கள் மோசேயினுடைய வார்த்தையின்
படியே செய்தார்கள்.
8, 9 **கர்த்தர்** ஆரோனை நோக்கி: நீயும் உன்னோ
டேகூட உன் குமாரரும் சாகாதிருக்கவேண்
டுமானால், ஆசரிப்புக் கூடாரத்துக்குள் பிர
வேசிக்கிறபோது, திராட்சரசத்தையும் [6]மது
10 வையும் குடிக்கவேண்டாம். பரிசுத்தமுள்ள
தற்கும் பரிசுத்தமில்லாததற்கும், [7]தீட்டுள்ள
தற்கும் தீட்டில்லாததற்கும், வித்தியாசம்பண்
11 ணும்படிக்கும், **கர்த்தர்** மோசேயைக்கொண்டு
இஸ்ரவேல் புத்திரருக்குச் சொன்ன சகல
பிரமாணங்களையும் அவர்களுக்குப் போதிக்
கும்படிக்கும், [8]இது உங்கள் தலைமுறைதோ
றும் நித்திய கட்டளையாயிருக்கும் என்றார்.
12 மோசே ஆரோனையும் மீதியாயிருந்த அவன்
குமாரராகிய எலெயாசாரையும் இத்தாமாரை
யும் நோக்கி: நீங்கள் **கர்த்தருடைய** தகனபலி
களில் மீதியான போஜனபலியை எடுத்து,
பலிபீடத்தண்டையிலே புளிப்பில்லாததாகப்
புசியுங்கள்; அது மகா பரிசுத்தமானது.
13 அதைப் [9]பரிசுத்த ஸ்தலத்திலே புசியுங்கள்;
அது **கர்த்தருடைய** தகனபலிகளில் உனக்
கும் உன் குமாரருக்கும் ஏற்படுத்தப்பட்டதா
யிருக்கிறது; இப்படிக் கட்டளை பெற்றிருக்
14 கிறேன். . அசைவாட்டும் மார்க்கண்டத்தை
யும், ஏறெடுத்துப் படைக்கும் முன்னந்தொ
டையையும், நீயும் உன்னோடேகூட உன்
குமாரரும் குமாரத்திகளும் சுத்தமான ஸ்தலத்
திலே புசிப்பீர்களாக; இஸ்ரவேல் புத்திர
ருடைய சமாதானபலிகளில் அவைகள் உன
க்கும் உன் பிள்ளைகளுக்கும் கிடைக்கும்படி
15 ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. கொழுப்பாகிய
தகனபலிகளோடே அவர்கள் **கர்த்தருடைய**
சந்நிதியில் அசைவாட்டும் பலியாக அசை
வாட்டும்படி ஏறெடுத்துப் படைக்கும் முன்
னந்தொடையையும், அசைவாட்டும் மார்க்க
ண்டத்தையும் கொண்டுவருவார்கள்; அது **கர்**
**த்தர்** கட்டளையிட்டபடியே உனக்கும் உன்
பிள்ளைகளுக்கும் நித்திய கட்டளையாக ஏற்
படுத்தப்பட்டிருக்கிறது என்றான்.
பாவநிவாரண பலியாகச் செலுத்தப்பட்ட 16
வெள்ளாட்டுக்கடாவை மோசே தேடிப்பார்த்
தான்; அது தகனிக்கப்பட்டிருந்தது; ஆகை
யால், மீதியாயிருந்த எலெயாசார் இத்தாமார்
என்னும் ஆரோனின் குமாரர்மேல் அவன்
கோபங்கொண்டு: பாவநிவாரணபலியை நீங் 17
கள் பரிசுத்த ஸ்தலத்தில் புசியாமற்போன
தென்ன? அது மகா பரிசுத்தமாயிருக்கிறதே;
சபையின் அக்கிரமத்தைச் சுமந்து தீர்ப்பதற்
குக் **கர்த்தருடைய** சந்நிதியில் அவர்களுக்கா
கப் பாவநிவிர்த்தி செய்யும்பொருட்டு, அதை
உங்களுக்குக் கொடுத்தாரே. அதின் இரத் 18
தம் பரிசுத்த ஸ்தலத்துக்குள்ளே கொண்டு
வரப்படவில்லையே; [10]நான் கட்டளையிட்டபடி
நீங்கள் அதைப் பரிசுத்த ஸ்தலத்தில் புசிக்க
வேண்டியதாயிருந்ததே என்றான். அப்பொ 19
ழுது ஆரோன் மோசேயை நோக்கி: அவர்
கள் தங்கள் பாவநிவாரணபலியையும், தங்கள்
சர்வாங்க தகனபலியையும் **கர்த்தருடைய** சந்
நிதியில் செலுத்தின இன்றுதானே எனக்கு
இப்படி நேரிட்டதே; பாவநிவாரணபலியை
இன்று நான் புசித்தேனானால், அது **கர்த்த**
**ரின்** பார்வைக்கு நன்றாய் *இருக்குமோ என்
றான். மோசே அதைக் கேட்டபோது அமை 20
தலாயிருந்தான்.

**கர்த்தர்** மோசேயையும் ஆரோனையும் நோ 11
க்கி: நீங்கள் இஸ்ரவேல் புத்திரரோடே 2
சொல்லவேண்டியது என்னவென்றால், பூமி
யிலிருக்கிற சகல மிருகங்களிலும் நீங்கள்
[11]புசிக்கத்தக்க ஜீவஜந்துக்கள் யாதெனில்:
மிருகங்களில் விரிகுளம்புள்ளதா யிருந்து, 3
குளம்புகள் இரண்டாகப் பிரிந்திருக்கிறதும்
அசைபோடுகிறதுமானவைகளை யெல்லாம்
நீங்கள் புசிக்கலாம். ஆனாலும், அசைபோடு 4
கிறதும் விரிகுளம்புள்ளதுமானவைகளில்
ஒட்டகமானது அசைபோடுகிறதா யிருந்தா
லும், அதற்கு விரிகுளம்பில்லாதபடியால்,
அது உங்களுக்கு அசுத்தமாயிருக்கும். குழி 5
முசலானது அசைபோடுகிறதா யிருந்தாலும்,
அதற்கு விரிகுளம்பில்லை, அது உங்களுக்கு
அசுத்தமாயிருக்கும். முயலானது அசைபோடு 6
கிறதாயிருந்தும், அதற்கு விரிகுளம்பில்லை,
அது உங்களுக்கு அசுத்தமாயிருக்கும். பன்றி 7
யின் குளம்பு விரிகுளம்பும் இரண்டாகப் பிரி
ந்ததுமா யிருந்தும், அது அசைபோடாது,
[12]அது உங்களுக்கு அசுத்தமாயிருக்கும். இவை 8
களின் மாம்சத்தைப் புசிக்கவும், இவைகளின்
உடல்களைத் தொடவும் வேண்டாம்; இவை
கள் [13]உங்களுக்குத் தீட்டாயிருக்கக்கடவது.
ஜலத்திலிருக்கிறவைகளில் நீங்கள் புசிக்கத் 9
தக்கது யாதெனில்: கடல்களும் ஆறுகளுமா

[1] சங். 39. 9: 46. 10
[2] லூக். 7. 12. அப். 5. 6, 10
[3] லேவி. 21. 10. எசே. 24. 17
[4] லேவி. 21, 12
[5] லேவி. 1. 5: 8. 19
[6] ஏசா. 28. 7. எசே. 44. 21. லூக். 1. 15. 1 தீமோ. 3. 3. தீத். 1. 7
[7] லேவி. 11. 47: 20. 25, 26. எரே. 15. 19. எசே. 44. 23
[8] நெகே. 8. 2, 8. மல். 2. 7
[9] எண். 18. 9, 10
[10] லேவி. 6. 26, 30
* எற்றுமோ, ஏசா. 1. 11–15. எரே. 6. 20: 14. 12. ஓசி. 9. 4. மல். 1. 10, 13
[11] உபா. 14. 3. மு. எசே. 4. 14. தானி. 1. 8. மத். 15. 11. அப். 10. 12, 14. ரோ. 14. 14. 17. எபி. 9. 10: 13. 9
[12] ஏசா. 65. 4: 66. 3, 17
[13] ஏசா. 52. 11. எரே. 7. 2. 15. 18. அப். 10. 10–15. 2 கொ. 6. 17: 8. 8. கொலோ. 2. 16, 21

கிய தண்ணீர்களிலே [1]சிறகும் செதிளும்
உள்ளவைகளையெல்லாம் நீங்கள் புசிக்கலாம்.
10 ஆனாலும், கடல்களும் ஆறுகளுமாகிய தண்
ணீர்களில் நீந்துகிறதும் வாழ்கிறதுமான பிரா
ணிகளில் சிறகும் செதிளும் இல்லாதவை
கள் யாவும் உங்களுக்கு அருவருப்பாயிருப்ப
11 தாக. அவைகள் உங்களுக்கு அருவருப்பா
யிருக்கக்கடவது; அவைகளின் மாம்சத்தைப்
புசியாதிருந்து, அவைகளின் உடல்களை அரு
12 வருப்பீர்களாக. தண்ணீர்களிலே சிறகும்
செதிளும் இல்லாத யாவும் உங்களுக்கு அரு
வருப்பாயிருக்கக்கடவது.
13 பறவைகளில் நீங்கள் புசியாமல் [2]அருவரு
க்கவேண்டியவைகள் யாதெனில்: கழுகும்,
14 கருடனும், கடலுராஞ்சியும், பருந்தும், சகல
15, 16 வித வல்லூறும், சகலவித காகங்களும், தீக்
குருவியும், கூகையும், செம்புகமும், சகலவித
17 டேகையும், ஆந்தையும், நீர்க்காகமும், கோட்
18 டானும், நாரையும், கூழக்கடாவும், குருகும்,
19 கொக்கும், சகலவித ராஜாளியும், புழுக்கொத்
தியும், வெளவாலும் ஆகிய இவைகளே.
20 பறக்கிறவைகளில் நாலுகாலால் நடமாடு
கிற ஊரும் பிராணிகள் யாவும் உங்களுக்கு
21 அருவருப்பாயிருப்பதாக. ஆகிலும், பறக்கிற
வைகளில் நாலுகாலால் நடமாடுகிற யாவி
லும், நீங்கள் புசிக்கத்தக்கது யாதெனில்:
தரையிலே தத்துகிறதற்குக் கால்களுக்குமேல்
தொடைகள் உண்டாயிருக்கிறவைகளிலே,
22 வெட்டுக்கிளி [3]ஜாதியாயிருக்கிறதையும், சோ
லேயாம் என்னும் கிளிஜாதியா யிருக்கிறதை
யும், அர்கொல் என்னும் கிளிஜாதியா யிருக்
கிறதையும், ஆகாபு என்னும் கிளிஜாதியா
23 யிருக்கிறதையும் நீங்கள் புசிக்கலாம். பறக்கிற
வைகளில் நாலு காலால் நடமாடுகிற மற்ற
யாவும் உங்களுக்கு அருவருப்பாயிருப்பதாக.
24 அவைகளாலே தீட்டுப்படுவீர்கள்; அவைக
ளின் உடலைத் தொடுகிறவன் எவனும் சாயங்
25 காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்பான். அவை
களின் உடலைச் சுமந்தவன் எவனும் [4]தன்
வஸ்திரங்களைத் தோய்க்கக்கடவன்; அவன்
சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்பான்.
26 விரிககங்க ளுள்ளவைகளா யிருந்தும், இரு
பிளவான குளம்பில்லாமலும் அசைபோடா
மலும் இருக்கிற மிருகங்கள் யாவும் உங்களு
க்கு அசுத்தமாயிருப்பதாக; அவைகளைத் தொ
27 டுகிறவன் எவனும் தீட்டுப்படுவான். நாலு
காலால் நடக்கிற சகல ஜீவன்களிலும் தங்கள்
உள்ளங்கால்களை ஊன்றி நடக்கிற யாவும்
உங்களுக்கு அசுத்தமாயிருப்பதாக; அவைக
ளின் உடலைத் தொடுகிறவன் எவனும் சாயங்
28 காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்பான். அவை
களின் உடலைச் சுமந்தவன் தன் வஸ்திரங்க
ளைத் தோய்க்கக்கடவன்; அவன் சாயங்காலம்
மட்டும் தீட்டுப்பட்டிருப்பான்; இவைகள் உங்
களுக்குத் தீட்டாயிருக்கக்கடவது.
29 தரையில் ஊருகிற பிராணிகளில் உங்களு
க்கு அசுத்தமானவைகள் எவையெனில்: பெ

1 உபா. 14. 9
2 உபா. 14. 12
3 மத். 3. 4. மாற். 1. 6
4 சங். 57. 2, 7. சகரி. 13. 1. யோ. 13. 8. அப். 22. 16. எபி. 9. 10. 1பே. 3. 21. வெளி. 7. 14
5 ஏசா. 66. 17
6 ஆகா. 2. 13
7 லேவி. 15. 12
8 லேவி. 6. 28. சங். 2. 9. எரே. 48. 38. 2தீமோ. 2. 21. வெளி. 2. 27
9 லேவி. 17. 15. உபா. 14. 21. எசே. 4. 14. 1கொ. 10. 21
10 லேவி. 20. 25

ருச்சாளியும், [5]எலியும், சகலவிதமான ஆமை
யும், உடும்பும், அழுங்கும், ஓணானும், பல்லி 30
யும், பச்சோந்தியும் ஆகிய இவைகளே. சகல 31
ஊரும் பிராணிகளிலும் இவைகள் உங்களுக்
குத் தீட்டாயிருக்கக்கடவது; அவைகளில்
செத்ததைத் [6]தொடுகிறவன் எவனும் சாயங்
காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்பான். அவை 32
களில் செத்தது ஒன்று யாதொன்றின்மேல்
விழுந்தால் அது தீட்டுப்பட்டிருக்கும்; அது
மரப்பாத்திரமானாலும், வஸ்திரமானாலும்,
தோலானாலும், பையானாலும், வேலைசெய்
கிறதற்கேற்ற ஆயுதமானாலும் சாயங்காலம்
மட்டும் தீட்டாயிருக்கும்; [7]அது தண்ணீரில்
போடப்படவேண்டும், அப்பொழுது சுத்த
மாகும். அவைகளில் ஒன்று மண்பாண்டத் 33
திற்குள் விழுந்தால், அதற்குள் இருக்கிறவை
யாவும் தீட்டுப்பட்டிருக்கும்; [8]அதை உடை
த்துப்போடவேண்டும். புசிக்கத்தக்க போஜன 34
பதார்த்தத்தின்மேல் அந்தத் தண்ணீர் பட்
டால், அது தீட்டாகும்; குடிக்கத்தக்க எந்தப்
பானமும் அப்படிப்பட்ட பாத்திரத்தினால்
தீட்டுப்படும். அவைகளின் உடலில் யாதொ 35
ன்று எதின்மேல் விழுமோ, அதுவும் தீட்டுப்
படும்; அடுப்பானாலும் மண் தொட்டியானா
லும் தகர்க்கப்படுவதாக; அவைகள் தீட்டுப்
பட்டிருக்கும்; ஆகையால், அவைகள் உங்க
ளுக்குத் தீட்டாயிருக்கக்கடவது. ஆனாலும், 36
நீரூற்றும் மிகுந்த ஜலம் உண்டாகிய கிண
றும் சுத்தமாயிருக்கும்; அவைகளிலுள்ள உட
லைத் தொடுகிறவனே தீட்டுப்படுவான். மேற் 37
சொல்லியவைகளின் உடலில் யாதொன்று
விதைத்தானியத்தின்மேல் விழுந்தால், அது
தீட்டுப்படாது. அந்த உடலில் யாதொன்று 38
தண்ணீர் வார்க்கப்பட்டிருக்கிற விதையின்
மேல் விழுந்ததானால், அது உங்களுக்குத் தீட்
டாயிருக்கக்கடவது.
உங்களுக்கு ஆகாரத்துக்கான ஒரு மிருகம் 39
செத்தால், அதின் உடலைத் தொடுகிறவன்
சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்பான்.
அதின் மாம்சத்தைப் [9]புசித்தவன் தன் வஸ்திரங் 40
களைத் தோய்க்கக்கடவன்; அவன் சாயங்காலம்
மட்டும் தீட்டுப்பட்டிருப்பான்; அதின் உடலை
எடுத்துப்போனவனும் தன் வஸ்திரங்களைத்
தோய்க்கக்கடவன்; அவனும் சாயங்காலம்மட்
டும் தீட்டுப்பட்டிருப்பான்.
தரையில் ஊருகிற பிராணிகளெல்லாம் உங் 41
களுக்கு அருவருப்பாயிருக்கக்கடவது; அவை
புசிக்கப்படலாகாது. தரையில் ஊருகிற சகல 42
பிராணிகளிலும், வயிற்றினால் நகருகிறவை
களையும், நாலு காலால் நடமாடுகிறவைகளை
யும், அநேகங் கால்களுள்ளவைகளையும் புசியா
திருப்பீர்களாக; அவைகள் அருவருப்பான
வைகள். ஊருகிற எந்தப் பிராணிகளிலும் 43
உங்களை [10]அருவருப்பாக்கிக்கொள்ளாமலும்,
அவைகளால் தீட்டுப்படாமலும் இருப்பீர்க
ளாக; அவைகளாலே நீங்கள் தீட்டுப்படுவீர்
கள். நான் உங்கள் தேவனாகிய **கர்த்தர்**, நான் 44

பரிசுத்தர்; ஆகையால், தரையில் ஊருகிற எந்
தப் பிராணிகளிலும் உங்களைத் தீட்டுப்படுத்தா
மல், உங்களைப் பரிசுத்தமாக்கிக்கொண்டு, [1]பரி
45 சுத்தராயிருப்பீர்களாக. நான் உங்கள் தேவனாயி
ருக்கும்படி உங்களை எகிப்துதேசத்திலிருந்து
வரப்பண்ணின **கர்த்தர்**, நான்பரிசுத்தர்; ஆகை
யால், நீங்களும் பரிசுத்தராயிருப்பீர்களாக.
46 சுத்தமானதற்கும் அசுத்தமானதற்கும், புசிக்
கத்தக்க ஜந்துக்களுக்கும் புசிக்கத்தகாத ஜந்துக்
களுக்கும் [2]வித்தியாசம் பண்ணும்பொருட்டு,
47 மிருகத்துக்கும் பறவைகளுக்கும், தண்ணீர்க
ளில் நீந்துகிற சகல ஜீவஜந்துக்களுக்கும், பூமி
யின்மேல் ஊருகிற சகல பிராணிகளுக்கும்
அடுத்த பிரமாணம் இதுவே என்று சொல்
லுங்கள் என்றார்.

**12** 2 பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ
இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண்
டியது என்னவென்றால்: ஒரு ஸ்திரீ கர்ப்பவ
தியாகி ஆண்பிள்ளையைப் பெற்றால், அவள்
சூதகஸ்திரீ விலக்கமாயிருக்கும் நாட்களுக்குச்
3 சரியாக ஏழுநாள் [3]தீட்டாயிருப்பாள். எட்
டாம் நாளிலே அந்தப் பிள்ளையினுடைய
நுனித்தோலின் மாம்சம் [4]விருத்தசேதனம்
4 பண்ணப்படக்கடவது. பின்பு அவள் முப்
பத்து மூன்றுநாள் தன் உதிரச் சுத்திகரிப்பு
நிலையிலே இருந்து, சுத்திகரிப்பின் நாட்கள்
நிறைவேறுமளவும் பரிசுத்தமான யாதொரு
வஸ்துவைத் தொடவும் பரிசுத்த ஸ்தலத்துக்
5 குள் வரவும் கூடாது. பெண்பிள்ளையைப்
பெற்றாளாகில், அவள், இரண்டுவாரம் சூதக
ஸ்திரீயைப்போல, தீட்டாயிருந்து, பின்பு
அறுபத்தாறுநாள் உதிரச் சுத்திகரிப்பு நிலை
6 யிலே இருக்கக்கடவள். அவள் ஆண்பிள்ளை
யையாவது பெண்பிள்ளையையாவது பெற்ற
தற்காக அவளுடைய [5]சுத்திகரிப்பின் நாட்கள்
நிறைவேறினபின்பு, அவள் ஒரு வயதான
ஆட்டுக்குட்டியை சர்வாங்க தகனபலியாகவும்,
ஒரு புறாக்குஞ்சையாவது காட்டுப்புறாவை
யாவது பாவநிவாரணபலியாகவும், ஆசரிப்
புக் கூடாரவாசலில் ஆசாரியனிடத்திற்குக்
7 கொண்டுவரக்கடவள். அதை அவன் **கர்த்
தருடைய** சந்நிதியில் பலியிட்டு, அவளுக்கா
கப் பாவநிவிர்த்தி செய்வானாக; அப்பொழுது
அவள் தன் உதிர ஊறலின் தீட்டு நீங்கிச் சுத்
தமாவாள். இது ஆண்பிள்ளையையாவது பெண்
பிள்ளையையாவது பெற்றவளைக்குறித்த பிரமா
8 ணம். ஆட்டுக்குட்டியைக் கொண்டுவர [6]அவ
ளுக்குச் சக்தியில்லாதிருந்தால், இரண்டு காட்
டுப்புறாக்களையாவது இரண்டு புறாக்குஞ்சு
களையாவது, ஒன்றைச் சர்வாங்க தகனபலியா
கவும் மற்றொன்றைப் பாவநிவாரணபலியாக
வும் கொண்டுவரக்கடவள்; அதினால் ஆசாரி
யன் அவளுக்காகப் பாவநிவிர்த்தி செய்யக்கட
வன்; அப்பொழுது அவள் சுத்தமாவாள்
என்றுசொல் என்றார்.

**13** பின்னும் **கர்த்தர்** மோசேயையும் ஆரோ
2 னையும் நோக்கி: ஒரு மனிதனுடைய சரீரத்
தின்மேல் குஷ்டரோகம்போலிருக்கிற ஒரு
தடிப்பாவது [7]அசறாவது வெள்ளைப்படரா
வது உண்டானால், அவன் ஆசாரியனாகிய
[8]ஆரோனிடத்திலாகிலும், ஆசாரியராகிய
அவன் குமாரரில் ஒருவனிடத்திலாகிலும்
கொண்டுவரப்படக்கடவன். அப்பொழுது 3
ஆசாரியன் அவன் சரீரத்தின்மேல் இருக்கிற
ரோகத்தைப்பார்க்கவேண்டும்; ரோகம் இருக்
கும் இடத்தில் மயிர் வெளுத்தும், ரோகமுள்ள
இடம் அவனுடைய மற்றச் சரீரத்தைப்பார்க்
கிலும் அதிகமாய்க் குழிந்தும் இருந்தால் அது
குஷ்டரோகம்; ஆசாரியன் அவனைப் பார்த்த
பின்பு, அவனைத் தீட்டுள்ளவன் என்று தீர்க்
கக்கடவன். அவன் சரீரத்தின்மேல்வெள்ளை 4
படர்ந்திருந்தாலும், அவ்விடம் அவனுடைய
மற்றத் தோலைப்பார்க்கிலும் அதிக பள்ளமாயி
ராமலும், அதின் மயிர் வெள்ளையாக மாறாம
லும் இருந்தால், ஆசாரியன் அவனை ஏழுநாள்
அடைத்துவைத்து, ஏழாம் நாளில் அவனைப் 5
பார்க்கக்கடவன்; தோலில் ரோகம் அதிகப்ப
டாமல், அவன் பார்வைக்கு ரோகம் நின்றி
ருந்தால், ஆசாரியன் இரண்டாந்தரம் அவனை
ஏழுநாள் அடைத்துவைத்து, இரண்டாந்த 6
ரம் அவனை ஏழாம் நாளில் பார்க்கக்கடவன்;
தோலில் ரோகம் அதிகப்படாமல் சுருங்கியி
ருந்தால், ஆசாரியன் அவனைச் சுத்தமுள்ள
வன் என்று தீர்க்கக்கடவன்; அது அசறு;
[9]அவன் தன் வஸ்திரங்களைத் தோய்த்துச் சுத்
தமாயிருப்பானாக. தன்னைச் சுத்தமுள்ளவன் 7
என்று தீர்க்கிறதற்கு அவன் தன்னை ஆசாரிய
னுக்குக் காண்பித்தபின்பு, அசறு தோலில்
அதிகமாய்ப் படர்ந்திருந்தால், அவன் மறுபடி
யும் ஆசாரியனுக்குத் தன்னைக் காண்பிக்கக்க
டவன். அப்பொழுது அசறு தோலிலே பட 8
ர்ந்தது என்று ஆசாரியன் கண்டால், ஆசாரி
யன் அவனைத் தீட்டுள்ளவன் என்று தீர்க்கக்க
டவன்; அது குஷ்டரோகம்.
குஷ்டரோகம் ஒருமனிதனுக்கு இருந்தால், 9
அவனை ஆசாரியனிடத்தில் கொண்டுவர
வேண்டும். அப்பொழுது ஆசாரியன் [10]அவ 10
னைப் பார்த்து, தோலிலே வெள்ளையான
தடிப்பிருந்து, அது மயிரை வெண்மையாக
மாறப்பண்ணிற்றென்றும், அந்தத் தடிப்புள்ள
இடத்திலே இரணமாம்சம் உண்டென்றும்
கண்டால், அது அவன் சரீரத்திலுள்ள நாள்ப் 11
பட்ட குஷ்டம்; அவன் தீட்டுள்ளவன். ஆத
லால், ஆசாரியன் அவனை அடைத்துவைக்கா
மல், தீட்டுள்ளவன் என்று தீர்க்கக்கடவன்.
ஆசாரியன் பார்க்கிற இடங்களெங்கும் தோ 12
லிலே குஷ்டம் தோன்றி, அந்த ரோகமுள்ள
வனுடைய தலைதொடங்கி அவன் கால்மட்டும்
அது தேகமுழுவதையும் மூடியிருக்கக் கண்
டால், அப்பொழுது ஆசாரியன் பார்த்து, 13
குஷ்டம் அவன் சரீரம் முழுவதையும் மூடியி
ருந்தால், அவனைச் சுத்தமுள்ளவன் என்று
தீர்க்கக்கடவன்; அவன் உடம்பெல்லாம்
வெண்மையாய்ப் போனபடியால், [11]அவன்

1 யாத். 19. 6. ஆமோஸ் 3. 3. மத். 5. 48. 1 தெச. 4. 7. 1 பே. 1. 15, 16. வெளி. 22. 11, 14
2 லேவி. 10. 10. எசே. 44. 23. மல். 3. 18
3 யோபு 14. 4. சங். 51. 5. லூக். 2. 22
4 ஆதி. 17. 12. லூக். 1. 59; 2. 21. யோ. 7. 22, 23. ரோ. 3. 19. கலா. 5. 3
5 லூக். 2. 22
6 லேவி. 5. 7. லூக். 2. 24
7 உபா. 28. 27. ஏசா. 3. 17
8 உபா. 17. 8, 9; 24. 8. மல். 2. 7. லூக். 17. 14
9 லேவி. 11. 25; 14. 8
10 எண். 12. 10. 2 இரா. 5. 27. 2 நாளா. 26. 19, 20
11 ஏசா. 64. 6. யோ. 9. 41

14 சுத்தமுள்ளவன். ஆனாலும், இரண மாம்சம்
அவனில் காணப்பட்டால், அவன் தீட்டுள்ள
15 வன். ஆகையால், இரணமாம்சத்தை ஆசா
ரியன் காணும்போது, அவனைத் தீட்டுள்ள
வன் என்று தீர்க்கக்கடவன்; இரணமாம்சம்
16 தீட்டுள்ளது; அது குஷ்டம். அல்லது, இரண
மாம்சம் மாறி வெண்மையானால்; அவன் ஆசா
17 ரியனிடத்துக்கு வரவேண்டும். ஆசாரியன்
அவனைப் பார்த்து, ரோகமுள்ள இடம் வெண்
மையாக மாறினதென்று கண்டால், ஆசாரி
யன் அவனைச் சுத்தமுள்ளவன் என்று தீர்க்கக்
கடவன்; அவன் சுத்தமுள்ளவன்.
18 சரீரத்தின்மேல் [1]புண் உண்டாயிருந்து
19 ஆறிப்போய், அவ்விடத்திலே ஒரு வெள்
ளைத் தடிப்பாவது சிவப்புக்கலந்த ஒரு வெள்
ளைப் படராவது உண்டானால், அதை ஆசாரி
20 யனுக்குக் காண்பிக்கவேண்டும். ஆசாரியன்
அதைப் பார்த்து, அவ்விடம் மற்றத் தோலைப்
பார்க்கிலும் குழிந்திருக்கவும், அதின் மயிர்
வெள்ளையாக மாறியிருக்கவும் கண்டால், ஆசா
ரியன் அவனைத் தீட்டுள்ளவன் என்று தீர்க்க
வேண்டும்; அது புண்ணில் எழும்பின குஷ்
21 டம். ஆசாரியன் அதைப் பார்த்து, அதில்
வெள்ளைமயிர் இல்லை என்றும், அது மற்றத்
தோலைப்பார்க்கிலும் குழிந்திராமல் சுருங்கியி
ருக்கிறது என்றும் கண்டானாகில், அவனை
22 [2]ஏழுநாள் அடைத்து வைத்து, அது தோலில்
அதிகமாய்ப் படர்ந்திருக்கக் கண்டால், அவ
னைத் தீட்டுள்ளவன் என்று தீர்க்கக்கடவன்;
23 அது குஷ்டந்தான். அந்த வெள்ளைப்படர்
அதிகப்படாமல், [3]அவ்வளவில் நின்றிருக்கு
மாகில், அது புண்ணின் தழும்பாயிருக்கும்;
ஆகையால், ஆசாரியன் அவனைச் சுத்தமுள்ள
வன் என்று தீர்க்கக்கடவன்.
24 ஒருவனுடைய சரீரத்தின்மேல் [4]நெருப்புப்
பட்டதினாலே வெந்து, அந்த வேக்காடு ஆறிப்
போன இடத்திலே சிவப்பான படராவது
வெண்மையான படராவது உண்டானால்,
25 ஆசாரியன் அதைப் பார்க்கக்கடவன்; அந்தப்
படரிலே மயிர் வெண்மையாக மாறி, அவ்வி
டம் மற்றத் தோலைப்பார்க்கிலும் பள்ளமாயி
ருந்தால், அது வேக்காட்டினால் எழும்பின
குஷ்டம்; ஆகையால், ஆசாரியன் அவனைத்
தீட்டுள்ளவன் என்று தீர்க்கக்கடவன்; அது
26 குஷ்டரோகந்தான். ஆசாரியன் அதைப்
பார்க்கிறபோது, படரிலே வெள்ளைமயிர்
இல்லை என்றும், அது மற்றத் தோலைப்பார்க்
கிலும் குழிந்திராமல், சுருங்கியிருக்கிறது
என்றும் கண்டானாகில், அவனை ஏழுநாள்
27 அடைத்து வைத்து, ஏழாம் நாளில் அவ
னைப் பார்க்கக்கடவன்; அது தோலில் அதிக
மாய்ப் படர்ந்திருந்தால், ஆசாரியன் அவ
னைத் தீட்டுள்ளவன் என்று தீர்க்கக்கடவன்;
28 அது குஷ்டரோகம். படரானது தோலில்
பெருகாமல், அவ்வளவில் நின்று சுருங்கி
யிருந்ததாகில், அது சூட்டினால் உண்டான
தழும்பு; ஆசாரியன் அவனைச் சுத்தமுள்ள
வன் என்று தீர்க்கக்கடவன்; அது சூட்டினால்
வந்த வேக்காடு.
புருஷனுக்காகிலும் ஸ்திரீக்காகிலும் தலை 29
யிலாவது தாடியிலாவது ஒரு [5]சொறி உண்
டானால், ஆசாரியன் அதைப் பார்த்து, அவ் 30
விடம் மற்றத் தோலைப்பார்க்கிலும் பள்ளமும்
அதிலே மயிர் பொன்னிறமும் மிருதுவுமாயி
ருக்கக் கண்டால், ஆசாரியன் அவனைத் தீட்
டுள்ளவன் என்று தீர்க்கக்கடவன்; அது தலை
யிலும் தாடியிலும் உண்டாகிற சொறிகுஷ்டம்.
ஆசாரியன் அந்தச் சொறிகுஷ்டத்தைப் பார்க் 31
கும்போது, அவ்விடம் மற்றத் தோலைப்பார்க்
கிலும் பள்ளமாயிராமலும், அதிலே கறுத்த
மயிர் இல்லாமலும் இருக்கக்கண்டால், ஆசா
ரியன் அவனை ஏழுநாள் அடைத்துவைத்து,
ஏழாம்நாளில் ஆசாரியன் அதைப் பார்க்கக்கட 32
வன்; அந்தச் சொறி இடங்கொள்ளாமலும்,
அதிலே பொன்னிறமயிர் இல்லாமலும், அவ்
விடம் மற்றத் தோலைப்பார்க்கிலும் பள்ளமில்
லாமலும் இருந்தால், அந்தச் சொறியுள்ள 33
இடந்தவிர, மற்ற யாவையும் அவன் சிரைத்
துக்கொள்ளக்கடவன்; பின்பு, ஆசாரியன்
இரண்டாந்தரம் அவனை ஏழுநாள் அடைத்து
வைத்து, ஏழாம் நாளில் அதைப் பார்க்கக 34
டவன்; சொறி தோலில் இடங்கொள்ளாம
லும், அவ்விடம் மற்றத் தோலைப்பார்க்கிலும்
பள்ளமில்லாமலும் இருந்தால், ஆசாரியன்
அவனைச் சுத்தமுள்ளவன் என்று தீர்க்கக்கட
வன்; அவன் தன் வஸ்திரங்களைத் தோய்த்த
பின் சுத்தமாயிருப்பான். அவன் சுத்தமுள் 35
ளவன் என்று தீர்க்கப்பட்டபின், அந்தச்
சொறி [6]தோலில் இடங்கொண்டதானால்,
ஆசாரியன் அவனைப் பார்க்கக்கடவன்; சொறி 36
தோலில் இடங்கொண்டிருந்தால், அப்பொ
ழுது மயிர் பொன்னிறமா அல்லவா என்று
ஆசாரியன் விசாரிக்கவேண்டியதில்லை; அவ
ன் தீட்டுள்ளவனே. அவன் பார்வைக்கு 37
அந்தச் சொறி நீங்கி, அதில் கறுத்தமயிர் மு
ளைத்ததேயாகில், சொறி சொஸ்தமாயிற்று;
அவன் சுத்தமுள்ளவன்; ஆசாரியன் அவனைச்
சுத்தமுள்ளவன் என்று தீர்க்கக்கடவன்.
ஒரு புருஷனுக்காகிலும் ஸ்திரீக்காகிலும் 38
அவர்கள் சரீரத்தின்மேல் [7]வெள்ளைப் புள்ளி
கள் உண்டாயிருந்தால், ஆசாரியன் பார்க்கக் 39
கடவன்; அவர்கள் சரீரத்திலே மங்கின வெள்
ளைப் புள்ளிகள் இருந்தால், அது தோலில்
எழும்புகிற வெள்ளைத்தேமல்; அவர்கள் சுத்த
முள்ளவர்கள்.
ஒருவனுடைய தலைமயிர் உதிர்ந்து, அவன் 40
மொட்டையனானாலும், அவன் சுத்தமாயிருக்
கிறான். அவனுடைய முன்னந்தலைமயிர் 41
உதிர்ந்தால், அவன் அரைமொட்டையன்;
அவனும் சுத்தமாயிருக்கிறான். மொட்டைத் 42
தலையிலாவது அரைமொட்டைத்தலையிலாவது
சிவப்புக்கலந்த வெண்மையான படர் உண்
டானால், அது அதில் எழும்புகிற குஷ்டம்.
ஆசாரியன் அவனைப் பார்க்கக்கடவன்; அவ 43

[1] யாத். 9. 9; 15. 26
[2] 1 கொ. 5. 5
[3] யோபு 34. 31. நீதி. 28. 13. 1 பே. 4. 8
[4] ஏசா. 3. 24
[5] 1 இரா. 8. 38. 2 நாளா. 6. 29. ஏசா. 1. 5
[6] 2 தீமோ. 2. 17; 3. 13
[7] பிர. 7. 20. ரோ. 7. 22, 23. யாக். 3. 2

னுடைய மொட்டைத் தலையிலாவது அரை
மொட்டைத் தலையிலாவது, மற்ற அங்கங்க
ளின்மேல் உண்டாகும் குஷ்டத்தைப்போல,
சிவப்புக்கலந்த வெண்மையான தடிப்பு இருக்
44 கக் கண்டால், அவன் குஷ்டரோகி, அவன்
தீட்டுள்ளவன்; ஆசாரியன் அவனைத் தீட்டுள்
ளவன் என்று தீர்க்கக்கடவன்; அவன் வியாதி
[1]அவன் தலையிலே இருக்கிறது.
45 அந்த வியாதி உண்டாயிருக்கிற குஷ்ட
ரோகி [2]வஸ்திரம் கிழிந்தவனும், [3]தன் தலை
யை மூடாதவனுமாய் இருந்து, [4]அவன் தன்
தாடியை மூடிக்கொண்டு, "தீட்டு, தீட்டு"
46 [5]என்று சத்தமிடவேண்டும். அந்த வியாதி
அவனில் இருக்கும் நாள்வரைக்கும் தீட்டுள்
ளவனாக எண்ணப்படக்கடவன்; [6]அவன் தீட்
டுள்ளவனே; ஆகையால், அவன் தனியே
குடியிருக்கவேண்டும்; அவன் குடியிருப்பு
பாளயத்துக்குப் [7]புறம்பே இருக்கக்கடவது.
47 ஆட்டுமயிர் வஸ்திரத்திலாவது, பஞ்சுநூல்
48 வஸ்திரத்திலாவது, பஞ்சுநூல், அல்லது ஆட்
டுமயிரான பாவிலாவது, ஊடையிலாவது, ஒரு
தோலிலாவது, தோலினால் செய்த எந்தவித
வஸ்துவிலாவது குஷ்டதோஷம் தோன்றி,
49 வஸ்திரத்திலாவது, தோலிலாவது, பாவிலா
வது, ஊடையிலாவது, தோலினால் செய்த
எந்தவித வஸ்துவிலாவது குஷ்டதோஷம் பச்
சையாயாவது சிவப்பாயாவது காணப்பட்டால்
அது குஷ்டமாயிருக்கும்; அதை ஆசாரிய
50 னுக்குக் காண்பிக்கவேண்டும். ஆசாரியன்
அதைப் பார்த்து, ஏழுநாள் அடைத்துவைத்து,
51 ஏழாம் நாளிலே அதைப் பார்க்கக்கடவன்; வஸ்
திரத்திலாவது, பாவிலாவது, ஊடையிலா
வது, தோலிலாவது, தோலினால் செய்த எந்
தவித வஸ்துவிலாவது அது அதிகப்பட்டிருந்
தால், அது அரிக்கிற குஷ்டம்; அது தீட்டா
52 யிருக்கும். அந்தத் தோஷம் இருக்கிற ஆட்டு
மயிரினாலும் பஞ்சுநூலினாலும் செய்த வஸ்தி
ரத்தையும், பாவையும், ஊடையையும், தோ
லினால் செய்த எந்தவித வஸ்துவையும் சுட்
டெரிக்கக்கடவன்; அது அரிக்கிற குஷ்டம்;
ஆகையால் அக்கினியில் சுட்டெரிக்கப்பட
53 வேண்டும். வஸ்திரத்தின் பாவிலாவது, ஊ
டையிலாவது, தோலினால் செய்த எந்தவித
வஸ்துவிலாவது, அந்தத் தோஷம் அதிகப்
54 படவில்லை என்று ஆசாரியன் கண்டால், அப்
பொழுது ஆசாரியன் அதைக் கழுவச்சொல்லி,
இரண்டாந்தரம் ஏழுநாள் அடைத்துவைத்து,
55 அது கழுவப்பட்டபின்பு, அதைப் பார்க்கக்
கடவன்; அந்தத் தோஷம் அதிகப்படாதிருந்
தாலும், [8]அது நிறம் மாறாததாயிருந்தால் தீட்
டாயிருக்கும்; அக்கினியில் அதைச் சுட்டெ
ரிக்கவேண்டும்; அது அவ்வஸ்திரத்தின் உட்
புறத்திலும் வெளிப்புறத்திலும் உருவ அரிக்
56 கும். கழுவப்பட்டபின்பு அது குறுகிற்றென்று
ஆசாரியன் கண்டானேயாகில், அதை வஸ்
திரத்திலாவது, தோலிலாவது, பாவிலாவது,
ஊடையிலாவது இராதபடிக்கு எடுத்துப்

1 ஏசா. 1. 5
2 2 சாமு. 13. 19. எசே. 36. 24
3 லேவி. 10. 6: 21. 10
4 எசே. 24. 17, 22. மீகா. 3. 7
5 யோபு 42. 6. சங். 51. 3, 5. ஏசா. 6. 5: 64. 6. புலம்பல் 4. 15. ரோ. 3. 23. 1 கொ. 6. 11
6 சங். 30. 12
7 எண். 5. 2: 12. 14. 2 இரா. 7. 3: 15. 5. சங். 38. 11. புலம்பல் 1. 1. லூக். 17. 12. 1 கொ. 5. 5, 13. 2 தெச. 3. 6. 1 தீமோ. 6. 5. வெளி. 21. 27: 22. 15
8 எசே. 24. 13. எபி. 6. 4, 8. 2 பே. 1. 9: 2. 20, 22
9 ஏசா. 33. 14. மத். 3. 12: 25. 41. வெளி. 21. 8
10 மத். 8. 2, 4. மாற். 1. 40, 44. லூக். 5. 12, 14: 17. 14
11 எண். 19. 6
12 எபி. 9. 19
13 சங். 51. 7
14 எண். 19. 18, 19. ஏசா. 52. 15. எசே. 36. 25. யோ. 19. 34. எபி. 9. 13, 21: 12. 24. 1 யோ. 5. 6
15 லேவி. 11. 25. எபே. 5. 26. எபி. 10. 22. 1 பே. 3. 21. வெளி. 1. 5, 6
16 மத். 8. 4. மாற். 1. 44. லூக். 5. 14
17 எண். 8. 11, 21. எபே. 5. 26, 27. யூதா 24

போடவேண்டும். அது இன்னும் வஸ்திரத் 57
திலாவது, பாவிலாவது, ஊடையிலாவது,
தோலினால் செய்த எந்தவித வஸ்துவிலாவது
காணப்பட்டால், அது படருகிற தோஷம்;
ஆகையினால் அது உள்ளதை [9]அக்கினியில்
சுட்டெரிக்கவேண்டும். வஸ்திரத்தின் பாவா 58
வது, ஊடையாவது, தோலினால் செய்த எந்த
வித வஸ்துவாவது கழுவப்பட்டபின்பு, அந்தத்
தோஷம் அதை விட்டுப் போயிற்றேயானால்,
இரண்டாந்தரம் கழுவப்படவேண்டும்; அப்
பொழுது சுத்தமாயிருக்கும். ஆட்டுமயிராலா 59
கிலும் பஞ்சுநூலாலாகிலும் நெய்த வஸ்திரத்
தையாவது; பாவையாவது, ஊடையையா
வது, தோலினால் செய்த எந்தவித வஸ்துவை
யாவது, சுத்தமென்றாவது தீட்டென்றாவது
தீர்க்கிறதற்கு, அதினுடைய குஷ்டதோஷத்
துக்கடுத்த பிரமாணம் இதுவே என்றார்.
பின்னும் கர்த்தர் மோசேயை நோக்கி: **14**
குஷ்டரோகியினுடைய சுத்திகரிப்பின் 2
நாளில் அவனுக்கடுத்த பிரமாணம் என்ன
வென்றால்: [10]அவன் ஆசாரியனிடத்தில் கொ
ண்டுவரப்படவேண்டும். ஆசாரியன் பாள 3
யத்துக்குப் புறம்பே போய்; குஷ்டரோகி
யின் குஷ்டவியாதி சொஸ்தமாயிற்று என்று
கண்டால், சுத்திகரிக்கப்படவேண்டியவனுக் 4
காக, உயிரோடிருக்கும் சுத்தமான இரண்டு
குருவிகளையும், [11]கேதுருக் கட்டையையும்,
[12]சிவப்புநூலையும், [13]ஈசோப்பையும் வாங்கிவரக்
கட்டளையிடக்கடவன். பின்பு, ஆசாரியன் அந் 5
தக் குருவிகளில் ஒன்றை ஒரு மண்பாண்டத்
திலுள்ள ஊற்றுநீர்மேல் கொல்லச்சொல்லி,
உயிருள்ள குருவியையும், கேதுருக் கட்டை 6
யையும், சிவப்புநூலையும், ஈசோப்பையும் எடு
த்து, இவைகளையும் உயிருள்ள குருவியையும்
ஊற்றுநீர்மேல் கொல்லப்பட்ட குருவியின்
இரத்தத்திலே தோய்த்து, குஷ்டம் நீங்கச் சுத்தி 7
கரிக்கப்படுகிறவன்மேல் ஏழுதரம் [14]தெளித்து,
அவனைச் சுத்தம்பண்ணி, உயிருள்ள குருவி
யை வெளியிலே விட்டுவிடக்கடவன். சுத் 8
திகரிக்கப்படுகிறவன் தன் வஸ்திரங்களைத்
தோய்த்து, தன் மயிர் முழுவதையும் சிரைத்து,
தான் சுத்தமாகும்படி [15]ஜலத்தில் ஸ்நானம்
பண்ணி, பின்பு பாளயத்தில் பிரவேசித்து,
தன் கூடாரத்துக்குப் புறம்பே ஏழுநாள் தங்கி,
ஏழாம் நாளிலே தன் தலையையும் தாடியை 9
யும் புருவங்களையும் தன்னுடைய மயிர் முழு
வதையும் சிரைத்து, தன் வஸ்திரங்களைத்
தோய்த்து, ஜலத்தில் ஸ்நானம் பண்ணவேண்
டும்; அப்பொழுது சுத்தமாயிருப்பான். எட் 10
டாம் நாளிலே அவன் [16]பழுதற்ற இரண்டு
ஆட்டுக்குட்டிகளையும், ஒரு வயதான பழுதற்ற
ஒரு பெண்ணாட்டுக்குட்டியையும், போஜன
பலிக்காக எண்ணெயிலே பிசைந்த ஒரு மரக்
காலில் பத்தில் மூன்று பங்காகிய மெல்லிய
மாவையும், ஆழாக்கு எண்ணெயையும் கொண்
டுவரக்கடவன். சுத்திகரிக்கிற [17]ஆசாரியன் 11
சுத்திகரிக்கப்படும் மனிதனையும் அவ்வஸ்துக்

களையும் ஆசரிப்புக் கூடார வாசலிலே **கர்த்த**
12 **நுடைய** சந்நிதியில் நிறுத்தக்கடவன். பின்பு,
ஆசாரியன் ஒரு ஆட்டுக்குட்டியைப் பிடித்து,
அதையும் அந்த ஆழாக்கு எண்ணெயையும்
குற்றநிவாரணபலியாகக் கொண்டுவந்து, **கர்த்**
**தருடைய** சந்நிதியில் [1]அசைவாட்டும் பலி
13 யாக அசைவாட்டி, பாவநிவாரணபலியும் சர்
வாங்க தகனபலியும் இடும் பரிசுத்த ஸ்தலத்
திலே அந்த ஆட்டுக்குட்டியைக் கொல்லக்கட
வன்; குற்றநிவாரணபலி பாவநிவாரண பலி
யைப்போல ஆசாரியனுக்கு உரியது; அது
14 மகா பரிசுத்தமானது. அந்தக் குற்றநிவாரண
பலியின் இரத்தத்தில் ஆசாரியன் கொஞ்சம்
எடுத்து, சுத்திகரிக்கப்படுகிறவன் வலதுகா
தின் மடலிலும், அவன் வலதுகையின் பெரு
விரலிலும், வலதுகாலின் பெருவிரலிலும்
15 பூசக்கடவன். பின்பு, ஆசாரியன் அந்த
ஆழாக்கு எண்ணெயிலே கொஞ்சம் தன்
16 இடதுகையில் வார்த்து, தன் இடதுகையி
லுள்ள எண்ணெயில் தன் வலதுகையின் விர
லைத் தோய்த்து, தன் விரலினால் ஏழுதரம்
அந்த எண்ணெயில் எடுத்து, **கர்த்தருடைய**
17 சந்நிதியில் தெளித்து, தன் உள்ளங்கையில்
இருக்கிற மீதியான எண்ணெயிலே கொஞ்
சம் எடுத்து சுத்திகரிக்கப்படுகிறவன் வலது
காதின் மடலிலும், அவன் வலதுகையின்
பெருவிரலிலும், வலதுகாலின் பெருவிரலி
லும், முந்தப் பூசியிருக்கிற குற்றநிவாரண
18 பலியினுடைய ரத்தத்தின்மேல் பூசி, தன்
உள்ளங்கையில் இருக்கிற மீதியான எண்
ணெயைச் சுத்திகரிக்கப்படுகிறவன் தலையிலே
வார்த்து, **கர்த்தருடைய** சந்நிதியில் அவனுக்
19 காகப் பாவநிவிர்த்தி செய்யக்கடவன். ஆசாரி
யன் பாவநிவாரணபலியையும் செலுத்தி,
சுத்திகரிக்கப்படுகிறவனின் தீட்டு நீங்க, அவ
னுக்குப் பாவநிவிர்த்தி செய்து, பின்பு சர்
20 வாங்க தகனபலியைக் கொன்று, சர்வாங்க
தகனபலியையும் போஜனபலியையும் பலி
பீடத்தின்மேல் வைத்து, அவனுக்காகப் பாவ
நிவிர்த்தி செய்யக்கடவன்; அப்பொழுது
அவன் சுத்தமாயிருப்பான்.
21 அவன் இம்மாத்திரம் செய்யத்திராணியற்ற
தரித்திரனாயிருந்தால், அவன் தன் பாவநிவிர்த்
திக்கென்று அசைவாட்டும் குற்றநிவாரண
பலியாக ஒரு ஆட்டுக்குட்டியையும், போஜன
பலிக்கு எண்ணெயில் பிசைந்த ஒரு மரக்கால்
மெல்லிய மாவிலே பத்தில் ஒரு பங்கையும்,
22 ஆழாக்கு எண்ணெயையும், தன் திராணிக்
குத் தக்கபடி இரண்டு காட்டுப்புறாக்களையா
வது இரண்டு புறாக்குஞ்சுகளையாவது, ஒன்று
பாவநிவாரணபலியாகவும், மற்றொன்று சர்
வாங்க தகனபலியாகவும் செலுத்தும்படி
23 வாங்கி, தான் சுத்திகரிக்கப்படும்படி எட்டாம்
நாளில் ஆசரிப்புக் கூடாரவாசலிலே **கர்த்த**
**நுடைய** சந்நிதியில் ஆசாரியனிடத்துக்குக்
24 கொண்டுவருவானாக. அப்பொழுது ஆசாரி
யன் குற்றநிவாரணபலிக்குரிய ஆட்டுக்குட்டி
யையும் அந்த ஆழாக்கு எண்ணெயையும்
வாங்கி **கர்த்தருடைய** சந்நிதியில் அசைவாட்
டும் போஜனபலியாக அசைவாட்டி, குற்ற 25
நிவாரணபலிக்கான அந்த ஆட்டுக்குட்டியைக்
கொன்று, குற்றநிவாரணபலியின் இரத்தத்
தில் கொஞ்சம் எடுத்து, சுத்திகரிக்கப்படுகிற
வன் வலதுகாதின் மடலிலும், அவன் வலது
கையின் பெருவிரலிலும், வலதுகாலின் பெரு
விரலிலும் பூசி, அந்த எண்ணெயிலே கொஞ் 26
சம் தன் இடதுகையில் வார்த்து, தன் இடது 27
கையிலுள்ள எண்ணெயிலே தன் வலது விர
லைத் தோய்த்து, **கர்த்தருடைய** சந்நிதியில் ஏழு
தரம் தெளித்து, தன் உள்ளங்கையில் இருக் 28
கிற எண்ணெயில் கொஞ்சம் எடுத்துச் சுத்தி
கரிக்கப்படுகிறவன் வலதுகாதின் மடலிலும்,
அவன் வலதுகையின் பெருவிரலிலும், வலது
காலின் பெருவிரலிலும் குற்றநிவாரணபலி
யின் இரத்தம் பூசியிருக்கிற இடத்தின்மேல்
பூசி, தன் உள்ளங்கையில் இருக்கிற மற்ற 29
எண்ணெயைச் சுத்திகரிக்கப்படுகிறவன் தலை
யின்மேல் அவனுக்காகக் **கர்த்தருடைய** சந்
நிதியில் பாவநிவிர்த்தி செய்யும்படி தடவி,
பின்பு, அவன் தன் திராணிக்கும் தகுதிக்கும் 30
தக்கதாய் காட்டுப்புறாக்களையாவது புறாக்
குஞ்சுகளையாவது கொண்டுவந்து, அவைக 31
ளில் ஒன்றைப் பாவநிவாரணபலியும், மற்
றொன்றைச் சர்வாங்க தகனபலியுமாக்கி, போ
ஜனபலியோடேகூடச் செலுத்தி, இப்படியே
ஆசாரியன் சுத்திகரிக்கப்படுகிறவனுக்காக,
**கர்த்தருடைய** சந்நிதியில் பாவநிவிர்த்தி செய்
யக்கடவன். தன் சுத்திகரிப்புக்கு வேண் 32
டியவைகளைச் [2]சம்பாதிக்கக்கூடாத குஷ்ட
ரோகியைக் குறித்த பிரமாணம் இதுவே
என்றார்.

பின்னும் **கர்த்தர்** மோசேயையும் ஆரோனை 33
யும் நோக்கி: நான் உங்களுக்குக் [3]காணியாட்சி 34
யாகக் கொடுக்கும் கானான்தேசத்திலே நீங்
கள் போய்ச் சேர்ந்தபின்பு, உங்கள் காணி
யாட்சியான தேசத்தில் ஒரு வீட்டிலே குஷ்ட
தோஷத்தை நான் வரப்பண்ணினால், அந்த 35
வீட்டிற்கு உடையவன் வந்து, [4]வீட்டிலே
தோஷம் வந்திருக்கிறதாகத் தோன்றுகிறது
என்று ஆசாரியனுக்கு அறிவிக்கக்கடவன்.
அப்பொழுது வீட்டிலுள்ள யாவும் தீட்டுப் 36
படாதபடிக்கு, ஆசாரியன் அந்தத் தோஷத்
தைப் பார்க்கப் போகும்முன்னே வீட்டை
ஒழித்துவைக்கும்படி சொல்லி, பின்பு வீட்
டைப் பார்க்கும்படி போய், அந்தத் தோஷம் 37
இருக்கிற இடத்தைப் பார்க்கக்கடவன்; அப்
பொழுது வீட்டுச் சுவர்களிலே கொஞ்சம் பச்
சையும் கொஞ்சம் சிவப்புமான குழி விழுந்
திருந்து, அவைகள் மற்றச் சுவரைப்பார்க்கி
லும் பள்ளமாயிருக்கக் கண்டால், ஆசாரியன் 38
வீட்டைவிட்டுப் புறப்பட்டு வாசற்படியிலே
வந்து, வீட்டை ஏழுநாள் அடைத்துவைத்து,
ஏழாம் நாளிலே திரும்பப் போய்ப் பார்த்து, 39
தோஷம் வீட்டுச் சுவர்களில் படர்ந்ததென்று

[1] யாத். 29. 24
[2] சங். 72.12–14. மத். 11. 5
[3] ஆதி. 12.7; 13. 17; 17. 8. உபா. 32. 49
[4] சங். 91. 10. நீதி. 3. 33. சகரி. 5. 4

40 கண்டால், தோஷம் இருக்கும் அவ்விடத்துக்
கல்லுகளைப் பெயர்க்கவும், பட்டணத்துக்குப்
புறம்பே [1]அசுத்தமான ஒரு இடத்திலே போட
41 வும் அவன் கட்டளையிட்டு, வீட்டை உள்ளே
சுற்றிலும் செதுக்கச்சொல்லி, செதுக்கிப்
போட்ட மண்ணைப் பட்டணத்துக்குப் புறம்
பே அசுத்தமான ஒரு இடத்திலே கொட்ட
42 வும், வேறே கல்லுகளை எடுத்துவந்து, அந்தக்
கல்லுகளுக்குப் பதிலாகக் கட்டி, வேறே
சாந்தை எடுத்து வீட்டைப் பூசவும் கட்டளை
43 யிடுவானாக. கல்லுகளைப் பெயர்த்து, வீட்
டைச்செதுக்கி, கவமாய்ப்பூசினபின்பும், [2]அந்
தத் தோஷம் திரும்ப வீட்டில் வந்தானால்,
44 ஆசாரியன் போய்ப் பார்க்கக்கடவன்; தோ
ஷம் வீட்டில் படர்ந்ததானால், அது வீட்டை
[3]அரிக்கிற குஷ்டம்; அது தீட்டாயிருக்கும்.
45 ஆகையால் [4]வீடு முழுவதையும் இடித்து,
அதின் கல்லுகளையும், மரங்களையும், அதின்
சாந்து எல்லாவற்றையும் பட்டணத்துக்குப்
புறம்பே அசுத்தமான இடத்திலே கொண்டு
46 போகவேண்டும். வீடு அடைக்கப்பட்டிருக்
கும் நாட்களில் அதற்குள் பிரவேசிக்கிறவன்
சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்பான்.
47 அந்த வீட்டிலே படுத்தவன் தன் வஸ்திரங்
களைத் தோய்க்கக்கடவன்; அந்த வீட்டிலே
சாப்பிட்டவனும் தன் வஸ்திரங்களைத் தோய்க்
48 கக்கடவன். ஆசாரியன் திரும்ப வந்து, வீடு
பூசப்பட்டபின்பு வீட்டிலே அந்தத் தோஷம்
படரவில்லை என்று கண்டானேயாகில், தோ
ஷம் நிவிர்த்தியானபடியால், ஆசாரியன் அந்த
வீட்டைச் [5]சுத்தம் என்று தீர்க்கக்கடவன்.
49 அப்பொழுது வீட்டிற்குத் தோஷங்கழிக்க,
இரண்டு குருவிகளையும், கேதுருக் கட்டை
யையும், சிவப்புநூலையும், ஈசோப்பையும் எடு
50 த்து, ஒரு குருவியை ஒரு மண்பாண்டத்தி
51 லுள்ள ஊற்றுநீரின்மேல் கொன்று, கேதுருக்
கட்டையையும், ஈசோப்பையும், சிவப்பு நூலை
யும், உயிருள்ள குருவியையும் எடுத்து, இவை
களைக் கொல்லப்பட்ட குருவியின் இரத்தத்தி
லும் ஊற்றுநீரிலும் தோய்த்து, வீட்டின்மேல்
52 ஏழுதரம் தெளித்து, குருவியின் இரத்தத்தி
னாலும், ஊற்றுநீரினாலும், உயிருள்ள குருவி
யினாலும், கேதுருக் கட்டையினாலும், ஈசோப்
பினாலும், சிவப்புநூலினாலும் வீட்டிற்குத்
53 தோஷங்கழித்து, உயிருள்ள குருவியைப்
பட்டணத்துக்குப் புறம்பே வெளியிலே விட்டு
விட்டு, இப்படி வீட்டிற்குப் பிராயச்சித்தம்
செய்யக்கடவன்; அப்பொழுது அது சுத்தமா
யிருக்கும்.
54 இது சகலவித குஷ்டரோகத்துக்கும், சொ
55 றிக்கும், வஸ்திரக் குஷ்டத்துக்கும், வீட்டுக்
56 குஷ்டத்துக்கும், தடிப்புக்கும், அசறுக்கும்,
வெள்ளைப்படருக்கும் அடுத்த பிரமாணம்.
57 குஷ்டம் எப்பொழுது [6]தீட்டுள்ளது என்றும்,
எப்பொழுது தீட்டில்லாதது என்றும் தெரி
விப்பதற்குக் குஷ்டரோகத்துக்கு அடுத்த பிர
மாணம் இதுவே என்றார்.

15 பின்னும் கர்த்தர் மோசேயையும் ஆரோ
னையும் நோக்கி: நீங்கள் இஸ்ரவேல் புத்திர 2
ரோடே சொல்லவேண்டியது என்னவென்
றால்: ஒருவனுக்குப் *பிரமியம் உண்டானால்,
அவன் தன் பிரமியத்தினாலே தீட்டானவன்.
அவனுடைய மாம்சத்திலுள்ள பிரமியம் 3
ஊறிக்கொண்டிருந்தாலும், அவன் பிரமியம்
அடைபட்டிருந்தாலும், அதினால் அவனுக்
குத் தீட்டுண்டாகும். பிரமியமுள்ளவன் படுக் 4
கிற எந்தப் படுக்கையும் தீட்டாகும்; அவன்
எதின்மேல் உட்காருகிறானோ அதுவும் தீட்
டாகும். அவன் படுக்கையைத் தொடுகிறவன் 5
தன் வஸ்திரங்களைத் தோய்த்து, தண்ணீரில்
முழுகக்கடவன்; சாயங்காலம்மட்டும் அவன்
தீட்டுப்பட்டிருப்பானாக. பிரமியம் உள்ள 6
வன் உட்கார்ந்ததின்மேல் உட்காருகிற
வன் தன் [7]வஸ்திரங்களைத் தோய்த்து, தண்
ணீரில் முழுகி, சாயங்காலம்மட்டும் தீட்டுப்
பட்டிருப்பானாக. பிரமியம் உள்ளவனின் 7
சரீரத்தைத் தொடுகிறவன் தன் வஸ்திரங்களைத்
தோய்த்து, தண்ணீரில் முழுகி, சாயங்காலம்
மட்டும் தீட்டுப்பட்டிருப்பானாக. பிரமியம் 8
உள்ளவன் சுத்தமாயிருக்கிற ஒருவன்மேல்
துப்பினால், இவன் தன் வஸ்திரங்களைத் தோய்
த்து, தண்ணீரில் முழுகி, சாயங்காலம்மட்டும்
தீட்டுப்பட்டிருப்பானாக. பிரமியம் உள்ளவன் 9
ஏறும் எந்தச் சேணமும் தீட்டாயிருக்கும்.
அவனுக்குக் கீழிருந்த எதையாகிலும் தொடு 10
கிறவன் சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்
பான்; அதை எடுத்துக்கொண்டுபோகிறவன்
தன் வஸ்திரங்களைத் தோய்த்து, தண்ணீரில்
முழுகி, சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்
பானாக. பிரமியம் உள்ளவன் தன் கைகளைத் 11
தண்ணீரினால் கழுவாமல் ஒருவனைத் தொட்
டால், இவன் தன் வஸ்திரங்களைத் தோய்த்து,
தண்ணீரில் முழுகி, சாயங்காலம்மட்டும் தீட்
டுப்பட்டிருப்பானாக. பிரமியம் உள்ளவன் 12
தொட்ட மண்பாண்டம் உடைக்கப்படவும்,
மரச்சாமான் எல்லாம் தண்ணீரினால் கழுவப்
படவும் வேண்டும். பிரமியம் உள்ளவன் தன் 13
பிரமியம் நீங்கிச் சுத்தமானால், தன் சுத்தி
கரிப்புக்கென்று ஏழுநாள் எண்ணிக்கொண்
டிருந்து, தன் வஸ்திரங்களைத் தோய்த்து,
தன் தேகத்தை ஊற்றுநீரில் கழுவக்கடவன்;
அப்பொழுது சுத்தமாயிருப்பான். எட்டாம் 14
நாளிலே, அவன் இரண்டு காட்டுப்புறாக்களை
யாவது, இரண்டு புறாக்குஞ்சுகளையாவது,
ஆசரிப்புக் கூடாரவாசலிலே **கர்த்தருடைய**
சந்நிதியில் கொண்டுவந்து, ஆசாரியனிடத்
தில் கொடுக்கக்கடவன். ஆசாரியன் அவை 15
களில் ஒன்றைப் பாவநிவாரணபலியும் மற்
றொன்றைச் சர்வாங்க தகனபலியுமாக்கி,
அவனுக்காகக் **கர்த்தருடைய** சந்நிதியில்
அவன் பிரமியத்தினிமித்தம் பாவநிவிர்த்தி
செய்யவேண்டும்.
ஒருவனிலிருந்து [8]இந்திரியம் கழிந்ததுண் 16
டானால், அவன் தண்ணீரில் முழுகவேண்டும்;

[1] வெளி. 22. 15
[2] எபி. 6. 4-8. 2 பே. 2. 20, 22. யூதா 12
[3] லேவி. 13. 51. சகரி. 5. 4
[4] 1 இரா. 9. 6, 9. 2 இரா. 10. 27. எரே. 52. 13. மத். 24. 2
[5] 1 கொ. 6. 11
[6] உபா. 24. 8. எசே. 44. 23
* மேகவியாதி. லேவி. 22. 4. எண். 5. 2. 2 சாமு. 3. 29. மத். 6. 20
[7] ஏசா. 1. 16. யாக். 4. 8
[8] உபா. 23. 10

சாயங்காலம்மட்டும் அவன் தீட்டுப்பட்டிருப்
17 பானாக. கழிந்த இந்திரியம் பட்ட வஸ்திர
மும் தோலும் தண்ணீரினால் கழுவப்பட்டு,
18 சாயங்காலம்மட்டும் தீட்டாயிருப்பதாக. இந்
திரியம் கழிந்தவனோடே ஸ்திரீ படுத்துக்
கொண்டிருந்தால், இருவரும் [1]தண்ணீரில்
முழுகி, சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்
பார்களாக.
19 சூதகஸ்திரீ தன் சரீரத்திலுள்ள உதிர [2]ஊற
லினிமித்தம் ஏழுநாள் தன் விலக்கத்தில் இருக்
கக்கடவள்; அவளைத் தொடுகிறவன் எவனும்
சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்பானாக.
20 அவள் விலக்கலாயிருக்கையில், எதின்மேல்
படுத்துக்கொள்ளுகிறாளோ எதின்மேல் உட்
காருகிறாளோ அதெல்லாம் தீட்டாயிருக்கும்.
21 அவள் படுக்கையைத் தொடுகிறவன் எவனும்
தன் வஸ்திரங்களைத் தோய்த்து, தண்ணீரில்
முழுகி, சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்
22 பானாக. அவள் உட்கார்ந்த மணையைத் தொடு
கிறவன் எவனும் தன் வஸ்திரங்களைத் தோய்
த்து, தண்ணீரில் முழுகி, சாயங்காலம்மட்டும்
23 தீட்டுப்பட்டிருப்பானாக. அவள் படுக்கையின்
மேலாகிலும், அவள் உட்கார்ந்த மணையின்
மேலாகிலும் இருந்த எதையாகிலும் தொட்ட
வன், சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்
24 பானாக. ஒருவன் அவளோடே படுத்துக்
கொண்டதும், அவள் [3]தீட்டு அவன்மேல்
பட்டதுமுண்டானால், அவன் ஏழுநாள் தீட்
டாயிருப்பானாக; அவன் படுக்கிற படுக்கை
யும் தீட்டுப்படும்.
25 ஒரு ஸ்திரீ [4]விலகியிருக்கவேண்டிய காலம்
அல்லாமல் அவளுடைய உதிரம் அநேகநாள்
ஊறிக்கொண்டிருந்தால், அல்லது அந்தக்
காலத்துக்கு மிஞ்சி அது கண்டிருக்கும்
நாளெல்லாம் ஊறிக்கொண்டிருந்தால், தன்
விலக்கத்தின் நாட்களிலிருந்ததுபோல அவள்
26 தீட்டாயிருப்பாளாக. அந்த நாட்களெல்லாம்
அவள் படுக்கும் எந்தப் படுக்கையும், அவள்
விலக்கத்தின் படுக்கையைப்போல, அவளுக்
குத் தீட்டாயிருக்கும்; அவள் உட்கார்ந்த
மணையும், அவளுடைய விலக்கத்தின் தீட்
27 டைப்போலவே தீட்டாயிருக்கும். அப்படிப்
பட்டவைகளைத் தொடுகிறவன் எவனும்
தன் வஸ்திரங்களைத் தோய்த்து, தண்ணீரில்
முழுகி, சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்
28 பானாக. அவள் தன் உதிர ஊறல் நின்று
சுத்தமானபோது, அவள் ஏழுநாள் எண்ணிக்
கொள்வாளாக; அதின்பின்பு சுத்தமாயிருப்
29 பாள். எட்டாம் நாளிலே இரண்டு காட்டுப்
புறாக்களையாவது, இரண்டு புறாக்குஞ்சுகளை
யாவது, ஆசரிப்புக் கூடாரவாசலில் ஆசாரிய
30 னிடத்தில் கொண்டுவரக்கடவள். ஆசாரி
யன் அவைகளில் ஒன்றைப் பாவநிவாரண
பலியும், மற்றொன்றைச் சர்வாங்க தகனபலியு
மாக்கி, அவளுக்காகக் **கர்த்தருடைய** சந்நிதி
யில் அவளுடைய உதிர ஊறலினிமித்தம்
பாவநிவிர்த்தி செய்யக்கடவன்.

[1] யாத். 19. 15. 1 சாமு. 21. 4. சங். 51. 5. 1 கொ. 6. 18. 1 தெச. 4. 3-5. எபி. 13. 4
[2] லேவி. 12. 2
[3] எசே. 18. 6; 22. 10
[4] மத். 9. 20. மாற். 5. 25. லூ. 8. 43
[5] எண். 5. 3. எசே. 5. 11; 23. 38. தானி. 9. 27. 1 கொ. 3. 17
[6] லேவி. 11. 47. எசே. 44. 23. எபி. 12. 15
[7] லேவி. 10. 1, 2
[8] யாத். 25. 22. 1 இரா. 8. 10
[9] யாத். 30. 10. எபி. 9. 7, 8; 10. 19
[10] யாத். 28. 39-43. எசே. 44. 17. மத். 22. 11, 12
[11] லேவி. 4. 14
[12] லேவி. 9. 7. எபி. 5. 2; 7. 27; 9. 7
[13] ஏசா. 53. 5, 6. 2 கொ. 5. 21. எபி. 7. 27. 1 யோ. 2. 2

இஸ்ரவேல் புத்திரர் தங்கள் நடுவே இருக் 31
கிற என்னுடைய வாசஸ்தலத்தைத் [5]தீட்டுப்
படுத்தி, தங்கள் தீட்டுகளால் சாகாதபடிக்கு,
இப்படி நீங்கள் அவர்கள் தீட்டுகளுக்கு அவர்
களை [6]விலக்கிவைக்கக் கடவீர்கள்.
பிரமியமுள்ளவனுக்கும், இந்திரியக் கழிவி 32
னாலே தீட்டானவனுக்கும், சூதக பலவீன 33
முள்ளவளுக்கும், பிரமியமுள்ள ஸ்திரீ புருஷ
ருக்கும், தீட்டாயிருக்கிறவளோடே படுத்துக்
கொண்டவனுக்கும் ஏற்ற பிரமாணம் இதுவே
என்றார்.
ஆரோனின் இரண்டு குமாரர் **கர்த்தரு** 16
**டைய** சந்நிதியிலே சேர்ந்து [7]மரித்துப்போன
பின்பு, **கர்த்தர்** மோசேயை நோக்கி: கிருபா 2
சனத்தின்மேல் [8]ஒரு மேகத்தில் நான் காணப்
படுவேன்; ஆதலால் உன் சகோதரனாகிய
ஆரோன் சாகாதபடி, [9]பரிசுத்த ஸ்தலத்திலே
திரைக்கு உட்புறத்திலிருக்கிற பெட்டியின்
மேலுள்ள கிருபாசன மூடிக்கு முன்பாகச்
சகல வேளையிலும் வரவேண்டாம் என்று
அவனுக்குச் சொல். ஆரோன் பரிசுத்த ஸ்த 3
லத்துக்குள் பிரவேசிக்கவேண்டிய விதமாவது:
அவன் ஒரு காளையைப் பாவநிவாரணபலி
யாகவும், ஒரு ஆட்டுக்கடாவைச் சர்வாங்க
தகனபலியாகவும் செலுத்திப் பிரவேசிக்க
வேண்டும். அவன் பரிசுத்தமான [10]சணல்நூல் 4
சட்டையைத் தரித்து, தன் அரைக்குச் சணல்
நூல் சல்லடத்தைப் போட்டு, சணல்நூல்
இடைக்கச்சையைக் கட்டி, சணல்நூல்
பாகையைத் தரித்துக்கொண்டிருக்கவேண்
டும்; அவைகள் பரிசுத்த வஸ்திரங்கள்; அவன்
ஜலத்திலே ஸ்நானம்பண்ணி, அவைகளைத்
தரித்துக்கொண்டு, இஸ்ரவேல் புத்திரராகிய 5
சபையாரிடத்திலே, பாவநிவாரணபலியாக
[11]இரண்டு வெள்ளாட்டுக்கடாக்களையும், சர்
வாங்க தகனபலியாக ஒரு ஆட்டுக்கடாவையும்
வாங்கக்கடவன். பின்பு ஆரோன் தனக்காக 6
வும் [12]தன் வீட்டாருக்காகவும் பாவநிவிர்த்தி
செய்யும்படிக்கு, தன்னுடைய பாவநிவாரண
பலியின் காளையைச் சேரப்பண்ணி, அந்த 7
இரண்டு வெள்ளாட்டுக்கடாக்களையும் கொ
ண்டுவந்து, ஆசரிப்புக் கூடாரவாசலிலே **கர்த்**
**தருடைய** சந்நிதியில் நிறுத்தி, அந்த இரண்டு 8
வெள்ளாட்டுக்கடாக்களையுங் குறித்துக் **கர்த்த**
**ருக்கென்று** ஒரு சீட்டும், போக்காடாக விடப்
படும் வெள்ளாட்டுக்கடாவுக்கென்று ஒரு சீட்
டும் போட்டு, **கர்த்தருக்கென்று** சீட்டு விழுந்த 9
வெள்ளாட்டுக்கடாவைப் பாவநிவாரணபலி
யாகச் சேரப்பண்ணி, போக்காடாக விடப் 10
படச் சீட்டுவிழுந்த வெள்ளாட்டுக்கடாவை,
அதைக்கொண்டு [13]பாவநிவிர்த்தி உண்டாக்க
வும் அதைப் போக்காடாக வனாந்தரத்திலே
போகவிடவும், **கர்த்தருடைய** சந்நிதியில் உயி
ரோடே நிறுத்தி; பின்பு ஆரோன் தனக்காக 11
வும் தன் வீட்டாருக்காகவும் பாவநிவிர்த்தி
செய்யும்படி, தன்னுடைய பாவநிவாரணத்
துக்கான காளையைக் கொண்டுவந்து, அதைக்

12 கொன்று, **கர்த்தருடைய** சந்நிதியிலிருக்கும்
பலிபீடத்தின்மேலுள்ள நெருப்புத் தணலி
னால் [1]தூபகலசத்தை நிரப்பி, பொடியாக்கப்
பட்ட [2]சுகந்த தூபவர்க்கத்திலே தன் கைப்
பிடிகள் நிறைய எடுத்து, திரைக்கு உட்புற
13 மாகக் கொண்டுவந்து, தான் சாகாதபடிக்குத்
தூபமேகமானது சாட்சிப்பெட்டியின்மேல்
இருக்கும் [3]கிருபாசனத்தை மூடத்தக்கதாக,
**கர்த்தருடைய** சந்நிதியில் அக்கினியின்மேல்
14 [4]தூபவர்க்கத்தைப் போடக்கடவன். பின்பு
காளையின் இரத்தத்திலே கொஞ்சம் எடுத்து,
கீழ்ப்புறமாக நின்று, தன் விரலினால் கிருபா
சனத்தின்மேல் [5]தெளித்து, அந்த இரத்தத்
தில் கொஞ்சம் எடுத்துக் கிருபாசனத்துக்கு
முன்பாக ஏழுதரம் தன் விரலினால் தெளிக்கக்
15 கடவன். பின்பு ஜனத்தினுடைய [6]பாவ
நிவாரணபலியான வெள்ளாட்டுக்கடாவை
அவன் கொன்று, அதின் இரத்தத்தைத்
[7]திரைக்கு உட்புறமாகக் கொண்டுவந்து, காளை
யின் இரத்தத்தைத் தெளித்ததுபோல, அதின்
இரத்தத்தையும் கிருபாசனத்தின்மேலும் அத
16 ற்கு முன்பாகவும் தெளித்து, இஸ்ரவேல் புத்
திரருடைய தீட்டுகளினிமித்தமும், அவர்களு
டைய சகல பாவங்களினாலும் உண்டான
அவர்களுடைய மீறுதல்களினிமித்தமும், பரி
சுத்த ஸ்தலத்திற்காகப் [8]பிராயச்சித்தஞ்செய்து,
அவர்களிடத்தில் அவர்களுடைய தீட்டுகளுக்
குள்ளே நிற்கிற ஆசரிப்புக் கூடாரத்திற்காக
17 வும் அப்படியே செய்யக்கடவன். பாவ
நிவிர்த்தி செய்யும்படி அவன் பரிசுத்த ஸ்தலத்
துக்குள் பிரவேசித்து, தனக்காகவும் தன் வீட்
டாருக்காகவும் இஸ்ரவேல் சபையார் அனை
வருக்காகவும் பாவநிவிர்த்தி செய்து, வெளியே
வருமளவும் ஆசரிப்புக் கூடாரத்தில் [9]ஒருவ
18 ரும் இருக்கலாகாது. பின்பு அவன் **கர்த்தரு
டைய** சந்நிதியில் இருக்கிற பலிபீடத்தண்டை
வந்து, அதற்காகப் [10]பிராயச்சித்தஞ்செய்து,
காளையின் இரத்தத்திலும் வெள்ளாட்டுக்கடா
வின் இரத்தத்திலும் கொஞ்சம் எடுத்து, பலி
பீடத்துக் கொம்புகளின்மேல் சுற்றிலும் பூசி,
19 தன் விரலினால் அந்த இரத்தத்தில் எடுத்து,
ஏழுதரம் அதின்மேல் தெளித்து, அதை இஸ்
ரவேல் புத்திரரின் தீட்டுகள் நீங்கச் [11]சுத்தி
20 கரித்து, பரிசுத்தப்படுத்தக்கடவன். அவன்
இப்படிப் பரிசுத்த ஸ்தலத்துக்கும் ஆசரிப்புக்
கூடாரத்துக்கும் பலிபீடத்துக்கும் [12]பிராயச்
சித்தஞ் செய்து தீர்ந்தபின்பு, உயிரோடிருக்
கிற வெள்ளாட்டுக்கடாவைச் சேரப்பண்ணி,
21 அதின் தலையின்மேல் ஆரோன் தன் இரண்டு
கைகளையும் வைத்து, அதின்மேல் இஸ்ர
வேல் புத்திரருடைய சகல அக்கிரமங்களை
யும் அவர்களுடைய எல்லாப் பாவங்களி
னாலும் உண்டான அவர்களுடைய சகல
மீறுதல்களையும் [13]அறிக்கையிட்டு, அவை
களை வெள்ளாட்டுக்கடாவினுடைய தலையின்
மேல் [14]சுமத்தி, அதை அதற்கான *ஆள்வச
மாய் வனாந்தரத்துக்கு அனுப்பிவிடக்கடவன்.

அந்த வெள்ளாட்டுக்கடா அவர்களுடைய அக் 22
கிரமங்களையெல்லாம் [15]தன்மேல் சுமந்துகொ
ண்டு, குடியில்லாத தேசத்துக்குப் போவதாக;
அவன் அந்த வெள்ளாட்டுக்கடாவை வனாந்
தரத்திலே போகவிடக்கடவன். ஆரோன் 23
ஆசரிப்புக் கூடாரத்துக்குள் வந்து, தான் பரி
சுத்த ஸ்தலத்துக்குள் பிரவேசிக்கும்போது,
உடுத்தியிருந்த சணல்நூல் வஸ்திரங்களைக்
களைந்து, அங்கே வைத்துவிட்டு, பரிசுத்த 24
இடத்திலே ஜலத்தில் ஸ்நானம்பண்ணி, தன்
வஸ்திரங்களை உடுத்திக்கொண்டு, வெளியே
வந்து, தன் சர்வாங்க தகனபலியையும் ஜனங்
களின் சர்வாங்க தகனபலியையும் இட்டு,
தனக்காகவும் ஜனங்களுக்காகவும் பாவநிவிர்த்
தி செய்து, பாவநிவாரண பலியின் [16]கொழுப் 25
பைப் பலிபீடத்தின்மேல் தகனிக்கக்கடவன்.
போகவிடப்படும் போக்காடாகிய வெள்ளாட் 26
டுக்கடாவைக் கொண்டுபோய் விட்டவன்,
தன் வஸ்திரங்களைத் தோய்த்து, ஜலத்தில்
ஸ்நானம்பண்ணி, பின்பு பாளயத்துக்குள்
வருவானாக. பாவநிவிர்த்திக்கென்று பரிசுத்த 27
ஸ்தலத்துக்குள் இரத்தம் கொண்டுவரப்பட்ட
[17]பாவநிவாரணபலியாகிய காளையையும், பாவ
நிவாரணபலியாகிய வெள்ளாட்டுக்கடாவை
யும், பாளயத்துக்குப் புறம்பே கொண்டுபோய்,
அவைகளின் தோலையும் மாம்சத்தையும் சாணி
யையும் அக்கினியிலே சுட்டெரிக்கக்கடவர்
கள். அவைகளைச் சுட்டெரித்தவன் தன் 28
வஸ்திரங்களைத் தோய்த்து, ஜலத்திலே ஸ்நா
னம்பண்ணி, பின்பு பாளயத்துக்குள் வரு
வானாக.

ஏழாம் [18]மாதம் பத்தாம்தேதியிலே, சுதேசி 29
யானாலும் உங்களுக்குள் தங்கும் பரதேசியானா
லும், தங்கள் ஆத்துமாக்களைத் [19]தாழ்மைப்
படுத்துவதுமன்றி, ஒரு வேலையும் செய்யாமல்
இருக்கவேண்டும்; இது உங்களுக்கு நித்திய
கட்டளையாய் இருக்கக்கடவது. **கர்த்தருடைய** 30
சந்நிதியில் உங்கள் பாவமெல்லாம் நீங்கிச்
[20]சுத்திகரிக்கப்படும்படி, அந்நாளில் உங்களைச்
சுத்திகரிக்கும்பொருட்டு, உங்களுக்காகப் பாவ
நிவிர்த்தி செய்யப்படும். உங்களுக்கு அது 31
விசேஷித்த [21]ஓய்வுநாள்; அதிலே உங்கள்
ஆத்துமாக்களைத் தாழ்மைப்படுத்தக் கடவீர்
கள்; இது நித்தியகட்டளை. அபிஷேகம் 32
பெற்றவனும், தன் தகப்பன் பட்டத்திற்கு
வந்து ஆசாரிய ஊழியஞ்செய்யப் பிரதிஷ்
டைபண்ணப்பட்டவனுமாகிய [22]ஆசாரியனே
பாவநிவிர்த்தி செய்யக்கடவன். அவன் பரி
சுத்த வஸ்திரங்களாகிய சணல்நூல் வஸ்திரங்
களை உடுத்திக்கொண்டு, பரிசுத்த ஸ்தலத் 33
துக்கும் ஆசரிப்புக் கூடாரத்துக்கும் பலிபீ
டத்துக்கும் [23]பிராயச்சித்தஞ்செய்து, ஆசாரி
யருக்காகவும் சபையின் சகல ஜனங்களுக்கா
கவும் பாவநிவிர்த்தி செய்யக்கடவன். இப் 34
படி வருஷத்தில் [24]ஒருமுறை இஸ்ரவேல்
புத்திரருக்காக, அவர்களுடைய சகல பாவங்
களுக்கும் பாவநிவிர்த்தி செய்வது, உங்க

1 ஏசா. 6. 6, 7. வெளி. 8. 5
2 யாத். 30. 34. வெளி. 8. 3, 4
3 யாத். 25. 21
4 யாத். 30. 8. வெளி. 8. 3, 4
5 லேவி. 4. 5, 6. எபி. 9. 13, 25
6 5, 9. வச.
7 எபி. 6. 19; 9. 3, 7, 12
8 யாத். 29. 36. எசே. 45. 18. எபி. 9, 22, 23
9 யாத். 34. 3. லூ. 1, 10. எபி. 9. 7
10 யாத். 30. 10. எபி. 9. 22, 23
11 எசே. 43. 20. எபி. 9. 7. ஷ
12 எசே. 45. 20. கொலோ. 1. 20
13 சங். 32. 5. நீதி. 28. 13. ரோ. 10. 10
14 ஏசா. 53. 6
* தகுந்த
15 ஏசா. 53. 11, 12. யோ. 1. 29. எபி. 9. 28. 1 பே. 2. 24
16 யாத். 29. 13
17 எபி. 13. 11
18 யாத். 30. 10. எண். 29. 7
19 ஏசா. 58. 3, 5. தானி. 10. 3, 12
20 சங். 51. 2. எரே. 33. 8. எசே. 36. 25. எபே. 5. 26. எபி. 9. 13, 14. 1 யோ. 1. 7, 9
21 லேவி. 23. 32
22 லேவி. 4. 3—16
23 யாத். 29. 36, 37
24 யாத். 30. 10. எபி. 9. 7, 25

ளுக்கு நித்திய கட்டளையாயிருக்கக்கடவது
என்று சொல் என்றார். **கர்த்தர்** மோசேக்குக்
கட்டளையிட்டபடியே ஆரோன் செய்தான்.

**17** பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி:
2 நீ ஆரோனோடும் அவன் குமாரரோடும் இஸ்
ரவேல் புத்திரர் அனைவரோடும் சொல்ல
வேண்டியதாவது; **கர்த்தர்** கட்டளையிடுகிறது
3 என்னவென்றால்: இஸ்ரவேல் குடும்பத்தா
ரில் எவனாகிலும் [1]மாட்டையாவது செம்மறி
யாட்டையாவது வெள்ளாட்டையாவது ஆச
ரிப்புக் கூடாரவாசலாகிய **கர்த்தருடைய**
வாசஸ்தலத்துக்கு முன்பாக **கர்த்தருக்குச்** செ
4 லுத்தும்படி கொண்டுவராமல், பாளயத்துக்
குள்ளேயாகிலும் பாளயத்துக்குப் புறம்பே
யாகிலும் அதைக் கொன்றால், அது அந்த
மனிதனுக்கு இரத்தப்பழியாக, [2]எண்ணப்
படும். அந்த மனிதன் இரத்தம் சிந்தினபடி
யால், தன் ஜனத்தில் இராமல் அறுப்புண்டு
5 போவான். ஆகையால் இஸ்ரவேல் புத்தி
ரர் [3]வெளியிலே பலியிடுகிற தங்கள் பலிகளை,
ஆசரிப்புக் கூடாரவாசலில் ஆசாரியனிடத்
தில் **கர்த்தருடைய** சந்நிதியில் கொண்டுவந்து,
அங்கே அவைகளைக் **கர்த்தருக்குச்** சமாதான
6 பலிகளாகச் செலுத்தக்கடவர்கள். அங்கே
ஆசாரியன் இரத்தத்தை ஆசரிப்புக் கூடாரவா
சலிலிருக்கிற **கர்த்தருடைய** பலிபீடத்தின்
மேல் தெளித்து, [4]கொழுப்பைக் **கர்த்தருக்குச்**
7 சுகந்த வாசனையாகத் தகனிக்கக்கடவன். தாங்
கள் [5]சோரமார்க்கமாய்ப் பின்பற்றுகிற [6]பேய்
களுக்குத் தங்கள் பலிகளை இனிச் செலுத்தா
திருப்பார்களாக; இது அவர்கள் தலைமுறை
தோறும் அவர்களுக்கு நித்திய கட்டளையாயி
ருக்கக்கடவது.
8 மேலும் நீ அவர்களை நோக்கி: இஸ்ரவேல்
குடும்பத்தாரிலும் உங்கள் நடுவே தங்குகிற
அந்நியர்களிலும் எவனாகிலும் சர்வாங்க தகன
9 பலி முதலானவைகளையிட்டு, அதை ஆச
ரிப்புக் கூடாரவாசலிலே **கர்த்தருக்குச்** செலு
த்தும்படி கொண்டுவராவிட்டால், அவன்
தன் ஜனத்தில் இராமல் அறுப்புண்டுபோ
வான் என்று சொல்.
10 இஸ்ரவேல் குடும்பத்தாரிலும் உங்களுக்குள்
தங்கும் அந்நியர்களிலும் எவனாகிலும் [7]இரத்
தம் என்னப்பட்டதைப் புசித்தால், இரத்தத்
தைப் புசித்த அவனுக்கு விரோதமாக நான்
என் [8]முகத்தைத் திருப்பி, அவன் தன் ஜனத்
தில் இராதபடிக்கு அவனை அறுப்புண்டுபோ
11 கப்பண்ணுவேன். மாம்சத்தின் உயிர் இரத்
தத்தில் இருக்கிறது; நான் அதை உங்களுக்
குப் பலிபீடத்தின்மேல் உங்கள் ஆத்துமாக்
களுக்காகப் [9]பாவநிவிர்த்தி செய்யும்படிக்குக்
கட்டளையிட்டேன்; ஆத்துமாவிற்காகப் பாவ
12 நிவிர்த்தி செய்கிறது [10]இரத்தமே. அதினிமித்
தம் உங்களில் ஒருவனும் இரத்தம் புசிக்க
வேண்டாம், உங்கள் நடுவே தங்குகிற அந்நி
யனும் இரத்தம் புசிக்கவேண்டாம் என்று
இஸ்ரவேல் புத்திரருக்குச் சொன்னேன்.

இஸ்ரவேல் புத்திரரிலும் உங்களுக்குள் தங் 13
குகிற அந்நியர்களிலும் எவனாகிலும் புசிக்கத்
தக்க ஒரு மிருகத்தையாவது ஒரு பட்சியை
யாவது வேட்டையாடிப் பிடித்தால், அவன்
அதின் இரத்தத்தைச் [11]சிந்தப்பண்ணி, மண்
ணினால் [12]அதை மூடக்கடவன். சகல மாம் 14
சத்துக்கும் இரத்தம் [13]உயிராயிருக்கிறது;
இரத்தம் ஜீவனுக்குச் சமானம்; ஆகையால்
எந்த மாம்சத்தின் இரத்தத்தையும் புசிக்க
வேண்டாம்; சகல மாம்சத்தின் உயிரும்
அதின் இரத்தந்தானே; அதைப் புசிக்கிற எவ
னும் அறுப்புண்டுபோவான் என்று இஸ்ர
வேல் புத்திரருக்குச் சொன்னேன். தானாய் 15
இறந்துபோனதையாவது, [14]பீறுண்டதையா
வது, புசித்தவன் எவனும், அவன் சுதேசியா
னாலும் பரதேசியானாலும், தன் வஸ்திரங்க
ளைத் தோய்த்து, தண்ணீரில் முழுகி, சாயங்
காலமட்டும் தீட்டாயிருப்பானாக; பின்பு சுத்
தமாயிருப்பான். அவன் தன் வஸ்திரங்களைத் 16
தோய்க்காமலும், ஸ்நானம்பண்ணாமலும் இரு
ந்தால், தன் அக்கிரமத்தைச் [15]சுமப்பான்
என்று சொல் என்றார்.

பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி: **18**
நீ இஸ்ரவேல் புத்திரருக்குச் சொல்லவேண் 2
டியது என்னவென்றால்: [16]நான் உங்கள் தேவ
னாகிய **கர்த்தர்**. நீங்கள் குடியிருந்த எகிப்து 3
தேசத்தாருடைய [17]செய்கையின்படி செய்யா
மலும், நான் உங்களை அழைத்துப்போகிற
கானான்தேசத்தாருடைய செய்கையின்படி
செய்யாமலும், அவர்களுடைய முறைமைக
ளின்படி நடவாமலும், என்னுடைய நியா 4
யங்களின்படி செய்து, [18]என்னுடைய கட்ட
ளைகளைக் கைக்கொண்டு நடவுங்கள்; நான்
உங்கள் தேவனாகிய **கர்த்தர்**. ஆகையால் என் 5
கட்டளைகளையும் என் நியாயங்களையும் கைக்
கொள்ளக்கடவீர்கள்; அவைகளின்படி செய்
கிறவன் எவனும் அவைகளால் பிழைப்பான்;
நான் **கர்த்தர்**.

ஒருவனும் தனக்கு நெருங்கின இனமாகிய 6
ஒருத்தியை *நிர்வாணமாக்கும்படி அவளைச்
சேரலாகாது; நான் **கர்த்தர்**. உன் தகப்பனை 7
யாவது உன் தாயையாவது நிர்வாணமாக்கலா
காது; அவள் உன் தாயானவள்; அவளை நிர்
வாணமாக்கலாகாது. உன் தகப்பனுடைய 8
[19]மனைவியை நிர்வாணமாக்கலாகாது; அது
உன் தகப்பனுடைய நிர்வாணம். உன் தகப் 9
பனுக்காவது உன் தாய்க்காவது வீட்டிலாகி
லும் புறத்திலாகிலும் பிறந்த குமாரத்தியாகிய
[20]உன் சகோதரியை நிர்வாணமாக்கலாகாது.
உன் குமாரனுடைய மகளையாவது உன் குமா 10
ரத்தியினுடைய மகளையாவது நிர்வாணமாக்க
லாகாது; அது உன்னுடைய நிர்வாணம்.
உன் தகப்பனுடைய மனைவியினிடத்தில் 11
உன் தகப்பனுக்குப் பிறந்த குமாரத்தியை நிர்
வாணமாக்கலாகாது; அவள் உனக்குச்
சகோதரி. உன் தகப்பனுடைய சகோதரி 12
யை நிர்வாணமாக்கலாகாது; அவள் உன்

[1] உபா. 12. 5, 6, 21
[2] ரோ. 5. 13
[3] ஆதி. 31. 54. 2 ராஜா. 28. 4. எசே. 20. 28
[4] யாத். 29. 13
[5] எசே. 23. 8
[6] உபா. 32. 17. 2 நாளா. 11. 15. சங். 106. 37. 1 கொ. 10. 20. வெளி. 9. 20
[7] ஆதி. 9. 4. உபா. 12.16,23. எசே. 44. 7
[8] எசே. 14. 8
[9] மத். 26. 28, ரோ. 5. 9. எபே. 1. 7. எபி. 13. 12
[10] எபி. 9. 22
[11] உபா. 15. 23
[12] எசே. 24. 7
[13] ஆதி. 9. 4. உபா. 12. 23
[14] உபா. 14. 21. எசே. 4. 14; 44. 31
[15] எண். 19. 19, 20
[16] யாத். 6. 7
[17] சங். 106. 35. எசே. 20. 7, 8. எபே. 5. 11
[18] உபா. 4. 1, 2. சங். 119. 4. எசே. 36. 27
* முறைகேடு. ஆதி. 49. 4. எசே. 22. 10
[19] 1 கொ. 5. 1
[20] 2 சாமு. 13. 11, 12

13 தகப்பனுக்கு நெருங்கின இனமானவள். உன்
தாயினுடைய சகோதரியை நிர்வாணமாக்க
லாகாது; அவள் உன் தாய்க்கு நெருங்கின
14 இனமானவள். உன் தகப்பனுடைய சகோ
தரனை நிர்வாணமாக்கலாகாது; அவன் மனை
வியைச் சேராயாக; அவள் உன் தகப்பனு
15 டைய சகோதரி. உன் மருமகளை [1]நிர்வாண
மாக்கலாகாது; அவள் உன் குமாரனுக்கு
16 மனைவி, அவளை நிர்வாணமாக்கலாகாது. உன்
சகோதரனுடைய மனைவியை [2]நிர்வாணமாக்க
லாகாது; அது உன் சகோதரனுடைய நிர்வா
17 ணம். ஒரு ஸ்திரீயையும் அவள் மகளையும்
நிர்வாணமாக்கலாகாது; அவளுடைய குமார
ரின் மகளையும் அவளுடைய குமாரத்தியின்
மகளையும் நிர்வாணமாக்கும்படி விவாகம்பண்
ணலாகாது; இவர்கள் அவளுக்கு நெருங்கின
18 இனமானவர்கள்; அது முறைகேடு. உன்
மனைவி உயிரோடிருக்கையில், அவளுக்கு
உபத்திரவமாக அவள் சகோதரியையும் நிர்
வாணமாக்கும்பொருட்டு [3]அவளை விவாகம்
19 பண்ணலாகாது. ஸ்திரீயானவள் சூதகத்தால்
[4]விலக்கத்திலிருக்கையில், அவளை நிர்வாண
20 மாக்க அவளோடே சேராதே. பிறனுடைய
[5]மனைவியோடே சேரும்படி சயனித்து, அவ
ளால் உன்னைத் தீட்டுப்படுத்திக்கொள்ள
21 வேண்டாம். நீ உன் சந்ததியில் யாரையாகி
லும் மோளேகுக்கென்று [6]தீக்கடக்கும்படி
இடங்கொடாதே; உன் தேவனுடைய நாமத்
தைப் பரிசுத்தக்குலைச்சலாக்காதே; நான் **கர்த்**
22 **தர்**. பெண்ணோடு சம்யோகம்பண்ணுகிறது
போல [7]ஆணோடே சம்யோகம்பண்ணவேண்
23 டாம்; அது அருவருப்பானது. யாதொரு
மிருகத்தோடும் நீ [8]புணர்ச்சிசெய்து, அதி
னாலே உன்னைத் தீட்டுப்படுத்தவேண்டாம்;
ஸ்திரீயானவள் மிருகத்தோடே புணரும்படி
அதற்கு முன்பாக நிற்கலாகாது; அது அரு
வருப்பான தாறுமாறு.
24 இவைகளில் ஒன்றினாலும் [9]உங்களைத் தீட்
டுப்படுத்தாதிருங்கள்; நான் உங்கள் முன்
னின்று துரத்திவிடுகிற ஜாதிகள் இவைக
ளெல்லாவற்றினாலும் தங்களைத் தீட்டுப்படுத்தி
யிருக்கிறார்கள்; தேசமும் தீட்டுப்படுத்தப்பட்
25 டிருக்கிறது. ஆகையால் அதின் அக்கிர
மத்தை [10]விசாரிப்பேன்; தேசம் தன் குடிக
26 ளைக் கக்கிப்போடும். இந்த அருவருப்புகளை
யெல்லாம் உங்களுக்கு முன் இருந்த அந்தத்
தேசத்தின் மனிதர் செய்ததினாலே தேசம்
27 தீட்டாயிற்று. இப்பொழுதும் உங்களுக்கு
முன் இருந்த ஜாதிகளைத் தேசம் கக்கிப்போட்
டதுபோல, நீங்கள் அதைத் தீட்டுப்படுத்தும்
போது அது உங்களையும் கக்கிப்போடாத
28 படிக்கு, நீங்கள் என் கட்டளைகளையும் என்
நியாயங்களையும் கைக்கொண்டு, தேசத்திலே
பிறந்தவனானாலும் உங்கள் நடுவே தங்குகிற
அந்நியனானாலும் இந்த அருவருப்புகளில் ஒன்
29 றையும் செய்யவேண்டாம். இப்படிப்பட்ட
அருவருப்பானவைகளில் யாதொன்றை யாரா
வது செய்தால், செய்த அந்த ஆத்துமாக்கள்
ஜனத்தில் இராதபடிக்கு அறுப்புண்டுபோ
வார்கள். ஆகையால் உங்களுக்கு முன் செய் 30
யப்பட்ட [11]அருவருப்பான முறைமைகளில்
யாதொன்றை நீங்கள் செய்து, அவைகளால்
உங்களைத் தீட்டுப்படுத்திக்கொள்ளாதபடிக்கு
என் கட்டளையைக் கைக்கொள்ளுங்கள்; நான்
உங்கள் தேவனாகிய **கர்த்தர்** என்று சொல்
என்றார்.

பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி: **19**
நீ இஸ்ரவேல் புத்திரரின் சபை அனைத்தோடும் 2
சொல்லவேண்டியது என்னவென்றால்: உங்
கள் தேவனும் **கர்த்தருமாகிய** நான் பரிசுத்தர்,
[12]ஆகையால் நீங்களும் பரிசுத்தராயிருங்கள்.
உங்களில் அவனவன் தன்தன் [13]தாய்க்கும் 3
தன்தன் தகப்பனுக்கும் பயந்திருக்கவும், [14]என்
ஓய்வுநாட்களை ஆசரிக்கவும் கடவீர்கள்; நான்
உங்கள் தேவனாகிய **கர்த்தர்**. விக்கிரகங்களை 4
[15]நாடாமலும், வார்ப்பிக்கப்பட்ட தெய்வங்
களை உங்களுக்கு உண்டாக்காமலும் இருப்
பீர்களாக; நான் உங்கள் தேவனாகிய **கர்த்தர்**.
நீங்கள் சமாதானபலியைக் **கர்த்தருக்குச்** 5
செலுத்தினால், அதை மனோற்சாகமாய்ச்
செலுத்துங்கள். நீங்கள் அதைச் செலுத்து 6
கிற நாளிலும் மறுநாளிலும் அதைப் புசிக்க
வேண்டும்; மூன்றாம் நாள்மட்டும் மீதியானது
அக்கினியிலே சுட்டெரிக்கப்படக்கடவது.
மூன்றாம் நாளில் அதில் ஏதாகிலும் புசிக்கப் 7
பட்டால் அருவருப்பாயிருக்கும்; அது அங்கி
கரிக்கப்படமாட்டாது. அதைப் புசிக்கிறவன் 8
**கர்த்தருக்குப்** பரிசுத்தமானதைப் பரிசுத்தக்
குலைச்சலாக்கினபடியால் அவன் தன் அக்கிர
மத்தைச் சுமந்து, தன் ஜனத்தில் இராத
படிக்கு அறுப்புண்டுபோவான்.
நீங்கள் தேசத்தின் [16]பயிரை அறுக்கும் 9
போது, உன் வயலின் ஓரத்திலிருக்கிறதைத்
தீர அறுக்காமலும், சிந்திக்கிடக்கிற கதிர்க
ளைப் பொறுக்காமலும், உன் திராட்சத்தோட் 10
டத்திலே பின் அறுப்பை அறுக்காமலும்,
அதிலே சிந்திக்கிடக்கிற பழங்களைப் பொ
றுக்காமலும், அவைகளை எளியவனுக்கும்
பரதேசிக்கும் விட்டுவிடுவாயாக; நான் உங்
கள் தேவனாகிய **கர்த்தர்**. நீங்கள் [17]களவு 11
செய்யாமலும், வஞ்சனைபண்ணாமலும், ஒரு
வருக்கொருவர் [18]பொய் சொல்லாமலும்
இருங்கள். என் நாமத்தைக்கொண்டு [19]பொ 12
ய்யாணை யிடுகிறதினால், உங்கள் தேவனு
டைய நாமத்தைப் பரிசுத்தக் குலைச்சலாக்
காமலும் இருப்பீர்களாக; நான் **கர்த்தர்**.
பிறனை ஒடுக்காமலும் [20]கொள்ளையிடாமலும் 13
இருப்பாயாக; கூலிக்காரனுடைய கூலி விடி
யற்காலம்மட்டும் உன்னிடத்தில் இருக்கலா
காது. செவிடனை நிந்தியாமலும், குருட 14
னுக்கு முன்னே [21]தடுக்கலை வையாமலும்,
உன் தேவனுக்குப் [22]பயந்திருப்பாயாக; நான்
**கர்த்தர்**. நியாயவிசாரணையில் [23]அநியாயம் 15
செய்யாதிருங்கள்; சிறியவனுக்கு முகதாட்சி

1 ஆதி. 38. 18, 26. எசே. 22. 11
2 உபா. 25. 5. மத். 22. 24
3 1 சாமு. 1. 6, 8. மல். 2. 14, 15
4 எசே. 18. 6; 22. 10
5 யாத். 20. 14. நீதி. 6. 25–33. மத். 5. 27
6 உபா. 12. 31. 2 இரா. 16. 3. சங். 106. 37. எரே. 7. 31
7 ரோ. 1. 27. 1 கொ. 6. 9. 1 தீமோ. 1. 10
8 யாத். 22. 19
9 மத். 15. 18–20. 1 கொ. 3. 17
10 எரே. 5. 9, 29. ஓசி. 2. 13; 9. 9
11 உபா. 18. 9
12 ஆமோ. 3. 3. 1 பே. 1. 16
13 யாத். 20. 12
14 யாத். 20. 8; 31. 13
15 யாத். 20. 4. 1 கொ. 10. 14. 1 யோ. 5. 21
16 உபா. 24. 19–21. ரூத். 2. 15–17
17 யாத். 20. 15
18 எபே. 4. 25. கொலோ. 3. 9
19 யாத். 20. 7. மத். 5. 33. யாக். 5. 12
20 மாற். 10. 19. மல். 3. 5. யாக். 5. 4
21 உபா. 27. 18. ரோ. 14. 13
22 பிர. 5. 7. 1 பே. 2. 17
23 உபா. 16. 19. சங். 82. 2. நீதி. 24. 23. யாக். 2. 9

ணியம்செய்யாமலும், பெரியவனுடையமுகத்
துக்கு அஞ்சாமலும், நீதியாகப் பிறனுக்கு
16 நியாயந்தீர்ப்பாயாக. உன் ஜனங்களுக்குள்
ளே அங்கு மிங்கும் [1]கோள்சொல்லித் திரியா
யாக; பிறனுடைய இரத்தப்பழிக்கு [2]உட்பட
17 வேண்டாம்; நான் **கர்த்தர்**. உன் சகோத
ரனை [3]உன் உள்ளத்தில் பகையாயாக; பிறன்
மேல் [4]பாவம் சுமராதபடிக்கு அவனை எப்படி
18 யும் [5]கடிந்துகொள்ளவேண்டும். பழிக்குப்
பழி [6]வாங்காமலும், உன் ஜனப்புத்திரர்மேல்
பொருமைகொள்ளாமலும், [7]உன்னில் நீ அன்
புகூருவதுபோல் பிறனிலும் அன்புகூருவா
19 யாக; நான் **கர்த்தர்**. என் கட்டளைகளைக்
கைக்கொள்வீர்களாக; உன் மிருகஜீவன்களை
[8]வேறு ஜாதியோடே பொலியவிடாயாக; உன்
வயலிலே வெவ்வேறு வகையான விதை
களைக் கலந்து விதையாயாக; சணல்நூலும்
கம்பளிநூலும் கலந்த வஸ்திரத்தை உடுத்தா
20 திருப்பாயாக. ஒருவனுக்கு அடிமையான
வள் ஒரு புருஷனுக்கு நியமிக்கப்பட்டவ
ளாயிருந்து, முற்றிலும் மீட்கப்படாமலும் தன்
னிச்சையாய் விடப்படாமலுமிருக்க, அவ
ளோடே ஒருவன் சம்யோகமாய்ச் சயனம்
பண்ணினுல், அவர்கள் கொலைசெய்யப்படா
மல், அடிக்கப்படவேண்டும்; அவள் சுயாதீன
21 முள்ளவள் அல்ல. அவன் தன் [9]குற்றநிவா
ரணபலியாய் ஆசரிப்புக் கூடாரவாசலிலே
**கர்த்தருடைய** சந்நிதியில் ஒரு ஆட்டுக்கடா
22 வைக் கொண்டுவரக்கடவன். அதினுலே
ஆசாரியன் அவன் செய்த பாவத்தினிமித்தம்
அவனுக்காகக் **கர்த்தருடைய** சந்நிதியில் பாவ
நிவிர்த்தி செய்யக்கடவன்; அப்பொழுது
அவன் செய்த பாவம் அவனுக்கு மன்னிக்கப்
23 படும். நீங்கள் அந்தத் தேசத்தில் வந்து,
புசிக்கத்தக்க கனிகளைத் தருகிற பலவித மரங்
களை நாட்டினபின்பு, அவைகளின் கனிகளை
விருத்தசேதனமில்லாதவைகளென்று எண்ணு
வீர்களாக; மூன்று வருஷம் அது புசிக்கப்ப
டாமல், விருத்தசேதனமில்லாததாய் உங்க
24 ளுக்கு எண்ணப்படவேண்டும் பின்பு நாலாம்
வருஷத்திலே அவைகளின் கனிகளெல்லாம்
**கர்த்தருக்குத்** [10]துதிசெலுத்துகிறதற்கேற்ற பரி
25 சுத்தமாயிருக்கும். ஐந்தாம் வருஷத்திலே
அவைகளின் கனிகளைப் புசிக்கலாம்; இப்படி
அவைகளின் பலன் உங்களுக்குப் பெருகும்;
26 நான் உங்கள் தேவனுகிய **கர்த்தர்**. யாதொன்
றையும் இரத்தத்துடன் புசிக்கவேண்டாம்.
[11]குறிகேளாமலும், நாள்பாராமலும் இருப்பீர்
27 களாக. உங்கள் தலைமயிரைச் சுற்றி யொதுக்
காமலும், [12]தாடியின் ஓரங்களைக் கத்தரிக்கா
28 மலும், செத்தவனுக்காக உங்கள் சரீரத்தைக்
[13]கீறிக்கொள்ளாமலும், அடையாளமான *எழு
த்துக்களை உங்கள்மேல் குத்திக்கொள்ளாம
29 லும் இருப்பீர்களாக; நான் **கர்த்தர்**. தேசத்
தார் வேசித்தனம்பண்ணி தேசமெங்கும் முறை
கேடான பாவம் நிறையாதபடிக்கு உன் குமா
ரத்தியை [14]வேசித்தனம்பண்ண விடுகிறதி
னுலே பரிசுத்தக்குலைச்சலாக்காயாக. என் 30
ஓய்வுநாட்களை ஆசரித்து, என் பரிசுத்த
ஸ்தலத்தைக்குறித்துப் [15]பயபக்தியாயிருப்பீர்க
ளாக; நான் **கர்த்தர்**. அஞ்சனம் பார்க்கிற 31
வர்களை [16]நாடி, குறிசொல்லுகிறவர்களைத்
தேடாதிருங்கள்; அவர்களாலே தீட்டுப்பட
வேண்டாம்; நான் உங்கள் தேவனுகிய **கர்த்தர்**.
நரைத்தவனுக்கு முன்பாக எழுந்து, [17]முதிர் 32
வயதுள்ளவன் முகத்தைக் கனம்பண்ணி, உன்
தேவனுக்குப் பயப்படுவாயாக; நான் **கர்த்தர்**.—
யாதொரு அந்நியன் உங்கள் தேசத்தில் உங்க 33
ளோடே தங்கினுல், [18]அவனைச் சிறுமைப்படு
த்தவேண்டாம். உங்களிடத்தில் வாசம்பண் 34
ணுகிற அந்நியனைச் [19]சுதேசிபோல எண்ணி,
நீங்கள் உங்களில் அன்புகூருகிறதுபோல
அவனிலும் அன்புகூருவீர்களாக; நீங்களும்
எகிப்துதேசத்தில் அந்நியரா யிருந்தீர்களே;
நான் உங்கள் தேவனுகிய **கர்த்தர்**. நியாய 35
விசாரணையிலும், அளவிலும், நிறையிலும்,
படியிலும் அநியாயம் செய்யாதிருப்பீர்களாக.
சுமுத்திரையான தராசும், [20]சுமுத்திரையான 36
நிறைகல்லும், சுமுத்திரையான மரக்காலும்,
சுமுத்திரையான படியும் உங்களுக்கு இருக்க
வேண்டும்; நான் உங்களை எகிப்துதேசத்தி
லிருந்து புறப்படப்பண்ணின உங்கள் தேவ
னுகிய **கர்த்தர்**. ஆகையால் என்னுடைய 37
கட்டளைகள் யாவையும் [21]என்னுடைய நியா
யங்கள் யாவையும் கைக்கொண்டு, அவைக
ளின்படி நடக்கக்கடவீர்கள்; நான் **கர்த்தர்**
என்று சொல் என்றார்.

**20** **கர்த்தர்** மோசேயை நோக்கி: பின்னும் 2
நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்ல
வேண்டியது என்னவென்றுல்: இஸ்ரவேல்
புத்திரரிலும் இஸ்ரவேலில் வாசம்பண்ணுகிற
அந்நியர்களிலும் எவனுகிலும் தன் சந்ததியில்
[22]ஒருபிள்ளையைமோளேகுக்குக்கொடுத்தால்,
அவன் கொலைசெய்யப்படவேண்டும்; தேசத்
தின் ஜனங்கள் அவன்மேல் கல்லெறியவேண்
டும். அவன் என் பரிசுத்த ஸ்தலத்தைத் தீட் 3
டுப்படுத்தி, என் பரிசுத்த நாமத்தைப் பரிசுத்
தக்குலைச்சலாக்கும்படிக்கு, தன் சந்ததியில்
ஒரு பிள்ளையை மோளேகுக்குக் கொடுத்த
தினுலே, நான் அப்படிப்பட்டவனுக்கு விரோ
தமாக [23]எதிர்த்துநின்று, அவனைத் தன் ஜனத்
தில் இராதபடிக்கு அறுப்புண்டுபோகப்பண்
ணுவேன். அவன் தன் சந்ததியில் ஒரு பிள் 4
ளையை மோளேகுக்குக் கொடுக்கும்போது,
தேசத்தின் ஜனங்கள் அவனைக் கொலைசெய்
யாதபடிக்குக் கண்சாடையாயிருந்தால், நான் 5
அந்த மனிதனுக்கும் அவன் குடும்பத்துக்கும்
விரோதமாக எதிர்த்துநின்று, அவனையும்,
அவன் பிறகே மோளேகை [24]விபசாரமார்க்க
மாய்ப் பின்பற்றின யாவரையும், தங்கள் ஜனத்
தில் இராதபடிக்கு அறுப்புண்டுபோகப் பண்
ணுவேன். அஞ்சனம் பார்க்கிறவர்களையும் 6
[25]குறிசொல்லுகிறவர்களையும் பின்தொடர்ந்து
சோரம்போக எந்த ஆத்துமா அவர்களை நாடி

1 நீதி. 20. 19
2 யாத். 23. 7. மத். 26. 60, 61
3 1 யோ. 2. 9, 11; 3. 15
4 1 கொ. 5. 2
5 நீதி. 27. 5. எபே. 5. 11. 1 தீமோ. 5. 20
6 ரோ. 12. 17, 19
7 மத். 5. 43; 22. 39, 40
8 உபா. 22. 9–11
9 லேவி. 6. 6
10 உபா. 12. 17, 18. நீதி. 3. 9
11 உபா. 12. 23; 18. 10-14. மல். 3. 5
12 லேவி. 21. 5. ஏசா. 15. 2. எரே. 9. 26
13 உபா. 14. 1. எரே. 16. 6
* முத்திரைகளை
14 உபா. 23. 17
15 பிர. 5. 1
16 உபா. 18. 10, 11. அப். 16. 16
17 யோபு 32. 4, 6. நீதி. 20. 29. 1 தீமோ. 5. 1
18 யாத். 22. 21
19 யாத். 12. 48, 49
20 நீதி. 11. 1; 16. 11; 20. 10
21 உபா. 5. 1. சங். 119. 4, 34
22 லேவி. 18. 21
23 எசே. 14. 8
24 எரே. 3. 2. ஓசி. 2. 5, 18
25 லேவி. 19. 31

ருனே, அந்த ஆத்துமாவுக்கு விரோதமாக
எதிர்த்துநின்று, அவனைத் தன் ஜனத்தில்
இராதபடிக்கு அறுப்புண்டுபோகப்பண்ணு
7 வேன். ஆதலால் நீங்கள் உங்களைப் [1]பரிசுத்
தப்படுத்திப் பரிசுத்தராயிருங்கள்; நான் உங்
8 கள் தேவனாகிய **கர்த்தர்**. என் கட்டளை
களைக் கைக்கொண்டு நடவுங்கள்; [2]நான் உங்
9 களைப் பரிசுத்தமாக்குகிற **கர்த்தர்**. தன் தகப்
பனையாவது [3]தன் தாயையாவது சபிக்கிற
எவனும்கொலைசெய்யப்படக்கடவன்; அவன்
தன் தகப்பனையும் தன் தாயையும் சபித்தான்,
அவன் இரத்தப்பழி அவன்மேல் இருப்பதாக.
10 ஒருவன் பிறனுடைய மனைவியோடே [4]விப
சாரம் செய்தால், பிறன் மனைவியோடே விப
சாரம் செய்த அந்த விபசாரனும் அந்த விப
11 சாரியும் கொலைசெய்யப்படக்கடவர்கள். தன்
தகப்பன் மனைவியோடே [5]சயனிக்கிறவன்
தன் தகப்பனை நிர்வாணமாக்கினபடியால்,
இருவரும் கொலைசெய்யப்படக்கடவர்கள்;
அவர்கள் இரத்தப்பழி அவர்கள்மேல் இருப்
12 பதாக. ஒருவன் தன் மருமகளோடே [6]சய
னித்தால், இருவரும் கொலைசெய்யப்படக்
கடவர்கள்; அருவருப்பான தாறுமாறுபண்ணி
னார்கள்; அவர்கள் இரத்தப்பழி அவர்கள்மேல்
13 இருப்பதாக. ஒருவன் பெண்ணோடே [7]சம்
யோகம் பண்ணுகிறதுபோல ஆணோடே சம்
யோகம் பண்ணினால், அருவருப்பான காரி
யம் செய்த அவ்விருவரும் கொலைசெய்யப்
படக்கடவர்கள்; அவர்கள் இரத்தப்பழி அவர்
14 கள்மேல் இருப்பதாக. ஒருவன் ஒரு ஸ்திரீ
யையும் [8]அவள் தாயையும் *படைத்தால்,
அது முறைகேடு; இவ்வித முறைகேடு உங்க
ளுக்குள் இராதபடிக்கு, அவனையும் அவர்களை
15 யும் அக்கினியில் சுட்டெரிக்கவேண்டும். ஒரு
வன் மிருகத்தோடே [9]புணர்ந்தால், அவன்
கொலைசெய்யப்படக்கடவன்; அந்த மிருகத்
16 தையும் கொல்லக்கடவீர்கள். ஒரு ஸ்திரீ
யாதொரு மிருகத்தோடே சேர்ந்து சயனித்
தால், அந்த ஸ்திரீயையும் அந்த மிருகத்தையும்
கொல்லக்கடவாய்; இருஜீவனும் கொலைசெய்
யப்படவேண்டும்; அவைகளின் இரத்தப்பழி
17 அவைகளின்மேல் இருப்பதாக. ஒருவன் தன்
தகப்பனுக்காவது தன் தாய்க்காவது குமாரத்தி
யாயிருக்கிற [10]தன் சகோதரியைச் சேர்த்துக்
கொண்டு, அவன் அவளுடைய நிர்வாணத்
தையும், அவள் அவனுடைய நிர்வாணத்தை
யும் பார்த்தால், அது பாதகம்; அவர்கள் தங்
கள் ஜனங்களின் கண்களுக்கு முன்பாக
அறுப்புண்டுபோகக்கடவர்கள்; அவன் தன்
சகோதரியை நிர்வாணப்படுத்தினான்; அவன்
18 தன் அக்கிரமத்தைச் சுமப்பான். ஒருவன்
சூதகஸ்திரீயோடே சயனித்து, அவளை நிர்
வாணமாக்கினால், [11]அவன் அவளுடைய உதிர
ஊற்றைத் திறந்து, அவளும் தன் உதிர
ஊற்றை வெளிப்படுத்தினபடியால், இருவ
ரும் தங்கள் ஜனத்தில் இராதபடிக்கு அறுப்
19 புண்டுபோகவேண்டும். உன் தாயினுடைய

[12]சகோதரியையும் உன் தகப்பனுடைய சகோ
தரியையும் நிர்வாணமாக்காயாக, அப்படிப்
பட்டவன் தன் நெருங்கிய இனத்தை அவ
மானமாக்கினான்; அவர்கள் தங்கள் அக்கிரமத்
தைச் சுமப்பார்கள். ஒருவன் தன் தகப்ப 20
னின் சகோதரனுடைய மனைவியோடே [13]சய
னித்தால், அவன் தன் தகப்பனின் சகோ
தரனை நிர்வாணமாக்கினான்; அவர்கள் தங்
கள் பாவத்தைச் சுமப்பார்கள், சந்தானமில்
லாமல் சாவார்கள். ஒருவன் தன் சகோத 21
ரன் [14]மனைவியை விவாகம்பண்ணினால், அது
அசுத்தம்; தன் சகோதரனை நிர்வாணமாக்கி
னான், அவர்கள் சந்தானமற்றிருப்பார்கள்.
ஆகையால் நீங்கள் குடியிருப்பதற்காக நான் 22
உங்களைக் கொண்டுபோகிற தேசம் உங்களைக்
கக்கிப்போடாதபடிக்கு, நீங்கள் என் கட்டளை
கள் யாவையும் என்னுடைய நியாயங்கள்
யாவையும் கைக்கொண்டு நடவுங்கள். நான் 23
உங்களுக்கு முன்பாகத் துரத்திவிடுகிற ஜனத்
தினுடைய வழிபாடுகளில் [15]நடவாதிருங்கள்;
அவர்கள் இப்படிப்பட்ட காரியங்களையெல்
லாம் செய்தபடியால் நான் அவர்களை அரோ
சித்தேன். நீங்கள் அவர்கள் தேசத்தைச் சுதந் 24
தரிப்பீர்கள் என்று உங்களோடே சொன்
னேன்; பாலும் தேனும் ஓடுகிற அந்தத் தேச
த்தை உங்களுக்குச் சுதந்தரமாகக் கொடுப்
பேன்; உங்களை மற்ற ஜனங்களைவிட்டுப்
[16]பிரித்தெடுத்த உங்கள் தேவனாகிய **கர்த்தர்**
நானே. ஆகையால் சுத்தமான மிருகங்களுக் 25
கும் அசுத்தமான [17]மிருகங்களுக்கும், சுத்தமான
பறவைகளுக்கும் அசுத்தமான பறவைகளுக்
கும் நீங்கள் வித்தியாசம்பண்ணி, நான் உங்க
ளுக்குத் தீட்டாக எண்ணச்சொல்லி விலக்
கின மிருகங்களாலும் பறவைகளாலும் தரை
யிலே ஊருகிற யாதொரு பிராணிகளாலும்
உங்களை அருவருப்பாக்காதிருப்பீர்களாக.
**கர்த்தராகிய** நான் பரிசுத்தராயிருக்கிறபடியி 26
னாலே [18]நீங்களும் எனக்கேற்ற பரிசுத்தவான்
களாயிருப்பீர்களாக; நீங்கள் என்னுடையவர்
களாயிருக்கும்படிக்கு, உங்களை மற்ற ஜனங்
களைவிட்டுப் பிரித்தெடுத்தேன்.
அஞ்சனம்பார்க்கிறவர்களும் [19]குறிசொல்லு 27
கிறவர்களுமாயிருக்கிற புருஷனாகிலும் ஸ்திரீ
யாகிலும் கொலைசெய்யப்படவேண்டும்; அவர்
கள்மேல் கல்லெறிவார்களாக; அவர்கள் இரத்
தப்பழி அவர்கள்மேல் இருக்கக்கடவது என்று
சொல் என்றார்.
பின்பு **கர்த்தர்** மோசேயை நோக்கி: ஆரோ **21**
னின் குமாரராகிய ஆசாரியர்களில் ஒருவ
னும் தன் ஜனத்தாரில் இறந்துபோன [20]யா
தொருவருக்காகத் தங்களைத் தீட்டுப்படுத்தலா
காதென்று அவர்களோடே சொல். தன் 2
தாயும், தன் தகப்பனும், தன் குமாரனும்,
தன் குமாரத்தியும், தன் சகோதரனும், புரு 3
ஷனுக்கு வாழ்க்கைப்படாமல் தன்னிடத்தி
லிருக்கிற கன்னியாஸ்திரீயான தன் சகோ
தரியுமாகிய தனக்கு நெருங்கின இனமான

[1] 1 பே. 1. 16
[2] யாத். 31. 13. எசே. 37. 28. 1 கொ. 1. 30
[3] யாத். 21. 17. நீதி. 20. 20. மத். 15. 4
[4] யோ. 8. 4, 5
[5] உபா. 27. 20
[6] லேவி. 18. 15, 23
[7] ஆதி. 19. 5. உபா. 23. 17. நியா. 19. 22
[8] லேவி. 18. 17
* சேர்த்தால்
[9] லேவி. 18. 23. உபா. 27. 21
[10] ஆதி. 20. 12. உபா. 27. 22
[11] லேவி. 18. 19, 21
[12] லேவி. 18. 12. ஷ
[13] லேவி. 18. 14. எசே. 22. 30
[14] மத். 14. 3, 4
[15] லேவி. 18. 3, 24, 27, 30
[16] யாத். 3. 17; 19. 5. 1 இரா. 8. 53
[17] லேவி. 11. 47
[18] 1 பே. 1. 16. தீத். 2. 14
[19] 1 சாமு. 28. 7, 8
[20] எசே. 44. 25

இவர்களுடைய சாவுக்காகத் தீட்டுப்படலாம்.
4 தன் ஜனத்தாரில் பெரியவனாகிய அவன்
வேறொருவருக்காகவும் [1]தன்னைப் பரிசுத்தக்
5 குலைச்சலாக்கித் தீட்டுப்படுத்தலாகாது. அவர்
கள் தங்கள் தலையை மொட்டையடிக்காமலும்,
[2]தங்கள் தாடியின் ஓரங்களைச் சிரைத்துப்
போடாமலும், தங்கள் தேகத்தைக் கீறிக்கொள்
6 ளாமலும் இருப்பார்களாக. தங்கள் தேவனு
டைய நாமத்தைப் பரிசுத்தக் குலைச்சலாக்கா
மல் அவருக்கேற்ற பரிசுத்தராயிருப்பார்களாக;
அவர்கள் **கர்த்தரின்** தகனபலிகளையும் தங்கள்
தேவனுடைய அப்பத்தையும் செலுத்துகிற
வர்களாதலால் [3]பரிசுத்தராயிருக்கவேண்டும்.
7 அவர்கள் தங்கள் தேவனுக்குப் பரிசுத்தமான
வர்கள், [4]ஆகையால் வேசியையாகிலும் கற்
புக்குலைந்தவளையாகிலும் விவாகம்பண்ணார்க
ளாக; தன் புருஷனாலே தள்ளப்பட்ட ஸ்திரீ
8 யையும் விவாகம்பண்ணார்களாக. அவன் தேவ
னுடைய அப்பத்தைச் செலுத்துகிறபடியால்
நீ அவனைப் பரிசுத்தப்படுத்தவேண்டும்; உங்க
ளைப் பரிசுத்தமாக்குகிற **கர்த்தராகிய** நான்
[5]பரிசுத்தராயிருக்கிறபடியால், அவனும் உன
9 க்கு முன்பாகப் பரிசுத்தனாயிருப்பானாக. ஆசா
ரியனுடைய குமாரத்தி வேசித்தனம்பண்ணி,
[6]தன்னைப் பரிசுத்தக் குலைச்சலாக்கினால்,
அவள் தன் தகப்பனையும் பரிசுத்தக் குலைச்ச
லாக்குகிறாள்; அவள் அக்கினியிலே சுட்டெ
ரிக்கப்படக்கடவள்.
10 தன் சகோதரருக்குள்ளே பிரதான [7]ஆசா
ரியனாக தன் சிரசில் அபிஷேக தைலம் வார்
க்கப்பட்டவனும், அவனுக்குரிய வஸ்திரங்க
ளைத் தரிக்கும்படி பிரதிஷ்டை பண்ணப்பட்
டவனுமாயிருக்கிறவன் எவனோ, அவன் தன்
பாகையை எடுக்காமலும், தன் வஸ்திரங்களைக்
11 கிழித்துக்கொள்ளாமலும், பிரேதம் கிடக்கும்
[8]இடத்தில் போகாமலும், தன் தகப்பனுக்காக
வும் தன் தாய்க்காகவும் தன்னைத் தீட்டுப்படுத்
12 திக்கொள்ளாமலும், பரிசுத்த ஸ்தலத்திலிரு
ந்து புறப்படாமலும், தன் தேவனுடைய பரி
சுத்த ஸ்தலத்தைப் பரிசுத்தக் குலைச்சலாக்கா
மலும் இருப்பானாக; அவனுடைய தேவனின்
அபிஷேகதைலம் என்னும் கிரீடம் [9]அவன்
13 மேல் இருக்கிறதே; நான் **கர்த்தர்**. கன்னி
கையாயிருக்கிற [10]பெண்ணை அவன் விவா
14 கம் பண்ணவேண்டும். விதவையையானாலும்
தள்ளப்பட்டவளையானாலும் கற்புக்குலைந்த
வளையானாலும் வேசியையானாலும் விவாகம்
பண்ணாமல், தன் ஜனங்களுக்குள்ளே ஒரு
கன்னிகையை விவாகம்பண்ணக்கடவன்.
15 அவன் தன் வித்தைத் [11]தன் ஜனங்களுக்குள்
ளே பரிசுத்தக் குலைச்சலாக்காமல் இருப்பா
னாக; நான் அவனைப் பரிசுத்தமாக்குகிற **கர்த்**
**தர்** என்று சொல் என்றார்.
16 பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி:
17 நீ ஆரோனோடே சொல்லவேண்டியது என்
னவென்றால்: உன் சந்ததியாருக்குள்ளே அங்
கவீனமுள்ளவன் தலைமுறைதோறும் தேவனு

[1] எசே. 24. 16, 17
[2] எசே. 44. 20
[3] ஏசா. 52. 11
[4] எசே. 44. 22
[5] லேவி. 20. 7, 8
[6] ஆதி. 38. 24
[7] யாத். 29. 29, 30
[8] எண். 19. 14
[9] யாத். 29. 6, 7
[10] எசே. 44. 22
[11] ஆதி. 18. 19. எஸ்றா 2. 62
[12] சங். 65. 4
[13] உபா. 23. 1
[14] எண். 18. 9, 19
[15] எண். 6. 3; 18. 32
[16] லேவி. 7. 20
[17] எண். 19. 11, 12
[18] எபி. 10. 22
[19] எண். 18. 11, 13
[20] யாத். 22. 31. எசே. 44. 31

டைய அப்பத்தைச் செலுத்தும்படி [12]சேரலா
காது. அங்கவீனமுள்ள ஒருவனும் அணுக 18
லாகாது; குருடனானாலும், சப்பாணியானா
லும், குறுகின அல்லது நீண்ட அவயவமுள்
ளவனானாலும், காலொடிந்தவனானாலும், கை 19
யொடிந்தவனானாலும், கூனனானாலும், குள்ள 20
னானாலும், பூவிழுந்த கண்ணனானாலும், சொ
றியனானாலும், அசறுள்ளவனானாலும், விதை
நசுங்கினவனானாலும் [13]அணுகலாகாது. ஆசா 21
ரியனாகிய ஆரோனின் சந்ததியாரில் அங்க
வீனமுள்ள ஒருவனும் **கர்த்தரின்** தகனபலி
களைச் செலுத்தச் சேரலாகாது; அவன் அங்க
வீனமுள்ளவனாகையால், அவன் தேவனு
டைய அப்பத்தைச் செலுத்தச் சேரலாகாது.
அவன் தன் தேவனுடைய அப்பமாகிய மகா 22
பரிசுத்தமானவைகளிலும் மற்ற பரிசுத்தமா
னவைகளிலும் [14]புசிக்கலாம். ஆனாலும் அவன் 23
அங்கவீனமுள்ளவனாகையால், அவன் என்
பரிசுத்த ஸ்தலங்களைப் பரிசுத்தக் குலைச்ச
லாக்காதபடிக்குத் திரைக்குள்ளே போகாம
லும் பலிபீடத்தண்டையில் சேராமலும் இரு
ப்பானாக; நான் அவர்களைப் பரிசுத்தமாக்கு
கிற **கர்த்தர்** என்று சொல் என்றார். மோசே 24
இவைகளை ஆரோனோடும் அவன் குமாரரோ
டும், இஸ்ரவேல் புத்திரர் அனைவரோடும்
சொன்னான்.
பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி: **22**
இஸ்ரவேல் புத்திரர் எனக்கென்று நியமித் 2
துச் செலுத்துகிற பரிசுத்த வஸ்துக்களைக்
குறித்து ஆரோனும் அவன் குமாரரும் என்
பரிசுத்த நாமத்தைப் பரிசுத்தக் குலைச்சலாக்
காதபடிக்கு எச்சரிக்கையாய் இருக்கவேண்
டும் என்று [15]அவர்களோடே சொல்; நான்
**கர்த்தர்**. அன்றியும் நீ அவர்களை நோக்கி: 3
உங்கள் தலைமுறைகளிலுள்ள சந்ததியாரில்
எவனாகிலும் தான் [16]தீட்டுப்பட்டிருக்கும்
போது, இஸ்ரவேல் புத்திரர் **கர்த்தருக்கு**
நியமித்துச் செலுத்துகிற பரிசுத்தமானவை
களண்டையில் சேர்ந்தால், அந்த ஆத்துமா
என் சந்நிதியில் இராதபடிக்கு அறுப்புண்
டுபோவான் என்று சொல்; நான் **கர்த்தர்**.
ஆரோனின் சந்ததியாரில் எவன் குஷ்ட 4
ரோகியோ, [17]எவன் பிரமியமுள்ளவனோ,
அவன் சுத்தமாகும்மட்டும் பரிசுத்தமானவை
களில் புசிக்கலாகாது; பிணத்தினாலே தீட்டா
னவைகளில் எதையாகிலும் தொட்டவனும்,
இந்திரியங் கழிந்தவனும், தீட்டுப்படுத்துகிற 5
யாதொரு ஊரும் பிராணியையாகிலும், தீட்
டுள்ள மனிதனையாகிலும் தொட்டவனும்,
சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்பான்; 6
[18]அவன் ஜலத்தில் ஸ்நானம்பண்ணும் வரைக்
கும் பரிசுத்தமானவைகளில் புசிக்கலாகாது.
சூரியன் அஸ்தமித்தபின்பு சுத்தமாயிருப் 7
பான்; அதன்பின்பு அவன் பரிசுத்தமான
வைகளில் புசிக்கலாம்; [19]அது அவனுடைய
ஆகாரம். தானாய்ச் செத்ததையும் [20]பீறுண்ட 8
தையும் அவன் புசிக்கிறதினாலே தன்னைத்

9 தீட்டுப்படுத்தலாகாது; நான் **கர்த்தர்**. ஆகை
யால் பரிசுத்தமானதை அவர்கள் பரிசுத்தக்
குலைச்சலாக்குகிறதினாலே, [1]பாவம் சுமந்து
அதினிமித்தம் சாகாதபடிக்கு, என் கட்டளை
யைக் காக்கக்கடவர்கள்; நான் அவர்களைப்
10 பரிசுத்தமாக்குகிற **கர்த்தர்**. அந்நியன் ஒருவ
னும் [2]பரிசுத்தமானவைகளில் புசிக்கலாகாது;
ஆசாரியன் வீட்டில் தங்கியிருக்கிறவனும்,
கூலிவேலை செய்கிறவனும் பரிசுத்தமானதில்
11 புசிக்கலாகாது. ஆசாரியனால் பணத்துக்குக்
கொள்ளப்பட்டவனும், [3]அவன் வீட்டிலே
பிறந்தவனும் அவனுடைய ஆகாரத்தில் புசிக்
12 கலாம். ஆசாரியனுடைய குமாரத்தி அந்நிய
னுக்கு வாழ்க்கைப்பட்டால், அவள் பரிசுத்த
மானவைகளின் படைப்பிலே புசிக்கலாகாது.
13 விதவையாய்ப்போன, அல்லது தள்ளப்பட்
டவளான ஆசாரியனுடைய குமாரத்தி பிள்
ளையில்லாதிருந்து, தன் தகப்பன் வீட்டில்
தன்னுடைய இளவயதில் இருந்ததுபோல
திரும்பவந்து இருந்தாளேயாகில், [4]அவள்
தன் தகப்பன் ஆகாரத்தில் புசிக்கலாம்; அந்நி
யனாகிய ஒருவனும் அதில் புசிக்கலாகாது.
14 ஒருவன் அறியாமல் பரிசுத்தமானதில் புசித்த
துண்டானால், அவன் அதிலே ஐந்தில் ஒரு
பங்கு அதிகமாய்க் கூட்டி, பரிசுத்தமானவை
களோடுங்கூட ஆசாரியனுக்குக் கொடுக்கக்
15 கடவன். அவர்கள் **கர்த்தருக்குப்** படைக்கிற
இஸ்ரவேல் புத்திரருடைய பரிசுத்தமானவை
16 களைப்[5]பரிசுத்தக் குலைச்சலாக்காமலும், அவை
களைப் புசிக்கிறதினால் அவர்கள்மேல் குற்ற
மான அக்கிரமத்தைச் சுமரப்பண்ணாமலும்
இருப்பார்களாக; நான் அவர்களைப் பரிசுத்த
மாக்குகிற **கர்த்தர்** என்று சொல் என்றார்.
17 பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி:
18 நீ ஆரோனோடும் அவன் குமாரரோடும் இஸ்
ரவேல் புத்திரர் அனைவரோடும் சொல்ல
வேண்டியது என்னவென்றால்: இஸ்ரவேல்
குடும்பத்தாரிலும் இஸ்ரவேலில் தங்குகிற
[6]அந்நியர்களிலும் தங்களுடைய பொருத்தனை
களின்படியாகிலும் உற்சாகத்தின்படியாகி
லும் சர்வாங்க தகனபலிகளாகக் **கர்த்தருக்குத்**
தங்கள் காணிக்கையை எவர்கள் செலுத்தப்
19 போகிறார்களோ, அவர்கள் தங்கள் மனதின்
படியே மாடுகளிலாகிலும் ஆடுகளிலாகிலும்
வெள்ளாடுகளிலாகிலும் பழுதற்ற ஒரு ஆணைப்
20 பிடித்துவந்து செலுத்துவார்களாக. பழுது
ள்ள [7]ஒன்றையும் செலுத்தவேண்டாம்; அது
உங்கள் நிமித்தம் அங்கிகரிக்கப்படுவதில்லை.
21 ஒருவன் விசேஷித்த [8]பொருத்தனையாயாவ
து, உற்சாகமாயாவது, **கர்த்தருக்கு** மாடுகளிலா
கிலும் ஆடுகளிலாகிலும் சமாதானபலிகளைச்
செலுத்தப்போனால், அது அங்கிகரிக்கப்
படும்படி, ஒரு பழுதுமில்லாமல் உத்தமமா
22 யிருக்கவேண்டும். குருடு, [9]நெரிசல், முடம்,
கழலை, சொறி, புண் முதலிய பழுதுள்ளவை
களை நீங்கள் **கர்த்தருக்குச்** செலுத்தாமலும்,
அவைகளாலே **கர்த்தருக்குப்** பலிபீடத்தின்

1 யாத். 28. 43
2 1 சாமு. 21. 6
3 எண்.18.11,13
4 ஆதி. 38. 11. எண்.18.11,19
5 எண். 18. 32
6 எண். 15. 14
7 உபா. 15. 21. மல். 1. 8, 14. எபே. 5. 27. 1 பே. 1. 19
8 எண். 15. 8, 9. சங். 61. 8: 65. 1. பிர. 5. 4, 5
9 மல். 1. 8
10 லேவி. 21. 18
11 எண். 16. 40. மல். 1. 14
12 யாத். 22. 30
13 உபா. 22. 6
14 சங். 107. 22. ஆமோ. 4. 5
15 எண். 15. 40. உபா. 4. 40
16 மத். 6. 9. லூா. 11. 2
17 யாத். 32.5. சங். 81. 3
18 யாத். 20. 9. லூா. 13. 14
19 யாத். 12. 6. ஆ. எண். 9. 2, 3. உபா. 16. 1, 8. யோசு. 5. 10

மேல் தகனபலியிடாமலும் இருப்பீர்களாக.
நீண்ட அல்லது குறுகின அவயவமுள்ள 23
[10]மாட்டையும் ஆட்டையும் நீ உற்சாகபலியாக
இடலாம்; பொருத்தனைக்காக அது அங்கிகரி
க்கப்படமாட்டாது. விதை நசுங்கினதையும் 24
நொறுங்கினதையும் காயம்பட்டதையும் விதை
அறுக்கப்பட்டதையும் நீங்கள் **கர்த்தருக்குச்**
செலுத்தாமலும், அவைகளை உங்கள் தேசத்தி
லே பலியிடாமலும் இருப்பீர்களாக. அந்நிய 25
புத்திரன் [11]கையிலும் இப்படிப்பட்டதை வா
ங்கி, தேவனுக்கு அப்பமாகச் செலுத்தீர்க
ளாக; அவைகளின் கேடும் பழுதும் அவை
களில் இருக்கிறது; அவைகள் உங்களுக்காக
அங்கிகரிக்கப்படுவதில்லை என்று சொல்
என்றார்.
பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி: 26
ஒரு கன்றாவது [12]செம்மறியாட்டுக்குட்டியா 27
வது வெள்ளாட்டுக்குட்டியாவது பிறந்தால்,
அது ஏழுநாள் தன் தாயினிடத்தில் இருக்கக்
கடவது; எட்டாம் நாள்முதல் அது **கர்த்தருக்**
**குத்** தகனபலியாக அங்கிகரிக்கப்படும். பசு 28
வையும் அதின் கன்றையும், ஆட்டையும்
அதின் குட்டியையும் [13]ஒரேநாளில் கொல்ல
வேண்டாம்.
**கர்த்தருக்கு** [14]ஸ்தோத்திரபலியைச் செலுத் 29
துவீர்களானால் மனப்பூர்வமாய் அதைச்
செலுத்துவீர்களாக. அந்நாளிலேதான் அது 30
புசிக்கப்படவேண்டும்; விடியற்காலம்மட்டும்
நீங்கள் அதில் ஒன்றும் மீதியாக வைக்கவேண்
டாம்; நான் **கர்த்தர்**.
நீங்கள் என் [15]கட்டளைகளைக் கைக்கொ 31
ண்டு, அவைகளின்படி செய்யக்கடவீர்கள்;
நான் **கர்த்தர்**. என் பரிசுத்த நாமத்தைப் [16]பரி 32
சுத்தக் குலைச்சலாக்காதிருப்பீர்களாக; நான்
இஸ்ரவேல் புத்திரர் நடுவே பரிசுத்தர் என்று
மதிக்கப்படுவேன்; நான் உங்களைப் பரிசுத்த
மாக்குகிற **கர்த்தர்**. நான் உங்களுக்குத் தேவ 33
னாயிருப்பதற்காக, உங்களை எகிப்துதேசத்தி
லிருந்து புறப்படப்பண்ணினேன்; நான் **கர்த்**
**தர்** என்று சொல் என்றார்.
பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி: **23**
நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண் 2
டியது என்னவென்றால்: சபை கூடிவந்து
[17]பரிசுத்தநாட்களாக ஆசரிக்கும்படி, நீங்கள்
கூறவேண்டிய **கர்த்தருடைய** பண்டிகை நாட்
களாவன: ஆறுநாளும் [18]வேலைசெய்யவேண் 3
டும்; ஏழாம்நாள் பரிசுத்த சபைகூடுதலான
ஓய்வுநாள், அதில் ஒரு வேலையும் செய்ய
வேண்டாம்; அது உங்கள் வாசஸ்தலங்களி
லெல்லாம் **கர்த்தருக்கென்று** ஓய்ந்திருக்கும்
நாளாயிருப்பதாக. சபைகூடிவந்து பரிசுத்த 4
மாய் ஆசரிக்கும்படி, நீங்கள் குறித்த காலத்
தில் கூறவேண்டிய **கர்த்தரின்** பண்டிகைக
ளாவன: முதலாம் மாதம் [19]பதினாலாம் தேதி 5
அந்திநேரமாகிற வேளையிலே **கர்த்தரின்**
பஸ்காபண்டிகையும், அந்த மாதம் பதி 6
னைந்தாம் தேதியிலே, **கர்த்தருக்குப்** புளிப்

பில்லா அப்பப்பண்டிகையுமாய் இருக்கும்;
ஏழுநாள் புளிப்பில்லா அப்பங்களைப் புசிக்க
7 வேண்டும். முதலாம் நாள் உங்களுக்குப் பரி
சுத்தமான சபைகூடுதல்; அதிலே சாதாரண
மான யாதொரு வேலையும் செய்யவேண்டாம்.
8 ஏழுநாளும் கர்த்தருக்குத் தகனபலி யிடவேண்
டும்; ஏழாம் நாள் பரிசுத்தமான சபைகூடுதல்;
அதில் சாதாரணமான யாதொரு வேலையும்
செய்யலாகாது என்று சொல் என்றார்.
9 பின்னும் கர்த்தர் மோசேயை நோக்கி:
10 நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண்
டியது என்னவென்றால்: நான் உங்களுக்குக்
கொடுக்கும் தேசத்தில் நீங்கள் போய்ச்
சேர்ந்து, அதின் வெள்ளாண்மையை அறுக்
கும்போது, உங்கள் அறுப்பின் [1]முதற்பலனா
கிய ஒரு கதிர்க்கட்டை ஆசாரியனிடத்தில்
11 கொண்டுவரக்கடவீர்கள். உங்களுக்காக அது
அங்கிகரிக்கப்படும்படி, ஆசாரியன் அந்தக்
கதிர்க்கட்டை ஓய்வுநாளுக்கு மறுநாளில் கர்த்
தருடைய சந்நிதியில் [2]அசைவாட்டவேண்டும்.
12 நீங்கள் அந்தக் கதிர்க்கட்டை அசைவாட்டும்
நாளில் கர்த்தருக்குச் சர்வாங்க தகனபலியாக,
ஒரு வயதான பழுதற்ற ஒரு ஆட்டுக்குட்டி
13 யையும், கர்த்தருக்குச் சுகந்த வாசனையான
தகனபலியாக ஒரு மரக்காலிலே பத்தில் இர
ண்டுபங்கானதும் எண்ணெயிலே பிசைந்தது
மான மெல்லிய மாவாகிய போஜனபலியை
யும், திராட்சப்பழரசத்திலே காற்படியாகிய
14 பானபலியையும் செலுத்தக்கடவீர்கள். உங்
கள் தேவனுக்குக் காணிக்கையை நீங்கள்
கொண்டுவரும் அந்நாள்மட்டும், அப்பமும்
வாட்டிய கதிரும் பச்சைக் கதிரும் புசியீர்க
ளாக; இது உங்கள் வாசஸ்தலங்களிலெல்லாம்
உங்கள் தலைமுறைதோறும் செல்லவேண்டிய
நித்தியகட்டளை.
15 நீங்கள் அசைவாட்டும் கதிர்க்கட்டைக்
கொண்டுவரும் ஓய்வுநாளுக்கு மறுநாள் முதற்
கொண்டு எண்ணத்துவக்கி, [3]ஏழுவாரங்கள்
16 நிறைவேறினபின்பு, ஏழாம் ஓய்வுநாளுக்கு
மறுநாளாகிய [4]ஐம்பதாம் நாள்மட்டும் எண்
ணி, கர்த்தருக்குப் புதிய போஜனபலியைச்
17 செலுத்தக்கடவீர்கள். நீங்கள் ஒரு மரக்கா
லிலே பத்தில் இரண்டு பங்காகிய மெல்
லிய மாவிலே புளிப்பாகப் பாகம்பண்ணப்
பட்ட அசைவாட்டும் காணிக்கையாயிருக்கிற
இரண்டு அப்பங்களை உங்கள் வாசஸ்தலங்
களிலிருந்து கர்த்தருக்கென்று [5]முதற்பல
18 னைக் கொண்டுவந்து, அப்பத்தோடேகூடக்
கர்த்தருக்குச் சர்வாங்க தகனபலியாக, ஒரு
வயதான [6]பழுதற்ற ஏழு ஆட்டுக்குட்டிகளை
யும், ஒரு காளையையும், இரண்டு ஆட்டுக்
கடாக்களையும், கர்த்தருக்குச் சுகந்தவாசனை
யான தகனபலியாக அவைகளுக்கு அடுத்த
போஜனபலியையும், பானபலிகளையும் செலு
19 த்தி, வெள்ளாடுகளில் [7]ஒரு கடாவைப் பாவ
நிவாரணபலியாகவும், ஒரு வயதான இரண்டு
ஆட்டுக்குட்டிகளைச் சமாதானபலியாகவும்

இடக்கடவீர்கள். அவைகளை ஆசாரியன் முதற் 20
பலனாகிய அப்பத்தோடும் இரண்டு ஆட்டுக்
குட்டிகளோடுங்கூட கர்த்தருடைய சந்நிதியில்
[8]அசைவாட்டும் பலியாக அசைவாட்டக்கட
வன்; கர்த்தருக்குப் பரிசுத்தமாகிய அவைகள்
ஆசாரியனுடையவைகளாகும். அந்த நாள் 21
உங்களுக்குச் சபை கூடும் பரிசுத்தநாள் என்று
கூறவேண்டும்; அதிலே சாதாரணமான
யாதொரு வேலையும் செய்யலாகாது; இது
உங்கள் வாசஸ்தலங்களிலெல்லாம் உங்கள்
தலைமுறைதோறும் செல்லவேண்டிய நித்திய
கட்டளை.
உங்கள் தேசத்தின் வெள்ளாண்மையை 22
[9]நீங்கள் அறுக்கையில், வயலின் ஓரத்தில்
இருக்கிறதை முற்றிலும் அறுக்காமலும், சிந்
திக்கிடக்கிற கதிர்களைப் பொறுக்காமலும்,
எளியவனுக்கும் பரதேசிக்கும் அவைகளை
விட்டுவிடவேண்டும்; நான் உங்கள் தேவனா
கிய கர்த்தர் என்று சொல் என்றார்.
பின்னும் கர்த்தர் மோசேயை நோக்கி: 23
நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண் 24
டியது என்னவென்றால்: உங்களுக்கு [10]ஏழாம்
மாதம் முதலாந்தேதி எக்காளச் சத்தத்தால்
ஞாபகக்குறியாகக் கொண்டாடுகிற பண்டிகை
என்கிற சபைகூடும் பரிசுத்த ஓய்வுநாளாய்
இருப்பதாக. அதிலே சாதாரணமான 25
யாதொருவேலையும்செய்யாமல்,கர்த்தருக்குத்
தகனபலி செலுத்தவேண்டும் என்று சொல்
என்றார்.
பின்னும் கர்த்தர் மோசேயை நோக்கி: 26
அந்த ஏழாம் மாதம் பத்தாந்தேதி [11]உங்களுக் 27
குப் பாவநிவிர்த்தி செய்யும் நாளும் சபைகூ
டும் பரிசுத்தநாளுமாயிருப்பதாக; அப்பொ
ழுது நீங்கள் உங்கள் ஆத்துமாக்களைத் தாழ்
மைப்படுத்தி, கர்த்தருக்குத் தகனபலி செலுத்
தக்கடவீர்கள். அந்த நாள் உங்கள் தேவனாகிய 28
கர்த்தருடைய சந்நிதியில் உங்களுக்காகப்
பாவநிவிர்த்தி செய்யப்படும் பாவநிவாரண
நாளாயிருக்கிறபடியால், அதிலே யாதொரு
வேலையும் செய்யவேண்டாம். அந்நாளிலே 29
தன்னைத் [12]தாழ்மைப்படுத்தாத எந்த ஆத்துமா
வும் தன் ஜனத்தில் இராதபடிக்கு [13]அறுப்புண்
டுபோவான். அந்நாளிலே ஒரு ஆத்துமா 30
யாதொரு வேலையைச் செய்தால், அந்த ஆத்
துமாவை அவன் ஜனத்தின் நடுவிலே வைக்
காமல் அழிப்பேன். அதில் நீங்கள் எந்த 31
வேலையும் செய்யாதிருப்பது உங்கள் வாசஸ்
தலங்களிலெல்லாம் உங்கள் தலைமுறைதோ
றும் செல்லவேண்டிய நித்தியகட்டளை. அது 32
உங்களுக்கு விசேஷித்த ஓய்வுநாள்; அதில்
உங்கள் ஆத்துமாக்களைத் தாழ்மைப்படுத்த
வேண்டும்; அந்த மாதத்தின் ஒன்பதாந்தேதி
சாயங்காலம் துவக்கி, மறுநாள் சாயங்காலம்
மட்டும் உங்கள் ஓய்வை ஆசரிக்கக்கடவீர்கள்
என்றார்.
பின்னும் கர்த்தர் மோசேயை நோக்கி: 33
நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண் 34

1 யாத். 22. 19. நீதி. 3. 9. எசே. 44. 30. ரோ. 11. 16. 1 கொ. 15. 20. யாக். 1. 18. வெளி. 14. 4
2 லேவி. 21. 18
3 யாத். 34. 22. உபா. 16. 9
4 அப். 2. 1
5 எண். 15. 20
6 மல். 1. 13, 14
7 லேவி. 3. 1: 4. 23
8 எண். 18. 12. உபா. 18. 4. 1 கொ. 9. 14
9 உபா. 24. 19. ரூத். 2. 15. சங். 41. 1—3. நீதி. 11. 24, 25. ஏசா. 58. 7, 8, 10. லூக். 11. 41. 2 கொ. 9. 5—12
10 எண். 10. 10. சங். 81. 3, 4: 98. 6
11 லேவி. 16. 30. எண். 29. 7
12 ஏசா. 22. 12. எரே. 31. 9. எசே. 7. 16
13 ஆதி. 17. 14

டியது என்னவென்றால்: [1]அந்த ஏழாம் மாதம்
பதினைந்தாம் தேதிமுதல் ஏழுநாளளவும் **கர்த்த
ருக்கு** ஆசரிக்கும் கூடாரப் பண்டிகையாயிருப்
35 பதாக. முதலாம்நாள் சபைகூடும் பரிசுத்த
நாள்; அதிலே சாதாரணமான யாதொரு
36 வேலையும் செய்யலாகாது. ஏழுநாளும் **கர்த்
தருக்குத்** தகனபலி செலுத்தக்கடவீர்கள்; [2]எட்
டாம் நாள் உங்களுக்குச் சபைகூடும் பரிசுத்த
நாள்; அதிலே **கர்த்தருக்குத்** தகனபலி செலுத்
தக்கடவீர்கள்; அது ஆசரிக்கப்படும் நாள்;
அதிலே சாதாரணமான யாதொரு வேலையும்
37 செய்யவேண்டாம். நீங்கள் **கர்த்தருடைய**
[3]ஓய்வுநாட்களில் செலுத்துவதும் தவிர, நீங்
கள் **கர்த்தருக்குப்** படைக்கிற உங்கள் எல்லாக்
காணிக்கைகளும் பொருத்தனைகளும் உற்சாக
38 பலிகளும் தவிர, நீங்கள் அந்தந்த நாளுக்குத்
தக்கதாய்க் **கர்த்தருக்குச்** சர்வாங்க தகனபலி,
போஜனபலி, இரத்தபலி, பானபலி முதலான
வைகளைச் செலுத்தும்படி சபை கூடிவந்து,
பரிசுத்தமாய் ஆசரிப்பதற்காக நீங்கள் கூற
வேண்டிய **கர்த்தருடைய** பண்டிகைகள்
39 இவைகளே. நிலத்தின் பலனை [4]நீங்கள் சேர்த்
துவைக்கும் ஏழாம் மாதம் பதினைந்தாம் தேதி
முதல் **கர்த்தருக்குப்** பண்டிகையை ஏழுநாள்
ஆசரிக்கக்கடவீர்கள்; முதலாம் நாளிலும்
40 ஓய்வு; எட்டாம் நாளிலும் ஓய்வு. முதல்
நாளிலே [5]அலங்காரமான விருட்சங்களின்
கனிகளையும் பேரீச்சின் ஓலைகளையும் தழைத்
திருக்கிற விருட்சங்களின் கிளைகளையும் ஆற்
றலரிகளையும் கொண்டுவந்து, உங்கள் தேவ
னாகிய **கர்த்தருடைய** சந்நிதியில் ஏழுநாளும்
41 [6]மகிழ்ச்சியாயிருங்கள். வருஷந்தோறும்
[7]ஏழுநாள் **கர்த்தருக்கு** இந்தப் பண்டிகையை
ஆசரிக்கக்கடவீர்கள்; இது உங்கள் தலைமுறை
தோறும் செல்லவேண்டிய நித்தியகட்டளை;
ஏழாம் மாதத்தில் அதை ஆசரிக்கவேண்டும்.
42 நான் இஸ்ரவேல் புத்திரரை எகிப்துதேசத்தி
லிருந்து புறப்படப்பண்ணினபோது, அவர்
களைக் [8]கூடாரங்களில் குடியிருக்கப்பண்ணி
னதை உங்கள் சந்ததியார் அறியும்படிக்கு,
43 ஏழுநாள் கூடாரங்களில் குடியிருக்கக்கடவீர்
கள்; [9]இஸ்ரவேலில் பிறந்தவர்கள் எல்லா
ரும் கூடாரங்களில் வாசம்பண்ணவேண்டும்;
நான் உங்கள் தேவனாகிய **கர்த்தர்** என்று
44 சொல் என்றார். அப்படியே மோசே **கர்த்த
ருடைய** பண்டிகைகளை இஸ்ரவேல் புத்திர
ருக்குத் தெரிவித்தான்.

**24** பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி:
2 குத்துவிளக்கு எப்பொழுதும் [10]எரிந்துகொண்
டிருக்கும்படி அதற்காக இடித்துப் பிழிந்த
தெளிவான [11]ஒலிவ எண்ணெயை இஸ்ர
வேல் புத்திரர் உன்னிடத்தில் கொண்டுவ
3 ரும்படி அவர்களுக்குக் கட்டளையிடு. ஆச
ரிப்புக் கூடாரத்தில் சாட்சி சந்நிதியின் திரை
க்கு வெளிப்புறமாக ஆரோன் அதை எப்பொ
ழுதும் சாயங்காலம் தொடங்கி விடியற்காலம்
மட்டும் **கர்த்தருடைய** சந்நிதியில் எரியும்படி
ஏற்றக்கடவன்; இது உங்கள் தலைமுறை
தோறும் செல்லவேண்டிய நித்தியகட்டளை.
அவன் எப்பொழுதும் **கர்த்தருடைய** சந்நிதி 4
யில் பரிசுத்தமான குத்துவிளக்கின்மேல் இரு
க்கிற விளக்குகளை [12]எரியவைக்கக்கடவன்.
அன்றியும் நீ மெல்லிய மாவை எடுத்து, 5
அதைப் பன்னிரண்டு [13]அப்பங்களாகச் சுடு
வாயாக; ஒவ்வொரு அப்பம் மரக்காலிலே
பத்தில் இரண்டுபங்கு மாவினால் செய்யப்பட
வேண்டும். அவைகளை நீ **கர்த்தருடைய** சந் 6
நிதியில் [14]பரிசுத்தமான மேஜையின்மேல் இர
ண்டு அடுக்காக, ஒவ்வொரு அடுக்கில் அவ்
வாறு அப்பம் இருக்கும்படியாக வைத்து,
ஒவ்வொரு அடுக்கினிடத்தில் சுத்தமான தூப 7
வர்க்கம் போடக்கடவாய்; அது அப்பத்தோ
டிருந்து, ஞாபகக்குறியாகக் **கர்த்தருக்கேற்ற**
தகனபலியாயிருக்கும். அப்பத்தை நித்திய 8
உடன்படிக்கையாக இஸ்ரவேல் புத்திரர்
கையிலே வாங்கி, [15]ஓய்வுநாள்தோறும் **கர்த்த
ருடைய** சந்நிதியில் அடுக்கிவைக்கக்கடவன்.
அது ஆரோனையும் [16]அவன் குமாரரையும் சே 9
ரும்; அதைப் பரிசுத்த இடத்திலே புசிக்கக்
கடவர்கள்; நித்தியகட்டளையாக **கர்த்தருக்கு**
இடப்படும் தகனபலிகளில் அது அவனுக்கு
மகா பரிசுத்தமாயிருக்கும் என்றார்.
அக்காலத்திலே இஸ்ரவேல் ஜாதியான 10
ஸ்திரீக்கும் எகிப்திய புருஷனுக்கும் பிறந்த
புத்திரனாகிய ஒருவன் இஸ்ரவேல் புத்திரரோ
டேகூடப் புறப்பட்டு வந்திருந்தான்; இவ
னும் இஸ்ரவேலனாகிய ஒரு மனிதனும் பாள
யத்திலே சண்டைபண்ணினார்கள். அப்பொ 11
ழுது இஸ்ரவேல் ஜாதியான அந்த ஸ்திரீயின்
மகன் **கர்த்தரின்** நாமத்தை நிந்தித்துத் [17]தூஷி
த்தான். அவனை மோசேயினிடத்தில் கொண்
டுவந்தார்கள். அவன் தாயின்பேர் செலோ
மித்; அவள் தாண் கோத்திரத்தானாகிய திப்ரி
யின் குமாரத்தி. **கர்த்தரின்** வாக்கினாலே தங் 12
களுக்கு [18]உத்தரவு வருமட்டும், அவனைக்
காவல்படுத்தினார்கள். அப்பொழுது **கர்த்தர்** 13
மோசேயை நோக்கி: தூஷித்தவனைப் பாள 14
யத்துக்குப் புறம்பே கொண்டுபோ; கேட்ட
வர்கள் எல்லாரும் [19]தங்கள் கைகளை அவன்
தலையின்மேல் வைப்பார்களாக; பின்பு சபை
யார் எல்லாரும் அவனைக் கல்லெறியக்கடவர்
கள். மேலும் நீ இஸ்ரவேல் புத்திரரை நோ 15
க்கி: எவனாகிலும் தன் தேவனைத் தூஷித்
தால், [20]அவன் தன் பாவத்தைச் சுமப்பான்.
**கர்த்தருடைய** நாமத்தை நிந்திக்கிறவன் [21]கொ 16
லைசெய்யப்படவேண்டும்; சபையார் எல்லா
ரும் அவனைக் கல்லெறியவேண்டும்; பரதே
சியானாலும் சுதேசியானாலும் **கர்த்தரின்** நாம
த்தைத் தூஷிக்கிறவன் கொலைசெய்யப்பட
வேண்டும். ஒரு மனிதனைக் கொல்லுகிறவன் 17
எவனோ [22]அவன் கொலைசெய்யப்படவேண்
டும். மிருகத்தைக் கொன்றவன் மிருகத்து 18
க்கு மிருகம் கொடுக்கக்கடவன். ஒருவன் 19
பிறனை ஊனப்படுத்தினால், [23]அவன் செய்த

[1] யாத். 23. 16. எஸ்றா 3. 4. சகரி. 14. 16. யோ. 7. 2. எபி. 11. 9
[2] எண். 29. 35. நெகே. 8. 18. யோ. 7. 37
[3] எண். 29. 39
[4] யாத். 23. 16. உபா. 16. 13
[5] நெகே. 8. 15
[6] உபா. 16. 14, 15
[7] எண். 29. 12. நெகே. 8. 18
[8] நெகே. 8. 14-16
[9] உபா. 31. 13. சங். 78. 5, 6
[10] மத். 25. 3, 8. லூ. 12. 35
[11] யாத். 27. 20, 21
[12] யாத். 31. 8; 39. 37. சகரி. 4. 2, 11. வெளி. 1. 20
[13] யாத். 25. 30
[14] 1 இரா. 7. 48. எபி. 9. 2
[15] 1 நாளா. 9. 32
[16] யாத். 29. 32. 1 சாமு. 21. 6. மத். 12. 4
[17] யோபு 1. 5, 11, 22. ஏசா. 8. 21
[18] எண். 15. 34; 27. 5
[19] உபா. 13. 9; 17. 7
[20] எண். 9. 13
[21] யாத். 20. 7. 1 இரா. 21. 10. சங். 74. 10, 18. மத். 12. 31. யாக். 2. 7
[22] யாத். 21. 12
[23] மத். 5. 38; 7. 2

படியே அவனுக்கும் செய்யப்படக்கடவது.
20 நொறுக்குதலுக்கு நொறுக்குதல், கண்ணுக்
குக் கண், பல்லுக்குப் பல்; அவன் ஒரு மனி
தனை ஊனப்படுத்தினதுபோல அவனும்
21 ஊனப்படுத்தப்படவேண்டும், மிருகத்தைக்
கொன்றவன் பதில் கொடுக்கவேண்டும்; மனி
தனைக் கொன்றவனோ கொலைசெய்யப்படக்
22 கடவன். உங்களில் பரதேசிக்கும் [1]சுதேசிக்
கும் ஒரே நியாயம் இருக்கவேண்டும்; நான்
உங்கள் தேவனாகிய **கர்த்தர்** என்று சொல்
23 என்றார். அப்படியே, தூஷித்தவனைப் பாள
யத்துக்குப் புறம்பே கொண்டுபோய், அவ
னைக் கல்லெறியும்படி மோசே இஸ்ரவேல்
புத்திரரோடே சொன்னான்; **கர்த்தர்** மோசே
க்குக் கட்டளையிட்டபடியே செய்தார்கள்.

**25** **கர்த்தர்** சீனாய்மலையில் மோசேயை நோ
2 க்கி: நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்ல
வேண்டியது என்னவென்றால்: நான் உங்க
ளுக்குக் கொடுக்கும் தேசத்திலே நீங்கள்
போய்ச் சேர்ந்திருக்கும்போது, தேசம் **கர்த்த
ருக்கென்று** [2]ஓய்வு கொண்டாடவேண்டும்.
3 ஆறுவருஷம் உன் வயலை விதைத்து, உன்
திராட்சத்தோட்டத்தைக் கிளைகழித்து, அதின்
4 பலனைச் சேர்ப்பாயாக. ஏழாம் வருஷத்தி
லோ, **கர்த்தருக்கென்று** ஓய்ந்திருக்கும் ஓய்வு
தேசத்திற்கு இருக்கவேண்டும்; அதில் உன்
வயலை விதைக்காமலும், உன் திராட்சத்தோட்
5 டத்தைக் கிளைகழிக்காமலும், தானாய் விளை
ந்து [3]பயிரானதை அறுக்காமலும், கிளைகழிக்
காதே விட்ட திராட்சச்செடியின் பழங்களைச்
சேர்க்காமலும் இருப்பாயாக; தேசத்துக்கு
6 அது ஓய்வு வருஷமாயிருக்கக்கடவது. தேச
த்தின் ஓய்விலே பயிராகிறது உங்களுக்கு
ஆகாரமாயிருப்பதாக; உன் வேலைக்காரனுக்
கும், உன் வேலைக்காரிக்கும், உன் கூலிக்கார
னுக்கும், உன்னிடத்தில் தங்குகிற அந்நிய
7 னுக்கும், உன் நாட்டு மிருகத்துக்கும், உன்
தேசத்தில் இருக்கிற காட்டு மிருகத்துக்கும்
அதில் விளைந்திருப்பதெல்லாம் ஆகாரமா
யிருப்பதாக.
8 அன்றியும், ஏழு ஓய்வு வருஷங்களுள்ள
ஏழு ஏழு வருஷங்களை எண்ணுவாயாக;
அந்த ஏழு ஓய்வு வருஷங்களும் நாற்பத்தொன்
9 பது வருஷமாகும். அப்பொழுதும் ஏழாம்
மாதம் பத்தாந்தேதியில் எக்காளச்சத்தம் தொ
னிக்கும்படி செய்யவேண்டும்; பாவநிவாரண
நாளில் உங்கள் தேசமெங்கும் [4]எக்காளச்சத்
10 தம் தொனிக்கும்படி செய்யவேண்டும். ஐம்ப
தாம் வருஷத்தைப் பரிசுத்தமாக்கி, தேசமெங்
கும் அதின் குடிகளுக்கெல்லாம் [5]விடுதலை
கூறக்கடவீர்கள்; அது உங்களுக்கு யூபிலி வரு
ஷம்; அதிலே உங்களில் ஒவ்வொருவனும்
தன் தன் காணியாட்சிக்கும் தன் தன் குடும்
11 பத்துக்கும் திரும்பிப் போகக்கடவன். அந்த
ஐம்பதாம் வருஷம் உங்களுக்கு யூபிலி வருஷ
மாயிருப்பதாக; அதிலே விதைக்காமலும், தா
னாய் விளைந்து பயிரானதை அறுக்காமலும்,
கிளைகழிக்காமல் விடப்பட்ட திராட்சச்செடி
யின் பழங்களைச் சேர்க்காமலும் இருப்பீர்க
ளாக. அது யூபிலி வருஷம்; அது உங்களுக் 12
குப் பரிசுத்தமாயிருக்கவேண்டும்; அந்த வரு
ஷத்தில் வயல்வெளியில் விளைந்தவைகளை நீங்
கள் புசிக்கவேண்டும். அந்த யூபிலி வருஷத் 13
தில் [6]உங்களில் அவனவன் தன்தன் காணி
யாட்சிக்குத் திரும்பிப்போகக்கடவன். ஆகை 14
யால், பிறனுக்கு எதையாவது விற்றாலும்,
அவனிடத்தில் எதையாவது கொண்டாலும்
ஒருவருக்கொருவர் [7]அநியாயம் செய்யக்கூ
டாது. யூபிலி வருஷத்துக்குப் பின்வரும் 15
வருஷங்களின் தொகைக்கேற்கப் பிறனிடத்
தில் கொள்ளுவாயாக; பலனுள்ள வருஷங்க
ளின் தொகைக்கேற்க அவன் உனக்கு விற்
பானாக. பலனுள்ள வருஷங்களின் இலக் 16
கத்தைப் பார்த்து, அவன் உனக்கு விற்கிறப
டியால், வருஷங்களின் தொகை ஏறினால்
விலையேறவும், வருஷங்களின் தொகை குறைந்
தால், விலை குறையவும் வேண்டும். உங்களில் 17
ஒருவனும் பிறனுக்கு அநியாயம் செய்யக்கூ
டாது; உன் தேவனுக்குப் [8]பயப்படவேண்
டும்; நான் உங்கள் தேவனாகிய **கர்த்தர்**.
என் கட்டளைகளின்படி செய்து, என் நியா 18
யங்களைக் கைக்கொண்டு அவைகளின்படி
நடக்கக்கடவீர்கள்; அப்பொழுது தேசத்திலே
[9]சுகமாய்க் குடியிருப்பீர்கள். பூமி தன் கனி 19
யைத் தரும்; நீங்கள் திருப்தியாகச் சாப்பிட்டு,
அதில் சுகமாய்க் குடியிருப்பீர்கள். ஏழாம் 20
வருஷத்தில் [10]எதைப் புசிப்போம்? நாங்கள்
விதைக்காமலும், விளைந்ததைச் சேர்க்காமலும்
இருக்கவேண்டுமே! என்று சொல்வீர்களா
னால், நான் ஆறாம் வருஷத்தில் [11]உங்களுக்கு 21
ஆசீர்வாதத்தை அநுக்கிரகம் பண்ணுவேன்;
அது உங்களுக்கு மூன்று வருஷத்தின் பல
னைத் தரும். நீங்கள் எட்டாம் வருஷத்திலே 22
விதைத்து, ஒன்பதாம்வருஷம்மட்டும் [12]பழைய
பலனிலே சாப்பிடுவீர்கள்; அதின் பலன் விளை
யும்வரைக்கும் பழைய பலனைச் சாப்பிடுவீர்
கள். தேசம் என்னுடையதாயிருக்கிறபடி 23
யால், [13]நீங்கள் நிலங்களை அறுதியாய் விற்கவே
ண்டாம்; நீங்கள் [14]பரதேசிகளும் என்னிடத்தில்
புறக்குடிகளுமாயிருக்கிறீர்கள். உங்கள் காணி 24
யாட்சியான தேசமெங்கும் நிலங்களை மீட்டுக்
கொள்ள இடங்கொடுக்கக்கடவீர்கள். உங்கள் 25
சகோதரன் [15]தரித்திரப்பட்டு, தன் காணி
யாட்சியிலே சிலதை விற்றால், அவன் இனத்
தான் ஒருவன் வந்து, தன் சகோதரன் விற்ற
தை மீட்கக்கடவன். அதை மீட்க ஒருவனும் 26
இல்லாமல், தானே அதை மீட்கத்தக்கவனா
னால், அதை விற்றபின் சென்ற வருஷங் 27
களின் தொகையைத் தள்ளி, மீந்த தொகை
யை யேற்றி, கொண்டவனுக்குக் கொடுத்து,
அவன் தன் காணியாட்சிக்குத் திரும்பிப்போ
கக்கடவன். அப்படிக் கொடுப்பதற்கான நிர் 28
வாகம் அவனுக்கு இல்லாவிட்டால், அவன்
விற்றது வாங்கினவன் கையிலே யூபிலி வரு

[1] யாத். 12. 49
[2] யாத். 23. 10
[3] 2 இரா. 19. 29
[4] எண். 10. 10
[5] ஏசா. 61. 1, 2: 63. 4. எரே. 34. 15—17. சகரி. 9. 11, 12. லூக். 4. 16—21
[6] எண். 36. 4
[7] 1 சாமு. 12. 3, 4. மீகா. 2. 2, 3. 1 கொரி. 6. 8
[8] ஆதி. 42. 18. எரே. 22. 16
[9] உபா. 12. 10. சங். 4. 8. நீதி. 1. 33. எரே. 23. 6. எசே. 34. 25-28
[10] மத். 6. 25, 31
[11] உபா. 28. 8
[12] 2 இரா. 19. 29. யோசு. 5. 11, 12
[13] 2 சாமு. 7. 20. சங். 85. 1
[14] சங். 39. 12. 1 பே. 2. 11
[15] ரூத். 2. 20. எரே. 32. 7, 8

ஷம்மட்டும் இருந்து, யூபிலி வருஷத்திலே
அது விடுதலையாகும்; அப்பொழுது அவன்
தன் காணியாட்சிக்குத் திரும்பப் போவான்.
29 ஒருவன் மதில்சூழ்ந்த பட்டணத்திலுள்ள
தன் வாசஸ்தலமாகிய வீட்டை விற்றால்,
அதை விற்ற ஒரு வருஷத்துக்குள் அதை
மீட்டுக்கொள்ளலாம்; ஒரு வருஷத்துக்குள்
ளாகவே அதை மீட்டுக்கொள்ளவேண்டும்.
30 ஒரு வருஷத்துக்குள்ளே அதை மீட்டுக்கொள்
ளாதிருந்தால், மதில்சூழ்ந்த பட்டணத்தி
லுள்ள அந்த வீடு தலைமுறைதோறும் அதை
வாங்கினவனுக்கே உரியதாகும்; யூபிலி வரு
31 ஷத்திலும் அது விடுதலையாகாது. மதில்
சூழப்படாத கிராமங்களிலுள்ள வீடுகளோ,
தேசத்தின் நிலங்கள்போலவே எண்ணப்ப
டும்; அவைகள் மீட்கப்படலாம்; யூபிலி வரு
32 ஷத்தில் அவைகள் விடுதலையாகும். லேவி
யரின் காணியாட்சியாகிய பட்டணங்களி
லுள்ள வீடுகளையோ [1]லேவியர் எக்காலத்தி
33 லும் மீட்டுக்கொள்ளலாம். இஸ்ரவேல் புத்
திரருக்குள்ளே லேவியருடைய பட்டணங்
களிலுள்ள வீடுகள் அவர்களுக்குரிய காணி
யாட்சியானபடியால், லேவியரிடத்தில் அவ
னுடைய காணியாட்சிப் பட்டணத்திலுள்ள
வீட்டை ஒருவன் வாங்கினால், விற்கப்பட்ட
அந்த வீடு யூபிலி வருஷத்தில் விடுதலையா
34 கும். அவர்கள் பட்டணங்களைச் [2]சூழ்ந்த
வெளிநிலம் விற்கப்படலாகாது; அது அவர்க
ளுக்கு நித்திய காணியாட்சியாயிருக்கும்.
35 உன் சகோதரன் தரித்திரப்பட்டு, கையி
ளைத்துப்போனவனானால், [3]அவனை ஆதரிக்க
வேண்டும்; [4]பரதேசியைப்போலும் தங்கவந்த
வனைப்போலும் அவன் உன்னோடே பிழைப்
36 பானாக. நீ அவன் கையில் [5]வட்டியாவது
பொலிசையாவது வாங்காமல், உன் தேவனுக்
குப் பயந்து, உன் சகோதரன் உன்னோடே
37 பிழைக்கும்படி செய்வாயாக. அவனுக்கு உன்
பணத்தை வட்டிக்கும், உன் தானியத்தைப்
38 பொலிசைக்கும் கொடாயாக. உங்களுக்குக்
கானான்தேசத்தைக் கொடுத்து, உங்களுக்குத்
தேவனாயிருக்கும்படி, உங்களை எகிப்துதேசத்
திலிருந்து புறப்படப்பண்ணின உங்கள் தேவ
னாகிய கர்த்தர் நானே.
39 உன் சகோதரன் தரித்திரனாகி, [6]உனக்கு
விலைப்பட்டுப்போனால், அவனை அடிமை
யைப்போல ஊழியஞ்செய்ய நெருக்கவேண்
40 டாம். அவன் [7]கூலிக்காரனைப்போலவும் தங்
கவந்தவனைப்போலவும் உன்னோடே இருந்து,
யூபிலி வருஷம்மட்டும் உன்னிடத்தில் சே
41 விக்கக்கடவன். பின்பு, தன் பிள்ளைகளோ
டுங்கூட உன்னை விட்டு நீங்கலாகி, தன் குடும்
பத்தாரிடத்துக்கும் தன் பிதாக்களின் காணி
42 யாட்சிக்கும் திரும்பிப்போகக்கடவன். அவர்
கள் நான் எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்
பண்ணின என்னுடைய [8]ஊழியக்காரர்;
ஆகையால், அவர்கள் அடிமைகளாக விற்கப்
43 படலாகாது. நீ அவனைக் [9]கொடூரமாய் ஆளா

1 எண். 35. 2. யோசு. 21. 1. ழ
2 அப். 4. 36, 37
3 உபா. 15. 7. சங். 37. 26. நீதி. 14. 31. லூ. 6. 35. அப். 11. 29. ரோ. 12. 10. 1 யோ. 3. 17
4 எபி. 13. 2
5 உபா. 23. 19. சங். 15. 5. நீதி. 28. 8. எசே. 18. 8
6 யாத். 21. 2. நெகே. 5. 5, 6
7 யாத். 21. 2, 3
8 ரோ. 6. 22. 1 கொ. 7. 23
9 எபே. 6. 9. கொலோ. 4. 1. மல். 3. 5
10 ஏசா. 56. 3, 6
11 ஏசா. 14. 2
12 நெகே. 5. 5, 8
13 யோபு 7. 1. ஏசா. 16. 14
14 யாத். 21. 2, 3

மல், உன் தேவனுக்குப் பயந்திரு. உனக்கு 44
இருக்கும் ஆண் அடிமையும் பெண் அடிமை
யும் சுற்றிலும் இருக்கிற புறஜாதிகளாயிருக்க
வேண்டும்; அவர்களில் நீ ஆண் அடிமையை
யும் பெண் அடிமையையும் விலைக்கு வாங்க
லாம். உங்களிடத்திலே பரதேசிகளாய்த் தங் 45
குகிற [10]அந்நிய புத்திரரிலும், உங்கள் தேசத்
தில் உங்களிடத்திலே பிறந்திருக்கிற அவர்
களுடைய குடும்பத்தாரிலும் நீங்கள் உங்க
ளுக்கு அடிமைகளைக்கொண்டு, அவர்களை
உங்களுக்குச் சுதந்தரமாக்கலாம். அவர்களை 46
உங்களுக்குப் பின்வரும் உங்கள் சந்ததியா
ரும் சுதந்தரிக்கும்படி நீங்கள் அவர்களைச்
[11]சுதந்தரமாக்கிக்கொள்ளலாம்; என்றைக்கும்
அவர்கள் உங்களுக்கு அடிமைகளாயிருக்க
லாம்; உங்கள் சகோதரராகிய இஸ்ரவேல்
புத்திரரோ ஒருவரையொருவர் கொடூரமாக
ஆளக்கூடாது.
உன்னிடத்தில் இருக்கிற பரதேசியும் அந் 47
நியனும் செல்வனாயிருக்க, அவனிடத்தில்
இருக்கிற உன் சகோதரன் தரித்திரப்பட்டு,
அந்தப் பரதேசிக்காவது, அந்நியனுக்காவது,
பரதேசியின் குடும்பத்தாரில் எவனுக்காவது
அவன் [12]விலைப்பட்டுப்போனால், அவன் 48
விலைப்பட்டுப்போனபின் திரும்ப மீட்கப்பட
லாம்; அவன் சகோதரரில் ஒருவன் அவனை
மீட்கலாம். அவனுடைய பிதாவின் சகோத 49
ரனாவது, அந்தச் சகோதரனுடைய புத்திரனா
வது, அவன் குடும்பத்திலுள்ள அவனைச்
சேர்ந்த இனத்தாரில் எவனாவது அவனை மீட்
கலாம்; தன்னால் கூடுமானால், தன்னைத்தானே
மீட்டுக்கொள்ளலாம். அவன் தான் விலைப் 50
பட்ட வருஷந்தொடங்கி, யூபிலி வருஷம்
வரைக்கும் உண்டான காலத்தைத் தன்னை
விலைக்குக் கொண்டவனுடன் கணக்குப்
பார்க்கக்கடவன்; அவனுடைய விலைக்கிரயம்
[13]கூலிக்காரனுடைய காலக்கணக்குப்போல,
வருஷத்தொகைக்கு ஒத்துப்பார்க்கவேண்டும்.
இன்னும் அநேக வருஷங்கள் இருந்தால், 51
அவன் தன் விலைக்கிரயத்திலே அவைகளுக்
குத் தக்கதைத் தன்னை மீட்கும்பொருளாகத்
திரும்பக் கொடுக்கக்கடவன். யூபிலி வருஷம் 52
மட்டும் மீதியாயிருக்கிற வருஷங்கள் கொஞ்
சமேயானால், அவனோடே கணக்குப் பார்த்து,
தன் வருஷங்களுக்குத் தக்கதை, தன்னை மீட்
கும்பொருளாகத் திரும்பக் கொடுக்கவேண்
டும். இவன் வருஷத்திற்கு வருஷம் கூலி 53
பொருந்திக்கொண்ட கூலிக்காரனைப்போல,
அவனிடத்தில் இருக்கவேண்டும்; அவன்
இவனை உனக்கு முன்பாகக் கொடூரமாய்
ஆளக்கூடாது. இப்படி இவன் [14]மீட்டுக்கொள் 54
ளப்படாதிருந்தால், இவனும் இவனோடே
கூட இவன் பிள்ளைகளும் யூபிலி வருஷத்தில்
விடுதலையாவார்கள். இஸ்ரவேல் புத்திரர் என் 55
ஊழியக்காரர்; அவர்கள் நான் எகிப்துதேசத்தி
லிருந்து புறப்படப்பண்ணின என் ஊழியக்
காரரே; நான் உங்கள் தேவனாகிய கர்த்தர்.

**26** நீங்கள் உங்களுக்கு [1]விக்கிரகங்களையும்
சுரூபங்களையும் உண்டாக்காமலும், உங்களுக்
குச் சிலையை நிறுத்தாமலும், சித்திரந்தீர்ந்த
கல்லை நமஸ்கரிக்கும்பொருட்டு உங்கள் தே
சத்தில் வைக்காமலும் இருப்பீர்களாக; நான்
2 உங்கள் தேவனாகிய **கர்த்தர்**. என் ஓய்வுநாட்
களை ஆசரித்து, என் பரிசுத்த ஸ்தலத்தைக்
குறித்துப் பயபக்தியாயிருப்பீர்களாக; நான்
**கர்த்தர்**.
3 நீங்கள் என் கட்டளைகளின்படி நடந்து,
என் கற்பனைகளைக் கைக்கொண்டு, அவைக
4 ளின்படி செய்தால், நான் ஏற்ற காலத்தில்
உங்களுக்கு [2]மழை பெய்யப்பண்ணுவேன்;
பூமி தன் பலனையும், வெளியிலுள்ள மரங்கள்
5 தங்கள் கனியையும் கொடுக்கும். திராட்சப்
பழம் பறிக்குங்காலம்வரைக்கும் போரடிப்புக்
காலம் இருக்கும்; விதைப்புக்காலம்வரைக்கும்
திராட்சப்பழம் பறிக்குங்காலம் இருக்கும்;
நீங்கள் உங்கள் [3]அப்பத்தைத் திருப்தியாகச்
சாப்பிட்டு, உங்கள் தேசத்தில் [4]சுகமாய்க் குடி
6 யிருப்பீர்கள். தேசத்தில் [5]சமாதானம் கட்
டளையிடுவேன்; தத்தளிக்கப்பண்ணுவார் இல்
லாமல் படுத்துக்கொள்வீர்கள்; [6]துஷ்ட மிரு
கங்களைத் தேசத்தில் இராதபடிக்கு ஒழியப்
பண்ணுவேன்; [7]பட்டயம் உங்கள் தேசத்தில்
7 உலாவுவதில்லை. உங்கள் சத்துருக்களைத் துரத்
துவீர்கள்; அவர்கள் உங்கள் முன்பாகப் பட்
8 டயத்தால் விழுவார்கள். உங்களில் [8]ஐந்து
பேர் நூறுபேரைத் துரத்துவார்கள்; உங்களில்
நூறுபேர் பதினாயிரம்பேரைத் துரத்துவார்கள்;
உங்கள் சத்துருக்கள் உங்களுக்கு முன்பாகப்
9 பட்டயத்தால் விழுவார்கள். நான் உங்கள்
மேல் [9]கண்ணோக்கமாயிருந்து, உங்களைப்
பலுகவும் [10]பெருகவும்பண்ணி, உங்களோடே
என் உடன்படிக்கையைத் திடப்படுத்துவேன்.
10 போன வருஷத்துப் பழைய தானியத்தைச்
சாப்பிட்டு, புதிய தானியத்துக்கு இடமுண்
11 டாகும்படி, பழையதை விலக்குவீர்கள். உங்
கள் நடுவில் என் [11]வாசஸ்தலத்தை ஸ்தாபிப்
பேன்; என் ஆத்துமா உங்களை அரோசிப்ப
12 தில்லை. நான் உங்கள் நடுவிலே [12]உலாவி,
உங்கள் தேவனாயிருப்பேன், [13]நீங்கள் என்
13 ஜனமாயிருப்பீர்கள். நீங்கள் எகிப்தியருக்கு
அடிமைகளாயிராதபடிக்கு, நான் அவர்கள் தே
சத்திலிருந்து, உங்களைப் புறப்படப்பண்ணி,
உங்கள் நுகத்தடிகளை [14]முறித்து, உங்களை
நிமிர்ந்து நடக்கப்பண்ணின உங்கள் தேவனா
கிய **கர்த்தர்**.
14 நீங்கள் எனக்குச் செவிகொடாமலும், [15]இந்
தக் கற்பனைகள் எல்லாவற்றின்படி செய்யா
15 மலும், என் கட்டளைகளை வெறுத்து, உங்கள்
ஆத்துமா என் நியாயங்களை அரோசித்து,
என் கற்பனைகள் எல்லாவற்றின்படியும் செய்
யாதபடிக்கு, [16]என் உடன்படிக்கையை நீங்
16 கள் மீறிப்போடுவீர்களாகில்: நான் உங்களுக்
குச் செய்வது என்னவென்றால், கண்களைப்
பூத்துப்போகப் பண்ணுகிறதற்கும், இருதயத்
தைத் துயரப்படுத்துகிறதற்கும், திகிலையும்
ஈளையையும் காய்ச்சலையும் உங்களுக்கு வரப்
பண்ணுவேன்; [17]நீங்கள் விதைக்கும் விதை
விருதாவாயிருக்கும்; உங்கள் சத்துருக்கள்
அதின் பலனைத் தின்பார்கள். நான் உங்க 17
ளுக்கு விரோதமாக என் முகத்தைத் திருப்பு
வேன்; உங்கள் சத்துருக்களுக்கு முன்பாக
முறிய [18]அடிக்கப்படுவீர்கள்; உங்கள் பகைஞர்
உங்களை ஆளுவார்கள்; துரத்துவார் இல்லா
திருந்தும் [19]ஓடுவீர்கள். இவ்விதமாய் நான் 18
உங்களுக்குச்செய்தும்,இன்னும்நீங்கள் எனக்
குச் செவிகொடாதிருந்தால், உங்கள் பாவங்
களினிமித்தம் பின்னும் [20]ஏழத்தனையாக
உங்களைத் தண்டித்து, உங்கள் வல்லமையின் 19
[21]பெருமையை முறித்து, [22]உங்கள் வானத்தை
இரும்பைப்போலவும்,உங்கள் பூமியை வெண்
கலத்தைப்போலவும் ஆக்குவேன். உங்கள் 20
பெலன் விருதாவிலே செலவழியும்; [23]உங்கள்
தேசம் தன் பலனையும், தேசத்தின் மரங்கள்
தங்கள் கனிகளையும் கொடுக்கமாட்டாது. நீங் 21
கள் எனக்குச் செவிகொடுக்க மனதில்லாமல்,
எனக்கு எதிர்த்து நடப்பீர்களானால், நான்
உங்கள் பாவங்களுக்குத்தக்கதாக இன்னும்
ஏழத்தனை வாதையை உங்கள்மேல் வரப்
பண்ணி, உங்களுக்குள்ளே வெளியின் 22
[24]துஷ்டமிருகங்களை வரவிடுவேன்; அவைகள்
உங்களைப் பிள்ளைகளற்றவர்களாக்கி, உங்கள்
மிருகஜீவன்களை அழித்து, உங்களைக் குறை
ந்துபோகப்பண்ணும்; உங்கள் வழிகள் பாழா
ய்க்கிடக்கும். நான் செய்யும் தண்டனையினால் 23
[25]நீங்கள் குணப்படாமல், எனக்கு எதிர்த்து
நடந்தால், நான் உங்களுக்கு எதிர்த்து நடந்து, 24
உங்கள் பாவங்களினிமித்தம் [26]ஏழத்தனையாக
வாதித்து, என் உடன்படிக்கையை மீறின 25
தற்குப் [27]பழிவாங்கும் பட்டயத்தை உங்கள்
மேல் வரப்பண்ணி, நீங்கள் உங்கள் பட்ட
ணங்களில் சேர்ந்தபின், [28]கொள்ளைநோயை
உங்கள் நடுவிலே அனுப்புவேன்; சத்துரு
வின் கையில் ஒப்புக்கொடுக்கப்படுவீர்கள். உங் 26
கள் அப்பம் என்னும் [29]ஆகாரக்கோலை நான்
முறித்துப்போடும்போது, பத்து ஸ்திரீகள்
ஒரே அடுப்பில் உங்கள் அப்பத்தைச் சுட்டு,
அதைத் திரும்ப உங்களுக்கு நிறுத்துக்கொ
டுப்பார்கள்; நீங்கள் சாப்பிட்டும் திருப்தி
யடையமாட்டீர்கள்.
இன்னும் இவைகளெல்லாவற்றாலும் நீங் 27
கள் எனக்குச் செவிகொடாமல், எனக்கு
எதிர்த்து நடந்தால், நானும் [30]உக்கிரத்தோடே 28
உங்களுக்கு எதிர்த்து நடந்து, நானே உங்கள்
பாவங்களினிமித்தம் உங்களை ஏழத்தனையாய்த்
தண்டிப்பேன். உங்கள் குமாரரின் [31]மாம் 29
சத்தையும் உங்கள் குமாரத்திகளின் மாம்சத்
தையும் புசிப்பீர்கள். நான் உங்கள் [32]மேடை 30
களை அழித்து, உங்கள் விக்கிரகச் சிலைகளை
நிர்த்தூளியாக்கி, உங்கள் உடல்களை உங்கள்
நரகலான தேவர்களுடைய உடல்கள்மேல்
எறிவேன்; என் ஆத்துமா [33]உங்களை அரோ

[1] யாத். 20. 4, 5. உபா. 16. 22. சங். 97. 7
[2] ஏசா. 30. 23. எசே. 34. 26. சங். 67. 6. 1 கொ. 7. 22, 23
[3] லேவி. 2. 19, 26
[4] யோபு 11. 19. எசே. 34. 25-28
[5] சங். 147. 14
[6] 2 இரா. 17. 25. எசே. 5. 17
[7] எசே. 14. 17
[8] உபா. 32. 30
[9] யாத். 2. 25
[10] நெகே. 9. 23
[11] சங். 76. 2. எசே. 37. 26-28. வெளி. 21. 3
[12] 2 கொ. 6. 16
[13] எசே. 11. 20
[14] எரே. 2. 20
[15] உபா. 28. 15
[16] எசே. 16. 59
[17] மீகா. 6. 15. நெகே. 9. 36, 37
[18] எரே. 19. 7
[19] நீதி. 2. 14
[20] 1 சாமு. 2. 5. நீதி. 24. 16
[21] ஏசா. 25. 11
[22] உபா. 28. 23
[23] சங். 127. 1. ஆகா. 1. 10
[24] 2 இரா. 17. 25. எசே. 5. 17
[25] எரே. 2. 30. ஆமோஸ். 4. 6-12
[26] சங். 18. 26. ஏசா. 63. 10
[27] உபா. 32. 35. எசே. 20. 37
[28] எரே. 24. 10
[29] சங். 105. 16. ஏசா. 3. 1; 9. 20. ஆகா. 1. 6
[30] ஏசா. 59. 18
[31] 2 இரா. 6. 29. புலம்பல் 4. 10
[32] எசே. 6. 3-13
[33] எரே. 14. 19

31 சிக்கும். நான் உங்கள் பட்டணங்களை [1]வெறு
மையும், உங்கள் பரிசுத்த ஸ்தலங்களைப் [2]பாழு
மாக்கி, உங்கள் சுகந்த வாசனையை முகரா
32 திருப்பேன். நான் தேசத்தைப் [3]பாழாக்கு
வேன்; அதிலே குடியிருக்கிற உங்கள் சத்
33 துருக்கள் பிரமிப்பார்கள். ஜாதிகளுக்குள்ளே
[4]உங்களைச் சிதற அடித்து, உங்கள் பின்னாகப்
பட்டயத்தை உருவுவேன்; உங்கள் தேசம்
பாழும், உங்கள் பட்டணங்கள் வனாந்தரமு
34 மாகும். நீங்கள் உங்கள் சத்துருக்களின்
தேசத்தில் இருக்கும்போது, தேசமானது
பாழாய்க்கிடக்கிற நாளெல்லாம் தன் [5]ஓய்வு
நாட்களை இரம்மியமாய் அநுபவிக்கும்; அப்
பொழுது தேசம் ஓய்வடைந்து, தன் ஓய்வு
35 நாட்களை இரம்மியமாய் அநுபவிக்கும். நீங்
கள் அதிலே குடியிருக்கும்போது, அது உங்
கள் ஓய்வு வருஷங்களில் ஓய்வடையாதபடியி
னாலே, அது பாழாய்க்கிடக்கும் நாளெல்லாம்
36 ஓய்வடைந்திருக்கும். உங்களில் உயிரோடு
மீதியாயிருப்பவர்களின் இருதயங்கள் தங்கள்
சத்துருக்களின் தேசங்களில் [6]மனத்தளர்ச்சி
அடையும்படி செய்வேன்; [7]அசைகிற இலை
யின் சத்தமும் அவர்களை ஓட்டும்; அவர்கள்
பட்டயத்திற்குத் தப்பி ஓடுகிறதுபோல ஓடி,
37 துரத்துவார் இல்லாமல் விழுவார்கள். துரத்
துவார் இல்லாமல், [8]பட்டயத்துக்கு முன்
விழுவதுபோல, ஒருவர்மேல் ஒருவர் இடறி
விழுவார்கள்; [9]உங்கள் சத்துருக்களுக்குமுன்
38 நிற்க உங்களுக்குப் பெலன் இராது. புறச்
சாதிகளுக்குள்ளே அழிந்துபோவீர்கள்; உங்
கள் சத்துருக்களின் தேசம் உங்களைப் பட்சிக்
39 கும். உங்களில் தப்பினவர்கள் தங்கள் அக்
கிரமங்களினிமித்தமும், தங்கள் பிதாக்களின்
அக்கிரமங்களினிமித்தமும், உங்கள் சத்துருக்
களின் தேசங்களில் [10]வாடிப்போவார்கள்.
40 அவர்கள் எனக்கு விரோதமாகத் துரோகம்
பண்ணி நடப்பித்த தங்கள் அக்கிரமத்தையும்,
தங்கள் பிதாக்களின் அக்கிரமத்தையும் [11]அறிக்
41 கையிடுகிறதுமன்றி, அவர்கள் எனக்கு எதிர்
த்து நடந்தபடியினால், நானும் அவர்களுக்கு
எதிர்த்து நடந்து, அவர்களுடைய சத்துருக்
களின் தேசத்திலே அவர்களைக் கொண்டு
போய்விட்டதையும் அறிக்கையிட்டு [12]விருத்த
சேதனமில்லாத தங்கள் இருதயத்தைத் தாழ்
த்தி, தங்கள் அக்கிரமத்துக்குக் கிடைத்த தண்
டனையை நியாயம் என்று ஒத்துக்கொண்
42 டால், நான் யாக்கோபோடே பண்ணின
என் [13]உடன்படிக்கையையும், ஈசாக்கோடே
பண்ணின என் உடன்படிக்கையையும், ஆபி
ரகாமோடே பண்ணின என் உடன்படிக்
கையையும் நினைப்பேன்; [14]தேசத்தையும்
நினைப்பேன்.
43 தேசம் அவர்களாலே விடப்பட்டு, பாழா
ய்க்கிடக்கிறதினாலே தன் ஓய்வுநாட்களை
இரம்மியமாய் அநுபவிக்கும்; அவர்கள் என்
நியாயங்களை [15]அவமதித்து, அவர்களுடைய
ஆத்துமா என் கட்டளைகளை வெறுத்தபடியி
னால் அடைந்த தங்களுடைய அக்கிரமத்தின்
தண்டனையை நியாயம் என்று ஒத்துக்கொள்
ளுவார்கள். அவர்கள் தங்கள் சத்துருக்களின் 44
தேசத்திலிருந்தாலும், நான் [16]அவர்களை நிர்
மூலமாக்கத்தக்கதாகவும், நான் அவர்களோ
டே பண்ணின என் உடன்படிக்கையை
அபத்தமாக்கத்தக்கதாகவும், நான் அவர்களைக்
கைவிடவும் வெறுக்கவுமாட்டேன்; நான்
அவர்கள் தேவனாகிய **கர்த்தர்**. அவர்களு 45
டைய தேவனாயிருக்கும்படிக்கு, நான் புற
ஜாதிகளின் கண்களுக்கு முன்பாக எகிப்து
தேசத்திலிருந்து அவர்களைப் புறப்படச்
செய்து, அவர்களுடைய [17]முன்னோர்களோ
டே நான் பண்ணின உடன்படிக்கையை
[18]அவர்கள் நிமித்தம் நினைவுகூருவேன்; நான்
**கர்த்தர்** என்று சொல் என்றார்.
**கர்த்தர்** தமக்கும் இஸ்ரவேல் சந்ததியாருக் 46
கும் நடுவே இருக்கும்படி [19]மோசேயைக்
கொண்டு, சீனாய்மலையின்மேல் கொடுத்த கட்
டளைகளும் நியாயங்களும் இவைகளே.

பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி: **27**
நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண் 2
டியது என்னவென்றால்: யாதாமொருவர்
[20]ஒரு விசேஷித்த பொருத்தனை பண்ணி
யிருந்தால், பொருத்தனை பண்ணப்பட்டவர்
கள் உன் மதிப்பின்படி **கர்த்தருக்கு** உரியவர்
கள். இருபது வயதுமுதல் அறுபது வய 3
துக்கு உட்பட்ட ஆண்பிள்ளையை நீ பரிசுத்த
ஸ்தலத்தின் சேக்கலாகிய [21]ஐம்பது வெள்
ளிச்சேக்கலாகவும், பெண்பிள்ளையை முப் 4
பது சேக்கலாகவும் மதிப்பாயாக. ஐந்து வயது 5
முதல் இருபது வயதுக்கு உட்பட்ட ஆண்
பிள்ளையை இருபது சேக்கலாகவும், பெண்
பிள்ளையைப் பத்துச் சேக்கலாகவும், ஒரு 6
மாதம்முதல் ஐந்து வயதுக்கு உட்பட்ட ஆண்
பிள்ளையை ஐந்து வெள்ளிச் சேக்கலாகவும்,
பெண்பிள்ளையை மூன்று வெள்ளிச் சேக்க
லாகவும், அறுபது வயதுதொடங்கி, அதற்கு 7
மேற்பட்ட வயதுள்ள ஆண்பிள்ளையைப் பதி
னைந்து சேக்கலாகவும், பெண்பிள்ளையைப்
பத்துச் சேக்கலாகவும் மதிக்கக்கடவாய். உன் 8
மதிப்பின்படி செலுத்தக்கூடாத தரித்திரனா
யிருந்தால், அவன் ஆசாரியனுக்கு முன்பாக
வந்து நிற்கக்கடவன்; ஆசாரியன் அவனை
மதிப்பானாக; பொருத்தனை பண்ணினவனு
டைய திராணிக்கேற்றபடி ஆசாரியன் அவனை
மதிக்கக்கடவன்.
ஒருவன் பொருத்தனை பண்ணினது **கர்த்த** 9
**ருக்குப்** பலியிடப்படத்தக்க மிருகஜீவனானால்
அவன் **கர்த்தருக்குக்** கொடுக்கிற அப்படிப்
பட்டதெல்லாம் பரிசுத்தமாயிருப்பதாக.
அதை மாற்றாமலும் வேறுபடுத்தாமலும் இருப் 10
பானாக; இளப்பமானதற்குப் பதிலாக நல
மானதையும், நலமானதற்குப் பதிலாக இளப்
பமானதையும் செலுத்தாமல் இருப்பானாக;
அவன் மிருகத்திற்குப் பதிலாக மிருகத்தை
மாற்றிக் கொடுப்பானாகில், அப்பொழுது அது

1 நெகே. 2. 3
2 மத். 24. 2
3 எரே. 25. 11, 18; 19. 8
4 சங். 44. 11. எரே. 9. 16
5 2 நாளா. 36. 21
6 எசே. 21. 7, 15
7 யோபு 15. 21. நீதி. 28. 1
8 எசா. 10. 4
9 எரே. 19. 7
10 புலம்பல் 4. 9. எசே. 4. 17
11 1 இரா. 8. 33. ழ. நெகே. 9. 2, ழ. நீதி. 28. 13. லூக். 15. 18. 1யோ. 1. 9
12 எரே. 9. 26. அப். 7. 51. ரோ. 2. 29
13 யாத். 2. 24. சங். 106. 45. எசே. 16. 60
14 யோவே. 2. 18
15 2 நாளா. 36. 16
16 சங். 94. 14 புலம்பல் 3. 20. ரோ. 11. 2
17 லூக். 1. 70, 72
18 ரோ. 11. 28
19 யோ. 1. 17
20 எண். 6. 2. நியா. 11. 30, ழ. 1 சாமு. 11. 1, 28
21 யாத். 30. 13

வும் அதற்குப் பதிலாகக் கொடுத்ததும் பரி
11 சுத்தமாயிருப்பதாக. அது **கர்த்தருக்குப்** பலி
யிடப்படத்தகாத சுத்தமல்லாத யாதொரு மிரு
கமானால், அதை ஆசாரியனுக்கு முன்பாக
12 நிறுத்தக்கடவன். ஆசாரியன் அது நல்லதா
னாலும் இளப்பமானதானாலும் அதை மதிப்பா
னாக; உன் மதிப்பின்படியே இருக்கக்கடவது.
13 அதை மீட்டுக்கொள்ள மனதாயிருந்தானாகில்,
உன் மதிப்போடே ஐந்தில் ஒரு பங்கைக்
கூட்டிக் கொடுக்கக்கடவன்.
14 ஒருவன் தன் வீட்டைக் **கர்த்தருக்குப்** பரி
சுத்தம் என்று நேர்ந்துகொண்டால், ஆசாரி
யன் அதின் நலத்துக்கும் இளப்பத்துக்கும்
தக்கதாக அதை மதிக்கக்கடவன்; ஆசாரியன்
15 மதிக்கிறபடி அது இருக்கக்கடவது. தன்
வீட்டைப் பரிசுத்தம் என்று நேர்ந்துகொண்
டவன் அதை மீட்டுக்கொள்ள மனதாயிருந்
தால், நீ மதிக்கும் திரவியத்தோடே ஐந்தில்
ஒரு பங்கைக் கூட்டிக் கொடுக்கக்கடவன்;
அப்பொழுது அது அவனுடையதாகும்.
16 ஒருவன் தன் காணியாட்சியான வயலில்
யாதொரு பங்கைக் **கர்த்தருக்குப்** பரிசுத்தம்
என்று நேர்ந்துகொண்டால், உன் மதிப்பு
அதின் விதைப்புக்குத் தக்கதாய் இருக்கவே
ண்டும்; ஒருகலம் வாற்கோதுமை விதைக்கிற
வயல் ஐம்பது வெள்ளிச்சேக்கலாக மதிக்கப்
17 படவேண்டும். யூபிலி வருஷமுதல் அவன்
தன் வயலைப் பரிசுத்தம் என்று நேர்ந்துகொ
ண்டால், அது உன் மதிப்பின்படி இருக்க
18 வேண்டும். யூபிலி வருஷத்துக்குப் பின் தன்
வயலைப் பரிசுத்தம் என்று நேர்ந்துகொண்டா
னானால், யூபிலி வருஷம்மட்டும்முள்ள மற்ற
வருஷங்களின்படியே ஆசாரியன் திரவியத்
தைக் கணக்குப்பார்த்து, அதற்குத் தக்கது
19 உன் மதிப்பிலே தள்ளப்படவேண்டும். வய
லைப் பரிசுத்தம் என்று நேர்ந்துகொண்டவன்
அதை மீட்டுக்கொள்ள மனதாயிருந்தால், உன்
மதிப்பான திரவியத்தோடே ஐந்தில் ஒரு பங்
கைக் கூட்டிக் கொடுக்கக்கடவன்; அப்பொ
20 ழுது அது அவனுக்கு உறுதியாகும். அவன்
வயலை மீட்டுக்கொள்ளாமல், வயலை வேறொ
ருவனுக்கு விற்றுப்போட்டால், அது திரும்ப
21 மீட்கப்படாமல், யூபிலி வருஷத்தில் மீட்
கப்படும்போது, சாபத்தீடான வயலாகக் **கர்த்**
**தருக்கென்று** நியமிக்கப்பட்டதாயிருக்கக்கட
வது; [1]அது ஆசாரியனுக்குக் காணியாட்சியா
22 கும். ஒருவன் தனக்குக் காணியாட்சி வய
லாயிராமல் தான் விலைக்கு வாங்கின ஒரு வய
லைக் **கர்த்தருக்குப்** பரிசுத்தம் என்று நேர்ந்து
கொண்டால், அது யூபிலி வருஷம்மட்டும், 23
உன் மதிப்பின்படி பெறும் விலை இன்ன
தென்று ஆசாரியன் அவனோடே கணக்குப்
பார்த்து, அந்த உன் மதிப்பை, **கர்த்தருக்குப்**
பரிசுத்தமாயிருக்கும்படி, அவன் அந்நாளிலே
கொடுக்கக்கடவன். யார் கையிலே அந்த 24
வயலைக் கொண்டானோ, அந்தக் காணி
யாட்சிக்காரன் வசமாய் அது யூபிலி வரு
ஷத்தில் திரும்பச் சேரும். உன் மதிப் 25
பெல்லாம் பரிசுத்த ஸ்தலத்துச் சேக்கல்
கணக்காயிருக்கக்கடவது; ஒரு சேக்கலானது
இருபது கேரா.
தலையீற்றானவைகள் [2]**கர்த்தருடையது**, 26
ஆகையால் ஒருவரும் தலையீற்றாகிய மிருகஜீ
வனைப் பரிசுத்தம் என்று நேர்ந்துகொள்ளலா
காது; அது மாடானாலும் ஆடானாலும் **கர்த்த**
**ருடையது**. சுத்தமல்லாத மிருகத்தினுடைய 27
தலையீற்றானால், அதை அவன் உன் மதிப்
பின்படி மீட்டுக்கொண்டு, அதனுடனே ஐந்
தில் ஒருபங்கைக் கூட்டிக் கொடுக்கக்கடவன்;
மீட்கப்படாமலிருந்தால், உன் மதிப்பின்படி
அது விற்கப்படக்கடவது.
ஒருவன் தன் வசத்திலுள்ள நரஜீவனிலா 28
வது, மிருகஜீவனிலாவது, காணியாட்சி நில
த்திலாவது, எதையாகிலும் **கர்த்தருக்கென்று**
சாபத்தீடாக நேர்ந்துகொண்டால், அது விற்
கப்படவும் மீட்கப்படவும் கூடாது; [3]நேர்ந்து
கொள்ளப்பட்டவைகளெல்லாம் **கர்த்தருக்கா**
**கப்** பரிசுத்தமாயிருக்கும். நரஜீவனில் [4]சாபத் 29
தீடாக நியமிக்கப்பட்டவைகளெல்லாம் மீட்
கப்படாமல் கொலைசெய்யப்படக்கடவது.
தேசத்திலே நிலத்தின் வித்திலும், விருட் 30
சங்களின் கனியிலும், [5]தசமபாகம் எல்லாம்
**கர்த்தருக்கு** உரியது; அது **கர்த்தருக்குப்** பரி
சுத்தமானது. ஒருவன் தன் தசமபாகத்திலே 31
எவ்வளவாவது மீட்டுக்கொள்ள மனதாயிருந்
தானானால், அதனுடன் ஐந்தில் ஒரு பங்கைக்
கூட்டிக் கொடுக்கக்கடவன். கோலின் கீழ்ப் 32
பட்ட [6]ஆடுமாடுகளிலே பத்தில் ஒரு பங்காகி
றதெல்லாம் **கர்த்தருக்குப்** பரிசுத்தமானது.
அது நல்லதோ இளப்பமானதோ என்று 33
அவன் பார்க்கவேண்டாம்; அதை மாற்றவும்
வேண்டாம்; மாற்றினால், அதுவும் அதற்குப்
பதிலாகக் கொடுக்கப்பட்டதுமாகிய இரண்
டும் பரிசுத்தமாகும்; அது மீட்கப்படக்கூடா
தென்று அவர்களோடே சொல் என்றார்.
இஸ்ரவேல் புத்திரருக்குச் சொல்லும்படி 34
**கர்த்தர்** [7]சீனாய்மலையில் மோசேக்கு விதித்த
கட்டளைகள் இவைகளே.

1 எண். 18. 14. எசே. 44. 29
2 யாத். 13. 2, 12. 22. 30. எண். 18. 17. உபா. 15. 19
3 யோசு. 6. 19
4 எண். 21. 2, 3
5 ஆதி. 28. 22. எண். 18. 21, 24. 2 நாளா. 31. 5, 6, 12. நெகே. 13. 12. மல். 3. 8, 10
6 எரே. 33. 13. எசே. 20. 37. மீகா 7. 14
7 யாத். 19. 2, 3, 25

# THE BOOK OF NUMBERS

# எண்ணாகமம்

1 இஸ்ரவேலர் எகிப்துதேசத்திலிருந்து புறப்
பட்ட இரண்டாம் வருஷம் இரண்டாம் மா
தம் முதல் தேதியில், **கர்த்தர்** சீனாய் [1]வனாந்
தரத்திலிருக்கிற ஆசரிப்புக் கூடாரத்திலே
2 மோசேயை நோக்கி: நீங்கள் இஸ்ரவேல்
புத்திரரின் முழுச்சபையாயிருக்கிற அவர்கள்
பிதாக்களுடைய வீட்டு வம்சங்களிலுள்ள புரு
ஷர்களாகிய சகல தலைகளையும் பேர்பேராக
3 [2]எண்ணித் தொகையேற்றுங்கள். இஸ்ரவே
லிலே இருபது வயதுள்ளவர்கள் முதல் யுத்
தத்துக்குப் புறப்படத்தக்கவர்கள் எல்லாரை
யும் அவர்கள் சேனைகளின்படி நீயும் ஆரோ
4 னும் எண்ணிப் பார்ப்பீர்களாக. ஒவ்வொரு
கோத்திரத்துக்கு ஒவ்வொரு மனிதன் உங்
களோடே இருப்பானாக; அவன் தன் பிதாக்
களின் வம்சத்துக்குத் தலைவனாயிருக்கவேண்
5 டும். உங்களோடே நிற்கவேண்டிய மனித
ருடைய நாமங்களாவன: ரூபன் கோத்திரத்
6 தில் சேதேயூருடைய குமாரன் எலிசூர். சிமி
யோன் கோத்திரத்தில் சூரிஷதாயின் குமா
7 ரன் செலூமியேல். யூதா கோத்திரத்தில்
8 அம்மினதாபின் குமாரன் நகசோன். இசக்
கார் கோத்திரத்தில் சூவாரின் குமாரன் நெத
9 னெயேல். செபுலோன் கோத்திரத்தில்
10 ஏலோனின் குமாரன் எலியாப். யோசேப்
பின் குமாரராகிய எப்பிராயீம் கோத்திரத்தில்
அம்மியூதின் குமாரன் எலிஷாமா; மனாசே
கோத்திரத்தில் பெதாசூரின் குமாரன் கமா
11 லியேல். பென்யமீன் கோத்திரத்தில் கீதெ
12 யோனின் குமாரன் அபீதான். தாண் கோத்
திரத்தில் அம்மிஷதாயின் குமாரன் அகியே
13 சேர். ஆசேர் கோத்திரத்தில் ஓகிரானின்
14 குமாரன் பாகியேல். காத் கோத்திரத்தில்
15 தேகுவேலின் குமாரன் எலியாசாப். நப்தலி
கோத்திரத்தில் ஏனானின் குமாரன் அகீரா.
16 இவர்களே சபையில் ஏற்படுத்தப்பட்டவர்க
ளும், தங்கள் தங்கள் பிதாக்களுடைய கோத்
திரங்களில் பிரபுக்களும், இஸ்ரவேலில் ஆயி
ரவர்களுக்குத் [3]தலைவருமாயிருப்பவர்கள் என்
17 னார். அப்படியே மோசேயும் ஆரோனும்
பேர்பேராகக் [4]குறிக்கப்பட்ட இந்த மனித
18 ரைக் கூட்டிக்கொண்டு, இரண்டாம் மாதம்
முதல் தேதியில் சபையார் எல்லாரையும் கூடி

[1] யாத். 19. 1; 25. 22
[2] யாத். 30. 12. 2 சாமு. 24. 2. 1 நாளா. 21. 2
[3] யாத். 18. 21, 25
[4] ஏசா. 48. 1. யோ. 10. 3

வரச்செய்தார்கள். அப்பொழுது அவர்கள்
தங்கள் தங்கள் குடும்பத்தின்படிக்கும், பிதாக்
களுடைய வம்சத்தின்படிக்கும், நாமத்தொ
கையின்படிக்கும், இருபது வயதுள்ளவர்கள்
முதல் தலைதலையாகத் தங்கள் வம்ச உற்பத்தி
யைத் தெரிவித்தார்கள். இப்படிக் **கர்த்தர்** 19
கட்டளையிட்டபடியே, மோசே அவர்களைச்
சீனாய் வனாந்தரத்தில் எண்ணிப்பார்த்தான்.
இஸ்ரவேலின் மூத்த குமாரனாகிய ரூபன் 20
புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சத்
தாரில் இருபது வயதுள்ளவர்கள் முதல் யுத்
தத்திற்குப் புறப்படத்தக்க புருஷர்கள் எல்லா
ரும் தலைதலையாக எண்ணப்பட்டபோது,
ரூபன் கோத்திரத்தில் எண்ணப்பட்டவர்கள், 21
நாற்பத்தாறாயிரத்து ஐந்நூறுபேர்.
சிமியோன் புத்திரருடைய பிதாக்களின் 22
வீட்டு வம்சத்தாரில் இருபது வயதுள்ளவர்
கள் முதல் யுத்தத்திற்குப் புறப்படத்தக்க புரு
ஷர்கள் எல்லாரும் தலைதலையாக எண்ணப்
பட்டபோது, சிமியோன் கோத்திரத்தில் 23
எண்ணப்பட்டவர்கள், ஐம்பத்தொன்பதினாயி
ரத்து முந்நூறுபேர்.
காத் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு 24
வம்சத்தாரில் இருபது வயதுள்ளவர்கள் முதல்
யுத்தத்திற்குப் புறப்படத்தக்க புருஷர்கள்
எல்லாரும் எண்ணப்பட்டபோது, காத் கோத் 25
திரத்தில் எண்ணப்பட்டவர்கள், நாற்பத்தை
யாயிரத்து அறுநூற்று ஐம்பதுபேர்.
யூதா புத்திரருடைய பிதாக்களின் வீட்டு 26
வம்சத்தாரில் இருபது வயதுள்ளவர்கள் முதல்
யுத்தத்திற்குப் புறப்படத்தக்க புருஷர்கள் எல்
லாரும் எண்ணப்பட்டபோது, யூதா கோத் 27
திரத்தில் எண்ணப்பட்டவர்கள், எழுபத்து
நாலாயிரத்து அறுநூறுபேர்.
இசக்கார் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு 28
வம்சத்தாரில் இருபது வயதுள்ளவர்கள் முதல்
யுத்தத்திற்குப் புறப்படத்தக்க புருஷர்கள் எல்
லாரும் எண்ணப்பட்டபோது, இசக்கார் கோ 29
த்திரத்தில் எண்ணப்பட்டவர்கள், ஐம்பத்து
நாலாயிரத்து நானூறுபேர்.
செபுலோன் புத்திரருடைய பிதாக்களின் 30
வீட்டு வம்சத்தாரில் இருபது வயதுள்ளவர்
கள் முதல் யுத்தத்திற்குப் புறப்படத்தக்க புரு

ஷர்கள் எல்லாரும் எண்ணப்பட்டபோது,
31 செபுலோன் கோத்திரத்தில் எண்ணப்பட்ட
வர்கள், ஐம்பத்தேழாயிரத்து நானூறுபேர்.
32 யோசேப்பின் குமாரரில் எப்பிராயீம் புத்
திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சத்தாரில்
இருபது வயதுள்ளவர்கள் முதல் யுத்தத்திற்
குப் புறப்படத்தக்க புருஷர்கள் எல்லாரும்
33 எண்ணப்பட்டபோது, எப்பிராயீம் கோத்தி
ரத்தில் எண்ணப்பட்டவர்கள், நாற்பதினாயி
ரத்து ஐந்நூறுபேர்.
34 மனாசே புத்திரருடைய பிதாக்களின் வீட்டு
வம்சத்தாரில் இருபது வயதுள்ளவர்கள் முதல்
யுத்தத்திற்குப் புறப்படத்தக்க புருஷர்கள் எல்
35 லாரும் எண்ணப்பட்டபோது, மனாசே கோத்
திரத்தில் எண்ணப்பட்டவர்கள், முப்பத்திரா
யிரத்து இருநூறுபேர்.
36 பென்யமீன் புத்திரருடைய பிதாக்களின்
வீட்டு வம்சத்தாரில் இருபது வயதுள்ளவர்கள்
முதல் யுத்தத்திற்குப் புறப்படத்தக்க புருஷர்
37 கள் எல்லாரும் எண்ணப்பட்டபோது, பென்
யமீன் கோத்திரத்தில் எண்ணப்பட்டவர்கள்,
முப்பத்தையாயிரத்து நானூறுபேர்.
38 தாண் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு
வம்சத்தாரில் இருபது வயதுள்ளவர்கள் முதல்
யுத்தத்திற்குப் புறப்படத்தக்க புருஷர்கள் எல்
39 லாரும் எண்ணப்பட்டபோது, தாண் கோத்
திரத்தில் எண்ணப்பட்டவர்கள், அறுபத்திரா
யிரத்து எழுநூறுபேர்.
40 ஆசேர் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு
வம்சத்தாரில் இருபது வயதுள்ளவர்கள் முதல்
யுத்தத்திற்குப் புறப்படத்தக்க புருஷர்கள் எல்
41 லாரும் எண்ணப்பட்டபோது, ஆசேர் கோத்
திரத்தில் எண்ணப்பட்டவர்கள், நாற்பத்தோ
ராயிரத்து ஐந்நூறுபேர்.
42 நப்தலி புத்திரருடைய பிதாக்களின் வீட்டு
வம்சத்தாரில் இருபது வயதுள்ளவர்கள் முதல்
யுத்தத்திற்குப் புறப்படத்தக்க புருஷர்கள் எல்
43 லாரும் எண்ணப்பட்டபோது, நப்தலி கோத்
திரத்தில் எண்ணப்பட்டவர்கள், ஐம்பத்து
மூவாயிரத்து நானூறுபேர்.
44 எண்ணப்பட்டவர்கள் இவர்களே; மோசே
யும் ஆரோனும் இஸ்ரவேலுடைய பிதாக்க
ளின் வம்சத்தில் ஒவ்வொரு வம்சத்துக்கு ஒவ்
வொரு பிரபுவாகிய பன்னிரண்டுபேரும் எண்
45 ணினார்கள். இஸ்ரவேல் புத்திரருடைய பிதா
க்களின் வம்சத்தில் இருபது வயதுள்ளவர்
கள் முதல், இஸ்ரவேலில் யுத்தத்திற்குப் புறப்
படத்தக்கவர்களாகிய [1]எண்ணப்பட்ட பேர்
46 கள் எல்லாரும், ஆறுலட்சத்து மூவாயிரத்து
ஐந்நூற்று ஐம்பதுபேராயிருந்தார்கள்.
47 லேவியர் தங்கள் பிதாக்களுடைய கோத்தி
ரத்தின்படியே, மற்றவர்களுடனே எண்ணப்
48 படவில்லை. கர்த்தர் மோசேயை நோக்கி:
49 நீ லேவி கோத்திரத்தாரைமாத்திரம் எண்ணா
மலும், இஸ்ரவேல் புத்திரருக்குள்ளே அவர்
50 கள் தொகையை ஏற்றாமலும், லேவியரைச்
சாட்சியின் வாசஸ்தலத்திற்கும், [2]அதினுடைய
சகல பணிமுட்டுகளுக்கும், அதிலுள்ள சமஸ்த
பொருள்களுக்கும் விசாரிப்புக்காரராக ஏற்ப
டுத்து; அவர்கள் வாசஸ்தலத்தையும் அதின்
சகல பணிமுட்டுகளையும் சுமப்பார்களாக;
அதினிடத்தில் ஊழியஞ்செய்து, வாசஸ்தலத்
தைச் சுற்றிலும் பாளயமிறங்கக்கடவர்கள்.
வாசஸ்தலம் புறப்படும்போது, லேவியர் அதை 51
இறக்கிவைத்து, அது ஸ்தாபனம் பண்ணப்
படும்போது, லேவியர் அதை எடுத்து நிறுத்
தக்கடவர்கள்; அந்நியன் அதற்குச் சமீபத்தில்
வந்தால் கொலைசெய்யப்படக்கடவன். இஸ் 52
ரவேல் புத்திரர் தங்கள் தங்கள் பாளயத்தோ
டும், தங்கள் தங்கள் சேனையின் கொடியோ
டும் கூடாரம் போடக்கடவர்கள். இஸ்ரவேல் 53
புத்திரராகிய சபையின்மேல் [3]கடுங்கோபம்
வராதபடிக்கு லேவியர் சாட்சியின் வாசஸ்த
லத்தைச் சுற்றிலும் பாளயமிறங்கி, லேவியர்
சாட்சியின் வாசஸ்தலத்தைக் காவல் காப்பார்
களாக என்றார். கர்த்தர் மோசேக்குக் கட்ட 54
ளையிட்டபடி எல்லாவற்றையும் இஸ்ரவேல்
புத்திரர் செய்தார்கள்.

கர்த்தர் மோசேயையும் ஆரோனையும் நோ 2
க்கி: இஸ்ரவேல் புத்திரர் அவரவர் தங்கள் 2
தங்கள் பிதாக்களுடைய வம்சத்தின் விருதா
கிய தங்கள் தங்கள் கொடியண்டையிலே தங்
கள் கூடாரங்களைப் போட்டு, [4]ஆசரிப்புக்
கூடாரத்திற்கு எதிராகச் சுற்றிலும் பாளய
மிறங்கக்கடவர்கள். யூதாவின் பாளயத்துக் 3
கொடியையுடைய சேனைகள் சூரியன் உதிக்
கும் கீழ்ப்புறத்திலே பாளயமிறங்கவேண்டும்;
அம்மினதாபின் குமாரனாகிய நகசோன் யூதா
சந்ததிக்குச் சேனாபதியா யிருக்கக்கடவன்.
எண்ணப்பட்ட அவனுடைய சேனை எழு 4
பத்து நாலாயிரத்து அறுநூறுபேர். அவன் 5
அருகே இசக்கார் கோத்திரத்தார் பாளயமிறங்
கவேண்டும்; சூவாரின் குமாரன் நெதனெ
யேல் இசக்கார் சந்ததிக்குச் சேனாபதியாயி
ருக்கக்கடவன். எண்ணப்பட்ட அவனுடைய 6
சேனை ஐம்பத்துநாலாயிரத்து நானூறுபேர்.
அவன் அருகே செபுலோன் கோத்திரத்தார் 7
பாளயமிறங்கவேண்டும்; ஏலோனின் குமார
னாகிய எலியாப் செபுலோன் சந்ததிக்குச்
சேனாபதியாயிருக்கக்கடவன். அவனுடைய 8
சேனையில் எண்ணப்பட்டவர்கள் ஐம்பத்தே
ழாயிரத்து நானூறுபேர். எண்ணப்பட்ட 9
யூதாவின் பாளயத்தார் எல்லாரும் தங்கள் சே
னைகளின்படியே இலட்சத்து எண்பத்து ஆறா
யிரத்து நானூறுபேர்; இவர்கள் பிரயாணத்
திலே [5]முதற்பாளயமாய்ப் போகக்கடவர்கள்.
ரூபனுடைய பாளயத்துக் கொடியையு 10
டைய சேனைகள் தென்புறத்தில் பாளயமி
றங்கவேண்டும், சேதேயூரின் குமாரனாகிய
எலிசூர் ரூபன் சந்ததியாருக்குச் சேனாபதியா
யிருக்கக்கடவன். அவனுடைய சேனையில் 11
எண்ணப்பட்டவர்கள் நாற்பத்தாறாயிரத்து ஐந்
நூறுபேர். அவன் அருகே சிமியோன் கோத் 12
திரத்தார் பாளயமிறங்கவேண்டும்; சூரிஷதா

[1] யாத். 12. 37: 38. 26. உபா. 10. 22
[2] யாத். 38. 21, 23
[3] எண். 8. 19. 1 சாமு. 6. 19
[4] யோசு. 3. 4
[5] எண். 10. 14

யின் குமாரனாகிய செலூமியேல் சிமியோன்
சந்ததியாருக்குச் சேனாபதியா யிருக்கக்கட
13 வன். அவனுடைய சேனையில் எண்ணப்
பட்டவர்கள் ஐம்பத்தொன்பதினாயிரத்து முந்
14 நூறுபேர். அவன் அருகே காத் கோத்திரத்
தார் பாளயமிறங்கவேண்டும்; தேகுவேலின்
குமாரனாகிய எலியாசாப் காத் சந்ததியாருக்
15 குச் சேனாபதியாயிருக்கக்கடவன். அவனு
டைய சேனையில் எண்ணப்பட்டவர்கள் நாற்
பத்தையாயிரத்து அறுநூற்று ஐம்பதுபேர்.
16 எண்ணப்பட்ட ரூபனின் பாளயத்தார் எல்
லாரும் தங்கள் சேனைகளின்படியே இலட்
சத்து ஐம்பத்து ஓராயிரத்து நானூற்று ஐம்பது
பேர்; இவர்கள் பிரயாணத்தில் [1]இரண்டாம்
பாளயமாய்ப் போகக்கடவர்கள்.
17 பின்பு ஆசரிப்புக் [2]கூடாரம் லேவியரின்
சேனையோடே பாளயங்களின் நடுவே பிரயா
ணப்பட்டுப் போகவேண்டும்; எப்படிப் பாள
யமிறங்குகிறார்களோ, அப்படியே அவரவர்
தங்கள் வரிசையிலே தங்கள் கொடிகளோடே
பிரயாணமாய்ப் போகக்கடவர்கள்.
18 எப்பிராயீமுடைய பாளயத்துக் கொடியை
யுடைய சேனைகள் மேல்புறத்தில் இறங்க
வேண்டும்; அம்மியூதின் குமாரனாகிய எலி
ஷாமா எப்பிராயீமின் சந்ததிக்குச் சேனாபதி
19 யாயிருக்கக்கடவன். அவனுடைய சேனையில்
எண்ணப்பட்டவர்கள் நாற்பதினாயிரத்து ஐந்
20 நூறுபேர். அவன் அருகே மனாசே கோத்தி
ரத்தார் பாளயமிறங்கவேண்டும்; பெதாசூரின்
குமாரனாகிய கமாலியேல் மனாசே சந்ததிக்குச்
21 சேனாபதியாயிருக்கக்கடவன். அவனுடைய
சேனையில் எண்ணப்பட்டவர்கள் முப்பத்திரா
22 யிரத்து இருநூறுபேர். அவன் அருகே பென்
யமீன் கோத்திரத்தார் பாளயமிறங்கவேண்
டும்; கீதெயோனின் குமாரனாகிய அபீதான்
பென்யமீன் சந்ததிக்குச் சேனாபதியாயிருக்
23 கக்கடவன். அவனுடைய சேனையில் எண்
ணப்பட்டவர்கள் முப்பத்தையாயிரத்து நானூ
24 றுபேர். எண்ணப்பட்ட எப்பிராயீமின் பாள
யத்தார் எல்லாரும் தங்கள் சேனைகளின்படி
யே இலட்சத்து எண்ணாயிரத்து நூறுபேர்;
இவர்கள் பிரயாணத்தில் [3]மூன்றாம் பாளய
மாய்ப் போகக்கடவர்கள்.
25 தாணுடைய பாளயத்துக் கொடியையு
டைய சேனைகள் வடபுறத்தில் இறங்கவேண்
டும்; அம்மிஷதாயின் குமாரனாகிய அகியே
சேர் தாண் வம்சத்திற்குச் சேனாபதியாயிருக்
26 கக்கடவன். அவனுடைய சேனையில் எண்
ணப்பட்டவர்கள் அறுபத்திராயிரத்து எழுநூறு
27 பேர். அவன் அருகே ஆசேர் கோத்திரத்தார்
பாளயமிறங்கவேண்டும்; ஓகிரானின் குமார
னாகிய பாகியேல் ஆசேர் சந்ததிக்குச் சேனா
28 பதியாயிருக்கக்கடவன். அவனுடைய சேனை
யில் எண்ணப்பட்டவர்கள் நாற்பத்தோராயி
29 ரத்து ஐந்நூறுபேர். அவன் அருகே நப்தலி
கோத்திரத்தார் பாளயமிறங்கவேண்டும்; ஏனா
னின் குமாரனாகிய அகீரா நப்தலி சந்ததி
யாருக்குச் சேனாபதியாயிருக்கக்கடவன். அவ 30
னுடைய சேனையில் எண்ணப்பட்டவர்கள்
ஐம்பத்து மூவாயிரத்து நானூறுபேர். எண் 31
ணப்பட்ட தாணின் பாளயத்தார் எல்லாரும்
இலட்சத்து ஐம்பத்தேழாயிரத்து அறுநூறு
பேர்; இவர்கள் தங்கள் கொடிகளோடே [4]பின்
பாளயமாய்ப் போகக்கடவர்கள்.
இவர்களே தங்கள் தங்கள் பிதாக்களின் 32
வம்சத்தின்படி இஸ்ரவேல் புத்திரரில் எண்
ணப்பட்டவர்கள். [5]பாளயங்களிலே தங்கள்
தங்கள் சேனைகளின்படியே எண்ணப்பட்ட
வர்கள் எல்லாரும் ஆறு லட்சத்து மூவாயி
ரத்து ஐந்நூற்று ஐம்பதுபேராயிருந்தார்கள்.
லேவியரோ, **கர்த்தர்** மோசேக்குக் கட்டளை 33
யிட்டபடி, இஸ்ரவேல் புத்திரருக்குள்ளே
எண்ணப்படவில்லை. **கர்த்தர்** மோசேக்குக் 34
கட்டளையிட்டபடியெல்லாம் இஸ்ரவேல் புத்
திரர் செய்து, [6]தங்கள் தங்கள் கொடிகளின்
கீழ் பாளயமிறங்கி, தங்கள் தங்கள் பிதாக்களு
டைய வம்சங்களின்படியே பிரயாணப்பட்
டுப்போனார்கள்.
சீனாய் மலையில் **கர்த்தர்** மோசேயோடே **3**
பேசின நாளிலே, ஆரோன் மோசே என்ப
வர்களுடைய வம்ச வரலாறுவது: ஆரோ 2
னுடைய குமாரர், [7]முதல் பிறந்தவனாகிய
நாதாப், அபியூ, எலெயாசார், இத்தாமார் என்
பவர்களே. ஆசாரிய ஊழியம்செய்கிறதற்கு 3
அவனால் பிரதிஷ்டை செய்யப்பட்டு [8]அபி
ஷேகம் பெற்ற ஆசாரியரான ஆரோனுடைய
குமாரரின் நாமங்கள் இவைகளே. நாதாபும் 4
அபியூவும் சீனாய் வனாந்தரத்தில் [9]அந்நிய அக்
கினியைக் **கர்த்தருடைய** சந்நிதியில் கொண்
டுவந்தபோது, **கர்த்தருடைய** சந்நிதியில் மரித்
துப்போனார்கள்; அவர்களுக்குப் பிள்ளைகள்
இல்லை; எலெயாசாரும் இத்தாமாருமே தங்
கள் தகப்பனாகிய ஆரோனுக்கு முன்பாக
ஆசாரிய ஊழியம் செய்தார்கள்.
**கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ லேவி 5,6
கோத்திரத்தாரைச் சேர்த்து, [10]அவர்கள் ஆசாரி
யனாகிய ஆரோனுக்குப் பணிவிடை செய்யும்
படி அவர்களை நிறுத்து. அவர்கள் ஆசரிப் 7
புக் கூடாரத்துக்கு முன்பாக அவனுடைய
[11]காவலையும் எல்லாச் சபையின் காவலையும்
காத்து, வாசஸ்தலத்தின் பணிவிடை வேலைக
ளைச் செய்யக்கடவர்கள். அவர்கள் ஆசரிப் 8
புக் கூடாரத்தின் தட்டுமுட்டு முதலானவைக
ளையும், இஸ்ரவேல் புத்திரரின் காவலையும்
காத்து, வாசஸ்தலத்தின் பணிவிடைகளைச்
செய்யக்கடவர்கள். ஆகையால் லேவியரை 9
ஆரோனிடத்திலும் அவன் குமாரரிடத்திலும்
ஒப்புக்கொடுப்பாயாக; இஸ்ரவேல் புத்திரரில்
இவர்கள் முற்றிலும் அவனுக்கு ஒப்புக்கொ
டுக்கப்பட்டிருக்கிறார்கள். ஆரோனையும் அவன் 10
குமாரரையுமோ, தங்கள் ஆசாரிய ஊழியத்
தைச் செய்வதற்காக நியமிக்கக்கடவாய், அந்த
ஊழியத்தைச் செய்யும்படி சேருகிற அந்நி
யன் [12]கொலைசெய்யப்படக்கடவன் என்றார்.

[1] எண். 10. 18
[2] எண். 10. 17, 21
[3] எண். 10. 22
[4] எண். 10. 25
[5] யாத். 38. 26. எண். 11. 21
[6] எண். 24. 2, 5, 6
[7] யாத். 6. 23
[8] யாத். 28. 41. லேவி. 8. 2. ழ
[9] லேவி. 10. 1, 2. 1 நாளா. 24. 2
[10] எண். 8.6. ரல். 2. 4
[11] 1 நாளா. 26. 20, 21
[12] எபே. 2. 19. எபி. 10. 19-22

11 பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி:
12 இஸ்ரவேல்புத்திரரில்கர்ப்பந்திறந்து பிறக்கிற
முதற்பேறான யாவுக்கும் பதிலாக, நான்
லேவியரை இஸ்ரவேல் புத்திரரிலிருந்து எடுத்
துக்கொண்டேன்; அவர்கள் என்னுடையவர்
13 களாயிருக்கிறார்கள். முதற்பேறானவையெல்
லாம் என்னுடையவை; நான் எகிப்துதேசத்
தில் முதற்பேறான யாவையும் சங்கரித்த
நாளில், இஸ்ரவேலில் மனிதர்முதல் மிருக
ஜீவன்மட்டுமுள்ள முதற்பேறான யாவையும்
[1]எனக்கென்று பரிசுத்தப்படுத்தினதினாலே,
அவைகள் என்னுடையவைகளாயிருக்கும்;
நான் **கர்த்தர்** என்றார்.
14 பின்னும் **கர்த்தர்** சீனாய் வனாந்தரத்தில்
15 மோசேயை நோக்கி: லேவி புத்திரரை அவர்
கள் பிதாக்களின் வம்சங்களின்படியே எண்
ணுவாயாக; அவர்களில் ஒரு மாதம்முதல்
அதற்கு மேற்பட்ட வயதுள்ள ஆண்பிள்ளை
16 களையெல்லாம் எண்ணுவாயாக என்றார். அப்
பொழுது **கர்த்தருடைய** வாக்கின்படி, மோ
சே தனக்குக் கற்பிக்கப்பட்டபிரகாரம் அவர்
17 களை எண்ணினான். லேவியின் [2]குமாரர்
தங்கள் நாமங்களின்படியே, கெர்சோன், கோ
18 காத், மெராரி என்பவர்கள். தங்கள் வம்சத்
தின்படியே [3]கெர்சோனுடைய குமாரரின்
19 நாமங்கள், லிப்னீ, சிமேயி என்பவைகள். தங்
கள் வம்சங்களின்படியே [4]கோகாத்துடைய
குமாரர், அம்ராம், இத்சேயார், எப்ரோன்,
20 ஊசியேல் என்பவர்கள். தங்கள் வம்சங்க
ளின்படியே [5]மெராரியினுடைய குமாரர்,
மகேலி, மூசி என்பவர்கள்; இவர்களே லேவி
யருடைய பிதாக்களின் வம்சத்தார்.
21 கெர்சோனின் வழியாய் லிப்னீயரின் வம்
சமும் சிமேயியர் வம்சமும் தோன்றின; இவை
22 களே கெர்சோனியரின் வம்சங்கள். அவர்
களில் ஒரு மாதம்முதல் அதற்கு மேற்பட்ட
வயதுள்ள ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்
பட்டபோது, எண்ணப்பட்டவர்கள் ஏழாயி
23 ரத்து ஐந்நூறுபேராயிருந்தார்கள். கெர்சோ
னியரின் வம்சங்கள் வாசஸ்தலத்தின் பின்பு
24 றத்தில் மேற்கே பாளயமிறங்கவேண்டும். கெர்
சோனியருடைய தகப்பன் வம்சத்துக்குத்
தலைவன் லாயேலின் குமாரனாகிய எலியா
25 சாப் என்பவன். ஆசரிப்புக் கூடாரத்திலே
கெர்சோன் புத்திரரின் காவலாவது: [6]வாசஸ்
தலமும், கூடாரமும், அதின் மூடியும், ஆச
26 ரிப்புக் கூடாரவாசல் மறைவும், வாசஸ்தலத்
தண்டையிலும் பலிபீடத்தண்டையிலும் சுற்
றிலும் இருக்கிற [7]பிராகாரத்தின் தொங்கு
திரைகளும், பிராகாரவாசல் மூடுதிரையும்,
அவைகளின் வேலைகளுக்கெல்லாம் உரிய
அவைகளின் கயிறுகளுமே.
27 கோகாத்தின் வழியாய் [8]அம்ராமியரின்
வம்சமும் இத்சேயாரின் வம்சமும் எப்ரோனி
யரின் வம்சமும் ஊசியேலரின் வம்சமும்
தோன்றின; இவைகளே கோகாத்தியரின்
28 வம்சங்கள். ஒரு மாதம்முதல் அதற்கு மேற்
பட்ட வயதுள்ள ஆண்பிள்ளைகளெல்லாம்
எண்ணப்பட்டபோது, பரிசுத்த ஸ்தலத்துக்கு
ரியவைகளைக் காப்பவர்கள், எண்ணாயிரத்து
அறுநூறுபேராயிருந்தார்கள். கோகாத் புத்தி 29
ரரின் வம்சங்கள் வாசஸ்தலத்தின் தென்புற
மான பக்கத்திலே பாளயமிறங்கவேண்டும்.
அவர்களின் தலைவன், ஊசியேலின் குமார 30
னாகிய எல்சாபான். அவர்களுடைய காவ 31
லாவது: [9]பெட்டியும், மேசையும், குத்துவிளக்
கும், பீடங்களும், ஆராதனைக்கேற்ற பரிசுத்த
ஸ்தலத்தின் பணிமுட்டுகளும், தொங்குதிரை
யும், அதினுடைய எல்லா வேலைகளுக்கும்
ஏற்றவைகளுமே. ஆசாரியனாகிய ஆரோ 32
னின் குமாரன் எலெயாசார் என்பவன் லேவி
யருடைய தலைவர்களுக்குத் தலைவனாய்ப் பரி
சுத்தஸ்தலத்தைக் காவல் காக்கிறவர்களுக்கு
விசாரிப்புக்காரனாயிருக்கவேண்டும்.
மெராரியின் வழியாய் மகேலியரின் வம்ச 33
மும் மூசியரின் வம்சமும் தோன்றின; இவை
களே மெராரியின் வம்சங்கள். அவர்களில் 34
ஒரு மாதம்முதல் அதற்கு மேற்பட்ட வயது
ள்ள ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்ட
போது, எண்ணப்பட்டவர்கள் ஆறாயிரத்து
இருநூறுபேராயிருந்தார்கள். அபியாயேலின் 35
குமாரனாகிய சூரியேல் என்பவன் அவர்களுக்
குத் தலைவனாயிருந்தான்; இவர்கள் வாசஸ்
தலத்தின் வடபுறமான பக்கத்தில் பாளயமி
றங்கவேண்டும். அவர்களுடைய காவல் விசா 36
ரிப்பாவது: வாசஸ்தலத்தின் பலகைகளும்,
தாழ்ப்பாள்களும், தூண்களும், பாதங்களும்,
அதினுடைய எல்லாப் பணிமுட்டுகளும், அத
ற்கடுத்தவைகள் அனைத்தும், சுற்றுப் பிரா 37
காரத்தின் தூண்களும், அவைகளின் பாதங்க
ளும், முளைகளும், கயிறுகளுமே. ஆசரிப்புக் 38
கூடாரமாகிய வாசஸ்தலத்துக்கு முன்பாக,
சூரியன் உதிக்கும் கீழ்ப்புறத்திலே மோசே
யும் ஆரோனும் அவன் குமாரரும் கூடாரங்க
ளைப் போட்டு இறங்கி, இஸ்ரவேல் புத்திர
ரின் காவலுக்குப் பதிலாகப் பரிசுத்தஸ்தலத்
தைக் காவல் காக்கவேண்டும். வாசஸ்தலத்
தில் சேருகிற அந்நியன் கொலைசெய்யப்ப
டக்கடவன். மோசேயும் ஆரோனும், **கர்த்**
**தருடைய** வாக்கின்படி, லேவியரில் ஒரு மா
தம்முதல் அதற்கு மேற்பட்ட வயதுள்ள ஆண்
பிள்ளைகளையெல்லாம் அவர்களுடைய வம்ச
ங்களின்படியே எண்ணினார்கள்; அவர்கள் இரு
பத்தீராயிரம்பேராயிருந்தார்கள்.
அதன்பின்பு **கர்த்தர்** மோசேயை நோக்கி:
நீ இஸ்ரவேல் புத்திரரில் ஒரு மாதம்முதல்
அதற்கு மேற்பட்ட வயதுள்ள முதற்பேறான
ஆண்பிள்ளைகளையெல்லாம் எண்ணி, அவர்
கள் நாமங்களைத் தொகையேற்றி, இஸ்ர
வேல் புத்திரரிலுள்ள முதற்பேறான யாவுக்
கும் பதிலாக லேவியரையும், இஸ்ரவேல் புத்
திரரின் மிருகஜீவன்களிலுள்ள தலையீற்றான
யாவுக்கும் பதிலாக லேவியரின் மிருகஜீவன்க
ளையும் எனக்கென்று பிரித்தெடு; நான் **கர்த்தர்**

[1] யாத். 13. 2,12. லேவி. 27. 26. லூக். 2. 23
[2] ஆதி. 46. 11. யாத். 6. 16
[3] யாத். 6. 17
[4] யாத். 6. 18
[5] யாத். 6. 19
[6] யாத். 25. 9
[7] யாத். 27. 9. ஓ
[8] 1 நாளா. 26. 23
[9] யாத். 25. 10, 23-31

ன்றூர். அப்பொழுது மோசே, கர்த்தர்
தனக்குக் கட்டளையிட்டபடியே, இஸ்ரவேல்
புத்திரரிலுள்ள முதற்பேறான யாவரையும்
43 எண்ணினான். ஒரு மாதம்முதல் அதற்கு
மேற்பட்ட வயதுள்ள முதற்பேறான ஆண்
பிள்ளைகளெல்லாரும் பேர்பேராக எண்ணப்
பட்டபோது, இருபத்தீராயிரத்து இருநூற்று
எழுபத்து மூன்றுபேராயிருந்தார்கள்.
44 அப்பொழுது **கர்த்தர்** மோசேயை நோக்கி:-
45 நீ இஸ்ரவேல் புத்திரரிலுள்ள முதற்பேறான
யாவருக்கும் பதிலாக லேவியரையும், அவர்க
ளுடைய மிருகஜீவன்களுக்குப் பதிலாக லேவி
யரின் மிருகஜீவன்களையும் பிரித்தெடு; லேவி
யர் என்னுடையவர்களாயிருப்பார்கள்; நான்
46 **கர்த்தர்**. இஸ்ரவேல் புத்திருடைய முதற்
பேறுகளில் லேவியரின் தொகைக்கு அதிக
மாயிருந்து, [1]மீட்கப்படவேண்டிய இருநூற்று
47 எழுபத்து மூன்றுபேரிடத்திலும், நீ தலைக்கு
ந்து சேக்கல் [2]வீதமாகப் பரிசுத்த சேக்கல்
கணக்கின்படி வாங்குவாயாக; அந்தச் சேக்க
48 லானது இருபது கேரா. லேவியருடைய
தொகைக்கு அதிகமானவர்கள் மீட்கப்படும்
திரவியத்தை ஆரோனுக்கும் அவன் குமா
49 ரருக்கும் கொடுப்பாயாக என்றார். அப்ப
டியே லேவியரால் மீட்கப்பட்டவர்களின்
தொகைக்கு அதிகமாயிருந்து, இன்னும் மீட்
கப்படவேண்டியவர்களுக்கு ஈடாக மோசே
இஸ்ரவேல் புத்திருடைய முதற்பேறான
50 வர்களிடத்தில், ஆயிரத்து முந்நூற்று அறுபத்
தைந்து சேக்கலாகிய திரவியத்தை, பரிசுத்த
ஸ்தலத்துச் சேக்கல் கணக்கின்படி வாங்கி,
51 **கர்த்தருடைய** வாக்கின்படியே மீட்கப்பட்ட
வர்களின் கிரயத்தை ஆரோனுக்கும் அவன்
குமாரருக்கும், கர்த்தர் தனக்குக் கட்டளை
யிட்டபடியே கொடுத்தான்.

4 **கர்த்தர்** மோசேயையும் ஆரோனையும்
2 நோக்கி: லேவியின் புத்திரருக்குள்ளே இருக்
கிற கோகாத் புத்திருடைய பிதாக்களின்
3 வீட்டு வம்சங்களில், ஆசரிப்புக் கூடாரத்திலே
வேலைசெய்யும் சேனைக்கு உட்படத்தக்க [3]முப்
து வயதுமுதல் ஐம்பது வயதுவரைக்கு
ள்ள எல்லாரையும் எண்ணி, தொகையிடு
யாக. ஆசரிப்புக் கூடாரத்திலே கோகாத்
த்திரரின் பணிவிடை மகா பரிசுத்தமான
வகளுக்குரியது. பாளயம் புறப்படும்போது,
ரோனும் அவன் குமாரரும் வந்து, மறை
பின் திரைச்சீலையை இறக்கி, [4]அதினாலே
ட்சியின் பெட்டியை [5]மூடி, அதின்மேல்
கசுத்தோல் மூடியைப் போட்டு, அதின்
மேல் முற்றிலும் நீலமான துப்பட்டியை
விரித்து, அதின் தண்டுகளைப் பாய்ச்சி, சமு
த்தப்ப மேசையின்மேல் [6]நீலத்துப்பட்டியை
விரித்து, தட்டுகளையும் தூபக்கரண்டிகளையும்
கிண்ணங்களையும் மூடுகிற தட்டுகளையும்
அதின்மேல் வைப்பார்களாக; நித்திய அப்ப
8 மும் அதின்மேல் இருக்கக்கடவது. அவை
களின்மேல் அவர்கள் சிவப்புத் துப்பட்டியை
விரித்து, அதைத் தகசுத்தோல் மூடியால் மூடி,
அதின் தண்டுகளைப் பாய்ச்சி, இளநீலத் துப் 9
பட்டியை எடுத்து, [7]குத்துவிளக்குத் தண்டை
யும், அதின் அகல்களையும், அதின் கத்தரிகளை
யும், சாம்பல் பாத்திரங்களையும், அதற்குரிய
எண்ணெய்ப் பாத்திரங்களையும் மூடி, அதை 10
யும் அதற்கடுத்த தட்டுமுட்டுகள் யாவையும்
தகசுத்தோல் மூடிக்குள்ளே போட்டு, அதை
ஒரு தண்டிலே கட்டி, பொற்பீடத்தின்மேல் 11
[8]இளநீலத் துப்பட்டியை விரித்து, அதைத்
தகசுத்தோல் மூடியால் மூடி, அதின் தண்டுக
ளைப் பாய்ச்சி, பரிசுத்த ஸ்தலத்தில் வழங்கும் 12
ஆராதனைக்கேற்ற [9]சகல தட்டுமுட்டுகளையும்
எடுத்து, இளநீலத் துப்பட்டியிலே போட்டு,
தகசுத்தோல் மூடியினால் மூடி, தண்டின்மேல்
கட்டி, பலிபீடத்தைச் சாம்பலற விளக்கி, 13
அதின்மேல் இரத்தாம்பரத் துப்பட்டியை
விரித்து, அதின்மேல் ஆராதனைக்கேற்ற சகல 14
பணிமுட்டுகளாகிய கலசங்களையும், முள் துற
டுகளையும், சாம்பல் எடுக்கும் கரண்டிகளையும்,
கலங்களையும், பலிபீடத்திற்கடுத்த எல்லாப்
பாத்திரங்களையும், அதின்மேல் வைத்து,
அதின்மேல் தகசுத்தோல் மூடியை விரித்து,
அதின் தண்டுகளைப் பாய்ச்சக்கடவர்கள். பாள 15
யம் புறப்படும்போது, ஆரோனும் அவன்
குமாரரும் பரிசுத்த ஸ்தலத்தையும் அதினு
டைய சகல பணிமுட்டுகளையும் மூடித் தீர்ந்த
பின்பு, கோகாத் புத்திரர் அதை எடுத்துக்
கொண்டு போகிறதற்கு வரக்கடவர்கள்;
[10]அவர்கள் சாகாதபடிக்கு பரிசுத்தமானதைத்
தொடாதிருக்கக்கடவர்கள்; ஆசரிப்புக் கூடா
ரத்திலே கோகாத் புத்திரர் சுமக்கும் சுமை
இதுவே. ஆசாரியனாகிய ஆரோனின் குமா 16
ரன் எலெயாசார், [11]விளக்குக்கு எண்ணெயை
யும், சுகந்த தூபவர்க்கத்தையும், தினந்தோறும்
இடும் போஜனபலியையும், அபிஷேகதைலத்
தையும், வாசஸ்தலம் முழுவதையும், அதி
லுள்ள யாவையும், பரிசுத்த ஸ்தலத்தையும்
அதின் பணிமுட்டுகளையும், விசாரிக்கக்கட
வன் என்றார்.

**கர்த்தர்** மோசேயையும் ஆரோனையும் 17
நோக்கி: லேவியருக்குள்ளே கோகாத் வம்ச 18
மாகிய கோத்திரத்தார் அழிந்துபோகாதபடி
பாருங்கள். அவர்கள் மகா பரிசுத்தமானவை 19
களைக் கிட்டுகையில், சாகாமல் உயிரோடிருக்
கும்படிக்கு, நீங்கள் அவர்களுக்காகச் செய்ய
வேண்டியதாவது: ஆரோனும் அவன் குமார 20
ரும் வந்து, அவர்களில் அவனவனை அவன
வன் செய்யும் வேலைக்கும் அவனவன் சுமக்
கும் சுமைக்கும் நியமிக்கக்கடவர்கள்; [12]அவர்
களோ சாகாதபடிக்குப் பரிசுத்தமானவைகள்
மூடப்படும்போது பார்க்கிறதற்கு உட்பிரவே
சியாமல் இருப்பார்களாக என்றார்.

பின்னும், **கர்த்தர்** மோசேயை நோக்கி: 21
கெர்சோன் புத்திருடைய பிதாக்களின் வீட்டு 22
வம்சங்களிலும் ஆசரிப்புக் கூடாரத்திலே பணி
விடை [13]வேலைசெய்யும் சேனைக்கு உட்படத்

1 யாத். 13. 13
2 லேவி. 27. 6, 25
3 1 நாளா. 23. 3, 24, 27
4 யாத். 26. 31. எசா. 25. 7. எபி. 9. 3; 10. 20
5 யாத். 25. 10, 16
6 யாத். 25. 23—30. லேவி. 24. 6–8
7 யாத். 25. 31—38
8 யாத். 30. 1–5
9 யாத். 25. 9
10 எபி. 12. 29
11 யாத். 25. 6
12 யாத். 19. 21. லேவி. 10. 2. 1 சாமு. 6. 19
13 1 கொ. 9. 7. 1 தீமோ. 1. 18

23 தக்க, முப்பது வயதுமுதல் ஐம்பது வயது
வரைக்குமுள்ள எல்லாரையும் எண்ணி,
24 தொகை ஏற்றுவாயாக. பணிவிடை செய்கிற
திலும் சுமக்கிறதிலும் கெர்சோன் வம்சத்தா
25 ரின் வேலையாவது: அவர்கள் வாசஸ்தலத்துக்
கும் ஆசரிப்புக் கூடாரத்துக்கும் உரிய தொங்கு
திரையையும், மூடியையும், அவைகளின்மேல்
இருக்கிற தகசுத்தோல் மூடியையும், ஆசரிப்
26 புக் கூடாரவாசல் மறைவையும், பிராகாரத்
தின் தொங்குதிரைகளையும், வாசஸ்தலத்தண்
டையிலும் பலிபீடத்தண்டையிலும் சுற்றிலும்
இருக்கிற பிராகாரத்தினுடைய வாசல் தொங்
குதிரையையும், அவைகளின் கயிறுகளையும்,
அவைகளின் வேலைக்கடுத்த கருவிகள் யாவை
யும் சுமந்து, அவைகளுக்காகச் செய்யவேண்
27 டிய யாவையும் செய்யக்கடவர்கள். கெர்
சோன் புத்திரர் சுமக்கவேண்டிய சுமைகளும்
செய்யவேண்டிய பணிவிடைகளாகிய சகல
வேலைகளும் ஆரோனும் அவன் குமாரரும்
சொல்லுகிறபடியே செய்யவேண்டும்; அவர்
கள் சுமக்கவேண்டிய சகல சுமைகளையும்
நீங்கள் நியமித்து, அவர்களிடத்தில் ஒப்பு
28 வியுங்கள். கெர்சோன் புத்திரரின் வம்சத்
தார் ஆசரிப்புக் கூடாரத்திலே செய்யும் பணி
விடை இதுதான்; அவர்களை வேலைகொள்
ளும் விசாரணை, ஆசாரியனாகிய ஆரோனின்
குமாரன் இத்தாமாருடைய கைக்குள் இருக்க
வேண்டும்.
29 மெராரி புத்திரருடைய பிதாக்களின் வீட்டு
வம்சங்களிலும் ஆசரிப்புக் கூடாரத்திலே பணி
விடை வேலைசெய்யும் சேனைக்கு உட்படத்
30 தக்க, முப்பது வயதுமுதல் ஐம்பது வயது
வரைக்குமுள்ள எல்லாரையும் எண்ணக்கட
31 வாய். ஆசரிப்புக் கூடாரத்தில் அவர்கள்
செய்யும் எல்லாப் பணிவிடைக்கும் அடுத்த
காவல் விசாரிப்பாவது: வாசஸ்தலத்தின் பல
கைகளும், தாழ்ப்பாள்களும், தூண்களும்,
32 பாதங்களும், சுற்றிலும் இருக்கிற பிராகாரத்
தின் தூண்களும், அவைகளின் பாதங்களும்,
முளைகளும், கயிறுகளும், அவைகளின் சகல
கருவிகளும், அவற்றிற்கு அடுத்த மற்றெல்லா
வேலையும்தானே; அவர்கள் சுமந்து காவல் காக்
கும்படி [1]ஒப்புவிக்கப்படுகிறவைகளைப் பேர்
33 பேராக எண்ணக்கடவீர்கள். ஆசாரியனாகிய
ஆரோனுடைய குமாரனாகிய இத்தாமாருடைய
கைக்குள்ளாக மெராரி புத்திரரின் வம்சத்தார்
ஆசரிப்புக் கூடாரத்திலே செய்யும் பணிவி
டைக்கு அடுத்த எல்லா வேலையும் இதுவே
என்றார்.
34 அப்படியே மோசேயும் ஆரோனும் சபை
யின் பிரபுக்களும் கோகாத் புத்திரருடைய
பிதாக்களின் வீட்டு வம்சங்களின்படி ஆசரிப்
புக் கூடாரத்திலே பணிவிடை செய்யும்
35 சேனைக்கு உட்படத்தக்க, முப்பது வயது
முதல் ஐம்பது வயதுவரைக்குமுள்ள எல்லா
36 ரையும் எண்ணினார்கள். அவர்கள் வம்சங்
களில் எண்ணப்பட்டவர்கள் இரண்டாயிரத்து
எழுநூற்று ஐம்பதுபேர். **கர்த்தர்** மோசேக் 37
குக் கட்டளையிட்டபடியே, மோசேயினாலும்
ஆரோனாலும் கோகாத் வம்சத்தாரில் ஆசரிப்
புக் கூடாரத்தில் வேலைசெய்கிறதற்காக எண்
ணித் தொகையிடப்பட்டவர்கள் எல்லாரும்
இவர்களே.
கெர்சோன் புத்திரருடைய பிதாக்களின் 38
வீட்டு வம்சங்களிலும் ஆசரிப்புக் கூடாரத்
திலே பணிவிடை செய்யும் சேனைக்கு உட்ப
டத்தக்க, முப்பது வயதுமுதல் ஐம்பது வயது 39
வரைக்குமுள்ள எல்லாரும் எண்ணப்பட்டார்
கள். அவர்களில் எண்ணப்பட்டவர்கள் அவ 40
ரவர் குடும்பத்தின்படிக்கும், பிதாக்களுடைய
வம்சத்தின்படிக்கும் இரண்டாயிரத்து அறு
நூற்று முப்பதுபேர். மோசேயினாலும் ஆரோ 41
னாலும் **கர்த்தர்** கட்டளையிட்டபடியே கெர்
சோன் புத்திரரின் வம்சத்தாரில் ஆசரிப்புக்
கூடாரத்தில் வேலைசெய்ய எண்ணித் தொகை
யிடப்பட்டவர்கள் எல்லாரும் இவர்களே.
மெராரி புத்திரருடைய பிதாக்களின் வீட்டு 42
வம்சங்களிலும் ஆசரிப்புக் கூடாரத்திலே பணி
விடை செய்யும் சேனைக்கு உட்படத்தக்க,
முப்பது வயதுமுதல் ஐம்பது வயதுள்ளவர் 43
கள் எல்லாரும் எண்ணப்பட்டார்கள். அவர் 44
களில் எண்ணப்பட்டவர்கள் தங்கள் குடும்பங்
களின்படியே மூவாயிரத்து இருநூறுபேர்.
**கர்த்தர்** மோசேக்குக் கட்டளையிட்டபடியே 45
மோசேயினாலும் ஆரோனாலும் மெராரி புத்திர
ரின் குடும்பத்தாரில் எண்ணித் தொகையிடப்
பட்டவர்கள் எல்லாரும் இவர்களே.
லேவியருடைய பிதாக்களின் வீட்டு வம் 46
சங்களில் முப்பது வயதுமுதல் ஐம்பது வயது
வரைக்குமுள்ளவர்கள் ஆசரிப்புக் கூடாரத்
திலே செய்யும் பணிவிடை வேலைக்கும் சுமை
யின் வேலைக்கும் உட்படத்தக்கவர்களும், மோ 47
சேயினாலும் ஆரோனாலும் இஸ்ரவேலின் பிர
புக்களாலும் எண்ணப்பட்டவர்களும் ஆகிய
எல்லாரும், எண்ணாயிரத்து ஐந்நூற்று எண் 48
பதுபேராயிருந்தார்கள். **கர்த்தர்** மோசேக்குக் 49
கட்டளையிட்டபடியே, அவர்கள் தங்கள் தங்
கள் பணிவிடைக்கென்றும் தங்கள் தங்கள்
சுமைக்கென்றும் மோசேயினால் எண்ணப்
பட்டார்கள்; இவ்விதமாய், **கர்த்தர்** மோசேக்
குக் [2]கட்டளையிட்டபடியே அவர்கள் அவ
னால் எண்ணப்பட்டார்கள்.
**கர்த்தர்** மோசேயை நோக்கி: குஷ்ட 2 **5**
ரோகிகள் [3]யாவரையும், பிரமியமுள்ளவர்கள்
[4]யாவரையும், சவத்தினால் [5]தீட்டுப்பட்டவர்
கள் யாவரையும் பாளயத்திலிருந்து விலக்கி
விட இஸ்ரவேல் புத்திரருக்குக் கட்டளை
யிடு. ஆண்பிள்ளையானாலும் பெண்பிள்ளை 3
யானாலும் அப்படிப்பட்டவர்களை நீங்கள்
விலக்கி, [6]நான் வாசம்பண்ணுகிற தங்கள் பாள
யங்களை அவர்கள் தீட்டுப்படுத்தாதபடிக்கு,
நீங்கள் அவர்களைப் பாளயத்திற்குப் புறம்பாக்
கிவிடக்கடவீர்கள் என்றார். **கர்த்தர்** மோசேக் 4
குச் சொன்னபடியே, இஸ்ரவேல் புத்திரர்

[1] யாத். 38. 21
[2] 1, 21
[3] லேவி. 13. 3, 46 உபா. 24. 8, 9
[4] லேவி. 15. 2
[5] லேவி. 21. 1
[6] லேவி. 26. 11, 12. 2 கொ. 6. 16

செய்து; அவர்களைப் பாளயத்திற்குப் புறம்
பாக்கிவிட்டார்கள்.
5, 6 மேலும் **கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ
இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண்டி
யது என்னவென்றால்: ஒரு புருஷனானாலும்
ஸ்திரீயானாலும், **கர்த்தருடைய** கட்டளையை
மீறி [1]மனிதர் செய்யும் பாவங்களில் யாதொரு
7 பாவத்தைச் செய்து குற்றவாளியானால், அவர்
கள் தாங்கள் செய்த பாவத்தை [2]அறிக்கை
யிடக்கடவர்கள்; அப்படிப்பட்டவன் தான்
செய்த குற்றத்தினிமித்தம் அபராதத்தின் முத
லோடே ஐந்தில் ஒரு பங்கை அதிகமாய்க்
கூட்டி, தான் குற்றஞ்செய்தவனுக்குச் செலுத்
8 தக்கடவன். அதைக் கேட்டு வாங்குகிறதற்கு
இனத்தான் ஒருவனும் இல்லாதிருந்தால், அப்
பொழுது அவனுக்காகப் பாவநிவிர்த்தி செய்
யும்படி ஆட்டுக்கடா செலுத்தப்படுவதுமல்
லாமல், **கர்த்தருக்கு** அந்த அபராதம் செலுத்
தப்பட்டு, அது ஆசாரியனைச் சேரவேண்டும்.
9 இஸ்ரவேல் புத்திரர் ஏறெடுத்துப் படைக்கும்
படி ஆசாரியனிடத்தில் கொண்டுவருகிற எல்
லாப் பரிசுத்தமான படைப்பும் [3]அவனுடைய
10 தாயிருக்கும். ஒவ்வொருவரும் படைக்கும்
பரிசுத்தமான வஸ்துக்கள் அவனுடையதாயி
ருக்கும்; ஒருவன் ஆசாரியனுக்குக் கொடுக்கி
றது எதுவும் அவனுக்கே உரியது என்று
சொல் என்றார்.
11, 12 **கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ இஸ்ர
வேல் புத்திரருக்குச் சொல்லவேண்டியது
என்னவென்றால்: ஒருவனுடைய மனைவி
பிறர்முகம் பார்த்து, புருஷனுக்குத் துரோகம்
13 பண்ணி, ஒருவனோடே [4]சம்யோகமாய்ச் சய
னித்திருந்த விஷயத்தில் அவள் தீட்டுப்பட்ட
வளாயிருந்தும், அவளுடைய புருஷன் கண்
களுக்கு அது மறைக்கப்பட்டு வெளிக்கு வரா
மல் இருக்கிறபோதும், சாட்சியில்லாமலும்
அவள் கையும் களவுமாகப் பிடிக்கப்படாமலும்
14 இருக்கிறபோதும், *எரிச்சலின் ஆவி அவன்
மேல் வந்து, அவன் அவனுடைய மனைவி
தீட்டுப்படுத்தப்பட் டிருக்க, தீட்டுப்படுத்தப்
பட்ட தன் மனைவியின்மேல் குரோதங்கொண்
டிருந்தாலும், அல்லது அவன் மனைவி தீட்டுப்
படுத்தப்படாதிருக்க, எரிச்சலின் ஆவி அவன்
மேல் வந்து, அவன் அவள்மேல் குரோதங்
15 கொண்டிருந்தாலும், அந்தப் புருஷன் தன்
மனைவியை ஆசாரியனிடத்தில் அழைத்துக்
கொண்டு வந்து, அவள் நிமித்தம் ஒரு எப்பா
அளவான வாற்கோதுமை மாவிலே பத்தில்
ஒருபங்கைப்படைப்பாகக்கொடுக்கக்கடவன்;
அது எரிச்சலின் காணிக்கையும் [5]அக்கிரமத்
தை நினைப்பூட்டும் காணிக்கையுமாய் இருப்ப
தினால், அதின்மேல் எண்ணெய் வார்க்காம
லும் தூபவர்க்கம் போடாமலும் இருப்பானாக.
16 ஆசாரியன் அவளைச் சமீபத்தில் அழைத்து,
17 **கர்த்தருடைய** சந்நிதியில் நிறுத்தி, ஒரு மண்
பாண்டத்திலே பரிசுத்த ஜலம் வார்த்து,
வாசஸ்தலத்தின் தளாயிலிருக்கும் புழுதியிலே

[1] லேவி. 6. 2, 3

[2] லேவி. 5. 5; 6. 5, 7. யோசு. 7. 19. யோபு 33. 27. சங். 32. 5. நீதி. 28. 13. 1 யோ. 1. 9

[3] யாத். 29. 28. எசே. 44. 29. மல். 3. 8—10. 1 கொ. 9. 19

[4] லேவி. 18. 20

* சந்தேகம், காமத்தினால் உண்டாகிய குரோதம். நீதி. 6. 34, 35. உன். 8. 6

[5] 1 இரா. 17. 18. எசே. 29. 16. எபி. 10. 3

[6] எபி. 13. 4. வெளி. 2. 19–23

[7] மத். 26. 63. யோசு. 7. 2

[8] யோசு. 6. 26. எரே. 29. 22

[9] சங். 109. 18

[10] லேவி. 8. 27

[11] லேவி. 2. 2, 9

[12] உபா. 28. 37. சங். 83. 9, 11. ஏசா. 65. 15. எரே. 24. 9. சகரி. 8. 13

கொஞ்சம் எடுத்து, அந்த ஜலத்திலே போட்டு,
ஸ்திரீயைக் **கர்த்தருடைய** சந்நிதியில் நிறுத்தி, 18
அவள் முக்காட்டை நீக்கி, [6]எரிச்சலின் கா
ணிக்கையாகிய நினைப்பூட்டுதலின் காணிக்
கையை அவள் உள்ளங்கையிலே வைப்பா
னாக; சாபகாரணமான கசப்பான ஜலம் ஆசா
ரியன் கையில் இருக்கவேண்டும். பின்பு, 19
ஆசாரியன் அவளை [7]ஆணையிடுவித்து: ஒருவ
னும் உன்னோடே சயனியாமலும், உன் புரு
ஷனுக்கு உட்பட்டிருக்கிற நீ தீட்டுப்படத்
தக்கதாய்ப் பிறர்முகம் பாராமலும் இருந்தால்,
சாபகாரணமான இந்தக் கசப்பான ஜலத்தின்
தோஷத்துக்கு நீங்கலாயிருப்பாய். உன் புரு 20
ஷனுக்கு உட்பட்டிருக்கிற நீ பிறர்முகம்
பார்த்து, உன் புருஷனோடேயன்றி அந்நிய
னோடே சம்யோகமாய்ச் சயனித்து [8]தீட்டுப்
பட்டிருப்பாயானால், **கர்த்தர்** உன் இடுப்பு 21
சூம்பவும், உன் வயிறு வீங்கவும் பண்ணி,
உன்னை உன் ஜனங்களுக்குள்ளே சாபமும்
ஆணையிடுங்குறியுமாக வைப்பாராக. சாபகா 22
ரணமான [9]இந்த ஜலம் உன் வயிறு வீங்கவும்
இடுப்பு சூம்பவும் பண்ணும்படி, உன் குட
லுக்குள் பிரவேசிக்கக்கடவது என்கிற சாப
வார்த்தையாலே ஸ்திரீயை ஆணையிடுவித்துச்
சொல்வானாக. அதற்கு அந்த ஸ்திரீ: ஆமென்,
ஆமென், என்று சொல்லக்கடவள். பின்பு 23
ஆசாரியன் இந்தச் சாபவார்த்தைகளை ஒரு
சீட்டில் எழுதி, அவைகளைக் கசப்பான ஜலத்
தினால் கழுவிப்போட்டு, சாபகாரணமான 24
அந்தக் கசப்பான ஜலத்தை அவள் குடிக்கும்
படி பண்ணுவான்; அப்பொழுது சாபகாரண
மான அந்த ஜலம் அவளுக்குள் இறங்கிக்
கசப்பாகும்.

பின்பு ஆசாரியன் எரிச்சலின் காணிக்கை 25
யை அந்த ஸ்திரீயின் கையிலிருந்து வாங்கி,
அதைக் **கர்த்தருடைய** சந்நிதியில் [10]அசை
வாட்டி, பீடத்தின்மேல் செலுத்தி, ஞாபகக் 26
குறியாக அதிலே ஒரு கைப்பிடி நிறைய
எடுத்து, [11]பீடத்தின்மேல் தகனித்து, பின்பு
ஸ்திரீக்கு அந்த ஜலத்தைக் குடிக்கும்படி
கொடுக்கக்கடவன். அந்த ஜலத்தைக் குடிக்கச் 27
செய்தபின்பு சம்பவிப்பதாவது: அவள் தீட்
டுப்பட்டு, தன் புருஷனுக்குத் துரோகம்பண்
ணியிருந்தால், சாபகாரணமான அந்த ஜலம்
அவளுக்குள் பிரவேசித்துக் கசப்புண்டானதி
னால், அவள் வயிறு வீங்கி, அவள் இடுப்பு
சூம்பும்; இப்படியே அந்த ஸ்திரீ தன் ஜனங்
களுக்குள்ளே [12]சாபமாக இருப்பாள். அந்த 28
ஸ்திரீ தீட்டுப்படாமல் சுத்தமாயிருந்தால்,
அவள் அதற்கு நீங்கலாகி, கர்ப்பந்தரிக்கத் தக்
கவளாயிருப்பாள். ஒரு ஸ்திரீ தன் புருஷ 29
னோடேயன்றி அந்நியபுருஷனோடே சேர்ந்து
தீட்டுப்பட்டதினால் உண்டான எரிச்சலுக்
கும், புருஷன்மேல் எரிச்சலின் ஆவி வரு 30
கிறதினால், அவன் தன் மனைவியின்மேல்
அடைந்த சமுசயத்துக்கும் அடுத்த பிரமாணம்
இதுவே. அவன் **கர்த்தருடைய** சந்நிதியில்

தன் மனைவியை நிறுத்துவானாக; ஆசாரியன்
இந்தப் பிரமாணத்தின்படியெல்லாம் அவளுக்
31 குச் செய்யக்கடவன். புருஷனானவன் அக்
கிரமத்திற்கு நீங்கலாயிருப்பான்; அப்படிப்
பட்ட ஸ்திரீயோ, [1]தன் அக்கிரமத்தைச் சுமப்
பாள் என்று சொல் என்றார்.

6 2 **கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ இஸ்ர
வேல் புத்திரரோடே சொல்லவேண்டியது
என்னவென்றால்: புருஷனாகிலும் ஸ்திரீயாகி
லும் **கர்த்தருக்கென்று** விரதம் பண்ணிக்
கொண்டவர்களாயிருக்கும்படி நசரேய விரத
மாகிய [2]ஒரு விசேஷித்த பொருத்தனையைப்
3 பண்ணினால், அப்படிப்பட்டவன் [3]திராட்
சாசத்தையும் மதுபானத்தையும் விலக்கக்கட
வன்; அவன் திராட்சரசத்தின் காடியையும்
மற்ற மதுபானத்தின் காடியையும், திராட்சர
சத்தினால் செய்த எவ்விதமான பானத்தையும்
குடியாமலும், திராட்சப்பழங்களையாவது திரா
4 ட்சவற்றல்களையாவது புசியாமலும், தான் நச
ரேயனாயிருக்கும் நாளெல்லாம் திராட்சச்செடி
விதைமுதல் தோல்வரையிலுள்ளவைகளினால்
செய்யப்பட்ட யாதொன்றையும் புசியாமலும்
5 இருக்கக்கடவன். அவன் நசரேய விரதங்
காக்கும் நாளெல்லாம் சவரகன் கத்தி [4]அவன்
தலையின்மேல் படலாகாது; அவன் **கர்த்த
ருக்கென்று** விரதங் காக்கும் காலம் நிறை
வேறுமளவும் பரிசுத்தமாயிருந்து, தன் தலை
6 மயிரை வளரவிடக்கடவன். அவன் **கர்த்த
ருக்கென்று** விரதங் காக்கும் நாளெல்லாம்
[5]யாதொரு பிரேதத்தண்டையில் போகக்
7 கூடாது. அவன் தன் தேவனுக்கென்று
செய்த நசரேய விரதம் அவன் தலைமேல்
இருக்கிறபடியால், மரணமடைந்த தன் தகப்
பனாலாகிலும் தாயினாலாகிலும் சகோதரனா
லாகிலும் சகோதரியினாலாகிலும் தன்னைத்
8 தீட்டுப்படுத்தலாகாது. அவன் நசரேயனாயி
ருக்கும் நாளெல்லாம் **கர்த்தருக்குப்** [6]பரிசுத்
9 தமாயிருப்பான். அவனண்டையிலே ஒரு
வன் சடுதியில் மரணமடைந்ததினால், நசரேய
விரதமுள்ள அவனுடைய தலை தீட்டுப்பட்
டதேயாகில், அவன் தன் சுத்திகரிப்பின் நாளா
கிய ஏழாம் நாளில் தன் [7]தலைமயிரைச் சிரைத்
10 துக்கொண்டு, எட்டாம் நாளில் இரண்டு காட்
டுப்புறாக்களையாவது இரண்டு [8]புறாக் குஞ்சு
களையாவது ஆசரிப்புக் கூடாரவாசலில் ஆசா
11 ரியனிடத்தில் கொண்டுவரக்கடவன். அப்
பொழுது ஆசாரியன் ஒன்றைப் பாவநிவா
ரணபலியாகவும், மற்றொன்றைச் சர்வாங்க
தகனபலியாகவும்செலுத்தி, பிணத்தினால் அவ
னுக்கு உண்டான தீட்டை நிவிர்த்திசெய்து,
அவன் தலையை அந்நாளில் பரிசுத்தப்படுத்து
12 வானாக. அவன் திரும்பவும் தன் விரத நாட்
களைக் **கர்த்தருக்கென்று** காத்து, ஒரு வரு
ஷத்து ஆட்டுக்குட்டியைக் குற்றநிவாரண
பலியாகக் கொண்டுவரக்கடவன்; அவனு
டைய நசரேய விரதம் தீட்டுப்பட்டதினால்
சென்ற நாட்கள் விருதாவாகும்.

[1] லேவி. 20. 17–20
[2] லேவி. 27. 2. நியா. 13. 5. அப். 21. 23, 24
[3] எரே. 35. 6–8. ஆமோ. 2. 12. லூ. 1. 15
[4] நியா. 16. 17, 19. 1 சாமு. 1. 11
[5] லேவி. 21. 1. 2–11
[6] 2 கொ. 6. 17, 18
[7] அப். 18. 18: 21. 24
[8] லேவி. 5. 6, 7
[9] அப். 21. 26
[10] லேவி. 4. 3–32. மல். 1. 13, 14 1 பே. 1. 19
[11] லேவி. 2. 4
[12] யாத். 29. 2
[13] அப். 21. 24
[14] யாத். 29. 22–24
[15] யாத். 29. 27, 28
[16] லேவி. 9. 22. உபா. 10. 8. யோசு. 8. 33. 1 நாளா. 23. 13
[17] சங். 134. 3
[18] சங். 121. 7. யோ. 17. 11

நசரேயனுக்குரியபிரமாணமாவது: [9]அவன் 13
விரதங் காக்கும் நாட்கள் நிறைவேறின
அன்றே, அவன் ஆசரிப்புக் கூடாரவாசலிலே
வந்து, சர்வாங்க தகனபலியாக ஒரு வரு 14
ஷத்து பழுதற்ற ஒரு ஆட்டுக்குட்டியையும்,
பாவநிவாரணபலியாக ஒரு வருஷத்து [10]பழு
தற்ற ஒரு பெண்ணாட்டுக்குட்டியையும், சமா
தானபலியாக பழுதற்ற ஒரு ஆட்டுக்கடாவை
யும், ஒரு கூடையில் எண்ணெயிலே பிசைந்த 15
புளிப்பில்லாத மெல்லிய மாவினால் செய்த
[11]அதிரசங்களையும், எண்ணெய் தடவப்பட்ட
புளிப்பில்லாத [12]அடைகளையும், அவைகளுக்கு
அடுத்த போஜனபலியையும், பானபலிகளை
யும் **கர்த்தருக்குத்** தன் காணிக்கையாகச்
செலுத்தக்கடவன். அவைகளை ஆசாரியன் 16
**கர்த்தருடைய** சந்நிதியில் கொண்டுவந்து, அவ
னுடைய பாவநிவாரண பலியையும் அவனு
டைய சர்வாங்க தகனபலியையும் செலுத்தி,
ஆட்டுக்கடாவைக் கூடையிலிருக்கும் புளிப் 17
பில்லாத அப்பங்களோடுங்கூடக் **கர்த்தருக்குச்**
சமாதானபலியாகச் செலுத்தி, அவனுடைய
போஜனபலியையும் பானபலியையும் படைப்
பானாக. அப்பொழுது நசரேயன் ஆசரிப் 18
புக் கூடாரவாசலிலே, பொருத்தனை செய்யப்
பட்ட [13]தன் தலையைச் சிரைத்து, பொருத்
தனை செய்யப்பட்ட தன் தலைமயிரை எடுத்து,
சமாதானபலியின்கீழ் எரிகிற அக்கினியில்
போடக்கடவன். நசரேயன் பொருத்தனை 19
செய்யப்பட்ட தன் தலைமயிரைச் சிரைத்துக்
கொண்டபின்பு, ஆசாரியன் ஆட்டுக்கடாவி
னுடைய வேவிக்கப்பட்ட [14]ஒரு முன்னந்
தொடையையும், கூடையில் இருக்கிறவை
களிலே புளிப்பில்லாத ஒரு அதிரசத்தையும்
புளிப்பில்லாத ஒரு அடையையும் எடுத்து,
அவனுடைய உள்ளங்கைகளில் வைத்து,
அவைகளைக் **கர்த்தருடைய** சந்நிதியில் அசை 20
வாட்டக்கடவன்; அது அசைவாட்டப்பட்ட
மார்க்கண்டத்தோடும், ஏறெடுத்துப் படைக்
கப்பட்ட முன்னந்தொடையோடும், ஆசாரிய
னைச் சேரும்; [15]அது பரிசுத்தமானது. பின்பு
நசரேயன் திராட்சரசம் குடிக்கலாம். பொருத் 21
தனை பண்ணின நசரேயனுக்கும், அவன்
தன் கைக்கு உதவுகிறதையல்லாமல், தன் நச
ரேய விரதத்தினிமித்தம் **கர்த்தருக்குச்** செலுத்
தும் காணிக்கைக்கும் அடுத்த பிரமாணம்
இதுவே. அவன் செய்த பொருத்தனையின்
படியே தன் பொருத்தனையின் பிரமாணத்துக்
கேற்க செய்து தீரவேண்டும் என்று சொல்
என்றார்.

பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி: 22
நீ ஆரோனோடும் அவன் குமாரரோடும் சொல் 23
லவேண்டியது என்னவென்றால்: நீங்கள்
இஸ்ரவேல் புத்திரரை ஆசீர்வதிக்கும்போ
து, [16]அவர்களைப் பார்த்துச் சொல்லவேண்
டியதாவது:

**கர்த்தர்** உன்னை [17]ஆசீர்வதித்து, [18]உன் 24
னைக் காக்கக்கடவர்.

25 **கர்த்தர்** தம்முடைய [1]முகத்தை உன்மேல்
பிரகாசிக்கப்பண்ணி, உன்மேல் [2]கிருபையா
யிருக்கக்கடவர்.
26 **கர்த்தர்** தம்முடைய முகத்தை [3]உன்மேல்
பிரசன்னமாக்கி, உனக்குச் [4]சமாதானம் கட்
டளையிடக்கடவர் என்பதே.
27 இவ்விதமாய் அவர்கள் என் நாமத்தை [5]இஸ்
ரவேல் புத்திரர்மேல் கூறக்கடவர்கள்; அப்
பொழுது நான் அவர்களை [6]ஆசீர்வதிப்பேன்
என்று சொல் என்றார்.

**7** மோசே வாசஸ்தலத்தை [7]ஸ்தாபனம்
பண்ணி, அதையும் அதின் எல்லாப் பணிமுட்
டுகளையும், பலிபீடத்தையும் அதின் எல்லாப்
பணிமுட்டுகளையும் அபிஷேகம்பண்ணி, பரி
2 சுத்தப்படுத்தி முடித்த நாளில், தங்கள் பிதாக்
களுடைய வம்சத் தலைவரும், எண்ணப்பட்ட
வர்களின் விசாரிப்புக்கு வைக்கப்பட்ட கோத்
திரப் பிரபுக்களுமாகிய இஸ்ரவேலின் பிர
புக்கள் காணிக்கைகளைச் செலுத்தினார்கள்.
3 தங்கள் காணிக்கையாக, ஆறு கூண்டுவண்
டில்களையும், பன்னிரண்டு மாடுகளையும்,
இரண்டிரண்டுபிரபுக்களுக்கு ஒவ்வொரு வண்
டிலும், ஒவ்வொரு பிரபுக்கு ஒவ்வொரு மாடு
மாக, **கர்த்தருக்குச்** செலுத்த வாசஸ்தலத்திற்கு
4 முன்பாகக் கொண்டுவந்தார்கள். அப்பொழுது
5 **கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ அவர்களிடத்
தில் ஆசாரிப்புக் கூடாரத்தின் ஊழியத்திற்காக
அவைகளை வாங்கி, லேவியருக்கு அவரவர்
வேலைக்குத்தக்கவைகளாகப் பங்கிட்டுக் கொடு
6 என்றார். அப்பொழுது மோசே அந்த வண்
டில்களையும் மாடுகளையும் வாங்கி, லேவியருக்
7 குக் கொடுத்தான். இரண்டு வண்டில்களையும்
நான்கு மாடுகளையும் கெர்சோன் புத்திரருக்கு,
[8]அவர்கள் வேலைக்குத்தக்க பங்காகக் கொடுத்
8 தான். நான்கு வண்டில்களையும் எட்டு மாடு
களையும் மெராரியின் புத்திரருக்கு, ஆசாரிய
னாகிய ஆரோனின் குமாரர் இத்தாமாருடைய
கையின்கீழிருக்கிற [9]அவர்களுடைய வேலைக்
9 குத்தக்க பங்காகக் கொடுத்தான். கோகாத்தின்
புத்திரருக்கோ ஒன்றும் கொடுக்கவில்லை;
தோள்மேல் [10]சுமப்பதே அவர்களுக்குரிய பரி
10 சுத்த ஸ்தலத்தின் வேலையாயிருந்தது. பலிபீ
டம் அபிஷேகம் பண்ணப்பட்ட நாளிலே,
பிரபுக்கள் [11]அதின் பிரதிஷ்டைக்காகக்
காணிக்கைகளைச் செலுத்தி, பலிபீடத்துக்கு
முன்பாகத் தங்கள் காணிக்கைகளைக் கொண்டு
11 வந்தார்கள். அப்பொழுது **கர்த்தர்** மோசேயை
நோக்கி: பலிபீடத்தின் பிரதிஷ்டைக்காக ஒவ்
வொரு பிரபுவும் தன்தன் நாளில் தன்தன்
காணிக்கையைச் செலுத்தக்கடவன் என்றார்.
12 அப்படியே முதலாம் நாளில் தன் காணிக்
கையைச் செலுத்தினவன் யூதா கோத்திரத்தா
னாகிய அம்மினதாபின் குமாரன் [12]நகசோன்.
13 அவன் காணிக்கையாவது: [13]போஜனபலியா
கப் படைக்கும்பொருட்டு எண்ணெயிலே
பிசைந்த மெல்லிய மாவினால் நிறைந்ததும்,
பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கல்கணக்காக நூற்று

1 சங். 31. 16; 67. 1. தானி. 9. 17
2 ஆதி. 43. 29. யாத். 33. 19. மல். 1. 9
3 சங். 4. 6; 89. 15
4 சங். 29. 11. ஏசா. 26. 3, 12. யோ. 14. 27. பிலி. 4. 7. 2 தெச. 3. 16
5 உபா. 28. 10. ஏசா. 43. 7. தானி. 9. 18, 19
6 சங். 5. 12; 115. 12, 13. அப். 3. 26. எபே. 1. 3
7 யாத். 40. 18. லேவி. 8. 10, 11
8 எண். 4. 25
9 லேவி. 4. 28–33
10 எண். 4. 6, 15-24
11 உபா. 20. 5. 1 இரா. 8. 63. எஸ்றா 6. 16. நெகே. 12. 27
12 எண். 2. 3
13 யாத். 30. 13. லேவி. 2. 1
14 யாத். 30. 34
15 லேவி. 1. 2
16 லேவி. 4. 23
17 லேவி. 3. 1

முப்பது சேக்கல் நிறையுள்ளதுமான ஒரு
வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறை
யுள்ள ஒரு வெள்ளிக் கலமும், ஆகிய இவ்வி
ரண்டும், தூபவர்க்கம் நிறைந்த [14]பத்துச்சேக் 14
கல் நிறையுள்ள பொன்னினால் செய்த ஒரு
தூபகரண்டியும், சர்வாங்க தகனபலியாக 15
[15]ஒரு காளையும், ஒரு ஆட்டுக்கடாவும், ஒரு வய
தான ஒரு ஆட்டுக்குட்டியும், பாவநிவாரணப 16
லியாக [16]ஒரு வெள்ளாட்டுக்கடாவும், சமா 17
தானபலியாக [17]இரண்டு மாடுகளும், ஐந்து
ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்க
டாக்களும், ஒரு வயதான ஐந்து ஆட்டுக்குட்
டிகளுமே; இது அம்மினதாபின் குமாரனாகிய
நகசோனின் காணிக்கை.

இரண்டாம் நாளில் இசக்காரின் பிரபுவா 18
கிய சூவாரின் குமாரன் நெதனெயேல்
காணிக்கை செலுத்தினான். அவன் காணிக் 19
கையாவது: போஜனபலியாகப் படைக்கும்
பொருட்டு எண்ணெயிலே பிசைந்த மெல்லிய
மாவினால் நிறைந்ததும், பரிசுத்த ஸ்தலத்தின்
சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்கல்
நிறையுள்ளதுமான ஒரு வெள்ளித்தாலமும்,
எழுபது சேக்கல் நிறையுள்ள ஒரு வெள்ளிக்
கலமும் ஆகிய இவ்விரண்டும், தூபவர்க்கம் 20
நிறைந்த பத்துச்சேக்கல் நிறையுள்ள பொன்
னினால் செய்த ஒரு தூபகரண்டியும், சர்வாங்க 21
தகனபலியாக ஒரு காளையும், ஒரு ஆட்டுக்கடா
வும், ஒரு வயதான ஒரு ஆட்டுக்குட்டியும், பாவ 22
நிவாரணபலியாக ஒரு வெள்ளாட்டுக்கடா
வும், சமாதானபலியாக இரண்டு மாடுகளும், 23
ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்
டுக்கடாக்களும், ஒரு வயதான ஐந்து ஆட்டுக்
குட்டிகளுமே; இது சூவாரின் குமாரனாகிய
நெதனெயேலின் காணிக்கை.

மூன்றாம் நாளில் ஏலோனின் குமாரனாகிய 24
எலியாப் என்னும் செபுலோன் புத்திரரின்
பிரபு காணிக்கை செலுத்தினான். அவன் 25
காணிக்கையாவது: போஜனபலியாகப் படை
க்கும்பொருட்டு எண்ணெயிலே பிசைந்த
மெல்லிய மாவினால் நிறைந்ததும், பரிசுத்த
ஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்
பது சேக்கல் நிறையுள்ளதுமான ஒரு வெள்
ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையுள்ள
ஒரு வெள்ளிக்கலமும் ஆகிய இவ்விரண்டும்,
தூபவர்க்கம் நிறைந்த பத்துச்சேக்கல் நிறை 26
யுள்ள பொன்னினால் செய்த ஒரு தூபகரண்
டியும், சர்வாங்க தகனபலியாக ஒரு காளையும், 27
ஒரு ஆட்டுக்கடாவும், ஒரு வயதான ஒரு ஆட்
டுக்குட்டியும், பாவநிவாரணபலியாக ஒரு 28
வெள்ளாட்டுக்கடாவும், சமாதானபலியாக 29
இரண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்க
ளும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும், ஒரு
வயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளுமே; இது
ஏலோனின் குமாரனாகிய எலியாபின் காணி
க்கை.

நான்காம் நாளில் சேதேயூரின் குமாரனா 30
கிய எலிசூர் என்னும் ரூபன் புத்திரரின் பிரபு

31 காணிக்கை செலுத்தினான். அவன் காணிக்
க்கையாவது: போஜனபலியாகப் படைக்கும்
பொருட்டு எண்ணெயிலே பிசைந்த மெல்
லிய மாவினால் நிறைந்ததும், பரிசுத்த ஸ்த
லத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது
சேக்கல் நிறையுள்ளதுமான ஒரு வெள்ளித்
தாலமும், எழுபது சேக்கல் நிறையுள்ள ஒரு
32 வெள்ளிக்கலமும் ஆகிய இவ்விரண்டும், தூப
வர்க்கம் நிறைந்த பத்துச்சேக்கல் நிறையுள்ள
பொன்னினால் செய்த ஒரு தூபகரண்டியும்,
33 சர்வாங்க தகனபலியாக ஒரு காளையும், ஒரு
ஆட்டுக்கடாவும், ஒரு வயதான ஒரு ஆட்டுக்
34 குட்டியும், பாவநிவாரணபலியாக ஒரு வெள்
35 ளாட்டுக்கடாவும், சமாதானபலியாக இரண்டு
மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து
வெள்ளாட்டுக்கடாக்களும், ஒரு வயதான
ஐந்து ஆட்டுக்குட்டிகளுமே; இது சேதேயூ
ரின் குமாரனாகிய எலிசூரின் காணிக்கை.
36 ஐந்தாம் நாளில் சூரிஷதாயின் குமாரனா
கிய செலூமியேல் என்னும் சிமியோன் புத்தி
37 ரரின் பிரபு காணிக்கை செலுத்தினான். அவன்
காணிக்கையாவது:போஜனபலியாகப்படைக்
கும்பொருட்டு எண்ணெயிலே பிசைந்த மெல்
லிய மாவினால் நிறைந்ததும், பரிசுத்த ஸ்தலத்
தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்
கல் நிறையுள்ளதுமான ஒரு வெள்ளித்தால
மும், எழுபது சேக்கல் நிறையுள்ள ஒரு வெள்
38 ளிக்கலமும் ஆகிய இவ்விரண்டும், தூபவர்க்
கம்நிறைந்தபத்துச்சேக்கல்நிறையுள்ளபொன்
39 னினால் செய்த ஒரு தூபகரண்டியும், சர்
வாங்க தகனபலியாக ஒரு காளையும், ஒரு
ஆட்டுக்கடாவும், ஒரு வயதான ஒரு ஆட்டுக்
40 குட்டியும், பாவநிவாரணபலியாக ஒரு வெள்
41 ளாட்டுக்கடாவும், சமாதானபலியாக இரண்டு
மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து
வெள்ளாட்டுக்கடாக்களும், ஒரு வயதான
ஐந்து ஆட்டுக் குட்டிகளுமே; இது சூரிஷ
தாயின் குமாரனாகிய செலூமியேலின் காணி
க்கை.
42 ஆறாம் நாளில் தேகுவேலின் குமாரனாகிய
எலியாசாப் என்னும் காத் புத்திரரின் பிரபு
43 காணிக்கை செலுத்தினான். அவன் காணிக்
கையாவது: போஜனபலியாகப் படைக்கும்
பொருட்டு எண்ணெயிலே பிசைந்த மெல்
லிய மாவினால் நிறைந்ததும், பரிசுத்த ஸ்தலத்
தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்
கல் நிறையுள்ளதுமான ஒரு வெள்ளித்தால
மும், எழுபது சேக்கல் நிறையுள்ள ஒரு வெள்
44 ளிக்கலமும் ஆகிய இவ்விரண்டும், தூபவர்க்
கம் நிறைந்த பத்துச்சேக்கல் நிறையுள்ள
பொன்னினால் செய்த ஒரு தூபகரண்டியும்,
45 சர்வாங்க தகனபலியாக ஒரு காளையும், ஒரு
ஆட்டுக்கடாவும், ஒரு வயதான ஒரு ஆட்டுக்
46 குட்டியும், பாவநிவாரணபலியாக ஒரு வெள்
47 ளாட்டுக்கடாவும், சமாதானபலியாக இரண்டு
மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து
வெள்ளாட்டுக்கடாக்களும், ஒரு வயதான
ஐந்து ஆட்டுக்குட்டிகளுமே; இது தேகுவே
லின் குமாரனாகிய எலியாசாபின் காணிக்கை.
ஏழாம் நாளில் அம்மியூதின் குமாரனா 48
கிய எலிஷாமா என்னும் எப்பிராயீம் புத்தி
ரரின் பிரபு காணிக்கை செலுத்தினான்.
அவன் காணிக்கையாவது: போஜனபலியா 49
கப் படைக்கும்பொருட்டு எண்ணெயிலே
பிசைந்த மெல்லிய மாவினால் நிறைந்ததும்,
பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கல் கணக்காக
நூற்றுமுப்பது சேக்கல் நிறையுள்ளதுமான
ஒரு வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல்
நிறையுள்ள ஒரு வெள்ளிக்கலமும் ஆகிய இவ்
விரண்டும், தூபவர்க்கம் நிறைந்த பத்துச் 50
சேக்கல் நிறையுள்ள பொன்னினால் செய்த
ஒரு தூபகரண்டியும், சர்வாங்க தகனபலியாக 51
ஒரு காளையும், ஒரு ஆட்டுக்கடாவும், ஒரு
வயதான ஒரு ஆட்டுக்குட்டியும், பாவநிவார 52
ணபலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவும், சமா 53
தானபலியாக இரண்டு மாடுகளும், ஐந்து
ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்
கடாக்களும், ஒரு வயதான ஐந்து ஆட்டுக்
குட்டிகளுமே; இது அம்மியூதின் குமாரனா
கிய எலிஷாமாவின் காணிக்கை.
எட்டாம் நாளில் பெதாசூரின் குமாரனாகிய 54
கமாலியேல் என்னும் மனாசே புத்திரரின்
பிரபு காணிக்கை செலுத்தினான். அவன் 55
காணிக்கையாவது: போஜனபலியாகப் படை
க்கும்பொருட்டு எண்ணெயிலே பிசைந்த
மெல்லிய மாவினால் நிறைந்ததும், பரிசுத்த
ஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்
பது சேக்கல் நிறையுள்ளதுமான ஒரு வெள்
ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையுள்ள
ஒரு வெள்ளிக்கலமும் ஆகிய இவ்விரண்டும்,
தூபவர்க்கம் நிறைந்த பத்துச்சேக்கல் நிறை 56
யுள்ள பொன்னினால் செய்த ஒரு தூபகரண்
டியும், சர்வாங்க தகனபலியாக ஒரு காளையும், 57
ஒரு ஆட்டுக்கடாவும், ஒரு வயதான ஒரு
ஆட்டுக்குட்டியும், பாவநிவாரணபலியாக ஒரு 58
வெள்ளாட்டுக்கடாவும், சமாதானபலியாக இர 59
ண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும்,
ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும், ஒரு வய
தான ஐந்து ஆட்டுக்குட்டிகளுமே; இது பெதா
சூரின் குமாரனாகிய கமாலியேலின் காணி
க்கை.
ஒன்பதாம் நாளில் கீதெயோனின் குமார 60
னாகிய அபீதான் என்னும் பென்யமீன் புத்தி
ரரின் பிரபு காணிக்கை செலுத்தினான்.
அவன் காணிக்கையாவது: போஜனபலியா 61
கப் படைக்கும்பொருட்டு எண்ணெயிலே
பிசைந்த மெல்லிய மாவினால் நிறைந்ததும்,
பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்
றுமுப்பது சேக்கல் நிறையுள்ளதுமான ஒரு
வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறை
யுள்ள ஒரு வெள்ளிக்கலமும் ஆகிய இவ்வி
ரண்டும், தூபவர்க்கம் நிறைந்த பத்துச்சேக் 62
கல் நிறையுள்ள பொன்னினால் செய்த ஒரு
தூபகரண்டியும், சர்வாங்க தகனபலியாக ஒரு 63

காளையும், ஒரு ஆட்டுக்கடாவும், ஒரு வயதான
64 ஒரு ஆட்டுக்குட்டியும், பாவநிவாரணபலி
65 யாக ஒரு வெள்ளாட்டுக்கடாவும், சமாதான
பலியாக இரண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்
கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்க
ளும், ஒரு வயதான ஐந்து ஆட்டுக்குட்டிக
ளுமே; இது கீதெயோனின் குமாரனாகிய
அபீதானின் காணிக்கை.
66 பத்தாம் நாளில் அம்மிஷதாயின் குமாரனா
கிய அகியேசேர் என்னும் தாண் புத்திரரின்
67 பிரபு காணிக்கை செலுத்தினான். அவன்
காணிக்கையாவது: போஜனபலியாகப் படை
க்கும்பொருட்டு எண்ணெயிலே பிசைந்த
மெல்லிய மாவினால் நிறைந்ததும், பரிசுத்த
ஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்
பது சேக்கல் நிறையுள்ளதுமான ஒரு வெள்
ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையுள்ள
ஒரு வெள்ளிக்கலமும் ஆகிய இவ்விரண்டும்,
68 தூபவர்க்கம் நிறைந்த பத்துச்சேக்கல் நிறை
யுள்ள பொன்னினால் செய்த ஒரு தூபகரண்
69 டியும், சர்வாங்க தகனபலியாக ஒரு காளை
யும், ஒரு ஆட்டுக்கடாவும், ஒரு வயதான ஒரு
70 ஆட்டுக்குட்டியும், பாவநிவாரணபலியாக ஒரு
71 வெள்ளாட்டுக்கடாவும், சமாதானபலியாக இர
ண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும்,
ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும், ஒரு வய
தான ஐந்து ஆட்டுக்குட்டிகளுமே; இது அம்
மிஷதாயின் குமாரனாகிய அகியேசேரின்
காணிக்கை.
72 பதினோராம் நாளில் ஒகிரானின் குமார
னாகிய பாகியேல் என்னும் ஆசேர் புத்திரரின்
73 பிரபு காணிக்கை செலுத்தினான். அவன்
காணிக்கையாவது: போஜனபலியாகப் படை
க்கும்பொருட்டு எண்ணெயிலே பிசைந்த
மெல்லிய மாவினால் நிறைந்ததும், பரிசுத்த
ஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்
பது சேக்கல் நிறையுள்ளதுமான ஒரு வெள்
ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையுள்ள
ஒரு வெள்ளிக்கலமும் ஆகிய இவ்விரண்டும்,
74 தூபவர்க்கம் நிறைந்த பத்துச்சேக்கல் நிறை
யுள்ள பொன்னினால் செய்த ஒரு தூபகரண்
75 டியும், சர்வாங்க தகனபலியாக ஒரு காளை
யும், ஒரு ஆட்டுக்கடாவும், ஒரு வயதான
76 ஒரு ஆட்டுக்குட்டியும், பாவநிவாரணபலியாக
77 ஒரு வெள்ளாட்டுக்கடாவும், சமாதானபலி
யாக இரண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்
களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும், ஒரு
வயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளுமே; இது
ஒகிரானின் குமாரனாகிய பாகியேலின் காணி
க்கை.
78 பன்னிரண்டாம் நாளில் ஏனானின் குமார
னாகிய அகீரா என்னும் நப்தலி புத்திரரின்
79 பிரபு காணிக்கை செலுத்தினான். அவன்
காணிக்கையாவது: போஜனபலியாகப் படை
க்கும்பொருட்டு எண்ணெயிலே பிசைந்த
மெல்லிய மாவினால் நிறைந்ததும், பரிசுத்த
ஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்
பது சேக்கல் நிறையுள்ளதுமான ஒரு வெள்
ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையுள்ள
ஒரு வெள்ளிக்கலமும் ஆகிய இவ்விரண்டும்,
தூபவர்க்கம் நிறைந்த பத்துச்சேக்கல் நிறை 80
யுள்ள பொன்னினால் செய்த ஒரு தூபகரண்
டியும், சர்வாங்க தகனபலியாக ஒரு காளையும், 81
ஒரு ஆட்டுக்கடாவும், ஒரு வயதான ஒரு ஆட்
டுக்குட்டியும், பாவநிவாரணபலியாக ஒரு 82
வெள்ளாட்டுக்கடாவும், சமாதானபலியாக 83
இரண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்
களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும்,
ஒரு வயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளுமே;
இது ஏனானின் குமாரனாகிய அகீராவின்
காணிக்கை.
பலிபீடம் அபிஷேகம்பண்ணப்பட்டபோ 84
து, இஸ்ரவேல் பிரபுக்களால் செய்யப்பட்ட
பிரதிஷ்டையாவது: வெள்ளித்தாலங்கள் பன்
னிரண்டு, வெள்ளிக்கலங்கள் பன்னிரண்டு,
பொன் தூபகரண்டிகள் பன்னிரண்டு. ஒவ் 85
வொரு வெள்ளித்தாலம் நூற்று முப்பது சேக்
கல் நிறையும், ஒவ்வொரு கலம் எழுபது சேக்
கல் நிறையுமாக, இந்தப் பாத்திரங்களின் வெ
ள்ளியெல்லாம் பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கல்
கணக்கின்படி இரண்டாயிரத்து நானூறு சேக்
கல் நிறையாயிருந்தது. தூபவர்க்கம் நிறைந்த 86
பொன் தூபகரண்டிகள் பன்னிரண்டு, ஒவ்
வொன்று பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கல் கணக்
கின்படி பத்துச்சேக்கல் நிறையாக, தூபகரண்
டிகளின் பொன்னெல்லாம் நூற்றிருபது சேக்
கல் நிறையாயிருந்தது. சர்வாங்க தகனபலி 87
யாகச் செலுத்தப்பட்ட காளைகளெல்லாம் பன்
னிரண்டு, ஆட்டுக்கடாக்கள் பன்னிரண்டு,
ஒரு வயதான ஆட்டுக்குட்டிகள் பன்னிர
ண்டு, அவைகளுக்கடுத்த போஜனபலிகளும்
கூடச் செலுத்தப்பட்டது; பாவநிவாரணபலி
யாகச் செலுத்தப்பட்ட வெள்ளாட்டுக்கடாக்
கள் பன்னிரண்டு. சமாதானபலியாகச் செலுத் 88
தப்பட்ட காளைகளெல்லாம் இருபத்துநான்கு;
ஆட்டுக்கடாக்கள் அறுபது, வெள்ளாட்டுக்
கடாக்கள் அறுபது, ஒரு வயதான ஆட்டுக்
குட்டிகள் அறுபது; பலிபீடம் அபிஷேகம்
பண்ணப்பட்டபின்பு செய்யப்பட்ட அதின்
பிரதிஷ்டை இதுவே. மோசே தேவனோடே 89
[1]பேசும்படி ஆசரிப்புக் கூடாரத்திற்குள் பிர
வேசிக்கும்போது, தன்னோடே பேசுகிறவ
ரின் சத்தம் சாட்சிப்பெட்டியின்மேலுள்ள கிரு
பாசனமான இரண்டு கேருபீன்களின் நடுவி
லிருந்துண்டாகக் கேட்பான்; அங்கே இருந்து
அவனோடே பேசுவார்.
**கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ ஆரோ 2 **8**
னோடே சொல்லவேண்டியது என்னவென்
றால்: நீ [2]விளக்குகளை ஏற்றும்போது ஏழு
விளக்குகளும் விளக்குத்தண்டிற்கு நேரே எரி
யவேண்டும் என்று சொல் என்றார். **கர்த்தர்** 3
மோசேக்குக் கட்டளையிட்ட பிரகாரம்
ஆரோன் செய்து, விளக்குத்தண்டிற்கு நேரே
ஒழுங்காக அதின் விளக்குகளை ஏற்றினான்.

[1] யாத். 33. 9, 11: 25. 22
[2] யாத். 25. 37: 40. 25

4 இந்தக் குத்துவிளக்கு, [1]அதின் பாதமுதல்
பூக்கள்வரைக்கும் பொன்னினால் அடிப்பு
வேலையாய்ச் செய்யப்பட்டிருந்தது; கர்த்தர்
மோசேக்குக் காண்பித்த மாதிரியின்படியே
அவன் குத்துவிளக்கை உண்டாக்கினான்.
5 பின்னும் கர்த்தர் மோசேயை நோக்கி:
6 நீ இஸ்ரவேல் சந்ததியாரினின்று லேவியரைப்
பிரித்தெடுத்து, அவர்களைச் சுத்திகரிப்பாயாக.
7 அவர்களைச் சுத்திகரிக்கும்படி அவர்களுக்குச்
செய்யவேண்டியதாவது: அவர்கள்மேல் [2]சுத்
திகரிக்கும் ஜலத்தைத் தெளிப்பாயாக; பின்பு
அவர்கள் சர்வாங்க சவரம்பண்ணி, தங்கள்
வஸ்திரங்களைத் தோய்த்து, தங்களைச் சுத்திகரி
8 க்கக்கடவர்கள். அப்பொழுது ஒரு காளையை
யும், அதற்கேற்ற எண்ணெயிலே பிசைந்த
மெல்லியமாவாகிய [3]போஜனபலியையும் கொ
ண்டுவரக்கடவர்கள்; பாவநிவாரண பலியாக
9 வேறொரு காளையையும் நீ வாங்கி, லேவிய
ரை [4]ஆசரிப்புக் கூடாரத்துக்குமுன் வரச்செ
ய்து, இஸ்ரவேல் புத்திரரின் சபையார் எல்
10 லாரையும் கூடிவரப்பண்ணுவாயாக. நீ லேவி
யரைக் கர்த்தருடைய சந்நிதியில் வரப்பண்
ணினபோது, இஸ்ரவேல் புத்திரர் தங்கள்
[5]கைகளை லேவியர்மேல் வைக்கக்கடவர்கள்.
11 லேவியர் கர்த்தருக்குரிய பணிவிடை செய்யும்
பொருட்டு, ஆரோன் அவர்களை இஸ்ரவேல்
புத்திரரின் காணிக்கையாகக் கர்த்தருக்கு முன்
பாக அசைவாட்டப்படும் காணிக்கையாய்
12 நிறுத்தக்கடவன். அதன்பின் லேவியர் தங்
கள் [6]கைகளைக் காளைகளுடைய தலையின்
மேல் வைப்பார்களாக; பின்பு நீ லேவியருக்
காகப் பாவநிவிர்த்தி செய்யும்பொருட்டு, கர்த்
தருக்கு அவைகளில் ஒன்றைப் பாவநிவாரண
பலியாகவும், மற்றொன்றைச் சர்வாங்க தகன
13 பலியாகவும் செலுத்தி, லேவியரை ஆரோ
னுக்கும் அவன் குமாரனுக்கும் முன்பாக நிறு
த்தி, அவர்களைக் கர்த்தருக்கு அசைவாட்டப்
14 படும் காணிக்கையாக்கி, இப்படி நீ லேவி
யரை இஸ்ரவேல் புத்திரரிலிருந்து பிரித்தெ
டுக்கக்கடவாய்; [7]லேவியர் என்னுடையவர்க
15 ளாயிருப்பார்கள். இப்படி அவர்களைச் சுத்தி
கரித்து, அவர்களை அசைவாட்டும் காணிக்
கை யாக்கக்கடவாய்; அதன்பின்பு லேவியர்
ஆசரிப்புக் கூடாரத்தில் பணிவிடை செய்யப்
16 பிரவேசிக்கக்கடவர்கள். இஸ்ரவேல் புத்திர
ரிலிருந்து அவர்கள் எனக்கு முற்றிலும் கொ
டுக்கப்பட்டிருக்கிறார்கள்; இஸ்ரவேல் புத்
திரர் எல்லாரிலும் கர்ப்பந்திறந்து பிறக்கிற
சகல முதற்பேறுக்கும் பதிலாக [8]அவர்களை
17 எனக்கு எடுத்துக்கொண்டேன். இஸ்ரவேல்
புத்திரரில் மனிதரிலும் மிருகஜீவன்களிலும்
[9]முதற்பேறானதெல்லாம் என்னுடையது;
நான் எகிப்துதேசத்திலே முதற்பேறான யா
வையும் சங்கரித்த நாளிலே அவைகளை எனக்
18 கென்று பரிசுத்தப்படுத்தி, பின்பு லேவியரை
இஸ்ரவேல் புத்திரரிலுள்ள முதற்பேறு சகலத்
19 திற்கும் பதிலாக எடுத்துக்கொண்டு, லேவியர்
இஸ்ரவேல் புத்திருடைய பணிவிடையை
ஆசரிப்புக் கூடாரத்தில் செய்யும்படிக்கும்,
இஸ்ரவேல் புத்திரருக்காகப் பாவநிவிர்த்தி
செய்யும்படிக்கும், இஸ்ரவேல் புத்திரர் தாங்
களே பரிசுத்த ஸ்தலத்தில் சேருகிறதினால்
இஸ்ரவேல் புத்திரரில் [10]வாதையுண்டாகாத
படிக்கும், லேவியரை அவர்களிலிருந்து எடு
த்து, ஆரோனுக்கும் அவன் குமாரருக்கும்
தத்தமாகக் கொடுத்தேன் என்றார். அப்பொ 20
ழுது மோசேயும் ஆரோனும் இஸ்ரவேல்
புத்திரரின் சபையார் யாவரும் கர்த்தர் லேவி
யரைக்குறித்து மோசேக்குக் கட்டளையிட்ட
படியெல்லாம் லேவியருக்குச் செய்தார்கள்.
லேவியர் சுத்திகரிக்கப்பட்டு, தங்கள் வஸ்தி 21
ரங்களைத் தோய்த்தார்கள்; பின்பு ஆரோன்
அவர்களைக் கர்த்தருக்கு முன்பாக அசைவாட்
டும் காணிக்கையாக நிறுத்தி, அவர்களைச் சுத்தி
கரிக்க அவர்களுக்காகப் பாவநிவிர்த்தி செய்
தான். அதற்குப்பின்பு லேவியர் ஆரோனுக் 22
கும் அவன் குமாரருக்கும் முன்பாக ஆசரிப்
புக் கூடாரத்தில் தங்கள் பணிவிடையைச்
செய்யும்படி பிரவேசித்தார்கள்; கர்த்தர்
லேவியரைக்குறித்து மோசேக்குக் கட்டளை
யிட்டபடியே அவர்களுக்குச் செய்தார்கள்.
பின்னும் கர்த்தர் மோசேயை நோக்கி: 23
லேவியருக்குரிய கட்டளை என்னவென்றால்: 24
[11]இருபத்தைந்து வயதுமுதல் அதற்கு மேற்
பட்ட வயதுள்ள யாவரும் ஆசரிப்புக்கூடாரத்
தின் பணிவிடையைச் செய்யும் சேனையிலே
சேவிக்க வரவேண்டும். ஐம்பது வயதுக்கு 25
மேற்பட்டவர்கள் வேலைசெய்யாமல் திருப்
பணி சேனையை விட்டு, ஆசரிப்புக் கூடாரத் 26
தின் காவலைக் காக்கிறதற்குத் தங்கள் சகோ
தரரோடேகூட ஊழியம் செய்வதேயன்றி,
[12]வேறொரு சேவகமும் செய்யவேண்டிய
தில்லை; இப்படி லேவியர் செய்யவேண்டிய
வேலைகளைக்குறித்துத் திட்டம்பண்ணக்கட
வாய் என்றார்.

அவர்கள் எகிப்துதேசத்திலிருந்து புறப் 9
பட்ட இரண்டாம் வருஷம் முதலாம் மாதத்
தில் கர்த்தர் சீனாய் வனாந்தரத்தில் மோசே
யை நோக்கி: குறித்தகாலத்தில் [13]இஸ்ரவேல் 2
புத்திரர் பஸ்காவை ஆசரிக்கக்கடவர்கள். இந்த 3
மாதம் பதினாலாந்தேதி அந்திநேரமான வேளை
யாகிய குறித்த காலத்தில் அதை ஆசரிக்கக்
கடவீர்கள்; அதற்குரிய எல்லாக் கட்டளையின்
படியேயும் முறைமைகளின்படியேயும் அதை
ஆசரிக்கக்கடவீர்கள் என்றார். அப்படியே பஸ் 4
காவை ஆசரிக்கும்படி மோசே இஸ்ரவேல்
புத்திரருக்குக் கட்டளையிட்டான். அதினால் 5
முதலாம் மாதம் பதினான்காம் தேதி அந்திநே
ரமான வேளையில், சீனாய் வனாந்திரத்தில் [14]பஸ்
காவை ஆசரித்தார்கள்; கர்த்தர் மோசேக்குக்
கட்டளையிட்டபடியெல்லாம் இஸ்ரவேல்
புத்திரர் செய்தார்கள். அந்நாளில் சிலர் மனித 6
பிரேதத்தினால் [15]தீட்டுப்பட்டபடியினால் பஸ்
காவை ஆசரிக்கத் தகாதவர்களாயிருந்தார்கள்;

1 யாத். 25. 31
2 எண். 19. 9, 17, 18
3 லேவி. 2. 1
4 யாத். 29. 4. 40 12
5 லேவி. 1. 4
6 யாத். 29. 10
7 எண். 3. 45
8 எண். 3. 12, 45
9 யாத். 13. 2, 12-15
10 2 நாளா. 26. 16
11 எண். 4. 3. 1 தீமோ. 1. 18
12 1 தீமோ. 4. 15
13 யாத். 12. 3, 6. உபா. 16. 1, 2
14 யோசு. 5. 10
15 எண். 5. 2. யோவா. 18. 28

அவர்கள் அந்நாளிலே [1]மோசேக்கும் ஆரோ
7 னுக்கும் முன்பாக வந்து: நாங்கள் மனித
பிரேதத்தினால் தீட்டுப்பட்டவர்கள்; குறித்த
காலத்தில் இஸ்ரவேல் புத்திரரோடேகூடக்
**கர்த்தருக்குக்** காணிக்கையைச் செலுத்தாத
படிக்கு, நாங்கள் விலக்கப்பட்டிருக்கவேண்
8 டியது என்ன என்றார்கள். மோசே அவர்
களை நோக்கி: பொறுங்கள்; **கர்த்தர்** உங்களைக்
குறித்துக் கட்டளையிடுவது என்ன என்று
கேட்பேன் என்றான்.
9,10 **கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ இஸ்ர
வேல் புத்திரரோடே சொல்லவேண்டியது
என்னவென்றால்: உங்களிலாகிலும் உங்கள்
சந்ததியாரிலாகிலும் ஒருவன் பிரேதத்தினால்
தீட்டுப்பட்டாலும், பிரயாணமாய்த் தூரம்போ
யிருந்தாலும், **கர்த்தருக்குப்** பஸ்காவை ஆசரிக்
11 கவேண்டும். அவர்கள் அதை இரண்டாம்
மாதம் பதினாலாந்தேதி அந்திநேரமான வேளை
யில் ஆசரித்து, [2]அதைப் புளிப்பில்லாத அப்
பங்களோடும் கசப்பான கீரைகளோடும் புசித்
12 து, விடியற்காலம்மட்டும் அதில் ஒன்றும் மீதி
யாக வைக்காமலும், [3]அதில் ஒரு எலும்பை
யும் முறிக்காமலும், பஸ்காவினுடைய சகல
முறைமைகளின்படியும் அதை ஆசரிக்கக்கட
13 வர்கள். ஒருவன் சுத்தமுள்ளவனுமாய்ப் பிர
யாணம் போகாதவனுமாயிருந்தும், பஸ்காவை
ஆசரிக்காதேபோனால், அந்த ஆத்துமா குறித்த
காலத்தில் **கர்த்தரின்** பலியைச் செலுத்தாதப
டியினால் [4]தன் ஜனத்தாரில் இராமல் அறுப்
புண்டுபோவான்; அந்த மனிதன் தன் பாவத்
14 தைச் சுமப்பான்.—ஒரு பரதேசி உங்களிடத்
திலே தங்கி, **கர்த்தருக்குப்** பஸ்காவை ஆசரிக்க
வேண்டுமானால், அவன் அதைப் பஸ்காவின்
கட்டளைப்படியும் அதின் முறைமையின்படி
யும் ஆசரிக்கக்கடவன்; [5]பரதேசிக்கும் சுதே
சிக்கும் ஒரே கட்டளை இருக்கவேண்டும்
என்று சொல் என்றார்.
15 வாசஸ்தலம் [6]ஸ்தாபனஞ் செய்யப்பட்ட
நாளிலே, மேகமானது சாட்சியின் கூடாரமா
கிய வாசஸ்தலத்தை மூடிற்று; சாயங்காலமா
னபோது, வாசஸ்தலத்தின்மேல் அக்கினிமய
மான ஒரு தோற்றம் உண்டாயிற்று; அது விடி
16 யற்காலமட்டும் இருந்தது. இப்படி நித்த
மும் இருந்தது; பகலில் மேகமும், இரவில்
அக்கினித்தோற்றமும் அதை மூடிக்கொண்டி
17 ருந்தது. மேகம் கூடாரத்திலிருந்து [7]மேலே
எழும்பும்போது இஸ்ரவேல் புத்திரர் பிரயா
ணம்பண்ணுவார்கள்; மேகம் தங்குமிடத்தில்
இஸ்ரவேல் புத்திரர் பாளயமிறங்குவார்கள்.
18 **கர்த்தருடைய** கட்டளையின்படியே இஸ்ர
வேல் புத்திரர் பிரயாணப்படுவார்கள்; **கர்த்த
ருடைய** கட்டளையின்படியே பாளயமிறங்கு
வார்கள்; மேகம் வாசஸ்தலத்தின்மேல் தங்கியி
ருக்கும் [8]நாளெல்லாம் அவர்கள் பாளயத்தில்
19 தங்கியிருப்பார்கள். மேகம் நெடுநாள் வாசஸ்
தலத்தின்மேல் தங்கியிருக்கும்போது, இஸ்ர
வேல் புத்திரர் பிரயாணப்படாமல் **கர்த்தரின்**

1 யாத். 18. 15, 19
2 யாத். 12. 8, 10
3 யாத். 12. 46. யோ. 19. 36
4 ஆதி. 17. 14. யாத். 12. 15
5 யாத். 12. 49
6 யாத். 40. 34. சங். 78. 14
7 யாத். 40. 36. சங். 80. 1
8 1 கொ. 10. 1
9 சகரி. 3. 7
10 யாத். 40. 36, 37
11 சங். 77. 20
12 ஏசா. 1. 13
13 எரே. 4. 5. யோவே. 2. 15
14 யாத். 18. 21
15 யோவே. 2. 1
16 யோசு. 6. 4. 1 நாளா. 15. 24
17 நியா. 2. 18. 2 நாளா. 13. 14. சங். 106. 4
18 லேவி. 23. 24. 1 நாளா. 15. 24. எஸ்றா 3. 10. நெகே. 12. 35. சங். 81. 3; 89. 15

[9]காவலைக் காத்துக்கொண்டிருப்பார்கள்.
மேகம் சிலநாள்மாத்திரம் வாசஸ்தலத்தின் 20
மேல் தங்கியிருக்கும்போது, **கர்த்தருடைய**
கட்டளையின்படியே பாளயமிறங்கியிருந்து,
**கர்த்தருடைய** கட்டளையின்படியே பிரயாண
ப்படுவார்கள். மேகம் சாயங்காலந்தொடங்கி 21
விடியற்காலமட்டும் இருந்து, விடியற்காலத்
தில் உயர எழும்பும்போது, உடனே பிரயா
ணப்படுவார்கள்; பகலிலாகிலும் இரவிலாகி
லும் மேகம் எழும்பும்போது பிரயாணப்படு
வார்கள். மேகமானது இரண்டு நாளாவது 22
ஒரு மாதமாவது ஒரு வருஷமாவது வாசஸ்த
லத்தின்மேல் தங்கியிருக்கும்போது, இஸ்ர
வேல் [10]புத்திரர் பிரயாணம்பண்ணாமல் பாள
யமிறங்கியிருப்பார்கள்; அது உயர எழும்பும்
போதோ பிரயாணப்படுவார்கள். **கர்த்தரு** 23
**டைய** கட்டளையின்படியே பாளயமிறங்கு
வார்கள்; **கர்த்தருடைய** கட்டளையின்படியே
பிரயாணம் பண்ணுவார்கள்; **கர்த்தர்** மோசே
யைக்கொண்டு [11]கட்டளையிடுகிறபடியே **கர்த்
தருடைய** காவலைக் காத்துக்கொள்வார்கள்.
**கர்த்தர்** மோசேயை நோக்கி: சபையைக் 2 **10**
[12]கூடிவரவழைப்பதற்கும் பாளயங்களைப் பிர
யாணப்படுத்துவதற்கும் உபயோகமாக இர
ண்டு வெள்ளிப் பூரிகைகளைச் செய்துகொள்
வாயாக; அவைகள் ஒரே வெள்ளித்தகட்டால்
செய்யப்படவேண்டும். அவைகளை ஊதும் 3
போது, [13]சபையார் எல்லாரும் ஆசரிப்புக்
கூடாரவாசலில் உன்னிடத்தில் கூடிவர
வேண்டும். ஒன்றைமாத்திரம் ஊதினால் இஸ் 4
ரவேலில் ஆயிரவர்களுக்குத் [14]தலைவராகிய
பிரபுக்கள் உன்னிடத்தில் கூடிவரக்கடவர்
கள். நீங்கள் அவைகளைப் [15]பெருந்தொனி 5
யாய் முழக்கும்போது, கிழக்கே இறங்கியிருக்
கிற பாளயங்கள் பிரயாணப்படக்கடவது.
அவைகளை நீங்கள் இரண்டாந்தரம் பெருந் 6
தொனியாய் முழக்கும்போது, தெற்கே இறங்
கியிருக்கிற பாளயங்கள் பிரயாணப்படக்கட
வது; அவர்களைப் பிரயாணப்படுத்துவதற்குப்
பெருந்தொனியாய் முழக்கவேண்டும். சபை 7
யைக் கூட்டுகிறதற்கு நீங்கள் ஊதவேண்டியதே
யன்றி பெருந்தொனியாய் முழக்கவேண்டாம்.
ஆரோனின் குமாரராகிய ஆசாரியர் [16]பூரிகை 8
களை ஊதக்கடவர்கள்; உங்கள் தலைமுறை
தோறும் இது உங்களுக்கு நித்தியகட்டளையா
யிருக்கக்கடவது. உங்கள் தேசத்தில் [17]உங்க 9
ளைத் துன்பப்படுத்துகிற சத்துருவுக்கு விரோ
தமாக யுத்தத்துக்குப் போகும்போது, பூரிகை
களைப் பெருந்தொனியாய் முழக்கக்கடவீர்கள்;
அப்பொழுது உங்கள் தேவனாகிய **கர்த்தரு
டைய** சமுகத்திலே நீங்கள் நினைவுகூரப்பட்டு,
உங்கள் பகைஞருக்கு நீங்கலாகி இரட்சிக்கப்
படுவீர்கள். உங்கள் [18]மகிழ்ச்சியின் நாளிலும், 10
உங்கள் பண்டிகைகளிலும் மாதப் பிறப்புகளி
லும், உங்கள் சர்வாங்க தகனபலிகளும் சமா
தானபலிகளும் செலுத்தப்படும்போது பூரிகை
களை ஊதவேண்டும்; அப்பொழுது அவைகள்

உங்கள் தேவனுடைய சமுகத்தில் உங்களுக்கு
[1]ஞாபகக்குறியாயிருக்கும்; நான் உங்கள் தேவ
னாகிய **கர்த்தர்** என்றார்.
11 இரண்டாம் வருஷம் இரண்டாம் மாதம்
இருபதாம் தேதியில் மேகம் [2]சாட்சியினுடைய
வாசஸ்தலத்தின்மீதிலிருந்து உயர எழும்
12 பிற்று. அப்பொழுது இஸ்ரவேல் புத்திரர்
சீனாய் [3]வனாந்தரத்திலிருந்து தங்கள் பிரயாண
வரிசைகளாய்ப் புறப்பட்டார்கள்; மேகம் பா
13 ரான் [4]வனாந்தரத்தில் தங்கிற்று. இப்படியே
**கர்த்தர்** மோசேயைக்கொண்டு கட்டளையிட்ட
படி முதல் பிரயாணம்பண்ணினார்கள்.
14 யூதா சந்ததியாருடைய பாளயத்தின் கொடி
அவர்கள் சேனைகளோடே முதல் புறப்பட்ட
து; அவனுடைய சேனைக்கு அம்மினதாபின்
குமாரன் நகசோன் தலைவனாயிருந்தான்.
15 இசக்கார் சந்ததியாருடைய கோத்திரத்தின்
சேனைக்குச் சூவாரின் குமாரன் நெதனெயேல்
16 தலைவனாயிருந்தான். செபுலோன் சந்ததியா
ருடைய கோத்திரத்தின் சேனைக்கு ஏலோ
னின் குமாரன் எலியாப் தலைவனாயிருந்தான்.
17 அப்பொழுது வாசஸ்தலம் [5]இறக்கிவைக்கப்
பட்டது; அதைக் கெர்சோன் புத்திரரும் மெ
ராரி புத்திரரும் சுமந்துகொண்டு புறப்பட்
18 டார்கள். அதற்குப்பின்பு ரூபன் சந்ததியா
ருடைய பாளயத்தின் கொடி அவர்கள் சேனை
களோடே புறப்பட்டது; அவனுடைய சே
னைக்குச் சேதேயூரின் குமாரன் எலிசூர் தலை
19 வனாயிருந்தான். சிமியோன் சந்ததியாருடைய
கோத்திரத்தின் சேனைக்குச் சூரிஷதாயின்
குமாரன் செலூமியேல் தலைவனாயிருந்தான்.
20 காத் சந்ததியாருடைய கோத்திரத்தின் சேனை
க்குத் தேகுவேலின் குமாரன் எலியாசாப்
21 தலைவனாயிருந்தான். கோகாத்தியர் [6]பரிசுத்
தமானவைகளைச் சுமந்துகொண்டு புறப்பட்
டார்கள்; இவர்கள் வந்து சேருமுன் மற்றவர்
கள் வாசஸ்தலத்தை ஸ்தாபனம்பண்ணுவார்
22 கள். அதற்குப்பின்பு, எப்பிராயீம் [7]சந்ததி
யாருடைய பாளயத்தின் கொடி அவர்கள்
சேனைகளோடே புறப்பட்டது; அவனுடைய
சேனைக்கு அம்மியூதின் குமாரன் எலிஷாமா
23 தலைவனாயிருந்தான். மனாசே சந்ததியாரு
டைய கோத்திரத்தின் சேனைக்குப் பெதாகு
ரின் குமாரன் கமாலியேல் தலைவனாயிருந்
24 தான். பென்யமீன் சந்ததியாருடைய கோத்
திரத்தின் சேனைக்குக் கீதெயோனின் குமா
25 ரன் அபீதான் தலைவனாயிருந்தான். அதற்குப்
பின்பு, தாண் [8]சந்ததியாருடைய பாளயத்தின்
கொடி சகல பாளயங்களுக்கும் பின்னாக அவர்
கள் சேனைகளோடே புறப்பட்டது; அவனு
டைய சேனைக்கு அம்மிஷதாயின் குமாரன்
26 அகியேசேர் தலைவனாயிருந்தான். ஆசேர்
சந்ததியாருடைய கோத்திரத்தின் சேனைக்கு
ஒகிரானின் குமாரன் பாகியேல் தலைவனா
27 யிருந்தான். நப்தலி சந்ததியாருடைய கோத்
திரத்தின் சேனைக்கு ஏனானின் குமாரன்
28 அகீரா தலைவனாயிருந்தான். இஸ்ரவேல் புத்
திரர் புறப்பட்டபோது, இவ்விதமாய்த் தங்கள்
தங்கள் சேனைகளின்படியே பிரயாணம்பண்
ணினார்கள்.
அப்பொழுது மோசே தன் மாமனாகிய [9]ரெ 29
குவேல் என்னும் மீதியானனுடைய குமார
னான ஒபாபை நோக்கி: [10]உங்களுக்குத் தரு
வேன் என்று **கர்த்தர்** சொன்ன ஸ்தலத்துக்கு
நாங்கள் பிரயாணம் போகிறோம்; நீயும் எங்க
ளோடேகூட வா, உனக்கு நன்மை செய்
வோம்; **கர்த்தர்** இஸ்ரவேலுக்கு [11]நல்ல வாக்
குத்தத்தம் பண்ணியிருக்கிறார் என்றான்.
அதற்கு அவன்: நான் வரக்கூடாது; என் 30
தேசத்துக்கும் என் இனத்தாரிடத்துக்கும்
போகவேண்டும் என்றான். அப்பொழுது 31
மோசே: நீ எங்களை விட்டுப் போகவேண்
டாம்; வனாந்தரத்திலே நாங்கள் பாளயமிறங்
கும் இடங்களை நீ அறிந்திருக்கிறபடியினால்,
[12]எங்களுக்குக் கண்களைப்போல இருப்பாய்.
நீ எங்களோடேகூட வந்தால், **கர்த்தர்** எங்க 32
ளுக்குச் செய்தருளும் நன்மையின்படியே
[13]உனக்கும் நன்மை செய்வோம் என்றான்.
அவர்கள் **கர்த்தருடைய** பர்வதத்தை [14]விட்டு, 33
மூன்றுநாள் பிரயாணம் போனார்கள்; மூன்று
நாள் பிரயாணத்திலும் **கர்த்தருடைய** உடன்
படிக்கைப்பெட்டி அவர்களுக்கு இளைப்பா
றும் ஸ்தலத்தைத் தேடிக் காட்டும்படிக்கு
[15]அவர்கள் முன் சென்றது. அவர்கள் பாள 34
யத்திலிருந்து பிரயாணம் போகிறபோது,
**கர்த்தருடைய** மேகம் [16]பகலில் அவர்கள்மேல்
தங்கியிருந்தது.
பெட்டியானது புறப்படும்போது, மோசே: 35
**கர்த்தாவே**, எழுந்தருளும், [17]உம்முடைய
சத்துருக்கள் சிதறடிக்கப்படுவார்களாக; உம்
மைப் பகைக்கிறவர்கள் உமக்கு முன்பாக
ஓடிப்போவார்களாக என்பான். அது தங்கும் 36
போது: **கர்த்தாவே**, அநேக ஆயிரவர்களாகிய
இஸ்ரவேலரிடத்தில் திரும்புவீராக என்று
சொல்லுவான்.

பின்பு, ஜனங்கள் முறையிட்டுக்கொண் **11**
டிருந்தார்கள்; அது **கர்த்தருடைய** செவிக
ளில் பொல்லாப்பாயிருந்தது; **கர்த்தர்** அதைக்
கேட்டபோது, அவருடைய கோபம் [18]மூண்
டது; **கர்த்தருடைய** அக்கினி [19]அவர்களுக்
குள்ளே பற்றியெரிந்து, பாளயத்தின் கடைசி
யிலிருந்த சிலரைப் பட்சித்தது. அப்பொழுது 2
ஜனங்கள் மோசேயை நோக்கிக் கூப்பிட்டார்
கள்; மோசே **கர்த்தரை** நோக்கி [20]விண்ணப்
பம்பண்ணினான்; உடனே அக்கினி அவிந்து
போயிற்று. **கர்த்தருடைய** அக்கினி அவர்க 3
ளுக்குள்ளே பற்றியெரிந்ததினால், அவ்விடத்
துக்குத் [21]தபேரா என்று பேரிட்டான்.
பின்பு அவர்களுக்குள் இருந்த [22]பல ஜாதி 4
யான அந்நிய ஜனங்கள் மிகுந்த இச்சையுள்ள
வர்களானார்கள்; இஸ்ரவேல் புத்திரரும்
திரும்ப அழுது, [23]நமக்கு இறைச்சியைப் புசிக்
கக் கொடுப்பவர் யார்? நாம் எகிப்திலே கிரய 5
மில்லாமல் சாப்பிட்ட [24]மச்சங்களையும், வெள்

[1] அப். 10. 4
[2] யாத். 40. 36, 37
[3] யாத். 19. 1
[4] ஆதி. 21. 21
[5] எண். 1. 51. 4. 24
[6] எண். 4. 4–15
[7] எண். 2. 18–24
[8] எண். 2 25–31. யோசு. 6. 9
[9] யாத். 2. 18
[10] ஆதி. 12. 7
[11] யாத். 6. 7, 8
[12] யோபு 29. 15
[13] நியா. 1. 16. 4. 11
[14] யாத். 3. 1
[15] உபா. 1. 33. யோசு 3 3, 6
[16] யாத். 13 21. நெகே. 9. 12, 19
[17] சங். 68. 1, 2: 132. 8
[18] சங். 78. 21
[19] லேவி. 10. 2. 2 இரா. 1. 12 சங். 106. 18
[20] யாக். 5. 16
[21] உபா. 9. 22
[22] யாத். 12. 38
[23] சங். 78. 18. 1 கொரி. 10. 6
[24] யாத். 16. 3

ளரிக்காய்களையும்,*கொம்மட்டிக்காய்களையும்,
கீரைகளையும், வெண்காயங்களையும், வெள்
6 ளைப்பூண்டுகளையும் நினைக்கிறோம். இப்பொ
ழுது நம்முடைய உள்ளம் [1]வாடிப்போகிறது;
இந்த மன்னாவைத்தவிர, நம்முடைய கண்க
ளுக்கு முன்பாக வேறொன்றும் இல்லையே
7 என்று சொன்னார்கள். அந்த மன்னா கொத்து
மல்லி விதையம்மாத்திரமும், அதின் நிறம்
8 †முத்துப்போலவும் இருந்தது. ஜனங்கள்
போய், அதைப் பொறுக்கிக்கொண்டுவந்து,
எந்திரங்களில் அரைத்தாவது உரல்களில்
இடித்தாவது, பானைகளில் சமைப்பார்கள்;
அதை அப்பங்களுமாகச் சுடுவார்கள்; அதின்
ருசி [2]புது ஒலிவ எண்ணெயின் ருசிபோ
9 லிருந்தது. இராவிலே பாளயத்தின்மேல் பனி
பெய்யும்போது, [3]மன்னாவும் அதின்மேல்
10 விழும். அந்தந்த வம்சங்களைச் சேர்ந்த ஜனங்
கள் தங்கள் தங்கள் கூடாரவாசலில் நின்று
அழுகிறதை மோசே கேட்டான்; **கர்த்தருக்கு**
மிகவும் கோபம் [4]மூண்டது; மோசேயின்
பார்வைக்கும் [5]அது பொல்லாப்பாயிருந்தது.
11 அப்பொழுது மோசே **கர்த்தரை** நோக்கி:
[6]நீர் இந்த ஜனங்கள் எல்லாருடைய பாரத்
தையும் என்மேல் சுமத்தினதினால், உமது
அடியானுக்கு உபத்திரவம் வரப்பண்ணின
தென்ன? உம்முடைய கண்களில் எனக்குக்
12 கிருபை கிடையாதே போனதென்ன? இவர்க
ளுடைய பிதாக்களுக்கு நான் [7]ஆணையிட்டுக்
கொடுத்த தேசத்துக்கு நீ இவர்களை [8]முலை
யுண்கிற பாலகனைத் தகப்பன் சுமந்துகொண்
டுபோவதுபோல, உன் மார்பிலே [9]அணைத்
துக்கொண்டுபோ என்று நீர் என்னோடே
சொல்லும்படி இந்த ஜனங்களையெல்லாம் கர்ப்
பந்தரித்தேனோ? இவர்களைப்பெற்றது நானோ?
13 இந்த ஜனங்கள் எல்லாருக்கும் கொடுக்கிற
தற்கு எனக்கு இறைச்சி [10]எங்கேயிருந்து
வரும்? எனக்கு இறைச்சி கொடு என்று என்
14 னைப் பார்த்து அழுகிறார்களே. இந்த ஜனங்க
ளெல்லாரையும் நான் [11]ஒருவனாய்த் தாங்கக்
கூடாது; எனக்கு இது மிஞ்சின பாரமாயிருக்
15 கிறது. உம்முடைய கண்களிலே எனக்குக்
கிருபை கிடைத்ததானால், இப்படி எனக்குச்
செய்யாமல், [12]என் உபத்திரவத்தை நான்
காணாதபடிக்கு இப்பொழுதே என்னைக் [13]கொ
ன்றுபோடும் என்று வேண்டிக்கொண்டான்.
16 அப்பொழுது **கர்த்தர்** மோசேயை நோக்கி:
இஸ்ரவேல் ஜனங்களுக்கு மூப்பரும் தலைவரு
மானவர்கள் இன்னார் என்று நீ அறிந்திருக்கி
றாயே, அந்த மூப்பரில் [14]எழுபதுபேரைக்
கூட்டி, அவர்களை ஆசரிப்புக் கூடாரத்தினி
டத்தில் அங்கே உன்னோடேகூட வந்து நிற்
17 கும்படி செய். அப்பொழுது நான் இறங்கி
வந்து, [15]அங்கே உன்னோடே பேசி, நீ ஒருவன்
மாத்திரம் ஜனங்களின் பாரத்தைச் சுமக்கா
மல், உன்னோடேகூட அவர்களும் அதைச்
சுமப்பதற்காக உன்மேல் இருக்கிற ஆவியை
18 [16]அவர்கள்மேலும் வைப்பேன். நீ ஜனங்களை
நோக்கி: நாளைக்காக உங்களைப் [17]பரிசுத்தம்பண்
ணுங்கள்; நீங்கள் இறைச்சி சாப்பிடுவீர்கள்;
எங்களுக்கு இறைச்சி சாப்பிடக் கொடுப்பவர்
யார் என்றும், எகிப்திலே எங்களுக்குச்
[18]சௌக்கியமாயிருந்தது என்றும், **கர்த்தரு**
**டைய** செவிகள் கேட்க அழுதீர்களே; ஆகை
யால், நீங்கள் சாப்பிடும்படி **கர்த்தர்** உங்க
ளுக்கு இறைச்சி கொடுப்பார். நீங்கள் ஒரு 19
நாள், இரண்டுநாள், ஐந்துநாள், பத்துநாள்,
இருபதுநாள் மாத்திரமல்ல, ஒரு மாதம்வரைக் 20
கும் புசிப்பீர்கள்; அது உங்கள் மூக்காலே
[19]புறப்பட்டு, உங்களுக்குத் தெவிட்டிப்போகு
மட்டும் புசிப்பீர்கள்; உங்களுக்குள்ளே இருக்
கிற **கர்த்தரை** அசட்டைபண்ணி, நாங்கள்
ஏன் எகிப்திலிருந்து புறப்பட்டோம் என்று
அவருக்கு முன்பாக அழுதீர்களே என்று
சொல் என்றார்.

அதற்கு மோசே: என்னோடிருக்கிற [20]கா 21
லாட்கள் ஆறுலட்சம்பேர்; ஒரு மாதம் முழுவ
தும் புசிக்கும்படி அவர்களுக்கு இறைச்சி
கொடுப்பேன் என்று சொன்னீரே, ஆடுமாடு 22
களை அவர்களுக்காக அடித்தாலும் [21]அவர்க
ளுக்குப் போதுமா? சமுத்திரத்து மச்சங்களை
யெல்லாம் அவர்களுக்காகச் சேர்த்தாலும் அவர்
களுக்குப் போதுமா என்றான். அதற்குக் 23
**கர்த்தர்** மோசேயை நோக்கி: **கர்த்தருடைய**
கை [22]குறுகியிருக்கிறதோ? என் வார்த்தையின்
படி [23]நடக்குமோ நடவாதோ என்று, நீ இப்
பொழுது காண்பாய் என்றார்.

அப்பொழுது மோசே புறப்பட்டு, **கர்த்தரு** 24
**டைய** வார்த்தைகளை ஜனங்களுக்குச் சொல்லி,
ஜனங்களின் மூப்பரில் எழுபதுபேரைக்
கூட்டி, கூடாரத்தைச் சுற்றிலும் அவர்களை
நிறுத்தினான். **கர்த்தர்** மேகத்தில் [24]இறங்கி, 25
அவனோடே பேசி, அவன்மேலிருந்த ஆவியை
மூப்பராகிய அந்த எழுபதுபேர்மேலும் வைத்
தார்; அந்த [25]ஆவி அவர்கள்மேல் வந்து தங்கின
மாத்திரத்தில் தீர்க்கதரிசனஞ் சொன்னார்கள்;
சொல்லி, பின்பு ஓய்ந்தார்கள். அப்பொழுது 26
இரண்டுபேர் பாளயத்தில் இருந்துவிட்டார்
கள்; ஒருவன் பேர் எல்தாத், மற்றவன் பேர்
மேதாத்; அவர்களும் பேர்வழியில் எழுதப்
பட்டிருந்தும், கூடாரத்துக்குப் போகப் புறப்
படாதிருந்தார்கள்; அவர்கள்மேலும் ஆவி
வந்து தங்கினதினால், [26]பாளயத்தில் தீர்க்கதரி
சனஞ்சொன்னார்கள். ஒருபிள்ளையாண்டான் 27
ஓடிவந்து, எல்தாதும் மேதாதும் பாளயத்தில்
தீர்க்கதரிசனஞ் சொல்லுகிறார்கள் என்று மோ
சேக்கு அறிவித்தான். உடனே மோசேயி 28
னிடத்திலுள்ள வாலிபரில் ஒருவனும் அவனு
டைய ஊழியக்காரனும் நூனின் குமாரனுமா
கிய யோசுவா பிரதியுத்தரமாக: என் ஆண்ட
வனாகிய மோசேயே, அவர்களைத் [27]தடை
பண்ணும் என்றான். அதற்கு மோசே: நீ 29
எனக்காக வைராக்கியம் காண்பிக்கிறாயோ?
**கர்த்தருடைய** ஜனங்கள் எல்லாரும் [28]தீர்க்கத
ரிசனஞ் சொல்லத்தக்கதாக, **கர்த்தர்** தம்மு

* வத்தாக்கு
1 எண். 21. 5
† பிதோலாகு. ஆதி. 2. 12
2 யாத். 16. 31
3 யாத். 16. 13, 14
4 சங். 78. 21. ஏசா. 5. 25
5 சங். 139. 21
6 உபா. 1. 12
7 ஆதி. 26. 3
8 ஏசா. 49. 23. 1 தெச. 2. 7
9 ஏசா. 40. 11
10 மத். 15. 33
11 யாத். 18. 18. உபா. 1. 9, 12
12 செப். 3. 15
13 1 இரா. 19. 4. யோனா 4. 3
14 யாத். 24. 1, 9
15 ஆதி. 11. 5; 18. 21. யாத். 19. 20
16 2 இரா. 2. 9, 15. ஏசா. 44. 3. யோவே. 2. 28
17 யாத். 19. 10
18 அப். 7. 39
19 சங். 78. 29; 106. 15
20 யாத். 12. 37
21 2 இரா. 7. 2. மாற். 8. 4. யோ. 6. 7, 9
22 ஏசா. 50. 2; 59. 1
23 எசே. 12. 25; 24. 14
24 17. வச.
25 1 சாமு. 10. 5, 6. ஒ. அப். 2. 17, 18. 1 கொ. 14. 1. ஒ
26 எரே. 36. 5, 6
27 லூக். 9. 49. யோ. 3. 26
28 1 கொ. 14. 5

டைய ஆவியை அவர்கள்மேல் இறங்கப்பண்
30 ணினால் நலமாயிருக்குமே என்றான். பின்பு,
மோசேயும் இஸ்ரவேலின் மூப்பரும் பாளயத்
திலே வந்து சேர்ந்தார்கள்.
31 அப்பொழுது **கர்த்தரிடத்திலிருந்து** புறப்
பட்ட ஒரு [1]காற்று சமுத்திரத்திலிருந்து
காடைகளை அடித்துக்கொண்டுவந்து, பாளயத்
திலும் பாளயத்தைச் சுற்றிலும், இந்தப் பக்கம்
ஒருநாள் பிரயாணமட்டும் அந்தப் பக்கம் ஒரு
நாள் பிரயாணமட்டும், தரையின்மேல் இரண்
டுமுழ உயரம் விழுந்துகிடக்கச் செய்தது.
32 அப்பொழுது ஜனங்கள் எழும்பி, அன்று பகல்
முழுவதும், இரா முழுவதும், மறுநாள் முழுவ
தும் காடைகளைச் சேர்த்தார்கள்; கொஞ்ச
மாய்ச் சேர்த்தவன் [2]பத்து ஓமர் அளவு சேர்த்
தான்; அவைகளைப் பாளயத்தைச் சுற்றிலும்
தங்களுக்காகக் குவித்துவைத்தார்கள்.
33 தங்கள் *பற்கள் நடுவே இருக்கும் இறைச்
சியை [3]அவர்கள் மென்று தின்னுமுன்னே
**கர்த்தருடைய** கோபம் ஜனங்களுக்குள்ளே
மூண்டது; **கர்த்தர்** ஜனங்களை மகா பெரிய
34 வாதையால் வாதித்தார். இச்சித்த ஜனங்களை
அங்கே அடக்கம்பண்ணினதினால், அந்த ஸ்த
லத்துக்குக் †கிப்ரோத் அத்தாவா என்று பே
ரிட்டான்.
35 பின்பு, ஜனங்கள் கிப்ரோத் அத்தாவா என்
னும் இடத்தைவிட்டு, ஆஸரோத்துக்குப் பிர
யாணம்பண்ணி, ஆஸரோத்திலே தங்கினார்
கள்.

**12** எத்தியோப்பியா தேசத்து [4]ஸ்திரீயை மோ
சே விவாகம்பண்ணியிருந்தபடியினால், மிரி
யாமும் ஆரோனும் அவன் விவாகம்பண்
ணின எத்தியோப்பியா தேசத்து ஸ்திரீயினி
2 மித்தம் அவனுக்கு விரோதமாய்ப் பேசி: **கர்த்**
**தர்** மோசேயைக்கொண்டுமாத்திரம் பேசினா
ரோ, [5]எங்களைக்கொண்டும் அவர் பேசினதில்
லையோ என்றார்கள்? **கர்த்தர்** [6]அதைக் கேட்
3 டார். மோசேயானவன் பூமியிலுள்ள சகல
மனிதரிலும் மிகுந்த சாந்தகுணமுள்ளவனாயி
4 ருந்தான். சடுதியிலே **கர்த்தர்** [7]மோசேயை
யும் ஆரோனையும் மிரியாமையும் நோக்கி: நீங்
கள் மூன்றுபேரும் ஆசரிப்புக் கூடாரத்துக்
குப் புறப்பட்டு வாருங்கள் என்றார்; மூன்று
5 பேரும் போனார்கள். **கர்த்தர்** [8]மேகத்தூணில்
இறங்கி, கூடாரவாசலிலே நின்று, ஆரோனை
யும் மிரியாமையும் கூப்பிட்டார்; அவர்கள்
6 இருவரும் போனார்கள். அப்பொழுது அவர்:
என் வார்த்தைகளைக் கேளுங்கள்; உங்களுக்
குள்ளே ஒருவன் தீர்க்கதரிசியாயிருந்தால்,
**கர்த்தராகிய** நான் [9]தரிசனத்தில் என்னை
அவனுக்கு வெளிப்படுத்தி, [10]சொப்பனத்தில்
7 அவனோடே பேசுவேன். என் தாசனாகிய
மோசேயோ அப்படிப்பட்டவன் அல்ல, [11]என்
வீட்டில் எங்கும் அவன் உண்மையுள்ளவன்.
8 நான் அவனுடன் மறைபொருளாக அல்ல,
[12]முகமுகமாகவும் பிரத்தியட்சமாகவும் பேசு
கிறேன்; அவன் **கர்த்தரின்** சாயலைக் காண்
கிறான்; இப்படியிருக்க, நீங்கள் என் தாச
னாகிய மோசேக்கு விரோதமாய்ப் பேச, [13]உங்
களுக்குப் பயமில்லாமற் போனதென்ன என்
றார். **கர்த்தருடைய** கோபம் அவர்கள்மேல் 9
மூண்டது; அவர் போய்விட்டார். மேகம் 10
கூடாரத்தை விட்டு நீங்கிப்போயிற்று; மிரி
யாம் உறைந்த மழையின் வெண்மைபோன்ற
[14]குஷ்டரோகியானாள்; ஆரோன் மிரியாமைப்
பார்த்தபோது, அவள் குஷ்டரோகியாயிருக்
கக்கண்டான். அப்பொழுது ஆரோன் மோ 11
சேயை நோக்கி: ஆ, என் ஆண்டவனே, [15]நாங்
கள் புத்தியீனமாய்ச் செய்த இந்தப் பாவத்தை
எங்கள்மேல் சுமத்தாதிரும். தன் தாயின் கர்ப் 12
பத்தில் பாதி மாம்சம் அழுகிச் [16]செத்துவிழுந்த
பிள்ளையைப்போல அவள் ஆகாதிருப்பாளாக
என்றான். அப்பொழுது மோசே **கர்த்தரை** 13
நோக்கி: என் தேவனே, அவளைக் [17]குணமாக்
கும் என்று கெஞ்சினான். **கர்த்தர்** மோசே 14
யை நோக்கி: அவள் தகப்பன் அவள் முகத்தி
லே [18]காறித் துப்பினதுண்டானால், அவள்
[19]ஏழுநாள் வெட்கப்படவேண்டாமோ, அது
போலவே அவள் ஏழுநாள் பாளயத்துக்குப்
புறம்பே விலக்கப்பட்டிருந்து, பின்பு சேர்த்
துக்கொள்ளப்படக்கடவள் என்றார். அப்ப 15
டியே மிரியாம் ஏழுநாள் பாளயத்துக்குப் புறம்
பே விலக்கப்பட்டிருந்தாள்; மிரியாம் சேர்த்
துக்கொள்ளப்படுமட்டும் ஜனங்கள் பிரயாணம்
பண்ணாதிருந்தார்கள். பின்பு, ஜனங்கள் ஆஸ 16
ரோத்திலிருந்து புறப்பட்டு, பாரான் வனாந்த
ரத்திலே பாளயமிறங்கினார்கள்.

**கர்த்தர்** மோசேயை நோக்கி: நான் இஸ் 2 **13**
ரவேல் புத்திரருக்குக் கொடுக்கும் கானான்தே
சத்தைச் [20]சுற்றிப்பார்ப்பதற்கு நீ மனிதரை
அனுப்பு; ஒவ்வொரு பிதாக்களின் கோத்திரத்
திலும் ஒவ்வொரு பிரபுவாகிய புருஷனை
அனுப்பவேண்டும் என்றார். மோசே **கர்த்த** 3
**ருடைய** வாக்கின்படியே அவர்களைப் பாரான்
வனாந்தரத்திலிருந்து அனுப்பினான்; அந்த
மனிதர் யாவரும் இஸ்ரவேல் புத்திரரின் தலை
வர்கள். அவர்களுடைய நாமங்களாவன: 4
ரூபன் கோத்திரத்தில் சக்கூரின் குமாரன்
சம்முவா. சிமியோன் கோத்திரத்தில் ஓரி 5
யின் குமாரன் சாப்பாத். யூதா கோத்திரத் 6
தில் எப்புன்னேயின் குமாரன் காலேப். இசக் 7
கார் கோத்திரத்தில் யோசேப்பின் குமாரன்
ஈகால். எப்பிராயீம் கோத்திரத்தில் நூனின் 8
குமாரன் [21]ஓசேயா. பென்யமீன் கோத்திரத் 9
தில் ரப்பூவின் குமாரன் பல்த்தி. செபு 10
லோன் கோத்திரத்தில் சோதியின் குமாரன்
காதியேல். யோசேப்பின் கோத்திரத்தைச் 11
சேர்ந்த மனாசே கோத்திரத்தில் சூசின் குமா
ரன் காதி. தாண் கோத்திரத்தில் கெமல்லி 12
யின் குமாரன் அம்மியேல். ஆசேர் கோத்தி 13
ரத்தில் மிகாவேலின் குமாரன் சேத்தூர். நப் 14
தலி கோத்திரத்தில் ஒப்பேசியின் குமாரன்
நாகபி. காத் கோத்திரத்தில் மாகியின் குமா 15
ரன் கூவேல். தேசத்தைச் சுற்றிப் பார்க்கும் 16

1 யாத். 16. 13. சங். 78. 26-29. 105. 40
2 யாத். 16. 36
* வாயில்
3 சங். 78. 30, 31
† இச்சையின் பிரேதக்குழிகள். உபா. 9. 22
4 யாத். 2. 21
5 யாத். 15. 20. மீகா 6. 4
6 எண். 11. 1. சங். 94. 7-9. ஏசா. 37. 4. எசே. 35. 12, 13
7 சங். 76. 9
8 எண். 11. 25
9 ஆதி. 15. 1; 46. 2. யோபு 33. 15. எசே. 1. 1. தா. 1. 11, 22. அப். 10. 11, 17
10 ஆதி. 31. 11. 1 இரா. 3. 5. யோபு 33. 15. மத். 1. 20
11 சங். 105. 26. எபி. 3. 2-5. 1 தீமோ. 3. 15
12 யாத். 33. 11-19. 1 கொ. 13. 12
13 2 பே. 2. 10. யூதா 8
14 உபா. 24. 9. 2 இரா. 5. 27
15 2 சாமு. 24. 10. நீதி. 30. 32
16 சங். 88. 4
17 யாக். 5. 15
18 எபி. 12. 9
19 லேவி. 13. 46
20 எண். 32. 8. உபா. 1. 22, 23
21 16. வசனம்

படி மோசே அனுப்பின மனிதரின் நாமங்
கள் இவைகளே; நூனின் குமாரனாகிய ஓசே
யாவுக்கு *யோசுவா என்று மோசே பேரிட்
17 டிருந்தான். அவர்களை மோசே கானான்தே
சத்தைச் சுற்றிப்பார்க்கும்படி அனுப்புகை
யில், அவர்களை நோக்கி: நீங்கள் இப்படித்
18 தெற்கே போய், [1]மலையில் ஏறி, தேசம் எப்
படிப்பட்டதென்றும், அங்கே குடியிருக்கிற
ஜனங்கள் பலவான்களோ பலவீனர்களோ,
கொஞ்சம்பேரோ அநேகம்பேரோ என்றும்,
19 அவர்கள் குடியிருக்கிற தேசம் எப்படிப்பட்
டது, அது நல்லதோ கெட்டதோ என்றும்,
அவர்கள் பட்டணங்கள் எப்படிப்பட்டதென்
றும், அவர்கள் கூடாரங்களில் குடியிருக்கிற
வர்களோ கோட்டைகளில் குடியிருக்கிறவர்க
20 ளோ என்றும், நிலம் எப்படிப்பட்டது, அது
வளப்பமானதோ [2]இளப்பமானதோ என்றும்;
அதில் விருட்சங்கள் உண்டோ இல்லையோ
என்றும் பாருங்கள்; [3]தைரியங்கொண்டிருந்து,
தேசத்தின் கனிகளிலே சிலவற்றைக் கொண்
டுவாருங்கள் என்றான். அக்காலம் திராட்சச்
செடி முதற்பழம் பழுக்கிற காலமாயிருந்தது.
21 அவர்கள் போய், சீன் வனாந்தரந்தொடங்கி,
[4]ஆமாத்துக்குப் போகிற வழியாகிய ரேகொப்
22 மட்டும், தேசத்தைச் சுற்றிப்பார்த்து, தெற்கே
யும் சென்று, எபிரோன்மட்டும் போனார்கள்;
அங்கே ஏனாக்கின் குமாரராகிய [5]அகீமானும்
சேசாயும் தல்மாயும் இருந்தார்கள். எபிரோன்
எகிப்திலுள்ள சோவானுக்கு ஏழுவருஷத்
23 திற்கு முன்னே கட்டப்பட்டது. பின்பு,
அவர்கள் எஸ்கோல் [6]பள்ளத்தாக்குமட்டும்
போய், அங்கே ஒரே குலையுள்ள ஒரு திராட்
சக்கொடியை அறுத்தார்கள்; அதை ஒரு தடி
யிலே இரண்டுபேர் கட்டித் தூக்கிக்கொண்டு
வந்தார்கள்; மாதளம்பழங்களிலும் அத்திப்
பழங்களிலும் சிலவற்றைக் கொண்டுவந்தார்
24 கள். இஸ்ரவேல் புத்திரர் அங்கே அறுத்த
திராட்சக்குலையினிமித்தம், அவ்விடம் எஸ்
25 கோல் பள்ளத்தாக்கு என்னப்பட்டது. அவர்
கள் தேசத்தைச் சுற்றிப்பார்த்து, நாற்பது நாள்
26 சென்றபின்பு திரும்பினார்கள். அவர்கள் பா
ரான் வனாந்தரத்தில் இருக்கிற காதேசுக்கு
வந்து, மோசே ஆரோன் என்பவர்களிடத்தி
லும் இஸ்ரவேல் புத்திரராகிய சபையார் எல்
லாரிடத்திலும் சேர்ந்து, அவர்களுக்கும் சபை
யார் அனைவருக்கும் [7]சமாசாரத்தை அறி
வித்து, தேசத்தின் கனிகளை அவர்களுக்குக்
27 காண்பித்தார்கள். அவர்கள் மோசேயை
நோக்கி: நீர் எங்களை அனுப்பின தேசத்துக்கு
நாங்கள் போய்வந்தோம்; [8]அது பாலும் தே
னும் ஓடுகிற தேசந்தான்; இது அதினுடைய
28 கனி. ஆனாலும், அந்தத் தேசத்திலே குடியி
ருக்கிற ஜனங்கள் [9]பலவான்கள்; பட்டணங்
கள் அரணிப்பானவைகளும் மிகவும் பெரிய
வைகளுமாய் இருக்கிறது; அங்கே ஏனாக்கின்
29 குமாரரையும் கண்டோம். அமலேக்கியர்
[10]தென்புறமான தேசத்தில் குடியிருக்கிறார்
கள்; ஏத்தியரும், எபூசியரும், எமோரியரும்
மலைநாட்டில் குடியிருக்கிறார்கள்; கானானியர்
கடல் அருகேயும் யோர்தானண்டையிலும்
குடியிருக்கிறார்கள் என்றார்கள். அப்பொ 30
ழுது காலேப் மோசேக்கு முன்பாக ஜனங்
களை அமர்த்தி: [11]நாம் உடனே போய் அதைச்
சுதந்தரித்துக்கொள்வோம்; [12]நாம் அதை எளி
தாய் ஜெயித்துக்கொள்ளலாம் என்றான். அவ 31
னோடேகூடப் போய்வந்த மனிதரோ: நாம்
போய் அந்த ஜனங்களோடே எதிர்க்க நம்மா
லே கூடாது; அவர்கள் நம்மைப்பார்க்கிலும்
[13]பலவான்கள் என்றார்கள். நாங்கள் போய்ச் 32
சுற்றிப் பார்த்துவந்த அந்தத் தேசம் தன் குடி
களைப் பட்சிக்கிற தேசம்; நாங்கள் அதிலே
கண்ட ஜனங்கள் எல்லாரும் [14]மிகவும் பெரிய
ஆட்கள். அங்கே இராட்சதப் பிறவியான 33
ஏனாக்கின் குமாரராகிய இராட்சதரையும் கண்
டோம்; நாங்கள் எங்கள் பார்வைக்கு [15]வெட்
டுக்கிளிகளைப்போல் இருந்தோம், அவர்கள்
பார்வைக்கும் அப்படியே இருந்தோம் என்று
சொல்லி, இப்படி இஸ்ரவேல் புத்திரருக்குள்
ளே தாங்கள் சுற்றிப் பார்த்துவந்த தேசத்தைக்
குறித்து துர்ச்செய்தி பரம்பச்செய்தார்கள்.

அப்பொழுது சபையார் எல்லாரும் கூக் **14**
குரலிட்டுப் புலம்பினார்கள்; ஜனங்கள் அன்று
இராமுழுதும் [16]அழுதுகொண்டிருந்தார்கள்.
இஸ்ரவேல் புத்திரர் எல்லாரும் மோசேக்கும் 2
ஆரோனுக்கும் விரோதமாக [17]முறுமுறுத்தார்
கள். சபையார் எல்லாரும் அவர்களை நோ
க்கி: எகிப்துதேசத்திலே செத்துப்போனோ
மானால் நலமாயிருக்கும்; இந்த வனாந்தரத்
திலே நாங்கள் செத்தாலும் நலம். நாங்கள் 3
பட்டயத்தால் மடியும்படிக்கும், எங்கள் பெண்
ஜாதிகளும் பிள்ளைகளும் கொள்ளையாகும்ப
டிக்கும், **கர்த்தர்** எங்களை இந்தத் தேசத்துக்
குக் கொண்டுவந்தது என்ன? எகிப்துக்குத்
திரும்பிப்போகிறதே எங்களுக்கு உத்தமம்
அல்லவோ என்றார்கள். பின்பு அவர்கள்: 4
நாம் ஒரு தலைவனை ஏற்படுத்திக்கொண்டு
[18]எகிப்துக்குத் திரும்பிப்போவோம் வாருங்கள்
என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்
டார்கள். அப்பொழுது மோசேயும் ஆரோ 5
னும் இஸ்ரவேல் புத்திரரின் சபையாராகிய
எல்லாக்கூட்டத்தாருக்கு முன்பாகவும் [19]முகங்
குப்புற விழுந்தார்கள். தேசத்தைச் சுற்றிப் 6
பார்த்தவர்களில் நூனின் குமாரனாகிய [20]யோசு
வாவும், எப்புன்னேயின் குமாரனாகிய காலே
பும், தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொ
ண்டு, இஸ்ரவேல் புத்திரரின் சமஸ்த சபை 7
யையும் நோக்கி: நாங்கள் போய்ச் சுற்றிப்
பார்த்து சோதித்த தேசம் மகா நல்ல தேசம்.
**கர்த்தர்** நம்மேல் [21]பிரியமாயிருந்தால், அந்தத் 8
தேசத்திலே நம்மைக் கொண்டுபோய், பாலும்
தேனும் ஓடுகிற அந்தத் தேசத்தை நமக்குக்
கொடுப்பார். **கர்த்தருக்கு** விரோதமாகமாத் 9
திரம் [22]கலகம்பண்ணாதிருங்கள்; அந்தத் தேசத்
தின் ஜனங்களுக்கு நீங்கள் பயப்படவேண்

* கர்த்தரின் இரட்சிப்பு. யாத். 17. 9
1 ஆதி. 14. 10. உபா. 1. 24. நியா. 1. 9, 10
2 நெகே. 9. 25, 35. எசே. 34. 14
3 உபா. 31. 6, 7-23
4 யோசு. 15. 1: 19. 28
5 யோசு. 11. 21: 21. 11
6 உபா. 1. 24, 25. நியா. 16. 4
7 எண். 20. 16. யோசு. 14. 6
8 யாத். 33. 3. உபா. 1. 25
9 உபா. 9. 1, 2
10 யாத். 17. 8
11 யோசு. 14. 7, 8
12 ரோ. 8. 37
13 உபா. 1. 28
14 ஆமோ. 2. 9
15 ஏசா. 40. 22
16 எண். 11. 4
17 யாத். 12. 2. சங். 106. 24, 25
18 நெகே. 9. 17. உபா. 17. 16. அப். 7. 39
19 எண். 16. 4, 22
20 30, 38. வசனம்
21 உபா. 10. 15. 2 சாமு. 15. 25. சங். 147. 10, 11. ஏசா. 62. 4
22 உபா. 9. 23: 20. 3

டியதில்லை; அவர்கள் நமக்கு [1]இரையாவார்
கள்; அவர்களைக் காத்த [2]நிழல் அவர்களை
விட்டு விலகிப்போயிற்று; **கர்த்தர்** நம்மோடே
[3]இருக்கிறார்; அவர்களுக்குப் பயப்படவேண்
10 டியதில்லை என்றார்கள். அப்பொழுது அவர்
கள்மேல் [4]கல்லெறியவேண்டும் என்று சபை
யார் எல்லாரும் சொன்னார்கள்; உடனே **கர்த்**
**தருடைய** மகிமை [5]ஆசரிப்புக் கூடாரத்தில்
இஸ்ரவேல் புத்திரர் எல்லாருக்கும் முன்பா
கக் காணப்பட்டது.
11 **கர்த்தர்** மோசேயை நோக்கி: எதுவரைக்
கும் இந்த ஜனங்கள் எனக்குக் [6]கோபம் உண்
டாக்குவார்கள்? தங்களுக்குள்ளே நான் காட்
டின சகல அடையாளங்களையும் அவர்கள்
கண்டும், எதுவரைக்கும் என்னை [7]விசுவாசி
12 யாதிருப்பார்கள்? நான் அவர்களைக் கொள்ளை
நோயினால் வாதித்து, சுதந்தரத்துக்குப் புறம்
பாக்கிப்போட்டு, அவர்களைப்பார்க்கிலும் உன்
னைப் [8]பெரிதும் பலத்ததுமான ஜாதியாக்கு
13 வேன் என்றார். மோசே **கர்த்தரை** நோக்கி:
எகிப்தியர் இதைக் கேட்பார்கள், [9]அவர்கள்
நடுவிலிருந்து உம்முடைய வல்லமையினாலே
14 இந்த ஜனங்களைக் கொண்டுவந்தீரே. **கர்த்த**
**ராகிய** நீர் இந்த ஜனங்களின் நடுவே [10]இருக்
கிறதையும், **கர்த்தராகிய** நீர் முகமுகமாய்த்
[11]தரிசனமாகிறதையும், உம்முடைய மேகம்
[12]இவர்கள்மேல் நிற்கிறதையும், பகலில் மேகத்
தூணிலும், இரவில் அக்கினித்தூணிலும் நீர்
இவர்களுக்குமுன் செல்லுகிறதையும் கேட்டி
ருக்கிறார்கள்; இந்தத்தேசத்தின் குடிகளுக்கும்
15 சொல்லுவார்கள். ஒரே மனிதனைக் *கொல்லு
கிறதுபோல இந்த ஜனங்களையெல்லாம் நீர்
கொல்வீரானால், அப்பொழுது உம்முடைய
16 கீர்த்தியைக் கேட்டிருக்கும் புறஜாதியார்: **கர்த்**
**தர்** அந்த ஜனங்களுக்குக் கொடுப்போம்
என்று ஆணையிட்டிருந்த தேசத்திலே அவர்க
ளைக் [13]கொண்டுபோய் விடக்கூடாதேபோன
படியினால், அவர்களை வனாந்தரத்திலே கொ
17 ன்றுபோட்டார் என்பார்களே. ஆகையால்
**கர்த்தர்** நீடிய சாந்தமும் [14]மிகுந்த கிருபையு
முள்ளவர் என்றும், அக்கிரமத்தையும் மீறுத
லையும் [15]மன்னிக்கிறவர் என்றும், குற்றமுள்ள
வர்களைக் குற்றமற்றவர்களாக விடாமல், பிதா
க்கள் செய்த அக்கிரமத்தைப் பிள்ளைகளிடத்
தில் மூன்றாம் நான்காம் தலைமுறைமட்டும்
விசாரிக்கிறவர் என்றும், நீர் சொல்லியிருக்
18 கிறபடியே, என் ஆண்டவருடைய வல்லமை
19 [16]பெரிதாய் விளங்குவதாக. உமது கிருபையி
னுடைய மகத்துவத்தின்படியேயும், எகிப்தை
விட்டதுமுதல் இந்நாள்வரைக்கும் இந்த ஜனங்
களுக்கு மன்னித்து வந்தபடியேயும், இந்த
ஜனங்களின் அக்கிரமத்தை [17]மன்னித்தருளும்
20 என்றான். அப்பொழுது **கர்த்தர்**: உன் வார்த்
21 தையின்படியே [18]மன்னித்தேன். பூமியெல்
லாம் **கர்த்தருடைய** மகிமையினால் [19]நிறைந்
திருக்கும் என்று என்னுடைய ஜீவனைக்
22 கொண்டு சொல்லுகிறேன். என் மகிமை

யையும், நான் எகிப்திலும் வனாந்தரத்திலும்
செய்த என் அடையாளங்களையும் கண்டிருந்
தும், என் சத்தத்துக்குச் செவிகொடாமல்,
இதனோடே பத்துமுறை என்னைப் பரிட்சை
பார்த்த மனிதரில் ஒருவரும், அவர்கள் பிதாக் 23
களுக்கு நான் ஆணையிட்டுக்கொடுத்த தேசத்
தைக் காணமாட்டார்கள்; [20]எனக்குக் கோபம்
உண்டாக்கினவர்களில் ஒருவரும் அதைக்
காணமாட்டார்கள். என்னுடைய தாசனாகிய 24
காலேப் [21]வேறே ஆவியை உடையவனாயி
ருக்கிறபடியினாலும், உத்தமமாய் என்னைப்
பின்பற்றிவந்தபடியினாலும், அவன் போய்
வந்த தேசத்திலே அவனைச் சேரப்பண்ணு
வேன்; அவன் சந்ததியார் அதைச் சுதந்தரித்
துக்கொள்ளுவார்கள். அமலேக்கியரும் கானா 25
னியரும் பள்ளத்தாக்கிலே குடியிருக்கிறபடி
யினால், நாளைக்கு நீங்கள் திரும்பி சிவந்த
சமுத்திரத்துக்குப் போகிற வழியாய் வனாந்
தரத்துக்குப் பிரயாணம் பண்ணுங்கள் என்றார்.
பின்னும் **கர்த்தர்** மோசேயையும் ஆரோ 26
னையும் நோக்கி: எனக்கு விரோதமாய் முறு 27
முறுக்கிற இந்தப் பொல்லாத சபையாரை
[22]எதுவரைக்கும் பொறுப்பேன்? இஸ்ரவேல்
புத்திரர் எனக்கு விரோதமாய் [23]முறுமுறுக்
கிறதைக் கேட்டேன். நீ அவர்களோடே 28
சொல்லவேண்டியது என்னவென்றால்: நீங்
கள் என் செவிகள் கேட்கச் சொன்னபிரகாரம்
[24]உங்களுக்குச் செய்வேன் என்பதை என் ஜீவ
னைக்கொண்டு [25]சொல்லுகிறேன் என்று **கர்த்**
**தர்** உரைக்கிறார். இந்த வனாந்தரத்தில் உங் 29
கள் பிரேதங்கள் விழும்; உங்களில் இரு
பது வயதுமுதல் அதற்கு மேற்பட்டவர்களாக
எண்ணப்பட்டு, [26]உங்கள் தொகைக்கு உட்
பட்டவர்களும் எனக்கு விரோதமாய் முறு
முறுத்திருக்கிறவர்களுமாகிய அனைவரின்
பிரேதங்களும் விழும். எப்புன்னேயின் குமா 30
ரன் காலேபும், நூனின் குமாரன் யோசுவா
வும் தவிர, மற்றவர்களாகிய நீங்கள் நான் உங்
களைக் குடியேற்றுவேன் என்று [27]ஆணையிட்
டுக் கொடுத்த தேசத்தில் பிரவேசிப்பதில்லை.
கொள்ளையாவார்கள் என்று நீங்கள் சொன்ன 31
உங்கள் குழந்தைகளையோ நான் அதில் பிர
வேசிக்கச் செய்வேன்; நீங்கள் [28]அசட்டை
பண்ணின தேசத்தை அவர்கள் கண்டறிவார்
கள். உங்கள் பிரேதங்களோ [29]இந்த வனாந் 32
தரத்திலே விழும். அவைகள் வனாந்தரத்திலே 33
விழுந்து தீருமட்டும், [30]உங்கள் பிள்ளைகள் நாற்
பது வருஷம் வனாந்தரத்திலே திரிந்து, நீங்
கள் சோரம்போன [31]பாதகத்தைச் சுமப்பார்
கள். நீங்கள் தேசத்தைச் சுற்றிப்பார்த்த நாற் 34
பதுநாள் இலக்கத்தின்படியே, ஒவ்வொரு
நாள் ஒவ்வொரு வருஷமாக, நீங்கள் நாற்பது
வருஷம் உங்கள் அக்கிரமங்களைச் சுமந்து,
என் உடன்படிக்கைக்கு [32]வந்த மாறுதலை
உணருவீர்கள். **கர்த்தராகிய** நான் இதைச் 35
சொன்னேன்; எனக்கு விரோதமாய்க் கூட்
டங்கூடின இந்தப் [33]பொல்லாத சபையார்

1 எண். 24. 8
2 சங். 121. 5
3 ஆதி. 48. 21. உபா. 20. 1-4. யோசு. 1. 22. சங். 46. 10, 11. ஏசா. 41. 10. ஆமோ. 5. 14. சகரி. 8. 23. ரோ. 8. 31
4 யாத். 17. 4
5 யாத். 16. 10. எண். 16. 19, 42
6 சகரி. 8. 14. எபி. 3. 8, 16
7 சங். 106. 24. யோ. 12. 37. எபி. 3. 18
8 யாத். 32. 10
9 உபா. 9. 26, 28; 32. 27. எசே. 20. 9, 14
10 யோசு. 2. 9, 10
11 யாத். 33. 11
12 யாத். 13. 21. சங். 78. 14
* ஒரே அடியினால்
13 உபா. 9. 28. யோசு. 7. 9
14 யாத். 34. 6, 7. யோனா 4. 2
15 மீகா 7. 18
16 மீகா 3. 8. மத். 9. 6, 8
17 சங். 78. 38
18 சங். 106. 23. யாக். 5. 16
19 சங். 72. 19. ஏசா. 66. 18, 19
20 உபா. 1. 35. சங். 95. 11. எசே. 20. 15. எபி. 3. 17, 18
21 எண். 32. 11, 12
22 மத். 17. 17
23 யாத். 16. 12
24 2. [illegible]
25 எபி. 3. 17
26 எண். 1. 45
27 ஆதி. 14. 22
28 சங். 106. 24
29 1 கொ. 10. 5. எபி. 3. 17
30 சங். 107. 40
31 எரே. 3. 1, 2. எசே. 23. 35 ஓசி. 9. 1
32 எரே. 18. 9, 10. புலம்பல் 3. 31-35
33 1 கொ. 10. 5

யாவருக்கும் இப்படியே செய்வேன்; இந்த
வனாந்தரத்திலே அழிவார்கள், இங்கே சாவார்
கள் என்று சொல் என்றார்.
36 அந்தத் தேசத்தைச் சோதித்துப் பார்க்கும்
படி மோசேயால் அனுப்பப்பட்டுத் திரும்பி,
அந்தத் தேசத்தைக் குறித்துத் துர்ச்செய்தி
37 கொண்டுவந்து, சபையார் எல்லாரும் அவ
னுக்கு விரோதமாய் முறுமுறுக்கும்படி அந்
தத் துர்ச்செய்தியைச் சொன்னவர்களாகிய
[1]அந்த மனிதர் **கர்த்தருடைய** சந்நிதியில்
38 வாதையினால் செத்தார்கள். தேசத்தைச் சுற்
றிப் பார்க்கப்போன அந்த மனிதரில் நூனின்
குமாரனாகிய யோசுவாவும், எப்புன்னேயின்
குமாரனாகிய காலேபும்மாத்திரம் [2]உயிரோடி
39 ருந்தார்கள். மோசே இந்த வார்த்தைகளை இஸ்
ரவேல் புத்திரர் அனைவரோடும் சொன்ன
போது, ஜனங்கள் மிகவும் [3]துக்கித்தார்கள்.
40 அதிகாலமே அவர்கள் எழுந்திருந்து: நாங்கள்
பாவஞ்செய்தோம், **கர்த்தர்** வாக்குத்தத்தம்
பண்ணின இடத்துக்கு நாங்கள் போவோம்
என்று சொல்லி மலையின் உச்சியில் ஏறத்
41 துணிந்தார்கள். மோசே அவர்களை நோக்கி:
நீங்கள் இப்படி **கர்த்தரின்** கட்டளையை மீறு
கிறதென்ன? அது உங்களுக்கு வாய்க்காது.
42 நீங்கள் உங்கள் சத்துருக்களுக்கு முன்பாக
முறிய அடிக்கப்படாதபடிக்கு ஏறிப்போகா
திருங்கள்; **கர்த்தர்** உங்கள் நடுவில் இரார்.
43 அமலேக்கியரும் கானானியரும் அங்கே உங்க
ளுக்கு முன்னே இருக்கிறார்கள்; பட்டயத்தி
னால் விழுவீர்கள்; நீங்கள் **கர்த்தரை** விட்டுப்
பின்வாங்கினபடியால், **கர்த்தர்** உங்களோ
44 டே இருக்கமாட்டார் என்றார். ஆனாலும்
அவர்கள் மலையின் உச்சியில் ஏறத் துணிந்
தார்கள்; **கர்த்தருடைய** உடன்படிக்கையின்
பெட்டியும் மோசேயும் பாளயத்தை விட்டுப்
45 போகவில்லை. அப்பொழுது அமலேக்கிய
ரும் கானானியரும் அந்த மலையிலே இருந்து
இறங்கிவந்து, [4]அவர்களை முறிய அடித்து,
அவர்களை ஓர்மா மட்டும் துரத்தினார்கள்.

**15** 2 **கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ இஸ்ர
வேல் புத்திரரோடே சொல்லவேண்டியது
என்னவென்றால்: நீங்கள் குடியிருக்கும்படி
நான் உங்களுக்குக் கொடுக்கும் தேசத்தில்
3 நீங்கள் போய்ச் சேர்ந்தபின்பு, விசேஷித்த
பொருத்தனையாயாவது, உற்சாக பலியாயா
வது, உங்கள் பண்டிகைகளில் செலுத்தும்
பலியாயாவது, **கர்த்தருக்கு** மாடுகளிலாகிலும்
ஆடுகளிலாகிலும் சர்வாங்க தகனபலியையா
வது மற்ற யாதொரு பலியையாவது **கர்த்த
ருக்குச்** சுகந்த வாசனையான தகனமாகப் பலி
4 யிடும்போது, தன் படைப்பைக் **கர்த்தருக்குச்**
செலுத்துகிறவன் சர்வாங்க தகனபலிக்காகி
லும் மற்றப் பலிக்காகிலும் ஒரு ஆட்டுக்குட்டி
யுடனே, ஒரு மரக்காலிலே பத்தில் ஒரு பங்
கும் காற்படி எண்ணெயிலே பிசைந்ததுமான
மெல்லிய மாவின் [5]போஜனபலியைச் செலுத்
5 தக்கடவன். பானபலியாக காற்படி திராட்ச

[1] 1 கொ. 10. 10. எபி. 3. 17. யூதா 5
[2] யோசு. 14. 6, 10
[3] யாத். 33. 4
[4] உபா. 1. 44. நியா. 1. 17
[5] லேவி. 14. 10
[6] லேவி. 7. 11
[7] யாத். 12. 49
[8] யோசு. 5. 11, 12
[9] நீதி. 3. 9, 10
[10] லேவி. 23. 10

ரசத்தையும் படைக்கவேண்டும். ஆட்டுக் 6
கடாவாயிருந்ததேயாகில், பத்தில் இரண்டு
பங்கானதும், ஒரு படியில் மூன்றில் ஒரு பங்
காகிய எண்ணெயிலே பிசைந்ததுமான மெல்
லிய மாவின் போஜனபலியையும், பானபலி 7
யாக ஒரு படியில் மூன்றில் ஒரு பங்கு திராட்
சரசத்தையும் **கர்த்தருக்குச்** சுகந்த வாசனை
யான படைப்பாகப் படைக்கவேண்டும். நீ 8
சர்வாங்க தகனபலிக்காகிலும், விசேஷித்த
பொருத்தனை பலிக்காகிலும், சமாதான பலிக்
காகிலும், [6]ஒரு காளையைக் **கர்த்தருக்குச்** செ
லுத்த ஆயத்தப்படுத்தும்போது, அதனோடே 9
பத்தில் மூன்று பங்கானதும், அரைப்படி
எண்ணெயிலே பிசைந்ததுமான மெல்லிய
மாவின் போஜனபலியையும், பானபலியாக 10
அரைப்படி திராட்சரசத்தையும், **கர்த்தருக்குச்**
சுகந்த வாசனையான தகனபலியாகப் படைக்க
வேண்டும். இந்தப்பிரகாரமாகவே ஒவ்வொரு 11
மாட்டுக்காகிலும், ஆட்டுக்கடாவுக்காகிலும்,
செம்மறியாட்டுக் குட்டிக்காகிலும், வெள்
ளாட்டுக் குட்டிக்காகிலும் செய்து படைக்க
வேண்டும். நீங்கள் படைக்கிறவைகளின் 12
இலக்கத்திற்குத் தக்கதாய் ஒவ்வொன்றிற்காக
வும் இந்தப்பிரகாரம் செய்யவேண்டும். சுதே 13
சத்தில் பிறந்தவர்கள் யாவரும் **கர்த்தருக்குச்**
சுகந்த வாசனையான தகனபலியைச் செலுத்
தும்போது இவ்விதமாகவே செய்யவேண்டும்.
உங்களிடத்திலே தங்கியிருக்கிற அந்நியனா 14
வது, உங்கள் நடுவிலே உங்கள் தலைமுறை
தோறும் குடியிருக்கிறவனாவது, **கர்த்தருக்குச்**
சுகந்த வாசனையான தகனபலி செலுத்தவே
ண்டுமானால், நீங்கள் செய்கிறபடியே அவ
னும் செய்யவேண்டும். சபையாராகிய உங் 15
களுக்கும் உங்களிடத்தில் தங்குகிற அந்நிய
னுக்கும் [7]ஒரே பிரமாணம் இருக்கவேண்டும்
என்பது உங்கள் தலைமுறைகளில் நித்திய
கட்டளையாயிருக்கக்கடவது; **கர்த்தருக்கு**
முன்பாக அந்நியனும் உங்களைப்போலவே
இருக்கவேண்டும். உங்களுக்கும் உங்களிடத் 16
தில் தங்குகிற அந்நியனுக்கும் ஒரே பிரமாண
மும் ஒரே முறைமையும் இருக்கக்கடவது
என்று சொல் என்றார்.
பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி: 17
நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண் 18
டியது என்னவென்றால்: நான் உங்களை
அழைத்துக்கொண்டுபோகிற தேசத்தில் நீங்
கள் சேர்ந்து, தேசத்தின் [8]ஆகாரத்தைப் புசிக் 19
கும்போது, **கர்த்தருக்கு** ஏறெடுத்துப் படைக்
கும் காணிக்கையைச் செலுத்தக்கடவீர்கள்.
உங்கள் பிசைந்த மாவினால் செய்த முதற்பல 20
னாகிய [9]அதிரசத்தை ஏறெடுத்துப் படைப்பீர்
களாக; போரடிக்கிற களத்தின் படைப்பை
ஏறெடுத்துப் படைக்கிறதுபோல [10]அதையும்
ஏறெடுத்துப் படைக்கவேண்டும். இப்படி 21
உங்கள் தலைமுறைதோறும் உங்கள் பிசைந்த
மாவின் முதற்பலனிலே **கர்த்தருக்குப்** படை
ப்பை ஏறெடுத்துப் படைக்கக்கடவீர்கள்.

22 **கர்த்தர்** மோசேயினிடத்தில் *சொன்ன
இந்தக் கற்பனைகள் எல்லாவற்றின்படியும்,
23 **கர்த்தர்** மோசேயைக்கொண்டு கட்டளைகொ
டுத்த நாள் முதற்கொண்டு அவர் உங்களுக்
கும் உங்கள் சந்ததிகளுக்கும் நியமித்த எல்லா
21 வற்றின்படியேயும் நீங்கள் செய்யாமல், அறி
யாமல் [1]தவறி நடந்தாலும், சபையாருக்குத்
தெரியாமல் யாதொரு தப்பிதம் செய்தாலும்,
சபையார் எல்லாரும் **கர்த்தருக்குச்** சுகந்த
வாசனையான தகனபலியாக ஒரு காளையை
யும், முறைமைப்படி அதற்கேற்ற போஜன
பலியையும், பானபலியையும் பாவநிவாரண
பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவையும் செ
25 லுத்தவேண்டும். அதினால் ஆசாரியன் இஸ்ர
வேல் புத்திரரின் சபையனைத்திற்காகவும்
பாவநிவிர்த்தி செய்யக்கடவன்; அது [2]அறி
யாமையினால் செய்யப்பட்டபடியாலும், அதி
னிமித்தம் அவர்கள் **கர்த்தருக்குத்** தகனபலி
யையும் பாவநிவாரணபலியையும் **கர்த்த
ருடைய** சந்நிதியில் கொண்டுவந்ததினாலும்,
26 அது அவர்களுக்கு மன்னிக்கப்படும். அது
அறியாமையினாலே ஜனங்கள் யாவருக்கும்
வந்தபடியால், அது இஸ்ரவேல் புத்திரரின்
சபையனைத்திற்கும் அவர்களுக்குள்ளே தங்கு
27 கிற அந்நியனுக்கும் மன்னிக்கப்படும். ஒரு
வன் அறியாமையினால் [3]பாவஞ்செய்தானா
கில், ஒரு வயதான வெள்ளாட்டைப் பாவ
28 நிவாரணபலியாகச் செலுத்தக்கடவன். அப்
பொழுது அறியாமையினால் பாவஞ்செய்தவ
னுக்காக ஆசாரியன் [4]பாவநிவிர்த்தி செய்யும்
படி **கர்த்தருடைய** சந்நிதியில் பாவநிவிர்த்தி
செய்யக்கடவன்; அப்பொழுது அவனுக்கு
29 மன்னிக்கப்படும். இஸ்ரவேல் புத்திரராகிய
உங்களில் பிறந்தவனுக்கும் உங்களுக்குள்ளே
தங்கும் [5]அந்நியனுக்கும், அறியாமையினால்
பாவஞ்செய்தவனிமித்தம், ஒரே பிரமாணம்
30 இருக்கவேண்டும். அன்றியும் தேசத்திலே
பிறந்தவர்களிலாகிலும் அந்நியர்களிலாகிலும்
எவனாவது [6]துணிகரமாய் யாதொன்றைச்
செய்தால், அவன் **கர்த்தரை** நிந்திக்கிறான்;
அந்த ஆத்துமா தன் ஜனத்தாரில் இராதப
31 டிக்கு அறுப்புண்டுபோகவேண்டும். அவன்
**கர்த்தரின்** வார்த்தையை [7]அசட்டைபண்ணி,
அவர் கற்பனையை மீறினபடியால், அந்த ஆத்
துமா அறுப்புண்டுபோகவேண்டும்; அவன்
அக்கிரமம் அவன்மேல் இருக்கும் என்று
சொல் என்றார்.
32 இஸ்ரவேல் புத்திரர் வனாந்தரத்தில் இருக்
கையில், ஓய்வுநாளில் விறகுகளைப் பொறுக்
கிக்கொண்டிருந்த [8]ஒரு மனிதனைக் கண்டு
33 பிடித்தார்கள். விறகுகளைப்பொறுக்கின அந்த
மனிதனைக் கண்டுபிடித்தவர்கள், அவனை மோ
சே ஆரோன் என்பவர்களிடத்துக்கும் சபை
யார் அனைவரிடத்துக்கும் கொண்டுவந்தார்
34 கள். அவனுக்குச் செய்யவேண்டியது இன்
னதென்று தீர்க்கமான உத்தரவு இல்லாதபடி
யினால், [9]அவனைக் காவலில் வைத்தார்கள்.
**கர்த்தர்** மோசேயை நோக்கி: அந்த மனிதன் 35
நிச்சயமாய் [10]கொலைசெய்யப்படவேண்டும்;
சபையார் எல்லாரும் அவனைப் பாளயத்திற்
குப் புறம்பே கல்லெறியக்கடவர்கள் என்றார்.
அப்பொழுது சபையார் [11]எல்லாரும் **கர்த்தர்** 36
மோசேக்குக் கட்டளையிட்டபடியே, அவனைப்
பாளயத்திற்குப் புறம்பே கொண்டுபோய்க்
கல்லெறிந்தார்கள்; அவன் செத்தான்.
பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி: 37
நீ இஸ்ரவேல் புத்திரரிடத்தில் பேசி, அவர் 38
கள் தங்கள் தலைமுறைதோறும் தங்கள் வஸ்தி
ரங்களின் ஓரங்களிலே [12]தொங்கல்களை உண்
டாக்கி, ஓரத்தின் தொங்கலிலே இளநீல
நாடாவைக் கட்டவேண்டும் என்று அவர்க
ளுக்குச் சொல். நீங்கள் பின்பற்றிச் சோரம் 39
போகிற [13]உங்கள் இருதயத்துக்கும் உங்கள்
கண்களுக்கும் ஏற்க நடவாமல், அதைப்
பார்த்து, **கர்த்தரின்** கற்பனைகளையெல்லாம்
நினைத்து அவைகளின்படியே செய்யும்ப
டிக்கு, அது உங்களுக்குத் தொங்கலாய் இருக்க
வேண்டும். நீங்கள் என் கற்பனைகளையெல் 40
லாம் நினைத்து, அவைகளின்படியே செய்து,
உங்கள் தேவனுக்குப் [14]பரிசுத்தராயிருக்கும்
படி அதைப் பார்ப்பீர்களாக. நான் உங்களுக் 41
குத் தேவனாயிருக்கும்படி; உங்களை எகிப்து
தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின உங்கள்
தேவனாகிய **கர்த்தர்**; நானே உங்கள் தேவனா
கிய **கர்த்தர்** என்று சொல் என்றார்.
லேவிக்குப் பிறந்த கோகாத்தின் [15]குமார **16**
னாகிய இத்சேயாரின் மகன் கோராகு என்ப
வன் ரூபன் வம்சத்திலுள்ள எலியாபின் குமார
ராகிய தாத்தானையும் அபிராமையும் பேலேத்
தின் குமாரனாகிய ஓனையும் கூட்டிக்
கொண்டு, இஸ்ரவேல் புத்திரரில் சபைக் 2
குத் தலைவர்களும் சங்கத்துக்கு அழைக்கப்பட்
டவர்களும் பிரபலமானவர்களுமாகிய இரு
நூற்று ஐம்பதுபேர்களோடுங்கூட மோசேக்கு
முன்பாக எழும்பி, மோசேக்கும் ஆரோனுக் 3
கும் விரோதமாகக் [16]கூட்டங்கூடி, அவர்
களை நோக்கி: நீங்கள் *மிஞ்சிப்போகிறீர்கள்;
சபையார் எல்லாரும் [17]பரிசுத்தமானவர்கள்;
**கர்த்தர்** அவர்கள் நடுவில் இருக்கிறாரே; இப்
படியிருக்க, **கர்த்தருடைய** சபைக்கு மேலாக
உங்களை ஏன் உயர்த்துகிறீர்கள் என்றார்கள்.
மோசே அதைக் கேட்டபோது, முகங்குப்புற 4
விழுந்தான். பின்பு அவன் கோராகையும் அவ 5
னுடைய எல்லாக் கூட்டத்தையும் நோக்கி:
[18]நாளைக்குக் **கர்த்தர்** தம்முடையவன் இன்
னான் என்றும், தம்மண்டையிலே சேரத் தாம்
கட்டளையிட்ட பரிசுத்தவான் இன்னான் என்
றும் காண்பிப்பார்; அப்பொழுது எவனைத்
தெரிந்துகொள்வாரோ, அவனைத் தம்மிடத்
தில் [19]சேரக் கட்டளையிடுவார். ஒன்று செய் 6
யுங்கள்; கோராகே, கோராகின் கூட்டத்தார்
களே, நீங்கள் எல்லாரும் தூபகலசங்களை
எடுத்துக்கொண்டு, நாளைக்கு அவைகளில் 7
அக்கினிபோட்டு, **கர்த்தருடைய** சந்நிதியில்

1 லேவி. 4. 2. ழ
2 அப். 3. 17, 19. 1 தீமோ. 1. 13. எபி. 5, 2
3 லேவி. 4. 27, 28
4 லேவி. 4. 35
5 ரோ. 3. 29, 30
6 உபா. 17. 12. சங். 19. 13. எபி. 10. 26. 2 பே. 2. 10
7 2 சாமு. 12. 9. நீதி. 13. 13. அப். 13. 41. எபி. 10. 28, 29
8 யாத். 31. 14. 35. 2, 3
9 லேவி. 24. 12
10 யாத். 31. 14, 15. அப். 7. 58
11 யோசு. 7. 25
12 உபா. 22. 12. மத். 23. 5
13 உபா. 29. 19. யோபு 31. 7. எரே. 9. 14. எசே. 6. 9. யாக். 4. 4
14 ரோ. 12. 1. கொலோ. 1. 22. 1 பே. 1. 15, 16
15 யாத். 6. 21. யூதா 11
16 சங். 106. 16
* பெரு செருக்குப பண்ணுகிறீர்கள்
17 யாத். 19. 6; 29. 45
18 லேவி. 20, 6. ழ
19 லேவி. 10. 3. எசே. 40, 46

தூபவர்க்கம் இடுங்கள்; அப்பொழுது **கர்த்தர்**
எவனைத் தெரிந்துகொள்வாரோ, [1]அவன் பரி
சுத்தவானாயிருப்பான்; லேவியின் புத்திரரா
கிய நீங்களே [2]மிஞ்சிப்போகிறீர்கள் என்
8 றான். பின்னும் மோசே கோராகை நோக்கி:
9 லேவியின் புத்திரரே, கேளுங்கள்; **கர்த்தரு**
**டைய** வாசஸ்தலத்தின் பணிவிடைகளைச்
செய்யவும், சபையாரின் முன் நின்று அவர்
கள் செய்யவேண்டிய வேலைகளைச் செய்ய
வும், உங்களைத் தம்மண்டையிலே சேரப்பண்
ணும்படி இஸ்ரவேலின் தேவன் இஸ்ரவேல்
சபையாரிலிருந்து உங்களைப் [3]பிரித்தெடுத்த
10 தும், அவர் உன்னையும் உன்னோடேகூட
லேவியின் புத்திரராகிய உன்னுடைய எல்
லாச் சகோதரரையும் சேரப்பண்ணினதும்,
உங்களுக்கு [4]அற்பகாரியமோ? இப்பொழுது
ஆசாரியப் பட்டத்தையும் தேடுகிறீர்களோ?
11 இதற்காக நீயும் உன் கூட்டத்தார் அனைவரும்
**கர்த்தருக்கு** விரோதமாகவே கூட்டங்கூடினீர்
கள்; ஆரோனுக்கு விரோதமாக நீங்கள் முறு
முறுக்கிறதற்கு [5]அவன் எம்மாத்திரம் என்
12 றான். பின்பு மோசே எலியாபின் குமார
ராகிய தாத்தானையும் அபிராமையும் அழைத்
தனுப்பினான். அவர்கள்: நாங்கள் வருகிற
13 தில்லை; இந்த வனாந்தரத்தில் எங்களைக்
கொன்றுபோடும்படி, பாலும் தேனும் ஓடு
கிற தேசத்திலிருந்து எங்களைக் கொண்டுவந்
தது [6]அற்பகாரியமோ, எங்கள்மேல் [7]துரைத்
14 தனமும் பண்ணப் பார்க்கிறாயோ? மேலும்
நீ எங்களைப் பாலும் தேனும் ஓடுகிற தேசத்
துக்குக் [8]கொண்டுவந்ததும் இல்லை, எங்க
ளுக்கு வயல்களையும் திராட்சத்தோட்டங்களை
யும் சுதந்தரமாகக் கொடுத்ததும் இல்லை; இந்த
மனிதருடைய கண்களைப் பிடுங்கப் பார்க்கி
றாயோ? நாங்கள் வருகிறதில்லை என்றார்கள்.
15 அப்பொழுது மோசேக்குக் கடுங்கோபம் மூண்
டது; அவன் **கர்த்தரை** நோக்கி: அவர்கள்
செலுத்துங் காணிக்கையை [9]அங்கிகரியா
திருப்பீராக; நான் அவர்களிடத்தில் [10]ஒரு
கழுதையை முதலாய் எடுத்துக்கொள்ள
வில்லை; அவர்களில் ஒருவனுக்கும் யாதொரு
பொல்லாப்பு செய்யவும் இல்லை என்றான்.
16 பின்பு மோசே கோராகை நோக்கி: நீயும் உன்
கூட்டத்தார் யாவரும் நாளைக்குக் **கர்த்தரு**
**டைய** சந்நிதியில் [11]வாருங்கள்; நீயும் அவர்
17 களும் ஆரோனும் வந்திருங்கள். உங்களில்
ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் தூபகலசங்
களை எடுத்து, அவைகளில் தூபவர்க்கத்தைப்
போட்டு, தங்கள் தங்கள் தூபகலசங்களாகிய
இருநூற்று ஐம்பது தூபகலசங்களையும் **கர்த்த**
**ருடைய** சந்நிதியில் கொண்டுவரவேண்டும்;
நீயும் ஆரோனும் தன் தன் தூபகலசத்தைக்
18 கொண்டுவாருங்கள் என்றான். அப்படியே அவ
ரவர் தங்கள் தங்கள் தூபகலசங்களை எடுத்து,
அவைகளில் அக்கினியையும் தூபவர்க்கத்தை
யும் போட்டு, ஆசரிப்புக் கூடாரவாசலுக்கு
முன்பாக வந்து நின்றார்கள்; மோசேயும்

[1] எபே. 1. 4
[2] எபி. 5. 4
[3] உபா. 10. 8
[4] 1 சாமு. 18. 28. ஏசா. 7. 13
[5] யாத். 16. 8. அப். 5. 4. 1 கொ. 3. 5
[6] 9. வசனம்
[7] யாத். 2. 14. அப். 7. 27, 35
[8] யாத். 3. 8. லேவி. 20. 24
[9] ஆதி. 4. 5. ஏசா. 1. 10–15
[10] 1 சாமு. 12. 3. அப். 20. 33. 2 கொ. 7. 2
[11] 1 சாமு. 12. 3, 7
[12] எண். 14. 10
[13] வெளி. 18. 4
[14] எபி. 12. 28, 29
[15] யோபு 12. 10. பிர. 12. 7. ஏசா. 57. 16. சக. 12. 1. எபி. 12. 9
[16] ஆதி. 18. 32. யோசு. 7. 1. 2 கொ. 5. 18
[17] ஆதி. 19. 12, 14. ஏசா. 52. 11. 2 கொ. 6. 17. 1 தீமோ. 5. 22. வெளி. 18. 4
[18] எரே. 23. 16. யோ. 5. 30
[19] சங். 106. 29
[20] ஏசா. 10. 3. யோபு 35. 15
[21] யோபு 31. 3. ஏசா. 28. 21
[22] சங். 55. 15
[23] உபா. 11. 6. சங். 106. 17, 18

ஆரோனும் அங்கே நின்றார்கள். அவர்களுக்கு 19
விரோதமாகக் கோராகு சபையையெல்லாம்
ஆசரிப்புக் கூடாரவாசலுக்கு முன்பாகக் கூடி
வரும்படி செய்தான்; அப்பொழுது **கர்த்த**
**ருடைய** மகிமை [12]சபைக்கெல்லாம் காணப்
பட்டது.

**கர்த்தர்** மோசேயோடும் ஆரோனோடும் 20
பேசி: இந்தச் சபையை விட்டுப் [13]பிரிந்து 21
போங்கள்; ஒரு நிமிஷத்திலே அவர்களை [14]அத
மாக்குவேன் என்றார். அப்பொழுது அவர்கள் 22
முகங்குப்புற விழுந்து: தேவனே, மாம்சமான
யாவருடைய [15]ஆவிகளுக்கும் தேவனே, ஒரு
மனிதன் பாவஞ்செய்திருக்கச் [16]சபையார் எல்
லார்மேலும் கடுங்கோபங்கொள்வீரோ என்
றார்கள். அப்பொழுது **கர்த்தர்** மோசேயை 23
நோக்கி: கோராகு தாத்தான் அபிராம் என் 24
பவர்களுடைய வாசஸ்தலத்தை விட்டு வில
கிப்போங்கள் என்று சபையாருக்குச் சொல்
என்றார். உடனே மோசே எழுந்திருந்து, 25
தாத்தான் அபிராம் என்பவர்களிடத்தில் போ
னான்; இஸ்ரவேலின் மூப்பரும் அவனைப்
பின்சென்று போனார்கள். அவன் சபையாரை 26
நோக்கி: இந்தத் துஷ்டமனிதரின் சகல பாவங்
களிலும் நீங்கள் வாரிக்கொள்ளப்படாதபடிக்
கு, அவர்கள் கூடாரங்களை [17]விட்டு விலகி,
அவர்களுக்கு உண்டானவைகளில் ஒன்றை
யும் தொடாதிருங்கள் என்றான். அப்படியே 27
அவர்கள் கோராகு தாத்தான் அபிராம் என்
பவர்களுடைய வாசஸ்தலத்தை விட்டு வில
கிப்போனார்கள்; தாத்தானும் அபிராமும்
வெளியே வந்து, தங்கள் பெண்ஜாதிகள் பிள்
ளைகள் குழந்தைகளோடும் தங்கள் கூடார வாச
லிலே நின்றார்கள். அப்பொழுது மோசே: 28
இந்தக் கிரியைகளையெல்லாம் செய்கிறதற்குக்
**கர்த்தர்** என்னை அனுப்பினார் என்றும், அவை
களை நான் என் மனதின்படியே [18]செய்ய
வில்லை என்றும், நீங்கள் எதினாலே [19]அறிவீர்க
ளென்றால், சகல மனிதரும் சாகிறபடி இவர் 29
கள் செத்து, [20]சகல மனிதருக்கும் நேரிடுகிறது
போல இவர்களுக்கும் நேரிட்டால், **கர்த்தர்**
என்னை அனுப்பவில்லை என்று அறிவீர்கள்.
**கர்த்தர்** ஒரு புதிய [21]காரியத்தை நேரிடச் 30
செய்வதால், பூமி தன் வாயைத்திறந்து, இவர்
கள் உயிரோடே பாதாளத்தில் இறங்கத்தக்க
தாக இவர்களையும் இவர்களுக்கு உண்டான
யாவையும் விழுங்கிப்போட்டதேயானால்,
இந்த மனிதர் **கர்த்தரை** அவமதித்தார்கள்
[22]என்பதை அறிந்துகொள்வீர்கள் என்றான்.
அவன் இந்தவார்த்தைகளையெல்லாம்சொல்லி 31
முடித்தவுடனே, அவர்கள் நின்றிருந்த நிலம்
பிளந்தது; பூமி தன் வாயைத் [23]திறந்து, அவர் 32
களையும் அவர்கள் வீடுகளையும், கோராகுக்
குரிய எல்லா மனிதரையும், அவர்களுக்கு
உண்டான சகல பொருள்களையும் விழுங்கிப்
போட்டது. அவர்கள் தங்களுக்கு உண்டா 33
னவை எல்லாவற்றோடும் உயிரோடே பாதா
ளத்தில் இறங்கினார்கள்; பூமி அவர்களை மூடிக்

கொண்டது; இப்படிச் சபையின் நடுவிலி
34 ருந்து அழிந்துபோனார்கள். அவர்களைச் சுற்
றிலும் இருந்த இஸ்ரவேலர் யாவரும் அவர்
கள் கூக்குரலைக் கேட்டு, பூமி நம்மையும்
விழுங்கிப்போடும் என்று சொல்லி ஓடினார்
35 கள். அக்கினி **கர்த்தருடைய** சந்நிதியிலிருந்து
[1]புறப்பட்டு, தூபங்காட்டின இருநூற்று [2]ஐம்
பதுபேரையும் பட்சித்துப்போட்டது.
36 பின்பு **கர்த்தர்** மோசேயை நோக்கி:
37 அக்கினிக்குள் அகப்பட்ட தூபகலசங்களை
எடுத்து, அவைகளிலிருக்கிற அக்கினியை
அப்பாலே கொட்டிப்போடும்படி ஆசாரிய
னாகிய ஆரோனின் குமாரன் எலெயாசாருக்
குச் சொல்; [3]அந்தத் தூபகலசங்கள் பரிசுத்த
38 மாயின. தங்கள் ஆத்துமாக்களுக்கே [4]கேடுண்
டாக்கின அந்தப் பாவிகளின் தூபகலசங்க
ளைப் பலிபீடத்தை மூடத்தக்க தட்டையான
தகடுகளாய் அடிக்கக்கடவர்கள்; அவர்கள்
**கர்த்தருடைய** சந்நிதியில் அவைகளைக் கொண்
டுவந்ததினால் அவைகள் பரிசுத்தமாயின;
அவைகள் இஸ்ரவேல் புத்திரருக்கு ஒரு
39 [5]அடையாளமாயிருக்கும் என்றார். அப்படியே
ஆசாரியனாகிய எலெயாசார் சுட்டெரிக்கப்பட்
டவர்கள் கொண்டுவந்திருந்த வெண்கலத் தூப
40 கலசங்களை எடுத்து, ஆரோனின் புத்திரராய்
இராத [6]அந்நியன் ஒருவனும் **கர்த்தருடைய**
சந்நிதியில் தூபங்காட்ட வாராதபடிக்கும்,
கோராகைப்போலும் அவன் கூட்டத்தாரைப்
போலும் இராதபடிக்கும், இஸ்ரவேல் புத்
திரருக்கு ஞாபகக்குறியாயிருக்கும்பொருட்டு,
**கர்த்தர்** மோசேயைக்கொண்டு தனக்குச்
சொன்னபடியே அவைகளைப் பலிபீடத்தை
மூடும் தகடுகளாக அடிப்பித்தான்.
41 மறுநாளில் இஸ்ரவேல் புத்திரரின் சபை
யார் எல்லாரும் மோசேக்கும் ஆரோனுக்கும்
விரோதமாக [7]முறுமுறுத்து: நீங்கள் **கர்த்த
ரின்** ஜனங்களைக் கொன்றுபோட்டீர்கள் என்
42 றார்கள். சபையார் மோசேக்கும் ஆரோனுக்
கும் விரோதமாகக் கூடி ஆசரிப்புக் கூடாரத்
துக்கு நேரே பார்க்கிறபோது, மேகம் [8]அதை
மூடினது, **கர்த்தரின்** மகிமை [9]காணப்பட்
43 டது. மோசேயும் ஆரோனும் ஆசரிப்புக்
44 கூடாரத்துக்கு முன்பாக வந்தார்கள். அப்
45 பொழுது **கர்த்தர்** மோசேயை நோக்கி: இந்
தச் சபையாரை விட்டு விலகிப்போங்கள்;
ஒரு நிமிஷத்தில் அவர்களை அதமாக்குவேன்
என்றார். அவர்கள் முகங்குப்புற விழுந்தார்
46 கள். மோசே ஆரோனை நோக்கி: நீ தூபகல
சத்தை எடுத்து, பலிபீடத்திலிருக்கிற அக்கி
னியை அதில் போட்டு, அதின்மேல் தூப
வர்க்கம் இட்டு, சீக்கிரமாய்ச் சபையினிடத்
தில் போய், அவர்களுக்காகப் பாவநிவிர்த்தி
செய்; **கர்த்தருடைய** சந்நிதியிலிருந்து கடுங்
கோபம் [10]புறப்பட்டது, வாதை தொடங்கிற்று
47 என்றான். மோசே சொன்னபடி ஆரோன்
அதை எடுத்துக்கொண்டு சபையின் நடுவில்
ஓடினான்; ஜனங்களுக்குள்ளே வாதை [11]தொ

1 லேவி. 10. 2. எண். 11. 1
2 17. வசனம்
3 லேவி. 27. 28
4 சநீதி. 8. 36; 20. 2. ஆப. 2. 10
5 எசே. 14. 8
6 2 நாளா. 26. 18
7 சங். 106. 25
8 யாத். 40. 34
9 19. வசனம்
10 லேவி. 10. 6. எண். 11. 33. 1 நாளா. 27. 24
11 சங். 106. 29
12 உபா. 33. 10
13 எபி. 7. 24, 25
14 சங். 106. 30
15 எசே. 37. 16
16 யாத். 25. 22
17 எண். 16. 5
18 யாத். 38. 21. அப். 7. 44
19 எபி. 9. 4

டங்கியிருந்தது; அவன் தூபவர்க்கம் போட்டு,
ஜனங்களுக்காகப் [12]பாவநிவிர்த்தி செய்து,
செத்தவர்களுக்கும் உயிரோடிருக்கிறவர்களுக் 48
கும் [13]நடுவே நின்றான்; அப்பொழுது வாதை
[14]நிறுத்தப்பட்டது. கோராகின் காரியத்தினி 49
மித்தம் செத்தவர்கள் தவிர, அந்த வாதையி
னால் செத்துப்போனவர்கள் பதினாலாயிரத்து
எழுநூறுபேர். வாதை நிறுத்தப்பட்டது; அப் 50
பொழுது ஆரோன் ஆசரிப்புக் கூடாரவாச
லுக்கு மோசேயினிடத்தில் திரும்பிவந்தான்.

பின்பு **கர்த்தர்** மோசேயை நோக்கி: **17**
நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசி, அவர் 2
கள் பிதாக்களின் வம்சங்களாகிய ஒவ்வொரு
வம்சத்தினுடைய பிரபுவினிடத்தில், [15]ஒவ்
வொரு கோலாகப் பன்னிரண்டு கோலை
வாங்கி, அவனவன் கோலில் அவனவன்
பேரை எழுதுவாயாக. லேவியினுடைய 3
கோலின்மேல் ஆரோனின் பேரை எழுதக்
கடவாய்; அவர்களுடைய பிதாக்களின் ஒவ்
வொரு வம்சத்தலைவனுக்காகவும் ஒவ்வொரு
கோல் இருக்கவேண்டும். அவைகளை ஆசரிப் 4
புக் கூடாரத்திலே நான் உங்களைச் சந்திக்கும்
[16]ஸ்தானமாகிய சாட்சிப்பெட்டிக்கு முன்னே
வைக்கக்கடவாய். அப்பொழுது நான் தெரிந் 5
துகொள்ளுகிறவனுடைய [17]கோல் துளிர்க்
கும்; இப்படி இஸ்ரவேல் புத்திரர் உங்களுக்கு
விரோதமாய் முறுமுறுக்கிற அவர்கள் முறு
முறுப்பை என்னைவிட்டு ஒழியப்பண்ணு
வேன் என்றார். இதை மோசே இஸ்ரவேல் 6
புத்திரரோடே சொன்னான்; அப்பொழுது
அவர்களுடைய பிரபுக்கள் எல்லாரும் தங்கள்
பிதாக்களுடைய வம்சத்தின்படி ஒவ்வொரு
பிரபுவுக்கு ஒவ்வொரு கோலாகப் பன்னி
ரண்டு கோல்களை அவனிடத்தில் கொடுத்தார்
கள்; ஆரோனின் கோலும் அவர்களுடைய
கோல்களுடனே இருந்தது. அந்தக் கோல் 7
களை மோசே [18]சாட்சியின் கூடாரத்திலே **கர்த்
தருடைய** சமூகத்தில் வைத்தான். மறுநாள் 8
மோசே சாட்சியின் கூடாரத்துக்குள் பிரவே
சித்தபோது, இதோ, லேவியின் குடும்பத்தா
ருக்கு இருந்த ஆரோனின் கோல் துளிர்த்தி
ருந்தது; அது துளிர்விட்டு, பூப்பூத்து, வாது
மைப்பழங்களைக் கொடுத்தது. அப்பொழுது 9
மோசே **கர்த்தருடைய** சமூகத்திலிருந்த அந்
தக் கோல்களையெல்லாம் எடுத்து, இஸ்ரவேல்
புத்திரர் எல்லாரும் காண வெளியே கொண்டு
வந்தான்; அவர்கள் கண்டு, அவரவர் தங்கள் 10
தங்கள் கோல்களை வாங்கிக்கொண்டார்கள்.
அப்பொழுது **கர்த்தர்** மோசேயை நோக்கி:
ஆரோனின் கோல் அந்தக் கலகக்காரருக்கு
விரோதமான [19]அடையாளமாகும்பொருட்டு,
அதைத் திரும்பவும் சாட்சிப்பெட்டிக்கு
முன்னே கொண்டுபோய் வை; இப்படி அவர்
கள் எனக்கு விரோதமாய் முறுமுறுப்பதை
ஒழியப்பண்ணுவாய், அப்பொழுது அவர்கள்
சாக மாட்டார்கள் என்றார். **கர்த்தர்** தனக்குக் 11
கட்டளையிட்டபடியே மோசே செய்தான்.

12 அப்பொழுது இஸ்ரவேல் புத்திரர் மோசே
யை நோக்கி: இதோ, செத்து அழிந்துபோ
கிறோம்; நாங்கள் எல்லாரும் [1]அழிந்துபோகி
13 றோம். **கர்த்தரின்** வாசஸ்தலத்தின் கிட்டே
வருகிற [2]எவனும் சாகிறான்; நாங்கள் எல்லா
ரும் செத்துத்தான் தீருமோ என்றார்கள்.

**18** பின்பு **கர்த்தர்** ஆரோனை நோக்கி: நீயும்
உன்னோடேகூட உன் குமாரரும் உன் தகப்
பன் வம்சத்தாரும் பரிசுத்த ஸ்தலத்தைப்பற்
றிய [3]அக்கிரமத்தைச் சுமக்கவேண்டும்; நீயும்
உன்னோடேகூட உன் குமாரரும் உங்கள்
ஆசாரிய ஊழியத்தைப்பற்றிய அக்கிரமத்
2 தைச் சுமக்கவேண்டும். உன் தகப்பனாகிய
லேவியின் கோத்திரத்தாரான உன் சகோதா
ரையும் உன்னோடே [4]கூடியிருக்கவும் உன்னி
டத்திலே [5]சேவிக்கவும் அவர்களைச் சேர்த்துக்
கொள்; நீயும் உன் குமாரருமோ சாட்சியின்
கூடாரத்துக்குமுன் ஊழியம் செய்யக்கடவீர்
3 கள். அவர்கள் உன் காவலையும் கூடாரம்
அனைத்தின் காவலையும் காக்கக்கடவர்கள்;
ஆகிலும் அவர்களும் நீங்களும் சாகாதபடிக்கு,
அவர்கள் பரிசுத்த ஸ்தலத்தின் பணிமுட்டுக
ளண்டையிலும் பலிபீடத்தண்டையிலும் சே
4 ராமல், உன்னோடே கூடிக்கொண்டு, கூடா
ரத்துக்கடுத்த எல்லாப் பணிவிடையையும்
செய்ய, ஆசரிப்புக் கூடாரத்தின் காவலைக்
காக்கக்கடவர்கள்; அந்நியன் ஒருவனும் உங்க
5 ளிடத்தில் சேரக்கூடாது. இஸ்ரவேல் புத்தி
ரர்மேல் இனிக் [6]கடுங்கோபம் வராதபடிக்கு,
நீங்கள் பரிசுத்த ஸ்தலத்தின் காவலையும் பலி
6 பீடத்தின் காவலையும் காக்கக்கடவீர்கள். ஆச
ரிப்புக்கூடாரத்தின் பணிவிடையைச்செய்ய,
**கர்த்தருக்குக்** கொடுக்கப்பட்ட உங்கள் சகோ
தராகிய லேவியரை நான் இஸ்ரவேல் புத்தி
ரரிலிருந்து பிரித்து, [7]உங்களுக்கு தத்தமாகக்
7 கொடுத்தேன். ஆகையால் நீயும் உன்னோடே
கூட உன் குமாரரும் பலிபீடத்துக்கும் திரை
க்கு உட்புறத்துக்கும் [8]அடுத்த எல்லாவற்றை
யும் செய்யும்பொருட்டு, உங்கள் ஆசாரிய
ஊழியத்தைக் காத்துச் சேவிக்கக்கடவீர்கள்;
உங்கள் ஆசாரிய ஊழியத்தை உங்களுக்கு தத்
தமாக அருளினேன்; அதைச் செய்யும்படி
சேருகிற அந்நியன் கொலைசெய்யப்படக்கட
வன் என்றார்.

8 பின்னும் **கர்த்தர்** ஆரோனை நோக்கி: இஸ்
ரவேல் புத்திரர் பரிசுத்தப்படுத்துகிறவைகளி
லெல்லாம் எனக்கு ஏறெடுத்துப் படைக்கப்
படும் படைப்புகளைக் [9]காத்துக்கொண்டிருக்கி
றீர்களே, அவைகளை உனக்குக் கொடுத்தேன்;
அபிஷேகத்தினிமித்தம் அவைகளை உனக்கும்
உன் குமாரருக்கும் நித்திய கட்டளையாகக்
9 கொடுத்தேன். மகா பரிசுத்தமானவைகளிலே,
அக்கினிக்கு உட்படுத்தப்படாமல் உன்னுடை
யதாயிருப்பது எவையெனில், [10]அவர்கள்
எனக்குப் படைக்கும் எல்லாப் படைப்பும்,
எல்லாப் போஜனபலியும், எல்லாப் பாவநி
வாரணபலியும், எல்லாக் குற்றநிவாரணபலி
யும், உனக்கும் உன் குமாரருக்கும் பரிசுத்த
மாயிருக்கும். பரிசுத்த ஸ்தலத்திலே [11]அவைக 10
ளைப் புசிக்கவேண்டும்; ஆண்மக்கள் யாவரும்
அவைகளைப் புசிக்கலாம்; அவைகள் உனக்
குப் பரிசுத்தமாயிருப்பதாக. இஸ்ரவேல் 11
புத்திரர் ஏறெடுத்துப்படைக்கிறதும் அசை
வாட்டுகிறதுமான அவர்களுடைய எல்லாக்
காணிக்கைகளின் படைப்பும் உன்னுடைய
வைகளாயிருக்கும்; அவைகளை உனக்கும்
உன் குமாரருக்கும் உன் குமாரத்திகளுக்கும்
[12]நித்திய நியமமாகக் கொடுத்தேன்; உன் வீட்
டிலே [13]சுத்தமானவர்கள் எல்லாரும் அவைக
ளைப் புசிக்கலாம். அவர்கள் **கர்த்தருக்குக்** 12
கொடுக்கும் அவர்களுடைய முதற்பலன்களா
கிய உச்சிதமான எண்ணெயையும், [14]உச்சித
மான திராட்சரசத்தையும், தானியத்தையும்
உனக்கு உரியதாகக் கொடுத்தேன். தங்கள் 13
தேசத்தில் முதற் பழுத்த பலனில் அவர்கள்
**கர்த்தருக்குக்** கொண்டுவருவதெல்லாம் உனக்
கு உரியதாகும்; உன் வீட்டிலே சுத்தமாயிருப்
பவர்கள் யாவரும் அவைகளைப் புசிக்கலாம்.
இஸ்ரவேலிலே [15]சாபத்தீடாக நேர்ந்துகொள் 14
ளப்பட்டதெல்லாம் உனக்கு உரியதாயிருக்
கும். மனிதரிலும் மிருகங்களிலும் அவர்கள் 15
**கர்த்தருக்குச்** செலுத்தும் சமஸ்த பிராணிக
ளுக்குள்ளே கர்ப்பந்திறந்து [16]பிறக்கும் யாவும்
உனக்கு உரியதாயிருக்கும்; ஆனாலும் மனித
ரின் முதற்பேற்றை அகத்தியமாய் மீட்கவே
ண்டும்; தீட்டான மிருகஜீவனின் தலையீற்
றையும் மீட்கவேண்டும். மீட்கவேண்டிய 16
வைகள் ஒரு மாதத்திற்கு மேற்பட்டதானால்,
உன் மதிப்புக்கு இசைய பரிசுத்த ஸ்தலத்தின்
[17]சேக்கல் கணக்கின்படி ஐந்துசேக்கல் பணத்
தாலே அவைகளை மீட்கவேண்டும்; ஒரு
சேக்கல் இருபது கேரா. மாட்டின் [18]தலை 17
யீற்றும், செம்மறியாட்டின் தலையீற்றும், வெள்
ளாட்டின் தலையீற்றுமோ மீட்கப்படவேண்
டாம்; அவைகள் பரிசுத்தமானவைகள்; அவை
களின் இரத்தத்தைப் [19]பலிபீடத்தின்மேல்
தெளித்து, அவைகளின் கொழுப்பைக் **கர்த்
தருக்குச்** சுகந்த வாசனையான தகனமாகத் தக
னிக்கவேண்டும். அசைவாட்டும் [20]மார்க்கண் 18
டத்தைப்போலும் வலது முன்னந்தொடை
யைப்போலும் அவைகளின் மாம்சமும் உன்
னுடையதாகும். இஸ்ரவேல் புத்திரர் **கர்த் 19
தருக்கு** ஏறெடுத்துப் படைக்கிற பரிசுத்த
படைப்புகளையெல்லாம் உனக்கும் உன் குமா
ரருக்கும் உன் குமாரத்திகளுக்கும் நித்திய
கட்டளையாகக் கொடுத்தேன்; **கர்த்தருடைய**
சந்நிதியில் இது உனக்கும் உன் சந்ததிக்கும்
என்றைக்கும் செல்லும் [21]மாறாத உடன்படிக்
கை என்றார்.

பின்னும் **கர்த்தர்** ஆரோனை நோக்கி: 20
அவர்களுடைய தேசத்தில் நீ ஒன்றையும்
சுதந்தரித்துக்கொள்ளவேண்டாம், அவர்கள்
நடுவே உனக்குப் பங்கு உண்டாயிருக்கவும்
வேண்டாம்; இஸ்ரவேல் புத்திரர் நடுவில்

1 சங். 90. 7. ஏசா. 57. 16
2 எபே. 2. 13. எபி. 10. 19–22
3 யாத். 28. 38. ஏசா. 53. 6, 11. 1 பே. 2. 14
4 ஆதி. 29. 34
5 யாத். 29. 16. லேவி. 3. 2, 5. எபி. 12. 24
6 எண். 16. 46
7 எண். 8. 19
8 எபி. 9. 3, 6
9 லேவி. 7. 32. யாத். 29. 29
10 லேவி. 2. 2, 3: 6. 25, 26. 7. 7
11 லேவி. 6. 16
12 உபா. 18. 3
13 லேவி. 22. 3
14 யாத். 23. 19. உபா. 18. 4. நெகே. 10. 35, 36
15 லேவி. 27. 28
16 யாத். 13. 2, 18
17 லேவி. 27. 25
18 உபா. 15. 19
19 யாத். 29. 16. எபி. 12. 24
20 யாத். 29. 26. லேவி. 7. 34
21 லேவி. 2. 13. 2 நாளா. 13. 5

நானே [1]உன் பங்கும் உன் சுதந்தரமுமாய்
21 இருக்கிறேன். இதோ, லேவியின் புத்திரர்
ஆசரிப்புக் கூடாரத்தின் பணிவிடையைச்
செய்கிற அவர்களுடைய வேலைக்காக, இஸ்ர
வேலருக்குள்ளவை யெல்லாவற்றிலும் தசம
பாகத்தை [2]அவர்களுக்குச் சுதந்தரமாகக் கொ
22 டுத்தேன். இஸ்ரவேல் புத்திரர் குற்றஞ்
சுமந்து [3]சாகாதபடிக்கு, இனி ஆசரிப்புக் கூடா
23 ரத்தைக் கிட்டாதிருக்கக்கடவர்கள். லேவியர்
மாத்திரம் ஆசரிப்புக் கூடாரத்துக்கடுத்த வேலை
களைச் செய்யவேண்டும்; அவர்கள் தங்கள்
அக்கிரமத்தைச் சுமப்பார்கள்; இஸ்ரவேல்
புத்திரர் நடுவே அவர்களுக்குச் சுதந்தரம்
இல்லை என்பது உங்கள் தலைமுறைதோறும்
24 நித்தியகட்டளையாயிருக்கும். இஸ்ரவேல் புத்
திரர் **கர்த்தருக்கு** ஏறெடுத்துப் படைக்கும்
படைப்பாகிய தசமபாகத்தை [4]லேவியருக்குச்
சுதந்தரமாகக் கொடுத்தேன்; ஆகையால் இஸ்
ரவேல் புத்திரரின் நடுவே அவர்களுக்குச்
சுதந்தரம் இல்லை என்று அவர்களுக்குச்
சொன்னேன் என்றார்.
25 பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி:
26 நீ லேவியரோடே சொல்லவேண்டியது என்
னவென்றால்: இஸ்ரவேல் புத்திரர் கையில்
வாங்கிக்கொள்ளும்படி நான் உங்களுக்குச்
சுதந்தரமாகக் கொடுத்த தசமபாகத்தை நீங்கள்
அவர்கள் கையில் வாங்கும்போது, தசமபாகத்
தில் பத்தில் ஒரு பங்கைக் **கர்த்தருக்கு** ஏறெடுத்
துப் படைக்கும் படைப்பாகச் செலுத்தவேண்
27 டும். நீங்கள் ஏறெடுத்துப் படைக்கும் இந்தப்
படைப்பு களத்தின் தானியத்தைப்போலும்,
ஆலையின் இரசத்தைப்போலும் உங்களுக்கு
28 எண்ணப்படும். இப்படியே நீங்கள் இஸ்ர
வேல் புத்திரர் கையில் வாங்கும் தசமபாகமா
கிய உங்கள் பங்குகளிலெல்லாம் நீங்களும்
**கர்த்தருக்கு** என்று ஒரு படைப்பை ஏறெடுத்
துப் படைத்து, அந்தப் படைப்பை ஆசாரிய
னாகிய ஆரோனுக்குக் கொடுக்கவேண்டும்.
29 உங்களுக்குக் கொடுக்கப்படுகிற ஒவ்வொரு
காணிக்கையிலுமுள்ள உச்சிதமான பரிசுத்த
பங்கையெல்லாம் **கர்த்தருக்கு** ஏறெடுத்துப்
படைக்கும் படைப்பாகச் செலுத்தவேண்டும்.
30 ஆதலால் நீ அவர்களோடே சொல்லவேண்
டியது என்னவென்றால்: அதில் உச்சிதமா
னதை நீங்கள் ஏறெடுத்துப் படைக்கும்போது,
அது களத்தின் வரத்திலும் ஆலையின் வரத்தி
லும் இருந்து எடுத்துச் செலுத்துகிறதுபோல
31 லேவியருக்கு எண்ணப்படும். அதை நீங்க
ளும் உங்கள் குடும்பத்தாரும் எவ்விடத்திலும்
புசிக்கலாம்; அது நீங்கள் ஆசரிப்புக் கூடாரத்
திலே செய்யும் பணிவிடைக்கு ஈடான [5]உங்
32 கள் சம்பளம். இப்படி அதில் உச்சிதமானதை
ஏறெடுத்துப் படைத்தீர்களானால், நீங்கள்
அதினிமித்தம் பாவம் சுமக்கமாட்டீர்கள்; [6]நீங்
கள் சாகாதிருக்கும்படிக்கு, இஸ்ரவேல் புத்தி
ரரின் பரிசுத்தமானவைகளைத் தீட்டுப்படுத்த
லாகாது என்று சொல் என்றார்.

[1] உபா. 10. 9. யோசு. 13. 14. சங். 16. 5. எசே. 44. 28
[2] லேவி. 27. 30, 32. எபி. 7. 5, 8, 9
[3] லேவி. 22. 9
[4] நெகே. 10. 37, 38. மல். 3. 8–10. எபி. 7. 5–9
[5] மத். 10. 10. லூ. 10. 7. 1 கொ. 9. 13. 2 கொ. 12. 13. 1 தீமோ. 5. 18
[6] லேவி. 19. 8; 22. 16
[7] யாத். 12. 5. மல். 1. 13, 14. 1 பே. 1. 19
[8] உபா. 21. 3. 1 சாமு. 6. 7
[9] எபி. 13. 11
[10] லேவி. 4. 6. எபி. 9. 13. 12. 24
[11] யாத். 29. 14
[12] லேவி. 14. 4, 6, 49
[13] லேவி. 11. 25; 15. 5
[14] எபி. 9. 13
[15] 13. வசனம்
[16] நெகே. 10. 37. மல். 3. 8–10. எபி. 7. 5–9
[17] லேவி. 15. 31. எண். 8. 7
[18] லேவி. 7. 20

**கர்த்தர்** மோசேயையும் ஆரோனையும் **19**
நோக்கி: **கர்த்தர்** கற்பித்த நியமப்பிரமாண 2
மாவது: பழுதற்றதும் [7]ஊனமில்லாததும்
[8]நுகத்தடிக்கு உட்படாததுமாகிய சிவப்பான
ஒரு கிடாரியை உன்னிடத்தில் கொண்டு
வரும்படி இஸ்ரவேல் புத்திரருக்குச் சொல்
லுங்கள். அதை எலெயாசார் என்னும் ஆசா 3
ரியனிடத்தில் ஒப்புக்கொடுங்கள்; அவன்
அதைப் [9]பாளயத்துக்கு வெளியே கொண்டு
போகக்கடவன்; அங்கே அது அவனுக்கு முன்
பாகக் கொல்லப்படக்கடவது. அப்பொழுது 4
ஆசாரியனாகிய எலெயாசார் தன் விரலினால்
அதின் இரத்தத்தில் கொஞ்சம் எடுத்து, [10]ஆச
ரிப்புக் கூடாரத்துக்கு எதிராக ஏழுதரம்
தெளிக்கக்கடவன். பின்பு கிடாரியை அவன் 5
கண்களுக்கு முன்பாக [11]ஒருவன் சுட்டெரிக்க
வேண்டும்; அதின் தோலும் அதின் மாம்சமும்
அதின் இரத்தமும் அதின் சாணியும் சுட்டெ
ரிக்கப்படவேண்டும். அப்பொழுது ஆசாரி 6
யன் கேதுருக் கட்டையையும் [12]ஈசோப்பை
யும் சிவப்புநூலையும் எடுத்து, கிடாரி எரிக்கப்
படுகிற நெருப்பின் நடுவிலே போடக்கடவன்.
பின்பு ஆசாரியன் தன் [13]வஸ்திரங்களைத் 7
தோய்த்து, ஜலத்திலே ஸ்நானம்பண்ணி,
அதின்பின்பு பாளயத்தில் பிரவேசிக்கக்கட
வன்; ஆசாரியன் சாயங்காலமட்டும் தீட்டுப்
பட்டிருப்பான். அதைச் சுட்டெரித்தவனும் 8
தன் வஸ்திரங்களை ஜலத்தில் தோய்த்து, ஜலத்
திலே ஸ்நானம்பண்ணி, சாயங்காலமட்டும்
தீட்டுப்பட்டிருப்பான். சுத்தமாயிருக்கிற [14]ஒரு 9
வன் அந்தக் கிடாரியின் சாம்பலை வாரிக்
கொண்டு, பாளயத்திற்குப் புறம்பே சுத்தமான
ஒரு இடத்திலே கொட்டிவைக்கக்கடவன்;
அது இஸ்ரவேல் புத்திரரின் சபைக்காகத்
[15]தீட்டுக்கழிக்கும் ஜலத்துக்கென்று காத்து
வைக்கப்படவேண்டும்; அது பாவத்தைப்பரிக
ரிக்கும். கிடாரியின் சாம்பலை வாரினவன் 10
தன் வஸ்திரங்களைத் தோய்க்கக்கடவன்;
அவன் சாயங்காலமட்டும் தீட்டுப்பட்டிருப்
பான்; இது இஸ்ரவேல் புத்திரருக்கும் அவர்
கள் நடுவிலே தங்குகிற அந்நியனுக்கும் நித்
திய கட்டளையாயிருப்பதாக. செத்துப்போ 11
னவனுடைய [16]பிரேதத்தைத் தொட்டவன்
ஏழுநாள் தீட்டுப்பட்டிருப்பான். அவன் 12
மூன்றாம் நாளிலும் ஏழாம் நாளிலும் தீட்டுக்
கழிக்கும் ஜலத்தினால் தன்னைச் சுத்திகரிக்கக்
கடவன்; அப்பொழுது சுத்தமாவான்; மூன்
றாம் நாளிலும் ஏழாம் நாளிலும் தன்னைச் சுத்
திகரிக்காமலிருப்பானாகில் சுத்தமாகான்.
செத்தவனுடைய பிரேதத்தைத் தொட்டும், 13
தன்னைச் சுத்திகரித்துக்கொள்ளாதவன் **கர்த்**
**தரின்** வாசஸ்தலத்தைத் [17]தீட்டுப்படுத்துகி
றான்; அந்த ஆத்துமா இஸ்ரவேலில் இராமல்
அறுப்புண்டுபோவான்; தீட்டுக்கழிக்கும்ஜலம்
அவன்மேல் தெளிக்கப்படாததினால், அவன்
தீட்டுப்பட்டிருப்பான்; அவன் தீட்டு இன்
னும் [18]அவன்மேல் இருக்கும். கூடாரத்தில் 14

ஒரு மனிதன் செத்தால், அதற்கடுத்த நியமமா
வது: அந்தக் கூடாரத்தில் பிரவேசிக்கிற யாவ
ரும் கூடாரத்தில் இருக்கிற யாவரும் ஏழுநாள்
15 தீட்டுப்பட்டிருப்பார்கள். மூடிக் கட்டப்ப
டாமல் திறந்திருக்கும் [1]பாத்திரங்கள் எல்லாம்
16 தீட்டுப்பட்டிருக்கும். வெளியிலே பட்டயத்
தால் வெட்டுண்டவனையாவது, செத்தவனை
யாவது, மனித எலும்பையாவது, பிரேதக்
குழியையாவது, தொட்டவன் எவனும் ஏழு
17 நாள் தீட்டுப்பட்டிருப்பான். ஆகையால் தீட்
டுப்பட்டவனுக்காக, பாவத்தைப் பரிகரிக்கும்
கிடாரியின் சாம்பலிலே கொஞ்சம் எடுத்து,
ஒரு பாத்திரத்தில் போட்டு, அதின்மேல்
18 ஊற்று ஜலம் வார்க்கவேண்டும். சுத்தமான
ஒருவன் [2]ஈசோப்பை எடுத்து, அந்த ஜலத்
திலே தோய்த்து, கூடாரத்தின்மேலும் அதி
லுள்ள சகல பணிமுட்டுகளின்மேலும் அங்கே
இருக்கிற ஜனங்களின்மேலும் தெளிக்கிறது
மல்லாமல், எலும்பையாகிலும் வெட்டுண்ட
வனையாகிலும் செத்தவனையாகிலும் பிரேதக்
குழியையாகிலும்தொட்டவன்மேலும்தெளிக்
19 கக்கடவன். சுத்தமாயிருக்கிறவன் தீட்டுப்
பட்டவன்மேல் மூன்றும் நாளிலும் ஏழாம்
நாளிலும் தெளிக்கவேண்டும்; ஏழாம் நாளில்
[3]இவன் தன்னைச் சுத்திகரித்து, தன் வஸ்தி
ரங்களைத் தோய்த்து, ஜலத்தில் ஸ்நானம்
பண்ணி, சாயங்காலத்திலே சுத்தமாயிருப்
20 பான். தீட்டுப்பட்டிருக்கிறவன் தன்னைச்
சுத்திகரித்துக்கொள்ளா திருந்தால், அவன்
சபையில் இராதபடிக்கு அறுப்புண்டுபோ
வான்; அவன் **கர்த்தரின்** பரிசுத்த ஸ்தலத்
தைத் [4]தீட்டுப்படுத்தினான்; தீட்டுக்கழிக்
கும் ஜலம் அவன்மேல் தெளிக்கப்படாத
21 தினால் அவன் தீட்டுப்பட்டிருக்கிறான். தீட்
டுக்கழிக்கும் ஜலத்தைத் தெளிக்கிறவனும் தன்
வஸ்திரங்களைத் தோய்க்கக்கடவன்; தீட்டுக்
கழிக்கும் ஜலத்தைத் தொட்டவனும் சாயங்
22 காலமட்டும் தீட்டுப்பட்டிருப்பான். தீட்டுப்
பட்டிருக்கிறவன் தொடுகிறவைகளெல்லாம்
தீட்டுப்படும், [5]அவைகளைத் தொடுகிறவனும்
சாயங்காலமட்டும் தீட்டுப்பட்டிருப்பான்; இது
உங்களுக்கு நித்திய கட்டளையாயிருக்கும்
என்றார்.

**20** இஸ்ரவேல் புத்திரரின் சபையார் எல்
லாரும் முதலாம் மாதத்தில் சீன் வனாந்தரத்தி
லே சேர்ந்து; ஜனங்கள் காதேசிலே தங்கி
யிருக்கையில், மிரியாம் மரணமடைந்து,
2 [6]அங்கே அடக்கம்பண்ணப்பட்டாள். ஜனங்
களுக்குத் தண்ணீர் இல்லாதிருந்தது; [7]அப்
பொழுது அவர்கள் மோசேக்கும் ஆரோனுக்
கும் விரோதமாகக் கூட்டங் கூடினார்கள்.
3 ஜனங்கள் மோசேயோடே [8]வாக்குவாதம்
பண்ணி: எங்கள் சகோதரர் **கர்த்தருடைய**
சந்நிதியில் மாண்டபோது நாங்களும் மாண்டு
4 போயிருந்தால் நலமாயிருக்கும். நாங்களும்
எங்கள் மிருகங்களும் இங்கே சாகும்படி, நீங்
கள் **கர்த்தரின்** சபையை இந்த வனாந்தரத்தி
லே கொண்டுவந்தது என்ன; *விதைப்பும், 5
அத்திமரமும், திராட்சச்செடியும், மாதளஞ்
செடியும், குடிக்கத் தண்ணீரும் இல்லாத இந்
தக் கெட்ட இடத்தில் எங்களைக் கொண்டு
வரும்படி, நீங்கள் எங்களை எகிப்திலிருந்து
புறப்படப்பண்ணினது என்ன என்றார்கள்.
அப்பொழுது மோசேயும் ஆரோனும் சபை 6
யாரை விட்டு, ஆசரிப்புக் கூடாரவாசலில்
போய், முகங்குப்புற விழுந்தார்கள்; **கர்த்தரு
டைய** மகிமை அவர்களுக்குக் காணப்பட்டது.
**கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ கோலை 7,8
எடுத்துக்கொண்டு, நீயும் உன் சகோதரனாகிய
ஆரோனும் சபையாரைக் கூடிவரச் செய்து,
அவர்கள் கண்களுக்கு முன்னே கன்மலை
யைப் பார்த்துப் பேசுங்கள்; அப்பொழுது
அது தன்னிடத்திலுள்ள தண்ணீரைக் கொடுக்
கும்; [9]இப்படி நீ அவர்களுக்குக் கன்மலையி
லிருந்து தண்ணீர் புறப்படப்பண்ணி, சபை
யாருக்கும் அவர்கள் மிருகங்களுக்கும் குடிக்
கக் கொடுப்பாய் என்றார். அப்பொழுது 9
மோசே தனக்குக் **கர்த்தர்** கட்டளையிட்ட
படியே **கர்த்தருடைய** சந்நிதியிலிருந்த கோலை
எடுத்தான். மோசேயும் ஆரோனும் சபை 10
யாரைக் கன்மலைக்கு முன்பாகக் கூடிவரச்
செய்தார்கள்; அப்பொழுது மோசே அவர்
களை நோக்கி: கலகக்காரரே, [10]கேளுங்கள்,
உங்களுக்கு இந்தக் கன்மலையிலிருந்து நாங்
கள் தண்ணீர் புறப்படப்பண்ணுவோமோ
என்று சொல்லி, தன் கையை ஓங்கி, கன்மலை 11
யைத் தன் கோலினால் இரண்டுதரம் [11]அடித்
தான்; உடனே தண்ணீர் ஏராளமாய்ப் புறப்
பட்டது, சபையார் குடித்தார்கள்; அவர்கள்
மிருகங்களும் குடித்தது. பின்பு **கர்த்தர்** 12
மோசேயையும் ஆரோனையும் நோக்கி: இஸ்ர
வேல் புத்திரரின் கண்களுக்கு முன்பாக
[12]என்னைப் பரிசுத்தம்பண்ணும்படி, நீங்கள்
[13]என்னை விசுவாசியாமல் போனபடியினால்,
இந்தச் சபையாருக்கு நான் கொடுத்த தேசத்
துக்குள் நீங்கள் அவர்களைக் கொண்டுபோவ
தில்லை என்றார். இங்கே இஸ்ரவேல் புத்தி 13
ரர் **கர்த்தரோடே** வாக்குவாதம்பண்ணினதி
னாலும், அவர்களுக்குள்ளே அவருடைய பரி
சுத்தம் விளங்கினதினாலும் இது மேரிபாவின்
[14]தண்ணீர் என்னப்பட்டது.

பின்பு மோசே [15]காதேசிலிருந்து ஏதோ 14
மின் ராஜாவினிடத்துக்கு ஸ்தானாபதிகளை
அனுப்பி: எங்கள் பிதாக்கள் [16]எகிப்துக்குப் 15
போனதும், நாங்கள் எகிப்திலே நெடுநாள்
வாசம்பண்ணினதும், எகிப்தியர் எங்களையும்
எங்கள் பிதாக்களையும் உபத்திரவப்படுத்தின
தும், இவைகளினால் எங்களுக்கு நேரிட்ட
எல்லா வருத்தமும் உமக்குத் தெரிந்திருக்கி
றது. **கர்த்தரை** நோக்கி நாங்கள் மன்றாடி 16
னோம்; [17]அவர் எங்களுக்குச் செவிகொடுத்து,
ஒரு தூதனை அனுப்பி, எங்களை எகிப்திலிரு
ந்து புறப்படப்பண்ணினார்; இப்பொழுது
நாங்கள் உமது எல்லைக்கு உட்பட்ட காதேஸ்

1 லேவி. 11. 32
2 சங். 51. 7
3 லேவி. 14. 9
4 13. வசனம்
5 லேவி. 15. 5. ஆகா. 2. 13
6 யாத். 15. 20
7 யாத். 17. 1. ழ
8 எண். 14. 2. ழ
* தானியமும்
9 நெகே. 9. 15. சங். 78. 15, 16. ஏசா. 48. 20: 48. 21
10 சங். 106. 33
11 யாத். 17. 6. உபா. 8. 15. 1 கொ. 10. 4
12 லேவி. 10. 3. எசே. 36. 23. 1 பே. 3. 15
13 உபா. 3. 26
14 யாத். 17. 7
15 நியா. 11. 16, 17. உபா. 2. 4
16 ஆதி. 46. 6. அப். 7. 15, 19 யாத். 12. 40
17 யாத். 2. 23: 3. 2, 7

17 ஊரில் வந்திருக்கிறோம். நாங்கள் உமது
தேசத்தின் வழியாய்க் கடந்துபோகும்படி
[1]உத்தரவு கொடுக்க வேண்டும்; வயல்வெளி
கள் வழியாகவும், திராட்சத்தோட்டங்கள்
வழியாகவும் நாங்கள் போகாமலும், துரவுக
ளின் தண்ணீரைக் குடியாமலும், ராஜபாதை
யாகவே நடந்து, உமது எல்லையைக் கடந்து
போகுமட்டும், வலதுபுறம் இடதுபுறம் சாயா
திருப்போம் என்று, உமது சகோதரனாகிய
இஸ்ரவேல் சொல்லி அனுப்புகிறான் என்று
18 சொல்லச்சொன்னான். அதற்கு ஏதோம்: நீ
என் தேசத்தின் வழியாய்க் கடந்துபோகக்
கூடாது; போனால் பட்டயத்தோடே உன்னை
எதிர்க்கப் புறப்படுவேன் என்று அவனுக்குச்
19 சொல்லச்சொன்னான். அப்பொழுது இஸ்ர
வேல் புத்திரர் அவனை நோக்கி: நடப்பான
பாதையின் வழியாய்ப் போவோம்; நாங்களும்
எங்கள் மிருகங்களும் உன் தண்ணீரைக் குடித்
தால், அதற்குக் கிரயங்கொடுப்போம்; வே
றொன்றும் செய்யாமல், கால்நடையாய்மாத்
20 திரம் கடந்துபோவோம் என்றார்கள். அதற்கு
அவன்: நீ கடந்துபோகக்கூடாது என்று
சொல்லி, வெகு ஜனங்களோடும் பலத்த
கையோடும் [2]அவர்களை எதிர்க்கப் புறப்பட்
21 டான். இப்படி ஏதோம் தன் எல்லைவழி
யாய்க் கடந்துபோகும்படி இஸ்ரவேலருக்கு
உத்தரவு கொடுக்கவில்லை; ஆகையால் இஸ்ர
வேலர் அவனைவிட்டு விலகிப்போனார்கள்.
22 இஸ்ரவேல் புத்திரரான சபையார் எல்லா
ரும் காதேசை [3]விட்டுப் பிரயாணப்பட்டு, ஓர்
23 என்னும் மலைக்குப் போனார்கள். ஏதோம்
தேசத்தின் எல்லைக்கு அருகான ஓர் என்னும்
மலையிலே **கர்த்தர்** மோசேயையும் ஆரோனை
24 யும் நோக்கி: ஆரோன் தன் ஜனத்தாரோடே
[4]சேர்க்கப்படுவான். மேரிபாவின் தண்ணீ
ரைப்பற்றிய காரியத்தில் நீங்கள் என் வாக்குக்
குக் கீழ்ப்படியாமல் போனபடியினால், நான்
இஸ்ரவேல் புத்திரருக்குக் கொடுக்கிற தேசத்
25 தில் அவன் பிரவேசிப்பதில்லை. நீ ஆரோ
னையும் அவன் குமாரனாகிய எலெயாசாரை
யும் கூட்டிக்கொண்டு, அவர்களை ஓர் என்
26 னும் மலையில் ஏறப்பண்ணி, ஆரோன் உடுத்
திருக்கிற வஸ்திரங்களைக் கழற்றி, அவைகளை
அவன் குமாரனாகிய எலெயாசாருக்கு உடுத்து
வாயாக; ஆரோன் அங்கே மரித்து, தன் ஜன
த்தாரோடே சேர்க்கப்படுவான் என்றார்.
27 **கர்த்தர்** கட்டளையிட்டபடியே மோசே செய்
தான்; சபையார் எல்லாரும் பார்க்க, அவர்
28 கள் ஓர் என்னும் மலையில் ஏறினார்கள். அங்
கே ஆரோன் உடுத்திருந்த வஸ்திரங்களை மோ
சே கழற்றி, [5]அவைகளை அவன் குமாரனாகிய
எலெயாசாருக்கு உடுத்தினான்; அப்பொழுது
ஆரோன் அங்கே மலையின் உச்சியிலே மரித்
தான்; பின்பு மோசேயும் எலெயாசாரும் மலை
29 யிலிருந்து இறங்கினார்கள். ஆரோன் ஜீவித்
துப்போனான் என்பதைச் சபையார் எல்லா
ரும் கண்டபோது, இஸ்ரவேல் வம்சத்தார்
எல்லாரும் ஆரோனுக்காக [6]முப்பதுநாள் துக்
கங்கொண்டாடினார்கள்.

**21** வேவுகாரர் காண்பித்த வழியாக இஸ்ர
வேலர் வருகிறார்கள் என்று தெற்கே வாசம்
பண்ணுகிற கானானியனாகிய [7]ஆராத் ராஜா
கேள்விப்பட்டபோது, அவன் இஸ்ரவேல
ருக்கு விரோதமாக யுத்தம்பண்ணி, அவர்க
ளில் சிலரைச் சிறைபிடித்துக் கொண்டுபோ
னான். அப்பொழுது இஸ்ரவேலர் **கர்த்தரை** 2
நோக்கி: தேவரீர் இந்த ஜனங்களை எங்கள்
கையில் ஒப்புக்கொடுத்தால், அவர்களுடைய
பட்டணங்களைச் சங்காரம் பண்ணுவோம்
என்று [8]பிரதிக்கினை பண்ணினார்கள். **கர்த்** 3
**தர்** இஸ்ரவேலின் சத்தத்துக்குச் செவிகொ
டுத்து, அவர்களுக்குக் கானானியரை ஒப்புக்
கொடுத்தார்; அப்பொழுது அவர்களையும் அவர்
கள் பட்டணங்களையும் சங்காரம்பண்ணி,
அவ்விடத்திற்கு *ஓர்மா என்று பேரிட்டார்
கள்.

அவர்கள் ஏதோம் தேசத்தைச் சுற்றிப் போ 4
கும்படிக்கு, ஓர் என்னும் மலையை விட்டு,
சிவந்த சமுத்திரத்தின் வழியாய்ப் பிரயாணம்
பண்ணினார்கள்; வழியினிமித்தம் ஜனங்கள்
மனமடிவடைந்தார்கள். ஜனங்கள் தேவனுக் 5
கும் மோசேக்கும் விரோதமாகப் பேசி: [9]நாங்
கள் வனாந்தரத்திலே சாகும்படி நீங்கள் எங்
களை எகிப்துதேசத்திலிருந்து வரப்பண்ணின
தென்ன? இங்கே அப்பமும் இல்லை, தண்ணீ
ரும் இல்லை; இந்த அற்பமான உணவு எங்
கள் மனதுக்கு வெறுப்பாயிருக்கிறது என்றார்
கள். அப்பொழுது **கர்த்தர்** கொள்ளிவாய்ச் 6
சர்ப்பங்களை [10]ஜனங்களுக்குள்ளே அனுப்பி
னார்; அவைகள் ஜனங்களைக் கடித்ததினால்
இஸ்ரவேலருக்குள்ளே அநேக ஜனங்கள்
செத்தார்கள். அதினால் ஜனங்கள் மோசே 7
யினிடத்தில் போய்: [11]நாங்கள் **கர்த்தருக்கும்**
உமக்கும் விரோதமாய்ப்பேசினதினால் பாவஞ்
செய்தோம்; சர்ப்பங்கள் எங்களைவிட்டு நீங்
கும்படி **கர்த்தரை** நோக்கி [12]விண்ணப்பம்
பண்ணவேண்டும் என்றார்கள்; மோசே ஜனங்
களுக்காக விண்ணப்பம்பண்ணினான். அப் 8
பொழுது **கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ ஒரு
கொள்ளிவாய்ச் சர்ப்பத்தின் உருவத்தைச்
செய்து, அதை ஒரு கம்பத்தின்மேல் தூக்கி
வை; கடிக்கப்பட்டவன் எவனோ அவன்
அதை நோக்கிப் பார்த்தால் பிழைப்பான் என்
றார். அப்படியே மோசே ஒரு வெண்கலச் 9
சர்ப்பத்தை [13]உண்டாக்கி, அதை ஒரு கம்பத்
தின்மேல் தூக்கிவைத்தான்; சர்ப்பம் ஒருவ
னைக் கடித்தபோது, அவன் அந்த வெண்
கலச் சர்ப்பத்தை நோக்கிப் பார்த்துப் பிழைப்
பான். இஸ்ரவேல் புத்திரர் பிரயாணப்பட் 10
டுப் போய், ஓபோத்தில் [14]பாளயமிறங்கினார்
கள். ஓபோத்திலிருந்து பிரயாணம்பண்ணி, 11
சூரியோதயத்திற்கு நேராய் மோவாபுக்கு எதி
ரான வனாந்தரத்திலுள்ள அபாரீமின் மேடுக
ளில் பாளயமிறங்கினார்கள்.

[1] உபா. 2. 27
[2] நியா. 11. 17. ஒபதி. 10–15
[3] எண். 33. 37
[4] ஆதி. 25. 8. உபா. 32. 50
[5] யாத். 29. 29, 30
[6] உபா. 34. 8
[7] நியா. 1. 16
[8] ஆதி. 28. 20–22. நியா. 11. 30
* ஸர்வ சங்காரம்
[9] சங். 78. 19. யாத். 16. 3
[10] உபா. 8. 15. 1 கொரி. 10. 9
[11] சங். 78. 34
[12] யாத். 8. 8, 28. 1 சாமு. 12. 19. அப். 8. 24. யாக். 5. 16
[13] 2 இரா. 18. 4. யோ. 3. 14, 15
[14] எண். 33. 43, 44

12 அங்கேயிருந்து பிரயாணப்பட்டுப்
போய், சாரேத் [1]பள்ளத்தாக்கிலே பாளய
13 மிறங்கினார்கள். அங்கேயிருந்து பிரயாணப்
பட்டுப் போய், எமோரியரின் எல்லையிலி
ருந்துவருகிறதும்வனாந்தரத்தில்ஓடுகிறதுமான
[2]அர்னோன் ஆற்றுக்கு இப்புறம் பாளயமிறங்
கினார்கள்; அந்த அர்னோன் மோவாபுக்கும்
எமோரியருக்கும் நடுவே இருக்கிற மோவா
14 பின் எல்லை. அதினால் *சூப்பாவிலுள்ள வா
15 கேபும், அர்னோனின் ஆற்றுக்கால்களும், ஆர்
என்னும் [3]ஸ்தலத்துக்குப் பாயும் நீரோடை
யும்மோவாபின் எல்லையைச் சார்ந்திருக்கிறது
என்னும் வசனம் **கர்த்தருடைய** யுத்த புஸ்த
கத்தில் எழுதியிருக்கிறது.
16 அங்கேயிருந்து பேயேருக்குப் [4]போனார்
கள்; ஜனங்களைக் கூடிவரச்செய், அவர்களுக்
குத் தண்ணீர் கொடுப்பேன் என்று **கர்த்தர்**
மோசேக்குச் சொன்ன ஊற்று இருக்கிற
17 இடம் அதுதான். அப்பொழுது இஸ்ரவே
லர் பாடின பாட்டாவது: [5]ஊற்றுத் தண்
ணீரே, பொங்கிவா; அதைக் குறித்துப் பாடு
18 வோம் வாருங்கள். நியாயப்பிரமாணிக்கனின்
[6]ஏவுதலால் அதிபதிகள் கிணற்றைத் தோண்டி
னார்கள்; ஜனத்தில் மேன்மக்கள் தங்கள் தண்
டாயுதங்களைக்கொண்டு தோண்டினார்கள்
19 என்று பாடினார்கள். அந்த வனாந்தரத்திலி
ருந்து மாத்தனாவுக்கும், மாத்தனாவிலிருந்து
நகாலியேலுக்கும், நகாலியேலிலிருந்து பா
20 மோத்துக்கும், பள்ளத்தாக்கிலுள்ள மோவா
பின் வெளியில் இருக்கிற பாமோத்திலிருந்து
†எஷிமோனை நோக்கும் பிஸ்காவின் ‡உச்சிக்
கும் போனார்கள்.
21 அப்பொழுது இஸ்ரவேலர் எமோரியரின்
ராஜாவாகிய சீகோனிடத்தில் [7]ஸ்தானாபதி
22 களை அனுப்பி: உமது தேசத்தின் வழியாய்க்
கடந்துபோகும்படி [8]உத்தரவு கொடுக்கவேண்
டும்; நாங்கள் வயல்களிலும், திராட்சத்தோட்
டங்களிலும் போகாமலும், துரவுகளின் தண்
ணீரைக் குடியாமலும், உமது எல்லையைக்
கடந்துபோகுமட்டும் ராஜபாதையில் நடந்து
போவோம் என்று சொல்லச்சொன்னார்கள்.
23 சீகோன் தன் எல்லைவழியாய்க் கடந்துபோக
இஸ்ரவேலுக்கு உத்தரவுகொடாமல், [9]தன்
ஜனங்களெல்லாரையும் கூட்டிக்கொண்டு,
இஸ்ரவேலருக்கு விரோதமாக வனாந்தரத்தி
லே புறப்பட்டு, யாகாசுக்கு வந்து, இஸ்ரவே
24 லரோடே யுத்தம்பண்ணினான். இஸ்ரவே
லர் [10]அவனைப் பட்டயக்கருக்கினால் வெட்டி,
அர்னோன் தொடங்கி அம்மோன் புத்திரரின்
தேசத்தைச் சார்ந்த யாப்போக்குவரைக்குமு
ள்ள அவனுடைய தேசத்தைக் கட்டிக்கொண்
டார்கள்; அம்மோன் புத்திரரின் எல்லை அர
25 ணிப்பானதாயிருந்தது. இஸ்ரவேலர் அந்தப்
பட்டணங்கள் யாவையும் பிடித்து, எஸ்போ
னிலும் அதைச் சார்ந்த எல்லாக் கிராமங்களி
லும் எமோரியருடைய எல்லாப் பட்டணங்க
26 ளிலும் குடியிருந்தார்கள். எஸ்போனானது

1 உபா. 2. 13
2 எண். 22. 36. நியா. 11. 18
* சிவந்த சமுத்திரம்
3 உபா. 2. 18, 29
4 நியா. 9. 21
5 யாத். 15. 1. நியா. 5. 1. சங். 106. 12
6 ஏசா. 33. 22
† வனாந்தரம்
‡ மலை
7 உபா. 2. 26, 27. நியா. 11. 19, 20
8 எண். 20. 17
9 உபா. 29. 7
10 யோசு. 12. 1, 2; 24. 8
11 ஆப. 2. 6
12 எரே. 48. 45, 46
13 உபா. 2. 9, 18. ஏசா. 15. 1, 2
§ மோவாபியருடைய குலதெய்வம். நியா. 11. 24
14 எரே. 48. 18, 22
15 ஏசா. 15. 2
16 எண். 32. 1. எரே. 48. 32
17 உபா. 3. 1. ழ
18 யோசு. 13. 12
19 உபா. 3. 2
20 24. வசனம்
21 உபா. 29. 7. யோசு. 13. 12. சங். 135. 10, 11
22 நியா. 11. 25
23 யாத். 15. 15
24 எண். 31. 8. யோசு. 13. 21, 22

எமோரியரின் ராஜாவாகிய சீகோனின் பட்
டணமாயிருந்தது; அவன் மோவாபியரின்
முந்தின ராஜாவுக்கு விரோதமாக யுத்தம்பண்
ணி, அர்னோன்வரைக்கும் இருந்த அவன்
தேசத்தையெல்லாம் அவன் கையிலிருந்து
பறித்துக்கொண்டான். அதினாலே கவி கட் 27
டுகிறவர்கள்; [11]எஸ்போனுக்கு வாருங்கள்;
சீகோனின் பட்டணம் ஸ்திரமாய்க் கட்டப்ப
டுவதாக. எஸ்போனிலிருந்து அக்கினியும் 28
[12]சீகோனுடைய பட்டணத்திலிருந்து ஜுவா
லையும் புறப்பட்டு, மோவாபுடைய ஆர் என்
னும் ஊரையும், [13]அர்னோனுடைய மேடுகளி
லுள்ள ஆண்டவமார்களையும் பட்சித்தது.
ஐயோ, மோவாபே, §கேமோஷ் தேவனின் 29
ஜனமே, நீ நாசமானாய்; தப்பி ஓடின தன்
குமாரரையும் தன் குமாரத்திகளையும் எமோரி
யரின் ராஜாவாகிய சீகோனுக்குச் சிறைகளாக
ஒப்புக்கொடுத்தான். அவர்களை எய்துபோட் 30
டோம்; எஸ்போன் பட்டணம் தீபோன் [14]ஊர்
வரைக்கும் நாசமாயிற்று; மேதேபாவுக்குச் [15]சமீ
பமான நோப்பா பட்டணபரியந்தம் அவர்க
ளைப் பாழாக்கினோம் என்று பாடினார்கள்.
இஸ்ரவேலர் இப்படியே எமோரியரின் 31
தேசத்திலே குடியிருந்தார்கள். பின்பு, மோ 32
சே யாசேர் [16]பட்டணத்துக்கு வேவுபார்க்
கிறவர்களை அனுப்பினான்; அவர்கள் அதைச்
சேர்ந்த கிராமங்களைக் கட்டிக்கொண்டு, அங்
கே இருந்த எமோரியரைத் துரத்திவிட்டார்
கள்.
பின்பு பாசானுக்குப் போகிற [17]வழியாய்த் 33
திரும்பிவிட்டார்கள்; அப்பொழுது பாசான்
ராஜாவாகிய ஓக் என்பவன் தன் சமஸ்த
ஜனங்களோடும் அவர்களை எதிர்த்து யுத்தம்
பண்ணும்படிக்கு, எத்ரேயுக்குப் [18]புறப்பட்டு
வந்தான். **கர்த்தர்** மோசேயை நோக்கி: அவ 34
னுக்குப் பயப்படவேண்டாம்; [19]அவனையும்
அவன் ஜனங்கள் எல்லாரையும், அவன்
தேசத்தையும் உன் கையில் ஒப்புக்கொடுத்
தேன்; எஸ்போனிலே வாசமாயிருந்த எமோ
ரியரின் ராஜாவாகிய சீகோனுக்கு நீ செய்த
படியே [20]இவனுக்கும் செய்வாய் என்றார். அப் 35
படியே ஒருவரும் உயிருடன் மீதியாயிரா
தபடிக்கு அவனையும், [21]அவன் குமாரரையும்,
அவனுடைய சகல ஜனங்களையும் வெட்டிப்
போட்டு, அவன் தேசத்தைக் கட்டிக்கொண்
டார்கள்.

பின்பு இஸ்ரவேல் புத்திரர் பிரயாணம் **22**
பண்ணி, எரிகோவின் கிட்ட இருக்கும்
யோர்தானுக்கு இக்கரையிலே மோவாபின்
சமனான வெளிகளில் பாளயமிறங்கினார்கள்.
இஸ்ரவேலர் எமோரியருக்குச் செய்த 2
யாவையும் சிப்போரின் குமாரனாகிய [22]பாலாக்
கண்டான். ஜனங்கள் ஏராளமாயிருந்தபடியி 3
னால், மோவாப் [23]மிகவும் பயந்து, இஸ்ரவேல்
புத்திரரினிமித்தம் கலக்கமடைந்து, மீதியா 4
னரின் மூப்பரை நோக்கி: [24]மாடு வெளியின்
புல்லை மேய்கிறதுபோல, இப்பொழுது இக்

தக் கூட்டம் நம்மைச் சுற்றியிருக்கிற யாவை
யும் மேய்ந்துபோடும் என்றான். அக்காலத்
திலே சிப்போரின் குமாரனாகிய பாலாக்
5 மோவாபியருக்கு ராஜாவாயிருந்தான். அவன்
பேயோரின் குமாரனாகிய பிலேயாமை
[1]அழைத்துவரும்படி, தன் சந்ததியாருடைய
தேசத்தில் நதியருகேயுள்ள பெத்தூருக்கு
ஸ்தானாபதிகளை அனுப்பி: எகிப்திலிருந்து
ஒரு ஜனக்கூட்டம் வந்திருக்கிறது; அவர்கள்
பூமியின் விசாலத்தை மூடி, எனக்கு எதிரே
6 இறங்கியிருக்கிறார்கள். அவர்கள் என்னிலும்
பலவான்கள்; ஆகிலும், நீர் ஆசீர்வதிக்கிறவன்
ஆசீர்வதிக்கப்பட்டவன், நீர் சபிக்கிறவன்
சபிக்கப்பட்டவன் என்று அறிவேன்; ஆத
லால், நீர் வந்து, எனக்காக அந்த ஜனத்தைச்
[2]சபிக்கவேண்டும், அப்பொழுது ஒருவேளை
நான் அவர்களை முறிய அடித்து, அவர்களை
இத்தேசத்திலிருந்து துரத்திவிடலாம் என்று
7 சொல்லச்சொன்னான். அப்படியே மோவா
பின் மூப்பரும் மீதியானின் மூப்பரும் குறி
சொல்லுதலுக்குரிய கூலியைத் [3]தங்கள் கை
யில் எடுத்துக்கொண்டு புறப்பட்டு, பிலேயாமி
டத்தில் போய், பாலாகின் வார்த்தைகளை அவ
8 னுக்குச் சொன்னார்கள். அவன் அவர்களை
நோக்கி: இராத்திரிக்கு இங்கே தங்கியிருங்கள்;
**கர்த்தர்** எனக்குச் சொல்லுகிறபடியே உங்க
ளுக்கு உத்தரவு கொடுப்பேன் என்றான்; அப்
படியே மோவாபின் பிரபுக்கள் பிலேயாமி
9 டத்தில் தங்கினார்கள். தேவன் பிலேயாமி
டத்தில் வந்து: [4]உன்னிடத்திலிருக்கிற இந்த
10 மனிதர் யார் என்றார். பிலேயாம் தேவனை
நோக்கி: சிப்போரின் குமாரனாகிய பாலாக்
என்னும் மோவாபின் ராஜா அவர்களை என்னி
11 டத்துக்கு அனுப்பி: பூமியின் விசாலத்தை
மூடுகிற ஒரு ஜனக்கூட்டம் எகிப்திலிருந்து
வந்திருக்கிறது; ஆகையால், நீ வந்து எனக்
காக அவர்களைச் சபிக்கவேண்டும்; அப்பொ
ழுது நான் அவர்களோடே யுத்தம்பண்ணி,
ஒருவேளை அவர்களைத் துரத்திவிடலாம் என்று
12 சொல்லச்சொன்னான் என்றான். அதற்குத்
தேவன் பிலேயாமை நோக்கி: நீ அவர்களோ
டே போகவேண்டாம்; அந்த ஜனங்களைச்
சபிக்கவும் வேண்டாம்; அவர்கள் ஆசீர்வதிக்கப்
13 பட்டவர்கள் [5]என்றார். பிலேயாம் காலமே
எழுந்து, பாலாகின் பிரபுக்களை நோக்கி: நீங்
கள் உங்கள் தேசத்துக்குப் போய்விடுங்கள்;
நான் உங்களோடேகூட வருகிறதற்குக் **கர்த்**
**தர்** எனக்கு உத்தரவு கொடுக்கமாட்டோம்
14 என்கிறார் என்று சொன்னான். அப்படியே
மோவாபியருடைய பிரபுக்கள் எழுந்து, பாலா
கினிடத்தில் போய்: பிலேயாம் எங்களோடே
வரமாட்டேன் என்று சொன்னான் என்றார்
15 கள். பாலாக் மறுபடியும் அவர்களிலும் கன
வான்களான அதிக பிரபுக்களை அனுப்பினான்.
16 அவர்கள் பிலேயாமிடத்தில் போய், அவனை
நோக்கி: சிப்போரின் குமாரனாகிய பாலாக்
எங்களை அனுப்பி: நீர் என்னிடத்தில் வருகிற
தற்குத் தடைபடவேண்டாம்; உம்மை மிக 17
வும் கனம்பண்ணுவேன்; நீர் சொல்வதையெல்
லாம் செய்வேன்; நீர் வந்து எனக்காக அந்த
ஜனங்களைச் சபிக்கவேண்டும் என்று சொல்
லச் சொன்னார் என்றார்கள். பிலேயாம் 18
பாலாகின் ஊழியக்காரருக்குப் பிரதியுத்தர
மாக: பாலாக் எனக்குத் தன் வீடு நிறைய
வெள்ளியும் பொன்னும் [6]தந்தாலும், சிறிய
காரியமானாலும் பெரிய காரியமானாலும் செய்
யும்பொருட்டு, [7]என் தேவனாகிய **கர்த்தரின்**
கட்டளையை நான் மீறக்கூடாது. ஆகிலும், 19
**கர்த்தர்** இனிமேல் எனக்கு என்ன சொல்லு
வார் என்பதை நான் அறியும்படிக்கு, நீங்க
ளும் இந்த இராத்திரி இங்கே தங்கியிருங்கள்
என்றான். இரவிலே தேவன் பிலேயாமிடத் 20
தில் வந்து: அந்த மனிதர் உன்னைக் கூப்பிட
வந்திருந்தால், நீ எழுந்து அவர்களோடே
கூடப்போ; ஆனாலும், நான் உனக்குச் சொல்
லும் வார்த்தையின்படிமாத்திரம் நீ செய்ய
வேண்டும் என்றார். பிலேயாம் காலமே 21
எழுந்து, தன் கழுதையின்மேல் சேணங்கட்டி,
மோவாபின் பிரபுக்களோடே கூடப்போ
னான். அவன் போகிறதினாலே தேவனுக்குக் 22
கோபம் மூண்டது; **கர்த்தருடைய** தூதனானவர்
[8]வழியிலே அவனுக்கு எதிராளியாக நின்றார்.
அவன் தன் கழுதையின்மேல் ஏறிப்போனான்;
அவன் வேலைக்காரர் இரண்டுபேரும் அவ
னோடே இருந்தார்கள். **கர்த்தருடைய** தூத 23
னானவர் உருவின பட்டயத்தைத் தம்முடைய
கையிலே பிடித்துக்கொண்டு வழியிலே நிற்கி
றதைக் கழுதை [9]கண்டு, வழியை விட்டு வய
லிலே விலகிப்போயிற்று; கழுதையை வழி
யில் திருப்ப பிலேயாம் அதை அடித்தான்.
**கர்த்தருடைய** தூதனானவர் இருபுறத்திலும் 24
சுவர் வைத்திருந்த திராட்சத்தோட்டங்களின்
பாதையிலே போய் நின்றார். கழுதை **கர்த்** 25
**தருடைய** தூதனைக் கண்டு, சுவர் ஓரமாய்
ஒதுங்கி, பிலேயாமின் காலைச் சுவரோடே
நெருக்கிற்று; திரும்பவும் அதை அடித்தான்.
அப்பொழுது **கர்த்தருடைய** தூதன் அப்புறம் 26
போய், வலதுபுறம் இடதுபுறம் விலக வழி
யில்லாத இடுக்கமான இடத்திலே நின்றார்.
கழுதை **கர்த்தருடைய** தூதனைக் கண்டு, பிலே 27
யாமின் கீழ்ப் படுத்துக்கொண்டது; பிலே
யாம் கோபம் மூண்டவனாகி, கழுதையைத்
தடியினால் அடித்தான். உடனே **கர்த்தர்** 28
கழுதையின் வாயைத் [10]திறந்தார்; அது பிலே
யாமைப் பார்த்து: நீர் என்னை இப்பொழுது
மூன்றுதரம் அடிக்கும்படி நான் உமக்கு
என்ன செய்தேன் என்றது. அப்பொழுது 29
பிலேயாம் கழுதையைப் பார்த்து: நீ என்னைப்
பரியாசம்பண்ணிக்கொண்டு வருகிறாய்; என்
கையில் ஒரு பட்டயம்மாத்திரம் இருந்தால்,
இப்பொழுதே [11]உன்னைக் கொன்றுபோடு
வேன் என்றான். கழுதை பிலேயாமை 30
நோக்கி: நீர் என்னைக் கைக்கொண்ட காலமு
தல் இந்நாள்வரைக்கும் நீர் ஏறின கழுதை

[1] உபா. 23. 4. யோசு. 24. 9. நெகே. 13. 1, 2. மீகா 6. 5. 2 பே 21. 15. வெளி. 2. 14
[2] எண். 23. 7
[3] 1 சாமு. 9. 7, 8. மீகா 3. 11. யூதா 11
[4] ஆதி. 20. 3
[5] ஆதி. 22. 16–18. எண். 23. 20. ரோ. 11. 29
[6] எண். 24. 13
[7] 1 இரா. 22. 14
[8] யாத். 4. 24
[9] 2 இரா. 6. 17. தானி. 10. 7. அப். 22. 9. 1 கொ. 1. 27-29. 2 பே 2. 16
[10] 2 பே. 2. 16
[11] நீதி. 12. 10

நான் அல்லவா? இப்படி உமக்கு எப்போதா
கிலும் நான் செய்தது உண்டா என்றது. அத
31 ற்கு அவன்: இல்லை என்றான். அப்பொழுது
**கர்த்தர்** பிலேயாமின் [1]கண்களைத் திறந்தார்;
வழியிலே நின்று உருவின பட்டயத்தைத் தம்
முடைய கையிலே பிடித்திருக்கிற **கர்த்தரு**
**டைய** தூதனை அவன் கண்டு, தலைகுனிந்து
32 முகங்குப்புற விழுந்து [2]பணிந்தான். **கர்த்த**
**ருடைய** தூதனானவர் அவனை நோக்கி: நீ உன்
கழுதையை, இதனோடே மூன்றுதரம் அடித்த
தென்ன? உன் வழி எனக்கு [3]மாறுபாடாயி
ருக்கிறதினால், நான் உனக்கு எதிரியாகப்
33 புறப்பட்டுவந்தேன். கழுதை என்னைக்
கண்டு, இந்த மூன்றுதரம் எனக்கு விலகிற்று;
எனக்கு விலகாமல் இருந்ததானால், இப்பொ
ழுது நான் உன்னைக் கொன்றுபோட்டு, கழு
தையை உயிரோடே வைப்பேன் என்றார்.
34 அப்பொழுது பிலேயாம் **கர்த்தருடைய** தூதனை
நோக்கி: நான் பாவஞ்செய்தேன்; [4]வழியிலே
நீர் எனக்கு எதிராக நிற்கிறதை அறியாதிருந்
தேன்; இப்பொழுதும் உமது பார்வைக்கு
இது தகாததாயிருக்குமானால், நான் திரும்பிப்
35 போய்விடுகிறேன் என்றான். **கர்த்தருடைய**
தூதனானவர் பிலேயாமை நோக்கி: அந்த மனி
தரோடே கூடப் போ; நான் உன்னோடே
சொல்லும் வார்த்தையைமாத்திரம் நீ சொல்
லக்கடவாய் என்றார்; அப்படியே பிலேயாம்
பாலாகின் பிரபுக்களோடே கூடப்போனான்.
36 பிலேயாம் வருகிறதைப் பாலாக் கேட்டமாத்
திரத்தில், கடைசி யெல்லையான அர்னோன்
நதியின் ஓரத்திலுள்ள மோவாபின் பட்டண
மட்டும் அவனுக்கு [5]எதிர்கொண்டு போனான்.
37 பாலாக் பிலேயாமை நோக்கி: உம்மை அழைக்
கும்படி நான் ஆவலோடே உம்மிடத்தில்
ஆள் அனுப்பவில்லையா? என்னிடத்திற்கு
வராமல் இருந்தது என்ன? ஏற்றபிரகாரமாக
உம்மை நான் கனம்பண்ணமாட்டேனோ [6]என்
38 றான். அப்பொழுது பிலேயாம் பாலாகை
நோக்கி: இதோ, உம்மிடத்திற்கு வந்தேன்;
ஆனாலும், ஏதாகிலும் சொல்லுகிறதற்கு என்
னாலே ஆகுமோ? தேவன் என் வாயிலே
[7]அளிக்கும் வார்த்தையையே சொல்லுவேன்
39 என்றான். பிலேயாம் பாலாகுடனே கூடப்
போனான்; அவர்கள் *கீரியாத் ஊசோத்தில்
40 சேர்ந்தார்கள். அங்கே பாலாக் ஆடுமாடுகளை
அடித்து, பிலேயாமுக்கும் அவனோடிருந்த
41 பிரபுக்களுக்கும் அனுப்பினான். மறுநாள்
காலமே பாலாக் பிலேயாமைக் கூட்டிக்
கொண்டு, அவனைப் பாகாலுடைய [8]மேடுக
ளில் ஏறப்பண்ணினான்; அவ்விடத்திலிருந்து
பிலேயாம் ஜனத்தின் கடைசிப் பாளயத்தைப்
பார்த்தான்.

**23** பிலேயாம் பாலாகை நோக்கி: நீர் இங்கே
எனக்கு ஏழு [9]பலிபீடங்களைக் கட்டி, ஏழு
காளைகளையும் ஏழு ஆட்டுக்கடாக்களையும்
இங்கே எனக்கு ஆயத்தப்படுத்தும் என்றான்.
2 பிலேயாம் சொன்னபடியே பாலாக் செய்
தான்; பாலாகும் பிலேயாமும் ஒவ்வொரு
பீடத்தில் ஒவ்வொரு காளையையும் ஒவ்வொரு
ஆட்டுக்கடாவையும் [10]பலியிட்டார்கள். பின்பு 3
பிலேயாம் பாலாகை நோக்கி: உம்முடைய
சர்வாங்க தகனபலியண்டையில் [11]நில்லும்,
நான் போய்வருகிறேன்; **கர்த்தர்** வந்து என்
னைச் சந்திக்கிறதாயிருக்கும்; அவர் எனக்கு
வெளிப்படுத்துவதை உமக்கு அறிவிப்பேன்
என்று சொல்லி, ஒரு மேட்டின்மேல் ஏறி
னான். தேவன் பிலேயாமைச் சந்தித்தார்; 4
[12]அப்பொழுது அவன் அவரை நோக்கி: நான்
ஏழு பலிபீடங்களை ஆயத்தம்பண்ணி, ஒவ்
வொரு பலிபீடத்தில் ஒவ்வொரு காளையையும்
ஒவ்வொரு ஆட்டுக்கடாவையும் பலியிட்டேன்
என்றான். **கர்த்தர்** பிலேயாமின் [13]வாயிலே 5
வாக்கு அருளி: நீ பாலாகினிடத்தில் திரும்
பிப் போய், இவ்விதமாய்ச் சொல்லக்கடவாய்
என்றார். அவனிடத்துக்கு அவன் திரும்பிப் 6
போனான்; பாலாக் மோவாபுடைய சகல பிர
புக்களோடுங்கூடத் தன் சர்வாங்க தகனபலி
யண்டையிலே நின்றுகொண்டிருந்தான்.

அப்பொழுது அவன் தன் †வாக்கியத்தை 7
எடுத்துரைத்து: மோவாபின் ராஜாவாகிய
பாலாக் என்னைக் கிழக்கு மலைகளிலுள்ள
ஆராமிலிருந்து வரவழைத்து: நீ வந்து எனக்
காக யாக்கோபைச் [14]சபிக்கவேண்டும்; நீ வந்து
இஸ்ரவேலை [15]வெறுத்துவிடவேண்டும் என்று
சொன்னான். தேவன் சபிக்காதவனை [16]நான் 8
சபிப்பதெப்படி? **கர்த்தர்** வெறுக்காதவனை
நான் வெறுப்பதெப்படி? கன்மலை யுச்சியிலி 9
ருந்து நான் அவனைக் கண்டு, குன்றுகளிலி
ருந்து அவனைப் பார்க்கிறேன்; அந்த ஜனங்
கள் ஜாதிகளோடே கலவாமல் [17]தனியே வா
சமாயிருப்பார்கள். யாக்கோபின் [18]தூளை 10
எண்ணத்தக்கவன் யார்? இஸ்ரவேலின் காற்
பங்கை எண்ணுகிறவன் யார்? நீதிமான் மரிப்
பதுபோல் [19]நான் மரிப்பேனாக, என் முடிவு
அவன் முடிவுபோல் இருப்பதாக என்றான்.

அப்பொழுது பாலாக் பிலேயாமை நோக்கி: 11
நீர் எனக்கு என்ன செய்தீர்; என் சத்துருக்க
ளைச் சபிக்கும்படி உம்மை அழைப்பித்தேன்;
[20]நீர் அவர்களை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்தீர்
என்றான். அதற்கு அவன்: **கர்த்தர்** என் 12
வாயில் அருளினதையே [21]சொல்வது என்
கடமையல்லவா என்றான்.

பின்பு பாலாக் அவனை நோக்கி: நீர் அவர் 13
களைப் பார்க்கத்தக்க வேறொரு இடத்திற்கு
என்னோடேகூட வாரும்; அங்கே அவர்கள்
எல்லாரையும் பாராமல், அவர்களுடைய
கடைசிப் பாளயத்தைமாத்திரம் பார்ப்பீர்;
அங்கேயிருந்து எனக்காக அவர்களைச் சபிக்க
வேண்டும் என்று சொல்லி, அவனைப் பிஸ்கா 14
வின் கொடுமுடியில் இருக்கிற சோப்பீமின்
வெளியிலே அழைத்துக்கொண்டுபோய், [22]ஏழு
பலிபீடங்களைக் கட்டி, ஒவ்வொரு பீடத்தில்
ஒவ்வொரு காளையையும் ஒவ்வொரு ஆட்டுக்
கடாவையும் பலியிட்டான். அப்பொழுது 15

1 ஆதி. 21. 19. 2 இரா. 6. 17. லூ. 24. 16, 31
2 யாத். 34. 8
3 2 பே. 2. 14, 15. நீதி. 14. 2
4 1 சாமு. 15. 24, 30. யோபு 34. 31, 32
5 ஆதி. 14. 17. எண். 21. 13
6 எண். 24. 11. யோ. 5. 44
7 18. வசனம்
* தெருக்களுள்ள பட்டணம்
8 உபா. 12. 2
9 29. வசனம்
10 14, 30. வசனம்
11 15. வசனம்
12 16. வசனம்
13 எண். 22. 35. உபா. 18. 18. எரே. 1. 9
† உவமை. யோபு 27. 1. சங். 78. 2. எசே. 17. 2. மீகா 2. 4. ஆப. 2. 6. மத். 13. 33, 35
14 நீதி. 26. 2
15 1 சாமு. 17. 20
16 ஏசா. 47. 12, 13
17 உபா. 28. 28. யாத். 33. 16. எஸ். 9. 2. எபே. 2. 14
18 ஆதி. 13. 16
19 சங். 37. 37; 116. 15. நீதி. 14. 32. 2 கொ. 5. 1
20 எண். 22. 11
21 எண். 22. 38
22 1, 2. வச. சொ. 1. 11

பிலேயாம் பாலாகை நோக்கி: இங்கே உம்மு
டைய சர்வாங்க தகனபலியண்டையில் நில்
லும்; நான் அங்கே போய்க் **கர்த்தரைச்** சந்
16 தித்து வருகிறேன் என்றான். **கர்த்தர்** பிலே
யாமைச் சந்தித்து, அவன் வாயிலே [1]வசனத்
தை அருளி: நீ பாலாகினிடத்திற்குத் திரும்
பிப் போய், இவ்விதமாய்ச் சொல்லக்கடவாய்
17 என்றார். அவனிடத்திற்கு அவன் வருகிற
போது, அவன் மோவாபின் பிரபுக்களோடுங்
கூடத் தன்னுடைய சர்வாங்க தகனபலியண்
டையிலே நின்றுகொண்டிருந்தான்; பாலாக்
அவனை நோக்கி: **கர்த்தர்** என்ன சொன்னார்
[2]என்று கேட்டான்.
18 அப்பொழுது அவன் தன் வாக்கியத்தை
எடுத்துரைத்து: பாலாகே, எழுந்திருந்து [3]கே
ளும்; சிப்போரின் குமாரனே, எனக்குச்
19 செவிகொடும். பொய்சொல்ல தேவன் [4]ஒரு
மனிதன் அல்ல; மனம் மாற அவர் ஒரு மனு
புத்திரனும் அல்ல; அவர் சொல்லியும் [5]செய்
யாதிருப்பாரா? அவர் வசனித்தும் நிறைவேற்
20 றாதிருப்பாரா? இதோ, ஆசீர்வதிக்கக் கட்டளை
பெற்றேன்; அவர் ஆசீர்வதிக்கிறார், [6]அதை
21 நான் திருப்பக்கூடாது. அவர் யாக்கோபிலே
அக்கிரமத்தைக் [7]காண்கிறதும் இல்லை, இஸ்ர
வேலிலே குற்றம் பார்க்கிறதும் இல்லை; அவர்க
ளுடைய தேவனாகிய **கர்த்தர்** [8]அவர்களோடே
இருக்கிறார்; ராஜாவின் [9]ஜயகெம்பீரம் அவர்
22 களுக்குள்ளே இருக்கிறது. தேவன் அவர்
களை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினார்;
காண்டாமிருகத்துக்கொத்த பெலன் [10]அவர்
23 களுக்கு உண்டு. யாக்கோபுக்கு விரோதமான
மந்திரவாதம் இல்லை, இஸ்ரவேலுக்கு விரோ
தமான குறிசொல்லுதலும் இல்லை; தேவன்
என்னென்ன செய்தார் என்று [11]கொஞ்சக்
காலத்திலே யாக்கோபையும் இஸ்ரவேலையும்
24 குறித்துச் சொல்லப்படும். அந்த ஜனம்
துஷ்ட சிங்கம்போல [12]எழும்பும், பால சிங்
கம்போல நிமிர்ந்து நிற்கும்; அது தான் பிடித்த
இரையைப் பட்சித்து, வெட்டுண்டவர்களின்
இரத்தத்தைக் குடிக்குமட்டும் படுத்துக்கொள்
வதில்லை என்றான்.
25 அப்பொழுது பாலாக் பிலேயாமை நோக்கி:
நீர் அவர்களைச் சபிக்கவும் வேண்டாம், அவர்
களை ஆசீர்வதிக்கவும் வேண்டாம் என்றான்.
26 அதற்குப் பிலேயாம் பாலாகைப் பார்த்து:
**கர்த்தர்** சொல்லுகிறபடியெல்லாம் செய்வேன்
என்று உம்மோடே [13]நான் சொல்லவில்லையா
27 என்றான். அப்பொழுது பாலாக் பிலேயா
மை நோக்கி: வாரும், வேறொரு இடத்திற்கு
உம்மை அழைத்துக்கொண்டுபோகிறேன்; நீர்
அங்கேயிருந்தாவது எனக்காக அவர்களைச்
சபிக்கிறது தேவனுக்குப் பிரியமாயிருக்கும்
28 என்று சொல்லி, அவனை எஷிமோனுக்கு
எதிராயிருக்கிற பேயோரின் கொடுமுடிக்கு
29 அழைத்துக்கொண்டு போனான் அப்பொ
ழுது பிலேயாம் பாலாகை நோக்கி: இங்கே
எனக்கு ஏழு பலிபீடங்களைக் கட்டி, இங்கே

1 5. வசனம்
2 1 சாமு. 3. 17. எரே. 37. 17
3 நியா. 3. 20
4 1 சாமு. 15. 29. சங். 89. 35. ரோ. 11. 29. தீத். 1. 2. எபி. 6. 18. யாக். 1. 17
5 1 நாளா. 17. 27. மீகா 7. 20
6 எண். 22. 12. பே. 10 28, 29. ரோ. 8. 38, 39
7 சங். 103. 12. ஏசா. 1. 18. ரோ. 4. 7, 8; 8. 1
8 யாத். 29. 45, 46. சங். 46. 11
9 சங். 118. 15
10 உபா. 33. 17. யோபு 39. 10, 11
11 சங். 31. 19
12 ஆதி. 49. 9, 27
13 12, 13. வச
14 எண். 23. 3, 15
15 1 சாமு. 10. 10
16 2 கொ. 12 2-4. வெளி. 1. 10, 17
17 சங். 1. 3. எரே. 17. 8
18 சங். 92 12-14; 104 16
19 எரே. 51. 18. வெளி. 17. 1, 5
20 சங். 2. 9; 45. 5
21 எண். 23. 24
22 ஆதி. 12. 3
23 நெகே. 13. 2
24 எண். 22. 17, 37

எனக்கு ஏழு காளைகளையும் ஏழு ஆட்டுக்க
டாக்களையும் ஆயத்தம்பண்ணும் என்றான்.
பிலேயாம் சொன்னபடி பாலாக் செய்து, ஒவ் 30
வொரு பீடத்தில் ஒவ்வொரு காளையையும்
ஒவ்வொரு ஆட்டுக்கடாவையும் பலியிட்டான்.
இஸ்ரவேலை ஆசீர்வதிப்பதே **கர்த்தருக்** **24**
குப் பிரியம் என்று பிலேயாம் கண்டபோது,
அவன் முந்திச் செய்துவந்ததுபோல நிமித்
தம் பார்க்கப் [14]போகாமல், வனாந்தரத்திற்கு
நேராகத் தன் முகத்தைத் திருப்பி, தன் கண் 2
களை ஏறெடுத்து, இஸ்ரவேல் தன் கோத்
திரங்களின்படியே பாளயமிறங்கியிருக்கிற
தைப் பார்த்தான்; தேவஆவி [15]அவன்மேல்
வந்தது. அப்பொழுது அவன் தன் வாக்கியத் 3
தை எடுத்துரைத்து: பேயோரின் குமாரனாகிய
பிலேயாம் சொல்லுகிறதாவது, கண் திறக்
கப்பட்டவன் உரைக்கிறதாவது, தேவன் 4
அருளும் வார்த்தைகளைக் கேட்டு, சர்வ
வல்லவரின் தரிசனத்தைக் [16]கண்டு தாழவி
ழும்போது, கண் திறக்கப்பட்டவன் விளம்பு
கிறதாவது, யாக்கோபே, உன் கூடாரங்க 5
ளும், இஸ்ரவேலே, உன் வாசஸ்தலங்களும்
எவ்வளவு அழகானவைகள்! அவைகள் பர 6
விப்போகிற ஆறுகளைப்போலவும், நதியோ
ரத்திலுள்ள [17]தோட்டங்களைப்போலவும், **கர்த்**
**தர்** நாட்டின சந்தனமரங்களைப்போலவும்
[18]தண்ணீர் அருகே உள்ள கேதுரு விருட்சங்
களைப்போலவும் இருக்கிறது. அவர்களுடைய 7
நீர்ச்சால்களிலிருந்து தண்ணீர் பாயும்; அவர்
கள் வித்து [19]திரளான தண்ணீர்களில் பரவும்;
அவர்களுடைய ராஜா ஆகாகைப்பார்க்கிலும்
உயருவான்; அவர்கள் ராஜ்யம் மேன்மைய
டையும். தேவன் அவர்களை எகிப்திலிருந்து 8
புறப்படப்பண்ணினார்; காண்டாமிருகத்துக்
கொத்த பெலன் அவர்களுக்கு உண்டு; அவர்
கள் தங்கள் சத்துருக்களாகிய ஜாதிகளைப்
பட்சித்து, அவர்கள் எலும்புகளை நொறுக்கி,
[20]அவர்களைத் தங்கள் அம்புகளாலே எய்வார்
கள். சிங்கம்போலவும் [21]துஷ்ட சிங்கம்போல 9
வும் மடங்கிப் படுத்துக்கொண்டிருக்கிறார்கள்;
அவர்களை எழுப்புகிறவன் யார்? உங்களை
ஆசீர்வதிக்கிறவன் ஆசீர்வதிக்கப்பட்டவன்,
[22]உங்களைச் சபிக்கிறவன் சபிக்கப்பட்டவன்
என்றான்.
அப்பொழுது பாலாக் பிலேயாமின்மேல் 10
கோபம் மூண்டவனாகி, கையோடே கை
தட்டி, பிலேயாமை நோக்கி: என் சத்துருக்
களைச் சபிக்க உன்னை அழைத்தனுப்பினேன்;
[23]நீயோ இந்த மூன்றுமுறையும் அவர்களை
ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்தாய். ஆகையால் 11
உன் இடத்துக்கு ஓடிப்போ; உன்னை மிகவும்
கனம்பண்ணுவேன் என்றேன்; [24]நீ கனமடை
யாதபடிக்குக் **கர்த்தர்** தடுத்தார் என்றான்.
அப்பொழுது பிலேயாம் பாலாகை நோக்கி: 12
பாலாக் எனக்குத் தன் வீடுநிறைய வெள்ளியும்
பொன்னும் கொடுத்தாலும், நான் என் மன
தாய் நன்மையாகிலும் தீமையாகிலும் செய்கிற

தற்குக் **கர்த்தரின்** கட்டளையை மீறக்கூடாது;
**கர்த்தர்** சொல்வதையே சொல்வேன் என்று,
13 நீர் என்னிடத்திற்கு அனுப்பின ஸ்தானாபதி
14 களிடத்தில் நான் சொல்லவில்லையா? இதோ,
நான் என் ஜனத்தாரிடத்திற்குப் போகிறேன்;
பிற்காலத்திலே இந்த ஜனங்கள் உம்முடைய
ஜனங்களுக்குச் செய்வது இன்னதென்று
[1]உமக்குத் தெரிவிப்பேன் வாரும் என்று
சொல்லி,
15 அவன் தன் வாக்கியத்தை எடுத்துரைத்து:
பேயோரின் குமாரன் பிலேயாம் சொல்லுகிற
தாவது, கண் திறக்கப்பட்டவன் உரைக்கிற
16 தாவது, தேவன் அருளும் வார்த்தைகளைக்
கேட்டு, உன்னதமானவர் அளித்த அறிவை
அறிந்து, சர்வவல்லவரின் தரிசனத்தைக்
கண்டு, தாழ விழும்போது, கண் திறக்கப்பட்
17 டவன் விளம்புகிறதாவது; அவரைக் காண்
பேன், [2]இப்பொழுது அல்ல; அவரைத் தரி
சிப்பேன், சமீபமாய் அல்ல; ஒரு நட்சத்திரம்
[3]யாக்கோபிலிருந்து உதிக்கும், ஒரு செங்
கோல் [4]இஸ்ரவேலிலிருந்து எழும்பும்; அது
மோவாபின் எல்லைகளை நொறுக்கி, சேத் புத்
18 திரர் எல்லாரையும் நிர்மூலமாக்கும். ஏதோம்
[5]சுதந்தரமாகும், சேயீர் தன் சத்துருக்களுக்
குச் சுதந்தரமாகும்; இஸ்ரவேல் பராக்கிரமஞ்
19 செய்யும். யாக்கோபிலிருந்து தோன்றும் ஒரு
வர் ஆளுகை செய்வார்; [6]பட்டணங்களில்
மீதியானவர்களை அழிப்பார் என்றான்.
20 மேலும், அவன் அமலேக்கைப்பார்த்து, தன்
வாக்கியத்தை எடுத்துரைத்து: [7]அமலேக்கு
முந்தி யெழும்பினவன்; ஆனாலும் அவன் முடி
விலே முற்றிலும் நாசமாவான் என்றான்.
21 அன்றியும் அவன் கேனியனைப் பார்த்து,
தன் வாக்கியத்தை எடுத்துரைத்து: உன் வாசஸ்
தலம் அரணிப்பானது; உன் கூட்டைக் கன்
22 மலையில் கட்டினாய். ஆகிலும் கேனியன்
அழிந்துபோவான்; அசூர் உன்னைச் சிறைபி
டித்துக்கொண்டுபோக எத்தனை நாள் செல்லும்
என்றான்.
23 பின்னும் அவன் தன் வாக்கியத்தை எடுத்
துரைத்து: ஐயோ, தேவன் இதைச் செய்யும்
24 போது யார் பிழைப்பான்; சித்தீமின் [8]கரைது
றையிலிருந்து கப்பல்கள் வந்து, அசூரைச் சிறு
மைப்படுத்தி, ஏபேரையும் வருத்தப்படுத்தும்;
அவனும் முற்றிலும் அழிந்துபோவான் என்
றான்.
25 பின்பு பிலேயாம் எழுந்து புறப்பட்டு, தன்
இடத்திற்குத் திரும்பினான்; பாலாகும் தன்
வழியே போனான்.

**25** இஸ்ரவேலர் சித்தீமிலே [9]தங்கியிருக்கை
யில், ஜனங்கள் மோவாபின் குமாரத்திகளோ
டே வேசித்தனம் [10]பண்ணத்தொடங்கினார்
2 கள். அவர்கள் தங்கள் தேவர்களுக்கு இட்ட
பலிகளை [11]விருந்துண்ணும்படி ஜனங்களை
அழைத்தார்கள்; ஜனங்கள் போய்ப் புசித்து,
அவர்கள் தேவர்களைப் பணிந்துகொண்டார்
3 கள். இப்படி இஸ்ரவேலர் பாகால்பேயோ
ரைப் [12]பற்றிக்கொண்டார்கள்; அதனால் இஸ்
ரவேலர்மேல் **கர்த்தருடைய** கோபம் மூண்
டது. **கர்த்தர்** மோசேயை நோக்கி: **கர்த்தரு** 4
**டைய** உக்கிரமான கோபம் இஸ்ரவேலை
விட்டு நீங்கும்படி நீ ஜனங்களின் தலைவர் எல்
லாரையும் கூட்டிக்கொண்டு, [13]அப்படிச்செய்
தவர்களைச் சூரியனுக்கு எதிரே **கர்த்தருடைய**
சந்நிதானத்தில் தூக்கிப்போடும்படி செய் என்
றார். அப்படியே மோசே இஸ்ரவேலின் 5
நியாயாதிபதிகளை நோக்கி: நீங்கள் அவரவர்
பாகால்பேயோரைப் பற்றிக்கொண்ட உங்கள்
மனிதரைக் [14]கொன்றுபோடுங்கள் என்றான்.
அப்பொழுது மோசேயும் இஸ்ரவேல் புத் 6
திரராகிய சபையார் அனைவரும் ஆசரிப்புக்
கூடாரவாசலுக்குமுன்பாக [15]அழுதுகொண்டு
நிற்கையில், அவர்கள் கண்களுக்கு முன்பாக
இஸ்ரவேல் புத்திரரில் ஒருவன் ஒரு மீதியா
னிய ஸ்திரீயைத் தன் சகோதரரிடத்திலே
அழைத்துக்கொண்டுவந்தான். அதை ஆசா 7
ரியனாகிய ஆரோனின் [16]குமாரனான எலெ
யாசாரின் மகன் பினெகாஸ் கண்டபோது,
அவன் நடுச்சபையிலிருந்து எழுந்து, ஒரு ஈட்
டியைத் தன் கையிலே பிடித்து, இஸ்ரவே 8
லனாகிய அந்த மனிதன் வேசித்தனம்பண்
ணும் அறையிலே அவன் பின்னாலே போய்,
இஸ்ரவேல் மனிதனும் அந்த ஸ்திரீயுமாகிய
இருவருடைய வயிற்றிலும் ஈட்டி உருவிப்
போக அவர்களைக் குத்திப்போட்டான்; அப்
பொழுது இஸ்ரவேல் புத்திரரில் உண்டான
வாதை நின்றுபோயிற்று. அந்த வாதையால் 9
செத்தவர்கள் [17]இருபத்து நாலாயிரம்பேர்.
**கர்த்தர்** மோசேயைநோக்கி: நான் என் 10, 11
*எரிச்சலில் இஸ்ரவேல் புத்திரரை நிர்மூல
மாக்காதபடிக்கு, ஆசாரியனாகிய ஆரோனின்
குமாரனான எலெயாசாரின் மகன் பினெ
காஸ், என்நிமித்தம் அவர்கள் நடுவில் பக்தி
வைராக்கியம் காண்பித்ததினால், இஸ்ரவேல்
புத்திரர்மேல் உண்டான என் உக்கிரத்தைத்
[18]திருப்பினான். ஆகையால், இதோ, அவ 12
னுக்கு என் [19]சமாதானத்தின் உடன்படிக்கை
யைக் கட்டளையிடுகிறேன். அவன் தன் தேவ 13
னுக்காக பக்திவைராக்கியம் காண்பித்து,
இஸ்ரவேல் புத்திரருக்காகப் [20]பாவநிவிர்த்தி
செய்தபடியினால், அவனுக்கும் அவனுக்குப்
பின்பு அவன் சந்ததிக்கும் [21]நித்திய ஆசாரிய
பட்டத்திற்குரிய உடன்படிக்கை உண்டா
யிருக்கும் என்று சொல் என்றார். மீதியா 14
னிய ஸ்திரீயோடே குத்துண்டு செத்த இஸ்ர
வேல் மனிதனுடைய பேர் சிம்ரி; அவன்
சல்லூவின் குமாரனும், சிமியோனியரின்
தகப்பன் வம்சத்தில் ஒரு பிரபுவுமாயிருந்தான்.
குத்துண்ட மீதியானிய ஸ்திரீயின் பேர் 15
கஸ்பி, அவள் சூரின் குமாரத்தி, [22]அவன்
மீதியானியருடைய தகப்பன் வம்சத்தாரான
ஜனங்களுக்குத் தலைவனாயிருந்தான்.
**கர்த்தர்** மோசேயைநோக்கி: மீதியானி 16, 17
யரை நெருக்கி [23]அவர்களை வெட்டிப்போடுங்

1 ஆதி. 49. 1. தானி. 2. 28. மீகா 6. 5. வெளி. 2. 14
2 வெளி. 1. 7
3 மத். 2. 2. வெளி. 22. 16
4 ஆதி. 49. 10. சங். 110. 2
5 2 சாமு. 8. 14. சங். 60. 8-14
6 ஆதி. 49. 10
7 யாத். 17. 8, 14
8 ஆதி. 10. 4, 21, 25
9 எண். 33. 49. மீகா 6. 5
10 1 கொ. 10. 8
11 யாத். 34. 15, 16; 20. 5. 1 கொ. 10. 20
12 யோசு. 22. 17. சங். 106. 28, 29. ஓசி. 9. 10
13 உபா. 4. 3. 13. 6-9
14 யாத். 32. 27
15 யோவேல் 2. 17
16 சங். 106. 30
17 உபா. 4. 3. 1 கொ. 10. 8
* வைராக்கியத்தில் யாத். 20. 5. 2 கொ. 11. 2
18 சங். 106. 23. யோ. 3. 36. சங். 78. 58. எசே. 16. 38. செப். 1. 18
19 மல். 2. 4, 5
20 அப். 22. 3. ரோ. 10. 2. எபி. 2. 17
21 யாத். 40. 15
22 எண். 31. 8, 16. யோசு. 13. 21
23 எண். 31. 2

18 கள். பேயோரின் சங்கதியிலும் பேயோரின்
நிமித்தம் வாதையுண்டான நாளிலே குத்து
ண்ட அவர்கள் சகோதரியாகிய கஸ்பி என்
னும் மீதியான் பிரபுவினுடைய குமாரத்தி
யின் சங்கதியிலும், அவர்கள் உங்களுக்குச்
செய்த சர்ப்பனைகளினால் உங்களை மோசம்
போக்கி [1]நெருக்கினார்களே என்றார்.

**26** அந்த வாதை தீர்ந்தபின்பு, **கர்த்தர்** மோ
சேயையும் ஆரோனின் குமாரனும் ஆசாரி
2 யனுமாகிய எலெயாசாரையும் நோக்கி: இஸ்
ரவேல் புத்திரரின் சமஸ்த சபையாரையும்
அவர்கள் பிதாக்களுடைய வம்சத்தின்படி இரு
பது வயதுமுதல் அதற்கு மேற்பட்ட இஸ்ர
வேலிலே யுத்தத்திற்குப் புறப்படத்தக்கவர்
கள் எல்லாரையும் [2]எண்ணுங்கள் என்றார்.
3 அப்பொழுது மோசேயும் ஆசாரியனாகிய எலெ
யாசாரும் எரிகோவின் அருகே இருக்கும்
யோர்தானுக்கு இப்பாலே மோவாபின் சம
னான வெளிகளிலே [3]அவர்களோடே பேசி:
4 **கர்த்தர்** மோசேக்கும் எகிப்துதேசத்திலிரு
ந்து புறப்பட்ட இஸ்ரவேல் புத்திரருக்கும்
கட்டளையிட்டிருக்கிறபடியே, இருபதுவயது
முதற்கொண்டிருக்கிறவர்களை எண்ணுங்கள்
என்றார்கள்.
5 ரூபன் [4]இஸ்ரவேலின் மூத்த குமாரன்;
ரூபனுடைய குமாரர், ஆனோக்கியர் குடும்
பத்துக்குத் தகப்பனான ஆனோக்கும், பல்லூ
வியர் குடும்பத்துக்குத் தகப்பனான பல்லூவும்,
6 எஸ்ரோனியர் குடும்பத்துக்குத் தகப்பனான
எஸ்ரோனும், கர்மீயர் குடும்பத்துக்குத் தகப்
7 பனான கர்மீயுமே. இவைகளே ரூபனிய
ரின் குடும்பங்கள்; அவர்களில் எண்ணப்பட்
டவர்கள் நாற்பத்து மூவாயிரத்து எழுநூற்று
8 முப்பதுபேர். பல்லூவின் குமாரன் எலியாப்.
9 எலியாபின் குமாரர் நேமுவேல், தாத்தான்,
அபிராம் என்பவர்கள்; இந்தத் தாத்தான் அபி
ராம் என்பவர்களே சபையில் பேர்பெற்றவர்
களாயிருந்து, **கர்த்தருக்கு** விரோதமாகப் போ
ராட்டம்பண்ணி, கோராகின் கூட்டாளிக
ளாகி, மோசேக்கும் ஆரோனுக்கும் விரோத
10 மாக [5]விவாதம்பண்ணினவர்கள். பூமி தன்
வாயைத் திறந்து, அவர்களையும் கோராகையும்
விழுங்கினதினாலும், அக்கினி இருநூற்று
ஐம்பதுபேரைப் பட்சித்ததினாலும், அந்தக்
கூட்டத்தார் செத்து, [6]ஒரு அடையாளமானார்
11 கள். கோராகின் குமாரரோ சாகவில்லை.
12 சிமியோனுடைய [7]குமாரரின் குடும்பங்க
ளாவன: நேமுவேலின் சந்ததியான நேமுவே
லரின் குடும்பமும், யாமினின் சந்ததியான
யாமினியரின் குடும்பமும், யாகீனின் சந்ததி
13 யான யாகீனியரின் குடும்பமும், சேராகின்
சந்ததியான சேராகியரின் குடும்பமும், சவு
லின் சந்ததியான சவுலியரின் குடும்பமுமே.
14 இவைகளே சிமியோனியரின் குடும்பங்கள்;
அவர்கள் இருபத்தீராயிரத்து இருநூறுபேர்.
15 காத்துடைய [8]குமாரரின் குடும்பங்களா
வன: சிப்போனின் சந்ததியான சிப்போனிய

[1] எண். 31. 16. வெளி 2. 14
[2] யாத். 30. 12. எண். 1. 2, 3
[3] எண். 35. 1
[4] ஆதி. 46. 8
[5] எண். 16. 1. மு
[6] 1 கொ. 10. 6, 8. 2 பே. 2. 6
[7] ஆதி. 46. 10. யாத். 6. 15
[8] ஆதி. 46. 16
[9] ஆதி. 38. 2-10
[10] ஆதி. 46. 13
* யோபு
[11] ஆதி. 46. 14
[12] ஆதி. 46. 20
[13] யோசு. 17. 1, 2.
[14] எண். 27. 1; 36. 11

ரின் குடும்பமும், ஆகியின் சந்ததியான ஆகி
யரின் குடும்பமும், சூனியின் சந்ததியான சூனி
யரின் குடும்பமும், ஒஸ்னியின் சந்ததியான 16
ஒஸ்னியரின் குடும்பமும், ஏரியின் சந்ததி
யான ஏரியரின் குடும்பமும், ஆரோதின் சந் 17
ததியான ஆரோதியரின் குடும்பமும், அரே
லியின் சந்ததியான அரேலியரின் குடும்ப
முமே. இவைகளே காத் புத்திரரின் குடும்பங் 18
கள்; அவர்களில் எண்ணப்பட்டவர்கள் நாற்
பதினாயிரத்து ஐந்நூற்றுபேர்.
யூதாவின் [9]குமாரர் ஏர் ஓனான் என்பவர் 19
கள்; ஏரும் ஓனானும் கானான்தேசத்தில் செத்
தார்கள். யூதாவுடைய மற்றக் குமாரரின் குடு 20
ம்பங்களாவன: சேலாவின் சந்ததியான சேலா
வியரின் குடும்பமும், பாரேசின் சந்ததியான
பாரேசியரின் குடும்பமும், சேராவின் சந்ததி
யான சேராவியரின் குடும்பமுமே. பாரேசு 21
டைய குமாரரின் குடும்பங்களாவன: எஸ்
ரோனின் சந்ததியான எஸ்ரோனியரின் குடு
ம்பமும், ஆமூலின் சந்ததியான ஆமூலியரின்
குடும்பமுமே. இவைகளே யூதாவின் குடும் 22
பங்கள்; அவர்களில் எண்ணப்பட்டவர்கள்
எழுபத்தாறாயிரத்து ஐந்நூறுபேர்.
இசக்காருடைய [10]குமாரரின் குடும்பங்களா 23
வன: தோலாவின் சந்ததியான தோலாவிய
ரின் குடும்பமும், பூவாவின் சந்ததியான பூவா
வியரின் குடும்பமும், *யாசூபின் சந்ததியான 24
யாசூபியரின் குடும்பமும், சிம்ரோனின் சந்த
தியான சிம்ரோனியரின் குடும்பமுமே.
இவைகளே இசக்காரின் குடும்பங்கள்; அவர் 25
களில் எண்ணப்பட்டவர்கள் அறுபத்து நாலா
யிரத்து முந்நூறுபேர்.
செபுலோனுடைய [11]குமாரரின் குடும்பங்க 26
ளாவன: சேரேத்தின் சந்ததியான சேரேத்தி
யரின் குடும்பமும், ஏலோனின் சந்ததியான
ஏலோனியரின் குடும்பமும், யால்லேயேலின்
சந்ததியான யால்லேயேலியரின் குடும்பமுமே.
இவைகளே செபுலோனியரின் குடும்பங்கள்; 27
அவர்களில் எண்ணப்பட்டவர்கள் அறுபதினா
யிரத்து ஐந்நூறுபேர்.
யோசேப்புடைய [12]குமாரரான மனாசே எப் 28
பிராயீம் என்பவர்களின் குடும்பங்களாவன:
மனாசேயினுடைய [13]குமாரரின் குடும்பங்கள்; 29
மாகீரின் சந்ததியான மாகீரியரின் குடும்ப
முமம், மாகீர் பெற்ற கிலெயாதின் சந்ததியான
கிலெயாதியரின் குடும்பமும், கிலெயாத் 30
பெற்ற ஈயேசேரின் சந்ததியான ஈயேசேரிய
ரின் குடும்பமும், ஏலேக்கின் சந்ததியான
ஏலேக்கியரின் குடும்பமும், அஸ்ரியேலின் 31
சந்ததியான அஸ்ரியேலரின் குடும்பமும், சே
கேமின் சந்ததியான சேகேமியரின் குடும்ப
மும், செமீதாவின் சந்ததியான செமீதாவிய 32
ரின் குடும்பமும், எப்பேரின் சந்ததியான எப்
பேரியரின் குடும்பமுமே. எப்பேரின் குமா 33
ரனான செலோப்பியாத்திற்குக் குமாரர் இல்
லாமல், [14]குமாரத்திகள் மாத்திரம் இருந்தார்
கள்; இவர்கள் நாமங்கள் மக்லாள், நோவாள்,

ஒக்லாள், மில்காள், திர்சாள் என்பவைகள்.
34 இவைகளே மனாசேயின் குடும்பங்கள்; அவர்
களில் எண்ணப்பட்டவர்கள் ஐம்பத்திராயிர
த்து எழுநூறுபேர்.
35 எப்பிராயீமுடைய குமாரரின் குடும்பங்க
ளாவன: சுத்தெலாகின் சந்ததியான சுத்தெலா
கியரின் குடும்பமும், பெகேரின் [1]சந்ததி
யான பெகேரியரின் குடும்பமும், தாகானின்
36 சந்ததியான தாகானியரின் குடும்பமும், சுத்
தெலாக் பெற்ற ஏரானின் சந்ததியான ஏரா
37 னியரின் குடும்பமுமே. இவைகளே எப்பி
ராயீம் புத்திரரின் குடும்பங்கள்; அவர்களில்
எண்ணப்பட்டவர்கள் முப்பத்திரண்டாயிரத்து ஐந்
நூறுபேர்; இவர்களே யோசேப்பு புத்திரரின்
குடும்பங்கள்.
38 பென்யமீனுடைய [2]குமாரரின் குடும்பங்க
ளாவன: பேலாவின் சந்ததியான பேலாவிய
ரின் குடும்பமும், அஸ்பேலின் சந்ததியான
அஸ்பேலியரின் குடும்பமும், அகிராமின் சந்
39 ததியான அகிராமியரின் குடும்பமும், சுப்பா
மின் சந்ததியான சுப்பாமியரின் குடும்பமும்,
உப்பாமின் சந்ததியான உப்பாமியரின் குடும்
40 பமும், பேலா பெற்ற ஆரேதின் சந்ததியான
ஆரேதியரின் குடும்பமும், நாகமானின் சந்த
41 தியான நாகமானியரின் குடும்பமுமே. இவை
களே பென்யமீன் புத்திரரின் குடும்பங்கள்;
அவர்களில் எண்ணப்பட்டவர்கள் நாற்பத்
தையாயிரத்து அறுநூறுபேர்.
42 தாணுடைய [3]குமாரரின் குடும்பங்களாவன:
சூகாமின் சந்ததியான சூகாமியரின் குடும்
43 பமே; இவைகள் தாணின் குடும்பம். சூகாமி
யரின் வம்சங்களில் எண்ணப்பட்டவர்கள் எல்
லாரும் அறுபத்து நாலாயிரத்து நானூறுபேர்.
44 ஆசேருடைய [4]குமாரரின் குடும்பங்களா
வன: இம்னாவின் சந்ததியான இம்னாவிய
ரின் குடும்பமும், இஸ்வியின் சந்ததியான
இஸ்வியரின் குடும்பமும், பெரீயாவின் சந்ததி
45 யான பெரீயாவியரின் குடும்பமும், பெரீயா
பெற்ற ஏபேரின் சந்ததியான ஏபேரியரின்
குடும்பமும், மல்கியேலின் சந்ததியான மல்கி
46 யேலியரின் குடும்பமுமே. ஆசேருடைய
47 குமாரத்தியின் பேர் சாராள். இவைகளே
ஆசேர் புத்திரரின் குடும்பங்கள்; அவர்களில்
எண்ணப்பட்டவர்கள் ஐம்பத்து மூவாயிரத்து
நானூறுபேர்.
48 நப்தலியினுடைய [5]குமாரரின் குடும்பங்க
ளாவன: யாத்சியேலின் சந்ததியான யாத்சி
யேலியரின் குடும்பமும், கூனியின் சந்ததி
49 யான கூனியரின் குடும்பமும், எத்செரின்
சந்ததியான எத்செரியரின் குடும்பமும், சில்
லேமின் சந்ததியான சில்லேமியரின் குடும்
50 பமுமே. இவைகளே நப்தலியின் குடும்பங்
கள்; அவர்களில் எண்ணப்பட்டவர்கள் நாற்
பத்தையாயிரத்து நானூறுபேர்.
51 இஸ்ரவேல் புத்திரரில் எண்ணப்பட்டவர்
கள் [6]ஆறுலட்சத்தோராயிரத்து எழுநூற்று
முப்பதுபேராயிருந்தார்கள்.

கர்த்தர் மோசேயை நோக்கி: இவர்களு 52,53
டைய பேர்களின் இலக்கத்திற்குத் தக்கதாய்
தேசம் இவர்களுக்குச் சுதந்தரமாகப் [7]பங்கிடப்
படவேண்டும். அநேகம்பேருக்கு அதிக சுதந் 54
தரமும் கொஞ்சம்பேருக்குக் கொஞ்ச சுதந்தர
மும் கொடுப்பாயாக; [8]அவர்களில் எண்ணப்
பட்ட இலக்கத்திற்குத் தக்கதாக அவரவர்க
ளுக்கு சுதந்தரம் கொடுக்கப்படவேண்டும்.
ஆனாலும் சீட்டுப்போட்டு, தேசத்தைப் பங்கி 55
டவேண்டும்; தங்கள் பிதாக்களுடைய கோத்
திரங்களுக்குரிய நாமங்களின்படியே சுதந்தரித்
துக்கொள்ளக்கடவர்கள். அநேகம்பேர்களா 56
யினும் கொஞ்சம்பேர்களாயினும் சீட்டு விழுந்
தபடியே அவரவர்களுடைய சுதந்தரங்கள்
பங்கிடப்படவேண்டும் என்றார்.
எண்ணப்பட்ட லேவியரின் குடும்பங்களா 57
வன: [9]கெர்சோனின் சந்ததியான கெர்சோ
னியரின் குடும்பமும், கோகாத்தின் சந்ததி
யான கோகாத்தியரின் குடும்பமும், மெராரி
யின் சந்ததியான மெராரியரின் குடும்பமும்;
லேவியின் மற்றக் குடும்பங்களாகிய லிப்னீய 58
ரின் குடும்பமும், எப்ரோனியரின் குடும்ப
மும், மகலியரின் குடும்பமும், மூசியரின்
குடும்பமும், கோராகியரின் குடும்பமுமே.
கோகாத் அம்ராமைப் பெற்றான். அம்ராமு 59
டைய மனைவிக்கு யோகெபேத் [10]என்று பேர்;
அவள் எகிப்திலே லேவிக்குப் பிறந்த குமா
ரத்தி; அவள் அம்ராமுக்கு ஆரோனையும் மோ
சேயையும் அவர்கள் சகோதரியான மிரியா
மையும் பெற்றாள். ஆரோனுக்கு [11]நாதாபும் 60
அபியூவும் எலெயாசாரும் இத்தாமாரும் பிறந்
தார்கள். நாதாபும் அபியூவும் கர்த்தருடைய 61
சந்நிதியில் அந்நிய அக்கினியைக் கொண்டு
வந்தபோது, [12]செத்துப்போனார்கள். அவர்க 62
ளில் ஒரு மாதத்து ஆண்பிள்ளை முதலாக
எண்ணப்பட்டவர்கள் இருபத்து மூவாயிரம்
பேர்; இஸ்ரவேல் புத்திரரின் நடுவே அவர்க
ளுக்குச் சுதந்தரம் கொடுக்கப்படாதபடியி
னால், [13]அவர்கள் இஸ்ரவேல் புத்திரரின் இலக்
கத்திற்கு உட்படவில்லை.
மோசேயும் ஆசாரியனாகிய எலெயாசாரும் 63
எரிகோவின் அருகேயிருக்கும் யோர்தானுக்கு
இப்பாலே மோவாபின் சமனான வெளிகளில்
இஸ்ரவேல் புத்திரரை எண்ணுகிறபோது
இருந்தவர்கள் இவர்களே. முன்பு மோசேயும் 64
ஆசாரியனாகிய ஆரோனும் சீனாய் வனாந்தரத்
தில் இஸ்ரவேல் புத்திரரை எண்ணும்போது
இருந்தவர்களில் ஒருவரும் [14]இவர்களுக்குள்
இல்லை. வனாந்தரத்தில் சாகவே சாவார்கள் 65
என்று கர்த்தர் அவர்களைக்குறித்துச் [15]சொல்
லியிருந்தார்; எப்புன்னேயின் குமாரனாகிய
காலேபும் நூனின் குமாரனாகிய யோசுவாவும்
தவிர, வேறொருவரும் அவர்களில் மீதியா
யிருக்கவில்லை.

**27**
யோசேப்பின் குமாரனாகிய மனாசேயின்
குடும்பங்களில், மனாசேயின் குமாரனாகிய
மாகீரின் மகனான கிலெயாத்துக்குப் [16]பிறந்த

[1] 1 நாளா. 7. 20
[2] ஆதி. 46. 21
[3] ஆதி. 46. 23
[4] ஆதி. 46. 17
[5] ஆதி. 46. 24
[6] எண். 1. 46
[7] யோசு. 11. 23; 14. 1
[8] எண். 33. 54
[9] ஆதி. 46. 11. யாத். 6. 16-19. 1 நாளா. 6, 1, 16
[10] யாத். 2. 1, 2; 6. 20
[11] எண். 3. 2
[12] லேவி. 10. 1, 2. எண். 3. 4
[13] எண். 18. 20-24. யோசு. 13. 4
[14] உபா. 4. 3, 4
[15] எண். 14. 28-30. 1 கொரி. 10. 5, 6. யூதா 5
[16] எண். 26. 33; 36. 1, 11. யோசு. 17. 3

ஏபேருக்குப் புத்திரனாயிருந்த செலொப்பியாத்
தின் குமாரத்திகளாகிய மக்லாள், நோவாள்,
ஒக்லாள், மில்காள், திர்சாள் என்பவர்கள்
2 வந்து, ஆசரிப்புக் கூடாரவாசலிலே மோசேக்
கும், ஆசாரியனாகிய எலெயாசாருக்கும், பிர
புக்களுக்கும், சபையனைத்திற்கும் முன்பாக
3 நின்று: எங்கள் தகப்பன் வனாந்தரத்தில் [1]மா
ணமடைந்தார்; அவர் கர்த்தருக்கு விரோதமா
கக் கூடின கோராகின் கூட்டத்தாரில் சேர்ந்
தவர் அல்ல, தம்முடைய பாவத்தினாலே மரித்
4 தார்; அவருக்குக் குமாரர் இல்லை. எங்கள்
தகப்பனுக்குக் குமாரன் இல்லாததினாலே,
அவருடைய பேர் அவருடைய வம்சத்தில்
இல்லாமல் அற்றுப்போகலாமா? எங்கள் தகப்
பனுடைய சகோதாருக்குள்ளே [2]எங்களுக்குக்
காணியாட்சி கொடுக்கவேண்டும் என்றார்கள்.
5 மோசே அவர்களுடைய நியாயத்தைக் [3]கர்த்
தருடைய சந்நிதியில் கொண்டுபோனான்.
6 அப்பொழுது கர்த்தர் மோசேயை நோக்கி:
7 செலொப்பியாத்தின் குமாரத்திகள் சொல்லுகி
றது சரிதான்; அவர்களுக்கு அவர்கள் தகப்ப
னுடைய சகோதாருக்குள்ளே [4]சுதந்தரம்
கொடுக்கவேண்டும்; அவர்கள் தகப்பன் பின்
வைத்த சுதந்தரத்தை அவர்களுக்குக் கிடைக்
8 கும்படி செய்வாயாக. மேலும் நீ இஸ்ரவேல்
புத்திரரை நோக்கி: ஒருவன் குமாரன் இல்லா
மல் மரித்தால், அவனுக்குரிய சுதந்தரத்தை
அவன் குமாரத்திக்குக் கொடுக்கவேண்டும்.
9 அவனுக்குக் குமாரத்தியும் இல்லாதிருந்தால்,
அவனுக்குரிய சுதந்தரத்தை அவன் சகோதா
10 ருக்குக் கொடுக்கவேண்டும். அவனுக்குச்
சகோதாரும் இல்லாதிருந்தால், அவனுக்குரிய
சுதந்தரத்தை அவன் தகப்பனுடைய சகோதா
11 ருக்குக் கொடுக்கவேண்டும். அவன் தகப்ப
னுக்குச் சகோதார் இல்லாதிருந்தால், அவ
னுக்குரிய சுதந்தரத்தை அவன் வம்சத்திலே
அவனுக்குக் கிட்டின உறவின்முறையானுக்
குச் சுதந்தரமாகக் கொடுக்கவேண்டும்; இது,
கர்த்தர் மோசேக்குக் கட்டளையிட்டபடியே,
இஸ்ரவேல் புத்திரருக்கு நியாயவிதிப் பிர
மாணமாய் இருக்கக்கடவது [5]என்று சொல்
என்றார்.
12 பின்பு கர்த்தர் மோசேயை நோக்கி: நீ
இந்த அபாரீம் [6]மலையில் ஏறி, நான் இஸ்ர
வேல் புத்திரருக்குக் கொடுத்த தேசத்தைப்
13 பார். நீ அதைப் பார்த்தபின்பு, உன் சகோ
தரனாகிய ஆரோன் சேர்க்கப்பட்டதுபோல,
நீயும உன் ஜனத்தாரிடத்தில் [7]சேர்க்கப்படு
14 வாய்; சபையார் வாக்குவாதம்பண்ணின சீன்
வனாந்தரத்தில் தண்ணீருக்கடுத்த விஷயத்தில்
அவர்கள் கண்களுக்கு முன்பாக என்னைப்
பரிசுத்தம்பண்ணவேண்டிய நீங்கள் என் கட்
டளையை மீறினீர்களே என்றார். இது சீன்
வனாந்தரத்தில் காதேஸ் ஊர் அருகே உண்
டான மேரிபாவின் [8]தண்ணீருக்கடுத்த காரிய
15 மே. அப்பொழுது மோசே கர்த்தரை நோக்கி:
16 கர்த்தருடைய சபை [9]மேய்ப்பன் இல்லாத மந்
தையைப்போல் இராதபடிக்கு, அந்தச் சபை 17
க்கு முன்பாகப் [10]போக்கும் வரத்துமாய் இருக்
கும்படிக்கும், அவர்களைப் போகவும் வரவும்
பண்ணும்படிக்கும், மாம்சமான யாவருடைய
ஆவிகளுக்கும் தேவனாகிய [11]கர்த்தர் ஒரு புரு
ஷனை அவர்கள்மேல் அதிகாரியாக [12]ஏற்படுத்த
வேண்டும் என்றான். கர்த்தர் மோசேயை 18
நோக்கி: ஆவியைப் பெற்றிருக்கிற புருஷனா
கிய யோசுவா என்னும் நூனின் குமாரனை நீ
தெரிந்துகொண்டு, [13]அவன்மேல் உன் கையை
வைத்து, அவனை ஆசாரியனாகிய எலெயாசா 19
ருக்கும் சபையனைத்திற்கும் முன்பாக நிறுத்தி,
அவர்கள் கண்களுக்கு முன்பாக அவனுக்குக்
[14]கட்டளைகொடுத்து, இஸ்ரவேல் புத்திரரா 20
கிய சபையார் எல்லாரும் அவனுக்குக் கீழ்ப்
படியும்படிக்கு, உன் கனத்தில் [15]கொஞ்சம்
அவனுக்குக் கொடு. அவன் ஆசாரியனாகிய 21
எலெயாசாருக்கு முன்பாக நிற்கக்கடவன்;
அவனிமித்தம் அந்த ஆசாரியன் கர்த்தருடைய
சந்நிதானத்தில் வந்து, ஊரீம் என்னும் [16]நியா
யத்தினாலே ஆலோசனை கேட்கக்கடவன்;
அவருடைய கட்டளையின்படியே, அவனும்
அவனோடேகூட இஸ்ரவேல் புத்திரராகிய
சபையார் எல்லாரும் போகவும் அவருடைய
கட்டளையின்படியே வரவும் வேண்டியது
என்றார். மோசே தனக்குக் கர்த்தர் கட்ட 22
ளையிட்டபடியே யோசுவாவை அழைத்துக்
கொண்டு போய், அவனை ஆசாரியனாகிய
எலெயாசாருக்கும் சபையனைத்திற்கும் முன்
பாக நிறுத்தி, அவன்மேல் தன் கைகளை 23
வைத்து, கர்த்தர் தனக்குச் சொன்னபடியே
[17]அவனுக்குக் கட்டளை கொடுத்தான்.

**28**

கர்த்தர் மோசேயை நோக்கி: எனக்குச் 2
சுகந்த வாசனையாக, தகனபலிகளுக்கு அடுத்த
காணிக்கையையும் அப்பத்தையும், [18]குறித்த
காலத்தில் எனக்குச் செலுத்தும்படிக்குக் கவ
னமாயிருக்கக்கடவீர்கள் என்று நீ இஸ்ரவேல்
புத்திரருக்குக் கட்டளையிடு.
மேலும் நீ அவர்களை நோக்கி: நீங்கள் கர்த் 3
தருக்குச் செலுத்தவேண்டிய தகனபலி என்
னவென்றால்: [19]நித்திய சர்வாங்க தகனபலி
யாக நாடோறும் ஒரு வயதான பழுதற்ற
இரண்டு ஆட்டுக்குட்டிகளைப் பலியிடவேண்
டும். காலையில் ஒரு ஆட்டுக்குட்டியையும், 4
மாலையில் ஒரு ஆட்டுக்குட்டியையும் [20]பலி
யிட்டு, போஜனபலியாக ஒரு மரக்காலிலே 5
பத்தில் ஒரு பங்கானதும் [21]இடித்துப் பிழிந்த
காற்படி எண்ணெயிலே பிசைந்ததுமாகிய
மெல்லிய மாவையும் செலுத்தக்கடவீர்கள்.
இது சீனாய் மலையிலே கட்டளையிடப்பட்ட 6
நித்திய சர்வாங்க தகனபலி; [22]இது கர்த்த
ருக்குச் சுகந்த வாசனைக்கான தகனபலி. காற் 7
படி திராட்சரசம் ஒரு ஆட்டுக்குட்டிக்கு அடு
த்த பானபலி; பரிசுத்த ஸ்தலத்திலே கர்த்த
ருக்கு அந்த இரசம் பானபலியாக வார்க்கப்
படக்கடவது. காலையின் போஜனபலிக்கும் 8
அதின் பானபலிக்கும் ஒப்பாகவே மாலையில்

[1] எண். 14. 35: 26. 64, 65
[2] யோசு. 17. 4
[3] யாத். 18. 15, 19. யோபு 23. 4
[4] எண். 36. 2
[5] எண். 35. 29
[6] எண். 33. 47. உபா. 3. 27: 32. 49: 34. 1
[7] எண். 20. 24: 31. 2
[8] யாத். 17. 7. எண். 20. 10—12
[9] 1 இரா. 22. 7. சகரி. 10. 2. மத். 9. 36. 1 பே. 2. 25
[10] உபா. 31. 2. 1 சாமு. 8. 20. யோ. 10. 9
[11] எண். 16. 22. எபி. 12. 9
[12] எரே. 3. 15
[13] ஆதி. 41. 38. நியா. 3. 10. 1 சாமு. 16. 13, 18 தானி. 5. 14. அப். 6. 3
[14] உபா. 31. 7
[15] எண். 11. 17, 28. 2 இரா. 2. 9, 15
[16] யாத். 28. 30. யோசு. 9. 14
[17] உபா. 3. 28
[18] லேவி. 3. 11. மல். 1. 7, 12
[19] யாத். 29. 38
[20] யாத். 12. 6
[21] யாத். 16. 36. லேவி. 2. 1
[22] யாத். 29. 42. ஆமோ. 5. 25

மற்ற ஆட்டுக்குட்டியையும் கர்த்தருக்குச் சுகந்த
வாசனையான தகனபலியாகச் செலுத்தக்கட
வீர்கள்.
9 ஓய்வுநாளிலோ போஜனபலிக்காக ஒரு
வயதான பழுதற்ற இரண்டு ஆட்டுக்குட்டி
களையும், பத்தில் இரண்டு பங்கானதும் எண்
ணெயிலே பிசைந்ததுமான மெல்லிய மாவை
யும், அதின் பானபலியையும் செலுத்தக்கட
10 வீர்கள். நித்தமும் செலுத்தும் சர்வாங்க தக
னபலியும் அதின் பானபலியும் அன்றி ஒவ்
வொரு ஓய்வுநாளிலும் [1]இந்தச் சர்வாங்க தக
னபலியும் செலுத்தப்படவேண்டும்.
11 உங்கள் மாதப்பிறப்புகளில் [2]நீங்கள் கர்த்த
ருக்குச் சர்வாங்க தகனபலியாக இரண்டு கா
ளைகளையும், ஒரு ஆட்டுக்கடாவையும், ஒரு வய
தான பழுதற்ற ஏழு ஆட்டுக்குட்டிகளையும்
12 செலுத்தக்கடவீர்கள். போஜனபலியாக [3]ஒவ்
வொரு காளைக்குப் பத்தில் மூன்று பங்கான
தும் எண்ணெயிலே பிசைந்ததுமான மெல்
லிய மாவையும், போஜனபலியாக ஒரு ஆட்
டுக்கடாவுக்குப் பத்தில் இரண்டு பங்கானதும்
எண்ணெயிலே பிசைந்ததுமான மாவையும்,
13 போஜனபலியாக ஒவ்வொரு ஆட்டுக்குட்டிக்
குப் பத்தில் ஒரு பங்கானதும் எண்ணெயிலே
பிசைந்ததுமான மாவையும் கர்த்தருக்குச் சுக
ந்த வாசனையான சர்வாங்க தகனபலியாகச்
14 செலுத்தக்கடவீர்கள். அவைகளுக்கேற்ற பான
பலிகள் திராட்சரசத்தில் காளைக்கு அரைப்
படியும், ஆட்டுக்கடாவுக்குப் படியில் மூன்
றில் ஒரு பங்கும், ஆட்டுக்குட்டிக்குக் காற்படி
ரசமுமாயிருக்கவேண்டும்; இது வருஷ முழு
வதும் மாதந்தோறும் செலுத்தப்படவேண்டிய
15 சர்வாங்க தகனபலி. நித்தமும் இடப்படும் சர்வா
ங்க தகனபலியும் அதின் பானபலியும் அன்றி,
பாவநிவாரணபலியாகக் கர்த்தருக்கு ஒரு வெள்
ளாட்டுக்கடாவும் [4]செலுத்தப்படவேண்டும்.
16 முதலாம் மாதம் பதினாலாம் தேதி [5]கர்த்த
17 ருக்கு உரிய பஸ்கா. அந்தமாதம் பதினைந்தாம்
தேதி [6]பண்டிகை நாள்; ஏழுநாளளவும் புளிப
18 பில்லாத அப்பம் புசிக்கவேண்டும். முதலாம்
நாளிலே [7]பரிசுத்த சபைகூடுதல் இருக்கவே
ண்டும்; அன்றையத்தினம் சாதாரணமான
19 யாதொரு வேலையும் செய்யலாகாது. அப்
பொழுது நீங்கள் கர்த்தருக்குச் சர்வாங்க தகன
பலியாக இரண்டு காளைகளையும், ஒரு ஆட்டுக்
கடாவையும், ஒரு வயதான பழுதற்ற [8]ஏழு
20 ஆட்டுக்குட்டிகளையும், அவைகளுக்கேற்ற
போஜனபலியாக எண்ணெயிலே பிசைந்த
மெல்லிய மாவிலே காளைக்காகப் பத்தில்
மூன்று பங்கையும், ஆட்டுக்கடாவுக்காகப் பத்
21 தில் இரண்டு பங்கையும், ஏழு ஆட்டுக்குட்டி
களில் ஒவ்வொன்றிற்காகப் பத்தில் ஒரு பங்
22 கையும், உங்கள் பாவநிவிர்த்திக்கென்று பாவ
நிவாரணபலியாக ஒரு வெள்ளாட்டுக்கடா
23 வையும் செலுத்தக்கடவீர்கள். காலையிலே
நித்தமும் செலுத்தும் சர்வாங்க தகனபலியை
யும் அன்றி இவைகளையும் செலுத்தக்கடவீர்
கள். இந்தப்பிரகாரம் ஏழுநாளளவும் நா 24
டோறும் கர்த்தருக்குச் சுகந்த வாசனையான
தகனபலி செலுத்தக்கடவீர்கள்; நித்தமும்
செலுத்தப்படும் சர்வாங்க தகனபலியையும்
அதின் பானபலியையும் அன்றி, இதையும்
செலுத்தவேண்டும். ஏழாம் நாளிலே பரி 25
சுத்த சபைகூடுதல் இருக்கவேண்டும்; அதில்
சாதாரணமான [9]யாதொரு வேலையும் செய்ய
லாகாது.
அந்த வாரங்களுக்குப்பின் நீங்கள் கர்த்த 26
ருக்குப் புதிய போஜனபலியாக முதற்கனிக
ளைச் செலுத்தும் [10]பண்டிகைநாளிலும் பரி
சுத்த சபைகூடுதல் இருக்கவேண்டும்; அதில்
சாதாரணமான யாதொரு வேலையும் செய்ய
லாகாது. அப்பொழுது நீங்கள் கர்த்தருக்குச் 27
சுகந்த வாசனையான சர்வாங்க தகனபலியாக
இரண்டு காளைகளையும், ஒரு ஆட்டுக்கடாவை
யும், ஒரு வயதான ஏழு ஆட்டுக்குட்டிகளை
யும், அவைகளின் போஜனபலியாக எண் 28
ணெயிலே பிசைந்த மெல்லிய மாவில் ஒரு
காளைக்காகப் பத்தில் மூன்று பங்கையும்,
அந்த ஒரு ஆட்டுக்கடாவுக்காகப் பத்தில் இர
ண்டு பங்கையும், ஏழு ஆட்டுக்குட்டிகளில் 29
ஒவ்வொன்றிற்காகப் பத்தில் ஒரு பங்கையும்,
உங்களுக்காகப் பாவநிவிர்த்தி செய்யும்படிக்கு 30
ஒரு வெள்ளாட்டுக்கடாவையும் செலுத்தக்
கடவீர்கள். நித்திய சர்வாங்க தகனபலியை 31
யும் அதின் போஜனபலியையும் அதின் பான
பலியையும் அன்றி, இவைகளையும் செலுத்
தக்கடவீர்கள்; இவைகள் [11]பழுதற்றவைகளா
யிருக்கவேண்டும்.

ஏழாம் மாதம் முதல்தேதி பரிசுத்த சபை **29**
கூடும் நாளாயிருக்கக்கடவது; அதில் சாதார
ணமான, யாதொரு [12]வேலையும் செய்ய
லாகாது; அது உங்களுக்கு எக்காளமூதும்
நாளாயிருக்கவேண்டும். அப்பொழுது நீங்கள் 2
கர்த்தருக்குச் சுகந்த வாசனையான சர்வாங்க
தகனபலியாக ஒரு காளையையும், ஒரு ஆட்
டுக்கடாவையும், ஒரு வயதான பழுதற்ற ஏழு
ஆட்டுக்குட்டிகளையும், அவைகளுக்கு அடுத்த 3
போஜனபலியாக எண்ணெயிலே பிசைந்த
மெல்லிய மாவிலே காளைக்காகப் பத்தில்
மூன்று பங்கையும், ஆட்டுக்கடாவுக்காக
இரண்டுபங்கையும், ஏழு ஆட்டுக்குட்டிகளில் 4
ஒவ்வொன்றிற்காக ஒரு பங்கையும், உங்கள் 5
பாவநிவிர்த்திக்கான பலியாக ஒரு வெள்ளா
ட்டுக்கடாவையும் செலுத்தி, மாதப்பிறப்பின் 6
சர்வாங்க தகனபலியையும் அதின் போஜன
பலியையும், தினந்தோறும் இடும் சர்வாங்க
தகனபலியையும் அதின் போஜனபலியை
யும், அவைகளின் முறைமைக்கேற்ற பான
பலிகளையும் அன்றி, இவைகளையும் கர்த்த
ருக்குச் சுகந்த வாசனையான சர்வாங்க தகன
பலியாகச் [13]செலுத்தக்கடவீர்கள்.
இந்த ஏழாம் மாதம் பத்தாம் தேதி உங்களுக் 7
குப் பரிசுத்த சபைகூடும் [14]நாளாயிருக்கக்கட
வது; அதிலே நீங்கள் யாதொரு வேலையும்

[1] எசே. 46. 4
[2] எண். 10. 10. 1 நாளா. 23. 31. நெகே. 10. 33. ஏசா. 1. 13, 14. எசே. 45. 17. கொலோ. 2. 16
[3] எண். 15. 4—12
[4] எண். 15. 24
[5] யாத். 12. 6, 18. லேவி. 16. 29: 23. 5, 6
[6] லேவி. 23. 6, 7
[7] யாத். 12. 16
[8] சங். 35. 13. ஏசா. 58. 5
[9] யாத். 12. 16. லேவி. 23. 8
[10] யாத். 23. 16. லேவி. 23. 10. உபா. 16. 10. அப். 2. 1
[11] 19. வசனம்
[12] லேவி. 23. 24. சங். 81. 3, 4
[13] எண். 28. 11. எஸ். 3. 4. 1 கொ. 14. 40. ... 14. 40
[14] லேவி. 16. 29

செய்யாமல், உங்கள் ஆத்துமாக்களைத் *தாழ்
8 மைப்படுத்தி, கர்த்தருக்குச் சுகந்த வாசனை
யான சர்வாங்க தகனபலியாக [1]ஒரு காளையை
யும், ஒரு ஆட்டுக்கடாவையும், ஒரு வயதான
9 பழுதற்ற ஏழு ஆட்டுக்குட்டிகளையும், அவை
களின் போஜனபலியாக எண்ணெயிலே
பிசைந்த மெல்லிய மாவிலே காளைக்காகப் பத்
தில் மூன்று பங்கையும், அந்த ஒரு ஆட்டுக்
10 கடாவுக்காக இரண்டு பங்கையும், ஏழு ஆட்
டுக்குட்டிகளில் ஒவ்வொன்றிற்காகப் பத்தில்
11 ஒரு பங்கையும், பாவநிவாரணபலியாக ஒரு
வெள்ளாட்டுக்கடாவையும் செலுத்தி, பாவ
நிவாரணபலியையும், நித்திய சர்வாங்க தகன
பலியையும், அதின் போஜன பலியையும்,
அவைகளின் பானபலிகளையும் அன்றி,
[2]இவைகளையும் செலுத்தக்கடவீர்கள்.
12 ஏழாம் மாதம் பதினைந்தாம் தேதி [3]உங்க
ளுக்குப் பரிசுத்த சபைகூடும் நாளாயிருக்கக்
கடவது; அதில் சாதாரணமான யாதொரு
வேலையும் செய்யலாகாது; ஏழுநாள் கர்த்த
13 ருக்குப் பண்டிகை ஆசரிக்கக்கடவீர்கள். நீங்
கள் கர்த்தருக்குச் சுகந்த வாசனையுள்ள [4]சர்
வாங்க தகனபலியாக பதின்மூன்று காளைகளை
யும், இரண்டு ஆட்டுக்கடாக்களையும், ஒரு வய
தான பழுதற்ற பதினாலு ஆட்டுக்குட்டிகளை
14 யும், அவைகளின் போஜனபலியாக எண்
ணெயிலே பிசைந்த மெல்லிய மாவிலே அந்
தப் பதின்மூன்று காளைகளில் ஒவ்வொன்றிற்
காகப் பத்தில் மூன்று பங்கையும், அந்த இர
ண்டு ஆட்டுக்கடாக்களில் ஒவ்வொன்றிற்காக
15 இரண்டு பங்கையும், பதினாலு ஆட்டுக்குட்
டிகளில் ஒவ்வொன்றிற்காக ஒரு பங்கையும்,
16 நித்திய தகனபலியையும், அதின் போஜன
பலியையும், அதின் பானபலியையும் அன்றி,
பாவநிவாரணபலியாக ஒரு வெள்ளாட்டுக்க
டாவையும் செலுத்தக்கடவீர்கள்.
17 இரண்டாம் நாளிலே பன்னிரண்டு காளைக
ளையும், இரண்டு ஆட்டுக்கடாக்களையும், ஒரு
வயதான பழுதற்ற பதினாலு ஆட்டுக்குட்டி
18 களையும், காளைகளும் ஆட்டுக்கடாக்களும்
ஆட்டுக்குட்டிகளும் இருக்கிற இலக்கத்திற்
குத் தக்கதாக முறைமையின்படி [5]அவைக
ளின் போஜனபலியையும், அவைகளின் பான
19 பலிகளையும், நித்திய சர்வாங்க தகனபலியை
யும், அதின் போஜனபலியையும், அவைக
ளின் பானபலிகளையும் அன்றி, பாவநிவார
ணபலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவையும்
செலுத்தக்கடவீர்கள்.
20 மூன்றாம் நாளிலே பதினொரு காளைகளை
யும், இரண்டு ஆட்டுக்கடாக்களையும், ஒரு வய
தான பழுதற்ற பதினாலு ஆட்டுக்குட்டிகளை
21 யும், காளைகளும் ஆட்டுக்கடாக்களும் ஆட்டுக்
குட்டிகளும் இருக்கிற இலக்கத்திற்குத் தக்க
தாக முறைமையின்படி அவைகளின் போஜ
னபலியையும், அவைகளின் பானபலிகளை
22 யும், நித்திய சர்வாங்க தகனபலியையும்,
அதின் போஜனபலியையும், அதின் பான
பலியையும் அன்றி, பாவநிவாரணபலியாக
ஒரு வெள்ளாட்டுக்கடாவையும் செலுத்தக்கட
வீர்கள்.
நான்காம் நாளிலே பத்துக் காளைகளையும், 23
இரண்டு ஆட்டுக்கடாக்களையும், ஒரு வயதான
பழுதற்ற பதினாலு ஆட்டுக்குட்டிகளையும்,
காளைகளும் ஆட்டுக்கடாக்களும் ஆட்டுக்குட்டி 24
களும் இருக்கிற இலக்கத்திற்குத் தக்கதாக
முறைமையின்படி அவைகளின் போஜனபலி
யையும், அவைகளின் பானபலிகளையும், நித் 25
திய சர்வாங்க தகனபலியையும், அதின் போ
ஜனபலியையும், அதின் பானபலியையும்
அன்றி, பாவநிவாரணபலியாக ஒரு வெள்
ளாட்டுக்கடாவையும் செலுத்தக்கடவீர்கள்.
ஐந்தாம் நாளிலே ஒன்பது காளைகளையும், 26
இரண்டு ஆட்டுக்கடாக்களையும், ஒரு வயதான
பழுதற்ற பதினாலு ஆட்டுக்குட்டிகளையும்,
காளைகளும் ஆட்டுக்கடாக்களும் ஆட்டுக்குட் 27
டிகளும் இருக்கிற இலக்கத்திற்குத் தக்கதாக
முறைமையின்படி அவைகளின் போஜனப
லியையும், அவைகளின் பானபலிகளையும்,
நித்திய சர்வாங்க தகனபலியையும், அதின் 28
போஜனபலியையும், அதின் பானபலியை
யும் அன்றி, பாவநிவாரணபலியாக ஒரு
வெள்ளாட்டுக்கடாவையும் செலுத்தக்கடவீர்
கள்.
ஆறாம் நாளிலே எட்டுக் காளைகளையும், இர 29
ண்டு ஆட்டுக்கடாக்களையும், ஒரு வயதான
பழுதற்ற பதினாலு ஆட்டுக்குட்டிகளையும்,
காளைகளும் ஆட்டுக்கடாக்களும் ஆட்டுக்குட் 30
டிகளும் இருக்கிற இலக்கத்திற்குத் தக்கதாக
முறைமையின்படி அவைகளின் போஜன
பலியையும், அவைகளின் பானபலிகளையும்,
நித்திய சர்வாங்க தகனபலியையும், அதின் 31
போஜனபலியையும், அதின் பானபலிகளை
யும் அன்றி, பாவநிவாரணபலியாக ஒரு வெள்
ளாட்டுக்கடாவையும் செலுத்தக்கடவீர்கள்.
ஏழாம் நாளிலே ஏழு காளைகளையும், இர 32
ண்டு ஆட்டுக்கடாக்களையும், ஒரு வயதான
பழுதற்ற பதினாலு ஆட்டுக்குட்டிகளையும்,
காளைகளும் ஆட்டுக்கடாக்களும் ஆட்டுக்குட் 33
டிகளும் இருக்கிற இலக்கத்திற்குத் தக்கதாக
முறைமையின்படி அவைகளின் போஜனப
லியையும், அவைகளின் பானபலிகளையும்,
நித்திய சர்வாங்க தகனபலியையும், அதின் 34
போஜனபலியையும், அதின் பானபலியையும்
அன்றி, பாவநிவாரணபலியாக ஒரு வெள்
ளாட்டுக்கடாவையும் செலுத்தக்கடவீர்கள்.
எட்டாம் நாள் உங்களுக்கு விசேஷித்த 35
ஆசரிப்பு [6]நாளாயிருக்கக்கடவது; அதில் சா
தாரணமான யாதொரு வேலையும் செய்யலா
காது. அப்பொழுது நீங்கள் கர்த்தருக்குச் 36
சுகந்த வாசனையுள்ள தகனமான சர்வாங்க தக
னபலியாக ஒரு காளையையும், ஒரு ஆட்டுக்க
டாவையும், ஒரு வயதான பழுதற்ற ஏழு ஆட்
டுக்குட்டிகளையும், காளையும் ஆட்டுக்கடாவும் 37
ஆட்டுக்குட்டிகளும் இருக்கிற இலக்கத்திற்

* பம். சங். 35. 13. ஏசா. 58. 5
[1] எண். 28. 19
[2] லேவி. 16. 3, 5
[3] லேவி. 23. 34. உபா. 16. 13. எசே. 45. 25
[4] எஸ்றா 3. 4
[5] 3, 4, 9, 10. வசனங்கள். எண். 15. 12; 28. 7, 14
[6] லேவி. 23. 36. யோ. 7. 37

குத் தக்கதாக முறைமையின்படி அவைகளின்
போஜனபலியையும், அவைகளின் பானபலி
38 களையும், நித்திய சர்வாங்க தகனபலியையும்,
அதின் போஜனபலியையும், அதின் பானப
லியையும் அன்றி, பாவநிவாரணபலியாக
ஒரு வெள்ளாட்டுக்கடாவையும் செலுத்தக்கட
வீர்கள்.
39 உங்கள் பொருத்தனைகளையும், உங்கள் உற்
சாகபலிகளையும், உங்கள் சர்வாங்க தகனபலி
களையும், உங்கள் போஜனபலிகளையும், உங்
கள் பானபலிகளையும், உங்கள் சமாதானபலி
களையும் அன்றி, நீங்கள் உங்கள் பண்டிகை
களிலே **கர்த்தருக்குச்** செலுத்தவேண்டியவை
கள் இவைகளே [1]என்று சொல் என்றார்.
40 **கர்த்தர்** மோசேக்குக் கட்டளையிட்டபடியெல்
லாம் மோசே இஸ்ரவேல் புத்திரருக்குச்
சொன்னான்.

**30** மோசே இஸ்ரவேல் புத்திரருடைய
கோத்திரங்களின் [2]தலைவரை நோக்கி: **கர்த்**
2 **தர்** கட்டளையிடுவது என்னவென்றால்: ஒரு
வன் **கர்த்தருக்கு** யாதொரு பொருத்தனைபண
ணினாலும், [3]அல்லது யாதொரு காரியத்தைச்
செய்யும்படி ஆணையிட்டுத் தன் ஆத்துமாவை
நிபந்தனைக் குட்படுத்திக்கொண்டாலும்,
[4]அவன் சொல் தவறாமல் தன் வாயிலிருந்து புற
ப்பட்ட வாக்கின்படியெல்லாம் [5]செய்யக்கட
3 வன். தன் தகப்பன் வீட்டிலிருக்கிற ஒரு
பெண்பிள்ளை தன் சிறுவயதிலே **கர்த்தருக்**
**குப்** பொருத்தனைபண்ணி யாதொரு காரியத்
தைச் செய்யும்படி தன் ஆத்துமாவை நிபந்
4 தனைக் குட்படுத்திக்கொண்டால், அவள்
செய்த பொருத்தனையையும், அவள் பண்
ணிக்கொண்ட நிபந்தனையையும் அவளுடைய
தகப்பன் கேட்டும் அவளுக்கு ஒன்றும சொல்
லாதிருப்பானானால், அவள் செய்த எல்லாப்
பொருத்தனைகளும் அவள் தன் ஆத்துமாவை
நிபந்தனைக்குட்படுத்திக்கொண்ட நிபந்தனை
5 யும் நிறைவேறவேண்டும். அவள் செய்த
பொருத்தனைகளையும், அவள் செய்யும்படி
தன் ஆத்துமாவை நிபந்தனைக்குட்படுத்தின
நிபந்தனையையும் அவளுடைய தகப்பன் கேட்
கிற நாளில் அவன் வேண்டாம் என்று தடுத்
தால், அது நிறைவேறவேண்டியதில்லை; அவ
ளுடைய தகப்பன் வேண்டாம் என்று தடுத்த
படியால், **கர்த்தர்** அதை அவளுக்கு மன்
6 னிபபார். அவள் பொருத்தனை பண்ணும்
போதும், தன் உதடுகளைத் திறந்து தன் ஆத்
துமாவை நிபந்தனைக்குட்படுத்திக்கொள்ளும்
போதும், அவளுக்குப் புருஷன் [6]இருந்தால்,
7 அப்பொழுது அவளுடைய புருஷன் அதைக்
கேட்டிருநதும், அதைக் கேள்விப்படுகிற
நாளில் அவளுக்கு ஒன்றும் சொல்லாதிருந்
தால், அவளுடைய பொருத்தனைகளும் அவள்
தன் ஆத்துமாவை நிபநதனைக்குட்படுத்தின
8 நிபந்தனையும் நிறைவேறவேண்டும். அவளு
டைய புருஷன் [7]அதைக் கேட்கிறநாளில
அவன் வேண்டாம் என்று தடுத்து, அவள்
செய்த பொருத்தனையும் அவள் தன் ஆத்து
மாவை நிபந்தனைக்குட்படுத்திக்கொண்ட நிபந்
தனையும் செல்லாதபடி செய்தானேயானால்,
அப்பொழுது **கர்த்தர்** அதை அவளுக்கு மன்
னிப்பார். ஒரு விதவையாவது, தள்ளப்பட் 9
டுப்போன ஒரு ஸ்திரீயாவது தன் ஆத்து
மாவை எந்த நிபந்தனைக்குட்படுத்திக்கொள்ளு
கிறாளோ அந்த நிபந்தனை நிறைவேறவேண்
டும். அவள் தன் புருஷனுடைய வீட்டில் 10
யாதொரு பொருத்தனை பண்ணினாலும், அல்
லது யாதொரு காரியத்தைச் செய்யும்படி
ஆணையிட்டுத் தன் ஆத்துமாவை நிபந்தனைக்
குட்படுத்திக்கொண்டாலும், அவளுடைய 11
புருஷன் அதைக் கேட்டும் அவளுக்கு அதை
வேண்டாமென்று தடுக்காமல் மவுனமாயிருந்
தால், அவள் செய்த எல்லாப் பொருத்தனை
களும், அவள் தன் ஆத்துமாவை நிபந்தனைக்
குட்படுத்தின எல்லா நிபந்தனைகளும் நிறை
வேறவேண்டும். அவளுடைய புருஷன் 12
அவைகளைக் கேட்டநாளில் அவைகளைச் செல்
லாதபடி பண்ணினால், அப்பொழுது அவள்
செய்த பொருத்தனைகளும், அவள் தன் ஆத்
துமாவை யுட்படுத்தின நிபந்தனையைக்குறித்து
அவள் வாயிலிருந்து புறப்பட்டதொன்றும்
[8]நிறைவேறவேண்டியதில்லை; அவளுடைய
புருஷன் அவைகளைச் செல்லாதபடி பண்ணி
னதினாலே **கர்த்தர்** அதை [9]அவளுக்கு மன்
னிப்பார். எந்தப் பொருத்தனையையும், ஆத் 13
துமாவைத் தாழ்மைப்படுத்தும்படி செய்யப்
பட்ட எந்த ஆணையையும், அவளுடைய புரு
ஷன் ஸ்திரப்படுத்தவுங்கூடும், செல்லாதபடி
பண்ணவுங்கூடும். அவளுடைய புருஷன் 14
ஒருநாளும் அவளுக்கு ஒன்றும் சொல்லா
திருந்தானாகில், அவன் அவளுடைய எல்
லாப் பொருத்தனைகளையும், அவள்பேரிலிருக்
கிற அவளுடைய எல்லா நிபந்தனைகளையும்
ஸ்திரப்படுத்துகிறான்; அவன் அதைக் கேட்
டநாளிலே அவளுக்கு ஒன்றும் சொல்லாமற்
போனதினால், அவைகளை ஸ்திரப்படுத்துகி
றான். அவன் அவைகளைக் கேட்டபின்பு 15
செல்லாதபடி பண்ணினால், அவளுடைய
அக்கிரமத்தை அவன் சுமப்பான் என்றார்.
புருஷனையும் ஸ்திரீயையும், தகப்பனையும் தக 16
பபனுடைய வீட்டில் சிறுவயதில் இருக்கிற
அவன் குமாரத்தியையும் குறித்து, **கர்த்தர்**
மோசேக்கு விதித்த கட்டளைகள் இவைகளே.

**31** **கர்த்தர்** மோசேயை நோக்கி: இஸ்ரவேல் 2
புத்திரர் நிமித்தம் மீதியானியரிடத்தில் [10]பழி
வாங்குவாயாக; அதன்பின்பு உன் ஜனத்தா
ரிடத்தில் [11]சேர்க்கப்படுவாய் என்றார். அப் 3
பொழுது மோசே ஜனங்களை நோக்கி: **கர்த்தர்**
நிமித்தம மீதியானியரிடத்தில் பழிவாங்கும்
பொருட்டு, உங்களில் அவர்கள்மேல் யுத்
தத்திற்குப் போகத்தக்கதாக மனிதரைப் பிரித்
தெடுங்கள். இஸ்ரவேலுடைய எல்லாக் கோத் 4
திரங்களிலும் ஒவ்வொரு கோத்திரத்தில் ஆயி
ரம்பேரை யுத்தத்திற்கு அனுப்பவேண்டும்

[1] லேவி. 7. 11, 16; 23. 2. எஸ். 3. 5. எசே. 1. 14
[2] எண். 1. 4–16
[3] லேவி. 27. 2. உபா. 23. 21. நியா. 11. 35, 36. சங். 15. 4. பிர. 5. 4
[4] லேவி. 5. 4. மத். 5. 33; 14. 7–9. அப். 23. 14
[5] யோபு 22. 27. சங். 22. 25. நாகூம் 1. 15
[6] சங். 56. 12
[7] ஆதி. 3. 16. 1கொ. 7. 14. எபே. 5. 22–24
[8] 1 கொ. 11. 3
[9] 5, 8. வசனம்
[10] எண். 25. 17
[11] எண். 27. 13

5 என்றான். அப்படியே இஸ்ரவேலராகிய
அநேகம் ஆயிரங்களில், ஒவ்வொரு கோத்தி
ரத்தில் ஆயிரமாயிரம் பேராகப் பன்னீரா
யிரம்பேர் யுத்தசன்னத்தராய் நிறுத்தப்பட்
6 டார்கள். மோசே அவர்களையும் ஆசாரிய
னாகிய எலெயாசாரின் குமாரன் பினெகா
சையும் யுத்தத்திற்கு அனுப்புகையில், அவன்
கையிலே பரிசுத்த தட்டுமுட்டுகளையும், தொ
னிக்கும் [1]பூரிகைகளையும் கொடுத்து அனுப்பி
7 னான். கர்த்தர் மோசேக்குக் கட்டளையிட்ட
படியே அவர்கள் மீதியானியருடன் யுத்தம்
பண்ணி, புருஷர்கள் [2]யாவரையும் கொன்று
8 போட்டார்கள். அவர்களைக் கொன்றுபோட்
டதும் அன்றி, மீதியானியரின் ஐந்து ராஜாக்
களாகிய ஏவி, ரேக்கேம், சூர், ஊர், ரேபா
என்பவர்களையும் கொன்றுபோட்டார்கள்.
[3]பேயோரின் குமாரனாகிய பிலேயாமையும்
பட்டயத்தினாலே கொன்றுபோட்டார்கள்.
9 அன்றியும் இஸ்ரவேல் புத்திரர் மீதியானிய
ரின் ஸ்திரீகளையும் குழந்தைகளையும் சிறைபி
டித்து, அவர்களுடைய மிருகஜீவன்களாகிய
ஆடுமாடுகள் யாவையும், மற்ற ஆஸ்திகள்
10 யாவையும் கொள்ளையிட்டு, அவர்கள் குடியி
ருந்த ஊர்கள் கோட்டைகள் யாவையும் [4]அக்
11 கினியால் சுட்டெரித்து, தாங்கள் கொள்ளை
யிட்ட பொருளையும் தாங்கள் [5]பிடித்த நரஜீ
வன் மிருகஜீவன் அனைத்தையும் சேர்த்து,
12 சிறைபிடிக்கப்பட்ட மனிதரையும், மிருகங்க
ளையும், கொள்ளையிட்ட பொருள்களையும் எரி
கோவின் அருகேயுள்ள யோர்தானுக்கு இக்க
ரையில் மோவாபின் சமனான வெளிகளிலுள்ள
பாளயத்திலிருந்த மோசேயினிடத்துக்கும்,
ஆசாரியனாகிய எலெயாசாரினிடத்துக்கும்,
இஸ்ரவேல் புத்திரராகிய சபையாரிடத்துக்கும்
கொண்டுவந்தார்கள்.
13 மோசேயும் ஆசாரியனாகிய எலெயாசாரும்
சபையின் பிரபுக்கள் எல்லாரும் அவர்களைச்
சந்திக்கப் பாளயத்திற்கு வெளியே புறப்பட்
14 டுப்போனார்கள். அப்பொழுது மோசே யுத்
தத்திலிருந்து வந்த ஆயிரம்பேருக்குத் தலைவ
ரும், நூறுபேருக்குத் தலைவருமாகிய சேனாபதி
15 கள்மேல் கோபங்கொண்டு, அவர்களை
நோக்கி: ஸ்திரீகள் எல்லாரையும் [6]உயிரோடே
16 விட்டுவிட்டீர்களா? பேயோரின் சங்கதியிலே
பிலேயாமின் ஆலோசனையினால் [7]இஸ்ரவேல்
புத்திரர் கர்த்தருக்கு விரோதமாய்த் துரோகம்
பண்ணக் காரணமாயிருந்தவர்கள் இவர்கள்
தானே; அதினால் கர்த்தரின் சபையிலே
17 வாதையும் நேரிட்டதே. ஆகையால் குழந்
தைகளில் எல்லா ஆண்பிள்ளைகளையும், புருஷ
சம்யோகத்தை அறிந்த எல்லா ஸ்திரீகளையும்
18 [8]கொன்றுபோடுங்கள். ஸ்திரீகளில் புருஷ
சம்யோகத்தை அறியாத எல்லாப் பெண்
பிள்ளைகளையும் உங்களுக்காக உயிரோடே
19 வையுங்கள். பின்பு நீங்கள் ஏழுநாள் பாள
யத்திற்குப் புறம்பே தங்குங்கள்; நரஜீவ
னைக் கொன்றவர்களும், வெட்டுண்டவர்க
ளைத் தொட்டவர்களுமாகிய நீங்கள் யாவரும்
மூன்றாம் நாளிலும் ஏழாம் நாளிலும் உங்களை
யும் உங்களால் சிறைபிடிக்கப்பட்டவர்களை
யும் சுத்திகரித்து, அந்தப்படியே எல்லா வஸ் 20
திரத்தையும், தோலால் செய்த கருவிகளையும்,
வெள்ளாட்டு மயிரினால் நெய்தவைகளையும்,
மரச்சாமான்களையும் சுத்திகரிக்கக்கடவீர்கள்
என்றான். ஆசாரியனாகிய எலெயாசாரும் யுத் 21
தத்திற்குப் போய்வந்த படைவீரரை நோக்கி:
கர்த்தர் மோசேக்குக் கட்டளையிட்ட விதிப்
பிரமாணம் என்னவென்றால்: அக்கினிக்கு 22
நிற்கத்தக்கவைகளாகிய பொன், வெள்ளி,
வெண்கலம், இரும்பு, தகரம், ஈயம் ஆகிய
இவைகளெல்லாம் சுத்தமாகும்படிக்கு, அவை 23
களை அக்கினியிலே போட்டெடுக்கக்கடவீர்
கள்; தீட்டுக்கழிக்கும் தண்ணீராலும் அவை
கள் சுத்திகரிக்கப்படவேண்டும்; அக்கினிக்கு
நிற்கத் தகாதவைகளையெல்லாம் தண்ணீரி
னால் சுத்தம்பண்ணக்கடவீர்கள். ஏழாம் நா 24
ளில் உங்கள் வஸ்திரங்களைத் தோய்க்கவேண்
டும்; [9]அப்பொழுது சுத்தமாயிருப்பீர்கள்;
பின்பு நீங்கள் பாளயத்திற்குள் வரலாம் என்
றான்.
கர்த்தர் மோசேயை நோக்கி: பிடித்துக் 25,26
கொண்டுவரப்பட்ட மனிதரையும் மிருகங்களை
யும் நீயும் ஆசாரியனாகிய எலெயாசாரும் சபை
யினுடைய பிதாக்களாகிய தலைவரும் தொகை
பார்த்து, கொள்ளையிடப்பட்டதை இரண்டு 27
பங்காகப் பங்கிட்டு, [10]யுத்தத்திற்குப் படையெ
டுத்துப் போனவர்களுக்கும் சபையனைத்திற்
கும் கொடுங்கள். மேலும் யுத்தத்திற்குப் போன 28
படைவீரரிடத்தில் கர்த்தருக்காக மனிதரி
லும் மாடுகளிலும் கழுதைகளிலும் ஆடுகளி
லும் ஐந்நூற்றிற்கு ஒரு பிராணி வீதமாக
[11]பகுதி வாங்கி, அவர்களுடைய பாதிப்பங் 29
கில் எடுத்து, கர்த்தருக்கு ஏறெடுத்துப் படைக்
கும் படைப்பாக ஆசாரியனாகிய எலெயாசா
ருக்குக் கொடுக்கவேண்டும். இஸ்ரவேல் புத் 30
திரரின் பாதிப்பங்கிலோ மனிதரிலும், மாடு
கள் கழுதைகள் ஆடுகளாகிய சகலவித மிருகங்
களிலும், ஐம்பதிற்கு ஒன்று வீதமாய் வாங்கி,
அவைகளைக் கர்த்தருடைய வாசஸ்தலத்தின்
காவலைக் காக்கும் லேவியருக்குக் கொடுக்க
வேண்டும் என்றார். கர்த்தர் மோசேக்குக் 31
கட்டளையிட்டபடியே, மோசேயும் ஆசாரிய
னாகிய எலெயாசாரும் செய்தார்கள். படை 32
வீரர் கொள்ளையிட்ட பொருளில், ஆறு லட்
சத்து எழுபத்தையாயிரம் ஆடுகளும், எழுபத் 33
தீராயிரம் மாடுகளும், அறுபத்தோராயிரம் கழு 34
தைகளும் மீதியாயிருந்தது. புருஷசம்யோ 35
கத்தை அறியாத ஸ்திரீகளில் முப்பத்திராயி
ரம்பேர் இருந்தார்கள். யுத்தஞ்செய்யப்போ 36
னவர்களுக்குக் கிடைத்த பாதிப்பங்கின்
தொகையாவது: ஆடுகள் மூன்று லட்சத்து
முப்பத்தேழாயிரத்து ஐந்நூறு. இந்த ஆடு 37
களிலே கர்த்தருக்குப் பகுதியாக வந்தது அறு
நூற்று எழுபத்தைந்து. மாடுகள் முப்பத்தாறு 38

1 எண். 10. 9
2 உபா. 20. 13. நியா. 21. 11 1 இரா. 11. 15, 16
3 யோசு. 13. 21, 22
4 யோசு. 6. 24. வெளி 18. 8
5 உபா. 20. 14. யோசு. 8. 2
6 உபா. 20. 13. 1 சாமு. 15. 3
7 2 பே. 2. 15. வெளி. 2. 14
8 நியா. 21. 11
9 லேவி. 11. 25
10 யோசு. 22. 8. 1 சாமு. 30. 34 சங். 68. 12
11 ஆதி. 14. 20. யோசு. 6. 19. 2 சாமு. 8. 11, 12. நீதி. 3. 9, 10

யிரம்; அவைகளில் கர்த்தருக்குப் பகுதியாக
வந்தது எழுபத்திரண்டு. கழுதைகள் முப்பதி
னாயிரத்து ஐந்நூறு; அவைகளில் கர்த்தருக்குப்
40 பகுதியாக வந்தது அறுபத்தொன்று. நரஜீ
வன்கள் பதினாறாயிரம்பேர்; அவர்களில் கர்த்
தருக்குப் பகுதியாக வந்தவர்கள் முப்பத்திரண்
41 டுபேர். கர்த்தருக்கு ஏறெடுத்துப் படைக்கும்
அந்தப் பகுதியை, மோசே கர்த்தர் தனக்குக்
கட்டளையிட்டபடியே, ஆசாரியனாகிய எலெ
42 யாசாரிடத்தில் கொடுத்தான். யுத்தம்பண்
ணின பேர்களுக்கும் இஸ்ரவேல் புத்திருக்
கும் மோசே பாதி பாதியாகப் பங்கிட்டதின்
படியே சபையாருக்கு வந்த பாதிப்பங்காவது:
43 ஆடுகளில் மூன்று லட்சத்து முப்பத்தேழாயி
44 ரத்து ஐந்நூறு, மாடுகளில் முப்பத்தாறாயிரம்,
45 கழுதைகளில் முப்பதினாயிரத்து ஐந்நூறு,
46, 47 நரஜீவன்களில் பதினாயிரம்பேருமே. இஸ்
ரவேல் புத்திரரின் பாதிப்பங்குக்கு வந்த இந்த
நரஜீவன்களிலும் மிருகங்களிலும் மோசே
ஐம்பதுக்கு ஒன்று வீதமாக எடுத்து, அவைக
ளைக் கர்த்தர் தனக்குக் கட்டளையிட்டபடியே,
கர்த்தருடைய வாசஸ்தலத்தின் காவலைக் காக்
48 கிற லேவியருக்குக் கொடுத்தான். பின்பு
ஆயிரம்பேருக்குத் தலைவரும், நூறுபேருக்குத்
தலைவருமான சேனாபதிகள் மோசேயினிடத்
49 தில் வந்து, உமது ஊழியக்காரராகிய நாங்
கள் எங்கள் கையின் கீழிருக்கிற யுத்தமனித
ரைத் தொகைபார்த்தோம்; அவர்களுக்குள்ளே
50 ஒரு ஆளும் குறையவில்லை. ஆகையால் கர்த்
தருடைய சந்நிதியில் எங்கள் ஆத்துமாக்களுக்
காகப் பாவநிவிர்த்தி செய்யும்பொருட்டு, [1]எங்
களுக்குக் கிடைத்த பொற்பணிகளாகிய பாத
சரங்களையும், அஸ்தகடகங்களையும், மோதிரங்
களையும், காதணிகளையும், காப்புகளையும் கர்த்
தருக்குக் காணிக்கையாகக் கொண்டுவந்தோம்
51 என்றார்கள். அப்பொழுது மோசேயும் ஆசா
ரியனாகிய எலெயாசாரும் சகலவித வேலைப்
பாடான பணிதிகளான அந்தப் பொன்னாபர
ணங்களை அவர்களிடத்தில் வாங்கினார்கள்.
52 இப்படி ஆயிரம்பேருக்குத் தலைவரானவர்க
ளாலும் நூறுபேருக்குத் தலைவரானவர்களா
லும் கர்த்தருக்கு ஏறெடுத்துப் படைக்கும்
காணிக்கையாகச் செலுத்தப்பட்ட பொன்
முழுவதும் பதினாறாயிரத்து எழுநூற்று ஐம்
53 பது சேக்கல் நிறையாயிருந்தது. யுத்தத்திற்
குப் போன மனிதர் ஒவ்வொருவரும் [2]தங்கள்
தங்களுக்காகக் கொள்ளையிட்டிருந்தார்கள்.
54 அந்தப் பொன்னை மோசேயும் ஆசாரியனாகிய
எலெயாசாரும் ஆயிரம்பேருக்குத் தலைவரான
வர்களின் கையிலும், நூறுபேருக்குத் தலைவ
ரானவர்களின் கையிலும் வாங்கி, இஸ்ரவேல்
புத்திரருக்கு ஞாபகக்குறியாக [3]ஆசரிப்புக்
கூடாரத்திலே கர்த்தருடைய சந்நிதியில் கொ
ண்டுவந்து வைத்தார்கள்.

32 ரூபன் புத்திரருக்கும் காத் புத்திரருக்
கும் ஆடுமாடுகள் மிகவும் திரளாயிருந்தது;
அவர்கள் யாசேர் [4]தேசத்தையும் கீலேயாத்
தேசத்தையும் பார்த்தபோது, அது ஆடுமாடு
களுக்குத் தகுந்த இடமென்று கண்டார்கள்.
ஆகையால் ரூபன் புத்திரரும் காத் புத்திர 2
ரும் வந்து, மோசேயையும் ஆசாரியனாகிய
எலெயாசாரையும் சபையின் பிரபுக்க
ளையும் நோக்கி: கர்த்தர் இஸ்ரவேல் சபை 3
க்கு முன்பாக முறிய அடித்த அதரோத்,
தீபோன், யாசேர், நிம்ரா, எஸ்போன்,
எலெயாலெ, சேபாம், நேபோ, பெயோன்
என்னும் பட்டணங்களைச் சேர்ந்த நாடானது
ஆடுமாடுகளுக்குத் தகுந்த இடம். உமது அடி 4
யாருக்கு ஆடுமாடுகள் உண்டு. உம்முடைய 5
கண்களில் எங்களுக்குத் தயை கிடைத்தா
னால், எங்களை யோர்தான் நதிக்கு அப்புறம்
கடந்துபோகப்பண்ணீராக; இந்த நாட்டை
உமது அடியாருக்குக் காணியாட்சியாகக்
கொடுக்கவேண்டும் என்றார்கள். அப்பொ 6
ழுது மோசே காத் புத்திரரையும் ரூபன் புத்தி
ரரையும் நோக்கி: உங்கள் சகோதரர் யுத்தத்திற்
குப் போகையில், நீங்கள் இங்கே இருப்பீர்க
ளோ? கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்குக் 7
கொடுத்த தேசத்திற்கு அவர்கள் போகாதப
டிக்கு, நீங்கள் அவர்கள் இருதயத்தைத் திட
னற்றுப்போகப் பண்ணுகிறதென்ன? அந்தத் 8
தேசத்தைப் பார்ப்பதற்கு நான் உங்கள் பிதாக்
களைக் காதேஸ்பர்னேயாவிலிருந்து அனுப்பி
னபோது [5]அவர்களும் இப்படியே செய்தார்
கள். அவர்கள் எஸ்கோல் பள்ளத்தாக்குமட் 9
டும் போய், அத்தேசத்தைப் பார்த்துவந்து,
இஸ்ரவேல் புத்திரர் கர்த்தர் தங்களுக்குக்
கொடுத்த தேசத்திற்குப் போகாதபடிக்கு அவர்
கள் இருதயத்தைத் திடனற்றுப்போகப்பண்
ணினார்கள். அதினால் கர்த்தர் அக்காளிலே 10
கோபம் [6]மூண்டவராகி: உத்தமமாய் என் 11
னைப் பின்பற்றின கேனேசியனான எப்புன்
னேயின் குமாரன் காலேபும், நூனின் குமா
ரன் யோசுவாவும் தவிர, எகிப்திலிருந்து வந்த 12
வர்களில் இருபது வயதுமுதல் அதற்கு மேற்
பட்ட மனிதர்களில் ஒருவரும் என்னை உத்த
மமாய்ப் பின்பற்றாதபடியால், அவர்கள் நான்
ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும்
ஆணையிட்டுக் கொடுத்த தேசத்தைக் காண்ப
தில்லை என்று ஆணையிட்டிருக்கிறார். அப் 13
படியே கர்த்தருடைய கோபம் இஸ்ரவேலி
ன்மேல் மூண்டது; கர்த்தருடைய சமுகத்தில்
பொல்லாப்புச்செய்த அந்தச் சந்ததியெல்லாம்
நிர்மூலமாகுமட்டும் அவர்களை வனாந்தரத்தி
லே [7]நாற்பதுவருஷம் அலையப்பண்ணினார்.
இப்பொழுதும் இதோ இஸ்ரவேலர்மே வி 14
ருக்கும் கர்த்தருடைய கோபத்தின் உக்கிரத்
தை இன்னும் அதிகரிக்கப்பண்ணும்படி, [8]நீங்
கள் உங்கள் பிதாக்களின் ஸ்தானத்திலே பாவ
முள்ள பெருங்கூட்டமாய் [9]எழும்பியிருக்கி
றீர்கள். நீங்கள் அவரைவிட்டுப் பின்வாங் 15
கினால், [10]அவர் இன்னும் அவர்களை வனாந்த
ரத்தில் இருக்கப்பண்ணுவார்; இப்படி நீங்
கள் இந்த ஜனங்களையெல்லாம் அழியப்பண்

[1] யாத். 30. 12, 16
[2] உபா. 20. 14
[3] யாத். 30. 16
[4] எண். 21. 32. யோசு. 13. 25 2 சாமு. 24. 5. ஏசா. 16. 8, 9
[5] எண். 13. 3-26. உபா. 1. 22
[6] எண். 14. 14, 29. உபா. 1. 35
[7] எண். 14. 33. 35
[8] லேவி. 13. 18. ஏசா. 65. 67
[9] சங். 78. 57
[10] உபா. 30. 17. யோசு. 22. 16. 2 நாளா. 7. 19

16 ணுவீர்கள் என்றான். அப்பொழுது அவர்
கள் அவன் சமீபத்தில் வந்து: எங்கள் ஆடுமா
டுகளுக்காகத் தொழுவங்களையும், எங்கள் பிள்
ளைகளுக்காகப் பட்டணங்களையும் இங்கே கட்
17 டுவோம். நாங்களோ இஸ்ரவேல் புத்திரரை
அவர்கள் ஸ்தானத்திலே கொண்டுபோய்ச்
சேர்க்குமளவும், யுத்தசன்னத்தராய்த் தீவிரத்
தோடே அவர்களுக்கு முன்பாக நடப்போம்;
[1]எங்கள் பிள்ளைகள் இத்தேசத்துக் குடிகளி
னிமித்தம் அரணான பட்டணங்களிலே குடி
18 யிருக்கக் கேட்டுக்கொள்ளுகிறோம். இஸ்ர
வேல் புத்திரர் யாவரும் தங்கள் தங்கள் சுதந்தர
த்தை சுதந்தரித்துக்கொள்ளும்வரைக்கும், நாங்
கள் எங்கள் [2]வீடுகளுக்குத் திரும்புவதில்லை.
19 யோர்தானுக்கு இப்புறத்தில் கிழக்கே எங்க
ளுக்குச் சுதந்தரம் உண்டானபடியினாலே,
[3]நாங்கள் அவர்களோடேகூட யோர்தானுக்கு
அக்கரையிலும், அதற்கு அப்புறத்திலும் சுதந்
20 தரம் வாங்கமாட்டோம் என்றார்கள். அப்பொ
ழுது மோசே அவர்களை நோக்கி: நீங்கள் இந்த
வார்த்தையின்படியே செய்து, **கர்த்தருடைய**
21 சமுகத்தில் [4]யுத்தசன்னத்தராகி, **கர்த்தர்** தம்
முடைய சத்துருக்களைத் தம்முடைய முகத்
திற்கு முன்னின்று துரத்திவிடுமளவும், நீங்
கள் யாவரும் அவருடைய சமுகத்தில் யுத்த
சன்னத்தராய் யோர்தானைக் கடந்துபோவீர்க
22 ளானால், அத்தேசம் **கர்த்தருக்கு** முன்பாக
வசப்படுத்தப்பட்டபின்பு, [5]நீங்கள் திரும்பி
வந்து, **கர்த்தருக்கு** முன்பாகவும், இஸ்ரவே
லருக்கு முன்பாகவும், குற்றமில்லாதிருப்பீர்
கள்; [6]அதற்குப்பின்பு இந்தத் தேசம் **கர்த்த
ருக்கு** முன்பாக உங்களுக்குச் சுதந்தரமாகும்.
23 நீங்கள் இப்படிச் செய்யாமற்போனால், **கர்த்
தருக்கு** விரோதமாகப் பாவம் செய்தவர்களாயி
ருப்பீர்கள்; *உங்கள் பாவம் உங்களைத் [7]தொ
டர்ந்துபிடிக்கும் என்று நிச்சயமாய் அறியுங்
24 கள். உங்கள் பிள்ளைகளுக்காகப் பட்டணங்
களையும், உங்கள் ஆடுமாடுகளுக்காகத் தொ
ழுவங்களையும் கட்டி, உங்கள் வாய்மொழி
25 யின்படியே செய்யுங்கள் என்றான். அப்
பொழுது காத் புத்திரரும் ரூபன் புத்திரரும்
மோசேயை நோக்கி: எங்கள் ஆண்டவன் கட்
டளையிட்டபடியே உமது ஊழியக்காரராகிய
26 நாங்கள் செய்வோம். எங்கள் பிள்ளைகளும்
எங்கள் மனைவிகளும், எங்கள் ஆடுமாடு முத
லான எங்களுடைய எல்லா மிருகஜீவன்க
ளோடும், இங்கே கீலேயாத்தின் [8]பட்டணங்
27 களில் இருப்பார்கள். உமது ஊழியக்கார
ராகிய நாங்களோ எங்கள் ஆண்டவன் சொன்
னபடியே, ஒவ்வொருவரும் யுத்தசன்னத்த
ராய், [9]**கர்த்தருடைய** சமுகத்தில் யுத்தத்திற்
28 குப் போவோம் என்றார்கள். அப்பொழுது
மோசே அவர்களுக்காக ஆசாரியனாகிய எலெ
யாசாருக்கும், நூனின் குமாரனாகிய யோசு
வாவுக்கும், இஸ்ரவேல் புத்திரருடைய கோத்
திர பிதாக்களாகிய தலைவர்களுக்கும் கட்டளை
29 யிட்டு: காத் புத்திரரும் ரூபன் புத்திரரும் அவ

1 யோசு. 4. 12, 13
2 யோசு. 22. 4
3 யோசு. 12. 1: 13. 8
4 உபா. 3. 18. யோசு. 1. 14: 4. 12, 13
5 யோசு. 18. 1
6 யோசு. 22. 4, 9
* கண்டுபிடிக்கும்
7 ஆதி. 4. 7: 44. 16. சங். 90. 8: 139. 11. நீதி. 13. 21. ஏசா. 59. 12. 1 கொ. 4. 5
8 யோசு. 1. 14
9 யோசு. 4. 12
10 உபா. 3. 12—17. யோசு. 12 6
11 ஆதி. 50. 23
12 உபா. 3. 12—15. யோசு. 13. 31
13 யாத். 12. 37: 13. 4, 8

ரவர் **கர்த்தருடைய** சமுகத்தில் யுத்தசன்னத்
தராய் உங்களோடேகூட யோர்தானைக் கடந்
துபோனால், அத்தேசம் உங்களுக்கு வசப்பட்
டபின்பு, அவர்களுக்குக் கீலேயாத் தேசத்
தைச் சுதந்தரமாகக் கொடுக்கக்கடவீர்கள். உங் 30
களோடேகூட யுத்தசன்னத்தராய்க் கடந்து
போகாதிருந்தார்களேயானால், அவர்கள் உங்
கள் நடுவே கானான்தேசத்திலே சுதந்தரம்
அடையக்கடவர்கள் என்றான். காத் புத்திர 31
ரும் ரூபன் புத்திரரும் பிரதியுத்தரமாக: உம்
முடைய ஊழியக்காரராகிய நாங்கள் **கர்த்தர்**
எங்களுக்குச் சொன்னபடியே செய்வோம்.
யோர்தானுக்கு இக்கரையிலே எங்கள் சுதந்த 32
ரத்தின் காணியாட்சி எங்களுக்கு உரியதாகும்
படி நாங்கள் **கர்த்தருடைய** சமுகத்தில் யுத்த
சன்னத்தராய் கானான்தேசத்திற்குப் போ
வோம் என்றார்கள். அப்பொழுது மோசே 33
[10]காத் புத்திரருக்கும், ரூபன் புத்திரருக்கும்,
யோசேப்பின் குமாரனாகிய மனாசேயின் பா
திக் கோத்திரத்தாருக்கும், எமோரியருடைய
ராஜாவாகிய சீகோனின் ராஜ்யத்தையும், பா
சானுடைய ராஜாவாகிய ஓகின் ராஜ்யத்தை
யும், அவைகளைச் சேர்ந்த தேசங்களையும்
அவைகளின் எல்லையைச் சுற்றிலுமுள்ள பட்
டணங்களையும் கொடுத்தான். பின்பு காத் 34
சந்ததியார் தீபோன், அதரோத் ஆரோவேர்,
ஆத்ரோத், சோபான், யாசேர், யொகிபேயா, 35
பெத்நிம்ரா, பெத்தாரான் என்னும் அரணான 36
பட்டணங்களையும் ஆட்டுத்தொழுவங்களையும்
கட்டினார்கள். ரூபன் சந்ததியார் எஸ்போன், 37
எலெயாலெ, கீரியத்தாயீம், பேர்கள் மாற்றப் 38
பட்ட நேபோ, பாகால்மெயோன், சீப்மா என்
பவைகளைக் கட்டி, தாங்கள் கட்டின பட்டண
ங்களுக்கு வேறே பேர்களைக் கொடுத்தார்கள்.
மனாசேயின் குமாரனாகிய மாகீரின் [11]புத்திரர் 39
கீலேயாத்திற்குப் போய், அதைக் *கட்டிக்கொ
ண்டு, அதிலிருந்த எமோரியரைத் துரத்திவிட்
டார்கள். அப்பொழுது மோசே கீலேயாத்தை 40
[12]மனாசேயின் குமாரனாகிய மாகீருக்குக் கொடு
த்தான்; அவர்கள் அதிலே குடியேறினார்கள்.
மனாசேயின் குமாரனாகிய யாவீர் போய், அவர் 41
களுடைய கிராமங்களைக் கட்டிக்கொண்டு,
அவைகளுக்கு யாவீர் என்று பேரிட்டான்.
நோபாக் போய், கேனாத்தையும் அதின் கிராம 42
ங்களையும் கட்டிக்கொண்டு, அதற்குத் தன் நாம
த்தின்படியே நோபாக் என்று பேரிட்டான்.

33 மோசே ஆரோன் என்பவர்களுடைய
கையின்கீழ்த் தங்கள் தங்கள் சேனைகளின்
படியே எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட
இஸ்ரவேல் புத்திரருடைய பிரயாணங்களின்
விபரம்: மோசே தனக்குக் **கர்த்தர்** கட்டளை 2
யிட்டபடியே அவர்கள் புறப்பட்ட பிரகார
மாக அவர்களுடைய பிரயாணங்களை எழுதி
னான்; அவர்கள் ஒவ்வொரு இடங்களிலிருந்து
புறப்பட்டுப் பண்ணின பிரயாணங்களாவன:
முதலாம் மாதத்தின் பதினைந்தாம் தேதியிலே 3
அவர்கள் ராமசேசை [13]விட்டுப் புறப்பட்டார்

கள்; பஸ்காவுக்கு மறுநாளிலே, எகிப்தியர்
எல்லாரும் பார்க்க, இஸ்ரவேல் புத்திரர் பெ
4 லத்தகையுடன் புறப்பட்டார்கள். அப்பொ
ழுது எகிப்தியர் **கர்த்தர்** தங்களுக்குள்ளே சங்
கரித்த [1]தலைச்சன் பிள்ளைகளையெல்லாம் அட
க்கம்பண்ணினார்கள்; அவர்கள் [2]தேவர்களின்
5 பேரிலும் **கர்த்தர்** நீதி செலுத்தினர். பின்பு
இஸ்ரவேல் புத்திரர் ராமசேசிலிருந்து புறப்
பட்டுப் போய், [3]சுக்கோத்திலே பாளயமிறங்
6 கினார்கள். சுக்கோத்திலிருந்து புறப்பட்டுப்
போய், [4]வனாந்தரத்தின் எல்லையிலிருக்கிற
7 ஏத்தாமிலே பாளயமிறங்கினார்கள். ஏத்தாமி
லிருந்து புறப்பட்டுப் போய், [5]பாகால்செபோ
னுக்கு எதிராக இருக்கிற ஈரோத் பள்ளத்தாக்
கின் முன்னடிக்குத் திரும்பி, மிக்தோலுக்கு
8 முன்பாகப் பாளயமிறங்கினார்கள். ஈரோத்
தைவிட்டுப் புறப்பட்டு, சமுத்திரத்தை நடுவா
கக் கடந்து [6]வனாந்தரத்திற்குப் போய், ஏத்
தாம் வனாந்தரத்திலே மூன்றுநாள் பிரயாணம்
பண்ணி, மாராவிலே பாளயமிறங்கினார்கள்.
9 மாராவிலிருந்து புறப்பட்டு, [7]ஏலிமுக்குப்
போனார்கள்; ஏலிமிலே பன்னிரண்டு நீரூற்
றுகளும் எழுபது பேரீச்ச மரங்களும் இருந்
10 தது; அங்கே பாளயமிறங்கினார்கள். ஏலிமி
லிருந்து புறப்பட்டு, சிவந்த சமுத்திரத்தின்
11 அருகே பாளயமிறங்கினார்கள். சிவந்த சமுத்
திரத்தை விட்டுப் புறப்பட்டுப் போய், [8]சீன்
12 வனாந்தரத்திலே பாளயமிறங்கினார்கள். சீன்
வனாந்தரத்திலிருந்து புறப்பட்டுப போய், தொ
13 ப்காவிலே பாளயமிறங்கினார்கள். தொப்கா
விலிருந்து புறப்பட்டுப் போய், ஆலூசிலே
14 பாளயமிறங்கினார்கள். ஆலூசிலிருந்து புறப்
பட்டுப் போய், [9]ரெவிதீமிலே பாளயமிறங்கி
னார்கள்; அங்கே ஜனங்களுக்குக் குடிக்கத்
15 தண்ணீர் இல்லாதிருந்தது. ரெவிதீமிலிருந்து
புறப்பட்டுப் போய், [10]சீனாய் வனாந்தரத்திலே
16 பாளயமிறங்கினார்கள். சீனாய் வனாந்தரத்தி
லிருந்து புறப்பட்டுப் போய், [11]கிப்ரோத் அத்
17 தாவிலே பாளயமிறங்கினார்கள். கிப்ரோத்
அத்தாவிலிருந்து புறப்பட்டுப் போய், [12]ஆஸ
18 ரோத்திலே பாளயமிறங்கினார்கள். ஆஸரோத்
திலிருந்து புறப்பட்டுப் போய், [13]ரித்மாவிலே
19 பாளயமிறங்கினார்கள். ரித்மாவிலிருந்து புறப்
பட்டுப் போய், ரிம்மோன்பேரேசிலே பாளய
20 மிறங்கினார்கள். ரிம்மோன்பேரேசிலிருந்து
புறப்பட்டுப் போய், லிப்னாவிலே பாளயமிற
21 ங்கினார்கள். லிப்னாவிலிருந்து புறப்பட்டுப்
போய், ரீசாவிலே பாளயமிறங்கினார்கள்.
22 ரீசாவிலிருந்து புறப்பட்டுப் போய், கேலத்
23 தாவிலே பாளயமிறங்கினார்கள். கேலத்தாவி
லிருந்து புறப்பட்டுப் போய், சாப்பேர் மலையி
24 லே பாளயமிறங்கினார்கள். சாப்பேர் மலையி
லிருந்து புறப்பட்டுப் போய், ஆரதாவிலே
25 பாளயமிறங்கினார்கள். ஆரதாவிலிருந்து புற
ப்பட்டுப் போய், மக்கெலோத்திலே பாளய
26 மிறங்கினார்கள். மக்கெலோத்திலிருந்து புறப்
பட்டுப்போய், தாகாத்திலே பாளயமிறங்கினார்

கள். தாகாத்திலிருந்து புறப்பட்டுப் போய், 27
தாராகிலே பாளயமிறங்கினார்கள். தாராகிலி 28
ருந்து புறப்பட்டுப் போய், மித்காவிலே பாள
யமிறங்கினார்கள். மித்காவிலிருந்து புறப்பட் 29
டுப் போய், அஸ்மோனாவிலே பாளயமிறங்கி
னார்கள். அஸ்மோனாவிலிருந்து புறப்பட்டுப் 30
போய், [14]மோசெரோத்திலே பாளயமிறங்கி
னார்கள். மோசெரோத்திலிருந்து புறப்பட் 31
டுப் போய், பெனெயாக்கானிலே பாளயமிற
ங்கினார்கள். பெனெயாக்கானிலிருந்து [15]புறப் 32
பட்டுப் போய், கித்காத் [16]மலையிலே பாளய
மிறங்கினார்கள். கித்காத் மலையிலிருந்து புறப் 33
பட்டுப் போய், யோத்பாத்தாவிலே பாளய
மிறங்கினார்கள். யோத்பாத்தாவிலிருந்து புறப் 34
பட்டுப் போய், எப்ரோனாவிலே பாளய
மிறங்கினார்கள். எப்ரோனாவிலிருந்து புறப் 35
பட்டுப் போய், எசியோன் கேபேரிலே [17]பா
ளயமிறங்கினார்கள். எசியோன் கேபேரிலி 36
ருந்து புறப்பட்டுப போய், காதேசாகிய [18]சீன்
வனாந்தரத்திலே பாளயமிறங்கினார்கள். கா 37
தேசிலிருந்து [19]புறப்பட்டுப் போய், ஏதோம்
தேசத்தின் எல்லையிலிருக்கிற ஓர் என்னும்
மலையிலே பாளயமிறங்கினார்கள். அப்பொ 38
ழுது ஆசாரியனாகிய ஆரோன் **கர்த்தருடைய**
கட்டளையின்படியே ஓர் என்னும் மலையின்
மேல் ஏறி, அங்கே இஸ்ரவேல் புத்திரர் எகி
ப்துதேசத்திலிருந்து புறப்பட்ட நாற்பதாம்
வருஷம் ஐந்தாம் மாதம முதல் தேதியிலே
[20]மரணமடைந்தான். ஆரோன் ஓர் என்னும் 39
மலையிலே மரணமடைந்தபோது, நூற்றிரு
பத்துமூன்று வயதாயிருந்தான். அங்காட்களி 40
லே கானான்தேசத்தின் தென்திசையில் குடி
யிருந்த கானானியனாகிய ஆராத் [21]என்னும்
ராஜா இஸ்ரவேல் புத்திரர் வருகிறதைக் கேள்
விபபட்டான். ஓர் என்னும் மலையை [22]விட் 41
டுப புறப்பட்டுப போய், சல்மோனாவிலே பா
ளயமிறங்கினார்கள். சல்மோனாவிலிருந்து 42
புறப்பட்டுப் போய், பூனோனிலே பாளயமிற
ங்கினார்கள். பூனோனிலிருந்து புறப்பட்டுப 43
போய், [23]ஓபோத்திலே பாளயமிறங்கினார்கள்.
ஓபோத்திலிருந்து புறப்பட்டுப் போய், மோ 44
வாபின் எல்லையிலுள்ள அபாரீமின் மேடுகளி
லே [24]பாளயமிறங்கினார்கள். அந்த மேடுகளை 45
விட்டுப் புறப்பட்டுப் போய், தீபோன்காத்தி
லே பாளயமிறங்கினார்கள். தீபோன்காத்தி 46
லிருந்து புறப்பட்டுப போய், [25]அல்மோன்
திப்லத்தாயிமிலே பாளயமிறங்கினார்கள். அல் 47
மோன் திப்லத்தாயிமிலிருந்து புறபபட்டுப்
போய், [26]நேபோவுக்கு எதிரான அபாரீம் மலை
களிலே பாளயமிறங்கினார்கள். அபாரீம் 48
மலைகளிலிருந்து புறப்பட்டுப் போய், [27]எரி
கோவின் அருகே யோர்தானைச்சார்ந்த மோ
வாபின் சமனான வெளிகளிலே பாளயமிறங்
கினார்கள். யோர்தானைச்சார்ந்த மோவாபின் 49
சமனான வெளிகளில் அவர்கள் பெத்யெசி
மோத்தைத் தொடங்கி, ஆபேல்சித்தீம்மட்டும்
[28]பாளயமிறங்கியிருந்தார்கள்.

1 யாத். 12. 29
2 யாத். 12. 12. ஏசா. 19. 1. வெளி. 12. 7-9
3 யாத். 12. 37.
4 யாத். 13. 20
5 யாத். 14. 2, 9
6 யாத். 14. 22. 15. 22, 23
7 யாத். 15. 27
8 யாத். 16. 1
9 யாத். 17. 1; 19. 2
10 யாத். 16. 1; 19. 1, 2
11 எண். 11. 34
12 எண். 11. 35
13 எண். 12. 16
14 உபா. 10. 6
15 உபா. 10. 6
16 உபா. 10. 7
17 உபா. 2. 8. 1 இரா. 9. 26
18 எண். 20. 1; 27. 14
19 எண். 20. 22, 23; 21. 4
20 எண். 20. 25-28. உபா. 10. 6; 32. 50
21 எண். 21. 1. மு
22 எண். 21. 4
23 எண். 21. 10
24 எண். 21. 11
25 எரே. 48. 22, எசே. 6. 14
26 உபா. 32. 49
27 எண். 22. 1
28 எண். 25. 1. யோசு. 2. 1

50 எரிகோவின் அருகே யோர்தானைச்சார்ந்த
மோவாபின் சமனான வெளிகளிலே **கர்த்தர்**
51 மோசேயை நோக்கி: நீ இஸ்ரவேல் புத்திர
ரோடே சொல்லவேண்டியது என்னவென்
றால்: நீங்கள் யோர்தானைக் கடந்து, [1]கானான்
52 தேசத்தில் போய்ச் சேரும்போது, அத்தேசத்
துக் குடிகளையெல்லாம் உங்களுக்கு முன்பா
கத் துரத்திவிட்டு, [2]அவர்களுடைய எல்லாச்
சிலைகளையும் வார்ப்பிக்கப்பட்ட அவர்களு
டைய எல்லா விக்கிரகங்களையும் அழித்து,
அவர்கள் மேடைகளையெல்லாம் நிர்மூல
53 மாக்கி, தேசத்திலுள்ளவர்களைத் துரத்திவிட்
டு, அதிலே குடியிருக்கக்கடவீர்கள்; அந்தத்
தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளும்படி அதை
54 உங்களுக்குக் கொடுத்தேன். சீட்டுப்போட்டு,
[3]தேசத்தை உங்கள் குடும்பங்களுக்குச் சுதந்
தரங்களாகப் பங்கிட்டு, அதிக ஜனங்களுக்கு
அதிக சுதந்தரமும், கொஞ்ச ஜனங்களுக்குக்
கொஞ்சச் சுதந்தரமும் கொடுக்கக்கடவீர்கள்;
அவரவர்க்குச் சீட்டு விழும் இடம் எதுவோ,
அவ்விடம் அவரவர்க்கு உரியதாகும்; உங்கள்
பிதாக்களுடைய கோத்திரங்களின்படியே
55 சுதந்தரம் பெற்றுக்கொள்ளக்கடவீர்கள். நீங்
கள் தேசத்தின் குடிகளை உங்களுக்கு முன்பா
கத் துரத்திவிடாமலிருப்பீர்களானால், [4]அப்
பொழுது அவர்களில் நீங்கள் மீதியாக வைக்
கிறவர்கள் உங்கள் கண்களில் முள்ளுகளும்
உங்கள் விலாக்களிலே கூர்களுமாயிருந்து,
நீங்கள் குடியிருக்கிற தேசத்திலே உங்களை
56 உபத்திரவப்படுத்துவார்கள். அன்றியும், நான்
அவர்களுக்குச் செய்ய நினைத்ததை உங்களுக்
குச் செய்வேன் என்று சொல் என்றார்.

34 2 **கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ இஸ்
ரவேல் புத்திரருக்குக் கட்டளையிட்டுச் சொ
ல்லவேண்டியது என்னவென்றால்: கானான்
தேசம் அதின் எல்லைகள் உட்பட உங்களுக்
குச் சுதந்தரமாகக் கிடைக்கப்போகிறது; [5]நீங்
கள் கானான்தேசத்தில் சேரும்போது,
3 உங்கள் தென்புறம் [6]சீன் வனாந்தரம் தொ
டங்கி ஏதோம் தேசத்தின் ஓரமட்டும் இருக்
கும்; கிழக்கே இருக்கிற உப்புக்கடலின்
கடைசி தொடங்கி உங்கள் தென் எல்லையா
4 யிருக்கும். உங்கள் எல்லை தெற்கிலிருந்து
அக்கராபீம் மேடுகளைச் சுற்றி, சீன் வனாந்த
ரம் வரையில் போய், தெற்கிலே காதேஸ்பர்
னேயாவுக்கும், [7]அங்கேயிருந்து ஆத்சார் அதா
ருக்கும், அங்கேயிருந்து அஸ்மோனாவுக்கும்
5 போய், அஸ்மோனாவிலிருந்து எகிப்தின் நதி
வரைக்கும் [8]சுற்றிப் போய்க் கடலில் முடி
6 யும். மேற்றிசைக்குப் பெருங்கடலே உங்க
ளுக்கு எல்லை; அதுவே உங்களுக்கு மேற்
7 புறத்து எல்லையாயிருக்கும். உங்களுக்கு வட
திசை எல்லை பெருங்கடல் தொடங்கி, ஓர்
என்னும் மலையை [9]உங்களுக்குக் குறிப்பாக
8 வைத்து, ஓர் என்னும் மலை தொடங்கி,
[10]ஆமாத்திற்குப் போகிற வழியைக் குறிப்பாக
வைத்து, அங்கேயிருந்து அந்த எல்லை சேதாத்
திற்குப் போய், அங்கேயிருந்து அது சிப்ரோ 9
னுக்குப் போய், [11]ஆத்சார் ஏனானிலே முடி
யும்; அதுவே உங்களுக்கு வடபுறத்து எல்லை
யாயிருக்கும். உங்களுக்குக் கீழ்த்திசை எல் 10
லைக்கு ஆத்சார் ஏனானிலிருந்து சேப்பாமைக்
குறிப்பாக வைத்து, சேப்பாமிலிருந்து எல் 11
லையானது ஆயினுக்குக் கிழக்கிலுள்ள ரிப்லா
பரியந்தமும், [12]அங்கேயிருந்து கின்னரேத்
[13]கடல்பரியந்தமும் அதின் கீழ்க்கரையோர
மாய், அங்கேயிருந்து யோர்தான்பரியந்தமும் 12
போய், உப்புக்கடலில் முடியும்; இந்தச் சுற்
றெல்லைகளையுடைய தேசமே உங்களுக்குரிய
தேசம் என்று சொல் என்றார். அப்பொழுது 13
மோசே இஸ்ரவேல் புத்திரரை நோக்கி: ஒன்
பதரைக் கோத்திரத்தாருக்குக் கொடுக்கும்படி
**கர்த்தர்** கட்டளையிட்டதும், நீங்கள் சீட்டுப்
போட்டுச் [14]சுதந்தரித்துக்கொள்ளவேண்டி
யதுமான தேசம் இதுவே. ரூபன் புத்திரர் 14
[15]தங்கள் பிதாக்களுடைய வம்சத்தின்படியும்,
காத் புத்திரர் தங்கள் பிதாக்களுடைய வம்சத்
தின்படியும், தங்கள் சுதந்தரத்தைப் பெற்றுக்
கொண்டதும் அல்லாமல், மனாசேயின் பாதிக்
கோத்திரத்தாரும் தங்கள் சுதந்தரத்தைப் பெற்
றுக்கொண்டார்கள். இந்த இரண்டரைக் 15
கோத்திரத்தாரும் சூரியோதய திசையாகிய
கிழக்கே எரிகோவின் அருகேயுள்ள யோர்
தானுக்கு இப்புறத்திலே தங்கள் சுதந்தரத்
தைப் பெற்றுக்கொண்டார்கள் என்றான்.
மேலும் **கர்த்தர்** மோசேயை நோக்கி: 16
உங்களுக்குத் தேசத்தைப் பங்கிட்டுக் கொடுக் 17
கும் மனிதரின் நாமங்களாவன: ஆசாரியனாகிய
எலெயாசாரும், [16]நூனின் குமாரனாகிய யோ
சுவாவுமே. அன்றியும், தேசத்தைப் பங்கிடும் 18
படி ஒவ்வொரு கோத்திரத்தில் ஒவ்வொரு
தலைவனையும் [17]தெரிந்துகொள்ளுங்கள். அந்த 19
மனிதருடைய நாமங்களாவன: யூதா கோத்
திரத்துக்கு எப்புன்னேயின் குமாரனாகிய கா
லேபும், சிமியோன் புத்திரரின் கோத்திரத் 20
துக்கு அம்மியூதின் குமாரனாகிய சாமுவே
லும், பென்யமீன் கோத்திரத்துக்கு கிஸ்லோ 21
னின் குமாரனாகிய எலிதாதும், தாண் புத்திர 22
ரின் கோத்திரத்துக்கு யொக்லியின் குமார
னாகிய புக்கி என்னும் பிரபுவும், யோசேப்பின் 23
குமாரனாகிய மனாசே புத்திரரின் கோத்திரத்
துக்கு ஏபோதின் குமாரனாகிய அன்னியேல்
என்னும் பிரபுவும், எப்பிராயீம் புத்திரரின் 24
கோத்திரத்துக்குச் சிப்தானின் குமாரனாகிய
கேமுவேல் என்னும் பிரபுவும், செபுலோன் 25
புத்திரரின் கோத்திரத்துக்குப் பர்னாகின் குமா
ரனாகிய எலிசாப்பான் என்னும் பிரபுவும்,
இசக்கார் புத்திரரின் கோத்திரத்துக்கு ஆசா 26
னின் குமாரனாகிய பல்த்தியேல் என்னும்
பிரபுவும், ஆசேர் புத்திரரின் கோத்திரத்துக் 27
குச் செலோமியின் குமாரனாகிய அகியூத் என்
னும் பிரபுவும், நப்தலி புத்திரரின் கோத்திரத் 28
துக்கு அம்மியூதின் குமாரனாகிய பெதாக்கேல்
என்னும் பிரபுவுமே என்றார். கானான்தேசத் 29

1 உபா. 9.1. யோசு. 3. 17
2 யாத். 33. 24, 33. உபா. 7. 2, 5. யோசு. 11. 11, 12. நியா. 2. 2
3 எண். 26. 53—55
4 யாத். 23. 33. யோசு. 23. 12, 13. நியா. 1. 21-36. சங். 106. 34. எசே. 28. 24
5 ஆதி. 17. 8. சங். 78. 55
6 யோசு. 15. 1. ழ. எசே. 47. 18. ழ
7 எண். 13. 26; 32. 8
8 ஆதி. 15. 18. 1 இரா. 8. 65. ஏசா. 27. 12
9 எண். 33. 37
10 எண். 13. 21. 1 இரா. 14. 25. எசே. 47. 15, 16
11 எசே. 47. 17
12 2 இரா. 23. 33. எரே. 39. 5, 6
13 உபா. 3. 17. யோசு. 11. 2. லூ. 5. 1
14 யோசு. 14. 1, 2
15 எண். 32. 33
16 யோசு. 14. 1; 19. 51
17 எண். 1. 4–16

திலே இஸ்ரவேல் புத்திரருக்குச் சுதந்தரங்க
ளைப் பங்கிட்டுக் கொடுக்கிறதற்குக் **கர்த்தர்**
கட்டளையிட்டவர்கள் இவர்களே.

**35** எரிகோவின் அருகே யோர்தானைச் சேர்
ந்த மோவாபின் சமனான வெளிகளிலே **கர்த்**
2 **தர்** மோசேயை நோக்கி: இஸ்ரவேல் புத்திரர்
தங்கள் காணியாட்சியாகிய சுதந்தரத்திலே லே
வியருக்குக் குடியிருக்கும்படி பட்டணங்களைக்
கொடுக்கவேண்டும் என்று அவர்களுக்குக்
[1]கட்டளையிடு; அந்தப் பட்டணங்களைச் சூழ்ந்
திருக்கிற வெளிநிலங்களையும் லேவியருக்குக்
3 கொடுக்கவேண்டும். அந்தப் பட்டணங்கள்
அவர்கள் குடியிருப்பதற்கும், அவைகளைச்
சூழ்ந்த வெளிநிலங்கள் அவர்களுடைய ஆடு
மாடுகளுக்கும், அவர்களுடைய ஆஸ்திகளுக்
கும், அவர்களுடைய சகல மிருகஜீவன்களுக்
4 கும் குறிக்கப்படவேண்டும். நீங்கள் லேவிய
ருக்குக் கொடுக்கும் பட்டணங்களைச் சூழ்ந்த
வெளிநிலங்கள் பட்டணத்தின் மதில்தொட
ங்கி, வெளியிலே சுற்றிலும் ஆயிர முழ தூரத்
5 துக்கு எட்டவேண்டும். பட்டணம் மத்தியில்
இருக்க, பட்டணத்தின் வெளிப்புறந்தொ
டங்கி, கிழக்கே இரண்டாயிர முழமும், தெற்
கே இரண்டாயிர முழமும், மேற்கே இரண்
டாயிர முழமும், வடக்கே இரண்டாயிர முழ
மும் அளந்துவிடக்கடவீர்கள்; இது அவர்கள்
பட்டணங்களுக்கு வெளிநிலங்களா யிருப்ப
6 தாக. நீங்கள் லேவியருக்குக் கொடுக்கும் பட்
டணங்களில் அடைக்கலத்துக்காக [2]ஆறு பட்
டணங்கள் இருக்கவேண்டும்; கொலைசெய்த
வன் அங்கே தப்பி ஓடிப்போகிறதற்கு அவை
களைக் குறிக்கக்கடவீர்கள்; அவைகளையல்லா
மல், நாற்பத்திரண்டு பட்டணங்களை அவர்க
7 ளுக்குக் கொடுக்கவேண்டும். நீங்கள் லே
வியருக்குக் கொடுக்கவேண்டிய பட்டணங்க
ளெல்லாம் நாற்பத்தெட்டுப் பட்டணங்களும்
8 [3]அவைகளைச் சூழ்ந்த வெளிநிலங்களுமே. நீங்
கள் இஸ்ரவேல் புத்திரரின் சுதந்தரத்திலிரு
ந்து [4]அந்தப் பட்டணங்களைப் பிரித்துக் கொ
டுக்கும்போது, [5]அதிகமுள்ளவர்களிடத்திலி
ருந்து அதிகமும், கொஞ்சமுள்ளவர்களிடத்தி
லிருந்து கொஞ்சமும் பிரித்துக் கொடுக்க
வேண்டும்; அவரவர் சுதந்தரித்துக்கொண்ட
சுதந்தரத்தின்படியே தங்கள் பட்டணங்களில்
லேவியருக்குக் கொடுக்கக்கடவர்கள் என்றார்.
9 பின்னும் **கர்த்தர்** மோசேயை நோக்கி:
10 நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண்
டியது என்னவென்றால்: நீங்கள் யோர்தானைக்
கடந்து, [6]கானான்தேசத்தில் பிரவேசிக்கும்
11 போது, கைப்பிசகாய் ஒருவனைக் கொன்று
போட்டவன் ஓடிப்போயிருக்கத்தக்க [7]அடை
க்கலப்பட்டணங்களாகச் சில பட்டணங்க
12 ளைக் குறிக்கக்கடவீர்கள். கொலைசெய்தவன்
நியாயசபையிலே நியாயம் விசாரிக்கப்படுமுன்
சாகாமல், [8]பழிவாங்குகிறவன் கைக்குத் தப்
பிப்போயிருக்கும்படி, அவைகள் உங்களுக்கு
அடைக்கலப்பட்டணங்களாய் இருக்கக்கட

[1] யோசு. 14. 3, 4. எசே. 45. 1. ழ
[2] உபா. 4. 41—43. யோசு. 20. 3—9. சங். 62. 7, 8. எபி. 6. 18
[3] யோசு. 21. 41
[4] யோசு. 21. 3
[5] எண். 26. 54
[6] உபா. 19. 2. யோசு. 20. 2
[7] யாத். 21. 13
[8] உபா. 19. 6. யோசு. 20. 3-6
[9] உபா. 4. 41. யோசு. 20. 8
[10] எண். 15. 16. லேவி. 24. 22
[11] யாத். 21. 12—14. லேவி. 24. 17. உபா. 19. 11, 12
[12] உபா. 19. 6, 12. யோசு. 20. 3, 5
[13] ஆதி. 4. 5, 8. 2 சாமு. 3. 27. நீதி. 26. 24
[14] யாத். 21. 14. உபா. 19. 11
[15] யாத். 21. 13
[16] யோசு. 20. 6
[17] யாத். 29. 7. யோசு. 20. 6

வது. நீங்கள் கொடுக்கும் பட்டணங்களில் 13
ஆறு பட்டணங்கள் அடைக்கலத்துக்காக இரு
க்கவேண்டும். யோர்தானுக்கு இப்புறத்தில் 14
மூன்று பட்டணங்களையும், கானான்தேசத்தில்
மூன்று பட்டணங்களையும் கொடுக்கவேண்
டும்; அவைகள் [9]அடைக்கலப்பட்டணங்க
ளாம். கைப்பிசகாய் ஒருவனைக் கொன்றவன் 15
எவனோ, அவன் அங்கே ஓடிப்போயிருக்கும்
படிக்கு, அந்த ஆறு பட்டணங்களும் இஸ்ர
வேல் புத்திரருக்கும் உங்கள் நடுவே இருக்
கும் பரதேசிக்கும் அந்நியனுக்கும் [10]அடைக்க
லப்பட்டணங்களாய் இருக்கவேண்டும். ஒரு 16
வன் இருப்பு ஆயுதத்தினால் [11]ஒருவனை வெட்
டினதினால் அவன் செத்துப்போனால், வெட்
டினவன் கொலைபாதகனாயிருக்கிறான்; கொ
லைபாதகன் கொலைசெய்யப்பட வேண்டும்.
ஒருவன் ஒரு கல்லை எடுத்து, சாகத்தக்கதாக 17
ஒருவன்மேல் எறிகிறதினாலே அவன் செத்துப்
போனால், கல்லெறிந்தவன் கொலைபாதகனாயி
ருக்கிறான், அவன் கொலைசெய்யப்படவேண்
டும். ஒருவன் தன் கையில் ஒரு மரஆயுதத் 18
தை எடுத்து, சாகத்தக்கதாக ஒருவனை அடித்
ததினால் அவன் செத்துப்போனால், அடித்த
வன் கொலைபாதகனாயிருக்கிறான்; கொலைபா
தகன் கொலைசெய்யப்படவேண்டும். பழி 19
வாங்கவேண்டியவனே [12]கொலைபாதகனைக்
கொல்லவேண்டும்; அவனைக் கண்டமாத்திரத்
தில் அவனைக் கொன்றுபோடலாம். ஒருவன் 20
பகையினால் [13]ஒருவனை விழத்தள்ளினதினாலா
யினும், பதுங்கியிருந்து [14]அவன் சாகத்தக்க
தாய் அவன்மேல் ஏதாகிலும் எறிந்ததினாலாயி
னும், அவனைப் பகைத்து, தன் கையினால் 21
அடித்ததினாலாயினும், அவன் செத்துப்போ
னால், அடித்தவன் கொலைபாதகன்; அவன்
கொலைசெய்யப்படவேண்டும், பழிவாங்குகிற
வன் கொலைபாதகனைக் கண்டமாத்திரத்தில்
கொன்றுபோடலாம். ஒருவன் பகையொன் 22
றும் இல்லாமல் [15]சடுதியில் ஒருவனைத் தள்ளி
விழப்பண்ணினதினாலாயினும், பதுங்கியிரா
மல் யாதொரு ஆயுதத்தை அவன்மேல் பட
எறிந்ததினாலாயினும், அவனுக்குப் பகைஞ 23
னயிராமலும் அவனுக்குத் தீங்குசெய்ய நினை
யாமலும் இருக்கையில், ஒருவனைக் கொன்று
போடத்தக்க ஒரு கல்லினால் அவனைக் காணா
மல் எறிய, அது அவன்மேல் பட்டதினாலா
யினும், அவன் செத்துப்போனால், அப்பொ 24
ழுது கொலைசெய்தவனையும் பழிவாங்குகிறவ
னையும் [16]சபையார் இந்த நியாயப்படி விசா
ரித்து, கொலைசெய்தவனைப் பழிவாங்குகிறவ 25
னுடைய கைக்குத் தப்புவித்து, அவன் ஓடிப்
போயிருந்த அடைக்கலப் பட்டணத்துக்கு
அவனைத் திரும்பப் போகும்படி செய்யக்கட
வர்கள்; பரிசுத்த தைலத்தினால் அபிஷேகம்
பெற்ற [17]பிரதான ஆசாரியன் மரணமடையு
மட்டும் அவன் அதிலே இருக்கக்கடவன்.
ஆனாலும் கொலைசெய்தவன் தான் ஓடிப்போ 26
யிருக்கிற அடைக்கலப்பட்டணத்தின் எல்லை

27 யை விட்டு வெளிப்பட்டிருக்கும்போது, பழி
வாங்குகிறவன் கொலைசெய்தவனை அடைக்க
லப் பட்டணத்துக்கு வெளியே கண்டுபிடித்
துக் கொன்றுபோட்டால், அவன்மேல் இரத்
28 தப்பழி இல்லை. கொலைசெய்தவன் பிரதான
ஆசாரியன் மரணமடையுமட்டும் அடைக்க
லப்பட்டணத்தி லிருக்கவேண்டும்; பிரதான
ஆசாரியன் மரணமடைந்தபின்பு, தன் சுதந்த
ரமான காணியாட்சிக்குத் திரும்பிப்போக
29 லாம். இவைகள் உங்கள் வாசஸ்தலங்களி
லெங்கும் உங்கள் தலைமுறைதோறும் உங்க
ளுக்கு [1]நியாயவிதிப் பிரமாணமாயிருக்கக்கட
30 வது. எவனாகிலும், ஒரு மனிதனைக் கொன்
றுபோட்டால், அப்பொழுது சாட்சிகளுடைய
வாக்குமூலத்தின்படியே அந்தக் கொலைபாதக
னைக் கொலைசெய்யக்கடவர்கள்; [2]ஒரே சாட்
சியைக் கொண்டுமாத்திரம் ஒரு மனிதன் சா
31 கும்படி தீர்ப்புச்செய்யலாகாது. சாகிறதற்
கேற்ற குற்றஞ் சுமந்த கொலைபாதகனுடைய
ஜீவனுக்காக நீங்கள் மீட்கும்பொருளை வாங்
கக்கூடாது; அவன் தப்பாமல் கொலைசெய்
32 யப்படவேண்டும். தன் அடைக்கலப்பட்
டணத்துக்கு ஓடிப்போனவன் ஆசாரியன்
மரணமடையாததற்குமுன்னே தன் நாட்
டிற்குத் திரும்பிவரும்படி நீங்கள் அவனுக்
33 காக மீட்கும்பொருளை வாங்கக்கூடாது. நீங்
கள் இருக்கும் தேசத்தைப் பரிசுத்தக் குலைச்
சலாக்காதிருங்கள்; இரத்தம் தேசத்தைத் தீட்
டுப்படுத்தும்; [3]இரத்தம் சிந்தினவனுடைய
இரத்தத்தினாலேயொழிய, [4]வேறொன்றினா
லும் தேசத்திலே சிந்துண்ட இரத்தத்திற்கா
34 கப் பாவநிவிர்த்தியில்லை. நீங்கள் குடியிருக்
கும் என் வாசஸ்தலமாகிய தேசத்தைத் [5]தீட்
டுப்படுத்தவேண்டாம்; **கர்த்தராகிய** நான்
இஸ்ரவேல் புத்திரர் நடுவே [6]வாசம்பண்ணு
கிறேன் என்று சொல் என்றார்.

**36** யோசேப்பின் குமாரனுடைய வம்சத்தா
ரில் மனாசேயின் குமாரனாகிய [7]மாகீருக்குப்
பிறந்த கிலேயாத்தின் வம்ச பிதாக்களான
தலைவர் சேர்ந்து, மோசேக்கும் இஸ்ரவேல்
புத்திரருடைய பிதாக்களில் தலைவராகிய பிர
புக்களுக்கும் முன்பாக வந்து, அவர்களை
2 நோக்கி: சீட்டுப்போட்டு, [8]தேசத்தை இஸ்
ரவேல் புத்திரருக்குச் சுதந்தரமாகக் கொடுக்
கும்படி எங்கள் ஆண்டவனுக்குக் **கர்த்தர்**
கட்டளையிட்டாரே; அன்றியும், எங்கள் சகோ
தரனாகிய செலோப்பியாத்தின் சுதந்தரத்தை
அவன் குமாரத்திகளுக்குக் கொடுக்கவேண்
டும் என்றும் எங்கள் [9]ஆண்டவனுக்குக் **கர்த்**
3 **தரா**லே கட்டளை யிடப்பட்டதே. இப்படி
யிருக்க, இவர்கள் இஸ்ரவேல் புத்திருடைய
வேறொரு கோத்திரத்தின் புத்திரருக்கு மனை
விகளானால், அந்தக் குமாரத்திகளுடைய சுதந்
தரம் எங்கள் பிதாக்களுடைய சுதந்தரத்தி
லிருந்து நீங்கி, அவர்கள் உட்படுகிற கோத்
திரத்தின் சுதந்தரத்தோடே சேர்ந்துபோகும்;
இப்படி எங்கள் சுதந்தரத்துக்குச் சீட்டினால்
விழுந்த பங்கில் இராமல் அற்றுப்போகுமே.
இஸ்ரவேல் புத்திரருக்கு யூபிலி வருஷம் 4
[10]வந்தாலும், அவர்களுடைய சுதந்தரம் அவர்
கள் உட்பட்டுப்போன கோத்திரத்தின் சுதந்
தரத்தோடே சேர்ந்துபோகும்; இப்படி எங்
கள் பிதாக்களுடைய கோத்திரத்தின் சுதந்த
ரத்திலிருந்து அது நீங்கிப்போகுமே என்றார்
கள். அப்பொழுது மோசே **கர்த்தருடைய** 5
கட்டளையின்படியே இஸ்ரவேல் புத்திரரை
நோக்கி: யோசேப்பு புத்திரரின் கோத்திரத்
தார் சொல்லுகிறது [11]சரியே. **கர்த்தர்** செலோ 6
ப்பியாத்தின் குமாரத்திகளைக் குறித்த காரியத்
தில் கட்டளையிடுகிறதாவது: அவர்கள் தங்க
ளுக்கு இஷ்டமானவர்களை விவாகஞ்செய்ய
லாம்; ஆனாலும், தங்கள் பிதாவின் கோத்திர
வம்சத்தாரில் மாத்திரம் [12]அவர்கள் விவாகஞ்
செய்யவேண்டும். இப்படியே இஸ்ரவேல் 7
புத்திரரின் சுதந்தரம் ஒரு கோத்திரத்தை
விட்டு, வேறு கோத்திரத்துக்குப் போகாதி
ருக்கும்; [13]இஸ்ரவேல் புத்திரர் அவரவர் தங்
கள் தங்கள் பிதாக்களுடைய கோத்திரத்தின்
சுதந்தரத்திலே நிலைகொண்டிருக்கவேண்டும்.
இஸ்ரவேல் புத்திரர் அவரவர் தங்கள் தங்கள் 8
பிதாக்களின் சுதந்தரத்தை அநுபவிக்கும்படி,
இஸ்ரவேல் புத்திரருடைய ஒரு கோத்திரத்
திலே சுதந்தரம் அடைந்திருக்கிற எந்தக் குமா
ரத்தியும் [14]தன் பிதாவின் கோத்திர வம்சத்தா
ரில் ஒருவனுக்கு மனைவியாகவேண்டும். சுதந் 9
தரமானது ஒரு கோத்திரத்தை விட்டு வே
றொரு கோத்திரத்தைச் சேரக்கூடாது; இஸ்ர
வேல் புத்திரருடைய ஒவ்வொரு கோத்திர
மும் தன் தன் சுதந்தரத்திலே நிலைகொண்டி
ருக்கவேண்டும் என்று கட்டளையிட்டிருக்கி
றார் என்றான். **கர்த்தர்** மோசேக்குக் கட் 10
டளையிட்டபடியே: செலோப்பியாத்தின் குமா
ரத்திகள் செய்தார்கள். செலோப்பியாத்தின் 11
குமாரத்திகளாகிய [15]மக்லாள் திர்சாள் ஒக்லாள்
மில்காள் நோவாள் என்பவர்கள் தங்கள் பிதா
வின் சகோதரருடைய புத்திரரை விவாகம்
பண்ணினார்கள்; அவர்கள் யோசேப்பின் குமா
ரனாகிய மனாசே புத்திரரின் வம்சத்தாரை
விவாகம்பண்ணினபடியால், அவர்களுடைய 12
சுதந்தரம் அவர்கள் பிதாவின் வம்சமான கோத்
திரத்தோடே இருந்தது.

எரிகோவின் அருகே யோர்தானுக்கு இப் 13
புறத்திலுள்ள மோவாபின் சமனான வெளிக
ளில் **கர்த்தர்** மோசேயைக்கொண்டு இஸ்ர
வேல் புத்திரருக்கு [16]விதித்த கட்டளைகளும்
நியாயங்களும் இவைகளே.

1 எண். 27. 11
2 உபா. 17. 6. மத். 18. 16. 2 கொ. 13. 1. எபி. 10. 28
3 2 இரா. 24. 4. சங். 106. 38. மீகா. 4. 11. மத். 23. 31–35
4 ஆதி. 9. 6
5 லேவி. 18. 25
6 யாத். 29. 45, 46. 2 கொ. 6. 16
7 எண். 26. 29
8 எண். 26. 55. யோசு. 17. 3
9 எண். 27. 1, 7
10 லேவி. 25. 10. ழ
11 எண். 27. 7
12 12. வச. ஆதி. 24. 3. 2 கொ. 6. 14
13 1 இரா. 21. 3
14 1 நாளா. 23. 22
15 எண். 27. 1
16 எண். 26. 3. 33. 50

# THE BOOK OF DEUTERONOMY

---

# உ பா க ம ம்

1 சேயீர் மலைவழியாய் ஓரேபுக்குப் பதி
னொருநாள் பிரயாண தூரத்திலுள்ள காதேஸ்
2 பர்னேயாவிலிருந்து, சூப்புக்கு எதிராகவும்,
பாரானுக்கும் தோப்பேலுக்கும் லாபானுக்
கும் ஆஸரோத்துக்கும் திசாகாபுக்கும் நடுவாக
வும் இருக்கிற யோர்தானுக்கு இக்கரையான
[1]வனாந்தரத்தின் சமனான வெளியிலே வந்த
போது, மோசே இஸ்ரவேலர் எல்லாரையும்
3 நோக்கிச் சொன்ன வசனங்களாவன: எஸ்
போனில் குடியிருந்த எமோரியரின் ராஜா
வாகிய சீகோனையும், எத்ரேயின் அருகே
அஸ்தரோத்தில் குடியிருந்த பாசானின் ராஜா
வாகிய ஓக் என்பவனையும், மோசே [2]முறிய
4 அடித்தபின்பு, நாற்பதாம் வருஷம் [3]பதினொ
ராம் மாதம் முதல் தேதியிலே, மோசே இஸ்ர
வேல் புத்திரருக்குச் சொல்லும்படி தனக்குக்
**கர்த்தர்** விதித்த யாவையும் அவர்களுக்குச்
5 சொன்னான். யோர்தானுக்கு இப்புறத்திலி
ருக்கிற மோவாபின் தேசத்தில் மோசே இந்த
நியாயப்பிரமாணத்தை விவரித்துக் காண்பிக்
6 கத் தொடங்கி, ஓரேபிலே நம்முடைய தேவ
னாகிய **கர்த்தர்** நம்மோடே சொன்னது என்
னவென்றால்: நீங்கள் இந்த மலையருகே தங்கி
7 யிருந்தது [4]போதும் நீங்கள் திரும்பிப் பிர
யாணம் புறப்பட்டு, எமோரியரின் மலைநாட்
டிற்கும், அதற்கு அடுத்த எல்லா சமனான
வெளிகளிலும் குன்றுகளிலும் பள்ளத்தாக்கு
களிலும், தென்திசையிலும் கடலோரத்தி
லும் இருக்கிற கானானியரின் தேசத்துக்கும்,
லீபனோனுக்கும், ஐப்பிராத்து நதி என்னும்
8 பெரிய நதிவரைக்கும் போங்கள். இதோ,
இந்தத் தேசத்தைஉங்களுக்கு முன்பாக வைத்
தேன்; நீங்கள் போய், **கர்த்தர்** உங்கள் பிதாக்
களாகிய ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்
கோபுக்கும் அவர்களுக்குப் பின்வரும் அவர்
கள் சந்ததிக்கும் [5]ஆணையிட்டுக் கொடுத்த அந்
தத் தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுங்கள்
9 என்றார். அக்காலத்திலே நான் உங்களை
நோக்கி: [6]நான் ஒருவனாக உங்கள் பாரத்தைத்
10 தாங்கக்கூடாது. உங்கள் தேவனாகிய **கர்த்தர்**
உங்களைப் பெருகப்பண்ணினார்; இதோ, இந்
நாளில் நீங்கள் வானத்து நட்சத்திரங்களைப்
11 போலத் [7]திரளாயிருக்கிறீர்கள். நீங்கள் இப்
பொழுது இருக்கிறதைப்பார்க்கிலும் ஆயிர
மடங்கு [8]அதிகமாகும்படி உங்கள் பிதாக்களின்
தேவனாகிய **கர்த்தர்** உங்களுக்குச் சொல்லிய
படியே உங்களை ஆசீர்வதிப்பாராக. உங்கள் 12
வருத்தத்தையும் பிரயாசத்தையும் வழக்குகளை
யும் [9]நான் ஒருவனாய்த் தாங்குவது எப்படி?
நான் உங்களுக்கு அதிபதிகளை ஏற்படுத்தும் 13
பொருட்டு, உங்கள் கோத்திரங்களில் ஞான
மும் விவேகமும் அறிவும் உள்ளவர்கள் என்று
பேர்பெற்ற மனிதரைத் தெரிந்துகொள்ளுங்
கள் [10]என்று சொன்னேன். நீங்கள் எனக் 14
குப் பிரதியுத்தரமாக: நீர் செய்யச்சொன்ன
காரியம் நல்லது என்றீர்கள். ஆகையால் 15
நான் ஞானமும் அறிவுமுள்ள மனிதராகிய
உங்கள் கோத்திரங்களின் வம்சபதிகளைத் தெ
ரிந்துகொண்டு, [11]அவர்கள் உங்களுக்குத் தலை
வராயிருக்கும்படி, ஆயிரம்பேருக்கு அதிபதி
களாகவும், நூறுபேருக்கு அதிபதிகளாகவும்,
ஐம்பதுபேருக்கு அதிபதிகளாகவும், பத்துப்
பேருக்கு அதிபதிகளாகவும் உங்கள் கோத்தி
ரங்களில் அதிகாரிகளாகவும் ஏற்படுத்திவைத்
தேன். அக்காலத்திலே உங்களுடைய நியா 16
யாதிபதிகளை நான் நோக்கி: நீங்கள் உங்கள்
சகோதரரின் வியாச்சியங்களைக் கேட்டு, இரு
பட்சத்தாராகிய உங்கள் சகோதரருக்கும்,
[12]அவர்களிடத்தில் தங்கும் அந்நியனுக்கும்,
[13]நீதியின்படி தீர்ப்புச்செய்யுங்கள். நியாயத் 17
திலே முகதாட்சணியம் பாராமல் [14]பெரியவ
னுக்குச் செவிகொடுப்பதுபோலச் சிறியவ
னுக்கும் செவிகொடுக்கக்கடவீர்கள்; மனிதன்
முகத்திற்குப் பயப்படீர்களாக; நியாயத்தீர்ப்பு
தேவனுடையது; [15]உங்களுக்குக் கடினமாயி
ருக்கும் காரியத்தை என்னிடத்தில் கொண்
டுவாருங்கள்; நான் அதைக் கேட்பேன் என்று
சொல்லி, நீங்கள் செய்யவேண்டிய காரியங் 18
கள் யாவையும் அக்காலத்திலே கட்டளையிட்
டேன்.

நம்முடைய தேவனாகிய **கர்த்தர்** நமக்குக் 19
கட்டளையிட்டபடியே, நாம் ஓரேபை விட்டுப்
பிரயாணம்பண்ணி, எமோரியரின் மலைநாட்
டிற்கு நேராக நீங்கள் கண்ட [16]அந்தப் பயங்கர
மான பெரிய வனாந்தரவழி முழுவதும் நடந்து
வந்து, [17]காதேஸ்பர்னேயாவிலே சேர்ந்தோம்.

1 யோசு. 9. 1, 10
2 எண். 21. 24, 33. யோசு. 18. 12
3 எண். 33. 38
4 யாத். 3. 1; 19. 1. எண். 10. 11
5 ஆதி. 12. 7
6 யாத். 18. 18. எண். 11. 14
7 ஆதி. 15. 5
8 2 சாமு. 24. 3
9 1 இரா. 3. 7–9
10 யாத். 18. 21
11 யாத். 18. 25
12 லேவி. 24. 22
13 உபா. 16. 18. யோ. 7. 24
14 லேவி. 19. 15. நீதி. 24. 23. யாக். 2. 1
15 2 நாளா. 19. 6
16 எண். 10. 12; 8. 15. எரே. 2. 6
17 எண். 13. 26

20 அப்பொழுது நான் உங்களை நோக்கி: நம்மு
டைய தேவனாகிய கர்த்தர் நமக்குக் கொடுக்
கும் எமோரியரின் மலைநாடுமட்டும் வந்து
21 சேர்ந்தீர்கள். இதோ, உன் தேவனாகிய கர்த்
தர் அந்தத் தேசத்தை உனக்கு முன்பாக வைத்
திருக்கிறார்; உன் பிதாக்களுடைய தேவனா
கிய கர்த்தர் உனக்குச் சொன்னபடியே, நீ
போய், அதைச் சுதந்தரித்துக்கொள்; பயப்ப
22 டாமலும்கலங்காமலும் [1]இரு என்றேன். அப்
பொழுது நீங்கள் எல்லாரும் என்னிடத்தில்
வந்து: நமக்காக அந்தத் தேசத்தைச் சோதித்
துப் பார்க்கவும், நாம் இன்னவழியாக அதில்
சென்று, இன்ன பட்டணங்களுக்குப் போக
லாம் என்று நமக்கு மறுசெய்தி கொண்டுவர
வும், நமக்கு முன்னாக மனிதரை அனுப்பு
23 வோம் என்றீர்கள். அது எனக்கு நன்றாய்க்
கண்டது; கோத்திரத்திற்கு ஒருவனாகப் பன்
னிரண்டு மனிதரைத் தெரிந்தெடுத்து [2]அனுப்
24 பினேன். அவர்கள் புறப்பட்டு, மலைகளில்
ஏறி, எஸ்கோல் பள்ளத்தாக்குமட்டும் போய்,
25 அதைவேவுபார்த்து, அத்தேசத்துக் கனிகளில்
சிலவற்றைத்தங்கள் கையில்எடுத்துக்கொண்டு
நம்மிடத்தில் வந்து, நம்முடைய தேவனாகிய
கர்த்தர் நமக்குக் கொடுக்கும் தேசம் நல்ல
தேசம் என்று நம்மிடத்தில் சொன்னார்கள்.
26 அப்படியிருந்தும், நீங்கள் போகமாட்டோம்
[3]என்று உங்கள் தேவனாகிய கர்த்தருடைய
27 கட்டளைக்கு விரோதமாக எதிர்த்து, உங்கள்
கூடாரங்களில் முறுமுறுத்து: கர்த்தர் நம்மை
வெறுத்து [4]நம்மை அழிக்கும்பொருட்டாக நம்
மை எமோரியரின் கையில் ஒப்புக்கொடுக்கும்
படி, நம்மை எகிப்துதேசத்திலிருந்து புறப்
28 படப்பண்ணினார். நாம் எங்கே போகலாம்;
அந்த ஜனங்கள் நம்மைப்பார்க்கிலும் பலவான்
களும், [5]நெடியவர்களும், அவர்கள் பட்டணங்
கள் பெரியவைகளும், வானத்தையளாவும் மதி
லுள்ளவைகளுமாய் இருக்கிறதென்றும், ஏனா
க்கியரின் புத்திரரையும் அங்கே கண்டோம்
என்றும் நம்முடைய சகோதரர் சொல்லி, நம்
முடைய இருதயத்தைக் கலங்கப்பண்ணினார்
29 கள் என்று சொன்னீர்கள். அப்பொழுது
நான் உங்களை நோக்கி: நீங்கள் கலங்காமலும்
அவர்களுக்குப் பயப்படாமலும் இருங்கள்.
30 உங்களுக்கு முன் செல்லும் உங்கள் தேவனா
கிய கர்த்தர் தாமே எகிப்தில் உங்களோடி
ருந்து, உங்கள் கண்களுக்கு முன்பாகச் செய்த
தெல்லாவற்றைப்போலவும், வனாந்தரத்தில்
செய்துவந்ததுபோலவும், [6]உங்களுக்காகயுத்தம்
31 பண்ணுவார். ஒரு மனிதன் தன் பிள்ளையைச்
சுமந்துகொண்டு போவதுபோல, [7]நீங்கள் இவ்
விடத்திற்கு வருகிறவரைக்கும், நடந்துவந்த
வழிகள் எல்லாவற்றிலும், உங்கள் தேவனாகிய
கர்த்தர் உங்களைச் சுமந்துகொண்டு வந்ததைக்
32 கண்டீர்களே. உங்கள் தேவனாகிய கர்த்தர்
நீங்கள் [8]பாளயமிறங்கத்தக்க இடத்தைப் பார்க்
கவும், நீங்கள் போகவேண்டிய வழியை உங்க
33 ளுக்குக் காட்டவும், இரவில் அக்கினியிலும்
பகலில் மேகத்திலும் உங்களுக்குமுன் சென்
றாரே. இப்படியிருந்தும், [9]இந்தக் காரியத்
தில் நீங்கள் அவரை விசுவாசியாமற்போனீர்
கள். ஆகையால் கர்த்தர் உங்கள் வார்த்தை 34
களின் சத்தத்தைக் கேட்டு, கடுங்கோபங்கொ
ண்டு: உங்கள் பிதாக்களுக்குக் கொடுப்பேன் 35
என்று நான் ஆணையிட்ட அந்த நல்ல தே
சத்தை இந்தப் பொல்லாத சந்ததியாராகிய
மனிதரில் [10]ஒருவரும் காண்பதில்லை என்றும்,
எப்புன்னேயின் குமாரனாகிய காலேப்மாத்தி 36
ரம் [11]அதைக் காண்பான்; அவன் கர்த்தரை
உத்தமமாய்ப் பின்பற்றினபடியினால், நான்
அவன் மிதித்துவந்த தேசத்தை அவனுக்கும்
அவன் பிள்ளைகளுக்கும் கொடுப்பேன் என்
றும் ஆணையிட்டார். அன்றியும் உங்கள்நிமித் 37
தம் கர்த்தர் என்மேலும் [12]கோபங்கொண்டு:
நீயும் அதில் பிரவேசிப்பதில்லை; உனக்கு 38
முன்பாக நிற்கிற நூனின் குமாரனாகிய யோ
சுவா [13]அதில் பிரவேசிப்பான்; அவனைத் திடப்
படுத்து; அவனே அதை இஸ்ரவேலுக்குச்
சுதந்தரமாகப் பங்கிடுவான். கொள்ளையாவார் 39
கள் என்று நீங்கள் சொன்ன உங்கள் குழந்
தைகளும், இந்நாளிலே நன்மை தீமை அறி
யாத உங்கள் பிள்ளைகளும் அதில் பிரவேசிப்
பார்கள்; அவர்களுக்கு அதைக் கொடுப்பேன்;
[14]அவர்கள் அதைச் சுதந்தரித்துக்கொள்வார்
கள். நீங்களோ திரும்பிக்கொண்டு, சிவந்த 40
சமுத்திரத்தின் வழியாய் வனாந்தரத்திற்குப்
[15]பிரயாணப்பட்டுப் போங்கள் என்றார். அப் 41
பொழுது நீங்கள் எனக்குப் பிரதியுத்தரமாக:
கர்த்தருக்கு விரோதமாகப் பாவஞ்செய்தோம்;
[16]நம்முடைய தேவனாகிய கர்த்தர் எங்களுக்
குக் கட்டளையிட்டபடியெல்லாம் நாங்கள்
போய் யுத்தம்பண்ணுவோம் என்று சொல்லி,
நீங்கள் யாவரும் உங்கள் ஆயுதங்களைத் தரித்
துக்கொண்டு, மலையின்மேல் ஏற ஆயத்தமா
யிருந்தீர்கள். அப்பொழுது கர்த்தர் என்னைப் 42
பார்த்து: நீங்கள் உங்கள் சத்துருக்களுக்கு
முன்பாக முறிந்துபோகாதபடிக்கு, போகாம
லும் யுத்தம்பண்ணாமலும் இருப்பீர்களாக;
[17]நான் உங்கள் நடுவே இரேன் என்று அவர்க
ளுக்குச் சொல் என்றார். அப்படியே நான் 43
உங்களுக்குச் சொன்னேன்; நீங்களோ செவி
கொடாமல், கர்த்தருடைய கட்டளைக்கு
விரோதமாகத் [18]துணிந்து மலையின்மேல் ஏறி
னீர்கள். அந்த மலையிலே குடியிருந்த எமோ 44
ரியர் உங்களை எதிர்க்கும்படி புறப்பட்டுவந்து,
தேனீக்கள் துரத்துகிறதுபோல உங்களைத்
துரத்தி, [19]உங்களைச் சேயீர் தொடங்கி ஓர்மா
மட்டும் முறிய அடித்தார்கள். நீங்கள் திரும்பி 45
வந்து, கர்த்தருடைய சமுகத்தில் அழுதீர்கள்;
கர்த்தர் உங்கள் சத்தத்தைக் கேட்கவில்லை,
உங்களுக்குச் செவிகொடுக்கவும் இல்லை.
இப்படி காதேசிலே தங்கி, [20]அங்கே வெகு 46
நாளாயிருந்தீர்கள்.

கர்த்தர் எனக்குச் சொல்லியபடி [21]நாம் திரு 2
ம்பி, சிவந்த சமுத்திரத்திற்குப் போகிற வழி

1 யோசு. 1. 9
2 எண். 13. 3. 22–27
3 எண். 14. 1. ஆ. சங். 106. 24, 25
4 உபா. 9. 28
5 யோசு. 2. 11. எண். 13. 28
6 யாத். 14. 14, 25. நெகே. 4. 20. ரோ. 8. 37
7 யாத். 19. 4. ஏசா. 40. 11. ஓசி. 11. 3. அப். 13. 18
8 யாத். 13. 21, 22. எண். 10. 33. சங். 78. 14
9 சங். 106. 24. எபி. 3. 18. யூதா 5
10 எண். 14. 22. சங். 95. 11
11 எண். 14. 24
12 எண். 20. 12. சங். 106. 32
13 எண். 14. 30 31
14 ஏசா. 7. 15. ரோ. 9. 11
15 எண். 14. 25
16 எண். 14. 40. ஆ
17 யோசு. 7. 12, 13
18 எண். 14. 44, 45
19 சங். 118. 12
20 எண். 13. 26. நியா. 11. 17
21 எண். 14. 25. உபா. 1. 40

யாய் வனாந்தரத்திற்குப் பிரயாணம்பண்ணி,
அநேகநாள் சேயீர்நாட்டைச் சுற்றித் திரிந்
2 தோம். அப்பொழுது **கர்த்தர்** என்னை நோ
3 க்கி: நீங்கள் இந்த மலைநாட்டைச் சுற்றித் திரிந்
4 தது போதும்; வடக்கே திரும்புங்கள். ஜனங்
களுக்கு நீ கட்டளையிடவேண்டியது என்ன
வென்றால்: சேயீரிலே குடியிருக்கிற ஏசா
வின் புத்திரரான உங்கள் சகோதரரின் எல்லை
யைக் கடக்கப்போகிறீர்கள்; [1]அவர்கள் உங்க
ளுக்குப் பயப்படுவார்கள்; நீங்களோ மிகவும்
5 எச்சரிக்கையாயிருங்கள்; அவர்களோடே
போர்செய்யவேண்டாம்; அவர்கள் தேசத்தி
லே ஒரு அடி நிலமும் உங்களுக்குக் கொ
டேன்; [2]சேயீர் மலைநாட்டை ஏசாவுக்குச்
6 சுதந்தரமாகக் கொடுத்திருக்கிறேன். போஜன
பதார்த்தங்களை அவர்கள் கையிலே பணத்திற்கு
வாங்கிப் புசித்து, தண்ணீரையும் அவர்கள்
கையிலே பணத்திற்கு வாங்கிக் குடியுங்கள்.
7 உன் தேவனாகிய **கர்த்தர்** உன் கைக் கிரியைக
ளிலெல்லாம் [3]உன்னை ஆசீர்வதித்து வருகி
றார்; இந்தப் பெரிய வனாந்தரவழியாக நீ
நடந்துவருகிறதை அறிவார்; இந்த நாற்பது
வருஷமும் உன் தேவனாகிய **கர்த்தர்** உன்
னோடே இருந்தார்; [4]உனக்கு ஒன்றும் குறை
வுபடவில்லை என்று சொல் என்றார்.
8 அப்படியே நாம் சேயீரிலே குடியிருக்கிற
நம்முடைய சகோதரராகிய ஏசாவின் புத்திர
ரைவிட்டுப் புறப்பட்டு, [5]அந்தரவெளி வழி
யாய் ஏலாத்மேலும், [6]எசியோன்கேபேர்மே
லும் போய், திரும்பிக்கொண்டு, மோவாப்
9 வனாந்தரவழியாய் வந்தோம். அப்பொழுது
**கர்த்தர்** என்னை நோக்கி: நீ மோவாபை வருத்
தப்படுத்தாமலும், அவர்களோடே போர்செய்
யாமலும் இரு; அவர்கள் தேசத்தில் உனக்கு
ஒன்றும் சுதந்தரமாகக் கொடேன்; ஆர் என்
னும் பட்டணத்தின் சீமையை லோத் புத்
திரருக்குச் [7]சுதந்தரமாகக் கொடுத்தேன்.
10 திரளானவர்களும் ஏனாக்கியரைப்போல நெடி
யவர்களுமான பலத்த ஜனங்களாகிய ஏமியர்
11 [8]அதில் முன்னே குடியிருந்தார்கள். அவர்க
ளும் ஏனாக்கியரையொத்த இராட்சதர் என்று
எண்ணப்பட்டார்கள்; மோவாபியரோ அவர்
12 களை ஏமியர் என்று சொல்லுகிறார்கள். ஓரி
யரும் [9]சேயீரில் முன்னே குடியிருந்தார்கள்;
**கர்த்தர்** தங்களுக்குச் சுதந்தரமாகக் கொடுத்த
தேசத்தாரை இஸ்ரவேல் துரத்தினதுபோல,
ஏசாவின் புத்திரர் அந்த ஓரியரைத் துரத்தி,
அவர்களைத் தங்கள் முகத்திற்கு முன்பாக
அழித்து, அவர்கள் இருந்த ஸ்தானத்தில்
13 குடியேறினார்கள். நீங்கள் எழுந்து, சேரேத்
ஆற்றைக் [10]கடந்துபோங்கள் என்று சொன்
னார்; அப்படியே சேரேத் ஆற்றைக் கடந்
14 தோம். யுத்த மனிதரான அந்தச் சந்ததி
யெல்லாம் **கர்த்தர்** தங்களுக்கு ஆணையிட்ட
படியே பாளயத்தின் நடுவிலிருந்து மாண்டு
போக, நாம் காதேஸ்பர்னேயாவை விட்டுப்
புறப்பட்டது முதற்கொண்டு, [11]சேரேத் ஆற்

றைக் கடக்குமட்டும், சென்றகாலம் முப்பத்
தெட்டு வருஷமாயிற்று. அவர்கள் பாளயத் 15
தின் நடுவிலிருந்து மாண்டு ஒழியுமட்டும்
**கர்த்தரின்** கை அவர்களை நிர்மூலமாக்கும்ப
டிக்கு [12]அவர்களுக்கு விரோதமாயிருந்தது.
யுத்தமனிதர் எல்லாரும் ஜனத்தின் நடு 16
விலிருந்து செத்துத் தீர்ந்தபின்பு, **கர்த்தர்** 17
என்னை நோக்கி: நீ ஆர் பட்டணம் இருக்கிற 18
மோவாபின் எல்லையை இன்றைக்குக் கடந்து,
அம்மோன் புத்திரருக்கு எதிராகச் சேரப்போ 19
கிறாய்; நீ அவர்களை வருத்தப்படுத்தவும் அவர்
களோடே போர்செய்யவும் வேண்டாம்; அம்
மோன் புத்திரரின் தேசத்தில் ஒன்றும் உனக்
குச் சுதந்தரமாகக் கொடேன்; அதை லோத்
புத்திரருக்குச் [13]சுதந்தரமாகக் கொடுத்திருக்
கிறேன். அதுவும் இராட்சதருடைய தேச 20
மாக எண்ணப்பட்டது; முற்காலத்தில் இராட்
சதர் அதிலே குடியிருந்தார்கள், அம்மோனி
யர் அவர்களைச் [14]சம்சூமியர் என்று சொல்லு
கிறார்கள். அவர்கள் திரளானவர்களும் ஏனாக் 21
கியரைப்போல நெடியவர்களுமான பலத்த
ஜனங்களாயிருந்தார்கள்; **கர்த்தரோ** சேயீரில்
குடியிருந்த ஏசாவின் புத்திரருக்கு முன்பாக
ஓரியரை அழிக்க, [15]அவர்கள் அந்த ஜனங்க
ளைத் துரத்திவிட்டு, அவர்கள் இருந்த ஸ்தா
னத்தில் இந்நாள்வரைக்கும் குடியிருக்கிறது
போலவும், கப்தோரிலிருந்து புறப்பட்ட கப் 22
தோரியர் ஆசேரீம் தொடங்கி ஆசாமட்டும்
குடியிருந்த [16]ஆவியரை அழித்து, அவர்கள்
இருந்த ஸ்தானத்திலே குடியேறினதுபோல
வும், **கர்த்தர்** அவர்களை இவர்களுக்கு முன் 23
பாக அழியப்பண்ண, இவர்கள் அவர்களைத்
துரத்திவிட்டு, அவர்கள் இருந்த ஸ்தானத்
திலே குடியேறினார்கள். நீங்கள் எழுந்து 24
பிரயாணம்பண்ணி, [17]அர்னோன் ஆற்றைக்
கடந்துபோங்கள்; எஸ்போனின் ராஜாவாகிய
சீகோன் என்னும் எமோரியனையும் அவன்
தேசத்தையும் உன் கையிலே ஒப்புக்கொடுத்
தேன், இதுமுதல் அதைச் சுதந்தரித்துக்கொள்
ளும்படி அவனோடே யுத்தஞ்செய். வானத் 25
தின்கீழ் எங்குமுள்ள ஜனங்கள் உன்னாலே
திகிலும் பயமும் அடையும்படி செய்ய [18]இன்று
நான் தொடங்குவேன்; அவர்கள் உன் கீர்த்தி
யைக் கேட்டு, உன்னிமித்தம் நடுங்கி, வேத
னைப்படுவார்கள் என்றார்.
அப்பொழுது நான் கெதெமோத் வனாந்தா 26
த்திலிருந்து எஸ்போனின் ராஜாவாகிய சீகோ
னிடத்தில், [19]சமாதான வார்த்தைகளைச் சொல்
லும்படி ஸ்தானாபதிகளை அனுப்பி: நான் உம் 27
முடைய தேசத்தைக் கடந்துபோகும்படி உத்
தரவுகொடும்; வலதுபுறம் இடதுபுறம் சாயா
மல் பெரும் பாதைவழியாய் நடப்பேன். சேயீ 28
ரில் குடியிருக்கிற ஏசாவின் புத்திரரும், ஆர்
பட்டணத்தில் குடியிருக்கிற மோவாபியரும்
எனக்குச் செய்ததுபோல, நீரும், நான் யோர்
தானைக் கடந்து, எங்கள் தேவனாகிய **கர்த்தர்**
எங்களுக்குக் கொடுக்கிற தேசத்தில் சேருமட்

[1] எண். 20. 14
[2] ஆதி. 36. 8. யோசு. 24. 4
[3] சங். 90. 17
[4] உபா. 8. 2-4. நெகே. 9. 21. லூ. 22. 35
[5] நியா. 11. 18
[6] 1 இரா. 9. 26
[7] ஆதி. 19. 36, 37. எண். 21. 28
[8] ஆதி. 14. 5 எண். 13. 22, 23
[9] ஆதி. 14. 6
[10] எண். 21. 12
[11] எண். 13. 26; 14. 32, 33
[12] சங். 78. 33; 106. 26
[13] ஆதி. 19. 36-38
[14] சூசிம், ஆதி. 14. 5
[15] 10. வசனம்.
[16] ஆதி. 36. 8. யோசு. 13. 8
[17] எண். 21. 13, 14
[18] யாத். 15. 14, 15. யோசு. 2. 9, 10
[19] எண். 20. 10

29 டும், எனக்குப் புசிக்க ஆகாரத்தையும் குடிக்
கத் தண்ணீரையும் கிரயத்துக்குத் தாரும்;
[1]நான் கால்நடையாய்க் கடந்துபோக மாத்தி
ரம் உத்தரவுகொடும் என்று சொல்லி அனுப்
30 பினேன். ஆனாலும் தன் தேசத்தைக் கடந்
துபோகும்படி, எஸ்போனின் ராஜாவாகிய
சீகோன் நமக்கு உத்தரவு கொடுக்கவில்லை;
இந்நாளில் இருக்கிறதுபோல, உன் தேவனா
கிய **கர்த்தர்** அவனை உன் கையில் ஒப்புக்
கொடுக்கும்படி, அவன் மனதைக் கடினப்
படுத்தி, [2]அவன் இருதயத்தை உரங்கொள்
31 ளப் பண்ணியிருந்தார். அப்பொழுது **கர்த்**
**தர்** என்னை நோக்கி: இதோ, சீகோனையும்
அவன் தேசத்தையும் உனக்கு ஒப்புக்கொடுக்
கப்போகிறேன்; இதுமுதல் அவன் தேசத்தை
வசப்படுத்தி, சுதந்தரித்துக்கொள் என்றார்.
32 சீகோன் தன்னுடைய எல்லா ஜனங்களோ
டுங்கூட நம்மோடே யுத்தம்பண்ணப் [3]புறப்
33 பட்டு, யாகாசிலே வந்தான். அவனை நம்மு
டைய தேவனாகிய **கர்த்தர்** நமக்கு ஒப்புக்
கொடுத்தார்; நாம் அவனையும் அவன் குமார
ரையும் அவனுடைய சகல ஜனங்களையும்
34 [4]முறிய அடித்து, அக்காலத்தில் அவன் பட்
டணங்களையெல்லாம் பிடித்து, சகல பட்ட
ணங்களிலும் இருந்த ஸ்திரீ புருஷரையும்,
பிள்ளைகளையும், ஒருவரையும் மீதியாக வைக்
35 காமல் [5]சங்காரம்பண்ணினோம். மிருகஜீவன்
களையும் நாம் பிடித்த பட்டணங்களில் கொள்
ளையடித்த பொருள்களையுமாத்திரம் நமக்கெ
36 ன்று வைத்துக்கொண்டோம். அர்னோன்
ஆற்றங்கரையில் இருக்கிற ஆரோவே
ரும் ஆற்றண்டையில் இருக்கிற பட்டண
மும் தொடங்கி, [6]கீலேயாத்வரைக்கும் நமக்கு
எதிர்த்து நிற்கத்தக்க அரணிப்பான பட்ட
ணம் இருந்ததில்லை; எல்லாவற்றையும் நம்மு
டைய தேவனாகிய **கர்த்தர்** நமக்கு [7]ஒப்புக்
37 கொடுத்தார். அம்மோன் புத்திரருடைய தே
சத்தையும், யாபோக் [8]ஆற்றங்கரையிலுள்ள
இடங்களையும், மலைகளிலுள்ள பட்டணங்
களையும், நம்முடைய தேவனாகிய **கர்த்தர்**
நமக்கு விலக்கின மற்ற இடங்களையும் சேரா
மல் விலகிப்போனாய்.

**3** பின்பு நாம் திரும்பி, பாசானுக்குப் போ
கிற வழியாய்ப் போனோம்; பாசானின் ராஜா
வாகிய ஓக் [9]தன்னுடைய சகல ஜனங்களோ
டும் நம்மோடே எதிர்த்து யுத்தம்பண்ணும்படி
2 புறப்பட்டு, எத்ரேயிக்கு வந்தான். அப்பொ
ழுது **கர்த்தர்** என்னை நோக்கி: அவனுக்
குப் பயப்படவேண்டாம்; அவனையும் அவனு
டைய ஜனங்கள் எல்லாரையும் அவன் தேசத்
தையும் உன் கையில் ஒப்புக்கொடுத்தேன்;
எஸ்போனிலே குடியிருந்த எமோரியரின்
ராஜாவாகிய சீகோனுக்கு நீ செய்ததுபோல,
3 [10]அவனுக்கும் செய்வாய் என்றார். அப்ப
டியே நம்முடைய தேவனாகிய **கர்த்தர்** பாசா
னின் ராஜாவாகிய ஓகையும் அவனுடைய
சகல ஜனங்களையும் நம்முடைய கையில் ஒப்
புக்கொடுத்தார்; அவனுக்கு ஒருவரும் மீதியா
யிராமற் போகுமட்டும் அவனை முறிய அடித்
தோம். அக்காலத்திலே அவனுடைய பட் 4
டணங்களையெல்லாம் பிடித்தோம்; அவர்களி
டத்தில் நாம் பிடித்துக்கொள்ளாத பட்டணம்
இல்லை; பாசானிலிருந்த ஓகின் ராஜ்யமான
அறுபது பட்டணங்களுள்ள அர்கோப் தேசம்
[11]முழுவதையும் பிடித்தோம். அந்தப் பட்ட 5
ணங்களெல்லாம் உயர்ந்த மதில்களாலும் வா
சல்களாலும் தாழ்ப்பாள்களாலும் அரணாக்கப்
பட்டிருந்தது; அவைகள் அன்றி, மதிலில்
லாத பட்டணங்களும் அநேகம். அவைகளை 6
யும் சங்காரம்பண்ணினோம்; நாம் எஸ்போ
னின் ராஜாவாகிய சீகோனுக்குச் செய்தது
போல, [12]அந்த எல்லாப் பட்டணங்களிலு
முள்ள புருஷரையும் ஸ்திரீகளையும் பிள்ளைக
ளையும் சங்காரம்பண்ணினோம். ஆனாலும் பட் 7
டணங்களிலுள்ள ஆஸ்தியையும் சகல மிருக
ஜீவன்களையும் நமக்கென்று கொள்ளையிட்
டோம். இப்படியே யோர்தானுக்கு இப்பு 8
றத்திலுள்ள அர்னோன் நதிதொடங்கி, எர்
மோன் மலைவரைக்குமுள்ள தேசத்தை நாம்
அக்காலத்தில் எமோரியருடைய இரண்டு ரா
ஜாக்களிடத்திலுமிருந்து பிடித்தோம். சீதோ 9
னியர் எர்மோனைச் சீரியோன் [13]என்கிறார்
கள்; எமோரியரோ அதைச் சேனீர் [14]என்கி
றார்கள். சமனான நாட்டின் எல்லாப் பட்ட 10
ணங்களையும், கீலேயாத் முழுவதையும், சல்
காயி எத்ரேயி என்னும் பாசானிலிருந்த ஓகு
டைய ராஜ்யத்தின் பட்டணங்கள் மட்டுமுள்ள
பாசான் முழுவதையும் பிடித்தோம். மீந்தி 11
ருந்த இராட்சதரில் பாசானின் ராஜாவாகிய
ஓக் என்பவன்மாத்திரம் [15]தப்பியிருந்தான்;
இரும்பினாற் செய்த அவனுடைய கட்டில்
மனிதருடைய கை முழத்தின்படியே, [16]ஒன்
பது முழ நீளமும் நாலு முழ அகலமுமாயி
ருந்தது; அது அம்மோன் புத்திரருடைய ரப்
பாபட்டணத்தில் இருக்கிறதல்லவா? அக்கா 12
லத்திலே சுதந்தரமாகப் பெற்றுக்கொண்ட
தேசத்தை அர்னோன் நதியருகேயுள்ள ஆரோ
வேர் [17]தொடங்கி, கீலேயாத் மலைநாட்டில்
பாதியையும், அதிலிருக்கிற பட்டணங்களை
யும், ரூபனியருக்கும் காத்தியருக்கும் கொடுத்
தேன். கீலேயாத்தின் [18]மற்றப் பங்கையும், 13
ஓகின் ராஜ்யமாயிருந்த பாசான் முழுவதை
யும், மனாசேயின் பாதிக் கோத்திரத்துக்குக்
கொடுத்ததும் அன்றி, இராட்சத தேசமென்
னப்பட்ட பாசானுக்குள்ளான அர்கோப்சீமை
யாவையும் கொடுத்தேன். மனாசேயின் குமா 14
ரனாகிய யாவீர் [19]அர்கோப் சீமை முழுவதை
யும் கெசூரியர் மாகாத்தியர் என்பவர்களுடைய
எல்லைமட்டும் கட்டிக்கொண்டு, அதற்குத் தன்
நாமத்தின்படியே பாசான் அவோத்யாயீர்
என்று பேரிட்டான், அது இந்நாள்வரைக்கும்
வழங்கிவருகிறது. மாகீருக்குக் கீலேயாத்தைக் 15
கொடுத்தேன். மேலும் கீலேயாத் தொடங்கி 16
அர்னோன் நதி ஓடுகிற பள்ளத்தாக்கும்,

1 எண். 20. 19-23
2 யாத். 4. 21. யோசு. 11. 20. ரோ. 9. 18, 22
3 எண். 21. 23, 24
4 உபா. 29. 7
5 லேவி. 27. 28. உபா. 7. 2, 26
6 உபா. 3. 12. யோசு. 13. 9
7 சங். 44. 3
8 ஆதி. 32. 22
9 எண். 21. 33. உபா. 29. 7
10 எண். 21. 24, 35
11 1 இரா. 4. 13
12 உபா. 2. 24. சங். 135. 10-12
13 உபா. 4. 48, 49. சங். 29. 6
14 1 நாளா. 5. 23. எசே. 27. 5
15 ஆமோ. 2. 9. ஆதி. 14. 5
16 2 சாமு. 12. 26. எரே. 49. 2
17 யோசு. 12. 2-6
18 யோசு. 13. 29
19 1 நாளா. 2. 22. எண். 32. 39-41

கடையாக்தாருமான அம்மோன் புத்திரரின்
எல்லையாகிய யாபோக்கு ஆறுமட்டும் இருக்கிற
17 தேசத்தையும், கின்னரேத் தொடங்கி அஸ்
தோத் பிஸ்காவுக்குத் தாழ்வாய்க் கிழக்கே
இருக்கிற உப்புக்கடலான சமனான வெளி
யின் கடல்மட்டும், யோர்தானின் எல்லைக்குள்
அடங்கிய சமனான வெளியையும், [1]ரூபனிய
18 ருக்கும் காத்தியருக்கும் கொடுத்தேன். அக்
காலத்திலே நான் உங்களை நோக்கி: உங்கள்
தேவனாகிய **கர்த்தர்** உங்களுக்கு இந்தத் தேசத்
தைச் சுதந்தரமாகக் கொடுத்தார்; யுத்தஞ்செய்
யத்தக்கவர்களாகிய நீங்கள் எல்லாரும் இஸ்ர
வேல் புத்திரரான உங்கள் சகோதரருக்கு
முன்னே [2]ஆயுதபாணிகளாக நடந்துபோங்
19 கள். உங்கள் மனைவிகளும் உங்கள் பிள்ளை
களும் உங்கள் ஆடுமாடுகளும்மாத்திரம் நான்
உங்களுக்குக் கொடுத்த உங்கள் பட்டணங்க
ளில் இருக்கட்டும்; உங்களுக்குத் திரளான
20 ஆடுமாடுகள் உண்டென்று அறிவேன். ஆன
லும் **கர்த்தர்** உங்களை இளைப்பாறப்பண்ணி
னதுபோல, உங்கள் சகோதரரையும் இளைப்
பாறப்பண்ணி, யோர்தானுக்கு அப்புறத்தில்
உங்கள் தேவனாகிய கர்த்தர் கொடுக்கிற தேசத்
தைச் சுதந்தரித்துக்கொள்ளுமட்டும் நீங்கள்
இருந்து, பின்பு அவரவர் நான் உங்களுக்குக்
கொடுத்த உங்கள் சுதந்தரத்துக்குத் [3]திரும்பு
21 வீர்களாக என்றேன். அக்காலத்திலே நான்
யோசுவாவை நோக்கி: [4]உங்கள் தேவனாகிய
**கர்த்தர்** அந்த இரண்டு ராஜாக்களுக்கும் செய்
தவைகளையெல்லாம் உன் கண்கள் கண்டது;
நீ போய்ச் சேரும் எல்லா ராஜ்யங்களுக்கும்
22 **கர்த்தர்** அப்படியே செய்வார். அவர்களுக்
குப் பயப்படாதிருப்பீர்களாக; [5]உங்கள் தேவனாகிய
**கர்த்தர்** தாமே உங்களுக்காக யுத்தம்பண்ணு
வார் என்று சொன்னேன்.
23 அக்காலத்திலே நான் **கர்த்தரை** நோக்கி:
24 **கர்த்தராகிய** ஆண்டவரே, நீர் உமது அடியே
னுக்கு உமது மகத்துவத்தையும் உமது வல்ல
மையுள்ள காத்தையும் [6]காண்பிக்கத் தொடங்
கினீர்; வானத்திலும் பூமியிலும் உம்முடைய
கிரியைகளுக்கும் உம்முடைய வல்லமைகளுக்
கும் ஒப்பாகச் செய்யத்தக்க தேவன் [7]யார்?
25 நான் கடந்துபோய் யோர்தானுக்கு அப்புறத்
திலுள்ள அந்த நல்ல தேசத்தையும், அந்த
நல்ல மலையையும், லீபனோனையும் பார்க்
கும்படி உத்தரவு கொடுத்தருளும் [8]என்று
26 வேண்டிக்கொண்டேன். **கர்த்தரோ** உங்
கள் நிமித்தம் என்மேல் கோபங்கொண்டு,
[9]எனக்குச் செவிகொடாமல், என்னை நோக்கி:
போதும், இனி இந்தக் காரியத்தைக்குறித்து
27 என்னோடே பேசவேண்டாம். நீ பிஸ்கா
வின் [10]கொடுமுடியில் ஏறி, உன் கண்களை
மேற்கிலும் வடக்கிலும் தெற்கிலும் கிழக்கி
லும் ஏறெடுத்து, உன் கண்களினாலே அதைப்
பார்; இந்த யோர்தானை நீ கடந்துபோவதில்லை.
28 நீ யோசுவாவுக்குக் கட்டளைகொடுத்து, [11]அவ
னைத் திடப்படுத்திப் பலப்படுத்து; அவன்
இந்த ஜனங்களுக்கு முன்பாகக் கடந்துபோய்,
அவனே நீ காணும் தேசத்தை அவர்களுக்
குப் பங்கிட்டுக் கொடுப்பான் என்றார். பின்பு 29
பெத்பெயோருக்கு எதிரான [12]பள்ளத்தாக்கில்
தங்கியிருந்தோம்.

இஸ்ரவேலரே, நீங்கள் பிழைத்திருக்கும்ப 4
டிக்கும், உங்கள் பிதாக்களின் தேவனாகிய
**கர்த்தர்** உங்களுக்குக் கொடுக்கிற தேசத்தில்
நீங்கள் பிரவேசித்து அதைச் சுதந்தரித்துக்
கொள்ளும்படிக்கும், [13]நீங்கள் கைக்கொள்வ
தற்கு நான் உங்களுக்குப் போதிக்கிற கட்ட
ளைகளையும் நியாயங்களையும் கேளுங்கள். நான் 2
உங்களுக்குக் கற்பிக்கும் உங்கள் தேவனாகிய
**கர்த்தரின்** கட்டளைகளை நீங்கள் கைக்கொள்
ளும்படி, நான் உங்களுக்குக் கற்பிக்கிறவசனத்
தோடே நீங்கள் ஒன்றும் கூட்டவும் வேண்
டாம், [14]அதில் ஒன்றும் குறைக்கவும் வேண்
டாம். பாகால்பேயோரின் [15]நிமித்தம் **கர்த்** 3
**தர்** செய்ததை உங்கள் கண்கள் கண்டிருக்கி
றது; பாகால்பேயோரைப் பின்பற்றின மனி
தரையெல்லாம் உன் தேவனாகிய **கர்த்தர்**
உன் நடுவில் இராதபடிக்கு அழித்துப்போட்
டார். ஆனாலும் உங்கள் தேவனாகிய **கர்த்த** 4
**ரைப்** பற்றிக்கொண்ட [16]நீங்களெல்லாரும்
இந்நாள்வரைக்கும் உயிரோடிருக்கிறீர்கள். நீங் 5
கள் சுதந்தரித்துக்கொள்ளும்படி பிரவேசிக்
கும் தேசத்தில் நீங்கள் கைக்கொள்ளும்
பொருட்டு, என் தேவனாகிய **கர்த்தர்** எனக்
குக் கற்பித்தபடியே, [17]நான் உங்களுக்குக் கட்
டளைகளையும் நியாயங்களையும் போதித்தேன்.
ஆகையால் அவைகளைக் கைக்கொண்டு நட 6
வுங்கள்; ஜனங்களின் கண்களுக்கு முன்பாக
வும் இதுவே உங்களுக்கு ஞானமும் [18]விவேக
முமாய் இருக்கும்; அவர்கள் இந்தக் கட்டளை
களையெல்லாம் கேட்டு, இந்தப் பெரிய ஜாதி
யே [19]ஞானமும் விவேகமுமுள்ள ஜனங்கள்
என்பார்கள். நம்முடைய தேவனாகிய **கர்த்த** 7
**ரை** நாம் தொழுதுகொள்ளுகிறபோதெல்
லாம், அவர் நமக்குச் சமீபமாயிருக்கிறது
போல, [20]தேவனை இவ்வளவு சமீபமாய்ப்பெற்
றிருக்கிற வேறே பெரிய ஜாதி எது? இந்நா 8
ளில் நான் உங்களுக்கு விதிக்கிற இந்த நியா
யப்பிரமாணம் முழுமைக்கும் ஒத்த இவ்வளவு
நீதியுள்ள கட்டளைகளையும் நியாயங்களையும்
பெற்றிருக்கிற [21]வேறே பெரிய ஜாதியும் எது?
ஓரேபிலே உன் தேவனாகிய **கர்த்தருக்கு** முன் 9
பாக நீ நிற்கும்போது, **கர்த்தர்** என்னை நோ
க்கி: [22]ஜனங்களை என்னிடத்தில் கூடிவரச்
செய்து, என் வார்த்தைகளை அவர்கள் கேட்
கும்படி பண்ணுவேன்; அவர்கள் பூமியில்
உயிரோடிருக்கும் நாளெல்லாம் எனக்குப் பய
ந்திருக்கும்படி அவைகளைக் கற்றுக்கொண்டு,
தங்கள் பிள்ளைகளுக்கும் போதிக்கக்கடவர்கள்
என்று சொல்லிய நாளில், உன் கண்கள் 10
கண்ட காரியங்களை [23]நீ மறவாதபடிக்கும், உன்
ஜீவனுள்ள நாளெல்லாம் அவைகள் உன் இரு
தயத்தை விட்டு நீங்காதபடிக்கும் [24]நீ எச்சரிக்

1 2 சாமு. 24. 5. யோசு. 12. 2
2 எண். 32. 20. ஙி
3 யோசு. 22. 4
4 எண். 27. 18, 22, 23
5 யாத். 14. 14. உபா. 1. 30. ஏசா. 48. 1, 2
6 உபா. 11. 2
7 யாத். 15. 11. 2 சாமு. 7. 22. சங். 71. 19. ஏசா. 40. 28. தானி. 3. 29
8 யாத். 3. 8. 2செ. 12. 8, 9
9 எண். 20. 12. சங். 106. 32
10 எண். 27. 10
11 எண். 27. 12 23. உபா. 1. 38
12 உபா. 4. 46
13 லேவி. 19. 37. சங். 119. 4. எசே. 20. 11. ரோ. 10. 5
14 உபா. 12. 32. வெளி. 22. 18, 19
15 எண். 25. 1, 9. சங். 106. 28, 29
16 யோசு. 23. 8. அப். 11. 23
17 நீதி. 22. 19, 20
18 யோபு 28. 28. சங். 19. 7; 111. 10. நீதி. 1. 7
19 சங். 119. 99
20 2 சாமு. 7. 23. சங். 46. 1. ஏசா. 55. 6
21 சங். 147. 19, 20
22 யாத். 19. 9, 16. எபி. 12. 18, 19
23 நீதி. 3. 1, 2
24 நீதி. 4. 23

கையாயிருந்து, உன் ஆத்துமாவைச் சாக்கிர
தையாய்க் காத்துக்கொள்; அவைகளை உன்
பிள்ளைகளுக்கும் உன் பிள்ளைகளின் பிள்ளைக
11 ளுக்கும் [1]அறிவிக்கக்கடவாய். நீங்கள் சேர்ந்
துவந்து, மலையின் அடிவாரத்தில் நின்றீர்கள்;
[2]அந்த மலையில் வானத்தை அளாவிய அக்கினி
யெரிய, இருளும் மேகமும் அந்தகாரமும்
12 சூழ்ந்தது. அந்த அக்கினியின் நடுவிலிருந்து
**கர்த்தர்** உங்களோடே பேசினார்; வார்த்தைக
ளின் சத்தத்தை [3]நீங்கள் கேட்டீர்கள்; அந்தச்
சத்தத்தை நீங்கள் கேட்டதேயன்றி, [4]ஒரு
13 ரூபத்தையும் [5]காணவில்லை. நீங்கள் கைக்
கொள்ளவேண்டும் என்று அவர் உங்களுக்குக்
கட்டளையிட்ட பத்துக் கற்பனைகளாகிய [6]தம்
முடைய உடன்படிக்கையை அவர் உங்க
ளுக்கு அறிவித்து, அவைகளை இரண்டு கற்ப
14 லகைகளில் எழுதினார். நீங்கள் சுதந்தரித்துக்
கொள்ளப்போகிற தேசத்தில் நீங்கள் கைக்
கொள்ளவேண்டிய கட்டளைகளையும் நியாயங்
களையும் உங்களுக்குப் போதிக்கவேண்டுமெ
ன்று [7]அக்காலத்திலே **கர்த்தர்** எனக்குக் கட்
15 டளையிட்டார். **கர்த்தர்** ஓரேபிலே அக்கினி
யின் நடுவிலிருந்து உங்களோடே பேசின
நாளில், [8]நீங்கள் ஒரு ரூபத்தையும் காண
16 வில்லை. ஆகையால் நீங்கள் உங்களைக் கெடுத்
துக்கொண்டு, ஆண் உருவும், [9]பெண் உரு
17 வும், பூமியிலிருக்கிற யாதொரு மிருகத்தின்
உருவும், ஆகாயத்தில் பறக்கிற செட்டையுள்ள
18 யாதொரு பட்சியின் உருவும், பூமியிலுள்ள
யாதொரு ஊரும்பிராணியின் உருவும், பூமி
யின்கீழ்த் தண்ணீரிலுள்ள யாதொரு மச்சத்
தின் உருவுமாயிருக்கிற இவைகளில் யாதொரு
உருவுக்கு ஒப்பான விக்கிரகத்தை உங்களுக்கு
19 உண்டாக்காதபடிக்கும், உங்கள் கண்களை வா
னத்திற்கு ஏறெடுத்து, [10]உங்கள் தேவனாகிய
**கர்த்தர்** வானத்தின் கீழெங்கும் இருக்கிற எல்
லா ஜனங்களுக்கும் ஏற்படுத்தின வானத்தின்
[11]சர்வ சேனைகளாகிய சந்திரசூரிய நட்சத்திரங்
களை நோக்கி, அவைகளைத் தொழுது [12]சேவி
க்க இணங்காதபடிக்கும், உங்கள் ஆத்துமாக்க
ளைக்குறித்து [13]மிகவும் எச்சரிக்கையாயிருங்
20 கள். இந்நாளில் நீங்கள் இருக்கிறதுபோல,
தமக்குச் சுதந்தரமான ஜனமாயிருக்கும்படி,
[14]**கர்த்தர்** உங்களைச் சேர்த்துக்கொண்டு, உங்
களை எகிப்து என்னும் இருப்புக்காளவாயிலி
21 ருந்து [15]புறப்படப்பண்ணினார். **கர்த்தர்** உங்
கள் நிமித்தம் என்மேல் கோபங்கொண்டு,
[16]நான் யோர்தானைக் கடந்துபோவதில்லை
என்றும், உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்குச்
சுதந்தரமாகக் கொடுக்கிற அந்த நல்ல தேசத்
தில் நான் பிரவேசிப்பதில்லை என்றும் ஆணை
22 யிட்டார். அதினால் இந்தத் தேசத்தில் நான்
[17]மரணமடையவேண்டும்; நான் யோர்தா
னைக் கடந்துபோவதில்லை; நீங்களோ கடந்து
போய், அந்த நல்ல தேசத்தைச் சுதந்தரித்துக்
23 கொள்வீர்கள். நீங்கள் உங்கள் தேவனாகிய
**கர்த்தர்** உங்களோடே பண்ணின உடன்ப
டிக்கையை மறந்து, உங்கள் தேவனாகிய **கர்த்**
**தர்** வேண்டாம் என்று விலக்கின எவ்வித
சாயலான விக்கிரகத்தையும் உங்களுக்கு உண்
டாக்காதபடிக்கு எச்சரிக்கையா யிருங்கள். 24
உன் தேவனாகிய **கர்த்தர்** பட்சிக்கிற அக்
கினி, [18]அவர் எரிச்சலுள்ள [19]தேவன்.
நீங்கள் பிள்ளைகளும் பிள்ளைகளின் பிள்ளை 25
களும் பெற்று, தேசத்தில் வெகுநாள் இருந்த
பின்பு, நீங்கள் உங்களைக் கெடுத்து, யாதொரு
விக்கிரகத்தையாவது யாதொரு சாயலான சுரூ
பத்தையாவது பண்ணி, உன் தேவனாகிய **கர்த்**
**தருக்குக்**கோபம் உண்டாக்க [20]அவர் பார்வைக்
குப் பொல்லாப்பானதைச் செய்தால், நீங் 26
கள் யோர்தானைக் கடந்து சுதந்தரிக்கப்போ
கிற தேசத்தில் இராமல், சீக்கிரமாய் முற்றி
லும் அழிந்துபோவீர்கள் என்று, இந்நாளில்
உங்களுக்கு விரோதமாய் வானத்தையும் பூமி
யையும் [21]சாட்சிவைக்கிறேன்; நீங்கள் அதிலே
நெடுநாள் இராமல் நிர்மூலமாக்கப்படுவீர்கள்.
**கர்த்தர்** உங்களைப் புறஜாதிகளுக்குள்ளே 27
[22]சிதற அடிப்பார்; **கர்த்தர்** உங்களைக் கொண்
டுபோய் விடப்போகிற ஜாதிகளிடத்திலே
கொஞ்ச ஜனங்களாய் மீந்திருப்பீர்கள். அங்கே 28
காணாமலும் கேளாமலும் சாப்பிடாமலும் மூக
ராமலும் இருக்கிற மரமும் கல்லுமான, மனு
ஷர் கைவேலையாகிய [23]தேவர்களைச் சேவிப்
பீர்கள். அப்பொழுது அங்கேயிருந்து உன் 29
தேவனாகிய **கர்த்தரைத்** தேடுவாய்; [24]உன் முழு
இருதயத்தோடும் உன் முழு ஆத்துமாவோடும்
அவரைத் தேடும்போது, அவரைக் கண்டடை
வாய். நீ வியாகுலப்பட்டு இவைகளெல்லாம் உன் 30
னைத் தொடர்ந்து பிடிக்கும்போது, [25]கடைசிகா
ட்களில் உன் தேவனாகிய **கர்த்தரிடத்தில்** திரு
ம்பி அவர் சத்தத்திற்குக் கீழ்ப்படிவாயானால்,
உன் தேவனாகிய **கர்த்தர்** இரக்கமுள்ள தேவ 31
னாயிருக்கிறபடியால், [26]அவர் உன்னைக் கைவி
டவுமாட்டார், உன்னை அழிக்கவுமாட்டார்,
உன் பிதாக்களுக்குத் தாம் ஆணையிட்டுக் கொ
டுத்த உடன் படிக்கையை மறக்கவுமாட்டார்.
தேவன் மனுஷனைப் பூமியிலே சிருஷ்டித்த 32
நாள்முதல், உனக்கு முன் இருந்த [27]பூர்வகாட்
களில, *வானத்தின் ஒருமுனை தொடங்கி
அதின் மறுமுனை மட்டுமுள்ள எவ்விடத்தி
லாகிலும் இப்படிப்பட்ட பெரிய காரியம் நட
ந்த துண்டோ, இப்படிப்பட்ட காரியம் கேள்
விப்பட்டதுண்டோ; அக்கினியின் நடுவிலிரு 33
ந்து பேசுகிற தேவனுடைய சத்தத்தை நீ கேட்
டதுபோல, [28]யாதொரு ஜனமாவது கேட்டதும்
உயிரோடிருந்ததும் உண்டோ, அல்லது உங் 34
கள் தேவனாகிய **கர்த்தர்** எகிப்திலே உங்கள்
கண்களுக்கு முன்பாக உங்களுக்குச் செய்தப
டியெல்லாம் தேவன் அந்நிய ஜாதிகளின் நடு
விலிருந்து ஒரு ஜனத்தைச் சோதனைகளினா
லும், [29]அடையாளங்களினாலும், [30]அற்புதங்
களினாலும், யுத்தத்தினாலும், வல்லமையுள்ள
கரத்தினாலும், [31]ஓங்கிய புயத்தினாலும், [32]மகா
பயங்கரமான செயல்களினாலும், தமக்கென்று

1 ஆதி. 18. 19. சங். 78. 5, 6. எபே. 6. 4
2 யாத். 19. 18
3 1 இரா. 19. 12. ஏசா. 30. 21
4 உபா. 33. 36
5 யாத். 20. 22. 24. 12
6 யாத். 34. 28
7 யாத். 21. 1
8 ஏசா. 40. 18
9 யாத். 20. 4, 5. ரோ. 1. 23
10 யோபு 31. 26, 27
11 ஆதி. 2. 1
12 உபா. 17. 3. 2 இரா. 17. 16. ரோ. 1. 25
13 யோசு. 23. 11. சங். 119. 9
14 உபா. 9. 29. எபே. 1. 18
15 1 இரா. 8. 51. எரே. 11. 4
16 எண். 20. 12
17 2 பே. 1. 13–15
18 உபா. 9. 3. எபி. 12. 29
19 யாத். 20. 5; 24. 17. ஏசா. 42. 8. நாகூம் 1. 2. செப். 3. 8
20 2 இரா. 17. 17. 1 கொ. 10. 22
21 உபா. 30. 18, 19. ஏசா. 1. 2. மீகா 6. 2. சங். 78. 5–7. எபே. 6. 4
22 லேவி. 26. 33. நெகே. 1. 8, 9
23 1 சாமு. 26. 19. ஏசா. 44. 9. எரே. 16. 13
24 லேவி. 26. 39, 40. எரே. 3. 12–14, 29
25 எரே. 23. 20. ஓசி. 3. 5. யோவே. 2. 12
26 சங். 116. 6. யோனா 4. 2
27 யோபு 8. 8
* பூமியின்=தேசத்தின். எரே. 12. 2. மத். 24. 31
28 யாத். 19. 18, 19; 24. 11
29 உபா. 29. 3
30 யாத். 7. 3
31 யாத். 13. 3
32 உபா. 34. 12

தெரிந்துகொள்ள வகைபண்ணினதுண்டோ
35 என்று நீ விசாரித்துப்பார். கர்த்தரே தேவன்,
[1]அவரையல்லாமல் வேறொருவரும் இல்லை
என்பதை நீ அறியும்படிக்கு, இது உனக்குக்
36 காட்டப்பட்டது. உன்னை உபதேசிக்கும்ப
டிக்கு, அவர் வானத்திலிருந்து [2]தமது சத்
தத்தை உனக்குக் கேட்கப்பண்ணி, பூமியிலே
தமது பெரிய அக்கினியை உனக்குக் காண்
பித்தார்; அக்கினியின் நடுவிலிருந்து உண்
டான அவருடைய வார்த்தைகளைக் கேட்
37 டாய். அவர் உன் பிதாக்களில் [3]அன்புகூர்ந்
தபடியால், அவர்களுடைய பின்சந்ததியைத்
38 தெரிந்துகொண்டு, உன்னிலும் பலத்த பெரிய
ஜாதிகளை உனக்கு முன்னின்று துரத்தவும்,
உன்னை அழைத்துக்கொண்டுபோய், இந்நா
ளில் இருக்கிறதுபோல, அவர்கள் தேசத்தை
உனக்குச் சுதந்தரமாகக் கொடுக்கவும், உன்
னைத் தமது முகத்துக்குமுன் தமது மிகுந்த
வல்லமையினால் [4]எகிப்திலிருந்து புறப்படப்
39 பண்ணினார். ஆகையால், உயர வானத்திலும்
தாழ பூமியிலும் கர்த்தரே தேவன், [5]அவ
ரைத் தவிர ஒருவரும் இல்லை என்பதை நீ
இந்நாளில் அறிந்து, உன் மனதிலே [6]சிந்
40 தித்து, நீயும் உனக்குப் பின்வரும் உன் பிள்
ளைகளும் [7]நன்றாயிருக்கும்படிக்கும், உன்
தேவனாகிய கர்த்தர் உனக்கு என்றைக்கும்
கொடுக்கிற தேசத்திலே நீ நீடித்த நாளாயிருக்
கும்படிக்கும், நான் இன்று உனக்குக் கற்பிக்
கிற அவருடைய கட்டளைகளையும் அவ
ருடைய கற்பனைகளையும் [8]கைக்கொள்ளக்கட
வாய் என்றான்.
41 முற்பகையின்றிக் கைப்பிசகாய் பிறனைக்
கொன்றவன் [9]அடைக்கலப்பட்டணங்களில்
ஒரு பட்டணத்தில் தப்பியோடிப்போய்ப்
42 பிழைத்திருக்கும்படியாக, ரூபனியரைச் சேர்
ந்த சமபூமியாகிய வனாந்தரத்திலுள்ள பேசே
ரும், காத்தியரைச் சேர்ந்த கிலேயாத்திலுள்ள
ராமோத்தும், மனாசேயரைச் சேர்ந்த பாசானி
43 லுள்ள கோலானுமாகிய, மூன்று பட்டணங்
களை மோசே யோர்தானுக்கு இப்புறத்தில்
சூரியோதய திசையிலே ஏற்படுத்தினான்.
41 இதுவே மோசே இஸ்ரவேல் புத்திரருக்கு
45 விதித்த பிரமாணம். இஸ்ரவேல் புத்திரர்
எகிப்திலிருந்து புறப்பட்டபின்பு; யோர்தா
னுக்கு இப்புறத்தில் எஸ்போனில் குடியிருந்த
எமோரியரின் ராஜாவாகிய சீகோனுடைய
தேசத்திலுள்ள பெத்பெயோருக்கு எதிரான
பள்ளத்தாக்கிலே, அவர்களுக்கு மோசே
சொன்ன சாட்சிகளும் கட்டளைகளும் நியா
46 யங்களும் இவைகளே. மோசேயும் இஸ்ர
வேல் புத்திரரும் எகிப்திலிருந்து புறப்பட்ட
47 பின்பு அந்த ராஜாவை [10]முறிய அடித்து, யோர்
தானுக்கு இப்புறத்தில் சூரியோதய திசையில்
அர்னோன் ஆற்றங்கரையிலுள்ள ஆரோவேர்
தொடங்கி எர்மோன் என்னும் சீயோன்மலை
48 வரைக்குமுள்ள தேசமும், யோர்தானுக்கு இப்
புறத்தில் சூரியோதய திசையில் அஸ்தோத்

1 1 சாமு. 2. 2. ஏசா. 45. 5: 18. 22. மாற். 12. 29, 32
2 எபி. 12. 18, 25
3 எரே. 31. 3
4 யாத். 13. 8, 9, 14
5 யோசு. 2. 11
6 ஏசா. 1. 3. ஓசி. 7. 2
7 உபா. 5. 16
8 லேவி. 22. 31
9 எண். 35. 11. உபா. 19. 4. யோசு. 20. 8
10 உபா. 3. 29
11 யாத். 19. 5-8. எபி. 8. 9
12 மத். 13. 17
13 யாத். 19. 9, 18, 19
14 யாத். 24. 2, 3. கலா. 3. 19
15 யாத். 20. 2-17. சங். 81. 10
16 மத். 4. 10
17 யாத். 20. 4. உபா. 4. 15-19. 34. 7
18 எரே. 32. 18. தானி. 9. 4
19 லேவி. 19. 12. சங். 139. 20. மத். 5. 33. யாக். 5. 12
20 ஏசா. 58. 13. எசே. 20. 12
21 ஆதி. 2. 2. எபி. 4. 4

பிஸ்காவுக்கும் தாழ்ந்த சமனான வெளியைச்
சேர்ந்த கடல்மட்டுமுள்ள சமனான வெளிய
னைத்துமாகிய, எமோரியருடைய இரண்டு 49
ராஜாக்களின் தேசங்களான சீகோனுடைய
தேசத்தையும், பாசானின் ராஜாவாகிய ஓகின்
தேசத்தையும் கட்டிக்கொண்டார்கள்.

மோசே இஸ்ரவேலர் எல்லாரையும் அழை 5
ப்பித்து, அவர்களை நோக்கி: இஸ்ரவேலரே,
நான் இன்று உங்கள் காதுகள் கேட்கச் சொல்
லும் கட்டளைகளையும் நியாயங்களையும் கேளுங்
கள்; நீங்கள் அவைகளின்படியே செய்யும்
படிக்கு அவைகளைக் கற்றுக் கைக்கொள்ளக்
கடவீர்கள். நம்முடைய தேவனாகிய கர்த்தர் 2
ஓரேபிலே [11]நம்மோடே உடன்படிக்கை பண்
ணினார். அந்த உடன்படிக்கையைக் கர்த்தர் 3
நம்முடைய பிதாக்களுடன் பண்ணாமல், இந்
நாளில் இங்கே உயிரோடிருக்கிற [12]நம்மெல்
லாரோடும் பண்ணினார். கர்த்தர் மலையிலே 4
அக்கினியின் நடுவிலிருந்து முகமுகமாய் [13]உங்
களோடே பேசினார். கர்த்தருடைய வார்த் 5
தையை உங்களுக்கு அறிவிக்கும்படி, அக்கா
லத்திலே நான் கர்த்தருக்கும் உங்களுக்கும்
[14]நடுவாக நின்றேன்; நீங்கள் அக்கினிக்குப்
பயந்து மலையில் ஏறாமல் இருந்தீர்கள்; அப்
பொழுது அவர் சொன்னது என்னவென்
றால்:
உன்னை அடிமைத்தன வீடாகிய எகிப்து 6
தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின [15]உன்
தேவனாகிய கர்த்தர் நானே. என்னையன்றி 7
உனக்கு வேறே தேவர்கள் [16]உண்டாயிருக்க
வேண்டாம்.
மேலே வானத்திலும், [17]கீழே பூமியிலும், 8
பூமியின்கீழ்த் தண்ணீரிலும் உண்டாயிருக்
கிறவைகளுக்கு ஒப்பான ஒரு சுரூபத்தையா
கிலும் யாதொரு விக்கிரகத்தையாகிலும் நீ
உனக்கு உண்டாக்கவேண்டாம். நீ அவை 9
களை நமஸ்கரிக்கவும் சேவிக்கவும் வேண்டாம்;
உன் தேவனாகிய கர்த்தராயிருக்கிற நான் எரி
ச்சலுள்ள தேவனாயிருந்து, என்னைப் பகைக்
கிறவர்களைக்குறித்து பிதாக்களுடைய அக்கிர
மத்தைப் பிள்ளைகளிடத்தில் மூன்றாம் நான்
காம் தலைமுறைமட்டும் விசாரிக்கிறவராயி
ருக்கிறேன். என்னிடத்தில் அன்புகூர்ந்து, 10
என் கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்க
ளுக்கோ [18]ஆயிரம் தலைமுறைமட்டும் இரக்
கஞ்செய்கிறவராயிருக்கிறேன்.
உன் தேவனாகிய கர்த்தருடைய நாமத்தை 11
வீணிலே வழங்காதிருப்பாயாக; [19]கர்த்தர்
தம்முடைய நாமத்தை வீணிலே வழங்குகிற
வனைத் தண்டியாமல் விடார்.
உன் தேவனாகிய கர்த்தர் உனக்குக் கட்ட 12
ளையிட்டபடியே, [20]ஓய்வுநாளைப் பரிசுத்தமாய்
ஆசரிப்பாயாக. ஆறுநாளும் நீ வேலைசெய்து, 13
உன் கிரியைகளையெல்லாம் நடப்பிப்பாயாக.
ஏழாம் நாளோ உன் தேவனாகிய கர்த்தரு 14
டைய [21]ஓய்வுநாள்; அதிலே நீயானாலும்,
உன் குமாரனானாலும், உன் குமாரத்தியானா

னும், உன் வேலைக்காரனுனாலும், உன் வேலை
க்காரியானாலும், உன் எருதானாலும், உன்
கழுதையானாலும், உனக்கு இருக்கிற மற்றெ
ந்த மிருகஜீவனானாலும், உன் வாசல்களில்
இருக்கிற அந்நியனானாலும் யாதொரு வேலை
யும் செய்யவேண்டாம்; நீ இளைப்பாறுவது
போல உன் வேலைக்காரனும் உன் வேலைக்கா
15 ரியும் இளைப்பாறவேண்டும்; நீ எகிப்துதேச
த்தில் [1]அடிமையாயிருந்தாய் என்றும், உன்
தேவனாகிய **கர்த்தர்** உன்னை அவ்விடத்திலி
ருந்து வல்லமையுள்ள காத்தினாலும் ஓங்கிய
புயத்தினாலும் புறப்படப்பண்ணினார் என்
றும் நினைப்பாயாக; ஆகையால் ஓய்வுநாளை
ஆசரிக்க உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்குக்
கட்டளையிட்டார்.
16 உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்குக் கொ
டுக்கிற தேசத்திலே உன் நாட்கள் நீடித்திருப்
பதற்கும், நீ நன்றாயிருப்பதற்கும், உன் தேவ
னாகிய **கர்த்தர்** உனக்குக் கட்டளையிட்டபடி
யே, [2]உன் தகப்பனையும் உன் தாயையும்
கனம்பண்ணுவாயாக.
17 கொலை [3]செய்யாதிருப்பாயாக.
18 விபசாரம் [4]செய்யாதிருப்பாயாக.
19 களவு [5]செய்யாதிருப்பாயாக.
20 பிறனுக்கு விரோதமாகப் பொய்ச்சாட்சி
[6]சொல்லாதிருப்பாயாக.
21 பிறனுடைய மனைவியை இச்சியாதிருப்பா
யாக; பிறனுடைய வீட்டையும், அவனுடைய
நிலத்தையும், அவனுடைய வேலைக்காரனை
யும், அவனுடைய வேலைக்காரியையும், அவ
னுடைய எருதையும், அவனுடைய கழுதை
யையும், பின்னும் பிறனுக்குள்ள யாதொன்
றையும் [7]இச்சியாதிருப்பாயாக என்றார்.
22 இந்த வார்த்தைகளைக் **கர்த்தர்** மலையிலே
அக்கினியிலும் மேகத்திலும் காரிருளிலும்
இருந்து உங்கள் சபையார் எல்லாரோடும்
மகா சத்தத்துடனே சொன்னார்; [8]அவைக
ளோடு ஒன்றும் கூட்டாமல், அவைகளை
இரண்டு கற்பலகைகளில் எழுதி, என்னிடத்
23 தில் கொடுத்தார். மலை அக்கினியாய் எரி
கையில் இருளின் நடுவிலிருந்து உண்டான
சத்தத்தை நீங்கள் கேட்டபோது, [9]கோத்திரத்
தலைவரும் மூப்பருமாகிய நீங்கள் எல்லாரும்
24 என்னிடத்தில் வந்து: இதோ, நம்முடைய
தேவனாகிய **கர்த்தர்** நமக்குத் தம்முடைய
மகிமையையும் தம்முடைய மகத்துவத்தையும்
காண்பித்தார்; அக்கினியின் நடுவிலிருந்து
உண்டான அவருடைய சத்தத்தையும் கேட்
டோம்; தேவன் மனுஷனோடே பேசியும்,
[10]அவன் உயிரோடிருக்கிறதை இந்நாளிலே
25 கண்டோம். இப்பொழுது நாங்கள் [11]சாவா
னேன்? இந்தப் பெரிய அக்கினி எங்களைப் பட்
சிக்குமே; நாங்கள் இன்னும் நம்முடைய தேவ
னாகிய **கர்த்தரின்** சத்தத்தைக் கேட்போமா
26 கில் சாவோம். நாங்கள் கேட்டதுபோல,
அக்கினியின் நடுவிலிருந்து பேசுகிற ஜீவ
னுள்ள தேவனுடைய சத்தத்தை மாம்சமான

1 உபா. 15. 15
2 லேவி. 19. 3 மத். 15. 4, 5. எபே. 6. 1-3
3 மத். 5. 21, 22
4 நீதி. 6. 32, 33 மத். 5. 27, 28
5 ரோ. 13. 9. எபே. 4. 28
6 மல்கி. 3. 5
7 ஆப. 2. 9. லூக். 12. 15. ரோ. 7. 7. எபி. 13. 5
8 யாத். 24. 12
9 யாத். 20. 18, 19
10 உபா. 4. 33. நியா. 13. 22
11 உபா. 18. 16
12 எபி. 12. 19
13 உபா. 18. 17
14 உபா. 32. 29. சங். 81. 13. ஏசா. 48. 18. எரே. 33. 31, 32. மத். 23. 37. லூக். 19. 42
15 கலா. 3. 19
16 யோசு. 1. 7. நீதி. 4. 27
17 சங். 119. 6. லூக். 1. 6. எரே. 7. 23
18 பிர. 12. 13
19 நீதி. 3. 1, 2
20 எசே. 37. 24
21 பிர. 8. 12. ஏசா. 3. 10
22 ஆதி. 22. 17
23 ஏசா. 42. 8. மாற். 12. 29-32. யோவா. 17. 3. 1 கொரி. 8. 4, 6
24 2 இரா. 23. 25. மத். 22. 37
25 நீதி. 2. 10, 11. 3. 3, 5. ஏசா. 51. 7

வர்களில் யாராவது கேட்டு உயிரோடிருந்தது
உண்டோ? நீரே சமீபித்துப் போய், நம்மு 27
டைய தேவனாகிய **கர்த்தர்** சொல்வதையெல்
லாம் கேட்டு, நம்முடைய தேவனாகிய **கர்த்**
**தர்** சொல்வதையெல்லாம் [12]நீரே எங்களுக்
குச் சொல்லவேண்டும்; நாங்கள் கேட்டு,
அதின்படியே செய்வோம் என்றீர்கள். நீங் 28
கள் என்னோடே பேசுகையில், **கர்த்தர்** உங்
கள் வார்த்தைகளைக் கேட்டு, **கர்த்தர்** என்னை
நோக்கி: இந்த ஜனங்கள் உன்னோடே சொ
ன்ன வார்த்தைகளைக் கேட்டேன்; அவர்கள்
சொன்னது எல்லாம் [13]நன்றாய்ச் சொன்னார்
கள். அவர்களும் அவர்கள் பிள்ளைகளும் என் 29
றென்றைக்கும் நன்றாயிருக்கும்படி, அவர்கள்
எந்நாளும் எனக்குப் பயந்து, என் கற்பனை
களையெல்லாம் கைக்கொள்வதற்கேற்ற [14]இரு
தயம் அவர்களுக்கு இருந்தால் நலமாயிருக்
கும். நீ போய்: உங்கள் கூடாரங்களுக்குத் 30
திரும்பிப்போங்கள் என்று அவர்களுக்குச்
சொல். நீயோ இங்கே [15]என்னிடத்தில் நில்; 31
நான் அவர்களுக்குச் சுதந்தரமாகக் கொடுக்
கும் தேசத்தில் அவர்கள் செய்யும்படி நீ அவர்
களுக்குப் போதிக்கவேண்டிய சகல கற்பனை
களையும் கட்டளைகளையும் நியாயங்களையும்
உனக்குச் சொல்லுவேன் என்றார். உங்கள் 32
தேவனாகிய **கர்த்தர்** உங்களுக்குக் கற்பித்தப
டியே செய்ய சாவதானமாயிருங்கள்; [16]வலது
புறம் இடதுபுறம் சாயாதிருப்பீர்களாக. நீங் 33
கள் சுதந்தரிக்கும் தேசத்திலே பிழைத்து சுகி
த்து நீடித்திருக்கும்படி, உங்கள் தேவனாகிய
**கர்த்தர்** உங்களுக்கு விதித்த [17]வழிகளெல்லா
வற்றிலும் நடக்கக்கடவீர்கள்.

நீ உன் தேவனாகிய **கர்த்தருக்குப்** [18]பயந்து, **6**
உயிரோடிருக்கும் நாளெல்லாம், நீயும் உன்
குமாரனும் உன் குமாரத்தியும், நான் உனக்கு
விதிக்கிற அவருடைய எல்லாக் கற்பனைகளை
யும் கட்டளைகளையும் கைக்கொள்ளுகிறதினா
லே உன் வாழ்நாட்கள் [19]நீடித்திருக்கும்படி,
நீங்கள் சுதந்தரிக்கப்போகிற தேசத்திலே கைக் 2
கொள்வதற்காக, உங்களுக்குப் போதிக்கவே
ண்டும் என்று உங்கள் தேவனாகிய **கர்த்தர்** கற்
பித்த கற்பனைகளும் கட்டளைகளும் [20]நியாயங்
களும் இவைகளே. இஸ்ரவேலே, நீ நன்றா 3
யிருப்பதற்கும், [21]உன் பிதாக்களின் தேவனா
கிய **கர்த்தர்** உனக்குச் சொன்னபடி, [22]பா
லும் தேனும் ஓடுகிற தேசத்தில் நீ மிகவும்
விருத்தியடைவதற்கும், அவைகளுக்குச் செ
விகொடுத்து, அவைகளின்படி செய்யச் சாவ
தானமாயிரு.

இஸ்ரவேலே, கேள்: [23]நம்முடைய தேவ 4
னாகிய **கர்த்தர்** ஒருவரே **கர்த்தர்**. நீ உன் 5
தேவனாகிய **கர்த்தரிடத்தில்** உன் முழு இரு
தயத்தோடும், உன் முழு ஆத்துமாவோடும்,
[24]உன் முழுப் பலத்தோடும் அன்புகூருவா
யாக. இன்று நான் உனக்குக் கட்டளையிடு 6
கிற [25]இந்த வார்த்தைகள் உன் இருதயத்தில்
இருக்கக்கடவது. நீ அவைகளை உன் பிள் 7

ளைகளுக்குக் [1]கருத்தாய்ப் போதித்து, நீ உன்
வீட்டில் உட்கார்ந்திருக்கிறபோதும், வழியில்
நடக்கிறபோதும், படுத்துக்கொள்ளுகிறபோ
தும், எழுந்திருக்கிறபோதும் அவைகளைக்
8 குறித்துப் பேசி, அவைகளை உன் கையின்
மேல் அடையாளமாகக் கட்டிக்கொள்வாயாக;
[2]அவைகள் உன் கண்களுக்கு நடுவே ஞாப
9 கக்குறியாய் இருக்கக்கடவது. அவைகளை
உன் வீட்டு நிலைகளிலும், [3]உன் வாசல்களி
லும் எழுதுவாயாக.
10 உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்குக் கொடு
ப்பேன் என்று ஆபிரகாம் ஈசாக்கு யாக்கோபு
என்பவர்களாகிய உன் பிதாக்களுக்கு ஆணை
யிட்டுக் கொடுத்த தேசத்தில் உன்னைப் பிர
வேசிக்கப்பண்ணும்போதும், [4]நீ கட்டாத வச
11 தியான பெரிய பட்டணங்களையும், நீ நிரப்
பாத சகல நல்ல வஸ்துக்களாலும் நிரம்பிய
வீடுகளையும், நீ வெட்டாமல் வெட்டப்பட்
டிருக்கிற துறவுகளையும், நீ நடாத திராட்சத்
தோட்டங்களையும் ஒலிவத் தோப்புகளையும்,
அவர் உனக்குக் கொடுப்பதினால், நீ சாப்பிட்
12 டுத் திர்ப்தியாகும்போதும், நீ அடிமைப்பட்
டிருந்த வீடாகிய எகிப்துதேசத்திலிருந்து
உன்னைப் புறப்படப்பண்ணின **கர்த்தரை**
13 மறவாதபடிக்கு எச்சரிக்கையாயிரு. உன்
தேவனாகிய **கர்த்தருக்குப்** பயந்து, [5]அவருக்கே
ஆராதனை செய்து, அவருடைய நாமத்தைக்
14 கொண்டே [6]ஆணையிடுவாயாக. உன் தேவனா
கிய **கர்த்தருடைய** கோபம் உன்மேல் மூண்டு,
உன்னைப் பூமியில் வைக்காமல் அழித்துப்
போடாதபடிக்கு, உங்களைச் சுற்றிலும் இருக்
கிற ஜனங்களின் தேவர்களாகிய [7]அந்நிய தே
15 வர்களைப் பின்பற்றாதிருப்பீர்களாக. உன்
நடுவிலிருக்கிற உன் தேவனாகிய **கர்த்தர்**
[8]எரிச்சலுள்ள தேவனாயிருக்கிறாரே.
16 நீங்கள் மாசாவிலே செய்ததுபோல, [9]உங்
கள் தேவனாகிய **கர்த்தரைப்** பரீட்சை பாரா
17 திருப்பீர்களாக. உங்கள் தேவனாகிய **கர்த்தர்**
உங்களுக்குக் கற்பித்த அவருடைய கற்பனை
களையும் அவருடைய சாட்சிகளையும் அவரு
டைய கட்டளைகளையும் [10]கருத்தாய்க் கைக்
18 கொள்வீர்களாக. நீ நன்றாயிருக்கிறதற்கும்
**கர்த்தர்** உன் பிதாக்களுக்கு ஆணையிட்டுக்
கொடுத்த நல்ல தேசத்தில் நீ பிரவேசித்து,
19 அதைச் சுதந்தரிப்பதற்கும், **கர்த்தர்** தாம்
சொன்னபடி, உன் சத்துருக்களையெல்லாம்
[11]உன் முகத்திற்கு முன்பாகத் துரத்திவிடுவ
தற்கும், நீ **கர்த்தருடைய** பார்வைக்குச் [12]செம்
மையும் நன்மையுமாய் இருக்கிறதைச் செய்
வாயாக.
20 நாளைக்கு உன் புத்திரன்: நம்முடைய தே
வனாகிய **கர்த்தர்** உங்களுக்குக் கட்டளையிட்ட
இந்தச் சாட்சிகளும் கட்டளைகளும் நியாயங்
களும் என்ன என்று [13]உன்னிடத்தில் கேட்
21 டால்; நீ உன் புத்திரனை நோக்கி: நாங்கள்
எகிப்திலே பார்வோனுக்கு அடிமைகளாயிருந்
தோம்; **கர்த்தர்** பலத்த கையினாலே எங்களை
எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினார். கர்த் 22
தர் எங்கள் கண்களுக்கு முன்பாக, எகிப்தின்
மேலும் பார்வோன்மேலும் அவன் குடும்பம்
அனைத்தின்மேலும் கொடிதான பெரிய அடை
யாளங்களையும் அற்புதங்களையும் விளங்கப்
பண்ணி, தாம் நம்முடைய பிதாக்களுக்கு 23
ஆணையிட்டுக் கொடுத்த தேசத்துக்கு எங்களை
அழைத்துக்கொண்டுபோய், அதை நமக்குக்
கொடுக்கும்படி எங்களை அவ்விடத்திலிருந்து
புறப்படப்பண்ணினார். இந்நாளில் இருக்கி 24
றதுபோல, நம்மை [14]அவர் உயிரோடே காப்ப
தற்கும், எந்நாளும் [15]நன்றாயிருக்கிறதற்கும்,
நம்முடைய தேவனாகிய **கர்த்தருக்குப்** பயந்து
[16]இந்த எல்லாக் கட்டளைகளின்படியேயும்
செய்யக் **கர்த்தர்** நமக்குக் கட்டளையிட்டார்.
நம்முடைய தேவனாகிய **கர்த்தர்** நமக்குக் கட் 25
டளையிட்டபடியே நாம் அவர் சமுகத்தில் இந்த
எல்லாக் கட்டளைகளின்படியும் செய்யச் சாவ
தானமாயிருந்தால், [17]நமக்கு நீதியாயிருக்கும்
என்று சொல்வாயாக.

நீ சுதந்தரிக்கப்போகிற தேசத்தில் உன் **7**
தேவனாகிய **கர்த்தர்** உன்னைப் பிரவேசிக்
கப்பண்ணி, உன்னைப்பார்க்கிலும் ஜனம்
பெருத்த ஜாதிகளாகிய ஏத்தியர், கிர்காசியர்,
எமோரியர், கானானியர், பெரிசியர், ஏவி
யர், எபூசியர் என்னும் ஏழு பலத்த ஜாதி
களை உனக்கு முன்பாகத் [18]துரத்தி, உன் 2
தேவனாகிய **கர்த்தர்** அவர்களை உன்னிடத்
தில் ஒப்புக்கொடுக்கும்போது, அவர்களை
முறிய அடித்து, [19]அவர்களைச் சங்காரம்பண்
ணக்கடவாய்; அவர்களோடே உடன்படிக்கை
பண்ணவும் அவர்களுக்கு இரங்கவும் வேண்
டாம். அவர்களோடே சம்பந்தம் கலவாயாக; 3
[20]உன் குமாரத்திகளை அவர்கள் குமாரருக்குக்
கொடாமலும், அவர்கள் குமாரத்திகளை உன்
குமாரருக்குக் கொள்ளாமலும் இருப்பாயாக.
என்னைப் பின்பற்றாமல், அந்நிய தேவர்களைச் 4
சேவிக்கும்படி அவர்கள் உன் குமாரரை
விலகப்பண்ணுவார்கள்; அப்பொழுது **கர்த்**
**தருடைய** கோபம் உங்கள்மேல் மூண்டு, [21]உங்
களைச் சீக்கிரத்தில் அழிக்கும். நீங்கள் அவர் 5
களுக்குச் செய்யவேண்டியது என்னவென்
றால்: அவர்கள் பலிபீடங்களை இடித்து, அவர்
கள் சிலைகளைத் தகர்த்து, [22]அவர்கள் தோப்பு
களை வெட்டி, அவர்கள் விக்கிரகங்களை அக்
கினியிலே எரித்துப்போடவேண்டும். நீ உன் 6
தேவனாகிய **கர்த்தருக்குப்** [23]பரிசுத்த ஜனம்,
பூச்சக்கரத்திலுள்ள எல்லா ஜனங்களிலும் உன்
தேவனாகிய **கர்த்தர்** உன்னைத் தமக்குச் [24]சொந்
தமாயிருக்கும்படி தெரிந்துகொண்டார். சகல 7
ஜனங்களிலும் நீங்கள் திரட்சியான ஜன
மென்று **கர்த்தர்** உங்கள்பேரில் அன்புவைத்து
உங்களைத் தெரிந்துகொள்ளவில்லை; [25]நீங்கள்
சகல ஜனங்களிலும் கொஞ்சமாயிருந்தீர்கள்.
**கர்த்தர்** [26]உங்களில் அன்புகூர்ந்ததினாலும், 8
[27]உங்கள் பிதாக்களுக்கு இட்ட ஆணையைக்
காக்கவேண்டும் என்பதினாலும்; **கர்த்தர்** பலத்த

1 உபா. 11. 19. சங். 78. 4, 5. எபே. 6. 4
2 நீதி. 6. 21; 7. 3
3 ஏசா. 57. 8. ஆப. 2. 2
4 யோசு. 24. 13. சங். 105. 44
5 மத். 4. 10. லூக். 4. 8
6 ஏசா. 65. 16. எரே. 5. 2; 12. 16
7 எரே. 25. 6
8 யாத். 20. 5. ஆமோ. 3. 2
9 யாத். 17. 2, 7. மத். 4. 7. 1 கொ. 10. 9
10 சங். 119. 4
11 எண். 33. 52, 53
12 யாத். 15. 26
13 யாத். 13. 14
14 சங். 41. 2. நீதி. 22. 4
15 யோபு 35. 7, 8. எரே. 32. 39
16 2 [illegible]
17 உபா. 24. 13. ரோ. 10. 3, 5
18 சங். 44. 2, 3
19 எண். 33. 52
20 எஸ்றா 9. 1, 2
21 உபா. 6. 15
22 யாத். 23. 24
23 சங். 50. 5. எரே. 2. 3
24 ஆமோ. 3. 2. 1 பே. 2. 9
25 உபா. 10. 22
26 உபா. 10. 15
27 ஆதி. 22. 16, 17. லூக். 1. 72, 73

கையினால் உங்களைப் புறப்படப்பண்ணி, அடி
மைத்தன வீடாகிய எகிப்தினின்றும் அதின்
இராஜாவான பார்வோனின் கையினின்றும்
9 உங்களை மீட்டுக்கொண்டார். ஆகையால் உன்
தேவனாகிய **கர்த்தரே** தேவன் என்றும், தம்
மில் அன்புகூர்ந்து, தமது கற்பனைகளைக் கைக்
கொள்ளுகிறவர்களுக்கு அவர் ஆயிரம் தலை
முறைமட்டும் உடன்படிக்கையையும் தயவை
யும் காக்கிற [1]உண்மையுள்ள தேவன் என்றும்,
10 தம்மைப் பகைக்கிறவர்களுக்குப் பிரத்தியட்ச
மாய்ப் பதிலளித்து அவர்களை அழிப்பார்
என்றும், [2]தம்மைப் பகைக்கிறவனுக்கு அவர்
தாமதியாமல் பிரத்தியட்சமாய்ப் பதிலளிப்பார்
11 என்றும் நீ அறியக்கடவாய். ஆகையால் நீ
செய்யும்படி நான் இன்று உனக்குக் கட்டளை
யிடுகிற கற்பனைகளையும் கட்டளைகளையும்
நியாயங்களையும் கைக்கொள்வாயாக.
12 இந்த நியாயங்களை நீங்கள் கேட்டு, கைக்
கொண்டு, அவைகளின்படி செய்வீர்களா
னால், அப்பொழுது உன் தேவனாகிய **கர்த்தர்**
உன் பிதாக்களுக்கு ஆணையிட்டுக் கொடுத்த
உடன்படிக்கையையும் கிருபையையும் [3]உ
13 னக்காகக் காத்து, உன்மேல் அன்புவைத்து,
[4]உன்னை ஆசீர்வதித்து, உனக்குக் கொடுப்
பேன் என்று உன் பிதாக்களுக்கு ஆணையிட்
டுக் கொடுத்த தேசத்தில் உன்னைப் பெருகப்
பண்ணி, உன் கர்ப்பக்கனியையும், உன் நிலத்
தின் கனிகளாகிய உன் தானியத்தையும், உன்
திராட்சரசத்தையும், உன் எண்ணெயையும்,
உன் மாடுகளின் பலனையும், உன் ஆட்டுமந்
14 தைகளையும் ஆசீர்வதிப்பார். சகல ஜனங்க
ளைப்பார்க்கிலும் நீ ஆசீர்வதிக்கப்பட்டிருப்
பாய்; உங்களுக்குள்ளும் உங்கள் மிருகஜீவன்
களுக்குள்ளும் ஆணிலாகிலும் பெண்ணிலா
15 கிலும் [5]மலடிருப்பதில்லை. **கர்த்தர்** சகல
நோய்களையும் உன்னைவிட்டு விலக்குவார்;
உனக்குத் தெரிந்திருக்கிற [6]எகிப்தியரின்
கொடிய ரோகங்களில் ஒன்றும் உன்மேல்
வரப்பண்ணாமல், உன்னைப் பகைக்கிற யாவர்
16 மேலும் அவைகளை வரப்பண்ணுவார். உன்
தேவனாகிய **கர்த்தர்** உன்னிடத்தில் ஒப்புக்
கொடுக்கும் சகல ஜனங்களையும் [7]நிர்மூலமாக்
கக்கடவாய்; உன் கண் அவர்களுக்கு இரங்
காதிருப்பதாக; அவர்கள் தேவர்களை நீ சேவி
யாமல் இருப்பாயாக; [8]அது உனக்குக் கண்
17 ணியாயிருக்கும். அந்த ஜாதிகள் என்னிலும்
ஜனம்பெருத்தவைகள், [9]நான் அவர்களைத்
துரத்திவிடுவது எப்படி என்று உன் இருதயத்
18 தில் சொல்லிக்கொண்டாயானால், உன் தேவ
னாகிய **கர்த்தர்** பார்வோனுக்கும் எகிப்தியர்
19 யாவருக்கும் செய்ததையும், உன் கண்கள்
கண்ட பெரிய சோதனைகளையும், [10]அடையா
ளங்களையும் அற்புதங்களையும், உன் தேவனா
கிய **கர்த்தர்** உன்னைப் புறப்படப்பண்ணிக்
காண்பித்த பலத்த கையையும் ஓங்கிய புயத்
தையும் நன்றாய் நினைத்து, [11]அவர்களுக்குப்
பயப்படாதிரு; நீ பார்த்துப் பயப்படுகிற எல்லா

1 ஏசா. 49. 7. 1 கொ. 10. 13. 2 தெச. 3. 3. 1 யோ. 1. 9
2 ஏசா. 59. 18. ரோ. 12. 19
3 லேவி. 26. 3. சங். 105. 8, 9. லூ. 1. 55, 72, 73
4 யோ. 14. 21
5 யாத். 23. 26,
6 யாத். 9. 14
7 உபா. 13. 8
8 யாத். 23. 33. நியா. 8. 27. சங். 106. 36
9 எண். 33. 53
10 உபா. 4. 34
11 உபா. 31. 6
12 யாத். 23. 28
13 உபா. 10. 17
14 யாத். 23. 29, 30
15 யோசு. 10. 24, 42
16 ஏசா. 54. 17
17 யாத். 32. 20
18 நியா. 8. 27
19 எசே. 14. 7. யோசு. 6. 17, 18
20 சங். 136. 16
21 யாத். 16. 4
22 2 நாளா. 32. 31
23 ஆமோ. 2. 10
24 யாத். 16. 2, 3, 15. 12. 14, 35
25 சங். 104. 27, 29. மத். 4. 4
26 நெகே. 9. 21

ஜனங்களுக்கும் உன் தேவனாகிய **கர்த்தர்** அப்
படியே செய்வார். மீதியாயிருந்து உனக்குத் 20
தப்பி ஒளித்துக்கொள்ளுகிறவர்களும் அழிந்து
போகுமட்டும் உன் தேவனாகிய **கர்த்தர்** அவர்
களுக்குள்ளே [12]குளவிகளை அனுப்புவார்.
அவர்களைப் பார்த்துப் பயப்படவேண்டாம்; 21
உங்கள் தேவனாகிய **கர்த்தர்** உங்களுக்குள்ளே
இருக்கிறார், அவர் வல்லமையும் [13]பயங்கரமு
மான தேவன். அந்த ஜாதிகளை உன் தேவ 22
னாகிய **கர்த்தர்** கொஞ்சம் கொஞ்சமாய் உன்
னைவிட்டுத் துரத்திவிடுவார்; [14]நீ அவர்களை ஒரு
மிக்க நிர்மூலமாக்கவேண்டாம்; நிர்மூலமாக்
கினால் காட்டுமிருகங்கள் உன்னிடத்தில் பெரு
கிப்போகும். உன் தேவனாகிய **கர்த்தர்** அவர் 23
களை உன்னிடத்தில் ஒப்புக்கொடுத்து, அவர்
கள் அழியுமட்டும் அவர்களை மிகவும் கலங்
கடிப்பார். அவர்களுடைய ராஜாக்களை [15]உன் 24
கையில் ஒப்புக்கொடுப்பார்; அவர்கள் பேர்
வானத்தின்கீழ் இராதபடிக்கு அவர்களைச் சங்
கரிக்கக்கடவாய்; நீ அவர்களைச் சங்கரித்துத்
தீருமட்டும் ஒருவரும் உனக்கு [16]எதிர்த்து நிற்
கமாட்டார்கள். அவர்கள் தேவர்களின் விக் 25
கிரகங்களை அக்கினியினால் [17]சுட்டெரிக்கக்க
டவாய், நீ அவைகளால் சிக்கிக்கொள்ளாத
படிக்கு, [18]அவைகளில் இருக்கிற வெள்ளியை
யும் பொன்னையும் இச்சியாமலும், அதை எடுத்
துக்கொள்ளாமலும் இருப்பாயாக; அவைகள்
உன் தேவனாகிய **கர்த்தருக்கு** அருவருப்பான
வைகள். அவைகளைப்போல நீ சாபத்துக் 26
குள்ளாகாதபடி அருவருப்பானதை உன் வீட்
டிலே கொண்டுபோகாயாக; [19]அதைச் சீ என்று
வெறுத்து முற்றிலும் அருவருக்கக்கடவாய்,
அது சாபத்திற்குள்ளானது.

நீங்கள் பிழைத்துப் பெருகி, **கர்த்தர்** உங் **8**
கள் பிதாக்களுக்கு ஆணையிட்டுக் கொடுத்த
தேசத்திலே பிரவேசித்து, அதைச் சுதந்தரிக்
கும்படி நான் இன்று உங்களுக்கு விதிக்கிற
எல்லாக் கட்டளைகளின்படியும் செய்யச் சாவ
தானமாயிருப்பீர்களாக. உன் தேவனாகிய 2
**கர்த்தர்** உன்னைச் சிறுமைப்படுத்தும்படிக்கும்,
[20]தம்முடைய கட்டளைகளை நீ கைக்கொள்
வாயோ கைக்கொள்ளமாட்டாயோ என்று
அவர் உன்னைச் சோதித்து, [21]உன் இருதயத்தி
லுள்ளதை நீ அறியும்படிக்கும், [22]உன்னை
இந்த நாற்பது வருஷமளவும் வனாந்தரத்திலே
[23]நடத்திவந்த எல்லா வழியையும் நினைப்பா
யாக. அவர் உன்னைச் சிறுமைப்படுத்தி, 3
[24]உன்னைப் பசியினால் வருத்தி, மனுஷன்
அப்பத்தினால் மாத்திரம் அல்ல, [25]**கர்த்தரு
டைய** வாயிலிருந்து புறப்படுகிற ஒவ்வொரு
வார்த்தையினாலும் பிழைப்பான் என்பதை
உனக்கு உணர்த்தும்படிக்கு, நீயும் உன் பிதாக்
களும் அறியாதிருந்த மன்னாவினால் உன்னைப்
போஷித்தார். இந்த நாற்பது வருஷமும் 4
உன்மேலிருந்த வஸ்திரம் [26]பழையதாய்ப் போ
கவும் இல்லை, உன் கால் வீங்கவும் இல்லை.
ஒருவன் தன் புத்திரனைச் சிட்சிக்கிறதுபோல 5

[1]உன் தேவனாகிய **கர்த்தர்** உன்னைச் சிட்சிக்கி
றார் என்று நீ உன் இருதயத்தில் அறிந்து
6 கொள்வாயாக. ஆகையால், உன் தேவனாகிய
**கர்த்தருடைய** வழிகளில் நடந்து, அவருக்குப்
பயப்படும்படிக்கு, அவருடைய கற்பனைகளைக்
7 கைக்கொள்ளக்கடவாய். உன் தேவனாகிய
**கர்த்தர்** உன்னை நல்ல தேசத்திலே பிரவேசிக்
கப்பண்ணுகிறார்; அது பள்ளத்தாக்குகளிலும்
மலைகளிலுமிருந்து புறப்படுகிற [2]ஆறுகளும்
8 ஊற்றுகளும் ஏரிகளுமுள்ள தேசம்; அது
கோதுமையும் வாற்கோதுமையும் திராட்சச்
செடிகளும் அத்திமரங்களும் மாதளஞ்செடிக
ளுமுள்ள தேசம்; அது ஒலிவமரங்களும்,
9 எண்ணெயும் தேனுமுள்ள தேசம்; அது
தாழ்ச்சியில்லாமல் அப்பம் புசிக்கத்தக்கதும்
ஒன்றும் உனக்குக் குறைவுபடாததுமான தே
சம்; அது கல்லுகள் இரும்பாயிருக்கிறதும்,
[3]செம்பு வெட்டியெடுக்கத்தக்க மலைகளுள்ள
10 துமான தேசம். ஆகையால், நீ புசித்துத் திர்ப்
தியடைந்திருக்கையில், [4]உன் தேவனாகிய
**கர்த்தர்** உனக்குக் கொடுத்த அந்த நல்ல
தேசத்துக்காக [5]அவரை ஸ்தோத்திரிக்கக்கட
11 வாய். உன் தேவனாகிய **கர்த்தரை** மறவாத
படிக்கும், நான் இன்று உனக்கு விதிக்கிற
அவருடைய கற்பனைகளையும் நியாயங்களையும்
கட்டளைகளையும் கைக்கொள்ளாமற் போகாதப
12 டிக்கும் எச்சரிக்கையாயிரு. நீ புசித்துத் திர்ப்
தியாகி, [6]நல்ல வீடுகளைக் கட்டி, அவைகளில்
13 குடியிருக்கும்போதும், உன் ஆடுமாடுகள் திர
ட்சியாகி, உனக்கு வெள்ளியும் பொன்னும்
பெருகி, உனக்கு உண்டானவையெல்லாம்
14 வர்த்திக்கும்போதும், உன் இருதயம் மேட்டி
மையடையாமலும், [7]உன்னை அடிமைத்தன
வீடாகிய எகிப்திலிருந்து [8]புறப்படப்பண்ணி
15 னவரும், உன்னுடைய பின் நாட்களில் உன
க்கு நன்மைசெய்யும்பொருட்டு, [9]உன்னைச்
சிறுமைப்படுத்தி, உன்னைச் சோதித்து, கொள்
ளிவாய்ச்சர்ப்பங்களும் தேள்களும், [10]தண்ணீ
ரில்லாத வறட்சியுமுள்ள பயங்கரமான பெ
ரிய [11]வனாந்தரவழியாய் உன்னை அழைத்து
வந்தவரும், உனக்காகப் பாறையான கல்மலை
யிலிருந்து தண்ணீர் [12]புறப்படப்பண்ணினவ
16 ரும், உன் பிதாக்கள் அறியாத மன்னாவினால்
[13]வனாந்தரத்திலே உன்னைப் போஷித்துவந்த
வருமான உன் தேவனாகிய **கர்த்தரை** [14]நீ மற
17 வாமலும், என் சாமர்த்தியமும் என் கைப்
பெலனும் இந்த ஐசுவரியத்தை எனக்குச் சம்
பாதித்தது [15]என்று நீ உன் இருதயத்தில் சொ
ல்லிக்கொள்ளாமலும் இருக்க எச்சரிக்கையா
18 யிருந்து, உன் தேவனாகிய **கர்த்தரை** நினைப்
பாயாக; அவரே உன் பிதாக்களுக்கு ஆணை
யிட்டுக் கொடுத்த தம்முடைய உடன்படிக்கை
யை உறுதிப்படுத்தும்படி, [16]இந்நாளில் உன
க்கு உண்டாயிருக்கிறதுபோல, ஐசுவரியத்
தைச் சம்பாதிக்கிறதற்கான பெலனை உனக்
19 குக் கொடுக்கிறவர். உன் தேவனாகிய **கர்த்**
**தரை** நீ மறந்து, வேறே தேவர்களைப் பின்

[1] 2 சாமு. 7. 14. சங். 89. 32. நீதி. 3. 12. எபி. 12. 5, 6. வெளி. 3. 19
[2] உபா. 11. 10-12
[3] உபா. 33. 25
[4] 1 கொ. 10. 31
[5] சங். 103. 2. நீதி. 3. 9
[6] நீதி. 30. 9
[7] 1 கொ. 4. 7
[8] சங். 106. 21
[9] எரே. 2. 5, 6. எபி. 12. 11
[10] எண். 21. 6
[11] ஏசா. 63. 12-14
[12] எண். 20. 11. 1 கொ. 10. 4
[13] யாத். 16. 15
[14] சங். 106. 21. எரே. 2. 6
[15] 1 கொ. 4. 7
[16] நீதி. 10. 22. ஓசி. 2. 8
[17] உபா. 4. 26
[18] தானி. 9 11, 12
[19] உபா. 11. 31. பேதுரு. 3. 16
[20] எண். 13. 22, 28, 33
[21] யாத். 23. 31
[22] உபா. 8. 17. ரோ. 11. 6, 20. 1 கொ. 4. 7
[23] ஆதி. 15. 16. லேவி. 18. 24, 25
[24] தீத். 3. 5
[25] ஆதி. 12. 7: 17. 8
[26] யாத். 32. 9
[27] யாத். 14. 11
[28] யாத். 32. 1-6

பற்றி அவர்களைச் சேவித்து, அவர்களைப்
பணிந்துகொள்வாயானால், நிச்சயமாய் [17]அழி
ந்துபோவீர்கள் என்று இன்று உங்களுக்குச்
சாட்சியாய் அறிவிக்கிறேன். உன் தேவ 20
னாகிய **கர்த்தருடைய** சத்தத்திற்கு நீங்கள்
கீழ்ப்படியாமற்போவதினால், **கர்த்தர்** உங்க
ளுக்கு முன்பாக அழித்த ஜாதிகளைப்போல
நீங்களும் [18]அழிவீர்கள்.

இஸ்ரவேலே, கேள்: நீ இப்பொழுது **9**
யோர்தானைக் கடந்து, [19]உன்னிலும் ஜனம்
பெருத்ததும் பலத்ததுமான ஜாதிகளைத் துரத்
தி, வானத்தை யளாவிய மதில்சூழ்ந்த பெரிய
பட்டணங்களைப் பிடித்து, ஏனாக்கின் புத்திர 2
ராகிய பெரியவர்களும் நெடியவர்களுமான
ஜனங்களைத் துரத்திவிடப்போகிறாய்; இவர்
கள் செய்தியை நீ அறிந்து, [20]ஏனாக் புத்திர
ருக்கு முன்பாக நிற்பவன் யார் என்று சொல்
லப்படுவதை நீ கேட்டிருக்கிறாய். உன் தேவ 3
னாகிய **கர்த்தர்** உனக்கு முன்பாகக் கடந்து
போகிறவர் என்பதை இன்று அறியக்கட
வாய்; அவர் பட்சிக்கிற அக்கினியைப்போல
அவர்களை அழிப்பார்; அவர்களை உனக்கு
முன்பாக விழப்பண்ணுவார்; இவ்விதமாய்க்
**கர்த்தர்** உனக்குச் சொன்னபடியே, [21]நீ அவர்
களைச் சீக்கிரமாய்த் துரத்தி, அவர்களை [22]அழி
ப்பாய். உன் தேவனாகிய **கர்த்தர்** அவர்களை 4
உனக்கு முன்பாகத் துரத்துகையில், நீ உன்
இருதயத்திலே: என் நீதியினிமித்தம் இந்தத்
தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளும்படி **கர்த்**
**தர்** என்னை அழைத்துவந்தார் என்று சொல்
லாயாக; அந்த ஜாதிகளுடைய [23]ஆகாமியத்தி
னிமித்தமே **கர்த்தர்** அவர்களை உனக்கு முன்
பாகத் துரத்திவிடுகிறார். உன் நீதியினிமித்த 5
மும் [24]உன் இருதயத்தினுடைய உத்தமத்தி
னிமித்தமும் நீ அவர்கள் தேசத்தைச் சுதந்த
ரிக்கும்படி பிரவேசிப்பதில்லை; அந்த ஜாதிக
ளுடைய ஆகாமியத்தினிமித்தமாகவும், ஆபிர
காம் ஈசாக்கு யாக்கோபு என்னும் உன் பிதாக்
களுக்குக் **கர்த்தர்** ஆணையிட்டுச் சொன்ன
வார்த்தையை [25]நிறைவேற்றும்படியாகவும்,
உன் தேவனாகிய **கர்த்தர்** அவர்களை உனக்கு
முன்பாகத் துரத்திவிடுகிறார். ஆகையால், 6
உன் நீதியினிமித்தம் உன் தேவனாகிய **கர்த்**
**தர்** உனக்கு அந்த நல்ல தேசத்தைச் சுதந்தரிக்
கக் கொடார் என்பதை அறியக்கடவாய்; நீ
[26]வணங்காக் கழுத்துள்ள ஜனம். நீ வனாந்த 7
ரத்தில் உன் தேவனாகிய **கர்த்தருக்குக்** கடுங்
கோபம் உண்டாக்கினதை நினை, அதை மற
வாயாக; நீங்கள் எகிப்துதேசத்திலிருந்து புற
ப்பட்ட நாள்முதல், [27]இவ்விடத்தில் வந்து
சேருமட்டும், **கர்த்தருக்கு** விரோதமாய்க் கல
கம்பண்ணினீர்கள். ஓரேபிலும் [28]நீங்கள் **கர்த்** 8
**தருக்குக்** கடுங்கோபம் உண்டாக்கினதினால்,
**கர்த்தர்** உங்களை அழிக்கத்தக்கதான உக்கிரங்
கொண்டார். **கர்த்தர்** உங்களோடே பண்ணின 9
உடன்படிக்கைப் பலகைகளாகிய கற்பலகை
களைப் பெற்றுக்கொள்ளும்படி நான் மலையில்

றினபோது, [1]நாற்பதுநாள் இரவும் பகலும்
மலையில் தங்கி அப்பம் புசியாமலும் தண்ணீர்
10 குடியாமலும் இருந்தேன். அப்பொழுது தே
வனுடைய விரலினால் எழுதியிருந்த [2]இரண்டு
கற்பலகைகளைக் கர்த்தர் என்னிடத்தில்
ஒப்புக்கொடுத்தார்; சபை கூடியிருந்த நாளில்
கர்த்தர் மலையிலே அக்கினியின் நடுவிலிருந்து
உங்களுடனே பேசின வார்த்தைகளின்படி
11 யே அவைகளில் எழுதியிருந்தது. இரவும்
பகலும் நாற்பதுநாள் முடிந்து, கர்த்தர் என
க்கு அந்த உடன்படிக்கையின் [3]இரண்டு கற்
12 பலகைகளைக் கொடுக்கிறபோது, கர்த்தர்
என்னை நோக்கி: நீ எழுந்து, சீக்கிரமாய் இவ்
விடம் விட்டு, இறங்கிப்போ; நீ எகிப்திலிரு
ந்து அழைத்துக்கொண்டுவந்த உன் ஜனங்கள்
தங்களைக் கெடுத்துக்கொண்டார்கள்; நான்
அவர்களுக்கு விதித்த வழியை அவர்கள் சீக்
கிரமாக விட்டு விலகி, [4]வார்ப்பிக்கப்பட்ட
விக்கிரகத்தைத் தங்களுக்காக உண்டாக்கினார்
13 கள் என்றார். பின்னும் கர்த்தர் என்னை
நோக்கி: இந்த ஜனங்களைப் பார்த்தேன்; அது
14 [5]வணங்காக் கழுத்துள்ள ஜனம். ஆகையால்,
நான் அவர்களை அழித்து, அவர்கள் பேரை
வானத்தின்கீழ் அற்றுப்போகப்பண்ணும்படி,
[6]நீ என்னை விட்டுவிடு; அவர்களைப்பார்க்கி
லும் உன்னைப் [7]பலத்ததும் ஜனம் பெருத்தது
15 மான ஜாதியாக்குவேன் என்றார். அப்பொ
ழுது நான் திரும்பி மலையிலிருந்து இறங்கி
னேன், [8]மலையானது அக்கினி பற்றியெரிந்து
கொண்டிருந்தது; உடன்படிக்கையின் இர
ண்டு பலகைகளும் [9]என் இரண்டு கைகளில்
16 இருந்தது. நான் பார்த்தபோது, நீங்கள் உங்
கள் தேவனாகிய கர்த்தருக்கு விரோதமாகப்
பாவஞ்செய்து, [10]வார்ப்பிக்கப்பட்ட கன்றுக்
குட்டியை உங்களுக்கு உண்டாக்கி, கர்த்தர்
உங்களுக்கு விதித்த வழியைச் சீக்கிரமாய்
17 விட்டு விலகினதைக் கண்டேன். அப்பொ
ழுது நான் என் இரண்டு கைகளிலும் இருந்த
அந்த இரண்டு பலகைகளையும் ஓங்கி எறிந்து,
அவைகளை உங்கள் கண்களுக்கு முன்பாக
18 உடைத்துப்போட்டேன். கர்த்தரைக் கோ
பப்படுத்துவதற்கு நீங்கள் அவருடைய சமுகத்
தில் பொல்லாப்புச் செய்து நடப்பித்த உங்க
ளுடைய சகல பாவங்கள் நிமித்தமும், நான்
கர்த்தருக்கு முன்பாக முன்போல இரவும்
பகலும் நாற்பதுநாள் விழுந்துகிடந்தேன்;
[11]நான் அப்பம் புசிக்கவுமில்லை, தண்ணீர்
19 குடிக்கவுமில்லை. கர்த்தர் உங்களை அழிக்
கும்படி உங்கள்மேல் கொண்டிருந்த கோபத்
திற்கும் உக்கிரத்திற்கும் [12]பயந்திருந்தேன்;
கர்த்தர் அந்த முறையும் என் மன்றாட்டைக்
20 கேட்டார். ஆரோன்மேலும் கர்த்தர் மிகவும்
கோபங்கொண்டு, அவனை அழிக்கவேண்டும்
என்றிருந்தார்; அப்பொழுது ஆரோனுக்காக
21 வும் விண்ணப்பம்பண்ணினேன். உங்கள்
பாவக்கிரியையாகிய [13]அந்தக் கன்றுக்குட்டி
யை நான் எடுத்து அக்கினியில் எரித்து,

அதை நொறுக்கி, தூளாய்ப் போகுமட்டும்
அரைத்து, அந்தத் தூளை மலையிலிருந்து ஓடு
கிற ஆற்றிலே போட்டுவிட்டேன். தபேரா 22
விலும், மாசாவிலும், கிப்ரோத் அத்தாவாவி
லும் கர்த்தருக்குக் [14]கடுங்கோபம் உண்டாக்கி
னீர்கள். நீங்கள் போய், நான் உங்களுக்குக் 23
கொடுத்த தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுங்
கள் என்று கர்த்தர் காதேஸ்பர்னேயாவிலிரு
ந்து உங்களை அனுப்புகையிலும், நீங்கள் உங்
கள் தேவனாகிய கர்த்தரை விசுவாசியாமலும்,
[15]அவருடைய சத்தத்துக்குச் செவிகொடாம
லும், அவருடைய வாக்குக்கு விரோதமாய்க்
[16]கலகம்பண்ணினீர்கள். நான் உங்களை அறி 24
ந்த [17]நாள்முதற்கொண்டு, நீங்கள் கர்த்தருக்கு
விரோதமாகக் கலகம்பண்ணுகிறவர்களாயிருந்
தீர்கள். கர்த்தர் உங்களை அழிப்பேன் என்று 25
சொன்னபடியினால், நான் முன்போல் கர்த்
தரின் சமுகத்தில் இரவும் பகலும் நாற்பது
நாள் விழுந்துகிடந்தேன்; அப்பொழுது நான்
கர்த்தரை நோக்கிப் பண்ணின விண்ணப்ப
மாவது: கர்த்தராகிய ஆண்டவரே, [18]தேவ 26
ரீர் உம்முடைய மகத்துவத்தினாலே மீட்டு,
பலத்த கையினால் எகிப்திலிருந்து கொண்டு
வந்த உமது ஜனத்தையும், உமது சுதந்தரத்
தையும் அழிக்காதிருப்பீராக. கர்த்தர் அவர்க 27
ளுக்கு வாக்குத்தத்தம்பண்ணியிருந்த தேசத்
தில் அவர்களைப் பிரவேசிக்கப்பண்ணக் கூடா
மற்போனபடியினாலும், [19]அவர்களை வெறுத்த
படியினாலும், அவர்களை வனாந்தரத்தில் கொ
ன்றுபோடும்படிக்கே கொண்டுவந்தார் என்று
நாங்கள் விட்டுப் புறப்படும்படி நீர் செய்த தே
சத்தின் குடிகள் சொல்லாதபடிக்கு, தேவ 28
ரீர் இந்த ஜனங்களின் முரட்டாட்டத்தையும்,
இவர்கள் ஆகாமியத்தையும், இவர்கள் பாவத்
தையும் பாராமல், உமது தாசராகிய ஆபிரகாம்
ஈசாக்கு யாக்கோபு என்பவர்களை நினைத்தரு
ளும். நீர் உமது மகா பலத்தினாலும், ஓங்கிய 29
புயத்தினாலும் புறப்படப்பண்ணின இவர்கள்
உமது ஜனமும் உமது சுதந்தரமுமாயிருக்கிறார்
களே [20]என்று விண்ணப்பம்பண்ணினேன்.

அக்காலத்திலே கர்த்தர் என்னை நோக்கி: 10
நீ முந்தினவைகளுக்கொத்த இரண்டு [21]கற்பல
கைகளை வெட்டிக்கொண்டு, மலையின்மேல்
ஏறி, என்னிடத்தில் வா; ஒரு மரப்பெட்டி
யையும் [22]செய்வாயாக. நீ உடைத்துப்போட்ட 2
முந்தின பலகைகளில் இருந்த வார்த்தைகளை
நான் அந்தப் பலகைகளில் எழுதுவேன்; நீ
அவைகளைப் பெட்டியிலே வைப்பாயாக என்
றார். அப்படியே நான் சீத்திம் மரத்தினால் 3
[23]ஒரு பெட்டியைச் செய்து, முந்தினவைக
ளுக்கொத்த இரண்டு கற்பலகைகளை வெட்டி,
அவைகளை என் கையிலே எடுத்துக்கொண்டு
மலையில் ஏறினேன். முன்னே சபைகூடி 4
வந்தநாளில் கர்த்தர் மலையில் அக்கினி நடு
விலிருந்து உங்களுக்கு விளம்பின பத்துக்
கற்பனைகளையும் அவர் முன் எழுதியிருந்த
பிரகாரம் அந்தப்பலகைகளில் [24]எழுதி, அவை

[1] யாத். 34. 28
[2] யாத். 31. 18. 19. 18, 19
[3] எபி. 8. 6-8, 10
[4] நியா. 2. 17. சங். 78. 57. ஓசி. 6. 4
[5] அப். 7. 51
[6] யாத். 32. 10. உபா. 29. 20
[7] எண். 14. 12
[8] யாத். 32. 15
[9] யாத். 19. 18
[10] யாத். 32. 19
[11] யாத். 32. 10–14
[12] ஓசி. 12. 4, 5
[13] யாத். 32. 20. ஏசா. 31. 7
[14] யாத். 17. 7. எண். 11. 1–4, 34
[15] சங். 78. 22. 106. 24, 25
[16] எண். 13, 14. அதி
[17] உபா. 31. 27
[18] யாத். 32. 11. முத
[19] எண். 14. 16
[20] நெகே. 1. 10. சங். 100. 3
[21] யாத். 34. 1. முத
[22] யாத். 25. 10, 16, 21. எபி. 9. 4
[23] யாத். 37. 1
[24] யாத். 34. 28, 29; 40. 20

5 களை என்னிடத்தில் தந்தார். அப்பொழுது
நான் திரும்பி மலையிலிருந்து இறங்கி, அந்தப்
பலகைகளை நான் செய்த பெட்டியிலே வைத்
தேன்; **கர்த்தர்** எனக்குக் கட்டளையிட்டப
டியே அவைகள் அதிலே வைத்திருக்கிறது.
6 பின்பு இஸ்ரவேல் புத்திரர் பெனெயாக்கா
னுக்கடுத்த பேரோத்திலேயிருந்து மோசெரா
வுக்குப் [1]பிரயாணம்பண்ணினார்கள்; அங்கே
ஆரோன் மரித்து அடக்கம்பண்ணப்பட்டான்;
அவன் ஸ்தானத்திலே அவன் குமாரனாகிய
7 எலெயாசார் ஆசாரியனானான். அங்கேயிருந்து
குத்கோதாவுக்கும், குத்கோதாவிலிருந்து ஆறு
களுள்ள நாடாகிய யோத்பாத்துக்கும் பிரயா
8 ணம்பண்ணினார்கள். அக்காலத்திலே [2]**கர்த்
தருடைய** உடன்படிக்கைப்பெட்டியைச் சும
ப்பதற்கும், இந்நாள்வரைக்கும் நடந்துவருகி
றதுபோல, **கர்த்தருடைய** சந்நிதியிலே நின்று
அவருக்கு ஆராதனைசெய்வதற்கும், அவர் நாமத்
தைக்கொண்டு ஆசீர்வதிப்பதற்கும், **கர்த்தர்**
லேவியின் கோத்திரத்தைப் பிரித்தெடுத்தார்.
9 ஆகையால் லேவிக்கு அவன் சகோதரரோடே
[3]பங்கும் சுதந்தரமும் இல்லை; உன் தேவனா
கிய **கர்த்தர்** அவனுக்குச் சொன்னபடி, **கர்த்
10 தரே** அவனுக்குச் சுதந்தரம். நான் முந்தின
பிரகாரமாகவே நாற்பதுநாள் இரவும் பகலும்
மலையில் இருந்தேன்; **கர்த்தர்** அந்த முறையும்
என் [4]மன்றாட்டைக் கேட்டு, உன்னை அழிக்
11 காமல் விட்டார். **கர்த்தர்** என்னை நோக்கி:
நான் கொடுப்பேன் என்று அவர்களுடைய
பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்தில் அவர்
கள் போய் அதைச் சுதந்தரித்துக்கொள்ளும்
படி, நீ எழுந்து, ஜனத்திற்கு முன்பாகப் பிர
யாணப்பட்டுப் போ என்றார்.
12 இப்பொழுதும் இஸ்ரவேலே, நீ உன் தேவ
னாகிய **கர்த்தருக்குப்** [5]பயந்து, அவர் [6]வழிக
ளிலெல்லாம் நடந்து, அவரிடத்தில் [7]அன்பு
கூர்ந்து, உன் முழு இருதயத்தோடும் உன்
முழு ஆத்துமாவோடும் உன் தேவனாகிய **கர்த்
13 தரைச்** [8]சேவித்து, நான் இன்று உனக்குக்
கற்பிக்கிற **கர்த்தருடைய** கற்பனைகளையும்
அவருடைய கட்டளைகளையும் உனக்கு [9]நன்
மையுண்டாகும்படி கைக்கொள்ளவேண்டும்
என்பதையே அல்லாமல், வேறே எதை உன்
தேவனாகிய **கர்த்தர்** உன்னிடத்தில் கேட்கி
14 றார். இதோ, வானங்களும் வானாதிவானங்
களும், [10]பூமியும் அதிலுள்ள யாவும், உன்
15 தேவனாகிய **கர்த்தருடையவைகள்**. ஆனாலும்
**கர்த்தர்** உன் பிதாக்கள்மேல் அன்புகூரும்
பொருட்டு அவர்களிடத்தில் பிரியம் வைத்து,
அவர்களுக்குப்பின் அவர்களுடைய சந்ததி
யாகிய உங்களை, இந்நாளில் இருக்கிறபடியே,
சகல ஜாதிகளுக்குள்ளும் தமக்கென்று தெரிந்
16 துகொண்டார். ஆகையால் நீங்கள் இனி உங்
கள் பிடரியைக் கடினப்படுத்தாமல், உங்கள்
இருதயத்தின் நுனித்தோலை [11]விருத்தசேத
17 னம்பண்ணுங்கள். உங்கள் தேவனாகிய **கர்த்
தர்** தேவாதி தேவனும், [12]கர்த்தாதி கர்த்தரும்,

மகத்துவமும் வல்லமையும் பயங்கரமுமான
தேவனுமாயிருக்கிறார்; அவர் பட்சபாதம் பண்
ணுகிறவரும் அல்ல, பரிதானம் வாங்குகிற
வரும் அல்ல. அவர் திக்கற்ற பிள்ளைக்கும் 18
விதவைக்கும் நியாயஞ்செய்கிறவரும், [13]அந்
நியன்மேல் அன்புவைத்து அவனுக்கு அன்
னவஸ்திரம் கொடுக்கிறவருமாய் இருக்கிறார்.
நீங்களும் எகிப்துதேசத்தில் அந்நியராயிருந் 19
தபடியால், [14]அந்நியனைச் சிநேகிப்பீர்களாக.
உன் தேவனாகிய **கர்த்தருக்குப்** பயந்து, அவ 20
ரைச் சேவித்து, அவரைப் பற்றிக்கொண்டி
ருந்து, [15]அவருடைய நாமத்தைக்கொண்டு
ஆணையிடுவாயாக. அவரே உன் [16]புகழ்ச்சி; 21
உன் கண்கண்ட இந்தப் பெரிய பயங்கரமான
காரியங்களை உன்னிடத்தில் செய்த உன்
தேவன் அவரே. உன் பிதாக்கள் எழுபது 22
பேராய் எகிப்துக்குப் [17]போனார்கள்; இப்பொ
ழுதோ உன் தேவனாகிய **கர்த்தர்** உன்னைத்
திரட்சியிலே வானத்தின் நட்சத்திரங்களைப்
போலாக்கினார்.

நீ உன் தேவனாகிய **கர்த்தரிடத்தில்** அன்பு **11**
கூர்ந்து, [18]அவருடைய பிரமாணங்களையும்,
அவருடைய கட்டளைகளையும், அவருடைய
நியாயங்களையும், அவருடைய கற்பனைகளை
யும் எப்பொழுதும் கைக்கொள்வாயாக. உங் 2
கள் தேவனாகிய **கர்த்தர்** செய்த [19]சிட்சையை
யும், அவருடைய மகத்துவத்தையும், அவரு
டைய பலத்த கையையும், அவருடைய ஓங்
கிய புயத்தையும், அவர் எகிப்தின் நடுவிலே 3
எகிப்தின் ராஜாவாகிய பார்வோனுக்கும்,
அவன் தேசம் அனைத்திற்கும் செய்த அவரு
டைய அடையாளங்களையும், [20]அவருடைய
கிரியைகளையும், எகிப்திய சேனையும் அவர் 4
கள் குதிரைகளும் இரதங்களும் உங்களைப்
பின்தொடர்ந்து வருகையில், **கர்த்தர்** சிவந்த
சமுத்திரத்தின் ஜலத்தை [21]அவர்கள்மேல் புர
ளப்பண்ணி, இந்நாள்வரைக்கும் இருக்கிற
துபோல, அவர்களை அழித்த அவருடைய
செய்கையையும், நீங்கள் இவ்விடத்திற்கு வரு 5
மளவும் அவர் உங்களுக்கு வனாந்தரத்தில் செய்
ததையும், பூமி தன் வாயைத் திறந்து, எலி 6
யாப் என்னும் ரூபன் குமாரனுடைய மக்க
ளான தாத்தானையும் அபிராமையும், [22]அவர்
கள் குடும்பங்களையும் அவர்கள் கூடாரங்களை
யும், இஸ்ரவேலர் எல்லாருக்குள்ளும் அவர்
களுக்கு இருந்த அவர்களுடைய சகல பொ
ருள்களையும் விழுங்கும்படி செய்ததையும்,
அறியாமலும் காணாமலும் இருக்கிற உங்கள்
பிள்ளைகளுடன் நான் பேசவில்லை; இன்று
நீங்களே அறிந்துகொள்ளுங்கள். **கர்த்தர்** 7
செய்த மகத்துவமான கிரியைகளையெல்லாம்
உங்கள் கண்கள் அல்லவோ கண்டது. ஆகை 8
யால் நீங்கள் பலப்படும்படிக்கும், நீங்கள் சுதந் 9
தரிக்கப்போகிற தேசத்துக்குள் பிரவேசித்து
அதைச் சுதந்தரிக்கும்படிக்கும், **கர்த்தர்** உங்
கள் பிதாக்களுக்கும் அவர்கள் சந்ததிக்கும்
கொடுப்பேன் என்று அவர்களுக்கு ஆணை

1 எண். 33. 31. ழி
2 எண். 3. 6—9: 4. 15; 6. 28. Cரா. 12. 7
3 எசே. 44. 28
4 யாத். 32. 14
5 சங். 54. 9
6 உபா. 5. 33
7 சங். 18. 1. மத். 22. 37
8 யோபு 36. 11. Cரா. 1. 9. எபி. 12. 28
9 உபா. 6. 24
10 1 இரா. 8. 27. சங். 115. 16; 148. 4; 24. 1
11 எரே. 4. 4. Cரா. 2. 28, 29
12 யோசு. 22. 22. தானி. 2. 47. வெளி. 17. 14. தெச. 9. 32. எபே. 6. 9
13 சங். 68. 5
14 லேவி. 19. 33
15 அப். 11. 23. ஏசா. 45. 23
16 எரே. 17. 14
17 ஆதி. 46. 27. அப். 7. 14
18 யாத். 10. 12
19 உபா. 8. 5
20 சங். 78. 12
21 யாத். 14. 28–31
22 எண். 16. 1, 31

யிட்ட பாலும் தேனும் ஓடுகிற தேசத்தில்
நீங்கள் நீடித்து வாழும்படிக்கும், இன்று
நான் உங்களுக்குக் கற்பிக்கிற கற்பனைகளை
10 யெல்லாம் கைக்கொள்வீர்களாக. நீ சுதந்தரிக்
கப்போகிற தேசம் நீ விட்டுவந்த எகிப்துதேசத்
தைப்போல் இராது; அங்கே நீ விதையை
விதைத்து, [1]கீரைத்தோட்டத்திற்கு நீர்ப்பாய்ச்
சுகிறதுபோல உன் காலால் நீர்ப்பாய்ச்சி வந்
11 தாய். நீங்கள் சுதந்தரிக்கப்போகிற தேசமோ,
[2]மலைகளும் பள்ளத்தாக்குகளுமுள்ள தேசம்;
அது வானத்தின் மழைத்தண்ணீரைக் குடிக்
12 கும் தேசம்; அது உன் தேவனாகிய **கர்த்தர்**
விசாரிக்கிற [3]தேசம், வருஷத்தின் துவக்க
முதல் வருஷத்தின் முடிவுமட்டும் எப்பொ
ழுதும் உன் தேவனாகிய **கர்த்தரின்** கண்கள்
அதின்மேல் வைக்கப்பட்டிருக்கும்.
13 நீங்கள் உங்கள் தேவனாகிய **கர்த்தரிடத்தில்**
உங்கள் முழு இருதயத்தோடும் உங்கள் முழு
ஆத்துமாவோடும் அன்புகூர்ந்து, [4]அவரைச்
சேவிக்கும்படி, நான் இன்று உங்களுக்குக்
கற்பிக்கிற என் கற்பனைகளுக்குக் கீழ்ப்படிந்
14 தால், நீ உன் தானியத்தையும் உன் திராட்சர
சத்தையும் உன் எண்ணெயையும் சேர்க்கும்
படிக்கு, நான் ஏற்றகாலத்தில் உங்கள் தேசத்
தில் முன்மாரியையும் பின்மாரியையும் [5]பெய்
15 யப்பண்ணி, மிருகஜீவன்களுக்காக உன் வெ
ளிகளிலே புல் முளைக்கும்படி செய்வேன்,
[6]நீ சாப்பிட்டுத் திர்ப்தியடைவாய் என்கிறார்.
16 உங்கள் இருதயம் [7]வஞ்சிக்கப்படாமலும்,
நீங்கள் வழிவிலகி அந்நிய தேவர்களைச் சே
வித்து அவர்களை நமஸ்கரியாமலும் இருக்கும்
17 படி [8]எச்சரிக்கையாயிருங்கள். இல்லாவிடில்
**கர்த்தருடைய** கோபம் உங்கள்மேல் மூண்டு,
மழை பெய்யாமற்போகவும், தேசம் தன் பல
னைக் கொடாமலிருக்கவும் [9]வானத்தை அடை
த்துப்போடுவார்; **கர்த்தர்** உங்களுக்குக் கொ
டுத்த நல்ல தேசத்திலிருந்து நீங்கள் சீக்கிரத்
18 தில் அழிந்துபோவீர்கள். ஆகையால் **கர்த்தர்**
உங்கள் பிதாக்களுக்குக் கொடுப்பேன் என்று
அவர்களுக்கு ஆணையிட்ட தேசத்தில் உங்கள்
நாட்களும், உங்கள் பிள்ளைகளின் நாட்களும்,
*பூமியின்மேல் வானம் இருக்கும் நாட்களைப்
19 போல அநேகமாயிருக்கும்படிக்கு, நீங்கள்
என் வார்த்தைகளை உங்கள் இருதயத்திலும்
உங்கள் ஆத்துமாவிலும் பதித்து, [10]அவைகளை
உங்கள் கையின்மேல் அடையாளமாகக் கட்டி,
உங்கள் கண்களின் நடுவே ஞாபகக்குறியாக
20 வைத்து, அவைகளை உங்கள் பிள்ளைகளுக்கு
உபதேசித்து, [11]நீங்கள் வீட்டில் உட்கார்ந்திருக்
கிறபோதும், வழியிலே நடக்கிறபோதும், படு
த்துக்கொள்ளுகிறபோதும், எழுந்திருக்கிற
போதும் அவைகளைக்குறித்துப் பேசுவீர்க
21 ளாக. அவைகளை உங்கள் வீட்டு நிலைகளி
லும் உங்கள் வாசல்களிலும் எழுதுவீர்களாக.
22 நீங்கள் உங்கள் தேவனாகிய **கர்த்தரிடத்தில்**
அன்புகூர்ந்து, அவர் வழிகளிலெல்லாம்
நடந்து, அவரைப் பற்றிக்கொண்டிருக்கும்

படி, [12]நான் உங்களுக்குச் செய்யக் கற்பிக்கிற
இந்தக் கற்பனைகளையெல்லாம் ஜாக்கிரதை
யாய்க் கைக்கொள்வீர்களானால், **கர்த்தர்** உங் 23
களுக்கு முன்பாக அந்த ஜாதிகளையெல்லாம்
[13]துரத்திவிடுவார்; உங்களைப்பார்க்கிலும் ஜனம்
பெருத்த பலத்த ஜாதிகளை நீங்கள் துரத்துவீர்
கள். உங்கள் உள்ளங்கால் மிதிக்கும் இட 24
மெல்லாம் [14]உங்களுடையதாயிருக்கும்; வனாந்
தரத்தையும் லீபனோனையும் தொடங்கி, [15]ஐபி
ராத்து நதியையும் தொடங்கி, கடைசிச் சமுத்
திரம்வரைக்கும் உங்கள் எல்லையாயிருக்கும்.
உங்கள்முன் ஒருவரும் எதிர்த்து நிற்பதில்லை; 25
உங்கள் தேவனாகிய **கர்த்தர்** உங்களுக்குச்
சொன்னபடி உங்களால் உண்டாகும் பயமும்
கெடியும் [16]நீங்கள் மிதிக்கும் பூமியின்மேலெல்
லாம் வரப்பண்ணுவார்.
இதோ, இன்று நான் உங்களுக்கு முன்பாக 26
ஆசீர்வாதத்தையும் [17]சாபத்தையும் வைக்கி
றேன். இன்று நான் உங்களுக்குக் கற்பிக்கிற 27
உங்கள் தேவனாகிய **கர்த்தரின்** கற்பனைகளுக்
குக் கீழ்ப்படிந்தீர்களானால் ஆசீர்வாதமும்,
எங்கள் தேவனாகிய **கர்த்தரின்** கற்பனைகளுக் 28
குக் கீழ்ப்படியாமல், இன்று நான் உங்களுக்கு
விதிக்கிற வழியை விட்டு விலகி, நீங்கள் அறி
யாத வேறே தேவர்களைப் பின்பற்றுவீர்களா
னால் சாபமும் வரும்.
நீ சுதந்தரிக்கப்போகிற தேசத்தில் உன் 29
தேவனாகிய **கர்த்தர்** உன்னைப் பிரவேசிக்கப்
பண்ணும்போது, கெரிசீம் மலையின்மேல்
ஆசீர்வாதத்தையும் [18]ஏபால் மலையின்மேல்
சாபத்தையும் கூறக்கடவாய். அவைகள் யோர் 30
தானுக்கு அப்புறத்திலே சூரியன் அஸ்தமிக்
கிற மேற்கு வழியாய்க் கானானியர் குடியிருக்
கிற நாட்டுவெளியிலே கில்காலுக்கு எதிரான
மோரே என்னும் சமபூமியின் அருகேயல்
லவோ இருக்கிறது? உங்கள் தேவனாகிய 31
**கர்த்தர்** உங்களுக்குக் கொடுக்கிற தேசத்தைச்
சுதந்தரிப்பதற்கு, நீங்கள் யோர்தானைக் கடந்
துபோய், அதைச் சுதந்தரித்துக்கொண்டு,
அதிலே குடியிருப்பீர்கள். ஆகையால் உங்க 32
ளுக்கு இன்று நான் ஏற்படுத்துகிற சகல கட்
டளைகளையும், நியாயங்களையும் கைக்கொண்டு
[19]நடக்கக்கடவீர்கள்.

உங்கள் பிதாக்களின் தேவனாகிய **கர்த்தர்** **12**
உங்களுக்குச் சுதந்தரிக்கக் கொடுக்கிற தேசத்
திலே, நீங்கள் பூமியில் உயிரோடிருக்கும்
நாளெல்லாம் கைக்கொண்டு நடக்கவேண்டிய
[20]கட்டளைகளும் நியாயங்களுமாவன: நீங்கள் 2
துரத்திவிடும் ஜாதிகள் தங்கள் தேவர்களைச்
சேவித்த உயர்ந்த மலைகளின்மேலும், மேடு
களின்மேலும், பச்சையான சகல மரங்களின்
கீழுமுள்ள இடங்களையெல்லாம் [21]முற்றிலும்
அழித்து, அவர்கள் பலிபீடங்களை இடித்து, 3
[22]அவர்கள் சிலைகளைத்தகர்த்து, அவர்கள் தோப்
புகளை அக்கினியால் சுட்டெரித்து, அவர்கள்
தேவர்களின் விக்கிரகங்களை நொறுக்கி, அவை
களின் பேரும் அவ்விடத்தில் இராமல் அழியும்

[1] சகரி. 14. 18
[2] உபா. 8. 7
[3] 1 இரா. 9. 3
[4] உபா. 10. 12
[5] லேவி. 26. 4 யோவே. 2. 23. யாக். 5. 7
[6] சங். 104. 14. ஓசி. 2. 21, 22. யோவே. 2. 19
[7] எரே. 4. 18
[8] யோசு. 23. 11-16
[9] 1 இரா. 8. 35
* உலகமுள்ளளவும். சங். 72. 5; 80. 29
[10] நீதி. 3. 1, 3
[11] உபா. 4. 9, 10
[12] உபா. 10. 20
[13] சங். 78. 55
[14] யோசு. 1. 3
[15] ஆதி. 15. 18 எண். 34. 3
[16] யோசு. 2. 9, 24
[17] உபா. 30. 1, 15, 19; 28. 2, 15
[18] உபா. 27. 12, 13. யோசு. 8. 33
[19] உபா. 12. 32
[20] உபா. 4. 10; 6. 1
[21] யாத். 34. 13
[22] எண். 33. 52. நியா. 2. 2. 2 நாளா. 31. 1

4 படி செய்யக்கடவீர்கள். உங்கள் தேவனுகிய
5 **கர்த்தருக்கு** நீங்கள் அப்படிச் செய்யாமல், உங்
கள் தேவனுகிய **கர்த்தர்** [1]தம்முடைய நாமம்
*விளங்கும்படி, உங்கள் சகல கோத்திரங்களி
லும் தெரிந்துகொள்ளும் ஸ்தானமாகிய அவ
ருடைய வாசஸ்தலத்தையே நாடி, அங்கே
6 போய், அங்கே [2]உங்கள் சர்வாங்க தகனங்
களையும், உங்கள் பலிகளையும், தசமபாகங்களை
யும், உங்கள் கை ஏறெடுத்துப் படைக்கும்
படைப்புகளையும், உங்கள் பொருத்தனைகளை
யும், உங்கள் உற்சாகப்பலிகளையும், உங்கள்
ஆடுமாடுகளின் தலையீற்றுகளையும் கொண்டு
7 வந்து, அங்கே உங்கள் தேவனுகிய **கர்த்த
ருடைய** சந்நிதியிலே புசித்து, நீங்கள் கையிட்
டுச் செய்ததும், உங்கள் தேவனுகிய **கர்த்தர்**
உங்களை ஆசீர்வதித்ததுமான யாவுக்காகவும்
நீங்களும் உங்கள் குடும்பத்தாரும் [3]சந்தோஷப்
8 படுவீர்களாக. இங்கே இந்நாளில் நாம் அவ
னவன் தன்தன் பார்வைக்குச் சரியானதை
யெல்லாம் செய்கிறதுபோல [4]நீங்கள் செய்
9 யாதிருப்பீர்களாக. உங்கள் தேவனுகிய **கர்த்
தர்** உங்களுக்குக் கொடுக்கும் இளைப்பாறுதலி
லும் [5]சுதந்தரத்திலும் நீங்கள் இன்னும் பிரவே
10 சிக்கவில்லையே. நீங்கள் யோர்தானைக் [6]கடந்து
போய், உங்கள் தேவனுகிய **கர்த்தர்** உங்களுக்
குச் சுதந்தரிக்கக் கொடுக்கும் தேசத்தில் குடி
யேறும்போதும், சுற்றிலும் இருக்கிற உங்கள்
சத்துருக்களையெல்லாம் அவர் விலக்கி, உங்
களை இளைப்பாறப்பண்ணுகிறதினுல் நீங்கள்
11 சுகமாய் வசித்திருக்கும்போதும், உங்கள் தேவ
னுகிய **கர்த்தர்** தமது நாமம் விளங்கும்படி
தெரிந்துகொள்ளும் ஓர் [7]இடம் உண்டாயிருக்
கும்; அங்கே நீங்கள் நான் உங்களுக்குக் கட்
டளையிட்ட யாவையும் உங்கள் சர்வாங்க தக
னங்களையும், உங்கள் பலிகளையும், உங்கள்
தசமபாகங்களையும், உங்கள் கை ஏறெடுத்துப்
படைக்கும் படைப்புகளையும், நீங்கள் **கர்த்த
ருக்கு** நேர்ந்துகொள்ளும் விசேஷித்த எல்லாப்
12 பொருத்தனைகளையும் கொண்டுவந்து, உங்
கள் தேவனுகிய **கர்த்தருடைய** சந்நிதியில் நீங்க
ளும், உங்கள் குமாரரும், உங்கள் குமாரத்திக
ளும், உங்கள் வேலைக்காரரும், உங்கள் வேலைக்
காரிகளும், உங்களோடு பங்கும் சுதந்தரமும்
இல்லாமல் உங்கள் வாசல்களில் இருக்கிற
13 லேவியனும் சந்தோஷப்படுவீர்களாக. கண்ட
இடமெல்லாம் [8]நீ உன் சர்வாங்க தகனபலி
14 களை இடாதபடிக்கு எச்சரிக்கையாயிரு. உன்
கோத்திரங்கள் ஒன்றில் **கர்த்தர்** தெரிந்து
கொள்ளும் இடத்தில்மாத்திரம் நீ உன் சர்
வாங்க தகனபலிகளையிட்டு, நான் உனக்குக்
கற்பிக்கிற யாவையும் அங்கே செய்வாயாக.
15 ஆனுலும் உன் தேவனுகிய **கர்த்தர்** உனக்கு
அருளும் ஆசீர்வாதத்திற்குத் தக்கதாய், நீ உன்
வாசல்களிலெங்கும் உன் இஷ்டப்படியே
[9]மிருகஜீவன்களை அடித்துப் புசிக்கலாம்; தீட்
டுப்பட்டவனும் தீட்டுப்படாதவனும், அவை
களை, வெளிமானையும் கலைமானையும் புசிக்கி

1 2 நாளா. 7. 12. சங். 78. 68
* ஸ்தாபிக்கும்படி
2 லேவி. 17. 3, 4
3 லேவி. 23. 40
4 நியா. 17. 6
5 ஓசி. 4. 9
6 யோசு. 3. 17
7 யோசு. 18. 1. 1 இரா. 8. 29
8 லேவி. 17. 2, 5
9 உபா. 14. 26; 15. 22
10 ஆதி. 9. 4. லேவி. 7. 26
11 உபா. 14. 23
12 1 கொ. 11. 19
13 உபா. 14. 27
14 ஆதி. 28. 14. யாத். 34. 24
15 லேவி. 17. 11-14
16 யாத். 15. 26. பிர. 2. 26
17 எசே. 3. 10
18 எண். 5. 9, 10
19 லேவி. 1. 5, 9, 13

றதுபோல புசிக்கலாம். இரத்தத்தைமாத்திரம் 16
புசிக்கவேண்டாம்; [10]அதைத் தண்ணீரைப்
போல் தரையிலே ஊற்றிவிடவேண்டும். உன் 17
தானியத்திலும் உன் திராட்சரசத்திலும் உன்
எண்ணெயிலும் தசமபாகத்தையும், உன் ஆடு
மாடுகளின் தலையீற்றுகளையும், நீ நேர்ந்து
கொள்ளும் உன்னுடைய சகல பொருத்தனை
களையும், உன் உற்சாகக் காணிக்கைகளையும்,
உன் கை ஏறெடுத்துப் படைக்கும் படைப்பு
களையும், நீ உன் வாசல்களில் புசிக்கவேண்
டாம். உன் தேவனுகிய **கர்த்தர்** தெரிந்து 18
கொள்ளும் ஸ்தானத்தில் நீயும் உன் குமார
னும், உன் குமாரத்தியும், உன் வேலைக்கார
னும், உன் வேலைக்காரியும், உன் வாசல்களில்
இருக்கிற லேவியனும், உன் தேவனுகிய **கர்
த்தருடைய** சந்நிதியில் அதைப் [11]புசித்து, நீ
கையிட்டுச் செய்யும் [12]எல்லாக் காரியத்திலும்
உன் தேவனுகிய **கர்த்தருடைய** சந்நிதியில்
சந்தோஷப்படுவாயாக. நீ உன் தேசத்திலி 19
ருக்கும் நாளெல்லாம் லேவியனைக் கைவிடா
தபடிக்கு [13]எச்சரிக்கையாயிரு.
உன் தேவனுகிய **கர்த்தர்** உனக்குச் சொன் 20
னபடி, [14]உன் எல்லையை விஸ்தாரமாக்கும்
போது, நீ இறைச்சி புசிக்க ஆசைகொண்டு,
இறைச்சி புசிப்பேன் என்பாயானுல், நீ உன்
இஷ்டப்படி இறைச்சி புசிக்கலாம். உன் 21
தேவனுகிய **கர்த்தர்** தமது நாமம் விளங்கும்படி
தெரிந்துகொள்ளும் ஸ்தானம் உனக்குத் தூர
மானுல், **கர்த்தர்** உனக்கு அளித்த உன் ஆடு
மாடுகளில் எதையாகிலும் நான் உனக்கு விதித்
தபடி நீ அடித்து, உன் இஷ்டப்படி உன்
வாசல்களிலே புசிக்கலாம். வெளிமானையும் 22
கலைமானையும் புசிக்கிறதுபோல நீ அதைப்
புசிக்கலாம்; தீட்டுப்பட்டவனும் தீட்டுப்படாத
வனும் அதைப் புசிக்கலாம். இரத்தத்தை 23
மாத்திரம் [15]புசிக்காதபடிக்கு எச்சரிக்கையா
யிரு; இரத்தமே உயிர்; மாம்சத்தோடே உயி
ரையும் புசிக்கவேண்டாம். அதை நீ சாப்பி 24
டாமல் தண்ணீரைப்போல் தரையிலே ஊற்றி
விடவேண்டும். நீ **கர்த்தரின்** பார்வைக்குச் 25
செம்மையானதைச் [16]செய்வதினுல், நீயும்
உனக்குப் பின்வரும் உன் பிள்ளைகளும் நன்
ருயிருக்கும்படி [17]நீ அதைச் சாப்பிடலாகாது.
உனக்குரிய பரிசுத்த வஸ்துக்களையும், [18]உன் 26
பொருத்தனைகளையும் **கர்த்தர்** தெரிந்துகொள்
ளும் ஸ்தானத்திற்கு நீ கொண்டுவந்து, உன் 27
தேவனுகிய **கர்த்தருடைய** பலிபீடத்தின்மேல்
[19]உன் சர்வாங்க தகனபலிகளை மாம்சத்தோ
டும் இரத்தத்தோடும் கூடப் பலியிடக்கடவாய்;
நீ செலுத்தும் மற்றப் பலிகளின் இரத்தமும்
உன் தேவனுகிய **கர்த்தருடைய** பலிபீடத்தின்
மேல் ஊற்றப்படக்கடவது; மாம்சத்தையோ
நீ புசிக்கலாம். நீ உன் தேவனுகிய **கர்த்த** 28
**ரின்** பார்வைக்கு நன்மையும் செம்மையுமான
தைச் செய்வதினுல், நீயும் உனக்குப் பின்வ
ரும் உன் பிள்ளைகளும் என்றென்றைக்கும்
நன்ருயிருக்கும்படிக்கு, நான் உனக்குக் கற்

பிக்கிற இந்த எல்லா வார்த்தைகளையும் நீ
[1]கவனித்துக் கேள்.
29 நீ சுதந்தரிக்கப்போகிற தேசத்தின் ஜாதி
களை உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்கு முன்
பாகச் [2]சங்கரிக்கும்போதும், நீ அவர்கள் தேச
த்தைச் சுதந்தரித்து அதிலே குடியிருக்கும்போ
30 தும், அவர்கள் உனக்கு முன்பாக அழிக்கப்
பட்டபின்பு, நீ அவர்களைப் பின்பற்றிச் சிக்
கிக்கொள்ளாதபடிக்கும், [3]இந்த ஜாதிகள் தங்
கள் தேவர்களைச் சேவித்தபடி நானும் சேவிப்
பேன் என்று சொல்லி அவர்களுடைய தேவர்
களைக் குறித்துக் கேட்டு விசாரியாதபடிக்கும்
31 எச்சரிக்கையாயிரு. உன் தேவனாகிய **கர்த்**
**தருக்கு** அப்படிச் [4]செய்யாயாக; **கர்த்தர்** வெறு
க்கிற அருவருப்பான யாவையும் அவர்கள்
தங்கள் தேவர்களுக்குச் செய்து, தங்கள் குமா
ரரையும் தங்கள் குமாரத்திகளையும் [5]தங்கள்
தேவர்களுக்கு அக்கினியிலே சுட்டெரித்தார்
32 களே. நான் உனக்கு விதிக்கிற யாவையும்
செய்யும்படி [6]கவனமாயிரு; நீ அதனோடே
ஒன்றும் கூட்டவும் வேண்டாம் [7]அதில் ஒன்
றும் குறைக்கவும் வேண்டாம்.

**13** உங்களுக்குள்ளே ஒரு தீர்க்கதரிசியாகிலும்,
2 சொப்பனக்காரனாகிலும் [8]எழும்பி: நீங்கள்
அறியாத வேறே தேவர்களைப் பின்பற்றி,
அவர்களைச் சேவிப்போம் வாருங்கள் என்று
சொல்லி, உங்களுக்கு ஒரு அடையாளத்தை
யும் அற்புதத்தையும் காண்பிப்பேன் [9]என்று
குறிப்பாய்ச் சொன்னாலும், அவன் சொன்ன
அடையாளமும் அற்புதமும் [10]நடந்தாலும்,
3 அந்தத் தீர்க்கதரிசியாகிலும், அந்தச் சொப்ப
னக்காரனாகிலும் சொல்லுகிறவைகளைக் கே
ளாதிருப்பீர்களாக; உங்கள் தேவனாகிய **கர்த்**
**தரிடத்தில்** நீங்கள் உங்கள் முழு இருதயத்தோ
டும் உங்கள் முழு ஆத்துமாவோடும் அன்பு
கூருகிறீர்களோ இல்லையோ என்று அறியும்
படிக்கு உங்கள் தேவனாகிய **கர்த்தர்** உங்க
4 ளைச் [11]சோதிக்கிறார். நீங்கள் உங்கள் தேவ
னாகிய **கர்த்தரைப்** [12]பின்பற்றி, அவருக்குப்
பயந்து, அவர் கற்பனைகளைக் கைக்கொண்டு,
அவர் சத்தத்தைக் [13]கேட்டு, அவரைச் சேவி
5 த்து, அவரைப் பற்றிக்கொள்வீர்களாக. அந்
தத் தீர்க்கதரிசியும், அந்தச் சொப்பனக்கார
னும் [14]கொலைசெய்யப்படக்கடவன்; நீங்கள்
நடக்கும்படி உங்கள் தேவனாகிய **கர்த்தர்**
உங்களுக்கு விதித்த வழியை விட்டு உங்
களை விலக்கும்படி, அவன், உங்களை எகி
ப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணினவ
ரும் உங்களை அடிமைத்தன வீட்டிலிருந்து
நீங்கலாக்கி மீட்டுக்கொண்டவருமான உங்
கள் தேவனாகிய **கர்த்தருக்கு** விரோதமான
துரோகப் பேச்சைப் பேசினான்; இப்படிப்
பட்ட தீமையை [15]உங்களிடத்திலிருந்து வில
க்குவீர்களாக.
6 உன் தாய்க்குப் பிறந்த உன் சகோதரனாகி
லும், உன் குமாரனாகிலும், உன் குமாரத்தியா
கிலும், உன் மார்பிலுள்ள [16]உன் மனைவியாகி
லும், உன் பிராணனைப்போலிருக்கிற [17]உன்
சிநேகிதனாகிலும் உன்னை நோக்கி: நாம்போய்
வேறே தேவர்களைச் சேவிப்போம் வாருங்கள்
என்று சொல்லி, உன்னைச் சுற்றிலும் உனக் 7
குச் சமீபத்திலாகிலும் உனக்குத் தூரத்திலாகி
லும், தேசத்தின் ஒருமுனை தொடங்கி மறு
முனைமட்டுமுள்ள எவ்விடத்திலாகிலும் இருக்
கிற ஜனங்களுடைய தேவர்களில், நீயும் உன்
பிதாக்களும் அறியாத அந்நிய தேவர்களைச்
சேவிக்கும்படி இரகசியமாய் உன்னை ஏவி
விட்டால், நீ அவனுக்குச் [18]சம்மதியாமலும், 8
அவனுக்குச் செவிகொடாமலும், உன் கண்
அவன்மேல் இரக்கங்கொள்ளாமலும், அவ
னைத் தப்பவிடாமலும், அவனை ஒளித்துவைக்
காமலும், அவனைக் கொலைசெய்து போட 9
வேண்டும்; அவனைக் கொலைசெய்வதற்கு,
முதல் உன் கையும் [19]பின்பு சகல ஜனத்தின்
கையும் அவன்மேல் இருக்கக்கடவது. அடி 10
மைத்தன வீடாகிய எகிப்து தேசத்திலிருந்து
உன்னைப் புறப்படப்பண்ணின உன் தேவ
னாகிய **கர்த்தரை** விட்டு விலகும்படி அவன்
உன்னை ஏவினபடியினால், அவன் சாகும்படி
அவன்மேல் கல்லெறியக்கடவாய். இஸ்ர 11
வேலர் யாவரும் [20]அதைக் கேட்டுப் பயந்து,
இனி உன் நடுவே இப்படிப்பட்ட தீமையான
காரியத்தைச் செய்யாதிருப்பார்கள்.
உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்குக் குடி 12
யிருக்கும்படி கொடுக்கும் பட்டணங்கள் ஒன்
றில் பேலியாளின் மக்களாகிய [21]துஷ்டமனி
தர் உன்னிடத்திலிருந்து புறப்பட்டு, நீங்கள் 13
அறியாத வேறே தேவர்களைச் சேவிக்கப்போ
வோம் வாருங்கள் என்று தங்கள் பட்டணத்
தின் குடிகளை ஏவினார்கள் என்கிற செய்தி
யைக் கேள்விப்படும்போது, நீ நன்றாய் விசா 14
ரித்து, கேட்டாராய்ந்து, அப்படிப்பட்ட அரு
வருப்பான காரியம் உன் நடுவே நடந்தது மெய்
யும் நிச்சயமும் என்று காண்பாயானால், அந்
தப் பட்டணத்தின் குடிகளைப் பட்டயக்கருக் 15
கினால் வெட்டி, அதையும் அதிலுள்ள யாவற்
றையும் அதின் மிருகஜீவன்களையும் பட்டயக்
கருக்கினால் [22]சங்காரம்பண்ணி, அதில் கொ 16
ள்ளையிட்டதையெல்லாம் அதின் நடுவீதியிலே
கூட்டி, உன் தேவனாகிய **கர்த்தருக்கு** என்று
அந்தப் பட்டணத்தையும், அதில் கொள்ளை
யிடப்பட்ட யாவற்றையும் முழுவதும் [23]அக்கி
னியில் சுட்டெரிக்கக்கடவாய்; அது இனிக்
கட்டப்படாமல், [24]நித்திய மண்மேடாயிருக்
கக்கடவது. சபிக்கப்பட்ட பொருளில் [25]ஒன் 17
றும் உன் கையில் இருக்கவேண்டாம். நான்
இன்று உனக்குக் கற்பிக்கிற உன் தேவனா
கிய **கர்த்தரின்** கற்பனைகளையெல்லாம் [26]நீ
கைக்கொண்டு, உன் தேவனாகிய **கர்த்தரு**
**டைய** பார்வைக்குச் செம்மையானதைச் செய்
யும்படி, அவர் சத்தத்திற்குச் செவிகொடுப்பா
யானால், **கர்த்தர்** தமது கோபத்தின் [27]உக்கி 18
ரத்தை விட்டுத் திரும்பி, உனக்குத் தயை
செய்து, [28]உனக்கு இரங்கி, அவர் உன் பிதாக்

1 யாத். 34. 11. 2 ராஜா. 7. 17. எசே. 37. 24. யோசு. 15. 10, 14
2 யாத். 23. 23. யோசு. 23. 4
3 2 இரா. 17. 15. சங். 106. 34—38
4 யாத். 23. 2
5 லேவி. 18. 21. எரே. 32. 35. எசே. 23. 37. மீகா 6. 7
6 யோசு. 1. 7
7 வெளி. 22. 18
8 சகரி. 10. 2
9 மத். 24. 24. 2 தெச. 2. 9
10 எரே. 28. 9. மத். 7. 22
11 1 கொ. 11. 19. 2 தெச. 2. 11. வெளி. 13. 14
12 2 ராஜா. 34. 31
13 எரே. 7. 23
14 சகரி. 13. 3
15 1 கொ. 5. 13
16 உபா. 28. 54. மீகா 7. 5
17 1 சாமு. 20. 17
18 நீதி. 1. 10
19 உபா. 17. 7. அப். 7. 58
20 உபா. 19. 20
21 நியா. 22. 11, 19, 22. 1 சாமு. 2. 12. 2 கொ. 6. 15. 1 யோ. 3. 10
22 யாத். 22. 20. யோசு. 6. 17—24
23 யோசு. 6. 24; 8. 28
24 எரே. 49. 2
25 யோசு. 6. 18; 7. 1
26 சங். 119. 6
27 யோசு. 7. 26. சங். 78. 38
28 புல. 3. 32

களுக்கு ஆணையிட்டபடி உன்னை [1]விருத்தி
யடையப்பண்ணுவார்.

14 நீங்கள் உங்கள் தேவனாகிய **கர்த்தரின்** [2]பிள்
ளைகள்; செத்தவனுக்காகக் கீறிக்கொள்ளாம
லும், [3]உங்கள் கண்களுக்கு இடையிலே சவரம்
2 பண்ணாமலும் இருப்பீர்களாக. நீங்கள் உங்கள்
தேவனாகிய **கர்த்தருக்குப்** பரிசுத்தமான ஜனங்
கள்; பூமியின்மீதெங்குமுள்ள எல்லா ஜனங்
களிலும் உங்களையே **கர்த்தர்** தமக்குச்சொந்த
ஜனங்களாயிருக்கத் தெரிந்துகொண்டார்.
3 அருவருப்பான தொன்றையும் [4]புசிக்க
4 வேண்டாம். நீங்கள் புசிக்கத்தகும் மிருகங்க
ளாவன: [5]மாடும், செம்மறியாடும், வெள்ளா
5 டும், மானும், வெளிமானும், கலைமானும்,
வரையாடும், புள்ளிமானும், சருகுமானும், புல்
6 வாயுமே. மிருகங்களில் விரிகுளம்புள்ளதா
யிருந்து, குளம்புகள் இரண்டாகப் பிரிந்தி
ருக்கிறதும், அசைபோடுகிறதுமான சகல
7 மிருகங்களையும் நீங்கள் புசிக்கலாம்; அசை
போடுகிறவைகளிலும், விரிகுளம்புள்ளவைக
ளிலும், நீங்கள் புசிக்கத்தகாதவைகள் எவை
யென்றால்: ஒட்டகமும், முசலும், குழிமுச
லுமே; அவைகள் அசைபோட்டும் அவைக
ளுக்கு விரிகுளம்பில்லை; அவைகள் உங்களு
8 க்கு அசுத்தமாயிருப்பதாக. பன்றியும் புசிக்
கத்தகாது; அது விரிகுளம்புள்ளதாயிருந்தும்,
அசைபோடாதிருக்கும்; அது உங்களுக்கு அசு
த்தமாயிருப்பதாக; இவைகளின் மாம்சத்தைப்
புசியாமலும் இவைகளின் [6]உடலைத் தொடா
மலும் இருப்பீர்களாக.
9 ஜலத்திலிருக்கிற எல்லாவற்றிலும் சிறகும்
செதிளும் உள்ளவைகளையெல்லாம் நீங்கள்
10 புசிக்கலாம். சிறகும் செதிளும் இல்லாத யா
தொன்றையும் புசிக்கலாகாது; அது உங்க
ளுக்கு அசுத்தமாயிருப்பதாக.
11 சுத்தமான சகல பட்சிகளையும் நீங்கள் புசிக்
12 கலாம். நீங்கள் புசிக்கத்தகாதவைகள் எவை
யென்றால்: கழுகும், கருடனும், கடலுராஞ்சி
13 யும், பைரியும், வல்லூறும், சகலவித பருந்
14, 15 தும், சகலவித காகங்களும், தீக்குருவி
யும், கூகையும், செம்புகமும், சகலவிதமான
16 டேகையும், ஆந்தையும், கோட்டானும்,
17 நாரையும், கூழக்கடாவும், குருகும், நீர்க்கா
18 கமும், கொக்கும், சகலவிதராஜாளியும், புழுக்
19 கொத்தியும், வௌவாலுமே. பறக்கிறவைக
ளில் [7]ஊர்வன யாவும் உங்களுக்கு அசுத்தமா
யிருப்பதாக; அவைகள் புசிக்கத்தகாதவைகள்.
20 சுத்தமான பறவைகள் யாவையும் நீங்கள் புசிக்
கலாம்.
21 தானாய் இறந்துபோனதொன்றையும் [8]புசி
க்கவேண்டாம்; உங்கள் வாசல்களில் இருக்
கிற பரதேசிக்கு அதைப் புசிக்கக் கொடுக்க
லாம்; அல்லது அந்நியனுக்கு அதை விற்றுப்
போடலாம்; நீங்கள் உங்கள் தேவனாகிய **கர்த்
தருக்குப்** பரிசுத்த ஜனங்கள். வெள்ளாட்டுக்
குட்டியை [9]அதின் தாயின் பாலிலே சமைக்க
வேண்டாம்.

நீ உன் தேவனாகிய **கர்த்தருக்கு** எப்பொழு 22
தும் பயந்திருக்கப் பழகும்படிக்கு, வருஷந்
தோறும் நீ விதைக்கிற விதைப்பினாலே வய
லில் விளையும் எல்லாப் பலனிலும் [10]தசமபா
கத்தைப் பிரித்து, உன் தேவனாகிய **கர்த்தர்** 23
தமது நாமம் விளங்கும்படி தெரிந்துகொள்ளும்
ஸ்தானத்திலே, உன் தானியத்திலும் உன்
திராட்சரசத்திலும் உன் எண்ணெயிலும் தசம
பாகத்தையும் உன் ஆடுமாடுகளின் தலையீற்று
களையும் அவருடைய சந்நிதியில் புசிப்பாயாக.
உன் தேவனாகிய **கர்த்தர்** உன்னை ஆசீர்வதிக் 24
கும் காலத்தில், உன் தேவனாகிய **கர்த்தர்**
தமது நாமம் விளங்கும்படி தெரிந்துகொண்ட
ஸ்தானம் உனக்கு வெகு [11]தூரமாயிருக்கிறதி
னால், வழிப்பிரயாணத்தின் வெகு தொலையி
னிமித்தம், நீ அதைக் கொண்டுபோகக்கூடா
திருக்குமானால், அதைப் பணமாக்கி, பண 25
முடிப்பை உன் கையிலே பிடித்துக்கொண்டு,
உன் தேவனாகிய **கர்த்தர்** தெரிந்துகொண்ட
ஸ்தலத்திற்குப் போய், அங்கே உன் இஷ்டப் 26
படி ஆடுமாடு, திராட்சரசம், மதுபானம் முத
லான சகலத்தையும் பணம்கொடுத்து வாங்கி,
[12]உன் தேவனாகிய **கர்த்தருடைய** சந்நிதியில்,
நீயும் உன் குடும்பத்தாரும் உன் வாசல்களில்
இருக்கிற லேவியனும் புசித்துச் சந்தோஷப்
படுவீர்களாக. லேவியனுக்கு உன்னோடே 27
பங்கும் சுதந்தரமும் இல்லாதபடியால் [13]அவ
னைக் கைவிடாயாக.
மூன்றாம் வருஷத்தின் முடிவிலே அவ் 28
வருஷத்தில் உனக்கு வந்த [14]பலன் எல்லாவற்
றிலும் தசமபாகத்தைப் பிரித்து, உன் வாசல்
களில் வைக்கக்கடவாய். லேவியனுக்கு உன் 29
னோடே பங்கும் சுதந்தரமும் இல்லாதபடியி
னால், அவனும், உன் வாசல்களில் இருக்கிற
பரதேசியும், [15]திக்கற்றவனும், விதவையும்
வந்து புசித்துத் திர்ப்தியடைவார்களாக; அப்
பொழுது உன் கை செய்யும் வேலையிலெல்
லாம் உன் தேவனாகிய **கர்த்தர்** உன்னை [16]ஆசீர்
வதிப்பார்.

ஏழாம் வருஷத்தின் முடிவிலே [17]விடுதலை 15
பண்ணுவாயாக. விடுதலையின் விபரமாவது: 2
பிறனுக்குக் கடன் கொடுத்தவன் எவனும்,
**கர்த்தர்** நியமித்த விடுதலை கூறப்பட்டபடி
யால், அந்தக் கடனைப் பிறன் கையிலாகிலும்
தன் சகோதரன் கையிலாகிலும் தண்டாமல்
விட்டுவிடக்கடவன். அந்நிய ஜாதியான் கை 3
யிலே நீ கடனைத் தண்டலாம்; [18]உன் சகோதர
னிடத்திலோ உனக்கு வரவேண்டியதை உன்
கை விட்டுவிடக்கடவது. எளியவன் உனக் 4
குள் இல்லாதிருக்கும்படியாக இப்படிச் செய்
யவேண்டும்; இன்று நான் உனக்குக் கற்பிக்
கிற எல்லாக் கற்பனைகளின்படியும் நீ செய்
யும்படி; உன் தேவனாகிய **கர்த்தரின்** சத்தத்
தைக் கவனமாய்க் கேட்பாயானால், உன் தே 5
வனாகிய **கர்த்தர்** உனக்குச் சுதந்தரிக்கும்படி
கொடுக்கும் தேசத்தில், உன்னை மேன்மே
லும் ஆசீர்வதிப்பார். உன் தேவனாகிய **கர்த்** 6

1 எசே. 37. 26
2 எரே. 3. 19. ரோ. 8. 16. கலா. 8. 26
3 லேவி. 19. 28. எரே. 16. 6
4 எசே. 4. 14. அப். 10. 12, 14. 1 கொ. 10. 28
5 லேவி. 11. அதி
6 லேவி. 11. 26, 27
7 லேவி. 11. 21
8 லேவி. 17. 15. எசே. 4. 14
9 யாத். 23. 19
10 லேவி. 27. 30. எண். 18. 21. நெகே. 10. 37
11 உபா. 12. 21
12 உபா. 12. 7, 18
13 எண். 18. 20
14 உபா. 26. 12. ஆமோ. 4. 4
15 யாத். 22. 21–24. யோபு 31. 16–22. லூ. 14. 12—14. எபி. 13. 2
16 நீதி. 3. 9, 10; 19. 17. மல். 3. 10
17 யாத். 21. 2
18 உபா. 23. 20

தர் உனக்குச் சொன்னபடி உன்னை ஆசிர்
வதிப்பதினால், நீ அநேகம் ஜாதிகளுக்குக்
கடன்கொடுப்பாய், நீயோ கடன் வாங்குவ
தில்லை; [1]நீ அநேகம் ஜாதிகளை ஆளுவாய்,
உன்னையோ அவர்கள் ஆளுவதில்லை.
7 உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்குக் கொ
டுக்கும் தேசத்தின் எந்த வாசலிலும் உன்
சகோதரரில் எளியவனான ஒருவன் இருந்
தால், எளியவனாகிய உன் சகோதரனுக்கு
உன் இருதயத்தை நீ கடினமாக்காமலும்,
8 [2]உன் கையை மூடாமலும், அவனுக்கு உன்
கையைத் [3]தாராளமாய்த் திறந்து, அவனு
டைய அவசரத்தினிமித்தம் அவனுக்குத் தே
9 வையானதைக் கடன் கொடுப்பாயாக. விடுதலை
வருஷமாகிய ஏழாம் வருஷம் கிட்டியிருக்கிற
தென்று சொல்லி, உன் இருதயத்திலே பொ
ல்லாத நினைவுகொண்டு, உன் ஏழைச் சகோ
தரனுக்குக் கொடாமல் மறுத்து, [4]அவன்மேல்
வன்கண் வைக்காதபடிக்கும், அவன் உன்னைக்
குறித்துக் **கர்த்தரை** நோக்கி அபயமிடாதபடி
க்கும் [5]எச்சரிக்கையாயிரு; அப்படிச் செய்
வாயானால் அது உனக்குப் [6]பாவமாயிருக்கும்.
10 அவனுக்குத் தாராளமாய்க் கொடுப்பாயாக;
[7]அவனுக்குக் கொடுக்கும்போது உன் இரு
தயம் விசனப்படாதிருப்பதாக; அதினிமித்த
மாக உன் தேவனாகிய **கர்த்தர்** உன்னுடைய
எல்லாக் கிரியைகளிலும், நீ கையிட்டுச் செய்
யும் எல்லாக் காரியங்களிலும் [8]உன்னை ஆசீர்
11 வதிப்பார். தேசத்திலே எளியவர்கள் [9]இல்
லாதிருப்பதில்லை; ஆகையால் உன் தேசத்
திலே சிறுமைப்பட்டவனும் எளியவனுமாகிய
உன் சகோதரனுக்கு உன் கையைத் தாராள
மாய்த் திறக்கவேண்டும் என்று நான் உனக்
குக் கட்டளையிடுகிறேன்.
12 உன் சகோதரனாகிய எபிரெய [10]புருஷனா
கிலும் எபிரெய ஸ்திரீயாகிலும் உனக்கு விலைப்
பட்டால், ஆறு வருஷம் உன்னிடத்தில்
சேவிக்கவேண்டும்; ஏழாம் வருஷத்தில் அவ
னை விடுதலைபண்ணி அனுப்பிவிடுவாயாக.
13 அவனை விடுதலைபண்ணி அனுப்பிவிடும்
போது அவனை வெறுமையாய் அனுப்பிவிடா
14 மல், உன் தேவனாகிய **கர்த்தர்** உன்னை [11]ஆசீர்
வதித்ததின்படி, உன் ஆட்டுமந்தையிலும் உன்
களத்திலும் உன் ஆலையிலும் எடுத்து அவனுக்
குத் தாராளமாய்க் கொடுத்து அனுப்பிவிடுவா
15 யாக. நீ எகிப்துதேசத்தில் அடிமையாயிருந்
ததையும், [12]உன் தேவனாகிய **கர்த்தர்** உன்னை
மீட்டுக்கொண்டதையும் நினைவுகூரக்கடவாய்;
ஆகையால் நான் இன்று இந்தக் காரியத்தை
16 உனக்குக் கட்டளையிடுகிறேன். ஆனாலும்,
அவன் உன்னிடத்தில் நன்மைபெற்று, [13]உன்
னையும் உன் குடும்பத்தையும் நேசிப்பதினால்:
நான் உன்னைவிட்டுப் போகமாட்டேன் என்று
17 உன்னுடனே சொல்வானேயாகில், நீ ஒரு
கம்பியை எடுத்து, அவன் காதைக் கதவோடே
சேர்த்துக் குத்துவாயாக; பின்பு அவன் என்
றைக்கும் உனக்கு அடிமையாயிருக்கக்கட

1 உபா. 28. 12, 44
2 1 யோ. 3. 17
3 லேவி. 25. 35–37. மத். 5. 42. கலா. 2. 10
4 நீதி. 28. 6. மத். 20. 15
5 யாத். 22. 23
6 மத். 25. 41—45
7 2 கொ. 9. 5–7
8 சங். 41. 1. நீதி. 22. 9
9 மத். 26. 11. யோ. 12. 8
10 லேவி. 25. 39–41. எரே. 34. 14
11 சங். 68. 10. நீதி. 10. 22. அப். 20. 35
12 உபா. 5. 15. ஏசா. 51. 1
13 யாத். 21. 5, 6
14 ஏசா. 16. 14; 21. 16
15 யாத். 13. 2. எண். 3. 13
16 லேவி. 22. 20. மல். 1. 7, 8
17 உபா. 12. 16, 23
18 யாத். 12. 31–42; 34. 18
19 எண். 28. 16–19
20 யாத். 13. 6, 7
21 யாத். 12. 10; 34. 25
22 யாத். 12. 6–9

வன்; உன் அடிமைப்பெண்ணுக்கும் அப்ப
டியே செய்யக்கடவாய். அவனை விடுதலை 18
யாக்கி அனுப்பிவிடுவது உனக்கு [14]விசனமா
ய்க் காணப்படவேண்டாம்; இரட்டிப்பான
கூலிக்கு ஈடாக ஆறு வருஷம் உன்னிடத்தில்
சேவித்தானே; இப்படி உன் தேவனாகிய
**கர்த்தர்** நீ செய்யும் எல்லாவற்றிலும் உன்னை
ஆசீர்வதிப்பார்.
உன் ஆடுமாடுகளில் [15]தலையீற்றாகிய ஆணை 19
யெல்லாம் உன் தேவனாகிய **கர்த்தருக்குப்** பரி
சுத்தமாக்கக்கடவாய்; உன் மாட்டின் தலை
யீற்றை வேலைகொள்ளாமலும், உன் ஆட்
டின் தலையீற்றை மயிர்கத்தரியாமலும் இருப்
பாயாக. **கர்த்தர்** தெரிந்துகொள்ளும் ஸ்தலத் 20
திலே வருஷந்தோறும் நீயும் உன் வீட்டாரு
மாய் உன் தேவனாகிய **கர்த்தருடைய** சந்நிதி
யில் அப்படிப்பட்டவைகளைப் புசிக்கக்கட
வீர்கள். அதற்கு முடம் குருடு முதலான 21
யாதொரு [16]பழுது இருந்தால், அதை உன்
தேவனாகிய **கர்த்தருக்குப்** பலியிடவேண்
டாம். அப்படிப்பட்டதை நீ உன் வாசல்க 22
ளிலே, கலைமானையும் வெளிமானையும் புசிப்
பதுபோலப் புசிக்கலாம்; தீட்டுப்பட்டவனும்
தீட்டுப்படாதவனும் அதைப் புசிக்கலாம்.
அதின் இரத்தத்தைமாத்திரம் சாப்பிடாமல், 23
[17]அதைத் தண்ணீரைப்போலத் தரையிலே
ஊற்றிவிடக்கடவாய்.
ஆபிப்மாதத்தைக் [18]கவனித்திருந்து, அதில் **16**
உன் தேவனாகிய **கர்த்தருக்குப்** பஸ்காவை
ஆசரிக்கக்கடவாய்; ஆபிப்மாதத்திலே இராக்
காலத்தில் உன் தேவனாகிய **கர்த்தர்** உன்னை
எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினாரே.
**கர்த்தர்** தமது நாமம் விளங்கும்படி தெரிந்து 2
கொள்ளும் ஸ்தானத்தில், உன் தேவனாகிய
**கர்த்தருக்குப்** [19]பஸ்காவின் பலியாகிய ஆடுமா
டுகளைப் பலியிடுவாயாக. நீ எகிப்துதேசத்தி 3
லிருந்து புறப்பட்ட நாளை நீ உயிரோடிருக்
கும் நாளெல்லாம் நினைக்கும்படி, பஸ்காப்ப
லியுடனே [20]புளிப்புள்ள அப்பம் புசியாமல்,
சிறுமையின் அப்பமாகிய புளிப்பில்லாத
அப்பங்களை ஏழுநாள் வரைக்கும் புசிக்கக்
கடவாய்; நீ தீவிரமாய் எகிப்துதேசத்திலி
ருந்து புறப்பட்டபடியினால் இப்படிச் செய்
யவேண்டும். ஏழுநாள் அளவும் உன் எல் 4
லைகளிலெங்கும் புளிப்புள்ள அப்பம் உன்
னிடத்தில் காணப்படலாகாது; நீ முதல் நாள்
சாயங்காலத்தில் இட்ட பலியின் மாம்சத்
தில் ஏதாகிலும் [21]இராமுழுதும் விடியற்கா
லம்வரைக்கும் வைக்கவேண்டாம். உன் தேவ 5
னாகிய **கர்த்தர்** உனக்குக் கொடுக்கும் உன்
னுடைய வாசல்களில் எதிலும் நீ பஸ்காவை
அடிக்கவேண்டாம். உன் தேவனாகிய **கர்த்** 6
**தர்** தமது நாமம் விளங்கும்படி [22]தெரிந்து
கொள்ளும் ஸ்தானத்திலே, நீ எகிப்திலி
ருந்து புறப்பட்ட நேரமாகிய சாயங்காலத்
திலே சூரியன் அஸ்தமிக்கிறபோது பஸ்
காவை அடித்து, உன் தேவனாகிய **கர்த்தர்** 7

தெரிந்துகொண்ட ஸ்தானத்திலே, [1]அதைப்
பொரித்துப் புசித்து, விடியற்காலத்திலே
உன் கூடாரங்களுக்குத் திரும்பிப்போவா
8 யாக. நீ ஆறுநாளும் புளிப்பில்லாத அப்பம்
புசிக்கவேண்டும், ஏழாம்நாள் உன் தேவனாகிய
**கர்த்தருக்கு** ஆசரிக்கப்படும் [2]நாளாயிருக்கும்;
அதிலே யாதொரு வேலையும் செய்யவேண்
டாம்.
9 ஏழு வாரங்களை [3]எண்ணுவாயாக; அறுப்பு
அறுக்கத் தொடங்கும் காலமுதல் நீ அந்த
10 ஏழு வாரங்களையும் எண்ணவேண்டும். அவை
கள் முடிந்தபோது வாரங்களின் பண்டிகை
யை உன் தேவனாகிய **கர்த்தருக்கு** என்று
ஆசரித்து, உன் தேவனாகிய **கர்த்தர்** உன்னை
ஆசீர்வதித்ததற்குத்தக்கதாய் [4]உன் கைக்கு
நேர்ந்த மனப்பூர்வமான காணிக்கையாகிய
11 பகுதியைச் செலுத்தி, உன் தேவனாகிய **கர்த்**
**தர்** தமது நாமம் விளங்கும்படி தெரிந்துகொள்
ளும் ஸ்தானத்திலே, நீயும், உன் குமாரனும்,
உன் குமாரத்தியும், உன் வேலைக்காரனும்,
உன் வேலைக்காரியும், உன் வாசல்களில் இரு
க்கிற லேவியனும், உன்னிடத்தில் இருக்கிற
பரதேசியும், திக்கற்ற பிள்ளையும், விதவையும்,
உன் தேவனாகிய **கர்த்தருடைய** சந்நிதியில்
12 [5]சந்தோஷப்பட்டு, நீ எகிப்தில் அடிமையா
யிருந்ததை [6]நினைத்து, இந்தக் கட்டளைகளைக்
கைக்கொண்டு, இவைகளின்படி செய்யக்
கடவாய்.
13 நீ உன் களத்தின் பலனையும் உன் ஆலை
யின் பலனையும் சேர்த்தபின்பு, கூடாரப்பண்
14 டிகையை [7]ஏழுநாள் ஆசரித்து, உன் பண்டி
கையில் நீயும், உன் குமாரனும், உன் குமா
ரத்தியும், உன் வேலைக்காரனும், உன் வே
லைக்காரியும், உன் வாசல்களில் இருக்கிற
லேவியனும், பரதேசியும், திக்கற்ற பிள்ளை
யும், விதவையும் [8]சந்தோஷப்படக்கடவீர்கள்;
15 உனக்கு உண்டான எல்லா வரத்திலும் உன்
கைகளுடைய எல்லாக் கிரியையிலும் உன்
தேவனாகிய **கர்த்தர்** உன்னை ஆசீர்வதித்தபடி
யினால், **கர்த்தர்** தெரிந்துகொள்ளும் ஸ்தானத்
தில் உன் தேவனாகிய **கர்த்தருக்கு** ஏழுநாளள
வும் [9]பண்டிகையை ஆசரித்துச் சந்தோஷமா
16 யிருப்பாயாக. வருஷத்தில் மூன்றுதரம் [10]புளி
ப்பில்லாத அப்பப்பண்டிகையிலும், வாரங்க
ளின் பண்டிகையிலும், கூடாரப்பண்டிகை
யிலும், உன் ஆண்மக்கள் எல்லாரும் உன்
தேவனாகிய **கர்த்தர்** தெரிந்துகொள்ளும் ஸ்தா
னத்திலே, அவர் சந்நிதிக்கு முன்பாக வந்து
17 காணப்படக்கடவர்கள். ஆனாலும் அவர்கள்
**கர்த்தருடைய** சந்நிதியில் வெறுங்கையோடே
[11]வராமல், உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்கு
அருளிய ஆசீர்வாதத்திற்குத்தக்கதாக, அவன
வன் தன் தன் தகுதிக்கு ஏற்றபடி [12]காணிக்
கையைக் கொண்டுவரக்கடவன்.
18 உன் தேவனாகிய **கர்த்தர்** உன் கோத்திரங்
கள்தோறும் உனக்குக் கொடுக்கும் வாசல்களி
லெல்லாம், நியாயாதிபதிகளையும் [13]தலைவரை
யும் ஏற்படுத்துவாயாக; அவர்கள் நீதியுடன்
ஜனங்களுக்கு நியாயத்தீர்ப்புச் செய்யக்கட
வர்கள். நியாயத்தைப் புரட்டாதிருப்பாயாக; 19
[14]முகதாட்சிணியம் பண்ணாமலும், *பரிதா
னம் வாங்காமலும் இருப்பாயாக; பரிதானம்
ஞானிகளின் கண்களைக் [15]குருடாக்கி, நீதி
மான்களின் நியாயங்களைத் தாறுமாறாக்கும்.
நீ பிழைத்து, உன் தேவனாகிய **கர்த்தர்** உனக் 20
குக் கொடுக்கும் தேசத்தைச் சுதந்தரித்துக்கொ
ள்ளும்படிக்கு நீதியையே [16]பின்பற்றுவாயாக.
நீ உன் தேவனாகிய **கர்த்தருக்கு** உண்டாக் 21
கும் பலிபீடத்தண்டையில் யாதொரு தோப்
பையும் [17]உண்டாக்கவேண்டாம்; யாதொரு 22
சிலையையும் [18]நிறுத்தவேண்டாம்; உன் தேவ
னாகிய **கர்த்தர்** அதை [19]வெறுக்கிறார்.

பழுதும் அவலட்சணமுமுள்ள [20]யாதொரு **17**
மாட்டையாவது ஆட்டையாவது உன் தேவ
னாகிய **கர்த்தருக்குப்** பலியிடவேண்டாம்;
அது உன் தேவனாகிய **கர்த்தருக்கு** அருவருப்
பாயிருக்கும்.
உன் தேவனாகிய **கர்த்தரின்** கண்களுக்கு 2
முன்பாக எந்தப் புருஷனாவது ஸ்திரீயாவது
உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்குக் கொடுக்
கிற வாசல்கள் ஒன்றில் அக்கிரமஞ்செய்து,
[21]அவருடைய உடன்படிக்கையை மீறி, நான் 3
விலக்கியிருக்கிற வேறே தேவர்களையாவது
[22]சந்திரசூரியர் முதலான வானசேனைகளையா
வது சேவித்து, அவைகளை நமஸ்கரிக்கிறதா
கக் காணப்பட்டால், அது உன் செவிகேட்க 4
உனக்கு அறிவிக்கப்படும்போது, நீ அதை
நன்றாய் விசாரிக்கக்கடவாய்; அது மெய் என்
றும், அப்படிப்பட்ட அருவருப்பு இஸ்ரவே
லில் நடந்தது நிச்சயம் என்றும் கண்டாயா
னால், அந்த அக்கிரமத்தைச் செய்த புருஷனை 5
யாவது ஸ்திரீயையாவது உன் வாசல்களுக்கு
வெளியே கொண்டுபோய், அப்படிப்பட்ட
வர்கள் சாகும்படி [23]கல்லெறியக்கடவாய். சா 6
வுக்குப் பாத்திரமானவன் இரண்டு மூன்று
சாட்சிகளுடைய [24]வாக்கினால் கொலைசெய்
யப்படக்கடவன்; ஒரே சாட்சியினுடைய
வாக்கினால் அவன் கொலைசெய்யப்படலா
காது. அவனைக் கொலைசெய்கிறதற்குச் சாட் 7
சிகளுடைய கைகள் முந்தியும் எல்லா ஜனங்
களுடைய கைகள் பிந்தியும் [25]அவன்மேல்
இருப்பதாக; இப்படியே தீமையை உன் நடு
விலிருந்து விலக்கக்கடவாய்.
உன் வாசல்களில் இரத்தப்பழிகளைக்குறித் 8
தும், வியாச்சியங்களைக்குறித்தும், [26]காயம்
பட்ட சேதங்களைக்குறித்தும் வழக்கு நே
ரிட்டு, நியாயந்தீர்ப்பது உனக்கு அரிதாயிருந்
தால், நீ எழுந்து, உன் தேவனாகிய **கர்த்தர்**
தெரிந்து ஏற்படுத்தின [27]ஸ்தானத்திற்குப்
போய், லேவியரான ஆசாரியரிடத்திலும் 9
[28]அந்நாட்களில் இருக்கிற நியாயாதிபதியினிட
த்திலும் விசாரிக்கவேண்டும்; நியாயம் இன்ன
தென்று அவர்கள் உனக்கு அறிவிப்பார்கள்.
**கர்த்தர்** தெரிந்துகொண்ட இடத்திலிருந்து 10

1 2 நாளா. 35. 13. யோ. 2. 13. 23; 11. 55
2 லேவி. 23. 8
3 யாத். 23. 16; 34. 22. லேவி. 23. 15. அப். 2. 1
4 1 கொ. 16. 2
5 உபா. 12. 7, 12, 18
6 உபா. 15. 15
7 லேவி. 23. 34
8 நெகே. 8. 9-12
9 லேவி. 23. 39, 40
10 யாத். 23. 14. 34. 23
11 யாத். 23. 15
12 மாற். 12. 41-44. 2 கொ. 8. 12
13 யாத். 18. 25, 26. 1 நாளா. 23. 4
14 லேவி. 19. 15
* லஞ்சம்
15 நீதி. 17. 23
16 எசே. 18. 5, 9. மீகா. 6. 8. பிலி. 4. 8
17 1 இரா. 14. 15
18 லேவி. 26. 1
19 எரே. 44. 4
20 மல். 1. 8, 13. 14
21 உபா. 13. 6. யோசு. 7. 11. ஓசி. 8. 1
22 யோபு. 31. 26
23 லேவி. 24. 14, 16
24 எண். 35. 30. யோ. 8. 17. 2 கொ. 13. 1. 1 தீமொ. 5. 19. எபி. 10. 28
25 அப். 7. 58, 59
26 யாத். 21. 12. மு
27 சங். 122. 4, 5
28 எரே. 18. 18. ஆகா. 2. 11. மல். 2. 7

அவர்கள் உனக்கு அறிவிக்கும் தீர்ப்புக்கு நீ
இணங்கி, அவர்கள் உனக்கு விதிக்கிறபடி
11 செய்யக் கவனமாயிருப்பாயாக. அவர்கள்
உனக்கு அறிவிக்கும் தீர்ப்பை விட்டு வலது
புறம் இடதுபுறம் சாயாமல், அவர்கள் உனக்கு
உணர்த்தும் பிரமாணத்தின்படியும், உனக்
குச் சொல்லும் நியாயத்தீர்ப்பின்படியும் செய்
12 யக்கடவாய். அங்கே உன் தேவனாகிய **கர்த்த
ருக்கு** ஆராதனை செய்யும்படி நிற்கிற ஆசாரி
யனுடைய சொல்லையாகிலும், நியாயாதிபதி
யினுடைய சொல்லையாகிலும் கேளாமல்,
ஒருவன் இடும்புசெய்தால், [1]அவன் சாகக்கட
வன்; இப்படியே தீமையை இஸ்ரவேலிலிரு
13 ந்து விலக்கக்கடவாய். அப்பொழுது ஜனங்
கள் எல்லாரும் அதைக் கேட்டு, பயந்து, இனி
இடும்புசெய்யாதிருப்பார்கள்.
14 உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்குக் கொ
டுக்கும் தேசத்தில் நீ போய்ச் சேர்ந்து, அதைச்
சுதந்தரித்துக்கொண்டு, அதில் குடியேறின
பின், நீ: என்னைச் சுற்றிலும் இருக்கிற சகல
ஜாதிகளையும்போல, நானும் எனக்கு ஒரு
இராஜாவை [2]ஏற்படுத்தவேண்டும் என்பாயா
15 னால்; உன் தேவனாகிய **கர்த்தர்** தெரிந்து
கொள்பவனையே [3]உனக்கு இராஜாவாக
வைக்கக்கடவாய்; உன் சகோதாருக்குள்ளி
ருக்கிற ஒருவனையே உன்மேல் இராஜாவாக
ஏற்படுத்தக்கடவாய்; உன் சகோதரன் அல்
லாத அந்நியனை [4]இராஜாவாக ஏற்படுத்தக்
16 கூடாது. அவன் அநேக குதிரைகளைச் சம்பா
தியாமலும், அநேக குதிரைகளைத் தனக்குச்
சம்பாதிக்கும்படிக்கு ஜனங்களைத் திரும்ப
எகிப்திற்குப் போகப்பண்ணாமலும் இருக்கக்
கடவன்; [5]இனி அந்த வழியாய் நீங்கள் திரும்
பிப்போகவேண்டாம் என்று **கர்த்தர்** உங்க
17 ளுக்குச் சொல்லியிருக்கிறாரே. அவன் இரு
தயம் பின்வாங்கிப்போகாதபடி அவன் அநே
கம் [6]ஸ்திரீகளைப் படைக்கவேண்டாம்; வெள்
ளியும் பொன்னும் தனக்கு மிகுதியாய்ப் பெ
18 ருகப்பண்ணவும் வேண்டாம். அவன் தன்
சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கும்போது,
[7]அவனுடைய இருதயம் அவன் சகோதரர்
பேரில் மேட்டிமைகொள்ளாமலும், கற்பனை
யை விட்டு வலதுபுறம் இடதுபுறம் சாயாம
19 லும், இந்த நியாயப்பிரமாணத்தின் எல்லா
வார்த்தைகளையும், இந்தக் கட்டளைகளையும் கை
க்கொண்டு, இவைகளின்படி செய்வதற்காகத்
தன் தேவனாகிய **கர்த்தருக்குப்** பயந்திருக்கும்
20 படி [8]கற்றுக்கொள்ளும்பொருட்டு, அவன்
லேவியராகிய ஆசாரியரிடத்திலிருக்கிற நியா
யப்பிரமாண நூலைப் பார்த்து, தனக்காக ஒரு
பிரதியை எழுதி, [9]தன்னிடத்தில் வைத்துக்
கொண்டு, தன் ஜீவனுள்ள நாளெல்லாம் அதை
வாசிக்கக்கடவன்; இப்படிச் செய்வதினால்,
தானும் தன் குமாரரும் இஸ்ரவேலின் நடுவே
தங்கள் இராஜ்யத்திலே நீடித்து வாழுவார்கள்.

18 லேவியராகிய ஆசாரியருக்கும் லேவி
கோத்திரத்தார் அனைவருக்கும் [10]இஸ்ரவேல்
புத்திரருடன் பங்கும் சுதந்தரமும் இல்லாதி
ருப்பதாக; **கர்த்தருக்கு** இடப்படும் தகனபலி
களையும் அவருக்குச் சுதந்தரமானவைகளையும்
[11]அவர்கள் புசிப்பார்களாக. அவர்கள் சகோ 2
தாருக்குள்ளே அவர்களுக்குச் சுதந்தரமில்லை;
**கர்த்தர்** அவர்களுக்குச் சொல்லியபடியே,
[12]அவரே அவர்கள் சுதந்தரம்.
ஜனத்தினிடத்தில் பெற்றுக்கொள்ளவேண் 3
டிய ஆசாரியருக்குரிய வரத்தாவது: [13]ஜனங்
கள் பலியிடும் ஆடுமாடுகளில் முன்னந்தொ
டையையும் தாடைகளையும் இரைப்பையை
யும் ஆசாரியனுக்குக் கொடுக்கவேண்டும். உன் 4
தானியம், [14]திராட்சரசம், எண்ணெய், ஆட்டு
ரோமம் என்னும் இவைகளின் முதற்பலனை
யும் அவனுக்குக் கொடுக்கவேண்டும். அவ 5
னும் அவன் குமாரரும் எந்நாளும் **கர்த்தரின்**
நாமத்தை முன்னிட்டு [15]ஆராதனை செய்யும்
படி நிற்கும்பொருட்டு, உன் தேவனாகிய
**கர்த்தர்** உன் கோத்திரத்தார் எல்லாருக்குள்
ளும் அவனையே தெரிந்துகொண்டார்.
இஸ்ரவேலில் எவ்விடத்திலுமுள்ள உன் 6
வாசல்கள் யாதொன்றிலே தங்கின ஒரு லேவி
யன் அவ்விடத்தை விட்டு, [16]**கர்த்தர்** தெரிந்து
கொண்ட ஸ்தானத்திற்கு மனப்பூர்வமாய் வந்
தால், அங்கே **கர்த்தருடைய** சந்நிதியில் நிற் 7
கும் லேவியராகிய [17]தன் எல்லாச் சகோதர
ரைப்போலும் தன் தேவனாகிய **கர்த்தரின்**
நாமத்தை முன்னிட்டு ஊழியஞ்செய்வான்.
அப்படிப்பட்டவர்கள் தங்கள் பிதாக்களுடைய 8
ஆஸ்தியின் விலைக்கிரயத்தை அநுபவிக்கிற
தும் அல்லாமல், சாப்பாட்டிற்காகச் சமமான
பாகத்தையும் பெற்றுக்கொள்வார்கள்.
உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்குக் கொ 9
டுக்கும் தேசத்தில் நீ போய்ச் சேரும்போது,
அந்த ஜாதிகள் செய்யும் [18]அருவருப்புகளின்
படி செய்யக் கற்றுக்கொள்ளவேண்டாம்.
தன் மகனையாவது தன் மகளையாவது தீக்க 10
டக்கப்பண்ணுகிறவனும், குறிசொல்லுகிறவ
னும், நாள்பார்க்கிறவனும், அஞ்சனம்பார்க்
கிறவனும், சூனியக்காரனும், மந்திரவாதியும், 11
சன்னதக்காரனும், மாயவித்தைக்காரனும்,
செத்தவர்களிடத்தில் குறிகேட்கிறவனும் உங்
களுக்குள்ளே இருக்கவேண்டாம். இப்ப 12
டிப்பட்டவைகளைச் செய்கிறவன் எவனும்
**கர்த்தருக்கு** அருவருப்பானவன்; இப்படிப்
பட்ட [19]அருவருப்புகளின்நிமித்தம் உன் தேவ
னாகிய **கர்த்தர்** அவர்களை உன் முன்னின்று
துரத்திவிடுகிறார். உன் தேவனாகிய **கர்த்த** 13
**ருக்கு** முன்பாக நீ [20]உத்தமனாயிருக்கக்கடவாய்.
நீ துரத்திவிடப்போகிற இந்த ஜாதிகள் நாள் 14
பார்க்கிறவர்களுக்கும் குறிசொல்லுகிறவர்களு
க்கும் செவிகொடுக்கிறார்கள்; நீ அப்படிச்
செய்கிறதற்கு உன் தேவனாகிய **கர்த்தர்** உத்
தரவு கொடார். உன் தேவனாகிய **கர்த்தர்** 15
என்னைப்போல ஒரு தீர்க்கதரிசியை [21]உனக்
காக உன் நடுவே உன் சகோதரரிலிருந்து
எழும்பப்பண்ணுவார்; அவருக்குச் [22]செவி

[1] எண். 15. 30. எஸ்ற 10. 8. ஓசி. 4. 4
[2] 1 சாமு. 8. 5, 19, 20
[3] 1 சாமு. 9. 15. எரே. 30. 21
[4] எரே. 2. 25
[5] 1 இரா. 14. 26. சங். 20. 7. ஏசா. 31. 1. எசே. 17. 15. ஓசி. 11. 5
[6] 1 இரா. 11. 3, 4
[7] 2 இரா. 11. 12; 15. 5
[8] உபா. 31. 9, 26
[9] யோசு. 1. 8. சங். 119. 97, 98
[10] எண். 18. 20
[11] 1 கொ. 9. 13, 14
[12] சங். 16. 5. புல. 3. 24
[13] லேவி. 7. 30–34
[14] யாத். 22. 29
[15] எண். 3. 10
[16] எண். 35. 2, 3. சங். 84. 2
[17] 2 நாளா. 31. 2, 4
[18] லேவி. 18. 26–36. ஏசா. 8. 19
[19] வெளி. 22. 15
[20] ஆதி. 17. 1. யோபு. 1. 1
[21] யோ. 1. 45. அப். 3. 22, 23; 7. 37
[22] மத். 17. 5. எபி. 1. 1, 2; 2. 1, 3. 1 பே. 3. 23

16 கொடுப்பீர்களாக. ஓரேபிலே சபை கூட்டப்
பட்ட நாளில்: நான் சாகாதபடி என் தேவனு
கிய **கர்த்தரின்** சத்தத்தை இனி நான் கேளா
மலும், இந்தப் பெரிய அக்கினியை இனி
நான் காணாமலும் [1]இருப்பேனாக என்று உன்
தேவனாகிய **கர்த்தரை** நீ வேண்டிக்கொண்ட
17 தின்படியெல்லாம் அவர் செய்வார். அப்பொ
ழுது **கர்த்தர்** என்னை நோக்கி: அவர்கள்
18 சொன்னது சரியே. உன்னைப்போல [2]ஒரு
தீர்க்கதரிசியை நான் [3]அவர்களுக்காக அவர்
கள் சகோதரரிலிருந்து எழும்பப்பண்ணி, என்
வார்த்தைகளை அவர் வாயில் அருளுவேன்;
நான் அவருக்குக் கற்பிப்பதையெல்லாம் [4]அ
19 வர்களுக்குச் சொல்லுவார். என் நாமத்தி
னாலே அவர் சொல்லும் என் வார்த்தைகளுக்
குச் செவிகொடாதவன் எவனோ [5]அவனை
20 நான் *விசாரிப்பேன். சொல்லும்படி நான்
கட்டளையிடாத வார்த்தையை என் நாமத்தி
னாலே சொல்லத் துணியும் தீர்க்கதரிசியும்,
[6]வேறே தேவர்களின் நாமத்தினாலே பேசும்
21 தீர்க்கதரிசியும் சாகக்கடவன். **கர்த்தர்** சொல்
லாத வார்த்தை இன்னதென்று நான் எப்படி
அறிவேன் [7]என்று நீ உன் இருதயத்தில் சொ
22 ல்வாயாகில், ஒரு தீர்க்கதரிசி **கர்த்தரின்** நாமத்
தினாலே சொல்லும் காரியம் நடவாமலும்
நிறைவேறாமலும் போனால், [8]அது **கர்த்தர்**
சொல்லாத வார்த்தை; அந்தத் தீர்க்கதரிசி
அதைத் துணிகரத்தினால் சொன்னான்; [9]அவ
னுக்கு நீ பயப்படவேண்டாம்.

**19** உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்குக் கொ
டுக்கும் தேசத்தின் ஜாதிகளை [10]உன் தேவனா
கிய **கர்த்தர்** வேரற்றுப்போகப்பண்ணுவதி
னால், நீ அவர்கள் தேசத்தைச் சுதந்தரித்துக்
கொண்டு, அவர்கள் பட்டணங்களிலும் அவர்
2 கள் வீடுகளிலும் குடியேறும்போது, நீ உன்
தேவனாகிய **கர்த்தர்** உனக்குச் சுதந்தரிக்கக்
கொடுக்கும் உன் தேசத்தின் நடுவிலே, உனக்
காக மூன்று பட்டணங்களைப் [11]பிரித்துவைக்
3 கக்கடவாய். கொலைசெய்தவன் எவனும் அங்
கே ஓடிப்போகும்படி உன் தேவனாகிய **கர்த்**
**தர்** உன்னைச் சுதந்தரிக்கப்பண்ணப்போகிற
உன் தேசத்தின் எல்லையை நீ மூன்று பங்கா
கப் பகுத்து அதற்கு வழியை உண்டுபண்ணக்
4 கடவாய். கொலைசெய்து அங்கே ஓடிப்போய்,
[12]உயிரோடிருக்கத்தக்கவன் யாரென்றால்:
தான் முன்னே பகைத்திராத பிறனொருவனை
5 மனதறியாமல் கொன்றவன்தானே. ஒருவன்
விறகு வெட்ட மற்றொருவனோடே காட்டில்
போய், மரத்தை வெட்டத் தன் கையிலிருந்த
கோடரியை ஓங்கும்போது, இரும்பானது
காம்பை விட்டுக் கழன்று மற்றவன்மேல் பட்
6 டதினால் அவன் இறந்துபோனால், இரத்தப்
பழிக்காரன் தன் மனம் எரிகையில், கொலை
செய்தவனை [13]வழி தூரமாயிருக்கிறதினாலே
பின்தொடர்ந்து பிடித்து, அவனைக் கொன்று
போடாதபடிக்கு, இவன் அந்தப் பட்டணங்
கள் ஒன்றில் ஓடிப்போய் உயிரோடிருப்பா
னாக; இவன் அவனை முன்னே பகைக்காத
படியினால், இவன்மேல் சாவுக்கான குற்றம்
சுமரவில்லை. இதினிமித்தம் மூன்று பட்ட 7
ணங்களை உனக்காகப் பிரித்துவைக்கக்கட
வாய் என்று நான் உனக்குக் கட்டளையிடுகி
றேன். நீ உன் தேவனாகிய **கர்த்தரிடத்தில்** 8
அன்புகூர்ந்து, எந்நாளும் அவர் வழிகளில்
நடப்பதற்காக, இன்று நான் உனக்குக் கற்
பிக்கிற இந்த எல்லாக் கற்பனைகளையும் கைக்
கொண்டு அதின்படி செய்து, உன் தேவனா 9
கிய **கர்த்தர்** உன் பிதாக்களுக்கு [14]ஆணையிட்
டபடியே, அவர் உன் எல்லையை விஸ்தார
மாக்கி, உன் பிதாக்களுக்குக் கொடுப்பேன்
என்று சொன்ன தேசம் முழுவதையும் உனக்
குக் கொடுத்தால், அப்பொழுது உன் தேவ 10
னாகிய **கர்த்தர்** உனக்குச் சுதந்தரமாகக் கொடுக்
கும் உன் தேசத்தில் குற்றமில்லாத இரத்தம்
சிந்தப்படுகிறதினால் உன்மேல் இரத்தப்பழி
சுமராதபடிக்கு, இந்த மூன்று பட்டணங்க
ளும் அல்லாமல் [15]இன்னும் மூன்று பட்ட
ணங்களை ஏற்படுத்தக்கடவாய். ஒருவன் பிற 11
னொருவனைப் பகைத்து, அவனுக்குப் பதி
விருந்து, அவனுக்கு விரோதமாய் எழும்பி,
[16]அவன் சாகும்படி அவனை அடித்து, இந்தப்
பட்டணங்களில் ஒன்றில் ஓடிப்போயிருப்
பானாகில், அந்தப் பட்டணத்தின் மூப்பர் 12
கள் ஆள் அனுப்பி, அங்கேயிருந்து அவனைக்
கொண்டுவரும்படி செய்து, அவன் சாகும்ப
டிக்கு அவனை இரத்தப்பழி வாங்குகிறவன்
கையில் ஒப்புக்கொடுக்கக்கடவர்கள். உன் 13
கண் அவனுக்கு இரங்கவேண்டாம்; [17]குற்ற
மில்லாத இரத்தப்பழியை இஸ்ரவேலைவிட்டு
விலக்கக்கடவாய்; அப்பொழுது நீ நன்றாயி
ருப்பாய்.

உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்குச் சுதந்த 14
ரமாகக் கொடுக்கும் தேசத்தில் உன் கைவச
மாயிருக்கும் காணியாட்சியிலே முன்னோர்
கள் குறித்திருக்கிற பிறனுடைய எல்லையை
[18]ஒற்றிப்போடாயாக.

ஒருவன் எந்த அக்கிரமத்தையாவது எந்தப் 15
பாவத்தையாவது செய்தான் என்று சொல்லப்
பட்டால், ஒரே சாட்சியினால் நியாயந்தீர்க்கக்
கூடாது; [19]இரண்டு மூன்று சாட்சிகளுடைய
வாக்கினாலே காரியம் நிலைவரப்படவேண்டும்.
ஒருவன்மேல் ஒரு குற்றத்தைச் சுமத்தும்படி, 16
ஒரு பொய்ச்சாட்சிக்காரன் [20]அவன்மேல் சாட்
சிசொல்ல எழும்பினால், வழக்காடுகிற இருவ 17
ரும் **கர்த்தருடைய** சந்நிதியில் அக்காலத்தில்
இருக்கும் ஆசாரியர்களுக்கும் நியாயாதிபதிக
ளுக்கும் முன்பாக [21]வந்து நிற்பார்களாக. அப் 18
பொழுது நியாயாதிபதிகள் நன்றாய் விசாரணை
செய்யக்கடவர்கள்; சாட்சி கள்ளச்சாட்சி என்
றும், தன் சகோதரன்மேல் அபாண்டமாய்க்
குற்றஞ்சாற்றினான் என்றும் கண்டால், அவன் 19
தன் சகோதரனுக்குச் செய்ய நினைத்தபடியே
[22]அவனுக்குச் செய்யக்கடவீர்கள்; இவ்வித
மாய்த் தீமையை உன் நடுவிலிருந்து விலக்கு

1 யாத். 20. 19. எபி. 12. 19
2 எண். 12. 6-8. எபி. 3. 2-6. லூ. 24. 19
3 ஏசா. 9. 6. சகரி. 6. 12, 13. மல். 3. 1
4 யோ. 4. 25; 8. 28; 12. 44, 50; 15. 15
5 மாற். 16. 16. அப். 3. 22, 23. எபி. 2. 2; 12. 25
* கேட்பேன். 23. 21
6 எரே. 14. 14, 15. சகரி. 13. 9. வெளி. 19. 20
7 1 யோ. 4. 1-3
8 ஏசா. 41. 22, 23. எரே. 28. 9
9 நீதி. 26. 2
10 உபா. 12. 29
11 யாத். 21. 13. எண். 35. 10. யோசு. 20. 2. ழ
12 எண். 35. 15
13 எண். 35. 12
14 ஆதி. 15. 18, 21. யாத். 34. 24
15 யோசு. 20. 7, 8
16 ஆதி. 9. 6. யாத். 21. 12. ழ. நீதி. 28. 17
17 உபா. 13. 8
18 யோபு 24. 2. நீதி. 22. 28. ஓசி. 5. 10
19 மத். 18. 16. யோ. 8. 17. 2 கொ. 13. 1. 1 தீமோ. 5. 19. எபி. 10. 28
20 சங். 27. 12; 35. 11
21 உபா. 17. 9
22 நீதி. 19. 5, 9. தானி. 6. 24

20 வாயாக. மற்றவர்களும் அதைக் கேட்டுப் பய
ந்து, [1]இனி உங்களுக்குள்ளே அப்படிப்பட்ட
21 தீமையைச் செய்யாதிருப்பார்கள். உன் கண்
அவனுக்கு இரங்கவேண்டாம்; [2]ஜீவனுக்கு
ஜீவன், கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல்,
கைக்குக் கை, காலுக்குக் கால் கொடுக்கப்பட
வேண்டும்.

**20** நீ உன் சத்துருக்களுக்கு எதிராக யுத்தஞ்
செய்யப் புறப்பட்டுப் போகையில், குதிரை
களையும் இரதங்களையும், [3]உன்னிலும் பெரிய
கூட்டமாகிய ஜனங்களையும் கண்டால், அவர்
களுக்குப் பயப்படாயாக; உன்னை எகிப்துதே
சத்திலிருந்து புறப்படப்பண்ணின உன் தேவ
னாகிய **கர்த்தர்** உன்னோடே [4]இருக்கிறார்.
2 நீங்கள் யுத்தஞ்செய்யத் தொடங்கும்போது,
ஆசாரியன் சேர்ந்துவந்து, ஜனங்களிடத்தில்
3 பேசி: இஸ்ரவேலரே, கேளுங்கள்; இன்று
உங்கள் சத்துருக்களுடன் யுத்தஞ்செய்யப்
போகிறீர்கள்; உங்கள் இருதயம் துவளவேண்
டாம்; [5]நீங்கள் அவர்களைப் பார்த்துப் பயப்
படவும் கலங்கவும் தத்தளிக்கவும் வேண்டாம்.
4 உங்களுக்காக உங்கள் சத்துருக்களோடே
யுத்தம்பண்ணவும் உங்களை இரட்சிக்கவும்
உங்களோடேகூடப் போகிறவர் உங்கள் தே
வனாகிய **கர்த்தர்** [6]என்று சொல்லவேண்டும்.
5 அன்றியும் அதிபதிகள் ஜனங்களை நோக்கி:
புதுவீட்டைக் கட்டி, அதைப் பிரதிஷ்டை
பண்ணாதிருக்கிறவன் எவனோ, [7]அவன் தன்
வீட்டுக்குத் திரும்பிப்போகக்கடவன்; அவன்
யுத்தத்திலே செத்தால் வேறொருவன் அதைப்
6 பிரதிஷ்டைபண்ணவேண்டியதாகும். திரா
ட்சத்தோட்டத்தை நாட்டி, [8]அதை அநுப
வியாதிருக்கிறவன் எவனோ, அவன் தன் வீட்
டுக்குத் திரும்பிப்போகக்கடவன்; அவன் யுத்
தத்திலே செத்தால் வேறொருவன் அதை
7 அநுபவிக்கவேண்டியதாகும். ஒரு பெண்
ணைத் தனக்கு நியமித்துக்கொண்டு, அவளை
விவாகம்பண்ணாதிருக்கிறவன்எவனோ,அவன்
தன் வீட்டுக்குத் திரும்பிப்போகக் கடவன்;
[9]அவன் யுத்தத்திலே செத்தால் வேறொரு
ருவன் அவளை விவாகம்பண்ணவேண்டியதா
8 கும் என்று சொல்லவேண்டும். பின்னும்
அதிபதிகள் ஜனங்களுடனே பேசி: பயங்கா
ளியும் திடனற்றவனுமாயிருக்கிறவன் எவ
னோ, [10]அவன் தன் சகோதரரின் இருதயத்
தைத் தன் இருதயத்தைப்போலக் கரைந்து
போகப்பண்ணாதபடிக்கு, தன் வீட்டுக்குத்
திரும்பிப்போகக்கடவன் என்று சொல்லவே
9 ண்டும். அதிபதிகள் ஜனங்களோடே பேசி
முடிந்தபின்பு, ஜனங்களை நடத்தும்படி, சே
னைத்தலைவரை நியமிக்கக்கடவர்கள்.
10 நீ ஒரு பட்டணத்தின்மேல் யுத்தம்பண்ண
நெருங்கும்போது, அந்தப் பட்டணத்தாருக்
11 குச் சமாதானம் [11]கூறக்கடவாய். அவர்கள்
உனக்குச் சமாதானமான உத்தரவு கொடுத்து,
வாசலைத் திறந்தால், அதிலுள்ள ஜனங்கள்
எல்லாரும் உனக்குப் பகுதிகட்டுகிறவர்க

[1] உபா. 17. 13
[2] யாத். 21. 23, 24. மத். 5. 38
[3] சங். 20. 7
[4] எண். 23. 21
[5] ஏசா. 28. 16; 51. 7, 8
[6] உபா. 1. 30. யோசு. 23. 10
[7] எண். 12. 27
[8] லேவி. 19. 23, 24
[9] உபா. 24. 5; 28. 30
[10] நியா. 7. 3
[11] 2 சாமு. 20. 18, 20
[12] எண். 31. 7-9
[13] யோசு. 8. 2; 22. 8
[14] எண். 21. 2, 3, 35. யோசு. 11. 14
[15] யாத். 23. 33. சங். 106. 34, 40. 1 கொ. 15. 33
[16] எபே. 6. 6

ளாகி, உனக்கு ஊழியஞ்செய்யக்கடவர்கள்.
அவர்கள் உன்னோடே சமாதானப்படாமல், 12
உன்னோடே யுத்தம்பண்ணுவார்களானால், நீ
அதை முற்றிக்கைபோட்டு, உன் தேவனாகிய 13
**கர்த்தர்** அதை உன் கையில் ஒப்புக்கொடுக்கும்
போது, [12]அதிலுள்ள புருஷர்கள் எல்லாரை
யும் பட்டயக்கருக்கினால் வெட்டி, ஸ்திரீக 14
ளையும் குழந்தைகளையும் மிருகஜீவன்களையும்
மாத்திரம் உயிரோடே வைத்து, பட்டணத்தி
லுள்ள எல்லாவற்றையும் கொள்ளையிட்டு,
[13]உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்கு ஒப்புக்
கொடுத்த உன் சத்துருக்களின் கொள்ளைப்
பொருளை அநுபவிப்பாயாக. இந்த ஜாதிக 15
ளைச் சேர்ந்த பட்டணங்களாயிராமல், உனக்கு
வெகு தூரத்திலிருக்கிற சகல பட்டணங்க
ளுக்கும் இப்படியே செய்வாயாக. உன் தே 16
வனாகிய **கர்த்தர்** உனக்குச் சுதந்தரமாகக்
கொடுக்கிற ஏத்தியர், எமோரியர், கானானி
யர், பெரிசியர், ஏவியர், எபூசியர் என்னும்
ஜனங்களின் பட்டணங்களிலேமாத்திரம்
[14]சுவாசமுள்ளதொன்றையும் உயிரோடே
வைக்காமல், அவர்களை உன் தேவனாகிய 17
**கர்த்தர்** உனக்குக் கட்டளையிட்டபடியே சங்
காரம்பண்ணக்கடவாய். அவர்கள் தங்கள் 18
தேவர்களுக்குச் செய்கிற தங்களுடைய சகல
அருவருப்புகளின்படியே நீங்களும் செய்ய
உங்களுக்குக் [15]கற்றுக்கொடாமலும், நீங்கள்
உங்கள் தேவனாகிய **கர்த்தருக்கு** விரோத
மாய்ப் பாவஞ்செய்யாமலும் இருக்கும்படி
இப்படிச் செய்யவேண்டும்.
நீ ஒரு பட்டணத்தின்மேல் யுத்தம்பண்ணி 19
அதைப் பிடிக்க அநேகநாள் அதை முற்
றிக்கைபோட்டிருக்கும்போது, நீ கோடரியை
ஓங்கி, [16]அதின் மரங்களை வெட்டிச் சேதம்
பண்ணாயாக; அவைகளின் கனியை நீ
புசிக்கலாமே; ஆகையால் உனக்குக் கொத்த
ளத்திற்கு உதவும் என்று அவைகளை வெட்டா
யாக; வெளியின் விருட்சங்கள் மனுஷனு
டைய ஜீவனத்துக்கானவைகள். புசிக்கிற 20
தற்கேற்ற கனிகொடாத மரம் என்று நீ அறிந்
திருக்கிற மரங்களைமாத்திரம் வெட்டி யழி
த்து, உன்னோடு யுத்தம்பண்ணுகிற பட்ட
ணம் பிடிபடுமட்டும் அதற்கு எதிராகக் கொத்
தளம் போடலாம்.

உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்குச் சுதந் **21**
தரிக்கக் கொடுக்கும் தேசத்தில், கொலைசெய்
யப்பட்டுக் கிடக்கிற ஒருவனை வெளியிலே
கண்டு; அவனைக் கொன்றவன் இன்னான்
என்று தெரியாதிருந்தால், உன் மூப்பரும் 2
உன் நியாயாதிபதிகளும் புறப்பட்டுப் போய்,
கொலைசெய்யப்பட்டவனைச் சுற்றிலும் இருக்
கும் பட்டணங்கள்மட்டும் அளப்பார்களாக.
கொலைசெய்யப்பட்டவனுக்குச் சமீபமான 3
பட்டணத்து மூப்பர், வேலையில் பண்படாத
தும் நுகத்தடியில் பிணைக்கப்படாததுமான
ஒரு கிடாரியைப் பிடித்து, உழுது விதை 4
யாத தரிசான பள்ளத்தாக்கிலே அதைக்

கொண்டுபோய், அந்தப் பள்ளத்தாக்கிலே
அதின் தலையை வெட்டிப்போடக்கடவர்கள்.
5 உன் தேவனாகிய **கர்த்தர்** தமக்கு [1]ஆராதனை
செய்யவும் **கர்த்தருடைய** நாமத்திலே [2]ஆசீர்
வதிக்கவும் லேவியின் குமாரராகிய ஆசாரி
யரைத் தெரிந்துகொண்டபடியால், அவர்க
ளும் அத்தருணத்தில் வந்திருக்கவேண்டும்;
அவர்கள் வாக்கின்படியே [3]சகல வழக்கும்
சகல காயச்சேதமும் தீர்க்கப்படவேண்டும்.
6 கொலைசெய்யப்பட்டவனுக்குச் சமீபமான
பட்டணத்தின் மூப்பர் எல்லாரும் பள்ளத்
தாக்கிலே தலை வெட்டப்பட்ட [4]கிடாரியின்
7 மேல் தங்கள் கைகளைக் கழுவி: எங்கள் கை
கள் அந்த இரத்தத்தைச் சிந்தினதும் இல்லை,
எங்கள் கண்கள் அதைக் கண்டதும் இல்லை;
8 **கர்த்தாவே**, நீர் மீட்டுக்கொண்ட உமது ஜன
மாகிய இஸ்ரவேலின்மேல் [5]குற்றமில்லாத
இரத்தப்பழியைச் சுமத்தாமல், உமது ஜன
மாகிய இஸ்ரவேலின்மேல் கிருபையுள்ளவரா
யிரும் என்று சொல்வார்களாக; அப்பொழுது
இரத்தப்பழி அவர்களுக்கு நிவிர்த்தியாகும்.
9 இப்படிக் **கர்த்தரின்** பார்வைக்குச் செம்மை
யானதை நீ செய்வாயாகில், குற்றமில்லாத
இரத்தப்பழியை [6]உன் நடுவிலிருந்து விலக்
கிப்போடுவாய்.

10 நீ உன் சத்துருக்களுக்கு எதிராக யுத்தத்
திற்குப் புறப்பட்டு, உன் தேவனாகிய **கர்த்தர்**
அவர்களை உன் கையில் ஒப்புக்கொடுக்கிறதி
11 னால், அவர்களைச் சிறைபிடித்துவந்து, சிறை
களில் ரூபவதியான [7]ஒரு ஸ்திரீயைக் கண்டு,
12 அவளை விவாகம்பண்ண விரும்பி, அவளை
உன் வீட்டிற்குள் அழைத்துக்கொண்டுபோவா
யானால், அவள் தன் தலையைச் சிரைத்து,
13 [8]தன் நகங்களைக் களைந்து, தன் சிறையிருப்
பின் வஸ்திரத்தையும் நீக்கி, உன் வீட்டிலிரு
ந்து, ஒரு மாதமட்டும் தன் தகப்பனையும்
தாயையும் நினைத்துத் துக்கங்கொண்டாடக்
கடவள்; [9]அதன்பின்பு நீ அவளோடே சேர்
ந்து, அவளுக்குப் புருஷனாயிரு, அவள் உன
14 க்கு மனைவியாயிருப்பாள். அவள்மேல் உனக்
குப் பிரியமில்லாமற்போனால், நீ அவளைப்
பணத்திற்கு விற்காமல், [10]அவளைத் தன்
இஷ்டப்படி போகவிடலாம்; நீ அவளைத்
தாழ்மைப்படுத்தினபடியினால் [11]அவளாலே
ஆதாயம் பெறும்படி தேடவேண்டாம்.
15 இரண்டு மனைவிகளையுடைய ஒருவன்,
ஒருத்தியின்மேல் விருப்பாயும்[12]மற்றவள்மேல்
வெறுப்பாயும் இருக்க, இருவரும் அவனுக்
குப் பிள்ளைகளைப் பெற்றார்களேயாகில், முதற்
பிறந்தவன் வெறுக்கப்பட்டவளின் புத்திர
16 னானாலும், தகப்பன் தனக்கு உண்டான ஆஸ்
தியைத் தன் பிள்ளைகளுக்குப் பங்கிடும் நா
ளில், வெறுக்கப்பட்டவளிடத்தில் பிறந்த
முதற்பேறானவனுக்குச் சேஷ்டபுத்திர சுதந்
தரத்தைக் கொடுக்கவேண்டுமேயல்லாமல்,
[13]விரும்பப்பட்டவளிடத்தில் பிறந்தவனுக்குக்
17 கொடுக்கலாகாது. வெறுக்கப்பட்டவளிடத்

[1] 1 நாளா. 23. 13
[2] எண். 6. 22–27
[3] உபா. 17. 8–10
[4] சங். 26. 6. மத். 27. 24
[5] 2 இரா. 24. 4. யோனா 1, 14
[6] உபா. 19. 13
[7] எண். 31. 18
[8] 1 கொ. 11. 6
[9] சங். 45. 10. லூ. 14. 26
[10] யாத். 21. 8
[11] ஆதி. 34. 2. நியா. 19. 24
[12] ஆதி. 29. 18, 20; 31. 33
[13] 1 நாளா. 5. 2 2 நாளா. 11, 21, 22
[14] 1 நாளா. 5. 1, 2
[15] ஆதி. 49. 3. 25. 31–33
[16] யாத். 20. 12. நீதி. 13. 24; 19, 18
[17] நீதி. 19. 26; 29. 17
[18] நீதி. 29. 1
[19] உபா. 19. 6. அப். 25. 11, 25
[20] யோசு. 8. 29. யோ. 19. 31
[21] கலா. 3, 13
[22] யாத். 23. 4
[23] யாத். 23. 5. எபி. 12. 12, 13

தில் பிறந்தவனைச் சேஷ்டபுத்திரனாக அங்கி
கரித்து, [14]தனக்கு உண்டான ஆஸ்திகளி
லெல்லாம் இரண்டு பங்கை அவனுக்குக் கொ
டுக்கவேண்டும்; அவன் தன் தகப்பனுடைய
முதற்பலன், [15]சேஷ்டபுத்திர சுதந்தரம் அவ
னுக்கே உரியது.
தன் தகப்பன் சொல்லையும் தன் தாயின் 18
சொல்லையும் கேளாமலும், [16]அவர்களால் தண்
டிக்கப்பட்டும், அவர்களுக்குக் கீழ்ப்படியாம
லும்போகிற அடங்காத துஷ்டப்பிள்ளை ஒரு
வனுக்கு இருந்தால், அவன் தகப்பனும் 19
அவன் தாயும் அவனைப் பிடித்து, அவன் இருக்
கும் பட்டணத்தின் மூப்பரிடத்துக்கும் அவ்
விடத்து வாசலுக்கும் அவனைக் கொண்டு
போய்: எங்கள் மகனாகிய இவன் அடங்காத 20
துஷ்டனாயிருக்கிறான்; எங்கள் சொல்லைக்
கேளான்; பெருந்தீனிக்காரனும் குடியனுமா
யிருக்கிறான் என்று பட்டணத்தின் மூப்ப
ரோடே [17]சொல்லுவார்களாக. அப்பொழுது 21
அவன் சாகும்படி அந்தப் பட்டணத்து மனித
ரெல்லாரும் [18]அவன்மேல் கல்லெறியக்கட
வர்கள்; இப்படியே தீமையை உன் நடுவி
லிருந்து விலக்கிப்போடவேண்டும்; இஸ்ர
வேலர் எல்லாரும் அதைக் கேட்டுப் பயப்படு
வார்கள்.
கொலைசெய்யப்பட ஒருவன்மேல் சாவுக் 22
குப் பாத்திரமான பாவம் உண்டாயிருக்க,
[19]அவனைக் கொலைசெய்யும்படி மரத்திலே தூக்
கிப்போடுவாயானால், இரவிலே அவன் பிரே 23
தம் மரத்திலே தொங்கலாகாது; [20]அந்நாளிலே
தானே அதை அடக்கம்பண்ணவேண்டும்;
தூக்கிப்போடப்பட்டவன் தேவனால் [21]சபிக்
கப்பட்டவன்; ஆகையால் உன் தேவனாகிய
**கர்த்தர்** உனக்குச் சுதந்தரமாகக் கொடுக்கும்
உன் தேசத்தைத் தீட்டுப்படுத்தாயாக.

உன் சகோதரனுடைய மாடாவது ஆடா **22**
வது வழிதப்பிப் போகிறதைக் கண்டாயா
னால், [22]அதைக் காணாதவன்போல் இராமல்,
அதை உன் சகோதரனிடத்துக்குத் திருப்பிக்
கொண்டுபோகக்கடவாய். உன் சகோதரன் 2
உனக்குச் சமீபமாயிராமலும் உனக்கு அறிமு
கமாயிராமலும் இருந்தால், நீ அதை உன் வீட்
டிற்குக் கொண்டுபோய், அதை உன் சகோத
ரன் தேடிவருமட்டும் உன்னிடத்திலே
வைத்து, அவனுக்குத் திரும்பக் கொடுக்கக்
கடவாய். அப்படியே அவன் கழுதையைக் 3
குறித்தும் செய்யக்கடவாய்; அவன் வஸ்திரத்
தைக்குறித்தும் அப்படியே செய்யக்கடவாய்;
உன் சகோதரனிடத்திலிருந்து காணாமற்போ
னவைகளில் எதையாகிலும் கண்டுபிடித்தாயா
னால் அப்படியே செய்யக்கடவாய்; அவை
களை நீ காணாதவன்போல் விட்டுப் போகலா
காது. உன் சகோதரனுடைய கழுதையாவது 4
அவனுடைய மாடாவது வழியிலே விழுந்துகி
டக்கிறதைக் கண்டாயானால், [23]அதைக் காணா
தவன்போல விட்டுப் போகாமல், அவனோ
டேகூட அதைத் தூக்கியெடுத்துவிடுவாயாக.

5 புருஷரின் உடைகளை ஸ்திரீகள் தரிக்கலா
காது, ஸ்திரீகளின் உடைகளைப் புருஷர் தரிக்
கலாகாது; அப்படிச் செய்கிறவர்கள் எல்லா
ரும் உன் தேவனாகிய கர்த்தருக்கு அருவருப்
பானவர்கள்.
6 வழியருகே ஒரு மரத்திலாவது தரையிலா
வது குஞ்சுகளாயினும் முட்டைகளாயினு
முள்ள ஒரு குருவிக்கூடு உனக்குத் தென்ப
டும்போது, [1]தாயானது குஞ்சுகளின்மேலா
வது முட்டைகளின்மேலாவது அடைகாத்
துக்கொண்டிருந்தால், நீ குஞ்சுகளோடே
7 தாயையும் பிடிக்கலாகாது. தாயைப் போக
விட்டு, குஞ்சுகளைமாத்திரம் எடுத்துக்கொள்ள
லாம்; [2]அப்பொழுது நீ நன்றாயிருப்பாய்;
உன் நாட்களும் நீடித்திருக்கும்.
8 நீ புதுவீட்டைக் கட்டினால், ஒருவன் உன்
மெத்தையிலிருந்து விழுகிறதினாலே, நீ ரத்தப்
பழியை உன் வீட்டின்மேல் சுமத்திக்கொள்
ளாதபடிக்கு, [3]அதற்குக் கைப்பிடி சுவரைக்
கட்டவேண்டும்.
9 உன் திராட்சத்தோட்டத்திலே [4]பற்பலவித
மான விதையை விதைக்காயாக; இப்படிச்
செய்தால் நீ விதைத்தவைகளின் பயிரையும்,
திராட்சத்தோட்டத்தின் பலனையும் தீட்டுப்ப
டுத்துவாய்.
10 மாட்டையும் கழுதையையும் [5]பிணைத்து
11 உழாதிருப்பாயாக. ஆட்டுமயிரும் பஞ்சுநூ
லும் கலந்த வஸ்திரத்தை [6]உடுத்திக்கொள்
ளாயாக.
12 நீ தரித்துக்கொள்ளுகிற உன் மேல்சட்டை
யின் நான்கு ஓரங்களிலும் [7]தொங்கல்களை
உண்டுபண்ணுவாயாக.
13 ஒரு ஸ்திரீயை விவாகம்பண்ணின ஒருவன்
அவளிடத்தில் பிரவேசித்தபின்பு [8]அவளை வெ
14 றுத்து: நான் இந்த ஸ்திரீயை விவாகம்பண்ணி,
அவளிடத்தில் சேர்ந்தபோது கன்னிமையைக்
காணவில்லை என்று அவள்மேல் ஆவலாதி
யான விசேஷங்களைச் சாற்றி, அவளுக்கு அவ
15 தூறு உண்டாக்கினால்; அந்த ஸ்திரீயின்
தகப்பனும் அவள் தாயும் அவளுடைய கன்
னிமையின் அடையாளத்தைப் பட்டணத்து
வாசலிலுள்ள மூப்பரிடத்தில் கொண்டுவரக்
16 கடவர்கள். அங்கே அந்தப் பெண்ணின்
தகப்பன்: என் மகளை இந்த மனிதனுக்கு
மனைவியாகக் கொடுத்தேன், இவன் அவளை
17 வெறுத்து, நான் உன் மகளிடத்தில் கன்னி
மையைக் காணவில்லையென்று ஆவலாதியான
விசேஷங்களை அவள்மேல் சாற்றுகிறான்;
என் மகளுடைய கன்னிமையின் அடையா
ளம் இங்கே இருக்கிறது என்று மூப்பரிடத்
தில் சொல்வானாக; பின்பு பட்டணத்து மூப்
பருக்கு முன்பாக அந்த வஸ்திரத்தை விரிக்
18 கக்கடவர்கள். அப்பொழுது அந்தப் பட்ட
ணத்து மூப்பர் அந்த மனிதனைப் பிடித்து,
19 அவனைத் தண்டித்து, அவன் இஸ்ரவேலில்
ஒரு கன்னியை அவதூறுபண்ணினதினாலே,
அவன் கையில் நூறு வெள்ளிக்காசை அபரா
தமாக வாங்கி, பெண்ணின் தகப்பனுக்குக்
கொடுக்கக்கடவர்கள்; அவளோ அவனுக்கு
மனைவியாயிருக்கவேண்டும்; அவன் தன் ஜீவ
னுள்ளளவும் [9]அவளைத் தள்ளிவிடக்கூடாது.
அந்தப் பெண்ணிடத்தில் கன்னிமை காணப் 20
படவில்லையென்னும் சங்கதி மெய்ப்பட்டதே
யானால், அந்தப் பெண்ணை அவள் தகப்பனு 21
டைய வீட்டுவாசலுக்கு முன்பாகக் கொண்டு
வந்து, அவள் இஸ்ரவேலில் மதிகெட்ட காரி
யத்தைச் செய்து, [10]தன் தகப்பன் வீட்டிலே
வேசித்தனம்பண்ணினபடியினாலே, அவளு
டைய பட்டணத்து மனிதர் அவளைக் கல்லெ
றிந்து கொல்லக்கடவர்கள்; இப்படியே தீமை
யை உன் நடுவிலிருந்து விலக்கக்கடவாய்.
புருஷனுக்கு விவாகம்பண்ணப்பட்ட ஸ்தி 22
ரீயோடே ஒருவன் சயனிக்கக் கண்டுபிடிக்கப்
பட்டால், [11]அந்த ஸ்திரீயோடே சயனித்த
மனிதனும் அந்த ஸ்திரீயும் இருவரும் சாக
வேண்டும்; இப்படியே தீமையை இஸ்ரவேலி
லிருந்து விலக்கக்கடவாய்.
கன்னிகையான ஒரு பெண் ஒருவனுக்கு 23
[12]நியமிக்கப்பட்டிருக்கையில், மற்றொருவன்
அவளை ஊருக்குள்ளே கண்டு, அவளோடே
சயனித்தால், அப்பொழுது அந்தப் பெண் 24
ஊருக்குள்ளிருந்தும் கூக்குரலிடாததினாலும்,
அந்த மனிதன் பிறனுடைய மனைவியைக்
கற்பழித்தபடியினாலும், [13]இருவரையும் அந்தப்
பட்டணத்து வாசலுக்குமுன் கொண்டுபோய்,
அவர்கள்மேல் கல்லெறிந்து கொல்லக்கடவீர்
கள்; இப்படியே தீமையை உன் நடுவிலிருந்து
விலக்கக்கடவாய்.
ஒருவனுக்கு நியமிக்கப்பட்ட பெண்ணை 25
வெளியிலே ஒருவன் கண்டு, [14]அவளைப் பல
வந்தமாய்ப் பிடித்து, அவளோடே சயனித்தா
னேயாகில், அவளோடே சயனித்த மனிதன்
மாத்திரம் சாகக்கடவன். பெண்ணுக்கு ஒன் 26
றும் செய்யலாகாது; பெண்ணின்மேல் சா
வுக்கு ஏதுவான குற்றம் இல்லை; இக்காரியம்
ஒருவன் மற்றொருவன்மேல் எழும்பி அவனு
டைய ஜீவனை வாங்கினதுபோல இருக்கிறது.
வெளியிலே அவன் அவளைக் கண்டுபிடித் 27
தான்; நியமிக்கப்பட்ட பெண் அப்பொழுது
கூக்குரலிட்டும் அவளைக் காப்பாற்றுவார் இல்
லாமற்போயிற்று.
நியமிக்கப்படாத கன்னியாஸ்திரீயாகிய 28
ஒரு பெண்ணை ஒருவன் கண்டு; [15]கையைப்
பிடித்து அவளோடே சயனிக்கையில், அவர்
கள் கண்டுபிடிக்கப்பட்டால், அவளோடே 29
சயனித்த மனிதன் பெண்ணின் தகப்பனுக்கு
ஐம்பது வெள்ளிக்காசைக் கொடுக்கக்கடவன்;
அவன் அவளைக் கற்பழித்தபடியினால், அவள்
அவனுக்குமனைவியாயிருக்கவேண்டும்; அவன்
உயிரோடிருக்குமளவும் அவளைத் தள்ளிவிடக்
கூடாது.
ஒருவனும் தன் தகப்பனுடைய மனைவி 30
யைச் சேரலாகாது, [16]தன் தகப்பன் மானத்
தை அவன் வெளிப்படுத்தலாகாது.

1 லேவி. 22. 28. லூ. 12. 6
2 உபா. 4. 40. நீதி. 22. 4
3 ஏசா. 22. 1. எரே. 19. 13
4 லேவி. 19. 19
5 2 கொ. 6. 14–16
6 லேவி. 19. 19
7 எண். 15. 38. மத். 23. 5
8 ஆதி. 29. 21. நியா. 15. 1
9 மத். 19. 8, 9
10 ஆதி. 34. 7. நியா. 20. 6, 10. 2 சாமு. 13. 12, 13
11 லேவி. 20. 10. எசே. 23. 45–48. யோவா. 8. 5. எபி. 13. 4
12 மத். 1. 18, 19
13 உபா. 21. 14, 22. 1 கொ. 5. 2, 13
14 2 சாமு. 13. 14
15 யாத். 22. 16, 17
16 லேவி. 18. 8. 1 கொ. 5. 1, 13. ரூத். 3. 9. எசே. 16. 8

**23** விதையடிக்கப்பட்டவனும், [1]சோசமறு
பட்டவனும் கர்த்தருடைய சபைக்கு உட்ப
2 டலாகாது. வேசிப்பிள்ளையும் [2]கர்த்தருடைய
சபைக்கு உட்படலாகாது; அவனுக்குப் பத்
தாம் தலைமுறையானவனும் கர்த்தருடைய
3 சபைக்கு உட்படலாகாது. அம்மோனியனும்
மோவாபியனும் கர்த்தருடைய சபைக்கு உட்
படலாகாது; [3]பத்தாம் தலைமுறையிலும் என்
றைக்கும் அவர்கள் கர்த்தருடைய சபைக்கு
4 உட்படலாகாது. நீங்கள் எகிப்திலிருந்து
புறப்பட்டுவருகிற வழியிலே, அவர்கள் அப்
பத்தோடும் தண்ணீரோடும் உங்களுக்கு எதிர்
கொண்டு வராததினிமித்தமும், [4]உன்னைச்
சபிக்கும்படியாய் மெசொப்பொத்தாமியாவின்
ஊராகிய பேத்தோரிலிருந்த பேயோரின்
குமாரன் பிலேயாமுக்குக் கூலிபேசி அவனை
அழைப்பித்ததினிமித்தமும் இப்படிச் செய்ய
5 வேண்டும். உன் தேவனாகிய கர்த்தர் பிலே
யாமுக்குச் செவிகொடுக்கச் சித்தமில்லாமல்,
உன் தேவனாகிய கர்த்தர் உன்மேல் அன்பு
கூர்ந்தபடியினால், உன் தேவனாகிய கர்த்தர்
அந்தச் சாபத்தை உனக்கு [5]ஆசீர்வாதமாக மாற
6 ப்பண்ணினார். நீ உன் ஆயுள்நாட்களுள்ள
ளவும் ஒருக்காலும் அவர்கள் சமாதானத்தையும்
7 நன்மையையும் தேடாதே. ஏதோமியனை அரு
வருக்காயாக, [6]அவன் உன் சகோதரன்; எகிப்
தியனை அருவருக்காயாக, [7]அவன் தேசத்திலே
8 பரதேசியாயிருந்தாய. மூன்றாம் தலைமுறை
யில் அவர்களுக்குப் பிறந்த பிள்ளைகள் கர்த்த
ருடைய சபைக்கு உட்படலாம்.
9 நீ படையெடுத்து உன் சத்துருக்களுக்கு
விரோதமாய்ப் புறப்படும்போது, [8]தீதான காரி
யங்கள் எல்லாவற்றிற்கும் விலகியிருப்பாயாக.
10 இராக்காலத்தில் சம்பவித்த தீட்டினாலே [9]அசு
த்தமாயிருக்கிற ஒருவன் உங்களிலிருந்தால்,
அவன் பாளயத்திற்கு வெளியே போய்,
11 பாளயத்திற்குள் வராமல், சாயங்காலத்தில்
ஜலத்திலே ஸ்நானம்பண்ணி, [10]சூரியன் அஸ்
தமிக்கும்போது பாளயத்திற்குள் வரக்கடவன்.
12 நீ வெளிக்குப் போயிருக்கத்தக்க இடம் பாள
13 யத்திற்குப் புறம்பே இருக்கவேண்டும். உன்
ஆயுதங்களோடே ஒரு சிறு கோலும் உன்னி
டத்தில் இருக்கக்கடவது; நீ மலஜலாதிக்குப்
போகும்போது, அதனால் மண்ணைத்தோண்டி,
மலஜலாதிக்கிருந்து, உன்னிலிருந்து கழிந்து
14 போனதை மூடிப்போடக்கடவாய். உன்
தேவனாகிய கர்த்தர் உன்னை இரட்சிக்கவும்,
உன் சத்துருக்களை உனக்கு ஒப்புக்கொடுக்க
வும், [11]உன் பாளயத்திற்குள்ளே உலாவிக்கொ
ண்டிருக்கிறார்; ஆகையால், அவர் உன்னி
டத்தில் அசுசியான காரியத்தைக் கண்டு,
உன்னை விட்டுப் போகாதபடிக்கு, உன் பாள
யம் சுத்தமாயிருக்கக்கடவது.
15 தன் எஜமானுக்குத் தப்பி உன்னிடத்தில்
வந்த வேலைக்காரனை [12]அவனுடைய எஜமான்
16 கையில் ஒப்புக்கொடாயாக. அவன் உனக்கு
இருக்கிற உன் வாசல்கள் ஒன்றிலே தனக்
குச் சம்மதியான இடத்தைத் தெரிந்துகொ
ண்டு, அதிலே உன்னுடனே இருப்பானாக;
[13]அவனை ஒடுக்கவேண்டாம்.
இஸ்ரவேலின் குமாரத்திகளில் ஒருத்தியும் 17
வேசியாயிருக்கக்கூடாது; [14]இஸ்ரவேலின்
குமாரரில் ஒருவனும் [15]ஆண்புணர்ச்சிக்காரனா
யிருக்கக்கூடாது. வேசிப்பணயத்தையும், 18
நாயின் கிரயத்தையும் எந்தப் பொருத்தனையி
னாலாகிலும் உன் தேவனாகிய கர்த்தரின் ஆல
யத்திலே கொண்டுவாராயாக; அவைகள் இரண்
டும் உன் தேவனாகிய கர்த்தருக்கு அருவருப்
பானவைகள்.
கடனாகக் கொடுக்கிற பணத்துக்கும் ஆகா 19
ரத்துக்கும், கடனாகக் கொடுக்கிற வேறே
எந்தப் பொருளுக்கும், [16]உன் சகோதரன்
கையில் வட்டி வாங்காயாக. அந்நியன் கையில் 20
[17]நீ வட்டி வாங்கலாம்; நீ சுதந்தரிக்கப்போகிற
தேசத்தில் உன் தேவனாகிய கர்த்தர் நீ
கையிடும் வேலையிலெல்லாம் உன்னை ஆசீர்வ
திக்கும்படி உன் சகோதரன் கையிலே வட்டி
வாங்காயாக.
நீ உன் தேவனாகிய கர்த்தருக்குப் பொருத் 21
தனைபண்ணியிருந்தால், [18]அதைச் செலுத்தத்
தாமதஞ்செய்யாதே; உன் தேவனாகிய கர்த்தர்
அதை நிச்சயமாய் உன் கையில் கேட்பார்;
அது உனக்குப் பாவமாகும். நீ பொருத்தனை 22
பண்ணாதிருந்தால், உன்மேல் பாவம் இல்லை.
உன் வாயினால் சொன்னதை [19]நிறைவேற்ற 23
வேண்டும்; உன் தேவனாகிய கர்த்தருக்கு உன்
வாயினால் நீ பொருத்தனைபண்ணிச் சொன்ன
உற்சாகபலியைச் செலுத்தித் தீர்ப்பாயாக.
நீ பிறனுடைய திராட்சத்தோட்டத்தில் 24
பிரவேசித்தால், உன் ஆசைதீர திராட்சப்
பழங்களைத் திர்ப்தியாகப் புசிக்கலாம்; உன்
கூடையிலே ஒன்றும் எடுத்துக்கொண்டு போ
கக்கூடாது. பிறனுடைய விளைச்சலில் பிர 25
வேசித்தால், உன் கையினால் கதிர்களைக்
கொய்யலாம்; [20]நீ அந்த விளைச்சலில் அரி
வாளை இடலாகாது.
ஒருவன் ஒரு ஸ்திரீயை விவாகம்பண் **24**
ணிக்கொண்டபின்பு, அவளிடத்தில் இலச்
சையான காரியத்தைக் கண்டு, அவள்மேல்
பிரியமற்றவனானால், அவன் [21]தள்ளுதலின்
சீட்டை எழுதி, அவள் கையிலே கொடுத்து,
அவளைத் தன் வீட்டிலிருந்து அனுப்பிவிட
லாம். அவள் அவனுடைய வீட்டைவிட்டுப் 2
போனபின்பு, வேறொருவனுக்கு மனைவியா
கலாம். அந்த இரண்டாம் புருஷனும் அவளை 3
வெறுத்து, தள்ளுதலின் சீட்டை எழுதி,
அவள் கையிலே கொடுத்து, அவளைத் தன்
வீட்டிலிருந்து அனுப்பிவிட்டாலும், அவளை
விவாகம்பண்ணின அந்த இரண்டாம் புரு
ஷன் இறந்துபோனாலும், அவள் தீட்டுப் 4
பட்டபடியினால், அவளைத் தள்ளிவிட்ட அவ
ளுடைய முந்தின புருஷன் திரும்பவும்
அவளை மனைவியாகச் சேர்த்துக்கொள்ளக்கூ
டாது; [22]அது கர்த்தருக்கு முன்பாக அருவருப்

1 லேவி. 21. 17–21
2 சகரி. 9. 6
3 நெகே. 13. 1, 2. ஏசா. 56. 3. ஏத். 4. 10. ஓ
4 எண். 22. 5. ழ
5 எஸ்று. 9. 12
6 ஆதி. 25. 24—26. மல். 1. 2
7 யாத். 22. 21. லேவி. 19. 34
8 யோசு. 6. 18
9 லேவி. 15. 16
10 லேவி. 15. 5
11 லேவி. 26. 12. 2 கொ. 6. 16
12 1 சாமு. 30. 15
13 யாத். 22. 21
14 லேவி. 19. 20. நீதி. 2. 16
15 ஆதி. 19. 5. 2 இரா. 23. 7
16 யாத். 22. 25. சங். 15. 6. லூ. 6. 34, 35
17 யாத். 22. 26, 27
18 எண். 30. 2. பிர. 5. 4, 5
19 சங். 66. 13, 14; 116. 18
20 மத். 12. 1
21 மத். 5. 31, 32
22 எரே. 3. 1

பானது; உன் தேவனாகிய கர்த்தர் உனக்குச்
சுதந்தரமாகக் கொடுக்கும் தேசத்தின்மேல்
பாவம் வரப்பண்ணாயாக.
5 ஒருவன் ஒரு பெண்ணைப் புதிதாய் விவா
கம்பண்ணியிருந்தால், அவன் யுத்தத்திற்குப்
புறப்படவேண்டாம்; அவன்மேல் யாதொரு
வேலையும் சுமத்தவேண்டாம்; [1]அவன் ஒரு
வருஷபரியந்தம் தன் வீட்டில் தன் இஷ்டப்
படியிருந்து, தான் விவாகம்பண்ணின ஸ்திரீ
6 யைச் சந்தோஷப்படுத்துவானாக. திரிகை
யின் அடிக்கல்லையாவது அதின் மேற்
கல்லையாவது ஒருவரும் அடகாக வாங்கக்
கூடாது; அது ஜீவனை அடகு வாங்குவது
போலாகும்.
7 தன் சகோதரராகிய இஸ்ரவேல் புத்திர
ரில் ஒருவனைத் திருடி, [2]அதினால் ஆதாயந்
தேடி, அவனை விற்றுப்போட்ட ஒருவன்
அகப்பட்டால், அந்தத் திருடன் கொலைசெய்
யப்பட வேண்டும்; இப்படியே தீமையை
உன் நடுவிலிருந்து விலக்கக்கடவாய்.
8 குஷ்டரோகத்தைக்குறித்து லேவியராகிய
ஆசாரியர் உங்களுக்குப் போதிக்கும் யாவை
யும் கவனித்துச் செய்யும்படி மிகவும் எச்சரிக்
கையாயிருங்கள்; [3]நான் அவர்களுக்குக் கட்
டளையிட்டபடியே செய்யக் கவனமாயிருப்பீர்
9 களாக. நீங்கள் எகிப்திலிருந்து புறப்பட்டு
வருகிற வழியிலே உங்கள் தேவனாகிய கர்த்
தர் மிரியாமுக்குச் செய்ததை [4]நினைத்துக்
கொள்ளுங்கள்.
10 பிறனுக்கு நீ எதாகிலும் கடனாகக் கொடுத்
தால், அவன் கொடுக்கும் அடகை வாங்க நீ
அவன் வீட்டிற்குள் பிரவேசிக்கவேண்டாம்.
11 வெளியே நிற்பாயாக; கடன் வாங்கினவன்
அந்த அடகை வெளியே உன்னிடத்தில்
12 கொண்டுவருவானாக. அவன் தரித்திரனானால்,
நீ அவன் அடகை வைத்துக்கொண்டு நித்தி
13 ரைசெய்யாமல், அவன் தன் வஸ்திரத்தைப்
போட்டுப் படுத்துக்கொண்டு [5]உன்னை ஆசீர்
வதிக்கும்படி, பொழுதுபோகும்போது, [6]திரு
ம்ப அந்த அடகை அவனுக்குக் கொடுத்துவி
டவேண்டும்; அது உன் தேவனாகிய கர்த்த
ருக்கு முன்பாக உனக்கு [7]நீதியாயிருக்கும்.
14 உன் சகோதரரிலும், உன் தேசத்தின்
வாசல்களிலுள்ள அந்நியரிலும் ஏழையும்
எளிமையுமான கூலிக்காரனை [8]ஒடுக்காயாக.
15 அவன் வேலைசெய்த நாளில்தானே, பொ
ழுது போகுமுன்னே, அவன் கூலியை அவ
னுக்குக் கொடுத்துவிடவேண்டும்; [9]அவன்
ஏழையும் அதின்மேல் ஆவலுமாயிருக்கிறான்;
அதைக் கொடாவிட்டால் அவன் உன்னைக்
குறித்துக் கர்த்தரை நோக்கி முறையிடுவான்;
அது உனக்குப் பாவமாயிருக்கும்.
16 பிள்ளைகளுக்காகப் பிதாக்களும், பிதாக்க
ளுக்காகப் பிள்ளைகளும் கொலைசெய்யப்பட
வேண்டாம்; [10]அவனவன் செய்த பாவத்தி
னிமித்தம் அவனவன் கொலைசெய்யப்பட
வேண்டும்.

1 உபா. 20. 7. நீதி. 5. 18
2 யாத். 21. 16
3 லேவி. 13. 2; 14. 2
4 எண். 12. 10. லூ. 17. 32. 1 கொ. 10. 6
5 யோபு. 29. 11–13. 2 கொ. 9. 13, 14
6 யாத். 22. 26, 27
7 ஆதி. 15. 6. சங். 106. 31. தானி. 4. 27. யாக். 2. 15—33
8 மல். 3. 5
9 லேவி. 19. 13. எரே. 22. 13. யாக். 5. 4
10 2 இரா. 14. 5, 6. எரே. 31. 29, 30. எசே. 18. 20
11 யாத். 22. 22, 27. நீதி. 22. 22. எரே. 22. 3. சகரி. 7. 10. மல். 3. 5
12 யாத். 22. 26
13 உபா. 16. 12
14 லேவி. 19. 9, 10. சங். 41. 1. நீதி. 19. 17
15 எசே. 44. 24. நீதி. 17. 15
16 மத். 10. 17. லூ. 12. 48
17 2 கொ. 11. 24
18 யோபு 18. 3
19 நீதி. 12. 10. 1 கொ. 9. 9. 1 தீமோ. 5. 18. ஓசி. 10. 11
20 ஆதி. 38. 8, 9. ரூத். 1. 12, 13. மத். 22. 24
21 ஆதி. 38. 9. ரூத். 4. 10
22 ரூத். 4. 1, 2

நீ அந்நியனுடைய நியாயத்தையும் [11]திக் 17
கற்ற பிள்ளையின் நியாயத்தையும் புரட்டாம
லும், விதவையின் வஸ்திரத்தை [12]அடகாக
வாங்காமலும் இருந்து, நீ எகிப்திலே அடி 18
மையாயிருந்ததையும், உன் தேவனாகிய கர்த்
தர் உன்னை அங்கேயிருந்து மீட்டுக்கொண்டு
வந்ததையும் நினைப்பாயாக; [13]ஆகையால், இப்
படிச் செய்யும்படி நான் உனக்குக் கட்டளை
யிடுகிறேன்.
நீ உன் பயிரை அறுக்கையில் உன் வய 19
லிலே ஒரு அரிக்கட்டை மறதியாய் வைத்து
வந்தாயானால், [14]அதை எடுத்து வரும்படி திரும்
பிப் போகவேண்டாம்; உன் தேவனாகிய கர்த்
தர் உன் கைப்பிரயாசத்திலெல்லாம் உன்னை
ஆசீர்வதிக்கும்படி, அதைப் பரதேசிக்கும் திக்
கற்ற பிள்ளைக்கும் விதவைக்கும் விட்டுவிடு
வாயாக. நீ உன் ஒலிவமரத்தை உதிர்த்து 20
விட்டபின்பு, கொம்பிலே தப்பியிருக்கிறதைப்
பறிக்கும்படி திரும்பிப் போகவேண்டாம்;
அதைப் பரதேசிக்கும் திக்கற்ற பிள்ளைக்கும்
விதவைக்கும் விட்டுவிடுவாயாக; நீ உன் 21
திராட்சப்பழங்களை அறுத்தபின்பு, மறுபடியும்
அதை அறுக்கத் திரும்பிப் போகவேண்டாம்;
அதைப் பரதேசிக்கும் திக்கற்ற பிள்ளைக்கும்
விதவைக்கும் விட்டுவிடுவாயாக. நீ எகிப்திலே 22
அடிமையாயிருந்ததை நினைப்பாயாக; ஆகை
யால், இப்படிச் செய்யும்படி நான் உனக்
குக் கட்டளையிடுகிறேன்.
மனிதருக்குள்ளே வழக்குண்டாய், அவர் **25**
கள் நியாயம் விசாரிக்கப்பட நியாயஸ்தலத்தி
லேவந்தால், [15]நியாயாதிபதிகள் நீதிமானை நீதி
மான் என்றும் குற்றவாளியைக் குற்றவாளி
என்றும் தீர்க்கக்கடவர்கள். குற்றவாளி அடி 2
களுக்குப் பாத்திரவானானால், [16]நியாயாதிபதி
அவனைக் கீழே கிடக்கப்பண்ணி, அவன் குற்
றத்திற்குத் தக்கதாய்த் தனக்கு முன்பாகக்
கணக்கின்படி அவனை அடிப்பிக்கக்கடவன்.
அவனை நாற்பது அடிவரைக்கும் [17]அடிக்க 3
லாம்; அவனை அதிலும் அதிகமாய் அடிக்கிற
தினால் உன் சகோதரன் உன் கண்களுக்கு
முன்பாக [18]நீசனாய்த் தோற்றுவான்; ஆதலால்
அவனை அதிகமாய் அடிக்கவேண்டாம்.
போரடிக்கிற மாட்டை [19]வாய் கட்டாயாக. 4
சகோதரர் ஒன்றாய்க் குடியிருக்கும்போது, 5
அவர்களில் ஒருவன் புத்திரசந்தானமில்லா
மல் மரித்தால், மரித்தவனுடைய மனைவி புற
த்திலிருக்கிற அந்நியனுக்கு மனைவியாகக்
கூடாது; அவளுடைய புருஷனின் சகோ
தரன் அவளைத் தனக்கு மனைவியாகக் கொ
ண்டு, [20]அவளிடத்தில் சேர்ந்து, புருஷனு
டைய சகோதரன் செய்யவேண்டிய கடமை
யைச் செய்யக்கடவன். மரித்த சகோதரனு 6
டைய பேர் இஸ்ரவேலில் அற்றுப்போகாத
படிக்கு, [21]அவள் பெறும் தலைப்
பிள்ளைக்குத் தரிக்கவேண்டும். அவன் தன் 7
சகோதரனுடைய மனைவியை விவாகம்பண்ண
மனதில்லாதிருந்தால், [22]அவன் சகோதர

னுடைய மனைவி வாசலில் கூடிய மூப்பரிட
த்துக்குப் போய்: என் புருஷனுடைய சகோ
தரன் தன் சகோதரனுடைய பேரை இஸ்ர
வேலில் நிலைக்கப்பண்ணமாட்டேன் என்
கிறான்; புருஷனுடைய சகோதரன் செய்ய
வேண்டிய கடமையைச் செய்ய அவன் மன
தில்லாதிருக்கிறான் என்று சொல்வாளாக.
8 அப்பொழுது அந்தப் பட்டணத்து மூப்பர்
அவனை அழைப்பித்து அவனோடே பேசியும்,
அவன் அவளை விவாகம்பண்ணிக்கொள்ள
எனக்குச் சம்மதமில்லை [1]என்று பிடிவாதமாய்ச்
9 சொன்னால், அவன் சகோதரனுடைய மனைவி
மூப்பரின் கண்களுக்கு முன்பாக அவனி
டத்தில் வந்து, [2]அவன் காலிலிருக்கிற பாத
ரட்சையைக் கழற்றி, அவன் முகத்திலே
துப்பி, தன் சகோதரன் வீட்டைக் கட்டாதவ
னுக்கு இப்படியே செய்யப்படவேண்டும்
10 என்று சொல்லக்கடவள். இஸ்ரவேலில் அப்
படிப்பட்டவன் வீடு, பாதரட்சை கழற்றிப்
போடப்பட்டவன் வீடு என்னப்படும்.
11 புருஷர் ஒருவரோடொருவர் சண்டைபண்
ணிக்கொண்டிருக்கையில், ஒருவனுடைய
மனைவி தன் புருஷனை அடிக்கிறவன் கைக்கு
அவனைத் தப்புவிக்கும்படி வந்து, தன் கை
யை நீட்டி, அடிக்கிறவன் மானத்தைப் பிடித்
12 ததுண்டானால், அவளுடைய கையைத் தறிக்
கக்கடவாய்; [3]உன் கண் அவளுக்கு இரங்க
வேண்டாம்.
13 உன் பையிலே பெரிதும் சிறிதுமான பல
வித நிறைகற்களை [4]வைத்திருக்கவேண்டாம்.
14 உன் வீட்டில் பெரிதும் சிறிதுமான பலவித
15 படிகளையும் வைத்திருக்கவேண்டாம். உன்
தேவனாகிய **கர்த்தர்** உனக்குக் கொடுக்கும்
தேசத்தில் உன் நாட்கள் நீடித்திருக்கும்படி,
குறையற்ற சுமுத்திரையான நிறை கல்லும்,
குறையற்ற சுமுத்திரையான படியும் உன்னி
16 டத்தில் இருக்கவேண்டும். இவைமுதலான
அநியாயத்தைச் செய்கிறவன் எவனும் [5]உன்
தேவனாகிய **கர்த்தருக்கு** அருவருப்பானவன்.
17 எகிப்திலிருந்து புறப்பட்டு வருகிற வழியி
லே, [6]அமலேக்கு தேவனுக்குப் பயப்படாமல்
18 உனக்கு எதிராக வந்து, நீ இளைத்து விடாய்த்
திருக்கையில், பின்வருகிற உன் பாளயத்தி
லுள்ள பலவீனரையெல்லாம் வெட்டினான்
19 என்பதை நினைத்திரு. உன் தேவனாகிய **கர்த்
தர்** நீ சுதந்தரித்துக்கொள்ள [7]உனக்குக் கொ
டுக்கும் தேசத்தின் சுற்றுப்புறத்தாராகிய உன்
னுடைய சத்துருக்களையெல்லாம் உன் தேவ
னாகிய **கர்த்தர்** விலக்கி, உன்னை இளைப்பா
றப்பண்ணும்போது, நீ அமலேக்கின் பேரை
வானத்தின்கீழ் இராதபடிக்கு அழியப்பண்
ணக்கடவாய்; இதை மறக்கவேண்டாம்.

**26** உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்குச் சுதந்
தரமாகக் கொடுக்கும் தேசத்தில் நீ போய்ச்
சேர்ந்து, அதைக் கட்டிக்கொண்டு, அதில்
2 வாசம்பண்ணும்போது, உன் தேவனாகிய
**கர்த்தர்** உனக்குக் கொடுக்கும் உன் தேசத்
தில் நீ பயிரிடும் நிலத்தின் கனிகளிலெல்லாம்
முந்தின பலனை [8]எடுத்து, ஒரு கூடையிலே
வைத்து, உன் தேவனாகிய **கர்த்தர்** தமது நா
மம் விளங்கும்படி தெரிந்துகொண்டிருக்கும்
ஸ்தானத்திற்குப் போய், அந்நாட்களில் இரு 3
க்கும் ஆசாரியனிடத்தில் சென்று, அவனை
நோக்கி: **கர்த்தர்** எங்களுக்குக் கொடுக்க நம்மு
டைய பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்தில்
வந்து சேர்ந்தேன் என்று இன்று உம்முடைய
தேவனாகிய **கர்த்தருடைய** சந்நிதியில் அறிக்
கையிடுகிறேன் என்பாயாக. அப்பொழுது 4
ஆசாரியன் அந்தக் கூடையை உன் கையி
லிருந்து வாங்கி, அதை உன் தேவனாகிய **கர்த்
தரின்** பலிபீடத்திற்கு முன்பாக வைக்கக்கட
வன். அப்பொழுது நீ உன் தேவனாகிய **கர்த் 5
தருடைய** சந்நிதியில் நின்று வசனித்துச்
சொல்லவேண்டியது என்னவென்றால்: என்
தகப்பன் [9]அழிவுக்கு நேரான [10]சீரியாதேசத்
தானாயிருந்தான்; அவன் கொஞ்சம் ஜனங்க
ளோடே எகிப்துக்குப் போய், [11]அவ்விடத்தில்
பரதேசியாய்ச் சஞ்சரித்து, அங்கே பெரிய
பலத்த திரட்சியான ஜாதியானான். எகிப்தி 6
யர் எங்களை ஒடுக்கி, [12]எங்களைச் சிறுமைப்
படுத்தி, எங்கள்மேல் கடினமான வேலையைச்
சுமத்தினபோது, எங்கள் பிதாக்களின் தேவ 7
னாகிய **கர்த்தரை** நோக்கிக் கூப்பிட்டோம்;
**கர்த்தர்** எங்கள் சத்தத்தைக் கேட்டு, [13]எங்கள்
சிறுமையையும் எங்கள் வருத்தத்தையும் எங்
கள் ஒடுக்கத்தையும் பார்த்து, எங்களைப் பல 8
த்த கையினாலும், [14]ஓங்கிய புயத்தினாலும், மகா
பயங்கரங்களினாலும், அடையாளங்களினா
லும், அற்புதங்களினாலும், எகிப்திலிருந்து
புறப்படப்பண்ணி, எங்களை இவ்விடத்துக்கு 9
அழைத்துவந்து, பாலும் தேனும் ஓடுகிற தேச
மாகிய [15]இந்தத் தேசத்தை எங்களுக்குக் கொ
டுத்தார். இப்பொழுதும், இதோ, **கர்த்தாவே**, 10
தேவரீர் எனக்குக் கொடுத்த நிலத்தினுடைய
கனிகளின் முதற்பலனைக் கொண்டுவந்தேன்
என்று சொல்லி, அதை உன் தேவனாகிய **கர்த்
தருடைய** சந்நிதியில் வைத்து, உன் தேவனா
கிய **கர்த்தருடைய** சந்நிதியில் [16]பணிந்து, நீ 11
யும் லேவியனும், [17]உன்னிடத்தில் இருக்கிற
பரதேசியும் உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்
கும் உன் வீட்டாருக்கும் அநுக்கிரகம்பண்
ணின சகல நன்மைகளினிமித்தமும் சந்தோ
ஷப்படுவீர்களாக.
தசமபாகம் செலுத்தும் வருஷமாகிய மூன் 12
றாம் வருஷத்திலே, நீ உன் வரத்திலெல்லாம்
பத்தில் ஒன்றை எடுத்து, [18]லேவியனும் பர
தேசியும் திக்கற்ற பிள்ளையும் விதவையும் உன்
வாசல்களில் புசித்துத் திர்ப்தியாகும்படி அவர்
களுக்குக் கொடுத்துத் தீர்ந்தபின்பு, நீ உன் 13
தேவனாகிய **கர்த்தருடைய** சந்நிதியில் போய்
அவரை நோக்கி: தேவரீர் எனக்குக் கொடுத்த
எல்லாக் கட்டளைகளின்படியும், நான் பரிசுத்
தமான பொருள்களை என் வீட்டிலிருந்து
எடுத்துவந்து, லேவியனுக்கும் பரதேசிக்கும்

[1] ரூத். 4. 6
[2] ரூத். 4. 7, 11.
[3] உபா. 19. 13
[4] லேவி. 19. 35, 36. நீதி. 11. 1. எசே. 45. 10. மீகா 6. 11
[5] நீதி. 11. 1. 1 தெச. 4. 6
[6] யாத். 17. 8. சங். 36. 1. நீதி. 16. 6. ரோ. 3. 18
[7] 1 சாமு. 15. 3
[8] யாத். 23. 19. எண். 18. 13. நீதி. 3. 9
[9] ஆதி. 43. 1, 2
[10] ஓசி. 12. 12
[11] ஆதி. 46. 1–6, 27. அப். 7. 15
[12] யாத். 1. 11–14
[13] யாத். 2–4. அதி
[14] யாத். 12. 37, 51
[15] யாத். 3. 8
[16] நீதி. 3. 9. 1 கொ. 10. 31
[17] 1 கொ. 9. 11
[18] லேவி. 27. 30. எண். 18. 24

திக்கற்ற பிள்ளைக்கும் விதவைக்கும் கொடுத்
தேன்; உம்முடைய கட்டளைகளில் ஒன்றை
யும் நான் மீறவும் இல்லை [1]மறக்கவும் இல்லை.
14 நான் துக்கங்கொண்டாடும்போது [2]அதில்
புசிக்கவும் இல்லை, தீட்டான காரியத்துக்கு
அதில் ஒன்றும் எடுக்கவும் இல்லை; இழவுகாரி
யத்துக்காக அதில் ஒன்றும் படைக்கவும் இல்
லை; நான் என் தேவனாகிய **கர்த்தரின்** சத்தத்
திற்குக் கீழ்ப்படிந்து, தேவரீர் எனக்குக் கட்
15 டளையிட்டபடி சகலமும் செய்தேன். நீர்
உமது பரிசுத்த வாசஸ்தலமாகிய பரலோகத்தி
லிருந்து நோக்கிப் பார்த்து, [3]உமது ஜனங்க
ளாகிய இஸ்ரவேலரையும், நீர் எங்கள் பிதாக்
களுக்கு ஆணையிட்டபடியே, எங்களுக்குக்
கொடுத்த பாலும் தேனும் ஓடுகிற தேசத்தை
யும் ஆசீர்வதியும் என்று சொல்வாயாக.
16 இந்தக் கட்டளைகளின்படியும் நியாயங்க
ளின்படியும் நீ செய்யும்பொருட்டு, இன்று
உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்குக் கட்டளை
யிடுகிறார்; ஆகையால் உன் முழு இருதயத்
தோடும் உன் முழு ஆத்துமாவோடும் அவைக
17 ளைக் காத்து நடக்கக்கடவாய். **கர்த்தர்** எனக்
குத் தேவனாயிருப்பார் என்றும், நான் அவர்
வழிகளில் நடந்து, அவர் கட்டளைகளையும்
அவர் கற்பனைகளையும் அவர் நியாயங்களையும்
கைக்கொண்டு, அவர் சத்தத்திற்குக் கீழ்ப்படி
வேன் என்றும் நீ இன்று அவருக்கு [4]வாக்
18 குக் கொடுத்தாய். **கர்த்தரும்** உனக்கு [5]வாக்
குக் கொடுத்து உனக்குச் சொல்லியிருக்கிற
படி: நீ என்னுடைய கட்டளைகளையெல்லாம்
கைக்கொண்டால், எனக்குச் சொந்த ஜனமா
19 யிருப்பாய் என்றும், நான் உண்டுபண்ணின
எல்லா ஜாதிகளைப்பார்க்கிலும், புகழ்ச்சியிலும்
கீர்த்தியிலும் மகிமையிலும் [6]உன்னைச் சிறந்தி
ருக்கும்படி செய்வேன் என்றும், நான் சொன்
னபடியே, நீ உன் தேவனாகிய **கர்த்தருக்குப்**
பரிசுத்த ஜனமாயிருப்பாய் என்றும்;
[7]அவர் இன்று உனக்குச் சொல்லுகிறார் என்
றான்.

**27** பின்பு மோசே, இஸ்ரவேலின் மூப்பர்
கூட இருக்கையில், ஜனங்களை நோக்கி:
நான் இன்று உங்களுக்கு விதிக்கிற கட்டளை
2 களையெல்லாம் கைக்கொள்ளுங்கள். உன்
தேவனாகிய **கர்த்தர்** உங்களுக்குக் கொடுக்
கும் தேசத்திற்கு நீ போக யோர்தானைக் [8]கடக்
கும் நாளில், நீ பெரிய கல்லுகளை நாட்டி,
3 அவைகளுக்குச் சாந்துபூசி, உன் பிதாக்க
ளின் தேவனாகிய **கர்த்தர்** உனக்குச் சொன்ன
படி உனக்குக் கொடுக்கும் பாலும் தேனும்
ஓடுகிற தேசத்திற்குள் பிரவேசிக்கும்படி நீ
கடந்துபோனபின்பு, இந்த நியாயப்பிரமாண
வார்த்தைகள் யாவையும் அவைகளில் எழுதக்
4 கடவாய். மேலும் நீங்கள் யோர்தானைக் கடந்த
போது, இன்று நான் உங்களுக்குக் கட்டளை
யிட்டபடி அந்தக் கல்லுகளை ஏபால் மலையிலே
5 நாட்டி, அவைகளுக்குச் சாந்துபூசி, அங்கே
இரும்பாயுதம்படாத கற்களாலே உங்கள் தேவ

[1] சங். 119. 141
[2] லேவி. 7. 20; 21. 1, 11. ஓசி. 9. 4
[3] ஏசா. 63. 15. சகரி. 2. 13
[4] யாத். 24. 7. ஏசா. 44. 5. சகரி. 13. 9. 2 கொ. 8. 5
[5] யாத். 6. 7; 19. 5, 6. தீத். 2. 14
[6] சங். 148. 14
[7] 1 பே. 2. 9
[8] யோசு. 4. 1. ஓ. 8. 30, 32
[9] யாத். 20. 25
[10] உபா. 26. 18
[11] உபா. 11. 29. யோசு. 8. 33. நியா. 9. 7
[12] உபா. 33. 10. யோசு. 8. 33. தானி. 9. 11
[13] யாத். 20.4,23. ஏசா. 44. 9. ஓசி. 13. 2, 3
[14] எரே. 11. 5. 1 கொ. 14. 16
[15] லேவி. 19. 3. எசே. 30. 17
[16] உபா. 19. 4. நீதி. 22. 28
[17] லேவி. 19. 14.
[18] யாத். 22. 21–24. மல். 3. 5
[19] லேவி. 18. 8; 20. 11. 1 கொ. 5. 1

னாகிய **கர்த்தருக்கு** ஒரு [9]பலிபீடத்தைக் கட்
டக்கடவாய். நீ உன் தேவனாகிய **கர்த்தரின்** 6
பலிபீடத்தை முழுக் கற்களாலே கட்டி, அதின்
மேல் உன் தேவனாகிய **கர்த்தருக்குச்** சர்
வாங்க தகனபலிகளையும், சமாதானபலிகளை 7
யும் இட்டு, உன் தேவனாகிய **கர்த்தருடைய**
சந்நிதியில் புசித்துச் சந்தோஷமாயிருந்து,
அந்தக் கல்லுகளில் இந்த நியாயப்பிரமாணத் 8
தின் வார்த்தைகளையெல்லாம் துலக்கமாய் எழு
தக்கடவாய் என்று கட்டளையிட்டான்.
பின்னும் மோசே, லேவியராகிய ஆசாரியர் 9
களும் கூட இருக்கையில், இஸ்ரவேலர் எல்
லாரையும் நோக்கி: இஸ்ரவேலே, கவனித்துக்
கேள்; இந்நாளிலே [10]உன் தேவனாகிய **கர்த்**
**தருக்கு** ஜனமானாய். ஆகையால் நீ உன் தேவ 10
னாகிய **கர்த்தருடைய** சத்தத்திற்குக் கீழ்ப்
படிந்து, இன்று நான் உனக்கு விதிக்கிற அவ
ருடைய கற்பனைகளின்படியும் அவருடைய
கட்டளைகளின்படியும் செய்வாயாக என்று
சொன்னான்.
மேலும் அந்நாளிலே மோசே ஜனங்களை 11
நோக்கி: நீங்கள் யோர்தானைக் கடந்தபின்பு, 12
ஜனங்கள் ஆசீர்வதிக்கப்படும்படி [11]கெரிசீம்
மலையில் சிமியோன், லேவி, யூதா, இசக்கார்,
யோசேப்பு, பென்யமீன் என்னும் கோத்தி
ரங்கள் நிற்கவேண்டும். சாபங் கூறப்படும் 13
பொருட்டு ஏபால் மலையில் ரூபன், காத்,
ஆசேர், செபுலோன், தாண், நப்தலி என்னும்
கோத்திரங்கள் நிற்கவேண்டும். அப்பொழுது 14
லேவியர் உரத்த சத்தமிட்டு [12]இஸ்ரவேல் மனி
தரெல்லாரையும் பார்த்து:
**கர்த்தருக்கு** அருவருப்பான காரியமாகிய 15
தொழிலாளிகளுடைய கைவேலையால் செய்
யப்பட்டதும் வார்ப்பிக்கப்பட்டதுமான யா
தொரு விக்கிரகத்தை உண்டுபண்ணி ஒளிப்
பிடத்திலே வைக்கிறவன் [13]சபிக்கப்பட்டவன்
என்பார்களாக; அதற்கு ஜனங்களெல்லாரும்
பிரதியுத்தரமாக ஆமென் [14]என்று சொல்லக்
கடவர்கள். தன் தகப்பனையும் தன் தாயை 16
யும் தூஷிக்கிறவன் சபிக்கப்பட்டவன் என்
பார்களாக; [15]ஜனங்களெல்லாரும் ஆமென்
என்று சொல்லக்கடவர்கள். பிறனுடைய எல் 17
லைக்குறியை ஒற்றிப்போடுகிறவன் சபிக்கப்
பட்டவன் என்பார்களாக; [16]ஜனங்களெல்லா
ரும் ஆமென் என்று சொல்லக்கடவர்கள்.
குருடனை வழிதப்பச் செய்கிறவன் சபிக்கப் 18
பட்டவன் என்பார்களாக; [17]ஜனங்களெல்லா
ரும் ஆமென் என்று சொல்லக்கடவர்கள்.
பரதேசி திக்கற்றவன் விதவை ஆகிய இவர்க 19
ளுடைய நியாயத்தைப் புரட்டுகிறவன் சபிக்
கப்பட்டவன் என்பார்களாக; [18]ஜனங்களெல்
லாரும் ஆமென் என்று சொல்லக்கடவர்கள்.
தன் தகப்பன் மனைவியோடே சயனிக்கிற 20
வன், தன் தகப்பனுடைய மானத்தைத் திறந்த
படியினாலே, சபிக்கப்பட்டவன் என்பார்க
ளாக; [19]ஜனங்களெல்லாரும் ஆமென் என்று
சொல்லக்கடவர்கள். யாதொரு மிருகத் 21

தோடே புணர்ச்சிசெய்கிறவன் சபிக்கப்பட்ட
வன் என்பார்களாக; [1]ஜனங்களெல்லாரும்
22 ஆமென் என்று சொல்லக்கடவர்கள். தன்
தகப்பனுக்காவது தாய்க்காவது குமாரத்தியா
கிய தன் சகோதரியோடே சயனிக்கிறவன்
சபிக்கப்பட்டவன் என்பார்களாக; [2]ஜனங்க
ளெல்லாரும் ஆமென் என்று சொல்லக்கட
23 வர்கள். தன் மாமியோடே சயனிக்கிறவன்
சபிக்கப்பட்டவன் என்பார்களாக; [3]ஜனங்க
ளெல்லாரும் ஆமென் என்று சொல்லக்கட
24 வர்கள். ஒளிப்பிடத்திலே பிறனைக் கொலை
செய்கிறவன் சபிக்கப்பட்டவன் என்பார்க
ளாக; [4]ஜனங்களெல்லாரும் ஆமென் என்று
25 சொல்லக்கடவர்கள். குற்றமில்லாதவனைக்
கொலைசெய்யும்படி பரிதானம் வாங்குகிறவன்
சபிக்கப்பட்டவன் என்பார்களாக; [5]ஜனங்க
ளெல்லாரும் ஆமென் என்று சொல்லக்கட
26 வர்கள். இந்த நியாயப்பிரமாண வார்த்தை
களையெல்லாம் கைக்கொண்டு நடவாதவன்
சபிக்கப்பட்டவன் என்பார்களாக; [6]ஜனங்க
ளெல்லாரும் ஆமென் என்று சொல்லக்கட
வர்கள்.

**28** இன்று நான் உனக்கு விதிக்கிற உன்
தேவனாகிய **கர்த்தருடைய** கட்டளைகளின்
படியெல்லாம் செய்ய நீ கவனமாயிருக்கும்
படிக்கு, [7]அவர் சத்தத்திற்கு உண்மையாய்ச்
செவிகொடுப்பாயானால், உன் தேவனாகிய
**கர்த்தர்** பூமியிலுள்ள சகல ஜாதிகளிலும்
2 உன்னை [8]மேன்மையாக வைப்பார். நீ உன்
தேவனாகிய **கர்த்தரின்** சத்தத்துக்குச் செவி
கொடுக்கும்போது, [9]இப்பொழுது சொல்லப்
படும் ஆசீர்வாதங்களெல்லாம் உன்மேல் வந்து
3 உனக்குப் பலிக்கும். நீ பட்டணத்திலும் ஆசீர்
வதிக்கப்பட்டிருப்பாய்; [10]வெளியிலும் ஆசீர்
4 வதிக்கப்பட்டிருப்பாய். உன் கர்ப்பத்தின்
கனியும், உன் நிலத்தின் கனியும், உன் மாடு
களின் பெருக்கமும், உன் ஆடுகளின் மந்தை
களுமாகிய உன் மிருகஜீவன்களின் பலனும்
5 [11]ஆசீர்வதிக்கப்பட்டிருக்கும். உன் கூடை
யும், மாப்பிசைகிற உன் தொட்டியும் ஆசீர்
6 வதிக்கப்பட்டிருக்கும். நீ வருகையிலும் ஆசீர்
வதிக்கப்பட்டிருப்பாய், நீ போகையிலும்
7 [12]ஆசீர்வதிக்கப்பட்டிருப்பாய். உனக்குவிரோ
தமாய் எழும்பும் உன் சத்துருக்களைக் **கர்த்தர்**
உனக்கு முன்பாக முறிய அடிக்கப்படும்படி
ஒப்புக்கொடுப்பார்; [13]ஒரு வழியாய் உனக்கு
எதிராகப் புறப்பட்டு வருவார்கள்; ஏழு வழி
யாய் உனக்கு முன்பாக ஓடிப்போவார்கள்.
8 **கர்த்தர்** உன் களஞ்சியங்களிலும், [14]நீ கையி
டும் எல்லா வேலையிலும் உனக்கு ஆசீர்வாதம்
கட்டளையிடுவார்; உன் தேவனாகிய **கர்த்தர்**
உனக்குக் கொடுக்கும் தேசத்திலே உன்னை
9 ஆசீர்வதிப்பார். நீ உன் தேவனாகிய **கர்த்த
ரின்** கட்டளைகளைக் கைக்கொண்டு, அவர் வழி
களில் நடக்கும்போது, **கர்த்தர்** உனக்கு ஆணை
யிட்டபடியே, [15]உன்னைத் தமக்குப் பரிசுத்த
10 ஜனமாக நிலைப்படுத்துவார். அப்பொழுது

1 லேவி. 18. 23: 20. 15
2 லேவி. 18. 9: 20. 17
3 லேவி. 18. 17: 20. 14
4 யாத். 21. 12-14
5 யாத். 23. 7, 8. நீதி. 1. 11-19. எசே. 22. 12
6 உபா. 28. 15. சங். 119. 21. எரே. 11. 3-5. ரோ. 10. 5. கலா. 3. 10
7 யாத். 15. 26
8 உபா. 26. 19
9 சகரி. 1. 6. 1 தீமோ. 4. 8
10 ஆதி. 39. 5. சங். 128. 1-4
11 ஆதி. 49. 25. சங். 107. 38: 127. 3
12 சங். 128. 1
13 2 சாமு. 22. 38-41. யோசு. 8. 22
14 லேவி. 25. 21. நீதி. 3. 10
15 யாத். 19. 5, 6. சங். 87. 5. 2 தெச. 3. 3. 1 பே. 5. 10
16 ஏசா. 63. 19. தானி. 9. 18, 19. மல். 3. 12
17 நீதி. 10. 22
18 யோவே. 2. 23
19 உபா. 15. 6
20 ஏசா. 30. 21
21 ஏசா. 9. 14, 15
22 புல. 2. 17
23 மல்கி. 2. 2
24 ஏசா. 30. 17. சகரி. 14. 13
25 எரே. 24. 10
26 ஆமோஸ் 4. 9, 10
27 லேவி. 26. 19. எரே. 14. 1-6
28 யோபு 18. 15-21

**கர்த்தருடைய** நாமம் உனக்குத் தரிக்கப்பட்டது
என்று பூமியின் ஜனங்களெல்லாம் கண்டு,
[16]உனக்குப் பயப்படுவார்கள். உனக்குக் 11
கொடுப்பேன் என்று **கர்த்தர்** உன் பிதாக்க
ளுக்கு ஆணையிட்ட தேசத்தில், [17]**கர்த்தர்** உன்
கர்ப்பத்தின் கனியிலும், உன் மிருகஜீவன்
களின் பலனிலும், உன் நிலத்தின் கனியிலும்
உனக்குப் பரிபூரண நன்மை உண்டாகக் கட்
டளையிடுவார். ஏற்றகாலத்தில் உன் தேசத் 12
திலே [18]மழை பெய்யவும், நீ கையிட்டுச் செய்
யும் [19]வேலைகளையெல்லாம் ஆசீர்வதிக்கவும்,
**கர்த்தர்** உனக்குத் தமது நல்ல பொக்கிஷசாலை
யாகிய வானத்தைத் திறப்பார்; நீ அநேகம் ஜாதி
களுக்குக் கடன்கொடுப்பாய், நீயோ கடன்
வாங்காதிருப்பாய். இன்று நான் உங்களுக்கு 13
விதிக்கிற வார்த்தைகள் யாவையும் விட்டு
விலகி வேறே தேவர்களைச் சேவிக்கும்படி,
[20]நீ வலதுபுறம் இடதுபுறம் சாயாமல், இன்று 14
நான் உனக்கு விதிக்கிற உன் தேவனாகிய
**கர்த்தரின்** கட்டளைகளைக் கைக்கொள்ளவும்
அவைகளின்படி நடக்கவும் அவைகளுக்குச்
செவிகொடுத்துவந்தால், **கர்த்தர்** உன்னை வா
லாக்காமல் தலையாக்குவார், [21]நீ கீழாகாமல்
மேலாவாய்.

இன்று நான் உனக்கு விதிக்கிற உன் தேவ 15
னாகிய **கர்த்தருடைய** எல்லாக் கற்பனைகளின்
படியும் கட்டளைகளின்படியும் நடக்கக் கவன
மாயிருக்கிறதற்கு, அவர் சத்தத்திற்குச் செவி
கொடாதேபோவாயாகில், இப்பொழுது
சொல்லப்படும் சாபங்களெல்லாம் உன்மேல்
வந்து, [22]உனக்குப் பலிக்கும். நீ பட்டணத் 16
திலும் சபிக்கப்பட்டிருப்பாய், [23]வெளியிலும்
சபிக்கப்பட்டிருப்பாய். உன் கூடையும், மாப் 17
பிசைகிற உன் தொட்டியும் சபிக்கப்பட்டிருக்
கும். உன் கர்ப்பத்தின் கனியும், உன் நிலத் 18
தின் கனியும், உன் மாடுகளின் பெருக்கமும்,
உன் ஆடுகளின் மந்தைகளும் சபிக்கப்பட்டி
ருக்கும். நீ வருகையிலும் சபிக்கப்பட்டிருப் 19
பாய், நீ போகையிலும் சபிக்கப்பட்டிருப்பாய்.
என்னைவிட்டு விலகி நீ செய்துவருகிற உன் 20
துர்க்கிரியைகளினிமித்தம் சீக்கிரத்தில் கெட்
டுப்போய் அழியுமட்டும், நீ கையிட்டுச் செய்
கிறதெல்லாவற்றிலும் **கர்த்தர்** உனக்குச் சாபத்
தையும் சஞ்சலத்தையும் [24]கேட்டையும் வரப்
பண்ணுவார். நீ சுதந்தரிக்கும் தேசத்தில் **கர்த் 21
தர்** உன்னை நிர்மூலமாக்குமட்டும் கொள்ளை
நோய் [25]உன்னைப் பிடித்துக்கொள்ளப்பண்ணு
வார். **கர்த்தர்** உன்னை ஈளையினாலும், காய்ச் 22
சலினாலும், உஷ்ணத்தினாலும், எரிபந்தத்தி
னாலும், [26]வறட்சியினாலும், கருக்காயினாலும்,
விஷப்பனியினாலும் வாதிப்பார்; நீ அழியுமட்
டும் இவைகள் உன்னைப் பின்தொடரும். உன் 23
தலைக்குமேலுள்ள வானம் வெண்கலமும்,
[27]உனக்குக் கீழுள்ள பூமி இரும்புமாய் இருக்
கும். உன் தேசத்து மழையைக் **கர்த்தர்** புழு 24
தியும் மண்ணுமாக பெய்யப்பண்ணுவார்; [28]நீ
அழியுமட்டும் அப்படியே வானத்திலிருந்து

25 உன்மேல் இறங்கிவரும். உன் சத்துருக்களு
க்கு முன்பாக நீ முறிய அடிக்கப்படும்படி [1]கர்த்
தர் செய்வார்; ஒரு வழியாய் அவர்களுக்கு எதி
ராகப் புறப்படுவாய், ஏழு வழியாய் அவர்க
ளுக்கு முன்பாக ஓடிப்போவாய்; நீ பூமியி
லுள்ள எல்லா ராஜ்யங்களிலும் [2]சிதறுண்டு
26 போவாய். உன் பிணம் ஆகாயத்துப் பறவை
களுக்கும் பூமியின் மிருகங்களுக்கும் இரை
யாகும்; [3]அவைகளை விரட்டுவாரில்லாதிருப்
27 பார்கள். நீ குணமாகாதபடி கர்த்தர் உன்னை
எகிப்தின் எரிபந்தமான பருக்களினாலும், மூல
வியாதியினாலும், [4]சொறியினாலும், சிரங்கினா
28 லும் வாதிப்பார். கர்த்தர் உன்னைப் புத்தி
மயக்கத்தினாலும், குருட்டாட்டத்தினாலும்,
29 மனத்திகைப்பினாலும் வாதிப்பார். குருடன்
அந்தகாரத்திலே தடவித் திரிகிறதுபோல, [5]நீ
பட்டப்பகலிலே தடவிக்கொண்டு திரிவாய்;
உன் வழிகளில் ஒன்றும் உனக்கு வாய்க்காதே
போம்; உதவிசெய்வாரில்லாமல் நீ எந்நாளும்
ஒடுக்கப்படுகிறவனும் பறிகொடுக்கிறவனுமாய்
30 இருப்பாய். பெண்ணை உனக்கு நியமிப்பாய்,
[6]வேறொருவன் அவளுடன் சயனிப்பான்;
வீட்டைக் கட்டுவாய், [7]அதிலே குடியிருக்க
மாட்டாய்; திராட்சத்தோட்டத்தை நாட்டு
வாய், அதின் பலனை அனுபவிக்கமாட்டாய்.
31 உன் மாடுகள் உன் கண்களுக்கு முன்பாக
அடிக்கப்படும், நீ அதில் ஒன்றும் புசிப்ப
தில்லை; உன் கழுதை உனக்கு முன்பாகக்
கொள்ளையிட்டுக் கொண்டுபோகப்பட்டு,
உனக்குத் திரும்ப அகப்படாமற்போம்; உன்
ஆடுகள் உன் சத்துருக்களுக்குக் கொடுக்கப்
படும், விடுவிப்பார் ஒருவரும் உனக்கு இல்லா
32 திருப்பார்கள். உன் குமாரரும் உன் குமா
ரத்திகளும் அந்நிய ஜனங்களுக்கு ஒப்புக்கொ
டுக்கப்படுவார்கள்; அவர்களைக் காண உன்
கண்கள் நாடோறும் பார்த்துப் பார்த்துப் [8]பூத்
துப்போம்; உன் கையில் பெலனில்லாதிருக்
33 கும். உன் நிலத்தின் கனியையும், [9]உன்
பிரயாசத்தின் எல்லாப் பலனையும் நீ அறியாத
ஜனங்கள் புசிப்பார்கள்; நீ சகலநாளும் ஒடுக்
கப்பட்டும் நொறுக்கப்பட்டும் இருப்பாய்.
34 உன் கண்கள் காணும் காரியங்களினாலே மதி
35 மயங்கிப்போவாய். உன் உள்ளங்கால் தொ
டங்கி [10]உன் உச்சந்தலைமட்டும் குணமாகாத
படிக்கு, கர்த்தர் உன்னை முழங்கால்களிலும்
தொடைகளிலும் கொடிய எரிபந்தப் பருக்
36 களினாலே வாதிப்பார். கர்த்தர் உன்னையும்,
உனக்காக நீ ஏற்படுத்திக்கொண்ட ராஜாவை
யும், நீயும் உன் பிதாக்களும் அறியாத ஜாதிக
ளிடத்துக்குப் [11]போகப்பண்ணுவார்; அங்கே
நீ மரமும் கல்லுமான [12]அந்நிய தேவர்களைச்
37 சேவிப்பாய். கர்த்தர் உன்னைக் கொண்டு
போய்விடும் எல்லா ஜனங்களுக்குள்ளும் பிர
மிப்பும் பழமொழியும் [13]பரியாசச் சொல்லு
38 மாவாய். மிகுந்த விதையை வயலுக்குக் கொ
ண்டுபோவாய், [14]கொஞ்சம் அறுப்பாய்; வெட்
39 டுக்கிளி [15]அதைப் பட்சித்துப்போடும். திராட்

[1] உபா. 32. 30
[2] எரே. 15. 4
[3] சங். 79. 2. எரே. 7. 33
[4] 1 சாமு. 5. 6, 12
[5] யோபு 5. 14. ஏசா. 59. 10
[6] எரே. 8. 10
[7] ஆமோஸ் 5. 11. மீகா 6. 15
[8] சங். 119. 82
[9] நெகே. 9. 36, 37. எரே. 5. 17
[10] ஏசா. 1. 6
[11] 2 நாளா. 36. 6, 17
[12] எரே. 16. 13
[13] சங். 44. 14
[14] மீகா 6. 15. ஆகாய் 1. 6
[15] யோவே. 1. 4
[16] ஆமோஸ் 7. 1, 2
[17] புல. 1. 5
[18] 12, 13. வசனம்
[19] ஏசா. 8. 18. எசே. 14. 8. 1 கொரி. 10. 11
[20] உபா. 32. 15
[21] நெகே. 9. 35-37
[22] புல. 5. 2-6
[23] எரே. 28. 14; 32. 41
[24] ஏசா. 47. 6
[25] ஏசா. 7. 18. ஓசி. 8. 1. தானி. 8. 23
[26] எரே. 5. 15; 6. 22, 23
[27] ஏசா. 1. 7; 62. 8
[28] 2 இரா. 25. 1-4

சத்தோட்டங்களை நாட்டிப் பயிரிடுவாய், ஆனா
லும் நீ திராட்சரசம் குடிப்பதும் இல்லை,
திராட்சப்பழங்களைச் சேர்ப்பதும் இல்லை;
பூச்சி [16]அதைத் தின்றுபோடும். ஒலிவமரங் 40
கள் உன் எல்லைகளிலெங்கும் இருக்கும், ஆனா
லும் அதின் எண்ணெயை நீ பூசிக்கொள்வ
தில்லை; உன் ஒலிவமரத்தின் பிஞ்சுகள் உதிர்ந்
துபோம். நீ குமாரரையும் குமாரத்திகளையும் 41
பெறுவாய், ஆனாலும் அவர்கள் உன்னோடே
கூட இரார்கள்; அவர்கள் [17]சிறைப்பட்டுப்
போவார்கள். உன் மரங்களெல்லாவற்றையும் 42
உன் நிலத்தின் கனிகளையும் விட்டில் பட்சித்
துப்போடும். உன் நடுவிலிருக்கிற அந்நியன் 43
உனக்கு மேற்பட்டு மேன்மேலும் உயர்ந்திருப்
பான்; நீ மிகவும் தாழ்த்தப்பட்டுப்போவாய்.
அவன் உன்னிடத்தில் கடன்படான், நீ அவ 44
னிடத்தில் கடன்படுவாய்; [18]அவன் தலையா
யிருப்பான், நீ வாலாயிருப்பாய். உன் தேவ 45
னாகிய கர்த்தர் உனக்கு விதித்த அவருடைய
கற்பனைகளையும் கட்டளைகளையும் கைக்கொள்
ளும்படி, நீ அவர் சத்தத்திற்குச் செவிகொடாத
படியினால், இந்தச் சாபங்கள் எல்லாம் உன்
மேல் வந்து, நீ அழியுமட்டும் உன்னைத் தொ
டர்ந்து பிடித்து, உன்னிலும் உன் சந்ததியி 46
லும் என்றைக்கும் [19]அடையாளமாகவும் அற்
புதமாகவும் இருக்கும். சகலமும் பரிபூரணமா 47
யிருக்கையில், [20]நீ மனமகிழ்ச்சியோடும் களிப்
போடும் [21]உன் தேவனாகிய கர்த்தரைச் சேவி
யாமற்போனதினிமித்தம், சகலமும் குறைவு 48
பட்டு, பட்டினியோடும் [22]தாகத்தோடும் நிர்
வாணத்தோடும், கர்த்தர் உனக்கு விரோத
மாய் அனுப்பும் சத்துருக்களைச் [23]சேவிப்பாய்;
அவர்கள் உன்னை அழித்துத் தீருமட்டும்,
இருப்பு நுகத்தடியை உன் கழுத்தின்மேல்
போடுவார்கள். கிழவன் என்று முகம்பாராம 49
லும், [24]வாலிபன் என்று இரங்காமலும் இருக்
கும் [25]கொடிய முகமுள்ளதும், உனக்குத் தெரி 50
யாத பாஷையைப் பேசுகிறதுமான ஜாதியை
வெகுதூரத்திலுள்ள பூமியின் கடையாந்தரத்தி
லிருந்து [26]கர்த்தர் உன்மேல் கழுகு பறக்கும்
வேகமாய் வரப்பண்ணுவார். நீ அழியுமட்டும் 51
அந்த ஜாதியான் உன் மிருகஜீவன்களின் பல
னையும், உன் நிலத்தின் கனியையும் [27]புசிப்
பான்; அவன் உன்னை அழித்துத் தீருமட்டும்
உன் தானியத்திலும், திராட்சரசத்திலும், எண்
ணெயிலும், உன் மந்தைகளிலுள்ள ஆடுமாடு
களிலும் உனக்கு ஒன்றும் மீதியாக வைக்க
மாட்டான். உன் தேசமெங்கும் நீ நம்பியிருக் 52
கும் உயரமும் அரணிப்புமான உன் மதில்கள்
விழுமளவும், அவன் உன் வாசல்களிலெங்கும்
உன்னை [28]முற்றிகைப்போடுவான்; உன் தேவ
னாகிய கர்த்தர் உனக்குக் கொடுத்த உன்னு
டைய தேசமெங்குமுள்ள உன்னுடைய வா
சல்கள்தோறும் உன்னை முற்றிகைப்போடு
வான். உன் சத்துருக்கள் உன்னை முற்றி 53
கைபோட்டு நெருக்குங்காலத்தில், உன் தேவ
னாகிய கர்த்தர் உனக்குக் கொடுத்த உன் கர்ப்

பக்கனியான உன் புத்திரபுத்திரிகளின் மாம்
54 சத்தைத் [1]தின்பாய். உன் சத்துருக்கள் உன்
வாசல்களிலெங்கும் உன்னை முற்றிகைப்போ
ட்டு நெருக்குங்காலத்தில், உன்னிடத்தில்
செருக்கும் சுகசெல்வமுமுள்ள மனிதன் சக
லத்தையும் இழந்து, தன் இல்லாமையினாலே
தான் தின்னும் தன் பிள்ளைகளின் மாம்சத்தி
55 லே, தன் சகோதரனுக்காகிலும், தன் மார்பில்
இருக்கிற மனைவிக்காகிலும், தனக்கு மீந்திருக்
கிற தன் மக்களில் ஒருவனுக்காகிலும் கொஞ்
சமேனும் கொடாதபடி அவர்கள்மேல் [2]வன்
56 கண்ணாயிருப்பான். உன்னிடத்தில் சுகசெல்
வத்தினாலும் செருக்கினாலும் தன் உள்ளங்கா
லைத் தரையின்மேல் வைக்க அஞ்சின செருக்
கும் சுகசெல்வமுமுள்ள ஸ்திரீ தன் கால்களின்
நடுவே புறப்பட்ட தன் நஞ்சுக்கொடியினிமித்
தமும், தான் பெற்ற [3]பிள்ளைகளினிமித்தமும்,
தன் மார்பில் இருக்கிற புருஷன்மேலும்
தன் குமாரன்மேலும் தன் குமாரத்தியின்மே
57 லும் வன்கண்ணாயிருப்பாள்; உன் சத்துருக்
கள் உன் வாசல்களில் உன்னை முற்றிகைப்
போட்டு நெருக்குங்காலத்தில், சகலமும்
குறைவுபடுவதினால், அவைகளை இரகசிய
58 மாய்த் தின்னுவாள். உன் தேவனாகிய **கர்த்**
**தர்** [4]என்னும் மகிமையும் பயங்கரமுமான
[5]நாமத்திற்குப் பயப்படும்படிக்கு, நீ இந்தப்
புஸ்தகத்தில் எழுதியிருக்கிற இந்த நியாயப்பிர
மாண வார்த்தைகளின்படியெல்லாம் நடக்கக்
59 கவனமாயிராவிட்டால், **கர்த்தர்** நீங்காதபெரிய
வாதைகளாலும் நீங்காத கொடிய ரோகங்களா
லும் உன்னையும் உன் சந்ததியையும் [6]அதிசய
60 மாய் வாதித்து, நீ கண்டு பயந்த எகிப்து [7]வியா
திகளெல்லாம் உன்மேல் வருவிப்பார்; அவை
61 கள் உன்னைப் பற்றிக்கொள்ளும். இந்த நியா
யப்பிரமாண புஸ்தகத்தில் எழுதியிராத எல்
லாப் பிணியையும் வாதையையும் நீ அழியுமள
62 வும் **கர்த்தர்** உன்மேல் வரப்பண்ணுவார். தி
ரட்சியிலே வானத்து நட்சத்திரங்களைப்போல்
இருந்த நீங்கள், உங்கள் தேவனாகிய **கர்த்த**
**ரின்** சத்தத்திற்குச் செவிகொடாமற்போனதி
63 னால், [8]கொஞ்சம் ஜனமாய்ப் போவீர்கள். **கர்த்**
**தர்** உங்களுக்கு நன்மை செய்யவும் உங்களைப்
பெருகப்பண்ணவும்எப்படி உங்கள்மேல் இரம்
மியமாயிருந்தாரோ, [9]அப்படியே **கர்த்தர்** உங்
களை அழிக்கவும் உங்களை அதம்பண்ணவும்
இரம்மியமாயிருப்பார்; நீங்கள் சுதந்தரிக்கப்
போகிற தேசத்திலிருந்து பிடுங்கிப்போடப்
64 படுவீர்கள். **கர்த்தர்** உன்னைப் பூமியின் ஒரு
முனைதுவக்கிப் பூமியின் மறுமுனைமட்டும்
இருக்கிற எல்லா ஜனங்களுக்குள்ளும் [10]சிதற
அடிப்பார்; அங்கே நீயும் உன் பிதாக்களும்
அறியாத மரமும் கல்லுமான அந்நிய தேவர்
65 களைச் சேவிப்பாய். அந்த ஜாதிகளுக்குள்ளே
உனக்கு [11]இளைப்பாறுதல் இராது, உன் உள்
ளங்கால்கள் தங்கித்தரிக்க இடமும் இராது;
அங்கே **கர்த்தர்** உனக்குத் தத்தளிக்கிற இரு
தயத்தையும், சோர்ந்துபோகிற கண்களையும்,
மனச்சஞ்சலத்தையும் கொடுப்பார். உன் 66
ஜீவன் உனக்குச் சந்தேகத்தில் ஊசலாடும்;
உன் ஜீவனைப்பற்றி நம்பிக்கையில்லாமல் இர
வும் பகலும் திகில்கொண்டிருப்பாய். நீ பயப் 67
படும் உன் இருதயத்தின் திகிலினாலும், உன்
கண்கள் காணும் காட்சியினாலும், விடியற்கா
லத்தில் எப்பொழுது சாயங்காலம் வருமோ
என்றும், [12]சாயங்காலத்தில், எப்பொழுது விடி
யற்காலம் வருமோ என்றும் சொல்லுவாய்,
இனிக் காணாதிருப்பாய் என்று நான் உனக்குச் 68
சொன்ன வழியாய், **கர்த்தர்** உன்னைக் கப்பல்
களிலே எகிப்திற்குத் திரும்பக் கொண்டுபோ
கப்பண்ணுவார்; [13]அங்கே உங்கள் சத்துருக்க
ளுக்கு வேலைக்காரராகவும் வேலைக்காரிகளாக
வும் விற்கப்படுவீர்கள்; உங்களைக் கொள்வா
ரும் இல்லாதிருப்பார்கள் என்றான்.

ஓரேபிலே இஸ்ரவேல் புத்திரரோடே **29**
பண்ணிக்கொண்ட [14]உடன்படிக்கையை அல்
லாமல், மோவாபின் தேசத்திலே அவர்களோ
டே உடன்படிக்கைபண்ண **கர்த்தர்** மோ
சேக்குக் கட்டளையிட்ட வார்த்தைகள் இவை
களே.

மோசே இஸ்ரவேலர் எல்லாரையும் வர 2
வழைத்து, அவர்களை நோக்கி: எகிப்துதேசத்தில்
உங்கள் கண்களுக்கு முன்பாகப் பார்வோனுக்
கும் அவனுடைய எல்லா ஊழியக்காரருக்கும்
அவனுடைய தேசமுழுவதற்கும், **கர்த்தர்** 3
செய்த பெரிய சோதனைகளையும், பெரிய
அடையாளங்களையும், அற்புதங்களையும் [15]கண்
ணாரக் கண்டீர்களே. ஆகிலும் **கர்த்தர்** உங் 4
களுக்கு உணரத்தக்க இருதயத்தையும், காணத்
தக்க கண்களையும், கேட்கத்தக்க காதுகளையும்
[16]இந்நாள்வரைக்கும் கொடுக்கவில்லை. **கர்த்த** 5
**ராகிய** நான் உங்கள் தேவன் என்று நீங்கள்
அறிந்துகொள்ளும்படிக்கு, நான் நாற்பது வரு
ஷம் உங்களை வனாந்தரத்தில் நடத்தினேன்;
உங்கள்மேலிருந்த வஸ்திரம் பழையதாய்ப்
போகவும் இல்லை, [17]உங்கள் காலிலிருந்த பாத
ரட்சைகள் பழையதாய்ப் போகவும் இல்லை.
நீங்கள் அப்பம் சாப்பிடவும் இல்லை, [18]திராட்ச 6
ரசமும் மதுவும் குடிக்கவும் இல்லை என்றார்.
நீங்கள் இவ்விடத்துக்கு வந்தபோது, எஸ்போ 7
னின் ராஜாவாகிய சீகோனும், [19]பாசானின்
ராஜாவாகிய ஓகும் நம்மோடே யுத்தஞ்செய்யப்
புறப்பட்டார்கள்; நாம் அவர்களை முறிய அடி
த்து, அவர்களுடைய தேசத்தைப் பிடித்து, 8
அதை ரூபனியருக்கும் காத்தியருக்கும் மனா
சேயின் பாதிக் கோத்திரத்திற்கும் சுதந்தர
மாகக் கொடுத்தோம். இப்பொழுதும் நீங்கள் 9
செய்வதெல்லாம் உங்களுக்கு வாய்க்கும்படி
க்கு, இந்த உடன்படிக்கையின் வார்த்தைக
ளைக் கைக்கொண்டு, [20]அவைகளின்படி செய்
வீர்களாக.

உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்குச் சொன் 10
னபடியேயும், [21]உன் பிதாக்களாகிய ஆபிரகா
முக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் ஆணை
யிட்டுக் கொடுத்தபடியேயும், [22]இன்று உன்

1 2 இரா. 6. 28, 29. எரே. 19. 9. புல. 2. 20; 4. 10
2 உபா. 15. 9. மத். 20. 15
3 ஏசா. 49. 15
4 யாத். 6. 2, 3. சங். 83. 18
5 நெகே. 9. 5. சங். 72. 19; 111. 9
6 தானி. 9. 12
7 உபா. 7. 15
8 நெகே. 7. 4; 9. 23. ஏசா. 1. 9
9 எரே. 32. 41. சகி. 1. 26. ஏசா. 1. 24
10 எரே. 16. 13; 50. 17
11 ஆமோஸ் 9. 4
12 யோபு. 7. 4
13 எரே. 43. 7. ஓசி. 8. 13; 9. 3
14 உபா. 5. 2, 3
15 யாத். 4. 34
16 ஏசா. 6. 9, 10; 63. 17. யோ. 8. 43. அப். 28. 26, 27. எபே. 4. 18. 2 தெச. 2. 11, 12
17 உபா. 8. 4
18 யாத். 16. 35. சங். 78. 24, 25. 1 கொ. 9. 25
19 எண். 21. 23
20 யோசு. 1. 7, 8
21 யாத். 6. 7
22 ஆதி. 17. 7

னைத் தமக்கு ஜனமாக ஏற்படுத்திக்கொள்ள
11 வும், தாம் உனக்குத் தேவனாயிருக்கவும், நீ
உன் தேவனாகிய **கர்த்தருடைய** உடன்படிக்
கைக்கும் இன்று அவர் உன்னோடே பண்ணு
கிற அவருடைய ஆணையுறுதிக்கும் [1]உட்
12 படும்படிக்கு, உங்கள் கோத்திரங்களின் தலை
வரும் உங்கள் மூப்பரும் உங்கள் அதிபதிக
13 ளும் இஸ்ரவேலின் சகல புருஷரும், உங்
கள் பிள்ளைகளும், உங்கள் மனைவிகளும், உங்
கள் பாளயத்துக்குள்ளிருக்கிற உங்கள் விற
குக்காரனும், உங்கள் தண்ணீர்க்காரனுமான
அந்நியர் எல்லாரும் இன்று உங்கள் தேவனா
கிய **கர்த்தருடைய** சமுகத்தில் [2]நிற்கிறீர்
14 களே. நான் உங்களோடேமாத்திரம் இந்த
உடன்படிக்கையையும் [3]இந்த ஆணையையும்
15 உறுதியையும்பண்ணாமல், இன்று இங்கே நம்
மோடேகூட நம்முடைய தேவனாகிய **கர்த்த
ருடைய** சமுகத்தில் நிற்கிறவர்களோடேயும்,
இன்று இங்கே நம்மோடே இராதவர்களோ
16 டேயும்கூட [4]அதைப் பண்ணுகிறேன். நாம்
எகிப்துதேசத்தில் குடியிருந்ததையும், நாம்
கடந்துவந்த இடங்களிலிருந்த ஜாதிகளின் நடு
வில் நடந்துவந்ததையும் நீங்கள் அறிந்திருக்
17 கிறீர்கள். அவர்களுடைய அருவருப்புகளை
யும், அவர்களிடத்திலிருக்கிற மரமும் கல்லும்
வெள்ளியும் பொன்னுமான அவர்களுடைய
நரகலான தேவர்களையும் கண்டிருக்கிறீர்கள்.
18 ஆகையால், அந்த ஜாதிகளின் தேவர்களைச்
சேவிக்கப் போகும்படி, இன்று நம்முடைய
தேவனாகிய **கர்த்தரை** விட்டு அகலுகிற இரு
தயமுள்ள ஒரு புருஷனாகிலும் ஸ்திரீயாகி
லும் குடும்பமாகிலும் கோத்திரமாகிலும் உங்க
ளில் இராதபடிக்கும், நஞ்சையும் எட்டியை
யும் [5]முளைப்பிக்கிற யாதொரு வேர் உங்களில்
19 இராதபடிக்கும் பாருங்கள். அப்படிப்பட்ட
வன் இந்த ஆணையுறுதியின் வார்த்தைகளைக்
கேட்டும், தாகத்தினிமித்தம் வெறிக்கக் குடி
த்து, [6]மன இஷ்டப்படி நடந்தாலும் எனக்
குச் சுகமுண்டாயிருக்கும் என்று தன் உள்
ளத்தைத் தேற்றிக்கொண்டால், **கர்த்தர்**
20 அவனை மன்னிக்கச் சித்தமாயிரார். அப்பொ
ழுது **கர்த்தரின்** கோபமும் [7]எரிச்சலும் [8]அந்த
மனிதன்மேல் புகையும்; இந்தப் புஸ்தகத்தில்
எழுதியிருக்கிற சாபங்களெல்லாம் அவன்
மேல் தங்கும்; **கர்த்தர்** அவன் பேரை வானத்
தின்கீழ் இராதபடிக்குக் [9]குலைத்துப்போடு
21 வார். இந்த நியாயப்பிரமாண புஸ்தகத்தில்
எழுதியிருக்கிற உடன்படிக்கையினுடைய
சகல சாபங்களின்படியும் அவனுக்குத் தீங்
காக **கர்த்தர்** இஸ்ரவேல் கோத்திரங்கள் எல்
லாவற்றிற்கும் அவனைப் [10]புறம்பாக்கிப்போடு
22 வார். அப்பொழுது உங்களுக்குப்பின் எழும்
பும் தலைமுறையான உங்கள் பிள்ளைகளும்,
தூரதேசத்திலிருந்து வரும் அந்நியரும், **கர்த்
தர்** இந்தத் தேசத்துக்கு வருவித்த வாதைகளை
23 யும் நோய்களையும் காணும்போதும், **கர்த்தர்**
தமது கோபத்திலும் தமது உக்கிரத்திலும்
சோதோமையும் கொமோராவையும் அத்மா
வையும் செபோயீமையும் கவிழ்த்துப்போட்ட
துபோல, [11]இந்தத் தேசத்தின் நிலங்களெல்
லாம் விதைப்பும் விளைவும் யாதொரு பூண்
டின் முளைப்பும் இல்லாதபடிக்கு, கந்தகத்தா
லும் உப்பாலும் [12]எரிக்கப்பட்டதைக் காணும்
போதும், அந்த ஜாதிகளெல்லாம் **கர்த்தர்** 24
இந்தத்தேசத்திற்கு ஏன் [13]இப்படிச் செய்தார்;
இந்த மகா கோபம் பற்றியெரிந்ததற்குக் கார
ணம் என்ன என்று சொல்லுவார்கள். அத 25
ற்கு: அவர்களுடைய பிதாக்களின் தேவனா
கிய **கர்த்தர்** அவர்களை எகிப்துதேசத்திலிரு
ந்து புறப்படப்பண்ணினபோது, அவர்க
ளோடே பண்ணின உடன்படிக்கையை
அவர்கள் விட்டுப் போய், தாங்கள் அறியா 26
மலும் தங்களுக்கு ஒரு பலனும் அளிக்காம
லும் இருக்கிற தேவர்களாகிய வேறே தேவர்
களைச் சேவித்து, அவைகளைப் பணிந்து
கொண்டபடியினாலே, **கர்த்தர்** இந்தப் புஸ்த 27
கத்தில் எழுதியிருக்கிற சாபங்கள் எல்லா
வற்றையும் இந்தத் தேசத்தின்மேல் வரப்
பண்ண, அதின்மேல் கோபம் [14]மூண்ட
வராகி, அவர்களைக் கோபத்தினாலும் உக்கி 28
ரத்தினாலும் மகா எரிச்சலினாலும் அவர்களு
டைய தேசத்திலிருந்து வேரோடே [15]பிடுங்கி,
இந்நாளில் இருக்கிறதுபோல, அவர்களை வே
றே தேசத்தில் எறிந்துவிட்டார் என்று சொல்
லப்படும். மறைவானவைகள் [16]நம்முடைய 29
தேவனாகிய **கர்த்தருக்கே** உரியவைகள்; வெ
ளிப்படுத்தப்பட்டவைகளோ, [17]இந்த நியாயப்
பிரமாணத்தின் வார்த்தைகளின்படியெல்லாம்
செய்யும்படிக்கு, நமக்கும் நம்முடைய பிள்ளை
களுக்கும் என்றென்றைக்கும் உரியவைகள்.

நான் உனக்கு முன்பாக வைத்த ஆசீர் **30**
வாதமும் சாபமுமாகிய இந்தக் காரியங்க
ளெல்லாம் உன்மேல் வரும்போது: நீ உன்
தேவனாகிய **கர்த்தரால்** துரத்திவிடப்பட்டு,
எல்லா ஜாதிகளிடத்திலும் போயிருக்கும்
போது, நீ உன் இருதயத்திலே [18]சிந்தனை
செய்து, உன் தேவனாகிய **கர்த்தரிடத்துக்கே** 2
[19]திரும்பி, இன்று நான் உனக்குக் கற்பிக்கிற
படியெல்லாம், நீயும் உன் பிள்ளைகளும் உங்
கள் முழு இருதயத்தோடும் உங்கள் முழு
ஆத்துமாவோடும் அவருடைய சத்தத்திற்குச்
செவிகொடுத்தால், உன் தேவனாகிய **கர்த்தர்** 3
உன் சிறையிருப்பைத் திருப்பி, [20]உனக்கு
இரங்கி, உன் தேவனாகிய **கர்த்தர்** உன்னைச்
சிதற அடித்த எல்லா ஜனங்களிடத்திலும்
இருக்கிற உன்னைத் திரும்பச் சேர்த்துக்
கொள்ளுவார். உன்னுடையவர்கள் வானத் 4
தின் கடையான திசைமட்டும் துரத்துண்
டிருந்தாலும், உன் தேவனாகிய **கர்த்தர்** அங்கே
இருக்கிற உன்னைக் கூட்டி, [21]அங்கே இருந்து
உன்னைக் கொண்டுவந்து, உன் பிதாக்கள் 5
சுதந்தரித்திருந்த தேசத்தை நீ சுதந்தரிக்கும்
படிக்கு, உன் தேவனாகிய **கர்த்தர்** அதில்
உன்னைச் சேர்த்து, உனக்கு நன்மைசெய்து,

1 நெகே. 10. 29
2 2 ராஜா. 23. 16. நெகே. 8, 2
3 எரே. 31. 31–33. எபி. 8. 7, 8
4 அப். 2. 39. 1 கொ. 7. 14
5 அப். 8. 23. எபி. 12. 15
6 ஏசா. 30. 1. ரோ. 2, 5
7 சங். 74. 1
8 சங். 79. 5
9 எசே. 14. 7, 8
10 மத். 24. 51
11 ஆதி. 19. 24, 25. எரே. 20. 16
12 எரே. 17. 6. செப். 2. 9
13 1 இரா. 9. 8, 9. எரே. 22. 8, 9
14 தானி. 9. 11–14
15 1 இரா. 14. 15. சங். 52. 5. நீதி. 2. 22
16 எரே. 23. 18. தானி. 2. 22, 28. 1 கொ. 2. 6
17 சங். 78. 2–7. 2 தீமோ. 3. 16
18 1 இரா. 8. 47, 48
19 நெகே. 1. 9. ஏசா. 55. 7. 1 யோ. 1. 9
20 எரே. 32. 37. எசே. 36. 24
21 நெகே. 1. 9

உன் பிதாக்களைப்பார்க்கிலும் உன்னைப் பெரு
6 கப்பண்ணுவார். உன் தேவனுகிய **கர்த்த**
**ரில்** நீ உன் முழு இருதயத்தோடும் உன்
முழு ஆத்துமாவோடும் அன்புகூர்ந்து பிழைக்
கும்படி, உன் தேவனுகிய **கர்த்தர்** உன் இரு
தயத்தையும் உன் சந்ததியாரின் இருதயத்தை
7 யும் [1]விருத்தசேதனம்பண்ணி, இந்தச் சாபங்
களையெல்லாம் [2]உன் சத்துருக்கள்மேலும்
உன்னைத் துன்பப்படுத்தின உன் பகைஞர்
8 மேலும் சுமரப்பண்ணுவார். நீயோ மனந்
திரும்பி, **கர்த்தரின்** சத்தத்திற்குச் செவி
கொடுத்து, நான் இன்று உனக்குக் கற்பிக்கிற
அவருடைய எல்லாக் கற்பனைகளின்படியும்
9 செய்வாய். அப்பொழுது உனக்கு நன்மை
உண்டாகும்படி [3]உன் தேவனுகிய **கர்த்தர்**
உன் கைகள் செய்யும் எல்லா வேலைகளிலும்,
உன் கர்ப்பத்தின் கனியிலும், உன் மிருக
ஜீவனின் பலனிலும், உன் நிலத்தின் கனியி
லும் உனக்குப் பரிபூரண முண்டாகச் செய்
10 வார். உன் தேவனுகிய **கர்த்தருடைய** சத்தத்
திற்குச் [4]செவிகொடுத்து, இந்த நியாயப்பிர
மாண புஸ்தகத்தில் எழுதியிருக்கிற அவரு
டைய கற்பனைகளையும் அவருடைய கட்டளை
களையும் கைக்கொள்ளும்போதும், உன் தேவ
னுகிய **கர்த்தரிடத்தில்** உன் முழு இருதயத்
தோடும் உன் முழு ஆத்துமாவோடும் திரும்பும்
போதும், **கர்த்தர்** உன் பிதாக்கள்மேல் சந்
தோஷமாயிருந்ததுபோல, உன்மேலும் உன
க்கு நன்மை உண்டாகத் திரும்பவும் சந்தோ
ஷமாயிருப்பார்.
11 நான் இன்று உனக்கு விதிக்கிற கட்டளை
உனக்கு மறைபொருளும் அல்ல, [5]அது உனக்
12 குத் தூரமானதும் அல்ல. நாங்கள் அதைக்
கேட்டு, அதின்படி செய்யும்பொருட்டு, எங்
கள்நிமித்தம் வானத்துக்கு ஏறி, [6]அதை எங்க
ளுக்குக் கொண்டுவருகிறவன் யாரென்று நீ
சொல்லத்தக்கதாக, அது வானத்திலுள்ளதும்
13 அல்ல; நாங்கள் அதைக் கேட்டு, அதின்படி
செய்யும்பொருட்டு, எங்கள்நிமித்தம் சமுத்
திரத்தைக் கடந்து, அதைக் கொண்டுவருகிற
வன் யார் என்று நீ சொல்லத்தக்கதாக, அது
சமுத்திரத்திற்கு அப்புறத்திலுள்ளதும் அல்ல;
14 நீ அந்த வார்த்தையின்படியே செய்யும்பொ
ருட்டு, அது உனக்கு மிகவும் சமீபமாய் உன்
வாயிலும் உன் இருதயத்திலும் இருக்கிறது.
15 இதோ, ஜீவனையும் நன்மையையும், [7]மர
ணத்தையும் தீமையையும் இன்று உனக்கு
16 முன்னே வைத்தேன். நீ பிழைத்துப் பெரு
கும்படிக்கும், நீ சுதந்தரிக்கப்போகிற தேசத்
தில் உன் தேவனுகிய **கர்த்தர்** உன்னை ஆசீர்
வதிக்கும்படிக்கும், நீ உன் தேவனுகிய **கர்த்**
**தரில்** அன்புகூரவும், [8]அவர் வழிகளில் நடக்
கவும், அவர் கற்பனைகளையும் கட்டளைகளையும்
நியாயங்களையும் [9]கைக்கொள்ளவும், நான்
17 இன்று உனக்குக் கற்பிக்கிறேன். நீ கேளாத
படிக்கு, மனம்பேதித்து, இழுப்புண்டுபோய்,
[10]வேறே தேவர்களைப் பணிந்து, அவர்களைச்
சேவிப்பாயானல், நீங்கள் சுதந்தரிக்கிறதற்கு 18
யோர்தானைக் கடந்துபோகிற தேசத்தில் நெடு
நாள் வாழாமல், நிச்சயமாய் அழிந்துபோவீர்
கள் என்பதை இன்று உங்களுக்கு [11]அறிவிக்
கிறேன். நான் ஜீவனையும் மரணத்தையும், 19
ஆசீர்வாதத்தையும் சாபத்தையும் உனக்கு முன்
வைத்தேன் என்று உங்கள்மேல் வானத்தை
யும் பூமியையும் இன்று [12]சாட்சிவைக்கிறேன்;
ஆகையால், நீயும் உன் சந்ததியும் பிழைக்கும்
படிக்கு, நீ ஜீவனைத் தெரிந்துகொண்டு, **கர்த்** 20
**தர்** உன் பிதாக்களாகிய ஆபிரகாமுக்கும் ஈசா
க்குக்கும் யாக்கோபுக்கும் கொடுப்பேன் என்று
அவர்களுக்கு ஆணையிட்டுக் கொடுத்த தேசத்
திலே குடியிருக்கும்படிக்கு, உன் தேவனுகிய
**கர்த்தரில்** அன்புகூர்ந்து, அவர் சத்தத்திற்குச்
செவிகொடுத்து, அவரைப் பற்றிக்கொள்வா
யாக; அவரே உனக்கு [13]ஜீவனும் தீர்க்காயுசு
மானவர் என்றான்.

பின்னும் மோசே போய் இஸ்ரவேலர் யா **31**
வரையும் நோக்கி: இன்று நான் [14]நூற்றிரு 2
பது வயதுள்ளவன்; இனி நான் போக்கும்
வரத்துமாயிருக்கக்கூடாது; இந்த யோர்தானை
நீ கடந்துபோவதில்லை என்று **கர்த்தர்** என்
னோடே [15]சொல்லியிருக்கிறார். உன் தேவ 3
னுகிய **கர்த்தர்**தாமே உனக்கு முன்பாகக்
[16]கடந்துபோவார், அவரே உனக்கு முன்
னின்று, அந்தத் தேசத்தாரை அழிப்பார்; நீ
அவர்கள் தேசத்தைச் சுதந்தரிப்பாய்; **கர்த்தர்**
சொன்னபடியே [17]யோசுவா உனக்கு முன்
பாகக் கடந்துபோவான். **கர்த்தர்** அழித்த 4
எமோரியரின் ராஜாக்களாகிய சீகோனுக்கும்,
ஓகுக்கும், அவர்கள் தேசத்திற்கும் செய்தது
போலவே [18]அவர்களுக்கும் செய்வார். நான் 5
உங்களுக்கு விதித்த கட்டளைகளின்படி அவர்
களுக்குச் செய்வதற்கு **கர்த்தர்** அவர்களை உங்
களுக்கு [19]ஒப்புக்கொடுப்பார். நீங்கள் பலங் 6
கொண்டு [20]திடமனதாயிருங்கள், அவர்களுக்
குப் பயப்படவும் [21]திகைக்கவும் வேண்டாம்;
உன் தேவனுகிய **கர்த்தர்**தாமே உன்னோடே
கூட வருகிறார்; அவர் உன்னை விட்டு விலகு
வதும் இல்லை, [22]உன்னைக் கைவிடுவதும்
இல்லை என்று சொன்னான். பின்பு மோசே 7
யோசுவாவை அழைத்து, இஸ்ரவேலர் எல்லா
ரும் பார்த்திருக்க, அவனை நோக்கி: பலங்
கொண்டு [23]திடமனதாயிரு; **கர்த்தர்** இவர்க
ளுக்குக் கொடுப்பேன் என்று இவர்களுடைய
பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்துக்கு நீ
இந்த ஜனத்தை அழைத்துக்கொண்டு போய்,
அதை இவர்கள் சுதந்தரிக்கும்படி செய்வாய்.
**கர்த்தர்**தாமே உனக்கு முன்பாகப் [24]போகிற 8
வர், அவர் உன்னோடே [25]இருப்பார்; அவர்
உன்னைவிட்டு விலகுவதுமில்லை, உன்னைக்
கைவிடுவதுமில்லை; நீ பயப்படவும் கலங்கவும்
வேண்டாம் என்றான்.

மோசே இந்த நியாயப்பிரமாணத்தை எழுதி, 9
[26]அதைக் **கர்த்தருடைய** உடன்படிக்கைப்
பெட்டியைச் சுமக்கிற லேவி புத்திரரான ஆசா

1 எரே. 32. 29. எசே. 11. 19; 36. 26
2 ஏசா. 14. 1-27. ஒபதி. 10
3 உபா. 28. 11
4 ஏசா. 55. 2, 3
5 சங். 147. 19. ஏசா. 45. 19
6 ரோ. 10. 6, ழ
7 1, 19. வச. உபா. 11. 26
8 மத். 22. 37, 38
9 யோ. 14. 21
10 நீதி. 14. 14
11 உபா. 8. 19
12 ஏசா. 1. 2. எரே. 2. 12, 13; 22. 29. மீகா 6. 1, 2
13 சங். 27. 1; 66. 9. யோ. 11. 25. அப். 17. 28
14 யாத். 7. 7. உபா. 34. 7
15 எண். 20. 12
16 உபா. 9. 3. சங். 44. 2, 3
17 எண். 27. 18-21
18 எண். 21. 24, 33
19 உபா. 7. 2, 18
20 யோசு. 10. 25. 1 நாளா. 22. 13
21 உபா. 20. 4. ஏசா. 43. 1-5
22 யோசு. 1. 5. எபி. 13. 5
23 ஏசா. 55. 2, 3
24 யாத். 13. 21, 22
25 யோசு. 1. 5, 9
26 25, 26. வச.

ரியருக்கும் இஸ்ரவேலுடைய மூப்பர் எல்
10 லாருக்கும் ஒப்புவித்து, அவர்களுக்குக் கட்
டளையிட்டது என்னவென்றால்: விடுதலையின்
[1]வருஷமாகிய ஒவ்வொரு ஏழாம் வருஷத்தின்
11 முடிவிலே [2]கூடாரப்பண்டிகையில், உன்
தேவனாகிய **கர்த்தர்** தெரிந்துகொள்ளும் ஸ்தா
னத்தில், இஸ்ரவேலர் எல்லாரும் அவருடைய
சந்நிதியில் சேர்ந்து வந்திருக்கும்போது,
[3]இந்த நியாயப்பிரமாணத்தை இஸ்ரவேலர்
எல்லாரும் கேட்க [4]அவர்களுக்கு முன்பாக
12 வாசிக்கக்கடவாய். புருஷர்களும் ஸ்திரீகளும்
பிள்ளைகளும் உன் வாசல்களிலிருக்கும் அந்
நியர்களுங் கேட்டு, கற்றுக்கொண்டு, உங்கள்
தேவனாகிய **கர்த்தருக்குப்** பயந்து, இந்த நியா
யப்பிரமாண வார்த்தைகளின்படியெல்லாம்
13 செய்யக் கவனமாயிருக்கும்படிக்கும், அதை
அறியாத அவர்கள் பிள்ளைகளும் [5]கேட்டு,
நீங்கள் யோர்தானைக் கடந்து சுதந்தரிக்கப்போ
கிற தேசத்தில் உயிரோடிருக்கும் நாளெல்
லாம், உங்கள் தேவனாகிய **கர்த்தருக்குப்** பயப்
படக் கற்றுக்கொள்ளும்படிக்கும் [6]ஜனத்தைக்
கூட்டி, அதை வாசிக்கவேண்டும் என்றான்.
14 பின்பு **கர்த்தர்** மோசேயை நோக்கி: இதோ,
[7]நீ மரிக்குங்காலம் சமீபித்திருக்கிறது; நான்
யோசுவாவுக்குக் கட்டளை கொடுக்கும்படி,
[8]அவனை அழைத்துக்கொண்டு, ஆசரிப்புக்
கூடாரத்தில் வந்து நில்லுங்கள் என்றார்; அப்
படியே மோசேயும் யோசுவாவும் போய், ஆச
15 ரிப்புக் கூடாரத்தில் நின்றார்கள். **கர்த்தர்**
கூடாரத்திலே மேகஸ்தம்பத்தில் [9]தரிசனமா
னார்; மேகஸ்தம்பம் கூடாரவாசல்மேல் நின்
16 றது. **கர்த்தர்** மோசேயை நோக்கி: நீ உன்
பிதாக்களோடே [10]படுத்துக்கொள்ளப்போகி
றாய்; இந்த ஜனங்கள் எழும்பி [11]தாங்கள் போ
யிருக்கும் தேசத்திலுள்ள அந்நிய தேவர்களைச்
சோரமார்க்கமாய்ப் பின்பற்றி, என்னைவிட்டு,
[12]தங்களுடனே நான் பண்ணின உடன்படிக்
17 கையை மீறுவார்கள். அந்நாளிலே நான்
அவர்கள்மேல் கோபங்கொண்டு, அவர்களைக்
கைவிட்டு, [13]என் முகத்தை அவர்களுக்கு
மறைப்பேன்; அதினால் அவர்கள் பட்சிக்கப்
படும்படிக்கு அநேக தீங்குகளும் இக்கட்டுக
ளும் அவர்களைத் தொடரும்; அந்நாளிலே அவர்
கள்: எங்கள் தேவன் எங்கள் நடுவே [14]இராததி
னாலே அல்லவா இந்தத் தீங்குகள் எங்களைத்
18 தொடர்ந்தது என்பார்கள். அவர்கள் வேறே
தேவர்களிடத்தில் திரும்பிப் போய்ச் செய்த
சகல தீமைகளினிமித்தமும் நான் அந்நாளிலே
என் முகத்தை மறைக்கவே மறைப்பேன்.
19 இப்பொழுது நீங்கள் இந்தப் பாட்டை எழு
திக்கொண்டு, இதை இஸ்ரவேல் புத்திரருக்
குப் படிப்பித்து, இந்தப் பாட்டு எனக்குச்
சாட்சியாக இஸ்ரவேல் புத்திரருக்குள்ளே
இருக்கும்படி இதை அவர்கள் வாயில் வழங்கப்
20 பண்ணுங்கள். நான் அவர்கள் பிதாக்களுக்கு
ஆணையிட்டுக் கொடுத்த பாலும் தேனும்
ஓடுகிற தேசத்தில் அவர்களைப் பிரவேசிக்கப்

1 உபா. 15. 1
2 லேவி. 23. 34
3 உபா. 16. 16
4 யோசு. 8. 34. 2 இரா. 23. 2. நெகே. 8. 1-8
5 சங். 78. 4-8
6 உபா. 4. 10
7 உபா. 34. 5
8 எண். 27. 19
9 யாத். 33. 9
10 2 சாமு. 7. 12
11 யாத். 32. 6: 34. 15
12 நியா. 2. 12, 20
13 2 நாளா. 15. 2. ஏசா. 64. 7
14 எண். 14. 42. நியா. 6. 13
15 நெகே. 9. 25, 26. ஓசி. 13. 6
16 ஓசி. 5. 3: 13. 5, 6
17 யோசு. 1. 6
18 2 இரா. 22. 8. ௸
19 உபா. 32. 9, 20
20 நியா. 2. 19. ஓசி. 9. 9
21 ஆதி. 49. 1. 2 நாளா. 34. 24
22 உபா. 30. 19. சங். 50. 4. ஏசா. 1. 2

பண்ணினபின்பு; அவர்கள் புசித்துத் திர்ப்தி
யாகிக் [15]கொழுத்துப்போயிருக்கும்போது,
அவர்கள் வேறே தேவர்களிடத்தில் திரும்பி,
அவர்களைச் சேவித்து, எனக்குக் கோபம்
மூட்டி, என் உடன்படிக்கையை மீறுவார்
கள். அநேக தீங்குகளும் இக்கட்டுகளும் 21
அவர்களைத் தொடரும்போது, அவர்கள் சந்
ததியாரின் வாயில் மறந்துபோகாதிருக்கும்
இந்தப் பாட்டே அவர்களுக்கு விரோதமான
சாட்சி பகரும்; நான் ஆணையிட்டுக் கொடுத்த
தேசத்தில் அவர்களைப் பிரவேசிக்கப்பண்ணு
திருக்கிற இப்பொழுதே அவர்கள் கொண்
டிருக்கும் [16]எண்ணம் இன்னது என்று அறி
வேன் என்றார்.
அன்றைக்கே மோசே அந்தப் பாட்டை 22
எழுதி, அதை இஸ்ரவேல் புத்திரருக்குப்
படிப்பித்தான்.
அவர் நூனின் குமாரனாகிய யோசுவாவை 23
நோக்கி: நீ பலங்கொண்டு திடமனதாயிரு,
[17]இஸ்ரவேல் புத்திரருக்கு நான் ஆணையிட்டுக்
கொடுத்த தேசத்தில் நீ அவர்களை நடத்திக்
கொண்டு போவாய்; நான் உன்னோடிருப்
பேன் என்று கட்டளையிட்டார்.
மோசே இந்த நியாயப்பிரமாணத்தின் வார் 24
த்தைகள் முழுவதையும் ஒரு புஸ்தகத்தில்
எழுதி முடித்தபின்பு, மோசே **கர்த்தருடைய** 25
உடன்படிக்கைப்பெட்டியைச் சுமக்கிறலேவி
யரை நோக்கி: நீங்கள் இந்த நியாயப்பிரமாண 26
[18]புஸ்தகத்தை எடுத்து, அதை உங்கள் தேவனா
கிய **கர்த்தருடைய** உடன்படிக்கைப்பெட்டி
யின் பக்கத்திலே வையுங்கள்; அங்கே அது
உனக்கு விரோதமான சாட்சியாயிருக்கும்.
நான் உன் கலகக் குணத்தையும் உன் கடினக் 27
கழுத்தையும் அறிந்திருக்கிறேன்; இன்று நான்
இன்னும் உங்களுடன் உயிரோடிருக்கையில்,
**கர்த்தருக்கு** விரோதமாகக் [19]கலகம்பண்ணினீர்
களே; என் மரணத்திற்குப் பின்பு எவ்வளவு
அதிகமாய்க் கலகம்பண்ணுவீர்கள்! உங்கள் 28
கோத்திரங்களிலுள்ள மூப்பர் உங்கள் அதிபதி
கள் எல்லாருடைய காதுகளும் கேட்கத்தக்க
தாக நான் இந்த வார்த்தைகளைச் சொல்லவும்,
அவர்களுக்கு விரோதமாக வானத்தையும் பூமி
யையும் சாட்சிவைக்கவும் அவர்களை என்னி
டத்தில் கூடிவரச்செய்யுங்கள். என் மரணத் 29
திற்குப் பின்பு நீங்கள் நிச்சயமாய் உங்களைக்
[20]கெடுத்து, நான் உங்களுக்குக் கட்டளையிட்ட
வழியை விட்டு விலகுவீர்கள்; ஆகையால்,
கடைசிநாட்களில் தீங்கு [21]உங்களுக்குநேரிடும்;
உங்கள் கைக்கிரியைகளினாலே **கர்த்தரைக்**
கோபப்படுத்தும்படிக்கு, அவர் பார்வைக்குப்
பொல்லாப்பானதைச் செய்வீர்கள் என்பதை
அறிவேன் என்று சொல்லி,
இஸ்ரவேல் சபையார் எல்லாரும் கேட்க 30
மோசே இந்தப் பாட்டின் வார்த்தைகளை முடி
யும்வரையும் சொன்னான்.
வானங்களே, [22]செவிகொடுங்கள், நான் **32**
பேசுவேன்; பூமியே, என் வாய்மொழிகளைக்

2 கேட்பாயாக. மழையானது இளம்பயிரின்
மேல் பொழிவதுபோல, [1]என் உபதேசம்
பொழியும்; பனித்துளிகள் புல்லின்மேல்
இறங்குவதுபோல, என் வசனம் இறங்கும்.
3 கர்த்தருடைய நாமத்தைப் பிரசித்தம்பண்ணு
வேன்; நம்முடைய தேவனுக்கு [2]மகத்துவத்
4 தைச் செலுத்துங்கள். அவர் கன்மலை; [3]அவர்
கிரியை உத்தமமானது; அவர் வழிகளெல்லாம்
[4]நியாயம், அவர் நியாயக்கேடில்லாத சத்திய
முள்ள [5]தேவன்; அவர் நீதியும் செம்மையு
மானவர்.
5 அவர்களோ தங்களைக் கெடுத்துக்கொண்
டார்கள், அவர்கள் அவருடைய பிள்ளைகள்
அல்ல; இதுவே அவர்கள் காரியம்; அவர்கள்
மாறுபாடும் தாறுமாறுமுள்ள [6]சந்ததியார்.
6 விவேகமில்லாத மதிகெட்ட ஜனங்களே, இப்
படியா கர்த்தருக்குப் [7]பதிலளிக்கிறீர்கள்.
உன்னை ஆட்கொண்ட [8]பிதா அவரல்லவா?
உன்னை உண்டாக்கி உன்னை நிலைப்படுத்தி
னவர் அவரல்லவா?
7 பூர்வநாட்களை நினை; தலைமுறை தலைமுறை
யாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்;
உன் தகப்பனைக் கேள், அவன் உனக்கு அறி
விப்பான்; [9]உன் மூப்பர்களைக் கேள், அவர்
8 கள் உனக்குச் சொல்லுவார்கள். உன்னத
மானவர் ஜாதிகளுக்குச் சுதந்தரங்களைப் [10]பங்
கிட்டு, ஆதாமின் புத்திரரை [11]வெவ்வேறாய்ப்
பிரித்தகாலத்தில், இஸ்ரவேல் புத்திரருடைய
தொகைக்குத்தக்கதாய், சர்வஜனங்களின் எல்
9 லைகளைத் திட்டம்பண்ணினார். கர்த்தருடைய
ஜனமே அவருடைய [12]பங்கு; யாக்கோபு அவ
10 ருடைய [13]சுதந்தரவீதம். பாழான நிலத்திலும்
ஊளையிடுதலுள்ள வெறுமையான அவாந்தர
வெளியிலும் அவர் அவனைக் கண்டுபிடித்தார்,
அவனை நடத்தினார், அவனை உணர்த்தினார்,
[14]அவனைத் தமது கண்மணியைப்போலக் காத்
11 தருளினார். கழுகு தன் கூட்டைக் கலைத்து,
தன் குஞ்சுகளின்மேல் அசைவாடி, தன் செ
ட்டைகளை விரித்து, [15]அவைகளை எடுத்து,
அவைகளைத் தன் செட்டைகளின்மேல் சுமந்
12 துகொண்டு போகிறதுபோல, கர்த்தர் ஒரு
வரே அவனை வழிநடத்தினார்; அந்நிய தேவன்
13 அவரோடே இருந்ததில்லை. பூமியிலுள்ள
உயர்ந்த ஸ்தானங்களின்மேல் [16]அவனை ஏறிவ
ரப்பண்ணினார்; வயலில் விளையும் பலனை
அவனுக்குப் புசிக்கக் கொடுத்தார்; கன்மலையி
லுள்ள [17]தேனையும், கற்பாறையிலிருந்து வடி
யும் எண்ணெயையும் அவன் உண்ணும்படி
14 செய்தார். பசுவின் வெண்ணெயையும், ஆட்
டின் பாலையும், பாசானில் மேயும் ஆட்டுக்
குட்டிகள் ஆட்டுக்கடாக்கள் வெள்ளாட்டுக்
கடாக்கள் இவைகளுடைய கொழுப்பையும்,
கொழுமையான கோதுமையையும், இரத்தம்
போன்ற சுயமான [18]திராட்சரசத்தையும் சாப்
பிட்டாய்.
15 யெஷூரன் *கொழுத்துப்போய் [19]உதைத்
தான்; கொழுத்து, ஸ்தூலித்து, நிணம் துன்
னினபோது, தன்னை உண்டாக்கின தேவனை
[20]விட்டு, தன் இரட்சிப்பின் கன்மலையை அச
ட்டைபண்ணினான். அந்நிய தேவர்களால் 16
அவருக்கு எரிச்சலை [21]மூட்டினார்கள்; அரு
வருப்பானவைகளினால் அவரைக் கோபப்படுத்
தினார்கள். அவர்கள் தேவனுக்குப் பலியிட 17
வில்லை; தாங்கள் அறியாதவைகளும், தங்கள்
பிதாக்கள் பயப்படாதவைகளும், நூதனமாய்த்
தோன்றிய புதுத் தெய்வங்களுமாகிய [22]பேய்
களுக்கே பலியிட்டார்கள். உன்னை ஜெநிப் 18
பித்த கன்மலையை நீ நினையாமற்போனாய்;
[23]உன்னைப் பெற்ற தேவனை மறந்தாய்.
கர்த்தர் அதைக் கண்டு, தமது குமாரரும் 19
தமது குமாரத்திகளும் [24]தம்மைக் கோபப்படுத்
தினதினிமித்தம் மனமடிவாகி, அவர்களைப்
புறக்கணித்து: என் முகத்தை அவர்களுக்கு 20
மறைப்பேன்; அவர்களுடைய முடிவு எப்படி
யிருக்கும் என்று பார்ப்பேன்; அவர்கள் மகா
மாறுபாடுள்ள சந்ததி; உண்மையில்லாத †பிள்
ளைகள். தெய்வம் அல்லாதவைகளினால் 21
எனக்கு எரிச்சலை மூட்டி, தங்கள் ‡மாயைகளி
னால் என்னைக் கோபப்படுத்தினார்கள், ஆகை
யால் மதிக்கப்படாத ஜனங்களினால் [25]அவர்
களுக்கு எரிச்சலை உண்டாக்கி, மதிகெட்ட
ஜாதியினால் அவர்களைக் கோபப்படுத்துவேன்,
என் கோபத்தினால் அக்கினி [26]பற்றிக்கொண் 22
டது, அது தாழ்ந்த நரகமட்டும் எரியும்; அது
பூமியையும் அதின் [27]பலனையும் அழித்து,
பர்வதங்களின் அஸ்திபாரங்களை வேகப்பண்
ணும். தீங்குகளை அவர்கள்மேல் குவிப்பேன்; 23
என்னுடைய [28]அம்புகளையெல்லாம் அவர்கள்
மேல் பிரயோகிப்பேன். அவர்கள் பசியினால் 24
வாடி, எரிபந்தமான [29]உஷ்ணத்தினாலும்,
கொடிய வாதையினாலும் மாண்டுபோவார்கள்;
துஷ்டமிருகங்களின் [30]பற்களையும், தரையில்
ஊரும் பாம்புகளின் விஷத்தையும் அவர்களுக்
குள் அனுப்புவேன். வெளியிலே பட்டய 25
மும், [31]உள்ளே பயங்கரமும், வாலிபனையும்
கன்னியையும், குழந்தையையும் நரைத்த கிழ
வனையும் அழிக்கும். எங்கள் கை உயர்ந்த 26
தென்றும், கர்த்தர் இதையெல்லாம் செய்ய
வில்லை என்றும் அவர்களுடைய பகைஞர்
தப்பெண்ணங்கொண்டு சொல்லுவார்கள்
என்று, நான் சத்துருவின் குரோதத்திற்கு 27
அஞ்சாதிருந்தேனானால், நான் அவர்களை
மூலைக்குமூலை [32]சிதற அடித்து, மனிதருக்
குள் அவர்களுடைய பெயர் அற்றுப்போகப்
பண்ணுவேன் என்று சொல்லியிருப்பேன்.
அவர்கள் யோசனைகெட்ட ஜாதி, [33]அவர்க 28
ளுக்கு உணர்வு இல்லை. அவர்கள் ஞான 29
மடைந்து, [34]இதை உணர்ந்து, தங்கள் முடி
வைச் சிந்தித்துக்கொண்டால் [35]நலமாயிருக்
கும் என்றார். அவர்களுடைய கன்மலை அவர் 30
களை விற்காமலும், [36]கர்த்தர் அவர்களை ஒப்
புக்கொடாமலும் இருந்தாரானால், ஒருவன்
ஆயிரம்பேரைத் துரத்தி, இரண்டுபேர் பதி
னாயிரம்பேரை ஓட்டுவதெப்படி? தங்கள் கன் 31

1 சங். 72. 6. ஏசா. 55. 10, 11. மீகா 5. 7. 1 கொ. 3. 6–8
2 1 நாளா. 29. 11. வெளி. 7. 11, 12
3 2 சாமு. 22. 3, 31. சங். 18. 2
4 தானி. 4. 37
5 யோபு 34. 10. சங். 92. 15
6 மத். 17. 17. பிலி. 2. 15
7 சங். 116. 12
8 ஏசா. 63. 16. சங். 74. 2. 1 கொ. 6. 20
9 யாத். 13. 14. சங். 44. 1
10 சகரி. 9. 2. அப். 27. 26
11 ஆதி. 11. 8
12 யாத். 19. 5. சங். 135. 4
13 சங். 78. 71. எபே. 1. 18
14 சகரி. 2. 8. சங். 17. 8. நீதி. 7. 2
15 ஏசா. 63. 9. ஓசி. 11. 3
16 ஏசா. 58. 14
17 சங். 81. 16
18 ஆதி. 49. 11
* உத்தமன். உபா. 33. 5, 26. ஏசா. 44. 2
19 1 சாமு. 2. 29 அப். 9. 5
20 நெகே. 9. 25, 26, 28
21 1 கொ. 10. 22
22 லேவி. 17. 7. சங். 106. 37. 1 கொ. 10. 20. வெளி. 9. 20
23 ஏசா. 17. 10. எரே. 2. 32
24 ஏசா. 1. 2
† விசுவாசமில்லாத. ஏசா. 30. 9. மத். 17. 17
‡ விக்கிரகங்கள். 1 சாமு. 12. 21. சங். 31. 6. அப். 14. 15
25 ரோ. 10. 19
26 புல. 4. 11
27 செப். 3. 8
28 எசே. 5. 16
29 ஆப. 3. 5
30 எசே. 14. 21
31 2 கொ. 7. 5
32 உபா. 28. 64
33 ஏசா. 27. 11. எரே. 4. 22
34 சங். 81. 13. லூக். 19. 42
35 ஏசா. 47. 7
36 ஏசா. 50. 1

மலை நம்முடைய கன்மலையைப்போல் அல்ல
என்று [1]நம்முடைய சத்துருக்களே தீர்மானிக்
32 கிறார்கள். அவர்களுடைய திராட்சச்செடி,
[2]சோதோமிலும் கொமோரா நிலங்களிலும்
பயிரான திராட்சச்செடியிலும் தாழ்ந்த ஜாதி
யாயிருக்கிறது, அவைகளின் பழங்கள் பித்
தும் அவைகளின் குலைகள் கசப்புமாய் இருக்
33 கிறது. அவர்களுடைய திராட்சரசம் [3]வலு
சர்ப்பங்களின் விஷமும் விரியன்பாம்பு
34 களின் கொடிய விஷமுமானது. இது என்
னிடத்தில் வைத்துவைக்கப்பட்டு, [4]என்
பொக்கிஷங்களில் இது முத்திரைபோடப்
35 பட்டிருக்கிறதில்லையோ? பழிவாங்குவதும்
பதிலளிப்பதும் எனக்கு [5]உரியது; ஏற்றகால
த்தில் அவர்களுடைய கால் தள்ளாடும்; அவர்க
ளுடைய ஆபத்துநாள் [6]சமீபமாயிருக்கிறது;
அவர்களுக்கு நேரிடும் காரியங்கள் தீவிரித்து
வரும்.
36 **கர்த்தர்** தம்முடைய ஜனங்களை நியாயந்தீர்
த்து; அவர்கள் பெலன் போயிற்றென்றும்,
அடைக்கப்பட்டவர்களாவது விடுதலைபெற்ற
வர்களாவது ஒருவரும் இல்லையென்றும் கா
ணும்போது, தம்முடைய ஊழியக்காரர்
37 மேல் [7]பரிதாபப்படுவார். அப்பொழுது அவர்:
அவர்கள் பலியிட்ட பலிகளின் கொழுப்
பைத் தின்று, பானபலிகளின் திராட்சரசத்
தைக் குடித்த அவர்களுடைய தெய்வங்களும்
38 [8]அவர்கள் நம்பின கன்மலையும் எங்கே? அவை
கள் எழுந்து உங்களுக்குச் சகாயம்பண்ணி
39 உங்களுக்கு மறைவிடமாயிருக்கட்டும். நான்
நானே அவர், *என்னோடே வேறே தேவன்
இல்லை என்பதை இப்பொழுது பாருங்கள்;
[9]நான் கொல்லுகிறேன், [10]நான் உயிர்ப்பிக்கி
றேன்; நான் காயப்படுத்துகிறேன், நான் சொ
ஸ்தப்படுத்துகிறேன்; என் கைக்குத் தப்புவி
40 ப்பார் இல்லை. நான் என் கரத்தை வானத்
திற்கு நேராக உயர்த்தி, [11]நான் என்றென்றை
41 க்கும் ஜீவித்திருக்கிறவர் என்கிறேன். மின்
னும் என் பட்டயத்தை நான் [12]கருக்காக்கி,
என் கையானது நியாயத்தைப் பிடித்துக்கொ
ள்ளுமானால், என் சத்துருக்களிடத்தில் பழி
வாங்கி, என்னைப் பகைக்கிறவர்களுக்குப் பதி
42 லளிப்பேன். கொலையுண்டும் சிறைப்பட்டும்
போனவர்களுடைய இரத்தத்தாலே என் அம்
புகளை [13]வெறிகொள்ளப்பண்ணுவேன்; என்
பட்டயம் தலைவர் முதல்கொண்டு சகல சத்து
43 ருக்களின் மாம்சத்தையும் பட்சிக்கும். ஜாதி
களே, அவருடைய ஜனங்களோடேகூடக்
களிகூருங்கள்; [14]அவர் தமது ஊழியக்காரரின்
இரத்தத்திற்குப் பழிவாங்கி, தம்முடைய சத்
துருக்களுக்குப் பதிலளித்து, தமது தேசத்
தின்மேலும் தமது ஜனங்களின்மேலும் கிரு
பையுள்ளவராவார்.
44 மோசேயும் நூனின் குமாரனாகிய யோசு
வாவும் வந்து, இந்தப் பாட்டின் வார்த்தைகளை
யெல்லாம் ஜனங்கள் கேட்கத்தக்கதாகச் சொன்
45 னார்கள். மோசே இந்த வார்த்தைகளையெல்
லாம் இஸ்ரவேலர் யாவருக்கும் சொல்லி முடித்
தபின்பு, அவர்களை நோக்கி: இந்த நியாயப்பிர 46
மாண வார்த்தைகளின்படியெல்லாம் உங்கள்
பிள்ளைகள் செய்யும்படி கவனமாயிருக்க, நீங்
கள் அவர்களுக்குக் கற்பிக்கும்படி, [15]நான்
இன்று உங்களுக்குச் சாட்சியாய் ஒப்புவிக்கிற
வார்த்தைகளையெல்லாம் உங்கள் மனதிலே
வையுங்கள். இது உங்களுக்கு வியர்த்தமான 47
காரியம் அல்லவே; [16]இது உங்கள் ஜீவனாயி
ருக்கிறது, நீங்கள் சுதந்தரித்துக்கொள்ளும்
படி யோர்தானைக் கடந்துபோய்ச் சேரும்
தேசத்தில் இதினால் உங்கள் நாட்களை நீடிக்
கப்பண்ணுவீர்கள் என்றான்.
அந்த நாளிலேதானே **கர்த்தர்** மோசேயை 48
நோக்கி: நீ எரிகோவுக்கு எதிரான மோவாப் 49
தேசத்திலுள்ள இந்த அபாரீம் என்னும் மலை
களிலிருக்கிற நேபோ பர்வதத்தில் [17]ஏறி,
நான் இஸ்ரவேல் சந்ததியாருக்குக் காணியாட்
சியாகக் கொடுக்கும் கானான்தேசத்தைப் பார்;
நீங்கள் சீன் வனாந்தரத்திலுள்ள காதேசிலே 50
மேரிபாவின் தண்ணீர் சமீபத்தில் இஸ்ரவேல்
புத்திரருக்குள்ளே என்னைப் [18]பரிசுத்தம்பண்
ணாமல், அவர்கள் நடுவே என் கட்டளைகளை
[19]மீறினதினாலே, உன் சகோதரனாகிய ஆ 51
ரோன் [20]ஓர் என்னும் மலையிலே மரித்து, தன்
ஜனத்தாரிடத்தில் சேர்க்கப்பட்டதுபோல நீ
யும் ஏறப்போகிற மலையிலே மரித்து, உன்
ஜனத்தாரிடத்தில் சேர்க்கப்படுவாய். நான் 52
இஸ்ரவேல் புத்திரருக்குக் கொடுக்கப்போகிற
எதிரேயிருக்கிற தேசத்தை நீ பார்ப்பாய்;
[21]ஆனாலும் அதற்குள் நீ பிரவேசிப்பதில்லை
என்றார்.

33 தேவனுடைய மனுஷனாகிய [22]மோசே
தான் மரணமடையுமுன்னே இஸ்ரவேல் புத்
திரரை ஆசீர்வதித்த [23]ஆசீர்வாதமாவது:
**கர்த்தர்** சீனாயிலிருந்து எழுந்தருளி, சேயீ 2
ரிலிருந்து [24]அவர்களுக்கு உதயமானார்; பா
ரான் மலையிலிருந்து பிரகாசித்து, பதினாயிரங்
களான பரிசுத்தவான்களோடே [25]பிரசன்ன
மானார்; அவர்களுக்காக அக்கினிமயமான பிர
மாணம் அவருடைய வலதுகரத்திலிருந்து புற
ப்பட்டது. மெய்யாகவே அவர் ஜனங்களைச் 3
[26]சிநேகிக்கிறார்; அவருடைய பரிசுத்தவான்
கள் எல்லாரும் [27]உம்முடைய கையில் இருக்
கிறார்கள்; அவர்கள் உம்முடைய பாதத்தில்
விழுந்து, [28]உம்முடைய வார்த்தைகளினால்
போதனையடைவார்கள்.
மோசே நமக்கு ஒரு நியாயப்பிரமாணத் 4
தைக் கற்பித்தான்; [29]அது யாக்கோபின் சபை
க்குச் சுதந்தரமாயிற்று. ஜனங்களின் தலைவ 5
ரும் இஸ்ரவேலின் கோத்திரங்களும் கூட்டங்
கூடினபோது அவர் யெஷூரனுக்கு [30]இராஜா
வாயிருந்தார்.
ரூபன் சாவாமல் பிழைப்பானாக; [31]அவன் 6
ஜனம் கொஞ்சமாயிராது என்றான்.
அவன் யூதாவைக்குறித்து: **கர்த்தாவே**, 7
யூதாவின் சத்தத்தைக் கேட்டு, அவன் தன்

1 1 சாமு. 2. 2: 4. 8
2 ஏசா. 1. 10
3 சங். 58. 4; 140. 3. ரோ. 3. 13
4 எரே. 2. 22. ரோ. 2. 5
5 ரோ. 12. 19. எபி. 10. 30
6 2 பே. 2. 3
7 கிய. 10. 15, 16
8 கிய. 10. 14. எரே. 2. 28
* நான்தான் அவர், என்னைத் தவிர. ஏசா. 45. 5, 18, 22
9 1 சாமு. 2. 6
10 சங். 68. 20. வெளி. 1. 17, 18
11 ஆதி. 14. 22
12 எசே. 21. 9–15
13 சங். 45. 5
14 ரோ. 15. 10. வெளி. 19. 2
15 நீதி. 3. 1–4. எசே. 40. 4
16 லேவி. 18. 5. நீதி. 4. 22. ரோ. 10. 5
17 எண். 27. 12, 13
18 லேவி. 10. 3. ஏசா. 8. 13
19 எண். 20. 11, 12
20 எண். 20. 24–29
21 எண். 27. 12. உபா. 34. 1–4
22 சங். 90
23 ஆதி. 49. 28
24 யாத். 19. 18, 20. கியா. 5. 4, 5. ஆப. 3. 3
25 சங். 68. 17. அப். 7. 53. கலா. 3. 19
26 ஓசி. 11. 1. 1 யோ. 4. 19
27 1 சாமு. 2. 9. சங். 31. 15. யோ. 17. 11–15
28 லூ. 10. 39. அப். 22. 3. 1 தெச. 1. 6
29 யோ. 1. 17; 7. 19. சங். 119. 111
30 உபா. 32. 15
31 ஆதி. 49. 3. ஓ

ஜனத்தோடே திரும்பச் சேரப்பண்ணும்;
அவன் கை பலக்கக்கடவது; [1]அவனுடைய
சத்துருக்களுக்கு அவனை நீங்கலாக்கி விடுவிக்
கிற சகாயராயிருப்பீராக என்றான்.
8 லேவியைக்குறித்து: நீ மாசாவிலே பரீட்
சைபார்த்து, மேரிபாவின் தண்ணீரிடத்தில்
வாக்குவாதம்பண்ணின உன் பரிசுத்த புரு
ஷன் *வசமாய் உன்னுடைய தும்மீம் ஊரீம்
9 [2]என்பவைகள் இருப்பதாக. தன் தகப்ப
னுக்கும் தன் தாய்க்கும்: நான் உங்களைப் பா
ரேன் என்று சொல்லி, தன் சகோதரனை [3]அங்
கிகரியாமல், தன் பிள்ளைகளையும் அறியாமலி
ருக்கிறவன் வசமாய் அவைகள் இருப்பதாக;
அவர்கள் உம்முடைய வார்த்தைகளைக் கைக்
கொண்டு, [4]உம்முடைய உடன்படிக்கையைக்
10 காக்கிறவர்கள். அவர்கள் யாக்கோபுக்கு
உம்முடைய நியாயங்களையும், இஸ்ரவேலுக்கு
உம்முடைய பிரமாணத்தையும் போதித்து,
[5]உமது சந்நிதானத்திலே தூபவர்க்கத்தையும்,
உமது பலிபீடத்தின்மேல் சர்வாங்க தகனபலி
11 களையும் இடுவார்கள். கர்த்தாவே, அவன்
சம்பத்தை ஆசீர்வதித்து, [6]அவன் கைக்கிரியை
யின்மேல் பிரியமாயிரும்; அவனைப் பகைத்து
அவனுக்கு விரோதமாய் எழும்புகிறவர்கள்
திரும்ப எழுந்திராதபடி அவர்களுடைய இடு
ப்புகளை நொறுக்கிவிடும் என்றான்.
12 பென்யமீனைக்குறித்து: கர்த்தருக்குப் பிரிய
மானவன், அவரோடே சுகமாய்த் தங்கியிருப்
பான்; [7]அவனை எக்காலும் அவர் காப்பாற்றி,
அவன் எல்லைக்குள்ளே வாசமாயிருப்பார்
என்றான்.
13 யோசேப்பைக்குறித்து: கர்த்தரால் அவ
னுடைய தேசம் ஆசீர்வதிக்கப்படுவதாக; [8]அது
வானத்தின் செல்வத்தினாலும், பனியினாலும்,
14 ஆழத்திலுள்ள நீரூற்றுகளினாலும், சூரியன்
பக்குவப்படுத்தும் அருமையான கனிகளினா
லும், சந்திரன் பக்குவப்படுத்தும் அருமை
15 யான பலன்களினாலும், ஆதிபர்வதங்களில்
உண்டாகும் திரவியங்களினாலும், நித்திய மலை
களில் பிறக்கும் அரும்பொருள்களினாலும்,
16 நாடும் அதின் நிறைவும் கொடுக்கும் அருமை
யான தானியங்களினாலும் ஆசீர்வதிக்கப்படு
வதாக. முட்செடியில் எழுந்தருளினவரின்
[9]தயை யோசேப்புடைய சிரசின்மேலும்,
தன் சகோதரரில் விசேஷித்தவனுடைய உச்
17 சந்தலையின்மேலும் வருவதாக. அவன் அலங்
காரம் அவன் தலையீற்றுக் காளையினுடைய
[10]அலங்காரத்தைப்போலவும், அவன் கொம்பு
கள் காண்டாமிருகத்தின் கொம்புகளைப்போல
வும் [11]இருக்கும்; அவைகளாலே ஜனங்களை
ஏகமாய்த் தேசத்தின் கடையாந்தரங்கள்மட்
டும் முட்டித் துரத்துவான்; அவைகள் எப்பி
ராயீமின் பதினாயிரங்களும் மனாசேயின் ஆயி
ரங்களுமானவைகள் என்றான்.
18 செபுலோனைக்குறித்து: செபுலோனே, [12]நீ
வெளியே புறப்பட்டுப்போகையிலும், இசக்
காரே, நீ உன் கூடாரங்களில் தங்குகையிலும்
சந்தோஷமாயிரு. ஜனங்களை அவர்கள் மலை 19
யின்மேல் வரவழைத்து, [13]அங்கே நீதியின்
பலிகளை [14]இடுவார்கள்; கடல்களிலுள்ள சம்
பூரணத்தையும் மணலுக்குள்ளே மறைந்திருக்
கும் பொருள்களையும் அநுபவிப்பார்கள் என்
றான்.
காத்தைக்குறித்து: காத்துக்கு [15]விஸ்தார 20
மான இடத்தைக் கொடுக்கிறவர் ஸ்தோத்தி
ரிக்கப்பட்டவர்; அவன் சிங்கத்தைப்போல் தங்
கியிருந்து, புயத்தையும் உச்சந்தலையையும் பீறி
ப்போடுவான். அவன் தனக்காக முதல் இட 21
த்தைப் பார்த்துக்கொண்டான்; [16]அங்கே தன
க்கு நியாயப்பிரமாணிகன் கொடுத்த பங்கு பத்
திரமாயிருக்கிறது; ஆனாலும் அவன் ஜனத்
தின் முன்னணியாய் வந்து, மற்ற இஸ்ரவே
லுடனே கர்த்தரின் நீதியையும் அவருடைய
நியாயங்களையும் [17]நடப்பிப்பான் என்றான்.
தாணைக்குறித்து: தாண் ஒரு பாலசிங்கம், 22
[18]அவன் பாசானிலிருந்து பாய்வான் என்
றான்.
நப்தலியைக்குறித்து: நப்தலி கர்த்தருடைய 23
தயவினாலே திர்ப்தியடைந்து, [19]அவருடைய
ஆசீர்வாதத்தினாலே நிறைந்திருப்பான். நீ மேற்
றிசையையும் தென்திசையையும் [20]சுதந்தரித்
துக்கொள் என்றான்.
ஆசேரைக்குறித்து: ஆசேர் புத்திரபாக்கிய 24
முடையவனாய், தன் சகோதரருக்குப் பிரிய
மாயிருந்து, [21]தன் காலை எண்ணெயிலே தோய்
ப்பான். இரும்பும் வெண்கலமும் உன் பாத 25
ரட்சையின் கீழிருக்கும்; [22]உன் நாட்களுக்
குத் தக்கதாய் உன் பெலனும் இருக்கும் என்
றான்.
யெஷூரனுடைய தேவனைப்போல் [23]ஒரு 26
வரும் இல்லை; அவர் உனக்குச் சகாயமாய்
வானங்களின்மேலும் தமது மாட்சிமையோடு
ஆகாய மண்டலங்களின்மேலும் [24]ஏறிவருகி
றார். அநாதி தேவனே [25]உனக்கு அடைக் 27
கலம்; அவருடைய நித்திய புயங்கள் உனக்கு
ஆதாரம்; அவர் உனக்கு முன்னின்று சத்
துருக்களைத் துரத்தி, அவர்களை அழித்துப்
போடு என்று கட்டளையிடுவார். இஸ்ரவேல் 28
சுகமாய்த் தனித்து வாசம்பண்ணுவான்; [26]யாக்
கோபின் ஊற்றானது தானியமும் திராட்ச
ரசமுமுள்ள தேசத்திலே இருக்கும்; அவரு
டைய வானமும் [27]பனியைப் பெய்யும். இஸ் 29
ரவேலே, [28]நீ பாக்கியவான்; கர்த்தரால் இரட்
சிக்கப்பட்ட ஜனமே, உனக்கு ஒப்பானவன்
யார்? உனக்குச் சகாயஞ்செய்யும் கேடக
மும் உனக்கு மகிமைபொருந்திய [29]பட்டயமும்
அவரே; உன் சத்துருக்கள் உனக்கு இச்சகம்
பேசி அடங்குவார்கள்; [30]அவர்கள் மேடுகளை
மிதிப்பாய், என்று சொன்னான்.
பின்பு மோசே மோவாபின் சமனான 34
வெளிகளிலிருந்து எரிகோவுக்கு எதிரான
நேபோ மலையிலிருக்கும் [31]பிஸ்காவின் கொடு
முடியில் ஏறினான்; அப்பொழுது கர்த்தர்
அவனுக்கு, தாண்மட்டுமுள்ள கீலேயாத்

1 ஆதி. 49. 8. சங். 146. 5
* பரிசுத்தர்
2 யாத். 28. 30. சங். 81. 7
3 யாத். 32. 25-28
4 மல்கி. 2. 5-7
5 லேவி. 1. 9, 17. சங். 51. 19
6 யாபு 42. 8. சங். 20. 8. எசே. 20. 40, 41
7 சங். 91. 4. ஏசா. 51. 16
8 ஆதி. 49. 25, 26; 27. 28. ஆப. 3. 6
9 யாத். 3. 2, 4. அப். 7. 30, 35
10 1 நாளா. 5. 1
11 சங். 92. 10
12 ஆதி. 49. 13-15
13 ஏசா. 2. 3
14 சங். 4. 5
15 யோசு. 13. 10. ழ. 1 நாளா. 12. 8. ழ
16 எண். 32. 1. ழ
17 யோசு. 4. 12, 13
18 யோசு. 19. 47
19 ஆதி. 49. 20, 21. சங். 36. 8; 90. 14. எரே. 31. 14
20 யோசு. 19. 32. ழ
21 ஆதி. 49. 20. யோபு 29. 6
22 ஏசா. 41. 10. 1 கொ. 10. 13
23 எரே. 10. 6
24 சங். 68. 4, 33. ஆப. 3. 8
25 சங் 90. 1. ஏசா. 25. 4
26 எண். 23. 9. எரே. 23. 6
27 ஆதி. 27. 28
28 சங். 144. 15; 115. 9-11
29 வெளி. 1. 16
30 2 சாமு. 22. 45. சங். 18. 44
31 எண். 27. 12

2 தேசம் அனைத்தையும், நப்தலி தேசம் அனைத்
தையும், எப்பிராயீம் மனாசே என்பவர்களின்
தேசத்தையும், கடைசிச் சமுத்திரம் வரைக்கு
3 முள்ள [1]யூதா தேசம் அனைத்தையும், தென்
புறத்தையும், சோவார் வரைக்குமுள்ள பேரீ
ச்சமரங்களின் பட்டணம் என்னும் ஊர்முதல்
கொண்டு [2]எரிகோவின் பள்ளத்தாக்காகிய
4 சமனான பூமியையும் காண்பித்தார். அப்பொ
ழுது **கர்த்தர்** அவனை நோக்கி: நான் உங்
கள் சந்ததிக்குக் கொடுப்பேன் என்று ஆபிர
காமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும்
ஆணையிட்ட தேசம் இதுதான், [3]இதை உன்
கண் காணும்படி செய்தேன்; ஆனாலும் நீ அவ்
விடத்திற்குக் கடந்துபோவதில்லை என்றார்.
5 அப்படியே **கர்த்தரின்** தாசனாகிய [4]மோசே
மோவாப் தேசமான அவ்விடத்திலே **கர்த்த
ருடைய** வார்த்தையின்படியே மரித்தான்.
6 அவர் அவனை மோவாப் தேசத்திலுள்ள பெத்
பேயோருக்கு எதிரான பள்ளத்தாக்கிலே
அடக்கம்பண்ணினார். இந்நாள்வரைக்கும் ஒரு
வனும் அவன் பிரேதக்குழியை [5]அறியான்.
7 மோசே மரிக்கிறபோது நூற்றிருபது வயதா
யிருந்தான்; அவன் கண் இருளடையவுமில்லை,

[1] உபா. 11. 24
[2] நியா. 1. 16
[3] ஆதி. 12. 7. சங். 105. 9–11. உபா. 3. 26, 27
[4] உபா. 32. 50
[5] யூதா 9
[6] யோசு. 14. 10, 11
[7] ஆதி. 50. 3, 10. எண். 20. 29
[8] எண். 27. 18, 23
[9] ஏசா. 11. 2 தானி. 6. 3
[10] உபா. 4. 34
[11] உபா. 7. 19
[12] யாத். 33. 11
[13] உபா. 18. 15, 18. அப். 3. 5, 6

[6]அவன் பெலன் குறையவுமில்லை. இஸ்ர 8
வேல் புத்திரர் மோவாபின் சமனான வெளி
களில் மோசேக்காக முப்பதுநாள் [7]அழுது
கொண்டிருந்தார்கள்; மோசேக்காக அழுது
துக்கங்கொண்டாடின நாட்கள் முடிந்தது.
மோசே நூனின் குமாரனாகிய யோசுவா 9
வின்மேல் தன் [8]கைகளை வைத்தபடியினால்
அவன் ஞானத்தின் ஆவியினால் [9]நிறையப்
பட்டான்; இஸ்ரவேல் புத்திரர் அவனுக்குக்
கீழ்ப்படிந்து, **கர்த்தர்** மோசேக்குக் கட்டளை
யிட்டபடியே செய்தார்கள். மோசே எகிப்து 10
தேசத்திலே பார்வோனுக்கும், அவனுடைய
எல்லா ஊழியக்காரருக்கும், அவனுடைய
தேசம் அனைத்திற்கும் செய்யும்படி **கர்த்தர்**
அவனை அனுப்பிச் செய்வித்த சகல அடை
யாளங்களையும் [10]அற்புதங்களையும், அவன் 11
இஸ்ரவேலர் எல்லாருக்கும் பிரத்தியட்ச
மாய்ச் செய்த சகல வல்லமையான [11]கிரியை
களையும், மகா பயங்கரமான செய்கைகளையும்
பார்த்தால், **கர்த்தரை** முகமுகமாய் [12]அறிந்த 12
மோசேயைப்போல, [13]ஒரு தீர்க்கதரிசியும்
இஸ்ரவேலில் அப்புறம் எழும்பினதில்லை
என்று விளங்கும்.

JOSHUA

# யோசுவாவின் புஸ்தகம்

1 **கர்த்தருடைய** தாசனாகிய மோசே [1]மரித்த
பின்பு, **கர்த்தர்** மோசேயின் ஊழியக்கார
னான [2]நூனின் குமாரன் யோசுவாவை
2 நோக்கி: என் தாசனாகிய மோசே மரித்துப்
போனான்; இப்பொழுது நீயும் இந்த ஜனங்
கள் எல்லாரும் எழுந்து, இந்த யோர்தானைக்
கடந்து, இஸ்ரவேல் புத்திரருக்கு நான்
3 கொடுக்கும் தேசத்துக்குப் போங்கள். நான்
மோசேக்குச் சொன்னபடி உங்கள் காலடி
மிதிக்கும் [3]எவ்விடத்தையும் உங்களுக்குக்
4 கொடுத்தேன். வனாந்தரமும் [4]இந்த லீபனோ
னும் தொடங்கி ஐபிராத்து நதியான பெரிய
நதிமட்டுமுள்ள ஏத்தியரின் தேசம் அனைத்
தும், சூரியன் அஸ்தமிக்கிற திசையான பெரிய
சமுத்திரம்வரைக்கும் உங்கள் எல்லையா
5 யிருக்கும். நீ உயிரோடிருக்கும் நாளெல்
லாம் ஒருவனும் உனக்கு முன்பாக [5]எதிர்த்து
நிற்பதில்லை; நான் மோசேயோடே இருந்தது
போல, [6]உன்னோடும் இருப்பேன்; நான்
உன்னைவிட்டு விலகுவதுமில்லை, [7]உன்னைக்
6 கைவிடுவதுமில்லை. பலங்கொண்டு திடமன
தாயிரு; [8]இந்த ஜனத்தின் பிதாக்களுக்கு நான்
கொடுப்பேன் என்று ஆணையிட்ட தேசத்தை
7 நீ இவர்களுக்குப் பங்கிடுவாய். என் தாச
னாகிய மோசே உனக்குக் கற்பித்த நியா
யப்பிரமாணத்தின்படி யெல்லாம் செய்யக்
கவனமாயிருக்கமாத்திரம் மிகவும் [9]பலங்கொ
ண்டு திடமனதாயிரு; நீ போகும் இடமெல்
லாம் புத்திமானாய் நடந்துகொள்ளும்படிக்கு,
அதை விட்டு வலது இடதுபுறம் விலகா
8 திருப்பாயாக. இந்த நியாயப்பிரமாண *புஸ்
தகம் [10]உன் வாயைவிட்டுப் பிரியாதிருப்
பதாக; இதில் எழுதியிருக்கிறவைகளின்படி
யெல்லாம் நீ செய்யக் கவனமாயிருக்கும்படி,
இரவும் பகலும் [11]அதைத் தியானித்துக்
கொண்டிருப்பாயாக; அப்பொழுது நீ உன்
வழியை வாய்க்கப்பண்ணுவாய், அப்பொழுது
9 புத்திமானாயும் நடந்துகொள்ளுவாய். நான்
உனக்குக் கட்டளையிடவில்லையா? [12]பலங்
கொண்டு திடமனதாயிரு; திகையாதே, [13]கலங்
காதே, நீ போகும் இடமெல்லாம் [14]உன்
தேவனாகிய **கர்த்தர்** உன்னோடே இருக்கிறார்
என்றார்.

[1] உபா. 34. 5
[2] யாத். 24. 13
[3] உபா. 11. 24
[4] ஆதி. 15. 18. எண். 34. 2–12
[5] உபா. 7. 24
[6] யாத். 3. 12
[7] உபா. 31. 6, 8. எபி. 13. 5
[8] உபா. 31. 7, 23
[9] எபே. 6. 10. 2 தீமோ. 2. 1
* விதிகள்
[10] உபா. 17. 18, 19
[11] சங். 1. 2
[12] 1 நாளா. 28. 20. ஆகா. 2. 4. சகரி. 8. 9
[13] ஆதி. 23. 15. சங். 27. 1. எரே. 1. 8
[14] சங். 46. 1. ஏசா. 43. 1, 5
[15] 3. 2
[16] 22. 1–4. எண். 32. 20–28
[17] யாத். 13. 18
[18] உபா. 5. 27
[19] 1 சாமு. 20. 13. 1 இரா. 1. 37

அப்பொழுது யோசுவா ஜனங்களின் அதி 10
பதிகளை நோக்கி: நீங்கள் பாளயத்தை உருவ 11
நடந்துபோய், ஜனங்களைப் பார்த்து: உங்களுக்
குப் போஜன பதார்த்தங்களை ஆயத்தம்பண்
ணுங்கள்; உங்கள் தேவனாகிய **கர்த்தர்** உங்க
ளுக்குச் சுதந்தரிக்கக் கொடுக்கும் தேசத்தை
நீங்கள் சுதந்தரித்துக்கொள்ளும்படிக்கு, இன்
னும் மூன்றுநாளைக்குள்ளே [15]இந்த யோர்
தானைக் கடந்துபோவீர்கள் என்று சொல்லச்
சொன்னான்.

பின்பு யோசுவா: ரூபனியரையும் காத்திய 12
ரையும் மனாசேயின் பாதிக்கோத்திரத்தாரையும்
நோக்கி: **கர்த்தருடைய** தாசனாகிய மோசே 13
உங்களுக்குக் கற்பித்த வார்த்தையை [16]நினைத்
துக்கொள்ளுங்கள்; உங்கள் தேவனாகிய **கர்த்**
**தர்** உங்களை இளைப்பாறப்பண்ணி, இந்தத்
தேசத்தை உங்களுக்குக் கொடுத்தாரே. உங் 14
கள் பெண்சாதிகளும் பிள்ளைகளும் மிருக
ஜீவன்களும், மோசே உங்களுக்கு யோர்தா
னுக்கு இப்புறத்திலே கொடுத்த தேசத்தில்
இருக்கட்டும்; உங்களிலுள்ள யுத்தவீரர் யாவ
ரும் உங்கள் சகோதரருக்கு முன்பாக அணி
யணியாய்க் [17]கடந்துபோய், **கர்த்தர்** உங்க 15
ளைப்போல உங்கள் சகோதரரையும் இளைப்பா
றப்பண்ணி, அவர்களும் உங்கள் தேவனாகிய
**கர்த்தர்** தங்களுக்குக் கொடுக்கும் தேசத்தைச்
சுதந்தரித்துக்கொள்ளுமட்டும், அவர்களுக்கு
உதவி செய்யக்கடவீர்கள்; பின்பு நீங்கள் **கர்த்**
**தருடைய** தாசனாகிய மோசே உங்களுக்கு
யோர்தானுக்கு இப்புறத்தில் சூரியன் உதிக்
கும் திசைக்கு நேராகக் கொடுத்த உங்கள்
சுதந்தரமான தேசத்துக்குத் திரும்பி, அதைச்
சுதந்தரித்துக்கொண் டிருப்பீர்களாக என்
றான். அப்பொழுது அவர்கள் யோசுவாவுக் 16
குப் பிரதியுத்தரமாக: [18]நீர் எங்களுக்குக் கட்
டளையிடுகிறதையெல்லாம் செய்வோம்; நீர்
எங்களை அனுப்பும் இடமெங்கும் போவோம்.
நாங்கள் மோசேக்குச் செவிகொடுத்ததுபோல 17
உமக்கும் செவிகொடுப்போம்; உம்முடைய
தேவனாகிய **கர்த்தர்** மாத்திரம் மோசேயோடே
இருந்ததுபோல, [19]உம்மோடும் இருப்பாராக.
நீர் எங்களுக்குக் கட்டளையிடும் சகல காரி 18
யத்திலும் உம்முடைய சொல்லைக் கேளாமல்,

உம்முடைய வாக்குக்கு முரட்டாட்டம்பண்
ணுகிற எவனும் [1]கொலைசெய்யப்படக்கட
வன்; பலங்கொண்டு திடமனதாய் மாத்திரம்
[2]இரும் என்றார்கள்.
2 நூனின் குமாரனாகிய யோசுவா சித்தீமி
லிருந்து வேவுகாரராகிய இரண்டு [3]மனுஷரை
இரகசியமாய்வேவுபார்க்கும்படி அனுப்பி: நீங்
கள் போய்த் தேசத்தையும் எரிகோவையும்
பார்த்துவாருங்கள் என்றான். அவர்கள் போய்:
ராகாப் [4]என்னும் பெயர்கொண்ட வேசியின்
வீட்டுக்குள் பிரவேசித்து, அங்கே தங்கினார்
2 கள். தேசத்தை வேவுபார்க்கும்படி, இஸ்ர
வேல் புத்திரரில் சில மனுஷர் இந்த ராத்திரி
யிலே இங்கே வந்தார்கள் என்று எரிகோவின்
3 ராஜாவுக்குச் சொல்லப்பட்டது. அப்பொ
ழுது எரிகோவின் ராஜா ராகாபண்டைக்கு
ஆள் அனுப்பி: உன்னிடத்தில் வந்து, உன்
வீட்டுக்குள் பிரவேசித்த மனுஷரை வெளி
யே கொண்டுவா; அவர்கள் தேசத்தையெல்
லாம் வேவுபார்க்கும்படி வந்தார்கள் என்று
சொல்லச்சொன்னான்.
4 அந்த ஸ்திரீ அவ்விரண்டு மனுஷரையும்
கொண்டுபோய் அவர்களை ஒளித்துவைத்து:
மெய்தான், என்னிடத்தில் மனுஷர் வந்திருந்
தார்கள்; ஆனாலும் அவர்கள் எவ்விடத்தாரோ
5 எனக்குத் தெரியாது. வாசலை அடைக்கும் நே
ரத்தில் இருட்டுவேளையிலே, அந்த மனுஷர்
புறப்பட்டுப் போய்விட்டார்கள்; அவர்கள் எங்
கே போனார்களோ எனக்குத் தெரியாது;
அவர்களைச் சீக்கிரமாய்ப் போய்த் தேடுங்கள்;
நீங்கள் அவர்களைப் பிடித்துக்கொள்ளலாம் என்
6 றாள். அவள் அவர்களை வீட்டின்மேல் ஏறப்
பண்ணி, [5]வீட்டின்மேல் பரப்பப்பட்ட சணல்
தட்டைகளுக்குள்ளே மறைத்துவைத்திருந்
7 தாள். அந்தமனுஷர் யோர்தானுக்குப்போகிற
வழியில் துறைகள்மட்டும் அவர்களைத் தேடப்
போனார்கள்; அவர்களைத் தேடுகிறவர்கள் புறப்
பட்டவுடனே வாசல் அடைக்கப்பட்டது.
8 அந்த மனுஷர் படுத்துக்கொள்ளுமுன்னே
அவள் வீட்டின்மேல் அவர்களிடத்திற்கு
9 ஏறிப்போய், கர்த்தர் உங்களுக்குத் தேசத்தை
ஒப்புக்கொடுத்தாரென்றும், உங்களைப்பற்றி
எங்களுக்குத் [6]திகில் பிடித்திருக்கிறதென்றும்,
உங்களைக்குறித்துத் தேசத்துக் குடிகள் எல்லா
ரும் சோர்ந்துபோனார்களென்றும் அறிவேன்.
10 நீங்கள் எகிப்திலிருந்து புறப்பட்டபோது,
கர்த்தர் உங்களுக்கு முன்பாக சிவந்த சமுத்
திரத்தின் தண்ணீரை [7]வற்றிப்போகப்பண்ணி
னதையும், நீங்கள் யோர்தானுக்கு அப்புறத்தில்
சங்காரம்பண்ணின எமோரியரின் இரண்டு
ராஜாக்களாகிய சீகோனுக்கும் [8]ஓகுக்கும்
11 செய்ததையும் கேள்விப்பட்டோம். கேள்விப்
பட்டபோது எங்கள் இருதயம் [9]கரைந்துபோ
யிற்று, உங்களாலே எல்லாருடைய தைரிய
மும் அற்றுப்போயிற்று; உங்கள் தேவனாகிய
கர்த்தரே உயர வானத்திலும் கீழே பூமியிலும்
12 [10]தேவனானவர். இப்போதும், நான் உங்களுக்
குத் தயவுசெய்தபடியினால், நீங்களும் என்
தகப்பன் [11]குடும்பத்துக்குத் தயவுசெய்வோம்
என்று கர்த்தர்பேரில் எனக்கு ஆணையிட்டு,
நீங்கள் என் தகப்பனையும் என் தாயையும் என் 13
சகோதரரையும் என் சகோதரிகளையும் அவர்
களுக்கு உண்டான எல்லாவற்றையும் உயி
ரோடே வைத்து, எங்கள் ஜீவனைச் சாவுக்குத்
தப்புவிக்கும்படி, எனக்கு நிச்சயமான அடை
யாளத்தைக் கொடுக்கவேண்டும் என்றாள்.
அப்பொழுது அந்த மனுஷர் அவளை நோக்கி: 14
எங்கள் ஜீவனே உங்கள் ஜீவனுக்கு ஈடு; நீங்
கள் எங்கள் காரியத்தை வெளிப்படுத்தாதிருந்
தால், கர்த்தர் எங்களுக்குத் தேசத்தைக் கொ
டுக்கும்போது, நாங்கள் தயையும் [12]சத்தியமும்
பாராட்டுவோம் என்றார்கள். அப்பொழுது 15
அவர்களைக் கயிற்றினாலே ஜன்னல் வழியாய்
இறக்கிவிட்டாள்; [13]அவள் வீடு அலங்கத்தின்
மதிளில் இருந்தது; அலங்கத்திலே அவள் குடி
யிருந்தாள். அப்பொழுது அவள் அவர்களை 16
நோக்கி: தேடுகிறவர்கள் உங்களைக் காணாத
படிக்கு, நீங்கள் மலையிலே போய், அவர்கள்
திரும்பிவருமட்டும் அங்கே மூன்றுநாள் ஒளித்
திருந்து, பின்பு உங்கள் வழியே போங்கள்
என்றாள். அப்பொழுது அந்த மனுஷர் அவ 17
ளை நோக்கி: இதோ, நாங்கள் தேசத்துக்குள்
பிரவேசிக்கும்போது, நீ இந்தச் சிவப்புநூல்
கயிற்றை எங்களை இறக்கிவிட்ட ஜன்ன
லிலே கட்டி, உன் தகப்பனையும் உன் தாயை
யும் உன் சகோதரர்களையும் உன் தகப்பன்
குடும்பத்தார் அனைவரையும் உன்னிடத்தில்
உன் வீட்டிலே சேர்த்துக்கொள். இல்லாவிட் 18
டால் நீ எங்கள் கையில் வாங்கின ஆணைக்கு
[14]நீங்கலாயிருப்போம். எவனாகிலும்உன் வீட்டு 19
வாசல்களிலிருந்து வெளியே புறப்பட்டால்,
அவனுடைய இரத்தப்பழி அவன் தலையின்
மேல் இருக்கும்; எங்கள்மேல் குற்றம் இல்லை;
உன்னோடே வீட்டில் இருக்கிற எவன்மே
லாகிலும் கைபோடப்பட்டதேயாகில், அவ
னுடைய இரத்தப்பழி [15]எங்கள் தலையின்மேல்
இருக்கும். நீ எங்கள் காரியத்தை வெளிப் 20
படுத்தினாயேயானால், [16]நீ எங்கள் கையில் வாங்
கின ஆணைக்கு நீங்கலாயிருப்போம் என்றார்
கள். அதற்கு அவள்: உங்கள் வார்த்தையின் 21
படியே ஆகக்கடவது [17]என்று சொல்லி, அவர்
களை அனுப்பிவிட்டாள்; அவர்கள் போய்விட்
டார்கள்; பின்பு அவள் அந்தச் சிவப்புக்கயிற்
றை ஜன்னலிலே கட்டிவைத்தாள். அவர்கள் 22
போய், மலையிலே சேர்ந்து, தேடுகிறவர்கள்
திரும்பிவருமட்டும், மூன்றுநாள் அங்கே தரித்
திருந்தார்கள்; தேடுகிறவர்கள் வழியிலெல்லாம்
அவர்களைத் தேடியும் காணாதேபோனார்கள்.
அந்த இரண்டு மனுஷரும் திரும்பி, மலையி 23
லிருந்து இறங்கி, ஆற்றைக் கடந்து, நூனின்
குமாரனாகிய யோசுவாவினிடத்தில் வந்து,
தங்களுக்குச் சம்பவித்த யாவையும் அவனுக்
குத் தெரிவித்து; கர்த்தர் தேசத்தையெல் 24
லாம் நம்முடைய கையில் [18]ஒப்புக்கொடுத்தார்;

1 ரோ. 13. 1–5
2 1 நாளா. 16. 13
3 எண். 13. 2
4 மத். 1. 5. எபி. 11. 31. யாக். 2. 25
5 யாத். 1. 15-21. 2 சாமு. 17. 19
6 ஆதி. 35. 5. யாத். 15. 15, 16. உபா. 2. 25
7 யாத். 14. 21
8 எண். 21. 21–35
9 5. 1. ஏசா. 13. 7
10 உபா. 4. 39
11 ஆதி. 24. 3, 9. 1 சாமு. 20. 16, 17. ரோ. 1. 31. 1 தீமோ. 5. 8
12 ஆதி. 24. 49. நியா. 1. 24. 1 சாமு. 20. 8
13 அப். 9. 25
14 யாத். 20. 7
15 மத். 27. 25
16 நீதி. 11. 13
17 மத். 7. 24
18 21. 44. யாத். 23. 31

தேசத்தின் குடிகளெல்லாம் நமக்கு முன்பா
கச் சோர்ந்துபோனார்கள் என்று அவனோடே
சொன்னார்கள்.

3 அதிகாலமே யோசுவா எழுந்திருந்தபின்பு,
அவனும் இஸ்ரவேல் புத்திரர் அனைவரும் சித்
தீமிலிருந்து பிரயாணம்பண்ணி, [1]யோர்தான்
மட்டும் வந்து, அதைக் கடந்துபோகுமுன்னே
2 அங்கே இராத்தங்கினார்கள். மூன்று நாள்
சென்றபின்பு, அதிபதிகள் [2]பாளயம் எங்கும்
3 போய், ஜனங்களை நோக்கி: நீங்கள் உங்கள்
தேவனாகிய **கர்த்தருடைய** உடன்படிக்கைப்
பெட்டியையும் [3]அதைச் சுமக்கிற லேவியரா
கிய ஆசாரியர்களையும் [4]கண்டவுடனே, நீங்க
ளும் உங்கள் இடத்தைவிட்டுப் பிரயாணப்
4 பட்டு, அதற்குப் பின்செல்லுங்கள். உங்க
ளுக்கும் அதற்கும் இடையிலே இரண்டாயிரம்
முழத் தூரமான [5]இடம் இருக்கவேண்டும்;
நீங்கள் நடக்கவேண்டிய வழியை அறியும்ப
டிக்கு, அதற்குச் சமீபமாய் வராதிருப்பீர்க
ளாக; இதற்குமுன்னே நீங்கள் ஒருபோதும்
இந்த வழியாய் நடந்துபோகவில்லை என்று
5 சொல்லி கட்டளையிட்டார்கள். யோசுவா
ஜனங்களை நோக்கி: உங்களைப் பரிசுத்தம் பண்
ணிக்கொள்ளுங்கள்; [6]நாளைக்குக் **கர்த்தர்** உங்
கள் நடுவிலே அற்புதங்களைச் செய்வார் என்
6 றான். பின்பு யோசுவா ஆசாரியர்களை நோக்
கி: நீங்கள் உடன்படிக்கைப்பெட்டியை எடுத்
துக்கொண்டு, [7]ஜனங்களுக்கு முன்னே நட
ந்துபோங்கள் என்றான்; அப்படியே உடன்
படிக்கைப்பெட்டியை எடுத்துக்கொண்டு ஜன
7 ங்களுக்கு முன்னே போனார்கள். **கர்த்தர்**
யோசுவாவை நோக்கி: நான் மோசேயோடே
இருந்ததுபோல, உன்னோடும் இருக்கிறேன்
என்பதை இஸ்ரவேலரெல்லாரும் அறியும்
படிக்கு, இன்று அவர்கள் கண்களுக்கு முன்
பாக உன்னை [8]மேன்மைப்படுத்துவேன்.
8 உடன்படிக்கைப்பெட்டியைச் சுமக்கிற ஆசா
ரியரைப் பார்த்து: நீங்கள் யோர்தான் தண்ணீர்
ஓரத்தில் சேரும்போது, யோர்தானில் நில்
லுங்கள் என்று நீ கட்டளையிடுவாயாக என்றார்.
9 யோசுவா இஸ்ரவேல் புத்திரரை நோக்கி:
நீங்கள் இங்கே சேர்ந்து, உங்கள் தேவனாகிய
**கர்த்தருடைய** வார்த்தைகளைக் கேளுங்கள்
10 என்றான். பின்பு யோசுவா: ஜீவனுள்ள
தேவன் [9]உங்கள் நடுவே இருக்கிறார் என்
பதையும், அவர் கானானியரையும் ஏத்தியரை
யும் ஏவியரையும் பெரிசியரையும் கிர்காசிய
ரையும் எமோரியரையும் எபூசியரையும் உங்க
ளுக்கு முன்பாகத் துரத்திவிடுவார் என்பதை
யும், நீங்கள் அறிந்துகொள்வதற்கு அடையா
11 ளமாக: இதோ, சர்வ பூமிக்கும் ஆண்டவரா
யிருக்கிறவருடைய[10]உடன்படிக்கைப்பெட்டி
உங்களுக்கு முன்னே யோர்தானிலே போகி
12 றது. இப்பொழுதும் இஸ்ரவேல் கோத்தி
ரங்களிலே பன்னிரண்டுபேரை, [11]ஒவ்வொரு
கோத்திரத்துக்கு ஒவ்வொருவராகப் பிரித்
13 தெடுங்கள். சம்பவிப்பது என்னவென்றால்,

[1] 2. 1
[2] 1. 10, 11
[3] எண். 10. 33
[4] உபா. 31. 9, 25
[5] யாத். 19. 12
[6] யாத். 19. 10, 14, 15. லேவி. 20. 7. எண். 11. 18. 1 சாமு. 16. 5. யோபு 1. 5. யோவே. 2. 16. யோ. 17. 19
[7] எண். 4. 15
[8] 4. 14. 1 நாளா. 29. 25. சங். 18. 35
[9] உபா. 5. 26. மத். 16. 16. 1 தெச. 1. 9
[10] ஏசா. 54. 5. மீகா 4. 13. சக. 4. 14; 6. 5
[11] 4. 2
[12] சங். 78. 13
[13] அப். 7. 45. எபி. 9. 4
[14] 1 நாளா. 12. 15. எரே. 12. 5
[15] யாத். 14. 29
[16] உபா. 27. 2
* வருங்காலத்தில்
[17] யாத். 13. 14. உபா. 6. 20. சங். 44. 1; 78. 3–8
[18] 3. 13–16

சர்வ பூமிக்கும் ஆண்டவராகிய **கர்த்தரின்**
பெட்டியைச் சுமக்கிற ஆசாரியர்களின் உள்
ளங்கால்கள் யோர்தானின் தண்ணீரிலே பட்
டமாத்திரத்தில், மேலேயிருந்து ஓடிவருகிற
யோர்தானின் தண்ணீர் ஓடாமல் ஒரு குவி
யலாக [12]நிற்கும் என்றான். ஜனங்கள் யோர் 14
தானைக் கடந்துபோகத் தங்கள் கூடாரங்களிலி
ருந்து புறப்பட்டார்கள்; ஆசாரியர்கள் உடன்
படிக்கைப்பெட்டியை [13]ஜனங்களுக்கு முன்
னே சுமந்துகொண்டுபோய், யோர்தான்
மட்டும் வந்தார்கள். யோர்தான் அறுப்புக் 15
காலம் முழுவதும் [14]கரை புரண்டுபோம். பெட்
டியைச் சுமக்கிற ஆசாரியர்களின் கால்கள்
தண்ணீரின் ஓரத்தில் பட்டவுடனே, மேலே 16
யிருந்து ஓடிவருகிற தண்ணீர் நின்று சார்தா
னுக்கடுத்த ஆதாம் ஊர்வரைக்கும் ஒரு குவிய
லாகக் குவிந்தது; உப்புக்கடல் என்னும் சம
னான வெளியின் கடலுக்கு ஓடிவருகிற தண்
ணீர் பிரிந்து ஓடிற்று; அப்பொழுது ஜனங்
கள் எரிகோவுக்கு எதிரே கடந்துபோனார்கள்.
சகல ஜனங்களும் யோர்தானைக் கடந்துதீரு 17
மளவும், **கர்த்தருடைய** உடன்படிக்கைப்பெட்
டியைச் சுமக்கிற ஆசாரியர்கள் யோர்தானின்
நடுவிலே தண்ணீரில்லாத[15]தரையில்காலூன்றி
நிற்கும்போது, இஸ்ரவேலரெல்லாரும் தண்
ணீரற்ற உலர்ந்த தரைவழியாய்க் கடந்து
போனார்கள்.

ஜனங்கள் எல்லாரும் யோர்தானைக் கடந்து 4
தீர்ந்தபோது, **கர்த்தர்** யோசுவாவை நோக்கி:
நீங்கள், ஒவ்வொரு கோத்திரத்திற்கு ஒவ்வொ 2
ருவராக ஜனங்களில் பன்னிரண்டுபேரைத்
தெரிந்துகொண்டு, இங்கே யோர்தானின் நடு 3
விலே ஆசாரியர்களின் கால்கள் நிலையாய்
நின்ற இடத்திலே பன்னிரண்டு கற்களை [16]எடு
த்து, அவைகளை உங்களோடேகூட அக்க
ரைக்குக் கொண்டுபோய், நீங்கள் இன்று இரா
வில் தங்கும் ஸ்தானத்திலே அவைகளை வை
யுங்கள் என்று அவர்களுக்குக் கட்டளையிடுங்
கள் என்றார். அப்பொழுது யோசுவா இஸ் 4
ரவேல் புத்திரரில் ஒவ்வொரு கோத்திரத்
திற்கு ஒவ்வொருவராக ஆயத்தப்படுத்தியிருந்த
பன்னிரண்டுபேரை அழைத்து, அவர்களை 5
நோக்கி: நீங்கள் யோர்தானின் மத்தியில் உங்
கள் தேவனாகிய **கர்த்தரின்** பெட்டிக்கு முன்
பாகக் கடந்துபோய், உங்களுக்குள்ளே ஒரு
அடையாளமாயிருக்கும்படிக்கு, இஸ்ரவேல்
புத்திரருடைய கோத்திரங்களின் இலக்கத்திற்
குச் சரியாக, உங்களில் ஒவ்வொருவன் ஒவ்
வொரு கல்லைத் தன் தோளின்மேல் எடுத்துக்
கொண்டு போங்கள். *நாளை இந்தக் கற்கள் 6
என்னவென்று [17]உங்கள் பிள்ளைகள் உங்களைக் கேட்
கும்போது, நீங்கள்: **கர்த்தருடைய** உடன்ப 7
டிக்கைப்பெட்டிக்கு முன்பாக யோர்தானின்
தண்ணீர் பிரிந்துபோனதினால் அவைகள்
வைக்கப்பட்டிருக்கிறது; [18]யோர்தானைக் கடந்
துபோகிறபோது, யோர்தானின் தண்ணீர்
பிரிந்துபோயிற்று; ஆகையால் இந்தக் கற்கள்

இஸ்ரவேல் புத்திரருக்கு என்றைக்கும் நினைப்
பூட்டும் [1]அடையாளம் என்று சொல்லுங்கள்
8 என்றான். யோசுவா கட்டளையிட்டபடி இஸ்
ரவேல் புத்திரர் செய்து, கர்த்தர் யோசுவா
வோடே சொன்னபடியே, இஸ்ரவேல் புத்தி
ரருடைய கோத்திரங்களின் இலக்கத்திற்குச்
சரியாகப் பன்னிரண்டு கற்களை யோர்தானின்
நடுவில் எடுத்து, அவைகளைத் தங்களோடே
கூட அக்கரைக்குக் கொண்டுபோய், தாங்கள்
9 தங்கின இடத்திலே வைத்தார்கள். யோர்தா
னின் நடுவிலும் உடன்படிக்கைப்பெட்டி
யைச் சுமந்த ஆசாரியரின் கால்கள் நின்ற
இடத்திலே யோசுவா பன்னிரண்டு கற்களை
நாட்டினான்; அவைகள் இந்நாள்மட்டும் அங்கே
10 இருக்கிறது. மோசே யோசுவாவுக்குக் கட்ட
ளையிட்டிருந்த எல்லாவற்றின்படியும் ஜனங்
களுக்குச் சொல்லும்படி, **கர்த்தர்** யோசுவா
வுக்குக் கட்டளையிட்டவையெல்லாம் செய்து
முடியுமட்டும், பெட்டியைச் சுமக்கிற ஆசா
ரியர் யோர்தானின் நடுவே நின்றார்கள்; ஜனங்
11 கள் தீவிரித்துக் கடந்துபோனார்கள். ஜன
மெல்லாம் கடந்துபோனபின்பு, **கர்த்தருடைய**
பெட்டியும் கடந்தது; ஆசாரியர் ஜனத்துக்கு
12 முன்பாகப் போனார்கள். ரூபன் புத்திரரும்
[2]காத் புத்திரரும் மனாசேயின் பாதிக் கோத்தி
ரத்தாரும் மோசே தங்களுக்குச் சொன்னப
டியே அணியணியாய் இஸ்ரவேல் புத்திர
13 ருக்கு முன்பாகக் கடந்துபோனார்கள். ஏறக்
குறைய நாற்பதினாயிரம்பேர் யுத்தசன்னத்த
ராய் யுத்தம்பண்ணும்படி, **கர்த்தருக்கு** முன்
பாக எரிகோவின் சமனான வெளிகளுக்குக்
14 கடந்துபோனார்கள். அந்நாளிலே **கர்த்தர்**
யோசுவாவைச் சகல இஸ்ரவேலரின் கண்க
ளுக்கு முன்பாகவும் [3]மேன்மைப்படுத்தினார்;
அவர்கள் மோசேக்குப் பயந்திருந்ததுபோல,
[4]அவனுக்கும், அவன் உயிரோடிருந்த நாளெல்
லாம், பயந்திருந்தார்கள்.
15, 16 **கர்த்தர்** யோசுவாவை நோக்கி: சாட்சி
யின் பெட்டியைச் [5]சுமக்கிற ஆசாரியர் யோர்
தானிலிருந்து கரையேறும்படி அவர்களுக்குக்
17 கட்டளையிடு என்று சொன்னார். யோசுவா:
யோர்தானிலிருந்து கரையேறி வாருங்கள்
என்று ஆசாரியர்களுக்குக் கட்டளையிட்டான்.
18 அப்பொழுது **கர்த்தருடைய** உடன்படிக்கைப்
பெட்டியைச் சுமக்கிற ஆசாரியர் யோர்தான்
நடுவிலிருந்து ஏறி, அவர்கள் உள்ளங்கால்கள்
கரையில் ஊன்றினபோது, யோர்தானின்
தண்ணீர்கள் தங்களிடத்துக்குத் திரும்பி,
முன்போல அதின் கரையெங்கும் புரண்டது.
19 இந்தப்பிரகாரமாக முதல் மாதம் பத்தாம் தேதி
யிலே ஜனங்கள் யோர்தானிலிருந்து கரை
யேறி, எரிகோவுக்குக் கிழெல்லையான கில்
20 காலிலே பாளயமிறங்கினார்கள். அவர்கள்
யோர்தானில் எடுத்துக்கொண்டுவந்த அந்தப்
பன்னிரண்டு கற்களையும் யோசுவா கில்கா
21 லிலே நாட்டி, இஸ்ரவேல் புத்திரரை நோக்
கி: *நாளை உங்கள் பிள்ளைகள் இந்தக் கற்கள்

[1] யாத். 12. 14. எண். 16. 40
[2] எண். 32. 20-29
[3] 3. 7
[4] யாத். 14. 31. 1 சாமு. 12. 18
[5] யாத். 25. 16, 21
* 6. வசனம்
† காய்ந்த நிலமாய். 3. 17
[6] 1 இரா. 8. 42, 43. சங். 106. 8. எரே. 10. 6, 7. தானி. 4. 34, 35
[7] யாத். 14. 21
[8] யாத். 15. 14, 15
[9] எண். 13. 29
[10] சங். 48. 6 எசே. 21. 7
[11] யாத். 4. 25
[12] எண். 26. 64, 65
[13] எண். 14. 33. உபா. 1. 3. சங். 95. 10
[14] எண். 14. 31. உபா. 1. 39

எதென்று தங்கள் பிதாக்களைக் கேட்கும்
போது, நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்கு அறி 22
விக்கவேண்டியது என்னவென்றால்: இஸ்ர
வேலர் †வெட்டாந்தரை வழியாய் இந்த யோர்
தானைக் கடந்துவந்தார்கள். பூமியின் சகல 23
ஜனங்களும் **கர்த்தருடைய** கரம் பலத்ததென்று
அறியும்படிக்கும், [6]நீங்கள் சகலநாளும் உங்
கள் தேவனாகிய **கர்த்தருக்குப்** பயப்படும்படிக்
கும், உங்கள் தேவனாகிய **கர்த்தர்** சிவந்த 24
சமுத்திரத்தின் தண்ணீரை [7]நாங்கள் கடந்து
தீருமட்டும் எங்களுக்கு முன்பாக வற்றிப்போ
கப்பண்ணினதுபோல, உங்கள் தேவனாகிய
**கர்த்தர்** யோர்தானின் தண்ணீருக்கும் செய்
து, அதை உங்களுக்கு முன்பாக நீங்கள்
கடந்து தீருமளவும் வற்றிப்போகப்பண்ணி
னார் என்று அறிவிக்கக்கடவீர்கள் என்றான்.
இஸ்ரவேல் புத்திரர் கடந்து தீருமளவும், **5**
**கர்த்தர்** யோர்தானின் தண்ணீரை [8]அவர்களு
க்கு முன்பாக வற்றிப்போகப்பண்ணினதை,
யோர்தானுக்கு மேல்கரையில் குடியிருந்த
எமோரியரின் சகல ராஜாக்களும், [9]சமுத்திரத்
தருகே குடியிருந்த கானானியரின் சகல ராஜா
க்களும் கேட்டது முதற்கொண்டு, அவர்கள்
இருதயம் கரைந்து, [10]இஸ்ரவேல் புத்திரருக்கு
முன்பாக சோர்ந்துபோனார்கள்.
அக்காலத்திலே **கர்த்தர்** யோசுவாவை நோ 2
க்கி: நீ கருக்கான கத்திகளை உண்டாக்கி,
[11]திரும்ப இரண்டாம்விசை இஸ்ரவேல் புத்
திரரை விருத்தசேதனம் பண்ணு என்றார்.
அப்பொழுது யோசுவா கருக்கான கத்திகளை 3
உண்டாக்கி, இஸ்ரவேல் புத்திரரை ஆர்லோத்
மேட்டிலே விருத்தசேதனம் பண்ணினான்.
யோசுவா இப்படி விருத்தசேதனம்பண்ணின 4
முகாந்தரம் என்னவென்றால், [12]எகிப்திலிரு
ந்து புறப்பட்ட சகல ஆண்மக்களாகிய யுத்த
புருஷர் எல்லாரும் எகிப்திலிருந்து புறப்பட்ட
பின்பு, வழியில் வனாந்தரத்திலே மாண்டுபோ
னார்கள். எகிப்திலிருந்து புறப்பட்ட எல்லா 5
ஜனங்களும் விருத்தசேதனம் பண்ணப்பட்ட
ருந்தார்கள்; அவர்கள் எகிப்திலிருந்து புறப்
பட்டபின்பு, வழியில் வனாந்தரத்திலே பிறந்த
சகல ஜனங்களும் விருத்தசேதனம் பண்ணப்
படாதிருந்தார்கள். **கர்த்தருடைய** சத்தத்திற் 6
குக் கீழ்ப்படியாமற்போன எகிப்திலிருந்து
புறப்பட்ட யுத்தபுருஷரான யாவரும் மாளுமட்
டும், இஸ்ரவேல் புத்திரர் நாற்பது வருஷம்
வனாந்தரத்தில் [13]நடந்து திரிந்தார்கள்; **கர்த்தர்**
எங்களுக்குக் கொடுக்கும்படி அவர்கள் பிதாக்
களுக்கு ஆணையிட்ட பாலும் தேனும் ஓடுகிற
தேசத்தை அவர்கள் காண்பதில்லை என்று **கர்த்**
**தர்** அவர்களுக்கு ஆணையிட்டிருந்தார். அவர் 7
களுக்குப் பதிலாக அவர் எழும்பப்பண்ணின
அவர்கள் பிள்ளைகளை யோசுவா விருத்தசேத
னம் பண்ணினான்; [14]வழியிலே அவர்களை
விருத்தசேதனம் பண்ணாததினால் அவர்கள்
விருத்தசேதனம் இல்லாதிருந்தார்கள். ஜனங் 8
களெல்லாரும் விருத்தசேதனம் பண்ணப்பட்

டுத் தீர்ந்தபின்பு, அவர்கள் குணமாகுமட்டும்
தங்கள் தங்கள் இடத்திலே பாளயத்தில் தரித்
9 திருந்தார்கள். **கர்த்தர்** யோசுவாவை நோக்கி:
இன்று எகிப்தின் நிந்தையை உங்கள்மேல்
இராதபடிக்குப் புரட்டிப்போட்டேன் என்
றார்; [1]அதனால் அந்த ஸ்தலம் இந்நாள்வரைக்
கும் *கில்கால் என்னப்படுகிறது.
10 இஸ்ரவேல் புத்திரர் கில்காலில் பாளயமிற
ங்கியிருந்து, மாதத்தின் பதினாலாம் தேதி
[2]அந்திநேரத்திலே எரிகோவின் சமனான வெ
11 ளிகளிலே பஸ்காவை ஆசரித்தார்கள். பஸ்கா
வின் மறுநாளாகிய அன்றையத்தினம் அவர்
கள் தேசத்தினுடைய தானியத்தாலாகிய புளி
ப்பில்லாத அப்பங்களையும் சுட்ட கதிர்களையும்
12 புசித்தார்கள். அவர்கள் தேசத்தின் தானி
யத்திலே புசித்த மறுநாளிலே மன்னா [3]பெய்
யாமல் ஒழிந்தது; அதுமுதல் இஸ்ரவேல் புத்
திரருக்கு மன்னா இல்லாமற்போய், அவர்கள்
கானான்தேசத்துப் பலனை அந்த வருஷத்தில்
தானே புசித்தார்கள்.
13 பின்னும் யோசுவா எரிகோவின் வெளியி
லிருந்து தன் கண்களை ஏறெடுத்துப் பார்க்கும்
போது, இதோ, ஒருவர் அவனுக்கு எதிரே
நின்றார்; [4]உருவின பட்டயம் அவர் கையில்
இருந்தது; யோசுவா அவரிடத்தில் போய்:
நீர் எங்களைச் சேர்ந்தவரோ, எங்கள் சத்துருக்
14 களைச் சேர்ந்தவரோ என்று கேட்டான். அத
ற்கு அவர்: அல்ல, நான் **கர்த்தருடைய** சேனை
யின் அதிபதியாய் [5]இப்பொழுது வந்தேன்
என்றார்; அப்பொழுது யோசுவா தரையிலே
முகம் குப்புற விழுந்து [6]பணிந்துகொண்டு,
அவரை நோக்கி: என் ஆண்டவர் தமது அடி
யேனுக்குச் சொல்லுகிறது என்னவென்று
15 கேட்டான். அப்பொழுது **கர்த்தருடைய**
சேனையின் அதிபதி யோசுவாவை நோக்கி:
உன் கால்களிலிருக்கிற பாதரட்சைகளைக் கழ
ற்றிப்போடு, [7]நீ நிற்கிற இடம் பரிசுத்தமானது
என்றார்; யோசுவா அப்படியே செய்தான்.

6 எரிகோ இஸ்ரவேல் புத்திரருக்கு முன்
பாக அடைக்கப்பட்டிருந்தது; ஒருவரும் வெ
ளியே போகவுமில்லை, ஒருவரும் உள்ளே வர
2 வுமில்லை. **கர்த்தர்** யோசுவாவை நோக்கி:
இதோ, எரிகோவையும் அதின் ராஜாவையும்
யுத்தவீரரையும் [8]உன் கையில் ஒப்புக்கொடுத்
3 தேன். யுத்தபுருஷராகிய நீங்கள் அனைவரும்
பட்டணத்தைச் சூழ்ந்து ஒருதரம் சுற்றிவாருங்
கள்: இப்படி ஆறுநாள் செய்யக்கடவீர்கள்.
4 ஏழு ஆசாரியர் பெட்டிக்கு முன்பாக ஏழு
கொம்பு [9]எக்காளங்களைப் பிடித்துக்கொண்டு
போகவேண்டும்; ஏழாம்நாளில் பட்டணத்தை
ஏழுதரம் சுற்றிவரக்கடவர்கள்; ஆசாரியர் எக்
5 காளங்களை ஊதவேண்டும். அவர்கள் அந்தக்
கொம்புகளினால் நெடுந்தொனி இடும்போதும்,
நீங்கள் எக்காள சத்தத்தைக் கேட்கும்போதும்,
ஜனங்கள் எல்லாரும் மகா ஆரவாரத்தோடே
ஆர்ப்பரிக்கக்கடவர்கள்; அப்பொழுது பட்ட
ணத்தின் அலங்கம் இடிந்து விழும்; உடனே
ஜனங்கள் அவரவர் தங்களுக்கு நேராக ஏறக்
கடவர்கள் என்றார். அந்தப்படியே நூனின் 6
குமாரனாகிய யோசுவா ஆசாரியரை அழை
த்து: உடன்படிக்கைப்பெட்டியை எடுத்துக்
கொண்டுபோங்கள்; தொனிக்கும் ஏழு எக்கா
ளங்களையும் ஏழு ஆசாரியர்கள் **கர்த்தருடைய**
பெட்டிக்கு முன்பாகப் பிடித்துக்கொண்டு
போகக்கடவர்கள் என்று சொல்லி; ஜனங் 7
களை நோக்கி: பட்டணத்தைச் சுற்றி நடந்து
போங்கள்; யுத்தசன்னத்தரானவர்கள் **கர்த்த
ரின்** பெட்டிக்குமுன் நடக்கக்கடவர்கள் என்
றான். யோசுவா ஜனங்களிடத்தில் பேசின 8
வுடனே, தொனிக்கும் ஏழு எக்காளங்களைப்
பிடித்திருக்கிற ஏழு ஆசாரியர் **கர்த்தருக்கு**
முன்பாக நடந்து, எக்காளங்களை ஊதினார்
கள்; **கர்த்தருடைய** உடன்படிக்கைப்பெட்டி
அவர்களுக்குப் பின்சென்றது. எக்காளங் 9
களை ஊதுகிற ஆசாரியருக்குமுன் [10]யுத்தசன்
னத்தரானவர்கள் நடந்தார்கள்; பின்தண்டு
எக்காளங்கள் ஊதப்படும்போது பெட்டிக்குப்
பின்சென்றது. யோசுவா ஜனங்களைநோக்கி: 10
நான் சொல்லும் நாள்மட்டும், நீங்கள் ஆர்ப்
பரியாமலும் உங்கள் வாயினால் சத்தங்காட்டா
மலும் இருங்கள்; உங்கள் வாயிலிருந்து ஒரு
பேச்சும் புறப்படவேண்டாம்; ஆர்ப்பரியுங்கள்
என்று உங்களுக்கு நான் சொல்லும் நாளிலே
ஆர்ப்பரிப்பீர்களாக என்று கட்டளையிட்டிருந்
தான். அப்படியே **கர்த்தரின்** பெட்டியைப் 11
பட்டணத்தைச் சூழ்ந்து ஒருதரம் சுற்றிவரப்
பண்ணினான்; அவர்கள் திரும்பப் பாளயத்
திலே வந்து, பாளயத்தில் இராத்தங்கினார்கள்.
யோசுவா அதிகாலமே எழுந்திருந்தான்; 12
ஆசாரியர்கள் **கர்த்தரின்** பெட்டியைச் [11]சுமந்
துகொண்டுபோனார்கள். தொனிக்கும் ஏழு 13
எக்காளங்களைப் பிடிக்கிற ஏழு ஆசாரியர்களும்
எக்காளங்களை ஊதிக்கொண்டே **கர்த்தரின்**
பெட்டிக்கு முன்பாக நடந்தார்கள்; யுத்தசன்
னத்தரானவர்கள் அவர்களுக்கு முன்னாலே
நடந்தார்கள்; பின்தண்டோவெனில் எக்கா
ளங்கள் ஊதப்படுகையில், **கர்த்தரின்** பெட்
டிக்குப் பின்சென்றது. இரண்டாம் நாளி 14
லும் பட்டணத்தை ஒருதரம் சுற்றிவந்து, பா
ளயத்துக்குத் திரும்பினார்கள்; இந்தப்படி ஆறு
நாளும் செய்தார்கள்.
ஏழாம் நாளில், அதிகாலமே கிழக்கு வெ 15
ளுக்கும்போது எழுந்திருந்து அந்தப்பிரகார
மே பட்டணத்தை ஏழுதரம் சுற்றிவந்தார்
கள்; அன்றையத்தினத்தில் மாத்திரம் பட்ட
ணத்தை ஏழுதரம் சுற்றிவந்தார்கள். ஏழாந்தரம் 16
ஆசாரியர் எக்காளங்களை ஊதுகையில், யோ
சுவா ஜனங்களை நோக்கி: ஆர்ப்பரியுங்கள்,
பட்டணத்தைக் **கர்த்தர்** உங்களுக்கு ஒப்புக்
கொடுத்தார். ஆனாலும் இந்தப் பட்டணமும் 17
இதிலுள்ள யாவும் **கர்த்தருக்குச்** [12]சாபத்தீடா
யிருக்கும்; நான் அனுப்பின ஆட்களை ராகாப்
என்னும் வேசி மறைத்துவைத்தபடியால், அவ
ளும் அவளோடே வீட்டுக்குள் இருக்கிற அனை

[1] ஆதி. 34. 14. 1 சாமு. 14. 6
* புரட்டிப்போடுதல்.
[2] யாத். 12. 6. எண். 9. 5
[3] யாத். 16. 35 நெகே. 9. 20
[4] ஆதி. 32. 24. யாத். 23. 23. சகரி. 1. 8. அப். 1. 10
[5] யாத். 23. 20. தானி. 10. 13, 21; 12. 1. வெளி. 19. 11–14
[6] ஆதி. 17. 3. எண். 16. 22
[7] யாத். 3. 5. அப். 7. 33
[8] 2. 9, 24; 8. 1. உபா. 7. 24
[9] நியா. 7. 16, 22
[10] எண். 10. 25
[11] உபா. 31. 25
[12] லேவி. 27. 28. மீகா 4. 13

18 வருமாத்திரம் உயிரோடிருக்கக்கடவர்கள். சா
பத்தீடானதில் எதாகிலும் எடுத்துக்கொள்ளு
கிறதினாலே, நீங்கள் சாபத்தீடாகாதபடிக்கும்,
இஸ்ரவேல் பாளயத்தைச் சாபத்தீடாக்கி
அதைக் கலங்கப்பண்ணாதபடிக்கும், நீங்கள்
சாபத்தீடானதற்குமாத்திரம் [1]எச்சரிக்கையா
19 யிருங்கள். சகல வெள்ளியும் பொன்னும்,
வெண்கலத்தினாலும் இரும்பினாலும் செய்யப்
பட்ட பாத்திரங்களும், **கர்த்தருக்குப்** பரிசுத்த
மானவைகள்; அவைகள் **கர்த்தரின்** பொக்கி
20 ஷத்தில் சேரும் என்றான். எக்காளங்களை
ஊதுகையில், ஜனங்கள் ஆர்ப்பரித்தார்கள்;
எக்காள சத்தத்தை ஜனங்கள் கேட்டு, மகா
ஆரவாரத்தோடே முழங்குகையில், அலங்கம்
இடிந்து விழுந்தது; [2]உடனே ஜனங்கள் அவ
ரவர் தங்களுக்கு நேராகப் பட்டணத்தில் ஏறி,
21 பட்டணத்தைப் பிடித்து, பட்டணத்திலிரு
ந்த புருஷரையும் ஸ்திரீகளையும் வாலிபரை
யும் கிழவரையும் ஆடுமாடுகளையும் கழுதைகளை
யும் சகலத்தையும் [3]பட்டயக்கருக்கினால் சங்
22 காரம்பண்ணினார்கள். யோசுவா, தேசத்தை
வேவுபார்த்த இரண்டு புருஷரை நோக்கி:
நீங்கள் அந்த வேசியின் வீட்டிலே போய்,
நீங்கள் அவளுக்கு ஆணையிட்டபடி [4]அந்த
ஸ்திரீயையும் அவளுக்கு உண்டான யாவை
யும் அங்கேயிருந்து வெளியே கொண்டுவாருங்
23 கள் என்றான். அப்பொழுது வேவுகாரரான
அந்த வாலிபர் உள்ளே போய், ராகாபையும்
அவள் தகப்பனையும் அவள் தாயையும் சகோ
தரர்களையும் அவளுக்குள்ள யாவையும் அவள்
குடும்பத்தார் அனைவரையும் வெளியே அழை
த்துக்கொண்டுவந்து, அவர்களை இஸ்ரவேல்
பாளயத்துக்குப் புறம்பே இருக்கும்படி பண்
24 ணினார்கள். பட்டணத்தையும் அதிலுள்ள
யாவையும் அக்கினியால் சுட்டெரித்தார்கள்;
வெள்ளியையும் பொன்னையும், வெண்கலத்தி
னாலும் இரும்பினாலும் செய்த பாத்திரங்களையு
மாத்திரம் **கர்த்தரின்** ஆலயப் பொக்கிஷத்தில்
25 சேர்த்தார்கள். எரிகோவை வேவுபார்க்க
யோசுவா அனுப்பின ஆட்களை ராகாப் [5]என்
னும் வேசி மறைத்துவைத்தபடியினால், அவ
ளையும் அவள் தகப்பன் வீட்டாரையும் அவ
ளுக்குள்ள யாவையும் யோசுவா உயிரோ
டே வைத்தான்; அவள் இந்நாள்வரைக்கும்
இஸ்ரவேலின் நடுவிலே குடியிருக்கிறாள்.
26 அக்காலத்திலே யோசுவா: இந்த எரிகோபட்
டணத்தைக் கட்டும்படி எழும்பும் மனுஷன்
**கர்த்தருக்கு** முன்பாகச் சபிக்கப்பட்டிருக்கக்
கடவன்; [6]அவன் அதின் அஸ்திபாரத்தைப்
போடுகிறபோது தன் மூத்த குமாரனையும்,
அதின் வாசல்களை வைக்கிறபோது தன்
இளைய குமாரனையும் சாகக்கொடுக்கக்கடவன்
27 என்று சாபம் கூறினான். இவ்விதமாய்க் **கர்த்**
**தர்** யோசுவாவோடேகூட இருந்தார்; [7]அவன்
கீர்த்தி தேசமெங்கும் பரம்பிற்று.

7 இஸ்ரவேல் புத்திரர் சாபத்தீடானதிலே
துரோகம்பண்ணினார்கள்; [8]எப்படியெனில்,

[1] உபா. 7. 26; 13. 17. 2 கொ. 6. 17
[2] 5. வசனம். எபி. 11. 30
[3] உபா. 7. 2, 16. சங். 137. 8, 9. எரே. 48. 10. வெளி. 18. 21
[4] யோசு. 2. 14. எபி. 11. 31
[5] நியா. 1. 24, 25. மத். 1. 5. எபி. 11. 31
[6] 1 இரா. 16. 34
[7] உபா. 31. 6
[8] 20, 21. வசனம்
[9] லேவி. 26. 17. உபா. 28. 25
[10] லேவி. 26. 36. சங். 22. 14
[11] ஆதி. 37. 29, 34. 1 சாமு. 4. 12. யோபு 2. 12
[12] யாத். 5. 22. 2 இரா. 3. 10
[13] ஆப. 2. 1
[14] யாத். 32. 12. எண். 14. 13
[15] 6. 17, 18
[16] அப். 5. 1, 2

யூதா கோத்திரத்துச் சேராகுடைய [1]குமார
னாகிய சப்தியின் மகன் கர்மீக்குப் பிறந்த
ஆகான் என்பவன், சாபத்தீடானதிலே
சிலதை எடுத்துக்கொண்டான்; ஆகையால்
இஸ்ரவேல் புத்திரர்மேல் **கர்த்தருடைய** கோ
பம் மூண்டது.
யோசுவா எரிகோவிலிருந்து பெத்தேலுக் 2
குக் கிழக்கிலுள்ள பெத்தாவேன் சமீபத்திலி
ருக்கிற ஆயிபட்டணத்துக்குப் போகும்படி
ஆட்களை அனுப்பி: நீங்கள் போய், அந்த நாட்
டை வேவுபாருங்கள் என்றான்; அந்த மனுஷர்
போய், ஆயியை வேவுபார்த்து, யோசுவாவி 3
னிடத்தில் திரும்பி வந்து, அவனை நோக்கி:
ஜனங்கள் எல்லாரும் போகவேண்டியதில்லை;
ஏறக்குறைய இரண்டாயிரம் மூவாயிரம்பேர்
போய், ஆயியை முறிய அடிக்கலாம்; எல்லா
ஜனங்களையும் அங்கே போகும்படி வருத்தப்
படுத்தவேண்டியதில்லை; அவர்கள் கொஞ்சம்
பேர்தான் என்றார்கள். அப்படியே ஜனங் 4
களில் ஏறக்குறைய மூவாயிரம்பேர் அவ்
விடத்திற்குப் போனார்கள்; ஆனாலும் அவர்கள்
[9]ஆயியின் மனுஷருக்கு முன்பாக முறிந்தோடி
னார்கள். ஆயியின் மனுஷர் அவர்களில் ஏறக் 5
குறைய முப்பத்தாறுபேரை வெட்டிப்போட்
டார்கள்; பட்டணவாசலின் வெளிதுவக்கிச்
செபாரீம்மட்டும் அவர்களைத் துரத்தி, மலை
யிறக்கத்திலே அவர்களை வெட்டினார்கள்; ஜன
ங்களின் இருதயம் கரைந்து [10]தண்ணீராய்ப்
போயிற்று. அப்பொழுது யோசுவா தன் வஸ் 6
திரங்களைக் கிழித்துக்கொண்டு, அவனும் இஸ்
ரவேலின் மூப்பரும் சாயங்காலமட்டும் **கர்த்த**
**ரின்** பெட்டிக்கு முன்பாகத் தரையிலே முகம்
குப்புற விழுந்து, [11]தங்கள் தலைகளின்மேல்
புழுதியைப் போட்டுக்கொண்டு கிடந்தார்கள்.
யோசுவா: ஆ, **கர்த்தராகிய** ஆண்டவரே, 7
[12]எங்களை அழிக்கும்படிக்கு எமோரியர் கைக
ளில் ஒப்புக்கொடுப்பதற்காகவா தேவரீர் இந்த
ஜனத்தை யோர்தானைக் கடக்கப்பண்ணினீர்?
நாங்கள் யோர்தானுக்கு அப்புறத்தில் மனத்
திர்ப்தியாக இருந்துவிட்டோமானால் நலமா
யிருக்கும். ஆ, ஆண்டவரே, இஸ்ரவேலர் 8
தங்கள் சத்துருக்களுக்கு முதுகைக் காட்டினார்
கள்; இப்பொழுது [13]நான் என்னசொல்லு
வேன். கானானியரும் தேசத்துக் குடிகள் 9
யாவரும் இதைக் கேட்டு, [14]எங்களை வளைந்து
கொண்டு, எங்கள் பேரைப் பூமியிலிராதபடி
க்கு வேரற்றுப்போகப் பண்ணுவார்களே;
அப்பொழுது உமது மகத்தான நாமத்துக்கு
என்னசெய்வீர் என்றான். அப்பொழுது 10
**கர்த்தர்** யோசுவாவை நோக்கி: எழுந்திரு, நீ
இப்படி முகம் குப்புற விழுந்துகிடக்கிறது
என்ன? இஸ்ரவேலர் பாவஞ்செய்தார்கள்; 11
நான் அவர்களுக்குக் கட்டளையிட்ட என்
உடன்படிக்கையை மீறினார்கள்; [15]சாபத்தீடா
னதில் எடுத்துக்கொண்டதும், களவுசெய்த
தும், வஞ்சித்ததும், [16]தங்கள் பண்டம்பாடிகளு
க்குள்ளே வைத்ததும் உண்டே. ஆகலால் 12

இஸ்ரவேல் புத்திரர் தங்கள் சத்துருக்களுக்கு
முன்பாக நிற்கக்கூடாமல், [1]தங்கள் சத்துருக்
களுக்கு முதுகைக் காட்டினார்கள்; அவர்கள்
சாபத்தீடானார்கள்; [2]நீங்கள் சாபத்தீடானதை
உங்கள் நடுவிலிருந்து நிக்கிரகம் பண்ணாவிட்
13 டால், இனி உங்களோடு இரேன். எழுந்திரு,
நீ ஜனங்களைப் பரிசுத்தம்பண்ணிச் சொல்ல
வேண்டியது என்னவென்றால்: நாளையதினத்
துக்கு உங்களைப் பரிசுத்தம்பண்ணிக்கொள்
ளுங்கள்; [3]இஸ்ரவேலரே, சாபத்தீடானது
உங்கள் நடுவே இருக்கிறது; நீங்கள் சாபத்
தீடானதை உங்கள் நடுவிலிருந்து விலக்கா
திருக்குமட்டும், நீங்கள் உங்கள் சத்துருக்
களுக்கு முன்பாக நிற்கக்கூடாது என்று
இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்** சொல்லு
14 கிறார். காலையிலே நீங்கள் கோத்திரம் கோத்
திரமாக வரவேண்டும்; அப்பொழுது **கர்த்தர்**
குறிக்கிற கோத்திரம் வம்சம் வம்சமாக வர
வேண்டும்; **கர்த்தர்** குறிக்கிற வம்சம் குடும்பம்
குடும்பமாக வரவேண்டும்; [4]**கர்த்தர்** குறிக்கிற
குடும்பம் பேர்பேராக வரவேண்டும் என்று
15 சொல். அப்பொழுது சாபத்தீடானதை எடுத்
தவனாய்க் கண்டுபிடிக்கப்படுகிறவன், **கர்த்த**
**ரின்** உடன்படிக்கையை மீறி, இஸ்ரவேலிலே
மதிகேடான காரியத்தைச் செய்தபடியினால்,
[5]அவனும் அவனுக்குள்ள யாவும் அக்கினியில்
சுட்டெரிக்கப்படக்கடவது என்றார்.
16 யோசுவா அதிகாலமே எழுந்திருந்து, இஸ்ர
வேலரைக் கோத்திரம் கோத்திரமாக வரப்
பண்ணினான்; அப்பொழுது, யூதாவின் கோத்
17 திரம் குறிக்கப்பட்டது. அவன் யூதாவின்
வம்சங்களை வரப்பண்ணினபோது, சேராகிய
ரின் வம்சம் குறிக்கப்பட்டது; அவன் சேரா
கியரின் வம்சத்தைப் பேர்பேராக வரப்பண்
18 ணினபோது, சப்தி குறிக்கப்பட்டான். அ
வன் வீட்டாரை அவன் பேர்பேராக வரப்பண்
ணினபோது, யூதா கோத்திரத்துச் சேராகின்
குமாரனாகிய சப்திக்குப் பிறந்த கர்மீயின் மகன்
19 ஆகான் [6]குறிக்கப்பட்டான். அப்பொழுது
யோசுவா ஆகானைநோக்கி: மகனே, நீ இப்
பொழுது இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்**
**தரை** மகிமைப்படுத்து, [7]அவருக்கு முன்பாக
அறிக்கைபண்ணி, [8]நீ செய்ததை எனக்குச்
சொல்லு; அதை எனக்கு ஒளிக்காதே என்
20 றான். அப்பொழுது ஆகான் யோசுவாவுக்
குப் பிரதியுத்தரமாக: மெய்யாகவே நான் இஸ்
ரவேலின் தேவனாகிய **கர்த்தருக்கு** விரோத
மாகப் பாவஞ்செய்தேன்; இன்னின்ன பிர
21 காரமாகச் செய்தேன். கொள்ளையிலே நேர்
த்தியான ஒரு பாபிலோனிய சால்வையையும்,
இருநூறு வெள்ளிச் சேக்கலையும், ஐம்பது சே
க்கல் நிறையான ஒரு பொன் பாளத்தையும்
நான் கண்டு, அவைகளை இச்சித்து [9]எடுத்துக்
கொண்டேன்; இதோ, அவைகள் என் கூடா
ரத்தின் மத்தியில் பூமிக்குள் புதைத்திருக்கி
றது, வெள்ளி அதின் அடியிலிருக்கிறது என்
22 றான். உடனே யோசுவா ஆட்களை அனுப்பி
னான்; அவர்கள் கூடாரத்துக்கு ஓடினார்கள்;
அவனுடைய கூடாரத்தில் அது புதைத்திருந்
தது, வெள்ளியும் அதின்கீழ் இருந்தது. அவை 23
களைக் கூடாரத்தின் மத்தியிலிருந்து எடுத்து,
யோசுவாவினிடத்திலும் இஸ்ரவேல் புத்திரர்
எல்லாரிடத்திலும் கொண்டுவந்து, **கர்த்தரு**
டைய சமுகத்தில் வைத்தார்கள். அப்பொ 24
ழுது யோசுவாவும் இஸ்ரவேலரெல்லாரும்
கூட சேராகின் புத்திரனாகிய ஆகானையும்,
அந்த வெள்ளியையும் சால்வையையும் பொன்
பாளத்தையும், அவன் குமாரரையும் குமாரத்தி
களையும், அவன் மாடுகளையும் கழுதைகளையும்
ஆடுகளையும், அவன் கூடாரத்தையும், அவனுக்
குள்ள யாவையும் எடுத்து, ஆகோர் பள்ளத்தாக்
குக்குக் கொண்டுபோனார்கள். அங்கே யோ 25
சுவா: நீ எங்களைக் கலங்கப்பண்ணினதென்
ன? [10]இன்று **கர்த்தர்** உன்னைக் கலங்கப்பண்
ணுவார் என்றான்; அப்பொழுது இஸ்ரவேல
ரெல்லாரும் அவன்மேல் [11]கல்லெறிந்து, அவை
களை அக்கினியில் சுட்டெரித்து, கற்களினால்
மூடி; அவன்மேல் இந்நாள்வரைக்கும் இருக் 26
கிற பெரிய கற்குவியலைக் குவித்தார்கள்; இப்
படியே **கர்த்தர்** தமது கோபத்தின் [12]உக்கிரத்
தை விட்டு மாறினார்; ஆகையால் அவ்விடம்
இந்நாள்வரைக்கும் *ஆகோர் பள்ளத்தாக்கு
என்னப்படும்.

அப்பொழுது **கர்த்தர்** யோசுவாவை நோ **8**
க்கி: நீ பயப்படாமலும் கலங்காமலும் இரு;
[13]நீ யுத்த ஜனங்கள் யாவரையும் கூட்டிக்
கொண்டு எழுந்து, ஆயிபட்டணத்தின்மேல்
போ, இதோ, ஆயியின் ராஜாவையும் அவன்
ஜனத்தையும் அவன் பட்டணத்தையும்
அவன் நாட்டையும் உன் கையிலே ஒப்
புக்கொடுத்தேன். நீ எரிகோவுக்கும் அதின் 2
ராஜாவுக்கும் [14]செய்ததுபோல, ஆயிக்கும்
அதின் ராஜாவுக்கும் செய்யக்கடவாய்; அதில்
கொள்ளையிட்ட பொருள்களையும் மிருகஜீவ
ன்களையும் உங்களுக்குக் கொள்ளையாக எடு
த்துக்கொள்ளலாம், [15]பட்டணத்துக்குப் பின்
னாலே பதிவிடையை வை என்றார். அப் 3
பொழுது ஆயியின்மேல் போக, யோசுவா
வும் சகல யுத்தஜனங்களும் எழுந்து புறப்
பட்டார்கள்; யோசுவா யுத்தவீரரான முப்பதி
னாயிரம்பேரைத் தெரிந்தெடுத்து, இராத்திரி
யிலே அவர்களை அனுப்பி, அவர்களுக்குக் 4
கட்டளையிட்டதாவது: நீங்கள் பட்டணத்
தின் பின்னாலே [16]பதிவிருக்கவேண்டும்; பட்
டணத்துக்கு வெகுதூரமாய்ப் போகாமல்,
எல்லாரும் ஆயத்தமாயிருங்கள். நானும் என் 5
னோடிருக்கிற சகல ஜனங்களும் பட்டணத்
தண்டையில் கிட்டிச் சேருவோம்; அவர்கள்
முன்போல எங்களுக்கு எதிராகப் புறப்பட்டு
வரும்போது, அவர்களுக்கு முன்னாக நாங்கள்
[17]ஓடிப்போவோம். அப்பொழுது அவர்கள்: 6
முன்போல நமக்கு முன்னாக முறிந்து ஓடிப்
போகிறார்கள் என்று சொல்லி, எங்களைத்
தூரத்தப் புறப்படுவார்கள்; நாங்களோ அவர்க

1 எண். 14. 45. நியா. 2. 14
2 6. 18. உபா. 7. 26. ஆகா. 2. 13, 14
3 3. 5
4 நீதி. 16. 33. யோனா 1. 7
5 ஆதி. 34. 7. நியா. 20. 6. 1 சாமு. 26. 21
6 1 சாமு. 14. 42
7 1 சாமு. 6. 5. எரே. 13. 16
8 எண். 5. 6, 7. எஸ்றா 10. 10, 11. சங். 32. 5; 51. 3. தானி. 9. 4. ரோ. 10. 10. 1 யோ. 1. 8—10
9 ஆப. 2. 9. ரோ. 7. 7. 1 தீமோ. 6. 10. யாக். 1. 15. மீகா 2. 1
10 1 நாளா. 2. 7. கலா. 5. 12. எபி. 12. 15
11 உபா. 17. 5
12 உபா. 13. 17
* கலக்கம். ஏசா. 65. 10. ஓசி. 2. 15
13 1. 9; 6. 2
14 6. 21
15 உபா. 20. 14
16 நியா. 20. 29. ஷி
17 7. 5

ளைப் பட்டணத்தை விட்டு இப்பாலே வரப்
பண்ணுமட்டும், அவர்களுக்கு முன்னாக ஓடு
7 வோம். அப்பொழுது நீங்கள் பதிவிலிருந்து
எழும்பிவந்து, பட்டணத்தைப் பிடிக்கவேண்
டும்; உங்கள் தேவனாகிய **கர்த்தர்** அதை உங்
8 கள் கைகளில் ஒப்புக்கொடுப்பார். நீங்கள்
பட்டணத்தைப் பிடிக்கும்போது, அதைத்
தீக்கொளுத்திப்போடுங்கள்; **கர்த்தருடைய**
சொற்படி செய்யுங்கள்; இதோ, நான் உங்க
ளுக்குக் [1]கட்டளையிட்டிருக்கிறேன் என்று
9 சொல்லி, அவர்களை அனுப்பினான்; அவர்
கள் போய், பெத்தேலுக்கும் ஆயிக்கும் நடு
வே, ஆயிக்கு மேற்காகப் பதிவிருந்தார்கள்;
யோசுவா அன்று ராத்திரி ஜனங்களுக்குள்
தங்கினான்.
10 அதிகாலமே யோசுவா எழுந்திருந்து,
ஜனங்களை இலக்கம்பார்த்து, இஸ்ரவேலின்
மூப்பரோடுங்கூட ஜனங்களுக்கு முன்னாலே
11 நடந்து, ஆயியின்மேல் போனான். அவனோ
டிருந்த யுத்தஜனங்கள் எல்லாரும் நடந்து, பட்
டணத்துக்கு எதிரே வந்து சேர்ந்து, ஆயிக்கு
வடக்கே பாளயமிறங்கினார்கள்; அவர்களுக்
கும் ஆயிக்கும் நடுவே ஒரு பள்ளத்தாக்கு
12 இருந்தது. அவன் ஏறக்குறைய ஐயாயிரம்
பேரைப் பிரித்தெடுத்து, அவர்களைப் பெத்தே
லுக்கும் ஆயிக்கும் நடுவே பட்டணத்திற்கு
மேலண்டையில் பதிவிடையாக வைத்தான்.
13 பட்டணத்திற்கு வடக்கே இருந்த சகல சே
னையையும் பட்டணத்திற்கு மேற்கே பதிவி
ருக்கிறவர்களையும் திட்டம்பண்ணினபின்பு,
யோசுவா அன்று ராத்திரி பள்ளத்தாக்கிலே
14 போயிருந்தான். ஆயியின் ராஜா அதைக்
கண்டபோது, அவனும் பட்டணத்தின் மனு
ஷராகிய அவனுடைய சகல ஜனங்களும் தீவி
ரித்து, அதிகாலமே குறித்த வேளையில் இஸ்ர
வேலருக்கு எதிரே யுத்தம்பண்ணச் சமனான
வெளிக்கு நேராகப் புறப்பட்டார்கள்; பட்ட
ணத்துக்குப் பின்னாலே தனக்குப் பதிவிடை
வைத்திருக்கிறதை [2]அவன் அறியாதிருந்தான்.
15 யோசுவாவும் இஸ்ரவேலர் எல்லாரும் அவர்க
ளுக்கு முன்னாக முறிந்து, வனாந்தரத்துக்குப்
16 போகிற வழியே ஓடிப்போனார்கள். அப்
பொழுது பட்டணத்துக்குள் இருந்த ஜனங்
கள் எல்லாரும் அவர்களைத் துரத்தும்படி கூப்
பிட்டுக்கொண்டு யோசுவாவைப் பின்தொ
டர்ந்து பட்டணத்தை விட்டு அப்புறப்பட்டார்
17 கள். ஆயியிலும் பெத்தேலிலும் இஸ்ரவேல
ரைப் பின்தொடராத மனுஷன் இருந்ததில்லை;
பட்டணத்தைத் திறந்து வைத்துவிட்டு, இஸ்ர
வேலரைத் துரத்திக்கொண்டு போனார்கள்.
18 அப்பொழுது **கர்த்தர்** யோசுவாவை நோக்கி:
உன் கையில் இருக்கிற ஈட்டியை [3]ஆயிக்கு
நேராக நீட்டு; அதை உன் கையில் ஒப்புக்
கொடுப்பேன் என்றார்; அப்படியே யோசுவா
தன் கையில் இருந்த ஈட்டியைப் பட்டணத்
19 துக்கு நேராக நீட்டினான். அவன் தன்
கையை நீட்டினவுடனே, பதிவிருந்தவர்கள்

[1] 2 சாமு. 13. 28
[2] நியா. 20. 34. பிர. 9. 12
[3] யாத். 8. 5
[4] ஆதி. 19. 28. ஏசா. 34. 10
[5] உபா. 7. 2
[6] யாத். 17. 11, 12
[7] எண். 31. 22, 26
[8] உபா. 13. 16
[9] 10. 26, 27. சங். 107. 40
[10] 7. 26
[11] உபா. 27. 4–6

தீவிரமாய்த் தாங்கள் இருந்த இடத்திலிருந்து
எழும்பி ஓடி, பட்டணத்துக்கு வந்து, அதைப்
பிடித்து, தீவிரத்தோடே பட்டணத்தைத் தீக்
கொளுத்தினார்கள். ஆயியின் மனுஷர் பின் 20
னிட்டுப் பார்த்தபோது, இதோ, பட்டணத்
தின் புகை [4]ஆகாசத்தில் எழும்புகிறதைக் கண்
டார்கள்; அப்பொழுது அங்கும் இங்கும் ஓடிப்
போகிறதற்கு அவர்களுக்கு இடம் இல்லாமற்
போயிற்று; வனாந்தரத்துக்கு ஓடின ஜனங்கள்
தங்களைத் தொடர்ந்தவர்கள் முகமாய்த் திரும்பி
னார்கள். பதிவிருந்தவர்கள் பட்டணத்தைப் 21
பிடித்ததையும், பட்டணத்தின் புகை எழும்பு
கிறதையும், யோசுவாவும் இஸ்ரவேலரும்
பார்த்தபோது, திரும்பிக்கொண்டு, ஆயியின்
மனுஷரை முறிய அடித்தார்கள். பட்டணத் 22
திலிருந்தவர்களும் அவர்களுக்கு எதிர்ப்பட்ட
தினால், சிலர் இப்புறத்திலும் சிலர் அப்புறத்
திலும் இருந்த இஸ்ரவேலின் நடுவே அகப்
பட்டுக்கொண்டார்கள்; ஆகையால் அவர்க
ளில் ஒருவரும் தப்பி மீந்திராதபடிக்கு [5]அவர்
களை வெட்டிப்போட்டு, ஆயியின் ராஜாவை 23
உயிரோடே பிடித்து, யோசுவாவினிடத்தில்
கொண்டுவந்தார்கள். இஸ்ரவேலர் வனாந்தர 24
வெளியிலே தங்களைத் துரத்தின ஆயியின்
குடிகளையெல்லாம் வெட்டித் தீர்ந்தபோதும்,
அவர்கள் அனைவரும் நாசமாகுமட்டும் பட்ட
யக்கருக்கினால் விழுந்து இறந்தபோதும்,
இஸ்ரவேலர் எல்லாரும் ஆயிக்குத் திரும்பி,
அதைப் பட்டயக்கருக்கினால் சங்கரித்தார்கள்.
அந்நாளிலே ஆணும் பெண்ணுமாக ஆயியின் 25
மனுஷர் எல்லாரும் பன்னீராயிரம்பேர் விழுந்
தார்கள். ஆயியின் குடிகளையெல்லாம் சங் 26
கரித்துத் தீருமட்டும், யோசுவா ஈட்டியை நீட்
டிக்கொண்டிருந்த [6]தன் கையை மடக்க
வில்லை. **கர்த்தர்** யோசுவாவுக்குக் கட்டளை 27
யிட்ட வார்த்தையின்படி, மிருகஜீவனையும்
அந்தப் பட்டணத்தின் கொள்ளையையும்மாத்
திரம் [7]இஸ்ரவேலர் எடுத்துக்கொண்டார்கள்.
யோச்வா ஆயியைச் சுட்டெரித்து, [8]அதை 28
இந்நாள்வரைக்கும் இருக்கிறபடி என்றைக்
கும் பாழாய்க்கிடக்கும் மண்மேடாக்கி, ஆயி 29
யின் ராஜாவை ஒரு மரத்திலே [9]தூக்கிப்போடு
வித்து, சாயங்காலமட்டும் அதிலே தொங்க
விட்டான்; சூரியன் அஸ்தமித்தபின்பு, யோ
சுவா அவன் உடலை மரத்தைவிட்டு இறக்கச்
சொன்னான்; அதைப் பட்டணவாசலில் போ
ட்டு, இந்நாள்வரைக்கும் இருக்கிற பெரிய
கற்குவியலை [10]அதின்மேல் குவித்தார்கள்.
அப்பொழுது யோசுவா: **கர்த்தரின்** தாசனா 30
கிய மோசே இஸ்ரவேல் புத்திரருக்குக் கட்
டளையிட்டபடியும், மோசேயின் நியாயப்பிர
மாண புஸ்தகத்தில் எழுதியிருக்கிறபடியும்,
ஏபால் பர்வதத்தில் இஸ்ரவேலின் தேவனா
கிய **கர்த்தருக்கு** இருப்பாயுதம்படாத முழுக்
கற்களால் [11]ஒரு பலிபீடத்தைக் கட்டினான்.
அதின்மேல் **கர்த்தருக்குச்** சர்வாங்க தகனபலி 31
களைச் செலுத்தி, சமாதானபலிகளையும் இட்

32 டார்கள். இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாக
மோசே எழுதி இருந்த நியாயப்பிரமாணத்தை
[1]அவன் அங்கே கற்களில் பேர்த்தெழுதினான்.
33 இஸ்ரவேல் ஜனங்களை ஆசீர்வதிக்கும்படி **கர்**
**த்தரின்** தாசனாகிய மோசே முதலில் கட்டளை
யிட்டிருந்தபடியே, இஸ்ரவேலர் எல்லாரும்,
அவர்களுடைய மூப்பரும், அதிபதிகளும்,
நியாயாதிபதிகளும், அந்நியர்களும், இஸ்ரவே
லில் பிறந்தவர்களும் **கர்த்தருடைய** உடன்ப
டிக்கைப்பெட்டியைச் சுமக்கிற லேவியரான
ஆசாரியருக்கு முன்பாக, [2]பெட்டிக்கு இருபு
றத்திலும், பாதிபேர் கெரிசீம் மலைக்கு எதிர்
புறமாகவும், பாதிபேர் ஏபால் மலைக்கு எதிர்
34 புறமாகவும் நின்றார்கள். அதற்குப்பின்பு
அவன் நியாயப்பிரமாண புஸ்தகத்தில் எழுதி
யிருக்கிறபடி நியாயப்பிரமாணத்தில் சொல்
லிய ஆசீர்வாதமும் சாபமுமாகிய சகல வார்த்
35 தைகளையும் [3]வாசித்தான். மோசே கட்டளை
யிட்ட எல்லாவற்றிலும் யோசுவா, இஸ்ரவே
லின் முழுச் சபைக்கும், ஸ்திரீகளுக்கும் [4]பிள்
ளைகளுக்கும், அவர்களுக்குள் நடமாடி சஞ்ச
ரித்த அந்நியர்களுக்கும் முன்பாக, ஒரு வார்த்
தையும் விடாமல் வாசித்தான்.

9 யோர்தானுக்கு இப்புறத்திலே மலைகளி
லும் பள்ளத்தாக்குகளிலும் லீபனோனுக்கு எதி
ரான பெரிய சமுத்திரத்தின் கரையோரமெங்
குமுள்ள ஏத்தியரும் [5]எமோரியரும் கானானி
யரும் பெரிசியரும் ஏவியரும் எபூசியருமான
வர்களுடைய சகல ராஜாக்களும் அதைக்
2 கேள்விப்பட்டபோது, அவர்கள் ஒருமனப்
பட்டு யோசுவாவோடும் இஸ்ரவேலரோடும்
[6]யுத்தம்பண்ண ஏகமாய்க் கூடினார்கள்.
3 எரிகோவுக்கும் ஆயிக்கும் யோசுவா செய்
ததைக் கிபியோனின் குடிகள், [7]கேள்விப்
4 பட்டபோது, ஒரு தந்திரமான யோசனை
பண்ணி, தங்களை ஸ்தானாபதிகள்போலக்
காண்பித்து, பழைய இரட்டுப் பைகளையும்,
பீறலும் பொத்தலுமான பழைய திராட்சரசத்
துருத்திகளையும் தங்கள் கழுதைகள்மேல் வை
5 த்து, பழுதுபார்க்கப்பட்ட பழைய பாதரட்
சைகளைத் தங்கள் கால்களில் போட்டு, பழைய
வஸ்திரங்களை உடுத்திக்கொண்டார்கள்; வழி
க்கு அவர்கள் கொண்டுபோன அப்பமெல்
லாம் உலர்ந்ததும் பூசணம் பூத்ததுமாயிருந்
6 தது. அவர்கள் கில்காலில் இருக்கிற பாள
யத்துக்கு யோசுவாவினிடத்தில் போய், அவ
னையும் இஸ்ரவேல் மனுஷரையும் நோக்கி:
நாங்கள் தூரதேசத்திலிருந்து வந்தவர்கள், எங்
களோடே உடன்படிக்கை பண்ணுங்கள் என்
7 றார்கள். அப்பொழுது இஸ்ரவேல் மனுஷர்
அந்த ஏவியரை நோக்கி: நீங்கள் எங்கள் நடு
விலே குடியிருக்கிறவர்களாக்கும்; [8]நாங்கள்
எப்படி உங்களோடே உடன்படிக்கை பண்ண
8 லாம் என்றார்கள். அவர்கள் யோசுவாவை
நோக்கி: நாங்கள் உமக்கு அடிமைகள் [9]என்
றார்கள்; அதற்கு யோசுவா: நீங்கள் யார்,
எங்கேயிருந்து வந்தீர்கள் என்று கேட்டான்.
அதற்கு அவர்கள்: உம்முடைய தேவனாகிய 9
**கர்த்தருடைய** நாமத்தின் பிரஸ்தாபத்தைக்
கேட்டு, [10]உமது அடியாராகிய நாங்கள் வெகு
தூரதேசத்திலிருந்து வந்தோம்; [11]அவருடைய
கீர்த்தியையும், அவர் எகிப்திலே செய்த
யாவையும், அவர் எஸ்போனின் ராஜாவாகிய 10
சீகோனும் அஸ்தரோத்திலிருந்த பாசானின்
ராஜாவாகிய ஓகும் என்கிற யோர்தானுக்கு
அப்புறத்திலிருந்த எமோரியரின் இரண்டு
ராஜாக்களுக்கும் [12]செய்த யாவையும் கேள்
விப்பட்டோம். ஆகையால், எங்கள் மூப் 11
பரும் எங்கள் தேசத்துக் குடிகளெல்லாரும்
எங்களை நோக்கி: உங்கள் கைகளில் வழிக்கு
ஆகாரம் எடுத்துக்கொண்டு, அவர்களுக்கு
எதிர்கொண்டுபோய், அவர்களிடத்தில்: நாங்
கள் உங்கள் அடியார், எங்களோடே உடன்
படிக்கை பண்ணவேண்டும் என்று சொல்லச்
சொன்னார்கள். உங்களிடத்தில் வர நாங் 12
கள் புறப்படுகிற அன்றே, எங்கள் வழிப்பிர
யாணத்துக்கு இந்த அப்பத்தைச் சுடச்சுட
எங்கள் வீட்டிலிருந்து எடுத்துக்கொண்டு வந்
தோம்; இப்பொழுது, இதோ, உலர்ந்து பூச
ணம் பூத்திருக்கிறது. நாங்கள் இந்தத் திராட்ச 13
ரசத் துருத்திகளை நிரப்புகையில் புதிதாயிருந்
தது; ஆனாலும், இதோ, கிழிந்துபோயிற்று;
எங்கள் வஸ்திரங்களும் பாதரட்சைகளும்
நெடுந்தூரமான பிரயாணத்தினாலே பழசாய்ப்
போயிற்று என்றார்கள். அப்பொழுது இஸ்ர 14
வேலர்: **கர்த்தருடைய** *வாக்கைக் கேளாமல்
அவர்களுடைய போஜன பதார்த்தத்தில் சிறிது
வாங்கிக்கொண்டார்கள். யோசுவா அவர்க 15
ளோடே சமாதானம்பண்ணி, அவர்களை
உயிரோடே காப்பாற்றும் உடன்படிக்கையை
அவர்களோடே பண்ணினான்; [13]அதற்காகச்
சபையின் பிரபுக்கள் அவர்களுக்கு ஆணை
யிட்டுக் கொடுத்தார்கள்.
அவர்களோடே உடன்படிக்கைபண்ணி, 16
மூன்றுநாள் சென்றபின்பு, அவர்கள் தங்கள்
அயலார் என்றும் தங்கள் நடுவே குடியிருக்
கிறவர்கள் என்றும் கேள்விப்பட்டார்கள்.
இஸ்ரவேல் புத்திரர் பிரயாணம்பண்ணுகை 17
யில், மூன்றாம் நாளில் அவர்கள் பட்டணங்
களுக்கு வந்தார்கள்; அந்தப் பட்டணங்கள்
கிபியோன், கெபிரா, பெயெரோத், கீரியாத்
யெயாரீம் என்பவைகள். சபையின் பிரபுக் 18
கள் அவர்களுக்கு இஸ்ரவேலின் தேவனாகிய
**கர்த்தர்**பேரில் ஆணையிட்டிருந்தபடியினால்,
[14]இஸ்ரவேல் புத்திரர் அவர்களைச் சங்காரம்
பண்ணவில்லை; ஆனாலும் சபையார் எல்லா
ரும் பிரபுக்கள்மேல் முறுமுறுத்தார்கள். அப் 19
பொழுது சகல பிரபுக்களும், சபையார் யாவ
ரையும் நோக்கி: நாங்கள் இஸ்ரவேலின் தேவ
னாகிய **கர்த்தர்**பேரில் அவர்களுக்கு ஆணை
யிட்டுக் கொடுத்தோம்; ஆதலால் அவர்களை
நாம் தொடக்கூடாது. கடுங்கோபம் நம்மேல் 20
வராதபடிக்கு, [15]நாம் அவர்களுக்கு இட்ட
ஆணையினிமித்தம் நாம் அவர்களை உயிரோ

[1] யாத். 20. 25. உபா. 27. 2–8
[2] உபா. 31. 9, 12, 25
[3] லேவி. 26. 3. உபா. 29. 15—26: 30. 15, 20: 31. 11. நெகே. 8. 2, 3: 13. 1
[4] உபா. 31. 12
[5] யாத். 3. 17: 23. 23. எண். 34. 6
[6] சங். 83. 3, 5. ஏசா. 8. 9, 10: 54. 15
[7] 6. 27: 10. 2
[8] யாத். 23. 32. உபா. 7. 2. நியா. 2. 2
[9] உபா. 20. 11. 2 இரா. 10. 5
[10] 2. 10. யாத். 15. 14. எண். 21. 35
[11] உபா. 20. 15
[12] எண். 21. 24, 33
* ஆலோசனையை. எண். 27. 21. ஏசா. 30. 1, 2. நியா. 1. 1: 20. 18, 28. 1 சாமு. 23. 10, 11
[13] 11. 19. 2 சாமு. 21. 2
[14] சங். 15. 4. பிர. 5. 6
[15] 2 சாமு. 21. 1–6. எசே. 17. 12–21. சகரி. 5. 3, 4. மல். 3. 5

டே வைத்து, அவர்களுக்கு ஒன்று செய்வோம்.
21 பிரபுக்களாகிய நாங்கள் அவர்களுக்குச் சொன்
னபடி அவர்கள் உயிரோடிருந்து, சபையார்
எல்லாருக்கும் விறகு வெட்டுகிறவர்களாக
வும், [1]தண்ணீர் எடுக்கிறவர்களாகவும் இருக்
கக்கடவர்கள் என்று பிரபுக்கள் அவர்களோ
22 டே சொன்னார்கள். பின்பு யோசுவா அவர்
களை அழைப்பித்து: நீங்கள் எங்கள் நடுவே
குடியிருக்கும்போது: நாங்கள் உங்களுக்கு
வெகுதூரமாயிருக்கிறவர்கள் என்று சொல்லி,
23 எங்களை வஞ்சித்தது என்ன? இப்போதும் நீங்
கள் சபிக்கப்பட்டவர்கள்; [2]என் தேவனுடைய
ஆலயத்துக்கு விறகு வெட்டுகிறவர்களும்,
தண்ணீர் எடுக்கிறவர்களுமான பணிவிடைக்
காரராயிருப்பீர்கள்; [3]இந்த ஊழியம் உங்களை
24 விட்டு நீங்கமாட்டாது என்றான். அவர்கள்
யோசுவாவுக்குப் பிரதியுத்தரமாக: தேசத்தை
யெல்லாம் உங்களுக்கு ஒப்புக்கொடுக்கவும்,
தேசத்தின் குடிகளையெல்லாம் உங்களுக்கு
முன்பாக அழிக்கவும் உம்முடைய தேவ
னாகிய **கர்த்தர்** தமது தாசனாகிய மோசேக்
குக் கட்டளையிட்டது உமது அடியாருக்கு நிச்
சயமாகவே அறிவிக்கப்பட்டதினால், [4]நாங்
கள் எங்கள் ஜீவன்நிமித்தம் உங்களுக்கு மிக
வும் பயந்து, இந்தக் காரியத்தைச் செய்தோம்.
25 இப்போதும், இதோ, உமது கையிலிருக்கி
றோம், [5]உம்முடைய பார்வைக்கு நன்மையும்
நியாயமுமாய்த் தோன்றுகிறபடி எங்களுக்குச்
26 செய்யும் என்றார்கள். அப்படியே யோசுவா
அவர்களுக்குச் செய்து, இஸ்ரவேல் புத்திரர்
அவர்களைக் கொன்றுபோடாதபடிக்கு, அவர்
27 களை இவர்கள் கைக்குத் தப்புவித்தான். இந்
நாள்மட்டும் இருக்கிறபடியே, அந்நாளில்
அவர்களைச் சபைக்கும், **கர்த்தர்** தெரிந்து
கொள்ளும் இடத்திலிருக்கும் [6]அவருடைய
பலிபீடத்துக்கும் விறகு வெட்டுகிறவர்களா
கவும் தண்ணீர் எடுக்கிறவர்களாகவு மாக்கி
னான்.

**10** யோசுவா ஆயியைப் பிடித்து, சங்காரம்
பண்ணி, [7]எரிகோவுக்கும் அதின் ராஜாவுக்
கும் செய்தபடி, ஆயிக்கும் அதின் ராஜாவுக்
கும் செய்ததையும், கிபியோனின் குடிகள்
இஸ்ரவேலோடே சமாதானம்பண்ணி அவர்
களுக்குள் வாசமாயிருக்கிறதையும், எருசலே
மின் ராஜாவாகிய அதோனிசேதேக் கேள்
2 விப்பட்டபோது, கிபியோன் ராஜதானி
பட்டணங்களில் ஒன்றைப்போல் பெரிய
பட்டணமும், ஆயியைப்பார்க்கிலும் பெரிது
மாயிருந்தபடியினாலும், அதின் மனுஷரெல்
லாரும் பலசாலிகளாயிருந்தபடியினாலும், [8]மிக
3 வும் பயந்தார்கள். ஆகையால், எருசலே
மின் ராஜாவாகிய அதோனிசேதேக் எபிரோ
னின் ராஜாவாகிய ஒகாமுக்கும், யர்மூத்தின்
ராஜாவாகிய பீராமுக்கும், லாகீசின் ராஜா
வாகிய யப்பியாவுக்கும், எக்லோனின் ராஜா
4 வாகிய தெபீருக்கும் ஆள் அனுப்பி: நாங்
கள் கிபியோனைச் சங்கரிக்கும்படி, நீங்கள்

[1] உபா. 29. 11. 2 நாளா. 2. 17, 18
[2] லேவி. 27. 28, 29
[3] 21, 27. வச.
[4] யாத். 23. 32: 15. 14-16
[5] ஆதி. 16. 6
[6] 1 நாளா. 9. 2. எஸ்ற 8. 20
[7] 6. 21: 8. 22, 28
[8] யாத். 15. 14-16. உபா. 11. 25
[9] 9. 15
[10] 5. 10: 9. 6
[11] 11. 6. நியா. 4. 14, 15
[12] 1 சாமு. 7. 10, 12. சங். 28. 21
[13] சங். 18. 13, 14. ஏசா. 30. 30. வெளி. 16. 21
[14] யோபு 9. 7. ஏசா. 28. 21. ஆப. 3. 11
* யதார்த்தன். 2 சாமு. 1. 18

என்னிடத்தில் வந்து, எனக்குத் துணை செய்
யுங்கள்; அவர்கள் யோசுவாவோடும் இஸ்ர
வேல் புத்திரரோடும் சமாதானம்பண்ணினார்
கள் [9]என்று சொல்லி அனுப்பினான். அப்ப 5
டியே எருசலேமின் ராஜா, எபிரோனின்
ராஜா, யர்மூத்தின் ராஜா, லாகீசின் ராஜா,
எக்லோனின் ராஜா என்கிற எமோரியரின்
ஐந்து ராஜாக்களும் கூடிக்கொண்டு, அவர்
களும் அவர்களுடைய எல்லாச் சேனைகளும்
போய், கிபியோனுக்கு முன்பாகப் பாளய
மிறங்கி, அதின்மேல் யுத்தம்பண்ணினார்கள்.
அப்பொழுது கிபியோனின் மனுஷர் கில் 6
காலிலிருக்கிற பாளயத்துக்கு யோசுவாவினிட
த்தில் ஆளனுப்பி: [10]உமது அடியாரைக் கைவி
டாமல், சீக்கிரமாய் எங்களிடத்தில் வந்து, எங்
களை இரட்சித்து, எங்களுக்குத் துணை செய்
யும்; பர்வதங்களிலே குடியிருக்கிற எமோரிய
ரின் ராஜாக்களெல்லாரும் எங்களுக்கு விரோ
தமாய்க் கூடினார்கள் என்று சொல்லச்சொன்
னார்கள். உடனே யோசுவாவும் அவனோடே 7
கூடச் சகல யுத்தமனுஷரும் சகல பராக்கிரம
சாலிகளும் கில்காலிலிருந்து போனார்கள்.
**கர்த்தர்** யோசுவாவை நோக்கி: அவர்களுக்குப் 8
பயப்படாயாக; [11]உன் கைகளில் அவர்களை
ஒப்புக்கொடுத்தேன்; அவர்களில் ஒருவரும்
உனக்கு முன்பாக நிற்பதில்லை என்றார்.
யோசுவா கில்காலிலிருந்து இராமுழுதும் 9
நடந்து, திடீரென்று அவர்கள்மேல் வந்துவிட்
டான். **கர்த்தரோ** அவர்களை இஸ்ரவேலுக்கு 10
முன்பாகக் கலங்கப்பண்ணினார்; [12]ஆகையால்
அவர்களைக் கிபியோனிலே மகா சங்காரமாக
மடங்கடித்து, பெத்தொரோனுக்குப் போகிற
வழியிலே துரத்தி, அசெக்காமட்டும் மக்கெதா
மட்டும் முறிய அடித்தார்கள். அவர்கள் 11
பெத்தொரோனிலிருந்து இறங்குகிற வழி
யிலே இஸ்ரவேலுக்கு முன்பாக ஓடிப்போ
கையில், அசெக்காமட்டும் ஓடுகிற அவர்கள்
மேல் **கர்த்தர்** வானத்திலிருந்து பெரிய கற்
களை விழப்பண்ணினார், [13]அவர்கள் செத்தார்
கள்; இஸ்ரவேல் புத்திரர் பட்டயத்தால்
கொன்றவர்களைப்பார்க்கிலும் கல்மழையினால்
செத்தவர்கள் அதிகமாயிருந்தார்கள்.
**கர்த்தர்** எமோரியரை இஸ்ரவேல் புத்திர 12
ருக்கு முன்பாக ஒப்புக்கொடுக்கிற அந்நா
ளிலே, யோசுவா **கர்த்தரை** நோக்கிப்
பேசி, பின்பு இஸ்ரவேலின் கண்களுக்கு
முன்பாக: சூரியனே, [14]நீ கிபியோன்மேலும்,
சந்திரனே, நீ ஆயலோன் பள்ளத்தாக்கின்
மேலும், தரித்து நில்லுங்கள் என்றான். அப் 13
பொழுது ஜனங்கள் தங்கள் சத்துருக்களுக்கு
நீதியைச் சரிக்கட்டுமட்டும் சூரியன் தரித்தது,
சந்திரனும் நின்றது; இது *யாசேரின் புஸ்த
கத்தில் எழுதியிருக்கவில்லையா; அப்படியே
சூரியன் அஸ்தமிக்கத் தீவிரிக்காமல், ஏறக்
குறைய ஒரு பகல் முழுதும் நடுவானத்தில்
நின்றது, இப்படிக் **கர்த்தர்** ஒரு மனித 14
னுடைய சொல் கேட்ட அந்நாளையொத்த நாள்

அதற்கு முன்னுமில்லை அதற்குப் பின்னு
மில்லை; **கர்த்தர்** இஸ்ரவேலுக்காக [1]யுத்தம்பண்
ணினார்.
15 பின்பு யோசுவா இஸ்ரவேல் அனைத்தோடுங்
கூடக் கில்காலிலிருக்கிற பாளயத்துக்குத் திரு
16 ம்பினான். அந்த ஐந்து ராஜாக்களும் ஓடிப்
போய், மக்கெதாவிலிருக்கிற [2]ஒரு கெபியில்
17 ஒளித்துக்கொண்டார்கள். ஐந்து ராஜாக்க
ளும் மக்கெதாவிலிருக்கிற ஒரு கெபியில் ஒளி
த்திருந்து அகப்பட்டார்கள் என்று யோசுவா
18 வுக்கு அறிவிக்கப்பட்டது. அப்பொழுது
யோசுவா: பெரிய கற்களைக் கெபியின் வாயி
லே புரட்டி, [3]அவ்விடத்தில் அவர்களைக் காவ
19 ல்காக்க மனுஷரை வையுங்கள். நீங்களோ
நில்லாமல், உங்கள் சத்துருக்களைத் துரத்தி,
[4]அவர்களுடைய பின்படைகளை வெட்டிப்
போடுங்கள்; அவர்களைத் தங்கள் பட்டணங்க
ளிலே பிரவேசிக்கவொட்டாதிருங்கள்; உங்
கள் தேவனாகிய **கர்த்தர்** அவர்களை உங்கள்
20 கையில் ஒப்புக்கொடுத்தார் என்றான். யோசு
வாவும் இஸ்ரவேல் புத்திரரும் அவர்களை மகா
பெரிய சங்காரமாய் அவர்கள் அழியுமளவும்
சங்கரித்தார்கள்; அவர்களில் மீதியானவர்கள்
[5]அரணான பட்டணங்களுக்குள் புகுந்தார்கள்.
21 ஜனங்களெல்லாரும் சுகமாய் மக்கெதாவிலிரு
க்கிற பாளயத்திலே, யோசுவாவினிடத்திற்
குத் திரும்பிவந்தார்கள்; இஸ்ரவேல் புத்திரரு
க்கு விரோதமாக ஒருவனும் தன் நாவை
22 [6]அசைக்கவில்லை. அப்பொழுது யோசுவா:
கெபியின் வாயைத் திறந்து, [7]அந்த ஐந்து
ராஜாக்களையும் அந்தக் கெபியிலிருந்து என்
னிடத்திற்கு வெளியே கொண்டுவாருங்கள்
23 என்றான். அவர்கள் அப்படியே செய்து,
எருசலேமின் ராஜாவும், எபிரோனின் ராஜா
வும், யர்மூத்தின் ராஜாவும், லாகீசின் ராஜா
வும், எக்லோனின் ராஜாவுமாகிய அந்த ஐந்து
ராஜாக்களையும் அந்தக் கெபியிலிருந்து அவனி
டத்திற்கு வெளியே கொண்டுவந்தார்கள்.
24 அவர்களை யோசுவாவினிடத்திற்குக் கொண்டு
வந்தபோது, யோசுவா இஸ்ரவேல் மனுஷ
ரையெல்லாம் அழைப்பித்து, தன்னோடே
கூட வந்த யுத்த மனுஷரின் அதிபதிகளை
நோக்கி: நீங்கள் கிட்டவந்து, [8]உங்கள் கால்
களை இந்த ராஜாக்களுடைய கழுத்துகளின்
மேல் வையுங்கள் என்றான்; அவர்கள் கிட்ட
வந்து, தங்கள் கால்களை அவர்கள் கழுத்து
25 களின்மேல் வைத்தார்கள். அப்பொழுது
யோசுவா அவர்களை நோக்கி: நீங்கள் பயப்
படாமலும் கலங்காமலும் பலத்துத் திடமனதா
யிருங்கள்; [9]நீங்கள் யுத்தம்பண்ணும் உங்கள்
சத்துருக்களுக்கெல்லாம் **கர்த்தர்** இப்படியே
26 செய்வார் என்றான். அதற்குப் பின்பு யோசு
வா அவர்களை வெட்டிக் கொன்று, ஐந்து மரங்
களிலே தூக்கிப்போட்டான்; [10]சாயங்காலமட்
27 டும் மரங்களில் தொங்கினார்கள். சூரியன்
அஸ்தமிக்கிற வேளையிலே, யோசுவா அவர்
களை மரங்களிலிருந்து இறக்கக் கட்டளையிட்
டான். அவர்கள் ஒளித்துக்கொண்டிருந்த
கெபியிலே அவர்களைப் போட்டு; இந்நாள்
வரைக்கும் இருக்கிறபடி பெரிய கற்களை
கெபியின் வாயிலே அடைத்தார்கள்.
அந்நாளிலே யோசுவா மக்கெதாவைப் 28
பிடித்து, அதைப் பட்டயக்கருக்கினால் அழி
த்து, அதின் ராஜாவையும் அதிலுள்ள மனு
ஷராகிய சகல நரஜீவன்களையும், ஒருவரை
யும் மீதியாக வைக்காமல், சங்காரம்பண்ணி,
[11]எரிகோவின் ராஜாவுக்குச் செய்ததுபோல,
மக்கெதாவின் ராஜாவுக்கும் செய்தான்.
மக்கெதாவிலிருந்து யோசுவா இஸ்ரவேலர் 29
அனைவரோடுங்கூட லிப்னாவுக்குப் புறப்ப
ட்டு, [12]லிப்னாவின்மேல் யுத்தம்பண்ணினான்.
**கர்த்தர்** அதையும் அதின் ராஜாவையும் இஸ்ர 30
வேலின் கையில் ஒப்புக்கொடுத்தார்; அதை
யும் அதிலுள்ள சகல நரஜீவன்களையும், ஒரு
வரையும் அதிலே மீதியாக வைக்காமல், பட்
டயக்கருக்கினால் அழித்து, எரிகோவின் ரா
ஜாவுக்குச் செய்ததுபோல, அதின் ராஜாவுக்
கும் செய்தான்.
லிப்னாவிலிருந்து யோசுவா இஸ்ரவேல் 31
அனைத்தோடுங்கூட லாகீசுக்குப் புறப்பட்டு,
அதற்கு எதிரே பாளயமிறங்கி, அதின்மேல்
யுத்தம்பண்ணினான். **கர்த்தர்** லாகீசை இஸ் 32
ரவேலின் கையில் ஒப்புக்கொடுத்தார்; அதை
இரண்டாம் நாளிலே பிடித்து, லிப்னாவுக்குச்
செய்ததுபோல, அதையும் அதிலுள்ள எல்லா
நரஜீவன்களையும் பட்டயக்கருக்கினால் அழி
த்தான்.
அப்பொழுது கேசேரின் ராஜாவாகிய 33
ஓராம் லாகீசுக்குத் துணைசெய்யும்படி வந்
தான்; யோசுவா அவனையும் அவன் ஜனத்தை
யும்; ஒருவனும் மீதியாயிராதபடி, வெட்டிப்
போட்டான்.
லாகீசிலிருந்து யோசுவாவும் இஸ்ரவேலர் 34
அனைவரும் எக்லோனுக்குப் புறப்பட்டு, அத
ற்கு எதிரே பாளயமிறங்கி, அதின்மேல் யுத்
தம்பண்ணி, அதை அந்நாளிலே பிடித்து, 35
அதைப் பட்டயக்கருக்கினால் அழித்தார்கள்;
லாகீசுக்குச் செய்ததுபோல, அதிலுள்ள சகல
நரஜீவன்களையும் அந்நாளிலேதானே சங்கா
ரம்பண்ணினான்.
பின்பு எக்லோனிலிருந்து யோசுவாவும் 36
இஸ்ரவேலர் அனைவருமாய் எபிரோனுக்குப்
புறப்பட்டு, [13]அதின்மேல் யுத்தம்பண்ணி,
அதைப் பிடித்து, எக்லோனுக்குச் செய்தது 37
போல, அதையும் அதின் ராஜாவையும், அத
ற்கு அடுத்த எல்லாப் பட்டணங்களையும் அதி
லுள்ள சகல நரஜீவன்களையும், ஒருவரையும்
மீதியாக வைக்காமல், பட்டயக்கருக்கினால்
அழித்தார்கள்; அதையும் அதிலுள்ள சகல நர
ஜீவன்களையும் சங்காரம்பண்ணினான்.
பின்பு யோசுவா இஸ்ரவேலர் அனைவரோ 38
டுங்கூடத் தெபீருக்குத் [14]திரும்பிப் போய்,
அதின்மேல் யுத்தம்பண்ணி, அதையும் 39
அதின் ராஜாவையும் அதைச் சேர்ந்த எல்

[1] உபா. 1. 30. ஏசா. 38. 8
[2] நியா. 6. 2. 1 சாமு. 13. 6
[3] மத். 27. 60
[4] எரே. 48. 10
[5] 2 சாமு. 20. 6. எரே. 8. 14
[6] யாத். 11. 7
[7] 1 சாமு. 15. 32
[8] ஏசா. 26. 5, 6. மல்கி. 4. 3. சங். 18. 40; 107. 40
[9] உபா. 31. 6, 8; 8. 21. ரோ. 8. 37
[10] 8. 29. உபா. 21. 23
[11] உபா. 7. 2, 16
[12] 15. 42
[13] 14. 13; 15. 13. நியா. 1. 10. 2 சாமு. 5. 1–5
[14] 15. 15

லாப் பட்டணங்களையும் பிடித்தான்; அவைக
ளைப் பட்டயக்கருக்கினால் அழித்து, அதிலு
ள்ள நரஜீவன்களையெல்லாம், ஒருவரையும்
மீதியாக வைக்காமல், சங்காரம்பண்ணினார்
கள்; எபிரோனுக்கும் லிப்னாவுக்கும் அவைக
ளின் ராஜாவுக்கும் செய்ததுபோல தெபீருக்
கும் அதின் ராஜாவுக்கும் செய்தான்.
40 இப்படியே யோசுவா மலைத்தேசம் அனைத்
தையும் தென்தேசத்தையும் சமபூமியையும்
நீர்ப்பாய்ச்சலான இடங்களையும் அவைகளின்
எல்லா ராஜாக்களையும், ஒருவரையும் மீதி
யாக வைக்காமல் அழித்து, இஸ்ரவேலின்
தேவனாகிய **கர்த்தர்** கட்டளையிட்டபடியே,
[1]சுவாசமுள்ள எல்லாவற்றையும் சங்காரம்
41 பண்ணி, காதேஸ்பர்னேயா துவக்கிக் காத்
சாமட்டும் [2]இருக்கிறதையும் கிபியோன்மட்
டும் இருக்கிற கோசேன் தேசம் அனைத்தை
42 யும் அழித்தான். அந்த ராஜாக்கள் எல்லா
ரையும் அவர்கள் தேசத்தையும் யோசுவா ஒரு
மிக்கப் பிடித்தான்; இஸ்ரவேலின் தேவனா
கிய **கர்த்தர்** இஸ்ரவேலுக்காக [3]யுத்தம்பண்ணி
43 னார். பின்பு யோசுவா இஸ்ரவேலனைத்தோ
டுங்கூடக் கில்காலிலிருக்கிற பாளயத்துக்குத்
திரும்பினான்.

11 ஆத்சோரின் ராஜாவாகிய யாபீன் அதைக்
கேள்விப்பட்டபோது, [4]அவன் மாதோனின்
ராஜாவாகிய யோபாபிடத்திற்கும், சிம்ரோ
னின் ராஜாவிடத்திற்கும், அக்சாபின் ராஜா
2 விடத்திற்கும், வடக்கேயிருக்கிற மலைகளி
லும் கின்னரோத்துக்குத் [5]தெற்கேயிருக்கிற
நாட்டுப்புறத்திலும் சமபூமியிலும் மேற்கு எல்
லையாகிய தோரிலும் [6]இருக்கிற இராஜாக்களி
3 டத்திற்கும், கிழக்கேயும் மேற்கேயுமிருக்
கிற கானானியரிடத்திற்கும், மலைகளிலிருக்
கிற எமோரியர், ஏத்தியர், பெரிசியர், எபூசி
யரிடத்திற்கும், எர்மோன் மலையின் அடியிலே
[7]மிஸ்பா சீமையிலிருக்கிற ஏவியரிடத்திற்கும்
4 ஆள் அனுப்பினான். அவர்கள் கடற்கரை மண
லைப்போல் [8]ஏராளமான திரண்ட ஜனமாகிய
தங்களுடைய எல்லாச் சேனைகளோடும், மகா
ஏராளமான குதிரைகளோடும் இரதங்களோ
5 டுங்கூடப் புறப்பட்டார்கள். இந்த ராஜாக்க
ளெல்லாரும் கூடி, இஸ்ரவேலோடே யுத்
தம்பண்ண வந்து, மேரோம் என்கிற ஏரியண்
டையிலே ஏகமாய்ப் பாளயமிறங்கினார்கள்.
6 அப்பொழுது **கர்த்தர்** யோசுவாவை நோக்கி:
அவர்களுக்குப் பயப்படாயாக; [9]நாளை இந்நே
ரத்திலே நான் அவர்களையெல்லாம் இஸ்ர
வேலுக்கு முன்பாக வெட்டுண்டவர்களாக ஒப்
புக்கொடுப்பேன்; நீ அவர்கள் குதிரைகளின்
குதிகால் நரம்புகளை அறுத்து, [10]அவர்கள் இர
தங்களை அக்கினியால் சுட்டெரிக்கக்கடவாய்
7 என்றார். யோசுவாவும், அவனோடேகூட
யுத்தஜனங்கள் அனைவரும், திடீரென்று மே
ரோம் ஏரியண்டையிலிருக்கிற அவர்களிடத்
தில் வந்து, அவர்கள்மேல் விழுந்தார்கள்.
8 **கர்த்தர்** அவர்களை இஸ்ரவேலின் கையில் ஒப்

1 உபா. 20. 16, 17
2 ஆதி. 10. 19
3 14 வசனம்
4 10. 8; 19. 15
5 எண். 34. 11
6 17. 11
7 ஆதி. 31. 49. நியா. 3. 3
8 ஆதி. 22. 17. நியா. 7. 12
9 10. 8
10 2 சாமு. 8. 4
11 எண். 33. 52. உபா. 7. 2
* மொட்டைமலை. 12. 7
12 12. 9-24. உபா. 7. 24
13 9. 3, 7

புக்கொடுத்தார்; அவர்களை முறிய அடித்து,
பெரிய சீதோன்மட்டும் மிஸ்ரபோத்மாயீம்
மட்டும், கிழக்கேயிருக்கிற மிஸ்பே பள்ளத்தா
க்குமட்டும் துரத்தி, அவர்களில் ஒருவரும்
மீதியாயிராதபடி, அவர்களை வெட்டிப்போ
ட்டார்கள். யோசுவா **கர்த்தர்** தனக்குச் 9
சொன்னபடி அவர்களுக்குச் செய்து, அவர்
கள் குதிரைகளின் குதிகால் நரம்புகளை அறு
த்து, அவர்கள் இரதங்களை அக்கினியால் சுட்
டெரித்தான்.
அக்காலத்திலே யோசுவா திரும்பி, ஆத்சோ 10
ரைப் பிடித்து, அதின் ராஜாவைப் பட்டயத்
தினால் வெட்டிப்போட்டான்; ஆத்சோர் முன்
னே அந்த ராஜ்யங்களுக்கெல்லாம் தலைமை
யான பட்டணமாயிருந்தது. அதிலிருந்த நர 11
ஜீவன்களையெல்லாம் பட்டயக்கருக்கினால்
வெட்டி, சங்காரம்பண்ணினார்கள்; சுவாச
முள்ளது ஒன்றும் மீதியானதில்லை; ஆத்சோ
ரையோ அக்கினியால் சுட்டெரித்தான்.
அந்த ராஜாக்களுடைய எல்லாப் பட்டணங் 12
களையும் அவைகளுடைய எல்லா ராஜாக்களை
யும் யோசுவா பிடித்து; பட்டயக்கருக்கினால்
வெட்டி, **கர்த்தருடைய** தாசனாகிய மோ
சே கட்டளையிட்டபடி, [11]அவர்களைச் சங்காரம்
பண்ணினான். ஆனாலும் தங்கள் அரணிப் 13
போடே இருந்த பட்டணங்களையெல்லாம்
இஸ்ரவேலர் சுட்டெரித்துப்போடாமல் வைத்
தார்கள்; ஆத்சோரைமாத்திரம் யோசுவா சுட்
டெரித்துப்போட்டான். அந்தப் பட்டணங் 14
களிலுள்ள மிருக ஜீவன்களையும் மற்றக்
கொள்ளைப்பொருள்களையும் இஸ்ரவேல் புத்
திரர் தங்களுக்கென்று எடுத்துக்கொண்டார்
கள்; ஆனாலும் எல்லா மனுஷரையும் அழித்
துத் தீருமட்டும் அவர்களைப் பட்டயக்கருக்கி
னால் வெட்டிப்போட்டார்கள்; சுவாசமுள்ள
ஒன்றையும் அவர்கள் மீதியாக வைக்கவில்லை.
**கர்த்தர்** தமது தாசனாகிய மோசேக்கு எப்ப 15
டிக் கட்டளையிட்டிருந்தாரோ, அப்படியே
மோசே யோசுவாவுக்குக் கட்டளையிட்டிருந்
தான்; அப்படியே யோசுவா செய்தான்;
அவன், **கர்த்தர்** மோசேக்குக் கட்டளையிட்ட
தில் ஒன்றையும் செய்யாமல் விடவில்லை.
இந்தப்பிரகாரமாக யோசுவா சேயீருக்கு 16
ஏறிப்போகிற *ஆலாக் மலைதுவக்கி லீபனோ
னின் பள்ளத்தாக்கில் எர்மோன் மலையடியில்
இருக்கிற பாகால் காத்மட்டுமுள்ள அந்த
முழுத் தேசமாகிய மலைகளையும், தென்தேசம்
யாவையும், கோசேன் தேசத்தையும், சமனான
பூமியையும், நாட்டுப்புறத்தையும், இஸ்ரவே
லின் மலைகளையும் அதின் சமபூமியையும்
பிடித்துக்கொண்டு, அவைகளின் ராஜாக்களை 17
யெல்லாம் பிடித்து, [12]அவர்களை வெட்டிக்
கொன்றுபோட்டான். யோசுவா நெடுநா 18
ளாய் அந்த ராஜாக்களெல்லாரோடும் யுத்தம்
பண்ணினான். கிபியோனின் குடிகளாகிய 19
[13]ஏவியரைத் தவிர, ஒரு பட்டணமும் இஸ்ர
வேல் புத்திரரோடே சமாதானம் பண்ண

வில்லை; மற்றெல்லாப் பட்டணங்களையும் யுத்
20 தம்பண்ணிப் பிடித்தார்கள். யுத்தம்பண்ண
இஸ்ரவேலுக்கு எதிராக வரும்படிக்கு, [1]அவர்
களுடைய இருதயம் கடினமானதும், இப்ப
டியே அவர்கள்பேரில் இரக்கம் உண்டாகா
மல், **கர்த்தர்** மோசேக்குக் கட்டளையிட்ட
படி, அவர்களை அழித்துச் சங்காரம்பண்ணி
னதும் **கர்த்தரால்** வந்த காரியமாயிருந்தது.
21 அக்காலத்திலே யோசுவா போய், மலைத்
தேசமாகிய எபிரோனிலும் தெபீரிலும் ஆனா
பிலும் யூதாவின் சகல மலைகளிலும் இஸ்ர
வேலின் சகல மலைகளிலும் இருந்த ஏனாக்கி
யரை [2]நிக்கிரகம்பண்ணி, அவர்களை அவர்கள்
பட்டணங்களோடும்கூடச் சங்கரித்தான்.
22 இஸ்ரவேல் புத்திரரின் தேசத்தில் ஏனாக்கியர்
ஒருவரும் மீதியாக வைக்கப்படவில்லை; காசா
விலும் காத்திலும் அஸ்தோத்திலும்மாத்திரம்
23 [3]சிலர் மீதியாயிருந்தார்கள். அப்படியே யோ
சுவா, **கர்த்தர்** மோசேயினிடத்தில் சொன்ன
படியெல்லாம் தேசமனைத்தையும் பிடித்து,
அதை இஸ்ரவேலருக்கு, அவர்கள் கோத்தி
ரங்களுடைய பங்குகளின்படியே, சுதந்தா
மாகக் கொடுத்தான்; [4]யுத்தம் ஓய்ந்ததினால்
தேசம் அமைதலாயிருந்தது.

**12** யோர்தானுக்கு அப்புறத்தில் சூரியன்
உதயமாகிற திசையிலே அர்னோன் [5]ஆறு
துவக்கி எர்மோன் [6]மலைமட்டும், கிழக்கே சம
பூமி எல்லையிலெல்லாமுள்ள ராஜாக்களை
இஸ்ரவேல் புத்திரர் முறிய அடித்து, அவர்க
ளுடைய தேசங்களையும் சுதந்தரித்துக்கொண்
2 டார்கள். அந்த ராஜாக்களில், எஸ்போனில்
குடியிருந்த எமோரியரின் ராஜாவாகிய [7]சீ
கோன், அர்னோன் ஆற்றங்கரையிலிருக்கிற
ஆரோவேர் தொடங்கி ஆற்றின் நடுமையமும்
பாதிக் கீலேயாத்து முட்பட அம்மோன் புத்
திரரின் எல்லையான யாபோக்கு ஆறுமட்டு
3 முள்ள தேசத்தையும், சமனான வெளிதுவக்
கிக் கிழக்கேயிருக்கிற கின்னரோத் [8]கடல்
மட்டும் பெத்யெசிமோத் வழியாய்க் கிழக்கே
யிருக்கிற சமனான வெளியின் கடலாகிய உப்
புக் கடல்மட்டும் இருக்கிற தேசத்தையும்
தெற்கே அஸ்தோத்பிஸ்காவுக்குத் தாழ்வாயி
4 ருக்கிற தேசத்தையும் ஆண்டான். இராட்ச
தரில் [9]மீதியான பாசானின் ராஜாவாகிய
ஓகின் [10]எல்லையையும் சுதந்தரித்துக்கொண்
டார்கள்; அவன் அஸ்தரோத்திலும் எத்ரேயி
5 லும் வாசம்பண்ணி, எர்மோன் மலையையும்
[11]சல்காவையும், கெசூரியர், மாகாத்தியர் எல்
லைமட்டும் எஸ்போனின் ராஜாவாகிய சீகோ
னின் எல்லையாயிருந்த பாதிக் கீலேயாத்மட்
டும் இருக்கும் பாசான் அனைத்தையும் ஆண்
6 டான். அவர்களைக் **கர்த்தரின்** தாசனாகிய
மோசேயும் இஸ்ரவேல் புத்திரரும் முறிய
அடித்தார்கள்; அத்தேசத்தைக் **கர்த்தரின்** தாச
னாகிய மோசே ரூபனியருக்கும் காத்தியருக்
கும் மனாசேயின் பாதிக் கோத்திரத்துக்கும்
சுதந்தரமாகக் [12]கொடுத்தான்.

யோர்தானுக்கு இப்புறத்திலே மேற்கே 7
லீபனோனின் பள்ளத்தாக்கிலுள்ள பாகால்
காத் முதல்கொண்டு சேயீருக்கு ஏறிப்போகிற
ஆலாக் மலைமட்டும், மலைகளிலும் பள்ளத்தாக்
குகளிலும் சமபூமியிலும் மலைகளுக்கடுத்த
புறங்களிலும் வனாந்தரத்திலும் தெற்குத் தேச
த்திலும் இருக்கிறதும், யோசுவா இஸ்ரவேல் 8
கோத்திரங்களுக்குச் சுதந்தரமாகப் பங்கிட்ட
துமான [13]ஏத்தியர், எமோரியர், கானானியர்,
பெரிசியர், ஏவியர், எபூசியர் என்பவர்களு
டைய தேசத்தில் இருந்தவர்களும், யோசுவா
வும் இஸ்ரவேல் புத்திரரும் முறிய அடித்த
வர்களுமான ராஜாக்கள் யாரெனில்: எரிகோ 9
வின் ராஜா [14]ஒன்று, பெத்தேலுக்கு அருகான
ஆயியின் ராஜா [15]ஒன்று, எருசலேமின் ராஜா 10
[16]ஒன்று, எபிரோனின் ராஜா ஒன்று, யர்மூத் 11
தின் ராஜா ஒன்று, லாகீசின் ராஜா ஒன்று,
எக்லோனின் ராஜா ஒன்று, கேசேரின் ராஜா 12
ஒன்று, தெபீரின் ராஜா ஒன்று, கெதேரின் 13
ராஜா ஒன்று, ஓர்மாவின் ராஜா ஒன்று, ஆரா 14
தின் ராஜா ஒன்று, லிப்னாவின் ராஜா ஒன்று, 15
அதுல்லாமின் ராஜா ஒன்று, மக்கேதாவின் 16
ராஜா ஒன்று, பெத்தேலின் [17]ராஜா ஒன்று,
தப்புவாவின் ராஜா ஒன்று, எப்பேரின் ராஜா 17
[18]ஒன்று, ஆப்பெக்கின் ராஜா ஒன்று, லசரோ 18
னின் *ராஜா ஒன்று, மாதோனின் ராஜா 19
ஒன்று, ஆத்சோரின் ராஜா [19]ஒன்று, சிம்ரோன் 20
மேரோனின் ராஜா [20]ஒன்று, அக்சாபின்
ராஜா ஒன்று, தானாகின் ராஜா ஒன்று, மெகி 21
தோவின் ராஜா ஒன்று, கேதேசின் ராஜா 22
ஒன்று, கர்மேலுக்கடுத்த யொக்னியாமின்
ராஜா ஒன்று, தோரின் கரையைச்சேர்ந்த 23
தோரின் ராஜா ஒன்று, கில்காலுக்கடுத்த ஜாதி
களின் [21]ராஜா ஒன்று, திர்சாவின் ராஜா 24
ஒன்று; ஆக இவர்களெல்லாரும் முப்பத்தொரு
ராஜாக்கள்.

யோசுவா வயதுசென்று [22]முதிர்ந்தவனா **13**
னபோது, **கர்த்தர்** அவனை நோக்கி: நீ வயது
சென்றவனும் முதிர்ந்தவனுமானாய்; சுதந்தரித்
துக்கொள்ளவேண்டிய தேசம் இன்னும் [23]மகா
விஸ்தாரமாயிருக்கிறது. மீதியாயிருக்கிற 2
தேசம் எவையெனில், [24]எகிப்துக்கு எதிரான
சீகோர் ஆறு துவக்கிக் கானானியரைச் சேர்ந்த
தாக எண்ணப்படும் வடக்கேயிருக்கிற எக்
ரோனின் எல்லைமட்டுமுள்ள பெலிஸ்தரின்
எல்லா எல்லைகளும், கெசூரிம் முழுவதும்,
காசா, அஸ்தோத், அஸ்கலோன், காத், எக் 3
ரோன் என்கிற பட்டணங்களிலிருக்கிற பெ
லிஸ்தருடைய ஐந்து அதிபதிகளின் நாடும்,
ஆவியரின் நாடும், தெற்கே துவக்கி †ஆப்பெக் 4
மட்டும் எமோரியர் எல்லைவரைக்கும் இருக்
கிற கானானியரின் சகல தேசமும், சீதோனி
யருக்கடுத்த மெயாரா நாடும். கிப்லியரின் நா 5
டும், [25]சூரியோதயப்புறத்தில் எர்மோன் மலை
யடிவாரத்தில் இருக்கிற பாகால்காத் [26]முதல்
கொண்டு ஆமாத்துக்குள் பிரவேசிக்குமட்டு
முள்ள லீபனோன் முழுவதும், லீபனோன் 6

[1] உபா. 2. 30. நியா. 14. 4. 1 சாமு. 2. 25. 1 இரா. 12. 15. ஏசா. 6. 10. ரோ. 9. 18
[2] எண். 12. 22, 23. உபா. 9. 2
[3] 15. 46. 1 சாமு. 17. 4
[4] 21. 44, 45. எண். 34. 2
[5] எண். 21. 24
[6] உபா. 3. 8, 9
[7] உபா. 2. 33. 36
[8] உபா. 3. 17
[9] உபா. 3. 11
[10] எண். 21. 33–35
[11] உபா. 3. 8–14
[12] எண். 32. 29, 33
[13] யாத். 23. 23
[14] 6. 2.
[15] 8. 17, 29
[16] 10. 23–43
[17] நியா. 1. 22
[18] 1 இரா. 4. 10
* சாரோன். ஏசா. 33. 9
[19] 11. 10
[20] 11. 1
[21] ஆதி. 14. 1, 2. ஏசா. 9. 1
[22] 14. 10; 23. 1
[23] உபா. 31. 3
[24] நியா. 3. 1. 2 சாமு. 3. 3. எரே. 2. 18
† உகை. 1 சாமு. 4. 1, நியா. 1. 36
[25] 1 இரா. 5. 18. சங். 83. 7
[26] 12. 7

துவக்கி மிஸ்ரபோத்மாயீம்மட்டும் [1]மலைகளில்
குடியிருக்கிற யாவருடைய நாடும், சீதோனி
யருடைய எல்லா நாடும்தானே. நான் அவர்
களை இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாகத்
துரத்துவேன்; நான் உனக்குக் கட்டளையிட்
டபடியே, நீ இஸ்ரவேலுக்குச் சுதந்தரமாகச்
சீட்டுகளைமாத்திரம் போட்டு தேசத்தைப் பங்
7 கிடவேண்டும். ஆதலால் இந்தத் தேசத்தை
ஒன்பது கோத்திரங்களுக்கும், மனாசேயின்
பாதிக் கோத்திரத்துக்கும் சுதந்தரமாகப் பங்
8 கிடு என்றார். மனாசேயின் பாதிக் கோத்தி
ரத்தாரும் ரூபனியரும் காத்தியரும் தங்கள்
சுதந்தரத்தை அடைந்து தீர்ந்தது; அதைக் **கர்
த்தரின்** தாசனாகிய மோசே யோர்தானுக்கு
அப்புறத்தில் கிழக்கே [2]அவர்களுக்குக் கொ
9 டுத்தான். அர்னோன் ஆற்றங்கரையிலிருக்கிற
ஆரோவேரும், நதியின் மத்தியிலிருக்கிற பட்
டணமும் துவக்கித் தீபோன்மட்டுமிருக்கிற
மெதெபாவின் [3]சமனான பூமி யாவையும்,
10 எஸ்போனிலிருந்து அம்மோன் புத்திரரின்
எல்லைமட்டும் ஆண்ட எமோரியரின் ராஜா
வாகிய சீகோனுக்குரிய சகல பட்டணங்களை
11 யும், கீலேயாத்தையும், [4]கெசூரியர் மாகாத்தி
யருடைய எல்லையிலுள்ள நாட்டையும், எர்
12 மோன் மலை முழுவதையும், அஸ்தரோத்தி
லும் எத்திரேயிலும் ஆண்டு, மோசே முறிய
அடித்துத் துரத்தின இராட்சதரில் மீதியாயி
ருந்த [5]பாசானின் ராஜாவாகிய ஓகுக்குச் சல்
காமட்டுமிருந்த பாசான் முழுவதையும் அவர்
13 களுக்குக் கொடுத்தான். இஸ்ரவேல் புத்திர
ரோ கெசூரியரையும் மாகாத்தியரையும் துரத்
திவிடவில்லை, கெசூரியரும் மாகாத்தியரும்
இந்நாள்வரைக்கும் இஸ்ரவேலின் நடுவே
14 குடியிருக்கிறார்கள். லேவியரின் கோத்திரத்
துக்குமாத்திரம் அவன் சுதந்தரம் கொடுக்க
வில்லை; [6]இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்**
அவர்களுக்குச் சொன்னபடியே, அவருடைய
தகனபலிகளே அவர்களுடைய சுதந்தரம்.
15 மோசே ரூபன் புத்திரரின் கோத்திரத்
துக்கு அவர்களுடைய வம்சங்களுக்குத் தக்க
16 தாகச் சுதந்தரம் கொடுத்தான். அர்னோன்
ஆற்றங்கரையிலிருக்கிற ஆரோவேரும், [7]ஆற்
றின் மத்தியிலிருக்கிற பட்டணம் தொடங்கி
மெதெபாவரைக்குமுள்ள சமபூமி முழுவதும்,
17 சமபூமியிலிருக்கிற எஸ்போனும், [8]அதின்
எல்லாப் பட்டணங்களுமாகிய தீபோன்,
18 பாமோத்பாகால், பெத்பாகால்மெயோன், யா
19 கசா, [9]கெதெமோத், மேபாகாத், கீரியாத்தா
யீம், சிப்மா, பள்ளத்தாக்கின் மலையிலுள்ள
20 செரேத்சகார், பெத்பேயோர், அஸ்தோத்
21 பிஸ்கா, பெத்யெசிமோத் முதலான, சமபூமி
யிலுள்ள எல்லாப் பட்டணங்களும், [10]எஸ்
போனில் ஆண்டிருந்த சீகோன் என்னும்
எமோரியருடைய ராஜாவின் ராஜ்யம் முழு
வதும் அவர்கள் எல்லைக்குள்ளாயிற்று; அந்தச்
சீகோனையும், தேசத்திலே குடியிருந்த சீகோ
னின் அதிபதியாயிருந்த ஏவி, ரெக்கேம், சூர்,

ஊர், ரேபா என்னும் மீதியானின் பிரபுக்
களையும் மோசே வெட்டிப்போட்டான். இஸ் 22
ரவேல் புத்திரர் வெட்டின மற்றவர்களோடுங்
கூட, பேயோரின் குமாரனாகிய பாலாம்
[11]என்னும் குறிசொல்லுகிறவனையும் பட்டயத்
தினால் வெட்டிப்போட்டார்கள். அப்படியே 23
யோர்தானும் அதற்கடுத்ததும் ரூபன் புத்திர
ரின் எல்லையாயிற்று; இந்தப் பட்டணங்களும்
இவைகளின் கிராமங்களும் ரூபன் புத்திர
ருக்கு, அவர்கள் வம்சங்களின்படி வந்த சுதந்
தரம்.
காத் புத்திரரின் கோத்திரத்துக்கு மோசே 24
அவர்கள் வம்சங்களுக்குத் தக்கதாகக் கொடுத்
தது என்னவெனில்: யாசேரும், [12]கீலேயாத் 25
தின் சகல பட்டணங்களும், ரபாவுக்கு [13]எதிரே
இருக்கிற ஆரோவேர்மட்டுமுள்ள அம்மோன்
புத்திரரின் பாதித் தேசமும், எஸ்போன் து 26
வக்கி ராமாத் மிஸ்பேமட்டும் பெத்தொனீம்
வரைக்கும் இருக்கிறதும், மகனாயீம் துவக்கித்
தெபீரின் எல்லைமட்டும் இருக்கிறதும், எஸ் 27
போனின் ராஜாவாகிய சீகோனுடைய ராஜ்
யத்தின் மற்றப் பங்காகிய பள்ளத்தாக்கிலிருக்
கிற பெத்தாராமும், [14]பெத்நிம்ராவும், சுக்கோத்
தும் [15]சாப்போனும், யோர்தான்மட்டும் இருக்
கிறதும், கிழக்கே யோர்தானின் கரையோர
மாய்க் கின்னரேத் கடலின் கடையாந்தரமட்
டும் இருக்கிறதும், அவர்கள் எல்லைக்குள்ளா
யிற்று. இந்தப் பட்டணங்களும் இவைக 28
ளின் கிராமங்களும் காத் புத்திரருக்கு, அவர்
களுடைய வம்சங்களின்படி, வந்த சுதந்தரம்.
மனாசே புத்திரரின் பாதிக் கோத்திரத்துக் 29
கும் மோசே அவர்கள் வம்சத்துக்குத் தக்க
தாகக் கொடுத்தான். மகனாயீம் துவக்கி, 30
[16]பாசானின் ராஜாவாகிய ஓகின் முழு ராஜ்ய
மாயிருக்கிற பாசான் முழுவதும், பாசானி
லுள்ள யாவீரின் சகல ஊர்களுமான அறுபது
பட்டணங்கள் அவர்கள் எல்லைக்குள்ளாயிற்று.
பாதிக் கீலேயாத்தையும், பாசானிலே அஸ்த 31
ரோத், [17]எத்ரேயி என்னும் ஒகு ராஜ்யத்தின்
பட்டணங்களையும், மனாசேயின் குமாரனாகிய
மாகீரின் புத்திரர் பாதிபேருக்கு அவர்களு
டைய வம்சங்களின்படியே கொடுத்தான்.
மோசே கிழக்கே எரிகோவின் அருகே யோர் 32
தானுக்கு அக்கரையிலிருக்கிற மோவாபின் சம
னான வெளிகளில் சுதந்தரமாகக் கொடுத்த
வைகள் இவைகளே. லேவி கோத்திரத்திற்கு 33
மோசே சுதந்தரம் கொடுக்கவில்லை, இஸ்ர
வேலின் தேவனாகிய **கர்த்தர்** அவர்களுக்குச்
சொல்லியிருக்கிறபடி, [18]அவரே அவர்களு
டைய சுதந்தரம்.
கானான் தேசத்திலே இஸ்ரவேல் புத்திரர் **14**
சுதந்தரித்துக்கொண்ட தேசங்களை ஆசாரிய
னாகிய எலெயாசாரும், [19]நூனின் குமாரனாகிய
யோசுவாவும் இஸ்ரவேல் புத்திரருடைய
கோத்திரப் பிதாக்களின் தலைவரும், **கர்த்தர்**
மோசேயைக் கொண்டு கட்டளையிட்டபடி
சீட்டுப் போட்டு, ஒன்பதரைக் கோத்திரங்க 2

[1] 11. 8: 14. 1, 2
[2] எண். 32. 33
[3] எண். 21. 30
[4] 12. 5
[5] எண். 22. 24, 35
[6] 14. 3, 4
[7] 12. 2
[8] எண். 21. 28, 30
[9] எண். 21. 23
[10] உபா. 3. 10
[11] எண். 22. 5: 31. 8
[12] எண். 32. 35
[13] 2 சாமு. 11. 1
[14] எண். 32. 36
[15] ஆதி. 33. 17
[16] எண். 32. 39-41
[17] 12. 4
[18] உபா. 18. 1, 2
[19] எண். 34. 17, 18: 26. 55. சங். 16. 5, 6

3 ளுக்கும் சுதந்தரமாகப் பங்கிட்டார்கள். மற்ற
இரண்டரைக் கோத்திரங்களுக்கும் மோசே
யோர்தானுக்கு அப்புறத்திலே சுதந்தரம்கொடு
த்திருந்தான்; லேவியருக்குமாத்திரம் அவர்கள்
4 நடுவே சுதந்தரம் கொடுக்கவில்லை. மனாசே
எப்பிராயீம் என்னும் யோசேப்பின் புத்திரர்
இரண்டு [1]கோத்திரங்களானார்கள்; ஆதலால்
அவர்கள் லேவியருக்குத் தேசத்திலே பங்கு
கொடாமல், குடியிருக்கும்படி பட்டணங்களை
யும், அவர்களுடைய ஆடுமாடுகள் முதலான
சொத்துக்காக வெளிநிலங்களையு மாத்திரம்
5 அவர்களுக்குக் கொடுத்தார்கள். **கர்த்தர்** மோ
சேக்குக் கட்டளையிட்டபடி இஸ்ரவேல் புத்தி
ரர் செய்து, [2]தேசத்தைப் பங்கிட்டார்கள்.
6 அப்பொழுது யூதாவின் புத்திரர் கில்
காலிலே யோசுவாவினிடத்தில் வந்தார்கள்;
கேனாசியனான எப்புன்னேயின் குமாரனாகிய
காலேப் அவனை நோக்கி: [3]காதேஸ்பர்னெயா
விலே **கர்த்தர்** என்னைக்குறித்தும் உம்மைக்
குறித்தும் தேவனுடைய மனுஷனாகிய மோ
சேயோடே சொன்ன வார்த்தையை நீர் அறி
7 வீர். தேசத்தை வேவுபார்க்கக் **கர்த்தரின்** தாச
னாகிய மோசே என்னைக் காதேஸ்பர்னெயாவி
லிருந்து அனுப்புகிறபோது, எனக்கு நாற்பது
வயதாயிருந்தது; [4]என் இருதயத்திலுள்ளபடி
யே அவருக்கு மறுசெய்தி கொண்டுவந்தேன்.
8 ஆனாலும் என்னோடேகூட வந்த என் சகோ
தரர் ஜனத்தின் இருதயத்தைக் கரையப்பண்
ணினார்கள்; [5]நானோ என் தேவனாகிய **கர்த்
9 தரை** உத்தமமாய்ப் பின்பற்றினேன். அந்
நாளிலே மோசே: நீ என் தேவனாகிய **கர்த்
தரை** உத்தமமாய்ப் பின்பற்றினபடியினால்,
உன் கால் மிதித்த தேசம் [6]உனக்கும் உன்
பிள்ளைகளுக்கும் என்றைக்கும் சுதந்தரமா
யிருக்கக்கடவது என்று சொல்லி ஆணை
10 யிட்டார். இப்போதும், இதோ, **கர்த்தர்**
சொன்னபடியே [7]என்னை உயிரோடே காத்
தார்; இஸ்ரவேலர் வனாந்தரத்தில் சஞ்சரிக்
கையில், **கர்த்தர்** அந்த வார்த்தையை மோசே
யோடே சொல்லி இப்போது நாற்பத்தைந்து
வருஷமாயிற்று; இதோ, இன்று நான் எண்
11 பத்தைந்து வயதுள்ளவன். மோசே என்னை
அனுப்புகிற நாளில், எனக்கு இருந்த அந்தப்
பெலன் இந்நாள்வரைக்கும் எனக்கு இருக்
கிறது, [8]யுத்தத்திற்குப் போக்கும் வரத்துமா
யிருக்கிறதற்கு அப்போது எனக்கு இருந்த
பெலன் இப்போதும் எனக்கு இருக்கிறது.
12 ஆகையால் **கர்த்தர்** அந்நாளிலே சொன்ன
இந்த மலைநாட்டை எனக்குத் தாரும்; அங்கே
ஏனாக்கியரும், [9]அரணிப்பான பெரிய பட்
டணங்களும் உண்டென்று நீர் அந்நாளிலே
கேள்விப்பட்டீரே; கர்த்தர் என்னோடிருப்
பாரானால், [10]**கர்த்தர்** சொன்னபடி, அவர்களைத்
13 துரத்திவிடுவேன் என்றான். அப்பொழுது
யோசுவா: எப்புன்னேயின் குமாரனாகிய
காலேபை ஆசீர்வதித்து, [11]எபிரோனை அவ
14 னுக்குச் சுதந்தரமாகக் கொடுத்தான். ஆதலால்

கேனாசியனான எப்புன்னேயின் குமாரனாகிய
காலேப் இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தரை**
உத்தமமாய்ப் பின்பற்றினபடியினால், இந்நாள்
மட்டும் இருக்கிறபடி, எபிரோன் அவனுக்குச்
சுதந்தரமாயிற்று. முன்னே எபிரோனுக்குக் 15
கீரியாத் அர்பா என்று பேரிருந்தது; [12]அர்பா
என்பவன் ஏனாக்கியருக்குள்ளே பெரிய மனு
ஷனாயிருந்தான்; யுத்தம் ஓய்ந்ததினால் தேசம்
அமைதலாயிருந்தது.

யூதா புத்திரரின் கோத்திரத்திற்கு அவர்க **15**
ளுடைய வம்சங்களின்படி உண்டான பங்கு
வீதமாவது: [13]ஏதோமின் எல்லைக்கு அருகான
சீன்வனாந்தரமேதென்புறத்தின்கடையெல்லை.
தென்புறமான அவர்களுடைய எல்லை உப் 2
புக்கடலின் கடைசியில் தெற்குமுகமாயிருக்
கிற முனை துவக்கி, தென்புறத்திலிருக்கிற அக் 3
ராபீமின் மேடுகளுக்கும், அங்கேயிருந்து சீனு
க்கும் போய், தெற்கேயிருக்கிற காதேஸ்பர்
னெயாவுக்கு ஏறி, எஸ்ரோனைக்கடந்து, ஆதா
ருக்கு ஏறி, கர்க்காவைச் சுற்றிப்போய், அஸ் 4
மோனுக்கும், அங்கேயிருந்து எகிப்தின் ஆற்
றுக்கும் சென்று, கடல்மட்டும் போய் முடியும்;
இதுவே உங்களுக்குத் தென்புறமான எல்லை
யாயிருக்கும் என்றான். கீழ்ப்புறமான எல்லை, 5
யோர்தான் முகத்துவாரமட்டும் இருக்கிற உப்
புக்கடல். வடபுறமான எல்லை, யோர்தான் முக
த்துவாரமிருக்கிற கடலின் முனை துவக்கி, பெ 6
த்எக்லாவுக்கு ஏறி, [14]வடக்கேயிருக்கிற பெத்
அரபாவைக் கடந்து, ரூபனின் குமாரனாகிய
போகனின் கல்லுக்கு ஏறிப்போய், அப் 7
புறம் ஆகோர் பள்ளத்தாக்கைவிட்டுத் தெபீ
ருக்கு ஏறி, வடக்கே ஆற்றின் தென்புறமான
அதும்மீமின் மேட்டுக்கு முன்பாக இருக்கிற
கில்காலுக்கு நேராகவும், அங்கேயிருந்து என்
சேமேசின் தண்ணீரிடத்துக்கும் போய், ரொ
கேல் [15]என்னும் கிணற்றுக்குச் சென்று, அப் 8
புறம் எபூசியர் குடியிருக்கிற [16]எருசலேமுக்
குத் தென்புறமாய் இன்னோமுடைய குமார
னின் பள்ளத்தாக்கைக் கடந்து, வடக்கேயிரு
க்கிற இராட்சதருடைய பள்ளத்தாக்கின் கடை
சியில் மேற்காக இன்னோம் பள்ளத்தாக்கின்
முன்னிருக்கிற மலையின் சிகரமட்டும் ஏறிப்
போய், அந்த மலையின் சிகரத்திலிருந்து நெப் 9
தோவாவின் நீரூற்றுக்குப்போய், எப்பெரோன்
மலையின் பட்டணங்களுக்குச் சென்று, கீரி
யாத்யெயாரீமாகிய பாலாவுக்குப் போய், பா 10
லாவிலிருந்து மேற்கே சேயீர்மலைக்குத் திரு
ம்பி, வடக்கேயிருக்கிற கெசலோனாகிய யெ
யாரீம் மலைக்குப் பக்கமாகப் போய், பெத்ஷி
மேசுக்கு இறங்கி, திம்னாவுக்குப் [17]போய், அப் 11
புறம் வடக்கேயிருக்கிற எக்ரோனுக்குப் பக்க
மாய்ச் சென்று, சிக்ரோனுக்கு ஓடி, பாலாம
லையைக் கடந்து, யாப்னியேலுக்குச் சென்று,
கடலிலே முடியும். மேற்புறமான எல்லை, 12
பெரிய சமுத்திரமே; இது யூதா புத்திரருக்கு
அவர்களுடைய வம்சங்களின்படி சுற்றிலுமிரு
க்கும் எல்லை.

1 ஆதி. 48. 5
2 எண். 35. 2
3 எண். 32. 12; 14. 24, 30. உபா. 1. 36
4 எண். 18. 6, 26, 30
5 எண். 13. 31, 32; 14. 24
6 1. 3
7 எண். 14. 30
8 உபா. 34. 7. சங். 103. 5
9 எண். 13. 28, 33
10 1 சாமு. 14. 6. சங். 18. 32–34. ரோ. 8. 31. பிலி. 4. 13. எபி. 11. 33
11 22. 6; 15. 13
12 ஆதி. 13. 2; 35. 27
13 எண். 26. 55; 34. 3–5
14 யோசு. 18. 19
15 2 சாமு. 17. 17
16 நியா. 19. 10
17 ஆதி. 38. 13. நியா. 14. 1

13 எப்புன்னேயின் குமாரனாகிய காலேபுக்கு,
யோசுவா, கர்த்தர் தனக்குக் கட்டளையிட்ட
படி, [1]ஏனாக்கின் தகப்பனாகிய அர்பாவின்
பட்டணமான எபிரோனை, யூதா புத்திரரின்
14 நடுவே, பங்காகக் கொடுத்தான். அங்கேயிரு
ந்த சேசாய், அகீமான், தல்மாய் என்னும்
ஏனாக்கின் மூன்று குமாரரையும் [2]காலேப் துரத்
15 திவிட்டு, அங்கேயிருந்து தெபீரின் குடிகளி
டத்திற்குப் போனான்; முற்காலத்திலே தெபீ
16 ரின் பேர் கீரியாத்செப்பேர். கீரியாத்செப்
பேரை சங்காரம்பண்ணிப் பிடிக்கிறவனுக்கு,
என் குமாரத்தியாகிய அக்சாளை விவாகம்பண்
ணிக் கொடுப்பேன் [3]என்று காலேப் சொன்
17 னான். அப்பொழுது காலேபின் சகோதர
னாகிய கேனாசின் மகன் ஒத்னியேல் அதைப்
பிடித்தான்; [4]ஆகையால் தன் குமாரத்தி அக்
சாளை அவனுக்கு விவாகம்பண்ணிக் கொடுத்
18 தான். அவள் புறப்படுகையில், என் தகப்ப
னிடத்தில் ஒரு வயல்வெளியைக் கேட்கவே
ண்டும் என்று அவனிடத்தில் உத்தரவு பெற்
றுக்கொண்டு, கழுதையின்மேலிருந்து இறங்கி
னாள். [5]காலேப் பார்த்து: உனக்கு என்னவே
19 ண்டும் என்றான். அப்பொழுது அவள்:
[6]எனக்கு ஒரு *ஆசீர்வாதம் தரவேண்டும்; என
க்கு வறட்சியான நிலத்தைத் தந்தீர்; நீர்ப்பாய்ச்
சலான நிலத்தையும் எனக்குத் தரவேண்டும்
என்றாள்; அப்பொழுது அவளுக்கு மேற்
புறத்திலும் கீழ்ப்புறத்திலும் நீர்ப்பாய்ச்சலான
நிலங்களைக் கொடுத்தான்.
20 யூதா புத்திரருக்கு அவர்களுடைய வம்சங்
களின்படி உண்டான சுதந்தரம் என்னவென்
றால்:
21 கடையாந்தரத் தென்புறமான ஏதோமின்
எல்லைக்கு நேராய், யூதா புத்திரரின் கோத்தி
ரத்திற்குக் கிடைத்த பட்டணங்களாவன: கப்
22 செயேல், ஏதேர், யாகூர், கீனா, திமோனா,
23 அதாதா, கேதேஸ், ஆத்சோர், இத்னான்,
24,25 சீப், தேலெம், பெயாலோத், ஆத்சோர்,
அதாத்தா, கீரியோத், எஸ்ரோன் என்னும் ஆத்
26,27 சோர், ஆமாம், சேமா, மொலாதா, ஆத்சார்
28 காதா, எஸ்மோன், பெத்பாலேத், ஆத்சார்சு
29 வால், பெயெர்செபா, பிஸ்யோத்யா, பாலா,
30 ஈயிம், ஆத்சேம், எல்தோலாத், கெசீல்,
31 ஓர்மா, சிக்லாக், [7]மத்மன்னா, சன்சன்னா,
32 லெபாயோத், சில்லீம், ஆயின், ரிம்மோன் என்
பவைகள்; எல்லாப் பட்டணங்களும் அவைக
ளுடைய கிராமங்களுமுட்பட இருபத்தொன்
பது.
33 பள்ளத்தாக்கு நாட்டில் எஸ்தாவோல், [8]சோ
34 ரியா, அஷ்னா, சனோகா, என்கன்னீம், தப்
35 புவா, ஏனாம், யர்மூத், அதுல்லாம், சோக்கோ,
36 அசேக்கா, சாராயீம், அதித்தாயீம், கெதேரா,
கெதெரொத்தாயீம்; இந்தப் பட்டணங்களும்
அவைகளுடைய கிராமங்களுமுட்பட பதி
37 னான்கு. சேனான், அதாஷா, மிக்தால்காத்,
38,39 திலியான், மிஸ்பே, யோக்தெயேல், [9]லா
40 கீஸ், போஸ்காத், எக்லோன், காபோன், லக

மாம், கித்லீஷ், கெதெரோத், பெத்தாகோன், 41
நாகமா, மக்கேதா; இந்தப் பட்டணங்களும்
அவைகளுடைய கிராமங்களுமுட்பட பதி
னாறு. லிப்னா, எத்தேர், ஆஷான், இப்தா, 42,43
அஸ்னா, நெத்சீப், கேகிலா, அக்சீப், மரேஷா; 44
இந்தப் பட்டணங்களும் அவைகளுடைய
கிராமங்களுமுட்பட ஒன்பது. எக் 45
ரோனும் அதின் வெளிநிலங்களும் கிராமங்க
ளும், எக்ரோன் துவக்கிச் சமுத்திரம்மட்டும், 46
அஸ்தோத்தின் புறத்திலிருக்கிற சகல ஊர்
களும், அவைகளின் கிராமங்களும், அஸ் 47
தோத்தும், அதின் வெளிநிலங்களும் கிராமங்
களும், காசாவும் எகிப்தின் [10]நதிமட்டுமிருக்கிற
அதின் வெளிநிலங்களும் கிராமங்களுமே; பெ
ரிய சமுத்திரமே எல்லை.
மலைகளில், சாமீர், யாத்தீர், சோக்கோ, 48
தன்னா, தெபீர் என்னப்பட்ட, கீரியாத்சன்னா, 49
ஆனாப், எஸ்தெமொ, ஆனீம், கோசேன், 50,51
[11]ஒலோன், கிலொ; இந்தப் பட்டணங்களும்
அவைகளுடைய கிராமங்களுமுட்பட பதி
னொன்று. அராப், தூமா, எஷியான், யா 52,53
னூம், பெத்தப்புவா, ஆப்பெக்கா, உம்தா, 54
எபிரோனாகிய கீரியாத்அர்பா, சீயோர்; இந்
தப் பட்டணங்களும் அவைகளுடைய கிராமங்
களுமுட்பட ஒன்பது. மாகோன், கர்மேல், 55
சீப, யுத்தா, யெஸ்ரயேல், யொக்தெயாம், 56
சனோகா, காயின், கிபியா, திம்னா; இந்தப் 57
பட்டணங்களும் அவைகளுடைய கிராமங்களு
முட்பட பத்து. அல்கூல், பெத்சூர், கெ 58
தோர், மகாராத், பெதானோத், எல்தெகோன்; 59
இந்தப் பட்டணங்களும் அவைகளுடைய கிரா
மங்களுமுட்பட ஆறு. கீரியாத்யெயாரீமாகிய 60
கீரியாத்பாகால், [12]ரபா; இந்தப் பட்டணங்க
ளும் அவைகளுடைய கிராமங்களு முட்பட
இரண்டு.
வனாந்தரத்தில், பெத்அரபா, மித்தீன், செக் 61
காக்கா, நிப்சான், உப்புப்பட்டணம், என் 62
கேதி; இந்தப் பட்டணங்களும் அவைகளு
டைய கிராமங்களுமுட்பட ஆறு.
எருசலேமிலே குடியிருந்த எபூசியரை யூதா 63
புத்திரர் துரத்திவிடக் கூடாமற்போயிற்று;
[13]ஆகையால் இந்நாள்மட்டும் எபூசியர் யூதா புத்
திரரோடே எருசலேமிலே குடியிருக்கிறார்
கள்.
யோசேப்பின் புத்திரருக்கு விழுந்த 16
சீட்டினால் அகப்பட்ட பங்குவீதமாவது: எரி
கோவின் அருகே இருக்கிற யோர்தானிலிரு
ந்து, யோர்தானுக்குக் கிழக்கான தண்ணீருக்
குப் போய், எரிகோ துவக்கிப் பெத்தேலின்
மலைகள்மட்டுமுள்ள வனாந்தர வழியாகவும் செ
ன்று, பெத்தேலிலிருந்து லூசுக்குப் [14]போய், 2
அர்கீயினுடைய எல்லையாகிய அதரோத்தைக்
கடந்து, மேற்கே யப்லெத்தியரின் எல்லைக் 3
கும் தாழ்வான பெத்தொரோன் காசேர் என்
னும் எல்லைகள்மட்டும் இறங்கி, சமுத்திரம்
வரைக்கும் போய் முடியும். இதை யோசேப் 4
பின் புத்திரராகிய மனாசேயும் எப்பிராயீமும்

1 யோசு. 14. 13, 15
2 எண். 13. 22. நியா. 1. 10, 20
3 நியா. 1. 12, 13
4 எண். 32. 12
5 ஆதி. 24. 64. 1 சாமு. 25. 23
6 ஆதி. 33. 11. நியா. 1. 15
* நன்கொடை
7 1 சாமு. 27. 6
8 எண். 13. 23
9 2 இரா. 14. 7
10 எண். 34. 5, 6
11 யோசு. 10. 41
12 யோசு. 18. 14
13 நியா. 1. 8, 21. 2 சாமு. 5. 6. [illegible]. 7. 14–21
14 ஆதி. 28. 19. நியா. 1. 26

5 [1]சுதந்தரித்தார்கள். எப்பிராயீம் புத்திரருக்கு
அவர்களுடைய வம்சங்களின்படி உண்டான
சுதந்தரத்தினுடைய கிழக்கு எல்லை, அதரோத்
அதார் துவக்கி, மேலான பெத்தொரோன்மட்
6 டும் போகிறது. மேற்கு எல்லை மிக்மேத்தாத்
திற்கு வடக்காகச் சென்று, கிழக்கே தானாத்
சீலோவுக்குத் திரும்பி, அதை யனோகாவுக்குக்
7 கிழக்காகக் கடந்து, யனோகாவிலிருந்து அத
ரோத்திற்கும் நகராத்திற்கும் இறங்கி, எரிகோ
வின் அருகே வந்து, யோர்தானுக்குச் செல்
8 லும். தப்புவாவிலிருந்து மேற்கு எல்லை, கானா
நதிக்குப்போய், சமுத்திரத்திலே முடியும்; இது
எப்பிராயீம் புத்திரரின் கோத்திரத்திற்கு அவர்
கள் வம்சங்களின்படி உண்டான சுதந்தரம்.
9 பின்னும் எப்பிராயீம் புத்திரருக்குப் பிரத்தி
யேகமாய்க் கொடுக்கப்பட்ட பட்டணங்களும்
அவைகளின் கிராமங்களுமெல்லாம் மனாசே
புத்திரருடைய சுதந்தரத்தின் நடுவே இருக்கி
10 றது. அவர்கள் கேசேரிலே குடியிருந்த கானா
னியரைத் துரத்திவிடவில்லை; [2]ஆகையால் கா
னானியர், இந்நாள்மட்டும் இருக்கிறபடி, எப்பி
ராயீமருக்குள்ளே குடியிருந்து, பகுதிகட்டுகிற
வர்களாய்ச் சேவிக்கிறார்கள்.

17 மனாசே கோத்திரத்திற்கும் பங்கு கிடைத்
தது; அவன் யோசேப்புக்கு முதற்பேறானவன்;
[3]மனாசேயின் மூத்த குமாரனும் கிலெயாத்தின்
தகப்பனுமான மாகீர் யுத்த மனுஷனானபடியி
னால், கிலேயாத்தும் [4]பாசானும் அவனுக்குக்
2 கிடைத்தது. அபியேசரின் புத்திரரும், [5]ஏலே
க்கின் புத்திரரும், அஸ்ரியேலின் புத்திரரும்,
செகேமின் புத்திரரும், எப்பேரின் புத்திரரும்,
செமீதாவின் புத்திரருமான மனாசேயினுடைய
மற்றக் குமாரரின் புத்திரராகிய அபியேசரின்
வம்சங்களுக்குத்தக்க சுதந்தரம் கொடுக்கப்பட்
டது. தங்கள் வம்சங்களுக்குள்ளே அவர்களே
யோசேப்புடைய குமாரனாகிய மனாசேயின்
3 ஆண்பிள்ளைகளாயிருந்தார்கள். மனாசேயின்
குமாரனாகிய மாகீருக்குப் பிறந்த கிலெயாத்
தின் குமாரனாகிய எப்பேரின் மகன் செலொ
ப்பியாத்துக்கு [6]குமாரத்திகள் தவிர குமாரர்
இல்லை; அவன் குமாரத்திகளின் நாமங்கள்,
மக்லாள், நோவாள், ஒக்லாள், மில்காள், திர்
4 சாள் என்பவைகள். அவர்கள் ஆசாரியனா
கிய எலெயாசாருக்கும் நூனின் குமாரனாகிய
யோசுவாவுக்கும் பிரபுக்களுக்கும் முன்பாகச்
சேர்ந்துவந்து: எங்கள் சகோதரர் நடுவே எங்க
ளுக்குச் சுதந்தரம் கொடுக்கும்படி **கர்த்தர்**
மோசேக்குக் கட்டளையிட்டார் என்றார்கள்;
[7]ஆகையால் அவர்கள் தகப்பனுடைய சகோத
ரரின் நடுவே, **கர்த்தருடைய** வாக்கின்படி,
5 அவர்களுக்குச் சுதந்தரம் கொடுத்தான். யோர்
தானுக்கு அப்புறத்திலே இருக்கிற கிலேயாத்,
பாசான் என்னும் தேசங்களையல்லாமல், மனா
சேக்குச் சீட்டிலே விழுந்தது பத்துப் பங்குக
6 ளாம். மனாசேயின் குமாரத்திகள் அவன்
குமாரருக்குள்ளே சுதந்தரம் பெற்றார்கள்; மனா
சேயின் மற்றப் புத்திரருக்கு கிலேயாத் தேசம்
கிடைத்தது. மனாசேயின் எல்லை, ஆசேர் 7
தொடங்கிச் சீகேமின் முன்னிருக்கிற மிக்மே
த்தாவுக்கும், [8]அங்கேயிருந்து வலதுபுறமாய்
என்தப்புவாவின் குடிகளிடத்திற்கும் போகி
றது. தப்புவாவின் நிலம் மனாசேக்குக் கிடை 8
த்தது; மனாசேயின் எல்லையோடிருக்கிற தப்பு
வாவோ, எப்பிராயீம் புத்திரரின் வசமாயிற்று.
அப்புறம் அந்த எல்லை கானா என்னும் ஆற்று 9
க்குப் போய், ஆற்றுக்குத் தெற்காக இறங்கு
கிறது; மனாசேயினுடைய பட்டணங்களின்
நடுவே இருக்கிற அவ்விடத்துப் பட்டணங்
கள் எப்பிராயீமுடையவைகள்; மனாசேயின்
எல்லை ஆற்றுக்கு வடக்கேயிருந்து சமுத்திரத்
திற்குப் போய் முடியும். தென்நாடு எப்பிரா 10
யீமுடையது; வடநாடு மனாசேயினுடையது;
சமுத்திரம் அதின் எல்லை; அது வடக்கே
ஆசேரையும், கிழக்கே இசக்காரையும் தொடு
கிறது. இசக்காரிலும் ஆசேரிலுமிருக்கிற 11
மூன்று நாடுகளாகிய பெத்செயானும் அதின்
ஊர்களும், இப்லெயாமும் அதின் ஊர்களும்,
தோரின் குடிகளும் அதின் ஊர்களும், எத்
தோரின் குடிகளும் அதின் ஊர்களும், தானா
கின் குடிகளும் அதின் ஊர்களும், மெகிதோ
வின் குடிகளும் அதின் ஊர்களும் [9]மனாசேயி
னுடையவைகள். மனாசேயின் புத்திரர் அந் 12
தப் பட்டணங்களின் குடிகளைத் துரத்திவிடக்
கூடாமற்போயிற்று; [10]கானானியர் அந்தச்
சீமையிலேதானே குடியிருக்கவேண்டு
மென்று இருந்தார்கள். இஸ்ரவேல் புத்திரர் 13
பலத்தபோதும், கானானியரை முற்றிலும் துர
த்திவிடாமல், [11]அவர்களைப் பகுதிகட்டுகிறவர்
களாக்கிக்கொண்டார்கள்.

யோசேப்பின் புத்திரர் யோசுவாவை நோ 14
க்கி: [12]**கர்த்தர்** எங்களை இதுவரைக்கும் ஆசீர்
வதித்துவந்ததினால், நாங்கள் ஜனம் பெருத்த
வர்களாயிருக்கிறோம்; நீர் எங்களுக்குச் சுதந்
தரமாக ஒரே வீதத்தையும் ஒரே பங்கையும்
கொடுத்தது என்ன என்று கேட்டார்கள்.
அதற்கு யோசுவா: நீங்கள் ஜனம் பெருத்தவர் 15
களாயும், எப்பிராயீம் மலைகள் உங்களுக்கு
நெருக்கமாயுமிருந்தால், பெரிசியர் ரெப்பாயீ
மியர் குடியிருக்கிற காட்டுத் தேசத்துக்குப்
போய் உங்களுக்கு இடம் உண்டாக்கிக்கொள்
ளுங்கள் என்றான். அதற்கு யோசேப்பின் 16
புத்திரர்: மலைகள் எங்களுக்குப் போதாது;
பள்ளத்தாக்கு நாட்டிலிருக்கிற பெத்செயானி
லும், அதின் ஊர்களிலும், யெஸ்ரயேல் பள்
ளத்தாக்கிலும் குடியிருக்கிற எல்லாக் கானானி
யரிடத்திலும் இருப்புரதங்கள் [13]உண்டு என்
றார்கள். யோசுவா யோசேப்பு வம்சத்தாரா 17
கிய எப்பிராயீமியரையும் மனாசேயரையும்
நோக்கி: நீங்கள் ஜனம்பெருத்தவர்கள், உங்க
ளுக்கு மகா பராக்கிரமமும் உண்டு, ஒரு பங்
குமாத்திரம் அல்ல, மலைத்தேசமும் உங்களு
டையதாகும். அது காடானபடியினாலே, 18
அதை வெட்டித் திருத்துங்கள், அப்பொழுது
அதின் கடையாந்தரமட்டும் உங்களுடையதா

[1] யோசு. 17. 14
[2] நியா. 1. 29. 1 இரா. 9. 16, 21
[3] ஆதி. 41. 51: 50. 23
[4] உபா. 3. 15
[5] எண். 26. 29-32
[6] எண். 26. 33: 36. 2
[7] எண். 27. 6, 7
[8] யோசு. 16. 6-9
[9] 1 சாமு. 31. 10
[10] நியா. 1. 27, 28
[11] யோசு. 16. 10
[12] ஆதி. 48. 19, 22. எண். 26. 33-37
[13] நியா. 1. 19

யிருக்கும்; கானானியருக்கு இருப்புரதங்கள்
இருந்தாலும், [1]அவர்கள் பலத்தவர்களாயிருந்
தாலும், நீங்கள் அவர்களைத் துரத்திவிடுவீர்கள்
என்றான்.

18 இஸ்ரவேல் புத்திரரின் சபையெல்லாம்
சீலோவிலே கூடி, [2]அங்கே ஆசரிப்புக் கூடா
ரத்தை நிறுத்தினார்கள். தேசம் அவர்கள்
2 வசமாயிற்று. இஸ்ரவேல் புத்திரரில் தங்கள்
சுதந்தரத்தை இன்னும் பங்கிட்டுக்கொள்ளாத
3 ஏழு கோத்திரங்கள் இருந்தது. ஆகையால்
யோசுவா இஸ்ரவேல் புத்திரரை நோக்கி:
உங்கள் பிதாக்களின் தேவனாகிய **கர்த்தர்**
உங்களுக்குக் கொடுத்த தேசத்தைச் சுதந்தரித்
துக்கொள்ளப்போகிறதற்கு, நீங்கள் எந்தமட்
4 டும் [3]அசதியாயிருப்பீர்கள். கோத்திரத்திற்கு
மும்மூன்று மனுஷரைத் தெரிந்துகொள்ளுங்
கள்; அவர்கள் எழுந்து புறப்பட்டு, தேசத்
திலே சுற்றித்திரிந்து அதைத் தங்கள் சுதந்தரத்
திற்குத் தக்கதாக விவரமாய் எழுதி, என்னி
டத்தில் கொண்டுவரும்படி அவர்களை அனுப்
5 புவேன். அதை ஏழு பங்காகப் பகிரக்கடவ
ர்கள், யூதா வம்சத்தார் தெற்கேயிருக்கிற தங்
கள் எல்லையிலும், [4]யோசேப்பு வம்சத்தார்
வடக்கேயிருக்கிற தங்கள் எல்லையிலும் நிலைத்
6 திருக்கட்டும். நீங்கள் தேசத்தை ஏழு பங்
காக விவரித்து எழுதி, இங்கே என்னிடத்
தில் கொண்டுவாருங்கள்; அப்பொழுது இவ்
விடத்திலே நம்முடைய தேவனாகிய **கர்த்தரு
டைய** சந்நிதியில் உங்களுக்காகச் சீட்டுப்போ
7 டுவேன். லேவியருக்கு உங்கள் நடுவே பங்
கில்லை; **கர்த்தருடைய** ஆசாரியபட்டமே அவர்
கள் சுதந்தரம்; காத்தும் ரூபனும் மனாசேயின்
பாதிக் கோத்திரமும் யோர்தானுக்கு அப்புறத்
திலே கிழக்கே **கர்த்தரின்** தாசனாகிய மோசே
தங்களுக்குக் கொடுத்த தங்கள் சுதந்தரத்தை
8 அடைந்து தீர்ந்தது என்றான். அப்பொழுது
அந்த மனுஷர் எழுந்து புறப்பட்டுப்போனார்
கள்; தேசத்தைக்குறித்து விவரம் எழுதப்போ
கிறவர்களை யோசுவா நோக்கி: நீங்கள் போய்,
தேசத்திலே சுற்றித்திரிந்து, அதின் விவரத்
தை எழுதி, என்னிடத்தில் திரும்பிவாருங்
கள்; அப்பொழுது இங்கே சீலோவிலே **கர்த்
தருடைய** சந்நிதியில் உங்களுக்காகச் சீட்டுப்
9 போடுவேன் என்று சொன்னான். அந்த
மனுஷர் போய், தேசம் எங்கும் அந்தந்தப்
பட்டணங்களின்படியே ஏழு பங்காக [5]ஒரு
புஸ்தகத்தில் எழுதிக்கொண்டு, சீலோவில்
இருக்கிற பாளயத்திலே யோசுவாவினிடத்
10 தில் வந்தார்கள். அப்பொழுது யோசுவா
அவர்களுக்காகச் சீலோவிலே **கர்த்தருடைய**
சந்நிதியில் சீட்டுப்போட்டு, [6]அங்கே இஸ்ர
வேல் புத்திரருக்குத் தேசத்தை அவர்கள் பங்
குவீதப்படி பங்கிட்டான்.

11 பென்யமீன் புத்திரருக்கு அவர்களுடைய
வம்சங்களின்படியே அவர்களுடைய கோத்தி
ரத்துக்குச் சீட்டு விழுந்தது; அவர்கள் பங்கு
வீதத்தின் எல்லையானது யூதா புத்திரருக்கும்
யோசேப்புப் புத்திரருக்கும் நடுவே இருந்தது.
அவர்களுடைய வட எல்லை, யோர்தானிலி 12
ருந்து வந்து, எரிகோவுக்கு வட பக்கமாய்ச்
சென்று, அப்புறம் மேற்கே மலையில் ஏறி,
பெத்தாவேன் வனாந்தரத்தில் போய் முடியும்.
அங்கேயிருந்து அந்த எல்லை, பெத்தேலாகிய 13
லூசுக்கு வந்து, லூசுக்குத் தென்பக்கமாய்ப்
போய், அதரோத் அதாருக்குத் தாழ்வான
பெத்தொரோனுக்குத் தெற்கேயிருக்கிற மலை
யருகே இறங்கும். அங்கேயிருந்து எல்லை 14
மேற்கு மூலைக்குப் பெத்தொரோனுக்கு எதி
ரே தெற்காக இருக்கிற மலைக்குத் தென்புற
மாய்ப் போய்த் திரும்பி, கீரியாத்பாகால் என்
னப்பட்ட யூதா புத்திரரின் பட்டணமாகிய
கீரியாத்யெயாரீம் அருகே போய் முடியும்;
இது மேற்கு எல்லை. தென் எல்லை கீரியாத் 15
யெயாரீமின் முடிவிலிருக்கிறது; அங்கேயிரு
ந்து எல்லை மேற்கே போய், நெப்தோவாவின்
நீரூற்றிற்குச் சென்று, அங்கேயிருந்து இரா 16
ட்சதரின் பள்ளத்தாக்கில் வடக்கேயிருக்கிற
இன்னோமுடைய குமாரரின் பள்ளத்தாக்கு
க்கு எதிரான மலையடிவாரத்திற்கு இறங்கி,
அப்புறம் தெற்கே எபூசியருக்குப் பக்கமான
இன்னோமின் பள்ளத்தாக்குக்கும், அங்கேயிரு
ந்து என்ரொகேலுக்கும் இறங்கி வந்து, வட 17
க்கே போய், என்சேமேசுக்கும், அங்கேயிரு
ந்து அதும்மீம் மேட்டுக்கு எதிரான கெலி
லோத்திற்கும், அங்கேயிருந்து ரூபன் குமார
னாகிய போகனின் கல்லினிடத்திற்கும் இறங்
கிவந்து, அராபாவுக்கு எதிரான வடபக்க 18
மாய்ப் போய், அராபாவுக்கு இறங்கும். அப் 19
புறம் அந்த எல்லை, பெத்ஓக்லாவுக்கு வடபக்
கமாய்ப் போய், யோர்தானின் முகத்துவாரத்
திற்குத் தெற்கான உப்புக்கடலின் வடமுனை
யிலே முடிந்துபோம்; இது தென் எல்லை.
கிழக்குப்புறத்தின் எல்லை யோர்தானே; இது 20
பென்யமீன் புத்திரருக்கு அவர்களுடைய வம்
சங்களின்படி சுற்றிலும் இருக்கிற எல்லைக
ளுக்குள்ளான சுதந்தரம். பென்யமீன் புத்தி 21
ரரின் கோத்திரத்திற்கு அவர்களுடைய வம்
சங்களின்படி இருக்கிற பட்டணங்களாவன:
எரிகோ, பெத்ஓக்லா, கேசீஸ் பள்ளத்தா
க்கு, பெத்அராபா, செமராயீம், பெத்தேல், 22
ஆவீம், பாரா, ஒப்ரா, கேப்பார்அமோனாய், 23,24
ஒப்னி, காபா என்னும் பன்னிரண்டு பட்ட
ணங்களும் அவைகளின் கிராமங்களுமே.
கிபியோன், ராமா, பேரோத், மிஸ்பே, 25,26
கெப்பிரா, மோத்சா, ரெக்கேம், இர்பெயேல், 27
தாராலா, சேலா, ஏலேப், எருசலேமாகிய 28
எபூசி, கிபெயாத், கீரியாத் என்னும் பதி
னான்கு பட்டணங்களும் அவைகளின் கிரா
மங்களுமே; பென்யமீன் புத்திரருக்கு அவர்
கள் வம்சங்களின்படி இருக்கிற சுதந்தரம்
இதுவே.

இரண்டாம் சீட்டு சிமியோனுக்கு விழுந் 19
தது; சிமியோன் புத்திரரின் கோத்திரத்துக்கு
அவர்கள் வம்சங்களின்படி கிடைத்த சுதந்

[1] உபா. 20. 1. ஏசா. 41. 14—16. ரோ. 8. 31, 37. எபி. 13. 6
[2] யோசு. 19. 51. எரே. 7. 12
[3] நியா. 18. 9
[4] யோசு. 15. 1; 16. 1, 4
[5] அப். 13. 19
[6] எசே. 47. 22; 48. 29

தாம், யூதா புத்திரருடைய சுதந்தரத்தின்
2 நடுவே இருக்கிறது. அவர்களுக்குச் சுதந்தா
மாகக் கிடைத்த பட்டணங்களாவன: பெயெர்
3 செபா, சேபா, மொலாதா, ஆசார்சூகால்,
4 பாலா, ஆத்சேம், எல்தோலாத், பெத்தூல்,
5 ஓர்மா, சிக்லாக், பெத்மார்காபோத், ஆத்சார்
6 சூசா, பெத்லெபாவோத், சருகேன் பட்ட
ணங்களும் அவைகளின் கிராமங்களும் உட்
7 பட பதின்மூன்று. மேலும் ஆயின், ரிம்
மோன், எத்தேர், ஆசான் என்னும் நாலு பட்
டணங்களும் அவைகளின் கிராமங்களுமே.
8 இந்தப் பட்டணங்களைச் சுற்றிலும் பாலாத்
பெயேர்மட்டும், தெற்கேயிருக்கிற ராமாத்மட்
டும் இருக்கிற எல்லாக் கிராமங்களுமே; இவை
சிமியோன் புத்திரருடைய கோத்திரத்திற்கு
அவர்கள் வம்சங்களின்படி கிடைத்த சுதந்
9 தாம். சிமியோன் புத்திரருடைய சுதந்தரம்
யூதா புத்திரரின் பங்குவீதத்திற்குள் இருக்
கிறது; யூதா புத்திரரின் பங்கு அவர்களுக்கு
மிச்சமாயிருந்தபடியால், [1]சிமியோன் புத்திரர்
அவர்கள் சுதந்தரத்தின் நடுவிலே சுதந்தரம்
பெற்றார்கள்.
10 மூன்றாம் சீட்டு செபுலோன் புத்திரருக்கு
விழுந்தது; அவர்களுக்கு அவர்கள் வம்சங்க
ளின்படி கிடைத்த சுதந்தர பங்குவீதம் சாரீத்
11 மட்டுமுள்ளது. அவர்களுடைய எல்லை மேற்
கே மாராலாவுக்கு ஏறி, தாபசேத்துக்கு வந்து,
யொக்கினேயாமுக்கு எதிரான ஆற்றுக்குப்
12 போம். சாரீதிலிருந்து அது கிழக்கே சூரி
யன் உதிக்கும் முனையாய்க் கிஸ்லோத்தா
போரின் எல்லையினிடத்துக்குத் திரும்பி,
தாபராத்துக்குச் சென்று, யப்பியாவுக்கு ஏறி,
13 அங்கேயிருந்து கிழக்குப்புறத்திலே கித்தா
ஏபேரையும் இத்தாகாத்சீனையும் கடந்து, ரிம்
மோன் மெத்தோவாருக்கும் நேயாவுக்கும்
14 போம். அப்புறம் அந்த எல்லை வடக்கே
அன்னத்தோனுக்குத்திரும்பி, இப்தாவேலின்
15 பள்ளத்தாக்கிலே முடியும். காத்தாத், நக
லால், சிம்ரோன், இதாலா, பெத்லகேம் [2]முத
லான பன்னிரண்டு பட்டணங்களும் அவைக
16 ளின் கிராமங்களும், செபுலோன் புத்திர
ருக்கு, அவர்கள் வம்சங்களின்படி, கிடைத்த
சுதந்தரம்.
17 நாலாம் சீட்டு இசக்காருக்கு விழுந்தது.
18 இசக்கார் புத்திரருக்கு அவர்கள் வம்சங்களின்
படி கிடைத்த எல்லை, யெஸ்ரயேல், கெசுல்
19 லோத், சூனேம், அப்பிராயீம், சீகோன், அ
20 னாகராத், ராப்பித், கிஷியோன், அபெத்ஸ்,
21 ரெமேத், என்கன்னீம், என்காதா, பெத்பாத்
22 செஸ் இவைகளே. அப்புறம் அந்த எல்லை
தாபோருக்கும், சகசீமாவுக்கும், பெத்ஷிமே
சுக்கும் வந்து யோர்தானிலே முடியும்; அதற்
குள் பதினாறு பட்டணங்களும் அவைகளு
23 டைய கிராமங்களுமுண்டு. இந்தப் பட்ட
ணங்களும் இவைகளைச் சேர்ந்த கிராமங்களும்
இசக்கார் புத்திரரின் கோத்திரத்திற்கு, அவர்க
ளுடைய வம்சங்களின்படி கிடைத்தசுதந்தரம்.

[1] 2 கொ. 8. 14, 15
[2] ரூத். 1. 19. 2 சாமு. 23. 15

ஐந்தாம் சீட்டு ஆசேர் புத்திரருடைய 24
கோத்திரத்துக்கு விழுந்தது. அவர்களுடைய 25
வம்சங்களின்படி அவர்களுக்குக் கிடைத்த
எல்லை, எல்காத், ஆலி, பேதேன், அக்சாப்,
அலம்மேலெக், ஆமாத், மிஷயால் இவை 26
களே; பின்பு அது மேற்கே கர்மேலுக்கும்
சீகோர்லிப்னாத்திற்கும் சென்று, கிழக்கே 27
பெத்தாகோனுக்குத்திரும்பி, செபுலோனுக்கு
வடக்கேயிருக்கிற இப்தாவேலின் பள்ளத்தாக்
குக்கும் பெத்தேமேக்குக்கும் நேகியெலுக்கும்
வந்து, இடதுபுறமான காபூலுக்கும், எபி 28
ரோனுக்கும், ரேகோபுக்கும், அம்மோனுக்
கும், கானாவுக்கும், பெரிய சீதோன்மட்டும்
போம். அப்புறம் அந்த எல்லை ராமாவுக்கும் 29
தீரு என்னும் அரணிப்பான பட்டணம்மட்
டும் திரும்பும்; பின்பு அந்த எல்லை ஓசாவுக்
குத் திரும்பி, அக்சீபின் எல்லை ஓரத்திலுள்ள
சமுத்திரத்திலே முடியும். உம்மாவும், ஆப் 30
பெக்கும், ரேகோபும் அதற்கு அடுத்திருக்
கிறது; இந்தப் பட்டணங்களும் இவைகளின்
கிராமங்களும் இருபத்திரண்டு. இந்தப் பட் 31
டணங்களும் இவைகளின் கிராமங்களும்
ஆசேர் புத்திரரின் கோத்திரத்துக்கு, அவர்
கள் வம்சங்களின்படி, கிடைத்த சுதந்தரம்.
ஆறாம் சீட்டு நப்தலி புத்திரருக்கு விழுந் 32
தது. நப்தலி புத்திரருக்கு அவர்கள் வம்சங் 33
களின்படி கிடைத்த எல்லை, ஏலேப்பிலும்,
சானானிமிலுள்ள அல்லோனிலுமிருந்து வந்
து, ஆதமி, நெக்கேபின்மேலும் யாப்னியே
லின்மேலும், லக்கூம்மட்டும் போய், யோர்
தானில் முடியும். அப்புறம் அந்த எல்லை 34
மேற்கே அஸ்னோத்தாபோருக்குத் திரும்பி,
அங்கேயிருந்து உக்கோகுக்குச் சென்று, தெற்
கே செபுலோனையும், மேற்கே ஆசேரையும்
சூரியோதயப்புறத்திலே யோர்தானிலே யூதா
வையும் சேர்ந்துவரும். அரணிப்பான பட் 35
டணங்களாவன: சித்திம், சேர், அம்மாத்,
ரக்காத், கின்னரேத், ஆதமா, ராமா, ஆத் 36
சோர், கேதேஸ், எத்ரேயி, என்ஆத்சோர், 37
ஈரோன், மிக்தாலேல், ஓரேம், பெதானாத், 38
பெத்ஷிமேஸ் முதலானவைகளே; பட்டணங்
களும் அவைகளின் கிராமங்களுமுட்பட பத்
தொன்பது. இந்தப் பட்டணங்களும் இவை 39
களின் கிராமங்களும் நப்தலி புத்திரருடைய
கோத்திரத்துக்கு, அவர்கள் வம்சங்களின்படி,
உண்டான சுதந்தரம்.
ஏழாம் சீட்டு தாண் புத்திரருடைய கோத் 40
திரத்திற்கு விழுந்தது. அவர்களுக்கு அவர் 41
கள் வம்சங்களின்படி கிடைத்த சுதந்தரத்தின்
எல்லையாவது, சோரா, எஸ்தாவோல், இர்சே
மேஸ், சாலாபீன், ஆயலோன், யெத்லா, 42
ஏலோன், திம்னாதா, எக்ரோன், எல்தெக் 43,44
கே, கிபெத்தோன், பாலாத், யேகூத், பெனே 45
பெராக், காத்ரிம்மோன், மேயார்கோன், ராக் 46
கோன் என்னும் பட்டணங்களும், யாப்போ
வுக்கு எதிரான எல்லையுமே. தாண் புத்திர 47
ரின் எல்லை அவர்களுக்கு ஒடுக்கமாயிருந்த

படியால், [1]அவர்கள் புறப்பட்டுப் போய்,
லேசேமின்மேல் யுத்தம்பண்ணி, அதைப்
பிடித்து, பட்டயக்கருக்கினால் சங்கரித்து,
அதைச் சுதந்தரித்துக்கொண்டு, அதிலே குடி
யிருந்து, லேசேமுக்குத் தங்கள் தகப்பனாகிய
தாணுடைய நாமத்தின்படியே தாண் என்று
48 பேரிட்டார்கள். இந்தப் பட்டணங்களும்
இவைகளின் கிராமங்களும் தாண் புத்திரரின்
கோத்திரத்திற்கு அவர்கள் வம்சங்களின்படி
உண்டான சுதந்தரம்.
49 தேசத்தை அதின் எல்லைகளின்படி சுதந்
தரமாகப் பங்கிட்டுத் தீர்ந்தபோது, இஸ்ர
வேல் புத்திரர் நூனின் குமாரனாகிய யோசு
வாவுக்குத் தங்கள் நடுவிலே ஒரு சுதந்தரத்
50 தைக் கொடுத்தார்கள். எப்பிராயீமின் மலைத்
தேசத்தில் இருக்கிற திம்னாத்சேரா என்னும்
அவன் கேட்ட பட்டணத்தை அவனுக்குக்
**கர்த்தருடைய** வாக்கின்படியே கொடுத்தார்
கள்; அந்தப் பட்டணத்தை அவன் கட்டி,
அதிலே குடியிருந்தான்.
51 ஆசாரியனாகிய எலெயாசாரும், நூனின்
குமாரனாகிய யோசுவாவும், கோத்திரப் பிதாக்
களுடைய தலைவரும் சீலோவிலே ஆசரிப்புக்
கூடாரத்தின் வாசலிலே **கர்த்தருடைய** சந்
நிதியில் இஸ்ரவேல் புத்திரரின் கோத்திரங்
களுக்குச் சீட்டுப்போட்டுக் கொடுத்த சுதந்
தரங்கள் இவைகளே; இவ்விதமாய் அவர்கள்
தேசத்தைப் பங்கிட்டு முடித்தார்கள்.

**20** 2 **கர்த்தர்** யோசுவாவை நோக்கி: நீ இஸ்
ரவேல் புத்திரரோடே சொல்லவேண்டியது
என்னவென்றால்: அறியாமல் கைப்பிசகாய்
ஒருவனைக் கொன்றவன் ஓடிப்போயிருக்கும்
படி; நான் மோசேயைக்கொண்டு உங்களுக்
குக் கற்பித்த அடைக்கலப் பட்டணங்களை
3 [2]உங்களுக்கு ஏற்படுத்திக்கொள்ளுங்கள். அ
வைகள் உங்களுக்கு இரத்தப்பழி வாங்கு
கிறவனுடைய கைக்குத் தப்பிப்போயிருக்கத்
4 தக்க அடைக்கலமாயிருக்கும். அந்தப் பட்ட
ணங்களில் ஒன்றிற்கு ஓடிவருகிறவன், பட்
டணத்தின் ஒலிமுகவாசலில் நின்றுகொண்டு,
[3]அந்தப் பட்டணத்தினுடைய மூப்பரின் செவி
கள் கேட்க, தன் காரியத்தைச் சொல்வானாக;
அப்பொழுது அவர்கள் அவனைத் தங்களிடத்
தில் பட்டணத்துக்குள்ளே சேர்த்துக்கொண்டு,
தங்களோடே குடியிருக்க அவனுக்கு இடம்
5 கொடுக்கக்கடவர்கள். பழிவாங்குகிறவன் அவ
னைத் தொடர்ந்துவந்தால், [4]அவன் பிறனை
முற்பகையின்றி அறியாமல் கொன்றதினால்,
அவனை இவன் கையில் ஒப்புக்கொடாதிருக்க
6 வேண்டும். நியாயம் விசாரிக்கும் சபைக்கு
முன்பாக அவன் நிற்கும்வரைக்கும், அந்நாட்
களிலிருக்கிற பிரதான ஆசாரியன் மரணம
டையும்வரைக்கும், அவன் அந்தப் பட்டணத்
திலே குடியிருக்கக்கடவன்; பின்பு கொலை
செய்தவன் தான் விட்டோடிப்போன தன்
பட்டணத்திற்கும் தன் வீட்டிற்கும் திரும்பிப்
7 போகவேண்டும் என்று சொல் என்றார். அப்
படியே அவர்கள் நப்தலியின் மலைத்தேசமான
கலிலேயாவிலுள்ள கேதேசையும், எப்பிராயீ
மின் மலைத்தேசத்திலுள்ள சீகேமையும், யூதா
வின் மலைத்தேசத்திலுள்ள [5]எபிரோனாகிய
கீரியாத் அர்பாவையும் ஏற்படுத்தினார்கள்.
எரிகோவிலிருக்கும் யோர்தானுக்கு அக்கரை 8
யான கிழக்கிலே ரூபன் கோத்திரத்திற்கு
இருக்கும் சமபூமியின் வனாந்தரத்திலுள்ள
பேசேரையும், காத்கோத்திரத்திற்கு இருக்கும்
கீலேயாத்திலுள்ள ராமோத்தையும், மனாசே
கோத்திரத்திற்கு இருக்கும் பாசானிலுள்ள
கோலானையும் குறித்துவைத்தார்கள். கைப் 9
பிசகாய் ஒருவனைக் கொன்றவன் எவனோ
அவன் சபைக்கு முன்பாக நிற்கும்வரைக்கும்,
பழிவாங்குகிறவன் கையினால் சாகாதபடிக்கு,
ஓடிப்போய் ஒதுங்கும்படி, இஸ்ரவேல் புத்தி
ரர் யாவருக்கும், அவர்கள் நடுவே தங்குகிற
பரதேசிக்கும், குறிக்கப்பட்ட பட்டணங்கள்
இவைகளே.

அப்பொழுது லேவியரின் வம்சப் பிதாக்க **21**
ளின் தலைவர்; கானான் தேசத்திலிருக்கிற
சீலோவிலே ஆசாரியனாகிய எலெயாசாரிடத்
திலும், நூனின் குமாரனாகிய யோசுவாவி
னிடத்திலும், இஸ்ரவேல் புத்திரருடைய
கோத்திரப் பிதாக்களிலுள்ள தலைவரிடத்தி
லும் சேர்ந்துவந்து: நாங்கள் குடியிருக்கும் 2
பட்டணங்களையும், எங்கள் மிருகஜீவனுக்காக
வெளிநிலங்களையும் எங்களுக்குக் கொடுக்கும்
படி, **கர்த்தர்** மோசேயைக்கொண்டு கட்டளை
யிட்டாரே [6]என்றார்கள். **கர்த்தருடைய** வா 3
க்கின்படியே, இஸ்ரவேல் புத்திரர் தங்கள்
சுதந்தரத்திலே லேவியருக்குப் பட்டணங்களை
யும் அவைகளின் வெளிநிலங்களையும் கொடுத்
தார்கள்.
கோகாத்தியரின் வம்சங்களுக்குச் சீட்டு 4
விழுந்தது; அந்தச் சீட்டின்படி லேவியரில்
ஆசாரியனாகிய ஆரோனின் குமாரருக்கு யூதா
கோத்திரத்திலும், சிமியோன் கோத்திரத்தி
லும், பென்யமீன் கோத்திரத்திலும் கிடைத்த
பட்டணங்கள் பதின்மூன்று.
கோகாத்தின் மற்றப் புத்திரருக்கு, எப்ரா 5
யீம் கோத்திரத்தின் வம்சங்களுக்குள்ளும்,
தாண் கோத்திரத்திலும், மனாசேயின் பாதிக்
கோத்திரத்திலும், சீட்டினால் கிடைத்த பட்ட
ணங்கள் பத்து.
கெர்சோன் புத்திரருக்கு, இசக்கார் கோத் 6
திரத்தின் வம்சங்களுக்குள்ளும், ஆசேர் கோத்
திரத்திலும், நப்தலி கோத்திரத்திலும், பாசானி
லிருக்கிற மனாசேயின் பாதிக் கோத்திரத்தி
லும், சீட்டினால் கிடைத்த பட்டணங்கள்
பதின்மூன்று.
மெராரி புத்திரருக்கு, அவர்கள் வம்சங்க 7
ளின்படியே, ரூபன் கோத்திரத்திலும், காத்
கோத்திரத்திலும், செபுலோன் கோத்திரத்தி
லும் கிடைத்த பட்டணங்கள் பன்னிரண்டு.
இந்தப் பட்டணங்களையும் அவைகளின் 8
வெளிநிலங்களையும் இஸ்ரவேல் புத்திரர், **கர்த்**

[1] நியா. 18. அதி.
[2] யாத். 21. 13. எண். 35. 6, 11, 14
[3] ரூத் 4. 1. 2 நீதி. 31. 23
[4] எண். 35. 12, 25
[5] லூக். 1. 39
[6] எண். 35. 1, 2

தர் மோசேயைக்கொண்டு கட்டளையிட்டபடி
யே, சீட்டுப்போட்டு லேவியருக்குக் கொடுத்
9 தார்கள். லேவியின் குமாரரில் முதலாம்சீட்
டைப்பெற்ற கோகாத்தியரின் வம்சங்களிலே
10 இருக்கிற ஆரோனின் குமாரருக்கு, யூதா
புத்திரரின் கோத்திரத்திலும், சிமியோன் புத்
திரரின் கோத்திரத்திலும், அவர்கள் கொடுத்த
வைகளும் பேர்பேராகச் சொல்லப்பட்டவை
களுமான பட்டணங்களின் நாமங்களாவன:
11 யூதாவின் மலைத்தேசத்தில் ஆனாக்கின் தகப்ப
னாகிய அர்பாவின் பட்டணமான எபிரோனை
யும் அதைச் சூழ்ந்த வெளிநிலங்களையும் அவர்
12 களுக்குக் கொடுத்தார்கள். பட்டணத்தைச்
சேர்ந்த வயல்களையும் அதின் பட்டிகளையும்
எப்புன்னேயின் குமாரனாகிய காலேபுக்குக்
காணியாட்சியாகக் கொடுத்தார்கள்.
13 இப்படியே கொலைசெய்தவனுக்கு அடைக்
கலப்பட்டணமாக ஆசாரியனாகிய ஆரோனின்
குமாரருக்கு எபிரோனையும் அதின் வெளி
நிலங்களையும், லிப்னாவையும் அதின் வெளி
14 நிலங்களையும், யாத்தீரையும் அதின் வெளிநில
ங்களையும், எஸ்தெமொவாவையும் அதின் வெ
15 ளிநிலங்களையும், ஓலோனையும் அதின் வெ
ளிநிலங்களையும், தெபீரையும் அதின் வெளி
16 நிலங்களையும், ஆயினையும் அதின் வெளி
நிலங்களையும், யுத்தாவையும் அதின் வெளி
நிலங்களையும், பெத்ஷிமேசையும் அதின் வெ
ளிநிலங்களையும் கொடுத்தார்கள்; அந்த இர
ண்டு கோத்திரங்களிலிருக்கிற பட்டணங்கள்
17 ஒன்பது. பென்யமீன் கோத்திரத்திலே
அவர்களுக்குக் கிபியோனையும் அதின் வெளி
நிலங்களையும், கேபாவையும் அதின் வெளி
18 நிலங்களையும், ஆனதோத்தையும் அதின்
வெளிநிலங்களையும், அல்மோனையும் அதின்
வெளிநிலங்களையும் கொடுத்தார்கள்; இந்தப்
19 பட்டணங்கள் நாலு. ஆசாரியரான ஆரோ
னுடைய குமாரரின் பட்டணங்களெல்லாம்
அவைகளின் வெளிநிலங்களுட்பட பதின்
மூன்று.
20 லேவியரான கோகாத்தின் புத்திரரில் மீதி
யான அவர்களுடைய மற்ற வம்சங்களுக்கு
எப்பிராயீம் கோத்திரத்திலே அவர்களுக்குப்
பங்குவீதமாக அவர்கள் கொடுத்த பட்டணங்
21 களாவன: கொலைசெய்தவனுக்கு அடைக்க
லப்பட்டணமான எப்பிராயீமின் மலைத்தேசத்
தில் இருக்கிற சீகேமையும் அதின் வெளி
நிலங்களையும், கேசேரையும் அதின் வெளி
22 நிலங்களையும், கிப்சாயீமையும் அதின் வெளி
நிலங்களையும், பெத்தொரோனையும் அதின்
வெளிநிலங்களையும் அவர்களுக்குக் கொடுத்
23 தார்கள்; இந்தப் பட்டணங்கள் நாலு. தாண்
கோத்திரத்திலே எல்தெக்கேயையும் அதின்
வெளிநிலங்களையும், கிபெத்தோனையும்
24 அதின் வெளிநிலங்களையும், ஆயலோனையும்
அதின் வெளிநிலங்களையும், காத்ரிம்மோனை
யும் அதின் வெளிநிலங்களையும் அவர்களுக்
குக் கொடுத்தார்கள்; இந்தப் பட்டணங்கள்
நாலு. மனாசேயின் பாதிக் கோத்திரத்திலே 25
தானாகையும் அதின் வெளிநிலங்களையும், காத்
ரிம்மோனையும் அதின் வெளிநிலங்களையும்
அவர்களுக்குக் கொடுத்தார்கள்; இந்தப் பட்
டணங்கள் இரண்டு. கோகாத் புத்திரரின் 26
மீதியான வம்சங்களுக்கு உண்டான பட்
டணங்களெல்லாம் அவைகளின் வெளிநிலங்
களுட்பட பத்து.
லேவியரின் வம்சங்களிலே கெர்சோன் 27
புத்திரருக்கு மனாசேயின் பாதிக் கோத்திரத்
தில் கொலைசெய்தவனுக்கு அடைக்கலப்பட்
டணமான பாசானிலுள்ள கோலானையும்
அதின் வெளிநிலங்களையும், பெயேஸ்திரா
வையும் அதின் வெளிநிலங்களையும் கொடுத்
தார்கள்; இந்தப் பட்டணங்கள் இரண்டு. இச 28
க்காரின் கோத்திரத்திலே கீசோனையும் அதின்
வெளிநிலங்களையும், தாபராத்தையும் அதின்
வெளிநிலங்களையும், யர்மூத்தையும் அதின் 29
வெளிநிலங்களையும், என்கன்னீமையும் அதின்
வெளிநிலங்களையும் கொடுத்தார்கள்; இந்தப்
பட்டணங்கள் நாலு. ஆசேரின் கோத்திரத் 30
திலே மிஷயாலையும் அதின் வெளிநிலங்களை
யும், அப்தோனையும் அதின் வெளிநிலங்களை
யும், எல்காத்தையும் அதின் வெளிநிலங்களை 31
யும், ரேகோபையும் அதின் வெளிநிலங்களை
யும் கொடுத்தார்கள்; இந்தப் பட்டணங்கள்
நாலு. நப்தலி கோத்திரத்திலே கொலைசெய் 32
தவனுக்கு அடைக்கலப்பட்டணமாக கலிலே
யாவிலுள்ள கேதேசையும் அதின் வெளிநிலங்
களையும், அம்மோத்தோரையும் அதின் வெளி
நிலங்களையும், கர்தானையும் அதின் வெளி
நிலங்களையும் கொடுத்தார்கள்; இந்தப் பட்ட
ணங்கள் மூன்று. கெர்சோனியருக்கு அவர் 33
கள் வம்சங்களின்படி உண்டான பட்டணங்
களெல்லாம் அவைகளின் வெளிநிலங்களுட்
பட பதின்மூன்று.
மற்ற லேவியராகிய மெராரி புத்திரரின் வம் 34
சங்களுக்குச் செபுலோன் கோத்திரத்திலே
யொக்னியாமையும் அதின் வெளிநிலங்களை
யும், கர்தாவையும் அதின் வெளிநிலங்களை
யும், திம்னாவையும் அதின் வெளிநிலங்களை 35
யும், நகலாலையும் அதின் வெளிநிலங்களையும்
கொடுத்தார்கள்; இந்தப் பட்டணங்கள் நாலு.
ரூபன் கோத்திரத்திலே பேசேரையும் அதின் 36
வெளிநிலங்களையும், யாகசாவையும் அதின்
வெளிநிலங்களையும், கெதெமோத்தையும் அதி 37
ன் வெளிநிலங்களையும், மெபாகாத்தையும் அதி
ன் வெளிநிலங்களையும் கொடுத்தார்கள்; இந்தப்
பட்டணங்கள் நாலு. காத் கோத்திரத்திலே, 38
கொலைசெய்தவனுக்கு அடைக்கலப்பட்டண
மாக, கீலேயாத்திலுள்ள ராமோத்தையும் அதி
ன் வெளிநிலங்களையும்; மக்னாயீமையும் அதின்
வெளிநிலங்களையும், எஸ்போனையும் அதின் 39
வெளிநிலங்களையும், யாசேரையும் அதின்
வெளிநிலங்களையும் கொடுத்தார்கள், இந்தப்
பட்டணங்கள் நாலு. இவைகளெல்லாம் 40
லேவியரின் மற்ற வம்சங்களாகிய மெராரி

புத்திரருக்கு, அவர்கள் வம்சங்களின்படி,
கிடைத்த பட்டணங்கள்; அவர்களுடைய பங்
குவீதம் பன்னிரண்டு பட்டணங்கள்.
41 இஸ்ரவேல் புத்திரருடைய காணியாட்சி
யின் நடுவிலே இருக்கிற லேவியரின் பட்ட
ணங்களெல்லாம், அவைகளின் வெளிநிலங்க
42 ளுட்பட நாற்பத்தெட்டு. இந்தப் பட்டணங்
களில் ஒவ்வொன்றிற்கும் அததைச் சூழ்ந்த
வெளிநிலங்கள் இருந்தது; எல்லாப் பட்ட
ணங்களுக்கும் அப்படியே இருந்தது.
43 இந்தப்பிரகாரமாகக் **கர்த்தர்** இஸ்ரவேலுக்
குக் கொடுப்பேன் என்று அவர்களுடைய
பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்தையெல்
லாம் கொடுத்தார்; [1]அவர்கள் அவைகளைச் சுதந்
தரித்துக்கொண்டு, அவைகளிலே குடியிருந்
44 தார்கள். **கர்த்தர்** அவர்களுடைய பிதாக்க
ளுக்கு ஆணையிட்டபடியெல்லாம் அவர்களைச்
சுற்றிலும் யுத்தமில்லாமல் இளைப்பாறப்பண்
ணினார்; அவர்களுடைய எல்லாச் சத்துருக்
களிலும் ஒருவரும் அவர்களுக்கு முன்பாக
நிற்கவில்லை; அவர்கள் சத்துருக்களையெல்
லாம் **கர்த்தர்** அவர்கள் கையில் ஒப்புக்கொடுத்
45 தார். **கர்த்தர்** இஸ்ரவேல் குடும்பத்தாருக்
குச் சொல்லியிருந்த நல்வார்த்தைகளிலெல்
லாம் ஒரு வார்த்தையும் தவறிப்போகவில்லை;
எல்லாம் நிறைவேறிற்று.

**22** அப்பொழுது யோசுவா ரூபனியரையும்
காத்தியரையும் மனாசேயின் பாதிக் கோத்தி
2 ரத்தையும் அழைத்து, அவர்களை நோக்கி:
**கர்த்தருடைய** தாசனாகிய மோசே உங்களுக்
குக் கட்டளையிட்டவைகளையெல்லாம் நீங்கள்
கைக்கொண்டீர்கள்; [2]நான் உங்களுக்குக் கட்
டளையிட்ட யாவிலும் என் சொற்படி செய்தீர்
3 கள். நீங்கள் இதுவரைக்கும் அநேகநாளாக
உங்கள் சகோதரரைக் கைவிடாமல், உங்கள்
தேவனாகிய **கர்த்தருடைய** கட்டளையைக் காத்
4 துக்கொண்டு நடந்தீர்கள். இப்பொழுதும்
உங்கள் தேவனாகிய **கர்த்தர்** தாம் உங்கள்
சகோதரருக்குச் சொல்லியிருந்தபடியே, அவர்
களை இளைப்பாறப்பண்ணினார்; ஆகையால்
**கர்த்தரின்** தாசனாகிய மோசே யோர்தானுக்கு
அப்புறத்திலே உங்களுக்குக் கொடுத்த உங்கள்
காணியாட்சியான தேசத்திலிருக்கிற [3]உங்கள்
5 கூடாரங்களுக்குத் திரும்பிப்போங்கள். ஆனா
லும் நீங்கள் உங்கள் தேவனாகிய **கர்த்தரில்**
அன்புகூர்ந்து, அவருடைய வழிகளிலெல்
லாம் நடந்து, அவர் கற்பனைகளைக் கைக்கொ
ண்டு, அவரைப் பற்றிக்கொண்டிருந்து, அவ
ரை உங்கள் முழு இருதயத்தோடும் உங்கள்
முழு ஆத்துமாவோடும் சேவிக்கிறதற்காக,
**கர்த்தரின்** தாசனாகிய மோசே உங்களுக்குக்
கற்பித்த கற்பனையின்படியேயும் நியாயப்பிர
மாணத்தின்படியேயும் [4]செய்யும்படிமாத்திரம்
6 வெகு சாவதானமாயிருங்கள் என்றான். இவ்
விதமாய் யோசுவா அவர்களை ஆசீர்வதித்து,
[5]அவர்களை அனுப்பிவிட்டான்; அவர்கள் தங்
கள் கூடாரங்களுக்குப் போய்விட்டார்கள்.

[1] ஆதி. 13. 15
[2] எண். 32. 20. யோசு. 1. 16, 17
[3] உபா. 29. 8
[4] உபா. 6. 6, 17; 10. 12; 11. 22. எபே. 12. 16
[5] ஆதி. 47. 7. லூ. 2. 34; 24. 50
[6] உபா. 8. 10-14
[7] எண். 31. 27. 1 சாமு. 30. 24. சங். 68. 12
[8] எண். 32. 1, 26, 29
[9] உபா. 13. 12. மூ. நியா. 20. 12
[10] யாத். 6. 25. எண். 25. 7
[11] லேவி. 17. 8, 9

மனாசேயின் பாதிக் கோத்திரத்துக்கு மோசே 7
பாசானிலே சுதந்தரம் கொடுத்தான்; அதின்
மற்றப் பாதிக்கு, யோசுவா யோர்தானுக்கு இப்
புறத்திலே மேற்கே அவர்கள் சகோதரரோடே
கூடச் சுதந்தரம் கொடுத்தான்; யோசுவா அவர்
களை அவர்கள் கூடாரங்களுக்கு அனுப்பிவிடு
கிறபோது, அவர்களை ஆசீர்வதித்து: நீங்கள் 8
மிகுந்த ஐசுவரியத்தோடும், [6]மகா ஏராளமான
ஆடுமாடுகளோடும், பொன் வெள்ளி வெண்க
லம் இரும்போடும், அநேக வஸ்திரங்களோ
டும் உங்கள் கூடாரங்களுக்குத் திரும்பி, உங்
கள் சத்துருக்களிடத்திலே கொள்ளையிட்ட
தை உங்கள் சகோதரரோடே [7]பங்கிட்டுக்
கொள்ளுங்கள் என்றான்.
அப்பொழுது ரூபன் புத்திரரும் காத் புத்திர 9
ரும் மனாசேயின் பாதிக் கோத்திரத்தாரும், **கர்
த்தர்** மோசேயைக்கொண்டு கட்டளையிட்ட
படியே, தாங்கள் கைவசம்பண்ணிக்கொண்ட
தங்கள் காணியாட்சி தேசமான கீலேயாத் [8]தே
சத்துக்குப் போகும்படிக்கு, கானான்தேசத்தி
லுள்ள சீலோவிலிருந்த இஸ்ரவேல் புத்திரரை
விட்டுத் திரும்பிப்போனார்கள். கானான்தே 10
சத்தில் இருக்கிற யோர்தானின் எல்லைகளு
க்கு வந்தபோது, ரூபன் புத்திரரும் காத் புத்
திரரும் மனாசேயின் பாதிக் கோத்திரத்தாரும்,
அங்கே யோர்தானின் ஓரத்திலே பார்வைக்
குப் பெரிதான ஒரு பீடத்தைக் கட்டினார்கள்.
ரூபன் புத்திரரும் காத் புத்திரரும் மனாசே 11
யின் பாதிக் கோத்திரத்தாரும் கானான்தேசத்
துக்கு எதிரே இஸ்ரவேல் புத்திரருக்கு அடு
த்த யோர்தானின் எல்லைகளில் ஒரு பீடத்
தைக் கட்டினார்கள் [9]என்று இஸ்ரவேல் புத்
திரர் கேள்விப்பட்டார்கள். அவர்கள் அதைக் 12
கேள்விப்பட்டபோது, இஸ்ரவேல் புத்திர
ரின் சபையாரெல்லாரும் அவர்களுக்கு விரோ
தமாய் யுத்தம்பண்ணும்படி சீலோவிலே கூடி,
கீலேயாத் தேசத்தில் இருக்கிற ரூபன் புத்திர 13
ரிடத்துக்கும் காத் புத்திரரிடத்துக்கும் மனாசே
யின் பாதிக் கோத்திரத்தாரிடத்துக்கும், ஆசா
ரியனாகிய எலெயாசாருடைய குமாரனாகிய
[10]பினெகாசையும், அவனோடேகூட இஸ்ர 14
வேலுடைய எல்லாக் கோத்திரங்களிலும் ஒவ்
வொரு பிதாவின் குடும்பத்துக்கு ஒவ்வொரு
பிரபுவாகப் பத்துப் பிரபுக்களையும் அனுப்பி
னார்கள்; இஸ்ரவேலின் சேனைகளிலே ஆயிர
வர்களுக்குள்ளே ஒவ்வொருவனும் தன்தன்
பிதாவின் குடும்பத்துக்குத் தலைவனாயிருந்
தான்.
அவர்கள் கீலேயாத்தேசத்திலே ரூபன் புத் 15
திரர் காத் புத்திரர் மனாசேயின் பாதிக் கோத்
திரத்தாராகிய இவர்களிடத்திற்கு வந்து: நீங் 16
கள் இந்நாளிலே **கர்த்தரைப்** பின்பற்றாதபடி
க்குப் புரண்டு, இந்நாளிலே **கர்த்தருக்கு**
விரோதமாய்க் கலகம் பண்ணும்படியாக உங்
களுக்கு ஒரு பீடத்தைக் கட்டி, [11]இஸ்ரவே
லின் தேவனுக்கு விரோதமாகப் பண்ணின
இந்தத் துரோகம் என்ன? பேயோரின் அக் 17

கிரமம் [1]நமக்குப் போதாதா? **கர்த்தருடைய**
சபையிலே வாதை உண்டாயிருந்ததே; இந்
நாள்வரைக்கும் நாம் அதினின்று நீங்கிச் சுத்த
18 மாகவில்லையே. நீங்கள் இந்நாளில் **கர்த்த**
**ரைப்** பின்பற்றாதபடிக்குப் புறளுவீர்களோ?
இன்று **கர்த்தருக்கு** விரோதமாய்க் கலகம்பண்
ணுவீர்களோ? அவர் நாளைக்கு இஸ்ரவேல்
சபையனைத்தின்மேலும் [2]கடுங்கோபங்கொள்
19 வாரே. உங்கள் காணியாட்சியான தேசம்
தீட்டாயிருந்தாலும், **கர்த்தருடைய** வாசஸ்
தலம் [3]தங்குகிற **கர்த்தருடைய** காணியாட்சி
யான அக்கரையிலுள்ள தேசத்திற்கு வந்து,
எங்கள் நடுவே காணியாட்சி பெற்றுக்கொள்
ளலாமே; நீங்கள் நம்முடைய தேவனாகிய
**கர்த்தரின்** பலிபீடத்தையல்லாமல் உங்களு
க்கு வேறொரு பீடத்தைக் கட்டுகிறதினாலே,
**கர்த்தருக்கும்** எங்களுக்கும் விரோதமான இர
20 ண்டகம் பண்ணாதிருங்கள். சேராவின் குமா
ரனாகிய ஆகான் சாபத்தீடான பொருளைக்
குறித்துத் துரோகம்பண்ணினதினாலே, [4]இஸ்
ரவேல் சபையின்மேலெல்லாம் கடுங்கோ
பம் வரவில்லையா? அவன் ஒருவன்மாத்திரம்
தன் அக்கிரமத்தினாலே மடிந்துபோகவில்லை
யென்று **கர்த்தருடைய** சபையார் எல்லாரும்
சொல்லச்சொன்னார்கள் என்றார்கள்.
21 அப்பொழுது ரூபன் புத்திரரும் காத் புத்திர
ரும் மனாசேயின் பாதிக்கோத்திரத்தாரும், இஸ்
ரவேலின் ஆயிரவரின் தலைவருக்குப் பிரதி
22 யுத்தரமாக: தேவாதி தேவனாகிய **கர்த்தர்,**
தேவாதி தேவனாகிய **கர்த்தரே,** [5]அதை அறிந்
திருக்கிறார்; இஸ்ரவேலரும் அறிந்துகொள்
வார்கள்; அது இரண்டகத்தினாலாவது, **கர்த்**
**தருடைய** கட்டளைக்கு விரோதமான துரோ
கத்தினாலாவது செய்யப்பட்டதானால், இந்நா
ளில் அவர் எங்களைக் காப்பாற்றாமல் இருக்
23 கக்கடவர். ஒரு காரியத்தைக்குறித்து நாங்
கள் எங்களுக்கு அந்தப் பீடத்தைக் கட்டின
தே அல்லாமல், **கர்த்தரைப்** பின்பற்றாதபடி
க்கு விலகுவதற்காவது, அதின்மேல் சர்வாங்க
தகனபலியையாகிலும் போஜனபலியையாகி
லும் சமாதானபலிகளையாகிலும் செலுத்துகிற
தற்காவது அதைச் செய்ததுண்டானால், **கர்த்**
24 **தர்** அதை [6]விசாரிப்பாராக. நாளைக்கு உங்
கள் பிள்ளைகள் எங்கள் பிள்ளைகளை நோக்கி:
இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தருக்கும்** உங்
25 களுக்கும் என்ன? ரூபன் புத்திரர் காத் புத்
திரர் ஆகிய உங்களுக்கும் எங்களுக்கும் நடுவே
**கர்த்தர்** யோர்தானை எல்லையாக வைத்தார்;
**கர்த்தரிடத்தில்** உங்களுக்குப் பங்கில்லை என்
று சொல்லி, எங்கள் பிள்ளைகளைக் **கர்த்தருக்**
**குப்** பயப்படாதிருக்கச் செய்வார்கள் என்கிற
ஐயத்தினாலே நாங்கள் சொல்லிக்கொண்டது
26 என்னவென்றால்: சர்வாங்க தகனத்திற்கும்
அல்ல, பலிக்கும் அல்ல, எங்கள் சர்வாங்க
தகனங்களாலும் பலிகளாலும் சமாதானபலிக
ளாலும் நாங்கள் **கர்த்தரின்** சந்நிதியில் [7]அவ
ருடைய ஆராதனையைச் செய்யத்தக்கவர்கள்

என்று எங்களுக்கும் உங்களுக்கும், நமக்குப்
பின்வரும் நம்முடைய சந்ததியாருக்கும் நடு
வே [8]சாட்சி உண்டாயிருக்கும்படிக்கும், **கர்** 27
**த்தரிடத்தில்** உங்களுக்குப் பங்கில்லை என்று
உங்கள் பிள்ளைகள் நாளைக்கு எங்கள் பிள்
ளைகளோடே சொல்லாதபடிக்குமே, ஒரு
பீடத்தை நமக்காக உண்டுபண்ணுவோம் என்
றோம். நாளைக்கு எங்களோடாவது, எங்கள் 28
சந்ததியாரோடாவது அப்படிச் சொல்வார்க
ளானால், அப்பொழுது சர்வாங்க தகனத்திற்
கும் அல்ல, பலிக்கும் அல்ல, எங்களுக்கும்
உங்களுக்கும் நடுவே சாட்சிக்காக எங்கள்
பிதாக்கள் உண்டுபண்ணின **கர்த்தருடைய**
பலிபீடத்தின் சாயலான பீடத்தைப் பாருங்
கள் என்று சொல்லலாம் என்றோம். நம்மு 29
டைய தேவனாகிய **கர்த்தரின்** வாசஸ்தலத்
திற்கு முன்பாக இருக்கிற அவருடைய பலி
பீடத்தைத் தவிர, நாங்கள் சர்வாங்க தகனத்
திற்கும், போஜனபலிக்கும், மற்றப் பலிக்கும்
வேறொரு பீடத்தைக் கட்டுகிறதினாலே, **கர்த்**
**தருக்கு** விரோதமாய்க் கலகம்பண்ணுவதும்,
இன்று **கர்த்தரைப்** பின்பற்றாதபடிக்கு விலகு
வதும், எங்களுக்குத் தூரமாயிருப்பதாக [9]என்
றார்கள்.
ரூபன் புத்திரரும் காத் புத்திரரும் மனாசே 30
புத்திரரும் சொல்லுகிற வார்த்தைகளை ஆசாரி
யனாகிய பினெகாசும், அவனோடே இருந்த
சபையின் பிரபுக்களும், இஸ்ரவேலுடைய
ஆயிரவரின் தலைவரும் கேட்டபோது, அது
அவர்கள் பார்வைக்கு நன்றாயிருந்தது. அப் 31
பொழுது ஆசாரியனான எலெயாசாரின் குமா
ரனாகிய பினெகாஸ் ரூபன் புத்திரரையும்
காத் புத்திரரையும் மனாசே புத்திரரையும்
நோக்கி: நீங்கள் **கர்த்தருக்கு** விரோதமாய்
அப்படிக்கொத்த துரோகத்தைச் செய்யாதிருக்
கிறதினாலே, **கர்த்தர்** நம்முடைய நடுவே
இருக்கிறார் என்பதை இன்று அறிந்திருக்கி
றோம்; [10]இப்பொழுது இஸ்ரவேல் புத்திரரைக்
**கர்த்தரின்** கைக்குத் தப்புவித்தீர்கள் என்றான்.
ஆசாரியனான எலெயாசாரின் குமாரனாகிய 32
பினெகாசும், பிரபுக்களும், கீலேயாத் தேசத்
தில் இருக்கிற ரூபன் புத்திரரையும் காத் புத்
திரரையும் விட்டு, கானான்தேசத்திற்கு இஸ்ர
வேல் புத்திரரிடத்தில் திரும்பிவந்து, அவர்க
ளுக்கு மறுசெய்தி சொன்னார்கள். அந்தச் 33
செய்தி இஸ்ரவேல் புத்திரரின் பார்வைக்கு
நன்றாயிருந்தது; ஆகையால் ரூபன் புத்திர
ரும் காத் புத்திரரும் குடியிருக்கிற தேசத்தை
அழித்துவிட, அவர்கள்மேல் யுத்தத்திற்குப்
புறப்படுவோம் என்கிற பேச்சை விட்டு,
இஸ்ரவேல் புத்திரர் தேவனை [11]ஸ்தோத்திரித்
தார்கள். **கர்த்தரே** தேவன் என்பதற்கு அந் 34
தப் பீடம் நமக்குள்ளே சாட்சியாயிருக்கும்
என்று சொல்லி, ரூபன் புத்திரரும் காத் புத்
திரரும் அதற்கு *ஏத் என்று பேரிட்டார்கள்.
**கர்த்தர்** இஸ்ரவேலைச் சுற்றிலும் இருந்த **23**
அவர்களுடைய எல்லாச் சத்துருக்களாலும்

[1] எண். 25. 3, 4
[2] எண். 16. 22
[3] 18. 1
[4] 7. 1, 5
[5] உபா. 10. 17. சங். 95. 3. தானி. 2. 47. 1 இரா. 8. 39. யோபு 23. 10. எரே. 12. 3. யோ. 2. 24, 25. 2 கொ. 11. 11, 31
[6] உபா. 18. 19. 1 சாமு. 20. 16
[7] உபா. 12. 5. ழ
[8] ஆதி. 31. 48
[9] ஆதி. 44. 7, 17. உபா. 12. 13, 14
[10] லேவி. 26. 11, 12. சகரி. 8. 23. 1 கொ. 14. 25
[11] 1 நாளா. 29. 20. நெகே. 8. 6. தானி. 2. 19. எபே. 1. 3
* சாட்சி. 24. 27

யுத்தமில்லாதபடிக்கு இளைப்பாறப்பண்ணி
அநேகநாள் சென்றபின்பு, [1]யோசுவா வயது
2 சென்று முதிர்ந்தவனானபோது, யோசுவா
இஸ்ரவேலின் மூப்பரையும், தலைவரையும்,
நியாயாதிபதிகளையும், அதிபதிகளையும், மற்ற
எல்லாரையும் அழைப்பித்து, [2]அவர்களை
நோக்கி: நான் வயதுசென்று முதிர்ந்தவனா
3 னேன். உங்கள் தேவனாகிய **கர்த்தர்** உங்க
ளுக்கு முன்பாக இந்தச் சகல ஜாதிகளுக்கும்
செய்த யாவையும் நீங்கள் கண்டீர்கள்; உங்கள்
தேவனாகிய **கர்த்தர்** தாமே [3]உங்களுக்காக யுத்
4 தம்பண்ணினார். பாருங்கள், யோர்தான்
முதல் நான் நிர்மூலமாக்கினவைகளும், மேற்
கிலுள்ள பெரிய சமுத்திரமட்டும் இன்னும்
மீதியாயிருக்கிறவைகளுமான சகல ஜாதிக
ளின் தேசத்தையும் சீட்டுப்போட்டு; உங்க
ளுக்கு, உங்கள் கோத்திரங்களுக்குத் தக்கதாய்,
5 சுதந்தரமாகப் பங்கிட்டேன். உங்கள் தேவ
னாகிய **கர்த்தர்** உங்களுக்குச் சொன்னபடியே,
[4]நீங்கள் அவர்களுடைய தேசத்தைக் கட்டிக்
கொள்ளும்படிக்கு, உங்கள் தேவனாகிய **கர்த்**
**தர்** தாமே அவர்களை உங்களுக்கு முன்பாகத்
துரத்தி, உங்கள் பார்வையினின்று அகற்றிப்
6 போடுவார். ஆகையால், மோசேயின் நியா
யப்பிரமாண புஸ்தகத்தில் எழுதியிருக்கிறதை
விட்டு, வலதுபுறமாகிலும் இடதுபுறமாகிலும்
விலகிப்போகாமல், [5]அதையெல்லாம் கைக்
கொள்ளவும் செய்யவும் திர்ணயம் பண்ணிக்
7 கொள்ளுங்கள். உங்களுக்குள்ளே மீதியாயி
ருக்கிற இந்த ஜாதிகளோடு கலவாமலும்,
[6]அவர்களுடைய தேவர்களின் பேரை நினை
யாமலும், அவைகளைக்கொண்டு ஆணையிடாம
லும், அவைகளைச் சேவியாமலும், பணிந்து
கொள்ளாமலும் இருக்கும்படி எச்சரிக்கையா
8 யிருங்கள். இந்நாள்மட்டும் நீங்கள் செய்தது
போல, உங்கள் தேவனாகிய **கர்த்தரைப்** [7]பற்
9 றிக்கொண்டிருங்கள். **கர்த்தர்** உங்களுக்கு
முன்பாகப் பெரியவைகளும் பலத்தவைகளு
மான ஜாதிகளைத் துரத்தியிருக்கிறார்; இந்நாள்
மட்டும் ஒருவரும் உங்களுக்கு முன்பாக நிற்க
10 வில்லை. உங்களில் ஒருவன் ஆயிரம்பேரைத்
துரத்துவான்; [8]உங்கள் தேவனாகிய **கர்த்தர்**
உங்களுக்குச் சொன்னபடி, [9]அவர்தாமே உங்
11 களுக்காக யுத்தம்பண்ணுகிறார். ஆகையால்,
உங்கள் தேவனாகிய **கர்த்தரில்** அன்புகூரும்
படி, உங்கள் ஆத்துமாக்களைக்குறித்து மிகவும்
12 எச்சரிக்கையாயிருங்கள். நீங்கள் பின்வாங்
கிப்போய், [10]உங்களுக்குள்ளே மீதியாயிருக்
கிற இந்த ஜாதிகளைச் சேர்ந்து, அவர்களோடே
சம்பந்தங்கலந்து, நீங்கள் அவர்களிடத்திலும்
அவர்கள் உங்களிடத்திலும் உறவாடினால்,
13 உங்கள் தேவனாகிய **கர்த்தர்** இனி இந்த ஜாதி
களை உங்களுக்கு முன்பாகத் துரத்திவிடமாட்
டார் என்றும், [11]உங்கள் தேவனாகிய **கர்த்தர்**
உங்களுக்குக் கொடுத்த இந்த நல்ல தேசத்தி
லிருந்து அழிந்துபோகுமட்டும், அவர்கள் உங்
களுக்குக் கண்ணியாகவும், [12]வலையாகவும், உங்
கள் விலாக்களுக்குச் சவுக்காகவும், உங்கள்
கண்களுக்கு முள்ளுகளாகவும் இருப்பார்கள்
என்றும் நிச்சயமாய் அறியுங்கள். இதோ, 14
இன்று நான் பூலோகத்தார் எல்லாரும் போ
கிற வழியே போகிறேன்; [13]உங்கள் தேவனா
கிய **கர்த்தர்** உங்களுக்காகச் சொன்ன நல்
வார்த்தைகளிலெல்லாம் ஒரு வார்த்தையும்
தவறிப்போகவில்லை என்பதை உங்கள் முழு
இருதயத்தாலும் உங்கள் முழு ஆத்துமாவாலும்
அறிந்திருக்கிறீர்கள்; [14]அவைகளெல்லாம் உங்
களுக்கு நிறைவேறிற்று; அவைகளில் ஒரு
வார்த்தையும் தவறிப்போகவில்லை. இப்பொ 15
ழுதும் உங்கள் தேவனாகிய **கர்த்தர்** உங்களோ
டே சொன்ன நல்ல காரியமெல்லாம் உங்களி
டத்திலே எப்படி நிறைவேறிற்றோ, [15]அப்படி
யே, உங்கள் தேவனாகிய **கர்த்தர்** உங்களுக்
குக் கட்டளையிட்ட அவருடைய உடன்படிக்
கையை நீங்கள் மீறி, அந்நிய தேவர்களைச்
சேவித்து, அவைகளைப் பணிந்துகொள்ளுங்
காலத்தில், உங்கள் தேவனாகிய **கர்த்தர்** உங் 16
களுக்குக் கொடுத்த இந்த நல்ல தேசத்திலி
ருந்து உங்களை நிர்மூலமாக்குமட்டும், **கர்த்தர்**
உங்கள்மேல் சகல தீமையான காரியங்களையும்
வரப்பண்ணுவார்; **கர்த்தருடைய** கோபம் உங்
கள்மேல் பற்றியெரியும்; [16]அவர் உங்களுக்குக்
கொடுத்த நல்ல தேசத்திலிருந்து நீங்கள் சீக்கி
ரமாய் அழிந்துபோவீர்கள் என்றான்.

பின்பு யோசுவா இஸ்ரவேலின் கோத் **24**
திரங்களையெல்லாம் சீகேமிலே [17]கூடிவரப்
பண்ணி, இஸ்ரவேலின் மூப்பரையும், தலை
வரையும், நியாயாதிபதிகளையும், அதிபதிகளை
யும் வரவழைத்தான்; அவர்கள் தேவனுடைய
சந்நிதியில் [18]வந்து நின்றார்கள். அப்பொழுது 2
யோசுவா சகல ஜனங்களையும் நோக்கி: இஸ்ர
வேலின் தேவனாகிய **கர்த்தர்** சொல்லுகிறது
என்னவென்றால்: பூர்வத்திலே உங்கள் பிதாக்
களாகிய ஆபிரகாமுக்கும் நாகோருக்கும் தகப்
பனான தேராகு என்பவன், நதிக்கு அப்புறத்
திலே குடியிருந்தபோது [19]அவர்கள் வேறே
தேவர்களைச் சேவித்தார்கள். நான் நதிக்கு 3
அப்புறத்தில் [20]இருந்த உங்கள் தகப்பனாகிய
ஆபிரகாமை அழைத்துக்கொண்டுவந்து, அவ
னைக் கானான்தேசமெங்கும் சஞ்சரிக்கச்
செய்து, அவன் சந்ததியைத் திரட்சியாக்கி,
அவனுக்கு ஈசாக்கைக் [21]கொடுத்தேன். ஈசாக் 4
குக்கு யாக்கோபையும் ஏசாவையும் [22]கட்டளை
யிட்டு, ஏசாவுக்குச் சேயீர் [23]மலைத்தேசத்தைச்
சுதந்தரிக்கும்படி கொடுத்தேன்; யாக்கோபும்
[24]அவன் பிள்ளைகளுமோ எகிப்துக்குப் போ
னார்கள். நான் மோசேயையும் ஆரோனையும் 5
அனுப்பி, எகிப்தியரை வாதித்தேன்; [25]அப்
படி அவர்கள் நடுவிலே நான் செய்தபின்பு
உங்களைப் புறப்படப்பண்ணினேன். நான் 6
உங்கள் பிதாக்களை எகிப்திலிருந்து புறப்ப
டப்பண்ணினபோது, சமுத்திரக்கரைக்கு வந்
தீர்கள்; எகிப்தியர் இரதங்களோடும் குதிரை
வீரரோடும் உங்கள் பிதாக்களைச் சிவந்த சமுத்

[1] 22. 4. 13. 1
[2] உபா. 31. 28
[3] யாத். 14. 14. சங். 44. 3
[4] யாத். 23. 30. எண். 33. 53. உபா. 11. 23
[5] உபா. 5. 32
[6] உபா. 7. 2, 3. சங். 16. 4. ஓசி. 2. 17. செப். 1. 4-6
[7] உபா. 10. 20. 11. 22, 23
[8] லேவி. 26. 8. நியா. 15. 15
[9] யாத். 23. 27
[10] சங். 125. 5. எசே. 1. 4. செப். 1. 6. எபி. 10. 38, 39. 2 பே. 2. 20, 21
[11] நியா. 2. 2, 3
[12] 1 இரா. 11. 4
[13] எபி. 9. 27
[14] 21. 45. லூ. 21. 33
[15] லேவி. 26. 14-16. உபா. 28. 15, 16, 36
[16] 2 இரா. 24. 20
[17] ஆதி. 35. 4. யோசு. 23. 2
[18] 1 சாமு. 10. 19
[19] ஆதி. 11. 26, 31; 31. 53
[20] ஆதி. 12. 1. அப். 7. 2, 3
[21] ஆதி. 21. 2, 3. சங். 127. 3
[22] ஆதி. 25. 24-26
[23] ஆதி. 36. 8. உபா. 2. 5
[24] ஆதி. 46. 1, 7
[25] யாத். 7—12. அதி.

7 திரமட்டும் [1]பின்தொடர்ந்தார்கள். அவர்கள்
கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டார்கள்; அப்
பொழுது அவர் உங்களுக்கும் எகிப்தியருக்
கும் நடுவே அந்தகாரத்தை வரப்பண்ணி, சமுத்
திரத்தை அவர்கள்மேல் புரளச்செய்து, அவர்
களை மூடிப்போட்டார்; நான் எகிப்திலே செய்
ததை உங்கள் கண்கள் கண்டது; பின்பு வனாந்
8 தரத்தில் அநேகநாள் சஞ்சரித்தீர்கள். அதற்
குப்பின்பு உங்களை யோர்தானுக்கு அப்புறத்
திலே குடியிருந்த எமோரியரின் தேசத்திற்
குக் கொண்டுவந்தேன்; அவர்கள் உங்களோடு
யுத்தம்பண்ணுகிறபோது, அவர்களை உங்கள்
கையில் ஒப்புக்கொடுத்தேன்; [2]அவர்கள் தேசத்
தைக் கட்டிக்கொண்டீர்கள்; அவர்களை உங்
9 கள் முகத்தினின்று அழித்துவிட்டேன். அப்
பொழுது சிப்போரின் குமாரன் பாலாக் [3]என்
னும் மோவாபியரின் ராஜா எழும்பி, இஸ்ரா
வேலோடு யுத்தம்பண்ணி, உங்களைச் சபிக்கும்
படி, பேயோரின் குமாரனாகிய பிலேயாமை
10 அழைத்தனுப்பினான். பிலேயாமுக்குச் செவி
கொடுக்க எனக்குச் சித்தமில்லாததினாலே, [4]அ
வன் உங்களை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்தான்,
இவ்விதமாய் உங்களை அவன் கைக்குத் தப்பு
11 வித்தேன். பின்பு யோர்தானைக் கடந்து
எரிகோவுக்கு வந்தீர்கள்; [5]எரிகோவின் குடி
களும், எமோரியரும், பெரிசியரும், கானானி
யரும், ஏத்தியரும், கிர்காசியரும், ஏவியரும்,
எபூசியரும், உங்களுக்கு விரோதமாக யுத்தம்
பண்ணினார்கள்; ஆனாலும் அவர்களை நான்
உங்கள் கையிலே ஒப்புக்கொடுத்தேன்.
12 எமோரியரின் இரண்டு ராஜாக்களையும் உங்
கள் பட்டயத்தாலும் உங்கள் வில்லாலும் நீங்
கள் துரத்தவில்லை; நான் உங்களுக்கு முன்
பாகக் குளவிகளை அனுப்பினேன்; [6]அவை
கள் அவர்களை உங்கள் முன்னின்று துரத்தி
13 விட்டது. அப்படியே நீங்கள் பண்படுத்தாத
தேசத்தையும், [7]நீங்கள் கட்டாத பட்டணங்க
ளையும் உங்களுக்குக் கொடுத்தேன், அவைக
ளில் குடியிருக்கிறீர்கள்; நீங்கள் நடாத திரா
ட்சத்தோட்டங்களின் பலனையும், ஒலிவத்
தோப்புகளின் பலனையும் புசிக்கிறீர்கள் என்
14 றார். ஆகையால் நீங்கள் கர்த்தருக்குப் பயந்து,
அவரை உத்தமமும் உண்மையுமாய்ச் சேவித்
து, [8]உங்கள் பிதாக்கள் நதிக்கு அப்புறத்தி
லும் எகிப்திலும் சேவித்த தேவர்களை அகற்
15 றிவிட்டு, [9]கர்த்தரைச் சேவியுங்கள். கர்த்த
ரைச் சேவிக்கிறது உங்கள் பார்வைக்கு ஆகா
ததாய்க் கண்டால், [10]பின்னை யாரைச் சேவிப்
பீர்கள் என்று இன்று தெரிந்துகொள்ளுங்
கள்; நதிக்கு அப்புறத்தில் உங்கள் பிதாக்கள்
சேவித்த தேவர்களைச் சேவிப்பீர்களோ? நீங்
கள் வாசம்பண்ணுகிற தேசத்துக் குடிகளா
கிய எமோரியரின் தேவர்களைச் சேவிப்பீர்க
ளோ? [11]நானும் என் வீட்டாருமோவென்றால்,
16 கர்த்தரையே சேவிப்போம் என்றான். அப்
பொழுது ஜனங்கள் பிரதியுத்தரமாக: வேறே
தேவர்களைச் சேவிக்கும்படி, கர்த்தரை விட்டு
விலகுகிற காரியம் எங்களுக்குத் தூரமாயிருப்
பதாக. நம்மையும் நம்முடைய பிதாக்களை 17
யும் அடிமைத்தன வீடாகிய எகிப்துதேசத்தி
லிருந்து புறப்படப்பண்ணி, நம்முடைய கண்
களுக்கு முன்பாகப் பெரிய அடையாளங்க
ளைச் செய்து, நாம் நடந்த எல்லா வழியிலும்,
நாம் கடந்துவந்த எல்லா ஜனங்களுக்குள்ளும்
நம்மைக் காப்பாற்றினவர் நம்முடைய தேவனா
கிய கர்த்தர்தாமே. தேசத்திலே குடியிருந்த 18
எமோரியர் முதலான சகல ஜனங்களையும் கர்த்
தர் நமக்கு முன்பாகத் துரத்தினாரே; ஆகை
யால் நாங்களும் கர்த்தரைச் சேவிப்போம்,
[12]அவரே நம்முடைய தேவன் என்றார்கள்.
யோசுவா ஜனங்களை நோக்கி: நீங்கள் கர்த் 19
தரை சேவிக்கமாட்டீர்கள்; [13]அவர் பரிசுத்த
முள்ள தேவன், [14]அவர் எரிச்சலுள்ள தேவன்;
[15]உங்கள் மீறுதலையும் உங்கள் பாவங்களையும்
மன்னியார். [16]கர்த்தர் உங்களுக்கு நன்மை 20
செய்திருக்க, நீங்கள் கர்த்தரை விட்டு, [17]அந்
நிய தேவர்களைச் சேவித்தால், அவர் திரும்பி
உங்களுக்குத் தீமைசெய்து, உங்களை நிர்மூல
மாக்குவார் என்றான். ஜனங்கள் யோசுவா 21
வை நோக்கி: அப்படியல்ல, நாங்கள் கர்த்த
ரையே சேவிப்போம் என்றார்கள். அப்பொ 22
ழுது யோசுவா ஜனங்களை நோக்கி: கர்த்த
ரைச்சேவிக்கும்படி நீங்கள் அவரைத் தெரிந்து
கொண்டதற்கு நீங்களே உங்களுக்குச் சாட்சி
கள் என்றான். [18]அதற்கு அவர்கள்: நாங்களே
சாட்சிகள் என்றார்கள். அப்பொழுது அவன்: 23
அப்படியானால், இப்பொழுதும் உங்கள் நடு
வே இருக்கிற அந்நிய தேவர்களை அகற்றி
விட்டு, [19]உங்கள் இருதயத்தை இஸ்ரவேலின்
தேவனாகிய கர்த்தருக்கு நேராகத் திருப்புங்கள்
என்றான். அப்பொழுது ஜனங்கள் யோசு 24
வாவை நோக்கி: நம்முடைய தேவனாகிய கர்
த்தரையே சேவித்து, [20]அவர் சத்தத்திற்கே
கீழ்ப்படிவோம் என்றார்கள். அந்தப்படி யோ 25
சுவா அந்நாளில் சீகேமிலே ஜனங்களோடே
உடன்படிக்கைபண்ணி, [21]அவர்களுக்கு அ
தைப் பிரமாணமும் நியாயமுமாக ஏற்படுத்தி
னான். இந்த வார்த்தைகளை யோசுவா தே 26
வனுடைய நியாயப்பிரமாண புஸ்தகத்தில்
எழுதி, [22]ஒரு பெரிய கல்லை எடுத்து, அதை
அங்கே கர்த்தருடைய பரிசுத்த ஸ்தலத்தின்
அருகில் இருந்த கர்வாலி மரத்தின்கீழ் நாட்டி,
எல்லா ஜனங்களையும் நோக்கி: இதோ, இந் 27
தக் கல் நமக்குள்ளே [23]சாட்சியாயிருக்கக்கட
வது; கர்த்தர் நம்மோடே சொன்ன எல்லா
வார்த்தைகளையும் [24]இது கேட்டது; நீங்கள்
உங்கள் தேவனுக்கு விரோதமாகப் பொய்
சொல்லாதபடிக்கு, இது உங்களுக்குச் சாட்
சியாயிருக்கக்கடவது என்று சொல்லி, யோ 28
சுவா ஜனங்களை அவரவர் சுதந்தரத்திற்கு [25]அ
னுப்பிவிட்டான்.

இந்தக் காரியங்கள் நடந்தபின்பு, நூனின் 29
குமாரனாகிய யோசுவா என்னும் கர்த்தருடைய
ஊழியக்காரன் நூற்றுப்பத்து [26]வயதுள்ளவ

[1] யாத். 13, 14. ஆதி.
[2] எண். 21. 21-35
[3] எண். 22. 5. ழ
[4] எண். 22. 5. உபா. 13. 4, 5
[5] 3. 14-17
[6] யாத். 23. 28. உபா. 7. 20
[7] உபா. 6. 10, 11
[8] 1 சாமு. 12. 24. ஆதி. 17. 1. உபா. 18. 13. யோ. 4. 24. 2 கொ. 1. 12. எபே. 6. 24
[9] எசே. 20. 18
[10] ரூத். 1. 15, 16. 1 இரா. 18. 21. யோ. 6. 67
[11] சங். 101. 2; 119. 106
[12] சங். 116. 16. லூ. 1. 71
[13] மத். 6. 24
[14] லேவி. 19. 2. ஏசா. 6. 3
[15] யாத். 20. 5
[16] யாத். 34. 7
[17] 1 நாளா. 28. 9. எஸ்றா 8. 22. ஏசா. 65. 11, 12. அப். 7. 42
[18] உபா. 26. 17. சங். 119. 173
[19] ஆதி. 35. 2. நியா. 10. 16. 1 சாமு. 7. 3
[20] உபா. 5. 28, 29
[21] யாத். 15. 25
[22] நியா. 9. 6. ஆதி. 28. 18
[23] ஆதி. 31. 48
[24] உபா. 32. 1
[25] நியா. 2. 6
[26] நியா. 2. 8

30 ஞய் மரணமடைந்தான். அவனை எப்பிராயீ
மின் மலைத்தேசத்திலுள்ள காயாஸ் மலைக்கு
வடக்கே இருக்கிற திம்னாத்சேரா [1]என்னும்
அவனுடைய சுதந்தரத்தின் எல்லைக்குள்ளே
31 அடக்கம்பண்ணினார்கள். யோசுவா உயிரோ
டிருந்த சகல நாட்களிலும், கர்த்தர் இஸ்ரவே
லுக்குச் செய்த அவருடைய கிரியைகள் யா
வையும் [2]அறிந்து யோசுவாவுக்குப் பின்பு
வெகுநாள் உயிரோடிருந்த மூப்பருடைய சகல
நாட்களிலும், இஸ்ரவேலர் கர்த்தரைச்சேவித்
32 தார்கள். இஸ்ரவேல் புத்திரர் எகிப்திலே
இருந்து கொண்டுவந்த யோசேப்பின் எலும்
புகளை, அவர்கள் சீகேமிலே யாக்கோபு சீகே
மின் தகப்பனாகிய எமோரியருடைய புத்திர
ரின் கையில் நூறுவெள்ளிக்காசுக்குக் கொண்ட
நிலத்தின் பங்கிலே அடக்கம்பண்ணினார்கள்;
[3]அந்த நிலம் யோசேப்பின் புத்திரருக்குச் சுத
ந்தரமாயிற்று. ஆரோனின் குமாரனாகிய 33
எலெயாசாரும் மரணமடைந்தான், [4]அவன்
குமாரனாகிய பினெகாசுக்கு எப்பிராயீமின்
மலைத்தேசத்திலேகொடுக்கப்பட்டமேட்டிலே
அவனை அடக்கம் பண்ணினார்கள்.

[1] 19. 50. நியா. 2. 9
[2] உபா. 11. 2, 7
[3] ஆதி. 33. 19; 50. 25. எபி. 11. 22
[4] யாத். 6. 25. நியா. 20. 28

# JUDGES

# நியாயாதிபதிகளின் புஸ்தகம்

1 யோசுவா மரித்தபின் இஸ்ரவேல் புத்
திரர் கர்த்தரை நோக்கி: [1]கானானியரை
எதிர்த்து யுத்தம்பண்ணும்படி, எங்களில் யார்
முதல்முதல் எழுந்து புறப்படவேண்டும் என்று
2 கேட்டார்கள். அதற்குக் கர்த்தர்: யூதா எழு
ந்து புறப்படக்கடவன்; [2]இதோ, அந்தத் தே
சத்தை அவன் கையிலே ஒப்புக்கொடுத்தேன்
3 என்றார். அப்பொழுது யூதா தன் சகோதர
னாகிய சிமியோனை நோக்கி: நாம் கானானிய
ரோடே யுத்தம்பண்ண நீ என் சுதந்தரப் பங்
குவீதத்தில் என்னோடேகூட எழுந்துவா;
உன் சுதந்தரப் பங்குவீதத்தில் நானும் உன்
னோடேகூட வருவேன் என்றான்; அப்படியே
சிமியோன் அவனோடேகூடப் போனான்.
4 யூதா எழுந்துபோனபோது, கர்த்தர் கானானி
யரையும் பெரிசியரையும் அவர்கள் கையிலே
ஒப்புக்கொடுத்தார்; அவர்கள் பேசேக்கிலே
5 [3]பதினாயிரம்பேரை வெட்டினார்கள். பேசேக்
கிலே அதோனிபேசேக்கைக் கண்டு, அவ
னோடு யுத்தம்பண்ணி, கானானியரையும் பெரி
6 சியரையும் வெட்டினார்கள். அதோனிபே
சேக் ஓடிப்போகையில், அவனைப் பின்தொ
டர்ந்து பிடித்து, அவன் கைகால்களின் பெரு
7 விரல்களைத் தறித்துப்போட்டார்கள். அப்
பொழுது அதோனிபேசேக்: எழுபது ராஜாக்
கள், கைகால்களின் பெருவிரல்கள் தறிக்கப்
பட்டவர்களாய், என் மேசையின்கீழ் விழுந்த
தைப் பொறுக்கித் தின்றார்கள்; நான் எப்படிச்
செய்தேனோ, [4]அப்படியே தேவன் எனக்கும்
செய்து சரிக்கட்டினார் என்றான். அவனை எரு
சலேமுக்குக் கொண்டுபோனார்கள்; அங்கே
அவன் செத்துப்போனான்.
8 யூதாவின் புத்திரர் எருசலேமின்மேல் யுத்
தம்பண்ணி, அதைப் பிடித்து, அதிலுள்ளவர்
களைப் பட்டயக்கருக்கினால் வெட்டி, [5]பட்ட
ணத்தை அக்கினிக்கு இரையாக்கிவிட்டார்
9 கள். பின்பு யூதாவின் புத்திரர் மலைத்தேசத்
திலேயும், தெற்கேயும், பள்ளத்தாக்குகளிலே
யும் குடியிருக்கிற கானானியரோடு [6]யுத்தம்
10 பண்ணப் புறப்பட்டுப்போனார்கள். அப்படி
யே யூதா கோத்திரத்தார் எபிரோனிலே [7]குடி
யிருக்கிற கானானியருக்கு விரோதமாய்ப்
போய், சேசாய், அகிமான், தல்மாய் என்ப

[1] எண். 27. 21. நியா. 20. 18
[2] ஆதி. 49. 8
[3] 1 சாமு. 11. 8
[4] லேவி. 24. 19. 1 சாமு. 15. 33. எசா. 33. 1. மத். 7. 1, 2. யாக். 2. 13
[5] யோசு. 15. 63
[6] 11. 21
[7] 15. 13, 14
[8] யோசு. 15. 15. [illegible]
* யோசு. 15. 19. காண்க. ஆதி. 33. 11. 1 பே. 3. 9
[9] உபா. 34. 3
[10] யோசு. 11. 22
[11] 2 இரா. 18. 7. சங். 60. 12. பிர. 9. 11
[12] யோசு. 17. 16. சங். 46. 9

வர்களை வெட்டிப்போட்டார்கள். முற்காலத்
தில் அந்த எபிரோனுக்கு கீரியாத்அர்பா
என்று பேர். அங்கேயிருந்து தெபீரின் குடி 11
களுக்கு விரோதமாகப் போனார்கள்; முற்கா
லத்தில் தெபீருக்கு கீரியாத்செப்பேர் என்று
பேர். அப்பொழுது காலேப்: கீரியாத்செப் 12
பேரை சங்காரம்பண்ணிப் பிடிக்கிறவனுக்கு
என் குமாரத்தியாகிய அக்சாளை [8]விவாகம்
பண்ணிக்கொடுப்பேன் என்றான். அப்பொ 13
ழுது காலேபுடைய தம்பியாகிய கேனாசின்
குமாரன் ஒத்னியேல் அதைப் பிடித்தான்;
ஆகையால் தன் குமாரத்தியாகிய அக்சாளை
அவனுக்கு விவாகம்பண்ணிக்கொடுத்தான்.
அவள் புறப்படுகையில், என் தகப்பனிடத் 14
தில் ஒரு வயல் வெளியைக் கேட்கவேண்டும்
என்று அவனிடத்தில் உத்தரவு பெற்றுக்கொ
ண்டு, கழுதையின்மேலிருந்து இறங்கினாள்.
காலேப் அவளை நோக்கி: உனக்கு என்ன
வேண்டும் என்றான். அப்பொழுது அவள்: 15
எனக்கு ஒரு *ஆசீர்வாதம் தரவேண்டும்;
வறட்சியான நிலத்தை எனக்குத் தந்தீர்; நீர்ப்
பாய்ச்சலான நிலங்களையும் எனக்குத் தரவே
ண்டும் என்றாள்; அப்பொழுது காலேப்:
மேற்புறத்திலும் கீழ்ப்புறத்திலும் அவளுக்கு
நீர்ப்பாய்ச்சலான நிலங்களைக் கொடுத்தான்.
மோசேயின் மாமனாகிய கேனியனின் புத் 16
திரரும் யூதாவின் புத்திரரோடேகூடப் பே
ரீச்சமரங்களின் [9]பட்டணத்திலிருந்து ஆராத்
திற்குத் தெற்கேயிருக்கிற யூதாவின் வனாந்
தரத்திற்கு வந்து ஜனங்களோடே குடியேறி
னார்கள். யூதா தன் சகோதரனாகிய சிமியோ 17
னோடுங்கூடப் போனான்; அவர்கள் சேப்பாத்
தில் குடியிருக்கிற கானானியரை முறிய அடித்
து, அதைச் சங்காரம்பண்ணி, அந்தப் பட்டண
த்திற்கு ஓர்மா என்று பேரிட்டார்கள். யூதா 18
காசாவையும் அதின் எல்லையையும், [10]அஸ்
கலோனையும் அதின் எல்லையையும், எக்ரோ
னையும் அதின் எல்லையையும் பிடித்தான்.
கர்த்தர் யூதாவோடேகூட இருந்ததினால், 19
[11]மலைத்தேசத்தாரைத் துரத்திவிட்டார்கள்;
பள்ளத்தாக்கின் குடிகளுக்கு இருப்புரதங்கள்
இருந்தபடியினால், [12]அவர்களைத் துரத்தக்கூடா
மற்போயிற்று. மோசே சொன்னபடியே, 20

எபிரோனைக் காலேபுக்குக் கொடுத்தார்கள்;
[1]அவன் அதிலிருந்த ஏனாக்கின் மூன்று குமா
21 ரரையும் துரத்திவிட்டான். பென்யமீன் புத்
திரர் எருசலேமிலே குடியிருந்த எபூசியரை
யும் துரத்திவிடவில்லை; [2]ஆகையால் எபூசியர்
இந்நாள்மட்டும் பென்யமீன் புத்திரரோடே
கூட எருசலேமில் குடியிருக்கிறார்கள்.
22 யோசேப்பின் குடும்பத்தாரும் பெத்தே
லுக்கு விரோதமாய்ப் போனார்கள்; [3]**கர்த்தர்**
23 அவர்களோடேகூட இருந்தார். யோசேப்
பின் புத்திரர் பெத்தேலை வேவுபார்க்க ஆட்
களை அனுப்பினார்கள்; [4]முன்னே அந்தப் பட்
24 டணத்திற்கு லூஸ் என்று பேர். அந்த வே
வுகாரர் பட்டணத்திலிருந்து புறப்பட்டுவரு
கிற ஒரு மனுஷனைக் கண்டு: [5]பட்டணத்திற்
குள் பிரவேசிக்கும் வழியை எங்களுக்குக்
காண்பி, உனக்குத் தயைசெய்வோம் என்றார்
25 கள். அப்படியே பட்டணத்திற்குள் பிரவே
சிக்கும் வழியை அவர்களுக்குக் காண்பித்
தான்; அப்பொழுது அவர்கள் வந்து, பட்ட
ணத்திலுள்ளவர்களைப் பட்டயக்கருக்கினால்
வெட்டி; அந்த மனுஷனையும் அவன் குடும்
26 பத்தையும் விட்டுவிட்டார்கள். அப்பொழுது
அந்த மனுஷன் ஏத்தியரின் தேசத்திற்குப்
போய், ஒரு பட்டணத்தைக் கட்டி, அதற்கு
லூஸ் என்று பேரிட்டான்; அதுதான் இந்
நாள்மட்டும் அதின்பேர்.
27 மனாசே கோத்திரத்தார் பெத்செயான் பட்
டணத்தாரையும் அதற்கு அடுத்த ஊர்களின்
மனுஷரையும், தானாக் பட்டணத்தாரையும்
அதற்கு அடுத்த ஊர்களின் மனுஷரையும்,
தோரின் குடிகளையும் அதற்கு அடுத்த ஊர்க
ளின் மனுஷரையும், இப்லெயாம் பட்டணத்
தாரையும் அதற்கு அடுத்த ஊர்களின் மனுஷ
ரையும், மெகிதோவின் குடிகளையும் அதற்கு
அடுத்த ஊர்களின் மனுஷரையும் துரத்திவிட
வில்லை; [6]கானானியர் அந்தத் தேசத்திலேதா
னே குடியிருக்கவேண்டும் என்று இருந்தார்
28 கள். இஸ்ரவேலர் பலத்தபோது, கானானி
யரை முற்றிலும் துரத்திவிடாமல் பகுதி கட்
டப்பண்ணினார்கள்.
29 எப்பிராயீம் கோத்திரத்தார் கேசேரிலே
குடியிருந்த கானானியரையும் துரத்திவிட
வில்லை; [7]ஆகையால் கானானியர் கேசேரில்
30 அவர்கள் நடுவே குடியிருந்தார்கள். செபு
லோன் கோத்திரத்தார் கித்ரோனின் குடிக
ளையும், நாகலோவின் குடிகளையும் துரத்தி
விடவில்லை, [8]ஆகையால் கானானியர் அவர்
கள் நடுவே குடியிருந்து, பகுதிகட்டுகிறவர்க
31 ளானார்கள். ஆசேர் கோத்திரத்தார் [9]அக்கோ
வின் குடிகளையும், சீதோனின் குடிகளையும்,
அக்லாப், அக்சீப், எல்பா, ஆப்பீப், ரேகோப்
பட்டணங்களின் குடிகளையும் துரத்திவிட
32 வில்லை. ஆசேரியர் தேசத்தின் குடிகளாகிய
கானானியரின் நடுவே குடியிருந்தார்கள்;
33 [10]அவர்களை அவர்கள் துரத்திவிடவில்லை. நப்
தலி கோத்திரத்தார் பெத்ஷிமேசின் குடிகளை

1 யோசு. 14. 9—14
2 யோசு. 15. 63
3 ஆதி. 49. 24
4 ஆதி. 28. 19. யோசு. 7. 2
5 யோசு. 2. 12, 14
6 யோசு. 17. 11-13. [illegible] 7. 21
7 யோசு. 16. 10
8 யோசு. 19. 15
9 யோசு. 19. 24-30
10 சங். 106. 35
11 யோசு. 19. 32-39
12 யோசு. 19. 42
13 ஆதி. 17. 7. சங். 89. 34
14 உபா. 7. 2; 12. 3
15 சங். 106. 34-36
16 யோசு. 23. 13, 33. உபா. 7. 16
* அழுகிறவர்கள்
17 24. 28. ழ
18 யோசு. 24. 30

யும் பெத்தானாத்தின் குடிகளையும் துரத்திவி
டாமல், தேசத்தின் குடிகளாகிய கானானிய
ரின் நடுவே குடியிருந்தார்கள்; [11]பெத்ஷி
மேஸ், பெத்தானாத் பட்டணங்களின் குடி
கள் அவர்களுக்குப் பகுதி கட்டுகிறவர்களா
னார்கள். எமோரியர் தாண் புத்திரரைப் பள் 34
ளத்தாக்கில் இறங்கவொட்டாமல், மலைத்தே
சத்திற்குப் போகும்படி நெருக்கினார்கள்.
எமோரியர் ஏரேஸ் மலைகளிலும் ஆயலோனி 35
லும் சால்பீமிலும் குடியிருக்கவேண்டும் என்று
இருந்தார்கள்; [12]ஆனாலும் யோசேப்பின் குடும்
பத்தாரின் கை பலத்தபடியினால், அவர்களுக்
குப் பகுதிகட்டுகிறவர்களானார்கள். எமோரி 36
யரின் எல்லை அக்கராபீமுக்குப் போகிற மேடு
தொடங்கி அதற்கு அப்புறமும் போயிற்று.
**கர்த்தருடைய** தூதனானவர் கில்காலிலி 2
ருந்து போகீமுக்கு வந்து: நான் உங்களை
எகிப்திலிருந்து புறப்படப்பண்ணி, உங்கள்
பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்தில் நான்
உங்களைக் கொண்டுவந்து விட்டு, உங்களோ
டே பண்ணின என் உடன்படிக்கையை நான்
ஒருக்காலும் [13]முறித்துப்போடுவதில்லை என்
றும், நீங்கள் இந்தத் தேசத்தின் குடிகளோ 2
டே உடன்படிக்கை பண்ணாமல், [14]அவர்கள்
பலிபீடங்களை இடித்துவிடக்கடவீர்கள் என்
றும் சொன்னேன்; ஆனாலும் என் சொல்லைக்
கேளாதேபோனார்கள்; [15]ஏன் இப்படிச் செய்
தீர்கள்? ஆகையால் நான் அவர்களை உங்கள் 3
முகத்திற்கு முன்பாகத் துரத்துவதில்லை என்
றேன்; அவர்கள் உங்களை நெருக்குவார்கள்;
[16]அவர்களுடைய தேவர்கள் உங்களுக்குக்
கண்ணியாவார்கள் என்றார். **கர்த்தருடைய** 4
தூதனானவர் இந்த வார்த்தைகளை இஸ்ரவேல்
புத்திரர் எல்லாரோடும் சொல்லுகையில்,
ஜனங்கள் உரத்த சத்தமிட்டு அழுதார்கள்.
அவ்விடத்திற்குப் *போகீம் என்று பேரிட்டு, 5
அங்கே **கர்த்தருக்குப்** பலியிட்டார்கள்.
யோசுவா இஸ்ரவேல் புத்திரராகிய ஜனங் 6
களை அனுப்பிவிட்டபோது, [17]அவர்கள் தேசத்
தைச் சுதந்தரித்துக்கொள்ள அவரவர் தங்கள்
தங்கள் சுதந்தர வீதத்திற்குப் போனார்கள்.
யோசுவாவின் சகல நாட்களிலும் **கர்த்தர்** 7
இஸ்ரவேலுக்காகச் செய்த அவருடைய பெ
ரிய கிரியைகளையெல்லாம் கண்டவர்களும்,
யோசுவாவுக்குப்பின்பு உயிரோடிருந்தவர்களு
மாகிய மூப்பரின் சகல நாட்களிலும் ஜனங்
கள் **கர்த்தரைச்** சேவித்தார்கள். நூனின் 8
குமாரனாகிய யோசுவா என்னும் **கர்த்தரின்**
ஊழியக்காரன் நூற்றுப்பத்து வயதுள்ளவ
னாய் மரணமடைந்தான். அவனை எப்பிரா 9
யீமின் மலைத்தேசத்திலுள்ள காயாஸ் மலைக்கு
வடக்கேயிருக்கிற அவனுடைய சுதந்தரத்தின்
எல்லையாகிய திம்னாத்ஏரேசிலே [18]அடக்கம்
பண்ணினார்கள். அக்காலத்தில் இருந்த அந் 10
தச் சந்ததியார் எல்லாரும் தங்கள் பிதாக்களு
டன் சேர்க்கப்பட்டபின்பு, **கர்த்தரையும்**,
அவர் இஸ்ரவேலுக்காகச் செய்த கிரியையை

யும் அறியாத வேறொரு சந்ததி [1]அவர்களுக்
குப் பின் எழும்பிற்று.
11 அப்பொழுது இஸ்ரவேல் புத்திரர் **கர்த்த
ரின்** பார்வைக்குப் பொல்லாப்பானதைச்
12 செய்து, பாகால்களைச் சேவித்து, தங்கள்
பிதாக்களை எகிப்து தேசத்திலிருந்து புறப்ப
டப்பண்ணின அவர்களுடைய தேவனாகிய
**கர்த்தரை** விட்டு, [2]தங்களைச் சுற்றிலும் இருக்
கிற ஜனங்களுடைய தேவர்களாகிய அந்நிய
தேவர்களைப் பின்பற்றிப் போய், அவர்களைப்
பணிந்துகொண்டு, **கர்த்தருக்குக்** கோபமூட்டி
13 னார்கள். அவர்கள் **கர்த்தரை** விட்டு, பாகா
லையும் அஸ்தரோத்தையும் சேவித்தார்கள்.
14 அப்பொழுது **கர்த்தர்** இஸ்ரவேலின்மேல்
கோபமூண்டவராகி, [3]அவர்கள் அப்புறம் தங்
கள் சத்துருக்களுக்கு முன்பாக நிற்கக்கூடாத
படி கொள்ளையிடுகிற கொள்ளைக்காரர் கையில்
அவர்களை ஒப்புக்கொடுத்து, [4]அவர்களைச்
சுற்றிலும் இருக்கிற அவர்கள் பகைஞரின்
15 கையிலே விற்றுப்போட்டார். **கர்த்தர்** சொல்
லியபடியும், **கர்த்தர்** அவர்களுக்கு ஆணையிட்
டிருந்தபடியும், அவர்கள் புறப்பட்டுப்போகிற
இடமெல்லாம் **கர்த்தருடைய** கை தீமைக்
கென்றே [5]அவர்களுக்கு விரோதமாயிருந்தது;
16 மிகவும் நெருக்கப்பட்டார்கள். **கர்த்தர்** நியா
யாதிபதிகளை எழும்பப்பண்ணினார்; [6]அவர்
கள் கொள்ளையிடுகிறவர்களின் கைக்கு அவர்
17 களை நீங்கலாக்கி இரட்சித்தார்கள். அவர்கள்
தங்கள் நியாயாதிபதிகளின் சொல்லைக் கே
ளாமல், [7]அந்நிய தேவர்களைப் பின்பற்றிச்
சோரம்போய், அவைகளைப் பணிந்துகொண்
டார்கள்; தங்கள் பிதாக்கள் **கர்த்தரின்** கற்ப
னைகளுக்குக் கீழ்ப்படிந்து நடந்த வழியை
அவர்கள் சீக்கிரமாய் விட்டு விலகி, அவர்கள்
18 செய்தபடி செய்யாமற்போனார்கள். **கர்த்தர்**
அவர்களுக்கு நியாயாதிபதிகளை எழும்பப்
பண்ணுகிறபோது, **கர்த்தர்** நியாயாதிபதியோ
டேகூட இருந்து, [8]அந்த நியாயாதிபதியின்
நாட்களிலெல்லாம் அவர்கள் சத்துருக்களின்
கைக்கு அவர்களை நீங்கலாக்கி இரட்சித்துவரு
வார்; அவர்கள் தங்களை இறுகப்பிடித்து ஒடுக்
குகிறவர்களினிமித்தம் தவிக்கிறதினாலே, [9]**கர்
19 த்தர்** மனஸ்தாபப்படுவார். நியாயாதிபதி மர
ணமடைந்த உடனே, அவர்கள் திரும்பி, அந்
நிய தேவர்களைப் பின்பற்றவும் சேவிக்கவும்
பணிந்துகொள்ளவும், தங்கள் பிதாக்களைப்
பார்க்கிலும் கேடாய் நடந்து, தங்கள் கிரித்தி
யங்களையும் தங்கள் முரட்டாட்டமான வழி
20 யையும் விடாதிருப்பார்கள். ஆகையால் **கர்த்
தர்** இஸ்ரவேலின்மேல் கோபமூண்டவராகி:
[10]இந்த ஜனங்கள் தங்கள் பிதாக்களுக்கு நான்
கற்பித்த என் உடன்படிக்கையை மீறி என்
21 சொல்லைக் கேளாதேபோனபடியால், யோசு
வா மரித்துப் பின்வைத்துப்போன ஜாதிகளில்
ஒருவனையும், நான் இனி அவர்களுக்கு முன்
22 பாகத் துரத்திவிடாதிருப்பேன். அவர்கள்
பிதாக்கள் **கர்த்தரின்** வழியைக் கவனித்தது
போல, அவர்கள் அதிலே நடக்கும்படிக்கு,
அதைக் கவனிப்பார்களோ இல்லையோ என்
று, [11]அவர்களைக்கொண்டு இஸ்ரவேலைச் சோ
திப்பதற்காக அப்படிச் செய்வேன் என்றார்.
அதற்காகக் **கர்த்தர்** அந்த ஜாதிகளை யோசுவா 23
வின் கையில் ஒப்புக்கொடாமலும், அவைக
ளைச் சீக்கிரமாய்த் துரத்திவிடாமலும் விட்டு
வைத்தார்.

கானான்தேசத்தில் நடந்த சகல யுத்தங்களை **3**
யும் அறியாதிருந்த இஸ்ரவேலராகிய அனை
வரையும் சோதிப்பதற்காகவும், இஸ்ரவேல் 2
புத்திரரின் சந்ததியாரும் அதற்குமுன் யுத்தஞ்
செய்ய அறியாதிருந்தவர்களும் அவைகளை
அறியும்படி பழக்குவிப்பதற்காகவும், **கர்த்தர்**
விட்டுவைத்த ஜாதிகள் யாரென்றால்: பெ 3
லிஸ்தரின் ஐந்து அதிபதிகளும், [12]சகல கானா
னியரும், சீதோனியரும், பாகால்எர்மோன்
துவக்கி ஆமாத்திற்குள் பிரவேசிக்கும்வரைக்
கும் லீபனோனின் மலைகளிலே குடியிருக்கிற
ஏவியருமே. **கர்த்தர்** மோசேயைக்கொண்டு 4
தங்கள் பிதாக்களுக்கு விதித்த கற்பனைகளுக்கு
இஸ்ரவேலர் கீழ்ப்படிவார்களோ என்று அறி
யும்படி, இஸ்ரவேலரை அவர்களாலே சோ
திப்பதற்காக அவர்கள் விடப்பட்டிருந்தார்கள்.

இப்படி இஸ்ரவேல் புத்திரர், [13]கானானியர், 5
ஏத்தியர், எமோரியர், பெரிசியர், ஏவியர், எபூ
சியராகிய இவர்கள் நடுவே குடியிருந்து, அவர் 6
களுடைய குமாரத்திகளை விவாகம்பண்ணி,
தங்களுடைய குமாரத்திகளை அவர்கள் குமார
ருக்குக் கொடுத்து, [14]அவர்கள் தேவர்களைச்
சேவித்தார்கள். இப்படி இஸ்ரவேல் புத்தி 7
ரர் **கர்த்தரின்** பார்வைக்குப் பொல்லாப்பான
தைச் செய்து, தங்கள் தேவனாகிய **கர்த்தரை**
மறந்து, பாகால்களையும் *தோப்பு விக்கிரகங்
களையும் சேவிக்கிறபோது, **கர்த்தர்** இஸ்ர 8
வேலின்மேல் கோபமூண்டவராகி, அவர்களை
மெசொப்பொத்தாமியாவின் ராஜாவாகிய [15]கூ
சான்ரிஷதாயீமின் கையிலே விற்றுப்போட்
டார்; இப்படியே இஸ்ரவேல் புத்திரர் கூசான்
ரிஷதாயீமை எட்டுவருஷம் சேவித்தார்கள்.
இஸ்ரவேல் புத்திரர் **கர்த்தரை** நோக்கிக் கூப் 9
பிட்டபோது, [16]**கர்த்தர்** இஸ்ரவேல் புத்திரரை
இரட்சிக்கும்படி காலேபின் தம்பியான கேனா
சுடைய குமாரனாகிய ஒத்னியேல் [17]என்னும்
ஒரு இரட்சகனை அவர்களுக்கு எழும்பப்
பண்ணினார். அவன்மேல் **கர்த்தருடைய** ஆவி 10
வந்திருந்ததினால், [18]அவன் இஸ்ரவேலை நியா
யம் விசாரித்து, யுத்தம்பண்ணப் புறப்பட்
டான்; **கர்த்தர்** மெசொப்பொத்தாமியாவின்
ராஜாவாகிய கூசான்ரிஷதாயீமை அவன் கை
யிலே ஒப்புக்கொடுத்தார்; ஆகையால் அவன்
கை கூசான்ரிஷதாயீமின்மேல் பலங்கொண்
டது. தேசம் நாற்பதுவருஷம் அமைதலாயி 11
ருந்தது. கேனாசின் குமாரனாகிய ஒத்னியேல்
மரணமடைந்தான்.

இஸ்ரவேல் புத்திரர் மறுபடியும் **கர்த்தரின்** 12
பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தார்

[1] யாத். 5. 2. 1 சாமு. 28. 9. சங். 92. 5, 6. எரே. 9. 8. 22. 16. கலா. 4. 8. 2 தெச. 1. 8. தீத். 1. 16
[2] உபா. 5. 9; 31. 16. சங். 106. 36
[3] சங். 106. 40–42
[4] 2 இரா. 17. 20. சங். 44. 12. ஏசா. 50. 1
[5] லேவி. 26. 17. உபா. 28. 15
[6] அப். 13. 20. சங். 106. 43–45
[7] யாத். 34. 15, 16
[8] யோசு. 1. 5
[9] ஆதி. 6. 6. உபா. 32. 36. ஓசி. 11. 8
[10] யோசு. 23. 16
[11] சங். 66. 10
[12] யோசு. 13. 3
[13] சங். 106. 35
[14] யாத். 34. 16. உபா. 7. 3, 4
* தோப்புதேவதைகளை. யாத். 34. 13. உபா. 16. 21
[15] ஆப. 3. 7
[16] 1 சாமு. 12. 10. நெகே. 9. 27. சங். 107. 13, 19
[17] நியா. 1. 13
[18] எண். 27. 18

கள்; அவர்கள் **கர்த்தரின்** பார்வைக்குப் பொ
ல்லாப்பானதைச் செய்தபடியால், **கர்த்தர்** எக்
லோன் [1]என்னும் மோவாபின் ராஜாவை
இஸ்ரவேலுக்கு விரோதமாய்ப் பலக்கப்பண்
13 ணினர். அவன் அம்மோன் புத்திரரையும்
அமலேக்கியரையும் கூட்டிக்கொண்டுவந்து,
இஸ்ரவேலை முறிய அடித்தான்; பேரீச்சமரங்
14 களின் பட்டணத்தையும் பிடித்தான். இப்
படியே இஸ்ரவேல் புத்திரர் எக்லோன் என்
னும் மோவாபின் ராஜாவைப் பதினெட்டுவரு
15 ஷம் [2]சேவித்தார்கள். இஸ்ரவேல் புத்திரர்
**கர்த்தரை** நோக்கிக் கூப்பிட்டபோது, **கர்த்தர்**
அவர்களுக்குப் பென்யமீன் கோத்திரத்தானா
கிய கேராவின் மகன் ஏகூத் என்னும் இரட்
சகனை எழும்பப்பண்ணினர்; அவன் இடது
கைப் பழக்கமுள்ளவனாயிருந்தான்; [3]அவன்
கையிலே இஸ்ரவேல் புத்திரர் மோவாபின்
ராஜாவாகிய எக்லோனுக்குக் காணிக்கை
16 அனுப்பினார்கள். ஏகூத், இருபுறமும் கருக்
கும் ஒரு முழ நீளமுமான ஒரு கத்தியை உண்
டுபண்ணி, அதைத் தன் வஸ்திரத்துக்குள்ளே
தன் வலதுபுறத்து இடுப்பிலே கட்டிக்கொ
17 ண்டு, காணிக்கையை மோவாபின் ராஜா
வாகிய எக்லோனுக்குச் செலுத்தினான்; எக்
லோன் மிகவும் ஸ்தூலித்த [4]மனுஷனாயிருந்
18 தான். அவன் காணிக்கையைச் செலுத்தித்
தீர்ந்தபின்பு, காணிக்கையைச் சுமந்துவந்த
19 ஜனங்களை அனுப்பிவிட்டான். அவனோ
கில்காலிலுள்ள சிலைகள் இருக்கும் இடத்தி
லிருந்து திரும்பிவந்து: இராஜாவே, உம்மி
டத்தில் சொல்லவேண்டிய இரகசியமான
ஒரு வார்த்தை உண்டு என்றான். அதற்கு
அவன்: பொறு என்றான்; அப்பொழுது அவ
னிடத்தில் நின்ற யாவரும் அவனை விட்டு
20 வெளியே போய்விட்டார்கள். ஏகூத் அவன்
கிட்டே போனான்; அவனோ தனக்குத் தனிப்
புற இருந்த குளிர்ச்சியான [5]அறைவீட்டில்
உட்கார்ந்திருந்தான்; அப்பொழுது ஏகூத்:
உம்மிடத்தில் சொல்லவேண்டிய தேவவாக்கு
எனக்கு உண்டு என்றான்; அவன் தன் ஆச
21 னத்திலிருந்து எழுந்திருந்தான். உடனே
ஏகூத் தன் இடதுகையை நீட்டி, தன் வலது
புறத்து இடுப்பிலே கட்டியிருந்த கத்தியை
உருவி, அதை அவன் வயிற்றிற்குள் பாய்ச்சி
22 னான். அலகோடேகூட கைப்பிடியும் உள்
ளே புகுந்தது; அவனுடைய வயிற்றிற்குள்
போன கத்தியை இவன் இழுக்கக்கூடாத
படிக்கு, நிணம் அலகைச் சுற்றிக்கொண்ட
டைத்தது; அது பின்புறத்திலே புறப்பட்
23 டது. ஏகூத் புறப்பட்டு, அறைவீட்டின் கத
வைச் சாத்திப் பூட்டிப்போட்டு, கொலுக்
கூடத்தின் வழியாய்ப் போய்விட்டான்.
24 அவன் போனபின்பு ஊழியக்காரர் வந்து
பார்த்தார்கள்; இதோ, அறைவீட்டின் கதவு
பூட்டியிருந்தது; ஆகையால் அவர் அந்தக்
குளிர்ச்சியான அறையிலே [6]மலஜலாதிக்கி
25 ருக்கிறாராக்கும் என்றார்கள். அவர்கள் சலித்

[1] 1 சாமு. 12. 9
[2] உபா. 28. 48
[3] நியா. 20. 16
[4] சங். 73. 7, 19
[5] ஆமோஸ் 3. 15
[6] 1 சாமு. 24. 3
[7] 1 சாமு. 13. 3
[8] 1 சாமு. 17. 47
[9] நியா. 5. 6
[10] 1 சாமு. 17. 47
[11] நியா. 2. 19
[12] 1 சாமு. 12. 9. சங். 83. 9, 10. யோசு. 11. 1, 10
[13] நியா. 1. 19
[14] ஆதி. 35. 8
[15] எபி. 11. 32

துப்போகுமட்டும் காத்திருந்தார்கள்; அவன்
அறைவீட்டின் கதவைத் திறக்கவில்லை; ஆகை
யால் ஒரு திறவுகோலை எடுத்துத் திறந்தார்
கள்; இதோ, அவர்கள் ஆண்டவன் தரையிலே
செத்துக்கிடந்தான். அவர்கள் தாமதித்துக் 26
கொண்டிருந்தபோது, ஏகூத் ஓடிப்போய்,
சிலைகளுள்ள இடத்தைக் கடந்து, சேயிராத்
தைச் சேர்ந்து தப்பினான். அங்கே வந்த 27
போது எப்பிராயீம் மலையில் எக்காளம் ஊதி
னான்; [7]அப்பொழுது இஸ்ரவேல் புத்திரர்
அவனோடேகூட மலையிலிருந்து இறங்கினார்
கள்; அவன் அவர்களுக்கு முன்பாக நடந்து:
என்னைப் பின்தொடர்ந்து வாருங்கள்; **கர்த்தர்** 28
உங்கள் பகைஞராகிய மோவாபியரை உங்கள்
கைகளில் ஒப்புக்கொடுத்தார் [8]என்றான். அவர்
கள் அவனைப் பின்தொடர்ந்து போய், மோவா
புக்கு எதிரான யோர்தான் துறைகளைப் பிடி
த்து, ஒருவனையும் கடந்துபோகவொட்டாமல்,
அக்காலத்திலே மோவாபியரில் ஏறக்குறையப் 29
பதினாயிரம்பேரை வெட்டினார்கள்; அவர்க
ளெல்லாரும் புஷ்டியுள்ளவர்களும் பராக்கிரம
சாலிகளுமாயிருந்தார்கள்; அவர்களில் ஒருவ
னும் தப்பவில்லை. இப்படியே அந்நாளிலே 30
மோவாப் இஸ்ரவேலுடைய கையின்கீழ்த்
தாழ்த்தப்பட்டது; அதனாலே தேசம் எண்பது
வருஷம் அமைதலாயிருந்தது.

அவனுக்குப் பிற்பாடு ஆனாத்தின் குமா 31
ரன் சம்கார் [9]எழும்பினான்; அவன் பெலிஸ்
தரில் அறுநூறுபேரை ஒரு தாற்றுக்கோலால்
[10]முறிய அடித்தான்; அவனும் இஸ்ரவேலை
இரட்சித்தான்.

ஏகூத் மரணமடைந்தபின்பு இஸ்ரவேல் 4
புத்திரர் திரும்பக் **கர்த்தரின்** பார்வைக்குப்
பொல்லாப்பானதைச் [11]செய்துவந்தார்கள்.
ஆகையால் **கர்த்தர்** அவர்களை ஆத்சோரில் 2
ஆளுகிற யாபீன் என்னும் கானானியருடைய
ராஜாவின் கையிலே விற்றுப்போட்டார்;
[12]அவனுடைய சேனாபதிக்குச் சிசெரா என்று
பேர்; அவன் புறஜாதிகளுடைய பட்டணமா
கிய அரோசேத்திலே குடியிருந்தான். அவ 3
னுக்குத் தொளாயிரம் இருப்புரதங்கள் இருந்
தது; [13]அவன் இஸ்ரவேல் புத்திரரை இருபது
வருஷம் கொடுமையாய் ஒடுக்கினான்; இஸ்ர
வேல் புத்திரர் **கர்த்தரை** நோக்கி முறையிட்
டார்கள்.

அக்காலத்திலே லபிதோத்தின் மனைவியா 4
கிய தெபொராள் என்னும் தீர்க்கதரிசியான
வள் இஸ்ரவேலை நியாயம் விசாரித்தாள்.
அவள் எப்பிராயீம் மலைத்தேசமான ராமாவுக் 5
கும் பெத்தேலுக்கும் நடுவிலிருக்கிற தெபொ
ராளின் பேரீச்சமரத்தின்கீழே குடியிருந்
தாள்; [14]அங்கே இஸ்ரவேல் புத்திரர் அவளி
டத்திற்கு நியாயவிசாரணைக்குப் போவார்கள்.
அவள் நப்தலியிலுள்ள கேதேசிலிருக்கிற அபி 6
னோகாமின் குமாரன் பாராக்கை [15]வரவழை
த்து: நீ நப்தலி புத்திரரிலும், செபுலோன்
புத்திரரிலும் பதினாயிரம்பேரைக் கூட்டிக்கொ

ண்டு, தாபோர் மலைக்குப் போகக்கடவாய்
7 என்றும், நான் யாபீனின் சேனாபதியாகிய
சிசெராவையும், அவன் ரதங்களையும், அவன்
சேனையையும், கீசோன் பள்ளத்தாக்கிலே
உன்னிடத்திற்கு வர இழுத்து, [1]அவனை உன்
கையில் ஒப்புக்கொடுப்பேன் என்றும், இஸ்ர
வேலின் தேவனாகிய **கர்த்தர்** உனக்குக் கட்
8 டளையிடவில்லையா என்றாள். அதற்குப் பா
ராக்: நீ என்னோடேகூட வந்தால் போவேன்;
என்னோடேகூட வராவிட்டால், நான் போக
9 மாட்டேன் என்றான். அதற்கு அவள்: நான்
உன்னோடேகூட நிச்சயமாய் வருவேன்; ஆனா
லும் நீ போகிற பிரயாணத்தில் உண்டாகிற
மேன்மை உனக்குக் கிடையாது; **கர்த்தர்**
சிசெராவை ஒரு ஸ்திரீயின் கையில் ஒப்புக்
கொடுப்பார் என்று சொல்லி, தெபொராள்
எழும்பி, பாராக்கோடேகூடக் கேதேசுக்குப்
10 போனாள். அப்பொழுது பாராக்: செபு
லோன் மனுஷரையும் நப்தலி மனுஷரையும்
கேதேசுக்கு வரவழைத்து, தன்னைப் பின்
செல்லும் பதினாயிரம்பேரோடே போனான்;
தெபொராளும் அவனோடேகூடப் போனாள்.
11 கேனியனான ஏபேர் என்பவன் மோசேயின்
மாமனாகிய ஓபாபின் [2]புத்திரராயிருக்கிற கே
னியரை விட்டுப் பிரிந்து, கேதேசின் கிட்ட
இருக்கிற சானாயிம் என்னும் கர்வாலிமரங்கள்
அருகே தன் கூடாரத்தைப் போட்டிருந்தான்.
12 அபினோகாமின் குமாரன் பாராக் தாபோர்
மலையில் ஏறிப்போனான் என்று சிசெராவுக்கு
13 அறிவிக்கப்பட்டபோது, சிசெரா தொளாயி
ரம் இருப்புரதங்களாகிய தன்னுடைய எல்லா
ரதங்களையும், தன்னோடிருக்கும் எல்லா ஜனங்
களையும், புறஜாதிகளின் பட்டணமாகிய அ
ரோசேத்திலிருந்து கீசோன் பள்ளத்தாக்கிலே
14 வரவழைத்தான். அப்பொழுது தெபொராள்
பாராக்கை நோக்கி: எழுந்துபோ; **கர்த்தர்**
சிசெராவை உன் கையில் ஒப்புக்கொடுக்கும்
நாள் இதுவே; **கர்த்தர்** உனக்கு முன்பாகப்
புறப்படவில்லையா [3]என்றாள்; அப்பொழுது
பாராக்கும், அவன் பின்னாலே பதினாயிரம்
பேரும், தாபோர் மலையிலிருந்து இறங்கினார்
15 கள். **கர்த்தர்** சிசெராவையும் அந்த எல்லா
இரதங்களையும் சேனையனைத்தையும் பாராக்
குக்கு முன்பாகப் பட்டயக்கருக்கினால் [4]கலங்
கடித்தார்; சிசெரா இரதத்தை விட்டிறங்கி
16 கால்நடையாய் ஓடிப்போனான். பாராக் ரத
ங்களையும் சேனையையும் புறஜாதிகளுடைய
அரோசேத்மட்டும் துரத்தினான்; சிசெராவின்
சேனையெல்லாம் பட்டயக் கருக்கினால் விழுந்
17 தது; ஒருவனும் [5]மீதியாயிருக்கவில்லை. சி
செரா கால்நடையாய்க் கேனியனான ஏபே
ரின் மனைவி யாகேலுடைய கூடாரத்திற்கு
ஓடிவந்தான்; அப்பொழுது யரபீன் என்னும்
ஆத்சோரின் ராஜாவுக்கும், கேனியனான ஏபே
ரின் வீட்டுக்கும் சமாதானம் உண்டாயிருந்தது.
18 யாகேல் வெளியே சிசெராவுக்கு எதிர்கொ
ண்டுபோய்: உள்ளே வாரும்; என் ஆண்டவ
னே, என்னண்டை உள்ளே வாரும், பயப்ப
டாதேயும் என்று அவனோடே சொன்னாள்;
அப்படியே அவளண்டை கூடாரத்தில் உள்
ளே வந்தபோது, அவனை ஒரு சமுக்காளத்தி
னாலே மூடினாள். அவன் அவளைப் பார்த்து: 19
குடிக்க எனக்குக் கொஞ்சம் தண்ணீர் தா,
தாகமாயிருக்கிறேன் என்றான்; அவள் பால்
துருத்தியைத் திறந்து, [6]அவனுக்குக் குடிக்கக்
கொடுத்து, திரும்பவும் அவனை மூடினாள்.
அப்பொழுது அவன்: நீ கூடாரவாசலிலே 20
நின்று, யாராவது ஒருவன் வந்து, இங்கே
யாராகிலும் இருக்கிறார்களா என்று உன்னி
டத்தில் கேட்டால், இல்லை என்று சொல்
என்றான். பின்பு ஏபேரின் மனைவியாகிய 21
யாகேல் ஒரு கூடார ஆணியை எடுத்து, தன்
கையிலே சுத்தியைப் பிடித்துக்கொண்டு,
மெள்ள அவனண்டையில் வந்து, அவன்
நெறியிலே அந்த ஆணியை [7]அடித்துப்போட்
டாள்; அது உருவிப்போய், தரையிலே புதை
ந்தது; அப்பொழுது ஆயாசமாய்த் தூங்கின
அவன் செத்துப்போனான். பின்பு சிசெ 22
ராவைத் தொடருகிற பாராக் வந்தான்; அப்
பொழுது யாகேல் வெளியே அவனுக்கு எதிர்
கொண்டுபோய்: வாரும், நீர் தேடுகிற மனு
ஷனை உமக்குக் காண்பிப்பேன் என்று சொன்
னாள்; அவன் அவளிடத்திற்கு வந்தபோது,
இதோ, சிசெரா செத்துக்கிடந்தான்; ஆணி
அவன் நெறியில் அடித்திருந்தது. இப்படித் 23
தேவன் அந்நாளிலே கானானியரின் ராஜாவா
கிய யாபீனை இஸ்ரவேல் புத்திரருக்கு முன்
பாகத் [8]தாழ்த்தினார். இஸ்ரவேல் புத்திரரின் 24
கை கானானியரின் ராஜாவாகிய யாபீனை நிர்
மூலமாக்குமட்டும் அவன்மேல் பலத்துக்கொ
ண்டேயிருந்தது.

அந்நாளிலே தெபொராளும் அபினோகா 5
மின் குமாரன் பாராக்கும் [9]பாடினதாவது:

**கர்த்தர்** இஸ்ரவேலுக்காக நீதியைச் சரிக் 2
கட்டினதினிமித்தமும், [10]ஜனங்கள் மனப்பூர்வ
மாய்த் தங்களை ஒப்புக்கொடுத்ததினிமித்தமும்
அவரை ஸ்தோத்திரியுங்கள். இராஜாக்களே, 3
கேளுங்கள்; அதிபதிகளே, செவிகொடுங்கள்;
[11]நான் **கர்த்தரைப்** பாடி, இஸ்ரவேலின் தேவ
னாகிய **கர்த்தரைக்** கீர்த்தனம்பண்ணுவேன்.
**கர்த்தாவே**, நீர் சேயீரிலிருந்து புறப்பட்டு, 4
[12]ஏதோமின் வெளியிலிருந்து நடந்துவருகை
யில், பூமி அதிர்ந்தது, வானம் சொரிந்தது,
மேகங்களும் தண்ணீராய்ப் பொழிந்தது.
**கர்த்தருக்கு** முன்பாகப் பர்வதங்கள் கரைந்தது; 5
[13]இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தருக்கு** முன்
பாக சீனாயும் கரைந்தது.

ஆனாத்தின் குமாரனாகிய சம்காரின் நாட்க 6
ளிலும், யாகேலின் நாட்களிலும், பெரும்பா
தைகள் பாழாய்க்கிடந்தது; [14]வழி நடக்கிறவர்
கள் பக்கவழியாய் நடந்தார்கள். தெபொரா 7
ளாகிய நான் எழும்புமளவும், இஸ்ரவேலிலே
நான் தாயாக [15]எழும்புமளவும், கிராமங்கள்
பாழாய்ப்போயின, இஸ்ரவேலின் கிராமங்

[1] யாத். 14. 4
[2] எண். 10. 29
[3] உபா. 9. 3. 2 சாமு. 5. 24. சங். 68. 7, 8. ஏசா. 52. 12
[4] சங். 83. 9, 10. யோசு. 10. 10
[5] ஏசா. 43. 17
[6] நியா. 5. 25, 26
[7] சங். 3. 7
[8] சங். 18. 47
[9] யாத். 15. 1
[10] உபா. 32. 43. சங். 18. 47. 2 நாளா. 17. 16
[11] சங். 2. 10
[12] சங். 68. 7, 8. 2 சாமு. 22. 8. ஏசா. 64. 3. ஆப. 3. 3, 10
[13] சங். 97. 5. யாத். 19. 18
[14] லேவி. 26. 22
[15] ஏசா. 49. 23

8 கள் பாழாய்ப்போயின. நூதன தேவர்களைத்
[1]தெரிந்துகொண்டார்கள்; அப்பொழுது யுத்
தம் வாசல்வரையும் வந்தது; இஸ்ரவேலிலே
நாற்பதினாயிரம்பேருக்குள்ளேகேடகமும் ஈட்
டியும் [2]காணப்பட்டதுண்டோ?
9 ஜனங்களுக்குள்ளே தங்களை மனப்பூர்வ
மாய் ஒப்புக்கொடுத்த இஸ்ரவேலின் அதிபதி
களை என் இருதயம் நாடுகிறது; **கர்த்தரை**
10 ஸ்தோத்திரியுங்கள். வெள்ளைக் கழுதைகளின்
மேல் ஏறுகிறவர்களே, [3]நியாயஸ்தலத்தில்
வீற்றிருக்கிறவர்களே, வழியில் நடக்கிறவர்க
11 ளே, இதைப் பிரஸ்தாபியுங்கள். தண்ணீர்
மொண்டுகொள்ளும் இடங்களில் வில்வீரரின்
இரைச்சலுக்கு நீங்கினவர்கள் அங்கே **கர்த்த**
**ரின்** நீதிநியாயங்களையும், அவர் இஸ்ரவேலி
லுள்ள தமது கிராமங்களுக்குச் செய்த நீதி
நியாயங்களையுமே [4]பிரஸ்தாபப்படுத்துவார்
கள்; அதுமுதல் **கர்த்தரின்** ஜனங்கள் ஒலிமுக
12 வாசல்களிலே போய் இறங்குவார்கள். விழி,
*விழி, [5]தெபொராளே, விழி, விழி, பாட்டுப்
பாடு; பாராக்கே, †எழும்பு; அபினோகாமின்
குமாரனே, உன்னைச் சிறையாக்கினவர்களைச்
சிறையாக்கிக்கொண்டுபோ.
13 மீதியாயிருந்தவர்கள் ஜனத்தின் பிரபுக்களை
ஆளும்படி செய்தார்; [6]**கர்த்தர்** எனக்குப்
பராக்கிரமசாலிகளின்மேல் ஆளுகை தந்தார்.
14 அமலேக்குக்கு விரோதமாக இவர்களுடைய
வேர் எப்பிராயீமிலிருந்து துளிர்த்தது; உன்
ஜனங்களுக்குள்ளே பென்யமீன் மனுஷர்
உனக்குப் பின்சென்றார்கள்; மாகீரிலிருந்து
அதிபதிகளும், செபுலோனிலிருந்து எழுது
கோலைப் பிடிக்கிறவர்களும் இறங்கிவந்தார்கள்.
15 இசக்காரின் பிரபுக்களும் தெபொராளோடே
இருந்தார்கள்; பாராக்கைப்போல இசக்கார்
மனுஷரும் பள்ளத்தாக்கில் கால்நடையாய்
அனுப்பப்பட்டுப் போனார்கள்; ரூபனின் பிரி
வினைகளால் உண்டான இருதயத்தின் நினை
16 வுகள் மிகுதி. மந்தைகளின் சத்தத்தைக்
கேட்க, நீ தொழுவங்களின் நடுவே இருந்து
விட்டதென்ன? ரூபனின் பிரிவினைகளால்
17 மனோவிசாரங்கள் [7]மிகுதி. கீலேயாத் மனு
ஷர் யோர்தானுக்கு அக்கரையிலே இருந்து
விட்டார்கள்; தாண் மனுஷர் கப்பல்களில்
தங்கியிருந்ததென்ன? ஆசேர் மனுஷர் கடற்க
ரையிலே தங்கி, தங்கள் குடாக்களில் தாபரித்
18 தார்கள். செபுலோனும் நப்தலியும் போர்க்க
ளத்து முனையிலே தங்கள் உயிரை யெண்ணா
மல் [8]மரணத்துக்குத் துணிந்து நின்றார்கள்.
19 இராஜாக்கள் வந்து யுத்தம்பண்ணினார்கள்;
அப்பொழுது கானானியரின் ராஜாக்கள் மெகி
தோவின் தண்ணீர் அருகான தானாக்கிலே
யுத்தம்பண்ணினார்கள்; அவர்களுக்குத் திரவி
20 யக் கொள்ளை [9]கிடைக்கவில்லை. வானத்தி
லிருந்து யுத்தம் உண்டாயிற்று; நட்சத்திரங்
கள் தங்கள் அயனங்களிலிருந்து [10]சிசெரா
21 வோடே யுத்தம்பண்ணின.. கீசோன் நதி,
பூர்வ நதியாகிய கீசோன் நதியே, [11]அவர்களை
அடித்துக்கொண்டுபோயிற்று; என் ஆத்துமா
வே, [12]நீ பலவான்களை மிதித்தாய். அப்பொ 22
ழுது குதிரைகளின் குளம்புகள், பாய்ச்சலி
னாலே, பலவான்களின் பாய்ச்சலினாலேயே,
பிளந்துபோயின.
மேரோசைச் சபியுங்கள்; அதின் குடிகளைச் 23
சபிக்கவே சபியுங்கள் என்று **கர்த்தருடைய**
தூதனானவர் சொல்லுகிறார்; [13]அவர்கள் **கர்த்**
**தர்** பட்சத்தில் துணைநிற்க வரவில்லை; பராக்
கிரமசாலிகளுக்கு விரோதமாய் அவர்கள்
**கர்த்தர்** பட்சத்தில் துணைநிற்க வரவில்லையே.
ஸ்திரீகளுக்குள்ளே கேனியனான ஏபேரின் 24
மனைவியாகிய யாகேல் ஆசீர்வதிக்கப்பட்ட
வள்; [14]கூடாரத்தில் வாசமாயிருக்கிற ஸ்திரீக
ளுக்குள்ளே அவள் ஆசீர்வதிக்கப்பட்டவளே.
தண்ணீரைக் கேட்டான், பாலைக் கொடுத் 25
தாள்; [15]ராஜாக்களின் கிண்ணியிலே வெண்
ணெயைக் கொண்டுவந்து கொடுத்தாள். தன் 26
கையால் ஆணியையும், தன் வலதுகையால்
தொழிலாளரின் சுத்தியையும் பிடித்து, சிசெ
ராவை அடித்தாள்; அவன் நெறியில் உருவக்
கடாவி, அவன் தலையை உடைத்துப்போட்
டாள். அவள் கால் அருகே அவன் மடங்கி 27
விழுந்துகிடந்தான், அவள் கால் அருகே மட
ங்கி விழுந்தான்; அவன் எங்கே மடங்கி விழுந்
தானோ அங்கே மடிந்துகிடந்தான்.
சிசெராவின் தாய் ஜன்னலில் நின்று பல 28
கணிவழியாய்ப்பார்த்துக்கொண்டிருந்து: அவ
னுடைய ரதம் வராமல் பிந்திப்போனதென்ன?
அவனுடைய ரதங்களின் ஓட்டம் தாமதிக்கிற
தென்ன என்று புலம்பினாள். அவளுடைய 29
நாயகிகளில் புத்திசாலிகள் அவளுக்கு உத்த
ரவு சொன்னதுமன்றி, அவள் தானும் தனக்கு
மறுமொழியாக: அவர்கள் கொள்ளையைக் 30
கண்டுபிடிக்கவில்லையோ, அதைப் பங்கிட
வேண்டாமோ, ஆளுக்கு இரண்டொருபெண்
களையும், [16]சிசெராவுக்குக் கொள்ளையிட்ட பல
வருணமான ஆடைகளையும், கொள்ளையிட்ட
பலவருணமான சித்திரத் தையலாடைகளை
யும், கொள்ளையிட்டவர்களின் கழுத்துக்கு
இருபுறமும் பொருந்தும் சித்திரத் தையலுள்ள
பலவருணமான ஆடையையும் கொடுக்க
வேண்டாமோ என்றாள்.
**கர்த்தாவே**, உம்மைப் பகைக்கிற யாவரும் 31
இப்படியே அழியக்கடவர்கள்; [17]அவரில் அன்
புகூருகிறவர்களோ, வல்லமையோடே உதிக்
கிற சூரியனைப்போல இருக்கக்கடவர்கள்
[18]என்று பாடினார்கள்.
பின்பு தேசம் நாற்பது வருஷம் அமைதலா
யிருந்தது.
பின்னும் இஸ்ரவேல் புத்திரர் **கர்த்தரின்** 6
பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்
தார்கள்; [19]அப்பொழுது **கர்த்தர்** அவர்களை
ஏழு வருஷம் மீதியானியரின் கையில் ஒப்புக்
கொடுத்தார். மீதியானியரின் கை இஸ்ர 2
வேலின்மேல் பலத்துக்கொண்டபடியால்,
இஸ்ரவேல் புத்திரர் மீதியானியர் நிமித்தம்

[1] உபா. 32. 16, 17
[2] 1 சாமு. 13. 19, 22
[3] நியா. 10. 4
[4] 1 சாமு. 12. 7. சங். 145. 7
* விழித்துக்கொள்
[5] சங். 57. 8. 68. 18
† எழுந்திரு
[6] சங். 49. 14; 75. 7
[7] சங். 4. 4; 77. 6
[8] வெளி. 12. 11
[9] ஆதி. 14. 23
[10] நியா. 4. 15
[11] 1இரா. 18. 40. சங். 83. 9, 10
[12] நியா. 4. 7
[13] நெகே. 3. 5. 1 சாமு. 18. 17
[14] லூ. 1. 28
[15] நியா. 4. 19. ழ
[16] யாத். 15. 9, 10
[17] சங். 83. 9, 10; 92. 9
[18] 2 சாமு. 23. 4. சங். 19. 5; 37. 6. நீதி. 4. 18
[19] நியா. 2. 19. ஆப. 3. 7

தங்களுக்கு மலைகளிலுள்ள கெபிகளையும்
குகைகளையும் அரணான ஸ்தலங்களையும்
3 [1]அடைக்கலங்களாக்கிக்கொண்டார்கள். இஸ்
ரவேலர் விதை விதைத்திருக்கும்போது, மீதி
யானியரும் அமலேக்கியரும் கிழக்கத்திப் புத்
திரரும் அவர்களுக்கு விரோதமாய் எழும்பி
4 வந்து; அவர்களுக்கு எதிரே பாளயமிறங்கி,
காசாவின் எல்லைமட்டும் நிலத்தின் விளைச்ச
லைக் கெடுத்து, [2]இஸ்ரவேலிலே ஆகாரத்தை
யாகிலும், ஆடுமாடுகள் கழுதைகளையாகிலும்
5 வைக்காதே போவார்கள். அவர்கள் தங்கள்
மிருகஜீவன்களோடும், தங்கள் கூடாரங்களோ
டும், வெட்டுக்கிளிகளைப்போல் திரளாய் வரு
வார்கள்; [3]அவர்களும் அவர்கள் ஒட்டகங்க
ளும் எண்ணிமுடியாததாயிருக்கும்; இந்தப்
பிரகாரமாகத் தேசத்தைக் கெடுத்துவிட அதி
6 லே வருவார்கள். இப்படி மீதியானியராலே
இஸ்ரவேலர் மிகவும் சிறுமைப்பட்டார்கள்;
[4]அப்பொழுது இஸ்ரவேல் புத்திரர் **கர்த்தரை**
நோக்கி முறையிட்டார்கள்.
7 இஸ்ரவேல் புத்திரர் மீதியானியர் நிமித்
தம் **கர்த்தரை** நோக்கி முறையிட்டபோது,
8 **கர்த்தர்** ஒரு தீர்க்கதரிசியை அவர்களிடத்திற்கு
அனுப்பினார்; அவன் அவர்களை நோக்கி: இஸ்
ரவேலின் தேவனாகிய **கர்த்தர்** உரைக்கிறது
என்னவென்றால்: நான் உங்களை எகிப்திலி
ருந்து வரவும், அடிமைத்தன வீட்டிலிருந்து
9 புறப்படவும் செய்து, எகிப்தியர் கையினின்
றும், உங்களை ஒடுக்கின யாவருடைய கையி
னின்றும் உங்களை இரட்சித்து, அவர்களை
உங்களுக்கு முன்பாகத் துரத்தி, [5]அவர்கள்
10 தேசத்தை உங்களுக்குக் கொடுத்து, நான்
உங்கள் தேவனாகிய **கர்த்தர்** என்றும், நீங்கள்
குடியிருக்கும் அவர்கள் தேசத்திலுள்ள எமோ
ரியருடைய தேவர்களுக்குப் பயப்படாதிருங்
கள் என்றும், [6]உங்களுக்குச் சொன்னேன்;
நீங்களோ என் சொல்லைக் கேளாதேபோனீர்
கள் என்கிறார் என்று சொன்னான்.
11 அதற்குப் பின்பு **கர்த்தருடைய** தூதனான
வர் வந்து, அபியேஸ்ரியனான யோவாசின்
ஊராகிய ஒப்ராவிலிருக்கும் ஒரு கர்வாலி
மரத்தின்கீழ் உட்கார்ந்தார்; அப்பொழுது அவ
னுடைய குமாரன் கிதியோன் கோதுமையை
மீதியானியரின் கைக்குத் தப்புவிக்கிறதற்காக,
ஆலைக்குச் சமீபமாய் அதைப் போரடித்தான்.
12 **கர்த்தருடைய** தூதனானவர் அவனுக்குத் தரி
சனமாகி: பராக்கிரமசாலியே **கர்த்தர்** உன்
13 னோடே இருக்கிறார் என்றார். அப்பொழுது
கிதியோன் அவரை நோக்கி: ஆ என் ஆண்ட
வனே, **கர்த்தர்** எங்களோடே இருந்தால்,
இவையெல்லாம் எங்களுக்கு நேரிடுவானேன்?
**கர்த்தர்** எங்களை எகிப்திலிருந்து கொண்டுவர
வில்லையா என்று எங்கள் பிதாக்கள் எங்க
ளுக்கு விவரித்துச் சொன்ன அவருடைய
அற்புதங்களெல்லாம் எங்கே? [7]இப்பொழுது
**கர்த்தர்** எங்களைக் கைவிட்டு, மீதியானியர்
கையில் எங்களை ஒப்புக்கொடுத்தாரே என்
றான். அப்பொழுது **கர்த்தர்** அவனை நோக் 14
கிப் பார்த்து: உனக்கு இருக்கிற இந்தப் பலத்
தோடே போ; [8]நீ இஸ்ரவேலை மீதியானி
யரின் கைக்கு நீங்கலாக்கி இரட்சிப்பாய்;
உன்னை அனுப்புகிறவர் நான் அல்லவா என்
றார். அதற்கு அவன்: ஆ என் ஆண்டவரே, 15
நான் இஸ்ரவேலை எதினாலே இரட்சிப்பேன்;
இதோ, மனாசேயில் என் குடும்பம் மிகவும்
எளியது; [9]என் தகப்பன் வீட்டில் நான் எல்
லாரிலும் சிறியவன் என்றான். அதற்குக் 16
**கர்த்தர்**: நான் உன்னோடேகூட இருப்பேன்;
ஒரே மனுஷனை முறிய அடிப்பதுபோல நீ
மீதியானியரை முறிய அடிப்பாய் என்றார்.
அப்பொழுது அவன்: உம்முடைய கண்களில் 17
இப்பொழுதும் எனக்குத் தயை கிடைத்தா
னால், என்னோடே பேசுகிறவர் தேவரீர்தான்
என்று எனக்கு ஒரு [10]அடையாளத்தைக் காட்
டவேண்டும். நான் உம்மிடத்திற்கு என் கா 18
ணிக்கையைக் கொண்டுவந்து, உமக்கு முன்
பாக வைக்குமளவும், [11]இவ்விடம் விட்டுப்
போகாதிருப்பீராக என்றான்; அதற்கு அவர்: நீ
திரும்பிவருமட்டும் நான் இருப்பேன் என்
றார். உடனே கிதியோன் உள்ளேபோய், 19
ஒரு வெள்ளாட்டுக்குட்டியையும் ஒரு மரக்
கால் மாவிலே புளிப்பில்லாத அப்பங்களையும்
ஆயத்தப்படுத்தி, [12]இறைச்சியை ஒரு கூடை
யில் வைத்து, ஆணத்தை ஒரு கிண்ணத்தில்
வார்த்து, அதை வெளியே கர்வாலிமரத்தின்
கீழிருக்கிற அவரிடத்தில் கொண்டுவந்து வை
த்தான். அப்பொழுது தேவனுடைய தூத 20
னானவர் அவனை நோக்கி: நீ இறைச்சியையும்
புளிப்பில்லாத அப்பங்களையும் எடுத்து, இந்
தக் கற்பாறையின்மேல் வைத்து ஆணத்தை
ஊற்று என்றார்; [13]அவன் அப்படியே செய்
தான்.
அப்பொழுது **கர்த்தருடைய** தூதன் தமது 21
கையிலிருந்த கோலின் நுனியை நீட்டி,
இறைச்சியையும் புளிப்பில்லாத அப்பங்களை
யும் தொட்டார்; அப்பொழுது அக்கினி கற்
பாறையிலிருந்து எழும்பி, [14]இறைச்சியையும்
புளிப்பில்லாத அப்பங்களையும் பட்சித்தது;
**கர்த்தரின்** தூதனோவென்றால், அவன் கண்க
ளுக்கு மறைந்துபோனார். அப்பொழுது கிதி 22
யோன், அவர் **கர்த்தருடைய** தூதன் என்று
கண்டு: ஐயோ, கர்த்தரான ஆண்டவரே, நான்
**கர்த்தருடைய** தூதனை முகமுகமாய்க் [15]கண்
டேனே என்றான். அதற்குக் **கர்த்தர்**: உனக் 23
குச் சமாதானம்; [16]பயப்படாதே, நீ சாவதில்லை
என்று சொன்னார்.
அங்கே கிதியோன் **கர்த்தருக்கு** ஒரு பலி 24
பீடத்தைக் கட்டி, அதற்கு *யெகோவா ஷா
லோம் என்று பேரிட்டான்; அது இந்நாள்
வரைக்கும் அபியேஸ்ரியரின் ஊராகிய ஒப்
ராவில் இருக்கிறது. அன்று ராத்திரியிலே 25
**கர்த்தர்** அவனை நோக்கி: நீ உன் தகப்பனுக்கு
இருக்கிற காளைகளில் ஏழு வயதான இரண்
டாம் காளையைக் கொண்டுபோய், [17]உன் தகப்

[1] 1 சாமு. 13. 6. எபி. 11. 38
[2] லேவி. 26. 16. உபா. 28. 30. மீகா 6. 15
[3] நியா. 7. 12. எரே. 46. 23
[4] ஓசி. 5. 15
[5] சங். 44. 2, 3
[6] 2 இரா. 17. 35–39
[7] சங். 89. 49. ஏசா. 59. 1
[8] 1 சாமு. 12. 11. எபி. 11. 32, 34
[9] 1 சாமு. 9. 21
[10] யாத். 3. 12. சங். 86. 17. ஏசா. 7. 11
[11] ஆதி. 18. 3, 5
[12] ஆதி. 18. 6–8
[13] 1 இரா. 18. 33, 34
[14] லேவி. 9. 24. 1 இரா. 18. 38
[15] ஆதி. 32. 30
[16] தானி. 10. 19
[17] உபா. 7. 5
* கர்த்தர் சமாதானம் அனுப்புவார். ஆதி. 22. 14. யாத். 17. 15. எசே. 33. 16. எசே. 48. 35

பனுக்கு இருக்கிற பாகாலின் பலிபீடத்தைத்
தகர்த்து, அதின் அருகேயிருக்கிற தோப்பை
26 வெட்டிப்போட்டு, இந்தக் கற்பாறை உச்சி
யிலே பாங்கான ஒரு இடத்தில் உன் தேவனு
கிய **கர்த்தருக்கு** ஒரு பலிபீடத்தைக் கட்டி,
அந்த இரண்டாம் காளையைக் கொண்டுவந்து,
அதை நீ வெட்டிப்போட்ட தோப்பினுடைய
கட்டை விறகுகளின்மேல் சர்வாங்க தகனமா
27 கப் பலியிடக்கடவாய் என்றார். அப்பொ
ழுது கிதியோன், தன் வேலையாட்களில் பத்
துப்பேரைச் சேர்த்து, **கர்த்தர்** தனக்குச் சொ
ன்னபடியே செய்தான்; அவன் தன் தகப்பன்
குடும்பத்தாருக்கும் அந்த ஊர் மனுஷருக்கும்
பயப்பட்டபடியினாலே, அதைப் பகலிலே
28 செய்யாமல், இரவிலே செய்தான். அந்த
ஊர் மனுஷர் காலமே எழுந்திருந்தபோது,
இதோ, பாகாலின் பலிபீடம் தகர்க்கப்பட்ட
தும், அதின் அருகேயிருந்த தோப்பு வெட்
டிப் போடப்பட்டதும், கட்டப்பட்டிருந்த
பலிபீடத்தின்மேல் அந்த இரண்டாம் காளை
பலியிடப்பட்டதுமாயிருக்க அவர்கள் கண்டு;
29 ஒருவரையொருவர் நோக்கி: இந்தக் காரியத்
தைச் செய்தவன் யார் என்றார்கள்; கேட்டு
விசாரிக்கிறபோது, யோவாசின் மகன் கிதி
30 யோன் இதைச் செய்தான் என்றார்கள். அப்
பொழுது ஊரார் யோவாசை நோக்கி: உன்
மகனை வெளியே கொண்டுவா; அவன் பாகா
லின் பலிபீடத்தைத் தகர்த்து, அதின் அரு
கேயிருந்த தோப்பை வெட்டிப்போட்டான்,
31 அவன் சாகவேண்டும் என்றார்கள். யோவாஸ்
தனக்கு விரோதமாக நிற்கிற அனைவரையும்
பார்த்து: நீங்களா பாகாலுக்காக வழக்காடுவீர்
கள்? நீங்களா அதை இரட்சிப்பீர்கள்? அதற்
காக வழக்காடுகிறவன் இன்று காலையிலே
தானே சாகக்கடவன்; அது தேவனானால் தன்
பலிபீடத்தைத் தகர்த்ததினிமித்தம், அதுதா
னே தனக்காக வழக்காடட்டும் என்றான்.
32 தன் பலிபீடத்தைத் தகர்த்ததினிமித்தம் பா
கால் அவனோடே வழக்காடட்டும் என்று சொ
ல்லி, அந்நாளிலே அவனுக்கு *யெருபாகால்
என்று பேரிடப்பட்டது.
33 மீதியானியரும் அமலேக்கியரும் கிழக்கத்
திப் புத்திரர் யாவரும் ஏகமாய்க் கூடி, ஆற்
றைக் கடந்துவந்து, யெஸ்ரயேல் பள்ளத்தாக்
34 கிலே பாளயமிறங்கினார்கள். அப்பொழுது
**கர்த்தருடைய** ஆவியானவர் கிதியோன்மேல்
இறங்கினார்; [1]அவன் எக்காளம் ஊதி, அபி
யேஸ்ரியரைக் கூப்பிட்டு, தனக்குப் பின்செல்
35 லும்படி செய்து, மனாசே நாடெங்கும் ஸ்தா
னாபதிகளை அனுப்பி, அவர்களையும் கூப்பி
ட்டு, தனக்குப் பின்செல்லும்படி செய்து,
ஆசேர், செபுலோன், நப்தலி நாடுகளிலும்
ஆட்களை அனுப்பினான்; அவர்களும் அவ
36 னுக்கு எதிர்கொண்டு வந்தார்கள். அப்பொ
ழுது கிதியோன் தேவனை நோக்கி: தேவரீர்
சொன்னபடி என் கையினாலே இஸ்ரவேலை
37 இரட்சிக்கவேண்டுமானால், இதோ, நான்
மயிருள்ள ஒரு தோலைக் களத்திலே போடுகி
றேன்; [2]பனி தோலின்மேல்மாத்திரம் பெ
ய்து, பூமியெல்லாம் காய்ந்திருந்தால், அப்
பொழுது தேவரீர் சொன்னபடி இஸ்ரவேலை
என் கையினால் இரட்சிப்பீர் என்று அதினாலே
அறிவேன் என்றான். அப்படியே ஆயிற்று. 38
அவன் மறுநாள் காலமே எழுந்திருந்து, தோ
லைக் கசக்கி, அதிலிருந்த பனிநீரை [3]ஒரு கிண்
ணம் நிறையப் பிழிந்தான். அப்பொழுது கிதி 39
யோன் தேவனை நோக்கி: நான் இன்னும் ஒரு
விசைமாத்திரம் பேசுகிறேன், உமது கோபம்
என்மேல் மூளாதிருப்பதாக; [4]தோலினாலே
நான் இன்னும் ஒரேவிசை சோதனைபண்
ணட்டும்; தோல்மாத்திரம் காய்ந்திருக்கவும்
பூமியெங்கும் பனிபெய்திருக்கவும் கட்டளை
யிடும் என்றான். அப்படியே தேவன் அன்று 40
ராத்திரி செய்தார்; [5]தோல்மாத்திரம் காய்ந்
திருந்து, பூமியெங்கும் பனி பெய்திருந்தது.

7 அப்பொழுது கிதியோனாகிய யெருபாகா
லும் [6]அவனோடிருந்த ஜனங்கள் யாவரும்
காலமே எழுந்து புறப்பட்டு, ஆரோத் என்
னும் நீரூற்றின் கிட்டப் பாளயமிறங்கினார்
கள்; மீதியானியரின் பாளயம் அவனுக்கு
வடக்கே மோரே மேட்டிற்குப் பின்னான
பள்ளத்தாக்கிலே இருந்தது. அப்பொழுது 2
**கர்த்தர்** கிதியோனை நோக்கி: நான் மீதியா
னியரை உன்னோடிருக்கிற ஜனத்தின் கை
யில் ஒப்புக்கொடுக்கிறதற்கு அவர்கள் மிகு
தியாயிருக்கிறார்கள்; என் கை என்னை இர
ட்சித்தது என்று இஸ்ரவேல் எனக்கு விரோ
தமாக வீம்புபேசுகிறதற்கு [7]இடமாகும். ஆகை 3
யால் பயமும் திகிலும் உள்ளவன் [8]எவனோ
அவன் திரும்பி, கீலேயாத் மலைகளிலிருந்து
விரைவாய் ஓடிப்போகக்கடவன் என்று, நீ
ஜனங்களின் செவிகள் கேட்கப் பிரசித்தப்
படுத்து என்றார்; அப்பொழுது ஜனத்தில்
இருபத்தீராயிரம்பேர் திரும்பிப் போய்விட்
டார்கள்; பதினாயிரம்பேர் மீதியாயிருந்தார்
கள். **கர்த்தர்** கிதியோனை நோக்கி: ஜனங் 4
கள் இன்னும் அதிகம், [9]அவர்களைத் தண்ணீ
ரண்டைக்கு இறங்கிப்போகப்பண்ணு, அங்
கே அவர்களைப் பரிட்சித்துக் காட்டுவேன்;
உன்னோடேகூட வரலாம் என்று நான் யா
ரைக் குறிக்கிறேனோ, அவன் உன்னோடே
கூட வரக்கடவன்; உன்னோடேகூட வரலா
காது என்று நான் யாரைக் குறிக்கிறேனோ, அ
வன் உன்னோடேகூட வராதிருக்கக்கடவன்
என்றார். அப்படியே அவன் ஜனங்களைத் 5
தண்ணீரண்டைக்கு இறங்கிப்போகப் பண்
ணினான்; அப்பொழுது **கர்த்தர்** கிதியோனை
நோக்கி: தண்ணீரை ஒரு நாய் நக்கும்பிரகார
மாக அதைத் தன் நாவினாலே நக்குகிறவன்
எவனோ அவனைத் தனியேயும், குடிக்கிற
தற்கு முழங்கால் ஊன்றிக் குனிகிறவன் எவ
னோ, அவனைத் தனியேயும் நிறுத்து என்
றார். தங்கள் கையால் அள்ளி, தங்கள் வாய்க் 6
கெடுத்து, நக்கிக்கொண்டவர்களின் லக்கம்

* பாகால் வழக்காடட்டும். எரே. 11. 13. ஓசி. 9. 10
1 நியா. 3. 10. எண். 10. 3
2 யாத். 4. 1-7
3 ஏசா. 35. 7
4 ஆதி. 18. 32
5 சங். 107. 33, 35. ஏசா. 50. 2
6 நியா. 6. 32
7 உபா. 8. 17. ஏசா. 10. 13. ரோ. 11. 18. 1 கொரி. 1. 29. 2 கொரி. 4. 7
8 உபா. 20. 8
9 சங். 33. 16

மூன்றுறுபேர்; மற்ற ஜனங்களெல்லாம் தண்
ணீர் குடிக்கிறதற்கு முழங்கால் ஊன்றிக்
7 குனிந்தார்கள். அப்பொழுது **கர்த்தர்** கிதி
யோனை நோக்கி: நக்கிக் குடித்த அந்த மூன்
றுறுபேராலே நான் உங்களை இரட்சித்து,
மீதியானியரை உன் கையில் ஒப்புக்கொடுப்
பேன், [1]மற்ற ஜனங்களெல்லாரும் தங்கள் தங்
கள் இடத்திற்குப் போகக்கடவர்கள் என்றார்.
8 அப்பொழுது ஜனங்கள் தங்கள் கையில் தின்
பண்டங்களையும் எக்காளங்களையும் எடுத்துக்
கொண்டார்கள்; மற்ற இஸ்ரவேலரெல்லாரை
யும் தங்கள் தங்கள் கூடாரங்களுக்கு அனுப்பி
விட்டு, அந்த முந்நூறுபேரைமாத்திரம் வைத்
துக்கொண்டான்; மீதியானியரின் சேனை
அவனுக்குத் தாழ்விடமான பள்ளத்தாக்கில்
இருந்தது.
9 அன்று ராத்திரி [2]**கர்த்தர்** அவனை நோக்கி:
நீ எழுந்து, அந்தச் சேனையினிடத்திற்குப்
போ; அதை உன் கையில் ஒப்புக்கொடுத்
10 தேன். போகப் பயப்பட்டாயானால், முதல்
நீயும் உன் வேலைக்காரனாகிய பூராவும் சேனை
11 யினிடத்திற்குப் போய், அங்கே என்ன
பேசுகிறார்கள் என்று கேள்; [3]பின்பு சேனை
யிடத்திற்குப் போக, உன் கைகள் திடப்படும்
என்றார்; அப்படியே அவனும் அவன் வே
லைக்காரனாகிய பூராவும் சேனையின் முன்ன
ணியிலே ஜாமம் காக்கிறவர்களின் இடமட்
12 டும் போனார்கள். மீதியானியரும், அமலேக்
கியரும், சகல கிழக்கத்திப் புத்திரரும், வெட்
டுக்கிளிகளைப்போலத் [4]திரளாய்ப் பள்ளத்தாக்
கிலே படுத்துக்கிடந்தார்கள்; அவர்களுடைய
ஒட்டகங்களுக்கும் கணக்கில்லை, கடற்கரை
13 மணலைப்போலத் திரளாயிருந்தது. கிதி
யோன் வந்தபோது, ஒருவன் மற்றொருவ
னுக்கு ஒரு சொப்பனத்தைச் சொன்னான்.
அதாவது: இதோ ஒரு சொப்பனத்தைக்
கண்டேன்; சுட்டிருந்த ஒரு வாற்கோதுமை
அப்பம் [5]மீதியானியரின் பாளயத்திற்கு உரு
ண்டுவந்தது, அது கூடாரமட்டும் வந்தபோது,
அதை விழத்தள்ளிக் கவிழ்த்துப்போட்டது,
14 கூடாரம் விழுந்துகிடந்தது என்றான். அப்
பொழுது மற்றவன்: இது யோவாசின் குமா
ரனாகிய கிதியோன் என்னும் இஸ்ரவேலனு
டைய பட்டயமே அல்லாமல் வேறல்ல; தே
வன் மீதியானியரையும், இந்தச் சேனை அனை
த்தையும் அவன் கையிலே ஒப்புக்கொடுத்தார்
என்றான்.
15 கிதியோன் அந்தச் சொப்பனத்தையும்
அதின் வியார்த்தியையும் கேட்டபோது,
அவன் பணிந்துகொண்டு, இஸ்ரவேலின் பாள
யத்திற்குத் திரும்பிவந்து: எழுந்திருங்கள்,
**கர்த்தர்** மீதியானியரின் பாளயத்தை உங்கள்
கைகளில் ஒப்புக்கொடுத்தார் என்று சொல்லி,
16 அந்த முந்நூறுபேரை மூன்று படையாக
வகுத்து, அவர்கள் ஒவ்வொருவன் கையிலும்
ஒரு எக்காளத்தையும், வெறும் பானையையும்,
அந்தப் பானைக்குள் வைக்கும் தீவட்டியையும்

1 1 சாமு. 14. 6
2 ஆதி. 46. 2, 3
3 ஆதி. 24. 14. 1 சாமு. 14. 9, 10
4 சங். 118. 10-12
5 1 கொ. 1. 27
6 யாத். 14. 13, 14. 2 இரா. 7. 6, 7
7 யோசு. 6. 16, 20
8 சங். 83. 9. ஏசா. 9. 4
9 யோ. 1. 28
10 ஏசா. 8. 3. சங். 83. 11, 12

கொடுத்து, அவர்களை நோக்கி: நான் செய் 17
வதைப் பார்த்து, அப்படியே நீங்களும் செய்
யுங்கள். இதோ, நான் பாளயத்தின் முன்ன
ணியில் வந்திருக்கும்போது, நான் எப்படிச்
செய்கிறேனோ அப்படியே நீங்களும் செய்ய
வேண்டும். நானும் என்னோடே இருக்கும் 18
சகலமானபேரும் எக்காளம் ஊதும்போது,
நீங்களும் பாளயத்தைச் சுற்றி எங்கும் எக்கா
ளங்களை ஊதி, **கர்த்தருடைய** பட்டயம் கிதி
யோனுடைய பட்டயம் என்பீர்களாக என்று
சொன்னான்.
நடுஜாமத்தின் துவக்கத்தில், ஜாமக்காரரை 19
மாற்றிவைத்த பின்பு, கிதியோனும் அவனோ
டிருந்த நூறுபேரும் அந்த ஜாமத்தின் துவக்
கத்திலே பாளயத்தின் முன்னணியில் வந்து,
எக்காளங்களை ஊதி, தங்கள் கையிலிருந்த
பானைகளை உடைத்தார்கள். மூன்று படை 20
களின் மனுஷரும் எக்காளங்களை ஊதி,
பானைகளை உடைத்து, தீவட்டிகளைத் தங்கள்
இடதுகைகளிலும், ஊதும் எக்காளங்களைத்
தங்கள் வலது கைகளிலும் பிடித்துக்கொண்டு,
**கர்த்தருடைய** பட்டயம் கிதியோனுடைய
பட்டயம் என்று சத்தமிட்டு, பாளயத்தைச் 21
சுற்றிலும் அவரவர் தங்கள் நிலையிலே நின்
றார்கள்; [6]அப்பொழுது பாளயத்தில் இருந்த
வர்கள் எல்லாரும் சிதறிக் கூக்குரலிட்டு,
ஓடிப்போனார்கள். முந்நூறுபேரும் எக்கா 22
ளங்களை ஊதுகையில், [7]**கர்த்தர்** பாளயமெங்
கும் ஒருவர் பட்டயத்தை ஒருவருக்கு விரோ
தமாய் ஓங்கப்பண்ணினார்; [8]சேனையானது
சேரோத்திலுள்ள பெத்சித்தாமட்டும், தாபாத்
திற்குச் சமீபமான ஆபேல்மேகொலாவின்
எல்லைமட்டும் ஓடிப்போயிற்று. அப்பொ 23
ழுது நப்தலி மனுஷரும், ஆசேர் மனுஷரும்,
மனாசேயின் சகல மனுஷருமாகிய இஸ்ரவே
லர் கூடிவந்து, மீதியானியரைப் பின்தொ
டர்ந்து போனார்கள். கிதியோன் எப்பிரா 24
யீம் மலைகளெங்கும் ஆட்களை அனுப்பி: மீதி
யானியருக்குவிரோதமாயிறங்கி, பெத்பாரா
[9]இருக்கும் யோர்தான்மட்டும் வந்து, அவர்
களுக்கு முந்தித் துறைகளைக் கட்டிக்கொள்
ளுங்கள் என்று சொல்லச்சொன்னான்; அப்
படியே எப்பிராயீமின் மனுஷர் எல்லாரும்
கூடி, பெத்பாரா இருக்கும் யோர்தான்
மட்டும் வந்து, துறைகளைக் கட்டிக்கொண்டு,
மீதியானியரின் இரண்டு அதிபதிகளாகிய 25
ஓரேபையும் சேபையும் பிடித்து, [10]ஓரேபை
ஓரேப் என்னப்பட்ட கல்மலையிலும், சேபை
சேப் என்னப்பட்ட ஆலையிலும் கொன்று
போட்டு, மீதியானியரைத் துரத்தி, ஓரேப்
சேப் என்பவர்களின் தலைகளை யோர்தானு
க்கு இக்கரையிலிருந்த கிதியோனிடத்துக்குக்
கொண்டுவந்தார்கள்.
அப்பொழுது எப்பிராயீம்மனுஷர் அவனை **8**
நோக்கி: நீ மீதியானியர்மேல் யுத்தம்பண்
ணப் போகிறபோது, எங்களை அழைப்பிக்க
வில்லையே, இப்படி நீ எங்களுக்குச் செய்தது

என்ன என்று, [1]அவனோடே பலத்த வாக்கு
2 வாதம் பண்ணினார்கள். அதற்கு அவன்: நீங்
கள் செய்ததற்கு நான் செய்தது எம்மாத்திரம்?
அபியேஸ்ரியரின் திராட்சப்பழத்தின் முழு
அறுப்பைப்பார்க்கிலும், எப்பிராயீமரின் மீதி
3 யான அறுப்பு அதிகம் அல்லவா? தேவன்
உங்கள் கையிலே மீதியானியரின் அதிபதிக
ளாகிய ஓரேபையும் சேபையும் ஒப்புக்கொ
டுத்தாரே; நீங்கள் செய்ததிலும் நான் செய்யக்
கூடியது எம்மாத்திரம் என்றான்; இந்த வார்த்
தையை அவன் சொன்னபோது, [2]அவன்மே
லிருந்த அவர்களுடைய கோபம் ஆறிற்று.
4 கிதியோன் யோர்தானுக்கு வந்தபோது, அவ
னும் அவனோடிருந்த முந்நூறுபேரும் அதைக்
கடந்துபோய், விடாய்த்திருந்தும் (சத்துரு
5 வை) பின்தொடர்ந்தார்கள். அவன் சுக்கோத்
தின் மனுஷரை நோக்கி: [3]என்னோடிருக்கிற
ஜனத்திற்குச் சில அப்பங்களைக் கொடுங்கள்;
அவர்கள் விடாய்த்திருக்கிறார்கள், நான் மீதி
யானியரின் ராஜாக்களாகிய சேபாவையும்
சல்முனாவையும் பின்தொடருகிறேன் என்
6 றான். அதற்குச் சுக்கோத்தின் பிரபுக்கள்:
உன் சேனைக்கு நாங்கள் அப்பம் கொடுக்கிற
தற்குச் [4]சேபா சல்முனா என்பவர்களின் கை
7 உன் கைவசமாயிற்றோ என்றார்கள். அப்
பொழுது கிதியோன் அவர்களை நோக்கி: **கர்த்**
**தர்** சேபாவையும் சல்முனாவையும் என் கை
யில் ஒப்புக்கொடுக்கும்போது, உங்கள் மாம்
சத்தைவனாந்தரத்தின் முள்ளுகளாலும் நெரிஞ்
சில்களாலும் கிழித்துவிடுவேன் என்று சொல்
8 லி, அவ்விடம் விட்டு, பெனூவேலுக்குப்
போய், [5]அவ்வூராரிடத்தில் அந்தப்படியே
கேட்டான்; சுக்கோத்தின் மனுஷர் பிரதியுத்
தரமாகச் சொன்னபடியே பெனூவேலின்
9 மனுஷரும் அவனுக்குச் சொன்னார்கள். அப்
பொழுது அவன், பெனூவேலின் மனுஷ
ரைப் பார்த்து: நான் சமாதானத்தோடே திரு
ம்பி வரும்போது, [6]இந்தக் கோபுரத்தை
இடித்துப்போடுவேன் என்றான்.
10 சேபாவும் சல்முனாவும் அவர்களோடே
கூட அவர்களுடைய சேனைகளும் ஏறக்கு
றைய பதினையாயிரம்பேர் கர்கோரில் இருந்
தார்கள்; பட்டயம் உருவத்தக்க இலட்சத்து
இருபதினாயிரம்பேர் விழுந்தபடியால், கிழக்
கத்தியாரின் சகல சேனையிலும் இவர்கள்மாத்
11 திரம் மீந்திருந்தார்கள். கிதியோன் கூடா
ரங்களிலே குடியிருக்கிறவர்கள் வழியாய்
நோபாகுக்கும், யொகிபெயாவுக்கும் கிழக்கே
போய், அந்தச் சேனை பயமில்லை என்றிருந்
12 தபோது [7]அதை முறிய அடித்தான். சேபா
வும் சல்முனாவும் ஓடிப்போனார்கள்; அவ
னோ அவர்களைத் தொடர்ந்து, சேபா சல்முனா
என்னும் மீதியானியரின் இரண்டு ராஜாக்
களையும் பிடித்து, [8]சேனை முழுவதையும் கலங்
13 கடித்தான். யோவாசின் குமாரனாகிய கிதி
யோன் யுத்தம்பண்ணி, சூரியன் உதிக்கும்
14 முன்னே திரும்பி வந்தபோது, சுக்கோத்தின்
மனுஷரில் ஒரு வாலிபனைப் பிடித்து, அவ
னிடத்தில் விசாரித்தான்; அவன் சுக்கோத்
தின் பிரபுக்களும் அதின் மூப்பருமாகிய எழு
பத்தேழு மனுஷரின் பேரை அவனுக்கு எழு
திக்கொடுத்தான். அவன் சுக்கோத்து ஊரா 15
ரிடத்தில் வந்து: இதோ, விடாய்த்திருக்கிற
உன் மனுஷருக்கு நாங்கள் அப்பம் கொடுக்
கிறதற்குச் சேபா சல்முனா என்பவர்களின்
கை உன் கைவசமாயிற்றோ என்று நீங்கள்
என்னை நிந்தித்துச் சொன்ன சேபாவும் சல்
முனாவும் இங்கே இருக்கிறார்கள் என்று
சொல்லி, பட்டணத்தின் மூப்பரைப் பிடி 16
த்து, வனாந்தரத்தின் முள்ளுகளையும் நெரிஞ்
சில்களையும் கொண்டுவந்து, அவைகளால் சுக்
கோத்தின் மனுஷருக்குப் புத்திவரப்பண்ணி,
பெனூவேலின் கோபுரத்தை இடித்து, [9]அவ் 17
வூர் மனுஷரையும் கொன்றுபோட்டான்.
பின்பு அவன் சேபாவையும் சல்முனாவையும் 18
நோக்கி: நீங்கள் தாபோரிலே கொன்று
போட்ட அந்த மனுஷர் எப்படிப்பட்டவர்
கள் என்று கேட்டான்; [10]அதற்கு அவர்கள்:
நீர் எப்படிப்பட்டவரோ அவர்களும் அப்ப
டிப்பட்டவர்களே; ஒவ்வொருவனும் பார்வை
க்கு ராஜகுமாரனைப்போலிருந்தான் என்றார்
கள். அப்பொழுது அவன்: அவர்கள் என் 19
சகோதாரும் என் தாயின் பிள்ளைகளுமாயிருந்
தார்கள்; அவர்களை உயிரோடே வைத்திருந்
தீர்களானால், உங்களைக் கொல்லாதிருப்பேன்
என்று **கர்த்தரின்** ஜீவனைக்கொண்டு சொல்லு
கிறேன் என்று சொல்லி, தன் மூத்த குமாரனா 20
னாகிய யெத்தேரை நோக்கி: நீ எழுந்து, இவர்
களை வெட்டிப்போடு என்றான்; அந்த வாலி
பன் இளைஞனானபடியால் பயந்து தன் பட்ட
யத்தை உருவாதிருந்தான். அப்பொழுது சே 21
பாவும் சல்முனாவும்: நீரே எழுந்து எங்கள்
மேல் விழும்; மனுஷன் எப்படியோ அப்ப
டியே அவன் பெலனும் இருக்கும் என்றார்
கள்; கிதியோன் எழுந்து, சேபாவையும் சல்
முனாவையும் கொன்றுபோட்டு, அவர்கள்
ஒட்டகங்களின் கழுத்துகளில் இருந்த சாந்துக்
காறைகளை [11]எடுத்துக்கொண்டான்.
அப்பொழுது இஸ்ரவேல் மனுஷர் கிதி 22
யோனை நோக்கி: நீர் எங்களை மீதியானியர்
கைக்கு நீங்கலாக்கிவிட்டபடியினால் நீரும் உம்
முடைய குமாரனும், உம்முடைய குமாரனின்
குமாரனும், எங்களை ஆளக்கடவீர்கள் என்றார்
கள். அதற்குக் கிதியோன்: நான் உங்களை 23
ஆளமாட்டேன்; என் குமாரனும் உங்களை
ஆளமாட்டான்; **கர்த்தரே** உங்களை ஆளுவா
ராக [12]என்றான். பின்பு கிதியோன் அவர் 24
களை நோக்கி: உங்களிடத்தில் ஒரு காரியத்
தைக் கேட்கிறேன்; நீங்கள் அவரவர் கொள்
ளையிட்ட கடுக்கன்களை என்னிடத்தில் கொ
ண்டுவாருங்கள் என்றான். அவர்கள் இஸ்ம
வேலராயிருந்தபடியினால் [13]அவர்களிடத்தில்
பொன்கடுக்கன்கள் இருந்தது. இஸ்ரவேலர்: 25
சந்தோஷமாய்க் கொடுப்போம் என்று சொ

[1] நியா. 12. 1. 2 சாமு. 19. 41
[2] நீதி. 15. 1: 25. 15
[3] ஆதி. 33. 17. சங். 60. 6
[4] 1 சாமு. 25. 11. 1 இரா. 20. 11;
[5] ஆதி. 32. 30. 1 இரா. 12. 25
[6] 1 இரா. 22. 27
[7] நியா. 18. 27. 1 தெச. 5. 3
[8] சங். 83. 11
[9] 9. வச.
[10] நியா. 4. 6. சங். 89. 12
[11] சங். 83 11
[12] 1 சாமு. 8. 7. சொ. 33 22: 68. 19
[13] ஆதி. 25. 13: 37. 25, 38

ல்லி, ஒரு வஸ்திரத்தை விரித்து, அவரவர்
கொள்ளையிட்ட கடுக்கன்களை அதிலே போட்
26 டார்கள். பிறைச்சிந்தாக்குகளும், ஆரங்க
ளும், மீதியானியரின் ராஜாக்கள் போர்த்துக்
கொண்டிருந்த இரத்தாம்பரங்களும், அவர்க
ளுடைய ஒட்டகங்களின் கழுத்துகளிலிருந்த
சரப்பணிகளும் அல்லாமல், அவன் கேட்டு
வாங்கின பொன்கடுக்கன்களின் நிறை ஆயி
ரத்து எழுநூறு பொன் சேக்கலின் நிறையா
27 யிருந்தது. அதினால் கிதியோன் ஒரு ஏபோத்
தை[1]உண்டாக்கி, அதைத் தன் ஊரான ஒப்ரா
விலே வைத்தான்; இஸ்ரவேலரெல்லாரும்
அதைப் பின்பற்றிச் சோரம்போனார்கள்;
[2]அது கிதியோனுக்கும் அவன் வீட்டாருக்
28 கும் [3]கண்ணியாயிற்று. இந்தப்பிரகாரம் மீதி
யானியர் திரும்ப தலையெடுக்கக்கூடாதபடி
க்கு, இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாகத்
தாழ்த்தப்பட்டார்கள்; தேசமானது கிதியோ
னின் நாட்களில் நாற்பது வருஷம் [4]அமைத
லாயிருந்தது.
29 யோவாசின் குமாரனாகிய யெருபாகால்
30 போய், தன் வீட்டிலே வாசமாயிருந்தான். கிதி
யோனுக்கு அநேகம் ஸ்திரீகள் இருந்தார்கள்;
அவனுடைய கர்ப்பப் பிறப்பான குமாரர் [5]எழு
31 பதுபேர். சீகேமிலிருந்த அவனுடைய மறு
மனையாட்டியும் அவனுக்கு ஒரு குமாரனைப்
பெற்றாள்; அவனுக்கு அபிமெலேக்கு [6]என்று
32 பேரிட்டான். பின்பு யோவாசின் குமாரனா
கிய கிதியோன் நல்ல விருத்தாப்பியத்திலே
மரித்து, [7]ஒப்ராவிலே தன் தகப்பனாகிய யோ
வாஸ் என்னும் அபியேஸ்ரியனுடைய கல்ல
றையில் அடக்கம்பண்ணப்பட்டான்.
33 கிதியோன் மரித்தபின் இஸ்ரவேல் புத்தி
ரர் திரும்பவும் பாகால்களைப் பின்பற்றிச் சோ
ரம்போய், [8]பாகால்பேரீத்தைத் தங்களுக்குத்
34 தேவனாக வைத்துக்கொண்டார்கள். இஸ்ர
வேல் புத்திரர் தங்களைச் சுற்றிலுமிருந்த தங்
கள் எல்லாச் சத்துருக்களின் கையினின்றும்
தங்களை இரட்சித்த தங்கள் தேவனாகிய கர்த்
35 தரை [9]நினையாமலும், கிதியோன் என்னும்
யெருபாகால் இஸ்ரவேலுக்குச் செய்த சகல
நன்மைக்குத் தக்க தயவை அவன் வீட்டாருக்
குப் [10]பாராட்டாமலும் போனார்கள்.

9 பெருபாகாலின் குமாரன் அபிமெலேக்கு
சீகேமிலிருக்கிற தன் தாயின் சகோதரரிடத்
திற்குப் போய், அவர்களையும் தன் தாயின்
தகப்பனுடைய வம்சமான [11]அனைவரையும்
2 நோக்கி: யெருபாகாலின் குமாரர் எழுபது
பேராகிய எல்லாரும்[12]உங்களை ஆளுவது உங்க
ளுக்கு நல்லதோ, ஒருவன்மாத்திரம் உங்களை
ஆளுவது உங்களுக்கு நல்லதோ என்று நீங்கள்
சீகேமிலிருக்கிற சகல பெரிய மனுஷரின்
காதுகளும் கேட்கப் பேசுங்கள்; நான் உங்கள்
எலும்பும் உங்கள் மாம்சமுமானவன் என்று
3 [13]நினைத்துக்கொள்ளுங்கள் என்றான். அப்ப
டியே அவன் தாயின் சகோதரர் சீகேமிலிருக்
கிற சகல பெரிய மனுஷரின் காதுகளும் கே

1 நியா. 17. 5
2 சங். 106. 39
3 உபா. 7. 16
4 நியா. 5. 31
5 நியா. 9. 2, 5
6 நியா. 9. 1, 18
7 ஆதி. 25. 8. யோபு 5. 26
8 நியா. 2. 17, 19; 9. 4, 16
9 சங். 78. 11, 42
10 நியா. 9. 16–19. பிர. 9. 14, 15
11 நியா. 8. 31
12 நியா. 8. 30
13 ஆதி. 29. 14
14 ஆதி. 29. 15
15 நியா. 8. 33
16 நியா. 11. 3. 2 சா. 13. 7. நீதி. 12. 11. அப். 17. 5
17 2 இரா. 11. 1, 2
18 யோசு. 8. 33. யோவா. 4. 20
19 2 இரா. 14. 9
20 சங். 104. 15
21 சங். 31. 6. 104. 15. பிர. 10. 19
22 ஏசா. 30. 2. தானி. 4. 12. ஓசி. 14. 7. எசே. 21. 28. எசே. 19. 14

ட்க இந்த வார்த்தைகளையெல்லாம் அவனுக்
காகப் பேசினார்கள், அப்பொழுது: அவன்
நம்முடைய சகோதரன் [14]என்று அவர்கள்
சொன்னதினால், அவர்கள் இருதயம் அபிமெ
லேக்கைப் பின்பற்றச் சாய்ந்தது. அவர்கள் 4
பாகால் பேரீத்தின் கோவிலிலிருந்து [15]எழு
பது வெள்ளிக்காசை எடுத்து அவனுக்குக்
கொடுத்தார்கள்; அவைகளால் அபிமெலேக்கு
வீணரும் [16]போக்கிரிகளுமான மனுஷரைச்
சேவகத்தில் வைத்தான்; அவர்கள் அவனைப்
பின்பற்றினார்கள். அவன் ஒப்ராவிலிருக்கிற 5
தன் தகப்பன் வீட்டிற்குப் போய், யெருபாகா
லின் குமாரராகிய தன் சகோதரர் எழுபது
பேரையும் ஒரே கல்லின்மேல் கொலைசெய்
தான்; [17]ஆனாலும் யெருபாகாலின் இளைய
குமாரனாகிய யோதாம் ஒளித்திருந்தபடியி
னால் அவன் தப்பினான்.
பின்பு சீகேமிலிருக்கிற சகல பெரிய மனு 6
ஷரும், மில்லோவின் குடும்பத்தாரனைவரும்
கூடிக்கொண்டுபோய், சீகேமிலிருக்கிற உய
ர்ந்த கர்வாலிமரத்தண்டையிலே அபிமெலேக்
கை ராஜாவாக்கினார்கள். இது யோதாமுக்கு 7
அறிவிக்கப்பட்டபோது, அவன் போய், கெ
ரிசீம் மலையின் [18]உச்சியில் ஏறி நின்று, உரத்த
சத்தமிட்டுக் கூப்பிட்டு, அவர்களை நோக்கி:
சீகேமின் பெரிய மனுஷரே, தேவன் உங்க
ளுக்குச் செவிகொடுக்கும்படி நீங்கள் எனக்
குச் செவிகொடுங்கள். விருட்சங்கள் தங்க 8
ளுக்கு ஒரு இராஜாவை அபிஷேகம்பண்
ணும்படி போய், [19]ஒலிவமரத்தைப் பார்த்து:
நீ எங்களுக்கு ராஜாவாயிரு என்றது. அத 9
ற்கு ஒலிவமரம்: தேவர்களும் மனுஷரும் புக
ழுகிற என்னிலுள்ள என் கொழுமையை
நான் விட்டு, [20]மரங்களை அரசாளப்போவே
னோ என்றது. அப்பொழுது மரங்கள் அத்தி 10
மரத்தைப் பார்த்து: நீ வந்து, எங்களுக்கு
ராஜாவாயிரு என்றது. அதற்கு அத்திமரம்: 11
நான் என் மதுரத்தையும் என் நற்கனியை
யும் விட்டு, மரங்களை அரசாளப்போவேனோ
என்றது. அப்பொழுது மரங்கள் திராட்சச் 12
செடியைப் பார்த்து: நீ வந்து, எங்களுக்கு
ராஜாவாயிரு என்றது. அதற்குத் திராட்சச் 13
செடி: தேவர்களையும் மனுஷரையும் மகிழப்
பண்ணும் [21]என் ரசத்தை நான் விட்டு மரங்
களை அரசாளப்போவேனோ என்றது. அப் 14
பொழுது மரங்களெல்லாம் முட்செடியைப்
பார்த்து: நீ வந்து, எங்களுக்கு ராஜாவாயிரு
என்றது. அதற்கு முட்செடியானது மரங்க 15
ளைப் பார்த்து: நீங்கள் என்னை உங்களுக்கு
ராஜாவாக அபிஷேகம் பண்ணுகிறதுமெய்யா
னால், என் நிழலிலே வந்தடையுங்கள்; [22]இல்
லாவிட்டால் முட்செடியிலிருந்து அக்கினி
புறப்பட்டு லீபனோனின் கேதுரு மரங்களைப்
பட்சிக்கக்கடவது என்றது. என் தகப்பன் 16
உங்களுக்காக யுத்தம்பண்ணி, தன் ஜீவனை
எண்ணாமற்போய், உங்களை மீதியானியரின்
கையினின்று இரட்சித்தார். நீங்களோ இன்று 17

என் தகப்பனுடைய குடும்பத்துக்கு விரோத
மாய் எழும்பி, அவருடைய குமாரரான எழு
பதுபேரையும் ஒரே கல்லின்மேல் கொலை
செய்து, அவருடைய வேலைக்காரியின் மக
ஞகிய அபிமெலேக்கு உங்கள் சகோதாஞன
படியினுல், அவனைச் சீகேம் பட்டணத்தா
18 ருக்கு ராஜாவாக்கினீர்கள். இப்போதும் நீங்
கள் அவனை ராஜாவாக்கின செய்கை உண்
மையும் உத்தமுமான செய்கையாயிருக்குமா
19 னுல், நீங்கள் யெருபாகாலையும் அவர் குடும்
பத்தாரையும் நன்மையாக நடத்தி, அவர் கை
களின் செய்கைக்குத் தக்கதை அவருக்குச்
செய்து, இப்படி இந்நாளில் அவரையும்
அவர் குடும்பத்தாரையும் நடத்தினது உண்
மையும் உத்தமுமாயிருக்குமானுல், அபிமெ
லேக்கின்மேல் நீங்களும் சந்தோஷமாயிருங்
கள்; [1]உங்கள்மேல் அவனும் சந்தோஷமா
20 யிருக்கட்டும். இல்லாவிட்டால் அபிமெலேக்
கிலிருந்து அக்கினி புறப்பட்டு, சீகேம் பட்ட
ணத்தாரையும், மில்லோவின் குடும்பத்தாரை
யும் பட்சிக்கவும், சீகேம் பட்டணத்தாரிலும்
மில்லோவின் குடும்பத்தாரிலுமிருந்து அக்
கினி புறப்பட்டு, அபிமெலேக்கைப் பட்சிக்க
21 வும் கடவது என்று யோதாம் சொல்லி, தன்
சகோதாஞகிய அபிமெலேக்குக்குப் பயந்து,
தப்பியோடி, பேயேருக்குப் போய், [2]அங்கே
குடியிருந்தான்.
22 அபிமெலேக்கு இஸ்ரவேலை மூன்று வரு
23 ஷம் அரசாண்டபின்பு, அபிமெலேக்குக்கும்
சீகேமின் பெரிய மனுஷருக்கும் நடுவே பொ
ல்லாப்பு உண்டாக்கும் [3]ஆவியைத் தேவன்
24 வரப்பண்ணினுர். யெருபாகாலின் எழுபது
குமாரருக்குச் செய்யப்பட்ட கொடுமை வந்து
பலித்து, [4]அவர்களுடைய ரத்தப்பழி அவர்
களைக் கொன்ற அவர்களுடைய சகோதாஞ
கிய அபிமெலேக்கின்மேலும், தன் சகோதா
ரைக் கொல்ல அவன் கைகளைத் திடப்படுத்
தின சீகேம் மனுஷர்மேலும் சுமரும்படியா
கச் சீகேமின் பெரிய மனுஷர் அபிமெலேக்
25 குக்கு [5]இரண்டகம்பண்ணினுர்கள். சீகே
மின் மனுஷர் மலைகளின் உச்சியில் அவனுக்
குப் பதிவிருக்கிறவர்களை வைத்தார்கள்; அவர்
கள் தங்கள் அருகே வழி நடந்துபோகிற யா
வரையும் கொள்ளையிட்டார்கள்; அது அபிமெ
26 லேக்குக்கு அறிவிக்கப்பட்டது. ஏபேதின்
குமாரஞகிய காகால் தன் சகோதரரோடே
சீகேமுக்குள் போனுன்; சீகேமின் பெரிய
27 மனுஷர் அவனை நம்பி, வெளியே புறப்
பட்டு, தங்கள் திராட்சத்தோட்டங்களின் பழ
ங்களை அறுத்து, ஆலையாட்டி, ஆடிப்பாடி,
தங்கள் தேவனின் வீட்டிற்குள் போய், [6]புசித்
துக் குடித்து, அபிமெலேக்கை சபித்தார்கள்.
28 அப்பொழுது ஏபேதின் குமாரஞகிய காகால்:
அபிமெலேக்கு யார்? [7]சீகேம் யார்? நாம் அவ
னைச் சேவிக்கவேண்டியதென்ன? அவன் யெ
ருபாகாலின் மகன் அல்லவா? சேபூல் அவ
னுடைய காரியக்காரன் அல்லவா? சீகேமின்
தகப்பஞகிய ஏமோரின் [8]மனுஷரையே சேவி
யுங்கள்; அவனை நாங்கள் சேவிப்பானேன்?
இந்த ஜனங்கள்மாத்திரம் என் கைக்குள் இரு 29
க்கட்டும்; [9]நான் அபிமெலேக்கைத் துரத்தி
விடுவேன் என்றுன். உன் சேனையைப் பெ
ருகப்பண்ணிப் புறப்பட்டுவா என்று, அவன்
அபிமெலேக்குக்குச் சொல்லியனுப்பினுன்.
பட்டணத்தின் அதிகாரியாகிய சேபூல் ஏபே 30
தின் குமாரஞகிய காகாலின் வார்த்தைகளைக்
கேட்டபோது, கோபமூண்டு, இரகசியமாய் 31
அபிமெலேக்கினிடத்துக்கு ஆட்களை அனு
ப்பி: இதோ, ஏபேதின் குமாரஞகிய காகாலும்
அவனுடைய சகோதாரும் சீகேமுக்கு வந்தி
ருக்கிறுர்கள்; பட்டணத்தை உமக்கு விரோத
மாக எழுப்புகிறுர்கள். ஆகையால் நீர் உம் 32
மோடிருக்கும் ஜனங்களோடேகூட இரவில்
எழுந்துவந்து வெளியிலே பதிவிருந்து, கால 33
மே சூரியன் உதிக்கையில் எழும்பி, பட்ட
ணத்தின்மேல் விழுந்து, அவனும் அவனோ
டிருக்கிற ஜனங்களும் உமக்கு எதிரே புறப்
படும்போது, உம்முடைய கைக்கு நேரிடுகிற
படி [10]அவனுக்குச் செய்யும் என்று சொல்லி
யனுப்பினுன்.
அப்படியே அபிமெலேக்கும், அவனோ 34
டிருந்த சகல ஜனங்களும், இரவில் எழுந்து
போய், சீகேமுக்கு விரோதமாக நாலு படை
யாகப் பதிவிருந்தார்கள். ஏபேதின் குமாரன் 35
காகால் புறப்பட்டு, பட்டணத்தின் ஒலிமுக
வாசலில் நின்றுன்; அப்பொழுது பதிவிருந்த
அபிமெலேக்கு தன்னோடிருக்கிற ஜனங்க
ளோடேகூட எழும்பிவந்தான். காகால் அந்த 36
ஜனங்களைக் கண்டு: இதோ, மலைகளின் உச்சி
களிலிருந்து ஜனங்கள் இறங்கிவருகிறுர்கள்
என்று சேபூலோடே சொன்னுன். அதற்குச்
சேபூல்: நீ மலைகளின் நிழலைக் கண்டு, மனு
ஷர் என்று நினைக்கிறுய் என்றுன். காகா 37
லோ திரும்பவும்: இதோ, ஜனங்கள் தேசத்
தின் மேட்டிலிருந்து இறங்கிவந்து, ஒரு
படை மெயொனெனீமின் கர்வாலிமரத்தின்
வழியாய் வருகிறது என்றுன். அதற்குச் சே 38
பூல்: அபிமெலேக்கை நாம் சேவிக்கிறதற்கு
அவன் யார் என்று நீ சொன்ன உன் வாய்
இப்பொழுது எங்கே? நீ நிந்தித்த ஜனங்கள்
அவர்கள் அல்லவா? இப்பொழுது நீ புறப்
பட்டு, அவர்களோடே யுத்தம்பண்ணு என்
றுன். அப்பொழுது காகால் சீகேமின் மனு 39
ஷருக்கு முன்பாகப் புறப்பட்டுப் போய்,
அபிமெலேக்கோடே யுத்தம்பண்ணினுன்.
அபிமெலேக்கு அவனைத் துரத்த, அவன் 40
அவனுக்கு முன்பாக ஓடினுன்; பட்டணவா
சல்மட்டும் அநேகர் வெட்டுண்டு விழுந்தார்
கள். அபிமெலேக்கு அருமாவில் இருந்து 41
விட்டான்; சேபூல் காகாலையும் அவன் சகோ
தரரையும் சீகேமிலே குடியிராதபடிக்குத் துர
த்திவிட்டான். மறுநாளிலே ஜனங்கள் வெ 42
ளியிலே வயலுக்குப் போனுர்கள்; அது அபி
மெலேக்குக்கு அறிவிக்கப்பட்டபோது,

[1] ஏசா. 8. 6. பிலி. 3. 3. யாக். 4. 16
[2] 2 சாமு. 20. 14
[3] 1 சாமு. 16. 14. 1 இரா. 12. 15. ஏசா. 19. 14. 2 தெச. 2. 11, 12
[4] 1 இரா. 2. 32. எஸ்தர் 9. 25. சங். 7. 16
[5] ஏசா. 33. 1
[6] ஏசா. 16. 9, 10. எரே. 25. 30
[7] 1 சாமு. 25. 10. 1 இரா. 12. 16
[8] ஆதி. 34. 2, 6
[9] 2 சாமு. 15. 4. சங். 10. 3
[10] 1 சாமு. 10. 7. 25. 8. பிர. 9. 10

43 அவன் ஜனங்களைக் கூட்டிக்கொண்டு, அவர்
களை மூன்று படையாக வகுத்து, வெளியிலே
பதிவிருந்து, அந்த ஜனங்கள் பட்டணத்திலி
ருந்து புறப்பட்டு வருகிறதைக் கண்டு, அவர்
கள்மேல் எழும்பி, அவர்களை வெட்டினான்.
44 அபிமெலேக்கும் அவனோடிருந்த படையும்
பாய்ந்துவந்து, பட்டணத்தின் ஒலிமுகவாச
லில் நின்றார்கள்; மற்ற இரண்டு படைகளோ
வெளியிலிருக்கிற யாவர்மேலும் விழுந்து,
45 அவர்களை வெட்டினார்கள். அபிமெலேக்கு
அந்நாள் முழுதும் பட்டணத்தின்மேல் யுத்தம்
பண்ணி, பட்டணத்தைப் பிடித்து, அதிலி
ருந்த ஜனங்களைக் கொன்று, பட்டணத்தை
இடித்துவிட்டு, [1]அதில் உப்பு விதைத்தான்.
46 அதைச் சீகேம் துருக்கத்து மனுஷர் எல்
லாரும் கேள்விப்பட்டபோது, அவர்கள் பே
ரீத் தேவனுடைய கோவில் அரணுக்குள் பிர
47 வேசித்தார்கள். சீகேம் துருக்கத்து மனுஷர்
எல்லாரும் அங்கே கூடியிருக்கிறது அபிமெ
48 லேக்குக்கு அறிவிக்கப்பட்டபோது, அபி
மெலேக்கு தன்னோடிருந்த எல்லா ஜனங்க
ளோடுங்கூடச் சல்மோன் [2]மலையில் ஏறி, தன்
கையிலே கோடரியைப் பிடித்து, ஒரு மரத்
தின் கொம்பை வெட்டி, அதை எடுத்து, தன்
தோளின்மேல் போட்டுக்கொண்டு, தன்னோ
டிருந்த ஜனங்களை நோக்கி: நான் என்னசெய்
கிறேன் என்று பார்க்கிறீர்களே, நீங்களும்
தீவிரமாய் என்னைப்போலச் செய்யுங்கள் என்
49 றான். அப்படியே சகல ஜனங்களும் அவ
ரவர் ஒவ்வொரு கொம்பை வெட்டி, அபிமெ
லேக்குக்குப் பின்சென்று, அவைகளை அந்த
அரணுக்கு அருகே போட்டு, அக்கினி கொ
ளுத்தி அந்த அரணைச் சுட்டுப்போட்டார்கள்;
அதினால் புருஷரும் ஸ்திரீகளும் ஏறக்குறைய
ஆயிரம்பேராகிய சீகேம் துருக்கத்து மனுஷர்
எல்லாரும் செத்தார்கள்.
50 பின்பு அபிமெலேக்கு தேபேசுக்குப்
போய், அதற்கு விரோதமாய்ப் பாளயமிறங்கி,
51 அதைப் பிடித்தான். அந்தப் பட்டணத்தின்
நடுவே பலத்த துருக்கம் இருந்தது; அங்கே
சகல புருஷரும் ஸ்திரீகளும் பட்டணத்து
மனுஷர் அனைவரும் ஓடிப் புகுந்து, கதவைப்
பூட்டிக்கொண்டு, துருக்கத்தின்மேல் ஏறினார்
52 கள். அபிமெலேக்கு அந்தத் துருக்கம்மட்டும்
வந்து, அதின்மேல் யுத்தம்பண்ணி, துருக்கத்
தின் கதவைச் சுட்டெரித்துப்போடும்படிக்கு,
53 அதின் கிட்டச் சேர்ந்தான். அப்பொழுது
ஒரு ஸ்திரீ ஒரு எந்திரக்கல்லின் துண்டை
அபிமெலேக்குடைய தலையின்மேல் போட்
டான்; [3]அது அவன் மண்டையை உடைத்
54 தது. உடனே அவன் தன் ஆயுததாரியாகிய
வேலைக்காரனைக் கூப்பிட்டு: [4]ஒரு ஸ்திரீ
என்னைக் கொன்றாள் என்று என்னைக்குறித்
துச் சொல்லாதபடிக்கு, நீ உன் பட்டயத்தை
உருவி, என்னைக் கொன்றுபோடு என்று அவ
னோடே சொன்னான்; அப்படியே அவன்
வேலைக்காரன் அவனை உருவக் குத்தினான்,

[1] 2 இரா. 3. 25. உபா. 29. 23. எசே. 47. 11. செப். 2. 9
[2] சங். 68. 14
[3] 2 சாமு. 11. 21
[4] 1 சாமு. 31. 4
[5] சங். 94. 23. நீதி. 5. 22. மத். 7. 2. கலா. 6. 7
[6] ஆதி. 21. 10. கலா. 4. 30
[7] நியா. 2. 16
[8] நியா. 5. 10; 12. 14
[9] நியா. 2. 11–14
[10] 1 இரா. 11. 33
[11] 1 சாமு. 12. 9, 10
[12] 1 சாமு. 12. 10

அவன் செத்துப்போனான். அபிமெலேக்குச் 55
செத்துப்போனதை இஸ்ரவேல் மனுஷர்
கண்டபோது, அவர்கள் தங்கள் தங்கள் இடங்
களுக்குப் போய்விட்டார்கள். இப்படியே 56
அபிமெலேக்கு தன்னுடைய எழுபது சகோ
தரரைக் கொலைசெய்ததினால், [5]தன் தகப்பனுக்
குச் செய்த பொல்லாப்பைத் தேவன் அவன்
மேல் திரும்பும்படி செய்தார். சீகேம் மனுஷர் 57
செய்த எல்லாப் பொல்லாப்பையும் தேவன்
அவர்கள் தலையின்மேல் திரும்பும்படி செய்
தார்; [6]யெருபாகாலின் குமாரன் யோதாமின்
சாபம் அவர்களுக்குப் பலித்தது.

## 10

அபிமெலேக்குக்குப் பின்பு தோதோ 10
வின் மகனாகிய பூவாவின் குமாரன் தோலா
என்னும் இசக்கார் கோத்திரத்தான் இஸ்ர
வேலை இரட்சிக்க எழும்பினான்; [7]அவன் எப்
பிராயீம் மலைத்தேசத்து ஊராகிய சாமீரிலே
குடியிருந்தான். அவன் இஸ்ரவேலை இரு 2
பத்துமூன்று வருஷம் நியாயம் விசாரித்து,
பின்பு மரித்து, சாமீரிலே அடக்கம்பண்ணப்
பட்டான்.

அவனுக்குப்பின்பு, கீலேயாத்தியனான யா 3
வீர் எழும்பி, இஸ்ரவேலை இருபத்திரண்டு
வருஷம் நியாயம் விசாரித்தான். முப்பது கழு 4
தைக்குட்டிகளின்மேல் ஏறும் முப்பது குமா
ரர் அவனுக்கு இருந்தார்கள்; [8]அவர்களுக்கு
முப்பது ஊர்களும் இருந்தது; கீலேயாத்
தேசத்திலிருக்கிற அவைகளுக்கு இந்நாள்
வரைக்கும் யாவீரின் கிராமங்களென்கிற பேர்
இருக்கிறது. யாவீர் மரித்து, காமோனிலே 5
அடக்கம்பண்ணப்பட்டான்.

இஸ்ரவேல் புத்திரர், மறுபடியும் கர்த்த 6
ரின் பார்வைக்குப் பொல்லாப்புச் செய்து,
[9]கர்த்தரைச் சேவியாமல் அவரை விட்டுப்
போய், பாகால்களையும், அஸ்தரோத்தையும்,
சீரியாவின் தேவர்களையும், சீதோனின் தேவர்
களையும், [10]மோவாபின் தேவர்களையும், அம்
மோன் புத்திரரின் தேவர்களையும், பெலிஸ்
தரின் தேவர்களையும் சேவித்தார்கள். அப் 7
பொழுது கர்த்தர் இஸ்ரவேலின்மேல் கோப
மூண்டு, அவர்களைப் பெலிஸ்தர் கையிலும்,
அம்மோன் புத்திரர் கையிலும் [11]விற்றுப்போட்
டார். அவர்கள் அந்த வருஷம் முதற்கொ 8
ண்டு பதினெட்டு வருஷமாய் யோர்தானுக்கு
அப்பாலே கீலேயாத்திலுள்ள எமோரியரின்
தேசத்தில் இருக்கிற இஸ்ரவேல் புத்திரரை
யெல்லாம் நெருக்கி ஒடுக்கினார்கள். அம் 9
மோன் புத்திரர் யூதாவின்மேலும், பென்ய
மீன்மேலும், எப்பிராயீம் குடும்பத்தார்மேலும்
யுத்தம்பண்ண யோர்தானைக் கடந்துவந்தார்
கள்; இஸ்ரவேலர் மிகவும் நெருக்கப்பட்டார்
கள். அப்பொழுது இஸ்ரவேல் புத்திரர் கர்த் 10
தரை நோக்கி முறையிட்டு: [12]உமக்கு விரோத
மாகப் பாவம் செய்தோம்; நாங்கள் எங்கள்
தேவனைவிட்டு, பாகால்களைச் சேவித்தோம்
என்றார்கள். கர்த்தர் இஸ்ரவேல் புத்திரரை 11
நோக்கி: எகிப்தியரும், எமோரியரும், அம்

12 மோன் புத்திரரும், பெலிஸ்தியரும், சீதோ
னியரும், அமலேக்கியரும், மாகோனியரும்,
உங்களை ஒடுக்கும் சமயங்களில், நீங்கள்
என்னை நோக்கி முறையிட்டபோது, நான்
உங்களை அவர்கள் கைக்கு நீங்கலாக்கி [1]இரட்
13 சிக்கவில்லையா? அப்படியிருந்தும் நீங்கள்
என்னை விட்டு, [2]அந்நிய தேவர்களைச் சேவித்
தீர்கள்; ஆகையால் இனி உங்களை இரட்சி
14 யேன். நீங்கள் போய், உங்களுக்காகத் தெரி
ந்துகொண்ட தேவர்களை நோக்கி முறையிடுங்
கள்; [3]அவைகள் உங்கள் ஆபத்தின் காலத்தில்
15 உங்களை இரட்சிக்கட்டும் என்றார். இஸ்ர
வேல் புத்திரர் **கர்த்தரை** நோக்கி: பாவம் செய்
தோம், தேவரீர் உம்முடைய பார்வைக்கு நல
மானதை எங்களுக்குச் செய்யும்; [4]இன்றைக்
குமாத்திரம் எங்களை இரட்சித்தருளும் என்று
16 சொல்லி, அந்நிய தேவர்களைத் தங்கள் நடு
விலிருந்து விலக்கிவிட்டு, **கர்த்தருக்கு** ஆரா
தனை செய்தார்கள்; [5]அப்பொழுது அவர்
இஸ்ரவேலின் வருத்தத்தைப் பார்த்து மன
திருகினார்.
17 அம்மோன் புத்திரர் கூட்டங்கூடி, கீலே
யாத்திலே பாளயமிறங்கினார்கள்; இஸ்ரவேல்
புத்திரரும் கூடிக்கொண்டு, மிஸ்பாவிலே
18 [6]பாளயமிறங்கினார்கள். அப்பொழுது கீலே
யாத்தின் ஜனங்களும் பிரபுக்களும் ஒருவரை
யொருவர் நோக்கி: அம்மோன் புத்திரர்மேல்
முந்தி யுத்தம்பண்ணப்போகிற மனுஷன் யார்?
அவனே கீலேயாத்தின் குடிகளுக்கெல்லாம்
[7]தலைவனாயிருப்பான் என்றார்கள்.

11 கீலேயாத்தியனான யெப்தா [8]பலத்த பராக்
கிரமசாலியாயிருந்தான்; அவன் பரஸ்திரீயின்
குமாரன்; கிலெயாத் அவனைப் பெற்றான்.
2 கிலெயாத்தின் மனைவியும் அவனுக்குக் குமா
ரர்களைப் பெற்றாள்; அவன் மனைவி பெற்ற
குமாரர் பெரியவர்களானபின்பு, அவர்கள்
யெப்தாவை நோக்கி: உனக்கு எங்கள் தகப்
பன் வீட்டிலே சுதந்தரம் இல்லை; நீ அந்நிய
ஸ்திரீயின் மகன் என்று சொல்லி அவனைத்
3 துரத்தினார்கள். அப்பொழுது யெப்தா: தன்
சகோதரரை விட்டு ஓடிப்போய், தோப்தேசத்
திலே குடியிருந்தான்; [9]வீணரான மனுஷர்
யெப்தாவோடே கூடிக்கொண்டு, அவனோடே
கூட யுத்தத்திற்குப் போவார்கள்.
4 சிலநாளைக்குப்பின்பு, அம்மோன் புத்திரர்
இஸ்ரவேலின்மேல் யுத்தம்பண்ணினார்கள்.
5 அவர்கள் இஸ்ரவேலின்மேல் யுத்தம்பண்ணும்
போது கீலேயாத்தின் மூப்பர் யெப்தாவைத்
தோப்தேசத்திலிருந்து அழைத்துவரப்போய்,
6 யெப்தாவை நோக்கி: நீ வந்து, நாங்கள் அம்
மோன் புத்திரரோடு யுத்தம்பண்ண எங்கள்
சேனாபதியாயிருக்கவேண்டும் என்றார்கள்.
7 அதற்கு யெப்தா கீலேயாத்தின் மூப்பரைப்
பார்த்து: நீங்கள் அல்லவா என்னைப் பகைத்து,
[10]என் தகப்பன் வீட்டிலிருந்து என்னைத் துரத்
தினவர்கள்? இப்பொழுது உங்களுக்கு ஆப
த்து நேரிட்டிருக்கிற சமயத்தில் நீங்கள் என்

1 யாத். 14. 30. எண். 21. 21—25. சங். 106. 42, 43
2 எரே. 2. 13
3 உபா. 32. 37, 38. 2 இரா. 3. 13. எரே. 2. 28
4 1 சாமு. 3. 18. 2 சாமு. 15. 26
5 2 நாளா. 7. 14: 15. 8. சங். 106. 44, 45. ஏசா. 63. 9
6 ஆதி. 31. 49
7 நியா. 11. 8, 11
8 நியா. 6. 12. 2 இரா. 5. 1. எபி. 11. 32
9 நியா. 9. 4. 1 சாமு. 22. 2
10 ஆதி. 26. 27
11 நியா. 10. 18. லூ. 17. 4
12 எரே. 42. 5
13 நியா. 20. 1. 1 சாமு. 10. 17
14 எண். 21. 24
15 உபா. 2. 9, 19
16 எண். 13. 26: 20. 1. உபா. 1. 40. யோசு. 5. 6
17 எண். 21. 11: 22. 36

னிடத்தில் ஏன் வருகிறீர்கள் என்றான். அதற் 8
குக் கீலேயாத்தின் மூப்பர் யெப்தாவை நோ
க்கி: நீ எங்களுடனேகூட வந்து, அம்மோன்
புத்திரரோடு யுத்தம்பண்ணி, கீலேயாத்தின்
குடிகளாகிய எங்கள் அனைவர்மேலும் தலைவ
னாயிருக்கவேண்டும்; [11]இதற்காக இப்பொழுது
உன்னிடத்தில் வந்தோம் என்றார்கள். அத 9
ற்கு யெப்தா: அம்மோன் புத்திரரோடே யுத்
தம்பண்ண, நீங்கள் என்னைத் திரும்ப அழை
த்துப்போனபின்பு, **கர்த்தர்** அவர்களை என்
முன்னிலையாய் ஒப்புக்கொடுத்தால், என்னை
உங்களுக்குத் தலைவனாய் வைப்பீர்களா என்று
கீலேயாத்தின் மூப்பரைக் கேட்டான். கீலே 10
யாத்தின் மூப்பர் யெப்தாவைப் பார்த்து: நாங்
கள் உன் வார்த்தையின்படியே செய்யாவிட்
டால், **கர்த்தர்** நமக்கு நடுநின்று [12]கேட்பாராக
என்றார்கள். அப்பொழுது யெப்தா கீலே 11
யாத்தின் மூப்பரோடே கூடப்போனான்;
ஜனங்கள் அவனைத் தங்கள்மேல் தலைவனும்
சேனாபதியுமாக வைத்தார்கள். யெப்தா தன்
காரியங்களையெல்லாம் மிஸ்பாவிலே **கர்த்தரு
டைய** [13]சந்நிதியிலே சொன்னான்.
பின்பு யெப்தா அம்மோன் புத்திரரின் ரா 12
ஜாவினிடத்திற்கு ஸ்தானாபதிகளை அனுப்பி:
நீ என் தேசத்தில் எனக்கு விரோதமாக யுத்
தம்பண்ண வருகிறதற்கு, எனக்கும் உனக்கும்
என்ன வழக்கு இருக்கிறது என்று கேட்கச்
சொன்னான். அம்மோன் புத்திரரின் ராஜா 13
யெப்தாவின் ஸ்தானாபதிகளை நோக்கி: இஸ்ர
வேலர் எகிப்திலிருந்து வருகிறபோது, அர்
னோன் துவக்கி யாபோக்மட்டும், யோர்தான்
மட்டும் இருக்கிற என் தேசத்தைக் கட்டிக்
கொண்டார்களே; [14]இப்பொழுது அதை எனக்
குச் சமாதானமாய்த் திரும்பக் கொடுத்துவிட
வேண்டும் என்று சொல்லுங்கள் என்றான்.
யெப்தா மறுபடியும் அம்மோன் புத்திரரின் 14
ராஜாவினிடத்திற்கு ஸ்தானாபதிகளை அனுப்பி
அவனுக்குச் சொல்லச்சொன்னதாவது: யெப் 15
தா சொல்லுகிறது என்னவென்றால்: இஸ்ர
வேலர் மோவாபியரின் தேசத்தையாகிலும்,
அம்மோன் புத்திரரின் தேசத்தையாகிலும்
[15]கட்டிக்கொண்டதில்லையே. இஸ்ரவேலர் 16
எகிப்திலிருந்து வருகிறபோது, வனாந்தரத்தில்
சிவந்த சமுத்திரமட்டும் நடந்து, [16]பின்பு காதே
சுக்கு வந்து, இஸ்ரவேலர் ஏதோமின் ராஜா 17
வினிடத்திற்கு ஸ்தானாபதிகளை அனுப்பி: நாங்
கள் உன் தேசத்துவழியாய்க் கடந்துபோகட்
டும் என்று சொல்லச்சொன்னார்கள்; அதற்கு
ஏதோமின் ராஜா செவிகொடுக்கவில்லை; அப்
படியே மோவாபின் ராஜாவினிடத்திற்கும்
அனுப்பினார்கள்; அவனும் சம்மதிக்கவில்லை.
ஆதலால் இஸ்ரவேலர் காதேசிலே தரித்தி
ருந்து, பின்பு வனாந்தரவழியாய் நடந்து ஏ 18
தோம் தேசத்தையும் மோவாப் தேசத்தையும்
சுற்றிப்போய், [17]மோவாபின் தேசத்திற்குக்
கிழக்கேவந்து, மோவாபின் எல்லைக்குள் பிர
வேசியாமல், மோவாபின் எல்லையான அர்

னோன் நதிக்கு அப்பாலே பாளயமிறங்கினார்
19 கள். அப்பொழுது இஸ்ரவேலர் எஸ்போனில்
ஆளுகிற சீகோன் என்னும் எமோரியரின்
ராஜாவினிடத்திற்கு ஸ்தானாபதிகளை அனுப்பி:
[1]நாங்கள் உன் தேசத்து வழியாய் எங்கள்
ஸ்தானத்திற்குக் கடந்துபோக இடங்கொடு
20 என்று சொல்லச்சொன்னார்கள். சீகோன் இஸ்
ரவேலரை நம்பாததினால், தன் எல்லையைக் கட
ந்துபோகிறதற்கு இடங்கொடாமல் தன் ஜனங்
களையெல்லாம் கூட்டி, யாகாசிலே பாளய
மிறங்கி, இஸ்ரவேலரோடே யுத்தம்பண்ணி
21 னான். அப்பொழுது இஸ்ரவேலின் தேவனா
கிய **கர்த்தர்** சீகோனையும் அவனுடைய எல்லா
ஜனங்களையும் இஸ்ரவேலரின் கையில் ஒப்புக்
கொடுத்தார்; அவர்களை முறிய அடித்தார்கள்;
அப்படியே இஸ்ரவேலர் அந்தத் தேசத்திலே
குடியிருந்த எமோரியரின் சீமையையெல்
22 லாம் பிடித்து, அர்னோன் துவக்கி, யாபோக்
மட்டும், வனாந்தரம் துவக்கி யோர்தான்மட்
டும் இருக்கிற எமோரியரின் எல்லையையெல்
லாம் சுதந்தரமாய்க் கட்டிக்கொண்டார்கள்.
23 இப்படி இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்**
எமோரியரைத் தம்முடைய ஜனமாகிய இஸ்ர
வேலுக்கு முன்பாகத் துரத்தியிருக்க, நீர் அந்
24 தத் தேசத்தைக் கட்டிக்கொள்ளத் தகுமா? உம்
முடைய தேவனாகிய காமோஸ் [2]உமக்கு முன்
பாகத் துரத்துகிறவர்களின் தேசத்தை நீர் கட்
டிக்கொள்ளமாட்டீரோ? அப்படியே எங்கள்
தேவனாகிய **கர்த்தர்** எங்களுக்கு முன்பாகத்
துரத்துகிறவர்களின் தேசத்தையெல்லாம்
25 [3]நாங்களும் கட்டிக்கொள்ளுகிறோம். மேலும்
சிப்போரின் குமாரனாகிய பாலாக் என்னும்
மோவாபின் ராஜாவைப்பார்க்கிலும் உமக்கு
அதிக நியாயம் உண்டோ? [4]அவன் இஸ்ர
வேலோடே எப்போதாகிலும் வழக்காடினானா?
எப்போதாகிலும் அவர்களுக்கு விரோதமாக
26 யுத்தம்பண்ணினானா? இஸ்ரவேலர் எஸ்போ
னிலும் அதின் கிராமங்களிலும், [5]ஆரோவேரி
லும் அதின் கிராமங்களிலும், அர்னோன் நதி
யருகான எல்லா ஊர்களிலும், முந்நூறு வரு
ஷம் குடியிருக்கையில், இவ்வளவுகாலமாய்
நீங்கள் அதைத் திருப்பிக்கொள்ளாதே போன
27 தென்ன? நான் உமக்கு விரோதமாய்க் குற்
றஞ்செய்யவில்லை; நீர் எனக்கு விரோதமாய்
யுத்தம்பண்ணுகிறதினால் நீர்தான் எனக்கு
அநியாயம் செய்கிறீர்; [6]நியாயாதிபதியாகிய
**கர்த்தர்** இன்று இஸ்ரவேல் புத்திரருக்கும்
அம்மோன் புத்திரருக்கும் நடுநின்று நியாயம்
தீர்க்கக்கடவர் என்று சொல்லி அனுப்பினான்.
28 ஆனாலும் அம்மோன் புத்திரரின் ராஜா தன
க்கு யெப்தா சொல்லியனுப்பின வார்த்தை
களுக்குச் செவிகொடாதேபோனான்.
29 அப்பொழுது **கர்த்தருடைய** ஆவி யெப்தா
வின்மேல் இறங்கினார்; [7]அவன் கீலேயாத்தை
யும் மனாசே நாட்டையும் கடந்துபோய், கீலே
யாத்திலிருக்கிற மிஸ்பாவுக்கு வந்து, அங்கே
யிருந்து அம்மோன் புத்திரருக்கு விரோதமா
கப் போனான். அப்பொழுது யெப்தா **கர்த்** 30
**தருக்கு** ஒரு பொருத்தனையைப் பண்ணி:
[8]தேவரீர் அம்மோன் புத்திரரை என் கையில்
ஒப்புக்கொடுக்கவே ஒப்புக்கொடுத்தால், நான் 31
அம்மோன் புத்திரரிடத்திலிருந்து சமாதானத்
தோடே திரும்பிவரும்போது, என் வீட்டு வா
சற்படியிலிருந்து எனக்கு எதிர்கொண்டு வரு
வது எதுவோ அது **கர்த்தருக்கு** உரியதாகும்,
[9]அதைச் சர்வாங்க தகனபலியாகச் செலுத்து
வேன் என்றான். யெப்தா அம்மோன் புத்தி 32
ரரின்மேல் யுத்தம்பண்ண, அவர்களுக்கு
விரோதமாய்ப் புறப்பட்டுப்போனான்; **கர்த்**
**தர்** அவர்களை அவன் கையில் ஒப்புக்கொடுத்
தார். அவன் அவர்களை ஆரோவேர் துவக்கி 33
மின்னீத்திற்குப் [10]போகுமட்டும், திராட்சத்
தோட்டத்து நிலங்கள் வரைக்கும், மகா சங்
காரமாய் முறிய அடித்து, இருபது பட்டணங்
களைப் பிடித்தான்; இப்படி அம்மோன் புத்தி
ரர் இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாகத் தாழ்
த்தப்பட்டார்கள்.
யெப்தா மிஸ்பாவிலிருக்கிற தன் வீட்டுக்கு 34
வருகிறபோது, இதோ, அவன் குமாரத்தி தம்
புரு வாசித்து நடனஞ்செய்து, அவனுக்கு
எதிர்கொண்டு வந்தாள்; [11]அவள் அவனுக்கு
ஒரேபிள்ளையானவள்; அவளையல்லாமல் அவ
னுக்குக் குமாரனும் இல்லை குமாரத்தியும்
இல்லை. அவன் அவளைக் கண்டவுடனே தன் 35
வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு: [12]ஐயோ!
என் மகளே, என்னை மிகவும் மனமடியவும்
கலங்கவும் பண்ணுகிறாய்; நான் **கர்த்தரை**
நோக்கி என் வாயைத் திறந்து சொல்லிவிட்
டேன்; [13]அதை நான் மாற்றக்கூடாது என்
றான். அப்பொழுது அவள்: என் தகப்பனே, 36
நீர் **கர்த்தரை** நோக்கி உம்முடைய வாயைத்
திறந்து பேசினீரல்லவோ? அம்மோன் புத்திர
ராகிய உம்முடைய சத்துருக்களுக்கு நீதி
யைச் சரிக்கட்டும் ஜெயத்தைக் **கர்த்தர்** உமக்
குக் கட்டளையிட்டபடியினால், [14]உம்முடைய
வாயிலிருந்து புறப்பட்டபடியே எனக்குச்
செய்யும் என்றாள். பின்னும் அவள் தன் தகப் 37
பனை நோக்கி: நீர் எனக்கு ஒரு காரியம் செ
ய்யவேண்டும்; நான் மலைகளின்மேல் போய்த்
திரிந்து, நானும் என் தோழிமார்களும் என்
கன்னிமையினிமித்தம் துக்கம் கொண்டாட,
எனக்கு இரண்டுமாதம் தவணைகொடும் என்
றாள். அதற்கு அவன்: போய்வா என்று 38
அவளை இரண்டு மாதத்திற்கு அனுப்பிவிட்
டான்; அவள் தன் தோழிமார்களோடும் கூட
ப்போய், தன் கன்னிமையினிமித்தம் மலைக
ளின்மேல் துக்கங்கொண்டாடி, இரண்டு 39
மாதம் முடிந்தபின்பு, தன் தகப்பனிடத்திற்
குத் திரும்பிவந்தாள்; அப்பொழுது அவன்
பண்ணியிருந்த தன் பொருத்தனையின்படி
அவளுக்குச் செய்தான்; [15]அவள் புருஷனை
அறியாதிருந்தாள். இதினிமித்தம் இஸ்ரவே 40
லின் குமாரத்திகள் வருஷந்தோறும் போய்,
நாலுநாள் கீலேயாத்தியனான யெப்தாவின்

[1] எண். 21. 21. உபா. 2. 26. ழி
[2] எண். 21. 29. 1 இரா. 11. 7. எரே. 48. 7
[3] மீகா 4. 5. உபா. 18. 12. சங். 78. 55
[4] எண். 22. 2. ழி
[5] எண். 21. 25. உபா. 2. 36
[6] ஆதி. 18. 25; 16. 5. 1 சாமு. 24. 12. சங். 75. 7. பிர. 12. 14
[7] பிர. 3. 10
[8] ஆதி. 28. 20. 1 சாமு. 1. 11. பிர. 5. 2–5
[9] லேவி. 27. 2. ழி. சங். 66. 13, 14
[10] எசே. 27. 17
[11] யாத். 15. 20. 1 சாமு. 18. 6. சங். 68. 25; 150. 4. எரே. 31. 4
[12] ஆதி. 37. 29, 34
[13] எண். 30. 2. சங். 15. 4
[14] எண். 30. 2. 2 சாமு. 18. 19, 31
[15] 31. லே. 1 சாமு. 1. 22, 24; 2. 18

குமாரத்தியைக்குறித்துப் புலம்புவது இஸ்ர
வேலிலே வழக்கமாயிற்று.

**12** எப்பிராயீம் மனுஷர் ஏகமாய்க் கூடி வட
க்கே புறப்பட்டுப் போய், யெப்தாவை நோ
க்கி: [1]நீ எங்களை உன்னோடேகூட வரும்படி
அழைப்பியாமல் அம்மோன் புத்திரர்மேல் யுத்
தம்பண்ணப் போனதென்ன? உன் வீட்டை
யும் உன்னையுங்கூட அக்கினியால் சுட்டுப்
2 போடுவோம் என்றார்கள். அதற்கு யெப்தா:
எனக்கும் என் ஜனத்திற்கும் அம்மோன் புத்
திரரோடே பெரிய வழக்கு இருக்கும்போது,
நான் உங்களைக் கூப்பிட்டேன்; நீங்கள்
என்னை அவர்கள் கைக்கு நீங்கலாக்கி இரட்
3 சிக்கவில்லை. நீங்கள் என்னை இரட்சிக்க
வில்லை என்று நான் கண்டபோது, நான்
என் ஜீவனை என் கையிலே பிடித்துக்கொ
ண்டு, [2]அம்மோன் புத்திரருக்கு விரோதமா
ய்ப் போனேன்; **கர்த்தர்** அவர்களை என் கை
யில் ஒப்புக்கொடுத்தார்; இப்படியிருக்க, நீங்
கள் என்மேல் யுத்தம்பண்ண, இன்று என்னி
டத்திற்கு வரவேண்டியது என்ன என்று
4 சொன்னான். பின்பு யெப்தா கீலேயாத் மனு
ஷரையெல்லாம் கூட்டி, எப்பிராயீமரோடு
யுத்தம்பண்ணினான்; எப்பிராயீமுக்கும் மனா
சேக்கும் நடுவே குடியிருக்கிற கீலேயாத்திய
ரான நீங்கள் எப்பிராயீமைவிட்டு ஓடிப்போ
னவர்கள் [3]என்று எப்பிராயீமர் சொன்னபடி
யினால், கீலேயாத் மனுஷர் அவர்களை முறிய
5 அடித்தார்கள். கீலேயாத்தியர் எப்பிராயீமரு
க்கு முந்தி யோர்தானின் துறைகளைப் பிடித்
தார்கள்; [4]அப்பொழுது எப்பிராயீமரிலே தப்
பினவர்களில் யாராவது வந்து: நான் அக்க
ரைக்குப் போகட்டும் என்று சொல்லும்போ
து; கீலேயாத் மனுஷர்: நீ எப்பிராயீமனா
என்று அவனைக் கேட்பார்கள்; அவன் அல்ல
6 என்றால், நீ *ஷிபோலேத் என்று சொல்
என்பார்கள்; அப்பொழுது அவன் அப்படி
உச்சரிக்கக்கூடாமல், சிபோலேத் என்பான்;
அப்பொழுது அவனைப் பிடித்து, யோர்தான்
துறையிலே வெட்டிப்போடுவார்கள்; அக்கா
லத்திலே எப்பிராயீமில் நாற்பத்தீராயிரம்பேர்
விழுந்தார்கள்.

7 யெப்தா இஸ்ரவேலை ஆறு வருஷம் நியா
யம் விசாரித்தான்; பின்பு கீலேயாத்திய
னான யெப்தா மரித்து, கீலேயாத்திலுள்ள
ஒரு பட்டணத்தில் அடக்கம் பண்ணப்பட்
டான்.

8 அவனுக்குப் பின்பு பெத்லெகேம் ஊரானா
கிய இப்சான் இஸ்ரவேலை நியாயம் விசாரித்
9 தான். அவனுக்கு முப்பது குமாரரும் முப்
பது குமாரத்திகளும் இருந்தார்கள்; முப்பது
குமாரத்திகளையும் புறத்திலே விவாகம்பண்
ணிக்கொடுத்து, தன் குமாரருக்கு முப்பது
பெண்களைப் புறத்திலே கொண்டான்; அவன்
இஸ்ரவேலை ஏழு வருஷம் நியாயம் விசாரித்
10 தான். பின்பு இப்சான் மரித்து, பெத்லெ
கேமிலே அடக்கம் பண்ணப்பட்டான்.

1 நியா. 8. 1
2 1 சாமு. 19. 5; 28. 21. யோபு 13. 14. சங். 119. 109
3 1 சாமு. 25. 10
4 யோசு. 22. 11
* வெள்ளம், ஜலப் பிரவாகம், சங். 69. 2, 15. ஏசா. 27. 12
5 நியா. 5. 10; 10. 4
6 எசே. 18. 23. 1 சாமு. 12. 9
7 யோசு. 19. 41
8 லூ. 1. 11. ழ
9 1 சாமு. 1. 11
10 எண். 6. 2. ழ
11 1 இரா. 17. 24; மத். 28. 3. லூ. 9. 29. அப். 6. 15

அவனுக்குப் பின்பு செபுலோனியனாகிய 11
ஏலோன் இஸ்ரவேலை நியாயம் விசாரித்தான்;
அவன் பத்து வருஷம் இஸ்ரவேலை நியாயம்
விசாரித்தான். பின்பு செபுலோனியனாகிய 12
ஏலோன் மரித்து, செபுலோன் தேசமான
ஆயலோன் ஊரில் அடக்கம் பண்ணப்பட்
டான்.

அவனுக்குப் பின்பு இல்லேலின் குமார 13
னாகிய பிரத்தோனியனான அப்தோன் இஸ்ர
வேலை நியாயம் விசாரித்தான். அவனுக்கு 14
நாற்பது குமாரரும் முப்பது பேரப்பிள்ளைக
ளும் இருந்தார்கள்; அவர்கள் எழுபது கழு
தைகளின்மேல் ஏறுவார்கள்; [5]அவன் இஸ்ர
வேலை எட்டு வருஷம் நியாயம் விசாரித்தான்.
பின்பு பிரத்தோனியனான இல்லேலின் குமா 15
ரனாகிய அப்தோன் மரித்து, எப்பிராயீம்தே
சத்தில் அமலேக்கியர் மலையிலிருக்கிற பிரத்
தோனிலே அடக்கம் பண்ணப்பட்டான்.

இஸ்ரவேல் புத்திரர் மறுபடியும் **கர்த்தரின்** **13**
பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்த
படியால், [6]**கர்த்தர்** அவர்களை நாற்பது வருஷ
மளவும் பெலிஸ்தர் கையில் ஒப்புக்கொடுத்
தார்.

அப்பொழுது தாண் வம்சத்தானாகிய சோரா 2
ஊரானான ஒரு மனுஷன் இருந்தான்;
[7]அவன் பேர் மனோவா; அவன் மனைவி பிள்ளை
பெறாத மலடியாயிருந்தாள். **கர்த்தருடைய** 3
தூதனானவர் அந்த ஸ்திரீக்குத் தரிசனமாகி,
அவளை நோக்கி: இதோ, பிள்ளைபெறாத மல
டியான நீ கர்ப்பந்தரித்து, [8]ஒரு குமாரனைப்
பெறுவாய். ஆதலால் நீ திராட்சரசமும் மது 4
பானமும் குடியாதபடிக்கும், தீட்டானது
ஒன்றும் புசியாதபடிக்கும் எச்சரிக்கையாயிரு.
நீ கர்ப்பந்தரித்து, ஒரு குமாரனைப் பெறு 5
வாய்; அவன் தலையின்மேல் சவரகன் கத்தி
படலாகாது; [9]அந்தப் பிள்ளை பிறந்ததுமுதல்
தேவனுக்கென்று நசரேயனாயிருப்பான்;
[10]அவன் இஸ்ரவேலைப் பெலிஸ்தரின் கைக்கு
நீங்கலாக்கி இரட்சிக்கத் தொடங்குவான் என்
றார். அப்பொழுது அந்த ஸ்திரீ தன் புருஷ 6
னிடத்தில் வந்து: தேவனுடைய மனுஷன்
ஒருவர் என்னிடத்தில் வந்தார்; [11]அவருடைய
சாயல் தேவனுடைய தூதரின் சாயலைப்
போல மகா பயங்கரமாயிருந்தது; எங்கேயி
ருந்து வந்தீர் என்று நான் அவரிடத்தில் கேட்
கவில்லை; அவர் தம்முடைய நாமத்தை எனக்
குச் சொல்லவுமில்லை. அவர் என்னை நோக்கி: 7
இதோ, நீ கர்ப்பந்தரித்து, ஒரு குமாரனைப்
பெறுவாய்; ஆதலால் நீ திராட்சரசமும் மது
பானமும் குடியாமலும், தீட்டானது ஒன்றும்
புசியாமலும் இரு; அந்தப் பிள்ளை பிறந்தது
முதல் தன் மரணநாள்மட்டும் தேவனுக்
கென்று நசரேயனாயிருப்பான் என்று சொன்
னார் என்றாள். அப்பொழுது மனோவா **கர்த்** 8
**தரை** நோக்கி விண்ணப்பம்பண்ணி: ஆ, என்
ஆண்டவரே, நீர் அனுப்பின தேவனுடைய
மனுஷன் மறுபடியும் ஒருவிசை எங்களிடத்

தில் வந்து, பிறக்கப்போகிற பிள்ளைக்காக
நாங்கள் செய்யவேண்டியதை எங்களுக்குக்
கற்பிப்பாராக என்று வேண்டிக்கொண்டான்.
9 தேவன் மனோவாவின் சத்தத்துக்குச் செவி
கொடுத்தார்; அந்த ஸ்திரீ வயல்வெளியில்
இருக்கும்போது தேவனுடைய தூதனானவர்
திரும்பவும் அவளிடத்தில் வந்தார்; அப்பொ
ழுது அவள் புருஷனாகிய மனோவா அவளோ
10 டே இருக்கவில்லை. ஆகையால் அந்த ஸ்திரீ
சீக்கிரமாய் ஓடி, இதோ, அன்று என்னிடத்
தில் வந்தவர் எனக்குத் தரிசனமானார் என்று
11 தன் புருஷனுக்கு அறிவித்தாள். அப்பொ
ழுது மனோவா எழுந்திருந்து, தன் மனைவியின்
பின்னாலே போய், அவரிடத்துக்கு வந்து:
இந்த ஸ்திரீயோடே பேசினவர் நீர்தானா என்று
அவரிடத்தில் கேட்டான்; அவர் நான்தான்
12 என்றார். அப்பொழுது மனோவா: நீர் சொ
ன்ன காரியம் நிறைவேறும்போது, அந்தப்
பிள்ளையை எப்படி வளர்க்கவேண்டும், அதை
எப்படி நடத்தவேண்டும் என்று கேட்டான்.
13 **கர்த்தருடைய** தூதனானவர் மனோவாவை
நோக்கி: நான் ஸ்திரீயோடே சொன்ன யாவற்
14 றிற்கும், அவள் எச்சரிக்கையாயிருந்து, தி
ராட்சச்செடியிலே உண்டாகிறதொன்றும்
சாப்பிடாமலும், திராட்சரசமும் மதுபானமும்
குடியாமலும், தீட்டானதொன்றும் புசியாம
லும், நான் அவளுக்குக் கட்டளையிட்டதை
யெல்லாம் கைக்கொள்ளக்கடவள் என்றார்.
15 அப்பொழுது மனோவா **கர்த்தருடைய** தூதனை
நோக்கி: நாங்கள் ஒரு வெள்ளாட்டுக்குட்டி
யை உமக்காகச் சமைத்துக்கொண்டுவருமட்
16 டும் தரித்திரும் [1]என்றான். **கர்த்தருடைய**
தூதனானவர் மனோவாவை நோக்கி: நீ என்னை
இருக்கச்சொன்னாலும் நான் உன் உணவைப்
புசியேன்; நீ சர்வாங்க தகனபலி இடவேண்
டுமானால்; அதை நீ **கர்த்தருக்குச்** செலுத்து
வாயாக என்றார். அவர் **கர்த்தருடைய** தூதன்
17 என்று மனோவா அறியாதிருந்தான். அப்
பொழுது மனோவா **கர்த்தருடைய** தூதனை நோ
க்கி: நீர் சொன்ன காரியம் நிறைவேறும்போது,
நாங்கள் உம்மைக் கனம்பண்ணும்படி, உம்மு
டைய நாமம் என்ன [2]என்று கேட்டான்.
18 அதற்குக் **கர்த்தருடைய** தூதனானவர்: என்
நாமம் என்ன என்று நீ கேட்கவேண்டியது
19 என்ன? அது அதிசயம் [3]என்றார். மனோவா
போய், வெள்ளாட்டுக்குட்டியையும் போஜன
பலியையும் கொண்டுவந்து, அதைக் கன்மலை
யின்மேல் **கர்த்தருக்குச்** செலுத்தினான்; [4]அப்
பொழுது மனோவாவும் அவன் மனைவியும்
பார்த்துக்கொண்டிருக்கையில், அதிசயம்
20 விளங்கினது. அக்கினிஜுவாலை பலிபீடத்தி
லிருந்து வானத்திற்கு நேராக எழும்புகை
யில், **கர்த்தருடைய** தூதனானவர் பலிபீடத்
தின் ஜுவாலையிலே ஏறிப்போனார்; அதை
மனோவாவும் அவன் மனைவியும் கண்டு, [5]தரை
21 யிலே முகங்குப்புற விழுந்தார்கள். பின்பு
**கர்த்தருடைய** தூதனானவர் மனோவாவுக்கும்

[1] ஆதி. 18. 5. நியா. 6. 18. ழ
[2] ஆதி. 32. 29
[3] ஏசா. 9. 6
[4] நியா. 6. 19—23
[5] லேவி. 9. 24. எசே. 1. 28. மத். 17. 6
[6] ஆதி. 32. 30. யாத். 33. 20. உபா. 5. 26
[7] சங். 25. 14; 27. 13. நீதி. 3. 32. யோ. 15. 15
[8] எபி. 11. 32. 1 சாமு. 3. 19. லூ. 1. 80; 2. 52
[9] நியா. 3. 10. 1 சாமு. 11. 6. மத். 4. 1
[10] ஆதி. 38. 13. யோசு. 15. 10
[11] ஆதி. 24. 3, 4; 34. 14. யாத். 34. 12, 16. உபா. 7. 3
[12] யோசு. 11. 20. 2 இரா. 6. 33. நியா. 13. 1
[13] நியா. 13. 25. 1 சாமு. 11. 6; 17. 34, 35

அவன் மனைவிக்கும் காணப்படவில்லை; அப்
பொழுது அவர் **கர்த்தருடைய** தூதன் என்று
மனோவா அறிந்து, தன் மனைவியைப் பார் 22
த்து: நாம் தேவனைக் கண்டோம், [6]சாகவே
சாவோம் என்றான். அதற்கு அவன் மனைவி: 23
**கர்த்தர்** நம்மைக் கொன்றுபோடச் சித்தமா
யிருந்தால், அவர் நம்முடைய கையிலே சர்
வாங்க தகனபலியையும் போஜனபலியையும்
ஒப்புக்கொள்ளமாட்டார், [7]இவைகளையெல்
லாம் நமக்குக் காண்பிக்கவுமாட்டார், இவை
களை நமக்கு அறிவிக்கவுமாட்டார் என்றாள்.
பின்பு அந்த ஸ்திரீ ஒரு குமாரனைப் பெற்று; 24
அவனுக்குச் சிம்சோன் என்று பேரிட்டாள்;
[8]அந்தப் பிள்ளை வளர்ந்தது; **கர்த்தர்** அவனை
ஆசீர்வதித்தார். அவன் சோராவுக்கும் எஸ் 25
தாவோலுக்கும் நடுவிலுள்ள தாணின் பாள
யத்தில் இருக்கையில் **கர்த்தருடைய** ஆவி
யானவர் [9]அவனை ஏவத்துவக்கினார்.

சிம்சோன் திம்னாத்துக்குப் போய், [10]திம் 14
னாத்திலே பெலிஸ்தரின் குமாரத்திகளில்
ஒரு பெண்ணைக் கண்டு, திரும்ப வந்து, 2
தன் தாயையும் தகப்பனையும் நோக்கி: திம்
னாத்திலே பெலிஸ்தரின் குமாரத்திகளில்
ஒரு பெண்ணைக் கண்டேன்; அவளை எனக்
குக் கொள்ளவேண்டும் என்றான். அப்பொ 3
ழுது அவன் தாயும் அவன் தகப்பனும் அவனை
நோக்கி: நீ போய், விருத்தசேதனமில்லாத
பெலிஸ்தரிடத்தில் ஒரு பெண்ணைக் கொள்ள
வேண்டியதென்ன? [11]உன் சகோதரரின் குமா
ரத்திகளிலும், எங்கள் ஜனமனைத்திலும் பெண்
இல்லையா என்றார்கள். சிம்சோன் தன் தகப்
பனை நோக்கி: அவள் என் கண்ணுக்குப் பிரி
யமானவள், அவளையே எனக்குக் கொள்ள
வேண்டும் என்றான். அவன் பெலிஸ்தரிடத் 4
தில் குற்றம்பிடிக்க முகாந்தரம் உண்டாகும்
படி, இது **கர்த்தரின்** செயல் என்று அவன்
தாயும் தகப்பனும் அறியாதிருந்தார்கள்; [12]அக்
காலத்திலே பெலிஸ்தர் இஸ்ரவேலை ஆண்
டார்கள். அப்படியே சிம்சோனும் அவன் 5
தாயும் தகப்பனும் திம்னாத்துக்குப் போகப்
புறப்பட்டார்கள்; அவர்கள் திம்னாத் ஊர்
திராட்சத்தோட்டங்கள்மட்டும் வந்தபோது,
இதோ, கெர்ச்சிக்கிற பாலசிங்கம் ஒன்று அவ
னுக்கு எதிராக வந்தது. அப்பொழுது **கர்த்** 6
**தருடைய** ஆவி அவன்மேல் பலமாய் இறங்
கினதினால், [13]அவன் தன் கையில் ஒன்றும்
இல்லாதிருந்தும், அதை ஒரு ஆட்டுக்குட்டி
யைக் கிழித்துப்போடுகிறதுபோல் கிழித்துப்
போட்டான்; ஆனாலும் தான் செய்ததை
அவன் தன் தாய் தகப்பனுக்கு அறிவிக்க
வில்லை. அவன் போய் அந்தப் பெண்ணோ 7
டே பேசினான்; அவள் சிம்சோனின் கண்
ணுக்குப் பிரியமாயிருந்தாள். சிலநாளைக்குப் 8
பின்பு, அவன் அவளை விவாகம்பண்ணத்
திரும்பிவந்து, சிங்கத்தின் உடலைப் பார்க்கிற
தற்கு வழிவிலகிப்போனான்; இதோ, சிங்கத்
தின் உடலுக்குள்ளே தேனீக்கூட்டமும் தே

9 னும் இருந்தது. அவன் அதைத் தன் கைக
ளில் எடுத்து, [1]சாப்பிட்டுக்கொண்டே நடந்து,
தன் தாய்தகப்பனிடத்தில் வந்து, அவர்களுக்
கும் கொடுத்தான்; அவர்களும் சாப்பிட்டார்
கள்; ஆனாலும் தான் அந்தத் தேனைச் சிங்கத்
தின் உடலிலே எடுத்ததை அவர்களுக்கு அறி
10 விக்கவில்லை. அவன் தகப்பன் அந்தப் பெண்
இருக்கும் இடத்தில் போனபோது, சிம்சோன்
அங்கே விருந்துசெய்தான்; [2]வாலிபர் அப்ப
11 டிச் செய்வது வழக்கம். அவர்கள் அவனைக்
கண்டபோது, அவனோடேகூட இருக்கும்
படி முப்பது தோழரை அவனிடத்தில் கொண்
12 டுவந்தார்கள். சிம்சோன் அவர்களை நோக்கி:
ஒரு விடுகதையை உங்களுக்குச் சொல்லுகி
றேன்; [3]அதை நீங்கள் விருந்துண்கிற ஏழு
நாளைக்குள்ளே [4]கண்டுபிடித்து எனக்கு விடு
வித்தால், நான் உங்களுக்கு முப்பது துப்பட்
டிகளையும் முப்பது மாற்று வஸ்திரங்களையும்
13 கொடுப்பேன். அதை எனக்கு விடுவிக்கா
தேபோனால், நீங்கள் எனக்கு முப்பது துப்
பட்டிகளையும்முப்பதுமாற்றுவஸ்திரங்களையும்
கொடுக்கவேண்டும் என்றான். அதற்கு அவர்
கள்: உன் விடுகதையைச் சொல்லு; நாங்கள்
14 அதைக் கேட்கட்டும் என்றார்கள். அப்பொ
ழுது அவன்: பட்சிக்கிறவனிடத்திலிருந்து
பட்சணமும், பலவானிடத்திலிருந்து மதுர
மும் வந்தது என்றான்; அந்த விடுகதை அவர்
களால் மூன்றுநாள்மட்டும் விடுவிக்கக் கூடா
15 தேபோயிற்று. ஏழாம்நாளிலே அவர்கள் சிம்
சோனின் பெண்சாதியைப் பார்த்து: உன்
புருஷன் அந்த விடுகதையை எங்களுக்கு விடு
விக்கும்படிக்கு நீ அவனை நயம்பண்ணு; [5]இல்
லாவிட்டால் நாங்கள் உன்னையும் உன் தகப்
பன் வீட்டையும் அக்கினியால் சுட்டெரித்துப்
போடுவோம்; [6]எங்களுக்குள்ளவைகளைப் பறி
த்துக்கொள்ளவா எங்களை அழைத்தீர்கள் என்
16 றார்கள். அப்பொழுது சிம்சோனின் பெண்
சாதி அவனுக்கு முன்பாக அழுது, நீ என்னை
நேசியாமல் என்னைப் பகைக்கிறாய், [7]என்
ஜனங்களுக்கு ஒருவிடுகதையைச்சொன்னாய்,
அதை எனக்காவது விடுவிக்கவில்லையே என்
றாள்; அதற்கு அவன்: இதோ, நான் என் தாய்
தகப்பனுக்கும் அதை விடுவிக்கவில்லையே,
உனக்கு அதை விடுவிப்பேனோ என்றான்.
17 விருந்துண்கிற ஏழுநாளும் அவள் அவன் முன்
பாக அழுதுகொண்டே இருந்தாள்; ஏழாம்நா
ளிலே அவள் அவனை அலட்டிக்கொண்டிருந்
தபடியால், [8]அதை அவளுக்கு விடுவித்தான்;
அப்பொழுது அவள் தன் ஜனங்களுக்கு அந்த
18 விடுகதையை விடுவித்தாள். ஆகையால்
ஏழாம்நாளிலே பொழுதுபோகுமுன்னே,
அந்த ஊர் மனுஷர் அவனை நோக்கி: தேனைப்
பார்க்கிலும் மதுரமானது என்ன, சிங்கத்தைப்
பார்க்கிலும் பலமானதும் என்ன என்றார்கள்;
அதற்கு அவன்: நீங்கள் என் கிடாரியால்
உழாதிருந்தீர்களானால், என் விடுகதையைக்
19 கண்டுபிடிப்பதில்லை என்றான். கர்த்தரு

[1] 1 சாமு. 14. 25-30. நீதி. 25. 6
[2] பிர. 10. 19
[3] 1 இரா. 10. 1. நீதி. 1. 6. எசே. 17. 2. லூக். 14. 7
[4] ஆதி. 29. 27. 2 இரா. 7. 18
[5] நியா. 16. 5. நீதி. 1. 10
[6] நியா. 15. 6
[7] நியா. 16. 15
[8] லூக். 11. 8; 18. 4, 5
[9] எரே. 9. 4. மீகா 7. 5. யோவா. 3. 29
[10] நியா. 14. 20
[11] 2 சாமு. 14. 30
[12] நியா. 14. 15

டைய ஆவி அவன்மேல் இறங்கினதினால்,
அவன் அஸ்கலோனுக்குப் போய், அவ்வூரா
ரில் முப்பதுபேரைக் கொன்று, அவர்களு
டைய வஸ்திரங்களை உரிந்துகொண்டுவந்து,
விடுகதையை விடுவித்தவர்களுக்கு அந்தமாற்று
வஸ்திரங்களைக் கொடுத்து, கோபமூண்ட
வனாய்ப் புறப்பட்டு, தன் தகப்பன் வீட்டுக்குப்
போய்விட்டான். சிம்சோனின் பெண்சாதி 20
யோவென்றால், அவனுடைய தோழரில்
[9]அவனோடே சிநேகமாயிருந்த ஒருவனுக்குக்
கொடுக்கப்பட்டாள்.

சிலநாள் சென்றபின்பு, சிம்சோன் கோ 15
துமை அறுக்கிற நாட்களில் ஒருவெள்ளாட்டுக்
குட்டியை எடுத்துகொண்டு, தன் பெண்சாதி
யைக் காணப்போய்: நான் என் பெண்சாதி
யினிடத்தில் அறைவீட்டிற்குள் போகட்டும்
என்றான்; அவள் தகப்பனோ, அவனை உள்
ளேபோக ஒட்டாமல்: நீ அவளை முற்றிலும் 2
பகைத்துவிட்டாய் என்று நான் எண்ணி,
[10]அவளை உன் சிநேகிதனுக்குக் கொடுத்துவிட்
டேன்; அவள் தங்கை அவளைப்பார்க்கிலும்
அழகானவள் அல்லவா, அவளுக்குப் பதி
லாக இவள் உனக்கு இருக்கட்டும் என்று
சொன்னான். அப்பொழுது சிம்சோன்: நான் 3
பெலிஸ்தருக்குப் பொல்லாப்புச்செய்தாலும்,
என்மேல் குற்றமில்லை என்று அவர்களுக்குச்
சொல்லி, புறப்பட்டுப் போய், மூந்நூறு நரிக 4
ளைப் பிடித்து, பந்தங்களை எடுத்து, வாலோ
டே வால் சேர்த்து, இரண்டு வால்களுக்கும்
நடுவே ஒவ்வொரு பந்தத்தை வைத்துக் கட்டி,
பந்தங்களைக் கொளுத்தி, பெலிஸ்தரின் வெள் 5
ளாண்மையிலே அவைகளை ஓடவிட்டு, [11]கதிர்
க்கட்டுகளையும் வெள்ளாண்மையையும் திராட்
சத் தோட்டங்களையும் ஒலிவத்தோப்புகளையும்
சுட்டெரித்துப்போட்டான். இப்படிச் செய் 6
தவன் யார் என்று பெலிஸ்தர் கேட்கிறபோது,
திம்னாத்தானுடைய மருமகனாகிய சிம்சோன்
தான்; அவனுடைய பெண்சாதியை அவனு
டைய சிநேகிதனுக்குக் கொடுத்துவிட்டபடி
யால் அப்படிச் செய்தான் என்றார்கள்; அப்
பொழுது பெலிஸ்தர் போய், அவளையும் அவள்
தகப்பனையும் அக்கினியால் [12]சுட்டெரித்தார்
கள். அப்பொழுது சிம்சோன் அவர்களை 7
நோக்கி: நீங்கள் இப்படிச் செய்தபடியால்
நான் உங்கள் கையிலே பழிவாங்கினாலொ
ழிய இளைப்பாறேன் என்று சொல்லி, அவர் 8
களைச் சின்ன பின்னமாகச் சங்காரம்பண்ணி,
பின்பு போய், ஏத்தாம் ஊர்க் கன்மலைச் சந்
திலே குடியிருந்தான்.

அப்பொழுது பெலிஸ்தர் போய், யூதாவிலே 9
பாளயமிறங்கி, லேகி என்கிற வெளியிலே
பரவியிருந்தார்கள். நீங்கள் எங்களுக்குவிரோ 10
தமாக வந்தது என்ன என்று யூதா மனுஷர்
கேட்டதற்கு, அவர்கள்: சிம்சோன் எங்களுக்
குச் செய்ததுபோல, நாங்களும் அவனுக்குச்
செய்யும்படி அவனைக் கட்டுகிறதற்காக வந்
தோம் என்றார்கள். அப்பொழுது யூதாவிலே 11

மூவாயிரம்பேர் ஏத்தாம் ஊர்க் கன்மலைச்
சந்திற்குப் போய்: பெலிஸ்தர் நம்மை ஆளு
கிறார்கள் என்று தெரியாதா? [1]பின்னை ஏன்
எங்களுக்கு இப்படிச் செய்தாய் என்று சிம்சோ
னிடத்தில் சொன்னார்கள். அதற்கு அவன்:
அவர்கள் எனக்குச் செய்தபடியே நானும்
12 அவர்களுக்குச் செய்தேன் என்றான். அப்
பொழுது அவர்கள்: உன்னைக் கட்டி, பெலிஸ்
தர் கையில் ஒப்புக்கொடுக்க வந்திருக்கிறோம்
என்றார்கள். அதற்குச் சிம்சோன்: நீங்களே
என்மேல் விழுகிறதில்லை என்று எனக்கு
13 ஆணையிடுங்கள் என்றான். அதற்கு அவர்கள்:
நாங்கள் உன்னை இறுகக் கட்டி, அவர்கள்
கையில் ஒப்புக்கொடுப்போமே அல்லாமல்,
உன்னைக் கொன்றுபோடமாட்டோம் என்று
சொல்லி, இரண்டு புதுக் கயிறுகளாலே அவ
னைக் கட்டி, கன்மலையிலிருந்து கொண்டு
14 போனார்கள். அவன் லேகிவரைக்கும் வந்து
சேர்ந்தபோது, பெலிஸ்தர் அவனுக்கு விரோ
தமாய் ஆரவாரம்பண்ணினார்கள்; அப்பொ
ழுது **கர்த்தருடைய** ஆவி அவன்மேல் பல
மாய் இறங்கினதினால், அவன் புயங்களில்
கட்டியிருந்த கயிறுகள் நெருப்புப்பட்ட நூல்
போலாகி, [2]அவன் கட்டுகள் அவன் கைகளை
15 விட்டு அறுந்துபோயிற்று. உடனே அவன்
ஒரு கழுதையின் பச்சைத் தாடையெலும்
பைக் கண்டு, [3]தன் கையை நீட்டி அதை
எடுத்து, அதினாலே ஆயிரம்பேரைக் கொன்று
16 போட்டான். அப்பொழுது சிம்சோன்: கழு
தையின் தாடையெலும்பினால் குவியல் குவி
யலாகப் பட்டுக்கிடக்கிறார்கள், கழுதையின்
தாடையெலும்பினால் ஆயிரம்பேரைக் கொன்
17 றேன் என்றான். அப்படிச் சொல்லித் தீர்ந்த
பின்பு, தன் கையில் இருந்த தாடையெலும்
பை எறிந்துவிட்டு, அவ்விடத்திற்கு ராமாத்
லேகி என்று பேரிட்டான்.
18 அவன் மிகவும் தாகமடைந்து, **கர்த்தரை**
நோக்கிக் கூப்பிட்டு: தேவரீர் உமது அடி
யேன் கையினால் இந்தப் பெரிய இரட்சிப்
பைக் கட்டளையிட்டிருக்க [4]இப்பொழுது
நான் தாகத்தினால் செத்து, விருத்தசேதனம்
இல்லாதவர்கள் கையிலே விழவேண்டுமோ
19 என்றான். அப்பொழுது தேவன் லேகியிலு
ள்ள பள்ளத்தைப் பிளக்கப்பண்ணினார்; அதி
லிருந்து தண்ணீர் ஓடிவந்தது; [5]அவன் குடித்
தபோது அவன் உயிர் திரும்ப வந்தது, அவன்
பிழைத்தான்; ஆனபடியால் அதற்கு *எந்நக்
கோரி என்று பேரிட்டான்; அது இந்நாள்
20 வரையும் லேகியில் இருக்கிறது. அவன்
பெலிஸ்தரின் நாட்களில் இஸ்ரவேலை இரு
பது வருஷம் நியாயம் விசாரித்தான்.

**16** பின்பு சிம்சோன் காசாவுக்குப் போய்,
அங்கே ஒரு வேசியைக் கண்டு, அவளிடத்தில்
2 போனான். அப்பொழுது: சிம்சோன் இங்
கே வந்திருக்கிறான் என்று காசா ஊராருக்
குச் சொல்லப்பட்டது. அவர்கள்: காலையில்
வெளிச்சமாகிறபோது அவனைக் கொன்று

[1] நியா. 14. 4. சங். 106. 41
[2] சங். 18. 34
[3] லேவி. 26. 8. யோசு. 23. 10
[4] சங். 3. 7
[5] ஆதி. 45. 27. ஏசா. 40. 29
* கூப்பிட்டவன் ஊற்று. சங். 34. 6
[6] 1 சாமு. 23. 16. சங். 118. 10–12. அப். 9. 24
[7] 1 இரா. 11. 1
[8] நியா. 14. 15. நீதி. 2. 16–19. 5. 3–11. 1 கொ. 6. 15–18

போடுவோம் என்று சொல்லி, [6]அவனை
வளைந்துகொண்டு இராமுழுதும் அவனுக்
காகப் பட்டணவாசலில் பதிவிருந்து இரா
முழுதும் பேசாதிருந்தார்கள். சிம்சோன் 3
நடுராத்திரிமட்டும் படுத்திருந்து, நடுராத்திரி
யில் எழுந்து, பட்டணத்து வாசல் கதவுகளை
யும் அதின் இரண்டு நிலைகளையும் பிடித்து,
தாழ்ப்பாளோடேகூடப் பேர்த்து, தன் தோ
ளின்மேல் வைத்து, எபிரோனுக்கு எதிரேயி
ருக்கிற மலையின் உச்சிக்குச் சுமந்துகொண்டு
போனான்.
அதற்குப்பின்பு அவன் சோரேக் ஆற்றங் 4
கரையில் இருக்கிற தெலீலாள் என்னும் பே
ருள்ள ஒரு ஸ்திரீயோடே [7]சிநேகமாயிருந்
தான். அவளிடத்திற்குப் பெலிஸ்தரின் அதி 5
பதிகள் போய்: நீ அவனை நயம்பண்ணி,
[8]அவனுடைய மகா பலம் எதினாலே உண்டா
யிருக்கிறது என்றும், நாங்கள் அவனைக் கட்
டிச் சிறுமைப்படுத்துகிறதற்கு எதினாலே
அவனை மேற்கொள்ளலாம் என்றும் அறிந்து
கொள்; அப்பொழுது நாங்கள் ஒவ்வொரு
வரும் ஆயிரத்து நூறு வெள்ளிக்காசு உனக்குக்
கொடுப்போம் என்றார்கள்.
அப்படியே தெலீலாள் சிம்சோனைப் 6
பார்த்து: உன் மகா பலம் எதினாலே உண்டா
யிருக்கிறது, உன்னைச் சிறுமைப்படுத்த உன்
னை எதினாலே கட்டலாம் என்று நீ எனக்குச்
சொல்லவேண்டும் என்றாள். அதற்குச் சிம் 7
சோன்: உலராத பச்சையான ஏழு அகணி
நார்க் கயிறுகளாலே என்னைக் கட்டினால்,
நான் பலட்சயமாகி, மற்ற மனுஷனைப்போல்
ஆவேன் என்றான். அப்பொழுது பெலிஸ் 8
தரின் அதிபதிகள் உலராத பச்சையான ஏழு
அகணிநார்க் கயிறுகளை அவளிடத்திற்குக்
கொண்டுவந்தார்கள்; அவைகளால் அவள்
அவனைக் கட்டினாள். பதிவிருக்கிறவர்கள் 9
அறைவீட்டிலே காத்திருக்கும்போது, அவள்:
சிம்சோனே, பெலிஸ்தர் உன்மேல் வந்துவிட்
டார்கள் என்றாள்; அப்பொழுது, சணல்
நூலானது நெருப்புப்பட்டவுடனே இற்றுப்
போகிறதுபோல, அவன் அந்தக் கயிறுகளை
அறுத்துப்போட்டான்; அவன் பலம் இன்ன
தினாலே உண்டாயிருக்கிறது என்று அறியப்
படவில்லை. அப்பொழுது தெலீலாள் சிம் 10
சோனைப் பார்த்து: இதோ, என்னைப் பரியா
சம்பண்ணி, எனக்குப் பொய் சொன்னாய்;
இப்போதும் உன்னை எதினாலே கட்டலாம்
என்று எனக்குச் சொல்லவேண்டும் என்
றாள். அதற்கு அவன்: இதுவரைக்கும் ஒரு 11
வேலைக்கும் வழங்காதிருக்கிற புதுக் கயிறுக
ளால் என்னை இறுகக் கட்டினால், நான் பல
ட்சயமாகி, மற்ற மனுஷனைப்போல் ஆவேன்
என்றான். அப்பொழுது தெலீலாள், புதுக் 12
கயிறுகளை வாங்கி, அவைகளால் அவனைக்
கட்டி: சிம்சோனே, பெலிஸ்தர் உன்மேல்
வந்துவிட்டார்கள் என்றாள்; பதிவிருக்கிறவர்
கள் அறைவீட்டில் இருந்தார்கள்; ஆனாலும்

அவன் தன் புயங்களில் இருந்த கயிறுகளை ஒரு
13 நூலைப்போல அறுத்துப்போட்டான். பின்பு
தெலீலாள் சிம்சோனைப் பார்த்து: இதுவரைக்
கும் என்னைப் பரியாசம்பண்ணி, எனக்குப்
பொய் சொன்னாய்; உன்னை எதினாலே கட்ட
லாம் என்று எனக்குச் சொல்லவேண்டும் என்
றாள்; அதற்கு அவன்: நீ என் தலைமயிரின்
ஏழு ஜடைகளை நெசவுநூல் பாவோடே பின்
14 னிவிட்டால் ஆகும் என்றான். அப்படியே
அவள் செய்து, அவைகளை ஆணியடித்து
மாட்டி: சிம்சோனே, பெலிஸ்தர் உன்மேல்
வந்துவிட்டார்கள் என்றாள்; அவன் நித்திரை
விட்டெழும்பி, நெசவு ஆணியையும் நூல்
பாவையும் கூடப் பிடுங்கிக்கொண்டுபோனான்.
15 அப்பொழுது அவள் அவனைப் பார்த்து: உன்
இருதயம் என்னோடு இராதிருக்க, [1]உன்னைச்
சிநேகிக்கிறேன் என்று நீ எப்படிச் சொல்லுகி
றாய்? நீ இந்த மூன்று விசையும் என்னைப் பரி
யாசம்பண்ணினாய் அல்லவா, உன்னுடைய
மகா பலம் எதினாலே உண்டாயிருக்கிறது
என்று எனக்குச் சொல்லாமற்போனாயே
16 என்று சொல்லி, இப்படி அவனைத் தினம்
தினம் தன் வார்த்தைகளினாலே நெருக்கி
அலட்டிக்கொண்டிருக்கிறதினால், சாகத்தக்க
17 தாய் அவன் ஆத்துமா விசனப்பட்டு, தன்
இருதயத்தையெல்லாம் அவளுக்கு வெளிப்
படுத்தி: [2]சவரகன் கத்தி என் தலையின்மேல்
படவில்லை; நான் என் தாயின் கர்ப்பத்தில்
பிறந்ததுமுதல் தேவனுக்கென்று நசரேயனான
வன்; என் தலை சிரைக்கப்பட்டால், [3]என் பலம்
என்னைவிட்டுப் போம்; அதினாலே நான் பல
ட்சயமாகி, மற்ற எல்லா மனுஷரைப்போலும்
ஆவேன் என்று அவளிடத்தில் சொன்னான்.
18 அவன் தன் இருதயத்தையெல்லாம் தனக்கு
வெளிப்படுத்தினதைத் தெலீலாள் கண்ட
போது, அவள் பெலிஸ்தரின் அதிபதிகளுக்கு
ஆள் அனுப்பி: இந்த ஒருவிசை வாருங்கள்,
அவன் தன் இருதயத்தையெல்லாம் எனக்கு
வெளிப்படுத்தினான் என்று சொல்லச்சொன்
னாள்; அப்பொழுது பெலிஸ்தரின் அதிபதிகள்
வெள்ளிக்காசுகளைத் தங்கள் கையில் எடுத்துக்
19 கொண்டு அவளிடத்துக்கு வந்தார்கள். அவள்
அவனைத் தன் மடியிலே நித்திரைசெய்யப்பண்
ணி, [4]ஒருவனை அழைத்து, அவன் தலைமயிரின்
ஏழுஜடைகளையும்சிரைப்பித்து, அவனைச்சிறு
மைப்படுத்தத் தொடங்கினாள்; அவன் பலம்
20 அவனைவிட்டு நீங்கிற்று. அப்பொழுது அ
வள்: சிம்சோனே, பெலிஸ்தர் உன்மேல் வந்து
விட்டார்கள் என்றாள்; அவன் நித்திரைவிட்டு
விழித்து, **கர்த்தர்** தன்னைவிட்டு விலகினதை
அறியாமல், [5]எப்போதும்போல உதறிப்போ
21 ட்டு வெளியே போவேன் என்றான். பெலி
ஸ்தர் அவனைப் பிடித்து, அவன் கண்களைப்
பிடுங்கி, அவனைக் காசாவுக்குக் கொண்டு
போய், அவனுக்கு இரண்டு வெண்கல வில
ங்குபோட்டுச் [6]சிறைச்சாலையிலே மாவரைத்
துக்கொண்டிருக்க வைத்தார்கள்.

அவன் தலைமயிர் சிரைக்கப்பட்டபின்பு, 22
திரும்பவும் முளைக்கத் தொடங்கிற்று. பெலி 23
ஸ்தரின் பிரபுக்கள்: நம்முடைய பகைஞனா
கிய சிம்சோனை நம்முடைய தேவன் நம்மு
டைய கையில் ஒப்புக்கொடுத்தார் என்று
சொல்லி, தங்கள் தேவனாகிய தாகோனுக்கு
ஒரு பெரிய பலிசெலுத்தவும், [7]சந்தோஷம்
கொண்டாடவும் கூடிவந்தார்கள். ஜனங்கள் 24
அவனைக் கண்டவுடனே: நம்முடைய தேசத்
தைப் பாழாக்கி, நம்மில் அநேகரைக் கொன்
றுபோட்ட நம்முடைய பகைஞனை நம்மு
டைய தேவன் நமது கையில் ஒப்புக்கொடுத்
தார் என்று சொல்லி, [8]தங்கள் தேவனைப் புக
ழ்ந்தார்கள். இப்படி அவர்கள் மனமகிழ்ச்சி 25
யாயிருக்கும்போது: நமக்கு முன்பாக வேடி
க்கை காட்டும்படிக்கு, [9]சிம்சோனைக் கூட்டிக்
கொண்டு வாருங்கள் என்றார்கள்; அப்பொ
ழுது சிம்சோனைச் சிறைச்சாலையிலிருந்து
கூட்டிக்கொண்டு வந்தார்கள், அவர்களுக்கு
முன்பாக வேடிக்கை காட்டினான்; அவனைத்
தூண்களுக்கு நடுவே நிறுத்தினார்கள். சிம் 26
சோன் தனக்குக் கைலாகு கொடுத்து நடத்து
கிற பிள்ளையாண்டானோடே, வீட்டைத் தாங்
குகிற தூண்களிலே நான் சாய்ந்துகொண்
டிருக்கும்படி அவைகளை நான் தடவிப்பார்க்
கட்டும் என்றான். அந்த வீடு புருஷராலும் 27
ஸ்திரீகளாலும் நிறைந்திருந்தது; அங்கே பெ
லிஸ்தரின் சகல பிரபுக்களும், வீட்டின்மேல்
புருஷரும் ஸ்திரீகளுமாக ஏறக்குறைய மூவா
யிரம்பேர், சிம்சோன் வேடிக்கை காட்டுகிற
தைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அப் 28
பொழுது சிம்சோன் **கர்த்தரை** நோக்கிக் கூப்
பிட்டு: [10]**கர்த்தராகிய** ஆண்டவரே, நான் என்
இரண்டு கண்களுக்காக ஒரே தீர்வையாய்ப்
பெலிஸ்தர் கையிலே பழிவாங்கும்படிக்கு,
இந்த ஒருவிசைமாத்திரம் என்னை நினைத்தரு
ளும், [11]தேவனே, பலப்படுத்தும் என்று சொ
ல்லி, சிம்சோன் அந்த வீட்டைத் தாங்கி நிற் 29
கிற இரண்டு நடுத்தூண்களில், ஒன்றைத் தன்
வலதுகையினாலும், மற்றொன்றைத் தன் இட
துகையினாலும் பிடித்துக்கொண்டு, என் 30
ஜீவன் பெலிஸ்தரோடேகூட மடியக்கடவது
என்று சொல்லி, பலமாய்ச் சாய்க்க, அந்த
வீடு அதில் இருந்த பிரபுக்கள்மேலும் எல்லா
ஜனங்கள்மேலும் விழுந்தது; [12]இவ்விதமாய்
அவன் உயிரோடிருக்கையில் அவனால் கொல்
லப்பட்டவர்களைப்பார்க்கிலும், அவன் சாகும்
போது அவனால் கொல்லப்பட்டவர்கள் அதி
கமாயிருந்தார்கள். பின்பு அவன் சகோதர 31
ரும், அவன் தகப்பன் வீட்டாரனைவரும்
போய், அவனை எடுத்துக்கொண்டுவந்து, சோ
ராவுக்கும் எஸ்தாவோலுக்கும் நடுவே அவன்
தகப்பனாகிய மனோவாவின் கல்லறையில் அட
க்கம்பண்ணினார்கள். [13]அவன் இஸ்ரவேலை
இருபது வருஷம் நியாயம் விசாரித்தான்.

எப்பிராயீம் மலைத்தேசத்தானாகிய மீகா **17**
என்னும் பேருள்ள ஒரு மனுஷன் இருந்தான்.

[1] நியா. 14. 16
[2] நீதி. 12. 23. மீகா 7. 5
[3] நியா. 13. 5. எண். 6. 5
[4] நீதி. 7. 26, 27. பிர. 7. 26
[5] எண். 14. 42, 43. 1 சாமு. 28. 15
[6] எரே. 2. 19
[7] 1 சாமு. 5. 2. யோபு 30. 9, 10. சங். 35. 15, 16
[8] தானி. 5. 4
[9] எபி. 11. 36
[10] சங். 91. 15. புல. 3. 31, 32. யோனா 2. 1, 2, 7
[11] சங். 74. 18, 23. எரே. 15. 15
[12] யோபு 20. 5. சங். 62. 3. பிர. 9. 12
[13] நியா. 13. 25

2 அவன் தன் தாயை நோக்கி: உன்னிடத்தி
லிருந்த ஆயிரத்து நூறு வெள்ளிக்காசு களவு
போயிற்றே, அதைக்குறித்து என் காதுகள்
கேட்க நீ சாபமிட்டாயே, அந்தப் பணம்,
இதோ, என்னிடத்தில் இருக்கிறது; அதை
எடுத்தவன் நான்தான் என்றான். அதற்கு அவ
ன் தாய்: என் மகனே, நீ **கர்த்தரால்** ஆசீர்வதிக்
3 கப்படுவாய் [1]என்றாள். அவன் அந்த ஆயிரத்து
நூறு வெள்ளிக்காசைத் தன் தாயினிடத்தில்
திரும்பக்கொடுத்தான்; அவள்: வெட்டப்பட்ட
ஒரு சுரூபத்தையும் வார்ப்பிக்கப்பட்ட ஒரு விக்
கிரகத்தையும் உண்டுபண்ண, [2]நான் என் கை
யிலிருந்த இந்த வெள்ளியை என் மகனுக்காக
முற்றிலும் **கர்த்தருக்கென்று** நியமித்தேன்;
இப்போதும் இதை உனக்குத் திரும்பக்கொடுக்
4 கிறேன் என்றாள். அவன் அந்த வெள்ளி
யைத் தன் தாய்க்குத் திரும்பக் கொடுத்தான்;
அப்பொழுது அவன் தாய் இருநூறு வெள்ளிக்
காசை எடுத்து, தட்டான் கையிலே கொடுத்
தாள்; [3]அவன் அதினாலே, வெட்டப்பட்ட
ஒரு சுரூபத்தையும் வார்ப்பிக்கப்பட்ட ஒரு
விக்கிரகத்தையும் பண்ணினான்; அவைகள்
5 மீகாவின் வீட்டில் இருந்தது. மீகா, சுவாமி
க்கு ஒரு அறைவீட்டை நியமித்து வைத்திருந்
தான்; அவன் ஒரு ஏபோத்தையும் [4]சுரூபங்களை
யும் [5]உண்டுபண்ணி, தன் குமாரரில் ஒருவனைப்
பிரதிஷ்டைபண்ணினான்; இவன் அவனுக்கு
6 ஆசாரியனானான். அந்நாட்களில் இஸ்ரவே
லிலே ராஜா இல்லை, [6]அவனவன் தன்தன்
பார்வைக்குச் சரிப்போனபடி செய்துவந்தான்.
7 யூதாவிலுள்ள பெத்லெகேம் [7]ஊரானும்
லேவியனுமான ஒரு வாலிபன் அங்கே தங்கி
8 யிருந்தான். அந்த மனுஷன் எங்கேயாகிலும்
பரதேசியாய்ப் போய்த் தங்கும்படிக்கு, யூதாவி
லுள்ள பெத்லெகேம் ஊரைவிட்டுப் புறப்பட்
டுப் பிரயாணம்போகையில், எப்பிராயீம்மலைத்
தேசத்தில் இருக்கிற மீகாவின் வீட்டில் வந்து
9 சேர்ந்தான். எங்கே இருந்து வந்தாய் என்று
மீகா அவனைக் கேட்டதற்கு, அவன்: நான் யூதா
விலுள்ள பெத்லெகேம் ஊரானாகிய லேவியன்,
எங்கேயாகிலும் போய்த் தங்கப்போகிறேன்
10 என்றான். அப்பொழுது மீகா: நீ என்னிடத்
தில் இரு, நீ எனக்குத் தகப்பனும் [8]ஆசாரிய
னுமாயிருப்பாய்; நான் உனக்கு வருஷத்திலே
பத்து வெள்ளிக்காசையும், மாற்று வஸ்திரத்
தையும், உனக்கு வேண்டிய ஆகாரத்தையும்
கொடுப்பேன் என்று அவனிடத்தில் சொன்
னான்; அப்படியே லேவியன் உள்ளே போ
11 னான். அந்த லேவியன் அந்த மனிதனிடத்
தில் இருக்கச் சம்மதித்தான்; அந்த வாலிபன்
அவனுக்கு அவன் குமாரரில் ஒருவனைப்
12 போல் இருந்தான். மீகா அந்த லேவியனைப்
[9]பிரதிஷ்டைபண்ணினான்; அந்த வாலிபன்
அவனுக்கு ஆசாரியனாகி, [10]மீகாவின் வீட்டில்
13 இருந்தான். அப்பொழுது மீகா: எனக்கு
ஆசாரியனாக ஒரு லேவியன் அகப்பட்டபடி
யினால், [11]**கர்த்தர்** எனக்கு நன்மை செய்வார்
என்று இப்பொழுது அறிந்திருக்கிறேன்
என்றான்.

அந்நாட்களில் இஸ்ரவேலிலே ராஜா 18
இல்லை; தாண் கோத்திரத்தார் குடியிருக்கிற
தற்கு, [12]தங்களுக்குச் சுதந்தரம் தேடினார்கள்;
அந்நாள்வரைக்கும் அவர்களுக்கு இஸ்ரவேல்
கோத்திரங்கள் நடுவே போந்த சுதந்தரம்
கிடைக்கவில்லை. ஆகையால் தேசத்தை உள 2
வுபார்த்து வரும்படி, தாண் புத்திரர் தங்கள்
கோத்திரத்திலே பலத்த மனுஷராகிய ஐந்து
பேரைத் தங்கள் எல்லைகளில் இருக்கிற சோ
ராவிலும் எஸ்தாவோலிலுமிருந்து அனுப்பி:
[13]நீங்கள் போய், தேசத்தை ஆராய்ந்துபார்த்து
வாருங்கள் என்று அவர்களோடே சொன்னார்
கள்; அவர்கள் எப்பிராயீம் மலைத்தேசத்தில்
இருக்கிற மீகாவின் வீடுமட்டும் போய்,
அங்கே இராத்தங்கினார்கள். அவர்கள் மீகா 3
வின் வீட்டண்டை இருக்கையில், லேவிய
னான வாலிபனுடைய சத்தத்தை அறிந்து,
அங்கே அவனிடத்தில் போய்: உன்னை இங்
கே அழைத்துவந்தது யார்? இவ்விடத்தில்
என்ன செய்கிறாய்? உனக்கு இங்கே இருக்
கிறது என்ன என்று அவனிடத்தில் கேட்
டார்கள். அதற்கு அவன்: இன்ன இன்ன 4
படி மீகா எனக்குச் செய்தான்; எனக்குச் சம்
பளம் பொருந்தினான்; [14]அவனுக்கு ஆசாரிய
னானேன் என்றான். அப்பொழுது அவர்கள் 5
அவனை நோக்கி: எங்கள் பிரயாணம் அநுகூல
மாய் முடியுமா என்று நாங்கள் அறியும்படி
தேவனிடத்தில் கேள் [15]என்றார்கள். அவர்க 6
ளுக்கு அந்த ஆசாரியன்: சமாதானத்தோடே
போங்கள்; [16]உங்கள் பிரயாணம் **கர்த்தருக்கு**
ஏற்றது என்றான்.

அப்பொழுது அந்த ஐந்து மனுஷரும் புறப் 7
பட்டு, லாயீசுக்குப் போய், [17]அதில் குடியிருக்
கிற ஜனங்கள் சீதோனியருடைய வழக்கத்
தின்படியே, பயமில்லாமல் அமரிக்கையும் சுக
முமாய் இருக்கிறதையும், தேசத்திலே அவர்
களை அடக்கி ஆள யாதொரு அதிகாரியும்
இல்லை என்பதையும், அவர்கள் சீதோனிய
ருக்குத் தூரமானவர்கள் என்பதையும், அவர்
களுக்கு ஒருவரோடும் கவைகாரியம் இல்லை
என்பதையும் கண்டு, சோராவிலும் எஸ்தா 8
வோலிலும் இருக்கிற தங்கள் சகோதரரிடத்
திற்குத் திரும்பிவந்தார்கள். அவர்கள் சகோ
தரர்: நீங்கள் கொண்டுவருகிற செய்தி என்ன
என்று அவர்களைக் கேட்டார்கள். அதற்கு 9
அவர்கள்: எழும்புங்கள், [18]அவர்களுக்கு
விரோதமாய்ப் போவோம் வாருங்கள்; அந்தத்
தேசத்தைப் பார்த்தோம், அது மிகவும் நன்றா
யிருக்கிறது; நீங்கள் சும்மாயிருப்பீர்களா? அந்
தத் தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளும்படி
புறப்பட்டுப்போக அசதியாயிராதேயுங்கள்.
நீங்கள் அங்கே சேரும்போது, சுகமாய்க் குடி 10
யிருக்கிற ஜனங்களிடத்தில் சேருவீர்கள்; அந்
தத் தேசம் விஸ்தாரமாயிருக்கிறது; தேவன்
அதை உங்கள் கையில் ஒப்புக்கொடுத்தார்;

[1] ஆதி. 14. 19. ரூத். 3. 10
[2] யாத். 20. 4, 23. லேவி. 19. 4
[3] ஏசா. 46. 6
[4] நியா. 8. 27
[5] ஆதி. 31. 19, 30. ஓசி. 3. 4
[6] நியா. 18. 1, 7
[7] ரூத். 1. 1, 2. மீகா 5. 2. மத். 2. 1, 5, 6
[8] ஆதி. 45. 8. நியா. 18. 19. லே. பு 29. 16
[9] 5. வசனம்
[10] நியா. 18. 30
[11] நீதி. 14. 12
[12] யோசு. 19. 47
[13] நியா. 18. 25. ஆதி. 42. 9. எண். 13. 17. யோசு. 2. 1
[14] நியா. 17. 10
[15] 1 இரா. 22. 5. ஏசா. 30. 1. ஓசி. 4. 12
[16] 1 இரா. 22. 6
[17] யோசு. 19. 47
[18] எண். 13. 30. 1 இரா. 22. 3

அது பூமியிலுள்ள சகல வஸ்துவும் குறை
வில்லாமலிருக்கிற [1]இடம் என்றார்கள்.
11 அப்பொழுது சோராவிலும் எஸ்தாவோலி
லும் இருக்கிற தாண் கோத்திரத்தாரில் அறு
நூறுபேர் ஆயுதபாணிகளாய் அங்கேயிருந்து
12 புறப்பட்டுப் போய், யூதாவிலுள்ள கீரியாத்
யாரீமிலே [2]பாளயமிறங்கினார்கள்; ஆதலால்
அது இந்நாள்வரைக்கும் மக்னிதான் [3]என்னப்
படும்; அது கீரியாத்யாரீமின் பின்னாலே இருக்
13 கிறது. பின்பு அவர்கள் அங்கேயிருந்து எப்
பிராயீம் மலைக்குப் போய், மீகாவின் வீடுமட்
14 டும் வந்தார்கள். அப்பொழுது லாயீசின்
நாட்டை உளவுபார்க்கப் போய்வந்த ஐந்து
மனுஷர் தங்கள் சகோதரரைப் பார்த்து: இந்த
வீடுகளில் ஏபோத்தும் சுரூபங்களும் வெட்
டப்பட்ட விக்கிரகமும் வார்ப்பிக்கப்பட்ட
விக்கிரகமும் இருக்கிறது என்று உங்களுக்
குத் தெரியுமா; [4]இப்போதும் நீங்கள் செய்ய
வேண்டியதை யோசித்துக்கொள்ளுங்கள் என்
15 றார்கள். அப்பொழுது அவ்விடத்திற்குத்
திரும்பி, மீகாவின் வீட்டில் இருக்கிற லேவி
யனான வாலிபனின் வீட்டிலே வந்து, அவ
16 னிடத்தில் சுகசெய்தி [5]விசாரித்தார்கள். ஆயு
தபாணிகளாகிய தாண் புத்திரர் அறுநூறுபே
17 ரும் வாசற்படியிலே நின்றார்கள். ஆசாரிய
னும் ஆயுதபாணிகளாகிய அறுநூறுபேரும்
வாசற்படியிலே நிற்கையில், தேசத்தை உளவு
பார்க்கப் போய் வந்த அந்த ஐந்து மனுஷர்
உள்ளே புகுந்து, வெட்டப்பட்ட விக்கிரகத்
தையும் ஏபோத்தையும் சுரூபங்களையும் வார்ப்
பிக்கப்பட்ட விக்கிரகத்தையும் எடுத்துக்கொ
18 ண்டு வந்தார்கள். அவர்கள் மீகாவின் வீட்
டுக்குள் புகுந்து, வெட்டப்பட்ட விக்கிரகத்
தையும் ஏபோத்தையும் சுரூபங்களையும் வார்ப்
பிக்கப்பட்ட விக்கிரகத்தையும் எடுத்துக்கொ
ண்டு வருகிறபோது, ஆசாரியன் அவர்களைப்
பார்த்து: நீங்கள் செய்கிறது என்ன என்று
19 கேட்டான். அதற்கு அவர்கள்: நீ பேசாதே,
உன் வாயை மூடிக்கொண்டு, [6]எங்களோடே
கூட வந்து எங்களுக்குத் தகப்பனும் ஆசாரிய
னுமாயிரு; நீ ஒரே ஒருவன் வீட்டுக்கு ஆசாரி
யனாயிருக்கிறது நல்லதோ? இஸ்ரவேலில்
ஒரு கோத்திரத்திற்கும் வம்சத்திற்கும் ஆசாரி
20 யனாயிருக்கிறது நல்லதோ? என்றார்கள். அப்
பொழுது ஆசாரியனுடைய மனது இதமியப்
பட்டு, அவன் ஏபோத்தையும் சுரூபங்களையும்
வெட்டப்பட்ட விக்கிரகத்தையும் எடுத்துக்
கொண்டு, ஜனங்களுக்குள்ளே புகுந்தான்.
21 அவர்கள் திரும்பும்படி புறப்பட்டு, பிள்ளை
களையும், ஆடுமாடுகளையும், பண்டம்பாடிகளை
யும், தங்களுக்குமுன்னே போகும்படி செய்
22 தார்கள். அவர்கள் புறப்பட்டு, மீகாவின்
வீட்டை விட்டுக் கொஞ்சந்தூரம் போன
போது, மீகாவின் வீட்டிற்கு அயல்வீட்டார்
கூட்டங்கூடி, தாண் புத்திரரைத் தொடர்ந்து
23 வந்து, அவர்களைப் பார்த்துக் கூப்பிட்டார்கள்;
அவர்கள் திரும்பிப்பார்த்து, மீகாவை நோக்கி:
நீ இப்படிக் கூட்டத்துடன் வருகிற காரியம்
என்ன [7]என்று கேட்டார்கள். அதற்கு 24
அவன்: நான் உண்டுபண்ணின என்னுடைய
தெய்வங்களையும் அந்த ஆசாரியனையுங்கூட நீங்
கள் கொண்டுபோகிறீர்களே; இனி எனக்கு
என்ன இருக்கிறது; நீ கூப்பிடுகிற காரியம்
என்ன என்று நீங்கள் என்னிடத்தில் எப்படிக்
கேட்கலாம் என்றான். தாண் புத்திரர் அவ 25
னைப் பார்த்து: எங்கள் காதுகள் கேட்க கூக்
குரல் இடாதே, இட்டால் கோபிகள் உங்கள்
மேல் விழுவார்கள்; [8]அப்பொழுது உன் ஜீவ
னுக்கும் உன் வீட்டாரின் ஜீவனுக்கும்
மோசம் வருவித்துக்கொள்வாய் என்று சொ
ல்லி, தங்கள் வழியே நடந்துபோனார்கள்; 26
அவர்கள் தன்னைப்பார்க்கிலும் பலத்தவர்கள்
என்று மீகா கண்டு, அவன் தன் வீட்டுக்குத்
திரும்பினான். அவர்களோ மீகா உண்டுபண் 27
ணினவைகளையும், அவனுடைய ஆசாரியனை
யும் கொண்டுபோய், பயமில்லாமல் சுகமா
யிருக்கிற லாயீஸ் ஊர் ஜனங்களிடத்தில்
சேர்ந்து, அவர்களைப் பட்டயக்கருக்கினால்
வெட்டி, [9]பட்டணத்தை அக்கினியால் சுட்
டெரித்துப்போட்டார்கள். அது சீதோனுக் 28
குத் தூரமாயிருந்தது; வேறே மனுஷரோடே
அவர்களுக்குச் சம்பந்தமில்லாமலும் இருந்த
படியால், அவர்களைத் தப்புவிப்பார் ஒருவரும்
இல்லை; அந்தப் பட்டணம் பெத்ரேகோபுக்
குச் சமீபமான பள்ளத்தாக்கில் இருந்தது;
அவர்கள் அதைத் திரும்பக் கட்டி, அதிலே
குடியிருந்து, பூர்வத்திலே லாயீஸ் என்னும் 29
பேர்கொண்டிருந்த அந்தப் பட்டணத்திற்கு
இஸ்ரவேலுக்குப் பிறந்த தங்கள் தகப்பனாகிய
தாணுடைய நாமத்தின்படியே தாண் என்று
பேரிட்டார்கள். அப்பொழுது தாண் புத்தி 30
ரர் அந்தச் சுரூபத்தைத் தங்களுக்கு ஸ்தாபித்
துக்கொண்டார்கள்; மனாசேயின் குமாரனாகிய
கெர்சோனின் மகன் யோனத்தானும், அவன்
குமாரரும், அந்தத் தேசத்தார் சிறைப்பட்டுப்
போன நாள்மட்டும், [10]தாண் கோத்திரத்தாரு
க்கு ஆசாரியராயிருந்தார்கள். தேவனுடைய 31
ஆலயம் சீலோவிலிருந்த காலமுழுதும் [11]அவர்
கள் மீகா உண்டுபண்ணின சுரூபத்தை வைத்
துக்கொண்டிருந்தார்கள்.

இஸ்ரவேலில் ராஜா இல்லாத அந்நாட்க 19
ளிலே, எப்பிராயீம் மலைகள் அருகே பரதேசி
யாய்த் தங்கின ஒரு லேவியன் இருந்தான்;
அவன் யூதாவிலுள்ள பெத்லெகேம் ஊரானா
கிய ஒரு ஸ்திரீயைத் தனக்கு மறுமனையாட்டி
யாகக் கொண்டிருந்தான். அவள் அவனுக் 2
குத் துரோகமாய் விபசாரம்பண்ணி, அவனை
விட்டு, யூதாதேசத்துப் பெத்லெகேம் ஊரிலி
ருக்கிற தன் தகப்பன் வீட்டுக்குப் போய்,
அங்கே நாலுமாதம்வரைக்கும் இருந்தாள்.
அவள் புருஷன் அவளோடே *நலவுசொல்ல 3
வும், [12]அவளைத் திரும்ப அழைத்துவரவும்,
இரண்டு கழுதைகளை ஆயத்தப்படுத்தி, தன்
வேலைக்காரனைக் கூட்டிக்கொண்டு, அவளி

[1] உபா. 8. 9
[2] யோசு. 15. 60
[3] நியா. 13. 25
[4] நியா. 17. 5. 1 சாமு. 14. 28
[5] ஆதி. 43. 27
[6] யோபு 21. 5. நீதி. 30. 32. மீகா 7. 16
[7] ஆதி. 21. 17. 2 இரா. 6. 28. சங். 114. 5 ஏசா. 22. 1
[8] 2 சாமு. 17. 8
[9] உபா. 33. 22
[10] 1 சாமு. 4. 2. சங். 78. 60
[11] யோசு. 18. 1. நியா. 19. 18
* இதம்
[12] ஆதி. 34. 3

டத்துக்குப் போனான்; அப்பொழுது அவள்
அவனைத் தன் தகப்பன் வீட்டுக்கு அழைத்துக்
கொண்டுபோனாள்; ஸ்திரீயின் தகப்பன் அவ
னைக் கண்டபோது சந்தோஷமாய் எற்றுக்
4 கொண்டு, ஸ்திரீயின் தகப்பனாகிய அவனு
டைய மாமன் அவனை இருத்திக்கொண்டதி
னால், மூன்றுநாள் அவனோடிருந்தான்; அவர்
கள் அங்கே புசித்துக் குடித்து இராத்தங்கி
5 னார்கள். நாலாம்நாள் காலமே அவர்கள்
எழுந்திருந்தபோது, அவன் பிரயாணப்படு
கையில், ஸ்திரீயின் தகப்பன் தன் மருமகனை
நோக்கி: கொஞ்சம் அப்பம் புசித்து, உன் மன
தைத் தேற்றிக்கொள்; [1]பிற்பாடு நீங்கள் போக
6 லாம் என்றான். அவர்கள் உட்கார்ந்து, இரு
வரும் கூடப் புசித்துக் குடித்தார்கள்; ஸ்திரீ
யின் தகப்பன் அந்த மனுஷனைப் பார்த்து: நீ
தயவுசெய்து, உன் இருதயம் மகிழ்ச்சியடைய
7 இராத்திரிக்கும் இரு என்றான். அப்படியே
போகிறதற்கு அந்த மனுஷன் எழுந்தபோது,
அவனுடைய மாமன் அவனை வருந்திக்கொண்
டதினால், அவன் அன்று ராத்திரியும் அங்கே
8 இருந்தான். ஐந்தாம் நாளிலே அவன் போ
கிறதற்கு அதிகாலமே எழுந்திருந்தபோது,
ஸ்திரீயின் தகப்பன்: இருந்து உன் இருதயத்
தைத் தேற்றிக்கொள் என்றான்; அப்படியே
அந்திநேரமட்டும் தாமதித்திருந்து, இருவரும்
9 போஜனம்பண்ணினார்கள். பின்பு அவனும்,
அவன் மறுமனையாட்டியும், அவன் வேலைக்
காரனும் போகிறதற்கு எழுந்திருந்தபோது,
ஸ்திரீயின் தகப்பனாகிய அவனுடைய மாமன்:
இதோ, பொழுது அஸ்தமிக்கப்போகிறது,
சாயங்காலமுமாயிற்று; இங்கே இராத்திரிக்கு
இருங்கள்; பார், மாலைமயங்குகிற வேளையா
யிற்று; [2]உன் இருதயம் சந்தோஷமாயிருக்கும்
படி, இங்கே இராத்தங்கி நாளை இருட்டோ
டே எழுந்திருந்து, உன் வீட்டுக்குப் போக
10 லாம் என்றான். அந்த மனுஷனோ, இராத்
திரிக்கு இருக்க மனதில்லாமல், இரண்டு கழு
தைகள்மேலும் சேணம்வைத்து, தன் மறு
மனையாட்டியைக் கூட்டிக்கொண்டு, எழுந்து
புறப்பட்டு, எருசலேமாகிய எபூசுக்கு [3]நேராக
11 வந்தான். அவர்கள் எபூசுக்குச் சமீபமாய்
வருகையில், பொழுதுபோகிறதாயிருந்தது;
அப்பொழுது வேலைக்காரன் தன் எஜமானை
நோக்கி: எபூசியர் இருக்கிற இந்தப் பட்ட
ணத்திற்குப் போய், அங்கே இராத்தங்கலாம்
12 என்றான். அதற்கு அவன் எஜமான்: நாம்
வழியைவிட்டு, இஸ்ரவேல் புத்திரரில்லாத
மறுஜாதியார் இருக்கிற பட்டணத்துக்குப்
போகப்படாது; அப்பாலே கிபியாமட்டும்
13 போவோம் என்று சொல்லி, தன் வேலைக்
காரனைப் பார்த்து: நாம் கிபியாவிலாகிலும்
ராமாவிலாகிலும் இராத்தங்கும்படிக்கு, அவை
களில் ஒரு இடத்திற்குப் போய்ச்சேரும்படி
14 நடந்துபோவோம் வா என்றான். அப்படியே
அப்பாலே நடந்துபோனார்கள்; பென்யமீன்
நாட்டைச் சேர்ந்த கிபியாவின் கிட்டவருகை

யில், சூரியன் அஸ்தமனமாயிற்று. ஆகை 15
யால் கிபியாவிலே வந்து இராத்தங்கும்படிக்கு,
வழியைவிட்டு அவ்விடத்திற்குப் போனார்
கள்; அவன் பட்டணத்துக்குள் போனபோது,
இராத்தங்குகிறதற்கு அவர்களை வீட்டிலே
சேர்த்துக்கொள்வார் இல்லாததினால், [4]வீதி
யில் உட்கார்ந்தான். வயலிலே வேலைசெய்து, 16
[5]மாலையிலே திரும்புகிற ஒரு கிழவன் வந்
தான்; அந்த மனுஷனும் எப்பிராயீம் மலைத்
தேசத்தான், அவன் கிபியாவிலே சஞ்சரிக்க
வந்தான்; அவ்விடத்து மனுஷரோ பென்யமீ
னர். அந்தக் கிழவன் தன் கண்களை ஏறெடுத் 17
துப் பட்டணத்துவீதியில் அந்தப் பிரயாணக்
காரன் இருக்கக் கண்டு: எங்கே போகிறாய்,
எங்கேயிருந்து வந்தாய் என்று கேட்டான்.
அதற்கு அவன்: நாங்கள் யூதாவிலுள்ள ஊரா 18
கிய பெத்லெகேமிலிருந்து வந்து, எப்பிராயீம்
மலைத்தேசத்தின் புறங்கள்மட்டும் போகிறோம்;
நான் அவ்விடத்தான்; யூதாவிலுள்ள பெத்லெ
கேம்மட்டும் போய்வந்தேன், நான் கர்த்தரு
டைய ஆலயத்துக்குப் போகிறேன்; [6]இங்கே
என்னை வீட்டிலே ஏற்றுக்கொள்வார் ஒருவ
ரும் இல்லை. எங்கள் கழுதைகளுக்கு வைக் 19
கோலும் *தீபனமும் உண்டு; எனக்கும் உமது
அடியாளுக்கும் உமது அடியானோடிருக்கிற
வேலைக்காரனுக்கும் அப்பமும் திராட்சரச
மும் உண்டு; ஒன்றிலும் குறைவில்லை என்
றான். அப்பொழுது அந்தக் கிழவன்: உனக் 20
குச் சமாதானம்; [7]உன் குறைவுகளெல்லாம்
என்மேல் இருக்கட்டும்; வீதியிலேமாத்திரம்
இராத்தங்கவேண்டாம் என்று சொல்லி,
அவனைத் தன் வீட்டுக்குள் அழைத்துக்கொண் 21
டுபோய், கழுதைகளுக்குத் தீபனம் போட்
டான்; அவர்கள் தங்கள் கால்களைக் கழுவிக்
கொண்டு, [8]புசித்துக் குடித்தார்கள். அவர் 22
கள் மனமகிழ்ச்சியாயிருக்கிறபோது, இதோ,
பேலியாளின் மக்களாகிய [9]அந்த ஊர் மனுஷ
ரில் சிலர் அந்த வீட்டைச் சூழ்ந்துகொண்டு,
கதவைத் தட்டி: உன் வீட்டிலே வந்த அந்த
மனுஷனை நாங்கள் அறியும்படிக்கு, [10]வெ
ளியே கொண்டுவா என்று வீட்டுக்காரனாகிய
அந்தக் கிழவனோடே சொன்னார்கள். அப் 23
பொழுது வீட்டுக்காரனாகிய அந்த மனுஷன்
வெளியே அவர்களிடத்தில் போய்: இப்படிச்
செய்யவேண்டாம்; என் சகோதரரே, இப்
படிப்பட்ட பொல்லாப்பைச் செய்யவேண்
டாம்; அந்த மனுஷன் என் வீட்டிற்குள் வந்தி
ருக்கையில், இப்படிக்கொத்த மதிகேட்டைச்
[11]செய்யீர்களாக. இதோ, கன்னியாஸ்திரீயா 24
கிய என் மகளும், அந்த மனிதனுடைய மறு
மனையாட்டியும் இருக்கிறார்கள்; அவர்களை
உங்களிடத்தில் வெளியே கொண்டுவருகி
றேன்; அவர்களை அவமானப்படுத்தி, [12]உங்கள்
பார்வைக்குச் சரிப்போனபிரகாரம் அவர்க
ளுக்குச் செய்யுங்கள்; ஆனாலும் இந்த மனுஷ
னுக்கு அப்படிப்பட்ட மதிகேடான காரியத்
தைச் செய்யவேண்டாம் என்றான். அந்த 25

[1] ஆதி. 18. 5. சங். 104. 15
[2] ரூ. 24. 29
[3] யோசு. 18. 28
[4] மத். 25. 43. எபி. 13. 2
[5] சங். 104. 23
[6] யோசு. 18. 1. 1 சாமு. 1. 3, 7
* தீனி
[7] ஆதி. 43. 23, 24. லூக். 6 23
[8] ஆதி. 18. 4. யோ. 13. 5-14. 1 தீமோ. 5. 10
[9] உபா. 13. 13. 2 சாமு. 23. 6, 7
[10] ஆதி. 19. 5. ரோ. 1. 26, 27
[11] 2 சாமு. 13. 12
[12] ஆதி. 34. 2. உபா. 21. 14

மனுஷர் அவன் சொல்லைக் கேட்கவில்லை;
அப்பொழுது அந்த மனுஷன் தன் மறுமனை
யாட்டியைப் பிடித்து, அவர்களிடத்தில் வெ
ளியே கொண்டுவந்து விட்டான்; அவர்கள்
அவளை அறிந்துகொண்டு, [1]இராமுழுதும் விடி
யுங்காலமட்டும் அவளை இலச்சையாய் நடத்தி,
கிழக்கு வெளுக்கும்போது அவளைப் போக
26 விட்டார்கள். விடியுங்காலத்திற்கு முன்னே
அந்த ஸ்திரீ வந்து, வெளிச்சமாகுமட்டும் அங்
கே தன் எஜமான் இருந்த வீட்டு வாசற்படியி
27 லே விழுந்துகிடந்தாள். அவள் எஜமான் கா
லமே எழுந்திருந்து வீட்டின் கதவைத் திறந்து,
தன் வழியே போகப் புறப்படுகிறபோது,
இதோ, அவன் மறுமனையாட்டியாகிய ஸ்திரீ
வீட்டு வாசலுக்கு முன்பாகத் தன் கைகளை
வாசற்படியின்மேல் வைத்தவளாய்க் கிடந்
28 தாள். எழுந்திரு போவோம் என்று அவன்
அவளோடே சொன்னதற்குப் பிரதியுத்தரம்
பிறக்கவில்லை. அப்பொழுது அந்த மனுஷன்
அவளைக் கழுதையின்மேல் போட்டுக்கொண்
டு, பிரயாணப்பட்டு, தன் இடத்திற்குப் போ
29 னான். அவன் தன் வீட்டுக்கு வந்தபோது,
ஒரு கத்தியை எடுத்து, தன் மறுமனையாட்டி
யைப் பிடித்து, அவளை அவளுடைய எலும்பு
களோடுங்கூடப் பன்னிரண்டு துண்டமாக்கி,
[2]இஸ்ரவேலின் எல்லைகளுக்கெல்லாம் அனுப்
30 பினான். அப்பொழுது அதைக் கண்டவர்க
ளெல்லாரும், இஸ்ரவேல் புத்திரர் எகிப்தி
லிருந்து புறப்பட்ட நாள் முதற்கொண்டு இந்
நாள்வரைக்கும் இதைப்போலொத்த காரியம்
செய்யப்படவும் இல்லை, காணப்படவும்
இல்லை; இந்தக் காரியத்தை யோசித்து ஆலோ
சனைபண்ணி, [3]செய்யவேண்டியது இன்ன
தென்று சொல்லுங்கள் என்றார்கள்.

20 அப்பொழுது தாண்முதல் பெயெர்செ
பாமட்டுமுள்ள இஸ்ரவேல் புத்திரர் அனை
வரும் கீலேயாத் தேசத்தாருடன் மிஸ்பாவி
லே **கர்த்தருக்கு** முன்பாக [4]ஏகோபித்து சபை
2 யாகக் கூடினார்கள். சகல ஜனங்களின் அதி
பதிகளும், இஸ்ரவேலின் சகல கோத்திரத்
தாரும் தேவனுடைய ஜனமாகிய சபையாகக்
கூடி நின்றார்கள்; அவர்கள் பட்டயம் உருவு
3 கிற நாலுலட்சம் காலாட்கள். இஸ்ரவேல்
புத்திரர் மிஸ்பாவுக்கு வந்த செய்தியைப் பென்
யமீன் புத்திரர் கேள்விப்பட்டார்கள்; அந்த
அக்கிரமம் நடந்தது எப்படி, சொல்லுங்கள்
என்று இஸ்ரவேல் புத்திரர் கேட்டார்கள்.
4 அப்பொழுது கொலைசெய்யப்பட்ட ஸ்திரீ
யின் புருஷனாகிய லேவியன் மாறுத்தரமாக:
[5]நானும் என் மறுமனையாட்டியும் பென்யமீன்
நாட்டிலுள்ள கிபியாவிலே இராத்தங்க வந்
5 தோம். அப்பொழுது கிபியாபட்டணத்தார்
எனக்கு விரோதமாய் எழும்பி, என்னைக்
கொலைசெய்ய நினைத்து, நான் இருந்தவீட்டை
இராத்திரியிலே வளைந்துகொண்டு, என் மறு
மனையாட்டியை அவமானப்படுத்தினார்கள்;
6 அதினாலே அவள் செத்துப்போனாள். ஆகை
யால் இஸ்ரவேலிலே அவர்கள் இப்படிப்பட்ட
முறைகேட்டையும் மதிகேட்டையும் செய்த
படியினால், நான் என் மறுமனையாட்டியைப்
பிடித்துத் துண்டித்து, இஸ்ரவேலின் சுதந்தர
மான சகல நாடுகளுக்கும் அனுப்பினேன்.
நீங்கள் எல்லாரும் இஸ்ரவேல் புத்திரராமே, 7
இங்கே ஆலோசித்துத் தீர்மானம்பண்ணுங்கள்
என்றான். அப்பொழுது எல்லா ஜனங்களும் 8
ஏகமாய் எழும்பி: நம்மில் ஒருவரும் தன் கூடா
ரத்திற்குப் போகவும்படாது, ஒருவனும் தன்
வீட்டிற்குத் திரும்பவும்படாது. இப்பொழுது 9
கிபியாவுக்குச் செய்யவேண்டியது என்ன
வென்றால்: சீட்டுப்போட்டு அதற்கு விரோத
மாகப் போவோம். பென்யமீன் கோத்திர 10
மான கிபியாபட்டணத்தார் இஸ்ரவேலிலே
செய்த எல்லா மதிகேட்டுக்கும் தக்கதாக ஜனங்
கள் வந்து செய்யும்படிக்கு, நாம் தானிய
தவசங்களைச் சம்பாதிக்கிறதற்கு, இஸ்ரவேல்
கோத்திரங்களிலெல்லாம் நூறுபேரில் பத்துப்
பேரையும், ஆயிரம்பேரில் நூறுபேரையும், பதி
னாயிரம்பேரில் ஆயிரம்பேரையும், தெரிந்தெ
டுப்போம் என்றார்கள்.

இஸ்ரவேலரெல்லாரும் ஒன்றுபோல 11
ஏகோபித்துப் பட்டணத்திற்கு முன்பாகக்
கூட்டங்கூடி, அங்கே இருந்த இஸ்ரவேலின் 12
கோத்திரத்தார் பென்யமீன் கோத்திரமெங்
கும் ஆட்களை அனுப்பி: [6]உங்களுக்குள்ளே
நடந்த இந்த அக்கிரமம் என்ன? இப்பொ 13
ழுது கிபியாவில் இருக்கிற பேலியாளின் மக்
களாகிய [7]அந்த மனுஷரை நாங்கள் கொன்று,
பொல்லாப்பை இஸ்ரவேலை விட்டு விலக்கும்
படிக்கு, [8]அவர்களை ஒப்புக்கொடுங்கள் என்று
சொல்லச்சொன்னார்கள்; பென்யமீன் புத்தி
ரர் இஸ்ரவேல் புத்திரராகிய தங்கள் சகோதர
ரின் சொல்லைக் கேட்க மனமில்லாமல், இஸ் 14
ரவேல் புத்திரரோடு யுத்தம்பண்ணப் புறப்
படும்படிக்கு, பட்டணங்களிலிருந்து கிபியா
வுக்கு வந்து கூடினார்கள். கிபியாவின் குடி 15
களிலே தெரிந்துகொள்ளப்பட்ட எழுநூறு
பேரையல்லாமல் அந்நாளில் பட்டணங்களி
லிருந்து வந்து கூடின பட்டயம் உருவுகிற
மனுஷரின் லக்கம் இருபத்தாறாயிரம்பேர்
என்று தொகையிடப்பட்டது. அந்த ஜன 16
ங்களெல்லாருக்குள்ளும் தெரிந்துகொள்ளப்
பட்ட இடதுகை வாக்கான [9]எழுநூறுபேர்
இருந்தார்கள்; அவர்கள் அனைவரும் ஒரு மயி
ரிழையும் தப்பாதபடிக்குக் கவண்கல் எறிவார்
கள். பென்யமீன் கோத்திரத்தையல்லாமல் 17
இஸ்ரவேலிலே பட்டயம் உருவுகிற மனுஷர்
நாலு லட்சம்பேர் என்று தொகையிடப்பட்
டது; இவர்களெல்லாரும் யுத்தவீரராயிருந்
தார்கள்.

இஸ்ரவேல் புத்திரரான அவர்கள் எழும்பி, 18
தேவனுடைய வீட்டிற்குப் போய்: [10]எங்களில்
யார் முந்திப் போய் பென்யமீன் புத்திரரோடு
யுத்தம்பண்ணவேண்டும் என்று தேவனிடத்
தில் விசாரித்தார்கள்; [11]அதற்குக் **கர்த்தர்:** யூதா

[1] ஆதி. 4. 1
[2] நியா. 20. 6, 7. 1 சாமு. 11. 7
[3] நீதி. 11. 14; 24. 6
[4] யோசு. 22. 12. 1 சாமு. 11. 7
[5] நியா. 19. 15. மு
[6] உபா. 13. 14. யோசு. 22. 13. மு
[7] உபா. 13. 13. நியா. 19. 22
[8] உபா. 17. 12
[9] நியா. 3. 15. 1 நாளா. 12. 2
[10] யோவே. 1. 14
[11] எண். 27. 21

19 முந்திப் போகவேண்டும் என்றார். அப்பொ
ழுது இஸ்ரவேல் புத்திரர் காலமே எழுந்து
புறப்பட்டு, கிபியாவுக்கு எதிராகப் பாளய
20 மிறங்கினார்கள். பின்பு இஸ்ரவேல் மனுஷர்
பென்யமீனோடு யுத்தம்பண்ணப் புறப்பட்டு,
கிபியாவிலே அவர்களுக்கு எதிராகப் போர்
21 செய்ய அணிவகுத்து நின்றார்கள். ஆனாலும்
பென்யமீன் புத்திரர் கிபியாவிலிருந்து புறப்
பட்டு, இஸ்ரவேலில் இருபத்தீராயிரம்பேரை
அன்றையதினம் தரையிலே விழும்படி [1]சங்க
ரித்தார்கள்.
22 இஸ்ரவேல் ஜனங்கள் தங்களைத் திடப்படுத்
திக்கொண்டு, முதல்நாளில் அணிவகுத்து
நின்ற ஸ்தலத்திலே, மறுபடியும் போர்செய்ய
23 அணிவகுத்து நின்றார்கள். அவர்கள் போய்,
**கர்த்தருடைய** சந்நிதியில் சாயங்காலமட்டும்
அழுது: [2]எங்கள் சகோதரராகிய பென்யமீன்
புத்திரரோடே திரும்பவும் யுத்தம் கலக்கப்
போவோமா என்று **கர்த்தரிடத்தில்** விசாரித்
தார்கள்; அப்பொழுது **கர்த்தர்:** அவர்களுக்கு
24 விரோதமாய்ப் போங்கள் என்றார். மறுநா
ளிலே இஸ்ரவேல் புத்திரர் பென்யமீன் புத்
25 திரர் கிட்டச் சேருகிறபோது, பென்யமீன்
கோத்திரத்தாரும் அந்நாளிலே கிபியாவிலிரு
ந்து அவர்களுக்கு எதிராகப் புறப்பட்டு வந்து,
பின்னும் இஸ்ரவேல் புத்திரரில் பட்டயம்
உருவுகிற பதினெண்ணாயிரம்பேரைத் தரை
யிலே விழும்படி சங்கரித்தார்கள்.
26 அப்பொழுது இஸ்ரவேல் புத்திரராகிய
சகல ஜனங்களும் புறப்பட்டு, தேவனுடைய
வீட்டிற்குப் போய், அங்கே **கர்த்தருடைய** சந்
நிதியில் அழுது, [3]தரித்திருந்து, அன்று சாயங்
காலமட்டும் உபவாசித்து, **கர்த்தருடைய** சந்
நிதியில் சர்வாங்க தகனபலிகளையும் சமாதான
27 பலிகளையும் இட்டு, **கர்த்தரிடத்தில்** விசாரித்
தார்கள்; [4]தேவனுடைய உடன்படிக்கையின்
பெட்டி அந்நாட்களில் அங்கே இருந்தது.
28 ஆரோனின் குமாரனாகிய எலெயாசாரின்
மகன் பினெகாஸ் [5]அந்நாட்களில் அவருடைய
சந்நிதியில் நின்றான்; எங்கள் சகோதரராகிய
பென்யமீன் புத்திரரோடே பின்னும் யுத்தம்
பண்ணப் புறப்படலாமா புறப்படலாகாதா
என்று அவர்கள் விசாரித்தார்கள்; அப்பொ
ழுது **கர்த்தர்:** போங்கள்; நாளைக்கு அவர்
களை உங்கள் கையில் ஒப்புக்கொடுப்பேன்
என்றார்.
29 அப்பொழுது இஸ்ரவேல் புத்திரர் கிபி
யாவைச் சுற்றிலும் பதிவிடையாட்களை [6]வை
30 த்து, மூன்றாம்நாளிலே பென்யமீன் புத்திர
ருக்கு விரோதமாய்ப் போய், முன் இரண்டு
தரம் செய்ததுபோல, கிபியாவுக்குச் சமீப
மாய்ப் போருக்கு அணிவகுத்து நின்றார்கள்.
31 அப்பொழுது பென்யமீன் புத்திரர் ஜனத்
திற்கு விரோதமாய்ப் புறப்பட்டுப் பட்ட
ணத்தை விட்டு, அப்பாலே வந்து, வெளி
யிலே பெத்தேலுக்கும் கிபியாவுக்கும் போகிற
இரண்டு வழிகளில் இஸ்ரவேல் ஜனத்தில்

[1] ஆதி. 49. 27. ஓசி. 10. 9
[2] சங். 78. 34. ஓசி. 5. 15
[3] யோவே. 2. 12–18
[4] யோசு. 18. 1. 1 சாமு. 4. 3, 4
[5] எண். 25. 7-13. யோசு. 24. 33. உபா. 10. 8
[6] யோசு. 8. 4. 2 சாமு. 5. 23
[7] யோசு. 8. 14. பிர. 9. 12. ஏசா. 47. 11. 1 தெச. 5. 3
[8] யோசு. 8. 15, ழ
[9] ஆதி. 19. 28. யோவே. 2. 30
[10] ஏசா. 13. 8; 33. 14

ஏறக்குறைய முப்பதுபேரை, முதல் இரண்டு
தரம் செய்ததுபோல, வெட்டவும் கொல்ல
வும் தொடங்கினார்கள். முன்போல நமக்கு 32
முன்பாக முறிய அடிக்கப்படுகிறார்கள் என்று
பென்யமீன் புத்திரர் சொன்னார்கள்; இஸ்ர
வேல் புத்திரரோ: அவர்களைப் பட்டணத்தை
விட்டு அப்பாலேயிருக்கிற வழிகளிலே வரப்
பண்ணும்படிக்கு, நாம் ஓடவேண்டும் என்று
சொல்லியிருந்தார்கள். அப்பொழுது இஸ்ர 33
வேல் மனுஷர் எல்லாரும் தங்கள் ஸ்தானத்தி
லிருந்து எழும்பி, பாகால் தாமாரிலே யுத்தத்
திற்கு அணிவகுத்து நின்றார்கள்; இஸ்ரவேல
ரில் கிபியாவின் பள்ளத்தாக்கிலே பதிவிருந்த
வர்கள் தங்கள் ஸ்தானத்திலிருந்து புறப்பட்டு,
அவர்களில் எல்லா இஸ்ரவேலிலும் தெரிந்து 34
கொள்ளப்பட்ட பதினாயிரம்பேர் கிபியாவுக்கு
எதிரே வந்தார்கள்; யுத்தம் பலத்தது; [7]ஆனா
லும் தங்களுக்கு விக்கினம் நேரிட்டது என்று
அவர்கள் அறியாதிருந்தார்கள். **கர்த்தர்** இஸ் 35
ரவேலுக்கு முன்பாகப் பென்யமீனை முறிய
அடித்தார்; அந்நாளிலே இஸ்ரவேல் புத்திரர்
பென்யமீனிலே பட்டயம் உருவுகிற ஆட்க
ளாகிய இருபத்தையாயிரத்து நூறுபேரைச்
சங்கரித்தார்கள்.
இஸ்ரவேலர் கிபியாவுக்கு அப்பாலே வை 36
த்த பதிவிடையை நம்பியிருந்தபடியினாலே,
பென்யமீனருக்கு இடம்கொடுத்தார்கள்;
[8]அதினாலே அவர்கள் முறிய அடிக்கப்படுகி
றார்கள் என்று பென்யமீன் புத்திரருக்குக்
காணப்பட்டது. அப்பொழுது பதிவிடையி 37
ருந்தவர்கள் தீவிரமாய்க் கிபியாவின்மேல்
பாய்ந்து பரவி, பட்டணத்தில் இருக்கிறவர்க
ளெல்லாரையும் பட்டயக்கருக்கினால் வெட்
டினார்கள். பட்டணத்திலிருந்து மகா பெரிய 38
புகையை எழும்பப்பண்ணுவதே இஸ்ரவேல
ருக்கும் பதிவிடைக்காரருக்கும் குறிக்கப்
பட்ட அடையாளமாயிருந்தது. ஆகையால் 39
இஸ்ரவேலர் யுத்தத்திலே பின்வாங்கின
போது, பென்யமீனர்: முந்தின யுத்தத்தில்
நடந்ததுபோல, அவர்கள் நமக்கு முன்பாக
முறிய அடிக்கப்படுகிறார்களே என்று சொ
ல்லி, இஸ்ரவேலரில் ஏறக்குறைய முப்பது
பேரை வெட்டவும் கொல்லவும் தொடங்கி
னார்கள். பட்டணத்திலிருந்து புகையானது 40
ஸ்தம்பம்போல [9]உயர எழும்பினபோது, பெ
ன்யமீனர் பின்னாகப் பார்த்தார்கள்; இதோ,
பட்டணத்தின் அக்கினிஜுவாலை வானபரி
யந்தம் எழும்பிற்று. அப்பொழுது இஸ்ரவே 41
லர் திரும்பிக்கொண்டார்கள்; பென்யமீன்
மனுஷரோ, தங்களுக்கு விக்கினம் [10]நேரிட்
டதைக் கண்டு திகைத்து, இஸ்ரவேல் புத்தி 42
ரரை விட்டு, வனாந்தரத்திற்குப் போகிற வழி
க்கு நேராய்த் திரும்பி ஓடிப்போனார்கள்;
ஆனாலும் யுத்தம் அவர்களைத் தொடர்ந்தது;
பட்டணங்களில் இருந்தவர்களும் தங்கள்
நடுவே அகப்பட்டவர்களைக் கொன்றுபோட்
டார்கள். இப்படியே பென்யமீனரை வளை 43

ந்துகொண்டு துரத்தி, கிபியாவுக்குக் கிழக்
குப்புறமாக வருமட்டும், அவர்களை லேசாய்
44 மிதித்துப்போட்டார்கள். இதினால் பென்
யமீனரிலே பதினெண்ணாயிரம்பேர் விழுந்
தார்கள்; அவர்களெல்லாரும் பலவான்களா
45 யிருந்தார்கள். மற்றவர்கள் விலகி, வனாந்தரத்
தில் இருக்கிற ரிம்மோன் [1]கன்மலைக்கு ஓடிப்
போனார்கள்; அவர்களில் இன்னும் ஐயாயி
ரம்பேரை வழிகளிலே கொன்று, மற்றவர்க
ளைக் கிதோம்மட்டும் பின்தொடர்ந்து, அவர்க
ளில் இரண்டாயிரம்பேரை வெட்டிப்போட்
46 டார்கள். இவ்விதமாய் பென்யமீனரில் அந்
நாளில் விழுந்தவர்களெல்லாரும் இருபத்தை
யாயிரம்பேர்; அவர்களெல்லாரும் பட்டயம்
47 உருவுகிற பலவான்களாயிருந்தார்கள். அறு
நூறுபேர் [2]திரும்பிக்கொண்டு ஓடி, வனாந்
தரத்திலிருக்கிற ரிம்மோன் கன்மலைக்குப்
போய், ரிம்மோன் கன்மலையிலே நாலுமாதம்
இருந்தார்கள்.
48 இஸ்ரவேலரோ பென்யமீன் புத்திரர்மேல்
திரும்பி, பட்டணத்தில் மனுஷர்தொடங்கி
மிருகங்கள்மட்டும் கண்டவைகள் எல்லாவற்
றையும் பட்டயக்கருக்கினால் வெட்டி, கண்ட
பட்டணங்களையெல்லாம் அக்கினியால் கொ
ளுத்திப்போட்டார்கள்.

**21** இஸ்ரவேலர் மிஸ்பாவிலே இருக்கும்போ
து: [3]நம்மில் ஒருவனும் தன் குமாரத்தியைப்
பென்யமீனருக்கு விவாகம்பண்ணிக் கொடுப்
பதில்லை என்று ஆணையிட்டிருந்தார்கள்.
2 ஆகையால் ஜனங்கள் தேவனுடைய வீட்டிற்
குப் போய், [4]அங்கே தேவசந்நிதியில் சாயங்
காலமட்டும் இருந்து, சத்தமிட்டு, மிகவும்
3 அழுது: இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தா
வே, இன்று இஸ்ரவேலில் ஒரு கோத்திரம்
குறைந்துபோகத்தக்கதாக இஸ்ரவேலில் இந்
தக் காரியம் நேரிட்டது என்ன என்றார்கள்.
4 மறுநாளிலே, ஜனங்கள் காலமே எழுந்திருந்து,
அங்கே ஒரு பலிபீடத்தைக் கட்டி, [5]சர்வாங்க
தகனபலிகளையும் சமாதானபலிகளையும் செ
5 லுத்தினார்கள். கர்த்தருடைய சந்நிதியில்
மிஸ்பாவுக்கு வாராதவன் நிச்சயமாய்க் கொலை
செய்யப்படக்கடவன் என்று அவர்கள் பெரிய
ஆணையிட்டிருந்தபடியால், இஸ்ரவேல் புத்
திரர்: கர்த்தருடைய சந்நிதியில் சபைகூடின
போது, இஸ்ரவேலுடைய எல்லாக் கோத்
திரங்களிலுமிருந்து வாராதேபோனவர்கள் யார்
6 என்று விசாரித்தார்கள். இஸ்ரவேல் புத்திரர்
தங்கள் சகோதரராகிய பென்யமீனரை நினை
த்து, மனஸ்தாபப்பட்டு: இன்று இஸ்ரவே
லில் ஒரு கோத்திரம் அறுப்புண்டுபோயிற்றே.
7 மீந்திருப்பவர்களுக்கு மனைவிகள் கிடைக்கும்
படி நாம் அவர்களுக்காக என்ன செய்யலாம்?
நம்முடைய குமாரத்திகளில் ஒருத்தியையும்
அவர்களுக்குக் கொடுப்பதில்லை என்று நாம்
கர்த்தர்மேல் ஆணையிட்டுக்கொண்டோமே.
8 இஸ்ரவேலின் கோத்திரங்களில் மிஸ்பாவிலே
கர்த்தருடைய சந்நிதியில் வாராதேபோன யா
தொருவர் உண்டோ என்று விசாரித்தார்கள்;
அப்பொழுது கீலேயாத்திலுள்ள யாபேசின்
மனுஷரில் ஒருவரும் [6]பாளயத்தில் சபை
கூடினபோது வரவில்லை. ஜனங்கள் இலக் 9
கம் பார்க்கப்பட்டபோது, கீலேயாத்திலிருக்
கிற யாபேசின் குடிகளில் அங்கே ஒருவரும்
இருந்ததில்லை. உடனே சபையார் பலவான் 10
களில் பன்னீராயிரம்பேரை அங்கே அழைத்து:
நீங்கள் போய், [7]கீலேயாத்திலுள்ள யாபேசின்
குடிகளை ஸ்திரீகளோடும் பிள்ளைகளோடும்
பட்டயக்கருக்கினால் வெட்டுங்கள். சகல 11
ஆண்பிள்ளைகளையும், புருஷனை அறிந்த சகல
பெண்பிள்ளைகளையும் சங்கரிக்கக்கடவீர்கள்
[8]என்று அவர்களுக்குக் கட்டளையிட்டு அனுப்
பினார்கள். இவர்கள் கீலேயாத்திலுள்ள யா 12
பேசின் குடிகளிடத்திலே புருஷனை அறி
யாத நாநூறு கன்னிப்பெண்களைக் கண்டு
பிடித்து, [9]அவர்களைக் கானான்தேசமான
சீலோவிலிருக்கிற பாளயத்திற்குக் கொண்டு
வந்தார்கள்.
அப்பொழுது ரிம்மோன் கன்மலையிலிருக் 13
கிற பென்யமீன் புத்திரரோடே பேசவும்,
[10]அவர்களுக்குச் சமாதானம் கூறவும், சபை
யார் எல்லாரும் மனுஷரை அனுப்பினார்கள்.
அப்படியே அக்காலத்தில் பென்யமீனர் திரும் 14
பவந்தார்கள்; கீலேயாத்திலிருக்கிற யாபேசின்
ஸ்திரீகளில் உயிரோடே வைத்த பெண்களை
அவர்களுக்குக் கொடுத்தார்கள்; அப்படிச்
செய்தும் அவர்கள் தொகைக்குக் காணாதிருந்
தது. இஸ்ரவேல் கோத்திரங்களிலே கர்த் 15
தர் ஒரு பிளப்பை [11]உண்டாக்கினார் என்று
ஜனங்கள் பென்யமீனருக்காக மனஸ்தாபப்
பட்டார்கள்.
பென்யமீன் கோத்திர ஸ்திரீகள் அழிந்த 16
படியினாலே, மீதியான மற்றப்பேர்களுக்கும்
மனைவிகள் கிடைக்கும்படி என்னசெய்யலாம்
என்று சபையின் மூப்பரானவர்கள் கேட்டு,
இஸ்ரவேலில் ஒருகோத்திரம் நிர்மூலமாகாத 17
படிக்கு, தப்பினவர்களுடைய சுதந்தரம் பென்
யமீனுக்கு இருக்கவேண்டுமே, நாமோ நம் 18
முடைய குமாரத்திகளில் அவர்களுக்குப்
பெண் கொடுக்கக்கூடாது; பென்யமீனருக்
குப் பெண்கொடுக்கிறவன் சபிக்கப்பட்டவன்
என்று, இஸ்ரவேல் புத்திரர் ஆணையிட்டார்
களே என்றார்கள். பின்னும், இதோ, பெத் 19
தேலுக்கு வடக்கே பெத்தேலிலிருந்து சீகே
முக்குப்போகிற பாதைக்குக் கிழக்காகவும்
லிபோனாவுக்குத்தெற்காகவும்இருக்கிறசீலோ
விலே வருஷந்தோறும் கர்த்தருக்குப் பண்டி
கைகொண்டாடப்படுகிறதே என்றுசொல்லி,
அவர்கள் பென்யமீன் புத்திரரை நோக்கி: 20
நீங்கள் போய், திராட்சத்தோட்டங்களிலே
பதிவிருந்து, சீலோவின் குமாரத்திகள் கீத 21
வாத்தியத்தோடே நடனம்பண்ணுகிறவர்களா
ய்ப் புறப்பட்டு வருகிறதை நீங்கள் காணும்
போது, [12]திராட்சத்தோட்டங்களிலிருந்து புற
ப்பட்டு, உங்களில் அவரவர் சீலோவின் குமா

1 யோசு. 15. 32. 1 நாளா. 6. 77. சகரி. 14. 10
2 நியா. 21. 13
3 நியா. 20. 1, 10. ஓசி. 10. 2
4 நியா. 20. 18, 26
5 2 சாமு. 24. 25
6 1 சாமு. 11. 1; 31. 11
7 1 சாமு. 11. 7
8 எண். 31. 17
9 யோசு. 18. 1
10 நியா. 20. 47
11 1 நாளா. 13. 11. ஏசா. 30. 13
12 நியா. 11. 34. பிர. 3. 4

ரத்திகளில், ஒவ்வொரு பெண்ணைப் பிடித்
துப் பென்யமீன் தேசத்திற்குக் கொண்டு
22 போங்கள். அவர்களுடைய தகப்பன்மாராகி
லும் சகோதராகிலும் எங்களிடத்தில் முறை
யிட வரும்போது, நாங்கள் அவர்களை நோக்கி:
எங்கள்நிமித்தம் அவர்களுக்குத் தயவுசெய்
யுங்கள்; நாங்கள் யுத்தம்பண்ணி, அவனவ
னுக்கு மனைவியை வாங்கிக் கொடுக்கவில்லை;
[1]உங்கள்மேல் குற்றமுண்டாக இப்போது நீங்
கள் அவர்களுக்கு மனைவிகளைக் கொடுக்கவும்
இல்லை என்போம் என்று சொன்னார்கள்.
23 பென்யமீன் புத்திரர் அப்படியே செய்து,

1 1 கொ. 7. 2

2 நியா. 20. 48

3 நியா. 17. 6. உபா. 12. 8

நடனம்பண்ணுகிறவர்களிலே தங்கள் தொ
கைக்குச் சரியான பெண்களை மனைவிகளா
கப் பிடித்துக்கொண்டு, தங்கள் சுதந்தரத்திற்
குத் திரும்பிப்போய், பட்டணங்களைப் புதுப்
பித்துக் கட்டி, [2]அவைகளில் குடியிருந்தார்
கள். இஸ்ரவேல் புத்திரரும் அக்காலத்திலே 24
அவ்விடம் விட்டு அவரவர் தங்கள் கோத்திரத்
துக்கும் தங்கள் குடும்பத்துக்கும் போய், அவர
வர் தங்கள் சுதந்தரத்தில் சேர்ந்தார்கள். அந் 25
நாட்களிலே இஸ்ரவேலில் ராஜா இல்லை;
[3]அவனவன் தன்தன் பார்வைக்குச் சரிப்
போனபடி செய்துவந்தான்.

RUTH

# ரூத்தின் சரித்திரம்

1 நியாயாதிபதிகள் நியாயம் விசாரித்துவரும்
நாட்களில், [1]தேசத்திலே பஞ்சம் உண்டா
யிற்று; அப்பொழுது யூதாவிலுள்ள பெத்லெ
கேம் ஊரானாகிய [2]ஒரு மனுஷன் தன் மனைவி
யோடும் இரண்டு குமாரரோடுங்கூட மோவாப்
2 தேசத்திலே போய்ச் சஞ்சரித்தான். அந்த
மனுஷனுடைய பேர் எலிமெலேக்கு, அவன்
மனைவியின் பேர் நகோமி, அவனுடைய இர
ண்டு குமாரரில் ஒருவன் பேர் மக்லோன்,
மற்றொருவன் பேர் கிலியோன்; யூதாவி
லுள்ள பெத்லெகேம் ஊராகிய எப்பிராத்திய
ராகிய [3]அவர்கள் மோவாப்தேசத்திற்குப்
3 போய், அங்கே இருந்துவிட்டார்கள். நகோ
மியின் புருஷனாகிய எலிமெலேக்கு இறந்து
போனான்; அவளும் அவளுடைய இரண்டு
4 குமாரரும்மாத்திரம் இருந்தார்கள். இவர்கள்
மோவாபியரில் பெண்கொண்டார்கள்; அவர்
களில் ஒருத்தி பேர் ஓர்பாள், மற்றவள் பேர்
ரூத்; அங்கே ஏறக்குறையப் பத்து வருஷம்
5 வாசம்பண்ணினார்கள். பின்பு மக்லோன்
கிலியோன் என்னும் அவர்கள் இருவரும்
இறந்துபோனார்கள்; அந்த ஸ்திரீ தன் குமாரர்
இருவரையும் தன் புருஷனையும் இழந்து
6 தனித்தவளானாள். **கர்த்தர்** தம்முடைய ஜன
ங்களைச் [4]சந்தித்து, அவர்களுக்கு ஆகாரம்
[5]அருளினார் என்று அவள் மோவாப்தேசத்
திலே கேள்விப்பட்டு, தன் மருமக்களோடே
கூட மோவாப்தேசத்திலிருந்து திரும்பிவரும்
7 படி எழுந்து, தன் இரண்டு மருமக்களோடுங்
கூடத் தானிருந்த ஸ்தலத்தை விட்டுப் புறப்
பட்டாள். யூதாதேசத்திற்குத் திரும்பிப்போக,
8 அவர்கள் வழிநடக்கையில், நகோமி தன்
இரண்டு மருமக்களையும் நோக்கி: நீங்கள் இரு
வரும் உங்கள் தாய் வீட்டுக்குத் திரும்பிப்போங்
கள்; மரித்துப்போனவர்களுக்கும் எனக்கும்
நீங்கள் தயைசெய்ததுபோல, [6]**கர்த்தர்** உங்க
9 ளுக்கும் தயைசெய்வாராக. **கர்த்தர்** உங்கள்
இருவருக்கும் வாய்க்கும் புருஷனுடைய வீட்
டிலே நீங்கள் சுகமாய் வாழ்ந்திருக்கச் செய்
வாராக என்று சொல்லி, அவர்களை முத்தமிட்
டாள். அப்பொழுது அவர்கள் சத்தமிட்டு அ
10 ழுது, அவளைப் பார்த்து: உம்முடைய ஜனத்
தண்டைக்கே உம்முடன்கூட வருவோம் என்
றார்கள். அதற்கு நகோமி: என் மக்களே, 11
நீங்கள் திரும்பிப்போங்கள்; என்னோடே ஏன்
வருகிறீர்கள்? உங்களுக்குப் புருஷராகும்படி
க்கு, [7]இனிமேல் என் கர்ப்பத்திலே எனக்குப்
பிள்ளைகள் உண்டாகுமோ? என் மக்களே, 12
திரும்பிப்போங்கள்; நான் வயது சென்றவள்;
ஒரு புருஷனுடன் வாழத்தக்கவளல்ல; அப்
படிப்பட்ட நம்பிக்கை எனக்கு உண்டாயி
ருந்து, நான் இன்று இரவில் ஒரு புருஷ
னுக்கு வாழ்க்கைப்பட்டு, பிள்ளைகளைப் பெற்
றாலும், அவர்கள் பெரியவர்களாகுமட்டும், புரு 13
ஷருக்கு வாழ்க்கைப்படாதபடிக்கு நீங்கள்
பொறுத்திருப்பீர்களோ? அது கூடாது; என்
மக்களே, **கர்த்தருடைய** கை எனக்கு விரோத
மாயிருக்கிறதினால், [8]உங்கள்நிமித்தம் எனக்கு
மிகுந்த விசனம் இருக்கிறது என்றாள். அப் 14
பொழுது அவர்கள் சத்தமிட்டு அதிகமாய்
அழுதார்கள்; ஓர்பாள் தன் மாமியை முத்த
மிட்டுப் போனாள்; ரூத்தோ அவளை விடாமல்
[9]பற்றிக்கொண்டாள். அப்பொழுது அவள்: 15
இதோ, உன் சகோதரி தன் ஜனங்களிடத்துக்
கும் தன் தேவர்களிடத்துக்கும் திரும்பிப்
போய்விட்டாளே; [10]நீயும் உன் சகோதரியின்
பிறகே திரும்பிப்போ என்றாள். அதற்கு 16
ரூத்: நான் உம்மைப் பின்பற்றாமல் உம்மை
விட்டுத் திரும்பிப்போவதைக்குறித்து, என்
னோடே பேசவேண்டாம்; [11]நீர் போகும் இடத்
திற்கு நானும் வருவேன்; நீர் தங்கும் இடத்
திலே நானும் தங்குவேன்; உம்முடைய ஜனம்
என்னுடைய ஜனம்; [12]உம்முடைய தேவன்
என்னுடைய தேவன். நீர் மரணமடையும் 17
இடத்தில் நானும் மரணமடைந்து, அங்கே
அடக்கம்பண்ணப்படுவேன்; மரணமேயல்லா
மல் வேறொன்றும் [13]உம்மை விட்டு என்னைப்
பிரித்தால், **கர்த்தர்** அதற்குச் சரியாகவும்
அதற்கு அதிகமாகவும் [14]எனக்குச் செய்யக்கட
வர் என்றாள். அவள் தன்னோடேகூட வர 18
மன உறுதியாயிருக்கிறதைக் கண்டு, [15]அப்பு
றம் அதைக்குறித்து அவளோடே ஒன்றும்
பேசவில்லை. அப்படியே இருவரும் பெத்லெ 19
கேம்மட்டும் நடந்துபோனார்கள்; அவர்கள்
பெத்லெகேமுக்கு வந்தபோது, ஊரார் எல்
லாரும் அவர்களைக்குறித்து ஆச்சரியப்பட்டு,

1 நியா. 2. 16
2 நியா. 17. 8
3 ஆதி. 35. 19
4 ஆதி. 50. 25 யாத். 4. 31. லூ. 1. 69
5 சங். 132. 15. மத். 6. 11, 31-34
6 2 தீமோ. 1. 16-18
7 ஆதி. 38. 11 உபா. 25. 5
8 நியா. 2. 15. யோபு 19. 21. சங். 32. 4
9 நீதி. 17. 17
10 யோசு. 24. 15. நியா. 11. 24
11 2 இரா. 2. 2-6. லூ. 24. 28, 29
12 2. 11, 12
13 அப். 20. 24
14 1 சாமு. 3. 17
15 அப். 21. 14

இவள் [1]நகோமியோ என்று பேசிக்கொண்
20 டார்கள். அதற்கு அவள்: நீங்கள் என்னை
*நகோமி என்று சொல்லாமல், †மாராள்
என்று சொல்லுங்கள்; சர்வவல்லவர் எனக்கு
21 மிகுந்த கசப்பைக் கட்டளையிட்டார். நான்
நிறைவுள்ளவளாய்ப் போனேன்; [2]**கர்த்தர்**
என்னை வெறுமையாய்த் திரும்பிவரப்பண்ணி
ளூர்; **கர்த்தர்** என்னைச் சிறுமைப்படுத்தி,
சர்வவல்லவர் என்னைக் கிலேசப்படுத்தியிருக்
கையில், நீங்கள் என்னை நகோமி என்பா
22 னேன் என்றாள். இப்படி நகோமி மோவா
பிய ஸ்திரீயான தன் மருமகள் ரூத்தோடுங்
கூட மோவாப்தேசத்திலிருந்து திரும்பிவந்
தாள்; வாற்கோதுமை அறுப்பின் துவக்கத்
தில் [3]அவர்கள் பெத்லெகேமுக்கு வந்தார்கள்.

**2** நகோமிக்கு அவளுடைய புருஷனுகிய
எலிமெலேக்கின் [4]உறவின்முறையில் [5]போ
வாஸ் என்னும் பேருள்ள மிகுந்த ஆஸ்திக்கா
ரனுகிய இனத்தான் ஒருவன் இருந்தான்.
2 மோவாபிய ஸ்திரீயான ரூத் என்பவள் நகோ
மியைப் பார்த்து: நான் வயல்வெளிக்குப்
போய், யாருடைய கண்களில் எனக்குத் தயை
கிடைக்குமோ, அவர் பிறகே கதிர்களைப்
[6]பொறுக்கிக்கொண்டு வருகிறேன் என்றாள்;
அதற்கு இவள்: என் மகளே, போ என்றாள்.
3 அவள் போய், வயல்வெளியில் அறுக்கிறவர்
கள் பிறகே பொறுக்கினாள்; தற்செயலாய் அவ
ளுக்கு நேரிட்ட அந்த வயல்நிலம் எலிமெ
லேக்கின் வம்சத்தானுகிய போவாசுடையதா
4 யிருந்தது. அப்பொழுது போவாஸ் பெத்லெ
கேமிலிருந்து வந்து, அறுக்கிறவர்களைப் பார்
த்து: **கர்த்தர்** உங்களோடே [7]இருப்பாராக
என்றான்; அதற்கு அவர்கள்: **கர்த்தர்** உம்மை
5 [8]ஆசீர்வதிப்பாராக என்றார்கள். பின்பு போ
வாஸ் அறுக்கிறவர்கள்மேல் கண்காணியாக
வைக்கப்பட்ட தன் வேலைக்காரனை நோக்கி:
இந்தப் பெண்பிள்ளை யாருடையவள் என்று
6 கேட்டான். அறுக்கிறவர்கள்மேல் கண்கா
ணியாக வைக்கப்பட்ட அந்த வேலைக்காரன்
பிரதியுத்தரமாக: இவள் மோவாப்தேசத்திலி
ருந்து நகோமியோடேகூட வந்த மோவாபிய
7 பெண்பிள்ளை. அறுக்கிறவர்கள் பிறகே அரிக்
கட்டுகளிலிருந்து சிந்தினதைப் பொறுக்கிக்
கொள்ளுகிறேன் என்று அவள் என்னிடத்தில்
கேட்டுக்கொண்டாள்; காலமேதுவக்கி இது
வரைக்கும் இங்கே இருக்கிறாள்; இப்பொ
ழுது அவள் குடிசைக்கு வந்து கொஞ்சநேரந்
8 தான் ஆயிற்று என்றான். அப்பொழுது போ
வாஸ் ரூத்தைப் பார்த்து: மகளே, கேள்; பொ
றுக்கிக்கொள்ள வேறே வயலில் போகாம
லும், [9]இவ்விடத்தைவிட்டுப் போகாமலும்,
இங்கே என் ஊழியக்காரப் பெண்களோடு
9 கூடவே இரு. அவர்கள் அறுப்பறுக்கும்
வயலை நீ பார்த்து, அவர்கள் பிறகே போ; ஒரு
வரும் உன்னைத் தொடாதபடிக்கு, [10]வேலைக்
காரருக்குக் கட்டளையிட்டிருக்கிறேன்; உனக்
குத் தாகம் எடுத்தால், தண்ணீர்க்குடங்களண்
டைக்குப் போய், வேலைக்காரர் மொண்டு
கொண்டு வருகிறதிலே குடிக்கலாம் என்
றான். அப்பொழுது அவள் தரையிலே முகங் 10
குப்புற விழுந்து வணங்கி: [11]நான் அந்நிய
தேசத்தாளாயிருக்க, நீர் என்னை விசாரிக்கும்
படி எனக்கு எதினாலே உம்முடைய கண்க
ளில் தயைகிடைத்தது என்றாள். அதற்குப் 11
போவாஸ் பிரதியுத்தரமாக: உன் புருஷன்
மரணமடைந்தபின்பு, நீ உன் மாமியாருக்கா
கச் செய்ததும், நீ உன் தகப்பனையும் உன்
தாயையும், உன் ஜந்மதேசத்தையும் விட்டு,
முன்னே நீ அறியாத ஜனங்களிடத்தில் வந்த
தும் எல்லாம் எனக்கு [12]விபரமாய்த் தெரிவிக்
கப்பட்டது. உன் செய்கைக்குத் தக்க பல 12
னைக் **கர்த்தர்** உனக்குக் கட்டளையிடுவாராக;
[13]இஸ்ரவேலின் தேவனுகிய **கர்த்தருடைய**
செட்டைகளின் கீழ் அடைக்கலமாய் வந்த
உனக்கு [14]அவராலே நிறைவான பலன்
கிடைப்பதாக என்றான். அதற்கு அவள்: 13
என் ஆண்டவனே, உம்முடைய கண்களில்
எனக்குத் தயை கிடைக்கவேண்டும்; [15]நான்
உம்முடைய வேலைக்காரிகளில் ஒருத்திக்கும்
சமானமாயிராவிட்டாலும், நீர் எனக்கு ஆறு
தல் சொல்லி உம்முடைய அடியாளோடே
பட்சமாய்ப் பேசினீரே என்றாள். பின்னும் 14
போவாஸ் சாப்பாட்டு வேளையில் அவளைப்
பார்த்து: நீ இங்கே வந்து, இந்த அப்பத்திலே
புசித்து, காடியிலே உன் துணிக்கையைத்
தோய்த்துக்கொள் என்றான். அப்படியே
அவள் அறுப்பறுக்கிறவர்கள் அருகே உட்
கார்ந்தாள்; அவளுக்கு வறுத்த கோதுமையைக்
கொடுத்தான்; அவள் சாப்பிட்டு, திர்ப்திய
டைந்து, மீந்ததை [16]வைத்துக்கொண்டாள்.
அவள் கதிர் பொறுக்கிக்கொள்ள எழுந்தபோ 15
து, போவாஸ் தன் வேலைக்காரரை நோக்கி:
அவள் அரிக்கட்டுகள் நடுவே பொறுக்கிக்
கொள்ளட்டும்; [17]அவளை ‡ஈனம்பண்ணவேண்
டாம். அவள் பொறுக்கிக்கொள்ளும்படிக்கு 16
அவளுக்காக அரிகளிலே சிலதைச் சிந்தவி
டுங்கள், அவளை அதட்டாதிருங்கள் என்று
கட்டளையிட்டான். அப்படியே அவள் சாயங் 17
காலமட்டும் வயலிலே கதிர் பொறுக்கினாள்;
பொறுக்கினதை அவள் தட்டி அடித்துத் தீர்ந்
தபோது, அது ஏறக்குறைய ஒரு மரக்கால்
வாற்கோதுமை கண்டது. அவள் அதை 18
எடுத்துக்கொண்டு, ஊருக்குள் வந்தாள்;
அவள் பொறுக்கினதை அவளுடைய மாமி
பார்த்தாள்; தான் திருப்தியாய்ச் சாப்பிட்டு
மீதியாக வைத்ததையும் எடுத்து அவளுக்குக்
கொடுத்தாள். அப்பொழுது அவளுடைய 19
மாமி: இன்று எங்கே கதிர் பொறுக்கினாய்,
எவ்விடத்தில் வேலைசெய்தாய் என்று அவளி
டத்தில் கேட்டு; உன்னை விசாரித்தவன் ஆசீர்
வதிக்கப்படுவானாக என்றாள்; [18]அப்பொழுது
அவள்: இன்னாரிடத்திலே வேலைசெய்தேன்
என்று தன் மாமிக்கு அறிவித்து: நான் இன்று
வேலைசெய்த வயல்காரன் பேர் போவாஸ்

[1] எசா. 23. 7. புல. 2. 15
* இன்பம்
† கசப்பு
[2] யோபு 1. 21
[3] யாத். 9. 31. 2 சாமு. 21. 9
[4] 3. 2, 12
[5] மத். 1. 5
[6] லேவி. 19. 9. உபா. 24. 19
[7] சங். 129. 7, 8. லூ. 1. 28. 2 தெச. 3. 16
[8] 1 தீமோ. 6. 2
[9] உன்னத. 1. 7, 8
[10] ஆதி. 20. 6. நீதி. 6. 29
[11] 1 சாமு. 25. 23
[12] 1. 14—17
[13] 1 சாமு 24. 19. நீதி. 11. 18
[14] சங். 17. 8; 36. 7; 57. 1; 63. 7
[15] ஆதி. 33. 15. 1 சாமு. 1. 18
[16] சங். 23. 5
[17] யாக். 1. 5
‡ பழிக்கவேண்டாம்
[18] சங். 41. 1

20 என்றாள். அப்பொழுது நகோமி தன் மருமக
ளைப் பார்த்து: உயிரோடிருக்கிறவர்களுக்கும்
மரித்தவர்களுக்கும் தயவுசெய்கிற [1]**கர்த்தரா**
**லே** [2]அவன் ஆசீர்வதிக்கப்படுவானாக என்
றாள்; பின்னும் நகோமி அவளைப் பார்த்து:
அந்த மனுஷன் நமக்கு நெருங்கின உறவின்
முறையானும் நம்மை ஆதரிக்கிற சுதந்தரவாளி
களில் ஒருவனுமாய் [3]இருக்கிறான் என்றாள்.
21 பின்னும் மோவாபிய ஸ்திரீயான ரூத்: அவர்
என்னை நோக்கி, என் அறுப்பெல்லாம் அறுத்
துத் தீருமட்டும், நீ என் வேலைக்காரிகளோ
டே கூடவே இரு என்று [4]சொன்னார் என்
22 றாள். அப்பொழுது நகோமி தன் மருமகளா
கிய ரூத்தைப் பார்த்து: என் மகளே, வே
றொரு வயலிலே மனுஷர் உன்னை எதிர்க்கா
தபடிக்கு நீ அவன் வேலைக்காரிகளோடே
23 போகிறது நல்லது என்றாள். அப்படியே
கோதுமை அறுப்பும் வாற்கோதுமை அறுப்
பும் தீருமட்டும் அவள் கதிர் பொறுக்கும்
படிக்கு, [5]போவாசுடைய வேலைக்காரிக
ளோடே கூடியிருந்து, தன் மாமியினிடத்தில்
தங்கினாள்.

**3** பின்பு அவள் மாமியாகிய நகோமி அவளை
நோக்கி: என் மகளே, நீ சுகமாய் வாழ்ந்தி
ருக்கும்படி [6]நான் உனக்குச் சவுக்கியத்தைத்
2 தேடாதிருப்பேனோ? நீ போவாசின் வேலைக்
காரிகளோடே கூடியிருந்தாயே, அவன் நம்
முடைய உறவின்முறையான் அல்லவா?
இதோ, அவன் இன்று ராத்திரி களத்திலே
3 வாற்கோதுமை தூற்றுவான். நீ குளித்து,
எண்ணெய் பூசி, [7]உன் வஸ்திரங்களை உடுத்
திக்கொண்டு, அந்தக் களத்திற்குப் போ; அந்த
மனுஷன் புசித்துக் குடித்துத் தீருமட்டும்
4 அவன் கண்ணுக்கு எதிர்ப்படாமலிரு. அவன்
படுத்துக்கொண்டபோது, அவன் படுத்திருக்
கும் இடத்தை நீ பார்த்திருந்து போய், அவன்
கால்களின்மேல் மூடியிருக்கிற போர்வையை
ஒதுக்கி நீ படுத்துக்கொள்; அப்பொழுது நீ
செய்யவேண்டியது இன்னதென்று அவன்
5 உனக்குச் சொல்லுவான் என்றாள். அதற்கு
அவள்: நீர் எனக்குச் சொன்னபடியெல்லாம்
6 செய்வேன் என்றாள். அவள் களத்திற்குப்
போய், தன் மாமி தனக்குக் கற்பித்தபடியெல்
7 லாம் செய்தாள். போவாஸ் புசித்துக் குடி
த்து, மகிழ்ச்சியாயிருந்து, [8]ஒரு அம்பாரத்து
அடியிலே வந்து படுத்துக்கொண்டான். அப்
பொழுது அவள்: மெள்ளப் போய், அவன்
கால்களின்மேல் மூடியிருக்கிற போர்வையை
8 ஒதுக்கிப் படுத்துக்கொண்டாள். பாதி ராத்தி
ரியிலே, அந்த மனுஷன் அருண்டு, திரும்பி,
ஒரு ஸ்திரீ தன் பாதத்தண்டையிலே படுத்தி
9 ருக்கிறதைக் கண்டு, நீ யார் என்று கேட்
டான்; அவள், நான் உம்முடைய அடியாளா
கிய ரூத்; நீர் உம்முடைய அடியாள்மேல் உம்
முடைய போர்வையை விரியும்; [9]நீர் சுதந்தர
10 வாளி என்றாள். அதற்கு அவன்: மகளே, நீ
**கர்த்தரால்** ஆசீர்வதிக்கப்படுவாயாக; [10]நீ தரித்

1 2 சாமு. 9. 1. நீதி. 17. 17; 3. 10
2 2 சாமு. 2. 5. யோபு 29. 13
3 லேவி. 25. 25
4 உன்னத. 1. 7, 8
5 நீதி. 13. 20. 1 கொ. 15. 33
6 1. 9. 1 கொ. 7. 36. 1 தீமோ. 5. 8
7 2 சாமு. 14. 2. பிர. 9. 8
8 நியா. 19. 9, 22. 2 சாமு. 13. 28. பிர. 8. 15; 9. 7. எஸ்தர் 1. 10
9 எசே. 16. 8
10 2. 20
11 நீதி. 12. 4; 31. 10
12 4. 1
13 4. 5. உபா. 25. 5. மத். 22. 24, 25
14 ரோ. 4. 2
15 ரோ. 14. 16. 2 கொ. 8. 21. 1 தெச. 5. 22
16 சங். 37. 3, 5
17 3. 12
18 1 இரா. 21. 8. நீதி. 31. 23

திரும் ஐசுவரியவான்களுமான வாலிபர்க
ளின் பிறகே போகாததினால், உன் முந்தின
நற்குணத்தைப்பார்க்கிலும் உன் பிந்தின நற்
குணம் உத்தமமாயிருக்கிறது. இப்போதும் 11
மகளே, நீ பயப்படாதே; உனக்கு வேண்டிய
படியெல்லாம் செய்வேன்; [11]நீ குணசாலி என்
பதை என் ஜனமாகிய ஊரெல்லாரும் அறி
வார்கள். நான் சுதந்தரவாளி என்பது மெய் 12
தான்; ஆனாலும் என்னிலும் கிட்டின சுதந்தர
வாளி [12]ஒருவன் இருக்கிறான். இராத்திரிக் 13
குத் தங்கியிரு; நாளைக்கு அவன் உன்னைச்
சுதந்தரமுறையாய் விவாகம்பண்ணச் சம்மதி
த்தால் நல்லது, [13]அவன் விவாகம்பண்ணட்
டும்; அவன் உன்னை விவாகம்பண்ண மனதில்
லாதிருந்தானேயாகில், நான் உன்னைச் சுதந்
தரமுறையாய் விவாகம்பண்ணுவேன் என்று
**கர்த்தருடைய** ஜீவனைக்கொண்டு ஆணையிடுகி
றேன்; [14]விடியற்காலமட்டும் படுத்துக்கொண்
டிரு என்றான். அவள் விடியற்காலமட்டும் 14
அவன் பாதத்தண்டையில் படுத்திருந்து, களத்
திலே ஒரு ஸ்திரீ வந்ததாக ஒருவருக்கும் தெரி
விக்கவேண்டாம் என்று அவன் சொல்லியிருந்
தபடியால், [15]ஒருவர் முகம் ஒருவருக்குத் தெரி
யாததற்கு முன்னே எழுந்திருந்தாள். அவன் 15
அவளை நோக்கி: நீ போர்த்துக்கொண்டிருக்
கிற போர்வையை விரித்துப் பிடி என்றான்;
அவள் அதைப் பிடித்தபோது, அவன் அதிலே
ஆறுபடி வாற்கோதுமையை அளந்து போட்டு,
அவள்மேல் தூக்கிவிட்டு, பட்டணத்திற்குப்
புறப்பட்டு வந்தான். அவள் தன் மாமியினி 16
டத்தில் வந்தபோது, அவள்: என் மகளே, உன்
செய்தி என்ன என்று கேட்டாள்; அப்பொ
ழுது அவள்: அந்த மனுஷன் தனக்குச் செய்
ததையெல்லாம் அவளுக்கு விவரித்தாள். மே 17
லும் அவர், நீ உன் மாமியாரண்டைக்கு வெறு
மையாய்ப் போகவேண்டாம் என்று சொல்லி,
இந்த ஆறுபடி வாற்கோதுமையை எனக்குக்
கொடுத்தார் என்றாள். அப்பொழுது அவள்: 18
என் மகளே, இந்தக் காரியம் என்னமாய் முடி
யும் என்று நீ அறியுமட்டும் பொறுத்திரு;
[16]அந்த மனுஷன் இன்றைக்கு இந்தக் காரி
யத்தை முடிக்குமுன் இளைப்பாறமாட்டான்
என்றாள்.

போவாஸ் பட்டணவாசலில் போய், உட் **4**
கார்ந்துகொண்டிருந்தான்; அப்பொழுது போ
வாஸ் சொல்லியிருந்த அந்தச் சுதந்தரவாளி
[17]அந்த வழியே வந்தான்; அவனை நோக்கி,
ஓய், என்று பேர் சொல்லிக் கூப்பிட்டு, இங்
கே வந்து சற்று உட்காரும் என்றான்; அவன்
வந்து உட்கார்ந்தான். அப்பொழுது அவன் 2
பட்டணத்து மூப்பரானவர்களில் பத்துப்பே
ரை அழைத்து, [18]இங்கே உட்காருங்கள் என்
றான்; அவர்களும் உட்கார்ந்தார்கள். அப்பொ 3
ழுது அவன் அந்தச் சுதந்தரவாளியை நோக்கி:
எலிமெலேக் என்னும் நம்முடைய சகோதர
னுக்கு இருந்த வயல் நிலத்தின் பங்கை, மோ
வாப் தேசத்திலிருந்து திரும்பி வந்த நகோமி

4 விற்கப்போகிறுன். ஆகையால் நீர் அதை
ஊராருக்கு முன்பாகவும், என் ஜனத்தின்
மூப்பருக்கு முன்பாகவும் வாங்கிக்கொள்ளும்
படி உமக்கு அறியப்பண்ணவேண்டும் என்
றிருந்தேன்; [1]நீர் அதைச் சுதந்தரமுறையாக
மீட்டுக்கொள்ள மனதிருந்தால் மீட்டுக்கொள்
ளும்; அதை மீட்டுக்கொள்ள மனதில்லாதிருந்
தால், நான் அதை அறியும்படிக்கு எனக்குச்
சொல்லும்; உம்மையும் உமக்குப் பின்பு என்
னையும் தவிர, அதை மீட்கத்தக்கவன் வே
ருெருவனும் இல்லை என்றுன்; அதற்கு
அவன், நான் அதை மீட்டுக்கொள்ளுகிறேன்
5 என்றுன். அப்பொழுது போவாஸ்: நீர் நகோ
மியின் கையிலே அந்த வயல்நிலத்தை வாங்கு
கிற நாளிலே மரித்தவனுடைய சுதந்தரத்தில்
அவன் பேரை நிலைநிற்கப் பண்ணும்படிக்கு,
[2]அதை மரித்தவன் மனைவியாகிய மோவாபிய
ஸ்திரீயான ரூத் கையிலும் வாங்கவேண்டி
6 யது என்றுன். அப்பொழுது அந்தச் சுதந்தர
வாளி: [3]நான் என் சுதந்தரத்தைக் கெடுக்காதப
டிக்கு, நான் அதை மீட்டுக்கொள்ளமாட்
டேன்; நான் மீட்கத்தக்கதை நீர் மீட்டுக்கொள்
ளும்; நான் அதை மீட்டுக்கொள்ளமாட்டேன்
7 என்றுன். மீட்கிறதிலும் மாற்றுகிறதிலும்
சகல காரியத்தையும் உறுதிப்படுத்தும்படிக்கு,
இஸ்ரவேலிலே பூர்வகால வழக்கம் என்ன
வென்றுல், [4]ஒருவன் தன் பாதரட்சையைக்
கழற்றி, மற்றவனுக்குக் கொடுப்பான், இது
இஸ்ரவேலிலே வழங்கின உறுதிப்பாடு.
8 அப்படியே அந்தச் சுதந்தரவாளி போவாசை
நோக்கி: நீர் அதை வாங்கிக்கொள்ளும் என்று
சொல்லி, தன் பாதரட்சையைக் கழற்றிப்
9 போட்டான். அப்பொழுது போவாஸ் மூப்
பரையும் சகல ஜனங்களையும் நோக்கி: எலிமெ
லேக்குக்கு இருந்த எல்லாவற்றையும் கிலி
யோனுக்கும் மக்லோனுக்கும் இருந்த எல்லா
வற்றையும் நகோமியின் கையிலே வாங்கிக்
கொண்டேன் என்பதற்கு இன்றையதினம்
10 நீங்கள் சாட்சி. இதுவுமல்லாமல், மரித்தவ
னுடைய சகோதரருக்குள்ளும், ஊராருக்குள்
ளும், அவனுடைய பேர் அற்றுப்போகாமல்,
மரித்தவனுடைய சுதந்தரத்திலே அவன் பே
ரை நிலைநிறுத்த, நான் மக்லோனின் மனைவி
யாயிருந்த மோவாபிய ஸ்திரீயான ரூத்தை
எனக்கு மனைவியாகக் கொண்டேன்; அதற்
கும் இன்றையதினம் நீங்கள் சாட்சி என்றுன்.
அப்பொழுது ஒலிமுகவாசலில் இருக்கிற 11
சகல ஜனங்களும் மூப்பரானவர்களும் அவனை
நோக்கி: நாங்கள் சாட்சிதான்; உன் வீட்டிலே
வருகிற மனைவியைக் **கர்த்தர்** இஸ்ரவேல்
வீட்டைக் கட்டுவித்த இரண்டுபேராகிய ராகே
லைப்போலவும் லேயாளைப்போலவும் வாழ்க்
திருக்கச் செய்வாராக; [5]நீ எப்பிராத்தாவிலே
பாக்கியவானுயிருந்து, பெத்லெகேமிலே புகழ்
பெற்றிருக்கக்கடவாய். இந்தப் பெண்ணிடத் 12
திலே [6]**கர்த்தர்** உனக்கு அருளிச்செய்யப்போ
கிற சந்தானத்தினுலே, உன் வீடு தாமார் யூதா
வுக்குப் பெற்ற பேரேசின் வீட்டைப்போல
ஆகக்கடவது என்றுர்கள். போவாஸ் ரூத்தை 13
விவாகம்பண்ணினுன்; அவள் அவனுக்கு மனை
வியானுள்; அவன் அவளிடத்தில் பிரவேசித்
தபோது, அவள் கர்ப்பந்தரித்து, [7]ஒரு ஆண்
பிள்ளையைப் பெறக் **கர்த்தர்** அநுக்கிரகம்
பண்ணினுர். அப்பொழுது ஸ்திரீகள் நகோ 14
மியைப் பார்த்து: சுதந்தரவாளி அற்றுப்போகா
தபடிக்கு இன்று உனக்குத் தயைசெய்த **கர்த்
தருக்கு** ஸ்தோத்திரம்; [8]அவன் பேர் இஸ்ர
வேலிலே பிரபலமாகக்கடவது. அவன் உன் 15
ஆத்துமாவுக்கு ஆறுதல் செய்கிறவனும், உன்
முதிர்வயதிலே உன்னை ஆதரிக்கிறவனுமா
யிருக்கக்கடவன்; [9]உன்னைச் சிநேகித்து, ஏழு
குமாரரைப்பார்க்கிலும் உனக்கு அருமையா
யிருக்கிற உன் மருமகள் அவனைப் பெற்றுளே
என்றுர்கள். நகோமி அந்தப் பிள்ளையை 16
எடுத்து, தன் மடியிலே வைத்து, அதை வளர்க்
கிற தாயானுள். அயல்வீட்டுக்காரிகள் நகோ 17
மிக்கு ஒரு ஆண்பிள்ளை பிறந்தது என்று
வாழ்த்தி, அதற்கு ஓபேத் என்று பேரிட்டார்
கள்; [10]அவன் தாவீதின் தகப்பனுகிய ஈசா
யின் தகப்பன்.

பேரேசுடைய சந்ததியின் வரலாறு: 18
பேரேஸ் எஸ்ரோனைப் [11]பெற்றுன். எஸ் 19
ரோன் ராமைப் பெற்றுன்; ராம் அம்மினதா
பைப் பெற்றுன். அம்மினதாப் நகசோனைப் 20
[12]பெற்றுன். நகசோன் சல்மோனைப் [13]பெற்
றுன். சல்மோன் போவாசைப் பெற்றுன்; 21
போவாஸ் ஓபேதைப் பெற்றுன். ஓபேத் ஈசா 22
யைப் பெற்றுன்; [14]ஈசாய் தாவீதைப் பெற்றுன்.

[1] எரே. 32. 8, 25. ஆதி. 23. 18
[2] ஆதி. 38. 8. உபா. 25. 5, 6. மத். 22. 24
[3] 3. 12, 13
[4] உபா. 25. 7-9
[5] ஆதி. 29. 30. சங். 127. 3; 128. 3
[6] ஆதி. 38. 29. மத். 1. 3
[7] ஆதி. 20. 17, 18; 33. 5
[8] லூக். 1. 58. ரோ. 12. 15
[9] ஆதி. 45. 11. சங். 55. 22. 1 சாமு. 1. 8
[10] லூக். 1. 58, 59
[11] மத். 1. 3. ழ
[12] எண். 1. 7
[13] மத். 1. 4. ழ
[14] 1 நாளா. 2. 15. மத். 1. 6

# I. SAMUEL

# சாமுவேலின்

## முதலாம் புஸ்தகம்

1 எப்பிராயீம் மலைத்தேசத்திலிருக்கிற சோப்
பீம் என்னப்பட்ட ராமதாயீம் ஊரானாகிய
ஒரு மனுஷன் இருந்தான்; அவனுக்கு [1]எல்க்
கானா என்று பேர்; அவன் எப்பிராயீமியனா
கிய சூப்புக்குப் பிறந்த தோகுவின் குமாரனா
கிய எலிகூவின் மகனான எரோகாமின் புத்தி
2 ரன். அவனுக்கு இரண்டு மனைவிகள் இருந்
தார்கள்; ஒருத்தி பேர் அன்னாள், மற்றவள்
பேர் பெனின்னாள்; பெனின்னாளுக்குப் பிள்
ளைகள் இருந்தார்கள்; அன்னாளுக்கோ பிள்ளை
3 இல்லை. அந்த மனுஷன் சீலோவிலே சேனை
களின் கர்த்தரைப் பணிந்துகொள்ளவும் அவ
ருக்குப் பலியிடவும் வருஷந்தோறும் தன்
ஊரிலிருந்து போய்வருவான்; [2]அங்கே கர்த்த
ரின் ஆசாரியரான எலியின் இரண்டு குமார
ராகிய ஒப்னியும் பினெகாசும் இருந்தார்கள்.
4 அங்கே எல்க்கானா பலியிடும் நாளிலே, அவன்
தன் மனைவியாகிய பெனின்னாளுக்கும், அவ
ளுடைய எல்லாக் குமாரருக்கும் குமாரத்திக
5 ளுக்கும், [3]பங்குபோட்டுக் கொடுப்பான். அன்
னாளைச் சிநேகித்தபடியினால், அவளுக்கு இரட்
டிப்பான பங்கு கொடுப்பான்; [4]கர்த்தரோ
6 அவள் கர்ப்பத்தை அடைத்திருந்தார். கர்த்
தர் அவள் கர்ப்பத்தை அடைத்தபடியினால்,
அவளுடைய சக்களத்தி அவள் துக்கப்படும்
படியாக அவளை மிகவும் [5]விசனப்படுத்துவாள்.
7 அவள் கர்த்தருடைய ஆலயத்திற்குப் போகும்
சமயத்தில், அவன் வருஷந்தோறும் அந்தப்
பிரகாரமாய்ச் செய்வான்; இவள் அவளை மன
மடிவாக்குவாள்; அப்பொழுது அவள் சாப்பி
8 டாமல் அழுதுகொண்டிருப்பாள். அவள் புரு
ஷனாகிய எல்க்கானா அவளைப் பார்த்து: அன்
னாளே, என் அழுகிறாய்? என் சாப்பிடாதிருக்
கிறாய்? என் சஞ்சலப்படுகிறாய்? பத்துக் குமா
ரரைப்பார்க்கிலும் [6]நான் உனக்கு அதிகமல்
9 லவா என்றான். சீலோவிலே அவர்கள் புசித்
துக் குடித்தபின்பு, அன்னாள் எழுந்திருந்தாள்;
ஆசாரியனாகிய எலி கர்த்தருடைய ஆலயத்
தின் வாசல் நிலையண்டையிலே ஒரு ஆசனத்
10 தின்மேல் உட்கார்ந்திருந்தான். அவள் போய்,
மனங்கசந்து, [7]மிகவும் அழுது, கர்த்தரை
11 நோக்கி விண்ணப்பம்பண்ணி: சேனைக
ளின் கர்த்தாவே, தேவரீர் உம்முடைய அடி

1 1 நாளா. 6. 27, 34
2 யாத். 23. 14. லூ. 2. 41
3 உபா. 12. 5-7, 17, 18
4 ஆதி. 30. 2.
5 யோபு 24. 21
6 ரூத். 4. 15
7 யோபு 7. 11; 10. 1. 2 சாமு. 17. 8
8 ஆதி. 28. 20; 29. 32; 30. 22. எண். 6. 5; 30. 3. நியா. 11. 30. 2 சாமு. 16. 12
9 சங். 62. 8; 142. 2
10 உபா. 13. 13
11 நியா. 18. 6. மாற். 5. 34. லூ. 7. 50. சங். 20. 4, 5
12 ஆதி. 33. 15. ரூத். 2. 13. பிர. 9. 7
13 ஆதி. 4. 1
14 ஆதி. 30. 22
* தேவனிடத்தில் கேட்டது

யாளின் சிறுமையைக் கண்ணோக்கிப்பார்த்து,
உம்முடைய அடியாளை மறவாமல் நினைந்த
ருளி, உமது அடியாளுக்கு ஒரு ஆண்பிள்ளை
யைக் கொடுத்தால், அவன் உயிரோடிருக்கும்
சகல நாளும் நான் அவனைக் கர்த்தருக்கு ஒப்
புக்கொடுப்பேன்; அவன் தலையின்மேல் சவர
க்கத்தி படுவதில்லை என்று [8]ஒரு பொருத்
தனை பண்ணினாள். அவள் கர்த்தருடைய 12
சந்நிதியில் வெகுநேரம் விண்ணப்பம் பண்ணு
கிறபோது, எலி அவள் வாயைக் கவனித்துக்
கொண்டிருந்தான். அன்னாள் தன் இருதயத் 13
திலே பேசினாள்; அவளுடைய உதடுகள்மாத்
திரம் அசைந்தது, அவள் சத்தமோ கேட்கப்ப
டவில்லை; ஆகையால் அவள் வெறித்திருக்கி
றாள் என்று எலி நினைத்து, அவளை நோக்கி: 14
நீ எதுவரைக்கும் வெறித்திருப்பாய்; உன்
குடியை உன்னை விட்டு விலக்கு என்றான்.
அதற்கு அன்னாள் பிரதியுத்தரமாக: அப்படி 15
யல்ல, என் ஆண்டவனே, நான் மனக்கிலே
சமுள்ள ஸ்திரீ; நான் திராட்சரசமாகிலும் மது
வாகிலும் குடிக்கவில்லை; நான் கர்த்தருடைய
சந்நிதியில் என் இருதயத்தை [9]ஊற்றிவிட்
டேன். உம்முடைய அடியாளைப் பேலியாளின் 16
மகளாக எண்ணாதேயும்; [10]மிகுதியான விசார
த்தினாலும் கிலேசத்தினாலும் இந்நேரமட்டும்
விண்ணப்பம்பண்ணினேன் என்றாள். அத 17
ற்கு எலி: சமாதானத்துடனே போ; [11]நீ இஸ்
ரவேலின் தேவனிடத்தில் கேட்ட உன் விண்
ணப்பத்தின்படி அவர் உனக்குக் கட்டளை
யிடுவாராக என்றான். அப்பொழுது அவள்: 18
உம்முடைய அடியாளுக்கு உம்முடைய கண்
களிலே தயைகிடைக்கக் கடவது என்றாள்;
[12]பின்பு அந்த ஸ்திரீ புறப்பட்டுப் போய்,
போஜனஞ்செய்தாள்; அப்புறம் அவள் துக்க
முகமாயிருக்கவில்லை. அவர்கள் அதிகாலை 19
யில் எழுந்து, கர்த்தரைப் பணிந்துகொண்டு,
ராமாவிலிருக்கிற தங்கள் வீட்டுக்குத் திரும்
பிப்போனார்கள்; எல்க்கானா தன் மனைவியா
கிய அன்னாளை [13]அறிந்தான்; கர்த்தர் அவளை
[14]நினைந்தருளினார். சிலநாள் சென்றபின்பு 20
அன்னாள் கர்ப்பவதியாகி, ஒரு குமாரனைப்
பெற்று, கர்த்தரிடத்தில் அவனைக் கேட்டேன்
என்று சொல்லி, அவனுக்குச் *சாமுவேல்

21 என்று பேரிட்டாள். எல்க்கானா என்பவன்
கர்த்தருக்கு வருஷாந்தரம் செலுத்தும் பலியை
யும் தன் பொருத்தனையையும் செலுத்தும்படி
யாக, தன் வீட்டார் அனைவரோடுங் கூடப்போ
22 னான். அன்னாள் கூடப் போகவில்லை; அவள்:
பிள்ளை பால் மறந்தபின்பு, அவன் கர்த்தரின்
சந்நிதியிலே காணப்படவும், [1]அங்கே எப்பொ
ழுதும் இருக்கவும், நான் அவனைக் கொண்டு
போய்விடுவேன் என்று தன் புருஷனிடத்தில்
23 சொன்னாள். அப்பொழுது அவள் புருஷனா
கிய [2]எல்க்கானா அவளை நோக்கி: நீ உன் இஷ்
டப்படி செய்து, அவனைப் பால்மறக்கப் பண்
ணுமட்டும் இரு; கர்த்தர் தம்முடைய வார்த்
தையைமாத்திரம் நிறைவேற்றுவாராக என்
றான்; அப்படியே அந்த ஸ்திரீ தன் பிள்
ளையைப் பால்மறக்கப் பண்ணுமட்டும் அதற்கு
24 முலைகொடுத்தாள். அவள் அவனைப் பால்
மறக்கப் பண்ணினபின்பு, மூன்று காளைகளை
யும், ஒரு மரக்கால் மாவையும், ஒரு துருத்தி
திராட்சரசத்தையும் எடுத்துக்கொண்டு, [3]அவ
னையும் கூட்டிக்கொண்டு, சீலோவிலிருக்கிற
கர்த்தருடைய ஆலயத்துக்குப் போனாள்;
25 பிள்ளை இன்னும் குழந்தையாயிருந்தது. அவர்
கள் ஒரு காளையைப் பலியிட்டு, [4]பிள்ளையை
ஏலியினிடத்தில் கொண்டுவந்து விட்டார்கள்.
26 அப்பொழுது அவள்: என் ஆண்டவனே, இங்
கே உம்மண்டையிலே நின்று கர்த்தரை நோ
க்கி விண்ணப்பம்பண்ணின ஸ்திரீ நான்தான்
என்று என் ஆண்டவனாகிய உம்முடைய
27 [5]ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேன். இந்தப்
பிள்ளைக்காக [6]விண்ணப்பம்பண்ணினேன்;
நான் கர்த்தரிடத்தில் கேட்ட என் விண்ணப்
பத்தின்படி எனக்குக் கட்டளையிட்டார்.
28 ஆகையால் அவன் கர்த்தருக்கென்று கேட்
கப்பட்டபடியினால், அவன் உயிரோடிருக்கும்
சகல நாளும் அவனைக் கர்த்தருக்கே [7]ஒப்புக்
கொடுக்கிறேன் என்றாள்; அவன் அங்கே கர்
த்தரைப் [8]பணிந்துகொண்டான்.

2 அப்பொழுது அன்னாள் ஜெபம்பண்ணி:
[9]என் இருதயம் கர்த்தருக்குள் களிகூருகிறது;
என் *கொம்பு கர்த்தருக்குள் உயர்ந்திருக்கி
றது; என் பகைஞரின்மேல் என் வாய் திறந்
திருக்கிறது; உம்முடைய இரட்சிப்பினாலே
[10]சந்தோஷப்படுகிறேன்.
2 கர்த்தரைப்போலப் [11]பரிசுத்தமுள்ளவர்
இல்லை; உம்மையல்லாமல் [12]வேறொருவரும்
இல்லை; எங்கள் தேவனைப்போல ஒரு [13]கன்
3 மலையும் இல்லை. இனி மேட்டிமையான
பேச்சைப் பேசாதிருங்கள்; [14]அகந்தையான
பேச்சு உங்கள் வாயிலிருந்து புறப்படவேண்
டாம்; கர்த்தர் ஞானமுள்ள தேவன்; அவர்
4 செய்கைகள் யதார்த்தமல்லவோ? பலவான்
களின் [15]வில் முறிந்தது; தள்ளாடினவர்களோ
5 பலத்தினால் இடைகட்டப்பட்டார்கள். திருப்
தியாயிருந்தவர்கள் [16]அப்பத்துக்காக கூலிவே
லை செய்கிறார்கள்; பசியாயிருந்தவர்களோ
இனிப் பசியாயிரார்கள்; [17]மலடியாயிருந்தவள்
ஏழு பெற்றாள்; அநேகம் பிள்ளைகளைப் பெற்
றவளோ [18]பலட்சயப்பட்டாள். கர்த்தர் கொ 6
ல்லுகிறவரும் [19]உயிர்ப்பிக்கிறவருமாயிருக்கி
றார்; அவரே பாதாளத்தில் இறங்கவும் அதி
லிருந்து ஏறவும்பண்ணுகிறவர். கர்த்தர் [20]தரி 7
த்திரம் அடையச்செய்கிறவரும், ஐசுவரி
யம் [21]அடையப்பண்ணுகிறவருமாயிருக்கிறார்;
அவர் தாழ்த்துகிறவரும், உயர்த்துகிறவருமா
னவர். அவர் சிறியவனைப் [22]புழுதியிலிருந்து 8
எடுத்து, எளியவனைக் குப்பையிலிருந்து உய
ர்த்துகிறார்; அவர்களைப் பிரபுக்களோடே உட்
காரவும், [23]மகிமையுள்ள சிங்காசனத்தைச் சுத
ந்தரிக்கவும் பண்ணுகிறார்; பூமியின் [24]அஸ்தி
பாரங்கள் கர்த்தருடையவைகள்; அவரே
அவைகளின்மேல் பூச்சக்கரத்தை வைத்தார்.
அவர் தமது [25]பரிசுத்தவான்களின் பாதங்களைக் 9
காப்பார்; துன்மார்க்கர் இருளிலே மௌன
மாவார்கள்: பெலத்தினால் [26]ஒருவனும் மேற்
கொள்வதில்லை. கர்த்தரோடே வழக்காடுகிற 10
வர்கள் [27]நொறுக்கப்படுவார்கள்; வானத்திலிரு
ந்து அவர்கள்மேல் முழங்குவார்; கர்த்தர் பூமி
யின் கடையாந்தரங்களை நியாயந்தீர்த்து, தாம்
ஏற்படுத்தின ராஜாவுக்குப் பெலன் அளித்து,
தாம் அபிஷேகம்பண்ணினவரின் [28]கொம்பை
உயரப்பண்ணுவார் என்று துதித்தாள்.
பின்பு எல்க்கானா ராமாவிலிருக்கிற தன் 11
வீட்டுக்குப் போனான்; அந்தப் பிள்ளையோ,
ஆசாரியனாகிய ஏலிக்கு முன்பாகக் கர்த்தருக்
குப் பணிவிடை செய்துகொண்டிருந்தான்.
ஏலியின் குமாரர் [29]பேலியாளின் மக்களா 12
யிருந்தார்கள்; அவர்கள் கர்த்தரை அறிய
வில்லை. அந்த ஆசாரியர்கள் ஜனங்களை நடப் 13
பித்த விதம் என்னவென்றால், எவனாகிலும்
ஒரு பலியைச் செலுத்துங்காலத்தில் இறைச்சி
வேகும்போது, ஆசாரியனுடைய வேலைக்கா
ரன் மூன்று கூறுள்ள ஒரு ஆயுதத்தைத் தன்
கையிலே பிடித்துவந்து, அதினாலே, கொப் 14
பரையிலாவது பானையிலாவது சருவத்திலா
வது சட்டியிலாவது குத்துவான்; அந்த ஆயு
தத்தில் வருகிறதையெல்லாம் ஆசாரியன் எடு
த்துக்கொள்ளுவான்; அப்படி அங்கே சீலோ
விலே வருகிற இஸ்ரவேலருக்கெல்லாம் செய்
தார்கள். கொழுப்பைத் [30]தகனிக்கிறதற்கு 15
முன்னும், ஆசாரியனுடைய வேலைக்காரன்
வந்து பலியிடுகிற மனுஷனை நோக்கி: ஆசாரி
யனுக்குப் பொரிக்கும்படி இறைச்சி கொடு;
பச்சை இறைச்சியே அல்லாமல், அவித்ததை
உன் கையிலே வாங்குகிறதில்லை என்பான்.
அதற்கு அந்த மனுஷன்: இன்று செய்ய 16
வேண்டியபடி முதலாவது கொழுப்பைத் தக
னித்துவிடட்டும்; பிற்பாடு உன் மனவிருப்
பத்தின்படி எடுத்துக்கொள் என்று சொன்
னாலும்; அவன்: அப்படியல்ல இப்பொழுதே
கொடு, இல்லாவிட்டால் பலவந்தமாய் எடுத்
துக்கொள்ளுவேன் என்பான். ஆதலால் அந்த 17
வாலிபரின் பாவம் கர்த்தருடைய சந்நிதியில்
[31]மிகவும் பெரிதாயிருந்தது; மனுஷர் கர்த்த

1 2, 28. வச. 11. 18
2 எண். 30. 7. 2 சாமு. 7. 25
3 உபா. 12. 5, 6, 11. யோசு. 18. 1
4 லூக். 2. 22
5 ஆதி. 42. 15
6 மத். 7. 7. பிலி. 4. 6. சங். 145. 18, 19
7 11, 22. வசனம்
8 ஆதி. 24. 26, 52
9 லூக். 1. 46. மு
* தலையில் சூடப்பட்ட கனக் குறிப்பின் ஓர் ஆபரணம். சங். 92. 10; 112. 9
10 சங். 13. 5
11 யாத். 15. 11
12 உபா. 4. 35
13 உபா. 32. 31. 2 சாமு. 22. 32
14 சங். 94. 4. மல். 3. 13. யூதா 15
15 சங். 37. 15, 17
16 சங். 34. 10. லூக். 1. 53
17 சங். 113. 9
18 ஏசா. 54. 1. எரே. 15. 9
19 உபா. 32. 39. யோபு 5. 18. ஓசி. 6. 1
20 யோபு 1. 21
21 சங். 75. 7
22 சங். 113. 7, 8. தானி. 4. 17
23 யோபு 36. 7
24 யோபு 38. 4–6. சங். 102. 25
25 சங். 121. 3
26 பிர. 9. 11
27 யாத். 15. 6. சங். 2. 9
28 சங். 89. 24
29 உபா. 13. 13. எரே. 22. 16. ரோ. 1. 28
30 லேவி. 3. 3–5, 16
31 ஆதி. 6. 11

ரின் காணிக்கையை [1]வெறுப்பாய் எண்ணி
னார்கள்.
18 சாமுவேல் என்னும் பிள்ளையாண்டான்
சணல்நூல் [2]ஏபோத்தைத் தரித்தவனாய்க் கர்த்
தருக்கு முன்பாகப் பணிவிடை செய்தான்.
19 அவனுடைய தாய் வருஷந்தோறும் செலுத்
தும் பலியைச் செலுத்துகிறதற்காக, தன் புரு
ஷனோடேகூட வருகிறபோதெல்லாம், அவ
னுக்கு ஒரு சின்னச் சட்டையைத் தைத்துக்
20 கொண்டு வருவாள். ஏலி எல்க்கானாவையும்
அவன் மனைவியையும் [3]ஆசீர்வதித்து: இந்த
ஸ்திரீ கர்த்தருக்கென்று ஒப்புக்கொடுத்ததற்
குப் பதிலாக கர்த்தர் உனக்கு அவளாலே சந்
தானம் கட்டளையிடுவாராக என்றான்; அவர்
கள் தங்கள் ஸ்தானத்திற்குத் திரும்பப் போய்
21 விட்டார்கள். அப்படியே கர்த்தர் அன்னா
ளைக் [4]கடாட்சித்தார்; அவள் கர்ப்பந்தரித்து
மூன்று குமாரரையும் இரண்டு குமாரத்திகளை
யும் பெற்றாள்; சாமுவேல் என்னும் பிள்ளை
யாண்டான் கர்த்தருடைய சந்நிதியில் [5]வளர்ந்
தான்.
22 ஏலி மிகுந்த கிழவனாயிருந்தான்; அவன்
தன் குமாரர் இஸ்ரவேலுக்கெல்லாம் செய்கிற
எல்லாவற்றையும், அவர்கள் ஆசரிப்புக் கூடா
ரத்தின் வாசலில் கூட்டங்கூடுகிற [6]ஸ்திரீக
ளோடே சயனிக்கிறதையும் கேள்விப்பட்டு,
23 அவர்களை நோக்கி: நீங்கள் இப்படிப்பட்ட
காரியங்களைச் செய்கிறது என்ன? இந்த ஜன
ங்கள் எல்லாரும் உங்கள் பொல்லாத நடக்கை
24 களைச் சொல்லக் கேட்கிறேன். என் குமார
ரே, வேண்டாம்; நான் கேள்விப்படுகிற இந்
தச் செய்தி நல்லதல்ல; கர்த்தருடைய ஜனங்
கள் மீறி நடக்கிறதற்குக் காரணமாயிருக்கிறீர்
25 களே. மனுஷனுக்கு விரோதமாக மனுஷன்
பாவஞ்செய்தால், நியாயாதிபதிகள் அதைத்
தீர்ப்பார்கள்; ஒருவன் கர்த்தருக்கு விரோத
மாகப் [7]பாவஞ்செய்வானேயாகில், அவனுக்
காக விண்ணப்பஞ் செய்யத்தக்கவன் யார்
என்றான்; அவர்களோ தங்கள் தகப்பன் சொ
ல்லைக் கேளாமற்போனார்கள்; அவர்களைச் சங்
26 கரிக்கக் கர்த்தர் [8]சித்தமாயிருந்தார். சாமு
வேல் என்னும் பிள்ளையாண்டானோ, பெரிய
வனாக வளர்ந்து, கர்த்தருக்கும் மனுஷருக்கும்
[9]பிரியமாக நடந்துகொண்டான்.
27 தேவனுடைய மனுஷன் [10]ஒருவன் ஏலியி
னிடத்தில் வந்து: கர்த்தர் உரைக்கிறது என்ன
வென்றால், உன் பிதாவின் வீட்டார் [11]எகிப்
திலே பார்வோனின் வீட்டில் இருக்கையில்,
நான் என்னை அவர்களுக்கு வெளிப்படுத்தி,
28 என் பலிபீடத்தின்மேல் பலியிடவும், தூபங்
காட்டவும், என் சமுகத்தில் ஏபோத்தைத்
தரிக்கவும், இஸ்ரவேல் கோத்திரங்களிலெல்
லாம் அவனை எனக்கு ஆசாரியனாகத் [12]தெரிந்து
கொண்டு, உன் பிதாவின் வீட்டாருக்கு இஸ்
ரவேல் புத்திரருடைய தகனபலிகளையெல்
29 லாம் [13]கொடுக்கவில்லையா? என் வாசஸ்தலத்
திலே செலுத்தும்படி நான் கட்டளையிட்ட
என் பலியையும், என் காணிக்கையையும்,
நீங்கள் [14]உதைப்பானேன்? என் ஜனமாகிய
இஸ்ரவேலின் காணிக்கைகளிலெல்லாம் பிர
தானமானவைகளைக்கொண்டு உங்களைக் கொ
ழுக்கப்பண்ணும்படிக்கு, நீ என்னைப்பார்க்கி
லும் உன் குமாரரை மதிப்பானேன் என்கி
றார். ஆகையால் இஸ்ரவேலின் தேவனாகிய 30
கர்த்தர் சொல்லுகிறதாவது: உன் வீட்டாரும்
[15]உன் பிதாவின் வீட்டாரும் என்றைக்கும்
என் சந்நிதியில் நடந்துகொள்வார்கள் என்று
நான் நிச்சயமாய்ச் சொல்லியிருந்தும், இனி
அது எனக்குத் [16]தூரமாயிருப்பதாக; என்னைக்
கனம்பண்ணுகிறவர்களை [17]நான் கனம்பண்ணு
வேன், என்னை அசட்டைபண்ணுகிறவர்கள்
[18]கனஈனப்படுவார்கள் என்று கர்த்தர் சொல்
லுகிறார். உன் வீட்டில் ஒரு கிழவனும் இரா 31
தபடிக்கு உன் புயத்தையும் உன் பிதாவின்
வீட்டாருடைய புயத்தையும் நான் தறித்துப்
போடும் [19]நாட்கள் வரும். இஸ்ரவேலுக்குச் 32
செய்யப்படும் சகல நன்மைக்கும் மாறாக என்
வாசஸ்தலத்திலே உபத்திரவத்தைக் காண்
பாய்; ஒருபோதும் உன் வீட்டில் ஒரு [20]கிழ
வனும் இருப்பதில்லை. என் பலிபீடத்தில் 33
சேவிக்க, நான் உன் சந்ததியில் நிர்மூலமாக்
காதவர்களோ, உன் கண்களைப் பூத்துப்போ
கப்பண்ணவும், உன் ஆத்துமாவை வேதனைப்
படுத்தவும் வைக்கப்படுவார்கள்; உன் வம்சத்தி
லுள்ள யாவரும் வாலவயதிலே சாவார்கள்.
ஓப்னி பினெகாஸ் என்னும் உன் இரண்டு 34
குமாரரின்மேல் வருவதே உனக்கு அடையா
ளமாயிருக்கும்; [21]அவர்கள் இருவரும் ஒரே
நாளில் சாவார்கள். நான் என் உள்ளத்துக் 35
கும் என் சித்தத்துக்கும் ஏற்றபடி செய்யத்
தக்க உண்மையான [22]ஒரு ஆசாரியனை எழும்
பப்பண்ணி, அவனுக்கு நிலையான வீட்டைக்
கட்டுவேன்; அவன் என்னால் •அபிஷேகம்
பண்ணப்பட்டவனுக்கு முன்பாகச் சகல
நாளும் நடந்துகொள்ளுவான். அப்பொழுது 36
உன் வீட்டாரில் மீதியாயிருப்பவன் எவனும்
ஒரு வெள்ளிப்பணத்துக்காகவும் ஒரு அப்பத்
துணிக்கைக்காகவும் அவனிடத்தில் வந்து
பணிந்து: நான் கொஞ்சம் அப்பம் சாப்பிட
யாதொரு ஆசாரிய ஊழியத்தில் என்னைச்
சேர்த்துக்கொள்ளும் என்று கெஞ்சுவான்
[23]என்று சொல்லுகிறார் என்றான்.

சாமுவேல் என்னும் பிள்ளையாண்டான் 3
ஏலிக்கு முன்பாகக் கர்த்தருக்குப் பணிவிடை
செய்துகொண்டிருந்தான்; அந்நாட்களிலே
கர்த்தருடைய வசனம் [*]அபூர்வமாயிருந்தது;
பிரத்தியட்சமான தரிசனம் இருந்ததில்லை.
ஒருநாள் ஏலி தன்னுடைய ஸ்தானத்திலே 2
படுத்துக்கொண்டிருந்தான்; அவன் பார்க்கக்
கூடாதபடிக்கு அவனுடைய கண்கள் [24]இரு
ளடைந்திருந்தது. தேவனுடைய பெட்டி 3
இருக்கிற கர்த்தருடைய ஆலயத்தில் தேவனு
டைய [25]விளக்கு அணைந்துபோகுமுன்னே
சாமுவேலும் படுத்துக்கொண்டிருந்தான். அப் 4

1 மல். 2. 8
2 யாத். 28. 4
3 ஆதி. 14. 19
4 ஆதி. 21. 1
5 லூ. 1 80; 2. 40
6 யாத். 38. 8
7 எண். 15. 30. சங். 51. 4, 16
8 யோசு. 11. 20. நீதி. 15. 10
9 நீதி. 3. 4. லூ. 2. 52. ரோ. 14. 18
10 1 இரா. 13. 1
11 யாத். 4. 14, 27
12 யாத். 28. 1, 4
13 லேவி. 7. 7; 8. 34. எண். 5. 9, 10
14 உபா. 32. 15
15 யாத். 29. 9
16 எரே. 18. 9, 10
17 சங். 91. 14. நீதி. 3. 9, 10
18 மல். 2. 8, 9
19 1 இரா. 2. 27, 35
20 சகரி. 8. 4
21 4. 11. 1 இரா. 13. 3
22 எசே. 44. 15, 16
23 1 இரா. 2. 27
* அருமை. சங். 74. 9. ஆமோஸ் 8. 11
24 ஆதி. 27. 1
25 யாத். 27. 20, 21

பொழுது **கர்த்தர்**, சாமுவேலைக் கூப்பிட்டார்.
அதற்கு அவன்: இதோ, இருக்கிறேன் என்று
5 சொல்லி, ஏலியினிடத்தில் ஓடி, இதோ,
இருக்கிறேன்; என்னைக் கூப்பிட்டீரே என்
றான். அதற்கு அவன்: நான் கூப்பிடவில்லை,
திரும்பிப்போய்ப் படுத்துக்கொள் என்றான்;
6 அவன் போய்ப் படுத்துக்கொண்டான். மறு
படியும் **கர்த்தர்**: சாமுவேலே என்று கூப்
பிட்டார்; அப்பொழுது சாமுவேல் எழுந்தி
ருந்து ஏலியினிடத்தில் போய்: இதோ, இருக்
கிறேன்; என்னைக் கூப்பிட்டீரே என்றான்.
அதற்கு அவன்: என் மகனே, நான் உன்னைக்
கூப்பிடவில்லை, திரும்பிப்போய்ப் படுத்துக்
7 கொள் என்றான். சாமுவேல் **கர்த்தரை**
இன்னும் [1]அறியாதிருந்தான்; **கர்த்தருடைய**
வார்த்தை அவனுக்கு இன்னும் வெளிப்பட
8 வில்லை. **கர்த்தர்** மறுபடியும் மூன்றாம்விசை:
சாமுவேலே என்று கூப்பிட்டார். அவன்
எழுந்திருந்து ஏலியினிடத்தில்போய், இதோ,
இருக்கிறேன்; என்னைக் கூப்பிட்டீரே என்
றான். அப்பொழுது **கர்த்தர்** பிள்ளையாண்டா
னைக் கூப்பிடுகிறார் என்று ஏலி அறிந்து,
9 சாமுவேலை நோக்கி: நீ போய்ப் படுத்துக்
கொள்; உன்னைக் கூப்பிட்டால், அப்பொ
ழுது நீ: **கர்த்தாவே** சொல்லும்; அடியேன்
கேட்கிறேன் என்று சொல் என்றான்; சாமு
வேல் போய், தன்னுடைய ஸ்தானத்திலே
10 படுத்துக்கொண்டான். அப்பொழுது **கர்த்தர்**
வந்து நின்று, முன்போல: சாமுவேலே சாமு
வேலே என்று கூப்பிட்டார்; அதற்குச் சாமு
வேல்: சொல்லும்; அடியேன் கேட்கிறேன்
11 என்றான். **கர்த்தர்** சாமுவேலை நோக்கி:
இதோ, நான் இஸ்ரவேலில் ஒரு காரியத்
தைச் செய்வேன்; அதைக் கேட்கிற ஒவ்வொ
ருவனுடைய இரண்டு காதுகளிலும் அது
12 [2]தொனித்துக்கொண்டிருக்கும். நான் ஏலி
யின் குடும்பத்திற்கு விரோதமாகச் சொன்ன
யாவையும், அவன்மேல் அந்நாளிலே வரப்
பண்ணுவேன்; அதைத் தொடங்கவும் அதை
13 முடிக்கவும் போகிறேன். அவன் குமாரர்
தங்கள்மேல் சாபத்தை வரப்பண்ணுகிறதை
அவன் அறிந்திருந்தும், அவர்களை அடக்கா
மல்போன பாவத்தினிமித்தம், நான் அவன்
குடும்பத்துக்கு என்றும் [3]நீங்காத நியாயத்தீர்ப்
புச் செய்வேன் என்று அவனுக்கு அறிவித்
14 தேன். அதினிமித்தம் ஏலியின் குடும்பத்தார்
செய்த அக்கிரமம் ஒருபோதும் பலியினாலா
வது [4]காணிக்கையினாலாவது நிவிர்த்தியாவ
தில்லை என்று ஏலியின் குடும்பத்தைக்குறித்து
15 ஆணையிட்டிருக்கிறேன் என்றார். சாமுவேல்
விடியற்காலமட்டும் படுத்திருந்து, **கர்த்தரு
டைய** ஆலயத்தின் கதவுகளைத் திறந்தான்;
சாமுவேல் ஏலிக்கு அந்தத் தரிசனத்தை அறி
16 விக்கப் பயந்தான். ஏலியோ: சாமுவேலே,
என் மகனே என்று சாமுவேலைக் கூப்பிட்
டான். அவன்: இதோ, இருக்கிறேன் என்
17 றான். அப்பொழுது அவன்: **கர்த்தர்** உன்
னிடத்தில் சொன்ன காரியம் என்ன? எனக்கு
அதை மறைக்கவேண்டாம்; அவர் உன்னி
டத்தில் சொன்ன சகல காரியத்திலும் ஒன்
றையாகிலும் எனக்கு மறைத்தாயானால்,
தேவன் உனக்கு [5]அதற்குச் சரியாகவும் அதற்கு
அதிகமாகவும் செய்வாராக என்றான். அப் 18
பொழுது சாமுவேல் ஒன்றையும் அவனுக்கு
மறைக்காமல், அந்தக் காரியங்களையெல்லாம்
அவனுக்கு அறிவித்தான். அதற்கு அவன்:
அவர் **கர்த்தர்**; [6]அவர் தமது பார்வைக்கு நல
மானதைச் செய்வாராக என்றான். சாமு 19
வேல் வளர்ந்தான்; **கர்த்தர்** அவனுடனேகூட
இருந்தார்; அவர் தம்முடைய எல்லா வார்த்
தைகளிலும் ஒன்றையாகிலும் [7]தரையிலே
விழுந்துபோகவிடவில்லை. சாமுவேல் **கர்த்த** 20
**ருடைய** தீர்க்கதரிசிதான் என்று தாண்முதல்
பெயெர்செபாமட்டுமுள்ள [8]சகல இஸ்ரவேல
ருக்கும் விளங்கினது. **கர்த்தர்** பின்னும் 21
சீலோவிலே தரிசனம் தந்தருளினார்; **கர்த்தர்**
சீலோவிலே தம்முடைய வார்த்தையினாலே
சாமுவேலுக்குத் தம்மை வெளிப்படுத்தினார்.

சாமுவேலின் வார்த்தை இஸ்ரவேலுக் **4**
கெல்லாம் *வந்தது. இஸ்ரவேலர் பெலிஸ்த
ருக்கு விரோதமாய் யுத்தஞ்செய்யப் புறப்
பட்டு, எபெனேசருக்குச் சமீபத்தில் பாளய
மிறங்கினார்கள்; பெலிஸ்தரோ ஆப்பெக்கிலே
பாளயமிறங்கியிருந்தார்கள். பெலிஸ்தர் இஸ்ர 2
வேலருக்கு விரோதமாய் அணிவகுத்து நின்
றார்கள்; யுத்தம் அதிகரித்து, இஸ்ரவேலர்
பெலிஸ்தருக்கு முன்பாக முறிய அடிக்கப்
பட்டார்கள்; அவர்கள் சேனையில் போர்க்க
ளத்திலே ஏறக்குறைய நாலாயிரம்பேர் வெட்
டுண்டுபோனார்கள். ஜனங்கள் திரும்பப் பாள 3
யத்துக்கு வந்தபோது, இஸ்ரவேலின் மூப்பரா
னவர்கள், இன்று **கர்த்தர்** பெலிஸ்தருக்குமுன்
பாக நம்மை முறிய அடித்ததென்ன? சீலோவி
லிருக்கிற **கர்த்தருடைய** உடன்படிக்கைப்பெ
ட்டியைக் கொண்டுவருவோம்; அது நம்மை
நம்முடைய பகைஞரின் கைக்கு விலக்கி
இரட்சிக்கும்படி, நம்முடைய நடுவிலே வர
வேண்டியது என்றார்கள். அப்படியே [9]கேரு 4
பீன்களின் மத்தியிலே வாசமாயிருக்கிற சே
னைகளின் **கர்த்தருடைய** உடன்படிக்கைப்
பெட்டியை எடுத்துவர, ஜனங்கள் சீலோவுக்
குச் சொல்லியனுப்பினார்கள்; அங்கே ஏலி
யின் இரண்டு குமாரராகிய ஓப்னியும்
பினெகாசும் தேவனுடைய உடன்படிக்கைப்
பெட்டியண்டையில் இருந்தார்கள். **கர்த்தரு** 5
**டைய** உடன்படிக்கைப்பெட்டி பாளயத்தி
லே வருகிறபோது, இஸ்ரவேலரெல்லாரும்
பூமி அதிரத்தக்கதாக மகா ஆர்ப்பரிப்பாய்ச்
சத்தமிட்டார்கள். அவர்கள் ஆர்ப்பரிக்கிற சத்
தத்தைப் பெலிஸ்தர் கேட்டபோது: எபிரெய
ருடைய பாளயத்தில் இந்த மகா ஆர்ப்பரிப்
பின் சத்தம் என்ன என்றார்கள்; பின்பு **கர்த்**
**தரின்** பெட்டி பாளயத்தில் வந்தது என்று
அறிந்துகொண்டார்கள். தேவன் பாளயத்தில் 7

[1] அப். 19. 2
[2] 2 இரா. 21. 12. எரே. 19. 3
[3] எசே. 7. 3
[4] எண். 15. 30, 31. சங். 51. 16. ஏசா. 22. 14. எபி. 10. 4-10
[5] ரூத் 1. 17
[6] யோபு 1. 21; 2. 10. சங். 39. 9. ஏசா. 39. 8
[7] 9. 6
[8] நியா. 20. 1
* வந்துசம்பவித்தது
[9] யாத். 25. 18, 22. 2 சாமு. 6. 2. சங். 80. 1

வந்தார் என்று சொல்லப்பட்டபடியினால்,
பெலிஸ்தர் பயந்து, ஐயோ, நமக்கு மோசம்
வந்தது; இதற்கு முன் ஒருபோதும் இப்படி
8 நடக்கவில்லையே, ஐயோ, அந்த மகத்துவ
மான தேவர்களின் கைக்கு நம்மைத் தப்பு
விப்பவர் யார்? எகிப்தியரைச் சகலவித வா
தைகளினாலும் வனாந்தரத்திலே அடித்த தே
9 வர்கள் இவர்கள்தானே. பெலிஸ்தரே,
[1]திடங்கொண்டு புருஷரைப்போல நடந்து
கொள்ளுங்கள்; எபிரெயர் உங்களுக்கு அடி
மைகளாயிருந்ததுபோல, [2]நீங்களும் அவர்க
ளுக்கு அடிமைகளாகாதபடிக்கு, புருஷரா
யிருந்து, யுத்தம்பண்ணுங்கள் என்று சொல்
10 லிக்கொண்டார்கள். அப்பொழுது பெலிஸ்
தர் யுத்தம்பண்ணினார்கள்; [3]இஸ்ரவேலர் முறி
ந்து, அவரவர் தங்கள் கூடாரங்களுக்கு ஓடிப்
போனார்கள்; மகா பெரிய சங்காரம் உண்டா
யிற்று; இஸ்ரவேலிலே முப்பதினாயிரம் கா
11 லாட்கள் விழுந்தார்கள். தேவனுடைய பெ
ட்டி பிடிக்கப்பட்டது; ஏலியின் இரண்டு குமா
ராகிய ஓப்னியும் பினெகாசும் மாண்டார்கள்.
12 பென்யமீன் கோத்திரத்தானாகிய ஒருவன்
படையிலிருந்து ஓடி, தன் வஸ்திரங்களைக்
கிழித்து, [4]தன் தலையின்மேல் புழுதியை வா
ரிப் போட்டுக்கொண்டு, அன்றையதினமே
13 சீலோவுக்கு வந்தான். அவன் வந்தபோது:
ஏலி ஒரு ஆசனத்தின்மேல் உட்கார்ந்து வழி
யைப் பார்த்துக்கொண்டிருந்தான்; தேவனு
டைய பெட்டிக்காக அவன் இருதயம் [5]தத்த
ளித்துக்கொண்டிருந்தது; ஊரிலே செய்தியை
அறிவிக்க அந்த மனுஷன் வந்தபோது, ஊரெ
14 ங்கும் புலம்பல் உண்டாயிற்று. புலம்புகிற
அந்தச் சத்தத்தை ஏலி கேட்டபோது: இந்த
அமளியின் இரைச்சல் என்ன என்று கேட்
டான்; அப்பொழுது அந்த மனுஷன் தீவி
15 ரித்து வந்து, ஏலிக்கு அறிவித்தான். ஏலி
தொண்ணூற்றெட்டு வயதுள்ளவனாயிருந்
தான்; அவன் பார்க்கக்கூடாதபடிக்கு, அவன்
16 கண்கள் மங்கலாயிருந்தது. அந்த மனுஷன்
ஏலியைப் பார்த்து: படையிலிருந்து வந்தவன்
நான்தான்; இன்றுதான் படையிலிருந்து ஓடி
வந்தேன் என்றான். அப்பொழுது அவன்:
என் மகனே, நடந்த காரியம் என்ன என்று
17 கேட்டான். செய்தி கொண்டுவந்தவன் பிர
தியுத்தரமாக: இஸ்ரவேலர் பெலிஸ்தருக்கு
முன்பாக முறிந்தோடிப்போனார்கள்; ஜனங்
களுக்குள்ளே பெரிய சங்காரம் உண்டாயிற்று;
உம்முடைய குமாரராகிய ஓப்னி, பினெகாஸ்
என்னும் இருவரும் இறந்துபோனார்கள்; தே
வனுடைய பெட்டியும் பிடிபட்டுப்போயிற்று
18 என்றான். அவன் தேவனுடைய பெட்டி
யைக்குறித்துச் சொன்னவுடனே, ஏலி ஆச
னத்திலிருந்து வாசலின் பக்கமாய் மல்லாக்க
விழுந்தான்; அவன் கிழவனும் ஸ்தூலித்தவனு
மாயிருந்தபடியால், அவன் பிடரி முறிந்து செத்
துப்போனான். அவன் இஸ்ரவேலை நாற்பது
19 வருஷம் நியாயம் விசாரித்தான். பினெகா

[1] 1 கொ. 16. 13
[2] நியா. 13. 1
[3] சங். 78. 9, 60-64
[4] யோசு. 7. 6. 2 சாமு. 15. 32. நெகே 2. 12
[5] சங். 26. 8
[6] ஆதி. 35. 17
* மகிமை எங்கே, அல்லது மகிமை இல்லை. 14. 3. சங். 78. 61
† கைப்பற்றி
[7] 7. 12
[8] நியா. 16. 23
[9] ஏசா. 19. 1; 46. 1, 2, 7
[10] எரே. 50. 2. எசே. 6. 4, 6. மீகா. 1. 7
[11] செப். 1. 9
[12] சங். 32. 4
[13] உபா. 28. 27. சங். 78. 66

சின் மனைவியாகிய அவன் மருமகள் நிறை
கர்ப்பிணியாயிருந்தாள்; அவள் தேவனுடைய
பெட்டி பிடிபட்ட செய்தியையும், தன் மாம
னும் தன் புருஷனும் இறந்துபோனதையும்
கேள்விப்பட்டபோது, அவள் கர்ப்பவேதனைப்
பட்டு குனிந்து பிரசவித்தாள். அவள் சா 20
கப்போகிற நேரத்தில் அவளண்டையிலே
நின்ற ஸ்திரீகள்: [6]நீ பயப்படாதே; ஆண்பிள்
ளையைப் பெற்றாய் என்றார்கள்; அவளோ
அதற்கு ஒன்றும் சொல்லவுமில்லை, அதின்
மேல் சிந்தைவைக்கவுமில்லை. தேவனுடைய 21
பெட்டி பிடிபட்டு, அவளுடைய மாமனும்
அவளுடைய புருஷனும் இறந்துபோனபடி
யினால், அவள்: மகிமை இஸ்ரவேலைவிட்டுப்
போயிற்று என்று சொல்லி, அந்தப் பிள்ளைக்கு
*இக்கபோத் என்று பேரிட்டாள். தேவனு 22
டைய பெட்டி பிடிபட்டுப்போனபடியினால்,
மகிமை இஸ்ரவேலைவிட்டு விலகிப்போயிற்று
என்றாள்.

பெலிஸ்தர் தேவனுடைய பெட்டியைப் **5**
†பிடித்து, [7]அதை எபெனேசரிலிருந்து அஸ்
தோத்திற்குக் கொண்டுபோனார்கள். பெலிஸ் 2
தர் தேவனுடைய பெட்டியைப் பிடித்து, [8]தா
கோனின் கோவிலிலே கொண்டுவந்து, தா
கோனண்டையிலே வைத்தார்கள்.

அஸ்தோத் ஊரார் மறுநாள் காலமே எழுந் 3
திருந்து வந்தபோது, இதோ, தாகோன் **கர்த்த
ருடைய** பெட்டிக்கு முன்பாகத் தரையிலே முக
ங்குப்புற விழுந்துகிடந்தது; [9]அப்பொழுது அவ
ர்கள் தாகோனை எடுத்து, அதை அதின் ஸ்தா
னத்திலே திரும்பவும் நிறுத்தினார்கள். அவர் 4
கள் மறுநாள் காலமே எழுந்திருந்து வந்த
போது, இதோ, தாகோன் **கர்த்தருடைய**
பெட்டிக்கு முன்பாகத் தரையிலே முகங்குப்
புற விழுந்து கிடந்ததுமல்லாமல், [10]தாகோ
னின் தலையும் அதின் இரண்டு கைகளும் வா
சற்படியின்மேல் உடைபட்டுக் கிடந்தது; தா
கோனுக்கு உடல்மாத்திரம் மீதியாயிருந்தது.
ஆதலால் இந்நாள்வரைக்கும் தாகோனின் 5
பூஜாசாரிகளும் தாகோனின் கோவிலுக்குள்
பிரவேசிக்கிற யாவரும் அஸ்தோத்திலிருக்கிற
தாகோனுடைய வாசற்படியை [11]மிதிக்கிற
தில்லை.

அஸ்தோத் ஊராரைப் பாழாக்கும்படிக்கு 6
**கர்த்தருடைய** கை அவர்கள்மேல் [12]பாரமாயி
ருந்தது; அவர் அஸ்தோத்தின் ஜனங்களையும்,
அதின் எல்லைகளுக்குள் இருக்கிறவர்களையும்
[13]மூலவியாதியினால் வாதித்தார். இப்படி நடந் 7
ததை அஸ்தோத்தின் ஜனங்கள் கண்டபோது:
இஸ்ரவேலின் தேவனுடைய கை நம்முடைய
மேலும், நம்முடைய தேவனாகிய தாகோனின்
மேலும் கடினமாயிருக்கிறபடியால், அவரு
டைய பெட்டி நம்மிடத்தில் இருக்கலாகாது
என்று சொல்லி; பெலிஸ்தரின் அதிபதி 8
களையெல்லாம் அழைப்பித்து, தங்களண்டை
யிலே கூடிவரச்செய்து: இஸ்ரவேலின் தேவ
னுடைய பெட்டியை நாம் என்ன செய்ய

வேண்டும் என்று கேட்டார்கள். அவர்கள்:
இஸ்ரவேலின் தேவனுடைய பெட்டியை
காத்பட்டணமட்டும் எடுத்துச் சுற்றிக்கொண்டு
போகவேண்டும் என்றார்கள்; அப்படியே இஸ்
ரவேலின் தேவனுடைய பெட்டியை எடுத்
9 துச் சுற்றிக்கொண்டுபோனார்கள். அதை எடு
த்துச் சுற்றிக்கொண்டுபோனபின்பு, **கர்த்தரு
டைய** கை [1]அந்தப் பட்டணத்தின்மேல் மகா
உக்கிரமாக இறங்கிற்று; அந்தப் பட்டணத்
தின் மனுஷருக்குள், சிறியவர் துவக்கிப் பெ
ரியவர்மட்டும், மூலவியாதியை உண்டாக்கி:
10 அவர்களை வாதித்தார். அதினால் அவர்கள்
தேவனுடைய பெட்டியை எக்ரோனுக்கு
அனுப்பினார்கள்; தேவனுடைய பெட்டி எக்
ரோனுக்கு வருகிறபோது, எக்ரோன் ஊரார்:
எங்களையும் எங்கள் ஜனங்களையும் கொன்று
போட, இஸ்ரவேலின் தேவனுடைய பெட்
டியை எடுத்து, எங்களண்டைக்குச் சுற்றிக்
கொண்டு வந்தார்கள் என்று கூக்குரலிட்டார்
11 கள். அவர்கள் பெலிஸ்தரின் அதிபதிகளை
யெல்லாம் கூடிவரும்படி அழைத்து: இஸ்ர
வேலின் தேவன் எங்களையும் எங்கள் ஜனங்க
ளையும் கொன்றுபோடாதபடிக்கு, அவரு
டைய பெட்டியை அதின் ஸ்தானத்திற்குத்
திரும்ப அனுப்பிவிடுங்கள் என்றார்கள்; அந்
தப் பட்டணமெங்கும் சாவு மும்முரமாயிருந்
தது; தேவனுடைய கை அங்கே மகா பாரமா
12 யிருந்தது. செத்துப்போகாதிருந்தவர்கள் மூல
வியாதியினால் வாதிக்கப்பட்டதினால், அந்தப்
பட்டணத்தின் கூக்குரல் [2]வானபரியந்தம்
எழும்பிற்று.

6 **கர்த்தருடைய** பெட்டி பெலிஸ்தரின் தே
2 சத்தில் ஏழுமாதம் இருந்தது. பின்பு பெலிஸ்
தர் [3]பூஜாசாரிகளையும் குறிசொல்லுகிறவர்க
ளையும் அழைப்பித்து: **கர்த்தருடைய** பெட்டி
யைப்பற்றி நாங்கள் என்ன செய்யவேண்டும்?
அதை நாங்கள் எவ்விதமாய் அதின் ஸ்தானத்
திற்கு அனுப்பிவிடலாம் என்று எங்களுக்குச்
3 சொல்லுங்கள் என்றார்கள். அதற்கு அவர்
கள்: இஸ்ரவேலின் தேவனுடைய பெட்டி
யை நீங்கள் அனுப்பினால், அதை [4]வெறுமை
யாய் அனுப்பாமல், குற்றநிவாரண [5]காணிக்
கையை எவ்விதத்திலும் அவருக்குச் செலுத்த
வேண்டும்; அப்பொழுது நீங்கள் சொஸ்தம
டைகிறதும் அல்லாமல், அவருடைய கை
உங்களை விடாதிருந்த முகாந்தரம் இன்னது
என்றும் உங்களுக்குத் தெரியவரும் என்றார்
4 கள். அதற்கு அவர்கள்: குற்றநிவாரண கா
ணிக்கையாக நாங்கள் அவருக்கு என்னத்தைச்
செலுத்தவேண்டும் என்று கேட்டதற்கு, அவர்
கள்: உங்களெல்லாருக்கும் உங்கள் அதிபதிக
ளுக்கும் [6]ஒரே வாதையுண்டானபடியால்,
பெலிஸ்தருடைய அதிபதிகளின் இலக்கத்திற்
குச் சரியாக மூலவியாதியின் சாயலானபடி
செய்த ஐந்து பொன் சுரூபங்களும், பொன்
னால் செய்த ஐந்து சுண்டெலிகளும் செலுத்த
5 வேண்டும். ஆகையால் உங்கள் மூலவியாதி
யின் சாயலான சுரூபங்களையும், உங்கள் தே
சத்தைக் கெடுத்துப்போட்ட சுண்டெலிக
ளின் சாயலான சுரூபங்களையும் நீங்கள் உண்டு
பண்ணி, இஸ்ரவேலின் தேவனுக்கு [7]மகிமை
யைச் செலுத்துங்கள்; அப்பொழுது ஒரு
வேளை உங்கள் மேலும், உங்கள் தேவர்கள்
மேலும், உங்கள் தேசத்தின்மேலும் இறங்கியி
ருக்கிற [8]அவருடைய கை உங்களை விட்டு
விலகும். எகிப்தியரும் பார்வோனும் தங்கள் 6
இருதயத்தைக் கடினப்படுத்தினதுபோல, நீங்
கள் உங்கள் இருதயத்தைக் கடினப்படுத்துவா
னேன்; [9]அவர்களை அவர் தீங்காய் வாதித்த
பின்பு, ஜனங்களை அவர்கள் அனுப்பிவிட்ட
தும், அவர்கள் போய்விட்டதும் இல்லை
யோ? இப்போதும் நீங்கள் ஒரு புதுவண்டில் 7
செய்து, [10]நுகம் பூட்டாதிருக்கிற இரண்டு
கறவைப்பசுக்களைப் பிடித்து, அவைகளை
வண்டிலிலே கட்டி, அவைகளின் கன்றுக்
குட்டிகளை அவைகளுக்குப் பின்னாகப் போக
விடாமல், வீட்டிலே கொண்டுவந்து விட்டு,
பின்பு **கர்த்தருடைய** பெட்டியை எடுத்து, 8
அதை வண்டிலின்மேல் வைத்து, நீங்கள்
குற்றநிவாரண காணிக்கையாக அவருக்குச்
செலுத்தும் பொன்னுருப்படிகளை அதின் பக்
கத்தில் ஒரு சிறிய பெட்டியிலே வைத்து,
அதை அனுப்பிவிடுங்கள். அப்பொழுது பா 9
ருங்கள்; அது தன் எல்லைக்குப் போகிறவழி
யாய் பெத்ஷிமேசுக்குப் போனால், இந்தப்
பெரிய தீங்கை நமக்குச் செய்தவர் [11]அவர்
தாமே என்று அறியலாம்; போகாதிருந்தால்,
அவருடைய கை நம்மைத் தொடாமல், அது
தற்செயலாய் நமக்கு நேரிட்டது என்று அறிந்
துகொள்ளலாம் என்றார்கள். அந்த மனுஷர் 10
அப்படியே செய்து, இரண்டு கறவைப்பசுக்க
ளைக் கொண்டுவந்து, அவைகளை வண்டிலிலே
கட்டி, அவைகளின் கன்றுக்குட்டிகளை வீட்
டிலே அடைத்துவைத்து, **கர்த்தருடைய** 11
பெட்டியையும், பொன்னால் செய்த சுண்டெ
லிகளும் தங்கள் மூலவியாதியின் சாயலான
சுரூபங்களும் வைத்திருக்கிற சிறிய பெட்டி
யையும், அந்த வண்டிலின்மேல் வைத்தார்
கள். அப்பொழுது அந்தப் பசுக்கள் பெத் 12
ஷிமேசுக்குப் போகிற வழியிலே செவ்வை
யாய்ப் போய், வலது இடதுபக்கமாய் விலகா
மல், பெரும்பாதையான நேர்வழியாகக் கூப்
பிட்டுக்கொண்டே நடந்தது; பெலிஸ்தரின்
அதிபதிகள் பெத்ஷிமேசின் எல்லைமட்டும்
அவைகளின் பிறகே போனார்கள். பெத்ஷி 13
மேசின் மனுஷர் பள்ளத்தாக்கிலே கோதுமை
அறுப்பு அறுத்துக்கொண்டிருந்தார்கள்; அவர்
கள் தங்கள் கண்களை ஏறெடுக்கும்போது,
பெட்டியைக் கண்டு, அதைக் கண்டதினால்
சந்தோஷப்பட்டார்கள். அந்த வண்டில் 14
பெத்ஷிமேஸ் ஊரானாகிய யோசுவாவின் வய
லில் வந்து, அங்கே நின்றது; அங்கே ஒரு
பெரிய கல்லிருந்தது; அப்பொழுது வண்டி
லின் மரங்களைப் பிளந்து, பசுக்களைக் **கர்த்த**

[1] உபா. 2. 15
[2] எரே. 14. 2
[3] ஆதி. 41. 8. யாத். 7. 11. தானி. 2. 2. ஏசா. 2. 4
[4] யாத். 23. 15. உபா. 16. 16
[5] லேவி. 5. 15, 16
[6] யோசு. 13. 3. நியா. 3. 3
[7] யோசு. 7. 19. மல். 2. 2. யோ. 9. 24
[8] 5. 6, 11
[9] யாத். 7. 13; 12. 31
[10] 2 சாமு. 6. 3
[11] யோசு. 15. 10

**நுக்குச்** சர்வாங்க தகனபலியாகச் செலுத்தினுர்
15 கள். லேவியர் **கர்த்தருடைய** பெட்டியை
யும், அதனோடிருந்த பொன்னுருப்படிகளுள்ள
சிறிய பெட்டியையும் இறக்கி, அந்தப் பெரிய
கல்லின்மேல் வைத்தார்கள்; பெத்ஷிமேசின்
மனுஷர், அன்றையதினம் **கர்த்தருக்குச்** சர்
வாங்க தகனங்களைச் செலுத்திப் பலிகளை
16 இட்டார்கள். பெலிஸ்தரின் [1]ஐந்து அதிபதி
களும் இவைகளைக் கண்டு, அன்றையதினம்
17 எக்ரோனுக்குத் திரும்பிப்போனுர்கள். பெலி
ஸ்தர் குற்றநிவாரணத்திற்காக, **கர்த்தருக்குச்**
செலுத்தின மூலவியாதியின் சாயலான
பொன் சுருபங்களாவன, அஸ்தோத்திற்காக
ஒன்று, காசாவுக்காக ஒன்று, அஸ்கலோனுக்
காக ஒன்று, காத்துக்காக ஒன்று, எக்ரோனுக்
18 காக ஒன்று. பொன்னுல் செய்த சுண்டெலி
களோவென்றுல், அரணான பட்டணங்கள்
துவக்கி காட்டிலுள்ள கிராமங்கள்மட்டும்,
**கர்த்தருடைய** பெட்டியை வைத்த பெரிய கல்
இருக்கிற ஆபேல்மட்டும், ஐந்து அதிபதிகளுக்
கும் ஆதீனமாயிருக்கிற பெலிஸ்தருடைய
சகல ஊர்களின் இலக்கத்திற்குச் சரியாயிருந்
தது. அந்தக் கல் இந்நாள்வரைக்கும் பெத்ஷி
மேஸ் ஊரானாகிய யோசுவாவின் வயலில்
19 இருக்கிறது. ஆனுலும் பெத்ஷிமேசின் மனு
ஷர் **கர்த்தருடைய** பெட்டிக்குள் பார்த்தபடியி
னுல், **கர்த்தர்** ஜனங்களில் ஐம்பதினுயிரத்து
எழுபதுபேரை அடித்தார்; அப்பொழுது **கர்த்
தர்** ஜனங்களைப் பெரிய சங்காரமாக [2]அடித்த
தினிமித்தம், ஜனங்கள் துக்கித்துக்கொண்டி
20 ருந்தார்கள். இந்தப் பரிசுத்தமான தேவனு
கிய **கர்த்தருக்கு** முன்பாக [3]நிற்கத்தக்கவன்
யார்? பெட்டி நம்மிடத்திலிருந்து யாரிடத்துக்
குப் போகும் என்று பெத்ஷிமேசின் மனுஷர்
21 சொல்லி, கீரியாத்யாரீமின் [4]குடிகளுக்கு
ஆட்களை அனுப்பி: பெலிஸ்தர் **கர்த்தருடைய**
பெட்டியைத் திரும்ப அனுப்பினுர்கள்; நீங்
கள் வந்து, அதை உங்களிடத்துக்கு எடுத்துக்
கொண்டுபோங்கள் என்று சொல்லச்சொன்
னுர்கள்.

**7** அப்படியே கீரியாத்யாரீமின் மனுஷர்
வந்து, **கர்த்தருடைய** பெட்டியை எடுத்து,
மேட்டின்மேலிருக்கிற [5]அபினதாபின் வீட்
டிலே கொண்டுவந்து வைத்து, **கர்த்தருடைய**
பெட்டியைக் காக்கும்படிக்கு, அவன் குமார
னுகிய எலெயாசாரைப் பரிசுத்தப்படுத்தினுர்
கள்.
2 பெட்டி கீரியாத்யாரீமிலே அநேகநாள்
தங்கி இருந்தது; இருபது வருஷம் அங்கேயே
இருந்தது; இஸ்ரவேல் குடும்பத்தாரெல்லா
ரும் **கர்த்தரை** நினைத்து, புலம்பிக்கொண்
3 டிருந்தார்கள். அப்பொழுது சாமுவேல் இஸ்
ரவேல் குடும்பத்தார் யாவரையும் நோக்கி: நீங்
கள் உங்கள் முழு இருதயத்தோடும் **கர்த்தரி
டத்தில்** [6]திரும்புகிறவர்களானுல், அந்நிய தே
வர்களையும் அஸ்தரோத்தையும் உங்கள் நடுவி
லிருந்து விலக்கி, உங்கள் இருதயத்தைக்
**கர்த்தருக்கு** நேராக்கி, அவர் ஒருவருக்கே ஆரா
தனை செய்யுங்கள்; அப்பொழுது அவர் உங்க
ளைப் பெலிஸ்தருடைய கைக்கு நீங்கலாக்கி
விடுவார் என்றுன். அப்பொழுது இஸ்ர 4
வேல் புத்திரர் [7]பாகால்களையும் அஸ்தரோத்
தையும் விலக்கிவிட்டு, **கர்த்தர்** ஒருவருக்கே
ஆராதனை செய்தார்கள்.
பின்பு சாமுவேல்: நான் உங்களுக்காகக் 5
**கர்த்தரை** மன்றுடும்படிக்கு, இஸ்ரவேலர்
எல்லாரையும் மிஸ்பாவிலே [8]கூட்டுங்கள் என்
றுன். அவர்கள் அப்படியே மிஸ்பாவிலே 6
கூடிவந்து தண்ணீர் மொண்டு, **கர்த்தருடைய**
சந்நிதியில் ஊற்றி, அன்றையதினம் உப
வாசம்பண்ணி, **கர்த்தருக்கு** விரோதமாய்ப்
[9]பாவம்செய்தோம் என்று அங்கே சொன்னுர்
கள்; மிஸ்பாவிலே சாமுவேல் இஸ்ரவேல்
புத்திரரை நியாயம் விசாரித்துக்கொண்டிருந்
தான். இஸ்ரவேல் புத்திரர் மிஸ்பாவிலே 7
கூடிவந்ததைப் பெலிஸ்தர் கேள்விப்பட்ட
போது, பெலிஸ்தரின் அதிபதிகள் இஸ்ர
வேலுக்கு விரோதமாக எதிர்த்துவந்தார்கள்;
அதை இஸ்ரவேல் புத்திரர் கேட்டு, பெலிஸ்த
ரினிமித்தம் பயப்பட்டு, சாமுவேலை நோக்கி: 8
நம்முடைய தேவனுகிய **கர்த்தர்** எங்களைப்
பெலிஸ்தரின் கைக்கு நீங்கலாக்கி ரட்சிக்கும்
படிக்கு, எங்களுக்காக [10]அவரை நோக்கி ஓயா
மல் வேண்டிக்கொள்ளும் என்றுர்கள். அப் 9
பொழுது சாமுவேல்: பால்குடிக்கிற ஒரு ஆட்
டுக்குட்டியைப் பிடித்து, அதைக் **கர்த்தருக்
குச்** சர்வாங்க தகனபலியாகச் செலுத்தி, இஸ்ர
வேலுக்காகக் **கர்த்தரை** நோக்கி வேண்டிக்
கொண்டான்; [11]**கர்த்தர்** அவனுக்கு மறுமொழி
அருளிச்செய்தார். சாமுவேல் சர்வாங்க தகன 10
பலியைச் செலுத்துகையில், பெலிஸ்தர் இஸ்
ரவேலின்மேல் யுத்தம்பண்ண நெருங்கினுர்
கள்; **கர்த்தர்** மகா பெரிய இடிமுழக்கங்களைப்
பெலிஸ்தர்மேல் அந்நாளிலே முழங்கப்
பண்ணி, அவர்களைக் கலங்கடித்ததினுல்,
அவர்கள் இஸ்ரவேலுக்கு முன்பாகப் பட்டு
விழுந்தார்கள். அப்பொழுது இஸ்ரவேலர் 11
மிஸ்பாவிலிருந்து பெலிஸ்தரைப் பின்தொ
டர்ந்துபோய், பெத்காரீம் பள்ளத்தாக்குமட்
டும் அவர்களை முறிய அடித்தார்கள். அப் 12
பொழுது சாமுவேல் ஒரு [12]கல்லை எடுத்து,
மிஸ்பாவுக்கும் சேனுக்கும் நடுவாக நிறுத்தி,
இம்மட்டும் **கர்த்தர்** எங்களுக்கு உதவிசெய்
தார் என்று சொல்லி, அதற்கு *எபெனேசர்
என்று பேரிட்டான். இந்தப்பிரகாரம் பெ 13
லிஸ்தர் அப்புறம் இஸ்ரவேலின் எல்லையிலே
வராதபடிக்குத் தாழ்த்தப்பட்டார்கள்; சாமு
வேலின் நாளெல்லாம் **கர்த்தருடைய** கை
பெலிஸ்தருக்கு விரோதமாய் இருந்தது. பெ 14
லிஸ்தர் இஸ்ரவேல் கையிலிருந்து பிடித்தி
ருந்த எக்ரோன்துவக்கிக் காத்மட்டுமுள்ள
பட்டணங்களும் இஸ்ரவேலுக்குத் திரும்பக்
கிடைத்தது; அவைகளையும் அவைகளின் எல்
லைகளையும் இஸ்ரவேலர் பெலிஸ்தர் கையிலே

[1] யோச. 13. 3
[2] யாத். 19. 21. எண். 4. 5, 15, 20
[3] 2 சாமு. 6. 9. மல். 3. 2
[4] யோசு. 18. 14. நியா. 18. 12
[5] 2 சாமு. 6. 4
[6] உபா. 30. 2-10. 1 இரா. 8. 48. யோவேல் 2. 12
[7] நியா. 2. 11
[8] நியா. 20. 1
[9] நியா. 10. 10. சங். 106. 6. எரே. 3. 13, 14
[10] ஏசா. 37. 4
[11] சங். 99. 6. எரே. 15. 1
[12] ஆதி. 28. 18, 19
* உதவியின் கல்

இராதபடிக்கு, விடுவித்துக்கொண்டார்கள்;
இஸ்ரவேலுக்கும் எமோரியருக்கும் சமாதா
15 னம் உண்டாயிருந்தது. சாமுவேல் உயிரோ
டிருந்த நாளெல்லாம் இஸ்ரவேலை நியாயம்
16 விசாரித்தான். அவன் வருஷாவருஷம் புறப்
பட்டு, பெத்தேலையும் கில்காலையும் மிஸ்பா
வையும் சுற்றிப்போய், அவ்விடங்களிலெல்
லாம் இஸ்ரவேலை நியாயம் விசாரித்தபின்பு,
17 அவன் ராமாவுக்குத் திரும்பிவருவான், அவ
னுடைய வீடு அங்கே யிருந்தது; அங்கே
இஸ்ரவேலை நியாயம் விசாரித்து, அவ்விடத்
தில் **கர்த்தருக்கு** ஒரு [1]பலிபீடத்தைக் கட்டி
னான்.

**8** சாமுவேல் முதிர்வயதானபோது, தன்
குமாரரை இஸ்ரவேலின்மேல் [2]நியாயாதிபதி
2 களாக வைத்தான். அவனுடைய மூத்த
குமாரனுக்குப் பெயர் *யோவேல், இளைய
வனுக்குப் பெயர் அபியா; அவர்கள் பெயெர்
செபாவிலே நியாயாதிபதிகளாயிருந்தார்கள்.
3 ஆனாலும் அவனுடைய குமாரர் அவன் வழி
களில் நடவாமல், [3]பொருளாசைக்குச் சாய்
ந்து, [4]பரிதானம் வாங்கி, நியாயத்தைப் புரட்
டினார்கள்.
4 அப்பொழுது இஸ்ரவேலின் மூப்பர் எல்
லாரும் கூட்டங்கூடி, ராமாவிலிருந்த சாமு
5 வேலினிடத்தில் வந்து: இதோ, நீர் முதிர்
வயதுள்ளவரானீர்; உம்முடைய குமாரர் உம்
முடைய வழிகளில் நடக்கிறதில்லை; ஆகை
யால் சகல ஜாதிகளுக்குள்ளும் இருக்கிறபடி,
எங்களை நியாயம் விசாரிக்கிறதற்கு; [5]ஒரு
ராஜாவை ஏற்படுத்தவேண்டும் என்றார்கள்.
6 எங்களை நியாயம் விசாரிக்க ஒரு ராஜாவை
ஏற்படுத்தும் என்று அவர்கள் சொன்ன வார்த்
தை சாமுவேலுக்குத் †தகாததாய்க் காணப்
பட்டது; ஆகையால் சாமுவேல் **கர்த்தரை**
7 நோக்கி விண்ணப்பம்பண்ணினான். அப்
பொழுது **கர்த்தர்** சாமுவேலை நோக்கி: ஜனங்
கள் உன்னிடத்தில் சொல்வதெல்லாவற்றிலும்
அவர்கள் சொல்லைக் கேள்; அவர்கள் [6]உன்
னைத் தள்ளவில்லை, நான் அவர்களை ஆளாத
8 படிக்கு, [7]என்னைத்தான் தள்ளினார்கள். நான்
அவர்களை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணி
னநாள்முதல் இந்நாள்மட்டும் அவர்கள் என்
னைவிட்டு, வேறே தேவர்களைச் சேவித்து
வந்த தங்கள் எல்லாச் செய்கைகளின்படியும்
செய்ததுபோல, அவர்கள் உனக்கும் செய்கி
9 றார்கள். இப்போதும் அவர்கள் ‡சொல்லைக்
கேள், ஆனாலும் உன் அபிப்பிராயத்தைக் காட்
டும்படி அவர்களை ஆளும் ராஜாவின் காரியம்
இன்னது என்று அவர்களுக்குத் [8]திடசாட்சி
யாய்த் தெரியப்படுத்து என்றார்.
10 அப்பொழுது சாமுவேல், ஒரு ராஜா
வேண்டும் என்று தன்னிடத்தில் கேட்ட ஜன
ங்களுக்குக் **கர்த்தருடைய** வார்த்தைகளையெல்
11 லாம் சொல்லி: உங்களை ஆளும் ராஜாவின்
காரியம் என்னவென்றால், தன் ரதத்திற்கு
முன் ஓடும்படி அவன் [9]உங்கள் குமாரரை

[1] நியா. 21. 4
[2] உபா. 16. 18. நியா. 5. 10; 10. 4
* வம்சா. 1 நாளா. 6. 28
[3] யாத். 18. 21. 1 தீமோ. 3. 3
[4] உபா. 16. 19. நீதி. 29. 4
[5] உபா. 17. 14. ஓசி. 13. 10. அப். 13. 21
† தீமையாய்
[6] யாத். 16. 8. மத். 10. 40
[7] ஓசி. 13. 10, 11
‡ சொற்படி செய்
[8] 10. 25; 14. 52
[9] உபா. 17. 16.
[10] 1 இரா. 21. 7. எசே. 46. 18
[11] ஆதி. 37. 36
[12] நீதி. 1. 25-28. ஏசா. 1. 15. மீகா 3. 4
[13] எரே. 44. 16
[14] ஓசி. 13. 11
[15] 14. 51
§ யமினியின் மகன்
[16] 10. 23

எடுத்து, தன் ரதசாரதிகளாகவும் தன் குதிரை
வீரராகவும் வைத்துக்கொள்ளுவான். ஆயிரம் 12
பேருக்கும் ஐம்பதுபேருக்கும் தலைவராகவும்,
தன் நிலத்தை உழுகிறவர்களாகவும், தன்
விளைச்சலை அறுக்கிறவர்களாகவும், தன் யுத்த
ஆயுதங்களையும் தன் ரதங்களின் பணிமுட்டு
களையும் பண்ணுகிறவர்களாகவும், அவர்களை
வைத்துக்கொள்ளுவான். உங்கள் குமாரத்தி 13
களைப் பரிமளதைலம் செய்கிறவர்களாகவும்,
சமையல் பண்ணுகிறவர்களாகவும், அப்பம்
சுடுகிறவர்களாகவும் வைத்துக்கொள்ளுவான்.
உங்கள் [10]வயல்களிலும், உங்கள் திராட்சத்தோ 14
ட்டங்களிலும், உங்கள் ஒலிவத்தோப்புகளி
லும், நல்லவைகளை எடுத்துக்கொண்டு, தன்
ஊழியக்காரருக்குக் கொடுப்பான். உங்கள் 15
தானியத்திலும் உங்கள் திராட்சப்பலனிலும்
தசமபாகம் வாங்கி, தன் [11]பிரதானிகளுக்கும்
தன் சேவகர்களுக்கும் கொடுப்பான். உங்கள் 16
வேலைக்காரரையும், உங்கள் வேலைக்காரிகளை
யும், உங்களில் திறமையான வாலிபரையும்,
உங்கள் கழுதைகளையும் எடுத்து தன்னுடைய
வேலைக்கு வைத்துக்கொள்ளுவான். உங்கள் 17
ஆடுகளிலே பத்தில் ஒன்று எடுத்துக்கொள்ளு
வான்; நீங்கள் அவனுக்கு வேலையாட்களாவீர்
கள். நீங்கள் தெரிந்துகொண்ட உங்கள் ராஜா 18
வினிமித்தம் அந்நாளிலே முறையிடுவீர்கள்;
ஆனாலும் **கர்த்தர்** அந்நாளிலே உங்களுக்குச்
[12]செவிகொடுக்கமாட்டார் என்றான். ஜனங் 19
கள் சாமுவேலின் சொல்லைக் [13]கேட்க மன
தில்லாமல்: அப்படியல்ல, எங்களுக்கு ஒரு
ராஜா இருக்கத்தான்வேண்டும். சகல ஜாதி 20
களையும்போல நாங்களும் இருப்போம்; எங்
கள் ராஜா எங்களை நியாயம் விசாரித்து, எங்
களுக்கு முன்பாகப் புறப்பட்டு, எங்கள் யுத்
தங்களை நடத்தவேண்டும் என்றார்கள். சாமு 21
வேல் ஜனங்களின் வார்த்தைகளையெல்லாம்
கேட்டு, அவைகளைக் **கர்த்தரிடத்தில்** தெரியப்
படுத்தினான். **கர்த்தர்** சாமுவேலை நோக்கி: 22
நீ அவர்கள் [14]சொல்லைக் கேட்டு, அவர்களை
ஆள ஒரு ராஜாவை ஏற்படுத்து என்றார்; அப்
பொழுது சாமுவேல் இஸ்ரவேல் ஜனங்களைப்
பார்த்து: அவரவர் தங்கள் ஊர்களுக்குப் போக
லாம் என்றான்.

பென்யமீன் கோத்திரத்தாரில் [15]கீஸ் என் **9**
னும் பேருள்ள மகா பராக்கிரமசாலியான
ஒரு மனுஷன் இருந்தான்; அவன் §பென்ய
மீன் கோத்திரத்தானாகிய அபியாவின் மக
னான பெகோராத்திற்குப் பிறந்த சேரோரின்
புத்திரனாகிய அபீயேலின் குமாரன். அவ 2
னுக்குச் சவுல் என்னும் பேருள்ள சவுந்தரிய
மான வாலிபனாகிய ஒரு குமாரன் இருந்
தான்; இஸ்ரவேல் புத்திரரில் அவனைப்பார்க்
கிலும் சவுந்தரியவான் இல்லை; [16]எல்லா ஜனங்
களும் அவன் தோளுக்குக் கீழாயிருக்கத்தக்க
உயரமுள்ளவனாயிருந்தான். சவுலின் தகப்ப 3
னாகிய கீசுடைய கழுதைகள் காணாமற்போ
யிற்று; ஆகையால் கீஸ் தன் குமாரனாகிய

சவுலை நோக்கி: நீ வேலைக்காரரில் ஒருவனைக்
கூட்டிக்கொண்டு, கழுதைகளைத் தேட, புறப்
4 பட்டுப்போ என்றான். அப்படியே அவன்
எப்பிராயீம் மலைகளையும் [1]சலீஷாநாட்டையும்
கடந்துபோனான்; அங்கே அவைகளைக் காணா
மல் சாலீம்நாட்டைக் கடந்தார்கள். அங்கே
யும் காணவில்லை; பென்யமீன்நாட்டை உரு
வக் கடந்தும் அவைகளைக் காணவில்லை.
5 அவர்கள் சூப் என்னும் நாட்டிற்கு வந்தபோ
து, சவுல் தன்னோடிருந்த வேலைக்காரனை
நோக்கி: என் தகப்பன், கழுதைகளின்மேலு
ள்ள கவலையை விட்டு, நமக்காகக் கவலைப்
படாதபடிக்குத் திரும்பிப்போவோம் வா என்
6 றான். அதற்கு அவன்: இதோ, இந்தப் பட்
டணத்திலே [2]தேவனுடைய மனுஷன் ஒரு
வர் இருக்கிறார்; அவர் பெரியவர்; அவர்
[3]சொல்லுகிறதெல்லாம் தப்பாமல் நடக்கும்;
அங்கே போவோம்; ஒருவேளை அவர் நாம்
போகவேண்டிய நம்முடைய வழியை நமக்
7 குத் தெரிவிப்பார் என்றான். அப்பொழுது
சவுல் தன் வேலைக்காரனைப் பார்த்து: நாம்
போனாலும் அந்த மனுஷனுக்கு [4]என்னத்தைக்
கொண்டுபோவோம்; நம்முடைய பைகளில்
இருந்த தின்பண்டங்கள் செலவழிந்துபோ
யிற்று; தேவனுடைய மனுஷனாகிய அவருக்
குக் கொண்டுபோகத்தக்க காணிக்கை நம்மி
8 டத்தில் ஒன்றும் இல்லையே என்றான். அந்த
வேலைக்காரன் பின்னும் சவுலைப் பார்த்து:
இதோ, என் கையில் இன்னும் கால் சேக்கல்
வெள்ளியிருக்கிறது; தேவனுடைய மனுஷன்
நமக்கு நம்முடைய வழியை அறிவிக்கும்படி
க்கு, அதை அவருக்குக் கொடுப்பேன் என்
9 றான். முற்காலத்தில் இஸ்ரவேலில் யாதொ
ருவர் [5]தேவனிடத்தில் விசாரிக்கப்போனால்,
ஞானதிஷ்டிக்காரனிடத்திற்குப் போவோம்
வாருங்கள் என்பார்கள்; இந்நாளிலே தீர்க்க
தரிசி என்னப்படுகிறவன் முற்காலத்தில் [6]ஞா
10 னதிஷ்டிக்காரன் என்னப்படுவான். அப்பொ
ழுது சவுல் தன் வேலைக்காரனை நோக்கி: நல்ல
காரியம் சொன்னாய், போவோம் வா என்
றான்; அப்படியே தேவனுடைய மனுஷன்
இருந்த அந்தப் பட்டணத்திற்குப் போனார்
11 கள். அவர்கள் பட்டணத்து மேட்டின் வழி
யாய் ஏறுகிறபோது, தண்ணீர் எடுக்கவந்த
[7]பெண்களைக் கண்டு: ஞானதிஷ்டிக்காரன்
இங்கே இருக்கிறாரா என்று அவர்களைக் கேட்
12 டார்கள். அதற்கு அவர்கள்: இருக்கிறார்;
இதோ, உங்களுக்கு எதிரே இருக்கிறார்; தீவி
ரமாய்ப் போங்கள்; இன்றைக்கு ஜனங்கள்
மேடையில் [8]பலியிடுகிறபடியினால், இன்றை
13 யதினம் பட்டணத்திற்கு வந்தார். நீங்கள்
பட்டணத்திற்குள் பிரவேசித்தவுடனே, அவர்
மேடையின்மேல் போஜனம்பண்ணப் போகி
றதற்கு முன்னே அவரைக் காண்பீர்கள்;
அவர் வருமட்டும் ஜனங்கள் போஜனம் பண்
ணமாட்டார்கள்; பலியிட்டதை அவர் ஆசீர்
வதிப்பார்; பின்பு அழைக்கப்பட்டவர்கள்

[1] 2 இரா. 4. 42
[2] உபா. 33. 1. 1 இரா. 13. 1
[3] 3. 19
[4] ஆதி. 43. 11 நியா. 6. 18 1 இரா. 14. 3. 2 இரா. 8. 8
[5] ஆதி. 25. 22
[6] 2 சாமு. 24. 11. 2 இரா. 17. 13. ஏசா. 30. 10. ஆமோஸ் 7. 12
[7] ஆதி. 24. 11
[8] ஆதி. 31. 54. 1 இரா. 3. 2
* இன்றைக்கு
[9] ஆமோஸ் 3. 7. அப். 27. 23
[10] 10. 1
[11] யாத். 2. 23-25. சங். 106. 44
[12] ஓசி. 13. 11. அப். 13. 21
[13] பேர. 14. 29
[14] நியா. 20. 46-48. சங். 68. 27
[15] நியா. 6. 15
[16] லேவி. 7. 32, 33. எசே. 24. 4

போஜனம் பண்ணுவார்கள்; உடனே போங்
கள்; *இந்நேரத்திலே அவரைக் கண்டுகொள்
ளலாம் என்றார்கள். அவர்கள் பட்டணத்திற் 14
குப் போய், பட்டணத்தின் நடுவே சேர்ந்த
போது, இதோ, சாமுவேல் மேடையின்மேல்
ஏறிப்போகிறதற்காக, அவர்களுக்கு எதிரே
புறப்பட்டு வந்தான்.
சவுல் வர ஒருநாளுக்கு முன்னே **கர்த்தர்** 15
சாமுவேலின் [9]காதுகேட்க: நாளை இந்நேரத் 16
திற்குப் பென்யமீன் நாட்டானாகிய ஒரு மனு
ஷனை உன்னிடத்தில் அனுப்புவேன்; அவனை
என் ஜனமாகிய இஸ்ரவேலின்மேல் அதிபதி
யாக [10]அபிஷேகம் பண்ணக்கடவாய்; அவன்
என் ஜனத்தைப் பெலிஸ்தரின் கைக்கு நீங்க
லாக்கி இரட்சிப்பான்; என் ஜனத்தின் முறை
யிடுதல் என்னிடத்தில் வந்து எட்டினபடியி
னால், [11]நான் அவர்களைக் கடாட்சித்தேன்
என்று வெளிப்படுத்தியிருந்தார். சாமுவேல் 17
சவுலைக் கண்டபோது, **கர்த்தர்** அவனிடத்
தில்: இதோ, நான் உனக்குச் சொல்லியிருந்த
[12]மனுஷன் இவனே; இவன்தான் என் ஜன
த்தை ஆளுவான் என்றார். சவுல் நடுவாச 18
லிலே சாமுவேலிடத்தில் வந்து: ஞானதிஷ்
டிக்காரன் வீடு எங்கே, சொல்லும் என்று
கேட்டான். சாமுவேல் சவுலுக்குப் பிரதி 19
யுத்தரமாக: ஞானதிஷ்டிக்காரன் நான்தான்;
நீ எனக்கு முன்னே மேடையின்மேல் ஏறிப்
போ; நீங்கள் இன்றைக்கு என்னோடே
போஜனம் பண்ணவேண்டும்; நாளைக்காலமே
நான் உன் [13]இருதயத்தில் உள்ளது எல்லாவற்
றையும் உனக்கு அறிவித்து, உன்னை அனுப்பி
விடுவேன். மூன்றுநாளைக்கு முன்னே காணா 20
மற்போன கழுதைகளைப்பற்றிக் கவலைப்பட
வேண்டாம்; அவைகள் அகப்பட்டது; இதல்
லாமல் சகல இஸ்ரவேலின் அபேட்சையும்
யாரை நாடுகிறது? உன்னையும் உன் வீட்டார்
அனைவரையும் அல்லவா? என்றான். அப் 21
பொழுது சவுல் பிரதியுத்தரமாக: நான் இஸ்ர
வேல் கோத்திரங்களிலே சிறிதான [14]பென்
யமீன் கோத்திரத்தான் அல்லவா? பென்ய
மீன் கோத்திரத்துக் குடும்பங்களிலெல்லாம்
என் குடும்பம் [15]அற்பமானது அல்லவா? நீர்
இப்படிப்பட்ட வார்த்தையை என்னிடத்தில்
சொல்வானேன் என்றான். சாமுவேல் சவு 22
லையும் அவன் வேலைக்காரனையும் போஜன
சாலைக்குள் அழைத்துக்கொண்டுபோய், அவர்
களை அழைக்கப்பட்டவர்களுக்குள்ளே தலை
மையான இடத்திலே வைத்தான்; அழைக்கப்
பட்டவர்கள் ஏறக்குறைய முப்பதுபேராயிருந்
தார்கள். பின்பு சாமுவேல் சமையற்காரனைப் 23
பார்த்து: நான் உன் கையிலே ஒரு பங்கைக்
கொடுத்துவைத்தேனே, அதைக் கொண்டு
வந்து வை என்றான். அப்பொழுது சமையற் 24
காரன், [16]ஒரு முன்னந்தொடையையும், அத
னோடிருந்ததையும் எடுத்துக்கொண்டு வந்து,
அதை சவுலுக்குமுன் வைத்தான்; அப்பொ
ழுது சாமுவேல்: இதோ, இது உனக்கென்று

வைக்கப்பட்டது, இதை உனக்கு முன்பாக
வைத்துச் சாப்பிடு; நான் ஜனங்களை விருந்
துக்கு அழைத்ததுமுதல், இதுவரைக்கும் இது
உனக்காக வைக்கப்பட்டிருந்தது என்றான்;
அப்படியே சவுல் அன்றையதினம் சாமுவே
25 லோடே சாப்பிட்டான். அவர்கள் மேடையி
லிருந்து பட்டணத்திற்கு இறங்கி வந்தபின்பு,
[1]அவன் மேல்வீட்டிலே சவுலோடே பேசிக்
26 கொண்டிருந்தான். அவர்கள் அதிகாலமே
கிழக்கு வெளுக்கிற நேரத்தில் எழுந்திருந்த
போது, சாமுவேல் சவுலை மேல்வீட்டின்மேல்
அழைத்து: நான் உன்னை அனுப்பிவிடும்
படிக்கு ஆயத்தப்படு என்றான்; சவுல் ஆயத்
தப்பட்டபோது, அவனும் சாமுவேலும் இரு
27 வருமாக வெளியே புறப்பட்டார்கள். அவர்
கள் பட்டணத்தின் கடைசிமட்டும் இறங்கி
வந்தபோது, சாமுவேல் சவுலைப் பார்த்து:
வேலைக்காரனை நமக்கு முன்னே நடந்து
போகச் சொல் என்றான்; அப்படியே அவன்
நடந்துபோனான்; இப்பொழுது நான் தேவ
னுடைய வார்த்தையை உனக்குத் தெரிவிக்
கும்படிக்கு, நீ *சற்றே தரித்துநில் என்றான்.
10 அப்பொழுது சாமுவேல் தைலக்குப்
பியை எடுத்து, [2]அவன் தலையின்மேல் வார்
த்து, [3]அவனை முத்தஞ்செய்து: கர்த்தர் உன்
னைத் தம்முடைய சுதந்தரத்தின்மேல் [4]தலை
2 வனாக அபிஷேகம்பண்ணினார் அல்லவா? நீ
இன்றைக்கு என்னைவிட்டுப் போகிறபோது,
பென்யமீன் எல்லையாகிய செல்சாகில் [5]ராகே
லின் கல்லறையண்டையில் இரண்டு மனுஷ
ரைக் காண்பாய்; அவர்கள் உன்னைப் பார்த்து:
நீ தேடப்போன கழுதைகள் அகப்பட்டது;
இதோ, உன் தகப்பன் கழுதைகளின்மேலி
ருந்த கவலையை விட்டு, உங்களுக்காக விசா
ரப்பட்டு, என் மகனுக்காக என்னசெய்வேன்?
3 என்கிறான் என்று சொல்லுவார்கள். நீ அவ்
விடத்தை விட்டு அப்புறம் கடந்துபோய்,
தாபோரிலுள்ள சமபூமியில் சேரும்போது,
[6]தேவனைப் பணியும்படி பெத்தேலுக்குப் போ
கிற மூன்று மனுஷர் அங்கே உன்னைக் கண்டு
சந்திப்பார்கள்; ஒருவன் மூன்று ஆட்டுக்குட்டி
களையும், இன்னொருவன் மூன்று அப்பங்
களையும், வேறொருவன் திராட்சரசமுள்ள
4 ஒரு துருத்தியையும் கொண்டுவந்து, உன்
னுடைய [7]சுகசெய்தியை விசாரித்து, உனக்கு
இரண்டு அப்பங்களைக் கொடுப்பார்கள்; அவை
களை நீ அவர்கள் கையிலே வாங்கவேண்டும்.
5 பின்பு பெலிஸ்தரின் தாணையம் இருக்கிற
தேவனுடைய மலைக்குப் போவாய், அங்கே
நீ பட்டணத்திற்குள் பிரவேசிக்கையில், மே
டையிலிருந்து இறங்கிவருகிற தீர்க்கதரிசிக
ளின் கூட்டத்திற்கு எதிர்ப்படுவாய்; அவர்க
ளுக்கு முன்பாகத் தம்புரும் மேளமும் நாகசுர
மும் சுரமண்டலமும் போகும்; [8]அவர்கள்
6 தீர்க்கதரிசனம் சொல்லுவார்கள். அப்பொ
ழுது [9]கர்த்தருடைய ஆவி உன்மேல் இறங்கு
வார்; நீ அவர்களோடேகூடத் தீர்க்கதரிசனம்
சொல்லி, வேறு மனுஷனுவாய். இந்த 7
அடையாளங்கள் உனக்கு நேரிடும்போது, சம
யத்துக்கு ஏற்றபடி நீ செய்; தேவன் உன்
னோடே இருக்கிறார். நீ எனக்கு முன்னே 8
[10]கில்காலுக்கு இறங்கிப்போ; சர்வாங்க தகன
பலிகளையும் சமாதானபலிகளையும் செலுத்
தும்படிக்கு, நான் உன்னிடத்தில் வருவேன்;
நான் உன்னிடத்தில் வந்து, நீ செய்யவேண்
டியதை உனக்கு அறிவிக்குமட்டும், [11]ஏழுநாள்
காத்திரு என்றான்.
அவன் சாமுவேலை விட்டுப் போகும்படி 9
திரும்பினபோது, தேவன் அவனுக்கு வேறே
இருதயத்தைக் கொடுத்தார்; அந்த அடையா
ளங்கள் எல்லாம் அன்றையதினமே நேரிட்
டது. அவர்கள் அந்த மலைக்கு வந்தபோது, 10
இதோ, தீர்க்கதரிசிகளின் கூட்டம் அவனுக்கு
எதிராக வந்தது; அப்பொழுது தேவனுடைய
ஆவி அவன்மேல் இறங்கினதினால், அவனும்
அவர்களுக்குள்ளே தீர்க்கதரிசனம் சொன்
னான். அதற்குமுன்னே அவனை அறிந்தவர் 11
கள் எல்லாரும் அவன் தீர்க்கதரிசிகளோடி
ருந்து, தீர்க்கதரிசனம் சொல்லுகிறதைக் கண்
டபோது: கீசின் குமாரனுக்கு வந்தது என்ன?
[12]சவுலும் தீர்க்கதரிசிகளில் ஒருவனோ? என்று
அந்த ஜனங்கள் ஒருவரோடொருவர் சொல்
லிக்கொண்டார்கள். அதற்கு அங்கே இருக் 12
கிறவர்களில் ஒருவன்: இவர்களுக்குத் †தகப்
பன் யார் என்றான்; ஆதலால் சவுலும் தீர்க்க
தரிசிகளில் ஒருவனோ? என்பது பழமொழி
யாயிற்று. அவன் தீர்க்கதரிசனம் சொல்லி 13
முடிந்தபின்பு, மேடையின்மேல் வந்தான்.
அப்பொழுது சவுலுடைய சிறியதகப்பன்: 14
நீங்கள் எங்கே போனீர்கள் என்று அவனையும்
அவன் வேலைக்காரனையும் கேட்டான்.
அதற்கு அவன்: நாங்கள் கழுதைகளைத் தே
டப்போய், அவைகளை எங்கும் காணாதபடியி
னால், சாமுவேலிடத்துக்குப் போனோம் என்
றான். அப்பொழுது சவுலின் சிறியதகப்பன்: 15
சாமுவேல் உங்களுக்குச் சொன்னது என்ன?
அதைச் சொல் என்றான். சவுல் தன் சிறிய 16
தகப்பனைப் பார்த்து: கழுதைகள் அகப்பட்
டது என்று எங்களுக்குத் தீர்மானமாய்ச் சொன்
னார் என்றான்; ஆனாலும் ராஜ்யபாரத்தைப்
பற்றிச் சாமுவேல் சொன்னதை அவனுக்கு
அறிவிக்கவில்லை.
சாமுவேல் ஜனங்களை மிஸ்பாவிலே கர்த் 17
தரிடத்தில் வரவழைத்து, இஸ்ரவேல் புத்தி 18
ரரை நோக்கி: இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தர் சொல்லுகிறது என்னவென்றால்,
[13]நான் இஸ்ரவேலை எகிப்திலிருந்து புறப்படப்
பண்ணி, உங்களை எகிப்தியர் கைக்கும், உங்
களை இறுகப்பிடித்த எல்லா ராஜ்யத்தாரின்
கைக்கும் நீங்கலாக்கிவிட்டேன். நீங்களோ 19
உங்களுடைய எல்லாத் தீங்குகளுக்கும் நெருக்
கங்களுக்கும் உங்களை நீங்கலாக்கி இரட்சித்த
உங்கள் தேவனை [14]இந்நாளிலே புறக்கணித்து,
ஒரு ராஜாவை எங்கள்மேல் ஏற்படுத்தும்

[1] அப். 10. 9
* இன்றைக்கு
[2] 9. 16; 16. 13. 2 இரா. 9. 3, 6
[3] 2 சாமு. 19. 39. 1 தெச. 5. 26
[4] 2 சாமு. 5. 2
[5] ஆதி. 35. 19, 20. சங். 78. 71. யோசு. 18. 28
[6] ஆதி. 28. 19, 22
[7] நியா. 18. 15
[8] யாத். 15. 20, 21. 1 கொரி. 14. 1
[9] 16. 13; 19. 23, 24. எண். 12. 25, 26
[10] 11. 14, 15; 13. 4
[11] 13. 8
[12] 19. 20, 24. மத். 13. 54, 55. யோ. 7. 15, 16. அப். 4. 13
† எஜமான்—குரு. 2 இரா. 2. 12; 13. 14. ஏசா. 54. 13. யோ. 6. 45
[13] நியா. 6. 8, 9
[14] 8. 7, 19; 12. 12

என்று அவரிடத்தில் கேட்டுக்கொண்டீர்கள்;
இப்பொழுது **கர்த்தருடைய** சந்நிதியில் உங்
கள் வம்சங்களின்படியேயும், ஆயிரங்களான
உங்கள் சேர்வைகளின்படியேயும், வந்து நில்
20 லுங்கள் என்றான். சாமுவேல் இஸ்ரவே
லின் கோத்திரங்களையெல்லாம் சேரப்பண்
ணினபின்பு பென்யமீன் கோத்திரத்தின்
21 மேல் [1]சீட்டு விழுந்தது. அவன் பென்ய
மீன் கோத்திரத்தை அதினுடைய குடும்பங்
களின்படியே சேரப்பண்ணின பின்பு, மாத்
திரி குடும்பத்தின்மேலும், அதிலே கீசின் குமா
ரனாகிய சவுலின்மேலும் சீட்டு விழுந்தது;
அவனைத் தேடினபோது, அவன் அகப்பட
வில்லை.
22 அவன் இனி இங்கே வருவானா என்று
அவர்கள் திரும்பக் **கர்த்தரிடத்தில்** விசாரித்த
போது: இதோ, அவன் தளவாடங்களிருக்
கிற இடத்திலே ஒளித்துக்கொண்டிருக்கிறான்
23 என்று **கர்த்தர்** சொன்னார். அப்பொழுது
அவர்கள் ஓடி, அங்கேயிருந்து அவனை அழைத்
துக்கொண்டுவந்தார்கள்; அவன் ஜனங்கள்
நடுவே வந்து நின்றபோது, [2]எல்லா ஜனங்
களும் அவன் தோளுக்குக் கீழாயிருக்கத்தக்க
உயரமுள்ளவனாயிருந்தான்.
24 அப்பொழுது சாமுவேல் எல்லா ஜனங்க
ளையும் நோக்கி: **கர்த்தர்** தெரிந்துகொண்ட
வனைப் பாருங்கள், சமஸ்த ஜனங்களுக்குள்
ளும் அவனுக்குச் சமானமானவன் இல்லை
என்றான்; அப்பொழுது ஜனங்கள் எல்லாரும்
25 ஆர்ப்பரித்து: ராஜா வாழ்க என்றார்கள். சா
முவேல் ராஜாங்கத்தின் முறைமையை ஜனங்க
ளுக்குத் தெரிவித்து, [3]அதை ஒரு புஸ்தகத்தில்
எழுதி, **கர்த்தருடைய** சந்நிதியில் வைத்து,
ஜனங்களையெல்லாம் அவரவர் வீட்டுக்கு அனு
ப்பிவிட்டான்.
26 சவுலும் கிபியாவிலிருக்கிற தன் வீட்டுக்
குப் போனான்; இராணுவத்தில் தேவன் எவர்
கள் மனதை ஏவினாரோ, அவர்களும் அவ
27 னோடேகூடப் போனார்கள். ஆனாலும் [4]பேலி
யாளின் மக்கள்: இவனா நம்மை இரட்சிக்கப்
போகிறவன் என்று சொல்லி, அவனுக்குக்
[5]காணிக்கை கொண்டுவராமல் அவனை அச
ட்டைபண்ணினார்கள்; அவனோ காதுகேளா
தவன்போல இருந்தான்.

**11** அக்காலத்தில் [6]நாகாஸ் என்னும் அம்மோ
னியன் வந்து, கிலேயாத்திலிருக்கிற [7]யாபே
சை முற்றிக்கைபோட்டான்; அப்பொழுது
யாபேசின் மனுஷர் எல்லாரும் நாகாசை நோ
க்கி: எங்களோடே [8]உடன்படிக்கைபண்ணும்;
அப்பொழுது உம்மைச் சேவிப்போம் என்
2 றார்கள். அதற்கு அம்மோனியனாகிய நாகாஸ்:
நான் உங்கள் ஒவ்வொருவருடைய வலது
கண்ணையும் பிடுங்கி, இதினாலே இஸ்ரவேல்
எல்லாவற்றின்மேலும் [9]நிந்தைவரப்பண்ணுவ
தே நான் உங்களோடே பண்ணும் உடன்
3 படிக்கை என்றான். அதற்கு யாபேசின் மூப்
பர்கள்: நாங்கள் இஸ்ரவேல் நாடெங்கும் ஸ்தா
னாபதிகளை அனுப்பும்படி, ஏழுநாள் *எங்க
ளுக்குத் தவணைகொடும், எங்களை இரட்சிப்
பார் இல்லாவிட்டால், அப்பொழுது உம்மி
டத்தில் வருவோம் என்றார்கள். அந்த ஸ்தா 4
னாபதிகள் சவுலின் ஊராகிய கிபியாவிலே
வந்து, ஜனங்களின் காதுகேட்க, அந்தச்
செய்திகளைச் சொன்னார்கள்; அப்பொழுது
ஜனங்களெல்லாரும் சத்தமிட்டு அழுதார்கள்.
இதோ, சவுல் மாடுகளின் பின்னாலே வயலி 5
லிருந்து வந்து, ஜனங்கள் அழுகிற முகாந்
தரம் என்ன என்று கேட்டான்; யாபேசின்
மனுஷர் சொல்லிய செய்திகளை அவனுக்குத்
தெரிவித்தார்கள். சவுல் இந்தச் செய்திகளைக் 6
கேட்டவுடனே, [10]தேவனுடைய ஆவி அவன்
மேல் இறங்கினதினால் அவன் மிகவும் கோபம்
மூண்டவனாகி, ஓரிணைமாட்டைப் பிடித்து, 7
[11]துண்டித்து, அந்த ஸ்தானாபதிகள் கையிலே
கொடுத்து, இஸ்ரவேலின் நாடுகளுக்கெல்
லாம் அனுப்பி: சவுலின் பின்னாலேயும், சாமு
வேலின் பின்னாலேயும் புறப்படாதவன் எவ
னோ, அவனுடைய மாடுகளுக்கு இப்படிச்
செய்யப்படும் என்று சொல்லியனுப்பினான்;
அப்பொழுது **கர்த்தரால்** உண்டான பயங்க
ரம் ஜனத்தின்மேல் வந்ததினால், ஒருமனப்
பட்டுப் புறப்பட்டுவந்தார்கள். அவர்களைப் 8
[12]பேசேக்கிலே இலக்கம்பார்த்தான்; இஸ்ர
வேல் புத்திரரில் மூன்றுலட்சம்பேரும், யூதா
மனுஷரில் முப்பதினாயிரம்பேரும் இருந்தார்
கள். வந்த ஸ்தானாபதிகளை அவர்கள் நோக்கி: 9
நாளைக்கு வெயில் ஏறுகிறதற்குமுன்னே உங்
களுக்கு இரட்சிப்புக் கிடைக்கும் என்று கீலே
யாத்திலிருக்கிற யாபேசின் மனுஷருக்குச்
சொல்லுங்கள் என்றார்கள்; ஸ்தானாபதிகள்
வந்து, யாபேசின் மனுஷரிடத்தில் அதை
அறிவித்தார்கள்; அதற்கு அவர்கள் சந்தோ
ஷப்பட்டார்கள். பின்பு யாபேசின் மனுஷர்: 10
நாளைக்கு உங்களிடத்தில் வருவோம், அப்
பொழுது உங்கள் இஷ்டப்படியெல்லாம் எங்
களுக்குச் செய்யுங்கள் என்றார்கள். மறுநா 11
ளிலே சவுல் ஜனங்களை [13]மூன்று படையாக
வகுத்து, கிழக்கு வெளுத்துவரும் ஜாமத்தில்
பாளயத்திற்குள் வந்து, வெயில ஏறும்வரைக்
கும் அம்மோனியரை முறிய அடித்தான்; தப்
பினவர்களில் இரண்டுபேராகிலும் சேர்ந்து
ஓடிப்போகாதபடி எல்லாரும் சிதறிப்போ
னார்கள். அப்பொழுது ஜனங்கள் சாமுவேலை 12
நோக்கி: [14]சவுலா நமக்கு ராஜாவாயிருக்கப்
போகிறவன் என்று சொன்னவர்கள் யார்?
அந்த மனுஷரை நாங்கள் கொன்றுபோடும்
படிக்கு ஒப்புக்கொடுங்கள் என்றார்கள். அதற் 13
குச் சவுல்: [15]இன்றையதினம் ஒருவரும் கொல்
லப்படலாகாது; இன்று **கர்த்தர்** இஸ்ரவே
லுக்கு [16]இரட்சிப்பை அருளினார் என்றான்.
அப்பொழுது சாமுவேல் ஜனங்களை நோ 14
க்கி: நாம் கில்காலுக்குப் போய், அங்கே ராஜ்ய
பாரத்தை ஸ்திரப்படுத்துவோம் வாருங்கள்
என்றான். அப்படியே ஜனங்கள் எல்லாரும் 15

[1] அப். 1. 24, 26
[2] 9. 2
[3] உபா. 17. 14 ழ
[4] உபா. 13. 13
[5] 2 சாமு. 8. 2. மத். 2. 11
[6] 12. 12
[7] நியா. 21. 8
[8] ஆதி. 26. 28. எசே. 17. 18
[9] ஆதி. 34. 14
* பொறுத்திரும்
[10] 10. 10
[11] நியா. 19. 29
[12] நியா. 1. 5
[13] நியா. 7. 16
[14] 10. 27. லூக். 19. 27
[15] 2 சாமு. 19. 22
[16] ஏசா. 59. 16

கில்காலுக்குப் போய், அவ்விடத்திலே கர்த்த
நுடைய சந்நிதியில் [1]சவுலை ராஜாவாக ஏற்
படுத்தி, அங்கே கர்த்தருடைய சந்நிதியில்
சமாதானபலிகளைச் செலுத்தி, அங்கே சவு
லும் இஸ்ரவேல் மனுஷர் யாவரும் மிகவும்
சந்தோஷங் கொண்டாடினார்கள்.
12 அப்பொழுது சாமுவேல் இஸ்ரவேலர்
அனைவரையும் நோக்கி: இதோ, நீங்கள்
எனக்குச் சொன்னபடியெல்லாம் [2]உங்கள்
சொற்கேட்டு உங்களுக்கு ஒரு ராஜாவை ஏற்
2 படுத்தினேன். இப்போதும் இதோ, ராஜா
வானவர் உங்களுக்கு முன்பாகச் சஞ்சரித்து
வருகிறார்; நானோ கிழவனும் நரைத்தவனுமா
னேன்; என் குமாரர் உங்களோடிருப்பார்கள்;
நான் என் சிறுவயதுமுதல் இந்நாள்வரைக்கும்
உங்களுக்கு முன்பாகச் சஞ்சரித்துவந்தேன்.
3 இதோ, இருக்கிறேன்; கர்த்தரின் சந்நிதியி
லும், அவர் அபிஷேகம் பண்ணிவைத்தவ
ருக்கு முன்பாகவும் என்னைக்குறித்துச் சாட்சி
சொல்லுங்கள்; [3]நான் யாருடைய எருதை
எடுத்துக்கொண்டேன்? யாருடைய கழுதை
யை எடுத்துக்கொண்டேன்? யாருக்கு அநியா
யஞ்செய்தேன்? யாருக்கு இடுக்கண்செய்தே
ன்? யார் கையில் பரிதானம் வாங்கிக்கொண்டு
[4]கண் சாடையாயிருந்தேன்? சொல்லுங்கள்;
அப்படியுண்டானால் அதை உங்களுக்குத் திரு
4 பக் கொடுப்பேன் என்றான். அதற்கு அவர்
கள்: நீர் எங்களுக்கு அநியாயஞ்செய்யவும்
இல்லை; எங்களுக்கு இடுக்கண் செய்யவும்
இல்லை; ஒருவர் கையிலும் ஒன்றும் வாங்கவும்
5 இல்லை என்றார்கள். அதற்கு அவன்: [5]நீங்கள்
என் கையில் ஒன்றும் கண்டுபிடிக்கவில்லை
என்பதற்குக் கர்த்தர் உங்களுக்கு எதிராகச்
சாட்சியாயிருக்கிறார்; அவர் அபிஷேகம்பண்
ணினவரும் இன்று அதற்குச் சாட்சி என்
றான்; அதற்கு அவர்கள்: அவர் சாட்சிதான்
6 என்றார்கள். அப்புறம் சாமுவேல் ஜனங்களை
நோக்கி: மோசேயையும் ஆரோனையும் ஏற்
படுத்தினவரும், உங்கள் பிதாக்களை எகிப்து
தேசத்திலிருந்து புறப்படப்பண்ணினவரும்
7 [6]கர்த்தரே. இப்போதும் கர்த்தர் உங்களுக்
கும் உங்கள் பிதாக்களுக்கும் செய்துவந்த [7]எல்
லா நீதியான கிரியைகளைக்குறித்தும், நான்
கர்த்தருடைய சந்நிதியில் உங்களோடே [8]நியா
8 யம் பேசும்படிக்கு நீங்கள் நில்லுங்கள். யாக்
கோபு எகிப்திலே போயிருக்கும்போது, உங்
கள் பிதாக்கள் கர்த்தரை நோக்கி முறையிட்
டார்கள், [9]அப்பொழுது கர்த்தர் மோசேயை
யும் ஆரோனையும் அனுப்பினார்; அவர்கள்
உங்கள் பிதாக்களை எகிப்திலிருந்து அழைத்
துவந்து, அவர்களை இந்த ஸ்தலத்திலே குடி
9 யிருக்கப்பண்ணினார்கள். அவர்கள் தங்கள்
தேவனாகிய கர்த்தரை மறந்துபோகிறபோது,
[10]அவர் அவர்களை ஆத்சோரின் சேனாபதியா
கிய சிசெராவின் கையிலும், பெலிஸ்தரின்
கையிலும், மோவாபிய ராஜாவின் கையிலும்
விற்றுப்போட்டார்; இவர்கள் அவர்களுக்கு

[1] 10. 10, 17
[2] 8. 5, 19, 20: 10. 24
[3] எண். 16. 15. அப். 20. 33. 2 கொ. 12. 14. 1 தெச. 2. 5
[4] உபா. 16. 19
[5] யாத். 22. 4. யோ. 18. 38. அப். 23. 9: 24. 16, 20
[6] மீகா 6. 4
[7] நியா. 5. 11
[8] ஏசா. 1. 18: 5. 3, 4. மீகா 6. 2, 3
[9] யாத். 2. 23: 3. 10
[10] நியா. 4. 2: 10. 7: 13. 1
[11] நியா. 2. 13: 10. 10, 15, 16
[12] நியா. 6. 14, 32: 7. 13: 11. 1
[13] 11. 1, 2
[14] ஓசி. 13. 11
[15] யோசு. 24. 14. சங். 81. 12–14
[16] லேவி. 26. 14. உபா. 28. 15
[17] யாத். 14. 13, 31
[18] யோசு. 10. 12. யாக். 5. 16–18
[19] யாத். 14. 31. எஸ்றா 10. 9
[20] யாத். 9. 28. யாக். 5. 15. 1 யோ. 5. 16
* கட்டிக்கொண்டோம்

விரோதமாக யுத்தம்பண்ணினார்கள். ஆகை 10
யால் அவர்கள் கர்த்தரை நோக்கி முறை
யிட்டு: [11]நாங்கள் கர்த்தரை விட்டுப் பாகால்க
ளையும் அஸ்தரோத்தையும் சேவித்ததினாலே,
பாவம்செய்தோம்; இப்போதும் எங்கள் சத்து
ருக்களின் கைக்கு எங்களை நீங்கலாக்கி இரட்
சியும்; இனி உம்மைச் சேவிப்போம் என்றார்
கள். அப்பொழுது கர்த்தர் [12]எருபாகாலை 11
யும் பேதானையும் யெப்தாவையும் சாமுவே
லையும் அனுப்பி, நீங்கள் பயமில்லாமல் குடியி
ருக்கும்படிக்குச் சுற்றிலும் இருந்த உங்கள்
சத்துருக்களின் கைக்கும் உங்களை நீங்கலாக்கி
இரட்சித்தார். அம்மோன் புத்திரரின் ராஜா 12
வாகிய [13]நாகாஸ் உங்களுக்கு விரோதமாய்
வருகிறதை நீங்கள் கண்டபோது, உங்கள்
தேவனாகிய கர்த்தரே உங்களுக்கு ராஜாவா
யிருந்தும், நீங்கள் என்னை நோக்கி: அப்படி
யல்ல, ஒரு ராஜா எங்கள்மேல் ஆளவேண்
டும் என்றீர்கள். இப்போதும் நீங்கள் வேண் 13
டும் என்று விரும்பித் தெரிந்துகொண்ட
ராஜா, இதோ, இருக்கிறார்; இதோ, [14]கர்த்தர்
உங்களுக்கு ஒரு ராஜாவை ஏற்படுத்தினார்.
நீங்கள் கர்த்தருடைய வாக்குக்கு விரோதமாய்க் 14
கலகம்பண்ணாமல் கர்த்தருக்குப் பயந்து, [15]அவ
ரைச் சேவித்து, அவருடைய சத்தத்திற்குக்
கீழ்ப்படிந்தால், நீங்களும் உங்களை ஆளுகிற
ராஜாவும் உங்கள் தேவனாகிய கர்த்தரைப் பின்
பற்றுகிறவர்களாயிருப்பீர்கள். நீங்கள் கர்த் 15
தருடைய சத்தத்திற்குக் கீழ்ப்படியாமல், [16]கர்த்
தருடைய வாக்குக்கு விரோதமாய்க் கலகம்
பண்ணினீர்களானால், கர்த்தருடைய கை உங்
கள் பிதாக்களுக்கு விரோதமாயிருந்ததுபோல
உங்களுக்கும் விரோதமாயிருக்கும். இப்பொ 16
ழுது கர்த்தர் [17]உங்கள் கண்களுக்கு முன்பா
கச் செய்யும் பெரிய காரியத்தை நின்று பாருங்
கள். இன்று கோதுமை அறுப்பின் நாள் 17
அல்லவா? நீங்கள் உங்களுக்கு ஒரு ராஜாவைக்
கேட்டதினால், கர்த்தரின் பார்வைக்குச் செய்த
உங்களுடைய பொல்லாப்புப் பெரியதென்று
நீங்கள் கண்டு உணரும்படிக்கு, நான் கர்த்
தரை நோக்கி விண்ணப்பம் பண்ணுவேன்;
[18]அப்பொழுது இடிமுழக்கங்களையும் மழை
யையும் கட்டளையிடுவார் என்று சொல்லி,
சாமுவேல் கர்த்தரை நோக்கி விண்ணப்பம் 18
பண்ணினான்; அன்றையதினமே கர்த்தர் இடி
முழக்கங்களையும் மழையையும் கட்டளையிட்
டார்; [19]அப்பொழுது ஜனங்கள் எல்லாரும் கர்
த்தருக்கும் சாமுவேலுக்கும் மிகவும் பயந்து;
சாமுவேலைப் பார்த்து: நாங்கள் சாகாதபடிக்கு 19
உம்முடைய தேவனாகிய கர்த்தரிடத்தில் உம்
முடைய அடியாருக்காக [20]விண்ணப்பம் செய்
யும்; நாங்கள் செய்த எல்லாப் பாவங்களோடும்
எங்களுக்கு ஒரு ராஜா வேண்டும் என்று
கேட்ட இந்தப் பாவத்தையும் *கூட்டிக்கொண்
டோம் என்று ஜனங்கள் எல்லாரும் சொன்
னார்கள். அப்பொழுது சாமுவேல் ஜனங் 20
களை நோக்கி: பயப்படாதேயுங்கள்; நீங்கள்

இந்தப் பொல்லாப்பையெல்லாம் செய்தீர்கள்;
ஆகிலும் **கர்த்தரை** விட்டுப் [1]பின்வாங்காமல்
**கர்த்தரை** உங்கள் முழு இருதயத்தோடும்
21 சேவியுங்கள். விலகிப்போகாதிருங்கள்; [2]மற்
றப்படி பிரயோஜனமற்றதும் இரட்சிக்கமாட்
டாததுமாயிருக்கிற வீணானவைகளைப் பின்
பற்றுவீர்கள்; அவைகள் வீணானவைகளே.
22 **கர்த்தர்** உங்களைத் தமக்கு ஜனமாக்கிக்கொள்
ளப் பிரியமானபடியினால், **கர்த்தர்** தம்
முடைய [3]மகத்துவமான நாமத்தினிமித்தம்
23 தமது ஜனத்தைக் [4]கைவிடமாட்டார். நானும்
உங்களுக்காக [5]விண்ணப்பம் செய்யாதிருப்
பேனாகில் **கர்த்தருக்கு** விரோதமாகப் பாவஞ்
செய்கிறவனாயிருப்பேன்; அது எனக்குத்
தூரமாயிருப்பதாக; நன்மையும் செவ்வையு
மான வழியை நான் உங்களுக்குப் போதிப்
24 பேன். நீங்கள் எப்படியும் **கர்த்தருக்குப்** [6]பய
ந்து, உங்கள் முழு இருதயத்தோடும் உண்மை
யாய் அவரைச் சேவிக்கக்கடவீர்கள்; [7]அவர்
உங்களிடத்தில் எவ்வளவு மகிமையான காரி
யங்களைச் செய்தார் [8]என்பதைச் சிந்தித்துப்
25 பாருங்கள். நீங்கள் இன்னும் பொல்லாப்பைச்
செய்யவே செய்வீர்களானால், [9]நீங்களும்
உங்கள் ராஜாவும் நாசமடைவீர்கள் என்றான்.

**13** சவுல் ராஜ்யபாரம்பண்ணி, ஒரு வருஷ
மாயிற்று; அவன் இஸ்ரவேலை இரண்டாம்
2 வருஷம் அரசாண்டபோது, இஸ்ரவேலில்
மூவாயிரம்பேரைத் தனக்குத் தெரிந்துகொண்
டான்; அவர்களில் இரண்டாயிரம்பேர் சவு
லோடேகூட மிக்மாசிலும் பெத்தேல் மலையி
லும் ஆயிரம்பேர் யோனத்தானோடேகூடப்
பென்யமீன் நாட்டிலுள்ள [10]கிபியாவிலும்
இருந்தார்கள்; மற்ற ஜனங்களை அவரவர் கூடா
3 ரங்களுக்கு அனுப்பிவிட்டான். யோனத்தான்
*கேபாவிலே தாணையம் இருந்த பெலிஸ்தரை
முறிய அடித்தான்; பெலிஸ்தர் அதைக் கேள்
விப்பட்டார்கள்; ஆகையினால் இதை எபி
ரெயர் கேட்கக்கடவர்கள் என்று சவுல் தேச
4 மெங்கும் எக்காளம் ஊதுவித்தான். தாணை
யம் இருந்த பெலிஸ்தரைச் சவுல் முறிய அடித்
தான் என்றும், இஸ்ரவேலர் பெலிஸ்தருக்கு
[11]அருவருப்பானார்கள் என்றும், இஸ்ரவே
லெல்லாம கேள்விப்பட்டபோது, ஜனங்கள்
சவுலுக்குப் பின்செல்லும்படி கில்காலுக்கு
5 வரவழைக்கப்பட்டார்கள். பெலிஸ்தர் இஸ்ர
வேலோடு யுத்தம்பண்ணும்படி முப்பதினாயி
ரம் இரதங்களோடும், ஆறாயிரம் குதிரைவீர
ரோடும்; கடற்கரை மணலத்தனை ஜனங்களோ
டும் கூடிக்கொண்டுவந்து, பெத்தாவேனுக்குக்
கிழக்கான மிக்மாசிலே பாளயமிறங்கினார்கள்.
6 அப்பொழுது இஸ்ரவேலர் தங்களுக்கு
உண்டான இக்கட்டைக் கண்டபோது, ஜனங்
கள் தங்களுக்கு உண்டான நெருக்கத்தினாலே
கெபிகளிலும், முட்காடுகளிலும், கன்மலைகளி
லும், துருக்கங்களிலும், [12]குகைகளிலும் ஒளித்
7 துக்கொண்டார்கள். எபிரெயரில் சிலர்
யோர்தானையும் கடந்து, காத் நாட்டிற்கும்
கீலேயாத்தேசத்திற்கும் போனார்கள்; சவுலோ
இன்னும் கில்காலில் இருந்தான்; சகல ஜனங்
களும் பயந்துகொண்டு அவனுக்குப் பின்
சென்றார்கள். அவன் தனக்குச் சாமுவேல் 8
குறித்த காலத்தின்படி [13]ஏழுநாள்மட்டும் காத்
திருந்தான்; சாமுவேல் கில்காலுக்கு வர
வில்லை, ஜனங்கள் அவனை விட்டுச் சிதறிப்
போனார்கள். அப்பொழுது சவுல்: சர்வாங்க 9
தகனபலியையும் சமாதானபலிகளையும் என்
னிடத்தில் கொண்டுவாருங்கள் என்று சொ
ல்லி, சர்வாங்க தகனபலியைச் செலுத்தி
னான். அவன் சர்வாங்க தகனபலியிட்டு முடி 10
கிறபோது, இதோ, சாமுவேல் வந்தான்;
சவுல் அவனைச் சந்தித்து †வந்தனஞ்செய்ய
அவனுக்கு எதிர்கொண்டு போனான். நீர் 11
செய்தது என்ன என்று சாமுவேல் கேட்ட
தற்கு, சவுல்: ஜனங்கள் என்னைவிட்டுச் சித
றிப்போகிறதையும், குறித்த நாட்களின் திட்
டத்திலே நீர் வராததையும், பெலிஸ்தர் மிக்மா
சிலே கூடிவந்திருக்கிறதையும், நான் கண்ட
படியினாலே, கில்காலில் பெலிஸ்தர் எனக்கு 12
விரோதமாய் வந்துவிடுவார்கள் என்றும்,
நான் இன்னும் **கர்த்தருடைய** சமுகத்தை
நோக்கி விண்ணப்பம் பண்ணவில்லைஎன்றும்,
எண்ணித் துணிந்து, சர்வாங்க தகனபலி
யைச் செலுத்தினேன் என்றான். சாமுவேல் 13
சவுலைப் பார்த்து: புத்தியீனமாய்ச் செய்தீர்;
[14]உம்முடைய தேவனாகிய **கர்த்தர்** உமக்கு
விதித்த கட்டளையைக் கைக்கொள்ளாமற்போ
னீர்; மற்றப்படி **கர்த்தர்** இஸ்ரவேலின்மேல்
உம்முடைய ராஜ்யபாரத்தை என்றைக்கும்
ஸ்திரப்படுத்துவார். இப்போதோ உம்மு 14
டைய ராஜ்யபாரம் நிலைநிற்காது; [15]**கர்த்தர்**
தம்முடைய இருதயத்திற்கு ஏற்ற ஒரு மனுஷ
னைத் தமக்குத் தேடி, அவனைக் **கர்த்தர்** தம்மு
டைய ஜனங்கள்மேல் தலைவனாயிருக்கக் கட்
டளையிட்டார்; **கர்த்தர்** உமக்கு விதித்த கட்ட
ளையை நீர் கைக்கொள்ளவில்லையே என்று
சொன்னான்.

சாமுவேல் எழுந்திருந்து, கில்காலை விட்டு, 15
பென்யமீன் நாட்டிலுள்ள கிபியாவுக்குப்
போனான்; சவுல் தன்னோடேகூட இருக்கிற
ஜனத்தைத் தொகைபார்க்கிறபோது, [16]ஏறக்கு
றைய அறுநூறுபேர் இருந்தார்கள். சவுலும் 16
அவன் குமாரனாகிய யோனத்தானும் அவர்க
ளோடேகூட இருக்கிற ஜனங்களும் பென்
யமீன் நாட்டிலுள்ள ‡கிபியாவில் இருந்து
விட்டார்கள்; பெலிஸ்தரோ மிக்மாசிலே
பாளயமிறங்கியிருந்தார்கள். கொள்ளைக்காரர் 17
பெலிஸ்தரின் பாளயத்திலிருந்து மூன்று
படையாய்ப் புறப்பட்டு வந்தார்கள்; ஒரு படை
[17]ஒப்ராவழியாய்ச் சூவால் நாட்டிற்கு நேரா
கப் போயிற்று. வேறொரு படை [18]பெத்தொ 18
ரோன் வழியாய்ப் போயிற்று; வேறொரு
படை வனாந்தரத்தில் இருக்கிற [19]செபோயீ
மின் பள்ளத்தாக்குக்கு எதிரான எல்லை வழி
யாய்ப் போயிற்று.

1 உபா. 11. 16
2 எரே. 16. 19. ஆப. 2. 18. 1 கொ. 8. 4
3 எசே. 20. 9, 14
4 புல. 3. 31, 32
5 அப். 12, 5. ரோ. 1. 9. கொலோ. 1. 9
6 பிர. 12, 13
7 உபா. 10, 21
8 ஏசா. 5. 12
9 உபா. 28. 36. யோசு. 24. 20
10 10. 26
* மலை. 10, 5
11 ஆதி. 34. 30. யாத். 5. 21
12 நியா. 6. 2
13 10. 8
† வாழ்த்துதல் சொல்ல
14 15. 11
15 15. 28. சங். 89. 20. அப். 13. 22
16 14. 2
‡ கேபாவிலே 3. வச.
17 யோசு. 18. 23.
18 யோசு. 16. 3
19 நெகே. 11. 34

19 *எபிரெயர் பட்டயங்களையாகிலும் ஈட்டிக
ளையாகிலும் உண்டுபண்ணுதபடிக்குப் பார்த்
துக்கொள்ளவேண்டும் என்று பெலிஸ்தர்
சொல்லியிருந்தபடியால், இஸ்ரவேல் தேசத்
தில் எங்கும் ஒரு கொல்லன் அகப்படவில்லை.
20 இஸ்ரவேலர் யாவரும் அவரவர் தங்கள் கொழு
விரும்புகளையும், தங்கள் மண்வெட்டிகளையும்,
தங்கள் கோடரிகளையும், தங்கள் கடப்பாரை
களையும் தீட்டிக் கூர்மையாக்குகிறதற்கு, பெ
லிஸ்தரிடத்துக்குப் போகவேண்டியதாயிருந்
21 தது. கடப்பாரைகளையும், மண்வெட்டிகளை
யும், முக்கூருள்ள ஆயுதங்களையும், கோடரி
களையும், தாற்றுக்கோல்களையும் கூர்மையாக்
குகிறதற்கு அரங்கள்மாத்திரம் அவர்களிடத்
22 தில் இருந்தது. யுத்தநாள் வந்தபோது, சவு
லுக்கும் அவன் குமாரனுகிய யோனத்தா
னுக்குமேயன்றி, [1]சவுலோடும் யோனத்தா
ேனுடும் இருக்கிற ஜனங்களில் ஒருவர் கையி
லும் பட்டயமும் ஈட்டியும் இல்லாதிருந்தது.
23 பெலிஸ்தரின் பாளயம் மிக்மாசிலிருந்துபோ
கிற வழிமட்டும் பரம்பியிருந்தது.

**14** ஒருநாள் சவுலின் குமாரனுகிய யோனத்
தான் தன் ஆயுததாரியாகிய வாலிபனை நோ
க்கி: நமக்கு எதிராக அந்தப்பக்கத்தில் இருக்
கிற பெலிஸ்தரின் தாணையத்திற்குப் போ
வோம் வா என்று சொன்னுன்; அதை அவன்
2 தன் தகப்பனுக்கு அறிவிக்கவில்லை. சவுல்
கிபியாவின் கடைசிமுனையாகிய மிக்ரோனி
லே ஒரு மாதளமரத்தின்கீழ் இருந்தான்; அவ
னேடேகூட இருந்த ஜனங்கள் ஏறக்குறைய
3 [2]அறுநூறுபேராயிருந்தார்கள். சீலோவிலே
**கர்த்தருடைய** ஆசாரியனுயிருந்த ஏலியின்
குமாரனுகிய பினெகாசுக்குப் பிறந்த இக்க
போத்தின் சகோதரனும் அகிதூபின் குமார
னுமாகிய *அகியா என்பவன் ஏபோத்தைத்
தரித்தவனுயிருந்தான்; யோனத்தான் போன
4 தை ஜனங்கள் அறியாதிருந்தார்கள். யோனத்
தான் பெலிஸ்தரின் [3]தாணையத்திற்குப் போ
கப்பார்த்த வழிகளின் நடுவே, இந்தப்பக்கம்
ஒரு செங்குத்தான பாறையும், அந்தப்பக்கம்
ஒரு செங்குத்தான பாறையும் இருந்தது; ஒன்
றுக்குப் போசேஸ் என்று பேர், மற்றொன்
5 றுக்குச் சேனே என்று பேர். அந்தப் பாறை
களில் ஒன்று வடக்கே மிக்மாசுக்கு எதிரா
கவும், மற்றொன்று தெற்கே கிபியாவுக்கு
6 எதிராகவும் இருந்தது. யோனத்தான் தன்
ஆயுததாரியாகிய வாலிபனை நோக்கி: விருத்த
சேதனம் இல்லாதவர்களுடைய அந்தத் தாணை
யத்திற்குப் போவோம் வா; ஒருவேளை **கர்த்
தர்** நமக்காக ஒரு காரியம் செய்வார்; [4]அநேகம்
பேரைக்கொண்டாகிலும், கொஞ்சம்பேரைக்
கொண்டாகிலும், இரட்சிக்கக் **கர்த்தருக்குத்**
7 தடையில்லை என்றுன். அப்பொழுது அவன்
ஆயுததாரி அவனைப் பார்த்து: உம்முடைய
இருதயத்தில் இருக்கிறபடியெல்லாம் செய்
யும்; அப்படியே போம்; இதோ, உம்முடைய
மனதுக்கு ஏற்றபடி நானும் உம்மோடேகூட
வருகிறேன் என்றுன். அதற்கு யோனத்தான்: 8
இதோ, நாம் கடந்து, அந்த மனுஷரிடத்திற்
குப் போகிறவர்கள்போல அவர்களுக்கு நம்
மைக் காண்பிப்போம். நாங்கள் உங்களிடத் 9
துக்கு வருமட்டும் நில்லுங்கள் என்று நம்மோ
டே சொல்வார்களானுல், நாம் அவர்களிடத்
துக்கு ஏறிப்போகாமல், நம்முடைய நிலையி
லே நிற்போம். எங்களிடத்துக்கு ஏறிவாருங் 10
கள் என்று சொல்வார்களானுல், ஏறிப்போ
வோம்; **கர்த்தர்** அவர்களை நம்முடைய கை
யில் ஒப்புக்கொடுத்தார்; இது நமக்கு [5]அடை
யாளம் என்றுன். அப்படியே அவர்கள் இரு 11
வரும் பெலிஸ்தரின் தாணையத்திற்குமுன்
†தங்களைக் காண்பித்தார்கள்; அப்பொழுது
பெலிஸ்தர்: இதோ, எபிரெயர் ஒளித்துக்
கொண்டிருந்த வளைகளை விட்டுப் புறப்படு
கிறுர்கள் என்று சொல்லி, தாணையம் இருக் 12
கிற மனுஷர் யோனத்தானையும் அவன் ஆயு
ததாரியையும் பார்த்து: எங்களிடத்துக்கு ஏறி
வாருங்கள், உங்களுக்குப் புத்தி கற்பிப்போம்
என்றுர்கள்; அப்பொழுது யோனத்தான் தன்
ஆயுததாரியை நோக்கி: என் பின்னுலே
ஏறிவா; **கர்த்தர்** அவர்களை இஸ்ரவேலின்
கையில் ஒப்புக்கொடுத்தார் என்று சொல்லி,
யோனத்தான் தன் கைகளாலும் தன் கால்க 13
ளாலும் தவழ்ந்து ஏறினுன்; அவன் ஆயுததாரி
அவன் பின்னுலே ஏறினுன்; அப்பொழுது
அவர்கள் யோனத்தானுக்கு முன்பாக மடிந்து
விழுந்தார்கள்; அவன் ஆயுததாரியும் அவன்
பின்னுலே வெட்டிக்கொண்டே போனுன்.
யோனத்தானும் அவன் ஆயுததாரியும் அடித்த 14
அந்த முந்தின அடியிலே ஏறக்குறைய இரு
பதுபேர் [6]அரையேர் நிலமான விசாலத்திலே
விழுந்தார்கள். அப்பொழுது பாளயத்திலும், 15
வெளியிலும், சகல ஜனங்களிலும், [7]பயங்கரம்
உண்டாய், தாணையம் இருந்தவர்களும் கொள்
ளையிடப்போன தண்டிலுள்ளவர்களுங்கூடத்
திகில் அடைந்தார்கள்; பூமியும் அதிர்ந்தது;
[8]அது தேவனுல் உண்டான பயங்கரமாயிருந்
தது.
பென்யமீன் நாட்டிலுள்ள கிபியாவிலே 16
சவுலுக்கு இருந்த ஜாமக்காரர் பார்த்து: இதோ,
அந்த ஏராளமான கூட்டம் கலைந்து, ஒருவர்
மேல் ஒருவர் விழுகிறதைக் கண்டார்கள்.
அப்பொழுது சவுல் தன்னேடேகூட இருக் 17
கிற ஜனங்களை நோக்கி: நம்மிடத்திலிருந்து
போனவர்கள் யார் என்று இலக்கம் பாருங்கள்
என்றுன்; அவர்கள் இலக்கம் பார்க்கிறபோது,
இதோ, யோனத்தானும் அவன் ஆயுததாரியும்
அங்கே இல்லை என்று கண்டார்கள். அப் 18
பொழுது சவுல் அகியாவை நோக்கி: தேவனு
டைய பெட்டியைக் கொண்டுவா என்றுன்;
தேவனுடைய பெட்டி அந்நாட்களில் இஸ்ர
வேல் புத்திரரிடத்தில் இருந்தது. இப்படிச் 19
சவுல் ஆசாரியனேடே பேசுகையில், [9]பெலிஸ்
தரின் பாளயத்தில் உண்டான கலகம் வரவர
அதிகரித்தது; அப்பொழுது சவுல் ஆசாரிய

[1] நியா. 5. 8
[2] 13. 15
* அகிமெலேக். 22. 9
[3] 13. 23
[4] உபா. 32. 35. நியா. 7. 4, 7. 2 நாளா. 14. 11
[5] ஆதி. 24. 14
† வெளிப்படுத்தினார்கள்
[6] நியா. 7. 21
[7] 1 இரா. 7. 7. யோபு 18. 11
[8] ஆதி. 35. 5
[9] எண். 27. 21

20 னைப் பார்த்து: இருக்கட்டும் என்றான். சவு
லும் அவனோடிருந்த ஜனங்களும் கூட்டங்
கூடிப் போர்க்களத்திற்குப் போனார்கள்; [1]ஒரு
வர் பட்டயம் ஒருவருக்கு விரோதமாயிருந்த
21 படியால் மகா அமளியுண்டாயிற்று. இதற்கு
முன் பெலிஸ்தருடன் கூடி அவர்களோடே
கூடப் பாளயத்திலே திரிந்துவந்த எபிரெய
ரும், சவுலோடும் யோனத்தானோடும் இருக்
கிற இஸ்ரவேலரோடே கூடிக்கொண்டார்
22 கள். எப்பிராயீம் மலைகளில் [2]ஒளித்துக்கொ
ண்டிருந்த சகல இஸ்ரவேலரும் பெலிஸ்தர்
முறிந்தோடுகிறதைக் கேள்விப்பட்டபோது,
யுத்தத்திலே அவர்களை நெருங்கித் தொடர்ந்
23 தார்கள். இப்படிக் [3]**கர்த்தர்** அன்றையதி
னம் இஸ்ரவேலை இரட்சித்தார்; அந்த யுத்தம்
24 பெத்தாவேன்மட்டும் நடந்தது. இஸ்ரவேலர்
அன்றையதினம் மிகுந்த வருத்தம் அடைந்
தார்கள்: நான் என் சத்துருக்கள் கையிலே
பழிவாங்கவேண்டும், சாயங்காலமட்டும் பொ
றுக்காமல் எவன் போஜனம் செய்கிறானோ,
அவன் சபிக்கப்பட்டவன் என்று சவுல் ஜன
ங்களுக்கு [4]ஆணையிட்டுச் சொல்லியிருந்தபடி
யால், ஜனங்களில் ஒருவரும் எவ்வளவேனும்
25 போஜனம் பண்ணாதிருந்தார்கள். தேசத்து
ஜனங்கள் எல்லாரும் ஒரு காட்டிலே வந்தார்
கள்; [5]அங்கே வெளியிலே தேன்கூடு கட்டியி
26 ருந்தது. ஜனங்கள் காட்டிலே வந்தபோது,
இதோ, தேன் ஒழுகிக்கொண்டிருந்தது; ஆனா
லும் ஒருவனும் அதைத் தன் கையினாலே
தொட்டுத் தன் வாயில் வைக்கவில்லை; ஜனங்
கள் அந்த ஆணையினிமித்தம் பயப்பட்டார்
27 கள். யோனத்தான் தன் தகப்பன் ஜனங்க
ளுக்கு ஆணையிட்டதைக்கேள்விப்படவில்லை;
அவன் தன் கையிலிருந்த கோலை நீட்டி,
அதின் நுனியினாலே தேன்கூட்டைக் குத்தி,
அதை எடுத்துத் தன் வாயிலே போட்டுக்
கொண்டான்; [6]அதினால் அவன் கண்கள்
28 தெளிந்தது. அப்பொழுது ஜனங்களில் ஒரு
வன்: இன்றைக்குப் போஜனம் சாப்பிடுகிற
வன் சபிக்கப்பட்டவன் என்று உம்முடைய
தகப்பனார் ஜனங்களுக்கு உறுதியாய் ஆணை
யிட்டிருக்கிறார்; ஆகையினால் ஜனங்கள் விடா
29 ய்த்திருக்கிறார்கள் என்றான். அப்பொழுது
யோனத்தான்: என் தகப்பன் தேசத்தின் ஜன
ங்களைக் கலக்கப்படுத்தினார்; நான் இந்தத்
தேனிலே கொஞ்சம் ருசிபார்த்ததினாலே, என்
30 கண்கள் தெளிந்ததைப் பாருங்கள். இன்றை
யதினம் ஜனங்கள் தங்களுக்கு அகப்பட்ட
தங்கள் சத்துருக்களின் கொள்ளையிலே ஏதா
கிலும் புசித்திருந்தால், எத்தனை நலமாயிருக்
கும்; பெலிஸ்தருக்குள் உண்டான சங்காரம்
31 மிகவும் அதிகமாயிருக்குமே என்றான். அவர்
கள் அன்றையதினம் மிக்மாசிலிருந்து ஆய
லோன்மட்டும் பெலிஸ்தரை முறிய அடித்த
போது, ஜனங்கள் மிகவும் விடாய்த்திருந்தார்
32 கள். அப்பொழுது ஜனங்கள் கொள்ளையின்
மேல் பாய்ந்து, ஆடுகளையும் மாடுகளையும் கன்

[1] நியா. 7. 22
[2] 13. 6
[3] யாத். 14. 30. சங். 44. 6, 7. ஓசி. 1. 7
[4] யோசு. 6. 26
[5] யாத். 3. 8. எண். 13. 27. மத். 3. 4
[6] 30. 12. நீதி. 25. 16
[7] லேவி. 3. 17
[8] 7. 17
[9] 10. 19. யோசு. 7. 14. ழ
[10] 2 சாமு. 12. 5
[11] நீதி. 16. 33. அப். 1. 24

றுக்குட்டிகளையும் பிடித்து, தரையிலே போ
ட்டு அடித்து, [7]இரத்தத்தோடும் புசித்தார்கள்.
அப்பொழுது: இதோ, இரத்தத்தோடிருக்கிற 33
தைப் புசிக்கிறதினால் ஜனங்கள் **கர்த்தருக்கு**
ஏலாத பாவம் செய்கிறார்கள் என்று சவுலுக்கு
அறிவித்தார்கள்; அவன்: நீங்கள் துரோகம்
பண்ணினீர்கள்; இப்போதே ஒரு பெரிய
கல்லை என்னிடத்தில் உருட்டிக்கொண்டுவா
ருங்கள். நீங்கள் ஜனத்திற்குள்ளே போய், 34
இரத்தத்தோடிருக்கிறதைச் சாப்பிடுகிறதினா
லே, **கர்த்தருக்கு** ஏலாத பாவம் செய்யாத
படிக்கு, அவரவர் தங்கள் மாட்டையும் அவர
வர் தங்கள் ஆட்டையும் என்னிடத்தில் கொண்
டுவந்து, இங்கே அடித்து, பின்பு சாப்பிட
வேண்டும் என்று அவர்களுக்குச் சொல்லுங்
கள் என்று கட்டளையிட்டான்; ஆகையால்
ஜனங்கள் எல்லாரும் அவரவர் தங்கள் மாடு
களை அன்று ராத்திரி தாங்களே கொண்டுவ
ந்து, அங்கே அடித்தார்கள். பின்பு சவுல் **கர்த்** 35
**தருக்கு** ஒரு பலிபீடத்தைக் கட்டினான்; [8]அது
அவன் **கர்த்தருக்குக்** கட்டின முதலாவது
பலிபீடம்.

அதற்குப்பின்பு சவுல்: நாம் இந்த ராத்தி 36
ரியிலே பெலிஸ்தரைத் தொடர்ந்துபோய்,
விடியற்கால வெளிச்சமாகுமட்டும் அவர்க
ளைக் கொள்ளையிட்டு, அவர்களில் ஒருவரை
யும் மீதியாக வைக்காதிருப்போமாக என்
றான். அதற்கு அவர்கள்: உம்முடைய கண்க
ளுக்கு நலமானபடியெல்லாம் செய்யும் என்
றார்கள். ஆசாரியனோ: நாம் இங்கே தேவசந்
நிதியில் சேர்க்கடவோம் என்றான். அப்ப 37
டியே: பெலிஸ்தரைத் தொடர்ந்து போகலா
மா? அவர்களை இஸ்ரவேலின் கையில் ஒப்புக்
கொடுப்பீரா? என்று சவுல் தேவனிடத்தில்
விசாரித்தான்; அவர் அந்த நாளிலே அவ
னுக்கு மறு உத்தரவு அருளவில்லை. அப் 38
பொழுது சவுல்: ஜனத்தின் தலைவர்களே,
[9]நீங்கள் எல்லாரும் இங்கே சேர்ந்துவந்து,
இன்று இந்தப் பாவம் எதினாலே உண்டா
யிற்று என்று பார்த்தறியுங்கள். அது என் 39
குமாரனாகிய யோனத்தானிடத்தில் காணப்
பட்டாலும், அவன் சாகவே சாகவேண்டும்
என்று இஸ்ரவேலை இரட்சிக்கிற **கர்த்த**
**ருடைய** [10]ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேன்
என்றான்; சகல ஜனங்களுக்குள்ளும் ஒருவ
னும் அவனுக்குப் பிரதியுத்தரம் சொல்ல
வில்லை. அதற்குப்பின் அவன் இஸ்ரவேலர் 40
எல்லாரையும் நோக்கி: நீங்கள் அந்தப் பக்கத்
திலே இருங்கள்; நானும் என் குமாரனாகிய
யோனத்தானும் இந்தப் பக்கத்தில் இருப்
போம் என்றான்; ஜனங்கள் சவுலைப் பார்த்து:
உம்முடைய கண்களுக்கு நலமானபடி செய்
யும் என்றார்கள். அப்பொழுது சவுல் இஸ்ர 41
வேலின் தேவனாகிய **கர்த்தரை** நோக்கி: [11]நிதா
னமாய்க் கட்டளையிட்டு யதார்த்தத்தை விளங்
கப்பண்ணும் என்றான்; அப்பொழுது யோ
னத்தான்மேலும் சவுலின்மேலும் சீட்டு விழுந்

42 தது, ஜனங்களோ தப்பினார்கள். எனக்கும்
என் குமாரனாகிய யோனத்தானுக்கும் சீட்டுப்
போடுங்கள் என்று சவுல் சொன்னபோது,
43 யோனத்தான்மேல் சீட்டு விழுந்தது. அப்பொ
ழுது சவுல் யோனத்தானைப் பார்த்து: [1]நீ செய்
தது என்ன? எனக்குச் சொல் என்று கேட்
டான். அதற்கு யோனத்தான்: என் கையில்
இருக்கிற கோலின் நுனியினாலே கொஞ்சம்
தேன் எடுத்து ருசிபார்த்தேன்; [2]அதற்காக
44 நான் சாகவேண்டும் என்றான். அப்பொ
ழுது சவுல்: யோனத்தானே, நீ சாகத்தான்
வேண்டும்; [3]இல்லாவிட்டால் தேவன் எனக்கு
அதற்குச் சரியாகவும் அதற்கு அதிகமாகவும்
45 செய்யக்கடவர் என்றான். ஜனங்களோ சவுலை
நோக்கி: இஸ்ரவேலிலே இந்தப் பெரிய இர
ட்சிப்பைச் செய்த யோனத்தான் கொலைசெய்
யப்படலாமா? [4]அது கூடாது; அவன் தலை
யில் இருக்கிற ஒரு மயிரும் தரையிலே விழப்
போகிறதில்லை என்று **கர்த்தருடைய** ஜீவனைக்
கொண்டு ஆணையிட்டுச் சொல்லுகிறோம்;
தேவன் துணைநிற்க அவன் இன்று காரியத்
தை நடப்பித்தான் என்றார்கள்; அப்படியே
யோனத்தான் சாகாதபடிக்கு, ஜனங்கள் அவ
46 னைத் தப்புவித்தார்கள். சவுல் பெலிஸ்தரைத்
தொடராமல் திரும்பிவிட்டான்; பெலிஸ்தரும்
தங்கள் ஸ்தலத்திற்குப் போய்விட்டார்கள்.
47 இப்படிச் சவுல் இஸ்ரவேலை ஆளுகிற ராஜ்
யபாரத்தைப் பெற்றுக்கொண்டு, சுற்றிலும்
இருக்கிற தன்னுடைய எல்லாச் சத்துருக்களு
மாகிய மோவாபியருக்கும், [5]அம்மோன் புத்தி
ரருக்கும், ஏதோமியருக்கும், [6]சோபாவின்
ராஜாக்களுக்கும், பெலிஸ்தருக்கும் விரோத
மாக யுத்தம்பண்ணி, எவர்கள்மேல் படையெ
டுத்தானோ, அவர்களையெல்லாம் அடக்கினான்.
48 அவன் பலத்து, [7]அமலேக்கியரை முறிய
அடித்து, இஸ்ரவேலரைக் கொள்ளையிடுகிற
யாவர் கைக்கும் அவர்களை நீங்கலாக்கி இரட்
சித்தான்.
49 சவுலுக்கு இருந்த குமாரர்: [8]யோனத்தான்,
இஸ்வி, மல்கிசூவா என்பவர்கள்; அவனுடைய
இரண்டு குமாரத்திகளில், மூத்தவள் பேர்
50 மேராப், இளையவள் பேர் மீகாள். சவுலு
டைய மனைவியின் பேர் அகினோவாம், அவள்
அகிமாசின் குமாரத்தி; அவனுடைய சேனா
பதியின் பேர் அப்னேர், அவன் சவுலுடைய
51 சிறிய தகப்பனாகிய நேரின் குமாரன். கீஸ்
சவுலின் [9]தகப்பன்; அப்னேரின் தகப்பனா
52 கிய நேர் ஆபியேலின் குமாரன். சவுல் இரு
ந்த நாளெல்லாம் பெலிஸ்தரின்மேல் கடின
மான யுத்தம் நடந்தது; சவுல் ஒரு பராக்கிரம
சாலியையாகிலும் ஒரு பலசாலியையாகிலும்
காணும்போது, அவர்கள் எல்லாரையும் [10]தன்
னிடமாகச் சேர்த்துக்கொள்ளுவான்.
**15** பின்பு சாமுவேல் சவுலை நோக்கி: இஸ்ர
வேலராகிய தம்முடைய ஜனங்கள்மேல் உம்
மை ராஜாவாக [11]அபிஷேகம்பண்ணுகிறதற்
குக் **கர்த்தர்** என்னை அனுப்பினாரே; இப்
போதும் **கர்த்தருடைய** வார்த்தைகளின் சத்
தத்தைக் கேளும்: சேனைகளின் **கர்த்தர்** 2
சொல்லுகிறது என்னவென்றால், [12]இஸ்ரவே
லர் எகிப்திலிருந்து வந்தபோது, அமலேக்கு
அவர்களுக்கு வழிமறித்த செய்கையை மன
திலே வைத்திருக்கிறேன். இப்போதும் நீ 3
போய், அமலேக்கை மடங்கடித்து, [13]அவ
னுக்கு உண்டான எல்லாவற்றையும் சங்கரி
த்து, அவன்மேல் இரக்கம் வைக்காமல், புரு
ஷரையும், ஸ்திரீகளையும், பிள்ளைகளையும்,
குழந்தைகளையும், மாடுகளையும், ஆடுகளையும்,
ஒட்டகங்களையும், கழுதைகளையும் கொன்று
போடக்கடவாய் என்கிறார் என்று சொன்
னான்.

அப்பொழுது சவுல்: இதை ஜனங்களுக்கு 4
அறியப்படுத்தி, தெலாயிமிலே அவர்களைத்
தொகைபார்த்தான்; அவர்கள் இரண்டு லட்
சம் காலாட்களும், யூதா ஜனங்கள் பதினா
யிரம்பேருமாயிருந்தார்கள். சவுல் அமலேக் 5
குடைய பட்டணமட்டும் வந்து, பள்ளத்தாக்
கிலே ஒரு பதிவிடையை வைத்தான். சவுல் 6
கேனியரை [14]நோக்கி: நான் அமலேக்கியரோ
டேகூட உங்களையும் வாரிக்கொள்ளாதபடி
க்கு, [15]நீங்கள் அவர்கள் நடுவிலிருந்து புறப்
பட்டு விலகிப்போங்கள்; இஸ்ரவேல் எகிப்தி
லிருந்து வந்தபோது, நீங்கள் அவர்கள் எல்
லாருக்கும் [16]தயவுசெய்தீர்கள் என்றான்; அப்
படியே கேனியர் அமலேக்கியரின் நடுவிலி
ருந்து விலகிப்போனார்கள். அப்பொழுது 7
சவுல்: [17]ஆவிலா துவக்கி எகிப்திற்கு எதிரே
யிருக்கிற சூருக்குப் போகும் எல்லைமட்டும்
இருந்த அமலேக்கியரை மடங்கடித்து, அம 8
லேக்கியரின் ராஜாவாகிய ஆகாகை உயிரோ
டே பிடித்தான்; ஜனங்கள் யாவரையும் பட்
டயக்கருக்கினாலே சங்காரம் பண்ணினான்.
சவுலும் ஜனங்களும் [18]ஆகாகையும், ஆடுமாடுக 9
ளில் முதல்தரமானவைகளையும், இரண்டாந்
தரமானவைகளையும், ஆட்டுக்குட்டிகளையும்,
நலமான எல்லாவற்றையும், அழித்துப்போட
மனதில்லாமல் தப்பவைத்து, அற்பமானவை
களும் உதவாதவைகளுமான சகல வஸ்துகளை
யும் முற்றிலும் அழித்துப்போட்டான்.

அப்பொழுது **கர்த்தருடைய** வார்த்தை சா 10
முவேலுக்கு உண்டாகி, அவர் சொன்னது:
நான் சவுலை ராஜாவாக்கினது எனக்கு [19]மனஸ் 11
தாபமாயிருக்கிறது; அவன் என்னைவிட்டுத்
திரும்பி, என் வார்த்தைகளை நிறைவேற்றா
மல் போனான் என்றார்; அப்பொழுது சாமு
வேல் மனம் நொந்து, இராமுழுதும் **கர்த்த
ரை** நோக்கிக் கூப்பிட்டான். மறுநாள் அதி 12
காலமே சாமுவேல் சவுலைச் சந்திக்கப் போ
னான்; அப்பொழுது சவுல் [20]கர்மேலுக்கு வந்து,
தனக்கு ஒரு ஜெயஸ்தம்பம் நாட்டி, பின்பு
பல இடங்களில் சென்று கில்காலுக்குப் போ
னான் என்று, சாமுவேலுக்கு அறிவிக்கப்பட்
டது. சாமுவேல் சவுலினிடத்தில் போனான்; 13
சவுல் அவனை நோக்கி: நீர் **கர்த்தரால்** [21]ஆசிர்

[1] யோசு. 7. 19
[2] 27. வச.
[3] ரூத். 1. 17
[4] 2 சாமு. 14. 11. 1 இரா. 1. 52. லூ. 21. 18
[5] 11. 11
[6] 2 சாமு. 10. 6
[7] 15. 3, 7
[8] 31. 2. 1 நாளா. 8. 33
[9] 9. 1, 2
[10] 8. 11
[11] 9. 16
[12] யாத். 17. 8, 14. எண். 24 20. உபா. 25. 17–19
[13] லேவி. 27. 28, 29. யோசு. 6. 17, 21
[14] நியா. 1–16. 4. 11
[15] வெளி. 18. 4
[16] எண். 10. 29, 32. 2 தீமோ. 1. 16
[17] ஆதி. 2. 11; 16. 7; 25. 28
[18] 1 இரா. 20. 30. ஷ
[19] ஆதி. 6. 6, 7. 2 சாமு. 24. 16. எரே. 18. 8, 10
[20] 1 இரா. 18. 42
[21] ரூத். 3. 10

வதிக்கப்பட்டவர்; **கர்த்தருடைய** [1]வார்த்தை
14 யை நிறைவேற்றினேன் என்றான். அதற்
குச் சாமுவேல்: அப்படியானால் என் காது
களில் விழுகிற ஆடுகளின் சத்தமும், எனக்
குக் கேட்கிற மாடுகளின் சத்தமும் என்ன
15 என்றான். அதற்குச் சவுல்: அமலேக்கியரி
டத்திலிருந்து அவைகளைக் கொண்டுவந்தார்
கள்; ஜனங்கள் ஆடுமாடுகளில் நலமானவை
களை உம்முடைய தேவனாகிய **கர்த்தருக்குப்**
பலியிடும்படிக்குத் தப்பவைத்தார்கள்; மற்ற
வைகளை முற்றிலும் அழித்துப்போட்டோம்
16 என்றான். அப்பொழுது சாமுவேல்: அந்தப்
பேச்சை விடும், **கர்த்தர்** இந்த இராத்திரியி
லே எனக்குச் சொன்னதை உமக்கு அறிவிக்
கிறேன் என்று சவுலோடே சொன்னான்.
17 அவன்: சொல்லும் என்றான். அப்பொழுது
சாமுவேல்: [2]நீர் உம்முடைய பார்வைக்குச்
சிறியவராயிருந்தபோது அல்லவோ இஸ்ர
வேல் கோத்திரங்களுக்குத் தலைவரானீர்; **கர்**
**த்தர்** உம்மை இஸ்ரவேலின்மேல் ராஜாவாக
18 அபிஷேகம்பண்ணுவித்தாரே. இப்போதும்
**கர்த்தர்**: நீ போய் அமலேக்கியராகிய அந்தப்
பாவிகளைச் சங்கரித்து, அவர்களை நிர்மூலமா
க்கித்தீருமட்டும், அவர்களோடு யுத்தம்பண்ணு
என்று சொல்லி, உம்மை அந்த வழியாய்
19 அனுப்பினார். இப்படியிருக்க, நீர் **கர்த்தரு**
**டைய** சொல்லைக் கேளாமல், கொள்ளையின்
மேல் பறந்து, **கர்த்தருடைய** பார்வைக்குப்
பொல்லாப்பானதைச் செய்தது என்ன என்
20 றான். சவுல் சாமுவேலை நோக்கி: [3]நான்
**கர்த்தருடைய** சொல்லைக் கேட்டு, **கர்த்தர்**
என்னை அனுப்பின வழியாய்ப் போய், அம
லேக்கின் ராஜாவாகிய ஆகாகைக் கொண்டு
வந்து, அமலேக்கியரைச் சங்காரம்பண்ணி
21 னேன். ஜனங்களோ உம்முடைய தேவனா
கிய **கர்த்தருக்குக்** கில்காலிலே பலியிடுகிறதற்
காக, [4]கொள்ளையிலே சாபத்தீடாகும் ஆடுமா
டுகளிலே பிரதானமானவைகளைப் பிடித்துக்
22 கொண்டு வந்தார்கள் என்றான். அதற்குச்
சாமுவேல்: [5]**கர்த்தருடைய** சத்தத்திற்குக்
கீழ்ப்படிகிறதைப்பார்க்கிலும், சர்வாங்க தக
னங்களும் பலிகளும் **கர்த்தருக்குப்** பிரியமா
யிருக்குமோ? [6]பலியைப்பார்க்கிலும் கீழ்ப்படி
தலும், ஆட்டுக்கடாக்களின் நிணத்தைப்பார்க்
23 கிலும் செவிகொடுத்தலும் உத்தமம். இரண்
டகம்பண்ணுதல்[7]பில்லிசூனியபாவத்திற்கும்,
முரட்டாட்டம்பண்ணுதல் அவபக்திக்கும்
[8]விக்கிரகாராதனைக்கும் சரியாய் இருக்கிறது;
நீர் **கர்த்தருடைய** வார்த்தையைப் புறக்கணித்
தபடியினாலே, அவர் உம்மை ராஜாவாயிராத
படிக்குப் புறக்கணித்துத் தள்ளினார் என்றான்.
24 அப்பொழுது சவுல் சாமுவேலை நோக்கி:
நான் **கர்த்தருடைய** கட்டளையையும் உம்மு
டைய வார்த்தைகளையும் மீறினதினாலே பா
வஞ்செய்தேன்; [9]நான் ஜனங்களுக்குப்பயந்து,
25 அவர்கள் சொல்லைக் கேட்டேன். இப்போ
தும் நீர் என் பாவத்தை மன்னித்து, நான்

[1] நீதி. 28. 13: 30. 13
[2] 9. 21
[3] 13. வச.
[4] 15. வச.
[5] சங். 50. 8, 9. நீதி. 21. 3. ஏசா. 1. 11–17. எரே. 7. 22, 23. மீகா 6. 6–8. எபி. 10. 4–10
[6] பிர. 5. 1. ஓசி. 6. 6. மத். 5. 24. மாற். 12. 33
[7] உபா. 18. 10. வெளி. 22. 15
[8] 2 கொ. 6. 16. கலா. 5. 20. வெளி. 21. 8
[9] யாத். 23. 2. நீதி. 29. 25. ஏசா. 51. 12, 13. கலா. 1. 10
[10] 2 யோ. 11. வச.
[11] 1 இரா. 11. 30, 31
[12] 28. 17, 18. 1 இரா. 11. 31
[13] எண். 23. 19. எசே. 24. 14. 2 தீமோ. 2. 13. தீத். 1. 2
[14] யோ. 5. 44: 12. 43
[15] யாத். 17. 11. எண். 14. 45. நியா. 1. 7
[16] 19. 24
[17] 11. வச. சங். 119. 136. எரே. 13. 17
[18] சங். 78. 70. 89. 19, 20. ஏசா. 55. 4. அப். 13. 22

**கர்த்தரைப்** பணிந்துகொள்ளும்படிக்கு, என்
னோடேகூடத் திரும்பிவாரும் என்றான். சா 26
முவேல் சவுலைப் பார்த்து: [10]நான் உம்மோடே
கூடத் திரும்பி வருவதில்லை; **கர்த்தருடைய**
வார்த்தையைப் புறக்கணித்தீர்; நீர் இஸ்ரவே
லின்மேல் ராஜாவாயிராதபடிக்கு, **கர்த்தர்**
உம்மையும் புறக்கணித்துத் தள்ளினார் என்
றான். போகும்படி சாமுவேல் திரும்புகிற 27
போது, சவுல், அவன் சால்வையின் தொங்க
லைப் பிடித்துக்கொண்டான், [11]அது கிழிந்து
போயிற்று. அப்பொழுது சாமுவேல் அவனை 28
நோக்கி: **கர்த்தர்** இன்று உம்மிடத்திலிருந்த
இஸ்ரவேலின் ராஜ்யத்தைக்கிழித்துப்போட்டு;
[12]உம்மைப்பார்க்கிலும் உத்தமனாயிருக்கிற உம்
முடைய தோழனுக்கு அதைக் கொடுத்தார்.
இஸ்ரவேலின் ஜெயபலமானவர் [13]பொய் 29
சொல்லுகிறதும் இல்லை; தாம் சொன்னதைப்
பற்றி மனஸ்தாபப்படுகிறதும் இல்லை; மனம்
மாற அவர் மனுஷன் அல்ல என்றான்.
அதற்கு அவன்: [14]நான் பாவஞ்செய்தேன்; 30
இப்போது என் ஜனத்தின் மூப்பருக்கு முன்
பாகவும், இஸ்ரவேலுக்கு முன்பாகவும், நீர்
என்னைக் கனம்பண்ணி, நான் உம்முடைய
தேவனாகிய **கர்த்தரைப்** பணிந்துகொள்ளும்
படிக்கு, என்னோடேகூடத் திரும்பி வாரும்
என்றான். அப்பொழுது சாமுவேல் திரும் 31
பிச் சவுலுக்குப் பின்சென்றான்; சவுல் **கர்த்த**
**ரைப்** பணிந்துகொண்டான்.

பின்பு சாமுவேல்: அமலேக்கின் ராஜாவா 32
கிய ஆகாகை என்னிடத்தில் கொண்டுவாருங்
கள் என்றான்; ஆகாக் சந்தோஷமாய் அவனி
டத்தில் வந்து, மரணத்தின் கசப்பு அற்றுப்
போனது நிச்சயம் என்றான். சாமுவேல்: 33
[15]உன் பட்டயம் ஸ்திரீகளைப் பிள்ளையற்றவர்க
ளாக்கினதுபோல, ஸ்திரீகளுக்குள்ளே உன்
தாயும் பிள்ளையற்றவளாவாள் என்று சொல்லி;
சாமுவேல் கில்காலிலே **கர்த்தருக்கு** முன்பாக
ஆகாகைத் துண்டித்துப்போட்டான்.

பின்பு சாமுவேல் ராமாவுக்குப் போனான்; 34
சவுலோ தன் ஊராகிய கிபியாவிலிருக்கிற
தன் வீட்டுக்குப் போய்விட்டான். சவுல் மர 35
ணமடையும் நாள்மட்டும் சாமுவேல் [16]அப்
புறம் அவனைக் கண்டு பேசவில்லை; இஸ்ர
வேலின்மேல் சவுலை ராஜாவாக்கினதற்காகக்
**கர்த்தர்** [17]மனஸ்தாபப்பட்டதினிமித்தம், சா
முவேல் சவுலுக்காகத் துக்கித்துக்கொண்டி
ருந்தான்.

**கர்த்தர்** சாமுவேலை நோக்கி: இஸ்ரவே **16**
லின்மேல் ராஜாவாயிராதபடிக்கு, நான் புறக்
கணித்துத் தள்ளின சவுலுக்காக நீ எந்தமட்டும்
துக்கித்துக்கொண்டிருப்பாய்; நீ உன் கொம்
பை தைலத்தால் நிரப்பிக்கொண்டுவா; பெத்
லெகேமியனாகிய ஈசாயினிடத்துக்கு உன்னை
அனுப்புவேன்; அவன் குமாரரில் ஒருவனை
[18]நான் ராஜாவாகத் தெரிந்துகொண்டேன்
என்றார். அதற்குச் சாமுவேல்: நான் எப்ப 2
டிப் போவேன்; சவுல் இதைக் கேள்விப்பட்

டால், என்னைக் கொன்றுபோடுவானே என்
றான்; அப்பொழுது **கர்த்தர்**: [1]நீ ஒரு காளை
யைக் கையோடே கொண்டுபோய், **கர்த்த
ருக்குப்** பலியிடவந்தேன் என்று சொல்லி,
3 ஈசாயைப் பலிவிருந்துக்கு அழைப்பாயாக;
அப்பொழுது நீ செய்யவேண்டியதை நான்
உனக்கு அறிவிப்பேன்; [2]நான் உனக்குச்
சொல்லுகிறவனை எனக்காக அபிஷேகம்பண்
4 ணுவாயாக என்றார். **கர்த்தர்** சொன்னபடி
யே சாமுவேல் செய்து, பெத்லெகேமுக்குப்
போனான்; அப்பொழுது அவ்வூரின் மூப்பர்
[3]தத்தளிப்போடே அவனுக்கு எதிர்கொண்டு
வந்து, [4]நீர் வருகிறது சமாதானமா என்றார்
5 கள். அதற்கு அவன்: சமாதானந்தான்; **கர்த்
தருக்குப்** பலியிட வந்தேன்; [5]நீங்கள் உங்களைப்
பரிசுத்தம் பண்ணிக்கொண்டு, என்னுடனே
கூடப் பலிவிருந்திற்கு வாருங்கள் என்றான்;
மேலும் ஈசாயையும் அவன் குமாரரையும்
பரிசுத்தம்பண்ணி, அவர்களைப் பலிவிருந்து
6 க்கு அழைத்தான். அவர்கள் வந்தபோது,
அவன் *எலியாபைப் பார்த்தவுடனே: **கர்த்த
ரால்** அபிஷேகம்பண்ணப்படுபவன் இவன்
7 தானாக்கும் என்றான். **கர்த்தர்** சாமுவேலை
நோக்கி: [6]நீ இவனுடைய முகத்தையும், இவ
னுடைய சரீரவளர்ச்சியையும் பார்க்கவேண்
டாம்; [7]நான் இவனைப் புறக்கணித்தேன்; மனு
ஷன் பார்க்கிறபடி நான் பாரேன்; [8]மனுஷன்
முகத்தைப் பார்ப்பான்; [9]**கர்த்தரோ** இருதயத்
8 தைப் பார்க்கிறார் என்றார். அப்பொழுது
ஈசாய் [10]அபினதாபை அழைத்து, அவனைச்
சாமுவேலுக்கு முன்பாகக் கடந்துபோகப்
பண்ணினான்; அவன்: இவனையும் **கர்த்தர்**
9 தெரிந்துகொள்ளவில்லை என்றான். ஈசாய்
சம்மாவையும் கடந்துபோகப்பண்ணினான்;
அவன்: இவனையும் **கர்த்தர்** தெரிந்துகொள்ள
10 வில்லை என்றான். இப்படி ஈசாய் தன் குமா
ரரில் எழுபேரை சாமுவேலுக்கு முன்பாகக்
கடந்துபோகப்பண்ணினான்; பின்பு சாமு
வேல் ஈசாயைப் பார்த்து: **கர்த்தர்** இவர்களில்
ஒருவனையும் தெரிந்துகொள்ளவில்லை என்று
11 சொல்லி; உன் பிள்ளைகள் இவ்வளவுதானா
என்று ஈசாயைக் கேட்டான். அதற்கு
அவன்: இன்னும் எல்லாருக்கும் இளையவன்
ஒருவன் இருக்கிறான்; [11]அவன் ஆடுகளை
மேய்த்துக்கொண்டிருக்கிறான் என்றான்; அப்
பொழுது சாமுவேல் ஈசாயை நோக்கி: ஆள்
அனுப்பி அவனை அழைப்பி; அவன் இங்கே
வருமட்டும் நான் பந்தியிருக்கமாட்டேன்
12 என்றான். ஆள் அனுப்பி அவனை அழைப்
பித்தான்; [12]அவன் சிவந்தமேனியும், அழகிய
கண்களும், நல்ல ரூபமுமுள்ளவனாயிருந்
தான்; அப்பொழுது **கர்த்தர்**: இவன்தான், நீ
எழுந்து இவனை அபிஷேகம்பண்ணு என்
13 றார். அப்பொழுது சாமுவேல்: தைலக்கொம்
பை எடுத்து, அவனை அவன் சகோதரர் நடு
விலே அபிஷேகம் பண்ணினான்; அந்நாள்
முதற்கொண்டு, [13]**கர்த்தருடைய** ஆவியானவர்

தாவீதின்மேல் வந்து இறங்கியிருந்தார்; சாமு
வேல் எழுந்து ராமாவுக்குப் போய்விட்டான்.
**கர்த்தருடைய** [14]ஆவி சவுலைவிட்டு நீங்கி 14
னார்; **கர்த்தரால்** வரவிடப்பட்ட [15]ஒரு பொல்
லாத ஆவி அவனைக் கலங்கப்பண்ணிக்கொண்
டிருந்தது. அப்பொழுது சவுலின் ஊழியக் 15
காரர் அவனை நோக்கி: இதோ, தேவனால்
விடப்பட்ட ஒரு பொல்லாத ஆவி உம்மைக்
கலங்கப்பண்ணுகிறதே. சுரமண்டலம் வா 16
சிக்கிறதில் தேறின ஒருவனைத் தேடும்படிக்கு,
எங்கள் ஆண்டவனாகிய நீர் உமக்கு முன்பாக
நிற்கிற உம்முடைய அடியாருக்குக் கட்டளை
யிடும்; அப்பொழுது தேவனால் விடப்பட்ட
பொல்லாத ஆவி உம்மேல் இறங்குகையில்,
அவன் தன் கையினால் [16]அதை வாசித்தால்
உமக்குச் சவுக்கியமுண்டாகும் என்றார்கள்.
சவுல் தன் ஊழியக்காரரைப் பார்த்து: நன் 17
றாய் வாசிக்கத்தக்க ஒருவனைத் தேடி, என்னி
டத்தில் கொண்டுவாருங்கள் என்றான். அப் 18
பொழுது அந்த வேலைக்காரரில் ஒருவன் பிர
தியுத்தரமாக: இதோ, பெத்லெகேமியனாகிய
ஈசாயின் குமாரன் ஒருவனைக் கண்டிருக்கி
றேன்; அவன் வாசிப்பதில் தேறினவன்,
[17]அவன் பராக்கிரமசாலி, [18]யுத்தவீரன், காரி
யசமர்த்தன், சவுந்தரியமுள்ளவன்; **கர்த்தர்**
அவனோடேகூட இருக்கிறார் என்றான். அப் 19
பொழுது சவுல்: ஈசாயினிடத்தில் ஆட்களை
அனுப்பி, ஆட்டுமந்தையில் இருக்கிற உன்
குமாரனாகிய தாவீதை என்னிடத்தில் அனுப்பு
என்று சொல்லச்சொன்னான். அப்பொழுது 20
ஈசாய்: அப்பத்தையும், ஒரு துருத்தி திராட்ச
ரசத்தையும், ஒரு வெள்ளாட்டுக்குட்டியையும்
[19]கழுதையின்மேல் ஏற்றி, தன் குமாரனாகிய
தாவீதின் வசமாய் சவுலுக்கு அனுப்பினான்.
அப்படியே தாவீது சவுலிடத்தில்வந்து, [20]அவ 21
னுக்கு முன்பாக நின்றான்; அவன் இவனை
மிகவும் சிநேகித்தான்; அவனுக்கு இவன் ஆயு
ததாரியானான். சவுல் ஈசாயினிடத்தில் ஆள் 22
அனுப்பி, தாவீது எனக்கு முன்பாக நிற்கட்
டும்; என் கண்களில் அவனுக்குத் தயவு
கிடைத்தது என்று சொல்லச்சொன்னான்.
அப்படியே தேவனால் விடப்பட்ட ஆவி சவு 23
லைப் பிடிக்கும்போது, தாவீது சுரமண்டலத்
தை எடுத்து, தன் கையினால் வாசிப்பான்;
அதினாலே பொல்லாத ஆவி அவனை விட்டு
நீங்க, சவுல் ஆறுதலடைந்து, சொஸ்தமாவான்.

பெலிஸ்தர் யுத்தம்பண்ணுகிறதற்குத் தங் **17**
கள் சேனைகளைச் சேர்த்து, யூதாவிலுள்ள
சோக்கோவிலே ஒருமித்துக் கூடி, சோக்கோ
வுக்கும் [21]அசெக்காவுக்கும் நடுவே இருக்கிற
எபேஸ்தம்மீமிலே பாளயமிறங்கினார்கள். சவு 2
லும் இஸ்ரவேல் மனுஷரும் ஒருமித்துக் கூடி,
ஏலா பள்ளத்தாக்கிலே பாளயமிறங்கி, பெலி
ஸ்தருக்கு எதிராக யுத்தத்திற்கு அணிவகுத்து
நின்றார்கள். பெலிஸ்தர் அந்தப் பக்கத்தில் 3
ஒரு மலையின்மேலும், இஸ்ரவேலர் இந்தப்
பக்கத்தில் ஒரு மலையின்மேலும் நின்றார்கள்;

[1] 9. 13; 20. 29
[2] யாத். 4. 15
[3] 21. 1
[4] 1 இரா. 2. 13
[5] யாத். 19. 10, 14. யோசு. 3. 5. 1 கொரி. 11. 28
* எலிகூ. 1 நாளா. 27. 18
[6] சங். 147. 10
[7] ஏசா. 55. 8, 9
[8] 2 கொரி. 10. 7
[9] 1 இரா. 8. 39. சங். 7. 9. எரே. 17. 10. அப். 1. 24. வெளி. 2. 23
[10] 17. 13
[11] 2 சாமு. 7. 8. சங். 78. 70–72
[12] 17. 42. உன்னத. 5. 10
[13] 10. 6, 9, 10. நியா. 11. 29
[14] நியா. 16. 20. சங். 51. 11
[15] 18. 10; 19. 9
[16] 2 8. வச. 2 இரா. 8. 15
[17] 17. 32, 36
[18] 2 சாமு. 17. 8-10; 14. 20
[19] ஆதி. 43. 11. நீதி. 18. 16
[20] ஆதி. 41. 46. நீதி. 22. 19
[21] யோசு. 15. 35. 2 நாளா. 28. 18

அவர்களுக்கு நடுவே பள்ளத்தாக்கு இருந்
4 தது. அப்பொழுது காத் ஊராகிய [1]கோலி
யாத் என்னும் பேருள்ள ஒரு வீரன் பெலிஸ்
தரின் பாளயத்திலிருந்து புறப்பட்டுவந்து நடு
வே நிற்பான்; அவன் உயரம் ஆறு முழமும்
5 ஒரு ஜாணுமாம். அவன் தன் தலையின்மேல்
வெண்கலச் சீராவைப் போட்டு, ஒரு போர்க்
கவசம் தரித்துக்கொண்டிருப்பான்; அந்தக்
கவசத்தின் நிறை ஐயாயிரம் சேக்கலான
6 வெண்கலமாயிருக்கும். அவன் தன் கால்க
ளிலே வெண்கலக் கவசத்தையும் தன் தோள்
களின்மேல் வெண்கலக் கேடகத்தையும் தரித்
7 திருப்பான். அவனுடைய [2]ஈட்டித் தாங்கு
நெசவுக்காரரின் படைமரத்தின் கனதியும்
அவன் ஈட்டியின் அலகு அறுநூறு சேக்கல்
இரும்புமாயிருக்கும்; பரிசை பிடிக்கிறவன்
8 அவனுக்கு முன்னாக நடப்பான். அவன்
வந்து நின்று, இஸ்ரவேல் சேனைகளைப் பார்த்
துச் சத்தமிட்டு, நீங்கள் யுத்தத்திற்கு அணி
வகுத்து நிற்கிறது என்ன; நான் பெலிஸ்தன்
அல்லவா? நீங்கள் சவுலின் சேவகர் அல்ல
வா? உங்களில் ஒருவனைத் தெரிந்துகொள்
ளுங்கள், அவன் என்னிடத்தில் வரட்டும்.
9 அவன் என்னோடே யுத்தம்பண்ணவும் என்
னைக் கொல்லவும் சமர்த்தனானால், நாங்கள்
உங்களுக்கு வேலைக்காரராயிருப்போம்; நான்
அவனை ஜெயித்து அவனைக் கொல்வேனானால்,
நீங்கள் எங்களுக்கு வேலைக்காரராயிருந்து,
எங்களைச் சேவிக்கவேண்டும் என்று சொல்லி,
10 பின்னும் அந்தப் பெலிஸ்தன்: நான் இன்
றையதினம் இஸ்ரவேலுடைய சேனைகளை
[3]நிந்தித்தேன்; நாம் ஒருவரோடு ஒருவர் யுத்
தம்பண்ண ஒருவனை விடுங்கள் என்று சொல்
11 லிக்கொண்டுவருவான். சவுலும் இஸ்ரவேலர்
அனைவரும் அந்தப் பெலிஸ்தனுடைய வார்த்
தைகளைக் கேட்டு, கலங்கி மிகவும் பயப்பட்
டார்கள்.
12 தாவீது என்பவன் யூதாவிலுள்ள பெத்லெ
கேம் ஊராகிய ஈசாய் என்னும் பேருள்ள
எப்பிராத்திய மனுஷனுடைய [4]குமாரனாயிருந்
தான்; ஈசாயுக்கு எட்டுக் குமாரர் இருந்தார்
கள்; இவன் சவுலின் நாட்களிலே மற்ற ஜனங்
களுக்குள்ளே வயதுசென்ற கிழவனாய் மதிக்
13 கப்பட்டான். ஈசாயினுடைய மூன்று மூத்த
குமாரர் சவுலோடேகூட யுத்தத்திற்குப் போ
யிருந்தார்கள்; யுத்தத்திற்குப் போயிருந்த அவ
னுடைய மூன்று குமாரரில் மூத்தவனுக்கு
எலியாப் என்றும், இரண்டாங்குமாரனுக்கு
அபினதாப் என்றும், மூன்றாங்குமாரனுக்குச்
14 சம்மா என்றும் பேர். தாவீது எல்லாருக்கும்
இளையவன்; மூத்தவர்களாகிய அந்த மூன்று
பேரும் சவுலோடேகூடப் போயிருந்தார்கள்.
15 தாவீது சவுலைவிட்டுத் திரும்பிப்போய் பெத்
லெகேமிலிருக்கிற [5]தன் தகப்பனுடைய ஆடு
16 களை மேய்த்துக்கொண்டிருந்தான். அந்தப்
பெலிஸ்தன் காலையிலும் மாலையிலும் நாற்பது
நாள் வந்து வந்து நிற்பான்.

ஈசாய் தன் குமாரனாகிய தாவீதை நோக்கி: 17
உன் சகோதரருக்கு இந்த ஒரு மரக்கால் வறு
த்த பயற்றையும், இந்தப் பத்து அப்பங்களை
யும் எடுத்துக்கொண்டு, பாளயத்திலிருக்கிற
உன் சகோதரரிடத்தில் ஓட்டமாய்ப் போய்,
இந்தப் பத்துப் பால்கட்டிகளை ஆயிரம்பே 18
ருக்கு அதிபதியானவனிடத்தில் கொடுத்து,
[6]உன் சகோதரர் சுகமாயிருக்கிறார்களா என்று
விசாரித்து, அவர்களிடத்தில் அடையாளம்
வாங்கிக்கொண்டு வா என்றான். அப்பொ 19
ழுது சவுலும், அவர்களும், இஸ்ரவேலர் எல்
லாரும், ஏலா பள்ளத்தாக்கிலே பெலிஸ்த
ரோடு யுத்தம் பண்ணிக்கொண்டிருந்தார்கள்.
தாவீது அதிகாலையில் எழுந்து, ஆடுகளைக் 20
காவலாளி வசமாய் விட்டு, ஈசாய் தனக்குக்
கற்பித்தபடியே எடுத்துக்கொண்டுபோய், இர
தங்கள் இருக்கிற இடத்திலே வந்தான்; சே
னைகள் அணிவகுத்து நின்று, யுத்தத்திற்கெ
ன்று ஆர்ப்பரித்தார்கள். இஸ்ரவேலரும் பெ 21
லிஸ்தரும் ஒருவருக்கு எதிராக ஒருவர் அணி
வகுத்துக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது 22
தாவீது: தான் கொண்டுவந்தவைகளை இறக்கி,
ரஸ்துக்களைக் காக்கிறவன் வசமாக வைத்து
விட்டு, சேனைக்குள் ஓடி தன் சகோதரரைப்
பார்த்து: [7]சுகமாயிருக்கிறீர்களா என்று கேட்
டான். அவன் இவர்களோடே பேசிக்கொ 23
ண்டிருக்கையில், இதோ, காத் ஊராகிய
கோலியாத் என்னும் பேருள்ள அந்தப் பெலி
ஸ்த வீரன் பெலிஸ்தரின் சேனைகளிலிருந்து
எழும்பிவந்து நின்று, [8]முன் சொன்ன வார்த்
தைகளையே சொன்னான்; அதைத் தாவீது
கேட்டான். இஸ்ரவேலர் எல்லாரும் அந்த 24
மனுஷனைக் காணும்போது மிகவும் பயப்
பட்டு, அவன் முகத்துக்கு விலகி ஓடிப்போ
வார்கள். அந்நேரத்திலே இஸ்ரவேலர்: வந்து 25
நிற்கிற அந்த மனுஷனைக் கண்டீர்களா, இஸ்
ரவேலை நிந்திக்க வந்து நிற்கிறான்; இவனைக்
கொல்லுகிறவன் எவனோ, அவனை ராஜா
மிகவும் ஐசுவரியவானாக்கி, [9]அவனுக்குத் தம்
முடைய குமாரத்தியைத் தந்து, அவன் தகப்
பன் வீட்டாருக்கு இஸ்ரவேலிலே சர்வமானி
யம் கொடுப்பார் என்றார்கள். அப்பொழுது 26
தாவீது தன்னண்டையிலே நிற்கிறவர்களைப்
பார்த்து, இந்தப் பெலிஸ்தனைக் கொன்று இஸ்
ரவேலுக்கு நேரிட்ட நிந்தையை நீக்குகிறவ
னுக்கு என்ன செய்யப்படும்; [10]ஜீவனுள்ள
தேவனுடைய சேனைகளை நிந்திக்கிறதற்கு
விருத்தசேதனம் இல்லாத இந்தப் பெலிஸ்
தன் எம்மாத்திரம் என்றான். அதற்கு ஜனங் 27
கள்: அவனைக் கொல்லுகிறவனுக்கு இன்ன
இன்னபடி செய்யப்படும் என்று முன் சொ
ன்ன வார்த்தைகளையே அவனுக்குச் சொன்
னார்கள். அந்த மனுஷரோடே அவன் பேசிக் 28
கொண்டிருக்கிறதை அவன் மூத்த சகோதர
னாகிய எலியாப் கேட்டபோது, [11]அவன் தாவீ
தின்மேல் கோபங்கொண்டு: நீ இங்கே வந்
தது என்ன? வனாந்தரத்திலுள்ள அந்தக் கொ

[1] யோசு. 11. 22. 2 சாமு. 21. 19
[2] 2 சாமு. 21. 19
[3] 26. வச. 2 சாமு. 21. 21
[4] 16. 10, 11 ரூத். 4. 22
[5] 16. 19
[6] ஆதி. 37. 14
[7] நீதி. 18. 15
[8] 8. வச.
[9] யோசு. 15. 16
[10] உபா. 5. 26
[11] ஆதி. 37. 4, 8, 11. மத். 10. 36

ஞ்ச ஆடுகளை நீ யார்வசத்தில் விட்டாய்? யுத்
தத்தைப் பார்க்க அல்லவா வந்தாய்? உன்
துணிகரத்தையும், உன் இருதயத்தின் அகங்
29 காரத்தையும் நான் அறிவேன் என்றான். அதற்
குத் தாவீது: நான் இப்பொழுது செய்தது
என்ன? [1]நான் வந்ததற்கு முகாந்தரம் இல்லை
30 யா என்று சொல்லி, அவனை விட்டு, வே
றொருவனிடத்தில் திரும்பி, அந்தப் பிரகார
மாகவே கேட்டான்; ஜனங்கள் முன்போலவே
31 உத்தரவு சொன்னார்கள். தாவீது சொன்ன
வார்த்தைகளை அவர்கள் கேட்டு, அதைச் சவு
லின் சமுகத்தில் அறிவித்தார்கள்; அப்பொ
32 ழுது அவன் அவனை அழைப்பித்தான். தா
வீது சவுலை நோக்கி: [2]இவனிமித்தம் ஒருவனு
டைய இருதயமும் கலங்கவேண்டியதில்லை;
உம்முடைய அடியானாகிய நான் போய், இந்
தப் பெலிஸ்தனோடே யுத்தம்பண்ணுவேன்
33 என்றான். அப்பொழுது சவுல் தாவீதை நோ
க்கி: [3]நீ இந்தப் பெலிஸ்தனோடே எதிர்த்து
யுத்தம்பண்ண உன்னால் ஆகாது; நீ இளை
ஞன், அவனோ தன் சிறுவயதுமுதல் யுத்த
34 வீரன் என்றான். தாவீது சவுலைப் பார்த்து:
உம்முடைய அடியான் என் தகப்பனுடைய
ஆடுகளை மேய்த்துக்கொண்டிருக்கிறபோது,
ஒருவிசை ஒரு சிங்கமும் ஒருவிசை ஒரு கரடி
யும் வந்து, மந்தையிலிருக்கிற ஒரு ஆட்டைப்
35 பிடித்துக்கொண்டது. நான் அதைத் தொடர்
ந்துபோய், அதை அடித்து, அதை அதின்
வாய்க்குத் தப்புவித்தேன்; அது என்மேல்
பாய்ந்தபோது, நான் அதின் தாடியைப் பிடி
த்து, அதை அடித்துக் கொன்றுபோட்டேன்.
36 அந்தச் சிங்கத்தையும் அந்தக் கரடியையும் உம்
முடைய அடியானாகிய நான் கொன்றேன்;
விருத்தசேதனமில்லாத இந்தப் பெலிஸ்த
னும் அவைகளில் ஒன்றைப்போல இருப்
பான்; அவன் ஜீவனுள்ள தேவனுடைய
37 சேனைகளை நிந்தித்தானே என்றான். பின்
னும் தாவீது: என்னைச் சிங்கத்தின் கைக்கும்
கரடியின் கைக்கும் தப்புவித்த [4]**கர்த்தர்** இந்
தப் பெலிஸ்தனுடைய கைக்கும் தப்புவிப்பார்
என்றான்; அப்பொழுது சவுல் தாவீதைப்
பார்த்து: [5]போ, **கர்த்தர்** உன்னுடனேகூட
38 இருப்பாராக என்றான். சவுல் தாவீதுக்குத்
தன் வஸ்திரங்களை உடுத்துவித்து, வெண்கல
மான ஒரு சீராவை அவன் தலையின்மேல்
போட்டு, ஒரு கவசத்தையும் அவனுக்குத்
39 தரிப்பித்தான். அவனுடைய பட்டயத்தை
தாவீது தன் வஸ்திரங்கள்மேல் கட்டிக்கொ
ண்டு, அதிலே அவனுக்குப் பழக்கமில்லாததி
னால் நடந்துபார்த்தான்; அப்பொழுது தாவீது
சவுலை நோக்கி: நான் இவைகளைப் போட்டுக்
கொண்டு போகக்கூடாது; இந்த அப்பியாசம்
எனக்கு இல்லை என்று சொல்லி, அவைக
40 ளைக் களைந்துபோட்டு, தன் தடியைக் கை
யிலே பிடித்துக்கொண்டு, ஆற்றிலிருக்கிற
ஐந்து கூழாங்கல்லுகளைத் தெரிந்தெடுத்து,
அவைகளை மேய்ப்பருக்குரிய தன்னுடைய
அடைப்பப்பையிலே போட்டு, தன் கவ
ணைத் தன் கையிலே பிடித்துக்கொண்டு,
அந்தப் பெலிஸ்தனண்டையிலே போனான்.
பெலிஸ்தனும் நடந்து, தாவீதண்டைக்குக் 41
கிட்டிவந்தான்; பரிசையைப் பிடிக்கிறவன்
அவனுக்கு முன்னாக நடந்தான். பெலிஸ் 42
தன் சுற்றிப்பார்த்து: தாவீதைக் கண்டு, அவன்
இளைஞனும் சவுந்தரிய ரூபமான சிவந்த மே
னியுள்ளவனுமாயிருந்தபடியினால், அவனை
[6]அசட்டைபண்ணினான். பெலிஸ்தன் தாவீ 43
தைப் பார்த்து: நீ தடிகளோடே என்னிடத்தில்
வர நான் [7]நாயா என்று சொல்லி, அவன்
தன் தேவர்களைக்கொண்டு தாவீதைச் சபித்
தான். பின்னும் அந்தப் பெலிஸ்தன் தாவீதைப் 44
பார்த்து: என்னிடத்தில் வா; நான் உன் மாம்
சத்தை ஆகாயத்துப் பறவைகளுக்கும் காட்டு
மிருகங்களுக்கும் கொடுப்பேன் என்றான்.
அதற்குத் தாவீது: [8]பெலிஸ்தனை நோக்கி: 45
நீ பட்டயத்தோடும், ஈட்டியோடும், கேடகத்
தோடும், என்னிடத்தில் வருகிறாய்; [9]நானோ
நீ நிந்தித்த இஸ்ரவேலுடைய இராணுவங்க
ளின் தேவனாகிய சேனைகளுடைய **கர்த்தரின்**
நாமத்திலே உன்னிடத்தில் வருகிறேன்.
இன்றையதினம் **கர்த்தர்** உன்னை என் கை 46
யில் ஒப்புக்கொடுப்பார்; நான் உன்னைக்
கொன்று, உன் தலையை உன்னைவிட்டு
வாங்கி, பெலிஸ்தருடைய பாளயத்தின் [10]பிண
ங்களை இன்றையதினம் ஆகாயத்துப் பறவை
களுக்கும், பூமியின் காட்டு மிருகங்களுக்கும்
கொடுப்பேன்; [11]அதனால் இஸ்ரவேலில் தே
வன் ஒருவர் உண்டு என்று பூலோகத்தார் எல்
லாரும் அறிந்துகொள்ளுவார்கள். **கர்த்தர்** 47
[12]பட்டயத்தினாலும் ஈட்டியினாலும் இரட்சிக்
கிறவர் அல்ல என்று இந்த ஜனக்கூட்டமெல்
லாம் அறிந்துகொள்ளும்; [13]யுத்தம் **கர்த்தருடை
யது**; அவர் உங்களை எங்கள் கையில் ஒப்புக்
கொடுப்பார் என்றான். அப்பொழுது அந்தப் 48
பெலிஸ்தன் எழும்பி, தாவீதுக்கு எதிராகக்
கிட்டிவருகையில், தாவீது தீவிரமாய் அந்தச்
சேனைக்கும் அந்தப் பெலிஸ்தனுக்கும் எதி
ராக ஓடி, தன் கையை அடைப்பத்திலே 49
போட்டு, அதிலிருந்து ஒரு கல்லை எடுத்து,
கவணிலே வைத்துச் சுழற்றி, பெலிஸ்தனு
டைய நெற்றியிலே பட எறிந்தான்; அந்தக்
கல் அவன் நெற்றியில் பதிந்துபோனதினால்,
அவன் தரையிலே முகங்குப்புற விழுந்தான்.
இவ்விதமாகத் தாவீது ஒரு கவணினாலும் ஒரு 50
கல்லினாலும் [14]பெலிஸ்தனை மேற்கொண்டு,
அவனை மடங்கடித்து, அவனைக் கொன்று
போட்டான்; தாவீதின் கையில் பட்டயம்
இல்லாதிருந்தது. ஆகையால் தாவீது பெலி 51
ஸ்தனண்டையில் ஓடி அவன்மேல் நின்று,
[15]அவன் பட்டயத்தை எடுத்து, அதை அதின்
உறையிலிருந்து உருவி, அவனைக் கொன்று,
அதினாலே அவன் தலையை வெட்டிப்போட்
டான்; அப்பொழுது தங்கள் வீரன் செத்துப்
போனான் என்று பெலிஸ்தர் கண்டு, [16]ஓடிப்

[1] 17. வச. நீதி. 15. 1
[2] உபா. 20. 1, 3
[3] எண். 13. 31. உபா. 9. 2
[4] சங். 11. 1; 18. 17; 77. 11. 2 கொரி. 1. 10. 2 தீமோ. 4. 17, 18
[5] 1 நாளா. 22. 11, 16
[6] சங். 123. 3, 4. 1 கொரி. 1. 27, 28
[7] 2 சாமு. 3. 8. 2 இரா. 8. 13
[8] 1 இரா. 20. 10, 11
[9] 2 சாமு. 22. 33, 35. சங். 124. 8. 125. 1. 2 கொரி. 10. 4. எபி. 11. 33, 34
[10] உபா. 28. 26
[11] யோசு. 4. 24. 1 இரா. 8. 43. 2 இரா. 19. 19. சங். 46. 10. ஏசா. 52. 10
[12] சங். 44. 6, 7. ஓசி. 1. 7. சகரி. 4. 6
[13] 2 நாளா. 20. 15
[14] நியா. 3. 31. 2 சாமு. 23. 21
[15] சங். 7. 15, 16
[16] எபி. 11. 34

52 போனார்கள். அப்பொழுது இஸ்ரவேலரும்
யூதா மனுஷரும் எழும்பி, ஆர்ப்பரித்து, பள்
ளத்தாக்கின் எல்லைமட்டும், எக்ரோனின் வா
சல்கள்மட்டும், பெலிஸ்தரைத் துரத்தினார்
கள்; சாராயீமின் வழியிலும், காத் பட்டண
மட்டும், எக்ரோன் பட்டணமட்டும், பெலிஸ்
53 தர் வெட்டுண்டு விழுந்தார்கள். இஸ்ரவேல்
புத்திரர் பெலிஸ்தரை மூர்க்கமாய்த் துரத்தின
பிற்பாடு, திரும்பிவந்து, அவர்களுடைய பாள
54 யங்களைக் கொள்ளையிட்டார்கள். தாவீது
பெலிஸ்தனுடைய தலையை எடுத்து, அதை
எருசலேமுக்குக் கொண்டுவந்தான்; அவன்
ஆயுதங்களையோ தன் கூடாரத்திலே வைத்
தான்.
55 தாவீது பெலிஸ்தனுக்கு எதிராகப் புறப்பட்
டுப்போகிறதைச் சவுல் கண்டபோது, அவன்
சேனாபதியாகிய அப்னேரைப் பார்த்து: அப்
னேரே, [1]இந்த வாலிபன் யாருடைய மகன்
என்று கேட்டான்; அதற்கு அப்னேர்: ராஜா
வே, எனக்குத் தெரியாது என்று உம்மு
டைய ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேன்
56 என்றான். அப்பொழுது ராஜா: அந்தப் பிள்ளை
யாண்டான் யாருடைய மகன் என்று விசாரி
57 என்றான். தாவீது பெலிஸ்தனைக் கொன்று
திரும்புகையில், அப்னேர் அவனைச் சவுலுக்கு
முன்பாக அழைத்துக்கொண்டு போய்விட்
டான்; பெலிஸ்தனுடைய தலை அவன் கை
58 யில் இருந்தது. அப்பொழுது சவுல்: வாலி
பனே, நீ யாருடைய மகன் என்று அவனைக்
கேட்டதற்கு, தாவீது: [2]நான் பெத்லெகேம்
ஊரானாயிருக்கிற உம்முடைய அடியானாகிய
ஈசாயின் மகன் என்றான்.

**18** அவன் சவுலோடே பேசி முடிந்தபின்பு,
யோனத்தானுடைய [3]ஆத்துமா தாவீதின்
ஆத்துமாவோடே ஒன்றாய் இசைந்திருந்தது;
[4]யோனத்தான் அவனைத் தன் உயிரைப்போ
2 லச் சிநேகித்தான். சவுல் அவனை அவன்
தகப்பன் வீட்டுக்குத் திரும்பிப்போக ஒட்டா
மல், அன்றுமுதல் தன்னிடத்தில் வைத்துக்
3 கொண்டான். யோனத்தான் தாவீதைத் தன்
ஆத்துமாவைப்போலச் சிநேகித்ததினால், அவ
னும் இவனும் உடன்படிக்கை பண்ணிக்
4 கொண்டார்கள். யோனத்தான் போர்த்துக்
கொண்டிருந்த சால்வையைக் கழற்றி, அதை
யும், தன் வஸ்திரத்தையும், தன் பட்டயத்தை
யும், தன் வில்லையும், தன் கச்சையையும்
5 கூடத் தாவீதுக்குக் கொடுத்தான். தாவீது
சவுல் தன்னை அனுப்புகிற எவ்விடத்திற்கும்
போய், புத்தியாய்க் காரியத்தை நடப்பித்ததி
னால், சவுல் அவனை யுத்தமனுஷரின்மேல்
அதிகாரியாக்கினான்; அவன் எல்லா ஜனத்
தின் கண்களுக்கும், சவுலுடைய ஊழியக்கா
ரரின் கண்களுக்கும் கூடப் பிரியமாயிருக்
தான்.
6 தாவீது *பெலிஸ்தனைக் கொன்று திரும்பி
வந்தபின்பு, ஜனங்கள் திரும்ப வரும்போதும்,
ஸ்திரீகள் இஸ்ரவேலின் சகல பட்டணங்
களிலுமிருந்து, ஆடல்பாடலுடன் புறப்பட்டு,
[5]மேளங்களோடும் கீதவாத்தியங்களோடும் சந்
தோஷமாய் ராஜாவாகிய சவுலுக்கு எதிர்
கொண்டுவந்தார்கள். அந்த ஸ்திரீகள் ஆடிப் 7
பாடுகையில்: [6]சவுல் கொன்றது ஆயிரம்,
தாவீது கொன்றது பதினாயிரம் என்று [7]முறை
முறையாகப் பாடினார்கள். அந்த வார்த்தை சவு 8
லுக்கு விசனமாயிருந்தது; அவன் மிகுந்த
எரிச்சலடைந்து, தாவீதுக்குப் பதினாயிரம்,
எனக்கோ ஆயிரம் கொடுத்தார்கள்; [8]இன்னும்
ராஜாங்கமாத்திரம் அவனுக்குக் குறைவாயிருக்
கிறது என்று சொல்லி, அந்நாள் முதற் 9
கொண்டு சவுல் தாவீதைக் †காய்மகாரமாய்ப்
பார்த்தான்.
மறுநாளிலே தேவனால் விடப்பட்ட [9]பொல் 10
லாத ஆவி சவுலின்மேல் இறங்கிற்று; [10]அவன்
வீட்டிற்குள்ளே தீர்க்கதரிசனம் சொல்லிக்
கொண்டிருந்தான்; அப்பொழுது தாவீது
தினந்தோறும் செய்கிறபடி, தன் கையினால்
சுரமண்டலத்தை வாசித்துக்கொண்டிருந்
தான்; [11]சவுலின் கையிலே ஈட்டியிருந்தது.
அப்பொழுது சவுல் தாவீதைச் சுவரோடே 11
சேர்த்து உருவக் குத்திப்போடுவேன் என்று
ஈட்டியை [12]அவன்மேல் எறிந்தான்; ஆனாலும்
தாவீது விலகி இரண்டுதரம் அவனுக்குத்
தப்பினான். கர்த்தர் தாவீதோடேகூட இருக் 12
கிறார் என்றும் தன்னை விட்டு விலகிப்போ
னார் என்றும், சவுல் கண்டு, தாவீதுக்குப்
பயந்து, அவனைத் தன்னைவிட்டு அப்புறப் 13
படுத்தி, அவனை ஆயிரம்பேருக்கு அதிபதி
யாக வைத்தான்; அப்படியே அவன் ஜனத்
திற்கு முன்பாகப் போக்கும் வரத்துமாயிருந்
தான். தாவீது தன் செய்கைகளிலெல்லாம் 14
புத்திமானாய் நடந்தான்; [13]**கர்த்தர்** அவனோடே
கூட இருந்தார். அவன் மகா புத்திமானாய் நட 15
க்கிறதைச் சவுல் கண்டு, அவனுக்குப் பயக்
திருந்தான். இஸ்ரவேலரும் யூதா ஜனங்க 16
ளுமாகிய யாவரும் தாவீதைச் சிநேகித்தார்
கள்; அவர்களுக்கு முன்பாக அவன் போக்
கும் வரத்துமாயிருந்தான்.
என் கை அல்ல, [14]பெலிஸ்தரின் கையே 17
அவன்மேல் விழட்டும் என்று சவுல் நினைத்
துக்கொண்டு, சவுல் தாவீதை நோக்கி: இதோ,
என் மூத்த குமாரத்தியாகிய [15]மேராவை
உனக்கு மனைவியாகக் கொடுப்பேன்; நீ என
க்கு நல்ல சேவகனாய்மாத்திரம் இருந்து,
[16]**கர்த்தருடைய** யுத்தங்களை நடத்து என்றான்.
அப்பொழுது தாவீது சவுலைப் பார்த்து: [17]ராஜா 18
வுக்கு மருமகனாகிறதற்கு நான் எம்மாத்திரம்,
என் ஜீவன் எம்மாத்திரம், இஸ்ரவேலிலே
என் தகப்பன் வம்சமும் எம்மாத்திரம் என்
றான். சவுலின் குமாரத்தியாகிய மேராப் 19
தாவீதுக்குக் கொடுக்கப்படுங் காலம் வந்த
போது, [18]அவள் மேகோலாத்தியனாகிய ஆத
ரியேலுக்கு மனைவியாகக் கொடுக்கப்பட்டாள்.
சவுலின் குமாரத்தியாகிய [19]மீகாள் தாவீதை 20
நேசித்தாள்; அது சவுலுக்கு அறிவிக்கப்பட்ட

1 16. 21, 22
2 12. வச.
3 ஆதி. 44. 30
4 19. 2; 20. 17. 2 சாமு. 1. 26. உபா. 13. 6
* பெலிஸ்தரை
5 யாத். 15. 20. நியா. 11. 34
6 21. 11; 29. 5
7 யாத். 15. 21
8 15. 28
† பொறாமை
9 16. 14
10 19. 25. அப். 16. 16
11 19. 9, 10
12 நீதி. 27. 4
13 ஆதி. 39. 2, 8, 23
14 2 சாமு. 12. 9
15 17. 25
16 25. 28
17 2 சாமு. 7. 18
18 2 சாமு. 21. 8. நியா. 7. 22
19 28. வச.

போது, அது அவனுக்குச் சந்தோஷமாயிருந்
21 தது. அவள் அவனுக்குக் [1]கண்ணியாயிருக்
கவும், பெலிஸ்தரின் கை அவன்மேல் விழ
வும், அவளை அவனுக்குக் கொடுப்பேன்
என்று சவுல் எண்ணி, தாவீதை நோக்கி: நீ
என்னுடைய இரண்டாம் குமாரத்தியினால்
இன்று எனக்கு மருமகனாவாய் என்றான்.
22 பின்பு சவுல் தன் ஊழியக்காரரைப் பார்த்து:
நீங்கள் தாவீதோடே இரகசியமாய்ப் பேசி:
இதோ, ராஜா உன்மேல் பிரியமாயிருக்கிறார்;
அவருடைய ஊழியக்காரர் எல்லாரும் உம்
மைச் சிநேகிக்கிறார்கள்; இப்போதும் நீர் ரா
ஜாவுக்கு மருமகனாவதினால் நலம் என்று சொல்லு
23 ங்கள் என்று கற்பித்தான். சவுலின் ஊழியக்
காரர் இந்தவார்த்தைகளைத்தாவீதின் செவிகள்
கேட்கப் பேசினார்கள்; அப்பொழுது தாவீது,
நான் ராஜாவுக்கு மருமகனாகிறது லேசான
காரியமா? நான் எளியவனும், அற்பமாய் எண்
ணப்பட்டவனுமாயிருக்கிறேன் என்றான்.
24 தாவீது இன்ன இன்னபடி சொன்னான் என்று
சவுலின் ஊழியக்காரர் அவனுக்கு அறிவித்
25 தார்கள். அப்பொழுது சவுல்: ராஜா [2]பரி
சத்தை விரும்பாமல், பெலிஸ்தரின் நூறு
நுனித்தோல்களினால் ராஜாவின் சத்துருக்க
ளிடத்தில் பழிவாங்க விருப்பமாயிருக்கிறார்
என்று தாவீதுக்குச் சொல்லுங்கள் என்றான்;
தாவீதை பெலிஸ்தரின் கையினால் விழப்பண்
ணுவதே சவுலுடைய எண்ணமாயிருந்தது.
26 அவன் ஊழியக்காரர் தாவீதுக்கு இந்த வார்த்
தைகளைச் சொன்னபோது, ராஜாவுக்கு மரு
மகனாகிறது தாவீதுக்குப் பிரியமாயிருந்தது.
27 அதற்குக் குறித்த நாட்கள் நிறைவேறும்முன்
னே, தாவீது எழுந்து, [3]தன் மனுஷரைக்
கூட்டிக்கொண்டு போய், பெலிஸ்தரில் இரு
நூறுபேரை வெட்டி, [4]அவர்கள் நுனித்தோல்
களைக் கொண்டுவந்து, தான் ராஜாவுக்கு மரு
மகனாகும்படிக்கு, அவைகளை ராஜாவுக்கு எண்
ணிச் செலுத்தினான்; அப்பொழுது சவுல்
தன் குமாரத்தியாகிய மீகாளை அவனுக்கு
28 மனைவியாகக் கொடுத்தான். கர்த்தர் தாவீ
தோடிருக்கிறார் என்று சவுல் கண்டறிந்து
கொண்டான்; சவுலின் குமாரத்தியாகிய மீகா
29 ளும் அவனை நேசித்தாள். ஆகையால் சவுல்
இன்னும் அதிகமாய்த் தாவீதுக்குப் பயந்து,
தான் உயிரோடிருந்த நாளெல்லாம் [5]தாவீதுக்
30 குச் சத்துருவாயிருந்தான். பெலிஸ்தருடைய
பிரபுக்கள் [6]புறப்படுகிறபோதெல்லாம் தாவீது
சவுலுடைய ஊழியக்காரர் எல்லாரைப்பார்க்
கிலும் புத்திமானாய் நடந்துகொண்டான்;
அவன் பேர் மிகவும் *கனம்பெற்றது.

19 தாவீதைக் கொன்றுபோடும்படிக்கு, சவுல்
தன் குமாரனாகிய யோனத்தானோடும் தன்
2 ஊழியக்காரர் எல்லாரோடும் பேசினான். சவு
லின் குமாரனாகிய யோனத்தானோ, [7]தாவீதின்
மேல் மிகவும் பிரியமாயிருந்தான்; அதனால்
யோனத்தான் தாவீதுக்கு அதை அறிவித்து:
என் தகப்பனாகிய சவுல் உம்மைக் கொன்று
போட வகைதேடுகிறார்; இப்போதும் நாளைக்
காலமே நீர் எச்சரிக்கையாயிருந்து, மறை
வான இடத்தில் ஒளித்துக்கொண்டிரும். நான் 3
புறப்பட்டுவந்து, நீர் வெளியிலிருக்கும் இடத்
தில் என் தகப்பன் பக்கத்திலே நின்று, உமக்
காக என் தகப்பனோடே பேசி, நடக்கும் காரி
யத்தைக் கண்டு, உமக்கு அறிவிப்பேன் என்
றான். அப்படியே யோனத்தான் தன் தகப் 4
பனாகிய [8]சவுலோடே தாவீதுக்காக நலமாய்ப்
பேசி, [9]ராஜா தம்முடைய அடியானாகிய தாவீ
துக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்யாதிருப்பா
ராக; அவன் உமக்கு விரோதமாகப் பாவஞ்
செய்யவில்லை; அவன் செய்கைகள் உமக்கு
மெத்த உபயோகமாயிருக்கிறதே. அவன் 5
தன் பிராணனைத் [10]தன் கையிலே வைத்துக்
கொண்டு, அந்தப் பெலிஸ்தனைக் கொன்றதி
னாலே, கர்த்தர் இஸ்ரவேலுக்கெல்லாம் பெரிய
இரட்சிப்பைக் கட்டளையிட்டதை நீர் கண்டு,
சந்தோஷப்பட்டீரே; இப்போதும் முகாந்தர
மில்லாமல் தாவீதைக் கொல்லுகிறதினால்,
[11]குற்றமில்லாத இரத்தத்திற்கு விரோதமாக
நீர் பாவஞ்செய்வானேன் என்றான். சவுல் 6
யோனத்தானுடைய சொல்லைக்கேட்டு:
அவன் கொலைசெய்யப்படுவதில்லை என்று
கர்த்தருடைய ஜீவனைக்கொண்டு [12]ஆணையிட்
டான். பின்பு யோனத்தான் தாவீதை அழை 7
த்து, அந்த வார்த்தைகளையெல்லாம் அவனுக்கு
அறிவித்து, அவனைச் சவுலண்டையிலே கூட்
டிக்கொண்டு போய்விட்டான்; அப்படியே
அவன் [13]முன்போலவே அவனுடைய சமுகத்
தில் இருந்தான்.

மறுபடியும் ஒரு யுத்தம் உண்டாயிற்று; அப் 8
பொழுது தாவீது புறப்பட்டுப்போய், பெலிஸ்
தரோடே யுத்தம்பண்ணி, அவர்களுக்குள்
மகா சங்காரம்பண்ணினதினால் அவர்கள் அவ
னுக்கு முன்பாக முறிந்தோடிப்போனார்கள்.
கர்த்தரால் விடப்பட்ட [14]பொல்லாத ஆவி 9
சவுலின்மேல் வந்தது; அவன் தன் வீட்டில்
உட்கார்ந்து, தன் ஈட்டியைக் கையிலே பிடித்
துக்கொண்டிருந்தான்; தாவீது தன் கையி
னாலே சுரமண்டலம் வாசித்தான். அப்பொ 10
ழுது சவுல், தாவீதை ஈட்டியினாலே சுவ
ரோடே சேர்த்து உருவக் குத்திப்போடப்
பார்த்தான்; ஆனாலும் இவன் சவுலுக்கு விலகி
னதினாலே, அவன் எறிந்த ஈட்டி சுவரிலே
பட்டது; தாவீதோ அன்று இராத்திரி ஓடிப்
போய், [15]தன்னைத் தப்புவித்துக்கொண்டான்.
தாவீதைக் காவல்பண்ணி, மறுநாள் காலமே 11
அவனைக் கொன்றுபோடும்படிக்கு, [16]சவுல்
அவன் வீட்டிற்குச் சேவகரை அனுப்பினான்;
இதைத் தாவீதுக்கு அவன் மனைவியாகிய
மீகாள் அறிவித்து: நீர் இன்று இராத்திரியில்
உம்முடைய பிராணனைத் தப்புவித்துக்கொள்
ளாவிட்டால், நாளைக்கு நீர் கொன்றுபோடப்
படுவீர் என்று சொல்லி, மீகாள் தாவீதை 12
ஜன்னல்வழியாய் இறக்கிவிட்டாள்; [17]அவன்
தப்பி ஓடிப்போனான். மீகாளோ ஒரு [18]சுரூ 13

1 யாத். 10. 7. நீதி. 29. 5
2 ஆதி. 34. 12. யாத். 22. 17
3 18. வச.
4 2 சாமு. 3. 14
5 சங். 37. 12, 14
6 2 சாமு. 11. 1
* அருமையாயிருந்தது. 26. 21. சங். 116. 15
7 18. 1
8 நீதி. 31. 8, 9
9 ஆதி. 42. 22. சங். 35. 12. நீதி. 17. 13. எரே. 18. 20
10 28. 21. நியா. 12. 3. சங். 119. 109
11 மத். 27. 4
12 நீதி. 26. 24, 25
13 16. 21
14 16. 14
15 சங். 124. 7. மத். 10. 23
16 சங். 59. முகவுரை
17 யோசு. 2. 15. அப். 9. 24, 25. 2 கொ. 11. 32, 33
18 ஆதி. 31. 19. நியா. 17. 5

பத்தை எடுத்து, கட்டிலின்மேல் வைத்து,
அதின் தலைமாட்டிலே ஒரு வெள்ளாட்டுத்தோ
லைப் போட்டு, துப்பட்டியினால் மூடிவைத்
14 தாள். தாவீதைக் கொண்டுவரச் சவுல் சேவ
கரை அனுப்பினபோது, அவர் வியாதியாயி
15 ருக்கிறார் என்றாள். அப்பொழுது தாவீதைப்
பார்க்கிறதற்குச் சவுல் சேவகரை அனுப்பி,
அவனைக் கொன்றுபோடும்படிக்கு, கட்டி
லோடே அவனை என்னிடத்திற்கு எடுத்துக்
16 கொண்டு வாருங்கள் என்றான். சேவகர் வந்த
போது, இதோ, சுரூபம் கட்டிலின்மேலும்,
வெள்ளாட்டுத்தோல் அதின் தலைமாட்டிலும்
17 கிடக்கக் கண்டார்கள். அப்பொழுது சவுல்:
நீ இப்படி என்னை எய்த்து, என் பகைஞனைத்
தப்பவிட்டு அனுப்பினது என்ன என்று மீகா
ளிடத்தில் கேட்டான். மீகாள் சவுலை நோக்கி:
என்னைப் போகவிடு, [1]நான் உன்னை என்
கொல்லவேண்டும் என்று அவர் என்னிடத்
தில் சொன்னார் என்றாள்.
18 தாவீது தப்பி, ராமாவிலிருந்த சாமுவேலி
டத்துக்குப் போய், சவுல் தனக்குச் செய்தது
எல்லாவற்றையும் அவனுக்கு அறிவித்தான்;
பின்பு அவனும் சாமுவேலும் போய், நாயோ
19 திலே தங்கியிருந்தார்கள். தாவீது ராமாவுக்க
டுத்த நாயோதிலே இருக்கிறான் என்று சவு
20 லுக்கு அறிவிக்கப்பட்டது. அப்பொழுது
சவுல்: தாவீதைக் கொண்டுவரச் [2]சேவகரை
அனுப்பினான்; அவர்கள் தீர்க்கதரிசனம்சொல்
லுகிற தீர்க்கதரிசிகளின் கூட்டத்தையும்,
[3]சாமுவேல் அவர்களின் தலைவனாக நிற்கிற
தையும் கண்டார்கள்; அப்பொழுது சவுலினு
டைய சேவகரின்மேல் தேவனுடைய ஆவி
இறங்கினதினால் [4]அவர்களும் தீர்க்கதரிசனம்
21 சொன்னார்கள். இது சவுலுக்கு அறிவிக்கப்
பட்டபோது, அவன் வேறே சேவகரை அனுப்
பினான்; அவர்களும் தீர்க்கதரிசனம் சொன்
னார்கள்; மூன்றாந்தரமும் சவுல் சேவகரை
அனுப்பினான்; அவர்களும் தீர்க்கதரிசனம்
22 சொன்னார்கள். அப்பொழுது அவனும் ராமா
வுக்குப் போய், சேக்குவிலிருக்கிற பெரிய
கிணற்றண்டையிலே வந்து, சாமுவேலும்
தாவீதும் எங்கே என்று கேட்டான்; அதோ
ராமாவுக்கடுத்த நாயோதிலே இருக்கிறார்கள்
23 என்று சொல்லப்பட்டது. அப்பொழுது ராமா
வுக்கடுத்த நாயோதிற்குப் போனான்; அவன்
மேலும் தேவனுடைய ஆவி [5]இறங்கினதினால்
அவன் ராமாவுக்கடுத்த நாயோதிலே சேருமட்
டும், தீர்க்கதரிசனம் சொல்லிக்கொண்டே
24 நடந்துவந்து, தானும் தன் வஸ்திரங்களைக்
[6]கழற்றிப்போட்டு, சாமுவேலுக்கு முன்பாகத்
தீர்க்கதரிசனம் சொல்லி, [7]அன்று பகல் முழு
வதும் இராமுழுவதும் வஸ்திரம் இல்லாமல்
விழுந்துகிடந்தான்; [8]ஆகையினாலே சவுலும்
தீர்க்கதரிசிகளில் ஒருவனோ என்பார்கள்.

**20** தாவீது ராமாவுக்கடுத்த நாயோதிலிருந்து
ஓடிப்போய், யோனத்தான் முன்பாக வந்து:
உம்முடைய தகப்பன் என் பிராணனை வாங்
கத் தேடுகிறாரே, நான் செய்தது என்ன? என்
அக்கிரமம் என்ன? நான் அவருக்குச் செய்த
துரோகம் என்ன? என்றான். அதற்கு அவன்: 2
அப்படி ஒருக்காலும் வாராது; நீர் சாவ
தில்லை, இதோ, எனக்கு அறிவிக்காமல் என்
தகப்பன் பெரிய காரியமானாலும் சிறிய காரிய
மானாலும் ஒன்றும் செய்கிறதில்லை; இந்தக்
காரியத்தை என் தகப்பன் எனக்கு மறைப்பா
னேன்? அப்படி இருக்கமாட்டாது என்றான்.
அப்பொழுது தாவீது: உம்முடைய கண்க 3
ளில் எனக்குத் தயைகிடைத்தது என்று உம்
முடைய தகப்பன் நன்றாய் அறிவார்; ஆகை
யால் யோனத்தானுக்கு மனநோவு உண்டா
காதபடிக்கு அவன் இதை அறியப்போகாது
என்பார்; [9]மரணத்திற்கும் எனக்கும் ஒரு
அடி தூரமாத்திரம் இருக்கிறது என்று கர்த்த
ருடைய ஜீவனையும் உம்முடைய ஜீவனையும்
கொண்டு நிச்சயமாய்ச் சொல்லுகிறேன் என்று
மறுமொழி சொல்லி ஆணையிட்டான். அப் 4
பொழுது யோனத்தான் தாவீதைப் பார்த்து:
உமது மனவிருப்பம் இன்னது என்று சொல்
லும், அதின்படி உமக்குச் செய்வேன் என்
றான். தாவீது யோனத்தானை நோக்கி: இ 5
தோ, நாளைக்கு [10]அமாவாசி, நான் ராஜா
வோடே பந்தியிருந்து சாப்பிடவேண்டியதா
யிருக்கும்; ஆனாலும் நான் மூன்றாம்நாள் சாயங்
காலமட்டும் வெளியிலே [11]ஒளித்திருக்கும்படி
எனக்கு உத்தரவுகொடும். உம்முடைய தகப் 6
பன் என்னைக்குறித்து விசாரித்தால், [12]தன்
ஊராகிய பெத்லெகேமிலே தன் குடும்பத்தார்
யாவரும் வருஷத்துக்கு ஒருதரம் பலியிட
வருகிறபடியால் தாவீது அவ்விடத்துக்குப்
போக என்னிடத்தில் வருந்திக்கேட்டான்
என்று நீர் சொல்லும். அதற்கு அவர் நல் 7
லது என்றால், உம்முடைய அடியானுக்குச்
சமாதானம் இருக்கும்; அவருக்கு எரிச்சலு
ண்டானால், [13]அவராலே பொல்லாப்புத் தீர்
மானப்பட்டிருக்கிறது என்று அறிந்துகொள்
வீர். ஆகையால் உம்முடைய அடியானுக் 8
குத்[14]தயைசெய்யவேண்டும்; கர்த்தருக்கு முன்
பாக உம்முடைய அடியானோடே [15]உடன்
படிக்கை பண்ணியிருக்கிறீரே; என்னில் ஒரு
அக்கிரமம் இருந்ததேயானால், [16]நீரே என்
னைக் கொன்றுபோடும்; நீர் என்னை உம்மு
டைய தகப்பனிடத்துக்குக் கொண்டுபோக
வேண்டியது என்ன என்றான். அப்பொழுது 9
யோனத்தான்: அப்படி உமக்கு வராதிருப்ப
தாக; உமக்குப் பொல்லாப்புச்செய்ய என்
தகப்பனாலே தீர்மானித்திருக்கிறது என்று
நான் நிச்சயமாய் அறிந்தேனானால் நான்
அதை உமக்கு அறிவிக்காதிருப்பேனா என்
றான்.
தாவீது யோனத்தானை நோக்கி: உம்மு 10
டைய தகப்பன் கடினமான உத்தரம் சொன்
னால் அதை யார் எனக்கு அறிவிப்பார் என்
றான். அப்பொழுது யோனத்தான் தாவீ 11
தைப் பார்த்து: ஊருக்கு வெளியே போவோம்

[1] 2 சாமு. 2. 22
[2] யோ. 7. 32, 45
[3] 10. 5, 6. 1 கொ. 14. 3, 24, 25
[4] எண். 11. 25. யோவேல் 2. 28
[5] 10. 10
[6] ஏசா. 20. 2
[7] எண். 24. 4
[8] 10. 10–12
[9] 2 கொ. 1. 9, 10
[10] எண். 10. 10; 28. 11
[11] 19. 2
[12] 9. 12; 16. 14
[13] 25. 17. எஸ்தர் 7. 7
[14] யோசு. 2. 14
[15] 16. வச.
[16] 2 சாமு. 14. 32

வாரும் என்றான்; இருவரும் வெளியே புறப்
12 பட்டுப் போனார்கள். அப்பொழுது யோனத்
தான் இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தரை**
முன்னிட்டு தாவீதை நோக்கி: நான் நாளையா
வது மறுநாளிலாவது என் தகப்பனுடைய
மனதை அறிந்துகொண்டு, அவர் தாவீதின்
மேல் தயவாயிருக்கிறார் என்று கண்டும்,
அதை அப்போது உமது செவிகளுக்கு வெ
ளிப்படுத்தும்படிக்கு, உமக்குச் சொல்லிய
13 னுப்பாதிருந்தால், இஸ்ரவேலின் தேவனா
கிய **கர்த்தர்** யோனத்தானுக்கு [1]அதற்குச் சரி
யாகவும் அதற்கு அதிகமாகவும் செய்யக்கட
வர்; ஆனாலும் உமக்குத் தீங்குசெய்ய என்
தகப்பனுக்குப் பிரியமாயிருந்தால், அதை
உமது செவிகளுக்கு வெளிப்படுத்தி, நீர் சமா
தானத்தோடே போகும்படிக்கு உம்மை அனு
ப்பிவிடுவேன்; **கர்த்தர்** என் தகப்பனோடு
இருந்ததுபோல், [2]உம்மோடும் இருப்பாராக.
14 மேலும், நான் உயிரோடிருக்கையில், நான்
சாகாதபடிக்கு நீர் **கர்த்தரின்** நிமித்தமாய்
எனக்குத் தயைசெய்யவேண்டியதும் அல்லா
15 மல், **கர்த்தர்** தாவீதின் சத்துருக்களாகிய
ஒவ்வொருவரையும் பூமியின்மேல் இராதபடி
க்கு, வேர் அறுக்கும்போதும், [3]நீர் என்றைக்
கும் உமது தயவை என் வீட்டைவிட்டு அகற்
றிவிடாமலும் இருக்கவேண்டும் என்றான்.
16 இப்படி யோனத்தான் தாவீதின் குடும்பத்
தோடே [4]உடன்படிக்கைபண்ணி, தாவீது
டைய சத்துருக்களின் கையிலே **கர்த்தர்**
கணக்குக் கேட்பாராக என்று சொல்லி,
17 யோனத்தான் தாவீதை மிகவும் சிநேகித்தபடி
யினால், *பின்னும் அவனுக்கு ஆணையிட்
டான்; [5]தன் உயிரைச் சிநேகித்ததுபோல
18 அவனைச் சிநேகித்தான். பின்பு யோனத்தான்
தாவீதைப் பார்த்து: நாளைக்கு [6]அமாவாசி,
நீர் உட்காரவேண்டிய இடம் காலியாயிருப்ப
தினால் உம்மைக்குறித்து விசாரிக்கப்படும்.
19 காரியம் நடந்தபோது, மூன்றாம்நாளிலே
நீர் [7]ஒளித்திருக்கும் இடத்திற்குத் தீவிரித்து
வந்து, ஏசேல் என்னும் கல்லண்டையில் உட்
20 கார்ந்திரும். அப்பொழுது நான் குறிப்பு
வைத்து எய்கிறதுபோல், அதற்குப் பக்கமாக
21 மூன்று அம்புகளை எய்து: நீ போய், அந்த
அம்புகளைத் தேடிவா என்று ஒருபிள்ளையாண்
டானை அனுப்புவேன்; இதோ, அம்புகள்
உனக்கு இப்புறத்திலே கிடக்கிறது, அவை
களை எடுத்துக்கொண்டுவா என்று பிள்ளை
யாண்டானிடத்தில் நான் சொன்னால், நீர்
வாரும்; அப்பொழுது ஒன்றும் இல்லை, உமக்
குச் சமாதானம் இருக்கும் என்று [8]**கர்த்தரு**
டைய ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேன்.
22 இதோ, அம்புகள் உனக்கு அப்புறத்திலே
கிடக்கிறது என்று நான் அந்தப் பிள்ளையாண்
டானிடத்தில் சொன்னால், நீர் போய்விடும்;
அப்பொழுது **கர்த்தர்** உம்மைப் போகச்சொல்
23 லுகிறார் என்று அறியும். நீரும் நானும் பே
சிக்கொண்ட [9]காரியத்திற்கு, இதோ, **கர்த்**

[1] ரூத். 1. 17
[2] 17. 37
[3] 24. 21. 2 சாமு. 9. 1-7
[4] 31. 2. 2 சாமு. 4. 7
* தம் சிநேகத்தின் பேரில் அவனை ஆணையிடுவித்தான்
[5] 18. 1
[6] 5. வச.
[7] 19. 2
[8] [illegible]. 4. 2
[9] 14, 15, 42. வச.
[10] லேவி. 7. 21. 15. 5. ஐ
[11] 6. வச.
[12] நீதி. 19. 12
[13] 9. 6, 11
[14] 19. 5. நீதி. 31. 8, 9. மத். 27. 23
[15] 18. 11
[16] 7. வச.

**தர்** எனக்கும் உமக்கும் என்றைக்கும் நடுநிற்
கும் சாட்சி என்றான்.
அப்படியே தாவீது வெளியிலே ஒளித்துக் 24
கொண்டிருந்தான்; அமாவாசியானபோது
ராஜா போஜனம்பண்ண உட்கார்ந்தான்.
ராஜா சுவரண்டையிலிருக்கிற தன் இடத்தில் 25
எப்போதும்போல உட்கார்ந்தபோது, யோனத்
தான் எழுந்திருந்தான்; அப்னேரோ சவுலு
டைய பக்கத்தில் உட்கார்ந்தான்; தாவீது
இருக்கும் இடம் காலியாயிருந்தது. ஆனா 26
லும் அவன் தீட்டாயிருக்கிறானாக்கும், [10]அவன்
தீட்டுப்பட்டுத்தான் இருக்கவேண்டும் என்று
அன்றையதினம் சவுல் ஒன்றும் சொல்ல
வில்லை. அமாவாசிக்கு மறுநாளிலும் தாவீது 27
இருக்கும் இடம் காலியாயிருந்தது; அப்பொ
ழுது சவுல்: ஈசாயின் மகன் நேற்றும் இன்
றும் போஜனத்துக்கு வாராதேபோனது என்ன
என்று தன் குமாரனாகிய யோனத்தானைக்
கேட்டான். யோனத்தான் சவுலுக்குப் பிரதி 28
யுத்தரமாக: [11]பெத்லெகேம்மட்டும் போக, தா
வீது என்னிடத்தில் வருந்திக் கேட்டு, அங்கே 29
நான் போகவேண்டும்; எங்கள் குடும்பத்தார்
ஊரிலே பலியிடப்போகிறார்கள்; என் தமை
யன் என்னை வரும்படி கட்டளையிட்டார்;
உம்முடைய கண்களில் எனக்குத் தயை
கிடைத்ததானால், நான் என் சகோதரரைப்
பார்க்கிறதற்குப் போக எனக்கு உத்தரவு
கொடும் என்றான்; இதனாலேதான் அவன்
ராஜாவின் பந்திக்கு வரவில்லை என்றான்.
அப்பொழுது சவுல் யோனத்தான்மேல் [12]கோ 30
பமூண்டவனாகி, அவனைப் பார்த்து: இரண்
டகமும் மாறுபாடுமுள்ளவளின் மகனே, நீ
உனக்கு வெட்கமாகவும், உன் தாயின் மானத்
திற்கு வெட்கமாகவும், ஈசாயின் மகனைத் தோ
ழனாகத் தெரிந்துகொண்டிருக்கிறதை நான்
அறியேனோ? ஈசாயின் மகன் பூமியின்மேல் 31
உயிரோடிருக்கும் நாள்வரையும் நீயானாலும்
உன் ராஜ்யபாரமானாலும் நிலைப்படுவதில்லை;
இப்போதே அவனை அழைப்பித்து, என்னி
டத்தில் கொண்டுவா; [13]அவன் சாகவேண்டும்
என்றான். யோனத்தான் தன் தகப்பனாகிய 32
சவுலுக்குப் பிரதியுத்தரமாக: [14]அவன் ஏன்
கொல்லப்படவேண்டும்; அவன் என்ன செய்
தான் என்றான். அப்பொழுது சவுல்: அவ 33
னைக் குத்திப்போட அவன்மேல் [15]ஈட்டியை
எறிந்தான்; ஆகையால் தாவீதைக் கொன்று
போடத் தன் தகப்பன் [16]தீர்மானித்திருக்கி
றான் என்பதை யோனத்தான் அறிந்துகொ
ண்டு, கோபதாபமாய்ப் பந்தியைவிட்டு எழுந் 34
திருந்து போய், அமாவாசியின் மறுநாளா
கிய அன்றையதினம் போஜனம்பண்ணாதிருந்
தான்; தன் தகப்பன் தாவீதை நிந்தித்துச்
சொன்னது அவனுக்கு மனநோவாயிருந்தது.
மறுநாள் காலமே, யோனத்தான் தாவீதுக் 35
குக் குறித்தநேரத்திலே ஒரு சிறு பிள்ளையாண்
டானைக் கூட்டிக்கொண்டு, வெளியே புறப்
பட்டுப்போய்: பிள்ளையாண்டானை நோக்கி: 36

நீ ஓடி, நான் எய்கிற அம்புகளைத் தேடி எடு
த்துக்கொண்டுவா என்று சொல்லி, அந்தப்
பிள்ளையாண்டான் ஓடும்போது, அவனுக்கு
அப்பாலே போகும்படி ஒரு அம்பை எய்
37 தான். யோனத்தான் எய்த அம்பிருக்கும்
இடமட்டும்பிள்ளையாண்டான் போனபோது,
அம்பு உனக்கு இன்னும் அப்பால் இருக்
கிறது அல்லவா என்று யோனத்தான் பிள்ளை
யாண்டானுக்குப் பிறகேயிருந்து கூப்பிட்
38 டான். நீ தரித்துநிற்காமல் தீவிரித்துப் பொட்
டெனப்போ என்றும் யோனத்தான் பிள்ளை
யாண்டானுக்குப் பிறகேயிருந்து கூப்பிட்
டான்; அப்படியே யோனத்தானின் பிள்ளை
யாண்டான் அம்புகளைப் பொறுக்கி, தன் எஜ
39 மானிடத்தில் கொண்டுவந்தான். அந்தக் காரி
யம் யோனத்தானுக்கும் தாவீதுக்கும் தெரிந்
திருந்ததேயல்லாமல், அந்தப் பிள்ளையாண்டா
40 னுக்கு ஒன்றும் தெரியாதிருந்தது. அப்பொ
ழுது யோனத்தான்: தன் ஆயுதங்களைப் பின்
ளையாண்டானிடத்தில் கொடுத்து, இவைக
ளைப் பட்டணத்திற்குக் கொண்டுபோ என்
41 றான். பிள்ளையாண்டான் போனபின்பு, தா
வீது தென்புறமான இடத்திலிருந்து எழுந்து
வந்து, தரையிலே முகங்குப்புறவிழுந்து, மூன்
றுவிசை வணங்கினான்; அவர்கள் ஒருவரை
ஒருவர் முத்தஞ்செய்து அழுதார்கள்; தாவீது
42 மிகவும் அழுதான். அப்பொழுது யோனத்
தான் தாவீதை நோக்கி: [1]நீர் சமாதானத்தோ
டே போம், **கர்த்தர்** என்றைக்கும் எனக்கும்
உமக்கும், என் சந்ததிக்கும் உமது சந்ததிக்
கும், நடுநிற்கும் சாட்சி என்று சொல்லி,
**கர்த்தருடைய** நாமத்தைக்கொண்டு நாம் இரு
வரும் [2]ஆணையிட்டுக்கொண்டதை நினைத்துக்
43 கொள்ளும் என்றான். பின்பு அவன் எழுந்து
புறப்பட்டுப் போனான்; யோனத்தானோ பட்
டணத்திற்குப் போய்விட்டான்.

**21** தாவீது நோபிலிருக்கிற ஆசாரியனாகிய
*அகிமெலேக்கினிடத்தில் போனான்; அகி
மெலேக்கு நடுக்கத்தோடே தாவீதுக்கு எதிர்
கொண்டுபோய்: ஒருவரும் உம்மோடேகூட
வராமல், நீர் ஒண்டியாய் வருகிறது என்ன
2 என்று அவனைக் கேட்டான். தாவீது ஆசா
ரியனாகிய அகிமெலேக்கைப் பார்த்து: ராஜா
எனக்கு ஒரு காரியத்தைக் கட்டளையிட்டு,
நான் உன்னை அனுப்பின காரியமும் உனக்
குக் கட்டளையிட்டதும் இன்னதென்று ஒரு
வரும் அறியாதிருக்கவேண்டும் என்று என்
னோடே சொன்னார்; இன்ன இடத்திற்கு வர
வேண்டும் என்று சேவகருக்குச் சொல்லி
3 யிருக்கிறேன். இப்போதும் உம்முடைய
கையில் இருக்கிறது என்ன? ஐந்து அப்பமாகி
லும், என்னவாகிலும், இருக்கிறதை என்
4 கையிலே கொடும் என்றான். ஆசாரியன்
தாவீதுக்குப் பிரதியுத்தரமாக: [3]பரிசுத்த அப்
பம் இருக்கிறதே ஒழிய, சாதாரண அப்பம்
என் கையில் இல்லை; [4]வாலிபர் ஸ்திரீகளோ
டேமாத்திரம் சேராதிருந்தால் கொடுப்பேன்

[1] 1. 17
[2] 28. வச.
* அபொ. 14. 8. அபியத்தார், மாற். 2. 26
[3] யாத். 25. 30. லேவி. 24. 5. மத். 12. 4
[4] யாத். 19. 15. சகரி. 7. 3
† பாண்டங்கள். 1 தெச. 4. 4
[5] லேவி. 8 26
[6] மத். 12. 3, 4
[7] லேவி. 24. 8, 9
[8] 22. 9. சங் 52. முகவுரை
[9] 17. 2, 50, 51: 31. 10
‡ அபிமெலேக். சங். 34. முகவுரை
[10] சங். 56. முகவுரை
[11] 18. 7: 29. 5
[12] லூக். 2. 19
§ வேஷமாறி. சங். 34. முகவுரை

என்றான். தாவீது ஆசாரியனுக்குப் பிரதி 5
யுத்தரமாக: நான் புறப்படுகிறதற்கு முன் நேற்
றும் முந்தாநாளும் ஸ்திரீகள் எங்களுக்கு விலக்
கமாயிருந்தார்கள்; வாலிபருடைய †அசம்பிக
ளும் சுத்தமாயிருக்கிறது; இன்றையதினம்
வேறே அப்பம் பாத்திரத்தில் பிரதிஷ்டை
பண்ணப்பட்டதினால், [5]இது சாதாரணமாயிற்
றே என்றான். அப்பொழுது **கர்த்தருடைய** 6
சந்நிதியிலிருந்து எடுக்கப்பட்ட சமுகத்தப்பங்
களைத்தவிர, வேறே அப்பம் அங்கே இராத
படியினால் ஆசாரியன் அவனுக்குப் [6]பரிசுத்த
அப்பத்தைக் கொடுத்தான்; [7]அவைகள் எடுக்
கப்படுகிற நாளிலே அதற்குப் பதிலாகச்
சூடான அப்பம் வைக்கப்படும். சவுலுடைய 7
வேலைக்காரரில் ஏதோமியனாகிய [8]தோவேக்கு
என்னும் பேருள்ள ஒருவன் அன்றையதினம்
அங்கே **கர்த்தருடைய** சந்நிதியில் தடைபட்டி
ருந்தான்; அவன் சவுலுடைய மேய்ப்பருக்குத்
தலைவனாயிருந்தான். தாவீது அகிமெலேக் 8
கைப் பார்த்து: இங்கே உம்முடைய வசத்தில்
ஒரு ஈட்டியாகிலும் பட்டயமாகிலும் இல்லை
யா? ராஜாவின் காரியம் அவசரமானபடியி
னால், என் பட்டயத்தையாகிலும், என் ஆயு
தங்களையாகிலும், நான் எடுத்துக்கொண்டுவர
வில்லை என்றான். அதற்கு ஆசாரியன்: நீர் 9
ஏலே பள்ளத்தாக்கிலே கொன்ற பெலிஸ்த
னாகிய கோலியாத்தின் பட்டயம், [9]இதோ,
ஏபோத்துக்குப் பின்னாக ஒரு புடவையிலே
சுருட்டி வைத்திருக்கிறது; அதை நீர் எடுக்க
மனதானால் எடுத்துக்கொண்டுபோம், அது
வே அல்லாமல் வேறொன்றும் இங்கே
இல்லை என்றான்; அப்பொழுது தாவீது:
அதற்கு நிகரில்லை; அதை எனக்குத் தாரும்
என்றான்.

அன்றையதினம் தாவீது எழுந்து சவுலுக் 10
குத் தப்பியோடி, காத்தின் [1]ராஜாவாகிய ‡ஆகீ
சிடத்தில் போனான். ஆகீசின் ஊழியக்காரர் 11
அவனைப் பார்த்து: [10]தேசத்து ராஜாவாகிய தா
வீது இவன் அல்லவோ? [11]சவுல் கொன்றது
ஆயிரம், தாவீது கொன்றது பதினாயிரம் என்று
இவனைக்குறித்தல்லவோ ஆடல் பாடலோடே
கொண்டாடினார்கள் என்றார்கள். இந்த வார்த் 12
தைகளைத் தாவீது தன் [12]மனதிலே வைத்துக்
கொண்டு, காத்தின் ராஜாவாகிய ஆகீசுக்கு
மிகவும் பயப்பட்டு, அவர்கள் கண்களுக்கு 13
முன்பாகத் §தன் முகநாடியை வேறுபடுத்தி,
அவர்களிடத்தில் பித்தங்கொண்டவன்போ
லக் காண்பித்து, வாசற் கதவுகளிலே கீறிக்
கொண்டிருந்து, தன் வாயிலிருந்து நுரையைத்
தன் தாடியில் விழப்பண்ணிக்கொண்டிருந்
தான். அப்பொழுது ஆகீஸ்: தன் ஊழியக் 14
காரரை நோக்கி: இதோ, இந்த மனுஷன் பித்
தங்கொண்டவன் என்று காண்கிறீர்களே;
இவனை நீங்கள் என்னிடத்தில் கொண்டுவந்
தது என்ன? எனக்கு முன்பாகப் பயித்திய 15
சேஷ்டை செய்ய, நீங்கள் இவனைக்கொண்டு
வருகிறதற்கு, பயித்தியக்காரர் எனக்குக் குறை

வாயிருக்கிறார்களோ? இவன் என் வீட்டிலே
வரலாமா என்றான்.

22 தாவீது அவ்விடத்தைவிட்டுத்தப்பி, [1]அது
ல்லாம் என்னும்கெபிக்குப் போனான்; அதை
அவன் சகோதரரும் அவன் தகப்பன் வீட்
டார் அனைவரும் கேட்டு, அங்கே அவனிடத்
2 துக்குப் போனார்கள். ஒடுக்கப்பட்டவர்கள்,
[2]கடன்பட்டவர்கள், முறுமுறுக்கிறவர்கள்
யாவரும் அவனோடே கூடிக்கொண்டார்கள்;
அவன் அவர்களுக்குத் தலைவனானான்; இந்தப்
பிரகாரமாக ஏறக்குறைய நானூறுபேர் அவ
னோடிருந்தார்கள்.
3 தாவீது அவ்விடத்தைவிட்டு மோவாபிய
ரைச் சேர்ந்த மிஸ்பேக்குப் போய், மோவா
பின் ராஜாவைப் பார்த்து: தேவன் என்னை
எப்படி நடத்துவார் என்று நான் அறியுமட்
டும், என் தகப்பனும் என் தாயும் உங்களிடத்
திலே தங்கியிருக்கும்படி தயவுசெய்யும் என்று
4 சொல்லி, அவர்களை மோவாபின் ராஜாவி
னிடத்தில் அழைத்துக்கொண்டுபோய் விட்
டான்; தாவீது *அரணில் இருந்த நாளெல்
லாம் அவர்கள் அங்கே அவனோடிருந்தார்கள்.
5 பின்பு [3]காத் என்னும் தீர்க்கதரிசி தாவீதைப்
பார்த்து: நீர் அரணில் இராமல் யூதாதேசத்
திற்குப் புறப்பட்டுவாரும் என்றான்; அப்பொ
ழுது தாவீது புறப்பட்டு ஆரேத் என்னும்
காட்டிலே போனான்.
6 தாவீதும் அவனோடிருந்த மனுஷரும் கா
ணப்பட்ட செய்தியைச் சவுல் கேள்விப்பட்
டான்; சவுல் கிபியாவைச்சேர்ந்த ராமாவில்
ஒரு தோப்பிலே உட்கார்ந்து, தன்னுடைய
ஊழியக்காரர் எல்லாரும் தன்னைச் சூழ்ந்து
நிற்க, தன் ஈட்டியைத் தன் கையிலே பிடித்
7 துக்கொண்டிருக்கும்போது, சவுல் தன்னண்
டையில் நிற்கிற தன் ஊழியக்காரரைப் பார்
த்து: பென்யமீன் புத்திரரே, கேளுங்கள்;
ஈசாயின் மகன் உங்களெல்லாருக்கும் [4]வயல்
களையும் திராட்சத்தோட்டங்களையும் கொடுப்
பானோ? உங்களெல்லாரையும் ஆயிரத்துக்கு
அதிபதிகளும் நூற்றுக்கு அதிபதிகளுமாக
8 வைப்பானோ? நீங்களெல்லாரும் எனக்கு
விரோதமாகக் கட்டுப்பாடு பண்ணிக்கொண்
டது என்ன? ஈசாயின் மகனுடனே என்
குமாரன் உடன்படிக்கை பண்ணும்போது,
என் செவிக்கு அதை ஒருவனும் வெளிப்படுத்
தவில்லை; எனக்காகப் பரிதாபப்பட்டு, என்
செவிக்கு அதை வெளிப்படுத்த உங்களில்
ஒருவனாகிலும் இல்லையா? இந்நாளில் இருக்கி
றபடி எனக்குச் சதிபண்ண, என் குமாரன்
என் வேலைக்காரனை எனக்கு விரோதமாக
9 எடுத்துவிட்டானே என்றான். அப்பொழுது
சவுலின் ஊழியக்காரரோடே நின்ற ஏதோமி
யனாகிய தோவேக்கு பிரதியுத்தரமாக: [5]ஈசா
யின் மகனை நோபிலிருக்கிற அகிதூபின் குமா
ரனாகிய அகிமெலேக்கிடத்தில் வரக்கண்
10 டேன். இவன் அவனுக்காகக் கர்த்தரிடத்
தில் [6]விசாரித்து, அவனுக்கு வழிக்குப் போஜ

[1] சங். 57. 142. மூலவுரை. 2 சாமு. 23. 13
[2] நியா. 11. 3
* கோட்டை
[3] 2 சாமு. 24. 11. 2 நாளா. 29. 25
[4] 8. 14
[5] 21. 1. மு
[6] எண். 27. 21
[7] 21. 6, 9
[8] 19. 4, 5; 24. 11
[9] உபா. 24. 16. எஸ்றா 3. 6
[10] யாத். 1. 17
[11] 2. 31, 33
[12] 9, 11. மு.
[13] 23. 6

னத்தைக் கொடுத்து, பெலிஸ்தனாகிய கோலி
யாத்தின் [7]பட்டயத்தையும் அவனுக்குக் கொ
டுத்தான் என்றான். அப்பொழுது ராஜா: 11
அகிதூபின் குமாரனாகிய அகிமெலேக் என்
னும் ஆசாரியனையும், நோபிலிருக்கிற அவன்
தகப்பன் வீட்டாராகிய எல்லா ஆசாரியரை
யும் அழைப்பித்தான்; அவர்களெல்லாரும் ரா
ஜாவினிடத்தில் வந்தார்கள். அப்பொழுது 12
சவுல்: அகிதூபின் குமாரனே கேள் என்று
சொல்ல, அவன்: இதோ, இருக்கிறேன் என்
ஆண்டவனே என்றான். அப்பொழுது சவுல் 13
அவனை நோக்கி: நீயும் ஈசாயின் மகனும் என
க்கு விரோதமாய்க் கட்டுப்பாடுபண்ணி, இந்
நாளில் இருக்கிறபடி எனக்குச் சதிபண்ண
அவன் எனக்கு விரோதமாக எழும்பும்படிக்கு,
நீ அவனுக்கு அப்பமும் பட்டயமும் கொடு
த்து, தேவசந்நிதியில் அவனுக்காக விசாரித்
தது என்ன என்றான். அகிமெலேக் ராஜா 14
வுக்குப் பிரதியுத்தரமாக: உம்முடைய எல்லா
ஊழியக்காரரிலும் தாவீதைப்போல, ராஜாவு
க்கு மருமகனும், உம்முடைய கட்டளைகளின்
படி செய்துவருகிறவனும், உம்முடைய வீட்
டிலே கனமுள்ளவனுமாயிருக்கிற [8]உண்மை
யுள்ளவன் யார்? இன்றையதினம் அவனுக்காக 15
தேவசந்நிதியில் விசாரிக்கத் தொடங்கினே
னோ? அது எனக்குத் தூரமாயிருப்பதாக; ரா
ஜா தம்முடைய அடியானாகிய என்மேலாகி
லும் என் தகப்பன் வீட்டாரில் எவன்மேலாகி
லும் குற்றம் சுமத்தவேண்டாம்; உம்முடைய
அடியான் இவைகளிலெல்லாம் ஒரு சிறியகா
ரியமாகிலும் பெரியகாரியமாகிலும் அறிந்திரு
ந்ததில்லை என்றான். ராஜாவோ: அகிமெ 16
லேக்கே, நீயும் உன் [9]தகப்பன் வீட்டார் அனை
வரும் சாகவே சாகவேண்டும் என்றான்.
பின்பு ராஜா தன்னண்டையிலே நிற்கிற சேவ 17
கரை நோக்கி: நீங்கள் போய், கர்த்தருடைய
ஆசாரியர்களைக் கொல்லுங்கள்; அவர்கள் கை
யும் தாவீதோடே இருக்கிறது; அவன் ஓடிப்
போகிறதை அவர்கள் அறிந்திருந்தும், அதை
எனக்கு வெளிப்படுத்தவில்லை என்றான்; ராஜா
வின் வேலைக்காரரோ, கர்த்தருடைய [10]ஆசாரி
யர்களைக் கொல்லத் தங்கள் கைகளை நீட்ட
சம்மதிக்கவில்லை. அப்பொழுது ராஜா தோ 18
வேக்கை நோக்கி: நீ போய் ஆசாரியர்களைக்
கொன்றுபோடு என்றான்; ஏதோமியனாகிய
தோவேக்கு ஆசாரியர்கள்மேல் விழுந்து, சணல்
நூல் ஏபோத்தைத் தரித்திருக்கும் எண்பத்தை
ந்துபேரை அன்றையதினம் [11]கொன்றான்.
ஆசாரியர்களின் பட்டணமாகிய [12]நோபிலு 19
முள்ள புருஷரையும், ஸ்திரீகளையும், பிள்ளை
களையும், குழந்தைகளையும், மாடுகளையும், கழு
தைகளையும், ஆடுகளையும் பட்டயக்கருக்கினால்
வெட்டிப்போட்டான். அகிதூபின் குமார 20
னாகிய அகிமெலேக்கின் குமாரரில் [13]அபியத்
தார் என்னும் பேருள்ள ஒருவன் தப்பி,
தாவீது இருக்கும் புறமாக ஓடிப்போய், சவுல் 21
கர்த்தருடைய ஆசாரியர்களைக் கொன்றுபோ

ட்ட செய்தியை தாவீதுக்கு அறிவித்தான்.
22 அப்பொழுது தாவீது அபியத்தாரைப் பார்
த்து: ஏதோமியனுகிய தோவேக்கு அங்கே
இருந்தபடியினலே, அவன் எவ்விதத்திலும்
சவுலுக்கு, அதை அறிவிப்பான் என்று அன்
றையதினமே அறிந்திருந்தேன்; உன் தகப்பன்
வீட்டாராகிய எல்லாருடைய மரணத்துக்கும்
23 காரணம் நானே. நீ என்னிடத்தில் இரு,
பயப்படவேண்டாம்; [1]என் பிராணனை வாங்
கத் தேடுகிறவனே உன் பிராணனையும் வாங்
கத்தேடுகிறன்; நீ என் ஆதரவிலே இரு என்
றான்.

**23** இதோ, பெலிஸ்தர் [2]கேகிலாவின்மேல்
யுத்தம்பண்ணி, களஞ்சியங்களைக் கொள்ளை
யிடுகிறார்கள் என்று தாவீதுக்கு அறிவிக்கப்
2 பட்டது. அப்பொழுது தாவீது: நான் போய்,
அந்தப் பெலிஸ்தரை முறிய அடிக்கலாமா
என்று **கர்த்தரிடத்தில்** [3]விசாரித்ததற்கு, **கர்த்
தர்**: நீ போ; பெலிஸ்தரை முறிய அடித்து,
கேகிலாவை இரட்சிப்பாயாக என்று தாவீதுக்
3 குச் சொன்னார். ஆனாலும் தாவீதின் மனு
ஷர் அவனை நோக்கி: இதோ, நாங்கள் இங்
கே யூதாவிலே இருக்கும்போதே பயப்படு
கிறோம்; நாங்கள் பெலிஸ்தருடைய சேனை
களை எதிர்க்கிறதற்கு கேகிலாவுக்குப் போ
4 னால், எவ்வளவு அதிகம் என்றார்கள். அப்
பொழுது தாவீது திரும்பவும் **கர்த்தரிடத்தில்**
விசாரித்தபோது, **கர்த்தர்** அவனுக்கு உத்தர
மாக: நீ எழும்பி, கேகிலாவுக்குப் போ; நான்
பெலிஸ்தரை உன் கையில் ஒப்புக்கொடுப்
5 பேன் என்றார். அப்படியே தாவீது தன்
மனுஷரைக் கூட்டிக்கொண்டு, கேகிலாவுக்
குப் போய், பெலிஸ்தரோடு யுத்தம்பண்ணி,
அவர்களில் அநேகம்பேரை வெட்டி, அவர்கள்
ஆடுமாடுகளை ஓட்டிக்கொண்டுபோனான்; இவ்
விதமாய் கேகிலாவின் குடிகளை இரட்சித்
தான்.
6 அகிமெலேக்கின் குமாரனுகிய அபியத்தார்
கேகிலாவில் இருக்கிற தாவீதினிடத்தில் [4]தப்
பியோடுகிறபோது, அவனிடத்தில் ஒருஏபோ
த்து இருந்தது.
7 தாவீது கேகிலாவுக்கு வந்தான் என்று சவு
லுக்கு அறிவிக்கப்பட்டபோது, தேவன்
அவனை என் கையில் ஒப்புக்கொடுத்தார்;
அவன் கதவுகளும் தாழ்ப்பாள்களுமுள்ள பட்
டணத்திற்குள் பிரவேசித்ததினால், அடைபட்
8 டிருக்கிறான் என்று சவுல் சொல்லி, தாவீ
தையும் அவன் மனுஷரையும் முற்றிக்கைபோ
டும்படிக்கு, கேகிலாவுக்குப் போக, எல்லா
ஜனத்தையும் யுத்தத்திற்கு அழைப்பித்தான்.
9 தனக்குப் பொல்லாப்புச் செய்யச் சவுல் எத்
தனம்பண்ணுகிறான் என்று தாவீது அறிந்து
கொண்டபோது, [5]ஆசாரியனுகிய அபியத்தா
ரை நோக்கி: ஏபோத்தை இங்கே கொண்டுவா
10 என்றான். அப்பொழுது தாவீது: இஸ்ரவே
லின் தேவனுகிய **கர்த்தாவே**, சவுல் கேகிலா
வுக்கு வந்து, [6]என்னிமித்தம் பட்டணத்தை
அழிக்க வகைதேடுகிறான் என்று உமது அடி
யானுகிய நான் நிச்சயமாய்க் கேள்விப்பட்
டேன். கேகிலாபட்டணத்தார் என்னை அவன் 11
கையில் ஒப்புக்கொடுப்பார்களோ, உம்மு
டைய அடியான் கேள்விப்பட்டபடி சவுல் வரு
வானே, இஸ்ரவேலின் தேவனுகிய **கர்த்தா
வே**, இதை உம்முடைய அடியானுக்குத் தெ
ரிவிக்கவேண்டும் என்றான். அதற்குக் **கர்த்
தர்**: அவன் வருவான் என்றார். கேகிலாபட் 12
டணத்தார் என்னையும் என் மனுஷரையும் சவு
லின் கையில் ஒப்புக்கொடுப்பார்களோ என்று
தாவீது கேட்டதற்கு, **கர்த்தர்**: ஒப்புக்கொடுப்
பார்கள் என்றார். ஆகையால் தாவீதும் ஏறக் 13
குறைய [7]அறுநூறு பேராகிய அவன் மனுஷ
ரும் எழும்பி, கேகிலாவை விட்டுப் புறப்
பட்டு, போகக்கூடிய இடத்திற்குப் போனார்
கள்; தாவீது கேகிலாவிலிருந்து தப்பிப்போ
னான் என்று சவுலுக்கு அறிவிக்கப்பட்ட
போது, தான் புறப்படுகிறதை நிறுத்திவிட்
டான். தாவீது வனாந்தரத்திலுள்ள அரணான 14
ஸ்தலங்களிலே தங்கி, சீப் என்னும் வனாந்த
ரத்திலிருக்கிற [8]ஒரு மலையிலே தரித்திருந்
தான்; சவுல் அநுதினமும் அவனைத் தேடி
யும், [9]தேவன் அவனை அவன் கையில் ஒப்புக்
கொடுக்கவில்லை.
தன் பிராணனை வாங்கத் தேடும்படிக்கு, 15
சவுல் புறப்பட்டான் என்று தாவீது அறிந்த
படியினலே, தாவீது சீப் வனாந்தரத்திலுள்ள
ஒரு காட்டிலே இருந்தான். அப்பொழுது 16
சவுலின் குமாரனுகிய யோனத்தான் எழுந்து,
காட்டிலிருக்கிற தாவீதினிடத்தில் போய்,
[10]தேவனுக்குள் அவன் கையைத் திடப்படுத்தி:
நீர் பயப்படவேண்டாம்; [11]என் தகப்பனுகிய 17
சவுலின் கை உம்மைக் கண்டுபிடிக்கமாட்
டாது; நீர் இஸ்ரவேலின்மேல் ராஜாவாயிருப்
பீர்; அப்பொழுது நான் உமக்கு இரண்டாவ
தாயிருப்பேன்; அப்படி நடக்கும் என்று என்
தகப்பனுகிய சவுலும் [12]அறிந்திருக்கிறார் என்
றான். அவர்கள் இருவரும் **கர்த்தருக்கு** முன் 18
பாக [13]உடன்படிக்கை பண்ணினபின்பு, தா
வீது காட்டில் இருந்துவிட்டான்; யோனத்
தானே தன் வீட்டிற்குப் போனான். பின்பு 19
சீப் ஊரார் [14]கிபியாவிலிருக்கிற சவுலிடத்தில்
வந்து: தாவீது எங்களிடத்தில் எஷிமோனுக்
குத் தெற்கே ஆகிலா என்னும் மலைக்காட்டி
லுள்ள அரணிப்பான இடங்களில் ஒளித்துக்
கொண்டிருக்கிறான் அல்லவா? இப்போதும் 20
ராஜாவே, நீர் உம்முடைய மனவிருப்பத்தின்
படி இறங்கிவாரும்; [15]அவனை ராஜாவின் கை
யில் ஒப்புக்கொடுக்க, எங்களால் ஆகும் என்
றார்கள். அதற்கு சவுல்: நீங்கள் என்மேல் 21
தயைவைத்ததினலே, [16]**கர்த்தரால்** ஆசீர்வதிக்
கப்பட்டிருப்பீர்களாக. நீங்கள் போய், அவன் 22
கால் நடமாடுகிற இடத்தைப் பார்த்து, அங்
கே அவனைக் கண்டவன் யார் என்பதையும்
இன்னும் நன்றாய் விசாரித்து அறியுங்கள்;
அவன் மகா தந்திரவாதி என்று எனக்குத் தெ

[1] 1 இரா. 2. 26
[2] யோசு. 15. 44
[3] 4, 6, 9. வச. 2 சாமு. 5. 19, 23
[4] 22. 20
[5] எண். 27. 21. எஸ்ற. 11. 18, 19: 38. 8
[6] எஸ்தர் 3. 6. சங். 28. 15. நீதி. 8. 15, 16
[7] 22. 2: 25. 13
[8] யோசு. 15. 55. சங். 11. 1
[9] சங். 54. 3, 4
[10] சங். 27. 9, 17. ஏசா. 35. 3, 4. எபே. 6. 10. எபி. 12. 12
[11] யோபு 5. 11–15
[12] 24. 20
[13] 20. 16, 42. 2 சாமு. 21. 7
[14] 26. 1. சங். 54. முகவுரை
[15] சங். 54. 3
[16] மீகா. 17. 2. மீகா 3. 11

23 சியவந்தது. அவன் ஒளித்துக்கொண்டிருக்
கும் எல்லா மறைவிடங்களையும் பார்த்தறிந்து
கொண்டு, நிச்சய செய்தி எனக்குக் கொண்டு
வாருங்கள்; அப்பொழுது நான் உங்களோடே
கூடவந்து, அவன் தேசத்தில் இருந்தால்,
யூதாவிலிருக்கிற சகல ஆயிரங்களுக்குள்ளும்
24 அவனைத் தேடிப்போவேன் என்றான். அப்
பொழுது அவர்கள் எழுந்து, சவுலுக்கு முன்
னாலே சிப் ஊருக்குப் போனார்கள்; தாவீதும்
அவன் மனுஷரும் எஷிமோனுக்குத் தெற்
கான அந்தரவெளியாகிய [1]மாகோன் வனாந்
25 தரத்தில் இருந்தார்கள். சவுலும் அவன் மனு
ஷரும் தாவீதைத் தேட வருகிறார்கள் என்று
அவனுக்கு அறிவிக்கப்பட்டபோது, அவன்
கன்மலையிலிருந்து இறங்கி, மாகோன் வனாந்
தரத்திலே தங்கினான்; அதைச் சவுல் கேள்
விப்பட்டு, மாகோன் வனாந்தரத்திலே தாவீ
26 தைப் பின்தொடர்ந்தான். சவுல் மலையின்
இந்தப் பக்கத்திலும், தாவீதும் அவன் மனுஷ
ரும் மலையின் அந்தப் பக்கத்திலும் நடந்தார்
கள்; சவுலுக்குத் தப்பிப்போக; [2]தாவீது தீவி
ரித்தபோது, சவுலும் அவன் மனுஷரும் தாவீ
தையும் அவன் மனுஷரையும் பிடிக்கத்தக்க
தாய் [3]அவர்களை வளைந்துகொண்டார்கள்.
27 அந்தச் சமயத்தில் ஒரு [4]ஆள் சவுலிடத்தில்
வந்து: நீர் சீக்கிரமாய் வாரும்; பெலிஸ்தர் தே
சத்தின்மேல் படையெடுத்து வந்திருக்கிறார்
28 கள் என்றான். அதனால் சவுல் தாவீதைப்
பின்தொடருகிறதை விட்டுத் திரும்பி, பெ
லிஸ்தரை எதிர்க்கும்படி போனான்; ஆதலால்
அவ்விடத்திற்குச் *சேலா அம்மாலிகோத்
29 என்று பேரிட்டார்கள். தாவீது அவ்விடத்
தை விட்டுப் புறப்பட்டு, [5]என்கேதியிலுள்ள
அரணிப்பான இடங்களில் தங்கினான்.

24 சவுல் பெலிஸ்தரைப் பின்தொடர்ந்து
திரும்பிவந்தபோது, [6]இதோ, தாவீது என்கே
தியின் வனாந்தரத்தில் இருக்கிறான் என்று
2 அவனுக்கு அறிவிக்கப்பட்டது. அப்பொ
ழுது சவுல்: இஸ்ரவேல் அனைத்திலும் தெரிந்
துகொள்ளப்பட்ட மூவாயிரம்பேரைக் கூட்
டிக்கொண்டு, தாவீதையும் அவன் மனுஷரை
யும் [7]வரையாடுகளுள்ள கன்மலைகளின்மேல்
3 தேடப்போனான். வழியோரத்திலிருக்கிற
ஆட்டுத்தொழுவங்களிடத்தில் அவன் வந்த
போது, அங்கே ஒரு கெபி இருந்தது; [8]அதி
லே சவுல் மலஜலாதிக்குப் போனான்; தாவீ
தும் அவன் மனுஷரும் அந்தக் கெபியின் பக்
4 கங்களில் உட்கார்ந்திருந்தார்கள். அப்பொ
ழுது [9]தாவீதின் மனுஷர் அவனை நோக்கி:
இதோ, நான் உன் சத்துருவை உன் கையில்
ஒப்புக்கொடுப்பேன்; உன் பார்வைக்கு நலமா
னபடி அவனுக்குச் செய்வாயாக என்று **கர்த்**
**தர்** உன்னோடே சொன்ன நாள் இதுதானே
என்றார்கள்; தாவீது எழுந்திருந்துபோய், சவு
லுடைய சால்வையின் தொங்கலை மெள்ள
5 அறுத்துக்கொண்டான். தாவீது சவுலின்
சால்வைத் தொங்கலை அறுத்துக்கொண்டதி
னிமித்தம் அவன் மனது [10]அடித்துக்கொண்
டிருந்தது அவன் தன் மனுஷரைப் பார்த்து: 6
**கர்த்தர்** அபிஷேகம்பண்ணின என் ஆண்ட
வன்மேல் என் கையைப் போடும்படியான
இப்படிப்பட்ட காரியத்தை நான் செய்யாத
படிக்கு, [11]**கர்த்தர்** என்னைக் காப்பாராக; அவர்
**கர்த்தரால்** [12]அபிஷேகம் பண்ணப்பட்டவர்
என்று சொல்லி, தன் மனுஷரைச் சவுலின் 7
மேல் எழும்ப ஒட்டாமல், [13]இவ்வார்த்தைகளி
னால் அவர்களைத் தடைபண்ணினான்; சவுல்
எழுந்திருந்து, கெபியைவிட்டு, வழியே நடந்
துபோனான்.
அப்பொழுது தாவீதும் எழுந்து, கெபியி 8
லிருந்து புறப்பட்டு, சவுலுக்குப் பின்னாகப்
போய்: ராஜாவாகிய என் ஆண்டவனே
என்று கூப்பிட்டான்; சவுல் திரும்பிப்பார்த்
தபோது, தாவீது தரைமட்டும் முகங்குனிந்து
வணங்கி, சவுலை நோக்கி: [14]தாவீது உமக்குப் 9
பொல்லாப்புச் செய்யப் பார்க்கிறான் என்று
சொல்லுகிற மனுஷருடைய வார்த்தைகளை
ஏன் கேட்கிறீர்? இதோ, **கர்த்தர்** இன்று 10
கெபியில் உம்மை என் கையில் ஒப்புக்கொ
டுத்தார் என்பதை இன்றையதினம் உம்மு
டைய கண்கள் கண்டதே, உம்மைக் கொன்
றுபோடவேண்டும் என்று சிலர் சொன்னார்
கள், ஆனாலும் என் கை உம்மைத் தப்பவிட்
டது; என் ஆண்டவன்மேல் என் கையைப்
போடேன்; அவர் **கர்த்தரால்** அபிஷேகம்
பண்ணப்பட்டவராமே என்றேன். என் 11
தகப்பனே பாரும்; என் கையிலிருக்கிற உம்
முடைய சால்வையின் தொங்கலைப் பாரும்;
உம்மைக் கொன்றுபோடாமல், உம்முடைய
சால்வையின் தொங்கலை அறுத்துக்கொண்
டேன்; [15]என் கையிலே பொல்லாப்பும் துரோ
கமும் இல்லை என்றும், உமக்கு நான் குற்
றம் செய்யவில்லை என்றும் அறிந்துகொள்
ளும்; நீரோ என் பிராணனை வாங்க, [16]அதை
வேட்டையாடுகிறீர். **கர்த்தர்** எனக்கும் உம 12
க்கும் [17]நடுநின்று நியாயம் விசாரித்து, **கர்த்தர்**
தாமே என் காரியத்தில் உமக்கு நீதியைச்
சரிக்கட்டுவாராக; உம்முடையபேரில் நான்
கைபோடுவதில்லை. முதியோர் மொழிப்ப 13
டியே, ஆகாதவர்களிடத்திலே ஆகாமியம் பிற
க்கும்; ஆகையால் உம்முடையபேரில் நான்
கைபோடுவதில்லை. இஸ்ரவேலின் ராஜா 14
யாரைத் தேடப் புறப்பட்டார்? ஒரு செத்த
நாயையா, [18]ஒரு தெள்ளுப்பூச்சியையா, நீர்
யாரைப் பின்தொடருகிறீர்? **கர்த்தர்** நியா 15
யாதிபதியாயிருந்து, [19]எனக்கும் உமக்கும்
நியாயந்தீர்த்து, [20]எனக்காக வழக்காடி, நான்
உம்முடைய கைக்குத் தப்ப என்னை விடுவிப்
பாராக என்றான். தாவீது இந்த வார்த்தைக 16
ளைச் சவுலோடே சொல்லி முடிந்தபின்பு,
சவுல்: என் குமாரனாகிய தாவீதே, [21]இது
உன்னுடைய சத்தமல்லவா என்று சொல்லி,
சத்தமிட்டு அழுது, தாவீதைப் பார்த்து: [22]நீ 17
என்னைப்பார்க்கிலும் நீதிமான்; நீ எனக்கு

[1] 25. 2
[2] சங். 31. 22
[3] சங். 17. 9, 11: 140. 1-9
[4] 2 இரா. 19. 9
* பிரிவினையின்மலை
[5] 2 நாளா. 20. 2
[6] 23. 28, 29
[7] சங். 38. 12: 141. 6
[8] நியா. 3. 24. சங். 57, 142. முகவுரை
[9] 26. 8-11
[10] 2 சாமு. 24. 10. 1 யோ. 3. 20, 21
[11] 26. 11. 1 இரா. 21. 3
[12] 2 சாமு. 1. 14
[13] சங். 7. 4. மத். 5. 44. ரோ. 12. 17-21
[14] லேவி. 19. 16. சங். 141. 6. நீதி. 16. 28: 17. 9: 18. 8. பிர. 7. 21
[15] சங். 7. 3: 35. 7
[16] 26. 20
[17] ஆதி. 16. 5. யோபு 5. 8
[18] 17. 43: 26. 20
[19] 2 நாளா. 24. 22
[20] சங். 35. 1: 43. 1: 119. 154. மீகா 7. 9
[21] 26. 17
[22] 26. 21. ஆதி. 38. 26. மத். 5. 44

நன்மை செய்தாய்; நானோ உனக்குத் தீமை
18 செய்தேன். நீ எனக்கு நன்மை செய்ததை
இன்று விளங்கப்பண்ணினாய்; கர்த்தர்
என்னை உன் கையில் ஒப்புக்கொடுத்திருந்தும்,
19 நீ என்னைக் கொன்றுபோடவில்லை. ஒருவன்
தன் மாற்றானைக் கண்டுபிடித்தால், அவனைச்
சுகமே போகவிடுவானோ? இன்று நீ எனக்
குச் செய்த நன்மைக்காகக் கர்த்தர் உனக்கு
20 [1]நன்மை செய்வாராக. நீ நிச்சயமாக ராஜா
வாய் [2]இருப்பாய் என்றும், இஸ்ரவேலின்
ராஜ்யபாரம் உன் கையில் நிலைவரப்படும்
21 என்றும் அறிவேன். இப்போதும் நீ எனக்
குப் பின்னிருக்கும் என் சந்ததியை வேறுப்
பதில்லை என்றும், [3]என் தகப்பன் வீட்டா
ரில் என் பெயரை அழித்துப்போடுவதில்லை
என்றும் கர்த்தர்மேல் எனக்கு ஆணையிட்டுக்
22 கொடு என்றான். அப்பொழுது தாவீது சவு
லுக்கு ஆணையிட்டுக்கொடுத்தான்; பின்பு,
சவுல் தன் வீட்டுக்குப் புறப்பட்டுப்போனான்;
தாவீதும் அவன் மனுஷரும் [4]அரணிப்பான
இடத்திற்கு ஏறிப்போனார்கள்.

**25** சாமுவேல் [5]மரணமடைந்தான். இஸ்ர
வேலர் எல்லாரும் கூடிவந்து, அவனுக்காகத்
துக்கங்கொண்டாடி, ராமாவிலிருக்கிற அவ
னுடைய வளவிலே அவனை அடக்கம்பண்
ணினார்கள்; தாவீது எழுந்து, பாரான் வனாந்
2 தரத்திற்குப் புறப்பட்டுப்போனான். மாகோ
னிலே [6]ஒரு மனுஷன் இருந்தான்; அவனு
டைய தொழில்துறை கர்மேலில் இருந்தது;
அந்த மனுஷன் மகா பாரிக் குடித்தனக்காரனா
யிருந்தான்; அவனுக்கு மூவாயிரம் ஆடும்,
ஆயிரம் வெள்ளாடும் இருந்தது; அவன் அப்
பொழுது கர்மேலில் தன் ஆடுகளை மயிர் கத்
3 தரித்துக்கொண்டிருந்தான். அந்த மனுஷ
னுக்கு நாபால் என்றும், அவன் மனைவிக்கு
அபிகாயில் என்றும் பெயர்; [7]அந்த ஸ்திரீ மகா
புத்திசாலியும் ரூபவதியுமாயிருந்தாள்; அந்தப்
புருஷனோ முரடனும் துராகிருதனுமாயிருந்
தான்; அவன் காலேபுடைய சந்ததியான்.
4 நாபால் தன் ஆடுகளை மயிர் கத்தரிக்கிற
செய்தியை [8]வனாந்தரத்தில் இருக்கிற தாவீது
5 கேட்டபோது, தாவீது பத்து வாலிபரை
அழைத்து: நீங்கள் கர்மேலுக்குப் போய்,
நாபாலிடத்தில் சென்று, என் பேரைச் சொ
ல்லி, [9]அவன் சுகசெய்தியை விசாரித்து,
6 அவனை நோக்கி: நீர் வாழ்க, [10]உமக்குச் சமா
தானமும், உம்முடைய வீட்டுக்குச் சமாதான
மும், உமக்கு உண்டான எல்லாவற்றிற்கும்
சமாதானமும் உண்டாவதாக என்று அவனை
7 வாழ்த்தி, இப்பொழுது ஆடுகளை மயிர் கத்த
ரிக்கிறவர்கள் உம்மிடத்தில் இருக்கிறார்கள்
என்று கேள்விப்பட்டேன்; உம்முடைய
மேய்ப்பர் எங்களோடேகூட இருந்தார்கள்;
அவர்கள் கர்மேலில் இருந்த நாளெல்லாம்
நாங்கள் அவர்களை வருத்தப்படுத்தவில்லை;
அவர்களுடைய பொருள் ஒன்றும் காணாமற்
8 போனதும் இல்லை. உம்முடைய வேலைக்
காரரைக் கேளும்; அவர்கள் உமக்குச் சொல்
லுவார்கள்; ஆதலால் இந்த வாலிபருக்கு உம்
முடைய கண்களிலே தயைகிடைக்கவேண்
டும்; [11]நல்லநாளில் வந்தோம்; [12]உம்முடைய
கைக்கு உதவுவதை உம்முடைய ஊழியக்கா
ருக்கும், உம்முடைய குமாரனாகிய தாவீதுக்
கும் கொடுக்கும்படி வேண்டுகிறேன் என்று
சொல்லுங்கள் என்றான். தாவீதின் வாலிபர் 9
போய், இந்த வார்த்தைகளையெல்லாம் தாவீ
தின் நாமத்தினாலே நாபாலிடத்தில் சொல்லி,
பின்பொன்றும் பேசாதிருந்தார்கள். நாபால் 10
தாவீதின் ஊழியக்காரருக்குப் பிரதியுத்தர
மாக: [13]தாவீது என்பவன் யார்? ஈசாயின் குமா
ரன் யார்? தங்கள் எஜமான்களை விட்டு ஓடிப்
போகிற வேலைக்காரர் இந்நாளில் அநேகர்
உண்டு. நான் என் அப்பத்தையும், [14]என் 11
தண்ணீரையும், என் ஆடுகளை மயிர் கத்தரிக்கி
றவர்களுக்காக நான் அடித்துச் சமையல்பண்
ணுவித்ததையும் எடுத்து, இன்ன இடத்தார்
என்று நான் அறியாத மனுஷருக்குக் கொடுப்
பேனோ என்றான். தாவீதின் வாலிபர் தங் 12
கள் வழியே திரும்பி, மறுபடியும் தாவீதினி
டத்தில் வந்து, இந்த வார்த்தைகளையெல்லாம்
அவனுக்கு அறிவித்தார்கள். அப்பொழுது 13
தாவீது தன் மனுஷரைப் பார்த்து: நீங்கள்
அவரவர் உங்கள் பட்டயத்தைக் கட்டிக்கொள்
ளுங்கள் என்றான்; அவரவர் தங்கள் பட்டயத்
தைக் கட்டிக்கொண்டார்கள்; தாவீதும் தன் பட்
டயத்தைக் கட்டிக்கொண்டான்; ஏறக்குறைய
நானூறுபேர் தாவீதுக்குப் பின்சென்று புறப்ப
ட்டுப்போனார்கள்; இருநூறுபேர் [15]ரஸ்துக்கள்
அண்டையில் இருந்துவிட்டார்கள். அப்பொ 14
ழுது வேலைக்காரரில் ஒருவன் நாபாலு
டைய மனைவியாகிய அபிகாயிலை நோக்கி:
இதோ, நம்முடைய எஜமானுடைய சுக
செய்தி விசாரிக்க தாவீது வனாந்தரத்திலிருந்து
ஆட்களை அனுப்பினான்; அவர்கள்பேரில்
அவர் சீறினார். அந்த மனுஷரோ எங்களுக்கு 15
மிகவும் உபகாரிகளாயிருந்தார்கள்; நாங்கள்
வெளிகளில் இருக்கும்போது, அவர்கள் எங்
களிடத்தில் நடமாடின நாளெல்லாம் அவர்கள்
எங்களை வருத்தப்படுத்தினதுமில்லை; நமது
பொருளில் ஒன்றும் காணாமற்போனதுமில்லை.
நாங்கள் ஆடுகளை மேய்த்து, அவர்களிடத்தில் 16
இருந்த நாளெல்லாம் அவர்கள் இரவும்பகலும்
எங்களைச் சுற்றிலும் [16]மதிலாயிருந்தார்கள்.
இப்போதும் நீர் செய்யவேண்டியதைக் கவ 17
னித்துப்பாரும்; நம்முடைய எஜமான்மேலும்,
அவருடைய வீட்டார் யாவர்மேலும், நிச்சய
மாய் ஒரு பொல்லாப்பு வருகிறதாயிருக்கிறது;
இவரோ, ஒருவரும் தம்மோடே பேசக்கூடா
தபடிக்கு, [17]பேலியாளின் மகனாயிருக்கிறார்
என்றான். அப்பொழுது அபிகாயில் [18]தீவிர 18
மாய் இருநூறு அப்பங்களையும், இரண்டு துரு
த்தி திராட்சரசத்தையும், சமையல்பண்ணப்
பட்ட ஐந்து ஆடுகளையும், ஐந்துபடி வறுத்த
பயற்றையும், வற்றலாக்கப்பட்ட நூறு திராட்

[1] சங். 18. 20. நீதி. 25. 21, 22
[2] 23. 17
[3] ஆதி. 21. 23. 2 சாமு. 21. 6, 8
[4] 23. 29
[5] 28. 3. எண். 20. 29. உபா. 34. 8
[6] 23. 34
[7] நீதி. 14. 1; 31. 26, 30
[8] ஆதி. 38. 13. 2 சாமு. 13. 23
[9] 17. 22
[10] 1 நாளா. 12. 18. லூக். 10. 5
[11] நெகே. 8. 10–12. எஸ்தர் 9. 19
[12] பிர. 11. 2
[13] நியா. 9. 28. சங். 73. 7, 8; 123. 3, 4. ஏசா. 32. 5, 7
[14] நியா. 8. 6
[15] 30. 24
[16] யாத். 14. 22. யோபு 1. 10. எரே. 15. 20
[17] உபா. 13. 13. 2 சாமு. 23. 6, 7
[18] ஆதி. 32. 13. நீதி. 18. 16; 21. 14

சக்குலைகளையும், வற்றலான இருநூறு அத்திப்
பழ அடைகளையும் எடுத்து, கழுதைகள்மேல்
19 ஏற்றி, தன் வேலைக்காரரைப் பார்த்து: [1]நீங்
கள் எனக்கு முன்னே போங்கள்; இதோ,
நான் உங்கள் பின்னே வருகிறேன் என்று
சொல்லி அனுப்பினாள்; தன் புருஷனாகிய
20 நாபாலுக்கு அதை அறிவிக்கவில்லை. அவள்
ஒரு கழுதையின்மேல் ஏறி, மலையின் மறை
வில் இறங்கிவருகையில், இதோ, தாவீதும்
அவன் மனுஷரும் அவளுக்கு எதிராக இறங்கி
21 வந்தார்கள்; அவர்களைச் சந்தித்தாள். தாவீது
தன் ஜனங்களை நோக்கி: அவனுக்கு வனாந்
தரத்தில் இருக்கிறதையெல்லாம் வீணாகவே
காப்பாற்றினேன்; அவனுக்கு உண்டானதி
லெல்லாம் ஒன்றும் காணாமற்போனதில்லை;
[2]என்றாலும் நன்மைக்குப் பதிலாக அவன்
22 எனக்குத் தீமைசெய்தான். அவனுக்கு உண்
டான எல்லாவற்றிலும் [3]சுவரில் நீர்விடும்
*ஒரு நாயைமுதலாய்* பொழுதுவிடியுமட்டும்
நான் உயிரோடே வைத்தால், தேவன் தாவீ
தின் சத்துருக்களுக்கு அதற்குச் சரியாகவும்
அதற்கு அதிகமாகவும் செய்யக்கடவர் என்று
23 சொல்லியிருந்தான். அபிகாயில் தாவீதைக்
காண்கையில், [4]தீவிரமாய்க் கழுதையை விட்டு
இறங்கி, தாவீதுக்கு நேராகத் தரையில் முகங்
24 குப்புற விழுந்து பணிந்து, அவன் பாதத்
திலே விழுந்து: என் ஆண்டவனே, இந்தப்
பாதகம் என்மேல் சுமரட்டும்; உம்முடைய
அடியாளுடைய வார்த்தைகளை நீர் கேட்கும்
பொருட்டாக உம்முடைய அடியாள் உமது
25 செவிகேட்கப் பேசவேண்டும். என் ஆண்
டவனாகிய நீர் நாபால் என்னும் இந்தப் பேலி
யாளின் மனுஷனை ஒருபொருட்டாக எண்ண
வேண்டாம்; அவன் பெயர் எப்படியோ அப்
படியே அவனும் இருக்கிறான்; அவன் பெயர்
†நாபால், அவனுக்குப் பயித்தியமும் இருக்
கிறது; உம்முடைய அடியாளாகிய நானோ,
என் ஆண்டவன் அனுப்பின வாலிபரைக்
26 காணவில்லை. இப்போதும் என் ஆண்ட
வனே, நீர் இரத்தம் சிந்த வரவும், [5]உம்மு
டைய கை நீதியைச் சரிக்கட்டவும், **கர்த்தர்**
உமக்கு இடங்கொடுக்கவில்லை என்பதைக்
**கர்த்தருடைய** ஜீவனைக்கொண்டும், உம்மு
டைய ஜீவனைக்கொண்டும் சொல்லுகிறேன்;
இப்போதும் உம்முடைய சத்துருக்களும், என்
ஆண்டவனுக்கு விரோதமாகப் பொல்லாப்புத்
தேடுகிறவர்களும், நாபாலைப்போல ஆகக்கட
27 வர்கள். இப்போதும் உமது அடியாள் என்
ஆண்டவனுக்குக் கொண்டுவந்த [6]காணிக்
கையை ஏற்றுக்கொண்டு, என் ஆண்டவ
னைப் பின்பற்றுகிற வாலிபருக்குக் கொடுப்பீ
28 ராக. உமது அடியாளின் பாதகத்தை மன்
னியும், **கர்த்தர்** என் ஆண்டவனுக்கு [7]நிலை
யான வீட்டை நிச்சயமாய்க் கட்டுவார்; என்
ஆண்டவன் **கர்த்தருடைய** யுத்தங்களை நடத்து
கிறவராமே; நீர் உயிரோடே இருக்கும்
நாளில் [8]ஒரு பொல்லாப்பும் உம்மிலே காணப்

[1] ஆதி. 32. 16, 20
[2] சங். 109. 5. நீதி. 17. 13
[3] 1 இரா. 14. 10
* ஒவ்வொரு ஆணையும்
[4] யோசு. 15. 18
† பயித்தியக்காரன்
[5] ரோ. 12. 19
[6] ஆதி. 33. 11. 2 இரா. 5. 15
[7] 2 சாமு. 7. 11, 27. 1 இரா. 9. 5. சங். 89. 29
[8] 24. 11. 1 இரா. 15. 9. சங். 119. 1-3
[9] எரே. 10. 18
[10] ஆதி. 40. 14. லூ. 23. 42
[11] ஆதி. 24. 27. யாத். 18. 10. சங். 41. 13. லூ. 1. 68
[12] சங். 141. 5. நீதி. 9. 9
[13] 22, 26. வச.
[14] 2 சாமு. 15. 9. லூ. 7. 50
[15] ஆதி. 19. 21
[16] 2 சாமு. 13. 23
[17] நீதி. 20. 1. பிர. 10. 19. ஏசா. 28. 3, 7
[18] யோபு 15. 21
[19] நீதி. 22. 23

படாதிருப்பதாக. உம்மைத் துன்பப்படுத்த 29
வும், உம்முடைய பிராணனை வாங்க வகை
தேடவும், ஒரு மனுஷன் எழும்பினாலும் என்
ஆண்டவனுடைய ஆத்துமா உம்முடைய
தேவனாகிய **கர்த்தரின்** ஆதரவில் இருக்கிற
ஜீவனுள்ளோருடைய கட்டிலே கட்டப்பட்
டிருக்கும்; உம்முடைய சத்துருக்களின் ஆத்து
மாக்களோ [9]கவணில் வைத்து எறிந்தாற்போல
எறியப்பட்டுப் போம். **கர்த்தர்** உம்மைக் 30
குறித்துச் சொன்ன நன்மையின்படி எல்லாம்
இனி என் ஆண்டவனுக்குச் செய்து, இஸ்ர
வேலுக்கு அதிபதியாக உம்மை நேமிக்கும்
போது, நீர் விருதாவாய் இரத்தம் சிந்தாம 31
லும், என் ஆண்டவனாகிய நீர் பழிவாங்காம
லும் இருந்ததுண்டானால், அப்பொழுது என்
ஆண்டவனாகிய உமக்குத் துக்கமும் இராது,
மன இடறலும் இராது; **கர்த்தர்** என் ஆண்
டவனுக்கு நன்மைசெய்யும்போது, உம்மு
டைய [10]அடியாளை நினைப்பீராக என்றாள்.
அப்பொழுது தாவீது அபிகாயிலை நோக்கி: 32
உன்னை இன்றையதினம் என்னைச் சந்திக்க
அனுப்பின இஸ்ரவேலின் தேவனாகிய [11]**கர்த்**
**தருக்கு** ஸ்தோத்திரம். நீ சொல்லிய [12]யோ 33
சனை ஆசீர்வதிக்கப்படுவதாக; நான் இரத்தம்
சிந்த வாராதபடிக்கும், என் கையே பழிவாங்
காதபடிக்கும், நீ இன்றையதினம் எனக்குத்
தடைபண்ணினபடியினால், நீயும் ஆசீர்வதிக்
கப்படுவாயாக. நீ தீவிரமாய் என்னைச் சந் 34
திக்க வராமல் இருந்தாயானால், பொழுதுவிடி
யுமட்டும் நாபாலுக்கு ஒரு நாயும் உயிரோ
டே வைக்கப்படுவதில்லை என்று, [13]உனக்
குப் பொல்லாப்புச் செய்ய எனக்கு இடங்
கொடாதிருக்கிற இஸ்ரவேலின் தேவனாகிய
**கர்த்தரின்** ஜீவனைக்கொண்டு மெய்யாய்ச்
சொல்லுகிறேன் என்று சொல்லி, அவள் 35
தனக்குக் கொண்டுவந்ததைத் தாவீது அவள்
கையிலே வாங்கிக்கொண்டு, அவளைப் பார்
த்து: நீ சமாதானத்தோடே உன் வீட்டுக்குப்
போ; [14]இதோ, நான் உன் சொல்லைக் கேட்டு,
[15]உன் முகத்தைப் பார்த்து, இப்படிச் செய்
தேன் என்றான். அபிகாயில் நாபாலிடத்தில் 36
வந்தபோது, இதோ, [16]ராஜவிருந்துக்கு ஒப்
பான விருந்து அவன் வீட்டிலே நடந்தது;
அவன் இருதயம் [17]களித்திருந்தது; அவன்
மிகவும் வெறித்துமிருந்தான்; ஆகையால் பொ
ழுதுவிடியுமட்டும் சிறிய காரியமானாலும் பெ
ரிய காரியமானாலும், ஒன்றையும் அவனுக்கு
அறிவிக்கவில்லை. பொழுதுவிடிந்து, நாபா 37
லின் வெறி தெளிந்தபின்பு, அவன் மனைவி
இந்த வர்த்தமானங்களை அவனுக்கு அறிவித்
தாள்; அப்பொழுது அவன் இருதயம் அவ
னுக்குள்ளே [18]செத்து, அவன் கல்லைப்போ
லானான். **கர்த்தர்** நாபாலை வாதித்ததினால், 38
ஏறக்குறையப் பத்துநாளுக்குப் பின்பு, அவன்
செத்தான். நாபால் செத்துப்போனான் என்று 39
தாவீது கேள்விப்பட்டபோது: [19]என் நிந்தை
யின் வழக்கை நாபாலின் கையில் விசாரித்து,

தம்முடைய அடியானைப் பொல்லாப்புச் செய்
யாதபடிக்குத் தடுத்த [1]கர்த்தருக்கு ஸ்தோத்
திரம்; கர்த்தர் தாமே நாபாலின் பொல்லாப்
பை [2]அவன் தலையின்மேல் திரும்பப்பண்ணி
னார் என்று சொல்லி, அபிகாயிலை விவாகம்
பண்ணுகிறதற்காக அவளோடே பேச, தா
40 வீது ஆட்களை அனுப்பினான். தாவீதின்
ஊழியக்காரர் கர்மேலில் இருக்கிற அபிகாயி
லண்டைக்கு வந்து, தாவீது உன்னை விவா
கம்பண்ண மனதாய், எங்களை உன்னிடத்
தில் அனுப்பினார் என்று அவளோடே சொல்
41 லுகிறபோது, அவள் எழுந்திருந்து, தரை
மட்டும் முகங்குனிந்து, இதோ, நான் என்
ஆண்டவனுடைய ஊழியக்காரரின் கால்
களைக் கழுவத்தக்க [3]பணிவிடைக்காரியாகிய
42 அவருடைய அடியாள் என்றாள். பின்பு
அபிகாயில் தீவிரித்து எழுந்து, ஒரு கழுதை
யின்மேல் ஏறி, ஐந்து தாதிப்பெண்களைக்
கூட்டிக்கொண்டு, தாவீதின் ஸ்தானாபதிகளு
க்குப் பின்சென்று போய், அவனுக்கு மனை
43 வியானாள். யெஸ்ரயேல் ஊராளாகிய அகி
னோவாமையும் தாவீது விவாகம்பண்ணினான்;
[4]அவர்கள் இருவரும் அவனுக்கு மனைவி
44 களானார்கள். சவுல் தாவீதின் மனைவியா
கிய [5]மீகாள் என்னும் தன் குமாரத்தியைக்
காலீம் ஊரானாகிய லாயீசின் குமாரனான
பல்த்திக்குக் கொடுத்திருந்தான்.

26 பின்பு சீப்ஊரார் கிபியாவிலிருக்கிற சவு
லிடத்தில் வந்து: [6]தாவீது எஷிமோனுக்கு
எதிரான ஆகிலாமேட்டில் ஒளித்துக்கொண்
2 டிருக்கிறான் என்றார்கள். அப்பொழுது
சவுல்: சீப் வனாந்தரத்திலே தாவீதைத் தேடும்
படி எழுந்து, இஸ்ரவேலிலே தெரிந்துகொள்
ளப்பட்ட மூவாயிரம்பேரோடுங்கூட, சீப் வ
3 னாந்தரத்திற்குப் புறப்பட்டுப்போனான். சவுல்
எஷிமோனுக்கு எதிரே வழியண்டையிலிருக்
கிற ஆகிலாமேட்டிலே பாளயமிறங்கினான்;
தாவீது வனாந்தரத்தில் தங்கி, சவுல் தன்னைத்
தொடர்ந்து வனாந்தரத்திற்கு வருகிறதைக்
4 கண்டு, தாவீது வேவுகாரரை அனுப்பி,
சவுல் வந்தது நிச்சயம் என்று அறிந்துகொண்
5 டான். பின்பு தாவீது எழுந்து, சவுல் பாளய
மிறங்கின இடத்திற்குப் போய், சவுலும்
நேரின் குமாரனாகிய [7]அப்னேர் என்னும்
அவன் படைத்தலைவனும் படுத்துக்கொண்டி
ருக்கிற இடத்தைப் பார்த்தான்; சவுல் இரதங்க
ளிருக்கிற இடத்திலே படுத்துக்கொண்டிருந்
தான்; ஜனங்கள் அவனைச் சுற்றிலும் பாளய
6 மிறங்கியிருந்தார்கள். தாவீது ஏத்தியனாகிய
அகிமெலேக்கையும், செருயாவின் குமார
னும் யோவாபின் சகோதரனுமாகிய [8]அபி
சாயையும் பார்த்து: என்னோடேகூடச் சவு
லிடத்திற்குப் பாளயத்தில் இறங்கிவருகிற
வன் யார் என்றதற்கு, அபிசாய்: நான் உம்
7 மோடேகூட வருகிறேன் என்றான். அப்
படியே தாவீதும் அபிசாயும் இராத்திரியிலே
அந்த ஜனங்களுக்குள்ளே வந்தார்கள்; இதோ,

சவுல் இரதங்களிருக்கிற இடத்திலே படுத்து
நித்திரைபண்ணினான்; அவன் தலைமாட்டில்
அவனுடைய ஈட்டி நிலத்திலே குத்தியிருந்
தது; அவனைச் சுற்றிலும் அப்னேரும் ஜனங்
களும் படுத்துக்கொண்டிருந்தார்கள். அப்பொ 8
ழுது அபிசாய் தாவீதைப் பார்த்து: இன்று
தேவன் உம்முடைய சத்துருவை உம்மு
டைய கையில் ஒப்புக்கொடுத்தார்; இப்போ
தும் நான் அவனை ஈட்டியினால் இரண்டு குத்
தாகக் குத்தாமல், ஒரே குத்தாக நிலத்தில் உரு
வக் குத்தட்டுமா என்றான். தாவீது அபிசா 9
யைப் பார்த்து: அவனைக் கொல்லாதே; [9]கர்த்
தர் அபிஷேகம்பண்ணுவித்தவர்மேல் தன்
கையைப் போட்டு, குற்றமில்லாமற்போகிற
வன் யார்? என்று சொன்னான். பின்னும் 10
தாவீது: கர்த்தர் [10]அவனை அடிப்பார், அல்லது
அவருடைய [11]காலம் வந்து, அவர் மரித்து, அல்
லது அவர் யுத்தத்திற்குப் போய் [12]மாண்டா
லொழிய, நான் என் கையைக் கர்த்தர் அபிஷே 11
கம் பண்ணுவித்தவர்மேல் போடாதபடிக்கு,
[13]கர்த்தர் என்னைக் காக்கக்கடவர் என்று கர்த்த
ருடைய ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேன்;
இப்போதும் அவர் தலைமாட்டில் இருக்கிற
ஈட்டியையும், தண்ணீர்ச் செம்பையும் எடுத்
துக்கொண்டு போவோம் என்றான். தாவீது 12
சவுலின் தலைமாட்டில் இருந்த ஈட்டியையும்,
தண்ணீர்ச் செம்பையும் எடுத்துக்கொண்ட
பின்பு, புறப்பட்டுப் போனார்கள்; அதை ஒரு
வரும் காணவில்லை, அறியவுமில்லை, ஒருவ
ரும் விழித்துக்கொள்ளவுமில்லை; கர்த்தர் அவர்
களுக்கு [14]அயர்ந்த நித்திரை வருவித்ததி
னால், அவர்களெல்லாரும் தூங்கினார்கள்.
தாவீது கடந்து, அந்தப் பக்கத்திற்குப் போய், 13
தங்களுக்கும் அவர்களுக்கும் நடுவே போந்த
இடமுண்டாக, தூரத்திலிருக்கிற மலையின்
கொடுமுடியிலே, ஜனங்களுக்கும் நேரின் 14
குமாரனாகிய அப்னேருக்கும் நேராக நின்று
கூப்பிட்டு: அப்னேரே, உத்தரவு சொல்ல
மாட்டீரா என்றான்; அதற்கு அப்னேர்: ராஜா
வுக்கு நேராகக் கூக்குரலிடுகிற நீ யார் என்
றான். அப்பொழுது தாவீது அப்னேரை 15
நோக்கி: நீர் வீரன் அல்லவா? இஸ்ரவேலில்
உமக்குச் சரியானவன் யார்? பின்னை நீர் உம்
முடைய ஆண்டவனாகிய ராஜாவைக் காக்கா
மற்போனதென்ன? ஜனத்தில் ஒருவன் உம்
முடைய ஆண்டவனாகிய ராஜாவைக் கொல்
லும்படி வந்திருந்தானே. நீர் செய்த இந்தக் 16
காரியம் நல்லதல்ல; கர்த்தர் அபிஷேகம்பண்
ணின உங்கள் ஆண்டவனை நீங்கள் காக்கா
மற்போனபடியினால், [15]நீங்கள் மரணத்திற்
குப் பாத்திரவான்கள்; இப்போதும் ராஜா
வின் தலைமாட்டில் இருந்த அவருடைய ஈட்
டியும் தண்ணீர்ச் செம்பும் எங்கே என்று பா
ரும் என்றான். அப்பொழுது சவுல்: தாவீதின் 17
சத்தத்தை அறிந்து, என் குமாரனாகிய தாவீ
தே, [16]இது உன் சத்தமல்லவா என்றான்.
அதற்கு, தாவீது: ராஜாவாகிய என் ஆண்ட

[1] 32. வச.
[2] சங். 7. 16
[3] ரூத். 2. 10, 13. நீதி. 15. 33
[4] 27. 3
[5] 2 சாமு. 3. 15
[6] 23. 19. சங். 54. முகவுரை
[7] 14. 50
[8] 1 நாளா. 2. 16
[9] 24. 6, 7. 2 சாமு. 1. 16
[10] சங். 94. 23. லூ. 18. 7
[11] உபா. 31. 14. யோபு 7. 1. சங். 37. 13. பிர. 3. 2. எபி. 9. 27
[12] 31. 6
[13] 24. 6, 12
[14] ஆதி. 2. 21; 15. 12
[15] 2 சாமு. 12. 5
[16] 24. 16

வனே, இது என் சத்தந்தான் என்று சொல்
18 லி, பின்னும்: என் ஆண்டவனாகிய நீர் உம்
முடைய அடியானை இப்படிப் பின்தொடரு
கிறது என்ன? நான் என்னசெய்தேன்? [1]என்
னிடத்தில் என்ன பொல்லாப்பு இருக்கிறது?
19 இப்பொழுது ராஜாவாகிய என் ஆண்டவன்
தம்முடைய அடியானுடைய வார்த்தைகளைக்
கேட்பாராக; **கர்த்தர்** [2]உம்மை எனக்கு விரோ
தமாக எடுத்துவிட்டதுண்டானால், [3]அதற்கு
அவர் காணிக்கையை ஏற்றுக்கொள்வாராக;
மனுபுத்திரர் அதைச் செய்தார்களேயாகில்,
அவர்கள் **கர்த்தருக்கு** முன்பாகச் சபிக்கப்பட
க்கடவர்கள்; அவர்கள்: நீ போய், அந்நிய
தேவர்களைச் சேவி என்று சொல்லி, அவர்
கள் இன்று என்னைக் **கர்த்தருடைய** சுதந்தரத்
திற்கு அடுத்தவனாயிராதபடிக்கு, [4]துரத்திவிட்
20 டார்களே. இப்போதும் **கர்த்தருடைய** சமு
கத்தில் என் இரத்தம் தரையில் விழாதிருப்ப
தாக; மலைகளில் ஒரு கவுதாரியை வேட்டை
யாடுகிறதுபோல, இஸ்ரவேலின் ராஜா ஒரு
[5]தெள்ளுப்பூச்சியைத் தேடவந்தாரோ என்
21 றான். அப்பொழுது சவுல்: [6]நான் பாவஞ்
செய்தேன்; என் குமாரனாகிய தாவீதே, திரு
ம்பிவா; என் ஜீவன் இன்றையதினம் உன்
பார்வைக்கு அருமையாயிருந்தபடியால், இனி
உனக்கு ஒரு பொல்லாப்புஞ் செய்யேன்;
இதோ, நான் மதியற்றவனாய் மகா பெரிய
22 தப்பிதஞ்செய்தேன் என்றான். அதற்குத்
தாவீது: இதோ, ராஜாவின் ஈட்டி இங்கே
இருக்கிறது; வாலிபரில் ஒருவன் இப்புறம்
வந்து, அதை வாங்கிக்கொண்டு போகட்டும்.
23 **கர்த்தர்** அவனவனுக்கு அவனவன் [7]நீதிக்
கும் உண்மைக்கும் தக்கதாகப் பலன் அளிப்
பாராக; இன்று **கர்த்தர்** உம்மை என் கையில்
ஒப்புக்கொடுத்திருந்தும், **கர்த்தர்** அபிஷேகம்
பண்ணினவர்மேல், என் கையை நீட்ட
24 மனதில்லாதிருந்தேன். இதோ, உம்முடைய
ஜீவன் இன்றையதினம் என் பார்வைக்கு எப்
படி அருமையாயிருந்ததோ, அப்படியே என்
ஜீவனும் **கர்த்தரின்** பார்வைக்கு அருமையா
யிருப்பதினால், அவர் என்னை எல்லா உபத்
திரவத்திற்கும் நீங்கலாக்கி விடுவாராக என்
25 றான். அப்பொழுது சவுல் தாவீதை நோக்கி:
என் குமாரனாகிய தாவீதே, நீ ஆசீர்வதிக்கப்
பட்டவன்; நீ பெரிய காரியங்களைச் செய்
வாய், [8]மேன்மேலும் பலப்படுவாய் என்றான்;
அப்படியே தாவீது தன் வழியே போனான்;
சவுலும் தன் ஸ்தானத்திற்குத் திரும்பினான்.

**27** பின்பு தாவீது: நான் எந்த நாளிலாகி
லும் [9]ஒருநாள் சவுலின் கையினால் மடிந்து
போவேன்; இனிச் சவுல் இஸ்ரவேலின்
எல்லைகளில் எங்கேயாவது என்னைக் கண்டு
பிடிக்கலாம் என்கிற நம்பிக்கை அற்றுப்போ
கும்படிக்கும், நான் அவன் கைக்கு நீங்கலா
யிருக்கும்படிக்கும், நான் பெலிஸ்தரின் தேச
த்திற்குப் போய், தப்பித்துக்கொள்வதைப்பார்
க்கிலும் நலமான காரியம் வேறில்லை என்று
தன் இருதயத்தில் யோசித்தான். ஆகையால் 2
தாவீது தன்னோடிருந்த [10]அறுநூறு பேரோ
டுங்கூட எழுந்திருந்து, மாயோகின் குமார
னாகிய ஆகீஸ் என்னும் காத்தின் ராஜாவி
னிடத்தில் போய்ச் சேர்ந்தான். அங்கே 3
தாவீதும், அவன் மனுஷரும், அவரவர் வீட்
டாரும், தாவீதோடேகூட [11]அவன் இரண்டு
மனைவிகளாகிய யெஸ்ரயேல் ஊராளாகிய
அகினோவாமும், நாபாலின் மனைவியாயிருந்த
கர்மேல் ஊராளாகிய அபிகாயிலும், காத்பட்
டணத்தில் ஆகீசிடத்தில் தங்கியிருந்தார்கள்.
தாவீது காத்பட்டணத்திற்கு ஓடிப்போனான் 4
என்று சவுலுக்கு அறிவிக்கப்பட்டபோது,
அவன் அப்புறம் அவனைத் தேடவில்லை.
தாவீது ஆகீசை நோக்கி: உம்முடைய கண் 5
களில் எனக்குத் தயைகிடைக்குமானால், நான்
வாசம்பண்ணும்படி நாட்டிலுள்ள ஊர்களிலே
ஒன்றில் எனக்கு இடந்தாரும்; உம்முடைய
அடியான் உம்மோடேகூட ராஜதானி பட்ட
ணத்திலே வாசமாயிருப்பானேன் என்றான்.
அப்பொழுது ஆகீஸ்: அன்றையதினம் சிக்லா 6
கை அவனுக்குக் கொடுத்தான்; [12]அதினிமித்
தம் சிக்லாக் இந்நாள்வரைக்கும் யூதாவின்
ராஜாக்களைச் சேர்ந்திருக்கிறது. தாவீது பெ 7
லிஸ்தரின் நாட்டிலே [13]ஒரு வருஷமும் நாலு
மாதமும் குடியிருந்தான்.
அங்கேயிருந்து தாவீதும் அவன் மனுஷ 8
ரும் [14]கெசூரியர்மேலும் கெஸ்ரியர்மேலும்
அமலேக்கியர்மேலும் படையெடுத்துப் போ
னார்கள்; சூருக்குப் போகிற எல்லைதுவக்கி
எகிப்துதேசமட்டும் இருக்கிற நாட்டிலே பூர்வ
காலம் துவக்கிக் குடியிருந்தவர்கள் இவர்களே.
தாவீது அந்த நாட்டைக் கொள்ளையடிக்கிற 9
போது, புருஷர்களையும் ஸ்திரீகளையும் உயி
ரோடே வைக்காமல், ஆடுமாடுகளையும் கழு
தைகளையும் ஒட்டகங்களையும் வஸ்திரங்களை
யும் எடுத்துக்கொண்டு, ஆகீசிடத்துக்குத் திரு
ம்பிவருவான். இன்று எத்திசையில் போய்க் 10
கொள்ளையடித்தீர்கள் என்று ஆகீஸ் கேட்கும்
போது, தாவீது: யூதாவுடைய தென்திசையி
லும், [15]யெராமியேலருடைய தென்திசையி
லும் [16]கேனியருடைய தென்திசையிலும் என்
பான். இன்ன இன்னபடி தாவீது செய்தான் 11
என்று தங்களுக்கு விரோதமான செய்தியை
அறிவிக்கத்தக்க ஒருவனையும் தாவீது காத்பட்
டணத்திற்குக் கொண்டுவராதபடிக்கு, ஒரு
புருஷனையாகிலும் ஸ்திரீயையாகிலும் உயி
ரோடே வைக்காதிருப்பான்; அவன் பெலிஸ்
தரின் நாட்டுப்புறத்திலே குடியிருக்கிற நாளெ
ல்லாம் இவ்வண்ணம் செய்துகொண்டு வந்
தான். ஆகீஸ் தாவீதை நம்பி: அவன் இஸ்ர 12
வேலராகிய தன்னுடைய ஜனங்கள் தன்னை
வெறுக்கும்படி செய்கிறான்; என்றைக்கும்
அவன் என் ஊழியக்காரனாயிருப்பான் என்
பான்.

அந்நாட்களிலே பெலிஸ்தர் இஸ்ரவே **28**
லின்மேல் யுத்தம்பண்ண, [17]தங்கள் சேனைக

[1] 24. 9, 11
[2] 2 சாமு. 16. 11
[3] சங். 119. 108
[4] உபா. 4. 27, 28. சங். 120. 5. ஏசா. 60. 5
[5] 24. 14
[6] 15. 24; 27. 17
[7] சங். 7. 8; 18. 20
[8] ஆதி. 32. 28
[9] ஏசா. 40. 27-31
[10] 25. 13
[11] 25. 43
[12] யோசு. 15. 31
[13] 29. 3
[14] யோசு. 13. 2. நியா. 1. 29. யாத். 17. 16
[15] 1 நாளா. 2. 9, 25
[16] நியா. 1. 16
[17] 29. 1

ளைப் போருக்குக் கூட்டினார்கள்; அப்பொ
ழுது ஆகீஸ் தாவீதை நோக்கி: நீயும் உன்
மனுஷரும் எவ்விதத்திலும் என்னோடேகூட
யுத்தத்துக்கு வரவேண்டும் என்று அறியக்கட
2 வாய் என்றான். தாவீது ஆகீசைப் பார்த்து: உம்
முடைய அடியான் செய்யப்போகிறதை நீர்
நிச்சயமாய் அறிந்துகொள்வீர் என்றான்; அப்
பொழுது ஆகீஸ் தாவீதை நோக்கி: இதற்காக
உன்னை எந்நாளும் எனக்கு மெய்க்காவலனாக
வைப்பேன் என்றான்.
3 சாமுவேல் இதற்கு [1]முன்னமே மரித்
துப்போனான்; இஸ்ரவேலர் எல்லாரும் அவ
னுக்குத் துக்கங்கொண்டாடி, அவன் ஊரா
கிய ராமாவிலே அவனை அடக்கம்பண்ணி
னார்கள். சவுல் அஞ்சனம் பார்க்கிறவர்களையும்
[2]குறிசொல்லுகிறவர்களையும் தேசத்தில் இராத
4 படிக்குத் துரத்திவிட்டான். பெலிஸ்தர் கூடி
வந்து, [3]சூநேமிலே பாளயமிறங்கினார்கள்;
சவுலும் இஸ்ரவேலர் எல்லாரையும் கூட்டி
னான்; அவர்கள் [4]கில்போவாவிலே பாளய
5 மிறங்கினார்கள். சவுல் பெலிஸ்தரின் பாள
யத்தைக் கண்டபோது பயந்தான்; அவன் இரு
தயம் மிகவும் [5]தத்தளித்துக்கொண்டிருந்தது.
6 சவுல் கர்த்தரிடத்தில் விசாரிக்கும்போது, கர்
த்தர் அவனுக்குச் [6]சொப்பனங்களினாலாவது,
[7]ஊரீமினாலாவது, தீர்க்க தரிசிகளினாலாவது
7 [8]மறுஉத்தரவு அருளவில்லை. அப்பொழுது
சவுல் தன் ஊழியக்காரரை நோக்கி: அஞ்ச
னம்பார்க்கிற ஒரு ஸ்திரீயைத் தேடுங்கள்;
[9]நான் அவளிடத்தில் போய் விசாரிப்பேன்
என்றான்; அதற்கு அவனுடைய ஊழியக்கா
ரர்: இதோ, எந்தோரில் அஞ்சனம்பார்க்கிற
ஒரு ஸ்திரீ இருக்கிறாள் என்றார்கள்.
8 அப்பொழுது சவுல் வேஷம் மாறி, வேறு
வஸ்திரம் தரித்துக்கொண்டு, அவனும் அவ
னோடேகூட இரண்டுபேரும் இராத்திரியிலே
அந்த ஸ்திரீயினிடத்தில் போய்ச் சேர்ந்தார்
கள்; அவளை அவன் நோக்கி: [10]நீ அஞ்சனம்
பார்த்து எனக்குக் குறிசொல்லி, நான் உன்
னிடத்தில் சொல்லுகிறவனை எழும்பிவரச்
9 செய் என்றான். அதற்கு அந்த ஸ்திரீ: [11]சவுல்
அஞ்சனம்பார்க்கிறவர்களையும், குறிசொல்லு
கிறவர்களையும், தேசத்தில் இராதபடிக்கு நிர்
மூலமாக்கின செய்தியை நீர் அறிவீரே; என்
னைக் கொன்றுபோடும்படி நீர் என் பிராண
னுக்குக் கண்ணிவைக்கிறது என்ன என்றாள்.
10 அப்பொழுது சவுல்: இந்தக் காரியத்திற்காக
உனக்குப் பொல்லாப்பு வராது என்பதைக்
**கர்த்தருடைய** ஜீவனைக்கொண்டு சொல்லுகி
றேன் என்று அவளுக்குக் **கர்த்தர்**மேல்
11 ஆணையிட்டான். அப்பொழுது அந்த ஸ்திரீ:
உமக்கு நான் யாரை எழும்பிவரப் பண்ண
வேண்டும் என்றதற்கு, அவன்: சாமுவேலை
எழும்பிவரப் பண்ணவேண்டும் என்றான்.
12 அந்த ஸ்திரீ சாமுவேலைக் கண்டமாத்திரத்தில்
மகா சத்தமாய்க் கூப்பிட்டு, சவுலை நோக்கி:
ஏன் என்னை மோசம்போக்கினீர்? நீர்தான்
சவுலாச்சுதே என்றாள். ராஜா அவளைப் 13
பார்த்து: நீ பயப்படாதே; நீ காண்கிறது
என்ன என்று கேட்டான். அதற்கு அந்த
ஸ்திரீ: [12]தேவர்கள் பூமிக்குள்ளிருந்து ஏறிவரு
கிறதைக் காண்கிறேன் என்று சவுலுக்குச்
சொன்னாள். அவருடைய ரூபம் என்ன 14
என்று அவளைக் கேட்டான். அதற்கு அவள்:
[13]சால்வையைப் போர்த்துக்கொண்டிருக்கிற
ஒரு முதிர்ந்த வயதான மனுஷன் எழும்பிவ
ருகிறான் என்றாள்; அதினாலே சவுல் அவன்
சாமுவேல் என்று அறிந்துகொண்டு, தரைமட்
டும் முகங்குனிந்து வணங்கினான். சாமுவேல் 15
சவுலை நோக்கி: நீ என்னை எழும்பிவரப்பண்
ணி, *என்னைக் கலைத்தது என்ன என்று கேட்
டான். அதற்குச் சவுல்: [14]நான் மிகவும் நெருக்
கப்பட்டிருக்கிறேன்; பெலிஸ்தர் எனக்கு
விரோதமாய் யுத்தம்பண்ணுகிறார்கள்; [15]தேவ
னும் என்னைக் கைவிட்டார்; அவர் தீர்க்கதரி
சிகளினாலாவது, சொப்பனங்களினாலாவது
எனக்கு மறு உத்தரவு அருளுகிறதில்லை; ஆகை
யால் நான் செய்யவேண்டியதை நீர் எனக்கு
அறிவிக்கும்படிக்கு, உம்மை அழைப்பித்தேன்
என்றான். அதற்குச் சாமுவேல்: **கர்த்தர்** 16
உன்னைவிட்டு விலகி, [16]உனக்குச் சத்துரு
வாய் இருக்கும்போது, நீ என்னிடத்தில்
கேட்பானேன்? **கர்த்தர்** [17]என்னைக்கொண்டு 17
சொன்னபடியே செய்துமுடித்து, ராஜ்யத்தை
உன் கையிலிருந்து பறித்து, அதை உன் தோ
ழனாகிய தாவீதுக்குக் கொடுத்துவிட்டார். நீ 18
**கர்த்தருடைய** [18]சொற்கேளாமலும், அமலேக்
கின்மேல் அவருக்கு இருந்த கோபத்தின்
உக்கிரத்தைத் தீர்க்காமலும் போனபடியினால்,
**கர்த்தர்** [19]இன்றையதினம் உனக்கு இந்தப்
பிரகாரமாகச் செய்தார். **கர்த்தர்** உன்னுடைய 19
ஜனமாகிய இஸ்ரவேலரையும் பெலிஸ்தர்
கையில் ஒப்புக்கொடுப்பார்; நாளைக்கு நீயும்
உன் குமாரரும் என்னோடிருப்பீர்கள்; இஸ்ர
வேலின் பாளயத்தையும் **கர்த்தர்** பெலிஸ்த
ரின் கையில் ஒப்புக்கொடுப்பார் என்றான்.
அந்தக்ஷணமே சவுல் நெடிதாங்கிடையாய்த் 20
தரையிலே விழுந்து, சாமுவேலின் வார்த்தை
களினாலே [20]மிகவும் பயப்பட்டான்; அவன்
இராப்பகல் முழுதும் ஒன்றும் சாப்பிடாதிருந்
தபடியினால், அவன் பலவீனமாயிருந்தான்.
அப்பொழுது அந்த ஸ்திரீ சவுலிடத்தில் வந்து, 21
அவன் மிகவும் கலங்கியிருக்கிறதைக் கண்டு,
அவனை நோக்கி: இதோ, உம்முடைய அடியா
ளாகிய நான் உம்முடைய சொற்கேட்டு, [21]என்
பிராணனை என் கையிலே பிடித்துக்கொண்டு,
நீர் எனக்குச் சொன்ன உம்முடைய வார்த்
தைகளுக்குக் கீழ்ப்படிந்தேன். இப்பொழுது 22
நீர் உம்முடைய அடியாளுடைய சொல்லைக்
கேளும், நான் உமக்கு முன்பாகக் கொஞ்சம்
அப்பம் வைக்கிறேன், அதைப் புசிப்பீராக;
அப்பொழுது நீர் வழிநடந்து போகத்தக்க
பெலன் உமக்குள் இருக்கும் என்றாள். அவ 23
னோ தட்டுதல்பண்ணி, நான் புசிக்கமாட்டேன்

1 25. 1
2 லேவி. 20. 27. உபா. 18. 10, 11
3 யோசு. 19. 18. 2 இரா. 4. 8
4 31. 1
5 யோபு 18. 11
6 எண். 12. 6
7 யாத். 28. 30. எண். 27. 21
8 நீதி. 1. 28. புல. 2. 9
9 லேவி. 19. 31
10 உபா. 18. 11. 1 நாளா. 10. 13. ஏசா. 8. 19
11 3. வச.
12 யாத். 22. 28. சங். 82. 6, 7
13 15. 27. 2 இரா. 2. 8, 13
* என் ஆசேரைபைக் கலைத்தது
14 நீதி. 5. 11-13. 14. 14. எரே. 2. 17, 19
15 18. 12. ஓசி. 9. 12
16 2 இரா. 6. 27. புல. 2. 5
17 15. 28
18 13. 9–13. 15. 9. 1 இரா. 20. 42. 1 நாளா. 10. 13. எரே. 48. 10
19 சங். 50. 21, 22
20 யோபு 15. 20
21 19. 5

என்றான்; ஆனாலும் அவனுடைய ஊழியக்
காரரும் அந்த ஸ்திரீயும் அவனை மிகவும் வரு
ந்திக்கொண்டதினால், அவன் அவர்கள் சொற்
கேட்டு, தரையிலிருந்து எழுந்திருந்து கட்டி
24 லின்மேல் உட்கார்ந்தான். அந்த ஸ்திரீயினி
டத்தில் கொழுத்த கன்றுக்குட்டி ஒன்று வீட்
டில் இருந்தது; அதைத் தீவிரமாய் அடித்து,
மா எடுத்துப் பிசைந்து, அதைப் புளிப்பில்லா
25 அப்பங்களாகச் சுட்டு, சவுலுக்கும் அவன்
ஊழியக்காரருக்கும் முன்பாகக் கொண்டுவ
ந்து வைத்தாள்; அவர்கள் புசித்து எழுந்திரு
ந்து, அந்த இராத்திரியிலேயே புறப்பட்டுப்
போனார்கள்.

**29** பெலிஸ்தர் தங்கள் சேனைகளையெல்லாம்
[1]ஆப்பெக்கிலே கூடிவரச் செய்தார்கள்; இஸ்
ரவேலர் யெஸ்ரயேலிலிருக்கிற துரவண்டை
2 யிலே பாளயமிறங்கினார்கள். அப்பொழுது
பெலிஸ்தரின் அதிபதிகள் நூறும் ஆயிரமு
மான சேர்வைகளோடே போனார்கள்; தாவீ
தும் அவன் மனுஷரும் ஆகீசோடே பின்தண்
3 டிலே போனார்கள். அப்பொழுது பெலிஸ்
தரின் பிரபுக்கள்: இந்த எபிரெயர் என்னத்
திற்கு என்றார்கள்; ஆகீஸ் அவர்களைப் பார்த்து:
இஸ்ரவேலின் ராஜாவாகிய சவுலின் ஊழி
யக்காரனாயிருந்த இந்தத் தாவீது [2]இத்தனை
நாட்களும் இத்தனை வருஷங்களும் என்னோடு
இருக்கவில்லையா? இவன் என்னிடத்தில் வந்
துசேர்ந்த நாள்முதல் இந்நாள்வரைக்கும் [3]ஒரு
குற்றமும் நான் இவனில் கண்டுபிடிக்கவில்லை
4 என்றான். அதனால் பெலிஸ்தரின் [4]பிரபுக்
கள் அவன்மேல் கடுங்கோபமாகி, அவனைப்
பார்த்து: இந்த மனுஷன் நீர் குறித்த தன் இட
த்திற்குத் திரும்பிப்போகும்படிக்கு, அங்கே
அவனை மறுபடியும் அனுப்பிவிடும்; [5]யுத்தத்
தில் இவன் நமக்குச் சத்துருவாயிராதபடிக்கு,
இவன் நம்மோடேகூட யுத்தத்திற்கு வரவே
ண்டியதில்லை; இவன் எதினாலே தன் ஆண்
டவனோடே ஒப்புரவாவான்? இந்த மனுஷரு
5 டைய தலைகளினால் அல்லவா? சவுல் கொன்
றது ஆயிரம், [6]தாவீது கொன்றது பதினாயிரம்
என்று இந்தத் தாவீதைக்குறித்து அல்லவோ
ஆடிப்பாடிச் சொன்னார்கள் என்றார்கள்.
6 அப்பொழுது ஆகீஸ் தாவீதை அழைத்து:
நீ உத்தமன் என்றும், நீ பாளயத்தில் என்
னோடே போக்கும் [7]வரத்துமாயிருக்கிறது
என் பார்வைக்கு நல்லது என்றும், **கர்த்தரு
டைய** ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேன்;
நீ என்னிடத்தில் வந்துசேர்ந்த நாள்முதல்
[8]இன்றையவரைக்கும் நான் உன்னில் ஒரு
பொல்லாப்பும் காணவில்லை; ஆகிலும் பிரபுக்
களின் பார்வைக்கு நீ பிரியமானவன் அல்ல.
7 ஆகையால் பெலிஸ்தருடைய பிரபுக்கள் உன்
மேல் தாங்கல் அடையாதபடிக்கு, இப்போது
சமாதானத்தோடே திரும்பிப் போய்விடு என்
8 றான். தாவீது ஆகீசை நோக்கி: ஏன்? நான்
செய்தது என்ன? நான் வந்து, ராஜாவாகிய
என் ஆண்டவனுடைய சத்துருக்களோடே
யுத்தம்பண்ணாதபடிக்கு, நான் உம்மிடத்தில்
வந்த நாள்முதற்கொண்டு இன்றையவரைக்கும்
உமது அடியேனிடத்தில் கண்டுபிடித்தது
என்ன என்றான்? ஆகீஸ் தாவீதுக்குப் பிரதி 9
யுத்தரமாக: அதை அறிவேன்; [9]நீ தேவனு
டைய தூதனைப்போல என் பார்வைக்குப்
பிரியமானவன்; ஆனாலும் இவன் எங்களோ
டேகூட யுத்தத்திற்கு வரக்கூடாது என்று
பெலிஸ்தரின் பிரபுக்கள் சொல்லுகிறார்கள்.
இப்போதும் நீ நாளை அதிகாலையில் உன்னோ 10
டேவந்த உன் ஆண்டவனுடைய வேலைக்கா
ரரைக் கூட்டிக்கொண்டு, விடியற்காலத்திலே
வெளிச்சமாகிறபோது, புறப்பட்டுப்போ
என்றான்.
அப்படியே தாவீது அதிகாலையில் தன் மனு 11
ஷரைக் கூட்டிக்கொண்டு, பொழுதுவிடிகிற
நேரத்திலே, பெலிஸ்தரின் தேசத்திற்குத் திரு
ம்பிப்போகப் புறப்பட்டான்; [10]பெலிஸ்தரோ
வெனில் யெஸ்ரயேலுக்குப் போனார்கள்.

தாவீதும் அவன் மனுஷரும் மூன்றாம் **30**
நாளிலே, சிக்லாகுக்கு வந்து சேருகிறதற்
குள்ளே, அமலேக்கியர் தென்புறத்துச் சீமை
யின்மேலும் சிக்லாகின்மேலும் விழுந்து, சிக்
லாகைக் கொள்ளையடித்து, அதை அக்கினி
யால் சுட்டெரித்து, அதிலிருந்த ஸ்திரீகளாகிய 2
சிறியவர்களையும் பெரியவர்களையும் சிறைபிடி
த்து, [11]ஒருவரையும் கொன்றுபோடாமல், அவர்
களைப் பிடித்துக்கொண்டு, தங்கள் வழியே
போய்விட்டார்கள். தாவீதும் அவன் மனுஷ 3
ரும் அந்தப் பட்டணத்திற்கு வந்தபோது,
இதோ, அது அக்கினியினால் சுட்டெரிக்கப்ப
ட்டது என்றும், தங்கள் மனைவிகளும் தங்கள்
குமாரரும் தங்கள் குமாரத்திகளும் சிறைபிடித்
துக்கொண்டுபோகப்பட்டார்கள் என்றும் கண்
டார்கள். அப்பொழுது தாவீதும் அவனோடிரு 4
ந்த ஜனங்களும் அழுகிறதற்குத் தங்களில் பெல
னில்லாமல் போகுமட்டும் சத்தமிட்டு அழு
தார்கள். தாவீதின் [12]இரண்டு மனைவிகளாகிய 5
யெஸ்ரயேல் ஊராளான அகினோவாமும்,
கர்மேல் ஊராளான நாபாலின் மனைவியா
யிருந்த அபிகாயிலும், சிறைபிடித்துக்கொண்டு
போகப்பட்டார்கள். தாவீது மிகவும் நெருக் 6
கப்பட்டான்; [13]சகல ஜனங்களும் தங்கள் குமா
ரர் குமாரத்திகளினிமித்தம் மனக்கிலேசமா
னதினால், அவனைக் கல்லெறியவேண்டும்
என்று சொல்லிக்கொண்டார்கள்; [14]தாவீது
தன் தேவனாகிய **கர்த்தருக்குள்ளே** தன்னைத்
திடப்படுத்திக்கொண்டான்.
தாவீது அகிமெலேக்கின் குமாரனாகிய அபி 7
யத்தார் என்னும் ஆசாரியனை நோக்கி: [15]ஏபோ
த்தை என்னிடத்தில் கொண்டுவா என்றான்;
அபியத்தார் ஏபோத்தைத் தாவீதினிடத்தில்
கொண்டுவந்தான். தாவீது **கர்த்தரை** நோ 8
க்கி: [16]நான் அந்தத் தண்டைப் பின்தொடர
வேண்டுமோ? அதைப் பிடிப்பேனா? என்று
கேட்டான். அதற்கு அவர்: அதைப் பின்தொ
டர்; அதை நீ பிடித்து, சகலத்தையும் திருப்

[1] 28. 1, 2
[2] 27. 7
[3] தானி. 6. 5
[4] 1 ராஜா. 12. 19
[5] 14. 21
[6] 18. 7
[7] 2 சாமு. 3. 25. 2 இரா. 19. 27.
[8] 3, 4. வச.
[9] 2 சாமு. 14. 17, 20; 19. 27
[10] 2 சாமு. 4. 4
[11] சங். 76. 10
[12] 25. 42, 43
[13] யாத். 17. 4
[14] சங். 42. 5; 56. 1—4. ஏசா. 25. 4. ஆப. 3. 17, 18. ரோ. 8. 31. 2 கொ. 1. 6, 10. எபி. 13. 6
[15] 23. 2-9
[16] 23. 2, 4

9 பிக்கொள்வாய் என்றார். அப்பொழுது தாவீ
தும் அவனோடிருந்த அறுநூறுபேரும் போ
னார்கள்; அவர்கள் பேசோர் ஆற்றண்டைக்கு
வந்தபோது அங்கே சிலர் நின்றுபோனார்
10 கள். தாவீதோ, நானூறுபேரோடுங்கூடத்
தொடர்ந்துபோனான்; இருநூறுபேர் விடாய்
த்துப்போனபடியினால் பேசோர் ஆற்றைக்
11 கடக்கமாட்டாமல் நின்றுபோனார்கள். ஒரு
எகிப்தியனை வெளியில் அவர்கள் கண்டு,
அவனைத் தாவீதினிடத்தில் கொண்டுவந்து,
புசிக்க அவனுக்கு அப்பமும் குடிக்கத் தண்
12 ணீரும் கொடுத்து, அத்திப்பழ அடையின்
ஒரு துண்டையும், வற்றலான இரண்டு திராட்
சப்பழக் குலைகளையும், அவனுக்குக் கொடுத்
தார்கள்; [1]அதை அவன் சாப்பிட்டபின்பு, அவ
னுடைய உயிர் திரும்ப அவனுக்குள் வந்தது.
அவன் இராப்பகல் மூன்றுநாளாய் அப்பம்
சாப்பிடாமலும் தண்ணீர் குடியாமலும் இருந்
13 தான். தாவீது அவனை நோக்கி: நீ யாருடை
யவன்? நீ எவ்விடத்தான் என்றுகேட்டதற்கு,
அவன்: நான் ஒரு அமலேக்கியனுடைய வே
லைக்காரனாகிய எகிப்துதேசத்துப் பிள்ளை
யாண்டான்; மூன்றுநாளைக்குமுன் நான்
வியாதிப்பட்டபோது, என் எஜமான் என்
14 னைக் கைவிட்டான். நாங்கள் [2]கிரேத்தியரு
டைய தென்புறத்தின்மேலும், யூதாவுக்கடுத்த
எல்லையின்மேலும், காலேபுடைய தென்புறத்
தின்மேலும், படையெடுத்துப்போய் [3]சிக்லா
கை அக்கினியினால் சுட்டெரித்துப்போட்
15 டோம் என்றான். தாவீது அவனை நோக்கி:
நீ என்னை அந்தத் தண்டினிடத்துக்குக் கொ
ண்டுபோவாயா என்று கேட்டதற்கு; அவன்,
நீர் என்னைக் கொன்றுபோடுவதுமில்லை, என்
னை என் எஜமான் கையில் ஒப்புக்கொடுப்பது
மில்லை என்று தேவன்மேல் ஆணையிடுவீ
ரானால், உம்மை அந்தத் தண்டினிடத்துக்
குக் கூட்டிக்கொண்டு போவேன் என்றான்.
16 இவன் அவனைக் கொண்டுபோய்விட்டபோது,
இதோ, அவர்கள் வெளியெங்கும் பரவி,
[4]புசித்துக் குடித்து, தாங்கள் பெலிஸ்தர் தேசத்
திலும் யூதாதேசத்திலும் கொள்ளையிட்டுவந்த
மகா பெரிதான அந்த எல்லாக் கொள்ளைக்கா
17 கவும் ஆடிப்பாடிக்கொண்டிருந்தார்கள். அவர்
களைத் தாவீது அன்று சாயங்காலந்தொடங்கி
மறுநாள் சாயங்காலமட்டும் முறிய அடித்தான்;
ஒட்டகங்கள்மேல் ஏறி ஓடிப்போன நானூறு
வாலிபர் தவிர, அவர்களில் வேறொருவரும்
18 தப்பவில்லை. அமலேக்கியர் பிடித்துக்கொ
ண்டுபோன எல்லாவற்றையும், தன்னுடைய
இரண்டு மனைவிகளையும், தாவீது விடுவித்
19 தான். அவர்கள் கொள்ளையாடிக் கொண்டு
போன எல்லாவற்றிலும், சிறியதிலும் பெரிய
திலும், குமாரரிலும், குமாரத்திகளிலும், ஒன்
றும் குறைபடாமல் எல்லாவற்றையும் தாவீது
20 திருப்பிக்கொண்டான். எல்லா ஆடுமாடுகளை
யும் தாவீது பிடித்துக்கொண்டான்; அவைக
ளைத் தங்கள் மிருக ஜீவன்களுக்கு முன்னாலே
ஓட்டி, இது தாவீதின் கொள்ளை என்றார்கள்.
விடாய்த்துப்போனதினாலே தாவீதுக்குப் 21
பின்செல்லாமல், பேசோர் ஆற்றண்டையிலே
தங்கியிருந்த [5]இருநூறுபேரிடத்துக்குத் தா
வீது வருகிறபோது, இவர்கள் தாவீதுக்கும்
அவனோடிருந்த ஜனத்திற்கும் எதிர்கொண்டு
வந்தார்கள்; தாவீது அந்த ஜனத்தினிடத்தில்
சேர்ந்து, அவர்கள் சுகசெய்தியை விசாரித்
தான். அப்பொழுது தாவீதோடே நடந்து 22
வந்த மனுஷரில் பொல்லாதவர்களும் [6]பேலி
யாளின் மக்களுமான எல்லாரும்: அவர்கள்
எங்களோடே வாராதபடியினால் நாங்கள் திருப்
பிக்கொண்ட கொள்ளையுடைமைகளில் அவர்
களுக்கு ஒன்றும் கொடுப்பதில்லை; அவர்களில்
ஒவ்வொருவனும் தன்தன் மனைவியையும் தன்
தன் பிள்ளைகளையுமே அழைத்துக்கொண்டு
போகட்டும் என்றார்கள். அதற்குத் தாவீது: 23
என் சகோதரரே, கர்த்தர் நமக்குத் தந்ததை
நீங்கள் இப்படிச் செய்யவேண்டாம்; கர்த்தர்
நம்மைக் காப்பாற்றி, நமக்கு விரோதமாய் வந்
திருந்த அந்தத் தண்டை நம்முடைய கையில்
ஒப்புக்கொடுத்தார். இந்தக் காரியத்தில் உங் 24
கள் சொற்கேட்க யார் சம்மதிப்பான்? [7]யுத்தத்
திற்குப் போனவர்களின் பங்கு எவ்வளவோ,
அவ்வளவு ரஸ்துக்களண்டையில் இருந்தவர்
களுக்கும் பங்குவீதம் கிடைக்கவேண்டும்; சரி
பங்காகப் பங்கிடுவார்களாக என்றான். அப் 25
படியே அந்நாள்முதற்கொண்டு நடந்துவரு
கிறது; அதை இஸ்ரவேலிலே இந்நாள்வரைக்
கும் இருக்கும் கட்டளையும் பிரமாணமுமாக
ஏற்படுத்தினான்.

தாவீது சிக்லாகுக்கு வந்தபோது, அவன் 26
கொள்ளையாடினவைகளிலே தன் சிநேகிதரா
கிய யூதாவின் மூப்பருக்குச் சிலவற்றை அனு
ப்பி: இதோ, கர்த்தருடைய சத்துருக்களின்
கொள்ளையில் உங்களுக்கு உண்டாயிருக்கும்
*ஆசீர்வாதபாகம் என்று சொல்லச்சொன்
னான். யார்யாருக்கு அனுப்பினானென்றால், 27
பெத்தேலில் இருக்கிறவர்களுக்கும், [8]தெற்
கான ராமோத்தில் இருக்கிறவர்களுக்கும்,
[9]யாத்தீரில் இருக்கிறவர்களுக்கும், ஆரோ 28
வேரில் [10]இருக்கிறவர்களுக்கும், சிப்மோத்தில்
இருக்கிறவர்களுக்கும், [11]எஸ்தேமோகாவில்
இருக்கிறவர்களுக்கும், ராக்காவில் இருக்கிற 29
வர்களுக்கும், [12]யெராமியேலியரின் பட்ட
ணங்களில் இருக்கிறவர்களுக்கும், [13]கேனி
யரின் பட்டணங்களில் இருக்கிறவர்களுக்
கும், ஓர்மாவில் [14]இருக்கிறவர்களுக்கும், கொ 30
ராசானில் இருக்கிறவர்களுக்கும், ஆத்தாகில்
இருக்கிறவர்களுக்கும், எப்ரோனில் [15]இருக் 31
கிறவர்களுக்கும், தாவீதும் அவன் மனுஷ
ரும் நடமாடின எல்லா இடங்களில் இருக்கிற
வர்களுக்கும் அனுப்பினான்.

பெலிஸ்தர் [16]இஸ்ரவேலரோடே யுத் **31**
தம்பண்ணினார்கள்; இஸ்ரவேலர் பெலிஸ்த
ருக்கு முன்பாக முறிந்தோடி, [17]கில்போவா
மலையிலே வெட்டுண்டு விழுந்தார்கள். பெலி 2

[1] 14. 27. நியா. 15. 19
[2] 2 சாமு. 8. 18
[3] யோசு. 14. 13
[4] மத். 24. 38, 39. 1 தெச. 5. 3
[5] 10. வச.
[6] உபா. 13. 13
[7] எண். 31. 27. யோசு. 22. 8
* வெகுமதிபாகம். 25. 27. ஆதி. 33. 11
[8] யோசு. 19. 8
[9] யோசு. 15. 48
[10] யோசு. 13. 16
[11] யோசு. 15. 50
[12] 27. 10
[13] நியா. 1. 16
[14] நியா. 1. 17
[15] யோசு. 14. 13. 2 சாமு. 2. 1
[16] 1 நாளா. 10. 1. மு.
[17] 28. 4

ஸ்தர் சவுலையும் அவன் குமாரரையும் நெருங்
கித் தொடர்ந்து, சவுலின் குமாரராகிய [1]யோ
னத்தானையும் அபினதாபையும் மல்கிசூவா
3 வையும் வெட்டிப்போட்டார்கள். சவுலுக்கு
விரோதமாய் [2]யுத்தம் பலத்தது; வில்வீரர் அவ
னைக் கண்டு நெருங்கினார்கள்; அப்பொழுது
4 சவுல் வில்வீரரால் மிகவும் காயப்பட்டு, தன்
ஆயுததாரியை நோக்கி: [3]அந்த விருத்தசேத
னம் இல்லாதவர்கள் வந்து, என்னைக் குத்திப்
போட்டு, என்னை அவமானப்படுத்தாதபடி
க்கு, நீ உன் பட்டயத்தை உருவி, என்னைக்
குத்திப்போடு என்றான்; அவனுடைய ஆயுத
தாரி மிகவும் பயப்பட்டதினால், அப்படிச்
செய்யமாட்டேன் என்றான்; அப்பொழுது
சவுல் பட்டயத்தை நட்டு [4]அதின்மேல் விழுந்
5 தான். சவுல் செத்துப்போனதை அவன் ஆயுத
தாரிகண்டபோது, அவனும் தன் பட்டயத்தின்
மேல் விழுந்து, அவனோடேகூடச் செத்துப்
6 போனான். அப்படியே அன்றையதினம் சவு
லும், அவன் மூன்று குமாரரும், அவன் ஆயுத
தாரியும், அவனுடைய எல்லா மனுஷரும் ஒரு
7 மிக்கச் செத்துப்போனார்கள். இஸ்ரவேலர்
முறிந்தோடினார்கள் என்றும், சவுலும் அவன்
குமாரரும் செத்துப்போனார்கள் என்றும், பள்
ளத்தாக்குக்கு இப்பாலும் யோர்தானுக்கு இப்
பாலும் இருந்த இஸ்ரவேலர் கண்டபோது,

[1] 14. 49. 1 நாளா. 8. 33
[2] 2 சாமு. 1. 6. ஷ
[3] 14. 6. நியா. 9. 54
[4] 2 சாமு. 1. 10
[5] 2 சாமு. 1. 20
[6] 21. 9. நியா. 2. 18
[7] 2 சாமு. 21. 12
[8] 11. 1 — 11. 2 சாமு. 2. 4-7
[9] 2 நாளா. 16. 14. எரே. 34. 5. ஆமோ. 6. 10
[10] 2 சாமு. 2. 4, 5; 21. 12—14
[11] ஆதி. 50.10

அவர்கள் பட்டணங்களை விட்டு ஓடிப்போனார்
கள்; அப்பொழுது பெலிஸ்தர் வந்து, அவைக
ளிலே குடியிருந்தார்கள்.
வெட்டுண்டவர்களை உரிந்துகொள்ள, பெ 8
லிஸ்தர் மறுநாள் வந்தபோது, அவர்கள், சவு
லும் அவன் மூன்று குமாரரும் கில்போவா
மலையிலே விழுந்துகிடக்கிறதைக் கண்டு, அ 9
வன் தலையை வெட்டி, அவன் ஆயுதங்களை
எடுத்துக்கொண்டு, [5]தங்கள் விக்கிரகங்களின்
கோவில்களிலும் ஜனங்களுக்குள்ளும் செய்தி
யைப் பிரசித்தப்படுத்தும்படி, அவைகளைப்
பெலிஸ்தர் தேசத்திலே சுற்றிலும் அனுப்பி,
அவன் ஆயுதங்களை [6]அஸ்தரோத் தேவனு 10
டைய கோவிலிலே வைத்து, [7]அவன் உட
லைப் பெத்சானின் அலங்கத்திலே தூக்கிப்
போட்டார்கள். பெலிஸ்தர் சவுலுக்குச்செய் 11
ததைக் கீலேயாத் தேசத்து [8]யாபேஸ் பட்டண
த்தார் கேட்டபோது, அவர்களிலே பலசாலி 12
கள் எல்லாரும் எழுந்து இராமுழுதும் நடந்து
போய், பெத்சானின் அலங்கத்திலிருந்த சவு
லின் உடலையும் அவன் குமாரரின் உடல்களை
யும் எடுத்து, யாபேசுக்குக் கொண்டுவந்து,
[9]அவைகளை அங்கே தகனம்பண்ணி, அவர் 13
களுடைய எலும்புகளை எடுத்து, [10]யாபேசி
லிருக்கிறதோப்பிலே அடக்கம்பண்ணி, [11]ஏழு
நாள் உபவாசம்பண்ணினார்கள்.

# II. SAMUEL

# சாமுவேலின்

## இரண்டாம் புஸ்தகம்

1 சவுல் மரித்தபின்பு, தாவீது அமலேக்கி
யரை [1]முறிய அடித்து, சிக்லாகுக்குத் திரும்பி
வந்து, இரண்டுநாள் அங்கே இருந்தபிற்பாடு,
2 மூன்றாம்நாளிலே [2]ஒரு மனுஷன் சவுலின்
பாளயத்திலிருந்து புறப்பட்டு, [3]தன் வஸ்திரங்
களைக் கிழித்துக்கொண்டு, தன் தலையின்மேல்
புழுதியைப் போட்டுக்கொண்டு, தாவீதினிடத்
தில் வந்து, தரையிலே விழுந்து வணங்கினான்.
3 தாவீது அவனைப் பார்த்து: நீ எங்கேயிருந்து
வந்தாய் என்று கேட்டதற்கு, அவன்: இஸ்ர
வேலின் பாளயத்திலிருந்து தப்பிவந்தேன்
4 என்றான். தாவீது அவனைப் பார்த்து: [4]நட
ந்த செய்தி என்ன? சொல் என்று கேட்ட
தற்கு, அவன்: ஜனங்கள் யுத்தத்தைவிட்டு
முறிந்தோடிப்போனார்கள்; ஜனங்களில் அநே
கம்பேர் விழுந்து மடிந்துபோனார்கள்; சவுலும்
அவர் குமாரனாகிய யோனத்தானும் மடிந்தார்
5 கள் என்றான். சவுலும் அவர் குமாரனாகிய
யோனத்தானும் மடிந்துபோனது உனக்கு எப்
படித் தெரியும் என்று தாவீது தனக்கு அதை
அறிவிக்கிற வாலிபனிடத்தில் கேட்டதற்கு.
6 அந்த வாலிபன்: நான் தற்செயலாய்க் கில்
போவா மலைக்குப் போனேன்; [5]அப்பொழுது
இதோ, சவுல் தம்முடைய ஈட்டியின்மேல்
சாய்ந்துகொண்டிருந்தார்; இரதங்களும் குதி
ரைவீரரும் அவரைத் தொடர்ந்து நெருங்கி
7 னார்கள். அவர் திரும்பிப் பார்த்து: என்னைக்
கண்டு கூப்பிட்டார்; அதற்கு நான்: இதோ,
8 இருக்கிறேன் என்றேன். அப்பொழுது
அவர்: நீ யார் என்று என்னைக் கேட்டார்;
நான் அமலேக்கியன் என்று சொன்னேன்.
9 அவர் என்னை நோக்கி: நீ என்னண்டையில்
கிட்டவந்து நின்று, என்னைக் கொன்றுபோடு;
என் பிராணன் முழுதும் இன்னும் போகாததி
னால் எனக்கு வேதனையாயிருக்கிறது என்
10 றார். அப்பொழுது நான், அவர் விழுந்த
பின்பு பிழைக்கமாட்டார் என்று நிச்சயித்து,
[6]அவரண்டையில் போய் நின்று, அவரைக்
கொன்றுபோட்டேன்; பிற்பாடு அவர் தலை
யின்மேல் இருந்த முடியையும் அவர் புயத்தில்
இருந்த அஸ்தகடகத்தையும் எடுத்துக்கொ
ண்டு, அவைகளை இங்கே என் ஆண்டவ
னிடத்திற்குக் கொண்டுவந்தேன் என்றான்.
அப்பொழுது தாவீதும் அவனோடிருந்த சகல 11
மனுஷரும் [7]தங்கள் வஸ்திரங்களைக் கிழித்
துக்கொண்டு, சவுலும், அவன் குமாரனாகிய 12
யோனத்தானும், கர்த்தருடைய ஜனங்களும்,
இஸ்ரவேல் குடும்பத்தாரும், பட்டயத்தாலே
விழுந்தபடியினால் புலம்பி அழுது சாயங்கால
மட்டும் உபவாசமாயிருந்தார்கள். தாவீது 13
அதைத் தனக்கு அறிவித்த வாலிபனைப் பார்
த்து: நீ எவ்விடத்தான் என்று கேட்டதற்கு,
அவன்: நான் அந்நிய ஜாதியானுடைய மகன்,
நான் அமலேக்கியன் என்றான். தாவீது 14
அவனை நோக்கி: கர்த்தர் அபிஷேகம்பண்ணி
னவரைக்கொன்றுபோடும்படி, [8]நீ உன் கையை
நீட்டப் பயப்படாமற்போனது என்ன என்று
சொல்லி, வாலிபரில் ஒருவனைக் கூப்பிட்டு, 15
[9]நீ கிட்டப்போய் அவன்மேல் விழுந்து, அவ
னை வெட்டு என்றான்; அவன் அவனை வெட்
டினான்; அவன் செத்தான். தாவீது அவ 16
னைப் பார்த்து: [10]உன் இரத்தப்பழி உன் தலை
யின்மேல் இருப்பதாக; கர்த்தர் அபிஷேகம்
பண்ணினவரை நான் கொன்றுபோட்டேன்
என்று [11]உன் வாயே உனக்கு விரோதமான
சாட்சி சொல்லிற்று என்றான்.
தாவீது சவுலின்பேரிலும், அவன் குமார 17
னாகிய யோனத்தானின்பேரிலும், புலம்பல்
பாடினான். (வில்வித்தையை யூதா புத்திர 18
ருக்குக் கற்றுக்கொடுக்கும்படி கட்டளையிட்
டான்; அது யாசேரின் புஸ்தகத்தில் எழுதி
யிருக்கிறது.) அவன் பாடின புலம்பலாவது:
இஸ்ரவேலின் அலங்காரம் உயர்ந்த ஸ்தா 19
னங்களில் அதமாயிற்று; [12]பராக்கிரமசாலிகள்
விழுந்துபோனார்கள். பெலிஸ்தரின் [13]குமாரத் 20
திகள் சந்தோஷப்படாதபடிக்கும், விருத்தசே
தனம் இல்லாதவர்களின் குமாரத்திகள் களி
கூராதபடிக்கும், [14]அதைக் காத்பட்டணத்தில்
அறிவியாமலும் அஸ்கலோனின் வீதிகளில்
பிரஸ்தாபப்படுத்தாமலும் இருங்கள். கில்போ 21
வா மலைகளே, [15]உங்கள்மேல் பனியும் மழை
யும் பெய்யாமலும், [16]காணிக்கைக்கு ஏற்ற
பலன் தரும் வயல்கள் இராமலும் போவதாக;
அங்கே பராக்கிரமசாலிகளுடைய கேடகம்
அவமதிக்கப்பட்டது; சவுல் தைலத்தால்[17] அபி
ஷேகம் பண்ணப்படாதவர்போல அவர் கே

1 1 சாமு. 30. 17, 26
2 1 சாமு. 4. 12
3 4. 10
4 1 சாமு. 4. 16
5 1 சாமு. 31. 1–4
6 நியா. 9. 54
7 3. 31; 13. 31
8 1 சாமு. 24. 6; 26. 9. சங். 105. 15
9 4. 10, 12
10 1 இரா. 2. 32, 33, 37
11 லூக். 19. 22
12 27. வச.
13 யாத். 15. 20. நியா. 11. 34
14 மீகா 1. 10
15 யோபு 3. 3–10
16 வெளி. 1. 9; 2. 14
17 1 சாமு. 10. 1

22 டகமும் அவமதிக்கப்பட்டதே. கொலையுண்
டவர்களின் இரத்தத்தைக் குடியாமலும், பராக்
கிரமசாலிகளின் நிணத்தை உண்ணாமலும்,
யோனத்தானுடைய [1]வில் பின்வாங்கின
தில்லை; சவுலின் பட்டயம் வெறுமையாய்த்
23 திரும்பினதில்லை. உயிரோடே இருக்கையில்
[2]சவுலும் யோனத்தானும் பிரியமும் இன்பமு
மாயிருந்தார்கள்; மரணத்திலும் பிரிந்துபோன
தில்லை; கழுகுகளைப்பார்க்கிலும் வேகமும்,
சிங்கங்களைப்பார்க்கிலும் பலமுமுள்ளவர்களா
24 யிருந்தார்கள். இஸ்ரவேலின் குமாரத்திகளே,
உங்களுக்கு இரத்தாம்பரத்தைச் சிறப்பாய்
உடுப்பித்து, உங்கள் உடையின்மேல் பொன்
ஆபரணங்களைத் தரிப்பித்த சவுலுக்காக அழுது
25 புலம்புங்கள். போர்முகத்தில் பராக்கிரமசா
லிகள் விழுந்தார்களே. யோனத்தானே, உயர
மான ஸ்தலங்களிலே வெட்டுண்டுபோனாயே.
26 என் சகோதரனாகிய யோனத்தானே, உனக்
காக நான் வியாகுலப்படுகிறேன்; நீ எனக்கு
வெகு இன்பமாயிருந்தாய்; உன் சிநேகம் ஆச்
சரியமாயிருந்தது; [3]ஸ்திரீகளின் சிநேகத்தைப்
27 பார்க்கிலும் அதிகமாயிருந்தது. பராக்கிரம
சாலிகள் [4]விழுந்துபோனார்களே; யுத்த ஆயு
தங்கள் எல்லாம் அழிந்துபோயிற்றே, என்று
பாடினான்.

**2** பின்பு தாவீது **கர்த்தரை** நோக்கி: நான்
யூதாவின் பட்டணங்கள் ஒன்றிலே போய்
இருக்கலாமா என்று [5]விசாரித்தான். அதற்
குக் **கர்த்தர்**: போ என்றார்; எவ்விடத்திற்குப்
போகலாம் என்று தாவீது கேட்டதற்கு, அவர்:
2 [6]எப்ரோனுக்குப் போ என்றார். அப்படியே
தாவீது தன் இரண்டு மனைவிகளாகிய யெஸ்ர
யேல் ஊராளான அகினோவாமோடும், [7]நாபா
லின் மனைவியாயிருந்த கர்மேல் ஊராளான
அபிகாயிலோடுங்கூட அவ்விடத்திற்குப் போ
3 னான். அன்றியும் தன்னோடிருந்த மனுஷ
ரையும், [8]அவர்கள் குடும்பங்களையும் கூட்
டிக்கொண்டு போனான்; அவர்கள் எப்ரோ
4 னின் சுற்றூர்களிலே குடியேறினார்கள். அப்
பொழுது யூதாவின் மனுஷர் வந்து, அங்கே
தாவீதை யூதா வம்சத்தாரின்மேல் ராஜாவாக
அபிஷேகம் பண்ணினார்கள். [9]கீலேயாத்தே
சத்து யாபேசின் மனுஷர் சவுலை அடக்கம்
பண்ணினவர்கள் என்று அவர்கள் தாவீதுக்கு
அறிவித்தபோது,
5 தாவீது கீலேயாத்தேசத்து யாபேசின் மனு
ஷரிடத்தில் ஸ்தானாபதிகளை அனுப்பி, நீங்
கள் உங்கள் ஆண்டவனாகிய சவுலுக்கு இந்தத்
தயவைச் செய்து, அவனை அடக்கம்பண்ணி
னபடியினாலே, [10]**கர்த்தர்** உங்களை ஆசீர்வதிப்
6 பாராக. **கர்த்தர்** உங்களைக் கிருபையும் உண்
மையுமாய் நடத்துவாராக; [11]நீங்கள் இந்தக்
காரியத்தைச் செய்தபடியினால், நானும் இந்த
நன்மைக்குத் தக்கதாக உங்களை நடத்துவேன்.
7 இப்போதும் நீங்கள் உங்கள் கைகளைத் திடப்
படுத்திக்கொண்டு நல்ல சேவகராயிருங்கள்;
உங்கள் ஆண்டவனாகிய சவுல் மரித்தபின்பு,
யூதா வம்சத்தார் என்னைத் தங்கள்மேல் ராஜா
வாக அபிஷேகம்பண்ணினார்கள் என்று அவர்
களுக்குச் சொல்லச்சொன்னான்.
சவுலின் படைத்தலைவனான நேரின் குமா 8
ரனாகிய [12]அப்னேர் சவுலின் குமாரனாகிய
இஸ்போசேத்தை மகனாயீமுக்கு அழைத்துக்
கொண்டுபோய், அவனைக் கீலேயாத்தின்மே 9
லும், அஷூரியர்மேலும், யெஸ்ரயேலின்மே
லும், எப்பிராயீமின்மேலும், பென்யமீனின்
மேலும், இஸ்ரவேலனைத்தின்மேலும் ராஜா
வாக்கினான். சவுலின் குமாரனாகிய இஸ்போ 10
சேத் இஸ்ரவேலின்மேல் ராஜாவாகிறபோது,
நாற்பது வயதாயிருந்தான்; அவன் இரண்டு
வருஷம் ராஜ்யபாரம்பண்ணினான்; யூதா
கோத்திரத்தார்மாத்திரம் தாவீதைப் பின்பற்றி
னார்கள். தாவீது எப்ரோனிலே யூதா கோத் 11
திரத்தின்மேல் ராஜாவாயிருந்த நாட்களின்
இலக்கம் [13]ஏழு வருஷமும் ஆறுமாதமுமாம்.
நேரின் குமாரனாகிய அப்னேர் சவுலின் 12
குமாரனாகிய இஸ்போசேத்தின் சேவகரைக்
கூட்டிக்கொண்டு, மகனாயீமிலிருந்து கிபி
யோனுக்குப் புறப்பட்டுப் போனான். அப் 13
பொழுது செருயாவின் குமாரனாகிய யோவா
பும் தாவீதின் சேவகரும் புறப்பட்டுப் போய்,
[14]கிபியோனின் குளத்தண்டையில் ஒருவருக்
கொருவர் எதிர்ப்பட்டு, குளத்திற்கு அந்தப்
பக்கத்தில் அவர்களும், குளத்திற்கு இந்தப்பக்
கத்தில் இவர்களும் இறங்கினார்கள். அப் 14
னேர் யோவாபை நோக்கி: வாலிபர் எழுந்து,
நமக்கு முன்பாகச் சிலம்பம் பண்ணட்டும்
என்றான். அதற்கு யோவாப்: அவர்கள் எழு
ந்து, அப்படிச் செய்யட்டும் என்றான். அப் 15
பொழுது சவுலின் குமாரனாகிய இஸ்போ
சேத்தின் பக்கத்திற்குப் பென்யமீன் மனுஷ
ரில் பன்னிரண்டுபேரும், தாவீதுடைய சேவ
கரிலே பன்னிரண்டுபேரும், எழுந்து ஒரு
பக்கமாய்ப் போய், ஒருவர் தலையை ஒருவர் 16
பிடித்து, ஒருவருடைய விலாவிலே ஒருவர்
பட்டயத்தினாலே குத்தி, ஒருமிக்க விழுந்தார்
கள்; அதினாலே கிபியோனிலிருக்கிற அந்த
ஸ்தலம் *எல்காத்அசூரீம் என்னப்பட்டது.
அன்றையதினம் மிகவும் கடினமான யுத்த 17
மாகி, அப்னேரும் இஸ்ரவேல் மனுஷரும்
தாவீதின் சேவகரால் முறிய அடிக்கப்பட்டார்
கள். அங்கே செருயாவின் மூன்று குமாரரா 18
கிய யோவாபும் அபிசாயும் ஆசகேலும் இருந்
தார்கள்; [15]ஆசகேல் வெளியிலிருக்கிற கலை
மான்களில் ஒன்றைப்போல வேகமாய் ஓடு
கிறவனாயிருந்தான். அவன் அப்னேரைப் 19
பின்தொடர்ந்து, வலதுபுறத்திலாகிலும் இட
துபுறத்திலாகிலும், அவனை விட்டு விலகாமல்
துரத்திக்கொண்டுபோனான். அப்னேர் திரும் 20
பிப் பார்த்து: நீ ஆசகேல் அல்லவா என்றான்.
அவன்: நான்தான் என்றான். அப்பொழுது 21
அப்னேர் அவனை நோக்கி: நீ வலதுபக்கத்திற்
காகிலும் இடதுபக்கத்திற்காகிலும் விலகி,
வாலிபரில் ஒருவனைப் பிடித்து, அவனை [16]உரிக்

[1] 1 சாமு. 14. 6. ஞ: 18. 4
[2] நியா. 14. 18. நீதி. 30. 30
[3] 1 சாமு. 18. 1, 3
[4] 19, 25. வச.
[5] நியா. 1. 1. 1 சாமு. 23. 2, 4, 10
[6] 5. 1, 3
[7] 1 சாமு. 30. 5
[8] 1 சாமு. 27. 2, 3
[9] 1 சாமு. 31. 11, 13
[10] ரூத். 2. 20; 3. 10. சங். 105. 15
[11] 2 தீமோ. 1. 16, 18
[12] 1 சாமு. 14. 50
[13] 5. 5. 1 இரா. 2. 11
[14] எரே. 41. 12
* பலசாலிகளின் வயல்
[15] 1 நாளா. 12. 8. உன்ன. 2. 17; 8. 14
[16] நியா. 14. 19

துகொள் என்றான்; ஆசகேலோ விடமாட்
22 டேன் என்று தொடர்ந்துபோனான். பின்
னும் அப்னேர் ஆசகேலை நோக்கி: நீ என்னை
விட்டுப் போ; நான் உன்னைத் தரையோடே
ஏன் வெட்டவேண்டும்? பிற்பாடு உன் சகோ
தரனாகிய யோவாபின் முகத்திலே எப்படி
23 விழிப்பேன் என்றான். ஆனாலும் அவன்
விலகிப்போகமாட்டேன் என்றபடியினால்,
அப்னேர் அவனை ஈட்டியின் பின்புற அலகி
னால் அவன் *வயிற்றிலே குத்தினான்; ஈட்டி
முதுகிலே புறப்பட்டது; அவன் அங்கே
தானே விழுந்து செத்தான்; ஆசகேல் விழுந்
துகிடக்கிற இடத்திலே வந்தவர்களெல்லாரும்
24 தரித்து நின்றார்கள். யோவாபும் அபிசாயும்
சூரியன் அஸ்தமிக்குமட்டும் அப்னேரைப்
பின்தொடர்ந்தார்கள்; கிபியோன் வனாந்தர
வழிக்கு அருகான கீயாவுக்கு எதிரே இருக்
25 கிற அம்மா மேடுமட்டும் வந்தார்கள். அப்பொ
ழுது அப்னேரைப் பின்சென்ற பென்யமீன்
புத்திரர் ஒரேபடையாகக் கூடி, ஒரு மலையின்
26 உச்சியிலே நின்றார்கள். அப்பொழுது அப்
னேர் யோவாபைப் பார்த்துக் கூப்பிட்டு, பட்
டயம் எப்போதும் சங்காரம் பண்ணிக்கொ
ண்டிருக்கவேண்டுமோ, முடிவிலே கசப்புண்
டாகும் என்று அறியீரோ, தங்கள் சகோத
ரரை விட்டுப் பின்வாங்கும்படிக்கு எந்தமட்
டும் ஜனங்களுக்குச் சொல்லாதிருப்பீர் என்
27 றான். அதற்கு யோவாப்: [1]இன்று காலமே
நீர் பேசாதிருந்தீரானால் ஜனங்கள் அவரவர்
தங்கள் சகோதரரைப் பின்தொடராமல், அப்
போதே திரும்பிவிடுவார்கள் என்று தேவனு
டைய ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேன்
28 என்றான். யோவாப் எக்காளம் ஊதினான்;
அப்பொழுது ஜனங்கள் எல்லாரும் இஸ்ர
வேலைத் தொடராமலும், யுத்தம்பண்ணாமலும்
29 நின்றுவிட்டார்கள். அன்று ராமுழுதும் அப்
னேரும் அவன் மனுஷரும் அந்தரவெளி வழி
யாய்ப் போய், யோர்தானைக் கடந்து, பித்
ரோனை உருவநடந்து தாண்டி, மகனாயீமுக்
30 குப் போனார்கள். யோவாப் அப்னேரைத்
தொடராமல் ஜனங்களையெல்லாம் கூடிவரச்
செய்தான்; தாவீதின் சேவகரில் பத்தொன்
பதுபேரும் ஆசகேலும் குறைந்திருந்தார்கள்.
31 தாவீதின சேவகரோ பென்யமீனரிலும், அப்
னேரின் மனுஷரிலும், முந்நூற்றறுபதுபே
32 ரை மடங்கடித்தார்கள். அவர்கள் ஆசகேலை
எடுத்து, பெத்லெகேமிலுள்ள அவனுடைய
தகப்பன் கல்லறையிலே அவனை அடக்கம்
பண்ணினார்கள்; யோவாபும் அவன் மனுஷ
ரும் இராமுழுவதும் நடந்து, பொழுது விடி
யும்போது எப்ரோனிலே சேர்ந்தார்கள்.

3 சவுலின் குடும்பத்துக்கும் தாவீதின் குடும்
பத்துக்கும் நெடுநாள் யுத்தம் நடந்தது; தா
வீது வரவர பலத்தான்; சவுலின் குடும்பத்தா
ரோ வரவர பலவீனப்பட்டுப்போனார்கள்.
2 எப்ரோனிலே [2]தாவீதுக்குப் பிறந்த குமாரர்:
யெஸ்ரயேல் ஊராளான [3]அகினோவாமிடத்
திலே பிறந்த அம்னோன் அவனுக்கு முதல்
பிறந்தவன். நாபாலின் மனைவியாயிருந்த கர் 3
மேல் ஊராளான அபிகாயிலிடத்திலே பிற
ந்த †கிலேயாப் அவனுடைய இரண்டாம்
குமாரன்; மூன்றாம் குமாரன் [4]கேசூரின்
ராஜாவான தல்மாய் குமாரத்தியாகிய மாக்
காள் பெற்ற அப்சலோம் என்பவன். நா 4
லாம் குமாரன் ஆகீத் பெற்ற [5]அதோனியா
என்பவன்; ஐந்தாம் குமாரன் அபித்தால்
பெற்ற செப்பத்தியா என்பவன். ஆறாம் 5
குமாரன் தாவீதின் மனைவியாகிய எக்லாளி
டத்தில் பிறந்த இத்ரேயாம் என்பவன்; இவர்
கள் எப்ரோனிலே தாவீதுக்குப் பிறந்தவர்
கள்.

சவுலின் குடும்பத்துக்கும் தாவீதின் குடும் 6
பத்துக்கும் யுத்தம் நடந்துவருகிறபோது, அப்
னேர் சவுலின் குடும்பத்திலே பலத்தவனா
னான். சவுலுக்கு ஆயாவின் குமாரத்தியாகிய 7
[6]ரிஸ்பாள் என்னும் பேருள்ள ஒரு மறுமனை
யாட்டி இருந்தாள்; இஸ்போசேத் அப்னே
ரை நோக்கி: நீ என் தகப்பனாருடைய [7]மறு
மனையாட்டியினிடத்தில் பிரவேசித்தது என்
ன என்றான். அப்னேர் இஸ்போசேத்தின் 8
வார்த்தைகளுக்காக மிகவும் கோபங்கொண்டு:
உம்மைத் தாவீதின் கையில் ஒப்புக்கொடா
மல், இந்நாள்மட்டும் உம்முடைய தகப்பனா
கிய சவுலின் குடும்பத்துக்கும், அவருடைய
சகோதரருக்கும், சிநேகிதருக்கும், தயவுசெய்
கிறவனாகிய என்னை நீர் இன்று ஒரு ஸ்திரீயி
னிமித்தம் குற்றம்பிடிக்கிறதற்கு, நான் யூதா
வுக்கு உட்கையான [8]ஒரு நாய்த்தலையா? நான் 9
ராஜ்யபாரத்தைச் சவுலின் குடும்பத்தைவிட்
டுத் [9]தாண்டப்பண்ணி, தாவீதின் சிங்காசனத்
தைத் தாண் துவக்கிப் பெயெர்செபாமட்டு
முள்ள இஸ்ரவேலின்மேலும் யூதாவின்மே
லும் நிலைநிறுத்தும்படிக்கு, கர்த்தர் தாவீது 10
க்கு [10]ஆணையிட்டபடியே, நான் அவனுக்குச்
செய்யாமற்போனால், தேவன் அப்னேருக்கு
அதற்குச் சரியாகவும் அதற்கு அதிகமாகவும்
செய்யக்கடவர் என்றான். அப்பொழுது 11
அவன் அப்னேருக்குப் பயப்பட்டதினால்,
அப்புறம் ஒரு மறுமொழியும் அவனுக்குச்
சொல்லாதிருந்தான்.

அப்னேர் தன் நாமத்தினாலே தாவீதினி 12
டத்திற்கு ஸ்தானாபதிகளை அனுப்பி: தேசம்
யாருடையது? என்னோடு உடன்படிக்கை
பண்ணும்; இதோ, இஸ்ரவேலையெல்லாம்
உம்மிடத்தில் திருப்ப, என் கை உம்மோடி
ருக்கும் என்று சொல்லச்சொன்னான். அத 13
ற்கு தாவீது: நல்லது, உன்னோடே நான்
உடன்படிக்கைபண்ணுவேன்; ஆனாலும் ஒரே
காரியம் உன்னிடத்தில் கேட்டுக்கொள்ளு
கிறேன்; அது என்னவெனில், நீ என் முகத்
தைப் பார்க்க வரும்போது, [11]சவுலின் குமா
ரத்தியாகிய மீகாளை நீ அழைத்துவரவேண்
டும்; [12]அதற்குமுன் நீ என் முகத்தைப் பார்ப்
பதில்லை என்று சொல்லச்சொல்லி, அவன் 14

* நியாயாதிபதி. 1. 27
[1] 14. வச. சீதி. 17. 14
[2] 1 நாளா. 3. 1-4
[3] 1 சாமு. 25. 43
† தானியேல். 1 நாளா. 3. 1
[4] 1 சாமு. 27. 8
[5] 1 இரா. 1. 5
[6] 21. 8, 10
[7] 16. 21
[8] 9. 8; 16. 9. உபா. 23. 18. 1 சாமு. 24. 14
[9] 17. 11. நியா. 20. 1. 1 இரா. 4. 25
[10] 1 சாமு. 15. 28
[11] 1 சாமு. 18. 20
[12] ஆதி. 43. 3

சவுலின் குமாரனாகிய இஸ்போசேத்தி
னிடத்திற்கும் ஸ்தானாபதிகளை அனுப்பி:
[1]நான் பெலிஸ்தருடைய நூறு நுனித்தோல்
களைப் பரிசமாகக் கொடுத்து, விவாகம்பண்
ணின என் மனைவியாகிய மீகாளை அனுப்பி
15 விடும் என்று சொல்லச்சொன்னான். அப்
பொழுது, இஸ்போசேத் அவளை லாயிசின்
குமாரனாகிய *பல்த்தியேல் என்னும் புருஷ
னிடத்திலிருந்து அழைத்துவர ஆட்களை
16 அனுப்பினான். அவள் புருஷன் [2]பகூரீம்
மட்டும் அவள் பிறகாலே அழுதுகொண்டு வந்
தான். அப்னேர் அவனை நோக்கி: நீ திரும்
பிப்போ என்றான்; அவன் திரும்பிப் போய்
விட்டான்.
17 அப்னேர் இஸ்ரவேலின் மூப்பரோடே
பேசி: தாவீதை உங்கள்மேல் ராஜாவாக வைக்
கும்படிக்கு நீங்கள் அநேககாலமாய்த் தேடினீர்
18 களே. இப்போதும் அப்படிச் செய்யுங்கள்:
என் தாசனாகிய தாவீதின் கையினால், என்
ஜனமாகிய இஸ்ரவேலைப் பெலிஸ்தரின்கைக்
கும், அவர்களுடைய எல்லாச் சத்துருக்க
ளின் கைக்கும், நீங்கலாக்கி இரட்சிப்பேன்
என்று கர்த்தர் தாவீதைக்குறித்துச் [3]சொல்லி
19 யிருக்கிறாரே என்றான். இந்தப்பிரகாரமாக
அப்னேர் [4]பென்யமீன் மனுஷர் காதுகள்
கேட்கப் பேசினான்; பின்பு அப்னேர் இஸ்ர
வேலர் பார்வைக்கும், பென்யமீனுடைய எல்
லாக் குடும்பத்தாரின் பார்வைக்கும், சம்மதி
யானதையெல்லாம் எப்ரோனிலே தாவீதின்
காதுகள் கேட்கப் பேசுகிறதற்குப் போனான்.
20 அப்னேரும், அவனோடேகூட இருபதுபே
ரும் எப்ரோனிலிருக்கிற தாவீதினிடத்தில்
வந்தபோது, தாவீது அப்னேருக்கும், அவ
னோடே வந்த மனுஷருக்கும் விருந்து செய்
21 தான். பின்பு அப்னேர் தாவீதை நோக்கி:
நான் எழுந்து போய், இஸ்ரவேலனை யெல்
லாம் உம்மோடே உடன்படிக்கை பண்ணும்
படிக்கு, ராஜாவாகிய என் ஆண்டவனிடத்தில்
[5]சேர்த்துக்கொண்டு வருகிறேன்; அதினாலே
உம்முடைய ஆத்துமா அரசாள விரும்புகிற
இடமெல்லாம் [6]அரசாளுவீர் என்றான்; அப்
படியே தாவீது அப்னேரை அனுப்பிவிட்
டான்; அவன் சமாதானத்தோடே போனான்.
22 தாவீதின் சேவகரும் யோவாபும் அநேகம்பொ
ருட்களைக் கொள்ளையிட்டு, தண்டிலிருந்து
கொண்டுவந்தார்கள்; அப்பொழுது அப்னேர்
எப்ரோனில் தாவீதினிடத்தில் இல்லை; அவ
னை அனுப்பிவிட்டான், அவன் சமாதானத்
23 தோடே போய்விட்டான். யோவாபும் அவ
னோடிருந்த எல்லாச் சேனையும் வந்தபோது,
நேரின் குமாரனாகிய அப்னேர் ராஜாவினி
டத்தில் வந்தான் என்றும், அவர் அவனைச்
சமாதானமாய்ப் போக அனுப்பிவிட்டார் என்
24 றும், யோவாபுக்கு அறிவித்தார்கள். அப்பொ
ழுது யோவாப் ராஜாவண்டையில் பிரவே
சித்து: என்னசெய்தீர்? இதோ, அப்னேர்
உம்மிடத்தில் வந்தானே, நீர் அவனைப் போக

[1] 1 சாமு. 18. 25, 27
* பல்த்தி. 1 சாமு. 25. 44
[2] 19. 16
[3] 9. வச.
[4] 1 நாளா. 12. 29
[5] 10, 12. வச.
[6] 1 இரா. 11. 37
[7] 1 சாமு. 29. 6 ஏசா. 37. 28
[8] 20. 9, 10. 1 இரா. 2. 5
[9] 2. 23
[10] 1 இரா. 2. 32, 33
[11] 1. 2, 11. யோசு. 7. 6
[12] 13. 12, 13. நீதி. 18. 7. எரே. 17. 11
[13] 12. 17. எரே. 16. 7
[14] ரூத். 1. 17

விட்டது என்ன? நேரின் குமாரனாகிய அப் 25
னேரை அறிவீரே; அவன் உம்மை மோசம்
போக்கவும், [7]உம்முடைய போக்குவரத்தை
அறியவும், நீர் செய்கிறதையெல்லாம் ஆராய
வும் வந்தான் என்று சொன்னான். யோவாப் 26
தாவீதை விட்டுப் புறப்பட்டவுடனே, அவன்
அப்னேரைத் தாவீதுக்குத் தெரியாமல் கூட்
டிக்கொண்டு வரும்படி ஆட்களை அனுப்பி
னான்; அவர்கள் சீரா என்னும் துரவுமட்டும்
போய் அவனை அழைத்துக்கொண்டு வந்தார்
கள். அப்னேர் எப்ரோனுக்குத் திரும்பி வரு 27
கிறபோது, யோவாப் அவனோடே இரகசிய
மாய்ப் பேசப்போகிறவன்போல, அவனை
ஒலிமுகவாசலின் நடுவே ஒரு [8]பக்கமாய்
அழைத்துப்போய், [9]தன் தம்பி ஆசகேலுடைய
இரத்தப்பழியை வாங்க, அங்கே அவனை
வயிற்றிலே குத்திக் கொன்றுபோட்டான்.
தாவீது அதைக் கேட்டபோது: நேரின் 28
குமாரனாகிய அப்னேரின் இரத்தத்திற்காக,
என்மேலும் என் ராஜ்யத்தின்மேலும் கர்த்த
ருக்கு முன்பாக என்றைக்கும் பழியில்லை.
அது யோவாபுடைய தலையின்மேலும், 29
[10]அவன் தகப்பன் குடும்பத்தின்மேலும் சுமந்
திருப்பதாக; யோவாபின் வீட்டாரிலே பிரமி
யக்காரனும், குஷ்டரோகியும், கோல் ஊன்றி
நடக்கிறவனும், பட்டயத்தால் விழுகிறவனும்,
அப்பம் குறைச்சலுள்ளவனும், ஒருக்காலும்
ஒழிந்துபோவதில்லை என்றான். அப்னேர் 30
கிபியோனில் நடந்த யுத்தத்திலே தங்கள் தம்பி
யாகிய ஆசகேலைக் கொன்றதினிமித்தம் யோ
வாபும் அவன் சகோதரனாகிய அபிசாயும் அவ
னைச் சங்காரம்பண்ணினார்கள்.
தாவீது யோவாபையும், அவனோடிருந்த 31
சகல ஜனங்களையும் பார்த்து: [11]நீங்கள் உங்கள்
வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு, இரட்
டுடுத்தி, அப்னேருக்கு முன்னாக நடந்து துக்
கம் கொண்டாடுங்கள் என்று சொல்லி, தாவீது
ராஜா தானும் பாடைக்குப் பின்சென்றான்.
அவர்கள் அப்னேரை எப்ரோனிலே அடக் 32
கம்பண்ணுகையில், ராஜா அப்னேரின் கல்ல
றையண்டையிலே சத்தமிட்டு அழுதான்;
சகல ஜனங்களும் அழுதார்கள். ராஜா அப் 33
னேருக்காகப் புலம்பி: [12]மதிகெட்டவன் சாகி
றதுபோல, அப்னேர் செத்துப்போனானோ?
உன் கைகள் கட்டப்படவும் இல்லை; உன் 34
கால்களில் விலங்கு போடப்படவும் இல்லை;
துஷ்டர் கையில் மடிகிறதுபோல மடிந்தாயே
என்றான்; அப்பொழுது ஜனங்களெல்லாரும்
பின்னும் அதிகமாய் அவனுக்காக அழுதார்
கள். பொழுது இன்னும் இருக்கையில், ஜன 35
ங்கள் எல்லாரும் வந்து: [13]அப்பம் புசியும்
என்று தாவீதுக்குச் சொன்னபோது, தாவீது:
சூரியன் அஸ்தமிக்கிறதற்கு முன்னே நான்
அப்பத்தையாகிலும் வேறெதையாகிலும் ருசி
பார்த்தால், [14]தேவன் எனக்கு அதற்குச் சரி
யாகவும் அதற்கு அதிகமாகவும் செய்யக்
கடவர் என்று ஆணையிட்டுச் சொன்னான்.

36 ஜனங்கள் எல்லாரும் அதைக் கவனித்தார்கள்,
அது அவர்கள் பார்வைக்கு நன்றாயிருந்தது,
அப்படியே ராஜா செய்ததெல்லாம் சகல ஜன
37 ங்களுக்கும் நலமாய்த் தோன்றினது. நேரின்
குமாரனாகிய அப்னேரைக் கொன்றுபோட்
டது ராஜாவினால் உண்டானதல்லவென்று
அந்நாளிலே சகல ஜனங்களும், இஸ்ரவேலர்
38 அனைவரும் அறிந்துகொண்டார்கள். ராஜா
தன் ஊழியக்காரரை நோக்கி: இன்றைய
தினம் இஸ்ரவேலில் பிரபுவும் பெரிய மனுஷ
னுமாகிய ஒருவன் விழுந்தான் என்று அறி
39 யீர்களா? நான் ராஜாவாக அபிஷேகம்பண்
ணப்பட்டவனாயிருந்தபோதிலும், [1]நான் இன்
னும் பலவீனன்; செருயாவின் குமாரராகிய
இந்த மனுஷர் என் பலத்துக்கு மிஞ்சினவர்க
ளாயிருக்கிறார்கள், [2]அந்தப் பொல்லாப்பைச்
செய்தவனுக்குக் கர்த்தர் அவன் பொல்லாப்
புக்குத் தக்கதாய்ச் சரிக்கட்டுவாராக என்றான்.

**4** அப்னேர் எப்ரோனிலே செத்துப்போன
தைச் சவுலின் குமாரன் கேட்டபோது,
[3]அவன் கைகள் திடனற்றுப் போயிற்று; [4]இஸ்
2 ரவேலரெல்லாரும் கலங்கினார்கள். சவுலின்
குமாரனுக்குப் படைத்தலைவரான இரண்டு
பேர் இருந்தார்கள்; ஒருவனுக்குப் பேர் பானா,
மற்றவனுக்குப் பேர் ரேகாப்; அவர்கள் பென்
யமீன் புத்திரரில் பேரோத்தியனாகிய ரிம்மோ
னின் குமாரர்கள். [5]பேரோத்தும் பென்யமீனு
3 க்கு அடுத்ததாய் எண்ணப்பட்டது. பேரோ
த்தியர் [6]கித்தாயீமுக்கு ஓடிப்போய், இந்நாள்
வரைக்கும் அங்கே சஞ்சரிக்கிறார்கள்.
4 சவுலின் குமாரன் யோனத்தானுக்கு [7]இர
ண்டு காலும் முடமான ஒரு குமாரன் இருந்
தான்; சவுலும் யோனத்தானும் மடிந்த செய்தி
யெஸ்ரயேலிலிருந்து வருகிறபோது, [8]அவன்
ஐந்து வயதுள்ளவனாயிருந்தான்; அப்பொழுது
அவனுடைய தாதி அவனை எடுத்துக்கொண்டு
ஓடிப்போனாள்; அவள் ஓடிப்போகிற அவச
ரத்தில் அவன் விழுந்து முடவனானான்; அவ
னுக்கு *மேவிபோசேத் என்று பேர்.
5 பேரோத்தியனான அந்த ரிம்மோனின் குமா
ரராகிய ரேகாபும பானாவும் போய், இஸ்போ
சேத் மத்தியானத்திலே வெய்யில் நேரத்தில்
படுக்கையின்மேல் சயனித்திருக்கும்போது
6 அவன் வீட்டிற்குள் பிரவேசித்து, கோதுமை
வாங்க வருகிறவர்கள்போல, நடுவீடுமட்டும்
வந்து, [9]அவனை வயிற்றிலே குத்திப்போட்
டார்கள்; பின்பு ரேகாபும் அவன் சகோதரன்
7 பானாவும் தப்பி ஓடிப்போனார்கள். அவன்
தன் பள்ளிஅறையிலே தன் கட்டிலின்மேல்
படுத்திருக்கும்போது இவர்கள் உள்ளேபோய்,
அவனைக் குத்திக் கொன்றுபோட்டு, அவன்
தலையை வெட்டிப்போட்டார்கள்; பின்பு
அவன் தலையை எடுத்துக்கொண்டு, இராமுழு
8 தும் அந்தரவெளி வழியாய் நடந்து, எப்ரோ
னிலிருக்கிற தாவீதினிடத்தில் இஸ்போசேத்
தின் தலையைக் கொண்டுவந்து, ராஜாவை
நோக்கி: இதோ, [10]உம்முடைய பிரா
ணனை வாங்கத் தேடின உம்முடைய சத்துரு
வாயிருந்த சவுலின் குமாரனாகிய இஸ்போ
சேத்தின் தலை, இன்றையதினம் கர்த்தர் ரா
ஜாவாகிய எங்கள் ஆண்டவனுக்காகச் சவுலின்
கையிலும் அவன் குடும்பத்தாரின் கையிலும்
பழிவாங்கினார் என்றார்கள். ஆனாலும் தா 9
வீது பேரோத்தியனான ரிம்மோனின் குமார
ராகிய ரேகாபுக்கும், அவன் சகோதரன் பானா
வுக்கும் பிரதியுத்தரமாக: [11]என் ஆத்துமாவை
எல்லா இக்கட்டுக்கும் நீங்கலாக்கி மீட்ட கர்த்
தருடைய ஜீவனைக்கொண்டு நான் சொல்லு
கிறதைக் கேளுங்கள். இதோ, ஒருவன் 10
எனக்கு நற்செய்தி கொண்டுவருகிறவன்
என்று எண்ணி, [12]சவுல் செத்துப்போனான்
என்று எனக்கு அறிவித்து, தனக்கு வெகு
மானம் கிடைக்கும் என்று நினைத்தபோது,
அவனை நான் பிடித்து சிக்லாகிலே கொன்று
போட்டேனே. தமது வீட்டிற்குள் தமது 11
படுக்கையின்மேல் படுத்திருந்த நீதிமானைக்
கொலைசெய்த பொல்லாத மனுஷருக்கு எவ்
வளவு அதிகமாய் ஆக்கினை செய்யவேண்டும்?
[13]இப்போதும் நான் அவருடைய இரத்தப்
பழியை உங்கள் கைகளில் வாங்கி, உங்களைப்
பூமியிலிருந்து அழித்துப்போடாதிருப்பேனோ
என்று சொல்லி, அவர்களைக் கொன்றுபோ 12
டவும், அவர்கள் கைகளையும் கால்களையும்
தறித்து, எப்ரோனிலிருக்கிற குளத்தண்டை
யிலே தூக்கிப்போடவும [14]தன் சேவகருக்குக்
கட்டளையிட்டான். இஸ்போசேத்தின் தலை
யை எடுத்து, எப்ரோனிலிருக்கிற அப்னே
ரின் [15]கல்லறையிலே அடக்கம்பண்ணினார்
கள்.

அக்காலத்திலே இஸ்ரவேலின் கோத்திரங் **5**
களெல்லாம் எப்ரோனிலிருக்கிற தாவீதினி
டத்தில் வந்து: [16]இதோ, நாங்கள் உம்முடைய
எலும்பும் உம்முடைய மாம்சமுமானவர்கள்.
சவுல் எங்கள்மேல் ராஜாவாயிருக்கும்போதே 2
இஸ்ரவேலை நடத்திக்கொண்டு போனவரும்
நடத்திக்கொண்டு வந்தவரும் நீரே; [17]கர்த்தர்:
என் ஜனமாகிய இஸ்ரவேலை நீ மேய்த்து,
நீ இஸ்ரவேலின்மேல் தலைவனாயிருப்பாய்
என்று உம்மிடத்தில் சொன்னாரே என்றார்
கள். இஸ்ரவேலின் மூப்பர் எல்லாரும் எப் 3
ரோனிலே ராஜாவினிடத்தில் வந்தார்கள்;
[18]தாவீது ராஜா எப்ரோனிலே கர்த்தருக்குமுன்
பாக அவர்களோடே உடன்படிக்கை பண்
ணினபின்பு, அவர்கள் தாவீதை இஸ்ரவே
லின்மேல் ராஜாவாக அபிஷேகம்பண்ணினார்
கள். தாவீது ராஜாவாகும்போது, [19]முப்பது 4
வயதாயிருந்தான்; அவன் நாற்பது வருஷம்
ராஜ்யபாரம்பண்ணினான். அவன் எப்ரோ 5
னிலே யூதாவின்மேல் ஏழு வருஷமும் ஆறு
மாதமும், [20]எருசலேமிலே சமஸ்த இஸ்ரவே
லின்மேலும் யூதாவின்மேலும் முப்பத்து
மூன்று வருஷமும் ராஜ்யபாரம்பண்ணினான்.
தேசத்திலே குடியிருக்கிற [21]எபூசியர்மேல் 6
யுத்தம்பண்ண ராஜாவானவன் தன் மனுஷ

[1] 19. 7
[2] 1 இரா. 2. 5, 6, 33. சங். 28. 4. 2 தீமோ. 4. 14
[3] எஸ்ற 4. 4. ஏசா. 13. 7
[4] மத். 2. 3
[5] யோசு. 18. 25
[6] நெகே. 11. 33
[7] 9. 3
[8] 1 சாமு. 29. 1, 11
* மேரிபால். 1 நாளா. 8. 34
[9] 2. 23
[10] 1 சாமு. 19. 2, 10, 11. சங். 63. 9, 10
[11] ஆதி. 48. 16. 1 இரா. 1. 29. சங். 31. 7
[12] 1. 2, 4, 15
[13] ஆதி. 9. 5, 6
[14] 1. 15
[15] 3. 32
[16] 1 நாளா. 11. 1. ஆதி. 29. 14
[17] 1 சாமு. 18. 13. சங். 78. 71
[18] 2 இரா. 11. 17. நெகே. 9. 38
[19] 1 நாளா. 29. 27
[20] 2. 11
[21] யோசு. 15. 63

ரோடேகூட எருசலேமுக்குப் போனான்.
அவர்கள்: இதிலே பிரவேசிக்க தாவீதினால்
கூடாது என்று எண்ணி, தாவீதை நோக்கி: நீ
இதற்குள் பிரவேசிப்பதில்லை; குருடரும் சப்
பாணிகளும் உன்னைத் தடுப்பார்கள் என்று
7 சொன்னார்கள். ஆனாலும் [1]தாவீது சீயோன்
கோட்டையைப் பிடித்தான்; அது தாவீதின்
8 நகரமாயிற்று. எவன் சாலகத்தின் வழியாய்
ஏறி, எபூசியரையும் தாவீதின் ஆத்துமா பகை
க்கிற சப்பாணிகளையும், குருடரையும் முறிய
அடிக்கிறானோ, [2]அவன் தலைவனாயிருப்பான்
என்று தாவீது அன்றையதினம் சொல்லி
யிருந்தான்; அதனால் குருடனும் சப்பாணியும்
வீட்டிலே வரலாகாது என்று சொல்லுகிற
9 துண்டு. அந்தக் கோட்டையிலே தாவீது வா
சம்பண்ணி, அதற்குத் தாவீதின் நகரம் என்று
பேரிட்டு, மில்லோ என்னும் ஸ்தலந்துவக்கி,
உட்புறமட்டும் சுற்றிலும் இருக்கிற மதிலைக்
10 கட்டினான். தாவீது நாளுக்குநாள் விருத்தி
யடைந்தான்; சேனைகளின் தேவனாகிய **கர்த்**
**தர்** அவனோடேகூட இருந்தார்.
11 தீருவின் ராஜாவாகிய ஈராம் தாவீதினிடத்
தில் ஸ்தானாபதிகளையும், [3]கேதுருமரங்களை
யும், தச்சரையும், கல்தச்சரையும் அனுப்பி
னான்; அவர்கள் தாவீதுக்கு ஒரு வீட்டைக்
12 கட்டினார்கள். **கர்த்தர்** தன்னை இஸ்ரவே
லின்மேல் ராஜாவாகத் திடப்படுத்தி, தம்மு
டைய ஜனமாகிய இஸ்ரவேலினிமித்தம் தன்
னுடைய ராஜ்யத்தை உயர்த்தினார் என்று தா
வீது கண்டறிந்தபோது,
13 அவன் எப்ரோனிலிருந்து வந்தபின்பு,
[4]எருசலேமில் இன்னும் அதிகமான மறுமனை
யாட்டிகளையும் ஸ்திரீகளையும் கொண்டான்;
இன்னும் அதிக குமாரரும் குமாரத்திகளும்
14 தாவீதுக்குப் பிறந்தார்கள். எருசலேமில் அவ
னுக்குச் [5]*சம்முவா, சோபாப், நாத்தான், சா
15 லொமோன், இப்பார், [6]†எலிசுவா, நெப்
16 பேக், யப்பியா, எலிஷாமா, [7]‡எலியாதா,
எலிப்பேலேத் என்னும் பேர்களையுடைய
குமாரர் பிறந்தார்கள்.
17 தாவீதை இஸ்ரவேலின்மேல் ராஜாவாக
அபிஷேகம்பண்ணினார்கள் என்று பெலிஸ்
தர் கேள்விப்பட்டபோது, அவர்கள் எல்லா
ரும் தாவீதைத் தேடும்படி வந்தார்கள்; அதைத்
தாவீது கேட்டபோது, [8]ஒரு அரணிப்பான
18 இடத்துக்குப் போனான். பெலிஸ்தரோ
வந்து, [9]ரெப்பாயீம் பள்ளத்தாக்கிலே பரவி
19 யிருந்தார்கள். பெலிஸ்தருக்கு விரோதமாய்ப்
போகலாமா, அவர்களை என் கையில் ஒப்புக்
கொடுப்பீரா என்று தாவீது **கர்த்தரிடத்தில்**
[10]விசாரித்தபோது, **கர்த்தர்**: போ, பெலிஸ்
தரை உன் கையில் நிச்சயமாய் ஒப்புக்கொடுப்
20 பேன் என்று தாவீதுக்குச் சொன்னார். தா
வீது [11]பாகால் பிராசீமுக்கு வந்து, அங்கே
அவர்களை முறிய அடித்து: தண்ணீர்கள்
உடைத்தோடுகிறதுபோல, **கர்த்தர்** என் சத்
துருக்களை எனக்கு முன்பாக உடைத்து ஓடப்

1 1 இரா. 2. 10; 8. 1
2 1 நாளா. 11. 6–9
3 1 இரா. 5. 2
4 உபா. 17. 17. 1 நாளா. 14. 3
5 * சிமேயா. 1 நாளா. 3. 5
6 † எலிசாமா. 1 நாளா. 3. 6
7 ‡ பெலியாதா. 1 நாளா. 14. 7
8 23. 14
9 யோசு. 15. 8. ஏசா. 17. 5
10 யாக். 4. 15
11 ஏசா. 28. 21
12 உபா. 7. 5, 25
13 2 இரா. 7. 6
14 1 நாளா. 14. 16
15 1 சாமு. 4. 4. 1 நாளா. 13. 5, 6. சங். 80. 1
16 எண். 7. 9. 1 சாமு. 6. 7
17 1 சாமு. 7. 1
18 1 நாளா. 13. 9
19 எண். 4. 15
20 1 சாமு. 6. 19
21 சங். 119. 120. லூக். 5. 8, 9

பண்ணினார் என்று சொல்லி, அதினிமித்தம்
அந்த ஸ்தலத்திற்குப் பாகால் பிராசீம்
என்று பேரிட்டான். அங்கே பெலிஸ்தர் 21
தங்கள் விக்கிரகங்களை விட்டு ஓடிப்போனார்
கள்; [12]அவைகளைத் தாவீதும் அவன் மனுஷ
ரும் சுட்டெரித்தார்கள்.
பெலிஸ்தர் திரும்பவும் வந்து, ரெப்பாயீம் 22
பள்ளத்தாக்கிலே இறங்கினார்கள். தாவீது **கர்த்** 23
**தரிடத்தில்** விசாரித்ததற்கு, அவர்: நீ நேராய்ப்
போகாமல், அவர்களுக்குப் பின்னாலே சுற்றி,
முசுக்கட்டைச் செடிகளுக்கு எதிரேயிருந்து,
அவர்கள்மேல் பாய்ந்து, முசுக்கட்டைச் செடி 24
களின் நுனிகளிலே செல்லுகிற இரைச்சலை நீ
கேட்கும்போது, [13]சீக்கிரமாய் எழும்பிப்போ;
அப்பொழுது பெலிஸ்தரின் பாளயத்தை
முறிய அடிக்க, **கர்த்தர்** உனக்கு முன்பாகப்
புறப்பட்டிருப்பார் என்றார். **கர்த்தர்** தாவீ 25
துக்குக் கட்டளையிட்டபிரகாரம் அவன் செய்
து, [14]பெலிஸ்தரைக் கேபா துவக்கிக் கேசேர்
எல்லைமட்டும் முறிய அடித்தான்.
பின்பு தாவீது இஸ்ரவேலர் எல்லாருக் **6**
குள்ளும் தெரிந்துகொள்ளப்பட்ட முப்பதி
னாயிரம்பேரைக் கூட்டி, கேருபீன்களின் 2
நடுவே வாசமாயிருக்கிற சேனைகளுடைய **கர்த்**
**தரின்** நாமம் தொழுதுகொள்ளப்படுகிற தேவ
னுடைய பெட்டியைப் [15]பாலேயூதாவிலிருந்து
கொண்டுவரும்படி, அவனும் அவனோடிருந்த
அந்த ஸ்தலத்தாரும் எழுந்துபோய், தேவ 3
னுடைய பெட்டியை ஒரு புது இரதத்தின்
மேல் ஏற்றி, அதைக் கிபியாவிலிருக்கிற அபி
னதாபின் வீட்டிலிருந்து கொண்டுவந்தார்கள்;
[16]அபினதாபின் குமாரராகிய ஊசாவும் அகி
யோவும் அந்தப் புது இரதத்தை நடத்தினார்
கள். அவர்கள் தேவனுடைய பெட்டியை 4
ஏற்றி, [17]அதைக் கிபியாவிலிருக்கிற அபின
தாபின் வீட்டிலிருந்து நடத்திக்கொண்டு வரு
கிறபோது, அகியோ பெட்டிக்கு முன்னாலே
நடந்தான். தாவீதும் இஸ்ரவேல் சந்ததியார் 5
அனைவரும் தேவதாரு மரத்தால் பண்ணப்
பட்ட சகலவித கீதவாத்தியங்களோடும், சுர
மண்டலம் தம்புரு மேளம் வீணை கைத்தாளம்
ஆகிய இவைகளோடும், **கர்த்தருக்கு** முன்
பாக ஆடிப்பாடிக்கொண்டுபோனார்கள். அவர் 6
கள் [18]நாகோனின் களம் இருக்கிற இடத்து
க்கு வந்தபோது, மாடுகள் மிரண்டு பெட்டி
யை அசைத்தபடியினால் [19]ஊசா தேவனுடைய
பெட்டியினிடமாய்த் தன் கையை நீட்டி,
அதைப் பிடித்தான். அப்பொழுது **கர்த்த** 7
**ருக்கு** ஊசாவின்மேல் கோபமூண்டது; அவ
னுடைய துணிவினிமித்தம் [20]தேவன் அங்
கே அவனை அடித்தார்; அவன் அங்கே தேவ
னுடைய பெட்டியண்டையில் செத்தான்.
அப்பொழுது **கர்த்தர்** ஊசாவை அடித்ததி 8
னிமித்தம் தாவீது விசனப்பட்டு, அந்த ஸ்த
லத்திற்கு இந்நாள்மட்டும் வழங்கிவருகிற பே
ரேஸ்ஊசா என்னும் பேரிட்டான். தாவீது 9
அன்றையதினம் **கர்த்தருக்குப்** பயந்து, [21]**கர்த்**

**கர்த்த**நுடைய பெட்டி என்னிடத்தில் வருவது
10 எப்படியென்று சொல்லி, அதைத் தன்னி
டத்தில் தாவீதின் நகரத்தில் கொண்டுவர மன
தில்லாமல், [1]கித்தியனாகிய ஓபேத்ஏதோ
மின் வீட்டிலே கொண்டுபோய் வைத்தான்.
11 **கர்த்த**நுடைய பெட்டி கித்தியனாகிய ஓபேத்
ஏதோமின் வீட்டிலே மூன்றுமாதம் இருக்கை
யில் [2]**கர்த்தர்** ஓபேத்ஏதோமையும் அவன்
12 வீட்டார் அனைவரையும் ஆசீர்வதித்தார். தேவ
னுடைய பெட்டியினிமித்தம் **கர்த்தர்** ஓபேத்
ஏதோமின் வீட்டையும், அவனுக்கு உண்
டான எல்லாவற்றையும் ஆசீர்வதித்தார் என்று
தாவீது ராஜாவுக்கு அறிவிக்கப்பட்டது; [3]அப்
பொழுது தாவீது தேவனுடைய பெட்டியை
ஓபேத்ஏதோமின் வீட்டிலிருந்து தாவீதின் நக
ரத்துக்கு மகிழ்ச்சியுடனே கொண்டுவந்தான்.
13 **கர்த்த**நுடைய பெட்டியைச் சுமந்துபோகிற
வர்கள் ஆறு தப்படி நடந்தபோது, [4]மாடுகளை
யும் கொழுத்த ஆட்டுக்கடாக்களையும் பலியிட்
14 டான். தாவீது சணல்நூல் ஏபோத்தைத்
தரித்துக்கொண்டு, [5]தன் முழுப்பலத்தோடும்
**கர்த்த**நுக்கு முன்பாக நடனம்பண்ணினான்.
15 அப்படியே தாவீதும், இஸ்ரவேல் சந்ததியார்
அனைவரும் [6]**கர்த்த**நுடைய பெட்டியை கெம்
பீர சத்தத்தோடும் எக்காள தொனியோடும்
16 கொண்டுவந்தார்கள். **கர்த்த**நுடைய பெட்டி
தாவீதின் நகரத்திற்குள் பிரவேசிக்கிறபோது,
சவுலின் குமாரத்தியாகிய மீகாள் பலகணி
வழியாய்ப் பார்த்து, [7]தாவீது ராஜா **கர்த்த**
நுக்கு முன்பாகக் குதித்து, நடனம்பண்ணு
கிறதைக் கண்டு, தன் இருதயத்திலே அவனை
17 அவமதித்தாள். அவர்கள் **கர்த்த**நுடைய பெட்
டியை உள்ளே கொண்டுவந்து, அதற்குத்
தாவீது போட்ட கூடாரத்திற்குள் இருக்கிற
அதின் ஸ்தானத்திலே அதை வைத்தபோது,
[8]தாவீது **கர்த்த**நுடைய சந்நிதியிலே சர்வாங்க
தகனபலிகளையும் சமாதானபலிகளையும் இட்
18 டான். தாவீது சர்வாங்க தகனபலிகளையும்
சமாதானபலிகளையும் இட்டபின்பு, [9]சேனை
களின் **கர்த்த**நுடைய நாமத்தினாலே ஜனங்
19 களை ஆசீர்வதித்து, இஸ்ரவேலின் திரள்
கூட்டமான ஸ்திரீ புருஷராகிய சகல ஜனங்
களுக்கும், [10]அவரவருக்கு ஒவ்வொரு அப்பத்
தையும், ஒவ்வொரு இறைச்சித் துண்டையும்,
ஒவ்வொரு படி திராட்சரசத்தையும் பங்கிட்
டான்; பிற்பாடு ஜனங்கள் எல்லாரும் அவ
ரவர் தங்கள் வீட்டிற்குப் போய்விட்டார்கள்.
20 தாவீது தன் வீட்டாரை [11]ஆசீர்வதிக்கிறதற்
குத் திரும்பும்போது, சவுலின் குமாரத்தியா
கிய மீகாள் தாவீதுக்கு எதிர்கொண்டுவந்து,
[12]அற்பமனுஷரில் ஒருவன் தன் வஸ்திரங்
களைக் கழற்றிப்போடுகிறதுபோல, இன்று
தம்முடைய ஊழியக்காரருடைய பெண்க
ளின் கண்களுக்கு முன்பாகத் தம்முடைய
வஸ்திரங்களை உரிந்துபோட்டிருந்த இஸ்ரவே
லின் ராஜா இன்று எத்தனை மகிமைப்பட்
21 டிருந்தார் என்றாள். அதற்கு தாவீது மீகா

1 1 நாளா. 13. 13, 14
2 ஆதி. 30. 27
3 1 நாளா. 15. 25
4 1 நாளா. 15. 2, 15
5 யாத். 15. 20. 1 சாமு. 2. 18 சங். 30. 11
6 1 நாளா. 15. 28. சங். 132
7 1 நாளா. 15 29
8 1 இரா. 8. 5, 63. 1 நாளா. 15. 1; 16. 1. சங். 132. 8
9 1 இரா. 8. 55
10 1 நாளா. 16. 3.
11 சங். 30. முகவுரை.
12 1 சாமு. 19. 24
13 1 சாமு. 13. 14. 15. 28
14 1 சாமு 15. 35. சகரி. 22. 14. மத். 1. 25
15 1 நாளா. 17. 1. ஷ
16 5. 11
17 யாத். 26. 1. அப். 7. 46
18 1 இரா. 8. 17, 18
19 1 இரா. 5. 3 1 நாளா. 22. 8
20 யாத். 40. 18, 19, 34. 1 இரா. 8. 16
21 5. 2. சங். 78. 71, 72. மத். 2. 6. அப். 20. 28 1 பே. 5. 2
22 லேவி. 26. 11, 12. 2 கொரி. 6. 16
23 1 சாமு. 16. 11, 12
24 1 சாமு. 18. 14
25 சங். 18. 37—42
26 ஆதி. 12. 2

ளைப் பார்த்து: உன் தகப்பனைப்பார்க்கிலும்,
அவருடைய எல்லா வீட்டாரைப்பார்க்கிலும்,
என்னை இஸ்ரவேலாகிய **கர்த்த**நுடைய ஜனத்
தின்மேல் தலைவனாகக் கட்டளையிடும்படிக்
குத் [13]தெரிந்துகொண்ட **கர்த்த**நுடைய சமு
கத்திற்கு முன்பாக ஆடிப்பாடினேன். இதைப் 22
பார்க்கிலும் இன்னும் நான் நீசனும் என் பார்
வைக்கு அற்பனுமாவேன்; அப்படியே நீ
சொன்ன பெண்களுக்குங்கூட மகிமையாய்
விளங்குவேன் என்றான். அதினால் சவுலின் 23
குமாரத்தியாகிய [14]மீகாளுக்கு மரணமடையும்
நாள்மட்டும் பிள்ளை இல்லாதிருந்தது.

**கர்த்தர்** ராஜாவைச் சுற்றிலும் இருந்த அவ 7
னுடைய எல்லாச் சத்துருக்களுக்கும் அவனை
நீங்கலாக்கி, [15]இளைப்பாறப்பண்ணினபோது,
அவன் தன் வீட்டிலே வாசமாயிருக்கையில்,
ராஜா தீர்க்கதரிசியாகிய நாத்தானை நோக்கி: 2
[16]பாரும், கேதுருமரங்களால் செய்யப்பட்ட
வீட்டிலே நான் வாசம்பண்ணும்போது, [17]தே
வனுடைய பெட்டி திரைகளின் நடுவே வாச
மாயிருக்கிறதே என்றான். அப்பொழுது நாத் 3
தான் ராஜாவை நோக்கி: நீர் போய் உம்மு
டைய இருதயத்தில் [18]உள்ளபடியெல்லாம்
செய்யும்; **கர்த்தர்** உம்மோடு இருக்கிறாரே
என்றான். அன்று ராத்திரியிலே **கர்த்த**நு 4
டைய வார்த்தை நாத்தானுக்கு உண்டாகி,
அவர்: நீ போய் என் தாசனாகிய தாவீதை 5
நோக்கி: [19]**கர்த்தர்** சொல்லுகிறது என்ன
வென்றால், நான் வாசமாயிருக்கத்தக்க ஆல
யத்தை நீ எனக்குக் கட்டுவாயோ? நான் இஸ்ர 6
வேல் புத்திரரை எகிப்திலிருந்து புறப்படப்
பண்ணின நாள் முதற்கொண்டு இந்நாள்வ
ரைக்கும், நான் ஒரு ஆலயத்திலே வாசம்பண்
ணாமல்; [20]கூடாரத்திலும் வாசஸ்தலத்திலும்
உலாவினேன். நான் இஸ்ரவேலாகிய என் 7
ஜனத்தை [21]மேய்க்கும்படி கட்டளையிட்ட இஸ்
ரவேல் கோத்திரங்களில் ஒரு கோத்திரத்தை
யாவது நோக்கி: நீங்கள் எனக்குக் கேதுரு
மரத்தால் செய்யப்பட்ட ஆலயத்தைக் கட்டா
திருக்கிறது என்ன என்று நான் இஸ்ரவேல்
புத்திரருக்குள் [22]உலாவிவந்த எவ்விடத்திலா
வது யாதொரு வார்த்தையைச் சொன்ன
துண்டோ? இப்போதும் நீ என் தாசனா 8
கிய தாவீதை நோக்கி: சேனைகளின் **கர்த்**
**தர்** சொல்லுகிறது என்னவென்றால், நீ இஸ்ர
வேல் என்கிற என் ஜனங்களுக்கு அதிபதியா
யிருக்கும்படி, [23]ஆடுகளின் பின்னே நடந்த
உன்னை நான் ஆட்டுமந்தையை விட்டு எடுத்து,
நீ போன எவ்விடத்திலும் [24]உன்னோடே 9
இருந்து, [25]உன் சத்துருக்களையெல்லாம் உன
க்கு முன்பாக நிர்மூலமாக்கி, பூமியிலிருக்
கிற பெரியோர்களின் [26]நாமத்திற்கு ஒத்த பெ
ரிய நாமத்தை உனக்கு உண்டாக்கினேன்.
நான் என் ஜனமாகிய இஸ்ரவேலுக்கு ஒரு 10
இடத்தை ஏற்படுத்தி, அவர்கள் தங்கள் ஸ்தா
னத்திலே குடியிருக்கவும், இனி அவர்கள்
அலையாமலும், முன்போலும், நான் என்

ஜனமாகிய இஸ்ரவேலின்மேல் நியாயாதிபதி
களைக் கட்டளையிட்ட நாள்வரையில் நடந்தது
போலும், நியாயக்கேட்டின் மக்களால் இனிச்
சிறுமைப்படாமலும் இருக்கும்படி அவர்களை
11 [1]நாட்டினேன். உன்னுடைய எல்லாச் சத்
துருக்களுக்கும் உன்னை நீங்கலாக்கி, இளைப்
பாறவும் பண்ணினேன்; [2]இப்போதும் **கர்த்
தர்** உனக்கு வீட்டை உண்டுபண்ணுவார் என்
12 பதைக் **கர்த்தர்** உனக்கு அறிவிக்கிறார். உன்
நாட்கள் நிறைவேறி, நீ உன் பிதாக்களோடே
நித்திரைபண்ணும்போது, [3]நான் உனக்குப்
பின்பு உன் கர்ப்பப்பிறப்பாகிய உன் சந்த
தியை எழும்பப்பண்ணி, அவன் ராஜ்யத்தை
13 நிலைப்படுத்துவேன். அவன் என் நாமத்திற்
கென்று ஒரு ஆலயத்தைக் கட்டுவான்; [4]அவன்
ராஜ்யபாரத்தின் சிங்காசனத்தை என்றைக்
14 கும் நிலைக்கப்பண்ணுவேன். நான் அவனுக்
குப் [5]பிதாவாயிருப்பேன், அவன் எனக்குக்
குமாரனாயிருப்பான்; அவன் அக்கிரமம் செய்
தால், நான் அவனை மனுஷருடைய மிலாற்றி
னாலும் மனுபுத்திரருடைய அடிகளினாலும்
15 தண்டிப்பேன். உனக்கு முன்பாக நான் தள்
ளிவிட்ட சவுலிடத்திலிருந்து என் கிருபை
யை விலக்கினதுபோல [6]அவனை விட்டு வில
16 க்கமாட்டேன். உன் வீடும், [7]உன் ராஜ்ய
மும், என்றென்றைக்கும் உனக்கு முன்பாக
ஸ்திரப்பட்டிருக்கும்; உன் ராஜாசனம் என்
றென்றைக்கும் நிலைபெற்றிருக்கும் என்கிறார்
17 என்று சொல்லச்சொன்னார். நாத்தான் இந்த
எல்லா வார்த்தைகளின்படியும், இந்த எல்
லாத் தரிசனத்தின்படியும், தாவீதுக்குச் சொ
ன்னான்.
18 அப்பொழுது தாவீது ராஜா உட்பிரவேசி
த்து, **கர்த்தருடைய** சமுகத்திலிருந்து: **கர்த்த
ராகிய** ஆண்டவரே, [8]தேவரீர் என்னை இதுவ
ரைக்கும் கொண்டுவந்ததற்கு, நான் எம்மாத்தி
19 ரம்? என் வீடும் எம்மாத்திரம்? **கர்த்தராகிய**
ஆண்டவரே, இது இன்னும் உம்முடைய
பார்வைக்குக் கொஞ்சகாரியமாயிருக்கிறது
என்று **கர்த்தராகிய** ஆண்டவராயிருக்கிற
தேவரீர் உம்முடைய அடியாளுடைய வீட்
டைக்குறித்து, [9]வெகுதூரமாயிருக்கும் காலத்
துச் செய்தியை மனுஷர் முறைமையாய்ச்
20 சொன்னீரே. இனி தாவீது உம்மிடத்தில்
சொல்லவேண்டியது என்ன? **கர்த்தராகிய**
ஆண்டவராயிருக்கிற [10]நீர் உமது அடியானை
21 அறிவீர், உம்முடைய வாக்குத்தத்தத்தினிமித்
தமும், [11]உம்முடைய சித்தத்தின்படியேயும்,
இந்தப் பெரிய காரியங்களையெல்லாம் உமது
அடியானுக்கு அறிவிக்கும்படிக்குத் தயவுசெ
22 ய்தீர். ஆகையால் தேவனாகிய **கர்த்தரே,**
[12]நீர் பெரியவர் என்று விளங்குகிறது; நாங்
கள் எங்கள் காதுகளாலே கேட்ட சகல காரி
யங்களின்படியும், [13]தேவரீருக்கு நிகரானவர்
இல்லை; உம்மைத்தவிர வேறே தேவனும்
23 இல்லை. உம்முடைய ஜனமாகிய இஸ்ரவே
லுக்கு நிகரான ஜனமும் உண்டோ? [14]பூலோ

1 சங். 44. 2. எரே. 24. 6
2 1 இரா. 11. 38
3 1 இரா. 8. 20. சங். 132. 11, 12
4 1 இரா. 5. 5. சங். 89. 4
5 சங். 89. 20-37. எபி. 1. 5
6 1 இரா. 11. 13, 34
7 யோ. 12. 34. எபி. 1. 8
8 ஆதி. 32. 10. எபே. 3. 8
9 12, 13. ஏசா. 55. 8
10 ஆதி. 18. 19. சங். 139. 1
11 சங். 132. 2. எசே. 36. 32, 33
12 எரே. 10. 6, 7
13 ஏசா. 45. 5, 18, 22
14 சங். 147. 20
15 உபா. 26. 18
16 ரூத். 4. 4. 1 சாமு. 9. 15
17 யோ. 17. 17
18 22. 51
19 1 நாளா. 18. 1. மு
20 எண். 24. 17
21 1 சாமு. 10. 27. சங். 72. 10
* ஆதாரேசர். 1 நாளா. 18. 3
22 1 நாளா. 18. 4

கத்து ஜாதிகளில் இந்த ஒரே ஜாதியைத்
தேவன் தமக்கு ஜனமாக மீட்கிறதற்கும், தமக்
குக் கீர்த்தி விளங்கப்பண்ணுகிறதற்கும் ஏற்ப
ட்டாரே; தேவரீர் எகிப்திலிருந்து மீட்டுக்கொ
ண்டுவந்த உம்முடைய ஜனத்திற்கு முன்பாக
பயங்கரமான பெரிய காரியங்களை நடத்தி,
உம்முடைய தேசத்திற்கும், அதிலிருந்த ஜாதி
களுக்கும், அவர்கள் தேவர்களுக்கும், உமது
மகிமையை விளங்கச்செய்து, உம்முடைய 24
ஜனமாகிய இஸ்ரவேலர் என்றைக்கும் உம்
முடைய ஜனமாயிருப்பதற்கு, [15]அவர்களைத்
திடப்படுத்தி, **கர்த்தராகிய** நீர்தாமே அவர்க
ளுக்குத் தேவனானீர். இப்போதும் தேவனா 25
கிய **கர்த்தாவே,** நீர் உமது அடியானையும்
அவன் வீட்டையும் குறித்துச் சொன்ன வார்த்
தையை என்றென்றைக்கும் நிலைவரப்படுத்த,
தேவரீர் சொன்னபடியே செய்தருளும். அப் 26
படியே சேனைகளின் **கர்த்தர்** இஸ்ரவேலின்
மேல் தேவனானவர் என்று சொல்லி, உம்மு
டைய நாமம் என்றென்றைக்கும் மகிமைப்ப
டுவதாக; உமது அடியானாகிய தாவீதின் வீடு
உமக்கு முன்பாக நிலைநிற்பதாக. உனக்கு 27
வீடுகட்டுவேன் என்று இஸ்ரவேலின் தேவ
னாகிய சேனைகளின் **கர்த்தராயிருக்கிற** [16]நீர்
உமது அடியானின் செவிக்கு வெளிப்படுத்தி
னீர்; ஆகையால் உம்மை நோக்கி இந்த விண்
ணப்பத்தைச் செய்ய உமது அடியானுக்கு
மனத்தைரியம் கிடைத்தது. இப்போதும் **கர்த் 28
தராகிய** ஆண்டவரே, நீரே தேவன்; [17]உம்மு
டைய வார்த்தைகள் சத்தியம்; தேவரீர் உமது
அடியானுக்கு இந்த நல்விசேஷங்களை வாக்
குத்தத்தம்பண்ணினீர். இப்போதும் உமது 29
அடியானின் வீடு என்றைக்கும் உமக்கு முன்
பாக இருக்கும்படி அதை ஆசீர்வதித்தருளும்;
**கர்த்தரான** ஆண்டவராகிய தேவரீர் அதைச்
சொன்னீர், உம்முடைய ஆசீர்வாதத்தினாலே
உமது அடியானின் வீடு [18]என்றைக்கும் ஆசீர்
வதிக்கப்பட்டிருப்பதாக என்றான்.

இதற்குப்பின்பு [19]தாவீது பெலிஸ்தரை 8
முறிய அடித்து, அவர்களைக் கீழ்ப்படுத்தி,
மேத்தேக்அம்மாவைப் பிடித்துக்கொண்டான்.
அவன் மோவாபியரையும் [20]முறிய அடித்து, 2
அவர்களைத் . தரைமட்டும் பணியப்பண்ணி,
அவர்கள்மேல் நூல்போட்டு, இரண்டுபங்கு
மனுஷரைக் கொன்றுபோட்டு, ஒரு பங்கை
உயிரோடே வைத்தான்; இவ்விதமாய் மோ
வாபியர் தாவீதைச் சேவித்து, [21]அவனுக்
குக் கப்பங்கட்டுகிறவர்களானார்கள். ரேகோ 3
பின் குமாரனாகிய *ஆதாதேசர் என்னும் சோ
பாவின் ராஜா, ஐபிராத்து நதியண்டையில்
இருக்கிற சீமையைத் திரும்பத் தன் வசமாக்
கிக்கொள்ளப் போகையில், தாவீது அவனை
யும் முறிய அடித்து, அவனுக்கு இருந்த 4
[22]இராணுவத்தில் ஆயிரத்து எழுநூறு குதிரை
வீரரையும், இருபதினாயிரம் காலாட்களையும்
பிடித்து, இரதங்களில் நூறு இரதங்களை
வைத்துக்கொண்டு, மற்றவைகளையெல்லாம்

5 துண்டாடிப்போட்டான். சோபாவின் ராஜா
வாகிய ஆதாதேசருக்கு உதவிசெய்ய தமஸ்
குப் பட்டணத்தாராகிய [1]சீரியர் வந்தார்கள்;
தாவீது சீரியரில் இருபத்தீராயிரம்பேரை
6 வெட்டிப்போட்டு, தமஸ்குக்கடுத்த சீரியா
விலே தாணையங்களை வைத்தான்; சீரியர்
தாவீதைச் சேவித்து, அவனுக்குக் கப்பங்கட்
டினார்கள்; தாவீது போன இடத்திலெல்லாம்,
7 [2]கர்த்தர் அவனைக் காப்பாற்றினார். ஆதாதே
சரின் சேவகருடைய [3]பொற்பரிசைகளைத்
தாவீது எடுத்து, அவைகளை எருசலேமுக்குக்
8 கொண்டுவந்தான். ஆதாதேசரின் பட்டணங்
களாகிய பேத்தாகிலும் *பேரொத்தாயிலுமிரு
ந்து தாவீது ராஜா மகா திரளான வெண்கலத்
9 தையும் எடுத்துக்கொண்டுவந்தான். தாவீது
ஆதாதேசருடைய எல்லா இராணுவத்தையும்
முறிய அடித்த செய்தியை ஆமாத்தின் ராஜா
10 வாகிய †தோயீ கேட்டபோது, ஆதாதேசர்
தோயீயின்மேல் எப்போதும் யுத்தம்பண்ணிக்
கொண்டிருந்தபடியால், ராஜாவாகிய தாவீ
தின் சுகசெய்தியை விசாரிக்கவும், அவன்
ஆதாதேசரோடே யுத்தம்பண்ணி, அவனை
முறிய அடித்ததற்காக அவனுக்கு வாழ்த்து
தல் சொல்லவும், தோயீ தன் குமாரனாகிய
‡யோராமை ராஜாவினிடத்தில் அனுப்பி
னான். மேலும் யோராம் தன் கையிலே வெள்
ளியும் பொன்னும் வெண்கலமுமான தட்டு
11 முட்டுகளைக் கொண்டுவந்தான். அவன் கொ
ண்டுவந்தவைகளைத் தாவீது ராஜா கீழ்ப்படுத்
தின சீரியர், மோவாபியர், அம்மோன் புத்தி
ரர், பெலிஸ்தர், அமலேக்கியர் என்னும் சகல
12 ஜாதியார்களிடத்திலும், ரேகோபின் குமார
னாகிய ஆதாதேசர் என்னும் சோபாவின் ராஜா
வினிடத்திலும் கொள்ளையிட்டதிலும் எடுத்து,
**கர்த்தருக்கு** நியமித்த வெள்ளியோடும் பொன்
னோடுங்கூட **கர்த்தருக்குப்** [4]பிரதிஷ்டைபண்
13 ணினான். தாவீது உப்புப்பள்ளத்தாக்கிலே
[5]பதினெண்ணாயிரம் சீரியரை முறிய அடித்
14 துத் திரும்பினதினால் கீர்த்திபெற்றான். ஏதோ
மில் தாணையங்களை வைத்தான்; ஏதோம் எங்
கும், அவன் தாணையங்களை வைத்ததினாலே,
ஏதோமியர் எல்லாரும் தாவீதைச் சேவிக்கி
றவர்களானார்கள்; [6]தாவீது போன எல்லா
இடத்திலும் **கர்த்தர்** அவனைக் காப்பாற்றினார்.
15 இப்படியே தாவீது இஸ்ரவேல் அனைத்
தின்மேலும் ராஜாவாயிருந்தான்; [7]அவன் தன்
னுடைய எல்லா ஜனத்திற்கும் நியாயமும்
16 நீதியும் செய்துவந்தான். செருயாவின் குமா
ரனாகிய யோவாப் இராணுவத்தலைவனாயிருந்
தான்; அகிலூதின் குமாரனாகிய யோசபாத்
17 மந்திரியாயிருந்தான். அகிதூபின் குமாரன்
[8]சாதோக்கும், அபியத்தாரின் குமாரன் அகிமெ
லேக்கும் ஆசாரியராயிருந்தார்கள்; செராயா
18 சம்பிரதியாயிருந்தான். யோய்தாவின் குமா
ரன் பெனாயா கிரேத்தியருக்கும் பிலேத்தி
யருக்கும் தலைவனாயிருந்தான்; தாவீதின் குமா
ரரோ பிரதானிகளாயிருந்தார்கள்.

1 1 இரா. 11. 28. 25
2 14. வச.
3 1 இரா. 10. 16
* கூன். 1 நாளா. 18. 8
† தோகூ. 1 நாளா. 18. 9
‡ அதோராம். 1 நாளா. 18. 10
4 1 இரா. 7. 51
5 சங். 60. முகவுரை.
6 சங். 121. 4–8
7 சங். 72. 2. எரே. 22. 15, 16. ஆமோ. 5. 15; 24
8 1 நாளா. 24. 3
9 1 சாமு. 20. 14. நீதி. 27. 10
10 16. 1, 4
11 1 சாமு. 20. 14
12 4. 4
13 17. 27
14 1 நாளா. 8. 34
15 16. 9
16 19. 29
17 19. 17
18 1 நாளா. 8. 34

யோனத்தான்நிமித்தம் [9]என்னால் தயவு 9
பெறத்தக்கவன் எவனாவது சவுலின் வீட்டா
ரில் இன்னும் மீதியாயிருக்கிறவன் உண்டா
என்று தாவீது கேட்டான். அப்பொழுது சவு 2
லின் வீட்டு வேலைக்காரனாகிய [10]சீபா என்
னும் பேருள்ளவனைத் தாவீதினிடத்தில்
அழைத்துவந்தார்கள்; ராஜா அவனைப் பார்த்து:
நீதானா சீபா என்று கேட்டான்; அவன் அடி
யேன்தான் என்றான். அப்பொழுது ராஜா: 3
தேவன்நிமித்தம் நான் சவுலின் குடும்பத்தாரு
க்குத் [11]தயைசெய்யும்படி அவன் வீட்டாரில்
யாதொருவன் இன்னும் மீதியாய் இருக்கி
றானா என்று கேட்டதற்கு, சீபா ராஜாவைப்
பார்த்து: இன்னும் யோனத்தானுக்கு இரண்
டுகால்களும் [12]முடமான ஒரு குமாரன் இருக்
கிறான் என்றான். அவன் எங்கே என்று 4
ராஜா கேட்டதற்கு, சீபா ராஜாவைப் பார்த்
து: இதோ, அவன் லோதேபாரிலே அம்மி
யேலின் குமாரனாகிய [13]மாகீரின் வீட்டில்
இருக்கிறான் என்றான். அப்பொழுது தா 5
வீது ராஜா அவனை லோதேபாரிலிருக்கிற
அம்மியேலின் குமாரனாகிய மாகீரின் வீட்டி
லிருந்து அழைப்பித்தான். சவுலின் குமார 6
னாகிய யோனத்தானின் மகன் [14]மேவிபோ
சேத் தாவீதினிடத்தில் வந்தபோது, முகங்
குப்புற விழுந்து வணங்கினான்; அப்பொழுது
தாவீது: மேவிபோசேத்தே என்றான்: அவன்
இதோ, அடியேன் என்றான். தாவீது அவ 7
னைப் பார்த்து: நீ பயப்படாதே; உன் தகப்ப
னாகிய யோனத்தான்நிமித்தம் நான் நிச்சய
மாய் உனக்குத் தயைசெய்து, உன் தகப்பனா
கிய சவுலின் நிலங்களையெல்லாம் உனக்குத்
திரும்பக் கொடுப்பேன்; நீ என் பந்தியில் நித்
தம் அப்பம் புசிப்பாய் என்றான். அப்பொ 8
ழுது அவன் வணங்கி: [15]செத்த நாயைப்போ
லிருக்கிற என்னை நீர் நோக்கிப்பார்க்கிறதற்கு,
உமது அடியான் எம்மாத்திரம் என்றான்.
ராஜா சவுலின் வேலைக்காரனாகிய சீபாவை 9
அழைப்பித்து, அவனை நோக்கி: சவுலுக்கும்
அவர் வீட்டார் எல்லாருக்கும் இருந்த யாவை
யும் உன் எஜமானுடைய [16]குமாரனுக்குக் கொ
டுத்தேன். ஆகையால் நீ உன் குமாரரையும் உன் 10
வேலைக்காரரையும் கூட்டிக்கொண்டு, உன்
எஜமானுடைய குமாரன் புசிக்க அப்பம் உண்
டாயிருக்கும்படி, அந்த நிலத்தைப் பயிரிட்டு,
அதின் பலனைச் சேர்ப்பாயாக; உன் எஜமா
னுடைய குமாரன் மேவிபோசேத் நித்தம்
என் பந்தியிலே அப்பம் புசிப்பான் என்றான்;
[17]சீபாவுக்குப் பதினைந்து குமாரரும் இருபது
வேலைக்காரரும் இருந்தார்கள். சீபா, ராஜா 11
வை நோக்கி: ராஜாவாகிய என் ஆண்டவன்
தமது அடியானுக்குக் கட்டளையிட்டபடியெல்
லாம் உமது அடியானாகிய நான் செய்வேன்
என்றான். ராஜகுமாரரில் ஒருவனைப்போல,
மேவிபோசேத் என் பந்தியிலே அசனம் பண்
ணுவான் என்று ராஜா சொன்னான். மேவி 12
போசேத்திற்கு [18]மீகா என்னும் பேருள்ள சிறு

வனாகிய ஒரு குமாரன் இருந்தான்; சீபாவின்
வீட்டிலே குடியிருந்த யாவரும் மேவிபோ
13 சேத்திற்கு வேலைக்காரராயிருந்தார்கள். மேவி
போசேத் ராஜாவின் பந்தியில் நித்தம் அச
னம் பண்ணுகிறவனாயிருந்தபடியினால், எருச
லேமிலே குடியிருந்தான்; அவனுக்கு இரண்டு
காலும் முடமாயிருந்தது.

**10** அதன்பின்பு [1]அம்மோன் புத்திரரின்
ராஜா மரித்துப்போனான்; அவன் குமாரனா
கிய ஆனூன் அவன் பட்டத்திற்கு ராஜாவா
2 னான்.—அப்பொழுது தாவீது: ஆனூனின்
தகப்பனாகிய நாகாஸ் எனக்குத் தயைசெய்
ததுபோல, அவன் குமாரனாகிய இவனுக்கு
நான் தயைசெய்வேன் என்று சொல்லி, அவன்
தகப்பனுக்காக அவனுக்கு ஆறுதல் சொல்ல,
தன் ஊழியக்காரரை அனுப்பினான்; தாவீ
தின் ஊழியக்காரர் அம்மோன் புத்திரரின்
3 தேசத்திலே வந்தபோது, அம்மோன் புத்திர
ரின் பிரபுக்கள் தங்கள் ஆண்டவனாகிய ஆனூ
னைப் பார்த்து: தாவீது ஆறுதல் சொல்லுகிற
வர்களை உம்மிடத்தில் அனுப்பினது, உம்மு
டைய தகப்பனைக் கனம்பண்ணுகிறதாய் உமக்
குத் தோன்றுகிறதோ? இந்தப் பட்டணத்தை
ஆராய்ந்து, உளவுபார்த்து, அதைக் கவிழ்த்
துப்போட அல்லவோ தாவீது தன் ஊழியக்
காரரை உம்மிடத்திற்கு அனுப்பினான் என்
4 றார்கள். அப்பொழுது ஆனூன்: தாவீதின்
ஊழியக்காரரைப் பிடித்து, அவர்களுடைய
ஒரு பக்கத்துத் தாடியைச் சிரைத்து, [2]அவர்
களுடைய வஸ்திரங்களை இருப்பிடமட்டும்
வைத்துவிட்டு, மற்றப் பாதியைக் கத்தரித்
துப்போட்டு, அவர்களை அனுப்பிவிட்டான்.
5 அது தாவீதுக்கு அறிவிக்கப்பட்டபோது,
ராஜா, அந்த மனுஷர் மிகவும் வெட்கப்பட்ட
படியினால், அவர்களுக்கு எதிராக ஆட்களை
அனுப்பி, உங்கள் தாடி வளருமட்டும் நீங்கள்
எரிகோவிலிருந்து, பிற்பாடு வாருங்கள் என்று
6 சொல்லச்சொன்னான். அம்மோன் புத்திரர்
தாங்கள் தாவீதுக்கு அருவருப்பானதைக் கண்
டபோது, [3]ஸ்தானாபதிகளை அனுப்பி, பெத்
ரேகோப் தேசத்துச் சீரியரிலும், சோபாவி
லிருக்கிற [4]சீரியரிலும் இருபதினாயிரம் காலாட்
களையும், மாக்காதேசத்து ராஜாவினிடத்தில்
ஆயிரம்பேரையும், இஷ்தோபிலிருக்கிற பன்
னிரண்டாயிரம்பேரையும், கூலிப்படையாக அழை
7 ப்பித்தார்கள். அதை தாவீது கேள்விப்பட்ட
போது, [5]யோவாபையும் பராக்கிரமசாலிகளா
கிய சமஸ்த இராணுவத்தையும் அனுப்பினான்.
8 அம்மோன் புத்திரர் புறப்பட்டு, ஒலிமுகவாச
லண்டையிலே போர்செய்ய அணிவகுத்து
நின்றார்கள்; ஆனாலும் சோபாவிலும் ரேகோ
பிலுமிருந்து வந்த சீரியரும், இஷ்தோபிலும்
மாக்காவிலுமிருந்து வந்த மனுஷரும், வெளி
9 யிலே பிரத்தியேகமாயிருந்தார்கள். யோவா
போ இராணுவங்களின் படைமுகம் தனக்கு
முன்னும் பின்னும் இருக்கிறதைக் காண்கை
யில், அவன் இஸ்ரவேலிலே தெரிந்துகொள்
ளப்பட்ட எல்லா இராணுவங்களிலும் ஒரு
பங்கைப் பிரித்தெடுத்து, அதைச் சீரியருக்கு
எதிராக அணிவகுத்து நிறுத்தி, மற்ற ஜனத் 10
தை அம்மோன் புத்திரருக்கு எதிராக அணி
வகுத்து நிறுத்தும்படி தன் சகோதரனாகிய
அபிசாயினிடத்தில் ஒப்புவித்து: சீரியர் 11
கைமிஞ்சுகிறதாயிருந்தால் நீ எனக்கு உதவி
செய்யவேண்டும்; அம்மோன் புத்திரர் கை
மிஞ்சுகிறதாயிருந்தால் நான் உனக்கு உதவி
செய்ய வருவேன். தைரியமாயிரு; [6]நம்மு 12
டைய ஜனத்திற்காகவும், நம்முடைய தேவ
னுடைய பட்டணங்களுக்காகவும் சவுரியத்
தைக் காட்டுவோம்; [7]கர்த்தர் தமது பார்
வைக்கு நலமானதைச் செய்வாராக என்றான்.
யோவாபும் அவனோடிருந்த ஜனமும் சீரியர் 13
மேல் யுத்தம்பண்ணக் கிட்டினார்கள்; அவர்
கள் அவனுக்கு முன்பாக முறிந்தோடினார்
கள். சீரியர் முறிந்தோடுகிறதை அம்மோன் 14
புத்திரர் கண்டபோது, அவர்களும் அபிசா
யிக்கு முன்பாக முறிந்தோடிப் பட்டணத்திற்
குள் புகுந்தார்கள்; அப்பொழுது யோவாப்
அம்மோன் புத்திரரை விட்டுத்திரும்பி எரு
சலேமுக்கு வந்தான். தாங்கள் இஸ்ரவே 15
லுக்கு முன்பாக முறிய அடிக்கப்பட்டதைச்
சீரியர் கண்டபோது, ஒருமிக்கக் கூடினார்கள்.
ஆதாரேசர் *நதிக்கு அப்பாலிருந்த சீரியரை 16
யும் அழைத்தனுப்பினான்; அவர்கள் ஏலா
முக்கு வந்தார்கள்; ஆதாரேசருடைய படைத்
தலைவனாகிய [8]சோபாக் அவர்களுக்கு முன்
னாலே சென்றான். அது தாவீதுக்கு அறி 17
விக்கப்பட்டபோது, அவன் இஸ்ரவேலை
யெல்லாம் கூட்டிக்கொண்டு, யோர்தானைக்
கடந்து, ஏலாமுக்குப் போனான்; சீரியர் தாவீ
துக்கு எதிராக இராணுவங்களை அணிவகுத்து
நின்றார்கள்; அவனோடு யுத்தம்பண்ணுகிற
போது, சீரியர் இஸ்ரவேலுக்கு முன்பாக 18
முறிந்தோடினார்கள்; தாவீது சீரியரில் எழு
நூறு இரதவீரரையும் நாற்பதினாயிரம் †குதிரை
வீரரையும் கொன்று, அவர்களுடைய படைத்
தலைவனாகிய சோபாகையும் சாகும்படி வெட்
டிப்போட்டான். அப்பொழுது ஆதாரேச 19
ரைச் சேவிக்கிற சகல ராஜாக்களும் தாங்கள்
இஸ்ரவேலுக்கு முன்பாக முறிய அடிக்கப்
பட்டதைக் கண்டு, இஸ்ரவேலரோடே சமா
தானம்பண்ணி, [9]அவர்களைச் சேவித்தார்கள்.
அப்புறம் அம்மோன் புத்திரருக்கு உதவி
செய்ய சீரியர் பயப்பட்டார்கள்.

மறுவருஷம் ராஜாக்கள் யுத்தத்திற்குப் **11**
புறப்படுங்காலம் வந்தபோது, [10]தாவீது யோ
வாபையும் அவனோடேகூடத் தன் சேவகரை
யும், இஸ்ரவேல் அனைத்தையும், அம்மோன்
புத்திரரை அழிக்கவும், ரப்பாவை முற்றிக்கை
போடவும் அனுப்பினான். தாவீதோ எருசலே
மில் இருந்துவிட்டான்.

ஒருநாள் சாயங்காலத்தில் தாவீது தன் 2
படுக்கையிலிருந்து எழுந்து, அரமனை உப்
பரிகையின்மேல் உலாத்திக்கொண்டிருக்கும்

[1] 1 நாளா. 19. 1. ௲
[2] ஏசா. 20. 4. 47. 2
[3] ஆதி. 34. 30
[4] 8. 3, 5
[5] 23. 8
[6] உபா. 31. 6. 1 சாமு. 4. 9. 1 கொரி. 16. 13
[7] 1 சாமு. 3. 18
[8] 1 நாளா. 19. 16
[9] 8. 6
[10] 1 இரா. 20. 22, 26. 1 நாளா. 20. 1. 36. 10

* ஐபிராத்து
† காலாட்கள். 1 நாளா. 19. 18

போது, [1]ஸ்நானம்பண்ணுகிற ஒரு ஸ்திரீயை
உப்பரிகையின் மேலிருந்து கண்டான்; அந்த
3 ஸ்திரீ வெகு சௌந்தரவதியாயிருந்தாள். அப்
பொழுது தாவீது, அந்த ஸ்திரீ யார் என்று
விசாரிக்க ஆள் அனுப்பினான்; அவள் எலியா
மின் குமாரத்தியும், ஏத்தியனான [2]உரியாவின்
மனைவியுமாகிய *பத்சேபாள் என்றார்கள்.
4 அப்பொழுது தாவீது ஆள் அனுப்பி அவளை
அழைத்து வரச்சொன்னான்; அவள் அவனி
டத்தில் வந்தபோது, [3]அவளோடே சயனித்
தான்; [4]பிற்பாடு அவள் தன் தீட்டு நீங்கும்படி
சுத்திகரித்துக்கொண்டு தன் வீட்டுக்குப் போ
5 னாள். அந்த ஸ்திரீ கர்ப்பந்தரித்து, தான் கர்ப்ப
வதியென்று தாவீதுக்கு அறிவிக்கும்படி ஆள்
6 அனுப்பினாள். அப்பொழுது தாவீது: ஏத்தி
யனாகிய உரியாவை என்னிடத்தில் அனுப்பு
என்று யோவாபினண்டைக்கு ஆள் அனுப்பி
னான்; அப்படியே யோவாப் உரியாவைத்
7 தாவீதினிடத்திற்கு அனுப்பினான். உரியா
அவனிடத்தில் வந்தபோது, தாவீது அவ
னைப் பார்த்து: யோவாப் சுகமாயிருக்கிறானா,
ஜனங்கள் சுகமாயிருக்கிறார்களா, யுத்தத்தின்
செய்தி நற்செய்தியா என்று விசாரித்தான்.
8 பின்பு தாவீது உரியாவை நோக்கி: நீ உன்
வீட்டிற்குப் போய், [5]பாதசுத்தி செய் என்
றான்; உரியா ராஜ அரமனையிலிருந்து புறப்
பட்டபோது, ராஜாவினிடத்திலிருந்து உச்
சிதமான பதார்த்தங்கள் அவன் பின்னாலே
9 அனுப்பப்பட்டது. ஆனாலும் உரியா தன்
வீட்டிற்குப் போகாமல், ராஜ அரமனையின்
வாசலிலே தன் ஆண்டவனுடைய எல்லாச்
சேவகரோடுங்கூட படுத்துக்கொண்டிருந்
10 தான். உரியா தன் வீட்டிற்குப் போக
வில்லையென்று தாவீதுக்கு அறிவிக்கப்பட்ட
போது, தாவீது உரியாவை நோக்கி: நீ பய
ணத்திலிருந்து வந்தவன் அல்லவா, நீ உன்
வீட்டிற்குப் போகாதிருக்கிறது என்ன என்று
11 கேட்டான். உரியா தாவீதை நோக்கி: [6]பெ
ட்டியும் இஸ்ரவேலும் யூதாவும் கூடாரங்க
ளிலே தங்கி, [7]என் ஆண்டவனாகிய யோவா
பும் என் ஆண்டவனின் சேவகரும் வெளி
யிலே பாளயமிறங்கியிருக்கையில், நான் புசிக்
கிறதற்கும், குடிக்கிறதற்கும், என் மனைவி
யோடே சயனிக்கிறதற்கும், என் வீட்டுக்
குள் பிரவேசிப்பேனா? நான் அப்படிச் செய்
கிறதில்லை என்று உம்முடையபேரிலும் உம்
முடைய ஆத்துமாவின்பேரிலும் ஆணையிட்
12 டுச் சொல்லுகிறேன் என்றான். அப்பொ
ழுது தாவீது உரியாவை நோக்கி: இன்றைக்
கும் நீ இங்கேயிரு; நாளைக்கு உன்னை
அனுப்பிவிடுவேன் என்றான்; அப்படியே
உரியா அன்றும் மறுநாளும் எருசலேமில்
13 இருந்தான். தாவீது அவனைத் தனக்கு முன்
பாகப் புசித்துக் குடிக்கிறதற்கு அழைத்து,
[8]அவனை வெறிக்கப்பண்ணினான்; ஆனாலும்
அவன் தன் வீட்டுக்குப் போகாமல், [9]சாயங்
காலத்திலே தன் ஆண்டவனின் சேவகரோ

1 ஆதி. 34. 2. யோபு. 31. 1. நீதி. 6. 25. மத். 5. 28
2 23. 39
* பத்சுவாள், 1 நாளா. 3. 5
3 சங். 51. யாக். 1. 14
4 லேவி. 15. 19, 28
5 ஆதி. 18. 4
6 7. 2, 6
7 20. 6
8 ஆதி. 19. 33, 35
9 9. வச.
10 1 இரா. 21. 8, 9
11 12. 9
12 நியா. 9. 53; 6. 32

டே தன் படுக்கையிலே படுத்துக்கொண்
டான். காலமே தாவீது யோவாபுக்கு ஒரு 14
[10]நிருபத்தை எழுதி, உரியாவின் கையில் கொ
டுத்து அனுப்பினான். அந்த நிருபத்திலே: 15
மும்முரமாய் நடக்கிற போர்முகத்திலே நீங்
கள் உரியாவை நிறுத்தி, [11]அவன் வெட்
டுண்டு சாகும்படிக்கு, அவனை விட்டுப் பின்
வாங்குங்கள் என்று எழுதியிருந்தான். அப் 16
படியே யோவாப் அந்தப் பட்டணத்தைச்
சூழக் காவல்போட்டிருக்கையில் பராக்கிரம
சாலிகள் இருக்கிறார்கள் என்று தான் அறிந்த
இடத்தில் உரியாவை நிறுத்தினான். பட்ட 17
ணத்து மனுஷர் புறப்பட்டுவந்து யோவா
போடே யுத்தம்பண்ணுகையில், தாவீதின்
சேவகராகிய ஜனத்தில் சிலர் பட்டார்கள்;
ஏத்தியனாகிய உரியாவும் செத்தான். அப் 18
பொழுது யோவாப் அந்த யுத்தத்தின் செய்தி
களையெல்லாம் தாவீதுக்கு அறிவிக்க ஆள்
அனுப்பி, தான் அனுப்புகிற ஆளை நோக்கி: 19
நீ யுத்தத்தின் செய்திகளையெல்லாம் ராஜாவுக்
குச் சொல்லித் தீர்ந்தபோது, ராஜாவுக்குக் 20
கோபம் எழும்பி, அவர்: நீங்கள் பட்டணத்
திற்கு இத்தனை கிட்டப்போய் யுத்தம்பண்ண
வேண்டியது என்ன? அலங்கத்தில் நின்று
எய்வார்கள் என்று உங்களுக்குத் தெரியாதா?
எருப்பேசேத்தின் குமாரன் [12]அபிமெலேக் 21
கைக் கொன்றது யார்? தேபேசிலே ஒரு
பெண்பிள்ளை அலங்கத்திலிருந்து ஒரு எந்தி
ரக்கல்லின் துண்டை அவன்மேல் போட்ட
தினால் அல்லவோ அவன் செத்தான்; நீங்கள்
அலங்கத்திற்கு இத்தனை கிட்டப்போனது
என்ன என்று உன்னோடே சொன்னால், அப்
பொழுது நீ, உம்முடைய சேவகனாகிய உரியா
என்னும் ஏத்தியனும் செத்தான் என்று சொல்
என்றான். அந்த ஆள் போய், உட்பிரவே 22
சித்து, யோவாப் தன்னிடத்தில் சொல்லி
யனுப்பின செய்திகளெல்லாம் தாவீதுக்கு
அறிவித்து, தாவீதைப் பார்த்து: அந்த மனு 23
ஷர் கைமிஞ்சி, அவர்கள் வெளியே எங்க
ளுக்கு எதிராகப் புறப்பட்டு வரும்போது,
நாங்கள் பட்டணவாசல்மட்டும் அவர்களைத்
துரத்தினோம். அப்பொழுது வில்வீரர் அலங் 24
கத்திலிருந்து உம்முடைய சேவகரின்மேல்
எய்ததினால், ராஜாவின் சேவகரில் சிலர் செத்
தார்கள்; உம்முடைய சேவகனாகிய உரியா
என்னும் ஏத்தியனும் செத்தான் என்றான்.
அப்பொழுது தாவீது அந்த ஆளை நோக்கி: 25
நீ யோவாபினிடத்தில் போய், இந்தக் காரி
யத்தைப்பற்றி விசாரப்படவேண்டாம்; பட்
டயம் ஒருவேளை ஒருவனையும், ஒருவேளை
வேறொருவனையும் பட்சிக்கும்; நீ யுத்தத்தைப்
பலக்கப்பண்ணி, பட்டணத்தை இடித்துப்
போடு என்று அவனுக்குத் திடன்சொல் என்
றான். தன் புருஷனாகிய உரியா செத்தான் 26
என்று அவன் மனைவி கேள்விப்பட்டபோது,
அவள் தன் நாயகனுக்காக இழவுகொண்
டாடினாள். துக்கநாள் சென்றபின்பு, தாவீது 27

அவளை அழைத்தனுப்பி, தன் வீட்டிலே
சேர்த்துக்கொண்டான்; [1]அவள் அவனுக்கு
மனைவியாகி, அவனுக்கு ஒரு குமாரனைப்
பெற்றாள். [2]தாவீது செய்த இந்தக் காரி
யம் **கர்த்தரின்** பார்வைக்குப் பொல்லாததா
யிருந்தது.

12 **கர்த்தர்** நாத்தானைத் தாவீதினிடத்தில் அ
னுப்பினார்; இவன் அவனிடத்தில் வந்து,
அவனை நோக்கி: [3]ஒரு பட்டணத்தில் இரண்டு
மனுஷர் இருந்தார்கள், ஒருவன் ஐசுவரிய
2 வான், மற்றவன் தரித்திரன். ஐசுவரியவா
னுக்கு ஆடுமாடுகள் வெகு திரளாயிருந்தது.
3 தரித்திரனுக்கோ தான் கொண்டு வளர்த்த
ஒரே ஒரு சின்ன ஆட்டுக்குட்டியைத் தவிர
வேறொன்றும் இல்லாதிருந்தது; அது அவ
னோடும் அவன் பிள்ளைகளோடுங்கூட இரு
ந்து வளர்ந்து, அவன் வாயின் அப்பத்தைத்
தின்று, அவன் பாத்திரத்திலே குடித்து,
[4]அவன் மடியிலே படுத்துக்கொண்டு, அவ
4 னுக்கு ஒரு மகளைப்போல இருந்தது. அந்த
ஐசுவரியவானிடத்தில் [5]வழிப்போக்கன் ஒரு
வன் வந்தான்; அவன் தன்னிடத்தில் வந்த
வழிப்போக்கனுக்குச் சமையல் பண்ணுவிக்க,
தன்னுடைய ஆடுமாடுகளில் ஒன்றைப் பிடிக்க
மனதில்லாமல், அந்தத் தரித்திரனுடைய ஆட்
டுக்குட்டியைப் பிடித்து, அதைத் தன்னிடத்
தில் வந்த மனுஷனுக்குச் சமையல் பண்ணு
5 வித்தான் என்றான். அப்பொழுது தாவீது:
அந்த மனுஷன்மேல் மிகவும் கோபமூண்டவ
னாகி, நாத்தானைப் பார்த்து: [6]இந்தக் காரியத்
தைச் செய்த மனுஷன் மரணத்திற்குப் பாத்
திரன் என்று **கர்த்தருடைய** ஜீவனைக்கொண்டு
6 சொல்லுகிறேன். அவன் இரக்கமற்றவனா
யிருந்து, இந்தக் காரியத்தைச் செய்தபடியி
னால், [7]அந்த ஆட்டுக்குட்டிக்காக நாலத்தனை
திரும்பச் செலுத்தவேண்டும் என்றான்.
7 அப்பொழுது நாத்தான் தாவீதை நோக்கி:
நீயே அந்த மனுஷன்; இஸ்ரவேலின் தேவ
னாகிய **கர்த்தர்** சொல்லுகிறது என்னவென்
றால், [8]நான் உன்னை இஸ்ரவேலின்மேல்
ராஜாவாக அபிஷேகம்பண்ணி, உன்னைச்
8 சவுலின் கைக்குத் தப்புவித்து, உன் ஆண்
டவனுடைய வீட்டை உனக்குக் கொடுத்து,
உன் ஆண்டவனுடைய ஸ்திரீகளையும் உன்
மடியிலே தந்து, இஸ்ரவேல் வம்சத்தையும்,
யூதா வம்சத்தையும் உனக்குக் கையளித்தேன்;
இது போதாதிருந்தால், இன்னும் உனக்கு
9 வேண்டியதைத் தருகிறேன். **கர்த்தருடைய**
பார்வைக்குப் பொல்லாப்பான இந்தக் காரி
யத்தைச் செய்து, [9]அவருடைய வார்த்தையை
நீ அசட்டைபண்ணினது என்ன? [10]ஏத்திய
னாகிய உரியாவை நீ பட்டயத்தால் மடிவித்து,
அவன் மனைவியை உனக்கு மனைவியாக எடுத்
துக்கொண்டு, அவனை அம்மோன் புத்திரரின்
10 பட்டயத்தாலே கொன்றுபோட்டாய். இப்
போதும் நீ என்னை அசட்டைபண்ணி, ஏத்
தியனாகிய உரியாவின் மனைவியை உனக்கு
மனைவியாக எடுத்துக்கொண்டபடியினால்,
[11]பட்டயம் என்றைக்கும் உன் வீட்டைவிட்டு
விலகாதிருக்கும். **கர்த்தர்** சொல்லுகிறது 11
என்னவென்றால், இதோ, நான் உன் வீட்
டிலே பொல்லாப்பை உன்மேல் எழும்பப்
பண்ணி, உன் கண்கள் பார்க்க, [12]உன் ஸ்திரீ
களை எடுத்து, உனக்கு அடுத்தவனுக்குக் கொ
டுப்பேன்; அவன் இந்தச் சூரியனுடைய
வெளிச்சத்திலே உன் ஸ்திரீகளோடே சய
னிப்பான். நீ ஒளிப்பிடத்தில் அதைச் செய் 12
தாய்; நானோ இந்தக் காரியத்தை இஸ்ரவே
லர் எல்லாருக்கு முன்பாகவும், சூரியனுக்கு
முன்பாகவும் செய்விப்பேன் என்றார் என்று
சொன்னான். அப்பொழுது தாவீது நாத்தா 13
னிடத்தில்: [13]நான் **கர்த்தருக்கு** விரோதமாய்ப்
பாவஞ்செய்தேன் என்றான். நாத்தான் தா
வீதை நோக்கி: நீ சாகாதபடிக்கு, [14]**கர்த்தர்**
உன் பாவம் நீங்கச்செய்தார். ஆனாலும் இக் 14
தக் காரியத்தினாலே **கர்த்தருடைய** சத்துருக்
கள் [15]தூஷிக்க நீ காரணமாயிருந்தபடியினால்,
உனக்குப் பிறந்த பிள்ளை நிச்சயமாய் சாகும்
என்று சொல்லி, நாத்தான் தன் வீட்டுக்குப்
போய்விட்டான். அப்பொழுது **கர்த்தர்** உரி 15
யாவின் மனைவி தாவீதுக்குப் பெற்ற ஆண்
பிள்ளையை அடித்தார்; அது வியாதிப்பட்டுக்
கேவலமாயிருந்தது. அப்பொழுது தாவீது 16
அந்தப் பிள்ளைக்காக தேவனிடத்தில் பிரார்த்த
னைபண்ணி, [16]உபவாசித்து, உள்ளேபோய்,
இராமுழுதும் தரையிலே கிடந்தான். அவ 17
னைத் தரையிலிருந்து எழுந்திருக்கப்பண்ண,
அவன் வீட்டிலுள்ள மூப்பரானவர்கள் எழு
ந்து, அவனண்டையில் வந்தாலும், அவன்
மாட்டேன் என்று சொல்லி, அவர்களோடே
அப்பம் சாப்பிடாமல் இருந்தான். ஏழாம் 18
நாளில், பிள்ளை செத்துப்போயிற்று. பிள்ளை
செத்துப்போயிற்று என்று தாவீதின் ஊழியக்
காரர் அவனுக்கு அறிவிக்க ஐயப்பட்டார்கள்:
பிள்ளை உயிரோடிருக்கையில், நாம் அவ
ரோடே பேசுகிறபோது, அவர் நம்முடைய
சொற்கேட்கவில்லை; பிள்ளை செத்துப்போயி
ற்று என்று அவரோடே எப்படிச் சொல்லு
வோம்? அதிகமாக வியாகுலப்படுவாரே என்று
பேசிக்கொண்டார்கள். தாவீது தன் ஊழி 19
யக்காரர் இரகசியமாய்ப் பேசிக்கொள்ளுகிற
தைக் கண்டு, பிள்ளை செத்துப்போயிற்று
என்று அறிந்து, தன் ஊழியக்காரரை நோக்கி:
பிள்ளை செத்துப்போயிற்றோ என்று கேட்
டான்; செத்துப்போயிற்று என்றார்கள். அப் 20
பொழுது தாவீது தரையைவிட்டு எழுந்து,
ஸ்நானம்பண்ணி, [17]எண்ணெய் பூசிக்கொ
ண்டு, தன் வஸ்திரங்களை மாற்றி, **கர்த்தரு
டைய** ஆலயத்தில் பிரவேசித்து, [18]பணிந்து
கொண்டு, தன் வீட்டுக்கு வந்து, போஜனம்
கேட்டான்; அவன் முன்னே அதை வைத்த
போது புசித்தான். அப்பொழுது அவன் 21
ஊழியக்காரர் அவனை நோக்கி: நீர் செய்கிற
இந்தக் காரியம் என்ன? பிள்ளை உயிரோடி

1 உபா. 22. 29
2 12. 9
3 சங். 51. 1 இரா. 20. 35-41. ஏசா. 5. 1-7
4 நீதி. 5. 18, 19
5 ஆதி. 18. 2-7
6 1 சாமு. 26. 16
7 யாத். 22. 1. லூக். 19. 8
8 1 சாமு. 16. 13
9 1 சாமு. 15. 19
10 எண். 15. 31. ஏசா. 5. 24. ஆமோ. 2. 4
11 ஆமோ. 7. 9. மத். 26. 52
12 16. 22. உபா. 28. 30
13 24. 10. யோபு. 7. 20. சங். 32. 5. 51. 4. நீதி. 28. 13
14 சங். 130. 3, 4. ஏசா. 6. 5, 7. மீகா. 7. 18. சகரி. 3. 4. 1 யோ. 1. 7, 9; 2. 1. வெளி. 1. 5
15 ஏசா. 52. 5. எசே. 36. 20, 23. ரோ. 2. 24
16 13. 31
17 ரூத். 3. 3
18 யோபு. 1. 20

ருக்கையில் உபவாசித்து அழுதீர்; பிள்ளை மரி
த்தபின்பு, எழுந்திருந்து அசனம்பண்ணுகி
22 றீரே என்றார்கள். அதற்கு அவன்: பிள்ளை
இன்னும் உயிரோடிருக்கையில், [1]பிள்ளை
பிழைக்கும்படிக்குக் **கர்த்தர்** எனக்கு இரங்கு
வாரோ, எப்படியோ, யாருக்குத் தெரியும்
23 என்று உபவாசித்து அழுதேன். அது மரித்
திருக்கிற இப்போது நான் உபவாசிக்கவேண்
டியது என்ன? இனி நான் அதைத் திரும்பி
வரப்பண்ணக்கூடுமோ? நான் அதினிடத்துக்
குப் போவேனே அல்லாமல், [2]அது என்னி
டத்துக்குத் திரும்பி வரப்போகிறது இல்லை
24 என்றான். பின்பு தாவீது தன் மனைவியாகிய
பத்சேபாளுக்கு ஆறுதல் சொல்லி, அவளிடத்
தில் போய், அவளோடே சயனித்தான்;
[3]அவள் ஒரு குமாரனைப் பெற்றாள்; [4]அவனுக்
குச் *சாலொமோன் என்று பேரிட்டான்; அவ
25 னிடத்தில் **கர்த்தர்** அன்பாயிருந்தார். அவர்
தீர்க்கதரிசியாகிய நாத்தானை அனுப்ப, அவன்
**கர்த்தரின்** நிமித்தம் அவனுக்கு †யெதிதியா
என்று பேரிட்டான்.
26 அதற்குள்ளே [5]யோவாப் அம்மோன் புத்தி
ரருடைய [6]ரப்பாபட்டணத்தின்மேல் யுத்தம்
27 பண்ணி, ராஜதானியைப் பிடித்து, தாவீதி
னிடத்தில் ஆள் அனுப்பி, நான் ரப்பாவின்
மேல் யுத்தம்பண்ணி, தண்ணீர் ஓரமான பட்
28 டணத்தைப் பிடித்துக்கொண்டேன். நான்
பட்டணத்தைப் பிடிக்கிறதினால், என் பேர்
வழங்காதபடிக்கு, நீர் மற்ற ஜனங்களைக் கூட்
டிக்கொண்டுவந்து, பட்டணத்தை முற்றிக்கை
போட்டு, பிடிக்கவேண்டும் என்று சொல்லச்
29 சொன்னான். அப்படியே தாவீது ஜனங்களை
யெல்லாம் கூட்டிக்கொண்டு, ரப்பாவுக்குப்
போய், அதின்மேல் யுத்தம்பண்ணி, அதைப்
30 பிடித்தான். அவர்களுடைய ராஜாவின் தலை
மேலிருந்த கிரீடத்தை எடுத்துக்கொண்டான்;
[7]அது ஒரு தாலந்து நிறை பொன்னும்,
இரத்தினங்கள் பதித்ததுமாயிருந்தது; அது
தாவீதினுடைய தலையில் வைக்கப்பட்டது;
பட்டணத்திலிருந்து ஏராளமான கொள்ளை
31 யைக் கொண்டுபோனான். பின்பு அதிலிரு
ந்த ஜனங்களை அவன் வெளியே கொண்டு
போய், அவர்களை வாள்களுக்கும், இருப்புப்
பாரைகளுக்கும், இருப்புக் கோடரிகளுக்கும்
உட்படுத்தி, அவர்களைச் செங்கற்சூளையையும்
கடக்கப்பண்ணினான்; இப்படி அம்மோன்
புத்திரரின் பட்டணங்களுக்கெல்லாம் செய்து,
தாவீது எல்லா ஜனத்தோடுங்கூட எருசலே
முக்குத் திரும்பினான்.

13 இதற்குப்பின்பு தாவீதின் குமாரனாகிய
அப்சலோமுக்குத் தாமார் என்னும் பேருள்ள
சவுந்தரியமுள்ள ஒரு சகோதரி இருந்தாள்;
[8]அவள்மேல் தாவீதின் குமாரன் அம்னோன்
2 மோகங்கொண்டான். தன் சகோதரியாகிய
தாமாரினிமித்தம் ஏக்கங்கொண்டு வியாதிப்
பட்டான்; [9]அவள் கன்னியாஸ்திரீயாயிருந்
தாள்; ‡அவளுக்குப் பொல்லாப்புச் செய்ய
அம்னோனுக்கு வருத்தமாய்க் கண்டது. அம் 3
னோனுக்குத் தாவீதுடைய தமையன் சிமியா
வின் குமாரனாகிய யோனதாப் என்னும்
பேருள்ள ஒரு சிநேகிதன் இருந்தான்; [10]அந்த
யோனதாப் மகா தந்திரவாதி. அவன் இவ 4
னைப் பார்த்து: ராஜகுமாரனாகிய நீ நாளுக்கு
நாள் எதினாலே இப்படி மெலிந்துபோகிறாய்,
எனக்குச் சொல்லமாட்டாயா என்றான். அத
ற்கு அம்னோன்: என் சகோதரன் அப்சலோ
மின் சகோதரியாகிய தாமாரின்மேல் நான்
ஆசைவைத்திருக்கிறேன் என்றான். அப் 5
பொழுது யோனதாப் அவனைப் பார்த்து: நீ
வியாதிக்காரனைப்போல உன் படுக்கையின்
மேல் படுத்துக்கொள்; உன்னைப் பார்க்கிற
தற்கு உன் தகப்பனார் வரும்போது, நீ, என்
சகோதரியாகிய தாமார் வந்து, எனக்குப் போ
ஜனம் கொடுத்து, அவள் கையினாலே சாப்பி
டும்படிக்கு, நான் பார்க்க, என் கண்களுக்கு
முன்பாக சமைக்கும்படி தயவுசெய்யவேண்
டும் என்று சொல் என்றான். அப்படியே 6
அம்னோன் வியாதிக்காரன்போல் படுத்துக்
கொண்டு, ராஜா தன்னைப் பார்க்கவந்தபோது,
ராஜாவை நோக்கி: என் சகோதரியாகிய தா
மார் வந்து நான் அவள் கையினாலே சாப்பிடும்
படிக்கு, என் கண்களுக்கு முன்பாக [11]இர
ண்டு நல்ல பணியாரங்களைப் பண்ணும்படி
உத்தரவு கொடுக்கவேண்டும் என்றான். அப் 7
பொழுது தாவீது: வீட்டுக்குத் தாமாரிடத்தில்
ஆள் அனுப்பி, நீ உன் சகோதரனாகிய அம்
னோன் வீட்டுக்குப் போய், அவனுக்கு சமை
யல் பண்ணிக்கொடு என்று சொல்லச்சொன்
னான். தாமார் தன் சகோதரனாகிய அம் 8
னோன் படுத்துக்கொண்டிருக்கிற வீட்டுக்குப்
போய், மாவெடுத்துப் பிசைந்து, அவன் கண்
களுக்கு முன்பாகத் தட்டி, பணியாரங்களைச்
சுட்டு, சட்டியை எடுத்து, அவனுக்கு முன் 9
பாக அவைகளை வைத்தாள்; ஆனாலும் அவன்
சாப்பிடமாட்டேன் என்றான்; பின்பு அம்
னோன்: [12]எல்லாரும் என்னைவிட்டு வெளியே
போகட்டும் என்றான்; எல்லாரும் அவனை
விட்டு வெளியே போனார்கள். அப்பொழுது 10
அம்னோன் தாமாரைப் பார்த்து: நான் உன்
கையினாலே சாப்பிடும்படிக்கு, அந்தப் பலகா
ரத்தை அறைவீட்டிலே கொண்டுவா என்
றான்; அப்படியே தாமார் தான் செய்த பணி
யாரங்களை அறைவீட்டில் இருக்கிற தன் சகோ
தரனாகிய அம்னோனிடத்தில் கொண்டுபோ
னாள். அவன் சாப்பிடும்படிக்கு அவள் அவை 11
களைக் கிட்டக் கொண்டுவருகையில், அவன்
அவளைப் பிடித்து, [13]அவளைப் பார்த்து: என்
சகோதரியே, நீ வந்து என்னோடே சயனி
என்றான். அதற்கு அவள்: வேண்டாம், என் 12
சகோதரனே, [14]என்னை அவமானப்படுத்தாதே,
[15]இஸ்ரவேலிலே இப்படிச் செய்யத்தகாது;
[16]இப்படிப்பட்ட மதிகேடான காரியத்தைச்
செய்யவேண்டாம். நான் என் வெட்கத்தோ 13
டே எங்கே போவேன்? நீயும் இஸ்ரவேலிலே

[1] ஏசா. 38. 1, 5. யோனா. 3. 9
[2] யோபு. 7. 8-10
[3] மத். 1. 6
[4] 1 நாளா. 22. 9
* சமாதானம்
† கர்த்தருக்குப் பிரியமானவன்
[5] 1 நாளா. 20. 1
[6] உபா. 3. 11
[7] 1 நாளா. 20. 2
[8] 1 நாளா. 8. 3, 9
[9] 1 இரா. 21. 4. 2 கொ. 7. 10
‡ அவளைக் கைவசப் படுத்த அவனால் கூடாமற் போயிற்று
[10] 1 சமு. 16. 9
[11] ஆதி. 18. 6
[12] ஆதி. 45. 1
[13] ஆதி. 39. 12
[14] ஆதி. 34. 2, 7
[15] லேவி. 18. 9, 11
[16] நியா. 19. 23

மதிகெட்டவர்களில் ஒருவனைப்போல ஆவாய்;
இப்போதும் நீ ராஜாவோடே பேசு, [1]அவர்
என்னை உனக்குத் தராமல் மறுக்கமாட்டார்
14 என்றாள். அவன் அவள் சொல்லைக் கேட்க
மாட்டேன் என்று அவளைப் பலவந்தமாய்ப்
பிடித்து, [2]அவளோடே சயனித்து, அவளைக்
15 கற்பழித்தான். பிற்பாடு அம்னோன் அவளை
மிகவும்வெறுத்தான்; அவன் அவளை விரும்பின
விருப்பத்தைப்பார்க்கிலும், அவளை வெறுத்த
வெறுப்பு அதிகமாயிருந்தது. ஆகையால்: நீ
எழுந்துபோய்விடு என்று அம்னோன் அவளோ
16 டே சொன்னான். அப்பொழுது அவள்: நீ
எனக்கு முந்தி செய்த அநியாயத்தைப்பார்க்கி
லும், இப்பொழுது என்னைத் துரத்திவிடுகிற
இந்த அநியாயம் கொடுமையாயிருக்கிறது என்
றாள்; ஆனாலும் அவன் அவள் சொல்லைக்
17 கேட்க மனதில்லாமல், தன்னிடத்தில் சே
விக்கிற தன் வேலைக்காரனைக் கூப்பிட்டு: நீ
இவளை என்னை விட்டு வெளியே தள்ளி, கத
18 வைப் பூட்டு என்றான். அப்படியே அவனி
டத்தில் சேவிக்கிறவன் அவளை வெளியே
தள்ளி, கதவைப் பூட்டினான்; [3]அவள் பலவர்
ணமான வஸ்திரத்தை உடுத்திக்கொண்டிருந்
தாள்; ராஜகுமாரத்திகளாகிய கன்னிகைகள்
இப்படிக்கொத்த சால்வைகளைத் தரித்துக்
19 கொள்வார்கள். அப்பொழுது தாமார்: [4]தன்
தலையின்மேல் சாம்பலை வாரிப் போட்டுக்
கொண்டு, தான் தரித்திருந்த பலவர்ணமான
வஸ்திரத்தைக் கிழித்து, தன் கையைத் தன்
தலையின்மேல் வைத்து, சத்தமிட்டு அழுது
20 கொண்டு போனாள். அப்பொழுது அவள்
சகோதரனாகிய அப்சலோம் அவளைப் பார்
த்து: உன் சகோதரனாகிய அம்னோன் உன்
னோடிருந்தானோ? இப்போதும் என் சகோ
தரியே, நீ மவுனமாயிரு; அவன் உன்னு
டைய சகோதரன்; இந்தக் காரியத்தை உன்
மனதிலே வைக்காதே என்றான்; அப்படியே
தாமார் தன் சகோதரனாகிய அப்சலோமின்
வீட்டில் தனித்துக் *கிலேசப்பட்டுக்கொண்
டிருந்தாள்.
21 தாவீதுராஜா இந்தச் செய்திகளையெல்லாம்
கேள்விப்பட்டபோது, வெகு கோபமாயெரிந்
22 தான். அப்சலோம் அம்னோனோடே [5]நன்
மையாகிலும்தீமையாகிலும்பேசவில்லை; [6]தன்
சகோதரியாகிய தாமாளை அம்னோன் கற்ப
ழித்த காரியத்தினிமித்தம் அப்சலோம் அவ
23 னைப் பகைத்தான். இரண்டுவருஷம் சென்ற
பின்பு, அப்சலோம் எப்பிராயீமுக்குச் சமீப
மான பாலாத்சோரிலே ஆட்களை வைத்து,
[7]ஆடுகளை மயிர்கத்தரிக்கிறவேலையில் இருந்
தான்; அங்கே ராஜகுமாரர் எல்லாரையும் விருந்
24 துக்கு அழைத்தான். அவன் ராஜாவினிடத்
தில் போய், ஆட்களை வைத்து ஆடுகளை மயிர்
கத்தரிக்கிறேன்; ராஜாவும் அவருடைய ஊழி
யக்காரரும் உமது அடியானோடே வரும்படி
25 வேண்டிக்கொள்ளுகிறேன் என்றான். ராஜா
அப்சலோமைப் பார்த்து: அப்படி வேண்
டாம், என் மகனே, நாங்கள் எல்லாரும் வரு
வோமாகில் உனக்கு வெகு செலவுண்டாகும்
என்றான்; அவனை வருந்திக் கேட்டாலும்,
அவன் போக மனதில்லாமல், அவனை ஆசீர்
வதித்தான். அப்பொழுது அப்சலோம்: அது 26
கூடாதிருந்தால், என் சகோதரனாகிய அம்
னோனாவது எங்களோடே வரும்படி அவனு
க்கு உத்தரவுசெய்யும் என்றான். அதற்கு
ராஜா: அவன் உன்னோடே வரவேண்டியது
என்ன என்றான். அப்சலோம் பின்னையும் 27
அவனை வருந்திக் கேட்டுக்கொண்டபடியி
னால், அவன் அம்னோனையும், ராஜாவின்
குமாரர் அனைவரையும் அவனோடே போக
விட்டான். அப்சலோம் தன் வேலைக்காரரை 28
நோக்கி: அம்னோன் திராட்சரசம் குடித்துக்
களித்திருக்கும் சமயத்தை நன்றாய்ப் பார்த்
திருங்கள்; அப்பொழுது நான்: அம்னோனை
அடியுங்கள் என்று சொல்லுவேன்; [8]உடனே
நீங்கள் பயப்படாமல் அவனைக் கொன்றுபோ
டுங்கள்; நான் அல்லவோ அதை உங்களுக்
குக் கட்டளையிடுகிறேன்; திடன்கொண்டு
தைரியமாயிருங்கள் என்று சொல்லியிருந்
தான். அப்சலோம் கற்பித்தபடியே அப்ச 29
லோமின் வேலைக்காரர் அம்னோனுக்குச் செய்
தார்கள்; அப்பொழுது ராஜகுமாரர் எல்லாரும்
எழுந்திருந்து, அவரவர் தம்தம் கோவேறு கழு
தையின்மேல் ஏறி ஓடிப்போனார்கள். அவர் 30
கள் வழியில் இருக்கிறபோதே, அப்சலோம்
ராஜகுமாரரையெல்லாம் அடித்துக் கொன்று
போட்டான், அவர்களில் ஒருவரும் மீந்திருக்க
விடவில்லை என்கிறதாய், தாவீதுக்குச் செய்தி
வந்தது. அப்பொழுது ராஜா எழுந்திருந்து, 31
[9]தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு, தரை
யிலே விழுந்துகிடந்தான்; அவன் ஊழியக்
காரர் எல்லாரும் தங்கள் வஸ்திரங்களைக் கிழித்
துக்கொண்டு நின்றார்கள். அப்பொழுது 32
தாவீதின் தமையனாகிய சிமியாவின் குமாரன்
யோனதாப் வந்து: ராஜகுமாரரான வாலிப
ரையெல்லாம் கொன்றுபோட்டார்கள் என்று
என் ஆண்டவன் நினைக்கவேண்டாம்; அம்
னோன்மாத்திரம் செத்துப்போனான்; அவன்
தன் சகோதரியாகிய தாமாளைக் கற்பழித்த
நாள்முதற்கொண்டு, அது அப்சலோமின்
நெஞ்சில் இருந்தது. இப்போதும் ராஜ 33
குமாரர்கள் எல்லாரும் செத்தார்கள் என்கிற
பேச்சை ராஜாவாகிய என் ஆண்டவன் தம்
முடைய [10]மனதிலே வைக்கவேண்டாம்; அம்
னோன் ஒருவனே செத்தான் என்றான்; அப்
சலோம் ஓடிப்போனான். சாமக்காரச் சேவ 34
கன் தன் கண்களை ஏறெடுத்துப் பார்த்தபோது,
இதோ, அநேகம் ஜனங்கள் தனக்குப் பின்
னாலே மலை ஓரமாய் வருகிறதைக் கண்டான்.
அப்பொழுது யோனதாப் ராஜாவைப் பார்த்து: 35
இதோ, ராஜகுமாரர் வருகிறார்கள்; உமது
அடியேன் சொன்னபடியே ஆயிற்று என்
றான். அவன் பேசி முடிந்தபோது, ராஜ 36
குமாரர் வந்து, சத்தமிட்டு அழுதார்கள்; ராஜா

[1] லேவி. 18. 9,11
[2] 12. 11. உபா. 22. 25
[3] ஆதி. 37. 8. நியா. 5. 30. சங். 45. 14
[4] யோசு. 7. 6. யோபு. 12. 12. எசே. 2. 37
* அசாதாவாய்
[5] ஆதி. 24. 50: 31. 24
[6] லேவி. 19. 17, 18
[7] ஆதி. 38. 12, 13. 1 சாமு. 25. 4, 36
[8] நியா. 19. 6, 9, 22. ரூத். 3. 7. 1 சாமு. 25. 36. எஸ்தர். 1. 10. சங். 104. 15. பிர. 9. 7; 10. 19
[9] 1. 11; 12. 16
[10] 19. 19

வும் அவனுடைய ஊழியக்காரரும் மிகவும்
புலம்பி அழுதார்கள்.
37 அப்சலோமோ அம்மியூதின் குமாரனாகிய
[1]தல்மாய் என்னும் கேசூரின் ராஜாவினிடத்
திற்கு ஓடிப்போனான். தாவீது தினந்தோ
றும் தன் குமாரனுக்காகத் துக்கித்துக்கொண்
38 டிருந்தான். அப்சலோம் [2]கேசூருக்கு ஓடிப்
போய், அங்கே மூன்று வருஷம் இருந்தான்.
39 தாவீதுராஜா அம்னோன் செத்தபடியினால்,
அவனுக்காகத் துக்கித்து ஆறுதல் அடைந்த
போது [3]அப்சலோமைப் *பின்தொடரும்
நினைவை விட்டுவிட்டான்.

**14** ராஜாவின் இருதயம் அப்சலோமின்மேல்
இன்னும் †தாங்கலாயிருக்கிறதைச் செருயா
2 வின் குமாரன் யோவாப் கண்டு, அவன்
தெக்கோவாவிலிருக்கிற [4]புத்தியுள்ள ஒரு ஸ்தி
ரீயை அழைத்து: நீ இழவுகொண்டாடுகிறவ
ளைப்போல, [5]துக்கவஸ்திரங்களை உடுத்திக்
கொண்டு, எண்ணெய் பூசிக்கொள்ளாமல்,
இறந்துபோனவனுக்காக நெடுநாள் துக்கிக்
3 கிற ஸ்திரீயைப்போலக் காண்பித்து, ராஜா
வினிடத்தில் போய், அவரை நோக்கி: இன்ன
இன்ன பிரகாரமாகச் சொல்லு என்று [6]அவள்
சொல்லவேண்டிய வார்த்தைகளை யோவாப்
4 அவள் வாயிலே போட்டான். அப்படியே
தெக்கோவா ஊராளான அந்த ஸ்திரீ ராஜா
வோடே பேசப்போய், [7]தரையிலே முகங்குப்
புற விழுந்து வணங்கி: ராஜாவே, [8]இரட்சியும்
5 என்றாள். ராஜா அவளைப் பார்த்து: உனக்கு
என்னவேண்டும் என்றதற்கு, அவள், நான்
விதவையானவள், என் புருஷன் சென்றுபோ
6 னான். உமது அடியாளுக்கு இரண்டு குமா
ரர் இருந்தார்கள்; அவர்கள் இருவரும் வெளி
யிலே சண்டைபண்ணி, அவர்களை விலக்க
ஒருவரும் இல்லாதபடியினால், ஒருவன் மற்ற
7 வனை அடித்துக் கொன்றுபோட்டான். வம்
சத்தார் எல்லாரும் உம்முடைய அடியாளுக்கு
விரோதமாய் எழும்பி, [9]தன் சகோதரனைக்
கொன்றுபோட்டவனை ஒப்பி; அவன் கொன்ற
அவன் சகோதரனுடைய பிராணனுக்காக நாங்
கள் அவனைக் கொன்றுபோடுவோம்; சுதந்தர
வாளனையினும் அவனையும் அழித்துப்போடு
வோம் என்கிறார்கள். இப்படி என் புருஷ
னுக்குப் பேரும் மீதியும் பூமியின்மேல் வைக்
கப்படாதபடிக்கு, எனக்கு இன்னும் மீதியா
யிருக்கிற பொறியையும் அவித்துப்போட மன
8 தாயிருக்கிறார்கள் என்றாள். ராஜா அந்த
ஸ்திரீயைப் பார்த்து: நீ உன் வீட்டுக்குப்போ,
உன் காரியத்தைக்குறித்து உத்தரவு கொடுப்
9 பேன் என்றான். பின்னும் அந்தத் தெக்கோ
வாவூர் ஸ்திரீ ராஜாவைப் பார்த்து: ராஜாவா
கிய என் ஆண்டவனே, [10]ராஜாவின்மேலும்
அவர் சிங்காசனத்தின்மேலும் குற்றமில்லாத
படிக்கு, [11]அந்தப் பழி என்மேலும் என் தகப்
பன் வீட்டின்மேலும் சுமரக்கடவது என்றாள்.
10 அதற்கு ராஜா: உனக்கு விரோதமாகப் பேசு
கிறவனை என்னிடத்தில் கொண்டுவா; அப்
பொழுது அவன் இனி உன்னைத் தொடாதி
ருப்பான் என்றான். பின்னும் அவள்: [12]இரத் 11
தப்பழி வாங்குகிறவர்கள் அழிம்புசெய்து,
என் குமாரனை அதம்பண்ணப் பெருகிப்போ
காதபடிக்கு, ராஜாவானவர் தம்முடைய தேவ
னாகிய **கர்த்தரை** நினைப்பாராக என்றாள்.
அதற்கு ராஜா: உன் குமாரனுடைய மயிரில்
ஒன்றாவது தரையில் விழுவதில்லை என்று
**கர்த்தரின்** ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேன்
என்றான். அப்பொழுது அந்த ஸ்திரீ: ராஜா 12
வாகிய என் ஆண்டவனோடே உமது அடி
யாள் ஒரு வார்த்தை சொல்ல உத்தரவாக
வேண்டும் என்றாள். அவன் சொல்லு என்
றான். அப்பொழுது அந்த ஸ்திரீ: பின்னை 13
ஏன் [13]தேவனுடைய ஜனத்திற்கு விரோதமாய்
இப்படிப்பட்ட நினைவை நீர் கொண்டிருக்கி
றீர், [14]துரத்துண்ட தம்முடையவனை ராஜா
திரும்ப அழைக்காததினாலே, ராஜா இப்பொ
ழுது சொன்ன வார்த்தையினால் குற்றமுள்ள
வரைப்போல் இருக்கிறார். நாம் மரிப்பது 14
நிச்சயம், [15]திரும்பச் சேர்க்கக்கூடாதபடிக்கு,
தரையிலே சுவறுகிற தண்ணீரைப்போல்
இருக்கிறோம்; ‡தேவன் ஜீவனை எடுத்துக்
கொள்ளாமல், [16]துரத்துண்டவன் முற்றிலும்
தம்மைவிட்டு விலக்கப்படாதிருக்கும் நினைவு
களை நினைக்கிறார். இப்போதும் நான் என் 15
ஆண்டவனாகிய ராஜாவோடே இந்த வார்த்
தையைப் பேசவந்த முகாந்தரம் என்னவென்
றால்: ஜனங்கள் எனக்குப் பயமுண்டாக்கின
தினால், நான் ராஜாவோடே பேசவந்தேன்;
ஒருவேளை ராஜா தமது அடியாளுடைய
வார்த்தையின்படி செய்வார் என்று உமது
அடியாளாகிய நான் நினைத்ததினாலும் வந்
தேனேஒழிய வேறில்லை. என்னையும் என் 16
குமாரனையும் ஏகமாய்த் தேவனுடைய சுதந்த
ரத்திற்குப் புறம்பாக்கி, அழிக்க நினைக்கிற
மனுஷனுடைய கைக்குத் தமது அடியாளை
நீங்கலாக்கி விடும்படிக்கு ராஜா கேட்பார்.
ராஜாவாகிய என் ஆண்டவனுடைய வார்த்தை 17
எனக்கு ஆறுதலாயிருக்கும் என்று உமது அடி
யாளாகிய நான் எண்ணினேன்; நன்மையை
யும் தீமையையும் கேட்கும்படி, [17]ராஜாவாகிய
என் ஆண்டவன் தேவனுடைய தூதனைப்
போல இருக்கிறார்; இதற்காக உம்முடைய
தேவனாகிய **கர்த்தர்** உம்மோடேகூட இருக்
கிறார் என்றாள். அப்பொழுது ராஜா அந்த 18
ஸ்திரீக்குப் பிரதியுத்தரமாக: நான் உன்னி
டத்தில் கேட்கும் காரியத்தை நீ எனக்கு
மறைக்கவேண்டாம் என்றான். அதற்கு
அந்த ஸ்திரீ, ராஜாவாகிய என் ஆண்டவர்
சொல்வாராக என்றாள். அப்பொழுது ராஜா: 19
இதிலெல்லாம் யோவாப் உனக்கு உட்கை
யாய் இருக்கவில்லையா என்று கேட்டான்.
அதற்கு ஸ்திரீ பிரதியுத்தரமாக, ராஜாவாகிய
என் ஆண்டவன் சொன்னதற்கெல்லாம் வலது
பக்கத்திலாவது இடதுபக்கத்திலாவது விலகு
வதற்கு ஒருவராலும் கூடாது என்று ராஜாவா

1 3. 3
2 14. 23
3 ஆதி. 38. 12
* அப்சலோமினிடத்தில் போக மிகவும் வாஞ்சையாயிருந்தான்
† சார்ந்திருக்கிறதை 13. 39
4 2 நாளா. 11. 6
5 ரூத். 3. 3
6 19. வச. யாத். 4. 15
7 1 சாமு. 20. 41
8 2 இரா. 6. 26, 28
9 உபா. 19. 12
10 3. 28, 29. 1 இரா. 2. 33
11 ஆதி. 27. 13. 1 சாமு. 25. 24. மத். 27. 25
12 எண். 35. 19. 1 சாமு. 14. 45 அப். 27. 34
13 நியா. 20. 2
14 13. 17, 38
15 யோபு. 34. 15. எபி. 9. 27
‡ தேவன் பட்சபாதமுள்ளவர் அல்ல
16 எண். 35. 15, 25, 28
17 20. வச. 19. 27

கிய என் ஆண்டவனுடைய ஜீவனைக்கொ
ண்டு சொல்லுகிறேன்; உமது அடியானாகிய
யோவாப் தான் இதை எனக்குக் கற்பித்து,
[1]அவனே இந்த எல்லா வார்த்தைகளையும்
உமது அடியாளின் வாயிலே போட்டான்.
20 நான் இந்தக் காரியத்தை உபமானமாய்ப் பேசு
கிறதற்கு உமது அடியானாகிய யோவாப் அதற்
குக் காரணமாயிருந்தான்; ஆனாலும் தேசத்தில்
நடக்கிறதையெல்லாம் அறிய, [2]என் ஆண்டவ
னுடைய ஞானம் தேவ தூதனுடைய ஞானத்
21 தைப்போல் இருக்கிறது என்றாள். அப்பொ
ழுது ராஜா யோவாபைப் பார்த்து: இதோ,
இந்தக் காரியத்தைச் செய்கிறேன், நீ போய்
அப்சலோம் என்னும் பிள்ளையாண்டானைத்
திரும்ப அழைத்துக்கொண்டுவா என்றான்.
22 அப்பொழுது யோவாப் தரையிலே முகங்குப்
புறவிழுந்து வணங்கி, ராஜாவை வாழ்த்தி:
ராஜா தமது அடியானுடைய வார்த்தையின்படி
செய்ததினால், என் ஆண்டவனாகிய ராஜாவின்
கண்களில் எனக்குத் தயைகிடைத்தது என்று
இன்று உமது அடியானுக்குத் தெரியவந்தது
23 என்றான். பின்பு யோவாப் எழுந்து, [3]கே
சூருக்குப் போய், அப்சலோமை எருசலே
24 முக்கு அழைத்துக்கொண்டு வந்தான். ராஜா:
[4]அவன் என் முகத்தைப் பார்க்கவேண்டிய
தில்லை; தன் வீட்டுக்குத் திரும்பிப்போகட்டும்
என்றான்; அப்படியே அப்சலோம் ராஜாவின்
முகத்தைப் பார்க்காமல் தன் வீட்டுக்குத் திரும்
பிப்போனான்.
25 இஸ்ரவேலர் அனைவருக்குள்ளும் அப்ச
லோமைப்போல் சவுந்தரியமுள்ளவனும் மெச்
சிக்கொள்ளப்பட்டவனும் இல்லை; [5]உள்ளங்
கால்தொடங்கி உச்சந்தலைமட்டும் அவனில்
26 ஒரு பழுதும் இல்லாதிருந்தது. அவன் தன்
தலைமயிர் தனக்குப் பாரமாயிருப்பதினால் வரு
ஷாந்தரம் சிரைத்துக்கொள்ளுவான்; சிரைக்
கும்போது, அவன் தலைமயிர் ராஜாவுடைய
நிறையின்படி இருநூறு சேக்கல் நிறையாயி
27 ருக்கும். அப்சலோமுக்கு மூன்று குமாரரும்,
[6]தாமார் என்னும் பேர்கொண்ட ஒரு குமாரத்
தியும் பிறந்திருந்தார்கள்; இவள் ரூபவதியான
பெண்ணாயிருந்தாள்.
28 அப்சலோம், ராஜாவின் முகத்தைக் காணா
மலே, இரண்டு வருஷம் எருசலேமிலே குடி
29 யிருந்தான். ஆகையால் அப்சலோம் யோவா
பை ராஜாவினிடத்தில் அனுப்பும்படி அழைப்
பித்தான்; அவனோ அவனிடத்திற்கு வரமாட்
டேன் என்றான்; இரண்டாம்விசையும் அவன்
அழைத்தனுப்பினான்; அவன் வரமாட்டேன்
30 என்றான். அப்பொழுது அவன் தன் வேலைக்
காரரைப் பார்த்து: இதோ, என் நிலத்திற்கு
அருகே யோவாபின் நிலம் இருக்கிறது; அதி
லே அவனுக்கு வாற்கோதுமை விளைந்திருக்
கிறது; நீங்கள் போய் அதைத் தீக்கொளுத்திப்
போடுங்கள் என்றான்; அப்படியே அப்சலோ
மின் வேலைக்காரர் அந்த நிலத்தைத் தீக்கொ
31 ளுத்திப்போட்டார்கள். அப்பொழுது யோ
வாப் எழுந்திருந்து, அப்சலோமிடத்தில் வீட்
டிற்குள் போய், என்னுடைய நிலத்தை உம்
முடைய வேலைக்காரர் தீக்கொளுத்திப்போட்
டது என்ன என்று அவனைக் கேட்டான். அப் 32
சலோம் யோவாபைப் பார்த்து: இதோ, நான்
என் கேசூரிலிருந்து வந்தேன்; நான் அங்கே
இருந்துவிட்டால் நலம் என்று ராஜாவுக்குச்
சொல்லும்படி உம்மை ராஜாவினிடத்தில்
அனுப்புவதற்காக உம்மை இங்கே வரும்படி
அழைப்பித்தேன்; இப்போதும் நான் ராஜா
வின் முகத்தைப் பார்க்கட்டும்; என்மேல் குற்ற
மிருந்தால் அவர் என்னைக் கொன்றுபோடட்
டும் என்றான். யோவாப் ராஜாவினிடத்தில் 33
போய், அதை அவனுக்கு அறிவித்தபோது,
அப்சலோமை அழைப்பித்தான்; அவன் ரா
ஜாவினிடத்தில் வந்து, ராஜாவுக்கு முன்பாகத்
தரையிலே முகங்குப்புற விழுந்து வணங்கி
னான்; அப்பொழுது ராஜா அப்சலோமை
[7]முத்தமிட்டான்.

இதற்குப்பின்பு, [8]அப்சலோம் இரதங்களை 15
யும் குதிரைகளையும், [9]தனக்கு முன் ஓட ஐம்
பது சேவகரையும் சம்பாதித்தான். மேலும் 2
அப்சலோம் காலைதோறும் எழுந்திருந்து, பட்
டணத்து வாசலுக்குப் போகிற வழி ஓரத்தி
லே நின்றுகொண்டு, எவனாகிலும் தனக்கு
இருக்கிற வழக்கு முகாந்தரமாய் ராஜாவினி
டத்தில் நியாயத்திற்காகப் போகும்போது,
அவனை அழைத்து, நீ எந்த ஊரான் என்று
கேட்பான்; அவன் உமது அடியான் இஸ்ர
வேல் கோத்திரங்களில் ஒன்றுக்கடுத்த இன்ன
ஊரான் என்றால், அப்பொழுது அப்சலோம் 3
அவனை நோக்கி: இதோ, உன் காரியம் நேர்
மையும் நியாயமுமாயிருக்கிறது; ஆனாலும் ரா
ஜாவினிடத்திலே உன் காரியத்தை விசாரிப்
பார் ஒருவரும் இல்லை என்பான். பின்னும் 4
அப்சலோம்: வழக்கு வியாஜ்யமுள்ளவர்கள்
எல்லாரும் என்னிடத்தில் வந்து, நான் அவர்
களுக்கு நியாயஞ்செய்யும்படிக்கு, என்னைத்
தேசத்திலே நியாயாதிபதியாக வைத்தால் [10]நல
மாயிருக்கும் என்பான். எவனாகிலும் ஒருவன் 5
அவனை வணங்க வரும்போது, அவன் தன்
கையை நீட்டி அவனைத் தழுவி, முத்தஞ்செய்
வான். இந்தப்பிரகாரமாக அப்சலோம் ரா 6
ஜாவினிடத்தில் நியாயத்திற்காக வரும் இஸ்ர
வேலருக்கெல்லாம் செய்து, இஸ்ரவேல் மனு
ஷருடைய இருதயத்தைக் [11]கவர்ந்துகொண்
டான்.

நாற்பது வருஷம் சென்றபின்பு, [12]அப்ச 7
லோம் ராஜாவை நோக்கி: நான் **கர்த்தருக்குப்**
பண்ணின என் பொருத்தனையை எப்ரோ
னில் செலுத்தும்படிக்கு நான் போக உத்தரவு
கொடும். **கர்த்தர்** என்னை எருசலேமுக்குத் 8
திரும்பிவரப்பண்ணினால், **கர்த்தருக்கு** ஆரா
தனை செய்வேன் என்று உமது அடியானாகிய
நான் சீரியாதேசத்தில் கேசூரிலே குடியிருக்
கும்போது, [13]பொருத்தனை பண்ணினேன்
என்றான். அதற்கு ராஜா, சமாதானத்தோடே 9

[1] 3. வச.
[2] 19. 27
[3] 13. 37
[4] ஆதி. 43. 3
[5] ஏசா. 1. 6
[6] 18. 18
[7] ஆதி. 33. 4; 45. 15. லூ. 15. 20
[8] 12. 11
[9] 1 இரா. 1. 5
[10] நியா. 9. 29
[11] ரோ. 16. 18
[12] 1 சாமு. 16. 1
[13] 13. 38. ஆதி. 28. 20, 21. 1 சாமு. 16 2

போ என்ருன்; அப்பொழுது அவன் எழுந்து
10 எப்ரோனுக்குப் போனுன். அப்சலோம்
இஸ்ரவேல் கோத்திரங்களுக்கெல்லாம் வேவு
காரரை அனுப்பி, நீங்கள் எக்காளத்தொ
னியைக் கேட்கும்போது, அப்சலோம் எப்
ரோனிலே ராஜாவானுன் என்று சொல்லுங்
கள் என்று சொல்லச் சொல்லி வைத்திருந்
11 தான். எருசலேமிலிருந்து வரவழைக்கப்
பட்ட இருநூறு பேர் அப்சலோமோடே
கூடப் போனுர்கள்; [1]அவர்கள் வஞ்சகமின்றி
12 அறியாமையினுல் போனுர்கள். அப்சலோம்
பலிகளைச் செலுத்தும்போது, [2]தாவீதின்
ஆலோசனைக்காரனுகிய அகித்தோப்பேல்என்
னும்கீலோனியனையும்அவன் ஊராகிய கீலோ
விலிருந்து வரவழைப்பித்தான்; அப்படியே
கட்டுப்பாடு பலத்து, [3]ஜனங்கள் அப்சலோமி
னிடத்தில் திரளாய் வந்து கூடினுர்கள்.
13 அதை அறிவிக்கிற ஒருவன் தாவீதினிடத்
தில் வந்து, [4]இஸ்ரவேலில் ஒவ்வொருவரு
டையஇருதயமும்அப்சலோமைப்பற்றிப்போ
14 கிறது என்ருன். அப்பொழுது தாவீது எரு
சலேமிலே தன்னிடத்திலுள்ள தன்னுடைய
எல்லா ஊழியக்காரரையும் நோக்கி: [5]எழுந்து
ஓடிப்போவோம், இல்லாவிட்டால் நாம் அப்ச
லோமுக்குத் தப்ப இடமில்லை; அவன் தீவிரி
த்து நம்மிடத்தில் வந்து, நம்மைப் பிடித்து,
நம்மேல் பொல்லாப்பு வரப்பண்ணி, நகரத்
தைப் பட்டயக்கருக்கினுல் சங்காரம் பண்ணுத
படிக்குத் தீவிரமாய்ப் புறப்படுங்கள் என்ருன்.
15 ராஜாவின் ஊழியக்காரர் ராஜாவைப் பார்த்து:
இதோ, ராஜாவாகிய எங்கள் ஆண்டவன் கட்
டளையிடும் காரியத்தையெல்லாம் செய்ய உம
து அடியாராகிய நாங்கள் ஆயத்தமாயிருக்கி
16 ருேம் என்ருர்கள். அப்படியே ராஜாவும்
அவனுடைய வீட்டார் எல்லாரும் கால்நடை
யாய்ப் புறப்பட்டார்கள்; வீட்டைக் காக்க ரா
ஜா மறுமனையாட்டிகளாகிய பத்து ஸ்திரீக
17 ளைப் பின்வைத்தான். ராஜாவும் சமஸ்த ஜன
ங்களும் கால்நடையாய்ப் புறப்பட்டு, சற்றுத்
தூரம் போய், ஒரு இடத்திலே தரித்துநின்ருர்
18 கள். அவனுடைய ஊழியக்காரர் எல்லாரும்,
கிரேத்தியர் யாவரும், பிலேத்தியர் யாவரும்
அவன் பக்கத்திலே நடந்துபோனுர்கள்; காத்
தூரிலிருந்து கால்நடையாய் வந்திருந்த அறு
நூறுபேராகிய கித்தியர் எல்லாரும் ராஜாவுக்கு
19 முன்பாக நடந்தார்கள். அப்பொழுது ராஜா
[6]கித்தியனுகிய ஈத்தாயைப் பார்த்து: நீ எங்க
ளுடனேகூட வருவானேன்? நீ திரும்பிப்
போய், ராஜாவுடனேகூட இரு; நீ அந்நிய
தேசத்தான்; நீ உன் இடத்திற்குத் திரும்பிப்
20 போகலாம். நீ நேற்றுதானே வந்தாய்; இன்று
நான் உன்னை எங்களோடே நடந்துவரும்படி
க்கு அழைத்துக்கொண்டு போகலாமா? [7]நான்
போகக்கூடிய இடத்திற்குப் போகிறேன்; நீ
உன் சகோதரரையும் அழைத்துக்கொண்டு
திரும்பிப்போ; கிருபையும் உண்மையும் உன்
21 னேடே இருப்பதாக என்ருன். ஆனுலும்

ஈத்தாய் ராஜாவுக்குப் பிரதியுத்தரமாக: ராஜா
வாகிய என் ஆண்டவன் எங்கேயிருப்பாரோ,
அங்கே உமது அடியானும், செத்தாலும்
பிழைத்தாலும், இருப்பான் என்று [8]**கர்த்தரு
டைய** ஜீவனையும் ராஜாவாகிய என் ஆண்டவ
னுடைய ஜீவனையும்கொண்டு சொல்லுகி
றேன் என்ருன். அப்பொழுது தாவீது ஈத் 22
தாயை நோக்கி: நடந்துவா என்ருன்; அப்ப
டியே கித்தியனுகிய ஈத்தாயும் அவனுடைய
எல்லா மனுஷரும் அவனேடிருக்கிற எல்லாப்
பிள்ளைகளும் நடந்துபோனுர்கள். சகல ஜனங் 23
களும் நடந்துபோகிறபோது, தேசத்தார் எல்
லாரும் மகா சத்தமாய் அழுதார்கள்; ராஜா [9]கீத
ரோன் ஆற்றைக் கடந்தான்; ஜனங்கள் எல்லா
ரும் [10]வனுந்தரத்திற்குப் போகிற வழியே
நடந்துபோனுர்கள். சாதோக்கும் தேவனு 24
டைய உடன்படிக்கைப் பெட்டியை [11]அவ
னேடேகூட இருந்து சுமக்கிற சகல லேவிய
ரும் வந்து, தேவனுடைய பெட்டியை அங்கே
வைத்தார்கள்; ஜனங்கள் எல்லாரும் நகரத்தி
லிருந்து கடந்துதீருமட்டும், அபியத்தார் திரும்
பிப்போயிருந்தான். ராஜா சாதோக்கை 25
நோக்கி: தேவனுடைய பெட்டியை நகரத்திற்
குத் திரும்பக் கொண்டுபோ; **கர்த்தருடைய**
கண்களில் எனக்குக் கிருபை கிடைத்ததா
னுல், [12]நான் அதையும் அவர் வாசஸ்தலத்தை
யும் பார்க்கிறதற்கு, என்னைத் திரும்ப வரப்
பண்ணுவார். அவர்: [13]உன்மேல் எனக்குப் 26
பிரியமில்லை என்பாராகில், இதோ, இங்கே
இருக்கிறேன்; [14]அவர் தம்முடைய பார்வைக்கு
நலமானபடி எனக்குச் செய்வாராக என்ருன்.
பின்னும் ராஜா ஆசாரியனுகிய சாதோக்கை 27
நோக்கி: [15]நீ ஞானதிருஷ்டிக்காரன் அல்ல
வோ? நீ சமாதானத்தோடே நகரத்திற்குத்
திரும்பு; உன் மகன் அகிமாசும் அபியத்தாரின்
மகன் யோனத்தானுமாகிய உங்கள் குமாரர்
[16]இரண்டுபேரும் உங்களோடேகூடத் திரும்
பிப் போகட்டும். எனக்கு அறிவிக்கிறதற்கு 28
உங்களிடத்திலிருந்துசெய்திவருமட்டும், நான்
வனுந்தரத்தின் வெளிகளிலே தரித்திருப்
பேன் என்ருன். அப்படியே சாதோக்கும் 29
அபியத்தாரும் தேவனுடைய பெட்டியை எரு
சலேமுக்குத் திரும்பக் கொண்டுபோய், அங்
கே இருந்தார்கள்.
தாவீது தன் முகத்தை மூடி, வெறுங்கா 30
லால் நடந்து அழுதுகொண்டு, [17]ஒலிவமலை
யின்மேல் ஏறிப்போனுன்; அவனேடிருந்த
சகல ஜனங்களும் முகத்தை மூடி அழுது
கொண்டு ஏறினுர்கள். அப்சலோமோடே 31
கட்டுப்பாடு பண்ணினவர்களுடன் அகித்
தோப்பேலும் சேர்ந்திருக்கிருன் என்று தாவீ
துக்கு அறிவிக்கப்பட்டபோது, தாவீது: **கர்த்**
**தாவே**, [18]அகித்தோப்பேலின் ஆலோசனை
யைப் பயித்தியமாக்கி விடுவீராக என்ருன்.
தாவீது மலையின் உச்சிமட்டும் வந்து, அங்கே 32
தேவனைப் பணிந்துகொண்டபோது, இதோ,
அற்கியனுகிய ஊசாய் தன் வஸ்திரத்தைக்

[1] ஆதி. 20. 5. 1 சாமு. 9. 13
[2] சங். 41. 9
[3] சங். 3. 1
[4] 6. வச. நியா. 9. 3
[5] 19. 9. சங். 3. முகவுரை
[6] 18. 2
[7] 1 சாமு. 23. 13
[8] ரூத். 1. 16, 17. நீதி. 17. 17; 18. 24
[9] யோ. 18. 1
[10] 16. 2
[11] எண். 4. 15
[12] சங். 43. 3, 4
[13] எண். 14. 8
[14] 1 சாமு. 3. 18
[15] 1 சாமு. 9. 9
[16] 17. 16, 17
[17] 19. 4. எஸ்தர். 6. 12. எசா. 20. 2, 4. எரே. 14. 3, 4
[18] 16. 23. யோபு. 5. 13

கிழித்துக்கொண்டு, [1]தலையின்மேல் புழுதி
யைப் போட்டுக்கொண்டவனாய் அவனுக்கு
33 எதிர்ப்பட்டான். தாவீது அவனைப் பார்த்து:
நீ என்னோடேகூட நடந்துவந்தால் எனக்குப்
34 [2]பாரமாயிருப்பாய். நீ நகரத்திற்குத் திரும்
பிப்போய், அப்சலோமை நோக்கி: ராஜாவே,
உம்முடைய ஊழியக்காரனாயிருப்பேன்; முன்
நான் உம்முடைய தகப்பனுக்கு ஊழியக்கார
னாயிருந்தேன்; [3]இப்போது நான் உமக்கு
ஊழியக்காரன் என்றாயேயாகில், எனக்காக
அகித்தோப்பேலின் ஆலோசனையை அபத்த
35 மாக்குவாய். உன்னோடே அங்கே சாதோக்
அபியத்தார் என்னும் ஆசாரியர்கள் இருக்கி
றார்கள் அல்லவா? ராஜாவின் வீட்டிலே பிறக்
கிற எதேது செய்தி உண்டோ, என்னென்ன
கேள்விப்படுகிறாயோ, [4]அதையெல்லாம் சா
தோக் அபியத்தார் என்னும் ஆசாரியர்களுக்கு
36 அறிவிப்பாய். அங்கே அவர்களோடே
சாதோக்கின் மகன் அகிமாசும் அபியத்தாரின்
மகன் யோனத்தானும்; அவர்கள் இரண்டு
குமாரரும் இருக்கிறார்கள்; நீங்கள் கேள்விப்
படுகிற செய்தியையெல்லாம் அவர்கள் வச
மாய் எனக்கு அனுப்புவீர்களாக என்றான்.
37 அப்படியே தாவீதின் சிநேகிதனாகிய [5]ஊசாய்
நகரத்திற்கு வந்தான்; [6]அப்சலோமும் எருச
லேமுக்கு வந்தான்.

16 தாவீது மலையுச்சியிலிருந்து சற்றப்புறம்
நடந்துபோனபோது, இதோ, [7]மேவிபோ
சேத்தின் காரியக்காரனாகிய சீபா, பொதிக
ளைச் சுமக்கிற இரண்டு கழுதைகளை ஓட்டிக்
கொண்டுவந்து, அவனைச் சந்தித்தான்; அவை
களில் இருநூறு அப்பங்களும், வற்றலான
நூறு திராட்சப்பழக் குலைகளும், வசந்தகாலத்
துப் பலனான நூறு குலைகளும், ஒரு துருத்தி
2 திராட்சரசமும் இருந்தது. ராஜா சீபாவைப்
பார்த்து: இவைகள் என்னத்திற்கு என்று
கேட்டதற்கு, சீபா: கழுதைகள் ராஜாவின்
வீட்டார் ஏறுகிறதற்கும், அப்பங்களும் பழங்க
ளும் வாலிபர் புசிக்கிறதற்கும், [8]திராட்சரசம்
வனாந்தரத்தில் விடாய்த்துப்போனவர்கள் குடி
3 க்கிறதற்குமே என்றான். அப்பொழுது ராஜா:
உன் ஆண்டவனுடைய குமாரன் எங்கே
என்று கேட்டதற்கு; [9]சீபா ராஜாவை நோக்கி:
எருசலேமில் இருக்கிறான்; இன்று இஸ்ர
வேல் வீட்டார் என் தகப்பனுடைய ராஜ்யத்
தை என் வசமாய்த் திரும்பப்பண்ணுவார்கள்
4 என்றான் என்று சொன்னான். அப்பொழுது
ராஜா சீபாவை நோக்கி: [10]மேவிபோசேத்திற்கு
உண்டானதெல்லாம் உன்னுடையதாயிற்று
என்றான். அதற்குச் சீபா: ராஜாவாகிய என்
ஆண்டவனே, உம்முடைய கண்களில் எனக்
குத் தயை கிடைக்கவேண்டும் என்று நான்
பணிந்து கேட்டுக்கொள்ளுகிறேன் என்றான்.
5 தாவீது ராஜா பகூரிம்மட்டும் வந்தபோது,
இதோ, சவுல்வீட்டு வம்சத்தானாயிருக்கிற
கேராவின் குமாரனாகிய [11]சீமேயி என்னும்
பேருள்ள ஒரு மனுஷன் அங்கேயிருந்து புறப்
பட்டு, தூஷித்துக்கொண்டே நடந்துவந்து,
சகலஜனங்களும், சகல பலசாலிகளும், தாவீ 6
தின் வலதுபுறமாகவும் இடதுபுறமாகவும் நடக்
கையில், தாவீதின்மேலும், தாவீதுராஜாவு
டைய சகல ஊழியக்காரர்மேலும் கற்களை எறி
ந்தான். சீமேயி அவனைத் தூஷித்து: இரத்தப் 7
பிரியனே, [12]பேலியாளின் மனுஷனே, தொ
லைந்துபோ, தொலைந்துபோ. சவுலின் ஸ்த 8
லத்தில் ராஜாவான உன்மேல் கர்த்தர் சவுல்
வீட்டாரின் [13]இரத்தப்பழியைத் திரும்பப்பண்
ணினார்; கர்த்தர் ராஜ்யபாரத்தை உன் குமார
னாகிய அப்சலோமின் கையில் ஒப்புக்கொடுத்
தார்; இப்போதும் இதோ, உன் அக்கிரமத்
தில் அகப்பட்டாய்; நீ இரத்தப்பிரியனான
மனுஷன் என்றான். அப்பொழுது செருயா 9
வின் குமாரன் அபிசாய் ராஜாவை நோக்கி:
[14]அந்தச் செத்தநாய் ராஜாவாகிய என் [15]ஆண்ட
வனைத் தூஷிப்பானேன்? நான் போய் அவன்
தலையை வாங்கிப்போடட்டுமே என்றான்.
அதற்கு ராஜா: செருயாவின் குமாரரே, [16]என 10
க்கும் உங்களுக்கும் என்ன? அவன் என்னைத்
தூஷிக்கட்டும்; [17]தாவீதைத் தூஷிக்கவேண்
டும் என்று கர்த்தர் அவனுக்குச் சொன்னார்;
[18]ஆகையால் ஏன் இப்படிச் செய்கிறாய் என்று
கேட்கத்தக்கவன் யார் என்றான். பின்னும் 11
தாவீது அபிசாயையும் தன் ஊழியக்காரர் எல்
லாரையும் பார்த்து: [19]இதோ, என் கர்ப்பப்
பிறப்பான என் குமாரனே என் பிராணனை
வாங்கத்தேடும்போது, இந்தப் பென்யமீனன்
எத்தனை அதிகமாய்ச் செய்வான், அவன்
தூஷிக்கட்டும்; அப்படிச் செய்ய கர்த்தர் அவ
னுக்குக் கட்டளையிட்டிருக்கிறார். ஒருவேளை 12
கர்த்தர் என் சிறுமையைப் பார்த்து, [20]இந்த
நாளில் அவன் நிந்தித்த நிந்தனைக்குப் பதிலாக
எனக்கு நன்மையைச் சரிக்கட்டுவார் என்
றான். அப்படியே தாவீதும் அவன் மனுஷ 13
ரும் வழியே நடந்துபோனார்கள்; சீமேயியும்
மலையின் பக்கத்திலே அவனுக்கு எதிராக
நடந்து தூஷித்து, அவனுக்கு எதிராகக் கற்
களை எறிந்து, மண்ணைத் தூற்றிக்கொண்டே
வந்தான். ராஜாவும் அவனோடிருந்த சகல 14
ஜனங்களும் விடாய்த்தவர்களாய், தங்குமிடத்
திலே சேர்ந்து, இளைப்பாறினார்கள்.

அப்சலோமும் [21]இஸ்ரவேல் மனுஷராகிய 15
சகல ஜனங்களும் அவனோடேகூட அகித்
தோப்பேலும் எருசலேமுக்கு வந்தார்கள். அற் 16
கியனாகிய ஊசாய் என்னும் தாவீதின் சிநேகி
தன் அப்சலோமிடத்தில் வந்தபோது, ஊசாய்
அப்சலோமை நோக்கி: ராஜாவே வாழ்க,
ராஜாவே வாழ்க என்றான். அப்பொழுது 17
அப்சலோம் ஊசாயைப் பார்த்து: உன் சிநேகி
தன்மேல் உனக்கு இருக்கிற தயை இதுதா
னோ? [22]உன் சிநேகிதனோடே நீ போகாதே
போனது என்ன என்று கேட்டான். அதற்கு 18
ஊசாய் அப்சலோமை நோக்கி: அப்படி
அல்ல, கர்த்தரும் இந்த ஜனங்களும் இஸ்ர
வேல் மனுஷர் அனைவரும் தெரிந்துகொள்ளு

1 1. 2. யோசு. 16. 2
2 19. 35
3 16. 19
4 17. 15, 16
5 16. 16
6 1 நாளா. 27. 33
7 9. 2; 15. 30, 32
8 15. 23; 17. 29
9 19. 27
10 நீதி. 18. 13
11 19. 16. 1 இரா. 2. 8, 44
12 உபா. 13. 13
13 நியா. 9. 24. 1 இரா. 2. 32, 33
14 1 சாமு. 24. 14
15 யாத். 22. 28
16 19. 22, 1 பே. 2. 23
17 2 இரா. 18. 25
18 ரோ. 9. 20
19 12. 11. ஆதி. 15. 4
20 1 சாமு. 1. 11. சங். 25. 18. ரோ. 8. 28
21 15. 37
22 19. 25. நீதி. 17. 17

கிறவனாயே நான் சேர்ந்து அவரோடே இருப்
19 பேன். இதுவும் அல்லாமல், [1]நான் யாரிடத்
தில் சேவிப்பேன்? அவருடைய குமாரனிடத்
தில் அல்லவா? உம்முடைய தகப்பனிடத்தில்
எப்படி சேவித்தேனே, அப்படியே உம்மிடத்
20 திலும் சேவிப்பேன் என்றான். அப்சலோம்
அகித்தோப்பேலைப் பார்த்து, நாங்கள் செய்ய
வேண்டியது இன்னதென்று ஆலோசனை
21 சொல்லும் என்றான். அப்பொழுது அகித்
தோப்பேல் அப்சலோமை நோக்கி: வீட்டைக்
காக்க உம்முடைய தகப்பன் பின்வைத்த அவ
ருடைய [2]மறுமனையாட்டிகளிடத்தில் பிரவேசி
யும், [3]அப்பொழுது உம்முடைய தகப்பனுக்கு
நாற்றமாய்ப் போனீர் என்பதை இஸ்ரவேலர்
எல்லாரும் கேள்விப்பட்டு, [4]உம்மோடிருக்கிற
எல்லாருடைய கைகளும் பலக்கும் என்றான்.
22 அப்படியே அப்சலோமுக்கு உப்பரிகையின்
மேல் ஒரு கூடாரத்தைப் போட்டார்கள்:
[5]அங்கே அப்சலோம் சகல இஸ்ரவேலரின்
கண்களுக்கு முன்பாக, தன் தகப்பனுடைய
மறுமனையாட்டிகளிடத்தில் பிரவேசித்தான்.
23 அந்நாட்களில் அகித்தோப்பேல் சொல்லும்
ஆலோசனை தேவனுடைய வாக்கைப்போல
இருந்தது; அப்படி அகித்தோப்பேலின்
ஆலோசனையெல்லாம் தாவீதுக்கும் இருந்தது,
[6]அப்சலோமுக்கும் அப்படியே இருந்தது.

**17** பின்பு அகித்தோப்பேல் அப்சலோமை
நோக்கி: நான் பன்னீராயிரம்பேரைத் தெரிந்
துகொண்டு எழுந்து, இன்று இராத்திரி தாவீ
2 தைப் பின்தொடர்ந்து போகட்டும். அவன்
விடாய்த்தவனும் [7]கை தளர்ந்தவனுமா யிருக்
கையில், நான் அவனிடத்தில் போய், அவ
னைத் திடுக்கிடப் பண்ணுவேன்; அப்பொ
ழுது அவனோடிருக்கும் ஜனங்களெல்லாரும்
ஓடிப்போவதினால், [8]நான் ராஜா ஒருவனை
3 மாத்திரம் வெட்டி, ஜனங்களையெல்லாம் உம்
முடைய வசமாய்த் திரும்பப் பண்ணுவேன்;
இப்படிச் செய்ய நீர் வகைதேடினால், எல்லா
ரும் திரும்பினபின் ஜனங்கள் சமாதானத்
4 தோடு இருப்பார்கள் என்றான். இந்த வார்த்
தை அப்சலோமின் பார்வைக்கும், இஸ்ரவே
லுடைய சகல மூப்பரின் பார்வைக்கும் நல
5 மாய்த் தோன்றினது. ஆகிலும் அப்சலோம்:
அற்கியனாகிய ஊசாயைக் கூப்பிட்டு, அவன்
வாய்மொழியையும் கேட்போம் என்றான்.
6 ஊசாய் அப்சலோமிடத்தில் வந்தபோது,
அப்சலோம் அவனைப் பார்த்து: இந்தப்பிரகா
ரமாக அகித்தோப்பேல் சொன்னான்; அவன்
வார்த்தையின்படி செய்வோமா? அல்லவென்
7 றால், நீ சொல் என்றான். அப்பொழுது
ஊசாய் அப்சலோமை நோக்கி: அகித்தோப்
பேல் இந்த விசை சொன்ன ஆலோசனை நல்
8 லதல்ல என்றான். மேலும் ஊசாய்: உம்மு
டைய தகப்பனும் அவன் மனுஷரும் பலசா
லிகள் என்றும், வெளியிலே [9]குட்டிகளைப்
பறிகொடுத்த கரடியைப்போல [10]மனமெரிகிற
வர்கள் என்றும் நீர் அறிவீர்; உம்முடைய தகப்

1 15. 34
2 15. 16
3 ஆதி. 34. 30
4 சகரி. 8. 13
5 12. 11, 12
6 15. 12
7 16. 14. உபா. 25. 18
8 சகரி. 13. 7
9 சங். 17. 12. ஓசி. 13. 8
10 நியா. 18. 25
11 யோசு. 2. 11
12 ஆதி. 22. 17
13 15. 31, 34. யோபு. 5. 12, 13. நீதி. 16. 8
14 15. 35
15 15. 28. சதி. 6. 4, 5
16 15. 27, 36
17 யோசு. 15. 7

பன் யுத்தவீரனுமாயிருக்கிறார்; அவர் இராக்
காலத்தில் ஜனங்களோடே தங்கமாட்டார்.
இதோ, அவர் இப்பொழுது ஒரு கெபியிலா 9
வது, வேறே யாதோரிடத்திலாவது ஒளித்திரு
ப்பார்; துவக்கத்திலேதானே நம்முடையவர்க
ளில்சிலர் பட்டார்களேயானால், அதைக் கேட்
கிற யாவரும் அப்சலோமைப் பின்செல்லுகிற
ஜனங்களில் சங்காரம் உண்டாயிற்று என்பார்
கள். அப்பொழுது சிங்கத்தின் இருதயத்திற் 10
கொத்த இருதயமுள்ள பலவானாயிருக்கிறவ
னுங்கூட [11]கலங்கிப்போவான்; உம்முடைய
தகப்பன் சவுரியவான் என்றும், அவரோடி
ருக்கிறவர்கள் பலசாலிகள் என்றும், இஸ்ர
வேலர் எல்லாரும் அறிவார்கள். ஆதலால் 11
நான் சொல்லுகிற யோசனையாவது, தாண்
முதல் பெயெர்செபாமட்டும் இருக்கிற கடற்
கரை மணலத்தனை திரட்சியான இஸ்ரவேலர்
எல்லாரும் உம்மண்டையில் கூட்டப்பட்டு,
[12]நீர்தானே கூட யுத்தத்திற்குப் போகவேண்
டும். அப்பொழுது அவனைக் கண்டுபிடிக்கிற 12
எவ்விடத்திலாகிலும் நாம் அவரிடத்தில்போய்,
பனி பூமியின்மேல் இறங்குவதுபோல அவர்
மேல் இறங்குவோம்; அப்படியே அவரோடி
ருக்கிற எல்லா மனுஷரிலும் ஒருவனும் அவ
ருக்கு மீந்திருப்பதில்லை. ஒரு பட்டணத்திற் 13
குள் புகுந்தாரேயானால், இஸ்ரவேலர் எல்லா
ரும் அந்தப் பட்டணத்தின்மேல் கயிறுகளைப்
போட்டு, அங்கே ஒரு பொடிக்கல்லும் காணப்
படாதே போகுமட்டும், அதை இழுத்து ஆற்
றிலே போடுவார்கள் என்றான். அப்பொ 14
ழுது அப்சலோமும் இஸ்ரவேல் மனுஷர்
அனைவரும்: அகித்தோப்பேலின் ஆலோசனை
யைப்பார்க்கிலும் அற்கியனாகிய ஊசாயின்
ஆலோசனை நல்லது என்றார்கள்; [13]இப்படி
**கர்த்தர்** அப்சலோமின்மேல் பொல்லாப்பை
வரப்பண்ணும் பொருட்டு, அகித்தோப்பே
லின் நல்ல ஆலோசனையை அபத்தமாக்குகிற
தற்குக் **கர்த்தர்** கட்டளையிட்டார்.
பின்பு ஊசாய், [14]சாதோக் அபியத்தார் 15
என்னும் ஆசாரியர்களைப் பார்த்து: இன்ன
இன்னபடி அகித்தோப்பேல் அப்சலோமுக்
கும் இஸ்ரவேலின் மூப்பருக்கும் ஆலோசனை
சொன்னான்; நானோ இன்ன இன்னபடி
ஆலோசனை சொன்னேன். இப்பொழுதும் 16
நீங்கள் சீக்கிரமாய்த் தாவீதுக்கு அறிவிக்கும்
படிக்குச் செய்தி அனுப்பி: [15]நீர் இன்று இரா
த்திரி வனாந்தரத்தின் வெளிகளிலே தங்க
வேண்டாம்; ராஜாவும் அவரோடிருக்கிற சகல
ஜனங்களும் விழுங்கப்படாதபடிக்குத் தாமதம்
இல்லாமல் அக்கரைப்படவேண்டும் என்று
சொல்லச்சொல்லுங்கள் என்றான். யோனத் 17
தானும் அகிமாசும், [16]தாங்கள் நகரத்தில் பிர
வேசிக்கிறதினால் காணப்படாதபடிக்கு, [17]இன்
ரோகேல் அண்டை நின்றுகொண்டிருந்தார்
கள்; ஒரு வேலைக்காரி போய், அதை அவர்க
ளுக்குச் சொன்னாள்; அவர்கள் தாவீது ராஜா
வுக்கு அதை அறிவிக்கப் போனார்கள். ஒரு 18

பின்ளையாண்டான் அவர்களைக் கண்டு, அப்ச
லோமுக்கு அறிவித்தான்; ஆகையால் அவர்
கள் இருவரும் சீக்கிரமாய்ப் போய், [1]பகூரிமி
லிருக்கிற ஒரு மனுஷன் வீட்டிற்குள் பிரவே
சித்தார்கள்; அவன் முற்றத்தில் ஒரு கிணறு
19 இருந்தது; அதில் இறங்கினார்கள். வீட்டுக்
காரி ஒரு பாயை எடுத்து, [2]கிணற்றுவாயின்
மேல் விரித்து, காரியம் வெளிப்படாதபடி
க்கு, அதின்மேல் நொய்யைப் *பரப்பிவைத்
20 தாள். அப்சலோமின் சேவகர் அந்த ஸ்திரீ
யினிடத்தில் வீட்டிற்குள் வந்து: அகிமாசும்
யோனத்தானும் எங்கே என்று கேட்டார்கள்;
[3]அவர்களுக்கு அந்த ஸ்திரீ: வாய்க்காலுக்கு
அப்பாலே போய்விட்டார்கள் என்றாள்;
இவர்கள் தேடிக் காணாதே போய், எருசலே
21 முக்குத் திரும்பினார்கள். இவர்கள் போன
பிற்பாடு, அவர்கள் கிணற்றிலிருந்து ஏறிவந்து,
தாவீது ராஜாவுக்கு அறிவித்து, தாவீதை நோ
க்கி: [4]சீக்கிரமாய் எழுந்து ஆற்றைக் கடந்து
போங்கள்; இன்னபடி அகித்தோப்பேல் உங்
களுக்கு விரோதமாய் ஆலோசனை சொன்
22 னான் என்றார்கள். அப்பொழுது தாவீதும்
அவனோடிருந்த சகல ஜனங்களும் எழுந்து
யோர்தானைக் கடந்துபோனார்கள்; பொழுது
விடிகிறதற்குள்ளாக யோர்தானைக் கடவாத
23 வன் ஒருவனும் இல்லை. அகித்தோப்பேல்
தன் யோசனையின்படி நடக்கவில்லை என்று
கண்டபோது, தன் கழுதையின்மேல் சேணம்
வைத்து ஏறி, தன் ஊரிலிருக்கிற தன் வீட்
டுக்குப் போய், தன் வீட்டுக்காரியங்களை ஒழு
ங்குபடுத்தி, [5]நான்றுகொண்டு செத்தான்;
அவன் தகப்பன் கல்லறையில் அவனை அடக்
கம்பண்ணினார்கள்.
24 தாவீது [6]மகனாயீமுக்கு வந்தான்; அப்சலோ
மும் சகல இஸ்ரவேலரோடுங்கூட யோர்தா
25 னைக் கடந்தான். அப்சலோம், யோவாபுக்குப்
பதிலாக அமாசாவை இராணுவத்தலைவனாக்கி
னான்; இந்த அமாசா, நாகாசின் குமாரத்தியும்
செருயாவின் சகோதரியும் யோவாபின் அத்
தையுமாகிய [7]அபிகாயிலைப் †படைத்த இஸ்ர
வேலனாகிய எத்திரா என்னும் பேருள்ள ஒரு
26 மனுஷனுடைய குமாரனாயிருந்தான். இஸ்ர
வேல் ஜனங்களும் அப்சலோமும் கீலேயாத்
தேசத்திலே பாளயமிறங்கினார்கள்.
27 தாவீது மகனாயீமில் சேர்ந்தபோது, அம்
மோன் புத்திரரின் தேசத்து ரப்பா பட்டண
த்தானாகிய [8]சோபி என்னும் நாகாசின் குமார
னும், லோதேபார் ஊரானான அம்மியேலின்
குமாரன் மாகீரும், ரோகிலிம் ஊரானும் கீலே
28 யாத்தியனுமாகிய பர்சிலாவும், மெத்தைகளை
யும் ‡கலங்களையும், மண்பாண்டங்களையும்,
கோதுமையையும், வாற்கோதுமையையும், மா
வையும், வறுத்த பயற்றையும், பெரும் பயற்
றையும், சிறு பயற்றையும், வறுத்த சிறு பயற்
29 றையும், தேனையும், வெண்ணெயையும், ஆடு
களையும், பால்கட்டிகளையும், தாவீதுக்கும்
அவனோடிருந்த ஜனங்களுக்கும் சாப்பிடுகிற

[1] 16. 5
[2] யோசு. 2. 5, 6
* அழுகி
[3] யாத். 1. 19
[4] 15. 16. வச.
[5] சங். 5. 10; 55. 23, மத். 27. 5
[6] ஆதி. 32. 2
[7] 1 நாளா. 2. 16, 17
† சேர்ந்த
[8] 10. 1; 12. 29, 30
‡ பாத்திரங்களையும்
[9] 16. 2
[10] 15. 19
[11] 21. 17
[12] 12. வச.
§ தயவாய்
[13] யோசு. 17. 15, 18

தற்குக் கொண்டுவந்தார்கள்; [9]அந்த ஜனங்கள்
வனாந்தரத்திலே பசியும் இளைப்பும் தவனமு
மாயிருப்பார்கள் என்று இப்படிச் செய்தார்
கள்.

18
தாவீது தன்னோடிருந்த ஜனங்களை இலக்
கம் பார்த்து, அவர்கள்மேல் ஆயிரத்துக்கு
அதிபதிகளையும், நூற்றுக்கு அதிபதிகளையும்
வைத்து, பின்பு தாவீது ஜனங்களில் மூன் 2
றில் ஒரு பங்கை யோவாபின் வசமாகவும்,
மூன்றில் ஒரு பங்கைச் செருயாவின் குமார
னும் யோவாபின் சகோதரனுமான அபி
சாயின் வசமாகவும், மூன்றில் ஒரு பங்
கைக் கித்தியனாகிய ஈத்தாயின் வசமாக
வும் அனுப்பி: [10]நானும் உங்களோடே
கூடப் புறப்பட்டு வருவேன் என்று ராஜா
ஜனங்களிடத்தில் சொன்னான். ஜனங்களோ: 3
[11]நீர் புறப்படவேண்டாம்; நாங்கள் முறிந்தோ
டிப்போனாலும், அவர்கள் எங்கள் காரியத்தை
ஒருபொருட்டாக எண்ணமாட்டார்கள்; எங்க
ளில் பாதிப்பேர் செத்துப்போனாலும், எங்கள்
காரியத்தைப்பற்றிக் கவலைப்படமாட்டார்கள்;
நீரோ, எங்களில் பதினாயிரம்பேருக்குச் சரி;
நீர் பட்டணத்தில் இருந்துகொண்டு, எங்க
ளுக்கு உதவிசெய்கிறது எங்களுக்கு நலமாயி
யிருக்கும் என்றார்கள். அப்பொழுது ராஜா 4
அவர்களைப் பார்த்து: உங்களுக்கு நலமாய்த்
தோன்றுகிறதைச் செய்வேன் என்று சொல்
லி, ராஜா ஒலிமுகவாசல் ஓரத்திலே நின்றான்;
ஜனங்கள் எல்லாரும் நூறு நூறாகவும், [12]ஆயி
ரம் ஆயிரமாகவும் புறப்பட்டார்கள். ராஜா 5
யோவாபையும், அபிசாயையும், ஈத்தாயையும்
நோக்கி: பிள்ளையாண்டானாகிய அப்சலோமை
என்னிமித்தம் §மெதுவாய் நடப்பியுங்கள்
என்று கட்டளையிட்டான்; இப்படி ராஜா
அப்சலோமைக் குறித்து அதிபதிகளுக்கெல்
லாம் கட்டளையிட்டதை ஜனங்கள் எல்லாரும்
கேட்டிருந்தார்கள். ஜனங்கள் வெளியே இஸ் 6
ரவேலருக்கு எதிராகப் புறப்பட்ட பிற்பாடு,
[13]எப்பிராயீம் காட்டிலே யுத்தம் நடந்தது.
அங்கே இஸ்ரவேல் ஜனங்கள் தாவீதின் சேவ 7
கருக்கு முன்பாக முறிய அடிக்கப்பட்டார்
கள்; அங்கே அன்றையதினம் இருபதினாயி
ரம்பேர் மடியத்தக்கதாக பெரிய சங்காரம்
உண்டாயிற்று. யுத்தம் அந்தத் தேசம் எங் 8
கும் பரந்தது; அன்றையதினம் பட்டயம் பட்
சித்த ஜனங்களைப்பார்க்கிலும், காடு பட்சித்த
ஜனம் அதிகம். அப்சலோம் தாவீதின் சேவ 9
கருக்கு எதிர்ப்பட்டான்; அப்சலோம் கோவே
றுகழுதையின்மேல் ஏறிவரும்போது, அந்தக்
கோவேறுகழுதை சன்னல்பின்னலான ஒரு
பெரிய கர்வாலிமரத்தின்கீழ் வந்ததினால், அவ
னுடைய தலை கர்வாலிமரத்தில் மாட்டிக்கொ
ண்டு, அவன் வானத்துக்கும் பூமிக்கும் நடுவே
தொங்கினான்; அவன் ஏறியிருந்த கோவேறு
கழுதை அப்பாலே போயிற்று. அதை ஒரு 10
வன் கண்டு, யோவாபுக்கு அறிவித்து: இதோ,
அப்சலோமை ஒரு கர்வாலிமரத்திலே தொங்

11 கக் கண்டேன் என்றான். அப்பொழுது யோ
வாப் தனக்கு அதை அறிவித்தவனை நோக்கி:
நீ அதைக் கண்டாயே; பின்னை ஏன் அவனை
அங்கே வெட்டி, தரையிலே தள்ளிப்போட
வில்லை? நான் உனக்குப் பத்து வெள்ளிக்கா
சையும் ஒரு கச்சையையும் கொடுக்கக் கடமை
12 யுள்ளவனாயிருப்பேனே என்றான். அந்த மனு
ஷன் யோவாபை நோக்கி: என் கைகளில்
ஆயிரம் வெள்ளிக்காசு நிறுத்துக் கொடுக்கப்
பட்டாலும், நான் ராஜாவுடைய குமாரன்
மேல் என் கையை நீட்டமாட்டேன்; [1]பிள்ளை
யாண்டானாகிய அப்சலோமை நீங்கள் அவ
ரவர் காப்பாற்றுங்கள் என்று ராஜா உமக்கும்
அபிசாய்க்கும் ஈத்தாய்க்கும் எங்கள் காதுகள்
13 கேட்கக் கட்டளையிட்டாரே. ராஜாவுக்கு
ஒரு காரியமும் மறைவாயிருக்கமாட்டாது;
ஆதலால், நான் அதைச் செய்வேனாகில், என்
பிராணனுக்கே விரோதமாகச் செய்பவனா
வேன், நீரும் எனக்கு விரோதமாயிருப்பீர்
14 என்றான். ஆதலால் யோவாப்: நான் இப்படி
உன்னோடே பேசி, தாமதிக்கமாட்டேன்
என்று சொல்லி, தன் கையிலே மூன்று
வல்லயங்களை எடுத்துக்கொண்டு, அப்சலோம்
இன்னும் கர்வாலிமரத்தின் நடுவிலே உயி
ரோடே தொங்குகையில், அவைகளை அவன்
15 நெஞ்சிலே குத்தினான். அப்பொழுது யோவா
பின் ஆயுததாரிகளாகிய பத்து சேவகர் அப்ச
லோமைச் சூழ்ந்து அவனை அடித்துக்கொன்று
16 போட்டார்கள். அப்பொழுது யோவாப் எக்
காளம் ஊதி ஜனங்களை நிறுத்திப்போட்டபடி
யினால், ஜனங்கள் இஸ்ரவேலைப் பின்தொட
17 ருகிறதை விட்டுத் திரும்பினார்கள். அவர்கள்
அப்சலோமை எடுத்து, அவனைக் காட்டி
லுள்ள ஒரு பெரிய குழியிலே போட்டு,
[2]அவன்மேல் மகா பெரிய கற்குவியலைக் குவித்
தார்கள்; இஸ்ரவேலர் எல்லாரும் அவரவர்
தங்கள் கூடாரங்களுக்கு ஓடிப்போனார்கள்.
18 அப்சலோம் உயிரோடே இருக்கையில்: [3]என்
பேரை நினைக்கப்பண்ணும்படியாக எனக்குக்
குமாரன் இல்லை என்று சொல்லி, ராஜாவின்
பள்ளத்தாக்கிலே தனக்கென்று ஒரு தூணை
நிறுத்தி, அந்தத் தூணுக்குத் தன் பேரைத்
தரித்திருந்தான்; அது இந்நாள்வரைக்கும் அப்
சலோமின் அடையாளம் என்று சொல்லப்
படும்.
19 சாதோக்கின் குமாரனாகிய அகிமாஸ்:
**கர்த்தர்** ராஜாவை அவர் சத்துருக்களின்
கைக்கு நீங்கலாக்கி நியாயஞ்செய்தார் என்
னும் செய்தியை அவருக்குக் கொண்டு
20 போக, நான் ஓடட்டுமே என்றான். யோ
வாப் அவனை நோக்கி: இன்றையதினம் நீ
செய்தியைக் கொண்டுபோகக்கூடாது; இன்
னொருநாளிலே நீ செய்தியைக் கொண்டுபோ
கலாம்; ராஜாவின் குமாரன் செத்தபடியினால்,
இன்றைக்கு நீ செய்தியைக் கொண்டுபோக
21 வேண்டாம் என்று சொல்லி, யோவாப்
கூஷியை நோக்கி: நீ போய், கண்டதை ராஜா

[1] 5. வச.
[2] யோசு. 7. 26
[3] 14. 27. ஆதி. 14. 17
[4] பேர. 20. 4
[5] 2 இரா. 9. 17. ஏசா. 21. 11, 12. எசே. 33. 2-7
[6] 1 இரா. 1. 42. நீதி. 25. 13. ஏசா. 52. 7
* சலாமுண்டாக
[7] சங். 124. 6
† சமாசாரம்
‡ பழிவாங்கினார். நியா. 18. 7, 8

வுக்கு அறிவி என்றான்; கூஷி யோவாபை
வணங்கி ஓடினான். சாதோக்கின் குமாரனா 22
கிய அகிமாஸ் இன்னும் யோவாபை நோக்கி:
எப்படியானாலும் கூஷியின் பிறகாலே நானும்
ஓடட்டுமே என்று திரும்பக் கேட்டதற்கு,
யோவாப்: என் மகனே, சொல்லும்படி உன
க்கு நல்லசெய்தி இல்லாதிருக்கையில், நீ ஓட
வேண்டியது என்ன என்றான். அதற்கு 23
அவன்: எப்படியானாலும் நான் ஓடுவேன்
என்றான்; அப்பொழுது யோவாப்: ஓடு என்
றான்; அப்படியே அகிமாஸ் சமனான பூமி
வழியாயோடி கூஷிக்கு [4]முந்திக்கொண்டான்.
தாவீது இரண்டு [5]ஒலிமுகக் கெவுனிவாச 24
லுக்கு நடுவாக உட்கார்ந்திருந்தான்; ஜாமங்காக்
கிறவன் அலங்கத்திலிருக்கிற கெவுனியின்
மேல் நடந்து, தன் கண்களை ஏறெடுத்து,
இதோ, ஒரு மனுஷன் தனியே ஓடிவருகிற
தைக் கண்டு, கூப்பிட்டு ராஜாவுக்கு அறிவித் 25
தான். அப்பொழுது ராஜா: அவன் ஒருவ
னாய் வந்தால், அவன் வாயிலே நல்ல செய்தி
இருக்கும் என்றான்; அவன் ஓடி கிட்டவரும்
போது, ஜாமங்காக்கிறவன், வேறொருவன் 26
ஓடிவருகிறதைக் கண்டு: அதோ பின்னொரு
வன் தனியே ஓடிவருகிறான் என்று வாசல்
காக்கிறவனோடே கூப்பிட்டுச் சொன்னான்,
அப்பொழுது ராஜா: அவனும் நல்ல செய்தி
கொண்டுவருகிறவன் என்றான். மேலும் 27
ஜாமங்காக்கிறவன்: முந்தினவனுடைய ஓட்
டம் சாதோக்கின் குமாரன் அகிமாசுடைய
ஓட்டம்போலிருக்கிறது என்று எனக்குத்
தோன்றுகிறது என்றான்; அப்பொழுது ராஜா:
[6]அவன் நல்ல மனுஷன்; அவன் நல்ல செய்தி
சொல்ல வருகிறான் என்றான். அகிமாஸ் 28
வந்து ராஜாவை நோக்கி: *சமாதானம் என்று
சொல்லி, முகங்குப்புற விழுந்து, ராஜாவை
வணங்கி, [7]ராஜாவாகிய என் ஆண்டவனுக்கு
விரோதமாய்த் தங்கள் கைகளை எடுத்த மனு
ஷரை ஒப்புக்கொடுத்திருக்கிற உம்முடைய
தேவனாகிய **கர்த்தருக்கு** ஸ்தோத்திரம் உண்
டாவதாக என்றான். அப்பொழுது ராஜா: 29
பிள்ளையாண்டானாகிய அப்சலோம் சுகமாயி
ருக்கிறானா என்று கேட்டதற்கு, அகிமாஸ்
யோவாப் ராஜாவின் வேலைக்காரனையும் உம்
முடைய அடியானையும் அனுப்புகிறபோது,
ஒரு பெரிய சந்தடியிருந்தது; ஆனாலும் அது
இன்னதென்று தெரியாது என்றான். அப் 30
பொழுது ராஜா: நீ அங்கே போய் நில் என்
றான்; அவன் ஒரு பக்கத்தில் போய் நின்றான்.
இதோ, கூஷி வந்து: ராஜாவாகிய என் ஆண் 31
டவனே, †நற்செய்தி, இன்று **கர்த்தர்** உமக்கு
விரோதமாயெழும்பின எல்லாரின் கைக்கும்
உம்மை நீங்கலாக்கி ‡நியாயஞ்செய்தார் என்
றான். அப்பொழுது ராஜா கூஷியைப் பார் 32
த்து: பிள்ளையாண்டானாகிய அப்சலோம் சுக
மாயிருக்கிறானா என்று கேட்டதற்கு, கூஷி
என்பவன்: அந்தப் பிள்ளையாண்டானுக்கு
நடந்ததுபோல, ராஜாவாகிய என் ஆண்டவ

னுடைய சத்துருக்களுக்கும், [1]பொல்லாப்புச்
செய்ய உமக்கு விரோதமாய் எழும்புகிற யாவ
33 ருக்கும் நடக்கக்கடவது என்றான். அப்பொ
ழுது ராஜா மிகவும் கலங்கி, கெவுனிவாசலின்
மேல்வீட்டிற்குள் ஏறிப்போய் அழுதான்;
அவன் ஏறிப்போகையில்: [2]என் மகனாகிய அப்
சலோமே, என் மகனே, என் மகனாகிய அப்ச
லோமே, [3]நான் உனக்குப் பதிலாகச் செத்தே
னானால் நலமாயிருக்கும்; அப்சலோமே, என் மக
னே, என் மகனே, என்று சொல்லி அழுதான்.

**19** இதோ, ராஜா அப்சலோமுக்காக [4]அழுது
புலம்புகிறார் என்று யோவாபுக்கு அறிவிக்கப்
2 பட்டது. ராஜா தம்முடைய குமாரனுக்காக
மனம் நொந்திருக்கிறார் என்று அன்றையதி
னம் ஜனங்கள் கேள்விப்பட்டார்கள்; அதினி
மித்தம் அன்றையதினம் அந்த ஜெயம் ஜனத்
3 திற்கெல்லாம் துக்கமாய் மாறிற்று. யுத்தத்
தில் முறிந்தோடுகிறதினால் வெட்கப்பட்டுத்
திருட்டளவாய் வருகிறவர்கள்போல, ஜனங்
கள் அன்றையதினம் திருட்டளவாய்ப் பட்ட
4 ணத்திற்குள் வந்தார்கள். ராஜா [5]தன் முகத்தை
மூடிக்கொண்டு, மகா சத்தமாய்: என் மகனா
கிய அப்சலோமே, அப்சலோமாகிய என்
மகனே, என் மகனே என்று அலறிக்
5 கொண்டிருந்தான். அப்பொழுது யோவாப்
வீட்டிற்குள்ளே ராஜாவினிடத்தில் போய்:
இன்று உம்முடைய ஜீவனையும், உம்மு
டைய குமாரர் குமாரத்திகளின் ஜீவனையும்,
உம்முடைய மனைவிகளின் ஜீவனையும், உம்மு
டைய மறுமனையாட்டிகளின் ஜீவனையும் தப்
புவித்த உம்முடைய ஊழியக்காரர் எல்லாரின்
முகத்தையும் வெட்கப்படுத்தினீர்; இன்று நீர்
உம்மைப் பகைக்கிறவர்களைச் சிநேகித்து, உம்
மைச் சிநேகிக்கிறவர்களைப் பகைக்கிறீர் என்று
6 விளங்குகிறது. அதிபதிகளும் சேவகரும் உம
க்கு அற்பமானவர்கள் என்று இன்று விளங்
கப்பண்ணுகிறீர்; அப்சலோம் உயிரோடி
ருந்து, நாங்கள் அனைவரும் இன்று செத்துப்
போனால், அப்பொழுது உம்முடைய பார்
வைக்கு நலமாயிருக்கும் என்று இன்று அறி
7 ந்துகொண்டேன். இப்போதும் எழுந்திருந்து
வெளியே வந்து, உம்முடைய ஊழியக்கார
ரோடே *அன்பாய்ப் பேசும்; நீர் வெளியே
வாராதிருந்தால், இன்று இரவு ஒருவரும் உம்
மோடே தங்கியிருப்பதில்லை என்று கர்த்தர்
மேல் ஆணையிடுகிறேன்; அப்பொழுது உம்
முடைய சிறு வயதுமுதல் இதுவரைக்கும்
உமக்கு நேரிட்ட எல்லாத் தீமையைப்பார்க்கி
லும், அது உமக்கு அதிக தீமையாயிருக்கும்
8 என்றான். அப்பொழுது ராஜா எழுந்து
போய், ஒலிமுகவாசலில் உட்கார்ந்தான்;
இதோ, ராஜா ஒலிமுகவாசலில் உட்கார்ந்
திருக்கிறார் என்று சகல ஜனங்களுக்கும் அறி
விக்கப்பட்டபோது, ஜனங்கள் எல்லாரும் ரா
ஜாவுக்கு முன்பாக வந்தார்கள்; [6]இஸ்ரவேல
ரோவெனில் அவரவர் தங்கள் கூடாரங்க
ளுக்கு ஓடிப்போனார்கள்.

இஸ்ரவேலுடைய சகல கோத்திரங்களிலு 9
முள்ள சகல ஜனங்களுக்குள்ளும் வாக்குவா
தம் உண்டாகி, அவர்கள்: ராஜா நம்முடைய
சத்துருக்களின் கைக்கு நம்மை நீங்கலாக்கி
விட்டார், அவர்தானே பெலிஸ்தரின் கைக்கு
நம்மைத் தப்புவித்தார்; இப்போதோ அப்ச
லோமுக்குத் தப்ப, [7]தேசத்தைவிட்டு ஓடிப்
போனார். நமக்கு ராஜாவாக அபிஷேகம் 10
பண்ணிவைத்த அப்சலோம் யுத்தத்திலே செத்
தான்; இப்போதும் ராஜாவைத் திரும்ப
அழைத்துவராமல் நீங்கள் சும்மாயிருப்பா
னேன் என்று சொல்லிக்கொண்டார்கள்.

இப்படி இஸ்ரவேலர் எல்லாரும் பேசிக் 11
கொண்டிருக்கிறது, ராஜா இருக்கிற வீட்டிலே
அவனுக்குக் கேள்வியானபடியினால், தாவீது
ராஜா சாதோக் அபியத்தார் என்னும் ஆசாரி
யர்களிடத்துக்கு ஆள் அனுப்பி, நீங்கள் யூதா
வின் மூப்பரோடே பேசி: ராஜாவைத் தம்மு
டைய வீட்டுக்குத் திரும்ப அழைத்துவர நீங்
கள் மற்றவர்களுக்குப் பிந்திப்போவானேன்.
நீங்கள் என் சகோதரர், [8]நீங்கள் என் எலும்பும் 12
என் மாம்சமுமானவர்கள்; ராஜாவைத் திரும்ப
அழைத்துவர நீங்கள் பிந்தினவர்களாயிருப்பா
னேன் என்று சொல்லுங்கள். நீங்கள் அமா 13
சாவையும் நோக்கி: நீ என் எலும்பும் என்
மாம்சமும் அல்லவோ? [9]நீ யோவாபுக்குப் பதி
லாக எந்நாளும் எனக்கு முன்பாகப் படைத்
தலைவனாயிராவிட்டால், [10]தேவன் அதற்குச்
சரியாகவும் அதற்கு அதிகமாகவும் எனக்குச்
செய்யக்கடவர் என்று சொல்லச்சொன்னான்.
இப்படியே யூதாவின் சகல மனுஷருடைய 14
இருதயத்தையும் [11]ஒரு மனுஷனுடைய இருத
யத்தைப்போல் இணங்கப்பண்ணினதினால்,
அவர்கள் ராஜாவுக்கு: நீர் உம்முடைய எல்லா
ஊழியக்காரரோடும் திரும்பிவாரும் என்று
சொல்லி அனுப்பினார்கள். ராஜா திரும்ப வரு 15
கிறதற்கு யோர்தான்மட்டும் வந்தபோது, யூதா
கோத்திரத்தார் ராஜாவுக்கு எதிர்கொண்டு
போய், ராஜாவை யோர்தானைக் கடக்கப்
பண்ண [12]கில்கால்மட்டும் வந்தார்கள்.

பகூரிம் ஊரானான பென்யமீனனாகிய 16
கேராவின் மகன் [13]சீமேயியும் தீவிரித்து, யூதா
மனுஷரோடுங்கூடத் தாவீதுராஜாவுக்கு எதிர்
கொண்டுபோனான். அவனோடே பென்யமீன் 17
மனுஷர் ஆயிரம்பேரும், சவுலின் வீட்டு
வேலைக்காரனாகிய [14]சீபாவும், அவனோடே
கூட அவனுடைய பதினைந்து குமாரரும், அவ
னுடைய இருபது வேலைக்காரரும் இருந்தார்
கள்; அவர்கள் ராஜாவுக்கு முன்பாக யோர்
தானை வேகமாய்க் கடந்துபோனார்கள். அவர் 18
கள் ராஜாவின் வீட்டாரை இக்கரைப்படுத்த
வும், அவன் விரும்பும் காரியத்துக்கு உதவவும்,
ஒரு படகு இக்கரையிலே வந்தது; அப்பொ
ழுது கேராவின் குமாரனாகிய சீமேயி யோர்
தானைக் கடக்கப்போகிற ராஜாவுக்கு முன்பா
கத் தாழவிழுந்து, ராஜாவை நோக்கி: [15]என் 19
ஆண்டவன் என் அக்கிரமத்தை என்மேல்

1 நியா. 5. 31, தானி. 4. 19
2 19. 4
3 ரோ. 5, 7, 8; 9. 3
4 நீதி. 17. 25
5 15. 30; 18. 33
* ஆறுதலாய்=இன்பமாய், ஆதி. 34. 3
6 18. 6, 8
7 15. 14
8 5. 1
9 17. 25
10 ரூத். 1. 17
11 நியா. 20. 1
12 யோசு. 5. 9
13 16. 5, 1 இரா. 2. 8
14 9. 2, 10; 16. 1, 2
15 1 சாமு. 22. 15

சுமத்தாமலும், ராஜாவாகிய என் ஆண்டவன்
எருசலேமிலிருந்து புறப்பட்டு வருகிற நாளி
லே, [1]உமது அடியான் செய்த துரோகத்தை
ராஜா நினைக்காமலும், தமது மனதில் வைக்
20 காமலும் இருப்பாராக. உமது அடியானா
கிய நான் பாவஞ்செய்தேன் என்று அறிந்தி
ருக்கிறேன்; இப்போதும், இதோ, ராஜாவா
கிய என் ஆண்டவனுக்கு எதிர்கொண்டுவர,
யோசேப்பு வீட்டார் அனைவருக்கும் நான்
21 இன்று முந்திக்கொண்டேன் என்றான். அப்
பொழுது செருயாவின் குமாரனாகிய அபிசாய்
பிரதியுத்தரமாக: கர்த்தர் [2]அபிஷேகம்பண்ணி
னவரைச் சீமேயி தூஷித்தபடியினால், அவனை
அதற்காகக் கொல்லவேண்டாமா என்றான்.
22 அதற்கு தாவீது: செருயாவின் குமாரரே,
இன்று நீங்கள் எனக்குச் சத்துருக்களாகிற
தற்கு, [3]எனக்கும் உங்களுக்கும் என்ன?
[4]இன்று இஸ்ரவேலில் ஒருவன் கொல்லப்பட
லாமா? இன்று நான் இஸ்ரவேலின்மேல் ரா
ஜாவானேன் என்று எனக்குத் தெரியாதா
23 என்று சொல்லி, ராஜா சீமேயியைப் பார்த்து:
[5]நீ சாவதில்லை என்று அவனுக்கு ஆணையிட்
டான்.
24 சவுலின் குமாரனாகிய [6]மேவிபோசேத்தும்
ராஜாவுக்கு எதிர்கொண்டுவந்தான்; ராஜா
போனநாள்முதல், அவன் சமாதானத்தோடே
திரும்பிவருகிற நாள்மட்டும், அவன் தன் கால்
களைச் சுத்தம் பண்ணவுமில்லை, தன் தாடி
யைச் சவரம் பண்ணவுமில்லை; தன் வஸ்திரங்
25 களை வெளுக்கவுமில்லை. அவன் எருசலேமி
லிருந்து ராஜாவுக்கு எதிர்கொண்டு வருகிற
போது, ராஜா அவனைப் பார்த்து: [7]மேவிபோ
சேத்தே, நீ என்னோடேகூட வராமல்போனது
26 என்ன என்று கேட்டான். அதற்கு அவன்:
ராஜாவாகிய என் ஆண்டவனே, என் வேலைக்
காரன் என்னை மோசம் போக்கினான்; உமது
அடியானாகிய நான் முடவனானபடியினால்,
ஒரு கழுதையின்மேல் சேணம்வைத்து அதின்
மேல் ஏறி, ராஜாவோடேகூடப் போகிறேன்
27 என்று அடியேன் சொன்னேன். அவன் ரா
ஜாவாகிய என் ஆண்டவனிடத்தில் உமது
அடியான்மேல் [8]வீண்பழி சொன்னான்; ராஜா
வாகிய என் ஆண்டவனோ [9]தேவனுடைய
தூதனைப்போல இருக்கிறார்; உமது பார்வை
க்கு நலமாய்த் தோன்றுகிறபடி செய்யும்.
28 ராஜாவாகிய என் ஆண்டவனுக்கு முன்பாக
என் தகப்பன் வீட்டார் எல்லாரும் சாவுக்கு
ஏதுவாயிருந்தார்களே ஒழிய, மற்றப்படி
அல்ல; [10]ஆனாலும் உமது பந்தியிலே சாப்பிடு
கிறவர்களோடே உமது அடியேனை வைத்தீர்;
இன்னும் நான் ராஜாவிடத்தில் முறையிட,
இனி எனக்கு என்ன நியாயம் இருக்கிறது
29 என்றான். அப்பொழுது ராஜா அவனைப்
பார்த்து: உன் காரியத்தைக்குறித்து அதிக
மாய்ப் பேசுவானேன்? நீயும் சீபாவும் நிலத்
தைப் பங்கிட்டுக்கொள்ளுங்கள் என்று நான்
30 சொல்லுகிறேன் என்றான். அதற்கு மேவி

1 16. 5, 6. ழ
2 யாத். 22. 28
3 16. 10
4 1 சாமு. 11. 13
5 2 இரா. 2. 8, 9, 37, 46
6 9. 6
7 16. 17
8 16. 3. எரே. 9. 4
9 14. 17, 20
10 9. 7, 10, 13
11 1 இரா. 2. 7
12 17. 27
13 சங். 90. 10
14 1 இரா. 2. 7. எரே. 41. 17
15 ஆதி. 31. 55. 1 தெச. 5. 26

போசேத் ராஜாவை நோக்கி: ராஜாவாகிய என்
ஆண்டவன் சமாதானத்தோடே தம்முடைய
வீட்டிற்கு வந்திருக்கும்போது, அவனே
எல்லாவற்றையும் எடுத்துக்கொள்ளட்டும் என்
றான்.
கீலேயாத்தியனாகிய [11]பர்சிலாவும் ரோகிலி 31
மிலிருந்து வந்து, யோர்தான்மட்டும் ராஜாவை
வழிவிட்டனுப்ப, அவனோடேகூட யோர்தா
னின் துறைமட்டும் கடந்துவந்தான். பர்சி 32
லா எண்பது வயதுசென்ற கிழவனாயிருந்
தான்; [12]ராஜா மகனாயீமிலே தங்கியிருக்குமட்
டும் அவனைப் பராமரித்து வந்தான்; அவன்
மகா பெரிய மனுஷனாயிருந்தான். ராஜா பர் 33
சிலாவை நோக்கி: நீ என்னோடேகூடக் கட
ந்துவா; எருசலேமிலே உன்னை என்னிடத்
தில் வைத்து பராமரிப்பேன் என்றான். பர் 34
சிலா ராஜாவைப் பார்த்து: நான் ராஜாவோ
டேகூட எருசலேமுக்கு வர, நான் இன்னும்
உயிரோடிருக்கும் ஆயுசின் நாட்கள் எம்மாத்
திரம்? இப்பொழுது நான் [13]எண்பது வய 35
துள்ளவன்; இனி நலமானது இன்னதென்
றும் தீதானது இன்னதென்றும் எனக்
குத் தெரியுமோ? புசிக்கிறதும் குடிக்கிறதும்
உமது அடியேனுக்கு ருசிகரமாயிருக்குமோ?
சங்கீதக்காரர் சங்கீதக்காரிகளுடைய சத்த
த்தை இனிக் கேட்கக்கூடுமோ? உமது அடி
யேனாகிய நான் இனி ராஜாவாகிய என் ஆண்
டவனுக்குப் பாரமாயிருக்கவேண்டியது
என்ன? அடியேன் கொஞ்சதூரம் யோர்தான் 36
மட்டும் ராஜாவோடேகூட வருவேன்; அதற்கு
ராஜா இவ்வளவு பெரிய உபகாரத்தை எனக்
குச் செய்யவேண்டியது என்ன? நான் என் 37
ஊரிலே மரித்து, என் தாய் தகப்பன்மார் கல்
லறையிலே அடக்கம்பண்ணப்படும்படிக்கு,
உமது அடியான் திரும்பிப்போகட்டும்; ஆனா
லும், இதோ, உமது அடியானாகிய [14]கிம்காம்
ராஜாவாகிய என் ஆண்டவனோடேகூட வரு
வான்; உம்முடைய பார்வைக்கு நலமானபடி
அவனுக்குச் செய்யும் என்றான். அப்பொ 38
ழுது ராஜா: கிம்காம் என்னோடேகூட வரட்
டும்; உன் பார்வைக்கு நலமானபடியே நான்
அவனுக்கு நடப்பித்து; நீ என்னிடத்தில்
வேண்டிக்கொள்வதையெல்லாம் நான் உனக்
குச் செய்வேன் என்றான். ஜனங்கள் எல்லா 39
ரும் யோர்தானைக் கடந்தபோது, [15]ராஜா பர்சி
லாவை முத்தமிட்டு அவனை ஆசீர்வதித்து,
தானும் கடந்துபோனான்; அவனோ தன்னி
டத்திற்குத் திரும்பிப் போய்விட்டான். ரா 40
ஜா கடந்து, கில்கால்மட்டும் போனான்; கிம்
காம் அவனோடேகூடக் கடந்துவந்தான்; யூதா
ஜனம் அனைத்தும், இஸ்ரவேலில் பாதிஜன
மும், ராஜாவை இக்கரைப்படுத்தி வந்தபின்பு,
இதோ, இஸ்ரவேல் மனுஷர் எல்லாரும் 41
ராஜாவினிடத்தில் வந்து, ராஜாவை நோக்கி:
எங்கள் சகோதரராகிய யூதா மனுஷர் திருட்
டளவாய் உம்மை அழைத்துவந்து, ராஜாவை
யும், அவர் வீட்டாரையும், அவரோடேகூட

இருக்கிற தாவீதின் மனுஷர் அனைவரையும்,
[1]யோர்தானைக் கடக்கப்பண்ணினது என்ன
42 என்றார்கள். அப்பொழுது யூதா மனுஷர்
எல்லாரும் இஸ்ரவேல் மனுஷருக்குப் பிரதி
யுத்தரமாக: ராஜா எங்களைச் [2]சேர்ந்தவரான
படியினால் இதைச் செய்தோம்; இதற்காக
நீங்கள் கோபிப்பானேன்? நாங்கள் ராஜாவின்
கையிலே எதாகிலும் வாங்கித் தின்றோமோ?
எங்களுக்கு வெகுமானம் கொடுக்கப்பட்
43 டதோ? என்றார்கள். இஸ்ரவேல் மனுஷரோ
யூதா மனுஷருக்குப் பிரதியுத்தரமாக: ராஜா
வினிடத்தில் எங்களுக்குப் பத்துப்பங்கு இருக்
கிறது; உங்களைப்பார்க்கிலும் எங்களுக்குத்
தாவீதினிடத்தில் அதிக உரிமை உண்டு;
பின்னை என் எங்களை அற்பமாய் எண்ணி
னீர்கள்; எங்கள் ராஜாவைத் திரும்ப அழை
த்துவரவேண்டும் என்று முந்திச்சொன்னவர்
கள் நாங்கள் அல்லவா என்றார்கள்; [3]ஆனா
லும் இஸ்ரவேல் மனுஷரின் பேச்சைப்பார்க்
கிலும் யூதா மனுஷரின் பேச்சு பலத்தது.

**20** அப்பொழுது பென்யமீன் மனுஷனான
பிக்கிரியின் குமாரனாகிய சேபா என்னும்
பேருள்ள பேலியாளின் மனுஷன் ஒருவன்
தற்செயலாய் அங்கே இருந்தான்; அவன்
எக்காளம் ஊதி: [4]எங்களுக்குத் தாவீதினிடத்
தில் பங்கும் இல்லை, ஈசாயின் குமாரனிடத்
தில் எங்களுக்குச் சுதந்தரமும் இல்லை; இஸ்ர
வேலே, [5]நீங்கள் அவரவர் தங்கள் கூடாரங்க
2 ளுக்குப் போய்விடுங்கள் என்றான். அப்பொ
ழுது இஸ்ரவேல் மனுஷர் எல்லாரும் தாவீ
தை விட்டுப் பின்வாங்கி, பிக்கிரியின் குமார
னாகிய சேபாவைப் பின்பற்றிப் போனார்கள்;
யோர்தான் தொடங்கி எருசலேம்மட்டுமுள்ள
யூதாமனுஷர் தங்கள் ராஜாவைச் சார்ந்திருந்
தார்கள்.
3 தாவீது எருசலேமிலுள்ள தன் வீட்டுக்கு
வந்தபோது, வீட்டைக் காக்க ராஜா பின்
வைத்துப்போன [6]பத்து மறுமனையாட்டிகளை
யும் வருவித்து, அவர்களை ஒரு காவல் வீட்
டிலே வைத்து பராமரித்தான்; அப்புறம் அவர்
களிடத்தில் அவன் பிரவேசிக்கவில்லை; அப்
படியே அவர்கள் சாகிற நாள்மட்டும் அடைக்
கப்பட்டு, உயிரோடிருக்கிற நாளெல்லாம்
விதவைகள்போல் இருந்தார்கள்.
4 பின்பு ராஜா அமாசாவைப் பார்த்து: [7]நீ
யூதா மனுஷரை மூன்று நாளைக்குள்ளே என்
னிடத்தில் வரவழைத்து, நீயும் கூடவந்து
5 இருக்கவேண்டும் என்றான். அப்பொழுது
அமாசா: யூதாவை அழைப்பிக்கப்போய்,
தனக்குக் குறித்த காலத்திலே வராமல் தாமதித்
6 திருந்தான். அப்பொழுது தாவீது அபிசா
யைப் பார்த்து: அப்சலோமைப்பார்க்கிலும்
பிக்கிரியின் குமாரனாகிய சேபா, இப்பொ
ழுது நமக்குப் பொல்லாப்புச் செய்வான்;
அவன் அரணான பட்டணங்களில் வந்தடை
ந்து, நம்முடைய கண்களுக்குத் தப்பிப்போ
காதபடிக்கு, [8]நீ உன் எஜமானுடைய சேவக
ரைக் கூட்டிக்கொண்டு, அவனைப் பின்தொ
டர்ந்துபோ என்றான். அப்படியே யோவா 7
பின் மனுஷரும், [9]கிரேத்தியரும் பிலேத்திய
ரும், சகல பலசாலிகளும் அவன் பிறகாலே
புறப்பட்டு, பிக்கிரியின் குமாரனாகிய சேபா
வைப் பின்தொடர எருசலேமிலிருந்து போ
னார்கள். அவர்கள் கிபியோன் கிட்ட இருக் 8
கிற பெரிய கல்லண்டையிலே வந்தபோது,
அமாசா அவர்களுக்கு எதிர்ப்பட்டுவந்தான்;
யோவாபோ, தான் உடுத்திக்கொண்டிருக்கிற
தன் சட்டையின்மேல் ஒரு கச்சையைக் கட்
டிக்கொண்டிருந்தான்; அதில் உறையோடே
ஒரு பட்டயம் அவன் இடுப்பண்டையிலே
தொங்கிற்று; அவன் புறப்படுகையில் அது
விழுந்தது. அப்பொழுது யோவாப் அமா 9
சாவைப் பார்த்து: என் சகோதரனே, சுகமா
யிருக்கிறாயா என்று சொல்லி, [10]அமாசாவை
முத்தம் செய்யும்படி, தன் வலதுகையினால்
அவன் தாடியைப் பிடித்து, தன் கையிலி 10
ருக்கிற பட்டயத்திற்கு அமாசா எச்சரிக்கை
யாயிராதபோது, [11]யோவாப் அவனை அவன்
குடல்கள் தரையிலே சரிந்துபோகத்தக்கதாய்,
அதினால் வயிற்றிலே ஒரே குத்தாக குத்தி
னான்; அவன் செத்துப்போனான்; அப்பொ
ழுது யோவாபும் அவன் சகோதரனாகிய அபி
சாயும் பிக்கிரியின் குமாரனாகிய சேபாவைப்
பின்தொடர்ந்தார்கள். யோவாபுடைய வாலிப 11
ரில் ஒருவன் செத்தவனண்டையிலே நின்று,
யோவாபின்மேல் பிரியப்படுகிறவன் எவனோ,
தாவீதின் பட்சத்தில் இருக்கிறவன் எவனோ,
அவன் யோவாபைப் பின்பற்றிப்போவானாக
என்றான். அமாசா நடுவழியிலே இரத்தத் 12
திலே புரண்டு கிடந்தபடியினால், ஜனங்கள்
எல்லாரும் தரித்து நிற்பதை அவன் கண்டு,
அமாசாவை வழியிலிருந்து வயலிலே இழுத்
துப்போட்டான்; அவனண்டையில் வருகிற
வர்கள் எல்லாரும் தரித்துநிற்பதைக் கண்டு,
ஒரு வஸ்திரத்தை அவன்மேல் போட்டான்.
அவன் வழியிலிருந்து எடுத்துப்போடப்பட்ட 13
பிற்பாடு, எல்லாரும் கடந்து, பிக்கிரியின்
குமாரனாகிய சேபாவைத் தொடர, யோவா
புக்குப் பின்சென்றார்கள். அவன் இஸ்ர 14
வேல் கோத்திரங்களையெல்லாம் சுற்றி, பெத்
மாக்காவாகிய [12]ஆபேல்மட்டாகவும், பேரீமின்
கடைசிமட்டாகவும் வந்திருந்தான்; அவ்வி
டத்தாரும் கூடி, தாங்களும் அவனுக்குப்
பின்சென்றார்கள். அவர்கள்போய் பெத்மாக் 15
காவாகிய ஆபேலிலே அவனை முற்றிக்கை
போட்டு, பட்டணத்திற்கு எதிராகத் [13]தெற்று
வனைக்கும் கொத்தளம்போட்டார்கள்; யோவா
போடே இருக்கிற ஜனங்கள் எல்லாரும்
அலங்கத்தை விழப்பண்ணும்படி அழிக்க எத்
தனம்பண்ணினார்கள். அப்பொழுது புத்தி 16
யுள்ள ஒரு ஸ்திரீ பட்டணத்திலிருந்து சத்த
மிட்டு: கேளுங்கள், கேளுங்கள்; நான் யோ
வாபோடே பேசவேண்டும்; அவனை இங்கே
கிட்ட வரச்சொல்லுங்கள் என்றாள். அவன் 17

[1] 15. வச.
[2] 12. வச.
[3] நியா. 8. 1; 12. 1
[4] 19. 43
[5] 1 இரா. 12. 16. 2 நாளா. 10. 16
[6] 15. 16; 16. 21, 22
[7] 19. 13
[8] 11. 11. 1 இரா. 1. 33
[9] 8. 18. 1 இரா. 1. 38
[10] மத். 26. 49. லூக். 22. 47
[11] 2. 23. 1 இரா. 2. 5.
[12] 1 இரா. 15. 29
[13] 2 இரா. 19. 32

அவளுக்குச் சமீபத்தில் வந்தபோது, அந்த
ஸ்திரீ: நீர்தானா யோவாப் என்று கேட்டாள்;
அவன் நான்தான் என்றான்; அப்பொழுது,
அவள் அவனைப் பார்த்து: உமது அடியா
ளின் வார்த்தைகளைக் கேளும் என்றாள்;
18 அவன்: கேட்கிறேன் என்றான். அப்பொ
ழுது அவள்: [1]பூர்வகாலத்து ஜனங்கள் ஆபே
லிலே விசாரித்தால் வழக்குத்தீரும் என்பார்
19 கள். இஸ்ரவேலிலே நான் சமாதானமும்
உண்மையுமுள்ளவளாயிருக்கையில், நீர் இஸ்ர
வேலிலே தாய் பட்டணமாயிருக்கிறதை நிர்
மூலமாக்கப் பார்க்கிறீரோ? நீர் **கர்த்தருடைய**
[2]சுதந்தரத்தை விழுங்கவேண்டியது என்ன
20 என்றாள். யோவாப் பிரதியுத்தரமாக: விழு
ங்கவேண்டும் அழிக்கவேண்டும் என்கிற
21 ஆசை எனக்கு வெகுதூரமாயிருப்பதாக. காரி
யம் அப்படியல்ல, பிக்கிரியின் குமாரனாகிய
சேபா என்னும் பேருள்ள எப்பிராயீம் பர்வ
தத்தானாயிருக்கிற ஒரு மனுஷன், ராஜாவா
கிய தாவீதுக்கு விரோதமாய்த் தன் கையை
ஓங்கினான்; அவனைமாத்திரம் ஒப்புக்கொடுங்
கள்; அப்பொழுது பட்டணத்தை விட்டுப்
போவேன் என்றான். அப்பொழுது அந்த
ஸ்திரீ யோவாபைப் பார்த்து: இதோ, அவன்
தலை மதிளின்மேலிருந்து உம்மிடத்திலே போ
22 டப்படும் என்று சொல்லி, அவள் ஜனங்க
ளிடத்தில் போய் [3]புத்தியாய்ப் பேசினதினால்,
அவர்கள் பிக்கிரியின் குமாரனாகிய சேபா
வின் தலையை வெட்டி, யோவாபிடத்திலே
போட்டார்கள்; அப்பொழுது அவன் எக்கா
ளம் ஊதினான்; அவரவர் பட்டணத்தை விட்
டுக் கலைந்து, தங்கள் கூடாரங்களுக்குப் புறப்
பட்டுப் போனார்கள், யோவாபும் ராஜாவிடத்
துக்குப் போகும்படி எருசலேமுக்குத் திரும்
பினான்.
23 யோவாப் [4]இஸ்ரவேலுடைய எல்லா இரா
ணுவத்தின்மேலும், யோய்தாவின் குமாரனா
கிய பெனாயா கிரேத்தியர்மேலும் பிலேத்தி
24 யர்மேலும் தலைவராயிருந்தார்கள். அதோராம்
[5]பகுதிகளை வாங்குகிறவனும், அகிலூதின்
25 குமாரனாகிய யோசபாத் மந்திரியும், சேவா
சம்பிரதியும், சாதோக்கும் அபியத்தாரும் ஆசா
26 ரியருமாயிருந்தார்கள். யயீரியனாகிய ஈராவும்
தாவீதுக்குப் பிரதானியாயிருந்தான்.

**21** தாவீதின் நாட்களில் மூன்று வருஷம்
ஓயாத பஞ்சம் உண்டாயிருந்தது; அப்பொ
ழுது தாவீது **கர்த்தருடைய** [6]சமுகத்தில் விசா
ரித்தான். **கர்த்தர்**: கிபியோனியரைக் கொன்
றுபோட்ட சவுலுக்காகவும், இரத்தப்பிரிய
ரான அவன் வீட்டாருக்காகவும் இது உண்
2 டாயிற்று என்றார். அப்பொழுது ராஜா: கிபி
யோனியரை அழைப்பித்தான்; [7]கிபியோனி
யரோ, இஸ்ரவேல் புத்திரராயிராமல் எமோ
ரியரில் மீதியாயிருந்தவர்கள்; அவர்களுக்கு
இஸ்ரவேல் புத்திரர் ஆணையிட்டிருந்தும்,
சவுல் இஸ்ரவேல் புத்திரருக்காகவும் யூதாவுக்
காகவும் காண்பித்த வைராக்கியத்தினால் அவர்
களை வெட்ட வகைதேடினான். ஆகையால் 3
தாவீது கிபியோனியரைப் பார்த்து: நான் உங்
களுக்குச் செய்யவேண்டியது என்ன? நீங்
கள் **கர்த்தருடைய** [8]சுதந்தரத்தை ஆசீர்வதிக்
கும்படிக்கு, நான் செய்யவேண்டிய பிராயச்
சித்தம் என்ன என்று கேட்டான். அப்பொ 4
ழுது கிபியோனியர் அவனைப் பார்த்து: சவு
லோடும் அவன் வீட்டாரோடும் எங்களுக்கு
இருக்கிற காரியத்திற்காக எங்களுக்கு வெள்
ளியும் பொன்னும் தேவையில்லை; இஸ்ரவே
லில் ஒருவனைக் கொன்றுபோடவேண்டும்
என்பதும் எங்கள் விருப்பம் அல்ல என்றார்
கள். அப்பொழுது அவன்: அப்படியானால்,
நான் உங்களுக்கு என்ன செய்யவேண்டும்
என்று சொல்லுகிறீர்கள் என்று கேட்டான்.
அவர்கள் ராஜாவை நோக்கி: நாங்கள் இஸ்ர 5
வேலின் எல்லையிலெங்கும் நிலைக்காதபடிக்கு,
அழிந்துபோக எவன் எங்களை நிர்மூலமாக்கி
எங்களுக்குப் பொல்லாப்புச் செய்ய நினைத்
தானோ, அவன் குமாரரில் எழுபேர் **கர்த்தர்** 6
தெரிந்துகொண்ட சவுலின் ஊராகிய [9]கிபியா
விலே நாங்கள் அவர்களைக் **கர்த்தருக்கென்று**
தூக்கிப்போட, எங்களுக்கு ஒப்புக்கொடுக்கப்
படவேண்டும் என்றார்கள். நான் அவர்களை
ஒப்புக்கொடுப்பேன் என்று ராஜா சொன்
னான். ஆனாலும் தாவீதும் சவுலின் குமார 7
னாகிய யோனத்தானும் **கர்த்தரைக்**கொண்டு
இட்ட [10]ஆணையினிமித்தம், ராஜா சவுலின்
குமாரனாகிய யோனத்தானின் மகன் மேவி
போசேத்தைத் தப்பவிட்டு, ஆயாவின் குமா 8
ரத்தியாகிய [11]ரிஸ்பாள் சவுலுக்குப் பெற்ற
அவளுடைய இரண்டு குமாரராகிய அர்மோ
னியையும் மேவிபோசேத்தையும், சவுலின்
குமாரத்தியாகிய மீகாள் மேகோலாத்தியனான
பர்சிலாவின் குமாரனாகிய [12]ஆதரியேலுக்குப்
பெற்ற அவளுடைய ஐந்து குமாரரையும்
பிடித்து, அவர்களைக் கிபியோனியர் கையில் 9
ஒப்புக்கொடுத்தான்; அவர்களைக் **கர்த்தருடைய**
சமுகத்தில் [13]மலையின்மேல் தூக்கிப்போட்டார்
கள். அப்படியே அவர்கள் எழுபேரும் ஒரு
மிக்க விழுந்தார்கள்; வாற்கோதுமை அறுப்பு
துவக்குகிற அறுப்புக்காலத்தின் முந்தின நாட்
களிலே அவர்கள் கொன்றுபோடப்பட்டார்
கள். அப்பொழுது ஆயாவின் குமாரத்தியாகிய 10
[14]ரிஸ்பாள் இரட்டுப்புடவையை எடுத்துக்
கொண்டுபோய், அதைப் பாறையின்மேல்
விரித்து, [15]அறுப்புநாளின் துவக்கம் முதற்
கொண்டு வானத்திலிருந்து அவர்கள்மேல்
மழைபெய்யுமட்டும் பகலில் ஆகாயத்துப் பற
வைகளாகிலும் இரவில் காட்டு மிருகங்களா
கிலும் அவர்கள்மேல் விழவொட்டாதிருந்
தாள். ஆயாவின் குமாரத்தியாகிய ரிஸ்பாள் 11
என்னும் சவுலின் மறுமனையாட்டி செய்தது
தாவீதுக்கு அறிவிக்கப்பட்டபோது, தாவீது 12
போய், பெலிஸ்தர் கில்போவாவிலே சவுலை
வெட்டினபோது, [16]பெத்சானின் வீதியிலே
தூக்கிப்போடப்பட்டதும், கீலேயாத்திலுள்ள

1 உபா. 20. 11.
2 21. 3. 1 சாமு. 26. 19
3 பிர. 9. 14, 15
4 8. 16–18
5 1 இரா. 4. 6
6 எண். 27. 21
7 யோசு. 9. 3, 15–17
8 20. 19
9 1 சாமு. 10. 26
10 1 சாமு. 18. 3
11 3. 7
12 1 சாமு. 18. 19
13 6. 17
14 8, வச. 3. 7
15 உபா. 21. 23
16 1 சாமு. 31. 10–13

யாபேஸ் பட்டணத்தார் அங்கே போய்த் திருட்
டளவாய்க் கொண்டுவந்ததுமான சவுலின்
எலும்புகளையும், அவன் குமாரனான யோனத்
தானின் எலும்புகளையும், அவர்களிடத்திலி
13 ருந்து எடுத்து, அங்கேஇருந்து அவைகளைக்
கொண்டுவந்து, தூக்கிப்போடப்பட்டவர்க
ளின் எலும்புகளையும் அவைகளோடே சேர்
14 த்து, சவுலின் எலும்புகளையும் அவன் குமா
ரனாகிய யோனத்தானின் எலும்புகளையும்,
பென்யமீன் தேசத்துச் [1]சேலா ஊரிலிருக்
கிற அவன் தகப்பனாகிய கீசின் கல்லறையில்
அடக்கம்பண்ணுவித்தான்; ராஜா கட்டளை
யிட்டபடியெல்லாம் செய்தார்கள்; அதற்குப்
பின்பு தேவன் தேசத்திற்காகச் செய்யப்பட்ட
வேண்டுதலைக் [2]கேட்டருளினார்.
15 பின்பு பெலிஸ்தர் இஸ்ரவேலின்மேல் யுத்
தம் செய்தார்கள்; அப்பொழுது தாவீதும் அவ
னோடேகூட அவன் சேவகரும்போய், பெலி
ஸ்தரோடு யுத்தம் பண்ணினார்கள்; தாவீது
16 விடாய்த்துப்போனான். அப்பொழுதுமுந்நூறு
சேக்கல் நிறை வெண்கலமான ஈட்டியைப்
பிடிக்கிறவனும், புதுப் பட்டயத்தை அரையி
லே கட்டிக்கொண்டவனுமான இஸ்பிபெ
னோப் என்னும் இராட்சத புத்திரரில் ஒருவன்
தாவீதை வெட்டவேண்டும் என்று இருந்தான்.
17 செருயாவின் குமாரனாகிய அபிசாய் ராஜாவு
க்கு உதவியாக வந்து, பெலிஸ்தனை வெட்டிக்
கொன்றுபோட்டான். அப்பொழுது தாவீ
தின் மனுஷர்: [3]இஸ்ரவேலின் விளக்கு [4]அணை
ந்துபோகாதபடிக்கு, நீர் இனி எங்களோடே
யுத்தத்திற்குப் புறப்படவேண்டாம் என்று
அவனுக்கு ஆணையிட்டுச் சொன்னார்கள்.
18 அதற்குப்பின்பு பெலிஸ்தரோடே திரும்ப
வும் கோபிலே யுத்தம் நடந்தது; ஊசாத்திய
னாகிய சிபேக்காய் இராட்சத சந்ததியான
19 சாப்பை வெட்டிப்போட்டான். பெலிஸ்த
ரோடு இன்னும் வேறொரு யுத்தம் கோபிலே
உண்டானபோது, யாரெயோர்கிமின் குமார
னாகிய எல்க்கானான் என்னும் பெத்லகேமி
யன் [5]காத் ஊரானாகிய கோலியாத்தின் சகோ
தரனை வெட்டினான்; அவன் ஈட்டித்தாங்கா
னது நெய்கிறவர்களின் படைமரம் அவ்வ
20 ளவு பெரிதாயிருந்தது. இன்னும் ஒரு யுத்
தம் காத் ஊரிலே நடந்தபோது, அங்கே நெட்
டையனான [6]ஒரு மனுஷன் இருந்தான்; அ
வன் கைகளில் அவ்வாறு விரல்களும் அவன்
கால்களில் அவ்வாறு விரல்களும், ஆக இரு
பத்து நான்கு விரல்களுள்ளவன்; இவனும்
21 இராட்சத பிறவியாயிருந்து, இஸ்ரவேலை
நிந்தித்தான்; [7]தாவீதின் சகோதரனான சிமேயா
வின் குமாரனாகிய யோனத்தான் அவனை
22 வெட்டினான். இந்த நாலுபேரும் காத்தூரிலே
இராட்சதனுக்குப் பிறந்தவர்கள்; இவர்கள்
தாவீதின் கையினாலும் அவன் சேவகரின்
கையினாலும் மடிந்தார்கள்.

**22** **கர்த்தர்** தாவீதை அவனுடைய எல்லாச்
சத்துருக்களின் கைக்கும், சவுலின் கைக்
கும், நீங்கலாக்கி விடுவித்தபோது, [8]அவன்
**கர்த்தருக்கு** முன்பாகப் பாடின பாட்டு:
**கர்த்தர்** என் [9]கன்மலையும், என் கோட்டை 2
யும், என் இரட்சகருமானவர். தேவன் நான் 3
நம்பியிருக்கிற துருக்கமும், [10]என் கேடகமும்,
என் இரட்சண்ணிய [11]கொம்பும், என் உயர்ந்த
[12]அடைக்கலமும், என் புகலிடமும், என்
இரட்சகருமானவர்; என்னை வல்லடிக்கு நீங்க
லாக்கி இரட்சிக்கிறவர் அவரே. ஸ்துதிக் 4
குப் பாத்திரராகிய **கர்த்தரை** நோக்கிக் கூப்
பிடுவேன்; அதனால் என் சத்துருக்களுக்கு
நீங்கலாகி இரட்சிக்கப்படுவேன்.
மரண *அலைகள் என்னைச் சூழ்ந்துகொ 5
ண்டு, துர்ச்சனப்பிரவாகம் என்னைப் பயப்படு
த்தினது. பாதாளக் கட்டுகள் என்னைச் சூழ்ந்து 6
கொண்டது; மரணக்கண்ணிகள் என்மேல் வி
ழுந்தது. எனக்கு உண்டான [13]நெருக்கத்திலே 7
**கர்த்தரை** நோக்கிக் கூப்பிட்டு, என் தேவனை
நோக்கி அபயமிட்டேன்; தமது [14]ஆலயத்தி
லிருந்து என் சத்தத்தைக் கேட்டார்; என்
கூப்பிடுதல் அவர் செவிகளில் ஏறிற்று. அப் 8
பொழுது பூமி அசைந்து [15]அதிர்ந்தது; அவர்
கோபங்கொண்டபடியால் வானத்தின் [16]அஸ்
திபாரங்கள் குலுங்கி அசைந்தது. அவர் நாசி 9
யிலிருந்து பட்சிக்கிற புகை எழும்பிற்று;
[17]அவர் வாயிலிருந்து அக்கினி புறப்பட்டது,
அதனால் தழல் மூண்டது. வானங்களைத் 10
[18]தாழ்த்தி இறங்கினார்; அவர் பாதங்களின்
கீழ் [19]காரிருள் இருந்தது. கேருபீனின்மேல் 11
ஏறி வேகமாய்ச் சென்றார். [20]காற்றின் செட்
டைகளின்மீதில் தரிசனமானார். ஆகாயத்து 12
மேகங்களிலே கூடிய தண்ணீர்களின் [21]இரு
ளைத் தம்மைச் சுற்றிலும் இருக்கும் கூடார
மாக்கினார். அவருடைய சந்நிதிப் பிரகாசத் 13
தினால் நெருப்புத்தழலும் எரிந்தது. **கர்த்தர்** 14
[22]வானத்திலிருந்து குமுறி, உன்னதமானவர்
தமது சத்தத்தைத் தொனிக்கப்பண்ணினார்.
அவர் [23]அம்புகளை எய்து, அவர்களைச் சிதற 15
அடித்து, மின்னல்களைப் பிரயோகித்து, அவர்
களைக் கலங்கப்பண்ணினார். **கர்த்தருடைய** 16
கண்டிதத்தினாலும், அவருடைய நாசியின் சுவா
சக் காற்றினாலும் [24]சமுத்திரத்தின் மதகுகள்
திறவுண்டு, பூதலத்தின் அஸ்திபாரங்கள்
காணப்பட்டது. உயரத்திலிருந்து அவர் 17
கை நீட்டி, என்னைப் பிடித்து, [25]ஜலப்
பிரவாகத்திலிருக்கிற என்னைத் தூக்கிவிட்
டார். என்னிலும் பலவான்களாயிருந்த என் 18
பலத்த சத்துருவுக்கும் என் பகைஞருக்கும்
என்னை விடுவித்தார். என் ஆபத்துநாளிலே 19
எனக்கு எதிரிட்டு வந்தார்கள்; **கர்த்தரோ**
எனக்கு ஆதரவாயிருந்தார். என்மேல் [26]அவர் 20
பிரியமாயிருந்தபடியால், விசாலமான இடத்
திலே என்னைக் கொண்டுவந்து, என்னைத்
தப்புவித்தார்.
**கர்த்தர்** என் நீதிக்குத் தக்கதாக எனக்குப் 21
[27]பதில் அளித்தார்; என் கைகளின் [28]சுத்தத்
திற்குத் தக்கதாக எனக்குச் சரிக்கட்டினார்.

[1] யோசு. 18. 28
[2] 24. 25. யோசு. 7. 26
[3] 1 இரா. 11. 36: 15. 4. சங். 132. 17
[4] 18. 3
[5] 1 நாளா. 20. 4
[6] 1 நாளா. 20. 6
[7] 1 சாமு. 16. 9
[8] யாத். 15. 1. நியா. 5. 1. சங். 18: 34. 19
[9] உபா. 32. 4. சங். 91. 2
[10] எபி. 2. 13. ஆதி. 15. 1
[11] லூ. 1. 75
[12] சங். 46. 1, 11. எரே. 16. 19
* வியாகுலங்கள்
[13] யோனா. 2. 2
[14] யாத். 8. 7. சங். 34. 6, 15, 17
[15] நியா. 5. 4 சங். 77. 18
[16] யோபு. 26. 11
[17] சங். 97. 3. ஆப. 3. 5
[18] சங். 144. 5. ஏசா. 64. 1
[19] யாத். 20. 21. சங். 97. 2
[20] சங். 104. 3
[21] சங். 97. 2
[22] சங். 29. 3. ஏசா. 30. 30
[23] உபா. 32. 23. ஆப. 3. 11
[24] யாத். 15. 8. நாகூம். 1. 4. மத். 8. 26.
[25] சங். 144. 7. ஏசா. 43. 2
[26] 15. 26
[27] 1 சாமு. 26. 23
[28] யோபு. 17. 9. சங். 24. 4

22 **கர்த்தருடைய** [1]வழிகளைக் காத்துக்கொண்டு
வந்தேன்; நான் என் தேவனுக்குத் துரோகம்
23 பண்ணினதில்லை. அவருடைய [2]நியாயங்களை
யெல்லாம் எனக்கு முன்பாக நிறுத்தினேன்;
நான் அவருடைய பிரமாணங்களை விட்டு வில
24 காமல், அவர் முன்பாக [3]மன உண்மையா
யிருந்து, என் துர்க்குணத்திற்கு என்னை விலக்
25 கிக் காத்துக்கொண்டேன். ஆகையால் **கர்த்
தர்** என் நீதிக்குத் தக்கதாகவும், தம்முடைய
கண்களுக்குமுன் இருக்கிற என் சுத்தத்திற்
குத் தக்கதாகவும் எனக்குப் பலனளித்தார்.
26 தயவுள்ளவனுக்கு நீர் தயவுள்ளவராகவும்,
27 [4]உத்தமனுக்கு நீர் உத்தமராகவும், புனிதனு
க்கு நீர் [5]புனிதராகவும், மாறுபாடானவனுக்கு
28 நீர் [6]மாறுபடுகிறவராகவும் தோன்றுவீர். சிறு
மைப்பட்ட ஜனத்தை [7]இரட்சிப்பீர்; மேட்டி
மையானவர்களைத் தாழ்த்த, [8]உம்முடைய கண்
கள் அவர்களுக்கு விரோதமாய்த் திருப்பப்
29 பட்டிருக்கிறது. **கர்த்தராகிய** தேவரீர் என்
[9]விளக்காயிருக்கிறீர், **கர்த்தர்** என் இருளை
30 வெளிச்சமாக்குகிறவர். உம்மாலே நான் ஒரு
சேனைக்குள் பாய்ந்துபோவேன்; என் தேவ
31 னாலே ஒரு மதிலைத் தாண்டுவேன். தேவ
னுடைய வழி [10]உத்தமமானது; **கர்த்தருடைய**
வசனம் [11]புடமிடப்பட்டது; தம்மை நம்புகிற
அனைவருக்கும் அவர் கேடகமாயிருக்கிறார்.
32 **கர்த்தரை** அல்லாமல் தேவன் யார்? [12]நம்மு
33 டைய தேவனையன்றி கன்மலையும் யார்? தே
வன் எனக்குப் பலத்த அரணானவர்; [13]அவர்
என் வழியைச் செவ்வைப்படுத்துகிறவர்.
34 அவர் என் கால்களை மான்களுடைய கால்
களைப்போலாக்கி, [14]என் உயர்தலங்களில்
35 என்னை நிறுத்துகிறார். வெண்கல வில்லும்
என் புயங்களால் வளையும்படி, [15]என் கைகளை
36 யுத்தத்திற்குப் பழக்குவிக்கிறார். உம்முடைய
இரட்சிப்பின் கேடகத்தையும் எனக்குத் தந்
தீர்; உம்முடைய காருண்ணியம் என்னைப்
37 பெரியவனாக்கும். என் கால்கள் வழுவாத
படிக்கு [16]நான் நடக்கிற வழியை அகலமாக்கி
38 னீர். என் சத்துருக்களைப் பின்தொடர்ந்து
அவர்களை அழிப்பேன்; அவர்களை நிர்மூல
39 மாக்கும்வரைக்கும் திரும்பேன். அவர்கள்
எழுந்திருக்கமாட்டாதபடிக்கு [17]என் பாதங்க
ளின் கீழ் விழுந்தார்கள்; அவர்களை முறிய
40 அடித்து வெட்டினேன். யுத்தத்திற்கு நீர் என்
னைப் பலத்தால் இடைகட்டி, [18]என்மேல்
எழும்பினவர்களை என்கீழ் மடங்கப்பண்ணி
41 னீர். நான் என் பகைஞரைச் சங்கரிக்கும்
படியாக, [19]என் சத்துருக்களின் பிடரியை
42 எனக்கு ஒப்புக்கொடுத்தீர். அவர்கள் நோக்
கிப் பார்க்கிறார்கள்; அவர்களை இரட்சிப்பார்
ஒருவருமில்லை; [20]**கர்த்தரை** நோக்கிப் பார்க்கி
றார்கள், அவர்களுக்கு அவர் உத்தரவு கொடுக்
43 கிறதில்லை. அவர்களைப் பூமியின் தூளாக
இடித்து, [21]தெருக்களின் சேற்றைப்போல
அவர்களை மிதித்து சிதறப்பண்ணுகிறேன்.
44 என் ஜனத்தின் சண்டைகளுக்கு நீர் என்னை

1 நீதி. 8. 32
2 சங். 119. 30
3 ஆதி. 6. 9. யோபு. 1. 1
4 மத். 5. 7
5 லேவி. 26. 23
6 சங். 18. 26
7 யாத். 3. 7, 8
8 தானி. 4. 37
9 யோபு. 29. 3. சங். 27. 1
10 உபா. 32. 4. வெளி. 15. 3
11 சங். 12. 6. நீதி. 30. 5
12 1 சாமு. 2. 2. ஏசா. 45. 5, 6
13 யாத். 15. 2. எபி. 13. 21
14 ஆப. 3. 19
15 சங். 144. 1
16 நீதி. 4. 12
17 மல். 4. 3
18 சங். 44. 5
19 ஆதி. 49. 8. யோசு. 10. 24
20 நீதி. 1. 28. மீகா. 3. 4
21 2 இரா. 13. 7. மீகா. 7. 10
22 சங். 2. 8. ஏசா. 55. 5
23 உபா. 33. 29
24 மீகா. 7. 17
25 சங். 89. 26
26 1 சாமு. 25. 39
27 2 தெச. 3. 2
28 ரோ. 15. 9
29 சங். 89. 29, 36
30 சங். 78. 70, 71. லூ. 24. 44
31 2 பே. 1. 21
32 நீதி. 31. 9
33 சங். 72. 6. நீதி. 4. 18
34 7. 14-16. ஏசா. 55. 3
35 மத். 3. 10

விலக்கிவிட்டு, ஜாதிகளுக்கு என்னைத் தலைவ
னாக வைக்கிறீர்; [22]நான் அறியாத ஜனங்கள்
என்னைச் சேவிக்கிறார்கள். அந்நியர் இச்ச 45
கம் பேசி எனக்கு அடங்கி, [23]என் சத்தத்தைக்
கேட்டவுடனே எனக்குக் கீழ்ப்படிகிறார்கள்.
அந்நியர் முனைவிழுந்துபோய், [24]தங்கள் அரண் 46
களிலிருந்து தத்தளிப்பாய்ப் புறப்படுகிறார்கள்.
**கர்த்தர்** ஜீவனுள்ளவர்; என் கன்மலையான 47
வர் ஸ்தோத்திரிக்கப்படுவாராக; [25]என் இரட்
சிப்பின் கன்மலையாகிய தேவன் உயர்ந்திருப்
பாராக. அவர் எனக்காகப் பழிக்குப் பழி 48
வாங்கி, [26]ஜனங்களை எனக்குக் கீழ்ப்படுத்து
கிற தேவனானவர். அவரே என் சத்துருக்க 49
ளுக்கு என்னை விலக்கி விடுவிக்கிறவர்; [27]என
க்கு விரோதமா யெழும்புகிறவர்கள்மேல்
என்னை உயர்த்திக் கொடுமையான மனுஷ
னுக்கு என்னைத் தப்புவிக்கிறீர். இதினிமித் 50
தம் **கர்த்தாவே**, ஜாதிகளுக்குள் உம்மைத்
துதித்து, [28]உம்முடைய நாமத்திற்குச் சங்கீதம்
பாடுவேன். தாம் ஏற்படுத்தின ராஜாவுக்கு 51
மகத்தான இரட்சிப்பை அளித்து, [29]தாம் அபி
ஷேகம் பண்ணின தாவீதுக்கும் அவன் சந்த
திக்கும் சதாகாலமும் கிருபை செய்கிறார்.
தாவீதுடைய கடைசி வார்த்தைகள்: மேன் **23**
மையாய் உயர்த்தப்பட்டு, [30]யாக்கோபுடைய
தேவனால் அபிஷேகம் பெற்று, இஸ்ரவே
லின் சங்கீதங்களை இன்பமாய்ப் பாடின ஈசா
யின் குமாரனாகிய தாவீது என்னும் புருஷன்
சொல்லுகிறது என்னவென்றால்; **கர்த்தரு** 2
**டைய** ஆவியானவர் என்னைக்கொண்டு பேசி
னார்; [31]அவருடைய வசனம் என்னுடைய
நாவில் இருந்தது. இஸ்ரவேலின் தேவனும் 3
இஸ்ரவேலின் கன்மலையுமானவர் எனக்குச்
சொல்லி உரைத்ததாவது: [32]நீதிபரராய் மனு
ஷரை ஆண்டு, தெய்வபயமாய்த் துரைத்தனம்
பண்ணுகிறவர் இருப்பார். அவர் காலையில் 4
மந்தாரமில்லாமல் உதித்து, [33]மழைக்குப் பிற்
பாடு தன் காந்தியினால் புல்லைப் பூமியிலிருந்து
முளைக்கப்பண்ணுகிற சூரியனுடைய விடி
யற்கால வெளிச்சத்தைப்போல இருப்பார் என்
றார். என்னுடைய வீடு தேவனிடத்தில் இப் 5
படியிராதோ? [34]சகலமும் திட்டம்பண்ணப்பட்
டிருக்கிற நிச்சயமான நித்திய உடன்படிக்
கையை என்னுடன் அவர் செய்திருக்கிறார்;
ஆதலால் என்னுடைய எல்லா இரட்சிப்பும்
எல்லா வாஞ்சையும் வளர்ந்தோங்கச் செய்யா
ரோ? பேலியாளின் மக்கள் அனைவருமோ, 6
கையினால் பிடிக்கப்படக்கூடாததாய் எறிந்து
போடப்படவேண்டிய முள்ளுக்குச் சமான
மானவர்கள். அவைகளை ஒருவன் தொடப் 7
போனால், இருப்பாயுதத்தையும் ஈட்டித்தாங்
கையும் கெட்டியாய்ப் பிடித்துக்கொள்ளவே
ண்டும்; [35]அவைகள் இருக்கிற இடத்தில்
தானே அக்கினியினால் முற்றும் சுட்டெரிக்
கப்படும் என்றான்.
தாவீதுக்கு இருந்த பராக்கிரமசாலிகளின் 8
நாமங்களாவன: தக்கெமோனியின் குமாரனா

கிய யோசேப்பாசெபெத் என்பவன் சேர்வைக்
காரரின் தலைவன்; [1]இவன் எண்ணூறுபேர்க
ளின்மேல் விழுந்து, அவர்களை ஒருமிக்க
வெட்டிப்போட்ட அதீனோவஸ்னி ஊரானான
9 வன். இவனுக்கு இரண்டாவது, அகோயின்
குமாரனாகிய தோதோவின் மகன் எலெயாசார்
என்பவன்; இவன் பெலிஸ்தர் யுத்தத்திற்குக்
கூடின ஸ்தலத்திலே இஸ்ரவேல் மனுஷர்
போகையில், தாவீதோடே இருந்து, பெலிஸ்
தரை நிந்தித்த மூன்று பராக்கிரமசாலிகளில்
10 ஒருவனாயிருந்தான். இவன் எழும்பித் தன்
கைசலித்து, தன் கை பட்டயத்தோடு ஒட்டிக்
கொள்ளுமட்டும் பெலிஸ்தரை வெட்டினான்;
அன்றையதினம் **கர்த்தர்** பெரிய இரட்சிப்பை
நடப்பித்தார்; ஜனங்கள் கொள்ளையிடமாத்தி
11 ரம் அவனைப் பின்சென்றார்கள். இவனுக்கு
மூன்றாவது, ஆகேயின் குமாரனாகிய சம்மா
என்னும் ஆராரியன், சிறுபயறு நிறைந்த வய
லிருந்த இடத்திலே பெலிஸ்தர் ஏராளமாய்க்
கூடி, ஜனங்கள் பெலிஸ்தரைக் கண்டு ஓடு
12 கிறபோது, இவன் அந்த நிலத்தின் நடு
விலே நின்று அதைக் காப்பாற்றி, பெலிஸ்
தரை மடங்கடித்துப்போட்டான்; அதனால்
**கர்த்தர்** பெரிய இரட்சிப்பை நடப்பித்தார்.
13 முப்பது தலைவருக்குள்ளே இந்த மூன்றுபே
ரும் அறுப்புநாளிலே அதுல்லாம் கெபியிலே
தாவீதிடத்தில் போயிருந்தார்கள்; பெலிஸ்த
ரின் தண்டு [2]ரெப்பாயீம் பள்ளத்தாக்கிலே பா
14 ளயமிறங்கினபோது, தாவீது அரணான ஒரு
இடத்தில் இருந்தான்; அப்பொழுது பெலிஸ்
தரின் தாணையம் பெத்லகேமிலே இருந்தது.
15 தாவீது பெத்லகேமின் ஒலிமுகவாசலில் இரு
க்கிற கிணற்றின் தண்ணீரின்மேல் ஆவல்
கொண்டு: என் தாகத்திற்குக் கொஞ்சந் தண்
ணீர் கொண்டுவருகிறவன் யார் என்றான்.
16 அப்பொழுது இந்த மூன்று பராக்கிரமசாலி
களும் பெலிஸ்தரின் பாளயத்திலே துணிந்து
புகுந்துபோய், பெத்லகேமின் ஒலிமுகவாச
லில் இருக்கிற கிணற்றிலே தண்ணீர் மொ
ண்டு, தாவீதினிடத்தில் கொண்டுவந்தார்கள்;
ஆனாலும் அவன் அதைக் குடிக்க மனதில்லா
மல் அதைக் **கர்த்தருக்கென்று** ஊற்றிப்போ
17 ட்டு: **கர்த்தாவே**, தங்கள் பிராணனை யெண்
ணாமல் போய்வந்த [3]அந்த மனுஷரின் இரத்
தத்தைக் குடிக்கும் இந்தச் செயல் எனக்குத்
தூரமாயிருப்பதாக என்று சொல்லி, அதைக்
குடிக்க மனதில்லாதிருந்தான்; இப்படி இந்த
மூன்று பராக்கிரமசாலிகளும் செய்தார்கள்.
18 யோவாபின் சகோதரனும் செருயாவின் குமா
ரனுமான அபிசாய் என்பவன், அந்த மூன்று
பேரில் பிரதானமானவன்; அவன் தன் ஈட்
டியை ஓங்கி முந்நூறுபேரை மடங்கடித்ததி
னால், இந்த மூன்றுபேர்களில் பேர்பெற்றவ
19 னானான். இந்த மூன்றுபேர்களில் அவன் மேன்
மையுள்ளவனாயிருந்ததினாலல்லவோ, அவர்க
ளில் தலைவனானான்; ஆனாலும் அந்த முந்தின
மூன்றுபேருக்கு அவன் சமமானவன் அல்ல.

[1] 1 நாளா. 11. 11, 12, 13, 14, 27
[2] 1 சாமு. 22. 1–5
[3] லேவி. 17, 10
* சிங்கம்போன்ற மனிதரை
[4] 21. 1
[5] 2 நாளா. 27. 23, 24

பராக்கிரமசாலியாகிய யோய்தாவின் குமார 20
னும் கப்செயேல் ஊரானுமாகிய பெனாயா
வும் செய்கைகளில் வல்லவனாயிருந்தான்;
அவன் மோவாப் தேசத்தின் இரண்டு *வலு
மையான சிங்கங்களைக் கொன்றதுமல்லாமல்,
உறைந்த மழைகாலத்தில் அவன் இறங்கிப்
போய் ஒரு கெபிக்குள் இருந்த ஒரு சிங்கத்
தையும் கொன்றுபோட்டான். அவன் பயங் 21
கர ரூபமான ஒரு எகிப்தியனையும் கொன்று
போட்டான்; அந்த எகிப்தியன் கையில் ஒரு
ஈட்டியிருக்கையில், இவன் ஒரு தடியைப்
பிடித்து, அவனிடத்தில் போய், அந்த எகிப்
தியன் கையிலிருந்த ஈட்டியைப் பறித்து,
அவன் ஈட்டியினாலே அவனைக் கொன்று
போட்டான். இவைகளை யோய்தாவின் குமா 22
ரனாகிய பெனாயா செய்தபடியினால், மூன்று
பராக்கிரமசாலிகளுக்குள்ளே பேர்பெற்றவ
னாயிருந்தான். முப்பதுபேரிலும் இவன் 23
மேன்மையுள்ளவன்; ஆனாலும் அந்த முந்தின
மூன்றுபேருக்கும் இவன் சமானமானவன்
அல்ல; இவனைத் தாவீது தன் மெய்க்காவல
ருக்குத் தலைவனாக வைத்தான்.

யோவாபின் தம்பி ஆசகேல் மற்ற முப்பது 24
பேரில் ஒருவன்; அவர்கள் யாரெனில், பெத்
லகேம் ஊரானாகிய தோதோவின் குமாரன்
எல்க்கானான், ஆரோதியனாகிய சம்மா, 25
ஆரோதியனாகிய எலிக்கா, பல்தியனாகிய 26
ஏலெஸ், இக்கேசின் குமாரனாகிய ஈரா என்
னும் தெக்கோவியன், ஆனதோத்தியனாகிய 27
அபியேசர், ஊசாத்தியனாகிய மெபுன்னாயி,
அகோகியனாகிய சல்மோன், நெத்தோபாத்தி 28
யனாகிய மகராயி, பானாவின் குமாரனாகிய 29
ஏலேப் என்னும் நெத்தோபாத்தியன், பென்
யமீன் புத்திரரின் கிபியா ஊரானாகிய ரிபா
யின் குமாரன் இத்தாயி, பிரத்தோனியனா 30
கிய பெனாயா, காகாஸ் நீரோடைகளின் தேச
த்தானாகிய ஈத்தாயி, அர்பாத்தியனாகிய அபி 31
அல்பொன், பருமியனாகிய அஸ்மாவேத்,
சால்போனியனாகிய எலியூபா, யாசேனின் 32
குமாரரில் யோனத்தான் என்பவன், ஆராரி 33
யனாகிய சம்மா, சாராரின் குமாரனாகிய அகி
யாம் என்னும் ஆராரியன். மாகாத்தியனின் 34
குமாரனாகிய அகஸ்பாயிம் மகன் எலிப்பெ
லேத், கீலோனியனாகிய அகித்தோப்பேலின்
குமாரன் எலியாம் என்பவன், கர்மேலிய 35
னாகிய எஸ்ராயி, அர்பியனாகிய பாராயி,
சோபா ஊரானாகிய நாத்தானின் குமாரன் 36
ஈகால், காதியனாகிய பானி, அம்மோனியனா 37
கிய சேலேக், செருயாவின் குமாரனாகிய
யோவாபின் ஆயுததாரியான பெரோத்தியனா
கிய நகராய், இத்ரியனாகிய ஈரா, இத்ரியனா 38
கிய காரேப், ஏத்தியனாகிய உரியா என்பவர்க 39
ளே; ஆக முப்பத்தேழுபேர்.

**கர்த்தருடைய** [4]கோபம் திரும்ப இஸ்ரவே **24**
லின்மேல் மூண்டது. [5]இஸ்ரவேல் யூதா
என்பவர்களை இலக்கம் பார் என்று அவர்க
ளுக்கு விரோதமாய்ச் சொல்லுகிறதற்கு தா

2 வீது ஏவப்பட்டான். அப்படியே ராஜா தன்
ேைனாடிருக்கிற சேனாபதியாகிய யோவாபைப்
பார்த்து: [1]ஜனங்களின் இலக்கத்தை நான்
அறியும்படிக்கு நீ தாண்முதல் பெயெர்செபா
மட்டுமுள்ள இஸ்ரவேலரின் கோத்திரமெங்
கும் சுற்றித்திரிந்து ஜனங்களைத் தொகையிடுங்
3 கள் என்றான். அப்பொழுது யோவாப்
ராஜாவைப் பார்த்து: ராஜாவாகிய என் ஆண்
டவனுடைய கண்கள் காணும்படி உம்மு
டைய தேவனாகிய **கர்த்தர்** ஜனங்களை இப்
பொழுது இருக்கிறதைப்பார்க்கிலும், நூறு
மடங்கு அதிகமாய் வர்த்திக்கப்பண்ணுவா
ராக; ஆனாலும் என் ஆண்டவனாகிய ராஜா
இந்தக் காரியத்தை விரும்புகிறது என்ன என்
4 றான். ஆகிலும் யோவாபும் இராணுவத்தலை
வரும் சொன்ன வார்த்தை செல்லாதபடிக்கு,
ராஜாவின் வார்த்தை பலத்தது; அப்படியே
இஸ்ரவேல் ஜனங்களைத் தொகையிட, யோ
வாபும் இராணுவத்தலைவரும் ராஜாவைவிட்
5 டுப் புறப்பட்டுப்போய், யோர்தானைக் கட
ந்து, காத் என்னும் ஆறுகளின் நடுவே இருக்
கிற பட்டணத்திற்கு வலதுபுறமான ஆரோ
வேரிலும் [2]யாசேரிடத்திலும் பாளயமிறங்கி,
6 அங்கேயிருந்து கிலேயாத்திற்கும் [3]தாதீம்ஒத்
சிக்கும் போய், அங்கேயிருந்து [4]தாண்யானுக்
கும், சீதோனின் சுற்றுப்புறங்களுக்கும்போய்,
7 பிற்பாடு தீரு என்னும் கோட்டைக்கும் ஏவி
யர் கானானியருடைய சகல பட்டணங்களுக்
கும் போய், அங்கேயிருந்து யூதாவின் தென்
8 புறமான பெயெர்செபாவுக்குப் போய், இப்
படி தேசமெங்கும் சுற்றித்திரிந்து, ஒன்பது
மாதமும் இருபது நாளும் ஆனபிற்பாடு எரு
9 சலேமுக்கு வந்தார்கள். யோவாப் ஜனத்தை
இலக்கம்பார்த்த தொகையை ராஜாவுக்குக்
கொடுத்தான்; [5]இஸ்ரவேலிலே பட்டயம் உரு
வத்தக்க யுத்த சேவகர் எட்டுலட்சம்பேர் இருந்
தார்கள்; யூதாமனுஷர் ஐந்துலக்ஷம்பேர் இருந்
தார்கள்.
10 இவ்விதமாய் ஜனங்களை எண்ணினபின்பு,
[6]ராஜாவின் இருதயம் அவனை வாதித்தது;
அப்பொழுது தாவீது **கர்த்தரை** நோக்கி:
நான் இப்படிச் செய்ததினாலே பெரிய பாவஞ்
செய்தேன்; இப்போதும் ஆண்டவரே, உமது
அடியானின் அக்கிரமத்தை நீக்கிவிடும்; [7]நான்
மகா புத்தியீனமாய்ச் செய்தேன் என்றான்.
11 தாவீது காலமே எழுந்திருந்தபோது, தாவீ
தின் ஞானதிருஷ்டிக்காரனாகிய [8]காத் என்
னும் தீர்க்கதரிசிக்குக் **கர்த்தருடைய** வார்த்
12 தை உண்டாகிச் சொன்னது: நீ தாவீதி
னிடத்தில் போய், மூன்று காரியங்களை உன
க்கு முன்பாக வைக்கிறேன்; அவைகளில்
ஒரு காரியத்தைத் தெரிந்துகொள், அதை
நான் உனக்குச் செய்வேன் என்று **கர்த்தர்**
13 உரைக்கிறார் என்று சொல் என்றார். அப்ப
டியே காத் தாவீதினிடத்தில் வந்து, அவனை
நோக்கி: [9]உம்முடைய தேசத்திலே ஏழு வரு
ஷம் பஞ்சம் வரவேண்டுமோ? அல்லது
மூன்றுமாதம் உம்முடைய சத்துருக்கள் உம்
மைப் பின்தொடர, நீர் அவர்களுக்கு முன்
பாக ஓடிப்போகவேண்டுமோ? அல்லது உம்
முடைய தேசத்திலே மூன்றுநாள் கொள்ளை
நோய் உண்டாகவேண்டுமோ? இப்போதும்
என்னை அனுப்பினவருக்கு நான் என்ன மறு
உத்தரவு கொண்டுபோகவேண்டும் என்பதை
நீர் யோசித்துப்பாரும் என்று சொன்னான்.
அப்பொழுது தாவீது காத்தை நோக்கி: கொ 14
டிய இடுக்கணில் அகப்பட்டிருக்கிறேன்; இப்
போது நாம் **கர்த்தருடைய** கையிலே விழு
வோமாக; [10]அவருடைய இரக்கங்கள் மகா
பெரியது; [11]மனுஷர் கையிலே விழாதிருப்
பேனாக என்றான்.
அப்பொழுது **கர்த்தர்** இஸ்ரவேலிலே 15
அன்று காலமேதொடங்கி குறித்தகாலம்வரைக்
கும் கொள்ளைநோயை வரப்பண்ணினார்;
[12]அதினால் தாண்முதல் பெயெர்செபாமட்டு
முள்ள ஜனங்களில் எழுபதினாயிரம்பேர் செத்
துப்போனார்கள். தேவதூதன் எருசலேமை 16
அழிக்கத் தன் கையை அதின்மேல் நீட்டின
போது, [13]**கர்த்தர்** அந்தத் தீங்குக்கு மனஸ்தா
பப்பட்டு, ஜனங்களைச் சங்கரிக்கிற தூதனை
நோக்கி: போதும், [14]இப்போது உன் கையை
நிறுத்து என்றார்; அந்த வேளையில் **கர்த்த
ருடைய** தூதன் எபூசியனாகிய அர்வனாவின்
போரடிக்கிற களத்திற்கு நேரே இருந்தான்.
ஜனத்தை உபாதிக்கிற தூதனை தாவீது கண்ட 17
போது, அவன் **கர்த்தரை** நோக்கி: இதோ,
நான்தான் பாவஞ்செய்தேன்; [15]நான்தான் அக்
கிரமம்பண்ணினேன்; இந்த ஆடுகள் என்ன
செய்தது? உம்முடைய கை எனக்கும் என்
தகப்பன் வீட்டுக்கும் விரோதமாயிருப்பதாக
என்று விண்ணப்பம்பண்ணினான்.
அன்றையதினம் காத் என்பவன் தாவீதினி 18
டத்தில் வந்து, அவனை நோக்கி: நீர் போய்,
[16]எபூசியனாகிய அர்வனாவின் களத்திலே **கர்த்
தருக்கு** ஒரு பலிபீடத்தை உண்டாக்கும் என்
றான். காத்துடைய வார்த்தையின்படியே 19
தாவீது **கர்த்தர்** கற்பித்த பிரகாரமாகப் போ
னான். அர்வனா எறிட்டுப்பார்த்து: ராஜாவும் 20
அவனுடைய ஊழியக்காரரும் தன்னிடத்தில்
வருகிறதைக் கண்டு, அர்வனா எதிர்கொண்டு
போய் தரைமட்டும் குனிந்து ராஜாவை வண
ங்கி, ராஜாவாகிய என் ஆண்டவன் தமது 21
அடியானிடத்தில் வருகிற காரியம் என்ன
என்று கேட்டதற்கு, தாவீது: [17]வாதை ஜனத்
தைவிட்டு நிறுத்தப்படக் **கர்த்தருக்கு** ஒரு பலி
பீடத்தைக் கட்டும்படிக்கு இந்தக் களத்தை
உன் கையிலே கொள்ளவந்தேன் என்றான்.
அர்வனா தாவீதைப் பார்த்து: ராஜாவாகிய 22
என் ஆண்டவன் இதை வாங்கிக்கொண்டு,
தம்முடைய பார்வைக்கு நலமானபடி பலி
யிடுவாராக; இதோ, [18]தகனபலிக்கு மாடுக
ளும் விறகுக்குப் போரடிக்கிற உருளைகளும்
மாடுகளின் நுகத்தடிகளும் இங்கே இருக்கி
றது என்று சொல்லி, அர்வனா ராஜயோக் 23

1 எரே. 17. 5
2 யோசு. 13.9,16. எண். 32.1, 3
3 நியா. 18. 29
4 யோசு. 19. 28
5 1 நாளா. 21. 5
6 1 சாமு. 24. 5
7 12. 13. 1 சாமு. 13. 13
8 1 சாமு. 22. 5. 1 நாளா. 29. 29
9 1 நாளா. 21. 12
10 சங். 103. 8-14; 119. 156
11 ஏசா. 47. 6. சகரி. 1. 15
12 1 நாளா. 21.14
13 யாத். 12. 23. சங். 90. 13
14 ஏசா. 27.8; 57. 16. யோவே. 2. 13, 14
15 1 நாளா. 21.17
16 1 நாளா. 21.18. ...
17 ஆதி. 23. 8-16. எண். 16. 48, 50
18 1 இரா. 19.21.

ஜியமாய் அவை எல்லாவற்றையும் ராஜாவுக்
குக் கொடுத்தபின்பு, அர்வனா ராஜாவை
நோக்கி: உம்முடைய தேவனாகிய **கர்த்தர்**
உம்மிடத்தில் [1]கிருபையாயிருப்பாராக என்
24 றான். ராஜா அர்வனாவைப் பார்த்து: அப்
படியல்ல; நான் இலவசமாய் வாங்கி, என்
தேவனாகிய **கர்த்தருக்கு** சர்வாங்க தகனபலி
களைச் செலுத்தாமல், அதை உன் கையிலே
விலைக்கிரயமாய் வாங்குவேன் என்று சொ
ல்லி, [2]தாவீது அந்தக் களத்தையும் மாடுகளை
யும் ஐம்பதுசேக்கல் நிறை வெள்ளிக்குக் கொ
ண்டான். அங்கே தாவீது **கர்த்தருக்கு** ஒரு 25
பலிபீடத்தைக் கட்டி, சர்வாங்க தகனபலி
களையும் சமாதானபலிகளையும் செலுத்தினான்;
[3]அப்பொழுது **கர்த்தர்** தேசத்துக்காகச் செய்
யப்பட்ட வேண்டுதலைக் கேட்டருளினார்;
இஸ்ரவேலின்மேலிருந்த அந்த வாதை நிறுத்
தப்பட்டது.

1 ஏசே. 20. 40, 41
2 1 நாளா. 21.24, 26
3 21. 14

I. KINGS

# இராஜாக்களின்

## முதலாம் புஸ்தகம்

1 தாவீதுராஜா வயதுசென்ற விர்த்தாப்பிய
னானபோது, வஸ்திரங்களினால் அவனை மூடி
னாலும், அவனுக்கு அனல் உண்டாகவில்லை.
2 அப்பொழுது அவனுடைய ஊழியக்காரர்
அவனை நோக்கி: ராஜசமுகத்தில் நின்று,
அவருக்குப் பணிவிடை செய்யவும், ராஜாவா
கிய எங்கள் ஆண்டவனுக்கு அனல் உண்டா
கும்படி உம்முடைய மடியிலே படுத்துக்கொ
ள்ளவும் கன்னியாகிய ஒரு சிறு பெண்ணை
ராஜாவாகிய எங்கள் ஆண்டவனுக்குத் தேடு
3 வோம் என்று சொல்லி, இஸ்ரவேலின் எல்
லையிலெல்லாம் அழகான ஒரு பெண்ணைத்
தேடி, [1]சூனேம் ஊராளாகிய அபிஷாகைக்
கண்டு, அவளை ராஜாவினிடத்தில் கொண்டு
4 வந்தார்கள். அந்தப் பெண் வெகு அழகா
யிருந்தாள்; அவள் ராஜாவுக்கு உதவியாயிருந்
து அவனுக்குப் பணிவிடை செய்தாள்; ஆனா
5 லும் ராஜா அவளை அறியவில்லை. ஆகீத்திற்
குப் பிறந்த [2]அதோனியா என்பவன்: [3]நான்
ராஜா ஆவேன் என்று சொல்லி, தன்னைத்
தான் உயர்த்தி, தனக்கு இரதங்களையும் குதி
ரை வீரரையும், தனக்குமுன் ஓடும் ஐம்பது
6 காலாட்களையும் சம்பாதித்தான். அவனு
டைய தகப்பன்: நீ இப்படிச் செய்வானேன்
என்று அவனை ஒருக்காலும் கடிந்துகொள்ள
வில்லை; அவன் மிகவும் அழகுள்ளவனாயிருந்
தான்; [4]அப்சலோமுக்குப்பின் அவனுடைய
7 தாய் அவனைப் பெற்றாள். அவன் செருயா
வின் குமாரனாகிய யோவாபோடும், [5]ஆசா
ரியனாகிய அபியத்தாரோடும் ஆலோசனைபண்
ணிவந்தான்; அவர்கள் அவனிடத்திலிருந்து
8 அவனுக்கு உதவிசெய்து வந்தார்கள். ஆசா
ரியனாகிய சாதோக்கும், யோய்தாவின் குமார
னாகிய பெனாயாவும், தீர்க்கதரிசியாகிய நாத்
தானும், சிமேயியும், ரேயியும், தாவீதோடி
ருக்கிற [6]பராக்கிரமசாலிகளும், அதோனியா
9 வுக்கு உடந்தையாயிருக்கவில்லை. அதோனி
யா [7]இன்ரோகேலுக்குச் சமீபமான சோகெ
லெத் என்னும் கல்லின் அருகே ஆடுமாடுகளை
யும் கொழுத்த ஜந்துக்களையும் அடித்து, ராஜா
வின் குமாரராகிய தன் சகோதரரெல்லாரை
யும், ராஜாவின் ஊழியக்காரரான யூதாவின்
10 மனுஷர் அனைவரையும் அழைத்தான். தீர்க்
கதரிசியாகிய நாத்தானையும், பெனாயாவையும்,
பராக்கிரமசாலிகளையும், தன் சகோதரனாகிய
சாலொமோனையும் அழைக்கவில்லை. அப் 11
பொழுது நாத்தான் சாலொமோனின் தாயா
கிய பத்சேபாளை நோக்கி: நம்முடைய ஆண்
டவனாகிய தாவீதுக்குத் தெரியாமல், [8]ஆகீத்
தின் குமாரனாகிய அதோனியா ராஜாவாகிற
செய்தியை நீ கேட்கவில்லையா? இப்போ 12
தும் உன் பிராணனையும், உன் குமாரனாகிய
சாலொமோனின் பிராணனையும் தப்புவிக்
கும்படிக்கு நீ வா, உனக்கு நான் ஆலோசனை
சொல்லுவேன். நீ தாவீது ராஜாவினிடத் 13
தில் போய்: ராஜாவாகிய என் ஆண்டவனே,
எனக்குப்பின் உன் குமாரனாகிய சாலொமோ
ன் ராஜாவாகி, அவனே என் சிங்காசனத்தின்
மேல் வீற்றிருப்பான் என்று நீர் உமது அடி
யாளுக்கு [9]ஆணையிடவில்லையா? அப்படியிரு
க்க, அதோனியா ராஜாவாகிறது என்ன?
என்று அவரிடத்தில் கேள். நீ அங்கே ராஜா 14
வோடே பேசிக்கொண்டிருக்கையில், நானும்
உனக்குப்பின் வந்து, உன் வார்த்தைகளை
உறுதிப்படுத்துவேன் என்றான். அப்படியே 15
பத்சேபாள் பள்ளியறைக்குள் ராஜாவிடத்தில்
போனாள்; ராஜா மிகவும் வயது சென்றவனா
யிருந்தான்; சூனேம் ஊராளாகிய அபிஷாக்
ராஜாவுக்குப் பணிவிடை செய்துகொண்டி
ருந்தாள். பத்சேபாள் குனிந்து, ராஜாவை 16
வணங்கினாள்; அப்பொழுது ராஜா: உனக்கு
என்னவேண்டும் என்று கேட்டான். அத 17
ற்கு அவள்: என் ஆண்டவனே, எனக்குப்
பின் உன் குமாரனாகிய சாலொமோன் ராஜா
வாகி, அவனே என் சிங்காசனத்தின்மேல்
வீற்றிருப்பான் என்று நீர் உம்முடைய தேவ
னாகிய கர்த்தரைக்கொண்டு, உமது அடியா
ளுக்கு ஆணையிட்டீரே. இப்பொழுது, 18
இதோ, அதோனியா ராஜாவாகிறான்; என்
ஆண்டவனாகிய ராஜாவே, நீர் அதை அறிய
வில்லை. அவன் மாடுகளையும் கொழுத்த ஜந் 19
துக்களையும் ஆடுகளையும் திரளாக அடித்து,
ராஜாவின் குமாரர் அனைவரையும் ஆசாரிய
னாகிய அபியத்தாரையும், யோவாப் என்னும்
படைத்தலைவனையும் அழைத்தான்; ஆனாலும்
உமது அடியானாகிய சாலொமோனை அழைக்

[1] யோசு. 19. 18
[2] 2 சாமு. 3. 4
[3] 2 சாமு. 15. 1
[4] 2 சாமு. 2. 3, 4
[5] 2 சாமு. 20. 25
[6] 2 சாமு. 23. 8
[7] 2 சாமு. 17. 17
[8] 2 சாமு. 3. 4
[9] 1 நாளா. 22. 6-13

20 கவில்லை. ராஜாவாகிய என் ஆண்டவனே,
ராஜாவாகிய என் ஆண்டவனுக்குப் பிறகு
அவருடைய சிங்காசனத்தின்மேல் வீற்றிருப்
பவன் இன்னான் என்று தங்களுக்கு அறிவிக்
கவேண்டும் என்று இஸ்ரவேலர் அனைவரின்
கண்களும் உம்மை நோக்கிக்கொண்டிருக்கி
21 றது. அறிவியாமற்போனால் ராஜாவாகிய
என் ஆண்டவன் [1]தம்முடைய பிதாக்களோ
டே படுத்துக்கொண்டபின்பு, நானும் என்
குமாரனாகிய சாலொமோனும் குற்றவாளிக
22 ளாய் எண்ணப்படுவோம் என்றாள். அவள்
ராஜாவோடே பேசிக்கொண்டிருக்கையில்,
23 தீர்க்கதரிசியாகிய நாத்தான் வந்தான். தீர்க்க
தரிசியாகிய நாத்தான் வந்திருக்கிறார் என்று
ராஜாவுக்குத் தெரிவித்தார்கள்; அவன் ராஜா
வுக்கு முன்பாகப் பிரவேசித்து முகங்குப்புற
24 விழுந்து ராஜாவை வணங்கினான். நாத்
தான்: ராஜாவாகிய என் ஆண்டவனே,
அதோனியா எனக்குப்பின் ராஜாவாகி, அவ
னே என் சிங்காசனத்தின்மேல் வீற்றிருப்
25 பான் என்று நீர் சொன்னதுண்டோ? அவன்
இன்றையதினம் போய், மாடுகளையும் கொழு
த்த ஜந்துக்களையும் ஆடுகளையும் திரளாக
அடித்து, ராஜாவின் குமாரர் அனைவரையும்
இராணுவத் தலைவரையும், ஆசாரியனாகிய
அபியத்தாரையும் அழைத்தான்; அவர்கள் அவ
னுக்கு முன்பாகப் புசித்துக் குடித்து, [2]ராஜா
வாகிய அதோனியா வாழ்க என்று சொல்லு
26 கிறார்கள். ஆனாலும் உமது அடியானாகிய
என்னையும், ஆசாரியனாகிய சாதோக்கையும்,
யோய்தாவின் குமாரனாகிய பெனாயாவையும்,
உமது அடியானாகிய சாலொமோனையும்
27 அவன் அழைக்கவில்லை. ராஜாவாகிய என்
ஆண்டவனுக்குப்பின் தமது சிங்காசனத்தில்
வீற்றிருப்பவன் இவன்தான் என்று நீர் உமது
அடியானுக்குத் தெரிவிக்காதிருக்கையில், இந்
தக் காரியம் ராஜாவாகிய என் ஆண்டவன்
கட்டளையால் நடந்திருக்குமோ என்றான்.
28 அப்பொழுது தாவீதுராஜா பிரதியுத்தரமாக:
பத்சேபாளை என்னிடத்தில் வரவழையுங்கள்
என்றான்; அவள் ராஜசமுகத்தில்பிரவேசித்து
29 ராஜாவுக்கு முன்னே நின்றாள். அப்பொ
ழுது ராஜா: உன் குமாரனாகிய சாலொமோன்
எனக்குப்பின் அரசாண்டு, அவனே என்
ஸ்தானத்தில் என் சிங்காசனத்தின்மேல் வீற்
றிருப்பான் என்று நான் உனக்கு இஸ்ரவே
லின் தேவனாகிய **கர்த்தர்**மேல் ஆணையிட்ட
படியே, இன்றைக்குச் செய்து தீர்ப்பேன்
30 என்பதை, என் ஆத்துமாவை எல்லா இக்
கட்டுக்கும் நீங்கலாக்கி மீட்ட **கர்த்தருடைய**
[3]ஜீவனைக்கொண்டு, சொல்லுகிறேன் என்று
31 ஆணையிட்டான். அப்பொழுது பத்சேபாள்
தரைமட்டும் குனிந்து ராஜாவை வணங்கி,
[4]என் ஆண்டவனாகிய தாவீதுராஜா என்றைக்
32 கும் வாழ்க என்றாள். பின்பு தாவீதுராஜா,
ஆசாரியனாகிய சாதோக்கையும் தீர்க்கதரிசியா
கிய நாத்தானையும் யோய்தாவின் குமாரன்
பெனாயாவையும் என்னிடத்தில் வரவழையுங்
கள் என்றான். அவர்கள் ராஜாவுக்கு முன் 33
பாகப் பிரவேசித்தபோது, ராஜா அவர்களை
நோக்கி: [5]நீங்கள் உங்கள் ஆண்டவனுடைய
சேவகரைக் கூட்டிக்கொண்டு, என் குமாரனா
கிய சாலொமோனை [6]என் கோவேறுகழுதை
யின்மேல் ஏற்றி, அவனைக் கீகோனுக்கு
அழைத்துக்கொண்டு போங்கள். அங்கே 34
ஆசாரியனாகிய சாதோக்கும் தீர்க்கதரிசி
யாகிய நாத்தானும் அவனை இஸ்ரவேலின்
மேல் ராஜாவாக [7]அபிஷேகம்பண்ணக்கடவர்
கள்; பின்பு எக்காளம் ஊதி, [8]ராஜாவாகிய
சாலொமோன் வாழ்க என்று வாழ்த்துங்கள்.
அதின்பின்பு அவன் நகர்வலம் வந்து, என் 35
சிங்காசனத்தில் வீற்றிருக்கும்படி, அவனைக்
கூட்டிக்கொண்டு வாருங்கள்; அவனே என்
ஸ்தானத்தில் ராஜாவாயிருப்பான்; அவன்
இஸ்ரவேலின்மேலும் யூதாவின்மேலும் தலை
வனாயிருக்கும்படி அவனை ஏற்படுத்தினேன்
என்றான். அப்பொழுது யோய்தாவின் குமா 36
ரன் பெனாயா ராஜாவுக்குப் பிரதியுத்தரமாக:
ஆமென், ராஜாவாகிய என் ஆண்டவனுடைய
தேவனாகிய **கர்த்தரும்** இப்படியே சொல்வா
ராக. **கர்த்தர்** ராஜாவாகிய என் ஆண்டவ 37
னோடே எப்படி இருந்தாரோ, அப்படியே
அவர் சாலொமோனோடும் இருந்து, [9]தாவீது
ராஜாவாகிய என் ஆண்டவனுடைய சிங்காச
னத்தைப்பார்க்கிலும் அவருடைய சிங்காசனத்
தைப் பெரிதாக்குவாராக என்றான். அப்ப 38
டியே ஆசாரியனாகிய சாதோக்கும், தீர்க்கதரி
சியாகிய நாத்தானும், யோய்தாவின் குமாரன்
பெனாயாவும், கிரேத்தியரும் பிலேத்தியரும்
போய், சாலொமோனைத் தாவீது ராஜாவினு
டைய கோவேறு கழுதையின்மேல் ஏற்றி,
அவனைக் கீகோனுக்கு நடத்திக்கொண்டுபோ
னார்கள். ஆசாரியனாகிய சாதோக்கு [10]தைலக் 39
கொம்பைக் கூடாரத்திலிருந்து எடுத்துக்
கொண்டுபோய், சாலொமோனை அபிஷேகம்
பண்ணினான்; அப்பொழுது எக்காளம் ஊதி,
[11]ஜனங்களெல்லாரும் ராஜாவாகிய சாலொ
மோன் வாழ்க என்று வாழ்த்தினார்கள். பிற் 40
பாடு ஜனங்களெல்லாரும் அவன் பிறகாலே
போனார்கள்; ஜனங்கள் நாகசுரங்களை ஊதி,
பூமி அவர்கள் சத்தத்தினால் அதிரத்தக்கதாக
மகா பூரிப்பாய்ச் சந்தோஷித்தார்கள். அதோ 41
னியாவும் அவனோடிருந்த எல்லா விருந்தாளி
களும் போஜனம் பண்ணி முடிந்தபோது
அதைக் கேட்டார்கள்; யோவாப் எக்காள சத்
தத்தைக் கேட்டபோது, நகரத்தில் உண்டா
யிருக்கிற ஆரவாரம் என்ன என்று விசாரித்
தான். அவன் பேசிக்கொண்டிருக்கையில், 42
ஆசாரியனாகிய அபியத்தாரின் குமாரன் யோ
னத்தான் வந்தான்; அப்பொழுது அதோனி
யா, உள்ளே வா, [12]நீ கெட்டிக்காரன், நீ நற்
செய்தி கொண்டுவருகிறவன் என்றான். யோ 43
னத்தான் அதோனியாவுக்குப் பிரதியுத்தர
மாக: ஏது, தாவீதுராஜாவாகிய நம்முடைய

[1] 2. 10. உபா. 31. 16
[2] 1 சாமு. 10. 24
[3] 13, 17. வச.
[4] நெகே. 2. 3. தானி. 2. 4
[5] 2 சாமு. 20. 6
[6] 2 சாமு. 32. 30
[7] 19. 16. 1 சாமு. 10. 1. அப். 10. 38. 2 சாமு. 1. 21, 22
[8] 2 இரா. 9. 13
[9] யோசு. 1. 5, 17. சங். 89. 27
[10] யாத். 30. 23, 25, 32. சங். 89. 20
[11] 1 சாமு. 10. 24
[12] 2 சாமு. 18. 27

ஆண்டவன் சாலொமோனை ராஜாவாக்கி
44 ஞரே. ராஜா ஆசாரியனுகிய சாதோக்கை
யும், தீர்க்கதரிசியாகிய நாத்தானையும், யோய்
தாவின் குமாரன் பெனுயாவையும், கிரேத்திய
ரையும் பிலேத்தியரையும் அவனோடே அனுப்
பினுர்; அவர்கள் அவனை ராஜாவுடைய கோ
45 வேறுகழுதையின்மேல் ஏற்றினுர்கள். ஆசா
ரியனுகிய சாதோக்கும், தீர்க்கதரிசியாகிய
நாத்தானும், அவனைக் கீகோனிலே ராஜா
வாக அபிஷேகம்பண்ணினுர்கள்; நகரமெல்
லாம் முழங்கத்தக்கதாக அங்கேயிருந்து பூரிப்
போடே புறப்பட்டுப்போனுர்கள்; நீங்கள்
46 கேட்ட இரைச்சல் அதுதான். அல்லாமலும்
சாலொமோன் [1]ராஜாங்கத்துக்குரிய சிங்காச
47 னத்தின்மேல் வீற்றிருக்கிருன். ராஜாவின்
ஊழியக்காரரும் தாவீதுராஜாவாகிய நம்மு
டைய ஆண்டவனை வாழ்த்துதல் செய்யவந்து:
தேவன் சாலொமோனின் நாமத்தை உம்மு
டைய நாமத்தைப்பார்க்கிலும் பிரபலப்படுத்தி,
அவருடைய சிங்காசனத்தை உம்முடைய சிங்
காசனத்தைப்பார்க்கிலும் பெரிதாக்குவாராக
என்ருர்கள்; [2]ராஜா தம்முடைய கட்டிலின்
48 மேல் குனிந்து பணிந்துகொண்டார். பின்
னும் ராஜா: என்னுடைய கண்கள் காண இன்
றையதினம் என் சிங்காசனத்தின்மேல் ஒரு
வனை வீற்றிருக்கச்செய்த [3]இஸ்ரவேலின் தே
வனுகிய **கர்த்தருக்கு** ஸ்தோத்திரம் என்று
49 சொன்னுர் என்ருன். அப்பொழுது அதோ
னியாவின் விருந்தாளிகளெல்லாரும் அதிர்
ந்து எழுந்திருந்து, அவரவர் தங்கள் வழியே
50 போய்விட்டார்கள். அதோனியா, சாலொ
மோனுக்குப் பயந்ததினுல் எழுந்துபோய்,
[4]பலிபீடத்தின் கொம்புகளைப்பிடித்துக்கொண்
51 டான். இதோ, அதோனியா ராஜாவாகிய
சாலொமோனுக்குப் பயப்படுகிருன் என்றும்,
இதோ, அவன் பலிபீடத்தின் கொம்புகளைப்
பிடித்துக்கொண்டு, ராஜாவாகிய சாலொ
மோன் தமது அடியானைப் பட்டயத்தாலே
கொன்றுபோடுவதில்லை என்று இன்று என
க்கு ஆணையிடுவாராக என்கிருன் என்றும்,
52 சாலொமோனுக்கு அறிவிக்கப்பட்டது. அப்
பொழுது சாலொமோன்: அவன் யோக்கியன்
என்று விளங்க நடந்துகொண்டால் [5]அவன்
தலைமயிரில் ஒன்றும் தரையிலே விழப்போகிற
தில்லை; அவனிடத்தில் பொல்லாப்புக் காணப்
படுமேயாகில், அவன் சாகவேண்டும் என்
53 ருன். அவனைப் பலிபீடத்திலிருந்து கொண்
டுவர, ராஜாவாகிய சாலொமோன் ஆட்களை
அனுப்பினுன்; அவன் வந்து, ராஜாவாகிய
சாலொமோனை வணங்கினுன்; சாலொமோன்
அவனைப் பார்த்து: உன் வீட்டிற்குப் போ
என்ருன்.

2 தாவீது மரணமடையும் காலம் [6]சமீபித்த
போது, அவன் தன் குமாரனுகிய சாலொ
மோனுக்குக் கட்டளையிட்டுச் சொன்னது:
2 நான் பூலோகத்தார் யாவரும் போகிற வழியே
போகிறேன்; [7]நீ திடன்கொண்டு புருஷனு
யிரு. நீ என்ன செய்தாலும், நீ எங்கே போ 3
னுலும், எல்லாவற்றிலும் புத்திமானுயிருக்கிற
தற்கும், **கர்த்தர்** என்னைக்குறித்து: உன் பிள்
ளைகள் தங்கள் முழு இருதயத்தோடும் தங்கள்
முழு ஆத்துமாவோடும் எனக்கு முன்பாக
உண்மையாய் நடக்கும்படிக்குத் தங்கள் வழி
யைக் காத்துக்கொண்டால், [8]இஸ்ரவேலின்
சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கத்தக்க புரு
ஷன் உனக்கு இல்லாமற்போவதில்லை என்று
சொன்ன தம்முடைய வார்த்தையைத் திடப்
படுத்துகிறதற்கும், மோசேயின் [9]நியாயப்பிர 4
மாணத்தில் எழுதியிருக்கிறபடி, நீ உன் தேவ
னுகிய **கர்த்தருடைய** கட்டளைகளையும், கற்ப
னைகளையும், நியாயங்களையும், சாட்சிகளையும்
கைக்கொள்ள, அவர் வழிகளில் நடக்கும்
படிக்கு அவருடைய *காவலைக் காப்பாயாக.
செருயாவின் குமாரனுகிய யோவாப், இஸ்ர 5
வேலின் இரண்டு சேனுபதிகளாகிய நேரின்
குமாரன் அப்னேருக்கும், ஏத்தேரின் குமா
ரன் அமாசாவுக்கும் செய்த காரியத்தினுல்
எனக்குச் செய்த [10]குற்றத்தை நீ அறிந்திருக்கி
ருயே; அவன் அவர்களைக் கொன்று, சமாதா
னகாலத்திலே யுத்தகாலத்து இரத்தத்தைச்
சிந்தி, யுத்தகாலத்து இரத்தத்தைத் தன் அரை
யிலுள்ள கச்சையிலும் தன் கால்களில் இருந்த
பாதரட்சையிலும் வடியவிட்டானே. ஆகை 6
யால் உன் யுக்தியின்படியே நீ செய்து [11]அவ
னுடைய நரைமயிர் சமாதானமாய்ப் பாதாளத்
தில் இறங்கவொட்டாதிரு. கீலேயாத்திய 7
னுன [12]பர்சிலாயின் குமாரருக்குத் தயைசெய்
வாயாக; அவர்கள் உன் பந்தியிலே சாப்பிடு
கிறவர்களுடன் இருப்பார்களாக; உன் சகோ
தரனுகிய அப்சலோமுக்கு முன்பாக நான்
ஓடிப்போகையில், [13]அவர்கள் என்னை ஆதரித்
தார்கள். மேலும் பகூரிம் ஊரானுன பென் 8
யமீனனுகிய கேராவின் மகன் [14]சீமேயி உன்
னிடத்தில் இருக்கிருன்; நான் மகனுயீமுக்
குப் போகிற நாளிலே, அவன் என்னைக் கொ
டிய தூஷணமாய்த் தூஷித்தான்; ஆனுலும்
அவன் யோர்தானிலே எனக்கு எதிர்கொண்டு
வந்தபடியினுல்: நான் உன்னைப் பட்டயத்தா
லே கொன்றுபோடுவதில்லை என்று **கர்த்தர்**
மேல் அவனுக்கு ஆணையிட்டுக்கொடுத்தேன்.
ஆகிலும் நீ அவனைக் [15]குற்றமற்றவன் என்று 9
எண்ணுதே; நீ புத்திமான்; அவனுடைய நரை
மயிரை இரத்தத்துடன் பாதாளத்தில் இறங்
கப்பண்ண, நீ அவனுக்குச் செய்யவேண்டி
யதை அறிவாய் என்ருன். பின்பு தாவீது 10
தன் பிதாக்களோடே நித்திரையடைந்து, [16]தா
வீதின் நகரத்தில் அடக்கம்பண்ணப்பட்டான்.
தாவீது இஸ்ரவேலை அரசாண்ட நாட்கள் நாற் 11
பது வருஷம்; [17]அவன் எப்ரோனில் ஏழு
வருஷமும், எருசலேமில் முப்பத்துமூன்று
வருஷமும் அரசாண்டான்.
சாலொமோன் தன் தகப்பனுகிய தாவீது 12
டைய சிங்காசனத்தின்மேல் வீற்றிருந்தான்;
[18]அவன் ராஜ்யபாரம் மிகவும் ஸ்திரப்பட்டது.

[1] 1 நாளா. 29. 23
[2] ஆதி. 47. 31
[3] 3. 6. சங். 132. 11, 12
[4] 2. 28
[5] 1 சாமு. 14. 45. அப். 27. 34
[6] ஆதி. 47. 29. உபா. 31. 14
[7] யோ. 23. 14. உபா. 17 19, 20
[8] உபா. 29. 9
[9] உபா. 17. 18–20
* விதிகளை. ஆதி. 26. 5
[10] 2 சாமு. 3. 39: 19. 5—7
[11] ஆதி. 42. 38. நீதி. 20. 26
[12] 2 சாமு. 19. 31-40
[13] 2 சாமு. 17. 27
[14] 2 சாமு. 16. 5: 19. 18, 23
[15] யாத். 20. 7. யோபு 9. 28
[16] 2 சாமு. 5. 7. அப். 2. 29: 13. 36
[17] 1 நாளா. 29. 26, 27
[18] 2 நாளா. 1. 1

13 ஆகீத்தின் குமாரனாகிய அதோனியா சாலொ
மோனின் தாயாகிய பத்சேபாளிடத்தில் வந்
தான். [1]நீ சமாதானமாய் வருகிறாயா என்று
அவள் கேட்டதற்கு: சமாதானமாய்த்தான்
14 வருகிறேன் என்றான். பின்பு அவன்: உம்
மோடே நான் பேசவேண்டிய ஒரு காரியம்
இருக்கிறது என்றான். அதற்கு அவள்: சொல்
15 என்றாள். அப்பொழுது அவன்: [2]ராஜ்யம்
என்னுடையதாயிருந்தது என்றும், நான் அர
சாளுகிறதற்கு இஸ்ரவேலரெல்லாரும் என்
மேல் நோக்கமாய் இருந்தார்கள் என்றும் நீர்
அறிவீர்; ஆனாலும் ராஜ்யபாரம் என்னைவிட்
டுத் தாண்டி, என் சகோதரனுக்கு ஆயிற்று;
[3]கர்த்தரால் அது அவருக்குக் கிடைத்தது.
16 இப்பொழுது நான் உம்மிடத்தில் ஒரு மன்
றாட்டைக் கேட்கிறேன்? அதை எனக்கு மறுக்
கவேண்டாம் என்றான். அவள்: சொல் என்
17 றாள். அப்பொழுது அவன்: ராஜாவாகிய
சாலொமோன் உம்முடைய சொல்லை மறுப்ப
தில்லை; [4]சூனேம் ஊராளாகிய அபிஷாகை
எனக்கு அவர் விவாகம் பண்ணிக்கொடுக்க,
அவரோடே பேசும்படி வேண்டுகிறேன் என்
18 றான். அதற்குப் பத்சேபாள்: நல்லது, நான்
உனக்காக ராஜாவிடத்தில் பேசுவேன் என்
19 றாள். பத்சேபாள் அதோனியாவுக்காக ராஜா
வாகிய சாலொமோனிடத்தில் பேசும்படி
போனாள்; அப்பொழுது ராஜா எழுந்திருந்து,
[5]அவளுக்கு எதிர்கொண்டுவந்து அவளை
வணங்கி, தன் சிங்காசனத்தின்மேல் உட்
கார்ந்து, ராஜாவின் தாயார் தன் [6]வலதுபுற
மாக உட்கார, அவளுக்கு ஒரு ஆசனத்தை
20 வைத்தான். அப்பொழுது அவள்: நான்
உம்மை ஒரு சிறிய மன்றாட்டைக் கேட்க
விரும்புகிறேன்; எனக்கு அதை மறுக்கவேண்
டாம் என்றாள். அதற்கு ராஜா: என் தாயாரே,
கேளும்; நான் உமக்கு மறுப்பதில்லை என்
21 றான். அப்பொழுது அவள்: சூனேம் ஊரா
ளாகிய அபிஷாகை உம்முடைய சகோதரனா
கிய அதோனியாவுக்கு விவாகம்பண்ணிக்
22 கொடுக்கவேண்டும் என்றாள். ராஜாவாகிய
சாலொமோன் தன் தாயாருக்குப் பிரதியுத்தர
மாக: நீர் சூனேம் ஊராளாகிய அபிஷாகை
அதோனியாவுக்குக் கேட்பானேன்? அப்படி
யானால் ராஜ்யபாரத்தையும் அவனுக்குக்
கேளும்; அவன் எனக்கு மூத்த சகோதரன்;
அவனுக்கும் ஆசாரியனாகிய அபியத்தாருக்கும்
செருயாவின் குமாரன் யோவாபுக்குமே
23 அதைக் கேளும் என்றான். பின்பு சாலொ
மோன் ராஜா: அதோனியா இந்த வார்த்தை
யைத் தன் பிராணனுக்குச் சேதமாகச் சொல்
லாதிருந்தால், [7]தேவன் அதற்குச் சரியாகவும்
அதற்கு அதிகமாகவும் எனக்குச் செய்யக்கட
24 வர் என்று கர்த்தர்மேல் ஆணையிட்டு, இப்
போதும் இன்றைக்கு அதோனியா கொலை
யுண்பான் என்று என்னைத் திடப்படுத்தின
வரும், என்னை என் தகப்பனாகிய தாவீதின்
சிங்காசனத்தில் வீற்றிருக்கப்பண்ணி, [8]தாம்
சொன்னபடி எனக்கு வீட்டைக் கட்டுவித்த
வருமாகிய கர்த்தருடைய ஜீவனைக்கொண்டு
சொல்லுகிறேன் என்று சொல்லி, ராஜாவா 25
கிய சாலொமோன் யோய்தாவின் குமாரன்
பெனாயாவுக்குக் கட்டளைகொடுத்து அவனை
அனுப்பினான்; இவன் அவன்மேல் விழுந்து
அவனைக் கொன்றுபோட்டான். ராஜா: 26
ஆசாரியனாகிய அபியத்தாரை நோக்கி: நீ உன்
நிலங்கள் இருக்கிற ஆனதோத்திற்குப் போய்
விடு; [9]நீ மரணத்திற்குப் பாத்திரவானாயிருந்
தும், நீ என் தகப்பனாகிய தாவீதுக்கு முன்
பாகக் கர்த்தராகிய ஆண்டவருடைய பெட்டி
யைச் சுமந்தபடியினாலும், என் தகப்பன் அநு
பவித்த உபத்திரவத்தையெல்லாம் நீ கூட
அனுபவித்தபடியினாலும், இன்றையதினம்
நான் உன்னைக் கொலைசெய்யமாட்டேன் என்
றான். அப்படியே கர்த்தர் சீலோவிலே ஏலி 27
யின் வீட்டாரைக்குறித்துச் சொன்ன வார்த்
தையை நிறைவேற்றும்படியாக, [10]சாலொ
மோன் அபியத்தாரைக் கர்த்தருடைய ஆசாரி
யனாயிராதபடிக்குத் தள்ளிப்போட்டான்.
நடந்த இந்தச் செய்தி யோவாபுக்கு வந்த 28
போது, அவன் கர்த்தருடைய கூடாரத்திற்கு
ஓடிப்போய், [11]பலிபீடத்தின் கொம்புகளைப்
பிடித்துக்கொண்டான்; யோவாப் அப்சலோ
மின் பட்சம் சாயாதவனாயிருந்தும், அதோ
னியாவின் பட்சம் சாய்ந்திருந்தான். யோவாப் 29
கர்த்தரின் கூடாரத்திற்கு ஓடிப்போனான் என்
றும், இதோ, பலிபீடத்தண்டையில் நிற்கி
றான் என்றும், ராஜாவாகிய சாலொமோனு
க்கு அறிவிக்கப்பட்டபோது, சாலொமோன்
யோய்தாவின் குமாரனாகிய பெனாயாவை
அனுப்பி, நீ போய் அவன்மேல் விழு என்
றான். பெனாயா கர்த்தரின் கூடாரத்திற்குப் 30
போய், அவனைப் பார்த்து: வெளியே வா
என்று ராஜா சொல்லுகிறார் என்றான்.
அதற்கு அவன்: நான் வரமாட்டேன்; இங்
கேயே சாவேன் என்றான்; ஆகையால் பெ
னாயா ராஜாவினிடத்தில் போய், யோவாப்
இன்னபடி சொல்லி, இன்னபடி எனக்கு
மறுஉத்தரவு கொடுத்தான் என்று மறுசெய்தி
சொன்னான். அப்பொழுது ராஜா அவனை 31
நோக்கி: அவன் சொன்னபடியே நீ செய்து,
அவனைக் கொன்று, அடக்கம்பண்ணி, இவ்
விதமாய் யோவாப் முகாந்தரமில்லாமல் சிந்
தின இரத்தத்தை [12]என்னைவிட்டும் என் பிதா
வின் வீட்டைவிட்டும் விலக்கிப்போடு. அவன் 32
தன்னைப்பார்க்கிலும் [13]நீதியும் நற்குணமு
முள்ள இரண்டுபேராகிய நேரின் குமாரன் அப்
னேர் என்னும் இஸ்ரவேலின் படைத்தலை
வன்மேலும், எதேரின் குமாரன் அமாசா என்
னும் யூதாவின் படைத்தலைவன்மேலும் விழு
ந்து, என் தகப்பனாகிய தாவீதுக்குத் தெரியா
மல் அவர்களைப் பட்டயத்தால் கொன்ற [14]அவ
னுடைய இரத்தப்பழியைக் கர்த்தர் அவனு
டைய தலையின்மேல் திரும்பப்பண்ணுவா
ராக. இப்படியே அவர்களுடைய இரத்தப் 33

1 1 சாமு. 16. 4, 5
2 1. 5
3 1 நாளா. 22. 9, 10. எசே. 27. 5–8. தானி. 2. 21
4 1. 3, 4
5 யாத். 20. 12
6 சங். 45. 9
7 ரூத். 1. 17
8 2 சாமு. 7. 11, 13
9 யோசு. 21. 18. 1 சாமு. 23. 6
10 1 சாமு. 2. 30–35
11 1. 7, 50
12 எண். 35. 33. உபா. 19. 13. 21. 8, 9
13 2 சாமு. 21. 13
14 நியா. 9. 24. சங். 7. 16

பழி என்றும் யோவாபுடைய தலையின்மே
லும், அவன் சந்ததியாரின் தலையின்மேலும்
திரும்பவும், [1]தாவீதுக்கும் அவர் சந்ததியாருக்
கும் அவர் வீட்டாருக்கும் அவர் சிங்காசனத்
திற்கும் என்றென்றைக்கும் **கர்த்தராலே**
சமாதானம் உண்டாயிருக்கவும் கடவது என்
34 றான். அப்படியே யோய்தாவின் குமாரன்
பெனாயா போய், அவன்மேல் விழுந்து அவ
னைக் கொன்றுபோட்டான்; அவன் வனாந்
தரத்திலிருக்கிற தன்னுடையவீட்டிலே அடக்
35 கம்பண்ணப்பட்டான். அவனுக்குப் பதிலாக
ராஜா யோய்தாவின் குமாரன் பெனாயாவை
இராணுவத்தின்மேலும், [2]ஆசாரியனாகிய சா
தோக்கை அபியத்தாரின் ஸ்தானத்திலும்
வைத்தான்.
36 பின்பு ராஜா சீமேயியை அழைப்பித்து,
அவனை நோக்கி: [3]நீ எருசலேமிலே உனக்கு
ஒரு வீட்டைக் கட்டி, அங்கேயிருந்து எங்கே
யாவது வெளியே போகாமல், அங்கேதானே
37 குடியிரு. நீ வெளியே போய்க் [4]கீதரோன்
ஆற்றைக்கடக்கும்நாளில், நீ சாகவே சாவாய்;
அப்பொழுது உன் இரத்தப்பழி [5]உன் தலை
யின்மேல் இருக்கும் என்பதை நீ நிச்சயமாய்
38 அறிந்துகொள் என்றான். சீமேயி ராஜாவைப்
பார்த்து: அது நல்ல வார்த்தை; ராஜாவாகிய
என் ஆண்டவன் சொன்னபடியே, உமது
அடியானாகிய நான் செய்வேன் என்று
சொல்லி, சீமேயி அநேகநாள் எருசலேமிலே
39 குடியிருந்தான். மூன்று வருஷம் சென்ற
போது,சீமேயியின்வேலைக்காரர்இரண்டுபேர்
மாக்காவின் குமாரனாகிய [6]ஆகீஸ் என்னும்
காத்தின் ராஜாவினிடத்திற்கு ஓடிப்போனார்
கள்; உன் வேலைக்காரர் காத் ஊரில் இருக்கி
றார்கள் என்று சீமேயிக்கு அறிவித்தார்கள்.
40 அப்பொழுது சீமேயி எழுந்து, தன் கழுதை
யின்மேல் சேணம்வைத்து, தன் வேலைக்கார
ரைத் தேட, காத் ஊரிலிருக்கிற ஆகீசிடத்துக்
குப் புறப்பட்டுப் போனான்; இப்படிச் சீமேயி
போய், தன் வேலைக்காரரைக் காத்ஊரிலி
41 ருந்து கொண்டுவந்தான். சீமேயி எருசலேமி
லிருந்து காத்ஊருக்குப் போய், திரும்பி வந்
தான் என்று சாலொமோனுக்கு அறிவிக்கப்
42 பட்டபோது, ராஜா சீமேயியை அழைப்
பித்து: நீ வெளியே புறப்பட்டு எங்கேயாவது
போகிற நாளிலே சாகவே சாவாய் என்பதை
நீ நிச்சயமாய் அறிந்துகொள் என்று நான்
உன்னைக் **கர்த்தர்**மேல் ஆணையிடச்செய்து,
உனக்குத் திடச்சாட்சியாகச் சொல்லியிருக்க,
அதற்கு நீ: நான் கேட்ட வார்த்தை நல்ல
43 தென்று சொல்லவில்லையா? நீ **கர்த்தரின்**
ஆணையையும், நான் உனக்குக் கற்பித்த கட்ட
ளையையும்கைக்கொள்ளாதேபோனதென்ன?
44 என்று சொல்லி, பின்னும் ராஜா சீமேயி
யைப் பார்த்து: நீ என் தகப்பனாகிய தாவீதுக்
குச் செய்ததும் உன் மனதுக்குத் தெரிந்திருக்
கிறதுமான எல்லாப் பொல்லாப்பையும் அறிந்
திருக்கிறாய்; [7]ஆகையால் **கர்த்தர்** உன் பொல்

லாப்பை உன் தலையின்மேல் திரும்பப்பண்
ணுவார். ராஜாவாகிய சாலொமோனோ ஆசீர் 45
வதிக்கப்பட்டவனாயிருப்பான்; [8]தாவீதின் சிங்
காசனம் என்றைக்கும் **கர்த்தருக்கு** முன்பாக
உறுதியாயிருக்கும் என்று சொல்லி, ராஜா 46
யோய்தாவின் குமாரனாகிய பெனாயாவுக்குக்
கட்டளை கொடுத்தான்; அவன் வெளியே
போய், அவன்மேல் விழுந்து அவனைக் கொ
ன்றுபோட்டான். [9]ராஜ்யபாரம் சாலொமோ
னின் கையிலே ஸ்திரப்பட்டது.

சாலொமோன் எகிப்தின் ராஜாவாகிய **3**
பார்வோனோடே சம்பந்தங்கலந்து, [10]பார்
வோனின் குமாரத்தியை விவாகம்பண்ணி,
தன்னுடைய அரமனையையும் **கர்த்தருடைய**
ஆலயத்தையும் எருசலேமின் சுற்றுமதிலையும்
கட்டித் தீருமட்டும் அவன் அவளைத் [11]தாவீ
தின் நகரத்தில் கொண்டுவந்து வைத்தான்.
அந்நாட்கள்மட்டும் **கர்த்தருடைய** நாமத்திற்கு 2
ஒரு ஆலயம் கட்டப்படாதிருந்ததினால்,
[12]ஜனங்கள் மேடைகளிலே பலியிட்டுவந்தார்
கள். சாலொமோன் **கர்த்தரிடத்தில்** [13]அன்பு 3
கூர்ந்து, தன் தகப்பனாகிய தாவீதின் [14]கட்ட
ளைகளில் நடந்தான்; ஆனாலும் அவன் மேடை
களிலே பலியிட்டுத் தூபம்காட்டிவந்தான்.
அப்படியே ராஜா பலியிட கிபியோனுக் 4
குப் போனான்; அது பெரிய மேடையாயிருந்
தது; அந்தப் பலிபீடத்தின்மேல் சாலொ
மோன் ஆயிரம் சர்வாங்க தகனபலிகளைச்
செலுத்தினான். கிபியோனிலே **கர்த்தர்** 5
சாலொமோனுக்கு இராத்திரியில் [15]சொப்
பனத்திலே தரிசனமாகி: நீ விரும்புகிறதை
என்னிடத்தில் கேள் என்று தேவன் சொன்
னார். அதற்குச் சாலொமோன்: என் தகப்ப 6
னாகிய தாவீது என்னும் உமது அடியான் உம்
மைப்பற்றி [16]உண்மையும் நீதியும் மனநேர்
மையுமாய் உமக்கு முன்பாக நடந்தபடியே
தேவரீர் அவருக்குப் பெரிய கிருபை செய்து,
அந்தப் பெரிய கிருபையை அவருக்குக்
காத்து, இந்நாளில் இருக்கிறபடியே அவரு
டைய சிங்காசனத்தில் வீற்றிருக்கிற [17]ஒரு
குமாரனை அவருக்குத் தந்தீர். இப்போதும் 7
என் தேவனாகிய **கர்த்தாவே**, தேவரீர் உமது
அடியேனை என் தகப்பனாகிய தாவீதின் ஸ்தா
னத்திலே ராஜாவாக்கினீரே, நானோவென்
றால் போக்கு வரவு அறியாத [18]சிறுபிள்ளையா
யிருக்கிறேன். நீர் தெரிந்துகொண்டதும் 8
[19]ஏராளத்தினால் எண்ணிக்கைக்கு அடங்காத
தும் இலக்கத்திற்கு உட்படாததுமான திர
ளான ஜனங்களாகிய உமது ஜனத்தின் நடு
வில் அடியேன் இருக்கிறேன். ஆகையால் 9
உமது ஜனங்களை நியாயம் விசாரிக்கவும்,
நன்மை தீமை இன்னதென்று [20]வகையறுக்க
வும், அடியேனுக்கு [21]ஞானமுள்ள இருதயத்
தைத் தந்தருளும்; ஏராளமாயிருக்கிற இந்த
உமது ஜனங்களை [22]நியாயம் விசாரிக்க யாரா
லே ஆகும் என்றான். சாலொமோன் இந்தக் 10
காரியத்தைக் கேட்டது ஆண்டவருடைய

1 2 சாமு. 3. 29. நீதி. 25. 5
2 எண். 25. 11–13. 1 சாமு. 2. 35
3 2 சாமு. 16. 5
4 2 சாமு. 15. 23.
5 லேவி. 20. 9. யோசு. 2. 19. 2 சாமு. 1. 16
6 1 சாமு. 27. 2
7 2 சாமு. 16. 5. சங். 7. 16. எசே. 17. 19
8 நீதி. 25. 5
9 2 நாளா. 1. 1
10 7. 8. 9. 24
11 2 சாமு. 5. 7
12 லேவி. 17. 3–5
13 உபா. 30. 16, 20. சங். 31. 23. மத். 22 37. ரோ. 8. 28
14 யோ. 14. 15, 21
15 எண். 12. 6. மத். 1. 20
16 2 இரா. 20. 3. சங். 15. 2
17 1. 48
18 1 நாளா. 29. 1. சங். 121. 8
19 உபா. 7. 6. ஆதி. 13. 16
20 எபி. 5. 14
21 நீதி. 2. 3–9. யாக். 1. 5
22 சங். 72. 1, 2. யோ. 5. 30

பார்வைக்கு உகந்த விண்ணப்பமாயிருந்தது.
11 ஆகையினால் தேவன் அவனை நோக்கி: நீ
உனக்கு நீடித்த நாட்களைக் கேளாமலும், ஐசு
வரியத்தைக் கேளாமலும், உன் சத்துருக்க
ளின் பிராணனைக் கேளாமலும், [1]நீ இந்தக்
காரியத்தையே கேட்டு, நியாயம் விசாரிக்கிற
தற்கு ஏற்ற ஞானத்தை உனக்கு வேண்டிக்
12 கொண்டபடியினால், உன் வார்த்தைகளின்
படி செய்தேன்; [2]ஞானமும் உணர்வுமுள்ள
இருதயத்தை உனக்குத் தந்தேன்; இதிலே
உனக்குச் சரியானவன் உனக்குமுன் இருந்
ததுமில்லை, உனக்குச் சரியானவன் உனக்
13 குப்பின் எழும்புவதுமில்லை. இதுவுமன்றி,
[3]நீ கேளாத ஐசுவரியத்தையும் மகிமையையும்
உனக்குத் தந்தேன்; [4]உன் நாட்களில் இருக்
கிற ராஜாக்களில் ஒருவனும் உனக்குச் சரி
14 யானவன் இருப்பதில்லை. உன் தகப்பனாகிய
தாவீது நடந்ததுபோல, நீயும் என் கட்டளை
களையும் என் நியமங்களையும் கைக்கொண்டு,
என் வழிகளில் நடப்பாயாகில், [5]உன் நாட்
களையும் நீடித்திருக்கப்பண்ணுவேன் என்
15 றார். சாலொமோனுக்கு நித்திரை தெளிந்த
போது, அது சொப்பனம் என்று அறிந்தான்;
அவன் எருசலேமுக்கு வந்து, கர்த்தருடைய
உடன்படிக்கைப் பெட்டிக்கு முன்பாக
நின்று, சர்வாங்க தகனபலிகளையிட்டு, சமா
தானபலிகளைச் செலுத்தி, [6]தன் ஊழியக்
காரர் எல்லாருக்கும் விருந்துசெய்தான்.
16 அப்பொழுது வேசிகளான இரண்டு ஸ்திரீ
கள் ராஜாவினிடத்தில் வந்து, அவனுக்கு முன்
17 பாக நின்றார்கள். அவர்களில் ஒருத்தி: என்
ஆண்டவனே, நானும் இந்த ஸ்திரீயும் ஒரே
வீட்டிலே குடியிருக்கிறோம்; நான் இவ
ளோடே வீட்டிலிருக்கையில் ஆண்பிள்ளை
18 பெற்றேன். நான் பிள்ளைபெற்ற மூன்றாம்
நாளிலே, இந்த ஸ்திரீயும் ஆண்பிள்ளை பெற்
றாள்; நாங்கள் ஒருமித்திருந்தோம், எங்கள்
இருவரையும் தவிர, வீட்டுக்குள்ளே வே
19 றொருவரும் இல்லை. இராத்திரி தூக்கத்
திலே இந்த ஸ்திரீ தன் பிள்ளையின்மேல்
புரண்டு படுத்ததினால் அது செத்துப்போ
20 யிற்று. அப்பொழுது, உமது அடியாள் நித்
திரைபண்ணுகையில், இவள் நடுச்சாமத்தில்
எழுந்து, என் பக்கத்திலே கிடக்கிற என்
பிள்ளையை எடுத்து, தன் மார்பிலே கிடத்திக்
கொண்டு, செத்த தன் பிள்ளையை எடுத்து,
21 என் மார்பிலே கிடத்திவிட்டாள். என் பிள்
ளைக்குப் பால்கொடுக்கக் காலமே நான் எழுந்
திருந்தபோது, அது செத்துக் கிடந்தது;
பொழுது விடிந்தபின் நான் அதை உற்றுப்
பார்க்கும்போது, அது நான் பெற்ற பிள்ளை
22 அல்லவென்று கண்டேன் என்றாள். அதற்கு
மற்ற ஸ்திரீ: அப்படியல்ல, உயிரோடிருக்
கிறது என் பிள்ளை, செத்தது உன் பிள்ளை
என்றாள். இவளோ: இல்லை, செத்தது உன்
பிள்ளை, உயிரோடிருக்கிறது என் பிள்ளை
என்றாள்; இப்படி ராஜாவுக்கு முன்பாக

[1] ரோ. 8. 26. யாக். 4. 2, 3
[2] 4. 29. பிர. 1. 16. 1 யோ. 5. 14, 15
[3] மத். 6. 33. எபே. 3. 20
[4] 4. 21, 24. நீதி. 3. 16
[5] உபா. 25. 15. சங். 21. 4; 91, 16. நீதி. 3. 2. 1 தீமோ. 4. 8
[6] ஆதி. 40. 20. எஸ்தர். 1. 3. மாற். 6. 21
[7] ஆதி. 43. 30. ஏசா. 49. 15. எரே. 31. 20 ஓசி. 11. 8
[8] சங். 72. 2, 4
[9] 2 சாமு. 20. 24
[10] 2. 27, 35
[11] 1 நாளா. 27. 33

வாதாடினார்கள். அப்பொழுது ராஜா: உயி 23
ரோடிருக்கிறது என் பிள்ளை, செத்தது உன்
பிள்ளை என்று இவள் சொல்லுகிறாள்; அப்
படியல்ல, செத்தது உன் பிள்ளை, உயிரோ
டிருக்கிறது என் பிள்ளை என்று அவள்
சொல்லுகிறாள் என்று சொல்லி, ஒரு பட் 24
டயத்தைக் கொண்டுவாருங்கள் என்றான்;
அவர்கள் ஒரு பட்டயத்தை ராஜாவினிடத்
தில் கொண்டுவந்தார்கள். ராஜா உயிரோ 25
டிருக்கிற பிள்ளையை இரண்டாகப் பிளந்து,
பாதியை இவளுக்கும் பாதியை அவளுக்கும்
கொடுங்கள் என்றான். அப்பொழுது உயி 26
ரோடிருக்கிற பிள்ளையின் தாய், [7]தன் பிள்
ளைக்காக அவள் குடல் துடித்ததினால், ராஜா
வைநோக்கி: ஐயோ! என் ஆண்டவனே,
உயிரோடிருக்கிற பிள்ளையைக் கொல்லவேண்
டாம்; அதை அவளுக்கே கொடுத்துவிடும்
என்றாள்; மற்றவள் அது எனக்கும் வேண்
டாம், உனக்கும் வேண்டாம், பிளந்து போ
டுங்கள் என்றாள். அப்பொழுது ராஜா உயி 27
ரோடிருக்கிற பிள்ளையைக் கொல்லாமல்,
அவளுக்குக் கொடுத்துவிடுங்கள்; அவளே
அதின் தாய் என்றான். ராஜா தீர்த்த இந்த 28
நியாயத்தை இஸ்ரவேலர் எல்லாரும் கேள்
விப்பட்டு, [8]நியாயம் விசாரிக்கிறதற்கு தேவன்
அருளின ஞானம் ராஜாவுக்கு உண்டென்று
கண்டு, அவனுக்குப் பயந்தார்கள்.

ராஜாவாகிய சாலொமோன் சமஸ்த இஸ்ர 4
வேலின்மேலும் ராஜாவாயிருந்தான். அவ 2
னுக்கு இருந்த பிரபுக்கள்: சாதோக்கின்
குமாரனாகிய அசரியா பிரதான மந்திரியா
யிருந்தான். சீசாவின் குமாரராகிய எலிகோ 3
ரேப்பும் அகியாவும் சம்பிரதிகளாயிருந்தார்
கள்; அகிலூதின் குமாரன் யோசபாத் [9]மந்
திரியாயிருந்தான். யோய்தாவின் குமாரன் 4
பெனாயா படைத்தலைவனும், சாதோக்கும்
[10]அபியத்தாரும் ஆசாரியர்களுமாயிருந்தார்கள்.
நாத்தானின் குமாரன் அசரியா மணியகார 5
ரின் தலைவனாயிருந்தான்; நாத்தானின் குமா
ரன் சாபூத் ராஜாவின் பிரதானியும் [11]இஷ்
டனுமாயிருந்தான். அகீஷார் அரமனை விசா 6
ரிப்புக்காரனும், அப்தாவின் குமாரன் அதோ
னீராம் பகுதி விசாரிப்புக்காரனுமாய் இருந்
தான். ராஜாவுக்கும் அவன் அரமனைக்கும் 7
வேண்டிய உணவுப்பொருள்களைச் சேகரிக்
கிற பன்னிரண்டு மணியகாரர் சாலொமோ
னுக்கு இஸ்ரவேல் தேசமெங்கும் வைக்கப்
பட்டிருந்தார்கள்; அவர்கள் மாதத்துக்கு ஒவ்
வொருவராக வருஷமுழுதும் பராமரித்து வந்
தார்கள். அவர்கள் நாமங்களாவன: ஊரின் 8
குமாரன், இவன் எப்பிராயீம் மலைத்தேசத்
தில் இருந்தான். தேக்கேரின் குமாரன், 9
இவன் மாக்காத்சிலும், சால்பீமிலும், பெத்
ஷிமேசிலும், ஏலோன்பெத்தானானிலும்
இருந்தான். ஏசேதின் குமாரன், இவன் 10
அறுபோத்தில் இருந்தான்; சோகோவும் எப்
பேர் சீமையனைத்தும் இவன் விசாரிப்பில்

11 இருந்தது. அபினதாபின் குமாரன், இவன்
தோரின் நாட்டுப்புற மனைத்திற்கும் விசாரிப்
புக்காரனாயிருந்தான்; சாலொமோனின் குமா
ரத்தியாகிய தாபாத் இவனுக்கு மனைவியா
12 யிருந்தாள். அகிலூதின் குமாரனாகிய பானா,
இவன் விசாரிப்பில், தானாகும், மெகிதோ
வும், சர்த்தனாவுக்குப் பக்கமாகவும் யெஸ்ர
யேலுக்குக் கீழாகவும் பெத்செயான்தொடங்கி
ஆபேல்மெகொல்லாமட்டும் யக்மெயாமுக்கு
அப்புறத்துமட்டும் இருக்கிற பெத்செயான்
13 அனைத்தும் இருந்தது. கேபேரின் குமாரன்,
இவன் கீலேயாத்திலுள்ள ராமோத்தில் இருந்
தான்; கீலேயாத்திலுள்ள மனாசேயின் குமார
னாகிய யாவீரின் கிராமங்களும் மதில்களும்
வெண்கலத் தாழ்ப்பாள்களுமுள்ள பாசான்
தேசத்திலுடைய அறுபது பெரிய பட்ட
ணங்களுள்ள அர்கோப் சீமையும் இவன்
14 விசாரிப்பில் இருந்தது. இத்தோவின் குமா
ரன் அகினதாப், இவன் மகனாயீமில் இருந்
15 தான். அகிமாஸ், இவன் நப்தலியில் இருந்
தான்; இவன் சாலொமோனுக்கு இருந்த ஒரு
குமாரத்தியாகிய பஸ்மாத் என்பவளை விவா
16 கம்பண்ணினான். ஊசாயின் குமாரன் பானா,
இவன் ஆசேரிலும் ஆலோத்திலும் இருந்
17 தான். பருவாவின் குமாரன் யோசபாத்,
18 இவன் இசக்காரில் இருந்தான். ஏலாவின்
குமாரன் சிமேயி, இவன் பென்யமீனில்
19 இருந்தான். ஊரியின் குமாரன் கேபேர்,
இவன் எமோரியரின் ராஜாவாகிய சீகோ
னுக்கும் பாசானின் ராஜாவாகிய ஓகுக்கும்
இருந்த [1]தேசமாகிய கீலேயாத்தேசத்தில்
இருந்தான்; இவன்மாத்திரம் அத்தேசத்தில்
அதிபதியாய் இருந்தான்.
20 யூதாவும் இஸ்ரவேலும் கடற்கரை மணலத்
தனை ஏராளமாயிருந்து [2]புசித்துக் குடித்து
21 மகிழ்ந்துகொண்டிருந்தார்கள். நதிதொடங்கி,
பெலிஸ்தர் தேசவழியாய் எகிப்தின் எல்லை
மட்டும் இருக்கிற சகல ராஜ்யங்களையும் சா
லொமோன் ஆண்டுகொண்டிருந்தான்; அவர்
கள் சாலொமோனுக்குக் [3]காணிக்கைகளைக்
கொண்டுவந்து, அவன் உயிரோடிருந்த நா
22 ளெல்லாம் அவனைச் சேவித்தார்கள். நாள்
ஒன்றிற்குச் சாலொமோனுக்குச் செல்லும்
சாப்பாட்டுச் செலவு, முப்பது மரக்கால்
மெல்லிய மாவும், அறுபது மரக்கால் மா
23 வும், கலைமான்களையும் வெளிமான்களையும்
வரையாடுகளையும் கொழுமையான பறவை
களையும் தவிர, கொழுக்கப்பட்ட பத்து
மாடுகளும், மேய்ச்சலிலிருந்து வந்த இரு
24 பது மாடுகளும், நூறு ஆடுகளுமாம். நதிக்கு
இப்புறத்தில் இருக்கிற திப்சாமுதற்கொண்டு
ஆசாமட்டுமுள்ளவை யெல்லாவற்றையும், நதி
க்கு இப்புறத்திலுள்ள சகல ராஜாக்களையும்
ஆண்டுவந்தான்; [4]அவனைச் சுற்றி எங்கும்
25 சமாதானமாயிருந்தது. சாலொமோனுடைய
நாளெல்லாம் தாண் துவக்கிப் பெயெர்செபா
மட்டும், யூதாவும் இஸ்ரவேலும் அவரவர் தங்
கள் தங்கள் திராட்சச்செடியின் நிழலிலும்,
தங்கள் தங்கள் அத்திமரத்தின் நிழலிலும் [5]சுக
மாய்க் குடியிருந்தார்கள். சாலொமோனுக்கு 26
*நாலாயிரம் இரதக்குதிரை லாயங்களும், [6]பன்
னீராயிரம் குதிரைவீரரும் இருந்தார்கள். மேற் 27
சொல்லிய †மணியகாரரில ஒவ்வொருவரும்
தன் தன் மாதத்திலே சாலொமோன் ராஜாவுக்
கும், ராஜாவின் பந்திக்கு வரும் யாவருக்கும்
வேண்டிய வைகளை ஒரு குறைவுமின்றி பராம
ரித்து, குதிரைகளுக்கும் ஒட்டகங்களுக்கும் 28
வேண்டிய வாற்கோதுமையையும், வைக்கோ
லையும், அவரவர் தங்களுக்கு இடப்பட்ட கட்
டளையின்படி அவைகள் இருக்கும் ஸ்தலத்திற்
குக் கொண்டுவருவார்கள்.
தேவன் சாலொமோனுக்கு மிகுதியான 29
ஞானத்தையும் புத்தியையும், [7]கடற்கரை மண
லத்தனையான ‡மனோவிருத்தியையும் கொடுத்
தார். சகல கிழக்கத்திப புத்திரரின் ஞானத் 30
தையும் எகிப்தியரின் சகல ஞானத்தையும்
பார்க்கிலும் [8]சாலொமோனின் ஞானம் சிறந்த
தாயிருந்தது. அவன் எஸ்ராகியனாகிய ஏத்தா 31
னிலும், ஏமான், கல்கோல், தர்தா என்னும்
மாகோலின் குமாரரிலும், மற்ற எல்லா மனு
ஷரிலும் ஞானவானாயிருந்தான்; சுற்றிலும்
இருந்த சகல ஜாதிகளிலும அவன் கீர்த்தி பிர
பலமாயிருந்தது. அவன் மூவாயிரம நீதி 32
மொழிகளைச் சொன்னான்; [9]அவனுடைய
பாட்டுகள் ஆயிரத்துஐந்து. லீபனோனில் 33
இருக்கிற கேதுருமரங்கள் முதற்கொண்டு
சுவரில் முளைக்கிற ஈசோப்புப பூண்டுவரை
க்குமுள்ள மரமுதலிய தாபரங்களைக் குறித்
தும, மிருகங்கள பறவைகள் ஊரும் பிராணி
கள் மச்சங்கள் ஆகிய இவைகளைக் குறித்தும்
வாக்கியங்களைச் சொன்னான். சாலொமோ 34
னின் ஞானத்தைக்குறித்துக் கேள்விப்பட்ட
பூமியின சகல ராஜாக்களிடத்திலுமிருந்து
[10]நானா ஜாதியான ஜனங்களும் அவனுடைய
ஞானத்தைக் கேட்கிறதற்கு வந்தார்கள்.
சாலொமோனை அவனுடைய பிதாவின் 5
ஸ்தானத்தில் ராஜாவாக அபிஷேகம்பண்ணி
னார்கள் என்று தீருவின் ராஜாவாகிய ஈராம்
கேள்விப்பட்டு, தன ஊழியக்காரரை அவனி
டத்தில் அனுப்பினான்; [11]ஈராம் தாவீதுக்குச்
சகல நாளும் சிநேகிதனாயிருந்தான். அப் 2
பொழுது சாலொமோன ஈராமினிடத்தில்
ஆட்களை அனுப்பி: என் தகப்பனாகிய தாவீ 3
தின் சத்துருக்களைக் கர்த்தர் அவருடைய பா
தங்களுக்குக்கீழ்ப்படுத்துவிடுமளவும, அவர்கள்
தம்மைச் சுற்றிலும் செய்கிற யுத்தத்தினால்,
[12]அவர் தம்முடைய தேவனாகிய கர்த்தருடைய
நாமத்திற்கு ஆலயத்தைக் கட்ட, அவருக்குக்
கூடாதிருந்தது என்று நீர் அறிந்திருக்கிறீர்.
ஆனாலும இப்பொழுதோ என் தேவனாகிய 4
கர்த்தர் எங்கும் எனக்கு இளைப்பாறுதலைத்
தந்தார்; [13]விரோதியும் இல்லை, இடையூறும்
இல்லை. ஆகையால்: நான் உன் ஸ்தானத் 5
தில் உன் சிங்காசனத்தின்மேல் வைக்கும்

1 உபா. 3. 8
2 ஆதி. 22. 17. நீதி. 14. 28. பிர. 2. 24
3 2 நாளா. 9. 26. சங். 72. 8–11
4 1 நாளா. 22. 9
5 எரே. 23. 6. மீகா. 4. 4. சகரி. 3. 10
* 40,000
6 உபா. 17. 16. 2 நாளா. 1. 14
† 7. வசனம் காண்க.
7 3. 12
‡ விவேகத்தையும்.
8 ஆதி. 25. 6. அப். 7. 22
9 நீதி. 1. 1. பிர. 12. 9. உன்னத. 1. 1
10 2 நாளா. 9. 1, 23. ஏசா. 2. 2,3. கொலோ. 2. 3
11 2 சாமு. 5. 11. ஆமோ. 1. 9
12 1 நாளா. 22. 8; 28. 3
13 சங். 72. 7. ஏசா. 9. 7

உன் குமாரனே என் நாமத்திற்கு ஆலயத்
தைக் கட்டுவான் என்று **கர்த்தர்** என் தகப்ப
ஞகிய தாவீதினிடத்தில் சொன்னபடியே,
[1]என் தேவஞகிய **கர்த்தரின்** நாமத்திற்கு ஆல
யத்தைக் கட்டவேண்டுமென்று இருக்கிறேன்.
6 ஆதலால் லீபனேனில் எனக்காக கேதரு
மரங்களை வெட்டக் கட்டளையிடும்; சீதோனி
யரைப்போல மரவெட்டுவேலை அறிந்தவர்கள்
[2]எங்களுக்குள்ளே ஒருவருமில்லை என்பது
உமக்குத் தெரியும்; அதற்காக என் வேலைக்
காரர் உம்முடைய வேலைக்காரரோடே இருப்
பார்கள்; நீர் சொல்வதின்படியெல்லாம் உம்
முடைய வேலைக்காரரின் சம்பளத்தை உமக்
குக் கொடுப்பேன் என்று சொல்லச்சொன்
7 ஞன். ஈராம் சாலொமோனின் வார்த்தைக
ளைக் கேட்டபோது, மிகவும் சந்தோஷப்
பட்டு: அந்த ஏராளமான ஜனங்களை ஆளும்
படி, தாவீதுக்கு ஒரு ஞானமுள்ள குமார
னைக் கொடுத்த **கர்த்தர்** இன்று ஸ்தோத்திரிக்
8 கப்படுவாராக என்று சொல்லி; ஈராம் சாலொ
மோனிடத்தில் மனுஷரை அனுப்பி: நீர் எனக்
குச் சொல்லியனுப்பின காரியத்தை நான்
கேட்டேன்; கேதுருமரங்களுக்காகவும், தேவ
தாரி விருட்சங்களுக்காகவும், உம்முடைய
விருப்பத்தின்படியெல்லாம் நான் செய்வேன்.
9 என் வேலைக்காரர் லீபனேனில் இருந்து
அவைகளை இறக்கிக் கடலிலே கொண்டுவரு
வார்கள்; அங்கே நான் அவைகளைத் தெப்பங்
களாகக் கட்டி, நீர் நியமிக்கும் இடத்துக்குக்
கடல்வழியாய் அனுப்பி, அவைகளை அவிழ்
த்து ஒப்பிப்பேன்; அங்கே நீர் அவைகளை
ஒப்புக்கொண்டு [3]என் ஜனங்களுக்கு ஆகாரங்
கொடுத்து, என் விருப்பத்தின்படி செய்ய
வேண்டும் என்று சொல்லச்சொன்ஞன்.
10 அப்படியே ஈராம் சாலொமோனுக்கு வேண்
டியமட்டும் கேதுருமரங்களையும் தேவதாரி
விருட்சங்களையும் கொடுத்துக்கொண்டுவந்
11 தான். சாலொமோன் ஈராமின் அரமனைக்
குப் போஜனத்திற்காக இருபதிஞயிரக் கலம்
கோதுமையையும், இடித்துப் பிழிந்த ஒலிவ
மரங்களின் இருபது கல எண்ணெயையும்
கொடுத்தான்; [4]இப்படிச் சாலொமோன் ஈரா
12 முக்கு வருஷாந்தரம் கொடுத்துவந்தான். **கர்த்
தர்** சாலொமோனுக்குச் சொல்லியிருந்த
படியே [5]அவனுக்கு ஞானத்தைத் தந்தருளி
ஞர்; ஈராமுக்கும் சாலொமோனுக்கும் சமா
தானம் உண்டாயிருந்து, இருவரும் உடன்
படிக்கை பண்ணிக்கொண்டார்கள்.
13 ராஜாவாகிய சாலொமோன் இஸ்ரவேல
ரெல்லாரிலும் ஊழியத்துக்கு முப்பதிஞயி
14 ரம் அமஞ்சி ஆட்களைப் பிடித்தான். அவர்
களில் ஒவ்வொரு மாதத்திற்குப் பதிஞயிரம்
பேரை மாற்றி மாற்றி, லீபனேனுக்கு அனுப்
பிஞன்; அவர்கள் ஒருமாதம் லீபனேனிலும்,
இரண்டுமாதம் தங்கள் வீடுகளிலும் இருப்பார்
கள்; [6]அதோனீராம் அந்த அமஞ்சி ஆட்களின்
15 மேல் விசாரிப்புக்காரஞயிருந்தான். சாலொ

[1] 2 சாமு. 7. 13. 1 நாளா. 17. 12
[2] 1 ஓசாசி. 12. 14. ஓ.
[3] எஸ்ரா. 3. 7. எசே. 27. 17. அப். 12, 20
[4] 2 நாளா. 2. 10
[5] 3. 12
[6] 4. 6
[7] 2 நாளா. 17. 18
[8] 1 நாள். 22. 2.
* கல் சதுரிக்கிறவர்கள்.
[9] 2 நாள. 3. 1, 2. அப். 7. 47
† பலகணி. ஆதி. 6. 16
[10] எசே. 40. 16: 41. 16
[11] எசே. 41. 6
[12] 5. 18. உபா. 27. 5, 6

மோனிடத்தில் சுமை சுமக்கிறவர்கள் எழுபதி
ஞயிரம்பேரும், [7]மலைகளில் மரம் வெட்டுகிற
வர்கள் எண்பதிஞயிரம்பேரும், இவர்களைத் 16
தவிர வேலையை விசாரித்து வேலையாட்களைக்
கண்காணிக்கிறதற்கு தலைமையான விசாரிப்
புக்காரர் மூவாயிரத்து முந்நூறுபேரும் இருந்
தார்கள். வெட்டின கல்லால் ஆலயத்துக்கு 17
அஸ்திபாரம் போட, [8]பெரிதும் விலையேறப்
பெற்றதுமான கற்களைக்கொண்டுவர ராஜா கட்
டளையிட்டான். ஆலயத்தைக் கட்ட, சாலொ 18
மோனின் சிற்பாசாரிகளும், ஈராமின் சிற்பாசா
ரிகளும், *கிபலி ஊராரும், அந்த மரங்களையும்
கற்களையும் வெட்டி ஆயத்தப்படுத்திஞர்கள்.

இஸ்ரவேல் புத்திரர் எகிப்து தேசத்தி 6
லிருந்து புறப்பட்ட நானூற்று எண்பதாம் வரு
ஷத்திலும், சாலொமோன் இஸ்ரவேலின்
மேல் ராஜாவான நாலாம் வருஷம் சீப்மாதமா
கிய இரண்டாம் மாதத்திலும், [9]அவன் **கர்த்த
ரின்** ஆலயத்தைக் கட்டத்தொடங்கிஞன். சா 2
லொமோன் ராஜா **கர்த்தருக்குக்** கட்டின ஆல
யம் அறுபது முழ நீளமும், இருபது முழ அகல
மும், முப்பது முழ உயரமுமாயிருந்தது. ஆலய 3
மாகிய அந்த மாளிகையின் முகப்பிலே அவன்
கட்டின மண்டபம் ஆலயத்தின் அகலத்திற்
குச் சரியாய் இருபது முழ நீளமும், ஆலயத்
துக்கு முன்னே பத்து முழ அகலமுமாயிருந்
தது. பார்வைக்குக் குறுகிப்போகிற ஒடுக்க 4
மான †ஜன்னல்களை [10]ஆலயத்திற்குச் செய்
வித்தான். அவன் தேவாலயத்தின் சுவரும் 5
சந்நிதிஸ்தானச் சுவருமாகிய ஆலயத்தின் சுவர்
களுக்கு அடுத்ததாய்ச் [11]சுற்றுக்கட்டுகளைக்
கட்டி, அவைகளில் அறைகளைச் சுற்றிலும்
உண்டாக்கிஞன். கீழே இருக்கிற சுற்றுக் 6
கட்டு ஐந்து முழ அகலமும், நடுவே இருக்கி
றது ஆறு முழ அகலமும், மூன்ருவதாயிருக்
கிறது ஏழு முழ அகலமுமாயிருந்தது; அவை
கள் ஆலயத்தினுடைய சுவர்களிலே தாங்காத
படிக்கு ஆலயத்தைச் சுற்றிலும் புறம்பே ஒட்
டுச் சுவர்களைக் கட்டுவித்தான். ஆலயம் 7
கட்டப்படுகையில், [12]அது பணிதீர்ந்து கொ
ண்டுவரப்பட்ட கற்களாலே கட்டப்பட்டது;
ஆகையால் அது கட்டப்படுகிறபோது, சுத்தி
கள் வாச்சிகள் முதலான எந்த இருப்பு ஆயு
தங்களின் சத்தமும் அதிலே கேட்கப்பட
வில்லை. நடு அறைகளுக்குப் போகிற வாசற் 8
படி ஆலயத்தின் வலதுபுறத்தில் இருந்தது;
சுழற்படிகளால் நடு அறைகளுக்கும், நடு அறை
களிலிருந்து மூன்ருவது அறைகளுக்கும் ஏறு
வார்கள். இவ்விதமாய் அவன் ஆலயத்தைக் 9
கட்டி, கேதுருமர உத்திரங்களாலும் பலகைக
ளாலும் ஆலயத்தை மச்சுப்பாவி முடித்தான்.
அவன் ஐந்து முழ உயரமான சுற்றுக்கட்டு 10
களை ஆலயத்தின் மேலெங்கும் கட்டுவித்தான்;
அவைகள் கேதுருமரங்களால் ஆலயத்தோடே
இணைக்கப்பட்டிருந்தது.

அப்பொழுது **கர்த்தருடைய** வார்த்தை சா 11
லொமோனுக்கு உண்டாயிற்று; அவர்: நீ 12

என் கட்டளைகளின்படி நடந்து, என் நீதி
நியாயங்களை நிறைவேற்றி, என் கற்பனை
களின்படி யெல்லாம் நடந்துகொள்ளும்படி
க்கு, அவைகளைக் கைக்கொண்டால், நீ கட்டு
கிற இந்த ஆலயத்தைக்குறித்து நான் உன்
தகப்பனாகிய தாவீதோடே சொன்ன [1]என்
வார்த்தையை உன்னிடத்தில் நிறைவேற்றி,
13 இஸ்ரவேல் புத்திரர் நடுவிலே [2]வாசம்பண்ணி,
என் ஜனமாகிய இஸ்ரவேலைக் [3]கைவிடா
14 திருப்பேன் என்றார். அப்படியே சாலொ
மோன் ஆலயத்தைக் கட்டி முடித்தான்.
15 ஆலயத்துச் சுவர்களின் உட்புறத்தை, தள
ம்தொடங்கிச் சுவர்களின் மேல்மச்சுமட்டும்,
கேதுருப் பலகைகளால் மூடி, இப்படி உட்
புறத்தை மரவேலையாக்கி, ஆலயத்தின் தளத்
தை தேவதாரி விருட்சங்களின் பலகைகளா
16 லே தளவரிசைப்படுத்தினான். தளவரிசை
தொடங்கிச் சுவர்களின் உயரமட்டும் ஆலயத்
தின் பக்கங்களைத் தொடர்ந்திருக்கிற இருபது
முழ நீளமான மறைப்பையும் கேதுருப்பல
கைகளால் உண்டாக்கி, [4]உட்புறத்தை மகா
பரிசுத்தமான சந்நிதி ஸ்தானமாகக் கட்டி
17 னான். அதின் முன்னிருக்கிற தேவாலயமா
கிய மாளிகை நாற்பது முழ நீளமாயிருந்தது.
18 ஆலயத்திற்குள் இருக்கிற கேதுருமரங்களில்
மொக்குகளும் மலர்ந்த பூக்களுமான சித்திர
வேலை செய்திருந்தது; பார்வைக்கு ஒரு கல்
லாகிலும் காணப்படாமல் எல்லாம் கேதுரு
19 மரமாயிருந்தது. **கர்த்தருடைய** உடன்படிக்
கைப் பெட்டியை வைக்கிறதற்கு ஆலயத்துக்
குள்ளே சந்நிதி ஸ்தானத்தை ஆயத்தப்படுத்தி
20 னான். சந்நிதி ஸ்தானம் முன்புறமட்டும் இரு
பது முழ நீளமும், இருபது முழ அகலமும்,
இருபது முழ உயரமுமாயிருந்தது; அதைப்
பசும்பொன் தகட்டால் மூடினான்; கேதுரு
மரப் பலிபீடத்தையும் அப்படியே மூடினான்.
21 ஆலயத்தின் உட்புறத்தைச் சாலொமோன்
பசும்பொன் தகட்டால் மூடி, சந்நிதி ஸ்தா
னத்தின் மறைப்புக்கும் பொன்சங்கிலிகளைக்
குறுக்கே போட்டு, அதைப் பொன்தகட்டால்
22 மூடினான். இப்படி ஆலயம் முழுவதும் கட்
டித் தீருமட்டும், அவன் ஆலயம் முழுவதை
யும் பொன்தகட்டால் மூடி, [5]சந்நிதி ஸ்தானத்
திற்கு முன்பாக இருக்கிற பலிபீடத்தை
23 முழுவதும் பொன்தகட்டால் மூடினான். சந்
நிதி ஸ்தானத்தில் ஒலிவமரங்களால் [6]இரண்டு
கேருபீன்களைச் செய்துவைத்தான்; ஒவ்வொ
24 ன்றும் பத்து முழ உயரமாயிருந்தது. கேரு
பீனுக்கு இருக்கிற ஒரு செட்டை ஐந்து முழ
மும் கேருபீனின் மற்றச் செட்டை ஐந்து முழ
முமாய், இப்படி ஒரு செட்டையின் கடைசி
முனைதொடங்கி மற்றச் செட்டையின் கடை
25 சி முனைமட்டும் பத்து முழமாயிருந்தது. மற்
றக் கேருபீனும் பத்து முழமாயிருந்தது; இர
ண்டு கேருபீன்களும் ஒரே அளவும் ஒரே கிட்
26 டமுமாயிருந்தது. ஒரு கேருபீன் பத்து முழ
உயரமாயிருந்தது; மற்றக் கேருபீனும் அப்

[1] 2 சாமு. 7. 13
[2] யாத். 25. 8. 2 கொரி. 6. 16. வெளி. 21. 3
[3] உபா. 31. 6. எபி. 13. 5
[4] யாத். 26. 33. எசே. 45. 3. எபி. 9. 3
[5] யாத். 30. 1, 3, 6
[6] யாத். 37. 7-9
* உள்வீடு, உள்ளறை.
[7] யாத். 25. 20
[8] எசே. 41. 23-25
[9] 9. 10. 2 நாளா. 8. 1

படியே இருந்தது. அந்தக் கேருபீன்களை 27
*உள் ஆலயத்திலே வைத்தான்; கேருபீன்க
ளின் செட்டைகள் விரித்திருந்ததினால், [7]ஒரு
கேருபீனின் செட்டை ஒரு பக்கத்துச் சுவரி
லும், மற்றக் கேருபீனின் செட்டை மறுபக்
கத்துச் சுவரிலும் தொடத்தக்கதா யிருந்தது;
ஆலயத்தின் நடு மையத்தில், அவைகளின்
செட்டைகள் ஒன்றோடொன்று தொடத்தக்க
தாயிருந்தது. அந்தக் கேருபீன்களைப் பொன் 28
தகட்டால் மூடினான். ஆலயத்தின் சுவர்களை 29
யெல்லாம் அவன் சுற்றிலும் உள்ளும் புறம்பு
மாகக் கேருபீன்களும் பேரீந்துகளும் மலர்ந்த
பூக்களுமான சித்திரங்களும் கொத்துவேலைக
ளுமாக்கினான். உள்ளும் புறம்புமாயிருக்கிற 30
ஆலயத்துத் தளவரிசையையும் பொன்தகட்
டால் மூடினான். சந்நிதி ஸ்தானத்தின் வாச 31
லுக்கு ஒலிவமரங்களால் இரட்டைக் கதவுக
ளைச் செய்தான்; மேல் சட்டமும் நிலைகளும்
மறைப்பின் அளவில் ஐந்தில் ஒரு பங்காயிருந்
தது. ஒலிவமரமான அந்த இரட்டைக் கதவு 32
களில் அவன் கேருபீன்களும் பேரீந்துகளும்
மலர்ந்த பூக்களுமான சித்திரங்களைச் செய்து,
அந்தக் கேருபீன்களிலும் பேரீந்துகளிலும்
பொன் பதியத்தக்கதாய்ப் பொன்தகட்டால்
மூடினான். இப்படித் தேவாலயத்தின் வாச 33
லுக்கும் ஒலிவமர நிலைகளைச் செய்தான்; அது
சுவர் அளவில் நாலத்தொரு பங்காயிருந்தது.
அதின் இரண்டு கதவுகளும் தேவதாரிப் பல 34
கைகளால் செய்யப்பட்டிருந்தது; [8]ஒரு கத
வுக்கு இரண்டு மடிப்புப் பலகைகளும், மற்
றக் கதவுக்கு இரண்டு மடிப்புப் பலகைகளும்
இருந்தது. அவைகளில் கேருபீன்களும் பே 35
ரீந்துகளும் மலர்ந்த பூக்களுமான சித்திரவே
லையைச் செய்து, சித்திரங்களுக்குச் சரியாகச்
செய்யப்பட்ட பொன்தகட்டால் அவைகளை
மூடினான். அவன் உட்பிராகாரத்தை மூன் 36
றுவரிசை வெட்டின கற்களாலும், ஒருவரி
சை கேதுருப் பலகைகளாலும் கட்டினான்.
நாலாம் வருஷம் சீப்மாதத்திலே **கர்த்தருடைய** 37
ஆலயத்துக்கு அஸ்திபாரம் போட்டு, பதினோ 38
ராம் வருஷம் பூல் என்னும் எட்டாம் மாதத்
திலே, அந்த ஆலயமுழுதும் சகல சட்டதிட்
டத்தின்படியே ஒரு பங்கும் குறையாமல் கட்
டித்தீர்ந்தது; அவன் அதைக் கட்டிமுடிக்க
ஏழு வருஷம் சென்றது.

சாலொமோன் தன் அரமனை முழுதையும் **7**
[9]கட்டி முடிக்க பதின்மூன்று வருஷம் சென்
றது. அவன் லீபனோன் வனம் என்னும் 2
மாளிகையையும் கட்டினான்; அது நூறு முழ
நீளமும், ஐம்பது முழ அகலமும், முப்பது
முழ உயரமுமாயிருந்தது, அதைக் கேதுருமர
உத்திரங்கள் பாவப்பட்ட கேதுருமரத் தூண்
களின் நாலுவரிசைகளின்மேல் கட்டினான்.
ஒவ்வொரு வரிசைக்குப் பதினைந்து தூண்க 3
ளாக நாற்பத்தைந்து தூண்களின்மேல் வைக்
கப்பட்ட உத்திரங்களின்மேல் கேதுருக்க
ளால் மச்சுப்பாவியிருந்தது. மூன்று வரிசை 4

ஜன்னல்கள் இருந்தது; மூன்றுவரிசையிலும்
ஜன்னல்கள், ஒன்றுக்கொன்று எதிராயிருக்
5 தது. ஜன்னல்களின் வாசல்களும் சட்டங்
களும் எல்லாம் சதுரமாயிருந்தது; மூன்று வரி
சையிலும் ஜன்னல்கள் ஒன்றுக்கொன்று எதி
6 ராயிருந்தது. ஐம்பது முழ நீளமும் முப்பது
முழ அகலமுமான மண்டபத்தையும் தூண்
கள் நிறுத்திக் கட்டினான்; அந்த மண்டபமும்,
அதின் தூண்களும், உத்திரங்களும், மாளி
கையின் தூண்களுக்கும் உத்திரங்களுக்கும்
7 எதிராயிருந்தது. தான் இருந்து நியாயம்
தீர்க்கிறதற்கு நியாயாசனம் போட்டிருக்கும்
ஒரு நியாயவிசாரணை மண்டபத்தையும் கட்
டி, அதின் ஒருபக்கம் துவக்கி மறுபக்கமட்
டும் கேதுருப்பலகைகளால் தளவரிசைப்படுத்
8 தினான். அவன் வாசம்பண்ணும் அவனு
டைய அரமனை மண்டபத்திற்குள்ளே அதே
மாதிரியாகச் செய்யப்பட்ட வேறொரு மண்
டபமும் இருந்தது. சாலொமோன் விவாகம்
பண்ணின [1]பார்வோனின் குமாரத்திக்கும்
அந்த மண்டபத்தைப்போல ஒரு மாளிகை
9 யைக் கட்டுவித்தான். இவைகளெல்லாம்,
உள்ளும் புறம்பும், அஸ்திபாரமுதல் மேல்திரா
ணைகள்மட்டும், வெளியே இருக்கும் பெரிய
முற்றம்வரைக்கும், அளவுபடி வெட்டி வாளால்
அறுக்கப்பட்ட விலையேறப்பெற்ற கற்களால்
10 செய்யப்பட்டது. அஸ்திபாரம் பத்துமுழக்
கற்களும், எட்டுமுழக் கற்களுமான விலையே
11 றப்பெற்ற பெரிய கற்களாயிருந்தது. அதின்
மேல் உயர அளவுபடி பணிப்படுத்தின விலை
யேறப்பெற்ற கற்களும், கேதுரு மரங்களும்
12 வைக்கப்பட்டிருந்தது. பெரிய முற்றத்திற்
குச் சுற்றிலும் மூன்றுவரிசைக் கேதுருமர
உத்திரங்களாலும் ஒருவரிசை பணிப்படுத்தின
கற்களாலும் செய்யப்பட்டிருந்தது; கர்த்தரு
டைய ஆலயத்தின் உட்பிராகாரத்திற்கும்,
[2]அதின் முன்மண்டபத்திற்கும் அப்படியே
செய்யப்பட்டிருந்தது.
13 ராஜாவாகிய சாலொமோன் [3]ஈராம் என்
னும் ஒருவனைத் தீருவிலிருந்து அழைப்பித்
14 தான். இவன் நப்தலி கோத்திரத்தாளாகிய
ஒரு கைம்பெண்ணின் மகன்; இவன் தகப்
பன் தீருநகரத்தானான கன்னான்; இவன் சக
லவித வெண்கலவேலையையும் செய்யத்தக்க
[4]யுத்தியும் புத்தியும் அறிவும் உள்ளவனாயிருந்
தான்; இவன் ராஜாவாகிய சாலொமோனி
டத்தில் வந்து, அவன் வேலையையெல்லாம்
15 செய்தான். இவன் இரண்டு [5]வெண்கலத்
தூண்களை உண்டாக்கினான்; ஒவ்வொரு
தூண் பதினெட்டு முழ உயரமும், ஒவ்வொரு
தூணின் சுற்றளவு பன்னிரண்டு முழ நூல
16 ளவுமாயிருந்தது. அந்தத் தூண்களுடைய
தலைப்பில் வைக்க, வெண்கலத்தால் வார்க்கப்
பட்ட இரண்டு கும்பங்களை உண்டாக்கினான்;
ஒவ்வொரு கும்பம் ஐந்து முழ உயரமாயிருந்த
17 து. தூண்களுடைய முனையின்மேலுள்ள கும்
பங்களுக்கு வலைபோன்ற பின்னல்களும், சங்

1 3. 1. 2 நாளா. 8. 11
2 யோ. 10. 23. அப். 3. 11
3 2 நாளா. 4. 11
4 யாத். 31. 3; 36. 1
5 2 இரா. 25. 17. எரே. 52. 21
* காட்டுப் புஷ்பம். மத். 6. 28
6 2 நாளா. 3. 16. எரே. 52. 23
† ஸ்தாபிப்பார்.
‡ பெலனுள்ளது.
7 2 இரா. 25. 13. எரே. 52. 17, 20
8 2 இரா. 4. 4, 5

கிலிபோன்ற தொங்கல்களும், ஒவ்வொரு கும்
பத்திற்கும் ஏழேழாக இருந்தது. தூண்களைப் 18
பண்ணின விதமாவது, தலைப்பின்மேலுள்ள
கும்பங்களை மூடும்படிக்கு, கும்பங்கள் ஒவ்
வொன்றிலும் பின்னலின்மேல் சுற்றிலும்
இரண்டுவரிசை மாதளம்பழங்களைச் செய்வித்
தான். மண்டபத்தின் முன்னிருக்கும் அந் 19
தத் தூண்களுடைய தலைப்பின்மேலுள்ள கும்
பங்கள் *லீலி புஷ்பங்களின் வேலையும்,
நாலு முழ உயரமுமாயிருந்தது. இரண்டு 20
தூண்களின்மேலுமுள்ள கும்பங்களில் செய்
யப்பட்ட பின்னலுக்கு அருகே இருந்த இடத்
தில் விம்மிய இருநூறு மாதளம்பழங்களின்
வரிசைகள் சுற்றிலும் இருந்தது; [6]மற்றக் கும்
பத்திலும் அப்படியே இருந்தது. அந்தத் தூண் 21
களைத் தேவாலய வாசல் மண்டபத்தில் நிறுத்
தினான்; அவன் வலதுபுறத்தில் நிறுத்தின
தூணுக்கு †யாகீன் என்றும், இடதுபுறத்தில்
நிறுத்தின தூணுக்கு ‡போவாஸ் என்றும்
பேரிட்டான். தூண்களுடைய சிகரத்தில் 22
லீலி புஷ்பவேலை செய்யப்பட்டிருந்தது;
இவ்விதமாய்த் தூண்களின் வேலை முடிந்தது.
வெண்கலக் கடல் [7]என்னும் தொட்டியையும் 23
வார்ப்பித்தான்; சுற்றிலும் சக்கராகாரமான
அதினுடைய ஒரு விளிம்புதொடங்கி மறு வி
ளிம்புமட்டும், அகலம் பத்து முழமும், உயரம்
ஐந்து முழமும், சுற்றளவு முப்பது முழ நூல
ளவுமாயிருந்தது. அந்தக் கடல்தொட்டியைச் 24
சுற்றி விளிம்புக்குக் கீழே அதைச் சுற்றிலும்
மொக்குகள் ஒவ்வொரு முழத்திற்குப் பத்து
பத்தாகச் செய்யப்பட்டிருந்தது; [8]வார்க்கப்
பட்ட அந்த மொக்குகளின் வரிசைகள் இர
ண்டும் தொட்டியோடு ஒன்றாய் வார்க்கப்பட்
டிருந்தது. அது பன்னிரண்டு ரிஷபங்களின் 25
மேல் நின்றது; அவைகளில் மூன்று வடக்கே
யும், மூன்று மேற்கேயும், மூன்று தெற்கேயும்,
மூன்று கிழக்கேயும் நோக்கியிருந்தது; கடல்
தொட்டி ரிஷபங்களின் மேலாகவும், அவை
களின் பின்புறங்களெல்லாம் உள்ளாகவும்
இருந்தது. அதின் கனம் நாலு விரற்கடையும், 26
அதின் விளிம்பு பானபாத்திரத்தின் விளிம்பு
போலும், லீலி புஷ்பம்போலும் இருந்தது;
அது இரண்டாயிரம்குடம் தண்ணீர் பிடிக்கும்.
பத்து வெண்கல ஆதாரங்களையும் செய்தான்; 27
ஒவ்வொரு ஆதாரம் நாலு முழ நீளமும், நாலு
முழ அகலமும், மூன்று முழ உயரமுமாயிருந்
தது. அந்த ஆதாரங்களின் வேலைப்பாடு என்ன 28
வெனில், அவைகளுக்குச் சவுக்கைகள் உண்
டாயிருந்தது; சவுக்கைகளோ சட்டங்களின்
நடுவில் இருந்தது. சட்டங்களுக்கு நடுவே இரு 29
க்கிற அந்தச் சவுக்கைகளில் சிங்கங்களும், கா
ளைகளும், கேருபீன்களும், சட்டங்களுக்கு
மேலாக ஒரு திரணையும், சிங்கங்களுக்கும்
காளைகளுக்கும் கீழாக சாய்வான வேலைப்பா
டுள்ள ஜலதாரைகளும் அதனோடே இருந்தது.
ஒவ்வொரு ஆதாரத்திற்கு நாலு வெண்கல 30
உருளைகளும், வெண்கலத் தட்டுகளும், அதின்

நாலு கோடிகளுக்கு அச்சுகளும் இருந்தது;
கொப்பரையின் கீழிருக்க, அந்தக் கொம்மை
கள் ஒவ்வொன்றும் வார்ப்பு வேலையாக ஜல
31 தாரைகளுக்கு நேராயிருந்தது. திரணைகளுக்
குள்ளான அதின் வாய் மேலாக ஒரு முழம்
உயர்ந்திருந்தது; அதின் வாய் ஒன்றரை முழ
சக்கராகாரமும் தட்டையுமாய், அதின் வாயி
ன்மேல் சித்திரங்களும் செய்யப்பட்டிருந்தது;
அவைகளின் சவுக்கைகள் விருத்தமாயிராமல்
32 சதுரமாயிருந்தது. அந்த நாலு உருளைகள்
சவுக்கைகளின் கீழும், உருளைகளின் அச்சு
கள் ஆதாரத்திலும் இருந்தது; ஒவ்வொரு உரு
33 ளை ஒன்றரை முழ உயரமாயிருந்தது. உரு
ளைகளின் வேலை இரதத்து உருளைகளின்
வேலைக்கு ஒத்திருந்தது; அவைகளின் அச்சு
களும், சக்கரங்களும், வட்டங்களும், கம்பி
களும் எல்லாம் வார்ப்புவேலையா யிருந்தது.
34 ஒவ்வொரு ஆதாரத்தினுடைய நாலு கோடி
களிலும், ஆதாரத்திலிருந்து புறப்படுகிற நாலு
35 கொம்மைகள் இருந்தது. ஒவ்வொரு ஆதா
ரத்தின் தலைப்பிலும் அரை முழ உயரமான
சக்கராகாரமும், ஒவ்வொரு ஆதாரத்தினுடைய
தலைப்பின்மேலும் அதிலிருந்து புறப்படுகிற
அதின் கைப்பிடிகளும் சவுக்கைகளும் இருந்
36 தது. அவைகளிலிருக்கிற கைப்பிடிகளுக்கும்
சவுக்கைகளுக்கும் இருக்கிற சந்துகளிலே, கே
ருபீன்கள் சிங்கங்கள் பேரீந்துகளுடைய சித்
திரங்களைத் தீர்த்திருந்தான்; சுற்றிலும் ஒவ்
வொன்றிலும், ஜலதாரைகளிலும் இருக்கும்
37 இடங்களுக்குத் தக்கதாய்ச் செய்தான். இந்
தப்பிரகாரமாக அந்தப் பத்து ஆதாரங்களை
யும் செய்தான்; அவைகளெல்லாம் ஒரே வார்
ப்பும், ஒரே அளவும், ஒரேவித கொத்துவே
38 லையுமாயிருந்தது. பத்து வெண்கலக் கொப்
பரைகளையும் உண்டாக்கினான்; [1]ஒவ்வொரு
கொப்பரை நாற்பது குடம்பிடிக்கும்; நாலு
முழ அகலமான ஒவ்வொரு கொப்பரையும்
அந்தப் பத்து ஆதாரங்களில் ஒவ்வொன்றின்
39 மேலும் வைக்கப்பட்டது. ஐந்து ஆதாரங்களை
ஆலயத்தின் வலதுபுறத்திலும், ஐந்து ஆதா
ரங்களை ஆலயத்தின் இடது புறத்திலும் வைத்
தான்; கடல்தொட்டியைக் கிழக்கில் ஆலயத்
தின் வலது புறத்திலே தெற்குக்கு நேராக
40 வைத்தான். பின்பு ஈராம் கொப்பரைகளை
யும் சாம்பல் எடுக்கிற கரண்டிகளையும் கலங்
களையும் செய்தான். இவ்விதமாய் ஈராம்
**கர்த்தருடைய** ஆலயத்துக்காக ராஜாவாகிய
சாலொமோனுக்குச் செய்யவேண்டிய எல்லா
41 வேலையையும் செய்து முடித்தான். அவை
கள் என்னவெனில்: இரண்டு தூண்களும்,
இரண்டு தூண்களுடைய முனையின்மேல்
இருக்கிற இரண்டு உருண்டைக் கும்பங்க
ளும், தூண்களுடைய முனையின்மேல் இருக்
கிற இரண்டு உருண்டைக் கும்பங்களை மூடும்
42 இரண்டு வலைப்பின்னல்களும், தூண்களின்
மேலுள்ள இரண்டு உருண்டைக் கும்பங்களை
மூடும்படி ஒவ்வொரு வலைப்பின்னலுக்கும்

[1] 2 நாளா. 4. 6
[2] யாத். 27. 3
[3] ஆதி. 33. 17. யோசு. 3. 16. 2 நாளா. 4. 17
[4] யாத். 25. 30; 37. 10 — 25. லேவி. 24. 5-8
[5] 2 சாமு. 8. 11
[6] 2 சாமு. 5. 7, 9
[7] 2 நாளா 5. 2. ழ
[8] 2 சாமு. 6. 17
[9] லேவி. 23. 34
[10] எண். 4. 15. 1 நாளா. 15. 14, 15
[11] 2 நாளா. 1. 3

பண்ணின இரண்டுவரிசை மாதளம்பழங்க
ளும், ஆக இரண்டு வலைப்பின்னலுக்கும் நா
னூறு மாதளம்பழங்களும், பத்து ஆதாரங்க 43
ளும், ஆதாரங்களின்மேல் வைத்த பத்துக்
கொப்பரைகளும், ஒரு கடல்தொட்டியும், 44
கடல்தொட்டியின் கீழிருக்கிற பன்னிரண்டு
ரிஷபங்களும், செப்புச் சட்டிகளும், [2]சாம் 45
பல் கரண்டிகளும், கலங்களும் செய்தான்;
**கர்த்தரின்** ஆலயத்துக்காக ராஜாவாகிய சா
லொமோனுக்கு ஈராம் செய்த இந்த எல்லாப்
பணிமுட்டுகளும் சுத்தமான வெண்கலமாயி
ருந்தது. யோர்தானுக்கு அடுத்த சமனான 46
பூமியிலே, [3]சுக்கோத்துக்கும் சர்தானுக்கும்
நடுவே களிமண் தரையிலே ராஜா இவைகளை
வார்ப்பித்தான். இந்தச் சகல பணிமுட்டுக 47
ளின் வெண்கலம் மிகவும் ஏராளமுமாயிருந்த
படியால், சாலொமோன் அவைகளை நிறுக்க
வில்லை; அதினுடைய நிறை இவ்வளவென்று
ஆராய்ந்து பார்க்கவுமில்லை. பின்னும் **கர்த்த** 48
**ருடைய** ஆலயத்துக்குத் தேவையான பணி
முட்டுகளை யெல்லாம் சாலொமோன் உண்
டாக்கினான்; அவையாவன, பொன் பலிபீட
த்தையும் [4]சமுகத்தப்பங்களை வைக்கும் பொன்
மேஜையையும், சந்நிதி ஸ்தானத்திற்கு முன் 49
பாக வைக்கும் பசும்பொன் விளக்குத் தண்டு
கள், வலதுபுறமாக ஐந்தையும் இடதுபுறமாக
ஐந்தையும், பொன்னான அதின் பூக்களோடும்
விளக்குகளோடும் கத்தரிகளோடுங்கூட உண்
டாக்கினான். பசும்பொன் கிண்ணங்களை 50
யும், வெட்டுக்கத்திகளையும், கலங்களையும்,
கலயங்களையும், தூபகலசங்களையும், மகா பரி
சுத்தமான உள் ஆலயத்தினுடைய கதவுகளின்
பொன்னான முளைகளையும், தேவாலயமாகிய
மாளிகைக் கதவுகளின் பொன்னான முளைக
ளையும் செய்தான். இவ்விதமாய் ராஜாவாகிய 51.
சாலொமோன் **கர்த்தருடைய** ஆலயத்துக்கா
கச் செய்த வேலைகளெல்லாம் முடிந்தது; அப்
பொழுது சாலொமோன் தன் தகப்பனாகிய
தாவீது பரிசுத்தம்பண்ணும்படி [5]நேர்ந்துகொ
ண்ட வெள்ளியையும் பொன்னையும் பணி
முட்டுகளையும் கொண்டுவந்து, **கர்த்தருடைய**
ஆலயத்தின் பொக்கிஷங்களில் வைத்தான்.

அப்பொழுது **கர்த்தருடைய** [6]உடன்படிக் 8
கைப் பெட்டியைச் சீயோன் என்னும் தாவீ
தின் நகரத்திலிருந்து கொண்டுவரும்படி [7]சா
லொமோன் இஸ்ரவேலின் மூப்பரையும்,
[8]கோத்திரப் பிரபுக்களாகிய இஸ்ரவேல் புத்தி
ரரிலுள்ள பிதாக்களின் தலைவர் அனைவரை
யும், எருசலேமில் ராஜாவாகிய சாலொமோன்
தன்னிடத்திலே கூடிவரச்செய்தான். இஸ் 2
ரவேல் மனுஷரெல்லாரும் [9]ஏழாம் மாதமாகிய
ஏத்தானீம் மாதத்துப் பண்டிகையிலே, ராஜா
வாகிய சாலொமோனிடத்தில் கூடிவந்தார்
கள். இஸ்ரவேலின் மூப்பர் அனைவரும் வந் 3
திருக்கையில், [10]ஆசாரியர் **கர்த்தருடைய** பெட்
டியை எடுத்து, பெட்டியையும், ஆசரிப்புக் 4
கூடாரத்தையும், [11]கூடாரத்திலிருந்த பரிசுத்த

பணிமுட்டுகள் அனைத்தையும் சுமந்துகொண்
டுவந்தார்கள்; ஆசாரியரும், லேவியரும், அ
5 வைகளைச் சுமந்தார்கள். ராஜாவாகிய சா
லொமோனும் அவனோடே கூடின இஸ்ர
வேல் சபையனைத்தும் பெட்டிக்கு முன்பாக
நடந்து, எண்ணிக்கையும் கணக்குமில்லாத
திரளான [1]ஆடுகளையும் மாடுகளையும் பலியிட்
6 டார்கள். அப்படியே ஆசாரியர்கள் **கர்த்தரு**
**டைய** உடன்படிக்கைப் பெட்டியை ஆல
யத்தின் சந்நிதி ஸ்தானமாகிய மகா பரிசுத்த
ஸ்தானத்திலே [2]கேருபீன்களுடைய செட்
டைகளின்கீழே கொண்டுவந்து வைத்தார்கள்.
7 கேருபீன்கள் பெட்டியிருக்கும் ஸ்தானத்திலே
தங்கள் இரண்டு செட்டைகளையும் விரித்து,
உயர இருந்து பெட்டியையும் அதின் தண்டு
8 களையும் மூடிக்கொண்டிருந்தது. தண்டுகளின்
முனைகள் சந்நிதிஸ்தானத்திற்கு முன்னான
பரிசுத்த ஸ்தலத்திலே காணப்படத்தக்கதாய்
அந்தத் தண்டுகளை முன்னுக்கு இழுத்தார்கள்;
ஆகிலும் வெளியே அவைகள் காணப்பட
வில்லை; அவைகள் இந்நாள்வரைக்கும் அங்கே
9 தான் இருக்கிறது. இஸ்ரவேல் புத்திரர்
எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்டபின் **கர்த்**
**தர்** அவர்களோடே உடன்படிக்கை பண்ணு
கிறபோது, [3]மோசே ஓரேபிலே அந்தப் பெட்
டியில் வைத்த இரண்டு கற்பலகைகளே அல்
லாமல் அதிலே வேறொன்றும் இருந்ததில்லை.
10 அப்பொழுது ஆசாரியர்கள் பரிசுத்த ஸ்தலத்தி
லிருந்து புறப்படுகையில், [4]மேகமானது **கர்த்த**
11 **ருடைய** ஆலயத்தை நிரப்பிற்று. மேகத்தினி
மித்தம் ஆசாரியர்கள் ஊழியஞ்செய்கிறதற்கு
நிற்கக் கூடாமற்போயிற்று; **கர்த்தருடைய**
மகிமை **கர்த்தருடைய** ஆலயத்தை நிரப்பிற்று.
12 அப்பொழுது சாலொமோன்: [5]காரிருளிலே
வாசம்பண்ணுவேன் என்று **கர்த்தர்** சொன்
13 னார் என்றும், தேவரீர் வாசம்பண்ணத்தக்க
வீடும், [6]நீர் என்றைக்கும் தங்கத்தக்க நிலை
யான ஸ்தானமுமாகிய ஆலயத்தை உமக்குக்
14 கட்டினேன் என்றும் சொல்லி, ராஜா முகம்
திரும்பி, [7]இஸ்ரவேல் சபையையெல்லாம்
ஆசீர்வதித்தான்; இஸ்ரவேல் சபையாரெல்
15 லாரும் நின்றார்கள். அவன் சொன்னது:
இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தருக்கு**
ஸ்தோத்திரம்; [8]அவர் என் தகப்பனாகிய தாவீ
துக்குத் தம்முடைய வாக்கினால் சொன்ன
தைத் தம்முடைய கரத்தினால் நிறைவேற்றி
16 னார். அவர் நான் என் ஜனமாகிய இஸ்ரவேலை
எகிப்திலிருந்து புறப்படப்பண்ணின நாள்
முதற்கொண்டு, என் நாமம் விளங்கும்படி,
ஒரு ஆலயத்தைக் கட்டவேண்டும் என்று நான்
இஸ்ரவேலுடைய எல்லாக் கோத்திரங்களிலு
முள்ள ஒரு பட்டணத்தையும் தெரிந்துகொள்
ளாமல், [9]என் ஜனமாகிய இஸ்ரவேலின்மேல்
அதிகாரியாயிருக்கும்படி தாவீதையே தெரிந்
17 துகொண்டேன் என்றார். இஸ்ரவேலின்
தேவனாகிய **கர்த்தரின்** நாமத்திற்கு ஆலயத்
தைக் கட்டவேண்டும் என்கிற விருப்பம் [10]என்
தகப்பனாகிய தாவீதின் இருதயத்தில் இருந்
தது. ஆனாலும் **கர்த்தர்** என் தகப்பனாகிய 18
தாவீதை நோக்கி: [11]என் நாமத்திற்கு ஆலயத்
தைக் கட்டவேண்டும் என்கிற விருப்பம் உன்
மனதிலே இருந்தது நல்லகாரியந்தான். ஆகி 19
லும் நீ அந்த ஆலயத்தைக் கட்டமாட்டாய்,
[12]உன் கர்ப்பப் பிறப்பாகிய உன் குமாரனே
என் நாமத்திற்கு அந்த ஆலயத்தைக் கட்டு
வான் என்றார். இப்போதும் **கர்த்தர்** சொல் 20
லிய தம்முடைய வார்த்தையை நிறைவேற்றி
னார்; [13]**கர்த்தர்** சொன்னபடியே, நான் என்
தகப்பனாகிய தாவீதின் ஸ்தானத்தில் எழும்பி,
இஸ்ரவேலின் சிங்காசனத்தின்மேல் உட்கார்
ந்து, இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தரின்**
நாமத்திற்கு ஆலயத்தைக் கட்டினேன். **கர்த்** 21
**தர்** நம்முடைய பிதாக்களை எகிப்துதேசத்தி
லிருந்து புறப்படப்பண்ணினபோது, [14]அவர்
களோடே பண்ணின உடன்படிக்கை இருக்
கிற பெட்டிக்காக அதிலே ஒரு ஸ்தானத்தை
உண்டாக்கினேன் என்றான்.
பின்பு சாலொமோன்: **கர்த்தருடைய** பலி 22
பீடத்திற்கு முன்னே இஸ்ரவேல் சபையா
ரெல்லாருக்கும் எதிராக நின்று, [15]வானத்திற்கு
நேராய்த் தன் கைகளை விரித்து: இஸ்ரவே 23
லின் தேவனாகிய **கர்த்தாவே**, மேலே வானத்
திலும் கீழே பூமியிலும் [16]உமக்கு ஒப்பான
தேவன் இல்லை; தங்கள் முழு இருதயத்தோ
டும் உமக்கு முன்பாக நடக்கிற உமது அடி
யாருக்கு [17]உடன்படிக்கையையும் கிருபை
யையும் காத்துவருகிறீர். தேவரீர் என் தகப்ப 24
னாகிய தாவீது என்னும் உம்முடைய தாசனுக்
குச் செய்த வாக்குத்தத்தத்தைக் காத்தருளினீர்;
அதை உம்முடைய வாக்கினால் சொன்னீர்;
இந்நாளில் இருக்கிறபடி, உம்முடைய கரத்தி
னால் அதை நிறைவேற்றினீர். இஸ்ரவேலின் 25
தேவனாகிய **கர்த்தாவே**, தேவரீர் என் தகப்ப
னாகிய தாவீது என்னும் உம்முடைய தாசனை
நோக்கி: நீ எனக்கு முன்பாக நடந்ததுபோல,
உன் குமாரரும் எனக்கு முன்பாக நடக்கும்
படி தங்கள் வழியைக் காப்பார்களேயானால்,
[18]இஸ்ரவேலின் சிங்காசனத்தின்மேல் வீற்றி
ருக்கும் புருஷன் எனக்கு முன்பாக உனக்கு
இல்லாமற்போவதில்லை என்று சொன்னதை
இப்பொழுது அவனுக்கு நிறைவேற்றும்.
இஸ்ரவேலின் தேவனே, என் தகப்பனாகிய 26
தாவீது என்னும் உம்முடைய தாசனுக்குச்
சொன்ன உம்முடைய வார்த்தைமெய்யென்று
விளங்குவதாக. தேவன் மெய்யாக [19]பூமியிலே 27
வாசம்பண்ணுவாரோ? இதோ, [20]வானங்களும்
வானாதி வானங்களும் உம்மைக் கொள்ளாதே;
நான் கட்டின இந்த ஆலயம் எம்மாத்திரம்?
என் தேவனாகிய **கர்த்தாவே**, உமது அடி 28
யேன் இன்று உமது சந்நிதியில் செய்கிற
விண்ணப்பத்தையும் மன்றாட்டையும் கேட்டு,
உமது அடியேனுடைய விண்ணப்பத்தையும்
வேண்டுதலையும் திருவுளத்தில் கொண்டரு
ளும். உமது அடியேன் இவ்விடத்திலே செய் 29

[1] 2 சாமு. 6. 12, 13, 17
[2] யாத். 26. 33, 34
[3] யாத். 25. 21; 40. 20. உபா. 10. 2–5. எபி. 9. 4
[4] யாத். 40. 34, 35. லேவி. 16. 2
[5] 2 நாளா. 6. 1. சங். 97. 2. ஏசா. 45. 15
[6] 2 சாமு. 7. 13. சங். 132. 14
[7] 2 சாமு. 6. 18
[8] லூ. 1. 68. 2 சாமு. 7. 5, 25.
[9] 1 சாமு. 16. 1. 2 சாமு. 7. 6, 8
[10] 2 நாளா. 17. 1
[11] 2 நாளா. 6. 8, 9
[12] 2 சாமு. 7. 5, 12, 13
[13] 1 நாளா. 28. 5, 6
[14] உபா. 31. 26
[15] யாத். 9. 33. ஏசா. 1. 15
[16] யாத். 15. 11. 2 சாமு. 7. 22
[17] நெகே. 1. 5. தானி. 9. 4
[18] 2 சாமு. 7. 12, 16, 25
[19] 2 நாளா. 2. 6. ஏசா. 66. 1. எரே. 23. 24. அப். 7. 49; 17. 24
[20] 2 கொரி. 12. 2

யும் விண்ணப்பத்தைக் கேட்கும்படி என்னு
டைய நாமம் விளங்குமென்று நீர் சொன்ன
ஸ்தலமாகிய [1]இந்த ஆலயத்தின்மேல் உம்மு
டைய கண்கள் இரவும் பகலும் திறந்திருப்ப
30 தாக. உமது அடியானும், இந்த ஸ்தலத்திலே
விண்ணப்பஞ் செய்யப்போகிற உமது ஜன
மாகிய இஸ்ரவேலும் பண்ணும் ஜெபத்தைக்
கேட்டருளும்; [2]பரலோகமாகிய உம்முடைய
வாசஸ்தலத்திலே அதை நீர் கேட்பீராக,
31 கேட்டு மன்னிப்பீராக. ஒருவன் தன் அய
லானுக்குக் குற்றஞ்செய்திருக்கையில், இவன்
அவனை ஆணையிடச் சொல்லும்போது, [3]அந்த
ஆணை இந்த ஆலயத்திலே உம்முடைய பலிபீ
32 டத்திற்குமுன் வந்தால், அப்பொழுது பர
லோகத்தில் இருக்கிற தேவரீர் கேட்டு, துன்
மார்க்கனுடைய நடக்கையை அவன் தலையின்
மேல் சுமரப்பண்ணி, [4]அவனைக் குற்றவாளி
யாகத் தீர்க்கவும், நீதிமானுக்கு அவனுடைய
நீதிக்குத் தக்கதாய்ச் செய்து அவனை நீதிமா
னாக்கவும் தக்கதாய் உமது அடியாரை நியாயந்
33 தீர்ப்பீராக. உம்முடைய ஜனங்களாகிய இஸ்
ரவேலர் உமக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்
ததினிமித்தம் சத்துருவுக்கு முன்பாக முறிந்து
போய், [5]உம்மிடத்திற்குத் திரும்பி, உம்மு
டைய நாமத்தை அறிக்கைபண்ணி, இந்த ஆல
யத்துக்கு நேராக உம்மை நோக்கி விண்ணப்
34 பத்தையும் வேண்டுதலையும் செய்தால், பர
லோகத்தில் இருக்கிற தேவரீர் கேட்டு, உம்
முடைய ஜனமாகிய இஸ்ரவேலின் பாவத்தை
மன்னித்து, அவர்கள் பிதாக்களுக்கு நீர் கொ
டுத்த தேசத்துக்கு அவர்களைத் திரும்பிவரப்
35 பண்ணுவீராக. அவர்கள் உமக்கு விரோத
மாய்ப் பாவஞ்செய்ததினால் வானம் அடை
பட்டு மழைபெய்யாதிருக்கும்போது, [6]அவர்
கள் இந்த ஸ்தலத்திற்கு நேராக விண்ணப்பஞ்
செய்து, உம்முடைய நாமத்தை அறிக்கை
பண்ணி, தங்களைத் தேவரீர் சிலேசப்படுத்து
கையில் தங்கள் பாவங்களை விட்டுத் திரும்பி
36 னால், பரலோகத்தில் இருக்கிற தேவரீர்
கேட்டு, உமது அடியாரும் உமது ஜனமாகிய
இஸ்ரவேலும் செய்த பாவத்தை மன்னித்து,
[7]அவர்கள் நடக்கவேண்டிய நல்வழியை அவர்
களுக்குப் போதித்து, தேவரீர் உமது ஜனத்திற்
குச் சுதந்தரமாகக் கொடுத்த உமது தேசத்தில்
37 மழைபெய்யக் கட்டளையிடுவீராக. தேசத்தி
லே பஞ்சம் உண்டாகிறபோதும், கொள்ளை
நோய் உண்டாகிற போதும், வறட்சி, சாவி,
வெட்டுக்கிளி, பச்சைக்கிளி உண்டாகிறபோ
தும், [8]அவர்கள் சத்துருக்கள் தேசத்திலுள்ள
பட்டணங்களை முற்றிக்கை போடுகிறபோ
தும், யாதொரு வாதையாகிலும் யாதொரு
38 வியாதியாகிலும் வருகிறபோதும், உம்மு
டைய ஜனமாகிய இஸ்ரவேல் அனைவரிலும்
எந்த மனுஷனானாலும் தன் இருதயத்தின்
வாதையை உணர்ந்து, இந்த ஆலயத்துக்கு
நேராகத் தன் கைகளை விரித்துச் செய்யும்
சகல விண்ணப்பத்தையும், சகல வேண்டுதலை

1 உபா. 12. 11. தானி. 6. 10
2 2 நாளா. 20. 9. நெகே. 1. 6
3 யாத். 22. 11. லேவி. 5. 1
4 உபா. 25. 1
5 லேவி. 26. 17, 39, 40. உபா. 28. 25. நெகே. 1. 9
6 லேவி. 26. 19 உபா. 28. 23
7 1 சாமு. 12. 23. சங். 25. 4, 8: 94. 12
8 லேவி. 26. 16, மு. உபா. 28. 21. மு. 2 நாளா. 20. 9
9 1 சாமு. 16. 7. சங். 11. 4: 130. 4. எரே. 17. 10. அப். 1. 24. எபி. 4. 12
10 உபா. 3. 24
11 2 இரா. 19. 19. சங். 67. 2; 102. 15
12 பிர. 7. 20. யாக். 3. 2. 1 யோ. 1. 8, 10.
13 உபா. 28. 36, 64
14 லேவி. 26. 40. நெகே. 1. 6. சங். 106. 6. தானி. 9. 5
15 எரே. 29. 12, 14. தானி. 6. 10

யும், உம்முடைய வாசஸ்தலமாகிய பரலோ 39
கத்தில் இருக்கிற தேவரீர் கேட்டு மன்னித்து,
தேவரீர் எங்கள் பிதாக்களுக்குக் கொடுத்த 40
தேசத்தில் அவர்கள் உயிரோடிருக்கும்நாளெல்
லாம் உமக்குப் பயப்படும்படிக்கு தேவரீர் ஒரு
வரே எல்லா மனுபுத்திரரின் இருதயத்தையும்
அறிந்தவராதலால், [9]நீர் அவனவன் இருதயத்
தை அறிந்திருக்கிறபடியே, அவனவனுடைய
வழிகளுக்குத் தக்கதாகச் செய்து, அவனவ
னுக்குப் பலன் அளிப்பீராக. உம்முடைய 41
ஜனமாகிய இஸ்ரவேல் ஜாதியல்லாத அந்நிய
ஜாதியார் உமது மகத்துவமான நாமத்தையும்,
[10]உமது பலத்த கரத்தையும், உமது ஓங்கிய
புயத்தையும் கேள்விப்படுவார்களே. அப்படிக் 42
கொத்த அந்நியஜாதியானும், உமது நாமத்தி
னிமித்தம் தூரதேசத்திலிருந்து வந்து, இந்த ஆ
லயத்துக்கு நேராக விண்ணப்பம்பண்ணினால்,
உமது வாசஸ்தலமாகிய பரலோகத்தில் இருக் 43
கிற தேவரீர் அதைக் கேட்டு, [11]பூமியின் ஜனங்
களெல்லாரும் உம்முடைய ஜனமாகிய இஸ்ர
வேலைப்போல உமக்குப் பயப்படும்படிக்கும்,
நான் கட்டின இந்த ஆலயத்துக்கு உம்மு
டைய நாமம் தரிக்கப்பட்டதென்று அறியும்
படிக்கும், உம்முடைய நாமத்தை அறியத்தக்க
தாக, அந்த அந்நியஜாதியான் உம்மை நோக்கி
வேண்டிக்கொள்வதின்படியெல்லாம் தேவரீர்
செய்வீராக. நீர் உம்முடைய ஜனங்களை 44
அனுப்பும் வழியிலே அவர்கள் தங்கள் சத்து
ருக்களோடு யுத்தம்பண்ணப் புறப்படும்போது,
நீர் தெரிந்துகொண்ட இந்த நகரத்துக்கும்,
உம்முடைய நாமத்துக்கு நான் கட்டின இந்த
ஆலயத்துக்கும் நேராகக் கர்த்தரை நோக்கி
விண்ணப்பம் பண்ணினால், பரலோகத்தில் 45
இருக்கிற தேவரீர் அவர்கள் விண்ணப்பத்தை
யும் வேண்டுதலையும் கேட்டு, அவர்கள் நியா
யத்தை விசாரிப்பீராக. பாவஞ்செய்யாத 46
மனுஷன் இல்லையே; [12]ஆகையால், அவர்கள்
உமக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்து, தேவ
ரீர் அவர்கள்மேல் கோபங்கொண்டு, அவர்கள்
சத்துருக்கள் கையில் அவர்களை ஒப்புக்கொடு
த்து, [13]அந்தச் சத்துருக்கள் அவர்களைத் தூரத்
திலாகிலும் சமீபத்திலாகிலும் இருக்கிற தங்
கள் தேசத்திற்குச் சிறைபிடித்துக்கொண்டு
போகும்போது, அவர்கள் சிறைப்பட்டுப் 47
போயிருக்கிற தேசத்திலே தங்களில் உணர்
வடைந்து, [14]மனந்திரும்பி: நாங்கள் பாவஞ்
செய்து, அக்கிரமம்பண்ணி, துன்மார்க்கமாய்
நடந்தோம் என்று தங்கள் சிறையிருப்பான
தேசத்திலே உம்மை நோக்கி வேண்டுதல்
செய்து, தங்களைச் சிறைபிடித்துக்கொண்ட 48
தங்கள் சத்துருக்களின் தேசத்திலே தங்கள்
முழு இருதயத்தோடும் தங்கள் முழு ஆத்துமா
வோடும் உம்மிடத்தில் திரும்பி, தேவரீர் தங்
கள் பிதாக்களுக்குக் கொடுத்த தங்கள் தேசத்
திற்கும், தேவரீர் தெரிந்துகொண்ட இந்த நக
ரத்திற்கும், [15]உம்முடைய நாமத்திற்கு நான்
கட்டின இந்த ஆலயத்திற்கும் நேராக உம்மை

நோக்கி விண்ணப்பம் பண்ணும்போது,
49 உமது வாசஸ்தலமாகிய பரலோகத்தில் இரு
க்கிற தேவரீர் அவர்கள் விண்ணப்பத்தை
யும் வேண்டுதலையும் கேட்டு, அவர்கள் நியா
50 யத்தை விசாரித்து, உம்முடைய ஜனங்கள்
உமக்கு விரோதமாய்ச் செய்த பாவத்தையும்,
அவர்கள் உம்முடைய கட்டளையை மீறிய
அவர்கள் துரோகங்களையும் எல்லாம் மன்
னித்து, [1]அவர்களைச் சிறைபிடித்துக்கொண்டு
போகிறவர்கள் அவர்களுக்கு இரங்கத்தக்க
தான இரக்கத்தை அவர்களுக்குக் கிடைக்கப்
51 பண்ணுவீராக. அவர்கள் எகிப்தென்கிற
இருப்புக்காளவாயின் நடுவிலிருந்து தேவரீர்
புறப்படப்பண்ணின [2]உம்முடைய ஜனமும்
உம்முடைய சுதந்தரமுமாய் இருக்கிறார்களே.
52 அவர்கள் உம்மை நோக்கி வேண்டிக்கொள்வ
தின்படியெல்லாம் தேவரீர் அவர்களுக்குச்
செய்யும்படி, உம்முடைய கண்கள் உமது
அடியானின் வேண்டுதலுக்கும், உமது ஜன
மாகிய இஸ்ரவேலின் வேண்டுதலுக்கும் திறந்
53 திருப்பதாக. கர்த்தராகிய ஆண்டவரே, நீர்
எங்கள் பிதாக்களை எகிப்திலிருந்து புறப்படப்
பண்ணும்போது, உம்முடைய தாசனாகிய
மோசேயைக்கொண்டு சொன்னபடியே,
[3]தேவரீர் பூமியின் சகல ஜனங்களிலும் அவர்
களை உமக்குச் சுதந்தரமாகப் பிரித்தெடுத்தீரே
என்று விண்ணப்பம்பண்ணினான்.
54 சாலொமோன் கர்த்தரை நோக்கி, இந்த
ஜெபத்தையும்வேண்டுதலையும்எல்லாம்செய்து
முடித்தபின்பு, அவன் கர்த்தருடைய பலிபீ
டத்திற்கு முன்பாகத் தன் கைகளை வானத்
திற்கு நேராக விரித்து, முழங்காற்படியிட்டி
55 ருந்ததை விட்டெழுந்து, நின்றுகொண்டு,
[4]இஸ்ரவேல்சபையையெல்லாம்ஆசீர்வதித்து,
56 உரத்த சத்தத்தோடே சொன்னது: தாம் வாக்
குத்தத்தம் பண்ணினபடியெல்லாம் தம்மு
டைய ஜனமாகிய இஸ்ரவேலுக்கு இளைப்
பாறுதலை அருளின கர்த்தருக்கு ஸ்தோத்தி
ரம், அவர் தமமுடைய தாசனாகிய மோசே
யைக்கொண்டு சொன்ன [5]அவருடைய நல்
வார்த்தைகளில் எல்லாம் ஒரு வார்த்தையாகி
57 லும் தவறிப்போகவில்லை. நம்முடைய தேவ
னாகியகர்த்தர் நம்மைக்கைவிடாமலும், நம்மை
நெகிழவிடாமலும், [6]அவர் நம்முடைய பிதாக்
களோடு இருந்ததுபோல, நம்மோடும் இருந்து,
58 நாம் அவருடைய வழிகளில் எல்லாம் நடக்
கிறதற்கும், அவர் நம்முடைய பிதாக்களுக்குக்
கட்டளையிட்ட அவருடைய கற்பனைகளையும்,
அவருடைய கட்டளைகளையும், அவருடைய
நியாயங்களையும் கைக்கொள்ளுகிறதற்கும்,
[7]நம்முடைய இருதயத்தைத் தம்மிடத்தில் சா
59 யப்பண்ணுவாராக. கர்த்தரே தேவன், [8]வே
றொருவரும் இல்லையென்பதைப் பூமியின்
60 ஜனங்களெல்லாம் அறியும்படியாக, அவர்
தமது அடியானுடைய நியாயத்தையும், தமது
ஜனமாகிய இஸ்ரவேலின் நியாயத்தையும்,
அந்தந்த நாளில் நடக்கும் காரியத்துக்குத் தக்க
தாய் விசாரிப்பதற்கு, நான் கர்த்தருக்கு முன்
பாக விண்ணப்பம்பண்ணின இந்த என்னு
டையவார்த்தைகள் இரவும்பகலும் நம்முடைய
தேவனாகிய கர்த்தருடைய சந்நிதியில் இருப்
பதாக. ஆதலால் இந்நாளில் இருக்கிறது 61
போல, நீங்கள் அவர் கட்டளைகளில் நடந்து,
அவர் கற்பனைகளைக் கைக்கொள்ள, [9]உங்கள்
இருதயம் நம்முடையதேவனாகிய கர்த்தரோடு
உத்தமமாய் இருக்கக்கடவது என்றான். பின்பு 62
ராஜாவும் அவனோடே இருந்த இஸ்ரவேலர்
அனைவரும், [10]கர்த்தருடைய சந்நிதியில் பலிக
ளைச் செலுத்தினார்கள். சாலொமோன் கர்த்த 63
ருக்குச் சமாதானபலிகளாக, இருபத்தீராயிரம்
மாடுகளையும், இலட்சத்திருபதினாயிரம் ஆடுக
ளையும் பலியிட்டான்; இவ்விதமாய் ராஜாவும்
இஸ்ரவேல் புத்திரர் அனைவரும் கர்த்தரு
டைய ஆலயத்தைப் பிரதிஷ்டைபண்ணினார்
கள். கர்த்தருடைய சந்நிதியில் இருந்த வெண் 64
கலப் பலிபீடம் சர்வாங்க தகனபலிகளையும்,
போஜனபலிகளையும், சமாதானபலிகளின்
நிணத்தையும் கொள்ளமாட்டாமல் சிறிதாயி
ருந்தபடியினால், ராஜா கர்த்தருடைய ஆலயத்
திற்குமுன் இருக்கிற பிராகாரத்தின் நடுமை
யத்தைப் பரிசுத்தப்படுத்தி, [11]அன்றையதினம்
அங்கே சர்வாங்க தகனபலிகளையும், போஜன
பலிகளையும், சமாதானபலிகளின் நிணத்தை
யும் செலுத்தினான். அக்காலத்தில்தானே 65
சாலொமோனும், ஆமாத்தின் எல்லைதொடங்கி
எகிப்தின் நதிமட்டும் இருந்துவந்து, அவ
னோடே இருந்த பெரிய கூட்டமாகிய இஸ்ர
வேல் அனைத்தும் நம்முடைய தேவனாகிய
கர்த்தருடைய சந்நிதியில் ஏழுநாளும், அதற்
குப்பின்பு வேறே ஏழுநாளும், ஆகப் பதினாலு
நாள்வரைக்கும் [12]பண்டிகையை ஆசரித்தார்
கள். எட்டாம் நாளிலே ஜனங்களுக்கு விடை 66
கொடுத்து அனுப்பினான்; [13]அவர்கள் ராஜா
வை வாழ்த்தி, கர்த்தர் தமது தாசனாகிய
தாவீதுக்கும் தமது ஜனமாகிய இஸ்ரவே
லுக்கும் செய்த [14]எல்லா நன்மைக்காகவும்
சந்தோஷப்பட்டு மனமகிழ்ச்சியோடே தங்
கள் கூடாரங்களுக்குப் போய்விட்டார்கள்.

சாலொமோன் கர்த்தருடைய ஆலயத்தை 9
யும் ராஜ அரமனையையும், தான் செய்ய
வேண்டும் என்று விரும்பின எல்லாவற்றை
யும் [15]கட்டி முடித்தபின்பு, கர்த்தர் கிபியோ 2
னிலே சாலொமோனுக்குத் தரிசனமானது
போல, [16]இரண்டாந்தரமும் அவனுக்குத் தரி
சனமானார். கர்த்தர் அவனை நோக்கி: [17]நீ 3
என் சமுகத்தில் செய்த உன் விண்ணப்பத்
தையும் உன் வேண்டுதலையும் கேட்டேன்; [18]நீ
கட்டின இந்த ஆலயத்தில் என் நாமம் என்
றைக்கும் விளங்கத்தக்கதாக, அதைப் பரிசுத்த
மாக்கினேன்; [19]என் கண்களும் என் இருதய
மும் எந்நாளும் அங்கேயிருக்கும். நான் உனக் 4
குக் கட்டளையிட்ட எல்லாவற்றையும் நீ செ
ய்து, என் கட்டளைகளையும் என் நியாயங்களை
யும் கைக்கொள்ளும்படிக்கு, [20]என் சமுகத்தில்

1 எஸ்றா. 7. 6. சங். 106. 46
2 உபா. 4. 20; 9. 29. எரே. 11. 4
3 யாத். 19. 5. உபா. 9. 26, 29; 14. 2
4 2 சாமு. 6. 18
5 உபா. 12. 10. யோசு. 21. 45; 23. 14
6 உபா. 31. 6. யோசு. 1. 5
7 சங். 119. 36
8 யோசு. 4. 24. உபா. 4. 35, 39
9 உபா. 18. 13
10 2 நாளா. 7. 4. ழி
11 2 நாளா. 4. 1; 7. 7
12 லேவி. 23. 34
13 2 நாளா. 7. 9, 10
14 சங். 106 4, 3
15 2 நாளா. 7. 11. 8. 6
16 3. 5
17 2 இரா. 20. 5. சங். 10. 17
18 8. 29
19 உபா. 11. 12
20 2. 4. நீதி. 10. 9

மனஉத்தமமும் செம்மையுமாய் உன் தகப்பஞ
கிய தாவீது நடந்ததுபோல நடப்பாயாகுல்,
5 இஸ்ரவேலின் சிங்காசனத்தின்மேல் உட்கா
ரும் புருஷன் உனக்கு இல்லாமற்போவதில்லை
என்று உன் தகப்பஞகிய தாவீதோடே நான்
சொன்னபடியே, [1]இஸ்ரவேலின்மேலுள்ள
உன் ராஜ்யபாரத்தின் சிங்காசனத்தை என்
6 றைக்கும் நிலைக்கப்பண்ணுவேன். நீங்களும்
உங்கள் பிள்ளைகளும் என்னைவிட்டுப் பின்
வாங்கி, நான் உங்களுக்கு முன்வைத்த என்
கற்பனைகளையும் என் கட்டளைகளையும் கைக்
கொள்ளாமற்போய், [2]வேறே தேவர்களைச்
சேவித்து, அவைகளைப் பணிந்துகொள்வீர்க
7 ளாகில், நான் இஸ்ரவேலுக்குக் கொடுத்த
தேசத்திலே அவர்களை வைக்காதபடிக்கு நிர்
மூலமாக்கி, என் நாமம் விளங்க நான் பரிசுத்த
மாக்கின இந்த ஆலயத்தை என் சமுகத்தை
விட்டுத் தள்ளுவேன்; [3]அப்பொழுது இஸ்ர
வேல் சகல ஜனங்களுக்குள்ளும் பழமொழி
யாகவும் வசைச்சொல்லாகவும் இருப்பார்கள்.
8 அப்பொழுது உன்னதமாயிருக்கிற இந்த ஆல
யத்தைக் கடந்துபோகிறவன் எவனும் பிர
மித்து, பகிடியாய் ஈசலிட்டு: [4]**கர்த்தர்** இந்தத்
தேசத்துக்கும் இந்த ஆலயத்துக்கும் இப்படிச்
9 செய்தது என்ன? என்று கேட்பார்கள். அத
ற்கு அவர்கள்: தங்கள் பிதாக்களை எகிப்து
தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின தங்கள்
தேவஞகிய **கர்த்தரை** விட்டு, வேறே தேவர்
களைப் பற்றிக்கொண்டு, அவர்களை நமஸ்கரித்
துச் சேவித்தபடியினுல், **கர்த்தர்** இந்தத் தீங்
கையெல்லாம் அவர்கள்மேல் வரப்பண்ணி
ஞர் என்று சொல்லுவார்கள் என்ருர்.
10 சாலொமோன் **கர்த்தருடைய** ஆலயமும்
ராஜ அரமனையுமாகிய இரண்டு மாளிகைகளை
யும் [5]கட்டி நிறைவேற்றுகிற இருபதாம் வரு
11 ஷம் முடிவிலே, தன்னுடைய விருப்பத்
தின்படியெல்லாம் தனக்குக் கேதுருமரங்க
ளையும், தேவதாரிவிருட்சங்களையும், பொன்
னையும் கொடுத்துவந்த தீருவின் ராஜாவாகிய
ஈராமுக்கு, ராஜாவாகிய சாலொமோன் கலி
லேயா நாட்டிலுள்ள இருபது பட்டணங்க
12 ளைக் கொடுத்தான். ஈராம் தனக்குச் சாலொ
மோன் கொடுத்த பட்டணங்களைப் பார்க்கிற
தற்குத் தீருவிலிருந்து புறப்பட்டு வந்தான்;
13 அவைகளில் அவன் பிரியப்படவில்லை. அத
ஞலே அவன்: என் சகோதரனே, நீர் எனக்
குக் கொடுத்த இந்தப் பட்டணங்கள் என்ன
பட்டணங்கள்? என்ருன். அவைகளுக்கு இந்
நாள்மட்டும் வழங்கிவருகிறபடி *காபூல் நாடு
14 என்று பேரிட்டான். ஈராம் ராஜாவுக்கு நூற்
றிருபது தாலந்து பொன் அனுப்பியிருந்தான்.
15 பிடித்த அமஞ்சி ஆட்களைக்கொண்டு [6]சா
லொமோன் ராஜா தான் **கர்த்தருடைய** ஆலயத்
தையும், தன் அரமனையையும், [7]மில்லோவை
யும், எருசலேமின் மதிலையும், [8]ஆத்சோரை
யும், மெகிதோவையும், கேசேரையும் கட்டி
16 ஞன். கேசேரை என் கட்டினுனென்ருல்,
எகிப்தின் ராஜாவாகிய பார்வோன் புறப்பட்டு
வந்து, அந்தக் கேசேர்பட்டணத்தைப் பிடித்
து, அதை அக்கினியால் சுட்டெரித்து, [9]அதி
லே குடியிருந்த கானனியரைக் கொன்று
போட்டு, அதைச் சாலொமோனின் மனைவி
யாகிய தன் குமாரத்திக்குச் சீதனமாகக் கொ
டுத்திருந்தான். சாலொமோன் அந்தக் கே 17
சேர்பட்டணத்தையும், [10]கீழ்ப்பெத்தொரோனை
யும், பாலாத்தையும், [11]வனாந்தரவெளியிலுள்ள 18
தத்மோரையும், தனக்கு இருக்கிற ரஸ்துக் 19
களை வைக்கும் சகல பட்டணங்களையும், இர
தங்கள் இருக்கும் பட்டணங்களையும், குதிரை
வீரர் இருக்கும் பட்டணங்களையும், எருசலே
மிலும் லீபனேனிலும், தான் அரசாண்ட
தேசமெங்கும் தனக்கு இஷ்டமானதையெல்
லாம் கட்டிஞன். இஸ்ரவேல் புத்திரர் சங் 20
காரம் பண்ணக்கூடாமல் மீந்திருந்த இஸ்ர
வேல் புத்திரரின் ஜாதியல்லாத எமோரியர்,
எத்தியர், பெரிசியர், ஏவியர், எபூசியருமான
சகல ஜனத்திலும், அவர்களுக்குப் பிறகு 21
தேசத்தில் மீந்திருந்த சகல ஜனங்களுடைய
பிள்ளைகளையும், சாலொமோன் இந்நாள்வ
ரைக்கும் நடக்கிறதுபோல, [12]அமஞ்சிவேலை
செய்ய அடிமைப்படுத்திக்கொண்டான். இஸ் 22
ரவேல்புத்திரரில்ஒருவரையும்[13]சாலொமோன்
அடிமைப்படுத்தவில்லை; அவர்கள் யுத்தமனு
ஷரும், அவனுக்குப் பணிவிடைக்காரரும்,
பிரபுக்களும், சேர்வைக்காரரும், இரதவீர
ரும், குதிரைவீரருமாயிருந்தார்கள். ஐந்நூற் 23
றைம்பதுபேர் [14]சாலொமோனின் வேலையை
விசாரித்து, வேலையாட்களைக் கண்காணிக்
கிறதற்குத் தலைமையான விசாரிப்புக்காரரா
யிருந்தார்கள். பார்வோனின் குமாரத்தி, 24
தாவீதின் நகரத்திலிருந்து சாலொமோன்
தனக்குக் கட்டின தன் மாளிகையிலே குடி
வந்தாள்; [15]அப்பொழுது மில்லோவைக் கட்டி
ஞன். சாலொமோன் **கர்த்தரின்** ஆலயத்தை 25
முடித்தபின்பு, அவருக்குக் கட்டின பலிபீடத்
தின்மேல் வருஷத்தில் மூன்று முறை [16]சர்
வாங்க தகனபலிகளையும் சமாதான பலிகளை
யும் இட்டு, **கர்த்தரின்** சந்நிதியில் இருக்கிற
பலிபீடத்தின்மேல் தூபங்காட்டிவந்தான்.
ராஜாவாகிய சாலொமோன் ஏதோம் தேசத் 26
தில் சிவந்த சமுத்திரக்கரையிலே ஏலோத்துக்
குச் சமீபத்திலுள்ள [17]எசியோன்கேபேரிலே
கப்பல்களைச் செய்வித்தான். அந்தக் கப்பல் 27
களில் [18]ஈராம் சமுத்திர யாத்திரையில் பழ
கின கப்பலாட்களாகிய தன் வேலைக்காரரைச்
சாலொமோனுடைய வேலைக்காரரோடே
கூட அனுப்பிஞன். அவர்கள் ஓப்பீருக்குப் 28
போய், [19]அவ்விடத்திலிருந்து நாலூற்று இரு
பது தாலந்து பொன்னை ராஜாவாகிய சாலொ
மோனிடத்தில் கொண்டுவந்தார்கள்.
**கர்த்தருடைய** நாமத்தைக்குறித்துச் சாலொ **10**
மோனுக்கு உண்டாயிருந்த கீர்த்தி சேபாவின்
ராஜஸ்திரீக்குக் கேள்வியானபோது, [20]அவள்
விடுகதைகளினுல் [21]அவனைச் சோதிக்கிறதற்

[1] 1 நாளா. 22. 9, 10. சங். 132. 12
[2] 2 சாமு. 7. 14. சங். 89. 30
[3] உபா. 4. 26-28, 87. 2 இரா. 17. 23. சங். 44. 14
[4] உபா. 29. 24-26. எரே. 22. 8, 9
[5] 2 நாளா. 8. 1, 2
* அருவருப்பு, அழுக்கு.
[6] 5. 13
[7] 2 சாமு. 5. 9
[8] யோசு. 16. 10. 17. 11, 19, 36
[9] யோசு. 16. 10
[10] யோசு. 16. 3
[11] யோசு. 19. 44
[12] நியா. 1. 21, 28. யோசு. 15. 63. எஸ்றா. 2. 55, 58
[13] லேவி. 25. 39
[14] 2 நாளா. 8. 10
[15] 7. 8; 11. 27
[16] 2 நாளா. 8. 12, 16
[17] உபா. 2. 8
[18] 10. 11
[19] யோபு 22. 24
[20] அருமையான கேள்விகளினுல். 2 நாளா. 9. 1. மத். 12. 42
[21] நியா. 14. 12. நீதி. 1. 6

2 காக, மிகுந்த பரிவாரத்தோடும், கந்தவர்க்கங்
களையும், மிகுதியான பொன்னையும் இரத்தி
னங்களையும் சுமக்கிற ஒட்டகங்களோடும், எரு
சலேமுக்கு வந்தாள்; அவள் சாலொமோனி
டத்தில் வந்தபோது, தன் மனதில் இருந்த
எல்லாவற்றையுங்குறித்து அவனிடத்தில் சம்
3 பாஷித்தாள். அப்பொழுது சாலொமோன்
அவள் கேட்டவைகளையெல்லாம் *விடுவித்
தான், அவளுக்கு விடுவிக்கக்கூடாதபடிக்கு,
ஒன்றாகிலும் ராஜாவுக்கு மறைபொருளாயிருக்
கவில்லை.
4 சேபாவின் ராஜஸ்திரீ சாலொமோனுடைய
சகல ஞானத்தையும், அவன் கட்டின அரம
5 னையையும், அவன் பந்தியின் போஜனபதா
ர்த்தங்களையும், அவன் ஊழியக்காரரின் வீடு
களையும், அவன் உத்தியோகஸ்தரின் வரிசை
யையும், அவர்கள் வஸ்திரங்களையும், அவனு
டைய பான பாத்திரக்காரரையும், அவன் கர்த்
தருடைய ஆலயத்துக்குள் பிரவேசிக்கும் நடை
மண்டபத்தையும் கண்டபோது [1]அவள் ஆச்ச
6 ரியத்தால் பிரமைகொண்டு, ராஜாவை நோக்
கி: உம்முடைய வர்த்தமானங்களையும் உம்மு
டைய ஞானத்தையும் குறித்து நான் என் தே
7 சத்தில் கேட்ட செய்தி மெய்யாயிற்று. நான்
வந்து அதை என் கண்களால் காணுமட்டும்
அந்த வார்த்தைகளை நான் நம்பவில்லை; இவை
களில் பாதியாகிலும் எனக்கு அறிவிக்கப்பட
வில்லை என்று காண்கிறேன்; நான் கேள்விப்
பட்ட பிரஸ்தாபத்தைப்பார்க்கிலும், உம்மு
டைய ஞானமும் செல்வமும் அதிகமாயிருக்கி
8 றது. உம்முடைய ஜனங்கள் பாக்கியவான்
கள்; எப்போதும் உமக்கு முன்பாக நின்று,
உம்முடைய [2]ஞானத்தைக் கேட்கிற உம்மு
டைய ஊழியக்காரரும் பாக்கியவான்கள்.
9 உம்மை இஸ்ரவேலின் சிங்காசனத்தின்மேல்
வைக்க, உம்மேல் பிரியங்கொண்ட உம்மு
டைய தேவனாகிய கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்
படுவாராக; [3]கர்த்தர் இஸ்ரவேலை என்றைக்
கும் சிநேகிக்கிறபடியினால், நியாயமும் நீதியும்
செய்கிறதற்கு உம்மை ராஜாவாக ஏற்படுத்தி
10 னார் என்றாள். அவள் ராஜாவுக்கு நூற்றிரு
பது தாலந்து பொன்னையும், மிகுதியான கந்த
வர்க்கங்களையும், இரத்தினங்களையும் கொடுத்
தாள்; [4]சேபாவின் ராஜஸ்திரீ ராஜாவாகிய
சாலொமோனுக்குக் கொடுத்த அவ்வளவு கந்
தவர்க்கங்கள் பிற்பாடு ஒருக்காலும் வரவில்லை.
11 ஓப்பீரிலிருந்து பொன்னைக் கொண்டுவருகிற
ஈராமின் கப்பல்களும், [5]ஓப்பீரிலிருந்து மிகு
ந்த †வாசனை மரங்களையும் இரத்தினங்களையும்
12 கொண்டுவந்தது. அந்த வாசனைமரங்களால்
ராஜா கர்த்தருடைய ஆலயத்திற்கும் ராஜ அரம
னைக்கும் ஊன்றுகால்களையும், [6]சங்கீதக்கார
ருக்குச் சுரமண்டலங்களையும் தம்புருகளையும்
உண்டாக்கினான்; அப்படிப்பட்ட வாசனை
மரங்கள் பிற்பாடு வந்ததுமில்லை, இந்நாள்
13 வரைக்கும் காணப்படவுமில்லை. ராஜாவாகிய
சாலொமோன் தானே சந்தோஷமாய்ச் சேபா
வின் ராஜஸ்திரீக்கு வெகுமதிகள் கொடுத்த
தும் அல்லாமல், அவள் விரும்பப்பட்டுக்
கேட்டது எல்லாவற்றையும் அவளுக்குக் கொ
டுத்தான்; பின்பு அவள் தன் பரிவாரத்தோடே
தன் தேசத்திற்குத் திரும்பிப்போனாள்.
சாலொமோனுக்கு வியாபாரிகளாலும், சுக 14
ந்த திரவிய வர்த்தகராலும், [7]அரபிதேசத்து
சகல ராஜாக்களாலும், மாகாணங்களின் அதி
பதிகளாலும் வந்த பொன்னையல்லாமல், ஒவ் 15
வொரு வருஷத்தில் அவனுக்கு வந்த பொன்
அறுநூற்று அறுபத்தாறு தாலந்து நிறையாயி
ருந்தது. சாலொமோன் ராஜா, அடித்த 16
பொன்தகட்டால் இருநூறு பரிசைகளைச் செய்
வித்தான்; ஒவ்வொரு பரிசைக்கு அறுநூறு
சேக்கல் நிறைபொன் சென்றது. அடித்த 17
பொன்தகட்டால் முந்நூறு கேடகங்களையும்
செய்வித்தான்; ஒவ்வொருகேடகத்திற்கு மூன்
று இராத்தல் பொன் சென்றது; அவைகளை
ராஜா லீபனோன் வனம் என்னும் மாளிகை
யிலே வைத்தான். ராஜா தந்தத்தினால் பெரிய 18
ஒரு சிங்காசனத்தையும் செய்வித்து, [8]அதைப்
பசும்பொன் தகட்டால் மூடினான். அந்தச் 19
சிங்காசனத்திற்கு ஆறு படிகள் இருந்தது; சிங்
காசனத்தின் தலைப்பு பின்னாக வளைவாயிருந்
தது; உட்காரும் இடத்திற்கு இருபுறமும் கைச்
சாய்மானங்கள் இருந்தது; இரண்டு சிங்கங்
கள் கைச்சாய்மானங்கள் அருகே நின்றது.
ஆறு படிகளின்மேலும், இரண்டு பக்கத்திலும், 20
பன்னிரண்டு சிங்கங்கள் நின்றது; எந்த ராஜ்
யத்திலும் இப்படிப் பண்ணப்படவில்லை.
ராஜாவாகிய சாலொமோனுக்கு இருந்த பான 21
பாத்திரங்களெல்லாம் பொன்னும், லீபனோன்
வனம் என்கிற மாளிகையின் பணிமுட்டுக
ளெல்லாம் பசும்பொன்னுமா யிருந்தது; [9]ஒன்
றும் வெள்ளியினால் செய்யப்படவில்லை; சா
லொமோனின் நாட்களில் வெள்ளி ஒரு
பொருளாய் எண்ணப்படவில்லை. ராஜாவுக் 22
குச் சமுத்திரத்திலே ஈராமின் கப்பல்களோ
டேகூடத் தர்ஷீசின் [10]கப்பல்களும் இருந்
தது; தர்ஷீசின் கப்பல்கள் மூன்று வருஷத்
துக்கு ஒருதரம் பொன்னையும், வெள்ளியை
யும், ‡யானைத்தந்தங்களையும், குரங்குகளை
யும், மயில்களையும் கொண்டுவரும். பூமியின் 23
சகல ராஜாக்களைப்பார்க்கிலும், ராஜாவா
கிய சாலொமோன் ஐசுவரியத்திலும் ஞான
த்திலும் [11]சிறந்தவனாயிருந்தான். சாலொ 24
மோனின் இருதயத்திலே தேவன் அருளிய
ஞானத்தைக் கேட்கிறதற்காக, சகல தேசத்
தாரும் அவன் முகதரிசனத்தைத் தேடினார்
கள். வருஷாவருஷம் அவரவர் தங்கள் 25
காணிக்கையாகிய வெள்ளிப்பாத்திரங்களை
யும், பொற்பாத்திரங்களையும், வஸ்திரங்களை
யும், ஆயுதங்களையும், கந்தவர்க்கங்களையும்,
குதிரைகளையும், கோவேறு கழுதைகளையும்
கொண்டுவருவார்கள். சாலொமோன் இர 26
தங்களையும் குதிரைவீரரையும் சேர்த்தான்;
[12]அவனுக்கு ஆயிரத்து நானூறு இரதங்கள்

* சொன்னான்.
[1] 1 சாமு. 26. 16
[2] நீதி. 8. 34
[3] 2 சாமு. 8. 15. சங். 72. 2. நீதி. 8. 15
[4] சங். 72. 10, 15
[5] 9. 27
† சந்தனக் கட்டைகள்.
[6] 2 நாளா. 9. 10, 11
[7] 2 நாளா. 9. 24
[8] 2 நாளா. 9. 17. ழ
[9] 2 நாளா. 9. 20 ழ
[10] ஆதி. 10. 4
‡ இபம்—கபி—தோகை.
[11] 3. 12; 4. 30
[12] 4. 26. உபா. 17. 16

இருந்தது, பன்னீராயிரம் குதிரைவீரரும்
இருந்தார்கள்; அவைகளை இரதங்கள் வைக்
கும் பட்டணங்களிலும், அவர்களை எருசலே
27 மில் தன்னிடத்திலும் வைத்திருந்தான். எரு
சலேமிலே ராஜா வெள்ளியைக் கற்கள்போ
லவும், [1]கேதுரு மரங்களைப் பள்ளத்தாக்கு
களில் இருக்கும் காட்டத்திமரங்கள்போலவும்
28 அதிகமாக்கினான். சாலொமோன் தனக்குக்
குதிரைகளையும் புடவைகளையும் எகிப்திலி
ருந்து அழைப்பித்தான்; [2]ராஜாவின் வர்த்த
கர் புடவைகளை ஒப்பந்த விலைக்கிரயத்திற்கு
29 வாங்கினார்கள். எகிப்திலிருந்து வந்த ஒவ்
வொரு இரதத்தின் விலை அறுநூறு வெள்ளிக்
காசும், ஒவ்வொரு குதிரையின் விலை நூற்
றைம்பது வெள்ளிக்காசுமாயிருந்தது; [3]இந்
தப்பிரகாரம் ஏத்தியரின் ராஜாக்களெல்லாருக்
கும், சீரியாவின் ராஜாக்களுக்கும், அவர்கள்
மூலமாய்க் கொண்டுவரப்பட்டது.

11 ராஜாவாகிய சாலொமோன், பார்வோ
னின் குமாரத்தியை நேசித்ததுமல்லாமல்,
[4]மோவாபியரும், அம்மோனியரும், ஏதோ
மியரும், சீதோனியரும், ஏத்தியருமாகிய அந்
நிய ஜாதியாரான அநேகம் ஸ்திரீகள்மேலும்
2 ஆசைவைத்தான். கர்த்தர் இஸ்ரவேல் புத்
திரரை நோக்கி: நீங்கள் அவர்களண்டைக்கும்
அவர்கள் உங்களண்டைக்கும் பிரவேசிக்கலா
காது; அவர்கள் நிச்சயமாய்த் தங்கள் தேவர்
களைப் பின்பற்றும்படி உங்கள் இருதயத்தைச்
சாயப்பண்ணுவார்கள் என்று சொல்லியிருந்
தார்; [5]சாலொமோன் அவர்கள்மேல் ஆசை
வைத்து, அவர்களோடு ஐக்கியமாயிருந்தான்.
3 அவனுக்குப் பிரபுக்கள் குலமான எழுநூறு
மனையாட்டிகளும், முந்நூறு மறுமனையாட்டி
களும் இருந்தார்கள்; அவனுடைய ஸ்திரீகள்
அவன் இருதயத்தை வழுவிப்போகப்பண்ணி
4 னார்கள். சாலொமோன் வயதுசென்றபோது,
[6]அவனுடைய மனைவிகள் அவன் இருதயத்
தை அந்நிய தேவர்களைப் பின்பற்றும்படி
சாயப்பண்ணினார்கள்; அதினால் அவனு
டைய இருதயம் அவன் தகப்பனாகிய தாவீ
தின் இருதயத்தைப்போல, தன் தேவனாகிய
**கர்த்தரோடே** உத்தமமா யிருக்கவில்லை.
5 சாலொமோன் சீதோனியரின் தேவியாகிய
*அஸ்தரோத்தையும், அம்மோனியரின் அரு
வருப்பாகிய †மில்கோமையும் பின்பற்றினான்.
6 சாலொமோன் தன் தகப்பனாகிய தாவீதைப்
போல **கர்த்தரைப்** [7]பூரணமாய்ப் பின்பற்றா
மல், **கர்த்தரின்** பார்வைக்குப் பொல்லாப்பா
7 னதைச் செய்தான். அப்பொழுது சாலொ
மோன் எருசலேமுக்கு எதிரான மலையிலே
மோவாபியரின் அருவருப்பாகிய [8]காமோசுக்
கும், அம்மோன் புத்திரரின் அருவருப்பாகிய
மோளேகுக்கும் மேடைையைக் கட்டினான்.
8 இப்படியே தங்கள் தேவர்களுக்குத் தூபங்
காட்டிப் பலியிடுகிற அந்நிய ஜாதியாரான
தன் ஸ்திரீகள் எல்லாருக்காகவும் செய்
தான்.

[1] 2 நாளா. 1. 15–17
[2] எசே. 27. 7
[3] 2 இரா. 7. 6
[4] உபா. 17. 17. நெகே. 13. 26
[5] யாத். 34. 16. உபா. 7. 3, 4
[6] 8. 61
* சஸ்தேதி=இஸ்தி. 2 இரா. 23. 13
† மோலேகு. அப். 7. 7. 34. வச. பாகால், சனி
[7] எண். 14. 24
[8] எண். 21. 29: 33. 52. 2 இரா. 23. 13
[9] 2. 3: 3. 5: 9. 2
[10] 12. 15, 16
[11] 2 சாமு 7. 15. சங். 89. 33
[12] 1 நாளா. 5. 26
[13] எண். 24. 19. 2 சாமு. 8. 14. 1 நாளா. 18. 12, 13

ஆகையால் இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்** 9
**தர்** சாலொமோனுக்கு இரண்டுவிசை தரிசன
மாகி, அந்நிய தேவர்களைப் பின்பற்றவேண்
டாம் என்று கட்டளையிட்டிருந்தும், [9]அவன்
**கர்த்தரை** விட்டுத் தன் இருதயத்தைத்
திருப்பி, அவர் கற்பித்ததைக் கைக்கொள் 10
ளாமற்போனதினால் **கர்த்தர்** அவன்மேல்
கோபமானார். ஆகையால் **கர்த்தர்** சாலொ 11
மோனை நோக்கி: நான் உனக்குக் கட்டளை
யிட்ட என் உடன்படிக்கையையும் என் கட்
டளைகளையும் நீ கைக்கொள்ளாமற்போய் இந்
தக் காரியத்தைச் செய்தபடியினால், [10]ராஜ்ய
பாரத்தை உன்னிடத்திலிருந்து பிடுங்கி,
அதை உன் ஊழியக்காரனுக்குக் கொடுப்
பேன். ஆகிலும் உன் தகப்பனாகிய தாவீதி 12
னிமித்தம், நான் அதை உன் நாட்களிலே
செய்வதில்லை; உன் குமாரனுடைய கையி
னின்று அதைப் பிடுங்குவேன். ஆனாலும் 13
ராஜ்யம் முழுவதையும் நான் பிடுங்காமல்,
[11]என் தாசனாகிய தாவீதினிமித்தமும், நான்
தெரிந்துகொண்ட எருசலேமினிமித்தமும்,
ஒரு கோத்திரத்தை நான் உன் குமாரனுக்குக்
கொடுப்பேன் என்றார்.

**கர்த்தர்** ஏதோமியனாகிய ஆதாத் என்னும் 14
ஒரு விரோதியைச் சாலொமோனுக்கு எழுப்
பினார்; [12]இவன் ஏதோமிலிருந்த ராஜகுல
மானவன். தாவீது ஏதோமில் இருக்கும் 15
போது படைத்தலைவனாகிய யோவாப் ஏதோ
மிலுள்ள ஆண்மக்களையெல்லாம் சங்கரித்து,
[13]வெட்டுண்டவர்களை அடக்கம்பண்ணப்போ
னான். அவர்களையெல்லாம் சங்கரிக்குமள 16
வும், தானும் இஸ்ரவேல் அனைத்தும் அங்கே
ஆறுமாதம் இருக்கும்போது, ஆதாதும் அவ 17
னோடேகூட அவன் தகப்பனுடைய ஊழி
யக்காரரில் சில ஏதோமியரும் எகிப்திற்குப்
போக ஓடிப்போனார்கள்; ஆதாத் அப்பொ
ழுது ஒரு சிறுபிள்ளையாயிருந்தான். அவர் 18
கள் மீதியானிலிருந்து எழுந்து, பாரானுக்
குச் சென்று, பாரானிலே சில மனுஷரைக்
கூட்டிக்கொண்டு, எகிப்திற்குப் பார்வோன்
என்னும் எகிப்தின் ராஜாவினிடத்திற்குப்
போனார்கள்; அவன் இவனுக்கு ஒரு வீடு
கொடுத்து, இவனுக்கு ஆகாரத்தைத் திட்டம்
பண்ணி, நிலத்தையும் கொடுத்தான். ஆதா 19
துக்குப் பார்வோனின் கண்களில் மிகுந்த
தயைகிடைத்தபடியினால், அவன் ராஜஸ்திரீ
யாகிய தாப்பெனேஸ் என்னும் தன் மனைவி
யின் சகோதரியை அவனுக்கு விவாகஞ்செய்
துகொடுத்தான். தாப்பெனேசின் சகோத 20
ரியாகிய இவள் அவனுக்குக் கேனுபாத்
என்னும் ஒரு குமாரனைப் பெற்றாள்; அவ
னைத் தாப்பெனேஸ் பார்வோனின் வீட்
டிலே வளர்த்தாள்; அப்படியே கேனுபாத்
பார்வோனின் வீட்டில் அவனுடைய குமா
ரருடன் இருந்தான். தாவீது தன் பிதாக் 21
களோடே நித்திரை யடைந்தான் என்றும்,
படைத்தலைவனாகிய யோவாப் இறந்து போ

னான் என்றும், எகிப்திலே ஆதாத் கேள்விப்
பட்டபோது, ஆதாத் பார்வோனை நோக்கி:
[1]நான் என் சுயதேசத்துக்குப் போக என்னை
22 அனுப்பவேண்டும் என்றான். அதற்குப் பார்
வோன்: இதோ, நீ உன் சுயதேசத்துக்குப்
போக விரும்புகிறதற்கு, என்னிடத்தில் உன
க்கு என்ன குறைவு இருக்கிறது என்றான்;
அதற்கு அவன்: ஒரு குறைவும் இல்லை;
ஆகிலும் என்னை அனுப்பிவிட வேண்டும்
என்றான்.
23 எலியாதாவின் குமாரனாகிய ரேசோன்
என்னும் வேறொரு விரோதியைத் தேவன்
எழுப்பினார்; இவன் தன் ஆண்டவனாகிய
[2]ஆதாதேசர் என்னும் சோபாவின் ராஜாவை
24 விட்டு ஓடிப்போய், தாவீது சோபாவில்
உள்ளவர்களைக் கொன்று போடுகையில்,
[3]அவன் தன்னோடே சில மனுஷரைச் சேர்த்
துக்கொண்டு, அந்தக் கூட்டத்திற்குத் தலைவ
னானான்; இவர்கள் தமஸ்குவுக்குப் போய்,
அங்கே குடியிருந்து, தமஸ்குவில் ஆண்டார்
25 கள். ஆதாத் பொல்லாப்புச் செய்ததுமல்லா
மல், ரேசோன் சாலொமோனுடைய நாளெல்
லாம் இஸ்ரவேலுக்கு விரோதியாகி, சீரியா
வின்மேல் ராஜாவாயிருந்து, இஸ்ரவேலைப்
பகைத்தான்.
26 சேரேதா ஊரிலுள்ள எப்பிராயீம் மனுஷ
னாகிய நேபாத்தின் குமாரன் [4]யெரொபெ
யாம் என்னும் சாலொமோனின் ஊழியக்
காரனும் ராஜாவுக்கு விரோதமாய்க் கையெ
டுத்தான்; அவனுடைய தாய் செரூகாள் என்
27 னும் பேருள்ள ஒரு விதவை. அவன் ராஜா
வுக்கு விரோதமாய்க் கையெடுத்த முகாந்தரம்
என்னவென்றால், [5]சாலொமோன் மில்லோ
வைக் கட்டி, தன் தகப்பனாகிய தாவீதுடைய
நகரத்தின் இடிந்துபோன இடங்களைப் பழுது
28 பார்த்தபோது, யெரொபெயாம் என்பவன்
பராக்கிரமசாலியாயிருந்தான்; அவன் காரிய
சமர்த்தனான வாலிபன் என்று சாலொமோன்
கண்டு, யோசேப்பு வம்சத்தாரின் காரியத்தை
யெல்லாம் அவன் விசாரிப்புக்கு ஒப்புவித்
29 தான். அக்காலத்திலே யெரொபெயாம் எரு
சலேமிலிருந்து வெளியே போகிறபோது,
சீலோனியனான அகியா என்னும் தீர்க்கதரிசி
[6]புதுச்சால்வையைப் போர்த்துக்கொண்டிரு
ந்து, வழியிலே அவனைக் கண்டான்; இரு
வரும் வயல் வெளியிலே தனித்திருக்கையில்,
30 அகியா தான் போர்த்துக்கொண்டிருந்த புதுச்
சால்வையைப் பிடித்து, [7]அதைப் பன்னி
ரண்டு துண்டாகக் கிழித்துப்போட்டு,
31 யெரொபெயாமை நோக்கி: பத்துத் துண்டு
களை எடுத்துக்கொள்; இஸ்ரவேலின் தேவ
னாகிய கர்த்தர் சொல்லுகிறது என்னவென்
றால்: [8]இதோ, நான் ராஜ்யபாரத்தைச்
சாலொமோனுடைய கையிலிருந்து எடுத்
துக் கிழித்து, உனக்குப் பத்துக் கோத்தி
32 ரங்களைக் கொடுப்பேன். ஆனாலும் என்
தாசனாகிய தாவீதுக்காகவும், நான் இஸ்ரவேல்

[1] 1 இரா. 2. 10, 34
[2] 2 சாமு. 8. 3
[3] 2 சாமு. 8. 3; 10. 8, 18
[4] 12. 2. 2 சாமு. 20. 21
[5] 9. 24
[6] 14. 2
[7] 1 சாமு. 15. 27; 24. 5
[8] 11, 13.
[9] 2 இரா. 8. 19. சங். 132. 17
[10] யோசு. 1. 5. 1 சாமு. 7. 11, 27
[11] 2 நாளா. 9. 29, 31

கோத்திரங்களில் எல்லாம் தெரிந்துகொண்ட
எருசலேம் நகரத்துக்காகவும், ஒரு கோத்திரம்
அவனுக்கு இருக்கும். அவர்கள் என்னை 33
விட்டு, சீதோனியரின் தேவியாகிய அஸ்த
ரோத்தையும், மோவாபியரின் தேவனாகிய கா
மோசையும், அம்மோன் புத்திரரின் தேவனா
கிய மில்கோமையும் பணிந்துகொண்டு, அ
வன் தகப்பனாகிய தாவீதைப்போல என் பார்
வைக்குச் செம்மையாய் இருக்கிறதைச் செய்
யவும், என் கட்டளைகளையும் என் நியாயங்
களையும் கைக்கொள்ளவும், அவர்கள் என்
வழிகளில் நடவாமற்போனபடியினால் அப்
படிச் செய்வேன். ஆனாலும் ராஜ்யபார 34
முழுவதையும் நான் அவன் கையிலிருந்து
எடுத்துப்போடுவதில்லை; நான் தெரிந்துகொ
ண்டவனும், என் கற்பனைகளையும் என் கட்
டளைகளையும் கைக்கொண்டவனுமான என்
தாசனாகிய தாவீதினிமித்தம், அவன் உயிரோ
டிருக்கும் நாளெல்லாம் அவனை அதிபதியாக
வைப்பேன். ஆனாலும் ராஜ்யபாரத்தை 35
அவன் குமாரன் கையிலிருந்து எடுத்து, அதி
லே பத்துக் கோத்திரங்களை உனக்குத் தரு
வேன். என் நாமம் விளங்கும்படிக்கு, நான் 36
தெரிந்துகொண்ட நகரமாகிய எருசலேமிலே
என் சமுகத்தில் என் தாசனாகிய [9]தாவீதுக்கு
எந்நாளும் ஒரு விளக்கு இருக்கத்தக்கதாக,
அவன் குமாரனுக்கு ஒரு கோத்திரத்தைக்
கொடுப்பேன். நீ உன் மனவிருப்பத்தின் 37
படி ஆண்டுகொண்டு, இஸ்ரவேலின்மேல்
ராஜாவாய் இருப்பதற்காக நான் உன்னைத்
தெரிந்துகொண்டேன். நான் உனக்குக் கட் 38
டளையிட்டதை யெல்லாம் நீ கேட்டுக் கைக்
கொண்டு, நீ என் வழிகளில் நடந்து, என்
தாசனாகிய தாவீது செய்ததுபோல, என் கட்
டளைகளையும் என் கற்பனைகளையும் கைக்கொ
ள்ளும்படிக்கு என் பார்வைக்குச் செம்மையா
னதைச் செய்கிறதுண்டானால், [10]நான் உன்
னோடிருந்து, நான் தாவீதுக்குக் கட்டினது
போல உனக்கும் நிலையான வீட்டைக் கட்டி
இஸ்ரவேலை உனக்குத் தருவேன். இப்படி 39
நான் இந்தக் காரியத்தினிமித்தம் தாவீதின்
சந்ததியைச் சிறுமைப்படுத்துவேன்; ஆகிலும்
எந்நாளும் அப்படியிராது என்று சொன்னான்.
அதினிமித்தம் சாலொமோன் யெரொபெயா 40
மைக் கொல்ல வகைதேடினான்; யெரொபெ
யாம் எழுந்து, எகிப்திற்குச் சீஷாக் என்னும்
எகிப்தின் ராஜாவினிடத்தில் ஓடிப்போய்,
சாலொமோன் மரணமடையுமட்டும் எகிப்
தில் இருந்தான்.
சாலொமோனின் மற்ற நடபடிகளும், 41
[11]அவன் செய்தவை அனைத்தும், அவனுடைய
ஞானமும், சாலொமோனுடைய நடபடிப்
புஸ்தகத்தில் அல்லவோ எழுதியிருக்கிறது.
சாலொமோன் எருசலேமிலே இஸ்ரவேலை 42
யெல்லாம் அரசாண்ட நாட்கள் நாற்பது வரு
ஷம். சாலொமோன் தன் பிதாக்களோடே 43
நித்திரையடைந்து, தன் தகப்பனாகிய தாவீ

தின் நகரத்தில் அடக்கம் பண்ணப்பட்டான்;
அவன் குமாரனாகிய ரெகொபெயாம் அவன்
ஸ்தானத்தில் ராஜாவானான்.
**12** ரெகொபெயாமை ராஜாவாக்கும்படி,
[1]இஸ்ரவேலர் எல்லாரும் சீகேமுக்கு வந்திரு
ந்தபடியால், அவனும் சீகேமுக்குப் போனான்.
2 ராஜாவாகிய சாலொமோனை விட்டு ஓடிப்
போய், எகிப்திலே குடியிருந்த நேபாத்தின்
குமாரனாகிய யெரொபெயாமோ, [2]எகிப்தில்
இருக்கையில் இதைக் கேள்விப்பட்டான்.
3 அவர்கள் யெரொபெயாமுக்கு ஆள் அனுப்பி
அவனை அழைப்பித்தார்கள்; அவனும் இஸ்ர
வேல் சபை அனைத்தும் வந்து, ரெகொபெயா
4 மை நோக்கி: உம்முடைய தகப்பன் பார
மான நுகத்தை எங்கள்மேல் வைத்தார்; [3]இப்
போதும் நீர் உம்முடைய தகப்பன் சுமத்தின
கடினமான வேலையையும், அவர் எங்கள்மேல்
வைத்த பாரமான நுகத்தையும் லகுவாக்கும்;
அப்பொழுது உம்மைச் சேவிப்போம் என்
5 றார்கள். அதற்கு அவன்: நீங்கள் போய், மூன்
றுநாள் பொறுத்து என்னிடத்தில் திரும்பிவா
ருங்கள் என்றான்; அப்படியே ஜனங்கள் போ
6 யிருந்தார்கள். அப்பொழுது ராஜாவாகிய
ரெகொபெயாம் தன் தகப்பனாகிய சாலொ
மோன் உயிரோடிருக்கையில் அவன் சமுகத்
தில் நின்ற முதியோரோடே ஆலோசனை
பண்ணி, இந்த ஜனங்களுக்கு மறுஉத்தரவு
கொடுக்க, நீங்கள் என்ன யோசனை சொல்லு
7 கிறீர்கள் என்று கேட்டான். அதற்கு அவர்
கள்: நீர் இன்று இந்த ஜனங்களுக்கு சேவக
னாகி, அவர்களுக்கு இணங்கி, [4]அவர்கள் சொ
ற்படி செய்து, மறுமொழியாக நல்வார்த்தை
களைச் சொல்வீரானால், எந்நாளும் அவர்கள்
உமக்கு ஊழியக்காரராயிருப்பார்கள் என்றார்
8 கள். முதியோர் தனக்குச் சொன்ன ஆலோ
சனையை அவன் தள்ளிவிட்டு, தன்னோடே
வளர்ந்து தன் சமுகத்தில் நிற்கிற வாலிபரோ
9 டே ஆலோசனைபண்ணி, அவர்களை நோக்கி:
உம்முடைய தகப்பன் எங்கள்மேல் வைத்த
நுகத்தை லகுவாக்கும் என்று என்னிடத்தில்
சொன்ன இந்த ஜனங்களுக்கு மறுமொழி
கொடுக்க, நீங்கள் என்ன யோசனை சொல்லு
10 கிறீர்கள் என்று கேட்டான். அப்பொழுது
அவனோடே வளர்ந்த வாலிபர் அவனை நோக்
கி: உம்முடைய தகப்பன் எங்கள் நுகத்தைப்
பாரமாக்கினார், நீர் அதை எங்களுக்கு லகுவா
க்கும் என்று உம்மிடத்தில் சொன்ன இந்த
ஜனத்திற்கு நீர் சொல்லவேண்டியது என்ன
வென்றால்: என் சுண்டுவிரல் என் தகப்பனா
ருடைய இடுப்பைப்பார்க்கிலும் பருமனாயிரு
11 க்கும். இப்போதும் என் தகப்பன் பாரமான
நுகத்தை உங்கள்மேல் வைத்தார், நான்
உங்கள் நுகத்தை அதிக பாரமாக்குவேன்;
என் தகப்பன் உங்களைச் சவுக்குகளினாலே
தண்டித்தார், நான் உங்களைத் தேள்களினாலே
தண்டிப்பேன் என்று நீர் அவர்களோடே
12 சொல்லவேண்டும் என்றார்கள். மூன்றாம்

1 2 நாளா. 10. 1. ழ
2 11. 26, 40
3 1 சாமு. 8. 11-18
4 2 நாளா. 10. 7. நீதி. 15. 1
5 24. வச. கீழ. 14. 4
6 2 சாமு. 20. 1
7 11. 13, 36
8 4. 6; 5. 14
9 2 இரா. 17. 21
10 11. 13, 32
11 2 நாளா. 11. 1

நாள் என்னிடத்தில் வாருங்கள் என்று ராஜா
சொல்லியிருந்தபடியே, யெரொபெயாமும்
சகல ஜனங்களும் மூன்றாம் நாளிலே ரெகொ
பெயாமிடத்தில் வந்தார்கள். ராஜா முதியோர் 13
தனக்குச் சொன்ன ஆலோசனையைத் தள்ளி
விட்டு, வாலிபருடைய ஆலோசனையின்படி
யே அவர்களோடே பேசி: என் தகப்பன் 14
உங்கள் நுகத்தைப் பாரமாக்கினார், நான் உங்
கள் நுகத்தை அதிக பாரமாக்குவேன்; என்
தகப்பன் உங்களைச் சவுக்குகளினாலே தண்
டித்தார், நான் உங்களைத் தேள்களினாலே தண்
டிப்பேன் என்று ஜனங்களுக்குக் கடினமான
உத்தரவு கொடுத்தான். ராஜா ஜனங்களுக் 15
குச் செவிகொடாமற் போனான்; **கர்த்தர்**
சீலோனியனான அகியாவைக்கொண்டு நே
பாத்தின் குமாரனாகிய யெரொபெயாமுக்குச்
சொன்ன தம்முடைய வார்த்தையை உறுதிப்
படுத்தும்படி [5]**கர்த்தரால்** இப்படி நடந்தது. ரா 16
ஜா தங்களுக்குச் செவிகொடாததை இஸ்ரவே
லர் எல்லாரும் கண்டபோது, ஜனங்கள் ராஜா
வுக்கு மறு உத்தரவாக: தாவீதோடே எங்களுக்
குப் பங்கேது? ஈசாயின் குமாரனிடத்தில் எங்க
ளுக்குச் சுதந்தரம் இல்லை; [6]இஸ்ரவேலே,
உன் கூடாரங்களுக்குப் போய்விடு; இப்போ
து தாவீதே, உன் சொந்தவீட்டைப் பார்த்துக்
கொள் என்று சொல்லி, இஸ்ரவேலர் தங்கள்
கூடாரங்களுக்குப் போய்விட்டார்கள். ஆனா 17
லும் யூதாவின் பட்டணங்களிலே குடியிருந்த
இஸ்ரவேல் புத்திரர்மேல் [7]ரெகொபெயாம்
ராஜாவாயிருந்தான். பின்பு ராஜாவாகிய ரெ 18
கொபெயாம் பகுதி விசாரிப்புக்காரனாகிய
[8]அதோராமை அனுப்பினான்; இஸ்ரவேலர்
எல்லாரும் அவனைக் கல்லெறிந்து கொன்றார்
கள்; அப்பொழுது ராஜாவாகிய ரெகொபெ
யாம் தீவிரமாய் இரதத்தின்மேல் ஏறி, எருச
லேமுக்கு ஓடிப்போனான். அப்படியே இந் 19
நாள்வரைக்கும் இருக்கிறபடி இஸ்ரவேலர் தா
வீதின் வம்சத்தை விட்டுக் கலகம்பண்ணிப்
[9]பிரிந்துபோயிருக்கிறார்கள். யெரொபெயாம் 20
திரும்பிவந்தான் என்று இஸ்ரவேலருக்கெல்
லாம் கேள்வியானபோது, அவனைச் சபையி
னிடத்தில் அழைத்தனுப்பி, அவனைச் சமஸ்த
இஸ்ரவேலின்மேலும் ராஜாவாக்கினார்கள்;
[10]யூதா கோத்திரம் மாத்திரமேயன்றி வேறொ
ருவரும் தாவீதின் வம்சத்தைப் பின்பற்ற
வில்லை.
ரெகொபெயாம் எருசலேமுக்கு வந்தபோ 21
து, [11]இஸ்ரவேல் வம்சத்தாரோடே யுத்தம்பண்
ணவும், ராஜ்யத்தைச் சாலொமோனின் குமா
ரனாகிய தன்னிடமாகத் திருப்பிக்கொள்ளவும்,
யூதாவம்சத்தார் பென்யமீன் கோத்திரத்தார்
அனைவருமாகிய தெரிந்துகொள்ளப்பட்ட யுத்
தவீரர் லட்சத்து எண்பதினாயிரம் பேரைக்
கூட்டினான். தேவனுடைய மனுஷனாகிய 22
செமாயாவுக்குத் தேவனுடைய வார்த்தையுண்
டாகி, அவர் சொன்னது: நீ யூதாவின் ராஜா 23
வாகிய ரெகொபெயாம் என்னும் சாலொமோ

னின் குமாரனையும் யூதா வம்சத்தார் அனைவ
ரையும், பென்யமீனரையும், மற்ற ஜனங்களை
24 யும் நோக்கி: நீங்கள் போகாமலும், இஸ்ரவேல்
புத்திரரான உங்கள் சகோதரரோடு யுத்தம்
பண்ணாமலும், அவரவர் தம்தம் வீட்டிற்குத்
திரும்புங்கள்; [1]என்னாலே இந்தக் காரியம் நடந்
தது என்று **கர்த்தர்** உரைக்கிறார் என்று
சொல் என்றார்; அப்பொழுது அவர்கள்: **கர்த்
தருடைய** சொல்லைக் கேட்டு, **கர்த்தருடைய**
வார்த்தையின்படியே திரும்பிப் போய்விட்
டார்கள்.
25 யெரொபெயாம் எப்பிராயீம் மலைத்தேசத்
தில் சீகேமைக் கட்டி, [2]அதிலே வாசம்பண்
ணி, அங்கிருந்து போய்ப் [3]பெனூவேலைக் கட்
26 டினான். யெரொபெயாம்: இப்போது ராஜ்ய
பாரம் தாவீது வம்சவசமாய்த் திரும்புகிறதா
27 யிருக்கும். இந்த ஜனங்கள் எருசலேமிலுள்ள
**கர்த்தருடைய** ஆலயத்திலே பலிகளைச் செலு
த்தப்போனால், [4]இந்த ஜனங்களின் இருதயம்
யூதாவின் ராஜாவாகிய ரெகொபெயாம் என்
னும் தங்கள் ஆண்டவன் வசமாய்த் திரும்பி,
அவர்கள் என்னைக் கொன்றுபோட்டு, யூதா
வின் ராஜாவாகிய ரெகொபெயாமின் பாரிச
மாய்ப் போய்விடுவார்கள் என்று தன் மன
28 திலே சிந்தித்துக்கொண்டிருந்தான். ஆகை
யால் ராஜாவானவன் யோசனைபண்ணி,
பொன்னினால் இரண்டு கன்றுக்குட்டிகளை
உண்டாக்கி, [5]ஜனங்களைப் பார்த்து: நீங்கள்
எருசலேமுக்குப் போகிறது உங்களுக்கு வருத்
தம்; இஸ்ரவேலரே, இதோ, இவைகள் உங்
களை எகிப்துதேசத்திலிருந்து வரப்பண்ணின
29 உங்கள் தேவர்கள் என்று சொல்லி, ஒன்
றைப் பெத்தேலிலும், [6]ஒன்றைத் தாணிலும்
30 ஸ்தாபித்தான். இந்தக் காரியம் பாவமாயிற்று;
[7]ஜனங்கள் இந்த ஒரு கன்றுக்குட்டிக்காகத்
31 தாண்மட்டும் போவார்கள். அவன் மேடை
யாகிய ஒரு கோவிலையும் கட்டி, [8]லேவியின்
புத்திரராயிராத ஜனத்தில் ஈனமானவர்களை
32 ஆசாரியராக்கினான். யூதாவில் ஆசரிக்கப்ப
டும் பண்டிகைக்கொப்பாக எட்டாம் மாதம்
பதினைந்தாம் தேதியிலே யெரொபெயாம் ஒரு
பண்டிகையையும் கொண்டாடி, [9]பலிபீடத்
தின்மேல் பலியிட்டான்; அப்படியே பெத்
தேலிலே தான் உண்டாக்கின கன்றுக்குட்டி
களுக்குப் பலியிட்டு, [10]தான் உண்டுபண்ணின
மேடைகளின் ஆசாரியர்களைப் பெத்தேலிலே
33 ஸ்தாபித்து, தன் மனதிலே தானே நியமித்
துக்கொண்ட [11]எட்டாம் மாதம் பதினைந்தாம்
தேதியிலே பெத்தேலில் தான் உண்டாக்கின
பலிபீடத்தின்மேல் பலியிட்டு, இஸ்ரவேல்
புத்திரருக்குப் பண்டிகையை ஏற்படுத்தி, பலி
பீடத்தின்மேல் பலியிட்டுத் தூபங்காட்டினான்.

**13** யெரொபெயாம் தூபங்காட்ட பலிபீடத்
தண்டையிலே நிற்கையில், [12]இதோ, தேவனு
டைய மனுஷன் ஒருவன் **கர்த்தருடைய** வார்
த்தையின்படியே, யூதாவிலிருந்து பெத்தே
2 லுக்கு வந்து, அந்தப் பலிபீடத்தை நோக்கி:
பலிபீடமே பலிபீடமே, இதோ, தாவீதின்
வம்சத்தில் [13]யோசியா என்னும் பேருள்ள
ஒரு குமாரன் பிறப்பான்; அவன் உன்மேல்
தூபங்காட்டுகிற மேடைகளின் ஆசாரியர்களை
உன்மேல் பலியிடுவான்; மனுஷரின் எலும்பு
களும் உன்மேல் சுட்டெரிக்கப்படும் என்ப
தைக் **கர்த்தர்** உரைக்கிறார் என்று **கர்த்த
ருடைய** வார்த்தையைக் கூறி; அன்றைய 3
தினம் அவன் ஒரு அடையாளத்தையும் சொ
ல்லி, [14]இதோ, இந்தப் பலிபீடம் வெடித்து,
அதின்மேலுள்ள சாம்பல் கொட்டுண்டுபோம்;
**கர்த்தர்** உரைத்ததற்கு இதுவே அடையாளம்
என்றான். பெத்தேலில் இருக்கிற அந்தப் 4
பலிபீடத்திற்கு எதிராகத் தேவனுடைய மனு
ஷன் கூறின வார்த்தையை ராஜாவாகிய யெ
ரொபெயாம் கேட்டபோது, [15]அவனைப் பிடி
யுங்கள் என்று தன் கையைப் பலிபீடத்திலி
ருந்து நீட்டினான்; அவனுக்கு விரோதமாய்
நீட்டின கை தன்னிடமாக முடக்கக்கூடாத
படிக்கு மரத்துப்போயிற்று. தேவனுடைய 5
மனுஷன் **கர்த்தருடைய** வார்த்தையால் குறித்
திருந்த அடையாளத்தின்படியே பலிபீடம்
வெடித்து, சாம்பல் பலிபீடத்திலிருந்து கொ
ட்டுண்டுபோயிற்று. அப்பொழுது ராஜா, தே 6
வனுடைய மனுஷனுக்குப் பிரதியுத்தரமாக:
நீ உன் தேவனாகிய **கர்த்தருடைய** சமுகத்தை
நோக்கி வேண்டிக்கொண்டு, [16]என் கை முன்
போலிருக்கும்படிக்கு எனக்காக விண்ணப்
பம் பண்ணவேண்டும் என்றான்; அப்பொ
ழுது தேவனுடைய மனுஷன் **கர்த்தருடைய**
சமுகத்தை நோக்கி வருந்தி விண்ணப்பம்
செய்தான், ராஜாவின் கை முன்னிருந்தபடி
சீர்ப்பட்டது. அப்பொழுது ராஜா தேவனு 7
டைய மனுஷனை நோக்கி: நீ என்னோடே
கூட வீட்டுக்கு வந்து இளைப்பாறு; [17]உனக்கு
வெகுமானம் தருவேன் என்றான். தேவ 8
னுடைய மனுஷன் ராஜாவை நோக்கி: [18]நீர்
எனக்கு உம்முடைய வீட்டில் பாதி கொடுத்
தாலும், நான் உம்மோடே வருவதுமில்லை,
இந்த ஸ்தலத்தில் அப்பம் புசிப்பதுமில்லை,
தண்ணீர் குடிப்பதுமில்லை. ஏனென்றால் 9
[19]நீ அப்பம் புசியாமலும், தண்ணீர் குடியாம
லும், போனவழியாய்த் திரும்பாமலும் இரு
வென்று **கர்த்தர்** தம்முடைய வார்த்தையால்
எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார் என்று
சொல்லி, அவன் பெத்தேலுக்கு வந்தவழி 10
யாய்த் திரும்பாமல், வேறு வழியாய்ப் போய்
விட்டான்.

கிழவனான ஒரு தீர்க்கதரிசி பெத்தேலிலே 11
குடியிருந்தான்; அவன் குமாரர் வந்து தேவ
னுடைய மனுஷன் அன்றையதினம் பெத்
தேலிலே செய்த எல்லாச் செய்கைகளையும்,
அவன் ராஜாவோடே சொன்ன வார்த்தை
களையும் தங்கள் தகப்பனுக்கு அறிவித்தார்கள்.
அப்பொழுது அவர்கள் தகப்பன்: அவன் எந்த 12
வழி போனான் என்று அவர்களைக் கேட்
டான். யூதாவிலிருந்து வந்த தேவனுடைய

[1] 15. ஏச.
[2] நியா. 9. 45
[3] நியா. 8. 17
[4] உபா. 12. 5, 6
[5] யாத். 32. 4, 8. 2 இரா. 10. 29; 17. 16
[6] ஆதி. 28. 19. நியா. 18. 29
[7] 13. 34. 2 இரா. 17. 21
[8] எண். 3. 10. 2 இரா. 17. 32. எசே. 44. 6-8
[9] லேவி. 23. 33, 34
[10] ஆமோ. 7. 13
[11] எண். 15. 39
[12] 12. 32, 33
[13] 2 இரா. 23. 15, 16
[14] ஏசா. 7. 14. யோ. 2. 18. 1 கொரி. 1. 22
[15] 2 நாளா. 16. 10. சங். 105. 15. எரே. 20. 2-4. ஆமோ. 7. 10-17. மத். 25. 40. யோ. 13. 20. அப். 6. 12
[16] யாத். 8. 8. எண். 21. 7. அப். 8. 24. யாக். 5. 16
[17] 1 சாமு. 9. 7. 2 இரா. 5. 15
[18] எண். 22. 18; 24. 13
[19] 1 கொரி. 5. 11

மனுஷன் போனவழி இன்னதென்று அவன்
13 குமாரர் பார்த்திருந்தபடியால், அவன் தன்
குமாரருடனே: கழுதையின்மேல் சேணம்
வைத்துக் கொடுங்கள் என்றான்; அவர்கள்
கழுதையின்மேல் சேணம் வைத்துக் கொடுத்
14 தபின், அவன் அதின்மேல் ஏறி, தேவனு
டைய மனுஷனைத் தொடர்ந்துபோய், ஒரு
கர்வாலிமரத்தின்கீழ் உட்கார்ந்திருக்கிற அவ
னைக் கண்டு: யூதாவிலிருந்து வந்த தேவனு
டைய மனுஷன் நீர்தானா என்று அவனைக்
கேட்டதற்கு; அவன், நான்தான் என்றான்.
15 அப்பொழுது அவனை நோக்கி: என்னோடே
வீட்டுக்கு வந்து அப்பம் புசியும் என்றான்.
16 அதற்கு அவன்: நான் உம்மோடே திரும்ப
வும் உம்மோடே உள்ளே போகவுமாட்டேன்;
இந்த ஸ்தலத்திலே உம்மோடே நான் அப்பம்
புசிக்கவும் தண்ணீர் குடிக்கவுமாட்டேன்.
17 ஏனென்றால் நீ அப்பம் புசியாமலும், அங்கே
தண்ணீர் குடியாமலும், நீ போனவழியாய்த்
திரும்பிவாராமலும் இரு என்று **கர்த்தருடைய**
வார்த்தை எனக்கு உண்டாயிருக்கிறது என்
18 றான். அதற்கு அவன்: உம்மைப்போல நா
னும் தீர்க்கதரிசிதான்; அவன் அப்பம் புசித்
துத் தண்ணீர் குடிக்க, நீ அவனைத் திருப்பி,
உன் வீட்டுக்கு அழைத்துக்கொண்டுவா என்று
ஒரு தூதன் **கர்த்தருடைய** வார்த்தையாக என்
னோடே சொன்னான் என்று அவனிடத்தில்
19 பொய்சொன்னான். அப்பொழுது அவன்
இவனோடே திரும்பிப்போய், [1]இவன் வீட்டி
லே அப்பம் புசித்துத் தண்ணீர் குடித்தான்.
20 அவர்கள் பந்தியில் உட்கார்ந்திருக்கிறபோது,
அவனைத் திருப்பிக்கொண்டுவந்த தீர்க்கதரி
சிக்குக் **கர்த்தருடைய** வார்த்தை உண்டான
21 தினால், அவன் யூதாவிலிருந்து வந்த தேவ
னுடைய மனுஷனைப் பார்த்துச் சத்தமிட்டு,
[2]உன் தேவனாகிய **கர்த்தர்** உனக்குக் கற்பித்த
கட்டளையை நீ கைக்கொள்ளாமல் **கர்த்தரு**
22 **டைய** வாக்கை மீறி, அப்பம் புசிக்கவும் தண்
ணீர் குடிக்கவும் வேண்டாம் என்று அவர்
விலக்கின ஸ்தலத்திற்கு நீ திரும்பி, அப்பம்
புசித்துத் தண்ணீர் குடித்தபடியினால், [3]உன்
னுடைய பிரேதம் உன் பிதாக்களின் கல்
லறையிலே சேருவதில்லை என்று **கர்த்தர்**
23 சொல்லுகிறார் என்றான். அவன் போஜன
பானம்பண்ணி முடிந்தபின்பு, அந்தத் தீர்க்க
தரிசியைத் திருப்பிக் கொண்டுவந்தவன் அவ
னுக்குக் கழுதையின்மேல் சேணம்வைத்துக்
24 கொடுத்தான். அவன் போனபிற்பாடு வழியி
லே [4]ஒரு சிங்கம் அவனுக்கு எதிர்ப்பட்டு
அவனைக் கொன்றுபோட்டது; அவன் பிரே
தம் வழியிலே கிடந்தது; கழுதை அதினண்
டையிலே நின்றது; சிங்கமும் பிரேதத்தண்
25 டையிலே நின்றது. அந்த வழியே கடந்து
வருகிற மனுஷர், வழியிலே கிடக்கிற பிரே
தத்தையும், பிரேதத்தண்டையிலே நிற்கிற சிங்
கத்தையும் கண்டு, கிழவனான தீர்க்கதரிசி குடி
யிருந்த பட்டணத்திலே வந்து சொன்னார்கள்.

1 உபா. 13. 1, 3, 5; 18. 20. அப். 4. 19
2 சங். 139. 1-4
3 30. லூக். 2 நாளா. 21. 20. ஏசா. 14. 18—20. எரே. 22. 18, 19
4 20. 36. நீதி. 22. 13; 26. 13
5 எரே. 22. 18
6 2 இரா. 23. 16-19
7 16. 24
8 2 நாளா. 11. 15. 13. 9.
9 12. 30; 14. 10. நீதி. 13. 6
10 11. 31
11 1 சாமு. 9. 7, 8

அவனை வழியிலிருந்து திரும்பப்பண்ணின 26
தீர்க்கதரிசி அதைக் கேட்டபோது, அவன்
**கர்த்தருடைய** வாக்கை மீறின தேவனுடைய
மனுஷன்தான், **கர்த்தர்** அவனுக்குச் சொன்
ன வார்த்தையின்படியே, **கர்த்தர்** அவனை ஒரு
சிங்கத்திற்கு ஒப்புக்கொடுத்தார்; அது அவனை
முறித்துக் கொன்றுபோட்டது என்று சொல்
லி, தன் குமாரரை நோக்கி: எனக்குக் கழு 27
தையின்மேல் சேணம்வைத்துக் கொடுங்கள்
என்றான்; அவர்கள் சேணம்வைத்துக் கொடு
த்தார்கள். அப்பொழுது அவன் போய், வழி 28
யிலே கிடக்கிற அவன் பிரேதத்தையும், பிரே
தத்தண்டையிலே கழுதையும் சிங்கமும் நிற்
கிறதையும் கண்டான்; அந்தச் சிங்கம் பிரேதத்
தைத் தின்னவுமில்லை, கழுதையை முறித்துப்
போடவுமில்லை. அப்பொழுது கிழவனான அந் 29
தத் தீர்க்கதரிசி தேவனுடைய மனுஷனின்
பிரேதத்தை எடுத்து, அதைக் கழுதையின்மேல்
வைத்து, அதற்காகத் துக்கங்கொண்டாடவும்
அதை அடக்கம்பண்ணவும், அதைத் தன் பட்
டணத்திற்குக் கொண்டுவந்து, அவன் பிரே 30
தத்தைத் தன்னுடைய கல்லறையிலே வைத்
தான். அவனுக்காக: [5]ஐயோ, என் சகோத
ரனே என்று புலம்பி, துக்கங்கொண்டாடினார்
கள். அவனை அடக்கம்பண்ணினபின்பு, 31
அவன் தன் குமாரரை நோக்கி: நான் மரிக்கும்
போது, தேவனுடைய மனுஷன் அடக்கம்
பண்ணப்பட்ட கல்லறையிலே என்னையும்
நீங்கள் அடக்கம்பண்ணி, [6]அவன் எலும்புக
ளண்டையிலே என் எலும்புகளையும் வையுங்
கள். அவன் பெத்தேலில் இருக்கிற பலிபீடத் 32
திற்கும், சமாரியாவின் பட்டணங்களில் இருக்
கிற மேடைகளாகிய சகல கோவில்களுக்கும்
விரோதமாகக் கூறின **கர்த்தருடைய** வார்த்தை
[7]நிச்சயமாய் நிறைவேறும் என்றான்.
இந்த நடபடிக்குப் பின்பு, [8]யெரொபெயாம் 33
தன் பொல்லாத வழியை விட்டுத் திரும்பா
மல், மறுபடியும் ஜனத்தில் ஈனமானவர்களை
மேடைகளின் ஆசாரியராக்கினான்; எவன்
மேல் அவனுக்கு மனதிருந்ததோ அவனைப் பிர
திஷ்டைபண்ணினான்; அப்படிப்பட்டவர்கள்
மேடைகளின் ஆசாரியரானார்கள். யெரொ 34
பெயாமின் வீட்டாரைப் பூமியின்மேல் வைக்
காமல் அதம்பண்ணி அழிக்கும்படியாக [9]இந்
தக் காரியம் அவர்களுக்குப் பாவமாயிற்று.
அக்காலத்திலே யெரொபெயாமின் குமா **14**
ரனாகிய அபியா வியாதியில் விழுந்தான்.
அப்பொழுது யெரொபெயாம் தன் மனைவி 2
யைப் பார்த்து: நீ எழுந்து, நீ யெரொபெயா
மின் மனைவியென்று ஒருவரும் அறியாதபடி
க்கு வேஷம்மாறி சீலோவுக்குப் போ; இந்த
ஜனத்தின்மேல் நான் ராஜாவாவேன் [10]என்று
என்னோடே சொன்ன தீர்க்கதரிசியாகிய அ
கியா அங்கே இருக்கிறான். நீ உன் கையிலே 3
பத்து அப்பங்களையும், பணியாரங்களையும், ஒரு
கலசம் தேனையும் எடுத்துக்கொண்டு அவனி
டத்துக்குப் போ; [11]பிள்ளைக்குச் சம்பவிக்கப்

போகிறது இன்னதென்று அவன் உனக்கு
4 அறிவிப்பான் என்றான். அப்படியே யெ
ரொபெயாமின் மனைவி செய்தாள்; அவள்
எழுந்து சீலோவுக்குப் போய், [1]அகியாவின்
வீட்டிற்குள் பிரவேசித்தாள்; அகியாவோ மு
திர்வயதானதினால் அவன் கண்கள் மங்கல
5 டைந்து பார்க்கக் கூடாதிருந்தான். **கர்த்தர்**
அகியாவினிடத்தில்: இதோ, யெரொபெயா
மின் மனைவி வியாதியாயிருக்கிற தன் குமார
னுக்காக உன்னை ஒரு விசேஷம் கேட்க வரு
கிறாள்; நீ அவளுக்கு இன்ன இன்ன பிரகார
மாகச் சொல்லவேண்டும்; அவள் உட்பிரவே
சிக்கிறபோது, தன்னை அந்நிய ஸ்திரீயாகக்
6 காண்பிப்பாள் என்றார். ஆகையால் வாசற்
படிக்குள் பிரவேசிக்கும் அவளுடைய நடை
யின் சத்தத்தை அகியா கேட்டவுடனே,
அவன், யெரொபெயாமின் மனைவியே, உள்
ளேவா; உன்னை அந்நிய ஸ்திரீயாகக் காண்
பிக்கிறதென்ன? துக்க செய்தியை உனக்கு
7 அறிவிக்க நான் அனுப்பப்பட்டேன். நீ
போய் யெரொபெயாமை நோக்கி: இஸ்ர
வேலின் தேவனாகிய **கர்த்தர்** சொல்லுகிறது
என்னவென்றால்: [2]ஜனத்தினின்று உன்னை
நான் உயர்த்தி, உன்னை இஸ்ரவேல் என்னும்
என் ஜனத்தின்மேல் அதிபதியாக வைத்தேன்.
8 நான் ராஜ்யபாரத்தைத் தாவீது வம்சத்தாரின்
கையிலிருந்து பிடுங்கி [3]உனக்குக் கொடுத்
தேன்; ஆனாலும் என் கற்பனைகளைக் கைக்
கொண்டு, என் பார்வைக்குச் செம்மையான
தையே செய்ய, தன் முழு இருதயத்தோடும்
என்னைப் பின்பற்றின என் தாசனாகிய தாவீ
9 தைப்போல நீ இராமல், உனக்கு முன்னி
ருந்த எல்லாரைப்பார்க்கிலும் பொல்லாப்புச்
செய்தாய்; எனக்குக் கோபம் உண்டாக்க,
நீ போய் உனக்கு அந்நிய தேவர்களையும்
வார்க்கப்பட்ட விக்கிரகங்களையும் உண்டு
பண்ணி, [4]உனக்குப் புறம்பே என்னைத் தள்
10 ளிவிட்டாய். ஆகையால் இதோ, நான் யெ
ரொபெயாமுடைய வீட்டின்மேல் பொல்லாப்
பை வரப்பண்ணி, யெரொபெயாமுக்கு,
*சுவர்மேல் நீர்விடும் ஒரு நாய்முதலா யிராத
படிக்கு, இஸ்ரவேலிலே அடைபட்டவனையும்
விடுபட்டவனையும் சங்காரம்பண்ணி, குப்பை
கழித்துப்போடப்படுகிறதுபோல யெரொபெ
யாமின் பின்னடியாரை அவர்கள் கட்டோடே
அற்றுப்போகுமட்டும் கழித்துப்போடுவேன்
11 என்றார். யெரொபெயாமின் சந்ததியாரில்
பட்டணத்திலே சாகிறவனை நாய்கள் தின்னும்;
[5]வெளியிலே சாகிறவனை ஆகாயத்தின் பறவை
கள் தின்னும்; **கர்த்தர்** இதை உரைத்தார்.
12 ஆகையால் நீ எழுந்து, உன் வீட்டுக்குப் போ;
உன் கால்கள் பட்டணத்திற்குள் பிரவேசிக்
கையில் [6]பிள்ளையாண்டான் செத்துப்போ
13 வான். அவனுக்காக இஸ்ரவேலரெல்லாரும்
துக்கங்கொண்டாடி அவனை அடக்கம்பண்ணு
வார்கள்; யெரொபெயாமின் வீட்டாரில் இஸ்
ரவேலின் தேவனாகிய **கர்த்தருக்கு** முன்பாக
அவனிடத்திலே நல்ல காரியம் காணப்பட்ட
தினால், [7]யெரொபெயாமின் சந்ததியில் அவன்
ஒருவனே கல்லறைக்குட்படுவான். ஆனாலும் 14
**கர்த்தர்** தமக்கு இஸ்ரவேலின்மேல் ஒரு ராஜா
வை எழும்பப்பண்ணுவார், [8]அவன் அந்நாளி
லே யெரொபெயாமின் வீட்டாரைச் சங்கரிப்
பான்; இப்போதே இது நடந்தேறும். தண் 15
ணீரிலே நாணல் அசைகிறதுபோல, **கர்த்தர்**
இஸ்ரவேலை முறிந்து அசையப்பண்ணி,
அவர்கள் பிதாக்களுக்குத் தாம் கொடுத்த இந்த
நல்ல தேசத்திலிருந்து இஸ்ரவேலை வேரோ
டே பிடுங்கி, [9]அவர்கள் தங்களுக்கு தோப்பு
விக்கிரகங்களை வைத்து, **கர்த்தருக்குக்** கோபம்
உண்டாக்கினபடியினால், அவர்களை நதிக்கப்
பாலே சிதறடித்து, யெரொபெயாம் செய்த 16
தும் இஸ்ரவேலைச் செய்யப்பண்ணினதுமான
[10]பாவத்தினிமித்தம் இஸ்ரவேலை ஒப்புக்கொ
டுத்துவிடுவார் என்றான். அப்பொழுது யெ 17
ரொபெயாமின் மனைவி எழுந்து புறப்பட்டு
திர்சாவுக்கு வந்தாள்; [11]அவள் வாசற்படியிலே
வருகையில் பிள்ளையாண்டான் செத்துப்போ
னான். **கர்த்தர்** தீர்க்கதரிசியாகிய அகியா 18
என்னும் தமது ஊழியக்காரனைக்கொண்டு
சொன்ன வார்த்தையின்படியே, [12]அவர்கள்
அவனை அடக்கம்பண்ணி, இஸ்ரவேலர் எல்
லாரும் அவனுக்காகத் துக்கங்கொண்டாடி
னார்கள்.

யெரொபெயாம் யுத்தம்பண்ணினதும் ஆண் 19
டதுமான அவனுடைய மற்ற வர்த்தமானங்கள்
இஸ்ரவேல் ராஜாக்களின் [13]நாளாகமப் புஸ்த
கத்தில் எழுதியிருக்கிறது. யெரொபெயாம் 20
ராஜ்யபாரம்பண்ணின காலம் இருபத்திரண்டு
வருஷம்; அவன் தன் பிதாக்களோடே நித்தி
ரையடைந்தபின், அவன் குமாரனாகிய நாதாப்
அவன் ஸ்தானத்தில் ராஜாவானான்.

சாலொமோனின் குமாரனாகிய ரெகொ 21
பெயாம் யூதாவிலே ராஜ்யபாரம பண்ணினான்;
ரெகொபெயாம் ராஜாவாகிறபோது நாற்பத்
தொருவயதாயிருந்து, **கர்த்தர்** தம்முடைய
நாமம விளங்கும்படி இஸ்ரவேல் கோத்திரங்
களிலெல்லாம் தெரிந்துகொண்ட நகரமாகிய
எருசலேமிலே பதினேழு வருஷம் ராஜ்ய
பாரம் பண்ணினான்; [14]அம்மோன் ஜாதியான
அவனுடைய தாயின்பேர் நாமாள். யூதா 22
ஜனங்கள் **கர்த்தரின்** பார்வைக்குப் பொல்லாப்
பானதைச் செய்து, தாங்கள் செய்துவருகிற
தங்களுடைய பாவங்களினால் தங்கள் பிதாக்
கள் செய்த எல்லாவற்றைபபார்க்கிலும் [15]அவ
ருக்கு அதிக எரிச்சலை மூட்டினார்கள். அவர் 23
களும் உயர்ந்த சகல மேட்டின்மேலும், [16]பச்
சையான சகல மரத்தின்கீழும், மேடைகளையும்
சிலைகளையும் தோபபுவிக்கிரகங்களையும் தங்க
ளுக்கு உண்டாக்கினார்கள். தேசத்திலே 24
இலச்சையான [17]புணர்ச்சிக்காரரும் இருந்தார்
கள்; **கர்த்தர்** இஸ்ரவேல் புத்திரருக்கு முன்
பாகத் துரத்திவிட்ட ஜாதிகளுடைய அருவருப்
புகளின்படியெல்லாம் செய்தார்கள். ரெகொ 25

[1] 11. 29
[2] 2 சாமு. 12. 7, 8
[3] 11. 31—38
[4] 2 ராஜா. 11. 15. ஏசே. 9. 26. சங். 50. 17. எசே. 23. 35
* ஒவ்வொரு ஆணையும். 15. 29. 2 இரா. 14. 26
[5] 16. 4; 21. 24
[6] 17. வச.
[7] 2 நாளா. 12. 12; 19. 3
[8] 15. 27, 29
[9] 1 இரா. 17. 6. சங். 52. 5. உபா. 12. 3, 4. எசா. 1. 28, 29
[10] 12. 30; 15. 30, 34
[11] 16. 6, 8
[12] 13. வச.
[13] 2 நாளா. 13. 2. ழ
[14] 2 நாளா. 12. 13
[15] உபா. 32. 21. சங். 78. 58. 1 கொரி. 10.22
[16] எசே. 16. 24, 25. எசா. 57. 5
[17] உபா. 23. 17. 2 இரா. 23. 7

பெயாம் ராஜ்யபாரம் பண்ணும் ஐந்தாம்
வருஷத்திலே, [1]எகிப்தின் ராஜாவாகிய
சீஷாக் எருசலேமுக்கு விரோதமாய் வந்து,
26 கர்த்தருடைய ஆலயத்தின் பொக்கிஷங்களை
யும், ராஜாவுடைய அரமனையின் பொக்கிஷங்
களையும், [2]சாலொமோன் செய்வித்த பொன்
பரிசைகள் ஆகிய சகலத்தையும் எடுத்துக்
27 கொண்டு போய்விட்டான். அவைகளுக்குப்
பதிலாக ராஜாவாகிய ரெகொபெயாம் வெண்
கலப் பரிசைகளைச் செய்வித்து, அவைகளை
ராஜாவின் வாசற்படியைக் காக்கிற சேவகரு
28 டைய தலைவரின் கையில் ஒப்பித்தான். ராஜா
கர்த்தருடைய ஆலயத்துக்குள் பிரவேசிக்கும்
போது, அரமனைச் சேவகா அவைகளைப் பிடித்
துக்கொண்டுபோய், திரும்பத் தங்கள் அறை
29 யிலே வைப்பார்கள். ரெகொபெயாமின்
மற்ற வர்த்தமானங்களும், [3]அவன் செய்தவை
யாவும், யூதாவுடைய ராஜாக்களின் நாளாகமப்
புஸ்தகத்தில் அல்லவோ எழுதியிருக்கிறது.
30 ரெகொபெயாமுக்கும் யெரொபெயாமுக்கும்
[4]அவர்கள் இருந்த நாட்களிலெல்லாம் யுத்தம்
31 நடந்துகொண்டிருந்தது. ரெகொபெயாம் தன்
பிதாக்களோடே நித்திரையடைந்து, தாவீதின்
நகரத்தில் தன் பிதாக்களண்டையில் அடக்கம்
பண்ணப்பட்டான்; [5]அம்மோன் ஜாதியான
அவன் தாய்க்கு நாமாள் என்று பேர்; அவன்
குமாரனாகிய *அபியாம் அவன் ஸ்தானத்தில்
ராஜாவானான்.

**15** நேபாத்தின் குமாரனாகிய யெரொபெயாம்
என்னும் ராஜாவின் [6]பதினெட்டாம் வருஷத்
திலே அபியாம் யூதாவின்மேல் ராஜாவாகி,
2 மூன்று வருஷம் எருசலேமில் ராஜ்யபாரம்
பண்ணினான்; [7]அப்சலோமின் குமாரத்தியா
3 கிய அவனுடைய தாயின்பேர் மாகாள். தன்
தகப்பன் தனக்கு முன் செய்த எல்லாப் பாவங்
களிலும் அவன் நடந்தான்; [8]அவன் இருதயம்
அவன் தகப்பனாகிய தாவீதின் இருதயத்தைப்
போல், தன் தேவனாகிய கர்த்தருக்கு முன்
4 பாக உத்தமமாயிருக்கவில்லை. ஆனாலும் தாவீ
தினிமித்தம் அவனுடைய தேவனாகிய கர்த்தர்,
அவனுக்குப் பிற்பாடு அவன் குமாரனை எழும்
பப்பண்ணுகிறதினாலும், எருசலேமை நிலை
நிறுத்துகிறதினாலும், [9]அவனுக்கு எருசலே
மில் ஒரு விளக்கைக் கட்டளையிட்டு வந்தார்.
5 தாவீது ஏத்தியனாகிய உரியாவின் சங்கதி
[10]ஒன்று தவிர கர்த்தர் தனக்குக் கட்டளையிட்
டதிலே தான் உயிரோடிருந்த நாளெல்லாம்
ஒன்றையும் விட்டு விலகாமல், அவர் பார்
வைக்குச் செம்மையானதைச் செய்துவந்தான்.
6 ரெகொபெயாமுக்கும் யெரொபெயாமுக்கும்
அவர்கள் இருந்த நாட்களிலெல்லாம் யுத்தம்
7 நடந்துகொண்டிருந்தது. அபியாமின் மற்ற
வர்த்தமானங்களும், அவன் செய்தவை யாவும்
யூதாவுடைய ராஜாக்களின் நாளாகமப் புஸ்த
கத்தில் அல்லவோ எழுதியிருக்கிறது; [11]அபி
யாமுக்கும் யெரொபெயாமுக்கும் யுத்தம் நடந்
8 துகொண்டிருந்தது. அபியாம் தன் பிதாக்க

[1] 2 நாளா. 12. 2
[2] 2 நாளா. 12. 9-11
[3] 2 நாளா. 12. 15
[4] 12. 24: 15. 6
[5] 2 நாளா. 12. 16
* அபியா. மத். 1. 7
[6] 2 நாளா. 13. 1. ழ
[7] 2 நாளா. 11. 20-22: 13. 2
[8] 11. 4. சங். 119. 80
[9] 11. 32, 36. 2 நாளா. 21. 7
[10] 2 சாமு. 11. 4, 15: 12. 9
[11] 2 நாளா. 13. 2, 3, 22
[12] 2 நாளா. 14. 1
[13] 2 நாளா. 14. 2
[14] 2 நாளா. 15. 16
[15] யாத். 32. 20
[16] 22. 43
[17] யோசு. 18. 25. 2 நாளா. 16. 1. ழ
[18] 2 நாளா. 16. 2

ளோடே நித்திரையடைந்தபின், [12]அவனைத்
தாவீதின் நகரத்தில் அடக்கம்பண்ணினார்கள்;
அவன் குமாரனாகிய ஆசா அவன் ஸ்தானத்
தில் ராஜாவானான்.
இஸ்ரவேலின் ராஜாவாகிய யெரொபெயா 9
மின் இருபதாம் வருஷத்திலே ஆசா யூதாவின்
மேல் ராஜாவாகி, நாற்பத்தொரு வருஷம் எரு 10
சலேமில் ராஜ்யபாரம் பண்ணினான்; அப்ச
லோமின் குமாரத்தியாகிய அவனுடைய தாயி
ன்பேர் மாகாள். ஆசா தன் தகப்பனாகிய 11
தாவீதைப்போல் [13]கர்த்தரின் பார்வைக்குச்
செம்மையானதைச் செய்தான். அவன் இலச் 12
சையான புணர்ச்சிக்காரரைத் தேசத்திலிருந்து
அகற்றி, தன் பிதாக்கள் உண்டுபண்ணின
நரகலான விக்கிரகங்களையெல்லாம் விலக்கி,
தோப்பிலே அருவருப்பான விக்கிரகத்தை 13
உண்டுபண்ணின தன் தாயாகிய மாகாளையும்
ராஜாத்தியாய் இராதபடிக்கு விலக்கிவிட்
டான்; அவளுடைய விக்கிரகத்தையும் ஆசா
நிர்மூலமாக்கி, [14]கீதரோன் ஆற்றண்டையிலே
[15]சுட்டெரித்துப்போட்டான். மேடைகளோ 14
தகர்க்கப்படவில்லை; [16]ஆனாலும் ஆசா உயிரோ
டிருந்த நாளெல்லாம் அவன் இருதயம் கர்த்த
ரோடே உத்தமமாயிருந்தது. தன் தகப்பனும் 15
தானும் பரிசுத்தப்படுத்தும்படி நேர்ந்துகொ
ண்ட வெள்ளியையும் பொன்னையும் பணி
முட்டுகளையும் அவன் கர்த்தருடைய ஆலயத்
திலே கொண்டுவந்தான். ஆசாவுக்கும் இஸ்ர 16
வேலின் ராஜாவாகிய பாஷாவுக்கும் அவர்க
ளுடைய நாட்களிலெல்லாம் யுத்தம் நடந்து
கொண்டிருந்தது. ஒருவரும் யூதாவின் ராஜா 17
வாகிய ஆசாவினிடத்தில் போக்கு வரத்தாயி
ராதபடிக்கு, [17]இஸ்ரவேலின் ராஜாவாகிய
பாஷா யூதாவுக்கு விரோதமாக வந்து ராமா
வைக் கட்டினான். அப்பொழுது ஆசா கர்த் 18
தருடைய ஆலயத்தின் பொக்கிஷங்களில
மீதியான எல்லா வெள்ளியையும் பொன்னை
யும், ராஜாவின் அரமனையின் பொக்கிஷங்
களையும் எடுத்து, அவைகளைத் தன் ஊழியக்
காரர் கையிலே தமஸ்குவில் வாசமாயிருக்கிற
எசியோனின் மகனாகிய தப்ரிமோனின் குமா
ரன் [18]பெனாதாத் என்னும் சீரியாவின் ராஜா
வுக்குக் கொடுத்தனுப்பி: எனக்கும் உமக்கும் 19
என் தகப்பனுக்கும் உம்முடைய தகப்பனுக்
கும் உடன்படிக்கை உண்டே; இதோ, உமக்கு
வெகுமதியாய் வெள்ளியையும் பொன்னையும்
அனுப்புகிறேன்; இஸ்ரவேலின் ராஜாவாகிய
பாஷா என்னைவிட்டு விலகிப்போகும்படிக்கு,
நீர் வந்து அவனோடு செய்த உடன்படிக்கை
யைத் தள்ளிப்போடும் என்று சொல்லச்சொன்
னான். பெனாதாத், ராஜாவாகிய ஆசாவுக்குச் 20
செவிகொடுத்து, தனக்கு உண்டான சேனாபதி
களை இஸ்ரவேலின் பட்டணங்களுக்கு விரோ
தமாக அனுப்பி, ஈயோனையும், தாணையும்
பெத்மாக்கா என்னும் ஆபேலையும் கின்ன
ரோத் அனைத்தையும் நப்தலியின் முழுத்
தேசத்தோடுங்கூட முறிய அடித்தான். பாஷா 21

அதைக் கேட்டபோது, ராமாவைக் கட்டு
கிறதை விட்டு திர்சாவி லிருந்துவிட்டான்.
22 அப்பொழுது ராஜாவாகிய ஆசா, யூதா எங்
கும் ஒருவரும் தப்பாமல் எல்லாரும் போய்,
பாஷா கட்டின ராமாவின் கற்களையும் அதின்
மரங்களையும் எடுத்துவர பறைமுறை இடு
வித்து; [1]அவைகளினால் பென்யமீன் கோத்
திரத்திலுள்ள கேபாவையும் மிஸ்பாவையும்
23 கட்டினான். ஆசாவின் மற்ற எல்லா வர்த்த
மானங்களும், அவனுடைய எல்லா வல்
லமையும், அவன் செய்தவை யாவும், அவன்
கட்டின பட்டணங்களின் வரலாறும், [2]யூதா
வுடைய ராஜாக்களின் நாளாகமப் புஸ்தகத்
தில் அல்லவோ எழுதியிருக்கிறது; அவன்
முதிர்வயதான காலத்தில் அவனுடைய கால்
24 களில் வியாதிகண்டிருந்தது. ஆசா தன்
பிதாக்களோடே நித்திரையடைந்தபின், தன்
தகப்பனாகிய தாவீதின் நகரத்திலே தன் பிதாக்
களண்டையில் அடக்கம் பண்ணப்பட்டான்;
[3]அவன் குமாரனாகிய யோசபாத் அவன்
ஸ்தானத்திலே ராஜாவானான்.
25 யூதாவின் ராஜாவாகிய ஆசாவின் இரண்
டாம வருஷத்திலே யெரொபெயாமின் குமார
னாகிய நாதாப் இஸ்ரவேலின்மேல் ராஜாவாகி,
இரண்டு வருஷம் இஸ்ரவேலின்மேல் ராஜ்ய
26 பாரம் பண்ணினான். அவன் கர்த்தருடைய
பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து,
தன் தகப்பன் வழியிலும், அவன் இஸ்ரவே
லைப் பாவஞ்செய்யப்பண்ணின [4]அவனுடைய
27 பாவத்திலும் நடந்தான். இசக்கார் வம்சத்தா
கிய அகியாவின் குமாரனான பாஷா, [5]அவ
னுக்கு விரோதமாய்க் கட்டுப்பாடுபண்ணி,
நாதாபும் இஸ்ரவேலனைத்தும் பெலிஸ்தரு
க்கு இருந்த கிபெத்தோனை முற்றிக்கை
போட்டிருக்கையில், பாஷா அவனைக் கிபெத்
28 தோனிலே வெட்டிப்போட்டான். பாஷா
யூதாவின் ராஜாவாகிய ஆசாவின் மூன்றும்
வருஷத்திலே அவனைக் கொன்றுபோட்ட
பின், அவன் ஸ்தானத்தில் ராஜாவானான்.
29 அப்பொழுது யெரொபெயாம் செய்ததும்,
இஸ்ரவேலைச் செய்யப்பண்ணினதுமான பா
வங்களினிமித்தமும், அவன் இஸ்ரவேலின்
தேவனாகிய கர்த்தருக்கு உண்டாக்கின கோ
பத்தினிமித்தமும், [6]கர்த்தர் சீலோனியனான
அகியா என்னும் தமது ஊழியக்காரனைக்
கொண்டு சொல்லியிருந்த வார்த்தையின்படி
30 யே, அவன் ராஜாவானபின் அவன் யெ
ரொபெயாமின் வீட்டாரையெல்லாம் வெட்
டிப்போட்டான்; [7]யெரொபெயாமுக்கு இரு
ந்த சுவாசமுள்ளதொன்றையும் அவன் அழிக்
31 காமல் விடவில்லை. நாதாபின் மற்ற வர்த்த
மானங்களும் அவன் செய்தவை யாவும் இஸ்ர
வேல் ராஜாக்களின் நாளாகமப் புஸ்தகத்தில்
32 அல்லவோ எழுதியிருக்கிறது. ஆசாவுக்கும்
இஸ்ரவேல் ராஜாவாகிய பாஷாவுக்கும் அவர்
கள் நாட்களிலெல்லாம் யுத்தம் நடந்துகொண்
டிருந்தது.

[1] 2 நாளா. 16. 6
[2] 2 நாளா. 16. 12
[3] 2 நாளா. 17. 1
[4] 12. 30; 14. 16
[5] 14. 14
[6] 14. 10, 16
[7] 14. 9, 16
[8] 12. 28, 29
[9] 2 நாளா. 19. 2; 20. 34
[10] 14. 7; 15. 34
[11] 14. 10; 15. 29
[12] 2 நாளா. 16 1
[13] 14. 17; 15. 21
[14] 15. 27, 29. ஓசி. 1. 4
[15] 2 இரா. 9. 31

யூதாவின் ராஜாவாகிய ஆசாவின் மூன்றும் 33
வருஷத்திலே அகியாவின் குமாரனாகிய
பாஷா, இஸ்ரவேலனைத்தின்மேலும் திர்சாவி
லேராஜாவாகி இருபத்துநாலுவருஷம் ஆண்டு,
கர்த்தரின் பார்வைக்குப்பொல்லாப்பானதைச் 34
செய்து, யெரொபெயாமின் வழியிலும்,
[8]அவன் இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப் பண்
ணின அவனுடைய பாவத்திலும் நடந்தான்.
பாஷாவுக்கு விரோதமாகக் கர்த்தருடைய 16
வார்த்தை ஆனானியின் குமாரனாகிய யெகூ
வுக்கு உண்டாயிற்று, [9]அவர்: நான் உன் 2
னைத் தூளிலிருந்து உயர்த்தி, உன்னை என்
ஜனமாகிய இஸ்ரவேலின்மேல் தலைவனாக
வைத்திருக்கையில், [10]நீ யெரொபெயாமின்
வழியிலே நடந்து, என் ஜனமாகிய இஸ்ர
வேல் தங்கள் பாவங்களால் எனக்குக் கோப
முண்டாக்கும்படி அவர்களைப் பாவஞ்செய்
யப் பண்ணுகிறபடியினால், இதோ, நான் 3
பாஷாவின் பின்னடியாரையும் அவன் வீட்
டாரின் பின்னடியாரையும் அழித்துப்போ
ட்டு, [11]உன் வீட்டை நேபாத்தின் குமாரனா
கிய யெரொபெயாமின் வீட்டைப்போல ஆக்
குவேன். பாஷாவின் சந்ததியிலே பட்ட 4
ணத்தில் சாகிறவனை நாய்கள் தின்னும்; வெ
ளியிலே சாகிறவனை ஆகாயத்துப் பறவைகள்
தின்னும் என்றார்.
பாஷாவின் மற்ற வர்த்தமானங்களும், 5
அவன் செய்ததும், [12]அவனுடைய வல்லமை
யும், இஸ்ரவேல் ராஜாக்களின் நாளாகமப்
புஸ்தகத்தில் அல்லவோ எழுதியிருக்கிறது.
பாஷா தன் பிதாக்களோடே நித்திரையடை 6
ந்து திர்சாவில் அடக்கம் பண்ணப்பட்டான்;
[13]அவன் குமாரனாகிய ஏலா அவன் ஸ்தானத்
தில் ராஜாவானான். பாஷா தன் கைகளின் 7
செய்கையால் கர்த்தருக்குக் கோபமுண்
டாக்கி, அவர் பார்வைக்குச் செய்த எல்லாப்
பொல்லாப்பினிமித்தமும், அவன் யெரொ
பெயாமின் வீட்டாரை வெட்டிப்போட்டதி
னிமித்தமும், [14]இவர்களைப்போல் ஆவான்
என்று அவனுக்கும் அவன் வீட்டுக்கும் விரோ
தமாக ஆனானியின் குமாரனாகிய யெகூ என்
னும் தீர்க்கதரிசியினால் கர்த்தருடைய வார்த்
தை பின்னும் உண்டாயிற்று.
யூதாவின் ராஜாவான ஆசாவின் இருபத் 8
தாறும் வருஷத்திலே பாஷாவின் குமாரனா
கிய ஏலா இஸ்ரவேலின்மேல் திர்சாவிலே
ராஜாவாகி இரண்டுவருஷம் அரசாண்டான்.
இரதங்களில் பாதிபங்குக்குத் தலைவனாகிய 9
[15]சிம்ரி என்னும் அவன் ஊழியக்காரன் அவ
னுக்கு விரோதமாய்க் கட்டுப்பாடு பண்ணி,
அவன் திர்சாவிலே அவ்விடத்து அரமனை
உக்கிராணக்காரனாகிய அர்சாவின் வீட்டிலே
குடித்து வெறிகொண்டிருக்கையில், சிம்ரி 10
உள்ளே புகுந்து, யூதாவின் ராஜாவாகிய
ஆசாவின் இருபத்தேழாம் வருஷத்தில் அவ
னை வெட்டிக் கொன்றுபோட்டு, அவன் ஸ்தா
னத்தில் ராஜாவானான். அவன் ராஜாவாகி, 11

சிங்காசனத்தின்மேல் உட்கார்ந்தபோது,
அவன் பாஷாவின் வீட்டாரையெல்லாம் வெ
ட்டிப்போட்டான்; அவன் இனத்தாரையாகி
லும், அவன் சிநேகிதரையாகிலும், *சுவரில்
நீர்விடும் ஒரு நாயையாகிலும், அவன் உயி
12 ரோடே வைக்கவில்லை. அப்படியே பாஷா
வும், அவன் குமாரனாகிய ஏலாவும், தங்கள்
†வீணான விக்கிரகங்களினாலே இஸ்ரவேலின்
தேவனாகிய **கர்த்தருக்குக்** கோபமுண்டாக்கிச்
செய்ததும் இஸ்ரவேலைச் செய்யப்பண்ணி
னதுமான அவர்களுடைய எல்லாப் பாவங்களி
13 னிமித்தமும், **கர்த்தர்** தீர்க்கதரிசியாகிய
யெகூவினால் பாஷாவைக்குறித்துச் சொல்லி
யிருந்த அவருடைய வார்த்தையின்படியே,
சிம்ரி பாஷாவின் வீட்டாரையெல்லாம் அழித்
14 துப்போட்டான். ஏலாவின் மற்ற வர்த்தமா
னங்களும், அவன் செய்தவை யாவும் இஸ்ர
வேல் ராஜாக்களின் நாளாகமப் புஸ்தகத்தில்
அல்லவோ எழுதியிருக்கிறது.
15 யூதாவின் ராஜாவாகிய ஆசாவின் இருபத்
தேழாம் வருஷத்திலே சிம்ரி திர்சாவிலே ஏழு
நாள் ராஜாவாயிருந்தான்; ஜனங்கள் அப்பொ
ழுது பெலிஸ்தருக்கு இருக்கிற [1]கிபெத்தோ
னுக்கு எதிராகப் பாளயமிறங்கியிருந்தார்கள்.
16 சிம்ரி கட்டுப்பாடுபண்ணி, ராஜாவைக் கொ
ன்றுபோட்டான் என்பதை அங்கே பாளய
மிறங்கின ஜனங்கள் கேட்டபோது, இஸ்ர
வேலரெல்லாம் அந்நாளிலேதானே பாளயத்
திலே படைத்தலைவனாகிய உம்ரியை இஸ்ர
17 வேல்மேல் ராஜாவாக்கினார்கள். அப்பொழுது
உம்ரியும் அவனோடேகூட இஸ்ரவேல் அனை
த்தும் கிபெத்தோனிலிருந்து வந்து, திர்சா
18 வை முற்றிக்கை போட்டார்கள். பட்டணம்
பிடிபட்டதைச் சிம்ரி கண்டபோது, அவன்
ராஜாவின் வீடாகிய அரமனைக்குள் பிரவே
சித்து, தான் இருக்கிற ராஜ அரமனையைத்
19 தீக்கொளுத்தி, அதிலே செத்தான். அவன்
**கர்த்தரின்** பார்வைக்குப் பொல்லாப்பான
தைச் செய்து, [2]யெரொபெயாமின் வழியி
லும் அவன் இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்
பண்ணின அவன் பாவத்திலும் நடந்ததினால்,
கட்டிக்கொண்ட அவனுடைய பாவங்களி
20 னிமித்தம் அப்படி நடந்தது. சிம்ரியின் மற்ற
வர்த்தமானங்களும், அவன் பண்ணின அவ
னுடைய கட்டுப்பாடும் இஸ்ரவேல் ராஜாக்
களின் நாளாகமப் புஸ்தகத்தில் அல்லவோ
எழுதியிருக்கிறது.
21 அப்பொழுது இஸ்ரவேல் ஜனங்கள் இர
ண்டு வகுப்பாய்ப் பிரிந்து, பாதி ஜனங்கள்
கீனாத்தின் குமாரனாகிய திப்னியை ராஜா
வாக்க, அவனைப் பின்பற்றினார்கள்; பாதி
ஜனங்கள் உம்ரியைப் பின்பற்றினார்கள்.
22 ஆனாலும் கீனாத்தின் குமாரனாகிய திப்னி
யைப் பின்பற்றின ஜனங்களைப்பார்க்கிலும்,
உம்ரியைப் பின்பற்றின ஜனங்கள் பலத்துப்
போனார்கள்; திப்னி செத்துப்போனான்;
23 உம்ரி அரசாண்டான். யூதாவின் ராஜாவா

* ஒரு ஆண்பிள்ளையாகிலும். 1 சாமு. 25. 22

† மாயைகளினாலே. உபா. 32. 21. ஏசா. 41. 29. 1 கொரி. 8. 4. 10. 19

[1] 15. 27

[2] 12. 28; 15. 26, 34

[3] 2 இரா. 17. 24. யோ. 4. 4

[4] மீகா. 6. 16

[5] 12. 28.

[6] உபா. 7. 3. நியா. 18. 7. 2 இரா. 10. 18–27

[7] 2 இரா. 13. 6. எரே. 17. 2

[8] யோசு. 6. 26

கிய ஆசாவின் முப்பத்தோராம் வருஷத்தில்,
உம்ரி இஸ்ரவேல்மேல் ராஜாவாகி, பன்னி
ரண்டு வருஷம் ராஜ்யபாரம் பண்ணினான்;
அவன் திர்சாவிலே ஆறுவருஷம் அரசாண்டு,
பின்பு சேமேரின் கையிலிருந்து சமாரியா 24
மலையை இரண்டு தாலந்து வெள்ளிக்கு
வாங்கி, அந்த மலையின்மேல் ஒரு பட்டணத்
தைக் கட்டி, அதற்கு மலையினுடைய எஜ
மானாயிருந்த சேமேருடைய பேரின்படியே
[3]சமாரியா என்னும் பேரைத் தரித்தான். உம்ரி 25
**கர்த்தரின்** பார்வைக்குப் பொல்லாப்பான
தைச் செய்து, [4]தனக்கு முன்னிருந்த எல்லா
ரைப்பார்க்கிலும் கேடாய் நடந்து, நேபாத் 26
தின் குமாரனாகிய யெரொபெயாமின் சகல
வழியிலும், இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்**
**தருக்குத்** தங்கள் வீணான விக்கிரகங்களாலே
[5]கோபம் மூட்டும்படியாய் இஸ்ரவேலைப் பா
வஞ் செய்யப்பண்ணின அவனுடைய பாவங்
களிலும் நடந்தான். உம்ரி செய்த அவனு 27
டைய மற்ற வர்த்தமானங்களும், அவன்
காண்பித்த வல்லமையும், இஸ்ரவேல் ராஜாக்
களின் நாளாகமப் புஸ்தகத்தில் அல்லவோ
எழுதியிருக்கிறது. உம்ரி தன் பிதாக்களோ 28
டே நித்திரையடைந்து, சமாரியாவிலே அடக்
கம் பண்ணப்பட்டான்; அவன் குமாரனாகிய
ஆகாப் அவன் ஸ்தானத்தில் ராஜாவானான்.
யூதாவின் ராஜாவாகிய ஆசாவின் முப்பத் 29
தெட்டாம் வருஷத்தில் உம்ரியின் குமாரனா
கிய ஆகாப் இஸ்ரவேலின்மேல் ராஜாவாகி,
சமாரியாவில் இஸ்ரவேலின்மேல் இருபத்தி
ரண்டு வருஷம் ராஜ்யபாரம் பண்ணினான்.
உம்ரியின் குமாரனாகிய ஆகாப், தனக்கு முன் 30
னிருந்த எல்லாரைப்பார்க்கிலும் **கர்த்தரின்**
பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்
தான். நேபாத்தின் குமாரனாகிய யெரொ 31
பெயாமின் பாவங்களில் நடப்பது அவனுக்
குக் கொஞ்சக் காரியமென்று நினைத்தாற்
போல் அவன் சீதோனியரின் ராஜாவாகிய
எத்பாகாலின் குமாரத்தி யேசபேலை விவாகம்
பண்ணினதுமல்லாமல், [6]அவன் போய் பா
காலையும் சேவித்து அதைப் பணிந்துகொ
ண்டு, தான் சமாரியாவிலே கட்டின பாகா 32
லின் கோவிலில் பாகாலுக்குப் பலிபீடத்தை
எடுப்பித்தான். ஆகாப் ஒரு விக்கிரகத்தோப் 33
பையும் வைத்து, [7]இஸ்ரவேலின் தேவனாகிய
**கர்த்தருக்குக்** கோபம் உண்டாக்கும்படிக்கு
தனக்கு முன்னிருந்த இஸ்ரவேலின் ராஜாக்க
ளெல்லாம் செய்ததைப்பார்க்கிலும் அதிகமா
ய்ச் செய்துவந்தான். அவன் நாட்களிலே 34
பெத்தேல் ஊரானாகிய ஈயேல் எரிகோவைக்
கட்டினான்; **கர்த்தர்** நூனின் குமாரனாகிய
யோசுவாவைக்கொண்டு சொல்லியிருந்த வார்த்
தையின்படியே, அவன் அதின் அஸ்திபாரத்
தைப் போடுகிறபோது, அபிராம் என்னும்
தன் மூத்த குமாரனையும், அதின் வாசல்களை
வைக்கிறபோது செகூப் என்னும் தன் இளைய
குமாரனையும், [8]சாகக்கொடுத்தான்.

17 கிலேயாத்தின் குடிகளிலே திஸ்பியனாகிய
எலியா ஆகாபை நோக்கி: என் வாக்கின்
படியே அன்றி இந்த வருஷங்களிலே பனி
யும் மழையும் பெய்யாதிருக்கும் [1]என்று இஸ்ர
வேலின் தேவனாகிய **கர்த்தருக்கு** முன்பாக
நிற்கிற நான் [2]அவருடைய ஜீவனைக்கொண்டு
2 சொல்லுகிறேன் என்றான். பின்பு **கர்த்த
ருடைய** வார்த்தை அவனுக்கு உண்டாயிற்று,
3 அவர்: நீ இவ்விடத்தை விட்டுக் கீழ்த்திசை
யை நோக்கிப் போய், யோர்தானுக்கு நேரா
யிருக்கிற கேரீத் ஆற்றண்டையில் ஒளித்துக்
4 கொண்டிரு. அந்த ஆற்றின் தண்ணீரைக்
குடிப்பாய்; அங்கே உன்னைப் போஷிக்க,
காகங்களுக்குக் கட்டளையிடுவேன் என்றார்.
5 அவன் போய், **கர்த்தருடைய** வார்த்தையின்
படியே யோர்தானுக்கு நேராயிருக்கிற கேரீத்
6 ஆற்றண்டையிலே தங்கியிருந்தான். காகங்
கள் அவனுக்கு விடியற்காலத்தில் [4]அப்பமும்
இறைச்சியும், சாயங்காலத்தில் அப்பமும்
இறைச்சியும் கொண்டுவந்தது; தாகத்திற்கு
அந்த ஆற்றின் தண்ணீரைக் குடித்தான்.
7 தேசத்தில் மழைபெய்யாதபடியினால், சிலநா
ளுக்குப்பின்பு அந்த ஆறு வற்றிப்போயிற்று.
8 அப்பொழுது **கர்த்தருடைய** வார்த்தை
9 அவனுக்கு உண்டாயிற்று, அவர்: நீ எழுந்து,
சீதோனுக்கடுத்த [5]சாறிபாத் ஊருக்குப்
போய், அங்கே தங்கியிரு: உன்னைப் பராம
ரிக்கும்படி அங்கே இருக்கிற ஒரு விதவைக்
10 குக் கட்டளையிட்டேன் என்றார். அப்படியே
அவன் எழுந்து, சாறிபாத்துக்குப் போனான்;
அந்தப் பட்டணத்தின் ஒலிமுகவாசலுக்கு
அவன் வந்தபோது, அங்கே ஒரு விதவை
விறகு பொறுக்கிக்கொண்டிருந்தாள்; அவன்
அவளைப் பார்த்துக் கூப்பிட்டு, நான் குடிக்
கிறதற்குக் கொஞ்சம் தண்ணீர் ஒரு பாத்தி
ரத்தில் எனக்குக் கொண்டுவா என்றான்.
11 கொண்டுவர அவள் போகிறபோது அவன்
அவளை நோக்கிக் கூப்பிட்டு, கொஞ்சம் அப்ப
மும் உன் கையிலே எனக்குக் கொண்டுவா
12 என்றான். அதற்கு அவள்: பானையில் ஒரு
பிடி மாவும் கலயத்தில் கொஞ்சம் எண்ணெயு
மே அல்லாமல், என்னிடத்தில் ஒரு அடை
யும் இல்லையென்று உம்முடைய தேவனாகிய
**கர்த்தருடைய** ஜீவனைக்கொண்டு சொல்லு
கிறேன்; இதோ, [3]நானும் என் குமாரனும்
சாப்பிட்டுச் செத்துப்போக, அதை எனக்கும்
அவனுக்கும் ஆயத்தப்படுத்துகிறதற்கு இர
ண்டு விறகு பொறுக்குகிறேன் என்றாள்.
13 அப்பொழுது எலியா அவளைப் பார்த்து:
பயப்படாதே; நீ போய் உன் வார்த்தையின்
படி ஆயத்தப்படுத்து; [4]ஆனாலும் முதல் அதி
லே எனக்கு ஒரு சிறிய அடையைப் பண்ணி
என்னிடத்தில் கொண்டுவா; பின்பு உனக்
கும் உன் குமாரனுக்கும் பண்ணலாம்.
14 **கர்த்தர்** தேசத்தின்மேல் மழையைக் கட்டளை
யிடும் நாள்மட்டும் பானையின் மா செலவழி
ந்துபோவதும் இல்லை; கலசத்தின் எண்

ணெய் குறைந்துபோவதும் இல்லை என்று
இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்** சொல்லு
கிறார் என்றான். அவள் போய், எலியாவின் 15
சொற்படி செய்தாள்; அவளும், இவனும்,
அவள் வீட்டாரும் அநேகநாள் சாப்பிட்டார்
கள். **கர்த்தர்** எலியாவைக்கொண்டு சொ 16
ன்ன வார்த்தையின்படியே, பானையிலே மா
செலவழிந்துபோகவும் இல்லை; கலசத்தின்
எண்ணெய் குறைந்துபோகவும் இல்லை.
இவைகள் நடந்தபின்பு, வீட்டுக்காரியாகிய 17
அந்த ஸ்திரீயின் மகன் வியாதியில் விழுந்
தான்; அவனுடைய சுவாசம் போகுமட்டும்
அவனுடைய வியாதி அதிகரித்துக்கொண்
டே இருந்தது. அப்பொழுது அவள் எலி 18
யாவை நோக்கி: தேவனுடைய மனுஷனே,
[5]எனக்கும் உமக்கும் என்ன? [6]என் அக்கிர
மத்தை நினைக்கப்பண்ணவும், என் குமார
னைச் சாகப்பண்ணவுமா? என்னிடத்தில் வந்
தீர் என்றாள். அதற்கு அவன்: உன் குமா 19
ரனை என்னிடத்தில் தா என்று சொல்லி,
அவனை அவள் மடியிலிருந்து எடுத்து, தான்
தங்கியிருக்கிற மேல்வீட்டிலே அவனைக் கொ
ண்டுபோய், தன் கட்டிலின்மேல் வைத்து:
என் தேவனாகிய **கர்த்தாவே**, நான் தங்கி 20
யிருக்க இடங்கொடுத்த இந்த விதவையின்
மகனைச் சாகப்பண்ணினதினால் அவளுக்குத்
துக்கத்தை வருவித்தீரோ என்று **கர்த்தரை**
நோக்கிக் கூப்பிட்டு; அந்தப் பிள்ளையின் 21
மேல் மூன்றுதரம் குப்புற விழுந்து: என் தேவ
னாகிய **கர்த்தாவே**, [7]இந்தப் பிள்ளையின்
ஆத்துமா அவனுக்குள் திரும்பிவரப் பண்
ணும் என்று **கர்த்தரை** நோக்கி விண்ணப்
பம் பண்ணினான். **கர்த்தர்** எலியாவின் 22
சத்தத்தைக் கேட்டார்; பிள்ளையினுடைய
ஆத்துமா அவனுள் திரும்பிவந்தது; [8]அவன்
பிழைத்தான். அப்பொழுது எலியா பிள்ளை 23
யை எடுத்து, மேல்வீட்டிலிருந்து அவனைக்
கீழ்வீட்டிற்குள் கொண்டுவந்து, அவனை
அவன் தாயினிடத்தில் கொடுத்து: பார் உன்
பிள்ளை உயிரோடிருக்கிறான் என்று சொன்
னான். அப்பொழுது அந்த ஸ்திரீ எலியா 24
வை நோக்கி: நீர் தேவனுடைய மனுஷன்
என்றும், [9]உம்முடைய வாயிலிருந்து பிறக்
கும் **கர்த்தரின்** வார்த்தை உண்மை என்றும்,
இதினால் இப்போது அறிந்திருக்கிறேன்
என்றாள்.

அநேகநாள் சென்று, மூன்றாம் வருஷ 18
மாகையில், **கர்த்தருடைய** வார்த்தை எலியா
வுக்கு உண்டாகி: [10]நீ போய் ஆகாபுக்கு உன்
னைக் காண்பி; [11]நான் தேசத்தின்மேல் மழை
யைக் கட்டளையிடுவேன் என்றார். அப்பொ 2
ழுது எலியா ஆகாபுக்குத் தன்னைக் காண்பிக்
கப் போனான்; பஞ்சமோவெனில் சமாரியா
விலே கொடிதாயிருந்தது. ஆனபடியால் 3
ஆகாப் அரமனை விசாரிப்புக்காரனாகிய ஒபதி
யாவை அழைப்பித்தான்; [12]ஒபதியா **கர்த்த
ருக்கு** மிகவும் பயந்து நடக்கிறவனாயிருந்தான்.

[1] யா. 4. 25. யாக். 5. 17
[2] உபா. 10. 8. 2 இரா. 3. 14
[4] சங்கீ. யா. 4. 26
[3] ஆதி. 21. 16. எரே. 14. 18. புல. 4. 9
[4] சங். 8. 9, 10. மத். 9. 41. எபி. 6. 10
[5] லூக். 5. 8
[6] யோபு. 13. 23, 26. எசே. 21. 23, 24
[7] 2 இரா. 4. 34, 35
[8] எபி. 11. 35
[9] யோ. 3. 2; 16. 30
[10] 17. 1
[11] உபா. 28. 12. சங். 147. 8. எரே. 5. 24; 14. 22
[12] நெகே. 7. 2

4 யேசபேல் கர்த்தரின் தீர்க்கதரிசிகளைச் சங்க
ரிக்கிறபோது, ஒபதியா [1]நூறு தீர்க்கதரிசி
களைச் சேர்த்து, அவர்களைக் கெபிக்கு ஐம்
பது ஐம்பதுபேராக ஒளித்துவைத்து, அவர்க
ளுக்கு அப்பமும் தண்ணீரும் கொடுத்து,
5 அவர்களைப் பராமரித்து வந்தான். ஆகாப்
ஒபதியாவைப் பார்த்து: நீ தேசத்திலிருக்கிற
எல்லா நீரூற்றுகளிடத்திலும், எல்லா ஆறுக
ளிடத்திலும் போ; நாம் சகல மிருகஜீவன்க
ளையும் சாகக்கொடாமல், குதிரைகளையும் கோ
வேறு கழுதைகளையுமாவது உயிரோடே காப்
பாற்றும்படிக்கு நமக்குப் புல் அகப்படுமா
6 என்று பார் என்றான். அப்படியே தேசத்
தைச் சுற்றிப்பார்க்கும்படி, அதைப் பகுத்துக்
கொண்டு, ஆகாப் ஒரு வழியாயும், ஒபதியா
7 வேறொரு வழியாயும் போனார்கள். ஒபதியா
வழியில் போகும்போது, எலியா அவனுக்கு
எதிர்ப்பட்டான்; அவன் இவனை இன்னான்
என்று அறிந்து, முகங்குப்புற விழுந்து, நீர்
என் ஆண்டவனாகிய எலியா அல்லவா என்று
8 கேட்டதற்கு; அவன், நான்தான்; நீ போய்,
இதோ, எலியா வந்திருக்கிறான் என்று உன்
9 ஆண்டவனுக்குச் சொல் என்றான். அதற்கு
அவன்: ஆகாப் என்னைக் கொன்றுபோடும்ப
டிக்கு, நீர் உமது அடியானை அவன் கையில்
ஒப்புக்கொடுக்க நான் என்னபாவம்செய்தேன்.
10 உம்மைத் தேடும்படி என் ஆண்டவன் மனு
ஷரை அனுப்பாத ஜாதியும் ராஜ்யமும் இல்லை
யென்று உம்முடைய தேவனாகிய கர்த்தரின்
ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேன்; நீர் இல்
லையென்று அவர்கள் சொன்னபோது, அவன்
அந்த ராஜ்யத்தையும் அந்த ஜாதியையும் உம்
மைக் காணவில்லை என்று சத்தியம் வாங்கிக்
11 கொண்டான். இப்போதும் நீ போய், உன்
ஆண்டவனுக்கு, இதோ, எலியா வந்திருக்கி
றான் என்று சொல் என்று நீர் சொல்லுகி
12 றீரே. நான் உம்மை விட்டுப்போனவுடனே
ஒருவேளை கர்த்தருடைய ஆவியானவர் [2]உம்
மை எடுத்து, நான் அறியாத இடத்திற்குக்
கொண்டுபோவார்; அப்பொழுது நான் ஆகா
பிடத்திற்குப் போய் அறிவித்தபின்பு, அவன்
உம்மைக் காணாவிட்டால், என்னைக்கொன்று
போடுவானே; உமது அடியானாகிய நான்
சிறுவயதுமுதல் கர்த்தருக்குப் பயந்து நடக்கி
13 றவன். யேசபேல் கர்த்தரின் தீர்க்கதரிசிக
ளைக் கொன்றுபோடுகிறபோது, நான் கர்த்த
ருடைய தீர்க்கதரிசிகளில் நூறுபேரை ஒவ்
வொரு கெபியிலே [3]ஐம்பது ஐம்பதுபேராக
ஒளித்துவைத்து, அவர்களுக்கு அப்பமும் தண்
ணீரும் கொடுத்து, பராமரித்துவந்த என்னு
டைய செய்கை என் ஆண்டவனுக்கு அறி
14 விக்கப்படவில்லையோ? இப்போதும் என்
ஆண்டவன் [4]என்னைக் கொன்றுபோடும்படி
யாக, நீர்: இதோ, எலியா வந்திருக்கிறான்
என்று போய் அவனுக்குச் சொல் என்று
15 சொல்லுகிறீரே என்றான். அதற்கு எலியா:
[5]இன்றைக்கு என்னை அவனுக்குக் காண்பிப்
பேன் என்று சேனைகளின் கர்த்தருக்கு முன்
பாக நிற்கிற நான் அவருடைய ஜீவனைக்
கொண்டு சொல்லுகிறேன் என்றான். அப் 16
பொழுது ஒபதியா போய், ஆகாபைச் சந்தித்து
அவனுக்கு அதை அறிவித்த உடனே, ஆகாப்
எலியாவைச் சந்திக்கப் போனான். ஆகாப் 17
எலியாவைக் கண்டபோது, ஆகாப் அவனை
நோக்கி: [6]இஸ்ரவேலைக் கலங்கப்பண்ணுகிற
வன் நீயல்லவா என்றான். அதற்கு அவன்: 18
இஸ்ரவேலைக் கலங்கப்பண்ணுகிறவன் நான்
அல்ல; கர்த்தரின் கட்டளைகளைவிட்டு பாகால்
களைப் பின்பற்றினதினால் நீரும் உம்முடைய
தகப்பன் வீட்டாருமே [7]இஸ்ரவேலைக் கலங்
கப்பண்ணுகிறவர்கள். இப்போதும் கர்மேல் 19
பர்வதத்திலே [8]இஸ்ரவேலனைத்தையும், பாகா
லின் தீர்க்கதரிசிகள் [9]நானூற்றைம்பதுபேரை
யும், யேசபேலின் பந்தியிலே சாப்பிடுகிற
தோப்பு விக்கிரகத்தின் தீர்க்கதரிசிகள் நானூறு
பேரையும் என்னிடத்தில் கூட்டிக்கொண்டு
வர ஆட்களை அனுப்பும் என்றான். அப்ப 20
டியே ஆகாப்: இஸ்ரவேல் புத்திரர் எல்லா
ரிடத்திலும் ஆட்களை அனுப்பி, [10]கர்மேல் பர்
வதத்திலே அந்தத் தீர்க்கதரிசிகளைக் கூடிவரும்
படி செய்தான். அப்பொழுது எலியா சகல 21
ஜனத்தண்டைக்கும் வந்து: [11]நீங்கள் எந்தமட்
டும் இரண்டு நினைவுகளால் குந்திக்குந்தி நடப்
பீர்கள்; கர்த்தர் தெய்வமானால் அவரைப்
பின்பற்றுங்கள்; [12]பாகால் தெய்வமானால் அவ
னைப் பின்பற்றுங்கள் என்றான், ஜனங்கள்
பிரதியுத்தரமாக அவனுக்கு ஒன்றும் சொல்ல
வில்லை. அப்பொழுது எலியா ஜனங்களை 22
நோக்கி: கர்த்தரின் தீர்க்கதரிசிகளில் மீந்திருக்
கிறவன் [13]நான் ஒருவன்; பாகாலின் தீர்க்க
தரிசிகளோ நானூற்றைம்பதுபேர். இப்போ 23
தும் இரண்டு காளைகளை எங்களிடத்தில்
கொண்டுவரட்டும்; ஒரு காளையை அவர்கள்
தெரிந்துகொண்டு, அதைச் சந்துசந்தாகத்
துண்டித்து, நெருப்புப் போடாமல் விறகுக
ளின்மேல் வைக்கக்கடவர்கள்; நான் மற்றக்
காளையை அப்படியே செய்து, நெருப்புப்
போடாமல் விறகுகளின்மேல் வைப்பேன்.
நீங்கள் உங்கள் தேவனுடைய நாமத்தைச் 24
சொல்லிக் கூப்பிடுங்கள்; நான் கர்த்தருடைய
நாமத்தைச் சொல்லிக் கூப்பிடுவேன்; [14]அப்
பொழுது அக்கினியினால் உத்தரவு அருளும்
தெய்வமே தெய்வம் என்றான்; அதற்கு
ஜனங்கள் எல்லாரும் இது நல்ல வார்த்தை
என்றார்கள்.

அப்பொழுது எலியா பாகாலின் தீர்க்கதரிசி 25
களை நோக்கி: நீங்கள் அநேகரானதால் நீங்
களே முந்தி ஒரு காளையைத் தெரிந்துகொண்டு
அதை ஆயத்தம்பண்ணி, நெருப்புப் போடா
மல் உங்கள் தேவனுடைய நாமத்தைச் சொல்
லிக் கூப்பிடுங்கள் என்றான். தங்களுக்குக் 26
கொடுக்கப்பட்ட காளையை அவர்கள் வாங்கி,
அதை ஆயத்தம்பண்ணி: பாகாலே, எங்களு
க்கு உத்தரவு அருளும் என்று காலைதொடங்கி

1 ஒசே. 5. 15
2 2 இரா. 2. 16. எசே. 3. 12, 14. மத். 4. 1. அப். 8. 39
3 மத். 10. 41, 42
4 மத். 10. 28
5 ஏசா. 51. 7, 8
6 21. 20. யோசு. 7. 25. அப். 16. 20; 17. 6
7 2 நாளா. 15. 2. 2 இரா. 2. 25
8 யோசு. 19. 26
9 16. 33
10 22. 6
11 2 இரா. 17. 41. மத். 6. 24
12 யோசு. 24. 15
13 19. 10, 14
14 38 வச. 1 நாளா. 21. 26. 2 நாளா. 7. 1, 3

மத்தியானமட்டும் பாகாலின் நாமத்தைச்
சொல்லிக் கூப்பிட்டார்கள்; ஆனாலும் ஒரு
சத்தமும் பிறக்கவில்லை, [1]மறுஉத்தரவு கொடுப்
பாரும் இல்லை. அவர்கள் கட்டின பலிபீடத்
27 திற்கு எதிரே குதித்து ஆடினார்கள். மத்தி
யானவேளையிலே எலியா அவர்களைப் பரியா
சம்பண்ணி: உரத்த சத்தமாய்க் கூப்பிடுங்கள்;
அவன் தேவனாமே, [2]அவன் தியானத்தில்
இருப்பான்; அல்லது அலுவலாயிருப்பான்;
அல்லது பிரயாணம்போயிருப்பான்; அல்லது
தூங்கினாலும் தூங்குவான்; அவனை எழுப்ப
28 வேண்டியதாக்கும் என்றான். அவர்கள்
உரத்த சத்தமாய்க் கூப்பிட்டு, தங்கள் வழக்
கத்தின்படியே இரத்தம் தங்கள்மேல் வடியு
மட்டும் [3]கத்திகளாலும் ஈட்டிகளாலும் தங்க
29 ளைக் கீறிக்கொண்டார்கள். மத்தியானவேளை
சென்றபின்பு, அந்திப்பலி செலுத்தும் நேர
மட்டாகச் [4]சன்னதம் சொல்லிக்கொண்டிருந்
தார்கள்; ஆனாலும் ஒரு சத்தமும் பிறக்க
வில்லை, மறுஉத்தரவு கொடுப்பாரும் இல்லை,
30 கவனிப்பாரும் இல்லை. அப்பொழுது எலியா
சகல ஜனங்களையும் நோக்கி: என் கிட்டே
வாருங்கள் என்றான்; சகல ஜனங்களும் அவன்
கிட்டே வந்தபோது, [5]தகர்க்கப்பட்ட கர்த்த
ருடைய பலிபீடத்தை அவன் செப்பனிட்டு:
31 உனக்கு இஸ்ரவேல் என்னும் பேர் [6]இருப்ப
தாக என்று சொல்லி, கர்த்தருடைய வார்த்
தையைப் பெற்ற யாக்கோபுடைய குமாரரால்
உண்டான கோத்திரங்களுடைய இலக்கத்
தின்படியே, பன்னிரண்டு கற்களை எடுத்து,
32 அந்தக் கற்களாலே கர்த்தருடைய [7]நாமத்திற்
கென்று ஒரு பலிபீடத்தைக் கட்டி, பலிபீடத்
தைச் சுற்றிலும் தானியம் அளக்கிற இரண்டு
படி விதை விதைக்கத்தக்க இடமான ஒரு
33 வாய்க்காலை உண்டாக்கி, விறகுகளை அடு
க்கி, [8]ஒரு காளையைச் சந்துசந்தாகத் துண்
34 டித்து விறகுகளின்மேல் வைத்தான். பிற்
பாடு அவன்: நீங்கள் நாலு குடம் தண்ணீர்
கொண்டுவந்து, சர்வாங்க தகனபலியின்மே
லும், விறகுகளின்மேலும் ஊற்றுங்கள் என்
றான்; பின்பு இரண்டாந்தரமும் அப்படியே
ஊற்றுங்கள் என்றான்; இரண்டாந்தரமும்
ஊற்றினார்கள்; அதற்குப்பின்பு மூன்றாந்தர
மும் அப்படியே ஊற்றுங்கள் என்றான்; மூன்
35 றாந்தரமும் ஊற்றினார்கள். அப்பொழுது
தண்ணீர் பலிபீடத்தைச் சுற்றிலும் ஓடினது;
வாய்க்காலையும் தண்ணீரால் நிரப்பினான்.
36 அந்திப்பலி செலுத்தும் நேரத்திலே, தீர்க்க
தரிசியாகிய எலியா வந்து: [9]ஆபிரகாமுக்கும்
ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் தேவனாகிய
கர்த்தாவே, [10]இஸ்ரவேலிலே நீர் தேவன்
என்றும், நான் உம்முடைய ஊழியக்காரன்
என்றும், நான் இந்தக் காரியங்களையெல்லாம்
உம்முடைய வார்த்தையின்படி செய்தேன்
என்றும் இன்றைக்கு விளங்கப்பண்ணும்.
37 கர்த்தாவே, நீர் தேவனாகிய கர்த்தர் என்றும்,
தேவரீர் தங்கள் இருதயத்தை மறுபடியும்

[1] சங். 115. 5-8. எரே. 10. 5. 1 கொரி. 8. 4; 12. 2
[2] ஏசா. 41. 23
[3] லேவி. 19. 28
[4] 1 கொரி. 11. 4, 5
[5] 19. 10
[6] ஆதி. 32. 28; 35. 10
[7] கொலோ. 3. 17
[8] லேவி. 1. 6-8. நியா. 6. 20
[9] யாத். 3. 6
[10] 2 இரா. 19. 19. சங். 83. 18. எசே. 36. 23
[11] லேவி. 9. 24. நியா. 6. 21. 1 நாளா. 21. 26. 2 நாளா. 7. 1
[12] 24. வச.
[13] உபா. 13. 5; 18. 20. 2 இரா. 10. 25
[14] யாக். 5. 17, 18
[15] 2 இரா. 4. 29; 9. 1. யோபு 38. 3. எபே. 6. 14. 1 பேது. 1. 13
[16] 18. 40
[17] ரூத். 1. 17. 2 இரா. 6. 31

திருப்பினீர் என்றும் இந்த ஜனங்கள் அறியும்
படிக்கு, என்னைக் கேட்டருளும், என்னைக்
கேட்டருளும் என்றான். அப்பொழுது கர்த் 38
தரிடத்தில் இருந்து [11]அக்கினி இறங்கி, அந்
தச் சர்வாங்க தகனபலியையும், விறகுகளை
யும், கற்களையும், மண்ணையும் பட்சித்து,
வாய்க்காலிலிருந்த தண்ணீரையும் நக்கிப்போ
ட்டது. ஜனங்களெல்லாரும் இதைக் கண்ட 39
போது, முகங்குப்புற விழுந்து: கர்த்தரே
தெய்வம், [12]கர்த்தரே தெய்வம் என்றார்கள்.
அப்பொழுது எலியா அவர்களை நோக்கி: நீங் 40
கள் பாகாலின் தீர்க்கதரிசிகளில் ஒருவனும்
தப்பிப்போகாதபடிக்கு அவர்களைப் பிடியுங்
கள் என்றான்; [13]அவர்களைப் பிடித்தபோது,
எலியா அவர்களைக் கீழே கீசோன் ஆற்றங்
கரையிலே கொண்டுபோய் அங்கே அவர்களை
வெட்டிப்போட்டான். பின்பு எலியா ஆகா 41
பை நோக்கி: நீர் போம், போஜனபானம் பண்
ணும்; பெருமழையின் இரைச்சல் கேட்கப்
படுகிறது என்றான். ஆகாப் போஜனபானம் 42
பண்ணப்போனான்; பின்பு எலியா கர்மேல்
பர்வதத்தினுடைய சிகரத்தின்மேல் ஏறி,
[14]தரையிலே பணிந்து, தன் முகம் தன் முழங்
காலில் பட குனிந்து, தன் ஊழியக்காரனை 43
நோக்கி: நீ போய்ச் சமுத்திரமுகமாய்ப் பார்
என்றான்; அவன் போய்ப் பார்த்து, ஒன்றும்
இல்லை என்றான்; நீ இன்னும் ஏழுதரம்
போய்ப் பார் என்றான். ஏழாந்தரம் இவன்: 44
இதோ, சமுத்திரத்திலிருந்து ஒரு மனுஷனு
டைய உள்ளங்கை அத்தனைச் சிறிய மேகம்
எழும்புகிறது என்றான்; அப்பொழுது அவன்
நீ போய், ஆகாபை நோக்கி: மழை உம்மைத்
தடைசெய்யாதபடிக்கு இரதத்தைப் பூட்டி,
போய்விடும் என்று சொல் என்றான். அதற் 45
குள்ளாக வானம் மேகங்களினாலும் காற்றினா
லும் கறுத்து பெருமழை உண்டாயிற்று;
ஆகாப் இரதத்தில் ஏறி யெஸ்ரயேலுக்குப்
போனான். கர்த்தருடைய கை எலியாவின் 46
மேல் இருந்ததினால், அவன் தன் அரை
யைக் கட்டிக்கொண்டு, [15]யெஸ்ரயேலுக்கு
வருமட்டாக ஆகாபுக்கு முன் ஓடினான்.

எலியா செய்த எல்லாவற்றையும், அ 19
வன் தீர்க்கதரிசிகளெல்லாரையும் பட்டயத்
தாலே கொன்றுபோட்ட செய்தி அனைத்தை
யும், [16]ஆகாப் யேசபேலுக்கு அறிவித்தான்.
அப்பொழுது யேசபேல் எலியாவினிடத்தில் 2
ஆள் அனுப்பி: அவர்களில் ஒவ்வொருவனு
டைய பிராணனுக்குச் செய்யப்பட்டது
போல, நான் நாளை இந்நேரத்தில் உன் பிரா
ணனுக்குச் செய்யாதேபோனால், [17]தேவர்கள்
அதற்குச் சரியாகவும் அதற்கு அதிகமாகவும்
எனக்குச் செய்யக்கடவர்கள் என்று சொல்
லச் சொன்னாள். அவனுக்கு அது தெரிந்த 3
போது எழுந்து, தன் பிராணனைக் காக்க
யூதாவைச்சேர்ந்த பெயெர்செபாவுக்குப் புறப்
பட்டுப்போய், தன் வேலைக்காரனை அங்கே
நிறுத்திவிட்டான். அவன் வனாந்தரத்தில் ஒரு 4

நாள் பிரயாணம் போய், ஒரு சூரைச்செடி
யின்கீழ் உட்கார்ந்து; தான் சாகவேண்டும்
என்று கோரி: போதும் **கர்த்தாவே**, [1]என்
ஆத்துமாவை எடுத்துக்கொள்ளும்; நான் என்
பிதாக்களைப்பார்க்கிலும் நல்லவன் அல்ல
5 என்று சொல்லி, ஒரு சூரைச்செடியின்
கீழ்ப் படுத்துக்கொண்டு நித்திரைபண்ணி
னான்; அப்பொழுது ஒரு தூதன் அவனைத்
தட்டியெழுப்பி: எழுந்திருந்து போஜனம்
6 பண்ணு என்றான். அவன் விழித்துப் பார்க்
கிறபோது, இதோ, தழலில் சுடப்பட்ட
அடையும், ஒரு பாத்திரத்தில் தண்ணீரும்
அவன் தலைமாட்டில் இருந்தது; அப்பொழுது
அவன், புசித்துக் குடித்துத் திரும்பப் படுத்
7 துக்கொண்டான். **கர்த்தருடைய** தூதன்
திரும்ப இரண்டாந்தரம் வந்து அவனைத் தட்
டியெழுப்பி:எழுந்திருந்துபோஜனம்பண்ணு;
நீ பண்ணவேண்டிய பிரயாணம் வெகுதூரம்
8 என்றான். அப்பொழுது அவன் எழுந்திருந்து
புசித்துக் குடித்து, அந்தப் போஜனத்தின்
பலத்தினால் நாற்பதுநாள் [2]இரவுபகல் ஓரேப்
என்னும் தேவனுடைய பர்வதமட்டும் நடந்து
9 போனான். அங்கே அவன் ஒரு கெபிக்குள்
போய்த் தங்கினான்; இதோ, **கர்த்தருடைய**
வார்த்தை அவனுக்கு உண்டாகி, அவர்: எலி
யாவே, இங்கே உனக்கு என்ன காரியம் என்
10 றார். அதற்கு அவன்: சேனைகளின் தேவனா
கிய **கர்த்தருக்காக** வெகு [3]பக்திவைராக்கிய
மாயிருந்தேன்; இஸ்ரவேல் புத்திரர் உமது
உடன்படிக்கையைத் தள்ளிவிட்டார்கள்; உம்
முடைய பலிபீடங்களை இடித்து, [4]உம்மு
டைய தீர்க்கதரிசிகளைப் பட்டயத்தினால்
கொன்றுபோட்டார்கள்; நான் ஒருவன்மாத்தி
ரம் மீதியாயிருக்கிறேன்; என் பிராணனையும்
11 வாங்கத் தேடுகிறார்கள் என்றான். அப்பொ
ழுது அவர்: நீ வெளியே வந்து **கர்த்தருக்கு**
முன்பாகப் [5]பர்வதத்தில் நில் என்றார்; அப்
பொழுது, இதோ, **கர்த்தர்** கடந்துபோனார்;
**கர்த்தருக்கு** முன்பாகப் பர்வதங்களைப் பிளக்
கிறதும் கன்மலைகளை உடைக்கிறதுமான பல
த்த பெருங்காற்று உண்டாயிற்று; [6]ஆனாலும்
அந்தக் காற்றிலே **கர்த்தர்** இருக்கவில்லை;
காற்றிற்குப்பின் பூமி அதிர்ச்சி உண்டாயிற்று;
பூமி அதிர்ச்சியிலும் **கர்த்தர்** இருக்கவில்லை.
12 பூமி அதிர்ச்சிக்குப்பின் அக்கினி உண்டா
யிற்று; அக்கினியிலும் **கர்த்தர்** இருக்கவில்லை;
அக்கினிக்குப்பின் அமர்ந்த மெல்லிய சத்தம்
13 உண்டாயிற்று. அதை எலியா கேட்டபோது,
[7]தன் சால்வையினால் தன் முகத்தை மூடிக்
கொண்டு வெளியே வந்து, கெபியின் வாசலில்
நின்றான். அப்பொழுது, இதோ, எலியாவே,
இங்கே உனக்கு என்னகாரியம் என்கிற சத்
14 தம் அவனுக்கு உண்டாயிற்று. அதற்கு
அவன்: சேனைகளின் தேவனாகிய **கர்த்தருக்**
**காக** வெகு பக்திவைராக்கியமாயிருந்தேன்;
இஸ்ரவேல் புத்திரர் உமது உடன்படிக்கை
யைத் தள்ளிவிட்டார்கள்; உம்முடைய பலி
பீடங்களை இடித்து, உம்முடைய தீர்க்கதரிசி
களைப் பட்டயத்தினால் கொன்றுபோட்டார்
கள், நான் ஒருவன்மாத்திரம் மீதியாயிருக்கி
றேன்; என் பிராணனையும் வாங்கத் தேடு
கிறார்கள் என்றான். அப்பொழுது **கர்த்தர்** 15
அவனைப் பார்த்து: நீ தமஸ்குவின் வழியாய்
வனாந்தரத்திற்குத் திரும்பிப்போய், [8]ஆசகே
லைச் சீரியாவின்மேல் ராஜாவாக அபிஷேகம்
பண்ணி, பின்பு நிம்சியின் குமாரனாகிய [9]யெ 16
கூவை இஸ்ரவேலின்மேல் ராஜாவாக அபி
ஷேகம்பண்ணி, ஆபேல்மேகொலா ஊரா
னான சாப்பாத்தின் குமாரனாகிய எலிசாவை
உன் ஸ்தானத்திலே தீர்க்கதரிசியாக அபிஷே
கம்பண்ணு. சம்பவிப்பதாவது: ஆசகேலின் 17
பட்டயத்திற்குத் தப்பினவனை யெகூ கொன்
றுபோடுவான்; [10]யெகூவின் பட்டயத்திற்குத்
தப்பினவனை எலிசா கொன்றுபோடுவான்.
ஆனாலும் பாகாலுக்கு முடங்காதிருக்கிற முழ 18
ங்கால்களையும் [11]அவனை முத்தஞ்செய்யாதிருக்
கிற வாய்களையுமுடைய ஏழாயிரம்பேரை இஸ்
ரவேலிலே மீதியாக வைத்திருக்கிறேன் என்
றார். அப்படியே அவன் அவ்விடம் விட்டுப் 19
புறப்பட்டுப்போய், பன்னிரண்டு ஏர் பூட்டி
உழுத சாப்பாத்தின் குமாரனாகிய எலிசா
வைக் கண்டான்; அவன் பன்னிரண்டாம்
ஏரை ஓட்டிக்கொண்டிருந்தான்; எலியா
அவன் இருக்கும் இடமட்டும் போய் அவன்
மேல் தன் சால்வையைப் போட்டான். அப் 20
பொழுது அவன் மாடுகளை விட்டு, எலியா
வின் பிறகே ஓடி: நான் என் தகப்பனையும்
என் தாயையும் முத்தஞ்செய்ய உத்தரவு
கொடும், [12]அதற்குப்பின் உம்மைப் பின்
தொடர்வேன் என்றான். அதற்கு அவன்:
போய்த் திரும்பிவா; நான் உனக்குச் *செய்த
தை நினைத்துக்கொள் என்றான். அப்பொ 21
ழுது அவன் இவனை விட்டுப்போய், ஓர் ஏர்
மாடுகளைப் பிடித்து அடித்து, [13]ஏரின் மரமுட்
டுகளால் அவைகளின் இறைச்சியைச் சமை
த்து ஜனங்களுக்குக் கொடுத்தான்; அவர்கள்
சாப்பிட்டபிற்பாடு, அவன் எழுந்து, எலியா
வுக்குப் பின்சென்று அவனுக்கு ஊழியஞ்
செய்தான்.

## 20

சீரியாவின் ராஜாவாகிய பெனாதாத் தன்
சேனையையெல்லாம் கூட்டிக்கொண்டு
போய், சமாரியாவை முற்றிக்கை போட்டு
அதின்மேல் யுத்தம்பண்ணினான்; அவனோ
டேகூட முப்பத்திரண்டு ராஜாக்கள் இருந்தது
மல்லாமல், குதிரைகளும் இரதங்களும் இருந்
தது. அவன் நகரத்திற்குள் இஸ்ரவேலின் 2
ராஜாவாகிய ஆகாபிடத்தில் ஸ்தானாபதிகளை
அனுப்பி: உன்னுடைய வெள்ளியும் உன்னு 3
டைய பொன்னும் என்னுடையது; உன்னு
டைய ஸ்திரீகளும் உன்னுடைய குமாரருக்
குள் சமர்த்தராயிருக்கிறவர்களும் என்னுடை
யவர்கள் என்று பெனாதாத் சொல்லுகிறான்
என்று அவனுக்குச் சொல்லச்சொன்னான்.
இஸ்ரவேலின் ராஜா அதற்குப் பிரதியுத்தர 4

[1] எண். 11. 15. யோனா 4. 3, 8
[2] யாத். 34. 28. உபா. 9. 9, 18. மத். 4. 2
[3] ரோ. 11. 2-4. எண். 25. 11, 13. சங். 69. 9
[4] நெ., 7. 2
[5] யாத். 24. 12
[6] எசே. 1. 4; 37. 7
[7] யாத். 3. 6. ஏசா. 6. 2
[8] 2 இரா. 8. 12, 13
[9] 2 இரா. 9. 1-3. லூ. 4. 27
[10] 2 இரா. 9. 14. ஓசி. 6. 5
[11] ரோ. 11. 4. ஓசி. 13. 2
[12] மத். 8. 21, 22. லூ. 9. 61, 62
* என்ன செய்தேன் என்றும்.
[13] 2 சாமு. 24. 22

மாக: ராஜாவாகிய என் ஆண்டவனே, உம்மு
டைய வார்த்தையின்படியே, நானும் எனக்கு
உண்டான யாவும் உம்முடையவைகள்தான்
5 என்று சொல்லியனுப்பினான். அந்த ஸ்தானா
பதிகள் திரும்பவும் வந்து: பெனாதாத் சொல்
லுகிறது என்னவென்றால், உன் வெள்ளியை
யும், உன் பொன்னையும், உன் ஸ்திரீகளையும்,
உன் குமாரர்களையும் நீ எனக்குக் கொடுக்க
வேண்டும் என்று உமக்குச் சொல்லியனுப்பி
6 னேனே. ஆனாலும் நாளை இந்நேரத்தில் என்
ஊழியக்காரரை உன்னிடத்தில் [1]அனுப்பு
வேன்; அவர்கள் உன் வீட்டையும் உன் ஊழி
யக்காரரின் வீடுகளையும் சோதித்து, உன் கண்
ணுக்குப் பிரியமானவைகள் எல்லாவற்றை
யும் தங்கள் கைகளில் எடுத்துக்கொண்டு போ
7 வார்கள் என்றார் என்று சொன்னார்கள். அப்
பொழுது இஸ்ரவேலின் ராஜா, தேசத்தின்
மூப்பரையெல்லாம் அழைப்பித்து: இவன்
பொல்லாப்புத் தேடுகிற விதத்தைக் கவனித்
துப்பாருங்கள்; என் ஸ்திரீகளையும், என் குமா
ரர்களையும், என் வெள்ளியையும், என் பொன்
னையும் கேட்க, இவன் என்னிடத்தில் ஆள்
அனுப்பினபோது, நான் கொடுக்கமாட்டேன்
என்று இவனுக்கு மறுக்கவில்லையே என்றான்.
8 அப்பொழுது சகல மூப்பரும் சகல ஜனங்க
ளும் அவனைப் பார்த்து: நீர் அவனுக்குச் செவி
கொடுக்கவும், அவனுக்குச் சம்மதிக்கவும் வே
9 ண்டாம் என்றார்கள். அதினால் அவன் பெ
னாதாத்தின் ஸ்தானாபதிகளை நோக்கி: நீங்கள்
ராஜாவாகிய என் ஆண்டவனுக்குச் சொல்ல
வேண்டியது என்னவென்றால், நீர் முதல்
விசை உமது அடியானுக்குச் சொல்லியனுப்
பின யாவும் செய்வேன்; இந்தக் காரியத்தை
யோ நான் செய்யக்கூடாது என்று சொல்
லுங்கள் என்றான்; ஸ்தானாபதிகள் போய்,
இந்த மறுமொழியை அவனுக்குச் சொன்னார்
10 கள். அப்பொழுது பெனாதாத் அவனிடத்
தில் ஆள் அனுப்பி: எனக்குப் பின் செல்லு
கிற ஜனங்கள் எல்லாரும் கைக்கு ஒரு பிடியா
வது வாரிக்கொள்ள சமாரியாவின் தூள் போ
துமானதாயிருந்தால், [1]தேவர்கள் அதற்குச் சரி
யாகவும் அதற்கு அதிகமாகவும் எனக்குச் செய்
யக்கடவர்கள் என்று சொல்லச்சொன்னான்.
11 அதற்கு இஸ்ரவேலின் ராஜா பிரதியுத்தரமாக:
ஆயுதம் தரித்திருக்கிறவன், ஆயுதம் உரிந்து
போடுகிறவனைப்போலப் பெருமைபாராட்ட
லாகாது என்று அவனுக்குச் சொல்லுங்கள்
12 என்றான். பெனாதாத்தும், மற்ற ராஜாக்க
ளும் கூடாரங்களிலே குடித்துக்கொண்டிருக்
கையில், இந்த வார்த்தையைக்கேட்டு, தன்
ஊழியக்காரரை நோக்கி: ஆயத்தம்பண்ணுங்
கள் என்றான்; அப்படியே நகரத்தின்மேல்
13 சண்டைசெய்ய ஆயத்தம்பண்ணினார்கள். அப்
பொழுது ஒரு தீர்க்கதரிசி இஸ்ரவேலின் ராஜா
வாகிய ஆகாபிடத்தில் வந்து: அந்த ஏராளமான
ஜனக்கூட்டத்தையெல்லாம் கண்டாயா?
இதோ, நானே **கர்த்தர்** என்று நீ அறியும்படி

1 19. 2

2 28. ௸.

3 16. 9. நீதி. 23. 29 – 32. ஏசா. 54. 15. ஓசி. 4. 11

4 2 சாமு. 11. 1

இன்றைக்கு [2]அதை உன் கையில் ஒப்புக்கொ
டுப்பேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறார் என்
றான். யாரைக்கொண்டு என்று ஆகாப் கேட் 14
டான்; அதற்கு அவன்: மாகாணங்களுடைய
அதிபதிகளின் சேவகரைக்கொண்டு என்று
**கர்த்தர்** சொல்லுகிறார் என்றான்; பின்பு
அவன், யுத்தத்தை யார் துவக்கவேண்டும் என்று
கேட்டதற்கு; அவன், நீர்தான் என்றான்.
அவன் மாகாணங்களுடைய அதிபதிகளின் 15
சேவகரை இலக்கம் பார்த்தான், அவர்கள் இரு
நூற்று முப்பத்திரண்டுபேர்; அவர்களுக்குப்
பின்பு, இஸ்ரவேல் புத்திரராகிய சகல ஜனத்
தின் இலக்கமும் பார்த்து ஏழாயிரம்பேர்
என்று கண்டான். அவர்கள் மத்தியானவே 16
ளையிலே வெளியே புறப்பட்டார்கள்; பெனா
தாத்தும், அவனுக்கு உதவியாக வந்த முப்பத்
திரண்டு ராஜாக்களாகிய மற்ற ராஜாக்களும்,
[3]கூடாரங்களில் குடித்து வெறிகொண்டிருந்
தார்கள். மாகாணங்களுடைய அதிபதிகளின் 17
சேவகர் முந்தண்டாகப் புறப்படுகிறபோது,
பெனாதாத் அனுப்பின மனுஷர்: சமாரியாவி
லிருந்து மனுஷர் புறப்பட்டு வருகிறார்கள்
என்று அவனுக்கு அறிவித்தார்கள். அப்பொ 18
ழுது அவன்: அவர்கள் சமாதானத்திற்காகப்
புறப்பட்டுவந்தாலும் அவர்களை உயிரோடே
பிடியுங்கள்; அவர்கள் யுத்தத்திற்காகப் புறப்
பட்டுவந்தாலும் அவர்களை உயிரோடே பிடி
யுங்கள் என்றான். மாகாணங்களுடைய அதி 19
பதிகளின் சேவகரான அவர்களும், அவர்கள்
பின்னே வருகிற இராணுவமும், நகரத்திலி
ருந்து வெளியே வந்தபோது, அவர்கள் அவ 20
ரவர் தங்களுக்கு எதிர்ப்படுகிறவர்களை வெட்
டினார்கள்; சீரியர் முறிந்தோடிப்போனார்கள்;
இஸ்ரவேலர் அவர்களைத் துரத்தினார்கள்; சீரி
யாவின் ராஜாவாகிய பெனாதாத், குதிரையின்
மேல் ஏறிச் சில குதிரைவீரரோடேகூடத் தப்
பியோடிப்போனான். இஸ்ரவேலின் ராஜா 21
புறப்பட்டு, குதிரைகளையும் இரதங்களையும்
முறிய அடித்து, சீரியரில் மகா சங்காரம் உண்
டாக வெட்டினான். பின்பு அந்தத் தீர்க்கதரிசி 22
இஸ்ரவேலின் ராஜாவினிடத்தில் வந்து,
அவனை நோக்கி: நீர் போய் உம்மைப் பலப்
படுத்திக்கொண்டு, நீர் செய்யத்தக்கது இன்ன
தென்று கவனித்துப்பாரும்; [4]மறுவருஷத்தி
லே சீரியாவின் ராஜா உமக்கு விரோதமாக
வருவான் என்றான்.

சீரியாவின் ராஜாவுடைய ஊழியக்காரர் 23
அவனைப் பார்த்து: அவர்களுடைய தேவர்கள்
மலைத்தேவர்கள், அதினால் அவர்கள் நம்மை
மேற்கொண்டார்கள்; நாம் அவர்களோடே சம
பூமியிலே யுத்தம்பண்ணினால் நல்லது; அப்
பொழுது அவர்களை மேற்கொள்வது நிச்சயம்.
அதற்காக நீர் செய்யவேண்டியது என்ன 24
வென்றால், இந்த ராஜாக்கள் ஒவ்வொருவரை
யும் தங்கள் ஸ்தலத்திலிருந்து மாற்றி, அவர்க
ளுக்குப் பதிலாகச் சேனாபதிகளை ஏற்படுத்தி;
நீர் மடியக்கொடுத்த சேனைக்குச் சரியாய்ச் சே 25

ளையையும், அந்தக் குதிரைகளுக்குச் சரியாய்க்
குதிரைகளையும், இரதங்களுக்குச் சரியாய் இர
தங்களையும் இலக்கம் பார்த்துக்கொள்ளும்;
பிற்பாடு சமபூமியிலே நாம் அவர்களோடு யுத்
தம்பண்ணி, நிச்சயமாய் அவர்களை மேற்கொள்
வோம் என்றார்கள்; அவன் அவர்கள் சொற்
26 கேட்டு அப்படியே செய்தான். மறுவருஷத்
திலே பெனாதாத் சீரியரை இலக்கம்பார்த்து,
இஸ்ரவேலோடுயுத்தம்பண்ண[1]ஆப்பெக்குக்கு
27 வந்தான். இஸ்ரவேல் புத்திரரும் இலக்கம்
பார்க்கப்பட்டு, தேவையானதைச் சம்பாதித்
துக்கொண்டு, அவர்களை எதிர்க்கப் புறப்பட்டு,
அவர்களுக்கு எதிரே இரண்டு சிறிய வெள்
ளாட்டுக் கிடைகளைப்போலப் பாளயமிறங்கி
னார்கள்; தேசம் சீரியரால் நிறைந்திருந்தது.
28 அப்பொழுது தேவனுடைய மனுஷன் ஒரு
வன் வந்து, இஸ்ரவேலின் ராஜாவைப் பார்
த்து: **கர்த்தர்** பள்ளத்தாக்குகளின் தேவனா
யிராமல், மலைகளின் தேவனாயிருக்கிறார்
என்று சீரியர் சொல்லியிருக்கிறபடியினால்,
[2]நான் இந்த ஏராளமான ஜனக்கூட்டத்தை
யெல்லாம் உன் கையில் ஒப்புக்கொடுத்தேன்;
அதினால் நானே **கர்த்தர்** என்று நீங்கள் அறி
வீர்கள் என்று **கர்த்தர்** சொல்லுகிறார் என்
29 றான். ஏழுநாளளவும் அவர்கள் முகமுக
மாய்ப் பாளயமிறங்கியிருந்தார்கள்; ஏழாம்
நாளில் யுத்தம் கலந்து, இஸ்ரவேல் புத்திரர்
ஒரேநாளிலே சீரியரில் லட்சம் காலாட்களை
30 மடங்கடித்தார்கள். மீதியானவர்கள் ஆப்பெக்
பட்டணத்திற்குள் ஓடிப்போனார்கள்; அங்கே
மீதியாயிருந்தஇருபத்தேழாயிரம்பேரின்மேல்
அலங்கம் இடிந்து விழுந்தது; பெனாதாத்தும்
ஓடிப்போய் நகரத்திற்குள் புகுந்து, உள்ளறை
31 யிலே பதுங்கினான். அப்பொழுது அவன்
ஊழியக்காரர் அவனை நோக்கி: இதோ, இஸ்
ரவேல் வம்சத்து ராஜாக்கள் தயவுள்ள ராஜாக்
கள் என்று கேட்டிருக்கிறோம்; நாங்கள்
இரட்டுகளை எங்கள் அரைகளில் கட்டி, [3]கயி
றுகளை எங்கள் தலைகளில் சுற்றிக்கொண்டு,
இஸ்ரவேலின் ராஜாவினிடத்தில் போவோம்;
ஒருவேளை உம்மை உயிரோடே வைப்பார்
32 என்று சொல்லி, இரட்டைத் தங்கள் அரை
களில் கட்டி, கயிறுகளைத் தங்கள் தலைகளில்
சுற்றிக்கொண்டு, இஸ்ரவேலின் ராஜாவினி
டத்தில் வந்து: என்னை உயிரோடே வையும்
என்று உமது அடியானாகிய பெனாதாத் விண்
ணப்பம் பண்ணுகிறான் என்றார்கள். அதற்கு
அவன், இன்னும் அவன் உயிரோடே இருக்
கிறானா, அவன் என் சகோதரன் என்றான்.
33 அந்த மனுஷர் நன்றாய்க் கவனித்து, அவன்
வாயின் சொல்லை உடனே பிடித்து: உமது
சகோதரனாகிய பெனாதாத் இருக்கிறான் என்
றார்கள்; அப்பொழுது அவன்: நீங்கள் போய்,
அவனை அழைத்துக்கொண்டு வாருங்கள் என்
றான்; பெனாதாத் அவனிடத்தில் வந்தபோது,
அவனைத் தன் இரதத்தில் ஏற்றிக்கொண்
34 டான். அப்பொழுது பெனாதாத் இவனைப்
பார்த்து: என் தகப்பன் உம்முடைய தகப்ப
னார் கையிலே பிடித்த பட்டணங்களைத் திரும்
பக் கொடுத்துவிடுகிறேன்; [4]என் தகப்பன்
சமாரியாவிலே செய்ததுபோல, நீரும் தமஸ்
குவிலே வீதிகளை உண்டாக்கிக்கொள்ளலாம்
என்றான். அதற்கு அவன், இந்த உடன்படிக்
கை செய்து நான் உம்மை அனுப்பிவிடுகி
றேன் என்று சொல்லி, அவனோடு உடன்
படிக்கைபண்ணி அவனை அனுப்பிவிட்டான்.
அப்பொழுது தீர்க்கதரிசிகளின் [5]புத்திரரில் 35
ஒருவன் **கர்த்தருடைய** [6]வார்த்தையின்படி தன்
தோழனை நோக்கி: நீ என்னை அடி என்றான்;
அந்த மனுஷன் அவனைப் பார்த்து அடிக்க
மாட்டேன் என்றான். அப்பொழுது அவன் 36
இவனைப் பார்த்து: நீ **கர்த்தருடைய** சத்தத்திற்
குக் கீழ்ப்படியாமற் போனபடியால், இதோ,
நீ என்னை விட்டுப் புறப்பட்டுப்போனவுடனே
ஒரு சிங்கம் உன்னைக் கொல்லும் என்றான்;
அப்படியே இவன் அவனை விட்டுப் புறப்
பட்டவுடனே, [7]ஒரு சிங்கம் இவனைக் கண்டு
கொன்றுபோட்டது. அதின்பின் அவன் 37
வேறொருவனைக் கண்டு: என்னை அடி என்
றான்; அந்த மனுஷன், அவனைக் காயமுண்
டாக அடித்தான். அப்பொழுது அந்தத் தீர்க்க 38
தரிசி போய், தன் முகத்தின்மேல் சாம்பலைப்
போட்டு, வேஷமாறினவனாய் வழியிலே
ராஜாவுக்காகக் காத்திருந்தான். ராஜா அவ் 39
வழியாய் வருகிறபோது, [8]இவன் ராஜாவைப்
பார்த்துக் கூப்பிட்டு: உமது அடியான் யுத்தத்
தில் நின்றபோது, ஒருவன் விலகி, என்னி
டத்தில் ஒருவனைக் கொண்டுவந்து, இந்த மனு
ஷனைப் பத்திரம்பண்ணு; இவன் தப்பிப்போ
னால், உன் பிராணன் அவன் பிராணனுக்கு
ஈடாயிருக்கும், [9]அல்லது ஒரு தாலந்து வெள்
ளியை நீ கொடுக்கவேண்டும் என்றான். ஆனா 40
லும் உமது அடியான் இங்கும் அங்கும் அலு
வலாயிருக்கும்போது, அவன் போய்விட்டான்
என்றான். இஸ்ரவேலின் ராஜா அவனைப்
பார்த்து: நீ சொன்ன தீர்ப்பின்படியே ஆகும்
என்றான். அப்பொழுது அவன் சீக்கிர 41
மாய்த் தன் முகத்தின்மேலிருக்கும் சாம்பலைத்
துடைத்துவிட்டதினால், இஸ்ரவேலின் ராஜா
அவன் தீர்க்கதரிசிகளில் ஒருவன் என்று
அறிந்துகொண்டான். அப்பொழுது இவன் 42
அவனை நோக்கி: சங்காரத்திற்கு நான் நிய
மித்த மனுஷனை உன் கையிலிருந்து தப்பிப்
போகும்படி நீ விட்டபடியினால், [10]உன் பிரா
ணன் அவன் பிராணனுக்கு ஈடாகவும்; உன்
ஜனம் அவன் ஜனத்திற்கு ஈடாகவும் இருக்
கும் என்று **கர்த்தர்** சொல்லுகிறார் என்றான்.
அதினால் இஸ்ரவேலின் ராஜா சலிப்பும் விச 43
னமுமாய்த் [11]தன் வீட்டிற்குப் போகப் புறப்
பட்டுச் சமாரியாவுக்கு வந்தான்.

இவைகளுக்குப் பின்பு, யெஸ்ரயேலனா **21**
கிய நாபோத்துக்கு யெஸ்ரயேலிலே சமா
ரியாவின் ராஜாவாகிய ஆகாபின் அரமனை
அண்டையில் ஒரு திராட்சத்தோட்டம் இருக்

[1] யோசு. 18. 4
[2] 13. வச.
[3] ஆதி. 37. 31
[4] 15. 20
[5] 2 இரா. 2. 3, 5, 7, 15
[6] 13. 17, 18
[7] 13. 24
[8] 2 சாமு. 12. 1
[9] 2 இரா. 10. 24
[10] 22. 31-37
[11] 21. 4

2 தது. ஆகாப் நாபோத்தோடே பேசி: உன்
திராட்சத்தோட்டம் என் வீட்டிற்கு அடுத்தி
ருக்கிறபடியால், [1]அதைக் கீரைக்கொல்லை
யாக்கும்படி எனக்குக் கொடு, அதைப்பார்க்
கிலும் நல்ல திராட்சத்தோட்டத்தை அதற்குப்
பதிலாக உனக்குத் தருவேன்; அல்லது உன
க்கு வேண்டுமானால், அதின் விலைக்கிரயமான
3 பணத்தைத் தருவேன் என்றான். நாபோத்
ஆகாபை நோக்கி: [2]நான் என் பிதாக்களின்
சுதந்தரத்தை உமக்குக் கொடாதபடி **கர்த்தர்**
4 என்னைக் காப்பாராக என்றான். இப்படி
என் பிதாக்களின் சுதந்தரத்தை உமக்குக் கொ
டேன் என்று யெஸ்ரயேலனாகிய நாபோத்
தன்னோடே சொன்ன வார்த்தைக்காக, ஆகாப்
சலிப்பும் சினமுமாய், தன் வீட்டிற்கு வந்து,
போஜனம்பண்ணாமல், தன் கட்டிலின்மேல்
படுத்து, தன் முகத்தைத் திருப்பிக்கொண்டி
5 ருந்தான். அப்பொழுது அவன் மனைவியா
கிய யேசபேல் அவனிடத்தில் வந்து: நீர்
போஜனம்பண்ணாதபடிக்கு, உம்முடைய
மனம் சலிப்பாயிருக்கிறது என்ன என்று அவ
6 னைக் கேட்டதற்கு, அவன் அவளைப் பார்த்து:
நான் யெஸ்ரயேலனாகிய நாபோத்தோடே
பேசி: உன் திராட்சத்தோட்டத்தை எனக்கு
விலைக்கிரயமாய்க் கொடு; அல்லது உனக்கு
ராசியானால் அதற்குப் பதிலாக வேறே திராட்
சத்தோட்டத்தை உனக்குத் தருவேன் என்
றேன். அதற்கு அவன்: என் திராட்சத்
தோட்டத்தை உமக்குக் கொடுக்கமாட்டேன்
7 என்று சொன்னான் என்றான். அப்பொ
ழுது அவன் மனைவியாகிய யேசபேல் அவனை
நோக்கி: நீர் இப்போது இஸ்ரவேலின்மேல்
ராஜ்யபாரம்பண்ணுகிறவர் அல்லவா; நீர் எழு
ந்து போஜனம்பண்ணி மனமகிழ்ச்சியாயிரும்;
யெஸ்ரயேலனாகிய நாபோத்தின் திராட்சத்
தோட்டத்தை நான் உமக்குக் கொடுப்பேன்
8 என்று சொன்னாள். அவள் ஆகாபின் பெய
ரால் நிருபங்களை எழுதி, அவன் முத்திரையை
அவைகளுக்குப் போட்டு, அந்த நிருபங்களை
நாபோத் இருக்கும் பட்டணத்தில் அவனோ
டே குடியிருக்கிற மூப்பரிடத்துக்கும் பெரி
9 யோரிடத்துக்கும் அனுப்பினாள். அந்த நிரு
பங்களில் அவள் எழுதினது என்னவென்
றால்: நீங்கள் உபவாசம் என்று பிரசித்தப்படு
த்தி, நாபோத்தை ஜனத்தின்முன் நிறுத்தி,
10 தேவனையும் ராஜாவையும் தூஷித்தாய் என்று
அவன்மேல் சாட்சி சொல்லுகிற [3]பேலியா
ளின் மக்களாகிய இரண்டுபேரை அவனுக்கு
எதிராக நிறுத்தி, அவனை வெளியே கொண்
டுபோய் அவன் சாகும்படிக்கு அவனைக் கல்
11 லெறியுங்கள் என்று எழுதினாள். அவன்
பட்டணத்திலே குடியிருக்கிற மூப்பரும்
பெரியோருமாகிய அவன் பட்டணத்து மனு
ஷர், யேசபேல் தங்களுக்கு அனுப்பின நிரு
பங்களில் எழுதிக் கட்டளையிட்டிருந்தபடியே
12 செய்தார்கள். அவர்கள் உபவாசம் என்று
பிரசித்தப்படுத்தி [4]நாபோத்தை ஜனத்தின்

[1] 1 சாமு. 8. 14
[2] லேவி. 25. 23. எண். 36. 7. எசே. 46. 18
[3] யாத். 22. 28. லேவி. 24. 14, 15, 16. அப். 6. 11
[4] ஏசா. 58. 4
[5] 2 இரா. 9. 26
[6] சங். 9. 12
[7] 22. 38
[8] 18. 17
[9] 2 இரா. 17. 17. ரோ. 7. 14
* ஒரு ஆணையும். 1 சாமு. 25. 22. 2 இரா. 9. 8
[10] 15. 29
[11] 16. 3, 11
[12] 2 இரா. 9. 36
[13] 14. 11; 16. 4

முன்னே நிறுத்தினார்கள். அப்பொழுது பே 13
லியாளின் மக்களாகிய இரண்டுபேர் வந்து,
அவனுக்கு எதிராக உட்கார்ந்து: நாபோத்
தேவனையும் ராஜாவையும் தூஷித்தான்
என்று ஜனத்திற்கு முன்பாக அவன்மேல்
சாட்சி சொன்னார்கள்; அதற்குப் பின்பு அவ
னைப் பட்டணத்திற்கு வெளியே கொண்டு
போய், [5]அவன் சாகும்படிக்கு அவனைக் கல்
லெறிந்து, பிற்பாடு யேசபேலுக்கு, நாபோத் 14
கல்லெறியுண்டு செத்தான் என்று சொல்லி
யனுப்பினார்கள். நாபோத் கல்லெறியுண்டு 15
செத்ததை யேசபேல் கேட்டபோது, ஆகா
பை நோக்கி: நீர் எழுந்திருந்து, யெஸ்ரயேல
னாகிய நாபோத் உமக்கு விலைக்கிரயமாய்க்
கொடுக்கமாட்டேன் என்று சொன்ன திராட்
சத்தோட்டத்தைச் சொந்தமாய் எடுத்துக்
கொள்ளும்; நாபோத் உயிரோடில்லை, அவன்
செத்துப்போனான் என்றாள். நாபோத் செத் 16
துப்போனதை ஆகாப் கேட்டபோது, அவன்
யெஸ்ரயேலனாகிய நாபோத்தின் திராட்சத்
தோட்டத்தைச் சொந்தமாய் எடுத்துக்கொள்
ளும்படி எழுந்துபோனான்.

**கர்த்தருடைய** வார்த்தை [6]திஸ்பியனாகிய 17
எலியாவுக்கு உண்டாயிற்று, அவர்: நீ எழு 18
ந்து, சமாரியாவிலிருக்கிற இஸ்ரவேலின்
ராஜாவாகிய ஆகாபைச் சந்திக்கும்படி போ;
இதோ, அவன் நாபோத்தின் திராட்சத்
தோட்டத்தைச் சொந்தமாய் எடுத்துக்கொள்ள
அங்கே போயிருக்கிறான். நீ அவனைப் பார் 19
த்து: நீ கொலைசெய்ததும் எடுத்துக்கொண்ட
தும் இல்லையோ என்று **கர்த்தர்** சொல்லு
கிறார்; நாய்கள் நாபோத்தின் இரத்தத்தை
நக்கின ஸ்தலத்திலே [7]உன்னுடைய இரத்தத்
தையும் நாய்கள் நக்கும் என்று **கர்த்தர்** சொல்
லுகிறார் என்று சொல் என்றார். அப்பொ 20
ழுது ஆகாப் எலியாவை நோக்கி: என் பகை
ஞனே, [8]என்னைக் கண்டுபிடித்தாயா என்
றான். அதற்கு அவன்: கண்டுபிடித்தேன்;
**கர்த்தரின்** பார்வைக்குப் பொல்லாப்பான
தைச் செய்ய [9]நீ உன்னை விற்றுப்போட்டாய்.
நான் உன்மேல் பொல்லாப்பு வரப்பண்ணி, 21
உன் சந்ததியை அழித்துப்போட்டு, ஆகா
புக்கு *சுவரில் நீர்விடும் ஒரு நாயாகிலும்
இராதபடிக்கு இஸ்ரவேலில் அடைபட்ட
வனையும் விடுபட்டவனையும் சங்கரித்து, நீ 22
எனக்குக் கோபம் உண்டாக்கி, இஸ்ரவேலைப்
பாவஞ்செய்யப் பண்ணினதினிமித்தம், உன்
னுடைய குடும்பத்தை நேபாத்தின் குமாரனா
கிய [10]யெரொபெயாமின் குடும்பத்துக்கும்,
அகியாவின் குமாரனாகிய [11]பாஷாவின் குடும்
பத்துக்கும், சமானமாக்குவேன் என்றார்
என்று சொன்னான். யேசபேலையும் குறித் 23
துக் **கர்த்தர்**: [12]நாய்கள் யேசபேலை யெஸ்ர
யேலின் மதில் அருகே தின்னும். ஆகாபின் 24
சந்ததியில் பட்டணத்திலே சாகிறவனை நாய்
களும், [13]வெளியிலே சாகிறவனை ஆகாயத்
துப் பறவைகளும் தின்னும் என்றார். தன் 25

மனைவியாகிய யேசபேல் தூண்டிவிட்ட
படியே, [1]கர்த்தரின் பார்வைக்குப் பொல்
லாப்பானதைச் செய்ய, தன்னை விற்றுப்
போட்ட ஆகாபைப்போல ஒருவனுமில்லை.
26 கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்கு முன்
னின்று துரத்திவிட்ட [2]எமோரியர் செய்த
படியெல்லாம், அவன் நரகலான விக்கிரகங்
களைப் பின்பற்றி, மகா அருவருப்பாய் நடந்து
27 கொண்டான். ஆகாப் இந்த வார்த்தைகளைக்
கேட்டபோது, தன் வஸ்திரங்களைக் கிழித்து,
தன் சரீரத்தின்மேல் இரட்டைப் போர்த்துக்
கொண்டு, [3]உபவாசம்பண்ணி, இரட்டிலே
படுத்துத் தாழ்மையாய் நடந்துகொண்டான்.
28 அப்பொழுது கர்த்தருடைய வார்த்தை திஸ்
பியனாகிய எலியாவுக்கு உண்டாயிற்று, அவர்:
29 ஆகாப் எனக்கு முன்பாகத் தன்னைத் தாழ்த்
தினதைக் கண்டாயா? அவன் எனக்கு முன்
பாகத் தன்னைத் தாழ்த்துகிறபடியினால், நான்
அவன் நாட்களில் அந்தப் பொல்லாப்பை
வரப்பண்ணாமல், [4]அவன் குமாரன் நாட்க
ளில் அதை அவன் வீட்டின்மேல் வரப்பண்
ணுவேன் என்றார்.

**22** சீரியருக்கும் இஸ்ரவேலருக்கும் மூன்று
2 வருஷம் யுத்தமில்லாமலிருந்தது. மூன்றாம்
வருஷத்திலே யூதாவின் ராஜாவாகிய [5]யோச
பாத் இஸ்ரவேலின் ராஜாவினிடத்திற்குப்
3 போயிருக்கும்போது, இஸ்ரவேலின் ராஜா
தன் ஊழியக்காரரை நோக்கி: [6]கீலேயாத்தி
லுள்ள ராமோத் நம்முடையதென்று அறியீர்
களா? நாம் அதைச் சீரியா ராஜாவின் கையி
லிருந்து பிடித்துக்கொள்ளாமல், சும்மாயிருப்
4 பானேன் என்று சொல்லி, யோசபாத்தை
நோக்கி: கீலேயாத்திலுள்ள ராமோத்தின்
மேல் யுத்தம்பண்ண என்னோடேகூட வரு
கிறீரா என்று கேட்டான். யோசபாத் இஸ்ர
வேலின் ராஜாவை நோக்கி: [7]நான்தான் நீர்,
என்னுடைய ஜனங்கள் உம்முடைய ஜனங்
கள், என்னுடைய குதிரைகள் உம்முடைய
5 குதிரைகள் என்றான். பின்னும் யோசபாத்
இஸ்ரவேலின் ராஜாவைப் பார்த்து: கர்த்த
ருடைய வார்த்தையை இன்றைக்கு விசா
6 ரித்து அறியும் என்றான். அப்பொழுது
இஸ்ரவேலின் ராஜா ஏறக்குறைய நானூறு
தீர்க்கதரிசிகளைக் கூடிவரச்செய்து: [8]நான்
கீலேயாத்திலுள்ள ராமோத்தின்மேல் யுத்தம்
பண்ணப் போகலாமா, போகலாகாதா என்று
அவர்களைக் கேட்டதற்கு; அவர்கள், போம்,
ஆண்டவர் ராஜாவின் கையில் ஒப்புக்கொடுப்
7 பார் என்றார்கள். பின்பு யோசபாத்: நாம்
விசாரித்து அறிகிறதற்கு இவர்களையல்லாமல்
கர்த்தருடைய தீர்க்கதரிசி வேறே யாராகிலும்
8 [9]இங்கே இல்லையா என்று கேட்டான். அப்
பொழுது இஸ்ரவேலின் ராஜா, யோசபா
த்தை நோக்கி: கர்த்தரிடத்தில் விசாரித்து
அறிகிறதற்கு இம்லாவின் குமாரனாகிய மிகா
யா என்னும் இன்னும் ஒருவன் இருக்கிறான்;
ஆனாலும் நான் அவனைப் பகைக்கிறேன்;
அவன் என்னைக்குறித்து நன்மையாக அல்ல,
தீமையாகவே தீர்க்கதரிசனஞ் சொல்லுகிற
வன் என்றான். அதற்கு, யோசபாத், ராஜா
வே, அப்படிச் சொல்லவேண்டாம் என்
றான். அப்பொழுது இஸ்ரவேலின் ராஜா 9
பிரதானிகளில் ஒருவனைக் கூப்பிட்டு: இம்
லாவின் குமாரனாகிய மிகாயாவைச் சீக்கிர
மாய் அழைத்துவா என்றான். இஸ்ரவேலின் 10
ராஜாவும், யூதாவின் ராஜாவாகிய யோசபாத்
தும், சமாரியாவின் ஒலிமுகவாசலுக்கு முன்
னிருக்கும் விசாலத்திலே ராஜவஸ்திரம் தரித்
துக்கொண்டவர்களாய், அவரவர் தம்தம் சிங்
காசனத்தில் உட்கார்ந்திருந்தார்கள்; சகல
தீர்க்கதரிசிகளும் அவர்களுக்கு முன்பாகத்
தீர்க்கதரிசனஞ் சொன்னார்கள். கேனா 11
னாவின் குமாரனாகிய சிதேக்கியா தனக்கு
இருப்புக்கொம்புகளை உண்டாக்கி, இவைக
ளால் நீர் சீரியரை முட்டி நிர்மூலமாக்கிப்
போடுவீர் என்று கர்த்தர் சொல்லுகிறார்
என்றான். சகல தீர்க்கதரிசிகளும் அதற்கு 12
இசைவாகத் தீர்க்கதரிசனம் சொல்லி, கீலே
யாத்திலுள்ள ராமோத்துக்குப் போம், உமக்கு
வாய்க்கும்; கர்த்தர் அதை ராஜாவின் கையில்
ஒப்புக்கொடுப்பார் என்றார்கள். மிகாயாவை 13
அழைக்கப்போன ஆள் அவனுடனே பேசி:
இதோ, தீர்க்கதரிசிகளுடைய வார்த்தைகள்
ஏகவாக்காய் ராஜாவுக்கு நன்மையாயிருக்
கிறது; உம்முடைய வார்த்தையும் அவர்களில்
ஒருவர் வார்த்தையைப்போல இருக்கும்படி
நன்மையாகச் சொல்லும் என்றான். அதற்கு 14
மிகாயா: கர்த்தர் என்னிடத்தில் சொல்வ
தையே சொல்லுவேன் [10]என்று கர்த்தருடைய
ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேன் என்றான்.
அவன் ராஜாவினிடத்தில் வந்தபோது, 15
ராஜா அவனைப் பார்த்து: மிகாயாவே, நாங்
கள் கீலேயாத்திலுள்ள ராமோத்தின்மேல் யுத்
தம்பண்ணப் போகலாமா, போகலாகாதா
என்று கேட்டான். அதற்கு அவன்: "போம்,
உமக்கு வாய்க்கும்; கர்த்தர் அதை ராஜாவின்
கையில் ஒப்புக்கொடுப்பார்" என்றான். ராஜா 16
அவனைப் பார்த்து: நீ கர்த்தருடைய நாமத்
திலே உண்மையை அல்லாமல் வேறொன்
றையும் என்னிடத்தில் சொல்லாதபடிக்கு,
நான் எத்தனைதரம் உன்னை ஆணையிடுவிக்க
வேண்டும் என்று சொன்னான். அப்பொ 17
ழுது அவன்: இஸ்ரவேலரெல்லாரும் மேய்ப்
பன் இல்லாத [11]ஆடுகளைப்போல மலைகளிலே
சிதறப்பட்டதைக் கண்டேன்; அப்பொழுது
கர்த்தர்: இவர்களுக்கு எஜமான் இல்லை;
அவரவர் தம்தம் வீட்டிற்குச் சமாதானத்
தோடே திரும்பக்கடவர்கள் என்றார் என்று
சொன்னான். அப்பொழுது இஸ்ரவேலின் 18
ராஜா யோசபாத்தை நோக்கி: இவன் என்
னைக்குறித்து நன்மையாக அல்ல, தீமையா
கவே தீர்க்கதரிசனம் சொல்லுகிறவன் என்று
நான் உம்மோடே சொல்லவில்லையா
என்றான்.

[1] 16. 30, 31
[2] ஆதி. 15. 16. 2 இரா. 21. 11
[3] ஆதி. 37. 34
[4] 2 இரா. 9. 25
[5] 2 நாளா. 18. 2. ழ
[6] உபா. 4. 43
[7] 2 இரா. 3. 7
[8] 18. 19
[9] 2 இரா. 3. 11
[10] எண். 22. 38
[11] மத். 9. 36

19 அப்பொழுது அவன் சொன்னது: **கர்த்த**
**ருடைய** வார்த்தையைக் கேளும்; **கர்த்தர்**
தம்முடைய சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்
கிறதையும், [1]பரமசேனையெல்லாம் அவரிடம்
அவர் வலதுபக்கத்திலும் அவர் இடதுபக்
20 கத்திலும் நிற்கிறதையும் கண்டேன். அப்
பொழுது **கர்த்தர்**: ஆகாப் போய், கீலே
யாத்திலுள்ள ராமோத்தில் விழும்படிக்கு,
அவனுக்குப் போதனை செய்கிறவன் யார்
என்று கேட்டதற்கு, ஒருவன் இப்படியும்
21 ஒருவன் அப்படியும் சொன்னார்கள். அப்
பொழுது ஒரு ஆவி புறப்பட்டு வந்து, **கர்த்த**
**ருக்கு** முன்பாக நின்று: நான் அவனுக்குப்
22 போதனை செய்வேன் என்றது. எதினால்
என்று **கர்த்தர்** அதைக் கேட்டார். அப்பொ
ழுது அது: நான் போய், அவனுடைய தீர்க்க
தரிசிகள் எல்லாரின் வாயிலும் பொய்யின்
ஆவியாய் இருப்பேன் என்றது. அதற்கு
அவர்: [2]நீ அவனுக்குப் போதனைசெய்து
அப்படி நடக்கப்பண்ணுவாய்; போய் அப்
23 படிச் செய் என்றார். ஆதலால் **கர்த்தர்**
பொய்யின் ஆவியை இந்த உம்முடைய தீர்க்க
தரிசிகளாகிய இவர்கள் எல்லாருடைய வாயி
லும் கட்டளையிட்டார்; **கர்த்தர்** உம்மைக்
குறித்துத் தீமையாகச் சொன்னார் என்றான்.
24 அப்பொழுது கேனானாவின் குமாரனாகிய
சிதேக்கியா கிட்டே வந்து, மிகாயாவைக்
கன்னத்தில் அடித்து, [3]**கர்த்தருடைய** ஆவி
எந்தவழியாய் என்னைவிட்டு உன்னோடே பே
25 சும்படி வந்தது என்றான். அதற்கு மிகாயா:
நீ ஒளித்துக்கொண்டு உள்ளறையிலே பதுங்
கும் அந்நாளிலே [4]அதைக் காண்பாய் என்
26 றான். அப்பொழுது இஸ்ரவேலின் ராஜா:
மிகாயாவைப் பிடித்து, அவனைப் பட்டணத்
துத் தலைவனாகிய ஆமோனிடத்திற்கும், ரா
ஜாவின் குமாரனாகிய யோவாசிடத்திற்கும்
27 திரும்பக் கொண்டுபோய், இவனைச் சிறைச்
சாலையிலே வைத்து, நான் சமாதானத்தோ
டே வருமளவும், இவனுக்கு இடுக்கத்தின்
அப்பத்தையும் இடுக்கத்தின் தண்ணீரையும்
சாப்பிடக் கொடுங்கள் என்று ராஜா சொன்
28 னார் என்று சொல்லுங்கள் என்றான். அப்
பொழுது மிகாயா: நீர் சமாதானத்தோடே
திரும்பிவருகிறது உண்டானால், [5]**கர்த்தர்**
என்னைக்கொண்டு பேசினதில்லை என்று
சொல்லி, ஜனங்களே, நீங்கள் எல்லாரும்
இதைக் கேளுங்கள் என்றான்.
29 பின்பு இஸ்ரவேலின் ராஜாவும், யூதா
வின் ராஜாவாகிய யோசபாத்தும் கீலேயாத்தி
30 லுள்ள ராமோத்துக்குப் போனார்கள். இஸ்ர
வேலின் ராஜா யோசபாத்தை நோக்கி: நான்
வேஷம்மாறியுத்தத்தில்பிரவேசிப்பேன்;நீரோ
ராஜவஸ்திரம் தரித்திரும் என்று சொல்லி,
[6]இஸ்ரவேலின் ராஜா வேஷம்மாறி, யுத்தத்
31 தில் பிரவேசித்தான். சீரியாவின் ராஜா
தனக்கு இருக்கிற இரதங்களின் முப்பத்தி
ரண்டு தலைவனாயும் நோக்கி: நீங்கள் சிறி
யவரோடும் பெரியவரோடும் யுத்தம்பண்ணா
மல் இஸ்ரவேலின் ராஜா ஒருவனோடேமாத்
திரம் யுத்தம்பண்ணுங்கள் என்று கட்டளை
யிட்டிருந்தான். ஆதலால் இரதங்களின் தலை 32
வர் யோசபாத்தைக் காண்கையில், இவன்
தான் இஸ்ரவேலின் ராஜா என்று சொல்லி
யுத்தம்பண்ண அவனுக்கு நேராகச் சாய்ந்து
வந்தார்கள்; [7]அப்பொழுது யோசபாத் கூக்
குரலிட்டான். இவன் இஸ்ரவேலின் ராஜா 33
அல்ல என்று இரதங்களின் தலைவர் கண்டு
அவனை விட்டு விலகிப்போனார்கள். ஒரு 34
வன் *நினையாமல் வில்லை நாணேற்றி எய்
தான்; அது இஸ்ரவேலின் ராஜாவினுடைய
கவசத்தின் சந்துகளுக்குள் பட்டது; அப்பொ
ழுது அவன் தன் சாரதியைப் பார்த்து: நீ
திருப்பி என்னை இராணுவத்துக் கப்பால்
கொண்டுபோ; எனக்குக் காயம்பட்டது என்
றான். அன்றையதினம் யுத்தம் அதிகரித் 35
தது; ராஜாவைச் சீரியருக்கு எதிராக இர
தத்தில் நிறுத்திவைத்தார்கள்; சாயங்காலத்தி
லே அவன் இறந்துபோனான்; காயத்தின்
இரத்தம் இரதத்தின் தட்டிலே வடிந்தது.
பொழுதுபோகும்போது அவரவர் தம்தம் பட் 36
டணத்திற்கும், அவரவர் தம்தம் தேசத்திற்
கும் போகலாம் என்று இராணுவத்தில்
பறைசாற்றப்பட்டது. அப்படியே ராஜா 37
இறந்தபின்பு, சமாரியாவுக்குக் கொண்டுவரப்
பட்டான்; ராஜாவைச் சமாரியாவில் அடக்
கம் பண்ணினார்கள். அந்த இரதத்தையும் 38
அவனுடைய கவசத்தையும் சமாரியாவின்
குளத்திலே கழுவுகிறபோது, **கர்த்தர்** சொ
ல்லியிருந்த வார்த்தையின்படியே, [8]நாய்கள்
அவன் இரத்தத்தை நக்கினது. ஆகாபின் 39
மற்ற வர்த்தமானங்களும், அவன் செய்த
வை யாவும், [9]அவன் கட்டின தந்த அர
மனையின் வரலாறும், அவன் கட்டின எல்
லாப் பட்டணங்களின் வரலாறும் இஸ்ர
வேல் ராஜாக்களின் நாளாகமப் புஸ்தகத்
தில் அல்லவோ எழுதியிருக்கிறது. ஆகாப் 40
தன் பிதாக்களோடே நித்திரையடைந்தபின்,
அவன் குமாரனாகிய அகசியா அவன் ஸ்தலத்
தில் ராஜாவானான்.
ஆசாவின் குமாரனாகிய [10]யோசபாத் இஸ்ர 41
வேலின் ராஜாவாகிய ஆகாபின் நாலாம்
வருஷத்தில் யூதாவின்மேல் ராஜாவானான்.
யோசபாத் ராஜாவாகிறபோது முப்பத்தை 42
ந்து வயதாயிருந்து, இருபத்தைந்து வருஷம்
எருசலேமில் ராஜ்யபாரம் பண்ணினான்; சில்
கியின் குமாரத்தியாகிய அவனுடைய தா
யின்பேர் அசுபாள். அவன் தன் தகப்ப 43
னாகிய ஆசாவின் வழிகளிலெல்லாம் நடந்
தான்; [11]அவன் அதை விட்டு விலகாமல்
**கர்த்தரின்** பார்வைக்குச் செம்மையானதைச்
செய்தான்; ஆகிலும் மேடைகள் தகர்க்கப்
படவில்லை; ஜனங்கள் இன்னும் மேடை
களின்மேல் பலியிட்டுத் தூபங்காட்டிவந்தார்
கள். யோசபாத் இஸ்ரவேலின் [12]ராஜாவோ 44

[1] யோபு 1. 6; 2. 1. சங். 103. 20, 21. ஏசா. 6. 1. தானி. 7. 9. சக. 1. 10. மத். 18. 10. எபி. 1. 7, 14
[2] நியா. 9. 23. யோபு 12. 16. எசே. 14. 9. 2 தெச. 2. 11
[3] 2 நாளா. 18. 28
[4] 20. 30
[5] எண். 16. 29. உபா. 18. 20–22
[6] 2 நாளா. 35. 22
[7] 2 நாளா. 18. 31. நீதி. 13. 20
* இலக்குக் குறிக்காமல். 2 சாமு. 15. 11
[8] 21. 19
[9] ஆமோ. 3. 15
[10] 2 நாளா. 20. 31
[11] 2 நாளா. 17. 3. 2 இரா. 12. 3
[12] 2 நாளா. 19. 2. 2 கொரி. 6. 14

45 டே சமாதானமாயிருந்தான். யோசபாத்தின்
மற்ற வர்த்தமானங்களும், அவன் காட்டிய வல்
லமையும், அவன் பண்ணின யுத்தமும், யூதா
வுடைய ராஜாக்களின் நாளாகமப் புஸ்தகத்தில்
46 அல்லவோ எழுதியிருக்கிறது. தன் தகப்பனு
கிய ஆசாவின் நாட்களில் மீதியாய்விட்டிருந்த
இலச்சையான புணர்ச்சிக்காரரையும் [1]அவன்
தேசத்திலிருந்து அற்றுப்போகப்பண்ணினான்.
47 அப்பொழுது ஏதோமில் ராஜா இல்லை; [2]பிரதி
48 ராஜா ஒருவன் இருந்தான். பொன்னுக்காக
ஓப்பீருக்குப் போகும்படி, யோசபாத் தர்ஷீஸ்
கப்பல்களைச் செய்தான்; ஆனால் அவைகள்
போகவில்லை; [3]அவைகள் எசியோன் கேபே
49 ரிலே உடைந்துபோயின. அப்பொழுது
ஆகாபின் குமாரனாகிய அகசியா யோசபாத்தை
நோக்கி: என் வேலைக்காரர் உம்முடைய
வேலைக்காரரோடுங்கூடக் கப்பல்களிலே
போகட்டும் என்றான்; அதற்கு யோசபாத் சம்
மதிக்கவில்லை. யோசபாத் தன் பிதாக்களோ 50
டே நித்திரையடைந்து; [4]தாவீதின் நகரத்திலே
தன் பிதாக்களோடே அடக்கம்பண்ணப்பட்
டான்; அவன் குமாரனாகிய யோராம் அவன்
ஸ்தானத்தில் ராஜாவானான்.

ஆகாபின் குமாரனாகிய [5]அகசியா யூதாவின் 51
ராஜாவாகிய யோசபாத்தின் பதினேழாம் வரு
ஷத்திலே சமாரியாவில் ராஜாவாகி, இஸ்ர
வேலின்மேல் இரண்டுவருஷம் ராஜ்யபாரம்
பண்ணி, **கர்த்தரின்** பார்வைக்குப் பொல் 52
லாப்பானதைச் செய்து, [6]தன் தகப்பன் வழி
யிலும், தன் தாயின் வழியிலும், இஸ்ரவேலைப்
பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின் குமா
ரன் யெரொபெயாமின் வழியிலும் நடந்து,
பாகாலைச் சேவித்து, [7]அவனைப் பணிந்து 53
கொண்டு, தன் தகப்பன் செய்தபடியெல்லாம்
இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தருக்குக்**
கோபமுண்டாக்கினான்.

[1] 14. 24; 15. 12
[2] ஆதி. 25. 23. 2 சாமு. 8. 14. 2 இரா. 3. 9; 8. 20
[3] 2 நாளா. 20. 35. ழ
[4] 2 நாளா. 21. 1
[5] 40. வச.
[6] 15. 26
[7] 16. 31. நியா. 2. 11

II. KINGS

# இராஜாக்களின்

## இரண்டாம் புஸ்தகம்

1 ஆகாப் மரணமடைந்தபின், [1]மோவாபியர்
இஸ்ரவேலுக்கு விரோதமாய்க் கலகம்பண்
2 ணிப் பிரிந்துபோனார்கள். அகசியா சமாரி
யாவிலிருக்கிற தன் மேல்வீட்டிலிருந்து கிரா
தியின் வழியாய் விழுந்து, வியாதிப்பட்டு:
இந்த வியாதி நீங்கிப் பிழைப்பேனா என்று
[2]எக்ரோனின் தேவனாகிய பாகால்சேபூபிடத்
தில் போய் விசாரியுங்களென்று ஆட்களை
3 அனுப்பினான். கர்த்தருடைய தூதன் திஸ்
பியனாகிய எலியாவை நோக்கி: நீ எழுந்து,
சமாரியாவுடைய ராஜாவின் ஆட்களுக்கு
எதிர்ப்படப் போய்: இஸ்ரவேலிலே தேவன்
இல்லையென்றா நீங்கள் எக்ரோனின் தேவ
னாகிய பாகால்சேபூபிடத்தில் விசாரிக்கப்
4 போகிறீர்கள்? இதினிமித்தம் நீ ஏறின கட்
டிலிலிருந்து இறங்காமல், சாகவே சாவாய்
என்று கர்த்தர் சொல்லுகிறார் என்பதை அவர்
களோடே சொல் என்றான்; அப்படியே
5 எலியா போய்ச் சொன்னான். அந்த ஆட்கள்
அவனிடத்திற்குத் திரும்பிவந்தபோது: நீங்
கள் திரும்பிவந்தது என்ன என்று அவன்
6 அவர்களிடத்தில் கேட்டான். அதற்கு அவர்
கள்: ஒரு மனுஷன் எங்களுக்கு எதிர்ப்பட்டு
வந்து: நீங்கள் உங்களை அனுப்பின ராஜாவி
னிடத்தில் திரும்பிப் போய், இஸ்ரவேலிலே
தேவன் இல்லையென்றா நீ எக்ரோனின் தே
வனாகிய பாகால்சேபூபிடத்தில் விசாரிக்கப்
போகிறாய்; இதினிமித்தம் நீ ஏறின கட்டிலி
லிருந்து இறங்காமல் சாகவே சாவாய் என்று
கர்த்தர் சொல்லுகிறார் என்பதை அவனோடே
சொல்லுங்கள் என்றான் என்று சொன்னார்
7 கள். அப்பொழுது அவன் அவர்களை நோக்கி:
உங்களுக்கு எதிர்ப்பட்டுவந்து, இந்த வார்த்
தைகளை உங்களிடத்தில் சொன்ன மனுஷன்
8 எப்படிப்பட்டவன் என்று கேட்டான். அத
ற்கு அவர்கள்: அவன் மயிர் உடையைத் தரி
த்து, [3]வார்க்கச்சையைத் தன் அரையிலே கட்
டிக்கொண்டிருந்தான் என்றார்கள்; அப்பொ
ழுது அவன்: திஸ்பியனாகிய எலியாதான்
9 என்று சொல்லி; அவனிடத்திற்கு ஒரு தலை
வனையும், அவனுடைய ஐம்பது சேவகரை
யும் அனுப்பினான்; மலையின் உச்சியில் உட்
கார்ந்திருக்கிற அவனிடத்தில் இவன் ஏறிப்
போய்: தேவனுடைய மனுஷனே, ராஜா
உன்னை வரச்சொல்லுகிறார் என்றான். அப் 10
பொழுது எலியா, அந்த ஐம்பதுபேரின் தலை
வனுக்குப் பிரதியுத்தரமாக: நான் தேவனு
டைய மனுஷனானால், [4]அக்கினி வானத்திலி
ருந்து இறங்கி, உன்னையும் உன் ஐம்பது பே
ரையும் பட்சிக்கக்கடவது என்றான்; உடனே
அக்கினி வானத்திலிருந்து இறங்கி, அவனை
யும் அவன் ஐம்பதுபேரையும் பட்சித்தது. மறு 11
படியும் அவனிடத்திற்கு வேறொரு தலைவ
னையும், அவனுடைய ஐம்பது சேவகரையும்
அனுப்பினான். இவன் அவனை நோக்கி; தே
வனுடைய மனுஷனே, ராஜா உன்னைச் சீக்
கிரமாய் வரச்சொல்லுகிறார் என்றான். எலி 12
யா அவர்களுக்குப் பிரதியுத்தரமாக: நான்
தேவனுடைய மனுஷனானால், அக்கினி வா
னத்திலிருந்து இறங்கி, உன்னையும் உன் ஐம்
பதுபேரையும் பட்சிக்கக்கடவது என்றான்;
உடனே தேவனுடைய அக்கினி வானத்தி
லிருந்து இறங்கி, அவனையும் அவன் ஐம்பது
பேரையும் பட்சித்தது. திரும்பவும் மூன்றாந் 13
தரம் ஒரு தலைவனையும், அவனுடைய ஐம்பது
சேவகரையும் அனுப்பினான்; இந்த மூன்றாந்
தலைவன் ஏறிவந்தபோது, எலியாவுக்கு முன்
பாக முழங்காற்படியிட்டு, அவனை வேண்டிக்
கொண்டு: தேவனுடைய மனுஷனே, என்
னுடைய பிராணனும், [5]உமது அடியாராகிய
இந்த ஐம்பதுபேரின் பிராணனும் உமது பார்
வைக்கு அருமையாயிருப்பதாக. இதோ, 14
அக்கினி வானத்திலிருந்து இறங்கி, முந்தின
இரண்டு தலைவரையும், அவரவருடைய ஐம்
பது சேவகரையும் பட்சித்தது; இப்போதும்
என்னுடைய பிராணன் உமது பார்வைக்கு
அருமையாயிருப்பதாக என்றான். அப்பொ 15
ழுது கர்த்தருடைய தூதன் எலியாவை நோக்
கி: அவனோடேகூட இறங்கிப்போ; அவனுக்
குப் பயப்படாதே என்றான்; அப்படியே
அவன் எழுந்து அவனோடே கூட ராஜாவி
னிடத்திற்கு இறங்கிப்போய், அவனைப் 16
பார்த்து: இஸ்ரவேலிலே தேவன் இல்லை
யென்றா நீ எக்ரோனின் தேவனாகிய பாகால்
சேபூபிடத்தில் விசாரிக்க ஆட்களை அனுப்பி
னாய்; ஆதலால் நீ ஏறின கட்டிலிலிருந்து

[1] 2 சாமு. 8. 2
[2] 1 சாமு. 5. 10
[3] சகரி. 13. 4. மத். 3. 4
[4] லூக். 9. 54
[5] 1 சாமு. 26. 21. சங். 72. 14

இறங்காமல் சாகவே சாவாய் என்று **கர்த்தர்**
17 சொல்லுகிறார் என்றான். எலியா சொன்ன
**கர்த்தருடைய** வார்த்தையின்படியே அவன்
இறந்துபோனான்; அவனுக்குக் குமாரன் இல்
லாதபடியினால், அவன் ஸ்தானத்திலே யூதா
வின் ராஜாவாகிய யோசபாத்துடைய குமார
னான யோராமின் இரண்டாம் வருஷத்தில்
*யோராம் அவன் ஸ்தானத்தில் ராஜாவானான்.
18 அகசியாவின் மற்ற வர்த்தமானங்கள் இஸ்ர
வேல் ராஜாக்களின் நாளாகமப் புஸ்தகத்தில்
அல்லவோ எழுதியிருக்கிறது.

**2** **கர்த்தர்** எலியாவைச் சுழல்காற்றிலே பர
லோகத்திற்கு ஏடுத்துக்கொள்ளப் போகிற
போது, [1]எலியா எலிசாவோடேகூடக் கில்
2 காலிலிருந்து புறப்பட்டுப் போனான். எலி
யா எலிசாவை நோக்கி: [2]நீ இங்கே இரு;
**கர்த்தர்** என்னைப் பெத்தேல்மட்டும் போக
அனுப்புகிறார் என்றான். அதற்கு எலிசா:
நான் உம்மை விடுகிறதில்லை என்று **கர்த்த
ரின்** ஜீவனையும் [3]உம்முடைய ஜீவனையும்
கொண்டு சொல்லுகிறேன் என்றான்; அப்படி
யே இருவரும் பெத்தேலுக்குப் போனார்கள்.
3 அப்பொழுது பெத்தேலிலிருந்த தீர்க்கதரிசிக
ளின் புத்திரர் [4]எலிசாவினிடத்தில் வந்து:
இன்றைக்குக் **கர்த்தர்** உனக்குத் தலைமையா
யிருக்கிற உன் எஜமானை உன்னைவிட்டு எடுத்
துக்கொள்வார் என்பது உனக்குத் தெரியுமா
என்றார்கள். அதற்கு அவன்: எனக்குத் தெரி
4 யும், சும்மா இருங்கள் என்றான். பின்பு எலி
யா அவனை நோக்கி: எலிசாவே, நீ இங்கே
இரு; **கர்த்தர்** என்னை எரிகோமட்டும் போக
அனுப்புகிறார் என்றான். அதற்கு அவன்:
நான் உம்மை விடுகிறதில்லை என்று **கர்த்தரு
டைய** ஜீவனையும் உம்முடைய ஜீவனையும்
கொண்டு சொல்லுகிறேன் என்றான்; அப்படி
5 யே அவர்கள் எரிகோவுக்கு வந்தார்கள். எரி
கோவிலிருந்த தீர்க்கதரிசிகளின் புத்திரர் எலி
சாவினிடத்தில் வந்து: இன்றைக்குக் **கர்த்தர்**
உனக்குத் தலைமையாயிருக்கிற உன் எஜமானை
உன்னைவிட்டு எடுத்துக்கொள்வார் என்பது
உனக்குத் தெரியுமா என்று அவனைக் கேட்
டார்கள். அதற்கு அவன்: எனக்குத் தெரி
6 யும், சும்மா இருங்கள் என்றான். பின்பு
எலியா அவனை நோக்கி: நீ இங்கே இரு;
**கர்த்தர்** என்னை யோர்தானுக்கு அனுப்புகி
றார் என்றான். அதற்கு அவன்: நான் உம்மை
விடுகிறதில்லை என்று **கர்த்தருடைய** ஜீவனை
யும் உம்முடைய ஜீவனையும்கொண்டு சொல்
லுகிறேன் என்றான்; அப்படியே இருவரும்
7 போனார்கள். தீர்க்கதரிசிகளின் புத்திரரில்
ஐம்பதுபேர் போய், தூரத்திலே பார்த்துக்
கொண்டு நின்றார்கள்; அவர்கள் இருவரும்
8 யோர்தான் கரையிலே நின்றார்கள். அப்
பொழுது எலியா, தன் சால்வையை எடுத்து
முறுக்கித் தண்ணீரை அடித்தான்; [5]அது இரு
பக்கமாகப் பிரிந்தது; அவர்கள் இருவரும்
உலர்ந்த தரைவழியாய் அக்கரைக்குப் போனார்

* ஆகாபின்குமாரன். 8. 1. 2 நாளா. 22. 6
[1] ஆதி. 5. 24. 1 இரா. 19. 21
[2] ரூத். 1. 15, 16
[3] 1 சாமு. 1. 26
[4] 1 இரா. 20. 35
[5] யாத். 14. 21. யோசு. 3. 16
[6] 6. 17. சங். 104. 4
[7] 13. 14
[8] 8. வச.
[9] 7. வச.
[10] 1 இரா. 18. 12. எசே. 8. 3. அப். 8. 39

கள். அவர்கள் அக்கரைப்பட்டபின்பு, எலியா 9
எலிசாவை நோக்கி: நான் உன்னைவிட்டு எடுத்
துக்கொள்ளப்படுமுன்னே நான் உனக்குச்
செய்யவேண்டியது என்ன, கேள் என்றான்.
அதற்கு எலிசா: உம்மிடத்திலுள்ள ஆவியின்
வரம் எனக்கு இரட்டிப்பாய்க் கிடைக்கும்படி
வேண்டுகிறேன் என்றான். அதற்கு அவன்: 10
அரிதான காரியத்தைக் கேட்டாய்; உன்னை
விட்டு நான் எடுத்துக்கொள்ளப்படுகையில்
என்னை நீ கண்டால் உனக்குக் கிடைக்
கும்; இல்லாவிட்டால் கிடையாது என்றான்.
அவர்கள் பேசிக்கொண்டு நடந்துபோகையில், 11
இதோ, அக்கினி ரதமும் [6]அக்கினிக் குதிரை
களும் அவர்கள் நடுவாக வந்து இருவரையும்
பிரித்தது; எலியா சுழல்காற்றிலே பரலோகத்
திற்கு ஏறிப்போனான். அதை எலிசா கண்டு: 12
என் தகப்பனே, [7]என் தகப்பனே, இஸ்ரவே
லுக்கு இரதமும் குதிரைவீரருமாய் இருந்த
வரே என்று புலம்பினான்; அவனை அப்புறம்
காணாமல், தன் வஸ்திரத்தைப் பிடித்து இர
ண்டு துண்டாகக் கிழித்தான். பின்பு அவன் 13
எலியாவின் மேலிருந்து கீழே விழுந்த சால்
வையை எடுத்துத் திரும்பிப்போய், யோர்தா
னின் கரையிலே நின்று, எலியாவின் மேலி 14
ருந்து கீழே விழுந்த சால்வையைப் பிடித்து:
எலியாவின்தேவனாகிய **கர்த்தர்** எங்கே என்று
சொல்லித் தண்ணீரை அடித்தான்; தண்ணீ
ரை அடித்தவுடனே [8]அது இருபக்கமாகப்
பிரிந்ததினால் எலிசா இக்கரைப்பட்டான்.
எரிகோவில் பார்த்துக்கொண்டு நின்ற தீர்க்க 15
தரிசிகளின் புத்திரர் [9]அவனைக் கண்டவுட
னே, எலியாவின் ஆவி எலிசாவின்மேல்
இறங்கியிருக்கிறது என்று சொல்லி, அவ
னுக்கு எதிர்கொண்டுபோய்த் தரைமட்டும்
குனிந்து அவனை வணங்கி: இதோ, உமது 16
அடியாரோடே ஐம்பது பலவான்கள் இருக்
கிறார்கள்; அவர்கள் போய் உம்முடைய எஜ
மானைத் தேடும்படி உத்தரவுகொடும்; ஒரு
வேளை **கர்த்தருடைய** ஆவியானவர் அவரை
எடுத்து, [10]பர்வதங்களில்ஒன்றின்மேலாகிலும்,
பள்ளத்தாக்குகளில் ஒன்றிலாகிலும் கொண்டு
போய் வைத்திருப்பார் என்றார்கள். அதற்கு
அவன்: அவர்களை அனுப்பவேண்டாம் என்
றான். அவன் சலித்துப்போகுமட்டும் அவர் 17
கள் அவனை அலட்டிக்கொண்டிருந்தபடியால்
அனுப்புங்கள் என்றான்; அப்படியே ஐம்பது
பேரை அனுப்பினார்கள்; அவர்கள் மூன்று
நாள் அவனைத் தேடியும் காணாமல், எரிகோ 18
விலிருந்த அவனிடத்திற்குத் திரும்பிவந்த
போது, அவன் இவர்களைப் பார்த்து: போக
வேண்டாம் என்று நான் உங்களுக்குச் சொல்
லவில்லையா என்றான். பின்பு அந்தப் பட் 19
டணத்தின் மனுஷர் எலிசாவை நோக்கி:
இதோ, எங்கள் ஆண்டவன் காண்கிறபடி இந்
தப் பட்டணம் குடியிருப்புக்கு நல்லது; தண்
ணீரோ கெட்டது, நிலமும் பாழ்நிலம் என்
றார்கள். அப்பொழுது அவன்: ஒரு புதுத் 20

தோண்டியை எடுத்து, அதிலே உப்புப்போ
ட்டுக் கொண்டுவாருங்கள் என்றான்; அதை
21 அவனிடத்தில் கொண்டுவந்தபோது, அவன்
நீரூற்றண்டைக்குப் போய், [1]உப்பை அதிலே
போட்டு: இந்தத் தண்ணீரை ஆரோக்கியமாக்
கினேன்; இனி இதினால் சாவும் வராது, நில
ப்பாழும் இராது என்று **கர்த்தர்** சொல்லுகி
22 றார் என்றான். எலிசா சொன்ன வார்த்தை
யின்படியே அந்தத் தண்ணீர் இந்நாள்வரைக்
கும் இருக்கிறபடி ஆரோக்கியமாயிற்று.
23 அவன் அவ்விடத்தைவிட்டுப் பெத்தேலுக்
குப் போனான்; அவன் வழிநடந்துபோகை
யில் பிள்ளைகள் பட்டணத்திலிருந்து வந்து,
அவனைப் பார்த்து: மொட்டைத்தலையா ஏறிப்
போ, மொட்டைத்தலையா ஏறிப்போ என்று
24 சொல்லி நிந்தித்தார்கள். அப்பொழுது அவன்
திரும்பி அவர்களைப் பார்த்து: **கர்த்தரின்** நாம
த்திலே அவர்களைச் சபித்தான்; உடனே காட்
டிலிருந்து இரண்டு கரடிகள் புறப்பட்டுவந்து,
அவர்களில் நாற்பத்திரண்டு பிள்ளைகளைப்
25 பீறிப்போட்டது. அவன் அவ்விடத்தைவிட்
டுக் கர்மேல் பர்வதத்திற்குப் போய், அங்கே
யிருந்து சமாரியாவுக்குத் திரும்பினான்.

3 யூதாவின் ராஜாவாகிய யோசபாத்தின் பதி
னெட்டாம் வருஷத்தில் ஆகாபின் குமாரனா
கிய யோராம் [2]சமாரியாவிலே இஸ்ரவேலின்
மேல் ராஜாவாகிப் பன்னிரண்டு வருஷம் ரா
2 ஜ்யபாரம்பண்ணி, **கர்த்தரின்** பார்வைக்குப்
பொல்லாப்பானதைச் செய்தான்; ஆனாலும்
தன் தகப்பனைப்போலும் தன் தாயைப்போ
லும் அல்ல; தன் தகப்பன் பண்ணுவித்த
3 [3]பாகாலின் சிலையை அகற்றிவிட்டான். என்
றாலும் இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்
ணின நேபாத்தின் குமாரனாகிய யெரொபெ
யாமின் [4]பாவங்களை அவன் விட்டு நீங்காமல்
அவைகளிலே சிக்கிக்கொண்டிருந்தான்.
4 மோவாபின் ராஜாவாகிய மேசா ஆடுமாடு
கள் பெருத்தவனாயிருந்து, இஸ்ரவேலின்
ராஜாவுக்கு இலட்சம் ஆட்டுக் குட்டிகளையும்,
[5]இலட்சம் குறும்பாட்டுக் கடாக்களையும் செ
5 லுத்திவந்தான். ஆகாப் இறந்துபோனபின்
மோவாபின் ராஜா [6]இஸ்ரவேலின் ராஜாவுக்கு
6 விரோதமாய்க் கலகம்பண்ணினான். அக்கா
லத்திலே யோராம் என்னும் ராஜா சமாரியா
விலிருந்து புறப்பட்டு, இஸ்ரவேலையெல்லாம்
7 இலக்கம் பார்த்துப் போய்: மோவாபின்
ராஜா எனக்கு விரோதமாய்க் கலகம்பண்ணி
னான்; மோவாபியர்மேல் யுத்தம்பண்ண, என்
னோடேகூட வருகிறீரா என்று யூதாவின்
ராஜாவாகிய யோசபாத்தைக் கேட்டனுப்பின
தற்கு; அவன் நான் வருகிறேன்; நான்தான்
நீர், [7]என்னுடைய ஜனங்கள் உம்முடைய
ஜனங்கள், என்னுடைய குதிரைகள் உம்மு
8 டைய குதிரைகள் என்றான். எந்த வழி
யாய்ப் போவோம் என்று கேட்டான். அதற்கு
அவன்: ஏதோம் வனாந்தரவழியாய் என்றான்.
9 அப்படியே இஸ்ரவேலின் ராஜாவும் யூதா
வின் ராஜாவும் ஏதோமின் ராஜாவும் சேர்ந்து
போனார்கள்; ஆனாலும் அவர்கள் ஏழுநாள்
சுற்றித்திரிந்தபோது, அவர்களைப் பின்செல்
லுகிற இராணுவத்துக்கும் மிருகஜீவன்களுக்
கும் தண்ணீர் இல்லாமற்போயிற்று. அப் 10
பொழுது இஸ்ரவேலின் ராஜா: ஐயோ, இந்த
மூன்று ராஜாக்களையும் **கர்த்தர்** மோவாபிய
ரின் கையில் ஒப்புக்கொடுக்க வரவழைத்
தாரே என்றான். அப்பொழுது யோசபாத்: 11
[8]நாம் **கர்த்தரிடத்தில்** விசாரிக்கும்படி **கர்த்த
ருடைய** தீர்க்கதரிசி ஒருவரும் இங்கே இல்
லையா என்று கேட்டதற்கு, எலியாவின் கை
களுக்குத் தண்ணீர் வார்த்த சாப்பாத்தின் குமா
ரனாகிய எலிசா இங்கே இருக்கிறான் என்று
இஸ்ரவேல் ராஜாவின் ஊழியக்காரரில் ஒரு
வன் மறுமொழியாகச் சொன்னான். அப் 12
பொழுது யோசபாத் அவனை நோக்கி: **கர்த்த
ருடைய** வார்த்தை அவனிடத்தில் இருக்கிறது
என்றான்; இஸ்ரவேலின் ராஜாவும் யோச
பாத்தும் ஏதோமின் ராஜாவும் [9]அவனிடத்தில்
போனார்கள். எலிசா இஸ்ரவேலின் ராஜா 13
வைப் பார்த்து: எனக்கும் உமக்கும் என்ன?
[10]நீர் உம்முடைய தகப்பனின் தீர்க்கதரிசிக
ளிடத்திலும், உம்முடைய தாயாரின் தீர்க்க
தரிசிகளிடத்திலும் போம் என்றான். அதற்கு
இஸ்ரவேலின் ராஜா: அப்படியல்ல, **கர்த்தர்**
இந்த மூன்று ராஜாக்களையும் மோவாபியரின்
கையில் ஒப்புக்கொடுக்கிறதற்கு வரவழைத்
தார் என்றான். அதற்கு எலிசா: நான் யூதா 14
வின் ராஜாவாகிய யோசபாத்தின் முகத்தைப்
பாராதிருந்தால் நான் உம்மை நோக்கவுமாட்
டேன், உம்மைப் பார்க்கவுமாட்டேன் என்று
சேனைகளுடைய **கர்த்தருக்கு** முன்நிற்கிற
நான் [11]அவருடைய ஜீவனைக்கொண்டு சொல்
லுகிறேன். இப்போதும் ஒரு சுரமண்டல 15
வாத்தியக்காரனை [12]என்னிடத்தில் கொண்டு
வாருங்கள் என்றான்; சுரமண்டல வாத்தியக்
காரன் வந்து வாசித்தபோது **கர்த்தருடைய**
கரம் [13]அவன்மேல் இறங்கி, அவன்: **கர்த்தர்** 16
உரைக்கிறது என்னவென்றால், இந்தப் பள்
ளத்தாக்கிலே எங்கும் வாய்க்கால்களை வெட்
டுங்கள். நீங்கள் காற்றையும் காணமாட்டீர் 17
கள், மழையையும் காணமாட்டீர்கள்; ஆனா
லும் நீங்களும் உங்கள் ஆடுமாடுகளும் உங்கள்
மிருக ஜீவன்களும் குடிக்கும்படிக்கு, இந்தப்
பள்ளத்தாக்கு தண்ணீரால் நிரப்பப்படும்
என்று **கர்த்தர்** சொல்லுகிறார். இது **கர்த்த** 18
**ரின்** பார்வைக்கு அற்பகாரியம்; மோவாபி
யரையும் உங்கள் கையிலே ஒப்புக்கொடுப்பார்.
நீங்கள் சகல கோட்டைகளையும் சகல சிறந்த 19
பட்டணங்களையும் தகர்த்து, நல்ல மரங்களை
யெல்லாம் வெட்டி, நீரூற்றுகளையெல்லாம்
தூர்த்து, நல்ல நிலத்தையெல்லாம் கல்மேடுக
ளாக்கிக் கெடுப்பீர்கள் என்றான். மறுநாள் 20
காலமே பலிசெலுத்தப்படும் நேரத்தில், [14]இ
தோ, தண்ணீர் ஏதோம் தேசவழியாய் வந்ததி
னால் தேசம் தண்ணீரால் நிரம்பிற்று. தங்க 21

[1] யாத். 15. 25. பேர். 9. 6
[2] 1. 17
[3] 2 இரா. 16. 31, 32
[4] 1 இரா. 12. 28-32
[5] ஏசா. 16. 1
[6] 1. 1
[7] 1 இரா. 22. 4
[8] 1 இரா. 22. 7
[9] 2. 25
[10] மத். 10. 14. லூக். 1. 15. 1 இரா. 18. 19. எசே. 14. 8
[11] 1 இரா. 17. 1
[12] 1 சாமு. 10. 5
[13] எசே. 1. 3; 8. 14
[14] யாத். 29. 39, 40

ளோடு யுத்தம்பண்ண ராஜாக்கள் வருகிறதை
மோவாபியரெல்லாரும் கேட்டபோது, அவர்
கள் ஆயுதம் தரிக்கத்தக்க வயதுள்ளவர்களையும்,
அதற்கு மேல்தரமானவர்கள் எல்லாரையும்
கூட்டி அழைத்துக்கொண்டுவந்து எல்லை
22 யிலே நின்றார்கள். மோவாபியர் அதிகாலமே
எழுந்தபோது சூரியன் *தண்ணீரின்மேல் பிர
காசித்ததினால் அந்தத் தண்ணீர் அவர்களுக்கு
இரத்தம்போல் சிவப்பாய்க் காணப்பட்டது.
23 அதினால் அவர்கள்: இது இரத்தம், அந்த
ராஜாக்கள் தங்களைத் தாங்களே ஒருவரை ஒரு
வர் வெட்டிக்கொண்டு மாண்டுபோனார்கள்;
ஆதலால் மோவாபியரே, கொள்ளைக்கு
24 வாருங்கள் என்று சொன்னார்கள். அவர்கள்
இஸ்ரவேலின் பாளயத்திற்கு வந்தபோதோ
வெனில், இஸ்ரவேலர் எழும்பி, மோவாபிய
ரைத் தங்களுக்கு முன்பாக ஓடிப்போகத்தக்க
தாய் முறிய அடித்து, அவர்கள் தேசத்திற்குள்
புகுந்து, அங்கேயும் மோவாபியரை முறிய
25 அடித்து, பட்டணங்களை இடித்து, சகல
நல்ல நிலத்திலும் கல்லெறிந்து நிரப்பி, நீரூற்
றுகளையெல்லாம் தூர்த்து, நல்ல மரங்களை
யெல்லாம் வெட்டிப்போட்டார்கள்; [1]கிராரே
சேத்திலே மாத்திரம் அதின் மதில்கள் இன்
னும் இடிபடாதிருக்கிறபோது, கவண்காரர்
அதைச் சுற்றிக்கொண்டு அதையும்சேதமாக்கி
26 னார்கள். யுத்தம் மும்முரமாகிறதென்று மோ
வாபியரின் ராஜா கண்டபோது, அவன்
ஏதோமின் ராஜாவின்மேல் வலுமையாய் விழு
கிறதற்குப் பட்டயம் உருவுகிற எழுநூறுபே
ரைக் கூட்டிக்கொண்டுபோனான்; ஆனாலும்
27 அவர்களாலே கூடாமற்போயிற்று. அப்
பொழுது அவன் தன் ஸ்தானத்தில் ராஜா
வாகப்போகிற [2]தன் ஜேஷ்டபுத்திரனைப் பிடி
த்து, அலங்கத்தின்மேல் அவனைச் சர்வாங்க
தகனமாக பலியிட்டான்; அப்பொழுது இஸ்ர
வேலர்மேல் கடுங்கோபம் மூண்டதினால்,
அவர்கள் அவனைவிட்டுப் புறப்பட்டு, [3]தங்கள்
தேசத்திற்குத் திரும்பிவிட்டார்கள்.

4 தீர்க்கதரிசிகளுடைய [4]புத்திரரில் ஒருவ
னுக்கு மனைவியாயிருந்த ஒரு ஸ்திரீ எலிசா
வைப் பார்த்து: உமது அடியானாகிய என்
புருஷன் இறந்துபோனான்; உமது அடியான்
கர்த்தருக்குப் பயந்து நடந்தான் என்பதை
அறிவீர்; [5]கடன் கொடுத்தவன் இப்போது
என் இரண்டு குமாரரையும் தனக்கு அடிமைக
2 ளாக்கிக்கொள்ள வந்தான் என்றாள். எலிசா
அவளை நோக்கி: நான் உனக்கு என்ன
செய்யவேண்டும்? வீட்டில் உன்னிடத்தில்
என்ன இருக்கிறது சொல் என்றான். அதற்கு
அவள்: ஒரு குடம் எண்ணெய் அல்லாமல்
உமது அடியாளுடைய வீட்டில் வேறொன்
3 றும் இல்லை என்றாள். அப்பொழுது அவன்:
நீ போய், உன்னுடைய அயல்வீட்டுக்காரர்
எல்லாரிடத்திலும் அநேகம் வெறும்பாத்திரங்
4 களைக் கேட்டுவாங்கி, உள்ளே போய், உன்
பிள்ளைகளுடன் உள்ளே நின்று கதவைப்
பூட்டி, அந்தப் பாத்திரங்கள் எல்லாவற்றிலும்
வார்த்து, நிறைந்ததை ஒரு பக்கத்தில் வை
என்றான். அவள் அவனிடத்திலிருந்து 5
போய், தன் பிள்ளைகளுடன் கதவைப் பூட்டிக்
கொண்டு, இவர்கள் பாத்திரங்களை அவளிடத்
தில் கொடுக்க, அவள் அவைகளில் வார்த்தாள்.
அந்தப் பாத்திரங்கள் நிறைந்தபின், அவள் 6
தன் மகன் ஒருவனை நோக்கி: இன்னும் ஒரு
பாத்திரம் கொண்டுவா என்றாள். அதற்கு
அவன்: வேறே பாத்திரம் இல்லை என்றான்;
அப்பொழுது எண்ணெய் நின்றுபோயிற்று.
அவள் போய் தேவனுடைய மனுஷனுக்கு 7
அதை அறிவித்தாள். அப்பொழுது அவன்:
நீ போய் அந்த எண்ணெயை விற்று, உன்
கடனைத் தீர்த்து, மீந்ததைக்கொண்டு நீயும்
உன் பிள்ளைகளும் ஜீவனம் பண்ணுங்கள்
என்றான்.

பின்பு ஒருநாள் எலிசா சூனேமுக்குப் 8
போயிருக்கும்போது, அங்கேயிருந்த கனம்
பொருந்திய ஒரு ஸ்திரீ அவனைப் போஜனம்
பண்ண வருந்திக் கேட்டுக்கொண்டாள்; அப்
படியே அவன் பயணப்பட்டு வருகிறபோ
தெல்லாம் போஜனம் பண்ணும்படி அங்கே
வந்து தங்குவான். அவள் தன் புருஷனை 9
நோக்கி: இதோ, நம்மிடத்தில் எப்போதும்
வந்துபோகிற தேவனுடைய மனுஷனாகிய
இவர் பரிசுத்தவான் என்று காண்கிறேன்.
நாம் மெத்தையின்மேல் ஒரு சிறிய அறை 10
வீட்டைக் கட்டி, அதில் அவருக்கு ஒரு கட்
டிலையும், மேசையையும், நாற்காலியையும்,
குத்துவிளக்கையும் வைப்போம்; அவர் நம்
மிடத்தில் வரும்போது அங்கே தங்கலாம்
என்றாள். ஒருநாள் அவன் அங்கே வந்து, 11
அந்த அறைவீட்டிலே தங்கி, அங்கே படுத்துக்
கொண்டிருந்தான். அவன் தன் வேலைக்கார 12
னாகிய கேயாசை நோக்கி: இந்தச் சூனே
மியாளை அழைத்துக்கொண்டுவா என்றான்;
அவளை அழைத்துக்கொண்டு வந்தான்; அவள்
அவனுக்கு முன்பாக நின்றாள். அவன் கே 13
யாசியைப் பார்த்து: இதோ, இப்படிப்பட்ட
சகல சலக்கரணையோடும் எங்களை விசாரித்து
வருகிறாயே, உனக்கு நான் என்ன செய்ய
வேண்டும்; ராஜாவினிடத்திலாவது சேனா
பதியினிடத்திலாவது உனக்காக நான் பேச
வேண்டிய காரியம் உண்டோ என்று அவ
ளைக் கேள் என்றான். அதற்கு அவள்: என்
ஜனத்தின் நடுவே நான் சுகமாய்க் குடியிருக்
கிறேன் என்றாள். அவளுக்குச் செய்ய 14
வேண்டியது என்னவென்று கேயாசியை
அவன் கேட்டதற்கு; அவன், அவளுக்குப்
பிள்ளை இல்லை, அவள் புருஷனும் பெரிய
வயதுள்ளவன் என்றான். அப்பொழுது 15
அவன்: அவளைக் கூப்பிடு என்றான்; அவளைக்
கூப்பிட்டபோது, அவள் வந்து வாசற்படி
யிலே நின்றாள். அப்பொழுது அவன்: [6]ஒரு 16
பிராண உற்பத்திகாலத் திட்டத்திலே ஒரு
குமாரனை அணைத்துக்கொண்டிருப்பாய் என்

* அங்கே தோன்றின
[1] ஏசா. 16. 7, 11
[2] ஆமோ. 2. 1
[3] 8. 20
[4] 1 இரா. 20. 35
[5] லேவி. 25. 39. மத். 18. 25
[6] ஆதி. 18. 10, 14

ளுன், அதற்கு அவள்: ஏது? தேவனுடைய
மனுஷனாகிய என் ஆண்டவனே, உமது
அடியாளுக்கு [1]அபத்தம் சொல்லவேண்டாம்
17 என்றாள். அந்த ஸ்திரீ கர்ப்பந்தரித்து, எலிசா
தன்னோடே சொன்னபடி, ஒரு உற்பத்தி
காலத்திட்டத்தில் ஒரு குமாரனைப் பெற்றாள்.
18 அந்தப் பிள்ளை வளர்ந்தான், ஒருநாள் அவன்
அறுப்பறுக்கிறவர்களிடத்திலிருந்த தன் தகப்
19 பனண்டைக்குப் போயிருக்கும்போது, தன்
தகப்பனைப் பார்த்து: என் தலை நோகிறது,
என் தலை நோகிறது என்றான்; அப்பொழுது
அவன் வேலைக்காரனிடத்தில், இவனை இவன்
தாயினிடத்தில் எடுத்துக்கொண்டுபோய் விடு
20 என்றான். அவனை எடுத்து, அவன் தாயி
னிடத்தில் கொண்டுபோனபோது, அவன்
மத்தியானமட்டும் அவள் மடியில் இருந்து
21 செத்துப்போனான். அப்பொழுது அவள்
ஏறிப்போய், அவனைத் தேவனுடைய மனு
ஷன் கட்டிலின்மேல் வைத்து; அவன் வைக்
கப்பட்ட அறையின் கதவைப் பூட்டிக்கொ
22 ண்டுபோய், தன் புருஷனிடத்தில் ஆள்
அனுப்பி: நான் சீக்கிரமாய் தேவனுடைய
மனுஷன் இருக்கும் இடமட்டும் போய்வரும்
படிக்கு, வேலைக்காரரில் ஒருவனையும் ஒரு
கழுதையையும் எனக்கு அனுப்பவேண்டும்
23 என்று சொல்லச்சொன்னாள். அப்பொழுது
அவன்: இது அமாவாசியும் அல்ல, ஓய்வு
நாளும் அல்லவே; நீ இன்றைக்கு அவரிடத்
துக்குப் போகவேண்டியது என்ன என்று
கேட்கச்சொன்னான். அதற்கு அவள்: எல்
லாம் *சரிதான், நான் போகவேண்டியிருக்
24 கிறது என்று சொல்லியனுப்பி, கழுதை
யின்மேல் சேணம் வைத்து ஏறி, தன் வே
லைக்காரனை நோக்கி: இதை ஓட்டிக்கொண்டு
போ; நான் உனக்குச் சொன்னாலொழிய
போகிற வழியில் எங்கும் ஓட்டத்தை நிறுத்
25 தாதே என்று சொல்லிப் புறப்பட்டு, கர்மேல்
[2]பர்வதத்திலிருக்கிற தேவனுடைய மனுஷ
னிடத்திற்குப் போனாள்; தேவனுடைய மனு
ஷன் தூரத்திலே அவளை வரக்கண்டு, தன்
வேலைக்காரனாகிய கேயாசியைப் பார்த்து,
26 அதோ சூனேமியாள் வருகிறாள். நீ அவ
ளுக்கு எதிர்கொண்டு ஓடி, நீ சுகமாயிருக்கி
றாயா? உன் புருஷன் சுகமாயிருக்கிறானா?
அந்தப் பிள்ளை சுகமாயிருக்கிறதா என்று
அவளிடத்தில் கேள் என்றான். அவள்: சுகந்
27 தான் என்று சொல்லி, பர்வதத்தி லிருக்
கிற தேவனுடைய மனுஷனிடத்தில் வந்து,
[3]அவன் காலைப் பிடித்துக்கொண்டாள்; அப்
பொழுது கேயாசி அவளை விலக்கிவிட வந்
தான்; தேவனுடைய மனுஷன்: அவளைத்
தடுக்காதே; அவள் †ஆத்துமா துக்கமாயிருக்
கிறது; கர்த்தர் அதை எனக்கு அறிவியாமல்
28 மறைத்துவைத்தார் என்றான். அப்பொழுது
அவள், நான் என் ஆண்டவனிடத்தில் ஒரு
குமாரனை வேண்டும் என்று கேட்டதுண்டா?
[4]எனக்கு அபத்தம் சொல்லவேண்டாம் என்று
நான் சொல்லவில்லையா என்றாள். அப் 29
பொழுது அவன் கேயாசியைப் பார்த்து: நீ
உன் இடையைக் கட்டிக்கொண்டு, [5]என்
தடியை உன் கையில் பிடித்துக்கொண்டு, வழி
யில் ஒருவனைச் சந்தித்தாலும் அவனை வின
வாமலும், உன்னை ஒருவன் வினவினாலும்
அவனுக்கு மறுமொழி சொல்லாமலும் போய்,
[6]என் தடியை அந்தப் பிள்ளையின் முகத்தின்
மேல் வை என்றான். பிள்ளையின் தாயோ: 30
நான் உம்மை விடுகிறதில்லை என்று கர்த்த
ரின் ஜீவனையும் உம்முடைய ஜீவனையும்
கொண்டு சொல்லுகிறேன் என்றாள்; அப்
பொழுது அவன் எழுந்திருந்து அவள் பின்
னே போனான். கேயாசி அவர்களுக்கு முன் 31
னே போய், அந்தத் தடியைப் பிள்ளையின்
முகத்தின்மேல் வைத்தான்; ஆனாலும் சத்த
மும் இல்லை, உணர்ச்சியும் இல்லை; ஆகையால்
அவன் திரும்பி அவனுக்கு எதிர்கொண்டு
வந்து: [7]பிள்ளை விழிக்கவில்லை என்று அவ
னுக்கு அறிவித்தான். எலிசா வீட்டிற்குள் 32
வந்தபோது, இதோ, அந்தப் பிள்ளை அவன்
கட்டிலின்மேல் செத்துக்கிடந்தான். உள் 33
ளே போய்த் தங்கள் இருவருக்கும் பின்னாக
அவன் கதவைப் பூட்டி, [8]கர்த்தரை நோக்கி
வேண்டுதல்செய்து, கிட்டேபோய், தன் வாய் 34
பிள்ளையின் வாயின்மேலும், தன் கண்கள்
அவன் கண்களின்மேலும், தன் உள்ளங்
கைகள் அவன் உள்ளங் கைகளின்மேலும்
படும்படியாக [9]அவன்மேல் குப்புறப் படுத்துக்
கொண்டான்; அப்பொழுது பிள்ளையின் உடல்
அனல்கொண்டது. அவன் எழுந்து, அறை 35
வீட்டில் இங்கும் அங்கும் உலாவி, திரும்பக்
கிட்டப்போய் அவன்மேல் குப்புறப்படுத்தான்;
[10]அப்பொழுது அந்தப் பிள்ளை ஏழுதரம் தும்
மித் தன் கண்களைத் திறந்தான். அப்பொழுது 36
அவன்: கேயாசியைக் கூப்பிட்டு, அந்தச்
சூனேமியாளை அழைத்துக்கொண்டுவா என்
றான்; அவளை அழைத்துக்கொண்டு வந்தான்;
அவள் அவனிடத்தில் வந்தபோது; அவன்,
உன் குமாரனை எடுத்துக்கொண்டுபோ என்
றான். அப்பொழுது அவள் உள்ளேபோய், 37
அவன் பாதத்திலே விழுந்து, தரைமட்டும்
பணிந்து, [11]தன் குமாரனை எடுத்துக்கொண்டு
வெளியே போனாள்.

எலிசா கில்காலுக்குத் திரும்பிப்போய் 38
இருக்கையில், தேசத்திலே பஞ்சம் உண்டா
யிற்று; [12]தீர்க்கதரிசிகளின் புத்திரர், அவனுக்கு
முன்பாக உட்கார்ந்திருந்தார்கள்; அவன் தன்
வேலைக்காரனை நோக்கி: நீ பெரிய பானையை
அடுப்பிலே வைத்துத் தீர்க்கதரிசிகளின் புத்தி
ரருக்குக் கூழ்காய்ச்சு என்றான். ஒருவன் 39
கீரைகளைப் பறிக்க வெளியிலே போய், ஒரு
பேய்க்கொம்மட்டிக்கொடியைக்கண்டு, அதன்
காய்களை மடிநிறைய அறுத்துவந்து, அவை
களை அரிந்து கூழ்ப்பானையிலே போட்டான்;
அது இன்னதென்று அவர்களுக்குத் தெரியா
திருந்தது. சாப்பிட அதை ஜனங்களுக்கு 40

[1] 28. வச.
* சமாதானம் = நன்மையாய் முடியும்
[2] 2. 25
[3] மத். 28. 9
† மனங்கசந்திருக்கிறது. 1 சாமு. 1. 10
[4] 16. வச.
[5] 1 இரா. 18. 46. லூக். 10. 4
[6] யாத். 7. 19. அப். 19. 12
[7] யோ. 11. 11
[8] 1 இரா. 17. 20. மத். 6. 6
[9] 1 இரா. 17. 21. அப். 20. 10
[10] 1 இரா. 17. 21. அப். 20. 10
[11] 1 இரா. 17. 23. எபி. 11. 35
[12] 2. 1, 3; 8. 1. லூக். 10. 39. அப். 22. 3

வார்த்தார்கள்; அவர்கள் அந்தக் கூழில் எடுத்
துச் சாப்பிடுகிறபோது, அதைச் சாப்பிடக்
கூடாமல்: தேவனுடைய மனுஷனே, பானை
யில்[1]சாவு இருக்கிறது என்று சத்தமிட்டார்கள்.
41 அப்பொழுது அவன், மாவைக் கொண்டுவரச்
சொல்லி, அதைப் பானையிலே போட்டு, ஜன
ங்கள் சாப்பிடும்படி அவர்களுக்கு வார் என்
றான்; அப்புறம் பானையிலே *தோஷம் இல்
லாமற்போயிற்று.
42 பின்பு பாகால்சலீஷாவிலிருந்து [2]ஒரு மனு
ஷன் தேவனுடைய மனுஷனுக்கு முதற்பல
னான வாற்கோதுமையின் இருபது அப்பங்
களையும் தாள் கதிர்களையும் கொண்டுவந்தான்;
அப்பொழுது அவன்: ஜனங்களுக்குச் சாப்பி
43 டக் கொடு என்றான். அதற்கு அவனுடைய
பணிவிடைக்காரன்: [3]இதை நான் நூறுபே
ருக்கு முன்வைப்பது எப்படி என்றான்.
அதற்கு அவன்: அதை ஜனங்களுக்குச் சாப்
பிடக் கொடு; சாப்பிட்டபிற்பாடு இன்னும்
மீதியுண்டாயிருக்கும் என்று கர்த்தர் சொல்
44 லுகிறார் என்றான். அப்பொழுது அவர்களு
க்கு முன்பாக அதை வைத்தான்; கர்த்தரு
டைய வார்த்தையின்படியே அவர்கள் சாப்பிட்
டதுமன்றி [4]மீதியும் இருந்தது.

**5** சீரிய ராஜாவின் படைத்தலைவனாகிய [5]நாக
மான் என்பவன் தன் ஆண்டவனிடத்தில் பெ
ரிய மனுஷனும் [6]எண்ணிக்கை யுள்ளவனு
மாயிருந்தான்; அவனைக்கொண்டு கர்த்தர் சீரி
யாவுக்கு †இரட்சிப்பைக் கட்டளையிட்டார்;
மகா பராக்கிரமசாலியாகிய அவனோ குஷ்ட
2 ரோகியாயிருந்தான். சீரியாவிலிருந்து தண்
டுகள் புறப்பட்டு, இஸ்ரவேல்தேசத்திலிருந்து
ஒரு சிறு பெண்ணைச் சிறைபிடித்துக்கொண்டு
வந்திருந்தார்கள்; அவள் நாகமானின் மனைவிக்
குப் பணிவிடை செய்துகொண்டிருந்தாள்.
3 அவள் தன் நாச்சியாளைப் பார்த்து: என் ஆண்
டவன் சமாரியாவிலிருக்கிற தீர்க்கதரிசியினி
டத்தில் போவாரானால் நலமாயிருக்கும்; அவர்
இவருடைய குஷ்டரோகத்தை நீக்கிவிடுவார்
4 என்றாள். அப்பொழுது அவன் போய், இஸ்ர
வேல் தேசத்துப் பெண் இன்ன இன்னபிர
காரமாய்ச் சொல்லுகிறாள் என்று தன் ஆண்
5 டவனிடத்தில் அறிவித்தான். அப்பொழுது
சீரியாவின் ராஜா: நல்லது போகலாம், இஸ்ர
வேலின் ராஜாவுக்கு நிருபம் தருகிறேன் என்
றான்; அப்படியே அவன் தன் கையிலே பத்
துத் தாலந்து வெள்ளியையும், [7]ஆறாயிரம்
சேக்கல் நிறை பொன்னையும், பத்து மாற்று
வஸ்திரங்களையும் எடுத்துக்கொண்டுபோய்,
6 இஸ்ரவேலின் ராஜாவிடத்தில் அந்த நிருபத்
தைக் கொடுத்தான். அதிலே: இந்த நிருபத்தை
உம்மிடத்தில் என் ஊழியக்காரனாகிய நாக
மான் கொண்டுவருவான்; நீர் அவன் குஷ்ட
ரோகத்தை நீக்கிவிட அவனை உம்மிடத்தில்
அனுப்பியிருக்கிறேன் என்று எழுதியிருந்தது.
7 இஸ்ரவேலின் ராஜா அந்த நிருபத்தை வாசித்
தபோது, அவன் தன் வஸ்திரங்களைக் கிழித்
துக்கொண்டு: ஒரு மனுஷனை அவன் குஷ்ட
ரோகத்தினின்று நீக்கிவிடவேண்டும் என்று,
அவன் என்னிடத்தில் நிருபம் அனுப்புகிற
தற்கு, கொல்லவும் உயிர்ப்பிக்கவும் [8]நான் தே
வனா? இவன் என்னை விரோதிக்க சமயம் தே
டுகிறான் என்பதைச் சிந்தித்துப்பாருங்கள்
என்றான். இஸ்ரவேலின் ராஜா தன் வஸ் 8
திரங்களைக் கிழித்துக்கொண்ட செய்தியை
தேவனுடைய மனுஷனாகிய எலிசா கேட்ட
போது, அவன்: நீர் உம்முடைய வஸ்திரங்க
ளைக் கிழித்துக்கொள்வானேன்? அவன் என்
னிடத்தில் வந்து, இஸ்ரவேலிலே தீர்க்கதரிசி
உண்டென்பதைஅறிந்துகொள்ளட்டும்என்று
ராஜாவுக்குச் சொல்லியனுப்பினான். அப்படி 9
யே நாகமான் தன் குதிரைகளோடும் தன் இர
தத்தோடும் வந்து எலிசாவின் வாசற்படியிலே
நின்றான். அப்பொழுது எலிசா: அவனிடத் 10
தில் ஆள் அனுப்பி, நீ போய், [9]யோர்தானில்
ஏழுதரம் ஸ்நானம்பண்ணு; அப்பொழுது உன்
மாம்சம் மாறி, நீ சுத்தமாவாய் என்று சொல்
லச்சொன்னான். அதற்கு நாகமான் கடுங்கோ 11
பங்கொண்டு, புறப்பட்டுப்போய்: அவன் வெ
ளியே வந்து நின்று, தன் தேவனாகிய கர்த்த
ருடைய நாமத்தைத் தொழுது, தன் கையினால்
அந்த இடத்தைத் தடவி, இவ்விதமாய்க்
குஷ்டரோகத்தை நீக்கிவிடுவான் என்று
எனக்குள் நினைத்திருந்தேன். நான் ஸ்நானம் 12
பண்ணிச் சுத்தமாகிறதற்கு இஸ்ரவேலின்
தண்ணீர்கள்எல்லாவற்றைப்பார்க்கிலும்தமஸ்
குவின் நதிகளாகிய ஆப்னாவும் பர்பாரும் நல்ல
தல்லவோ என்று சொல்லி, உக்கிரத்தோடே
திரும்பிப்போனான். அவன் ஊழியக்காரர் 13
சமீபத்தில் வந்து, அவனை நோக்கி: தகப்ப
னே, அந்தத் தீர்க்கதரிசி ஒரு பெரிய காரியத்
தைச் செய்ய உமக்குச் சொல்லியிருந்தால்,
அதை நீர் செய்வீர் அல்லவா? ஸ்நானம் பண்
ணும், அப்பொழுது சுத்தமாவீர் என்று அவர்
உம்மோடே சொல்லும்போது, அதைச் செய்ய
வேண்டியது ‡எத்தனை அதிகம் என்று சொன்
னார்கள். அப்பொழுது அவன் இறங்கி, தேவ 14
னுடைய மனுஷன் வார்த்தையின்படியே
யோர்தானில் ஏழுதரம் முழுகினபோது,
அவன் மாம்சம் ஒரு சிறுபிள்ளையின் மாம்சத்
தைப்போல மாறி, [10]அவன் சுத்தமானான். அப் 15
பொழுது அவன் தன் கூட்டத்தோடெல்லாம்
தேவனுடைய மனுஷனிடத்திற்குத் திரும்பி
வந்து, அவனுக்கு முன்பாக நின்று: இதோ,
இஸ்ரவேலிலிருக்கிற தேவனைத்தவிர பூமி
யெங்கும் [11]வேறே தேவன் இல்லை என்பதை
அறிந்தேன்; இப்போதும்உமது அடியேன் கை
யில் ஒரு §காணிக்கை வாங்கிக்கொள்ளவேண்
டும்என்றான். அதற்கு அவன்: நான் வாங்குகிற 16
தில்லை என்று கர்த்தருக்கு முன்பாக அவ
ருடைய ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேன்
என்றான்; [12]வாங்கவேண்டும் என்று அவனை
வருந்தினாலும் தட்டுதல் பண்ணிவிட்டான்.
அப்பொழுது நாகமான்: ஆனாலும் இரண்டு 17

1 யாத். 10. 17
* தீங்கு
2 1 சாமு. 9. 4, 7. 1 கொரி. 9. 11. கலா. 6. 6
3 லூ. 9. 13, 17. யோ. 6. 9, 11
4 மத். 14. 20; 15. 37. யோ. 6. 13
5 லூ. 4. 27
6 யாத். 11. 3
† ஜெயத்தை.
7 8. 8, 9. 1 சாமு. 9. 8
8 ஆதி. 30. 2. உபா. 32. 39. 1 சாமு. 2. 6
9 4. 41. யோ. 9. 7
‡ உத்தமம்.
10 யோபு. 33. 25. லூ. 4. 27
11 தானி. 2. 47; 3. 29; 6. 26, 27
§ வெகுமதி, நன்கொடை. ஆதி. 33. 11
12 ஆதி. 14. 23. மத். 10. 8. அப். 8. 18, 20

கோவேறு கழுதைகள் சுமக்கத்தக்க இரண்டு
பொதி மண் உமது அடியேனுக்குக் கட்டளை
யிடவேண்டும்; உமது அடியேன் இனிக் **கர்த்**
**தருக்கே** அல்லாமல், [1]அந்நிய தேவர்களுக்குச்
சர்வாங்க தகனத்தையும் பலியையும் செலுத்து
18 வதில்லை. ஒரு காரியத்தையே **கர்த்தர்** உமது
அடியேனுக்கு மன்னிப்பாராக; என் ஆண்ட
வன் பணிந்துகொள்ள ரிம்மோன் கோவிலுக்
குள் பிரவேசிக்கும்போது, நான் அவருக்குக்
கைலாகு கொடுத்து [2]ரிம்மோன் கோவிலிலே
பணியவேண்டியதாகும்; இப்படி ரிம்மோன்
கோவிலில் நான் பணியவேண்டிய இந்தக்
காரியத்தைக் **கர்த்தர்** உமது அடியேனுக்கு
19 மன்னிப்பாராக என்றான். அதற்கு அவன்:
சமாதானத்தோடே போ என்றான்; இவன்
புறப்பட்டுக் கொஞ்சதூரம் போனபோது,
20 தேவனுடைய மனுஷனாகிய எலிசாவின்
வேலைக்காரன் கேயாசி என்பவன், அந்தச்
சீரியனாகிய நாகமான் கொண்டுவந்ததை என்
ஆண்டவன் அவன் கையிலே வாங்காமல்
அவனை விட்டுவிட்டார்; நான் அவன் பிறகே
ஓடி, அவன் கையிலே ஏதாகிலும் [3]வாங்கு
வேன் என்று **கர்த்தருடைய** ஜீவன்மேல்
21 ஆணையிட்டு, நாகமானைப் பின்தொடர்ந்தான்;
அவன் தன் பிறகே ஓடிவருகிறதை நாகமான்
கண்டபோது, அவனுக்கு எதிர்கொண்டுபோக
இரதத்திலிருந்து குதித்து: சுகசெய்தியா என்று
22 கேட்டான். அதற்கு அவன்: சுகசெய்திதான்;
தீர்க்கதரிசிகளின் புத்திரரில் இரண்டு வாலி
பர் இப்பொழுதுதான் எப்பிராயீம் மலைத்தே
சத்திலிருந்து என்னிடத்தில் வந்தார்கள்; அவர்
களுக்கு ஒரு தாலந்து வெள்ளியையும், இர
ண்டு மாற்று வஸ்திரங்களையும் தரவேண்டும்
என்று கேட்க, என் எஜமான் என்னை அனுப்
23 பினார் என்றான். அதற்கு நாகமான்: தயவு
செய்து, இரண்டு தாலந்தை வாங்கிக்கொள்
என்று சொல்லி, அவனை வருந்தி, இரண்டு
தாலந்து வெள்ளியை இரண்டு பைகளில்
இரண்டு மாற்று வஸ்திரங்களோடே கட்டி,
அவனுக்கு முன்பாகச் சுமந்துபோகத் தன்
வேலைக்காரரான இரண்டுபேர்மேல் வைத்
24 தான். அவன் மேட்டண்டைக்கு வந்தபோது,
அவன் அதை அவர்கள் கையிலிருந்து வாங்கி,
[4]வீட்டிலே வைத்து, அந்த மனுஷரை அனுப்பி
விட்டான்; அவர்கள் போய்விட்டார்கள்.
25 பின்பு அவன் உள்ளே போய்த் தன் எஜமா
னுக்கு முன்பாக [5]நின்றான்: கேயாசியே, எங்
கேயிருந்து வந்தாய் என்று எலிசா அவனைக்
கேட்டதற்கு, அவன், உமது அடியான் எங்கும்
26 போகவில்லை என்றான். அப்பொழுது அவன்
இவனைப் பார்த்து: அந்த மனுஷன் உனக்கு
எதிர்கொண்டுவர தன் இரதத்திலிருந்து இறங்
கித் திரும்புகிறபோது [6]என் மனம் உன்னு
டன் கூடச் செல்லவில்லையா? பணத்தை
வாங்குகிறதற்கும், வஸ்திரங்களையும் ஒலிவத்
தோப்புகளையும் திராட்சத்தோட்டங்களையும்
ஆடுமாடுகளையும் வேலைக்காரரையும் வேலைக்
காரிகளையும் வாங்குகிறதற்கும் இது காலமா?
ஆகையால் நாகமானின் குஷ்டரோகம் உன் 27
னையும் உன் சந்ததியாரையும் என்றைக்கும்
பிடித்திருக்கும் என்றான்; [7]உடனே அவன்
உறைந்த மழை நிறமான குஷ்டரோகியாகி,
அவன் சமுகத்தை விட்டுப் புறப்பட்டுப்
போனான்.

தீர்க்கதரிசிகளின் *புத்திரர் எலிசாவை **6**
நோக்கி: இதோ, நாங்கள் உம்முடன் குடி
யிருக்கிற இந்த இடம் எங்களுக்கு நெருக்க
மாய் இருக்கிறது. நாங்கள் யோர்தான்மட் 2
டும் போய் அவ்விடத்தில் ஒவ்வொருவர் ஒவ்
வொரு உத்திரத்தை வெட்டி, குடியிருக்க அங்
கே எங்களுக்கு ஒரு இடத்தை உண்டாக்கு
வோம் என்றார்கள். அதற்கு அவன்: போங்கள்
என்றான். அவர்களில் ஒருவன்: நீர் தயவு 3
செய்து உமது அடியாரோடேகூட வரவேண்
டும் என்றான். அதற்கு அவன்: நான் வருகி
றேன் என்று சொல்லி, அவர்களோடே 4
கூடப் போனான்; அவர்கள் யோர்தான் நதி
யருகே வந்தபோது மரங்களை வெட்டினார்கள்.
ஒருவன் ஒரு உத்திரத்தை வெட்டி விழுத்து 5
கையில் †கோடாரி தண்ணீரில் விழுந்தது;
அவன்: ஐயோ என் ஆண்டவனே, அது
இரவலாக வாங்கப்பட்டதே என்று கூவி
னான். தேவனுடைய மனுஷன் அது எங்கே 6
விழுந்தது என்று கேட்டான்; அவன் அந்த
இடத்தைக் காண்பித்தபோது, [8]ஒரு கொம்பை
வெட்டி, அதை அங்கே எறிந்து, அந்த இரும்
பை மிதக்கப்பண்ணி, அதை எடுத்துக்கொள் 7
என்றான்; அப்படியே அவன் தன் கையை
நீட்டி அதை எடுத்துக்கொண்டான்.

அக்காலத்தில் சீரியாவின் ராஜா இஸ்ரவே 8
லுக்கு விரோதமாய் யுத்தம்பண்ணி, இன்ன
இன்ன ஸ்தலத்திலே பாளயமிறங்குவேன்
என்று தன் ஊழியக்காரரோடே ஆலோசனை
பண்ணினான். ஆகிலும் தேவனுடைய மனு 9
ஷன் இஸ்ரவேலின் ராஜாவினிடத்தில் ஆள்
அனுப்பி: இன்ன இடத்துக்குப் போகாத
படிக்கு எச்சரிக்கையாயிரும்; சீரியர் அங்கே
இறங்குவார்கள் என்று சொல்லச்சொன்னான்.
அப்பொழுது இஸ்ரவேலின் ராஜா தேவனு 10
டைய மனுஷன் தன்னை எச்சரித்து, தனக்
குக் குறித்துச் சொன்ன ஸ்தலத்திற்கு மனு
ஷரை அனுப்பிப் பார்த்து எச்சரிக்கையா
யிருந்து, இப்படி அநேகந்தரம் தன்னைக் காத்
துக்கொண்டான். இந்தக் காரியத்தினிமித் 11
தம் சீரியா ராஜாவின் இருதயம் ‡குழம்பி, அவன்
தன் ஊழியக்காரரை அழைத்து: நம்முடைய
வர்களில் இஸ்ரவேலின் ராஜாவுக்கு உளவா
யிருக்கிறவன் யார் என்று நீங்கள் எனக்கு
அறிவிக்கமாட்டீர்களா என்று கேட்டான்.
அப்பொழுது அவன் ஊழியக்காரரில் ஒரு
வன்: அப்படியில்லை; என் ஆண்டவனாகிய
ராஜாவே, [9]நீர் உம்முடைய பள்ளி அறையிலே
பேசுகிற வார்த்தைகளையும் இஸ்ரவேலிலிருக்
கிற தீர்க்கதரிசியாகிய எலிசா இஸ்ரவேலின்

[1] 1 தெச. 1. 9
[2] 7. 2, 17
[3] ஆதி. 2. 9. 1 தீமோ. 6. 9, 10
[4] யோசு. 7. 21. ஏசா. 29. 15
[5] எசே. 33. 1
[6] சங். 12. 19, 22
[7] யாத். 2. 6. எண். 12. 10. ஏசா. 59. 2, 3. ஓசி. 10. 13. 1 தீமோ. 6. 10
* 4. 38
† இரும்பு. 6. வச.
[8] 2. 21
‡ கலங்கி. சங். 48. 4, 5. மத். 2. 3.
[9] ஆமோ. 3. 7. சங். 139. 1–4. எரே. 23. 24

13 ராஜாவுக்கு அறிவிப்பான் என்றான். அப்
பொழுது அவன்: நான் மனுஷனை அனுப்பி
அவனைப் பிடிக்கும்படி, நீங்கள் போய் அவன்
எங்கே இருக்கிறான் என்று பாருங்கள் என்
றான்; அவன் [1]தோத்தானில் இருக்கிறான்
14 என்று அவனுக்கு அறிவிக்கப்பட்டது. அப்
பொழுது அவன் அங்கே குதிரைகளையும்
இரதங்களையும் பலத்த இராணுவத்தையும்
அனுப்பினான்; அவர்கள் இராக்காலத்திலே
வந்து பட்டணத்தை வளைந்துகொண்டார்கள்.
15 தேவனுடைய மனுஷனின் வேலைக்காரன்
அதிகாலமே எழுந்து வெளியே புறப்படுகை
யில், இதோ, இராணுவமும் குதிரைகளும்
இரதங்களும் பட்டணத்தைச் சுற்றிக்கொண்
டிருக்கக் கண்டான்; அப்பொழுது வேலைக்
காரன் அவனை நோக்கி: ஐயோ, என் ஆண்ட
16 வனே, என்னசெய்வோம் என்றான். அதற்கு
அவன்: பயப்படாதே; [2]அவர்களோடிருக்கிற
வர்களைப்பார்க்கிலும் நம்மோடிருக்கிறவர்கள்
17 அதிகம் என்றான். அப்பொழுது எலிசா
விண்ணப்பம்பண்ணி: கர்த்தாவே, இவன்
பார்க்கும்படி இவன் கண்களைத் திறந்தருளும்
என்றான்; உடனே கர்த்தர் அந்த வேலைக்கா
ரன் கண்களைத் திறந்தார்; இதோ, [3]எலிசா
வைச் சுற்றிலும் அக்கினிமயமான குதிரை
களாலும் இரதங்களாலும் அந்த மலை நிறைந்
18 திருக்கிறதை அவன் கண்டான். அவர்கள்
அவனிடத்தில் வருகையில், எலிசா கர்த்தரை
நோக்கி விண்ணப்பம்பண்ணி: இந்த ஜனங்க
ளுக்குக் கண்மயக்கம் உண்டாகும்படி செய்
யும் என்றான்; [4]எலிசாவுடைய வார்த்தையின்
படியே அவர்களுக்குக் கண்மயக்கம் உண்டா
19 கும்படி செய்தார். அப்பொழுது எலிசா
அவர்களை நோக்கி: இது வழி அல்ல; இது
பட்டணமும் அல்ல; என் பிறகே வாருங்கள்;
நீங்கள் தேடுகிற மனுஷனிடத்தில் நான் உங்
களை வழி நடத்துவேன் என்று சொல்லி,
அவர்களைச் சமாரியாவுக்கு அழைத்துக்
20 கொண்டுபோனான். அவர்கள் சமாரியாவில்
வந்தபோது, எலிசா: கர்த்தாவே, இவர்கள்
பார்க்கும்படிக்கு இவர்கள் கண்களைத் திறந்
தருளும் என்றான்; பார்க்கும்படிக்குக் கர்த்
தர் அவர்கள் கண்களைத் திறக்கும்போது,
[5]இதோ, அவர்கள் சமாரியாவின் நடுவே
21 இருந்தார்கள். இஸ்ரவேலின் ராஜா அவர்
களைக் கண்டபோது, எலிசாவைப் பார்த்து:
என் தகப்பனே, நான் அவர்களை வெட்டிப்
22 போடலாமா என்று கேட்டான். அதற்கு
அவன்: நீர் வெட்டவேண்டாம்; நீர் உம்மு
டைய பட்டயத்தாலும், உம்முடைய வில்லி
னாலும் சிறையாக்கிக்கொண்டவர்களை வெட்
டுகிறீரோ? [6]இவர்கள் புசித்துக் குடித்து, தங்
கள் ஆண்டவனிடத்துக்குப் போகும்படிக்கு,
அப்பமும் தண்ணீரும் அவர்களுக்கெதிரில்
23 வையும் என்றான். அப்பொழுது அவர்களுக்
குப் பெரிய விருந்துபண்ணி, அவர்கள் புசித்
துக் குடித்தபின்பு, அவர்களை அனுப்பிவிட்

1 ஆதி. 37. 17
2 2 நாளா. 32. 7. சங். 55. 18. ரோ. 8. 31
3 2. 11. சங். 34. 7; 68. 17. சகரி. 1. 8; 6. 1-7
4 ஆதி. 19. 11
5 லூ. 24. 16, 31
6 நீதி. 25, 21, 22. ரோ. 12. 10
7 5. 2; 24. 2
8 லேவி. 26, 26. எரே. 52. 6. எசே. 4. 16
9 லேவி. 26, 29. உபா. 28. 53, 57. ஏசா. 49. 15
10 1 இரா. 21. 27
11 ரூத். 1. 17. 1 இரா. 19. 2
12 எசே. 8. 1; 20. 1
13 1 இரா. 18. 4. லூ. 13. 32
14 யோபு. 2. 9

டான்; அவர்கள் தங்கள் ஆண்டவனிடத்
துக்குப் போய்விட்டார்கள்; [7]சீரியரின்
தண்டுகள் இஸ்ரவேல் தேசத்திலே அப்புறம்
வரவில்லை.
இதற்குப்பின்பு சீரியாவின் ராஜாவாகிய 24
பெனாதாத் தன் இராணுவத்தையெல்லாம்
கூட்டிக்கொண்டுவந்து சமாரியாவை முற்றிக்
கை போட்டான். அதினால் சமாரியாவிலே 25
கொடிய பஞ்சமுண்டாயிற்று; ஒரு கழுதைத்
தலை எண்பது வெள்ளிக்காசுக்கும், புறாக்க
ளுக்குப் போடுகிற காற்படி பயறு ஐந்து
வெள்ளிக்காசுக்கும் விற்கப்படுமட்டும் [8]அதை
முற்றிக்கை போட்டார்கள். இஸ்ரவேலின் 26
ராஜா அலங்கத்தின்மேல் நடந்துபோகையில்,
ஒரு ஸ்திரீ அவனைப் பார்த்துக் கூப்பிட்டு,
ராஜாவாகிய என் ஆண்டவனே, இரட்சியும்
என்றாள். அதற்கு அவன்: கர்த்தர் உன்னை 27
இரட்சிக்காதிருந்தால் நான் எதிலிருந்து எடு
த்து உன்னை இரட்சிக்கலாம்? களஞ்சியத்தி
லிருந்தா, ஆலையிலிருந்தா என்று சொல்லி,
ராஜா பின்னையும் அவளைப்பார்த்து: உனக்கு 28
என்னவேண்டும் என்று கேட்டான். அதற்கு
அவள்: இந்த ஸ்திரீ என்னை நோக்கி, உன்
மகனைத் தா, அவனை இன்று தின்போம்;
நாளைக்கு என் மகனைத் தின்போம் என்றாள்.
அப்படியே என் மகனை [9]ஆக்கித் தின்றோம்; 29
மறுநாளில் நான் இவளை நோக்கி: நான் உன்
மகனைத் தின்ன அவனைத் தா என்றேன்;
அவள் தன் மகனை ஒளித்துவிட்டாள் என்றாள்.
அந்த ஸ்திரீயின் வார்த்தைகளை ராஜா கேட்ட 30
வுடனே, அலங்கத்தின்மேல் நடந்துபோகிற
[10]அவன் தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்
டான்; அவன் உள்ளே தன் சரீரத்தின்மேல்
இரட்டு உடுத்தியிருக்கிறதை ஜனங்கள் கண்
டார்கள். அவன்: சாப்பாத்தின் குமாரனாகிய 31
எலிசாவின் தலை இன்றைக்கு அவன்மேல்
இருந்தால், [11]தேவன் அதற்குச் சரியாகவும்
அதற்கு அதிகமாகவும் எனக்குச் செய்யக்கட
வர் என்று சொன்னான். எலிசா தன் வீட் 32
டில் உட்கார்ந்திருந்தான்; [12]மூப்பரும் அவ
னோடே உட்கார்ந்திருந்தார்கள். அப்பொழுது
ராஜா: ஒரு மனுஷனைத் தனக்கு முன்னே
அனுப்பினான்; இந்த ஆள் எலிசாவினிடத்
துக்கு வருமுன்னே, அவன் அந்த மூப்பரை
நோக்கி: என் தலையை வாங்க, [13]அந்தக் கொலை
பாதகனுடையமகன் ஆள் அனுப்பினான்; பார்த்
தீர்களா? அந்த ஆள் வரும்போது, நீங்கள்
அவனை உள்ளே வரவொட்டாமல் கதவைப்
பூட்டிப்போடுங்கள்; அவனுக்குப் பின்னாக
அவன் ஆண்டவனுடைய காலின் சத்தம்
கேட்கிறது அல்லவா என்றான். அவர்க 33
ளோடே அவன் பேசிக்கொண்டிருக்கையில்,
அந்த ஆள் அவனிடத்தில் வந்து: இதோ,
இந்தப் பொல்லாப்பு கர்த்தரால் உண்டா
னது; [14]நான் இனிக் கர்த்தருக்காகக் காத்தி
ருக்கவேண்டியது என்ன என்று ராஜா
சொல்லுகிறார் என்றான்.

**7** அப்பொழுது எலிசா: **கர்த்தருடைய** வார்
த்தையைக் கேளுங்கள்; [1]நாளை இந்நேரத்தில்
சமாரியாவின் வாசலிலே ஒரு மரக்கால்
கோதுமை மா ஒரு சேக்கலுக்கும், இரண்டு
மரக்கால் வாற்கோதுமை ஒரு சேக்கலுக்கும்
விற்கப்படும் என்று **கர்த்தர்** சொல்லுகிறார்
2 என்றான். அப்பொழுது ராஜாவுக்குக் [2]கை
லாகுகொடுக்கிற பிரதானி ஒருவன் தேவனு
டைய மனுஷனுக்குப்பிரதியுத்தரமாக: இதோ,
[3]**கர்த்தர்** வானத்திலே மதகுகளை உண்டாக்
கினாலும் இப்படி நடக்குமா என்றான். அத
ற்கு அவன்: உன்னுடைய கண்களினாலே
அதைக் காண்பாய்; ஆனாலும் அதிலே சாப்
பிடமாட்டாய் என்றான்.
3 குஷ்டரோகிகளான நாலுபேர் [4]ஒலிமுக
வாசலில் இருந்தார்கள்; அவர்கள் ஒருவரை
ஒருவர் நோக்கி: நாம் இங்கே இருந்து சாக
4 வேண்டியது என்ன? பட்டணத்திற்குள்
போவோமென்றாலும் பட்டணத்தில் பஞ்சம்
உண்டாயிருக்கிறதினால் அங்கே சாவோம்;
நாம் இங்கே இருந்தாலும் சாவோம்; ஆகை
யால் இப்பொழுது சீரியருடைய இராணு
வத்திற்குப் போவோம் வாருங்கள்; அவர்கள்
நம்மை உயிரோடே வைத்தால் பிழைக்கி
றோம்; நம்மைக் கொன்றால் சாகிறோம் என்று
5 சொல்லி, சீரியருடைய இராணுவத்திற்குப்
போக இருட்டோடே எழுந்திருந்து, சீரிய
ருடைய பாளயத்தின் முன்னணியில் வந்தார்
6 கள்; அங்கே ஒருவருமில்லை. ஆண்டவர்
சீரியரின் இராணுவத்திற்கு இரதங்களின்
இரைச்சலையும், [5]குதிரைகளின் இரைச்சலை
யும், மகா இராணுவத்தின் இரைச்சலையும்
கேட்கப்பண்ணினதினால், அவர்கள் ஒருவரை
ஒருவர் நோக்கி: இதோ, நம்மிடத்தில் போரு
க்குவர, இஸ்ரவேலின் ராஜா [6]ஏத்தியரின்
ராஜாக்களையும் எகிப்தியரின் ராஜாக்களையும்
நமக்கு விரோதமாகக் கூலி பொருத்தினான்
7 என்று சொல்லி, இருட்டோடே எழுந்தி
ருந்து ஓடிப்போய், [7]தங்கள் கூடாரங்களையும்
தங்கள் குதிரைகளையும் தங்கள் கழுதைகளை
யும் தங்கள் பாளயத்தையும் அவைகள் இருந்த
பிரகாரமாக விட்டு, தங்கள் பிராணன் மாத்
திரம் தப்பும்படி ஓடிப்போனார்கள்.
8 அந்தக் குஷ்டரோகிகள் பாளயத்தின் முன்
னணைமட்டும் வந்தபோது, ஒரு கூடாரத்திற்
குள் பிரவேசித்து, புசித்துக் குடித்து, அதிலி
ருந்த வெள்ளியையும் பொன்னையும் வஸ்தி
ரங்களையும் எடுத்துக்கொண்டுபோய் ஒளித்து
வைத்து, திரும்பிவந்து, வேறொரு கூடாரத்
திற்குள் பிரவேசித்து, அதிலிருந்தும் அப்ப
டியே எடுத்துக்கொண்டுபோய் ஒளித்துவை
9 த்து, பின்பு அவர்கள் ஒருவரை ஒருவர்
நோக்கி: நாம் செய்கிறது நியாயமல்ல, இந்
நாள் நற்செய்தி அறிவிக்கும் நாள்; நாம் மவுன
மாயிருந்து, பொழுது விடியுமட்டும் காத்திருந்
தால் குற்றம் நம்மேல் சுமரும்; இப்போதும்
நாம் போய் ராஜாவின் *அரமனையாருக்கு

1 18, 19 வச.
2 17. 19, 20 வச.
3 மல். 3. 10
4 லேவி. 13. 46
5 2 சாமு. 5. 24. யோபு 15. 21
6 1 இரா. 10. 29
7 சங். 48. 4-6. நீதி. 28. 1
* வீட்டாருக்கு. 11. வச.
8 1 வச.
9 6. 32

இதை அறிவிப்போம் வாருங்கள் என்றார்
கள். அப்படியே அவர்கள் வந்து, பட்ட 10
ணத்து வாசல் காவலாளரை நோக்கிக் கூப்
பிட்டு: நாங்கள் சீரியரின் பாளயத்திற்குப்
போய்வந்தோம்; அங்கே ஒருவரும் இல்லை,
ஒரு மனுஷனுடைய சத்தமும் இல்லை, கட்டி
யிருக்கிற குதிரைகளும் கட்டியிருக்கிற கழு
தைகளும், கூடாரங்களும் இருந்தபிரகாரம்
இருக்கிறது என்று அவர்களுக்குச் சொன்னார்
கள். அப்பொழுது அவன் வாசல்காக்கிற 11
மற்றவர்களைக் கூப்பிட்டான்; அவர்கள் உள்
ளே போய் ராஜாவின் அரமனையாருக்கு
அதை அறிவித்தார்கள். அப்பொழுது ராஜா 12
இராத்திரியில் எழுந்து, தன் ஊழியக்காரரை
நோக்கி: சீரியர் நமக்குச் செய்கிற காரியத்தை
உங்களுக்குத் தெரியப்படுத்துகிறேன்; நாம்
பட்டினியாயிருக்கிறோம் என்று அவர்கள்
அறிவார்கள்; ஆகையால் நாம் பட்டணத்திலி
ருந்து புறப்பட்டுப்போனால் நம்மை உயி
ரோடே பிடித்துக்கொண்டு பட்டணத்திற்குள்
பிரவேசிக்கலாம் என்று எண்ணி, அவர்கள்
பாளயத்தை விட்டுப் புறப்பட்டு வெளியில்
ஒளித்துக்கொண்டிருக்கிறார்கள் என்றான்.
அவன் ஊழியக்காரரில் ஒருவன் பிரதியுத் 13
தரமாக: இங்கே மீதியான குதிரைகளில்
ஐந்து குதிரைகளைக் கொண்டுபோக உத்தரவு
கொடும்; இதோ, இங்கே மீதியான இஸ்ர
வேலின் சகல ஏராளத்திலும், மாண்டுபோன
இஸ்ரவேலின் சகல கூட்டத்திலும், அவை
கள்மாத்திரம் மீந்திருக்கிறது; அவைகளை நாம்
அனுப்பிப் பார்ப்போம் என்றான். அப்ப 14
டியே இரண்டு இரதக்குதிரைகளைக் கொண்டு
வந்தார்கள்; ராஜா போய்வாருங்கள் என்று
சொல்லி, சீரியரின் இராணுவத்தைத் தொடர்
ந்துபோகும்படி அனுப்பினான். அவர்கள் 15
யோர்தான்மட்டும் அவர்களைப் பின்தொடர்ந்
துபோனார்கள்; சீரியர் தீவிரித்து ஓடுகையில்,
அவர்கள் எறிந்துபோட்ட வஸ்திரங்களாலும்
தட்டுமுட்டுகளாலும் வழியெல்லாம் நிறைந்தி
ருந்தது; அனுப்பப்பட்டவர்கள் திரும்பிவந்து
ராஜாவுக்கு அதை அறிவித்தார்கள். அப் 16
பொழுது ஜனங்கள் புறப்பட்டு, சீரியரின்
பாளயத்தைக் கொள்ளையிட்டார்கள்; **கர்த்தரு**
**டைய** வார்த்தையின்படியே, [8]ஒரு மரக்கால்
கோதுமை மா ஒரு சேக்கலுக்கும், இரண்டு
மரக்கால் வாற்கோதுமை ஒரு சேக்கலுக்கும்
விற்கப்பட்டது. ராஜா தனக்குக் கைலாகு 17
கொடுக்கிற அந்தப் பிரதானியை ஒலிமுக
வாசலில் விசாரிப்பாயிருக்கக் கட்டளையிட்
டிருந்தான்; ஒலிமுகவாசலிலே ஜனங்கள்
அவனை நெருங்கி மிதித்ததினாலே, ராஜா
தேவனுடைய மனுஷனிடத்தில் வந்தபோது
சொல்லியிருந்தபடியே, [9]அவன் செத்துப்போ
னான். இரண்டு மரக்கால் வாற்கோதுமை 18
ஒரு சேக்கலுக்கும், ஒரு மரக்கால் கோதுமை
மா ஒரு சேக்கலுக்கும், நாளை இந்நேரத்திலே
சமாரியாவின் ஒலிமுகவாசலில் விற்கும் என்று

தேவனுடைய மனுஷன் ராஜாவோடே
19 சொன்னதின்படியே நடந்தது. அதற்கு அந்
தப் பிரதானி தேவனுடைய மனுஷனுக்குப்
பிரதியுத்தரமாக: இதோ, கர்த்தர் வானத்திலே
மதகுகளை உண்டாக்கினாலும், இந்த வார்த்
தையின்படி நடக்குமா என்று சொல்ல;
இவன், இதோ, உன்னுடைய கண்களினாலே
அதைக் காண்பாய், ஆனாலும் அதிலே சாப்
20 பிடமாட்டாய் என்றானே. அந்தப்பிரகார
மாகத்தானே அவனுக்கு நடந்தது; ஒலிமுக
வாசலிலே ஜனங்கள் அவனை நெருங்கி மிதித்
ததினாலே அவன் செத்துப்போனான்.

8 எலிசா தான் உயிர்ப்பித்த பிள்ளையின்
தாயாகிய ஸ்திரீயை நோக்கி: [1]நீ உன் வீட்
டாரோடும் கூட எழுந்து புறப்பட்டுப்போய்
எங்கேயாகிலும் சஞ்சரி; கர்த்தர் பஞ்சத்தை
வருவிப்பார்; [2]அது எழு வருஷம் தேசத்தில்
2 இருக்கும் என்று சொல்லியிருந்தான். அந்த
ஸ்திரீ எழுந்து, தேவனுடைய மனுஷன் சொ
ன்ன வார்த்தையின்படி செய்து, தன் வீட்டா
ரோடுங்கூடப் புறப்பட்டு, பெலிஸ்தரின் தே
சத்தில் போய், எழுவருஷம் சஞ்சரித்தாள்.
3 எழுவருஷம் சென்றபின்பு, அவள் பெலிஸ்
தரின் தேசத்தை விட்டுத் திரும்ப வந்து, தன்
வீட்டுக்காகவும் தன் வயலுக்காகவும் ராஜாவி
4 னிடத்தில் முறையிடும்படி போனாள். அந்
நேரத்தில் ராஜா, தேவனுடைய மனுஷனின்
வேலைக்காரனாயிருந்த [3]கேயாசியுடனே பேசி:
எலிசா செய்த அதிசயங்களையெல்லாம் நீ
5 எனக்கு விவரமாய்ச் சொல் என்றான். செத்
துப்போனவனை உயிர்ப்பித்தார் [4]என்பதை
அவன் ராஜாவுக்கு அறிவிக்கிறபோது, இதோ,
அவன் உயிர்ப்பித்த பிள்ளையின் தாயாகிய
அந்த ஸ்திரீ வந்து, தன் வீட்டுக்காகவும் தன்
வயலுக்காகவும் ராஜாவினிடத்தில் முறையிட்
டாள்; அப்பொழுது கேயாசி: ராஜாவாகிய
என் ஆண்டவனே, இவள்தான் அந்த ஸ்திரீ;
எலிசா உயிர்ப்பித்த இவளுடைய குமாரன்
6 இவன்தான் என்றான். ராஜா அந்த ஸ்திரீ
யைக் கேட்டதற்கு, அவள்: அதை அவனுக்கு
விவரித்துச் சொன்னாள்; அப்பொழுது ராஜா
அவளுக்கு ஒரு பிரதானியை நியமித்து, அவ
ளுக்கு உண்டானது எல்லாவற்றையும், அவள்
தேசத்தை விட்டுப்போன நாள்முதல் இது
வரைக்கும் உண்டான அந்த வயலின் வரு
மானம் அனைத்தையும் அவளுக்குக் கிடைக்
கும்படி செய் என்றான்.
7 சீரியாவின் ராஜாவாகிய பெனாதாத் வியாதி
யாயிருந்தான்; எலிசா தமஸ்குவுக்கு வந்தான்;
தேவனுடைய மனுஷன் இவ்விடத்தில் வந்தி
ருக்கிறான் என்று அவனுக்கு அறிவிக்கப்பட்
8 டபோது, ராஜா ஆசகேலை நோக்கி: [5]நீ உன்
கையிலே ஒரு காணிக்கையை எடுத்துக்
கொண்டு, தேவனுடைய மனுஷனுக்கு எதிர்
கொண்டுபோய், நான் இந்த வியாதி நீங்கிப்
பிழைப்பேனா என்று அவனைக்கொண்டு கர்த்
9 தரிடத்தில் விசாரிக்கச் சொன்னான். ஆச

[1] 4. 35
[2] சங். 105. 16. ஆகா. 1. 11
[3] 5. 27
[4] 4. 35
[5] 1 சாமு. 9. 7. 1 இரா. 14. 3; 19. 15
[6] 15. வச.
[7] லூக். 19. 41
[8] 10. 32; 12. 17; 15. 16. ஆமோ. 1. 3; 1. 13. ஓசி. 13. 16
[9] 1 சாமு. 17. 43. 1 இரா. 19. 15
[10] 2 நாளா. 21. 3, 4
[11] 2 நாளா. 21. 5. ழ
[12] 26. வச.
[13] 2 சாமு. 7. 13. 1 இரா. 11. 36. 2 நாளா. 21. 7

கேல் தமஸ்குவின் சகல உச்சிதங்களிலும் நாற்
பது ஒட்டகங்களின் சுமையான காணிக்கை
யை எடுத்துக்கொண்டு, அவனுக்கு எதிர்கொ
ண்டுபோய், அவனுக்கு முன்பாக நின்று, சீரி
யாவின் ராஜாவாகிய பெனாதாத் என்னும் உம்
முடைய குமாரன் என்னை உம்மிடத்தில்
அனுப்பி, இந்த வியாதி நீங்கிப் பிழைப்
பேனா என்று கேட்கச்சொன்னார் என்றான்.
எலிசா அவனை நோக்கி: நீ போய், வியாதி 10
நீங்கிப் பிழைப்பீர் என்று அவனுக்குச் சொல்
லும்; ஆனாலும் அவன் சாகவே சாவான் [6]என்
பதைக் கர்த்தர் எனக்குக் காண்பித்தார் என்
றான். பின்பு தேவனுடைய மனுஷன்: தன் 11
முகத்தைத் திருப்பாமல் அவன் சலித்துப்
போகுமட்டும் அவனை நோக்கிக்கொண்டே
[7]அழுதான். அப்பொழுது ஆசகேல்: என் 12
ஆண்டவன் அழுகிறது என்ன என்று கேட்
டான். அதற்கு அவன்: நீ இஸ்ரவேல் புத்திர
ருக்குச் செய்யும் தீங்கை நான் அறிந்திருக்கிற
படியினால் அழுகிறேன்; [8]நீ அவர்கள் கோட்
டைகளை அக்கினிக்கு இரையாக்கி, அவர்கள்
வாலிபரைப் பட்டயத்தால் கொன்று, அவர்
கள் குழந்தைகளைத் தரையோடே மோதி,
அவர்கள் கர்ப்பவதிகளைக் கீறிப்போடுவாய்
என்றான். அப்பொழுது ஆசகேல்: இத்தனை 13
பெரிய காரியத்தைச் செய்ய நாயாகிய [9]உமது
அடியான் எம்மாத்திரம் என்றான். அதற்கு
எலிசா: நீ சீரியாவின்மேல் ராஜாவாவாய்
என்பதைக் கர்த்தர் எனக்குத் தெரிவித்தார்
என்றான். இவன் எலிசாவை விட்டுப் புறப் 14
பட்டு, தன் ஆண்டவனிடத்தில் வந்தபோது,
அவன்: எலிசா உனக்கு என்ன சொன்னான்
என்று கேட்டதற்கு; இவன், நீர் வியாதி நீங்
கிப் பிழைப்பீர் என்று எனக்குச் சொன்னான்
என்று சொல்லி, மறுநாளிலே ஒரு சமுக் 15
காளத்தை எடுத்து, தண்ணீரிலே தோய்த்து
அவன் முகத்தின்மேல் விரித்தான்; அதினால்
அவன் செத்துப்போனான்; ஆசகேல் அவ
னுக்குப் பதிலாய் ராஜாவானான்.
இஸ்ரவேலின் ராஜாவாகிய ஆகாபின் 16
குமாரன் யோராமுடைய ஐந்தாம் வருஷத்
தில், [10]யோசபாத் யூதாவிலே இன்னும் ராஜா
வாயிருக்கையில், யோசபாத்தின் குமாரனாகிய
யோராம் என்னும் யூதாவின் ராஜா ராஜ்ய
பாரம்பண்ணத் துவக்கினான். அவன் ராஜா 17
வாகிறபோது முப்பத்திரண்டு வயதாயிருந்து,
[11]எட்டு வருஷம் எருசலேமில் ராஜ்யபாரம்
பண்ணினான். அவன் இஸ்ரவேல் ராஜாக்க 18
ளின் வழியிலே நடந்து, ஆகாபின் வீட்டார்
செய்ததுபோலச் செய்தான்; ஆகாபின் குமா
ரத்தி [12]அவனுக்கு மனைவியாயிருந்தாள்; அவன்
கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பான
தைச் செய்தான். கர்த்தர்: உன் குமாரருக் 19
குள்ளே எந்நாளும் [13]ஒரு விளக்கை உனக்குக்
கட்டளையிடுவேன் என்று தம்முடைய தாச
னாகிய தாவீதுக்குச் சொன்னதின்படியே,
அவனிமித்தம் அவர் யூதாவை முற்றிலும் கெ

20 ஒக்கவில்லை. அவன் நாட்களில் யூதாவுடைய
கையின்கீழிருந்த ஏதோமியர் கலகம்பண்ணி,
[1]தங்களுக்கு ஒரு ராஜாவை ஏற்படுத்திக்
21 கொண்டார்கள். அதினாலே யோராம் சகல
இரதங்களோடுங்கூடச் சாயீருக்குப் புறப்பட்
டுப் போனான்; அவன் இராத்திரியில் எழுந்
திருந்து, தன்னை வளைந்துகொண்ட ஏதோமி
யரையும் இரதங்களின் தலைவரையும் முறிய
அடித்தபோது, ஜனங்கள் தங்கள் கூடாரங்க
22 ளுக்கு ஓடிப்போனார்கள். அப்படியே யூதா
வுடைய கையின்கீழிருந்த ஏதோமியர், இந்
நாள்வரைக்கும் இருக்கிறதுபோல, கலகம்
பண்ணினார்கள்; [2]அக்காலத்தில்தானே
லிப்னா பட்டணத்தாரும் கலகம்பண்ணினார்
23 கள். யோராமின் மற்ற வர்த்தமானங்களும்,
அவன் செய்தவை யாவும், யூதாவுடைய
ராஜாக்களின் நாளாகமப் புஸ்தகத்தில் அல்
24 லவோ எழுதியிருக்கிறது. யோராம் தன்
பிதாக்களோடே நித்திரையடைந்து, தன்
பிதாக்களிடத்திலே தாவீதின் நகரத்தில் அடக்
கம்பண்ணப்பட்டான்; அவனுக்குப் பதிலாக
அவன் குமாரனாகிய [3]அகசியா ராஜாவானான்.
25 இஸ்ரவேலின் ராஜாவாகிய ஆகாபின்
குமாரன் யோராமுடைய பன்னிரண்டாம்
வருஷத்திலே, யூதாவின் ராஜாவாகிய யோ
ராமின் குமாரன் அகசியா ராஜாவானான்.
26 அகசியா ராஜாவாகிறபோது, [4]இருபத்திர
ண்டு வயதாயிருந்து, ஒரே வருஷம் எருசலே
மில் ராஜ்யபாரம் பண்ணினான்; இஸ்ரவே
லின் ராஜாவாகிய ஓம்ரியின் குமாரத்தியான
27 அவன் தாயின்பேர் அத்தாலியாள். அவன்
ஆகாபுடைய வீட்டாரின் வழியே நடந்து,
ஆகாபின் வீட்டாரைப்போல் **கர்த்தரின்** பார்
வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான்;
அவன் ஆகாப் வீட்டாரோடே சம்பந்தங் கலந்
28 திருந்தான். அவன் ஆகாபின் குமாரனாகிய
[5]யோராமோடேகூடக் கீலேயாத்திலுள்ள ரா
மோத்திற்குச் சீரியாவின் ராஜாவாகிய ஆசகே
லோடு யுத்தம்பண்ணப் போனான்; சீரியர்
29 யோராமைக் காயப்படுத்தினார்கள். ராஜாவா
கிய யோராம் தான் சீரியாவின் ராஜாவாகிய
ஆசகேலோடு யுத்தம்பண்ணுகையில், சீரியர்
ராமாவிலே தன்னை வெட்டின காயங்களை
ஆற்றிக்கொள்ள யெஸ்ரயேலுக்குப் போயிருந்
தான்; [6]ஆகாபின் குமாரனாகிய யோராம் வியா
தியாயிருந்தபடியினால், யூதாவின் ராஜாவா
கிய யோராமின் குமாரன் அகசியா யெஸ்ர
யேலில் இருக்கிற அவனைப் பார்க்கிறதற்குப்
போனான்.

**9** அப்பொழுது தீர்க்கதரிசியாகிய எலிசா
தீர்க்கதரிசிகளின் புத்திரரில் ஒருவனை அழை
த்து: [7]நீ இடைகட்டிக்கொண்டு, இந்தத் தை
லக்குப்பியை உன் கையில் எடுத்துக்கொண்டு,
2 கீலேயாத்திலுள்ள ராமோத்திற்குப் போ. நீ
அங்கே சேர்ந்தபோது, நிம்சியின் மகனான
யோசபாத்தின் குமாரன் யெகூ எங்கே இருக்
கிறான் என்று பார்த்து, அங்கே உட்பிரவே
சித்து, அவனைத் தன் சகோதரரின் நடுவி
லிருந்து எழுந்திருக்கப்பண்ணி, [8]அவனை உள்
ளான ஒரு அறையிலே அழைத்துக்கொண்டு
போய், தைலக்குப்பியை எடுத்து, அவன் 3
தலையின்மேல் வார்த்து: [9]உன்னை இஸ்ரவே
லின்மேல் ராஜாவாக அபிஷேகம்பண்ணி
னேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறார் என்று
சொல்லி, கதவைத் திறந்து தாமதியாமல்
ஓடிப்போ என்றான். அப்படியே தீர்க்கதரிசி 4
யின் ஊழியக்காரனாகிய அந்த வாலிபன்
கீலேயாத்திலுள்ள ராமோத்திற்குப் போனான்.
அவன் உட்பிரவேசித்தபோது, சேனாபதிகள் 5
அங்கே உட்கார்ந்திருந்தார்கள்; அப்பொழுது
அவன்: சேனாபதியே, உமக்குச் சொல்ல
வேண்டிய ஒரு வார்த்தை உண்டு என்றான்.
அதற்கு யெகூ: எங்களெல்லாருக்குள்ளும்
யாருக்கு என்று கேட்டதற்கு, அவன், சேனா
பதியாகிய உமக்குத்தான் என்றான். அவன் 6
எழுந்து, அறைவீட்டிற்குள் பிரவேசித்தான்;
அவன் அந்தத் தைலத்தை அவன் தலையின்
மேல் வார்த்து, அவனை நோக்கி: இஸ்ரவே
லின் தேவனாகிய **கர்த்தர்** சொல்லுகிறது
என்னவென்றால், [10]உன்னைக் **கர்த்தருடைய**
ஜனமாகிய இஸ்ரவேலின்மேல் ராஜாவாக
அபிஷேகம்பண்ணினேன். நான் என் ஊழி 7
யக்காரராகிய தீர்க்கதரிசிகளின் இரத்தப்பழி
யையும், **கர்த்தருடைய** சகல ஊழியக்காரரின்
இரத்தப்பழியையும், [11]யேசபேலின் கையிலே
வாங்கும்படிக்கு நீ உன் ஆண்டவனாகிய ஆகா
பின் குடும்பத்தை அழித்துவிடக்கடவாய்.
ஆகாபின் குடும்பமெல்லாம் அழியும்படிக்கு, 8
நான் ஆகாபுக்குச் *சுவரில் நீர்விடும் ஒரு நாய்
முதலாய் இராதபடிக்கு, இஸ்ரவேலிலே அவ
னுடையவர்களில் அடைபட்டவனையும் விடு
பட்டவனையும் கருவறுத்து, ஆகாபின் குடும் 9
பத்தை நேபாத்தின் குமாரனாகிய யெரொபெ
யாமின் குடும்பத்துக்கும், அகியாவின் குமார
னாகிய பாஷாவின் குடும்பத்துக்கும் சரியாக்
குவேன். யேசபேலை யெஸ்ரயேலின் நிலத் 10
திலே [12]நாய்கள் தின்றுவிடும்; அவளை அடக்
கம்பண்ணுகிறவன் இல்லையென்கிறார் என்று
சொல்லி, கதவைத் திறந்து ஓடிப்போனான்.
யெகூ தன் ஆண்டவனுடைய ஊழியக்கா 11
ரிடத்துக்குத் திரும்பிவந்தபோது; அவர்கள்
அவனை நோக்கி: சுகசெய்தியா? அந்தப் பயித்
தியக்காரன் [13]உன்னிடத்தில் வந்தது என்ன
என்று கேட்டார்கள். அதற்கு அவன்: அந்த
மனுஷனையும், அவன் சொன்ன காரியத்தை
யும் நீங்கள் அறிவீர்கள் என்றான். அதற்கு 12
அவர்கள்: அது பொய், அதை எங்களுக்குச்
சொல்லும் என்றார்கள். அப்பொழுது அவன்.
நான் உன்னை இஸ்ரவேலின்மேல் ராஜாவாக
அபிஷேகம்பண்ணினேன் என்று **கர்த்தர்**
உரைக்கிறார் என்று இன்ன இன்ன பிரகார
மாக என்னிடத்தில் சொன்னான் என்றான்.
அப்பொழுது அவர்கள் தீவிரமாய் அவரவர் 13
தங்கள் [14]வஸ்திரத்தைப் படிகளின் உயரத்தில்

[1] 8. 27. ஆதி. 27. 40. 1 இரா. 22. 47
[2] 2 நாளா. 21. 10
[3] 2 நாளா. 21. 17: 22. 6
[4] 2 நாளா. 22. 2
[5] 2 நாளா. 22. 5
[6] 9. 15, 16
[7] 4. 29. எரே. 1. 17
[8] 5, 11. வச.
[9] 1 இரா. 19. 16
[10] 2 நாளா. 22. 7
[11] 1 இரா. 18. 4: 21. 15
* ஒரு ஆணும். 1 இரா. 14. 10: 21. 21, 22
[12] 1 இரா. 21. 23
[13] எரே. 29. 26. யோவா. 10. 20. அப். 26. 24. 1 கொரி. 4. 10
[14] மத். 21. 7

அவன் கீழே விரித்து, எக்காளம் ஊதி: யெகூ
14 ராஜாவானான் என்றார்கள். அப்படியே நிம்
சியின் மகனாகிய யோசபாத்தின் குமாரன்
யெகூ என்பவன் யோராமுக்கு விரோத
மாய்க் கட்டுப்பாடு பண்ணினான்; யோரா
மோ இஸ்ரவேலர் எல்லாரோடுங் கூட
கீலேயாத்திலுள்ள ராமோத்திலே சீரியாவின்
ராஜாவாகிய ஆசகேலினிமித்தம் காவல் வை
15 த்துவைத்தான். ஆனாலும் சீரியாவின் ராஜா
வாகிய ஆசகேலோடே பண்ணின யுத்தத்தி
லே, [1]சீரியர் தன்னை வெட்டின காயங்களை
யெஸ்ரயேலிலே ஆற்றிக்கொள்ளுகிறதற்கு,
ராஜாவாகிய யோராம் திரும்பிப் போயிருந்
தான். யெகூ என்பவன்: இது உங்களுக்குச்
சம்மதியாயிருந்தால் யெஸ்ரயேலில் இதை
அறிவிக்கிறதற்கு ஒருவரும் பட்டணத்தி
லிருந்து தப்பிப்போகும்படி விடாதிருங்கள்
16 என்றான். அப்பொழுது யெகூ இரதத்தின்
மேல் ஏறி, யெஸ்ரயேலுக்கு நேராகப் போ
னான், [1]யோராம் அங்கே வியாதியாய்க் கிடந்
தான்; யோராமைப் பார்க்க, [2]யூதாவின் ராஜா
வாகிய அகசியாவும் அங்கே வந்திருந்தான்.
17 யெஸ்ரயேலில் கோபுரத்தின்மேல் நிற்கிற
சாமக்காரன், யெகூவின் கூட்டம் வருகிற
தைக் கண்டு: ஒரு கூட்டத்தைக் காண்கிறேன்
என்றான். அப்பொழுது யோராம்: நீ ஒரு
குதிரைவீரனைக் கூப்பிட்டு, அவர்களுக்கு
எதிராக அனுப்பிச் [3]சமாதானமா என்று கேட்
18 கச்சொல் என்றான். அந்தக் குதிரைவீரன்:
அவனுக்கு எதிர்கொண்டுபோய், சமாதானமா
என்று ராஜா கேட்கச்சொன்னார் என்றான்.
அதற்கு யெகூ: சமாதானத்தைப்பற்றி உனக்கு
என்ன? என் பிறகே திரும்பிவா என்றான்.
அப்பொழுது சாமக்காரன்: அனுப்பப்பட்ட
வன் அவர்கள் இருக்கும் இடமட்டும் போன
போதிலும் திரும்பி வரவில்லை என்றான்.
19 ஆகையால் வேறொரு குதிரைவீரனை அனுப்
பினான். அவன் அவர்களிடத்தில் போய்:
சமாதானமா என்று ராஜா கேட்கச்சொன்னார்
என்றான். அதற்கு யெகூ: சமாதானத்தைப்
பற்றி உனக்கு என்ன? என் பிறகே திரும்பி
20 வா என்றான். அப்பொழுது சாமக்காரன்:
அவன் அவர்கள் இருக்கும் இடமட்டும் போன
போதிலும்திரும்பிவரவில்லை என்றும், *ஓட்டு
கிறது நிம்சியின் குமாரனாகிய யெகூ ஓட்டு
கிறதுபோல இருக்கிறது; [4]அதிவேகமாய்
21 ஓட்டுகிறான் என்றும் சொன்னான். அப்
பொழுது யோராம்: இரதத்தை ஆயத்தப்
படுத்து என்றான்; அவனுடைய இரதத்தை
ஆயத்தப்படுத்தினபோது, [5]இஸ்ரவேலின் ரா
ஜாவாகிய யோராமும், யூதாவின் ராஜாவாகிய
அகசியாவும் அவனவன் தன் தன் இரதத்தில்
ஏறி யெகூவுக்கு நேராகப் புறப்பட்டு, யெஸ்ர
யேலியனாகிய நாபோத்தின் நிலத்திலே அவ
22 னுக்கு எதிர்ப்பட்டார்கள். யோராம் யெகூ
வைக் கண்டவுடனே: யெகூவே, சமாதான
மா என்றான். அதற்கு யெகூ: உன் தாயாகிய
யேசபேலின் வேசித்தனங்களும் அவளுடைய
பில்லிசூனியங்களும், இத்தனை ஏராளமா
யிருக்கையில் சமாதானம் ஏது என்றான். அப் 23
பொழுது யோராம் தன் இரதத்தைத் திருப்
பிக்கொண்டு ஓடிப்போய், அகசியாவை நோ
க்கி: அகசியாவே: இது †சதி என்றான். யெகூ 24
தன் கையால் வில்லை நாணேற்றி, அம்பு யோ
ராமுடைய நெஞ்சில் உருவிப் புறப்படத்தக்க
தாய், அவனை அவன் புயங்களின் நடுவே
எய்தான்; அதினால் அவன் தன் இரதத்தி
லே சுருண்டு விழுந்தான். அப்பொழுது 25
யெகூ, தன் சேனாபதியாகிய பித்காரை
நோக்கி: அவனை எடுத்து, யெஸ்ரயேலிய
னாகிய நாபோத்தின் வயல்நிலத்தில் எறிந்து
போடு; நானும் நீயும் ஒரு சோடாய் அவன்
தகப்பனாகிய ஆகாபின் பிறகே குதிரை ஏறி
வருகிறபோது, **கர்த்தர்** இந்த ஆக்கினையை
[6]அவன்மேல் சுமத்தினார் என்பதை நினைத்
துக்கொள். நேற்று நாபோத்தின் இரத்தத் 26
தையும், அவன் குமாரரின் இரத்தத்தையும்
கண்டேன் அல்லவா என்றும், இந்த நிலத்
தில் [7]உனக்கு நீதியைச் சரிக்கட்டுவேன் என்
றும் அப்பொழுது **கர்த்தர்** சொன்னாரே; இப்
போதும் அவனை எடுத்து, **கர்த்தருடைய**
வார்த்தையின்படியே இந்த நிலத்தில் எறிந்து
போடு என்றான். இதை யூதாவின் ராஜா 27
வாகிய அகசியா கண்டு, தோட்டத்தின் வீட்டு
வழியாய் ஓடிப்போனான்; யெகூ அவனைப்
பின்தொடர்ந்து: அவனையும் இரதத்திலே
வெட்டிப்போடுங்கள் என்றான்; அவர்கள்
இப்லேயாம் கிட்ட இருக்கிற கூர்மலையின்
மேல் ஏறுகிற வழியிலே அப்படிச் செய்தார்
கள்; அவன் [8]மெகிதோவுக்கு ஓடிப்போய்
அங்கே செத்துப்போனான். அவனுடைய 28
ஊழியக்காரர் அவனை இரதத்தின்மேல் எருச
லேமுக்குக் கொண்டுபோய், அவனைத் தாவீ
தின் நகரத்தில் அவன் பிதாக்களோடு அவ
னுடைய கல்லறையிலே அடக்கம் பண்ணி
னார்கள். இந்த அகசியா, ஆகாபுடைய குமார 29
னாகிய யோராமின் பதினோராம் வருஷத்தில்
யூதாவின்மேல் ராஜாவானான்.

யெகூ யெஸ்ரயேலுக்கு வந்தான்; அதை 30
யேசபேல் கேட்டபோது, தன் கண்களுக்கு
மையிட்டு, [9]தன் தலையைச் சிங்காரித்துக்
கொண்டு, ஜன்னல்வழியாய் எட்டிப்பார்த்து,
யெகூ ஒலிமுகவாசலில் வந்தபோது, அவள்: 31
[10]தன் ஆண்டவனைக் கொன்ற சிம்ரி க்ஷேமம்
அடைந்தானா என்றாள். அப்பொழுது அவன் 32
தன் முகத்தை அந்த ஜன்னலுக்கு நேராக
ஏறெடுத்து: என் பட்சத்தில் இருக்கிறது யார்?
யார்? என்று கேட்டதற்கு, இரண்டு மூன்று
பிரதானிகள் அவனை எட்டிப்பார்த்தார்கள்.
அப்பொழுது அவன்: அவளைக் கீழே தள்ளுங் 33
கள் என்றான்; அப்படியே அவளைக் கீழே
தள்ளினதினால், அவளுடைய இரத்தம் சுவரி
லும் குதிரைகளிலும் தெறித்தது; அவன்
அவளை மிதித்துக்கொண்டு, உள்ளே போய், 34

[1] 8. 29
[2] 8. 29
[3] 2 சாமு. 16. 4
* ஓடுகிற ஓட்டம்.
[4] ஆப. 1. 6
[5] 2 நாளா. 22. 7
† ராஜ துரோகம்.
[6] 1 இரா. 21. 29
[7] 1 இரா. 21. 19
[8] 2 நாளா. 22. 9
[9] எசே. 23. 40
[10] 1 இரா. 16. 9–20

புசித்துக் குடித்தபின்பு: நீங்கள் போய் சபிக்
கப்பட்ட அந்த ஸ்திரீயைப் பார்த்து, அவளை
அடக்கம் பண்ணுங்கள்; [1]அவள் ஒரு ராஜ
35 குமாரத்தி என்றான். அவர்கள் அவளை
அடக்கம் பண்ணப்போகிறபோது, அவளு
டைய தலையோட்டையும் கால்களையும் உள்
ளங்கைகளையுமே அல்லாமல் வேறொன்றை
36 யும் காணவில்லை. ஆகையால் அவர்கள்
திரும்பவந்து அவனுக்கு அறிவித்தார்கள்;
அப்பொழுது அவன்: இது **கர்த்தர்** திஸ்பிய
னாகிய எலியா என்னும் தம்முடைய ஊழியக்
காரனைக்கொண்டு சொன்ன வார்த்தை; [2]யெ
ஸ்ரயேலின் நிலத்திலே நாய்கள் யேசபேலின்
37 மாம்சத்தைத் தின்னும் என்றும், இன்னது
யேசபேலென்று சொல்லக்கூடாதபடிக்கு,
[3]யேசபேலின் பிரேதம் யெஸ்ரயேலின் நிலத்
திலே வயல்வெளியின்மேல் போடும் எரு
வைப்போல் ஆகும் என்றும் சொன்னாரே
என்றான்.

**10** ஆகாபுக்குச் சமாரியாவிலே எழுபது குமா
ரர் இருந்தபடியினால், யெகூ சமாரியாவிலிரு
க்கிற யெஸ்ரயேலின் பிரபுக்களாகிய மூப்பரி
டத்துக்கும், ஆகாபுடைய பிள்ளைகளை வளர்க்
கிறவர்களிடத்துக்கும் நிருபங்களை எழுதியனு
2 ப்பினான். அதில்: உங்கள் ஆண்டவனுடைய
குமாரர்கள் உங்களோடிருக்கிறார்களே; இர
தங்களும், குதிரைகளும், அரணான பட்டண
மும், ஆயுதங்களும் உங்களுக்கு உண்டே.
3 இப்போதும் இந்த நிருபம் உங்களிடத்தில்
வரும்போது நீங்கள் உங்கள் ஆண்டவனு
டைய குமாரரில் உத்தமமும் செம்மையுமா
யிருக்கிறவனைப் பார்த்து, அவனை அவன்
தகப்பனுடையசிங்காசனத்தின்மேல் வைத்து,
உங்கள் ஆண்டவனுடைய குடும்பத்துக்காக
யுத்தம்பண்ணுங்கள் என்று எழுதியிருந்தது.
4 அவர்கள் மிகவும் பயந்து: இதோ, இரண்டு
ராஜாக்கள் அவனுக்கு முன்பாக நிற்கவில்லை
யே; நாங்கள் எப்படி நிற்போம் என்றார்கள்.
5 ஆகையால் அரமனை விசாரிப்புக்காரனும்,
நகர விசாரிப்புக்காரனும், மூப்பரும், பிள்ளை
களின் விசாரிப்புக்காரரும்: நாங்கள் உமது
அடியார்கள், நீர் எங்களுக்குச் சொல்வதை
யெல்லாம் செய்வோம்; நாங்கள் ஒருவனையும்
ராஜாவாக்குவதில்லை; உமது பார்வைக்குச்
சம்மதியானதைச் செய்யும் என்று யெகூவுக்
குச் சொல்லியனுப்பினார்கள்.
6 அப்பொழுது அவன்: அவர்களுக்கு இர
ண்டாம் நிருபத்தை எழுதினான்; அதில்: நீங்
கள் என் பட்சத்தில் சேர்ந்து என் சொல்லைக்
கேட்பீர்களானால், உங்கள் ஆண்டவனுடைய
குமாரரின் தலைகளை வாங்கி, நாளை இந்நே
ரத்தில் யெஸ்ரயேலுக்கு என்னிடத்தில் வா
ருங்கள் என்று எழுதியிருந்தது. ராஜாவின்
குமாரராகிய எழுபதுபேரும் தங்களை வளர்க்
கிற பட்டணத்தின் பெரியமனுஷரோடு இருந்
7 தார்கள். இந்த நிருபம் அவர்களிடத்தில்
வந்தபோது, அவர்கள் ராஜாவின் குமாரரா

[1] 1 இரா. 16. 31
[2] 1 இரா. 21. 23
[3] சங். 83. 10
[4] 1 இரா. 21. 21
[5] 9. 14, 24
[6] 1 சாமு. 3. 19. 1 இரா. 21. 19, 21, 29
[7] எரே. 35. 6. ழ
* வினவி, வாழ்த்தி.
[8] 1 இரா. 19. 10

கிய எழுபதுபேரையும் பிடித்துவெட்டி, [4]அவ
ர்கள் தலைகளைக் கூடைகளில் வைத்து, யெஸ்ர
யேலிலிருக்கிற அவனிடத்திற்கு அனுப்பி
னார்கள். அனுப்பப்பட்ட ஆள் வந்து: ராஜ 8
குமாரரின் தலைகளைக் கொண்டுவந்தார்கள்
என்று அவனுக்கு அறிவித்தபோது, அவன்
விடியற்காலமட்டும் அவைகளை ஒலிமுகவாச
லில் இரண்டு குவியலாகக் குவித்துவையுங்
கள் என்றான். மறுநாள் காலமே அவன் 9
வெளியே வந்து நின்று, சகல ஜனங்களையும்
நோக்கி: நீங்கள் நீதிமான்களல்லவா? இதோ,
நான் என் ஆண்டவனுக்கு விரோதமாகக்
[5]கட்டுப்பாடுபண்ணி அவனைக்கொன்றுபோட்
டேனே; ஆனாலும் இவர்கள் எல்லாரையும்
கொன்றவன் யார்? ஆதலால் **கர்த்தர்** ஆகா 10
பின் குடும்பத்தாருக்கு விரோதமாகச்சொன்ன
**கர்த்தருடைய** வார்த்தைகளில் ஒன்றும் [6]தரை
யிலே விழவில்லை என்பதை அறிந்துகொள்
ளுங்கள்; **கர்த்தர்** தம்முடைய ஊழியக்கார
னாகிய எலியாவைக்கொண்டு சொன்னதைச்
செய்தார் என்றான். யெஸ்ரயேலிலும் ஆகா 11
பின் குடும்பத்தாரில் மீதியான யாவரையும்,
அவனுக்கு இருந்த எல்லா மந்திரிகளையும்,
அவனைச்சேர்ந்த மனுஷரையும், அவனுடைய
ஆசாரியர்களையும், அவனுக்கு ஒருவரையும்
மீதியாக வைக்காதபடிக்கு, யெகூ கொன்று
போட்டான். பின்பு அவன் எழுந்து சமாரி 12
யாவுக்குப் போகப் புறப்பட்டான்; வழியிலே
அவன் ஆட்டுமயிர் கத்தரிக்கிற மேய்ப்பரின்
ஊர் இருக்கும் இடத்துக்கு வந்தபோது,
யூதாவின் ராஜாவாகிய அகசியாவின் சகோ 13
தரரை அங்கே கண்டு; நீங்கள் யார் என்று
கேட்டான். அவர்கள்: நாங்கள் அகசியாவின்
சகோதரர்; நாங்கள் ராஜாவின் பிள்ளைகளை
யும் ராஜஸ்திரீயின் பிள்ளைகளையும் வினவுகிற
தற்குப் போகிறோம் என்றார்கள். அப்பொ 14
ழுது அவன்: இவர்களை உயிரோடே பிடியுங்
கள் என்றான்; அவர்களை உயிரோடே பிடித்
து, நாற்பத்திரண்டு பேர்களாகிய அவர்களை
ஆட்டுமயிர் கத்தரிக்கிற துரவண்டையிலே
வெட்டிப் போட்டார்கள்; அவர்களில் ஒரு
வனையும் அவன் மீதியாக விடவில்லை.
அவன் அவ்விடம்விட்டுப் புறப்பட்டபோ 15
து, தனக்கு எதிர்ப்பட்ட ரேகாபின் குமாரனா
கிய [7]யோனதாபைச் சந்தித்து, அவனை *உப
சரித்து: என் இருதயம் உன் இருதயத்தோடே
செம்மையாய் இருக்கிறதுபோல உன் இருதய
மும் செம்மையாயிருக்கிறதா என்று கேட்
டான். அதற்கு யோனதாப்: அப்படியே
இருக்கிறது என்றான்; அப்படியிருக்கிறதா
னால், உன் கையைத் தா என்று சொன்னான்;
அவன் தன் கையைக் கொடுத்தபோது, அவ
னைத் தன்னிடத்தில் இரதத்தின்மேல் ஏறி
வரச்சொல்லி, நீ என்னோடே கூடவந்து 16
**கர்த்தருக்காக** எனக்கு இருக்கிற பக்திவைராக்
கியத்தைப் [8]பார் என்றான்; அப்படியே இவனை
அவன் இரதத்தின்மேல் ஏற்றினார்கள்.

17 அவன் சமாரியாவுக்கு வந்தபோது, கர்த்தர்
எலியாவோடே சொன்ன வார்த்தையின்படி
யே, [1]சமாரியாவில் ஆகாபுக்கு மீதியான யா
வரையும் அழித்துத் தீருமளவும் சங்காரஞ்
18 செய்தான். பின்பு யெகூ ஜனங்களையெல்
லாம் கூட்டி, அவர்களை நோக்கி: ஆகாப் பா
காலைச் சேவித்தது கொஞ்சம், [2]யெகூ அவ
19 னைச் சேவிப்பது மிகுதி. இப்போதும் பாகா
லின் சகல தீர்க்கதரிசிகளையும், [3]அவனுடைய
சகல பணிவிடைக்காரரையும், அவனுடைய
சகல ஆசாரியரையும் என்னிடத்தில் அழைப்
பியுங்கள்; ஒருவனும் குறையலாகாது; நான்
பாகாலுக்குப் பெரிய பலியிடப்போகிறேன்;
வராதவன் எவனோ அவன் உயிரோடிருப்ப
தில்லை என்றான்; பாகாலின் பணிவிடைக்கா
ரரை அழிக்கும்படி யெகூ இதைத் தந்திர
20 மாய்ச் செய்தான். பாகாலுக்குப் பண்டிகை
யின் ஆசரிப்பைக் கூறுங்கள் என்று யெகூ
21 சொன்னான்; அப்படியே கூறினார்கள். யெகூ
இஸ்ரவேல் தேசமெங்கும் அதைச் சொல்லி
யனுப்பினபடியினால், பாகாலின் பணிவி
டைக்காரர் எல்லாரும் வந்தார்கள்; வராதவன்
ஒருவனுமில்லை; [4]அவர்கள் பாகாலின் கோவி
லுக்குள் பிரவேசித்ததினால் பாகாலின் கோ
22 வில் நாற்சாரியும் நிறைந்திருந்தது. அப்பொ
ழுது அவன், வஸ்திரசாலை விசாரிப்புக்காரனை
நோக்கி: பாகாலின் பணிவிடைக்காரருக்கெல்
லாம் வஸ்திரங்களை எடுத்துக்கொண்டுவா என்
றான்; அவர்களுக்கு வஸ்திரங்களை எடுத்துக்
23 கொண்டு வந்தான். பின்பு யெகூ: ரேகாபின்
குமாரனாகிய யோனதாபோடுங்கூடப் பாகா
லின் கோவிலுக்குள் பிரவேசித்து, பாகாலின்
பணிவிடைக்காரரை நோக்கி: பாகாலின் ஊழி
யக்காரரே அல்லாமல் **கர்த்தரின்** ஊழியக்கா
ரரில் ஒருவரும் இங்கே உங்களோடு இராத
படிக்குத் திட்டமாய்ப் பாருங்கள் என்றான்.
24 அவர்கள் பலிகளையும் சர்வாங்க தகனங்களை
யும் செலுத்த உட்பிரவேசித்தபின்பு, யெகூ
வெளியிலே எண்பதுபேரைத் தனக்கு ஆயத்
தமாக வைத்து: நான் உங்கள் கையில் ஒப்பு
விக்கிற மனுஷரில் ஒருவனை எவன் தப்பவிடு
கிறானோ [5]அவனுடைய ஜீவனுக்குப் பதிலாக
அவனைத் தப்பவிட்டவனுடைய ஜீவன் ஈடா
25 யிருக்கும் என்றான். சர்வாங்க தகனபலி
யிட்டுத் தீர்ந்தபோது, யெகூ சேவகரையும்
சேர்வைக்காரரையும் நோக்கி: உள்ளே போய்,
அவர்களை வெட்டிப்போடுங்கள்; ஒருவரையும்
வெளியே விடவேண்டாம் என்றான்; அப்
படியே பட்டயக்கருக்கினால் சேவகரும் சேர்
வைக்காரரும் அவர்களை வெட்டி எறிந்துபோ
ட்டு, பாகால் கோவிலைச் சேர்ந்த ஸ்தலம் எங்
26 கும் போய், பாகால் கோவில் விக்கிரகங்களை
வெளியே எடுத்துவந்து, [6]அவைகளைத் தீக்
27 கொளுத்தி, பாகாலின் சிலையைத் தகர்த்து,
பாகாலின் கோவிலை இடித்து, அதை இக்
நாள்வரைக்கும் இருக்கிறதுபோல [7]மலஜலாதி
28 இடமாக்கினார்கள். இப்படியே யெகூ பா

காலை இஸ்ரவேலில் இராதபடிக்கு அழித்துப்
போட்டான். ஆனாலும் பெத்தேலிலும் தா 29
ணிலும் வைத்த [8]பொற்கன்றுக்குட்டிகளால்,
இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின நே
பாத்தின் குமாரனாகிய யெரொபெயாமின்
பாவங்களை யெகூ விட்டு விலகவில்லை. **கர்த்** 30
**தர்** யெகூவை நோக்கி: என்பார்வைக்குச்
செம்மையானதை நீ நன்றாய்ச் செய்து, என்
இருதயத்தில் இருந்தபடியெல்லாம் ஆகாபின்
குடும்பத்துக்குச் செய்தபடியினால், [9]உன்
குமாரர் இஸ்ரவேலுடைய சிங்காசனத்தின்
மேல் நாலு தலைமுறையாக வீற்றிருப்பார்கள்
என்றார். ஆனாலும் யெகூ இஸ்ரவேலின் 31
தேவனாகிய **கர்த்தரின்** நியாயப்பிரமாணத்தின்
படி தன் முழு இருதயத்தோடும் நடக்கக் கவ
லைப்படவில்லை; இஸ்ரவேலைப் பாவஞ்செய்
யப்பண்ணின யெரொபெயாமின் [10]பாவங்களை
விட்டு அவன் விலகவும் இல்லை. அந்நாட்கள் 32
முதல் **கர்த்தர்** இஸ்ரவேலைக் குறைந்துபோ
கப்பண்ணினார்; [11]ஆசகேல் அவர்களை இஸ்ர
வேலின் எல்லைகளிலெல்லாம் முறிய அடி
த்து, யோர்தான் துவக்கிக் கிழக்கிலுள்ள அர் 33
னோன் நதிக்குச் சமீபமான ஆரோவேர் முதற்
கொண்டிருக்கிற கீலேயாத்திலும் பாசானிலு
முள்ள காதியர், ரூபேனியர், மனாசேயர்
இவர்களுடைய தேசமாகிய கீலேயாத் முழு
வதையும் முறிய அடித்தான்.
யெகூவின் மற்ற வர்த்தமானங்களும், அ 34
வன் செய்தவை யாவும், அவனுடைய எல்லா
வல்லமையும் இஸ்ரவேல் ராஜாக்களின் நாளா
கமப் புஸ்தகத்தில் அல்லவோ எழுதியிருக்
கிறது. யெகூ தன் பிதாக்களோடே நித்திரை 35
யடைந்தபின், அவனைச் சமாரியாவில் அடக்
கம்பண்ணினார்கள்; அவன் ஸ்தானத்தில்
அவன் குமாரனாகிய யோவாகாஸ் ராஜாவா
னான். யெகூ சமாரியாவிலே இஸ்ரவேலின் 36
மேல் ராஜ்யபாரம்பண்ணின நாட்கள் இருபத்
தெட்டுவருஷம்.

**11**
அகசியாவின் தாயாகிய [12]அத்தாலியாள்
தன் குமாரன் இறந்துபோனதைக் கண்ட
போது, எழும்பி ராஜவம்சஸ்தர் யாவரையும்
சங்காரம்பண்ணினாள். யோராம் என்னும் 2
ராஜாவின் குமாரத்தியும் அகசியாவின் சகோ
தரியுமாகிய யோசேபாள், கொலையுண்ணப்
படுகிற ராஜகுமாரரின் நடுவிலிருக்கிற அகசி
யாவின் மகனாகிய யோவாசைக் களவாய் எடு
த்தாள், அவன் கொல்லப்படாதபடி, அவனை
யும் அவன் தாதியையும் அத்தாலியாளுக்குத்
தெரியாமல் பள்ளி அறையில் ஒளித்துவைத்
தார்கள். இவனோடேகூட அவன் ஆறு வரு 3
ஷம் **கர்த்தருடைய** ஆலயத்தில் ஒளித்துவைக்
கப்பட்டிருந்தான்; அத்தாலியாள் தேசத்தின்
மேல் ராஜ்யபாரம் பண்ணினாள்.
ஏழாம் வருஷத்திலே [13]யோய்தா நூறுபே 4
ருக்கு அதிபதிகளையும் தலைவரையும் காவலாள
ரையும் அழைப்பித்து, அவர்களைத் தன்னிட
த்தில் **கர்த்தருடைய** ஆலயத்திலே வரச்சொ

1 9. 8. 1 இரா. 21. 21
2 1 இரா. 16. 31, 32
3 1 இரா. 22. 6
4 1 இரா. 16. 32
5 1 இரா. 20. 39
6 1 இரா. 14. 23
7 எஸ்றா. 6. 11. தானி. 2. 5
8 1 இரா. 12. 28, 29
9 25. அ. 13. 1, 10; 14. 23
10 1 இரா. 14. 16
11 8. 12
12 8-26. 2 நாளா. 22. 10, 11
13 2 நாளா. 23. 1. ...

ல்லி, அவர்களோடு உடன்படிக்கைபண்ணி,
அவர்களைக் கர்த்தருடைய ஆலயத்திலே ஆணை
யிடுவித்துக்கொண்டு, அவர்களுக்கு ராஜா
5 வின் குமாரனைக் காண்பித்து, அவர்களை
நோக்கி: நீங்கள் செய்யவேண்டிய காரியம்
என்னவென்றால், [1]ஓய்வுநாளில் முறைப்படி
இங்கே வருகிற உங்களில் மூன்றில் ஒரு
பங்கு ராஜாவின் அரமனைக் காவல் காக்கவே
6 ண்டும். மூன்றில் ஒருபங்கு சூர் என்னும்
வாசலிலும், மூன்றில் ஒருபங்கு காவலாள
ரின் காவலின் பிறகே இருக்கிற வாசலிலு
மிருந்து ஆலயக்காவலைப் பத்திரமாய்க் காக்க
7 வேண்டும். இப்படியே ஓய்வுநாளில் முறைப்
படியே உங்களில் இரண்டுபங்குபேர், ராஜாவி
னிடத்தில் கர்த்தருடைய ஆலயத்தைக் காவல்
8 காக்கவேண்டும். நீங்கள் அவரவர் தங்கள்
ஆயுதங்களைக் கையிலே பிடித்தவர்களாய்,
ராஜாவைச் சுற்றிலும் வரிசையாய் நின்று
கொண் டிருக்கவேண்டும்; *வரிசைகளுக்குள்
புகுந்து வருகிறவன் கொலை செய்யப்படக்
கடவன்; ராஜா வெளியே போகும்போதும்
உள்ளே வரும்போதும் நீங்கள் அவரோடே
9 இருங்கள் என்றான். ஆசாரியனாகிய யோய்தா
கட்டளையிட்டபடியெல்லாம் நூறுபேருக்கு
அதிபதிகள் செய்து, [2]அவரவர் ஓய்வுநாளில்
முறைப்படி வருகிறவர்களும் முறைப்படி
போகிறவர்களுமாகிய தங்கள் மனுஷரைக்
கூட்டிக்கொண்டு, ஆசாரியனாகிய யோய்தாவி
10 னிடத்தில் வந்தார்கள். ஆசாரியன் கர்த்த
ரின் ஆலயத்தில் தாவீதுராஜா வைத்திருந்த
ஈட்டிகளையும் கேடகங்களையும் நூறுபேருக்கு
11 அதிபதிகளிடத்தில் கொடுத்தான். காவலா
ளர் அவரவர் தங்கள் ஆயுதங்களைப் பிடித்தவர்
களாய், ஆலயத்தின் வலதுபக்கம் தொடங்கி
அதின் இடதுபக்கமட்டும், பலிபீடத்திற்கு
எதிராகவும் ஆலயத்திற்கு எதிராகவும் ராஜா
12 வைச் சுற்றிலும் நின்றார்கள். அப்பொழுது
அவன்: ராஜகுமாரனை வெளியே கொண்டு
வந்து, கிரீடத்தை அவன்மேல் வைத்து,
சாட்சியின் ஆகமத்தை அவன் கையிலே
கொடுத்தான்; இப்படி அவனை ராஜாவாக்கி
அபிஷேகம்பண்ணி: ராஜா வாழ்க [3]என்று
13 சொல்லி கைகொட்டினார்கள். ஓடிவருகிற
ஜனங்கள் செய்த ஆரவாரத்தை அத்தாலியாள்
கேட்டபோது: [4]அவள் கர்த்தருடைய ஆல
14 யத்திற்கு ஜனங்களிடத்தில் வந்து, இதோ,
ராஜா முறைமையின்படியே [5]தூணண்டை
யிலே நிற்கிறதையும், ராஜாவண்டையில் நிற்
கிற பிரபுக்களையும், எக்காளம் ஊதுகிறவர்
களையும், தேசத்து ஜனங்கள் எல்லாரும் சந்
தோஷப்பட்டு எக்காளம் ஊதுகிறதையும் கண்
டவுடனே, அத்தாலியாள் தன் வஸ்திரங்களைக்
கிழித்துக்கொண்டு: துரோகம்துரோகம்என்று
15 கூவினாள். ஆசாரியனாகிய யோய்தா இராணு
வத்தலைவராகிய நூறுபேருக்கு அதிபதிகளான
வர்களுக்குக் கட்டளையிட்டு: இவளை †வரிசை
களுக்குப் புறம்பே கொண்டுபோங்கள்; இவ

ளைப் பின்பற்றுகிறவனைப் பட்டயத்தாலே
வெட்டிப்போடுங்கள் என்றான். கர்த்தருடைய
ஆலயத்தில் அவளைக் கொல்லலாகாது என்று
ஆசாரியன் சொல்லியிருந்தான். அவர்கள் அவ 16
ளுக்கு இடம் உண்டாக்கினபோது, ராஜாவின்
அரமனைக்குள் குதிரைகள் பிரவேசிக்கிற வழி
யிலே அவள் போகையில், அவளைக் கொன்று
போட்டார்கள்.

அப்பொழுது யோய்தா, அவர்கள் கர்த்தரு 17
டைய ஜனமாயிருக்கும்படிக்கு, ராஜாவும்
ஜனங்களும் கர்த்தரோடே உடன்படிக்கை
பண்ணவும், [6]ராஜாவும் ஜனங்களும் ஒருவரோ
டொருவர் உடன்படிக்கை பண்ணவும் செய்
து, பின்பு தேசத்தின் ஜனங்கள் எல்லாரும் 18
பாகாலின் கோவிலில்போய், [7]அதை இடித்து,
அதின் பலிபீடங்களையும் அதின் விக்கிரகங்
களையும் முற்றிலும் உடைத்து, பாகாலின்
பூஜாசாரியாகிய மாத்தானைப் பலிபீடங்களு
க்கு முன்பாகக் கொன்றுபோட்டார்கள். ஆசா
ரியன் கர்த்தருடைய ஆலயத்தை விசாரிக்கும்
உத்தியோகஸ்தரை ஏற்படுத்தினான். நூறு 19
பேருக்கு அதிபதிகளையும் தலைவரையும் காவ
லாளரையும் தேசத்தின் ஜனங்களையும் கூட்டி,
ராஜாவைக் கர்த்தருடைய ஆலயத்திலிருந்து
இறங்கப்பண்ணி, அவனைக் காவலாளரின்
வாசல்வழியாய் ராஜ அரமனைக்கு அழைத்துக்
கொண்டுபோனார்கள்; அங்கே அவன் ராஜாக்க
ளுடைய சிங்காசனத்தின்மேல் உட்கார்ந்தான்.
தேசத்தின் ஜனங்கள் எல்லாரும் மகிழ்ந்து 20
நகரம் அமைதலாயிற்று. அத்தாலியாளையோ
ராஜாவின் அரமனையண்டையில் பட்டயத்
தால் கொன்றுபோட்டார்கள். யோவாஸ் 21
ராஜாவாகிறபோது [8]ஏழுவயதாயிருந்தான்.

யெகூவின் ஏழாம் வருஷத்தில் யோவாஸ் **12**
ராஜாவாகி, எருசலேமிலே நாற்பது வருஷம்
ராஜ்யபாரம் பண்ணினான்; பெயெர்செபா
ஊராளாகிய அவனுடைய தாயின்பேர் சிபி
யாள். ஆசாரியனாகிய யோய்தா யோவாசைப் 2
போதகம்பண்ணின நாளெல்லாம் அவன் கர்த்
தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்
தான். மேடைகளைமாத்திரம் அகற்றவில்லை; 3
[9]ஜனங்கள் இன்னும் மேடைகள்மேல் பலி
யிட்டுத் தூபங்காட்டிவந்தார்கள்.

யோவாஸ் ஆசாரியரை நோக்கி: பிரதிஷ்டை 4
யாக்கப்பட்ட பொருள்களாகிய கர்த்தருடைய
ஆலயத்துக்குக் கொண்டுவரப்படுகிற எல்லாப்
பணங்களையும், [10]இலக்கத்திற் குட்படுகிறவர்க
ளின் பணத்தையும், மீட்புக்காக மதிக்கப்படு
கிற ஆட்களின் பணத்தையும், கர்த்தருடைய
ஆலயத்துக்குக் கொண்டுவரும்படி, அவரவர்
தம்தம் மனதிலே நியமித்திருக்கும் எல்லாப்
பணத்தையும், ஆசாரியர்கள் அவரவர் தங்க 5
ளுக்கு அறிமுகமானவர்கள் கையில் வாங்கிக்
கொண்டு, ஆலயத்தில் எங்கெங்கே பழுது
காண்கிறதோ, அங்கேயெல்லாம் ஆலயத்தைப்
பழுதுபார்க்கவேண்டும் என்றான். ஆனாலும் 6
ராஜாவாகிய யோவாசின் இருபத்து மூன்றாம்

[1] 1 நாளா. 9. 25
* அணிகள்.
[2] 2 நாளா. 23. 8
[3] 1 சாமு. 10. 24
[4] 2 நாளா. 23. 12. [illegible]
[5] 23. 3. 2 நாளா. 34. 31
† அணிகள்.
[6] 2 சாமு. 5. 3. 2 நாளா. 23. 16
[7] 10. 26. உபா. 12. 3
[8] 2 நாளா. 24. 1
[9] 1 இரா. 15. 14
[10] 22. 4. யாத். 35. 5. 1 நாளா. 29. 9

வருஷமட்டும் ஆசாரியர்கள் [1]ஆலயத்தைப்
7 பழுது பாராதே போனபடியினால், ராஜா
வாகிய யோவாஸ் ஆசாரியனாகிய யோய்தா
வையும் மற்ற ஆசாரியர்களையும் அழைப்பித்து:
நீங்கள் ஆலயத்தைப் பழுதுபாராதேபோன
தென்ன? இனி நீங்கள் உங்களுக்கு அறிமுக
மானவர்கள் கையிலே பணத்தை வாங்காமல்,
அதை ஆலயத்தைப் பழுதுபார்க்கிறதற்காக
8 விட்டுவிடுங்கள் என்றான். அப்பொழுது
ஆசாரியர்கள் ஜனத்தின் கையிலே பணத்தை
வாங்கிக்கொள்ளாமலும், ஆலயத்தைப் பழுது
பாராமலும் இருக்கிறதற்குச் சம்மதித்தார்கள்.
9 ஆசாரியனாகிய யோய்தா ஒரு பெட்டியை
எடுத்து, [2]அதின் மூடியிலே ஒரு துவாரமிட்டு,
அதைப்பலிபீடத்தண்டையிலே**கர்த்தருடைய**
ஆலயத்தில்ஜனங்கள் உட்பிரவேசிக்கும்வலது
பக்கத்தில் வைத்தான்; வாசற்படியைக் காக்
கிற ஆசாரியர்கள் **கர்த்தருடைய** ஆலயத்திற்குக்
கொண்டுவரப்பட்ட பணத்தையெல்லாம் அதி
10 லே போட்டார்கள். பெட்டியிலே மிகுந்த
பணம் உண்டென்று அவர்கள் காணும்போது,
ராஜாவின் சம்பிரதியும் பிரதான ஆசாரியனும்
வந்து: **கர்த்தருடைய** ஆலயத்திலே சேகரிக்
கப்பட்ட பணத்தை எண்ணி முடிப்புக்கட்டி,
11 எண்ணின பணத்தைக் **கர்த்தருடைய** ஆலயத்
திலே விசாரிப்புக்காரர் கையிலே கொடுப்பார்
கள்; அதை அவர்கள் **கர்த்தருடைய** ஆலயத்
தைப் பழுதுபார்க்கிற தச்சருக்கும், சிற்பாசா
12 ரிகளுக்கும், கொற்றருக்கும், கல்தச்சருக்கும்,
**கர்த்தருடைய** ஆலயத்தைப் பழுது பார்க்கத்
தேவையான மரங்களையும் வெட்டின கற்களை
யும் கொள்ளுகிறதற்கும் ஆலயத்தைப் பழுது
பார்க்கிறதற்குச் செல்லும் எல்லாச் செலவுக்
13 கும் கொடுப்பார்கள். **கர்த்தருடைய** ஆலயத்
திற்குக் கொண்டுவரப்பட்ட பணத்தினாலே
வெள்ளிக் கிண்ணங்களும், கீதவாத்தியங்க
ளும், கலங்களும், எக்காளங்களும், பொற்
பாத்திரங்களும், [3]வெள்ளிப் பாத்திரங்களும்
14 பண்ணப்படாமல், **கர்த்தருடைய** ஆலயத்
தைப் பழுது பார்க்கும்படிக்கு வேலைசெய்கிற
15 வர்களுக்கே அதைக் கொடுத்தார்கள். வேலை
செய்கிறவர்களுக்குக் கொடுக்கும்படிக்கு,
பணத்தை வரப்பற்றிக்கொண்ட மனுஷர் கை
யிலே கணக்குக் கேளாதிருந்தார்கள்; [4]அவர்
கள் உண்மையாய் அதை நடப்பித்தார்கள்.
16 குற்றப் பிராயச்சித்தப் பணமும் பாவப் பிரா
யச்சித்தப் பணமும் **கர்த்தருடைய** ஆலயத்
திற்காகக் கொண்டுவரப்படவில்லை; [5]அது
ஆசாரியனைச் சேர்ந்தது.
17 அதற்குப்பின்பு சீரியாவின் ராஜாவாகிய
ஆசகேல் வந்து, காத்தூரின்மேல் யுத்தம்
பண்ணி அதைப் பிடித்தான்; [6]அதின்பின்பு
எருசலேமுக்கு விரோதமாய்ப்போக ஆசகேல்
18 தன் முகத்தைத்திருப்பினான். அப்பொழுது
யூதாவின் ராஜாவாகிய யோவாஸ், தன் பிதாக்
களாகிய யோசபாத் யோராம் அகசியா என்
னும் யூதாவின் ராஜாக்கள் பரிசுத்தம் பண்ணி
வைத்த எல்லாவற்றையும் தான் பரிசுத்தம்
பண்ணிவைத்ததையும், **கர்த்தருடைய** ஆலயத்
திலும் ராஜாவின் அரமனையிலுமுள்ள பொக்
கிஷங்களில் அகப்பட்ட பொன் யாவையும்
எடுத்து சீரியாவின் ராஜாவாகிய ஆசகேலுக்கு
அனுப்பினான்; [7]அப்பொழுது அவன் எருச
லேமை விட்டுத் திரும்பிப்போனான். யோவா 19
சின் மற்ற வர்த்தமானங்களும், அவன் செய்த
வை யாவும் யூதாவுடைய ராஜாக்களின் நாளாக
மப் புஸ்தகத்தில் அல்லவோ எழுதியிருக்கி
றது. யோவாசின் ஊழியக்காரர் எழும்பி கட் 20
டுப்பாடு பண்ணிக்கொண்டு, [8]சில்லாவுக்குப்
போகிற வழியிலிருக்கிற மில்லோ வீட்டிலே
அவனைக்கொன்றுபோட்டார்கள். சிமியாதின் 21
குமாரன் யோசகார், சோமேரின் குமாரன்
யோசபாத் என்னும் அவனுடைய ஊழியக்
காரர் அவனைக் கொன்றார்கள்; [9]இறந்துபோன
அவனைத் தாவீதின் நகரத்தில் அவனுடைய
பிதாக்களண்டையிலே அடக்கம்பண்ணினார்
கள்; அவன் குமாரனாகிய அமத்சியா அவன்
ஸ்தானத்தில் ராஜாவானான்.

## 13

அகசியா என்னும் யூதாவுடைய ராஜாவின்
குமாரனாகிய யோவாசுடைய இருபத்து மூன்
றாம் வருஷத்தில் யெகூவின் குமாரனாகிய
யோவாகாஸ் இஸ்ரவேலின்மேல் சமாரியாவி
லே பதினேழு வருஷம் ராஜ்யபாரம்பண்ணி,
**கர்த்தரின்** பார்வைக்குப் பொல்லாப்பான 2
தைச் செய்து, இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்
பண்ணின நேபாத்தின் குமாரனாகிய யெரொ
பெயாமின் பாவங்களைப் பின்பற்றி நடந்தான்;
அவைகளை விட்டு அவன் விலகவில்லை. ஆகை 3
யால் **கர்த்தருக்கு** இஸ்ரவேலின்மேல் கோப
மூண்டு, [10]அவர்களைச் சீரியாவின் ராஜாவாகிய
ஆசகேலின் கையிலும் ஆசகேலின் குமாரனா
கிய பெனாதாத்தின் கையிலும் அந்நாட்களி
லெல்லாம் ஒப்புக்கொடுத்தார். யோவாகாஸ் 4
**கர்த்தருடைய** சமுகத்தை நோக்கிப் பிரார்த்
தித்தான்; [11]சீரியாவின் ராஜா இஸ்ரவேலை
ஒடுக்குகிறதினால் அவர்கள் ஒடுங்கிப் போகிற
தைப் பார்த்து: [12]**கர்த்தர்** அவனுக்குச் செவி
கொடுத்தார். **கர்த்தர்** இஸ்ரவேலுக்கு ஒரு 5
இரட்சகனைக் கொடுத்ததினால், [13]அவர்கள் சீரி
யருடைய கையின் கீழிருந்து நீங்கலானார்கள்;
ஆதலால் இஸ்ரவேல் புத்திரர் முன்போல் தங்
கள் கூடாரங்களிலே குடியிருந்தார்கள். ஆகி 6
லும் இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின
யெரொபெயாம் வீட்டாரின் பாவங்களை அவர்
கள் விட்டு விலகாமல் அதிலே நடந்தார்கள்;
[14]சமாரியாவிலிருந்த விக்கிரகத்தோப்பும் நிலை
யாயிருந்தது. யோவாகாசுக்குச் சீரியாவின் 7
ராஜா, ஐம்பது குதிரை வீரரையும், பத்து இர
தங்களையும், பதினாயிரம் காலாட்களையுமே அல்
லாமல், ஜனங்களில் வேறொன்றும் மீதியாக
வைக்கவில்லை; [15]அவன் அவர்களை அழித்துப்
போரடிக்கும் இடத்துத் தூளைப்போல ஆக்கிப்
போட்டான். யோவாகாசின் மற்ற வர்த்தமா 8
னங்களும், அவன் செய்தவை யாவும், அவனு

[1] 2 நாளா. 24. 5, 6
[2] 2 நாளா. 24. 8. 9
[3] 2 நாளா. 24. 14
[4] 22. 7
[5] லேவி. 5. 15, 18: 7. 7. எண். 18. 9
[6] 8. 12. 2 நாளா. 24. 23
[7] 1 இரா. 15. 18
[8] 14. 5. 2 நாளா. 24. 25
[9] 2 நாளா. 24. 26, 27
[10] 8. 12. நியா. 2. 14
[11] சங். 78. 34
[12] 14. 26. யாத். 3. 7
[13] 14. 25, 27
[14] 1 இரா. 16. 33
[15] ஆமோ. 1. 3

டைய வல்லமையும் இஸ்ரவேல் ராஜாக்களின்
நாளாகமப் புஸ்தகத்தில் அல்லவோ எழுதியி
9 ருக்கிறது. யோவாகாஸ் தன் பிதாக்களோ
டே நித்திரையடைந்தபின், அவனைச் சமாரி
யாவிலே அடக்கம் பண்ணினார்கள்; அவன்
குமாரனாகிய யோவாஸ் அவன் ஸ்தானத்தில்
ராஜாவானான்.
10 யூதாவின் ராஜாவாகிய யோவாசுடைய முப்
பத்தேழாம் வருஷத்தில், யோவாகாசின் குமா
ரனாகிய *யோவாஸ், இஸ்ரவேலின்மேல்
ராஜாவாகி சமாரியாவிலே பதினாறு வருஷம்
11 ராஜ்யபாரம்பண்ணி, **கர்த்தரின்** பார்வைக்
குப் பொல்லாப்பானதைச் செய்தான்; இஸ்ர
வேலைப் பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்
தின் குமாரனாகிய யெரொபெயாமின் பாவங்
களை விட்டு விலகாமல் அவைகளிலெல்லாம்
12 நடந்தான். யோவாசின் மற்ற வர்த்தமானங்க
ளும், [1]அவன் செய்தவை யாவும், அவன் யூதா
வின் ராஜாவாகிய அமத்சியாவோடு அவன்
யுத்தம்பண்ணின வல்லமையும், இஸ்ரவேல்
ராஜாக்களின் நாளாகமப் புஸ்தகத்தில் அல்ல
13 வோ எழுதியிருக்கிறது. யோவாஸ் தன் பிதாக்
களோடே நித்திரையடைந்தபின், யெரொபெ
யாம் அவன் சிங்காசனத்தில் வீற்றிருந்தான்;
யோவாஸ் சமாரியாவில் இஸ்ரவேலின் ராஜாக்
களண்டையிலே அடக்கம்பண்ணப்பட்டான்.
14 அவன் நாட்களில் எலிசா மரணத்துக்கு
ஏதுவான வியாதியாய்க் கிடந்தான்; அப்பொ
ழுது இஸ்ரவேலின் ராஜாவாகிய யோவாஸ்
அவனிடத்துக்குப் போய், அவன்மேல் விழுந்
து, அழுது: [2]என் தகப்பனே, என் தகப்ப
னே, இஸ்ரவேலுக்கு இரதமும் குதிரைவீரரு
15 மாயிருந்தவரே என்றான். எலிசா அவனைப்
பார்த்து: வில்லையும் அம்புகளையும் பிடியும்
என்றான்; அப்படியே வில்லையும் அம்புகளை
16 யும் பிடித்துக்கொண்டான். அப்பொழுது
அவன் இஸ்ரவேலின் ராஜாவை நோக்கி: உம்
முடைய கையை வில்லின்மேல் வையும் என்
றான்; அவன் தன் கையை வைத்தபோது,
எலிசா தன் கைகளை ராஜாவுடைய கைகள்
17 மேல் வைத்து: கிழக்கே இருக்கிற ஜன்ன
லைத் திறவும் என்றான்; அவன் அதைத் திறந்த
போது, எலிசா: எய்யும் என்றான்; இவன்
எய்தபோது, அவன்: அது கர்த்தருடைய இரட்
சிப்பின் அம்பும், சீரியரினின்று விடுதலையாக்
கும் இரட்சிப்பின் அம்புமானது; [3]நீர் ஆப்
பெக்கிலே சீரியரைத் தீர முறிய அடிப்பீர்
18 என்றான். பின்பு அம்புகளைப் பிடியும் என்
றான்; அவைகளைப் பிடித்தான். அப்பொழுது
அவன் இஸ்ரவேலின் ராஜாவை நோக்கி:
தரையிலே அடியும் என்றான்; அவன் மூன்று
19 தரம் அடித்து நின்றான். அப்பொழுது தேவ
னுடைய மனுஷன் அவன்மேல் கோபமாகி:
நீர் ஐந்து ஆறுவிசை அடித்தீரானால், அப்பொ
ழுது சீரியரைத் தீர முறிய அடிப்பீர்; [4]இப்
பொழுதோ சீரியரை மூன்றுவிசைமாத்திரம்
முறிய அடிப்பீர் என்றான்.

* தன் தகப்பனோடு கூட. 14. 1
1 14. 9, 15. 2 நாளா. 25. 17. ழ
2 2. 12
3 1 இரா. 20. 26
4 25. ௸.
5 8. 12
6 14. 27. யாத். 2. 24, 25; 32. 13
7 18, 19. ௸.
8 13. 10. 2 நாளா. 25. 1
9 12. 3
10 12. 20
11 உபா. 24. 16. எசே. 18. 4, 20

எலிசா மரணமடைந்தான்; அவனை அடக் 20
கம்பண்ணினார்கள்; மறு வருஷத்திலே மோ
வாபியரின் தண்டுகள் தேசத்திலே வந்தது.
அப்பொழுது அவர்கள், ஒரு மனுஷனை அடக் 21
கம்பண்ணப் போகையில், அந்தத் தண்டைக்
கண்டு, அந்த மனுஷனை எலிசாவின் கல்
லறையில் போட்டார்கள்; அந்த மனுஷனின்
பிரேதம் அதிலே விழுந்து எலிசாவின் எலும்
புகளின்மேல் பட்டபோது, அந்த மனுஷன்
உயிரடைந்து தன் கால்களை ஊன்றி எழுந்
திருந்தான்.
யோவாகாசின் நாட்களிலெல்லாம் சீரியா 22
வின் ராஜாவாகிய [5]ஆசகேல் இஸ்ரவேலை
ஒடுக்கினான். ஆனாலும் **கர்த்தர்** அவர்களுக்கு 23
இரங்கி, [6]ஆபிரகாம் ஈசாக்கு யாக்கோபு என்
பவர்களோடு செய்த தமது உடன்படிக்கை
யினிமித்தம் அவர்களை அழிக்கச் சித்தமாயிரா
மலும், அவர்களை இன்னும் தம்முடைய முகத்
தைவிட்டுத் தள்ளாமலும் அவர்கள்மேல் மன
துருகி, அவர்களை நினைத்தருளினார். சீரியா 24
வின் ராஜாவாகிய ஆசகேல் இறந்துபோய்,
அவன் குமாரனாகிய பெனாதாத் அவன் ஸ்தா
னத்திலே ராஜாவானபின்பு, யோவாகாசின் 25
குமாரனாகிய யோவாஸ், ஆசகேலோடே யுத்
தம்பண்ணி, தன் தகப்பனாகிய யோவாகாசின்
கையிலிருந்து பிடித்துக்கொண்ட பட்டணங்
களை அவன் குமாரனாகிய பெனாதாத்தின் கை
யிலிருந்து திரும்பப் பிடித்துக்கொண்டான்;
[7]மூன்றுவிசை யோவாஸ் அவனை முறிய
அடித்து இஸ்ரவேலின் பட்டணங்களைத் திரும்
பக் கட்டிக்கொண்டான்.

இஸ்ரவேலின் ராஜாவாகிய யோவாகா **14**
சின் குமாரன் யோவாசுடைய இரண்டாம்
வருஷத்திலே [8]யூதாவின் ராஜாவாகிய யோவா
சின் குமாரன் அமத்சியா ராஜாவானான்.
அவன் ராஜாவாகிறபோது இருபத்தைந்து வய 2
தாயிருந்து, எருசலேமிலே இருபத்தொன்பது
வருஷம் ராஜ்யபாரம்பண்ணினான்; எருச
லேம் நகரத்தாளான அவன் தாயின்பேர் யொ
வதானாள். அவன் **கர்த்தரின்** பார்வைக்குச் 3
செம்மையானதைச் செய்தான்; ஆனாலும் தன்
தகப்பனாகிய தாவீதைப்போலல்ல; தன் தகப்
பனாகிய யோவாஸ் செய்தபடியெல்லாம் செய்
தான். மேடைகள்மாத்திரம் அகற்றப்பட 4
வில்லை; [9]ஜனங்கள் இன்னும் மேடைகளின்
மேல் பலியிட்டுத் தூபங்காட்டிவந்தார்கள்.
ராஜ்யபாரம் அவன் கையிலே ஸ்திரப்பட்ட 5
போது, அவனுடைய தகப்பனாகிய ராஜாவைக்
கொன்றுபோட்ட [10]தன் ஊழியக்காரரைக் கொ
ன்றுபோட்டான். ஆனாலும் பிள்ளைகளினி 6
மித்தம் பிதாக்கள் கொலைசெய்யப்படாமலும்
பிதாக்களினிமித்தம் பிள்ளைகள் கொலைசெய்
யப்படாமலும், அவனவன் செய்த பாவத்தி
னிமித்தம் அவனவன் கொலைசெய்யப்பட
வேண்டும் என்று மோசேயின் நியாயப்பிர
மாண புஸ்தகத்தில் எழுதியிருக்கிறபடி [11]**கர்த்
தர்** கட்டளையிட்டபிரகாரம் கொலைசெய்தவர்

களின் பிள்ளைகளை அவன் கொல்லாதிருந்
7 தான். அவன் உப்புப் பள்ளத்தாக்கிலே ஏதோ
மியரில் பதினாயிரம்பேரை மடங்கடித்து, [1]யுத்
தஞ்செய்து சேலாவைப் பிடித்து, அதற்கு இந்
நாள்வரைக்கும் இருக்கிற யொக்தியேல் என்
னும் பேரைத் தரித்தான்.
8 அப்பொழுது அமத்சியா யெகூவின் குமார
னாகிய யோவாகாசின் குமாரன் யோவாஸ்
என்னும் இஸ்ரவேலின் ராஜாவிடத்தில் ஸ்தா
னாபதிகளை அனுப்பி: [2]நம்முடைய சாமர்த்தி
யத்தைப் பார்ப்போம் வா என்று சொல்லச்
9 சொன்னான். அதற்கு இஸ்ரவேலின் ராஜா
வாகிய யோவாஸ் யூதாவின் ராஜாவாகிய
அமத்சியாவுக்கு ஆள் அனுப்பி: [3]லீபனோனி
லுள்ள முட்செடியானது, லீபனோனிலுள்ள
கேதுருமரத்தை நோக்கி, நீ உன் மகளை
என் மகனுக்கு மனைவியாக விவாகஞ்செய்து
கொடு என்று சொல்லச்சொல்லிற்று; ஆனா
லும் லீபனோனிலுள்ள ஒரு காட்டுமிருகம்
அந்த வழி போகையில் ஓடி அந்த முட்செடி
10 யை மிதித்துப்போட்டது. நீ ஏதோமியரை
முறிய அடித்ததினால் உன் இருதயம் உன்
னைக் கர்வங்கொள்ளப்பண்ணினது; [4]நீ பெ
ருமை பாராட்டிக்கொண்டு உன் வீட்டிலே
இரு; நீயும் உன்னோடேகூட யூதாவும் விழும்
படிக்கு, பொல்லாப்பைத் தேடிக்கொள்வா
11 னேன் என்று சொல்லச்சொன்னான். ஆனா
லும் அமத்சியா செவிகொடாதே போனான்;
ஆகையால் இஸ்ரவேலின் ராஜாவாகிய யோ
வாஸ் வந்தான்; [5]யூதாவிலுள்ள பெத்ஷிமேசி
லே அவனும், யூதாவின் ராஜா அமத்சியாவும்,
தங்கள் சாமர்த்தியத்தைப் பார்க்கிறபோது,
12 யூதா ஜனங்கள் இஸ்ரவேலருக்கு முன்பாக
முறிந்து அவரவர் தங்கள் கூடாரங்களுக்கு
13 ஓடிப்போனார்கள். அகசியாவின் குமாரனாகிய
யோவாசின் குமாரன் அமத்சியா என்னும் யூதா
வின் ராஜாவையோ, இஸ்ரவேலின் ராஜா
வாகிய யோவாஸ் பெத்ஷிமேசிலே பிடித்து,
எருசலேமுக்கு வந்து, [6]எருசலேமின் அலங்
கத்திலே எப்பிராயீம் வாசல் தொடங்கி மூலை
வாசல்மட்டும் நாநூறு முழ நீளம் இடித்துப்
14 போட்டு, **கர்த்தருடைய** ஆலயத்திலும் ராஜா
வுடைய அரமனைப்பொக்கிஷங்களிலும்[7] அகப்
பட்ட பொன் வெள்ளி யாவையும், சகல பணி
முட்டுகளையும், *கிரியிருப்பவர்களையும் பிடித்
துக்கொண்டு சமாரியாவுக்குத் திரும்பிப் போ
15 னான். யோவாஸ் செய்த மற்ற வர்த்தமானங்
களும், அவனுடைய வல்லமையும், அவன்
யூதாவின் ராஜாவாகிய அமத்சியாவோடு யுத்தம்
பண்ணின விதமும், [8]இஸ்ரவேல் ராஜாக்க
ளின் நாளாகமப் புஸ்தகத்தில் அல்லவோ எழு
16 தியிருக்கிறது. யோவாஸ் தன் பிதாக்களோ
டே நித்திரையடைந்தபின், சமாரியாவில் இஸ்
ரவேலின் ராஜாக்களண்டையிலே அடக்கம்
பண்ணப்பட்டான்; அவன் குமாரனாகிய யெ
ரொபெயாம் அவன் ஸ்தானத்தில் ராஜா
வானான்.

[1] 2 சாமு. 8. 13. 2 நாளா. 25. 11
[2] 2 நாளா. 25. 17, 18. ழி
[3] நியா. 9. 8. 1 இரா. 4. 33
[4] உபா. 8. 14. 2 நாளா. 32. 25. எசே. 28. 2, 5, 17. ஆப. 2. 4
[5] யோசு. 19. 38. 1 சாமு. 6. 9
[6] நெகே. 8. 16. எரே. 31. 38. சகரி. 14. 10
[7] 1 இரா. 7. 51
* பிணையாளிகள்.
[8] 13. 12
[9] 2 நாளா. 25. 25. ழி
[10] 2 நாளா. 25. 27
[11] யோசு. 10. 31
[12] 15. 13. 2 நாளா. 26. 1
[13] எண். 13. 21; 34. 8. உபா. 3. 17. எத. 12. 39, 40
[14] உபா. 32. 26
[15] 13. 5
[16] 2 சாமு. 8. 6. 1 இரா. 11. 24. 2 நாளா. 8. 3

இஸ்ரவேலின் ராஜாவாகிய யோவாகாசின் 17
குமாரன் யோவாஸ் மரணமடைந்தபின், [9]யூதா
வின் ராஜாவாகிய யோவாசின் குமாரன்
அமத்சியா பதினைந்து வருஷம் உயிரோடிருந்
தான். அமத்சியாவின் மற்ற வர்த்தமானங் 18
கள் யூதாவுடைய ராஜாக்களின் நாளாகமப்
புஸ்தகத்தில் அல்லவோ எழுதியிருக்கிறது.
எருசலேமிலே அவனுக்கு விரோதமாகக் [10]கட் 19
டுப்பாடுபண்ணினார்கள்; [11]அப்பொழுது லாகீ
சுக்கு ஓடிப்போனான்; ஆனாலும் அவர்கள்
அவன் பிறகே லாகீசுக்கு மனுஷரை அனுப்பி,
அங்கே அவனைக் கொன்றுபோட்டு, குதி 20
ரைகள்மேல் அவனை எடுத்துக்கொண்டு வந்
தார்கள்; அவன் எருசலேமில் இருக்கிற தா
வீதின் நகரத்திலே தன் பிதாக்களண்டையி
லே அடக்கம்பண்ணப்பட்டான். யூதா ஜனங் 21
கள் யாவரும் பதினாறு வயதுள்ள அசரியாவை
அழைத்துவந்து [12]அவனை அவன் தகப்பனாகிய
அமத்சியாவின் ஸ்தானத்தில் ராஜாவாக்கினார்
கள். ராஜா தன் பிதாக்களோடே நித்திரை 22
யடைந்தபின்பு, இவன் ஏலாதைக் கட்டி,
அதைத் திரும்ப யூதாவின் வசமாக்கிக்கொண்
டான்.
யூதாவின் ராஜாவாகிய யோவாசின் குமா 23
ரன் அமத்சியாவின் பதினைந்தாம் வருஷத்
தில், இஸ்ரவேலின் ராஜாவாகிய யோவாசின்
குமாரன் யெரொபெயாம் ராஜாவாகி சமாரி
யாவில் நாற்பத்தொரு வருஷம் அரசாண்டு,
**கர்த்தரின்** பார்வைக்குப் பொல்லாப்பான 24
தைச் செய்தான்; இஸ்ரவேலைப் பாவஞ்செய்
யப்பண்ணின நேபாத்தின் குமாரனாகிய யெ
ரொபெயாமின் பாவங்கள் ஒன்றையும் அவன்
விட்டு விலகவில்லை. காத்தேப்பேர் ஊரானா 25
கிய அமித்தாய் என்னும் தீர்க்கதரிசியின் குமா
ரன் யோனா என்னும் தம்முடைய ஊழியக்
காரனைக்கொண்டு இஸ்ரவேலின் தேவனாகிய
**கர்த்தர்** சொல்லியிருந்த வார்த்தையின்படியே,
[13]அவன் ஆமாத்தின் எல்லை முதற்கொண்டு
சமபூமியின் கடல்மட்டுமுள்ள இஸ்ரவேலின்
எல்லைகளைத் திரும்பச் சேர்த்துக்கொண்டான்.
இஸ்ரவேலின் உபத்திரவம் மிகவும் கொடிது 26
என்றும், [14]அடைபட்டவனுமில்லை, விடுபட்
டவனுமில்லை, இஸ்ரவேலுக்கு ஒத்தாசை
செய்கிறவனுமில்லை என்றும் **கர்த்தர்** பார்த்
தார். இஸ்ரவேலின் பேரை வானத்தின் 27
கீழிருந்து கொலைத்துப் போடுவேன் [15]என்று
**கர்த்தர்** சொல்லாமல், யோவாசின் குமார
னாகிய யெரொபெயாமின் கையால் அவர்களை
இரட்சித்தார். யெரொபெயாமின் மற்ற வர் 28
த்தமானங்களும் அவன் செய்தவை யாவும்,
அவன் யுத்தம்பண்ணி, [16]யூதாவுக்கு இருந்த
தமஸ்குவையும் ஆமாத்தையும் இஸ்ரவேலுக்
காகத் திரும்பச் சேர்த்துக்கொண்ட அவனு
டைய வல்லமையும், இஸ்ரவேல் ராஜாக்
களின் நாளாகமப் புஸ்தகத்தில் அல்லவோ
எழுதியிருக்கிறது. யெரொபெயாம் இஸ்ர 29
வேலின் ராஜாக்களாகிய தன் பிதாக்களோ

டே நித்திரையடைந்தபின், [1]அவன் குமார
னாகிய சகரியா அவன் ஸ்தானத்தில் ராஜா
வானான்.

**15** இஸ்ரவேலின் ராஜாவாகிய யெரொபெ
யாமின் இருபத்தேழாம் வருஷத்தில், [2]யூதா
வின் ராஜாவாகிய அமத்சியாவின் குமாரன்
2 அசரியா ராஜாவானான். அவன் ராஜாவா
கிறபோது பதினாறு வயதாயிருந்து, ஐம்பத்
திரண்டு வருஷம் எருசலேமிலே அரசாண்
டான்; எருசலேம் நகரத்தாளான அவன்
3 தாயின்பேர் எக்கோலியாள். அவன் தன்
தகப்பனாகிய அமத்சியா செய்தபடியெல்லாம்
**கர்த்தரின்** பார்வைக்குச் செம்மையானதைச்
4 செய்தான். மேடைகள்மாத்திரம் அகற்றப்
படவில்லை; [3]ஜனங்கள் இன்னும் மேடைகள்
மேல் பலியிட்டுத் தூபங்காட்டி வந்தார்கள்.
5 **கர்த்தர்** இந்த ராஜாவை வாதித்ததினால்,
அவன் தன் மரணநாள்மட்டும் குஷ்டரோகி
யாயிருந்து, [4]தனித்து ஒரு வீட்டிலே வாசம்
பண்ணினான்; ராஜாவின் குமாரனாகிய யோ
தாம் அரமனை விசாரிப்புக்காரனாயிருந்து,
தேசத்தின் ஜனங்களை நியாயம் விசாரித்தான்.
6 அசரியாவின் மற்ற வர்த்தமானங்களும், அவன்
செய்தவை யாவும், யூதாவுடைய ராஜாக்
களின் நாளாகமப் புஸ்தகத்தில் அல்லவோ
7 எழுதியிருக்கிறது. அசரியா தன் பிதாக்க
ளோடே நித்திரையடைந்தபின், [5]அவனைத்
தாவீதின் நகரத்திலே அவன் பிதாக்களண்
டையிலே அடக்கம்பண்ணினார்கள்; அவன்
குமாரனாகிய யோதாம் அவன் ஸ்தானத்தில்
ராஜாவானான்.
8 யூதாவின் ராஜாவாகிய அசரியாவின் முப்
பத்தெட்டாம் வருஷத்திலே யெரொபெயா
மின் குமாரனாகிய சகரியா இஸ்ரவேலின்
மேல் சமாரியாவிலே ஆறுமாதம் ராஜ்யபாரம்
9 பண்ணி, தன் பிதாக்கள் செய்ததுபோல,
**கர்த்தரின்** பார்வைக்குப் பொல்லாப்பான
தைச் செய்தான்; இஸ்ரவேலைப் பாவஞ்செய்
யப்பண்ணின நேபாத்தின் குமாரனாகிய யெ
ரொபெயாமின் பாவங்களை அவன் விட்டு
10 விலகவில்லை. யாபேசின் குமாரனாகிய சல்
லூம் அவனுக்கு விரோதமாகக் கட்டுப்பாடு
பண்ணி, ஜனத்தின் முன்பாக அவனை வெட்
டிக் கொன்றுபோட்டு, [6]அவன் ஸ்தானத்தில்
11 ராஜாவானான். சகரியாவின் மற்ற வர்த்த
மானங்கள் இஸ்ரவேல் ராஜாக்களின் நாளாக
மப் புஸ்தகத்தில் அல்லவோ எழுதியிருக்
12 கிறது. உன் குமாரர் நாலாம் தலைமுறை
மட்டும் இஸ்ரவேலுடைய சிங்காசனத்தின்
மேல் வீற்றிருப்பார்கள் என்று **கர்த்தர்** யெகூ
வோடே சொன்ன வார்த்தை இதுதான், [7]அப்
படியே ஆயிற்று.
13 யூதாவின் ராஜாவாகிய உசியாவின் [8]முப்
பத்தொன்பதாம்வருஷத்தில் யாபேசின் குமார
னாகிய சல்லூம் ராஜாவாகி, சமாரியாவில்
14 ஒரு மாதம் அரசாண்டான். காதியின் குமார
னாகிய மெனாகேம் திர்சாவிலிருந்து [9]சமாரியா

1 பதினொரு வருஷ இராஜாக்கள் பிறகு 15. 8
2 14. 21. 2 நாளா. 26. 1-4
3 35. வச. 12. 3. 14. 4
4 லேவி. 13. 46. 2 நாளா. 26. 19-21
5 2 நாளா. 26. 23
6 ஆமோ. 7. 9
7 10. 30
8 மத். 1. 8, 9
9 1 இரா. 14, 17
10 1 இரா. 4. 24
11 8. 12
12 1 நாளா. 5. 26. ஏசா. 9. 1. ஓசி. 8. 9

வுக்கு வந்து, யாபேசின் குமாரனாகிய சல்லூ
மைச் சமாரியாவிலே வெட்டிக் கொன்று
போட்டு, அவன் ஸ்தானத்தில் ராஜாவானான்.
சல்லூமின் மற்ற வர்த்தமானங்களும், அவன் 15
செய்த கட்டுப்பாடும், இஸ்ரவேல் ராஜாக்
களின் நாளாகமப் புஸ்தகத்தில் அல்லவோ
எழுதியிருக்கிறது. அப்பொழுது மெனாகேம் 16
[10]திப்சாபட்டணத்தையும், அதிலுள்ள யாவை
யும், திர்சாதொடங்கி அதின் எல்லைகளையும்
முறிய அடித்தான்; அவர்கள் தனக்கு வாச
லைத் திறக்கவில்லை என்று அவர்களை வெட்டி,
[11]அவர்களுடைய கர்ப்பவதிகளையெல்லாம்
கீறிப்போட்டான்.
யூதாவின் ராஜாவாகிய அசரியாவின் முப் 17
பத்தொன்பதாம் வருஷத்தில், காதியின் குமார
னாகிய மெனாகேம் இஸ்ரவேல்மேல் ராஜா
வாகி சமாரியாவிலே பத்து வருஷம் ராஜ்ய
பாரம்பண்ணி, அவன் தன் நாட்களிலெல்
லாம் **கர்த்தரின்** பார்வைக்குப் பொல்லாப்
பானதைச் செய்தான். இஸ்ரவேலைப் பாவஞ் 18
செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனாகிய
யெரொபெயாமின் பாவங்களை விட்டு விலகா
திருந்தான். அசீரியாவின் ராஜாவாகிய பூல், 19
[12]தேசத்திற்கு விரோதமாய் வந்தான்; அப்
பொழுது மெனாகேம் பூலின் உதவியினால்
ராஜ்யபாரத்தை தன் கையில் பலப்படுத்தும்
பொருட்டு, அவனுக்கு ஆயிரம் தாலந்து வெ
ள்ளி கொடுத்தான். இந்தப் பணத்தை அசீரி 20
யாவின் ராஜாவுக்குக் கொடுக்கும்படி, மெனா
கேம் இஸ்ரவேலில் பலத்த ஐசுவரியவான்
களிடத்தில் ஆள் ஒன்றிற்கு ஐம்பது வெள்ளிச்
சேக்கல் தண்டினான்; அப்படியே அசீரியா
வின் ராஜா தேசத்திலே நிற்காமல் திரும்பிப்
போனான். மெனாகேமின் மற்ற வர்த்தமானங் 21
களும், அவன் செய்தவை யாவும், இஸ்ரவேல்
ராஜாக்களின் நாளாகமப் புஸ்தகத்தில் அல்ல
வோ எழுதியிருக்கிறது. மெனாகேம் தன் 22
பிதாக்களோடு நித்திரையடைந்தபின், அவன்
குமாரனாகிய பெக்காகியா அவன் ஸ்தானத்
தில் ராஜாவானான்.
யூதாவின் ராஜாவாகிய அசரியாவின் ஐம்ப 23
தாம் வருஷத்தில், மெனாகேமின் குமார
னாகிய பெக்காகியா இஸ்ரவேலின்மேல் ரா
ஜாவாகி சமாரியாவிலே இரண்டு வருஷம்
ராஜ்யபாரம்பண்ணி, **கர்த்தரின்** பார்வைக் 24
குப் பொல்லாப்பானதைச் செய்தான்;
அவன் இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப் பண்
ணின நேபாத்தின் குமாரனாகிய யெரொ
பெயாமின் பாவங்களை விட்டு விலகவில்லை.
ஆனாலும் ரெமலியாவின் குமாரனாகிய பெக் 25
கா என்னும் அவனுடைய சேர்வைக்காரன்
அவனுக்கு விரோதமாய்க் கட்டுப்பாடுபண்ணி,
கீலேயாத் புத்திரரில் ஐம்பதுபேரைக் கூட்டிக்
கொண்டு, அவனையும் அர்கோபையும் ஆரி
யேயையும் ராஜாவின் வீடாகிய அரமனையி
லே சமாரியாவில் வெட்டிக் கொன்றுபோட்
டு, அவன் ஸ்தானத்தில் ராஜாவானான். பெக் 26

காகியாவின் மற்ற வர்த்தமானங்களும், அவன்
செய்தவை யாவும், இஸ்ரவேல் ராஜாக்களின்
நாளாகமப் புஸ்தகத்தில் அல்லவோ எழுதி
யிருக்கிறது.
27 யூதாவின் ராஜாவாகிய அசரியாவின் ஐம்
பத்திரண்டாம் வருஷத்தில், ரெமலியாவின்
குமாரனாகிய [1]பெக்கா இஸ்ரவேலின்மேல்
ராஜாவாகி சமாரியாவிலே இருபது வருஷம்
28 ராஜ்யபாரம் பண்ணி, **கர்த்தரின்** பார்வைக்
குப் பொல்லாப்பானதைச் செய்தான்; இஸ்
ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்
தின் குமாரனாகிய யெரொபெயாமின் பாவங்
29 களை அவன் விட்டு விலகவில்லை. இஸ்ர
வேலின் ராஜாவாகிய பெக்காவின் நாட்க
ளில் அசீரியாவின் ராஜாவாகிய திகிலாத்பி
லேசர் [2]வந்து, ஈயோனையும், பெத்மாக்கா
என்னும் ஆபேலையும், [3]யனோவாகையும், கே
தேசையும், ஆத்சோரையும், கீலேயாத்தையும்,
கலிலேயாவாகிய நப்தலி தேசமனைத்தையும்
பிடித்து, குடிகளைச் சிறையாக அசீரியாவுக்குக்
30 கொண்டுபோனான். ஏலாமின் குமாரனாகிய
ஓசெயா ரெமலியாவின் குமாரனாகிய பெக்கா
வுக்கு விரோதமாய்க் கட்டுப்பாடுபண்ணி, அவ
னை உசியாவின் குமாரனாகிய யோதாமின்
இருபதாம் வருஷத்தில் வெட்டிக் கொன்று
போட்டு, [4]அவன் ஸ்தானத்தில் ராஜாவானான்.
31 பெக்காவின் மற்ற வர்த்தமானங்களும், அவன்
செய்தவை யாவும், இஸ்ரவேல் ராஜாக்களின்
நாளாகமப் புஸ்தகத்தில் அல்லவோ எழுதி
யிருக்கிறது.
32 இஸ்ரவேலின் ராஜாவாகிய ரெமலியாவின்
குமாரன் பெக்காவின் இரண்டாம் வருஷத்
தில், யூதாவின் ராஜாவாகிய உசியாவின் குமா
33 ரன் யோதாம் [5]ராஜாவானான். அவன் ராஜா
வாகிறபோது, இருபத்தைந்து வயதாயிருந்து,
எருசலேமிலே பதினாறு வருஷம் அரசாண்
டான்; சாதோக்கின் குமாரத்தியாகிய அவன்
34 தாயின் பேர் எருசாள். அவன் **கர்த்தரின்**
பார்வைக்குச் செம்மையானதைச் செய்தான்;
[6]தன் தகப்பனாகிய உசியா செய்தபடியெல்
35 லாம் செய்தான். மேடைகள்மாத்திரம் அகற்
றப்படவில்லை; ஜனங்கள் இன்னும் மேடை
களின்மேல் பலியிட்டுத் தூபங்காட்டி வந்தார்
கள்; [7]இவன் **கர்த்தருடைய** ஆலயத்தின்
36 உயர்ந்த வாசலைக் கட்டினான். யோதாமின்
மற்ற வர்த்தமானங்களும், அவன் செய்தவை
யாவும், யூதாவுடைய ராஜாக்களின் நாளாக
மப் புஸ்தகத்தில் அல்லவோ எழுதியிருக்கி
37 றது. அந்நாட்களிலே **கர்த்தர்** சீரியாவின்
ராஜாவாகிய ரேத்சீனையும், [8]ரெமலியாவின்
குமாரனாகிய பெக்காவையும் யூதாவுக்கு விரோ
38 தமாக அனுப்பத் தொடங்கினார். யோதாம்
தன் பிதாக்களோடே நித்திரையடைந்தபின்,
தன் தகப்பனாகிய தாவீதின் பட்டணத்திலே
தன் பிதாக்களண்டையில் அடக்கம் பண்ணப்
பட்டான்; அவன் குமாரனாகிய ஆகாஸ் அவன்
ஸ்தானத்தில் ராஜாவானான்.

[1] ஏசா. 7. 1
[2] 1 நாளா. 5. 26. ஏசா. 9. 1
[3] 1 இரா. 15. 20
[4] இவைகளுடன் ஆசி ல்லாமைக்குப்பின் பு. 17. 1. ஓசி. 10. 3, 7, 15
[5] 2 நாளா. 27. 1
[6] 3. வச.
[7] 2 நாளா. 27. 3
[8] 16. 5. ஏசா. 7. 1
[9] 2 நாளா. 28. 1, மு.
[10] லேவி. 18. 21. உபா. 12. 31. 2 நாளா. 28. 3. சங். 106. 37, 38
[11] உபா. 12. 2. 1 இரா. 14. 23
[12] ஏசா. 7. 1, 4. மு.
[13] 14. 22
[14] 15. 29. 1 நாளா. 5. 26. 2 நாளா. 28. 20
[15] 12. 18. 2 நாளா. 28. 21
[16] ஆமோ. 1. 5
[17] 2 நாளா. 26. 16, 19

ரெமலியாவின் குமாரனாகிய பெக்காவின் 16
பதினேழாம் வருஷத்தில் யூதாவின் ராஜாவா
கிய யோதாமின் குமாரன் [9]ஆகாஸ் ராஜாவா
னான். ஆகாஸ் ராஜாவாகிறபோது இருபது 2
வயதாயிருந்து, எருசலேமிலே பதினாறு வரு
ஷம் அரசாண்டான்; அவன் தன் தகப்பனா
கிய தாவீதைப்போல் தன் தேவனாகிய **கர்த்த
ரின்** பார்வைக்குச் செம்மையானதைச் செய்
யாமல், இஸ்ரவேல் ராஜாக்களின் வழியிலே 3
நடந்து, **கர்த்தர்** இஸ்ரவேல் புத்திரருக்கு
முன்பாகத் துரத்தின ஜாதிகளுடைய அரு
வருப்புகளின்படியே தன் குமாரனை முதலாய்
[10]தீக்கடக்கப்பண்ணினான். மேடைகளிலும் 4
[11]மலைகளின்மேலும் பச்சையான சகல மரத்
தின் கீழும் பலியிட்டுத் தூபங்காட்டிவந்தான்.
அப்பொழுது சீரியாவின் ராஜாவாகிய ரேத் 5
சீனும், [12]இஸ்ரவேலின் ராஜாவாகிய ரெமலி
யாவின் குமாரன் பெக்காவும், எருசலேமின்
மேல் யுத்தம்பண்ண வந்து ஆகாசை முற்றிக்
கை போட்டார்கள்; ஆனாலும் ஜெயிக்கமாட்
டாதே போனார்கள். அக்காலத்திலே சீரியா 6
வின் ராஜாவாகிய ரேத்சீன் ஏலாத்தைத் திரும்
பச் சீரியாவோடே சேர்த்துக்கொண்டு, யூத
ரை [13]ஏலாத்திலிருந்து துரத்தினான்; சீரியர்
ஏலாத்திற்கு வந்து இந்நாள்வரைக்கும் அவ்வி
டத்திலே குடியாயிருக்கிறார்கள். ஆகாஸ் அசீ 7
ரியாவின் ராஜாவாகிய திகிலாத்பிலேசரிடத்
திற்கு [14]ஸ்தானாபதிகளை அனுப்பி: நான் உம்
முடைய அடியானும் உம்முடைய குமாரனு
மாயிருக்கிறேன்; நீர் வந்து, எனக்கு விரோத
மாயெழும்பின சீரியா ராஜாவின் கைக்கும்,
இஸ்ரவேல் ராஜாவின் கைக்கும் என்னை நீங்
கலாக்கிவிடும் என்று சொல்லச்சொல்லி; **கர்** 8
**த்தருடைய** ஆலயத்திலும் ராஜாவின் அரம
னைப்பொக்கிஷங்களிலும் அகப்பட்ட [15]வெள்
ளியையும் பொன்னையும் எடுத்து, அசீரியா
வின் ராஜாவுக்குக் காணிக்கையாக அனுப்பி
னான். அசீரியா ராஜா அவனுக்குச் செவி 9
கொடுத்து, [16]தமஸ்குவுக்குப்போய் அதைப்பிடி
த்து, அதின் குடிகளைக் கீர்பட்டணத்திற்குச்
சிறைபிடித்துக்கொண்டுபோய், ரேத்சீனைக்
கொன்றுபோட்டான். அப்பொழுது ராஜா 10
வாகிய ஆகாஸ் தமஸ்குவிலுள்ள அசீரியா
வின் ராஜாவாகிய திகிலாத்பிலேசருக்கு எதிர்
கொண்டுபோய்த் தமஸ்குவிலுள்ள பலிபீடத்
தைக் கண்டான். ராஜாவாகிய ஆகாஸ் அந்
தப் பலிபீடத்தின் சாயலையும், அதினுடைய
சகல வேலைப்பாடாகிய அதின் மாதிரியையும்
ஆசாரியனாகிய உரியாவுக்கு அனுப்பினான்.
ராஜாவாகிய ஆகாஸ் தமஸ்குவிலிருந்து வரு 11
கிறதற்குள் ஆசாரியனாகிய உரியா அப்படிக்
கொத்த பலிபீடத்தைக் கட்டி, ராஜாவாகிய
ஆகாஸ் தமஸ்குவிலிருந்து அனுப்பின கட்
டளையின்படியெல்லாம் செய்தான். ராஜா 12
தமஸ்குவிலிருந்து வந்தபோது, அவன் அந்
தப் பலிபீடத்தைப் பார்த்து, அந்தப் பலிபீடத்
தண்டையில் சேர்ந்து, [17]அதின்மேல் பலி

13 யிட்டு, தன் சர்வாங்க தகனபலியையும் தன்
போஜனபலியையும் தகனித்து, தன் பான
பலியை வார்த்து, தன் சமாதானபலிகளின்
இரத்தத்தை அந்தப் பலிபீடத்தின்மேல் தெ
14 ளித்தான். **கர்த்தரின்** சந்நிதியில் இருந்த
[1]வெண்கலப் பலிபீடத்தை அவன் தன் பலி
பீடத்திற்கும் **கர்த்தரின்** ஆலயத்திற்கும் நடு
வே ஆலயத்தின் முகப்பிலிருந்து எடுத்து,
அதைத் தன் பலிபீடத்திற்கு வடபுறமாய்
15 வைத்தான். ராஜாவாகிய ஆகாஸ் ஆசாரிய
ஞகிய உரியாவை நோக்கி: இந்தப் பெரிய
பலிபீடத்தின்மேல் நீ [2]காலைச் சர்வாங்க தகன
பலியையும், மாலைப் போஜனபலியையும், ரா
ஜாவின் சர்வாங்க தகனபலியையும், அவ
ருடைய போஜனபலியையும், தேசத்தினு
டைய சகல ஜனத்தின் சர்வாங்க தகனபலி
யையும், அவர்கள் போஜனபலியையும், அவர்
கள் பானபலிகளையும் செலுத்தி, அதின்மேல்
சர்வாங்க தகனங்களின் சகல இரத்தத்தையும்,
பலிகளின் சகல இரத்தத்தையும் தெளிப்பா
யாக; அந்த வெண்கலப் பலிபீடமோ, நான்
சன்னதம் கேட்கிறதற்கு உதவும் என்றான்.
16 ராஜாவாகிய ஆகாஸ் கட்டளையிட்டபடியெல்
17 லாம் ஆசாரியஞகிய உரியா செய்தான். பின்
னும் ராஜாவாகிய ஆகாஸ் ஆதாரங்களின் சவு
க்கைகளை அறுத்துவிட்டு, [3]அவைகளின்மே
லிருந்த கொப்பரைகளை எடுத்து, கடல்தொட்
டியைக் கீழே நிற்கிற வெண்கல ரிஷபங்க
ளின் மேலிருந்து இறக்கி, அதைக் கற்களின்
18 தளவரிசையிலே வைத்து, ஆலயத்தின் அரு
கே கட்டியிருந்த ஓய்வுநாளின் மண்டபத்தை
யும், ராஜா பிரவேசிக்கும் மண்டபத்தையும்,
அசீரியருடைய ராஜாவினிமித்தம் **கர்த்த**
**ருடைய** ஆலயத்திலிருந்து அப்புறப்படுத்தி
19 ஞன். ஆகாஸ் செய்த மற்ற வர்த்தமானங்
கள் யூதாவுடைய ராஜாக்களின் நாளாகமப்
புஸ்தகத்தில் அல்லவோ எழுதியிருக்கிறது.
20 ஆகாஸ் தன் பிதாக்களோடே நித்திரையடைந்
தபின், அவன் தாவீதின் நகரத்தில் தன் பிதாக்
களண்டையிலே அடக்கம்பண்ணப்பட்டான்;
அவன் குமாரஞகிய எசேக்கியா அவன் ஸ்தா
னத்தில் ராஜாவாஞன்.

**17** யூதாவின் ராஜாவாகிய ஆகாசின் பன்னி
ரண்டாம் வருஷத்தில், ஏலாவின் குமாரஞ
கிய [4]ஓசெயா இஸ்ரவேலின்மேல் ராஜாவாகி,
சமாரியாவிலே ஒன்பது வருஷம் ராஜ்யபாரம்
2 பண்ணி, **கர்த்தரின்** பார்வைக்குப் பொல்
லாப்பானதைச் செய்தான்; ஆஞலும் தனக்கு
முன்னிருந்த இஸ்ரவேலின் ராஜாக்களைப
3 போல்செய்யவில்லை. அவனுக்கு விரோதமாக
அசீரியாவின் ராஜாவாகிய சல்மஞசார் [5]வந்
தான்; அப்பொழுது ஓசெயா அவனைச் சேவி
க்கிறவஞகி, [6]அவனுக்குப் பகுதி கட்டிஞன்.
4 ஓசெயா எகிப்தின் ராஜாவாகிய சோ என்பவ
னிடத்துக்கு ஸ்தாஞபதிகளை அனுப்பினதும்,
தனக்கு வருஷந்தோறும் செய்ததுபோல்,
பகுதி அனுப்பாதேபோனதுமான கலக யோ
சனையை அசீரியாவின் ராஜா ஓசெயாவி
னிடத்திலே கண்டு, அவனைப் பிடித்துக் கட்
டிச் சிறைச்சாலையிலே வைத்தான். அசீரியா 5
ராஜா [7]தேசம் எங்கும் போய், சமாரியாவுக்
கும் வந்து அதை மூன்று வருஷம் முற்
றிக்கை போட்டிருந்தான். ஓசெயாவின் ஒன் 6
பதாம் வருஷத்தில் அசீரியா ராஜா சமாரியா
வைப் பிடித்து, [8]இஸ்ரவேலை அசீரியாவுக்
குச் சிறையாகக் கொண்டுபோய், அவர்களைக்
கோசான் நதி ஓரமான ஆலாகிலும் ஆபோரி
லும் மேதியரின் பட்டணங்களிலும் குடியேற்
றிஞன். எகிப்தின் ராஜாவாகிய பார்வோ 7
னுடைய கையின் கீழிருந்த தங்களை எகிப்து
தேசத்திலிருந்து வரப்பண்ணின தங்கள் தேவ
ஞகிய **கர்த்தருக்கு** விரோதமாக இஸ்ரவேல்
புத்திரர் பாவஞ்செய்து, அந்நிய தேவர்களுக்
குப் பயந்து நடந்து, **கர்த்தர்** இஸ்ரவேல் 8
புத்திரருக்கு முன்பாகத் துரத்தின ஜாதிக
ளின் வழிபாடுகளிலும் இஸ்ரவேல் ராஜாக்
களின் வழிபாடுகளிலும் [9]நடந்துகொண்டிருந்
தார்கள். செய்யத்தகாத காரியங்களை இஸ்ர 9
வேல் புத்திரர் தங்கள் தேவஞகிய **கர்த்தருக்கு**
விரோதமாக இரகசியத்தில் செய்ததுமன்றி,
காவல்காக்கிற கோபுரங்கள் தொடங்கி [10]அர
ணான பட்டணங்கள் மட்டுமுள்ள தங்கள்
ஊர்களிலெல்லாம் தங்களுக்கு மேடைகளை
யும் கட்டி, உயரமான சகல மேட்டின்மே 10
லும் பச்சையான சகல மரத்தின்கீழும் தங்க
ளுக்குச் சிலைகளையும் [11]விக்கிரகத் தோப்புகளை
யும் நிறுத்தி, **கர்த்தர்** தங்களை விட்டுக் குடி 11
விலக்கின ஜாதிகளைப்போல, சகல மேடை
களிலும் தூபங்காட்டி, **கர்த்தருக்குக்** கோப
மூண்டாகத் துர்க்கிரியைகளைச் செய்து, இப் 12
படிச் செய்யத்தகாது என்று **கர்த்தர்** தங்க
ளுக்குச் சொல்லியிருந்தும், [12]நரகலான விக்
கிரகங்களைச் சேவித்து வந்தார்கள். நீங்கள் 13
உங்கள் பொல்லாத வழிகளை விட்டுத் திரும்பி,
நான் உங்கள் பிதாக்களுக்குக் கட்டளையிட்ட
தும், என் ஊழியக்காரராகிய தீர்க்கதரிசி
களைக்கொண்டு உங்களுக்குச் சொல்லியனுப்
பினதுமான நியாயப்பிரமாணத்தின்படியெல்
லாம் என் கற்பனைகளையும் என் கட்டளைகளை
யும் கைக்கொள்ளுங்கள் என்று **கர்த்தர்** தீர்க்க
தரிசிகள் ஞானதிருஷ்டிக்காரர் எல்லாரையுங்
கொண்டு இஸ்ரவேலுக்கும் யூதாவுக்கும் [13]திடச்
சாட்சியாய் எச்சரித்துக்கொண்டிருந்தும்,
அவர்கள் செவிகொடாமல், தங்கள் தேவஞ 14
கிய **கர்த்தர்மேல்** விசுவாசியாமற்போன கடி
னக் கழுத்துள்ள தங்கள் பிதாக்களைப்போல்,
[14]தங்கள் கழுத்தைக் கடினப்படுத்தி, அவரு 15
டைய கட்டளைகளையும், அவர் தங்கள் பிதாக்
களோடே பண்ணின அவருடைய உடன்
படிக்கையையும், [15]அவர் தங்களுக்குத் திடச்
சாட்சியாய்க் காண்பித்த அவருடைய சாட்சி
களையும் வெறுத்துவிட்டு, வீணான விக்கிரகங்
களைப் பின்பற்றி வீணராகி, [16]அவர்களைச்
சுற்றிலும் இருக்கிறவர்களைப்போல, செய்ய

[1] 2 நாளா. 4. 1
[2] யாத். 29. 38, 40, 41
[3] 1 இரா. 7. 25, 27, 28. 2 நாளா. 28. 24
[4] 15. 30
[5] 18. 9
[6] 2 சாமு. 8. 2
[7] 18. 9
[8] 18. 10, 11. லேவி. 26. 32, 33. உபா. 28. 36, 64
[9] லேவி. 18. 3. உபா. 18. 9
[10] 18. 8. யாத். 34. 13
[11] 1 இரா. 14. 23. ஏசா. 57. 5. மீகா. 5. 14
[12] யாத். 20. 3, 4. லேவி. 26. 1. உபா. 5. 7, 8
[13] 1 சாமு. 9. 9. எரே. 18. 11; 25. 5; 35. 15
[14] உபா. 31. 27. நீதி. 29. 1
[15] உபா. 29. 25
[16] உபா. 32. 21. 1 இரா. 16. 13. சங். 115. 8. ரோ. 1. 21. 1 கொரி. 8. 4

வேண்டாமென்று கர்த்தர் தங்களுக்குக் கட்
டளையிட்டு விலக்கியிருந்த ஜாதிகளுக்குப் பின்
16 சென்று, தங்கள் தேவனாகிய கர்த்தரின் கற்
பனைகளையெல்லாம் விட்டுவிட்டு, இரண்டு
கன்றுக்குட்டிகளாகிய வார்ப்பித்த விக்கிரகங்
களைத் தங்களுக்கு உண்டாக்கி, [1]விக்கிரகத்
தோப்புகளை நாட்டி, வானத்தின் சேனைகளை
யெல்லாம் பணிந்துகொண்டு, பாகாலைச் சே
17 வித்தார்கள். அவர்கள் தங்கள் குமாரரையும்
தங்கள் குமாரத்திகளையும் தீக்கடக்கப்பண்ணி,
[2]குறிகேட்டு நிமித்தங்கள் பார்த்து, கர்த்தருக்
குக் கோபமுண்டாக்க அவர் பார்வைக்குப்
பொல்லாப்பானதைச் செய்கிறதற்குத் தங்களை
18 [3]விற்றுப்போட்டார்கள். ஆகையால் கர்த்தர்
இஸ்ரவேலின்மேல் மிகவும் கோபமடைந்து,
அவர்களைத் தம்முடைய முகத்தைவிட்டு அகற்
றினார்; [4]யூதா கோத்திரமாத்திரமே மீதியா
19 யிற்று. யூதா ஜனங்களும் தங்கள் தேவனா
கிய கர்த்தரின் கற்பனைகளைக் கைக்கொள்ளா
மல் இஸ்ரவேல் உண்டாக்கின வழிபாடுகளில்
20 நடந்தார்கள். ஆகையால் கர்த்தர் இஸ்ர
வேல் சந்ததியாரையெல்லாம் புறக்கணித்து,
அவர்களைத் தமது முகத்தைவிட்டுத் தள்ளுமட்
டாக ஒடுக்கி, [5]அவர்களைக் கொள்ளைக்காரர்
21 கையில் ஒப்புக்கொடுத்தார். இஸ்ரவேலர்
தாவீது வம்சத்தைவிட்டுப் பிரிந்து, நேபாத்
தின் குமாரனாகிய யெரொபெயாமை ராஜா
வாக்கினார்கள்; [6]அப்பொழுது யெரொபெயாம்
இஸ்ரவேலைக் கர்த்தரை விட்டுப் பின்வாங்க
வும், பெரிய பாவத்தைச் செய்யவும் பண்ணி
22 னான். அப்படியே இஸ்ரவேல் புத்திரர் யெ
ரொபெயாம் செய்த எல்லாப் பாவங்களிலும்
23 நடந்து, கர்த்தர் தீர்க்கதரிசிகளாகிய தம்மு
டைய ஊழியக்காரர் எல்லாரையும் கொண்டு
சொல்லியிருந்தபடி, [7]அவர்களைத் தமது சமு
கத்தைவிட்டு அகற்றுகிறவரைக்கும், அவை
களை விட்டு விலகாதிருந்தார்கள்; இப்படியே
இஸ்ரவேலர் தங்கள் தேசத்தினின்று அசீரி
யாவுக்குக் கொண்டுபோகப்பட்டு இந்நாள்வ
ரைக்கும் இருக்கிறார்கள்.
24 அசீரியாராஜா, [8]பாபிலோனிலும், கூத்தா
விலும், ஆபாவிலும், ஆமாத்திலும், செப்பர்
வாயிமிலும் இருந்து மனுஷரை வரப்பண்ணி,
அவர்களை இஸ்ரவேல் புத்திரருக்குப் பதிலா
கச் சமாரியாவின் பட்டணங்களிலே குடி
யேற்றினான்; இவர்கள் சமாரியாவைச் சொந்
தமாய்க் கட்டிக்கொண்டு அதின் பட்டணங்
25 களிலே குடியிருந்தார்கள். அவர்கள் அங்கே
குடியேறினதுமுதல், கர்த்தருக்குப் பயப்படா
ததினால், கர்த்தர் அவர்களுக்குள்ளே சிங்கங்
களை அனுப்பினார்; அவைகள் அவர்களில்
26 சிலரைக் கொன்றுபோட்டது. அப்பொழுது
ஜனங்கள் அசீரியா ராஜாவை நோக்கி: நீர்
இங்கேயிருந்து அனுப்பி, சமாரியாவின் பட்
டணங்களிலே குடியேற்றுவித்த ஜாதிகள்
அந்தத் தேசத்து தேவனுடைய காரியத்தை
அறியாதபடியினால், அவர் அவர்களுக்குள்

[1] யாத். 32. 8. 1 இரா. 12. 28; 14. 15, 23
[2] லேவி. 18. 21
[3] 1 இரா. 21. 20
[4] 1 இரா. 11. 13, 32
[5] 15. 29
[6] 1 இரா. 11. 11, 31; 12. 20, 28
[7] 1 இரா. 14. 16
[8] எஸ்ரா. 4. 2, 10
[9] எஸ்ரா. 4. 9
[10] லேவி. 18. 21. உபா. 12. 31
[11] 1 இரா. 12. 31
[12] செப். 1. 5
[13] ஆதி. 32. 28; 35. 10. 1 இரா. 11. 31
[14] நியா. 6. 10. யாத். 20. 5
[15] யாத். 6. 6. உபா. 10. 20
[16] உபா. 5. 32

ளே சிங்கங்களை அனுப்பினார்; அந்தத் தேசத்து
தேவனுடைய காரியத்தை அவர்கள் அறியாத
படியினால், அவைகள் அவர்களைக் கொன்று
போடுகிறது என்று சொன்னார்கள். அதற்கு 27
அசீரியா ராஜா: நீங்கள் அங்கேயிருந்து
கொண்டுவந்த ஆசாரியர்களில் ஒருவனை அங்
கே அழைத்துக்கொண்டுபோங்கள்; அவர்கள்
அங்கே குடியிருக்கும்படிக்கு, அவன் அவர்
களுக்கு அந்தத் தேசத்துத் தேவனுடைய காரி
யத்தைப் போதிக்கக்கடவன் என்று கட்டளை
யிட்டான். அப்படியே அவர்கள் சமாரியா 28
விலிருந்து கொண்டுபோயிருந்த ஆசாரியர்க
ளில் ஒருவன் வந்து, பெத்தேலிலே குடி
யிருந்து, கர்த்தருக்குப் பயந்து நடக்கவேண்
டிய விதத்தை அவர்களுக்குப் போதித்தான்.
ஆனாலும் அந்தந்த ஜாதி தங்கள் தங்கள் தேவர் 29
களைத் தங்களுக்கு உண்டுபண்ணி, அந்தந்த
ஜாதியார் குடியேறின தங்கள் தங்கள் பட்ட
ணங்களில் சமாரியர் உண்டுபண்ணின மே
டைகளின் கோவில்களில் வைத்தார்கள்.
பாபிலோனின் மனுஷர் சுக்கோத் பெனோத் 30
தையும், கூத்தின் மனுஷர் நேர்காலையும்,
ஆமாத்தின் மனுஷர் அசிமாவையும், ஆவியர் 31
நிபேகாசையும் தர்தாக்கையும் உண்டாக்கினார்
கள், [9]செப்பர்வியர் செப்பர்வாயிமின் தேவர்
களாகிய அத்ரமலேக்குக்கும் அன்னமலேக்
குக்கும் தங்கள் பிள்ளைகளை [10]அக்கினியில் தக
னித்து வந்தார்கள். அவர்கள் கர்த்தருக்குப் 32
பயந்ததுமன்றி, மேடைகளிலுள்ள கோவில்
களில் தங்களுக்காக ஆராதனை செய்கிறதற்கு,
[11]தங்களுக்குள் ஈனமானவர்களை ஆசாரியர்க
ளாகவும் ஏற்படுத்தினார்கள். அப்படியே 33
கர்த்தருக்குப் பயந்தும், [12]தாங்கள் விட்டுவந்த
ஜாதிகளுடைய முறைமையின்படியே தங்கள்
தேவர்களை சேவித்தும் வந்தார்கள். இந்நாள் 34
வரைக்கும் அவர்கள் தங்கள் முந்தின முறை
களின்படியே செய்துவருகிறார்கள்; அவர்
கள் கர்த்தருக்குப் பயந்து நடக்கிறதுமில்லை,
தங்கள் சுயதிட்டங்கள் முறைமைகளின்படி
யாகிலும், கர்த்தர் இஸ்ரவேல் [13]என்று
பேரிட்ட யாக்கோபின் புத்திரருக்குக் கற்
பித்த நியாயப்பிரமாணத்திற்கும் கற்பனைக்கும்
ஒத்தபடியாகிலும் செய்கிறதுமில்லை. கர்த்தர் 35
இவர்களோடே உடன்படிக்கை பண்ணி, இவ
ர்களுக்குக் கற்பித்தது என்னவென்றால்: நீங்
கள் அந்நிய தேவர்களுக்குப் பயப்படாமலும்,
[14]அவர்களைப் பணிந்துகொள்ளாமலும், சேவி
யாமலும், அவர்களுக்குப் பலியிடாமலும்,
உங்களை மகா வல்லமையினாலும் ஓங்கிய புயத் 36
தினாலும் எகிப்து தேசத்திலிருந்து வரப்பண்
ணின கர்த்தருக்கே பயந்து, [15]அவரையே
பணிந்துகொண்டு, அவருக்கே பலியிட்டு,
அவர் உங்களுக்கு [16]எழுதிக்கொடுத்த திட்டங் 37
களின்படியும், முறைமைகளின்படியும், நியா
யப் பிரமாணத்தின்படியும், கற்பனைகளின்
படியும், நீங்கள் சகல நாளும் செய்கிறதற்குக்
கவனமாயிருந்து அந்நிய தேவர்களுக்குப் பயப்

38 படாதிருங்கள். நான் உங்களோடே பண்
ணின உடன்படிக்கையை [1]நீங்கள் மறவாம
லும், அந்நியதேவர்களுக்குப் பயப்படாமலும்,
39 உங்கள் தேவனாகிய **கர்த்தருக்கே** பயந்து நடப்
பீர்களாக; அப்பொழுது அவர் உங்கள் எல்
லாச் சத்துருக்களின் கைக்கும் உங்களைத் தப்பு
விப்பார் என்று அவர்களுக்குச் சொல்லியிருந்
40 தார். ஆனாலும் அவர்கள் செவிகொடாமல்
தங்கள் முந்தின முறைமைகளின்படியே செய்
41 தார்கள். அப்படியே அந்த ஜாதிகள் **கர்த்**
**தருக்குப்** பயந்தும், தங்கள் விக்கிரகங்களைச்
சேவித்தும் வந்தார்கள்; [2]அவர்கள் பிள்ளைக
ளும் அவர்கள் பிள்ளைகளின் பிள்ளைகளும்
தங்கள் பிதாக்கள் செய்தபடியே இந்நாள்
வரைக்கும் செய்துவருகிறார்கள்.

**18** இஸ்ரவேலின் ராஜாவாகிய ஏலாவின் குமா
ரன் ஓசெயாவின் மூன்றாம் வருஷத்திலே
ஆகாஸ் என்னும் யூதாவுடைய ராஜாவின்
குமாரனாகிய [3]எசேக்கியா ராஜாவானான்.
2 அவன் ராஜாவாகிறபோது, இருபத்தைந்து
வயதாயிருந்து, எருசலேமிலே இருபத்தொன்
பது வருஷம் அரசாண்டான்; சகரியாவின்
குமாரத்தியாகிய அவன் தாயின் பேர் *ஆபி.
3 அவன் தன் தகப்பனாகிய தாவீது செய்தபடி
யெல்லாம் **கர்த்தரின்** பார்வைக்குச் செம்மை
4 யானதைச் செய்தான். அவன் மேடைகளை
அகற்றி, [4]சிலைகளைத் தகர்த்து, விக்கிரகத்தோப்
புகளைவெட்டி, மோசே பண்ணியிருந்த வெண்
கலச்சர்ப்பத்தை உடைத்துப்போட்டான்; அந்
நாட்கள்மட்டும் இஸ்ரவேல் புத்திரர் அதற்
குத் தூபங்காட்டி வந்தார்கள்; அதற்கு †நிகுஸ்
5 தான் என்று பேரிட்டான். அவன் இஸ்ரவே
லின் தேவனாகிய **கர்த்தரின்மேல்** வைத்த நம்
பிக்கையிலே, [5]அவனுக்குப் பின்னும் அவ
னுக்கு முன்னும் இருந்த யூதாவின் ராஜாக்
களிலெல்லாம் அவனைப்போல் ஒருவனும்
6 இருந்ததில்லை. அவன் **கர்த்தரை** விட்டுப்
பின்வாங்காமல் அவரைச் சார்ந்திருந்து, [6]**கர்த்**
**தர்** மோசேக்குக் கற்பித்த அவருடைய கற்
7 பனைகளைக் கைக்கொண்டு நடந்தான். ஆகை
யால் **கர்த்தர்** அவனோடிருந்தார்; [7]அவன்
போகிற இடம் எங்கும் அவனுக்கு அனுகூல
மாயிற்று; [8]அவன் அசீரியா ராஜாவைச் சேவிக்
காமல், அவன் அதிகாரத்தைத் தள்ளிவிட்
8 டான். அவன் பெலிஸ்தரைக் காசாமட்டும்
அதின் எல்லைகள்பரியந்தமும், [9]காவலாளர்
காக்கிற கோபுரங்கள் தொடங்கி அரணான
நகரங்கள் பரியந்தமும் முறிய அடித்தான்.
9 இஸ்ரவேலின் ராஜாவாகிய ஏலாவின் குமா
ரன் ஓசெயாவின் ஏழாம் வருஷத்திற்குச் சரி
யான எசேக்கியா ராஜாவின் நாலாம் [10]வருஷத்
திலே அசீரியா ராஜாவாகிய சல்மனாசார் சமா
ரியாவுக்கு விரோதமாய் வந்து அதை முற்றிக்
10 கை போட்டான். மூன்று வருஷம் சென்ற
பின்பு, அவர்கள் அதைப் பிடித்தார்கள்;
எசேக்கியாவின் ஆறாம் வருஷத்திலும், இஸ்ர
வேலின் ராஜாவாகிய ஓசெயாவின் [11]ஒன்ப
தாம் வருஷத்திலும் சமாரியா பிடிபட்டது.
அசீரியா ராஜா இஸ்ரவேலை அசீரியாவுக்குச் 11
சிறைபிடித்துக்கொண்டுபோய், கோசான் நதி
யோரமான [12]ஆலாகிலும் ஆபோரிலும் மேதி
யரின் பட்டணங்களிலும் குடியேற்றினான்.
அவர்கள் தங்கள் தேவனாகிய **கர்த்தருடைய** 12
சத்தத்திற்குச் செவிகொடாமல், அவருடைய
உடன்படிக்கையையும் **கர்த்தரின்** தாசனாகிய
மோசே கற்பித்த யாவற்றையும் மீறி, [13]அதற்
குச் செவிகொடாமலும் அதின்படி செய்யாம
லும் போனார்கள்.

யூதாவின் ராஜாவாகிய எசேக்கியாவின் பதி 13
னாலாம் வருஷத்திலே அசீரியா ராஜாவாகிய
சனகெரிப் [14]யூதாவிலிருக்கிற அரணான சகல
பட்டணங்களுக்கும் விரோதமாய் வந்து அவை
களைப் பிடித்தான். அப்பொழுது யூதாவின் 14
ராஜாவாகிய எசேக்கியா லாகீசிலுள்ள அசீ
ரியா ராஜாவுக்கு ஆள் அனுப்பி: நான் குற்றஞ்
செய்தேன்; என்னைவிட்டுத் திரும்பிப்போம்;
நீர் என்மேல் சுமத்துவதைச் சுமப்பேன் என்று
சொன்னான்; அப்படியே அசீரியா ராஜா யூதா
வின் ராஜாவாகிய எசேக்கியாவின்மேல் முந்
நூறு தாலந்து வெள்ளியையும் முப்பது தாலந்து
பொன்னையும் சுமத்தினான். ஆதலால் எசேக் 15
கியா **கர்த்தரின்** ஆலயத்திலும் ராஜாவுடைய
அரமனைப் பொக்கிஷங்களிலும் அகப்பட்ட
[15]எல்லா வெள்ளியையும் கொடுத்தான். அக் 16
காலத்திலே யூதாவின் ராஜாவாகிய எசேக்
கியா **கர்த்தருடைய** ஆலயக் கதவுகளிலும் நிலை
களிலும் தான் அழுத்தியிருந்த பொன் தகடு
களைக் கழற்றி அவைகளை அசீரியா ராஜாவுக்
குக் கொடுத்தான். ஆகிலும் அசீரியா ராஜா 17
லாகீசிலிருந்து தர்த்தானையும் ரப்சாரீசையும் ரப்
சாக்கேயையும் பெரிய சேனையோடே எரு
சலேமுக்கு எசேக்கியா ராஜாவினிடத்தில்
அனுப்பினான்; [16]அவர்கள் எருசலேமுக்கு
வந்து, வண்ணார் துறையின் வழியிலுள்ள
மேல்குளத்துச் சாலகத்தண்டையிலே நின்று,
ராஜாவை அழைப்பித்தார்கள்; அப்பொழுது 18
இல்க்கியாவின் குமாரனாகிய எலியாக்கீம் என்
னும் அரமனை விசாரிப்புக்காரனும், செப்னா
என்னும்சம்பிரதியும், ஆசாப்பின்குமாரனாகிய
யோவாக் என்னும் கணக்கனும் அவர்களிடத்
துக்குப் புறப்பட்டுப் போனார்கள். ரப்சாக்கே 19
அவர்களை நோக்கி: அசீரியா ராஜாவாகிய மகா
ராஜாவானவர் உரைக்கிறதும், நீங்கள் எசேக்
கியாவுக்குச் சொல்லவேண்டியதும் என்ன
வென்றால்: [17]நீ நம்பியிருக்கிற இந்த நம்பிக்கை
என்ன? யுத்தத்திற்கு மந்திராலோசனையும் 20
வல்லமையும் உண்டென்று நீ சொல்லுகிறாயே,
அது வாய்ப்பேச்சேயன்றி வேறல்ல; நீ என்
னை விரோதிக்கும்படி யார்மேல் நம்பிக்கைவை
த்திருக்கிறாய்? இதோ, [18]நெரிந்த நாணல்கோ 21
லாகிய அந்த எகிப்தை நம்புகிறாய்; அதின்
மேல் ஒருவன் சாய்ந்தால், அது அவன் உள்
ளங்கையில் பட்டு உருவிப்போம்; எகிப்தின்
ராஜாவாகிய பார்வோன் தன்னை நம்புகிற

[1] உபா. 4. 23
[2] 32, 33. வச.
[3] 2 நாளா. 28. 27; 29. 1
* அபியாள். 2 நாளா. 29. 1
[4] 2 நாளா. 31. 1
† வெண்கலத் துண்டு. எண். 21. 9
[5] 19. 10; 23. 25. யோபு. 13. 15. சங். 13. 5
[6] உபா. 10. 20. யோசு. 23. 8
[7] 2 நாளா. 15. 2
[8] 1 சாமு. 18. 5, 14. சங். 60. 12
[9] 1 நாளா. 4. 41. ஏசா. 14. 29
[10] 17. 3
[11] 17. 6
[12] 1 நாளா. 5. 26
[13] 17. 7. தானி. 9. 6, 10
[14] 2 நாளா. 32. 1. ஏசா. 36. 1. மு
[15] 16. 8
[16] ஏசா. 7. 3
[17] 2 நாளா. 32. 10. மு
[18] எசே. 29. 6, 7

22 யாவருக்கும் இப்படியே இருப்பான். நீங்கள்
என்னிடத்தில்: எங்கள் தேவனாகிய **கர்த்தரை**
நம்புகிறோம் என்று சொல்வீர்களாகில், [1]அவ
ருடைய மேடைகளையும் அவருடைய பலிபீ
டங்களையும் அல்லவோ எசேக்கியா அகற்றி,
யூதாவையும் எருசலேமையும் நோக்கி: எருச
லேமிலிருக்கிற இந்தப் பலிபீடத்தின்முன்
23 பணியுங்கள் என்றானே. நான் உனக்கு இரண்
டாயிரம் குதிரைகளைக் கொடுப்பேன்; நீ அவை
கள்மேல் ஏறத்தக்கவர்களைச் சம்பாதிக்கக் கூடு
மானால் அசீரியா ராஜாவாகிய என் ஆண்ட
24 வனோடே சபதங்கூறு. கூறாதே போனால்,
நீ என் ஆண்டவனுடைய ஊழியக்காரரில்
ஒரே ஒரு சிறிய தலைவனின் முகத்தை எப்
படித் திருப்புவாய்? இரதங்களோடு குதிரை
வீரரும் வருவார்கள் என்று எகிப்தையா நம்பு
25 கிறாய்? இப்போதும் **கர்த்தருடைய** கட்டளை
யில்லாமல் இந்த ஸ்தலத்தை அழிக்க வந்தே
னோ? இந்தத் தேசத்திற்கு விரோதமாய்ப்
போய் அதை அழித்துப்போடு என்று **கர்த்தர்**
26 என்னோடே சொன்னாரே என்றான். அப்
பொழுது இல்க்கியாவின் குமாரன் எலியாக்
கீமும் செப்னாவும் யோவாகும் ரப்சாக்கே
யைப் பார்த்து: உமது அடியாரோடே சீரிய
பாஷையிலே பேசும்; அது எங்களுக்குத் தெ
ரியும்; அலங்கத்திலிருக்கிற ஜனத்தின் செவி
கள் கேட்க எங்களோடே யூதபாஷையிலே
27 பேசவேண்டாம் என்றார்கள். அதற்கு ரப்
சாக்கே: உங்களோடேகூடத் தங்கள் மலத்
தைத் தின்னவும் தங்கள் நீரைக் குடிக்கவும்
அலங்கத்திலே தங்கியிருக்கிற மனுஷரண்
டைக்கே அல்லாமல், உன் ஆண்டவனண்
டைக்கும் உன்னண்டைக்குமா என் ஆண்ட
வன் இந்த வார்த்தைகளைப் பேச என்னை
28 அனுப்பினார் என்று சொல்லி, ரப்சாக்கே
நின்றுகொண்டு யூதபாஷையிலே உரத்த சத்த
மாய்: அசீரியா ராஜாவாகிய மகாராஜாவுடைய
29 வார்த்தையைக் கேளுங்கள். எசேக்கியா உங்
களை [2]வஞ்சியாதபடி பாருங்கள்; அவன் உங்
களை என் கையிலிருந்து தப்புவிக்கமாட்டான்.
30 **கர்த்தர்** நம்மை நிச்சயமாய்த் தப்புவிப்பார்;
இந்த நகரம் அசீரியா ராஜாவின் கையில் ஒப்
புக்கொடுக்கப்படுவதில்லை என்று சொல்லி,
எசேக்கியா உங்களைக் **கர்த்தரை** நம்பப் பண்
ணுவான்; அதற்கு இடங்கொடாதிருங்கள்
31 என்று ராஜா சொல்லுகிறார். எசேக்கியா
வின் சொல்லைக் கேளாதிருங்கள்; அசீரியா
ராஜா சொல்லுகிறதாவது: நீங்கள் என்னோ
டே *இராசியாகி, காணிக்கையோடே என்
னிடத்தில் வாருங்கள்; நான் வந்து, உங்களை
உங்கள் தேசத்துக்கு ஒப்பான தானியமும்
திராட்சத்தோட்டமுமுள்ள தேசமும், [3]அப்ப
மும் திராட்சரசமுமுள்ள தேசமும், ஒலிவ
எண்ணெயும் தேனுமுள்ள தேசமுமாகிய
சீமைக்கு அழைத்துக்கொண்டுபோகுமளவும்,
32 அவனவன் தன்தன் திராட்சச்செடியின் கனி
யையும் தன்தன் அத்திமரத்தின் கனியையும்

[1] 4 வச. 2 நாளா. 31. 1; 32. 12
[2] 2 நாளா. 32. 15
* இணங்கி. ஆதி. 32. 20. நீதி. 18. 16
[3] உபா. 8. 7, 8
[4] 19. 12. 2 நாளா. 32. 14. ஏசா. 10. 10, 11
[5] 17. 24; 19. 13
[6] தானி. 8. 15
[7] ஏசா. 33. 7
[8] ஏசா. 37. 1
[9] 18. 35. 2 சாமு. 16. 12
[10] 18. 17. ஏசா. 37. 6
[11] 35—37. வச. எரே. 51. 1

புசித்து, அவனவன் தன்தன் கிணற்றின் தண்
ணீரைக் குடியுங்கள்; இவ்விதமாய் நீங்கள் சாகா
மல் பிழைப்பீர்கள்; **கர்த்தர்** நம்மைத் தப்புவிப்
பார் என்று உங்களைப் போதனைசெய்ய எசேக்
கியாவுக்குச் செவிகொடாதிருங்கள். ஜாதிகளு 33
டைய தேவர்களில் யாராவது [4]தங்கள் தேசத்தை
அசீரியா ராஜாவின் கைக்குத் தப்புவித்த
துண்டோ? ஆமாத், அர்பாத் பட்டணங்களின் 34
தேவர்கள் எங்கே? செப்பர்வாயிம், ஏனா,
ஈவாப் பட்டணங்களின் தேவர்கள் எங்கே?
[5]அவர்கள் சமாரியாவை என் கைக்குத் தப்பு
வித்ததுண்டோ? **கர்த்தர்** எருசலேமை என் 35
கைக்குத் தப்புவிப்பார் என்பதற்கு, [6]அந்தத்
தேசங்களுடைய எல்லாத் தேவர்களுக்குள்
ளும் தங்கள் தேசத்தை என் கைக்குத் தப்பு
வித்தவர் யார் என்கிறார் என்று சொன்னான்.
ஆனாலும் ஜனங்கள் அவனுக்கு ஒரு வார்த் 36
தையும் பிரதியுத்தரமாகச் சொல்லாமல் மவுன
மாயிருந்தார்கள்; அவனுக்கு மறு உத்தரவு
சொல்லவேண்டாம் என்று ராஜா கட்டளை
யிட்டிருந்தான். அப்பொழுது இல்க்கியா 37
வின் குமாரனாகிய எலியாக்கீம் என்னும் அர
மனை விசாரிப்புக்காரனும், செப்னா என்னும்
சம்பிரதியும், ஆசாப்பின் குமாரன் யோவாக்
என்னும் கணக்கனும் வஸ்திரங்களைக் கிழித்
துக்கொண்டு, [7]எசேக்கியாவினிடத்தில் வந்
து, ரப்சாக்கேயின் வார்த்தைகளை அவனுக்
குத் தெரிவித்தார்கள்.

ராஜாவாகிய எசேக்கியா அதைக் கேட்ட 19
போது, [8]தன் வஸ்திரங்களைக் கிழித்து, இர
ட்டு உடுத்திக்கொண்டு, **கர்த்தருடைய** ஆல
யத்தில் பிரவேசித்து, அரமனை விசாரிப்புக் 2
காரனாகிய எலியாக்கீமையும், சம்பிரதியாகிய
செப்னாவையும், ஆசாரியர்களின் மூப்பரை
யும், ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா என்
னும் தீர்க்கதரிசியினிடத்துக்கு இரட்டு உடுத்
திக்கொண்டவர்களாக அனுப்பினான். இவர் 3
கள் அவனை நோக்கி: இந்த நாள் நெருக்கமும்
கண்டிதமும் தூஷணமும் அநுபவிக்கிற நாள்;
பிள்ளை பேறு நோக்கியிருக்கிறது, பெறவோ
பெலனில்லை. ஜீவனுள்ள தேவனை நிந்திக் 4
கும்படி அசீரியா ராஜாவாகிய தன் ஆண்டவ
னால் அனுப்பப்பட்ட ரப்சாக்கே சொன்ன
வார்த்தைகளையெல்லாம் உமது தேவனாகிய
**கர்த்தர்** கேட்டிருக்கிறார்; [9]உமது தேவனாகிய
**கர்த்தர்** கேட்டிருக்கிற வார்த்தைகளினிமித்
தம் தண்டனை செய்வார்; ஆகையால் இன்
னும் மீதியாயிருக்கிறவர்களுக்காக விண்ணப்
பஞ்செய்வீராக என்று எசேக்கியா சொல்லச்
சொன்னார் என்றார்கள். இவ்விதமாய் எசேக் 5
கியா ராஜாவின் ஊழியக்காரர் ஏசாயாவினி
டத்தில் வந்து சொன்னார்கள். அப்பொழுது 6
ஏசாயா அவர்களை நோக்கி: [10]அசீரியா ராஜா
வின் ஊழியக்காரர் என்னைத் தூஷித்ததும்
நீர் கேட்டதுமான வார்த்தைகளினாலே பயப்
படாதேயும். இதோ, அவன் ஒரு செய்தி 7
யைக் கேட்டு, [11]தன் தேசத்துக்குத் திரும்பு

வதற்கான ஆவியை நான் அவனுக்குள் அனு
ப்பி, அவனை அவன் தேசத்திலே பட்டயத்
தால் விழப்பண்ணுவேன் என்று **கர்த்தர்**
உரைக்கிறார் என்பதை உங்கள் ஆண்டவனி
டத்தில் சொல்லுங்கள் என்றான்.
8 அசீரியா ராஜா லாகீசைவிட்டுப் புறப்பட்
டான் என்று கேள்விப்பட்டு, [1]ரப்சாக்கே
திரும்பிப்போய், அவன் லிப்னாவின்மேல் யுத்
9 தம் பண்ணுகிறதைக் கண்டான். இதோ,
எத்தியோப்பியா ராஜாவாகிய திராக்கா உம்
மோடு யுத்தம்பண்ணப் புறப்பட்டான் என்று
சொல்லக் கேள்விப்பட்டான்; [2]அப்பொழுது
அவன் திரும்ப எசேக்கியாவினிடத்துக்கு
10 ஸ்தானாபதிகளை அனுப்பி: நீங்கள் யூதாவின்
ராஜாவாகிய எசேக்கியாவுக்குச் சொல்லவே
ண்டியது என்னவென்றால், எருசலேம் அசீ
ரியா ராஜாவின் கையில் ஒப்புக்கொடுக்கப்
படுவதில்லையென்று [3]நீ நம்பியிருக்கிற உன்
11 தேவன் உன்னை எத்த ஒட்டாதே. இதோ,
அசீரியா ராஜாக்கள் சகல தேசங்களையும் சங்
கரித்த செய்தியை நீ கேட்டிருக்கிறாயே, நீ
12 தப்புவாயோ? என் பிதாக்கள் அழித்துவிட்ட
கோசானையும் ஆரானையும் ரேத்சேப்பையும்,
தெலாசாரிலிருந்த ஏதேனின் புத்திரரையும்
[4]அவர்களுடைய தேவர்கள் தப்புவித்ததுண்
13 டோ? ஆமாத்தின் ராஜாவும், அர்பாத்தின்
ராஜாவும், செப்பர்வாயிம் ஏனா ஈவா பட்ட
ணங்களின் ராஜாவும் எங்கே? [5]என்று சொல்
14 லுங்கள் என்றான். எசேக்கியா ஸ்தானாபதி
களின் கையிலிருந்து நிருபத்தை வாங்கி வாசி
த்தபின்பு, [6]அவன் **கர்த்தரின்** ஆலயத்திற்குப்
போய், அதைக் **கர்த்தருக்கு** முன்பாக விரித்து,
15 **கர்த்தரை** நோக்கி: [7]கேருபீன்களின் மத்தி
யில் வாசம்பண்ணுகிற இஸ்ரவேலின் தேவ
னாகிய **கர்த்தாவே**, [8]நீர் ஒருவரே பூமியின்
ராஜ்யங்களுக்கெல்லாம் தேவனானவர்; நீர் வா
16 னத்தையும் பூமியையும் உண்டாக்கினீர் **கர்**
**த்தாவே**, உமது செவியைச் சாய்த்துக் கேளும்;
[9]**கர்த்தாவே**, நீர் உமது கண்களைத் திறந்து
பாரும்; [10]சனகெரிப் ஜீவனுள்ள தேவனை நிந்
திக்கும்படிக்குச் சொல்லியனுப்பின வார்த்தை
17 களைக் கேளும். **கர்த்தாவே**, அசீரியா ராஜாக்
கள் அந்த ஜாதிகளையும் அவர்கள் தேசத்தையும்
18 நாசமாக்கி, அவர்களுடைய தேவர்களை நெ
ருப்பிலேபோட்டுவிட்டது மெய்தான்; அவை
கள் தேவர்கள் அல்லவே, [11]மனுஷர் கைவேலை
யான மரமும் கல்லும்தானே; ஆகையால்
19 அவைகளை நிர்த்தூளியாக்கினார்கள். இப்போ
தும் எங்கள் தேவனாகிய **கர்த்தாவே**, நீர் ஒரு
வரே தேவனாகிய **கர்த்தர்** என்று பூமியின்
ராஜ்யங்கள் எல்லாம் அறியும்படிக்கு, [12]எங்
களை அவன் கைக்கு நீங்கலாக்கி இரட்சியும்
என்று விண்ணப்பம்பண்ணினான்.
20 அப்பொழுது ஆமோத்சின் குமாரனாகிய
ஏசாயா எசேக்கியாவுக்குச் சொல்லியனுப்பி
னது: இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்**
உரைக்கிறது என்னவென்றால், [13]அசீரியா
ராஜாவாகிய சனகெரிபினிமித்தம் நீ என்னை
நோக்கிப் பண்ணின விண்ணப்பத்தைக் கேட்
டேன். அவனைக்குறித்துக் **கர்த்தர்** சொல் 21
லுகிற வசனமாவது: சீயோன் குமாரத்தியா
கிய கன்னியாஸ்திரீ உன்னை இகழ்ந்து, [14]உன்
னைப் பரிகாசம் பண்ணுகிறாள்; [15]எருசலேம்
குமாரத்தி உன் பின்னாலே தலையைத் துலுக்
குகிறாள். யாரை நிந்தித்துத் தூஷித்தாய்? 22
யாருக்கு விரோதமாய் உன் சத்தத்தை உயர்த்
தினாய்? நீ இஸ்ரவேலின் பரிசுத்தருக்கு
விரோதமாயல்லவோ [16]உன் கண்களை மேட்
டிமையாக ஏறெடுத்தாய்? உன் ஸ்தானாபதி 23
களைக்கொண்டு நீ ஆண்டவரை நிந்தித்து:
என் இரதங்களின் திரளினாலே [17]நான் மலை
களின் கொடுமுடிகளுக்கும் லீபனோனின்
சிகரங்களுக்கும் வந்து ஏறினேன்; அதின்
உயரமான கேதுருமரங்களையும், உச்சிதமான
தேவதாரி விருட்சங்களையும் நான் வெட்டி,
அதின் கடையாந்தரத் தாபரமட்டும், அதின்
செழுமையான வனமட்டும் [18]வருவேன் என்
றும், நான் அந்நியதேசங்களில் கிணறுவெட்டி 24
தண்ணீர் குடித்தேன்; என் உள்ளங்கால்க
ளினால் அரணிப்பான இடங்களின் அகழி
களையெல்லாம் வறளவும் பண்ணினேன் என்
றும் சொன்னாய். நான் வெகுகாலத்திற்கு 25
முன் அதை நியமித்து, பூர்வநாட்கள் முதல்
அதைத் திட்டம்பண்ணினேன் என்பதை நீ
கேட்டதில்லையோ? [19]இப்பொழுது நீ அர
ணான பட்டணங்களைப் பாழான மண்மேடு
கள் ஆக்கும்படிக்கு நானே அதைச் சம்பவிக்
கப் பண்ணினேன். அதினாலே அவைகளின் 26
குடிகள் கையிளைத்தவர்களாகி, கலங்கி வெட்
கப்பட்டு, வெளியின் பூண்டுக்கும், பச்சிலைக்
கும், வீடுகளின்மேல் முளைக்கும் புல்லுக்கும்,
[20]ஓங்கிவளருமுன் தீய்ந்துபோம் பயிருக்கும்
சமானமானார்கள். உன் இருப்பையும், உன் 27
போக்கையும், உன் வரவையும், நீ எனக்கு
விரோதமாய்க் கொந்தளிக்கிறதையும் [21]அறி
வேன். நீ எனக்கு விரோதமாய்க் கொந்த 28
ளித்து, வீரியம் பேசினது என் செவிகளில்
ஏறினபடியினால், நான் என் துறட்டை உன்
மூக்கிலும் என் கடிவாளத்தை உன் வாயிலும்
போட்டு, [22]நீ வந்தவழியே உன்னைத் திருப்
பிக்கொண்டுபோவேன் என்று அவனைக்குறி
த்துச் சொல்லுகிறார். உனக்கு அடையாள 29
மாயிருப்பது என்னவென்றால்: [23]இந்த வரு
ஷத்திலே தப்பிப் பயிராகிறதையும், இரண்
டாம் வருஷத்திலே தானாய் விளைகிறதையும்
சாப்பிடுவீர்கள்; மூன்றாம் வருஷத்திலோ
விதைத்து அறுத்து, திராட்சத்தோட்டங்களை
நாட்டி, அவைகளின் கனிகளைப் புசிப்பீர்கள்.
யூதா வம்சத்தாரில் தப்பி மீந்திருக்கிறவர்கள் 30
[24]மறுபடியும் கீழே வேர்பற்றி மேலே கனி
கொடுப்பார்கள். மீதியாயிருக்கிறவர்கள் எரு 31
சலேமிலும், தப்பினவர்கள் சீயோன் மலையி
லும் இருந்து புறப்படுவார்கள்; சேனைகளு
டைய **கர்த்தரின்** வைராக்கியம் [25]இதைச்

[1] 18. 14
[2] 1 சாமு. 23. 27
[3] 18. 5
[4] 18. 33. எசே. 27. 23
[5] 18. 34
[6] ஏசா. 37. 14. ழ
[7] 1 சாமு. 4. 4. சங். 80. 1
[8] 1 இரா. 18. 39. ஏசா. 44. 6. எரே. 10. 10–12
[9] சங். 31. 2
[10] 2 நாளா. 6. 40
[11] சங். 115. 4. எரே. 10. 3
[12] சங். 83. 18
[13] ஏசா. 37. 21. ழ. சங். 65. 2
[14] புல. 2. 13, 15
[15] யோபு 16. 4. சங். 22. 7, 8
[16] சங். 71. 22. ஏசா. 5. 24. எரே. 51. 5
[17] 18. 17. சங். 20. 7
[18] ஏசா. 10. 18
[19] ஏசா. 10. 5; 45. 7
[20] சங். 129. 6
[21] சங். 139. 1 ழ.
[22] யோபு. 41. 2. எசே. 29. 4. ஆமோ. 4. 2
[23] 1 சாமு. 2. 34. ஏசா. 7. 11, 14
[24] 2 நாளா. 32. 22, 23
[25] ஏசா. 9. 7

32 செய்யும். ஆகையால் **கர்த்தர்** அசீரியா ராஜா
வைக்குறித்து: அவன் இந்த நகரத்திற்குள் பிர
வேசிப்பதில்லை; இதின்மேல் அம்பு எய்வது
மில்லை; இதற்குமுன் கேடகத்தோடே வரு
வதுமில்லை; இதற்கு எதிராகக் கொத்தளம்
33 போடுவதுமில்லை. அவன் இந்த நகரத்திற்
குள் பிரவேசியாமல், தான் வந்தவழியே திரு
34 ம்பிப்போவான். என்நிமித்தமும் என் தாச
ஞகிய தாவீதின் நிமித்தமும் நான் இந்த நகர
த்தை இரட்சிக்கும்படிக்கு, [1]இதற்கு ஆதரவா
யிருப்பேன் என்பதைக் **கர்த்தர்** உரைக்கிறார்
என்று சொல்லியனுப்பினன்.
35 அன்று இராத்திரியில் சம்பவித்தது என்ன
வென்றால்: [2]**கர்த்தருடைய** தூதன் புறப்பட்டு,
அசீரியரின் பாளயத்தில் லட்சத்தெண்பத்தை
யாயிரம்பேரைச் சங்கரித்தான்; அதிகாலமே
எழுந்திருக்கும்போது, இதோ, அவர்கள் எல்
லாரும் செத்த பிரேதங்களாய்க் கிடந்தார்கள்.
36 அப்பொழுது அசீரியாராஜாவாகிய சனகெ
ரிப் பிரயாணப்பட்டு, திரும்பிப்போய் [3]நினி
37 வேயில் இருந்துவிட்டான். அவன் தன்
தேவனாகிய நிஸ்ரோகின் கோவிலிலே பணிந்
துகொள்ளுகிறபோது, அவன் குமாரராகிய
[4]அத்ரமலேக்கும் சரேத்சேரும் அவனைப் பட்
டயத்தினல் வெட்டிப்போட்டு, *ஆரராத் தே
சத்திற்குத் தப்பி ஓடிப்போனார்கள்; அவன்
குமாரனாகிய [5]எசரத்தோன் அவன் பட்டத்
திற்கு வந்து அரசாண்டான்.

**20** அந்நாட்களில் எசேக்கியா வியாதிப்
பட்டு மரணத்துக்கு ஏதுவாயிருந்தான்; [6]அப்
பொழுது ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா
என்னும் தீர்க்கதரிசி அவனிடத்தில் வந்து,
அவனை நோக்கி: நீர் உமது வீட்டுக்காரியத்தை
ஒழுங்குப்படுத்தும்; நீர் பிழைக்கமாட்டீர், மரித்
துப்போவீர் என்று **கர்த்தர்** சொல்லுகிறார்
2 என்றான். அப்பொழுது எசேக்கியா தன்
முகத்தைச் சுவர்ப்புறமாகத்திருப்பிக்கொண்டு,
3 **கர்த்தரை** நோக்கி: ஆ **கர்த்தாவே**, நான்
உமக்கு முன்பாக உண்மையும் மன உத்தமமு
மாய் நடந்து, [7]உமது பார்வைக்கு நலமான
தைச் செய்தேன் என்பதை [8]நினைத்தருளும்
என்று விண்ணப்பம் பண்ணினன். எசேக்
4 கியா மிகவும் அழுதான். ஏசாயா பாதி †முற்
றத்தைவிட்டு அப்புறம்போகிறதற்குமுன்னே
**கர்த்தருடைய**வார்த்தை அவனுக்கு உண்டாகி,
5 அவர் சொன்னது: நீ திரும்பிப்போய், என்
ஜனத்தின் [9]அதிபதியாகிய எசேக்கியாவை
நோக்கி: உன் தகப்பனாகிய தாவீதின் தேவனா
யிருக்கிற **கர்த்தர்** சொல்லுகிறது என்னவென்
றால்: உன் விண்ணப்பத்தைக் கேட்டேன்,
[10]உன் கண்ணீரைக் கண்டேன்; [11]இதோ, நான்
உன்னைக் குணமாக்குவேன்; மூன்றாம் நாளி
லே நீ **கர்த்தருடைய** ஆலயத்திற்குப் போவாய்.
6 உன் நாட்களோடே பதினைந்து வருஷங்களைக்
கூட்டுவேன்; உன்னையும் இந்த நகரத்தையும்
அசீரியா ராஜாவின் கைக்குத் தப்புவித்து,
என் நிமித்தமும் என் தாசனாகிய தாவீதின்
நிமித்தமும் இந்த நகரத்துக்கு [12]ஆதரவாய்
இருப்பேன் என்று சொல் என்றார். பின்பு 7
ஏசாயா: [13]அத்திப்பழத்து அடையைக் கொண்
டுவாருங்கள் என்றான்; அதை அவர்கள் கொண்
டுவந்து, பிளவையின்மேல் பற்று போட்ட
போது அவன் பிழைத்தான். எசேக்கியா ஏசா 8
யாவை நோக்கி: **கர்த்தர்** என்னைக் குணமாக்
குவதற்கும், மூன்றாம் நாளிலே நான் **கர்த்தரு**
**டைய** ஆலயத்திற்குப் போவதற்கும் [14]அடை
யாளம் என்ன என்றான். அதற்கு ஏசாயா: 9
**கர்த்தர்** தாம் சொன்ன வார்த்தையின்படியே
செய்வாரென்பதற்கு, **கர்த்தரால்** உனக்கு
உண்டாகும் [15]அடையாளமாகச் சாயை பத்
துப்பாகை முன்னிட்டுப் போகவேண்டுமோ,
பத்துப்பாகை பின்னிட்டுத் திரும்பவேண்டு
மோ என்று கேட்டான். அதற்கு எசேக்கியா: 10
சாயை பத்துப்பாகை முன்னிட்டுப்போகிறது
லேசானகாரியம்; அப்படி வேண்டாம்; சாயை
பத்துப்பாகை பின்னிட்டுத் திரும்பவேண்டும்
என்றான். அப்பொழுது ஏசாயா தீர்க்கதரிசி 11
**கர்த்தரை** நோக்கிக் கூப்பிடுகையில், அவர்
ஆகாசுடைய சூரிய கடியாரத்தில் பாகைக்குப்
பாகை முன்போன சாயை பத்துப்பாகை
[16]பின்னிட்டுத் திரும்பும்படி செய்தார்.
அக்காலத்திலே பலாதானின் குமாரனாகிய 12
‡பெரோதாக் பலாதான் என்னும் பாபிலோ
னின் ராஜா எசேக்கியா வியாதிப்பட்டிருக்கிற
தைக் கேட்டு, அவனிடத்துக்கு நிருபங்களை
யும் வெகுமானத்தையும் அனுப்பினன். எசே 13
க்கியா அவர்களை அங்கிகரித்து, பின்பு அவர்
களுக்குத் தன் பொக்கிஷசாலை அனைத்தை
யும், வெள்ளியையும், பொன்னையும், கந்த
வர்க்கங்களையும், நல்ல பரிமளதைலத்தையும்,
தன் ஆயுதசாலை அனைத்தையும், தன் பொக்
கிஷ சாலைகளிலுள்ள எல்லாவற்றையும் காண்
பித்தான்; [17]தன் அரமனையிலும் தன் ராஜ்யத்
தில் எங்கும் எசேக்கியா அவர்களுக்குக் காண்
பியாதபொருள் ஒன்றும் இல்லை. அப்பொழுது 14
ஏசாயா தீர்க்கதரிசி எசேக்கியா ராஜாவினிடத்
தில் வந்து: அந்த மனுஷர் என்ன சொன்னார்
கள், எங்கேயிருந்து உம்மிடத்தில் வந்தார்கள்
என்று கேட்டான். அதற்கு எசேக்கியா: பாபி
லோன் என்னும் தூரதேசத்திலிருந்து வந்தார்
கள் என்றான். அப்பொழுது: அவன் உம் 15
முடைய வீட்டில் என்னத்தைப் பார்த்தார்கள்
என்று கேட்டான். அதற்கு எசேக்கியா: என்
வீட்டிலுள்ள எல்லாவற்றையும் பார்த்தார்கள்;
[18]என் பொக்கிஷங்களில் நான் அவர்களுக்குக்
காண்பியாத பொருள் ஒன்றும் இல்லை என்
றான். அப்பொழுது ஏசாயா எசேக்கியாவை 16
நோக்கி: **கர்த்தருடைய**வார்த்தையைக்கேளும்.
இதோ, நாட்கள் வரும்; அப்பொழுது உமது 17
வீட்டில் உள்ளதிலும் உமது பிதாக்கள் இந்
நாள்வரைக்கும் சேர்த்ததிலும் ஒன்றும் மீதி
யாக வைக்கப்படாமல் [19]எல்லாம் பாபிலோ
னுக்குக் கொண்டுபோகப்படும். நீர் பெறப் 18
போகிற உமது சந்தானமாகிய உமது குமாரர்

1 20. 6. 1 இரா. 11. 12, 13
2 2 நாளா. 32. 21. ஏசா. 37. 36
3 ஆதி. 10. 11
4 2 நாளா. 32. 21
* அர்மீனியா.
5 எஸ்றா. 4. 2
6 2 நாளா. 32. 24. ஏசா. 38. 1.
7 ஆதி. 17. 1. 1 இரா. 3. 6
8 நெகே. 13. 22
† பிராகாரம் அல்லது நகரம்.
9 1 சாமு. 9. 16; 10. 1
10 19. 20. சங். 65. 2
11 சங். 39. 12; 56. 8
12 19. 34
13 ஏசா. 38. 21
14 நியா. 6. 17; 37. 39. ஏசா. 7. 11, 14
15 ஏசா. 38. 7, 8
16 யோசு. 10. 12, 14
‡ மெரோதாக் பலாதான். ஏசா. 39. 1
17 2 நாளா. 32. 27, 31
18 13. ஏசா.
19 24. 13; 25. 13. எரே. 27. 21, 22

களிலும் சிலர் பாபிலோன் ராஜாவின் அரமனை
யிலே அரமனை வேலைக்காரராயிருப்பார்கள்
[1]என்று கர்த்தர் சொல்லுகிறார் என்றான்.
19 அப்பொழுது எசேக்கியா ஏசாயாவை நோக்கி:
நீர் சொன்ன கர்த்தருடைய வார்த்தை நல்லது
தான் என்று சொல்லி, [2]என் நாட்களிலாவது
சமாதானமும் உண்மையும் இருக்குமே என்
20 றான். எசேக்கியாவின் மற்ற வர்த்தமானங்
களும், அவனுடைய எல்லா வல்லமையும்,
அவன் ஒரு குளத்தையும் [3]சாலகத்தையும் உண்
டாக்கினதினாலே தண்ணீரை நகரத்திற்குள்
ளே வரப்பண்ணினதும், யூதாவுடைய ராஜாக்
களின் நாளாகமப் புஸ்தகத்தில் [4]அல்லவோ
21 எழுதியிருக்கிறது. எசேக்கியா தன் பிதாக்க
ளோடே நித்திரையடைந்தபின், அவன் குமா
ரனாகிய மனாசே அவன் ஸ்தானத்தில் ராஜா
வானான்.

21 மனாசே ராஜாவாகிறபோது பன்னிரண்டு
வயதாயிருந்து, [5]ஐம்பத்தைந்து வருஷம் எரு
சலேமில் அரசாண்டான்; அவன் தாயின்பேர்
2 எப்சிபாள். கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்கு
முன்பாகத் துரத்தின ஜாதிகளுடைய அரு
வருப்புகளின்படியே, [6]அவன் கர்த்தரின் பார்
3 வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து, தன்
தகப்பனாகிய எசேக்கியா [7]இடித்துப்போட்ட
மேடைகளைத் திரும்பவும் கட்டி, பாகாலுக்குப்
பலிபீடங்களை எடுப்பித்து, இஸ்ரவேலின்
ராஜாவாகிய [8]ஆகாப் செய்ததுபோல விக்கிர
கத்தோப்பை உண்டாக்கி, வானத்தின் சேனை
களையெல்லாம் [9]பணிந்துகொண்டு அவைக
4 ளைச் சேவித்தான். எருசலேமிலே என்
நாமத்தை விளங்கப்பண்ணுவேன் என்று கர்த்
தர் சொல்லிக் குறித்த கர்த்தருடைய ஆலயத்
5 திலே [10]அவன் பலிபீடங்களைக் கட்டி, கர்த்
தருடைய ஆலயத்தின் இரண்டு பிராகாரங்
களிலும் வானத்தின் சேனைகளுக்கெல்லாம்
6 பலிபீடங்களைக் கட்டி, தன் குமாரனைத் தீ
மிதிக்கப்பண்ணி, [11]நாள் பார்க்கிறவனும் நிமித்
தம் பார்க்கிறவனுமாயிருந்து, [12]அஞ்சனம் பார்
க்கிறவர்களையும் குறிசொல்லுகிறவர்களையும்
வைத்து, கர்த்தருக்குக் கோபமுண்டாக அவர்
பார்வைக்குப் பொல்லாப்பானதை மிகுதி
7 யாய்ச் செய்தான். இந்த ஆலயத்திலும், நான்
இஸ்ரவேலின் சகல கோத்திரங்களிலுமிருந்து
தெரிந்துகொண்ட எருசலேமிலும், என் நாமத்
தை என்றைக்கும் விளங்கப்பண்ணுவேன்
[13]என்று கர்த்தர் தாவீதோடும் அவன் குமார
னாகிய சாலொமோனோடும் சொல்லிக் குறித்த
ஆலயத்திலே அவன் பண்ணின தோப்புவிக்
8 கிரகத்தை வைத்தான். நான் அவர்களுக்குக்
கற்பித்த எல்லாவற்றின்படியேயும், என் தாச
னாகிய மோசே அவர்களுக்குக் கற்பித்த எல்லா
நியாயப்பிரமாணத்தின்படியேயும் செய்யசாக்
கிரதையாய் இருந்தார்களேயானால், நான் இனி
இஸ்ரவேலின் காலை அவர்கள் பிதாக்களுக்குக்
கொடுத்த தேசத்தைவிட்டு [14]அலையப்பண்ணு
9 வதில்லை என்று சொல்லியிருந்தார் ஆனா
லும் அவர்கள் கேளாதேபோனார்கள்; கர்த்தர்
இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாக அழித்த
ஜாதிகள் செய்த பொல்லாப்பைப்பார்க்கிலும்
அதிகமாய்ச் செய்ய மனாசே அவர்களை [15]ஏவி
விட்டான். ஆகையால் கர்த்தர் தீர்க்கதரிசிக 10
ளாகிய தம்முடைய ஊழியக்காரரைக்கொண்டு
உரைத்தது: யூதாவின் ராஜாவாகிய மனாசே 11
தனக்குமுன்னிருந்த எமோரியர் செய்த எல்லா
வற்றைப்பார்க்கிலும் கேடாக இந்த அருவருப்
புகளைச் செய்து, [16]தன் நரகலான விக்கிரகங்க
ளால் யூதாவையும் பாவஞ்செய்யப்பண்ணின
படியினால், இஸ்ரவேலின் தேவனாகிய கர்த் 12
தர் சொல்லுகிறது என்னவென்றால்: இதோ,
கேட்கப்போகிற யாவருடைய இரண்டு காதுக
ளிலும் அது தொனித்துக்கொண்டிருக்கும்படி
யான [17]பொல்லாப்பை நான் எருசலேமின் மே
லும் யூதாவின்மேலும் வரப்பண்ணி, எருசலே 13
மின்மேல் சமாரியாவின் மட்டநூலையும் ஆகாப்
வீட்டின் தூக்குநூலையும் பிடிப்பேன்; [18]ஒரு
வன் ஒரு தாலத்தைத் துடைத்துப் பின்பு
அதைக் கவிழ்த்துவைக்கிறதுபோல எருசலே
மைத் துடைத்துவிடுவேன். அவர்கள் தங் 14
கள் பிதாக்கள் எகிப்திலிருந்து புறப்பட்ட
நாள்முதற்கொண்டு இந்நாள்வரைக்கும் என்
பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து,
எனக்குக் கோபம் மூட்டிவந்தபடியினால்,
என் சுதந்தரத்தில் மீதியானதைக் கைவிட்டு,
அவர்கள் பகைஞரின் கையில் அவர்களை ஒப்
புக்கொடுப்பேன். தங்கள் பகைஞருக்கெல் 15
லாம் கொள்ளையும் சூறையுமாய்ப் போவார்கள்
என்றார். கர்த்தரின் பார்வைக்குப் பொல் 16
லாப்பானதைச் செய்யும்படியாக, மனாசே
யூதாவைப் பாவஞ்செய்யப்பண்ணின அந்தப்
பாவமும் தவிர, அவன் எருசலேமை நாலு
மூலைவரையும் [19]இரத்தப்பழிகளால் நிரப்பத்
தக்கதாய், குற்றமில்லாத இரத்தத்தையும் மிகு
தியாகச் சிந்தினான்.
மனாசேயின் மற்ற வர்த்தமானங்களும், 17
அவன் செய்தவை யாவும், அவன் செய்த
பாவமும் யூதாவுடைய ராஜாக்களின் நாளாக
மப் புஸ்தகத்தில் அல்லவோ [20]எழுதியிருக்கி
றது. மனாசே தன் பிதாக்களோடே நித்திரை 18
யடைந்தபின், அவன் ஊசாவின் தோட்டமா
கிய தன் அரமனைத் தோட்டத்தில் அடக்கம்
பண்ணப்பட்டான்; அவன் ஸ்தானத்திலே
அவன் குமாரனாகிய ஆமோன் ராஜாவானான்.
ஆமோன் ராஜாவானபோது இருபத்தி 19
ரண்டு வயதாயிருந்து, [21]இரண்டு வருஷம்
எருசலேமில் அரசாண்டான்; யோத்பா ஊரா
னாகிய ஆரூத்சின் குமாரத்தியான அவன்
தாயின்பேர் மெசுல்லேமேத். அவன் தன் 20
தகப்பனாகிய மனாசே செய்ததுபோல, கர்த்த
ரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச்
செய்து, தன் தகப்பன் நடந்த எல்லா வழி 21
யிலும் நடந்து, தன் தகப்பன் சேவித்த நரக
லான விக்கிரகங்களைச் சேவித்து அவைகளைப்
பணிந்துகொண்டு, கர்த்தரின் வழியிலே நட 22

[1] 2 நாளா. 33. 11. தானி. 1. 3
[2] 1 சாமு. 3. 18. யோபு 1. 21. சங். 39. 9
[3] நெகே. 3. 16
[4] 2 நாளா. 32. 30-33
[5] 2 நாளா. 33. 1. ழி
[6] 16. 3
[7] 18. 4
[8] 1 இரா. 16. 32, 33
[9] உபா. 4. 19
[10] 2 சாமு. 7. 13. 1 இரா. 8. 29
[11] லேவி. 18. 21
[12] லேவி. 19. 26, 31
[13] 2 சாமு. 7. 13 1 இரா. 9. 3
[14] 2 சாமு. 7. 10
[15] நீதி. 29. 12
[16] 23. 26, 27. எரே. 15. 4. 1 இரா. 21. 26
[17] 1 சாமு. 3. 11. எரே. 19. 3
[18] ஏசா. 34. 11. புல. 2. 8. ஆமோ. 7. 7, 8
[19] 24. 4
[20] 2 நாளா. 33. 11-20
[21] 2 நாளா. 33. 21-23

வாமல், தன் பிதாக்களின் தேவனாகிய **கர்த்த**
23 **ரை** [1]விட்டுவிட்டான். ஆமோனின் ஊழியக்
காரர் [2]அவனுக்கு விரோதமாய்க் கட்டுப்பாடு
பண்ணி, ராஜாவை அவன் அரமனையிலே
24 கொன்றுபோட்டார்கள். அதினால் தேசத்து
ஜனங்கள் ராஜாவாகிய ஆமோனுக்கு விரோ
தமாய்க் கட்டுப்பாடு பண்ணினவர்களையெல்
லாம் வெட்டிப்போட்டு, அவன் குமாரனாகிய
யோசியாவை அவன் ஸ்தானத்தில் ராஜாவாக்
25 கினார்கள். ஆமோன் செய்த மற்ற வர்த்த
மானங்கள் யூதாவுடைய ராஜாக்களின் காலா
கமப் புஸ்தகத்தில் அல்லவோ எழுதியிருக்
26 கிறது. அவன் ஊசாவின் தோட்டத்திலுள்ள
அவனுடைய கல்லறையில் அடக்கம் பண்
ணப்பட்டான்; அவன் ஸ்தானத்திலே அவன்
குமாரனாகிய யோசியா ராஜாவானான்.

**22** யோசியா ராஜாவாகிறபோது, எட்டு
வயதாயிருந்து, முப்பத்தொருவருஷம் எரு
சலேமில் அரசாண்டான்; [3]போஸ்காத் ஊரா
னாகிய அதாயாவின் குமாரத்தியான அவன்
2 தாயின்பேர் எதிதாள். அவன் **கர்த்தரின்**
பார்வைக்குச் செம்மையானதைச் செய்து,
தன் தகப்பனாகிய தாவீதின் வழியிலெல்லாம்
வலது இடதுபுறம் [4]விலகாமல் நடந்தான்.
3 ராஜாவாகிய யோசியாவின் பதினெட்டாம்
வருஷத்திலே, [5]ராஜா மெசுல்லாமின் குமார
னாகிய அத்சலியாவின் மகன் சாப்பான் என்
னும் சம்பிரதியைக் **கர்த்தரின்** ஆலயத்துக்கு
4 அனுப்பி: நீ பிரதான ஆசாரியனாகிய இல்க்
கியாவினிடத்தில் போய், **கர்த்தருடைய** ஆல
யத்துக்குக் கொண்டுவரப்பட்டதும் வாசல்
காக்கிறவர்கள் ஜனத்தின் கையிலே வாங்கப்
பட்டதுமான பணத்தை அவன் தொகை பார்
5 த்து, பிற்பாடு அவர்கள் அதைக் **கர்த்தரு**
**டைய** ஆலயத்தின் வேலையை விசாரிக்கிறவர்
கள் கையிலே கொடுத்து, அவர்கள் அதைக்
**கர்த்தரின்** ஆலயத்தைப் பழுதுபார்க்கிறதற்
6 காக அதிலிருக்கிற வேலைக்காரராகிய, தச்ச
ருக்கும், சிற்பாசாரிகளுக்கும், கொற்றருக்
கும், [6]ஆலயத்தைப் பழுதுபார்க்கும்படி
வேண்டிய மரங்களையும் வெட்டின கற்களை
யும் வாங்குகிறதற்கும் செலவழிக்கவேண்டும்.
7 ஆகிலும் அந்தப் பணத்தைத் தங்கள் கையில்
ஒப்புவித்துக்கொள்ளுகிறவர்களோ காரியத்
தை உண்மையாய் நடப்பிக்கிறபடியினால்,
அவர்களிடத்தில் அதின் கணக்கைக் கேட்க
வேண்டியதில்லை என்று சொல் என்றான்.
8 அப்பொழுது பிரதான ஆசாரியனாகிய இல்க்
கியா சம்பிரதியாகிய சாப்பானை நோக்கி:
நான் **கர்த்தரின்** ஆலயத்திலே நியாயப்பிர
மாண புஸ்தகத்தைக் கண்டுபிடித்தேன் என்று
சொல்லி, [7]அந்தப் புஸ்தகத்தைச் சாப்பானி
டத்தில் கொடுத்தான்; அவன் அதை வாசித்
9 தான். அப்பொழுது சம்பிரதியாகிய சாப்
பான் ராஜாவினிடத்தில் வந்து, ராஜாவுக்கு
மறு உத்தரவுசொல்லி, ஆலயத்திலே தொகை
யிட்டுக் கண்ட பணத்தை உமது அடியார்
சேர்த்துக் கட்டி, அதைக் **கர்த்தருடைய** ஆல
யத்தின் வேலையை விசாரிக்கிறவர்கள் கையி
லே கொடுத்தார்கள் என்று சொன்னான்.
சம்பிரதியாகிய சாப்பான் பின்னையும் ராஜா 10
வை நோக்கி: ஆசாரியனாகிய இல்க்கியா என்
னிடத்தில் ஒரு புஸ்தகத்தைக் கொடுத்தான்
என்று அறிவித்து, அதை ராஜாவுக்கு முன்
பாக வாசித்தான். ராஜா நியாயப்பிரமாண 11
புஸ்தகத்தின் வார்த்தைகளைக் கேட்டபோது,
தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு, ஆசா 12
ரியனாகிய இல்க்கியாவுக்கும், சாப்பானின்
குமாரனாகிய அகீக்காமுக்கும், மிகாயாவின்
குமாரனாகிய *அக்போருக்கும், சம்பிரதியா
கிய சாப்பானுக்கும், ராஜாவின் ஊழியக்கார
னாகிய அசாயாவுக்கும் ராஜா கட்டளையிட்
டது: கண்டெடுக்கப்பட்ட இந்தப் புஸ்தகத் 13
தின் வார்த்தைகளினிமித்தம் நீங்கள் போய்,
எனக்காகவும் ஜனத்திற்காகவும் யூதாவனைத்
திற்காகவும் கர்த்தரிடத்தில் விசாரியுங்கள்;
நமக்காக எழுதியிருக்கிற எல்லாவற்றின்படி
யேயும் செய்ய நம்முடைய பிதாக்கள் இந்தப்
புஸ்தகத்தின் வார்த்தைகளுக்குச் செவிகொ
டாதபடியினால், நம்மேல் பற்றியெரிந்த **கர்த்**
**தருடைய** உக்கிரம் [8]பெரியது என்றான். அப் 14
பொழுது ஆசாரியனாகிய இல்க்கியாவும், அகீ
க்காமும், அக்போரும், சாப்பானும், அசாயா
வும், அர்காசின் குமாரனாகிய திக்வாவின் மக
னான சல்லூம் என்னும் வஸ்திரசாலை விசா
ரிப்புக்காரன் மனைவியாகிய உல்தாள் என்
னும் தீர்க்கதரிசியானவளிடத்திற்குப் போய்
அவளோடே பேசினார்கள்; அவள் எருசலே
மின் இரண்டாம் வகுப்பிலே குடியிருந்தாள்.
அவள் அவர்களை நோக்கி: உங்களை என்னி 15
டத்தில் அனுப்பினவரிடத்தில் நீங்கள் போய்:
இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்** உரைக்கி
றது என்னவென்றால்: இதோ, யூதாவின் 16
ராஜா வாசித்த புஸ்தகத்தின் வார்த்தைகளிலெ
ல்லாம் காட்டியிருக்கிற பொல்லாப்பை [9]நான்
இந்த ஸ்தலத்தின்மேலும், அதின் குடிகளின்
மேலும் வரப்பண்ணுவேன். அவர்கள் என் 17
னைவிட்டு, தங்கள் கைகளின் கிரியைகள் எல்
லாவற்றிலும் எனக்குக் கோபமுண்டாக்க வே
றே தேவர்களுக்குத் தூபங் காட்டினபடியி
யினால், என் உக்கிரம் இந்த ஸ்தலத்தின்மேல்
பற்றியெரியும்; அது அவிந்துபோவது இல்லை
யென்று **கர்த்தர்** சொல்லுகிறார் என்று சொல்
லுங்கள். **கர்த்தரிடத்தில்** விசாரிக்கிறதற்கு உங் 18
களை அனுப்பின யூதாவின் ராஜாவினிடத்தில்
நீங்கள் போய்: [10]நீர் கேட்ட வார்த்தைகளைக்
குறித்து இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்**
சொல்லுகிறது என்னவென்றால்: நான் இந்த 19
ஸ்தலத்திற்கும் அதின் குடிகளுக்கும் விரோத
மாக, அவர்கள் பாழும் சாபமுமாவார்கள்
என்று [11]சொன்னதை நீ கேட்டபோது, உன்
இருதயம் இளகி, [12]நீ **கர்த்தருக்கு** முன்பாக
உன்னைத் தாழ்த்தி, உன் வஸ்திரங்களைக் கிழித்
துக்கொண்டு, எனக்கு முன்பாக அழுதபடியி

[1] 1 இரா. 11. 33
[2] 2 நாளா. 33. 24, 25
[3] 2 நாளா. 34. 1
[4] உபா. 5. 32
[5] 2 நாளா. 34. 8. ழ
[6] 12. 4, 11–15
[7] உபா. 31. 24. ழ. 2 நாளா. 34. 14. ழ
* அப்தோன். 2 நாளா. 34. 20
[8] உபா. 29. 27
[9] உபா. 29. 25–27. தானி. 9, 11–14
[10] 2 நாளா. 34. 26. ழ
[11] லேவி. 26. 31, 32. எரே. 26. 6.
[12] சங். 51. 17, ஏசா. 57. 15. 1 இரா. 21. 29

ணல் நானும் உன் விண்ணப்பத்தைக் கேட்
20 டேன். ஆகையால், இதோ, நான் உன்னை
உன் பிதாக்களண்டையிலே சேர்த்துக்கொள்
ளுவேன்; நீ சமாதானத்தோடே உன் கல்ல
றையில் சேர்வாய்: [1]நான் இந்த ஸ்தலத்தின்
மேல் வரப்பண்ணும் சகல பொல்லாப்பையும்
உன் கண்கள் காண்பதில்லை என்று **கர்த்தர்**
சொல்லுகிறார் என்பதைச் சொல்லுங்கள் என்
றாள்; இந்த மறு உத்தரவை அவர்கள் போய்
ராஜாவுக்குச் சொன்னார்கள்.

**23** அப்பொழுது ராஜா யூதாவிலும் எருசலே
மிலும் இருந்த மூப்பரையெல்லாம் அழைப்
பித்தான்; [2]அவர்கள் அவனிடத்தில் கூடின
2 போது, ராஜாவும், அவனோடே யூதாவின்
மனுஷர் யாவரும் எருசலேமின் குடிகள்
அனைவரும், ஆசாரியர்களும், தீர்க்கதரிசி
களும், சிறியோர்துவக்கிப் பெரியோர்மட்டு
முள்ள சகலரும் **கர்த்தரின்** ஆலயத்துக்குப்
போனார்கள்; **கர்த்தருடைய** ஆலயத்திலே
[3]கண்டெடுக்கப்பட்ட உடன்படிக்கை புஸ்த
கத்தின் வார்த்தைகளையெல்லாம் அவர்கள்
3 காதுகள் கேட்க வாசித்தான். அப்பொழுது
ராஜா, [4]தூண் அருகே நின்று, **கர்த்தரைப்**
பின்பற்றி நடக்கவும், அவருடைய கற்பனை
களையும் அவருடைய சாட்சிகளையும் அவரு
டைய கட்டளைகளையும் முழு இருதயத்தோடும்
முழு ஆத்துமாவோடும் கைக்கொள்ளவும்,
அந்தப் புஸ்தகத்தில் எழுதியிருக்கிற அந்த
உடன்படிக்கையின் வார்த்தைகளை நிறைவே
ற்றவும் **கர்த்தருடைய** சந்நிதியில் உடன்படிக்
கைபண்ணினான்; ஜனங்கள் எல்லாரும் உடன்
4 படிக்கைக்கு உட்பட்டார்கள். பின்பு ராஜா:
பாகாலுக்கும் விக்கிரகத்தோப்புக்கும் [5]வானத்
தின் சகல சேனைகளுக்கும் பண்ணப்பட்
டிருந்த சகல பணிமுட்டுகளையும் **கர்த்தரு**
**டைய** ஆலயத்திலிருந்து புறம்பாக்க, பிரதான
ஆசாரியனாகிய இல்க்கியாவுக்கும் இரண்டாம்
வகுப்பிலுள்ள ஆசாரியர்களுக்கும் வாசல்காக்
கிறவர்களுக்கும் கட்டளையிட்டு, அவைகளை
எருசலேமுக்குப் புறம்பாய்க் கீதரோன் வெளி
களில் சுட்டெரித்து, அவைகளின் சாம்பலைப்
பெத்தேலுக்குக் கொண்டுபோகப் பண்ணி
5 னான். யூதாவின் பட்டணங்களிலும் எருச
லேமைச் சுற்றிலும் மேடைகளின்மேல் தூபங்
காட்ட, யூதாவின் ராஜாக்கள் வைத்த பூசா
சாரிகளையும், பாகாலுக்கும் சூரியனுக்கும் சந்
திரனுக்கும் கிரகங்களுக்கும் *வானத்தின்
சகல சேனைகளுக்கும் தூபங் காட்டினவர்
6 களையும் அகற்றிவிட்டான். தோப்பு விக்கிர
கத்தை [6]**கர்த்தரின்** ஆலயத்திலிருந்து எருச
லேமுக்குப் புறம்பே கீதரோன் ஆற்றிற்குக்
கொண்டுபோய், அதைக் கீதரோன் ஆற்று
ஓரத்திலே சுட்டெரித்து, அதைத் தூளாக்கி,
அந்தத் தூளை ஜனபுத்திரருடைய பிரேதக்
7 குழிகளின்மேல் [7]போடுவித்தான். **கர்த்தரின்**
ஆலயத்திற்கு அருகே ஸ்திரீகள் தோப்பு விக்
கிரகத்துக்குக் கூடாரங்களை நெய்த இடத்தி
லுள்ள [8]இலச்சையான புணர்ச்சிக்காரரின்
வீடுகளை இடித்துப்போட்டான். அவன் யூதா 8
வின் பட்டணங்களிலுள்ள எல்லா ஆசாரிய
ரையும் வரச்சொல்லி, கேபாமுதல் [9]பெயெர்
செபாமட்டும் ஆசாரியர்கள் தூபங்காட்டியிரு
ந்த மேடைகளைத் தீட்டாக்கி, ஒலிமுகவாசல்
களின் மேடைகளையும், பட்டணத்துவாசலுக்
குப் போகும் வழிக்கு இடதுபுறமாயிருக்கிற
பட்டணத்தலைவனாகிய யோசுவாவின் வாசற்
படியில் இருந்த மேடையையும் இடித்துப்
போட்டான். மேடைகளின் ஆசாரியர்கள் 9
எருசலேமிலிருக்கிற **கர்த்தருடைய** பலிபீடத்
தின்மேல் பலியிடாமல் [10]தங்கள் சகோதரருக்
குள்ளே புளிப்பில்லாத அப்பங்களைப் புசிக்
கிறதற்குமாத்திரம் உத்தாரம்பெற்றார்கள்.
ஒருவனும் மோளேகுக்கென்று தன் குமாரனை 10
யாகிலும் தன் குமாரத்தியையாகிலும் தீக்கடக்
கப்பண்ணாதபடிக்கு, [11]இன்னோம் புத்திரரின்
பள்ளத்தாக்கிலிருக்கிற தோப்பேத் என்னும்
ஸ்தலத்தையும் அவன் தீட்டாக்கி, **கர்த்தரின்** 11
ஆலயத்திற்குள் போகிற இடந்தொடங்கி, பட்
டணத்துக்குப் புறம்பே இருக்கிற நாத்தான்
மெலெக் என்னும் பிரதானியின் அறைவீடு
மட்டும் யூதாவின் ராஜாக்கள் சூரியனுக்கென்று
வைத்திருந்த குதிரைகளை அகற்றி, சூரியனின்
இரதங்களை அக்கினியில் சுட்டெரித்தான்.
யூதாவின் ராஜாக்கள் உண்டாக்கினதும், ஆகா 12
சுடைய மேல்வீட்டில் இருந்ததுமான பலி
பீடங்களையும், [12]மனாசே **கர்த்தருடைய** ஆல
யத்தின் இரண்டு பிராகாரங்களிலும் உண்டாக்
கின பலிபீடங்களையும் ராஜா இடித்து, அவை
களின் தூளை அங்கேயிருந்து எடுத்துக் கீத
ரோன் ஆற்றில் கொட்டினான். எருசலே 13
முக்கு எதிரே இருக்கிற †நாசமலையின் வலது
புறத்தில் இஸ்ரவேலின் ராஜாவாகிய சாலொ
மோன் [13]சீதோனியரின் அருவருப்பாகிய அஸ்த
ரோத்திற்கும், மோவாபியரின் அருவருப்பா
கிய காமோசுக்கும், அம்மோன் புத்திரரின்
அருவருப்பாகிய மில்கோமுக்கும் கட்டியிருந்த
மேடைகளையும் ராஜா தீட்டாக்கி, சிலைகளை 14
உடைத்து, [14]விக்கிரகத்தோப்புகளை நிர்மூல
மாக்கி, அவைகளின் ஸ்தலத்தை மனுஷரின்
எலும்புகளால் நிரப்பினான். இஸ்ரவேலைப் 15
பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின் குமார
னாகிய யெரொபெயாம் [15]பெத்தேலில் உண்
டாக்கியிருந்த பலிபீடமும் மேடையும் ஆகிய
அவ்விரண்டையும் அவன் இடித்து, அந்த
மேடையைச் சுட்டெரித்துத் தூளாக்கி, விக்
கிரகத்தோப்பையும் சுட்டெரித்தான். யோசி 16
யா திரும்பிப் பார்க்கிறபோது அங்கே அந்த
மலையிலிருக்கிற கல்லறைகளைக் கண்டு, ஆட்
களை அனுப்பி, அந்தக் கல்லறைகளிலுள்ள
எலும்புகளை எடுத்துவரச்செய்து, இப்படி நடக்
கும் என்று தேவனுடைய மனுஷன் கூறின
**கர்த்தருடைய** வார்த்தையின்படியே, [16]அவை
களை அந்தப் பலிபீடத்தின்மேல் சுட்டெரித்து
அதைத் தீட்டாக்கினான். அப்பொழுது அவன்: 17

[1] சங். 37. 37. ஏசா. 57. 1, 2.
[2] 2 நாளா. 34. 29. ழி
[3] 22. 8
[4] 11. 14, 17
[5] 21. 3, 7
* இராசி நட்சத்திரங்கள்.
[6] 21. 7
[7] 2 நாளா. 34. 4
[8] 1 இரா. 14. 24; 15. 12. எசே. 16. 16
[9] 1 இரா. 15. 22
[10] 1 சாமு. 2. 36. எசே. 44. 10–14. லேவி. 18. 21
[11] யோசு. 15. 8. எசே. 23. 37, 39. எரே. 7. 31
[12] 21. 5. எரே. 19. 13. செப். 1. 5
† ஒலிவமலை.
[13] 1 இரா. 11. 7
[14] யாத். 23. 24. உபா. 7. 5, 25
[15] 1 இரா. 12. 28, 33
[16] 1 இரா. 13. 2

நான் காண்கிற அந்தக் குறிப்படையாளம்
என்ன என்று கேட்டதற்கு, அந்தப் பட்ட
ணத்து மனுஷர்: அது யூதாவிலிருந்துவந்து,
நீர் செய்த இந்தக் கிரியைகளைப் பெத்தேலின்
பலிபீடத்திற்கு விரோதமாய்க் கூறி, அறிவித்த
தேவனுடைய மனுஷனின் கல்லறை [1]என்
18 ருர்கள். அதற்கு அவன்: இருக்கட்டும், ஒரு
வனும் அவன் எலும்புகளைத் தொடவேண்
டாம் என்ருன்; அப்படியே அவன் எலும்பு
களைச் சமாரியாவிலிருந்துவந்த தீர்க்கதரிசியின்
19 எலும்புகளோடு விட்டுவிட்டார்கள். **கர்த்த
ருக்குக்**கோபமுண்டாக்க இஸ்ரவேலின் ராஜா
க்கள் சமாரியாவின் [2]பட்டணங்களில் உண்
டாக்கியிருந்த மேடைகளின் கோவில்களை
யெல்லாம் யோசியா தகர்த்து, பெத்தேலிலே
தான் செய்த செய்கைகளின்படியே அவை
20 களுக்குச்செய்து, அவ்விடங்களில் இருக்கிற
மேடைகளின் ஆசாரியர்களையெல்லாம் பலி
பீடங்களின்மேல் கொன்றுபோட்டு, [3]அவை
களின்மேல் மனுஷரின் எலும்புகளைச் சுட்
டெரித்து, எருசலேமுக்குத் திரும்பினுன்.
21 பின்பு ராஜா: இந்த உடன்படிக்கையின்
புஸ்தகத்தில் எழுதியிருக்கிறபடியே [4]உங்கள்
தேவனுகிய **கர்த்தருக்குப்** பஸ்காவை ஆசரி
யுங்கள் என்று சகல ஜனங்களுக்கும் கட்டளை
22 யிட்டான். இஸ்ரவேலை நியாயம் விசாரித்த
நியாயாதிபதிகளின் நாட்கள்தொடங்கி, இஸ்ர
வேலின் ராஜாக்கள் யூதாவின் ராஜாக்கள்
ஆகிய அவர்களுடைய சகல நாட்களிலும்
இந்தப் பஸ்காவைப்போல் [5]பஸ்கா ஆசரிக்கப்
23 படவில்லை. ராஜாவாகிய யோசியாவின் பதி
னெட்டாம் வருஷத்திலே **கர்த்தருக்கு** இந்தப்
பஸ்கா எருசலேமிலே ஆசரிக்கப்பட்டது.
24 ஆசாரியனுகிய இல்க்கியா **கர்த்தருடைய** ஆல
யத்திலே கண்டெடுத்த புஸ்தகத்தில் எழுதி
யிருக்கிற நியாயப்பிரமாணத்தின் வார்த்தை
களை நிறைவேற்றும்படிக்கு, [6]யோசியா அஞ்ச
னக்காரரையும், குறிசொல்லுகிறவர்களையும்,
சுரூபங்களையும், நரகலான விக்கிரகங்களையும்,
யூதாதேசத்திலும் எருசலேமிலும் காணப்
பட்ட எல்லா அருவருப்புகளையும் நிர்மூல
25 மாக்கினுன். **கர்த்தரிடத்துக்குத்** தன் முழு
இருதயத்தோடும் தன் முழு ஆத்துமாவோடும்
தன் முழு பலத்தோடும் மோசேயின் நியாயப்
பிரமாணத்திற்கு ஏற்றபடியெல்லாம் செய்ய
மனதைச் சாய்த்தான்; [7]அவனைப்போலொத்த
ராஜா அவனுக்குமுன் இருந்ததுமில்லை, அவ
26 னுக்குப்பின் எழும்பினதுமில்லை. ஆகிலும்,
மனுசே **கர்த்தருக்குக்** கோபமுண்டாக்கின
சகல காரியங்களினிமித்தமும் [8]அவர் யூதாவின்
மேல் கொண்ட தம்முடைய மகா கோபத்தின்
27 உக்கிரத்தை விட்டுத் திரும்பாமல்: நான்
இஸ்ரவேலைத் தள்ளிவிட்டதுபோல [9]யூதா
வையும் என் முகத்தைவிட்டுத் தள்ளி, நான்
தெரிந்துகொண்ட இந்த எருசலேம் நகரத்தை
யும், [10]என் நாமம் விளங்கும் என்று நான்
சொன்ன ஆலயத்தையும் வெறுத்துவிடுவேன்
என்று **கர்த்தர்** சொன்னுர். யோசியாவின் 28
மற்ற வர்த்தமானங்களும், அவன் செய்தவை
யாவும், யூதாவுடைய ராஜாக்களின் நாளாகமப்
புஸ்தகத்தில் அல்லவோ எழுதியிருக்கிறது.
அவன் நாட்களில் எகிப்தின் ராஜாவாகிய 29
பார்வோன்நேகோ அசீரியா ராஜாவுக்கு
விரோதமாய் ஐபிராத்துநதிக்குப் போகிற
போது ராஜாவாகிய யோசியா அவனுக்கு
எதிராகப் புறப்பட்டான்; [11]பார்வோன்நேகோ
அவனை மெகிதோவிலே கண்டபோது, அவ
னைக் கொன்றுபோட்டான். மரணமடைந்த 30
அவனை அவனுடைய ஊழியக்காரர் ரதத்தின்
மேல் ஏற்றி, மெகிதோவிலிருந்து எருசலே
முக்குக் கொண்டுவந்து, அவனை அவன் கல்
லறையில் அடக்கம் பண்ணினுர்கள்; [12]அப்
பொழுது தேசத்தின் ஜனங்கள் யோசியாவின்
குமாரனுகிய யோவாகாசை அழைத்து,
அவனை அபிஷேகம்பண்ணி, அவன் தகப்
பன் ஸ்தானத்தில் அவனை ராஜாவாக்கினுர்கள்.
யோவாகாஸ்*ராஜாவாகிறபோது இருபத்து 31
மூன்று வயதாயிருந்து, மூன்றுமாதம் எருச
லேமில் அரசாண்டான்; லிப்னு ஊரானுகிய
எரேமியாவின் குமாரத்தியான அவன் [13]தா
யின்பேர் அமுத்தாள். அவன் தன் பிதாக்கள் 32
செய்தபடியெல்லாம் **கர்த்தரின்** பார்வைக்குப்
பொல்லாப்பானதைச் செய்தான். அவன் 33
எருசலேமில் அரசாளாதபடிக்கு, பார்வோன்
நேகோ அவனை ஆமாத்தேசமான ரிப்லாவிலே
[14]பிடித்துக் கட்டுவித்து, தேசத்தின்மேல் நூறு
தாலந்து வெள்ளியையும் ஒரு தாலந்து பொன்
னையும் [15]அபராதமாகச் சுமத்தி, யோசியா 34
வின் குமாரனுகிய எலியாக்கீமை அவன் தகப்
பனுகியயோசியாவின் ஸ்தானத்தில் ராஜாவாக
வைத்து, அவன்பேரை யோயாக்கீம் என்று
மாற்றி, [16]யோவாகாசைக் கொண்டுபோய்விட்
டான்; [17]இவன் எகிப்திலே போய் அங்கே
மரணமடைந்தான். அந்த வெள்ளியையும் 35
பொன்னையும் யோயாக்கீம் பார்வோனுக்குக்
கொடுத்தான்; ஆனுலும் பார்வோனுடைய கட்
டளையின்படி அந்தப் பணத்தைக் கொடுக்கும்
படி அவன் தேசத்தை மதிப்பிட்டு, அவரவர்
மதிப்பின்படி அந்த வெள்ளியையும் பொன்
னையும் பார்வோன் நேகோவுக்குக் கொடுக்கத்
தக்கதாக தேசத்து ஜனங்களின் கையிலே
தண்டினுன்.
யோயாக்கீம் ராஜாவாகிறபோது இருபத் 36
தைந்து வயதாயிருந்து, [18]பதினொரு வருஷம்
எருசலேமில் அரசாண்டான்; ரூமா ஊரா
னுகிய பெதாயாமின் குமாரத்தியாகிய அவன்
தாயின் பேர் செபுதாள். அவன் தன் பிதாக் 37
கள் செய்தபடியெல்லாம் **கர்த்தரின்** பார்வைக்
குப் பொல்லாப்பானதைச் செய்தான்.

அவன் நாட்களிலே பாபிலோன் ராஜா **24**
வாகிய நேபுகாத்நேச்சார் வந்தான்; [19]யோ
யாக்கீம் மூன்றுவருஷம் அவனைச் சேவித்து,
பின்பு அவனுக்கு விரோதமாகக் கலகம்பண்
ணினுன். அப்பொழுது **கர்த்தர்** கல்தேய 2

1 1 இரா. 13. 1, 30, 31
2 2 நாளா. 34. 6, 7
3 11. 18. யாத். 22. 20. 1 இரா. 18. 40. 2 நாளா. 34. 5
4 யாத். 12. 3. ழி. எண். 9. 2. உபா. 16. 2. ழ
5 2 நாளா. 35. 18, 19
6 21. 6. லேவி. 19. 31; 20. 27. ஏசா. 19. 3 வெளி. 22. 15
7 18. 5
8 21. 11, 12; 24. 3, 4. எரே. 15. 4
9 17. 18, 20
10 1 இரா. 8. 29
11 14. 8. 2 நாளா. 35. 20. சகரி. 12. 11
12 2 நாளா. 35. 24; 36. 1
* சல்லூம் 1 நாளா. 3. 15. எரே. 22. 11
13 24. 18
14 25. 6. எரே. 52. 27
15 2 நாளா. 36. 3
16 24. 17. ஆதி. 41. 45. தானி. 1. 7
17 எரே. 22. 11, 12. எசே. 19. 3, 4
18 2 நாளா. 36. 5
19 2 நாளா. 36. 6. எரே. 25. 1, 9. தானி. 1. 1

ரின் தண்டுகளையும், சீரியரின் தண்டுகளை
யும், மோவாபியரின் தண்டுகளையும், அம்
மோன் புத்திரரின் தண்டுகளையும் அவன்மேல்
வரவிட்டார்; [1]தீர்க்கதரிசிகளாகிய தம்முடைய
ஊழியக்காரரைக்கொண்டு **கர்த்தர்** சொன்ன
வார்த்தையின்படியே அவர் அவைகளை யூதா
3 வை அழிக்கும்படிக்கு வரவிட்டார். மனாசே
தன் எல்லாச் செய்கைகளினாலும் செய்த பா
வங்களினிமித்தம் [2]யூதாவைத் தமது சமுகத்
தை விட்டு அகற்றும்படி **கர்த்தருடைய** கட்
4 டளையினால் அப்படி நடந்தது. அவன் சிந்
தின குற்றமற்ற இரத்தத்திற்காகவும் எருசலே
மைக் குற்றமற்ற இரத்தத்தால் நிரப்பினதற்
காகவும் [3]**கர்த்தர்** மன்னிக்கச் சித்தமில்லாதி
5 ருந்தார். யோயாக்கீமின் மற்ற வர்த்தமானங்
களும், அவன் செய்தவை யாவும், யூதாவுடைய
ராஜாக்களின் நாளாகமப் புஸ்தகத்தில் அல்ல
6 வோ எழுதியிருக்கிறது. யோயாக்கீம் தன்
பிதாக்களோடே நித்திரையடைந்தபின், [4]அ
வன் குமாரனாகிய யோயாக்கீன் அவன் ஸ்தா
7 னத்தில் ராஜாவானான். எகிப்தின் ராஜா அப்
புறம் தன் தேசத்திலிருந்து புறப்பட்டு வர
வில்லை; [5]எகிப்தின் நதிதுவக்கி ஐபிராத்து நதி
மட்டும் எகிப்தின் ராஜாவுக்கு இருந்த யாவை
யும் பாபிலோன் ராஜா பிடித்திருந்தான்.
8 யோயாக்கீன் *ராஜாவாகிறபோது பதினெ
ட்டுவயதாயிருந்து, [6]எருசலேமிலே மூன்று
மாதம் அரசாண்டான்; எருசலேம் ஊராளு
கிய எல்நாத்தானின் குமாரத்தியான அவன்
9 தாயின்பேர் நெகுஸ்தாள். அவன் தன் தகப்
பன் செய்தபடியெல்லாம் **கர்த்தரின்** பார்
வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான்.
10 அக்காலத்திலே பாபிலோன் ராஜாவாகியநேபு
காத்நேச்சாரின் சேவகர் எருசலேமுக்கு வந்
தார்கள்; [7]நகரம் முற்றிக்கை போடப்பட்
11 டது. பாபிலோன் ராஜாவாகிய நேபுகாத்
நேச்சாருடைய சேவகர் நகரத்தை முற்றிக்கை
போடுகையில் அவன்தானும் அதற்கு விரோத
12 மாய் வந்தான். அப்பொழுது யூதாவின் ராஜா
வாகிய யோயாக்கீனும், [8]அவன் தாயும்,
அவன் ஊழியக்காரரும், அவன் பிரபுக்களும்,
பிரதானிகளும் பாபிலோன் ராஜாவினிடத்
திற்குப் புறப்பட்டுப் போனார்கள்; அவனைப்
பாபிலோன் ராஜா தன் ஆளுகையின் எட்
டாம் வருஷத்திலே பிடித்துக்கொண்டான்.
13 அங்கேயிருந்து **கர்த்தருடைய** ஆலயத்தின்
சகல பொக்கிஷங்களையும், ராஜாவுடைய அர
மனையின் பொக்கிஷங்களையும் எடுத்துக்கொ
ண்டு, இஸ்ரவேலின் ராஜாவாகிய சாலொ
மோன் **கர்த்தருடைய** ஆலயத்தில் உண்டாக்
கியிருந்த பொன் பணிமுட்டுகளை யெல்லாம்,
[9]**கர்த்தர்** சொல்லியிருந்தபடியே, உடைத்
14 துப்போட்டு, எருசலேமியர் அனைவரும்
சகல பிரபுக்களும் சகல பராக்கிரமசாலிகளு
மாகிய பதினாயிரம்பேரையும், சகல தச்சரை
யும் கொல்லரையும் சிறைபிடித்துக் கொண்டு
போனான்; [10]தேசத்தில் ஏழைஜனங்களே அல்
லாமல் வேறொருவரும் மீதியாயிருக்கவில்லை.
அவன் யோயாக்கீனையும், ராஜாவின் தாயை 15
யும், ராஜாவின் ஸ்திரீகளையும், அவன் பிரதா
னிகளையும், தேசத்தின் பராக்கிரமசாலிகளை
யும் எருசலேமிலிருந்து பாபிலோனுக்குச்
[11]சிறைபிடித்துக்கொண்டு போனான். இப்படி 16
யே பாபிலோன் ராஜா பராக்கிரமசாலிகளான
மனுஷராகிய ஏழாயிரம்பேரையும், தச்சரும்
கொல்லருமாகிய ஆயிரம்பேரையும், [12]யுத்
தம்பண்ணத்தக்க பலசாலிகளையும் பாபிலோ
னுக்குச் சிறைபிடித்துக்கொண்டு போனான்.
அவனுக்குப் பதிலாகப் பாபிலோன் ராஜா 17
அவன் சிறிய தகப்பனாகிய மத்தனியாவை
ராஜாவாக வைத்து [13]அவனுக்குச் சிதேக்கியா
என்று மறுபேரிட்டான்.
சிதேக்கியா ராஜாவாகிறபோது இருபத் 18
தொரு வயதாயிருந்து, [14]பதினொரு வருஷம்
எருசலேமிலே அரசாண்டான்; லிப்னா ஊரா
னாகிய எரேமியாவின் குமாரத்தியான அவன்
தாயின்பேர் அமுத்தாள். யோயாக்கீம் செய்த 19
படியெல்லாம் அவனும் **கர்த்தருடைய** பார்
வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான்.
எருசலேமையும் யூதாவையும் **கர்த்தர்** தம்மு 20
டைய சமுகத்தைவிட்டு அகற்றித் தீருமளவும்,
அவைகளின்மேலுள்ள அவருடைய கோபத்
தினால் இப்படி நடந்ததும் அல்லாமல், [15]சிதேக்
கியா பாபிலோனிலே ராஜாவுக்கு விரோத
மாகக் கலகமும் பண்ணினான்.

அவன் ராஜ்யபாரம் பண்ணும் ஒன்ப **25**
தாம் வருஷம் பத்தாம்மாதம் பத்தாந்தேதி
யிலே பாபிலோன் ராஜாவாகிய நேபுகாத்
நேச்சாரும் அவனுடைய எல்லா இராணுவ
மும் எருசலேமுக்கு விரோதமாய் வந்து,
[16]அதற்கு எதிரே பாளயமிறங்கி, சுற்றிலும்
அதற்கு எதிராகக் கொத்தளங்களைக் கட்டி
னார்கள். அப்படியே சிதேக்கியா ராஜாவின் 2
பதினோராம் வருஷமட்டும் நகரம் முற்றிக்கை
போடப்பட்டிருந்தது. நாலாம் மாதம் ஒன் 3
பதாந்தேதியிலே பஞ்சம் நகரத்திலே அதிக
ரித்து, [17]தேசத்தின் ஜனத்திற்கு ஆகாரம் இல்
லாமற்போயிற்று; நகரத்தின் மதிலில் திறப்பு
கண்டது. அப்பொழுது கல்தேயர் நகரத் 4
தைச் சூழ்ந்திருக்கையில், யுத்தமனுஷர் எல்
லாரும் இராத்திரிகாலத்தில் ராஜாவுடைய
தோட்டத்தின் வழியாய் இரண்டு மதில்க
ளுக்கு நடுவான வாசலால் தப்பி, [18]அவர்களும்
ராஜாவுமாய் சமனான பூமியை நோக்கி ஓடிப்
போனார்கள். கல்தேயரின் இராணுவத்தார் 5
ராஜாவைப் பின்தொடர்ந்து எரிகோவின் சம
னான பூமியில் அவனைப் பிடித்தார்கள்; அப்
பொழுது அவனுடைய இராணுவமெல்லாம்
அவனை விட்டுச் சிதறிப்போயிற்று. அவர்கள் 6
ராஜாவைப் பிடித்து, [19]அவனை ரிப்லாவிலிருக்
கிற பாபிலோன் ராஜாவினிடத்துக்குக் கொ
ண்டுபோய், அவனை நியாயந்தீர்த்து, சிதேக் 7
கியாவின் குமாரரை அவன் கண்களுக்கு முன்
பாக வெட்டி, சிதேக்கியாவின் கண்களைக்

1 எரே. 25. 9. எசே. 19. 8
2 21. 2, 11: 23. 26
3 21. 16
4 எரே. 22. 18, 19
5 எரே. 37. 5, 7: 46. 2
* எகொனியா. 1 நாளா. 3. 16. கோனியா. எரே. 22. 24, 28
6 2 நாளா. 36. 9
7 தானி. 1. 1
8 எரே. 29. 1, 2: 52. 28
9 20. 17. எசா. 39. 6. எரே. 20. 5. தானி. 5. 2, 3
10 எரே. 24. 1: 40. 7
11 2 நாளா. 36. 10. எஸ்தர் 2. 6. எரே. 22. 24. ழ
12 எரே. 52. 28
13 எரே. 37. 1
14 2 நாளா. 36. 5. ழ. எரே. 37. 1. 52. 1
15 2 நாளா. 36. 13. எசே. 17. 15
16 2 நாளா. 36. 17. எரே. 34. 2: 39. 1: 52. 4, 5. எசே. 24. 1
17 எரே. 39. 2: 52. 6, 7
18 எசே. 12. 12
19 23. 33. எரே. 52. 9

குருடாக்கி, [1]அவனுக்கு இரண்டு வெண்கல
விலங்குகளைப் போட்டு, அவனைப் பாபிலோ
னுக்குக் கொண்டுபோனார்கள்.
8 ஐந்தாம் மாதம் ஏழாந்தேதியிலே நேபுகாத்
நேச்சார் என்னும் பாபிலோன் ராஜாவின் பத்
தொன்பதாம் வருஷத்திலே, [2]பாபிலோன்
ராஜாவின் ஊழியக்காரனாகிய நெபுசராதான்
என்னும் காவல்சேனாபதி எருசலேமுக்கு
9 வந்து, கர்த்தருடைய ஆலயத்தையும் [3]ராஜா
வின் அரமனையையும், எருசலேமின் சகல
கட்டடங்களையும், பெரிய வீடுகள் எல்லா
வற்றையும் அக்கினியால் சுட்டெரித்துவிட்
10 டான். காவல் சேனாபதியோடிருந்த கல்தே
யரின் இராணுவத்தாரெல்லாரும் எருசலே
மைச் சுற்றிலும் இருந்த [4]அலங்கங்களை இடித்
11 துப்போட்டார்கள். நகரத்தில் மீதியான
மற்ற ஜனத்தையும்; பாபிலோன் ராஜாவின்
வசமாக ஓடி வந்துவிட்டவர்களையும், மற்ற
ஜனக்கூட்டத்தையும், [5]காவல் சேனாபதியா
கிய நெபுசராதான் சிறைகளாகக் கொண்டு
12 போனான். தேசத்தில் ஏழையான சிலரைத்
[6]திராட்சத்தோட்டக்காரராகவும் பயிரிடுங்
13 குடிகளாகவும் விட்டிருந்தான். கர்த்தருடைய
ஆலயத்திலிருந்த வெண்கலத் தூண்களையும்,
அதிலிருந்த ஆதாரங்களையும், கர்த்தருடைய
ஆலயத்திலிருந்த வெண்கலக் கடல்தொட்
டியையும், [7]கல்தேயர் உடைத்துப்போட்டு,
அவைகளின் வெண்கலத்தைப் பாபிலோ
னுக்கு எடுத்துக்கொண்டு போனார்கள்.
14 செப்புச்சட்டிகளையும், சாம்பல் பாத்திரங்களை
யும், கத்திகளையும், தூபகலசங்களையும், [8]ஆரா
தனைக்கடுத்த சகல வெண்கலப் பணிமுட்டு
15 களையும் எடுத்துக்கொண்டார்கள். சுத்தப்
பொன்னும் சுத்த வெள்ளியுமான தூபகலசங்
களையும் கலங்களையும் காவல்சேனாபதி எடுத்
16 துக்கொண்டான். சாலொமோன் கர்த்தரு
டைய ஆலயத்துக்காகப்பண்ணுவித்த இரண்டு
தூண்களும், ஒரு கடல்தொட்டியும் ஆதாரங்
களுமாகிய அந்தச் சகல பணிமுட்டுகளுடைய
17 வெண்கலத்திற்கும் [9]நிறையில்லை. ஒரு
தூணின் உயரம் பதினெட்டு முழமாயிருந்தது;
அதின்மேல் அதற்கு மூன்றுமுழ உயரமான
வெண்கலத் தலைப்பும் உண்டாயிருந்தது; [10]குமி
ழிலே சுற்றிலும் செய்யப்பட்டிருந்த பின்ன
லும் மாதளம்பழங்களும் எல்லாம் வெண்கல
மாயிருந்தது; மற்றத் தூணும் அதின் பின்ன
18 லும் அதைப்போல் இருந்தது. காவல்சேனா
பதி பிரதான ஆசாரியனாகிய செராயாவை
யும், இரண்டாம் ஆசாரியனாகிய செப்பனியா
வையும், [11]வாசல் காக்கும் மூன்று காவற்கார
19 ரையும் பிடித்தான். நகரத்திலே அவன் யுத்த
மனுஷரின் விசாரிப்புக்காரனாகிய பிரதானி
ஒருவனையும், [12]ராஜாவின் மந்திரிகளிலே நகரத்
தில் அகப்பட்ட ஐந்துபேரையும், தேசத்தின்
ஜனத்தைச் சேவகம் எழுதுகிற தலைவனான
இராணுவச்சம்பிரதியையும், தேசஜனத்திலே
நகரத்தில் அகப்பட்ட அறுபது பேரையும்

1 எரே. 39. 7. எசே. 12. 13
2 எரே. 52. 12–14
3 2 நாளா. 36. 19. சங். 79. 1. எரே. 39. 8. ஆமோ. 2. 5
4 நெகே. 1. 3. எரே. 52. 14
5 எரே. 39. 9; 52. 15
6 24. 14. எரே. 39. 9, 10; 40. 7; 52. 16
7 எரே. 27. 19. ஷ. 1 இரா. 7. 15–27
8 யாத். 27. 3. 1 இரா. 7. 45, 50
9 1 இரா. 7. 47
10 1 இரா. 7. 15. எரே. 52. 21
11 1 நாளா. 6. 14. எஸ்றா. 7. 1. எரே. 21. 1; 29. 15
12 எரே. 52. 25
13 லேவி. 26. 33. உபா. 28. 36, 64
14 எரே. 40. 5
15 எரே. 40. 7–9
16 எரே. 41. 1, 2
17 எரே. 43. 4, 7
18 எரே. 52. 31. ஷ
19 ஆதி. 40. 13, 20
20 2 சாமு. 9. 7

பிடித்தான். அவர்களைக் காவல்சேனாபதியா 20
கிய நெபுசராதான் பிடித்து, ரிப்லாவில் இருக்
கிற பாபிலோன் ராஜாவினிடத்துக்குக்கொண்
டுபோனான். அவர்களைப் பாபிலோன் ராஜா 21
ஆமாத்தேசத்தின் பட்டணமான ரிப்லாவிலே
வெட்டிக் கொன்றுபோட்டான்; இப்படியே
யூதா ஜனங்கள் தங்கள் தேசத்திலிருந்து [13]சிறை
யிருப்புக்குக் கொண்டுபோகப் பட்டார்கள்.
பாபிலோன் ராஜாவாகிய நேபுகாத்நேச்சார், 22
[14]யூதேயாதேசத்தில் மீதியாக வைத்த ஜனத்
தின்மேல், சாப்பானின் குமாரனாகிய அகீக்
காமின் மகன் கெதலியாவை அதிகாரியாக
வைத்தான்.
பாபிலோன் ராஜா கெதலியாவை அதிகாரி 23
யாக வைத்ததை, [15]சகல இராணுவச்சேர்வைக்
காரரும் அவர்களுடைய மனுஷரும் கேட்ட
போது, அவர்கள் மிஸ்பாவில் இருக்கிற கெத
லியாவினிடத்தில் வந்தார்கள்; அவர்கள் யாரெ
னில், நெத்தனியாவின் குமாரன் இஸ்மவே
லும், கரேயாவின் குமாரன் யோகனானும், நெத்
தோப்பாத்தியனாகிய தன்கூமேத்தின் குமா
ரன் செராயாவும், மாகாத்தியனான ஒருவனு
டைய குமாரன் யசனியாவும் அவர்கள் மனு
ஷருமே. அப்பொழுது கெதலியா அவர்க 24
ளுக்கும் அவர்கள் மனுஷருக்கும் ஆணையிட்டு:
நீங்கள் கல்தேயரைச் சேவிக்கப் பயப்பட
வேண்டாம்; தேசத்திலிருந்து பாபிலோன் ரா
ஜாவைச் சேவியுங்கள்; அப்பொழுது உங்க
ளுக்கு நன்மை உண்டாகும் என்றான். ஏழாம் 25
மாதத்திலே, [16]ராஜவம்சத்திலே பிறந்த எலிசா
மாவின் குமாரனாகிய நெத்தனியாவின் குமா
ரன் இஸ்மவேல் பத்து மனுஷரோடேகூட
வந்து, கெதலியாவையும், அவனோடே மிஸ்
பாவிலிருந்த யூதரையும், கல்தேயரையும் வெட்
டிக் கொன்றுபோட்டான். அப்பொழுது சிறி 26
யோரும் பெரியோருமாகிய ஜனங்கள் யாவ
ரும் சேனாபதிகளும் கல்தேயருக்குப் பயந்தினாலே எழுந்து புறப்பட்டு [17]எகிப்திற்குப்
போனார்கள்.
யூதாவின் ராஜாவாகிய யோயாக்கீனுடைய 27
சிறையிருப்பின் முப்பத்தேழாம் வருஷம் பன்
னிரண்டாம் மாதம் இருபத்தேழாந்தேதியிலே,
[18]எவில்மெரொதாக் என்னும் பாபிலோன்
ராஜா, தான் ராஜாவான வருஷத்திலே, யூதா
வின் ராஜாவாகிய யோயாக்கீனைச் சிறைச்சாலை
யிலிருந்து புறப்படப்பண்ணி, [19]அவன் தலை
யை உயர்த்தி, அவனோடே அன்பாய்ப் பேசி, 28
அவனுடைய சிங்காசனத்தைத் தன்னோடே
பாபிலோனிலிருந்து ராஜாக்களின் சிங்காச
னங்களுக்கு உயரமாக வைத்து, அவனுடைய 29
சிறைச்சாலைவஸ்திரங்களை மாற்றினான்; அவன்
உயிரோடிருந்த சகல நாளும் நித்தம் தனக்கு
[20]முன்பாகப் போஜனம்பண்ணும்படி செய்
தான். அவன் உயிரோடிருந்த நாளெல்லாம் 30
அவனுடைய செலவுக்காக, ராஜாவினால் கட்
டளையான அநுதினத் திட்டத்தின்படி, அநு
தினமும் கொடுக்கப்பட்டுவந்தது.

# I. CHRONICLES

# நாளாகமத்தின்

## முதலாம் புஸ்தகம்

1 2 ஆதாம் [1]சேத், ஏனோஸ், கேனான், மக
3 லாலெயேல், யாரேத், ஏனோக்கு, மெத்தூச
4 லா, லாமேக்கு, நோவா, சேம், காம், யாப்பேத்.
5 யாப்பேத்தின் குமாரர், [2]கோமர், மாகோகு,
மாதாய், யாவான், தூபால், மேசேக்கு, தீராஸ்
6 என்பவர்கள். கோமரின் குமாரர், அஸ்கி
னாஸ், ரீப்பாத்து, தொகர்மா என்பவர்கள்.
7 யாவானின் குமாரர், எலீசா, தர்ஷீஸ், கித்
தீம், தொதானீம் என்பவர்கள்.
8 காமின் குமாரர், கூஷ், மிஸ்ராயீம், பூத்,
9 கானான் என்பவர்கள். கூஷின் குமாரர், சேபா
ஆவிலா, சப்தா, ராமா, சப்திகா என்பவர்கள்;
ராமாவின் குமாரர், சேபா, திதான் என்பவர்
10 கள். கூஷ் நிம்ரோதைப் [3]பெற்றான்; இவன்
11 பூமியிலே பராக்கிரமசாலியானான். மிஸ்ரா
யீம் லூதீயரையும், ஆனாமியரையும், லெகா
12 பியரையும், நப்தூகியரையும், பத்ரூசியரை
யும், பெலிஸ்தரைப் பெற்ற கஸ்லூகியரையும்,
13 கப்தோரியரையும் [4]பெற்றான். கானான் [5]தன்
மூத்தமகனாகிய சீதோனையும், கேத்தையும்,
14 எபூசியரையும், எமோரியரையும், கிர்காசிய
15 ரையும், ஏவியரையும், அர்கீயரையும், சீனி
16 யரையும், அர்வாதியரையும், செமாரியரை
யும், காமாத்தியரையும் பெற்றான்
17 சேமின் [6]குமாரர், ஏலாம், அசூர், அர்பக்
சாத், லூத், ஆராம், ஊத்ஸ், கூல், கேத்தெர்,
18 *மேசக் என்பவர்கள். அர்பக்சாத் சாலா
வைப் பெற்றான்; சாலா ஏபேரைப் பெற்
19 றான். ஏபேருக்கு இரண்டு குமாரர் பிறந்தார்
கள்; ஒருவன் பேர் பேலேகு, [7]ஏனெனில்
அவன் நாட்களில் பூமி பகுக்கப்பட்டது;
20 அவன் சகோதரன் பேர் யொக்தான். யொக்
தான் [8]அல்மோதாதையும், சாலேப்பையும், ஆசர்
21 மாவேத்தையும், யேராகையும், அதோராமை
22 யும், ஊசாலையும், திக்லாவையும், ஏபாலையும்,
23 அபிமாவேலையும், சேபாவையும், ஓப்பீரையும்,
ஆவிலாவையும், யோபாபையும் பெற்றான்;
இவர்கள் எல்லாரும் யொக்தானின் குமாரர்.
24, 25 சேம், [9]அர்பக்சாத், சாலா, ஏபேர்,
26 [10]பேலேகு, ரெகூ, செரூகு, நாகோர், தே
27, 28 ராகு, ஆபிராமாகிய [11]ஆபிரகாம். ஆபிர
காமின் குமாரர், [12]ஈசாக்கு, இஸ்மவேல் என்
பவர்கள்.

இவர்களுடைய சந்ததிகளாவன: [13]இஸ்ம 29
வேலின் மூத்த குமாரனாகிய நெபாயோத், கே
தார், அத்பியேல், மிப்சாம், மிஷ்மா, தூமா, 30
மாசா, †ஆதாத், தேமா, யெத்தூர், நாபீஸ், 31
கேத்மா என்பவர்கள்; இவர்கள் இஸ்மவேலின்
குமாரர்.

ஆபிரகாமின் மறுமனையாட்டியாகிய [14]கேத் 32
தூராள் பெற்ற குமாரர், சிம்ரான், யக்ஷான்,
மேதான், மீதியான், இஸ்பாக், சூவா என்ப
வர்கள்; யக்ஷானின் குமாரர், சேபா, தேதான்
என்பவர்கள். மீதியானின் குமாரர், ஏப்பா, 33
ஏப்பேர், ஆனோக்கு, அபீதா, எல்தாகா என்
பவர்கள்; இவர்கள் எல்லாரும் கேத்தூராளின்
குமாரர்.

ஆபிரகாம் ஈசாக்கைப் பெற்றான்; [15]ஈசாக் 34
கின் குமாரர், ஏசா, இஸ்ரவேல் என்பவர்கள்.
ஏசாவின் குமாரர், [16]எலீப்பாஸ், ரெகு 35
வேல், எயூஷ், யாலாம், கோராகு என்பவர்
கள். எலீப்பாசின் குமாரர், தேமான், ஓமார், 36
‡செப்பி, கத்தாம், கேனாஸ், திம்னா, அம
லேக்கு என்பவர்கள். ரெகுவேலின் குமா 37
ரர், நகாத், சேராகு, சம்மா, மீசா என்பவர்
கள். சேயீரின் [17]குமாரர், லோத்தான், சோ 38
பால், சிபியோன், ஆனா, தீசோன், எத்சேர்,
தீசான் என்பவர்கள். லோத்தானின் குமா 39
ரர், ஓரி, §ஓமாம் என்பவர்கள்; லோத்தா
னின் சகோதரி திம்னாள் என்பவள். சோ 40
பாலின் குமாரர், ‖அல்வான், மானகாத்,
ஏபால், செப்பி, ஓனாம் என்பவர்கள்; சிபி
யோனின் குமாரர், அயா, ஆனாகு என்பவர்
கள். ஆனாகின் குமாரரில் ஒருவன் திஷோன் 41
என்பவன்; திஷோனின் குமாரர், ¶அம்
ராம், எஸ்பான், இத்தரான், கெரான் என்
பவர்கள். எத்சேரின் குமாரர், பில்கான், 42
சகவான், **யாக்கான் என்பவர்கள்; திஷா
னின் குமாரர், ஊத்ஸ், அரான் என்பவர்கள்.
இஸ்ரவேல் புத்திரரை ஒரு ராஜா ஆளுத 43
தற்கு முன்னே, ஏதோம் தேசத்தில் அரசா
ண்ட ராஜாக்களானவர்கள்: [18]பேயோரின்
குமாரன் பேலா என்பவன்; இவன் பட்ட
ணத்தின்பேர் தின்காபா. பேலா மரித்தபின், 44
போஸ்ரா ஊரானாகிய சேராகின் குமாரன்
யோபாப் அவன் ஸ்தானத்தில் ராஜாவானான்.

[1] ஆதி. 4. 25, 26; 5. 3, 9
[2] ஆதி. 10. 2. முதல்
[3] ஆதி. 10. 6, 13. முதல்
[4] உபா. 2. 23
[5] ஆதி. 10. 15. முதல்
[6] ஆதி. 10. 22; 11. 10
* மாஸ். ஆதி. 10. 23
[7] ஆதி. 10. 25
[8] ஆதி. 10. 26
[9] ஆதி. 11. 10. முத. லூக். 3. 34. முதல்
[10] ஆதி. 11. 15
[11] ஆதி. 17. 5
[12] ஆதி. 16. 11, 15; 21. 2, 3
[13] ஆதி. 25. 13–16
† ஆதார். ஆதி. 25. 15
[14] ஆதி. 25. 1, 2
[15] ஆதி. 21. 2, 3; 25. 25, 26
[16] ஆதி. 36. 9. முதல்
‡ செப்போ. ஆதி. 36. 11
[17] ஆதி. 36. 20
§ ஏமாம். ஆதி. 36. 22
‖ அல்வான் செப்போ. ஆதி. 36 23
¶ எஸ்தான். ஆதி. 36. 25, 26
** அக்கான். ஆதி. 36. 27.
[18] ஆதி. 36. 31. முதல்

45 யோபாப் மரித்தபின், தேமானியரின் தேசத்
தானாகிய ஊசாம் அவன் ஸ்தானத்தில் ராஜா
46 வானான்: ஊசாம் மரித்தபின், பேதாதின்
குமாரன் ஆதாத் அவன் ஸ்தானத்தில் ராஜா
வானான், இவன் மீதியானியரை மோவாபின்
நாட்டிலே முறிய அடித்தவன்; இவன் பட்ட
47 ணத்தின் பேர் ஆவீத். ஆதாத் மரித்தபின்,
மஸ்ரேக்கா ஊரானாகிய சம்லா அவன் ஸ்தா
48 னத்தில் ராஜாவானான். சம்லா [1]மரித்தபின்,
நதியோரமான ரேகோபோத்தானாகிய சவுல்
49 அவன் ஸ்தானத்தில் ராஜாவானான். சவுல்
மரித்தபின், அக்போரின் குமாரன் பாகாலா
னான் அவன் ஸ்தானத்தில் ராஜாவானான்.
50 பாகாலானான் மரித்தபின், *ஆதாத் அவன்
ஸ்தானத்தில் ராஜாவானான்; இவன் பட்ட
ணத்தின்பேர் †பாகி; மேசகாபின் குமாரத்தி
யாகிய மாத்திரேத்தின் மகளான அவன் மனை
51 வியின் பேர் மெகேதபேல். ஆதாத் மரித்த
பின், ஏதோமில் ஏற்பட்ட பிரபுக்களானவர்
கள்; திம்னா பிரபு, ‡அல்யா பிரபு, எதேத்
52 பிரபு, அகோலிபாமா பிரபு, ஏலா பிரபு,
53 பினோன் பிரபு, கேனாஸ் பிரபு, தேமான்
54 பிரபு, மிப்சார் பிரபு, மக்தியேல் பிரபு, ஈராம்
பிரபு, இவர்களே ஏதோமின் பிரபுக்கள்.

2 இஸ்ரவேலின் §குமாரர், ரூபன், சிமி
யோன், லேவி, யூதா, இசக்கார், செபு
2 லோன், தாண், யோசேப்பு, பென்யமீன்,
3 நப்தலி, காத், ஆசேர் என்பவர்கள். யூதா
வின் குமாரர், [2]ஏர், ஓனான், சேலா என்பவர்
கள்; இந்த மூன்று குமாரர் சூவாவின் மகளான
கானானிய ஸ்திரீயினிடத்தில் அவனுக்குப் பிறந்
தவர்கள்; ஏர் என்னும் யூதாவின் மூத்த குமா
ரன் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாதவ
னானபடியால் அவர் அவனைக் கொன்றுபோ
4 ட்டார். அவன் மருமகளாகிய தாமார் [3]அவ
னுக்குப் பாரேசையும் சேராவையும் பெற்
றாள்; யூதாவின் குமாரர் எல்லாரும் ஐந்து
5 பேர். பாரேசின் குமாரர், [4]எஸ்ரோன், ஆ
6 மூல் என்பவர்கள். சேராவின் குமாரர் எல்
லாரும், ||சிம்ரி, ஏத்தான், ஏமான், கல்கோல்,
7 தாரா என்னும் ஐந்துபேர். சாபத்தீடான
விஷயத்திலே துரோகம்பண்ணி இஸ்ரவே
லைக் கலங்கப்பண்ணின ¶ஆகார் என்பவன்,
8 கர்மீ புத்திரரில் ஒருவன். ஏத்தானின் குமா
9 ரர் அசரியா முதலானவர்கள். எஸ்ரோனுக்
குப் பிறந்த குமாரர், யெர்மெயேல், **ராம்,
10 ††கெலுபா என்பவர்கள். ராம் அம்மினதா
பைப் [5]பெற்றான்; அம்மினதாப் யூதா புத்திர
ரின் பிரபுவாகிய [6]நகசோனைப் பெற்றான்.
11 நகசோன் ‡‡சல்மாவைப் பெற்றான்; சல்மா
12 போவாசைப் பெற்றான். போவாஸ் ஓபே
தைப்பெற்றான்; ஓபேத் ஈசாயைப்பெற்றான்.
13 ஈசாய் தன் மூத்தகுமாரன் எலியாபையும்,
அபினதாம் என்னும் இரண்டாம் குமாரனை
யும், §§சிம்மா என்னும் மூன்றாம் குமாரனை
14 யும், நெதனெயேல் என்னும் நாலாம் குமா
ரனையும், ரதாயி என்னும் ஐந்தாம் குமாரனை
யும், ஒத்சேம் என்னும் ஆறாம் குமாரனையும், 15
தாவீது என்னும் ஏழாம் குமாரனையும் பெற்
றான். அவர்கள் சகோதரிகள் செருயாள், 16
அபிகாயில் என்பவர்கள்; செருயாளின் குமா
ரர், [7]அபிசாய், யோவாப், ஆசகேல் என்னும்
மூன்றுபேர். அபிகாயில் அமாசாவைப்பெற் 17
றாள்; அமாசாவின் தகப்பன் இஸ்மவேலிய
னாகிய ||||யெத்தேர் என்பவன். எஸ்ரோ 18
னின் குமாரன் காலேப் எரீயோத் என்னப்
பட்ட தன் பெண்ஜாதியாகிய அசுபாளாலே
பெற்ற குமாரர், ஏசேர், சோபாப், அர்தோன்
என்பவர்கள். அசுபாள் செத்துபோனபின் 19
காலேப் எப்ராத்தை விவாகம்பண்ணினான்;
[8]இவள் அவனுக்கு ஊரைப் பெற்றாள். ஊர் 20
ஊரியைப் பெற்றான்; [9]ஊரி பெசலெயேலைப்
பெற்றான். பிற்பாடு, எஸ்ரோன் அறுபது 21
வயதானபோது கிலெயாத்தின் தகப்பனாகிய
[10]மாகீரின் குமாரத்தியை விவாகம்பண்ணி,
அவளிடத்தில் பிரவேசித்தான்; இவள் அவ
னுக்குச் செகூபைப் பெற்றாள். செகூப் யா 22
வீரைப் பெற்றான்; இவனுக்குக் கீலேயாத் தே
சத்தில் இருபத்துமூன்று ஊர்கள் இருந்தது.
கேசூரையும் ஆராமையும் யாவீரின் கிராமங் 23
களையும், [11]கேனாத்திலுள்ள கிராமங்களாகிய
அறுபது ஊர்களையும் அவர்கள் கையிலே வாங்
கினார்கள்; இவர்கள் எல்லாரும் கிலெயாத்
தின் தகப்பனாகிய மாகீரின் குமாரர். காலே 24
பின் ஊரான எப்ராத்தாவில் எஸ்ரோன் இறந்
துபோனபின், எஸ்ரோனின் பெண்ஜாதியா
கிய அபியாள் அவனுக்குத் தெக்கொவாவின்
தகப்பனாகிய [12]அசூரைப் பெற்றாள். எஸ்ரோ 25
னுக்கு முதற்பிறந்த யெர்மெயேலின் குமாரர்,
ராம் என்னும் மூத்தவனும், பூனா, ஓரேன்,
ஓத்சேம், அகியா என்பவர்களுமே. அத்தா 26
ராள் என்னும் பேருள்ள வேறொரு மனைவி
யும் யெர்மெயேலுக்கு இருந்தாள்; இவள்
ஓனாமின் தாய். யெர்மெயேலுக்கு முதற் 27
பிறந்த ராமின் குமாரர், மாஸ், யாமின், எக்
கேர் என்பவர்கள். ஓனாமின் குமாரர், சம் 28
மாய், யாதா என்பவர்கள்; சம்மாயின் குமா
ரர், நாதாப், அபிசூர் என்பவர்கள். அபிசூ 29
ருடைய மனைவியின் பேர் அபியாயேல்;
அவள் அவனுக்கு அக்பானையும் மோளிதை
யும் பெற்றாள். நாதாபின் குமாரர், சேலேத், 30
அப்பாயிம் என்பவர்கள்; சேலேத் புத்திரரில்
லாமல் மரித்தான். அப்பாயிமின் குமாரர் 31
இஷி முதலானவர்கள்; இஷியின் குமாரர்
சேசான் முதலானவர்கள்; சேசானின் குமா
ரத்தி அக்லாய். சம்மாயின் சகோதரனாகிய 32
யாதாவின் குமாரர், யெத்தெர், யோனத்தான்
என்பவர்கள்; யெத்தெர் குமாரரில்லாமல் மரி
த்தான். யோனத்தானின் குமாரர், பேலேத், 33
சாசா என்பவர்கள், இவர்கள் யெர்மெயே
லின் புத்திரர். சேசானுக்குக் குமாரத்திகளே 34
யன்றி குமாரர்கள் இல்லை; சேசானுக்கு யர்
கா என்னும் பேருள்ள எகிப்திய வேலைக்கா
ரன் ஒருவன் இருந்தான். சேசான் தன் 35

1 ஆதி. 36. 37
* ஆதார்.
† பாகு. ஆதி. 36. 39
‡ அல்வா. ஆதி. 36. 40
§ யாக்கோபின். ஆதி. 29. 32: 30. 5: 35. 18, 22: 46. 8. மு
2 ஆதி. 38. 2, 7, 13: 46. 12. எண். 26. 19
3 ஆதி. 38. 29, 30, மத். 1. 3
4 ஆதி. 46. 12. ரூத். 4. 18
|| சப்தி. யோசு. 7. 1
¶ ஆகான்.
** ஆராம். மத். 1. 3, 4
†† காலேப். 18. வச.
5 ரூத். 4. 20. மத். 1. 4
6 எண். 1. 7
‡‡ சல்மோன். மத். 1. 4
§§ சம்மா. 1 சாமு. 16. 6, 9
7 2 சாமு. 2. 18
|||| எத்திரா. 2 சாமு. 17. 25
8 50. வச.
9 யாத். 31. 2
10 எண். 27. 1
11 எண். 32. 41
12 4. 5

குமாரத்தியைத் தன் வேலைக்காரனாகிய யர்கா
வுக்குக் கொடுத்தான்; அவள் அவனுக்கு அத்
36 தாயியைப் பெற்றாள். அத்தாயி நாதானைப்
37 பெற்றான்; [1]நாதான் சாபாதைப் பெற்றான். சா
பாத் எப்லாலைப் பெற்றான்; எப்லால் ஓபே
38 தைப் பெற்றான். ஓபேத் ஏகூவைப் பெற்
39 றான்; ஏகூ அசரியாவைப் பெற்றான். அசரி
யா ஏலேத்சைப் பெற்றான்; ஏலேத்ஸ் எலே
40 யாசாவைப் பெற்றான். எலேயாசா சிஸ்மா
யைப் பெற்றான்; சிஸ்மாய் சல்லூமைப் பெற்
41 றான். சல்லூம் எக்கமியாவைப் பெற்றான்;
42 எக்கமியா எலிசாமாவைப் பெற்றான். யெர்
மெயேலின் சகோதரனாகிய காலேபின் குமா
ரர், சிப்பின் தகப்பனாகிய மேசா என்னும்
மூதற் பிறந்தவனும், எப்ரோனின் தகப்பனா
43 கிய மெரேசாவின் குமாரருமே. எப்ரோனின்
குமாரர், கோராகு, தப்புவா, ரெக்கேம், செ
44 மா என்பவர்கள். செமா யோர்க்கேயாமின்
தகப்பனாகிய ரெக்கேமைப் பெற்றான்; ரெக்
45 கேம் சம்மாயைப் பெற்றான். சம்மாயின்
குமாரன் மாகோன்; மாகோன் பெத்சூரின்
46 தகப்பன். காலேபின் மறுமனையாட்டியாகிய
எப்பாள் ஆரானையும், மோசாவையும், காசே
சையும் பெற்றாள்; ஆரான் காசேசைப் பெற்
47 றான். யாதாயின் குமாரர், ரேகேம், யோ
தாம், கேசாம், பேலேத், எப்பா, சாகாப் என்
48 பவர்கள். காலேபின் மறுமனையாட்டியாகிய
மாகாள் சேபேரையும் திர்கானாவையும் பெற்
49 றாள். அவள் மத்மன்னாவின் தகப்பனாகிய
சாகாபையும், மக்பேனாவுக்கும் கிபேயாவுக்கும்
தகப்பனாகிய சேவாவையும் பெற்றாள்; காலே
50 பின் குமாரத்தி [2]அக்சாள் என்பவள். எப்ராத்
தாளிடத்தில் மூதற்பிறந்த ஊருடைய குமார
னாகிய காலேபின் குமாரர், கீரியாத்யாரீமின்
51 *மூப்பனான சோபாலும், பெத்லெகேமின்
மூப்பனான சல்மாவும், பெத்காதேரின் மூப்ப
52 னான ஆரேப்புமே. கீரியாத்யாரீமின் மூப்ப
னான சோபாவின் குமாரர், ஆரோவே, ஆசி
53 யம்மெனுகோத் என்பவர்கள். கீரியாத்யாரீ
மிலிருந்த வம்சங்கள், எத்திரியரும் பூகியரும்
சுமாத்தியரும் மிஸ்ராவியருமே; இவர்களி
டத்தில் சோராத்தியரும், எஸ்தவோலியரும்
54 பிறந்தார்கள். சல்மாவின் சந்ததிகள், பெத்
லெகேமியரும், நெத்தோப்பாத்தியரும், பெத்
யோவாப் என்னும் அதரோத் ஊராரும், மா
னாத்தியரிலும் சோரியரிலும் பாதி ஜனங்களு
55 மே. யாபேசில் குடியிருந்த கணக்கரின் வம்
சங்கள், திராத்தியரும் சிமாத்தியரும் சுக்காத்
தியருமே; ரேகாப் வீட்டாரின் தகப்பனா
கிய அம்மாத்தின் சந்ததியாரான [3]கேனியர்
இவர்களே.

3 தாவீதுக்கு எப்ரோனிலே பிறந்த குமாரர்:
யெஸ்ரயேல் ஊராளான அகினோவாமிடத்
தில் பிறந்த [4]அம்னோன் மூதற்பேறானவன்;
கர்மேலின் ஊராளான அபிகாயேலிடத்தில்
பிறந்த தானியேல் இரண்டாம் குமாரன்.
2 கேசூரின் ராஜாவாகிய தல்மாயின் குமாரத்தி
மாக்காள் பெற்ற அப்சலோம் மூன்றாம் குமா
ரன்; ஆகீத் பெற்ற அதோனியா நாலாம்
குமாரன். அபித்தாள் பெற்ற செப்பத்தியா 3
ஐந்தாம் குமாரன்; அவன் பெண்ஜாதியாகிய
[5]எக்லாள் பெற்ற இத்ரேயாம் ஆறாம் குமாரன்.
இந்த ஆறு குமாரர் அவனுக்கு எப்ரோனிலே 4
பிறந்தார்கள்; அங்கே ஏழு வருஷமும் ஆறு
மாதமும் அரசாண்டான்; [6]எருசலேமிலோ
முப்பத்துமூன்று வருஷம் அரசாண்டான்.
எருசலேமில் அவனுக்குப் பிறந்தவர்கள்: 5
[7]அம்மியேலின் குமாரத்தியாகிய †பத்சுவா
ளிடத்தில் சிமீயா, சோபாப், நாத்தான், சா
லொமோன் என்னும் நாலுபேரும், இப்கார், 6
எலிசாமா, எலிப்பெலேத், நோகா, நேபேக், 7
யப்பியா, எலிசாமா, எலியாதா, எலிபே 8
லேத் என்னும் [8]ஒன்பதுபேருமே. மறுமனை 9
யாட்டிகளின் குமாரரையும் இவர்கள் சகோ
தரியாகிய [9]தாமாரையும் தவிர, இவர்களெல்
லாரும் தாவீதின் குமாரர். சாலொமோனின் 10
குமாரன் ரெகொபெயாம்; இவனுடைய
குமாரன் அபியா; [10]இவனுடைய குமாரன்
ஆசா; இவனுடைய குமாரன் யோசபாத்.
இவனுடைய குமாரன் யோராம்; இவனு 11
டைய குமாரன் ‡அகசியா; இவனுடைய
குமாரன் யோவாஸ். இவனுடைய குமாரன் 12
அமத்சியா; இவனுடைய குமாரன் §அசரியா;
இவனுடைய குமாரன் யோதாம். இவனு 13
டைய குமாரன் ஆகாஸ்; இவனுடைய குமா
ரன் எசேக்கியா; இவனுடைய குமாரன் மனா
சே. இவனுடைய குமாரன் ஆமோன்; இவ 14
னுடைய குமாரன் யோசியா. யோசியாவின் 15
குமாரர், மூதல் பிறந்த யோகனானும், யோ
யாக்கீம் என்னும் இரண்டாம் குமாரனும்,
[11]சிதேக்கியா ||என்னும் மூன்றாம் குமாரனும்,
சல்லூம் என்னும் நாலாம் குமாரனுமே. யோ 16
யாக்கீமின் குமாரர், எகொனியா மூதலான
வர்கள்; இவனுக்கு மகனானவன் சிதேக்கியா.
கட்டுண்ட ¶எகொனியாவின் குமாரர் சலாத் 17
தியேல், மல்கீராம், பெதாயா, சேனாசார், 18
யெகமியா, ஓசாமா, நெதபியா என்பவர்கள்.
பெதாயாவின் குமாரர், செருபாபேல், சிமேயி 19
என்பவர்கள்; செருபாபேலின் குமாரர், மெ
சுல்லாம், அனனியா என்பவர்கள்; இவர்கள்
சகோதரி செலோமீத் என்பவள். அசூபா, 20
ஓகேல், பெரகியா, அசதியா, ஊசாபேசேத்
என்னும் ஐந்துபேருமே. அனனியாவின் 21
குமாரர், பெலத்தியா, எசாயா என்பவர்கள்;
இவனுடைய குமாரன் ரெபாயா; இவனு
டைய குமாரன், அர்னான்; இவனுடைய குமா
ரன் ஒபதியா; இவனுடைய குமாரன் செக்
கனியா. செக்கனியாவின் குமாரர், செமா 22
யா மூதலானவர்கள்; செமாயாவின் குமாரர்
[12]அத்தூஸ், எகெயால், பாரியா, நெயாரியா,
செப்பாத் என்னும் ஆறுபேர். நெயாரியா 23
வின் குமாரர், எலியோனாய், எசேக்கியா,
அஸ்ரீக்காம் என்னும் மூன்றுபேர். எலியோ 24
னாயின் குமாரர், ஓதாயா, எலியாசிப், பெலா

[1] 11. 41
[2] யோசு. 15. 17
* தகப்பன்.
[3] நியா. 1. 16. எரே. 35. 2
[4] யோசு. 15. 56. 2 சாமு. 3. 2, 3
[5] 2 சாமு. 3. 5
[6] 2 சாமு. 2. 11; 5. 5
[7] 2 சாமு. 5. 14, 15
† பத்சேபாள். 2 சாமு. 11. 3; 12. 24
[8] 2 சாமு. 5. 14, 16
[9] 2 சாமு. 13. 1
[10] 1 இரா. 11. 43; 15. 6; 16. 1
‡ அசரியா. 2 நாளா. 22. 6
§ உசியா. 2 இரா. 15. 30
[11] 1 இரா. 23. 30, 34
|| மத்தனியா. 2 இரா. 24. 17
¶ ஆசீ.
[12] எஸ்ரா. 8. 2

யா, அக்கூப், யோகனான், தெலாயா, ஆனானி
என்னும் எழுபேர்.
4 யூதாவின் குமாரர், [1]பாரேஸ், எஸ்ரோன்,
2 கர்மீ, ஊர், சோபால் என்பவர்கள். சோபா
லின் குமாரன் ராயா யாகாத்தைப் பெற்றான்;
யாகாத் அகுமாயியையும், லாகாதையும் பெற்
றான்; சோராத்தியரின் வம்சங்கள் இவை
3 களே. ஏதாம் என்னும் மூப்பனின் சந்ததி
யார், யெஸ்ரெயேல், இஷ்மா, இத்பாஸ்
என்பவர்கள்; இவர்களுடைய சகோதரியின்
4 பேர் அத்செலெல்போனி; கேதோருக்கு
மூப்பனான பெனுவெல், உஷாவுக்கு மூப்ப
னான ஏசேர் என்பவர்கள்; இவர்கள் பெத்லெ
கேமுக்கு மூப்பனான எப்பிராத்தாவுக்கு முதற்
5 பிறந்த ஊரின் குமாரர். தெக்கோவாவுக்கு
மூப்பனான அ[illegible]ருக்கு ஏலாள், நாராள் என்
னும் இரண்டு பெண்ஜாதிகள் இருந்தார்கள்.
6 நாராள் அவனுக்கு அகுசாமையும், எப்பேரை
யும், தெமனியையும், ஆகாஸ்தாரியையும் பெற்
றாள்; நாராளின் குமாரர்கள் இவர்களே.
7 ஏலாளின் குமாரர், சேரேத், எத்சோகார்,
8 எத்னான் என்பவர்கள். கோஸ் என்பவன்
அனூபையும், சோபேபாகையும், ஆருமின்
குமாரனாகிய அகர்கேலின் வம்சங்களையும்
9 பெற்றான். யாபேஸ் தன் சகோதரரைப்
பார்க்கிலும் [2]கனம்பெற்றவனாயிருந்தான்.
அவன் தாய்: நான் துக்கத்தோடே அவனைப்
பெற்றேன் என்று சொல்லி அவனுக்கு *யா
10 பேஸ் என்று பேரிட்டாள். யாபேஸ் இஸ்ர
வேலின் தேவனை நோக்கி: தேவரீர் என்னை
ஆசீர்வதித்து, என் எல்லையைப் பெரிதாக்கி,
உமது கரம் என்னோடிருந்து, தீங்கு என்னைத்
துக்கப்படுத்தாதபடிக்கு அதற்கு என்னை விலக்
கிக் காத்தருளும் என்று வேண்டிக்கொண்
டான்; அவன் வேண்டிக்கொண்டதை தேவன்
11 அருளினார். சூகாவின் சகோதரனாகிய கே
லூப் மேகீரைப் பெற்றான்; இவன் எஸ்தோ
12 னின் தகப்பன். எஸ்தோன் பெத்ராபாவை
யும், பசேயாகையும், இர்நாகாஷின் தகப்ப
னாகிய தெகின்னாவையும் பெற்றான்; இவர்கள்
13 ரேகாவூர் மனுஷர். கேனாசின் குமாரர்,
[3]ஒத்னியேல், செராயா என்பவர்கள்; ஒத்னி
14 யேலின் குமாரரில் ஒருவன் ஆத்தாத். மெ
யோனத்தாய் ஒபிராவைப் பெற்றான்; செரா
யா கராஷீமன் பள்ளத்தாக்குக்கு மூப்பனாகிய
யோவாபைப் பெற்றான்; அவர்கள் தொழி
15 லாளிகளாயிருந்தார்கள். எப்புன்னேயின்
குமாரனாகிய காலேபின் குமாரர், ஈரு, ஏலா,
நாகாம்; ஏலாவின் குமாரரில் ஒருவன் கே
16 னாஸ். எகலெலேலின் குமாரர், சீப், சீப்பா,
17 திரியா, அசாரெயேல். எஸ்றாவின் குமாரர்,
யெத்தேர், மேரேத், எப்பேர், யாலோன்;
மேரேத்தின் பெண்ஜாதி மிரியாமையும், சம்
மாயியையும், எஸ்தெமோவா ஊருக்கு மூப்ப
18 னான இஸ்பாவையும் பெற்றாள். அவன்
பெண்ஜாதியாகிய †எகுதியாள், கேதோரின்
தகப்பனாகிய யாரேதையும், சோக்கோவின்
தகப்பனாகிய ஏபேரையும், சனோவாவின் தகப்
பனாகிய எக்குத்தியேலையும் பெற்றாள்; மே
ரேத் விவாகம்பண்ணின பார்வோனின் குமா
ரத்தியாகிய பித்தியாளின் குமாரர் இவர்களே.
நாகாமின் சகோதரியாகிய ஒதியாவினுடைய 19
பெண்ஜாதியின் குமாரர், கர்மியனாகிய ஆபி
கேயிலாவும், மாகாத்தியனாகிய எஸ்தேமோ
வாவுமே. ஷீமோனின் குமாரர், அம்னோன், 20
ரின்னா, பென்கானான், தீலோன் என்பவர்
கள், இஷியின் குமாரர், சோகேதும் பென்
சோகேதுமே. யூதாவின் [4]குமாரனாகிய சே 21
லாகின் புத்திரர்: லேக்காவூர் மூப்பனான
ஏரும், மரேசாவூர் மூப்பனான லாதாகும், மெல்
லிய புடவை நெய்த அஸ்பெயா வீட்டு வம்
சங்களும், யோக்கீமும், கோசேபாவின் 22
மனுஷரும், மோவாபியரை ஆண்ட யோ
வாஸ், சாராப் என்பவர்களும், யசுபிலெகே
முமே; இவைகள் பூர்வகாலத்தின் செய்திகள்.
இவர்கள் குயவராயிருந்து, நெத்தாயிமிலும் 23
‡கெதேராவிலும் குடியிருந்தார்கள்; ராஜாவின்
வேலையை விசாரிக்கிறதற்கு அங்கே வாசம்
பண்ணினார்கள்.

சிமியோனின் குமாரர், §நெமுவேல், யா 24
மின், யாரீப், சேரா, சவுல் என்பவர்கள்.
இவன் குமாரன் சல்லூம்; இவன் குமாரன் 25
மிப்சாம்; இவன் குமாரன் மிஸ்மா. மிஸ்மா 26
வின் குமாரரில் ஒருவன் அம்முவேல்; இவன்
குமாரன் சக்கூர்; இவன் குமாரன் சிமேயி.
சிமேயிக்குப் பதினாறு குமாரரும் ஆறு குமா 27
ரத்திகளும் இருந்தார்கள்; அவன் சகோதர
ருக்கு அநேகம் பிள்ளைகள் இருந்ததில்லை;
அவர்கள் வம்சமெல்லாம் யூதாவின் புத்திர
ரைப்போலப் பெருகினதுமில்லை. அவர்கள் 28
பெயெர்செபாவிலும், மொலாதாவிலும், ஆத்
சார்சூவாவிலும், பில்லாவிலும், எத்சாமிலும், 29
தோலாதிலும், பெத்தூவேலிலும், ஓர்மாவி 30
லும், சிக்லாகிலும், பெத்மர்காபோத்திலும், 31
‖ஆத்சார்சூசிமிலும், பெத்பிரியிலும், சாராயி
மிலும் குடியிருந்தார்கள்; தாவீது ராஜாவாகு
மட்டும் இவைகள் அவர்கள் பட்டணங்களா
யிருந்தது. அவர்களுடைய பேட்டைகள், 32
¶ஏத்தாம், ஆயின், ரிம்மோன், தோகேன்,
ஆசான் என்னும் ஐந்து பட்டணங்கள்.
அந்தப் பட்டணங்களைச் சுற்றிலும், **பா 33
கால் மட்டுமுள்ள அவர்களுடைய எல்லாப்
பேட்டைகளும், அவர்கள் வாசஸ்தலங்களும்,
அவர்களுடைய வம்ச அட்டவணையும் இவை
களே. மெசோபாபும், யம்லேகும், அமத் 34
சியாவின் குமாரன் யோஷாவும், யோவே 35
லும், ஆசியேலின் மகன் செராயாவுக்குப்
பிறந்த யோசிபியாவின் குமாரன் ஏகூவும்,
எலியோனாயும், யாக்கோபாவும், யெசொகா 36
யாவும், அசாயாவும், ஆதியேலும், யெசிமி
யேலும், பெனாயாவும், செமாயா பெற்ற 37
சிம்ரியின் மகன் யெதாயாவுக்குப் பிறந்த அல்
லோனின் புத்திரனாகிய சீப்பியின் குமாரன்
சீசாவும் என்று, பேர்பேராய் எழுதியிருக் 38

[1] ஆதி. 38. 29
[2] ஆதி. 34. 19
* துக்கமுள்ளவன்.
[3] யோசு. 15. 17
† யூதச்சி.
[4] ஆதி. 38. 1, 5; 46. 12
‡ பூண்டுகள் வேலி கள் நடுவில்.
§ எமுவேல். ஆதி. 46. 10
‖ யோசு. 19. 5
¶ யோசு. 19. 7
** யோசு. 19. 8

கிற இவர்கள் தங்கள் வம்சங்களில் பிரபுக்க
ளாயிருந்தார்கள்; இவர்கள் பிதாக்களின் வீட்
39 டார் ஏராளமாய்ப் பரம்பினார்கள். தங்கள்
ஆடுகளுக்கு மேய்ச்சலைத் தேடும்படிக்கு கே
தோரின் எல்லையாகிய பள்ளத்தாக்கின் கீழ்ப்
40 புறமட்டும் போய், நல்ல செழிப்பான மேய்ச்
சலையும், அமரிக்கையும் சுகமுமுள்ள விஸ்
தாரமான தேசத்தையும் கண்டுபிடித்தார்கள்;
பூர்வத்திலே காமின் சந்ததியார் அங்கே குடி
41 யிருந்தார்கள். பேர்பேராய் எழுதியிருக்கிற
இவர்கள் யூதாவின் ராஜாவாகிய எசேக்கியா
வின் நாட்களிலே அங்கே போய், அங்கே
கண்டுபிடித்தவர்களின் கூடாரங்களையும்[1]தாப
ரங்களையும் அழித்து, இந்நாளிலே இருக்கி
றதுபோல, அவர்களைச் சங்காரம்பண்ணி,
அங்கே தங்கள் ஆடுகளுக்கு மேய்ச்சல் இருந்
தபடியினால், அவர்கள் அந்த ஸ்தலத்திலே
42 குடியேறினார்கள். சிமியோனின் புத்திரரா
கிய இவர்களில் ஐந்நூறு மனுஷரும், அவர்
கள் தலைமைக்காரராகிய இஷியின் குமா
ரரான பெலத்தியாவும், நெகரியாவும், ரெப்
பாயாவும், ஊசியேலும், சேயீர் மலைத்தேசத்
43 திற்குப் போய், அமலேக்கியரில் தப்பி மீதி
யாயிருந்தவர்களை மடங்கடித்து, [2]இந்நாள்வ
ரைக்கும் இருக்கிறபடி அங்கே குடியேறி
னார்கள்.

5 ரூபன் இஸ்ரவேலுக்கு முதற்பிறந்த சேஷ்
டபுத்திரன்; [3]ஆனாலும் அவன் தன் தகப்ப
னுடைய மஞ்சத்தைத் தீட்டுப்படுத்தினபடியி
னால், கோத்திரத்து அட்டவணையிலே அவன்
முதற்பிறந்தவனாக எண்ணப்படாமல், அவ
னுடைய சேஷ்ட புத்திர சுதந்தரம் [4]இஸ்ர
வேலின் குமாரனாகிய யோசேப்பின் குமா
2 ரருக்குக் கொடுக்கப்பட்டது. யூதா தன் சகோ
தரரிலே பலத்தகினால் ராஜாதிபத்தியம் அவன்
சந்ததியில் உண்டானது; [5]ஆகிலும் சேஷ்ட
புத்திர சுதந்தரம் யோசேப்புடையதாயிற்று.
3 இஸ்ரவேலின் முதற்பேறான [6]ரூபனின் குமா
ரர் ஆனோக்கு, பல்லூ, எஸ்ரோன், கர்மீ
4 என்பவர்கள். யோவேலின் குமாரரில் ஒரு
வன் செமாயா; இவன் குமாரன் கோக்;
5 இவன் குமாரன் சிமேய் இவன் குமாரன்
மீகா; இவன் குமாரன் ராயா; இவன் குமா
6 ரன் பாகால். இவன் குமாரன் பேரா; ரூப
னியரின் பிரபுவான இவனை அசீரியா ராஜா
வாகிய *தில்காத்பில்நேசர் சிறைபிடித்துப்
7 போனான். தங்கள் சந்ததிகளின்படியே தங்
கள் வம்ச அட்டவணைகளில் எழுதப்பட்ட
அவன் சகோதரரில் தலைவர் ஏயேலும், சகரி
8 யாவும், யோவேலின் மகனாகிய சேமாவுக்
குப் பிறந்த ஆசாசின் குமாரன் பேலாவும்;
இவன் சந்ததியார் †ஆரோவேரிலும், நேபோ
மட்டும், பாகால் மெயோன்மட்டும் வாசம்
9 பண்ணினார்கள். கிழக்கே ஐபிராத்து நதிதொ
டங்கி வனாந்தரத்தின எல்லைமட்டும் அவர்கள்
வாசம்பண்ணினார்கள்; அவர்கள் ஆடுமாடுகள்
10 [7]கிலேயாத் தேசத்தில் மிகுதியாயிற்று. சவு
லின் நாட்களில் [8]ஆகாரியரோடே அவர்கள் யுத்
தம்பண்ணி, தங்கள் கையால் அவர்கள் விழு
ந்தபின் அவர்கள் கூடாரங்களிலே கிலேயாத்
தின் கீழ்ப்புறமெல்லாம் குடியேறினார்கள்.
காத்தின் புத்திரர் அவர்களுக்கு எதிரே 11
[9]பாசான்தேசத்திலே சல்காமட்டும் வாசம்பண்
ணினார்கள். அவர்களில் யோவேல் தலைவ 12
னும், சாப்பாம் அவனுக்கு இரண்டாவதுமா
யிருந்தான்; யானாயும் சாப்பாத்தும் பாசானில்
இருந்தார்கள். அவர்கள் பிதாக்களின் வீட் 13
டாராகிய அவர்கள் சகோதரர், மிகாவேல்,
மெசுல்லாம், சேபா, யோராயி, யாக்கான்,
சீகா, ஏபேர் என்னும் ஏழுபேர். இவர்கள் 14
ஊரிக்குப் பிறந்த அபியேலின் குமாரர்; ஊரி
என்பவன் யெரோவாவுக்கும், யெரோவா
கிலேயாத்துக்கும், கிலேயாத் மிகாவேலுக்கும்,
மிகாவேல் எசிசாயிக்கும், எசிசாயி யாதோ
வுக்கும், யாதோ பூசுக்கும் குமாரராயிருந்தவர்
கள். கூனியின் குமாரனாகிய அப்தியேலின் 15
மகன் அகி, அவர்கள் பிதாக்களின் வீட்டுத்
தலைவனாயிருந்தான். அவர்கள் கிலேயாத் 16
திலிருக்கிற பாசானிலும், அதின் வெளி
நிலங்களிலும், ‡சாரோனின் எல்லாப் பேட்
டைகளிலும் அவைகளின் கடையாந்தரங்கள்
மட்டும் வாசம்பண்ணினார்கள். இவர்களெல் 17
லாரும் யூதாவின் ராஜாவாகிய [10]யோதாமின்
நாட்களிலும், இஸ்ரவேலின் ராஜாவாகிய
[11]யெரொபெயாமின் நாட்களிலும் தங்கள் வம்
சத்து அட்டவணைப்படி தொகை ஏற்றப்பட்
டார்கள்.

ரூபன் புத்திரரிலும், காத்தியரிலும், மனா 18
சேயின் பாதிக் கோத்திரத்தாரிலும், கேடக
மும் பட்டயமும் எடுத்து, வில்லெய்து, யுத்தத்
திற்குப் பழகி, படைக்குப் போகத்தக்க சேவ
கர் நாற்பத்து நாலாயிரத்து எழுநூற்று அறுபது
பேராயிருந்தார்கள். அவர்கள் ஆகாரியரோ 19
டும், §யெத்தூர் நாப்பீஸ் நோதாப் என்பவர்க
ளோடும் யுத்தம்பண்ணுகிறபோது, அவர்க 20
ளோடே எதிர்க்கத் துணை பெற்றபடியினால்,
ஆகாரியரும் இவர்களோடிருக்கிற யாவரும்
அவர்கள் கையில் ஒப்புக்கொடுக்கப்பட்டார்
கள்; அவர்கள் யுத்தத்திலே தேவனை நோக்கிக்
கூப்பிட்டு, [12]அவர்மேல் நம்பிக்கைவைத்தபடி
யினால் அவர்கள் விண்ணப்பத்தைக் கேட்டரு
ளினார். அவர்கள் இவர்களுக்கு இருந்த மிரு 21
கஜீவன்களாகிய ஐம்பதினாயிரம் ஒட்டகங்க
ளையும், இரண்டு லட்சத்து ஐம்பதினாயிரம்
ஆடுகளையும், இரண்டாயிரம் கழுதைகளையும்,
மனுஷரில் லட்சம்பேர்களையும் பிடித்தார்கள்.
யுத்தம் தேவனால் நடந்தபடியினால் அநேகர் 22
வெட்டுண்டு விழுந்தார்கள்; தாங்கள் சிறைப்
பட்டுப் போகுமட்டும் [13]இவர்களுடைய ஸ்த
லத்திலே குடியிருந்தார்கள்.

மனாசேயின் பாதிக்கோத்திரத்துப் புத்திர 23
ரும் அந்தத் தேசத்தில் குடியிருந்து, பாசான்
தொடங்கிப் பாகால்எர்மோன்மட்டும், செனீர்
மட்டும், எர்மோன் பர்வதமட்டும் பெருகி

[1] இரா. 18. 8
[2] 1 சாமு. 15. 8: 30. 17
[3] ஆதி. 29. 32: 49. 3: 35. 22: 49. 4
[4] ஆதி. 48. 15, 22
[5] ஆதி. 49. 8, 10. சங். 60. 7. மீகா. 5. 2. மத். 2. 6
[6] ஆதி. 46. 9. யாத். 6. 14. எண். 26. 5
* தில்லாத் பிலேசர். 2 இரா. 15. 2, 9: 16. 7
† யோசு. 13. 15, 16
[7] யோசு. 22. 9
[8] ஆதி. 25 12
[9] யோசு. 13. 11, 24
‡ 27. 29
[10] 2 இரா. 15. 5, 32
[11] 2 இரா. 14 16, 28
§ ஆதி. 25. 15
[12] சங். 22. 4, 5
[13] 2 இரா. 15. 29: 17. 6

24 யிருந்தார்கள். அவர்கள் தங்கள் பிதாக்களின்
வீட்டுத் தலைவராகிய எப்பேர், இஷி, எலி
யேல், அஸரியேல், எரேமியா, ஒதாவியா,
யாதியேல் என்பவர்கள் பராக்கிரமவீரரான
மனுஷரும் பேர்பெற்ற தலைவருமாயிருந்தார்
கள்.
25 அவர்கள் தங்கள் பிதாக்களின் தேவனுக்
குத் துரோகம்பண்ணி, தேவன் அவர்களுக்கு
முன்பாக அழித்திருந்த தேசஜனங்களின் தே
வர்களைப் பின்பற்றிச் [1]சோரம்போனார்கள்.
26 ஆகையால் இஸ்ரவேலின் தேவன் அசீரியா
ராஜாவாகிய *பூலின் ஆவியையும், அசீரியா
ராஜாவாகிய †தில்காத்பில்நேசரின் ஆவியை
யும் எழுப்பினதினாலே, அவன் ரூபனியரும்
காத்தியரும் மனாசேயின் பாதிக்கோத்திரத்தா
ருமாகிய அவர்களைச் சிறைபிடித்து, இந்நாள்
வரைக்கும் இருக்கிறதுபோல, ஆலாவுக்கும்
ஆபோருக்கும் ஆராவுக்கும் கோசான் ஆற்றங்
கரைக்கும் கொண்டுபோனான்.
6 லேவியின் குமாரர், [2]கெர்சோன், கோகாத்,
2 மெராரி என்பவர்கள். கோகாத்தின் குமா
ரர், அம்ராம், இத்சார், எப்ரோன், ஊசியேல்
3 என்பவர்கள். அம்ராமின் பிள்ளைகள், ஆ
ரோன், மோசே, மிரியாம் என்பவர்கள்; ஆரோ
னின் குமாரர், நாதாப் ‡அபியூ, எலெயாசார்,
4 இத்தாமார் என்பவர்கள். எலெயாசார் பினெ
காசைப் பெற்றான்; பினெகாஸ் அபிசுவா
5 வைப் பெற்றான். அபிசுவா புக்கியைப் பெற்
6 றான்; புக்கி ஊசியைப் பெற்றான். ஊசி
செராகியாவைப் பெற்றான்; செராகியா மெ
7 ராயோதைப் பெற்றான். மெராயோத் அம
ரியாவைப் பெற்றான்; அமரியா அகித்தூபைப்
8 பெற்றான். அகித்தூப் சாதோக்கைப் பெற்
றான்; [3]சாதோக் அகிமாசைப் பெற்றான்.
9 அகிமாஸ் அசரியாவைப் பெற்றான்; அசரியா
10 யோகனானைப் பெற்றான். யோகனான் அசரி
யாவைப் பெற்றான்; சாலொமோன் எருச
லேமில் கட்டின ஆலயத்திலே [4]ஆசாரிய
பணிவிடையைச் செய்தவன் இவன்தான்.
11 அசரியா [5]அமரியாவைப் பெற்றான்; அமரி
12 யா அகித்தூபைப் பெற்றான். அகித்தூப் சா
தோக்கைப் பெற்றான்; சாதோக் §சல்லூ
13 மைப் பெற்றான். சல்லூம் இல்கியாவைப்
பெற்றான்; இல்கியா அசரியாவைப் பெற்
14 றான். அசரியா [6]செராயாவைப் பெற்றான்;
15 செராயா யோசதாக்கைப் பெற்றான். **கர்த்தர்**
நேபுகாத்நேச்சாரைக்கொண்டு யூதா ஜனங்களை
யும் எருசலேமியரையும் சிறை பிடித்துக்கொ
ண்டுபோகச் செய்தபோது [7]யோசதாக்கும்
சிறைப்பட்டுப்போனான்.
16 லேவியின் குமாரர், [8]கெர்சோன், கோ
17 காத், மெராரி என்பவர்களே. கெர்சோனு
டைய குமாரரின் நாமங்கள், லிப்னி, சிமேயி
18 என்பவைகள். கோகாத்தின் குமாரர், அம்
ராம், இத்சார், எப்ரோன், ஊசியேல் என்
19 பவர்கள். மெராரியின் குமாரர், மகேலி,
மூசி என்பவர்கள். லேவியருக்கு அவர்கள்

[1] 2 இரா. 17. 7
* 2 இரா. 15. 19
† 2 இரா. 15. 29
[2] 16. வச. ஆதி. 46. 11
‡ லேவி. 10. 1
[3] 2 சமு. 8. 17. 15. 27
[4] 1 இரா. 6. 2 நாளா. 26. 17, 18
[5] எஸ்றா. 7. 3
§ 9. 11
[6] நெகே. 11. 11
[7] 2 இரா. 25. 18
[8] யாத். 6. 16
[9] 16. 1
[10] யாத். 6. 24

பிதாக்கள் வழியாய் உண்டான வம்சங்கள்:
கெர்சோனின் குமாரன் லிப்னி; இவன் 20
குமாரன் யாகாத்; இவன் குமாரன் சிம்மா.
இவன் குமாரன் யோவா; இவன் குமாரன் 21
இத்தோ; இவன் குமாரன் சேரா; இவன்
குமாரன் யாத்திராயி. கோகாத்தின் குமா 22
ரரில் ஒருவன் அம்மினதாப், இவன் குமாரன்
கோராகு; இவன் குமாரன் ஆசீர். இவன் 23
குமாரன் எல்க்கானா; இவன் குமாரன் அபி
யாசாப்; இவன் குமாரன் ஆசீர். இவன் 24
குமாரன் தாகாத்; இவன் குமாரன் ஊரியேல்;
இவன் குமாரன் ஊசியா; இவன் குமாரன்
சவுல். எல்க்கானாவின் குமாரர், அமாசாயி, 25
ஆகிமோத் என்பவர்கள். எல்க்கானாவின் 26
குமாரரில் ஒருவன் சோபாய்; இவன் குமா
ரன் நாகாத். இவன் குமாரன் எலியாப்; 27
இவன் குமாரன் எரோகாம்; இவன் குமா
ரன் எல்க்கானா. சாமுவேலின் குமாரர், 28
அவனுடைய மூதற்பேறான வஷ்னீ அபியா
என்பவர்கள். மெராரியின் குமாரரில் ஒரு 29
வன் மகேலி; இவன் குமாரன் லிப்னி;
இவன் குமாரன் சிமேயி; இவன் குமாரன்
ஊசா. இவன் குமாரன் சிமெயா; இவன் 30
குமாரன் அகியா; இவன் குமாரன் அசாயா.
**கர்த்தருடைய** பெட்டி [9]நிலைபெற்றபோது, 31
தாவீது **கர்த்தருடைய** ஆலயத்தில் சங்கீத
சேவையை நடத்துகிறதற்கு ஸ்தாபித்தவர்க
ளும், சாலொமோன் எருசலேமிலே **கர்த்த** 32
**ருடைய** ஆலயத்தைக் கட்டித் தீருமட்டும்
ஆசரிப்புக் கூடார வாசஸ்தலத்திற்கு முன்
பாக சங்கீத சேவையுடன் தங்கள் முறை
மையின்படியே பணிவிடை செய்துவந்தவர்
களுமாகிய மனுஷரும் அவர்கள் குமாரரு
மானவர்கள்: கோகாத்தியரின் குமாரரில் 33
ஏமான் என்னும் பாடகன்; இவன் யோவே
லின் குமாரன்; இவன் சாமுவேலின் குமா
ரன். இவன் எல்க்கானாவின் குமாரன்; 34
இவன் யெரொகாமின் குமாரன்; இவன் எலி
யேலின் குமாரன்; இவன் தோவாகின் குமா
ரன். இவன் சூப்பின் குமாரன்; இவன் 35
இல்க்கானாவின் குமாரன்; இவன் மாகாத்
தின் குமாரன்; இவன் அமாசாயின் குமா
ரன். இவன் எல்க்கானாவின் குமாரன்; 36
இவன் யோவேலின் குமாரன்; இவன் அசரி
யாவின் குமாரன்; இவன் செப்பனியாவின்
குமாரன். இவன் தாகாதின் குமாரன்; 37
இவன் ஆசீரின் குமாரன்; இவன் [10]எபியா
சாப்பின் குமாரன்; இவன் கோராகின் குமா
ரன். இவன் இத்சாரின் குமாரன்; இவன் 38
கோகாத்தின் குமாரன்; இவன் இஸ்ரவேலின்
குமாரனாகிய லேவியின் குமாரன். இவன் 39
சகோதரனாகிய ஆசாப் இவன் வலது பக்கத்
திலே நிற்பான்; ஆசாப் பெரகியாவின் குமா
ரன்; இவன் சிமேயாவின் குமாரன். இவன் 40
மிகாவேலின் குமாரன்; இவன் பாசெயா
வின் குமாரன்; இவன் மல்கியாவின் குமா
ரன். இவன் எத்னியின் குமாரன்; இவன் 41

சேராவின் குமாரன்; இவன் அதாயாவின்
42 குமாரன். இவன் ஏத்தானின் குமாரன்;
இவன் சிம்மாவின் குமாரன்; இவன் சீமே
43 யின் குமாரன். இவன் யாகாதின் குமாரன்;
இவன் கெர்சோனின் குமாரன்; இவன் லேவி
44 யின் குமாரன். மெராரியின் புத்திரராகிய
இவர்களுடைய சகோதரர் இடதுபக்கத்திலே
நிற்பார்கள்; அவர்களில் ஏதான் என்பவன்
கிஷியின் குமாரன்; இவன் அப்தியின் குமா
45 ரன்; இவன் மல்லூகின் குமாரன். இவன்
அஸபியாவின் குமாரன்; இவன் அமத்சியா
வின் குமாரன்; இவன் இல்க்கியாவின் குமா
46 ரன். இவன் அம்சியின் குமாரன்; இவன்
பானியின் குமாரன்; இவன் சாமேரின் குமா
47 ரன். இவன் மகேலியின் குமாரன்; இவன்
மூசியின் குமாரன்; இவன் மெராரியின் குமா
48 ரன்; இவன் லேவியின் குமாரன். அவர்கள்
சகோதரராகிய மற்ற லேவியர் தேவனுடைய
ஆலயமாகிய வாசஸ்தலத்தின் பணிவிடைக்
கெல்லாம் வைக்கப்பட்டிருந்தார்கள்.
49 ஆரோனும் அவன் குமாரரும் [1]சர்வாங்க
தகனபலிபீடத்தின்மேல் பலியிட்டுத் தூபங்
காட்டும் பீடத்தின்மேல் தூபங்காட்டி, மகா
பரிசுத்த ஸ்தலத்தின் எல்லா வேலைக்கும்,
தேவனுடைய தாசனாகிய மோசே கற்பித்த
படியெல்லாம் இஸ்ரவேலுக்காகப் பாவநிவிர்
த்தி யுண்டாக்குகிறதற்கும் வைக்கப்பட்டிருந்
50 தார்கள். ஆரோனின் குமாரரில் எலெயாசார்
என்பவனுடைய குமாரன் பினேகாஸ்; இவன்
51 குமாரன் அபிசுவா. இவன் குமாரன் புக்கி;
இவன் குமாரன் ஊசி; இவன் குமாரன்
52 செராகியா. இவன் குமாரன் மெராயோத்;
இவன் குமாரன் அமரியா; இவன் குமாரன்
53 அகித்தூப். இவன் குமாரன் சாதோக்; இவன்
குமாரன் அகிமாஸ்.
54 அவர்கள் பேட்டைகளின்படியே அவர்கள்
எல்லைக்குள்ளான அவர்கள் வாசஸ்தலங்களா
வன: [2]கோகாத்தியரின் வம்சமான ஆரோ
னின் புத்திரருக்கு விழுந்த சீட்டின்படியே,
55 யூதாதேசத்திலிருக்கிற எப்ரோனையும் அதைச்
சுற்றியிருக்கிற வெளிநிலங்களையும் கொடுத்
56 தார்கள். அந்தப் பட்டணத்தின் வயல்களை
யும் அதின் பட்டிகளையும் எப்புன்னேயின்
குமாரனாகிய காலேபுக்குக் கொடுத்தார்கள்.
57 இப்படியே ஆரோனின் புத்திரருக்கு எப்
ரோன் என்னும் அடைக்கலப்பட்டணங்க
ளில் ஒன்றையும், லிப்னாவையும் அதின்
வெளிநிலங்களையும், யாத்தீரையும் எஸ்தெ
மோவாவையும் அவற்றின் வெளிநிலங்களை
58 யும், ஈலேனையும் அதின் வெளிநிலங்களையும்,
தெபீரையும் அதின் வெளிநிலங்களையும்,
59 ஆசானையும் அதின் வெளிநிலங்களையும், பெத்
சேமேசையும் அதின் வெளிநிலங்களையும்,
60 பென்யமீன் கோத்திரத்திலே கேபாவையும்
அதின் வெளிநிலங்களையும், அலெமேத்தை
யும் அதின் வெளிநிலங்களையும், ஆனதோத்
தையும் அதின் வெளிநிலங்களையும் கொடுத்
தார்கள்; இவர்கள் வம்சங்களுக்குக் கொடுத்த
இவர்கள் பட்டணங்களெல்லாம் பதின்
மூன்று. கோகாத்தின் மற்றப் புத்திரருக்கு 61
வேறொரு கோத்திரவம்சத்திலும், பாதிக்கோ
த்திரமாகிய மனாசேயின் பாதியிலும் விழுந்த
சீட்டின்படியே பத்துப் பட்டணங்கள் இருந்
தது. கெர்சோனின் புத்திரருக்கு அவர்கள் 62
வம்சங்களின்படியே, இசக்கார் கோத்திரத்
திலும், ஆசேர் கோத்திரத்திலும், நப்தலி
கோத்திரத்திலும், பாசானிலிருக்கிற மனாசே
கோத்திரத்திலும் பதின்மூன்று பட்டணங்
கள் இருந்தது. மெராரியின் புத்திரருக்கு 63
அவர்கள் வம்சங்களின்படியே, ரூபன் கோத்
திரத்திலும், காத்கோத்திரத்திலும், செபு
லோன் கோத்திரத்திலும் விழுந்த சீட்டின்
படி பன்னிரண்டு பட்டணங்கள் இருந்தது.
அப்படியே இஸ்ரவேல் புத்திரர் லேவியருக் 64
குக் கொடுத்த பட்டணங்களும் அவைகளின்
வெளிநிலங்களும் என்னவென்றால், சீட்டுப் 65
போட்டு, சிலருக்கு யூதா புத்திரரின் கோத்
திரத்திலும், சிமியோன் புத்திரரின் கோத்
திரத்திலும், பென்யமீன் புத்திரரின் கோத்தி
ரத்திலும், பேர்பேராகச் சொல்லப்பட்ட அந்
தப் பட்டணங்களைக் கொடுத்தார்கள். கோகாத் 66
புத்திரரில் மற்ற வம்சங்களுக்கு அவர்கள்
எல்லையான பட்டணங்கள் அவர்களுக்கு எப்
பிராயீம் கோத்திரத்திலே இருந்தது. எவை 67
யெனில், அடைக்கலப்பட்டணங்களில் அவர்
களுக்கு எப்பிராயீம் மலைத்தேசத்திலிருக்கிற
சீகேமையும் அதின் வெளிநிலங்களையும், கே
சேரையும் அதின் வெளிநிலங்களையும், யோக் 68
மெயாமையும் அதின் வெளிநிலங்களையும்,
பேத் ஓரோனையும் அதின் வெளிநிலங்களையும்,
ஆயலோனையும் அதின் வெளிநிலங்களையும், 69
காத்ரிம்மோனையும் அதின் வெளிநிலங்களை
யும், மனாசேயின் பாதிக்கோத்திரத்திலே 70
ஆனேரையும் அதின் வெளிநிலங்களையும்,
பீலியாமையும் அதின் வெளிநிலங்களையும்
கொடுத்தார்கள்; இவைகள் காகாத் புத்திரரி
லுள்ள மற்ற வம்சங்களுக்கு இருந்தது. கெர் 71
சோன் புத்திரருக்கு மனாசேயின் பாதிக்கோத்
திர வம்சத்திலே பாசானிலிருக்கிற கோலா
னும் அதின் வெளிநிலங்களும், அஸ்தரோத்
தும் அதின் வெளிநிலங்களும், இசக்கார் 72
கோத்திரத்திலே கேதேசும் அதின் வெளி
நிலங்களும், தாபிராத்தும் அதின் வெளிநிலங்
களும், ராமோத்தும் அதின் வெளிநிலங்க 73
ளும், ஆனேமும் அதின் வெளிநிலங்களும்,
ஆசேர் கோத்திரத்திலே மாஷாலும் அதின் 74
வெளிநிலங்களும், அப்தோனும் அதின் வெளி
நிலங்களும், உக்கோக்கும் அதின் வெளி 75
நிலங்களும், ரேகோபும் அதின் வெளிநிலங்
களும், நப்தலி கோத்திரத்திலே கலிலேயா 76
விலிருக்கிற கேதேசும் அதின் வெளிநிலங்
களும், அம்மோனும் அதின் வெளிநிலங்க
ளும், கீரியாத்தாயிமும் அதின் வெளிநிலங்க
ளும் இருந்தது. மெராரியின் மற்றப் புத்திர 77

[1] யாத். 30. 7. லேவி. 1. 9
[2] யோசு. 21. அதி. காண்க

ருக்கு செபுலோன் கோத்திரத்திலே ரிம்மோ
னும் அதின் வெளிநிலங்களும், தாபோரும்
78 அதின் வெளிநிலங்களும், எரிகோவுக்கு
அப்புறமாயிருக்கிற யோர்தானுக்கு அப்பாலே
யோர்தானுக்குக் கிழக்கே இருக்கிற ரூபன்
கோத்திரத்திலே வனாந்தரத்திலுள்ள பேசே
ரும் அதின் வெளிநிலங்களும், யாத்சாவும்
79 அதின் வெளிநிலங்களும், கேதேமோத்தும்
அதின் வெளிநிலங்களும், மேபாத்தும்
80 அதின் வெளிநிலங்களும், காத் கோத்திரத்
திலே கீலேயாத்திலுள்ள ராமோத்தும் அதின்
வெளிநிலங்களும், மக்னாயீமும் அதின் வெளி
81 நிலங்களும், எஸ்போனும் அதின் வெளி
நிலங்களும், யாசேரும் அதின் வெளிநிலங்க
ளும் இருந்தது.

7 இசக்காருடைய குமாரர், [1]தோலா, பூவா,
2 யசுப், சிம்ரோன் என்னும் நாலுபேர். தோ
லாவின் குமாரர், ஊசி, ரெப்பாயா, யெரி
யேல், யக்மாயி, இப்சாம், சாமுவேல் என்
பவர்கள்; தோலாவுக்குப் பிறந்த இவர்கள்
தங்கள் பிதாக்கள் வம்சத்தலைவரும் தங்கள்
சந்ததிகளிலே பராக்கிரமசாலிகளுமா யிருந்
தார்கள்; தாவீதின் நாட்களில் அவர்கள்
தொகை [2]இருபத்தீராயிரத்து அறுநூறுபேரா
3 யிருந்தது. ஊசியின் குமாரரில் ஒருவன்
இஸ்ரகியா; இஸ்ரகியாவின் குமாரர், மிகா
யேல், ஒபதியா, யோவேல், இஷியா என்
பவர்கள்; இவர்கள் ஐந்துபேரும் தலைவராயி
4 ருந்தார்கள். அவர்கள் பிதாக்கள் வம்சத்தா
ரான அவர்கள் சந்ததிகளில் யுத்த மனுஷரான
கூட்டங்கள் முப்பத்தாறாயிரம்பேர் அவர்க
ளோடிருந்தார்கள்; அவர்களுக்கு அநேகம்
பெண்ஜாதிகளும் பிள்ளைகளும் இருந்தார்கள்.
5 இசக்காருடைய மற்ற எல்லா வம்சங்களிலும்
அவர்களுக்குச் சகோதரரான பராக்கிரமசாலி
கள் தங்கள் வம்ச அட்டவணைகளின்படியெல்
லாம் எண்பத்தேழாயிரம் பேராயிருந்தார்கள்.
6 பென்யமீன் குமாரர், [3]பேலா, பெகேர்,
7 யெதியாயேல் என்னும் மூன்றுபேர். பேலா
வின் குமாரர், எஸ்போன், ஊசி, ஊசியேல்,
யெரிமோத், இரி என்பவர்கள்; இவர்கள் தங்
கள் பிதாக்களின் வம்சத்தில் பராக்கிரமசாலி
களான ஐந்து தலைவராயிருந்தார்கள்; இவர்
கள் வம்ச அட்டவணைக்குள்ளானவர்கள் இரு
8 பத்தீராயிரத்து முப்பத்துநாலுபேர். பெகே
ரின் குமாரர், செமிரா, யோவாஸ், எலியே
சர், எலியோனாய், உம்ரி, யெரிமோத், அபியா,
ஆனதோத், அலமேத் என்பவர்கள்; இவர்
9 கள் எல்லாரும் பெகேரின் குமாரர். தங்கள்
பிதாக்களின் வம்சத் தலைவராகிய அவர்கள்
சந்ததிகளின் அட்டவணைக்குள்ளான பராக்
கிரமசாலிகள் இருபதினாயிரத்து இருநூறு
10 பேர். யெதியாயேலின் குமாரரில் ஒருவன்
பில்கான்; பில்கானின் குமாரர், எயூஷ், பென்
யமீன், எகூத், கெனானா, சேத்தான், தர்ஷீஸ்,
11 அகிஷாகார் என்பவர்கள். யெதியாயேலின்
குமாரராகிய இவர்கள் எல்லாரும் தங்கள் பிதா
க்கள் வம்சத்தாரில் தலைவராயிருந்தார்கள்;
இவர்களில் யுத்தத்திற்குப் போகத்தக்க சேவ
கரான பராக்கிரமசாலிகள் பதினேழாயிரத்து
இருநூறுபேர். சுப்பீமும் உப்பீமும் [4]ஈரின் 12
குமாரர், ஊசிம், ஆசேரின் குமாரரில் ஒரு
வன்.

நப்தலியின் குமாரரான பில்காளின் பேரன் 13
மார், யாத்சியேல், கூனி, எத்சேர், [5]சல்லூம்
என்பவர்கள்.

மனாசேயின் புத்திரரில் ஒருவன் குலஸ்திரீ 14
யினிடத்தில் பிறந்த அஸ்ரியேல்; அவன் மறு
மனையாட்டியாகிய அராமிய ஸ்திரீயினிடத்
தில் கீலேயாத்தின் தகப்பனாகிய மாகீர் பிறந்
தான். மாகீர் மாக்காள் என்னும் பேருள்ள 15
உப்பீம் சுப்பீம் என்பவர்களின் சகோதரியை
விவாகம்பண்ணினான்; மனாசேயின் இரண்
டாம் குமாரன் செலோப்பியாத்; செலோப்பி
யாத்திற்குக் குமாரத்திகள் இருந்தார்கள். மாகீ 16
ரின் பெண்ஜாதியாகிய மாக்காள் ஒரு குமார
னைப் பெற்று, அவனுக்குப் பேரேஸ் என்று
பேரிட்டாள்; இவன் சகோதரன் பேர் சே
ரேஸ்; இவனுடைய குமாரர் ஊலாம், ரேகேம்
என்பவர்கள். ஊலாமின் குமாரரில் ஒருவன் 17
[6]பேதான்; இவர்கள் மனாசேயின் குமாரனாகிய
மாகீருக்குப் பிறந்த கீலேயாத் புத்திரர். இவன் 18
சகோதரியாகிய அம்மொளேகேத் இஸ்கோ
தையும் [7]அபியேசேரையும் மாகலாவையும் பெற்
றாள். செமிதாவின் குமாரர், அகியான், சே 19
கேம், லிக்கே, அனியாம் என்பவர்கள்.

எப்பிராயீமின் [8]குமாரரில் ஒருவன் சுத்தெ 20
லாக்; இவனுடைய குமாரன் பேரேத்; இவ
னுடைய குமாரன் தாகாத்; இவனுடைய குமா
ரன் எலாதா; இவனுடைய குமாரன் தாகாத்.
இவனுடைய குமாரன் சாபாத்; இவனுடைய 21
குமாரர் சுத்தெலாக், எத்சேர், எலியாத்; இவர்
கள் தேசத்தில் பிறந்த காத்தூராருடைய ஆடு
மாடுகளைப் பிடிக்கப்போனபடியால் அவர்கள்
இவர்களைக் கொன்றுபோட்டார்கள். அவர் 22
கள் தகப்பனாகிய எப்பிராயீம் அநேகநாள் துக்
கங்கொண்டாடுகையில், அவன் சகோதரர் அவ
னுக்கு ஆறுதல் சொல்லவந்தார்கள். பின்பு 23
அவன் தன் பெண்ஜாதியினிடத்தில் பிரவே
சித்ததினால், அவள் கர்ப்பந்தரித்து ஒரு குமா
ரனைப் பெற்றாள்; அவன், தன் குடும்பத்துக்
குத் தீங்கு உண்டானதினால், இவனுக்குப்
பெரீயா என்று பேரிட்டான். இவனுடைய 24
குமாரத்தியாகிய சேராள் கீழ்ப்புறமும் மேற்
புறமுமான பெத்தோரோனையும், ஊசேன்
சேராவையும் கட்டினவள். அவனுடைய 25
குமாரர், ரேப்பாக், ரேசேப் என்பவர்கள்;
இவனுடைய குமாரன் தேலாக்; இவனுடைய
குமாரன் தாகான். இவனுடைய குமாரன் 26
லாதான்; இவனுடைய குமாரன் அம்மியூத்;
இவனுடைய குமாரன் எலிஷாமா. இவனு 27
டைய குமாரன் நூன்; [9]இவனுடைய குமா
ரன் யோசுவா. அவர்களுடைய காணியாட் 28
சியும், வாசஸ்தலங்களும், கிழக்கேயிருக்கிற

[1] ஆதி. 46. 13. எண். 26. 23
[2] 2 சாமு. 24. 1
[3] ஆதி. 46. 21. எண். 26. 38
[4] எண். 26. 39
[5] ஆதி. 46. 24
[6] 1 சாமு. 12. 11
[7] எண். 26. 30
[8] எண். 26. 35
[9] எண். 13. 8, 16

[1]நாரானும், மேற்கேயிருக்கிற கேசேரும் அ
தின் கிராமங்களும், பெத்தேலும் அதின் கிரா
மங்களும், சீகேமும் அதின் கிராமங்களும்,
காசாமட்டுக்குமுள்ள அதின் கிராமங்களும்.
29 மனாசே புத்திரரின் பக்கத்திலே பெத்செயா
னும் அதின் கிராமங்களும், [2]தானாகும் அதின்
கிராமங்களும், மெகிதோவும் அதின் கிராமங்க
ளும், தோரும் அதின் கிராமங்களுமே; இவ்
விடங்களில் இஸ்ரவேலின் குமாரனாகிய யோ
சேப்பின் புத்திரர் குடியிருந்தார்கள்.
30 ஆசேரின் [3]குமாரர், இம்னா, இஸ்வா,
இஸ்வி, பெரீயா என்பவர்கள்; இவர்கள் சகோ
31 தரி சேராள். பெரீயாவின் குமாரர், ஏபேர்,
மல்கியேல் என்பவர்கள்; இவன் பிர்சாவீத்
32 தின் தகப்பன். ஏபேர் யப்லேத்தையும், சோ
மேரையும், ஒத்தாமையும், இவர்கள் சகோதரி
33 யாகிய சூகாளையும் பெற்றான். யப்லேத்தின்
குமாரர், பாசாக், பிம்மால், அஸ்வாத் என்ப
வர்கள்; இவர்களே யப்லேத்தின் குமாரர்.
34 சோமேரின் குமாரர் அகி, ரோகா, எகூபா,
35 ஆராம் என்பவர்கள். அவன் சகோதரனாகிய
ஏலேமின் குமாரர், சோபாக், இம்னா, சேலேஸ்,
36 ஆமால் என்பவர்கள். சோபாக்கின் குமாரர்,
சூவாக், அர்னெப்பர், சூகால், பேரி, இம்ரா,
37 பேசேர், ஒத், சம்மா, சில்சா, இத்ரான், பேரா
38 என்பவர்கள். யெத்தேரின் குமாரர், எப்பு
39 னே, பிஸ்பா, ஆரா என்பவர்கள். உல்லா
வின் குமாரர், ஆராக், அன்னியேல், ரித்சியா
40 என்பவர்கள். ஆசேரின் புத்திரராகிய இவர்
கள் எல்லாரும் தங்கள் பிதாக்களின் வம்சத்
தலைவரும் தெரிந்துகொள்ளப்பட்ட பராக்கிர
மசாலிகளும், பிரபுக்களின் தலைவருமாயிருந்
தார்கள்; அவர்கள் வம்ச அட்டவணைகளில்
யுத்தத்திற்குப் போகத்தக்க சேவகரின் இலக்
கம் இருபத்தாறாயிரம்பேர்.

8 பென்யமீன், [4]பேலா என்னும் தன் மூத்த
குமாரனையும், அஸ்பால் என்னும் இரண்டாம்
குமாரனையும், அகராக் என்னும் மூன்றாம்
2 குமாரனையும், நோகா என்னும் நாலாம் குமா
ரனையும், ரப்பா என்னும் ஐந்தாம் குமாரனை
3 யும் பெற்றான். பேலாவுக்கு இருந்த குமாரர்,
4 ஆதார், கேரா, அபியூத் என்பவர்கள். அபி
5 சுவா, நாமான், அகோவா, கேரா, செப்புப்
பான், ஊராம் என்பவர்கள் எகூதின் குமாரர்.
6 கேபாவின் குடிகளுக்கு மூப்பான தலைவரா
யிருந்து, இவர்களை மனாகாத்திற்கு அழைத்
துக்கொண்டுபோனவர்கள், நாமான், அகியா,
7 கேரா என்பவர்களே. கேரா அவர்களை அங்
கே அழைத்துக்கொண்டு போனபின்பு, ஊசா
8 வையும் அகியூதையும் பெற்றான். அவர்களை
அனுப்பிவிட்டபின், சகராயீம் மோவாப் தே
சத்திலே ஊசிம் பாராள் என்னும் தன் பெண்
ஜாதிகளிடத்திலே பெற்ற பிள்ளைகளைத் தவிர,
9 தன் பெண்ஜாதியாகிய ஓதேசாலே யோவா
பையும், சீபீயாவையும், மேசாவையும், மல்கா
10 மையும், எயூசையும், சாகியாவையும், மிர்மாவை
யும் பெற்றான்; பிதாக்களின் தலைவரான இவர்
கள் அவனுடைய குமாரர். ஊசிம் வழியாய் 11
அவன் அபித்தூபையும் எல்பாலையும் பெற்றான்.
எல்பாலின் குமாரர், ஏபேர், மீஷாம், சாமேத்; 12
இவன் ஓனோவையும் லோதையும் அதின் கிரா
மங்களையும் உண்டாக்கினவன். பெரீயாவும் 13
சேமாவும் ஆயலோன் குடிகளுடைய பிதாக்க
ளிலே தலைவராயிருந்தார்கள்; இவர்கள் காத்
தின் குடிகளை ஓட்டிவிட்டார்கள். அகியோ, 14
சாஷாக், எரேமோத், செபதியா, ஆராத், 15
ஆதேர், மிகாயேல், இஸ்பா, யோகா என்ப 16
வர்கள் பெரீயாவின் குமாரர். செபதியா, மெ 17
சுல்லாம், இஸ்கி, ஏபேர், இஸ்மெராயி, இஸ்லி 18
யா, யோபாப் என்பவர்கள் எல்பாலின் குமா
ரர். யாக்கிம், சிக்ரி, சப்தி, எலியேனாய், 19, 20
சில்தாய், எலியேல், அதாயா, பெராயா, சிம் 21
ராத் என்பவர்கள் சிமியின் குமாரர், இஸ் 22
பான், ஏபேர், எலியேல், அப்தோன், சிக்ரி, 23
ஆனான், அனனியா, ஏலாம், அந்தோதியா, 24
இபிதியா, பெனூயேல் என்பவர்கள் சாஷாக் 25
கின் குமாரர். சம்சேராய், செகரியா, அத்தா 26
லியா, யரெஷியா, எலியா, சிக்ரி என்பவர் 27
கள் எரோகாமின் குமாரர். இவர்கள் தங்கள் 28
சந்ததிகளின் பிதாக்களிலே தலைவராயிருந்து,
எருசலேமிலே குடியிருந்தார்கள். கிபியோ 29
னிலே குடியிருந்தவன், கிபியோனின் மூப்
பன்; அவன் பெண்ஜாதியின் பேர் மாக்காள்.
அவன் மூத்த குமாரன் அப்தோன் என்பவன்; 30
மற்றவர்கள் சூர், கீஸ், பாகால், நாதாப், கே 31
தோர், அகியோ, சேகேர் என்பவர்கள். மிக் 32
லோத் சிமியாவைப் பெற்றான்; இவர்களும்
தங்கள் சகோதரரோடுங்கூட எருசலேமிலே
தங்கள் சகோதரருக்குச் சமீபத்தில் குடியிருந்
தார்கள். நேர் கீசைப் பெற்றான்; கீஸ் சவுலைப் 33
பெற்றான்; சவுல் யோனத்தானையும், மல்
கிசூவாவையும், [5]அபினதாபையும், *எஸ்பாலை
யும் பெற்றான். யோனத்தானின் குமாரன் 34
†மேரிபால்; மேரிபால் மீகாவைப் பெற்
றான். மீகாவின் குமாரர், பித்தோன், மே 35
லேக், தரேயா, ஆகாஸ் என்பவர்கள். ஆகாஸ் 36
யோகதாவைப் பெற்றான்; யோகதா அலமேத்
தையும், அஸ்மாவேத்தையும், சிம்ரியையும்
பெற்றான்; சிம்ரி மோசாவைப் பெற்றான்.
மோசா பினியாவைப் பெற்றான்; இவன் குமா 37
ரன் ரப்பா; இவன் குமாரன் எலியாசா; இவன்
குமாரன் ஆத்சேல். ஆத்சேலுக்கு ஆறு குமா 38
ரர் இருந்தார்கள்; அவர்கள் நாமங்களாவன,
அஸ்ரீக்காம், பொக்குரு, இஸ்மவேல், செகரி
யா, ஒபதியா, ஆனான்; இவர்கள் எல்லாரும்
ஆத்சேலின் குமாரர். அவன் சகோதரனாகிய 39
எசேக்கின் குமாரர்; ஊலாம் என்னும் மூத்த
குமாரனும், எகூஸ் என்னும் இரண்டாம்
குமாரனும், எலிபேலேத் என்னும் மூன்றாம்
குமாரனுமே. ஊலாமின் குமாரர் பராக்கிரம 40
சாலிகளான வில்வீரராய் இருந்தார்கள்; அவர்
களுக்கு அநேகம் புத்திரர் பௌத்திரர் இருந்
தார்கள்; அவர்கள் தொகை நூற்றைம்பதுபேர்;
இவர்கள் எல்லாரும் பென்யமீன் புத்திரர்.

[1] யோசு. 16. 7
[2] யோசு. 17. 7, 11
[3] ஆதி. 46. 17
[4] ஆதி. 46. 21. எண். 26. 38
[5] 1 சாமு. 14. 49
* இஸ்போசேத். 2 சாமு. 2. 8
† மேவிபோசேத். 2 சாமு. 4. 4

9 இஸ்ரவேலர் எல்லாரும் [1]தங்கள் வம்ச வர
லாற்றின்படி எண்ணப்பட்டார்கள்; இவர்கள்
நாமங்கள் இஸ்ரவேல் ராஜாக்களின் புஸ்த
கத்தில் எழுதியிருக்கிறது, யூதா கோத்திரத்தார்
தங்கள் துரோகத்தினிமித்தம், பாபிலோனுக்
குச் சிறைபிடித்துக் கொண்டுபோகப்பட்டார்
2 கள். தங்கள் காணியாட்சியிலும் தங்கள் பட்
டணங்களிலும் முன் குடியிருந்தவர்கள் [2]இஸ்
ரவேலரும் ஆசாரியரும் லேவியரும் [3]நிதினி
3 மியருமே. யூதா புத்திரரிலும், பென்யமீன்
புத்திரரிலும், எப்பிராயீம் மனாசே என்பவர்
களின் புத்திரரிலும், எருசலேமில் [4]குடியிருந்
4 தவர்கள் யாரென்றால், யூதாவின் புத்திரனா
கிய பேரேசின் சந்ததியில் பானியின் குமார
னாகிய இம்ரியின் மகனான உம்ரிக்குப் பிறந்த
5 அம்மியூதின் குமாரன் ஊத்தாய். சேலாவின்
சந்ததியில் மூத்தவனாகிய அசாயாவும், அவன்
6 பிள்ளைகளும், சேராவின் சந்ததியில் யெகு
வேலும், அவன் சகோதரராகிய அறுநூற்றுத்
7 தொண்ணூறுபேருமே. பென்யமீன் புத்திர
ரில் அசெனூவாவின் குமாரனாகிய ஓதாவியா
வுக்குப் பிறந்த மெசுல்லாமின் மகன் சல்லூ.
8 எரோகாமின் குமாரன் இப்னெயா; மிக்கிரி
யின் குமாரனாகிய ஊசியின் மகன் ஏலா; இப்
னியாவின் குமாரனாகிய ரேகுவேலுக்குப் பிற
ந்த செபதியாவின் மகன் மெசுல்லாம் என்ப
9 வர்களும்; தங்கள் சந்ததிகளின்படி இருந்த
இவர்கள் சகோதரராகிய தொளாயிரத்து ஐம்
பத்தாறுபேருமே; இந்த மனுஷர் எல்லாரும்,
தங்கள் பிதாக்களின் வம்சத்திலே பிதாக்களின்
தலைவராயிருந்தார்கள்.
10 ஆசாரியர்களில் [5]யெதாயா, யோயாரீப், யா
11 கின். அகிதூபின் குமாரனாகிய மெராயோ
தின் மகன் சாதோக்குக்குப் பிறந்த மெசுல்லா
வின் குமாரனாகிய இல்க்கியாவின் மகன்
[*]அசரியா என்பவன் தேவாலயத்து விசார
12 ணைக் கர்த்தன். மல்கியாவின் குமாரனாகிய
பஸ்கூருக்குப் பிறந்த எரோகாமின் மகன்
அதாயா; இம்மெரின் குமாரனாகிய மெசில்லே
மித்தின் மகன் மெசுல்லாமுக்குப் பிறந்த யா
செராவின் குமாரனாகிய ஆதியேலின் மகன்
13 மாசாய் என்பவர்களும், அவர்கள் சகோதர
ரும், தங்கள் பிதாக்களின் வம்சத் தலைவரான
ஆயிரத்து எழுநூற்று அறுபதுபேர் தேவால
யத்துக்கடுத்த பணிவிடைக்குத் திறமையுள்ள
14 வர்களாயிருந்தார்கள். லேவியரில் மெராரி
யின் சந்ததியான அசபியாவின் குமாரனாகிய
அஸ்ரீகாமுக்குப் பிறந்த அசூபின் மகன் செ
15 மாயா, பக்பக்கார், ஏரேஸ், காலால், ஆசா
பின் குமாரனாகிய சிக்ரிக்குப் பிறந்த மிகா
16 வின் மகன் மத்தனியா, எதுத்தூனின் குமா
ரனாகிய காலாலுக்குப் பிறந்த செமாயாவின்
மகன் ஒபதியா; நெத்தோபாத்தியரின் கிராமங்
களில் குடியிருந்த எல்க்கானாவின் குமாரனா
17 கிய ஆசாவின் மகன் பெரகியா, வாசல்காவ
லாளிகளாகிய சல்லூம், அக்கூப், தல்மோன்,
அகிமான் என்பவர்களும், இவர்கள் சகோதர
ருமே; இவர்கள் தலைவன் சல்லூம். லேவி 18
புத்திரரின் சேனைகளில் இவர்கள் கிழக்கே
யிருக்கிற ராஜாவின் வாசலைக் காவல் காத்து
வந்தார்கள். கோராகின் குமாரனாகிய எபி 19
யாசாபுக்குப் பிறந்த கோரேயின் மகன் சல்
லூமும், அவன் பிதாவின் வம்சத்தாராகிய
அவனுடைய சகோதரருமான கோராகியர்
பணிவிடை வேலையை விசாரித்து, அவர்கள்
பிதாக்கள் கர்த்தருடைய பாளயத்திலே வா
சஸ்தலத்திற்குப் போகிற வழியைக் காவல்
காத்ததுபோல, வாசஸ்தலத்து வாசல்களைக்
காத்துவந்தார்கள். எலெயாசாரின் குமாரனா 20
கிய [6]பினெகாசுடனே கர்த்தர் இருந்தபடியி
னால், அவன் முற்காலத்திலே அவர்கள்மேல்
விசாரணைக்காரனாயிருந்தான். மெசெல்மியா 21
வின் குமாரனாகிய சகரியா ஆசரிப்புக் கூடார
வாசல் காவல்காரனாயிருந்தான். வாசல்க 22
ளைக் காக்கிறதற்குத் தெரிந்துகொள்ளப்பட்ட
இவர்களெல்லாரும் இருநூற்றுப் பன்னிரண்
டுபேராயிருந்து, தங்கள் கிராமங்களின்படியே
தங்கள் வம்சத்து அட்டவணைகளில் எழுதப்
பட்டார்கள்; தாவீதும், [7]ஞானதிருஷ்டிக்கார
னாகிய சாமுவேலும், அவர்களைத் தங்கள்
வேலைகளில் வைத்தார்கள். அப்படியே அவர் 23
களும், அவர்கள் குமாரரும் கர்த்தருடைய
ஆலயமாகிய வாசஸ்தலத்து வாசல்களைக் காக்
கிறவர்களை முறைமுறையாய் விசாரித்து வந்
தார்கள். வாசல்களைக் காக்கிறவர்கள் நாலு 24
திசைகளாகிய கிழக்கிலும் மேற்கிலும் வடக்கி
லும் தெற்கிலும் இருந்தார்கள். அவர்கள் 25
சகோதரர் தங்கள் கிராமங்களிலிருந்து ஏழு
நாளுக்கு ஒருவிசை [8]மாறிமாறி அவர்களோ
டிருக்க வருவார்கள். தேவாலயத்தின் பண் 26
டகசாலைகள்மேலும் பொக்கிஷசாலைகள்மேலு
முள்ள விசாரணை உத்தியோகம் லேவியரான
அந்த நாலு பிரதான காவலாளர் வசத்தில் ஒப்பு
விக்கப்பட்டது. காவல் அவர்களுக்கு ஒப்பு 27
வித்திருந்தபடியால் அவர்கள் தேவாலயத்தைச்
சுற்றிலும் இராத்தங்கியிருந்து, காலமே கதவு
களைத் திறந்துவிடுவார்கள். அவர்களில் சில 28
ரிடத்தில் ஆராதனை பணிமுட்டுகள் ஒப்புவித்
திருந்தது; அவர்கள் அவைகளை எண்ணி உள்
ளே கொண்டுபோய், எண்ணி வெளியே
கொண்டுவருவார்கள். அவர்களில் சிலர் மற் 29
றப் பணிமுட்டுகளின்மேலும், பரிசுத்த பாத்
திரங்கள் எல்லாவற்றின்மேலும், மெல்லிய
மா, திராட்சரசம், எண்ணெய், சாம்பிராணி,
சுகந்தவர்க்கங்களின்மேலும் விசாரணைக்கா
ராயிருந்தார்கள். ஆசாரியரின் குமாரரில் சிலர் 30
சுகந்தவர்க்கத்தால் பரிமளதைலம் [9]இறக்குவார்
கள். லேவியரில் கோராகியனான சல்லூமின் 31
மூத்த குமாரனாகிய மத்தித்தியாவுக்குப் பலகா
ரம் [10]சுடுகிற வேலையின் விசாரிப்பு ஒப்புவித்
திருந்தது. அவர்கள் சகோதரராகிய கோகாத் 32
தியரின் புத்திரரில் சிலருக்கு ஓய்வுநாள்தோ
றும் சமுகத்து அப்பங்களை [11]ஆயத்தப்படுத்தும்
விசாரிப்பு இருந்தது. இவர்களில் லேவிய 33

1 எஸ்றா 2. 59
2 எஸ்றா 2. 70. நெகே. 7. 73
3 யோசு. 9. 27
4 நெகே. 11. 1
5 நெகே. 11. 10. ஷ
* செராயா, நெகே. 11. 11
6 எண். 31. 6
7 26. 1,2. 1சாமு. 9. 9
8 2 இரா. 11. 5
9 யாத். 30. 23, 25
10 லேவி. 2. 5, 6, 21
11 லேவி. 24. 8

ருடைய பிதாக்களின் தலைவராகிய சங்கீதக்
காரர் [1]இரவும் பகலும் தங்கள் வேலையை நடத்
தவேண்டியிருந்தபடியால், மற்ற வேலைக்கு
நீங்கலாய்த் தங்கள் அறைகளில் இருந்தார்கள்.
34 லேவியரில் பிதாக்களின் தலைவராகிய இவர்
கள் தங்கள் சந்ததிகளுக்குத் தலைமையானவர்
கள்; இவர்கள் எருசலேமிலே குடியிருந்தார்
கள்.
35 கிபியோனிலே குடியிருந்தவர்கள் யாரென்
றால், கிபியோனின் மூப்பனாகிய யெகியேல்,
36 இவன் பெண்ஜாதியின் பேர் [2]மாக்காள். அ
வன் மூத்த குமாரனாகிய அப்தோனும், சூர்,
37 கீஸ், பாகால், நேர், நாதாப், கேதோர், அகி
யோ, சகரியா, மிக்லோத் என்பவர்களுமே.
38 மிக்லோத் சிமியாமைப் பெற்றான்; இவர்களும்
தங்கள் சகோதரரோடுங்கூட எருசலேமிலிருக்
கிற தங்கள் சகோதரருக்குச் சமீபத்தில் குடியி
39 ருந்தார்கள். நேர் கீசைப் பெற்றான்; [3]கீஸ் சவு
லைப் பெற்றான்; சவுல் யோனத்தானையும்,
மல்கிசூவாவையும், அபினதாபையும், எஸ்பா
40 லையும் பெற்றான். யோனத்தானின் குமாரன்
மெரிபால்; மெரிபால் மீகாவைப் பெற்றான்.
41 மீகாவின் குமாரர், பித்தோன், மேலேக்,
42 தரேயா, [4]ஆகாஸ் என்பவர்கள். ஆகாஸ்
யாராகைப் பெற்றான்; யாராக் அலெமேத்தை
யும், அஸ்மவேத்தையும், சிம்ரியையும் பெற்
43 றான்; சிம்ரி மோசாவைப் பெற்றான். மோ
சா பினியாவைப் பெற்றான்; இவன் குமா
ரன் ரப்பாயா; இவன் குமாரன் எலியாசா;
44 இவன் குமாரன் ஆத்சேல். ஆத்சேலுக்கு
ஆறு குமாரர் இருந்தார்கள்; அவர்கள் நாமங்க
ளாவன, அசரீக்காம், பொக்குரு, இஸ்மவேல்,
சேராயா, ஒபதியா, ஆனான்; இவர்கள் ஆத்
சேலின் குமாரர்.

10 பெலிஸ்தர் இஸ்ரவேலரோடே யுத்தம்
பண்ணினார்கள்; [5]இஸ்ரவேல் பெலிஸ்தரு
க்கு முன்பாக முறிந்தோடி, கில்போவா மலை
2 யிலே வெட்டுண்டு விழுந்தார்கள். பெலிஸ்
தர் சவுலையும் அவன் குமாரரையும் நெருங்கித்
தொடர்ந்து, சவுலின் குமாரராகிய யோனத்
தானையும் *அபினதாபையும் மல்கிசூவாவை
3 யும் வெட்டிப் போட்டார்கள். சவுலுக்கு
விரோதமாய் யுத்தம் பலத்தது, வில்வீரர் அவ
னைக் கண்டு நெருங்கினார்கள்; அப்பொழுது
4 சவுல் வில்வீரருக்கு மிகவும் பயப்பட்டு, தன்
ஆயுததாரியை நோக்கி: அந்த விருத்தசேத
னம் இல்லாதவர்கள் வந்து என்னை அவமா
னப்படுத்தாதபடிக்கு, நீ உன் பட்டயத்தை
உருவி, என்னைக் குத்திப்போடு என்றான்;
அவனுடைய ஆயுததாரி மிகவும் பயப்பட்டதி
னால் அப்படிச் செய்யமாட்டேன் என்றான்.
அப்பொழுது சவுல் பட்டயத்தை நட்டு அதின்
5 மேல் விழுந்தான். சவுல் செத்துப்போனதை
அவன் ஆயுததாரி கண்டபோது, அவனும்
பட்டயத்தின்மேல் விழுந்து செத்துப்போ
6 னான். அப்படியே சவுலும், அவன் மூன்று
குமாரரும், அவன் வீட்டு மனுஷர் அனைவரும்

[1] 16. 31
[2] 8. 29
[3] 8. 33
[4] 8. 35
[5] 1 சாமு. 31. 1, 2
* இஷ்வி. 1 சாமு. 14. 49
[6] 1 சாமு. 31. 10
[7] 1 சாமு. 13. 13: 15. 23: 28. 7
[8] 1 சாமு. 16. 1, 13. 2 சாமு. 3. 9, 10: 5. 3
[9] 2 சாமு. 5. 1
[10] சங். 78. 71. எரே. 3. 15
[11] 1 சாமு. 16. 1, 12
[12] நியா. 1. 21: 19. 10. 2 சாமு. 5. 6

கூடச் செத்துப்போனார்கள். ஜனங்கள் முறிந் 7
தோடினதையும், சவுலும் அவன் குமாரரும்
செத்துப்போனதையும், பள்ளத்தாக்கிலுள்ள
இஸ்ரவேலர் எல்லாரும் கண்டபோது தங்
கள் பட்டணங்களைவிட்டு ஓடிப்போனார்கள்;
அப்பொழுது பெலிஸ்தர் வந்து, அவைகளில்
குடியிருந்தார்கள்.
வெட்டுண்டவர்களின் வஸ்திரங்களை உரிக் 8
துகொள்ளப் பெலிஸ்தர் மறுநாளில் வந்தபோ
து, அவர்கள் சவுலையும் அவன் குமாரரையும் கில்
போவா மலையிலே விழுந்துகிடக்கக் கண்டு,
அவன் வஸ்திரங்களை உரிந்து, அவன் தலை 9
யையும் அவன் ஆயுதங்களையும் எடுத்துக்கொ
ண்டு, தங்கள் விக்கிரகங்களுக்கும் ஜனங்களுக்
கும் அதைப் பிரசித்தப்படுத்தும்படி பெலிஸ்த
ருடைய தேசத்திலே சுற்றிலும் செய்தி அனுப்
பி, அவன் ஆயுதங்களைத் தங்கள் தேவர்களின் 10
கோவிலிலே வைத்து, [6]அவன் தலையைத் தா
கோன் கோவிலிலே தூக்கிவைத்தார்கள்.
பெலிஸ்தர் சவுலுக்குச் செய்த எல்லாவற்றை 11
யும் கீலேயாத்தேசத்து யாபேஸ் பட்டணத்
தார் யாவரும் கேட்டபோது, பராக்கிரமசா 12
லிகள் எல்லாரும் எழுந்துபோய், சவுலின்
உடலையும் அவன் குமாரரின் உடல்களையும்
எடுத்து, யாபேசுக்குக் கொண்டுவந்து, அவர்
கள் எலும்புகளை யாபேசிலிருக்கிற ஒரு கர்வா
லி மரத்தின்கீழ் அடக்கம்பண்ணி, ஏழுநாள்
உபவாசம் பண்ணினார்கள். அப்படியே சவுல் 13
**கர்த்தருடைய** வார்த்தையைக் கைக்கொள்ளா
மல் **கர்த்தருக்குச்** செய்த தன் துரோகத்தினி
மித்தமும், அவன் **கர்த்தரைத்** தேடாமல் அஞ்
சனம் பார்க்கிறவர்களைக் கேட்கும்படிக்குத்
தேடினதினிமித்தமும் [7]செத்துப்போனான்.
அதற்காக அவர் அவனைக் கொன்று, ராஜ்ய 14
பாரத்தை ஈசாயின் குமாரனாகிய தாவீது [8]வச
மாகத் திருப்பினார்.

இஸ்ரவேலர் எல்லாரும் எப்ரோனிலிருக் 11
கிற தாவீதினிடத்தில் கூடிவந்து: [9]இதோ,
நாங்கள் உம்முடைய எலும்பும் உம்முடைய
மாம்சமுமானவர்கள். சவுல் இன்னும் ராஜா 2
வாயிருக்கும்போதே, நீர் இஸ்ரவேலை நடத்
திக்கொண்டுபோய் நடத்திக்கொண்டுவருவீர்;
என் ஜனமாகிய இஸ்ரவேலை நீர் மேய்த்து,
[10]என் ஜனமாகிய இஸ்ரவேலின்மேல் தலைவ
னாயிருப்பீர் என்று உம்முடைய தேவனாகிய
**கர்த்தர்** உமக்குச் சொல்லியும் இருக்கிறார்
என்றார்கள். அப்படியே இஸ்ரவேலின் மூப் 3
பரெல்லாரும் எப்ரோனிலே ராஜாவினிடத்
தில் வந்தார்கள்; தாவீது எப்ரோனிலே **கர்த்**
**தருக்கு** முன்பாக அவர்களோடு உடன்படிக்
கை பண்ணிக்கொண்டபின்பு, **கர்த்தர்** சாமு
வேலைக்கொண்டு சொன்ன வார்த்தையின்
படியே அவர்கள் தாவீதை இஸ்ரவேலின்
மேல் ராஜாவாக [11]அபிஷேகம் பண்ணினார்
கள். பின்பு தாவீது இஸ்ரவேலனைத்தோடு 4
ங்கூட எபூசாகிய எருசலேமுக்குப் போனான்;
[12]எபூசியர் அத்தேசத்தின் குடிகளாயிருந்தார்

5 கள். அப்பொழுது எபூசின் குடிகள் தாவீ
தை நோக்கி: நீ இதற்குள் பிரவேசிப்பதில்லை
என்றார்கள்; ஆனாலும் தாவீது சீயோன்
கோட்டையைப் பிடித்தான்; அது தாவீதின்
6 நகரமாயிற்று. எபூசியரை முறிய அடிக்கிற
தில் எவன் முந்தினவனாயிருக்கிறானோ,
அவன் தலைவனும் சேனாபதியுமா யிருப்பா
னென்று தாவீது சொல்லியிருந்தான்; செரு
யாவின் குமாரனாகிய யோவாப் முந்தி ஏறித்
7 தலைவனானான். தாவீது அந்தக் கோட்டை
யில் வாசம்பண்ணினபடியினால், *அது தாவீ
8 தின் நகரம் என்னப்பட்டது. பிற்பாடு அவன்
நகரத்தை மில்லோ தொடங்கிச் சுற்றிலும்
கட்டினான்; யோவாப் நகரத்தின் மற்ற இடங்
9 களைப் பழுதுபார்த்தான். தாவீது நாளுக்கு
நாள் விருத்தியடைந்தான்; சேனைகளுடைய
**கர்த்தர்** அவனோடேகூட இருந்தார்.
10 **கர்த்தர்** இஸ்ரவேலுக்காகச் சொன்ன வார்
த்தையின்படியே, [1]தாவீதை ராஜாவாக்கும்
படி அவன் வசமாயிருந்து, ராஜ்யபாரம் பண்
ணுகிற அவனிடத்திலும், சகல இஸ்ரவேல
ரிடத்திலும், வீரத்தத்துவத்தைப் பாராட்டின
11 பிரதான பராக்கிரமசாலிகளும், தாவீதுக்கு
இருந்த அந்தப் பராக்கிரமசாலிகளின் இலக்க
முமாவது: அக்மோனியின் குமாரனாகிய யா
ஷோபியாம் என்னும் சேர்வைக்காரரின் தலை
வன்; இவன் முந்நூறுபேர்களின்மேல் தன்
ஈட்டியை ஓங்கி அவர்களை ஒருமிக்கக் கொன்
12 றுபோட்டான். இவனுக்கு இரண்டாவது
அகோயின் குமாரனாகிய தோதோவின் மகன்
எலெயாசார்; இவன் மூன்று பராக்கிரமசாலி
13 களில் ஒருவன். பெலிஸ்தர் †பாஸ்தம்மீமி
லிருக்கிற வாற்கோதுமை நிறைந்த வயல்
நிலத்தில் யுத்தத்திற்குக் கூடிவந்தபோதும்,
ஜனம் பெலிஸ்தரைக் கண்டு ஓடினபோதும்
இவன் தாவீதோடே அங்கே இருந்தான்.
14 அப்பொழுது அவர்கள் அந்த நிலத்தின் நடு
விலே நின்று அதைக் காப்பாற்றிப் பெலிஸ்
தரை மடங்கடித்தார்கள்; அதினாலே **கர்த்தர்**
15 பெரிய ரட்சிப்பை நடப்பித்தார். முப்பது
தலைவரில் மூன்றுபேர் அதுல்லாம் என்னும்
கன்மலைக் கெபியிலிருக்கிற தாவீதினிடத்தில்
போயிருந்தார்கள்; [2]பெலிஸ்தரின் பாளயம்
ரெப்பாயீம்பள்ளத்தாக்கில் இறங்குகிறபோது,
16 தாவீது அரணான ஒரு இடத்திலிருந்தான்;
அப்பொழுது பெலிஸ்தரின் தாணையம் பெத்
17 லகேமில் இருந்தது. தாவீது பெத்லகேமின்
ஒலிமுக வாசலிலிருக்கிற கிணற்றின் தண்
ணீர்மேல் ஆவல்கொண்டு: என் தாகத்திற்குக்
கொஞ்சம் தண்ணீர் கொண்டுவருகிறவன் யார்
18 என்றான். அப்பொழுது அந்த மூன்றுபேர்
பெலிஸ்தரின் பாளயத்திற்குள் துணிந்து புகு
ந்துபோய், பெத்லகேமின் ஒலிமுக வாசலி
லிருக்கிற கிணற்றிலே தண்ணீர் மொண்டு,
தாவீதினிடத்தில் கொண்டுவந்தார்கள்; ஆனா
லும் அவன் அதைக் குடிக்க மனதில்லாமல்
அதைக் **கர்த்தருக்கென்று** ஊற்றிப்போட்டு:

* ஒ.பா. 2 சாமு. 5. 7
[1] 1 சாமு. 16. 1, 12. 2 சாமு 23. 8
† எபேஸ்தம்மீம். 1 சாமு 17. 1
[2] 2 சாமு. 23. 13. ஷ
[3] 1 சாமு. 23. 18
[4] 1 சாமு. 23. 19
[5] 1 சாமு. 23. 20
[6] 2 சாமு. 23. 24, 25
[7] 2 சாமு. 23. 32, 33

நான் இதைச் செய்யாதபடிக்கு, என் தேவன் 19
என்னைக் காத்துக்கொள்ளக்கடவர்; தங்கள்
பிராணனை எண்ணாமல்போய் அதைக் கொ
ண்டுவந்த இந்த மனுஷரின் ரத்தத்தைக் குடி
ப்பேனோ என்று சொல்லி அதைக் குடிக்க
மாட்டேன் என்றான். இப்படி இந்த மூன்று
பராக்கிரமசாலிகளும் செய்தார்கள். யோவா 20
பின் சகோதரனாகிய அபிசாய் அந்த மூன்று
பேரில் பிரதானமானவன்; [3]அவன் தன் ஈட்
டியை ஓங்கி, முந்நூறுபேரை மடங்கடித்ததி
னால் இந்த மூன்றுபேரில் பேர்பெற்றவனா
னான். இந்த மூன்றுபேரில் அவன் மற்ற இர 21
ண்டுபேரிலும் மேன்மையுள்ளவனானதினால்,
அவர்களில் தலைவனானான்; [4]ஆனாலும் அந்த
முந்தின மூன்றுபேருக்கு அவன் சமானமா
னவனல்ல. பராக்கிரமசாலியாகிய யோய்தா 22
வின் குமாரனும், கப்சேயேல் ஊரானுமாகிய
பெனாயாவும் செய்கைகளில் வல்லவனாயிருந்
தான்; [5]அவன் மோவாப் தேசத்தின் இரண்டு
வலுமையான சிங்கங்களைக் கொன்றதுமல்லா
மல், உறைந்த மழைபெய்த நாளில் அவன்
ஒரு கெபிக்குள்ளே இறங்கிப்போய், ஒரு சிங்
கத்தைக் கொன்றான். ஐந்து முழ உயரமான 23
ஒரு எகிப்தியனையும் அவன் கொன்றுபோட்
டான்; அந்த எகிப்தியன் கையில் நெய்கிறவர்
களின் படைமரக்கனதியான ஒரு ஈட்டி இரு
க்கையில், இவன் ஒரு தடியைப் பிடித்து,
அவனிடத்தில் போய், அந்த எகிப்தியன்
கையிலிருந்த ஈட்டியைப் பறித்து, அவன்
ஈட்டியினாலே அவனைக் கொன்றுபோட்
டான். இவைகளை யோய்தாவின் குமாரனான 24
பெனாயா செய்தபடியினால், மூன்று பராக்கிரம
சாலிகளுக்குள்ளே பேர்பெற்றவனாய் இருந்
தான். முப்பதுபேரிலும் இவன் மேன்மை 25
யுள்ளவன்; ஆனாலும் அந்த முந்தின மூன்று
பேருக்கும் இவன் சமானமானவனல்ல;
அவனைத் தாவீது தன் மெய்க்காவலருக்குத்
தலைவனாக வைத்தான்.

ராணுவத்திலிருந்த மற்றப் பராக்கிரமசாலி 26
கள்: யோவாபின் தம்பி ஆசகேல், [6]பெத்
லகேம் ஊரானாகிய தோதோவின் குமாரன்
எல்க்கானான், ஆரோதியனாகிய சம்மோத், 27
பெலோனியனாகிய ஏலெஸ், தெக்கோவிய 28
னாகிய இக்கேசின் குமாரன் ஈரா, ஆனதோத்
தியனாகிய அபியேசர், ஊசாத்தியனாகிய 29
சிபெக்காய், அகோகியனாகிய ஈலாய், நெத் 30
தோபாத்தியனாகிய மகராயி, நெத்தோபாத்திய
னாகிய பானாவின் குமாரன் ஏலேத், பென்ய 31
மீன் புத்திரரின் கிபேயா ஊரானாகிய ரிபா
யின் குமாரன் இத்தாயி, பிரத்தோனியனாகிய
பெனாயா, காகாஸ் நீரோடைத் தேசத்தா 32
னாகிய ஊராயி, அர்பாத்தியனாகிய அபியேல்,
பகரூமியனாகிய அஸ்மாவேத், சால்போனிய 33
னாகிய எலியாபா, கீசோனியனாகிய ஆசே 34
மின் குமாரர். [7]ஆராரியனாகிய சாகியின்
குமாரன் யோனத்தான், ஆராரியனாகிய சாக் 35
காரின் குமாரன் அகியாம், ஊரின் குமாரன்

36 எலிபால், மெகராத்தியனாகிய எப்பேர், பெ
37 லோனியனாகிய அகியா, கர்மேலியனாகிய
38 எஸ்றோ, எஸ்பாயின் குமாரன் நாராயி, நாத்
தானின் சகோதரன் யோவேல், அகரியின்
39 குமாரன் மிப்கார், அம்மோனியனாகிய சே
லேக், செருயாவின் குமாரனாகிய யோவாபின்
ஆயுததாரியான பெரோத்தியனாகிய நாராயி,
40 இத்தரியனாகிய ஈரா, இத்தரியனாகிய காரெப்,
41 ஏத்தியனாகிய உரியா, அக்லாயின் குமாரன்
42 சாபாத், ரூபனியரின் தலைவனாகிய சிசாவின்
குமாரன் அதினா என்னும் ரூபனியன்; அவ
43 னோடே முப்பதுபேர் இருந்தார்கள். மாகா
வின் குமாரன் ஆனான், மிதினியனாகிய யோச
44 பாத், அஸ்தரேத்தியனாகிய உசியா, ஆரோ
வேரியனாகிய ஒத்தாமின் குமாரர் சமாவும்,
45 யெகியேலும், சிம்ரியின் குமாரன் எதியா
யேல், திச்சியனாகிய அவன் சகோதரன் யோ
46 கா, மாகாவியரின் புத்திரன் எலியேல், எல்
நாமின் குமாரர் எரிபாயும், யொசவியாவும்,
47 மோவாபியனான இத்மாவும், மெசோபாயா
ஊராராகிய எலியேலும், ஓபேதும், யாசி
யேலுமே.

**12** தாவீது கீசின் குமாரனாகிய சவுலினிமித்
தம் இன்னும் மறைவாயிருக்கையில், [1]சிக்லாகி
2 லிருக்கிற அவனிடத்திற்கு வந்து, யுத்தத்
திற்கு ஒத்தாசைசெய்த வில்வீரரும், [2]கவண்
கல் எறிகிறதற்கும் வில்லினால் அம்பு எய்கிற
தற்கும் வலது இடது கைவாட்டமான பராக்
கிரமசாலிகளான மற்ற மனுஷருமாவன: சவு
லின் சகோதரராகிய பென்யமீன் கோத்திரத்
3 தில், கிபேயா ஊரானாகிய சேமாவின் குமா
ரர் அகியேசர் என்னும் தலைவனும், யோவா
சும், அஸ்மாவேத்தின் குமாரராகிய எசியே
லும் பேலேத்தும், பெராக்கா, ஆனதோத்திய
4 னான ஏகூ என்பவர்களும், முப்பதுபேரில்
பராக்கிரமனும் முப்பதுபேருக்குப் பெரியவ
னுமான இஸ்மாயா என்னும் கிபியோனிய
னும், எரேமியா, யகாசியேல், யோகனான்,
5 கெதேரூரானான யோசபாத், எலுசாயி, எரி
மோத், பிகலியா, செமரியா, அருப்பியனான
6 செப்பத்தியா, எல்க்கானா, எஷியா, அசாரி
யேல், யொவேசேர், யசொபெயாம் என்னும்
7 கோரேகியரும், யொவேலா, செபதியா
என்னும் கேதோர் ஊரானான எரோகாமின்
8 குமாரருமே. காத்தியரில் பரிசையும் ஈட்டி
யும் பிடித்து, சிங்கமுகம்போன்ற முகமும்,
[3]மலைகளிலிருக்கிற வெளிமான் வேகம்
போன்ற வேகமுமுள்ளவர்களாயிருந்து, யுத்த
சேவகரான பராக்கிரமசாலிகள் சிலரும் வனாந்
தரத்திலுள்ள அரணான இடத்தில் இருக்கிற
9 தாவீது பட்சமாய்ச் சேர்ந்தார்கள். யாரென்
றால், எத்சேர் என்னும் தலைவன், அவனுக்கு
இரண்டாவது ஒபதியா; மூன்றாவது எலி
10 யாப், நாலாவது மிஸ்மன்னா, ஐந்தாவது
11 எரேமியா, ஆறாவது அத்தாயி, ஏழாவது
12 எலியேல், எட்டாவது யோகனான், ஒன்
13 பதாவது எல்சபாத், பத்தாவது எரேமியா,
பதினோராவது மக்பன்னாயி; காத் புத்திர 14
ரான இவர்கள் ராணுவத்தலைவராயிருந்தார்
கள்; அவர்களில் சிறியவன் நூறுபேருக்கும்
பெரியவன் ஆயிரம்பேருக்கும் சேர்வைக்கார
ராயிருந்தார்கள். யோர்தான் கரை புரண்டு 15
போயிருக்கிற முதலாம் மாதத்தில் [4]அதைக்
கடந்து, கிழக்கேயும் மேற்கேயும் பள்ளத்
தாக்குகளில் இருக்கிற யாவரையும் துரத்தி
விட்டவர்கள் இவர்களே. பின்னும் பென்ய 16
மீன் புத்திரரிலும் யூதாபுத்திரரிலும் சிலர்
அரணான ஸ்தலத்தில் இருக்கிற தாவீதினிடத்
தில் வந்தார்கள். தாவீது புறப்பட்டு, அவர்க 17
ளுக்கு எதிர்கொண்டுபோய், அவர்களுக்கு
உத்தரவுகொடுத்து: நீங்கள் எனக்கு உதவி
செய்ய சமாதானமாய் என்னிடத்தில் வந்தீர்க
ளானால், என் இருதயம் உங்களோடு இசைந்
திருக்கும்; என் கைகளில் கொடுமை இல்லா
திருக்க, என்னை என் சத்துருக்களுக்குக்
காட்டிக்கொடுக்க வந்தீர்களேயாகில் நம்மு
டைய பிதாக்களின் தேவன் அதைப் பார்த்துக்
கண்டிப்பாராக என்றான். அப்பொழுது 18
அதிபதிகளுக்குத் தலைவனான அமாசாயின்
மேல் ஆவி இறங்கினதினால், [5]அவன்: தாவீ
தே, நாங்கள் உம்முடையவர்கள்; ஈசாயின்
குமாரனே, உமது பட்சமாயிருப்போம்; உமக்
குச் சமாதானம், சமாதானம்; உமக்கு உதவி
செய்கிறவர்களுக்கும் சமாதானம்; உம்மு
டைய தேவன் உமக்குத் துணைநிற்கிறார்
என்றான்; அப்பொழுது தாவீது அவர்களைச்
சேர்த்துக்கொண்டு, அவர்களைத் தண்டுக்குத்
தலைவராக்கினான். சவுலின்மேல் யுத்தம்பண் 19
ணப்போகிற பெலிஸ்தருடனே கூடத் தாவீது
வருகிறபோது, மனாசேயிலும் சிலர் அவன்
பட்சமாய்ச் சேர்ந்தார்கள்; [6]பெலிஸ்தரின் பிர
புக்கள் யோசனைபண்ணி, அவன் நம்முடைய
தலைகளுக்கு மோசமாய்த் தன் ஆண்டவனாகிய
சவுலின் பட்சமாய்ப் போவான் என்று அவனை
அனுப்பிவிட்டார்கள்; அதனால் அவர்கள்
இவர்களுக்கு உதவிசெய்யவில்லை. அப்படி 20
யே அவன் சிக்லாகுக்குத் திரும்பிப்போகை
யில், மனாசேயில் அத்னாக், யோசபாத், எதியா
வேல், மிகாயேல், யோசபாத், எலிகூ, சில்த்
தாயி என்னும் மனாசே கோத்திரத்தாரின்
ஆயிரத்துச் சேர்வைக்காரர் அவன் பட்சமாய்
வந்தார்கள். அந்தத் தண்டுக்கு [7]விரோதமாய் 21
இவர்கள் தாவீதுக்கு உதவிசெய்தார்கள்; இவர்
களெல்லாரும் பராக்கிரமசாலிகளும் ராணு
வத்தில் சேர்வைக்காரருமாயிருந்தார்கள். அக் 22
காலத்திலே நாளுக்குநாள் தாவீதுக்கு உதவி
செய்யும் மனுஷர் அவனிடத்தில் வந்து சேர்ந்த
படியால், அவர்கள் தேவசேனையைப்போல
மகா சேனையானார்கள்.

**கர்த்தருடைய** வாக்கின்படியே, சவுலின் 23
ராஜ்யபாரத்தைத் தாவீதினிடமாய்த் திருப்ப,
எப்ரோனிலிருக்கிற அவனிடத்துக்கு வந்த
யுத்தசன்னத்தரான தலைவரின் இலக்கமாவன:
யூதாபுத்திரரில் பரிசையும் ஈட்டியும் பிடித்து 24

[1] 1 சாமு. 27. 2, 16
[2] நியா. 20. 16
[3] 2 சாமு. 2. 18
[4] யோசு. 3. 15
[5] நியா. 6. 34. 2 சாமு. 17. 25
[6] 1 சாமு. 29. 2,4
[7] 1 சாமு. 30. 1, 9, 10

யுத்தசன்னத்தரானவர்கள் ஆறாயிரத்து எண்
25 ணூறுபேர். சிமியோன் புத்திரரில் பராக்
கிரமசாலிகளாகிய யுத்தவீரர் ஏழாயிரத்து நூறு
26 பேர். லேவிபுத்திரரில் நாலாயிரத்து அறு
27 நூறுபேர். ஆரோன் சந்ததியாரின் அதிபதி
யாகிய யோய்தாவும், அவனோடிருந்த மூவா
28 யிரத்து எழுநூறுபேரும், பராக்கிரமசாலி
யான [1]சாதோக் என்னும் வாலிபனும், அவன்
தகப்பன் வம்சத்தாரான இருபத்திரண்டு தலை
29 வருமே. பென்யமீன் புத்திரரான சவுலின்
சகோதரரில் மூவாயிரம்பேர்; அதுவரைக்கும்
அவர்களில் மிச்சமானவர்கள் [2]சவுலின் குடும்
30 பத்தைக் காப்பாற்றப் பார்த்தார்கள். எப்பி
ராயீம் புத்திரரில் தங்கள் பிதாக்களின் வம்சத்
தில் பேர்பெற்ற மனுஷரான பராக்கிரமசாலி
31 கள் இருபதினாயிரத்து எண்ணூறுபேர். மனா
சேயின் பாதிக்கோத்திரத்தில் தாவீதை ராஜா
வாக்குகிறதற்கு வரும்படி, பேர்பேராகக்குறிக்
32 கப்பட்டவர்கள் பதினெண்ணாயிரம்பேர். இச
க்கார் புத்திரரில், இஸ்ரவேலர் செய்யவேண்
டியது இன்னதென்று அறிந்து [3]காலாகாலங்க
ளுக்குத் தகுந்த யோசனை சொல்லத்தக்க தலை
வர்கள் இருநூறுபேரும், இவர்கள் வாக்குக்
குச் செவிகொடுத்த இவர்களுடைய எல்லாச்
33 சகோதரருமே. செபுலோன் புத்திரரில் சகல
வித யுத்த ஆயுதங்களாலும் யுத்தம் செய்கிற
தற்கும், தங்கள் அணியைக் காத்துநிற்கிறதற்
கும் பழகி, வஞ்சனைசெய்யாமல் யுத்தத்திற்குப்
34 போகத்தக்கவர்கள் ஐம்பதினாயிரம்பேர். நப்
தலி புத்திரரில் ஆயிரம் தலைவர்கள் பரிசையும்
ஈட்டியும் பிடித்த அவர்களோடேகூட இருந்
35 தவர்கள் முப்பத்தேழாயிரம்பேர். தாண் புத்
திரரில்யுத்தத்திற்குத்தேறினவர்கள் இருபத்து
36 எண்ணாயிரத்து அறுநூறுபேர். ஆசேர் புத்
திரரில் யுத்தத்திற்குத் தேறினவர்களாய் சேவ
கம் பண்ணப்போகத் தக்கவர்கள் நாற்பதி
37 னாயிரம்பேர். யோர்தானுக்கு அக்கரையான
ரூபனியரிலும், காத்தியரிலும், மனாசேயின்
பாதிக்கோத்திரத்தாரிலும், யுத்தம்பண்ண சகல
வித ஆயுதங்களையும் தரித்தவர்கள் நூற்றிருபதி
38 னாயிரம்பேர். தாவீதை இஸ்ரவேலின்மேல்
ராஜாவாக்குகிறதற்கு, இந்த யுத்தமனுஷர் எல்
லாரும் அணி அணியாய் வைக்கப்பட்டவர்க
ளாக, உத்தம இருதயத்தோடே எப்ரோனுக்கு
வந்தார்கள்; இஸ்ரவேலில் மற்ற யாவரும்
தாவீதை ராஜாவாக்குகிறதற்கு ஒருமனப்பட்
39 டிருந்தார்கள். அவர்கள் அங்கே தாவீதோ
டேகூட மூன்றுநாள் இருந்து, போஜன
பானம்பண்ணினார்கள்; அவர்கள் சகோதரர்
அவர்களுக்காகச் சகலத்தையும் ஆயத்தம்பண்
40 ணியிருந்தார்கள். இசக்கார், செபுலோன்,
நப்தலியின் எல்லைமட்டும் அவர்களுக்குச் சமீ
பமாயிருந்தவர்களும், கழுதைகள்மேலும் ஒட்
டகங்கள்மேலும்கோவேறு கழுதைகள்மேலும்
மாடுகள்மேலும், தின்பண்டங்களாகிய மா,
அத்திப்பழ அடைகள், வற்றலான திராட்சப்
பழங்கள், திராட்சரசம், எண்ணெய், ஆடு
ம்மாடுகள் ஆகிய இவைகளை வேண்டியமட்டும்
ஏற்றிக்கொண்டுவந்தார்கள்; இஸ்ரவேலிலே
மகிழ்ச்சியுண்டாயிற்று.

13 தாவீது ஆயிரம்பேருக்குத் தலைவரோடும்
நூறுபேருக்குத் தலைவரோடும் சகல அதிபதி
களோடும் ஆலோசனைபண்ணி, இஸ்ரவேல் 2
சபையையெல்லாம் நோக்கி: உங்களுக்குச் சம்
மதியும் நம்முடைய தேவனாகிய **கர்த்தருக்குச்**
சித்தமுமாயிருந்தால், இஸ்ரவேலின்தேசங்களி
லெல்லாம் இருக்கிற நம்முடைய மற்றச் சகோ
தரரும், அவர்களோடே தங்கள் வெளிநிலங்க
ளில் இருக்கிற ஆசாரியரும் லேவியரும் நம்
மோடே கூடும்படிக்கு [4]நாம் சீக்கிரமாய் அவர்
களிடத்துக்கு ஆள் அனுப்பி, நமது தேவ 3
னுடைய பெட்டியைத் திரும்ப நம்மிடத்துக்
குக் கொண்டுவருவோமாக; [5]சவுலின் நாட்க
ளில் அதைத் தேடாதேபோனோம் என்றான்.
இந்தக் காரியம் சகல ஜனத்தின் பார்வைக்கும் 4
செம்மையாயிருந்தபடியால், சபையார் எல்
லாரும் அப்படியே செய்வோம் என்றார்கள்.
அப்படியேதேவனுடைய பெட்டியைக்கீரியா 5
த்யாரீமிலிருந்து கொண்டுவரும்படி, [6]தாவீது
எகிப்தைச்சேர்ந்த [7]சீகோர் நதிதுவக்கி ஆமாத்
தின் எல்லைமட்டுமுள்ள இஸ்ரவேலையெல்
லாங்கூட்டி, கேருபீன்களின் நடுவே வாசம் 6
பண்ணுகிற **கர்த்தராகிய** தேவனுடைய நாமம்
தொழுதுகொள்ளப்படுகிற அவருடைய பெட்
டியை யூதாவிலிருக்கிற கீரியாத்யாரீமுக்கடுத்த
[8]பாலாவிலிருந்து கொண்டுவரும்படிக்கு, அவ
னும் இஸ்ரவேலர் அனைவரும் அவ்விடத்
திற்குப் போனார்கள். அவர்கள் தேவனுடைய 7
பெட்டியை [9]அபினதாபின் வீட்டிலிருந்து
ஒரு புது ரதத்தின்மேல் ஏற்றிக்கொண்டு வந்
தார்கள்; ஊசாவும் அகியோவும் ரதத்தை நடத்
தினார்கள். தாவீதும் சகல இஸ்ரவேலரும் 8
தங்கள் முழுப்பலத்தோடும் தேவனுக்கு முன்
பாகச் சுரமண்டலங்களையும் தம்புருகளையும்
மேளங்களையும் கைத்தாளங்களையும் பூரிகைக
ளையும் சேவித்து [10]மகிழ்ச்சியாய் ஆடிப் பாடி
னார்கள். அவர்கள் கீதோனின் களமட்டும் 9
வந்தபோது, [11]மாடுகள் இடறினபடியினால்,
ஊசா பெட்டியைப் பிடிக்கத் தன் கையை
நீட்டினான். அப்பொழுது **கர்த்தர்** ஊசாவின் 10
மேல் கோபம் மூண்டவராகி, அவன் தன்
கையைப் பெட்டியண்டைக்கு நீட்டினதினி
மித்தம் அவனை அடித்தார்; [12]அங்கே அவன்
தேவசமுகத்தில் செத்தான். அப்பொழுது 11
**கர்த்தர்** ஊசாவை அடித்ததினிமித்தம் தாவீது
விசனப்பட்டு, அந்த ஸ்தலத்திற்கு இந்நாள்
மட்டும் வழங்கிவருகிற பேரேஸ் ஊசா என்
னும் பேரிட்டு, அன்றையதினம் தேவனுக் 12
குப் பயந்து: தேவனுடைய பெட்டியை நான்
என்னிடத்துக்குக் கொண்டுவருவது எப்படி
யென்று சொல்லி, பெட்டியைத் தன்னிடத் 13
தில் தாவீதின் நகரத்திலே கொண்டுவரா
மல், அதைக் கித்தியனாகிய ஓபேத் ஏதோ
மின் வீட்டிலே சேர்த்தான். தேவனுடைய 14

[1] 2 சாமு. 8. 17
[2] 2 சாமு. 2. 8, 9
[3] எஸ்தர் 1. 13
[4] 1 சாமு. 31. 1. ஏசா. 37. 4
[5] 1 சாமு. 7. 1, 2
[6] 2 சாமு. 6. 1
[7] யோசு. 13. 3. எரே. 2. 18
[8] யோசு. 15. 9, 60
[9] 1 சாமு. 7. 1
[10] 2 சாமு. 6. 5
[11] 2 சாமு. 6. 6. முதலிய
[12] எண். 4. 15. லேவி. 10. 2

பெட்டி ஓபேத் ஏதோமின் வீட்டிலே அவனி
டத்தில் மூன்றுமாதம் இருக்கையில், [1]**கர்த்தர்**
ஓபேத் ஏதோமின் வீட்டையும் அவனுக்கு
உண்டான எல்லாவற்றையும் ஆசீர்வதித்தார்.
14 தீருவின் ராஜாவாகிய ஈராம் தாவீதினிடத்
தில் ஸ்தானாபதிகளையும், [2]அவனுக்கு ஒரு வீட்
டைக் கட்டுகிறதற்குக் கேதுருமரங்களையும்,
தச்சரையும், கல்தச்சரையும் அனுப்பினான்.
2 **கர்த்தர்** தன்னை இஸ்ரவேலின்மேல் ராஜா
வாகத் திடப்படுத்தி, இஸ்ரவேல் என்னும் தம்
முடைய ஜனத்தினிமித்தம் தன்னுடைய ராஜ்
யத்தை மிகவும் உயர்த்தினார் என்று தாவீது
அறிந்துகொண்டான்.
3 எருசலேமிலே தாவீது பின்னும் அநேக
ஸ்திரீகளை விவாகம்பண்ணி, பின்னும் குமார
4 ரையும் குமாரத்திகளையும் பெற்றான். எருச
லேமிலே அவனுக்குப் பிறந்த குமாரரின்
நாமங்களாவன: [3]சம்முவா, சோபாப், நாத்
5 தான், சாலொமோன், இப்கார், எலிசூவா,
6 எல்பெலேத், நோகா, நெப்பேக், யப்பியா,
7 எலிஷாமா, *பெலியாதா, எலிப்பெலேத் என்
பவைகள்.
8 தாவீது சமஸ்த இஸ்ரவேலின்மேலும் ராஜா
வாக அபிஷேகம் பண்ணப்பட்டதைப் பெலி
ஸ்தர் கேள்விப்பட்டபோது, பெலிஸ்தர் எல்
லாரும் தாவீதைத் தேடும்படி வந்தார்கள்;
அதைத் தாவீது கேட்டபோது அவர்களுக்கு
9 விரோதமாகப் புறப்பட்டான். பெலிஸ்தர்
வந்து ரெப்பாயீம் பள்ளத்தாக்கிலே பரவி
10 யிருந்தார்கள். பெலிஸ்தருக்கு விரோதமாகப்
போகலாமா, அவர்களை என் கையில் ஒப்புக்
கொடுப்பீரா என்று தாவீது தேவனைக் கேட்ட
போது, **கர்த்தர்**: போ, அவர்களை உன் கை
11 யில் ஒப்புக்கொடுப்பேன் என்றார். அவர்கள்
பாகால்பிராசீமுக்கு வந்தபோது, தாவீது
அங்கே அவர்களை முறிய அடித்து: தண்ணீர்
கள் உடைந்தோடுகிறதுபோல, தேவன் என்
கையினால் என் சத்துருக்களை உடைந்தோடப்
பண்ணினார் என்றான்; அதினிமித்தம் அந்த
ஸ்தலத்திற்குப் பாகால் பிராசீம் என்னும்
12 பேரிட்டார்கள். அங்கே அவர்கள் தங்கள்
தெய்வங்களைவிட்டு ஓடிப்போனார்கள்; தாவீது
கற்பித்தபடி அவைகள் அக்கினியாலே சுட்டெ
13 ரிக்கப்பட்டன. பெலிஸ்தர் மறுபடியும் வந்து
14 அந்தப் பள்ளத்தாக்கிலே[4]இறங்கினார்கள். அப்
பொழுது தாவீது திரும்ப தேவனிடத்தில்
விசாரித்ததற்கு, தேவன் நீ அவர்களுக்குப் பின்
னாலே போகாமல், அவர்களுக்குப் பக்கமாய்ச்
சுற்றி, முசுக்கட்டைச் செடிகளுக்கு எதிரே
15 யிருந்து, அவர்கள்மேல் பாய்ந்து, முசுக்கட்
டைச் செடிகளின் நுனிகளிலே செல்லுகிற
இரைச்சலை நீ கேட்கும்போது, யுத்தத்திற்குப்
புறப்படு; பெலிஸ்தரின் பாளயத்தை முறிய
அடிக்க, தேவன் உனக்கு முன்னே புறப்பட்
16 டிருப்பார் என்றார். தேவன் தனக்குக் கற்
பித்தபடியே தாவீது செய்தபோது, பெலிஸ்த
ரின் ராணுவத்தைக் கிபியோன் [5]துவக்கிக்

[1] ஆதி. 30. 27. நீதி. 10. 22
[2] 2 சாமு. 5. 11 மு
[3] 3. 5
* எலியாதா. 2 சாமு. 5. 16
[4] 2 சாமு. 5. 22, 23
[5] 2 சாமு. 5. 25.
[6] யோசு. 6. 27. 2 நாளா. 26. 8. சங். 18. 44
[7] உபா. 2. 25; 11. 25
[8] 16. 1
[9] எண். 4. 2, 15. உபா. 10. 8; 31. 9
[10] 1 இரா. 8. 1
[11] யாத். 6. 22
[12] யாத். 6. 18
[13] 2 சாமு. 6. 3, 8
[14] யாத். 25. 14. எண். 7. 9

காசேர்மட்டும் முறிய அடித்தார்கள். அப் 17
படியே தாவீதின் [6]கீர்த்தி சகல தேசங்களி
லும் பிரசித்தமாகி, [7]அவனுக்குப் பயப்படுகிற
பயத்தைக் **கர்த்தர்** சகல ஜாதிகளின்மேலும்
வரப்பண்ணினார்.
அவன் தனக்குத் தாவீதின் நகரத்தில் வீடு 15
களை உண்டாக்கி, தேவனுடைய பெட்டிக்கு
ஒரு ஸ்தலத்தை ஆயத்தப்படுத்தி, [8]அதற்கு ஒரு
கூடாரத்தைப்போட்டான். பிற்பாடு தாவீது: 2
லேவியர் ஒழிய வேறொருவரும் தேவனுடைய
பெட்டியை எடுக்கலாகாது; [9]தேவனுடைய
பெட்டியை எடுக்கவும், என்றைக்கும் அவருக்
குப் பணிவிடை செய்யவும், அவர்களையே
**கர்த்தர்** தெரிந்துகொண்டார் என்றான். அப் 3
படியே **கர்த்தருடைய** பெட்டிக்குத்தான் ஆயத்
தப்படுத்தின அதின் ஸ்தலத்திற்கு அதைக்
கொண்டுவரும்படி, [10]தாவீது இஸ்ரவேலையெ
ல்லாம் எருசலேமிலே கூடிவரச்செய்தான்.
ஆரோனின் புத்திரரையும், லேவியராகிய 4, 5
கோகாத் புத்திரரில் பிரபுவாகிய ஊரியேலை
யும், அவன் சகோதரராகிய நூற்றிருபதுபே
ரையும், மெராரியின் புத்திரரில் பிரபுவாகிய 6
அசாயாவையும், அவன் சகோதரராகிய இரு
நூற்றிருபதுபேரையும், கெர்சோன் புத்திர 7
ரில் பிரபுவாகிய யோவேலையும், அவன் சகோ
தரராகிய நூற்றுமுப்பதுபேரையும், எலிசாப் 8
பான் [11]புத்திரரில் பிரபுவாகிய செமாயாவை
யும், அவன் சகோதரராகிய இருநூறுபேரை
யும், எப்ரோன் [12]புத்திரரில் பிரபுவாகிய 9
எலியேலையும், அவன் சகோதரராகிய எண்
பதுபேரையும், ஊசியேல் புத்திரரில் பிரபு 10
வாகிய அம்மினதாபையும், அவன் சகோதர
ராகிய நூற்றுப்பன்னிரண்டுபேரையும் தாவீது
கூடிவரப்பண்ணினான். பின்பு தாவீது ஆசா 11
ரியராகிய சாதோக்கையும், அபியத்தாரையும்,
லேவியராகிய ஊரியேல், அசாயா, யோவேல்,
செமாயா, எலியேல், அம்மினதாப் என்பவர்
களையும் அழைத்து, அவர்களை நோக்கி: லேவி 12
யரில் நீங்கள் பிதாக்களுடைய சந்ததிகளின்
தலைவர், நீங்கள் இஸ்ரவேலின் தேவனாகிய
**கர்த்தரின்** பெட்டியை அதற்கு நான் ஆயத்
தம்பண்ணின ஸ்தலத்திற்குக் கொண்டுவரும்
படி, உங்களையும் உங்கள் சகோதரரையும்
பரிசுத்தம் பண்ணிக்கொள்ளுங்கள். முதலில் 13
நீங்கள் அதைச் சுமக்காதபடியினாலும், [13]நாம்
நம்முடைய தேவனாகிய **கர்த்தரை** நியாய
மானபடியே தேடாதேபோனபடியினாலும்,
அவர் நமக்குள்ளே அடிவிழப்பண்ணினார்
என்றான். அப்படியே ஆசாரியரும் லேவிய 14
ரும் இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தரின்**
பெட்டியைக் கொண்டுவரத் தங்களைச் சுத்தம்
பண்ணிக்கொண்டார்கள். பின்பு லேவி புத் 15
திரர் **கர்த்தருடைய** வார்த்தையின்படியே,
[14]மோசே கற்பித்தபிரகாரம் தேவனுடைய
பெட்டியை அதின் தண்டுகளினாலே தங்கள்
தோள்மேல் எடுத்துக்கொண்டு வந்தார்கள்.
தாவீது லேவியரின் பிரபுக்களை நோக்கி: நீங் 16

கள் உங்கள் சகோதரராகிய பாடகரைத் தம்
புரு சுரமண்டலம் கைத்தாளமுதலிய கீதவாத்
தியங்கள் முழங்க, தங்கள் சத்தத்தை உயர்த்தி,
சந்தோஷம் உண்டாகப் பாடும்படி நிறுத்த
17 வேண்டும் என்று சொன்னான். அப்படியே
லேவியர் யோவேலின் குமாரனாகிய ஏமானை
யும், அவன் சகோதரரில் பெரகியாவின் குமா
ரனாகிய ஆசாப்பையும், மெராரியின் புத்திர
ரான தங்கள் சகோதரரில் குஷாயாவின்
18 குமாரனாகிய ஏத்தானையும், இவர்களோடுங்
கூட இரண்டாவது வரிசையாகத் தங்கள்
சகோதரராகிய சகரியா, பேன், யாசியேல்,
செமிரமோத், யெகியேல், உன்னி, எலியாப்,
பெனாயா, மாசெயா, மத்தித்தியா, எலிப்ப
லேகு, மிக்னேயா, ஓபேத்ஏதோம், ஏயெல்
என்னும் வாசல் காவலாளரையும் நிறுத்தினார்
19 கள். பாடகராகிய ஏமானும், ஆசாப்பும்,
ஏத்தானும், பஞ்சலோகக் கைத்தாளங்களைத்
20 தொனிக்கப்பண்ணிப் பாடினார்கள். சகரியா,
ஆசியேல், செமிரமோத், யெகியேல், உன்னி,
எலியாப், மாசெயா, பெனாயா என்பவர்கள்
அல்மோத் என்னும் இசையில் பாடி, தம்புரு
21 களை வாசித்தார்கள். மத்தித்தியா, எலிப்ப
லேகு, மிக்னேயா, ஓபேத்ஏதோம், ஏயெல்,
அசசியா என்பவர்கள் செமனீத் என்னும்
இசையில் பாடி, சுரமண்டலங்களை நேர்த்தி
22 யாய் வாசித்தார்கள். லேவியருக்குள்ளே கெ
னானியா என்பவன் சங்கீதத் தலைவனாயிருக்
தான்; அவன் நிபுணனானபடியால், கீதவித்
23 தையைப் படிப்பித்தான். பெரகியாவும் எல்க்
கானாவும் பெட்டிக்கு முன்பாகக் காவல்
24 காத்து வந்தார்கள். செபனியா, யோசபாத்,
நெதனெயேல், அமாசாயி, சகரியா, பெனாயா,
எலியேசர் என்னும் ஆசாரியர் தேவனுடைய
பெட்டிக்கு முன்பாகப் பூரிகைகளை ஊதினார்
கள்; [1]ஓபேத்ஏதோமும், எகியாவும் பெட்டி
25 க்கு வாசல் காவலாளராயிருந்தார்கள். இப்
படித் தாவீதும், இஸ்ரவேலின் மூப்பரும்,
ஆயிரத்துச் சேர்வைக்காரரும் **கர்த்தருடைய**
உடன்படிக்கைப் பெட்டியை [2]ஓபேத்ஏதோ
மின் வீட்டிலிருந்து மகிழ்ச்சியோடே கொண்
26 டுவரப்போனார்கள். **கர்த்தருடைய** உடன்
படிக்கைப் பெட்டியைச் சுமக்கிற லேவிய
ருக்கு தேவன் அநுக்கிரகம்பண்ணினபடி
யால், அவர்கள் ஏழு காளைகளையும் ஏழு ஆட்
27 டுக்கடாக்களையும் பலியிட்டார்கள். தாவீதும்,
பெட்டியைச் சுமக்கிற சகல லேவியரும்,
பாடகரும், பாடகரின் வேலையை விசாரிக்
கிற தலைவனாகிய கெனானியாவும், மெல்லிய
புடவையான சால்வைகளைத் தரித்திருந்தார்
கள்; தாவீது சணல்நூல் ஏபோத்தைத் தரித்
28 திருந்தான். அப்படியே இஸ்ரவேலனைத்தும்
**கர்த்தருடைய** உடன்படிக்கைப் பெட்டியைக்
கெம்பீரத்தோடும், [3]எக்காளங்கள் பூரிகைகள்
கைத்தாளங்களின் தொனியோடும், தம்புரு
களையும் சுரமண்டலங்களையும் வாசிக்கிற சத்
29 தத்தோடும் கொண்டுவந்தார்கள். **கர்த்தரு**

[1] ஏண்.10.8. சங். 81. 3
[2] 2 சாமு. 6. 12. ஓ. 1 இரா. 8. 1
[3] 13. 8
[4] 2 சாமு. 6. 16
[5] 2 சாமு. 6. 17-19
[6] 2 சாமு. 23. 1
[7] சங்.105.1-15. காண்க

**டைய** உடன்படிக்கைப் பெட்டி தாவீதின்
நகரமட்டும் வந்தபோது, சவுலின் குமாரத்தி
யாகிய மீகாள் பலகணிவழியாய்ப் பார்த்து,
[4]தாவீது ராஜா ஆடிப் பாடி வருகிறதைக் கண்டு,
அவனைத் தன் இருதயத்திலே அவமதித்தாள்.
அவர்கள் தேவனுடைய பெட்டியை உள் 16
ளே கொண்டுவந்தபோது, தாவீது அதற்குப்
போட்ட கூடாரத்தின் நடுவே அவர்கள் அதை
வைத்து, [5]தேவனுடைய சந்நிதியில் சர்வாங்க
தகனபலிகளையும் சமாதானபலிகளையும் செலு
த்தினார்கள். தாவீது சர்வாங்க தகனபலிகளை 2
யும் சமாதானபலிகளையும் செலுத்தித் தீர்ந்த
பின்பு, அவன் ஜனத்தைக் **கர்த்தருடைய**
நாமத்திலே ஆசீர்வதித்து, புருஷர் தொடங்கி 3
ஸ்திரீகள்மட்டும், இஸ்ரவேலராகிய அனைவ
ருக்கும் அவரவருக்கு ஒவ்வொரு அப்பத்தை
யும், ஒவ்வொரு இறைச்சித் துண்டையும்,
ஒவ்வொருபடி திராட்சரசத்தையும் பங்கிட்டுக்
கொடுத்தான்.
இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தரைப்** 4
பிரஸ்தாபம்பண்ணித் துதித்துப் புகழுகிற
தற்கு, **கர்த்தருடைய** பெட்டிக்குமுன்பாகச்
சேவிக்கத்தக்க லேவியரில் சிலரை நியமித்
தான். அவர்களில் ஆசாப் தலைவனும், சகரி 5
யா அவனுக்கு இரண்டாவதுமாயிருந்தான்;
ஏயெல், செமிரமோத், யெகியேல், மத்தித்
தியா, எலியாப், பெனாயா, ஓபேத்ஏதோம்,
ஏயெல் என்பவர்கள் தம்புரு சுரமண்டலம்
என்னும் கீதவாத்தியங்களை வாசிக்கவும்,
ஆசாப் கைத்தாளங்களைக் கொட்டவும், பெ 6
னாயா, யாகாசியேல் என்னும் ஆசாரியர் எப்
போதும் தேவனுடைய உடன்படிக்கைப்
பெட்டிக்கு முன்பாகப் பூரிகைகளை ஊதவும்
நியமிக்கப்பட்டார்கள்.
அப்படி ஆரம்பித்த அந்நாளிலேதானே 7
**கர்த்தருக்குத்** துதியாகப் பாடும்படி [6]தாவீது
ஆசாப்பிடத்திலும் அவன் சகோதரரிடத்தி
லும் கொடுத்த சங்கீதமாவது:
**கர்த்தரைத்** துதித்து, [7]அவருடைய நாமத் 8
தைப்பிரஸ்தாபமாக்குங்கள்; அவருடையசெய்
கைகளை ஜனங்களுக்குள்ளே பிரசித்தப்படுத்
துங்கள். அவரைப் பாடி, அவரைக் கீர்த்தனம் 9
பண்ணி, அவருடைய அதிசயங்களையெல்
லாம் தியானித்துப் பேசுங்கள். அவருடைய 10
பரிசுத்த நாமத்தைக்குறித்து மேன்மைபாராட்
டுங்கள்; **கர்த்தரைத்** தேடுகிறவர்களின் இருத
யம் மகிழ்வதாக. **கர்த்தரையும்** அவர் வல்ல 11
லமையையும் நாடுங்கள்; அவர் சமுகத்தை நித்
தமும் தேடுங்கள். அவருடைய தாசனாகிய 12
இஸ்ரவேலின் சந்ததியே! அவரால் தெரிந்து
கொள்ளப்பட்டவர்களாகிய யாக்கோபின் புத்
திரரே! அவர் செய்த அதிசயங்களையும், அவ 13
ருடைய அற்புதங்களையும், அவர் வாக்கின்
நியாயத் தீர்ப்புகளையும் நினைவுகூருங்கள்.
அவரே நம்முடைய தேவனாகிய **கர்த்தர்**; 14
அவருடைய நியாயத்தீர்ப்புகள் பூமியெங்கும்
விளங்கும்.

15 ஆயிரந் தலைமுறைக்கென்று அவர் கட்ட
ளையிட்ட வாக்கையும், ஆபிரகாமோடே அவர்
16 பண்ணின [1]உடன்படிக்கையையும், அவர்
ஈசாக்குக்கு இட்ட ஆணையையும் என்றென்
17 றைக்கும் நினைத்திருங்கள். அதை யாக்கோ
புக்குப் பிரமாணமாகவும், இஸ்ரவேலுக்கு
நித்திய உடன்படிக்கையாகவும் உறுதிப்படு
18 த்தி: உங்கள் சுதந்தரபாகமாக கானான்தேசத்
19 தை உனக்குத் தருவேன் என்றார். அக்காலத்
தில் அவர்கள் கொஞ்சத்தொகைக்குட்பட்ட
[2]சொற்ப ஜனங்களும் பரதேசிகளுமா யிருந்
20 தார்கள். அவர்கள் ஒரு ஜனத்தை விட்டு மறு
ஜனத்தண்டைக்கும், ஒரு ராஜ்யத்தை விட்டு
மறு தேசத்தாரண்டைக்கும் போனார்கள்.
21 அவர்களையொடுக்கும்படி ஒருவருக்கும் இடங்
கொடாமல், [3]அவர்கள் நிமித்தம் ராஜாக்களைக்
22 கடிந்துகொண்டு: நான் அபிஷேகம் பண்
ணினவர்களை நீங்கள் தொடாமலும், என்னு
டைய தீர்க்கதரிசிகளுக்குத் தீங்குசெய்யாம
லும் இருங்கள் என்றார்.
23 பூமியின் சகலகுடிகளே, **கர்த்தரைப்** பாடி,
[4]நாளுக்குநாள் அவருடைய ரட்சிப்பைச் சுவி
24 சேஷமாய் அறிவியுங்கள். ஜாதிகளுக்குள்
அவருடைய மகிமையையும், சகல ஜனங்க
ளுக்குள்ளும் அவருடைய அதிசயங்களையும்
25 விவரித்துச் சொல்லுங்கள். **கர்த்தர்** பெரிய
வரும் மிகவும் துதிக்கப்படத்தக்கவருமா யிருக்
கிறார்; எல்லா தேவர்களிலும் பயப்படத்தக்க
26 வர் அவரே. சகல ஜனங்களுடைய தேவர்க
ளும் விக்கிரகங்கள்தானே; [5]**கர்த்தரோ** வானங்
27 களை உண்டாக்கினவர். மகிமையும் கனமும்
அவர் சமுகத்தில் இருக்கிறது; வல்லமையும்
மகிழ்ச்சியும் அவர் ஸ்தலத்தில் இருக்கிறது.
28 ஜனங்களின் வம்சங்களே, **கர்த்தருக்கு** மகி
மையையும் வல்லமையையும் செலுத்துங்கள்;
29 **கர்த்தருக்கே** அதைச் செலுத்துங்கள். **கர்த்**
**தருக்கு** அவருடைய நாமத்திற்குரிய மகிமை
மையைச் செலுத்தி, காணிக்கைகளைக் கொண்
டுவந்து, அவருடைய சந்நிதியில் பிரவேசியுங்
கள்; பரிசுத்த அலங்காரத்துடனே **கர்த்தரைத்**
30 தொழுதுகொள்ளுங்கள். பூலோகத்தாரே, நீங்
கள் யாவரும் அவருக்கு முன்பாக நடுங்குங்கள்;
அவர் பூச்சக்கரத்தை அசையாதபடிக்கு உறு
31 திப்படுத்துகிறவர். வானங்கள் மகிழ்ந்து, பூமி
பூரிப்பதாக; **கர்த்தர்** ராஜரிகம்பண்ணுகிறார்
என்று ஜாதிகளுக்குள்ளே சொல்லப்படுவதாக.
32 சமுத்திரமும் அதின் நிறைவும் முழங்கி, நாடும்
33 அதிலுள்ள யாவும் களிகூருவதாக. அப்பொ
ழுது **கர்த்தருக்கு** முன்பாகக் காட்டு விருட்சங்
களும் கெம்பீரிக்கும்; அவர் பூமியை நியாயந்
34 தீர்க்க வருகிறார். **கர்த்தரைத்** துதியுங்கள்,
அவர் நல்லவர், [6]அவர் கிருபை என்று முள்
35 ளது. எங்கள் ரட்சிப்பின் தேவனே, நாங்கள்
உமது பரிசுத்த நாமத்தைப் போற்றி, உம்
மைத் துதிக்கிறதினால் மேன்மைபாராட்டும்
படிக்கு, [7]எங்களை ரட்சித்து, எங்களைச் சேர்த்
துக்கொண்டு, ஜாதிகளுக்கு எங்களை நீங்கலாக்
கியருளும் என்று சொல்லுங்கள். இஸ்ரவே 36
லின் தேவனாகிய **கர்த்தருக்கு** [8]சதாகாலங்களி
லும் ஸ்தோத்திரம் உண்டாவதாக; அதற்கு
ஜனங்களெல்லாரும் ஆமென் என்று சொல்
லிக் **கர்த்தரைத்** துதித்தார்கள்.

பின்பு பெட்டிக்கு முன்பாக நித்தம் அன் 37
றாடக முறையாய்ச் சேவிக்கும்படி, அவன்
அங்கே **கர்த்தருடைய** உடன்படிக்கைப் பெட்
டிக்கு முன்பாக ஆசாப்பையும், அவன் சகோ
தரரையும், ஓபேத் ஏதோமையும், அவர்களு
டைய சகோதரராகிய அறுபத்தெட்டுப்பே
ரையும் வைத்து, எதித்தூனின் குமாரனாகிய 38
இந்த ஓபேத்ஏதோமையும் ஓசாவையும் வாசல்
காக்கிறவர்களாக வைத்தான். கிபியோனி 39
லுள்ள மேட்டின்மேலிருக்கிற **கர்த்தருடைய**
வாசஸ்தலத்திற்குமுன்பாக இருக்கிற சர்வாங்க
தகனபலிபீடத்தின்மேல் சர்வாங்க தகனங்
களை நித்தமும், [9]அந்திசந்தியில், **கர்த்தர்**
இஸ்ரவேலுக்குக் கற்பித்த நியாயப்பிரமாணத்
தில் எழுதியிருக்கிறபடியெல்லாம் **கர்த்தருக்**
**குச்** செலுத்துவதற்காக, அங்கே அவன் ஆசா 40
ரியனாகிய சாதோக்கையும், அவன் சகோதர
ராகிய ஆசாரியரையும் வைத்து, இவர்க 41
ளோடேகூட ஏமானையும், எதித்தூனையும்
பேர்பேராகக் குறித்துத் தெரிந்துகொள்ளப்
பட்ட மற்றச் சிலரையும்: **கர்த்தருடைய** கிரு
பை என்றுமுள்ளது [10]என்று அவரைத் துதிக்
கவும், பூரிகைகளையும் கைத்தாளங்களையும் 42
தேவனைப் பாடுகிறதற்குரிய கீதவாத்தியங்களை
யும் தொனிக்கச்செய்யவும் அவர்களுடன்
ஏமானையும் எதித்தூனையும் வைத்து, எதித்
தூனின் குமாரரை வாசல்காக்கிறவர்களாகக்
கட்டளையிட்டான். பின்பு ஜனங்கள் எல் 43
லாரும் அவரவர் தங்கள் வீட்டிற்குப் போனார்
கள்; [11]தாவீதும் தன் வீட்டாரை ஆசீர்வதிக்கத்
திரும்பினான்.

தாவீது தன் வீட்டிலே வாசமாயிருக்கிற **17**
போது, அவன் தீர்க்கதரிசியாகிய நாத்தானை
நோக்கி: பாரும், [12]நான் கேதுருமரவீட்டிலே
வாசம்பண்ணுகிறேன்; **கர்த்தருடைய** உடன்
படிக்கைப் பெட்டியோ திரைகளின்கீழ் இருக்
கிறது என்றான்.

அப்பொழுது நாத்தான் தாவீதை நோக்கி: 2
உம்முடைய இருதயத்தில் இருக்கிறதையெல்
லாம் செய்யும்; தேவன் உம்மோடு இருக்கிறார்
என்றான். அன்று ராத்திரியிலே, தேவனு 3
டைய வார்த்தை நாத்தானுக்கு உண்டாகி,
அவர்: நீ போய், என் தாசனாகிய தாவீதை 4
நோக்கி: **கர்த்தர்** சொல்லுகிறது என்னவென்
றால்: நான் வாசமாயிருக்க நீ எனக்கு ஆல
யத்தைக் கட்டவேண்டாம். நான் இஸ்ரவேலை 5
வரப்பண்ணின நாள்முதற்கொண்டு இந்நாள்
வரைக்கும் நான் ஒரு ஆலயத்திலே வாசம்
பண்ணாமல், ஒரு கூடாரத்திலிருந்து மறு
கூடாரத்துக்கும், ஒரு வாசஸ்தலத்திலிருந்து
மறு வாசஸ்தலத்துக்கும் போனேன். நான் 6
சகல இஸ்ரவேலோடும் உலாவிவந்த எவ்வி

[1] ஆதி. 17. 2, 8: 26. 3
[2] ஆதி. 34. 30
[3] ஆதி. 12. 17: 20. 3. யாத். 7. 15–18
[4] சங். 96. 1–13. காண்க
[5] லேவி. 19. 4
[6] சங். 106. 1
[7] சங். 106. 47, 48
[8] 1 இரா. 8. 15. உபா. 27. 15.
[9] யாத். 29. 38. எண். 28. 3
[10] சங். 108. 17. எரே. 33. 11
[11] 2 சாமு. 6. 19, 20
[12] 2 சாமு. 7. 1. மு. காண்க

டத்திலாகிலும், நான் என் ஜனத்தை மேய்க்
கக் கற்பித்த இஸ்ரவேலின் நியாயாதிபதிக
ளில் யாதொருவனை நோக்கி: நீங்கள் எனக்
குக் கேதுருமரத்தால் செய்யப்பட்ட ஆலயத்
தைக் கட்டாதிருக்கிறது என்ன என்று யா
தொரு வார்த்தை சொன்னது உண்டோ?
7 இப்போதும், நீ என் தாசனாகிய தாவீதை
நோக்கி: சேனைகளின் **கர்த்தர்** சொல்லுகிறது
என்னவென்றால்: நீ என் ஜனமாகிய இஸ்ர
வேலின்மேல் அதிபதியாயிருக்கும்படி, ஆடு
களின் பின்னே நடந்த உன்னை ஆட்டுமந்
8 தையை விட்டு எடுத்து, நீ போன இடமெல்
லாம் உன்னோடே இருந்து, உன் சத்துருக்க
ளையெல்லாம் உனக்கு முன்பாக நிர்மூலமா
க்கி, பூமியிலிருக்கிற பெரியோர்களின் நாமத்
திற்கு ஒத்த நாமத்தை உனக்கு உண்டாக்கி
9 னேன். நான் என் ஜனமாகிய இஸ்ரவே
லுக்கு ஒரு இடத்தையும் ஏற்படுத்தி, அவர்கள்
தங்கள் ஸ்தானத்திலே குடியிருக்கவும், இனி
அவர்கள் அலையாமலும், முன்போலும், நான்
என் ஜனமாகிய இஸ்ரவேலின்மேல் நியா
யாதிபதிகளைக் கட்டளையிட்ட நாள்முதல் நடந்
ததுபோலும், நியாயக்கேட்டின் மக்களால்
இனிச் சிறுமைப்படாமலும் இருக்கவும் அவர்
10 களை நாட்டினேன். உன் சத்துருக்களையெல்
லாம் கீழ்ப்படுத்தினேன். இப்போதும் **கர்த்**
**தர்** உனக்கு ஒரு வீட்டைக் கட்டுவார் என்ப
11 தை உனக்கு அறிவிக்கிறேன். நீ உன் பிதாக்க
ளிடத்திலே போக, உன் நாட்கள் நிறைவே
றும்போது, நான் உனக்குப்பின்பு உன் புத்
திரரில் ஒருவனாகிய உன் சந்ததியை எழும்
பப்பண்ணி, அவன் ராஜ்யத்தை நிலைப்படுத்து
12 வேன். அவன் எனக்கு ஒரு ஆலயத்தைக்
கட்டுவான்; அவன் சிங்காசனத்தை என்றைக்
13 கும் நிலைக்கப்பண்ணுவேன். நான் அவனுக்
குப் பிதாவாயிருப்பேன், [1]அவன் எனக்குக்
குமாரனாயிருப்பான்; உனக்கு முன்னிருந்த
வனை விட்டு என் கிருபையை நான் விலகப்
பண்ணினதுபோல, அவனை விட்டு விலகப்
14 பண்ணாமல், அவனை என் ஆலயத்திலும்
என் ராஜ்யத்திலும் என்றென்றைக்கும் நிலைக்
கப்பண்ணுவேன்; [2]அவனுடைய ராஜாசனம்
என்றென்றைக்கும் நிலைபெற்றிருக்கும் என்று
15 சொல் என்றார். நாத்தான் இந்த எல்லா
வார்த்தைகளின்படியும் இந்த எல்லாத் தரிச
னத்தின்படியும் தாவீதுக்குச் சொன்னான்.
16 அப்பொழுது தாவீதுராஜா உட்பிரவே
சித்து, **கர்த்தருடைய** சமுகத்திலிருந்து: [3]தேவ
னாகிய **கர்த்தாவே**, தேவரீர் என்னை இது
வரைக்கும் கொண்டுவந்ததற்கு நான் எம்மாத்
17 திரம்? என் வீடும் எம்மாத்திரம்? தேவனே,
இது இன்னும் உம்முடைய பார்வைக்குக்
கொஞ்சக் காரியமாயிருக்கிறது என்று தேவ
னான **கர்த்தராயிருக்கிற** நீர் உமது அடியானு
டைய வீட்டைக்குறித்து வெகுதூரமாயிருக்
கும் காலத்துச் செய்தியையும் சொல்லி,
என்னை மகா மேன்மையான சந்ததியின்
மனுஷனாகப் பார்த்தீர். உமது அடியானுக்கு 18
உண்டாகும் கனத்தைப்பற்றி, தாவீது அப்
புறம் உம்மோடே சொல்வது என்ன? தேவ
ரீர் உமது அடியானை அறிவீர். **கர்த்தாவே**, 19
உமது அடியானின் நிமித்தமும், [4]உமது இரு
தயத்தின்படியும், இந்தப் பெரிய காரியங்களை
யெல்லாம் அறியப்பண்ணும்படிக்கு, இந்தப்
பெரிய காரியத்தையெல்லாம் செய்தீர். **கர்த்** 20
**தாவே**, நாங்கள் எங்கள் காதுகளால் கேட்ட
எல்லாவற்றின்படியும் தேவரீருக்கு நிகரான
வர் இல்லை; உம்மைத்தவிர வேறே தேவனும்
இல்லை. உமது ஜனமாகிய இஸ்ரவேலுக்கு 21
நிகரான ஜனமும் உண்டோ? பூலோகத்தில்
இந்த ஒரே ஜாதியை தேவனாகிய நீர் உமக்கு
ஜனமாக மீட்கும்படி, பயங்கரமான பெரிய
காரியங்களினால் உமக்குக் கீர்த்தியை உண்
டாக்கி, நீர் எகிப்திற்கு நீங்கலாக்கி மீட்ட
உமது ஜனத்திற்கு முன்பாக ஜாதிகளைத் துர
த்தி, உமது ஜனமாகிய இஸ்ரவேலர் என் 22
றைக்கும் உமது ஜனமாயிருப்பதற்கு அவர்களை
நிலைப்படுத்தி, [5]**கர்த்தராகிய** நீர்தாமே அவர்
களுக்கு தேவனானீர். இப்போதும் **கர்த்தா** 23
**வே**, தேவரீர் அடியானையும் அவன் வீட்டை
யும் குறித்துச் சொன்ன வார்த்தை என்றென்
றைக்கும் நிலைவரப்பட்டிருப்பதாக; தேவரீர்
சொன்னபடியே செய்தருளும். ஆம், அது 24
நிலைவரப்பட்டிருக்கவும், இஸ்ரவேலின் தேவ
னாகிய சேனைகளின் **கர்த்தர்** [6]இஸ்ரவேலுக்கு
தேவன் என்றும், உமது அடியானாகிய தா
வீதின் வீடு உமக்கு முன்பாகத் திடமானதென்
றும் சொல்லப்படுவதினால், உமது நாமம் என்
றைக்கும் மகிமைப்படவும் கடவது. உனக்கு 25
வீடு கட்டுவேன் என்று என் தேவனாகிய நீர்
உமது அடியான் செவிகேட்க வெளிப்படுத்தி
னீர்; ஆகையால் உமக்கு முன்பாக விண்ணப்
பம் பண்ண, உமது அடியானுக்கு மனத்தை
ரியம் கிடைத்தது. இப்போதும் **கர்த்தாவே**, 26
நீரே தேவன்; நீர் உமது அடியானைக்குறித்து
இந்த நல்ல விசேஷத்தைச் சொன்னீர். இப் 27
போதும் உமது அடியானின் வீடு என்றைக்
கும் உமக்கு முன்பாக இருக்கும்படிக்கு,
அதை ஆசீர்வதித்தருளினீர்; **கர்த்தராகிய**
தேவரீர் அதை ஆசீர்வதித்தபடியினால், [7]அது
என்றைக்கும் ஆசீர்வதிக்கப்பட் டிருக்கும்
என்றான்.

இதற்குப்பின்பு, [8]தாவீது பெலிஸ்தரை **18**
முறிய அடித்து, அவர்களைக் [1] கீழ்ப்படுத்தி,
காத்பட்டணத்தையும் அதின் கிராமங்களையும்
பெலிஸ்தரின் கையிலிருந்து பிடித்துக்கொண்
டான். அவன் மோவாபியரையும் முறிய 2
அடித்ததினால், மோவாபியர் தாவீதைச் சே
வித்து அவனுக்குக் காணிக்கைகளைச் செலுத்
தினார்கள். சோபாவின் ராஜாவாகிய ஆதா 3
ரேசர் ஐபிராத் நதியண்டையில் தன் ராஜா
வத்தை நிறுத்தப்போகிறபோது, தாவீது அவ
னையும் ஆமாத்தின்கிட்டே முறிய அடித்தான்.
அவனுக்கு இருந்த ஆயிரம் ரதங்களையும் ஏழா 4

[1] 2 சாமு. 7. 14, 15
[2] லூக். 1. 33
[3] 2 சாமு. 7. 18
[4] ஏசா. 37. 35. தானி. 9. 17
[5] ரோ. 9. 4, 5
[6] எபி. 8. 10. வெளி. 21. 3
[7] ரோ. 11. 29
[8] 2 சாமு. 8. 1. மு

யிரம் குதிரைவீரரையும் இருபதினுயிரம் கா
லாட்களையும் பிடித்து, இரதங்களில் நூறு
ரதங்களை வைத்துக்கொண்டு, மற்றவைகளை
5 யெல்லாம் துண்டாடிப்போட்டான். சோபா
வின் ராஜாவாகிய ஆதாரேசருக்கு உதவி
செய்யத் தமஸ்குபட்டணத்தாராகிய சீரியர்
வந்தார்கள்; தாவீது சீரியரில் இருபத்திரா
6 யிரம்பேரை வெட்டிப்போட்டு, தமஸ்குவுக்
கடுத்த சீரியாவிலே தாணையங்களை வைத்தான்;
சீரியர் தாவீதைச் சேவித்து அவனுக்குக் காணி
க்கைகளைச் செலுத்தினார்கள்; தாவீது போன
இடத்திலெல்லாம் **கர்த்தர்** அவனைக் காப்பாற்
7 றினார். ஆதாரேசரின் சேவகருக்கு இருந்த
பொன் பரிசைகளைத் தாவீது எடுத்து, அவை
8 களை எருசலேமுக்குக் கொண்டுவந்தான். ஆதா
ரேசரின் பட்டணங்களாகிய திப்காத்திலும்
கூனிலுமிருந்து தாவீது வெகு திரளான வெண்
கலத்தையும் எடுத்துக்கொண்டுவந்தான்; [1]அதி
னாலே சாலொமோன் வெண்கலக் கடல்
தொட்டியையும் தூண்களையும் வெண்கலத்
9 தட்டுமுட்டுகளையும் உண்டாக்கினான். தாவீது
சோபாவின் ராஜாவாகிய ஆதாரேசரின் ராணு
வத்தையெல்லாம் முறிய அடித்த செய்தியை
ஆமாத்தின் ராஜாவாகிய [2]தோயூ கேட்டபோ
10 து, அவன் தாவீது ராஜாவின் சுகசெய்தியை
விசாரிக்கவும், அவன் ஆதாரேசரோடு யுத்தம்
பண்ணி, அவனை முறிய அடித்ததற்காக அவ
னுக்கு வினவுதல் சொல்லவும், தன் குமார
னாகிய அதோராமையும், பொன்னும் வெள்
ளியும் வெண்கலமுமான சகலவிதத் தட்டு
முட்டுகளையும், அவனிடத்துக்கு அனுப்பி
னான்; ஆதாரேசர் தோயூவினமேல் யுத்தம்
11 பண்ணுகிறவனாயிருந்தான. அந்தத் தட்டுமுட்
டுகளையும், தான எதோமியர், மோவாபியர்,
அம்மோன் புத்திரர், பெலிஸ்தர், அமலேக்கியர்
என்னும் சகல ஜாதிகளின் கையிலும் வாங்
கின வெள்ளியையும், பொன்னையும் கூடத்
தாவீது ராஜா **கர்த்தருக்குப்** பரிசுத்தம் என்று
12 நேர்ந்துகொண்டான. செருயாவின் குமாரன்
அபிசாயி உப்புப்பள்ளத்தாக்கிலே பதினெண்
ணாயிரம் [3]எதோமியரை முறிய அடித்தான்.
13 ஆகையால் தாவீது எதோமிலே தாணையமபோ
ட்டான்; [4]எதோமியர் எல்லாரும் அவனைச் சே
விக்கிறவர்களானார்கள்; தாவீதுபோன இடத்தி
லெல்லாம் **கர்த்தர்** அவனைக் காப்பாற்றினார்.
14 தாவீது இஸ்ரவேலையெல்லாம் ஆண்டு, தன்
னுடைய ஜனத்திற்கெல்லாம் நியாயமும் நீதி
15 யும் செய்தான். செருயாவின் குமாரன் யோ
வாப் ராணுவத்தலைவனாயிருந்தான்; அகிலூ
தின் குமாரனாகிய யோசபாத் மந்திரியாயிருந்
16 தான். அகிதூபின் குமாரன் சாதோக்கும,
அபியத்தாரின் குமாரன் *அபிமெலேக்கும
ஆசாரியராயிருந்தார்கள்; சவிஷா சம்பிரதியா
17 யிருந்தான். யோய்தாவின் குமாரன் பெனா
யா கிரேத்தியருக்கும பிலேத்தியருக்கும் தலை
வனாயிருந்தான்; தாவீதின் புத்திரர் ராஜாவி
னிடத்தில் பிரதானிகளாயிருந்தார்கள்.

[1] 1 இரா. 7. 15, 23
[2] 2 சாமு. 8
[3] 2 சாமு. 8. 13
[4] 2 சாமு. 8 14.ழ
* அகிமெலேக்கு, செசாயா. 2 சாமு. 8. 17, 18
[5] 2 சாமு. 10. 1.ழ

19 அதன்பின்பு, [5]அம்மோன் புத்திரரின்
ராஜாவாகிய நாகாஸ் மரித்து, அவன் குமா
ரன் அவன் ஸ்தானத்தில் ராஜாவானான். அப் 2
பொழுது தாவீது: ஆனூனின் தகப்பனாகிய
நாகாஸ் எனக்குத் தயவுசெய்ததுபோல, நானும்
அவன் குமாரனாகிய இவனுக்குத் தயவுசெய்
வேன் என்று சொல்லி, அவன் தகப்பனுக்
காக அவனுக்கு ஆறுதல் சொல்ல ஸ்தானாபதி
களை அனுப்பினான்; தாவீதின் ஊழியக்காரர்
ஆனூனுக்கு ஆறுதல் சொல்ல அம்மோன் புத்
திரரின் தேசத்திலே வந்தபோது, அம்மோன் 3
புத்திரரின் பிரபுக்கள் ஆனூனைப் பார்த்து:
தாவீது ஆறுதல் சொல்லுகிறவர்களை உம்மிடத்
தில் அனுப்பினது, உம்முடைய தகப்பனைக்
கனம்பண்ணுகிறதாய் உமக்குத் தோன்றுகிற
தோ? தேசத்தை ஆராயவும், அதைக் கவிழ்த்
துப்போடவும், உளவுபார்க்கவும் அல்லவோ,
அவன் ஊழியக்காரர் உம்மிடத்தில் வந்தார்
கள் என்று சொன்னார்கள். அப்பொழுது 4
ஆனூன்: தாவீதின் ஊழியக்காரரைப் பிடித்து,
அவர்கள் தாடியைச் சிரைத்து, அவர்களு
டைய வஸ்திரங்களை இருப்பிடமட்டும் வைத்
துவிட்டு, மற்றப் பாதியைக் கத்தரித்துப்போ
ட்டு, அவர்களை அனுப்பிவிட்டான். அந்த 5
மனுஷர் வருகையில், அவர்கள் செய்தி தாவீ
துக்கு அறிவிக்கப்பட்டது; அப்பொழுது
அந்த மனுஷர் மிகவும் வெட்கப்பட்டபடியி
னால், அவர்களுக்கு எதிராக ராஜா ஆட்களை
அனுப்பி: உங்கள் தாடி வளருமட்டும் நீங்கள்
எரிகோவிலிருந்து, பிற்பாடு வாருங்கள் என்று
சொல்லச்சொன்னான். அம்மோன் புத்திரர் 6
தாங்கள் தாவீதுக்கு அருவருப்பானதைக் கண்
டபோது, ஆனூனும் அம்மோன் புத்திரரும்
மெசொப்பொத்தாமியாவிலும் மாக்கா சோபா
என்னும் சீரியரின் தேசத்திலுமிருந்து தங்க
ளுக்கு ரதங்களும் குதிரைவீரரும் கூலிக்கு
வரும்படி ஆயிரம் தாலந்து வெள்ளி அனுப்பி,
முப்பத்தீராயிரம் ரதங்களையும் மாக்காவின் 7
ராஜாவையும், அவன் ஜனத்தையும் கூலிப்
படையாக அழைப்பித்தான்; இவர்கள் வந்து
மேதேபாவுக்கு முன்புறத்திலே பாளயமிறங்கி
னார்கள்; அம்மோன் புத்திரரும் தங்கள் பட்ட
ணங்களிலிருந்து கூடிக்கொண்டு யுத்தம்பண்
ண வந்தார்கள். அதைத் தாவீது கேட்டபோது, 8
யோவாபையும் பலசாலிகளின் ராணுவம் முழு
வதையும் அனுப்பினான். அம்மோன் புத்தி 9
ரர் புறப்பட்டுவந்து, பட்டணத்து வாசலண்
டையில் அணிவகுத்தார்கள்; வந்த ராஜாக்கள்
தனித்து வெளியிலே போருக்கு ஆயத்தமாய்
நின்றார்கள். யுத்த ராணுவங்களின் முகப்புத் 10
தனக்கு முன்னும் பின்னும் இருக்கிறதை
யோவாப் கண்டு, அவன் இஸ்ரவேலிலே தெரிந்
துகொள்ளப்பட்ட அனைவரிலும் ஒரு பங்கைப்
பிரித்தெடுத்து, அதைச் சீரியருக்கு எதிராக
நிறுத்தி, மற்ற ஜனத்தை அம்மோன் புத்திர 11
ருக்கு எதிராகப் போருக்கு ஆயத்தப்படுத்தி,
தன் சகோதரனாகிய அபிசாயிக்கு ஒப்பு

12 வித்து, அவனை நோக்கி: என்னைப்பார்க்கி
லும் சீரியர் பலன்கொண்டால், நீ எனக்குத்
துணைநில்; உன்னைப்பார்க்கிலும் அம்மோன்
புத்திரர் பலன்கொண்டால் நான் உனக்குத்
13 துணைநிற்பேன். தைரியமாயிரு; நாம் நம்மு
டைய ஜனத்திற்காகவும், நமது தேவனுடைய
பட்டணங்களுக்காகவும் திடன்கொண்டிருக்
கக்கடவோம்; **கர்த்தர்** தமது பார்வைக்கு நல
14 மானதைச் செய்வாராக என்றான். பின்பு
யோவாபும் அவனோடிருந்த ஜனமும் சீரிய
ரோடு யுத்தம்பண்ணச் சேர்ந்தார்கள்; அவர்
கள் அவனுக்கு முன்பாக முறிந்தோடினார்கள்.
15 சீரியர் முறிந்தோடுகிறதை அம்மோன் புத்தி
ரர் கண்டபோது, அவர்களும் அவன் சகோ
தரனாகிய அபிசாயிக்கு முன்பாக முறிந்தோ
டிப் பட்டணத்திற்கு உட்பட்டார்கள்; யோ
16 வாப் திரும்ப எருசலேமுக்கு வந்தான். தாங்
கள் இஸ்ரவேலுக்கு முன்பாக முறிய அடிக்
கப்பட்டதைக்கண்டபோது, அவர்கள் நதிக்கு
அப்புறத்திலிருக்கிற சீரியரை வரவழைத்தார்
கள்; ஆதாரேசரின் படைத்தலைவனாகிய *சோ
ப்பாக் அவர்களுக்கு முன்னாலே நடந்துபோ
17 னான். அது தாவீதுக்கு அறிவிக்கப்பட்ட
போது, அவன் இஸ்ரவேலையெல்லாம் கூட்
டிக்கொண்டு, யோர்தானைக் கடந்து, அவர்
களுக்குச் சமீபமாய் வந்தபோது, அவர்களுக்கு
எதிராக ராணுவங்களை நிறுத்தினான்; தாவீது
சீரியருக்கு எதிராக ராணுவங்களைப் போருக்கு
ஆயத்தப்படுத்தினபின் அவனோடு யுத்தம்பண்
18 ணினார்கள். சீரியர் இஸ்ரவேலுக்கு முன்
பாக முறிந்தோடினார்கள்; தாவீது சீரியரில்
ஏழாயிரம் ரதங்களின் மனுஷரையும், நாற்பதி
னாயிரம் காலாட்களையும் கொன்று, படைத்
தலைவனாகிய சோப்பாக்கையும் கொன்றான்.
19 தாங்கள் இஸ்ரவேலுக்கு முன்பாக முறிய
அடிக்கப்பட்டதை ஆதாரேசரின் சேவகர்
கண்டபோது, அவர்கள் தாவீதோடே சமா
தானம்பண்ணி, அவனைச்சேவித்தார்கள்; அப்
புறம் அம்மோன் புத்திரருக்கு உதவிசெய்ய
சீரியர் மனதில்லாதிருந்தார்கள்.

**20** மறு வருஷம், ராஜாக்கள் யுத்தத்திற்குப்
புறப்படும் காலம் வந்தபோது, [1]யோவாப்
ராணுவபலத்தைக் கூட்டிக்கொண்டுபோய்,
அம்மோன் புத்திரரின் தேசத்தைப் பாழ்க்க
டித்து ரப்பாவுக்கு வந்து அதை முற்றிக்கை
போட்டான்; தாவீதோ எருசலேமில் இருந்து
விட்டான்; யோவாப் ரப்பாவை அடித்துச்
2 சங்கரித்தான். தாவீது வந்து, அவர்கள் ராஜா
வுடைய தலையின்மேல் இருந்த கிரீடத்தை
எடுத்துக்கொண்டான்; [2]அது ஒரு தாலந்து
பொன்நிறையும் ரத்தினங்கள் பதித்ததுமா
யிருந்தது; அது தாவீதின் தலையில் வைக்கப்
பட்டது; பட்டணத்திலிருந்து ஏராளமான
3 கொள்ளையையும் கொண்டுபோனான். பின்பு
அதிலிருந்த ஜனங்களை அவன் வெளியே
கொண்டுபோய், அவர்களை வாள்களுக்கும்,
இருப்புப்பாரைகளுக்கும், கோடரிகளுக்கும்
உட்படுத்தி; இப்படி அம்மோன் புத்திரரின்
பட்டணங்களுக்கெல்லாம் தாவீது செய்து,
எல்லா ஜனத்தோடுங்கூட எருசலேமுக்குத்
திரும்பினான்.

அதற்குப் பின்பு கேசேரிலே பெலிஸ்த 4
ரோடு யுத்தம் உண்டாயிற்று; [3]அப்பொழுது
ஊசாத்தியனாகிய சிபெக்காய் ராட்சத புத்திர
ரில் ஒருவனான சிப்பாயி என்பவனைக் கொன்
றான்; அதினால் அவர்கள் வசப்படுத்தப்பட்
டார்கள். திரும்பப் பெலிஸ்தரோடு யுத்தம் 5
உண்டாகிறபோது, யாவீரின் குமாரனாகிய
எல்க்கானான் காத்தூரானாகிய கோலியாத்தின்
சகோதரனை லாகேமியைக் கொன்றான்;
அவன் ஈட்டித் தாங்கு நெய்கிறவர்களின்
படைமரம் அவ்வளவு பெரிதாயிருந்தது. மறு 6
படியும் ஒரு யுத்தம் காத்திலே நடந்தபோது,
[4]அங்கே நெட்டையனான ஒரு மனுஷன்
இருந்தான்; அவனுக்கு அவ்வாறு விரலாக
இருபத்துநாலு விரல்கள் இருந்தது, அவனும்
ராட்சத சந்ததியாயிருந்து, இஸ்ரவேலை நிந் 7
தித்தான்; தாவீதின் சகோதரனாகிய [5]சிமேயா
வின் குமாரன் யோனத்தான் அவனைக் கொ
ன்றான். காத்தூரிலிருந்த ராட்சதனுக்குப் 8
பிறந்த இவர்கள் தாவீதின் கையினாலும் அவன்
சேவகரின் கையினாலும் மடிந்தார்கள்.

சாத்தான் இஸ்ரவேலுக்கு விரோதமாய் **21**
எழும்பி, [6]இஸ்ரவேலைத் தொகையிடுகிற
தற்கு தாவீதை ஏவிவிட்டது. அப்படியே 2
தாவீது யோவாபையும், ஜனத்தின் சேர்வைக்
காரரையும் நோக்கி: நீங்கள் போய், பெயெர்
செபாதொடங்கித் தாண்மட்டும் இருக்கிற
இஸ்ரவேலை எண்ணி, [7]அவர்கள் இலக்கத்
தை நான் அறியும்படிக்கு, என்னிடத்தில்
கொண்டுவாருங்கள் என்றான். அப்பொழுது 3
யோவாப்: **கர்த்தருடைய** ஜனங்கள் இப்போது
இருக்கிறதைப்பார்க்கிலும் நூறத்தனையாய்
அவர் வர்த்திக்கப்பண்ணுவாராக; ஆனாலும்
ராஜாவாகிய என் ஆண்டவனே, அவர்கள்
எல்லாரும் என் ஆண்டவனின் சேவகரல்ல
வா? என் ஆண்டவன் இதை விசாரிப்பா
னேன்? இஸ்ரவேலின்மேல் குற்றமுண்டாக
இது நடக்கவேண்டியது என்ன என்றான்.
யோவாப் அப்படிச் சொல்லியும், ராஜாவின் 4
வார்த்தை மேலிட்டபடியினால், யோவாப்
புறப்பட்டு, இஸ்ரவேல் எங்கும் சுற்றித்திரி
ந்து எருசலேமுக்கு வந்து, ஜனத்தை இலக் 5
கம்பார்த்து, தொகையைத் தாவீதிடத்தில்
கொடுத்தான். இஸ்ரவேலிலெல்லாம் பட்ட
யம் உருவத்தக்கவர்கள் பதினொருலட்சம்பே
ரும், யூதாவில் பட்டயம் உருவத்தக்கவர்கள்
நாலுலட்சத்து எழுபதினாயிரம்பேரும் இருந்
தார்கள். ஆனாலும் ராஜாவின் வார்த்தை யோ 6
வாபுக்கு அருவருப்பா யிருந்தபடியினால்,
[8]லேவி பென்யமீன் கோத்திரங்களில் உள்ள
வர்களை அவர்களுடைய இலக்கத்திற்குட்பட
எண்ணாதேபோனான். இந்தக் காரியம் தேவ 7
னுடைய பார்வைக்கு ஆகாததானபடியினால்

* சோபாக். 2 சாமு. 10. 16
[1] 2 சாமு. 11. 1; 12. 26
[2] 2 சாமு. 12. 30, 31
[3] 2 சாமு. 21. 18, 19
[4] 2 சாமு. 21. 20
[5] 1 சாமு. 16. 9
[6] 2 சாமு. 24. 1
[7] 27. 28
[8] 27. 24

8 அவர் இஸ்ரவேலை வாதித்தார். தாவீது தே
வனை நோக்கி: நான் இந்தக் காரியத்தைச்
செய்ததினால் மிகவும் பாவஞ்செய்தேன்; [1]இப்
போதும் உம்முடைய அடியேனின் அக்கிர
மத்தை நீக்கிவிடும்; வெகு புத்தியீனமாய்ச்
9 செய்தேன் என்றான். அப்பொழுது **கர்த்தர்**,
தாவீதின் ஞானதிருஷ்டிக்காரனாகிய [2]காத்து
10 டனே பேசி, நீ தாவீதினிடத்தில் போய்:
மூன்று காரியங்களை உனக்கு முன்பாக வைக்
கிறேன்; அவைகளில் ஒரு காரியத்தைத் தெரி
ந்துகொள்; அதை நான் உனக்குச் செய்
வேன் என்று **கர்த்தர்** உரைக்கிறார் என்று
11 சொல் என்றார். அப்படியே காத் தாவீதினி
12 டத்தில் வந்து, அவனை நோக்கி: மூன்று
வருஷத்துப் பஞ்சமோ? அல்லது உன் பகை
ஞரின் பட்டயம் உன்னைப் பின்தொடர
நீ உன் சத்துருக்களுக்கு முன்பாக முறிந்
தோடிப்போகச் செய்யும் மூன்றுமாதச் சங்
காரமோ? அல்லது மூன்றுநாள் **கர்த்தரு
டைய** தூதன் இஸ்ரவேலுடைய எல்லையெங்
கும் சங்காரம் உண்டாகும்படி தேசத்தில் நிற்
கும் **கர்த்தருடைய** பட்டயமாகிய கொள்ளை
நோயோ? இவைகளில் ஒன்றைத் தெரிந்து
கொள் என்று **கர்த்தர்** உரைக்கிறார். [3]இப்
போதும் என்னை அனுப்பினவருக்கு நான்
என்ன மறு உத்தரவு கொண்டுபோகவேண்
டும் என்பதை யோசித்துப்பாரும் என்றான்.
13 அப்பொழுது தாவீது காத்தை நோக்கி: கொ
டிய இடுக்கணில் அகப்பட்டிருக்கிறேன்; இப்
போது நான் **கர்த்தருடைய** கையிலே விழு
வேனாக; அவருடைய இரக்கங்கள் மகா பெரி
யது; மனுஷர் கையிலே விழாதிருப்பேனாக
14 என்றான். ஆகையால் **கர்த்தர்** இஸ்ரவேலி
லே கொள்ளைநோயை வரப்பண்ணினார்; அதி
னால் இஸ்ரவேலில் எழுபதினாயிரம்பேர் மடி
15 ந்தார்கள். எருசலேமையும் அழிக்க தேவன்
ஒரு தூதனை அனுப்பினார்; [4]ஆனாலும் அவன்
அழிக்கையில் **கர்த்தர்** பார்த்து, அந்தத் தீங்
குக்கு மனஸ்தாபப்பட்டு, [5]சங்கரிக்கிற தூதனை
நோக்கி: போதும், இப்போது உன் கையை
நிறுத்து என்றார்; **கர்த்தருடைய** தூதன் எபூ
சியனாகிய ஒர்னானின் களத்தண்டையிலே
16 நின்றான். தாவீது தன் கண்களை ஏறெடுத்து,
பூமிக்கும் வானத்திற்கும் நடுவே நிற்கிற **கர்த்
தருடைய** தூதன் உருவின பட்டயத்தைத் தன்
கையில் பிடித்து, [6]அதை எருசலேமின்மேல்
நீட்டியிருக்கக் கண்டான்; அப்பொழுது தா
வீதும் மூப்பர்களும் இரட்டுப் போர்த்துக்கொ
17 ண்டு முகங்குப்புற விழுந்தார்கள். தாவீது
தேவனை நோக்கி: ஜனத்தை எண்ணச்சொன்
னவன் நான் அல்லவோ? நான்தான் பாவஞ்
செய்தேன், பொல்லாப்பு நடப்பித்தேன்;
இந்த ஆடுகள் என்னசெய்தது? என் தேவனா
கிய **கர்த்தாவே**, வாதிக்கும்படி உம்முடைய
கரம் உம்முடைய ஜனத்திற்கு விரோதமாயிரா
மல், எனக்கும் என் தகப்பன் வீட்டிற்கும்
18 விரோதமாயிருப்பதாக என்றான். அப்பொ

[1] 2 சாமு. 12. 13. 24. 10
[2] 1 சாமு. 9. 9
[3] 2 சாமு. 24. 13
[4] 2 சாமு. 24. 16, 18
[5] ஆதி. 6. 6. ஸ்பா. 2. 18. யோனா. 4. 2
[6] ஆதி. 3. 24. எண். 22. 31. யோசு. 5. 13, 14
[7] 2 சாமு. 24. 24
[8] லேவி. 9. 24. 2 நாளா. 7. 1
[9] 16. 39. 1 இரா. 3. 4. 2 நாளா. 1. 3
[10] 21. 18. உபா. 12. 5. 2 நாளா. 3. 1

ழுது எபூசியனாகிய ஒர்னானின் களத்திலே
**கர்த்தருக்கு** ஒரு பலிபீடத்தை உண்டாக்கும்
படி, தாவீது அங்கே போகவேண்டுமென்று
தாவீதுக்குச் சொல் என்று **கர்த்தருடைய**
தூதன் காத்துக்குக் கட்டளையிட்டான். அப் 19
படியே தாவீது **கர்த்தரின்** நாமத்திலே காத்
சொன்ன வார்த்தையின்படியே போனான்.
ஒர்னான் திரும்பிப்பார்த்தான்; அவனும் அவ 20
னோடிருக்கிற அவனுடைய நாலு குமாரரும்
அந்த தேவதூதனைக் கண்டு ஒளித்துக்கொண்
டார்கள்; ஒர்னானோ போரடித்துக்கொண்டிரு
ந்தான். தாவீது ஒர்னானிடத்தில் வந்தபோது, 21
ஒர்னான் கவனித்துத் தாவீதைப் பார்த்து,
அவன் களத்திலிருந்து புறப்பட்டுவந்து, தரை
மட்டும் குனிந்து தாவீதை வணங்கினான்.
அப்பொழுது தாவீது ஒர்னானை நோக்கி: இந் 22
தக் களத்தின் நிலத்திலே நான் **கர்த்தருக்கு**
ஒரு பலிபீடத்தைக் கட்டும்படிக்கு அதை
எனக்குக் கொடு; வாதை ஜனத்தைவிட்டு
நிறுத்தப்பட, எனக்கு அதைப் பெறும் விலைக்
குக் கொடு என்றான். ஒர்னான் தாவீதை நோ 23
க்கி: ராஜாவாகிய என் ஆண்டவன் அதை
வாங்கிக்கொண்டு, தம்முடைய பார்வைக்கு
நலமானபடி செய்வாராக; இதோ, சர்வாங்க
தகனங்களுக்கு மாடுகளும், விறகுக்குப் போ
ரடிக்கிற உருளைகளும், போஜனபலிக்குக்
கோதுமையும் ஆகிய யாவையும் கொடுக்கி
றேன் என்றான். அதற்குத் தாவீதுராஜா ஒர் 24
னானை நோக்கி: அப்படியல்ல, நான் உன்னு
டையதை இலவசமாய் வாங்கி, **கர்த்தருக்குச்**
சர்வாங்க தகனத்தைப் பலியிடாமல், அதைப்
பெறும் விலைக்கு வாங்குவேன் என்று சொல்
லி, தாவீது அந்த நிலத்திற்கு அறுநூறுசேக் 25
கல் நிறை பொன்னை [7]ஒர்னானுக்குக் கொடு
த்து, அங்கே **கர்த்தருக்கு** ஒரு பலிபீடத்தைக் 26
கட்டி, சர்வாங்க தகனபலிகளையும் சமாதான
பலிகளையும் செலுத்தி, **கர்த்தரை** நோக்கி
விண்ணப்பம் பண்ணினான்; அப்பொழுது
அவர் வானத்திலிருந்து சர்வாங்க தகனபலி
பீடத்தின்மேல் இறங்கின அக்கினியினால்
[8]அவனுக்கு மறு உத்தரவு கொடுத்ததுமல்லா
மல், தேவதூதன் தன்னுடைய பட்டயத்தை 27
உறையிலே திரும்பப் போடவேண்டும்என்று
**கர்த்தர்** அவனுக்குச் சொன்னார்.

எபூசியனாகிய ஒர்னானின் களத்திலே **கர்த்** 28
**தர்** தனக்கு உத்தரவு அருளினதைத் தாவீது
அக்காலத்திலே கண்டு அங்கேதானே பலியிட்
டான். மோசே வனாந்தரத்தில் உண்டாக் 29
கின **கர்த்தருடைய** வாசஸ்தலமும் [9]சர்வாங்க
தகனபலிபீடமும் அக்காலத்திலே கிபியோ
னின் மேட்டில் இருந்தது. தாவீது **கர்த்தரு** 30
**டைய** தூதனின் பட்டயத்திற்குப் பயந்திருந்த
படியால், அவன் தேவசந்நிதியில் போய் விசா
ரிக்கக்கூடாதிருந்தது.

அப்பொழுது தாவீது: தேவனாகிய **கர்த்** **22**
**தருடைய** ஆலயம் இருக்கும் ஸ்தலம் இது
வே; [10]இஸ்ரவேல் பலியிடும் சர்வாங்க தகன

பலிபீடம் இருக்கும் ஸ்தலமும் இதுவே
என்றான்.
2 பின்பு தாவீது இஸ்ரவேல் தேசத்திலிருக்
கிற அந்நிய ஜாதியாரைக் கூடிவரச்செய்து,
[1]தேவனுடைய ஆலயத்தைக் கட்டுகிறதற்கான
கல்லுகளை வெட்டிப் பணிப்படுத்தும் கல்தச்
3 சரை ஏற்படுத்தினான். தாவீது வாசல்களின்
கதவுகளுக்கு வேண்டிய ஆணிகளுக்கும் கீல்
களுக்கும் மிகுதியான இரும்பையும், [2]நிறுத்து
முடியாத ஏராளமான வெண்கலத்தையும்,
4 எண்ணிறந்த கேதுரு மரங்களையும் சம்பா
தித்தான்; [3]சீதோனியரும் தீரியரும் தாவீதுக்
குத் திரளான கேதுருமரங்களைக் கொண்டு
5 வந்தார்கள். தாவீது: என் குமாரனாகிய
சாலொமோன் வாலிபனும் இளைஞனுமா
யிருக்கிறான்; [4]கர்த்தருக்குக் கட்டப்படும்
ஆலயம் சகல தேசங்களிலும் கீர்த்தியும் மகி
மையும் உடையதாய் விளங்கும்படி மகா பெரி
யதாயிருக்கவேண்டும்; ஆகையால் அதற்காக
வேண்டியவைகளை இப்பொழுதே சேகரம்
பண்ணவேண்டும் என்று சொல்லி, தாவீது
தன் மரணத்திற்குமுன்னே திரளாய்ச் சவத
ரித்து வைத்தான்.
6 அவன் தன் குமாரனாகிய சாலொமோனை
அழைத்து, இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்த
ருக்கு ஆலயத்தைக் கட்டுகிறதற்காக அவனுக்
7 குக் கட்டளை கொடுத்து, சாலொமோனை
நோக்கி: என் குமாரனே, [5]நான் என் தேவ
னாகிய கர்த்தரின் நாமத்திற்கு ஒரு ஆலயத்
தைக் கட்ட என் இருதயத்தில் நினைத்திருந்
8 தேன். ஆனாலும் கர்த்தருடைய வார்த்தை
எனக்கு உண்டாகி: நீ திரளான ரத்தத்தைச்
சிந்தி, [6]பெரிய யுத்தங்களைப் பண்ணினாய்; நீ
என் நாமத்திற்கு ஆலயத்தைக் கட்டவேண்
டாம்; எனக்குமுன்பாக மிகுதியான ரத்தத்
9 தைத் தரையிலே சிந்தப்பண்ணினாய். இதோ,
உனக்குப் பிறக்கப்போகிற குமாரன் அமைதி
யுள்ள புருஷனாயிருப்பான்; [7]சுற்றிலுமிருக்
கும் அவன் சத்துருக்களையெல்லாம் விலக்கி
அவனை அமர்ந்திருக்கச் செய்வேன்; ஆகை
யால் அவன் பேர் சாலொமோன் என்னப்
படும்; அவன் நாட்களில் இஸ்ரவேலின்மேல்
சமாதானத்தையும் அமரிக்கையையும் அருளு
10 வேன். அவன் என் நாமத்திற்கு ஆலயத்தைக்
கட்டுவான்; [8]அவன் எனக்குக் குமாரனாயிருப்
பான், நான் அவனுக்குப் பிதாவாயிருப்பேன்;
இஸ்ரவேலை ஆளும் அவனுடைய ராஜாங்கத்
தின் சிங்காசனத்தை என்றென்றைக்கும் நிலை
11 ப்படுத்துவேன் என்றார். இப்போதும் என்
குமாரனே, நீ பாக்கியவானாயிருந்து, கர்த்தர்
உன்னைக்குறித்துச் சொன்னபடியே உன் தே
வனாகிய கர்த்தரின் ஆலயத்தைக் கட்டும்படி,
12 அவர் உன்னுடனேகூட [9]இருப்பாராக. கர்த்
தர் உனக்கு ஞானத்தையும் உணர்வையும் அரு
ளிச்செய்து, [10]உன் தேவனாகிய கர்த்தரின்
நியாயப்பிரமாணத்தைக் கைக்கொண்டு, இஸ்ர
வேலை ஆளும்படி உனக்குக் கட்டளையிடுவா

[1] 1 இரா. 9. 21
[2] 14. வச. 1 இரா. 7. 47
[3] 1 இரா. 5. 6
[4] 1 இரா. 8. 7
[5] 2 சாமு. 7. 2. 1 இரா. 8. 17. உபா. 12. 5, 11
[6] 1 இரா. 5. 3
[7] 1 இரா. 4. 25; 5. 4
[8] 2 சாமு. 7. 12, 13. எபி. 1. 5
[9] 16. வச.
[10] 1 இரா. 3. 9, 12. சங். 72. 1
[11] உபா. 31. 7, 8. யோசு. 1. 6-8
[12] உபா. 12. 10. யோசு. 22. 4. 2 சாமு. 7. 1
[13] 28. 5. 1 இரா. 1. 33-39
[14] எண். 4. 3, 47
[15] 26. 29. உபா. 16. 18
[16] 2 நாளா. 29. 25, 26. ஆமோ. 6. 5

ராக. கர்த்தர் இஸ்ரவேலுக்காக மோசேக் 13
குக் கற்பித்த நியமங்களையும் நியாயங்களையும்
செய்ய நீ கவனமாயிருந்தால் பாக்கியவானா
யிருப்பாய்; [11]நீ பலங்கொண்டு தைரியமாயிரு,
பயப்படாமலும் கலங்காமலும் இரு. இதோ, 14
நான் என் சிறுமையிலே கர்த்தருடைய ஆல
யத்திற்காக ஒரு லட்சம் தாலந்து பொன்னை
யும், பத்துலட்சம் தாலந்து வெள்ளியையும்,
நிறுத்து முடியாத திரளான வெண்கலத்தை
யும் இரும்பையும் சவதரித்தும், மரங்களையும்
கற்களையும் சவதரித்தும் வைத்தேன்; நீ இன்
னும் அவைகளுக்கு அதிகமாய்ச் சவதரிப்பாய்.
வேலைசெய்யத்தக்க திரளான சிற்பாசாரிக 15
ளும், தச்சரும் கல்தச்சரும், எந்த வேலையிலும்
நிபுணரானவர்களும் உன்னோடிருக்கிறார்கள்.
பொன்னுக்கும், வெள்ளிக்கும், வெண்கலத் 16
துக்கும், இரும்புக்கும் கணக்கில்லை; நீ எழும்
பிக் காரியத்தை நடப்பி; கர்த்தர் உன்னோடே
இருப்பாராக என்றான். தன் குமாரனாகிய 17
சாலொமோனுக்கு உதவிசெய்ய, தாவீது இஸ்
ரவேலின் பிரபுக்கள் அனைவருக்கும் கற்பித்
துச் சொன்னது: உங்கள் தேவனாகிய கர்த் 18
தர் உங்களோடிருந்து நான்குதிசையிலும் உங்
களுக்கு இளைப்பாறுதலைத் தந்தார் அல்லவா?
[12]தேசத்தின் குடிகளை என் கையில் ஒப்புக்
கொடுத்தார்; கர்த்தருக்கு முன்பாகவும், அவ
ருடைய ஜனத்திற்கு முன்பாகவும் தேசம் கீழ்ப்
பட்டிருக்கிறது. இப்போதும் நீங்கள் உங்கள் 19
இருதயத்தையும், உங்கள் ஆத்துமத்தையும்,
உங்கள் தேவனாகிய கர்த்தரைத் தேடுகிறதற்கு
நேராக்கி, கர்த்தருடைய உடன்படிக்கைப்
பெட்டியையும், தேவனுடைய பரிசுத்தப் பணி
முட்டுகளையும், கர்த்தருடைய நாமத்திற்குக்
கட்டப்படும் அந்த ஆலயத்திற்குள் கொண்டு
போகும்படிக்கு, நீங்கள் எழும்பி, தேவனாகிய
கர்த்தரின் பரிசுத்த ஸ்தலத்தைக் கட்டுங்கள்
என்றான்.

தாவீது கிழவனும் பூரண வயதுள்ளவனு 23
மானபோது, [13]தன் குமாரனாகிய சாலொ
மோனை இஸ்ரவேலின்மேல் ராஜாவாக்கினான்.
இஸ்ரவேலின் எல்லாப் பிரபுக்களையும், ஆசா 2
ரியரையும், லேவியரையும் கூடிவரும்படி செ
ய்தான். அப்பொழுது முப்பது வயதுமுதல் 3
அதற்கு மேற்பட்ட லேவியர் பேர்பேராக
எண்ணப்பட்டார்கள்; [14]தலைதலையாக எண்ண
ப்பட்ட அவர்களுடைய இலக்கம் முப்பத்
தெண்ணாயிரம். அவர்களில் இருபத்து நாலாயி 4
ரம்பேர் கர்த்தருடைய ஆலயத்தின் வேலையை
விசாரிக்கிறவர்களும், [15]ஆறாயிரம்பேர் தலைவ
ரும் மணியக்காரருமாயிருக்கவேண்டும் என்
றும், நாலாயிரம்பேர் வாசல் காக்கிறவர்களா 5
யிருக்கவேண்டும் என்றும், துதிசெய்கிறதற்
குத் தான் பண்ணுவித்த கீதவாத்தியங்களால்
நாலாயிரம்பேர் கர்த்தரைத் துதிக்கிறவர்களா
யிருக்கவேண்டும் [16]என்றும் தாவீது சொல்லி,
அவர்களை லேவியின் குமாரராகியகெர்சோன், 6
கோகாத், மெராரி என்பவர்களுடைய வகுப்

7 புகளின்படி [1]வகுத்தான். கெர்சோனியரில்,
8 [2]லாதானும், சிமேயும் இருந்தார்கள். லாதா
னின் குமாரர், யெகியேல், சேத்தாம், யோ
வேல் என்னும் மூன்றுபேர்; இவர்களில் மூ
9 த்தவன் தலைமையாயிருந்தான். சிமேயின்
குமாரர், செலோமித், ஆசியேல், ஆரான் என்
னும் மூன்றுபேர்; இவர்கள் லாதான் வம்சப்
10 பிதாக்களில் தலைமையாயிருந்தார்கள். யா
காத், சீனா, எயூஷ், பெரீயா என்னும் நாலு
பேரும் சிமேயின் குமாரராயிருந்தார்கள்.
11 யாகாத் தலைமையாயிருந்தான்; சீனா இரண்
டாம் குமாரனாயிருந்தான்; எயூஷுக்கும் பெரீ
யாவுக்கும் அநேகம் குமாரர் இராதபடியினால்,
அவர்கள் பிதாக்களின் குடும்பத்தாரில் ஒரே
12 வம்சமாக எண்ணப்பட்டார்கள். கோகாத்
தின் குமாரர், [3]அம்ராம், இத்சார், எப்ரோன்,
13 ஊசியேல் என்னும் நாலுபேர். அம்ராமின்
குமாரர், [4]ஆரோன், மோசே என்பவர்கள்;
ஆரோனும் அவன் குமாரரும் பரிசுத்தத்திற்
குப் பரிசுத்தமான ஸ்தலத்தை என்றைக்கும்
பரிசுத்தமாய்க் காக்கிறதற்கும், என்றைக்கும்
கர்த்தருக்கு முன்பாக தூபங்காட்டுகிறதற்கும்,
அவருக்கு ஆராதனை செய்கிறதற்கும், அவர்
நாமத்திலே ஆசீர்வாதம்கொடுக்கிறதற்கும் [5]பிரி
14 த்துவைக்கப்பட்டார்கள். தேவனுடைய மனு
ஷனாகிய மோசேயின் குமாரரோவெனில்,
லேவி கோத்திரத்தாருக்குள் எண்ணப்பட்டார்
15 கள். மோசேயின் குமாரர், கெர்சோம், எலி
16 யேசர் என்பவர்கள். கெர்சோமின் குமாரரில்
17 செபுவேல் தலைமையாயிருந்தான். எலியேச
ருடைய குமாரரில் ரெகபியா என்னும் அவன்
குமாரன் தலைமையாயிருந்தான்; எலியேசரு
க்கு வேறே குமாரர் இல்லை; ரெகபியாவின்
18 குமாரர் அநேகராயிருந்தார்கள். இத்சாரின்
குமாரரில் செலோமித் தலைமையாயிருந்தான்.
19 எப்ரோனின் குமாரரில் எரியா என்பவன்
தலைமையாயிருந்தான்; இரண்டாவது அம
ரியா, மூன்றாவது யாகாசியேல், நாலாவது
20 எக்காமியாம். ஊசியேலின் குமாரரில் மீகா
என்பவன் தலைமையாயிருந்தான்; இரண்டா
21 வது இஷியா. மெராரியின் குமாரர், மகேலி,
மூசி என்பவர்கள்; மகேலியின் குமாரர், எலெ
22 யாசார், கீஸ் என்பவர்கள். எலெயாசார் மரிக்
கிறபோது, அவனுக்குக் குமாரத்திகளே அல்
லாமல் குமாரர் இல்லை; கீசின் குமாரராகிய
இவர்களுடைய சகோதரர் இவர்களை விவாகம்
23 பண்ணினார்கள். மூசியின் குமாரர், மகேலி,
24 ஏதேர், எரேமோத் என்னும் மூன்றுபேர். தங்
கள் பிதாக்களுடைய குடும்பங்களின்படியே,
[6]பிதாக்களில் தலைமையாயிருந்த லேவி புத்தி
ரரின் பேர் டாப்பின்படியே, தலைதலையாக
எண்ணப்பட்ட இருபது வயதுமுதல் அதற்கு
மேற்பட்ட இவர்களுடைய சந்ததியார் **கர்த்
தருடைய** ஆலயத்துப் பணிவிடையைச் செய்
25 தார்கள். இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்**
தமது ஜனத்தை இளைப்பாறியிருக்கப்பண்ணி
னார்; அவர் என்றென்றைக்கும் எருசலேமில்
வாசம்பண்ணுவாரென்றும், இனி லேவியர் 26
வாசஸ்தலத்தையாகிலும் அதின் ஊழியத்திற்
கடுத்த அதின் பணிமுட்டுகளில் [7]எதையாகி
லும் சுமக்கத் தேவையில்லை என்றும், தாவீது 27
அவர்களைக்குறித்துச் சொன்ன கடைசி வார்த்
தைகளின்படியே, லேவி புத்திரரில் தொகைக்
குட்பட்டவர்கள் இருபதுவயதுமுதல் அதற்கு
மேற்பட்டவர்களாயிருந்தார்கள். அவர்கள் ஆ 28
ரோனுடைய குமாரரின்கீழ்க் **கர்த்தருடைய**
ஆலயத்தின் ஊழியமாய் நின்று, பிராகாரங்
களையும், அறைகளையும், சகல பரிசுத்த பணி
முட்டுகளின் சுத்திகரிப்பையும், தேவனுடைய
ஆலயத்தின் ஆராதனைக்கடுத்த வேலையையும்
விசாரிப்பதும், சமுகத்தப்பங்களையும், போ 29
ஜனபலிக்கு மெல்லிய மாவையும், புளிப்பில்
லாத அதிரசங்களையும், சட்டிகளிலே செய்கி
றதையும் சுடுகிறதையும், [8]திட்டமான சகல
நிறையையும் அளவையும் விசாரிப்பதும்,
நாள்தோறும் காலையிலும் மாலையிலும் **கர்த்த** 30
**ரைப்** போற்றித் துதித்து, ஓய்வுநாட்களிலும்,
[9]அமாவாசைகளிலும், பண்டிகைகளிலும், **கர்
த்தருக்குச்** சர்வாங்க தகனபலிகள் செலுத்தப்
படுகிற சகல வேளைகளிலும், இலக்கத்திற் 31
குள்ளான அவர்கள் தங்களுக்கு நியமிக்கப்
பட்டபடியே, எப்பொழுதும் அந்தப்பிரகார
மாய்ச் செய்ய, **கர்த்தருக்கு** முன்பாக நிற்ப
தும், ஆசரிப்புக் கூடாரத்தின் காவலையும் 32
பரிசுத்த ஸ்தலத்தின் காவலையும் தங்கள் சகோ
தரராகிய ஆரோனுடைய குமாரரின் காவலை
யும் காப்பதும், **கர்த்தருடைய** ஆலயத்தின்
பணிவிடையைச் செய்வதும், [10]அவர்கள் வே
லையாயிருந்தது.

ஆரோன் புத்திரரின் வகுப்புகளாவன: **24**
[11]ஆரோனின் குமாரர், நாதாப், அபியூ, எலெ
யாசார், இத்தாமார் என்பவர்கள். நாதாபும் 2
அபியூவும் குமாரர் இல்லாமல் தங்கள் தகப்ப
னுக்கு முன்னே மரித்தபடியினால், [12]எலெயா
சாரும் இத்தாமாரும் ஆசாரிய ஊழியம் செய்
தார்கள். தாவீது சாதோக்கைக்கொண்டு எலெ 3
யாசாரின் புத்திரரையும், அகிமெலேக்கைக்
கொண்டு இத்தாமாரின் புத்திரரையும் அவர்
கள் செய்யவேண்டிய ஊழியத்துக்கு முறைப்
படி அவர்களை வகுத்தான். அவர்களை வகுக் 4
கிறபோது, இத்தாமாரின் புத்திரரைப்பார்க்கி
லும் எலெயாசாரின் புத்திரருக்குள்ளே தலை
மையானவர்கள் அதிகமானபேர் காணப்பட்
டபடியினால், எலெயாசாரின் புத்திரரில் பதி
னாறுபேர் தங்கள் பிதாக்களுடைய குடும்பத்
துக்கும், இத்தாமாரின் புத்திரரில் எட்டுப்பேர்
தங்கள் பிதாக்களுடைய குடும்பத்துக்கும் தலை
மையாக வைக்கப்பட்டார்கள். எலெயாசா 5
ரின் புத்திரரிலும் இத்தாமாரின் புத்திரரிலும்,
பரிசுத்த ஸ்தலத்துக்கும், தேவனுக்கு அடுத்த
காரியங்களில் பிரபுக்களாயிருக்கும்படிக்கும்,
இவர்களுக்கும் அவர்களுக்கும் வித்தியாசம்
பண்ணாமல் சீட்டுப்போட்டு அவர்களை வகுத்
தார்கள். லேவியரில் சம்பிரதியாகிய செமாயா 6

[1] யாத். 6. 16. எண். 26. 57
[2] 26. 21
[3] யாத். 6. 18
[4] யாத். 6. 20. 28. 1. எபி. 5. 4
[5] யாத். 30. 7. எண். 6. 23. 16. 40. உபா. 21. 5
[6] எண். 10. 17, 21. எஸ்றா. 3. 8
[7] எண். 4. 5. ழ
[8] யாத். 25. 30. லேவி. 19. 35
[9] எண். 10. 10 சங். 81. 3
[10] எண். 1. 53. 3. 6-9
[11] லேவி. 10. 1, 6. எண். 26. 60
[12] எண். 3. 4. 26. 61

என்னும் நெதனெயேலின் குமாரன், ராஜா
வுக்கும் பிரபுக்களுக்கும் ஆசாரியனாகிய சா
தோக்குக்கும் அபியத்தாரின் குமாரனாகிய
அகிமெலேக்குக்கும் ஆசாரியரும் லேவியரு
மான பிதாக்களின் தலைவருக்கும் முன்பாக
அவர்கள் நாமங்களை எழுதினான்; ஒரு பிதா
வின் வீட்டுச் சீட்டு எலெயாசாருக்கு விழுந்
தது; பின்பு அந்தப்படியே இத்தாமாருக்கும்
7 விழுந்தது. முதலாவது சீட்டு யோயாரீபின்
பேர்வழிக்கும், இரண்டாவது யெதாயாவின்
8 பேர்வழிக்கும், மூன்றாவது ஆரிமின் பேர்
வழிக்கும், நான்காவது செயோரீமின் பேர்
9 வழிக்கும், ஐந்தாவது மல்கியாவின் பேர்
வழிக்கும், ஆறாவது மியாமீனின் பேர்வழிக்
10 கும், ஏழாவது அக்கோத்சின் பேர்வழிக்கும்,
11 எட்டாவது அபியாவின் பேர்வழிக்கும், ஒன்
பதாவது யெசுவாவின் பேர்வழிக்கும், பத்தா
12 வது செக்கனியாவின் பேர்வழிக்கும், பதி
னோராவது எலியாசீபின் பேர்வழிக்கும், பன்
னிரண்டாவது யாக்கீமின் பேர்வழிக்கும்,
13 பதின்மூன்றாவது உப்பாவின் பேர்வழிக்கும்,
பதினான்காவது எசெபெயாவின் பேர்வழிக்
14 கும், பதினைந்தாவது பில்காவின் பேர்வழிக்
கும், பதினாறாவது இம்மேரின் பேர்வழிக்கும்,
15 பதினேழாவது ஏசீரின் பேர்வழிக்கும், பதி
னெட்டாவது அப்சேசின் பேர்வழிக்கும்,
16 பத்தொன்பதாவது பெத்தகியாவின் பேர்வழிக்
கும், இருபதாவது எகெசெக்கியேலின் பேர்
17 வழிக்கும், இருபத்தோராவது யாகினின்
பேர்வழிக்கும், இருபத்திரண்டாவது காமு
18 வேலின் பேர்வழிக்கும், இருபத்துமூன்றா
வது தெலாயாவின் பேர்வழிக்கும், இருபத்து
நான்காவது மாசியாவின் பேர்வழிக்கும் விழுந்
19 தது. இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்**
அவர்கள் தகப்பனாகிய ஆரோனுக்குக் கற்பித்
தபடியே, அவர்கள் அவனுடைய கட்டளை
யின் பிரகாரம், தங்கள் முறைவரிசைகளில்
**கர்த்தருடைய** ஆலயத்திற்குள் பிரவேசிக்கும்
அவர்களுடைய ஊழியத்திற்காகப் பண்ணப்
பட்ட வகுப்புகள் இவைகளே.
20 லேவியின் மற்றப் புத்திரருக்குள்ளே இருக்
கிற அம்ராமின் புத்திரரில் சூபவேலும், சூப
21 வேலின் குமாரரில் எகேதியாவும், ரெகபி
யாவின் குமாரரில் மூத்தவனாகிய இஷியா
22 வும், இத்சாரியரில் செலெமோத்தும், செலெ
23 மோத்தின் குமாரரில் யாகாத்தும், எப்ரோ
னின் குமாரரில் மூத்தவனாகிய எரியாவும்,
இரண்டாம் குமாரனாகிய அமரியாவும், மூன்
றாம் குமாரனாகிய யாகாசியேலும், நான்காம்
24 குமாரனாகிய எக்காமியாமும், ஊசியேலின்
குமாரரில் மீகாவும், மீகாவின் குமாரரில் சாமீ
25 ரும், மீகாவின் சகோதரனாகிய இஷியாவும்,
26 இஷியாவின் குமாரரில் சகரியாவும், மெராரி
யின் குமாரராகிய மகேலி மூசி என்பவர்க
ளும், யாசியாவின் குமாரனாகிய பேனோவும்,
27 மெராரியின் குமாரனாகிய யாசியாவின் குமா
ரான பேனோ, சோகாம், சக்கூர், இப்ரி என்

பவர்களும், மகேலியின் குமாரரில் புத்திர 28
னில்லாத எலெயாசாரும், கீசின் புத்திரரில் 29
யெராமியேலும், மூசியின் குமாரரான மகே 30
லி, ஏதேர், எரிமோத் என்பவர்களுமாகிய
இவர்கள் தங்கள் பிதாக்களுடைய குடும்பங்
களின்படியே லேவியரின் புத்திரரானவர்
கள். இவர்களும் ராஜாவாகிய தாவீதுக்கும் 31
சாதோக்குக்கும் அகிமெலேக்குக்கும் ஆசாரி
யரிலும் லேவியரிலும் பிதாக்களாயிருக்கிற
தலைவருக்கும் முன்பாக, தங்கள் சகோதரரா
கிய ஆரோனின் புத்திரர் செய்ததுபோல,
தங்களிலிருக்கிற பிதாக்களான தலைவருக்
கும், அவர்களுடைய சிறிய சகோதரருக்கும்,
சரிசமானமாய்ச் சீட்டுப் போட்டுக் கொண்
டார்கள்.

மேலும் சுரமண்டலங்களாலும் தம்புருக 25
ளாலும் கைத்தாளங்களாலும், தீர்க்கதரிசனம்
சொல்லுகிற ஆசாப், ஏமான், எதுத்தூன் என்
பவர்களின் குமாரரில் சிலரை, தாவீதும் தே
வாலயச் சேனைகளின் பிரபுக்களும் ஊழியத்
திற்கென்று பிரித்துவைத்தார்கள்; தங்கள்
ஊழியத்தின் கிரியைக்குக் குறித்துவைக்கப்
பட்ட மனுஷர்களின் தொகையாவது: ராஜா 2
வுடைய கட்டளைப்பிரமாணமாய்த் தீர்க்கதரி
சனம் சொல்லுகிற ஆசாப்பின் வசத்திலிருக்
கிற, ஆசாப்பின் குமாரரில் சக்கூர், யோசே
ப்பு, நெதானியா, அஷாரேலா என்பவர்க
ளும், **கர்த்தரைப்** போற்றித் துதித்துத் தீர்க்க 3
தரிசனம் சொல்லுகிற தங்கள் தகப்பனாகிய
எதுத்தூனின் வசத்திலே சுரமண்டலங்களை
வாசிக்க, எதுத்தூனின் குமாரராகிய கெதலி
யா, சேரீ, எஷாயா, அஷபியா, மத்தித்தியா
என்னும் ஆறுபேரும், கொம்பைத் தொனிக் 4
கப்பண்ண, தேவவிஷயத்தில் ராஜாவுக்கு
ஞானதிருஷ்டியுள்ள புருஷனாகிய ஏமானின்
குமாரரான புக்கியா, மத்தனியா, ஊசியேல்,
செபுவேல், எரிமோத், அனனியா, அனானி,
எலியாத்தா, கிதல்தி, ரொமந்தியேசர், யோஸ்
பெகாஷா, மலோத்தி, ஒத்திர், மகாசியோத்
என்பவர்களுமே. இவர்களெல்லாரும் ஏமா 5
னின் குமாரராயிருந்தார்கள்; தேவன் ஏமா
னுக்குப் பதினாலு குமாரரையும் மூன்று குமா
ரத்திகளையும் கொடுத்தார். இவர்கள் அனைவ 6
ரும் ராஜாவுடைய கட்டளைப்பிரமாணமாய்க்
**கர்த்தருடைய** ஆலயத்தில் தாளங்கள் தம்புரு
கள் சுரமண்டலங்களாகிய கீதவாத்தியம் வா
சிக்க, தேவனுடைய ஆலயத்தின் ஊழியமாக
அவரவர் தங்கள் தங்கள் தகப்பன்மாராகிய
ஆசாப், எதுத்தூன், ஏமான் என்பவர்கள் வசத்
தில் இருந்தார்கள். **கர்த்தரைப்** பாடும் பாட் 7
டுகளைக் கற்றுக்கொண்டு, நிபுணரான தங்கள்
சகோதரரோடுங்கூட அவர்கள் இலக்கத்
திற்கு இருநூற்றெண்பத்தெட்டுப்பேராயிருந்
தார்கள். அவர்களில் சிறியவனும் பெரியவ 8
னும், ஆசானும் மாணாக்கனும், சரிசமானமாய்
முறைவரிசைக்காகச் சீட்டுப் போட்டுக்கொ
ண்டார்கள். முதலாவது சீட்டு ஆசாப் வம்ச 9

மான யோசேப்பின் பேர்வழிக்கும், இரண்
டாவது கெதலியா, அவன் சகோதரர், அவன்
குமாரரென்னும் பன்னிரண்டு பேர்வழிக்
10 கும், மூன்றாவது சக்கூர், அவன் குமாரர்,
அவன் சகோதரரென்னும் பன்னிரண்டு பேர்
11 வழிக்கும், நான்காவது இஸ்ரி, அவன் குமா
ரர், அவன் சகோதரரென்னும் பன்னிரண்டு
12 பேர்வழிக்கும், ஐந்தாவது நெத்தனியா,
அவன் குமாரர், அவன் சகோதரரென்னும்
13 பன்னிரண்டு பேர்வழிக்கும், ஆறாவது புக்
கியா, அவன் குமாரர், அவன் சகோதரரென்
14 னும் பன்னிரண்டு பேர்வழிக்கும், ஏழாவது
எசரேலா, அவன் குமாரர், அவன் சகோதர
ரென்னும் பன்னிரண்டு பேர்வழிக்கும்,
15 எட்டாவது எஷாயா, அவன் குமாரர்,
அவன் சகோதரரென்னும் பன்னிரண்டு பேர்
16 வழிக்கும், ஒன்பதாவது மத்தனீயா, அவன்
குமாரர், அவன் சகோதரரென்னும் பன்னி
17 ரண்டு பேர்வழிக்கும், பத்தாவது சிமேயா,
அவன் குமாரர், அவன் சகோதரரென்னும்
18 பன்னிரண்டு பேர்வழிக்கும், பதினோராவது
அசாரியேல், அவன் குமாரர், அவன் சகோ
தரரென்னும் பன்னிரண்டு பேர்வழிக்கும்,
19 பன்னிரண்டாவது அஷாபியா, அவன் குமா
ரர், அவன் சகோதரரென்னும் பன்னிரண்டு
20 பேர்வழிக்கும், பதின்மூன்றாவது சுபவேல்,
அவன் குமாரர், அவன் சகோதரரென்னும்
21 பன்னிரண்டு பேர்வழிக்கும், பதினான்கா
வது மத்தித்தியா, அவன் குமாரர், அவன்
சகோதரரென்னும் பன்னிரண்டு பேர்வழிக்
22 கும், பதினைந்தாவது எரேமோத், அவன்
குமாரர், அவன் சகோதரரென்னும் பன்னி
23 ரண்டு பேர்வழிக்கும், பதினாறாவது அனா
னியா, அவன் குமாரர், அவன் சகோதர
ரென்னும் பன்னிரண்டு பேர்வழிக்கும்,
24 பதினேழாவது யோஸ்பேக்காஷா, அவன்
குமாரர், அவன் சகோதரரென்னும் பன்னி
25 ரண்டு பேர்வழிக்கும், பதினெட்டாவது
ஆனானி, அவன் குமாரர், அவன் சகோதர
26 ரென்னும் பன்னிரண்டு பேர்வழிக்கும், பத்
தொன்பதாவது மலோத்தி, அவன் குமாரர்,
அவன் சகோதரரென்னும் பன்னிரண்டு பேர்
27 வழிக்கும், இருபதாவது எலியாத்தா, அவன்
குமாரர், அவன் சகோதரரென்னும் பன்னி
28 ரண்டு பேர்வழிக்கும், இருபத்தோராவது
ஒத்திர், அவன் குமாரர், அவன் சகோதர
ரென்னும் பன்னிரண்டு பேர்வழிக்கும்,
29 இருபத்திரண்டாவது கிதல்தி, அவன் குமாரர்,
அவன் சகோதரரென்னும் பன்னிரண்டு பேர்
30 வழிக்கும், இருபத்து மூன்றாவது மகாசி
யோத், அவன் குமாரர், அவன் சகோதர
31 ரென்னும் பன்னிரண்டு பேர்வழிக்கும், இரு
பத்துநான்காவது ரொமந்தியேசர், அவன்
குமாரர், அவன் சகோதரரென்னும் பன்னி
ரண்டு பேர்வழிக்கும் விழுந்தது.

26 வாசல் காக்கிறவர்களின் வகுப்புகளா
வன: கோராகியர் சந்ததியான ஆசாபின் புத்
திரரிலே கோரேயின் குமாரன் மெஷெலே
மியா என்பவன், மெஷெலேமியாவின் 2
குமாரர், மூத்தவனாகிய சகரியாவும், எதியா 3
யேல், செபதியா, யதனியேல், ஏலாம், யோக
னான், எலியோனாய் என்னும் இரண்டாம்
மூன்றாம் நான்காம் ஐந்தாம் ஆறாம் ஏழாம்
குமாரரும்; ஓபேத்ஏதோமின் குமாரர், மூத் 4
தவனாகிய செமாயாவும், யோசபாத், யோ 5
வாக், சாக்கார், நெதனெயேல், அம்மியேல்,
இசக்கார், பெயுள்தாயி என்னும் இரண்டாம்
மூன்றாம் நான்காம் ஐந்தாம் ஆறாம் ஏழாம்
எட்டாம் குமாரருமே; தேவன் அவனை ஆசீர்
வதித்திருந்தார். அவன் குமாரனாகிய செமா 6
யாவுக்கும் குமாரர் பிறந்து, அவர்கள் பராக்
கிரமசாலிகளாயிருந்து, தங்கள் தகப்பன் குடும்
பத்தாரை ஆண்டார்கள். செமாயாவுக்கு இரு 7
ந்த குமாரர் ஒத்னியும், பலசாலிகளாகிய ரெப்
பாயேல், ஓபேத், எல்சாபாத் என்னும் அவன்
சகோதரரும், எலிகூவும் செமகியாவுமே.
ஓபேத்ஏதோமின் புத்திரரும் அவர்கள் குமா 8
ரரும் அவர்கள் சகோதரருமாகிய ஊழியத்திற்
குப் பலத்த பராக்கிரமசாலிகளான அவர்க
ளெல்லாரும் அறுபத்திரண்டுபேர். மெஷெ 9
லேமியாவின் குமாரரும் சகோதரருமான
பராக்கிரமசாலிகள் பதினெட்டுப்பேர். மெ 10
ராரியின் புத்திரரில் ஓசா என்பவனுடைய
குமாரர்கள்: சிம்ரி என்னும் தலைமையானவன்;
இவன் மூத்தவனாயிராவிட்டாலும் இவன்
தகப்பன் இவனைத் தலைவனாக வைத்தான்.
இல்க்கியா, தெபலியா, சகரியா என்னும் 11
இரண்டாம் மூன்றாம் நான்காம் குமாரரான
வர்கள்; ஓசாவின் குமாரரும் சகோதரரும்
எல்லாம் பதின்மூன்றுபேர். காவல்காரரான 12
தலைவரின் கீழ்த் தங்கள் சகோதரருக்கொத்த
முறையாய்க் கர்த்தருடைய ஆலயத்தில் வா
சல் காக்கிறவர்களாய்ச் சேவிக்க இவர்கள்
வகுக்கப்பட்டு, தங்கள் பிதாக்களின் குடும் 13
பத்தாராகிய சிறியவர்களும் பெரியவர்களு
மாய் இன்ன வாசலுக்கு இன்னாரென்று சீட்
டுப் போட்டுக்கொண்டார்கள். கீழ்ப்புறத்திற் 14
குச் செலேமியாவுக்குச் சீட்டு விழுந்தது;
விவேகமுள்ள யோசனைக்காரனாகிய சகரியா
என்னும் அவன் குமாரனுக்குச் சீட்டுப்
போட்டபோது, அவன் சீட்டு வடபுறத்திற்
கென்று விழுந்தது. ஓபேத்ஏதோமுக்குத் 15
தென்புறத்திற்கும், அவன் குமாரருக்கு அசுப்
பீம் வீட்டிற்கும், சுப்பீமுக்கும், ஓசாவுக் 16
கும் மண்போட்டு உயர்த்தப்பட்ட வழியும்
காவலுக்கு எதிர்காவலும் இருக்கிற மேற்புற
மான வாசலுக்கும் சீட்டு விழுந்தது. கிழக்கே 17
லேவியரான ஆறுபேரும், வடக்கே பகலிலே
நாலுபேரும், தெற்கே பகலிலே நாலுபேரும்,
அசுப்பீம் வீட்டண்டையில் இரண்டிரண்டு
பேரும், வெளிப்புறமான வாசல் அண்டை 18
யில் மேற்கே இருக்கிற உயர்ந்த வழிக்கு
நாலுபேரும், வெளிப்புறமான வழியில் இர
ண்டுபேரும் வைக்கப்பட்டார்கள். கோரா 19

கின் புத்திரருக்குள்ளும், மெராரியின் புத்திர
ருக்குள்ளும், வாசல் காக்கிறவர்களின் வகுப்
புகள் இவைகளே.
20 மற்ற லேவியரில் அகியா என்பவன் தேவ
னுடைய ஆலயத்துப் பொக்கிஷங்களையும்,
[1]பிரதிஷ்டையாக்கப்பட்ட பொருள்களின்
பொக்கிஷங்களையும் விசாரிக்கிறவனாயிருந்
21 தான். லாதானின் குமாரர் யாரென்றால்,
கெர்சோனியனான அவனுடைய குமாரரில்
தலைமையான பிதாக்களாயிருந்த யெகியேலி
22 யும், யெகியேலியின் குமாரராகிய சேத்தா
மும், அவன் சகோதரனாகிய யோவேலுமே;
இவர்கள் **கர்த்தருடைய** ஆலயத்துப் பொக்
கிஷங்களை விசாரிக்கிறவர்களாயிருந்தார்கள்.
23 அம்ராமீயரிலும், இச்சேகாரியரிலும், எப்
ரோனியரிலும், ஊசியேரியரிலும் சிலர் அப்
24 படியே விசாரிக்கிறவர்களாயிருந்தார்கள். மோ
சேயின் குமாரனாகிய கெர்சோமின் சந்ததி
யான செபுவேல் பொக்கிஷப் பிரதானியா
25 யிருந்தான். எலியேசர் மூலமாய் அவனுக்கு
இருந்த சகோதரரானவர்கள், இவன் குமா
ரன் ரெகபியாவும், இவன் குமாரன் எஷாயா
வும், இவன் குமாரன் யோராமும், இவன்
குமாரன் சிக்கிரியும், இவன் குமாரன் செ
26 லோமித்துமே. ராஜாவாகிய தாவீதும், ஆயி
ரம்பேருக்கு அதிபதிகளும், நூறுபேருக்கு
அதிபதிகளுமான பிதாக்களின் தலைவரும்,
சேனாபதிகளும் யுத்தத்தில் அகப்பட்ட கொள்
27 ளைகளில் எடுத்து, **கர்த்தருடைய** ஆலயத்
தைப் பரிபாலிக்கும்படிக்குப் பரிசுத்தம் என்று
நேர்ந்துகொண்ட பொருள்களின் பொக்கிஷங்
களையெல்லாம் அந்தச் செலோமித்தும் அவ
28 னுடைய சகோதரரும் விசாரித்தார்கள். ஞான
திருஷ்டிக்காரனாகிய சாமுவேலும், [2]கீசின்
குமாரனாகிய சவுலும், நேரின் குமாரனாகிய
அப்னேரும், செருயாவின் குமாரனாகிய யோ
வாபும், அவரவர் பரிசுத்தம் என்று நேர்ந்து
கொண்ட அனைத்தும் செலோமித்தின் கை
யின்கீழும் அவன் சகோதரர் கையின்கீழும்
29 இருந்தது. இத்சாகாரியரில் கெனனியாவும்
அவன் குமாரரும் தேசகாரியங்களைப் பார்க்
கும்படி வைக்கப்பட்டு, இஸ்ரவேலின்மேல்
விசாரிப்புக்காரரும் மணியக்காரருமாயிருந்தார்
30 கள். எப்ரோனியரில் அசபியாவும் அவன்
சகோதரருமாகிய ஆயிரத்து எழுநூறு பராக்
கிரமசாலிகள் யோர்தானுக்கு இப்பாலே மேற்
கே இருக்கிற இஸ்ரவேலின்மேல் **கர்த்தரு
டைய** எல்லா ஊழியத்திற்கும் ராஜாவின்
31 வேலைக்கும் வைக்கப்பட்டார்கள். எப்ரோ
னியரில் எரியாவும் இருந்தான்; அவன் தன்
பிதாக்களின் வம்சங்களான எப்ரோனியரில்
தலைமையானவன்; தாவீது அரசாண்ட நாற்ப
தாம் வருஷத்திலே அவர்கள் தேடப்பட்ட
போது அவர்களுக்குள்ளே கீலேயாத்தேசத்து
[3]யாசேரிலே பராக்கிரம வீரர் காணப்பட்டார்
32 கள். பலசாலிகளாகிய அவனுடைய சகோ
தரர் இரண்டாயிரத்து எழுநூறு பிரதான தலை
வராயிருந்தார்கள்; அவர்களைத் தாவீதுராஜா
தேவனுக்கடுத்த சகல காரியத்திற்காகவும், ரா
ஜாவின் காரியத்திற்காகவும், ரூபனியர்மேலும்,
காதியர்மேலும், மனாசேயின் பாதிக்கோத்தி
ரத்தின்மேலும் வைத்தான்.

**27** தங்கள் இலக்கத்தின்படி இருக்கிற இஸ்ர
வேல் புத்திரருக்கு வம்சங்களின் தலைவரும்,
ஆயிரத்துக்குச் சேர்வைக்காரரும், நூற்றிற்
குச் சேர்வைக்காரரும், இவர்களுடைய தலை
வரும் வைக்கப்பட்டிருந்தார்கள்; இவர்கள்
வருஷத்திலுண்டான மாதங்களிலெல்லாம்
மாதத்திற்கு மாதம் ராஜாவைச் சேவிக்கிற
தற்கு வகுக்கப்பட்ட வரிசைகளின்படியெல்
லாம் மாறிமாறி வருவார்கள்; ஒவ்வொரு வகு
ப்பில் இருபத்துநாலாயிரம்பேர் இருந்தார்கள்.
முதலாவது மாதத்துக்கு முதல்வகுப்பின்மேல் 2
சப்தியேலின் குமாரன் யஷொபெயாம் [4]இருந்
தான்; அவன் வகுப்பில் இருபத்து நாலா
யிரம்பேர் இருந்தார்கள். அவன் பேரேசின் 3
சந்ததியாரில் சகல சேனாபதிகளின் தலைவனா
யிருந்து முதல் மாதம் விசாரித்தான். இரண் 4
டாவது மாதத்தின் வகுப்பின்மேல் அகோகிய
னாகிய தோதாயி இருந்தான்; அவன் வகுப்பிலே
மிக்லோத்தளகர்த்தனாயிருந்தான்; அவன்வகுப்
பிலே இருபத்துநாலாயிரம்பேர் இருந்தார்கள்.
மூன்றாவது மாதத்தின் மூன்றாம் சேனாபதி 5
யோய்தாவின் குமாரனாகிய பெனாயா என்னும்
தலைமையான பிரதானி; அவன் வகுப்பில் இரு
பத்து நாலாயிரம்பேர் இருந்தார்கள். இந்தப் 6
பெனாயா அந்த முப்பது பராக்கிரம சாலிக
ளில் ஒருவனும் அந்த முப்பது பேர்களின்
தலைவனுமாயிருந்தான்; அவனுடையவகுப்பை
அவன் குமாரனாகிய அமிசபாத் விசாரித்தான்.
நாலாவது மாதத்தின் நாலாம் சேனாபதி யோ 7
வாபின் சகோதரனாகிய ஆசகேலும், அவனுக்
குப்பின்பு அவன் குமாரன் செப்தியாவுமே;
அவன் வகுப்பில் இருபத்து நாலாயிரம்பேர்
இருந்தார்கள். ஐந்தாவது மாதத்தின் ஐந்தாம் 8
சேனாபதி இஸ்ராகியனான சம்கூத் என்பவன்;
அவன் வகுப்பில் இருபத்துநாலாயிரம்பேர்
இருந்தார்கள். ஆறாவது மாதத்தின் ஆறாம் 9
சேனாபதி இக்கேசின் குமாரன் ஈரா என்னும்
தெக்கோவியன்; அவன் வகுப்பில் இருபத்து
நாலாயிரம்பேர் இருந்தார்கள். ஏழாவது மாதத் 10
தின் ஏழாம் சேனாபதி எப்பிராயீம் புத்திரரில்
ஒருவனாகிய எலேஸ் என்னும் பெலோனி
யன்; அவன் வகுப்பில் இருபத்துநாலாயிரம்
பேர் இருந்தார்கள். எட்டாவது மாதத்தின்எட் 11
டாம் சேனாபதி சாரியரில் ஒருவனாகிய சிபெ
க்காயி என்னும் ஊஷாத்தியன்; அவன் வகு
ப்பில் இருபத்து நாலாயிரம்பேர் இருந்தார்கள்.
ஒன்பதாவது மாதத்தின் ஒன்பதாம் சேனாபதி 12
பென்னியமீனரில் அபியேசர் என்னும் ஆனா
தோத்தான்; அவன் வகுப்பில் இருபத்து நாலா
யிரம்பேர் இருந்தார்கள். பத்தாவது மாதத் 13
தின் பத்தாம் சேனாபதி சாரியரில் ஒருவனாகிய
மக்ராயி என்னும் நெத்தோபாத்தியன்; அவன்

[1] 28. 12. [illegible]. 8. 10
[2] 1 சாமு. 9. 9
[3] யோசு. 21. 19
[4] 2 சாமு. 23, 8. [illegible]

வகுப்பில் இருபத்து நாலாயிரம்பேர் இருந்தார்
14 கள். பதினோராவது மாதத்தின் பதினோராம்
சேனாபதி எப்பிராயீம் புத்திரரில் பெனாயா
என்னும் பிரத்தோனியன்; அவன் வகுப்பில்
15 இருபத்து நாலாயிரம்பேர் இருந்தார்கள். பன்
னிரண்டாவது மாதத்தின் பன்னிரண்டாம்
சேனாபதி ஒத்னியேல் சந்ததியான எல்தாயி
என்னும் நெத்தோபாத்தியன்; அவன்
வகுப்பில் இருபத்து நாலாயிரம்பேர் இருந்
தார்கள்.
16 இஸ்ரவேல் கோத்திரங்களுக்குத் தலைவர்
கள்: ரூபனியருக்குத் தலைவன் சிக்ரியின் குமா
ரன் எலியேசர்; சிமியோனியருக்கு மாக்கா
17 வின் குமாரன் செப்பத்தியா. லேவியருக்கு
கேமுவேலின் குமாரன் அஷாபியா; ஆரோன்
18 சந்ததிக்குச் சாதோக். யூதாவுக்குத் தாவீதின்
சகோதரரில் ஒருவனாகிய எலிகூ; இசக்கா
19 ருக்கு மிகாவேலின் குமாரன் ஒம்ரி. செபு
லோனுக்கு ஒப்தியாவின் குமாரன் இஸ்மாயா;
நப்தலிக்கு அஸ்ரியேலின் குமாரன் எரிமோத்.
20 எப்பிராயீம் புத்திரருக்கு அசசியாவின் குமா
ரன் ஓசெயா; மனாசேயின் பாதிக்கோத்திரத்
திற்குப் பெதாயாவின் குமாரன் யோவேல்.
21 கீலேயாத்திலுள்ள மனாசேயின் பாதிக்கோத்
திரத்திற்குச் சகரியாவின் குமாரன் இத்தோ;
பென்யமீனுக்கு அப்னேரின் குமாரன் யாசி
22 யேல். தாணுக்கு எரோகாமின் குமாரன் அசா
ரியேல்; இவர்கள் இஸ்ரவேல் கோத்திரங்க
23 ளுக்குத் தலைவராயிருந்தார்கள். இஸ்ரவேலை
வானத்தின் நட்சத்திரங்கள் அத்தனையாய்ப்
பெருகப்பண்ணுவேன் என்று **கர்த்தர்** சொல்
லியிருந்தபடியால், [1]தாவீது இருபது வயது
முதல் அதற்குக் கீழ்ப்பட்டவர்களின் இலக்
24 கத்தைத் தொகையேற்றவில்லை. செருயாவின்
குமாரன் யோவாப் எண்ணத்துவக்கியும் முடிக்
காதேபோனான்; அதற்காக இஸ்ரவேலின்
மேல் கடுங்கோபம் வந்தது; [2]ஆதலால் அந்தத்
தொகை தாவீதுராஜாவின் நாளாகமக் கணக்
கிலே ஏறவில்லை.
25 ராஜாவுடைய பொக்கிஷங்களின்மேல் ஆதி
யேலின் குமாரன் அஸ்மாவேத்தும், பட்ட
ணங்களிலும் கிராமங்களிலும் துருக்கங்களி
லுமுள்ள நிலத்தின் வருமான பண்டகசாலைக
ளின்மேல் உசியாவின் குமாரன் யோனத்
26 தானும், நிலத்தைப் பயிரிட வயல்வெளியின்
வேலைசெய்கிறவர்களின்மேல் கேலூப்பின்
27 குமாரன் எஸ்ரியும், திராட்சத்தோட்டங்க
ளின்மேல் ராமாத்தியனான சிமேயும், திராட்
சத்தோட்டங்களின் வரத்தாகிய திராட்சரசம்
வைக்கும் இடங்களின்மேல் சிப்மியனாகிய
28 சப்தியும், பள்ளத்தாக்குகளிலுள்ள ஒலிவம
ரங்களின்மேலும் முசுக்கட்டை விருட்சங்க
ளின்மேலும் கெதேரியனான பால்கானானும்,
எண்ணெய் கிடங்குகளின்மேல் யோவாசும்,
29 சாரோனில் மேய்கிற மாடுகளின்மேல் சாரோ
னியனான சித்ராயும், பள்ளத்தாக்குகளிலுள்ள
மாடுகளின்மேல் அத்லாயின் குமாரன் சாப்

[1] ஆதி. 15. 5
[2] 2 சாமு. 24. 15
[3] 2 சாமு. 15. 12, 37
[4] 1 இரா. 1. 7
[5] 2 சாமு. 7. 2. சங். 132. 2–7
[6] 1 இரா. 5. 3
[7] 5. 2. ஆதி. 49. 8, 10. சங். 60. 7. எபி. 7. 14

பாத்தும், ஒட்டகங்களின்மேல் இஸ்மவேலி 30
யனாகிய ஓபிலும், கழுதைகளின்மேல் மெரோ
னோத்தியனாகிய எகெதியாவும், ஆடுகளின் 31
மேல் ஆகாரியனான யாசிசும், விசாரிப்புக்கார
ராயிருந்தார்கள்; இவர்களெல்லாரும் தாவீது
ராஜாவின் பொருள்களுக்கு விசாரிப்புக்கார
ராயிருந்தார்கள்.
தாவீதின் சிறிய தகப்பனாகிய யோனத்தான் 32
என்னும் புத்தியும் படிப்புமுள்ள மனுஷன்
ஆலோசனைக்காரனாயிருந்தான்; அக்மோனி
யின் குமாரன் யெகியேல் ராஜாவின் குமார
ரோடிருந்தான். [3]அகித்தோப்பேல் ராஜா 33
வுக்கு ஆலோசனைக்காரனாயிருந்தான்; அர்கிய
னான ஊஷாயி ராஜாவின் தோழனாயிருந்தான்.
பெனாயாவின் குமாரன் யோய்தாவும் அபியத் 34
தாரும் அகித்தோப்பேலுக்கு உதவியாயிருந்
தார்கள்; [4]யோவாப் ராஜாவின் படைத்தலைவனா
யிருந்தான்.
கோத்திரங்களின் தலைவரும், ராஜாவைச் 28
சேவிக்கிற வகுப்புகளின் தலைவரும், ஆயிரம்
பேருக்கு அதிபதிகளும், நூறுபேருக்கு அதி
பதிகளும், ராஜாவுக்கும் ராஜகுமாரருக்கும்
உண்டான எல்லா ஆஸ்தியையும் மிருகஜீவன்
களையும் விசாரிக்கிற தலைவருமாகிய இஸ்ரவே
லின் சகல பிரபுக்களையும், பிரதானிகளையும்,
பலசாலிகளையும், சகல பராக்கிரமசாலிகளை
யும் தாவீது எருசலேமிலே கூடிவரச்செய்
தான். அப்பொழுது ராஜாவாகிய தாவீது 2
எழுந்திருந்து காலூன்றி நின்று: என் சகோ
தரரே, என் ஜனமே, நான் சொல்வதைக்
கேளுங்கள்; **கர்த்தருடைய** உடன்படிக்கைப்
பெட்டியும் நமது தேவனுடைய பாதபடியும்
தங்குவதற்கு ஒரு ஆலயத்தைக் கட்ட நான்
என் மனதிலே நினைத்து, [5]கட்டுகிறதற்கு
ஆயத்தமும் பண்ணினேன். ஆனாலும் தே 3
வன்: நீ என் நாமத்திற்கு ஆலயத்தைக் கட்ட
வேண்டாம்; [6]நீ யுத்தமனுஷனாயிருந்து, ரத்தத்
தைச் சிந்தினாய் என்றார். இப்போதும் இஸ்ர 4
வேல் அனைத்தின்மேலும் என்றைக்கும் ராஜா
வாயிருக்க, இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்**
என் தகப்பனுடைய வீட்டாரிலெல்லாம் என்
னைத் தெரிந்துகொண்டார்; [7]அவர் யூதாவையும்
யூதாவின் வம்சத்தில் என் தகப்பன் குடும்பத்
தையும் தலைமையாகத் தெரிந்துகொண்டு, என்
னை எல்லா இஸ்ரவேலின்மேலும் ராஜாவாக்க,
என் தகப்பனுடைய குமாரருக்குள் என்மேல்
பிரியம் வைத்தார். **கர்த்தர்** எனக்கு அநே 5
கம் குமாரரைத் தந்தருளினார்; ஆனாலும் இஸ்ர
வேலை ஆளும் **கர்த்தருடைய** ராஜ்யபாரத்தின்
சிங்காசனத்தின்மேல் உட்காருகிறதற்கு, அவர்
என்னுடைய எல்லாக் குமாரரிலும் என் குமா
ரனாகிய சாலொமோனைத் தெரிந்துகொண்டு,
அவர் என்னை நோக்கி: உன் குமாரனாகிய 6
சாலொமோனே என் ஆலயத்தையும் என்
பிராகாரங்களையும் கட்டக்கடவன்; அவனை
எனக்குக் குமாரனாகத் தெரிந்துகொண்டேன்;
நான் அவனுக்குப் பிதாவாயிருப்பேன். இங் 7

நாளில் நடக்கிறபடியே அவன் என் கற்பனை
களின்படியும் என் நியாயங்களின்படியும் செ
ய்ய உறுதியாயிருப்பானானால், அவன் ராஜ்ய
பாரத்தை என்றென்றைக்கும் திடப்படுத்து
8 வேன் என்றார். இப்போதும் நீங்கள் என்
றென்றைக்கும் இந்த நல்ல தேசத்தைச் சுதந்தர
மாய் அநுபவித்து, உங்களுக்குப்பிறகு அதை
உங்கள் பிள்ளைகளுக்குச் சுதந்தரமாய்ப் பின்
வைக்கும்பொருட்டாக, நீங்கள் உங்கள் தேவ
னாகிய **கர்த்தரின்** கற்பனைகளையெல்லாம் கைக்
கொண்டு விசாரியுங்கள் என்று **கர்த்தரின்**
சபையாகிய இஸ்ரவேல் அனைத்தின் கண்க
ளுக்கு முன்பாகவும், நமது தேவனுடைய
செவிகேட்கவும் உங்களுக்குப் புத்திசொல்லு
9 கிறேன். என் குமாரனாகிய சாலொமோனே,
[1]நீ உன் பிதாவின் தேவனை அறிந்து, [2]அவரை
உத்தம இருதயத்தோடும் உற்சாக மனதோடும்
சேவி; **கர்த்தர்** எல்லா இருதயங்களையும் ஆரா
ய்ந்து, நினைவுகளின் தோற்றங்களையெல்லாம்
அறிகிறார்; நீ அவரைத் தேடினால் உனக்குத்
தென்படுவார்; [3]நீ அவரை விட்டுவிட்டால்
அவர் உன்னை என்றைக்கும் கைவிடுவார்.
10 இப்போதும் எச்சரிக்கையாயிரு; பரிசுத்த
ஸ்தலமாக ஒரு ஆலயத்தைக் கட்டுவதற்குக்
**கர்த்தர்** உன்னைத் தெரிந்துகொண்டார்; நீ
திடன்கொண்டு அதை நடப்பி என்று
சொன்னான்.
11 தாவீது தன் குமாரனாகிய சாலொமோ
னுக்கு மண்டபமும், அதின் அறைகளும்,
அதின் பொக்கிஷ சாலைகளும், அதின் மேல்
வீடுகளும், அதின் உள்ளறைகளும், கிருபா
சன ஸ்தானமும் இருக்கவேண்டிய [4]மாதிரி
12 யையும், ஆவியினால் தனக்குக் கட்டளையி
டப்பட்டபடியெல்லாம் அவன் செய்யவேண்
டிய **கர்த்தருடைய** ஆலயப்பிராகாரங்களும்,
தேவனுடைய ஆலயத்துப் பொக்கிஷங்களை
யும், பரிசுத்தமாக நேர்ந்துகொள்ளப்பட்டவை
களின் பொக்கிஷங்களையும் வைக்கும் சகல
சுற்றறைகளும் இருக்கவேண்டிய மாதிரியை
13 யும், ஆசாரியரையும் லேவியரையும் வரிசை
களாக வகுக்கிறதற்கும், **கர்த்தருடைய** ஆலயப்
பணிவிடை வேலை அனைத்திற்கும், **கர்த்தரு**
**டைய** ஆலயத்து வேலையின் பணிமுட்டுகள்
அனைத்திற்குமுரிய கட்டளையையும் கொடுத்
14 தான். அவன் பற்பலவேலைக்கு வேண்டிய
சகல பொற்பாத்திரங்களுக்காக நிறையின்படி
பொன்னையும், பற்பல வேலைக்கு வேண்டிய
சகல வெள்ளிப் பாத்திரங்களுக்காக நிறையின்
15 படி வெள்ளியையும், பொன்விளக்குத் தண்
டுகளுக்கும் அவைகளின் பொன் விளக்குக
ளுக்கும், ஒவ்வொரு விளக்குத்தண்டுக்கும்,
அதின் விளக்குகளுக்கும் நிறையின்படி வேண்
டிய பொன்னையும், வெள்ளி விளக்குத்தண்டு
களில் ஒவ்வொரு விளக்குத்தண்டுக்கும் அதின்
விளக்குகளுக்கும் நிறையின்படி வேண்டிய
16 வெள்ளியையும், சமுகத்தப்பங்களை வைக்கும்
ஒவ்வொரு மேசைக்கும் நிறையின்படி வேண்
டிய பொன்னையும், வெள்ளி மேசைகளுக்கு
வேண்டிய வெள்ளியையும், முள்குறடுகளுக் 17
கும் கலங்களுக்கும் தட்டுகளுக்கும் வேண்டிய
பசும்பொன்னையும், பொன் கிண்ணிகளில்
ஒவ்வொரு கிண்ணிக்கும் நிறையின்படி வே
ண்டியதையும், வெள்ளிக்கிண்ணிகளில் ஒவ்
வொரு கிண்ணிக்கும் நிறையின்படி வேண்டி
யதையும், தூபங்காட்டும் பீடத்திற்கு நிறை 18
யின்படி வேண்டிய புடமிடப்பட்ட பொன்
னையும் கொடுத்து, செட்டைகளை விரித்துக்
**கர்த்தருடைய** உடன்படிக்கைப் பெட்டியை
மூடும் பொன் கேருபீன்களான வாகனத்தின்
[5]மாதிரியையும் கொடுத்து, இந்த மாதிரியின் 19
படி சகல வேலைகளும் எனக்குத் தெரியப்
படுத்த, இவையெல்லாம் **கர்த்தருடைய** கரத்
தினால் எனக்கு [6]எழுதிக் கொடுக்கப்பட்டது
என்றான். தாவீது தன் குமாரனாகிய சாலொ 20
மோனை நோக்கி: நீ பலங்கொண்டு தைரிய
மாயிருந்து, இதை நடப்பி; [7]நீ பயப்படா
மலும் கலங்காமலும் இரு; தேவனாகிய **கர்த்**
**தர்** என்னும் என் தேவன் உன்னோடே இருப்
பார்; **கர்த்தருடைய** ஆலயத்தைக் கட்டுகிற
தற்கடுத்த சகல கிரியைகளையும் நீ முடித்துத்
தீருமட்டும், அவர் உன்னை விட்டு விலகவு
மாட்டார், உன்னைக் கைவிடவுமாட்டார்.
இதோ, தேவனுடைய ஆலயத்துவேலைக்கெல் 21
லாம் ஆசாரியர் லேவியருடைய வகுப்புகள்
இருக்கிறது; [8]அந்த எல்லாக் கிரியைக்கும்
சகலவித வேலையிலும் நிபுணரான மனப்
பூர்வமுள்ள சகல மனுஷரும், உன் சொற்
படியெல்லாம் கேட்கும் பிரபுக்களும், சகல
ஜனங்களும் உன்னிடத்தில் இருக்கிறார்கள்
என்றான்.

## 29

பின்பு தாவீதுராஜா சபையார் எல்லாரை
யும் நோக்கி: தேவன் தெரிந்துகொண்ட
என் குமாரனாகிய [9]சாலொமோன் இன்னும்
வாலிபனும் இளைஞனுமாயிருக்கிறான்; செய்ய
வேண்டிய வேலையோ பெரியது; அது ஒரு
மனுஷனுக்கு அல்ல, தேவனாகிய **கர்த்தருக்**
**குக்** கட்டும் அரமனை. நான் என்னாலே 2
இயன்றமட்டும் என் தேவனுடைய ஆலயத்
துக்கென்று பொன்வேலைக்குப் பொன்னை
யும், வெள்ளிவேலைக்கு வெள்ளியையும், வெ
ண்கலவேலைக்கு வெண்கலத்தையும், இரும்பு
வேலைக்கு இரும்பையும், மரவேலைக்கு மரத்
தையும், பதிக்கப்படத்தக்க [10]காந்தியுள்ள கற்
களையும், பல வருணக் கற்களையும், விலை
யேறப்பெற்ற சகலவித ரத்தினங்களையும், வெ
ண்கற்பாளங்களையும், கோமேதகமுதலிய கற்
களையும் ஏராளமாகச் சவதரித்தேன். இன் 3
னும் என் தேவனுடைய ஆலயத்தின்மேல்
நான் வைத்திருக்கிற வாஞ்சையினால், பரிசுத்த
ஆலயத்துக்காக நான் சவதரித்த அனைத்தை
யும் தவிர, எனக்குச் சொந்தமான பொன்
னையும் வெள்ளியையும் என் தேவனுடைய
ஆலயத்துக்கென்று கொடுக்கிறேன். அறை 4
களின் சுவர்களை மூடுவதற்காகவும், பொன்

[1] 1 சாமு. 16. 7–14
[2] எரே. 9. 24. யோ. 17. 3
[3] 2 இரா. 20. 3. சங். 101. 2. யோ. 4. 24. ரோ. 1. 9. எபி. 12. 28
[4] யாத். 25. 40. 2 நாளா. 15. 2
[5] யாத். 25. 18, 22. 1 சாமு. 4. 4
[6] யாத். 25. 40
[7] உபா. 31. 7, 8. யோசு. 1. 5–9
[8] யாத். 35, 25, 26; 36. 1, 2
[9] 1 இரா. 3. 7. நீதி. 4. 3
[10] ஏசா. 54. 11, 12. வெளி. 21. 18. ழ

வேலைக்குப் பொன்னும், வெள்ளிவேலைக்கு
வெள்ளியும் உண்டாயிருக்கிறதற்காகவும், கம்
மாளர் செய்யும் வேலை அனைத்திற்காகவும்,
ஒப்பீரின் தங்கமாகிய மூவாயிரம் தாலந்து தங்
கத்தையும், சுத்த வெள்ளியாகிய ஏழாயிரம்
தாலந்து வெள்ளியையும் கொடுக்கிறேன்.
5 இப்போதும் உங்களில் இன்றையதினம் கர்த்
தருக்குத் தன் கைக்காணிக்கைகளைச் செலுத்த
6 மனப்பூர்வமானவர்கள் யார் என்றான். அப்
பொழுது வம்சங்களின் பிரபுக்களும், [1]இஸ்ர
வேல் கோத்திரங்களின் பிரபுக்களும், ஆயி
ரம்பேருக்கு அதிபதிகளும், நூறுபேருக்கு
அதிபதிகளும், ராஜாவின் வேலைக்காராகிய
7 பிரபுக்களும் மனப்பூர்வமாய், தேவனுடைய
ஆலயத்து வேலைக்கு ஐயாயிரம் தாலந்து
பொன்னையும், பதினாயிரம் தங்கக்காசையும்,
பதினாயிரம் தாலந்து வெள்ளியையும், பதி
னெண்ணாயிரம் தாலந்து வெண்கலத்தையும்,
லட்சம் தாலந்து இரும்பையும் கொடுத்தார்
8 கள். யார் கையில் ரத்தினங்கள் இருந்ததோ,
அவர்கள் அவைகளையும் கர்த்தருடைய ஆல
யத்துப் பொக்கிஷத்திற்கென்று கெர்சோனிய
னான [2]யெகியேலின் கையிலே கொடுத்தார்
9 கள். இப்படி மனப்பூர்வமாய்க் கொடுத்ததற்
காக ஜனங்கள் சந்தோஷப்பட்டார்கள்; [3]உத்
தம இருதயத்தோடே உற்சாகமாய்க் கர்த்த
ருக்குக் கொடுத்தார்கள்; தாவீது ராஜாவும்
10 மிகவும் சந்தோஷப்பட்டான். ஆகையால்
தாவீது சபை அனைத்தின் கண்களுக்கு முன்
பாகவும் கர்த்தருக்கு ஸ்தோத்திரம் செலுத்திச்
சொன்னது: எங்கள் தகப்பனாகிய இஸ்ரவே
லின் தேவனான கர்த்தாவே, சதாகாலங்களி
லும் தேவரீருக்கு ஸ்தோத்திரம் உண்டாவதாக.
11 கர்த்தாவே, மாட்சிமையும் வல்லமையும் மகி
மையும் ஜெயமும் மகத்துவமும் உம்முடைய
வைகள்; [4]வானத்திலும் பூமியிலும் உள்ள
வைகளெல்லாம் உம்முடையவைகள்; கர்த்
தாவே, ராஜ்யமும் உம்முடையது; தேவரீர்
எல்லாருக்கும் தலைவராய் உயர்ந்திருக்கிறீர்.
12 ஐசுவரியமும் கனமும் உம்மாலே வருகிறது;
[5]தேவரீர் எல்லாவற்றையும் ஆளுகிறவர்; உம்
முடைய கரத்திலே சத்துவமும் வல்லமையும்
உண்டு; எவரையும் மேன்மைப்படுத்தவும் பலப்
படுத்தவும் உம்முடைய கரத்தினால் ஆகும்.
13 இப்போதும் எங்கள் தேவனே, நாங்கள் உம
க்கு ஸ்தோத்திரம் செலுத்தி, உமது மகிமை
14 யுள்ள நாமத்தைத் துதிக்கிறோம். இப்படி
மனப்பூர்வமாய்க் கொடுக்கும் திராணி உண்
டாவதற்கு நான் எம்மாத்திரம்? என் ஜனங்
கள் எம்மாத்திரம்? எல்லாம் உம்மால் உண்
டானது; உமது கரத்திலே வாங்கி உமக்குக்
15 கொடுத்தோம். உமக்கு முன்பாக நாங்கள்
எங்களுடைய பிதாக்கள் எல்லாரைப்போலும்
அரதேசிகளும் பரதேசிகளுமாயிருக்கிறோம்;
[6]பூமியின்மேல் எங்கள் நாட்கள் ஒரு நிழலைப்
போல இருக்கிறது; நிலைத்திருப்போம் என்
16 னும் நம்பிக்கையில்லை. எங்கள் தேவனாகிய
கர்த்தாவே, உம்முடைய பரிசுத்த நாமத்திற்
கென்று உமக்கு ஒரு ஆலயத்தைக் கட்டுகிற
தற்கு, நாங்கள் சவதரித்திருக்கிற இந்தப்
பொருள்கள் எல்லாம் உமது கரத்திலிருந்து
வந்தது; எல்லாம் உம்முடையது. என் தே 17
வனே, நீர் இருதயத்தைச் சோதித்து, உத்தம
குணத்தில் பிரியமாயிருக்கிறீர் என்பதை அறி
வேன்; [7]இவையெல்லாம் நான் உத்தம இரு
தயத்தோடே மனப்பூர்வமாய்க் கொடுத்தேன்;
இப்பொழுது இங்கேயிருக்கிற உம்முடைய
ஜனமும் உமக்கு மனப்பூர்வமாய்க் கொடுக்கிற
தைக் கண்டு சந்தோஷித்தேன். ஆபிரகாம் 18
ஈசாக்கு இஸ்ரவேல் என்னும் எங்கள் பிதாக்
களின் தேவனாகிய கர்த்தாவே, உமது ஜனத்
தின் இருதயத்தில் உண்டான இந்தச் சிந்தை
யையும் நினைவையும் என்றைக்கும் காத்து,
[8]அவர்கள் இருதயத்தை உமக்கு நேராக்கியரு
ளும். என் குமாரனாகிய சாலொமோன் உம் 19
முடைய கற்பனைகளையும் உம்முடைய சாட்சி
களையும் உம்முடைய கட்டளைகளையும் கைக்
கொள்ளும்படிக்கும், இவைகள் எல்லாவற்
றையும் செய்து, நான் ஆயத்தம்பண்ணின
இந்த அரமனையைக் கட்டும்படிக்கும், [9]அவ
னுக்கு உத்தம இருதயத்தைத் தந்தருளும்
என்றான்.

அதின்பின்பு தாவீது சபை அனைத்தையும் 20
நோக்கி: இப்போது உங்கள் தேவனாகிய கர்த்
தரை ஸ்தோத்திரியுங்கள் என்றான்; அப்பொ
ழுது சபையார் எல்லாரும் தங்கள் பிதாக்க
ளின் தேவனாகிய கர்த்தரை ஸ்தோத்திரித்து,
தலைகுனிந்து, கர்த்தரையும் ராஜாவையும்
பணிந்துகொண்டு, கர்த்தருக்குப் பலியிட்டு, 21
மறுநாளிலே சர்வாங்க தகனபலிகளாக ஆயி
ரம் காளைகளையும், ஆயிரம் ஆட்டுக்கடாக்களை
யும், ஆயிரம் ஆட்டுக்குட்டிகளையும், அவைக
ளுக்கடுத்த பானபலிகளையும் இஸ்ரவேல்
அனைத்திற்காகவும் கர்த்தருக்குச் செலுத்தி
னார்கள். அவர்கள் அன்றையதினம் மிகுந்த 22
சந்தோஷத்தோடே கர்த்தருக்கு முன்பாகப்
போஜனபானம்பண்ணி, [10]தாவீதின் குமார
னாகிய சாலொமோனை இரண்டாம்விசை ரா
ஜாவாக்கி, கர்த்தருக்கு முன்பாக அவனை அதி
பதியாகவும், சாதோக்கை ஆசாரியனாகவும்
அபிஷேகம் பண்ணினார்கள். அப்படியே 23
சாலொமோன் தன் தகப்பனாகிய தாவீதின்
ஸ்தானத்திலே கர்த்தருடைய சிங்காசனத்தில்
ராஜாவாய் வீற்றிருந்து பாக்கியசாலியாயிருந்
தான்; இஸ்ரவேலர் எல்லாரும் அவனுக்குக்
கீழ்ப்படிந்திருந்தார்கள். சகல பிரபுக்களும் 24
பராக்கிரமசாலிகளும் தாவீது ராஜாவினுடைய
சகல குமாரருங்கூட [11]ராஜாவாகிய சாலொ
மோனுக்கு அடங்கியிருந்தார்கள். இஸ்ரவே 25
லர் எல்லாரும் காணக் கர்த்தர் சாலொமோனை
மிகவும் பெரியவனாக்கி, அவனுக்குமுன்னே
இஸ்ரவேலில் ராஜாவான ஒருவனுக்கும் இல்
லாதிருந்த ராஜரிக [12]மகத்துவத்தை அவனுக்
குக் கட்டளையிட்டார்.

[1] 27. 1, 25. ஓ
[2] 26. 21
[3] 2 கொ. 9. 7
[4] மத். 6. 13. 1 தீமோ. 1. 17. வெளி. 5. 13
[5] ரோ. 11. 36
[6] யோபு 14. 2. சங். 39. 12; 90. 9. ஓ. 102. 11; 144. 4. எபி. 11. 13. 1 பே. 2. 11
[7] 1 சாமு. 16. 7. நீதி. 11. 20
[8] சங். 10. 17
[9] 22. 14. சங். 72. 1
[10] 1 இரா. 1. 35, 39
[11] ஆதி. 24. 2. பிர. 8. 2. எசே. 17. 18
[12] 1 இரா. 3. 13. பிர. 2. 9

26 இவ்விதமாய் ஈசாயின் குமாரனாகிய தாவீது
இஸ்ரவேல் அனைத்துக்கும் ராஜாவாயிருந்
27 தான். அவன் இஸ்ரவேலை அரசாண்ட நாட்
கள் நாற்பது வருஷம்; [1]எப்ரோனிலே ஏழு
வருஷமும், எருசலேமிலே முப்பத்துமூன்று
28 வருஷமும் ராஜாவாயிருந்தான். அவன் தீர்க்
[1]காயுசும் [2]ஐசுவரியமும் மகிமையுமுள்ளவனாய்,
நல்ல முதிர்வயதிலே மரணமடைந்தபின், அ
வன் குமாரனாகிய சாலொமோன் அவன் ஸ்தா
29 னத்திலே அரசாண்டான். தாவீது ராஜாவி
னுடைய ஆதியோடந்தமான நடபடிகளும்,
அவன் அரசாண்ட விபரமும், அவனுடைய
வல்லமையும், அவனுக்கும் இஸ்ரவேலுக்கும்,
அந்தந்தத் தேசங்களின் ராஜ்யங்கள் அனைத்
திக்கும் நடந்த [3]காலசம்பவங்களும், ஞான 30
திருஷ்டிக்காரனாகிய சாமுவேலின் *பிரபந்தத்
திலும், தீர்க்கதரிசியாகிய நாத்தானின் பிரபந்
தத்திலும், ஞானதிருஷ்டிக்காரனாகிய காத்
தின் பிரபந்தத்திலும் எழுதியிருக்கிறது.

[1] 2 சாமு. 5. 4, 5. 1 இரா. 2. 11

[2] ஆதி. 25. 8

[3] தானி. 2. 21

* புஸ்தகம்=சரித்திரம்.

II. CHRONICLES

# நாளாகமத்தின்

## இரண்டாம் புஸ்தகம்

1 தாவீதின் குமாரனாகிய சாலொமோன் தன்
ராஜ்யத்திலே பலப்பட்டான்; [1]அவனுடைய
தேவனாகிய **கர்த்தர்** அவனுடனே இருந்து
2 அவனை மிகவும் பெரியவனாக்கினார். சாலொ
மோன் ஆயிரம்பேருக்கு அதிபதிகளும், [2]நூறு
பேருக்கு அதிபதிகளும், நியாயாதிபதிகளும்,
இஸ்ரவேல் எங்குமிருக்கிற வம்சங்களின் தலை
வராகிய சகல பிரபுக்களுமான இஸ்ரவேல்
3 அனைவரோடும் பேசி, அவனும் அவனோடே
கூடச் சபையார் அனைவரும், கிபியோனிலி
4 ருக்கிற மேடைக்குப் போனார்கள். தாவீது
தேவனுடைய பெட்டிக்கு எருசலேமிலே
கூடாரம்போட்டு ஆயத்தம்பண்ணின ஸ்தலத்
திற்குக் கீரியாத் யாரீமிலிருந்து அதைக்
கொண்டுவந்தான்; [3]**கர்த்தரின்** தாசனாகிய
மோசே வனாந்தரத்திலே பண்ணின தேவனு
டைய ஆசரிப்புக்கூடாரம் அங்கே இருந்தது.
5 ஊரின் புத்திரனாகிய ஊரியின் குமாரன் பெச
லெயேல் உண்டுபண்ணின வெண்கலப் பலி
பீடமும் அங்கே **கர்த்தரின்** வாசஸ்தலத்திற்கு
முன்பாக இருந்தது; [4]சாலொமோனும் சபை
6 யாரும் அதை நாடிப்போனார்கள். அங்கே
சாலொமோன் ஆசரிப்புக்கூடாரத்திற்கு முன்
பாகக் **கர்த்தரின்** சந்நிதியிலிருக்கிற வெண்
கலப் பலிபீடத்தின்மேல் ஆயிரம் சர்வாங்க
தகனபலிகளைச் செலுத்திப் பலியிட்டான்.
7 அன்று ராத்திரியிலே தேவன் சாலொமோ
னுக்குத் தரிசனமாகி: [5]நீ விரும்புகிறதை என்
8 னிடத்தில் கேள் என்றார். சாலொமோன்
தேவனை நோக்கி: தேவரீர் என் தகப்பனாகிய
தாவீதுக்குப் பெரிய கிருபைசெய்து, [6]என்னை
9 அவன் ஸ்தானத்திலே ராஜாவாக்கினீர். இப்
போதும் தேவனாகிய **கர்த்தாவே**, நீர் என்
தகப்பனாகிய தாவீதுக்கு அருளின உமது வாக்
குத்தத்தம் உறுதிப்படுவதாக; தேவரீர் பூமியின்
தூளத்தனை ஏராளமான ஜனத்தின்மேல் எ
10 ன்னை ராஜாவாக்கினீர். இப்போதும் நான்
இந்த ஜனத்திற்கு முன்பாகப் போக்கும் வரத்
துமாயிருக்கத்தக்க ஞானத்தையும் அறிவையும்
எனக்குத் தந்தருளும்; [7]ஏராளமாயிருக்கிற இ
ந்த உம்முடைய ஜனத்தை நியாயம் விசாரிக்
11 கத்தக்கவன் யார் என்றான். அப்பொழுது
தேவன் சாலொமோனை நோக்கி: [8]இந்த விருப்

[1] ஆதி. 39. 2. 1 இரா. 2. 46. 1 நாளா. 29. 25
[2] 1 நாளா. 27. 1
[3] 2 சாமு. 6. 2, 17. 1 நாளா. 16, 39
[4] யாத். 38. 1, 2
[5] 1 இரா. 3. 5, 6
[6] 1 நாளா. 28. 5
[7] 1 இரா. 3. 9. எண். 27. 17. உபா. 31. 2. நீதி. 4. 7. யாக். 1. 5, 6
[8] 1 இரா. 3. 11–13
[9] 9. 22. 1 நாளா. 29. 25. பிர. 2. 9
[10] 1 இரா. 10. 26. ழ
[11] யோபு. 22. 24
[12] 1 இரா. 5. 5, ழ

பம் உன் இருதயத்தில் இருந்தபடியாலும், நீ
ஐசுவரியத்தையும் சம்பத்தையும் கனத்தையும்,
உன் பகைஞரின் பிராணனையும் நீடித்த ஆயு
சையும் கேளாமல், நான் உன்னை அரசாளப்
பண்ணின என் ஜனத்தை நியாயம் விசாரிக்
கத்தக்க ஞானத்தையும் விவேகத்தையும் நீ கேட்
டபடியினாலும், ஞானமும் விவேகமும் தந் 12
திருக்கிறதுமல்லாமல், [9]உனக்குமுன் இருந்த
ராஜாக்களுக்காகிலும் உனக்குப்பின் இருக்
கும் ராஜாக்களுக்காகிலும் இல்லாத ஐசுவரி
யத்தையும் சம்பத்தையும் கனத்தையும் உனக்
குத் தருவேன் என்றார். இப்படிச் சாலொ 13
மோன் கிபியோனிலிருக்கிற மேட்டிற்குப்
போய், ஆசரிப்புக் கூடாரத்தின் சந்நிதியிலி
ருந்து எருசலேமுக்கு வந்து, இஸ்ரவேலை
அரசாண்டான்.
சாலொமோன் ரதங்களையும் குதிரைவீரரை 14
யும் சேர்த்தான்; [10]அவனுக்கு ஆயிரத்து நானூறு
ரதங்கள் இருந்தது; பன்னீராயிரம் குதிரை
வீரரும் இருந்தார்கள்; அவைகளை ரதங்களின்
பட்டணங்களிலும், அவர்களை ராஜாவாகிய
தன்னிடத்தில் எருசலேமிலும் வைத்திருந்
தான். ராஜா எருசலேமிலே வெள்ளியையும் 15
பொன்னையும் கற்கள்போலவும், [11]கேதுருமரங்
களைப் பள்ளத்தாக்கில் இருக்கிற காட்டத்தி
மரங்கள்போலவும் அதிகமாக்கினான். சா 16
லொமோனுக்கு இருந்த குதிரைகளும் புடவை
களும் எகிப்திலிருந்து கொண்டுவரப்பட்டது;
ராஜாவின் வர்த்தகர் புடவைகளை ஒப்பந்த
விலைக்கிரயத்துக்கு வாங்கினார்கள். அவர்கள் 17
எகிப்திலிருந்து ஒரு ரதத்தை அறுநூறு வெள்
ளிக்காசுக்கும், ஒரு குதிரையை நூற்றைம்பது
வெள்ளிக்காசுக்கும் கொண்டுவருவார்கள்; அந்
தப்படியே ஏத்தியரின் சகல ராஜாக்களுக்கும்,
சீரியாவின் ராஜாக்களுக்கும் அவர்கள் மூல
மாய்க் கொண்டுவரப்பட்டது.
சாலொமோன் **கர்த்தருடைய** நாமத்திற்கு 2
ஒரு ஆலயத்தையும், [12]தன் ராஜரிகத்திற்கு
ஒரு அரமனையையும் கட்ட நிர்ணயம்பண்ணி,
சுமைசுமக்கிறதற்கு எழுபதினாயிரம்பேரையும், 2
மலையில் மரம் வெட்டுகிறதற்கு எண்பதினா
யிரம்பேரையும், இவர்கள்மேல் தலைவராக
மூவாயிரத்து அறுநூறுபேரையும் எண்ணி

3 ஏற்படுத்தினான். தீருவின் ராஜாவாகிய ஈரா
மிடத்தில் ஆள் அனுப்பி: என் தகப்பனாகிய
தாவீது தாம் வாசமாயிருக்கும் அரமனையைத்
தமக்குக் கட்டும்படிக்கு, நீர் அவருக்குத் தயவு
செய்து, அவருக்குக் கேதருமரங்களை அனுப்
4 பினதுபோல எனக்கும் தயவுசெய்யும். இதோ,
என் தேவனாகிய **கர்த்தருக்கு** முன்பாகச்
சுகந்தவர்க்கங்களின் தூபம் காட்டுகிறதற்கும்,
சமுகத்தப்பங்களை எப்போதும் வைக்கிற
தற்கும், காலையிலும் மாலையிலும், ஓய்வு
நாட்களிலும், மாதப் பிறப்புகளிலும், எங்கள்
தேவனாகிய **கர்த்தரின்** பண்டிகைகளிலும்,
இஸ்ரவேல் நித்தியகாலமாகச் செலுத்தவேண்
டியபடி சர்வாங்க தகனபலிகளைச் செலுத்து
கிறதற்கும், [1]அவருடைய நாமத்திற்கு ஒரு ஆல
யத்தைக் கட்டி அதை அவருக்குப் பிரதிஷ்டை
பண்ணும்படி நான் எத்தனித்திருக்கிறேன்.
5 எங்கள் தேவன் எல்லா தேவர்களைப்பார்க்கி
லும் பெரியவர்; [2]ஆகையால் நான் கட்டப்
6 போகிற ஆலயம் பெரியதாயிருக்கும். வானங்
களும் வானாதி வானங்களும் அவரைக் கொள்
ளக்கூடாதிருக்க, அவருக்கு ஒரு ஆலயத்தைக்
கட்ட வல்லவன் யார்? [3]அவர் சந்நிதியில் தூபங்
காட்டுகிறதற்கே ஒழிய, வேறே முகாந்தரமாய்
அவருக்கு ஆலயம் கட்டுகிறதற்கு நான் எம்
7 மாத்திரம்? இப்போதும் என் தகப்பனாகிய
தாவீது குறித்தவர்களும், என்னிடத்தில் யூதா
விலும் எருசலேமிலும் இருக்கிறவர்களுமாகிய
நிபுணரோடு, பொன்னிலும் வெள்ளியிலும்
வெண்கலத்திலும் இரும்பிலும் இரத்தாம்பர
நூலிலும் சிவப்புநூலிலும் இளநீலநூலிலும்
வேலைசெய்ய நிபுணனும், கொத்துவேலை
செய்ய அறிந்தவனுமாகிய ஒரு மனுஷனை
8 என்னிடத்தில் அனுப்பும். லீபனோனிலி
ருந்து கேதருமரங்களையும், தேவதாரிவிருட்
சங்களையும், வாசனை மரங்களையும் எனக்கு
அனுப்பும்; லீபனோனின் மரங்களை வெட்ட
உம்முடைய வேலைக்காரர் பழகினவர்களெ
ன்று அறிவேன்; எனக்கு மரங்களைத் திரளாக
ஆயத்தப்படுத்த என் வேலைக்காரர் உம்மு
டைய வேலைக்காரரோடேகூட இருப்பார்கள்.
9 நான் கட்டப்போகிற ஆலயம் பெரியதும்
10 ஆச்சரியப்படத்தக்கதுமாயிருக்கும். அந்த
மரங்களை வெட்டுகிற உம்முடைய வேலைக்
காரருக்கு இருபதினாயிரம் மரக்கால் கோது
மை அரிசியையும், இருபதினாயிரம் மரக்கால்
வாற்கோதுமையையும், இருபதினாயிரம் குடம்
திராட்சரசத்தையும், இருபதினாயிரம் குடம்
எண்ணெயையும் [4]கொடுப்பேன் என்று சொ
ல்லி அனுப்பினான்.
11 அப்பொழுது தீருவின் ராஜாவாகிய ஈராம்
சாலொமோனுக்குப் பிரதியுத்தரமாக: **கர்த்தர்**
தம்முடைய ஜனத்தைச் சிநேகித்ததினால், [5]உம்
12 மை அவர்கள்மேல் ராஜாவாக வைத்தார். **கர்த்**
**தருக்கு** ஒரு ஆலயத்தையும், [6]தமது ராஜரிகத்
திற்கு ஒரு அரமனையையும் கட்டத்தக்க யுக்தி
யும் புத்தியுமுடைய ஞானமுள்ள குமாரனை,

[1] யாத். 25. 30. லேவி. 24. 8. எண். 28. 9–11
[2] சங். 135. 5
[3] 6. 18. 1 இரா. 8. 27. ஏசா. 66. 1
[4] 1 இரா. 5. 11
[5] 1 இரா. 10. 9. சங். 72. 17
[6] சங். 33. 6. எரே. 10. 10, 11. அப். 14. 15. வெளி. 10. 6
[7] 1 இரா. 7. 13, 14
[8] 1 இரா. 5. 8, 9
[9] 1 இரா. 6. 1. ழ
[10] 1 இரா. 6. 2. ழ

தாவீது ராஜாவுக்குக் கட்டளையிட்டவராகிய
வானத்தையும் பூமியையும் உண்டாக்கின இஸ்
ரவேலின் தேவனாகிய **கர்த்தருக்கு** ஸ்தோத்
திரமுண்டாவதாக. இப்போதும் ஈராம் அபி 13
யென்னும் புத்திமானாகிய நிபுணனை அனுப்
புகிறேன். அவன் தாணின் குமாரத்திகளில் 14
ஒரு ஸ்திரீயின் குமாரன்; அவன் தகப்பன்
தீருதேசத்தான்; [7]அவன் பொன்னிலும், வெள்
ளியிலும், வெண்கலத்திலும், இரும்பிலும்,
கற்களிலும், மரங்களிலும், இரத்தாம்பரநூலி
லும் இளநீலநூலிலும் மெல்லியநூலிலும் சிவப்
புநூலிலும் வேலைசெய்யவும், சகலவிதக் கொத்
துவேலை செய்யவும், என்னென்ன செய்ய
வேண்டுமென்று அவனுக்குச் சொல்லப்படு
மோ, அவைகளையெல்லாம் உம்மிடத்திலுள்ள
நிபுணரோடும், உம்முடைய தகப்பனாகிய
தாவீது என்னும் என் ஆண்டவனின் நிபுண
ரோடேகூட யூகித்துச் செய்யவும் அறிந்தவன்.
என் ஆண்டவன் தாம் சொன்னபடி கோது 15
மையையும், வாற்கோதுமையையும், எண்ணெ
யையும், திராட்சரசத்தையும் தம்முடைய ஊழி
யக்காரருக்கு அனுப்புவாராக. நாங்கள் உமக் 16
குத் தேவையான மரங்களை யெல்லாம் லீப
னோனிலே வெட்டி, அவைகளைத் தெப்பங்
களாய்க் கட்டி கடல்வழியாய் யோப்பாமட்
டும் கொண்டுவருவோம்; [8]பிற்பாடு நீர் அவை
களை எருசலேமுக்குக் கொண்டுபோகலாம்
என்று எழுதி அனுப்பினான். தன் தகப்பனா 17
கிய தாவீது இஸ்ரவேல் தேசத்திலுண்டான
மறுஜாதியாரையெல்லாம் எண்ணித் தொகை
யிட்டதுபோல, சாலொமோனும் அவர்களை
எண்ணினான்; அவர்கள் லட்சத்து ஐம்பத்து
மூவாயிரத்து அறுநூறுபேராயிருந்தார்கள்.
இவர்களில் அவன் எழுபதினாயிரம்பேரைச் 18
சுமைசுமக்கவும், எண்பதினாயிரம்பேரை மலை
யில் மரம் வெட்டவும், மூவாயிரத்து அறு
நூறுபேரை ஜனத்தின் வேலையை விசாரிக்
கும் தலைவராயிருக்கவும் வைத்தான்.

பின்பு சாலொமோன் எருசலேமிலே [9]தன் 3
தகப்பனாகிய தாவீதுக்குக் காண்பிக்கப்பட்ட
மோரியா என்னும் மலையில் எபூசியனாகிய
ஓர்னானின் களம் என்னும் தாவீது குறித்து
வைத்த ஸ்தலத்திலே **கர்த்தருடைய** ஆலயத்
தைக் கட்டத் துவக்கினான். அவன் தான் ராஜ 2
யபாரம்பண்ணின நாலாம் வருஷம் இரண்டாம்
மாதம் இரண்டாம்தேதியிலே கட்டத்தொடங்
கினான். தேவனுடைய ஆலயத்தைக் கட்டுகிற 3
தற்கு, [10]சாலொமோன் போட்ட அஸ்திபாரமா
னது, முற்காலத்து அளவின்படியே அறுபது
முழ நீளமும், இருபதுமுழ அகலமுமாயிருந்
தது. முகப்பு மண்டபம் ஆலயத்தினுடைய 4
அகலத்தின்படியே இருபது முழ நீளமும்,
நூற்றிருபது முழ உயரமுமாயிருந்தது; அதின்
உட்புறத்தைப் பசும் பொன்தகட்டால் மூடி
னான். ஆலயத்தின் பெரிய மாளிகையை 5
தேவதாரு பலகைகளினால் செய்து பசும்
பொன்னினால் இழைத்து, அதின்மேல் பே

ரீச்சு வேலையையும் சங்கிலி வேலையையும் சித்
6 திரித்து, அந்த மாளிகையை ரத்தினங்களால்
அலங்கரித்தான்; பொன்னானது பர்வாயீமின்
7 பொன்னாயிருந்தது. அந்த மாளிகையின் உத்
திரங்களையும், நிலைகளையும் அதின் சுவர்களை
யும், அதின் கதவுகளையும் பொன்தகட்டால்
மூடி, கொத்துவேலையால் சுவர்களிலே கேரு
8 பீன்களைச் செய்வித்தான். மகா பரிசுத்த
மான ஆலயத்தையும் கட்டினான்; அதின் நீளம்
ஆலயத்தினுடைய அகலத்தின்படி இருபது
முழமும், அதின் அகலம் இருபது முழமுமா
யிருந்தது; அதை அறுநூறு தாலந்து பசும்
9 பொன்னினால் இழைத்தான். ஆணிகளின்
நிறை ஐம்பது பொன் சேக்கலானது; மேல்
அறைகளையும் பொன்னினால் இழைத்தான்.
10 அவன் மகா பரிசுத்தமான ஆலயத்திலே இர
ண்டுகேருபீன்களையும்சித்திரவேலையாய்உண்
டுபண்ணினான்; அவைகளைப் பொன்தகட்
11 டால் மூடினான். அந்தக் கேருபீன்களுடைய
செட்டைகளின் நீளம் இருபது முழமானது;
ஒன்றினுடைய ஒரு செட்டை ஐந்துமுழமா
யிருந்து, ஆலயத்துச் சுவரைத் தொட்டது;
மறு செட்டை ஐந்துமுழமாயிருந்து, மற்றக்
12 கேருபீனின் செட்டையைத் தொட்டது. மற்
றக் கேருபீனின் ஒரு செட்டையும் ஐந்து
முழமாயிருந்து, ஆலயத்துச் சுவரைத் தொட்
டது; அதின் மறு செட்டையும் ஐந்து முழமா
யிருந்து, மற்றக் கேருபீனின் செட்டையைத்
13 தொட்டது. இப்படியே அந்தக் கேருபீன்க
ளின் செட்டைகள் இருபதுமுழ விரிவாயி
ருந்தது; அவைகள் தங்கள் கால்களால் ஊன்றி
நின்றது; அவைகளின் முகங்கள் ஆலயத்து
14 உட்புறமாய்நோக்கியிருந்தது. இளநீலநூலா
லும் இரத்தாம்பரநூலாலும் சிவப்புநூலாலும்
மெல்லியநூலாலும் [1]திரையையும், அதிலே
கேருபீன்களின் உருவங்களையும் உண்டுபண்
15 ணினான். ஆலயத்திற்கு முன்னாக முப்பத்
தைந்து முழ உயரமான இரண்டு தூண்களை
யும், [2]அவைகளுடைய முனைகளின்மேலிருக்
கும் ஐந்து முழ உயரமான கும்பங்களையும்
16 உண்டாக்கி, சந்நிதிக்கு முன்னிருக்கச் சங்
கிலிகளையும் பண்ணி, தூண்களின் முனைக
ளின்மேல் பற்றவைத்து, நூறு மாதளம் பழங்
களையும் பண்ணி அந்தச் சங்கிலிகளில் கோத்
17 தான். அந்தத் தூண்களை அவன் தேவாலயத்
திற்கு முன்பாக ஒன்றை வலதுபுறத்திலும்
ஒன்றை இடதுபுறத்திலும் நாட்டி, வலதுபுற
மானதற்கு யாகீன் என்றும், இடதுபுறமான
தற்குப் போவாஸ் என்றும் பேரிட்டான்.

4 அன்றியும் இருபது முழ நீளமும் இரு
பது முழ அகலமும் பத்து முழ உயரமுமான
வெண்கலப் பலிபீடத்தையும் [3]பண்ணினான்.
2 வெண்கலக் கடல்தொட்டியையும் வார்ப்பித்
தான்; [4]சக்கராகாரமான அதினுடைய ஒரு
விளிம்புதொடங்கி மறு விளிம்புமட்டும் பத்து
முழ அகலமும், ஐந்து முழ உயரமும், சுற்ற
3 ளவு முப்பது முழ நூலளவுமாயிருந்தது. அ

[1] யாத். 26. 31. மத். 27. 51. எபி. 9. 3
[2] 1 இரா. 7. 15–21. எரே. 52. 21
[3] யாத். 27. 1, 2. 2 இரா. 16. 14. எசே. 43. 13, 16
[4] 1 இரா. 7. 23, ழ
[5] யாத். 25. 31, 40. 1 இரா. 7. 49
[6] 1 இரா. 7. 48
[7] 1 இரா. 6. 36
[8] 1 இரா. 7. ழ. அதி. காண்க.

தின் கீழ்ப்புறமாய் ரிஷபங்களின் உருவங்கள்
ஒவ்வொரு முழத்திற்குப் பத்து உருவமாக
அந்தக் கடல்தொட்டியின் சக்கரத்தில் இருந்
தது; தொட்டியோடு ஒன்றாய் வார்க்கப்பட்ட
அந்த ரிஷபங்களின் இரண்டு வரிசைகள்
இருந்தது. அது பன்னிரண்டு ரிஷபங்க 4
ளின்மேல் நின்றது; இவைகளில் மூன்று
வடக்கேயும், மூன்று மேற்கேயும், மூன்று
தெற்கேயும், மூன்று கிழக்கேயும் நோக்கியிருந்
தது; கடல்தொட்டி அவைகளின்மேல் உயர
இருந்தது; அவைகளின் பின்பக்கமெல்லாம்
உட்புறமாய் இருந்தது. அதின் கனம் நாலு 5
விரற்கடையும், அதின் விளிம்பு பானபாத்
திரத்தின் விளிம்புபோலும், லீலிபுஷ்பம்போ
லும் இருந்தது; அது மூவாயிரங்குடம் தண்
ணீர் பிடிக்கத்தக்கதாயிருந்தது. கழுவுகிறதற் 6
குப் பத்துக் கொப்பரைகளையும் உண்டாக்கி,
ஐந்தை வலதுபுறத்திலும், ஐந்தை இடதுபுறத்
திலும் வைத்தான்; சர்வாங்க தகனமாகிறவை
களை அவைகளில் அலசுவார்கள்; கடல்தொட்
டியோ ஆசாரியர்கள் தங்களைச் சுத்தம்பண்
ணிக்கொள்ளுகிறதற்கு இருந்தது. பத்துப் 7
பொன் விளக்குத்தண்டுகளையும், [5]அவைகளு
டைய பிரமாணத்தின்படி செய்வித்து, அவை
களை தேவாலயத்தில் வலதுபுறத்திலே ஐந்
தும் இடதுபுறத்திலே ஐந்துமாக வைத்தான்.
பத்து மேசைகளையும் செய்து, [6]அவைகளை 8
தேவாலயத்தில் வலதுபுறத்திலே ஐந்தும் இட
துபுறத்திலே ஐந்துமாக வைத்து, நூறு பொன்
கலங்களையும் பண்ணினான். மேலும் ஆசாரி 9
யரின் பிராகாரத்தையும், பெரிய பிராகாரத்தை
யும், [7]பிராகாரத்தின் வாசல்களையும் உண்டா
க்கி, அவைகளின் கதவுகளை வெண்கலத்தால்
மூடினான். கடல்தொட்டியை கீழ்த்திசை 10
யான வலதுபுறத்திலே தெற்குமுகமாக வைத்
தான். ஈராம் செப்புச்சட்டிகளையும், [8]சாம்ப 11
லெடுக்கிற கரண்டிகளையும், கலங்களையும் செ
ய்தான்; இவ்விதமாய் ஈராம் கர்த்தருடைய ஆல
யத்திற்காக ராஜாவாகிய சாலொமோனுக்குச்
செய்யவேண்டிய வேலையைச் செய்து முடித்
தான். அவைகள் என்னவெனில், இரண்டு 12
தூண்களும், இரண்டு தூண்களுடைய முனை
யின்மேலிருக்கிற கும்பங்களும், குமிழ்களும்,
தூண்களுடைய முனையின்மேலிருக்கிற குமி
ழ்களான இரண்டு கும்பங்களை மூடுகிறதற்கு
இரண்டு வலைப்பின்னல்களும், தூண்களின் 13
மேலுள்ள குமிழ்களான இரண்டு கும்பங்களை
மூடுகிறதற்கு, ஒவ்வொரு வலைப்பின்னலின்
இரண்டுவரிசை மாதளம்பழங்களாக, இரண்டு
வலைப்பின்னலிலுமிருக்கிற நானூறு மாதளம்
பழங்களுமே. ஆதாரங்களையும், ஆதாரங்க 14
ளின்மேலிருக்கும் கொப்பரைகளையும், ஒரு 15
கடல் தொட்டியையும், அதின் கீழிருக்கும்
பன்னிரண்டு ரிஷபங்களையும், செப்புச்சட் 16
டிகளையும், சாம்பல் கரண்டிகளையும், முள்துற
டுகள் முதலான பணிமுட்டுகளையும், ஈராம்
அபி ராஜாவாகிய சாலொமோனுக்குக் கர்த்த

ரீன் ஆலயத்திற்காக சுத்தமான வெண்கலத்
17 தால் பண்ணினுன். யோர்தானுக்கடுத்த சம
ஞன பூமியில் சுக்கோத்திற்கும் சரேத்தாவுக்
கும் நடுவே களிமண் தரையிலே ராஜா அவை
18 களை வார்ப்பித்தான். இந்தப் பணிமுட்டுக
ளையெல்லாம் சாலொமோன் வெகு ஏராளமாய்
உண்டுபண்ணினுன்; வெண்கலத்தின் நிறை
19 தொகைக்கு அடங்காததாயிருந்தது. தேவனு
டைய ஆலயத்துக்கு வேண்டிய சகல பணி
முட்டுகளையும், பொற்பீடத்தையும், [1]சமுகத்
20 தப்பங்களை வைக்கும்மேசைகளையும், முறை
யின்படியே சந்நிதிக்கு முன்பாக விளக்குக்
கொளுத்துகிறதற்குப் பசும்பொன் விளக்குத்
தண்டுகளையும், அவைகளின் விளக்குகளையும்,
21 சுத்த தங்கத்தினுல் செய்த பூக்களையும், விளக்
22 குகளையும், கத்தரிகளையும், பசும்பொன் கத்
திகளையும், கலங்களையும், கலயங்களையும், தூப
கலசங்களையும் சாலொமோன் பண்ணினுன்;
மகா பரிசுத்த ஸ்தலத்தின் உட்கதவுகளும்,
ஆலயமாகிய வீட்டின் கதவுகளும், ஆலயத்
தின் வாசல் கதவுகளும் எல்லாம் பொன்ஞ
யிருந்தது.

5 **கர்த்தருடைய** ஆலயத்துக்காகச் சாலொ
மோன்செய்தவேலையெல்லாம்முடிந்தபோது,
சாலொமோன் தன் தகப்பனுகிய தாவீது பரி
சுத்தம்பண்ணும்படி நேர்ந்தவைகளைக் கொண்
டுவந்து, வெள்ளியையும், பொன்னையும், சகல
பணிமுட்டுகளையும், [2]தேவனுடைய ஆலயத்
2 தின் பொக்கிஷங்களில் வைத்தான். பின்பு
**கர்த்தருடைய** உடன்படிக்கைப் பெட்டியைச்
சீயோன் என்னும் தாவீதின் நகரத்திலிருந்து
கொண்டுவரும்படி சாலொமோன் இஸ்ரவே
லின் மூப்பரையும், [3]கோத்திரப் பிரபுக்களா
கிய இஸ்ரவேல் புத்திரரின் வம்சத்தலைவர்
எல்லாரையும் எருசலேமிலே கூடிவரச்செய்
3 தான். அப்படியே இஸ்ரவேலர் எல்லாரும்
ஏழாம் மாதத்தின் பண்டிகையிலே ராஜாவி
4 னிடத்தில் கூடிவந்தார்கள். இஸ்ரவேலின்
மூப்பர் எல்லாரும் வந்தபின்பு லேவியர் பெட்
5 டியை எடுத்து, பெட்டியையும், ஆசரிப்புக்
கூடாரத்தையும், கூடாரத்திலிருக்கிற பரிசுத்த
பணிமுட்டுகளையும் கொண்டுவந்தார்கள்; அ
வைகளைக் கொண்டுவந்தவர்கள் லேவியரான
6 ஆசாரியரே. ராஜாவாகிய சாலொமோனும்,
அவனேடே கூடின இஸ்ரவேல் சபையார்
அனைவரும், பெட்டிக்கு முன்பாக எண்ணிக்
கைக்கும் தொகைக்கும் அடங்காத ஏராளமான
7 ஆடுமாடுகளைப் பலியிட்டார்கள். அப்படியே
ஆசாரியர் **கர்த்தருடைய** உடன்படிக்கைப்
பெட்டியை, ஆலயத்தின் சந்நிதியாகிய மகா
பரிசுத்தமான ஸ்தலத்திலே, கேருபீன்களு
டைய செட்டைகளுக்குக் கீழாகக் கொண்டு
8 வந்து வைத்தார்கள். கேருபீன்கள், பெட்டி
யிருக்கும் ஸ்தானத்தின்மேல், தங்கள் இரண்
டிரண்டு செட்டைகளை விரித்து உயர இருந்து
பெட்டியையும் அதின் தண்டுகளையும் மூடிக்
9 கொண்டிருந்தது. பெட்டியிலிருக்கிற தண்
டுகளின் முனைகள் சந்நிதிஸ்தலத்திற்கு முன்
னே காணப்படத்தக்கதாய் அந்த தண்டுகளை
இழுத்தார்கள்; புறம்பே அவைகள் காணப்ப
டவில்லை; அது இந்நாள்வரைக்கும் அங்கே
இருக்கிறது. இஸ்ரவேல் புத்திரர் எகிப்திலி 10
ருந்து புறப்பட்டபின், **கர்த்தர்** ஓரேபிலே அ
வர்களோடு உடன்படிக்கைபண்ணினபோது,
[4]மோசே அந்தப் பெட்டியிலே வைத்த இர
ண்டு கற்பலகைகளே அல்லாமல் அதிலே
வேறொன்றும் இருந்ததில்லை. வகுப்புகளின் 11
முறைகளைப் பாராமல், ஆசாரியர் எல்லாரும்
தங்களைப் பரிசுத்தம்பண்ணிக்கொண்டார்கள்.
ஆசாப், ஏமான், எதுத்தூனுடைய கூட்டத் 12
தாரும், அவர்களுடைய குமாரர் சகோதரரு
டைய கூட்டத்தாருமாகிய பாடகரான லேவி
யரனைவரும் மெல்லிய புடவைகளைத் தரித்து,
கைத்தாளங்களையும் தம்புருகளையும் சுரமண்ட
லங்களையும் பிடித்துப் பலிபீடத்திற்குக் கிழக்
கே நின்றூர்கள்; [5]அவர்களோடுங்கூடப் பூரி
கைகளை ஊதுகிற ஆசாரியர்கள் நூற்றிருபது
பேர் நின்றூர்கள். அவர்கள் ஒருமிக்கப் பூரி 13
கைகளை ஊதி, ஏக சத்தமாய் **கர்த்தரை** துதித்து
ஸ்தோத்திரித்துப் பாடினூர்கள்; ஆசாரியர் பரி
சுத்த ஸ்தலத்திலிருந்து புறப்படுகையிலும்,
பாடகர் பூரிகைகள் தாளங்கள் கீதவாத்தியங்க
ளுடைய சத்தத்தை தொனிக்கப்பண்ணி, **கர்த்**
**தர்** நல்லவர், அவர் கிருபை என்றுமுள்ளது
என்று அவரை ஸ்தோத்திரிக்கையிலும், [6]**கர்த்**
**தருடைய** வீடாகிய தேவாலயம் மேகத்தினுல்
நிறையப்பட்டது. அந்த மேகத்தினிமித்தம் 14
ஆசாரியர்கள் ஊழியஞ்செய்து, நிற்கக்கூடா
மற்போயிற்று; [7]**கர்த்தருடைய** மகிமை தேவ
னுடைய ஆலயத்தை நிரப்பிற்று.

அப்பொழுது சாலொமோன்: காரிருளிலே 6
வாசம்பண்ணுவேன் [8]என்று **கர்த்தர்** சொன்
னூர் என்றும், தேவரீர் வாசம்பண்ணத்தக்க 2
வீடும், நீர் என்றைக்கும் தங்கத்தக்க நிலையான
ஸ்தானமுமாகிய ஆலயத்தை உமக்குக் கட்டி
னேன் என்றும் சொல்லி, ராஜா முகம் திரு 3
ம்பி, இஸ்ரவேல் சபையார் எல்லாரையும்
ஆசீர்வதித்தான்; இஸ்ரவேல் சபையார் எல்
லாரும் நின்றூர்கள். அவன் சொன்னது: 4
இஸ்ரவேலின் தேவனுகிய **கர்த்தருக்கு** ஸ்தோ
த்திரம்; அவர் என் தகப்பனுகிய தாவீதுக்குத்
தம்முடைய வாக்கினுல் சொன்னதை, தம்மு
டைய கரத்தினுல் நிறைவேற்றினூர். அவர்: 5
நான் என் ஜனத்தை எகிப்துதேசத்திலிருந்து
புறப்படப்பண்ணின நாள்முதற்கொண்டு, என்
நாமம் விளங்கும்படி, ஒரு ஆலயத்தைக் கட்
டவேண்டுமென்று நான் இஸ்ரவேலுடைய
எல்லாக் கோத்திரங்களிலுமுள்ள வேறே
யாதொரு பட்டணத்தைத் தெரிந்துகொள்ளா
மலும், என் ஜனமாகிய இஸ்ரவேலின்மேல்
அதிபதியாயிருக்கும்படி வேறே ஒருவனைத்
தெரிந்துகொள்ளாமலும், என் நாமம் விளங் 6
கும் ஸ்தானமாக எருசலேமையும், [9]என் ஜன
மாகிய இஸ்ரவேலின்மேல் அதிபதியாயிருக்

[1] யாத். 25. 30, 31: 27. 20, 21
[2] 1 இரா. 7. 51
[3] 2 சாமு. 6. 12. 1 இரா. 8. 1. ழ
[4] உபா. 10. 2, 5: 6. 11
[5] 1 நாளா. 15. 24. 25. 1
[6] 1 நாளா. 16. 34, 41. சங். 136
[7] 7. 2. யாத். 40. 35. எசே. 10. 4. வெளி. 15. 8
[8] 1 இரா. 8. 12. ழ. லேவி. 16. 2
[9] 12. 13. 1 நாளா. 28. 4

கத் தாவீதையும் தெரிந்துகொண்டேன் என்
7 றூர். இஸ்ரவேலின் தேவனுகிய **கர்த்தரின்**
நாமத்திற்கு ஆலயத்தைக் கட்டவேண்டும் என்
கிற விருப்பம் [1]என் தகப்பனுகிய தாவீதின்
8 மனதில் இருந்தது. ஆனாலும் **கர்த்தர்** என்
தகப்பனுகிய தாவீதை நோக்கி: என் நாமத்
திற்கு ஆலயத்தைக் கட்டவேண்டும் என்கிற
விருப்பம் உன் மனதிலே இருந்தது நல்ல
9 காரியக்தான். ஆகிலும் நீ அந்த ஆலயத்தைக்
கட்டமாட்டாய்; உன் கர்ப்பப்பிறப்பாகிய உன்
குமாரனே என் நாமத்திற்கு அந்த ஆலயத்
10 தைக் கட்டுவான் என்றூர். இப்போதும் **கர்த்**
**தர்** சொல்லிய தமது வார்த்தையை நிறைவேற்
றினுர்; **கர்த்தர்** சொன்னபடியே, நான் என்
தகப்பனுகிய தாவீதின் ஸ்தானத்தில் எழும்பி,
இஸ்ரவேலுடைய சிங்காசனத்தின்மேல் உட்
கார்ந்து, இஸ்ரவேலின் தேவனுகிய **கர்த்தரின்**
11 நாமத்திற்கு ஆலயத்தைக் கட்டி, **கர்த்தர்** இஸ்
ரவேல் புத்திரருடனே பண்ணின உடன்ப
டிக்கையிருக்கிற பெட்டியை அதிலே வைத்
தேன் என்று சொல்லி,
12 **கர்த்தருடைய** பலிபீடத்திற்கு முன்னே
இஸ்ரவேல் சபையார் எல்லாருக்கும் எதிராக
13 நின்று [2]தன் கைகளை விரித்தான். சாலொ
மோன் ஐந்துமுழ நீளமும், ஐந்து முழ அகல
மும், மூன்று முழ உயரமுமான ஒரு வெண்
கலப் பிரசங்கபீடத்தை உண்டாக்கி, அதை
நடுப்பிராகாரத்திலே வைத்திருந்தான்; அதின்
மேல் அவன் நின்று, இஸ்ரவேலின் சபை
யார் எல்லாருக்கும் எதிராக முழங்காற்படி
யிட்டு, தன் கைகளை வானத்திற்கு நேராக
14 விரித்து: இஸ்ரவேலின் தேவனுகிய **கர்த்**
**தாவே**, வானத்திலும் பூமியிலும் உமக்கு ஒப்
பான தேவனில்லை; [3]தங்கள் முழு இருதயத்
தோடும் உமக்கு முன்பாக நடக்கிற உமது
அடியாருக்கு உடன்படிக்கையையும் கிருபை
15 யையும் காத்துவருகிறீர். தேவரீர் என் தகப்
பனுகிய தாவீது என்னும் உமது அடியானுக்
குச்செய்த வாக்குத்தத்தத்தைக் காத்தருளினீர்;
உம்முடைய வாக்கினுல் அதைச் சொன்னீர்;
உம்முடைய கரத்தினுல் அதை இந்நாளில்
16 இருக்கிறபடி நிறைவேற்றினீர். இஸ்ரவே
லின் தேவனுகிய **கர்த்தாவே**, தேவரீர் என்
தகப்பனுகிய தாவீது என்னும் உமது அடி
யானை நோக்கி: நீ எனக்கு முன்பாக நடந்தது
போல, உன் குமாரரும் என் நியாயப்பிரமா
ணத்தில் நடக்கும்படி தங்கள் வழியைக் காப்
பார்களேயானுல், இஸ்ரவேலின் சிங்காசனத்
தில் வீற்றிருக்கும் புருஷன் எனக்கு முன்
பாக உனக்கு இல்லாமற்போவதில்லை என்று
சொன்னதை இப்பொழுது [4]அவனுக்கு நிறை
17 வேற்றும். இஸ்ரவேலின் தேவனுகிய **கர்த்**
**தாவே**, தேவரீர் உமது அடியானுகிய தாவீ
துக்குச் சொன்ன உம்முடைய வார்த்தை
18 மெய் என்று விளங்குவதாக. தேவன் மெய்
யாக மனுஷரோடே பூமியிலே வாசம்பண்ணு
வாரோ? [5]இதோ, வானங்களும், வானுதிவா
னங்களும் உம்மைக் கொள்ளாதே; நான் கட்
டின இந்த ஆலயம் எம்மாத்திரம்? என் தேவ 19
னுகிய **கர்த்தாவே**, உமது அடியேன் உமது
சந்நிதியில் செய்கிற விண்ணப்பத்தையும் மன்
றூட்டையும் கேட்டு, உமது அடியேனுடைய
விண்ணப்பத்தையும் வேண்டுதலையும் திருவு
ளத்தில் கொண்டருளும். உமது அடியேன் 20
இவ்விடத்திலே செய்யும் விண்ணப்பத்தைக்
கேட்க, என் நாமம் விளங்குமென்று நீர் சொ
ன்ன ஸ்தலமாகிய இந்த ஆலயத்தின்மேல் உம்
முடைய கண்கள் இரவும் பகலும் திறந்திருப்ப
தாக. உமது அடியேனும், இந்த ஸ்தலத் 21
திலே விண்ணப்பம் செய்யப்போகிற உமது
ஜனமாகிய இஸ்ரவேலும் பண்ணும் ஜெபங்
களைக் கேட்டருளும்; பரலோகமாகிய உம்மு
டைய வாசஸ்தலத்திலே நீர் அதைக் கேட்
பீராக, கேட்டு மன்னிப்பீராக. ஒருவன் 22
தன் அயலானுக்குக் குற்றம் செய்திருக்கை
யில், இவன் அவனை ஆணையிடச் சொல்லும்
போது, அந்த ஆணை இந்த ஆலயத்திலே உம்
முடைய பலிபீடத்திற்கு முன்பாக வந்தால்,
அப்பொழுது பரலோகத்திலிருக்கிற தேவரீர் 23
கேட்டு, துன்மார்க்கனுடைய நடக்கையை
அவன் தலையின்மேல் சுமரப்பண்ணி, அவ
னுக்கு நீதியைச் சரிக்கட்டவும், நீதிமானுக்கு
அவனுடைய நீதிக்குத் தக்கதாய்ச் செய்து
அவனை நீதிமானுக்கவுந்தக்கதாய், உமது அடி
யாரை நியாயந்தீர்ப்பீராக. உம்முடைய ஜனங் 24
களாகிய இஸ்ரவேலர் உமக்கு விரோதமாகப்
பாவஞ்செய்ததினிமித்தம் சத்துருவுக்கு முன்
பாக முறிந்துபோய், உம்மிடத்திற்குத் திரும்பி,
உம்முடைய நாமத்தை அறிக்கைபண்ணி,
இந்த ஆலயத்திலே உம்முடைய சந்நிதியில்
விண்ணப்பத்தையும் வேண்டுதலையும் செய்
தால், பரலோகத்திலிருக்கிற தேவரீர் கேட்டு, 25
உம்முடைய ஜனமாகிய இஸ்ரவேலின் பாவத்
தை மன்னித்து, அவர்களுக்கும் அவர்கள்
பிதாக்களுக்கும் நீர் கொடுத்த தேசத்துக்கு
அவர்களைத் திரும்பிவரப் பண்ணுவீராக.
அவர்கள் உமக்கு விரோதமாய்ப் பாவஞ்செய் 26
ததினுல், வானம் அடைபட்டு மழை பெய்யா
திருக்கும்போது, அவர்கள் இந்த ஸ்தலத்திற்கு
நேராக விண்ணப்பஞ்செய்து, உம்முடைய
நாமத்தை அறிக்கைபண்ணி, தேவரீர் தங்க
ளைக் கிலேசப்படுத்துகையில் தங்கள் பாவங்
களை விட்டுத் திரும்பினுல், பரலோகத்திலிருக் 27
கிற தேவரீர் கேட்டு, உமது அடியாரும் உமது
ஜனமாகிய இஸ்ரவேலும் செய்த பாவத்தை
மன்னித்து, அவர்கள் நடக்கவேண்டிய நல்
வழியை அவர்களுக்குப் போதித்து, தேவரீர்
உமது ஜனத்திற்குச் சுதந்தரமாகக் கொடுத்த
உம்முடைய தேசத்தில் [6]மழைபெய்யக் கட்ட
ளையிடுவீராக. தேசத்திலே பஞ்சம் உண்டா 28
கிறபோதும், கொள்ளைநோய் உண்டாகிறபோ
தும், வறட்சி, சாவி, வெட்டுக்கிளி, பச்சைக்
கிளி உண்டாகிறபோதும், அவர்களுடைய
சத்துருக்கள் அவர்கள் வாசஞ்செய்கிற தேசத்

[1] 2 சாமு. 7. 2
[2] 1 இரா. 8. 22
[3] யாத். 15. 11. உபா. 4. 39; 7. 9
[4] 2 சாமு. 7. 12, 16. சங். 132. 12
[5] 2. 6. ஏசா. 66. 1. அப். 7. 49
[6] எரே. 5. 24. எசே. 34. 26. ஓசி. 2. 21, 22

திலே அவர்களை முற்றிக்கை போடுகிறபோ
தும், யாதொரு வாதையாகிலும் யாதொரு
29 வியாதியாகிலும் வந்திருக்கிறபோதும், எந்த
மனுஷனாலும், இஸ்ரவேலாகிய உம்மு
டைய ஜனத்தில் எவனாலும், தன் தன்
வாதையையும் வியாகுலத்தையும் உணர்ந்து,
இந்த ஆலயத்திற்கு நேராகத் தன் கைகளை
விரித்துச் செய்யும் சகல விண்ணப்பத்தை
30 யும், சகல வேண்டுதலையும், உம்முடைய
வாசஸ்தலமாகிய பரலோகத்திலிருக்கிற தேவ
31 ரீர் கேட்டு மன்னித்து, தேவரீர் எங்கள்
பிதாக்களுக்குக் கொடுத்த தேசத்தில் அவர்
கள் உயிரோடிருக்கும் நாளெல்லாம் உமக்
குப் பயப்பட்டு, உம்முடைய வழிகளில்
நடக்கும்படிக்கு தேவரீர் ஒருவரே மனுப்புத்தி
ரரின் இருதயத்தை அறிந்தவரானதால், நீர்
அவனவன் இருதயத்தை அறிந்திருக்கிறப
டியே, அவனவனுடைய எல்லா வழிகளுக்
கும் தக்கதாய்ச் செய்து பலன் அளிப்பீராக.
32 உம்முடைய ஜனமாகிய இஸ்ரவேல் ஜாதியில்
லாத அந்நிய ஜாதியார் உம்முடைய மகத்துவ
மான நாமத்தினிமித்தமும், [1]உம்முடைய பல
த்த கரத்தினிமித்தமும், ஓங்கிய உம்முடைய
புயத்தினிமித்தமும், தூரதேசங்களிலிருந்து
வந்து, இந்த ஆலயத்துக்கு நேராக நின்று
33 விண்ணப்பம் பண்ணினால், உமது வாசஸ்
தலமாகிய பரலோகத்திலிருக்கிற தேவரீர் அ
தைக் கேட்டு, பூமியின் ஜனங்களெல்லாரும்
உம்முடைய ஜனமாகிய இஸ்ரவேலைப்போல,
[2]உம்முடைய நாமத்தை அறிந்து உமக்குப்
பயப்பட்டு, நான் கட்டின இந்த ஆலயத்திற்கு
உம்முடைய நாமம் தரிக்கப்பட்டதென்று அறி
யும்படிக்கு, அந்த அந்நிய ஜாதியான் உம்மை
நோக்கி வேண்டிக்கொள்வதின்படியே தேவ
34 ரீர் செய்வீராக. நீர் உம்முடைய ஜனங்களை
அனுப்பும் வழியிலே அவர்கள் தங்கள் சத்து
ருக்களோடு யுத்தம்பண்ணப் புறப்படும்போது,
நீர் தெரிந்துகொண்ட இந்த நகரத்துக்கும்,
உம்முடைய நாமத்திற்கு நான் கட்டின இந்த
ஆலயத்திற்கும் நேராக விண்ணப்பம் பண்ணி
35 னால், பரலோகத்தில் இருக்கிற தேவரீர்
அவர்கள் விண்ணபபத்தையும் வேண்டுதலை
யும் கேட்டு, அவர்கள் நியாயத்தை விசாரிப்பீ
36 ராக. பாவஞ்செய்யாத மனுஷன் இல்லையே;
[3]ஆகையால் அவர்கள் உமக்கு விரோதமாய்ப்
பாவஞ்செய்து, தேவரீர் அவர்கள்மேல் கோபங்
கொண்டு, அவர்கள் சத்துருக்கள் கையில்
அவர்களை ஒப்புக்கொடுக்கிறதினால், அவர்க
ளைச் சிறைபிடிக்கிறவர்கள் அவர்களைத் தூரத்
திலாகிலும் சமீபத்திலாகிலும் இருக்கிற தங்
கள் தேசத்திற்குக் கொண்டுபோயிருக்கை
37 யில், அவர்கள் சிறைபட்டுப்போன தேசத்
திலே தங்களில் உணர்வடைந்து, மனந்தி
ரும்பி: நாங்கள் பாவஞ்செய்து அக்கிரமம்
பண்ணி, துன்மார்க்கமாய் நடந்தோம் என்று
தங்கள் சிறையிருப்பான தேசத்திலே உம்மை
38 நோக்கிக் கெஞ்சி, தாங்கள் சிறைகளாகக்

[1] சங். 56. 2, 67. யோ. 10. 16. அப். 8. 27–39.
[2] சங். 46. 10. எரே. 10. 7
[3] நீதி. 20. 9. பிர. 7. 20. யாக். 3. 2. 1 யோ. 1. 8
[4] தானி. 9. 16–19
[5] 1 நாளா. 28. 2. நெகே. 9. 25. சங். 132. 7–10, 16. ஏசா. 66. 1
[6] சங். 132. 1. ஏசா. 55. 2, 3
[7] 1 இரா. 8. 54
[8] யாத். 29. 43. லேவி. 9. 24. நியா. 6. 21. மல். 3. 1, 2
[9] 20. 21. 1 நாளா. 16. 41. சங். 103. 17: 136. 1
[10] எபி. 7. 24, 25 1 இரா. 8. 62, 63
[11] 1 நாளா. 15. 16

கொண்டுபோகப்பட்ட தங்கள் சிறையிருப்
பான தேசத்திலே, தங்கள் முழு இருதயத்
தோடும் தங்கள் முழு ஆத்துமாவோடும் உம்
மிடத்தில் திரும்பி, தேவரீர் தங்கள் பிதாக்க
ளுக்குக் கொடுத்த தங்கள் தேசத்திற்கும், தேவ
ரீர் தெரிந்துகொண்ட இந்த நகரத்திற்கும், உம்
முடைய நாமத்திற்கு நான் கட்டின இந்த ஆல
யத்திற்கும் நேராக உம்மை நோக்கி விண்ணப்
பம் பண்ணினால், உம்முடைய வாசஸ்தல 39
மாகிய பரலோகத்திலிருக்கிற தேவரீர் அவர்
கள் விண்ணப்பத்தையும் ஜெபங்களையும் கே
ட்டு, [4]அவர்கள் நியாயத்தை விசாரித்து, உமக்கு
விரோதமாய்ப் பாவஞ்செய்த உம்முடைய
ஜனத்திற்கு மன்னித்தருளும். இப்போதும் 40
என் தேவனே, இந்த ஸ்தலத்திலே செய்யப்ப
டும் விண்ணப்பத்திற்கு உம்முடைய கண்கள்
திறந்தவைகளும், உம்முடைய செவிகள் கவ
னிக்கிறவைகளுமாயிருப்பதாக. தேவனாகிய 41
**கர்த்தாவே**, [5]உம்முடைய தாபர ஸ்தலத்திற்கு
தேவரீர் உமது வல்லமை விளங்கும் பெட்டி
யுடன் எழுந்தருளும்; தேவனாகிய **கர்த்தாவே**,
உமது ஆசாரியர் ரட்சிப்பைத் தரித்து, உம்மு
டைய பரிசுத்தவான்கள் நன்மையிலே மகிழ்
வார்களாக. தேவனாகிய **கர்த்தாவே**, நீர் 42
அபிஷேகம் பண்ணினவனின் முகத்தைப்
புறக்கணியாமல், [6]உம்முடைய தாசனாகிய
தாவீதுக்கு வாக்குத்தத்தம்பண்ணின கிருபை
களை நினைத்தருளும் என்றான்.

சாலொமோன் ஜெபம்பண்ணி முடிக்கிற **7**
போது, [7]அக்கினி வானத்திலிருந்து இறங்கி,
[8]சர்வாங்க தகனபலியையும் மற்றப் பலிகளை
யும் பட்சித்தது; **கர்த்தருடைய** மகிமையும்
ஆலயத்தை நிரப்பிற்று. **கர்த்தருடைய** மகி 2
மை **கர்த்தருடைய** ஆலயத்தை நிரப்பினதி
னால், ஆசாரியர்கள் **கர்த்தருடைய** ஆலயத்
துக்குள் பிரவேசிக்கக் கூடாதிருந்தது. அக் 3
கினி இறங்குகிறதையும், **கர்த்தருடைய** மகி
மை ஆலயத்தின்மேல் தங்கியிருக்கிறதையும்,
இஸ்ரவேல் புத்திரர் எல்லாரும் கண்டபோது,
தளவரிசைமட்டும் தரையிலே முகங்குப்புறக்
குனிந்து பணிந்து, **கர்த்தர்** நல்லவர், அவரு
டைய கிருபை என்றுமுள்ளது என்று சொல்
லி, [9]அவரைத் துதித்தார்கள். அப்பொழுது 4
ராஜாவும் சகல ஜனங்களும் **கர்த்தருடைய** சந்
நிதியில் [10]பலிகளைச் செலுத்தினார்கள். ராஜா 5
வாகிய சாலொமோன் இருபத்தீராயிரம் மாடு
களையும், லட்சத்திருபதினாயிரம் ஆடுகளையும்
பலியிட்டான்; இவ்விதமாய் ராஜாவும் சகல
ஜனங்களும் தேவனுடைய ஆலயத்தைப் பிர
திஷ்டைபண்ணினார்கள். ஆசாரியர்கள் தங் 6
கள் பணிவிடைகளைச் செய்து நின்றார்கள்;
[11]தாவீதுராஜா லேவியரைக்கொண்டு, **கர்த்த**
**ருடைய** கிருபை என்றுமுள்ளது என்று அவ
ரைத் துதித்துப் பாடும்படியாக செய்வித்த
**கர்த்தரின்** கீதவாத்தியங்களை அவர்களும் வா
சித்து, சேவித்து நின்றார்கள்; ஆசாரியர்கள்
அவர்களுக்கு எதிராக நின்று பூரிகைகளை

ஊதினார்கள்; இஸ்ரவேலர் எல்லாரும் நின்று
7 கொண்டிருந்தார்கள். சாலொமோன் உண்
டாக்கின வெண்கலப் பலிபீடம் சர்வாங்க
தகனபலிகளையும் போஜன பலிகளையும் நிண
த்தையும் கொள்ளமாட்டா திருந்தபடியினால்,
**கர்த்தருடைய** ஆலயத்துக்கு முன்னிருக்கிற
பிராகாரத்தின் நடுமையத்தைச் சாலொமோன்
பரிசுத்தப்படுத்தி, அங்கே சர்வாங்க தகனபலி
களையும் சமாதானபலிகளின் நிணத்தையும்
8 செலுத்தினான். அக்காலத்தில்தானே சாலொ
மோனும், ஆமாத்தின் எல்லையிலிருந்து எகிப்
தின் நதிமட்டும் வந்து, [1]அவனோடேகூட
இருந்த மகா பெரிய கூட்டமாகிய இஸ்ர
வேல் அனைத்தும் ஏழுநாளளவும் பண்டிகை
9 யை ஆசரித்து, எட்டாம்நாளை விசேஷித்த
ஆசரிப்புநாளாய்க் கொண்டாடினார்கள்; ஏழு
நாள் பலிபீடத்துப் பிரதிஷ்டையையும், ஏழு
நாள் பண்டிகையையும் ஆசரித்தார்கள்.
10 ஏழாம் மாதத்தின் இருபத்துமூன்றாம் தேதியி
லே தங்கள் தங்கள் கூடாரங்களுக்குப் போக
ஜனங்களுக்கு விடைகொடுத்தான்; **கர்த்தர்**
தாவீதுக்கும், சாலொமோனுக்கும், தமது ஜன
மாகிய இஸ்ரவேலுக்கும் செய்த நன்மைக்கா
கச் சந்தோஷமும் மனமகிழ்ச்சியுமாய்ப்
போனார்கள்.
11 இவ்விதமாய் சாலொமோன் **கர்த்தருடைய**
ஆலயத்தையும் ராஜ அரமனையையும் கட்டித்
தீர்த்தான்; [2]**கர்த்தருடைய** ஆலயத்திலும் தன்
அரமனையிலும் சாலொமோன் செய்ய மன
12 தாயிருந்ததெல்லாம் அநுகூலமாயிற்று. **கர்த்**
**தர்** இரவிலே சாலொமோனுக்குத் தரிசன
மாகி: நான் உன் விண்ணப்பத்தைக் கேட்டு,
[3]இந்த ஸ்தலத்தை எனக்குப் பலியிடும் ஆலய
13 மாகத் தெரிந்துகொண்டேன். நான் மழை
யில்லாதபடிக்கு வானத்தை அடைத்து, [4]அல்
லது தேசத்தை அழிக்க வெட்டுக்கிளிகளுக்
குக் கட்டளையிட்டு, அல்லது என் ஜனத்திற்
குள் கொள்ளைநோயை அனுப்பும்போது,
14 என் நாமம் தரிக்கப்பட்ட என் ஜனங்கள்
தங்களைத் தாழ்த்தி, ஜெபம்பண்ணி, என்
முகத்தைத் தேடி, தங்கள் பொல்லாத வழி
களைவிட்டுத் திரும்பினால், அப்பொழுது பர
லோகத்திலிருக்கிற நான் கேட்டு, அவர்கள்
பாவத்தை மன்னித்து, [5]அவர்கள் தேசத்துக்கு
15 க்ஷேமத்தைக் கொடுப்பேன். இந்த ஸ்தலத்
திலே செய்யப்படும் ஜெபத்திற்கு, [6]என் கண்
கள் திறந்தவைகளும், என் செவிகள் கவனிக்
16 கிறவைகளுமாயிருக்கும். என் நாமம் இந்த
ஆலயத்தில் என்றென்றைக்கும் இருக்கும்படி
[7]நான் இதைத் தெரிந்துகொண்டு பரிசுத்தப்
படுத்தினேன்; என் கண்களும் என் இருதய
17 மும் எந்நாளும் இங்கே இருக்கும். உன் தக
ப்பனாகிய தாவீது நடந்ததுபோல, நீ எனக்கு
முன்பாக நடந்து, நான் உனக்குக் கற்பித்த
படியெல்லாம் செய்து, என் கட்டளைகளையும்
என் நியாயங்களையும் கைக்கொள்வாயானால்,
18 அப்பொழுது இஸ்ரவேலை அரசாளும் புரு

[1] 1 இரா. 8. 65, 66
[2] 1 இரா. 9. 1. ழ
[3] உபா. 12. 5
[4] 6. 26, 28
[5] சொ. 45. 19, அப். 9. 11, யாக். 4. 10.
[6] 6. 40
[7] 6. 6. 1 இரா. 9. 3
[8] 6. 16
[9] லேவி. 26. 14, 33. உபா. 28. 15, 36, 37
[10] உபா. 29. 24. எரே. 22. 8, 9
[11] 1 இரா. 9. 10. ழ

ஷன் உனக்கு இல்லாமற்போவதில்லை என்று
நான் உன் தகப்பனாகிய தாவீதோடே உடன்
படிக்கை பண்ணினபடியே, [8]உன் ராஜ்ய
பாரத்தின் சிங்காசனத்தை நிலைக்கப்பண்ணு
வேன். நீங்கள் வழிவிலகி, நான் உங்களுக்கு 19
முன்வைத்த என் கட்டளைகளையும் என் கற்
பனைகளையும் விட்டுப்போய், வேறே தேவர்
களைச் சேவித்து, [9]அவர்களைப் பணிந்துகொள்
வீர்களேயாகில், நான் அவர்களுக்குக் கொ 20
டுத்த என் தேசத்தில் இருந்து அவர்களைப்
பிடுங்கி, என் நாமத்திற்கென்று நான் பரிசுத்
தப்படுத்தின இந்த ஆலயத்தை என் சமுகத்தி
னின்று தள்ளி, அதை எல்லா ஜனசதளங்
களுக்குள்ளும் பழமொழியாகவும் வசைச்
சொல்லாகவும் வைப்பேன். அப்பொழுது 21
உன்னதமாயிருக்கிற இந்த ஆலயத்தைக் கடந்
துபோகிறவன் எவனும் பிரமித்து: [10]**கர்த்தர்**
இந்தத் தேசத்திற்கும் இந்த ஆலயத்திற்கும்
இப்படிச் செய்தது என்ன என்று கேட்பான்.
அதற்கு அவர்கள்: தங்கள் பிதாக்களை எகிப்து 22
தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின தங்கள்
தேவனாகிய **கர்த்தரை** விட்டு, வேறே தேவர்
களைப் பற்றிக்கொண்டு, அவைகளை நமஸ்
கரித்து, சேவித்தபடியினால், **கர்த்தர்** இந்தத்
தீங்கையெல்லாம் அவர்கள்மேல் வரப்பண்
ணினார் என்று சொல்லுவார்கள் என்றார்.

சாலொமோன் **கர்த்தருடைய** ஆலயத்தை **8**
யும் தன் அரமனையையும் கட்ட [11]இருபது
வருஷகாலம் சென்றபின்பு, ஈராம் தனக்குக் 2
கொடுத்திருந்த பட்டணங்களைச் சாலொ
மோன் கட்டி, அவைகளில் இஸ்ரவேல் புத்
திரரைக் குடியேற்றினான்.
பின்பு சாலொமோன் ஆமாத்சோபாவுக்குப் 3
போய், அதை ஜெயித்தான். அவன் வனாந் 4
தரத்திலுள்ள தத்மோரையும், ஆமாத்தேசத்தி
லே இரஸ்துக்களின் பட்டணங்கள் அனைத்
தையும் கட்டினான். சாலொமோன் மேல் 5
பெத்தொரோனையும், கீழ்ப்பெத்தொரோனை
யும், அலங்கங்களும் கதவுகளும் தாழ்ப்பாள்களு
முள்ள அரணான பட்டணங்களாகக் கட்டி,
பாலாத்தையும், தனக்கு இருக்கிற இரஸ்துக் 6
களை வைக்கும் சகல பட்டணங்களையும், ரதங்
கள் இருக்கும் சகல பட்டணங்களையும், குதி
ரைவீரர் இருக்கும் பட்டணங்களையும், எருச
லேமிலும் லீபனோனிலும் தான் ஆளும் தேச
மெங்கும் தனக்கு இஷ்டமானதையெல்லாம்
கட்டினான். இஸ்ரவேல் புத்திரர் சங்கா 7
ரம் பண்ணாதிருந்த இஸ்ரவேல் ஜாதியல்
லாத ஏத்தியர், எமோரியர், பெரிசியர்,
ஏவியர், எபூசியரில் மீதியான சகல ஜனத்தி
லும், அவர்களுக்குப் பிறகு தேசத்திலிருந்த 8
அவர்கள் பிள்ளைகளை சாலொமோன் இந்
நாள்வரைக்கும் இருக்கிறபடி பகுதிகட்டச்
செய்தான். இஸ்ரவேல் புத்திரரில் ஒருவ 9
ரையும் சாலொமோன் தன் வேலையைச்
செய்ய அடிமைப்படுத்தவில்லை; அவர்கள் யுத்
தமனுஷரும், அவனுடைய சேர்வைக்காரரின்

தலைவரும், அவனுடைய ரதங்களுக்கும் குதி
10 ரைவீரருக்கும் தலைவருமாயிருந்தார்கள். ராஜா
வாகிய சாலொமோனுடைய ஊழியக்காரரின்
தலைவராகிய இவர்களில் [1]இருநூற்று ஐம்பது
11 பேர் ஜனத்தை ஆண்டார்கள். சாலொமோன்:
**கர்த்தருடைய** பெட்டி வந்த ஸ்தலங்கள் பரி
சுத்தமாயிருக்கிறது; ஆதலால், இஸ்ரவேலின்
ராஜாவாகிய தாவீதின் அரமனையிலே என்
மனைவி வாசம்பண்ணலாகாது என்று சொ
ல்லி, [2]பார்வோனின் குமாரத்தியைத் தாவீ
தின் நகரத்திலிருந்து தான் அவளுக்குக் கட்
டின மாளிகைக்குக் குடிவரப்பண்ணினான்.
12 அதுமுதற்கொண்டு சாலொமோன் தான்
மண்டபத்திற்கு முன்பாகக் கட்டியிருந்த **கர்த்**
13 **தருடைய** பலிபீடத்தின்மேல், ஒவ்வொரு
நாளின் கட்டளைக்குத் தக்கதாய் மோசேயு
டைய கற்பனையின்படியே [3]ஓய்வுநாட்களி
லும் மாதப்பிறப்புகளிலும், வருஷத்தில் மூன்
றுதரம் ஆசரிக்கிற பண்டிகைகளாகிய புளிப்
பில்லாத அப்பப்பண்டிகையிலும், வாரங்க
ளின் பண்டிகையிலும், கூடாரப்பண்டிகையி
லும், **கர்த்தருக்குச்** சர்வாங்க தகனபலிகளைச்
14 செலுத்தினான். அவன் தன் தகப்பனாகிய
தாவீதுடைய பிரமாணத்தின்படியே, ஆசாரி
யர்கள் தங்கள் தங்கள் ஊழியத்தைச் செய்யும்
வகுப்புகளையும், லேவியர் ஒவ்வொரு நாளின்
கட்டளைப்படியே துதித்து சேவித்து ஆசாரிய
ருக்கு முன்பாகத் தங்கள் ஊழியத்தைச் செய்
யும் முறைகளையும், வாசல் காப்பவர்கள் ஒவ்
வொரு வாசலில் காவல்காக்கும் வகுப்புகளை
யும் நிற்கப்பண்ணினான்; [4]தேவனுடைய மனு
ஷனாகிய தாவீது இப்படிக் கட்டளையிட்டிருந்
15 தான். சகல காரியத்தையும் பொக்கிஷங்க
ளின் காரியத்தையும் குறித்து, ராஜா ஆசாரிய
ருக்கும் லேவியருக்கும் கொடுத்த கட்டளையை
16 விட்டு அவர்கள் விலகாதிருந்தார்கள். இப்ப
டியே **கர்த்தருடைய** ஆலயத்துக்கு அஸ்திபா
ரம் போடப்பட்ட நாள் முதல் அதை முடிக்கு
மட்டும் சாலொமோனின் வேலையெல்லாம்
நடந்தேறிக் **கர்த்தருடைய** ஆலயம் கட்டித்
தீர்ந்தது.
17 பின்பு சாலொமோன் ஏதோம் தேசத்துக்
கடல் ஓரத்திலிருக்கும் [5]எசியோன் கேபேருக்
18 கும் * ஏலோத்துக்கும் போனான். அவனுக்கு
ஈராம் தன் ஊழியக்காரர் முகாந்தரமாய்க் கப்
பல்களையும், சமுத்திர யாத்திரையில் பழகின
வேலையாட்களையும் அனுப்பினான்; அவர்கள்
சாலொமோனின் வேலைக்காரரோடே கூட
ஓப்பீருக்குப்போய், [6]அங்கேயிருந்து நானூற்று
ஐம்பது தாலந்து பொன்னை ஏற்றி ராஜா
வாகிய சாலொமோனிடத்தில் கொண்டுவந்
தார்கள்.

9 சேபாவின் ராஜஸ்திரீ சாலொமோனின்
கீர்த்தியைக் கேள்விப்பட்டபோது, [7]விடுகதை
களினாலே சாலோமோனைச் சோதிக்கிறதற்
காக, மிகுந்த பரிவாரத்தோடும், கந்தவர்க்கங்
களையும், மிகுதியான பொன்னையும், ரத்தினங்
களையும் சுமக்கிற ஒட்டகங்களோடும் எருசலே
முக்கு வந்தாள்; அவள் சாலொமோனிடத்தில்
வந்தபோது, தன் மனதிலிருந்த எல்லாவற்றை
யும் குறித்து அவனிடத்தில் சம்பாஷித்தாள்.
அப்பொழுது சாலொமோன் அவள் கேட்ட 2
வைகளையெல்லாம் விடுவித்தான்; அவளுக்கு
விடுவிக்காதபடிக்கு ஒன்றாகிலும் சாலொமோ
னுக்கு மறைபொருளாயிருக்கவில்லை. சேபா 3
வின் ராஜஸ்திரீ சாலொமோனுடைய ஞானத்
தையும், அவன் கட்டின அரமனையையும்,
அவன் பந்தியின் போஜனபதார்த்தங்களையும், 4
அவன் ஊழியக்காரரின் வீடுகளையும், அவன்
உத்தியோகஸ்தரின் வரிசையையும், அவர்கள்
வஸ்திரங்களையும், அவனுடைய பான பாத்தி
ரக்காரரையும், அவர்கள் வஸ்திரங்களையும்,
**கர்த்தருடைய** ஆலயத்துக்குள் பிரவேசிக்கும்
நடைமண்டபத்தையும் கண்டபோது அவள்
ஆச்சரியத்தால் பிரமைகொண்டு, ராஜாவை 5
நோக்கி: உம்முடைய வர்த்தமானங்களையும்
உம்முடைய ஞானத்தையும் குறித்து, நான்
என் தேசத்திலே கேட்ட செய்தி மெய்யா
யிற்று. நான் வந்து அதை என் கண்களால் 6
காணுமட்டும் அவர்கள் வார்த்தைகளை நம்ப
வில்லை; உம்முடைய பெரிய ஞானத்தில் பாதி
யாகிலும் அவர்கள் எனக்கு அறிவிக்கவில்லை;
நான் கேள்விப்பட்ட பிரஸ்தாபத்தைப்பார்க்கி
லும் அதிகம் உண்டாயிருக்கிறது. உம்மு 7
டைய ஜனங்கள் பாக்கியவான்கள்; எப்போ
தும் உமக்கு முன்பாக நின்று, உம்முடைய
ஞானத்தைக் கேட்கிற உம்முடைய ஊழியக்
காரரும் பாக்கியவான்கள். உம்முடைய தேவ 8
னாகிய **கர்த்தருக்கு** முன்பாக நீர் ராஜாவாயிருக்
கும்படிக்கு, உம்மைத் தம்முடைய சிங்காசனத்
தின்மேல் வீற்றிருக்கப்பண்ண, உம்மேல் பிரி
யங்கொண்ட உம்முடைய தேவனாகிய **கர்த்**
**தர்** ஸ்தோத்திரிக்கப்படுவாராக; உம்முடைய
தேவன் இஸ்ரவேலை என்றென்றைக்கும் நிலை
நிறுத்தும்படிக்குச் சிநேகிக்கிறதினாலே, அவர்
நியாயமும் நீதியும் செய்கிறதற்கு உம்மை அவர்
கள்மேல் ராஜாவாக வைத்தார் என்றாள். அவள் 9
ராஜாவுக்கு நூற்றிருபது தாலந்து பொன்னை
யும், மிகுதியான கந்தவர்க்கங்களையும், ரத்தி
னங்களையும் கொடுத்தாள்; சேபாவின் ராஜஸ்
திரீ ராஜாவாகிய சாலொமோனுக்குக் கொ
டுத்த அப்படிப்பட்ட கந்தவர்க்கங்களைப்போல
ஒருக்காலும் வரவில்லை. ஓப்பீரிலிருந்து பொ 10
ன்னைக் கொண்டுவருகிற ஈராமின் வேலைக்கா
ரரும் சாலொமோனின் வேலைக்காரரும் வாச
னைமரங்களையும் ரத்தினங்களையும் கொண்டு
வந்தார்கள். அந்த வாசனை மரங்களால் ராஜா 11
**கர்த்தருடைய** ஆலயத்துக்கும் ராஜ அரமனைக்
கும் ஊன்றுகால்களையும், சங்கீதக்காரருக்குச்
சுரமண்டலங்களையும் தம்புருகளையும் உண்
டாக்கினான்; அப்படிப்பட்டவைகள் அதற்கு
முன்னே யூதேயா தேசத்தில் ஒருக்காலும்
காணப்படவில்லை. சேபாவின் ராஜஸ்திரீ 12
ராஜாவுக்குக் கொண்டுவந்தவைகளைப் பார்க்கி

[1] 1 இரா. 9. 23
[2] 1 இரா. 3. 1, 28: 7. 8
[3] யாத். 29. 38
[4] 1 நாளா. 24, 25. அதி.
[5] 1 இரா. 9. 26, 27
* ஏலாத். 1 இரா. 14. 22
[6] பிர. 2. 8
[7] 1 இரா. 10. 1. மு. மத். 12. 42. லூ. 11. 31

லும் அதிகமாய் அவள் ஆசைப்பட்டுக் கேட்ட
எல்லாவற்றையும் ராஜாவாகிய சாலொமோன்
அவளுக்குக் கொடுத்தான்; பின்பு அவள் தன்
பரிவாரத்தோடுங்கூட தன் தேசத்திற்குத்
திரும்பிப்போனாள்.
13 வியாபாரிகளும் வர்த்தகரும் கொண்டுவரும்
பொன்னைத்தவிர, சாலொமோனுக்கு ஒவ்
வொரு வருஷத்திலும் வந்த பொன் அறு
நூற்று அறுபத்தாறு தாலந்து நிறையாயிருந்
14 தது. அரபிதேசத்துச் சகல ராஜாக்களும்
மாகாணங்களின் அதிபதிகளும் சாலொமோ
னுக்குப் பொன்னையும் வெள்ளியையும்
15 கொண்டுவருவார்கள். ராஜாவாகிய சாலொ
மோன் இருநூறு பரிசைகளை அடித்த பொன்
தகட்டால் செய்வித்தான்; ஒவ்வொரு பரி
சைக்கு அறுநூறு சேக்கல் நிறை பொன் தகட்
16 டைச் செலவழித்தான். அடித்த பொன்
தகட்டால் முந்நூறு கேடகங்களையும் உண்
டாக்கினான்; ஒவ்வொரு கேடகத்திற்கு முந்
நூறு சேக்கல் நிறை பொன்னைச் செலவழித்
தான்; அவைகளை ராஜா லீபனோன் வனம்
17 என்னும் மாளிகையிலே வைத்தான். ராஜா
தந்தத்தினால் ஒரு பெரிய சிங்காசனத்தையும்
செய்வித்து, அதைப் பசும்பொன் தகட்டால்
18 மூடினான். அந்தச் சிங்காசனத்துக்குப் பொன்
னினால் செய்யப்பட்ட ஆறு படிகளும், ஒரு
பாதபடியும், உட்காரும் இடத்திற்கு இருபுறத்
திலும் கைச்சாய்மானங்களும் இருந்தது; இர
ண்டு சிங்கங்கள் கைச்சாய்மானங்கள் அருகே
19 நின்றது. அந்த ஆறு படிகளின்மேலும்,
இரண்டு பக்கத்திலும் பன்னிரண்டு சிங்கங்கள்
நின்றது; எந்த ராஜ்யத்திலும் இப்படிப் பண்
20 ணப்படவில்லை. ராஜாவாகிய சாலொமோ
னுக்கு இருந்த பான பாத்திரங்களெல்லாம்
பொன்னும், லீபனோன் வனம் என்னும் மாளி
கையின் பணிமுட்டுகளெல்லாம் பசும்பொன்
னுமாயிருந்தது; ஒன்றும் வெள்ளியினால் செய்
யப்படவில்லை; சாலொமோனின் நாட்களில்
வெள்ளி ஒரு பொருளாய் எண்ணப்பட
21 வில்லை. ராஜாவின் கப்பல்கள் ஈராமின்
வேலைக்காரருடன் தர்ஷீசுக்குப் போய்வரும்;
தர்ஷீசின் கப்பல்கள் மூன்று வருஷத்துக்கு
ஒருதரம் பொன்னையும், வெள்ளியையும்,
யானைத்தந்தங்களையும், குரங்குகளையும், மயில்
22 களையும் கொண்டுவரும். பூமியின் சகல
ராஜாக்களைப்பார்க்கிலும் ராஜாவாகிய சாலொ
மோன் ஐசுவரியத்திலும் ஞானத்திலும் சிறந்
23 தவனாயிருந்தான். சாலொமோனின் இருத
யத்திலே தேவன் அருளிய ஞானத்தைக்
கேட்பதற்குப் பூமியின் ராஜாக்கள் எல்லாரும்
24 அவன் முகதரிசனத்தைத் தேடினார்கள். வரு
ஷாவருஷம் அவரவர் தங்கள் காணிக்கையா
கிய வெள்ளிப்பாத்திரங்களையும், பொற்பாத்தி
ரங்களையும், வஸ்திரங்களையும், ஆயுதங்களை
யும், கந்தவர்க்கங்களையும், குதிரைகளையும்,
கோவேறுகழுதைகளையும் கொண்டுவருவார்
25 கள். சாலொமோனுக்கு நாலாயிரம் குதிரை

லாயங்களும் ரதங்களும் இருந்தது, பன்னீரா
யிரம் குதிரைவீரரும் இருந்தார்கள்; அவைகளை
ரதங்கள் வைக்கும் பட்டணங்களிலும், அவர்
களை எருசலேமில் தன்னிடத்திலும் ராஜா
வைத்திருந்தான். நதிதுவக்கிப் பெலிஸ்தரின் 26
தேசமட்டுக்கும் எகிப்தின் எல்லைவரைக்கும்
இருக்கிற சகல ராஜாக்களையும் [1]அவன் ஆண்
டான். எருசலேமிலே ராஜா வெள்ளியைக் 27
[2]கற்கள்போலவும், கேதுருமரங்களைப் பள்ளத்
தாக்குகளில் இருக்கும் காட்டத்தி மரங்கள்
போலவும் அதிகமாக்கினான். எகிப்திலும் மற்ற 28
தேசங்களிலுமிருந்து சாலொமோனுக்குக் குதி
ரைகள் கொண்டுவரப்பட்டது.
சாலொமோனுடைய ஆதியந்தமான மற்ற 29
நடபடிகள் தீர்க்கதரிசியாகிய நாத்தானின்
புஸ்தகத்திலும், சீலோனியனாகிய அகியா எழு
தின தீர்க்கதரிசனத்திலும், [3]நேபாத்தின் குமார
னாகிய யெரொபெயாமைக்குறித்து ஞான
திருஷ்டிக்காரனாகிய இத்தோ எழுதின தரிச
னங்களிலும் அல்லவோ எழுதியிருக்கிறது.
சாலொமோன் எருசலேமிலே இஸ்ரவேலை 30
யெல்லாம் நாற்பது வருஷம் அரசாண்டான்.
பின்பு சாலொமோன் தன் பிதாக்களோடே 31
நித்திரையடைந்தான்; அவனை அவன் தகப்ப
னாகிய தாவீதின் நகரத்தில் அடக்கம்பண்ணி
னார்கள்; அவன் ஸ்தானத்திலே அவன் குமார
னாகிய ரெகொபெயாம் ராஜாவானான்.

ரெகொபெயாமை ராஜாவாக்கும்படி இஸ்ர 10
வேலர் எல்லாரும் சீகேமுக்கு வந்திருந்த
படியால், [4]அவனும் சீகேமுக்குப் போனான்.
ராஜாவாகிய சாலொமோனை விட்டு ஓடிப் 2
போய், எகிப்திலிருந்த நேபாத்தின் குமார
னாகிய யெரொபெயாம் அதைக் கேட்டபோது,
[5]அவன் எகிப்திலிருந்து திரும்பிவந்தான்.
ஆள் அனுப்பி அவனை அழைப்பித்தார்கள்; 3
பின்பு யெரொபெயாமும் இஸ்ரவேலனைத்து
மாய் வந்து, ரெகொபெயாமை நோக்கி: உம் 4
முடைய தகப்பன் பாரமான நுகத்தை எங்கள்
மேல் வைத்தார்; இப்போதும் நீர் உம்முடைய
தகப்பன் சுமத்தின கடினமான வேலையை
யும், அவர் எங்கள்மேல் வைத்த பாரமான
நுகத்தையும் லகுவாக்கும்; அப்பொழுது உம்
மைச் சேவிப்போம் என்றார்கள். அதற்கு 5
அவன்: நீங்கள் மூன்றுநாளைக்குப் பிற்பாடு
திரும்ப என்னிடத்தில் வாருங்கள் என்றான்;
அப்படியே ஜனங்கள் போயிருந்தார்கள். அப் 6
பொழுது ராஜாவாகிய ரெகொபெயாம் தன்
தகப்பனாகிய சாலொமோன் உயிரோடிருக்
கையில் அவன் சமுகத்தில் நின்ற முதியோ
ரோடே ஆலோசனைபண்ணி, இந்த ஜனங்க
ளுக்கு மறு உத்தரவுகொடுக்க நீங்கள் என்ன
ஆலோசனை சொல்லுகிறீர்கள் என்று கேட்
டான். அதற்கு அவர்கள்: நீர் இந்த ஜனங்க 7
ளுக்குத் தயவையும் பட்சத்தையும் காண்பித்து,
அவர்களுக்கு நல்வார்த்தைகளைச் சொல்வீரா
னால், என்றைக்கும் அவர்கள் உமக்கு ஊழி
யக்காரராயிருப்பார்கள் என்றார்கள். முதி 8

[1] 1 இரா. 4. 21. சங். 72. 8
[2] 1 இரா. 10. 27, 28
[3] 1 இரா. 11. 29, 41–43
[4] 1 இரா. 12. 1. ழ
[5] 1 இரா. 11. 40

யோர் சொன்ன ஆலோசனையை அவன் தள்ளி
விட்டு, தன்னோடே வளர்ந்தவர்களும் தன்
சமுகத்தில் நிற்கிறவர்களுமாகிய வாலிபரோ
9 டே ஆலோசனைபண்ணி, அவர்களை நோக்கி:
உம்முடைய தகப்பன் எங்கள்மேல் வைத்த
நுகத்தை லகுவாக்கும் என்று என்னிடத்தில்
சொன்ன இந்த ஜனங்களுக்கு மறு உத்தரவு
கொடுக்க நீங்கள் என்ன ஆலோசனை சொல்லு
10 கிறீர்கள் என்று கேட்டான். அவனோடே
வளர்ந்த வாலிபர் அவனை நோக்கி: உம்மு
டைய தகப்பன் எங்கள் நுகத்தைப் பாரமாக்கி
ஞர், நீர் அதை எங்களுக்கு லகுவாக்கும்
என்று உம்மிடத்தில் சொன்ன இந்த ஜனத்
திற்கு நீர் சொல்லவேண்டியது என்னவென்
ருல்: என் சுண்டுவிரல் என் தகப்பனுடைய
இடுப்பைப்பார்க்கிலும் பருமனாயிருக்கும்.
11 இப்போதும் என் தகப்பன் பாரமான நுகத்
தை உங்கள்மேல் வைத்தார், நான் உங்கள்
நுகத்தை அதிக பாரமாக்குவேன்; என் தகப்
பன் உங்களைச் சவுக்குகளினாலே தண்டித்தார்,
நான் உங்களைத் தேள்களினாலே தண்டிப்
12 பேன் என்று சொல்லும் என்ருர்கள். மூன்
ரும் நாள் என்னிடத்தில் வாருங்கள் என்று
ராஜா சொல்லியிருந்தபடியே, யெரொபெயா
மும் சகல ஜனங்களும் மூன்ரும் நாளிலே
13 ரெகொபெயாமிடத்தில் வந்தார்கள். ராஜா
வாகிய ரெகொபெயாம் மூதியோர் ஆலோச
னையைத் தள்ளிவிட்டு, அவர்களுக்குக் கடின
14 மான உத்தரவு கொடுத்தான். வாலிபரு
டைய ஆலோசனையின்படியே அவர்களோ
டே பேசி, என் தகப்பன் உங்கள் நுகத்தைப்
பாரமாக்கினர், நான் அதை அதிக பாரமாக்கு
வேன்; என் தகப்பன் உங்களைச் சவுக்கு
களினாலே தண்டித்தார், நான் உங்களைத்
தேள்களினாலே தண்டிப்பேன் என்று சொன்
15 ஞன். ராஜா ஜனங்களுக்குச் செவிகொடா
மற்போனன்; கர்த்தர் சீலோனியனான அகி
யாவைக்கொண்டு நேபாத்தின் குமாரனாகிய
யெரொபெயாமுக்குச் சொன்ன தமது வார்த்
தையை உறுதிப்படுத்தும்படி தேவனாலே
16 [1]இப்படி நடந்தது. ராஜா தங்களுக்குச் செவி
கொடாததை இஸ்ரவேலர் எல்லாரும் கண்ட
போது, ஜனங்கள் ராஜாவுக்கு மறு உத்தர
மாக: தாவீதோடே எங்களுக்குப் பங்கேது?
ஈசாயின் குமாரனிடத்தில் எங்களுக்குச் சுதந்
தரம் இல்லை; இஸ்ரவேலே, உன் கூடாரங்க
ளுக்குப் போய்விடு; இப்போது தாவீதே,
உன் சொந்த வீட்டைப் பார்த்துக்கொள்
என்று சொல்லி, இஸ்ரவேலர் எல்லாரும்
தங்கள் கூடாரங்களுக்குப் போய்விட்டார்கள்.
17 ஆனாலும் யூதாவின் பட்டணங்களிலே குடி
யிருந்த இஸ்ரவேல் புத்திரர்மேல் ரெகொபெ
18 யாம் ராஜாவாயிருந்தான். பின்பு ராஜாவா
கிய ரெகொபெயாம் பகுதி விசாரிப்புக்கார
னாகிய அதோராமை அனுப்பினான்; இஸ்ர
வேல் புத்திரர் அவனைக் கல்லெறிந்து கொன்
ருர்கள்; அப்பொழுது ராஜாவாகிய ரெகொ
பெயாம் தீவிரமாய் ரதத்தின்மேல் ஏறி எருச
லேமுக்கு ஓடிப்போனான். அப்படியே இந் 19
நாள்வரைக்கும் இருக்கிறபடி இஸ்ரவேலர்
தாவீதின் வம்சத்தை விட்டுக் கலகம்பண்ணிப்
[2]பிரிந்துபோயிருக்கிருர்கள்.

ரெகொபெயாம் எருசலேமுக்கு வந்தபோ 11
து, இஸ்ரவேலோடு யுத்தம்பண்ணவும், [3]ராஜ்
யத்தைத் தன்னிடமாகத் திருப்பிக்கொள்ள
வும், யூதா வம்சத்தாரும் பென்யமீன் வம்சத்
தாருமாகிய தெரிந்துகொள்ளப்பட்ட யுத்த
வீரரான லட்சத்து எண்பதினாயிரம்பேரைக்
கூட்டினான். தேவனுடைய மனுஷனாகிய 2
செமாயாவுக்குக் கர்த்தருடைய வார்த்தை உண்
டாகி, [4]அவர் சொன்னது: நீ யூதாவின் ராஜா 3
வாகிய ரெகொபெயாம் என்னும் சாலொமோ
னின் குமாரனையும், யூதாவிலும் பென்யமீ
னிலும் இருக்கிற எல்லா இஸ்ரவேலரையும்
நோக்கி: நீங்கள் போகாமலும், உங்கள் சகோ 4
தரரோடு யுத்தம்பண்ணாமலும், அவரவர் தம்
தம் வீட்டுக்குத் திரும்புங்கள்; என்னாலே இந்
தக் காரியம் நடந்தது என்று கர்த்தர் உரைக்
கிருர் என்று சொல் என்ருர்; அப்பொழுது
அவர்கள் கர்த்தருடைய வார்த்தைகளுக்குக்
கீழ்ப்படிந்து, யெரொபெயாமுக்கு விரோத
மாய் யுத்தம்பண்ணுவதை விட்டுத் திரும்பிப்
போய்விட்டார்கள். ரெகொபெயாம் எருச 5
லேமில் வாசமாயிருந்து, யூதாவிலே அரணான
பட்டணங்களைக் கட்டினான். அவன் பெத்ல 6
கேமும், ஏத்தாமும், தெக்கொவாவும், பெத் 7
சூரும், சோகோவும், அதுல்லாமும், காத் 8
தும், மரேஷாவும், சீப்பும், அதோராயீமும், 9
லாகீசும், அசேக்காவும், சோராவும், ஆயி 10
லோனும், எப்ரோனும் ஆகிய யூதாவிலும்
பென்யமீனிலும் இருக்கிற அரணிப்பான
பட்டணங்களைக் கட்டி, அந்த அரணிப்பு 11
களைப் பலப்படுத்தி, அவைகளிலே தலைவரை
யும், ஆகாரமும் எண்ணெயும் திராட்சரசமு
முள்ள பண்டகசாலைகளையும், யூதாவும் பென் 12
யமீனும் அவன் பட்சத்திலிருக்க, ஒவ்வொரு
பட்டணத்திலும் பரிசைகளையும் ஈட்டிகளை
யும் வைத்து, அவைகளை மிகுதியும் பலப்படுத்
தினான். இஸ்ரவேலெங்கும் இருக்கிற ஆசா 13
ரியரும் லேவியரும் தங்கள் எல்லா எல்லைகளி
லுமிருந்து அவனிடத்தில் வந்தார்கள். லே 14
வியர் கர்த்தருக்கு ஆசாரிய ஊழியஞ்செய்யாத
படிக்கு யெரொபெயாமும் அவன் குமாரரும்
அவர்களைத் தள்ளிப்போட்டபடியினால் [5]தங்
கள் வெளிநிலங்களையும் தங்கள் காணியாட்சி
களையும் விட்டு, யூதாதேசத்துக்கும் எருசலே
முக்கும் வந்தார்கள். அவன் மேடைகளுக் 15
கென்றும், பேய்களுக்கென்றும், [6]தான் உண்
டாக்கின கன்றுக்குட்டிகளுக்கென்றும் ஆசா
ரியர்களை ஏற்படுத்தினான். அந்த லேவிய 16
ரின் பிறகாலே [7]இஸ்ரவேலின் கோத்திரங்களி
லெல்லாம் இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்த
ரைத் தேடுகிறதற்கு, தங்கள் இருதயத்தை
நோக்கினவர்கள் தங்கள் பிதாக்களின் தேவ

[1] 1 சாமு. 2. 25. 1 இரா. 11. 29. 12. 15, 24
[2] 1 இரா. 12. 19. சங். 89. 30. ழ
[3] 1 இரா. 12. 21. ழ
[4] 12. 15
[5] எண். 35. 2
[6] 1 இரா. 12, 31. ஓசி. 13. 2. லேவி. 17. 7. 1 கொ. 10. 20
[7] 15. 9

ஞகிய கர்த்தருக்குப் பலியிடும்படிக்கு எருச
17 லேமுக்கு வந்தார்கள். இப்படி மூன்று வரு
ஷமட்டும் யூதாவின் ராஜ்யத்தைப் பலப்
படுத்தி, [1]சாலொமோனின் குமாரஞகிய ரெ
கொபெயாமைத் திடப்படுத்திஞர்கள்; தாவீ
தும் சாலொமோனும் நடந்தவழியிலே
18 மூன்று வருஷமட்டும் நடந்தார்கள். ரெகொ
பெயாம் தாவீதின் குமாரஞகிய எரிமோத்தின்
குமாரத்தி மகலாத்தையும், ஈசாயின் குமாரஞ
கிய எலியாபின் குமாரத்தி அபியாயேலையும்
19 விவாகம்பண்ணிஞன். இவள் அவனுக்கு
எயூஸ் சமரியா சாகாம் என்னும் குமாரரைப்
20 பெற்ருள். அவளுக்குப் பிறகு அப்சலோமின்
குமாரத்தியாகிய *மாகாளை விவாகம்பண்ணி
ஞன்; அவள் அவனுக்கு அபியாவையும், அத்
தாயியையும், சீசாவையும், செலோமித்தையும்
21 பெற்ருள். ரெகொபெயாம் தன்னுடைய மனை
விகள் மறுமனையாட்டிகள் எல்லாரிலும், அப்
சலோமின் குமாரத்தியாகிய மாகாளைச் சிநே
கித்தான்; பதினெட்டு மனைவிகளையும் அறு
பது மறு மனையாட்டிகளையும் விவாகம்பண்
ணி, இருபத்தெட்டுக் குமாரரையும் அறுபது
22 குமாரத்திகளையும் பெற்ருன். ரெகொபெ
யாம் மாகாளின் குமாரஞகிய [2]அபியாவை
அவன் சகோதரருக்குள்ளே தலைவனும்பெரிய
வனுமாக ஏற்படுத்திஞன்; அவனை ராஜாவாக்க
23 நினைத்தான். அவன் புத்தியாய் நடந்து, யூதா
பென்யமீனுடைய எல்லாத் தேசங்களிலு
முள்ள அரணுன சகல பட்டணங்களிலும்
தன் குமாரர் யாவரையும் பிரித்துவைத்து,
அவர்களுக்கு வேண்டிய ஆகாரத்தைக் கொ
டுத்து, அவர்களுக்கு அநேகம் பெண்களைத்
தேடிஞன்.

12 ரெகொபெயாம் ராஜ்யத்தைத் திடப்படுத்
தித் தன்னைப் பலப்படுத்திக்கொண்டபின்,
[3]அவனும் அவனேடே இஸ்ரவேலர் அனைவ
ரும் கர்த்தருடைய †நியாயப் பிரமாணத்தை
2 விட்டுவிட்டார்கள். அவர்கள் கர்த்தருக்கு
விரோதமாய்த்துரோகம்பண்ணினபடியினுல்,
ராஜாவாகிய ரெகொபெயாமின் ஐந்தாம் வரு
ஷத்தில் எகிப்தின் ராஜாவாகிய சீஷாக் ஆயி
ரத்து இருநூறு ரதங்களோடும், [4]அறுபதினு
யிரம் குதிரைவீரரோடும் எருசலேமுக்கு
3 விரோதமாய்வந்தான். அவனேடேகூட எகிப்
திலிருந்து வந்த லூபியர், சூக்கியர், எத்தியோப்
பியரான ஜனங்கள் எண்ணிக்கைக்கு அடங்
4 காதவர்களாயிருந்தார்கள். அவன் யூதாவுக்கு
அடுத்த அரணுன பட்டணங்களைப் பிடித்து,
5 எருசலேம்மட்டும் வந்தான். அப்பொழுது
செமாயா தீர்க்கதரிசி ரெகொபெயாமிடத்துக்
கும், சீஷாக்கினிமித்தம் எருசலேமிலே வந்து
கூடியிருக்கிற யூதாவின் பிரபுக்களிடத்துக்கும்
வந்து, அவர்களை நோக்கி: நீங்கள் என்னை
விட்டுவிட்டீர்கள், [5]ஆகையால் நான் உங்களை
யும் சீஷாக்கின் கையிலே விழும்படி விட்டு
விட்டேன் என்று கர்த்தர் சொல்லுகிருர்
6 என்ருன். அப்பொழுது இஸ்ரவேலின் பிர
புக்களும் ராஜாவும் [6]தங்களைத் தாழ்த்தி: [7]கர்த்
தர் நீதியுள்ளவர் என்ருர்கள். அவர்கள் தங் 7
களைத் தாழ்த்தினதைக் கர்த்தர் கண்டபோது,
கர்த்தருடைய வார்த்தை செமாயாவுக்கு உண்
டாகி, அவர் சொன்னது: [8]அவர்கள் தங்களைத்
தாழ்த்திஞர்கள், ஆகையால் அவர்களை அழிக்
கமாட்டேன்; என் உக்கிரம் சீஷாக்கைக்கொ
ண்டு எருசலேமின்மேல் ஊற்றப்படாதபடிக்
கு, அவர்களுக்குக் கொஞ்சம் சகாயத்தைக்
கட்டளையிடுவேன். ஆனுலும் என்னைச் சே 8
விக்கிறதற்கும், அந்நிய தேசங்களின் ராஜ்யங்
களைச் சேவிக்கிறதற்கும் இருக்கிற வித்தியா
சத்தை அவர்கள் அறியும்படிக்கு [9]அவனைச்
சேவிக்கிறவர்களாவார்கள் என்ருர். அப்ப 9
டியே எகிப்தின் ராஜாவாகிய சீஷாக் எருச
லேமுக்கு விரோதமாய் வந்து, கர்த்தருடைய
ஆலயத்தின் பொக்கிஷங்களையும், ராஜாவு
டைய அரமனைப் பொக்கிஷங்களையும், சா
லொமோன் செய்வித்த பொன்பரிசைகள்
ஆகிய சகலத்தையும் [10]எடுத்துக்கொண்டு
போய்விட்டான். அவைகளுக்குப் பதிலாக 10
ராஜாவாகிய ரெகொபெயாம் வெண்கலப் பரி
சைகளைச் செய்வித்து, [11]அவைகளை ராஜா
வின் வாசற்படியைக் காக்கிற சேவகருடைய
தலைவரின் கையில் ஒப்புவித்தான். ராஜா 11
கர்த்தருடைய ஆலயத்துக்குள் பிரவேசிக்கும்
போது, அரமனைச் சேவகர் வந்து, அவைகளை
எடுத்துக்கொண்டுபோய், திரும்பத் தங்கள்
அறையிலே வைப்பார்கள். அவன், தன் 12
னைத் தாழ்த்தினபடியினுல், [12]கர்த்தர் அவனை
முழுதும் அழிக்காதபடிக்கு அவருடைய கோ
பம் அவனை விட்டுத் திரும்பிற்று; [13]யூதாவிலே
இன்னும் சில காரியங்கள் சீராயிருந்தது.
அப்படியே ராஜாவாகிய ரெகொபெயாம் எரு 13
சலேமிலே தன்னைத் திடப்படுத்திக்கொண்டு
அரசாண்டான்; [14]ரெகொபெயாம் ராஜாவாகி
றபோது நாற்பத்தொரு வயதாயிருந்து, கர்த்
தர் தம்முடைய நாமம் விளங்கும்படி இஸ்ர
வேல் கோத்திரங்களிலெல்லாம் தெரிந்து
கொண்ட நகரமாகிய எருசலேமிலே பதி
னேழு வருஷம் ராஜ்யபாரம் பண்ணிஞன்;
அம்மோன் ஜாதியான அவனுடைய தாயின்
பேர் நாமாள். அவன் கர்த்தரைத் தேடுகிற 14
தற்குத் தன் இருதயத்தை நேராக்காமல்
பொல்லாப்பானதைச் செய்தான். ரெகொ 15
பெயாமின் ஆதியோடந்தமான நடபடிகள்
செமாயாவின் புஸ்தகத்திலும், ஞானதிருஷ்
டிக்காரஞகிய இத்தோவின் வம்ச அட்டவணை
யிலும் அல்லவோ எழுதியிருக்கிறது; [15]ரெகொ
பெயாமுக்கும் யெரொபெயாமுக்கும் சகல
நாளும் யுத்தம் நடந்துகொண்டிருந்தது. ரெ 16
கொபெயாம் தன் பிதாக்களோடே நித்திரை
யடைந்தபின் தாவீதின் நகரத்தில் அடக்கம்
பண்ணப்பட்டான்; அவன் குமாரஞகிய ‡அ
பியா அவன் ஸ்தானத்தில் ராஜாவாஞன்.

13 ராஜாவாகிய யெரொபெயாமின் பதினெ
ட்டாம் வருஷத்தில் [16]அபியா யூதாவின்மேல்

[1] 12. 1
* மிகாயாள், 13. 2
[2] உபா. 21. 15-17
[3] 11. 17
† வேதத்தை. 1 இரா. 14. 22, 24 உபா. 32. 15, 18
[4] 1 இரா. 14. 24, 25
[5] 11. 2; 15. 2
[6] எரே. 13. 15, 18. யாக். 4. 10
[7] யாத். 9. 27
[8] 1 இரா. 21. 28, 29
[9] உபா. 28. 47, 48. ஏசா. 26. 13
[10] 1 இரா. 10. 16, 17; 14. 25, 26
[11] 2 சாமு. 8. 18
[12] ஏசா. 57. 15. 1 பே. 5. 6
[13] 19. 3. ஆதி. 18. 24. 1 இரா. 14. 13
[14] 1 இரா. 14. 21
[15] 1 இரா. 14. 30
‡ அபியாம். 1 இரா. 14. 31
[16] 1 இரா. 15. 1. ழ

2 ராஜாவாகி, மூன்று வருஷம் எருசலேமில்
ராஜ்யபாரம்பண்ணினான்; கிபியா ஊரானாகிய
ஊரியேலின் குமாரத்தியாகிய அவனுடைய
தாயின்பேர் *மிகாயாள்; அபியாவுக்கும் யெ
3 ரொபெயாமுக்கும் யுத்தம் நடந்தது. அபியா
தெரிந்துகொள்ளப்பட்ட நாலுலட்சம்பேரா
கிய பராக்கிரம சேவகரின் ராணுவத்தாரை
யுத்தத்திற்கு ஆயத்தம்பண்ணினான்; யெரொ
பெயாம் தெரிந்துகொள்ளப்பட்ட எட்டு லட்
சம்பேராகிய பலத்த பராக்கிரமசாலிகளை அவ
னுக்கு எதிராக யுத்தத்திற்கு நிறுத்தினான்.
4 அப்பொழுது அபியா எப்பிராயீம் மலைத்தேசத்
திலுள்ள [1]செமராயீம் என்னும் மலையின்மேல்
ஏறி நின்று: யெரொபெயாமே, எல்லா இஸ்ர
5 வேலரே, கேளுங்கள். இஸ்ரவேலை என்
றைக்கும் ஆளும் ராஜ்யபாரத்தை இஸ்ரவே
லின் தேவனாகிய கர்த்தர் தாவீதுக்கும் அவன்
குமாரருக்கும் மாறாத உடன்படிக்கையாய்க்
6 கட்டளையிட்டதை [2]நீங்கள் அறியீர்களா? ஆகி
லும் தாவீதின் குமாரனாகிய சாலொமோனின்
ஊழியக்காரனான யெரொபெயாம் என்னும்
நேபாத்தின் குமாரன் எழும்பி, [3]தன் எஜமா
னுக்கு விரோதமாகக் கலகம்பண்ணினான்.
7 பேலியாளின் மக்களாகிய [4]வீணர் அவனோ
டே கூடி, சாலொமோனின் குமாரனாகிய ரெ
கொபெயாம் அவர்களை எதிர்க்கக்கூடாமல்
வாலவயதும் திடனற்ற மனதுமாயிருக்கையில்,
அவனுக்கு விரோதமாய்த் தங்களைப் பலப்ப
8 டுத்திக்கொண்டார்கள். இப்போதும் தாவீது
டைய குமாரன் கையிலிருக்கிற கர்த்தருடைய
ராஜ்யத்திற்கு விரோதமாக நீங்கள் பெலன்
கொள்ளலாமென்று நினைக்கிறீர்கள்; நீங்கள்
ஏராளமான கூட்டம்; யெரொபெயாம் உங்க
ளுக்கு தேவர்களாக [5]உண்டாக்கின பொன்
கன்றுக்குட்டிகளும் உங்களிடத்தில் இருக்கி
9 றதே. நீங்கள் ஆரோனின் குமாரராகிய கர்
த்தருடைய ஆசாரியரையும் லேவியரையும் தள்
ளிவிட்டு, [6]தேசாதேசங்களின் ஜனங்களைப்
போல உங்களுக்கு ஆசாரியர்களை உண்டுபண்
ணவில்லையோ? இளங்காளையினாலும், ஏழு
கடாக்களினாலும், [7]தன்னைப் பிரதிஷ்டையா
க்கும்படி வருகிற எவனும் தெய்வம் அல்லா
10 தவைகளுக்கு ஆசாரியனாகிறானே. எங்களுக்
கோ கர்த்தரே தேவன்; நாங்கள் அவரைவிட்டு
விலகவில்லை; கர்த்தருக்கு ஊழியஞ்செய்கிற
ஆசாரியர்கள் ஆரோனின் குமாரரும், பணி
11 விடை செய்கிறவர்கள் லேவியருமாமே. அவர்
கள் தினந்தோறும் கர்த்தருக்குச் சர்வாங்க
தகனபலிகளையும் சுகந்த வாசனையான தூபத்
தையும் செலுத்தி, காலையிலும் மாலையிலும்
பரிசுத்தமான மேசையின்மேல் சமுகத்தப்பங்
களை அடுக்கிவைக்கிறதையும், பொன் குத்து
விளக்கையும் அதின் விளக்குகளைச் சாயங்கா
லந்தோறும் ஏற்றுகிறதையும் விசாரிக்கிறார்
கள்; நாங்கள் எங்கள் தேவனாகிய கர்த்தரின்
காவலைக் காக்கிறோம்; நீங்களோ அவரை
12 விட்டு விலகினீர்கள். இதோ, தேவன் எங்

* 11. 20. காண்க
[1] யோச. 18 22
[2] 2 சாமு. 7. 12, 13, 16. எண். 18. 19
[3] 1 இரா. 11. 26. 12. 20
[4] நியா. 9. 4
[5] 1 இரா. 12. 28: 14. 9. ஓசி. 8. 6
[6] 11. 14, 15
[7] யாத். 29. 35. லேவி. 8. 2
[8] எண். 10. 8
[9] அப். 5. 39
[10] 14. 12
[11] 1 நாளா. 5. 20. சங். 22. 5
[12] 1 சாமு. 25. 38. 1 இரா. 14. 20
[13] 12. 15
[14] 1 இரா. 15. 8, ழ
[15] யாத். 34. 13. 1 இரா. 11. 7: 15. 14

கள் சேனாபதியாய் எங்களோடேகூட இருக்
கிறார்; [8]உங்களுக்கு விரோதமாகப் பூரிகைக
ளைப் பெருந்தொனியாய் முழக்குகிற ஆசாரி
யர்களும் இருக்கிறார்கள்; இஸ்ரவேல் புத்தி
ரரே, உங்கள் பிதாக்களின் தேவனாகிய கர்த்
தருக்கு விரோதமாக யுத்தஞ்செய்யாதேயுங்கள்;
[9]செய்தால் உங்களுக்குச் சித்திக்காது என்றான்.
யெரொபெயாம் அவர்களுக்குப் பின்னாக வரத் 13
தக்கதாக ஒரு பதிவிடையைச் சுற்றிப்போகப்
பண்ணினான்; அப்படியே அவர்கள் யூதாவுக்கு
முன் இருந்தார்கள்; அந்தப் பதிவிடை அவர்க
ளுக்குப்பின் இருந்தது. யூதா ஜனங்கள் திரும் 14
பிப்பார்க்கிறபோது, முன்னும் பின்னும் யுத்
தம் நடக்கிறதைக் கண்டு, கர்த்தரை நோக்கிக்
கூப்பிட்டார்கள்; ஆசாரியர்கள் பூரிகைகளை
முழக்கினார்கள். யூதா மனுஷர் ஆர்ப்பரித் 15
தார்கள்; யூதா மனுஷர் ஆர்ப்பரிக்கிறபோது,
தேவன் யெரொபெயாமையும் இஸ்ரவேலை
னைத்தையும் அபியாவுக்கும் யூதாவுக்கும் முன்
பாக [10]முறிய அடித்தார். இஸ்ரவேல் புத்தி 16
ரர் யூதாவுக்கு முன்பாக முறிந்தோடினார்கள்;
தேவன் அவர்களை இவர்கள் கையில் ஒப்புக்
கொடுத்தார். அபியாவும் அவனுடைய ஜனங் 17
களும் அவர்களில் மகா சங்காரம்பண்ணினார்
கள்; தெரிந்துகொள்ளப்பட்ட ஐந்துலட்சம்
பேர் இஸ்ரவேலிலே வெட்டுண்டு விழுந்தார்
கள். அப்படியே இஸ்ரவேல் புத்திரர் அக் 18
காலத்திலே தாழ்த்தப்பட்டார்கள்; யூதா புத்திர
ரோ தங்கள் பிதாக்களின் தேவனாகிய கர்த்
தரைச் சார்ந்துகொண்டதினால் [11]மேற்கொண்
டார்கள். அபியா யெரொபெயாமைப் பின் 19
தொடர்ந்து, அவனுக்கு உண்டான பட்டணங்
களாகிய பெத்தேலையும் அதின் கிராமங்களை
யும், எஷானாவையும் அதின் கிராமங்களையும்,
எப்பெரோனையும் அதின் கிராமங்களையும்
பிடித்தான். அப்புறம் அபியாவின் நாட்க 20
ளில் யெரொபெயாம் பலன் கொள்ளமாட்டா
தே போய், கர்த்தர் அவனை அடித்ததினால்
[12]மரணமடைந்தான். அபியா பலத்துப்போ 21
னான்; அவன் பதினாலு ஸ்திரீகளை விவாகம்
பண்ணி, இருபத்திரண்டு குமாரரையும் பதி
னாறு குமாரத்திகளையும் பெற்றான். அபியா 22
வின் மற்றக் கிரியைகளும், அவன் நடபடி
களும் அவன் வர்த்தமானங்களும், தீர்க்கதரிசி
யாகிய இத்தோவின் [13]சரித்திரத்தில் எழுதி
யிருக்கிறது.

அபியா தன் பிதாக்களோடே நித்திரை 14
யடைந்தபின், அவனைத் தாவீதின் நகரத்தில்
அடக்கம்பண்ணினார்கள்; [14]அவன் ஸ்தானத்தி
லே அவன் குமாரனாகிய ஆசா ராஜாவானான்;
இவனுடைய நாட்களில் தேசம் பத்து வருஷ
மட்டும் அமரிக்கையாயிருந்தது. ஆசா தன் 2
தேவனாகிய கர்த்தரின் பார்வைக்கு நன்மை
யும் செம்மையுமானதைச் செய்தான். அந்நிய 3
தேவர்களின் பலிபீடங்களையும் மேடைகளை
யும் அகற்றி, சிலைகளை உடைத்து, [15]விக்கிரகத்
தோப்புகளை வெட்டி, தங்கள் பிதாக்களின் 4

தேவனுகிய கர்த்தரைத் தேடவும், நியாயப்பிர
மாணத்தின்படியும் கற்பனையின்படியும் செய்
5 யவும் யூதாவுக்குக் கற்பித்து, யூதாவுடைய
எல்லாப் பட்டணங்களிலுமிருந்து மேடை
களேயும் விக்கிரகங்களேயும் அகற்றினன்; அவ
னுக்குமுன்பாக ராஜ்யம் அமரிக்கையாயிருந்
6 தது. கர்த்தர் அவனுக்கு இளேப்பாறுதலேக் கட்
டளேயிட்டதினுல், அந்த வருஷங்களில் அவ
னுக்கு விரோதமான யுத்தம் இல்லாதிருந்தது;
தேசம் அமரிக்கையாயிருந்தபடியினுல் யூதா
விலே அரணுன பட்டணங்களேக் கட்டினன்.
7 அவன் யூதாவை நோக்கி: தேசம் நமக்கு முன்
பாக அமர்ந்திருக்கையில், நாம் இந்தப் பட்ட
ணங்களேக் கட்டி, அவைகளுக்கு அலங்கங்கள்,
கோபுரங்கள், வாசல்கள் உண்டுபண்ணி, தாழ்
ப்பாள் போட்டுப் பலப்படுத்துவோமாக; நம்
முடைய தேவனுகிய கர்த்தரைத் தேடினேம்,
தேடினபோது, சுற்றிலும் நமக்கு இளேப்பாறு
தலேக் கட்டளேயிட்டார் என்ருன்; அப்படி
யே கட்டினர்கள்; அவர்களுக்குக் காரியம் வாய்
8 த்தது. யூதாவிலே பரிசையும் ஈட்டியும் பிடிக்
கிற மூன்று லட்சம்பேரும், பென்யமீனிலே
கேடகம் பிடித்து வில்லே நாணேற்றுகிற இர
ண்டுலட்சத்து எண்பதினுயிரம் பேருமான
சேனே ஆசாவுக்கு இருந்தது, இவர்களெல்லா
9 ரும் பராக்கிரமசாலிகள். அவர்களுக்கு விரோ
தமாக எத்தியோப்பியனுகிய சேரா [1]பத்துலட்
சம்பேர்கள் சேர்ந்த சேனேயோடும் முந்நூறு
ரதங்களோடும் புறப்பட்டு மரேசாமட்டும் [2]வந்
10 தான். அப்பொழுது ஆசா அவனுக்கு எதி
ராகப் புறப்பட்டான்; மரேசாவுக்கு அடுத்த
செப்பத்தா என்னும் பள்ளத்தாக்கில் யுத்தத்
11 திற்கு அணிவகுத்து நின்ருர்கள். ஆசா தன்
தேவனுகிய கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டு:
கர்த்தாவே, பலமுள்ளவனுக்காகிலும் பல
னற்றவனுக்காகிலும் உதவிசெய்கிறது உமக்கு
லேசான காரியம்; [3]எங்கள் தேவனுகிய கர்த்
தாவே, எங்களுக்குத் துணேநில்லும்; உம்மைச்
சார்ந்து உம்முடைய நாமத்தில் ஏராளமான
இந்தக் கூட்டத்திற்கு எதிராக வந்தோம்; கர்த்
தாவே, நீர் எங்கள் தேவன்; மனுஷன் உம்
மை மேற்கொள்ள விடாதேயும் என்ருன்.
12 அப்பொழுது கர்த்தர் அந்த எத்தியோப்பிய
ரை ஆசாவுக்கும் யூதாவுக்கும் முன்பாக முறிய
அடித்ததினுல் எத்தியோப்பியர் ஓடிப்போ
13 னுர்கள். அவர்களே ஆசாவும் அவனேடிருந்த
ஜனங்களும் கேரார்மட்டும் துரத்தினுர்கள்;
எத்தியோப்பியர் திரும்ப பலன்கொள்ளாத
படிக்கு முறிந்து விழுந்தார்கள்; கர்த்தருக்கும்
அவருடைய சேனேக்கும் முன்பாக நொறுங்
கிப்போனுர்கள்; அவர்கள் மிகுதியாகக் கொ
14 ள்ளே அடித்து, கேராரின் சுற்றுப் பட்டணங்
களேயெல்லாம் முறிய அடித்தார்கள்; கர்த்த
ரால் அவர்களுக்குப் பயங்கரம் உண்டாயிற்று;
அந்தப் பட்டணங்களேயெல்லாம் கொள்ளே
யிட்டார்கள், அவைகளில் கொள்ளே மிகுதி
15 யாய் அகப்பட்டது. மிருகஜீவன்கள் இருந்த

[1] 16. 8
[2] யோசு. 15. 44
[3] 13. 14. யாத். 14. 10. 1 சாமு. 14. 6; 17. 45. சங். 22. 5. நீதி. 18. 10
[4] எண். 24. 2. நியா. 3. 31
[5] எரே. 29. 13. மத். 7. 7, 8. யாக். 4. 8
[6] லேவி. 10. 11. ஓசி. 3. 4
[7] உபா. 4. 29
[8] நியா. 5. 6
[9] மத். 24. 7
[10] யாத். 22. 20. உபா. 13. 5, 9, 15. 2 இரா. 25. 3. நெகே. 10. 29

கொட்டாரங்களேயும் அவர்கள் இடித்துப்போ
ட்டு, திரளான ஆடுகளேயும் ஒட்டகங்களேயும்
சாய்த்துக்கொண்டு எருசலேமுக்குத் திரும்பி
னுர்கள்.

அப்பொழுது தேவனுடைய [4]ஆவி ஓதே 15
தின் குமாரனுகிய அசரியாவின்மேல் இறங்
கினதினுல், அவன் வெளியே ஆசாவுக்கு 2
எதிர்கொண்டுபோய், அவனே நோக்கி: ஆசா
வே, யூதா பென்யமீன் கோத்திரங்களின்
சகல மனுஷரே, கேளுங்கள்; நீங்கள் கர்த்த
ரோடிருந்தால், அவர் உங்களோடிருப்பார்;
[5]நீங்கள் அவரைத் தேடினுல், உங்களுக்கு வெ
ளிப்படுவார்; அவரை விட்டீர்களேயாகில்,
அவர் உங்களே விட்டுவிடுவார். இஸ்ரவேலி 3
லே அநேகநாளாய் மெய்யான தேவனும்
இல்லே, உபதேசிக்கிற ஆசாரியனும் இல்லே,
[6]வேதமும் இல்லே. தங்கள் நெருக்கத்திலே 4
இஸ்ரவேலின் தேவனுகிய கர்த்தரிடத்துக்
குத் திரும்பி, அவரைத் தேடினபோது [7]அவர்
அவர்களுக்கு வெளிப்பட்டார். அக்காலங் 5
களிலே வெளியே போகிறவர்களுக்கும் உள்
ளே வருகிறவர்களுக்கும் [8]சமாதானம் இல்லே;
தேசங்களின் குடிகள் எல்லாருக்குள்ளும் மகா
அமளி உண்டாயிருந்து, ஜாதியை ஜாதியும், 6
பட்டணத்தைப் பட்டணமும் நொறுக்கினது;
[9]தேவன் அவர்களேச் சகலவித இடுக்கத்தினு
லும் கலங்கப்பண்ணினுர். நீங்களோ உங்கள் 7
கைகளே நெகிழவிடாமல் திடன்கொள்ளுங்
கள்; உங்கள் கிரியைகளுக்குப் பலன் உண்டு
என்ருன். ஆசா இந்த வார்த்தைகளேயும் தீர்க் 8
கதரிசியாகிய ஓதேதின் தீர்க்கதரிசனத்தையும்
கேட்டபோது, அவன் திடன்கொண்டு, அரு
வருப்புகளே யூதா பென்யமீன் தேசம் அனேத்
திலும், எப்பிராயீமின் மலேத்தேசத்தில் தான்
பிடித்தபட்டணங்களிலுமிருந்து அகற்றி, கர்த்
தருடைய மண்டபத்தின் முன்னிருக்கிற கர்த்
தருடைய பலிபீடத்தைப் புதுப்பித்து, அவன் 9
யூதா பென்யமீன் ஜனங்களேயும், அவர்களோ
டேகூட எப்பிராயீமிலும்மனுசேயிலும் சிமியோ
னிலும் இருந்துவந்து அவர்களோடு சஞ்ச
ரித்தவர்களேயும் கூட்டினுன்; அவனுடைய
தேவனுகிய கர்த்தர் அவனேடிருக்கிறதைக்
கண்டு, இஸ்ரவேலிலிருந்து திரளான ஜனங்
கள் அவன் பட்சத்தில் சேர்ந்தார்கள். ஆசா 10
அரசாண்ட பதினேந்தாம் வருஷம் மூன்ரும்
மாதத்திலே அவர்கள் எருசலேமிலே கூடி,
தாங்கள் கொள்ளேயிட்டு ஓட்டிக்கொண்டுவந் 11
தவைகளில் அந்நாளிலே எழுநூறு மாடுகளே
யும் ஏழாயிரம் ஆடுகளேயும் கர்த்தருக்குப் பலி
யிட்டு, தங்கள் பிதாக்களின் தேவனுகிய கர்த் 12
தரைத் தங்கள் முழு இருதயத்தோடும் தங்கள்
முழு ஆத்துமாவோடும் தேடுவோம் என்றும்;
சிறியோர் பெரியோர் ஸ்திரீ புருஷர் எல்லா 13
ரிலும், இஸ்ரவேலின் தேவனுகிய கர்த்தரைத்
தேடாதவன் எவனே அவன் கொலேசெய்யப்
படவேண்டும் என்றும் [10]ஒரு உடன்படிக்கை
செய்து, மகா சத்தத்தோடும் கெம்பீரத்தோ 14

டும் பூரிகைகளோடும் எக்காளங்களோடும் கர்த்
15 தருக்கு முன்பாக ஆணையிட்டார்கள். இந்த
ஆணைக்காக யூதா ஜனங்கள் யாவரும் சந்தோ
ஷப்பட்டார்கள்; தங்கள் முழு இருதயத்தோ
டும் ஆணையிட்டு, தங்கள் முழுமனதோடும்
அவரைத் தேடினார்கள்; கர்த்தர் அவர்களுக்கு
வெளிப்பட்டு, சுற்றுப்புறத்தாரால் யுத்தமில்லா
தபடிக்கு அவர்களை இளைப்பாறப்பண்ணினார்.
16 தோப்பிலே அருவருப்பான விக்கிரகத்தை
உண்டுபண்ணின ராஜாவாகிய ஆசாவின் *தா
யான மாகாளையும் ராஜாத்தியாய் இராதபடிக்கு
ஆசா விலக்கிப்போட்டு, அவளுடைய விக்கிர
கத்தையும் நிர்மூலமாக்கித் தகர்த்து, கீதரோன்
ஆற்றண்டையிலே சுட்டெரித்துப் போட்
17 டான். மேடைகளோ இஸ்ரவேலிலிருந்து
தகர்க்கப்படவில்லை; ஆனாலும், ஆசாவின் இரு
தயம் அவன் நாட்களிலெல்லாம் உத்தமமா
18 யிருந்தது. தன் தகப்பனும் தானும் பரிசுத்
தம்பண்ணும்படி நேர்ந்துகொண்ட வெள்ளி
யையும் பொன்னையும் பணிமுட்டுகளையும்
அவன் தேவனுடைய ஆலயத்திலே கொண்டு
19 வந்தான். ஆசா அரசாண்ட முப்பத்தைந்தாம்
வருஷமட்டும் யுத்தம் இல்லாதிருந்தது.

16 ஆசா அரசாண்ட முப்பத்தாறாம் வரு
ஷத்திலே, இஸ்ரவேலின் ராஜாவாகிய பா
ஷா யூதாவுக்கு விரோதமாய் வந்து, [1]ஒருவரும்
யூதாவின் ராஜாவாகிய ஆசாவினிடத்தில்
போக்கும் வரத்துமாயிராதபடிக்கு ராமாவைக்
2 கட்டினான். அப்பொழுது ஆசா கர்த்தரு
டைய ஆலயத்திலும் ராஜாவின் அரமனையிலு
முள்ள பொக்கிஷங்களிலுள்ள வெள்ளியும்
பொன்னும் எடுத்து, தமஸ்குவில் வாசம்பண்
ணுகிற பெனாதாத் என்னும் சீரியாவின்
3 ராஜாவினிடத்துக்கு அனுப்பி: எனக்கும்
உமக்கும், என் தகப்பனுக்கும் உம்முடைய
தகப்பனுக்கும் உடன்படிக்கை உண்டே;
இதோ, வெள்ளியும் பொன்னும் உமக்கு
அனுப்பினேன்; இஸ்ரவேலின் ராஜாவாகிய
பாஷா என்னைவிட்டு விலகிப்போகும்படிக்கு
நீர் வந்து, அவனோடு செய்த உடன்படிக்கை
யைத் தள்ளிப்போடும் என்று சொல்லி அனுப்
4 பினான். பெனாதாத் ராஜாவாகிய ஆசா
வுக்குச் செவிகொடுத்து, தனக்கு உண்டான
சேனாபதிகளை இஸ்ரவேலின் பட்டணங்களு
க்கு விரோதமாக அனுப்பினான்; அவர்கள்
ஈயோனையும், தாணையும், ஆபேல்மாயீமையும்,
நப்தலிபட்டணங்களின் எல்லாப் பண்டக
5 சாலைகளையும் முறிய அடித்தார்கள். இதைப்
பாஷா கேட்டபோது, ராமாவைக் கட்டுகிற
தை நிறுத்தி, தன் வேலையை விட்டு ஒழிந்
6 தான். அப்பொழுது ராஜாவாகிய ஆசா யூதா
அனைத்தையுங் கூட்டிக்கொண்டுபோய், பா
ஷா கட்டின ராமாவின் கற்களையும் அதின்
மரங்களையும் எடுத்துவந்து, அவைகளால் கே
7 பாவையும் மிஸ்பாவையும் கட்டினான். அக்
காலத்திலே ஞானதிருஷ்டிக்காரனாகிய
அனானி யூதாவின் ராஜாவாகிய ஆசாவினிடத்
தில் வந்து, அவனை நோக்கி: [2]நீர் உம்முடைய
தேவனாகிய கர்த்தரைச் சார்ந்துகொள்ளாமல்,
சீரியாவின் ராஜாவைச் சார்ந்துகொண்டபடி
யினால், சீரியா ராஜாவின் ராணுவம் உமது
கைக்குத் தப்பிப்போயிற்று. மிகவும் ஏராள 8
மான ரதங்களும் குதிரைவீரருமுள்ள எத்தி
யோப்பியரும் லூபியரும் [3]மகா சேனையாயிருந்
தார்கள் அல்லவா? நீர் கர்த்தரைச் சார்ந்துகொ
ண்டபோதோவெனில், அவர்களை உமது கை
யில் ஒப்புக்கொடுத்தாரே. தம்மைப்பற்றி உத் 9
தம இருதயத்தோ டிருக்கிறவர்களுக்குத் தம்
முடைய வல்லமையை விளங்கப்பண்ணும்
படி, கர்த்தருடைய கண்கள் பூமியெங்கும்
உலாவிக்கொண்டிருக்கிறது; [4]இந்த விஷயத்
தில் மதியில்லாதவராயிருந்தீர்; ஆகையால்
இதுமுதற்கொண்டு உமக்கு யுத்தங்கள் நேரிடும்
என்றான். அதினிமித்தம் ஆசா ஞானதிருஷ் 10
டிக்காரன்மேல் சினந்து கடுங்கோபங் கொ
ண்டு [5]அவனைக் காவலறையிலே வைத்தான்;
இதல்லாமலும் அக்காலத்தில் ஜனங்களுக்குள்
சிலரைக் கொடூரமாய் நடப்பித்தான். ஆசா 11
வின் ஆதியோடந்தமான நடபடிகளெல்லாம்
யூதாவையும் இஸ்ரவேலையும் சேர்ந்த ராஜாக்
களின் புஸ்தகத்தில் எழுதியிருக்கிறது. ஆசா 12
அரசாண்ட முப்பத்தொன்பதாம் வருஷத்
திலே தன் கால்களில் வியாதிகண்டு, அவன்
நோவு மிகவும் உக்கிரமாயிருந்தது; அவன்
தன் வியாதியிலும் கர்த்தரை அல்ல, [6]பரிகாரி
களையே தேடினான். ஆசா தான் அரசாண்ட 13
நாற்பத்தோராம் வருஷத்தில் மரித்து, தன்
பிதாக்களோடே நித்திரையடைந்தான்: தை 14
லக்காரரால் செய்யப்பட்ட கந்தவர்க்கங்களினா
லும் பரிமளங்களினாலும் நிறைந்த ஒரு மெத்
தையின்மேல் அவனை வளர்த்தி, [7]அவனுக்காக
வெகு திரளான கந்தவர்க்கங்களைக் கொளுத்
தினபின்பு, அவன் தாவீதின் நகரத்தில் தன
க்கு வெட்டிவைத்திருந்த அவனுடைய கல்ல
றையிலே, அவனை அடக்கம்பண்ணினார்கள்.

அவன் ஸ்தானத்திலே அவன் குமாரனா 17
கிய யோசபாத் ராஜாவாகி, [8]இஸ்ரவேலு
க்கு விரோதமாய்ப் பலப்பட்டான். அவன் 2
யூதாவின் அரணான பட்டணங்களிலெல்லாம்
ராணுவத்தையும், யூதா தேசத்திலும், தன்
தகப்பனாகிய ஆசா பிடித்த எப்பிராயீமின் பட்
டணங்களிலும் தாணையங்களையும் வைத்தான்.
கர்த்தர் யோசபாத்தோடிருந்தார்; அவன் பா 3
கால்களைத் தேடாமல், தன் தசப்பனாகிய தா
வீது †முன்நாட்களில் நடந்த வழிகளில் நட
ந்து, தன் தகப்பனுடைய தேவனைத் தேடி, 4
இஸ்ரவேலுடைய செய்கையின்படி நடவா
மல், [9]அவருடைய கற்பனைகளின்படி நடந்து
கொண்டான். ஆகையால் கர்த்தர் அவன் 5
கையில் ராஜ்யபாரத்தைத் திடப்படுத்தினார்;
யூதாகோத்திரத்தார் எல்லாரும் யோசபாத்துக்
குக் காணிக்கைகளைக் கொண்டுவந்தார்கள்;
[10]அவனுக்கு ஐசுவரியமும் கனமும் மிகுதியா
யிருந்தது. கர்த்தருடைய வழிகளில் அவன் 6

* பாட்டி. 1 இரா. 15. 2, 10
[1] 15. 5, 9. 1 இரா. 15. 17. ழ
[2] 19. 2. 1 இரா. 16. 1. ஏசா. 31. 1. எரே. 17. 5
[3] 12. 3; 14. 9
[4] யோபு. 34. 21. நீதி. 5. 21; 15. 3. எரே. 16. 17. சகரி. 4. 10
[5] 18. 26. எரே. 20. 2. மத். 14. 3
[6] எரே. 17. 5
[7] ஆதி. 50. 2. மாற். 16. 1. யோவா. 19. 39, 40
[8] 1 இரா. 15. 24
† தாவீதின் முந்தின வழிகளில்.
[9] 1 இரா. 12. 28
[10] 1 சாமு. 10. 27. 1 இரா. 10. 25, 27

இருதயம் உற்சாகங்கொண்டது; அவன் மே
டைகளையும் விக்கிரகத் தோப்புகளையும் யூதா
7 வைவிட் டகற்றினான். அவன் அரசாண்ட
மூன்றாம் வருஷத்தில் யூதாவின் பட்டணங்
களிலே உபதேசம்பண்ணும்படிக்கு, அவன்
தன் பிரபுக்களாகிய பென்னயிலையும், ஒபதி
யாவையும், சகரியாவையும், நெதனெயேலே
8 யும், மிகாயாவையும், இவர்களோடேகூடச்
செமாயா, நெதனியா, செபதியா, ஆசகேல்,
செமிரமோத், யோனத்தான், அதோனியா,
தொபியா, தோபத்தோனியா என்னும் லேவி
யரையும், இவர்களோடேகூட ஆசாரியரான
எலிஷாமாவையும், யோராமையும் அனுப்பி
9 னான். இவர்கள் யூதாவிலே உபதேசித்து,
**கர்த்தருடைய** வேதபுஸ்தகத்தை வைத்துக்கொ
ண்டு, [1]யூதாவின் பட்டணங்களிலெல்லாம் திரி
10 ந்து ஜனங்களுக்குப் போதித்தார்கள். யூதா
வைச் சுற்றியிருக்கிற தேசங்களுடைய ராஜ்
யங்களின்மேலெல்லாம் **கர்த்தரால்** உண்
டான பயங்கரம் வந்ததினால், [2]யோசபாத்
11 தோடு யுத்தம்பண்ணாதிருந்தார்கள். பெலிஸ்
தரிலும்சிலர் யோசபாத்துக்குப் [3]பகுதிப்பணத்
தோடேகூடக் காணிக்கைகளையும் கொண்டு
வந்தார்கள்; அரபியரும் அவனுக்கு எழாயிர
த்து எழுநூறு ஆட்டுக்கடாக்களையும், எழாயிர
த்து எழுநூறு வெள்ளாட்டுக்கடாக்களையும்
12 கொண்டுவந்தார்கள். இப்படியே யோசபாத்
வரவர மிகவும் பெரியவனாகி, யூதாவிலே
கோட்டைகளையும், ரஸ்துக்களை வைக்கும் பட்
13 டணங்களையும் கட்டினான். யூதாவின் பட்ட
ணங்களில் அவன் பெரிய வேலைகளை நடத்தி
னான்; எருசலேமிலே பராக்கிரமசாலிகளான
14 சேவகர் அவனுக்கு இருந்தார்கள். தங்கள்
பிதாக்களுடைய வம்சங்களின்படி அவர்களு
டைய இலக்கமாவது: யூதாவிலே ஆயிரத்து
க்கு அதிபதிகளில் அத்னா தலைமையானவன்;
அவனிடத்திலே பராக்கிரமசாலிகள் மூன்று
15 லட்சம்பேர் இருந்தார்கள். அவனுக்கு உத
வியாக யோகனான் என்னும் சேனாபதியிருந்
தான்; அவனிடத்திலே இரண்டுலட்சத்து
16 எண்பதினாயிரம்பேர் இருந்தார்கள். அவனு
க்கு உதவியாக **கர்த்தருக்குத்** தன்னை உற்சாக
மாய் ஒப்புக்கொடுத்த சிக்ரியின் [4]குமாரனாகிய
அமசியா இருந்தான்; அவனிடத்திலே பராக்
கிரமசாலிகள் இரண்டுலட்சம்பேர் இருந்தார்
17 கள். பென்யமீனிலே எலியாதா என்னும்
பராக்கிரமசாலி இருந்தான்; அவனிடத்திலே
வில்லும் கேடகமும் பிடிக்கிறவர்கள் இரண்டு
18 லட்சம்பேர் இருந்தார்கள். அவனுக்கு உதவி
யாக யோசபாத் இருந்தான்; அவனிடத்திலே
சேவகத்திற்கு ஆயுதபாணிகள் லட்சத்து எண்
19 பதினாயிரம்பேர் இருந்தார்கள். ராஜா யூதா
எங்குமுள்ள அரணான பட்டணங்களில் வைத்
தவர்களைத்தவிர இவர்களே ராஜாவைச் சே
வித்தவர்கள்.

18 யோசபாத்துக்கு மிகுந்த ஐசுவரியமும்
கனமும் உண்டாயிருந்தது; [5]அவன் ஆகா
போடே சம்பந்தங் கலந்து, சில வருஷங்கள் 2
சென்றபின்பு, சமாரியாவிலிருக்கிற ஆகா
பிடத்துக்குப் போனான்; [6]அப்பொழுது ஆகாப்
அவனுக்கும் அவனோடிருக்கிற ஜனத்திற்
கும் அநேகம் ஆடுமாடுகளை அடிப்பித்து,
கீலேயாத்திலுள்ள ராமோத்திற்கு வரும்படி
அவனை ஏவினான். எப்படியெனில், இஸ்ர 3
வேலின் ராஜாவாகிய ஆகாப் யூதாவின் ராஜா
வாகிய யோசபாத்தை நோக்கி: கீலேயாத்தி
லுள்ள ராமோத்துக்கு என்னோடே வருகிறீரா
என்று கேட்டதற்கு, அவன்: நான்தான் நீர்,
என்னுடைய ஜனங்கள் உம்முடைய ஜனங்
கள், உம்மோடேகூட யுத்தத்திற்கு வருகி
றேன் என்றான். பின்னும் யோசபாத் இஸ்ர 4
வேலின் ராஜாவைப் பார்த்து: **கர்த்தருடைய**
வார்த்தையை இன்றைக்கு விசாரித்து அறி
யும்[7] என்றான். அப்பொழுது இஸ்ரவேலின் 5
ராஜா நானூறு தீர்க்கதரிசிகளைக் கூடிவரச்
செய்து: நாங்கள் கீலேயாத்திலுள்ள ராமோத்
தின்மேல் யுத்தம்பண்ணப் போகலாமா, போக
லாகாதா என்று அவர்களைக் கேட்டான். அத
ற்கு அவர்கள்: போம், தேவன் ராஜாவின்
கையில் அதை ஒப்புக்கொடுப்பார் என்றார்
கள். பின்பு யோசபாத்: நாம் விசாரித்து அறி 6
கிறதற்கு இவர்களையல்லாமல் **கர்த்தருடைய**
தீர்க்கதரிசி வேறே யாராகிலும் இங்கே இல்
லையா என்று கேட்டான். அப்பொழுது 7
இஸ்ரவேலின் ராஜா யோசபாத்தை நோக்கி:
**கர்த்தரிடத்தில்** விசாரித்து அறிகிறதற்கு இம்
லாவின் குமாரனாகிய மிகாயா என்னும் மற்
றொருவன் இருக்கிறான்; ஆனாலும் நான்
அவனைப் பகைக்கிறேன்; [8]அவன் என்னைக்
குறித்து நன்மையாக அல்ல, தீமையாகவே
எப்பொழுதும் தீர்க்கதரிசனம் சொல்லுகிற
வன் என்றான். அதற்கு யோசபாத்: ராஜா
வே, அப்படிச் சொல்லவேண்டாம் என்றான்.
அப்பொழுது இஸ்ரவேலின் ராஜா பிரதானி 8
களில் ஒருவனைக் கூப்பிட்டு: இம்லாவின்
குமாரனாகிய மிகாயாவைச் சீக்கிரமாய் அழைத்
துவா என்றான். இஸ்ரவேலின் ராஜாவும் 9
யூதாவின் ராஜாவாகிய யோசபாத்தும், சமாரி
யாவின் ஒலிமுகவாசலுக்கு முன்னிருக்கும்
விசாலமான இடத்திலே ராஜவஸ்திரம் தரித்
துக்கொண்டவர்களாய், அவரவர் தம்தம் சிங்
காசனத்திலே உட்கார்ந்திருந்தார்கள்; சகல
தீர்க்கதரிசிகளும் அவர்களுக்கு முன்பாகத்
தீர்க்கதரிசனஞ் சொன்னார்கள். கெனானா 10
வின் குமாரனாகிய சிதேக்கியா தனக்கு இருப்
புக்கொம்புகளை உண்டாக்கி, இவைகளால் நீர்
சீரியரை முட்டி நிர்மூலமாக்கிப்போடுவீர் எ
ன்று **கர்த்தர்** சொல்லுகிறார் என்றான். சகல 11
தீர்க்கதரிசிகளும் அதற்கு இசைவாகத் தீர்க்க
தரிசனஞ்சொல்லி, கீலேயாத்திலுள்ள ராமோ
த்திற்குப் போம், உமக்கு வாய்க்கும், **கர்த்தர்**
அதை ராஜாவின் கையில் ஒப்புக்கொடுப்பார்
என்றார்கள். மிகாயாவை அழைக்கப்போன 12
ஆள் அவனுடனே பேசி: இதோ, தீர்க்கதரிசி

[1] 35. 3. நெகே. 8. 7
[2] ஆதி. 35. 5
[3] 2 சாமு. 8. 2
[4] நியா. 5. 2, 9
[5] 17. 5. 2 இரா. 8. 18
[6] 1 இரா. 22. 2, மு
[7] 1 சாமு. 23. 2, 4, 9.
[8] சங். 34. 21. நீதி. 29. 16. ஆமோ. 5. 10. தா. 6. 22

களின் வார்த்தைகள் ஏகவாக்காய் ராஜாவுக்கு
நன்மையாயிருக்கிறது; உம்முடைய வார்த்
தையும் அவர்களில் ஒருவர் வார்த்தையைப்
போல இருக்கும்படிக்கு நன்மையாகச் சொல்
13 லும் என்றான். அதற்கு மிகாயா: [1]என் தே
வன் சொல்வதையே சொல்வேன் என்று **கர்த்**
**தருடைய** ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேன்
14 என்றான். அவன் ராஜாவினிடத்தில் வந்த
போது, ராஜா அவனைப் பார்த்து: மிகாயாவே,
நாங்கள் கீலேயாத்திலுள்ள ராமோத்தின்மேல்
யுத்தம்பண்ணப் போகலாமா, போகலாகாதா
என்று கேட்டான். அதற்கு அவன்: போங்
கள்; உங்களுக்கு வாய்க்கும்; உங்கள் கையில்
15 ஒப்புக்கொடுக்கப்படுவார்கள் என்றான். ராஜா
அவனைப் பார்த்து: நீ **கர்த்தருடைய** நாமத்திலே
உண்மையை அல்லாமல் வேறொன்றையும்
என்னிடத்தில் சொல்லாதபடிக்கு, நான் எத்த
னைதரம் உன்னை ஆணையிடுவிக்கவேண்டும் எ
16 ன்று சொன்னான். அப்பொழுது அவன்:
இஸ்ரவேலர் எல்லாரும் மேய்ப்பனில்லாத
ஆடுகளைப்போல மலைகளில் சிதறப்பட்டதைக்
கண்டேன்; அப்பொழுது **கர்த்தர்**: இவர்க
ளுக்கு எஜமான் இல்லை; அவரவர் தம்தம் வீட்
டிற்குச் சமாதானத்தோடே திரும்பக்கடவர்
17 கள் என்றார் என்று சொன்னான். அப்பொ
ழுது இஸ்ரவேலின் ராஜா யோசபாத்தை
நோக்கி: இவன் என்னைக்குறித்து நன்மை
யாக அல்ல, தீமையாகவே தீர்க்கதரிசனஞ்
சொல்லுகிறவன் என்று நான் உம்மோடே
18 சொல்லவில்லையா என்றான். அப்பொழுது
அவன் சொன்னது: **கர்த்தருடைய** வார்த்தை
யைக் கேளுங்கள்; **கர்த்தர்** தம்முடைய சிங்
காசனத்தின்மேல் வீற்றிருக்கிறதையும், பரம
சேனையெல்லாம் அவர் வலதுபக்கத்திலும்
அவர் இடதுபக்கத்திலும் நிற்கிறதையும் கண்
19 டேன். அப்பொழுது **கர்த்தர்**: இஸ்ரவே
லின் ராஜாவாகிய ஆகாப் கீலேயாத்திலுள்ள
ராமோத்தில் போய் விழும்படிக்கு, அவனுக்
குப் போதனைசெய்கிறவன் யார் என்று கேட்
டதற்கு, ஒருவன் இப்படியும் ஒருவன் அப்ப
20 டியும் சொன்னார்கள். அப்பொழுது ஒரு ஆவி
புறப்பட்டுவந்து, [2]**கர்த்தருக்கு** முன்பாக நின்று:
நான் அவனுக்குப் போதனை செய்வேன் என்
றது; எதினால் என்று **கர்த்தர்** அதைக் கேட்
21 டார். அப்பொழுது அது: நான் போய்,
அவனுடைய தீர்க்கதரிசிகள் எல்லாரின் வாயி
லும் பொய்யின் ஆவியாய் இருப்பேன் என்
றது. அதற்கு அவர்: நீ அவனுக்குப் போத
னைசெய்து அப்படி நடக்கப்பண்ணுவாய்;
22 போய் அப்படியே செய் என்றார். ஆனதி
னால் **கர்த்தர்** பொய்யின் ஆவியை இந்த உம்
முடைய தீர்க்கதரிசிகளின் வாயிலே கட்ட
ளையிட்டார்; [3]**கர்த்தர்** உம்மைக்குறித்துத் தீமை
23 யாகச் சொன்னார் என்றான். அப்பொழுது
கேனானாவின் குமாரனாகிய சிதேக்கியா கிட்
டேவந்து: மிகாயாவைக் கன்னத்தில் அடித்து,
[4]**கர்த்தருடைய** ஆவி எந்த வழியாய் என்னை
விட்டு உன்னோடே பேசும்படி வந்தது என்
றான். அதற்கு மிகாயா: நீ ஒளித்துக்கொள்ள 24
உள்ளறையிலே பதுங்கும் அந்நாளிலே அ
தைக் காண்பாய் என்றான். அப்பொழுது 25
இஸ்ரவேலின் ராஜா: நீங்கள் மிகாயாவைப்
பிடித்து, அவனைப் பட்டணத்துத் தலைவனா
கிய ஆமோனிடத்துக்கும், ராஜகுமாரனாகிய
யோவாசிடத்துக்கும் திரும்பக் கொண்டு
போய், அவனைச் சிறைச்சாலையிலே வை 26
த்து, [5]நான் சமாதானத்தோடே திரும்பி வரு
மளவும், அவனுக்கு இடுக்கத்தின் அப்பத்தை
யும் இடுக்கத்தின் தண்ணீரையும் சாப்பிடக்
கொடுங்கள் என்று ராஜா சொன்னார் என்று
சொல்லுங்கள் என்றான். அப்பொழுது மி 27
காயா: நீர் சமாதானத்தோடே திரும்பிவந்தால்,
**கர்த்தர்** என்னைக்கொண்டு பேசினதில்லை
என்று சொல்லி; ஜனங்களே, நீங்கள் எல்லா
ரும் கேளுங்கள் என்றான்.

பின்பு இஸ்ரவேலின் ராஜாவும், யூதாவின் 28
ராஜாவாகிய யோசபாத்தும் கீலேயாத்திலுள்ள
ராமோத்துக்குப் போனார்கள். இஸ்ரவேலின் 29
ராஜா யோசபாத்தைப் பார்த்து: நான் வேஷ
மாறி யுத்தத்தில் பிரவேசிப்பேன்; நீரோ ராஜ
வஸ்திரம் தரித்திரும் என்று சொல்லி, இஸ்ர
வேலின் ராஜா வேஷமாறி யுத்தத்தில் பிரவே
சித்தான். சீரியாவின் ராஜா தனக்கு இருக்கிற 30
ரதங்களின் தலைவரை நோக்கி: நீங்கள் சிறிய
வரோடும் பெரியவரோடும் யுத்தம்பண்ணாமல்,
இஸ்ரவேலின் ராஜா ஒருவனோடேமாத்திரம்
யுத்தம்பண்ணுங்கள் என்று கட்டளையிட்டிருந்
தான். ஆதலால் ரதங்களின் தலைவர் யோச 31
பாத்தைக் காண்கையில், இவன்தான் இஸ்ர
வேலின் ராஜா என்று சொல்லி யுத்தம்பண்ண
அவனைச் சூழ்ந்துகொண்டார்கள்; அப்பொ
ழுது யோசபாத் கூக்குரல் இட்டான்; **கர்த்தர்**
அவனுக்கு *அநுசாரியாயிருந்தார், அவர்கள்
அவனைவிட்டு விலகும்படி தேவன் செய்
தார். இவன் இஸ்ரவேலின் ராஜா அல்ல 32
என்று ரதங்களின் தலைவர் கண்டபோது
அவனை விட்டுத் திரும்பினார்கள். ஒருவன் 33
நினையாமல் வில்லை நாணேற்றி எய்தான்,
அது இஸ்ரவேலின் ராஜாவினுடைய கவசத்
தின் சந்துக்கிடையிலே பட்டது; அப்பொ
ழுது அவன் தன் சாரதியைப் பார்த்து: நீ
திருப்பி என்னை ராணுவத்துக்கப்பால் கொ
ண்டுபோ, எனக்குக் காயம்பட்டது என்றான்.
அன்றையதினம் யுத்தம் அதிகரித்தது; இஸ்ர 34
வேலின் ராஜா சீரியருக்கு எதிராக ரதத்தில்
சாயங்காலமட்டும் நின்றிருந்து, சூரியன் அஸ்
தமிக்கும்போது இறந்துபோனான்.

யூதாவின் ராஜாவாகிய யோசபாத், எருச **19**
லேமிலுள்ள தன் வீட்டிற்குச் சமாதானத்
தோடே திரும்பிவந்தான். அப்பொழுது அனா 2
னியின் குமாரனாகிய யெகூ என்னும் ஞான
திருஷ்டிக்காரன் புறப்பட்டு, அவனைச் சந்தி
த்து, ராஜாவாகிய யோசபாத்தை நோக்கி:
துன்மார்க்கனுக்குத் துணைநின்று, **கர்த்தரைப்**

[1] எண். 22. 18, 20, 35. 1 இரா. 22. 14

[2] யோபு. 1. 6

[3] யோபு. 12. 16. ஏசா. 19. 14. எசே. 14. 9

[4] எரே. 20. 2. மாற். 14. 65. அப். 23. 2

[5] 16. 10

* துணை

பகைக்கிறவர்களை நீர் சிநேகிக்கலாமா? [1]இதி
னிமித்தம் **கர்த்தருடைய** கடுங்கோபம் உம்
3 மேல் வர இருந்தது. ஆகிலும் நீர் விக்கிரகத்
தோப்புகளைத் தேசத்தை விட்டகற்றி, தேவ
னைத் தேட உம்முடைய இருதயத்தை நோக்
கின விஷயத்தில் நன்மையான காரியங்கள்
[2]உம்மிடத்திலே காணப்பட்டது உண்டு
என்றான்.
4 யோசபாத் எருசலேமிலே வாசமாயிருந்து,
திரும்பப் பெயெர்செபா தொடங்கி, எப்பிரா
யீம் மலைத்தேசமட்டுமுள்ள ஜனத்திற்குள்ளே
பிரயாணமாய்ப் போய், அவர்களைத் தங்கள்
பிதாக்களுடைய தேவனாகிய **கர்த்தர்** இடத்
5 திற்குத் திரும்பப்பண்ணினான். அவன் யூதா
வின் அரணான பட்டணங்களாகிய ஒவ்
வொரு பட்டணத்திலும் நியாயாதிபதிகளை
6 வைத்து, அந்த நியாயாதிபதிகளை நோக்கி:
நீங்கள் செய்கிற காரியத்தைக்குறித்து எச்ச
ரிக்கையாயிருங்கள்; நீங்கள் மனுஷனுடைய
கட்டளையினால் அல்ல, **கர்த்தருடைய** கட்ட
ளையினால் நியாயம் விசாரிக்கிறீர்கள்; [3]நியாயம்
விசாரிக்கிற விஷயத்திலே அவர் உங்களுட
7 னே இருக்கிறார். ஆதலால் **கர்த்தருக்குப்**
பயப்படுகிற பயம் உங்களிடத்தில் இருக்கக்
கடவது; எச்சரிக்கையாயிருந்து காரியத்தை
நடத்துங்கள்; உங்கள் தேவனாகிய **கர்த்தரிடத்**
**திலே** அநியாயமும் முகதாட்சிணியமும் இல்
லை, [4]பரிதானமும் அவரிடத்திலே செல்லாது
8 என்றான். அவர்கள் எருசலேமில் வந்திருக்
கும்போது, யோசபாத் லேவியரிலும், ஆசாரி
யரிலும், இஸ்ரவேலுடைய வம்சத்தலைவரி
லும், சிலரைக் **கர்த்தருடைய** நியாயங்களைக்கு
றித்தும் விவாதவிஷயங்களைக்குறித்தும் விசா
9 ரிக்கும்படி [5]எருசலேமிலே நியமித்து, அவர்
களுக்குக் கட்டளையிட்டதாவது: நீங்கள் **கர்த்**
**தருக்குப்** பயந்து, [6]உண்மையோடும் உத்தம
இருதயத்தோடும் நடந்து செய்யவேண்டியது
10 என்னவென்றால், நானாவித ரத்தப்பழிச் சங்
கதிகளும், பிரமாணத்திற்கும், கற்பனைக்கும்,
கட்டளைகளுக்கும், நியாயங்களுக்கும் அடுத்த
நானாவித வழக்குச் சங்கதிகளும், தங்கள் பட்ட
ணங்களிலே குடியிருக்கிற உங்கள் சகோதர
ரிடத்திலிருந்து உங்களிடத்தில் வரும்போது,
அவர்கள் **கர்த்தருக்கு** நோஸ்தராகாதபடிக்
கும், உங்கள்மேலும் உங்கள் சகோதரர்மேலும்
கடுங்கோபம் வராதபடிக்கும், நீங்கள் அவர்
களை எச்சரியுங்கள்; [7]நீங்கள் இப்படிச் செய்
11 தால் நோஸ்தராகமாட்டீர்கள். இதோ, ஆசா
ரியனாகிய அமரியா **கர்த்தருக்கடுத்த** எல்லா
நியாயத்திலும், இஸ்மவேலின் குமாரனாகிய
செபதியா என்னும் யூதா வம்சத்தின் தலைவன்
ராஜாவுக்கடுத்த எல்லா நியாயத்திலும் உங்க
ளுக்குமேலான நியாயாதிபதிகள்; லேவியரும்
உங்கள் கைக்குள் உத்தியோகஸ்தராயிருக்கி
றார்கள்; நீங்கள் திடமனதாயிருந்து காரியங்
களை நடத்துங்கள், உத்தமனுக்குக் **கர்த்தர்**
துணை என்றான்.

[1] 1 சாமு. 9. 9. சங். 139. 21
[2] 12. 12; 17. 4, 6
[3] உபா. 1. 17. சங். 82. 1. பிர. 5. 8
[4] உபா. 10. 17; 32. 4. யோபு 34. 19. அப். 10. 34. ரோ. 2. 11; 3. 5, 6. 9. 14. எபே. 6. 9. 1 பே. 1. 17
[5] உபா. 17. 8, 9
[6] 2 சாமு. 23. 3
[7] 1 சாமு. 16. 46. எசே. 3. 18
[8] ஆதி. 14. 7. யோசு. 15. 62
[9] எஸ்றா 8. 21. எரே. 36, 9. யோவே. 3. 5
[10] உபா. 4. 39. சங். 115. 3. தானி. 4. 17, 25. மத். 6. 9, 13
[11] ஏசா. 41. 8. யாக். 2. 23
[12] 1 இரா. 8. 33, 37
[13] உபா. 2. 4, 9, 19. எண். 20. 21
[14] சங். 83. 12
[15] 1 சாமு. 3. 13

இதற்குப்பின்பு மோவாப் புத்திரரும், 20
அம்மோன் புத்திரரும், அவர்களோடே அம்
மோனியருக்கு அப்புறத்திலுள்ள மனுஷரும்
கூட யோசபாத்திற்கு விரோதமாய் யுத்தம்
பண்ண வந்தார்கள். சிலர் வந்து, யோசபாத் 2
தை நோக்கி: உமக்கு விரோதமாய் ஏராளமான
ஜனங்கள் கடலுக்கு அக்கரையிலிருக்கிற சீரி
யாவிலிருந்து வருகிறார்கள்; இதோ, அவர்கள்
எங்கேதியாகிய [8]ஆசாசோன் தாமாரில் இருக்
கிறார்கள் என்று அறிவித்தார்கள். அப்பொ 3
ழுது யோசபாத் பயந்து, **கர்த்தரைத்** தேடுகிற
தற்கு ஒருமுகப்பட்டு, [9]யூதாவெங்கும் உப
வாசத்தைக் கூறுவித்தான். அப்படியே யூதா 4
ஜனங்கள் **கர்த்தரிடத்திலே** சகாயந்தேடக்
கூடினார்கள்; யூதாவிலுள்ள எல்லாப் பட்
டணங்களிலும் இருந்து அவர்கள் **கர்த்த**
**ரைத்** தேட வந்தார்கள். அப்பொழுது யோச 5
பாத் **கர்த்தருடைய** ஆலயத்திலே புதுப்பிரா
காரத்து முகப்பிலே, யூதா ஜனங்களும் எரு
சலேமியரும் கூடின சபையிலே நின்று:
எங்கள் பிதாக்களின் தேவனாகிய **கர்த்தாவே,** 6
பரலோகத்திலிருக்கிற நீர் அல்லவோ தேவன்;
[10]தேவரீர் ஜாதிகளுடைய ராஜ்யங்களையெல்
லாம் ஆளுகிறவர்; உம்முடைய கரத்திலே வல்
லமையும் பராக்கிரமமும் இருக்கிறது, ஒருவ
ரும் உம்மோடு எதிர்த்து நிற்கக்கூடாது. எங் 7
கள் தேவனாகிய நீர் உம்முடைய ஜனமாகிய
இஸ்ரவேலுக்கு முன்பாக இந்தத் தேசத்துக்
குடிகளைத் துரத்திவிட்டு, இதை உம்முடைய
[11]சிநேகிதனாகிய ஆபிரகாமுடைய சந்ததிக்கு
என்றைக்குமென்று கொடுக்கவில்லையா? ஆத 8
லால் அவர்கள் இங்கே குடியிருந்து, இதிலே
உம்முடைய நாமத்திற்கென்று ஒரு பரிசுத்த
ஸ்தலத்தைக் கட்டினார்கள். எங்கள்மேல் பட் 9
டயம், நியாயதண்டனை, கொள்ளைநோய், பஞ்
சம் முதலான தீமைகள் வந்தால், [12]அப்பொ
ழுது உம்முடைய நாமம் இந்த ஆலயத்தில்
விளங்குகிறபடியால், நாங்கள் இந்த ஆலயத்
திலும் உமது சந்நிதியிலும் வந்து நின்று, எங்
கள் இடுக்கணில் உம்மை நோக்கிக் கூப்பிடு
கையில், தேவரீர் கேட்டு ரட்சிப்பீர் என்று
சொல்லியிருக்கிறார்கள். இப்போதும், இதோ, 10
இஸ்ரவேலர் எகிப்துதேசத்திலிருந்து வருகிற
போது, அம்மோன் புத்திரர், மோவாபியர்,
சேயீர் மலைத்தேசத்தாருடைய சீமைகள் வழி
யாய்ப் போக நீர் உத்தரவு கொடுக்கவில்லை;
[13]ஆகையால் அவர்களை விட்டு விலகி, அவர்
களை நாசப்படுத்தாதிருந்தார்கள். இப்போ 11
தும், இதோ, அவர்கள் எங்களுக்கு நன்மைக்
குத் தீமையைச் சரிக்கட்டி, [14]தேவரீர் எங்க
ளைச் சுதந்தரிக்கப்பண்ணின உம்முடைய
சுதந்தரத்திலிருந்து எங்களைத் துரத்திவிட வரு
கிறார்கள். எங்கள் தேவனே, அவர்களை [15]நீர் 12
நியாயந்தீர்க்கமாட்டீரோ? எங்களுக்கு விரோ
தமாக வந்த இந்த ஏராளமான கூட்டத்திற்கு
முன்பாக நிற்க எங்களுக்குப் பெலனில்லை;
நாங்கள் செய்யவேண்டியது இன்னதென்று

எங்களுக்குத் தெரியவில்லை; ஆகையால் எங்
கள் கண்கள் [1]உம்மையே நோக்கிக்கொண்டி
13 ருக்கிறது என்றான். யூதா கோத்திரத்தார்
அனைவரும், அவர்கள் குழந்தைகளும், அவர்
கள் பெண்சாதிகளும், அவர்கள் குமாரருங்
14 கூட **கர்த்தருக்கு** முன்பாக நின்றார்கள். அப்
பொழுது சபையின் நடுவிலிருக்கிற மத்தனி
யாவின் குமாரனாகிய ஏயெலின் மகனான
பெனாயாவுக்குப் பிறந்த சகரியாவின் புத்திரன்
யகாசியேல் என்னும் ஆசாப்பின் புத்திரரில்
ஒருவனான லேவியன்மேல் **கர்த்தருடைய** ஆவி
15 இறங்கினதினால் [2]அவன் சொன்னது: சகல
யூதா கோத்திரத்தாரே, எருசலேமின் குடிக
ளே, ராஜாவாகிய யோசபாத்தே, கேளுங்கள்;
நீங்கள் அந்த ஏராளமான கூட்டத்திற்குப்
பயப்படாமலும் கலங்காமலும் இருங்கள்
[3]என்று **கர்த்தர்** உங்களுக்குச் சொல்லுகிறார்,
இந்த யுத்தம் உங்களுடையதல்ல, தேவனு
16 டையது. நாளைக்கு நீங்கள் அவர்களுக்கு
விரோதமாய்ப் போங்கள்; இதோ, அவர்கள்
சிஸ் என்னும் மேட்டுவழியாய் வருகிறார்கள்;
நீங்கள் அவர்களை யெருவேல் வனாந்தரத்திற்கு
எதிரான பள்ளத்தாக்கின் கடையாந்தரத்திலே
17 கண்டு சந்திப்பீர்கள். இந்த யுத்தத்தைப் பண்
ணுகிறவர்கள் நீங்கள் அல்ல; யூதா மனுஷரே,
எருசலேம் ஜனங்களே, நீங்கள் தரித்துநின்று
**கர்த்தர்** உங்களுக்குச் செய்யும் ரட்சிப்பைப்
பாருங்கள்; பயப்படாமலும் கலங்காமலும்
இருங்கள்; [4]நாளைக்கு அவர்களுக்கு எதிராகப்
புறப்படுங்கள்; **கர்த்தர்** உங்களோடே இருக்
18 கிறார் என்றான். அப்பொழுது யோசபாத்
தரைமட்டும் முகங்குனிந்தான்; [5]சகல யூதா
கோத்திரத்தாரும் எருசலேமின் குடிகளும்
**கர்த்தரைப்** பணிந்துகொள்ளக் **கர்த்தருக்கு**
19 முன்பாகத்தாழவிழுந்தார்கள். கோகாத்தியரின்
புத்திரரிலும் கோராகியரின் புத்திரரிலும் இரு
ந்த லேவியர் எழுந்திருந்து, இஸ்ரவேலின்
தேவனாகிய **கர்த்தரை** மகா சத்தத்தோடே
20 கெம்பீரமாய்த் துதித்தார்கள். அவர்கள் அதி
காலமே எழுந்திருந்து, தெக்கொவாவின்
வனாந்தரத்திற்குப் போகப் புறப்பட்டார்கள்;
புறப்படுகையில் யோசபாத் நின்று யூதாவே,
எருசலேமின் குடிகளே, கேளுங்கள்; உங்கள்
தேவனாகிய **கர்த்தரை** நம்புங்கள், [6]அப்பொ
ழுது நிலைப்படுவீர்கள்; அவருடைய தீர்க்கதரி
சிகளை நம்புங்கள், அப்பொழுது சித்திபெறு
21 வீர்கள் என்றான். பின்பு அவன் ஜனத்தோ
டே ஆலோசனைபண்ணி, பரிசுத்தமுள்ள மக
த்துவத்தைத் துதிக்கவும், [7]ஆயுதம் அணிந்த
வர்களுக்கு முன்னாக நடந்துபோய், **கர்த்த**
**ரைத்** துதியுங்கள், அவர் கிருபை என்றும்
உள்ளதென்று **கர்த்தரைப்** பாடவும், பாட
22 கரை நிறுத்தினான். அவர்கள் பாடித் துதி
செய்யத் தொடங்கினபோது, யூதாவுக்கு வி
ரோதமாய் வந்து பதிவிருந்த அம்மோன் புத்
திரரையும், மோவாபியரையும், சேயீர் மலைத்
தேசத்தாரையும், ஒருவருக்கு விரோதமாய்
ஒருவரைக் **கர்த்தர்** எழும்பப்பண்ணினதி
னால் [8]அவர்கள் வெட்டுண்டு விழுந்தார்கள்.
எப்படியெனில், அம்மோன் புத்திரரும் மோ 23
வாபியரும், சேயீர் மலைத்தேசக் குடிகளைச்
சங்கரிக்கவும் அழிக்கவும் அவர்களுக்கு விரோ
தமாய் எழும்பினார்கள்; சேயீர் குடிகளை அழி
த்துத் தீர்ந்தபோது, தாங்களும் தங்களில் ஒரு
வரையொருவர் அழிக்கத்தக்கவிதமாய்க் கைக
லந்தார்கள். யூதா மனுஷர் வனாந்தரத்திலுள்ள 24
சாமக்கூட்டண்டையிலே வந்து, அந்த ஏரா
ளமான கூட்டமிருக்கும் திக்கை நோக்குகிற
போது, இதோ, அவர்கள் தரையிலே விழுந்
துகிடக்கிற பிரேதங்களாகக் கண்டார்கள்;
ஒருவரும் தப்பவில்லை. யோசபாத்தும் அவ 25
னுடைய ஜனங்களும் அவர்கள் உடைமை
களைக் கொள்ளையிட வந்தபோது, அவர்கள்
கண்ட ஏராளமான பொருள்களும் பிரேதங்
களிலிருந்து உரிந்துபோட்ட ஆடை ஆபர
ணங்களும், தாங்கள் எடுத்துக்கொண்டு போ
கக்கூடாதிருந்தது; மூன்றுநாளாய்க் கொள்
ளையிட்டார்கள்; அது அவ்வளவு மிகுதியா
யிருந்தது. நாலாம் நாளில் பெராக்காவிலே 26
கூடினார்கள்; அங்கே **கர்த்தருக்கு** ஸ்தோத்
திரம் செலுத்தினார்கள்; ஆதலால் அவ்விடத்
திற்கு இந்நாள்வரைக்கும் இருக்கிறபடி *பெ
ராக்கா என்னும் பேர் தரித்தார்கள். பின்பு 27
**கர்த்தர்** அவர்களை அவர்கள் சத்துருக்கள்
பேரில் களிகூரச் செய்தபடியால் [9]யூதா மனு
ஷர் யாவரும் எருசலேம் ஜனங்களும், அவர்
களுக்கு முன்னாலே யோசபாத்தும் மகிழ்ச்சி
யோடே எருசலேமுக்குத் திரும்பினார்கள்.
அவர்கள் தம்புருகளோடும் சுரமண்டலங்க 28
ளோடும் பூரிகைகளோடும் எருசலேமிலிருக்
கிற **கர்த்தருடைய** ஆலயத்திற்கு வந்தார்கள்.
**கர்த்தர்** இஸ்ரவேலின் சத்துருக்களோடு யுத்தம் 29
பண்ணினார் என்று கேள்விப்பட்ட அந்தந்தத்
தேசத்துராஜ்யத்தார்மேல் தேவனால் உண்டான
[10]பயங்கரம் வந்தது. இவ்விதமாய் தேவன் சுற் 30
றுப்புறத்தாரால் யுத்தமில்லாத இளைப்பாறுதலை
அவனுக்குக் கட்டளையிட்டதினால், [11]யோச
பாத்தின் ராஜ்யபாரம் அமரிக்கையாயிருந்தது.
யோசபாத் யூதாவை அரசாண்டான்; 31
அவன் ராஜாவாகிறபோது, [12]முப்பத்தைந்து
வயதாயிருந்து, இருபத்தைந்து வருஷம்
எருசலேமில் அரசாண்டான்; சில்கியின்
குமாரத்தியாகிய அவனுடைய தாயின்பேர்
அசுபாள். அவன் தன் தகப்பனாகிய ஆசா 32
வின் வழியிலே நடந்து, அதைவிட்டு விலகா
திருந்து, **கர்த்தரின்** பார்வைக்குச் செம்மை
யானதைச் செய்தான். ஆனாலும் மேடைகள் 33
தகர்க்கப்படவில்லை; ஜனங்கள் தங்கள் இரு
தயத்தைத் தங்கள் பிதாக்களின் தேவனுக்கு
இன்னும் [13]நேராக்காதிருந்தார்கள். யோச 34
பாத்தின் ஆதியந்தமான மற்ற வர்த்தமானங்
கள் [14]இஸ்ரவேல் ராஜாக்களின் புஸ்தகத்தில்
கண்டிருக்கிற அனானியின் குமாரனாகிய யெ
கூவின் வசனங்களில் எழுதியிருக்கிறது.

[1] சங். 123. 1, 2
[2] எண். 11. 25, 26
[3] யாத். 14. 13, 14. உபா. 1. 29, 30
[4] எண். 14. 9. ரோ. 8. 31
[5] யாத். 4. 31
[6] ஏசா. 7. 9. எபி. 11. 6
[7] 1 நாளா. 16. 29, 34
[8] நியா. 7. 22. 1 சாமு. 14. 20
* ஸ்தோத்திரப் பள்ளத்தாக்கு.
[9] நெகே. 12. 43
[10] 17. 10
[11] 15. 15. யோபு. 34. 29
[12] 1 இரா. 22. 41
[13] 12. 14; 19. 3
[14] 1 இரா. 16. 1, 7

35 அதற்குப்பின்பு யூதாவின் ராஜாவாகிய யோ
சபாத் [1]பொல்லாப்புச் செய்கிறவனான அகசி
யா என்னும் இஸ்ரவேலின் ராஜாவோடே
36 தோழமைபண்ணினான். தர்ஷீசுக்குப்போகும்
படிக்குக் கப்பல்களைச் செய்ய அவனோடே
கூடிக்கொண்டான்; அப்படியே எசியோன்
37 கேபேரிலே கப்பல்களைச் செய்தார்கள். மரே
சா ஊரானாகிய தொதாவாவின் குமாரனான
எலியேசர் யோசபாத்துக்கு விரோதமாகத்
தீர்க்கதரிசனம் சொல்லி: நீர் அகசியாவோ
டே கூடிக்கொண்டபடியினால், **கர்த்தர்** உம்
முடைய கிரியைகளை முறித்துப் போட்டார்
என்றான்; அந்தக் கப்பல்கள் உடைந்துபோ
யிற்று, [2]அவர்கள் தர்ஷீசுக்குப் போகக்கூடா
மற்போயிற்று.

**21** யோசபாத் தன் பிதாக்களோடே நித்
திரையடைந்து, [3]தாவீதின் நகரத்தில் தன்
பிதாக்களண்டையிலே அடக்கம்பண்ணப்பட்
டான்; அவன் ஸ்தானத்திலே அவன் குமார
2 னாகிய யோராம் ராஜாவானான். அவனுக்கு
யோசபாத்தின் குமாரராகிய அசரியா, எகி
யேல், சகரியா, அசரியா, மிகாவேல், செப்
பத்தியா என்னும் சகோதரர் இருந்தார்கள்;
இவர்கள் எல்லாரும் இஸ்ரவேலின் ராஜா
3 வாகிய யோசபாத்தின் குமாரர். அவர்களு
டைய தகப்பன் வெள்ளியும் பொன்னும் உச்
சிதங்களுமான அநேகம் நன்கொடைகளையும்,
யூதாவிலே அரணான பட்டணங்களையும் அவர்
களுக்குக் கொடுத்தான்; [4]யோராம் ஜேஷ்ட
புத்திரனானபடியினால், அவனுக்கு ராஜ்யத்
4 தைக் கொடுத்தான். யோராம் தன் தகப்ப
னுடைய ராஜ்யபாரத்திற்கு வந்து தன்னைப்
பலப்படுத்திக்கொண்ட பின்பு, அவன் தன்னு
டைய சகோதரர் எல்லாரையும் இஸ்ரவேலின்
பிரபுக்களில் சிலரையும் பட்டயத்தால் கொன்
5 றுபோட்டான். யோராம் ராஜாவாகிறபோது,
முப்பத்திரண்டு வயதாயிருந்து, [5]எட்டு வரு
6 ஷம் எருசலேமில் அரசாண்டான். அவன்
இஸ்ரவேல் ராஜாக்களின் வழியிலே நடந்து,
ஆகாபின் வீட்டார் செய்ததுபோலச் செய்
தான்; ஆகாபின் குமாரத்தி அவனுக்கு மனை
வியாயிருந்தாள்; [6]அவன் **கர்த்தரின்** பார்வைக்
7 குப் பொல்லாப்பானதைச் செய்தான். **கர்த்**
**தர்** தாவீதுக்கும் அவன் குமாரருக்கும் என்
றென்றைக்கும் ஒரு விளக்கைக் கட்டளையிடு
வேன் என்று சொல்லி, [7]அவனோடே பண்
ணின உடன்படிக்கையினிமித்தம் தாவீதின்
வம்சத்தை அழிக்கச் சித்தமில்லாதிருந்தார்.
8 அவன் நாட்களில் யூதாவுடைய கையின்கீழி
ருந்த ஏதோமியர் கலகம்பண்ணி, [8]தங்களுக்கு
ஒரு ராஜாவை ஏற்படுத்திக்கொண்டார்கள்.
9 அதினால் யோராம் தன் பிரபுக்களோடும் தன்
சகல ரதங்களோடும் புறப்பட்டுப் போனான்;
அவன் ராத்திரியில் எழுந்திருந்து, தன்னை
வளைந்துகொண்ட ஏதோமியரையும் ரதங்க
10 ளின் தலைவரையும் முறிய அடித்தான். ஆகி
லும் யூதாவுடைய கையின்கீழிருந்த ஏதோமி
யர் இந்நாள்வரைக்கும் இருக்கிறதுபோல,
கலகம்பண்ணிப் பிரிந்தார்கள்; அவன் தன்
பிதாக்களின் தேவனாகிய **கர்த்தரை** விட்ட
படியினால், அக்காலத்திலே லீப்னாபட்டணத்
தாரும் கலகம்பண்ணினார்கள். அவன் யூதா 11
வுடைய மலைகளின்மேல் மேடைகளை உண்
டாக்கி, எருசலேமின் குடிகளைச் சோரம்
போகப் பண்ணி, [9]யூதாவையும் அதற்கு ஏவி
விட்டான். அப்பொழுது தீர்க்கதரிசியாகிய 12
எலியா எழுதின ஒரு நிருபம் அவனிடத்
திற்கு வந்தது; [10]அதில்: உம்முடைய தகப்ப
னான தாவீதின் தேவனாகிய **கர்த்தர்** உரைக்
கிறது என்னவென்றால், நீ உன் தகப்பனாகிய
யோசபாத்தின் வழிகளிலும், யூதாவின் ராஜா
வாகிய ஆசாவின் வழிகளிலும் நடவாமல்,
இஸ்ரவேல் ராஜாக்களின் வழியிலே நடந்து, 13
ஆகாபுடைய குடும்பத்தின் சோரமார்க்கத்
திற்கு ஒத்தபடியே யூதாவையும் எருசலேமின்
குடிகளையும் சோரம்போகப்பண்ணி, [11]உன்
னைப்பார்க்கிலும் நல்லவர்களாயிருந்த உன்
தகப்பன் வீட்டாரான உன் சகோதரரையும்
கொன்றுபோட்டபடியினால், இதோ, **கர்த்** 14
**தர்** உன் ஜனத்தையும், உன் பிள்ளைகளையும்,
உன் மனைவிகளையும், உனக்கு உண்டான
எல்லாவற்றையும் மகா வாதையாக வாதிப்
பார். நீயோ உனக்கு உண்டாகும் குடல் 15
நோயினால் உன் குடல்கள் நாளுக்குநாள் இற்று
விழுமட்டும் கொடிய வியாதியினால் வாதிக்கப்
படுவாய் என்று எழுதியிருந்தது. அப்படியே 16
**கர்த்தர்** பெலிஸ்தரின் ஆவியையும், எத்தி
யோப்பியாவுக்கடுத்த தேசத்தாரான அரபிய
ரின் ஆவியையும் யோராமுக்கு விரோதமாக
[12]எழுப்பினார். அவர்கள் யூதாவில் வந்து, 17
பலாத்காரமாய்ப் புகுந்து, ராஜாவின் அரமனை
யில் அகப்பட்ட எல்லாப் பொருள்களையும்,
அவன் பிள்ளைகளையும், அவன் மனைவிகளை
யும் பிடித்துக்கொண்டு போனார்கள்; யோவா
காஸ் என்னும் அவன் குமாரரில் இளையவனை
அல்லாமல் ஒரு குமாரனும் அவனுக்கு மீதி
யாக வைக்கப்படவில்லை. இவைகள் எல்லா 18
வற்றிற்கும் பிற்பாடு **கர்த்தர்** அவன் குடல்
களில் உண்டான தீராதநோயினால் [13]அவனை
வாதித்தார். அப்படி நாளுக்குநாள் இருந்து, 19
இரண்டு வருஷம் முடிகிறகாலத்தில் அவ
னுக்கு உண்டான நோயினால் அவன் குடல்
கள் சரிந்து கொடிய வியாதியினால் செத்துப்
போனான்; அவனுடைய பிதாக்களுக்காகக்
கந்தவர்க்கங்களைக் கொளுத்தினதுபோல், [14]அவ
னுடைய ஜனங்கள் அவனுக்காகக் கொளுத்த
வில்லை. அவன் ராஜாவாகிறபோது முப்பத்திர 20
ண்டு வயதாயிருந்து, எட்டு வருஷம் எருசலே
மில் அரசாண்டு, விரும்புவாரில்லாமல் [15]இறந்
துபோனான்; அவனைத் தாவீதின் நகரத்தில்
அடக்கம்பண்ணினார்கள்; ஆனாலும் ராஜாக்க
ளின் கல்லறைகளில் அவனை வைக்கவில்லை.

எருசலேமின் குடிகள், அவன் இளைய **22**
குமாரனாகிய அகசியாவை அவன் ஸ்தானத்

[1] 1 இரா. 22. 48, 49
[2] 9. 21
[3] 1 இரா. 22. 50
[4] 2 இரா. 8. 16
[5] 2 இரா. 8. 17
[6] 22. 2
[7] 2 சாமு. 7. 12, 13. 1 இரா. 11. 36
[8] 1 இரா. 8. 20. ழ
[9] லேவி. 17. 7; 20. 5
[10] 2 இரா. 2. 1
[11] யாத். 34. 15. உபா. 31. 16. 1 இரா. 16. 31-33
[12] 1 இரா. 11. 14, 23
[13] 2 இரா. 9. 29
[14] 16. 14
[15] எரே. 22. 18

தில் ராஜாவாக்கினார்கள்; [1]அரபியரோடே
கூடவந்து பாளயமிறங்கின தண்டிலிருந்தவர்
கள் மூத்தகுமாரரையெல்லாம்கொன்றுபோட்
டார்கள்; இவ்விதமாய் அகசியா என்னும் யூதா
வின் ராஜாவாகிய யோராமின் குமாரன் அர
2 சாண்டான். அகசியா ராஜாவாகிறபோது
இருபத்திரண்டு வயதாயிருந்து, ஒரு வருஷம்
எருசலேமில் அரசாண்டான்; ஒம்ரியின் குமா
ரத்தியாகிய அவன் தாயின்பேர் [2]அத்தலி
3 யாள். அவனும் ஆகாப் குடும்பத்தாரின் வழி
களில் நடந்தான்; துன்மார்க்கமாய் நடக்க,
அவனுடைய தாய் அவனுக்கு ஆலோசனைக்
4 காரியாயிருந்தாள். அவன் ஆகாபின் குடும்
பத்தாரைப்போல் கர்த்தரின் பார்வைக்குப்
பொல்லாப்பானதைச்செய்தான்; அவன் தகப்
பன் சென்றுபோனபின்பு, அவர்கள் அவனுக்
குக் கேடாக அவனுடைய ஆலோசனைக்கா
5 ராயிருந்தார்கள். அவர்களுடைய ஆலோச
னைக்கு உட்பட்டவனாய், அவன் இஸ்ரவே
லின் ராஜாவாகிய யோராம் என்னும் ஆகா
பின் குமாரனோடேகூட, [3]கீலேயாத்திலுள்ள
ராமோத்திற்குச்சீரியாவின்ராஜாவாகியஆசகே
லுக்கு விரோதமாக யுத்தம்பண்ணப் போனான்;
அங்கே சீரியர் யோராமைக் காயப்படுத்தினார்
6 கள். அப்பொழுது தான் சீரியாவின் ராஜா
வாகிய ஆசகேலோடு யுத்தம்பண்ணுகையில்,
தன்னை அவர்கள் ராமாவிலே வெட்டின
காயங்களையெஸ்ரெயேலிலே ஆற்றிக்கொள்ள
அவன் திரும்பினான்; [4]அப்பொழுது ஆகாபின்
குமாரனாகிய யோராம் வியாதியாயிருந்தபடியி
னால் யூதாவின் ராஜாவாகிய யோராமின் குமா
ரன் அகசியா, யெஸ்ரெயேலிலிருக்கிற அவ
7 னைப் பார்க்கிறதற்குப் போனான். அகசியா
யோராமிடத்துக்கு வந்தது அவனுக்கு தேவ
னால் உண்டான கேடாக லபித்தது; [5]எப்படி
யென்றால், அவன் வந்தபோது யோராமுட
னேகூட, கர்த்தர் ஆகாபின் குடும்பத்தாரைச்
சங்கரிக்க அபிஷேகம் பண்ணுவித்த நிம்சி
யின் குமாரனாகிய யெகூவுக்கு நேராக வெளி
8 யே போனான். யெகூ, ஆகாபின் குடும்பத்தா
ருக்கு ஆக்கினை நடப்பிக்கும்போது, [6]அவன்
அகசியாவைச் சேவிக்கிற யூதாவின் பிரபுக்க
ளையும், அகசியாவுடைய சகோதரரின் குமார
ரையும் கண்டுபிடித்துக் கொன்றுபோட்டான்.
9 பின்பு அவன் அகசியாவைத் தேடினான்;
[7]சமாரியாவில் ஒளித்துக்கொண்டிருந்த
அவனை அவர்கள் பிடித்து, யெகூவினிடத்தில்
கொண்டுவந்து, அவனைக் கொன்றுபோட்டு:
இவன் தன் முழு இருதயத்தோடும் கர்த்த
ரைத்தேடின யோசபாத்தின் குமாரன் என்று
சொல்லி, அவனை அடக்கம்பண்ணினார்கள்;
அப்படியே அரசாளுகிறதற்குப்பெலன்கொள்
ளத்தக்க ஒருவரும அகசியாவின் குடும்பத்
திற்கு இல்லாமற்போயிற்று.
10 அகசியாவின் தாயாகிய அத்தலியாள் தன்
குமாரன் இறந்துபோனதைக் கண்டபோது,
[8]அவள் எழும்பி, யூதா குடும்பத்திலுள்ள ராஜ

[1] 2 இரா. 8. 24. ழ
[2] 21. 6
[3] 2 இரா. 8. 28. ழ
[4] 2 இரா. 9. 15
[5] சங். 14. 4. 1 இரா. 12. 15
[6] 2 இரா. 10. 10-14
[7] 2 இரா. 9. 27
[8] 2இரா. 11. 1. ழ
[9] 2இரா. 11. 4. ழ
[10] 2 சாமு. 7. 12. 1 இரா. 2. 4
[11] 1 நாளா. 9. 25
[12] 1 நாளா. 23. 28, 29

வம்சமான யாவரையும் சங்காரம்பண்ணினாள்.
ராஜாவின் குமாரத்தியாகிய யோசேபியாத், 11
கொன்றுபோடப்படுகிற ராஜகுமாரருக்குள்
இருக்கிற அகசியாவின் ஆண்பிள்ளையாகிய
யோவாசைக் களவாயெடுத்துக்கொண்டு, அவ
னையும் அவன் தாதியையும் சயனவீட்டிலே
வைத்தாள்; அப்படியே அத்தலியாள் அவனைக்
கொன்றுபோடாதபடிக்கு, ராஜாவாகிய யோ
ராமின் குமாரத்தியும் ஆசாரியனாகிய யோய்
தாவின் பெண்சாதியுமாகிய யோசேபியாத்
அவனை ஒளித்துவைத்தாள்; அவள் அகசியா
வின் சகோதரியாயிருந்தாள். இவர்களோடு 12
அவன் ஆறுவருஷமாய்க் கர்த்தருடைய ஆல
யத்திலே ஒளித்துவைக்கப்பட்டிருந்தான்; அத்
தலியாள் தேசத்தின்மேல் ராஜ்யபாரம் பண்
ணினாள்.

ஏழாம் வருஷத்திலே யோய்தா திடன் 23
கொண்டு, [9]நூறுபேருக்கு அதிபதிகளாகிய
எரோகாமின் குமாரன் அசரியாவையும், யோ
கனானின் குமாரன் இஸ்மவேலையும், ஓபே
தின் குமாரன் அசரியாவையும், ஆதாயாவின்
குமாரன் மாசெயாவையும், சிக்ரியின் குமா
ரன் எலிஷாபாத்தையும் தன் உடன்படிக்
கைக்கு உட்படுத்தினான். அவர்கள் யூதா 2
விலே சுற்றித்திரிந்து, யூதாவின் பட்டணங்
களிலெல்லாம் இருக்கிற லேவியரையும், இஸ்
ரவேலுடைய பிதாக்களின் வம்சத்தலைவரை
யும் கூட்டிக்கொண்டு எருசலேமுக்கு வந்தார்
கள். அந்தச் சபையார் எல்லாரும் தேவனு 3
டைய ஆலயத்தில் ராஜாவோடே உடன்படிக்
கைசெய்தார்கள்; யோய்தா அவர்களைநோக்கி:
இதோ, கர்த்தர் தாவீதின் குமாரரைக்குறித்
துச் சொன்னபடியே [10]ராஜாவின் குமாரன்
ராஜாவாகவேண்டும். நீங்கள் செய்யவேண் 4
டிய காரியம் என்னவென்றால், இவ்வாரத்தில்,
[11]முறைப்படி வருகிற ஆசாரியரும் லேவியரு
மான உங்களில் மூன்றில் ஒருபங்கு ஒலிமுக
வாசல்களையும், மூன்றில் ஒருபங்கு ராஜா 5
வின் அரமனையையும், மூன்றில் ஒருபங்கு
அஸ்திபார வாசலையும் காக்கவும், ஜனங்க
ளெல்லாம் கர்த்தருடைய ஆலயப் பிராகாரங்
களில் இருக்கவும் வேண்டும். ஆசாரியரும் 6
லேவியரில் ஊழியம் செய்கிறவர்களும் தவிர,
ஒருவரும் கர்த்தருடைய ஆலயத்திற்குள் பிர
வேசிக்கவேண்டாம்; அவர்களே உட்பிரவேசிப்
பார்களாக; [12]அவர்கள் பரிசுத்தமாக்கப்பட்ட
வர்கள்; ஜனங்களெல்லாரும் கர்த்தருடைய
காவலைக் காப்பார்களாக. லேவியர் அவரவர் 7
தங்கள் ஆயுதங்களைத் தங்கள் கையிலே பிடித்
துக்கொண்டவர்களாய், ராஜாவைச் சுற்றிலும்
வரிசையாய் நின்றுகொண்டிருக்கவேண்டும்;
ஆலயத்துக்குட்படுகிற எவனும் கொலைசெய்
யப் படக்கடவன்; ராஜா உட்பிரவேசிக்கிற
போதும் வெளியே புறப்படுகிறபோதும் நீங்
கள் அவரோடே இருங்கள் என்றான். ஆசா 8
ரியனாகிய யோய்தா கட்டளையிட்டபடியெல்
லாம் லேவியரும் யூதா கோத்திரத்தார் அனை

வரும் செய்து, அவரவர் அவ்வாரத்து முறைப்
படி வருகிறவர்களும், முறைதீர்ந்து போகிற
வர்களுமான தம்தம் மனுஷரைக் கூட்டிக்
கொண்டு போனார்கள்; [1]வகுப்புகள் பிரிந்து
போக ஆசாரியனாகிய யோய்தா உத்தரவு கொ
9 டுக்கவில்லை. தாவீதுராஜா தேவனுடைய ஆல
யத்தில் வைத்திருந்த ஈட்டிகளையும் கேடகங்க
ளையும் பரிசைகளையும் ஆசாரியனாகிய யோய்
தா நூறுபேருக்கு அதிபதியினிடத்தில் கொ
10 டுத்து, அவரவர் தங்கள் ஆயுதங்களைக் கை
யிலே பிடித்துக்கொண்டவர்களாய் ஆலயத்
தின் வலதுபக்கந் தொடங்கி, ஆலயத்தின்
இடதுபக்கமட்டும், பலிபீடத்திற்கும் ஆலயத்
திற்கும் எதிரே ராஜாவைச் சுற்றிலும் நிற்க
11 ஜனங்களையெல்லாம் நிறுத்தினான். பின்பு
ராஜகுமாரனை வெளியே கொண்டுவந்து, கிரீ
டத்தை அவன்மேல் வைத்து, சாட்சியின் ஆக
மத்தை அவன் கையிலே கொடுத்து, [2]அவனை
ராஜாவாக்கினார்கள்; யோய்தாவும் அவன் குமா
ரரும் அவனை அபிஷேகம் பண்ணி, ராஜா
12 வாழ்க என்றார்கள். ஜனங்கள் ஓடிவந்து,
ராஜாவைப் புகழுகிற சத்தத்தை அத்தலியாள்
கேட்டபோது, அவள் **கர்த்தருடைய** ஆலயத்
13 திற்கு ஜனங்களிடத்தில் வந்து, இதோ, நடை
யிலுள்ள தன்னுடைய தூணண்டையிலே
ராஜா நிற்கிறதையும், ராஜாவண்டையில் நிற்
கிற பிரபுக்களையும், எக்காளம் ஊதுகிறவர்க
ளையும், தேசத்து ஜனங்களெல்லாரும் சந்தோ
ஷப்பட்டு எக்காளங்கள் ஊதுகிறதையும், கீத
வாத்தியங்களைப் பிடித்துக்கொண்டு பாடக
ரும் சங்கீதத்தலைவரும் துதிக்கிறதையும் கண்
டாள்; அப்பொழுது அத்தலியாள் தன் வஸ்தி
ரங்களைக் கிழித்துக்கொண்டு: [3]துரோகம்
14 துரோகம் என்று கூவினாள். ஆசாரியனாகிய
யோய்தா ராணுவத்தலைவராகிய நூறுபேருக்கு
அதிபதிகளானவர்களை வெளியே அழைத்து,
அவர்களை நோக்கி: இவளை வரிசைக்குப்
புறம்பே கொண்டுபோங்கள்; இவளைப் பின்
பற்றுகிறவனைப் பட்டயத்தால் வெட்டிப்போ
டுங்கள் என்றான். **கர்த்தரின்** ஆலயத்திலே
அவளைக் கொன்றுபோடாதேயுங்கள் என்று
15 ஆசாரியன் சொல்லியிருந்தான். அவர்கள்
அவளுக்கு இடமுண்டாக்கினபோது, அவள்
ராஜாவின் அரமனையிலிருக்கிற குதிரைகளின்
வாசலுக்குள் [4]பிரவேசிக்கும் இடமட்டும் போ
னாள்; அங்கே அவளைக் கொன்றுபோட்
டார்கள்.
16 அப்பொழுது யோய்தா தாங்கள் **கர்த்தரு
டைய** ஜனமாயிருக்கும்படிக்கு, தானும் சகல
ஜனங்களும் ராஜாவும் உடன்படிக்கை பண்
17 ணிக்கொள்ளும்படி செய்தான். அப்பொழுது
ஜனங்களெல்லாரும் பாகாலின் கோவிலுக்
குப் போய், அதை இடித்து, அதின் பலிபீ
டங்களையும், அதின் விக்கிரகங்களையும் தகர்
த்து, பாகாலின் பூசாசாரியாகிய [5]மாத்தானைப்
பலிபீடங்களுக்கு முன்பாகக் கொன்றுபோட்
18 டார்கள். தாவீது கட்டளையிட்டபிரகாரம் சந்

[1] 1 நாளா. 24, 25. அதி.
[2] உபா. 17. 18-20
[3] 1 நாளா. 25,6-8
[4] செகே. 3. 28
[5] உபா. 18. 9
[6] எண். 28. 2. 1 நாளா. 25,2,6
[7] 2 இரா. 11. 19
[8] 2 இரா. 11. 21; 12. 1. மு
[9] 26. 5
[10] 2 இரா. 12. 4. மு
[11] யாத். 30. 12-16. எண். 1. 50. அப். 7. 44
[12] 21. 17

தோஷத்தோடும் சங்கீதத்தோடும் **கர்த்தரின்**
சர்வாங்க தகனபலிகளை மோசேயின் நியாயப்
பிரமாணத்தில் எழுதியிருக்கிறபடியே செலுத்
தத்தக்கதாக, [6]யோய்தா **கர்த்தருடைய** ஆலயத்
தை விசாரிக்கும் உத்தியோகங்களைத் தாவீது
**கர்த்தருடைய** ஆலயத்துக்கென்று பகுத்து
வைத்த லேவியரான ஆசாரியர்களின் கை
யில் ஒப்புவித்து, யாதொரு காரியத்தினால் 19
தீட்டுப்பட்டவன் **கர்த்தருடைய** ஆலயத்திற்
குள் பிரவேசியாதபடிக்கு, அதின் வாசல்க
ளுக்குக் காவலாளரை நிறுத்தினான். நூறு 20
பேருக்கு அதிபதிகளையும், பெரியவர்களையும்,
ஜனத்தை ஆளுகிறவர்களையும், தேசத்து சம
ஸ்த ஜனங்களையும் கூட்டிக்கொண்டு, [7]ராஜா
வைக் **கர்த்தருடைய** ஆலயத்திலிருந்து இறங்
கப்பண்ணி, உயர்ந்த வாசல்வழியாய் ராஜ
அரமனைக்குள் அழைத்துவந்து அரசாளும்
சிங்காசனத்தின்மேல் ராஜாவை உட்காரப்
பண்ணினார்கள். தேசத்து ஜனங்களெல்லா 21
ரும் மகிழ்ந்தார்கள்; அத்தலியாளைப் பட்ட
யத்தால் கொன்றபின்பு நகரம் அமரிக்கையா
யிற்று.

யோவாஸ் ராஜாவாகிறபோது ஏழு வய **24**
தாயிருந்து, [8]நாற்பது வருஷம் எருசலேமில்
அரசாண்டான்; பெயெர்செபா பட்டணத்
தாளான அவன் தாயின்பேர் சிபியாள். ஆசா 2
ரியனாகிய யோய்தாவின் நாளெல்லாம் [9]யோ
வாஸ் **கர்த்தரின்** பார்வைக்குச் செம்மையான
தைச் செய்தான். அவனுக்கு யோய்தா 3
இரண்டு ஸ்திரீகளை விவாகஞ்செய்து கொடுத்
தான்; அவர்களால் குமாரரையும் குமாரத்தி
களையும் பெற்றான். அதற்குப் பின்பு **கர்த்த** 4
**ருடைய** ஆலயத்தைப் புதுப்பிக்க யோவாஸ்
விருப்பங்கொண்டான். அவன் ஆசாரியரை 5
யும் லேவியரையும் கூடிவரச்செய்து, அவர்
களை நோக்கி: [10]நீங்கள் யூதா பட்டணங்களுக்
குப் புறப்பட்டுப்போய், உங்கள் தேவனு
டைய ஆலயத்தை வருஷா வருஷம் பழுது
பார்க்கிறதற்கு, இஸ்ரவேலெங்கும் பணம்
சேகரியுங்கள்; இந்தக் காரியத்தைத் தாமதமில்
லாமல் செய்யுங்கள் என்றான்; ஆனாலும்
லேவியர் தாமதம் பண்ணினார்கள். அப்பொ 6
ழுது ராஜா யோய்தா என்னும் தலைவனை
அழைப்பித்து: சாட்சியின் வாசஸ்தலத்துக்
குக் கொடுக்க, [11]**கர்த்தரின்** தாசனாகிய மோ
சே கட்டளையிட்ட வரியை யூதாவினிடத்தி
லும், எருசலேமியரிடத்திலும், இஸ்ரவேல்
சபையாரிடத்திலும் வாங்கிவருகிறதற்கு, லே
வியரை நீர் விசாரியாமற் போனதென்ன?
அந்தப் பொல்லாத ஸ்திரீயாகிய அத்தலியா 7
ளுடைய மக்கள் [12]தேவனுடைய ஆலயத்தைப்
பலவந்தமாய்த் திறந்து, **கர்த்தருடைய** ஆலயத்
திலுள்ள பிரதிஷ்டை பண்ணப்பட்ட வை
களையெல்லாம் பாகால்களுக்காகச் செலவு
பண்ணிப் போட்டார்களே என்றான். அப் 8
பொழுது ராஜாவின் சொற்படி ஒரு பெட்டி
யை உண்டாக்கி, அதைக் **கர்த்தருடைய** ஆல

9 யத்து வாசலுக்குப் புறம்பே வைத்து, **கர்த்த
ரின்** தாசனாகிய மோசே வனாந்தரத்தில் இஸ்ர
வேலுக்குக் கட்டளையிட்ட வரியைக் **கர்த்த
ருக்குக்** கொண்டுவாருங்கள் என்று யூதாவி
லும் எருசலேமிலும் பறைசாற்றுவித்தார்கள்.
10 அப்பொழுது எல்லாப் பிரபுக்களும் எல்லா
ஜனங்களும் சந்தோஷமாய்க் கொண்டுவந்து
11 பெட்டிநிறைய அதிலே போட்டார்கள். வெ
குபணம் உண்டென்று கண்டு, லேவியர் கை
யால் அந்தப் பெட்டி ராஜாவின் விசாரிப்புக்
காரர் அண்டையிலே கொண்டுவரப் படும்
போது, [1]ராஜாவின் சம்பிரதியும் பிரதான ஆசா
ரியனுடைய விசாரிப்புக்காரனும் வந்து, பெ
ட்டியிலிருக்கிறதைக் கொட்டியெடுத்து,
அதைத் திரும்ப அதின் ஸ்தானத்திலே வைப்
பார்கள்; இப்படி நாளுக்குநாள் செய்து மிகு
12 ந்த பணத்தைச் சேர்த்தார்கள். அதை ராஜா
வும் யோய்தாவும் **கர்த்தருடைய** ஆலயத்தின்
வேலையை விசாரிக்கும் ஊழியக்காரர் கையி
லே கொடுத்தார்கள்; அதினால் அவர்கள் **கர்த்
தருடைய** ஆலயத்தைப் புதுப்பிக்கும்படி, கல்
தச்சரையும் தச்சரையும், **கர்த்தருடைய** ஆல
யத்தைப் பழுதுபார்க்கும்படி கொற்றரையும்
கன்னாரையும் கூலிக்கு அமர்த்திக்கொண்டார்
13 கள். அப்படி வேலையை விசாரிக்கிறவர்கள்
தங்கள் கையினாலே வேலையை நடந்தேறப்
பண்ணி, தேவனுடைய ஆலயத்தை அதின்
முந்தின சீருக்குக் கொண்டுவந்து அதைப்
14 பலப்படுத்தினார்கள். அதை முடித்துத் தீர்ந்த
பின்பு, [2]மீந்த பணத்தை ராஜாவுக்கும் யோய்
தாவுக்கும் முன்பாகக் கொண்டுவந்தார்கள்;
அதினாலே **கர்த்தருடைய** ஆலயத்தில் செய்
யப்படும் பணிமுட்டுகளையும், ஆராதனை பலி
முதலியவைகளுக்கு வேண்டிய பணிமுட்டு
களையும், கலசங்களையும் பொற்பாத்திரங்களை
யும், வெள்ளிப்பாத்திரங்களையும் பண்ணுவித்
தான்; யோய்தாவின் நாளெல்லாம் நித்தம்
**கர்த்தருடைய** ஆலயத்திலே சர்வாங்க தகன
15 பலிகளைச் செலுத்திவந்தார்கள். யோய்தா
தீர்க்காயுசுள்ளவனாய் முதிர்வயதில் மரித்
தான்; அவன் மரணமடைகிறபோது நூற்று
16 முப்பதுவயதாயிருந்தான். அவன் தேவனுக்
காகவும் அவருடைய ஆலயத்திற்காகவும் இஸ்
ரவேலுக்கு நன்மை செய்தபடியினால், அவ
னைத் தாவீதின் நகரத்தில் ராஜாக்களண்டை
17 யிலே அடக்கம்பண்ணினார்கள். யோய்தா
மரணமடைந்தபின்பு யூதாவின் பிரபுக்கள்
வந்து, ராஜாவைப் பணிந்துகொண்டார்கள்;
அப்பொழுது ராஜா அவர்களுக்குச் செவிகொ
18 டுத்தான். அப்படியே அவர்கள் தங்கள் பிதாக்
களின் தேவனாகிய **கர்த்தரின்** ஆலயத்தை
விட்டுவிட்டு, தோப்பு விக்கிரகங்களையும் சிலை
களையும் சேவித்தார்கள்; அப்பொழுது அவர்
கள் செய்த இந்தக் குற்றத்தினிமித்தம் யூதா
வின்மேலும் எருசலேமின்மேலும் [3]கடுங்கோ
19 பம் மூண்டது. அவர்களைத் தம்மிடத்திற்குத்
திரும்பப்பண்ணக் **கர்த்தர்** அவர்களிடத்திலே
தீர்க்கதரிசிகளை அனுப்பினார்; [4]அவர்கள் ஜன
ங்களைத் திடச்சாட்சியாகக் கடிந்துகொண்
டார்கள்; [5]ஆனாலும் அவர்கள் செவி கொடுக்க
வில்லை. அப்பொழுது தேவனுடைய ஆவி 20
ஆசாரியனாகிய யோய்தாவின் குமாரனான
சகரியாவின்மேல் இறங்கினதினால், [6]அவன்
ஜனத்திற்கு எதிரே நின்று: நீங்கள் **கர்த்தரு
டைய** கற்பனைகளை மீறுகிறது என்ன? [7]இதி
னால் நீங்கள் சித்திபெறமாட்டீர்கள் என்று
தேவன் சொல்லுகிறார்; நீங்கள் **கர்த்தரை**
விட்டுவிட்டதினால் அவர் உங்களைக் கைவிடு
வார் [8]என்றான். அதினால் அவர்கள் அவ 21
னுக்கு விரோதமாய்க் கட்டுப்பாடுபண்ணி,
**கர்த்தருடைய** ஆலயப்பிராகாரத்தில் ராஜாவி
னுடைய கற்பனையின்படி அவனைக் கல்லெ
றிந்து [9]கொன்றார்கள். அப்படியே அவனு 22
டைய தகப்பனாகிய யோய்தா தனக்குச் செய்த
தயையை ராஜாவாகிய யோவாஸ் நினையாமல்
அவனுடைய குமாரனைக் கொன்றுபோட்
டான்; இவன் சாகும்போது: **கர்த்தர்** அதைப்
பார்ப்பார், அதைக் கேட்பார் [10]என்றான்.
மறு வருஷத்திலே சீரியாவின் சேனைகள் 23
அவனுக்கு விரோதமாக யூதாவிலும் எருசலே
மிலும் வந்து, ஜனத்திலிருக்கிற பிரபுக்களை
யெல்லாம் அழித்து, கொள்ளையிட்ட அவர்
கள் உடைமைகளையெல்லாம் தமஸ்குவின்
ராஜாவுக்கு அனுப்பினார்கள். சீரியாவின் 24
சேனை சிறுகூட்டமாய் வந்திருந்தாலும், [11]அவர்
கள் தங்கள் பிதாக்களின் தேவனாகிய **கர்த்த
ரை** விட்டுவிட்டபடியினால், **கர்த்தர்** மகா
பெரிய சேனையை அவர்கள் கையில் ஒப்புக்
கொடுத்தார்; அவர்கள் யோவாசுக்கு தண்டனை
செய்தார்கள். அவர்கள் அவனை மகா வேத 25
னைக்குள்ளானவனாக விட்டுப்போனார்கள்;
அவர்கள் புறப்பட்டுப் போனபின்பு, [12]அவனு
டைய ஊழியக்காரர் ஆசாரியனாகிய யோய்தா
வுடைய குமாரரின் ரத்தப்பழியினிமித்தம்,
அவனுக்கு விரோதமாய்க் கட்டுப்பாடு பண்
ணி, அவன் படுக்கையிலே அவனைக் கொன்
றுபோட்டார்கள்; செத்துப்போன அவனைத்
தாவீதின் நகரத்தில் அடக்கம்பண்ணினார்கள்;
ஆனாலும் ராஜாக்களின் கல்லறைகளில் அவ
னை வைக்கவில்லை. அவனுக்கு விரோதமாகக் 26
கட்டுப்பாடு பண்ணினவர்கள், அம்மோனிய
ஸ்திரீயான சிமாத்தின் குமாரனாகிய சாபாத்
தும், மோவாப் ஸ்திரீயான சிம்ரீத்தின் குமார
னாகிய யோசபாத்துமே. அவன் குமாரரைப் 27
பற்றியும், அவன்மேல் சுமந்த பெரிய பாரத்
தைப்பற்றியும், தேவனுடைய ஆலயத்தை
அவன் பலப்படுத்தினதைப்பற்றியும் ராஜாக்
களின் புஸ்தகமான சரித்திரத்தில் எழுதி
யிருக்கிறது; அவன் குமாரனாகிய அமத்சியா
அவன் ஸ்தானத்தில் ராஜாவானான்.

**25** அமத்சியா இருபத்தைந்தாம் வயதிலே
ராஜாவாகி, [13]இருபத்தொன்பது வருஷம்
எருசலேமில் அரசாண்டான்; எருசலேம்
நகரத்தாளாகிய அவனுடைய தாயின்பேர்

[1] 2 இரா. 12. 10
[2] 2 இரா. 12. 13
[3] நிபா. 5. 8. ஓசி. 5. 10, 14. செப். 1. 4-6. எபே. 5. 6
[4] எரே. 7. 25, 26
[5] சங். 95. 7, 8. அப். 7. 51
[6] நிபா. 6. 34
[7] எண். 14. 41
[8] 15. 2
[9] மத். 23. 35. அப். 7. 58, 59
[10] சங். 10. 14. எரே. 51. 56. லூக். 11. 51. 2 கொரி. 4. 16
[11] லேவி. 26. 8. உபா. 32. 30. ஏசா. 30. 17
[12] 2 இரா. 12. 20, 21
[13] 2 இரா. 14. 1. ழ

2 யோவதாளுள். அவன் **கர்த்தரின்** பார்வை
க்குச் செம்மையானதைச் செய்தான்; ஆனா
லும் முழு மனதோடே அப்படிச் செய்ய
3 வில்லை. ராஜ்யபாரம் அவனுக்கு ஸ்திரப்
பட்டபோது, அவன் தன் தகப்பனாகிய ராஜா
வைக் கொலைசெய்த தன்னுடைய ஊழியக்
4 காரரைக் கொன்றுபோட்டான். ஆனாலும்
பிள்ளைகளினிமித்தம் பிதாக்களும், பிதாக்களி
னிமித்தம் பிள்ளைகளும் கொலைசெய்யப்படா
மல், அவனவன் செய்த பாவத்தினிமித்தம்
அவனவன் கொலைசெய்யப்படவேண்டுமென்
று மோசேயின் நியாயப்பிரமாண புஸ்தகத்தில்
எழுதியிருக்கிறபடி, [1]**கர்த்தர்** கட்டளையிட்ட
பிரகாரம், அவர்களுடைய பிள்ளைகளை அவன்
5 கொல்லாதிருந்தான். அமத்சியா யூதா மனு
ஷரைக் கூடிவரச்செய்து, அவர்கள் பிதாக்க
ளுடைய வம்சங்களின்படியே, யூதா பென்ய
மீன் தேசங்கள் எங்கும் ஆயிரம்பேருக்கு அதி
பதிகளையும் நூறுபேருக்கு அதிபதிகளையும்
வைத்து, இருபது வயதுமுதற்கொண்டு
அதற்கு மேற்பட்டவர்களை இலக்கம் பார்
த்து, [2]யுத்தத்திற்குப் புறப்படவும், ஈட்டி
யையும் கேடகத்தையும் பிடிக்கவுந்தக்க யுத்
தவீரர் மூன்று லட்சம்பேரென்று கண்
6 டான். இஸ்ரவேலிலும் லட்சம் பராக்கிரம
சாலிகளை நூறு தாலந்து வெள்ளி கொடுத்துக்
7 கூலிக்கு அமர்த்தினான். தேவனுடைய மனு
ஷன் ஒருவன் அவனிடத்தில் வந்து: ராஜா
வே, இஸ்ரவேலின் சேனை உம்முடனே வர
லாகாது; **கர்த்தர்** எப்பிராயீமின் சகல
புத்திரராகிய இஸ்ரவேலோடும் இருக்க
8 வில்லை. போக மனதானால் நீர் போம்,
காரியத்தை நடத்தும்; யுத்தத்திற்குத் திடன்
கொண்டு நில்லும்; தேவன் உம்மைச் சத்துரு
வுக்கு முன்பாக விழப்பண்ணுவார்; ஒத்தாசை
செய்யவும் விழப்பண்ணவும் தேவனாலே கூடும்
9 [3]என்றான். அப்பொழுது அமத்சியா: அப்
படியானால் நான் இஸ்ரவேலின் சேனைக்குக்
கொடுத்த நூறு தாலந்திற்காகச் செய்யவேண்
டியது என்ன என்று தேவனுடைய மனுஷ
னைக் கேட்டான். அதற்கு தேவனுடைய மனு
ஷன்: [4]அதைப்பார்க்கிலும் அதிகமாய்க் **கர்த்**
**தர்** உமக்குக் கொடுக்கக்கூடும் என்றான்.
10 அப்பொழுது அமத்சியா எப்பிராயீமரில் தன்
னிடத்துக்கு வந்த சேனையைத் தங்கள் வீட்
டிற்குப் போய்விடப் பிரித்துவிட்டான்; அத
னால் அவர்களுக்கு யூதாவின்மேல் மிகுந்த
கோபமூண்டு, உக்கிரமான எரிச்சலோடே
தங்களிடத்திற்குத் திரும்பிப்போனார்கள்.
11 அமத்சியாவோ திடன்கொண்டு, தன் ஜனத்
தைக்கூட்டி, உப்புப்பள்ளத்தாக்குக்குப் போய்,
[5]சேயீர் புத்திரரில் பதினாயிரம்பேரை வெட்டி
12 னான். யூதா புத்திரர், பதினாயிரம்பேரை உயி
ரோடு பிடித்து, ஒரு கன்மலை யுச்சியிலே
கொண்டுபோய், அவர்களெல்லாரும் நொறுங்
கிப்போகத்தக்கதாய் அந்தக் கன்மலை யுச்சியி
13 லிருந்து கீழே தள்ளிவிட்டார்கள். தன்னோடு

1 உபா. 24. 16. 2 இரா. 14. 6. எரே. 31. 30. எசே. 18. 20
2 எண். 1. 3
3 20. 6. சங். 62 11. பிர. 9. 11
4 சங். 24. 1. நீதி. 10. 22. பிலி. 4. 19
5 2 இரா. 14. 7
6 28. 23. யாத். 20. 8, 5. ஏசா. 44. 19
7 சங். 96. 5
8 1 சாமு. 2. 25
9 2 இரா. 14. 8. ழ
10 22. 7. 1 இரா. 12. 15

கூட யுத்தத்திற்கு வராதபடிக்கு, அமத்சியா
திருப்பிவிட்ட யுத்த புருஷர், சமாரியா துவக்
கிப் பெத்தொரோன்மட்டுமுள்ள யூதா பட்ட
ணங்களின்மேல் விழுந்து, அவைகளில் மூவா
யிரம்பேரை வெட்டி, திரளாய்க் கொள்ளை
யிட்டார்கள்.
அமத்சியா ஏதோமியரை முறிய அடித்து 14
சேயீர் புத்திரரின் தெய்வங்களைக் கொண்டு
வந்தபின்பு, அவன் அவைகளைத் தனக்கு
தெய்வங்களாக வைத்து, [6]அவைகளுக்கு முன்
பாகப் பணிந்து அவைகளுக்குத் தூபங்காட்டி
னான். அப்பொழுது, **கர்த்தர்** அமத்சியா 15
வின்மேல் கோபமூண்டவராகி, அவனிடத்
துக்கு ஒரு தீர்க்கதரிசியை அனுப்பினார்; இவன்
அவனை நோக்கி: தங்கள் ஜனத்தை உமது
கைக்குத் தப்புவிக்காதேபோன ஜனத்தின்
தெய்வங்களை [7]நீர் நாடுவானேன் என்றான்.
தன்னோடே அவன் இப்படிப் பேசினபோது, 16
ராஜா அவனை நோக்கி: உன்னை ராஜாவுக்கு
ஆலோசனைக்காரனாக வைத்தார்களோ? அதை
விட்டுவிடு; நீ ஏன் வெட்டப்படவேண்டும்
என்றான்; அப்பொழுது அந்தத் தீர்க்கதரிசி
அதை விட்டுவிட்டு: நீர் இப்படிச் செய்து, என்
ஆலோசனையைக் கேளாமற்போனபடியினால்,
தேவன் உம்மை அழிக்க யோசனையாயிருக்
கிறார் [8]என்பதை அறிவேன் என்றான்.
பின்பு யூதாவின் ராஜாவாகிய அமத்சியா 17
யோசனைபண்ணி, யெகூவின் குமாரனாகிய
யோவாகாசின் புத்திரன் யோவாஸ் என்னும்
இஸ்ரவேலின் ராஜாவுக்கு: [9]நம்முடைய சா
மர்த்தியத்தைப் பார்ப்போம் வா என்று சொல்லி
யனுப்பினான். அதற்கு இஸ்ரவேலின் ராஜா 18
வாகிய யோவாஸ் யூதாவின் ராஜாவாகிய
அமத்சியாவுக்கு ஆள் அனுப்பி: லீபனோனி
லுள்ள முட்செடியானது லீபனோனிலுள்ள
கேதுருமரத்தை நோக்கி, நீ உன் மகளை என்
மகனுக்கு மனைவியாக விவாகஞ்செய்து கொடு
என்று கேட்கச்சொல்லிற்று; ஆனாலும் லீப
னோனிலுள்ள ஒரு காட்டுமிருகம் அந்த வழி
போகையில் ஓடி அந்த முட்செடியை மிதித்
துப்போட்டது. நீ ஏதோமியரை அடித்தாய் 19
என்று பெருமைபாராட்ட உன் இருதயம்
உன்னைக் கர்வங்கொள்ளப்பண்ணினது; இப்
போதும் நீ உன் வீட்டிலே இரு; நீயும் உன்
னோடே யூதாவுங்கூட விழும்படிக்கு, பொல்
லாப்பைத் தேடிக்கொள்வானேன் என்று
சொல்லச்சொன்னான். ஆனாலும் அமத்சியா 20
செவிகொடாதேபோனான்; அவர்கள் ஏதோ
மின் தெய்வங்களை நாடினதினிமித்தம் அவர்
களை அவர்கள் சத்துருக்கள் கையில் ஒப்புக்
கொடுக்கும்படிக்கு தேவனாலே [10]இப்படி நடந்
தது. அப்படியே இஸ்ரவேலின் ராஜாவாகிய 21
யோவாஸ் வந்தான்; யூதாவிலிருக்கிற பெத்ஷி
மேசிலே அவனும், அமத்சியா என்னும் யூதா
வின் ராஜாவும் தங்கள் சாமர்த்தியத்தைப் பார்த்
தார்கள். யூதா இஸ்ரவேலுக்கு முன்பாக 22
முறிந்து, அவரவர் தங்கள் கூடாரங்களுக்கு

23 ஓடிப்போனார்கள். இஸ்ரவேலின் ராஜாவா
கிய யோவாஸ் அகசியாவின் குமாரனாகிய
யோவாசுக்குப் பிறந்த அமத்சியா என்னும்
யூதாவின் ராஜாவைப் பெத்ஷிமேசிலே பிடி
த்து, அவனை எருசலேமுக்குக்கொண்டுவந்து,
எருசலேமின் அலங்கத்திலே எப்பிராயீம்
வாசல்தொடங்கி மூலைவாசல்மட்டும் நானூறு
24 முழ நீளம் இடித்துப்போட்டு, தேவனுடைய
ஆலயத்தில் ஓபேத் ஏதோமின் வசத்திலே
அகப்பட்ட சகல பொன்னையும், வெள்ளியை
யும், சகல பணிமுட்டுகளையும், ராஜாவின்
அரமனைப் பொக்கிஷங்களையும், *கிரியிருப்ப
வர்களையும் பிடித்துக்கொண்டு சமாரியாவுக்
குத் திரும்பிப்போனான்.
25 யோவாகாசின் குமாரனாகிய யோவாஸ் என்
னும் இஸ்ரவேலின் ராஜா மரணமடைந்த
பின்பு, [1]யோவாசின் குமாரனாகிய அமத்சியா
என்னும் யூதாவின் ராஜா பதினைந்து வருஷம்
26 உயிரோடிருந்தான். அமத்சியாவின் ஆதி
யோடந்த நடபடியான மற்ற வர்த்தமானங்
கள் யூதா இஸ்ரவேல் ராஜாக்களின் புஸ்தகத்
27 தில் அல்லவோ எழுதியிருக்கிறது. அமத்சியா
**கர்த்தரை** விட்டுப் பின்வாங்கின காலமுதற்
கொண்டு எருசலேமிலிருந்தவர்கள் அவனுக்கு
விரோதமாகக் கட்டுப்பாடு பண்ணிக்கொண்
டார்கள்; அதினிமித்தம் அவன் லாகீசுக்கு
ஓடிப்போனான்; ஆனாலும் அவன் பிறகே லாகீ
சுக்கு மனுஷரை அனுப்பினார்கள்; அவர்கள்
28 அங்கே அவனைக் கொன்றுபோட்டு, குதிரை
கள்மேல் அவனை எடுத்துவந்து, யூதாவின்
நகரத்தில் அவன் பிதாக்களண்டையிலே
[2]அடக்கம் பண்ணினார்கள்.

**26** அப்பொழுது யூதா ஜனங்கள் எல்லாரும்
பதினாறு வயதான உசியாவை அழைத்து
வந்து, [3]அவனை அவன் தகப்பனாகிய அமத்சி
யாவின் ஸ்தானத்திலே ராஜாவாக்கினார்கள்.
2 ராஜா தன் பிதாக்களோடே நித்திரையடைந்த
பின்பு, இவன் ஏலோதைக் கட்டி, அதைத்
திரும்ப யூதாவின் வசமாக்கிக்கொண்டான்.
3 உசியா ராஜாவாகிறபோது, பதினாறு வயதா
யிருந்து, ஐம்பத்திரண்டு வருஷம் எருசலே
மில் அரசாண்டான்; எருசலேம்நகரத்தாளான
4 அவன் தாயின் பேர் எக்கோலியாள். அவன்
தன் தகப்பனாகிய அமத்சியா செய்தபடியெல்
லாம் **கர்த்தரின்** பார்வைக்குச் செம்மையான
5 தைச் செய்து, தேவனுடைய தரிசனங்க
ளில் புத்திமானாயிருந்த [4]சகரியாவின் நாட்
களிலே தேவனைத் தேட மனதிணங்கியிருந்
தான்; அவன் **கர்த்தரைத்** தேடின நாட்களில்
தேவன் [5]அவன் காரியங்களை வாய்க்கச்செய்
6 தார். அவன் புறப்பட்டுப்போய், பெலிஸ்த
ரோடு யுத்தம்பண்ணி, [6]காத்தின் அலங்கத்
தையும் யப்னேயின் அலங்கத்தையும், அஸ்
தோத்தின் அலங்கத்தையும் இடித்துப்போட்டு,
அஸ்தோத் நாட்டிலும் பெலிஸ்தருக்குள்ளும்
7 பட்டணங்களைக் கட்டினான். பெலிஸ்தரை
யும் கூர்பாகாலிலே குடியிருக்கிற அரபியரை

* பிணையாளிகள்.
1 2 இரா. 14. 7
2 2 இரா. 14. 20
3 2 இரா. 14. 21, 22; 15. 1. ழ
4 24. 2. ஆதி. 41. 15. தானி. 1. 17
5 1 சாமு. 22. 18
6 ஏசா. 14. 29
7 21. 16
† கப்பம்கொடை. 2 சாமு. 8. 2
8 2 இரா. 14. 13. செப்பா. 3. 13, 19, 32. சகரி. 14. 10
9 25. 19. உபா. 8. 14; 32. 15
10 2 இரா. 16. 12, 13
11 1 நாளா. 6. 10
12 எண். 16. 40; 18. 7
13 யாத். 30. 7, 8

யும் மெகுனியரையும் வெல்ல, [7]தேவன் அவ
னுக்குத் துணைநின்றார். அம்மோனியர் உசி 8
யாவுக்குத் †காணிக்கைகளைக் கொடுத்தார்கள்;
அவனுடைய கீர்த்தி எகிப்தின் எல்லைமட்டும்
எட்டினது; அவன் மிகவும் பெலன் கொண்
டான். உசியா எருசலேமிலே மூலைவாசல் 9
மேலும், பள்ளத்தாக்கு வாசல்மேலும், [8]அலங்
கத்துக்கோடிகள்மேலும் கோபுரங்களைக்கட்டி
அவைகளைப் பலப்படுத்தினான். அவனுக்குப் 10
பள்ளத்தாக்கிலும் சமபூமியிலும் அநேகம் ஆடு
மாடுகளும், மலைகளிலேயும் வயல் வெளியிலே
யும் பயிர்க்குடிகளும், திராட்சத்தோட்டக்கா
ரும் உண்டாயிருந்தபடியினால், அவன் வனாந்
தரத்திலே கோபுரங்களைக் கட்டி, அநேக துர
வுகளை வெட்டினான்; அவன் வெள்ளாண்
மைப் பிரியனாயிருந்தான். உசியாவுக்கு யுத்த 11
வீரரின் சேனையும் இருந்தது; அது சம்பிரதி
யாகிய ஏயெலியினாலும், ஆதிக்கக்காரனாகிய
மாசேயாவினாலும் இலக்கம் பார்க்கப்பட்ட
படியே, ராஜாவின் பிரபுக்களில் ஒருவனாகிய
அனனியாவின் கீழ் வகுப்பு வகுப்பாய்ச்
சேவகம் பண்ணப் புறப்பட்டது. பராக்கிரம 12
சாலிகளான வம்சத்தலைவரின் தொகையெல்
லாம் இரண்டாயிரத்து அறுநூறு. இவர்கள் 13
கையின்கீழ்ச் சத்துருக்களுக்கு விரோதமாக
ராஜாவுக்குத் துணைநிற்க, பராக்கிரமத்தோடே
யுத்தம்பண்ணுகிற மூன்றுலட்சத்து ஏழாயிரத்
து ஐந்நூறுபேரான சேனை இருந்தது. இந்தச் 14
சேனையிலுள்ளவருக்கெல்லாம் உசியா கேட
கங்களையும், ஈட்டிகளையும், தலைச்சீராக்களை
யும், மார்க்கவசங்களையும், வில்லுகளையும், கல்
லெறிகிற கவண்களையும் ஆயத்தப்படுத்தினான்.
கோபுரங்கள்மேலும் அலங்கக் கோடிகள்மே 15
லும் நின்று அம்புகளையும் பெரிய கற்களையும்
பிரயோகிக்கிறதற்கு நிபுணரான தொழிலாளி
கள் கற்பித்த யந்திரங்களையும் அவன் எருசலே
மில் உண்டாக்கினான்; அப்படியே அவன்
கீர்த்தி வெகுதூரம் பரம்பிற்று; அவன் பலப்
படுமட்டும் ஆச்சரியமாய் அவனுக்கு அநு
கூலமுண்டாயிற்று.
அவன் பலப்பட்டபோது, தனக்குக் கே 16
டுண்டாகுமட்டும், அவனுடைய மனம் மேட்
டிமையாகி, [9]தன் தேவனாகிய **கர்த்தருக்கு**
விரோதமாக மீறுதல் செய்து, தூபபீடத்தின்
மேல் தூபங்காட்ட [10]**கர்த்தருடைய** ஆலயத்திற்
குள் பிரவேசித்தான். ஆசாரியனாகிய அசரி 17
யாவும், [11]அவனோடேகூடக் **கர்த்தரின்** ஆசாரி
யரான பராக்கிரமசாலிகளாகிய எண்பதுபே
ரும், அவன் பிறகே உட்பிரவேசித்து, ராஜா 18
வாகிய உசியாவோடு எதிர்த்துநின்று: [12]உசியா
வே, **கர்த்தருக்குத்** தூபங்காட்டுகிறது உமக்கு
அடுத்ததல்ல; [13]தூபங்காட்டுகிறது பரிசுத்தமாக்
கப்பட்ட ஆரோனின் குமாரராகிய ஆசாரிய
ருக்கே அடுக்கும்; பரிசுத்த ஸ்தலத்தை விட்டு
வெளியே போம்; மீறுதல் செய்தீர்; இது தே
வனாகிய **கர்த்தராலே** உமக்கு மேன்மையாக
லபியாது என்றார்கள். அப்பொழுது உசியா 19

கோபங்கொண்டான்; அவன் தூபகலசத்தைத்
தன் கையிலே பிடித்து, ஆசாரியரோடே கோ
பமாய்ப் பேசுகிறபோது, ஆசாரியருக்கு முன்
பாகக் **கர்த்தருடைய** ஆலயத்திலே தூபபீடத்
தின் முன்நிற்கிற அவனுடைய நெற்றியிலே
20 [1]குஷ்டரோகம்தோன்றிற்று. பிரதான ஆசா
ரியனாகிய அசரியாவும் சகல ஆசாரியரும் அவ
னைப் பார்க்கும்போது, இதோ, அவன் தன்
நெற்றியிலே குஷ்டரோகம் பிடித்தவனென்று
கண்டு, அவனைத் தீவிரமாய் அங்கேயிருந்து
வெளிப்படப்பண்ணினார்கள்; **கர்த்தர்** தன்னை
அடித்ததினால் அவன் தானும் வெளியேபோ
21 கத்[2]தீவிரப்பட்டான். ராஜாவாகிய உசியா தன்
மரணநாள்மட்டும் குஷ்டரோகியாயிருந்து,
[3]**கர்த்தருடைய** ஆலயத்துக்குப் புறம்பாக்கப்
பட்டபடியினால், ஒரு தனித்த வீட்டிலே குஷ்
டரோகியாய் வாசம்பண்ணினான்; அவன்
குமாரனாகிய யோதாம் ராஜாவின் அரமனை
விசாரிப்புக்காரனாயிருந்து, தேசத்தின் ஜனங்
22 களை நியாயம் விசாரித்தான். உசியாவின்
ஆதியோடந்த நடபடியான மற்ற வர்த்தமானங்
களை ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா [4]என்
23 னும் தீர்க்கதரிசி எழுதினான். உசியா தன்
பிதாக்களோடே நித்திரையடைந்த பின்பு,
ஜனங்கள் அவனைக் குஷ்டரோகியென்று
சொல்லி, அவனை அவன் பிதாக்களண்டை
யில், ராஜாக்களை அடக்கம்பண்ணுகிற இடத்
திற்கு அருகான நிலத்திலே அடக்கம்பண்ணி
னார்கள்; [5]அவன் குமாரனாகிய யோதாம்
அவன் ஸ்தானத்தில் ராஜாவானான்.

**27** யோதாம்ராஜாவாகிறபோது இருபத்தை
ந்து வயதாயிருந்து, [6]பதினாறு வருஷம் எரு
சலேமிலே அரசாண்டான்; சாதோக்கின் குமா
ரத்தியாகிய அவன் தாயின்பேர் எருசாள்.
2 அவன் தன் தகப்பனாகிய உசியா செய்தபடி
யெல்லாம் **கர்த்தரின்** பார்வைக்குச் செம்மை
யானதைச் செய்தான்; ஆனாலும் அவனைப்
போலக் **கர்த்தரின்** ஆலயத்திற்குள் பிரவேசி
யாதிருந்தான்; ஜனங்கள் இன்னும் தங்களைக்
3 கெடுத்துக்கொண்டிருந்தார்கள். அவன் **கர்த்**
**தருடைய** ஆலயத்தின் உயர்ந்த வாசலைக் கட்
டினதுமல்லாமல், ஓபேலின் மதிலின்மேல்
4 அநேக கட்டடங்களையும் கட்டினான். யூதா
வின் மலைகளிலே பட்டணங்களையும், காடுக
ளிலே கோட்டைகளையும் கோபுரங்களையும்
5 கட்டினான். அவன் அம்மோன் புத்திரரு
டைய ராஜாவோடு யுத்தம்பண்ணி அவர்களை
மேற்கொண்டான்; ஆதலால் அம்மோன் புத்
திரர் அவனுக்கு அந்த வருஷத்திலே நூறு
தாலந்து வெள்ளியையும், பதினாயிரங்கலக்
கோதுமையையும், பதினாயிரங்கல வாற்கோ
துமையையும் கொடுத்தார்கள்; இரண்டாம்
மூன்றாம் வருஷத்திலும் அம்மோன் புத்திரர்
அப்படியே அவனுக்குச் செலுத்தினார்கள்.
6 யோதாம் தன் வழிகளைத் தன் தேவனாகிய
**கர்த்தருக்கு** முன்பாக நோக்கினதினால் பலப்
7 பட்டான். யோதாமின் மற்ற வர்த்தமானங்க

[1] எண். 12. 10. 2 இரா. 5. 27
[2] எஸ்தர். 6. 12
[3] லேவி. 13. 46. எண். 5. 2. 2 இரா. 15. 5
[4] ஏசா. 1. 1
[5] 2 இரா. 15. 7. ஏசா. 6. 1
[6] 2 இரா. 15. 32. ஷ
[7] 2 இரா. 15. 38
[8] 2 இரா. 16. 2
[9] யாத். 34. 17. லேவி. 19. 4. கியா. 2. 11
[10] லேவி. 18. 21. 2 இரா. 16. 3. 23. 10
[11] ஏசா. 7. 1
[12] 2 இரா. 15. 27
[13] 11. 4
[14] சங். 69. 26. ஏசா. 10. 5-7. எசே. 25. 12. ஒபதி. 10. சகரி. 1. 15
[15] ஆதி. 4. 10. எஸ்றா 9. 6. வெளி. 18. 5

ளும், அவனுடைய சகல யுத்தங்களும், அவ
னுடைய நடைகளும், இஸ்ரவேல் யூதா ராஜா
க்களின் புஸ்தகத்தில் எழுதியிருக்கிறது. அவன் 8
ராஜாவாகிறபோது இருபத்தைந்து வயதாயி
ருந்து, பதினாறு வருஷம் எருசலேமில் அர
சாண்டான். யோதாம் தன் பிதாக்களோடே 9
நித்திரையடைந்தபின்பு, [7]அவனைத் தாவீதின்
நகரத்திலே அடக்கம்பண்ணினார்கள்; அவன்
குமாரனாகிய ஆகாஸ் அவன் ஸ்தானத்தில்
ராஜாவானான்.

ஆகாஸ் ராஜாவாகிறபோது இருபது வய **28**
தாயிருந்து, [8]பதினாறு வருஷம் எருசலேமில்
அரசாண்டான்; ஆனாலும் அவன், தன் தகப்
பனாகிய தாவீதைப்போல், **கர்த்தரின்** பார்
வைக்குச் செம்மையானதைச் செய்யாமல்,
இஸ்ரவேல் ராஜாக்களின் வழிகளில் நடந்து, 2
[9]பாகால்களுக்கு வார்ப்புவிக்கிரகங்களைச் செய்
தான். அவன் இன்னோம் குமாரரின் பள் 3
ளத்தாக்கிலே தூபங்காட்டி, **கர்த்தர்** இஸ்ர
வேல் புத்திரருக்கு முன்பாகத் துரத்தின ஜாதி
களுடைய அருவருப்புகளின்படியே [10]தன்
குமாரரை அக்கினியிலே தகித்துப்போட்டு,
மேடைகளிலும், மலைகளிலும், பச்சையான 4
சகல மரங்களின் கீழும் பலியிட்டுத் தூபங்
காட்டிவந்தான். ஆகையால் அவனுடைய தே 5
வனாகிய **கர்த்தர்** அவனைச் சீரியருடைய ரா
ஜாவின் கையில் ஒப்புக்கொடுத்தார்; அவர்கள்
அவனை முறிய அடித்து, [11]அவனுக்கு இருக்
கிறவர்களிலே பெரிய கூட்டத்தைச் சிறை
பிடித்துத் தமஸ்குவுக்குக் கொண்டுபோனார்
கள்; அவன் இஸ்ரவேலுடைய ராஜாவின் கை
யிலும் ஒப்புக்கொடுக்கப்பட்டான்; இவன்
அவனை வெகுவாய் முறிய அடித்தான். எப் 6
படியெனில், யூதா மனுஷர் தங்கள் பிதாக்க
ளின் தேவனாகிய **கர்த்தரை** விட்டபடியினால்,
ரெமலியாவின் குமாரனாகிய பெக்கா அவர்க
ளில் ஒரே நாளில் லட்சத்திருபதினாயிரம்
பேரைக் கொன்றுபோட்டான்; [12]அவர்கள் எல்
லாரும் மகா வீரராயிருந்தவர்கள். அன்றியும் 7
எப்பிராயீமின் பராக்கிரமசாலியான சிக்ரியும்,
ராஜாவின் குமாரனாகிய மாசேயாவையும், அர
மனைத் தலைவனாகிய அஸ்ரிக்காமையும், ராஜா
வுக்கு இரண்டாவதான எல்க்கானாவையும்
கொன்றுபோட்டான். இஸ்ரவேல் புத்திரர் 8
தங்கள் சகோதரரில் [13]இரண்டு லட்சம்பேரா
கிய ஸ்திரீகளையும் குமாரரையும் குமாரத்திகளை
யும் சிறைபிடித்து, அவர்களுடைய அநேக திர
வியங்களைக் கொள்ளையிட்டு, கொள்ளைப்பொ
ருளைச் சமாரியாவுக்குக் கொண்டுபோனார்கள்.
அங்கே ஓதேத் என்னும் பேருள்ள **கர்த்த** 9
**ருடைய** தீர்க்கதரிசி ஒருவன் இருந்தான்; அவன்
சமாரியாவுக்கு வருகிற சேனைக்கு எதிராகப்
போய், அவர்களை நோக்கி: இதோ, உங்கள்
பிதாக்களின் தேவனாகிய **கர்த்தர்** யூதாவின்
மேல் கோபங்கொண்டபடியினால் [14]அவர்களை
உங்கள் கைகளில் ஒப்புக்கொடுத்தார்; [15]நீங்க
ளோ வானபரியந்தம் எட்டுகிற உக்கிரத்தோ

டே அவர்களைச் சங்காரம் பண்ணினீர்கள்.
10 இப்போதும் யூதாவின் புத்திரரையும் எருசலே
மியரையும் நீங்கள் உங்களுக்கு வேலைக்கார
ராகவும் வேலைக்காரிகளாகவும் [1]கீழ்ப்படுத்த
வேண்டும் என்று நினைக்கிறீர்கள்; ஆனாலும்
உங்கள் தேவனாகிய **கர்த்தருக்கு** விரோதமான
குற்றங்கள் உங்களிடத்திலும் இல்லையோ?
11 ஆதலால் நீங்கள் எனக்குச் செவிகொடுத்து,
நீங்கள் உங்கள் சகோதரரிடத்தில் சிறைபிடித்
துக் கொண்டுவந்தவர்களைத் திரும்ப அனுப்பி
விடுங்கள்; **கர்த்தருடைய** உக்கிரமான [2]கோ
12 பம் உங்கள்மேல் இருக்கிறது என்றான். அப்
பொழுது எப்பிராயீம் புத்திரரின் தலைவரில்
சிலபேராகிய யோகனானின் குமாரன் அசரியா
வும், மெஷிலெமோத்தின் குமாரன் பெரகியா
வும், சல்லூமின் குமாரன் எகிஸ்கியாவும், அத்
லாயின் குமாரன் அமாசாவும் யுத்தத்திலிருந்து
13 வந்தவர்களுக்கு விரோதமாக எழும்பி, அவர்
களை நோக்கி: நீங்கள் சிறைபிடித்த இவர்களை
இங்கே உள்ளே கொண்டுவரவேண்டாம்; நம்
மேல் திரளான குற்றமும், இஸ்ரவேலின்மேல்
உக்கிரமான கோபமும் இருக்கையில், நீங்கள்
**கர்த்தருக்கு** முன்பாக நம்மேல் குற்றம் சுமரப்
பண்ணத்தக்கதாய், நம்முடைய பாவங்களையும்
நம்முடைய குற்றங்களையும் அதிகமாக்க நினைக்
14 கிறீர்கள் என்றார்கள். அப்பொழுது ஆயுத
பாணிகளானவர்கள் சிறை பிடித்தவர்களையும்,
கொள்ளையுடைமைகளையும், பிரபுக்களுக்கு
முன்பாகவும் சமஸ்த சபைக்கு முன்பாகவும்
*15 விட்டுவிட்டார்கள். அப்பொழுது பேர் குறிக்
கப்பட்ட மனுஷர் [3]எழும்பி, சிறைபிடிக்கப்
பட்டவர்களைச் சேர்த்துக்கொண்டு, அவர்களில்
வஸ்திரமில்லாத சகலருக்கும் கொள்ளையில்
எடுக்கப்பட்ட வஸ்திரங்களைக் கொடுத்து, உடுப்
பையும் பாதரட்சைகளையும் போடுவித்து,
அவர்களுக்குச் சாப்பிடவும் குடிக்கவும் கொ
டுத்து, [4]அவர்களுக்கு எண்ணெய் வார்த்து,
அவர்களில் பலட்சயமானவர்களையெல்லாம்
கழுதைகள்மேல் ஏற்றி, பேரீச்சமரங்களின்
பட்டணமாகிய எரிகோவிலே அவர்கள் சகோ
தரரிடத்துக்குக் கொண்டுவந்து விட்டு, சமாரி
யாவுக்குத் திரும்பினார்கள்.
16 அக்காலத்திலே ஆகாஸ் என்னும் ராஜா,
அசீரியாவின் ராஜாக்கள் தனக்கு ஒத்தாசை
பண்ண [5]அவர்களிடத்துக்கு ஆட்களை அனுப்
17 பினான். ஏதோமியரும் கூடவந்து, யூதாவை
முறிய அடித்து, சிலரைச் சிறைபிடித்துப்போ
18 யிருந்தார்கள். பெலிஸ்தரும் [6]யூதாவிலே சம
பூமியிலும் தெற்கேயும் இருக்கிற பட்டணங்
களின்மேல் விழுந்து, பெத்ஷிமேசையும்,
ஆயலோனையும், கெதெரோத்தையும், சோக்
கோவையும் அதின் கிராமங்களையும், திம்னா
வையும் அதின் கிராமங்களையும், கிம்சோவை
யும் அதின் கிராமங்களையும் பிடித்து அங்கே
19 குடியேறினார்கள். யூதாவின் ராஜாவாகிய
[7]ஆகாசினிமித்தம் **கர்த்தர்** யூதாவைத் தாழ்த்
தினார்; அவன் யூதாவைச் [8]சீர்குலைத்து, **கர்த்த
ருக்கு** விரோதமாய் மிகவும் துரோகம்பண்ணி
னான். அசீரியாவின் ராஜாவாகிய தில்காத் 20
பில்நேசர் [9]அவனிடத்தில் வந்தான்; அவனை
நெருக்கினானே அல்லாமல் அவனைப் பலப்
படுத்தவில்லை. ஆகாஸ் **கர்த்தருடைய** ஆல 21
யத்தில் ஒரு பங்கும், ராஜ அரமனையில் ஒரு
பங்கும், பிரபுக்களின் கையில் ஒரு பங்கும்
எடுத்து, அசீரியாவின் ராஜாவுக்குக் கொடுத்
தும், அவனுக்கு உதவிகிடைக்கவில்லை. தான் 22
நெருக்கப்படுகிற காலத்திலும் **கர்த்தருக்கு**
விரோதமாய் அந்த ஆகாஸ் என்னும் ராஜா
துரோகம் பண்ணிக்கொண்டே இருந்தான்.
எப்படியென்றால்: சீரியா ராஜாக்களின் தெய் 23
வங்கள் அவர்களுக்குத் துணைசெய்கிறபடியி
னால், அவர்கள் எனக்கும் துணைசெய்ய அவர்
களுக்குப் பலியிடுவேன் என்று சொல்லி,
தன்னை முறிய அடித்த தமஸ்குவின் தெய்வங்
களுக்கு அவன் பலியிட்டான்; [10]ஆனாலும்
அது அவனும் இஸ்ரவேல் அனைத்தும் நாச
மாகிறதற்கு ஏதுவாயிற்று. ஆகாஸ் தேவனு 24
டைய ஆலயத்தின் பணிமுட்டுகளைச் சேர்த்து,
தேவனுடைய ஆலயத்தின் பணிமுட்டுகளைத்
துண்டுதுண்டாக்கி **கர்த்தருடைய** ஆலயத்தின்
கதவுகளைப் பூட்டிப்போட்டு, [11]எருசலேமில்
மூலைக்குமூலை பலிபீடங்களை உண்டுபண்ணி,
அந்நிய தெய்வங்களுக்குத் தூபங்காட்டும்படி 25
க்கு, யூதாவின் ஒவ்வொரு பட்டணத்திலும்
மேடைகளை உண்டுபண்ணி, தன் பிதாக்களின்
தேவனாகிய **கர்த்தருக்குக்** கோபமூட்டினான்.
அவனுடைய மற்ற வர்த்தமானங்களும், அவ 26
னுடைய ஆதியோடந்தமான சகல நடபடி
களும் யூதா இஸ்ரவேல் ராஜாக்களின் [12]புஸ்த
கத்தில் எழுதியிருக்கிறது. ஆகாஸ் தன் பிதாக் 27
களோடே நித்திரையடைந்தபின்பு, அவனை
எருசலேம் நகரத்தில் அடக்கம்பண்ணினார்
கள்; ஆனாலும் இஸ்ரவேல் ராஜாக்களின் கல்
லறைகளில் அவனைக் கொண்டுவந்து வைக்க
வில்லை; அவன் குமாரனாகிய எசேக்கியா
அவன் ஸ்தானத்தில் ராஜாவானான்.

**29**

எசேக்கியா இருபத்தைந்தாம் வயதில் ரா
ஜாவாகி, இருபத்தொன்பது வருஷம் எருச
லேமில் அரசாண்டான்; [13]சகரியாவின் குமா
ரத்தியாகிய அவனுடைய தாயின்பேர் அபி
யாள். அவன் தன் தகப்பனாகிய தாவீது செ 2
ய்தபடியெல்லாம் **கர்த்தரின்** பார்வைக்குச்
செம்மையானதைச் செய்தான். அவன் தன் 3
ராஜ்யபாரத்தின் முதலாம் வருஷம் முதலாம் மா
தத்தில் **கர்த்தருடைய** ஆலயத்தின் கதவுகளைத்
திறந்து, [14]அவைகளைப் பழுதுபார்த்து, ஆசாரி 4
யரையும் லேவியரையும் அழைத்துவந்து, அவர்
களைக் கிழக்கு வீதியிலே கூடிவரச்செய்து,
அவர்களை நோக்கி: லேவியரே, கேளுங்கள்; 5
நீங்கள் இப்போது உங்களைப் பரிசுத்தம் பண்
ணிக்கொண்டு, [15]உங்கள் பிதாக்களின் தேவ
னாகிய **கர்த்தருடைய** ஆலயத்தைப் பரிசுத்தம்
பண்ணி, அசுத்தமானதைப் பரிசுத்தஸ்தலத்தி
லிருந்து வெளியே கொண்டுபோங்கள். நம் 6

[1] லேவி. 25. 39.ழ
[2] யாக். 2. 13
[3] 12. வச.
[4] 2 இரா. 6. 22. நீதி. 25. 21, 22. லூ. 6. 27. ரோ. 12. 20
[5] 2 இரா. 16. 7
[6] எசே. 16. 27, 57
[7] 21. 2
[8] யாத். 32. 25
[9] 2 இரா. 15. 29; 16. 7-9
[10] 25. 14. எரே. 14. 17, 18
[11] 29. 3, 7
[12] 2 இரா. 16. 19, 20
[13] 2 இரா. 18. 1
[14] 28. 24
[15] 1 நாளா. 15. 12

முடைய பிதாக்கள் துரோகம்பண்ணி, நம்
முடைய தேவனாகிய **கர்த்தரின்** பார்வைக்
குப் பொல்லாப்பானதைச் செய்து, அவரை
விட்டு விலகி, தங்கள் முகங்களைக் **கர்த்தரு**
**டைய** வாசஸ்தலத்தை விட்டுத் திருப்பி,
7 [1]அதற்கு முதுகைக் காட்டினார்கள். அவர்கள்
பரிசுத்தஸ்தலத்தில் இஸ்ரவேலின் தேவனுக்
குச் சர்வாங்க தகனபலி செலுத்தாமலும்,
[2]தூபங்காட்டாமலும், விளக்குகளை அணைத்
துப்போட்டு, மண்டபத்தின் கதவுகளையும் பூட்
8 டிப்போட்டார்கள். ஆகையால் **கர்த்தருடைய**
கடுங்கோபம் யூதாவின்மேலும் எருசலேமின்
மேலும் வந்து, அவர் இவர்களை, நீங்கள் உங்
கள் கண்களினால் காண்கிறபடி, துயரத்துக்
கும் திகைப்புக்கும் பழிப்புக்கும் [3]ஒப்புக்கொ
9 டுத்தார். இதோ, இதினிமித்தம் நம்முடைய
பிதாக்கள் பட்டயத்தினால் விழுந்து, [4]நம்மு
டைய குமாரரும் நம்முடைய குமாரத்திகளும்
நம்முடைய மனைவிகளும் சிறையிருப்பில்
10 அகப்பட்டார்கள். இப்போதும் இஸ்ரவே
லின் தேவனாகிய **கர்த்தருடைய** உக்கிரகோபம்
நம்மைவிட்டுத்திரும்பும்படிக்கு, [5]அவரோடே
உடன்படிக்கை பண்ண என் மனதிலே நிர்
11 ணயித்துக்கொண்டேன். என் குமாரரே,
இப்பொழுது அசதியாயிராதேயுங்கள்; [6]நீங்
கள் **கர்த்தருக்குப்** பணிவிடை செய்யும்படி
அவருக்குமுன்பாக நிற்கவும், அவருக்கு ஊழி
யஞ்செய்கிறவர்களும் தூபங்காட்டுகிறவர்களு
மாயிருக்கவும் உங்களை அவர் தெரிந்து
கொண்டார் என்றான்.
12 அப்பொழுது கோகாத் புத்திரரில் அமா
சாயின் குமாரன் மாகாத்தும், அசரியாவின்
குமாரன் யோவேலும், மெராரியின் புத்திர
ரில் அப்தியின் குமாரன் கீசும், எகலேலின்
குமாரன் அசரியாவும், கெர்சோனியரில் சிம்
மாவின் குமாரன் யோவாகும், யோவாகின்
13 குமாரன் ஏதேனும், எலிச்சாப்பான் புத்திர
ரில் சிம்ரியும், ஏயெலும், ஆசாப்பின் புத்திர
14 ரில் சகரியாவும், மத்தனியாவும், ஏமானின்
புத்திரரில் எகியேலும், சிமேயியும், எதுத்தூ
னின் புத்திரரில் செமாயாவும், ஊசியேலும்
15 என்னும் லேவியர் எழும்பி, தங்கள் சகோ
தரரைக்கூடிவரச்செய்து, பரிசுத்தம்பண்ணிக்
கொண்டு, [7]**கர்த்தருடைய** வசனங்களுக்கொ
த்த ராஜாவினுடைய கற்பனையின்படியே **கர்**
**த்தருடைய** ஆலயத்தைச் சுத்திகரிக்க வந்தார்
16 கள். ஆசாரியர்கள் **கர்த்தருடைய** ஆலயத்
தைச் சுத்திகரிக்கும்படி உட்புறத்திலே பிர
வேசித்து, **கர்த்தருடைய** ஆலயத்தில் கண்ட
சகல அசுத்தத்தையும்வெளியே **கர்த்தருடைய**
ஆலயப் பிராகாரத்தில் கொண்டுவந்தார்கள்;
அப்பொழுது லேவியர் அதை எடுத்து, வெளி
யே கீதரோன் ஆற்றிற்குக் கொண்டுபோனார்
17 கள். முதல் மாதம் முதல் தேதியிலே அவர்
கள் பரிசுத்தம்பண்ணத் துவக்கி, எட்டாந்தே
தியிலே **கர்த்தருடைய** மண்டபத்திலே பிர
வேசித்து, **கர்த்தருடைய** ஆலயத்தை எட்டுநா

1 எசே. 2. 27. எசே. 8. 16
2 28. 24
3 உபா. 28. 25. 1 இரா. 9. 8. எரே. 18. 16
4 28. 5, 6, 8, 17
5 15. 12
6 எண். 3. 6. 8. 14
7 1 நாளா. 23. 28
8 28. 24
9 லேவி. 4. 3, 14
10 லேவி. 8. 14, 15, 19, 24. எபி. 9. 21
11 லேவி. 4. 15, 24
12 லேவி. 14. 20
13 1 நாளா. 16. 4. 25. 6

ளில் பரிசுத்தம்பண்ணி, முதலாம் மாதம் பதி
னாறாந்தேதியில் அதை முடித்தார்கள். அவர் 18
கள் ராஜாவாகிய எசேக்கியாவினிடத்தில்
போய்: நாங்கள் **கர்த்தரின்** ஆலயத்தையும்,
சர்வாங்கதகனபலிபீடத்தையும், அதினுடைய
சகல பணிமுட்டுகளையும், சமுகத் தப்பங்களின்
மேசையையும், அதின் சகல பணிமுட்டுகளை
யும் சுத்திகரித்து, ராஜாவாகிய ஆகாஸ் அர 19
சாளும்போது தம்முடைய பாதகத்தினால் எறி
ந்துபோட்ட [8]சகல பணிமுட்டுகளையும் முஸ்
திப்பாக்கிப் பரிசுத்தம்பண்ணினோம்; இதோ,
அவைகள் **கர்த்தரின்** ஆலயத்திற்கு முன்பாக
இருக்கிறது என்றார்கள்.
அப்பொழுது ராஜாவாகிய எசேக்கியா கா 20
லமே எழுந்திருந்து, நகரத்தின் பிரபுக்களைக்
கூட்டிக்கொண்டு, **கர்த்தரின்** ஆலயத்திற்குப்
போனான். அப்பொழுது ராஜ்யபாரத்திற்கா 21
கவும் பரிசுத்த ஸ்தலத்திற்காகவும் யூதாவுக்கா
கவும் ஏழு காளைகளையும், ஏழு ஆட்டுக்கடாக்
களையும், ஏழு ஆட்டுக்குட்டிகளையும், ஏழு
வெள்ளாட்டுக் கடாக்களையும் பாவநிவாரண
பலியாகக் கொண்டுவந்தார்கள்; [9]அவைகளைக்
**கர்த்தருடைய** பலிபீடத்தின்மேல் பலியிடுங்
கள் என்று அவன் ஆசாரியராகிய ஆரோ
னின் புத்திரருக்குச் சொன்னான். அப்படி 22
யே ஆசாரியர் காளைகளை அடித்து, அந்த ரத்த
த்தைப் பிடித்துப் பலிபீடத்தின்மேல் தெளித்
தார்கள், [10]ஆட்டுக்கடாக்களை அடித்து, அவை
களின் ரத்தத்தைப் பலிபீடத்தின்மேல் தெ
ளித்தார்கள்; ஆட்டுக்குட்டிகளையும் அடித்து,
அவைகளின் ரத்தத்தையும் பலிபீடத்தின்
மேல் தெளித்தார்கள். பிற்பாடு பாவநிவாரண 23
பலிக்கான வெள்ளாட்டுக்கடாக்களை ராஜா
வுக்கும் சபையாருக்கு முன்பாகக் கொண்டு
வந்தார்கள்; [11]அவைகள்மேல் அவர்கள் தங்
கள் கைகளை வைத்தார்கள். இஸ்ரவேல் 24
அனைத்திற்காகவும், சர்வாங்கதகனபலியையும்
பாவநிவாரண பலியையும் செலுத்துங்கள்
என்று ராஜா சொல்லியிருந்தான்; ஆதலால்
ஆசாரியர் அவைகளை அடித்து, இஸ்ரவேல்
அனைத்திற்கும் பாவநிவிர்த்தி உண்டாக்க,
அவைகளின் ரத்தத்தால் பலிபீடத்தின்மேல்
[12]பிராயச்சித்தஞ் செய்தார்கள். அவன், தா 25
வீதும், ராஜாவின் ஞானதிருஷ்டிக்காரனாகிய
காத்தும், தீர்க்கதரிசியாகிய நாத்தானும் கற்பித்
தபடியே, [13]கைத்தாளங்களையும் தம்புருகளை
யும் சுரமண்டலங்களையும் வாசிக்கிற லேவிய
ரைக்**கர்த்தருடைய**ஆலயத்திலே நிறுத்தினான்;
இப்படிச் செய்யவேண்டும் என்கிற கற்பனை
**கர்த்தரால்** அவருடைய தீர்க்கதரிசிகளைக்
கொண்டு உண்டாயிருந்தது. அப்படியே லே 26
வியர் தாவீதின் கீதவாத்தியங்களையும் ஆசாரி
யர் பூரிகைகளையும் பிடித்துநின்றார்கள். அப் 27
பொழுது எசேக்கியா சர்வாங்கதகனபலிகளைப்
பலிபீடத்தின்மேல் செலுத்தக் கட்டளையிட்
டான்; அதைச் செலுத்தத் துவக்கின நேரத்
தில் **கர்த்தரைத்** துதிக்கும் கீதமும் பூரிகை

களும், இஸ்ரவேல் ராஜாவாகிய தாவீது ஏற்
படுத்தின கீதவாத்தியங்களும் முழங்கத் தொ
28 டங்கினது. கீதத்தைப் பாடி, பூரிகைகளை
ஊதிக்கொண்டிருக்கையில், சர்வாங்க தகன
பலியைச் செலுத்தித் தீருமட்டும் சபையார்
எல்லாரும் பணிந்துகொண் டிருந்தார்கள்.
29 பலியிட்டுத் தீர்ந்தபோது, ராஜாவும் அவனோ
டிருந்த அனைவரும் தலைகுனிந்து பணிந்து
30 கொண்டார்கள். பின்பு எசேக்கியா ராஜா
வும் பிரபுக்களும் லேவியரை நோக்கி: நீங்கள்
தாவீதும் ஞானதிருஷ்டிக்காரனாகிய ஆசா
பும் பாடின வார்த்தைகளினால் **கர்த்தரைத்**
துதியுங்கள் என்றார்கள்; அப்பொழுது மகிழ்ச்
சியோடே துதிசெய்து தலைகுனிந்து பணிந்து
31 கொண்டார்கள். அதின்பின்பு எசேக்கியா:
இப்போதும் நீங்கள் **கர்த்தருக்கென்று** உங்க
ளைப் பரிசுத்தம் பண்ணினீர்கள்; ஆகையால்
கிட்டவந்து, **கர்த்தருடைய** ஆலயத்திற்குத்
தகனபலிகளையும் ஸ்தோத்திர பலிகளையும்
[1]கொண்டுவாருங்கள் என்றான்; அப்பொழுது
சபையார் தகனபலிகளையும் ஸ்தோத்திரபலி
களையும், இஷ்டமுள்ளவர்களெல்லாம் சர்வா
ங்க தகனபலிகளையும் கொண்டுவந்தார்கள்.
32 சபையார் கொண்டுவந்த சர்வாங்கதகனபலி
களின் தொகை எழுபது காளைகளும் நூறு
ஆட்டுக்கடாக்களும், இருநூறு ஆட்டுக்குட்டி
களுமே; இவைகளெல்லாம் **கர்த்தருக்குச்**
33 சர்வாங்க தகனமாயின. அறுநூறு காளைக
ளும் மூவாயிரம் ஆடுகளும் பிரதிஷ்டையாக்
34 கப்பட்டது. ஆனாலும் ஆசாரியர்கள் கொஞ்
சம்பேரானதினால் அவர்களால் அந்தச் சர்
வாங்க தகனமான ஜீவன்களையெல்லாம் அடி
த்துத் தோலுரிக்க முடியாதிருந்தது; அதி
னாலே அந்த வேலை தீருமட்டாகவும், மற்ற
ஆசாரியர் தங்களைப் பரிசுத்தம் பண்ணுமட்
டாகவும், அவர்கள் சகோதரராகிய லேவியர்
அவர்களுக்கு உதவிசெய்தார்கள்; தங்களைப்
பரிசுத்தம் பண்ணிக்கொள்ள லேவியர் ஆசாரி
யரைப்பார்க்கிலும் [2]மன உற்சாகமுள்ளவர்க
35 ளாயிருந்தார்கள். சர்வாங்க தகனபலிகளும்,
ஸ்தோத்திரபலிகளின் கொழுப்பும், [3]சர்வாங்க
தகனங்களுக்கடுத்த பானபலிகளும் மிகுதியா
யிருந்தது; இவ்விதமாய் **கர்த்தருடைய** ஆல
யத்தின் ஆராதனை திட்டம்பண்ணப்பட்டது.
36 தேவன் ஜனத்தை ஆயத்தப்படுத்தினதைக்
குறித்து எசேக்கியாவும் ஜனங்கள் எல்லாரும்
சந்தோஷப்பட்டார்கள்; இந்தக் காரியத்தைச்
செய்யும்படியான யோசனை சடுதியாய் உண்
டாயிற்று.

**30** அதன்பின்பு இஸ்ரவேலின் தேவனாகிய
**கர்த்தருக்குப்** பஸ்காவை ஆசரிக்கும்படி, எரு
சலேமில் இருக்கிற **கர்த்தருடைய** ஆலயத்
திற்கு வாருங்கள் என்று எசேக்கியா இஸ்ர
வேல் யூதா எங்கும் ஆட்களை அனுப்பினதும்
அன்றி, எப்பிராயீம் மனாசே கோத்திரங்களுக்
2 கும் நிருபங்களை எழுதியனுப்பினான். பஸ்
காவை இரண்டாம் மாதத்தில் ஆசரிக்கும்படி,
ராஜாவும் அவனுடைய பிரபுக்களும் எருசலே
மிலுள்ள சபையார் யாவரும் யோசனைபண்
ணியிருந்தார்கள். ஆசாரியர் போதுமானபேர் 3
தங்களைப் பரிசுத்தம்பண்ணாமலும், ஜனங்கள்
எருசலேமில் இன்னும் கூடிவராமலும் இருந்
தபடியினால், [4]அதின் காலத்தில் அதை ஆச
ரிக்கக் கூடாமற்போயிற்று. இந்தக் காரியம் 4
ராஜாவின் பார்வைக்கும் சமஸ்த சபையின்
பார்வைக்கும் நியாயமாய்க் காணப்பட்டது.
எழுதியிருக்கிறபடி வெகுகாலமாய் அவர்கள் 5
அதை ஆசரிக்கவில்லை; ஆகையால் இஸ்ரவே
லின் தேவனாகிய **கர்த்தருக்குப்** பஸ்காவை
ஆசரிக்கும்படி எருசலேமுக்கு வாருங்கள்
என்று பெயெர்செபாமுதல் தாண்மட்டுமுள்ள
இஸ்ரவேல் தேசமெங்கும் பறைசாற்றுவிக்கத்
தீர்மானம் பண்ணினார்கள். அப்படியே ரா 6
ஜாவும் அவனுடைய பிரபுக்களும் கொடுத்த
நிருபங்களை அஞ்சல்காரர் வாங்கி, ராஜாவு
டைய கட்டளையின்படியே இஸ்ரவேல் யூதா
எங்கும் போய்: இஸ்ரவேல் புத்திரரே, ஆபிர
காம் ஈசாக்கு இஸ்ரவேல் என்பவர்களுடைய
தேவனாகிய **கர்த்தரிடத்துக்குத்** திரும்புங்கள்;
[5]அப்பொழுது அசீரியருடைய ராஜாக்களின்
கைக்குத் தப்பியிருக்கிற மீதியான உங்களண்
டைக்கு அவர் திரும்புவார். தங்கள் பிதாக்க 7
ளின் தேவனாகிய **கர்த்தருக்குத்** துரோகம்பண்
ணின உங்கள் பிதாக்களைப்போலவும் உங்
கள் சகோதரரைப்போலவும் இராதேயுங்கள்;
[6]அதற்காக, நீங்கள் காண்கிறபடியே, அவர்கள்
பாழாய்ப்போகிறதற்கு ஒப்புக்கொடுத்தாரே.
இப்போதும் உங்கள் பிதாக்களைப்போல 8
உங்கள் கழுத்தைக் கடினப்படுத்தாதேயுங்கள்;
[7]நீங்கள் **கர்த்தருக்கு** உடன்பட்டு, அவர் சதா
காலத்துக்கும் பரிசுத்தம்பண்ணின அவரு
டைய பரிசுத்த ஸ்தலத்திற்கு வந்து, உங்கள்
தேவனாகிய **கர்த்தரைச்** சேவியுங்கள்; அப்
பொழுது அவருடைய உக்கிரமான கோபம்
[8]உங்களை விட்டுத் திரும்பும். நீங்கள் **கர்த்த** 9
**ரிடத்துக்குத்** திரும்பினால், உங்கள் சகோதர
ரும் உங்கள் பிள்ளைகளும் தங்களைச் சிறை
பிடித்தவர்களுக்கு முன்பாக இரக்கம் பெறு
கிறதற்கும், இந்தத் தேசத்திற்குத் திரும்புகிற
தற்கும் அது ஏதுவாகும்; [9]உங்கள் தேவனாகிய
**கர்த்தர்** கிருபையும் இரக்கமுமுள்ளவர்; நீங்
கள் அவரிடத்திற்குத் திரும்பினால், அவர்
தம்முடைய முகத்தை உங்களைவிட்டு விலக்கு
வதில்லை என்றார்கள். அப்படி அந்த அஞ் 10
சல்காரர் எப்பிராயீம் மனாசே தேசங்களில்
செபுலோன்மட்டுக்கும் ஊரூராகத் திரிந்தார்
கள்; ஆனாலும் அவர்கள் இவர்களைப்பார்த்து
[10]நகைத்துப் பரிகாசம்பண்ணினார்கள். ஆகி 11
லும் ஆசேரிலும், மனாசேயிலும், செபுலோ
னிலும், சிலர் மனத்தாழ்மையாகி எருசலே
முக்கு வந்தார்கள். யூதாவிலும் **கர்த்தருடைய** 12
வார்த்தையின்படியே, ராஜாவும் பிரபுக்களும்
கட்டளையிட்டபிரகாரம் செய்கிறதற்கு, தேவ
னுடைய கரம் அவர்களை [11]ஒருமனப்படுத்

1 லேவி. 7. 12
2 சங். 7. 10
3 லேவி. 3. 16. எண். 15. 5, 7, 10
4 29. 24. யாத். 12. 6, 18
5 எஸ். 4. 1. யோவே. 2. 13
6 29. 8. எசே. 20. 18
7 உபா. 10. 16. 1 நாளா. 29. 24. எஸ்றா 10. 19
8 29. 10
9 யாத். 34. 6. சங். 106. 46. ஏசா. 55. 7
10 36. 16
11 எரே. 24. 7. எசே. 36. 26. பிலி. 2. 13

13 திற்று. அப்படியே இரண்டாம் மாதத்தில்
புளிப்பில்லாத அப்பப்பண்டிகையை ஆசரி
க்க வெகு ஜனங்கள் எருசலேமில் மகா
14 பெரிய சபையாய்க் கூடினார்கள். அவர்கள்
எழும்பி, எருசலேமில் உண்டான பலிபீடங்
களையும் [1]தூபபீடங்களையும் அகற்றிக் கீதே
15 ரோன் ஆற்றிலே போட்டார்கள். பின்பு
அந்த இரண்டாம் மாதம் பதினாலாந்தேதியில்
பஸ்காவின் ஆட்டுக்குட்டிகளை அடித்தார்கள்;
ஆசாரியரும் லேவியரும் வெட்கி, [2]தங்களைச்
சுத்தம்பண்ணி, சர்வாங்க தகனபலிகளைக் **கர்த்**
16 **தருடைய** ஆலயத்திற்குக் கொண்டுவந்து, தேவ
னுடைய மனுஷனாகிய மோசேயின் நியாயப்
பிரமாணத்திற்கு ஏற்ற தங்கள் முறைமையின்
படியே தங்கள் ஸ்தானத்திலே நின்றார்கள்;
ஆசாரியர் லேவியரின் கையிலிருந்து ரத்தத்
17 தை வாங்கித் தெளித்தார்கள். சபையிலே அநே
கர் தங்களைப் பரிசுத்தம் பண்ணிக்கொள்ளா
திருந்தார்கள்; [3]ஆகையால் சுத்தமில்லாத எல்
லாரையும் **கர்த்தருக்குப்** பரிசுத்தம்பண்ண, லே
வியர் அவர்களுக்காகப் பஸ்காவின் ஆட்டுக்
குட்டிகளை அடிக்கும் காரியத்தை விசாரித்தார்
18 கள். அதேனென்றால் எப்பிராயீம், மனாசே,
இசக்கார், செபுலோன் மனுஷரில் ஏரா்ள
மான அநேகம் ஜனங்கள் தங்களைச் சுத்தம்பண்
ணிக்கொள்ளாதிருந்தும், [4]எழுதியிராத பிரகா
19 ரமாகப் பஸ்காவைச் சாப்பிட்டார்கள். எசேக்
கியா அவர்களுக்காக விண்ணப்பம்பண்ணி,
[5]தங்கள் பிதாக்களின் தேவனாகிய **கர்த்த**
**ரான** தேவனைத் தேடும்படிக்கு, தங்கள் இரு
தயத்தை நோக்கினவர்கள் பரிசுத்த ஸ்தலத்
திற்கேற்ற சுத்தாங்கம் அடையாதிருந்தாலும்,
கிருபையுள்ள **கர்த்தர்** அவர்கள் எல்லாருக்
20 கும் மன்னிப்பாராக என்றான். **கர்த்தர்**
எசேக்கியாவின் விண்ணப்பத்தைக் கேட்டு,
21 ஜனங்களுக்கு அநுகூலஞ்செய்தார். அப்ப
டியே எருசலேமிலே காணப்பட்ட இஸ்ர
வேல் புத்திரர் புளிப்பில்லாத அப்பப்பண்டி
கையை ஏழுநாளளவும் மகா ஆனந்தத்தோடே
ஆசரித்தார்கள்; [6]லேவியரும் ஆசாரியரும்
தினந்தினம் **கர்த்தருக்கென்று** பேரோசை
யாய்த் தொனிக்கும் கீதவாத்தியங்களால் **கர்த்**
22 **தரைத்** துதித்துக்கொண்டிருந்தார்கள். **கர்த்**
**தருக்கு** அடுத்த காரியத்தில் நல்ல உணர்வுள்ள
எல்லா லேவியரோடும் எசேக்கியா பட்ச
மாய்ப் பேசினான்; [7]இப்படி அவர்கள் பண்
டிகையின் ஏழுநாள் அளவும் புசித்து, ஸ்தோ
த்திரபலிகளைச் செலுத்தி, தங்கள் பிதாக்க
ளின் தேவனாகிய **கர்த்தரைத்** துதித்துக்கொ
23 ண்டிருந்தார்கள். பின்பு வேறே ஏழுநாளள
வும் ஆசரிக்கச் சபையார் எல்லாரும் யோசனை
பண்ணி, [8]அந்த ஏழுநாளும் ஆனந்தத்தோடே
24 ஆசரித்தார்கள். யூதாவின் ராஜாவாகிய எசே
க்கியா சபைக்கு ஆயிரம் காளைகளையும் ஏழா
யிரம் ஆடுகளையும் கொடுத்தான்; பிரபுக்களும்
சபைக்கு ஆயிரம் காளைகளையும் பதினாயிரம்
ஆடுகளையும் கொடுத்தார்கள்; ஆசாரியரில்

[1] 28. 24
[2] 29. 34
[3] 29. 34
[4] யாத். 12. 43. ழ
[5] 19. 3
[6] யாத். 12. 15; 13. 6
[7] உபா. 33. 10. எசே. 40, 2. எஸ்று 10. 11
[8] 1 இரா. 8. 65
[9] எண். 6. 23
[10] சங். 68. 5
[11] 2 இரா. 18. 4
[12] 1 நாளா. 23. 6
[13] எண். 28, 29. அதி.
[14] எண். 18. 8. ழ நெகே. 13. 10. மல். 2. 7
[15] யாத். 22. 29. நெகே. 13. 12
[16] லேவி. 27. 30. உபா. 14. 28

அநேகம்பேர் தங்களைச் சுத்தம்பண்ணினார்கள்.
யூதாவின் சபையனைத்தும், ஆசாரியரும், லே 25
வியரும், இஸ்ரவேலிலிருந்து வந்தவர்களு
டைய சபையனைத்துமாகிய இஸ்ரவேல் தே
சத்திலிருந்துவந்த அந்நியரும், யூதாவில் குடி
யிருந்தவர்களும் மகிழ்ச்சியாயிருந்தார்கள்.
அப்படியே எருசலேமில் மகா சந்தோஷம் 26
உண்டாயிருந்தது; தாவீதின் குமாரனாகிய
சாலொமோன் என்னும் இஸ்ரவேலுடைய
ராஜாவின் நாட்கள் முதற்கொண்டு இப்படி
எருசலேமில் நடந்ததில்லை. லேவியரான 27
ஆசாரியர்கள் எழுந்து நின்று, ஜனத்தை ஆசீர்
வதித்தார்கள்; [9]அவர்களுடைய சத்தம் கேட்
கப்பட்டு, அவர்களுடைய விண்ணப்பம் அவ
ருடைய பரிசுத்த வாசஸ்தலமாகிய பரலோ
கத்தில் [10]வந்து எட்டினது.

இவையெல்லாம் முடிந்தபின்பு, வந்திருந்த **31**
இஸ்ரவேலர் எல்லாரும் யூதாவின் பட்ட
ணங்களுக்குப் புறப்பட்டுப்போய், யூதா பென்
யமீனெங்கும் எப்பிராயீமிலும் மனாசேயிலுங்
கூட உண்டான சிலைகளை உடைத்து, விக்கி
ரகத்தோப்புகளை வெட்டி, மேடைகளையும்
பீடங்களையும் இடித்து, அவைகளையெல்லாம்
தகர்த்துப்போட்டார்கள்; [11]பின்பு இஸ்ரவேல்
புத்திரர் எல்லாரும் அவரவர் தங்கள் ஊர்களி
லிருக்கிற தங்கள் காணியாட்சிக்குத் திரும்பி
னார்கள். எசேக்கியா ஆசாரியர் லேவியரு 2
டைய வகுப்புகளை அவர்கள் வரிசைகளின்
படியேயும், அவரவரை அவர்கள் ஊழியத்தின்
படியேயும் திட்டப்படுத்தி, [12]ஆசாரியரையும்
லேவியரையும், சர்வாங்க தகனபலிகளையும்
சமாதானபலிகளையும் செலுத்தவும், **கர்த்தரு**
**டைய** பாளயத்தின் வாசல்களில் ஊழியஞ்
செய்து துதித்து ஸ்தோத்திரிக்கவும் ஒழுங்குப்
படுத்தினான். ராஜா **கர்த்தருடைய** நியாயப் 3
பிரமாணத்தில் எழுதியிருக்கிறபடியே அந்தி
சந்திகளில் செலுத்தவேண்டிய சர்வாங்க தக
னபலிகளுக்கும், [13]ஓய்வுநாட்களிலும் மாதப்
பிறப்புகளிலும் பண்டிகைகளிலும் செலுத்த
வேண்டிய சர்வாங்க தகனபலிகளுக்கும் தன்
ஆஸ்தியிலிருந்தெடுத்துத் தன் பங்கைக் கொ
டுத்தான். ஆசாரியரும் லேவியரும் **கர்த்தரு** 4
**டைய** நியாயப்பிரமாணத்தை உற்சாகமாய்க்
கைக்கொள்ளும்படி, அவர்களுக்குரிய [14]பாகத்
தைக் கொடுக்க ஜனங்களுக்கும் எருசலேமின்
குடிகளுக்கும் கட்டளையிட்டான். இந்த வார் 5
த்தை பிரசித்தமானபோது, [15]இஸ்ரவேல் புத்
திரர் தானியத்திலும், திராட்சரசத்திலும், எண்
ணெயிலும், தேனிலும், நிலத்தின் எல்லா வரத்
திலும் முதற்பலன்களைத் திரளாகக் கொண்டு
வந்து, சகலத்திலும் தசமபாகத்தைப் பரிபூர
ணமாய்க் கொடுத்தார்கள். யூதாவின் பட்ட 6
ணங்களில் குடியிருந்த இஸ்ரவேல் புத்திர
ரும், யூதா புத்திரரும், மாடுகளிலும் ஆடுகளி
லும் தசமபாகத்தையும், தங்கள் தேவனாகிய
**கர்த்தருக்குப்** பரிசுத்தம் பண்ணப்பட்டவை
களில் தசமபாகத்தையும் [16]கொண்டுவந்து குவி

7 யல் குவியலாக வைத்தார்கள். மூன்றும்
மாதத்தில் குவியல் செய்யத்தொடங்கி ஏழாம்
8 மாதத்தில் முடித்தார்கள். எசேக்கியாவும் பிர
புக்களும் வந்து, அந்தக் குவியல்களைக் காணும்
போது, **கர்த்தருக்கு** ஸ்தோத்திரஞ்செலுத்தி,
அவருடைய ஜனமாகிய இஸ்ரவேலைப்*புகழ்ந்
9 தார்கள். அந்தக் குவியல்களைக்குறித்து எசே
க்கியா ஆசாரியரையும் லேவியரையும் விசா
10 ரித்தபோது, சாதோக்கின் சந்ததியானாகிய
அசரியா என்னும் பிரதான ஆசாரியன் அவனை
நோக்கி: இந்தக் காணிக்கையைக் **கர்த்தரு
டைய** ஆலயத்திற்குக் கொண்டுவரத் தொடங்
கினதுமுதல் நாங்கள் சாப்பிட்டுத் திர்ப்திய
டைந்தோம்;[1]இன்னும் மிச்சமும் இருக்கிறது;
**கர்த்தர்** தம்முடைய ஜனத்தை ஆசீர்வதித்தபடியி
னால் இந்தத் திரட்சியான அம்பாரம் மீந்திருக்
11 கிறது என்றான். அப்பொழுது எசேக்கியா
**கர்த்தருடைய** ஆலயத்தில் பண்டகசாலைகளை
12 ஆயத்தப்படுத்தச் சொன்னான். அவர்கள்
அவைகளை ஆயத்தப்படுத்தின பின்பு, அவைக
ளிலே காணிக்கைகளையும், தசமபாகத்தையும்,
பரிசுத்தம் பண்ணப்பட்டவைகளையும் †உண்
மையாய் எடுத்துவைத்தார்கள்; அவைகளின்
மேல் லேவியனாகிய கொனனியா தலைவ
னும், [2]அவன் தம்பியாகிய சிமேயி இரண்டா
13 வதுமாயிருந்தான். ராஜாவாகிய எசேக்கியா
வும், தேவனுடைய ஆலய விசாரணைக்காரனா
கிய அசரியாவும் பண்ணின கட்டளையின்ப
டியே, யெகியேலும், அசசியாவும், நாகாத்தும்,
ஆசகேலும், யெரிமோத்தும், யோசபாத்தும்,
எலியேலும், இஸ்மகியாவும், மாகாத்தும், பெ
னாயாவும், கொனனியாவின் கீழும் அவன்
தம்பியாகிய சிமேயியின் கீழும் விசாரிப்புக்
14 காரராயிருந்தார்கள். கிழக்குவாசலைக் காக்கிற
இம்னாவின் குமாரனாகிய கோரே என்னும்
லேவியன், **கர்த்தருக்குச்** செலுத்தப்பட்ட
காணிக்கைகளையும் மகா பரிசுத்தமானவைக
ளையும் பங்கிடும்படிக்கு, தேவனுக்குச் செலுத்
தும் உற்சாகக் காணிக்கைகள்மேல் அதிகாரி
15 யாயிருந்தான். அவனுடைய கைக்கு உதவி
யாக ஆசாரியன் பட்டணங்களில் வகுப்புக
ளின்படியிருக்கிற தங்கள் சகோதரரிலே பெரி
யவனுக்கும் சிறியவனுக்கும் சரிசமானமாய்க்
கொடுக்கும்படிக்கு, உண்மையுள்ளவர்களாக
எண்ணப்பட்ட ஏதேனும், மின்யமீனும், யெ
சுவாவும், செமாயாவும், அமரியாவும், செக்க
16 னியாவும் ஏற்படுத்தப்பட்டார்கள். வம்ச அட்
டவணைகளில் எழுதப்பட்ட மூன்று வயது
முதல், அதற்கு மேற்பட்ட ஆண்பிள்ளைகளைத்
தவிர, கர்த்தருடைய ஆலயத்திற்குள் பிரவே
சிக்கிற அவரவருக்கும் தங்கள் வகுப்புகளின்
படியே, தங்கள் முறைகளிலே தாங்கள் செய்
கிற தங்கள் பணிவிடைக்குத்தக்கதாய் அநு
17 தின படி கொடுக்கப்பட்டது. தங்கள் பிதாக்
களின் வம்ச அட்டவணைகளில் எழுதப்பட்ட
தங்கள் வகுப்புகளின்படியே தங்கள் முறைக
ளிலிருக்கிற இருபது வயதுமுதல், அதற்கு
மேற்பட்ட ஆசாரியருக்கும், லேவியருக்கும்,
அவர்களுடைய எல்லாக் கூட்டத்தின் அட்ட 18
வணையிலும் எழுதப்பட்ட அவர்களுடைய
எல்லாக் குழந்தைகளுக்கும், மனைவிகளுக்கும்,
குமாரருக்கும், குமாரத்திகளுக்கும் பங்கு கொ
டுத்தார்கள்; [3]அவர்கள் பரிசுத்தமானதை உண்
மையின்படி பரிசுத்தமாய் விசாரித்தார்கள்.
ஆசாரியரில் எல்லா ஆண்பிள்ளைகளுக்கும் 19
லேவியருக்குள்ளே அட்டவணையில் எழுதப்
பட்டவர்கள் எல்லாருக்கும் படிகொடுக்க,
ஆசாரியருடைய ஒவ்வொரு பட்டணத்துக்
கடுத்த வெளிநிலங்களிலும் ஆரோன் புத்திர
ரில் பேர்பேராகக் குறிக்கப்பட்ட மனுஷர்
இருந்தார்கள். இந்தப்பிரகாரமாக எசேக்கியா 20
யூதாவெங்கும் நடப்பித்து, தன் தேவனாகிய
**கர்த்தருக்கு** முன்பாக நன்மையும் செம்மையும்
உண்மையுமானதைச் செய்தான். அவன் தே 21
வனுடைய ஆலயத்தின் வேலையிலும், தன்
தேவனைத் தேடும்படிக்கு நியாயப்பிரமாணத்
திற்கும் கற்பனைக்கும் அடுத்த காரியத்திலும்
என்னசெய்யத்தொடங்கினானோ, அதையெல்
லாம் தன் முழு இருதயத்தோடும் செய்து
சித்திபெற்றான்.

இக்காரியங்கள் நடந்தேறிவருகையில் **32**
அசீரியா ராஜாவாகிய சனகெரிப் வந்து,
யூதாவுக்குள் பிரவேசித்து, அரணான பட்ட
ணங்களுக்கு எதிராகப் பாளயமிறங்கி, [4]அவை
களைத் தன் வசமாக்கிக்கொள்ள நினைத்தான்.
சனகெரிப் வந்து, எருசலேமின்மேல் யுத்தம் 2
பண்ண நோக்கங்கொண்டிருப்பதை எசேக்
கியா கண்டபோது, நகரத்திற்குப் புறம்பே 3
யிருக்கிற ஊற்றுகளைத் தூர்த்துப்போட, தன்
பிரபுக்களோடும் தன் பராக்கிரமசாலிகளோ
டும் ஆலோசனைபண்ணினான்; அதற்கு அவர்
கள் உதவியாயிருந்தார்கள். அசீரியா ராஜாக் 4
கள் வந்து, அதிக தண்ணீரைக் கண்டுபிடிப்
பானேன் என்று சொல்லி, அநேகம் ஜனங்
கள் கூடி, எல்லா ஊற்றுகளையும் நாட்டின்
நடுவில் பாயும் ஓடையையும் தூர்த்துப்போட்
டார்கள். அவன் திடன்கொண்டு, இடிந்து 5
போன மதிலையெல்லாம் கட்டி, அவைகளை
யும் வெளியிலுள்ள மற்ற மதிலையும் கொத்த
ளங்கள்மட்டும் உயர்த்தி, தாவீது நகரத்தின்
கோட்டையைப் பலப்படுத்தி, திரளான ஆயு
தங்களையும் கேடகங்களையும் பண்ணி, ஜனத் 6
தின்மேல் படைத்தலைவரை வைத்து, அவர்களை
நகரவாசலின் வீதியிலே தன்னண்டையில்
கூடிவரச்செய்து, அவர்களை நோக்கி: நீங் 7
கள் திடன்கொண்டு தைரியமாயிருங்கள்; அசி
ரியா ராஜாவுக்கும் அவனோடிருக்கிற ஏராள
மான கூட்டத்திற்கும் பயப்படாமலும் கலங்
காமலுமிருங்கள்; [5]அவனோ டிருக்கிறவர்க
ளைப் பார்க்கிலும் நம்மோடிருக்கிறவர்கள் அதி
கம். அவனோடிருக்கிறது மாம்ச புயம், [6]நமக் 8
குத் துணைநின்று நம்முடைய யுத்தங்களை நட
த்த நம்மோடிருக்கிறவர் நம்முடைய தேவனா
கிய **கர்த்தர்**தானே என்று சொல்லி, அவர்க

* வாழ்த்தினார்கள்

[1] மல்கி. 3. 10

† விசுவாசத்தோடே

[2] நெகே. 13. 13

[3] 1 நாளா. 23. 24, 27

[4] 2 இரா. 18. 13

[5] 20. 15. உபா. 31. 6. 2 இரா. 6. 16

[6] எரே. 17. 5. 1 யோ. 4. 4. ரோ. 8. 31

ளைத் தேற்றினான்; யூதாவின் ராஜாவாகிய
எசேக்கியா சொன்ன இந்த வார்த்தைகளின்
மேல் ஜனங்கள் நம்பிக்கை வைத்தார்கள்.
9 இதின்பின்பு அசீரியா ராஜாவாகிய சன
கெரிப் தன் முழுச் சேனையுடன் லாகீசுக்கு எதி
ராய் முற்றிக்கை போட்டிருக்கையில், [1]யூதா
வின் ராஜாவாகிய எசேக்கியாவிடத்துக்கும்,
எருசலேமிலுள்ள யூதா ஜனங்கள் யாவரிடத்
10 துக்கும் தன் ஊழியக்காரரை அனுப்பி: அசி
ரியா ராஜாவாகிய சனகெரிப் சொல்லுகிறது
என்னவென்றால், [2]முற்றிக்கை போடப்பட்ட
எருசலேமிலே நீங்கள் இருக்கும்படிக்கு, நீங்
கள் எதின்மேல் நம்பிக்கையாயிருக்கிறீர்கள்?
11 நம்முடைய தேவனாகிய கர்த்தர் நம்மை அசீரி
யருடைய ராஜாவின் கைக்குத் தப்புவிப்பார்
என்று எசேக்கியா சொல்லி, [3]நீங்கள் பசியினா
லும் தாகத்தினாலும் சாகும்படி உங்களைப் போ
12 திக்கிறான் அல்லவா? அவருடைய மேடைகளை
யும் அவருடைய பலிபீடங்களையும் தள்ளிவிட்
டவனும், ஒரே பலிபீடத்திற்கு முன்பாகப் பணி
ந்து, அதின்மேல் தூபங்காட்டுங்கள் என்று
யூதாவுக்கும் எருசலேமியருக்கும் சொன்ன
13 வனும் [4]அந்த எசேக்கியாதான் அல்லவா? நா
னும் என் பிதாக்களும் தேசத்துச் சகல ஜனங்க
ளுக்கும் செய்ததை அறியீர்களோ? [5]அந்தத் தே
சங்களுடைய ஜாதிகளின் தேவர்கள் அவர்கள்
தேசத்தை நம்முடைய கைக்குத் தப்புவிக்க அவர்
14 களுக்குப் பெலன் இருந்ததோ? உங்கள் தேவன்
உங்களை என் கைக்குத் தப்புவிக்கக்கூடும்படி
க்கு, என் பிதாக்கள் பாழாக்கின அந்த ஜாதிகளு
டைய எல்லா தேவர்களிலும் எவன் தன்
ஜனத்தை என் கைக்குத் தப்புவிக்கப் பலவா
15 னாயிருந்தான்? இப்போதும் எசேக்கியா உங்
களை வஞ்சிக்கவும், இப்படி உங்களைப் போதிக்
கவும் இடங்கொடுக்கவேண்டாம்; [6]நீங்கள்
அவனை நம்பவும் வேண்டாம்; ஏனென்றால்
எந்த ஜாதியின் தேவனும், எந்த ராஜ்யத்தின்
தேவனும் தன் ஜனத்தை என் கைக்கும் என்
பிதாக்களின் கைக்கும் தப்புவிக்கக் கூடாதி
ருந்ததே; உங்கள் தேவன் உங்களை என் கைக்
குத் தப்புவிப்பது எப்படி என்கிறார் என்று
16 சொல்லி, அவனுடைய ஊழியக்காரர் தேவ
னாகிய கர்த்தருக்கு விரோதமாகவும், அவரு
டைய தாசனாகிய எசேக்கியாவுக்கு விரோத
மாகவும் பின்னும் அதிகமாய்ப் பேசினார்கள்.
17 தேசங்களுடைய ஜாதிகளின் தேவர்கள் தங்
கள் ஜனங்களை என் கைக்குத் தப்புவிக்காதி
ருந்ததுபோல, [7]எசேக்கியாவின் தேவனும்
தன் ஜனங்களை என் கைக்குத் தப்புவிப்ப
தில்லையென்று இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தரை நிந்திக்கவும், அவருக்கு விரோதமா
கப் பேசவும் அவன் நிருபங்களையும் எழுதி
18 னான். அவர்கள் அலங்கத்தின்மேலிருக்கிற
எருசலேமின் ஜனங்களைப் பயப்படுத்தி, [8]கலங்
கப்பண்ணி, தாங்கள் நகரத்தைப் பிடிக்கும்
படி, அவர்களைப் பார்த்து: யூதபாஷையிலே
19 மகா சத்தமாய்க் கூப்பிட்டு, மனுஷர் கை

1 2 இரா. 18. 17
2 2 இரா. 18. 19
3 2 இரா. 18. 30
4 2 இரா. 18. 22
5 2 இரா. 18. 33-35
6 2 இரா. 18. 29
7 2 இரா. 19. 9, 12
8 2 இரா. 18. 26-28
9 2 இரா. 19. 15
10 2 இரா. 19. 2, 4, 15
11 2 இரா. 19. 35. ஷ
12 2 இரா. 20. 1. ஏசா. 38. 1
13 சங். 116. 12. ஷ. ஆப. 2. 4
14 2 இரா. 20. 19. எரே. 26. 18, 19
15 1 நாளா. 29. 12

வேலையினால் செய்யப்பட்டதும், பூச்சக்கரத்து
ஜனங்களால் தொழுதுகொள்ளப்பட்டதுமா
யிருக்கிற தேவர்களைக் குறித்துப் பேசுகிறபிர
காரமாக [9]எருசலேமின் தேவனையும் குறித்
துப் பேசினார்கள். இதினிமித்தம் ராஜாவா 20
கிய எசேக்கியாவும் ஆமோத்சின் குமாரனாகிய
ஏசாயா தீர்க்கதரிசியும் பிரார்த்தித்து, [10]வானத்
தை நோக்கி அபயமிட்டார்கள். அப்பொ 21
ழுது கர்த்தர் ஒரு தூதனை அனுப்பினார்;
[11]அவன் அசீரியருடைய ராஜாவின் பாளயத்
திலுள்ள சகல பராக்கிரமசாலிகளையும், தலைவ
ரையும், சேனாபதிகளையும் அதம்பண்ணினான்;
அப்படியே சனகெரிப் செத்தமுகமாய்த் தன்
தேசத்திற்குத் திரும்பினான்; அங்கே அவன்
தன் தேவனுடைய கோவிலுக்குள் பிரவேசிக்
கிறபோது, அவனுடைய கர்ப்பப் பிறப்பான
சிலர் அவனைப் பட்டயத்தால் வெட்டிப்போட்
டார்கள். இப்படிக் கர்த்தர் எசேக்கியாவை 22
யும் எருசலேமின் குடிகளையும் அசீரியரு
டைய ராஜாவாகிய சனகெரிபின் கைக்கும்
மற்ற எல்லாருடைய கைக்கும் நீங்கலாக்கி ரட்
சித்து, அவர்களைச் சுற்றுப்புறத்தாருக்கு வில
க்கி ஆதரித்து நடத்தினார். அநேகம்பேர் கர்த் 23
தருக்கென்று எருசலேமுக்குக் காணிக்கைக
ளையும், யூதாவின் ராஜாவாகிய எசேக்கியா
வுக்கு உச்சிதங்களையும் கொண்டுவந்தார்கள்;
அவன் இதற்குப்பிற்பாடு சகல ஜாதிகளின்
பார்வைக்கும் மேன்மைப்பட்டவனாயிருந்
தான்.

அந்நாட்களில் எசேக்கியா வியாதிப்பட்டு 24
மரணத்துக்கு ஏதுவாயிருந்தான்; [12]அவன்
கர்த்தரை நோக்கி ஜெபம்பண்ணும்போது,
அவர் அவனுக்கு வாக்குத்தத்தம்பண்ணி, அவ
னுக்கு ஒரு அற்புதத்தைக் கட்டளையிட்
டார். எசேக்கியா தனக்குச் செய்யப்பட்ட 25
உபகாரத்திற்குத் தக்கதாய் நடவாமல் மன
மேட்டிமையானான்; [13]ஆகையால் அவன்மே
லும், யூதாவின்மேலும், எருசலேமின்மேலும்
கடுங்கோபம் மூண்டது. எசேக்கியாவின் மன 26
மேட்டிமையினிமித்தம் அவனும் எருசலே
மின் குடிகளும் தங்களைத் தாழ்த்தினபடியி
னால், [14]கர்த்தருடைய கடுங்கோபம் எசேக்கி
யாவின் நாட்களிலே அவர்கள்மேல் வரவில்லை.
எசேக்கியாவுக்கு மிகுதியான ஐசுவரியமும் 27
கனமும் உண்டாயிருந்தது; வெள்ளியும் பொன்
னும் ரத்தினங்களும் கந்தவர்க்கங்களும் கேட
கங்களும் விநோதமான ஆபரணங்களும் வைக்
கும்படியான பொக்கிஷசாலைகளையும், தன 28
க்கு வந்துகொண்டிருந்த தானியமும் திராட்
சரசமும் எண்ணெயும் வைக்கும்படியான
பண்டகசாலைகளையும், சகல வகையுள்ள மிரு
கஜீவன்களுக்குக் கொட்டாரங்களையும், மந்
தைகளுக்குத் தொழுவங்களையும் உண்டாக்கி
னான். அவன் தனக்குப் பட்டணங்களைக் 29
கட்டுவித்து ஏராளமான ஆடுமாடுகளை வைத்
திருந்தான்; [15]தேவன் அவனுக்கு மகா திர
ளான ஆஸ்தியைக் கொடுத்தார். இந்த எசேக் 30

கியா கீயோன் என்னும் ஆற்றிலே அணை
கட்டி, அதின் தண்ணீரை மேற்கேயிருந்து
தாழத் தாவீதின் நகரத்திற்கு நேராகத் திருப்
பினான்; எசேக்கியா செய்ததெல்லாம் வாய்த்
31 தது. ஆகிலும் பாபிலோன் பிரபுக்களின்
ஸ்தானாபதிகள் தேசத்திலே நடந்த அற்புதத்
தைக்கேட்க அவனிடத்துக்கு அனுப்பப்பட்ட
விஷயத்தில் அவன் இருதயத்தில் உண்டான
எல்லாவற்றையும் அறியும்படி [1]அவனைச் சோ
திக்கிறதற்காக தேவன் அவனைக் கைவிட்டார்.
32 எசேக்கியாவின் மற்ற வர்த்தமானங்களும்,
அவன் செய்த நன்மைகளும் ஆமோத்சின்
குமாரனாகிய எசாயா தீர்க்கதரிசியின் புஸ்த
கத்திலும் [2]யூதா இஸ்ரவேல் ராஜாக்களின்
33 புஸ்தகத்திலும் எழுதியிருக்கிறது. எசேக்
கியா தன் பிதாக்களோடே நித்திரை யடைந்த
பின்பு, [3]அவனைத் தாவீது வம்சத்தாரின் கல்ல
றைகளில் பிரதானமான கல்லறையில் அடக்
கம்பண்ணினார்கள்; [4]யூதாவனைத்தும் எருச
லேமின் குடிகளும் அவன் மரித்தபோது அவ
னைக் கனம்பண்ணினார்கள்; அவன் குமாரனா
கிய மனாசே அவன் ஸ்தானத்தில் ராஜா
வானான்.

**33** மனாசே ராஜாவாகிறபோது பன்னிரண்டு
வயதாயிருந்து, [5]ஐம்பத்தைந்து வருஷம் எரு
2 சலேமில் அரசாண்டான். **கர்த்தர்** இஸ்ர
வேல் புத்திரருக்கு முன்பாகத் துரத்தின ஜாதி
களுடைய அருவருப்புகளின்படியே, [6]அவன்
**கர்த்தரின்** பார்வைக்குப் பொல்லாப்பான
3 தைச் செய்தான். அவன் தன் தகப்பனாகிய
எசேக்கியா தகர்த்துப்போட்ட மேடைகளைத்
திரும்பவும் கட்டி, பாகால்களுக்குப் பலிபீ
டங்களை எடுப்பித்து, விக்கிரகத்தோப்புகளை
உண்டாக்கி, வானத்தின் சேனையையெல்லாம்
பணிந்துகொண்டு, [7]அவைகளைச் சேவித்து,
4 எருசலேமிலே என் நாமம் என்றென்றைக்
கும் விளங்கும் [8]என்று **கர்த்தர்** சொன்ன தம்
முடைய ஆலயத்திலே பலிபீடங்களைக் கட்டி,
5 **கர்த்தருடைய** ஆலயத்தின் இரண்டு பிராகா
ரங்களிலும் வானத்தின் சேனைகளுக்கெல்லாம்
6 [9]பலிபீடங்களைக் கட்டினான். அவன் இன்
னோம் குமாரரின் பள்ளத்தாக்கிலே தன் குமா
ரரைத் தீமிதிக்கப் பண்ணி, நாளும் நிமித்தமும்
பார்த்து, பில்லிசூனியங்களை அநுசரித்து, அஞ்
சனம் பார்க்கிறவர்களையும் குறி சொல்லுகிற
வர்களையும் வைத்து, [10]**கர்த்தருக்குக்** கோபமு
ண்டாக அவர் பார்வைக்கு மிகுதியும் பொல்
7 லாப்பானதைச் செய்தான். இந்த ஆலயத்தி
லும், இஸ்ரவேல் கோத்திரங்களிலெல்லாம்
நான் தெரிந்துகொண்ட எருசலேமிலும், [11]என்
நாமத்தை என்றென்றைக்கும் விளங்கப்பண்
8 ணுவேன் என்றும், நான் மோசேயைக்கொ
ண்டு இஸ்ரவேலுக்குக் கொடுத்த சகல நியாயப்
பிரமாணத்திற்கும் கட்டளைகளுக்கும் நியாயங்
களுக்கும் ஒத்தபடியே அவர்களுக்கு நான் கற்பி
த்தவைகளையெல்லாம் அவர்கள் செய்யச் சாவ
தானமாய் இருந்தார்களேயாகில், [12]நான் இனி

அவர்கள் காலை அவர்கள் பிதாக்களுக்கு நிலைப்
படுத்திவைத்த தேசத்திலிருந்து விலகப்பண்
ணுவதில்லையென்றும், தேவன் தாவீதோடும்
அவன் குமாரனாகிய சாலொமோனோடும் சொ
ல்லியிருந்த தேவனுடைய ஆலயத்தில்தானே,
அவன் தான் பண்ணுவித்த விக்கிரகமாகிய
சிலையை ஸ்தாபித்தான். அப்படியே **கர்த்தர்** 9
இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாக அழித்த
ஜாதிகளைப்பார்க்கிலும், யூதாவும் எருசலேமின்
குடிகளும் பொல்லாப்புச் செய்யத்தக்கதாய்,
மனாசே அவர்களை வழிதப்பிப்போகப் பண்
ணினான். **கர்த்தர்** மனாசேயோடும் அவனு 10
டைய ஜனத்தோடும் பேசினபோதிலும்,
அவர்கள் கவனிக்காதேபோனார்கள். ஆகை 11
யால் **கர்த்தர்**: அசீரியா ராஜாவின் சேனாப
திகளை அவர்கள்மேல் வரப்பண்ணினார்; அவர்
கள் மனாசேயை முட்செடிகளில் பிடித்து,
[13]இரண்டு வெண்கலச் சங்கிலியால் அவனைக்
கட்டிப் பாபிலோனுக்குக் கொண்டுபோனார்
கள். இப்படி அவன் நெருக்கப்படுகையில், தன் 12
தேவனாகிய **கர்த்தரை** நோக்கிக் கெஞ்சி, தன்
பிதாக்களின் தேவனுக்கு முன்பாக மிகவும்
தன்னைத் [14]தாழ்த்தினான். அவரை நோக்கி, 13
அவன் விண்ணப்பம் பண்ணிக்கொண்டிருக்
கிறபோது, அவர் அவன் கெஞ்சுதலுக்கு இர
ங்கி, அவன் ஜெபத்தைக் கேட்டு, அவனைத்
திரும்ப எருசலேமிலுள்ள தன்னுடைய ராஜ்ய
த்திற்கு வரப்பண்ணினார்; [15]**கர்த்தரே** தேவன்
என்று அப்பொழுது மனாசே அறிந்தான்.
பின்பு அவன் தாவீதுடைய நகரத்தின் 14
வெளி அலங்கத்தைக் கீயோனுக்கு மேற்கே
யிருக்கிற பள்ளத்தாக்கு தொடங்கி மீன்வாசல்
மட்டும் கட்டி, ஓபேலைச் சுற்றிலும் அதை
வளைத்து, [16]அதை மிகவும் உயர்த்தி, யூதாவி
லுள்ள அரணான பட்டணங்களிலெல்லாம்
ராணுவத்தலைவரை வைத்து, **கர்த்தருடைய** 15
ஆலயத்திலிருந்து அந்நிய தேவர்களையும் அந்த
விக்கிரகத்தையும் எடுத்துப்போட்டு, **கர்த்த
ருடைய** ஆலயமுள்ள மலையிலும் எருசலேமி
லும் தான் கட்டியிருந்த எல்லாப் பலிபீடங்க
ளையும் அகற்றி, பட்டணத்திற்குப் புறம்பாகப்
போடுவித்து, **கர்த்தருடைய** பலிபீடத்தைச் 16
செப்பனிட்டு, அதின்மேல் சமாதானபலிகளை
யும் ஸ்தோத்திரபலிகளையும் செலுத்தி, [17]இஸ்
ரவேலின் தேவனாகிய **கர்த்தரைச்** சேவிக்க
வேண்டும் என்று யூதாவுக்குக் கட்டளையிட்
டான். ஆகிலும் ஜனங்கள் இன்னும் மேடை 17
களில் பலியிட்டுவந்தார்கள்; [18]என்றாலும் தங்
கள் தேவனாகிய **கர்த்தருக்கென்றே** அப்படிச்
செய்தார்கள். மனாசேயின் மற்ற வர்த்தமா 18
னங்களும், அவன் தன் தேவனை நோக்கிப்
பண்ணின விண்ணப்பமும், இஸ்ரவேலின்
தேவனாகிய **கர்த்தரின்** நாமத்தில் அவனோடே
பேசின ஞானதிருஷ்டிக்காரரின் வார்த்தை
களும், [19]இஸ்ரவேல் ராஜாக்களின் புஸ்தகத்
தில் எழுதியிருக்கிறது. அவனுடைய விண் 19
ணப்பமும், அவன் கெஞ்சுதலுக்குக் **கர்த்தர்**

1 உபா. 8. 2. 2 இரா. 20. 12. சங். 39. 1
2 ஏசா. 36—38 அதி. 2 இரா. 18-20. அதி.
3 2 இரா. 20. 21
4 நீதி. 10. 7
5 2 இரா. 21. 1. மு
6 உபா. 18. 9. 2 நாளா. 28. 3
7 2 இரா. 18. 4. உபா. 16. 21; 17. 3
8 உபா. 12. 11. 1 இரா. 8. 29
9 4. 9
10 லேவி. 18. 21. உபா. 18. 10, 11. 2 இரா. 23. 10
11 2 இரா. 21. 7. சங். 132. 14
12 2 சாமு. 7. 10
13 யோபு 36. 8. சங். 107. 10, 11
14 ஓசி. 5. 15. 1 பே. 5. 6
15 1 நாளா. 5. 20. எஸ்றா 8. 23. சங். 9. 16. தானி. 4. 25
16 27. 3. 1 இரா. 1. 33
17 லேவி. 7. 12
18 32. 12
19 1 சாமு. 9. 9

இரங்கினதும், அவன் தன்னைத் தாழ்த்தினத
ற்கு முன்னே பண்ணின அவனுடைய எல்
லாப் பாவமும் துரோகமும், அவன் மேடைக
ளைக்கட்டி விக்கிரகத்தோப்புகளையும் சிலைகளை
யும் ஸ்தாபித்த இடங்களும், [*]ஓசாயின் பிரபந்
20 தத்தில் எழுதியிருக்கிறது. மனாசே தன் பிதாக்
களோடே நித்திரையடைந்தபின்பு, அவனை
அவன் வீட்டிலே அடக்கம்பண்ணினார்கள்;
[1]அவன் குமாரனாகிய ஆமோன் அவன் ஸ்தா
னத்தில் ராஜாவானான்.
21 ஆமோன் ராஜாவாகிறபோது இருபத்தி
ரண்டு வயதாயிருந்து, [2]இரண்டு வருஷம் எரு
22 சலேமில் அரசாண்டான். அவன் தன் தகப்
பனாகிய மனாசே செய்ததுபோல **கர்த்தரின்**
பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்
தான்; தன் தகப்பனாகிய மனாசே பண்ணுவித்
திருந்த விக்கிரகங்களுக்கெல்லாம் ஆமோன்
23 பலியிட்டு, அவைகளைச் சேவித்தான். தன்
தகப்பனாகிய மனாசே தன்னைத் தாழ்த்திக்கொ
ண்டதுபோல, [3]இந்த ஆமோன் என்பவன்
**கர்த்தருக்கு** முன்பாகத் தன்னைத் தாழ்த்தா
மல் மேன்மேலும் அக்கிரமம் செய்துவந்தான்.
24 அவன் ஊழியக்காரர் அவனுக்கு விரோத
மாய்க் கட்டுப்பாடுபண்ணி, [4]அவன் அரமனை
25 யிலே அவனைக் கொன்றுபோட்டார்கள். அப்
பொழுது தேசத்து ஜனங்கள் ஆமோன் என்
னும் ராஜாவுக்கு விரோதமாய்க் கட்டுப்பாடு
பண்ணின யாவரையும் வெட்டிப்போட்டு,
அவன் குமாரனாகிய யோசியாவை அவன்
ஸ்தானத்தில் ராஜாவாக்கினார்கள்.

**34** யோசியா ராஜாவாகிறபோது எட்டு வய
தாயிருந்து, [5]முப்பத்தொரு வருஷம் எருச
2 லேமில் அரசாண்டான். அவன் **கர்த்தரு**
**டைய** பார்வைக்குச் செம்மையானதைச் செய்
து, தன் தகப்பனாகிய தாவீதின் வழிகளில்,
வலது இடதுபுறமாக விலகாமல் நடந்தான்.
3 அவன் தன் ராஜ்யபாரத்தின் எட்டாம் வரு
ஷத்தில், தான் இன்னும் இளவயதாயிருக்கை
யில், [6]தன் தகப்பனாகிய தாவீதின் தேவனைத்
தேட ஆரம்பித்து, பன்னிரண்டாம் வருஷத்
தில் மேடைகள் தோப்புகள் சுரூபங்கள் விக்கி
ரகங்கள் ஆகிய இவைகள் அற்றுப்போகும்
படி, யூதாவையும் எருசலேமையும் சுத்திகரிக்
4 கத் தொடங்கினான். அவனுக்கு முன்பாகப்
பாகால்களின் பலிபீடங்களை இடித்தார்கள்;
அவைகளின்மேலிருந்த சிலைகளை வெட்டி,
விக்கிரகத்தோப்புகளையும் வார்ப்பு விக்கிரகங்
களையும் வெட்டு விக்கிரகங்களையும் உடைத்து
நொறுக்கி, [7]அவைகளுக்குப் பலியிட்டவர்க
ளுடைய பிரேதக்குழிகளின்மேல் தூவி,
5 பூசாசாரிகளின் எலும்புகளை அவர்களுடைய
பீடங்களின்மேல் சுட்டெரித்து, [8]இவ்வித
மாய் யூதாவையும் எருசலேமையும் சுத்திகரித்
6 தான். அப்படியே அவன் மனாசே எப்பிரா
யீம் சிமியோன் என்னும் பட்டணங்களிலும்,
நப்தலிமட்டும், பாழான அவைகளின் சுற்றுப்
7 புறங்களிலும் செய்தான். அவன் இஸ்ரவேல்
தேசம் எங்குமுள்ள பலிபீடங்களையும் விக்கிர
கத்தோப்புகளையும் தகர்த்து, [9]விக்கிரகங்களை
நொறுக்கித் தூளாக்கி, எல்லாச் சிலைகளையும்
வெட்டிப் போட்டபின்பு எருசலேமுக்குத்
திரும்பினான்.
அவன் தேசத்தையும் ஆலயத்தையும் சுத்தி 8
கரித்தபின்பு, அவன் தன் ராஜ்யபாரத்தின்
பதினெட்டாம் வருஷத்திலே, அத்சலியாவின்
குமாரனாகிய சாபபானையும், நகரத்தலைவனா
கிய மாசெயாவையும், யோவாகாசின் குமார
னாகிய யோவாக் என்னும் மந்திரியையும்,
[10]தன் தேவனாகிய **கர்த்தரின்** ஆலயத்தைப்
பழுதுபார்க்கும்படிக்கு அனுப்பினான். அவர் 9
கள் பிரதான ஆசாரியனாகிய இல்க்கியாவினி
டத்தில் வந்து, வாசற்படியைக் காக்கிற லேவி
யர் மனாசேயிலும் எப்பிராயீமிலும் இஸ்ரவே
லில் மீதியானவர்களெல்லாரின் கையிலும்
யூதா பென்யமீன் எங்கும் சேர்த்து, எருசலே
முக்குத் திரும்பி தேவனுடைய ஆலயத்திற்குக்
கொண்டுவந்த [11]பணத்தை ஒப்புவித்து, வேலை 10
யைச் செய்விக்கும்படி, **கர்த்தருடைய** ஆல
யத்தின் விசாரிப்புக்காரரானவர்களின் கை
யில் அதைக் கொடுத்தார்கள்; இவர்கள் அதைக்
**கர்த்தருடைய** ஆலயத்தைப் பழுதுபார்த்துச்
சீர்ப்படுத்துகிறதற்கு ஆலயத்தில் வேலைசெய்
கிறவர்கள் கையிலே கொடுத்தார்கள். அப்ப 11
டியே யூதாவின் ராஜாக்கள் கெடுத்துப்போட்
ட அறைகளைப் பழுதுபார்க்க வெட்டின கற்
களையும், இணைப்புக்கு மரங்களையும், பாவுகிற
தற்குப் பலகைகளையும் வாங்கத் தச்சருக்கும்
சிற்பாசாரிகளுக்கும் அதைக் கொடுத்தார்கள்.
இந்த மனுஷர் வேலையை உண்மையாய்ச் 12
செய்தார்கள்; வேலையை நடத்த மெராரியின்
புத்திரரில் யாகாத் ஒபதியா என்னும் லேவிய
ரும், கோகாதியரின் புத்திரரில் சகரியாவும்,
மெசுல்லாமும் அவர்கள்மேல் விசாரிப்புக்கா
ரராயிருந்தார்கள்; இந்த லேவியர் எல்லா
ரும் கீதவாத்தியங்களை வாசிக்க அறிந்தவர்
கள். அவர்கள் சுமைகாரரை விசாரிக்கிறவர் 13
களாயும், பற்பல வேலைகளைச் செய்கிறவர்கள்
எல்லாரையும் கண்காணிக்கிறவர்களாயும் இரு
ந்தார்கள்; [12]லேவியரில் இன்னும் சிலர் கணக்
கரும் மணியக்காரரும் வாசற் காவலாளருமா
யிருந்தார்கள். **கர்த்தருடைய** ஆலயத்துக்குக் 14
கொண்டுவரப்பட்ட பணத்தை அவர்கள் எடுக்
கிறபோது மோசேயைக்கொண்டு கட்டளை
யிடப்பட்ட **கர்த்தருடைய** நியாயப்பிரமாணப்
புஸ்தகத்தை ஆசாரியனாகிய இல்க்கியா [13]கண்
டெடுத்தான். அப்பொழுது இல்க்கியா சம் 15
பிரதியாகிய சாப்பானை நோக்கி: **கர்த்தருடைய**
ஆலயத்திலே நியாயப்பிரமாணப் புஸ்தகத்
தைக் கண்டெடுத்தேன் என்று சொல்லி, அந்
தப் புஸ்தகத்தைச் சாப்பான் கையில் கொடுத்
தான். சாப்பான் அந்தப் புஸ்தகத்தை ராஜா 16
வினிடத்திற்குக் கொண்டுபோய், [14]அவனை
நோக்கி: உம்முடைய ஊழியக்காரருக்குக் கட்
டளையிடப்பட்டவைகளையெல்லாம் அவர்கள்

[*] ஞானதிருஷ்டிக்காரர்
[1] 2 இரா. 21. 18
[2] 2 இரா. 21. 19. ழ
[3] 12. வச.
[4] 2 இரா. 21. 23, 24
[5] 2 இரா. 22. 1. ழ
[6] 15. 2; 33. 17, 22. 1 இரா. 13. 2
[7] லேவி. 26. 30. 2 இரா. 23. 4. 6
[8] 1 இரா. 13. 2
[9] உபா. 9. 21
[10] 2 இரா. 22. 3
[11] 2 இரா. 12. 4. ழ
[12] 1 நாளா. 23. 4, 5
[13] உபா. 17. 18, 19. யோசு. 1. 8. 2 இரா. 22. 8. ழ
[14] எரே. 36. 20, 21

17 செய்கிறார்கள். **கர்த்தருடைய** ஆலயத்திலே
சேர்ந்த பணத்தை அவர்கள் கூட்டி, அதை
விசாரிப்புக்காரர் கையிலும், வேலைசெய்கிற
வர்கள் கையிலும் கொடுத்தார்கள் என்று ராஜா
வுக்கு மறுசெய்தி சொன்னதும் அல்லாமல்,
18 ஆசாரியனாகிய இல்க்கியா என் கையில் ஒரு
புஸ்தகத்தைக் கொடுத்தான் என்பதைச் சம்பி
ரதியாகிய சாப்பான் ராஜாவுக்கு அறிவித்து,
ராஜாவுக்கு முன்பாக அதை வாசித்தான்.
19 நியாயப்பிரமாணத்தின் வார்த்தைகளை ராஜா
கேட்டபோது, [1]அவன் தன் வஸ்திரங்களைக்
20 கிழித்துக்கொண்டு, இல்க்கியாவுக்கும், சாப்பா
னின் குமாரனாகிய அகிக்காமுக்கும், மீகாவின்
குமாரனாகிய அப்தோனுக்கும், சம்பிரதியாகிய
சாப்பானுக்கும், ராஜாவின் ஊழியக்காரனாகிய
அசாயாவுக்கும் [2]கட்டளையிட்டுச்சொன்னது:
21 கண்டெடுக்கப்பட்ட இந்தப் புஸ்தகத்தினு
டைய வார்த்தைகளினிமித்தம் நீங்கள் போய்,
எனக்காகவும் இஸ்ரவேலிலும் யூதாவிலும் மீதி
யானவர்களுக்காகவும் **கர்த்தரிடத்தில்** விசா
ரியுங்கள்; [3]இந்தப் புஸ்தகத்தில்எழுதியிருக்கிற
எல்லாவற்றின்படியேயும் செய்யும்படிக்கு,
**கர்த்தருடைய** வார்த்தையை நம்முடைய பிதா
க்கள் கைக்கொள்ளாதேபோனபடியினால், நம்
மேல்மூண்ட **கர்த்தருடைய** உக்கிரம்பெரியது
22 என்றான். அப்பொழுது இல்க்கியாவும் ராஜா
அனுப்பின மற்றவர்களும் அஸ்ராவின் குமார
னாகிய திக்வாதின் மகனான சல்லூம் என்னும்
வஸ்திரசாலைவிசாரிப்புக்காரன் மனைவியாகிய
உல்தாள் என்னும்தீர்க்கதரிசியானவளிடத்திற்
குப் போனார்கள்; [4]அவள் எருசலேமில் இரண்
டாம் வகுப்பிலே குடியிருந்தாள்; அவளோடே
23 அதைப்பற்றிப் பேசினார்கள். அவள் இவர்
களை நோக்கி: உங்களை என்னிடத்தில் அனுப்
பினவருக்கு நீங்கள் சொல்லவேண்டியது
என்னவென்றால்: இஸ்ரவேலின் தேவனாகிய
24 **கர்த்தர்** உரைக்கிறதாவது, இதோ, யூதா
வின் ராஜாவுக்கு முன்பாக வாசிக்கப்பட்ட
புஸ்தகத்தில் எழுதியிருக்கிற சகல சாபங்களு
மாகிய பொல்லாப்பை நான் இந்த ஸ்தலத்
தின்மேலும் இதின் குடிகளின்மேலும் வரப்
25 பண்ணுவேன். அவர்கள் என்னைவிட்டு,
தங்கள் கைகளின் கிரியைகள் எல்லாவற்றி
லும் எனக்குக் கோபம் உண்டாக்க வேறே
தேவர்களுக்குத் தூபங்காட்டினபடியினால்,
என் உக்கிரம் அவிந்துபோகாதபடி இந்த ஸ்த
லத்தின்மேல் இறங்கும் என்று **கர்த்தர்** உரைக்
26 கிறார். **கர்த்தரிடத்தில்** விசாரிக்கிறதற்கு உங்
களை அனுப்பின யூதாவின் ராஜாவினிடத்தில்
நீங்கள் போய்: நீ கேட்ட வார்த்தைகளைக்
குறித்து இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்**
27 சொல்லுகிறது என்னவென்றால், இந்த ஸ்த
லத்திற்கும் அதின் குடிகளுக்கும் விரோதமாக
தேவன் சொன்ன அவருடைய வார்த்தை
களை நீ கேட்கையில், உன் இருதயம் இளகி,
எனக்கு முன்பாக நீ உன்னைத் தாழ்த்தி,
[5]எனக்கு முன்பாகப் பணிந்து, உன் வஸ்தி
ரங்களைக் கிழித்துக்கொண்டு, எனக்கு முன்
பாக அழுதபடியினால், [6]நானும் உன் விண்
ணப்பத்தைக் கேட்டேன் என்று **கர்த்தர்**
சொல்லுகிறார். இதோ, நான் இந்த ஸ்தலத் 28
தின்மேலும் இதின் குடிகளின்மேலும் வரப்
பண்ணும் எல்லாப் பொல்லாப்பையும் உன்
கண்கள் காணாதபடிக்கு, நீ சமாதானத்தோ
டே உன் கல்லறையில் சேர்த்துக்கொள்ளப்
பட, நான் உன்னை உன் பிதாக்களண்டையி
லே சேரப்பண்ணுவேன் என்கிறார் என்று
சொன்னாள்; அவர்கள் ராஜாவுக்கு மறுசெய்தி
கொண்டுபோனார்கள்.

அப்பொழுது ராஜா யூதாவிலும் எருசலே 29
மிலுமுள்ள மூப்பரையெல்லாம் [7]அழைப்பித்
துக் கூடிவரச்செய்து, ராஜாவும், சகல யூதா 30
மனுஷரும், எருசலேமின் குடிகளும், ஆசாரிய
ரும், லேவியரும், பெரியோர்முதல் சிறியோர்
மட்டுமுள்ள சகலருமாய்க் **கர்த்தருடைய**
ஆலயத்துக்குப் போனார்கள்; **கர்த்தருடைய**
ஆலயத்திலே கண்டெடுக்கப்பட்ட உடன்
படிக்கைப் புஸ்தகத்தின் வார்த்தைகளையெல்
லாம் அவர்கள் காதுகள் கேட்க வாசித்
தான். ராஜா தன் ஸ்தானத்திலே நின்று, 31
[8]அந்தப் புஸ்தகத்தில் எழுதியிருக்கிற உடன்
படிக்கையின் வார்த்தைகளின்படியே தான்
செய்வதினாலே, **கர்த்தரைப்** பின்பற்றி நடப்
பேன் என்றும், தன் முழு இருதயத்தோடும்
தன் முழு ஆத்துமாவோடும் அவருடைய கற்
பனைகளையும் அவருடைய சாட்சிகளையும்
அவருடைய கட்டளைகளையும் கைக்கொள்ளு
வேன் என்றும் **கர்த்தருடைய** சந்நிதியில்
உடன்படிக்கைபண்ணி, எருசலேமிலும் 32
பென்யமீனிலும் காணப்பட்ட யாவரையும்
அதற்கு உட்படப்பண்ணினான்; அப்படியே
எருசலேமின் குடிகள் தங்கள் பிதாக்களின்
தேவனாகிய அந்த தேவனுடைய உடன்படிக்
கையின்படியே செய்தார்கள். யோசியா 33
இஸ்ரவேல் புத்திரருடைய தேசங்கள் எங்கும்
உண்டான அருவருப்புகளையெல்லாம் அகற்றி,
இஸ்ரவேலிலே காணப்பட்டவர்களை யெல்
லாம் தங்கள் தேவனாகிய **கர்த்தரைச்** சேவிக்
கும்படி செய்தான்; [9]அவன் உயிரோடிருந்த
நாளெல்லாம் அவர்கள் தங்கள் பிதாக்களின்
தேவனாகிய **கர்த்தரை** விட்டுப் பின்வாங்கின
தில்லை.

அதற்குப் பின்பு யோசியா எருசலேமி **35**
லே **கர்த்தருக்குப்** பஸ்காவை ஆசரித்தான்,
[10]அவர்கள் முதலாம்மாதம் பதினாலாந்தேதியி
லே பஸ்கா ஆட்டுக்குட்டியை அடித்தார்கள்.
அவன் ஆசாரியர்களை அவர்கள் முறைவரி 2
சைகளில் வைத்து, [11]அவர்களைக் **கர்த்த
ருடைய** ஆலயத்தில் ஆராதனை செய்யத் திட்
டப்படுத்தி, இஸ்ரவேலையெல்லாம் உபதே 3
சிக்கிறவர்களும், **கர்த்தருக்குப்** பரிசுத்தமாக்
கப்பட்டவர்களுமாகிய லேவியரை நோக்கி:
[12]பரிசுத்தப் பெட்டியைத் தாவீதின் குமார
னாகிய சாலொமோன் என்னும் இஸ்ரவே

1 ரோ. 7. 7, 9
2 2 இரா. 22. 12
3 ஏசா. 37. 4
4 2 இரா. 22. 14
5 சங். 34. 18; 51. 17. ஏசா. 57. 15; 66. 2. எசே. 9. 4
6 சங். 10. 17. ஏசா. 65. 24
7 2 இரா. 23. 1. ழ
8 6. 13. 2 இரா. 11. 14; 23. 3. சங். 119. 106
9 1 இரா. 11. 5. எரே. 3. 10
10 2 இரா. 23. 21, 22. எஸ்றா. 6. 19
11 23. 18
12 உபா. 33. 19. மல்கி. 2. 7

லின் ராஜா கட்டின ஆலயத்திலே வையுங்
கள்; தோளின்மேல் அதைச் சுமக்கும் பாரம்
உங்களுக்குரியதல்ல; [1]இப்போது நீங்கள் உங்
கள் தேவனாகிய **கர்த்தருக்கும்**, அவருடைய
ஜனமாகிய இஸ்ரவேலுக்கும் ஊழியஞ்செ
4 ய்து, இஸ்ரவேலின் ராஜாவாகிய தாவீது
எழுதின கட்டளைக்கும், [2]அவன் குமாரனாகிய
சாலொமோன் எழுதின கட்டளைக்கும் [3]ஒத்த
படியே உங்கள் பிதாக்களின் குடும்பத்தாருக்
காகக் குறிக்கப்பட்ட வரிசையிலே உங்களை
5 ஆயத்தப்படுத்தி, ஜனங்களாகிய உங்கள்
சகோதரருக்காகப் பரிசுத்த ஸ்தலத்திலே பிதா
க்களுடைய வம்சப் பிரிவுகளின்படியேயும்,
[4]லேவியருடைய வம்சத்தார் வகுக்கப்பட்ட
6 படியேயும் நின்று, பஸ்கா ஆட்டுக்குட்டியை
அடித்து, உங்களைப் பரிசுத்தம்பண்ணி, [5]மோ
சேயைக்கொண்டு **கர்த்தர்** சொன்னபடியே
உங்கள் சகோதரர் செய்யும்படி, அவர்களுக்கு
அவைகளை ஆயத்தப்படுத்துங்கள் என்றான்.
7 வந்திருந்த ஜனங்கள் எல்லாருக்கும், அவர்
கள் இலக்கத்தின்படியே, பஸ்கா பலிக்காக
முப்பதினாயிரம் ஆட்டுக்குட்டிகளையும் வெள்
ளாட்டுக்குட்டிகளையும், மூவாயிரம் காளைகளை
யும், ராஜாவாகிய யோசியா தன்னுடைய
8 [6]ஆஸ்தியிலிருந்து கொடுத்தான். அவனு
டைய பிரபுக்களும் மனப்பூர்வமான காணிக்
கையாக ஜனத்திற்கும் ஆசாரியருக்கும் லே
வியருக்கும் கொடுத்தார்கள்; தேவனுடைய
ஆலய விசாரணைக் கர்த்தாவாகிய இல்க்கியா
வும் சகரியாவும் யெகியேலும் ஆசாரியர்களுக்
குப் பஸ்கா பலிக்கென்று இரண்டாயிரத்து
அறுநூறு ஆட்டுக்குட்டிகளையும், முந்நூறு
9 காளைகளையும் கொடுத்தார்கள். கொனனியா,
செமாயா, நெதனெயேல் என்னும் அவர்கள்
சகோதரரும், அசபியா, ஏயெல், யோசபாத்
என்னும் லேவியரின் பிரபுக்களும், லேவிய
ருக்குப் பஸ்கா பலிக்கென்று ஐயாயிரம் ஆட்
டுக்குட்டிகளையும் ஐந்நூறு காளைகளையும் கொ
10 டுத்தார்கள். இப்படி ஆராதனை திட்டம்பண்
ணப்பட்டபோது, ராஜாவினுடைய கட்டளை
யின்படியே, ஆசாரியர் தங்கள் ஸ்தானத்தி
லும், [7]லேவியர் தங்கள் வகுப்புகளின் வரிசை
11 யிலும் நின்று, பஸ்கா ஆட்டுக்குட்டியை
அடித்தார்கள்; ஆசாரியர் அவர்கள் கையிலிரு
ந்து ரத்தத்தை வாங்கித் தெளித்தார்கள்; [8]லே
12 வியர் தோலுரித்தார்கள். மோசேயின் புஸ்த
கத்தில் எழுதியிருக்கிறபடி ஜனங்கள் **கர்த்த
ருக்குப்** பலிசெலுத்தும்படி, அவர்கள் தகன
பலி மிருகங்களைப் பிதாக்களுடைய வம்சப்
பிரிவுகளின்படியே, இவர்களுக்குக் கொடுக்
கத்தக்கதாய் அவைகளைப் பிரித்துவைத்தார்
கள்; [9]காளைகளையும் அப்படியே செய்தார்கள்.
13 அவர்கள் பஸ்கா ஆட்டுக்குட்டியை நியாய
முறைமையின்படியே அக்கினியில் பொரித்
து, [10]பரிசுத்தமாக்கப்பட்ட மற்றவைகளைப் பா
னைகளிலும் கொப்பரைகளிலும் சட்டிகளி
லும் சமைத்து, ஜனங்களுக்கெல்லாம் தீவிர

[1] 1 நாளா. 9. 10
[2] 1 நாளா. 23. 26
[3] 8. 14
[4] சங். 134. 1
[5] 30. 3, 15. எஸ்றா 6. 20
[6] 30. 24
[7] எஸ்றா 6. 18
[8] 29. 22, 24
[9] லேவி. 3. 3
[10] யாத். 12. 8, 9. உபா. 16. 7
[11] 1 சாமு. 2. 13–15
[12] 1 நாளா. 9. 17; 25. 1. ழ
[13] யாத். 12. 15
[14] 2 இரா. 23. 22, 23
[15] 2 இரா. 23. 29. எரே. 46. 2
[16] 1 இரா. 22. 30

மாய்ப் [11]பங்கிட்டுக்கொடுத்தார்கள். பின்பு 14
தங்களுக்காகவும் ஆசாரியருக்காகவும் ஆயத்
தப்படுத்தினார்கள்; ஆரோனின் புத்திரராகிய
ஆசாரியர்கள் சர்வாங்க தகனபலிகளையும் நி
ணத்தையும் செலுத்துகிறதில், இரவுமட்டும்
வேலையாயிருந்தபடியினால், லேவியர் தங்களு
க்காகவும், ஆரோனின் புத்திரராகிய ஆசாரிய
ருக்காகவும் ஆயத்தப்படுத்தினார்கள். தாவீ 15
தும், ஆசாபும், ஏமானும், ராஜாவின் ஞான
திருஷ்டிக்காரனாகிய எதுத்தூனும் கற்பித்த
படியே, [12]ஆசாபின் புத்திரராகிய பாடகர் தங்
கள் ஸ்தானத்திலும், வாசல்காவலாளர் ஒவ்
வொரு வாசலிலும் நின்றார்கள்; அவர்கள் தங்
கள் ஊழியத்தை விட்டு விலகக்கூடாதிருந்
தது; லேவியரான அவர்கள் சகோதரர் அவர்
களுக்காக ஆயத்தப்படுத்தினார்கள். அப்படி 16
யே ராஜாவாகிய யோசியாவினுடைய கட்ட
ளைப்படி, பஸ்காவை ஆசரிக்கிறதற்கும், **கர்த்
தருடைய** பலிபீடத்தின்மேல் சர்வாங்க தகன
பலிகளை இடுகிறதற்கும் அடுத்த **கர்த்தருடைய**
ஆராதனையெல்லாம் அன்றையதினம் திட்ட
மாய்ச் செய்யப்பட்டது. அங்கே வந்திருந்த 17
இஸ்ரவேல் புத்திரர் அக்காலத்தில் பஸ்காவை
யும், [13]புளிப்பில்லாத அப்பப் பண்டிகையை
யும் ஏழுநாளளவும் ஆசரித்தார்கள். தீர்க்க 18
தரிசியாகிய சாமுவேலின் நாள்தொடங்கி,
இஸ்ரவேலிலே அப்படிக்கொத்த பஸ்கா ஆச
ரிக்கப்படவில்லை; [14]யோசியாவும், ஆசாரிய
ரும், லேவியரும், யூதாவனைத்தும், இஸ்ரவே
லில் வந்திருந்தவர்களும், எருசலேமின் குடி
களும் ஆசரித்த பஸ்காவைப்போல இஸ்ர
வேல் ராஜாக்களில் ஒருவரும் ஆசரித்த
தில்லை. யோசியாவுடைய ராஜ்யபாரத்தின் 19
பதினெட்டாம் வருஷத்திலே இந்தப் பஸ்கா
ஆசரிக்கப்பட்டது.

யோசியா தேவாலயத்திற்கு அடுத்ததைத் 20
திட்டப்படுத்தின இந்த எல்லா நடபடிகளுக்
கும் பின்பு, [15]எகிப்தின் ராஜாவாகிய நேகோ
ஐபிராத்து நதியோரமான கர்கேமிஸ் பட்ட
ணத்தின்மேல் யுத்தம்பண்ண வந்தான்; அப்
பொழுது யோசியா அவனுக்கு விரோதமாய்
யுத்தஞ்செய்யப் புறப்பட்டான். அவன் இவ 21
னிடத்துக்கு ஸ்தானாபதிகளை அனுப்பி: யூதா
வின் ராஜாவே, எனக்கும் உமக்கும் என்ன?
நான் இப்போது உமக்கு விரோதமாய் அல்ல,
என்னோடே யுத்தம்பண்ணுகிற ஒருவனுக்கு
விரோதமாய்ப் போகிறேன்; நான் தீவிரிக்க
வேண்டுமென்று தேவன் சொன்னார்; தேவன்
என்னோடிருக்கிறார்; அவர் உம்மை அழிக்கா
தபடிக்கு அவருக்கு எதிரிடை செய்வதை
விட்டுவிடும் என்று சொல்லச்சொன்னான்.
ஆனாலும் யோசியா தன் முகத்தை அவனை 22
விட்டுத் திருப்பாமலும், நேகோ சொன்ன
தேவனுடைய வாயின் வார்த்தைகளுக்குச் செ
விகொடாமலும், [16]அவனோடே யுத்தம்பண்ண
வேஷம் மாறி, மெகிதோவின் பள்ளத்தாக்கி
லே யுத்தம்பண்ணுகிறதற்கு வந்தான். வில் 23

வீரர் யோசியா ராஜாவின்மேல் அம்பெய்தார்
கள்; அப்பொழுது ராஜா தன் ஊழியக்காரரை
நோக்கி: [1]என்னை அப்புறம் கொண்டுபோங்
கள், எனக்குக் கொடிய காயம்பட்டது என்
24 றான். அப்பொழுது அவனுடைய ஊழியக்
காரர் அந்தரதத்தின்மேலிருந்த அவனை இறக்கி,
அவனுக்கு இருந்த இரண்டாவது ரதத்தின்
மேல் ஏற்றி அவனை எருசலேமுக்குக் கொண்
டுவந்தார்கள்; அவன் மரணமடைந்து தன்
பிதாக்களின் கல்லறையில் அடக்கம்பண்ணப்
பட்டான்; [2]யூதாவிலும் எருசலேமிலுமுள்ள
யாவரும் யோசியாவுக்காகத் துக்கங்கொண்டா
25 டினார்கள். எரேமியா யோசியாவின்மேல் புலம்
பல் பாடினான்; சகல பாடகரும் பாடகிகளும்
இந்நாள்வரைக்கும் தங்கள் புலம்பல்களில்
யோசியாவின்மேல் பாடுகிறார்கள், அவைகள்
இந்நாள்வரைக்கும் இஸ்ரவேலிலே வழங்கி
வருகிறது; [3]அவைகள் புலம்பலின் புஸ்தகத்
26 தில் எழுதியிருக்கிறது. யோசியாவின் மற்ற
வர்த்தமானங்களும், **கர்த்தருடைய** நியாயப்பிர
மாணத்தில் எழுதியிருக்கிறதற்கொத்த அவன்
27 செய்த நன்மைகளும், அவனுடைய ஆதி
யோடந்த நடபடிகளும், இஸ்ரவேல் யூதா
ராஜாக்களின் புஸ்தகத்தில் எழுதியிருக்
கிறது.

**36** அப்பொழுது ஜனங்கள் யோசியாவின்
குமாரனாகிய யோவாகாசை அழைத்து,
[4]அவனை எருசலேமிலே அவன் தகப்பன் ஸ்தா
2 னத்திலே ராஜாவாக்கினார்கள். யோவாகாஸ்
ராஜாவாகிறபோது இருபத்துமூன்று வயதா
யிருந்து, மூன்றுமாதம் எருசலேமில் அர
3 சாண்டான். அவன் எருசலேமில் அரசாளா
தபடிக்கு எகிப்தின் ராஜா அவனைத் தள்ளி
விட்டு, தேசத்தின்மேல் நூறு தாலந்து வெள்
ளியும் ஒரு தாலந்து பொன்னுமான தண்டத்
4 தைச் சுமத்தி, அவனுடைய அண்ணனாகிய
எலியாக்கீமை யூதாவின்மேலும் எருசலேமின்
மேலும் ராஜாவாக்கி, அவன் பேரை யோயாக்
கீம் என்று மாற்றினான்; அவன் தம்பியாகிய
யோவாகாசை எகிப்தின் ராஜாவாகிய நேகோ
எகிப்திற்குக் கொண்டுபோனான்.
5 யோயாக்கீம் ராஜாவாகிறபோது இருபத்
தைந்து வயதாயிருந்து, [5]பதினொரு வருஷம்
எருசலேமில் அரசாண்டு, தன் தேவனாகிய
**கர்த்தருடைய** பார்வைக்குப் பொல்லாப்பான
6 தைச் செய்தான். அவனுக்கு விரோதமாகப்
பாபிலோன் ராஜாவாகிய நேபுகாத்நேச்சார்
வந்து, [6]அவனைப் பாபிலோனுக்குக் கொண்டு
போக இரண்டு வெண்கலச் சங்கிலியால் அவ
7 னைக் கட்டினான். **கர்த்தருடைய** ஆலயத்தின்
பணிமுட்டுகளிலும் சிலவற்றை நேபுகாத்நேச்
சார் பாபிலோனுக்குக்கொண்டுபோய், [7]அவை
களைப் பாபிலோனிலுள்ள தன்னுடைய கோ
8 விலிலே வைத்தான். யோயாக்கீமுடைய
மற்ற வர்த்தமானங்களும், அவன் செய்ததும்,
அவனிடத்திலே கண்டுபிடிக்கப்பட்டதுமான
அவனுடைய அருவருப்புகளும், [8]இஸ்ரவேல்

[1] 1 இரா. 22. 34
[2] 2 இரா. 23. 30. சகரி. 12. 11
[3] எரே. 22. 20. புலம். 4. 20. மத். 9. 23
[4] 2 இரா. 23. 30. ழ
[5] 2 இரா. 23. 36, 37
[6] 2 இரா. 24. 1
[7] 2 இரா. 24. 13. தானி. 1. 1, 2: 5. 2
[8] எகோனியா. 1 நாளா. 3. 16. கோனியா. எரே. 22. 24
[9] 2 இரா. 24. 8
[10] 2 இரா. 24. 10–17
* மத்தனியா. 2 இரா. 24. 17. எரே. 37. 1
[11] 2 இரா. 24. 18. எரே. 52. 1. ழ
[12] எரே. 52. 3. எசே. 17. 15, 18
[13] 2 இரா. 17. 14
[14] எரே. 25. 3, 4: 35. 15: 44. 4
[15] எரே. 5. 12, 13: 32. 3: 38. 6. நீதி. 1. 25, 30. மத். 23. 34
[16] சங். 74. 1: 79. 5
[17] உபா. 28. 49. 2 இரா. 25. 1. ழ. எஸ்றா 9. 7
[18] சங். 74. 20: 79. 2, 3
[19] 2 இரா. 25. 13. ழ

யூதா ராஜாக்களின் புஸ்தகத்தில் எழுதியிருக்
கிறது; அவன் ஸ்தானத்தில் அவன் குமாரனா
கிய யோயாக்கீன் ராஜாவானான்.
யோயாக்கீன் ராஜாவாகிறபோது எட்டுவய 9
தாயிருந்து, மூன்று மாதமும் பத்துநாளும் எரு
சலேமில் அரசாண்டு [9]**கர்த்தரின்** பார்வைக்
குப் பொல்லாப்பானதைச் செய்தான். மறு 10
வருஷத்தின் ஆரம்பத்திலே நேபுகாத்நேச்சார்
என்னும் ராஜா அவனையும், **கர்த்தருடைய** ஆல
யத்தின் திவ்வியமான பணிமுட்டுகளையும் பாபி
லோனுக்குக் கொண்டுவரப்பண்ணி, [10]அவன்
சிறிய தகப்பனாகிய *சிதேக்கியாவை யூதா
வின்மேலும் எருசலேமின்மேலும் ராஜா
வாக்கினான்.
சிதேக்கியா ராஜாவாகிறபோது இருபத் 11
தொரு வயதாயிருந்து, [11]பதினொரு வருஷம்
எருசலேமில் அரசாண்டு, தன் தேவனாகிய 12
**கர்த்தரின்** பார்வைக்குப் பொல்லாப்பான
தைச் செய்தான்; அவன் **கர்த்தருடைய** வாக்
கை உரைத்த எரேமியா என்கிற தீர்க்கதரிசிக்கு
முன்பாகத் தன்னைத் தாழ்த்தவில்லை. தேவன் 13
மேல் தன்னை ஆணையிடுவித்துக்கொண்ட நே
புகாத்நேச்சார் என்னும் ராஜாவுக்கு விரோத
மாய்க் கலகம்பண்ணி, [12]இஸ்ரவேலின் தேவ
னாகிய **கர்த்தரிடத்துக்குத்** திரும்பாதபடிக்கு
[13]தன் கழுத்தை அழுத்தமாக்கி, தன் இருதயத்
தைக் கடினப்படுத்தினான். ஆசாரியரில் பிர 14
தானமானவர்கள் யாவரும் ஜனங்களும் கூடிப்
புறஜாதிகளுடைய சகல அருவருப்புகளின்
படியும் மிகவும் துரோகம்பண்ணி, **கர்த்தர்**
எருசலேமிலே பரிசுத்தம் பண்ணின அவரு
டைய ஆலயத்தைத் தீட்டுப்படுத்தினார்கள்.
அவர்களுடைய பிதாக்களின் தேவனாகிய **கர்த்** 15
**தர்** தமது ஜனத்தையும் தமது வாசஸ்தலத்தை
யும் காப்பதற்கான இரக்கமுள்ளவராயிருந்த
படியால், [14]அவர்களிடத்துக்குத் தம்முடைய
ஸ்தானாபதிகளை ஏற்கெனவே அனுப்பினார்.
ஆனாலும் அவர்கள் தேவனுடைய ஸ்தானாபதி 16
களைப் பரியாசம்பண்ணி, அவருடைய வார்த்
தைகளை அசட்டைசெய்து, அவருடைய தீர்க்
கதரிசிகளை நிந்தித்தபடியால், [15]**கர்த்தருடைய**
உக்கிரம் அவருடைய ஜனத்தின்மேல் மூண்
டது; [16]சகாயமில்லாமல் போயிற்று. ஆதலால் 17
அவர் அவர்கள்மேல் கல்தேயரின் ராஜாவை
வரப்பண்ணினார்; [17]அவன் அவர்கள் வாலி
பரை அவர்களுடைய பரிசுத்தமான ஆலயத்
திலே பட்டயத்தினால் கொன்று, [18]வாலிபரை
யும் கன்னியாஸ்திரீகளையும் முதியோரையும்
விருத்தாப்பியரையும் தப்பவிடவில்லை; எல்லா
ரையும் தேவன் அவன் கையில் ஒப்புக்கொடுத்
தார். அவன் தேவனுடைய ஆலயத்தின் 18
பெரிதும் சிறிதுமான பணிமுட்டுகள் அனைத்
தையும், [19]**கர்த்தருடைய** ஆலயத்தின் பொக்கி
ஷங்களும் ராஜாவுக்கும் அவன் பிரபுக்களுக்
கும் இருந்த பொக்கிஷங்களுமாகிய அனைத்
தையும் பாபிலோனுக்குக் கொண்டுபோனான்.
அவர்கள் தேவனுடைய ஆலயத்தைத் தீக் 19

கொளுத்தி, எருசலேமின் அலங்கத்தை இடி
த்து, அதின் மாளிகைகளையெல்லாம் அக்கி
னியால் சுட்டெரித்து, [1]அதிலிருந்த திவ்விய
மான பணிமுட்டுகளை யெல்லாம் அழித்தார்
20 கள். பட்டயத்திற்குத் தப்பின மீதியானவர்
களை அவன் பாபிலோனுக்குச் சிறைபிடித்துப்
போனான்; [2]பெர்சியா ராஜ்யபாரம் ஸ்தாபிக்
கப்படுமட்டும் அங்கே அவர்கள் அவனுக்கும்
அவன் குமாரருக்கும் அடிமைகளாயிருந்தார்
21 கள். கர்த்தர் எரேமியாவின் வாயினாலே
சொன்ன வார்த்தை நிறைவேறும்படிக்கு,
தேசம் தன்னுடைய ஓய்வு வருஷங்களை
இரம்மியமாய் அநுபவித்துத் தீருமட்டும்,
[3]அது பாழாய்க் கிடந்தநாளெல்லாம், அதா
வது, எழுபது வருஷம் முடியுமட்டும் ஓய்ந்
திருந்தது.

[1] 2 இரா. 25. 9. சங். 74. 6; 79. 1, 7
[2] 2 இரா. 25, 11. எரே. 27. 7
[3] எரே. 25. 9, 12. தானி. 9. 2, லேவி. 25. 4, 5
[4] எஸ்றா 1. 1-3. எரே. 25. 12, 18
[5] ஏசா. 44. 28; 45. 1. ழ

எரேமியாவின் வாயினாலே **கர்த்தர்** சொ 22
ன்ன வார்த்தை நிறைவேறும்படி, பெர்சியா
வின் ராஜாவாகிய கோரேசின் முதலாம் வருஷ
த்திலே, [4]**கர்த்தர்** பெர்சியாவின் ராஜாவாகிய
[5]கோரேசின் ஆவியை எவினதினாலே, அவன்:
பரலோகத்தின் தேவனாகிய **கர்த்தர்** பூமியின்
ராஜ்யங்களையெல்லாம் எனக்குத் தந்தருளி,
யூதாவிலுள்ள எருசலேமிலே தமக்கு ஆலயத்
தைக் கட்டுவிக்கும்படி எனக்குக் கட்டளையிட்
டிருக்கிறார். அவருடைய ஜனங்கள் எல்லா 23
ரிலும் எவன் உங்களுக்குள் இருக்கிறானோ
அவன் போகட்டும், அவனுடைய தேவனாகிய
**கர்த்தர்** அவனோடிருப்பாராக என்று பெர்சி
யாவின் ராஜாவாகிய கோரேஸ் அறிவிக்கிறார்
என்று, தன் ராஜ்யம் எங்கும் எழுதியனுப்பி
விளம்பரம்பண்ணினான்.

EZRA

# எஸ்றுவின் புஸ்தகம்

**1** எரேமியாவின் வாயினுலே கர்த்தர் சொன்
னவார்த்தை நிறைவேறும்படி, [1]பெர்சியாவின்
ராஜாவாகிய கோரேசுடைய முதலாம் வரு
ஷத்திலே, கர்த்தர் பெர்சியாவின் ராஜாவா
கிய கோரேசின் ஆவியை ஏவினதினுலே
2 அவன்: பரலோகத்தின் தேவனுகிய கர்த்தர்
பூமியின் ராஜ்யங்களையெல்லாம் எனக்குத்
தந்தருளி, யூதாவிலுள்ள எருசலேமிலே தம
க்கு ஆலயத்தைக் கட்டும்படி [2]எனக்குக் கட்
3 டளையிட்டிருக்கிறுர். அவருடைய ஜனங்
கள் எல்லாரிலும் எவன் உங்களுக்குள் இருக்
கிறுனே, அவனேடே அவனுடைய தேவன்
இருப்பாராக; [3]அவன் யூதாவிலுள்ள எருச
லேமுக்குப்போய், இஸ்ரவேலின் தேவனுகிய
கர்த்தருடைய ஆலயத்தைக் கட்டக்கடவன்;
[4]எருசலேமில் வாசம்பண்ணுகிற தேவனே
4 தேவன். அந்த ஜனங்களில் மீதியாயிருக்கிற
வன் எவ்விடத்தில் தங்கியிருக்கிறுனே, அவ்
விடத்து ஜனங்கள் எருசலேமிலுள்ள தேவனு
டைய ஆலயத்துக்கென்று அவனிடத்தில் உற்
சாகமாய்க் காணிக்கை கொடுத்து அனுப்புகிற
துமன்றி, அவனுக்குப் பொன் வெள்ளி முத
லிய திரவியங்களையும், மிருகஜீவன்களையும்
கொடுத்து, உதவிசெய்யவேண்டும் என்று
பெர்சியாவின் ராஜாவாகிய கோரேஸ் அறி
விக்கிறுர் என்று தன் ராஜ்யமெங்கும் எழுதி
5 யனுப்பி [5]விளம்பரம் பண்ணுவித்தான். அப்
பொழுது எருசலேமிலுள்ள கர்த்தருடைய
ஆலயத்தைக் கட்டுகிறதற்குப் போகும்படி
யூதா பென்யமீன் வம்சங்களின் தலைவரும்
ஆசாரியரும் லேவியருமன்றி, எவர்கள் ஆவி
யைத் தேவன் ஏவினுரோ [6]அவர்கள் எல்லா
6 ரும் எழும்பினுர்கள். அவர்களைச் சுற்றிலும்
குடியிருக்கிற யாவரும் மன உற்சாகமாய்க்
காணிக்கைகொடுத்ததுமன்றி, வெள்ளிப்பணி
முட்டுகளையும்பொன்னையும்மற்றவஸ்துக்களை
யும் மிருகஜீவன்களையும் உச்சிதமான பொருள்
களையும் கொடுத்து, அவர்கள் கைகளைத் திடப்
7 படுத்தினுர்கள். நேபுகாத்நேச்சார் எருசலே
மிலிருந்து கொண்டுவந்து, [7]தன் தேவனுடைய
கோவிலிலே வைத்திருந்த கர்த்தருடைய ஆல
யத்துப் பணிமுட்டுகளையும் கோரேஸ் ராஜா
8 எடுத்துக்கொடுத்தான். அவைகளைப் பெர்சி
யாவின் ராஜாவாகிய கோரேஸ்பொக்கிஷக்கா
ரனுகிய மித்திரேதாத்தின் கையினுல் எடுக்கச்
செய்து, யூதாவின் அதிபதியாகிய சேஸ்பாத்
சாரிடத்தில் எண்ணிக்கொடுத்தான். அவை 9
களின் தொகையாவது: பொன் தட்டுகள் முப்
பது, வெள்ளித்தாலங்கள் ஆயிரம், கத்திகள்
இருபத்தொன்பது. பொற்கிண்ணங்கள் முப் 10
பது, வெள்ளிக்கிண்ணங்கள் நானூற்றுப்பத்து,
மற்றப் பணிமுட்டுகள் ஆயிரம். பொன் 11
வெள்ளிப் பணிமுட்டுகளெல்லாம் ஐயாயிர
த்து நானூறு. இவைகளையெல்லாம் சேஸ்பாத்
சார், சிறையிருப்பினின்று விடுதலைபெற்ற
வர்கள் பாபிலோனிலிருந்து எருசலேமுக்குப்
[8]போகையில், எடுத்துக்கொண்டுபோனுன்.
பாபிலோன் ராஜாவாகிய நேபுகாத்நேச் **2**
சார் [9]பாபிலோனுக்குக் கொண்டுபோனவர்
களுக்குள்ளே, சிறையிருப்பிலிருந்து எருசலே
முக்கும் யூதாவிலுள்ள தங்கள் தங்கள் பட்ட
ணங்களுக்கும், செருபாபேல், யெசுவா, நெ 2
கேமியா, *செராயா, ரெலாயா, மொர்தெகாய்,
பில்சான், மிஸ்பார், பிக்வாய், ரேகூம், பானு
என்பவர்களோடேகூட திரும்பிவந்த தேசத்
துப் புத்திரராகிய இஸ்ரவேல் ஜனமான மனி
தரின் தொகையாவது: பாரோஷின் புத்திரர் 3
இரண்டாயிரத்து நூற்று எழுபத்திரண்டுபேர்.
செபத்தியாவின் புத்திரர் முந்நூற்று எழு 4
பத்திரண்டுபேர். ஆராகின் [10]புத்திரர் எழு 5
நூற்று எழுபத்தைந்துபேர். யெசுவா யோ 6
வாப் என்பவர்களுடைய சந்ததிக்குள்ளிருந்த
[11]பாகாத்மோவாபின் புத்திரர் இரண்டாயிரத்து
எண்ணூற்றுப் பன்னிரண்டுபேர். ஏலாமின் 7
புத்திரர் ஆயிரத்து இருநூற்று ஐம்பத்து நான்
குபேர். சத்தூவின் புத்திரர் தொள்ளாயிரத்து 8
நாற்பத்தைந்துபேர். சக்காயின் புத்திரர் எழு 9
நூற்று அறுபதுபேர். †பானியின் புத்திரர் 10
அறுநூற்று நாற்பத்திரண்டுபேர். பெபாயின் 11
புத்திரர் அறுநூற்று இருபத்து மூன்றுபேர்.
அஸ்காதின் புத்திரர் ஆயிரத்து இருநூற்று 12
இருபத்திரண்டுபேர். அதொனிகாமின் புத் 13
திரர் அறுநூற்று அறுபத்தாறுபேர். பிக்வா 14
யின் புத்திரர் இரண்டாயிரத்து ஐம்பத்தாறு
பேர். ஆதீனின் புத்திரர் நானூற்று ஐம்பத்து 15
நான்குபேர். எசேக்கியாவின் சந்ததியான 16

1 2 நாளா. 36. 22, 23. எரே. 25. 12; 29. 10
2 ஏசா. 44. 28; 45. 1, 18
3 சங். 83. 18. ஏசா. 45. 5. எரே. 10. 10
4 தானி. 6. 26
5 5. 13, 14
6 நெகே. 2. 12. நீதி. 16. 1. பிலி. 2. 13. 3 யோ. 11
7 5. 14; 6. 5. 2 இரா. 24. 13. 2 நாளா. 36. 7. தானி. 5. 2
8 மத். 1. 11, 12
9 2 இரா. 24. 14, 16. நெகே. 7. 6. மூ. சகரி. 2. 7
* அசரியா. நெகே. 7. 7
10 நெகே. 7. 10
11 நெகே. 7. 11
† பின்னூ. நெகே. 7. 15

அதேரின் புத்திரர் தொண்ணூற்றெட்டுப்பேர்.
17 பேசாயின் புத்திரர் மூந்நூற்று இருபத்து மூன்
18 றுபேர். *யோராகின் புத்திரர் நூற்றுப் பன்
19 னிரண்டுபேர். அசூமின் புத்திரர் இருநூற்று
20 இருபத்துமூன்றுபேர். †கிபாரின் புத்திரர் தொ
21 ண்ணூற்றைந்துபேர். பெத்லகேமின் புத்திரர்
22 நூற்றிருபத்து மூன்றுபேர். நெத்தோபாவின்
23 மனிதர் ஐம்பத்தாறுபேர். ஆனதோத்தின்
24 மனிதர் நூற்றிருபத்தெட்டுப்பேர். ‡அஸ்
மாவேத்தின் புத்திரர் நாற்பத்திரண்டுபேர்.
25 கீரியாத்யாரீம், கெபிரா, பேரோத் என்பவை
களின் புத்திரர் எழுநூற்று நாற்பத்து மூன்று
26 பேர். ராமா, காபா என்பவைகளின் புத்தி
27 ரர் அறுநூற்று இருபத்தொருபேர். மிக்மா
28 சின் மனிதர் நூற்றிருபத்திரண்டு பேர். பெத்
தேல், ஆயி என்பவைகளின் மனிதர் இரு
29 நூற்று இருபத்து மூன்றுபேர். நேபோவின்
30 புத்திரர் ஐம்பத்திரண்டுபேர். மக்பீஷின் புத்
31 திரர் நூற்றைம்பத்தாறுபேர். மற்ற ஏலாமின்
புத்திரர் §ஆயிரத்து இருநூற்று ஐம்பத்து நான்
32 குபேர். ஆரீமின் புத்திரர் மூந்நூற்று இரு
33 பதுபேர். லோத், ஆதீத், ஓனோ என்பவை
களின் புத்திரர் எழுநூற்று இருபத்தைந்து
34 பேர். எரிகோவின் புத்திரர் மூந்நூற்று நாற்
35 பத்தைந்துபேர். சேனாகின் புத்திரர் மூவாயிர
36 த்து அறுநூற்று முப்பதுபேர். ஆசாரியரான
வர்கள்: யெசுவாவின் குடும்பத்தானாகிய யெ
தாயாவின் ||புத்திரர் தொள்ளாயிரத்து எழு
37 பத்து மூன்றுபேர். இம்மேரின் ¶புத்திரர்
38 ஆயிரத்து ஐம்பத்திரண்டுபேர். பஸ்கூரின்
**புத்திரர் ஆயிரத்து இருநூற்று நாற்பத்தேழு
39 பேர். ஆரீமின் ††புத்திரர் ஆயிரத்துப் பதி
40 னேழுபேர். லேவியரானவர்கள்: ‡‡ஒதாயா
வின் சந்ததியான யெசுவா கத்மியேல் என்ப
41 வர்களின் புத்திரர் எழுபத்து நான்குபேர். பா
டகர்களானவர்கள்: ஆசாபின் புத்திரர் நூற்றிரு
42 பத்தெட்டுப்பேர். வாசல் காவலாளரின் புத்
திரரானவர்கள்: சல்லூமின் புத்திரரும், அதே
ரின் புத்திரரும், தல்மோனின் புத்திரரும், அக்
கூபின் புத்திரரும், அதிதாவின் புத்திரரும்,
சோபாயின் புத்திரருமானவர்க ளெல்லாரும்
43 நூற்று முப்பத்தொன்பதுபேர். நிதனீமியரான
வர்கள்: §§சீகாவின் புத்திரர், அசுபாவின் புத்
44 திரர், தபாகோத்தின் புத்திரர், கேரோசின்
புத்திரர், சீயாகாவின் புத்திரர், பாதோனின்
45 புத்திரர், லெபானாகின் புத்திரர், அகாபாவின்
46 புத்திரர், அக்கூபின் புத்திரர், ஆகாபின் புத்
திரர், ||||சல்மாயின் புத்திரர், ஆனானின் புத்தி
47 ரர், கித்தேலின் புத்திரர், காகாரின் புத்திரர்,
48 ராயாகின் புத்திரர், ரேத்சீனின் புத்திரர்,
நெகோதாவின் புத்திரர், காசாமின் புத்திரர்,
49 ஊசாவின் புத்திரர், பாசெயாகின் புத்திரர்,
50 பேசாயின் புத்திரர், அஸ்னாவின் புத்திரர்,
51 மெயூனீமின் புத்திரர், நெபுசீமின் புத்திரர், பக்
பூக்கின் புத்திரர், அகுபாவின் புத்திரர், அர்கூ
52 ரின் புத்திரர், ¶¶பஸ்லூதின் புத்திரர், மெகி
53 தாவின் புத்திரர், அர்ஷாவின் புத்திரர். பர்

* ஆரீப். நெகே. 7. 24
† கிபேயோன். நெகே. 7. 25
‡ பெத் அஸ்மா வேத். நெகே. 7. 28
§ 7. வச.
|| 1 நாளா. 24. 7.
¶ 1 நாளா. 24. 14
** 1 நாளா. 9. 12
†† 1 நாளா. 24. 8
‡‡ யூதா. 3. 9. ஒபதியா. நெகே. 7. 43
§§ 1 நாளா. 9. 2
|||| சல்மாய்.
¶¶ பஸ்லீத். நெகே. 7. 54
*** 1 இரா. 9. 21
††† பெரீத். நெகே. 7. 57
‡‡‡ ஆமோன். நெகே. 7. 59
§§§ யோசு. 9. 21, 27. 1 இரா. 9. 21
|||||| கோத்திர வரலாறு.
¶¶¶ 2 சாமு. 17. 27
**** எண். 3. 10
†††† யாத். 28. 30
‡‡‡‡ அதிபதி. நெகே. 8. 9
§§§§ நெகே. 7. 66.
|||||||| நெகே. 7. 10
¶¶¶¶ 1 நாளா. 26. 20
***** 6. 16, 17. நெகே. 7. 73

கோசின் புத்திரர், சிசெராவின் புத்திரர், தாமா
வின் புத்திரர், நெத்சியாவின் புத்திரர், அதி 54
பாவின் புத்திரருமே. சாலொமோனுடைய 55
வேலையாட்களின் புத்திரரானவர்கள்: ***சோ
தாயின் புத்திரர், சொபரேத்தின் புத்திரர்,
†††பெருதாவின் புத்திரர், யாலாகின் புத்தி 56
ரர் தர்கோனின் புத்திரர், கித்தேலின் புத்தி
ரர், செபத்தியாவின் புத்திரர், அத்தீலின் 57
புத்திரர், செபாயீமிலுள்ள பொகெரேத்தின்
புத்திரர், ‡‡‡ஆமியின் புத்திரருமே. நிதனீ 58
மியரும் §§§சாலொமோனுடைய வேலை
யாட்களின் புத்திரரும் எல்லாரும் மூந்நூற்
றுத்தொண்ணூற்றிரண்டுபேர். தெல்மெலாகி 59
லும், தெல்அர்சாவிலும், கேருபிலும், ஆதோ
னிலும், இம்மேரிலுமிருந்து வந்து, தாங்கள்
இஸ்ரவேலர் என்று தங்கள் பிதாக்களின் வம்
சத்தையும், தங்கள் ||||||பூர்வோத்தரத்தையும்
சொல்லமாட்டாமல் இருந்தவர்கள்: தெலாயா 60
வின் புத்திரர், தொபியாவின் புத்திரர், நெகோதா
வின் புத்திரர், ஆக அறுநூற்று ஐம்பத்திரண்டு
பேர்; ஆசாரியரின் புத்திரரில் அபாயாவின் புத் 61
திரர், கோசின் புத்திரர், கீலேயாத்தியனான
¶¶¶பர்சில்லாயின் குமாரத்திகளில் ஒருத்தியை
விவாகம்பண்ணி, அவர்கள் வம்ச நாமம் தரிக்
கப்பட்ட பர்சில்லாயின் புத்திரரே. இவர் 62
கள் தங்கள் வம்ச அட்டவணையைத் தேடி,
அதைக் காணாமற்போய், ஆசாரிய ஊழி
யத்திற்கு ****விலக்கமானவர்கள் என்று எண்
ணப்பட்டார்கள். ஊரீம் ††††தும்மீம் என் 63
பவைகளுள்ள ஒரு ஆசாரியன் எழும்புமட்டும்,
இவர்கள் மகா பரிசுத்தமானதிலே புசிக்கத் தகா
தென்று ‡‡‡‡திர்ஷாதா அவர்களுக்குச் சொன்
னான். சபையார் எல்லாரும் ஏகத்திற்கு 64
§§§§ நாற்பத்தீராயிரத்து மூந்நூற்று அறுபது
பேராயிருந்தார்கள். அவர்களைத்தவிர ஏழாயிர 65
த்து மூந்நூற்று முப்பத்தேழுபேரான அவர்களு
டையவேலைக்காரரும்வேலைக்காரிகளும், இரு
நூறு பாடகரும் பாடகிகளும் அவர்களுக்கு இரு
ந்தார்கள். அவர்களுடைய குதிரைகள் எழு 66
நூற்று முப்பத்தாறு, அவர்களுடைய கோவேறு
கழுதைகள் இருநூற்று நாற்பத்தைந்து, அவர்க 67
ளுடைய ஒட்டகங்கள் நானூற்று முப்பத்தைந்து,
கழுதைகள் ஆறாயிரத்து எழுநூற்று இருபது.
வம்சங்களின் தலைவரில் சிலர் எருசலேமிலுள்ள 68
கர்த்தருடைய ஆலயத்துக்கு வந்தபோது,
||||||||தேவனுடைய ஆலயத்தை அதின் ஸ்தான
த்திலே எடுப்பிக்கும்படிக்கு, அதற்காக மன
உற்சாகமாய்க் காணிக்கைகளைக் கொடுத்தார்
கள். அவர்கள் தங்கள் சக்திக்குத் தக்கதாக திருப் 69
பணிப் பொக்கிஷத்திற்கு அறுபத்தோராயிரம்
தங்கக்காசையும், ஐயாயிரம் இராத்தல் வெள்ளி
யையும், நூறு ஆசாரிய வஸ்திரங்களையும்
¶¶¶¶கொடுத்தார்கள். ஆசாரியரும், *****லேவி 70
யரும், ஜனங்களில் சிலரும், பாடகரும், வாசல்
காவலாளரும், நிதனீமியரும், தங்கள் தங்கள் பட்
டணங்களிலும், இஸ்ரவேலர் எல்லாரும் தங்கள்
தங்கள் பட்டணங்களிலும் குடியேறினார்கள்.

3 இஸ்ரவேல் புத்திரர் பட்டணங்களிலே
குடியேறி, ஏழாம் மாதமானபோது, ஜனங்கள்
2 ஏகோபித்து எருசலேமிலே கூடினார்கள். அப்
பொழுது யோசதாக்கின் குமாரனாகிய *யெசு
வாவும், அவன் சகோதரராகிய ஆசாரியரும்,
†செயல்தியேலின் குமாரனாகிய செருபாபே
லும், அவன் சகோதரரும் எழும்பி, தேவனு
டைய மனிதனாகிய மோசேயின் நியாயப்பிர
மாணத்தில் எழுதியிருக்கிறபடி சர்வாங்க தகன
ங்களைப் பலியிடும்படிக்கு, இஸ்ரவேலுடைய
தேவனின் பலிபீடத்தைக் கட்டினார்கள்.
3 அவர்கள் அத்தேசத்தின் ஜனங்களுக்குப் பயந்
ததினால், பலிபீடத்தை அதின் ஆதாரங்களின்
மேல் ஸ்தாபித்து, அதின்மேல் அவர்கள் **கர்த்
தருக்கு** அந்திசந்தி சர்வாங்க [1]தகனபலிகளைச்
4 செலுத்தினார்கள். எழுதியிருக்கிறபடியே
அவர்கள் கூடாரப்பண்டிகையை ஆசரித்து,
[2]நித்திய நியமத்தின்படியும் அன்றாடகக் கணக்
கின்படியும் ஒவ்வொரு நாளிலும் பலியிட்டார்
5 கள். அதற்குப்பின்பு நித்தமும், மாதப்பிறப்பு
களிலும், **கர்த்தருடைய** சகல பரிசுத்த பண்டி
கைகளிலும் செலுத்தும் சர்வாங்க தகனபலி
யையும், [3]**கர்த்தருக்கு** அவரவர் செலுத்தும் உற்
6 சாகபலியையும் செலுத்தினார்கள். ஏழாம்
மாதம் முதல்தேதியில் **கர்த்தருக்குச்** சர்வாங்க
தகனபலிகளைச் செலுத்தத் தொடங்கினார்கள்;
ஆனாலும் **கர்த்தருடைய** ஆலயத்தின் அஸ்தி
7 பாரம் இன்னும் போடப்படவில்லை. அப்
பொழுது பெர்சியாவின் ராஜாவாகிய கோ
ரேஸ் தங்களுக்குப் பிறப்பித்த உத்தரவின்படி
யே அவர்கள் கல்தச்சருக்கும் தச்சருக்கும்
பணத்தையும், [4]லீபனோனிலிருந்து கேதுரு
மரங்களைச் சமுத்திரவழியாய் யோபாமட்டும்
கொண்டுவரச் சீதோனியருக்கும் தீரியருக்
கும் போஜனபானத்தையும் எண்ணெயையும்
கொடுத்தார்கள்.
8 அவர்கள் எருசலேமிலுள்ள தேவனுடைய
ஆலயத்திற்கு வந்த இரண்டாம் வருஷம் இர
ண்டாம் மாதத்திலே, செயல்தியேலின் குமா
ரனாகிய செருபாபேலும், யோசதாக்கின் குமா
ரனாகிய யெசுவாவும், மற்றுமுள்ள அவர்கள்
சகோதரராகிய ஆசாரியரும் லேவியரும், [5]சி
றையிருப்பிலிருந்து எருசலேமுக்கு வந்த அனை
வரும், ஆரம்பஞ்செய்து, இருபதுவயதுமுதல்
அதற்கு மேற்பட்ட லேவியரைக் **கர்த்தரு
டைய** ஆலயத்தின் வேலையை நடத்தும்படி
9 வைத்தார்கள். அப்படியே தேவனுடைய
ஆலயத்தின் வேலையைச் செய்கிறவர்களை நட
த்தும்படி யெசுவாவும் அவன் குமாரரும் சகோ
தரரும், கத்மியேலும் அவன் குமாரரும், யூதா
வின் குமாரரும், எனாதாத்தின் குமாரரும்,
அவர்கள் சகோதரராகிய லேவியரும் ஒரு
10 மனப்பட்டு நின்றார்கள். சிற்பாசாரிகள் **கர்த்
தருடைய** ஆலயத்திற்கு அஸ்திபாரம் போடுகிற
போது, இஸ்ரவேல் ராஜாவாகிய தாவீதுடைய
கட்டளையின்படியே, **கர்த்தரைத்** துதிக்கும்
படிக்கு, [6]வஸ்திரங்கள் தரிக்கப்பட்டு, பூரிகை
களை ஊதுகிற ஆசாரியரையும், தாளங்களைக்
கொட்டுகிற ஆசாபின் குமாரராகிய லேவிய
ரையும் நிறுத்தினார்கள்: **கர்த்தர்** நல்லவர், 11
இஸ்ரவேலின்மேல் அவருடைய கிருபை
என்றுமுள்ளது என்று அவரைப் புகழ்ந்து
துதிக்கையில், [7]மாறிமாறிப் பாடினார்கள்; **கர்த்
தரைத்** துதிக்கையில், ஜனங்கள் எல்லாரும்
**கர்த்தருடைய** ஆலயத்தின் அஸ்திபாரம் போ
டப்படுகிறதினிமித்தம் மகா கெம்பீரமாய் ஆ
ரவாரித்தார்கள். முந்தின ஆலயத்தைக் கண் 12
டிருந்த முதிர்வயதான ஆசாரியரிலும், லேவி
யரிலும், பிதாக்கள் வம்சங்களின் தலைவரிலும்
அநேகர் இந்த ஆலயத்துக்குத் தங்கள் கண்
களுக்கு முன்பாக அஸ்திபாரம் போடப்படு
கிறதைக் கண்டபோது, மகா சத்தமிட்டு அழு
தார்கள்; [8]வேறே அநேகம்பேரோ கெம்பீர சந்
தோஷமாய் ஆர்ப்பரித்தார்கள். ஜனங்கள் மகா 13
கெம்பீரமாய் ஆர்ப்பரிக்கிறதினால் அவர்கள்
சத்தம் வெகுதூரம் கேட்கப்பட்டது; ஆனாலும்
சந்தோஷ ஆரவாரத்தின் சத்தம் இன்னதென்
றும், ஜனங்களுடைய அழுகையின் சத்தம்
இன்னதென்றும் பகுத்தறியக்கூடாதிருந்தது.

சிறையிருப்பிலிருந்து வந்த ஜனங்கள் 4
இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தருக்கு** ஆல
யத்தைக் கட்டுகிறார்கள் என்று யூதாவுக்கும்
பென்யமீனுக்கும் இருந்த சத்துருக்கள் கேள்
விப்பட்டபோது, அவர்கள் செருபாபேலிடத் 2
துக்கும் தலைவரான பிதாக்களிடத்துக்கும் வந்
து: உங்களோடேகூட நாங்களும் கட்டுவோம்;
உங்களைப்போல நாங்களும் உங்கள் தேவனை
நாடுவோம்; [9]இவ்விடத்துக்கு எங்களை வரப்
பண்ணின அசீரியாவின் ராஜாவாகிய எசரத்
தோன் நாட்கள் முதற்கொண்டு அவருக்கு
நாங்களும் பலியிட்டுவருகிறோம் என்று அவர்
களோடே சொன்னார்கள். அதற்குச் செரு 3
பாபேலும், யெசுவாவும், இஸ்ரவேலில் மற்று
முள்ள தலைவரான பிதாக்களும் அவர்களை
நோக்கி: எங்கள் தேவனுக்கு ஆலயத்தைக்
கட்டுகிறதற்கு உங்களுக்கும் எங்களுக்கும் சம்
பந்தமில்லை; [10]பெர்சியாவின் ராஜாவாகிய கோ
ரேஸ் ராஜா எங்களுக்குக் கட்டளையிட்டபடி,
நாங்களே இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்த
ருக்கு** அதைக் கட்டுவோம் என்றார்கள். அதி 4
னால் அந்தத் தேசத்து ஜனங்கள் யூதா ஜனத்
தின் கைகளைத் தளரப்பண்ணி, [11]கட்டாதபடி
க்கு அவர்களைச் சங்கடப்படுத்தி, பெர்சியா 5
வின் ராஜாவாகிய கோரேசின் காலமுழுதும்,
தரியு என்னும் பெர்சியாராஜா அரசாண்ட
காலமட்டும், அவர்கள் யோசனையை அவத்த
மாக்கும்படி அவர்களுக்கு விரோதமாய் ஆலோ
சனைக்காரருக்குக் ‡கைக்கூலி கட்டினார்கள்.
அகாஸ்வேரு அரசாளுகிறபோது, அவனு 6
டைய ராஜ்யபாரத்தின் துவக்கத்திலே, யூதா
விலும் எருசலேமிலும் குடியிருக்கிறவர்களு
க்கு விரோதமாகப் §பிரியாது எழுதினார்கள்.
அர்தசஷ்டாவின் நாட்களிலும், பிஸ்லாமும், 7
மித்திரேதாத்தும், †தாபெயேலும், மற்றுமுள்ள

* யோசுவா. ஆகா. 1. 1
† சலாத்தியேல். சொரொபாபேல். மத். 1. 12.
[1] எண். 28. 3, 4
[2] யாத். 23. 16. எண். 8. 14, 17. 29. 12. ழ. சகரி. 14. 16, 17
[3] யாத். 29. 38. எண். 28. 3, 11, 19, 26
[4] 2 இரா. 5. 6-9. 2 நாளா. 2. 10. அப். 12. 20
[5] 1 நாளா. 23. 24, 27
[6] 1 நாளா. 6. 31. ழ. 16. 5, 6, 42. சகரி. 4. 10
[7] யாத். 15. 21. 2 நாளா. 7. 3. நெகே. 12. 24. சங். 136. 1. எரே. 33. 11
[8] ஆகா. 2. 3. சங். 126. 6. எரே. 31. 8, 9
[9] 2 இரா. 17. 24, 32, 33; 19. 37
[10] நெகே. 2. 20
[11] 3. 3
‡ லஞ்சம். அப். 24. 1. ழ
§ முறைபாடு.

அவர்கள் வகையராவும், பெர்சியா ராஜாவான
அர்தசஷ்டாவுக்கு ஒரு மனு எழுதினார்கள்;
அந்த மனு சீரிய எழுத்திலும் சீரிய பாஷை
8 யிலும் எழுதியிருந்தது. ஆலோசனைத் தலைவ
னாகிய ரேகூமும் கணக்கனாகிய சிம்சாவும்
எருசலேமுக்கு விரோதமாக அர்தசஷ்டா என்
னும் ராஜாவுக்கு எழுதின மனுவிலே கை
9 யொப்பம் போட்டவர்கள் யாரென்றால்: ஆ
லோசனைத் தலைவனாகிய ரேகூமும், கணக்க
னாகிய சிம்சாயும், மற்றுமுள்ள அவர்கள் வகை
யராவாகிய தினாவியர், அபற்சாத்தியர், தர்பே
லியர், அப்பார்சியர், அற்கேவியர், பாபிலோ
னியர், சூஷங்கியர், தெகாவியர், ஏலாமியரான
10 வர்களும், பெரியவரும் [1]பேர் பெற்றவருமான
அஸ்னாப்பார் அவ்விடங்களிலிருந்து அழைத்
துக்கொண்டுவந்து சமாரியாவின் பட்டணத்தி
லே குடியேறப்பண்ணின மற்ற ஜனங்களும்,
நதிக்கு இப்பாலே இருக்கிற மற்ற ஜனங்களு
11 மே. அவர்கள் அர்தசஷ்டா என்னும் ராஜாவு
க்கு அனுப்பின மனுவின் நகலாவது: நதிக்கு
இப்புறத்தில் இருக்கிற உமது அடியார் முத
லானவர்கள் அறிவிக்கிறது என்னவென்றால்,
12 உம்மிடத்திலிருந்து எங்களிடத்திற்கு வந்த
யூதர் எருசலேமிலே கூடி, கலகமும் பொல்
லாப்புமான அந்தப் பட்டணத்திற்கு அஸ்தி
பாரங்களை இணைத்து, அதின் மதில்களை
எழுப்பிக் கட்டுகிறார்கள் என்பது ராஜாவுக்கு
13 அறியலாவதாக. இப்போதும் இந்தப் பட்ட
ணம் கட்டப்பட்டு, அலங்கங்கள் எடுப்பிக்கப்
பட்டுத் தீர்ந்தால், அவர்கள் பகுதியையும் தீர்
வையையும் ஆயத்தையும் கொடுக்கமாட்டார்
கள்; [2]அதினால் ராஜாக்களின் வருமானத்திற்கு
நஷ்டம் வரும் என்று ராஜாவுக்கு அறியலாவ
14 தாக. இப்போதும் நாங்கள் அரமனை உப்புத்
தின்கிறபடியினால், ராஜாவுக்குக் குறைவுவரப்
பார்த்திருக்கிறது எங்களுக்கு அடாதகாரியம்;
ஆகையால் நாங்கள் இதை அனுப்பி, ராஜா
15 வுக்குத் தெரியப்படுத்துகிறோம். உம்முடைய
பிதாக்களின் நடபடி புஸ்தகங்களில் சோதித்
துப்பார்க்க உத்தரவாகவேண்டும்; அப்பொ
ழுது இந்தப் பட்டணம் கலகமும், ராஜாக்க
ளுக்கும் சீமைகளுக்கும் நஷ்டமும் உண்டாக்
குகிற பட்டணம் என்றும், பூர்வகாலமுதல்
கலாதி உள்ளதாயிருந்தபடியினால் இந்தப் பட்
டணம் பாழ்க்கடிக்கப்பட்டது என்றும், அந்த
16 நடபடி புஸ்தகங்களில் கண்டறியலாம். ஆ
கையால் இந்தப் பட்டணம் கட்டப்பட்டு,
இதின் அலங்கங்கள் எடுப்பிக்கப்பட்டுத் தீர்ந்
தால், நதிக்கு இப்புறத்திலே உமக்கு ஒன்றும்
இராதேபோம் என்பதை ராஜாவுக்கு அறியப்
படுத்துகிறோம் என்று எழுதி அனுப்பினார்கள்.
17 அப்பொழுது ராஜா ஆலோசனைத் தலைவனா
கிய ரேகூமுக்கும், கணக்கனாகிய சிம்சாயிக்
கும், சமாரியாவில் குடியிருக்கிற மற்றுமுள்ள
அவர்களுடைய வகையராவுக்கும், நதிக்கு அப்
புறத்தில் இருக்கிற மற்றவர்களுக்கும் எழுதி
யனுப்பின பிரதியுத்தரமாவது: உங்களுக்குச்

[1] நேசா. 13. 7

[2] 7. 24

* க்ஷேமம்.

[3] ஆதி. 15. 18. யோசு. 1. 4. 1 இரா. 4. 21. சங். 72. 8

[4] ஆகா. 1. 1. சகரி. 1. 1.

[5] 3. 2

[6] 6. 6

† உபாகமம். 7. 6, 28. சங். 33. 18, 19

*சமாதானம், ஷ. நீங்கள் அனுப்பின மனு 18
நமது சமுகத்தில் தீர்க்கமாய் வாசிக்கப்பட்
டது. நம்முடைய உத்தரவினால் சோதித்துப் 19
பார்க்கும்போது, அந்தப் பட்டணம் பூர்வகால
முதல் ராஜாக்களுக்கு விரோதமாய் எழும்பி
னது என்றும், அதிலே கலகமும் ராஜதுரோக
மும் காணப்பட்டது என்றும், எருசலேமில் 20
வல்லமையுள்ள ராஜாக்கள் இருந்தார்கள் என்
றும், அவர்கள் நதிக்கு அப்புறத்தில் இருக்கிற
சகல தேசங்களையும் ஆண்டுவந்தார்கள் என்
றும், [3]பகுதியும் தீர்வையும் ஆயமும் அவர்க
ளுக்குச் செலுத்தப்பட்டது என்றும் தெரிய
வருகிறது. இப்பொழுதும் நம்மிடத்திலிருந்து 21
மறு உத்தரவு பிறக்கும்வரையும் அந்த மனிதர்
அந்தப் பட்டணத்தைக் கட்டாமல் நிறுத்தி
விடும்படி கட்டளையிடுங்கள். இதிலே நீங்கள் 22
தவறாதபடி எச்சரிக்கையாயிருங்கள்; ராஜாக்
களுக்கு நஷ்டமும் சேதமும் வரவேண்டியது
என்ன என்று எழுதி அனுப்பினான். ராஜா 23
வாகிய அர்தசஷ்டாவுடைய உத்தரவின் நகல்
ரேகூமுக்கும், கணக்கனாகிய சிம்சாயிக்கும்,
அவர்கள் வகையராவுக்கு முன்பாக வாசிக்
கப்பட்டபோது, அவர்கள் தீவிரத்துடனே எரு
சலேமிலிருக்கிற யூதரிடத்திற்குப் போய், பல
வந்தத்தோடும் கட்டாயத்தோடும் அவர்களை
வேலைசெய்யாதபடிக்கு நிறுத்திப்போட்டார்
கள். அப்பொழுது எருசலேமிலுள்ள தேவ 24
னுடைய ஆலயத்தின் வேலை தடைபட்டு, பெர்
சியாவின் ராஜாவாகிய தரியு ராஜ்யபாரம் பண்
ணின இரண்டாம் வருஷமட்டும் நிறுத்தப்பட்
டிருந்தது.

அப்பொழுது ஆகாய் [4]தீர்க்கதரிசியும், இத் 5
தோவின் குமாரனாகிய சகரியா என்னும் தீர்க்
கதரிசியும், யூதாவிலும் எருசலேமிலுமுள்ள
யூதருக்கு இஸ்ரவேல் தேவனின் நாமத்திலே
தீர்க்கதரிசனம் சொன்னார்கள். அப்பொழுது 2
செயல்தியேலின் குமாரனாகிய செருபாபே
லும் யோசதாக்கின் குமாரனாகிய யெசுவாவும்
எழும்பி, [5]எருசலேமிலுள்ள தேவனுடைய ஆ
லயத்தைக் கட்டத் தொடங்கினார்கள்; அவர்
களுக்குத் திடன்சொல்ல தேவனுடைய தீர்க்
கதரிசிகளும் இருந்தார்கள். அக்காலத்திலே 3
நதிக்கு இப்புறத்தில் இருக்கிற நாடுகளுக்கு
அதிபதியாகிய தத்னாய் என்பவனும், சேத்
தார்பொஸ்னாயும், அவர்கள் வகையராவும் அ
வர்களிடத்துக்கு வந்து, இந்த ஆலயத்தைக்
கட்டவும், [6]இந்த மதிலை எடுப்பிக்கவும் உங்க
ளுக்குக் கட்டளையிட்டவன் யார் என்று அவர்
களைக் கேட்டார்கள். அப்பொழுது அதற்கு 4
ஏற்ற உத்தரவையும், இந்த மாளிகையைக்
கட்டுகிற மனிதரின் நாமங்களையும் அவர்களுக்
குச் சொன்னோம். ஆனாலும் இந்தச் செய்தி 5
தரியுவினிடத்திற்குப் போய் எட்டுகிறவரைக்
கும் இவர்கள் யூதருடைய மூப்பரின் வேலை
யைத் தடுக்காதபடிக்கு, அவர்களுடைய தேவ
னின் †கண் அவர்கள்மேல் வைக்கப்பட்டிருந்
தது; அப்பொழுது இதைக்குறித்து அவர்கள்

சொன்ன மறுமொழியைக் கடிதத்தில் [1]எழுதி
யனுப்பினார்கள்.
6 நதிக்கு இப்புறத்திலிருக்கிற தத்னாய் என்
னும் தேசாதிபதியும், சேத்தார் பொஸ்னாயும்,
நதிக்கு இப்புறத்திலிருக்கிற அப்பற்சாகிய
ரான அவன் வகையராவும், [2]ராஜாவாகிய தரி
யுவுக்கு எழுதியனுப்பின கடிதத்தின் நகலா
7 வது: ராஜாவாகிய தரியுவுக்குச் சகல *சமாதா
8 னமும் உண்டாவதாக. நாங்கள் யூதர் சீமை
யிலுள்ள மகா தேவனுடைய ஆலயத்துக்குப்
போனோம்; அது பெருங் கற்களால் கட்டப்ப
டுகிறது; மதில்களின்மேல் உத்திரங்கள் பாய்ச்
சப்பட்டு, அந்த வேலை துரிசாய் நடந்து, அவர்
களுக்குக் கைகூடிவருகிறதென்பது ராஜாவுக்
9 குத் தெரியலாவதாக. அப்பொழுது நாங்கள்
அவர்கள் மூப்பர்களை நோக்கி: இந்த ஆலயத்
தைக் கட்டவும், இந்த மதிலை எடுப்பிக்கவும்
உங்களுக்குக் கட்டளையிட்டது யார் [3]என்று
10 கேட்டோம். இதுவுமல்லாமல், அவர்களுக்
குள்ளே தலைவரான மனிதர் இன்னாரென்று
உமக்கு எழுதி அறியப்படுத்தும்படி அவர்
கள் நாமங்கள் என்னவென்றும் கேட்டோம்.
11 அவர்கள் எங்களுக்குப் பிரதியுத்தரமாக: நாங்
கள் பரலோகத்துக்கும் பூலோகத்துக்கும்
தேவனா யிருக்கிறவருக்கு அடியாராயிருந்து,
இஸ்ரவேலின் பெரிய ராஜா ஒருவன் அநேக
வருஷங்களுக்கு முன்னே கட்டித்தீர்த்த
இந்த ஆலயத்தை [4]நாங்கள் மறுபடியும் கட்டு
12 கிறோம். எங்கள் பிதாக்கள் பரலோகத்தின்
தேவனுக்குக்கோபமூட்டினபடியினால், அவர்
இவர்களைப் பாபிலோன் ராஜாவாகிய நேபு
காத்நேச்சார் என்னும் கல்தேயன் கையில்
ஒப்புக்கொடுத்தார்; [5]அவன் இந்த ஆலயத்தை
நிர்மூலமாக்கி, ஜனத்தைப் பாபிலோனுக்குக்
13 கொண்டுபோனான். ஆனாலும் பாபிலோன்
ராஜாவாகிய கோரேசின் முதலாம் வருஷத்
திலே கோரேஸ் ராஜாவானவர் [6]தேவனு
டைய இந்த ஆலயத்தைக் கட்டும்படி கட்
14 டளையிட்டார். நேபுகாத்நேச்சார் எருசலேமி
லிருந்த தேவாலயத்திலிருந்து எடுத்து, பாபி
லோன் கோவிலில் கொண்டுபோய் வைத்
திருந்த தேவனுடைய ஆலயத்தின் பொன்
வெள்ளிப் பணிமுட்டுகளையும் ராஜாவாகிய
கோரேஸ் பாபிலோன் கோவிலிலிருந்து எடு
த்து, [7]அவர் தேசாதிபதியாக நியமித்த செஸ்
பாத்சாரென்னும் நாமமுள்ளவனிடத்தில்
15 அவைகளை ஒப்புவித்து, அவனை நோக்கி:
நீ இந்தப் பணிமுட்டுகளை எடுத்து, எருச
லேமிலிருக்கும் தேவாலயத்துக்குக் கொண்டு
போ; தேவனுடைய ஆலயம் அதின் ஸ்தா
னத்திலே கட்டப்படவேண்டும் என்றார்.
16 அப்பொழுது அந்தச் செஸ்பாத்சார் வந்து,
எருசலேமிலுள்ள தேவனுடைய ஆலயத்தின்
அஸ்திபாரத்தைப் போட்டான்; அந்நாள்முதல்
இதுவரைக்கும் அது கட்டப்பட்டு வருகிறது;
[8]அது இன்னும் முடியவில்லை என்றார்கள்.
17 இப்பொழுதும் ராஜாவுக்குச் சித்தமாயிருந்
தால், எருசலேமிலுள்ள தேவனுடைய ஆல
யத்தைக் கட்ட, ராஜாவாகிய கோரேஸ் கட்
டளையிட்டதுண்டோ என்று பாபிலோனில்
இருக்கிற ராஜாவின் †கஜானாவிலே ஆராய்ந்து
பார்க்கவும், [9]இந்த விஷயத்தில் ராஜாவினு
டைய சித்தம் இன்னதென்று எங்களுக்கு
எழுதியனுப்பவும் உத்தரவாகவேண்டும் என்று
எழுதியனுப்பினார்கள்.

அப்பொழுது ராஜாவாகிய தரியு இட்ட 6
கட்டளையின்படியே பாபிலோன் ‡கஜானாவி
லுள்ள தஸ்திர அறையைச் சோதித்தார்கள்.
மேதிய சீமையிலிருக்கிற §அக்மேதா பட்ட 2
ணத்தின் அரமனையிலே ஒரு சுருள் அகப்
பட்டது; அதிலே எழுதியிருந்த விபரமாவது:
ராஜாவாகிய கோரேசின் முதலாம் வருஷத் 3
தில், கோரேஸ் ராஜா எருசலேமிலிருந்த தேவா
லயத்தைக் குறித்துப் பிறப்பித்த உத்தரவு என்
னவென்றால்: தேவாலயமானது பலிசெலுத்
தப்பட்டுவந்த ஸ்தானத்திலே கட்டப்படக்கட
வது; அதின் அஸ்திபாரங்கள் பலமாயிருப்ப
தாக; அது அறுபது முழ உயரமும், அறு
பது முழ அகலமுமாயிருக்கவேண்டும். அது 4
மூன்று வரிசை பெருங்கற்களாலும், ஒரு மச்
சுவரிசை புது உத்திரங்களாலும் கட்டப்படக்
கடவது; [10]அதற்குச் செல்லும் செலவு ராஜா
வின் அரமனையிலிருந்து கொடுக்கப்படுவதாக.
அன்றியும் நேபுகாத்நேச்சார் எருசலேமிலி 5
ருந்த ஆலயத்திலிருந்து எடுத்து, பாபிலோ
னுக்குக் கொண்டுவந்த தேவனுடைய ஆலயத்
துக்கடுத்த பொன் வெள்ளிப் பணிமுட்டுகள்
எருசலேமிலுள்ள தேவாலயமாகிய தங்கள் ஸ்
தானத்திற்குப் போய்ச் சேரும்படிக்குத் திரும்
பக் கொடுக்கப்படக்கடவது; [11]அவைகளை தே
வனுடைய ஆலயத்துக்குக் கொண்டுபோகக்க
டவர்கள் என்று எழுதியிருந்தது. அப்பொ 6
ழுது தரியு ராஜா எழுதியனுப்பினதாவது:
இப்பொழுதும், [12]நதிக்கு அப்புறத்திலிருக்கிற
தேசாதிபதியாகிய தத்னாயும் சேத்தார்பொஸ்
னாயு மாகிய நீங்களும், நதிக்கு அப்புறத்தி
லிருக்கிற அப்பற்சாகியரான உங்கள் வகை
யரா யாவரும் அவ்விடத்தைவிட்டு விலகி
யிருங்கள். தேவனுடைய ஆலயத்தின் வேலை 7
யை அவர்கள் செய்யட்டும், யூதருடைய அதி
பதியும், யூதரின் மூப்பரும், தேவனுடைய
ஆலயத்தை அதின் ஸ்தானத்திலே கட்டக் கட
வர்கள். தேவனுடைய ஆலயத்தை யூதரின் 8
மூப்பர் கட்டும் விஷயத்தில் நீங்கள் அவர்க
ளுக்குச் செய்யத்தக்கதாய், நம்மால் உண்
டான கட்டளை என்னவென்றால், அந்த மனி
தருக்குத் தடை உண்டாகாதபடிக்கு, நதி
க்கு அப்புறத்தில் வாங்கப்படும் பகுதியாகிய
ராஜாவின் திரவியத்திலே அவர்களுக்குத்
தாமதமில்லாமல் செல்லும் செலவு கொடுக்
கவேண்டும். பரலோகத்தின் தேவனுக்குச் 9
சர்வாங்க தகனபலிகளையிடத் தேவையான
இளங்காளைகள், ஆட்டுக்கடாக்கள், ஆட்டு
க்குட்டிகள், கோதுமை, உப்பு, திராட்சா

[1] 6. 6
[2] 4. 9
* நன்மையும்.
[3] 3, 4. வச.
[4] 1 இரா. 6. 1
[5] 2 இரா. 24. 2. 2 நாளா. 36. 16, 17
[6] 1. 1
[7] 1. 7, 8: 6. 5. ஆகா. 1. 14: 2. 2, 21
[8] 3. 8, 10: 6. 15
† பொக்கிஷ சாலையிலே.
[9] 6. 1, 2
‡ புஸ்தகசாலையிலே. 5. 17
§ எக்பத்தானா.
[10] 1 இரா. 6. 36
[11] 1. 7, 8: 5. 14
[12] 5. 3

சம், எண்ணெய் முதலானவை தினந்தினம்
அவர்கள் சொற்படி தாழ்ச்சியில்லாமல் கொ
10 டுக்கப்படக்கடவது. எருசலேமிலிருக்கிற
ஆசாரியர்கள் பரலோகத்தின் தேவனுக்குச்
சுகந்த வாசனையான பலிகளைச் செலுத்தி,
[1]ராஜாவுக்கும் அவர் குமாரருக்கும் தீர்க்காயு
சுண்டாக மன்றாடும்படிக்கு இப்படிச் செய்
11 யப்படுவதாக. பின்னும் நம்மால் பிறக்கும்
கட்டளை என்னவென்றால்: எந்த மனிதனா
வது இந்தக் கட்டளையை மாற்றினால், அவன்
வீட்டிலிருந்து ஒரு உத்திரம் பிடுங்கி நாட்டப்
பட்டு, அவன் அதில் தூக்கிப்போடப்படவும்,
அதினிமித்தமாக [2]அவனுடைய வீடு குப்பை
12 மேடாக்கப்படவுங்கடவது. ஆகையால் இதை
மாற்றவும், எருசலேமிலுள்ள தேவனுடைய
ஆலயத்தைக் கெடுக்கவும், தங்கள் கையை நீட்
டப்போகிற சகல ராஜாக்களையும் சகல ஜனங்
களையும் தம்முடைய நாமத்தை அங்கே விளங்
கப்பண்ணின [3]தேவன் நிர்மூலமாக்கக்கடவர்;
தரியுவாகிய நாம் இந்தக் கட்டளையைக் கொ
டுத்தோம்; இதின்படி ஜாக்கிரதையாய்ச்
செய்யப்படக்கடவது என்று எழுதியனுப்
பினான்.
13 அப்பொழுது நதிக்கு இப்புறத்திலிருக்கிற
தேசாதிபதியாகிய தத்னாயும், சேத்தார்பொஸ்
னாயும், அவர்கள் வகையராவும், தரியுராஜா
கட்டளையிட்டபிரகாரம் ஜாக்கிரதையாய்ச்
14 செய்தார்கள். அப்படியே யூதரின் மூப்பர்
கட்டினார்கள்; [4]தீர்க்கதரிசியாகிய ஆகாயும் இத்
தோவின் குமாரனாகிய சகரியாவும் தீர்க்கதரி
சனம்சொல்லிவந்தபடியினால் அவர்களுடைய
காரியம் கைகூடிவந்தது; அவர்கள் இஸ்ரவே
லின் தேவனுடைய கட்டளைப்படியேயும்,
கோரேஸ், தரியு, பெர்சியாவின் ராஜாவாகிய
அர்தசஷ்டா [5]என்பவர்களுடைய கட்டளைப்
15 படியேயும் அதைக் கட்டி முடித்தார்கள். ராஜா
வாகிய தரியு அரசாளுகிற ஆறும் வருஷம்
ஆதார் என்னும் மாதம் மூன்றாந்தேதியிலே
16 அந்த ஆலயம் கட்டி முடிந்தது. அப்பொ
ழுது இஸ்ரவேல் புத்திரரும், ஆசாரியரும்,
லேவியரும், சிறையிருப்பிலிருந்து வந்த மற்ற
வர்களும், தேவனுடைய ஆலயப் பிரதிஷ்டை
யைச் [6]சந்தோஷமாய்க் கொண்டாடினார்கள்.
17 தேவனுடைய ஆலயத்தின் பிரதிஷ்டைக்காக
நூறு காளைகளையும், இருநூறு ஆட்டுக்கடாக்
களையும், நானூறு ஆட்டுக்குட்டிகளையும், இஸ்
ரவேல் கோத்திரங்களுடைய இலக்கத்தின்ப
டியே, இஸ்ரவேல் அனைத்தின் பாவநிவாரண
பலிக்காகப் பன்னிரண்டு வெள்ளாட்டுக்கடா
18 க்களையும் [7]பலியிட்டு, மோசேயின் புஸ்தகத்
தில் எழுதியிருக்கிறபடியே, [8]அவர்கள் எரு
சலேமிலுள்ள தேவனுடைய ஆராதனைக்கெ
ன்று ஆசாரியரை அவர்கள் வகுப்புகளின்படி
யும், லேவியரை அவர்கள் முறைவரிசைக
ளின்படியும் நிறுத்தினார்கள்.
19 சிறையிருப்பிலிருந்து வந்தவர்கள் முதலாம்
மாதம் பதினாலாந்தேதியிலே பஸ்காவையும்

1 7. 23. எசே. 29. 7. 1 தீமோ. 2. 1, 2
2 தானி. 2. 5; 3. 29
3 1 இரா. 9. 3
4 5. 1, 2
5 1. 1; 5. 13; 7. 1
6 1 இரா. 8. 63, 2 நாளா. 7. 5
7 8. 35
8 எண். 3. 6; 8. 9. 1 நாளா. 23. 6; 24. 1
9 யாத். 12. 6
10 2 நாளா. 30. 15; 35. 11
11 9. 11
12 யாத். 12. 15; 13. 6
13 நீதி. 21. 1. 2 இரா. 23. 29
14 1 நாளா. 6. 4
15 நெகே. 2. 1
16 8. 22, 31
* கரமே.
17 8. 1, 15
18 நெகே. 2. 8, 18
19 சங். 119. 45

[9]ஆசரித்தார்கள். ஆசாரியரும் லேவியரும் 20
ஒருமனப்பட்டுத் தங்களைச் சுத்தம்பண்ணிக்
கொண்டதினால், எல்லாரும் சுத்தமாயிருந்து,
சிறையிருப்பிலிருந்து வந்தவர்கள் எல்லாருக்
காகவும், ஆசாரியரான தங்கள் சகோதரருக்
காகவும், [10]தங்களுக்காகவும் பஸ்காவின் ஆட்
டுக்குட்டிகளை அடித்தார்கள். அப்படியே 21
சிறையிருப்பிலிருந்து திரும்பிவந்த இஸ்ர
வேல் புத்திரரும், இஸ்ரவேலின் தேவனாகிய
**கர்த்தரை** நாடும்படி, பூலோக ஜாதிகளின்
அசுத்தத்தை விட்டு, [11]அவர்களண்டையிலே
சேர்ந்த அனைவரும் அதைப் புசித்து, புளிப் 22
பில்லாத அப்பப் பண்டிகையை [12]ஏழுநாளா
கச் சந்தோஷத்துடனே ஆசரித்தார்கள்; **கர்த்**
**தர்** அவர்களை மகிழ்ச்சியாக்கி, அவர்கள் கை
களை இஸ்ரவேலின் தேவன் என்னும் தேவ
னுடைய ஆலயத்தின் வேலையிலே பலப்படுத்
தத்தக்கதாய் அசீரியருடைய ராஜாவின் இரு
தயத்தை [13]அவர்கள் பட்சத்தில் சார்ந்திருக்கப்
பண்ணினார்.

இந்தவர்த்தமானங்களுக்குப்பின்பு, [14]செரா **7**
யாவின் குமாரனாகிய எஸ்றா, பெர்சியா
வின் ராஜாவாகிய அர்தசஷ்டா [15]அரசாளுகிற
காலத்திலே பாபிலோனிலிருந்து வந்தான்;
இந்தச் செராயா அசரியாவின் குமாரன்;
இவன் இல்க்கியாவின் குமாரன், இவன் சல் 2
லூமின் குமாரன், இவன் சாதோக்கின் குமா
ரன், இவன் அகித்தூபின் குமாரன், இவன் 3
அமரியாவின் குமாரன், இவன் அசரியாவின்
குமாரன், இவன் மெராயோதின் குமாரன்,
இவன் செராகியாவின் குமாரன், இவன் 4
ஊசியின் குமாரன், இவன் புக்கியின் குமா
ரன், இவன் அபிசுவாவின் குமாரன், இவன் 5
பினெகாசின் குமாரன், இவன் எலெயாசா
ரின் குமாரன், இவன் பிரதான ஆசாரிய
னான ஆரோனின் குமாரன். இந்த எஸ்றா 6
இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்** அருளிய
மோசேயின் நியாயப்பிரமாணத்திலே தேறின
வேதபாரகனாயிருந்தான்; [16]அவனுடைய தேவ
னாகிய **கர்த்தருடைய** *கரம் அவன்மேல் இருந்
ததினால், அவன் கேட்டவைகளையெல்லாம்
ராஜா அவனுக்குக் கொடுத்தான். அவனோ 7
டேகூட இஸ்ரவேல் புத்திரரிலும், ஆசாரிய
ரிலும், லேவியரிலும், பாடகரிலும், வாசல் கா
வலாளரிலும், நிதனீமியரிலும், [17]சிலர் அர்த
சஷ்டா ராஜாவின் ஏழாம் வருஷத்திலே எரு
சலேமுக்குப் போனார்கள். ஐந்தாம் மாதத் 8
தில் அவன் எருசலேமுக்கு வந்தான்; அது
அந்த ராஜாவின் ஏழாம் வருஷமானது.
முதலாம் மாதம் முதல்தேதியிலே அவன் 9
பாபிலோனிலிருந்து பிரயாணமாகப் புறப்
பட்டு, [18]ஐந்தாம் மாதம் முதல் தேதியிலே
தன் தேவனுடைய தயவுள்ள கரம் தன்மே
லிருந்ததினால் எருசலேமுக்கு வந்தான். **கர்த்** 10
**தருடைய** வேதத்தை ஆராயவும், அதின்படி
செய்யவும், [19]இஸ்ரவேலிலே கட்டளைகளை
யும் நீதிநியாயங்களையும் உபதேசிக்கவும்,

[1]எஸ்றா தன் இருதயத்தைப் பக்குவப்படுத்தி
யிருந்தான்.
11 **கர்த்தருடைய** கற்பனைகளின் வார்த்தைக
ளிலும், அவர் இஸ்ரவேலுக்குக் கொடுத்த
கட்டளைகளிலும், படித்துத் தேறின வேதபா
ரகனாகிய எஸ்றா என்னும் ஆசாரியனுக்கு,
ராஜாவாகிய அர்தசஷ்டா கொடுத்த சன்ன
12 தின் நகலாவது: ராஜாதிராஜாவாகிய [2]அர்த
சஷ்டா பரலோகத்தின் தேவனுடைய நியா
யப்பிரமாணத்தைப் போதிக்கிற உத்தம வேத
பாரகனாகிய எஸ்றா என்னும் ஆசாரியனுக்
குப் பூரண சமாதானமுண்டாக வாழ்த்தி எழு
13 துகிறது என்னவென்றால்: நம்முடைய ராஜ
யத்தில் இருக்கிற இஸ்ரவேல் ஜனத்திலும்,
அதின் ஆசாரியரிலும், லேவியரிலும், உன்
னோடேகூட எருசலேமுக்குப் போக மனப்
பூர்வமாயிருக்கிற யாவரும் போகலாம் என்று
14 நம்மாலே உத்தரவாகிறது. நீ உன் கையிலி
ருக்கிற உன் தேவனுடைய நியாயப்பிர
மாணத்தின்படி, யூதாவையும் எருசலேமை
15 யும் விசாரித்து நடத்தவும், ராஜாவும் அவரு
டைய மந்திரிமாரும் எருசலேமில் வாசம்பண்
ணுகிற இஸ்ரவேலின் தேவனுக்கு [3]மனப்
பூர்வமாய்க் கொடுத்த [4]வெள்ளியையும் பொன்
16 னையும், பாபிலோன் சீமையெங்கும் உனக்
குக் கிடைக்கும் எல்லா வெள்ளியையும் பொ
ன்னையும், உன்னுடைய ஜனமும் ஆசாரியரும்
எருசலேமிலுள்ள தங்கள் தேவனுடைய ஆலய
த்துக்கென்று மன உற்சாகமாய்க் கொடுக்கும் கா
ணிக்கைகளையும் நீ கொண்டுபோகவும், நீ ராஜா
வினாலும் அவருடைய [5]ஏழு மந்திரிமாராலும்
17 அனுப்பப்படுகிறாய். ஆகையால் அந்தத் திரவி
யத்தினால் நீ தாமதமின்றி காளைகளையும், ஆட்
டுக்கடாக்களையும், ஆட்டுக்குட்டிகளையும்,
அவைகளுக்கடுத்த போஜன பலிகளையும்,
பானபலிகளையும் வாங்கி, [6]அவைகளை எருச
லேமிலுள்ள உங்கள் தேவனுடைய ஆலயத்
துப் பலிபீடத்தின்மேல் செலுத்துவாயாக.
18 மீதியான வெள்ளியையும் பொன்னையும்
கொண்டு செய்யவேண்டிய தின்னதென்று
உனக்கும் உன் சகோதரருக்கும் நலமாய்த்
தோன்றுகிறபடி அதை உங்கள் தேவனுடைய
19 சித்தத்தின்படியே செய்யுங்கள். உன் தேவ
னுடைய ஆலயத்தின் ஆராதனைக்காக உனக்
குக் கொடுக்கப்பட்ட பணிமுட்டுகளையும் நீ
எருசலேமின் தேவனுடைய சந்நிதியில் ஒப்பு
20 விக்கக்கடவாய். பின்னும் உன் தேவனுடைய
ஆலயத்துக்கு அவசியமாய்க் கொடுக்கவேண்
டியிருப்பதை, நீ ராஜாவின் கஜானாவிலிருந்து
21 வாங்கிக்கொடுப்பாயாக. நதிக்கு அப்புறத்தி
லிருக்கிற எல்லா கஜான்சிகளுக்கும் அர்த
சஷ்டா என்னும் ராஜாவாகிய நாம் இடுகிற
கட்டளை என்னவென்றால், பரலோகத்தின்
தேவனுடைய நியாயப்பிரமாணத்தைப் போ
திக்கும் வேதபாரகனாகிய எஸ்றா என்னும்
ஆசாரியன் நூறு தாலந்து வெள்ளி, நூற்றுக்
கலக் கோதுமை, நூற்றுக்கலத் திராட்சரசம்,

1 உபா. 33. 10. நெகே. 8. 1, 8. மல்கி. 2. 7
2 எசே. 26. 7. தானி. 2. 37
3 2 நாளா. 6. 2. சங். 135. 21
4 8. 25. 1 நாளா. 29. 6, 9
5 எஸ்தர். 1. 14
6 எண். 15, 4-13. உபா. 12. 5, 11
7 யாத். 18. 21, 22. உபா. 16. 18. 2 நாளா. 17. 7. மல்கி. 2. 7. மத். 23. 2, 3
8 6. 22. 1 நாளா. 29. 10
9 5. 5; 8. 18
10 1 நாளா. 3. 22
11 2. 3

நூற்றுக்கல எண்ணெய்மட்டும் உங்களைக்
கேட்பவை எல்லாவற்றையும், வேண்டிய உப் 22
பையும், தாமதமில்லாமல் கொடுக்கவும், பர 23
லோகத்தின் தேவனுடைய கற்பனையின்படி
யே, எது தேவையாயிருக்குமோ அதுவெல்
லாம் பரலோகத்தின் தேவனுடைய ஆலயத்
திற்கு ஜாக்கிரதையாய்ச் செலுத்தப்படவும்
வேண்டும்; ராஜாவும் அவர் குமாரரும் ஆளும்
ராஜ்யத்தின்மேல் கடுங்கோபம் வருவானேன்.
பின்னும் ஆசாரியரும், லேவியரும், பாடக 24
ரும், வாசல் காவலாளரும், நிதனீமியரும்,
தேவனுடைய ஆலயத்தின் பணிவிடைக்கார
ருமான ஒருவன்மேலும் பகுதியாகிலும் தீர்வை
யாகிலும் ஆயமாகிலும் சுமத்தலாகாதென்று
அவர்களைக்குறித்து உங்களுக்கு அறியப்படுத்
துகிறோம். பின்னும் நதிக்கு அப்புறத்தி 25
லிருந்து உன் தேவனுடைய நியாயப்பிரமா
ணங்களை அறிந்த சகல ஜனங்களையும் நியாயம்
விசாரிக்கத்தக்க துரைகளையும், நியாயாதிபதி
களையும், எஸ்றாவாகிய நீ உன்னிலுள்ள
உன் தேவனுடைய ஞானத்தின்படியே ஏற்
படுத்துவாயாக; [7]அந்தப் பிரமாணங்களை அறி
யாதவர்களுக்கு அவைகளை உபதேசிக்கவுங்
கடவாய். உன் தேவனுடைய நியாயப்பிரமா 26
ணத்தின்படியேயும், ராஜாவினுடைய நியா
யப்பிரமாணத்தின்படியேயும் செய்யாதவனெ
வனும் உடனே மரணத்துக்காகிலும், தேசத்
துக்குப் புறம்பாக்குதலுக்காகிலும், அபராதத்
துக்காகிலும், காவலுக்காகிலும் தீர்க்கப்பட்
டுத் தண்டிக்கப்படக்கடவன் என்று எழுதி
யிருந்தது.

எருசலேமிலுள்ள **கர்த்தருடைய** ஆலயத் 27
தை அலங்கரிக்க, இப்படிப்பட்ட யோசனை
யை ராஜாவின் இருதயத்தில் அருளி, ராஜா
வுக்கும் அவருடைய மந்திரிமார்களுக்கும் ராஜா
வின் கைக்குள்ளான பலத்த எல்லா மகாப்பிர
புக்களுக்கு முன்பாக எனக்குத் தயவு கிடைக்
கப்பண்ணின எங்கள் பிதாக்களின் தேவனா
கிய **கர்த்தருக்கு** [8]ஸ்தோத்திரம். அப்படியே 28
என் தேவனாகிய **கர்த்தருடைய** கரம் என்
மேல் இருந்ததினால் நான் திடன்கொண்டு,
[9]இஸ்ரவேலில் சில தலைவரை என்னோடே
கூடவரும்படி சேர்த்துக்கொண்டேன்.

அர்தசஷ்டா ராஜா அரசாளும் காலத்தில் **8**
பாபிலோனிலிருந்து என்னோடேகூட வந்த
தங்கள் பிதாக்கள் வம்சங்களின் தலைவரும்
அவர்கள் வம்ச அட்டவணைகளுமாவன:
பினெகாசின் புத்திரரில் கெர்சோம், இத்தா 2
மாரின் புத்திரரில் தானியேல், தாவீதின் புத்
திரரில் [10]அத்தூஸ், பாரோஷின் புத்திரரில் 3
[11]ஒருவனான செக்கனியாவின் புத்திரரில் சகரி
யாவும், அவனோடேகூட வம்ச அட்டவணை
யில் எழுதியிருக்கிற நூற்றைம்பது ஆண்மக்க
ளும், பாகாத்மோவாபின் புத்திரரில் செரகி 4
யாவின் குமாரனாகிய எலியோனாயும், அவ
னோடேகூட இருநூறு ஆண்மக்களும், செக் 5
கனியாவின் புத்திரரில் யகசியேலின் குமார

ஹும், அவனேடேகூட முந்நூறு ஆண்மக்க
6 ளும், ஆதினின் புத்திரரில் யோனத்தானின்
குமாரனுகிய எபேதும், அவனேடேகூட ஐம்
7 பது ஆண்மக்களும், ஏலாமின் புத்திரரில்
அதலியாவின் குமாரனுகிய எஷாயாவும், அவ
8 னேடேகூட எழுபது ஆண்மக்களும், செப்
பதியாவின் புத்திரரில் மிகவேலின் குமாரனு
கிய செப்பதியாவும், அவனேடேகூட எண்
9 பது ஆண்மக்களும், யோவாபின் புத்திரரில்
யெகியேலின் குமாரனுகிய ஒபதியாவும், அவ
னேடேகூட இருநூற்றுப் பதினெட்டு ஆண்
10 மக்களும், செலோமித்தின் புத்திரரில் யொசி
பியாவின் குமாரனும், அவனேடேகூட நூற்
11 றுபது ஆண்மக்களும், பெபாயின் புத்திர
ரில் பெபாயின் குமாரனுகிய சகரியாவும்,
அவனேடேகூட இருபத்தெட்டு ஆண்மக்க
12 ளும், அஸ்காதின் புத்திரரில் காத்தானின்
குமாரனுகிய யோகனனும், அவனேடேகூட
13 நூற்றுப்பத்து ஆண்மக்களும், அதோனிகா
மின் கடைசிப்புத்திரரான எலிபேலேத்,
எயெல், செமாயா என்னும் நாமங்களுள்ளவர்
களும், அவர்களோடேகூட அறுபது ஆண்
14 மக்களும், பிக்வாயின் புத்திரரில் ஊத்தாயும்
சபூதும், அவர்களோடேகூட எழுபது ஆண்
மக்களுமே.
15 இவர்களை நான் அகாவாவுக்கு ஓடுகிற நதி
யண்டையிலே கூட்டிக்கொண்டுபோனேன்;
அங்கே மூன்றுநாள் தங்கியிருந்தோம்; [1]நான்
ஜனங்களையும் ஆசாரியரையும் பார்வையிடும்
போது, லேவியின் புத்திரரில் ஒருவரையும்
16 அங்கே காணவில்லை. ஆகையால் நான் எலி
யேசர், அரியேல், செமாயா, எல்நாத்தான்,
யாரிப், எல்நாத்தான், நாத்தான், சகரியா, மிசுல்
லாம் என்னும் தலைவரையும், யோயாரிப், எல்
நாத்தான் என்னும் புத்திமான்களையும் அழைப்
17 பித்து, கசிப்பியா என்னும் ஸ்தலத்திலிருக்
கிற தலைவனுகிய இத்தோவிடத்திற்குச்செய்தி
கொண்டுபோக அவர்களுக்குக்கற்பித்து, நமது
தேவனுடைய ஆலயத்துப் பணிவிடைக்கா
ரரை எங்களிடத்திற்கு அழைத்துவரும்படி,
அவர்கள் கசிப்பியா என்னும் ஸ்தலத்திலிருக்
கிற தங்கள் சகோதரனுகிய இத்தோவுக்கும்,
நிதனீமியருக்கும் சொல்லவேண்டிய வார்த்
18 தைகளைச் [2]சொல்லிக்கொடுத்தேன். அவர்கள்
எங்கள்மேலிருந்த எங்கள் தேவனுடைய தயை
யுள்ள கரத்தின்படியே, [3]இஸ்ரவேலுக்குப்
பிறந்த லேவியின் குமாரனுகிய மகேலியின்
புத்திரரில் புத்தியுள்ள மனுஷனுகிய [4]செரெ
பியாவும் அவன் குமாரரும் சகோதரருமான
19 பதினெட்டுப்பேரையும், மெராரியரின் புத்
திரரில் அஷபியாவும் அவனேடே எஷாயா
வும் அவன் சகோதரரும் அவர்கள் குமாரரு
20 மான இருபதுபேரையும், தாவீதும் பிரபுக்க
ளும் லேவியருக்குப் பணிவிடைக்காரராக
வைத்த நிதனீமியரில் இருநூற்று இருபது
பேரையும், [5]எங்களிடத்தில் அழைத்துக்கொ
ண்டு வந்தார்கள்; அவர்கள் எல்லாருடைய

பேர்களும் குறிக்கப்பட்டன. அப்பொழுது 21
நாங்கள் எங்கள் தேவனுக்கு முன்பாக எங்
களைத் தாழ்த்துகிறதற்கும், எங்களுக்காகவும்
எங்கள் பிள்ளைகளுக்காகவும் எங்கள் சகல
பொருள்களுக்காகவும் செவ்வையான வழி
யைத் தேடுகிறதற்கும், நான் அங்கே அந்த
அகாவா நதியண்டையிலே [6]உபவாசத்தைக்
கூறினேன். வழியிலே சத்துருவை விலக்கி, 22
எங்களுக்குத் துணை செய்யும்படிக்கு, நான்
ராஜாவினிடத்தில் சேவகரையும் குதிரை
வீரரையும் கேட்க வெட்கப்பட்டிருந்தேன்;
[7]எங்கள் தேவனுடைய கரம் தம்மைத் தேடு
கிறவர்கள் எல்லார்மேலும் அவர்களுக்கு நன்
மையாக இருக்கிறதென்றும், [8]அவருடைய
வல்லமையும் அவருடைய கோபமும் அவ
ரை விட்டு விலகுகிறவர்கள் எல்லார்மேலும்
இருக்கிறதென்றும், நாங்கள் ராஜாவுக்குச்
சொல்லியிருந்தோம். அப்படியே நாங்கள் 23
உபவாசம்பண்ணி, எங்கள் தேவனிடத்திலே
அதைத் தேடினோம்; [9]எங்கள் விண்ணப்பத்
தைக் கேட்டருளினர். பின்பு நான் ஆசா 24
ரியரின் தலைவரிலே பன்னிரண்டுபேராகிய
செரெபியாவையும், அஷபியாவையும், அவர்
கள் சகோதரரிலே பத்துப்பேரையும் பிரித்
தெடுத்து, ராஜாவும், அவருடைய ஆலோச 25
னைக்காரரும், அவருடைய பிரபுக்களும், அங்
கேயிருந்த சகல இஸ்ரவேலரும், எங்கள்
தேவனுடைய ஆலயத்துக்கென்று எடுத்துக்
கொடுத்த காணிக்கையாகிய வெள்ளியையும்,
பொன்னையும், [10]பணிமுட்டுகளையும் அவர்க
ளிடத்தில் நிறுத்துக்கொடுத்தேன். அவர்கள் 26
கையிலே நான் அறுநூற்று ஐம்பது தாலந்து
வெள்ளியையும், நூறு தாலந்து நிறையான
வெள்ளிப் பணிமுட்டுகளையும், நூறு தாலந்து
பொன்னையும், ஆயிரம் தங்கக்காசு பெறு 27
மான இருபதுபொற்கிண்ணங்களையும், பொன்
னைப்போல எண்ணப்பட்ட பளபளப்பான
இரண்டு நல்ல வெண்கலப் பாத்திரங்களையும்
நிறுத்துக்கொடுத்து, அவர்களை நோக்கி: நீங்கள் 28
கர்த்தருக்குப்பரிசுத்தமானவர்கள்; இந்தப்பணி
முட்டுகளும், உங்கள் பிதாக்களுடைய தேவனு
கிய கர்த்தருக்கு மன உற்சாகமாய்ச் செலுத்தப்
பட்ட இந்த வெள்ளியும், [11]இந்தப் பொன்னும்
பரிசுத்தமானவைகள். நீங்கள் அதை எருச 29
லேமிலிருக்கிற தேவனுடைய ஆலயத்தின்
அறைகளில் ஆசாரியர் லேவியருடைய பிரபு
க்களுக்கும், இஸ்ரவேலுடைய வம்சத்தலைவர்
களுக்கும் முன்பாக நிறுத்து ஒப்புவிக்குமட்
டும் விழிப்பாயிருந்து, அதைக் காத்துக்கொள்
ளுங்கள் என்றேன். அப்படியே அந்த ஆசா 30
ரியரும் லேவியரும், அந்த வெள்ளியையும்
பொன்னையும் பணிமுட்டுகளையும் எருசலே
மிலிருக்கிற எங்கள் தேவனுடைய ஆலயத்துக்
குக் கொண்டுபோகும்படிக்கு, நிறுத்து வாங்
கிக்கொண்டார்கள்.
நாங்கள் எருசலேமுக்குப் போக, முதலாம் 31
மாதம் பன்னிரண்டாந்தேதியிலே, அகாவா

[1] 7. 7
[2] 2 சாமு. 14. 3, 19
[3] நெகே. 2. 8
[4] நெகே. 8. 7; 9. 4, 5
[5] 2. 43
[6] லேவி. 16. 29. 2 நாளா. 20. 3. சங். 5. 8. ஏசா. 58. 3, 5
[7] 1 நாளா. 9. 15
[8] 7. 6, 9, 28. சங். 33. 18, 19. ரோ. 8. 28
[9] 1 நாளா. 5. 20. ஏசா. 19. 22
[10] 7. 15, 16
[11] லேவி. 21. 6–8. உபா. 33. 8

நதியை விட்டுப் பயணம் புறப்பட்டோம்;
[1]எங்கள் தேவனுடைய கரம் எங்கள்மேலி
ருந்து, வழியிலே சத்துருவின் கைக்கும்,
பதிவிருக்கிறவர்களின் கைக்கும் எங்க
32 ளைத் தப்புவித்தது. நாங்கள் எருசலேமுக்கு
வந்து, [2]அங்கே மூன்றுநாள் இருந்தபின்பு,
33 நாலாம் நாளிலே அந்த வெள்ளியும் பொன்
னும் பணிமுட்டுகளும், எங்கள் தேவனுடைய
ஆலயத்தில் ஆசாரியனாகிய உரியாவின் குமா
ரன் மெரெமோத்தின் கையிலும், பினெகாசின்
குமாரன் எலெயாசாரின் கையிலும், எல்லா
வற்றிற்கும் இருந்த நிறையின்படியேயும் நிறுத்
து, ஒப்புவிக்கப்பட்டது; யெசுவாவின் குமா
ரன் யோசபாத்தும், பின்னூயின் குமாரன்
நொவதியாவும் என்கிற லேவியரும் அவர்க
34 ளோடே கூட இருந்தார்கள். அந்த நிறை
யெல்லாம் அக்காலத்தில் எழுதப்பட்டது.
35 சிறைப்பட்டு மீண்டவர்கள் இஸ்ரவேலின்
தேவனுக்குச் சர்வாங்க தகனபலிகளாக இஸ்
ரவேல் அனைத்தினிமித்தம் பன்னிரண்டு
காளைகளையும், தொண்ணூற்றாறு ஆட்டுக்க
டாக்களையும், எழுபத்தேழு ஆட்டுக்குட்டிகளை
யும், பாவ நிவாரணத்துக்காகப் பன்னிரண்டு
வெள்ளாட்டுக்கடாக்களையும் பலியிட்டு, [3]அ
வையெல்லாம் **கர்த்தருக்குச்** சர்வாங்க தகன
36 பலியாகச் செலுத்தினார்கள். பின்பு ராஜா
வின் சன்னதுகளை நதிக்கு இப்புறத்திலிருக்
கிற ராஜாவின் தேசாதிபதிகளுக்கும் அதிகா
ரிகளுக்கும் ஒப்புவித்தார்கள்; [4]அப்பொழுது
அவர்கள் ஜனங்களுக்கும் தேவனுடைய ஆல
யத்துக்கும் உதவியாயிருந்தார்கள்.

**9** இவைகள் செய்து முடிந்தபின்பு, பிரபுக்
கள் என்னிடத்தில் சேர்ந்து: இஸ்ரவேல்
ஜனங்களும், ஆசாரியரும் லேவியரும் ஆகிய
இவர்கள், கானானியர், ஏத்தியர், பெரிசியர்,
எபூசியர், அம்மோனியர், மோவாபியர், எகிப்
தியர், அம்மோரியர் என்னும் இந்தத் தேசங்க
ளின் ஜனங்களுக்கும், அவர்களுடைய அருவ
2 ருப்புகளுக்கும் [5]விலகியிருக்கவில்லை. எப்படி
யென்றால், அவர்களுடைய குமாரத்திகளிலே
தங்களுக்கும் தங்கள் குமாரருக்கும் பெண்க
ளைக் கொண்டார்கள்; இப்படியே பரிசுத்த
வித்துத் தேசங்களின் ஜனங்களோடே [6]கலந்து
போயிற்று; பிரபுக்களின் கையும், அதிகாரிக
ளின் கையும், இந்தக் குற்றத்தில் முந்தினதா
3 யிருக்கிறது என்றார்கள். இந்த வர்த்தமானத்
தை நான் கேட்டபொழுது, என் வஸ்திரத்
தையும் என் சால்வையையும் நான் கிழித்து,
[7]என் தலையிலும் என் தாடியிலுமுள்ள மயி
ரைப் பிடுங்கித் திகைத்தவனாய் உட்கார்ந்திருந்
4 தேன். அப்பொழுது சிறையிருப்பிலிருந்து
வந்தவர்களுடைய குற்றத்தினிமித்தம் இஸ்ர
வேலுடைய தேவனின் வார்த்தைகளுக்கு நடு
ங்குகிற யாவரும் என்னோடே கூடிக்கொண்
டார்கள்; [8]நானோ அந்திபலி செலுத்தப்படு
மட்டும் திகைத்தவனாய் உட்கார்ந்துகொண்டி
5 ருந்தேன். அந்திப்பலி நேரத்திலே நான் துக்
கத்தோடே எழுந்து, கிழித்துக்கொண்ட வஸ்
திரத்தோடும் சால்வையோடும் முழங்காற்படி
யிட்டு, [9]என் கைகளை என் தேவனாகிய **கர்த்**
**தருக்கு** நேராக விரித்து: என் தேவனே, 6
நான் என் முகத்தை என் தேவனாகிய உமக்கு
முன்பாக ஏறெடுக்க வெட்கிக் கலங்குகிறேன்;
[10]எங்கள் அக்கிரமங்கள் எங்கள் தலைக்கு மே
லாகப் பெருகிற்று; எங்கள் குற்றம் வானபரி
யந்தம் வளர்ந்துபோயிற்று. எங்கள் பிதாக்க 7
ளின் நாட்கள் முதல் இந்நாள்மட்டும் நாங்கள்
பெரிய குற்றத்துக்கு உள்ளாயிருக்கிறோம்;
எங்கள் அக்கிரமங்களினிமித்தம் நாங்களும்,
எங்கள் ராஜாக்களும், எங்கள் ஆசாரியர்களும்,
இந்நாளிலிருக்கிறதுபோல, அந்நியதேசராஜா
க்களின் கையிலே, பட்டயத்துக்கும், சிறையி
ருப்புக்கும், கொள்ளைக்கும், [11]வெட்கத்துக்கும்
ஒப்புக்கொடுக்கப்பட்டோம். இப்பொழுதும் 8
எங்கள் தேவனாகிய **கர்த்தர்** எங்களிலே
தப்பின சிலரை மீதியாக வைக்கவும், தம்மு
டைய பரிசுத்த ஸ்தலத்தில் எங்களுக்கு ஒரு
*குச்சைக் கொடுக்கவும், இப்படியே எங்கள்
தேவன் எங்கள் கண்களைப் பிரகாசிப்பித்து,
எங்கள் அடிமைத்தனத்திலே எங்களுக்குக்
கொஞ்சம் உயிர் கொடுக்கவும், அவராலே
கொஞ்சநேரமாவது கிருபை கிடைத்தது.
நாங்கள் அடிமைகளாயிருந்தோம்; ஆனாலும் 9
எங்கள் அடிமைத்தனத்திலே எங்கள் தேவன்
எங்களைக் கைவிடாமல், [12]எங்களுக்கு உயிர்
கொடுக்கவும், நாங்கள் எங்கள் தேவனுடைய
ஆலயத்தை எடுப்பித்து, [13]பாழாய்ப்போன
அதைப் புதுப்பிக்கும்படிக்கும் எங்களுக்கு
யூதாவிலும் எருசலேமிலும் ஒரு [14]வேலியைக்
கட்டளையிடும்படிக்கும், பெர்சியாவின் ராஜா
க்கள் சமுகத்தில் எங்களுக்குத் தயைகிடைக்
கச் செய்தார். இப்பொழுதும் எங்கள் தேவ 10
னே, நாங்கள் இனி என்ன சொல்லுவோம்;
தேவரீர் உமது ஊழியக்காரராகிய தீர்க்கதரிசி
களைக்கொண்டு கற்பித்த உமது கற்பனைகளை
விட்டுவிட்டோம். நீங்கள் சுதந்தரிக்கிறதற்கு 11
உட்பிரவேசிக்கும் தேசமானது, தேசாதேசங்
களுடைய ஜனங்களின் அசங்கியத்தினாலும்,
அவர்கள் அதை ஒரு முனைதொடங்கி மறு
முனைமட்டும் நிறையப்பண்ணின அவர்களு
டைய அருவருப்புகளினாலும் அவர்களுடைய
அசுத்தத்தினாலும், தீட்டுப்பட்டதாயிருக்கி
றது. ஆதலால் நீங்கள் பலத்துக்கொண்டு, 12
தேசத்தின் நன்மையைப் புசித்து, அதை நித்
தியகாலமாக உங்கள் பிள்ளைகளுக்கு †உம்பி
ளிக்கையாகப் பின்வைக்கும்படிக்கு, நீங்கள்
உங்கள் குமாரத்திகளை அவர்களுடைய குமா
ரருக்குக் கொடாமலும், அவர்களுடைய குமா
ரத்திகளை உங்கள் குமாரருக்குக் கொள்ளாம
லும், [15]அவர்களுடைய சமாதானத்தையும் நன்
மையையும் ஒருக்காலும் நாடாமலும் இருப்பீர்
களாக என்றீரே. இப்பொழுதும் எங்கள் 13
தேவனே, எங்கள் பொல்லாத செய்கைகளி
னாலும், எங்கள் பெரிய குற்றத்தினாலும், இவை

1 7. 6, 9, 28
2 நெகே. 2. 11
3 6. 17
4 7. 21
5 6. 21. உபா. 12. 30, 31. நெகே. 9. 2
6 யாத். 34. 16. உபா. 7. 3. 2 கொ. 6. 14
7 யோபு 1. 20. சங். 148. 4
8 10. 3, யாத். 29. 39. ஏசா. 66. 2
9 யாத். 9. 29, 33
10 2 நாளா. 28. 9. சங். 38. 4. தானி. 9. 7, 8. வெளி. 18. 5
11 உபா. 28. 36, 64. நெகே. 9. 30. சங். 106. 6. தானி. 9. 7, 8
* தங்குமிடத்தை.
12 நெகே. 9. 36
13 சங். 136. 23
14 ஏசா. 5. 2
† சுதந்திரமாக. நீதி. 13. 22; 20. 7
15 யாத். 23. 32; 34. 16. உபா. 7. 3; 23. 6

களெல்லாம் எங்கள்மேல் வந்தும், தேவரீர்
எங்கள் அக்கிரமத்துக்குத்தக்க ஆக்கினையை
எங்களுக்கு இடாமல், [1]எங்களை இப்படித் தப்
14 பவிட்டிருக்கையில், நாங்கள் உமது கற்பனை
களை வீணாக்கவும், இந்த அருவருப்புகளுள்ள
ஜனங்களோடே சம்பந்தங்கலக்கவும் தகுமோ?
[2]அப்படிச்செய்தால், எங்களில் ஒருவரும்மீந்து
தப்பாதபடிக்கு, [3]தேவரீர் எங்களை நிர்மூல
மாக்குமட்டும் எங்கள்மேல் கோபமாயிருப்பீ
15 ரல்லவோ? இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்
தாவே, [4]நீர் நீதியுள்ளவர்; ஆகையால் இந்நா
ளில் இருக்கிறதுபோல, நாங்கள் தப்பி மீந்தி
ருக்கிறோம்; இதோ, நாங்கள் உமக்கு முன்
பாகக் குற்றத்திற்குள்ளானவர்கள்; [5]இதினி
மித்தம் நாங்கள் உமக்கு முன்பாக நிற்கத்தக்க
வர்கள் அல்ல என்று பிரார்த்தித்தேன்.

10 எஸ்றா இப்படி விண்ணப்பம்பண்ணி,
அறிக்கையிட்டு அழுது, தேவனுடைய ஆல
யத்துக்கு முன்பாகத் தாழ விழுந்துகிடக்கை
யில், [6]இஸ்ரவேலில் புருஷரும் ஸ்திரீகளும்
பிள்ளைகளுமான மகா பெரிய சபை அவனி
டத்தில் வந்து கூடிற்று; ஜனங்கள் மிகவும்
2 அழுதார்கள். அப்பொழுது ஏலாமின் புத்
திரரில் ஒருவனாகிய யெகியேலின் குமாரன்
செக்கனியா எஸ்றாவை நோக்கி: நாங்கள் தே
சத்து ஜனங்களிலுள்ள அந்நிய ஸ்திரீகளைச்
சேர்த்துக்கொண்டதினால், எங்கள் தேவனு
க்கு விரோதமாகப் பாவஞ்செய்தோம்; [7]ஆகி
லும் இப்பொழுது இந்தக்காரியத்திலே இன்
னும் இஸ்ரவேலுக்காக நம்பிக்கை உண்டு.
3 இப்பொழுதும் அந்த ஸ்திரீகள் எல்லாரையும்,
அவர்களிடத்தில்பிறந்தவர்களையும், என் ஆண்
டவனுடைய ஆலோசனைக்கும், நமது தேவ
னுடைய கற்பனைக்கு நடுங்குகிறவர்களின்
ஆலோசனைக்கும் ஏற்றபிரகாரம் அகற்றிப்
போடுவோம் என்று நம்முடைய தேவனோ
டே [8]உடன்படிக்கை பண்ணக்கடவோம்;
நியாயப் பிரமாணத்தின்படியே செய்யப்படு
4 வதாக. எழுந்திரும்; இந்தக் காரியத்தை நடப்
பிக்கிறது உமக்கு அடுத்தது; நாங்களும் உம்
மோடேகூட இருப்போம்; [9]நீர் திடன்கொ
5 ண்டு இதைச் செய்யும் என்றான். அப்பொ
ழுது எஸ்றா எழுந்திருந்து, ஆசாரியரிலும்
லேவியரிலும் பிரதானமானவர்களும் இஸ்ர
வேல் அனைவரும் இந்த வார்த்தையின்படி
செய்யும்படிக்கு, அவர்களை ஆணையிடச்சொ
6 ன்னான்;[10] அவர்கள் ஆணையிட்டார்கள். அதின்
பின்பு எஸ்றா தேவனுடைய ஆலயத்துக்கு
முன்னிருந்து எழுந்து, எலியாசிபின் குமார
னாகிய யோகனானின் அறைக்குள் பிரவே
சித்தான்; அங்கே வந்தபோது, அவன் சிறை
யிருப்பிலிருந்து வந்தவர்களுடைய குற்றத்
தினிமித்தம் [11]அப்பம் புசியாமலும் தண்
ணீர் குடியாமலும் துக்கித்துக்கொண்டிருந்
7 தான். அப்பொழுது சிறையிருப்பிலிருந்து
வந்தவர்கள் எல்லாரும் எருசலேமிலே வந்து
8 கூடவேண்டும் என்றும், மூன்றுநாளைக்குள்

ளே பிரபுக்கள் மூப்பர்களுடைய ஆலோசனை
யின்படியே எவனாகிலும் வாராதேபோனால்,
அவனுடைய பொருளெல்லாம் ஜப்தி செய்யப்
பட்டு, சிறையிருப்பிலிருந்து வந்த சபைக்கு
அவன் புறம்பாக்கப்படுவான் என்றும், யூதா
விலும் எருசலேமிலும் விளம்பரம்பண்ணி
னார்கள். அப்படியே யூதா பென்யமீன் கோத் 9
திரத்தார் எல்லாரும் மூன்று நாளைக்குள்ளே
எருசலேமிலே கூடினார்கள்; அது ஒன்பதாம்
மாதம் இருபதாந்தேதியாயிருந்தது; ஜனங்கள்
எல்லாரும் தேவனுடைய ஆலயத்தின் வீதியி
லே அந்தக் காரியத்தினாலும் [12]அடைமழையி
னாலும் நடுங்கிக்கொண்டிருந்தார்கள். அப் 10
பொழுது ஆசாரியனாகிய எஸ்றா எழுந்திருந்து
அவர்களை நோக்கி: நீங்கள் இஸ்ரவேலின்மே
லிருக்கிற குற்றத்தை அதிகரிக்கப்பண்ண,
மறுஜாதியான ஸ்திரீகளை விவாகம்பண்ணின
தினால் பாவஞ்செய்தீர்கள். இப்பொழுதும் 11
நீங்கள் உங்கள் பிதாக்களின் தேவனாகிய கர்த்
தரிடத்தில் அறிக்கையிட்டு, அவருடைய பிரி
யத்தின்படியே செய்து, [13]தேசத்தின் ஜனங்
களையும், மறுஜாதியான ஸ்திரீகளையும் விட்டு
விலகுங்கள் என்றான். அப்பொழுது சபை 12
யார் யாவரும் மகா சத்தத்தோடே பிரதியுத்தர
மாக: ஆம், நீர் சொன்ன வார்த்தைகளின்படி
யே செய்யவேண்டியதுதான். ஆனாலும் ஜன 13
ங்கள் திரளாயிருக்கிறார்கள், இது மாரிகால
முமாயிருக்கிறது, இங்கே வெளியிலே நிற்க
எங்களாலே கூடாது; இது ஒருநாள் இரண்டு
நாள் வேலையல்ல; இந்தக் காரியத்திலே கட்
டளை மீறினவர்களாகிய நாங்கள் அநேகர். ஆ 14
கையால் இதற்குச் சபையெங்கும் எங்கள் பிர
புக்கள் விசாரிப்புக்காரராக வைக்கப்படவே
ண்டும்; இந்தக்காரியத்தினிமித்தம் நம்முடைய
தேவனுக்கு இருக்கிற உக்கிரகோபம் [14]எங்
களை விட்டுத் திரும்பும்படி, எங்கள் பட்ட
ணங்களில் மறுஜாதியான ஸ்திரீகளைக்கொ
ண்ட அனைவரும் ஒவ்வொரு பட்டணத்தின்
மூப்பரோடும் நியாயாதிபதிகளோடும் குறித்த
காலங்களில் வரக்கடவர்கள் என்றார்கள்.
ஆசகேலின் குமாரன் யோனத்தானும், திக்கா 15
வின் குமாரன் யக்சியாவுமாத்திரம் அதை வி
சாரிக்கும்படிக்கு வைக்கப்பட்டார்கள்; மெ
சுல்லாமும், சப்பேதா என்னும் லேவியனும்
அவர்களுக்கு உதவியாயிருந்தார்கள். சிறை 16
யிருப்பிலிருந்து வந்தவர்கள் இந்தப்பிரகாரம்
செய்தார்கள்; ஆசாரியனாகிய எஸ்றாவும், தங்
கள் பிதாக்களுடைய குடும்பத்தின்படியே
பேர்பேராக அழைக்கப்பட்ட பிதா வம்சங்
களின் தலைவர் அனைவரும், இந்தக் காரியத்
தை விசாரிக்கும்படி, [15]பத்தாம் மாதம் முதல்
தேதியிலே, தனித்து உட்கார்ந்து, அந்நிய 17
ஜாதியான ஸ்திரீகளைக் கொண்டவர்கள் எல்
லாருடைய காரியத்தையும் முதலாம் மாதம்
முதல்தேதியிலே விசாரித்து முடித்தார்கள்.
ஆசாரிய புத்திரரில் மறுஜாதியான மனைவி 18
களைக் கொண்டவர்களாகக் காணப்பட்டவர்

1 சங். 103. 10
2 நெகே. 13. 23, 27. மோ. 5. 14. 2 பே. 2. 20,21
3 உபா. 9. 8
4 நெகே. 9. 33. தானி. 9. 14
5 சங். 130. 3. கொ. 8. 19. 1 கொ. 15. 17
6 2 நாளா. 20. 9. தானி. 9. 20
7 நெகே. 13. 27
8 9. 4. உபா. 7. 2, 3. 2 நாளா. 34. 31
9 1 நாளா. 28. 10
10 நெகே. 5. 12
11 உபா. 9. 18
12 1 சாமு. 12. 18.
13 யோசு. 7. 19. நீதி. 28. 13. 1 யோ. 1. 9
14 2 நாளா. 30. 8
15 உபா. 13. 14. யோபு 29. 16. யோ. 7. 51

கன் யாரென்றால்: [1]யோசதாக்கின் குமாரனா
கிய யெசுவாவின் குமாரரிலும் அவன் சகோ
தரரிலும், மாசெயா, எலியேசர், யாரீப், கெத
19 லியா என்பவர்கள். இவர்கள் தங்கள் ஸ்திரீ
களைத் தள்ளிவிடுவோம் என்று கையடித்துக்
கொடுத்து; [2]தாங்கள் குற்றவாளிகளானபடியி
னால் குற்ற நிவாரணபலியாக ஒரு ஆட்டுக்க
20 டாவைச் செலுத்தினார்கள். இம்மேரின் புத்
21 திரரில் அனானியும், செபதியாவும், ஆரீமின்
புத்திரரில் மாசெயா, எலியா, செமாயா, யெ
22 கியேல், உசியா என்பவர்களும்; பஸ்கூரின் புத்
திரரில் எலியோனாய், மாசெயா, இஸ்மவேல்,
நெதனெயேல், யோசபாத், எலாசா என்ப
23 வர்களும்; லேவியரில் யோசபாத், சிமேயி,
கெலிதா என்னும் பேருமுள்ள கெலாயா,
பெத்தகியா, யூதா, எலியேசர் என்பவர்களும்;
24 பாடகரில் எலியாசிபும், வாசல் காவலாளரில்
சல்லூம், தேலேம், ஊரி என்பவர்களும்;
25 மற்ற இஸ்ரவேலருக்குள்ளே பாரோஷின்
புத்திரரில் ரமீயா, யெசியா, மல்கியா, மியா
மின், எலெயாசார், மல்கிஜா, பெனாயா என்
26 பவர்களும்; ஏலாமின் புத்திரரில் மத்தனியா,
சகரியா, யெகியேல், அப்தி, யெரிமோத், எலி
27 யா என்பவர்களும்; சத்தூவின் புத்திரரில்
எலியோனாய், எலியாசிப், மத்தனியா, யெரி
28 மோத், சாபாத், அசிசா என்பவர்களும்; பெ

1 எசே. 28. 11.
மல். 2. 8, 9

2 லேவி. 6. 4, 6.
2 இரா. 10. 15.
1 நாளா. 29. 24.
2 நாளா. 30. 8

3 நீதி. 5. 20

பாயின் புத்திரரில் யோகனான், அனனியா,
சாபாயி, அத்லாயி என்பவர்களும்; பானி 29
யின் புத்திரரில் மெசுல்லாம், மல்லூக், அதா
யா, யாசுப், செயால், ராமோத் என்பவர்க
ளும்; பாகாத்மோவாபின் புத்திரரில் அத்னா, 30
கெலால், பெனாயா, மாசெயா, மத்தனியா,
பெசலெயேல், பின்னூயி, மனாசே என்பவர்
களும்; ஆரீமின் புத்திரரில் எலியேசர், இ 31
ஷியா, மல்கியா, செமாயா, ஷிமியோன்,
பென்யமீன், மல்லூக், செமரியா என்பவர்க 32
ளும்; ஆசூமின் புத்திரரில் மத்னாயி, மத்தத் 33
தா, சாபாத், எலிப்பேலேத், எரேமாயி, மனாசே,
சிமெயி என்பவர்களும்; பானியின் புத்திரரில் 34
மாதாயி, அம்ராம், ஊவேல், பெனாயா, பெதி 35
யா, கெல்லூ, வனியா, மெரேமோத், எலெயா 36
சிப், மத்தனியா, மதனாய், யாசாய், பானி, 37, 38
பின்னூயி, சிமெயி, செலேமியா, நாத்தான், 39
அதாயா, மக்நாத்பாயி, சாசாயி, சாராயி, 40
அசரெயேல், செலேமியா, செமரியா, சல் 41, 42
லூம், அமரியா, யோசேப் என்பவர்களும்; நே 43
போவின் புத்திரரில் ஏயெல், மத்தித்தியா,
சாபாத், செபினா, யதாய், யோவேல், பெ
னாயா என்பவர்களுமே. இவர்கள் எல்லாரும் 44
மறுஜாதியான ஸ்திரீகளைக் கொண்டவர்கள்;
[3]இவர்களில் சிலர் கொண்டிருந்த ஸ்திரீகளி
டத்தில் பிள்ளைகளைப் பெற்றிருந்தார்கள்.

# நெகேமியாவின் புஸ்தகம்

1 அகலியாவின் குமாரனாகிய [1]நெகேமியா
வின் நடபடிகள்:
இருபதாம் வருஷம் கிஸ்லேயு மாதத்தில்
நான் சூசான் என்னும் அரமனையில் இருக்கும்
2 போது சம்பவித்தது என்னவென்றால், என்
சகோதாரில் ஒருவனாகிய ஆனானியும், வே
றே சில மனுஷரும் யூதாவிலிருந்து வந்தார்
கள்; அவர்களிடத்தில் நான் சிறையிருப்பில்
மீந்து தப்பின யூதரின் செய்தியையும், எருச
3 லேமின் செய்தியையும் விசாரித்தேன். அத
ற்கு அவர்கள்: சிறையிருப்பில் மீந்திருக்கிற
வர்கள் அந்தத் தேசத்திலே மகா தீங்கையும்
நிந்தையையும் அநுபவிக்கிறார்கள்; [2]எருசலே
மின் அலங்கம் இடிபட்டதும், [3]அதின் வாசல்
கள் அக்கினியால் சுட்டெரிக்கப்பட்டதுமாய்க்
4 கிடக்கிறது என்றார்கள். இந்த வார்த்தை
களைக் கேட்டபோது நான் உட்கார்ந்து அழுது,
சிலநாளாய்த் துக்கித்து, உபவாசித்து, மன்
றாடி, பரலோகத்தின் தேவனை நோக்கி:
5 பரலோகத்தின் தேவனாகிய **கர்த்தாவே**, [4]உம்
மில் அன்புகூர்ந்து, உம்முடைய கற்பனை
களைக் கைக்கொள்ளுகிறவர்களுக்கு, [5]உடன்
படிக்கையையும் கிருபையையும் காக்கிற மகத்
6 துவமும் பயங்கரமுமான தேவனே, உமது
அடியாராகிய இஸ்ரவேல் புத்திரருக்காக
இன்று இரவும் பகலும் உமக்கு முன்பாக மன்
றாடி, இஸ்ரவேல் புத்திரராகிய நாங்கள்
உமக்கு விரோதமாகச் செய்த பாவங்களை
[6]அறிக்கையிடுகிற அடியேனுடைய ஜெபத்
தைக் கேட்கிறதற்கு, [7]உம்முடைய செவி
கவனித்தும், [8]உம்முடைய கண்கள் திறந்தும்
இருப்பதாக; நானும் என் தகப்பன் வீட்டா
7 ரும் பாவஞ்செய்தோம். நாங்கள் உமக்கு
முன்பாக மிகவும் கெட்டவர்களாய் நடந்
தோம்; நீர் உம்முடைய தாசனாகிய மோசேக்
குக் கற்பித்த கற்பனைகளையும், கட்டளைகளை
யும், நியாயங்களையும், [9]கைக்கொள்ளாதேபோ
8 னோம். நீங்கள் கட்டளையை மீறினால் [10]நான்
உங்களை ஜாதிகளுக்குள்ளே சிதறடிப்பேன்
9 என்றும், நீங்கள் என்னிடத்தில் திரும்பி,
என் கற்பனைகளைக் கைக்கொண்டு, அவைக
ளின்படி செய்வீர்களானால், உங்களிலே தள்
ளுண்டுபோனவர்கள் *வானத்தின் கடையாந்
தரத்தில் இருந்தாலும், நான் அங்கேயிருந்து
அவர்களைச் சேர்த்து, [11]என் நாமம் விளங்கும்
படி நான் தெரிந்துகொண்ட ஸ்தலத்துக்கு
அவர்களைக் கொண்டுவருவேன் என்றும் தேவ
ரீர் உம்முடைய தாசனாகிய மோசேக்குக் கட்
டளையிட்ட வார்த்தையை நினைத்தருளும்.
தேவரீர் உமது மகா வல்லமையினாலும், உமது 10
பலத்த கரத்தினாலும், மீட்டுக்கொண்ட உமது
அடியாரும் [12]உமது ஜனங்களும் இவர்கள்தா
னே. ஆண்டவரே, உமது அடியானின் 11
ஜெபத்தையும், உமது நாமத்துக்குப் பயப்பட
வேண்டும் என்று விரும்புகிற உமது அடியா
ரின் ஜெபத்தையும் உமது செவிகள் கவனித்
திருப்பதாக; [13]இன்றைக்கு உமது அடியானுக்
குக் காரியத்தைக் கைகூடி வரப்பண்ணி,
இந்த மனுஷனுக்கு முன்பாக எனக்கு இரக்
கம் கிடைக்கப்பண்ணியருளும் என்று பிரார்த்
தித்தேன். நான் ராஜாவுக்குப் [14]பானபாத்திரக்
காரனாயிருந்தேன்.
அர்தசஷ்டா ராஜாவின் இருபதாம் வரு 2
ஷம் நிசாம் மாதத்திலே, [15]திராட்சரசம் ராஜா
வுக்கு முன்பாக வைத்திருக்கையில், நான்
அதை எடுத்து அவருக்குக் கொடுத்தேன்;
நான் முன் ஒருபோதும் அவர் சமுகத்தில்
துக்கமாயிருந்ததில்லை. அப்பொழுது ராஜா 2
என்னைப் பார்த்து: நீ துக்கமுகமாயிருக்கிறது
என்ன? உனக்கு வியாதியில்லையே, இது மன
தின் துக்கமே [16]ஒழிய வேறொன்றும் அல்ல
என்றார்; அப்பொழுது நான் மிகவும் பயந்து,
ராஜாவை [17]நோக்கி: ராஜா என்றைக்கும் வா 3
ழ்க; என் பிதாக்களின் கல்லறைகள் இருக்
கும் ஸ்தலமாகிய நகரம் பாழானதும், அதின்
வாசல்கள் அக்கினியால் சுட்டெரிக்கப்பட்
டதுமாய்க் கிடக்கும்போது, நான் துக்கமுகத்
தோடு இராதிருப்பது எப்படி என்றேன்.
அப்பொழுது ராஜா என்னைப் பார்த்து: நீ 4
கேட்கிற காரியம் என்ன என்றார். அப்பொ
ழுது நான்: [18]பரலோகத்தின் தேவனை நோக்கி
ஜெபம்பண்ணி, ராஜாவைப் பார்த்து: ராஜா 5
வுக்குச் சித்தமாயிருந்து, அடியேனுக்கு உமது
சமுகத்தில் தயை கிடைத்தானால், என் பி
தாக்களின் கல்லறைகளிருக்கும் பட்டணத்
தைக் கட்டும்படி, யூதாதேசத்துக்கு நீர் என்னை
அனுப்ப வேண்டிக்கொள்ளுகிறேன் என்
றேன். அப்பொழுது ராஜஸ்திரீயும் பக்கத் 6
தில் உட்கார்ந்திருந்தாள். ராஜா என்னைப்
பார்த்து: உன் பிரயாணம் எத்தனை நாள் செல்
லும், நீ எப்பொழுது திரும்பிவருவாய் என்று
கேட்டார். இவ்வளவு காலம் செல்லுமென்று
நான் ராஜாவுக்குச் சொன்னபோது, [19]என்னை
அனுப்ப அவருக்குச் சித்தமாயிற்று. பின் 7
னும் நான் ராஜாவைப் பார்த்து: ராஜாவுக்குச்
சித்தமாயிருந்தால், நான் யூதாதேசத்துக்குப்

1 10. 1
2 சங். 137. 1–3. புல. 1. 7
3 2 இரா. 25. 10. ஏசா. 64. 10,11
4 தானி. 9. 4. ழி. யாத். 20. 6
5 சங். 32.5.1 யோ. 1. 9
6 1 இரா. 8. 28, 29
7 சங். 34. 15
8 சங். 106. 6. தானி. 9. 5
9 உபா. 28. 15
10 லேவி. 26. 33. ழி. உபா. 4. 25. ழி
* ஆகாயத்தின். உபா. 30. 4
11 சங்.147.2.ஏசா. 11. 12. எரே. 12. 15
12 உபா. 9. 29. தானி. 9. 15. ழி
13 சங். 86. 6.ஏசா. 26. 8. எபி. 13. 18
14 2. 1
15 எஸ்ற 7. 1
16 நீதி. 15. 13
17 1 இரா. 1. 31. தானி. 2. 4
18 நீதி. 3. 6. பிலி. 4. 6
19 5. 14. 13. 6

போய்ச் சேருமட்டும், நதிக்கு அப்புறத்தியி
ருக்கிற தேசாதிபதிகள் என்னை வழிவிட்
டனுப்பும்படிக்கு அவர்களுக்குக் *கடிதங்கள்
8 கொடுக்கும்படிக்கும், தேவாலயத்துக்கு இருக்
கிற அரணின் கதவுவேலைக்கும், நகர அலங்
கத்தின் வேலைக்கும், நான் தங்கப்போகிற
வீட்டின் வேலைக்கும் வேண்டிய மரங்களை ரா
ஜாவின் வனத்துக் காவலாளனாகிய ஆசாப்
எனக்குக் கொடுக்கும்படிக்கும், அவனுக்கும்
ஒரு கடிதம் கட்டளையிடப்படுவதாக என்
றேன்; என் தேவனுடைய தயவுள்ள கரம்
என்மேல் இருந்தபடியால், [1]ராஜா அவைகளை
9 எனக்குக் கட்டளையிட்டார். அப்படியே
நான் நதிக்கு அப்புறத்திலிருக்கிற தேசாதி
பதிகளிடத்துக்கு வந்து, ராஜாவின் கடிதங்
களை அவர்களுக்குக் கொடுத்தேன்; ராஜா
என்னோடேகூட ராணுவச் சேர்வைக்காரரை
யும், குதிரைவீரரையும் அனுப்பியிருந்தார்.
10 இதை ஓரோனியனான சன்பல்லாத்தும், அம்
மோனியனான தொபியா என்னும் ஊழியக்
காரனும் கேட்டபோது, இஸ்ரவேல் புத்திர
ரின் நன்மையை விசாரிக்க ஒருவன் வந்தான்
என்பது அவர்களுக்கு மிகவும் [2]விசனமாயிருந்
11 தது. நான் எருசலேமுக்கு வந்து, [3]அங்கே
12 மூன்றுநாள் இருந்தபின்பு, நான் சில மனுஷ
ரைக் கூட்டிக்கொண்டு, ராத்திரியில் எழுந்து
நகரசோதனை செய்தேன்; ஆனாலும் எருசலே
முக்காகச் செய்யும்படி என் [4]தேவன் என்
மனதிலே வைத்ததை நான் ஒருவருக்கும்
அறிவிக்கவில்லை; நான் ஏறிப்போன மிருக
மேயல்லாமல் வேறொரு மிருகமும் என்னோ
13 டிருந்ததில்லை. நான் அன்று ராத்திரி பள்ளத்
தாக்கின் வாசல்வழியாய்ப் புறப்பட்டு, வலு
சர்ப்பத் துரவைக் கடந்து, குப்பைமேட்டு
[5]வாசலுக்கு வந்து, எருசலேமில் இடிந்து
போன [6]அலங்கத்தையும், அக்கினியால் சுட்
டெரிக்கப்பட்ட அதின் வாசல்களையும் பார்
14 வையிட்டேன். அவ்விடத்தை விட்டு [7]ஊரு
ணி வாசலண்டைக்கும், ராஜாவின் குளத்தண்
டைக்கும் போனேன்; நான் ஏறியிருந்த மிரு
கம் அங்கே நடந்துபோகிறதற்கு வழியில்லா
15 திருந்தது. அன்று ராத்திரியிலேயே நான்
ஆற்றோரமாய்ப் போய், [8]அலங்கத்தைப் பார்
வையிட்டுத் திரும்பி, பள்ளத்தாக்கின் வாசல்
16 வழியாய் வந்துவிட்டேன். நான் போனதும்,
நான் செய்ததும் அதிகாரிகள் ஒருவருக்கும்
தெரியாது; அதுவரையிலும் நான் யூதருக்காகி
லும், ஆசாரியர்கள் பெரியவர்கள் அதிகாரிக
ளுக்காகிலும், வேலைசெய்கிற மற்றவர்களுக்
17 காகிலும் ஒன்றும் அறிவிக்கவில்லை. பின்பு
நான் அவர்களை நோக்கி: எருசலேம் பாழா
யிருக்கிறதையும், [9]அதின் வாசல்கள் அக்கினி
யால் சுட்டெரிக்கப்பட்டுக் கிடக்கிறதையும்,
நாம் இருக்கிற சிறுமையையும் பார்க்கிறீர்க
ளே; நாம்இனி[10]நிந்தைக்குள்ளாயிராதபடிக்கு,
எருசலேமின் அலங்கத்தைக் கட்டுவோம் வா
18 ருங்கள் என்று சொல்லி, என் தேவனு

* நிருபங்கள்.
[1] எஸ்றா 5. 5
[2] சங். 112. 10. எசே. 25. 6-8
[3] எஸ்றா 8. 32
[4] சங். 51. 18. 122. 6
[5] 2 நாளா. 26. 9
[6] 1. 3
[7] 3. 15
[8] 2 சாமு. 15. 28. எரே. 31. 38—40
[9] புல. 2. 2, 8, 9
[10] 1. 3. சங். 44. 13. 79. 4, 12. எரே. 24. 9. எசே. 5. 14, 15. 22. 4
[11] 2 சாமு. 2. 7. எஸ்றா 6. 22
[12] சங். 80. 6
[13] 6. 6
[14] சங். 102. 13, 14. பிர. 7. 18
[15] எஸ்றா 4. 3. ஏசா. 56. 5
[16] 12. 10
[17] யோ. 5. 2
† கோபுரம். எரே. 31. 38. சகரி. 14. 10
[18] எஸ்றா 2. 34
[19] 2 நாளா. 33. 14. செப். 1. 10
[20] நியா. 5. 4, 5. 23. 1 கொ. 1. 26. 1 தீமோ. 6. 17, 18
‡ இணங்கவில்லை.
[21] 2. 8

டைய கரம் என்மேல் நன்மையாக இருக்கிற
தையும், ராஜா என்னோடே சொன்ன வார்த்
தைகளையும் அவர்களுக்கு அறிவித்தேன்; அப்
பொழுது அவர்கள்: எழுந்து கட்டுவோம்
வாருங்கள் என்று சொல்லி, [11]அந்த நல்ல வே
லைக்குத் தங்கள் கைகளைத் திடப்படுத்தினார்கள்.
ஓரோனியனான சன்பல்லாத்தும், அம்மோனி 19
யனான தொபியா என்னும் ஊழியக்காரனும்,
அரபியனான கேஷேமும் இதைக் கேட்ட
போது, எங்களைப் பரியாசம்பண்ணி, [12]எங்
களை நிந்தித்து: நீங்கள் செய்கிற இந்தக் காரி
யம் என்ன? நீங்கள் ராஜாவுக்கு விரோதமா
கக் [13]கலகம் பண்ணப்போகிறீர்களோ என்றார்
கள். அதற்கு நான் மறுமொழியாக: பரலோ 20
கத்தின் தேவனானவர் எங்களுக்குக் காரியத்
தைக் கைகூடி வரப்பண்ணுவார்; [14]அவரு
டைய ஊழியக்காரராகிய நாங்கள் எழுந்து
கட்டுவோம்; உங்களுக்கோவென்றால் எருச
லேமிலே பங்குமில்லை பாத்தியமுமில்லை;
[15]உங்கள்பேர் விளங்க ஒன்றும் இல்லையென்று
அவர்களுடனே சொன்னேன்.

அப்பொழுது பிரதான ஆசாரியனாகிய 3
[16]எலியாசீபும், அவன் சகோதரராகிய ஆசாரி
யர்களும் எழுந்து, [17]ஆட்டுவாசலைக் கட்டினார்
கள்; அதைக் கட்டி, அவர்கள் பிரதிஷ்டை
பண்ணி, அதின் கதவுகளை வைத்து, மேயா
என்கிற †கொம்மைமுதல் அனானெயேலின்
கொம்மைமட்டும்கட்டிப் பிரதிஷ்டைபண்ணி
னார்கள். அவன் அருகே எரிகோவின் மனு 2
ஷர் கட்டினார்கள்; [18]அவர்கள் அருகே இம்ரி
யின் குமாரனாகிய சக்கூர் கட்டினான். மீன் 3
வாசலை [19]அசெனாவின் குமாரர் கட்டினார்கள்;
அதற்கு உத்திரம் பாவி, அதற்குக் கதவுகளை
யும் பூட்டுகளையும் தாழ்ப்பாள்களையும் போட்
டார்கள். அவர்கள் அருகே கோசின் குமார 4
னாகிய உரியாவின் மகன் மெரெமோத் பழுது
பார்த்துக் கட்டினான்; அவர்கள் அருகே மெ
ஷேசாபெயேலின் குமாரனாகிய பெரகியா
வின் மகன் மெசுல்லாம் பழுதுபார்த்துக் கட்
டினான்; அவர்கள் அருகே பானாவின் குமார
னாகிய சாதோக் பழுதுபார்த்துக் கட்டினான்.
அவர்கள் அருகே தெக்கோவா ஊரார் பழுது 5
பார்த்துக் கட்டினார்கள்; அவர்களுடைய பிர
புக்களோ, [20]தங்கள் ஆண்டவருடைய வேலைக்
குத் ‡தங்கள் கழுத்தைக் கொடுக்கவில்லை.
பழைய வாசலைப் பசெயாகின் குமாரனாகிய 6
யோய்தாவும், பேசோதியாவின் குமாரனாகிய
மெசுல்லாமும் பழுதுபார்த்துக் கட்டினார்கள்;
அவர்கள் அதற்கு உத்திரம்பாவி, அதற்குக்
கதவுகளையும் பூட்டுகளையும் தாழ்ப்பாள்களை
யும் போட்டார்கள். அவர்கள் அருகே கிபி 7
யோன் மிஸ்பா ஊர்களின் மனுஷரான மெ
லத்தியா என்னும் கிபியோனியனும், யாதோன்
என்னும் மெரொனோத்தியனும், நதிக்கு இப்
புறத்திலிருக்கிற [21]அதிபதியின் சமஸ்தானமட்
டும் பழுதுபார்த்துக் கட்டினார்கள். அவர்கள் 8
அருகே தட்டாரில் ஒருவனாகிய அராயாவின்

குமாரன் ஊசியேல் பழுதுபார்த்துக் கட்டி
ஞன்; அவன் அருகே தைலக்காரரில் ஒருவன்
குமாரனுகிய அனனியா பழுதுபார்த்துக் கட்
டினுன்; [1]அதுமுதற்கொண்டு அகலமான
மதில்மட்டும் எருசலேம் இடிக்காமல் விட்டி
9 ருந்தது. அவர்கள் அருகே எருசலேம் பட்
டணத்தின் பாதிக்குப் பிரபுவாகிய ஊரின்
குமாரன் ரெப்பாயா பழுதுபார்த்துக் கட்டி
10 ஞன். அவர்கள் அருகே அருமாப்பின் குமா
ரன் யெதாயா தன் வீட்டுக்கு எதிரானதைப்
பழுதுபார்த்துக் கட்டினுன்; அவன் அருகே
ஆசாப்நெயாவின் குமாரன் அத்தூஸ் பழுது
11 பார்த்துக் கட்டினுன். மற்றப் பங்கையும்,
சூளைகளின் கொம்மையையும், [2]ஆரீமின்
குமாரன் மல்கிஜாவும், பாகாத்மோவாபின்
குமாரன் அசூபும் பழுதுபார்த்துக் கட்டினுர்
12 கள். அவன் அருகே எருசலேம் பட்டணத்
தின் மறுபாதிக்குப் பிரபுவாகிய அலோகே
சின் குமாரன் சல்லூமும், அவன் குமாரத்திக
13 ளும் பழுதுபார்த்துக் கட்டினுர்கள். பள்
ளத்தாக்கின் வாசலை [3]ஆனூனும், சானோவா
கின் குடிகளும் பழுதுபார்த்துக் கட்டினுர்கள்;
அவர்கள் அதைக் கட்டி, அதற்குக் கதவுகளை
யும் பூட்டுகளையும் தாழ்ப்பாள்களையும் போட்
டு, குப்பைமேட்டு வாசல்மட்டாக அலங்கத்
14 தில் ஆயிரம் முழம் கட்டினுர்கள். குப்பை
மேட்டு வாசலைப் பெத்கேரேமின் மாகாணத்
துப் பிரபுவாகிய ரெக்காபின் குமாரன் மல்
கியா பழுதுபார்த்து, அதைக் கட்டி, அதற்குக்
கதவுகளையும் பூட்டுகளையும் தாழ்ப்பாள்களையும்
15 போட்டான். ஊருணிவாசலை [4]மிஸ்பாவின்
மாகாணத்துப் பிரபுவாகிய கொல்லோசேயின்
குமாரன் சல்லூம் பழுதுபார்த்து, அதைக்
கட்டி, மச்சுப்பாவி, அதற்குக் கதவுகளையும்
பூட்டுகளையும் தாழ்ப்பாள்களையும் போட்டு,
ராஜாவின் சிங்காரத்தோட்டத் தண்டையி
லிருக்கிற சீலோவாவின் [5]குளத்து மதிலை
யும், தாவீதின் நகரத்திலிருந்து இறங்குகிற
படிகள்மட்டாக இருக்கிறதையும் கட்டினுன்.
16 அவனுக்குப் பின்னுகப் பெத்சூர் மாகாணத்
தின் பாதிக்குப் பிரபுவாகிய அஸ்பூகின்
குமாரன் நெகேமியா தாவீதின் கல்லறைக்
களுக்கு எதிரான இடமட்டாகவும், வெட்டப்
பட்ட [6]குளமட்டாகவும், பராக்கிரமசாலிக
ளின் வீடுமட்டாகவும் இருக்கிறதைப் பழுது
17 பார்த்துக் கட்டினுன். அவனுக்குப் பின்னுக
லேவியரில் பானியின் குமாரன் ரெகூமும்,
அவன் அருகே கேகிலா மாகாணத்தில் தன்
* னுடைய பாதிப்பங்குக்குப் பிரபுவாகிய அச
பியாவும் பழுதுபார்த்துக் கட்டினுர்கள்.
18 அவனுக்குப் பின்னுக அவனுடைய சகோதர
ரில் கேகிலா [7]மாகாணத்து மறுபாதிக்குப் பிர
புவாகிய எனாதாதின் குமாரன் பாபாயி பழுது
19 பார்த்துக் கட்டினுன். அவன் அருகே மிஸ்
பாவின் பிரபுவாகிய யெசுவாவின் குமாரன்
ஏசர் என்பவன் மதிலின் கோடியிலே [8]ஆயுத
சாலையின் படிகளுக்கு எதிரேயிருக்கிற வே

[1] 12. 38
[2] 12. 38
[3] 2. 13
[4] 2. 14
[5] யோவா. 9. 7
[6] 2 இரா. 20. 20. ஏசா. 7. 3; 22. 11
[7] 1 சாமு. 23. 1. ழ
[8] 2 நாளா. 26. 9
[9] 12. 28
[10] 19. வச.
[11] எரே. 32. 2; 37. 21
[12] 2 நாளா. 27. 3
[13] 2 இரா. 11. 16. எரே. 31. 40
* தொகைப்பிடுகிற.

றொரு பங்கைப் பழுதுபார்த்துக் கட்டினுன்.
அவனுக்குப் பின்னுகச் சாபாயின் குமாரன் 20
பாருக் அந்தக் கோடிதுவக்கிப் பிரதான ஆசா
ரியனுகிய எலியாசிபின் வாசற்படிமட்டும்
இருக்கிற பின்னொரு பங்கை வெகு ஜாக்கிர
தையோடே பழுதுபார்த்துக் கட்டினுன்.
அவனுக்குப் பின்னுகக் கோசின் குமாரனு 21
கிய உரியாவின் மகன் மெரேமோத் எலியாசி
பின் வீட்டு வாசற்படி துவக்கி அவனுடைய
வீட்டின் கடைக்கோடிமட்டும் இருக்கிற பின்
னொரு பங்கைப் பழுதுபார்த்துக் கட்டினுன்.
அவனுக்குப் பின்னுகச் சமனுன பூமியில் 22
வாசமாயிருக்கிற ஆசாரியர்கள் [9]பழுதுபார்த்
துக் கட்டினுர்கள். அவர்களுக்குப் பின்னு 23
கப் பென்யமீனும், அசூபும் தங்கள் வீட்டுக்கு
எதிரே இருக்கிறதைப் பழுதுபார்த்துக் கட்டி
னுர்கள்; அவர்களுக்குப் பின்னுக அனனியா
வின் குமாரனுகிய மாசேயாவின் மகன் அச
ரியா தன் வீட்டின் அருகே இருக்கிறதைப் பழு
துபார்த்துக் கட்டினுன். அவனுக்குப் பின் 24
னுக எனாதாதின் குமாரன் பின்னூவி அசரி
யாவின் வீடுதுவக்கி அலங்கத்துக் கோடி
[10]வளைவுவரைக்கும் இருக்கிற வேறொரு பங்
கைப் பழுதுபார்த்துக் கட்டினுன். ஊசா 25
யின் குமாரன் பாலால் வளைவுக்கு எதிரேயும்,
காவல் வீட்டின் முற்றத்துக்கடுத்த ராஜாவின்
உயரமான அரமனைக்கு வெளிப்புறமாயிருக்
கிற [11]கொம்மைக்கு எதிரேயும் இருக்கிறதைக்
கட்டினுன்; அவனுக்குப் பின்னுகப் பாரோ
ஷின் குமாரன் பெதாயாவும், ஓபேலிலே 26
[12]குடியிருக்கிற நிதனீமியரைச்சேர்ந்த மனித
ரும் கிழக்கேயிருக்கிற தண்ணீர் வாசலுக்கு
வெளிப்புறமான கொம்மைக்கு எதிரேயிருக்
கிற இடமட்டும் கட்டினுர்கள். அவர்களுக் 27
குப் பின்னுகத் தெக்கோவா ஊரார் வெளிப்
புறமான பெரிய கொம்மைக்கு எதிரே ஓபே
லின் மதில்மட்டும் இருக்கிற பின்னொரு பங்
கைப் பழுதுபார்த்துக் கட்டினுர்கள். குதிரை 28
வாசல் [13]முதற்கொண்டு ஆசாரியர்கள் அவரவர்
தங்கள் வீடுகளுக்கு எதிரே இருக்கிறதைப்
பழுதுபார்த்துக் கட்டினுர்கள். அவர்களுக் 29
குப் பின்னுக இம்மேரின் குமாரன் சாதோக்
தன் வீட்டுக்கு எதிரே இருக்கிறதைப் பழுது
பார்த்துக் கட்டினுன்; அவனுக்குப் பின்னுகக்
கிழக்குவாசலைக் காக்கிற செக்கனியாவின்
குமாரன் செமாயா பழுதுபார்த்துக் கட்டி
ஞன். அவனுக்குப் பின்னுகச் செல்மீயா 30
வின் குமாரன் அனனியாவும், சாலாபின்
ஆருவது குமாரனுகிய ஆனூனும், வேறொரு
பங்கைப் பழுதுபார்த்துக் கட்டினுர்கள்; அவர்
களுக்குப் பின்னுகப் பெரகியாவின் குமாரன்
மெசுல்லாம், தன் அறைவீட்டுக்கு எதிரே
இருக்கிறதைப் பழுதுபார்த்துக் கட்டினுன்.
அவனுக்குப் பின்னுகத் தட்டானின் குமா 31
ரன் மல்கியா *மிப்காத் என்னும் வாசலுக்கு
எதிரே நிதனீமியரும் மளிகைக்காரரும் குடி
யிருக்கிற ஸ்தலமுதல் கோடியின் மேல்வீடு

மட்டாகவும் இருக்கிறதைப் பழுதுபார்த்துக்
32 கட்டினான். கோடியின் மேல்வீட்டுக்கும் ஆட்
டுவாசலுக்கும் நடுவே இருக்கிறதைத் தட்டா
ரும் வர்த்தகரும் பழுதுபார்த்துக் கட்டி
னார்கள்.

4 நாங்கள் அலங்கத்தைக் கட்டுகிற செய்தி
யைச் சன்பல்லாத் கேட்டபோது, அவன்
2 கோபித்து, எரிச்சலடைந்து, [1]யூதரைச் சக்கந்
தம்பண்ணி: அந்த அற்பமான [2]யூதர் செய்கி
றது என்ன, அவர்களுக்கு இடங்கொடுக்
கப்படுமோ, பலியிடுவார்களோ, ஒரு நாளி
லே முடித்துப்போடுவார்களோ, சுட்டெரித்
துப்போடப்பட்டு மண்மேடுகளான கற்க
ளுக்கு உயிர்கொடுப்பார்களோ, என்று தன்
சகோதரருக்கும் சமாரியாவின் சேனைக்கும்
3 முன்பாகச் சொன்னான். அப்பொழுது அம்
மோனியனாகிய தொபியா அவன் பக்கத்தில்
நின்று: அவர்கள் கட்டினாலும் என்ன, ஒரு
நரி [3]ஏறிப்போனால் அவர்களுடைய கல்மதில்
4 இடிந்துபோகும் என்றான். எங்கள் தேவனே
நாங்கள் அவமதிக்கப்படுகிறதைக் கேட்டு,
[4]அவர்கள் நிந்திக்கிற நிந்தையை அவர்கள் தலை
யின்மேல் திருப்பி, [5]அவர்களைச் சிறையிருப்
பின் தேசத்திலே சூறைக்கு ஒப்புக்கொடும்.
5 அவர்கள் அக்கிரமத்தை மூடிப்போடாதேயும்;
[6]அவர்கள் பாவம் உமக்கு முன்பாகக் கிலேக்
கப்படாதிருப்பதாக; கட்டுகிறவர்களுக்கு மன
6 மடிவுண்டாகப் பேசினார்களே. நாங்கள் அலங்
கத்தைக் கட்டிவந்தோம்; அலங்கமெல்லாம்
பாதிமட்டும் ஒன்றாய் இணைந்து உயர்ந்தது;
ஜனங்கள் வேலைசெய்கிறதற்கு, [7]ஆவலாயிருந்
தார்கள்.

7 எருசலேமின் அலங்கத்தைக் கட்டுகிற
வேலை வளர்ந்தேறுகிறது என்றும், இடிக்கப்
பட்ட இடங்கள் அடைபட்டுவருகிறது என்
றும் சன்பல்லாத்தும், தொபியாவும், அரபிய
ரும், அம்மோனியரும், அஸ்தோத்தியரும்
கேட்டபோது, அவர்கள் மிகவும் எரிச்சலாகி,
8 எருசலேமின்மேல் யுத்தம்பண்ண எல்லாரும்
ஏகமாய் வரவும், வேலையைத் தடுக்கவும் [8]கட்டுப்
9 பாடு பண்ணினார்கள். ஆனாலும் நாங்கள் எங்
கள் தேவனை நோக்கி [9]ஜெபம்பண்ணி, அவர்
கள் நிமித்தம் இரவும் பகலும் சாமங்காக்கிறவர்
10 களை வைத்தோம். அப்பொழுது யூதா மனி
தர்: சுமைகாரரின் பெலன் குறைந்துபோகி
றது; மண்மேடு மிச்சமாயிருக்கிறது; நாங்கள்
அலங்கத்தைக் கட்டக்கூடாது என்றார்கள்.
11 எங்கள் சத்துருக்களோவென்றால்: நாங்கள்
அவர்கள் நடுவே வந்து, அவர்களைக் கொன்று
போடுமட்டும், அவர்கள் அதை அறியாமலும்
பாராமலும் இருக்கவேண்டும்; [10]இவ்விதமாய்
அந்த வேலையை ஒயப்பண்ணுவோம் என்றார்
12 கள். அதை அவர்களண்டையிலே குடியிருக்
கிற யூதரும், பல இடங்களிலுமிருந்து எங்க
ளிடத்துக்கு வந்து, பத்துவிசை எங்களுக்குச்
13 சொன்னார்கள். அப்பொழுது நான்: அலங்
கத்துக்குப் பின்னாக இருக்கிற பள்ளமான
இடங்களிலும் மேடுகளிலும், பட்டயங்களை
யும், ஈட்டிகளையும், வில்லுகளையும் பிடித்திருக்
கிற ஜனங்களைக் குடும்பங்குடும்பமாக நிறுத்தி
னேன். அதை நான் பார்த்து எழும்பி, பிர 14
புக்களையும் அதிகாரிகளையும் மற்ற ஜனங்களை
யும் நோக்கி: அவர்களுக்குப் [11]பயப்படாதிரு
ங்கள்; நீங்கள் மகத்துவமும் [12]பயங்கரமுமான
ஆண்டவரை நினைத்து, உங்கள் சகோதரருக்
காகவும், உங்கள் குமாரருக்காகவும், உங்கள்
குமாரத்திகளுக்காகவும், உங்கள் மனைவிகளுக்
காகவும், உங்கள் வீடுகளுக்காகவும் [13]யுத்தம்பண்
ணுங்கள் என்றேன். எங்களுக்குச் செய்தி 15
தெரியவந்ததென்றும், தேவன் அவர்கள்
ஆலோசனையை [14]அபத்தமாக்கினாரென்றும்,
எங்கள் பகைஞர் கேட்டபோது, நாங்கள் எல்
லாரும் அவரவர் தங்கள் வேலையைச் செய்ய
அலங்கத்துக்குத் திரும்பினோம். அன்றுமுதற் 16
கொண்டு என் வேலைக்காரரில் பாதிப்பேர்
வேலைசெய்தார்கள், பாதிப்பேர் ஈட்டிகளையும்
பரிசைகளையும் வில்லுகளையும் கவசங்களையும்
பிடித்து நின்றார்கள்; அதிகாரிகள் யூதாவம்
சத்தார் எல்லாருக்கும் பின்னாக நின்றார்கள்.
அலங்கத்திலே கட்டுகிறவர்களும், சுமைசுமக் 17
கிறவர்களும், சுமையேற்றுகிறவர்களும், அவர
வர் ஒரு கையினாலே வேலைசெய்து, மறுகையி
னாலே [15]ஆயுதம் பிடித்திருந்தார்கள். கட்டுகிற 18
வர்கள் அவரவர் தங்கள் பட்டயத்தைத் தங்
கள் இடுப்பிலே கட்டிக்கொண்டவர்களாய்
வேலைசெய்தார்கள்; எக்காளம் ஊதுகிறவன்
என்னண்டையிலே நின்றான். நான் பிரபுக் 19
களையும் அதிகாரிகளையும் மற்ற ஜனங்களையும்
நோக்கி: வேலை பெரிதும் விஸ்தாரமுமாயிருக்
கிறது; நாம் அலங்கத்தின்மேல் சிதறப்பட்டு
ஒருவருக்கு ஒருவர் தூரமாயிருக்கிறோம். நீங் 20
கள் எவ்விடத்திலே எக்காளச் சத்தத்தைக்
கேட்கிறீர்களோ அவ்விடத்திலே வந்து, எங்
களோடே கூடுங்கள்; நம்முடைய தேவன் நமக்
காக [16]யுத்தம் பண்ணுவார் என்றேன். இப் 21
படியே நாங்கள் வேலைசெய்துகொண்டிருந்
தோம்; அவர்களிலே பாதிப்பேர் கிழக்கு வெ
ளுக்கும் நேரமுதல் நட்சத்திரங்கள் காணு
மட்டும் ஈட்டிகளைப் பிடித்திருந்தார்கள். அக் 22
காலத்திலே நான் ஜனங்களைப் பார்த்து: இரா
மாறு நமக்குக் காவலுக்கும் பகல்மாறு வேலைக்
கும் உதவ, அவரவர் தங்கள் வேலைக்காரரோ
டுங்கூட எருசலேமுக்குள்ளே ராத்தங்கக்கட
வர்கள் என்று சொல்லி, நானாகிலும், என் 23
சகோதரராகிலும், என் வேலைக்காரராகிலும்,
என்னைப் பின்பற்றி காவல்காக்கிற சேவக
ராகிலும் எங்கள் வஸ்திரங்களைக் களைந்து
போடாதிருந்தோம்; [17]அவரவருக்கு ஆயுதமும்
தண்ணீரும் இருந்தது.

ஜனங்களுக்குள் அநேகரும் அவர்களு 5
டைய ஸ்திரீகளும் யூதராகிய தங்கள் சகோத
ரர்மேல் முறையிடுகிற பெரிய [18]கூக்குரலுண்
டாயிற்று. அதென்னவென்றால், அவர்களில் 2
சிலர்: நாங்கள் எங்கள் குமாரரோடும் எங்கள்

[1] 2. 10, 19. அப். 5. 17. எபி. 11. 36
[2] சகரி. 12. 8
[3] 2 இரா. 18. 23
[4] சங். 123. 3, 4
[5] சங். 79. 12. நீதி. 3. 34
[6] சங். 69. 27. எரே. 18. 23. 2 தீமோ. 4. 14
[7] 2 நாளா. 29. 26. சங். 110. 3
[8] சங். 83. 3–5
[9] சங். 50. 15; 55. 16–22. லூக். 21. 36. அப். 4. 24–29
[10] 2 சாமு. 17. 2. அப். 23. 12, 21
[11] உபா. 1. 29, 30. மத். 10. 28
[12] உபா. 10. 17. சங். 66. 3, 5. நாகூம். 1. 6, 7
[13] 2 சாமு. 10. 12
[14] யோபு 5. 12. சங். 33. 10. புல. 3. 37, 38
[15] 1 கொரி. 16. 13. பிலி. 1. 28
[16] யாத். 14. 14, 25. உபா. 1. 30. சகரி. 14. 3
[17] 1 கொரி. 15. 10
[18] ஏசா. 5. 7

குமாரத்திகளோடும் அநேகரானபடியினால்,
சாப்பிட்டுப் பிழைக்கும்படிக்கு நாங்கள் தானி
யத்தைக் கடனாக வாங்கினோம் என்றார்கள்.
3 வேறுசிலர்: எங்கள் நிலங்களையும் எங்கள் திராட்
சத்தோட்டங்களையும் எங்கள் வீடுகளையும் நாங்
கள் அடைமானமாக வைத்து, [1]இந்தப் பஞ்சத்தி
4 லே தானியம் வாங்கினோம் என்றார்கள். இன்
னும் சிலர்: ராஜாவுக்குத் தீர்வை செலுத்த,
நாங்கள் எங்கள் நிலங்கள்மேலும் எங்கள்
திராட்சத் தோட்டங்கள்மேலும், பணத்தைக்
5 கடனாக வாங்கினோம் என்றும்; எங்கள் *உட
லும் எங்கள் சகோதரர் உடலும் சரி; எங்கள்
பிள்ளைகளும் அவர்கள் பிள்ளைகளும் சரி; ஆனா
லும், இதோ, நாங்கள் எங்கள் குமாரரையும்
எங்கள் குமாரத்திகளையும் அடிமைத்தனத்திற்கு
உட்படுத்தவேண்டியதாயிருக்கிறது; அப்படி
யே எங்கள் குமாரத்திகளில் சிலர் அடிமைப்
பட்டுமிருக்கிறார்கள்; [2]அவர்களை மீட்க எங்
களுக்கு நிர்வாகமில்லை; எங்கள் நிலங்களும்
எங்கள் திராட்சத்தோட்டங்களும் வேறே
6 மனிதர் கைவசமாயிற்று என்றார்கள். அவர்
கள் கூக்குரலையும், இந்த வார்த்தைகளையும்
நான் கேட்டபோது, மிகவும் கோபங்கொ
7 ண்டு, என் மனதிலே ஆலோசனைபண்ணி,
பிற்பாடு பிரபுக்களையும் அதிகாரிகளையும் கடி
ந்துகொண்டு: நீங்கள் அவரவர் தங்கள் சகோத
ரர்மேல் ஏன் வட்டி சுமத்துகிறீர்கள் என்று
சொல்லி, [3]அவர்களுக்கு விரோதமாக ஒரு பெ
8 ரிய சபை கூடிவரச்செய்து, அவர்களை நோக்
கி: புறஜாதியாருக்கு விற்கப்பட்ட யூதராகிய
எங்கள் சகோதரரை நாங்கள் எங்கள் சக்திக்குத்
தக்கதாய் மீட்டிருக்கையில், [4]நீங்கள் திரும்ப
உங்கள் சகோதரரை விற்கலாமா? இவர்கள்
நமக்கு விலைப்பட்டுப்போகலாமா என்றேன்;
அப்பொழுது அவர்கள் மறு உத்தரவு சொல்ல
9 இடமில்லாமல் மவுனமாயிருந்தார்கள். பின்
னும் நான் அவர்களை நோக்கி: நீங்கள் செய்
கிற காரியம் நல்லதல்ல; நம்முடைய பகைஞ
ராகிய புறஜாதியார் நிந்திக்கிறநிமித்தம் [5]நீங்
கள் நம்முடைய தேவனுக்குப் பயந்து நடக்க
10 வேண்டாமா? நானும் என் சகோதரரும் என்
வேலைக்காரரும் இவ்விதமாகவா அவர்களுக்
குப் பணமும் தானியமும் கடன் கொடுத்தி
ருக்கிறோம்? இந்த வட்டியை விட்டுவிடுவோ
11 மாக. நீங்கள் இன்றைக்கு அவர்கள் நிலங்க
ளையும், அவர்கள் திராட்சத்தோட்டங்களையும்,
அவர்கள் ஒலிவத்தோப்புகளையும், அவர்கள்
வீடுகளையும், நீங்கள் பணத்திலும் தானியத்தி
லும் திராட்சரசத்திலும் எண்ணெயிலும் நூற்
றுக்கொன்று வீதமாக அவர்களிடத்தில் தண்டி
வருகிற வட்டியையும், அவர்களுக்குத் திரும்
12 பக் கொடுத்துவிடுங்கள் என்றேன். அதற்கு
அவர்கள்: நாங்கள் அதைத் திரும்பக் கொடுத்
துவிட்டு, இனி அப்படி அவர்களிடத்தில்
கேட்கமாட்டோம்; நீர் சொல்லுகிறபடியே
செய்வோம் என்றார்கள்; அப்பொழுது நான்
ஆசாரியர்களை அழைத்து, அவர்கள் இந்த

1 லேவி. 25. 35–39. உபா. 15. 7
* மாம்சமும், சரீரமும். ஏசா. 58. 7
2 யாத். 21. 7
3 யாத். 22. 25. சங். 15. 1, 5. எசே. 22. 12
4 லேவி. 25. 48
5 15. 2 சாமு. 12. 14. ரோ. 2. 24. 1 பே. 2. 12
6 2 இரா. 23. 2, 3. எஸ்ரா. 10. 5. எரே. 34. 8, 9
7 மத். 10. 14. அப். 13. 51; 18. 6
8 உபா. 27. 15, மு
9 2 இரா. 23. 3
10 1 கொ. 9. 4, 15
11 நீதி. 16. 6. 2 கொ. 11. 9; 12. 13
12 2 சாமு. 9. 7. 1 இரா. 18. 19
13 1 இரா. 4. 22
14 14, 15. வச.
15 13. 22. சங். 40. 17. மத். 25. 40. மாற். 9. 41
16 2. 10, 19; 4. 1, 7
17 நீதி. 26. 24, 25
18 சங். 37. 12, 32. அப். 6, 8, 5

வார்த்தையின்படி செய்ய அவர்களை [6]ஆணை
யிடுவித்துக்கொண்டேன். நான் என் வஸ்தி 13
ரத்தை உதறிப்போட்டு, [7]இப்படி இந்த வார்த்
தையை நிறைவேற்றாத எந்த மனிதனையும்
அவன் வீட்டிலும் அவன் சம்பாத்தியத்திலும்
இருந்து தேவன் உதறிப்போடக்கடவர்; இந்
தப்பிரகாரமாக அவன் உதறிப்போடப்பட்டு,
வெறுமையாய்ப்போவானாக என்றேன்; அதற்
குச் சபையார் எல்லாரும் [8]ஆமென் என்று
சொல்லி, கர்த்தரைத் துதித்தார்கள்; [9]பின்பு
ஜனங்கள் இந்த வார்த்தையின்படியே செய்
தார்கள். நான் யூதாதேசத்திலே அதிபதியா 14
யிருக்கும்படி ராஜாவாகிய அர்தசஷ்டா எனக்
குக் கற்பித்த நாளாகிய அவருடைய இருப
தாம் வருஷம் தொடங்கி, அவருடைய முப்பத்
திரண்டாம் வருஷம் வரைக்குமிருந்த பன்னி
ரண்டு வருஷகாலமாய், நானும் என் சகோ
தரரும் அதிபதிகள் வாங்குகிற [10]படியை
வாங்கிச் சாப்பிடவில்லை. எனக்கு முன் 15
னிருந்த அதிபதிகள் ஜனங்களுக்குப் பார
மாயிருந்து, அவர்கள் கையிலே அப்பமும்
திராட்சரசமும் வாங்கினதும் அல்லாமல், நாற்
பது சேக்கல் வெள்ளியும் வாங்கிவந்தார்கள்;
அவர்கள் வேலைக்காரர்முதலாய் ஜனங்கள்
மேல் அதிகாரம் செலுத்தினார்கள்; [11]நானோ
தேவனுக்குப் பயந்ததினால் இப்படிச் செய்ய
வில்லை. ஒரு வயலையாவது நாங்கள் கொள்ள 16
வில்லை; அந்த அலங்கத்தின் வேலையிலே
முயன்று நின்றேன்; என் வேலைக்காரரனைவ
ரும் கூட்டமாய் அந்த வேலைக்குக் கூடிவந்
தார்கள். யூதரும் மூப்பருமான நூற்றைம் 17
பதுபேரும், எங்களைச் சுற்றிலுமிருக்கிற புற
ஜாதிகளிடத்திலிருந்து எங்களிடத்திற்கு வந்த
வர்களும் என் பந்தியில் [12]சாப்பிட்டார்கள்.
நாளொன்றுக்கு ஒரு காளையும், முதல்தரமான 18
ஆறு ஆடும் [13]சமைக்கப்பட்டது; பட்சிகளும்
சமைக்கப்பட்டது; பத்துநாளைக்கு ஒருதரம்
நானாவிதத் திராட்சரசமும் செலவழிந்தது;
இப்படியெல்லாம் இருந்தபோதும், இந்த ஜன
ங்கள் பட்டபாடு கடினமாயிருந்தபடியால், அதி
பதிகள் வாங்குகிற [14]படியை நான் வாங்க
வில்லை. என் தேவனே, நான் இந்த ஜனத்துக் 19
காகச் செய்த எல்லாவற்றின்படியும் [15]எனக்கு
நன்மையுண்டாக என்னை நினைத்தருளும்.

நான் அலங்கத்தைக் கட்டி முடித்ததையும், **6**
இனி அதிலே திறப்பு ஒன்றுமில்லை என்ப
தையும், சன்பல்லாத்தும், [16]தொபியாவும், அர
பியனான கேஷேமும் எங்களுக்குண்டாயி
ருந்த மற்றப் பகைஞரும் கேள்விப்பட்ட
போது, நான் வாசல்களுக்கு இன்னும் கதவு 2
போடாதிருக்கையில், சன்பல்லாத்தும், கே
ஷேமும் ஆள் அனுப்பி: [17]நாம் ஓனோ பள்ளத்
தாக்கில் இருக்கிற கிராமங்கள் ஒன்றில் ஒரு
வரையொருவர் கண்டு பேசுவோம் வாரும்
என்று கூப்பிட்டார்கள்; அவர்களோவென்
றால் [18]எனக்குப் பொல்லாப்புச் செய்ய நினைத்
தார்கள். அப்பொழுது நான் அவர்களிடத் 3

திற்கு ஆட்களை அனுப்பி: நான் பெரிய வேலை
யைச் செய்கிறேன், நான் வரக்கூடாது; நான்
அந்த வேலையை விட்டு உங்களிடத்திற்கு வரு
கிறதினால் அது மினக்கட்டுப் போவானேன்
4 என்று சொல்லச்சொன்னேன். அவர்கள்
இந்தப்பிரகாரமாக நாலுதரம் எனக்குச் சொல்
லியனுப்பினார்கள்; [1]நானும் இந்தப்பிரகார
மாகவே அவர்களுக்கு மறுமொழி அனுப்பி
5 னேன். ஐந்தாந்தரமும் சன்பல்லாத்து அந்
தப்பிரகாரமாகவே தன் வேலைக்காரனையும்,
அவன் கையிலே முத்திரைபோடாத ஒரு கடி
6 தத்தையும் எனக்கு அனுப்பினான். அதிலே:
நீரும் யூதரும் கலகம்பண்ண நினைக்கிறீர்கள்
என்றும், அதற்காக நீர் அலங்கத்தைக் கட்டுகி
றீர் என்றும், இவ்விதமாக நீர் அவர்களுக்கு
7 ராஜாவாகப்போகிறீர் என்றும், யூதாவிலே
ஒரு ராஜா இருக்கிறார் என்று உம்மைக்குறித்து
எருசலேமிலே கூறுகிற தீர்க்கதரிசிகளையும்
சம்பாதித்தீரென்றும் புறஜாதிகளுக்குள்ளே
பிரஸ்தாபமாயிருக்கிறது, [2]கஷ்மூவும் அப்ப
டிச் சொல்லுகிறான்; இப்போதும் இந்தச்
செய்தி ராஜாவுக்கு எட்டுமே; ஆகையால் நாம்
ஒருவரோடொருவர் ஆலோசனை பண்ணுகிற
தற்காக நீர் வரவேண்டும் என்று எழுதியிருந்
8 தது. அதற்கு நான்: நீர் சொல்லுகிற அந்தக்
காரியங்களில் ஒன்றும் நடக்கவில்லை; அவை
கள் உம்முடைய *மனோராஜ்யமே ஒழிய
வேறல்ல என்று சொல்லியனுப்பினேன்.
9 அந்த வேலை நடந்தேறாதபடிக்கு, எங்கள் கை
சலித்துப்போம் என்று சொல்லி, அவர்கள்
எல்லாரும் எங்களைப் பயமுறுத்தப் பார்த்தார்
கள். ஆதலால் தேவனே, [3]நீர் என் கைக
ளைத் திடப்படுத்தியருளும்.
10 மெகதாபெயேலின் குமாரனாகிய தெலாயா
வின் மகன் செமாயா தன் வீட்டிலே அடைக்
கப்பட்டிருக்கும்போது, நான் அவனிடத்தில்
போனேன்; அப்பொழுது அவன்: நாம் இரு
வருமாய் தேவனுடைய வீடாகிய ஆலயத்துக்
குள்ளே போய், தேவாலயத்தின் கதவுகளைப்
பூட்டுவோம் வாரும்; உம்மைக் கொன்றுபோட
வருவார்கள், [4]இரவிலே உம்மைக் கொன்று
11 போட வருவார்கள் என்றான். அதற்கு நான்:
என்னைப்போன்ற மனிதன் ஓடிப்போவா
னோ? [5]என்னைப்போன்றவன் உயிர் பிழைக்
கும்படி தேவாலயத்திலே போய்ப் பதுங்குவா
12 னோ? நான் போவதில்லை என்றேன். தேவன்
அவனை அனுப்பவில்லையென்றும், தொபியா
வும் சன்பல்லாத்தும் அவனுக்குக் கூலிகொ
டுத்ததினால், அவன் எனக்கு விரோதமாய் அந்
தத் தீர்க்கதரிசனத்தைச் சொன்னான் என்றும்
13 அறிந்துகொண்டேன். நான் பயந்து அப்ப
டிச் செய்து பாவங் கட்டிக்கொள்ளுகிறதற்
கும், என்னை நிந்திக்கத்தக்க அபகீர்த்திக்கு
மூகாந்தரம் உண்டாக்குகிறதற்கும் [6]அவனுக்
14 குக் கைக்கூலி கொடுத்திருந்தார்கள். என்
தேவனே, தொபியாவும் சன்பல்லாத்தும்
செய்த இந்தச் செய்கைகளுக்குத் தக்கதாக

1 நீதி. 14. 15
2 எரே. 20. 10
* மனதோற்றம்.
3 1 சாமு. 30. 6. சங். 71. 1
4 யோபு 24. 16
5 சங். 11. 1; 112. 6, 8. நா. 18. 31–33. அப். 20. 24. 21. 13
6 எசே. 13. 17. ழ
7 13. 29. சங். 36. 11, 12
8 சங். 126. 2. அப். 5. 38, 39
9 6. 1.
10 அப். 6. 3, 5
11 யாத். 18. 21
12 1 நாளா. 9. 1. ழ

நீர் அவர்களையும் [7]நொவதியாள் என்னும் தீர்க்
கதரிசியானவளையும், எனக்குப் பயமுண்டாக்
கப் பார்த்த மற்றத் தீர்க்கதரிசிகளையும் நினைத்
துக்கொள்ளும்.
அப்படியே அலங்கமானது ஐம்பத்திரண்டு 15
நாளைக்குள்ளே கட்டப்பட்டு, எலூல் மாதம்
இருபத்தைந்தாந்தேதியிலே முடிந்தது. எங் 16
கள் பகைஞர் எல்லாரும் அதைக் கேட்டபோ
தும், எங்கள் சுற்றுப்புறத்தாராகிய புறஜாதி
யான அனைவரும் கண்டபோதும், மிகவும்
முனையற்றுப்போய், இந்தக் கிரியை எங்கள்
தேவனால் கைகூடி [8]வந்ததென்று அறிந்தார்
கள். அந்த நாட்களில் யூதாவிலுள்ள பெரிய 17
மனிதரிடத்திலிருந்து தொபியாவுக்குப் போகி
றதும், தொபியாவினிடத்திலிருந்து அவர்க
ளுக்கு வருகிறதுமான கடிதங்கள் அநேகமா
யிருந்தது. அவன் ஆராகின் குமாரனாகிய 18
செகனியாவுக்கு மருமகனாயிருந்ததும் அல்லா
மல், அவன் குமாரனாகிய யோகனான் பெரகி
யாவின் குமாரனாகிய மெசுல்லாமின் குமாரத்
தியை விவாகம்பண்ணி யிருந்தபடியாலும்,
யூதாவில் அநேகர் அவனுக்கு ஆணையிட்டுக்
கொடுத்திருந்தார்கள். அவன் செய்யும் நன் 19
மைகளையும் அவர்கள் எனக்கு முன்பாக விவ
ரித்து, என் வார்த்தைகளை அவனுக்குக் கொ
ண்டுபோவார்கள்; தொபியா எனக்குப் பய
முண்டாகக் கடிதங்களை அனுப்புவான்.
அலங்கம் கட்டி முடிந்து, கதவுகள் போ 7
டப்பட்டு, [9]வாசல் காவலாளரையும், பாடக
ரையும், லேவியரையும் ஏற்படுத்தினபின்பு,
நான் என் சகோதரனாகிய ஆனானியையும், 2
அநேகரைப்பார்க்கிலும் [10]உண்மையுள்ளவனும்
[11]தேவனுக்குப் பயந்தவனுமாயிருந்த அரம
னைத் தலைவனாகிய அனனியாவையும், எருச
லேமின் காவல் விசாரணைக்கு ஏற்படுத்தி
னேன். அவர்களை நோக்கி: வெயில் ஏறுமட் 3
டும் எருசலேமின் வாசல்கள் திறக்கப்பட
வேண்டாம்; நீங்கள் நிற்கும்போதே கதவுக
ளைச் சாத்தித் தாழ்ப்பாள் போட்டு, எருசலே
மின் குடிகளில் காவலாளர் அவரவர் தங்கள்
காவலிலே, அவரவர் தங்கள் வீடுகளுக்கு எதி
ராக நிறுத்தப்படவேண்டும் என்றேன். பட் 4
டணம் விஸ்தாரமும் பெரிதுமாயிருந்தது; அத
ற்குள்ளே ஜனங்கள் கொஞ்சமாயிருந்தார்கள்,
வீடுகளும் கட்டப்படவில்லை. அப்பொழுது 5
வம்ச அட்டவணைகளைப் பார்க்கிறதற்கு, நான்
பிரபுக்களையும் அதிகாரிகளையும் ஜனங்களை
யும் கூடிவரச்செய்ய, என் தேவன் என் மன
திலே ஒரு எண்ணத்தை உண்டாக்கினார்;
முந்தி வந்தவர்களின் வம்ச அட்டவணைப் புஸ்
தகம் அப்பொழுது எனக்கு அகப்பட்டது;
அதிலே [12]எழுதியிருக்க நான் கண்டது என்ன
வென்றால்: பாபிலோன் ராஜாவாகிய நேபு 6
காத்நேச்சார் சிறைபிடித்துப்போனவர்களும்,
சிறையிருப்பிலிருந்து செருபாபேலோடும்,
யெசுவா, நெகேமியா, அசரியா, ராமியா, நக
மானி, மொர்தெகாய், பில்சான், மிஸ்பெ

ரேத், பிக்வாயி, நெகூம், பாஞ என்பவர்க
7 ளோடேகூட வந்து, எருசலேமுக்கும் யூதா
வுக்கும் திரும்பித் தங்கள் தங்கள் பட்டணங்க
ளிலே குடியிறங்கினவர்களுமான இந்தத் தே
சத்தின் [1]புத்திரராகிய இஸ்ரவேல் ஜனங்க
8 ளான மனிதரின் தொகையாவது: பாரோ
ஷின் புத்திரர் இரண்டாயிரத்து நூற்று எழு
9 பத்திரண்டுபேர். செபத்தியாவின் புத்திரர்
10 முந்நூற்று எழுபத்திரண்டுபேர். ஆராகின்
11 புத்திரர் அறுநூற்று ஐம்பத்திரண்டுபேர். யெசு
வா யோவாப் என்பவர்களின் சந்ததிக்குள்ளி
ருந்த பாகாத்மோவாபின் புத்திரர் இரண்டாயி
12 ரத்து எண்ணூற்றுப் பதினெட்டுப்பேர். ஏலா
மின் புத்திரர் ஆயிரத்து இருநூற்று ஐம்பத்து
13 நாலுபேர். சத்தூவின் புத்திரர் எண்ணூற்று
14 நாற்பத்தைந்துபேர். சக்காயின் புத்திரர் எழு
15 நூற்று அறுபதுபேர். *பின்னூவின் புத்திரர்
16 அறுநூற்று நாற்பத்தெட்டுப்பேர். பெபாயின்
புத்திரர் அறுநூற்று இருபத்தெட்டுப்பேர்.
17 அஸ்காதின் புத்திரர் இரண்டாயிரத்து முந்
18 நூற்று இருபத்திரண்டுபேர். அதோனிகா
மின் புத்திரர் அறுநூற்று அறுபத்தேழுபேர்.
19 பிக்வாயின் புத்திரர் இரண்டாயிரத்து அறு
20 பத்தேழுபேர். ஆதீனின் புத்திரர் அறுநூற்று
21 ஐம்பத்தைந்துபேர். எசேக்கியாவின் சந்ததி
யான ஆதேரின் புத்திரர் தொண்ணூற்று
22 எட்டுப்பேர். ஆசூமின் புத்திரர் முந்நூற்று
23 இருபத்தெட்டுப்பேர். பேசாயின் புத்திரர் முந்
24 நூற்று இருபத்து நாலுபேர். †ஆரீப்பின் புத்
25 திரர் நூற்றுப் பன்னிரண்டுபேர். ‡கிபி
யோனின் புத்திரர் தொண்ணூற்று ஐந்து
26 பேர். பெத்லகேம் ஊராரும், நெத்தோபா
27 ஊராரும் நூற்று எண்பத்தெட்டுப்பேர். ஆன
தோத்தூர் மனிதர் நூற்று இருபத்தெட்டுப்
28 பேர். பெத் §அஸ்மாவேத் ஊரார் நாற்பத்
29 திரண்டுபேர். கீரியாத்யாரீம், கெபிரா, பே
ரோத் ஊர்களின் மனிதர் எழுநூற்று நாற்பத்து
30 மூன்றுபேர். ராமா, காபா ஊர்களின் மனி
31 தர் அறுநூற்று இருபத்தொருபேர். மிக்மாஸ்
32 ஊரார் நூற்று இருபத்திரண்டுபேர். பெத்
தேல், ஆயி ஊர்களின் மனிதர் நூற்று இரு
33 பத்து மூன்றுபேர். வேறொரு நேபோ ஊரார்
34 ஐம்பத்திரண்டுபேர். மற்றொரு [2]ஏலாம் புத்
திரர் ஆயிரத்து இருநூற்று ஐம்பத்து நாலுபேர்.
35 ஆரீம் புத்திரர் முந்நூற்று இருபதுபேர்.
36 எரிகோ புத்திரர் முந்நூற்று நாற்பத்தைந்து
37 பேர். லோத், ஆதீத், ஓனோ ஊர்களின் புத்
38 திரர் எழுநூற்று இருபத்தொருபேர். செனாகா
புத்திரர் மூவாயிரத்துத் தொள்ளாயிரத்து முப்
39 பதுபேர். ஆசாரியரானவர்கள்: [3]யெசுவா
குடும்பத்தானாகிய யெதாயாவின் புத்திரர்
40 தொள்ளாயிரத்து எழுபத்து மூன்றுபேர். இம்
மேரின் புத்திரர் ஆயிரத்து ஐம்பத்திரண்டு
41 பேர். [4]பஸ்கூரின் புத்திரர் ஆயிரத்து இரு
42 நூற்று நாற்பத்தேழுபேர். ஆரீமின் புத்திரர்
43 ஆயிரத்துப் பதினேழுபேர். லேவியரானவர்
கள்: [5]ஒதியாவின் புத்திரருக்குள்ளே கத்மியே

லின் குமாரனாகிய யெசுவாவின் புத்திரர் எழு
பத்துநாலுபேர். பாடகரானவர்கள்: ஆசாபின் 44
புத்திரர் நூற்று நாற்பத்தெட்டுப்பேர். வாசல் 45
காவலாளரானவர்கள்: சல்லூமின் புத்திரர்,
அதேரின் புத்திரர், தல்மோனின் புத்திரர்,
அக்கூபின் புத்திரர், அதிதாவின் புத்திரர்,
சோபாயின் புத்திரர், ஆக நூற்று முப்பத்தெட்
டுப்பேர். நிதனீமியரானவர்கள்: சீகாவின் 46
புத்திரர், அசுபாவின் புத்திரர், தபாகோத்தின்
புத்திரர், கேரோசின் புத்திரர், சீயாவின் புத் 47
திரர், பாதோனின் புத்திரர், லெபானாவின் 48
புத்திரர், அகாபாவின் புத்திரர், சல்மாயின்
புத்திரர், ஆனானின் புத்திரர், கித்தேலின் 49
புத்திரர், காகாரின் புத்திரர், ராயாகின் புத் 50
திரர், ரேத்சீனின் புத்திரர், நெகோதாவின் புத்
திரர், காசாமின் புத்திரர், ஊசாவின் புத்திரர், 51
பாசெயாகின் புத்திரர், பேசாயின் புத்திரர், 52
மெயுநீமின் புத்திரர், நெபிஷசீமின் புத்திரர்,
பக்பூக்கின் புத்திரர், அகுபாவின் புத்திரர், 53
அர்கூரின் புத்திரர், ||பஸ்லீதின் புத்திரர், 54
மெகிதாவின் புத்திரர், அர்ஷாவின் புத்திரர்,
பர்கோசின் புத்திரர், சிசெராவின் புத்திரர், 55
தாமாவின் புத்திரர், நெத்சியாகின் புத்திரர், 56
அதிபாவின் புத்திரர். சாலொமோனுடைய 57
வேலைக்காரரின் புத்திரரானவர்கள்: சோதா
யின் புத்திரர், சொபெரேத்தின் புத்திரர்,
¶பெரிதாவின் புத்திரர், யாலாவின் புத்திரர், 58
தர்கோனின் புத்திரர், கித்தேலின் புத்திரர்,
செபத்தியாவின் புத்திரர், அத்தீலின் புத்திரர், 59
பொகெரேத் செபாயிமிலுள்ள புத்திரர்,
**ஆமோனின் புத்திரர். நிதனீமியரும், சாலொ 60
மோனுடைய வேலையாட்களின் புத்திரரும்
ஏகத்துக்கு முந்நூற்றுத் தொண்ணூற்றிரண்டு
பேர். தெல்மெலாகிலும், தெல் அர்சாவிலும், 61
கேருபிலும், ††ஆதோனிலும், இம்மேரிலும்
இருந்துவந்தும், தாங்கள் இஸ்ரவேலர் என்று
தங்கள் பிதாக்களின் வம்சத்தையும், தங்கள் பூர்
வோத்தரத்தையும் சொல்லமாட்டாமல் [6]இருந்
தவர்கள்: தெலாயாவின் புத்திரர், தொபியா 62
வின் புத்திரர், நெகோதாவின் புத்திரர், ஆக
அறுநூற்று நாற்பத்திரண்டுபேர். ஆசாரியர் 63
களில் அபாயாவின் புத்திரர், கோசின் புத்
திரர், கிலேயாத்தியனான பர்சில்லாயின் குமா
ரத்திகளில் ஒருத்தியை விவாகம்பண்ணி,
அவர்கள் வம்ச நாமம் தரிக்கப்பட்ட [7]பர்சில்
லாயின் புத்திரர். இவர்கள் தங்கள் வம்ச 64
அட்டவணையைத் தேடி, அதைக் காணாமற்
போய், [8]ஆசாரிய ஊழியத்துக்கு [9]விலக்கமான
வர்கள் என்று எண்ணப்பட்டார்கள். ஊரீம் 65
தும்மீம் என்பவைகளுள்ள [10]ஒரு ஆசாரியன்
எழும்புமட்டும், அவர்கள் மகா பரிசுத்த மான
திலே புசிக்கத்தகாதென்று ‡‡திர்ஷாதா அவர்
களுக்குச் சொன்னான்.

சபையார் எல்லாரும் ஏகத்துக்கு நாற்பத் 66
தீராயிரத்து முந்நூற்று அறுபது பேராயிருந்
தார்கள். அவர்களைத்தவிர ஏழாயிரத்து முந் 67
நூற்று முப்பத்தேழுபேரான அவர்களுடைய

[1] எஸ்ரு 2. 1. ஓ
* பின்னி.
† யோரா.
‡ கிப்பார்.
§ அஸ்மாவேத்.
[2] 12. வச.
[3] 1 நாளா. 24. 7. ஓ
[4] 1 நாளா. 9. 12
[5] எஸ்ரு. 2. 40; 3. 9
|| பஸ்லூத்.
¶ பெருதா.
** ஆமி.
†† அதான்.
[6] எஸ்ரு 2. 59
[7] 2 சாமு. 17. 27. 1 இரா. 2. 7
[8] மத். 22. 11–13. 25. 11, 12
[9] லேவி. 4. 3
[10] யாத். 28. 30
‡‡ தேசாதிபதி. 8. 9

வேலைக்காரரும்வேலைக்காரிகளும், இருநூற்று
நாற்பத்தைந்து பாடகரும் பாடகிகளும் அவர்
68 களுக்கு இருந்தார்கள். அவர்களுடைய குதி
ரைகள் எழுநூற்று முப்பத்தாறு, அவர்கள்
கோவேறு கழுதைகள் இருநூற்று நாற்பத்
69 தைந்து. ஒட்டகங்கள் நானூற்று முப்பத்
தைந்து, கழுதைகள் ஆறாயிரத்து எழுநூற்று
70 இருபது. வம்சத்தலைவரில் சிலர் வேலைக்
கென்று கொடுத்ததாவது: திர்ஷாதா ஆயிரம்
தங்கக்காசையும், ஐம்பது கலங்களையும், ஐந்
நூற்று முப்பது ஆசாரிய வஸ்திரங்களையும்
71 பொக்கிஷத்துக்குக் கொடுத்தான். வம்சத்தலை
வரில் சிலர் வேலையின் பொக்கிஷத்துக்கு
இருபதினாயிரம் தங்கக்காசையும், இரண்டா
யிரத்து இருநூறு ராத்தல் வெள்ளியையும்
72 கொடுத்தார்கள். மற்ற ஜனங்கள் இருபதினா
யிரம் தங்கக்காசையும், இரண்டாயிரம் ராத்
தல் வெள்ளியையும், அறுபத்தேழு ஆசாரிய
73 வஸ்திரங்களையும் கொடுத்தார்கள். ஆசாரிய
ரும், லேவியரும், வாசல்காவலாளரும், பாட
கரும், ஜனங்களில் சிலரும், நிதனீமியரும்,
இஸ்ரவேலர் அனைவரும் தங்கள் தங்கள் பட்ட
ணங்களில் குடியேறினார்கள்; எழாம்மாதமான
போது, *இஸ்ரவேல் புத்திரர் தங்கள் பட்
டணங்களில் இருந்தார்கள்.

**8** ஜனங்கள் எல்லாரும் [1]தண்ணீர் வாசலுக்கு
முன்னான வீதியிலே ஒருமனப்பட்டுக் கூடி,
**கர்த்தர்** இஸ்ரவேலுக்குக் கற்பித்த மோசே
யின் நியாயப்பிரமாண புஸ்தகத்தைக் கொண்டு
வர வேண்டுமென்று வேதபாரகனாகிய எஸ்றா
2 வுக்குச் சொன்னார்கள். அப்படியே எழாம்மா
தம் முதல் தேதியில் [2]ஆசாரியனாகிய எஸ்றா
நியாயப்பிரமாணத்தைப் புருஷரும் ஸ்திரீக
ளும், கேட்டு அறியத்தக்க அனைவருமாகிய
3 சபைக்கு [3]முன்பாகக் கொண்டுவந்து, தண்
ணீர் வாசலுக்கு முன்னான வீதிக்கு எதிரேயி
ருந்து, காலமேதொடங்கி மத்தியானமட்டும்
புருஷருக்கும் ஸ்திரீகளுக்கும், கேட்டு அறியத்
தக்க மற்றவர்களுக்கும் முன்பாக அதை வாசித்
தான்; சகல ஜனங்களும் நியாயப்பிரமாணப்
புஸ்தகத்திற்குக் கவனமாய்ச் செவிகொடுத்தார்
4 கள். வேதபாரகனாகிய எஸ்றா அதற்கென்று
மரத்தால் செய்யப்பட்ட ஒரு பிரசங்கபீடத்
தின்மேல் நின்றான்; அவனண்டையில் அவனு
க்கு வலதுபக்கமாக மத்தித்தியாவும், செமாவும்,
அனாயாவும், உரியாவும், இல்க்கியாவும், மாசே
யாவும், அவனுக்கு இடது பக்கமாகப் பெதா
யாவும், மீசவேலும், மல்கியாவும், அசூமும்,
அஸ்பதானாவும், சகரியாவும், மெசுல்லாமும்
5 நின்றார்கள். எஸ்றா சகல ஜனங்களுக்கும்
உயர நின்று, சகல ஜனங்களும் காணப் புஸ்த
கத்தைத் திறந்தான்; அவன் அதைத் திறந்த
போது, [4]ஜனங்கள் எல்லாரும் [5]எழுந்து நின்
6 றார்கள். அப்பொழுது எஸ்றா மகத்துவமுள்ள
தேவனாகிய **கர்த்தரை** ஸ்தோத்திரித்தான்;
[6]ஜனங்களெல்லாரும் தங்கள் கைகளைக் [7]குவி
த்து, அதற்கு மறுமொழியாக, [8]ஆமென்

ஆமென் என்றுசொல்லி, குனிந்து, [9]முகங்குப்
புறவிழுந்து, **கர்த்தரைப்** பணிந்துகொண்டார்
கள். யெசுவா, பானி, செரெபியா, யாமின், 7
அக்கூப், சபெதாயி, ஒதியா, மாசெயா, கேலி
தா, அசரியா, யோசபாத், ஆனான், பெலாயா
என்பவர்களும், லேவியரும், நியாயப்பிரமா
ணத்தை ஜனங்களுக்கு விளங்கப்பண்ணினார்
கள்; ஜனங்கள் தங்கள் நிலையிலே நின்றார்கள்.
அவர்கள் தேவனுடைய நியாயப்பிரமாண 8
புஸ்தகத்தை தீர்க்கமாக வாசித்து, அர்த்தஞ்
சொல்லி, வாசித்ததை அவர்களுக்கு [10]விளங்கப்
பண்ணினார்கள். ஜனங்கள் எல்லாரும் நியா 9
யப்பிரமாணத்தின் வார்த்தைகளைக் கேட்ட
போது, [11]அழுதபடியால், திர்ஷாதா என்னப்
பட்ட நெகேமியாவும், வேதபாரகனாகிய
எஸ்றா என்னும் ஆசாரியனும், ஜனங்களுக்கு
விளக்கிக்காட்டின லேவியரும் சகல ஜனங்
களையும் நோக்கி: இந்த நாள் உங்கள் தேவனா
கிய **கர்த்தருக்குப்** [12]பரிசுத்தமான நாள்; நீங்
கள் துக்கப்படவும் [13]அழவும் வேண்டாம் என்
றார்கள். பின்னும் அவன் அவர்களை நோக்கி: 10
நீங்கள் போய்க் கொழுமையானதைப் புசித்து,
மதுரமானதைக் குடித்து, [14]ஒன்றுமில்லாதவர்
களுக்குப் பங்குகளை அனுப்புங்கள்; இந்த நாள்
நம்முடைய ஆண்டவருக்குப் பரிசுத்தமான
நாள், விசாரப்படவேண்டாம்; **கர்த்தருக்குள்**
மகிழ்ச்சியாயிருப்பதே[15]உங்களுடையபெலன்
என்றான். லேவியரும் ஜனங்களையெல்லாம் 11
அமர்த்தி: அழாதிருங்கள், இந்த நாள் பரிசுத்த
மான நாள், விசாரப்படவேண்டாம் என்றார்
கள். அப்பொழுது ஜனங்கள் எல்லாரும் தங் 12
களுக்கு அறிவிக்கப்பட்ட வார்த்தைகளை
உணர்ந்துகொண்டபடியால், [16]புசித்துக் குடிக்
கவும், பங்குகளை அனுப்பவும், மிகுந்த சந்தோ
ஷம் கொண்டாடவும் போனார்கள்.

மறுநாளில் ஜனத்தின் சகல வம்சத்தலைவ 13
ரும், ஆசாரியரும், லேவியரும், நியாயப்பிர
மாணத்தின் வார்த்தைகளை அறிந்துகொள்ள
வேண்டும் என்று வேதபாரகனாகிய எஸ்றாவி
னிடத்தில் கூடிவந்தார்கள். அப்பொழுது 14
நியாயப்பிரமாணத்திலே, இஸ்ரவேல் புத்தி
ரர் எழாம்மாதத்தின் பண்டிகையிலே கூடா
ரங்களில் குடியிருக்கவேண்டும் என்று **கர்த்**
**தர்** மோசேயைக்கொண்டு [17]கற்பித்த காரியம்
எழுதியிருக்கிறதைக் கண்டார்கள். ஆகை 15
யால் எழுதியிருக்கிறபடி கூடாரங்களைப் போ
டும்படிக்கு, நீங்கள் மலைகளுக்குப் புறப்பட்
டுப்போய் ஒலிவக் கிளைகளையும், காட்டு ஒலி
வக் கிளைகளையும், மிருதுச்செடிகளின் கிளை
களையும், பேரீச்ச மட்டைகளையும், அடர்ந்த
மரக்கிளைகளையும் கொண்டுவாருங்கள் என்று
தங்களுடைய சகல பட்டணங்களிலும், எருச
லேமிலும் கூறிப் பிரசித்தப்படுத்தினார்கள்.
அப்படியே ஜனங்கள் வெளியேபோய் அவை 16
களைக் கொண்டுவந்து, அவரவர் தங்கள் வீடு
கள்மேலும், [18]தங்கள் முற்றங்களிலும், தேவனு
டைய ஆலயப்பிராகாரங்களிலும், தண்ணீர்

* எஸ்றா 3. 1
1 எஸ்றா 3. 1. ஒ. ஏசா. 34. 16
2 லேவி. 23. 24
3 அப். 15. 21
4 நியா. 4. 16. ஒ
5 சங். 3. 20. 1 இரா. 8. 14
6 2 நாளா. 6. 4
7 சங். 68. 4. 1 தீமோ. 2. 8
8 1 கொ. 14. 16
9 யாத். 12. 27. 2 நாளா. 20. 18
10 லூ. 24. 27, 45. அப். 8. 30. ஒ
11 2 நாளா. 34. 19, 21. ரோ. 7. 9
12 லேவி. 23. 24. எண். 29. 1
13 உபா. 16. 14. பிர. 3. 4. ஏசா. 61. 3
14 எஸ்தர் 9. 19, 22. வெளி. 11. 10
15 சங். 149. 2. ஏசா. 12. 2, 3. யோவேல் 2. 23. பிலி. 3. 3
16 சங். 126. 1–3. ரோ. 7. 1, 8
17 லேவி. 23. 34, 42. உபா. 16. 13. ஒ
18 உபா. 22. 8

வாசல் வீதியிலும், எப்பிராயீம் வாசல் வீதியி
லும் தங்களுக்குக் கூடாரங்களைப் போட்டார்
17 கள். இந்தப்பிரகாரமாகச் சிறையிருப்பி
லிருந்து திரும்பி வந்தவர்களின் சபையார்
எல்லாரும் கூடாரங்களைப் போட்டு, கூடாரங்
களில் குடியிருந்தார்கள்; இப்படியே நூனின்
குமாரனாகிய யோசுவாவின் நாட்கள்முதல்
அந்நாள்மட்டும் இஸ்ரவேல் புத்திரர் செய்யா
திருந்து இப்பொழுது செய்தபடியால், [1]மிகு
18 ந்த சந்தோஷமுண்டாயிருந்தது. முதலாம்
நாள்தொடங்கிக் கடைசிநாள்மட்டும், தினம்
தினம் தேவனுடைய நியாயப்பிரமாண புஸ்த
கம் வாசிக்கப்பட்டது; ஏழுநாள் பண்டிகை
யை ஆசரித்தார்கள்; எட்டாம் நாளோவெ
னில், [2]முறைமையின்படியே விசேஷித்த ஆச
ரிப்பு நாளாயிருந்தது.

9 அந்த மாதம் இருபத்து நாலாந்தேதியிலே
இஸ்ரவேல் புத்திரர் உபவாசம்பண்ணி, இர
ட்டுடுத்தி, தங்கள்மேல் புழுதியைப் [3]போட்
2 டுக்கொண்டவர்களாய்க் கூடிவந்தார்கள். இஸ்
ரவேல் சந்ததியார் மறு ஜாதியாரையெல்லாம்
விட்டுப் பிரிந்து வந்துநின்று, [4]தங்கள் பாவங்
களையும், தங்கள் பிதாக்களின் அக்கிரமங்களை
3 யும் அறிக்கையிட்டார்கள். அவர்கள் எழுந்தி
ருந்து, தங்கள் நிலையில் நின்றார்கள்; [5]அப்பொ
ழுது ஒரு ஜாமமட்டும் அவர்களுடைய தேவ
னாகிய **கர்த்தரின்** நியாயப்பிரமாண புஸ்தகம்
வாசிக்கப்பட்டது; பின்பு ஒரு ஜாமமட்டும்
அவர்கள் பாவஅறிக்கை பண்ணி, தங்கள் தே
வனாகிய **கர்த்தரைப்** பணிந்துகொண்டார்கள்.
4 யெசுவா, பானி, கத்மியேல், செப்பனியா,
புன்னி, செரெபியா, பானி, கெனானி என்
பவர்கள் லேவியருடைய படிகளின்மேல்
நின்று, தங்கள் தேவனாகிய **கர்த்தரை** நோக்கி
5 மகா சத்தமாய் [6]ஓலமிட்டார்கள். பின்பு லே
வியரான யெசுவா, கத்மியேல், பானி, ஆசாப்
னெயா, செரெபியா, ஒதியா, செபனியா, பெ
த்தகியா என்பவர்கள் ஜனங்களைப் பார்த்து:
நீங்கள் எழுந்திருந்து, [7]அநாதியாய் என்றென்
றைக்குமிருக்கிற உங்கள் தேவனாகிய **கர்த்த**
**ரை** ஸ்தோத்திரியுங்கள் என்று சொல்லி, **கர்**
**த்தரை** நோக்கி: எந்த ஸ்துதி ஸ்தோத்திரத்துக்
கும் மேலான [8]உம்முடைய மகிமையுள்ள நா
6 மத்துக்கு ஸ்தோத்திரமுண்டாவதாக. நீர்
[9]ஒருவரே **கர்த்தர்**; நீர் வானங்களையும், வா
னாதி வானங்களையும், [10]அவைகளுடைய சர்வ
சேனைகளையும், பூமியையும் அதிலுள்ள எல்
லாவற்றையும், சமுத்திரங்களையும் அவைகளி
லுள்ள எல்லாவற்றையும் உண்டாக்கினீர்;
[11]அவைகளையெல்லாம் நீர் காப்பாற்றுகிறீர்;
வானசேனைகள் [12]உம்மைப் பணிந்துகொள்ளு
7 கிறது. ஆபிராமைத் தெரிந்துகொண்டு, அவ
னை ஊர் என்னும் கல்தேயரின் பட்டணத்தி
லிருந்து புறப்படப்பண்ணி, [13]அவனுக்கு
ஆபிரகாம் என்னும் பேரிட்ட தேவனாகிய **கர்**
8 **த்தர்** நீர். அவன் இருதயத்தை உமக்கு முன்பாக
[14]உண்மையுள்ளதாகக் கண்டு, கானானியர், ஏத்

1 2 நாளா. 30. 21
2 எண். 29. 35
3 1 சாமு. 4. 12
4 எஸ்றா 9. 2; 10. 11
5 8. 7, 8
6 சங். 3. 4
7 சங். 135. 1, 2
8 1 நாளா. 29. 13. சங். 16. 2; 106. 2
9 சங். 86. 10. ஏசா. 37. 16
10 ஆதி. 2. 1. உபா. 10. 14
11 சங். 36. 6
12 வெளி. 5. 11–13
13 ஆதி. 12. 1; 17. 5
14 ஆதி. 15. 6, 18
15 சங். 105. 8
16 யாத். 14. 10
17 யாத். 12—14. அதி.
18 உபா. 32. 15
19 ஏசா. 63. 12–14. எரே. 32. 20
20 யாத். 14, 15. அதி.
21 யாத். 13. 21, 22
22 யாத். 20. அதி. சங். 19. 8, 9. ரோ. 7. 12
23 யாத். 16. 14, 15. யோ. 6. 31–35
24 யாத். 17. 6. எண். 20. 7-11
25 உபா. 31. 27. சங். 78. 8. ழ
26 சங். 86. 5, 15
27 எண். 14. 4
28 யாத். 34. 6
29 யாத். 32. 4

தியர், எமோரியர், பெரிசியர், எபூசியர், கிர்கா
சியருடைய தேசத்தை அவன் சந்ததிக்குக் கொ
டுக்கும்படி, அவனோடு [15]உடன்படிக்கை பண்
ணி உம்முடைய வார்த்தைகளை நிறைவேற்றி
னீர்; நீர் நீதியுள்ளவர். எகிப்திலே எங்கள் பிதா 9
க்கள் அநுபவித்த சிறுமையை நீர் கண்டு, [16]சிவ
ந்த சமுத்திரத்தில் அவர்கள் கூப்பிடுதலைக் கே
ட்டீர். பார்வோனிடத்திலும், அவனுடைய 10
எல்லா ஊழியக்காரரிடத்திலும், அவன் தே
சத்தின் சகல ஜனத்தினிடத்திலும், [17]அடை
யாளங்களையும் அற்புதங்களையும் செய்தீர்;
அவர்கள் உமது ஜனங்களை அகந்தையாய் [18]நட
த்தினார்கள் என்பதை அறிந்திருந்தீர்; இப்படி
யே இந்நாள்வரைக்கும் இருக்கிறபடி உமக்
குக் [19]கீர்த்தியை உண்டாக்கினீர். நீர் அவர் 11
களுக்கு முன்பாகச் சமுத்திரத்தைப் பிரித்த
தினால், [20]கடலின் நடுவாகக் கால் நனையாமல்
நடந்தார்கள்; வலுவான தண்ணீர்களிலே கல்
லைப் போடுகிறதுபோல, அவர்களைத் தொடர்
ந்தவர்களை ஆழங்களிலே போட்டுவிட்டீர். நீர் 12
பகலிலே மேகஸ்தம்பத்தினாலும், [21]அவர்கள்
நடக்கவேண்டிய வழியை அவர்களுக்கு வெ
ளிச்சமாக்க இரவிலே அக்கினி ஸ்தம்பத்தினா
லும், அவர்களை வழிநடத்தினீர். நீர் சீனாய் 13
மலையிலிறங்கி, வானத்திலிருந்து அவர்களோ
டே பேசி, அவர்களுக்குச் செம்மையான நீதி
நியாயங்களையும், [22]நல்ல கட்டளைகளும் கற்
பனைகளுமாகிய உண்மையான பிரமாணங்
களையும் கொடுத்தீர். உமது பரிசுத்த ஓய்வு 14
நாளை அவர்களுக்குத் தெரியப்படுத்தி, உமது
தாசனாகிய மோசேயைக்கொண்டு, அவர்களுக்
குக் கற்பனைகளையும், கட்டளைகளையும், நியா
யப்பிரமாணங்களையும், கற்பித்தீர். அவர்கள் 15
பசிக்கு வானத்திலிருந்து [23]அப்பம் கொடுத்து,
அவர்கள் தாகத்துக்குக் கன்மலையிலிருந்து
[24]தண்ணீர் புறப்படப்பண்ணி, நீர் அவர்களுக்
குக் கொடுப்பேன் என்று ஆணையிட்ட தேசத்
தைச் சுதந்தரித்துக்கொள்ளப் பிரவேசியுங்கள்
என்று அவர்களுக்குச் சொன்னீர். எங்கள் 16
பிதாக்களாகிய அவர்களோ அகங்காரமாய்
நடந்து, [25]தங்கள் கழுத்தைக் கடினப்படுத்தி,
உம்முடைய கற்பனைகளுக்குச் செவிகொடா
தேபோனார்கள். அவர்கள் செவிகொடுக்க 17
மனதில்லாமலும், அவர்களிடத்திலே நீர் செய்த
உம்முடைய [26]அற்புதங்களை நினையாமலும்
போய், தங்கள் கழுத்தைக் கடினப்படுத்தி,
தங்கள் அடிமைத்தனத்துக்குத் திரும்பும்படி
க்கு அவர்கள் கலகம்பண்ணி, [27]ஒரு தலை
வனை ஏற்படுத்தினார்கள்; ஆகிலும் வெகுவாய்
மன்னிக்கிறவரும், இரக்கமும் மன உருக்க
மும், நீடிய சாந்தமும், மகா கிருபையுமுள்ள
வருமான [28]தேவனாகிய நீர் அவர்களைக் கை
விடவில்லை. அவர்கள் வார்ப்பிக்கப்பட்ட ஒரு 18
கன்றுக்குட்டியைத் தங்களுக்கு உண்டாக்கி:
[29]இது உன்னை எகிப்திலிருந்து கொண்டுவந்த
உன் தெய்வம் என்று சொல்லி, கோபமூட்
டத்தக்க பெரிய அக்கிரமங்களைச் செய்திருக்

19 தாலும், நீர் உம்முடைய மிகுந்த மனஉருக்
கத்தின்படியே, [1]அவர்களை வனாந்தரத்திலே
கைவிடவில்லை; அவர்களை வழிநடத்தப் பகலி
லே மேகஸ்தம்பமும், அவர்களுக்கு வெளிச்
சத்தையும் அவர்கள் நடக்கவேண்டிய வழியை
யும் காட்ட இரவிலே அக்கினிஸ்தம்பமும்,
20 அவர்களை விட்டு விலகவில்லை. அவர்களுக்கு
அறிவை உணர்த்த உம்முடைய [2]நல் ஆவி
யைக் கட்டளையிட்டீர்; அவர்கள் வாய்க்கு உம்
முடைய மன்னாவை அருளி, அவர்கள் தாகத்
21 துக்குத் தண்ணீரைக் கொடுத்தீர். இப்படி
நாற்பது வருஷமாக [3]வனாந்தரத்தில் அவர்க
ளுக்கு ஒன்றும் குறைவுபடாதபடிக்கு, அவர்
களைப் பராமரித்துவந்தீர்; அவர்கள் வஸ்திரங்
கள் பழமையாய்ப் போகவுமில்லை, அவர்கள்
22 கால்கள் வீங்கவுமில்லை. அவர்களுக்கு ராஜ்
யங்களையும் ஜனங்களையும் ஒப்புக்கொடுத்து,
அவைகளை எல்லை எல்லையாக அவர்களுக்குப்
பங்கிட்டீர்; எஸ்போனின் ராஜாவாகிய சீகோ
னின் தேசத்தையும், [4]பாசானின் ராஜாவா
கிய ஓகின் தேசத்தையும் கட்டிக்கொண்டார்
23 கள். அவர்கள் பிள்ளைகளை வானத்து நட்சத்
திரங்களைப் போலப் பெருகப்பண்ணி, சுதந்
தரித்துக்கொள்ளும்படி நீர் அவர்கள் பிதாக்
களுக்குச் சொன்ன தேசத்திலே அவர்களை
24 அழைத்துவந்தீர். அப்படியே பிள்ளைகள்
[5]உட்பிரவேசித்து, [6]தேசத்தைச் சுதந்தரித்துக்
கொண்டார்கள்; நீர் அவர்களுக்கு முன்பாகத்
தேசத்தின் குடிகளாகிய கானானியரைத் தாழ்
த்தி, அவர்களையும் அவர்கள் ராஜாக்களையும்,
தேசத்தின் ஜனங்களையும், தங்கள் இஷ்டப்
படி செய்ய, அவர்கள் கையிலே ஒப்புக்கொ
25 டுத்தீர். அவர்கள் அரணான பட்டணங்களை
யும், செழுமையான பூமியையும் கட்டிக்கொ
ண்டு, சகலவித உடைமைகள் நிறைந்த வீடு
களையும், வெட்டப்பட்ட துரவுகளையும், ஏரா
ளமான திராட்சத்தோட்டங்களையும், ஒலிவத்
தோப்புகளையும், கனிகொடுக்கும் விருட்சங்
களையும் சுதந்தரித்துக்கொண்டு, புசித்துத் திரு
ப்தியாகிக் [7]கொழுத்து, உம்முடைய பெரிய
26 தயையினால் செல்வமாய் வாழ்ந்தார்கள். ஆனா
லும் அவர்கள் கீழ்ப்படியாதவர்களாகி, [8]உம
க்கு விரோதமாய்க் கலகம்பண்ணி, உம்மு
டைய நியாயப்பிரமாணத்தைத் [9]தங்களுக்குப்
புறம்பே எறிந்துவிட்டு, தங்களை உம்மிடத்தில்
திருப்பும்படி அவர்களைத் திடசாட்சியாய்க்
கடிந்துகொண்ட உம்முடைய தீர்க்கதரிசிக
ளைக் [10]கொன்றுபோட்டு, கோபமூட்டுகிற பெ
27 ரிய அக்கிரமங்களைச் செய்தார்கள். ஆகையால்
அவர்களை நெருக்குகிற [11]அவர்கள் சத்துருக்க
ளின் கையில் அவர்களை ஒப்புக்கொடுத்தீர்;
அவர்கள் நெருக்கம் அநுபவிக்கிற காலத்தில்
அவர்கள் உம்மை நோக்கிக் கூப்பிடுகிறபோ
தோ, நீர் பரலோகத்திலிருந்து கேட்டு, உம்மு
டைய மிகுந்த இரக்கத்தினால் அவர்களை அவர்
கள் சத்துருக்களின் கைக்கு நீங்கலாக்கிவிடுகிற
28 ரட்சகர்களை அவர்களுக்குக் கொடுத்தீர். அவர்
களுக்கு இளைப்பாறுதல் உண்டானபோதோ,
உமக்கு முன்பாக மறுபடியும் பொல்லாப்புச்
செய்யத் தொடங்கினார்கள்; ஆகையால் அவர்
கள் சத்துருக்கள் அவர்களை ஆளும்படிக்கு,
அவர்கள் கையிலே ஒப்புவித்தீர்; அவர்கள்
மனந்திரும்பி, உம்மை நோக்கிக் கூப்பிட்ட
போதோ, நீர் பரலோகத்திலிருந்து கேட்டு,
அவர்களை உம்முடைய இரக்கங்களின்படியே
அநேகந்தரம் விடுதலையாக்கிவிட்டீர். அவர் 29
களை உம்முடைய நியாயப்பிரமாணத்துக்குத்
திருப்ப அவர்களைத் திடசாட்சியாய்க் கடிந்து
கொண்டீர்; ஆனாலும் அவர்கள் அகங்காரங்
கொண்டு, உம்முடைய கற்பனைகளுக்குச் செ
விகொடாமல், கீழ்ப்படிந்து நடக்கிற மனு
ஷன் செய்து பிழைக்கிற உம்முடைய நீதி
நியாயங்களுக்கு விரோதமாகப் பாவஞ்செய்து,
தங்கள் தோளை முரண்டுத்தனமாய் விலக்கி,
செவிகொடாமல், தங்கள் கழுத்தைக் கடினப்
படுத்திக்கொண்டார்கள். நீர் அநேக வருஷ 30
மாக அவர்கள்மேல் பொறுமையாயிருந்து, உம்
முடைய ஆவியினால் பேசின உம்முடைய
தீர்க்கதரிசிகளைக்கொண்டு [12]அவர்களைத் திட
சாட்சியாய்க் கடிந்துகொண்டாலும், அவர்கள்
செவிகொடாதபடியினாலே, அவர்களை அந்
நியதேச ஜனங்களின் கையில் ஒப்புக்கொடுத்
தீர். ஆகிலும் உம்முடைய மிகுந்த இரக்கங் 31
களின்படியே, அவர்களை நிர்மூலமாக்காமலும்
அவர்களைக் கைவிடாமலும் இருந்தீர்; [13]நீர் கிரு
பையும் இரக்கமுமுள்ள தேவன். இப்பொ 32
ழுதும் உடன்படிக்கையையும் கிருபையையும்
காக்கிற வல்லமையும் பயங்கரமுமுள்ள மகா
தேவனாகிய எங்கள் தேவனே, அசீரியா ரா
ஜாக்களின் நாட்கள் [14]முதற்கொண்டு இந்நாள்
வரைக்கும் எங்களுக்கும், எங்கள் ராஜாக்க
ளுக்கும், எங்கள் பிரபுக்களுக்கும், எங்கள்
ஆசாரியர்களுக்கும், எங்கள் தீர்க்கதரிசிகளுக்
கும், எங்கள் பிதாக்களுக்கும், உம்முடைய
ஜனங்கள் அனைவருக்கும் நேரிட்ட சகல
வருத்தமும் உமக்கு முன்பாக அற்பமாய்க்
காணப்படாதிருப்பதாக. எங்களுக்கு நேரி 33
டப்பண்ணின எல்லாவற்றிலும் [15]நீர் நீதியுள்
ளவர்; நீர் உண்மையாய் நடப்பித்தீர்; நாங்க
ளோ [16]ஆகாமியம் பண்ணினோம். எங்கள் 34
ராஜாக்களும், எங்கள் பிரபுக்களும், எங்கள்
ஆசாரியர்களும், எங்கள் பிதாக்களும், உம்மு
டைய நியாயப் பிரமாணத்தின்படி செய்யாம
லும், உம்முடைய கற்பனைகளையும், நீர் அவர்
களைக் கடிந்துகொண்ட உம்முடைய [17]சாட்சி
களையும் கவனியாமலும் போனார்கள். அவர் 35
கள் தங்கள் ராஜ்யத்திலும், [18]நீர் அவர்களுக்
குக் கொடுத்த உம்முடைய பெரிய தயையி
லும், நீர் அவர்களுக்கு முன்பாகத் திறந்து
வைத்த விசாலமும் செழிப்புமான தேசத்தி
லும் உமக்கு ஊழியஞ்செய்யாமலும், தங்கள்
துர்க் கருமங்களைவிட்டுத் திரும்பாமலும் போ
னார்கள். இதோ, இன்றையதினம் நாங்கள் 36
[19]அடிமைகளாயிருக்கிறோம்; இதோ, பலனை

[1] 1 சாமு. 12. 22. ஏசா. 44. 21
[2] ஏசா. 63. 11
[3] உபா. 2. 7
[4] எண். 21. 21. மு
[5] எண். 14. 21. யோசு. 21. 43, 45
[6] சங். 44. 2, 3
[7] உபா. 32. 15
[8] நியா. 2. 11, 12. எசே. 20. 21
[9] சங். 50. 17
[10] 1 இரா. 18. 4. அப். 7. 52
[11] சங். 106. 41
[12] 2 நாளா. 36. 15
[13] 17. வச.
[14] 2 இரா. 17. 3
[15] சங். 119. 137. தானி. 9. 5–14
[16] சங். 106. 6
[17] உபா. 31. 21. 2 இரா. 17. 13. எரே. 29. 19
[18] உபா. 28. 47
[19] எஸ்றா. 9. 9

யும் நன்மையையும் அனுபவிக்கும்படி நீர் எங்
கள் பிதாக்களுக்குக் கொடுத்த இந்தத் தேசத்
தில்தானே நாங்கள் அடிமைகளாயிருக்கிறோம்.
37 அதின் வருமானம் எங்கள் பாவங்களினிமித்
தம் நீர் எங்கள்மேல் வைத்த ராஜாக்களுக்குத்
*திரளாகப்போகிறது; அவர்கள் தங்களுக்கு
இஷ்டமானபடியே எங்கள் சரீரங்களையும்
எங்கள் மிருகஜீவன்களையும் ஆளுகிறார்கள்;
நாங்கள் மகா இக்கட்டில் அகப்பட்டிருக்கி
38 றோம். இவையெல்லாம் இப்படி இருக்கிற
படியால், நாங்கள் உறுதியான [1]உடன்படிக்
கைபண்ணி அதை எழுதிவைக்கிறோம்; எங்
கள் பிரபுக்களும், எங்கள் லேவியரும், எங்கள்
ஆசாரியரும் அதற்கு முத்திரைபோடுவார்கள்
என்றார்கள்.

**10** முத்திரை போட்டவர்கள் யாரென்றால்:
அகலியாவின் குமாரனாகிய திர்ஷாதா என்
2 னும் நெகேமியா, சிதேக்கியா, செராயா, அச
3 ரியா, எரேமியா, பஸ்கூர், அமரியா, மல்
4 கிஜா, அத்தூஸ், செபனியா, மல்லூக்,
5, 6 ஆரீம், மெரெமோத், ஒபதியா, தானி
7 யேல், கிநேதோன், பாருக், மெசுல்லாம்,
8 அபியா, மீயாமின், மாசியா, பில்காய், செ
9 மாயா என்னும் ஆசாரியர்களும், லேவியரா
கிய அசனியாவின் குமாரன் யெசுவா, எனா
தாதின் குமாரரில் ஒருவனாகிய பின்னூயி,
10 கத்மியேல் என்பவர்களும், அவர்கள் சகோ
தரராகிய செபனியா, ஒதியா, கேலிதா, பெ
11 லாயா, ஆனான், மீகா, ரேகோப், அசபியா,
12, 13 சக்கூர், செரெபியா, செபனியா, ஒதி
14 யா, பானி, பெனினு என்பவர்களும், ஜனத்
தின் தலைவராகிய [2]பாரோஷ், பாகாத்மோ
15 வாப், ஏலாம், சத்தூ, பானி, புன்னி, அஸ்
16 காத், பெபாயி, அதோனியா, பிக்வாய்,
17, 18 ஆதின், ஆதேர், இஸ்கியா, அசூர், ஒதி
19 யா, ஆசூம், பெத்சாய், ஆரீப், ஆனதோத்,
20 நெபாய், மக்பியாஸ், மெசுல்லாம், ஏசீர்,
21 மெஷெசாபெயேல், சாதோக், யதுவா,
22, 23 பெலத்தியா, ஆனான், ஆனாயா, ஒசெ
24 யா, அனனியா, அசூப், அல்லோகேஸ்,
25 பில்கா, சோபேக், ரேகூம், அஷபனா, மா
26, 27 செயா, அகியா, கானான், ஆனான், மல்
28 லூக், ஆரிம், பானா என்பவர்களுமே. ஜனங்
களில் மற்றவர்களாகிய ஆசாரியரும், லேவிய
ரும், வாசல் காவலாளரும், பாடகரும், நிதனீ
மியரும், தேசங்களின் ஜனங்களைவிட்டுப் பிரி
ந்து [3]விலகி தேவனுடைய நியாயப்பிரமாணத்
துக்குத் [4]திரும்பின அனைவரும், அவர்கள்
மனைவிகளும், அவர்கள் குமாரரும், அவர்கள்
குமாரத்திகளுமாகிய அறிவும் புத்தியும் உள்ள
29 வர்களெல்லாரும், தங்களுக்குப் பெரியவர்க
ளாகிய தங்கள் சகோதரரோடே கூடிக்கொ
ண்டு: தேவனுடைய தாசனாகிய மோசேயைக்
கொண்டு கொடுக்கப்பட்ட தேவனுடைய
நியாயப்பிரமாணத்தின்படி நடந்துகொள்
வோம் என்றும், [5]எங்கள் ஆண்டவராகிய கர்த்
தரின் கற்பனைகளையும் சகல நீதிநியாயங்களை

யும், கட்டளைகளையும் எல்லாம் கைக்கொண்
டு, அவைகளின்படி செய்வோம் என்றும்,
நாங்கள் எங்கள் குமாரத்திகளைத் தேசத்தின் 30
ஜனங்களுக்குக் கொடாமலும், [6]எங்கள் குமார
ருக்கு அவர்கள் குமாரத்திகளைக் கொள்ளாம
லும் இருப்போம் என்றும், தேசத்தின் ஜனங் 31
கள் ஓய்வுநாளிலே சரக்குகளையும், எந்தவிதத்
தானியதவசத்தையும் விற்கிறதற்குக் கொண்டு
வந்தால், நாங்கள் அதை [7]ஓய்வுநாளிலும் பரி
சுத்தநாளிலும் அவர்கள் கையில் கொள்ளா
திருப்போம் என்றும், நாங்கள் ஏழாம் வருஷத்
தை விடுதலை வருஷமாக்கிச் சகல கடன்களை
யும் விட்டுவிடுவோம் என்றும் [8]ஆணையிட்டுப்
பிரமாணம்பண்ணினார்கள். மேலும்: நாங்கள் 32
எங்கள் தேவனுடைய ஆலயத்தின் ஆராத
னைக்காக சமுகத்தப்பங்களுக்கும், [9]நித்திய
போஜனபலிக்கும், ஓய்வுநாட்களிலும் மாதப்
பிறப்புகளிலும் செலுத்தும் நித்திய சர்வாங்க
தகனபலிகளுக்கும், [10]பண்டிகைகளுக்கும், பிர
திஷ்டையான பொருள்களுக்கும், இஸ்ரவே
லுக்காகப் பாவநிவிர்த்தி உண்டாக்கும் பலி
களுக்கும், எங்கள் தேவனுடைய ஆலயத் 33
தின் சகலவேலைக்கும், வருஷந்தோறும் நாங்
கள் சேக்கலில் மூன்றில் ஒரு பங்கைக் கொ
டுப்போம் என்கிற கடனை எங்கள்மேல் ஏற்
றுக்கொண்டோம். நியாயப்பிரமாணத்தில் 34
எழுதியிருக்கிறபடியே [11]எங்கள் தேவனாகிய
கர்த்தருடைய பலிபீடத்தின்மேல் எரிகிறதற்
காக, குறிக்கப்பட்ட காலங்களில் வருஷா
வருஷம் [12]எங்கள் பிதாக்களுடைய குடும்பங்
களின்படியே, எங்கள் தேவனுடைய ஆலயத்
துக்குக் கொண்டுவரவேண்டிய [13]விறகு கா
ணிக்கைக்காகவும், ஆசாரியருக்கும், லேவிய
ருக்கும், ஜனத்துக்கும் சீட்டுப்போட்டோம்.
நாங்கள் வருஷந்தோறும் எங்கள் தேவனு 35
டைய ஆலயத்துக்கு எங்கள் தேசத்தின் [14]முதற்
பலனையும், சகலவித விருட்சங்களின் எல்லா
முதற்கனிகளையும் கொண்டுவரவும், நியா 36
யப்பிரமாணத்தில் எழுதியிருக்கிறபடியே,
[15]எங்கள் குமாரரில் முதற்பேறுகளையும், எங்
கள் ஆடுமாடுகளாகிய மிருகஜீவன்களின்
தலையீற்றுகளையும், எங்கள் தேவனுடைய
ஆலயத்துக்கும் எங்கள் தேவனுடைய ஆல
யத்திலே ஊழியஞ்செய்கிற ஆசாரியரிடத்
துக்கும் கொண்டுவரவும், நாங்கள் எங்கள் 37
பிசைந்தமாவில் முதற்பாகத்தையும், [16]எங்கள்
படைப்புகளையும், சகல மரங்களின் முந்தின
[17]பலனாகிய திராட்சப்பழரசத்தையும், எண்
ணெயையும், எங்கள் தேவனுடைய ஆல
யத்தின் அறைகளில் வைக்கும்படி ஆசா
ரியரிடத்துக்கும், எங்கள் நிலப்பயிர்களில்
தசமபாகம் லேவியரிடத்துக்கும் கொண்டுவர
வும், லேவியராகிய இவர்கள் எங்கள் வெள்
ளாண்மையின் பட்டணங்களிலெல்லாம் [18]தச
மபாகம் சேர்க்கவும், லேவியர் தசமபாகம் 38
சேர்க்கும்போது ஆரோனின் குமாரனாகிய
ஒரு ஆசாரியன் லேவியரோடேகூட இருக்

* திரளான பலனைத் தருகிறது. உபா. 28. 33
1 10. 29. 2 இரா. 23. 3. 2 நாளா. 29. 10
2 எஸ்றா 2. 3
3 9. 2. லேவி. 20. 24. எஸ்றா 10. 11-19
4 எஸ்றா 2. 36
5 2 நாளா. 34. 31
6 யாத். 34. 16. உபா. 7. 3. எஸ்றா 9. 12, 14
7 13. 15. ஒ. லேவி. 23. 3. உபா. 5. 12. ஏசா. 58. 13, 14
8 5. 1, 12, 13. லேவி. 25. 4. உபா. 29. 12, 14. சங். 119. 106
9 லேவி. 24. 5
10 எண். 28, 29. அதி.
11 லேவி. 6. 12
12 எபி. 10. 3-7
13 13. 31. ஏசா. 40. 16
14 யாத். 23. 19. எண். 18. 12. உபா. 26. 2
15 யாத். 13. 2, 12, 13. லேவி. 27. 26
16 எண். 15. 19. உபா. 18. 4
17 உபா. 26. 2
18 எண். 18. 21. மல். 3. 8, 10

கவும், தசமபாகமாகிய அதிலே லேவியர் பத்
தில் ஒரு பங்கை எங்கள் தேவனுடைய ஆல
யத்திலுள்ள [1]பொக்கிஷ அறைகளில் கொண்
டுவரவும் திட்டம்பண்ணிக் கொண்டோம்.
39 பரிசுத்த ஸ்தலத்தின் பணிமுட்டுகளும், ஊழி
யஞ்செய்கிற ஆசாரியரும், வாசல் காவலாள
ரும், பாடகரும் இருக்கிற அந்த அறைகளி
லே இஸ்ரவேல் புத்திரரும் லேவி புத்திரரும்
தானியம் திராட்சரசம் எண்ணெய் என்பவை
களின் படைப்புகளைக் கொண்டுவரவேண்
டியது; [2]இவ்விதமாய் நாங்கள் எங்கள் தேவனு
டைய ஆலயத்தைப் பாராமரியாமல் விடுவதில்
லையென்று திட்டம்பண்ணிக் கொண்டோம்.
11 ஜனத்தின் அதிகாரிகள் எருசலேமிலே
குடியிருந்தார்கள்; மற்ற ஜனங்கள், தங்களுக்
குள்ளே பத்துப்பேரில் ஒருவனை எருசலே
மென்னும் [3]பரிசுத்த நகரத்திலும் ஒன்பதுபே
ரை மற்றப் பட்டணங்களிலும் குடியிருக்கப்
2 பண்ண, [4]சீட்டுகளைப் போட்டார்கள். ஆனா
லும் எருசலேமிலே குடியிருக்க மனப்பூர்வ
மாய்ச் சம்மதித்த மனுஷர்களையெல்லாம்
3 [5]ஜனங்கள் வாழ்த்தினார்கள். யூதாவின் பட்
டணங்களில் இஸ்ரவேலரும், ஆசாரியரும்,
லேவியரும், நிதனீமியரும், சாலொமோனு
டைய வேலைக்காரரின் புத்திரரும், அவரவர்
தங்கள் பட்டணங்களிலுள்ள தங்கள் காணி
பூமியிலே குடியிருந்தார்கள்; எருசலேமிலே
குடியிருந்த நாடுகளின் தலைவர் யாரென்றால்:
4 எருசலேமிலே யூதா புத்திரரில் சிலரும், பென்
யமீன் புத்திரரில் சிலரும் குடியிருந்தார்கள்;
[6]யூதா புத்திரரிலே [7]பேரேசின் புத்திரருக்
குள் ஒருவனான மகலாலெயேலின் குமாரனா
கிய செபதியாவின் குமாரன் அமரியாவுக்குப்
பிறந்த சகரியாவுக்குக் குமாரனான உசியாவின்
5 மகன் அத்தாயாவும், சீலோனின் குமாரன்
சகரியாவுக்குக் குமாரனாகிய யோயாரிபுக்குக்
குமாரனான அதாயாவுக்குப் பிறந்த அசாயா
வின் குமாரன் கொல்லோசே பெற்ற பாருக்
6 கின் மகன் மாசெயாவுமே. எருசலேமிலே
குடியிருக்கிற பேரேசின் புத்திரரெல்லாரும்
நானூற்று அறுபத்தெட்டுப் பராக்கிரமசாலிக
7 ளாயிருந்தார்கள். பென்யமீன் புத்திரரில் யா
ரென்றால், சல்லு என்பவன்; இவன் மெசுல்
லாமுக்கும், இவன் யோவேதுக்கும், இவன்
பெதாயாவுக்கும், இவன் கொலாயாவுக்கும்,
இவன் மாசெயாவுக்கும், இவன் இதியேலுக்
கும், இவன் எசாயாவுக்கும் குமாரனானவன்.
8 அவனுக்குப்பின் கப்பாய், சல்லாய் முதலான
வர்கள் தொள்ளாயிரத்து இருபத்தெட்டுப்
9 பேர். அவர்கள்மேல் விசாரிப்புக்காரனான
சிக்கிரியின் குமாரன் யோவேலும், பட்டணத்
தின்மேல் இரண்டாவது விசாரிப்புக்காரனான
10 செனுவாவின் குமாரன் யூதாவுமே. ஆசாரியர்
களில் [8]யோயாரிபின் குமாரன் யெதாயா, யா
11 கின் என்பவர்களும், அகிதூபின் குமாரன் மெ
ராயோத்துக்குப் பிறந்த சாதோக்கின் குமாரன்
மெசுல்லாம் பெற்ற இல்க்கியாவின் மகன் செ

[1] 1 நாளா. 9. 26. 2 நாளா. 31. 11, 12
[2] 13. 10 — 12. உபா. 12. 6, 11
[3] 18. ஏசா. மத். 4. 5; 27. 53
[4] யோசு. 18. 10
[5] நியா. 5. 9
[6] 1 நாளா. 9. 3. ழ
[7] ஆதி. 38. 29
[8] 1 நாளா. 9. 10. ழ
[9] 1 நாளா. 26. 20. அப். 6. 2, 3
[10] 1 நாளா. 16. 4. பிலி. 4. 6
[11] எஸ்றா. 6. 8, 9; 7. 20
[12] 1 நாளா. 18. 17
[13] யோசு. 14. 15

ராயா என்னும் தேவனுடைய ஆலயத்தின்
விசாரணைக்கர்த்தனும், ஆலயத்திலே பணி 12
விடை செய்கிற அவர்கள் சகோதரராகிய எண்
ணூற்று இருபத்திரண்டுபேரும், மல்கியாவின்
குமாரன் பஸ்கூருக்கு மகனான சகரியாவின்
குமாரன் அம்சிக்குப் பிறந்த பெல்லியாவின்
குமாரன் எரோகாமுக்குப் பிறந்த அதாயாவும்,
பிதா வம்சத்தலைவராகிய அவனுடைய சகோ 13
தரர் இருநூற்று நாற்பத்திரண்டுபேரும், இம்
மேரின் குமாரன் மெசில்லேமோத்தின் மகனா
கிய அகசாய்க்குப் பிறந்த அசரெயேலின்
மகன் அமாசாயும், அவர்களுடைய சகோதர 14
ராகிய பராக்கிரமசாலிகள் நூற்று இருபத்தெ
ட்டுப்பேருமே; இவர்கள்மேல் அகெதோலி
மின் குமாரன் சப்தியேல் விசாரிப்புக்காரனா
யிருந்தான். லேவியரிலே புன்னியின் குமா 15
ரன் அசபியாவின் மகனாகிய அஸ்ரிக்காமின்
குமாரனான அசூபின் மகன் செமாயாவும்,
தேவனுடைய ஆலயத்தின் வெளிவேலையை 16
[9]விசாரிக்கிற லேவியரின் தலைவரிலே சபெ
தாயும், யோசபாத்தும், ஆசாபின் குமாரன் 17
சப்தியின் குமாரனாகிய மீகாவின் மகன் மத்
தனியா ஜெபத்தில் [10]ஸ்தோத்திரப்பாட்டைத்
துவக்குகிற தலைவனும் அவன் சகோதரரில்
இரண்டாவதான பக்பூக்கியா என்னும் ஒரு
வனும், எதுத்தூனின் குமாரன் காலாவின்
மகனாகிய சமுவாவின் குமாரன் அப்தாவுமே.
பரிசுத்த பட்டணத்திலிருந்த லேவியர் எல் 18
லாரும் இருநூற்று எண்பத்துநாலுபேர். வா 19
சல் காவலாளர் அக்கூபும், தல்மோனும், வா
சல்களில் காவல்காக்கிற அவர்கள் சகோதர
ரும் நூற்று எழுபத்திரண்டுபேர். மற்ற இஸ்ர 20
வேலரும், ஆசாரியரும், லேவியரும், யூதா
வின் சகல பட்டணங்களிலும், அவரவர் தங்
கள் சுதந்தரத்திலிருந்தார்கள். நிதனீமியர் 21
ஓபேலிலே குடியிருந்தார்கள்; அவர்கள்மேல்
சீகாவும் கிஸ்பாவும் விசாரிப்புக்காரரா யிருந்
தார்கள். எருசலேமிலிருக்கிற லேவியரின் 22
விசாரிப்புக்காரன் மீகாவின் குமாரன் மத்த
னியாவின் மகனாகிய அசபியாவுக்குப் பிறந்த
பானியின் குமாரன் ஊசி என்பவன் தேவனு
டைய ஆலயத்தின் ஊழியத்துக்கு நிற்கிற
பாடகராகிய ஆசாபின் குமாரரில் ஒருவன்.
பாடகராகிய அவர்களுக்காக அன்றாடகப்படி 23
கொடுக்கப்படும்படி ராஜாவினால் [11]கட்டளை
யிடப்பட்டிருந்தது. யூதாவின் குமாரனாகிய 24
சேராக்கின் புத்திரரில் மெசெசாபெயேலின்
குமாரன் பெத்தகியா ஜனத்தின் காரியங்க
ளுக்கெல்லாம் [12]ராஜாவின் சமுகத்தில் நின்
றான். தங்கள் நாட்டுப்புறங்களான கிராமங் 25
களில் இருக்கிறவர்களுக்குள்ளே யூதாவின்
புத்திரரில் சிலர் [13]கீரியாத் அர்பாவிலும் அதின்
கிராமங்களிலும், தீபோனிலும் அதின் கிரா
மங்களிலும், எகாப்செயேலிலும் அதின் கிரா
மங்களிலும், யெசுவாவிலும், மோலாதாகி 26
லும், பெத்பெலேதிலும், ஆத்சார் சூகாவி 27
லும், பெயெர்செபாவிலும் அதின் கிராமங்க

28 ளிலும், சிக்லாகிலும், மேகோனாகிலும் அதின்
29 கிராமங்களிலும், என்ரிம்மோனிலும், சாரே
30 யாகிலும், யர்மூத்திலும், சானோவாகிலும்,
அதுல்லாமிலும் அவைகளின் கிராமங்களி
லும், லாகீசிலும் அதின் நாட்டுப்புறங்களிலும்,
அசெக்காவிலும் அதின் கிராமங்களிலும், பெ
யெர்செபா தொடங்கி [1]இன்னோமின் பள்ளத்
31 தாக்குமட்டும் குடியேறினார்கள். கேபாவின்
ஊராராயிருந்த பென்யமீன் புத்திரர், மிக்
மாஸ், ஆயா, பெத்தேல் ஊர்களிலும் அதின்
32 கிராமங்களிலும், ஆனதோத், நோப், அனனி
33, 34 யா, ஆத்சோர், ராமா, கித்தாயிம், ஆதீத்,
35 செபோயிம், நெபலாத், லோத், ஓனோ என்
னும் ஊர்களிலும், சிற்பாசாரிகளின் [2]பள்ளத்
36 தாக்கிலும் குடியிருந்தார்கள். லேவியரிலே
சில வகுப்பார் யூதாவிலும், சிலர் பென்யமீ
னிலும் இருந்தார்கள்.

**12** செயல்தியேலின் குமாரனாகிய செருபா
பேலோடும் யெசுவாவோடும் வந்த ஆசாரி
யரும் லேவியரும் யாரென்றால்: [3]செராயா,
2 எரேமியா, எஸ்றா, அமரியா, மல்லூக், அத்
3, தூஸ், செகனியா, ரேகூம், மெரெமோத்,
4, 5 இத்தோ, கிநேத்தோ, [4]அபியா, மியாமின், மா
6 தியா, பில்கா, செமாயா, யோயாரிப், யெதா
7 யா, சல்லூ, ஆமோக், இல்கியா, யெதாயா
என்பவர்கள்; இவர்கள் [5]யெசுவாவின் நாட்க
ளில், ஆசாரியருக்கும் தங்கள் சகோதரருக்கும்
8 தலைவரா யிருந்தார்கள். லேவியர் யாரென்
றால்: யெசுவா, பின்னூயி, கத்மியேல், செரே
பியா, யூதா, மத்தனியா என்பவர்கள்; இவ
னும் இவன் சகோதரரும் [6]துதிசெய்தலை
9 விசாரித்தார்கள். பக்புக்கியா, உன்னி என்
கிற அவர்கள் சகோதரர் அவர்களுக்கு எதிரே
10 காவல் காத்திருந்தார்கள். யெசுவா யொயகீ
மைப் பெற்றான், யொயகீம் எலியாசிபைப்
பெற்றான், எலியாசிப் யொயதாவைப் பெற்
11 றான், யொயதா யோனத்தானைப் பெற்றான்,
12 யோனத்தான் யதுவாவைப் பெற்றான். யொ
யகீமின் நாட்களிலே பிதா வம்சங்களின் தலை
வரான ஆசாரியர்கள் யாரென்றால்: செராயா
வின் சந்ததியில் மெராயா, எரேமியாவின்
13 சந்ததியில் அனனியா, எஸ்றாவின் சந்ததி
யில் மெசுல்லாம், அமரியாவின் சந்ததியில்
14 யோகனான், மெலிகுவின் சந்ததியில் யோ
னத்தான், செபனியாவின் சந்ததியில் யோ
15 சேப்பு, ஆரீமின் சந்ததியில் அத்னா, மெரா
16 யோதின் சந்ததியில் எல்காய், இத்தோ
வின் சந்ததியில் சகரியா, கிநெதோனின் சந்
17 ததியில் மெசுல்லாம், அபியாவின் சந்ததி
யில் சிக்ரி, மினியாமீன் மொவதியா என்பவர்
18 களின் சந்ததியில் பில்தாய், பில்காவின் சந்
ததியில் சம்முவா, செமாயாவின் சந்ததியில்
19 யோனத்தான், யோயாரிபின் சந்ததியில் மத்
20 தனா, யெதாயாவின் சந்ததியில் ஊசி, சல்லா
யின் சந்ததியில் கல்லாய், ஆமோக்கின் சந்ததி
21 யில் ஏபேர், இல்க்கியாவின் சந்ததியில் அச
பியா, யெதாயாவின் சந்ததியில் நெதனெயேல்

என்பவர்கள். எலியாசிபின் நாட்களில் யொ 22
யதா, யோகனான், யதுவா என்கிற லேவியர்
பிதா வம்சங்களின் தலைவராக எழுதப்பட்டார்
கள்; பெர்சியனாகிய தரியுவின் ராஜ்யபாரமட்
டும் இருந்த ஆசாரியர்களும் அப்படியே எழு
தப்பட்டார்கள். லேவி புத்திரராகிய பிதா 23
வம்சங்களின் தலைவர் எலியாசிபின் குமாரனா
கிய யோகனானின் நாட்கள்மட்டும் நாளாகமப்
புஸ்தகத்தில் [7]எழுதப்பட்டார்கள். லேவியரின் 24
தலைவராகிய அசபியாவும், செரெபியாவும், கத்
மியேலின் குமாரன் யெசுவாவும், அவர்களுக்கு
எதிரே நிற்கிற அவர்கள் சகோதரரும், தேவ
னுடைய மனுஷனாகிய தாவீதினுடைய கற்
பனையின்படியே, [8]துதிக்கவும் தோத்திரிக்க
வும், ஒருவருக்கொருவர் எதிர்முகமாக முறை
முறையாயிருந்தார்கள். மத்தனியா, பக்புக் 25
கியா, ஒபதியா, மெசுல்லாம், தல்மோன், அக்
கூப் என்பவர்கள் வாசல்களிலிருக்கிற பொக்
கிஷ அறைகளைக் காவல் காக்கிறவர்களாயிருந்
தார்கள். யோத்சதாக்கின் குமாரனாகிய யெசு 26
வாவின் குமாரன் யொயகீமின் நாட்களிலும்,
அதிபதியாகிய நெகேமியாவும், [9]வேதபாரகனா
கிய எஸ்றா என்னும் ஆசாரியனும் இருக்கிற
நாட்களிலும் அவர்கள் இருந்தார்கள்.
எருசலேமின் அலங்கத்தைப் பிரதிஷ்டை 27
பண்ணுகையில், [10]துதியினாலும் பாடலினாலும்,
கைத்தாளம் தம்புரு சுரமண்டலம் முதலான கீத
வாத்தியங்களினாலும், பிரதிஷ்டையை மகிழ்ச்
சியோடே கொண்டாட எல்லா இடங்களிலும்
இருக்கிற லேவியரை எருசலேமுக்கு வரும்
படி தேடினார்கள். அப்படியே பாடகரின் 28
புத்திரர் எருசலேமின் சுற்றுப்புறங்களான சம
பூமியிலும், நெத்தோபாத்தியரின் கிராமங்களி
லும், பெத்கில்காலிலும், கேபா, அஸ்மா 29
வேத் ஊர்களின் நாட்டுப்புறங்களிலும் இருந்து
வந்து கூடினார்கள்; பாடகர் எருசலேமைச்
சுற்றிலும் தங்களுக்குக் கிராமங்களைக் கட்டி
யிருந்தார்கள். ஆசாரியரும் லேவியரும் தங்க 30
ளைச் சுத்தம்பண்ணிக்கொண்டு, ஜனத்தையும்
பட்டண வாசல்களையும் அலங்கத்தையும் [11]சுத்
தம்பண்ணினார்கள். அப்பொழுது நான் யூதா 31
வின் பிரபுக்களை அலங்கத்தின்மேல் ஏறப்
பண்ணி, துதிசெய்து நடந்துபோகும்படி
இரண்டு பெரிய கூட்டத்தாரை நிறுத்தினேன்;
அவர்களில் ஒரு கூட்டத்தார் அலங்கத்தின்
மேல் வலது புறமாகக் குப்பைமேட்டு வாச
லுக்குப் போனார்கள். அவர்கள் பிறகாலே 32
ஓசாயாவும், யூதாவின் பிரபுக்களில் பாதிப்பே
ரும், அசரியா, எஸ்றா, மெசுல்லாம், யூதா, 33, 34
பென்யமீன், செமாயா, எரேமியா என்பவர்க
ளும், பூரிகைகளைப் [12]பிடிக்கிற ஆசாரியரின் 35
புத்திரரில் ஆசாபின் குமாரன் சக்கூரின்
மகனாகிய மிகாயாவுக்குக் குமாரனான மத்த
னியாவின் மகன் செமாயாவுக்குப் பிறந்த
யோனத்தானின் குமாரன் சகரியாவும், தேவ 36
னுடைய மனுஷனாகிய தாவீதின் கீதவாத்தி
யங்களை [13]வாசிக்கிற அவன் சகோதரரான

[1] ஆதி. 26. 33. யோசு. 15. 8. 2 இரா. 23. 10
[2] 1 நாளா. 4. 14
[3] எஸ்றா. 2. 1, 2
[4] லூக். 1. 5
[5] யோசுவா. எஸ்றா 3. 2. ஆகா. 1. 1. சகரி. 3. 1
[6] 11. 17
[7] 1 நாளா. 9. 14
[8] 1 நாளா. 23, 25, 26. அதி.
[9] 8. 9. எஸ்றா 7. 6, 11
[10] 1 நாளா. 25. 6
[11] எபி. 5. 1, 3
[12] எண். 10. 2, 8
[13] 1 நாளா. 23. 5

செமாயா, அசரெயேல், மிலாலாய், கிலாலாய்,
மகாய், நெதனெயேல், யூதா, அனானி என்ப
வர்களும் போனார்கள்; வேதபாரகனாகிய
எஸ்றா இவர்களுக்கு முன்பாக நடந்தான்.
37 அங்கேயிருந்து அவர்கள் தங்களுக்கு எதிரான
ஊருணிவாசலுக்கு வந்தபோது, அலங்கத்
தைப்பார்க்கிலும் உயரமான தாவீது நகரத்
தின் படிகளில் ஏறி, தாவீது வீட்டின் மேலா
கக் கிழக்கேயிருக்கிற தண்ணீர்வாசல் மட்டும்
38 போனார்கள். துதிசெய்கிற இரண்டாம் கூட்
டத்தார் எதிரேயிருக்கிற வழியாய் நடந்துபோ
னார்கள், அவர்கள் பிறகாலே நான் போ
னேன்; ஜனத்தில் பாதிப்பேர் அலங்கத்தின்
மேல் சூளைகளின் கொம்மையைக் கடந்து,
39 அகழ் மதில் மட்டும் நெடுகப்போய், எப்பி
ராயீம் வாசலையும், பழையவாசலையும், மீன்
வாசலையும், அனானெயேலின் கொம்மையை
யும், மேயா என்கிற கொம்மையையும் கடந்து,
ஆட்டுவாசல்மட்டும் புறப்பட்டுக் காவல்வீட்டு
40 வாசலிலே நின்றார்கள். அதற்குப்பின்பு துதி
செய்கிற இரண்டு கூட்டத்தாரும் தேவனு
டைய ஆலயத்திலே வந்து நின்றார்கள்; நா
னும் என்னோடேகூட இருக்கிற தலைவரில்
41 பாதிப்பேரும், பூரிகைகளைப் பிடிக்கிற எலி
யாக்கீம், மாசெயா, மினியாமீன், மிகாயா,
எலியோனாய், சகரியா, அனானியா, என்கிற
42 ஆசாரியர்களும், மாசெயா, செமாயா, எலெ
யாசார், ஊசி, யோகனான், மல்கியா, ஏலாம்,
ஏசேர் என்பவர்களும் நின்றோம்; பாடகரும்,
அவர்கள் விசாரிப்புக்காரனாகிய யெஷரகியா
43 வும் [1]சத்தமாய்ப் பாடினார்கள். அந்நாளிலே
மிகுதியான பலிகளைச் செலுத்தி, தேவன் தங்
களுக்கு மகா சந்தோஷத்தை உண்டாக்கினதி
னால் மகிழ்ச்சியாயிருந்தார்கள்; ஸ்திரீகளும்
பிள்ளைகளுங்கூடக் களிகூர்ந்தார்கள்; எருச
லேமின் களிப்பு தூரத்திலே கேட்கப்பட்டது.
44 அன்றையதினம் பொக்கிஷங்களையும்,
படைப்புகளையும், முதல் கனிகளையும், தசம
பாகங்களையும் வைக்கும் அறைகளின்மேல்,
[2]ஆசாரியர்களுக்கும் லேவியர்களுக்கும் நியா
யப்பிரமாணத்தின்படியே வரவேண்டிய பட்
டணங்களுடையநிலங்களின்பங்குகளை அவை
களில் சேர்க்கும்படிக்கு, சில மனுஷர் விசா
ரிப்புக்காரராக வைக்கப்பட்டார்கள்; ஊழி
யஞ்செய்து நிற்கிற ஆசாரியர்மேலும் லேவியர்
மேலும் யூதா மனிதர் சந்தோஷமாயிருந்தார்
45 கள். பாடகரும், வாசல் காவலாளரும், தாவீ
தும் அவன் குமாரனாகிய சாலொமோனும்
கற்பித்தபடியே [3]தங்கள் தேவனுடைய காவலை
யும், சுத்திகரிப்பின் காவலையும் காத்தார்கள்.
46 தாவீதும் [4]ஆசாப்பும் இருந்த பூர்வநாட்களில்
பாடகரின் தலைவரும் வைக்கப்பட்டு, தேவ
னுக்குத் துதியும் தோத்திரங்களும் செலுத்து
கிற சங்கீதங்கள் திட்டம்பண்ணப்பட்டிருந்
47 தது. ஆகையால் செருபாபேலின் நாட்களி
லும், நெகேமியாவின் நாட்களிலும், இஸ்ர
வேலர் எல்லாரும் பாடகருக்கும் வாசல் காவ
லாளருக்கும் அன்றாடகத் திட்டமாகிய பங்
குகளைக் கொடுத்தார்கள்; [5]அவர்கள் லேவிய
ருக்கென்று பிரதிஷ்டை பண்ணிக்கொடுத்
தார்கள்; லேவியர் ஆரோனின் புத்திருக்
கென்று அவர்கள் பங்கைப் பிரதிஷ்டை பண்
ணிக்கொடுத்தார்கள்.

அன்றையதினம் ஜனங்கள் கேட்க, மோ 13
சேயின் புஸ்தகத்தை வாசித்தார்கள்; [6]அதிலே
அம்மோனியரும் மோவாபியரும், இஸ்ரவேல்
புத்திரருக்கு அப்பமும் [7]தண்ணீரும் கொடுக்க
எதிர்கொண்டுவராமல், [8]அவர்களைச் சபிக்க
அவர்களுக்கு விரோதமாய்ப் பிலேயாமைக்
கூலிபொருந்திக்கொண்டபடியினால், அவர் 2
கள் என்றைக்கும், அந்தச் சாபத்தை ஆசீர்வாத
மாகத் திருப்பின எங்கள் தேவனுடைய சபைக்
குட்படலாகாது [9]என்று எழுதியிருக்கிறதாகக்
காணப்பட்டது. ஆகையால் அவர்கள் அந்தக் 3
கட்டளையைக் கேட்டபோது, பலஜாதியான
ஜனங்களையெல்லாம் இஸ்ரவேலை விட்டுப்
[10]பிரித்துவிட்டார்கள்.

இதற்கு முன்னே எங்கள் தேவனுடைய 4
ஆலயத்தின் அறைகளை விசாரிக்க வைக்கப்
பட்ட ஆசாரியனாகிய எலியாசிப் தொபியா
வோடே சம்பந்தங் கலந்தவனாயிருந்து, முற் 5
காலத்தில் காணிக்கைகளும், சாம்பிராணியும்,
பணிமுட்டுகளும், லேவியருக்கும் பாடகருக்
கும் வாசல் காவலாளருக்கும் கட்டளைபண்
ணப்பட்ட தானியம் திராட்சரசம் எண்ணெய்
என்பவைகளிலே தசமபாகமும், ஆசாரிய
ரைச் சேருகிற படைப்பான காணிக்கைகளும்
வைக்கப்பட்டிருந்த இடத்தில் ஒரு பெரிய
[11]அறையை அவனுக்கு ஆயத்தம்பண்ணியிருந்
தான். இதெல்லாம் நடக்கும்போது நான் எரு 6
சலேமில் இல்லை; பாபிலோன் ராஜாவாகிய
அர்தசஷ்டாவின் முப்பத்திரண்டாம் வருஷத்
திலே நான் ராஜாவினிடத்திற்குப் போய்,
[12]சில நாளுக்குப்பின்பு திரும்ப ராஜாவினிடத்
தில் உத்தரவுபெற்றுக்கொண்டு, எருசலே 7
முக்கு வந்தேன்; அப்பொழுது எலியாசிப்
தொபியாவுக்கு தேவனுடைய ஆலயத்துப்
பிராகாரங்களில் ஒரு அறையை ஆயத்தம்
பண்ணினதினால், செய்த பொல்லாப்பை
அறிந்துகொண்டேன். அதினால் நான் மிக 8
வும் மனமடிவாகி, தொபியாவின் வீட்டுத் தட்டு
முட்டுகளையெல்லாம் அந்த அறையிலிருந்து
வெளியே எறிந்துவிட்டேன். பின்பு நான் 9
அறைவீடுகளைச் சுத்திகரிக்கச் சொல்லி, தேவ
னுடைய ஆலயப் பணிமுட்டுகளையும் காணிக்
கைகளையும் சாம்பிராணியையும் அங்கே திரும்
பக் கொண்டுவந்து வைத்தேன். பின்னையும் 10
லேவியருக்கு அவர்கள் பங்குகள் கொடுக்கப்
படவில்லையென்பதையும், பணிவிடை செய்
கிற லேவியரும் பாடகரும் அவரவர் தங்கள்
வெளிநிலங்களுக்கு ஓடிப்போனார்கள் என்ப
தையும் நான் அறிந்துகொண்டேன். அப்பொ 11
ழுது நான் தலைமையானவர்களோடே வழக்
காடி, தேவனுடைய ஆலயம் கைவிடப்பட்டுப்

[1] சங். 81. 1; 98. 4—6
[2] 2 நாளா. 31. 11, 12
[3] 1 நாளா. 25, 26. அதி.
[4] 2 நாளா. 29. 30
[5] எண். 18. 21, 26
[6] உபா. 23. 3, 4; 31. 11, 12. 2 இரா. 23. 2
[7] மத். 25. 40
[8] எண். 22. 5
[9] எண். 24. 10. உபா. 23. 5. யோசு. 24. 9, 10. மீகா. 6. 5
[10] 9. 2; 10. 28
[11] 12. 44
[12] 5. 14

போவானேன்என்றுசொல்லி, அவர்களைச்சே
ர்த்து, அவரவர் நிலையில் அவர்களை வைத்தேன்.
12 அப்பொழுது யூதர் எல்லாரும் தானியம் திரா
ட்சரசம் எண்ணெய் என்பவைகளில் தசம
பாகத்தைப் [1]பொக்கிஷ அறைகளில் கொண்
13 டுவந்தார்கள். அப்பொழுது நான் ஆசாரியனா
கிய செலேமியாவையும், வேதபாரகனாகிய சா
தோக்கையும், லேவியரில் பெதாயாவையும்,
இவர்களுக்குக் கைத்துணையாக மத்தனியா
வின் குமாரன் சக்கூரின் மகனாகிய ஆனானை
யும் பொக்கிஷ அறைகளின்மேல் விசாரிப்
புக்காரராக வைத்தேன்; அவர்கள் உண்மை
யுள்ளவர்கள் என்று எண்ணப்பட்டார்கள்;
[2]ஆகையால் தங்கள் சகோதரருக்குப் பங்கிடு
கிற வேலை அவர்களுக்கு ஒப்புவிக்கப்பட்டது.
14 என் தேவனே, நான் என் தேவனுடைய ஆல
யத்துக்காகவும் அதின் முறைமைகளுக்காக
வும் செய்த நற்கிரியைகளைக் குலைத்துப்போ
டாமல், இந்தக் காரியத்திலே என்னை [3]நினைத்
தருளும்.
15 அந்த நாட்களில் நான் யூதாவிலே ஓய்வுநா
ளில் [4]சிலர் ஆலைகளை மிதிக்கிறதையும், சிலர்
தானியப் பொதிகளைக் கழுதைகள்மேல் ஏற்
றிக்கொண்டுவருகிறதையும், திராட்சரசம்,
திராட்சப்பழம் அத்திப்பழம் முதலானவைக
ளின் பற்பல சுமைகளை ஓய்வுநாளிலே எருச
லேமுக்குக் கொண்டுவருகிறதையும் கண்டு,
[5]அவர்கள் தின்பண்டம் விற்கிற நாளைப்பற்றி
அவர்களைத் திடசாட்சியாய்க் கடிந்துகொண்
16 டேன். மீனையும் சகலவித சரக்குகளையும்
கொண்டுவந்து, ஓய்வுநாளிலே யூதா புத்திர
ருக்கும் எருசலேமில் இருக்கிறவர்களுக்கும்
விற்கிற சில தீரியரும் உள்ளே குடியிருந்தார்
17 கள். ஆகையால் நான் யூதாவின் பெரியவர்
களைக் கடிந்துகொண்டு: நீங்கள் ஓய்வுநாளைப்
பரிசுத்தக் குலைச்சலாக்குகிற [6]இந்தப் பொல்
18 லாத செய்கையென்ன? உங்கள் பிதாக்கள்
இப்படிச் செய்ததினாலல்லவா, [7]நமது தேவன்
நம்மேலும் இந்த நகரத்தின்மேலும் இந்தத்
தீங்கையெல்லாம்வரப்பண்ணினார்; நீங்களோ
வென்றால் ஓய்வுநாளைப் பரிசுத்தக் குலைச்ச
லாக்குகிறதினால், இஸ்ரவேலின்மேலிருக்கிற
உக்கிரத்தை அதிகரிக்கப் பண்ணுகிறீர்கள்
19 என்று அவர்களுக்குச் சொன்னேன். ஆகை
யால் ஓய்வுநாளுக்கு முன்னே எருசலேமின்
பட்டணவாசலில், [8]மாலைமயங்கும்போது, கத
வுகளைப் பூட்டவும், ஓய்வுநாள் முடியுமட்டும்
அவைகளைத் திறவாதிருக்கவும் வேண்டுமெ
ன்று கட்டளையிட்டு, ஓய்வுநாளிலே ஒரு சுமை
யும் உள்ளே வராதபடிக்கு வாசலண்டையி
லே என் வேலைக்காரரில் சிலரை நிறுத்தி
20 னேன். அதினால் வர்த்தகரும், சகலவித
சரக்குகளை விற்கிறவர்களும், இரண்டொரு
தரம் எருசலேமுக்குப் புறம்பே ராத்தங்கினார்
21 கள், அப்பொழுது நான் அவர்களைத் திட
சாட்சியாய்க் கடிந்துகொண்டு, நீங்கள் அலங்
கத்தண்டையிலே ராத்தங்குகிறது என்ன?

[1] மல். 3 10.
[2] அப். 6. 3. 1 தீமோ. 3. 10
[3] சங். 122. 6-9. எபி. 6. 10
[4] யாத். 20. 10
[5] 10. 31
[6] 11. வச. நீதி. 28. 4
[7] எரே. 17. 21-23
[8] லேவி. 23. 32. எரே. 17. 21, 22
[9] 12. 30
[10] 14, 31. வச.
[11] எஸ்றா 9. 2
[12] 11. வச. நீதி. 28. 4
[13] எஸ்றா 10. 5
[14] 1 இரா. 3. 13. 11. 1. ழ. 2 சாமு. 12. 24
[15] 12. 10, 22
[16] மல். 2. 4, 10; 6. 14
[17] 10. 34
[18] 14. 22. வச. சங். 26. 8, 9

நீங்கள் மறுபடியும் இப்படிச்செய்தால், உங்
கள்மேல் கைபோடுவேன் என்று அவர்களோ
டே சொன்னேன்; அதுமுதல் அவர்கள் ஓய்வு
நாளில் வராதிருந்தார்கள். ஓய்வுநாளைப் பரி 22
சுத்தமாக்கும்படிக்கு, உங்களைச் [9]சுத்தம்பண்
ணிக்கொண்டு வாசல்களைக் காக்க வாருங்கள்
என்று லேவியருக்கும்சொன்னேன். என் தே
வனே, இதைக்குறித்து நீர் என்னை நினைத்
தருளி, [10]உம்முடைய மிகுந்த கிருபையின்படி
எனக்கு இரங்குவீராக.
அஸ்தோத், அம்மோன், மோவாப் ஜாதிக 23
ளான ஸ்திரீகளைச் [11]சேர்த்துக்கொண்ட சில
யூதரையும் அந்த நாட்களில் கண்டேன். அவர் 24
கள் பிள்ளைகள் பேசின பேச்சில் பாதி அஸ்
தோத் பாஷையாயிருந்தது; இவர்கள் அந்தந்த
ஜாதிகளின் பாஷையைத்தவிர, யூதபாஷை
யைத் திட்டமாய்ப் பேச அறியாதிருந்தார்கள்.
அவர்களையும் நான் கடிந்துகொண்டு, [12]அவர் 25
கள்மேல் வரும் சாபத்தைக் கூறி, அவர்களில்
சிலரை அடித்து, மயிரைப் பிய்த்து: நீங்கள்
உங்கள் குமாரத்திகளை அவர்கள் குமாரருக்குக்
கொடாமலும், அவர்கள் குமாரத்திகளில்
ஒருவரையும் உங்கள் குமாரருக்காகிலும் உங்
களுக்காகிலும் கொள்ளாமலும் இருக்கவேண்
டுமென்று அவர்களை தேவன்மேல் [13]ஆணையி
டப்பண்ணி, நான் அவர்களை நோக்கி: இஸ் 26
ரவேலின் ராஜாவாகிய சாலொமோன் [14]இதி
னாலே பாவஞ்செய்தா னல்லவா? அவனைப்
போன்ற ராஜா அநேகம் ஜாதிகளுக்குள்ளே
உண்டாயிருந்ததில்லை; அவன் தன் தேவனா
லே சிநேகிக்கப்பட்டவனாயிருந்தான்; தேவன்
அவனை இஸ்ரவேலனைத்தின்மேலும் ராஜா
வாக வைத்தார்; அப்படிப்பட்டவனையும் மறு
ஜாதியான ஸ்திரீகள் பாவஞ்செய்யப்பண்ணி
னார்களே. நீங்கள் மறுஜாதியான ஸ்திரீகளைச் 27
சேர்த்துக்கொள்ளுகிறதினால், நம்முடைய தே
வனுக்குத் துரோகிகளாகி, இந்தப் பெரிய
பொல்லாப்பையெல்லாம் செய்யும்படி, உங்க
ளுக்கு இடங்கொடுப்போமோ என்றேன்.
யொயதாவின் புத்திரரிலே பிரதான ஆசாரிய 28
னாகிய எலியாசிபினுடைய குமாரன் ஒருவன்
ஓரோனியனான சன்பல்லாத்துக்கு மருமகனா
னான்; [15]ஆகையால் அவனை என்னை விட்டுத்
துரத்தினேன். என் தேவனே, அவர்கள் 29
ஆசாரிய ஊழியத்தையும், ஆசாரிய ஊழியத்
துக்கும்லேவியருக்கும் இருக்கிற உடன் படிக்
கையையும் தீட்டுப்படுத்தினார்கள் என்று அவர்
களை [16]நினைத்துக்கொள்ளும்.
இப்படியே நான் மறுஜாதியாரை யெல் 30
லாம் நீக்கி, [17]ஆசாரியரையும் லேவியரையும்
சுத்திகரித்து, அவரவரை அவர்கள் வேலையின்
முறைகளில் நிறுத்தி, குறிக்கப்பட்ட காலங் 31
களிலே செலுத்தப்படவேண்டிய விறகு கா
ணிக்கையையும், முதற்பலன்களையுங் குறித்
துத் திட்டம்பண்ணினேன். என் தேவனே,
எனக்கு நன்மையுண்டாக என்னை [18]நினைத்
தருளும்.

# ESTHER

---

# எஸ்தரின் சரித்திரம்

---

**1** இந்து தேசம் முதல் எத்தியோப்பியா தே
சம் வரைக்குமுள்ள நூற்றிருபத்தேழு நாடுக
ளையும் அரசாண்ட அகாஸ்வேருவின் [1]நாட்க
2 ளிலே சம்பவித்ததாவது: ராஜாவாகிய அகாஸ்
வேரு சூசான் [2]அரமனையிலிருக்கிற தன் ராஜ்
யத்தின் சிங்காசனத்தின்மேல் வீற்றிருந்தான்.
3 அவன் தன் ராஜ்யபாரத்தின் மூன்றாம் வரு
ஷத்திலே தன்னுடைய பிரபுக்களுக்கும் ஊழி
யக்காரருக்கும் விருந்து பண்ணினான்; [3]அப்
பொழுது பெர்சியா மேதியா தேசங்களிலுள்ள
மகத்தானவர்களும், நாடுகளின் அதிபதிகளும்,
பிரபுக்களும், அவன் சமுகத்தில் வந்திருந்தார்
4 கள். அவன் தன் ராஜ்யத்தின் மகிமையான
ஐசுவரியத்தையும், தன் மகத்துவத்தின் சிறந்த
பிரதாபத்தையும் அநேகநாளாகிய நூற்றெண்
பது நாளளவும் விளங்கச் செய்துகொண்டிருந்
5 தான். அந்த நாட்கள் முடிந்தபோது, ராஜா
சூசான் அரமனையில் வந்திருந்த பெரியோர்
முதல் சிறியோர் மட்டுமுள்ள சமஸ்த ஜனங்
களுக்கும் ராஜ அரமனையைச் சேர்ந்த சிங்கா
ரத்தோட்டத்திலுள்ள மண்டபத்தில் ஏழுநாள்
6 விருந்து செய்வித்தான். அங்கே வெண்கலத்
தூண்களின்மேலுள்ள வெள்ளி வளையங்களில்
மெல்லியநூலும்சிவப்புநூலுமான கயிறுகளால்
வெள்ளையும் பச்சையும் இளநீலமுமாகிய தொ
ங்குதிரைகள் விதானித்திருந்தது; சிவப்பும்
நீலமும் வெள்ளையும் கறுப்புமான கற்கள்
பதித்திருந்த தளவரிசையின்மேல் பொற்சரி
கையும் வெள்ளிச்சரிகையுமான *மெத்தைகள்
7 வைக்கப்பட்டிருந்தது. பொன்னால் செய்யப்
பட்ட நானாவித பாத்திரங்களிலே பானம் கொ
டுக்கப்பட்டது; முதல்தரமான திராட்சரசம்
ராஜஸ்திதிக்கு ஏற்கப் பரிபூரணமாய்ப் பரிமா
8 றப்பட்டது. அவரவருடைய மனதின்படியே
செய்யலாம் என்று [4]ராஜா தன் அரமனையின்
பெரிய மனுஷருக்கெல்லாம் கட்டளையிட்டி
ருந்தபடியினால், முறைப்படி பானம் பண்ணி
னார்கள்; ஒருவனும் பலவந்தம் பண்ணவில்லை.
9 ராஜஸ்திரீயாகிய வஸ்தியும் ராஜாவாகிய அகா
ஸ்வேருவின் அரமனையிலே ஸ்திரீகளுக்கு
10 ஒரு விருந்து செய்தாள். ஏழாம் நாளிலே ரா
ஜா [5]திராட்சரசத்தினால் களிப்பாயிருக்கும்
போது, மகா ரூபவதியாயிருந்த ராஜஸ்திரீயா
கிய வஸ்தியின் சௌந்தரியத்தை ஜனங்களுக்
கும் பிரபுக்களுக்கும் காண்பிக்கும்படி, ராஜ
கிரீடம் தரிக்கப்பட்டவளாக, அவளை ராஜா
வுக்குமுன்பாக அழைத்துவரவேண்டுமென்று,
ராஜாவாகிய அகாஸ்வேருவின் சமுகத்தில் 11
சேவிக்கிற மெகுமான், பிஸ்தா, அற்போனா,
பிக்தா, அபக்தா, சேதார், கர்காஸ் என்னும்
ஏழு †பிரதானிகளுக்கும் கட்டளையிட்டான்.
ஆனாலும் பிரதானிகள் மூலமாய் ராஜா சொல் 12
லியனுப்பின கட்டளைக்கு ராஜஸ்திரீயாகிய
வஸ்தி வரமாட்டேன் என்றாள்; அப்பொழுது
ராஜா கடுங்கோபமடைந்து, தனக்குள்ளே
மூர்க்கவெறிகொண்டான். அச்சமயத்தில் ரா 13
ஜசமுகத்தைத் தரிசிக்கிறவர்களும், [6]ராஜ்யத்
தின் முதல் ஆசனங்களில் உட்காருகிறவர்களு
மான கர்ஷேனா, சேதார், அத்மாதா, தர்ஷீஸ்,
மேரேஸ், மர்சேனா, [7]மெமுகான் என்னும்
பெர்சியர் மேதியருடைய ஏழு பிரபுக்களும்
அவன் சமீபத்தில் இருந்தார்கள். ராஜா நியா 14
யப்பிரமாணத்தையும் ராஜநீதியையும் அறிந்
தவர்களிடத்தில் பேசுவது தனக்கு வழக்க
மானபடியால், காலாகால வர்த்தமானங்களை
அறிந்த [8]பண்டிதர்களை நோக்கி: ராஜாவாகிய 15
அகாஸ்வேரு பிரதானிகள் மூலமாய்ச் சொல்
லியனுப்பின கட்டளையின்படி ராஜஸ்திரீயா
கிய வஸ்தி செய்யாமற் போனதினிமித்தம்,
தேசச் சட்டத்தின்படி அவளுக்குச் செய்ய
வேண்டியது என்ன என்று கேட்டான். அப் 16
பொழுது மெமுகான் ராஜாவுக்கும் பிரபுக்க
ளுக்கும் முன்னே பிரதியுத்தரமாக: ராஜஸ்திரீ
யாகிய வஸ்தி ராஜாவுக்குமாத்திரம் அல்ல, ரா
ஜாவாகிய அகாஸ்வேருவினுடைய சகல நாடு
களிலுமுள்ள சகல பிரபுக்களுக்கும் சகல
ஜனங்களுக்குங்கூட ‡அநியாயஞ் செய்தாள்.
ராஜாவாகிய அகாஸ்வேரு ராஜஸ்திரீயாகிய 17
வஸ்தியைத் தமக்கு முன்பாக அழைத்துவரச்
சொன்னபோது, அவள் வரமாட்டோம் என்
கிற செய்தி எல்லா ஸ்திரீகளுக்கும் பிரசித்த
மானால், அவர்களும் தங்கள் புருஷனைத் தங்
கள் பார்வையில் அற்பமாய் எண்ணுவார்கள்.
இன்றையதினமே பெர்சியாவிலும் மேதியாவி 18
லுமுள்ள பிரபுக்களின் §ஸ்திரீகள் ராஜஸ்திரீ
யின் செய்தியைக் கேட்கும்போது, ராஜாவின்

[1] 2 இரா. 25. 19. எஸ்றா. 4. 6. தானி. 6. 1. 9. 1
[2] 1 இரா. 1. 45. நெகே. 1. 1
[3] 2. 18. ஆதி. 40. 20. மாற். 6. 21
* மஞ்சங்கள். எசே. 23. 41. ஆமோஸ் 6. 4
[4] ஆப. 2. 15
[5] 2 சாமு. 13. 18. பிர. 10. 19
† அண்ணகர்.
[6] 2 இரா. 25. 19
[7] எஸ்றா 7. 14
[8] 1 நாளா. 12. 32. எரே. 10. 7
‡ தப்பிதம்.
§ நாயகிகள். ஏசா. 47. 5, 7

பிரபுக்களுக்கெல்லாம் அப்படியே சொல்லு
வார்கள்; மிகுந்த அசட்டையும் எரிச்சலும்
19 விளையும். ராஜாவுக்குச் சம்மதியாயிருந்தால்,
வஸ்தி இனி ராஜாவாகிய அகாஸ்வேருவுக்கு
முன்பாக வரக்கூடாது என்றும், அவளுடைய
ராஜமேன்மையை அவளைப்பார்க்கிலும் உத்த
மியாகிய மற்றொரு ஸ்திரீக்கு ராஜா கொடுப்
பாராக என்றும், அவரால் ஒரு ராஜ கட்டளை
பிறந்து, அது மீறப்படாதபடிக்கு, [1]பெர்சியா
வுக்கும் மேதியாவுக்கும் உரிய தேசச்சட்டத்தி
20 லும் எழுதப்படவேண்டும். இப்படி ராஜா
தீர்த்த காரியம் தமது விஸ்தீரணமான ராஜ்ய
மெங்கும் கேட்கப்படும்போது, பெரியோர்
முதல் சிறியோர்மட்டுமுள்ள எல்லா ஸ்திரீக
ளும் தங்கள் [2]புருஷரைக் கனம்பண்ணுவார்
21 கள் என்றான். இந்த வார்த்தை ராஜாவுக்கும்
பிரபுக்களுக்கும் நலமாய்த் தோன்றினதினால்,
ராஜா மெமுகானுடைய வார்த்தையின்படியே
22 செய்து, எந்தப் புருஷனும் தன் வீட்டிற்
குத்தானே அதிகாரியாயிருக்கவேண்டும் என்
றும், [3]இதை அந்தந்த ஜனங்களுடைய பாஷை
யிலே பிரசித்தம்பண்ணவேண்டும் என்றும்,
அந்தந்த நாட்டில் வழங்குகிற அட்சரத்திலும்,
அந்தந்த ஜாதியார் பேசுகிற பாஷையிலும் ரா
ஜாவின் சகல நாடுகளுக்கும் [4]கட்டளை எழுதி
அனுப்பினான்.

**2** இவைகளுக்குப்பின்பு, ராஜாவாகிய அகா
ஸ்வேருவின் உக்கிரம் தணிந்தபோது, அவன்
வஸ்தியையும் அவள் செய்ததையும் அவளைக்
குறித்துத் தீர்மானிக்கப்பட்டதையும் [5]நினைத்
2 தான். அப்பொழுது ராஜாவைச் சேவிக்கிற
அவனுடைய ஊழியக்காரர் அவனை நோக்கி:
ரூபவதிகளாயிருக்கிற கன்னிப்பெண்களை
3 ராஜாவுக்காகத் தேடவேண்டும். அதற்காக
ராஜா தம்முடைய ராஜ்யத்தின் நாடுகளிலெல்
லாம் விசாரிப்புக்காரரை வைக்கவேண்டும்;
இவர்கள் ரூபவதிகளாயிருக்கிற சகல கன்
னிப்பெண்களையும் கூட்டி, சூசான் அரமனை
யிலிருக்கிற கன்னிமாடத்துக்கு அழைத்து
வந்து, ஸ்திரீகளைக் காவல்பண்ணுகிற ராஜா
வின் பிரதானியாகிய யேகாயின் வசத்திலே
ஒப்புவிக்கவேண்டும்; அவர்களுடைய சுத்தி
கரிப்புக்கு வேண்டியவைகள் அவர்களுக்குக்
4 கொடுக்கப்படவேண்டும். அப்பொழுது ரா
ஜாவின் கண்களுக்குப் பிரியமான கன்னி
வஸ்திக்குப் பதிலாகப் *பட்டத்து ஸ்திரீயாக
வேண்டும் என்றார்கள்; இந்த வார்த்தை ராஜா
வுக்கு நலமாய்த் தோன்றினபடியால் அப்படி
யே செய்தான்.
5 அப்பொழுது சூசான் அரமனையிலே பென்
யமீனியனாகிய கீசின் குமாரன் சிமேயினு
டைய மகனாகிய யாவீரின் குமாரன் மொர்தெ
காய் என்னும் பேருள்ள ஒரு யூதன் இருந்
6 தான். அவன் பாபிலோன் ராஜாவாகிய நேபு
காத்நேச்சார் யூதாவின் ராஜாவாகிய †எகோ
னியாவைப்பிடித்துக்கொண்டுபோகிறபோது,
அவனோடேகூட எருசலேமிலிருந்து பிடித்
துக்கொண்டு போகப்பட்டவர்களில் ஒருவனா
யிருந்தான். அவன் தன் சிறிய தகப்பன் குமா 7
ரத்தியாகிய ‡எஸ்தர் என்னும் அத்சாளை வளர்த்
தான்; அவளுக்குத் தாய்தகப்பனில்லை; அந்
தப் பெண் ரூபவதியும் சௌந்தரியமுடைய
வளுமா யிருந்தாள்; அவள் தகப்பனும் அவள்
தாயும் மரணமடைந்தபோது, மொர்தெகாய்
அவளைத் தன் குமாரத்தியாக எடுத்துக்கொண்
டான். ராஜாவின் கட்டளையும் தீர்மானமும் 8
பிரசித்தமாகி, அநேகம் பெண்கள் கூட்டப்
பட்டு, சூசான் அரமனையிலுள்ள யேகாயின்
வசத்தில் ஒப்புவிக்கப்படுகிறபோது, எஸ்தரும்
ராஜாவின் அரமனைக்கு அழைத்துக்கொண்டு
போகப்பட்டு, ஸ்திரீகளைக் காவல்பண்ணுகிற
யேகாயின் வசத்தில் ஒப்புவிக்கப்பட்டாள்.
அந்தப் பெண் அவன் பார்வைக்கு நன்றாயி 9
ருந்ததினால், [6]அவளுக்கு அவன் கண்களிலே
தயை கிடைத்தது; ஆகையால் அவளுடைய
சுத்திகரிப்புக்கு வேண்டியவைகளையும், அவ
ளுக்குத் தேவையான மற்றவைகளையும் அவ
ளுக்குக் கொடுக்கவும், ராஜ அரமனையிலிருக்
கிற ஏழு தாதிமார்களை அவளுக்கு நியமிக்கவும்
ஜாக்கிரதைப்பட்டு, கன்னிமாடத்தில் சிறந்த
ஒரு இடத்திலே அவளையும் அவள் தாதிமார்
களையும் வைத்தான். எஸ்தரோவென்றால் தன் 10
குலத்தையும், தன் பூர்வோத்தரத்தையும் அறி
விக்காதிருந்தாள்; [7]மொர்தெகாய் அதைத் தெரி
விக்க வேண்டாமென்று அவளுக்குக் கற்பித்தி
ருந்தான். எஸ்தருடைய சுகசெய்தியையும் 11
அவளுக்கு நடக்குங் காரியத்தையும் அறிய
[8]மொர்தெகாய் நாடோறும் கன்னிமாடத்து முற்
றத்துக்கு முன்பாக உலாவுவான். ஒவ்வொரு 12
பெண்ணும் ஆறுமாதம் வெள்ளைப்போளத்
தைலத்தினாலும், [9]ஆறுமாதம் சுகந்தவர்க்கங்
களினாலும், ஸ்திரீகளுக்குரிய மற்றச் சுத்திக
ரிப்புகளினாலும் ஜோடிக்கப்படுகிற நாட்கள்
நிறைவேறி, இவ்விதமாய் ஸ்திரீகளின் முறை
மைப்படி பன்னிரண்டு மாதமாகச் செய்யப்
பட்டுத் தீர்ந்தபின்பு, ராஜாவாகிய அகாஸ்
வேருவினிடத்தில் பிரவேசிக்க, அவளவளு
டைய முறை வருகிறபோது, இப்படி ஜோ 13
டிக்கப்பட்ட பெண் ராஜாவினிடத்தில் பிர
வேசிப்பாள்; கன்னிமாடத்திலிருந்து தன்னோ
டேகூட ராஜ அரமனைக்குப் போக, அவள்
தனக்கு வேண்டுமென்று கேட்பவையெல்
லாம் அவளுக்குக் கொடுக்கப்படும். சாயங் 14
காலத்திலே அவள் உள்ளே பிரவேசித்து,
காலமே, §அபிமான ஸ்திரீகளைக் காவல்
பண்ணுகிற ராஜாவின் பிரதானியாகிய சாஸ்
காசுடைய விசாரிப்புக்குள்ளிருக்கிற ஸ்திரீ
களின் இரண்டாம் மாடத்துக்குத் திரும்பி
வருவாள்; ராஜா தன்னை விரும்பிப் பேர்
சொல்லி [10]அழைப்பித்தாலொழிய அவள் ஒரு
போதும் ராஜாவினிடத்தில் பிரவேசிக்கக்
கூடாது. மொர்தெகாய் தனக்குக் குமாரத்தி 15
யாய் ஏற்றுக்கொண்டவளும், அவன் சிறிய
தகப்பனாகிய அபியாயேலின் குமாரத்தியுமான

[1] 8. 8. தானி. 6. 8—15
[2] எபே. 5. 33. கொலோ. 3. 18. 1 பே. 3. 1
[3] எபே. 5. 22-24. 1 தீமோ. 2. 12
[4] 8. 9
[5] 1. 19, 20
* ராஜபத்தி. மத். 20. 16; 22. 14
† எகொனியா. 2 இரா. 24. 6, 15. எரே. 24. 1
‡ தாராநட்சத்திரம்.
[6] சங். 106. 46
[7] 20. வச.
[8] ஆதி. 37. 14. 1 சாமு. 17. 18
[9] நீதி. 7. 17. ஏசா. 57. 9
§ வைப்பாட்டிகள்.
[10] ஆதி. 34. 19. உபா. 21. 14. ஏசா. 43. 1; 62. 4, 5

எஸ்தர் ராஜாவினிடத்தில் பிரவேசிக்கிறதற்கு
முறை வந்தபோது, அவள் ஸ்திரீகளைக் காவல்
பண்ணுகிற ராஜாவின் பிரதானியாகிய யே
காய் நியமித்த காரியமேயல்லாமல் வேறொன்
றும் கேட்கவில்லை; எஸ்தருக்குத் தன்னைக்
காண்கிற எல்லார் கண்களிலும் [1]தயை கிடைத்
16 தது. அப்படியே எஸ்தர் ராஜாவாகிய அகாஸ்
வேரு அரசாளுகிற ஏழாம் வருஷம் தேபேத்
மாதமாகிய பத்தாம் மாதத்திலே ராஜாவினிடத்
தில் அரமனைக்கு அழைத்துக்கொண்டுபோ
17 கப்பட்டாள். ராஜா சகல ஸ்திரீகளைப் பார்க்
கிலும் எஸ்தர்மேல் அன்பு வைத்தான்; சகல
கன்னிகைகளைப்பார்க்கிலும் அவளுக்கு அவன்
சமுகத்தில் அதிக தயையும் பட்சமும் கிடைத்
தது; ஆகையால் அவன் ராஜகிரீடத்தை அவள்
சிரசின்மேல் வைத்து, அவளை வஸ்தியின்
ஸ்தானத்திலே பட்டத்து ஸ்திரீயாக்கினான்.
18 அப்பொழுது ராஜா தன்னுடைய எல்லாப்
பிரபுக்களுக்கும் ஊழியக்காரருக்கும், எஸ்தரி
னிமித்தம் ஒரு பெரிய விருந்துசெய்து, நாடு
களுக்குச் *சலக்கரணை உண்டாக்கி, ராஜஸ்
திதிக்குத்தக்க [2]வெகுமானங்களைக் கொடுத்
19 தான். இரண்டாந்தரம் கன்னிகைகள் சேர்க்
கப்படும்போது, மொர்தெகாய் ராஜாவின் அர
20 மனை வாசலில் உட்கார்ந்திருந்தான். எஸ்தர்
மொர்தெகாய் தனக்குக் கற்பித்திருந்தபடி, தன்
பூர்வோத்தரத்தையும் தன் குலத்தையும் தெரி
விக்காதிருந்தாள்; எஸ்தர் மொர்தெகாய் இடத்
திலே வளரும்போது அவன் சொற்கேட்டு
நடந்ததுபோல, [3]இப்பொழுதும் அவன் சொற்
21 கேட்டு நடந்துவந்தாள். அந்நாட்களில் மொர்
தெகாய் ராஜாவின் அரமனை வாசலில் உட்
கார்ந்திருக்கிறபோது, வாசல்காக்கிற ராஜா
வின் இரண்டு பிரதானிகளாகிய பிக்தானும்
தேரேசும்வர்மம் வைத்து, ராஜாவாகிய அகாஸ்
வேருவின்மேல் †கைபோட வகைதேடினார்
22 கள். இந்தக் காரியம் மொர்தெகாய்க்குத் தெ
ரியவந்ததினால், அவன் அதை ராஜாத்தியாகிய
எஸ்தருக்கு அறிவித்தான்; [4]எஸ்தர் மொர்தெ
காயின் பேரால் அதை ராஜாவுக்குச் சொன்
23 னாள். அந்தக் காரியம் விசாரிக்கப்படுகிற
போது, அது மெய்யென்று காணப்பட்டது;
ஆகையால் அவர்கள் இருவரும் மரத்திலே
தூக்கிப்போடப்பட்டார்கள்; இது ராஜசமு
கத்திலே நாளாகமப் புஸ்தகத்தில் எழுதப்பட்
டிருக்கிறது.

3 இந்த நடபடிகளுக்குப்பின்பு, ராஜாவாகிய
அகாஸ்வேரு அம்மெதாத்தாவின் குமாரனா
கிய ஆமான் என்னும் ஆகாகியனை [5]மேன்
மைப்படுத்தி, தன்னிடத்திலிருக்கிற சகல பிர
புக்களுக்கும் மேலாக அவனுடைய ஆசனத்
2 தை உயர்த்திவைத்தான். ஆகையால் ராஜா
வின் அரமனை வாசலிலிருக்கிற ராஜாவின்
ஊழியக்காரர் எல்லாரும் ஆமானை வணங்கி
நமஸ்கரித்து வந்தார்கள்; [6]அவனுக்கு இப்ப
டிச் செய்யவேண்டும் என்று ராஜா கட்டளை
யிட்டிருந்தான்; ஆனாலும் மொர்தெகாய்
அவனை வணங்கவுமில்லை, [7]நமஸ்கரிக்கவுமில்
லை. அப்பொழுது ராஜாவின் அரமனை வா 3
சலிலிருக்கிற ராஜாவின் ஊழியக்காரர் மொர்
தெகாயைப் பார்த்து, நீ ராஜாவின் கட்டளை
யை [8]மீறுகிறது என்ன என்று கேட்டார்கள்.
இப்படி அவர்கள் நாளுக்குநாள் அவனுடனே 4
சொல்லியும், அவன் தங்களுக்குச் செவிகொ
டாதபோது, தான் யூதன் என்று அவன்
அவர்களுக்கு அறிவித்திருந்தபடியால், மொர்
தெகாயின் சொற்கள் நிலைநிற்குமோ என்று
பார்க்கிறதற்கு, அதை ஆமானுக்கு அறிவித்
தார்கள். ஆமான் மொர்தெகாய் தன்னை 5
வணங்கி நமஸ்கரியாததைக் கண்டபோது,
[9]மூர்க்கம் நிறைந்தவனானான். ஆனாலும் மொர் 6
தெகாயின்மேல் மாத்திரம் கைபோடுவது அவ
னுக்கு அற்பக்காரியமாகக் கண்டது; மொர்
தெகாயின் ஜனங்கள் இன்னாரென்று ஆமா
னுக்கு அறிவிக்கப்பட்டிருந்தபடியால், அகாஸ்
வேருவின் ராஜ்யமெங்கும் இருக்கிற மொர்
தெகாயின் ஜனமாகிய [10]யூதரையெல்லாம் சங்
கரிக்க அவன் வகைதேடினான். ராஜாவாகிய 7
அகாஸ்வேருவின் பன்னிரண்டாம் வருஷம்
நிசான் மாதமாகிய முதலாம்மாதத்திலே ஆமா
னுக்கு முன்பாகப் பூர் [11]என்னப்பட்ட சீட்டு
ஒவ்வொரு நாளையும் ஒவ்வொரு மாதத்தையும்
குறித்துப் போடப்பட்டு, ஆதார்மாதமான பன்
னிரண்டாம் மாதத்தின்மேல் விழுந்தது. அப் 8
பொழுது ஆமான் அகாஸ்வேரு ராஜாவை
நோக்கி: உம்முடைய ராஜ்யத்தின் சகல நாடு
களிலுமுள்ள ஜனங்களுக்குள்ளே ஒருவித
ஜனங்கள் சிதறுண்டு பரம்பியிருக்கிறார்கள்;
அவர்களுடைய ‡வழக்கங்கள் சகல ஜனங்
களுடைய வழக்கங்களுக்கும் விகற்பமாயிருக்
கிறது; அவர்கள் ராஜாவின் சட்டங்களைக்
கைக்கொள்ளுகிறதில்லை; ஆகையால் அவர்
களை இப்படி விட்டிருக்கிறது ராஜாவுக்கு நியா
யமல்ல. ராஜாவுக்குச் சம்மதியானால், அவர் 9
களை அழிக்கவேண்டுமென்று எழுதி அனுப்
பவேண்டியது; அப்பொழுது நான் ராஜாவின்
கஜானாவிலே கொண்டுவந்து செலுத்த பதினா
யிரம் தாலந்து வெள்ளியை எண்ணிக் காரி
யக்காரர் கையில் கொடுப்பேன் என்றான்.
அப்பொழுது ராஜா தன் கையிலிருக்கிற தன் 10
[12]மோதிரத்தைக் கழற்றி, அதை ஆகாகியனான
அம்மெதாத்தாவின் குமாரனும் யூதரின் சத்
துருவுமாகிய ஆமானிடத்தில் கொடுத்து, ஆ 11
மானை நோக்கி: அந்த வெள்ளியை நீ வைத்
துக்கொள்; அந்த ஜனத்துக்கு உன் இஷ்டப்
படி செய்யலாம் என்றான். முதலாம் மாதம் 12
பதின்மூன்றாம் தேதியிலே, ராஜாவின் சம்
பிரதிகள் [13]அழைக்கப்பட்டார்கள்; ஆமான்
கற்பித்தபடியெல்லாம் ராஜாவின் தேசாதிபதி
களுக்கும், ஒவ்வொரு நாட்டின்மேல் வைக்
கப்பட்டிருந்த துரைகளுக்கும், ஒவ்வொரு
ஜனத்தின் பிரபுக்களுக்கும், அந்தந்த நாட்
டில் வழங்கும் அட்சரத்திலும், அந்தந்த ஜாதி
யார் பேசும் பாஷையிலும் எழுதப்பட்டது;

[1] உன்ன. 6. 9. 8. 10. அப். 7. 10
* இறைவைச் சகாயப்படுத்தி.
[2] ஜெகே. 8. 12
[3] எபே. 6. 1—3
† கொலை செய்ய.
[4] 6. 1, 2
[5] ஏன். 24. 7. 1 சாமு. 15. 8, 33
[6] ஆதி. 41. 43
[7] சங். 15. 4
[8] 2. வச.
[9] ஆதி. 4. 5, 6. தானி. 3. 19
[10] சங். 83. 4. வெளி. 12. 17
[11] 9. 24
‡ கிரமப் பிரமாணங்கள். எஸ்றா 4. 13. அப். 16. 20
[12] 8. 2, 8. ஆதி. 41. 42
[13] 8. 9. ஞ.

ராஜாவாகிய அகாஸ்வேருவின் பேரால் அது
எழுதப்பட்டு, ராஜாவின் [1]மோதிரத்தினால்
13 முத்திரை போடப்பட்டது. ஆதார் மாதமான
பன்னிரண்டாம் மாதம் பதின்மூன்றாந் தேதி
யாகிய ஒரேநாளிலே சிறியோர் பெரியோர்
குழந்தைகள் ஸ்திரீகள் ஆகிய சகல யூதரையும்
அழித்துக் கொன்று நிர்மூலமாக்கவும்; அவர்
களைக் கொள்ளையிடவும், அஞ்சற்காரர் கையி
லே ராஜாவின் நாடுகளுக்கெல்லாம் கட்டளை
14 கள் அனுப்பப்பட்டது. அந்த நாளுக்கு ஆயத்
தப்பட்டிருக்கவேண்டும் என்று சகல ஜனங்க
ளுக்கும் கூறி அறிவிக்கிறதற்காகக் கொடுக்
கப்பட்ட கட்டளையின் நகல் இதுவே, இது
ஒவ்வொரு நாட்டிலும் பிரசித்தம் பண்ணப்
15 பட்டது. அந்த அஞ்சற்காரர் ராஜாவின் உத்
தரவினால் தீவிரமாய்ப் புறப்பட்டுப்போனார்
கள்; அந்தக் கட்டளை சூசான் அரமனையில்
பிறந்தது. ராஜாவும் ஆமானும் குடிக்கும்படி
உட்கார்ந்தார்கள்; [2]சூசான் நகரம் கலங்கிற்று.

4 நடந்த யாவற்றையும் மொர்தெகாய் அறிந்த
போது, [3]மொர்தெகாய் தன் வஸ்திரங்களைக்
கிழித்து, இரட்டுடுத்தி, சாம்பல் போட்டுக்
கொண்டு, [4]நகரத்தின் நடுவே புறப்பட்டுப்
போய், [5]துயரமுள்ள மகா சத்தத்துடனே அல
2 றிக்கொண்டு, ராஜாவின் அரமனை வாசல்
முகப்புமட்டும் வந்தான்; இரட்டுடுத்தினவனாய்
ராஜாவின் அரமனை வாசலுக்குள் பிரவேசிக்க
3 ஒருவனுக்கும் உத்தரவில்லை. ராஜாவின் உத்
தரவும் அவனுடைய கட்டளையும் போய்ச்
சேர்ந்த ஒவ்வொரு நாட்டிலும் ஸ்தலத்திலு
முள்ள யூதருக்குள்ளே மகா துக்கமும், உப
வாசமும், அழுகையும், [6]புலம்பலும் உண்
டாய், அநேகர் இரட்டுடுத்திச் சாம்பலில் கிட
4 ந்தார்கள். அப்பொழுது எஸ்தரின் தாதிமார்
களும், அவளுடைய பிரதானிகளும் போய்,
அதை அவளுக்கு அறிவித்தார்கள்; அதினாலே
ராஜாத்தி மிகவும் துக்கப்பட்டு, மொர்தெகாய்
உடுத்திருந்த இரட்டை எடுத்துப்போட்டு,
அவனை உடுத்துவிக்கிறதற்கு வஸ்திரங்களை
அனுப்பினாள்; அவனோ அவைகளை ஏற்றுக்
5 கொள்ளாதிருந்தான். அப்பொழுது எஸ்தர்
தன் பணிவிடைக்கென்று ராஜாவினால் நிய
மித்திருந்த அவனுடைய பிரதானிகளில் ஒரு
வனாகிய ஆத்தாகை அழைப்பித்து: காரியம்
என்ன? அதின் முகாந்தரம் என்ன? என்று
அறியும்படி, மொர்தெகாயினிடத்தில் விசா
6 ரிக்க அவனுக்குக் கட்டளையிட்டாள். அப்
படியே ஆத்தாகு ராஜாவின் அரமனை
வாசலுக்கு முன்னான பட்டண வீதியிலிருக்
கிற மொர்தெகாயினிடத்தில் புறப்பட்டுப்
7 போனான். அப்பொழுது மொர்தெகாய் தன
க்குச் சம்பவித்த எல்லாவற்றைப் பற்றியும்,
யூதரை அழிக்கும்படி ஆமான் ராஜாவின் கஜா
னாவுக்கு எண்ணிக் கொடுப்பேன் என்று
சொன்ன பணத்தொகையைப்பற்றியும் [7]அவ
8 னுக்கு அறிவித்ததும் அன்றி, யூதர்களை
அழிக்கும்படி சூசானில் பிறந்த கட்டளையின்

[1] 1 இரா. 21. 8
[2] நீதி. 29. 2
[3] 2 சாமு. 1. 11. யோபு 1. 20
[4] யோசு. 7. 6. எசே. 27. 30. யோனா. 3. 6
[5] ஆதி. 27. 34
[6] ஏசா. 22. 4, 5 37. 1, 3. தானி. 9. 3
[7] 3. 9
[8] 3. 14, 15
[9] நெகே. 2. 4. நீதி. 21. 1
[10] 5. 1
[11] 5. 2 8. 4
[12] தானி. 2. 9
[13] நீதி. 24. 11, 12
[14] எண். 23. 23. 1 சாமு. 12. 22. ஏசா. 54. 17
[15] யோனா. 3. 4-9
[16] ஆதி. 43. 14
[17] 4. 11 6. 4
[18] நெகே. 1. 11. நீதி. 21. 1

நகலையும் [8]அவனிடத்தில் கொடுத்து, அதை
எஸ்தருக்குக் காண்பித்துத் தெரியப்படுத்தவும்,
அவள் அகத்தியமாய் ராஜாவினிடத்திற்
போய், அவனிடத்தில் தன் ஜனங்களுக்காக
விண்ணப்பம்பண்ணவும் மன்றாடவும் [9]வேண்
டுமென்று அவளுக்குச் சொல்லச்சொன்னான்.
ஆத்தாகு வந்து, மொர்தெகாயின் வார்த்தை 9
களை எஸ்தருக்கு அறிவித்தான். அப்பொ 10
ழுது எஸ்தர் ஆத்தாகினிடத்தில் மொர்தெகா
ய்க்குச் சொல்லியனுப்பினது: யாராவது 11
அழைப்பிக்கப்படாமல், [10]உள்முற்றத்தில் ரா
ஜாவினிடத்தில் பிரவேசித்தால், புருஷனா
லும் ஸ்திரீயானாலும் சரி, அவர்கள் பிழைக்கும்
படிக்கு அவர்களுக்கு ராஜா பொற்செங்கோலை
[11]நீட்டினாலொழிய மற்றப்படி சாகவேண்டும்
என்கிற ஒரு [12]தவறாத சட்டமுண்டு, இது ரா
ஜாவின் சகல ஊழியக்காரருக்கும், ராஜாவி
னுடைய நாடுகளிலுள்ள சகல ஜனங்களுக்
கும் தெரியும்; நான் இந்த முப்பது நாளளவும்
ராஜாவினிடத்தில் வரவழைப்பிக்கப்பட
வில்லை என்று சொல்லச் சொன்னாள். எஸ் 12
தரின் வார்த்தைகளை மொர்தெகாய்க்குத் தெரி
வித்தார்கள். மொர்தெகாய் எஸ்தருக்குத் திரு 13
ம்பச் சொல்லச் சொன்னது: நீ ராஜாவின்
அரமனையிலிருக்கிறதினால், மற்ற யூதர் தப்பக்
கூடாதிருக்க, [13]நீ தப்புவாயென்று உன் மன
திலே நினைவுகொள்ளாதே. நீ இந்தக் காலத் 14
திலே மவுனமாயிருந்தால், [14]யூதருக்குச் சகாய
மும் ரட்சிப்பும் வேறொரு இடத்திலிருந்து
எழும்பும், அப்பொழுது நீயும் உன் தகப்பன்
குடும்பத்தாரும் அழிவீர்கள்; நீ இப்படிப்பட்ட
காலத்துக்கு உதவியாயிருக்கும்படி உனக்கு
ராஜமேன்மை கிடைத்திருக்கலாமே, யாருக்
குத் தெரியும், என்று சொல்லச்சொன்னான்.
அப்பொழுது எஸ்தர் மொர்தெகாய்க்கு மறு 15
படியும் சொல்லச்சொன்னது: நீர் போய், 16
சூசானில் இருக்கிற யூதரையெல்லாம் கூடி
வரச்செய்து, மூன்றுநாள் அல்லும் பகலும்
புசியாமலும் குடியாமலுமிருந்து, எனக்காக
உபவாசம் பண்ணுங்கள்; [15]நானும் என் தாதி
மாரும் உபவாசம் பண்ணுவோம்; இவ்வித
மாக சட்டத்தை மீறி, ராஜாவினிடத்தில் பிர
வேசிப்பேன்; நான் செத்தாலும் சாகிறேன்
[16]என்று சொல்லச்சொன்னாள். அப்பொழுது 17
மொர்தெகாய் புறப்பட்டுப்போய், எஸ்தர் தன
க்குக் கற்பித்தபடியெல்லாம் செய்தான்.

மூன்றாம் நாளிலே எஸ்தர் ராஜவஸ்திரந் 5
தரித்துக்கொண்டு, ராஜ அரமனையின் உள்
முற்றத்தில், [17]ராஜா கொலுவிருக்கும் ஸ்தான
த்துக்கு எதிராக வந்து நின்றாள்; ராஜா அர
மனைவாசலுக்கு எதிரான கொலுமண்டபத்
தில் ராஜாசனத்திலே வீற்றிருந்தான். ராஜா 2
ராஜஸ்திரீயாகிய எஸ்தர் முற்றத்தில் நிற்கிற
தைக் கண்டபோது, அவளுக்கு அவன் கண்
களில் தயைகிடைத்ததினால், [18]ராஜா தன் கை
யிலிருக்கிற பொற்செங்கோலை எஸ்தரிடத்
திற்கு நீட்டினான்; அப்பொழுது எஸ்தர் கிட்

டவந்த செங்கோலின் நுனியைத் தொட்
3 டாள். ராஜா அவளை நோக்கி: எஸ்தர் ராஜாத்
தியே, உனக்கு என்னவேண்டும்? நீ கேட்கிற
மன்றாட்டு என்ன? நீ ராஜ்யத்தில் பாதிமட்
டும் கேட்டாலும், [1]உனக்குக் கொடுக்கப்படும்
4 என்றான். அப்பொழுது எஸ்தர்: ராஜாவுக்
குச் சித்தமானால், நான் தமக்குச் செய்வித்த
விருந்துக்கு ராஜாவும் ஆமானும் இன்றைக்கு
5 வரவேண்டும் என்றாள். அப்பொழுது ராஜா
எஸ்தர் சொற்படி செய்ய, ஆமானைத் தீவிரி
த்து வரும்படி சொல்லி, எஸ்தர் செய்த விருந்
6 துக்கு ராஜாவும் ஆமானும் வந்தார்கள். விருந்
திலே திராட்சரசம் பரிமாறப் படுகையில்,
ராஜா எஸ்தரைப் பார்த்து: உன் வேண்டுதல்
என்ன? அது உனக்குக் கொடுக்கப்படும்; நீ
கேட்கிறது என்ன? [2]நீ ராஜ்யத்தில் பாதிமட்
7 டும் கேட்டாலும் கிடைக்கும் என்றான். அத
8 ற்கு எஸ்தர் பிரதியுத்தரமாக: ராஜாவின்
கண்களில் எனக்குக் கிருபைகிடைத்து, என்
வேண்டுதலைக் கட்டளையிடவும், என் விண்
ணப்பத்தின்படி செய்யவும், ராஜாவுக்குச் சித்
தமாயிருந்தால், ராஜாவும் ஆமானும் நான்
இன்னும் தங்களுக்குச் செய்யப்போகிற விரு
ந்துக்கு வரவேண்டும் என்பதே என் வேண்டு
தலும் என் விண்ணப்பமுமா யிருக்கிறது; நா
ளைக்கு ராஜாவின் சொற்படி செய்வேன் என்
9 றாள். அன்றையதினம் ஆமான் சந்தோஷ
மும் மனமகிழ்ச்சியுமாய்ப் புறப்பட்டான்;
ஆனாலும் ராஜாவின் அரமனை வாசலிலிருக்
கிற மொர்தெகாய் தனக்குமுன் எழுந்திராம
லும் அசையாமலும் இருக்கிறதை ஆமான்
கண்டபோது, [3]அவன் மொர்தெகாயின்மேல்
10 உக்கிரம் நிறைந்தவனானான். ஆகிலும் ஆமான்
அதை அடக்கிக்கொண்டு, [4]தன் வீட்டுக்கு
வந்து, தன் சிநேகிதரையும் தன் மனைவியா
11 கிய சிரேஷையும் அழைத்து, தன் ஐசுவரி
யத்தின் மகிமையையும், தன் பிள்ளைகளின்
திரட்சியையும், [5]ராஜா தன்னைப் பெரியவ
னாக்கி, தன்னைப் பிரபுக்கள்மேலும் ராஜா
வின் ஊழியக்காரர்மேலும் உயர்த்தின [6]எல்
லாவற்றையும் ஆமான் அவர்களுக்கு விவரித்
12 துச் சொன்னான். பின்னையும் ஆமான்: ரா
ஜஸ்திரீயாகிய எஸ்தரும் தான்செய்த விருந்
துக்கு ராஜாவுடனேகூட என்னைத்தவிர வே
றொருவனையும் அழைக்கவில்லை; நாளைக்கும்
ராஜாவுடனேகூட நான் விருந்துக்கு வரவ
13 ழைக்கப்பட்டிருக்கிறேன். ஆனாலும் அந்த
யூதனாகிய மொர்தெகாய் ராஜாவின் அரமனை
வாசலில் உட்கார்ந்திருக்கிறதை நான் காணு
மளவும் அவையெல்லாம் எனக்கு [7]ஒன்றுமில்
14 லையென்றான். அப்பொழுது அவன் மனை
வியாகிய சிரேஷும் அவனுடைய சிநேகிதர்
எல்லாரும் அவனைப் பார்த்து: ஐம்பது முழ
உயரமான ஒரு தூக்குமரம் செய்யப்படவே
ண்டும்; [8]அதிலே மொர்தெகாயைத் தூக்கிப்
போடும்படி நாளையதினம் நீர் ராஜாவுக்குச்
சொல்லவேண்டும்; [9]பின்பு சந்தோஷமாய்

[1] 6. வச. மாற். 6. 23
[2] 7. 2. 9. 12
[3] 3. 5. தானி. 3. 16, 19. மத். 2. 16
[4] 2 சாமு. 13. 22
[5] 9. 12, 13
[6] 3. 1
[7] 1 இரா. 21. 4. யோபு 15. 20
[8] 7. 9
[9] 6. 4
[10] சங். 37. 14, 32
[11] 2. 23
[12] பிர. 9. 15
[13] நீதி. 18. 12
[14] ஆதி. 41. 43. 1 இரா. 1. 33, 34

ராஜாவுடனேகூட விருந்துக்குப் போகலாம்
என்றார்கள்; இந்தக் காரியம் ஆமானுக்கு நன்
றாய்க் கண்டதினால் தூக்குமரத்தைச் [10]செய்
வித்தான்.

அந்த ராத்திரியிலே ராஜாவுக்கு நித்திரை 6
வராதபடியினால், காலவர்த்தமானங்கள் எழுதி
யிருக்கிற [11]நடபடி புஸ்தகத்தைக் கொண்டு
வரச் சொன்னான்; அது ராஜசமுகத்தில் வாசி
க்கப்பட்டது. அப்பொழுது வாசற் காவலா 2
ளரில் ராஜாவின் இரண்டு பிரதானிகளாகிய
பிக்தானாவும் தேரேசும், ராஜாவாகிய அகாஸ்
வேருவின்மேல் கைபோடப் பார்த்த செய்தி
யை மொர்தெகாய் அறிவித்தான் என்று எழுதி
யிருக்கிறது வாசிக்கப்பட்டது. அப்பொழுது 3
ராஜா: இதற்காக மொர்தெகாய்க்கு கனமும்
மேன்மையும் செய்யப்பட்டதா என்று கேட்
டான். அதற்கு ராஜாவைச் சேவிக்கிற ஊழி
யக்காரர்: அவனுக்கு ஒன்றும் செய்யப்பட
வில்லை [12]என்று சொன்னார்கள். ஆமான் தான் 4
செய்த தூக்குமரத்திலே மொர்தெகாயைத்
தூக்கிப்போட வேண்டுமென்று, ராஜாவிடத்
தில் பேசும்படி ராஜ அரமனையின் வெளி
முற்றத்திலே வந்திருந்தான். அப்பொழுது
ராஜா: முற்றத்திலிருக்கிறது யார் என்று கேட்
டான். ராஜாவின் ஊழியக்காரர் அவனை 5
நோக்கி: இதோ, ஆமான் முற்றத்திலே நிற்
கிறான் என்றார்கள்; ராஜா: அவன் உள்ளே
வரட்டும் என்றான். ஆமான் உள்ளே வந்த 6
போது, ராஜா அவனை நோக்கி: ராஜா கனம்
பண்ண விரும்புகிற மனுஷனுக்கு என்ன
செய்யப்படவேண்டும் என்று கேட்டான்;
அதற்கு ஆமான், என்னையன்றி, யாரை ராஜா
கனம்பண்ண விரும்புவார் [13]என்று தன் மன
திலே நினைத்து, ராஜாவை நோக்கி: ராஜா 7
கனம்பண்ண விரும்புகிற மனுஷனுக்குச்
செய்யவேண்டியது என்னவென்றால், ராஜா 8
உடுத்திக்கொள்ளுகிற ராஜவஸ்திரமும், ராஜா
எறுகிற குதிரையும், அவர் சிரசிலே தரிக்கப்
படும் ராஜமுடியும் கொண்டுவரப்பட வேண்
டும். அந்த வஸ்திரமும் குதிரையும் ராஜா 9
வுடைய பிரதான பிரபுக்களில் ஒருவனுடைய
கையிலே கொடுக்கப்படவேண்டும்; ராஜா
கனம்பண்ண விரும்புகிற மனுஷனை அலங்
கரித்தபின், அவனைக் குதிரையின்மேல் எற்றி,
நகரவீதியில் உலாவும்படி செய்து, ராஜா கனம்
பண்ண விரும்புகிற மனுஷனுக்கு இப்படியே
செய்யப்படும் என்று [14]அவனுக்கு முன்பாகக்
கூறப்படவேண்டும் என்றான். அப்பொழுது 10
ராஜா ஆமானை நோக்கி: சீக்கிரமாய் நீ சொன்
னபடி வஸ்திரத்தையும் குதிரையையும் கொ
ண்டுபோய், ராஜ அரமனையின் வாசலில் உட்
கார்ந்திருக்கிற யூதனாகிய மொர்தெகாய்க்கு
அந்தப்பிரகாரம் செய்; நீ சொன்ன எல்லா
வற்றிலும் ஒன்றும் தவறாதபடி பார் என்றான்.
அப்படியே ஆமான் வஸ்திரத்தையும் குதிரை 11
யையும் கொண்டுபோய், மொர்தெகாயை அல
ங்கரித்து, அவனைக் குதிரையின்மேல் எற்றி,

நகரவீதியில் உலாவும்படி செய்து, ராஜா
கனம்பண்ண விரும்புகிற மனுஷனுக்கு இப்
படியே செய்யப்படும் என்று அவனுக்கு முன்
12 பாகக் கூறினான். பின்பு மொர்தெகாய் ரா
ஜாவின் அரமனை வாசலுக்குத் திரும்பிவந்
தான்; ஆமானோவென்றால் சஞ்சலப்பட்டு
முக்காடிட்டுக்கொண்டு [1]தன் வீட்டுக்குத் தீவி
13 ரித்துப்போனான். ஆமான் தனக்கு நேரிட்ட
எல்லாவற்றையும் தன் மனைவியாகிய சிரே
ஷுக்கும் தன் சிநேகிதர் எல்லாருக்கும் அறி
வித்தபோது, அவனுடைய ஆலோசனைக்கார
ரும் அவன் மனைவியாகிய சிரேஷும் அவனைப்
பார்த்து: மொர்தெகாய்க்கு முன்பாக நீர் தாழ்ந்
துபோகத் தொடங்கினீர்; அவன் யூதகுலமா
னால், [2]நீர் அவனை மேற்கொள்ளாமல் அவ
னுக்கு முன்பாகத் தாழ்ந்துபோவது நிச்சயம்
14 என்றார்கள். அவர்கள் இப்படிப் பேசிக்கொ
ண்டிருக்கும்போதே, ராஜாவின் பிரதானிகள்
வந்து, எஸ்தர் செய்த விருந்துக்கு வர [3]ஆமா
னைத் துரிதப்படுத்தினார்கள்.

**7** ராஜாத்தியாகிய எஸ்தருடனே விருந்துண்
2 ண, ராஜாவும் ஆமானும் வந்தபோது, இரண்
டாம் நாள் விருந்தில் திராட்சரசம் பரிமாறப்
படும்போது, [4]ராஜா எஸ்தரை நோக்கி: எஸ்
தர் ராஜாத்தியே, உன் வேண்டுதல் என்ன?
அது உனக்குக் கொடுக்கப்படும்; நீ கேட்கிற
மன்றாட்டு என்ன? நீ ராஜ்யத்தில் பாதிமட்
3 டும் கேட்டாலும் கிடைக்கும் என்றான். அப்
பொழுது ராஜாத்தியாகிய எஸ்தர் பிரதியுத்தர
மாக: ராஜாவே, உம்முடைய கண்களில் என
க்குக் கிருபை கிடைத்து, ராஜாவுக்குச் சித்த
மாயிருந்தால் என் வேண்டுதலுக்கு என் ஜீவ
னும், என் மன்றாட்டுக்கு என் ஜனங்களும்
4 எனக்குக் கட்டளையிடப்படுவதாக. எங்களை
அழித்துக் கொன்று நிர்மூலமாக்கும்படி நா
னும் என் ஜனங்களும் விற்கப்பட்டோம்;
[5]அடிமைகளாகவும் வெள்ளாட்டிகளாகவும்
விற்கப்பட்டுப்போனாலும் நான் மவுனமாயிருப்
பேன்; இப்பொழுதோ ராஜாவுக்கு உண்டா
கும் நஷ்டத்துக்கு அந்தச் சத்துரு உத்தரவா
5 தம்பண்ணமுடியாது என்றாள். அப்பொ
ழுது ராஜாவாகிய அகாஸ்வேரு மறுமொழி
யாக, ராஜாத்தியாகிய எஸ்தரை நோக்கி: இப்
படிச் செய்யத் துணிகரங்கொண்டவன் யார்?
6 அவன் எங்கே? என்றான். அதற்கு எஸ்தர்:
சத்துருவும் பகைஞனுமாகிய அந்த மனிதன்
இந்தத் துஷ்ட ஆமான்தான் என்றாள்; அப்
பொழுது ராஜாவுக்கும் ராஜாத்திக்கும் முன்
7 பாக ஆமான் [6]திகிலடைந்தான். ராஜா உக்
கிரத்தோடே திராட்சரசப் பந்தியை விட்டெ
ழுந்து, அரமனைத் தோட்டத்திற்குப் போ
னான்; ராஜாவினால் தனக்குப் பொல்லாப்பு
நிர்ணயிக்கப்பட்டதென்று ஆமான் கண்டு, ரா
ஜாத்தியாகிய எஸ்தரிடத்தில் தன் பிராண
னுக்காக விண்ணப்பம்பண்ண எழுந்து நின்
8 றான். ராஜா அரமனைத் தோட்டத்திலிருந்து
திராட்சரசம் பரிமாறப்பட்ட இடத்துக்குத்
திரும்பிவருகையில், எஸ்தர் உட்கார்ந்திருக்
கிற மெத்தையின்மேல் ஆமான் விழுந்துகிடந்
தான்; அப்பொழுது ராஜா: நான் அரமனையி
லிருக்கும்போதே என் கண்முன்னே இவன்
ராஜாத்தியைப் பலவந்தம் செய்யவேண்டுமெ
ன்றிருக்கிறானோ என்றான்; இந்த வார்த்தை
ராஜாவின் வாயிலிருந்து பிறந்தவுடனே ஆமா
னின் முகத்தை [7]மூடிப்போட்டார்கள். அப் 9
பொழுது ராஜசமுகத்தில் இருக்கிற பிரதானி
களில் [8]அற்போனா என்னும் ஒருவன்: இதோ,
ராஜாவின் நன்மைக்காகப் பேசின மொர்தெ
காய்க்கு ஆமான் செய்வித்த ஐம்பது முழ உயர
மான தூக்குமரம் [9]ஆமானின் வீட்டண்டை
நாட்டப்பட்டிருக்கிறது என்றான்; அப்பொ
ழுது ராஜா: அதிலே அவனைத் தூக்கிப் போ
டுங்கள் என்றான். அப்படியே ஆமான் மொர் 10
தெகாய்க்கு ஆயத்தம்பண்ணின தூக்குமரத்
தில் ஆமானையே தூக்கிப்போட்டார்கள்; [10]அப்
பொழுது ராஜாவின் உக்கிரம் தணிந்தது.

அன்றையதினம் அகாஸ்வேரு ராஜா யூத **8**
ரின் சத்துருவாயிருந்த ஆமானின் வீட்டை ரா
ஜாத்தியாகிய எஸ்தருக்குக் கொடுத்தான்;
[11]மொர்தெகாய் ராஜசமுகத்தில்வந்தான்; அவன்
தனக்கு இன்ன உறவு என்று எஸ்தர் [12]அறி
வித்திருந்தாள். ராஜா ஆமானின் கையிலி 2
ருந்து வாங்கிப்போட்ட தம்முடைய மோதிரத்
தை எடுத்து, [13]அதை மொர்தெகாய்க்குக் கொ
டுத்தான்; எஸ்தர் மொர்தெகாயை ஆமானின்
அரமனைக்கு [14]அதிகாரியாக வைத்தாள். பின் 3
னும் எஸ்தர் ராஜசமுகத்தில் பேசி, அவன் பா
தங்களில் விழுந்து அழுது, ஆகாகியனான
ஆமானின் தீவினையையும் அவன் யூதருக்கு
விரோதஞ்செய்ய யோசித்த யோசனையையும்
பரிகரிக்க அவனிடத்தில் விண்ணப்பம் பண்
ணினாள். அப்பொழுது ராஜா பொற்செங் 4
கோலை எஸ்தருக்கு நீட்டினான்; எஸ்தர் எழுந்
திருந்து ராஜசமுகத்தில் நின்று: ராஜாவுக் 5
குச் சித்தமாயிருந்து அவர் சமுகத்தில் எனக்
குக் கிருபை கிடைத்து, ராஜசமுகத்தில் நான்
சொல்லும் வார்த்தை சரியென்று காணப்பட்
டு, அவருடைய கண்களுக்கு நான் பிரியமா
யிருந்தால், ராஜாவின் நாடுகளிலெல்லாம் இருக்
கிற யூதரை அழிக்கவேண்டும் என்று அம்மெ
தாத்தாவின் குமாரனாகிய ஆமான் என்னும்
ஆகாகியன் தீவினையாய் எழுதின கட்டளை
கள் செல்லாமற்போகப்பண்ணும்படி எழுதி
அனுப்பப்படவேண்டும். என் ஜனத்தின் 6
மேல் வரும் பொல்லாப்பை நான் எப்படிப்
பார்க்கக்கூடும்? [15]என் குலத்துக்கு வரும் அழி
வை நான் எப்படிச் சகிக்கக்கூடும்? என்றாள்.
அப்பொழுது அகாஸ்வேரு ராஜா ராஜாத்தி 7
யாகிய எஸ்தரையும் யூதனாகிய மொர்தெகா
யையும் நோக்கி: இதோ, [16]ஆமானின் வீட்
டை எஸ்தருக்குக் கொடுத்தேன்; அவன் யூதர்
மேல் தன் கையைப்போட எத்தனித்தபடியி
னால் அவனை மரத்திலே தூக்கிப்போட்டார்
கள். இப்போதும் உங்களுக்கு இஷ்டமான 8

[1] 2 சாமு. 15. 30. 2 நாளா. 26. 20. எரே. 14. 3, 4
[2] யோபு 15. 24
[3] 5. 8
[4] 5. 6
[5] 3. 9. 4. 7
[6] நீதி. 16. 14
[7] யோபு 9. 24
[8] 1. 10
[9] 5. 14. சங். 7. 15,16. நீதி. 11. 5, 6
[10] சங். 37. 35,36. தானி. 6. 24
[11] நீதி. 13. 22
[12] 2. 7
[13] 3. 10
[14] சங். 37. 34. தானி. 2. 48
[15] 7. 4. நெகே. 2. 3
[16] நீதி. 13. 22

படி நீங்கள் ராஜாவின் நாமத்தினால் யூதருக்
காக எழுதி, ராஜாவின் மோதிரத்தினால் முத்தி
ரை போடுங்கள்; ராஜாவின் பேரால் எழுதப்
பட்டு, ராஜாவின் மோதிரத்தினால் முத்திரை
போடப்பட்டதைச் [1]செல்லாமற்போகப்பண்
9 ண ஒருவராலும் கூடாது என்றான். சீவான்
மாதம் என்னும் மூன்றாம் மாதம் இருபத்து
மூன்றாந் தேதியாகிய அக்காலத்திலேதானே
[2]ராஜாவின் சம்பிரதிகள் அழைக்கப்பட்டார்
கள்; மொர்தெகாய் கற்பித்தபடியெல்லாம்
யூதருக்கும் இந்துதேசம்முதல் [3]எத்தியோப்
பியா தேசமட்டுமுள்ள நூற்றிருபத்தேழு நாடு
களின் தேசாதிபதிகளுக்கும், அதிபதிகளுக்
கும், அதிகாரிகளுக்கும், அந்தந்த நாட்டில்
வழங்கும் அட்சரத்திலும், அந்தந்த ஜாதியார்
பேசும் பாஷையிலும், யூதருக்கும் அவர்
கள் அட்சரத்திலும் அவர்கள் பாஷையிலும்
10 எழுதப்பட்டது. அந்தக் கட்டளைகள் அகாஸ்
வேரு ராஜாவின்பேரால் எழுதப்பட்டு, [4]ராஜா
வின்மோதிரத்தினால் முத்திரை போடப்பட்ட
பின், குதிரைகள்மேலும், வேகமான ஒட்டகங்
கள்மேலும், கோவேறுகழுதைகள்மேலும் ஏறி
ப்போகிற அஞ்சல்காரர் கையில் அனுப்பப்பட்
11 டது. அவைகளில், அகாஸ்வேரு ராஜாவு
டைய எல்லா நாடுகளிலும் ஆதார் மாதம் என்
கிற பன்னிரண்டாம் மாதம் பதின்மூன்றாந்
12 தேதியாகிய [5]அந்த ஒரே நாளிலே, அந்தந்தப்
பட்டணத்திலிருக்கிற யூதர் ஒன்றாய்ச் சேர்ந்
து, தங்கள் பிராணனைக் காப்பாற்றவும், தங்
களை விரோதிக்கும் சத்துருக்களாகிய ஜனத்
தாரும் தேசத்தாருமான எல்லாரையும், அவர்
கள் குழந்தைகளையும், ஸ்திரீகளையும் அழித்
துக் கொன்று நிர்மூலமாக்கவும், [6]அவர்கள்
உடைமைகளைக் கொள்ளையிடவும், ராஜா யூத
ருக்குக் கட்டளையிட்டார் என்று எழுதியிருந்
13 தது. யூதர் தங்கள் பகைஞருக்குச் சரிக்குச்
சரிக்கட்டும்படி நியமித்த அன்றையதினத்தில்
ஆயத்தமா யிருக்கவேண்டுமென்று அந்தந்த
நாட்டிலுள்ள சகல ஜனங்களுக்கும் கூறப்படு
கிறதற்காகக் கொடுக்கப்பட்ட கட்டளையின்
நகல் இதுவே; இது ஒவ்வொரு நாட்டிலும்
14 பிரசித்தம் பண்ணப்பட்டது. அப்படியே
வேகமான ஒட்டகங்கள்மேலும், கோவேறு
கழுதைகள்மேலும் ஏறின அஞ்சல்காரர் ராஜா
வின் வார்த்தையினாலே ஏவப்பட்டு, தீவிரத்
தோடே புறப்பட்டுப்போனார்கள்; அந்தக் கட்
டளை சூசான் அரமனையில் கொடுக்கப்பட்
15 டது. அப்பொழுது மொர்தெகாய் இளநீல
மும் வெள்ளையுமான ராஜவஸ்திரமும், பெரிய
பொன்முடியும், பட்டும் ரத்தாம்பரமும் அணி
ந்தவனாய் ராஜாவினிடத்திலிருந்து புறப்பட்
டான்; சூசான் நகரம் [7]ஆர்ப்பரித்து மகிழ்ந்தி
16 ருந்தது. இவ்விதமாய் யூதருக்கு வெளிச்ச
மும், [8]மகிழ்ச்சியும், களிப்பும், கனமும் உண்
17 டாயிற்று. ராஜாவின் வார்த்தையும் அவனு
டைய கட்டளையும் போய்ச்சேர்ந்த எல்லா
நாடுகளிலும், எல்லாப் பட்டணங்களிலும்,

[1] 1. 19. தானி. 6. 8, 12, 15
[2] 3. 12
[3] 1. 1; 8. 12
[4] 1 இரா. 21. 8
[5] 8. 13. ஞ. 9. 1
[6] சங். 37. 14, 15. எசே. 39. 10
[7] நீதி. 29. 2
[8] சங். 18. 28; 30. 5–11. நீதி. 11. 10. ஏசா. 30. 29
[9] 9. 19, 22. 1 சாமு. 25. 8
[10] 9. 2. யாத். 15. 16. உபா. 2. 25; 11. 25
[11] 3. 13; 8. 12. 2 சாமு. 22. 41
[12] 16. வச. 8. 17. சங். 71. 13, 24
[13] 2 சாமு. 3. 1. 1 நாளா. 11. 9. சங். 18. 43. நீதி. 4. 18
[14] 8. 12

யூதருக்குள்ளே அது மகிழ்ச்சியும், களிப்பும்,
விருந்துண்டு கொண்டாடும் [9]நல்ல நாளுமா
யிருந்தது; யூதருக்குப் பயப்படுகிற பயம் தேச
த்து ஜனங்களைப் பிடித்ததினால், அவர்களில்
[10]அநேகர் யூதமார்க்கத்தில் அமைந்தார்கள்.
ராஜாவின் வார்த்தையின்படியும் அவனு 9
டைய கட்டளையின்படியும் செய்யப்படுகிற
தற்கு, ஆதார் மாதம் என்கிற பன்னிரண்டாம்
மாதம் பதின்மூன்றாந்தேதியிலே, [11]யூதரின்
பகைஞர் அவர்களை மேற்கொள்ளலாம் என்று
நம்பினார்களே; அந்நாளிலேதானே, யூதரான
வர்கள் தங்கள் பகைஞரை மேற்கொள்ளும்
படிக்குக் காரியம் மாறுதலாய் முடிந்தது.
யூதர் அகாஸ்வேரு ராஜாவின் சகல நாடுகளி 2
லுமுள்ள பட்டணங்களிலே தங்களுக்குப்
பொல்லாப்பு வரப்பண்ணப் பார்த்தவர்கள்
மேல் கைபோடக் [12]கூடிக்கொண்டார்கள்;
ஒருவரும் அவர்களுக்கு முன்பாக நிற்கக்கூ
டாதிருந்தது; அவர்களைப்பற்றி சகல ஜனங்க
ளுக்கும் பயமுண்டாயிற்று. நாடுகளின் சகல 3
அதிகாரிகளும், தேசாதிபதிகளும், துரைக
ளும், ராஜாவின் காரியங்களை நடப்பிக்கிறவர்
களும், யூதருக்குத் துணைநின்றார்கள்; மொர்
தெகாயினால் உண்டான பயங்கரம் அவர்களைப்
பிடித்தது. மொர்தெகாய் ராஜாவின் அரமனை 4
யில் பெரியவனா யிருந்தான்; அவனுடைய
கீர்த்தி எல்லா நாடுகளிலும் பிரசித்தமாயிற்று;
[13]இந்த மொர்தெகாய் என்பவன் மேன்மேலும்
பெரியவனானான். அப்படியே யூதர் தங்கள் 5
சத்துருக்களையெல்லாம் பட்டயத்தால் வெட்
டிக் கொன்று நிர்மூலமாக்கி, தங்கள் இஷ்
டப்படி தங்கள் பகைஞருக்குச் செய்தார்கள்.
யூதர் சூசான் அரமனையிலும் ஐந்நூறுபேரைக் 6
கொன்று நிர்மூலமாக்கினார்கள். அம்மெதாத் 7
தாவின் குமாரனாகிய ஆமான் என்னும் யூத
ருடைய சத்துருவின் குமாரரான பர்சான்
தாத்தா, தல்போன், அஸ்பாதா, பொராதா, 8
அதலியா, அரிதாத்தா, பர்மஷ்டா, அரிசாய், 9
அரிதாய், வாய்சாதா ஆகிய பத்துப்பேரையும்
கொன்று போட்டார்கள். ஆனாலும் கொள் 10
ளையிடத் [14]தங்கள் கையை நீட்டவில்லை.
அன்றையதினம் சூசான் அரமனையில் 11
கொன்று போடப்பட்டவர்களின் தொகை
ராஜசமுகத்தில் கொண்டுவரப்பட்டது. அப் 12
பொழுது ராஜா, ராஜாத்தியாகிய எஸ்தரை
நோக்கி: யூதர் சூசான் அரமனையில் ஐந்நூறு
பேரையும் ஆமானின் பத்துக் குமாரரையும்
கொன்று நிர்மூலமாக்கினார்கள்; ராஜாவின்
மற்ற நாடுகளிலும் என்ன செய்திருப்பார்க
ளோ! இப்போதும் உன் வேண்டுதல் என்ன?
அது உனக்குக் கட்டளையிடப்படும்; உன்
மன்றாட்டு என்ன? அதின்படி செய்யப்படும்
என்றான். அப்பொழுது எஸ்தர்: ராஜாவுக் 13
குச் சித்தமாயிருந்தால், இன்றையதினத்துக்
கட்டளையின்படியே சூசானிலிருக்கிற யூதர்
நாளையதினமும் செய்யவும், ஆமானின் பத்
துக் குமாரரின் உடலையும் தூக்குமரத்தில

[1]தூக்கிப்போடவும் உத்தரவாகவேண்டும் என்
14 றான். அப்படியே செய்யும்படிக்கு ராஜா
உத்தரவு கொடுத்தான்; அதற்குச் சூசானிலே
கட்டளை பிறந்தது; ஆமானின் பத்துக்குமாா
ருடைய உடலையும் தூக்கிப்போட்டார்கள்.
15 சூசானிலிருக்கிற யூதர் ஆதார் மாதத்தின் பதி
னாலாந் தேதியிலும் கூடிச்சேர்ந்து, [2]சூசா
னில் முந்நூறுபேரைக் கொன்றுபோட்டார்
கள்; ஆனாலும் கொள்ளையிடத் [3]தங்கள் கை
16 யை நீட்டவில்லை. ராஜாவின் நாடுகளிலுள்ள
மற்ற யூதர்கள் தங்கள் பிராணனைத் தற்காக்க
வும், தங்கள் பகைஞருக்கு விலகி இளைப்பாறு
தல் அடையவும் ஒருமிக்கச்சேர்ந்து, தங்கள்
விரோதிகளில் எழுபத்தையாயிரம் பேரைக்
கொன்றுபோட்டார்கள்; ஆனாலும் கொள்ளை
17 யிடத் தங்கள் கையை நீட்டவில்லை. ஆதார்
மாதத்தின் பதின்மூன்றாந் தேதியிலே இப்ப
டிச்செய்து, பதினாலாந்தேதியிலே இளைப்
பாறி, அதை விருந்துண்டு சந்தோஷப்படுகிற
18 பண்டிகை நாளாக்கினார்கள். சூசானிலுள்ள
யூதரோ வென்றால், அந்த மாதத்தின் பதின்
மூன்றாந்தேதியிலும் பதினாலாந் தேதியிலும்
ஏகமாய்க் கூடி, பதினைந்தாந்தேதியில் இளைப்
பாறி, அதை விருந்துண்டு சந்தோஷப்படுகிற
19 பண்டிகை நாளாக்கினார்கள். ஆதலால் அலங்
கமில்லாத ஊர்களில் குடியிருக்கிற நாட்டுப்
புறத்தாரான யூதர்கள் ஆதார் மாதத்தின் பதி
னாலாந்தேதியைச் சந்தோஷமும், விருந்துண்
கிற பூரிப்புமான நாளும், [4]ஒருவருக்கொருவர்
வரிசைகளை அனுப்புகிற நாளுமாக்கினார்கள்.
20 மொர்தெகாய் இந்த வர்த்தமானங்களை எழு
தி, சமீபத்திலும் தூரத்திலும் இருக்கிற அகாஸ்
வேரு ராஜாவின் சகல நாடுகளிலுமுள்ள எல்
21 லா யூதருக்கும் நிருபங்களை அனுப்பி, வரு
ஷந்தோறும் ஆதார் மாதத்தின் பதினாலாம் பதி
னைந்தாந்தேதிகளை, யூதர் தங்கள் பகைஞருக்கு
நீங்கலாகி இளைப்பாறுதல் அடைந்த நாட்க
ளாகவும், அவர்கள் சஞ்சலம் சந்தோஷமாக
வும், அவர்கள் துக்கம் மகிழ்ச்சியாகவும் மாறின
22 [5]மாதமாகவும் ஆசரித்து, அந்நாட்களில் விரு
ந்துண்டு சந்தோஷங் கொண்டாடவும், ஒருவ
ருக்கொருவர் வரிசைகளை அனுப்பவும், எளி
யவர்களுக்குத் தான தர்மஞ்செய்யவும் வேண்
23 டுமென்று திட்டம்பண்ணினான். அப்பொ
ழுது யூதர் தாங்கள் செய்யத்தொடங்கினபடி
யும் மொர்தெகாய் தங்களுக்கு எழுதினபடி
24 யும் செய்யச் சம்மதித்தார்கள். அம்மெதாத்
தாவின் குமாரனாகிய ஆமான் என்னும் ஆகா
கியன், யூதருக்கெல்லாம் சத்துருவாயிருந்து
யூதரைச் சங்கரிக்க நினைத்து, [6]அவர்களை அழி
க்கவும் நிர்மூலமாக்கவும், *பூர் என்னப்பட்ட
25 சீட்டைப் போடுவித்தான். ஆனாலும் எஸ்தர்,
ராஜசமுகத்தில் போய், யூதருக்கு விரோத
மாய் அவன் நினைத்த அவனுடைய பொல்
லாத யோசனை அவனுடைய தலையின்மேல்
திரும்பும்படி [7]கட்டளை பிறப்பித்ததினாலே,
அவனையும் அவன் குமாரரையும் மரத்திலே
[8]தூக்கிப்போட்டார்கள். ஆகையினால் அந்த 26
நாட்கள் பூர் என்னும் பேரினால் பூரீம் என்
னப்பட்டது; அவன் அந்த நிருபத்தில் எழுதி
யிருந்த எல்லா வார்த்தைகளி னிமித்தமும்,
தாங்களே இந்த விஷயத்தில் அநுபவித்தவை
களினிமித்தமும், தங்களுக்கு நேரிட்டவைகளி
னிமித்தமும், யூதர் அதைத் திட்டப்படுத்தி, 27
அந்த இரண்டு நாட்களைக் குறித்து எழுதி
யிருக்கிறபடியே, [9]அவைகளை வருஷந்தோ
றும், அவைகளின் சரியான காலத்திலே ஆச
ரியாமலிருப்பதில்லை என்பதையும், இந்த 28
நாட்கள் எல்லாத் தலைமுறைகளிலும் வம்சங்
களிலும், தேசங்களிலும், ஊர்களிலும் நினைவு
கூரப்பட்டு ஆசரிக்கப்படவேண்டும் என்பதை
யும், இந்தப் பூரீம் என்னும் பண்டிகை நாட்கள்
யூதருக்குள்ளே தவறிப்போகாமலும், அவை
களை நினைவுகூருதல் தங்கள் சந்ததியாருக்குள்
ளே ஒழிந்துபோகாமலும் இருக்கவேண்டும்
என்பதையும், தங்கள்மேலும், தங்கள் சந்ததி
யார்மேலும், தங்கள் மார்க்கத்தில் அமையப்
போகிற மற்ற யாவர்மேலும் கடனாக நியமித்
துக்கொண்டார்கள். பூரீமைக் குறித்து எழுதி 29
யிருக்கிற இந்த இரண்டாம் நிருபத்தைத் திடப்
படுத்தும்படிக்கு, அபியாயேலின் குமாரத்தி
யாகிய எஸ்தர் என்னும் ராஜாத்தியும், யூத
னாகிய மொர்தெகாயும், [10]பின்னும் மகா உறுதி
யாய் எழுதினார்கள் யூதனாகிய மொர்தெகா 30
யும், ராஜாத்தியாகிய எஸ்தரும் யூதருக்கு உறு
திப்பாடு பண்ணினதும், அவர்கள் தானே உப
வாசத்தோடும் [11]அலறுதலோடும் ஆசரிப்போம்
என்று தங்கள்மேலும் தங்கள் சந்ததியார்மேலும்
கடனாக நியமித்துக்கொண்டதுமான, பூரீம்
என்னப்பட்ட இந்த நாட்கள் அவைகளின் சரி
யான காலங்களில் ஆசரிக்கப்படும் காரியத்தை
உறுதியாக்க, அவன் அகாஸ்வேருவின் ராஜ் 31
யத்திலுள்ள நூற்றிருபத்தேழு நாடுகளிலும்
இருக்கிற எல்லா யூதருக்கும் சமாதானமும்
உண்மையுமான வார்த்தைகளையுடைய நிருபங்
களை அனுப்பினான். இப்படியே எஸ்தரின் 32
கட்டளையானது பூரீம் நாட்களைப் பற்றின
இந்த வர்த்தமானங்களைத் திடப்படுத்தினது;
அது ஒரு புஸ்தகத்தில் எழுதப்பட்டது.
ராஜாவாகிய அகாஸ்வேரு தேசத்தின் **10**
மேலும், சமுத்திரத்திலுள்ள தீவுகளின்மே
லும், [12]பகுதி ஏற்படுத்தினான். வல்லமையும் 2
பராக்கிரமமுமான அவனுடைய எல்லாச் செ
ய்கைகளும், ராஜா பெரியவனாக்கின மொர்தெ
காயினுடைய மேன்மையின் விர்த்தாந்தமும்,
[13]மேதியா பெர்சியா ராஜாக்களின் நடபடி
புஸ்தகத்தில் அல்லவோ எழுதியிருக்கிறது.
யூதனாகிய மொர்தெகாய் ராஜாவாகிய அகாஸ் 3
வேருவுக்கு இரண்டாவதானவனும், [14]யூதருக்
குள் பெரியவனும், தன் திரளான சகோதர
ருக்குப் பிரியமானவனுமாயிருந்ததும் அன்றி
[15]தன் ஜனங்களுடைய நன்மையை நாடி,
தன் குலத்தாருக்கெல்லாம் சமாதானமுண்
டாகப் பேசுகிறவனுமாயிருந்தான்.

[1] உபா. 21. 23. 2 சாமு. 21. 6, 9. கலா. 3. 13
[2] 2, 13. வச.
[3] 10. வச.
[4] 22. வச. 8. 17. உபா. 16. 11, 14. நெகே. 8. 10—12
[5] சங். 30. 11
[6] 3. 6, 7
* திருவுளச் சீட்டு.
[7] 8. 3, 12
[8] சங். 7. 16
[9] 8. 17. ஏசா. 56. 8, 6. சகரி. 2. 11
[10] 20. வச. 8. 10
[11] 4. 3, 16
[12] ஆதி. 10. 5. சங். 72. 10. ஏசா. 24. 15. தா. 2. 1
[13] 8. 15. 9. 4. தானி. 2. 48
[14] ஆதி. 41. 40. தானி. 5. 16, 29
[15] நெகே. 2. 10. சங். 122. 6–9. ரோ. 10. 1. 14. 18

# THE BOOK OF JOB

# யோபுடைய சரித்திரம்*

1 ஊத்ஸ் [1]தேசத்திலே யோபு [2]என்னும் பேர்
கொண்ட ஒரு மனுஷன் இருந்தான்; அந்த
மனுஷன் உத்தமனும் சன்மார்க்கனும், [3]தேவ
னுக்குப் பயந்து, பொல்லாப்புக்கு விலகுகிற
2 வனுமாயிருந்தான். அவனுக்கு ஏழு குமாரரும்,
மூன்று குமாரத்திகளும் பிறந்தார்கள்.
3 அவனுக்கு ஏழாயிரம் ஆடுகளும், மூவாயிரம்
ஒட்டகங்களும், ஐந்நூறு ஏர்மாடுகளும், ஐந்நூறு
கழுதைகளுமாகிய மிருகஜீவன்கள் இருந்தது
மன்றி, திரளான பணிவிடைக்காரரும் இருந்
தார்கள்; அதினால் அந்தமனுஷன் கிழக்கத்திப்
புத்திரர் எல்லாரிலும் பெரியவனாயிருந்தான்.
4 அவன் குமாரர், அவனவன் தன் தன் நாளி
லே தன் தன் வீட்டிலே விருந்துசெய்து, தங்
கள் மூன்று சகோதரிகளையும் தங்களோடே
போஜனம் பண்ணும்படி அழைப்பார்கள்.
5 விருந்துசெய்கிற அவரவருடைய நாள் முறை
முடிகிறபோது, யோபு: ஒருவேளை என் குமாரர்
பாவஞ்செய்து, தேவனைத் தங்கள் இருதயத்
திலே [4]தூஷித்திருப்பார்கள் என்று சொல்லி,
அவர்களை அழைத்தனுப்பி, பரிசுத்தப்படுத்தி,
அதிகாலமே எழுந்து, அவர்கள் எல்லாருடைய
இலக்கத்தின்படியேயும் சர்வாங்க தகனபலிக
ளைச் [5]செலுத்துவான்; இந்தப்பிரகாரமாக யோ
பு அந்நாட்களிலெல்லாம் செய்துவருவான்.
6 ஒருநாள் *[6]தேவபுத்திரர் **கர்த்தருடைய**
சந்நிதியில் வந்து நின்றபோது, †[7]சாத்தானும்
7 அவர்கள் நடுவிலே வந்து நின்றான். **கர்த்தர்**
சாத்தானைப் பார்த்து: நீ எங்கேயிருந்து வருகி
றாய் என்றார். சாத்தான் **கர்த்தருக்குப்** பிரதி
யுத்தரமாக: பூமியெங்கும் உலாவி, [8]அதில்
8 சுற்றித்திரிந்து வருகிறேன் என்றான். **கர்த்
தர்** சாத்தானை நோக்கி: என் தாசனாகிய யோ
பின்மேல் கவனம் வைத்தாயோ? உத்தமனும்
சன்மார்க்கனும், தேவனுக்குப் பயந்து, பொல்
லாப்புக்கு விலகுகிறவனுமாகிய அவனைப்
போல பூமியில் ஒருவனும் இல்லை என்றார்.
9 அதற்குச் சாத்தான் **கர்த்தருக்குப்** பிரதியுத்தர
மாக: யோபு விருதாவாகவா தேவனுக்குப் பய
10 ந்து நடக்கிறான்? நீர் அவனையும் அவன் வீட்
டையும் அவனுக்கு உண்டான எல்லாவற்றை
யும் சுற்றி [9]வேலியடைக்கவில்லையோ? அவன்
கைகளின் கிரியையை ஆசீர்வதித்தீர்; அவனு
டைய சம்பத்து தேசத்தில் பெருகிற்று. ஆனா 11
லும் உம்முடைய கையை நீட்டி அவனுக்கு
உண்டானவையெல்லாம் தொடுவீரானால்,
[10]அப்பொழுது அவன் உமது முகத்துக்கு
எதிரே உம்மைத் தூஷிக்கானோ பாரும் என்
றான். **கர்த்தர்** சாத்தானை நோக்கி: இதோ, அவ 12
னுக்கு உண்டானவையெல்லாம் உன் ‡கையி
லிருக்கிறது; அவன்மேல் மாத்திரம் உன்
கையை நீட்டாதே என்றார்; அப்பொழுது
சாத்தான் **கர்த்தருடைய** சந்நிதியைவிட்டுப்
புறப்பட்டுப்போனான்.

பின்பு ஒருநாள் யோபுடைய குமாரரும், 13
அவன் குமாரத்திகளும் [11]தங்கள் மூத்த சகோ
தரன் வீட்டிலே புசித்து, திராட்சரசம் குடிக்
கிறபோது, ஒரு ஆள் அவனிடத்தில் வந்து: 14
எருதுகள் உழுகிறபோது, கழுதைகள் அவை
களின் பக்கத்திலே மேய்ந்துகொண்டிருக்கை
யில், சபேயர் அவைகள்மேல் விழுந்து, அவை 15
களைச் சாய்த்துக்கொண்டுபோனார்கள்; வேலை
யாட்களையும் பட்டயக்கருக்கினால் வெட்டிப்
போட்டார்கள்; நான் ஒருவன்மாத்திரம்
தப்பி, அதை உமக்கு அறிவிக்கும்படி வந்
தேன் என்றான். இவன் இப்படிப் பேசிக் 16
கொண்டிருக்கையில், வேறொருவன் வந்து:
வானத்திலிருந்து தேவனுடைய §அக்கினி
விழுந்து, ஆடுகளையும் வேலையாட்களையும்
சுட்டெரித்துப்போட்டது; நான் ஒருவன்மாத்
திரம் தப்பி, அதை உமக்கு அறிவிக்கும்படி
வந்தேன் என்றான். இவன் இப்படிப்பேசிக் 17
கொண்டிருக்கையில், வேறொருவன் வந்து:
கல்தேயர் மூன்று ||பவுஞ்சாய் வந்து, ஒட்ட
கங்கள்மேல்விழுந்து, அவைகளை ஓட்டிக்கொ
ண்டு போனார்கள்; வேலையாட்களையும் பட்
டயக் கருக்கினால் வெட்டிப்போட்டார்கள்;
நான் ஒருவன்மாத்திரம் தப்பி, அதை உமக்கு
அறிவிக்கும்படி வந்தேன் என்றான். இவன் 18
இப்படிப் பேசிக்கொண்டிருக்கையில், வே
றொருவன் வந்து: உம்முடைய குமாரரும்
உம்முடைய குமாரத்திகளும், தங்கள் மூத்த
சகோதரன் வீட்டிலே புசித்துத் திராட்சரசம்
குடிக்கிறபோது, வனாந்தரவழியாய்ப் பெருங் 19
காற்று வந்து, அந்த வீட்டின் நாலு மூலையி
லும் அடிக்க, அது பிள்ளைகளின்மேல் விழுந்

[1] ஆதி. 22. 20, 21. 1 நாளா. 1. 17, 42

[2] எசே. 14. 14, 20. யாக். 5. 11

[3] நீதி. 8. 13. 16. 6

[4] லேவி. 24. 15, 16. 1 இரா. 21. 10, 13

[5] ஆதி. 8. 20

* [illegible]

[6] 2. 1. மு.

† பகைஞன் = எதிராளி. 1 நாளா. 21. 1. சகரி. 3. 1. வெளி. 12. 9, 10

[7] 38. 7. 1 இரா. 22. 19

[8] மத். 12. 43. 1 பே. 5. 8

[9] சங். 34. 7. ஏசா. 5. 2

[10] 19. 21. ஏசா. 8. 21. மல். 3. 13, 14

‡ கைக்குள். ஆதி. 16. 6

[11] பிர. 9. 12

§ மின்னல், இடி:

|| பிரிவாய். ஆதி. 32. 7

* மோசே மீதியானருக்குள் இருக்கும்போது கி. மு. 1520-ல் எழுதினதாகச் சொல்லுகிறார்கள்.

ததினால் அவர்கள் இறந்துபோனார்கள்; நான்
ஒருவன்மாத்திரம் தப்பி, அதை உமக்கு அறி
20 விக்கும்படி வந்தேன் என்றான். அப்பொ
ழுது யோபு எழுந்திருந்து, தன் சால்வை
யைக் கிழித்து, [1]தன் தலையைச் சிரைத்து,
21 தரையிலே விழுந்து [2]பணிந்து: நிர்வாணி
யாய் [3]என் தாயின் கர்ப்பத்திலிருந்து வந்தேன்;
நிர்வாணியாய் அவ்விடத்துக்குத் திரும்பு
வேன்; **கர்த்தர்** கொடுத்தார், [4]**கர்த்தர்** எடுத்
தார்; [5]**கர்த்தருடைய** நாமத்துக்கு ஸ்தோத்தி
22 ரம் [6]என்றான். இவையெல்லாவற்றிலும்
யோபு பாவஞ்செய்யவுமில்லை, [7]தேவனைப்
பற்றிக் குறைசொல்லவுமில்லை.

**2** பின்னொரு நாளிலே தேவபுத்திரர் **கர்த்த
ருடைய** சந்நிதியில் வந்து நின்றபோது, [8]சாத்
தானும் அவர்கள் நடுவிலே **கர்த்தருடைய** சந்
2 நிதியில் வந்து நின்றான். **கர்த்தர்** சாத்தா
னைப் பார்த்து: நீ எங்கேயிருந்து வருகிறாய்
என்றார்; சாத்தான் **கர்த்தருக்குப்** பிரதியுத்தர
மாக: பூமியெங்கும் உலாவி, அதில் சுற்றித்
3 திரிந்து வருகிறேன் என்றான். அப்பொ
ழுது **கர்த்தர்** சாத்தானை நோக்கி: நீ என்
தாசனாகிய யோபின்மேல் கவனம் வைத்தா
யோ? உத்தமனும் சன்மார்க்கனும், தேவனுக்
குப் பயந்து, பொல்லாப்புக்கு விலகுகிறவனு
மான மனுஷனாகிய அவனைப்போல பூமியில்
ஒருவனுமில்லை; முகாந்தரமில்லாமல் அவனை
நிர்மூலமாக்கும்படி நீ என்னை ஏவினபோதி
லும், அவன் இன்னும் தன் உத்தமத்திலே
4 [9]உறுதியாய் நிற்கிறான் என்றார். சாத்தான்
**கர்த்தருக்குப்** பிரதியுத்தரமாக: *தோலுக்குப்
பதிலாகத் தோலையும், [10]தன் ஜீவனுக்குப்
பதிலாகத் தனக்கு உண்டான எல்லாவற்றை
5 யும், மனுஷன் கொடுத்துவிடுவான். ஆனா
லும் நீர் உம்முடைய கையை நீட்டி, அவன்
எலும்பையும் அவன் மாம்சத்தையும் தொடு
வீரானால், [11]அப்பொழுது அவன் உமது
முகத்துக்கு எதிரே உம்மைத் தூஷிக்கானோ
6 பாரும் என்றான். அப்பொழுது **கர்த்தர்**
சாத்தானை நோக்கி: இதோ, அவன் உன்
கையிலிருக்கிறான்; ஆகிலும் அவன் பிராண
7 னைமாத்திரம் தப்பவிடு என்றார். அப்பொ
ழுது சாத்தான் **கர்த்தருடைய** சந்நிதியைவிட்
டுப் புறப்பட்டு, யோபின் உள்ளங்கால் தொ
டங்கி அவன் உச்சந்தலைமட்டும் கொடிய
8 பருக்களால் [12]அவனை வாதித்தான். அவன்
ஒரு ஓட்டை எடுத்து, தன்னைச் சுறண்டிக்
9 கொண்டு [13]சாம்பலில் உட்கார்ந்தான். அப்
பொழுது அவன் மனைவி அவனைப் பார்த்து:
நீர் இன்னும் உம்முடைய உத்தமத்தில் உறுதி
யாய் நிற்கிறீரோ? [14]தேவனைத் தூஷித்து
10 ஜீவனைவிடும் என்றாள். அதற்கு அவன்:
நீ பயித்தியக்காரி பேசுகிறதுபோலப் பேசு
கிறாய்; தேவன் கையிலே நன்மையைப் பெ
ற்ற நாம் [15]தீமையையும் பெறவேண்டாமோ
என்றான்; இவைகள் எல்லாவற்றிலும் யோபு
[16]தன் உதடுகளினால் பாவஞ்செய்யவில்லை.

யோபுடைய மூன்று சிநேகிதராகிய [17]தே 11
மானியனான எலிப்பாசும், சூகியனான பில்தா
தும், நாகமாத்தியனான சோப்பாரும், யோ
புக்கு நேரிட்ட தீமைகள் யாவையும் கேள்
விப்பட்டபோது, அவனுக்காகப் பரிதபிக்க
வும், [18]அவனுக்கு ஆறுதல்சொல்லவும், ஒருவ
ரோடொருவர் யோசனை பண்ணிக்கொண்டு,
அவரவர் தங்கள் ஸ்தலங்களிலிருந்து வந்தார்
கள். அவர்கள் தூரத்தில் வருகையில் தங் 12
கள் கண்களை ஏறெடுத்துப் பார்த்தபோது,
அவனை உருத்தெரியாமல், சத்தமிட்டு அழுது,
அவரவர் தங்கள் சால்வையைக் கிழித்து, வா
னத்தைப் பார்த்து: தங்கள் தலைகள்மேல்
புழுதியைத் [19]தூற்றிக்கொண்டு, வந்து, 13
அவன் துக்கம் மகா கொடிய துக்கம் என்று
கண்டு, ஒருவரும் அவனோடு ஒரு வார்த்தை
யையும் பேசாமல், †இரவு பகல் ஏழுநாள்,
அவனோடேகூடத் தரையிலே உட்கார்ந்திருந்
தார்கள்.

அதற்குப்பின்பு யோபு தன் வாயைத் **3**
திறந்து, தான் பிறந்த நாளைச் சபித்து,
வசனித்துச் சொன்னது என்னவென்றால்: 2
நான் பிறந்த நாளும் [20]ஒரு ஆண்பிள்ளை 3
உற்பத்தியாயிற்றென்று சொல்லப்பட்ட ராத்
திரியும் அழிவதாக. அந்த நாள் அந்தகாரப் 4
படுவதாக; தேவன் உயரத்திலிருந்து அதை
விசாரியாமலும், ஒளி அதின்மேல் பிரகாசி
யாமலும், அந்தகாரமும் மரண இருளும் 5
அதைக் கறைப்படுத்தி, மப்பு அதை மூடி,
மந்தாரநாளின் பயங்கரங்கள் அதை அருக்
களிப்பாக்குவதாக.

அந்த ராத்திரியை அந்தகாரம் பிடிப்ப 6
தாக; வருஷத்தின் நாட்களில் அது சந்தோ
ஷப்படுகிற நாளா யிராமலும், மாதங்களின்
கணக்கிலே அது வராமலும் போவதாக.
அந்த ராத்திரி தனிமையாயிருப்பதாக; அதி 7
லே கெம்பீரசத்தம் இல்லாமற்போவதாக.
நாளைச் சபிக்கிறவர்களும், ‡லிவியாதானை 8
எழும்பப்பண்ணத்தக்கவர்களும், அதைச் சபி
ப்பார்களாக. அதின் அஸ்தமன காலத்தில் 9
தோன்றிய நட்சத்திரங்கள் இருண்டு, அது
எதிர்பார்த்திருந்த வெளிச்சம் உண்டாகாம
லும், விடியற்காலத்து வெளுப்பை அது கா
ணாமலும் இருப்பதாக. நான் இருந்த கர்ப் 10
பத்தின் வாசலை அது அடைக்காமலும், என்
கண்கள் காண்கிற வருத்தத்தை மறைத்து
விடாமலும் இருந்ததே.

நான் கர்ப்பத்தில்தானே அழியாமலும், 11
[21]கர்ப்பத்திலிருந்து புறப்படுகிறபோதே சாகாம
லும் போனதென்ன? என்னை ஏந்திக்கொள்ள 12
மடியும், [22]நான் பாலுண்ண ஸ்தனங்களும்
உண்டாயிருந்ததென்ன? அப்படி யில்லா 13
திருந்தால், அசையாமல் கிடந்து அமர்ந்தி
ருந்து, பாழ்நிலங்களில் தங்களுக்கு மாளி 14
கையைக் [23]கட்டின பூமியின் ராஜாக்களோடும்
மந்திரிமார்களோடும், அல்லது, பொன்னை 15
உடையவர்களும், தங்கள் வீடுகளை வெள்

[1] ஆதி. 37. 29
[2] 1 பே. 5. 6
[3] சங். 49. 17. பிர. 5. 15. 1 தீமோ. 6. 7
[4] பிர. 5. 19. புல. 3. 38. யாக். 1. 17
[5] மத். 20. 15
[6] சங். 89. 38—52. 1 தெச. 5. 18
[7] 2. 10
[8] 1. 6. மு.
[9] 27. 5, 6. சங். 26. 1: 41. 12
* உடல்.
[10] மத். 6. 25
[11] 19. 20
[12] ஏசா. 1. 6
[13] மத். 11. 21
[14] 21. 15
[15] ரோ. 12. 12. யாக். 5. 10, 11
[16] சங். 39. 1
[17] நீதி. 17. 17
[18] ரோ. 12. 15
[19] நெகே. 9. 1. புல. 2. 10
† ஆதி. 50. 10
[20] 10. 18. மு. எரே. 20. 14
‡ முதலை அல்லது புலம்பலிலிருக்கிறவர்கள். எரே. 9. 17–20
[21] 10. 18
[22] ஆதி. 30. 3. ஏசா. 66. 12
[23] 15. 28

ளியினல் நிரப்பினவர்களுமான பிரபுக்களோ
டுங்கூட நான் இப்பொழுது தூங்கி இளைப்
16 பாறுவேனே. அல்லது, வெளிப்படாத முதி
ராப் பிண்டம்போலவும், [1]வெளிச்சத்தைக்
காணாத சிசுக்கள் போலவும் இருப்பேனே.
17 துன்மார்க்கருடைய தொந்தரவு அங்கே ஓய்ந்
திருக்கிறது; பெலனற்று விடாய்த்துப்போன
18 வர்கள் அங்கே இளைப்பாறுகிறார்கள். கட்
டுண்டிருந்தவர்கள் அங்கே ஏகமாக அமைந்
திருக்கிறார்கள்; ஒடுக்குகிறவனுடைய சத்தம்
19 அங்கே கேட்கப்படுகிறதில்லை. சிறியவனும்
பெரியவனும் அங்கே சரியாயிருக்கிறார்கள்;
அடிமை தன் எஜமானுக்கு நீங்கலாயிருக்
கிறான்.
20 மரணத்துக்கு ஆசையாய்க் காத்திருந்து,
[2]புதையலைத் தேடுகிறதுபோல [3]அதைத் தேடி
21 யும் அடையாமற்போகிறவர்களும், பிரே
தக்குழியைக் கண்டுபிடித்ததினால் மிகவும் களி
22 கூர்ந்து, அதற்காகச் சந்தோஷப்படுகிற நிர்ப்
பாக்கியருமாகிய இவர்களுக்கு வெளிச்சமும்,
மனச்சஞ்சலமுள்ள இவர்களுக்கு ஜீவனும்
23 கொடுக்கப்படுகிறதினால் பலன் என்ன? தன்
வழியைக் காணக்கூடாதபடிக்கு, தேவனால்
[4]வளைந்துகொள்ளப்பட்டவனுக்கு வெளிச்சத்
24 தினால் பலன் என்ன? என் போஜனத்
துக்கு முன்னே எனக்குப் பெருமூச்சு உண்
டாகிறது; என் கதறுதல் வெள்ளம்போல்
25 புரண்டுபோகிறது. நான் பயந்த காரியம்
எனக்கு நேரிட்டது; நான் அஞ்சினது என
26 க்கு வந்தது. எனக்குச் சுகமுமில்லை, இளைப்
பாறுதலுமில்லை, அமைதலு மில்லை; எனக்
குத் தத்தளிப்பே நேரிட்டது.

4 அப்பொழுது தேமானியனாகிய எலிப்
2 பாஸ் பிரதியுத்தரமாக: நாங்கள், உம்முட
னே பேசத் துணிந்தால், ஆயாசப்படுவீரோ?
ஆனாலும் பேசாமல் அடக்கிக்கொள்ளத்தக்க
3 வன் யார்? இதோ, நீர் அநேகருக்குப் புத்தி
சொல்லி, [5]இளைத்த கைகளைத் திடப்படுத்தி
4 னீர். விழுகிறவனை உம்முடைய வார்த்
தைகளால் நிற்கப்பண்ணி, தள்ளாடுகிற
5 முழங்கால்களைப் [6]பலப்படுத்தினீர். இப்
பொழுதோ துன்பம் உமக்கு நேரிட்டபடி
யினால் ஆயாசப்படுகிறீர்; அது உம்மைத் தொட்
6 டதினால் கலங்குகிறீர். உம்முடைய தேவ
பக்தி உம்முடைய உறுதியாயும், உம்முடைய
வழிகளின் உத்தமம் உம்முடைய நம்பிக்கை
7 யாயும் இருக்கவேண்டியதல்லவோ? குற்ற
மில்லாமல் அழிந்தவன் உண்டோ? [7]சன்மார்க்
கர் அதம்பண்ணப்பட்டது எப்போ? இதை
8 நினைத்துப்பாரும். நான் கண்டிருக்கிறபடி,
அநியாயத்தை உழுது, [8]தீவினையை விதைத்
9 தவர்கள், அதையே அறுக்கிறார்கள். தேவ
னுடைய சுவாசத்தினாலே அவர்கள் அழிந்து,
[9]அவருடைய நாசியின் காற்றினாலே நிர்மூல
10 மாகிறார்கள். சிங்கத்தின் கெர்ச்சிப்பும், துஷ்ட
சிங்கத்தின் முழக்கமும் அடங்கும்; [10]பால சிங்
11 கங்களின் பற்களும் தகர்ந்துபோம். கிழச்

1 சங். 58. 8
2 வெளி. 9. 6
3 நீதி. 2. 4
4 19. 8. புல. 3. 7
5 ஏசா. 35. 3
6 எபி. 12. 12
7 சங். 37. 25
8 நீதி. 22. 8. கலா. 6. 7, 8
9 கோபத்தினாலே. 15. 30. ஏசா. 11. 4. 2 தெச. 2. 8
10 சங். 58. 6
11 9. 2
12 2 பே. 2. 4
13 2 கொ. 4. 7; 5. 1
14 சங். 90. 5, 6
15 சங். 146. 3, 4. ஏசா. 2. 22
* குரோதம்.
16 சங். 37. 35
17 ஆதி. 3. 17—19. 1 கொ. 10. 13
18 சங். 11. 33

சிங்கம் இரையில்லாமையால் மாண்டுபோம்,
பாலசிங்கங்கள் சிதறுண்டுபோம்.

இப்போதும் ஒரு வார்த்தை என்னிடத்தில் 12
ரகசியமாய் அறிவிக்கப்பட்டது, அதினுடைய
மெல்லிய ஓசை என் செவியில் விழுந்தது.
மனுஷர்மேல் அயர்ந்த நித்திரை இறங்குகை 13
யில், ராத்தரிசனங்களில் பலவித தோற்றங்
கள் உண்டாகும்போது, திகிலும் நடுக்கமும் 14
என்னைப் பிடித்தது, என் எலும்புகளெல்லாம்
நடுங்கினது. அப்பொழுது ஒரு ஆவி என் 15
முகத்துக்கு முன்பாகக் கடந்தது, என் உட
லின் மயிர் சிலிர்த்தது. அது ஒரு உருப் 16
போல என் கண்களுக்கு முன்நின்றது, ஆனா
லும் அதின் ரூபம் இன்னதென்று விளங்க
வில்லை; அமைதலுண்டாயிற்று, அப்பொழுது
நான் கேட்ட சத்தமாவது: மனுஷன் 17
தேவனைப் பார்க்கிலும் நீதிமானாயிருப்பானோ?
[11]மனுபுத்திரன் தன்னை உண்டாக்கினவரைப்
பார்க்கிலும் சுத்தமாயிருப்பானோ? கேளும், 18
அவர் தம்முடைய பணிவிடைக்காரரிடத்தில்
நம்பிக்கை வைப்பதில்லை; தம்முடைய தூத
ரின்மேலும் [12]புத்தியீனத்தைச் சுமத்துகிறாரே.
புழுதியில் அஸ்திபாரம் போட்டு, [13]மண் வீடுக 19
ளில் வாசம்பண்ணி, பொட்டுப்பூச்சியால்
அரிக்கப்படுகிறவர்கள்மேல் அவர் நம்பிக்கை
வைப்பது எப்படி? காலைமுதல் மாலைவரைக் 20
கும் மடிந்து, [14]கவனிப்பார் ஒருவருமில்லாமல்,
நித்திய அழிவடைகிறார்கள். அவர்களிலிருக் 21
கிற அவர்களுடைய மேன்மை போய்விடுமல்
லவோ? [15]ஞானமடையாமல் சாகிறார்களே
என்று சொன்னான்.

இப்போது கூப்பிடும், உமக்கு உத்தரவு 5
கொடுப்பார் உண்டோ பார்ப்போம்? பரிசுத்த
வான்களில் யாரை நோக்கிப் பார்ப்பீர்? கோ 2
பம் நிர்மூடனைக் கொல்லும்; *பொறாமை புத்
தியில்லாதவனை அதம்பண்ணும். நிர்மூடன் 3
ஒருவன் வேரூன்றுகிறதை நான்கண்டு, [16]உட
னே அவன் வாசஸ்தலத்தைச் சபித்தேன்.
அவன் பிள்ளைகள் ரட்சிப்புக்குத் தூரமாகி, 4
தப்புவிப்பாரில்லாமல், வாசலிலே நொறுக்
கப்பட்டார்கள். பசித்தவன் அவன் விளைச் 5
சலை முட்செடிகளுக்குள்ளுமிருந்து பறித்துத்
தின்றான்; பறிகாரன் அவன் ஆஸ்தியை
விழுங்கினான். தீங்கு புழுதியிலிருந்து உண் 6
டாகிறது மில்லை; வருத்தம் மண்ணிலிருந்து
முளைக்கிறதுமில்லை. அக்கினிப்பொறிகள் 7
மேலேபறக்கிறதுபோல, [17]மனுஷன் வருத்தம்
அநுபவிக்கப் பிறந்திருக்கிறான்.

ஆனாலும் நான் தேவனை நாடி, என் நியா 8
யத்தை தேவனிடத்தில் ஒப்புவிப்பேன். ஆரா 9
ய்ந்து முடியாத பெரிய காரியங்களையும்,
[18]எண்ணிமுடியாத அதிசயங்களையும் அவர்
செய்கிறார். தாழ்ந்தவர்களை உயரத்தில் வை 10
த்து, துக்கிக்கிறவர்களை ரட்சித்து உயர்த்துகி
றார். அவர் பூமியின்மேல் மழையை வரு 11
ஷிக்கப்பண்ணி, வெளிநிலங்களின்மேல் தண்
ணீர்களை வருவிக்கிறார். தந்திரக்காரரின் 12

கைகள் காரியத்தை முடிய நடத்தக்கூடாதப
டிக்கு, [1]அவர்களுடைய உபாயங்களை அவர்
13 அபத்தமாக்குகிறார். அவர் ஞானிகளை அவர்
களுடைய தந்திரத்திலே பிடிக்கிறார்; [2]திரி
யாவரக்காரரின் ஆலோசனை கவிழ்க்கப்படும்.
14 அவர்கள் பகற்காலத்திலே அந்தகாரத்துக்குள்
ளாகி, மத்தியான வேளையிலே இரவில் தடவு
15 கிறதுபோல தடவித் திரிகிறார்கள். ஆனாலும்
எளியவனை அவர்கள் வாயிலிருக்கிற பட்ட
யத்துக்கும், [3]பெலவானின் கைக்கும் விலக்கி
16 ரட்சிக்கிறார். அதினால் தரித்திரனுக்கு நம்
பிக்கை உண்டு; தீமையானது தன் வாயை
மூடும்.
17 இதோ, தேவன் தண்டிக்கிற மனுஷன்
பாக்கியவான்; [4]ஆகையால் சர்வ வல்லவரு
டைய சிட்சையை அற்பமாக எண்ணாதிரும்.
18 அவர் காயப்படுத்திக் காயங்கட்டுகிறார்; [5]அவர்
அடிக்கிறார், அவருடைய கை ஆற்றுகிறது.
19 ஆறு இக்கட்டுகளுக்கு உம்மை [6]நீங்கலாக்கு
வார்; ஏழாவதிலும் பொல்லாப்பு உம்மைத்
20 தொடாது. பஞ்சகாலத்திலே [7]அவர் உம்மை
மரணத்துக்கும், யுத்தத்திலே பட்டயத்தின்
21 வெட்டுக்கும் விலக்கி மீட்பார். நாவின் சவுக்
குக்கும் மறைக்கப்படுவீர்; [8]பாழாக்குதல் வரும்
22 போதும் பயப்படாமலிருப்பீர். பாழாக்குதலை
யும் பஞ்சத்தையும் பார்த்து நகைப்பீர்; காட்டு
23 மிருகங்களுக்கும்பயப்படாமலிருப்பீர். வெளி
யின் கல்லுகளோடும் உமக்கு உடன்படிக்கை
யிருக்கும்; [9]வெளியின் மிருகங்களும் உம்
24 மோடே சமாதானமாயிருக்கும். உம்முடைய
கூடாரம் சமாதானத்தோடிருக்கக் காண்பீர்;
உம்முடைய வாசஸ்தலத்தை விசாரிக்கும்
25 போது குறைவைக் காணமாட்டீர். உம்மு
டைய சந்தானம் பெருகி, உம்முடைய சந்ததி
யார் பூமியின் பூண்டுகளைப்போல இருப்பார்
26 கள் என்பதை அறிந்துகொள்வீர். தானியம்
ஏற்றகாலத்திலே அம்பாரத்தில் சேருகிறது
போல, [10]முதிர்வயதிலே கல்லறையில் சேரு
27 வீர். இதோ, நாங்கள் ஆராய்ந்து அறிந்தது
இதுதான்; [11]காரியம் இப்படியிருக்கிறது;
இதை நீர் கேட்டு உமக்கு நன்மையுண்டாக
அறிந்துகொள்ளும் என்றான்.

6 2 யோபு பிரதியுத்தரமாக: என் சஞ்சலம்
நிறுக்கப்பட்டு, என் நிர்ப்பந்தம் எல்லாம் தரா
சிலே வைக்கப்பட்டால் நலமாயிருக்கும்.
3 அப்பொழுது அது கடற்கரை மணலைப்பார்க்
கிலும் பாரமாயிருக்கும்; [12]ஆகையால் என்
4 துக்கம் சொல்லிமுடியாது. சர்வவல்லவரின்
அம்புகள் எனக்குள் [13]தைத்திருக்கிறது; அவை
களின் விஷம் என் உயிரைக் குடிக்கிறது;
தேவனால் உண்டாகும் பயங்கரங்கள் [14]எனக்கு
5 முன்பாக அணியணியாய் நிற்கிறது. புல்லி
ருக்கிற இடத்திலே காட்டுக்கழுதை கத்து
மோ? தனக்குத் *தீவனமிருக்கிற இடத்திலே
6 எருது கதறுமோ? ருசி யில்லாத பதார்த்தத்
தை உப்பில்லாமல் சாப்பிடக்கூடுமோ? முட்
டையின் வெள்ளைக்கருவில் சுவை உண்டோ?
உங்கள் வார்த்தைகளை என் ஆத்துமா தொட 7
மாட்டேன் என்கிறது; அவைகள் அரோசிக
மான போஜனம்போல் இருக்கிறது.
ஆ, என் மன்றாட்டு எனக்கு அருளப் 8
பட்டு, நான் வாஞ்சிப்பதை தேவன் எனக்
குத் தந்து, தேவன் என்னை நொறுக்கச் சித் 9
தமாய், தம்முடைய கையை நீட்டி [15]என்னைத்
துண்டித்துப் போட்டால் நலமாயிருக்கும்.
அப்பொழுதாவது எனக்கு ஆறுதல் இருக் 10
குமே; அப்பொழுது என்னைத் தப்பவிடாத
நோவிலே மரத்திருப்பேன்; [16]பரிசுத்தருடைய
வார்த்தைகளை நான் மறைத்துவைக்கவில்லை,
அவர் என்னைத் தப்பவிடாராக. நான் காத் 11
துக்கொண்டிருக்க என் பெலன் எம்மாத்திரம்?
என் ஜீவனை நீடித்திருக்கப்பண்ண என்
முடிவு எப்படிப்பட்டது? என் பெலன் கற் 12
களின் பெலனோ? என் மாம்சம் வெண்கல
மோ? எனக்கு உதவியானது ஒன்றும் இல் 13
லையல்லவோ? சகாயம் என்னைவிட்டு நீங்
கிற்றே.
உபாதிக்கப்படுகிறவனுக்கு [17]அவனுடைய 14
சிநேகிதனால் தயை கிடைக்கவேண்டும்; அவ
னோ சர்வவல்லவருக்குப் பயப்படாதேபோகி
றான். என் சகோதரர் காட்டாறுபோல 15
மோசம் பண்ணுகிறார்கள்; [18]ஆறுகளின் வெள்
ளத்தைப்போலக் கடந்துபோகிறார்கள். அவை 16
கள் குளிர்காலப் பனிக்கட்டியினாலும், அதில்
விழுந்திருக்கிற உறைந்த மழையினாலும் கல
ங்கலாகி, உஷ்ணங்கண்டவுடனே உருகி 17
வற்றி, அனல்பட்டவுடனே தங்கள் ஸ்தலத்
தில் உருவழிந்துபோகின்றன. அவைகளு 18
டைய வழிகளின் போக்குகள் இங்குமங்கும்
பிரியும்; அவைகள் விருதாவிலே பாவி ஒன்
றும் இல்லாமல் போகும். தேமாவின் [19]பய 19
ணக்காரர் தேடி, சேபாவின் பயணக்கூட்டங்
கள் அவைகள்மேல் நம்பிக்கை வைத்து, தாங் 20
கள் இப்படி நம்பினதினாலே வெட்கப்படுகி
றார்கள்; அவ்விடமட்டும் வந்து கலங்கிப்போ
கிறார்கள். அப்படியே நீங்களும் இப்பொ 21
ழுது ஒன்றுக்கும் [20]உதவாமற் போனீர்கள்;
என் ஆபத்தைக் கண்டு பயப்படுகிறீர்கள்.
எனக்கு ஏதாகிலும் கொண்டு வாருங்கள் என் 22
றும், உங்கள் ஆஸ்தியிலிருந்து எனக்கு யா
தொரு வெகுமானம் கொடுங்கள் என்றும்;
அல்லது சத்துருவின் கைக்கு என்னைத்தப்புவி 23
யுங்கள், வல்லடிக்காரரின் கைக்கு என்னை நீங்
கலாக்கி மீட்டுவிடுங்கள் என்றும் நான் சொன்
னதுண்டோ?
எனக்கு உபதேசம்பண்ணுங்கள், நான் 24
மவுனமாயிருப்பேன்; நான் எதிலே தவறினே
னோ அதை எனக்குத் தெரியப்படுத்துங்கள்.
செம்மையான வார்த்தைகளில் [21]எவ்வளவுவல் 25
லமை உண்டு? உங்கள் கடிந்துகொள்ளுதலி
னால் காரியம் என்ன? கடிந்துகொள்ள நீங் 26
கள் வார்த்தைகளை யோசித்து, நம்பிக்கையற்ற
வனுடைய வார்த்தைகளைக் காற்றிலே விட்டு
விடுகிறீர்களோ? இப்படிச் செய்து திக்கற்ற 27

[1] நெகே. 4. 15
[2] 1 கொ. 3. 19
[3] சங். 107. 41, 42
[4] எபி. 12. 5. யாக். 1. 12
[5] உபா. 32. 39
[6] சங். 91. 3
[7] சங். 37. 19
[8] சங். 31. 20
[9] ஏசா. 11. 9
[10] நீதி. 9. 11
[11] நீதி. 2. 3—5
[12] நீதி. 27. 3
[13] சங். 38. 2
[14] சங். 88. 15, 16
* ஆகாரம்.
[15] 1 இரா. 19. 4. யோனா. 4. 3, 8
[16] ஏசா. 57. 15. அப். 20. 20, 27
[17] நீதி. 17. 17. எபி. 13. 3
[18] சங். 38. 11
[19] ஆதி. 25. 15
[20] 13. 4
[21] பிர. 12. 11

வன்மேல் நீங்கள் விழுந்து, [1]உங்கள் சிநேகித
28 னுக்குப் படுகுழியை வெட்டுகிறீர்கள். இப்
போதும் உங்களுக்குச் சித்தமானால் என்னை
நோக்கிப் பாருங்கள்; அப்பொழுது நான் பொ
ய்சொல்லுகிறேனோ என்று உங்களுக்குப்
29 பிரத்தியட்சமாய் விளங்கும். நீங்கள் திரும்
புங்கள், அக்கிரமம் காணப்படாதிருக்கும்;
[2]திரும்புங்கள் என் நீதி அதிலே விளங்கும்.
30 என் நாவிலே அக்கிரமம் உண்டோ? [3]என்
வாய் ஆகாதவைகளைப் *பகுத்தறியாதோ?

7 பூமியிலே போராட [4]மனுஷனுக்குக் குறிக்
கப்பட்ட காலம் உண்டல்லவோ? அவன் நாட்
கள் ஒரு கூலிக்காரன் நாட்களைப்போல் இருக்
2 கிறதல்லவோ? ஒரு வேலையாள் நிழலை
வாஞ்சித்து, ஒரு கூலிக்காரன் தன் கூலியை
3 வரப்பார்த்திருக்கிறதுபோல, மாயையான
மாதங்கள் என்னுடைய சுதந்தரமாகி, சஞ்சல
மான ராத்திரிகள் [5]எனக்குக் குறிக்கப்பட்
4 டது. நான் படுத்துக்கொள்ளுகிறபோது,
[6]எப்பொழுது எழுந்திருப்பேன்? ராக்காலம்
எப்பொழுது முடியும் என்று சொல்லி, கிழக்கு
வெளுக்குமட்டும் அரண்டு புரளுகிறதினால்
5 எனக்குப் போதுமென்றுபோகிறது. என்
மாம்சம் [7]பூச்சிகளினாலும், அடைபற்றின புழு
தியினாலும் மூடப்பட்டிருக்கிறது; என் தோல்
6 வெடித்து அருவருப்பாயிற்று. என் நாட்
கள் நெய்கிறவன் எறிகிற [8]நாடாவிலும் தீவிர
மாய் ஓடுகிறது; அவைகள் நம்பிக்கையில்லா
7 மல் முடிந்துபோகும். என் பிராணன் [9]காற்
றைப்போலிருக்கிறதென்றும், என் கண்கள்
இனி நன்மையைக் காணப்போகிறதில்லையெ
8 ன்றும் நினைத்தருளும். இப்போது என்னைக்
காண்கிறவர்களின் கண்கள் இனி என்னைக்
காண்பதில்லை; உம்முடைய கண்கள் என்
மேல் நோக்கமாயிருக்கிறது; நானோ இல்லா
9 மற்போகிறேன். மேகம் பறந்துபோகிறது
போல, [10]பாதாளத்தில் இறங்குகிறவன் இனி
10 ஏறிவரான். இனி தன் வீட்டுக்குத் திரும்
பான், [11]அவன் ஸ்தலம் இனி அவனை அறி
11 யாது. ஆகையால் நான் என் வாயை அடக்
காமல், என் ஆவியின் வேதனையினால் பேசி,
[12]என் ஆத்துமத்தின் கசப்பினால் அங்கலாய்ப்
பேன்.
12 தேவரீர் என்மேல் காவல் வைக்கிறதற்கு
நான் சமுத்திரமோ? நான் ஒரு திமிங்கிலமோ?
13 என் கட்டில் எனக்கு ஆறுதல் கொடுக்கும்
என்றும், என் படுக்கை என் தவிப்பை ஆற்
14 றும் என்றும் நான் சொல்வேனாகில், நீர்
சொப்பனங்களால் என்னைக் கலங்கப்பண்ணி,
தரிசனங்களால் எனக்குத் திகிலுண்டாக்குகி
15 றீர். அதினால் என் ஆத்துமா, நெருக்குண்டு
சாகிறதையும், என் எலும்புகளோடே உயி
ரோடிருக்கிறதைப்பார்க்கிலும் மரணத்தையும்
16 விரும்புகிறது. இப்படியிருக்கிறதை அரோ
சிக்கிறேன்; [13]எந்நாளும் உயிரோடிருக்க
விரும்பேன், என்னை விட்டுவிடும்; என் நாட்
17 கள் மாயைதானே. மனுஷனை நீர் ஒரு
பொருட்டாக எண்ணுகிறதற்கும், [14]அவன்
மேல் சிந்தைவைக்கிறதற்கும், காலைதோறும் 18
அவனை விசாரிக்கிறதற்கும், நிமிஷந்தோறும்
அவனைச் சோதிக்கிறதற்கும், அவன் எம்மாத்
திரம்? நான் என் உமிழ்நீரை விழுங்காதபடி 19
எத்தனைகாலம் [15]என்னை நெகிழாமலும்; என்
னைவிடாமலும் இருப்பீர். மனுஷரைக் காப் 20
பவரே, [16]பாவஞ்செய்தேனானால் உமக்கு நான்
செய்யவேண்டியது என்ன? நான் எனக்குத்
தானே பாரமாயிருக்கும்படிக்கு, நீர் என்னை
உமக்கு இலக்காக வைத்தது என்ன? என் 21
மீறுதலை நீர் மன்னியாமலும், என் அக்கிர
மத்தை நீக்காமலும் இருக்கிறது என்ன? [17]இப்
பொழுதே மண்ணில் படுத்துக்கொள்வேன்;
விடியற்காலத்திலே [18]என்னைத் தேடுவீரானால்
நான் இரேன் என்றான்.

அப்பொழுது சூகியனான பில்தாத் பிரதி 8
யுத்தரமாக: நீர் எந்தமட்டும் இப்படிப்பட்ட 2
வைகளைப் பேசுவீர்? எதுவரைக்கும் உம்மு
டைய வாயின் வார்த்தைகள் பலமான காற்
றைப்போலிருக்கும்? தேவன் [19]நியாயத்தைப் 3
புரட்டுவாரோ? சர்வவல்லவர் நீதியைப்புரட்டு
வாரோ? உம்முடைய பிள்ளைகள் அவருக்கு 4
விரோதமாய்ப் பாவஞ்செய்திருந்தாலும், அவர்
களுடைய பாதகத்தின் ஆக்கினைக்கு அவர்களை
அவர் ஒப்புக்கொடுத்திருந்தாலும், நீர் தேவனை 5
[20]ஏற்கனவே தேடி, சர்வவல்லவரை நோக்கி
விண்ணப்பம்செய்து, சுத்தமும் செம்மையு 6
மாய் இருந்தீரேயானால், அப்பொழுது அவர்
உமக்காக விழித்து நீதியுள்ள உம்முடைய
வாசஸ்தலத்தைச் சாங்கோபாங்கமாக்குவார்:
உம்முடைய துவக்கம் அற்பமாயிருந்தாலும், 7
உம்முடைய முடிவு சம்பூரணமாயிருக்கும்.
ஆகையால், நீர் முந்தின தலைமுறையாரிட 8
த்தில் விசாரித்து, [21]அவர்கள் முன்னோர்களின்
செய்தியை ஆராய்ந்துபாரும். நாம் நேற்று 9
உண்டானவர்கள், [22]ஒன்றும் அறியோம்;
பூமியின்மேல் நம்முடைய நாட்கள் [23]நிழலைப்
போலிருக்கிறது. அவர்கள் உமக்கு உபதே 10
சித்து, உமக்குத் தெரிவித்து, தங்கள் இருதயத்
திலிருக்கும் நியாயங்களை வெளிப்படுத்துவார்
கள் அல்லவோ? சேறில்லாமல் நாணல் ஓங்கி 11
வளருமோ? தண்ணீரில்லாமல் கோரைப்புல்
முளைக்குமோ? அது இன்னும் பச்சையாயிருக் 12
கும்போதே, அறுக்கப்படாதிருந்தும் மற்ற எந்
தப் புல்லைப்பார்க்கிலும் சீக்கிரமாய் [24]வாடிப்
போம் அல்லவோ? தேவனை மறக்கிற எல்லா 13
ருடைய வழிகளும் அப்படியே இருக்கும்;
மாயக்காரரின் [25]நம்பிக்கை அழிந்துபோம்.
அவனுடைய வீண் எண்ணம் அற்றுப்போய், 14
அவனுடைய நம்பிக்கை சிலந்திப்பூச்சி †வீடு
போலிருக்கும். ஒருவன் அதின் வீட்டின் 15
மேல் சாய்ந்தால், [26]அது நிலைக்கமாட்டாது,
அதைப்பிடித்தால், அது நிற்காது. வெயில் 16
எறிக்காததற்கு முன்னே அவன் பச்சைச்
செடி, அதின் கொடிகள் அவன் தோட்டத்
தின்மேலே படரும்; அதின் வேர்கள் கற் 17

[1] சங். 57. 6
[2] 17. 10
[3] 12. 11
* ருசித்தறியாதோ?
[4] 14. 5, 14. சங். 39. 4
[5] சங். 6. 6
[6] உபா. 28. 67
[7] ஏசா. 14. 11
[8] யாக். 4. 14
[9] ஆதி. 42. 36, சங். 78. 39
[10] 2 சாமு. 12. 23
[11] சங். 49. 12, 14
[12] 1 சாமு. 1. 10
[13] 10. 1, 20
[14] சங். 8. 4. எபி. 2. 6
[15] சங். 80. 4
[16] சங். 36. 6, புல. 3. 12
[17] மீகா. 7. 18, 19. 1 யோவா. 1. 9
[18] சங். 103. 15
[19] உபா. 32. 4. சங். 89. 14 தானி. 9. 14 ரோ. 3. 5, 6
[20] 11. 13
[21] உபா. 4. 32; 32. 7
[22] சங். 39. 5
[23] 1 நாளா. 29. 15
[24] சங். 129. 6. மத். 13. 20
[25] 11. 20. நீதி. 10. 28
† கூடு. ஏசா. 59. 5, 6
[26] மத். 7. 26

18 குவியலில் சிக்கி, கற்பாறையை நாடும். அது
அதினிடத்தில் இராதபடிக்கு நிர்மூலமான
பின், அது இருந்த இடம் உன்னை நான் கண்
19 டதில்லையென்று [1]மறுதலிக்கும். இதோ,
அவன் வழியின் மகிழ்ச்சி இப்படியே போகி
றது; ஆனாலும் *வேறே பேர் [2]மண்ணிலிருந்து
முளைப்பார்கள்.
20 இதோ, தேவன் உத்தமனை வெறுக்கிறது
மில்லை, [3]பொல்லாதவர்களுக்குக் கைகொடுக்
21 கிறதுமில்லை. இனி அவர் உம்முடைய வாயை
நகைப்பினாலும், உம்முடைய உதடுகளைக்
22 கெம்பீரத்தினாலும் நிரப்புவார். உம்மைப்
பகைக்கிறவர்கள் [4]வெட்கத்தால் மூடப்படு
வார்கள்; துன்மார்க்கருடைய கூடாரம் அழிந்
துபோகும் என்றான்.

**9** 2 அதற்கு யோபு பிரதியுத்தரமாக: ஆம்,
காரியம் இப்படியிருக்கிறது என்று அறி
வேன்; தேவனுக்கு முன்பாக மனுஷன் [5]நீதி
3 மானாயிருப்பதெப்படி? அவர் அவனோடே
வழக்காடச் சித்தமாயிருந்தால், ஆயிரத்தில்
ஒன்றுக்காகிலும் அவருக்கு உத்தரவு சொல்ல
4 மாட்டானே. அவர் இருதயத்தில் [6]ஞான
முள்ளவர், பெலத்தில் பராக்கிரமமுள்ளவர்;
அவருக்கு விரோதமாகத் தன்னைக் கடினப்
5 படுத்தி வாழ்ந்தவன் யார்? அவர் பர்வதங்
களைச் சடிதியாய்ப் பேர்க்கிறார்; தம்முடைய
கோபத்தில் அவைகளைப் புரட்டிப்போடுகி
6 றார். பூமியின் தூண்கள் அதிரத்தக்கதாய்
அதை அதின் ஸ்தானத்தினின்று [7]அசையப்
7 பண்ணுகிறார். அவர் சூரியனுக்குக் கட்டளை
யிட அது உதிக்காதிருக்கும்; [8]அவர் நட்சத்
8 திரங்களை மறைத்துப்போடுகிறார். அவர் ஒரு
வரே வானங்களை விரித்து, [9]சமுத்திர அலைக
9 ளின்மேல் நடக்கிறவர். அவர் துருவச்சக்கர
நட்சத்திரங்களையும், [10]மிருகசீரிஷத்தையும்,
அறுமீனையும், தட்சண மண்டலங்களையும்
10 உண்டாக்கினவர். ஆராய்ந்து முடியாத பெ
ரிய காரியங்களையும், எண்ணிமுடியாத அதி
11 சயங்களையும் அவர் செய்கிறார். இதோ, அவர்
என் அருகில் போகிறார், [11]நான் அவரைக்
காணேன்; அவர் கடந்துபோகிறார், நான்
12 அவரை அறியேன். இதோ, அவர் பறித்துக்
கொண்டுபோகிறார், அவரை மறிப்பவன்யார்?
நீர் என்ன செய்கிறீர் என்று [12]அவரைக் கேட்
13 பவன் யார்? தேவன் தம்முடைய கோபத்தைத்
திருப்பமாட்டார்; [13]ஒருவருக்கொருவர் துணை
நிற்கிற அகங்காரிகள் அவருக்கு அடங்கவேண்
14 டும். இப்படியிருக்க, அவருக்கு மறுமொழி
கொடுக்கவும், அவரோடே வழக்காடும் வார்த்தை
களைத் தெரிந்துகொள்ளவும் நான் எம்மாத்திரம்?
15 நான் நீதிமானாயிருந்தாலும் அவரோடே வழ
க்காடாமல், என் நியாயாதிபதியினிடத்தில்
16 [14]இரக்கத்துக்குக் கெஞ்சுவேன். நான் கெஞ்ச,
அவர் எனக்கு உத்தரவு அருளினாலும், அவர்
என் விண்ணப்பத்துக்குச் செவிகொடுத்தார்
17 என்று நம்பேன். அவர் புசலினால் என்னை
முறிக்கிறார்; முகாந்தரமில்லாமல் அநேகம்

1 சங். 37. 36
* மனுஷர்.
2 பிர. 3. 9
3 சங். 94. 14
4 சங். 132. 18
5 சங். 143. 2. ரோ. 3. 20
6 பூதா. 25. வச.
7 எபி. 12. 26
8 யோசு. 10. 12
9 சங். 104. 2, 3. ஏசா. 40. 22, 28. மத். 14. 25
10 ஆமோ. 5. 8
11 23. 8, 9; 35. 14
12 தானி. 4. 35
13 ஏசா. 30. 7
14 34. 31
15 பிர. 9. 2, 3. எசே. 21. 3
16 2 சாமு. 15. 10
17 ஆப. 1. 8
18 யாத். 20. 7
19 எரே. 2. 22
20 பிர. 6. 10. ஏசா. 46. 2. ரோ. 9. 20
21 1 சாமு. 2. 25. சங். 106. 23
22 சங். 39. 10
23 2 இரா. 19. 4
24 சங். 143. 2. ரோ. 8. 1

காயங்களை எனக்கு உண்டாக்குகிறார். நான் 18
மூச்சுவிட எனக்கு இடங்கொடாமல், கசப்பி
னால் என்னை நிரப்புகிறார். பெலத்தைப் 19
பார்த்தால், அவரே பெலத்தவர்; நியாயத்தைப்
பார்த்தால், என் பட்சத்தில் சாட்சிசொல்லு
கிறவன் யார்? நான் என்னை நீதிமானாக்கி 20
னாலும் என் வாயே என்னைக் குற்றவாளியாக்
கும்; நான் உத்தமன் என்று சொன்னாலும்,
நான் மாறுபாடானவன் என்று அது சாட்சி
கொடுக்கும். நான் உத்தமனென்றாலும் என் 21
உள்ளத்தை நான் அறியேன்; என் ஜீவனை
அரோசிப்பேன்.
ஒரு காரியம் உண்டு, அதைச் சொல்லு 22
கிறேன்; சன்மார்க்கனையும் துன்மார்க்கனை
யும் [15]அவர் அழிக்கிறார். சவுக்கானது அசுப் 23
பிலே வாதித்துக் கொல்லும்போது, அவர்
குற்றமில்லாதவர்களின் சோதனையைப் பார்
த்து நகைக்கிறார். உலகம் துன்மார்க்கர் கை 24
யில் விடப்பட்டிருக்கிறது; [16]அதிலிருக்கிற
நியாயாதிபதிகளின் முகத்தை மூடிப்போடு
கிறார்; அவர் இதைச் செய்கிறதில்லையென்
றால், பின்னை யார் இதைச் செய்கிறார். என் 25
நாட்கள் அஞ்சற்காரர் ஓட்டத்திலும் தீவிரமா
யிருக்கிறது; அவைகள் நன்மையைக் காணா
மல் பறந்துபோம். அவைகள் வேகமாய் [17]ஓடு 26
கிற கப்பல்களைப்போலவும், இரையின்மேல்
பாய்கிற கழுகைப்போலவும் கடந்துபோகி
றது. என் அங்கலாய்ப்பை நான் மறந்து, 27
என் முகத்தின் துக்கத்தை மாற்றி, திடன்
கொள்வேன் என்று சொன்னால், என் வருத் 28
தங்களைப்பற்றிப் பயமாயிருக்கிறேன்; என்
னைக் குற்றமில்லாதவனாக [18]எண்ணமாட்டீர்
என்று அறிவேன். நான் பொல்லாதவனா 29
யிருந்தால், விருதாவாய்ப் போராடவேண்டி
யது என்ன? நான் உறைந்த மழைத் தண் 30
ணீரில் முழுகி, [19]என் கைகளைச் சவுக்காரத்தி
னால் சுத்தம்பண்ணினாலும், நீர் என்னைச் 31
சேற்றுப்பள்ளத்திலே அமிழ்த்துவீர்; அப்பொ
ழுது என் வஸ்திரமே என்னை அருவருக்கும்.
நான் அவருக்குப் பிரதியுத்தரம் சொல்லுகிற 32
தற்கும், நாங்கள் கூடி நியாயத்திற்கு வருகிற
தற்கும், [20]அவர் என்னைப்போல மனுஷன்
அல்லவே. எங்கள் இருவர்மேலும் தன் கை 33
யை வைக்கத்தக்க [21]மத்தியஸ்தன் எங்களுக்
குள் இல்லையே. அவர் தமது மிலாற்றை 34
என்னைவிட்டு அகற்றுவாராக; [22]அவருடைய
பயங்கரம் என்னைக் கலங்கப்பண்ணாதிருப்ப
தாக. அப்பொழுது நான் அவருக்குப் பயப் 35
படாமல் பேசுவேன்; இப்பொழுதோ அப்ப
டிச்செய்ய இடமில்லை.

என் ஆத்துமா ஜீவனை அரோசிக்கிறது, **10**
[23]நான் என் துயரத்துக்கு எனக்குள்ளே
இடங்கொடுத்து, என் மனச்சஞ்சலத்தினாலே
பேசுவேன். நான் தேவனை நோக்கி: என் 2
னைக் குற்றவாளியென்று தீர்க்காதிரும்; [24]நீர்
எதினிமித்தம் என்னோடே வழக்காடுகிறீர்,
அதை எனக்குத் தெரியப்படுத்தும் என்பேன்.

3 நீர் என்னை ஒடுக்கி, உம்முடைய கைகளின்
கிரியையை வெறுத்து, துன்மார்க்கரின் யோ
சனையைக் [1]கிருபையாய்ப் பார்க்கிறது உம
4 க்கு நன்றாயிருக்குமோ? மாம்சக் கண்கள்
உமக்கு உண்டோ? மனுஷன் பார்க்கிறபிர
5 காரமாய்ப் [2]பார்க்கிறீரோ? நீர் என் அக்கிர
மத்தைக் கிண்டிக்கிளப்பி, [3]என் பாவத்தை
6 ஆராய்ந்து விசாரிக்கிறதற்கு, உம்முடைய
நாட்கள் ஒரு மனுஷனுடைய நாட்களைப்
போலவும், உம்முடைய வருஷங்கள் ஒரு
புருஷனுடைய ஜீவகாலத்தைப்போலவும்
7 இருக்கிறதோ? நான் துன்மார்க்கன் [4]அல்ல
என்பது உமக்குத் தெரியும்; உம்முடைய
கைக்கு என்னைத் தப்புவிக்கிறவன் இல்லை.
8 உம்முடைய கரங்கள் என்னையும் எனக்
குரிய எல்லாவற்றையும் உருவாக்கிப் [5]படை
9 த்திருந்தும், என்னை நிர்மூலமாக்குகிறீர். களி
மண்போல என்னை உருவாக்கினீர் என்பதை
யும், [6]என்னைத் திரும்பத் தூளாகப்போகப்
பண்ணுவீர் என்பதையும் நினைத்தருளும்.
10 நீர் என்னைப் பால்போல் வார்த்து, [7]தயிர்
போல் உறையப்பண்ணினீர் அல்லவோ?
11 தோலையும் சதையையும் எனக்குத் தரித்து,
எலும்புகளாலும் நரம்புகளாலும் என்னை
12 இசைத்தீர். எனக்கு ஜீவனைத் தந்ததும் அல்
லாமல், தயவையும் எனக்குப் பாராட்டினீர்;
உம்முடைய பராமரிப்பு என் ஆவியைக் காப்
13 பாற்றினது. இவைகள் உம்முடைய உள்
ளத்தில் மறைந்திருந்தாலும், இது உமக்குள்
இருக்கிறது என்று அறிவேன்.
14 நான் பாவஞ்செய்தால், அதை நீர் என்னி
டத்தில் விசாரித்து, என் அக்கிரமத்தை என்
15 மேல் சுமத்தாமல் விடீர். நான் துன்மார்க்க
னாயிருந்தால் எனக்கு ஐயோ! [8]நான் நீதிமானா
யிருந்தாலும் என் தலையை நான் எடுக்கமாட்
டேன்; அவமானத்தால் நிரப்பப்பட்டேன்;
நீர் என் சிறுமையைப் பார்த்தருளும், அது
16 அதிகரிக்கிறது. சிங்கத்தைப்போல என்னை
வேட்டையாடி, [9]எனக்கு விரோதமாய் உமது
அதிசய வல்லமையை விளங்கப்பண்ணுகிறீர்.
17 நீர் உம்முடைய *சாட்சிகளை எனக்கு விரோத
மாய் இரட்டிக்கப்பண்ணுகிறீர்; என்மேல்
உம்முடைய கோபத்தை அதிகரிக்கப்பண்ணு
கிறீர்; போராட்டத்தின்மேல் போராட்டம்
அதிகரிக்கிறது.
18 நீர் என்னைக் கர்ப்பத்திலிருந்து புறப்படப்
பண்ணினது என்ன? ஒரு கண்ணும் என்
னைக் காணாதபடி, [10]நான் அப்பொழுதே ஜீவித்
19 துப்போனால் நலமாமே. நான் ஒருக்காலும்
இல்லாததுபோ லிருந்து, கர்ப்பத்திலிருந்து
பிரேதக்குழிக்குக் கொண்டுபோகப் பட்டிருப்
20 பேன். என் நாட்கள் கொஞ்சமல்லவோ?
21 காரிருளும் மரணாந்தகாரமுமான இருண்ட
தேசமும், இருள் சூழ்ந்த ஒழுங்கில்லாத மர
ணாந்தகாரமுள்ள தேசமும், [11]ஒளியும் இருளா
கும் தேசமுமாகிய, போனால் திரும்பிவராத
22 தேசத்துக்கு, நான் போகுமுன்னே, நான்

[1] சங். 138. 8. ஏசா. 64. 8
[2] 1 சாமு. 16. 7
[3] சங். 10. 14
[4] யோ. 21. 17
[5] சங். 119. 73
[6] ஆதி. 2. 7. ஏசா. 64. 8. எரே. 18. 6. ரோ. 9. 21
[7] சங். 139. 13, 16
[8] ஏசா. 6. 5
[9] புல. 3. 10. ஓசி. 13. 7, 8
* தண்டனைகளை.
[10] 3. 11
[11] சங். 23. 4; 39. 13; 88. 12
[12] நீதி. 10. 19
[13] 6. 30. 10. 7
[14] எஸ்றா. 9. 13
[15] பிர. 3. 11. ஏசா. 40. 28. ரோ. 11. 33
[16] வெளி. 3. 7
[17] சங். 10. 14. யோ. 2. 24, 25
[18] 1 சாமு. 7. 3
[19] சங். 101. 3
[20] ஆதி. 4. 5, 6. 1 யோ. 3. 21
[21] நீதி. 4. 18. ஏசா. 58. 8, 10
[22] சங். 45. 12
[23] உபா. 28. 65

சற்று இளைப்பாறும்படி நீர் என்னை விட்டு
ஒய்ந்திரும் என்றான்.
11 அப்பொழுது நாகமாத்தியனாகிய சோப்
பார் பிரதியுத்தரமாக: ஏராளமான வார்த் 2
தைகளுக்கு உத்தரவு சொல்லவேண்டாமோ?
[12]வாய்ச்சாலகன் நீதிமானாய் விளங்குவானோ?
உம்முடைய வீம்புவார்த்தைகளுக்கு மனுஷர் 3
மவுனமா யிருப்பார்களோ? நீர் பரியாசம் பண்
ணும்போது, ஒருவரும் உம்மை வெட்கப்படுத்
தவேண்டாமோ? என்சொல் சுத்தம் என்றும், 4
நான் தேவரீருடைய பார்வைக்குத் துப்புரவா
னவன் என்றும் [13]நீர் சொல்லுகிறீர். ஆனா 5
லும் தேவன் பேசி, உமக்கு விரோதமாய்த்
தம்முடைய உதடுகளைத்திறந்து, உமக்கு ஞான 6
த்தின் இரகசியங்களை வெளிப்படுத்தினால் நல
மாயிருக்கும்; உள்ளபடி பார்த்தால், அது இர
ட்டிப்புள்ளதாயிருக்கிறது; ஆகையால் உம்மு
டைய அக்கிரமத்திற் கேற்றபடி தேவன் உம்
மைத் தண்டிக்கவில்லை யென்று [14]அறிந்து
கொள்ளும்.
தேவனுடைய அந்தரங்க ஞானத்தை நீர் 7
ஆராய்ந்து, [15]சர்வவல்லவருடைய சம்பூரணத்
தை நீர் அறியக்கூடுமோ? அது வானபரியந் 8
தம் உயர்ந்தது; உம்மால் என்ன ஆகும்? அது
பாதாளத்திலும் ஆழமானது, நீர் அறியக்கூடி
யது என்ன? அதின் அளவு பூமியைப்பார்க்கி 9
லும் நீளமும், சமுத்திரத்தைப் பார்க்கிலும்
அகலமுமாயிருக்கிறது. அவர் பிடித்தாலும், 10
அவர் அடைத்தாலும், [16]அவர் நியாயத்தில்
கொண்டுவந்து நிறுத்தினாலும், அவரைத்
தடைபண்ணுகிறவன் யார்? மனுஷருடைய 11
மாயத்தை அவர் அறிவார்; [17]அக்கிரமத்தை
அவர் கண்டும், அதைக் கவனியாதிருப்பா
ரோ? புத்தியில்லாத மனுஷன் காட்டுக் கழு 12
தைக்குட்டிக்கு ஒப்பாகப் பிறந்திருந்தாலும்,
பெரு நெஞ்சுள்ளவனாயிருக்கிறான்.
நீர் உம்முடைய இருதயத்தை ஆயத்தப் 13
படுத்தி, [18]உம்முடைய கைகளை அவருக்கு
நேராக விரித்தால் நலமாயிருக்கும். உம்மு 14
டைய கையிலே அக்கிரமம் இருந்தால்,
அதைத் தூரத்தில் அகற்றிவிட்டு, [19]அநியாயம்
உம்முடைய கூடாரங்களில் வாசமாயிருக்க
வொட்டாதிரும். அப்பொழுது உம்முடைய 15
முகத்தை மாசில்லாமல் ஏறெடுத்து, [20]பயப்
படாமல் திடன்கொண்டிருப்பீர். அப்பொ 16
ழுது நீர் வருத்தத்தை மறந்து, கடந்துபோன
தண்ணீரைப்போல அதை நினைப்பீர். அப் 17
பொழுது உம்முடைய ஆயுசுகாலம் பட்டப்
பகலைப் பார்க்கிலும் [21]பிரகாசமா யிருக்கும்;
இருள் அடைந்த நீர் விடியற்காலத்தைப்போ
லிருப்பீர். நம்பிக்கை உண்டாயிருக்கிறதி 18
னால் திடனாயிருப்பீர்; தோண்டி ஆராய்ந்து
சுகமாய்ப் படுத்துக்கொள்வீர். பயப்படுத்து 19
வாரில்லாமல் நித்திரைசெய்வீர்; அநேகர்
உமது முகத்தைநோக்கி [22]விண்ணப்பம்பண்
ணுவார்கள். துன்மார்க்கருடைய கண்கள் 20
பூத்துப்போய், [23]அவர்கள் அடைக்கலம் அவர்

களை விட்டொழிந்து, அவர்கள் நம்பிக்கை
சாகிறவன் சுவாசம்போல் அழிந்துபோகும்
என்றான்.

12 2 யோபு பிரதியுத்தரமாக: ஆம், நீங்க
ளே ஞானமுள்ள ஜனங்கள்; உங்களுடனே
3 ஞானம் சாகும். உங்களைப்போல எனக்கும்
புத்தியுண்டு; உங்களிலும் நான் தாழ்ந்தவன்
அல்ல; இப்படிப்பட்டவைகளை அறியாதவன்
4 யார்? என் சிநேகிதரால் நான் நிந்திக்கப்
பட்டு, தேவனை நோக்கிப் பிரார்த்திப்பேன்;
அவர் எனக்கு மறுஉத்தரவு அருளுவார்;
உத்தமனாகிய நீதிமான் பரியாசம்பண்ணப்
5 படுகிறான். ஆபத்துக்குள்ளானவன் சுகமா
யிருக்கிறவனுடைய நினைவில் இகழ்ச்சி
யடைகிறான்; கால்இடறினவர்களுக்கு இது
நேரிடும்.
6 கள்ளருடைய கூடாரங்களில் செல்வமுண்
டு; [1]தேவனைக் கோபப்படுத்துகிறவர்களுக்குச்
*சாங்கோபாங்கமுண்டு; அவர்கள் கையிலே
7 தேவன் கொண்டுவந்து கொடுக்கிறார். இப்
போதும் நீ மிருகங்களைக் கேட்டுப்பார், அவை
கள் உனக்குப் போதிக்கும்; ஆகாயத்துப் பற
வைகளைக் கேள், அவைகள் உனக்கு அறி
8 விக்கும். அல்லது பூமியை விசாரித்துக்
கேள், அது உனக்கு உபதேசிக்கும்; சமுத்
திரத்தின் மச்சங்களைக் கேள், அவைகள்
9 உனக்கு விவரிக்கும். கர்த்தருடைய கரம்
இதைச்செய்ததென்று இவைகளெல்லாவற்றி
10 னாலும் அறியாதவன் யார்? சகல பிராணி
களின் ஜீவனும், மாம்சமான சகல மனுஷ
ரின் ஆவியும் அவர் கையிலிருக்கிறது.
11 வாயானது போஜனத்தை ருசிபார்க்கிறது
போல, செவியானது வார்த்தைகளைச் சோ
12 தித்துப் பார்க்கிறதல்லவா? முதியோரிடத்
தில் ஞானமும் [2]வயதுசென்றவர்களிடத்தில்
13 புத்தியும் இருக்குமே. அவரிடத்தில் ஞான
மும் வல்லமையும் எத்தனை அதிகமாய் இருக்
கும்? அவருக்குத்தான் ஆலோசனையும் [3]புத்தி
14 யும் உண்டு. இதோ, அவர் இடித்தால் கட்ட
முடியாது; [4]அவர் மனுஷனை அடைத்தால்
15 விடுவிக்க முடியாது. இதோ, அவர் தண்
ணீர்களை அடக்கினால் எல்லாம் உலர்ந்து
போம்; அவர் அவைகளை வரவிட்டால், பூமி
16 யைக் கீழதுமேலதாக்கும். அவரிடத்தில் பெ
லனும் ஞானமுமுண்டு; மோசம்போகிறவ
னும் மோசம் போக்குகிறவனும், [5]அவர் கை
17 யின்கீழிருக்கிறார்கள். அவர் ஆலோசனைக்
காரரைச் சிறைபிடித்து, [6]நியாயாதிபதிகளை
18 மதிமயக்குகிறார். அவர் ராஜாக்களுடைய
கட்டுகளை அவிழ்த்து, அவர்கள் இடுப்புகளைக்
19 கச்சைகட்டுகிறார். அவர் †மந்திரிகளைச்
சிறைபிடித்துக் கொண்டுபோய், பெலவான்
20 களைக் கவிழ்த்துப்போடுகிறார். அவர் நம்பிக்
கையுள்ளவர்களுடைய வாக்கை விலக்கி,
[7]முதிர்வயதுள்ளவர்களின் ஆலோசனையை
21 வாங்கிப்போடுகிறார். அவர் பிரபுக்களின்
மேல் இகழ்ச்சி வரப்பண்ணுகிறார்; [8]பல
வான்களின் கச்சையைத் தளர்ந்துபோகப்பண்
ணுகிறார். அவர் அந்தகாரத்திலிருக்கிற ஆ 22
ழங்களை வெளியரங்கமாக்கி, [9]மரண இருளை
வெளிச்சத்தில் கொண்டுவருகிறார். அவர் 23
ஜாதிகளைப் பெருகவும் அழியவும் பண்ணு
கிறார்; [10]அவர் ஜாதிகளைப் பரவவும் குறுகவும்
பண்ணுகிறார். அவர் பூமியிலுள்ள ஜனத்தி 24
னுடைய அதிபதிகளின் நெஞ்சை [11]அகற்
றிப்போட்டு, அவர்களை வழியில்லாத அந்த
ரத்திலே அலையப்பண்ணுகிறார். அவர்கள் 25
வெளிச்சமற்ற இருளிலே தடவித் திரிகிறார்
கள்; [12]வெறித்தவர்களைப்போல அவர்களைத்
தடுமாறித் திரியப்பண்ணுகிறார்.

இதோ, இவைகளெல்லாவற்றையும் என் 13
கண் கண்டு, என் காது கேட்டு அறிந்திருக்
கிறது. நீங்கள் அறிந்திருக்கிறதை நானும் 2
அறிந்திருக்கிறேன்; நான் உங்களுக்குத் தாழ்ந்
தவன் அல்ல.
சர்வவல்லவரோடே நான் பேசினால் நல் 3
லது; [13]தேவனோடே நியாயத்திற்காக [14]வழக்
காட விரும்புவேன். நீங்கள் பொய்யைப் 4
பிணைக்கிறவர்கள்; நீங்கள் எல்லாரும் [15]காரி
யத்துக்குதவாத வைத்தியர்கள். நீங்கள் பே 5
சாமலிருந்தால் நலமாகும்; [16]அது உங்களுக்கு
ஞானமாயிருக்கும்.
நீங்கள் என் நியாயத்தைக் கேட்டு, என் 6
உதடுகள் சொல்லும் விசேஷங்களைக் கவனி
யுங்கள். நீங்கள் தேவனுக்காக நியாயக்கே 7
டாய்ப் பேசி, [17]அவருக்காக வஞ்சகமாய் வச
னிக்கவேண்டுமோ? அவருக்கு [18]முகதாட் 8
சிணியம் பண்ணுவீர்களோ? தேவனுக்காக
வழக்காடுவீர்களோ? அவர் உங்களை ஆராய் 9
ந்துபார்த்தால் அது உங்களுக்கு நலமாயிருக்கு
மோ? மனுஷனைப் பரியாசம் பண்ணுகிறது
போல [19]அவரைப் பரியாசம் பண்ணுவீர்க
ளோ? நீங்கள் அந்தரங்கமாய் முகதாட்சிணி 10
யம் பண்ணினால், [20]அவர் உங்களை எவ்விதத்
திலும் கண்டிப்பார். அவருடைய மகத்து 11
வம் உங்களைத் திடுக்கிடப் பண்ணாதோ?
[21]அவருடைய பயங்கரம் உங்களைப் பிடிக்க
மாட்டாதோ? உங்கள் பேரை நினைக்கப் 12
பண்ணும் அடையாளங்கள் சாம்பலுக்குச்
சரி; உங்கள் மேட்டிமைகள் சேற்றுக் குவி
யல்களுக்குச் சமானம்.
நீங்கள் மவுனமாயிருங்கள், நான் பேசுகி 13
றேன், எனக்கு வருகிறது வரட்டும். நான் 14
என் பற்களினால் என் சதையைப் பிடுங்கி,
என் பிராணனை என் கையிலே வைப்பா
னேன்? அவர் என்னைக் கொன்றுபோட்டா 15
லும், [22]அவர்மேல் நம்பிக்கையாயிருப்பேன்;
ஆனாலும் என் வழிகளை அவருக்கு முன்பாக
ரூபகாரம்பண்ணுவேன். அவரே என் ரட் 16
சிப்பு; மாயக்காரனோ [23]அவர் சந்நிதியில் சே
ரான். என் வசனத்தையும், நான்சொல்விக் 17
காண்பிக்கிறதையும், உங்கள் செவிகளால்
கவனமாய்க் கேளுங்கள். இதோ, என் நியா 18
யங்களை அணியணியாக வைத்தேன்; என்

[1] சங். 73. 12. ஒ. எரே. 12. 1. ஒ.
* சௌக்கியம்.
[2] 32. 7
[3] நீதி. 8. 14
[4] ஏசா. 22. 22. வெளி. 3. 7
[5] ஏசே. 14. 9
[6] ஏசா. 19, 12, 13. 1 கொ. 1. 19
† பிரபுக்களை. ஏசா. 45. 1
[7] ஏசா. 3. 1—3
[8] தானி. 2. 21, 22
[9] ஆதி. 10. 26. 1 கொ. 4. 5
[10] சங். 107. 38
[11] தானி. 4. 16, 33
[12] உபா. 28. 29
[13] 23. 3; 31. 35
[14] ஏசா. 1. 18. மீகா 6. 2. ஒ
[15] 16. 2
[16] நீதி. 17. 28. ஆமோ. 5. 13
[17] 32. 21, 22
[18] 2 கொ. 4. 2
[19] கலா. 6. 7
[20] சங். 82. 1, 2
[21] எபே. 5. 22
[22] சங். 23. 4. நீதி. 14. 32
[23] ஏசா. 33. 14

19 நீதி விளங்கும் என்று அறிவேன். என்னோ
டே [1]வழக்காடவேண்டுமென்று இருக்கிறவன்
யார்? நான் மவுனமாயிருந்தால் ஜீவித்துப்
போவேனே.
20 இரண்டு காரியங்களைமாத்திரம் எனக்குச்
செய்யாதிருப்பீராக; அப்பொழுது உமது
முகத்துக்கு முன்பாக ஒளித்துக்கொள்ளா
21 திருப்பேன். உம்முடைய கையை என்னை
விட்டுத் தூரப்படுத்தும்; [2]உம்முடைய பயங்
கரம் என்னைக் கலங்கப்பண்ணாதிருப்பதாக.
22 நீர் கூப்பிடும், [3]நான் உத்தரவு கொடுப்பேன்;
அல்லது நான் பேசுவேன்; நீர் எனக்கு மறு
23 மொழி சொல்லும். என் அக்கிரமங்களும்
பாவங்களும் எத்தனை? என் மீறுதலையும் என்
24 பாவத்தையும் [4]எனக்கு உணர்த்தும். நீர்
உமது முகத்தை மறைத்து, [5]என்னை உமக்
25 குப் பகைஞனாக எண்ணுவானேன்? காற்
றடித்த சருகை நொறுக்குவீரோ? [6]காய்ந்து
26 போன துரும்பைப் பின்தொடருவீரோ? மகா
கசப்பான தீர்ப்புகளை என்பேரில் எழுதுகி
றீர்; என் சிறுவயதின் அக்கிரமங்களை [7]எனக்
27 குப் பலிக்கப்பண்ணுகிறீர். என்கால்களைத்
தொழுவடித்துப்போட்டு [8]என் வழிகளையெல்
லாம் காவல்பண்ணுகிறீர்; என் காலடிகளில்
28 அடையாளத்தைப் போடுகிறீர். இப்படிப்
பட்டவன் அழுகிப்போகிற வஸ்துபோலவும்,
பொட்டரித்த வஸ்திரம்போலவும் அழிந்து
போவான்.

**14** ஸ்திரீயினிடத்தில் பிறந்த மனுஷன் வாழ்
நாள் குறுகினவனும் [9]சஞ்சலம் நிறைந்தவனு
2 மா யிருக்கிறான். அவன் பூவைப்போலப்
பூத்து அறுப்புண்கிறான்; [10]நிழலைப்போல
3 நிலைநிற்காமல் ஓடிப்போகிறான். ஆகிலும்
இப்படிப்பட்டவன்மேல் நீர் உம்முடைய
கண்களைத் திறந்துவைத்து, [11]உம்முடைய
நியாயத்துக்கு என்னைக் கொண்டுபோவீரோ?
4 அசுத்தமானதிலிருந்து சுத்தமானதைப் [12]பிறப்
பிக்கத்தக்கவன் உண்டோ? ஒருவனுமில்லை.
5 அவனுடைய நாட்கள் இம்மாத்திரம் என்று
குறிக்கப்பட்டிருக்கையால், அவனுடைய மா
தங்களின் தொகை உம்மிடத்தில் இருக்கி
றது; அவன் கடந்துபோகக்கூடாத எல்லை
6 யை [13]அவனுக்கு ஏற்படுத்தினீர். அவன்
ஒரு கூலிக்காரனைப்போல் தன் நாளின் வே
லையாயிற்று என்று ரம்மியப்படுமட்டும் அவன்
ஓய்ந்திருக்கும்படி உமது பார்வையை அவனை
விட்டு விலக்கும்.
7 ஒரு மரத்தைக்குறித்தாவது நம்பிக்கையுண்
டு; அது வெட்டிப்போடப்பட்டாலும் திரும்
பத் தழைக்கும், அதின் இளங்கிளைகள் துளி
8 ர்க்கும்; அதின்வேர் தரையிலே பழைய
தாகி, அதின் அடிக்கட்டை மண்ணிலே செத்
9 தாலும், தண்ணீரின் வாசனையினால் அது
துளிர்த்து, இளமரம்போலக் கிளைவிடும்.
10 மனுஷனோவென்றால் செத்தபின் ஒழிந்து
போகிறான், மனுபுத்திரன் ஜீவித்துப்போன
பின் அவன் எங்கே?

1 ஏசா. 50. 8. ரோ. 8. 33, 34
2 சங். 39. 10
3 38. 3
4 34. 32. யோ. 16. 8, 9
5 சங். 102. 2. புல. 2. 5
6 ஏசா. 42. 3
7 சங். 25. 7
8 33. 11
9 பிர. 2. 23
10 சங். 90. 5-10
11 சங். 144. 3; 143. 2
12 சங். 51. 2, 10. யோ. 3. 6
13 எபி. 9. 27
14 சங். 102. 26. ஏசா. 51. 6. 2 பே. 3. 10, 11. வெளி. 20. 11
15 1 தெச. 4. 14-16
16 நீதி. 5. 21
17 உபா. 32. 34
18 1 தீமோ. 6. 4, 5
19 லூக். 19. 22
20 சங். 90. 2. நீதி. 8. 25
21 ரோ. 11. 34. 1 கொ. 2. 11

தண்ணீர் ஏரியிலிருந்து வடிந்து, வெள் 11
ளம் வற்றிச் சுவறிப்போகிறதுபோல, மனு 12
ஷன் படுத்துக்கிடக்கிறான், வானங்கள் ஒழிந்
துபோகுமளவும் [14]எழுந்திருக்கிறதும் இல்லை,
நித்திரை தெளிந்து விழிக்கிறதும் இல்லை.
நீர் என்னைப் பாதாளத்தில் ஒளித்து, உமது 13
கோபம் தீருமட்டும் என்னை மறைத்து, என்
னைத் திரும்ப நினைக்கும்படிக்கு எனக்கு ஒரு
காலத்தைக் குறித்தால் நலமாயிருக்கும். மனு 14
ஷன் செத்தபின் பிழைப்பானோ? [15]எனக்கு
மாறுதல் எப்போது வருமென்று எனக்குக்
குறிக்கப்பட்ட போராட்டத்தின் நாளெல்லாம்
நான் காத்திருக்கிறேன்.
என்னைக் கூப்பிடும், அப்பொழுது நான் 15
உமக்கு உத்தரவு சொல்லுவேன்; உமது கை
களின் கிரியையின் மேல் விருப்பம் வைப்பீ
ராக. இப்பொழுது என் நடைகளை எண்ணு 16
கிறீர்; [16]என் பாவத்தின்மேலல்லவோ கவன
மாயிருக்கிறீர். என் மீறுதல் ஒரு கட்டாகக் 17
கட்டப்பட்டு முத்திரைபோடப்பட் டிருக்கி
றது, [17]என் அக்கிரமத்தை ஒருமிக்கச் சேர்த்
தீர்.
மலைமுசலாய் விழுந்து கரைந்துபோம்; கன் 18
மலை தன் இடத்தைவிட்டுப் பேர்ந்துபோம்.
தண்ணீர் கற்களைக் குடையும்; ஜலப்பிரவா 19
கம் பூமியின் தூளில் முளைத்ததை மூடும்; அப்
படியே மனுஷன் கொண்டிருக்கும் நம்பிக்கை
யை அழிக்கிறீர். நீர் என்றைக்கும் அவனைப் 20
பெலனாய் நெருக்குகிறதினால் அவன் போய்
விடுகிறான்; அவன் முகரூபத்தை மாறப்பண்
ணி அவனை அனுப்பிவிடுகிறீர். அவன் பிள் 21
ளைகள் கனமடைந்தாலும் அவன் உணரான்;
அவர்கள் சிறுமைப்பட்டாலும் அவர்களைக் கவ
னியான். அவன் மாம்சம் அவனிலிருக்கு 22
மளவும் அதற்கு நோவிருக்கும்; அவன் ஆத்து
மா அவனுக்குள்ளிருக்குமட்டும் அதற்குத் துக்
கமுண்டு என்றான்.

அப்பொழுது தேமானியனாகிய எலிப் **15**
பாஸ் பிரதியுத்தரமாக: ஞானவான் காற்றைப் 2
போன்ற நியாயங்களைச் சொல்லி, தன் வயிற்
றைக் கொண்டல் காற்றினால் நிரப்பி, பிர 3
யோசனமில்லாத வார்த்தைகளாலும், உபயோ
கமில்லாத [18]வசனங்களாலும் தர்க்கிக்கலா
மோ? நீர் பயபக்தியை வீணென்று சொல்லி, 4
தேவனுக்கு முன்பாக ஜெபத்தியானத்தைக்
குறையப்பண்ணுகிறீர். உம்முடைய வாய் 5
உம்முடைய அக்கிரமத்தைச் சொல்லிக்காட்டு
கிறது; நீர் தந்திரமுள்ளவர்களின் நாவைத்
தெரிந்துகொண்டீர். நான் அல்ல, [19]உம்மு 6
டைய வாயே உம்மைக் குற்றவாளி என்று
தீர்க்கிறது; உம்முடைய உதடுகளே உமக்கு
விரோதமாய்ச் சாட்சியிடுகிறது.
மனுஷரில் முந்திப் பிறந்தவர் நீர்தானோ? 7
பர்வதங்களுக்குமுன்னே [20]உருவாக்கப்பட்டீ
ரோ? நீர் தேவனுடைய இரகசிய ஆலோ 8
சனையைக் கேட்டு, [21]ஞானத்தை உம்மிடமாய்ச்
சேர்த்துக்கொண்டீரோ? நாங்கள் அறியாத 9

எந்தக் காரியத்தை நீர் அறிந்திருக்கிறீர்? எங்
களுக்கு விளங்காத எந்தக் காரியமாவது உம
10 க்கு விளங்கியிருக்கிறதோ? உம்முடைய தகப்
பனைப் பார்க்கிலும் பெரிய வயதுள்ள நரைத்
தோரும் விருத்தாப்பியரும் [1]எங்களுக்குள்
11 இருக்கிறார்களே. தேவன் அருளிய ஆறுதல்
களும், உம்மோடே சொல்லப்படுகிற மிருது
வான பேச்சும் உமக்கு அற்பக்காரியமாயிருக்
கிறதோ?
12 உம்முடைய இருதயம் உம்மை எங்கே கொ
ண்டுபோகிறது? உம்முடைய கண்கள் நெறித்
13 துப் பார்க்கிறது என்ன? தேவனுக்கு விரோ
தமாக உம்முடைய ஆவியை எழுப்பி, [2]உம்
முடைய வாயிலிருந்து வசனங்களைப் புறப்
14 படப்பண்ணுகிறீர். மனுஷனானவன் பரி
சுத்தமாயிருக்கிறதற்கும், ஸ்திரீயினிடத்தில்
பிறந்தவன் நீதிமானாயிருக்கிறதற்கும், [3]அவன்
15 எம்மாத்திரம்? இதோ, தம்முடைய பரிசுத்த
வான்களையும் அவர் நம்புகிறதில்லை; [4]வானங்
களும் அவர் பார்வைக்குச் சுத்தமானவைகள்
16 அல்ல, அநியாயத்தைத் தண்ணீரைப்போ
லக் குடிக்கிற மனுஷன் எத்தனை அதிகமாய்
[5]அருவருப்பும் அசுத்தமுமாயிருக்கிறான்?
17 உமக்குக் காரியத்தைத் தெரியப்பண்ணு
வேன், என்னைக் கேளும்; நான் கண்டதை
18 உமக்கு விவரித்துச் சொல்லுவேன். ஞானி
கள் தங்கள் பிதாக்கள் சொல்லக்கேட்டு மறை
க்காமல் அறிவித்ததையே நான் சொல்லு
19 வேன். அவர்களுக்குமாத்திரம் பூமி அளிக்
கப்பட்டது; [6]அந்நியர் அவர்கள் நடுவே கட
20 ந்துபோக இடமில்லை. துன்மார்க்கன் உயி
ரோடிருக்கிற நாளெல்லாம் துன்பத்தால் வா
திக்கப்படுகிறான்; [7]பலவந்தம் பண்ணுகிறவ
னுக்கு அவன் வருஷங்களின் தொகை மறைக்
21 கப்பட்டிருக்கிறது. பயங்கரமான சத்தம்
அவன் காதுகளில் தொனிக்கிறது; [8]அவன்
சமாதானமா யிருக்கையில் பாழாக்கிறவன்
22 அவன்மேல் வருவான். இருளிலிருந்து திரும்
பிவர அவனுக்கு நம்பிக்கையில்லாமல், பதி
விருக்கிறவர்களின் பட்டயத்துக்கு அவன்
23 பயப்படுகிறான். அப்பம் எங்கே கிடைக்கும்
என்று அவன் அலைந்து திரிகிறான்; [9]அந்த
கார நாள் தனக்குச் சமீபித்திருக்கிறதை அறி
24 வான். இக்கட்டும் நெருக்கமும் அவனைக்
கலங்கப்பண்ணி, யுத்தசன்னத்தனான ராஜா
25 வைப்போல அவனை மேற்கொள்ளும். அவன்
தேவனுக்கு விரோதமாகக் கைநீட்டி, [10]சர்வ
வல்லவருக்கு விரோதமாகப் பராக்கிரமம் பா
26 ராட்டுகிறான். கடினக்கழுத்தோடும், பருத்த
குமிழுள்ள தன் கேடயங்களோடும் அவருக்கு
27 எதிராக ஓடுகிறான் அவன் முகத்தைக் கொ
ழுப்பு மூடியிருக்கிறது; [11]அடிவயிறு தொந்தி
28 விட்டிருக்கிறது. ஆனாலும் பாழான பட்ட
ணங்களிலும், குடிபோன கற்குவியலானவீடு
29 களிலும் வாசம்பண்ணுவான். அவன் ஐசு
வரியவானாவதுமில்லை, அவன் ஆஸ்தி நிலைப்
பதுமில்லை; அப்படிப்பட்டவர்களின் செல்
வம் பூமியில் நீடித்திருப்பதில்லை. இருளு 30
க்கு அவன் தப்புவதில்லை; அக்கினிஜுவாலை
அவனுடைய கிளையைக் காய்ந்துபோகப்பண்
ணும்; அவருடைய வாயின் சுவாசத்தால் அற்
றுப்போவான். வழிதப்பினவன் மாயையை 31
நம்பானாக; [12]நம்பினால் மாயையே அவன்
பலனாயிருக்கும். அது அவன் நாள் வருமுன் 32
னே [13]அவனுக்குப் பூரணமாய்ப் பலிக்கும்;
அவனுடைய கொப்புப் பச்சை கொள்வதில்
லை. பிஞ்சுகள் உதிர்ந்துபோகிற திராட்சச் 33
செடியைப்போலவும், பூக்கள் உதிர்ந்துபோ
கிற ஒலிவமரத்தைப்போலவும் அவன் இருப்
பான். மாயக்காரரின் கூட்டம் [14]வெறுமை 34
யாய்ப் போம்; பரிதானம் வாங்கினவர்களின்
கூடாரங்களை அக்கினி பட்சிக்கும். அப் 35
படிப்பட்டவன் அநியாயத்தைக்கர்ப்பந்தரித்து
அக்கிரமத்தைப் பெறுகிறான்; [15]அவர்கள் கர்ப்
பம் மாயையைப் பிறப்பிக்கும் என்றான்.

அதற்கு யோபு பிரதியுத்தரமாக: இப் 2 **16**
படிப்பட்ட அநேகங் காரியங்களை நான் கேட்
டிருக்கிறேன்; [16]நீங்கள் எல்லாரும் அலட்டுண்
டாக்குகிற தேற்றரவாளர். காற்றைப்போன்ற 3
வார்த்தைகளுக்கு முடிவிராதோ? இப்படி நீ
உத்தரவு சொல்ல உனக்குத் துணிவு உண்
டானதென்ன? உங்களைப்போல நானும் 4
பேசக்கூடும்; நான் இருக்கும் நிலைமையில்
நீங்கள் இருந்தால், நான் உங்களுக்கு விரோத
மாக வார்த்தைகளைக் கோத்து, உங்களுக்கு
எதிரே [17]என் தலையைத் துலுக்கவும்கூடும்?
ஆனாலும் நான் என் வாயினால் உங்களுக்குத் 5
திடன்சொல்லுவேன்; [18]என் உதடுகளின்
அசைவு உங்கள் துக்கத்தை ஆற்றும்.

நான் பேசினாலும் என் துக்கம் ஆறாது; 6
நான் பேசாமலிருந்தாலும் எனக்கு என்ன
ஆறுதல்? இப்போது அவர் என்னை இளைத் 7
துப்போகச் செய்தார்; என் கூட்டத்தையெல்
லாம் பாழாக்கினீர். நீர் என்னைச் சுருங்கிப் 8
போகப் பண்ணினது அதற்குச் சாட்சி; என்
மெலிவு என்னில் அத்தாட்சியாக நின்று, என்
முகத்துக்கு முன்பாக உத்தரவு சொல்லும்.
என்னைப் பகைக்கிறவனுடைய கோபம் என் 9
னைப் பீறுகிறது, [19]என்பேரில் பற்கடிக்கிறான்;
என் சத்துரு கொடிய கண்ணினால் என்னைப்
பார்க்கிறான். எனக்கு விரோதமாகத் தங்கள் 10
வாயை விரிவாய்த் திறந்தார்கள்; [20]நிந்தையாக
என்னைக் கன்னத்தில் அடித்தார்கள்; எனக்கு
விரோதமாக ஏகமாய்க் கூட்டங்கூடினார்கள்.

தேவன் என்னை அநியாயக்காரன் வசமாக 11
ஒப்புவித்து, [21]துன்மார்க்கரின் கையில் என்னை
அகப்படப்பண்ணினார். நான் சுகமாய் வாழ் 12
ந்திருந்தேன்; அவர் என்னை நருக்கி, என் பிட
ரியைப் பிடித்து, என்னை நொறுக்கி, என்
னைத் தமக்கு இலக்காக [22]நிறுத்தினார். அவ 13
ருடைய வில்லாளர் என்னைச் சூழ்ந்துகொண்
டார்கள்; என் ஈரலைத் தப்பவிடாமல் பிளந்
தார்; என் பிச்சைத் தரையில் ஊற்றிவிட்டார்.
நொறுக்குதலின்மேல் நொறுக்குதலை என் 14

[1] 32. 6—9
[2] மல். 3. 13
[3] பிர. 7. 20. 1 யோ. 1. 8-10
[4] 4. 18. 25. 5
[5] 20. 12. சங். 53. 3. நீதி. 19. 28
[6] உபா. 32. 8. யோவே. 3. 17
[7] சங். 90. 12. பிர. 9. 3
[8] லேவி. 26, 36. 1 தெச. 5. 3
[9] சங். 59. 15
[10] ஏசா. 27. 4
[11] சங். 73. 7. ழ
[12] ஏசா. 59. 4
[13] சங். 55. 23
[14] 27. 8. ஏசா. 33. 14. ஆமோ. 5. 11, 12
[15] ஓசி. 10. 13. கலா. 6. 7, 8
[16] 13. 4
[17] சங். 22. 7
[18] நீதி. 27. 9
[19] 10, 16, 17. 13. 24.
[20] சங். 35. 15. புல. 3. 30
[21] 1. 15, 17
[22] 7. 20

மேல் வரப்பண்ணினர்; [1]பராக்கிரமசாலி
15 யைப்போல என்மேல் பாய்ந்தார். நான் இர
ட்டுச்சேலையைத் தைத்து, என் தோளின்மேல்
போர்த்துக்கொண்டேன்; என் மகிமையைப்
16 [2]புழுதியிலே போட்டுவிட்டேன். அழுகிற
தினல் என் முகம் அழுக்கடைந்தது; மரண
இருள் என் கண்ணிமைகளின்மேல் உண்டா
17 யிருக்கிறது. என் கைகளிலே கொடுமையில்
லாதிருக்கையிலும், [3]என் ஜெபம் சுத்தமாயிருக்
கையிலும், அப்படியாயிற்று.
18 பூமியே, என் ரத்தத்தை மூடிப்போடாதே;
என் அலறுதலுக்கு மறைவிடம் உண்டாகா
19 திருப்பதாக. இப்போதும் இதோ, என்
சாட்சி பரலோகத்திலிருக்கிறது, [4]எனக்குச்
சாட்சி பகருகிறவர் உன்னதங்களில் இருக்
20 கிறார். என் சிநேகிதர் என்னைப் பரியாசம்
பண்ணுகிறார்கள்; என் கண் தேவனை நோக்
21 கிக் கண்ணீர் சொரிகிறது. ஒரு மனுபுத்தி
ரன் தன் சிநேகிதனுக்காக வழக்காடுகிறது
போல, [5]தேவனோடே மனுஷனுக்காக வழக்
காடுகிறவர் ஒருவர் உண்டானால் நலமாயிருக்
22 கும். குறுகின வருஷங்களுக்கு முடிவு வரு
கிறது; [6]நான் திரும்பிவராத வழியே போ
வேன்.

17 என் சுவாசம் ஒழிகிறது, என் நாட்கள்
முடிகிறது; பிரேதக்குழி எனக்கு [7]ஆயத்தமா
யிருக்கிறது.
2 பரியாசம் பண்ணுகிறவர்கள் என்னிடத்
தில் இல்லையோ? அவர்கள் செய்யும் அநியா
யங்களை என் [8]கண் பார்த்துக்கொண்டிருக்கி
3 றது. தேவரீர் என் காரியத்தை மேல்போட்
டுக்கொண்டு, எனக்காகப் பிணைப்படுவீராக;
[9]வேறே யார் எனக்குக் கைகொடுக்கத்தக்கவர்?
4 நீர் அவர்கள் இருதயத்துக்கு ஞானத்தை
மறைத்தீர்; ஆகையால் அவர்களை உயர்த்தா
5 திருப்பீர். எவன் தன் சிநேகிதருக்குக் கேடா
கத் துரோகம் பேசுகிறானோ, [10]அவன் பிள்ளை
களின் கண்களும் பூத்துப்போகும்.
6 ஜனங்களுக்குள்ளே அவர் என்னைப் பழ
மொழியாக வைத்தார்; அவர்கள் முகத்துக்கு
7 முன் நான் அருவருப்பானேன். இதினிமித்
தம் என் [11]கண்கள் சஞ்சலத்தினால் இருள
டைந்தது; என் அவயவங்களெல்லாம் நிழ
8 லைப்போலிருக்கிறது. சன்மார்க்கர் இதற்கா
கப் பிரமிப்பார்கள்; குற்றமில்லாதவன் மாயக்
9 காரனுக்கு விரோதமாக எழும்புவான். நீதி
மான் தன் வழியை உறுதியாய்ப் பிடிப்பான்;
[12]சுத்தமான கைகளுள்ளவன் மேன்மேலும்
10 பலத்துப்போவான். இப்போதும் நீங்கள் எல்
லாரும் போய்வாருங்கள்; உங்களில் ஞான
முள்ள ஒருவனையும் காணேன்.
11 என் நாட்கள் போயிற்று; என் இருதயத்
தில் எனக்கு உண்டாயிருந்த [13]சிந்தனைகள்
12 அற்றுப்போயிற்று. அவைகள் இரவைப் பக
லாக்கிற்று; இருளை வெளிச்சம் தொடர்ந்து
13 வரும் என்று எண்ணச்செய்தது. அப்படி
நான் காத்துக்கொண்டிருந்தாலும், பாதாளம்

[1] சங். 42. 7
[2] 30. 19
[3] சங். 44. 17-21: 66. 18, 19
[4] ரோ. 1. 9
[5] பிர. 6. 10. ஏசா. 45. 9. ரோ. 9. 20
[6] பிர. 12. 5
[7] சங். 88. 3, 4
[8] 1 சாமு. 1. 6, 7
[9] நீதி. 6. 1
[10] சங். 12. 3
[11] சங். 6. 7
[12] சங். 24. 4: 84. 7, 11. நீதி. 4. 18
[13] நீதி. 16. 9: 19. 21
[14] 3. 17-19
[15] சங். 73. 22
[16] 13. 14
[17] நீதி. 24. 20
[18] சங். 18. 28
[19] நீதி. 1. 30-32
[20] நீதி. 5. 22: 29. 6
[21] எரே. 20. 3, 4
[22] நீதி. 10. 28
* மரணம்.
[23] ஏசா. 5. 24
[24] சங். 34. 16
[25] ஏசா. 14. 22
[26] சங். 37. 13

எனக்கு வீடாயிருக்கும்; இருளில் என் படுக்
கையைப் போடுவேன். அழிவைப் பார்த்து, 14
நீ எனக்குத் தகப்பன் என்கிறேன்; புழுக்க
ளைப் பார்த்து, நீங்கள் எனக்குத் தாயும் எனக்
குச் சகோதரியும் என்கிறேன். என் நம் 15
பிக்கை இப்போது எங்கே? நான் நம்பியிருந்
ததைக் காண்பவன் யார்? அது பாதாளத் 16
தின் காவலுக்குள் இறங்கும்; [14]அப்போது
தூளில் ஏகமாய் இளைப்பாறுவோம் என்றான்.

அப்பொழுது சூகியனான பில்தாத் பிரதி 18
யுத்தரமாக: நீங்கள் எந்தமட்டும் பேச்சுகளை 2
முடிக்காதிருப்பீர்கள்? புத்திமான்களாயிருங்
கள்; நாங்களும் பேசட்டும். நாங்கள் மிருகங் 3
களைப்போல எண்ணப்பட்டு, [15]உங்கள் பார்
வைக்குத் தீழ்ப்பானவர்களா யிருப்பானேன்?
கோபத்தினால் உம்மைத்தானே பீறுகிற 4
[16]உமதுநிமித்தம் பூமி பாழாய்ப்போகுமோ?
கன்மலை தன்னிடத்தைவிட்டுப் பேருமோ?
துன்மார்க்கனுடைய [17]விளக்கு அணைந்து 5
போம்; அவன் அடுப்பின் நெருப்பும் அவிந்து
போம். அவன் கூடாரத்தில் வெளிச்சம் 6
அந்தகாரப்படும்; [18]அவன் விளக்கு அவனு
டனே அணைந்துபோம். அவன் பெலனாய் 7
நடந்த நடைகள் குறைந்துபோம்; [19]அவன்
ஆலோசனை அவனை விழப்பண்ணும். அவன் 8
தன் கால்களினால் வலையில் அகப்பட்டு,
[20]வலைச்சிக்கலிலே நடக்கிறான். கண்ணி 9
அவன் குதிகாலைப் பிடிக்கும்; பறிகாரர்
அவனை மேற்கொள்வார்கள். அவனுக்காகச் 10
சுருக்கு தரையிலும், அவனுக்காகக் கண்ணி
வழியிலும் வைக்கப்பட்டிருக்கிறது. சுற்றிலு 11
மிருந்துண்டாகும் பயங்கரங்கள் அவனைத்
திடுக்கிடப்பண்ணி, [21]அவன் கால்களைத்
திசைதெரியாமல் அலையப்பண்ணும். அவன் 12
பெலனைப் பட்டினி தின்றுபோடும்; அவன்
பக்கத்தில் கேடு ஆயத்தப்பட்டு நிற்கும்.
அது அவன் அங்கத்தின் பலத்தைப் பட்சிக் 13
கும்; பயங்கரமான மரணமே அவன் அவய
வங்களைப் பட்சிக்கும். அவன் நம்பிக்கை 14
[22]அவன் கூடாரத்திலிருந்து வேரோடே பிடுங்
கப்படும்; அது அவனைப் *பயங்கர ராஜாவி
னிடத்தில் துரத்தும். அவனுக்கு ஒன்றுமில் 15
லாமற் போனதினால், பயங்கரம் அவன்
கூடாரத்தில் குடியிருக்கும்; கந்தகம் அவன்
வாசஸ்தலத்தின்மேல் தெளிக்கப்படும்.
கீழே இருக்கிற அவன் வேர்கள் அழிந்து 16
போகும்; [23]மேலே இருக்கிற அவன் கிளைகள்
பட்டுப்போகும். அவனை நினைக்கும் நினைப் 17
புப் பூமியிலிருந்தழியும், [24]வீதிகளில் அவன்
பேரில்லாமற்போகும். அவன் வெளிச்சத்தி 18
லிருந்து இருளில் துரத்திவிடப்பட்டு, பூலோ
கத்திலிருந்து தள்ளுண்டுபோவான். அவன் 19
ஜனத்துக்குள்ளே அவனுக்குப் புத்திரனும்
இல்லை பௌத்திரனும் இல்லை; [25]அவன் வீட்டி
ல் மீதியாயிருக்கத்தக்கவன் ஒருவனும் இல்லை.
அவன் காலத்தோர் அவன் நாளுக்காகத் திடுக் 20
கிட்டதுபோல, [26]பின்னடியாரும் பிரமிப்பார்

21 கள். அக்கிரமக்காரன் குடியிருந்த ஸ்தானங்
கள் இவைகள்தான்; [1]தேவனை அறியாமற்போ
னவனுடைய ஸ்தலம் இதுவே என்பார்கள்
என்றான்.

19 யோபு பிரதியுத்தரமாக:
2 நீங்கள் எந்தமட்டும் என் ஆத்துமாவை வரு
த்தப்படுத்தி, வார்த்தைகளினால் என்னை நொ
3 றுக்குவீர்கள்? இப்போது பத்துதரம் [2]என்னை
நிந்தித்தீர்கள்; நீங்கள் எனக்குக் கடினமுகம்
காண்பிக்கிறதினால் உங்களுக்கு வெட்கமில்லை.
4 நான் தப்பி நடந்தது மெய்யானாலும், என் தப்
5 பிதம் என்னோடேதான் இருக்கிறது. நீங்கள்
எனக்கு விரோதமாகப் [3]பெருமைபாராட்டி,
எனக்கு நிந்தையாக என்னைக் கடிந்துகொள்ள
6 வேண்டும் என்றிருப்பீர்களாகில், தேவன் என்
னைக் கவிழ்த்து, தம்முடைய வலையை என்
7 மேல் வீசினார் என்று அறியுங்கள். இதோ,
கொடுமை என்று கூப்பிடுகிறேன், கேட்பார்
ஒருவரும் இல்லை; கூக்குரலிடுகிறேன், நியாய
8 விசாரணை இல்லை. நான் கடந்துபோகக்
கூடாதபடிக்கு [4]அவர் என் பாதையை வேலி
யடைத்து, என் வழிகளை இருளாக்கிவிட்
9 டார். என்னிலிருந்த என் மகிமையை அவர்
உரிந்துகொண்டு, என் சிரசின் கிரீடத்தை
10 எடுத்துப்போட்டார். அவர் என்னை நான்கு
புறத்திலும் நாசமாக்கினார், [5]நான் அற்றுப்
போகிறேன்; என் நம்பிக்கையை ஒரு செடி
11 யைப்போலப் பிடுங்கிப்போட்டார். அவர்
தமது கோபத்தை என்மேல் எரியப்பண்ணி
னார்; என்னைத் தம்முடைய சத்துருக்களில்
12 ஒருவனாக எண்ணிக்கொள்ளுகிறார். அவரு
டைய தண்டுப்படைகள் ஏகமாய் வந்து,
எனக்கு விரோதமாய்த் தங்கள் வழியை
உயர்த்தி, என் கூடாரத்தைச் சுற்றிப் பாளய
13 மிறங்கினார்கள். என் சகோதரரை என்னை
விட்டுத் தூரப்படுத்தினார்; எனக்கு அறிமுக
மானவர்கள் எனக்கு அந்நியராய்ப் போனார்
14 கள். என் பந்துஜனங்கள் [6]விலகிப்போனார்
கள்; என் சிநேகிதர் என்னை மறந்துவிட்டார்
15 கள். என் வீட்டு ஜனங்களும், என் வேலைக்
காரிகளும், என்னை அந்நியனாக எண்ணு
கிறார்கள்; அவர்கள் பார்வைக்கு நான் பர
16 தேசியானேன். நான் என் வேலைக்காரனைக்
கூப்பிடுகிறபோது அவன் எனக்கு உத்தரவு
கொடான்; என் வாயினால் நான் அவனைக்
17 கெஞ்சவேண்டியதாயிற்று. என் சுவாசம்
என் மனைவிக்கு வேறுபட்டிருக்கிறது; என்
கர்ப்பத்தின் பிள்ளைகளுக்காகப் பரிதபிக்கி
18 றேன். சிறுபிள்ளைகளும் [7]என்னை அசட்
டைபண்ணுகிறார்கள்; நான் எழுந்தால், அவர்
கள் எனக்கு விரோதமாய்ப் பேசுகிறார்கள்.
19 என் பிராண சிநேகிதர் எல்லாரும் என்னை
வெறுக்கிறார்கள்; [8]நான் சிநேகித்தவர்கள்
20 எனக்கு விரோதிகளானார்கள். என் எலும்பு
கள் என் தோலோடும் என் மாம்சத்தோடும்
[9]ஒட்டிக்கொண்டிருக்கிறது; என் பற்களை
மூடக் கொஞ்சம் தோல்மாத்திரம் தப்பினது.
என் சிநேகிதரே, எனக்கு இரங்குங்கள், 21
எனக்கு இரங்குங்கள்; [10]தேவனுடைய கை
என்னைத் தொட்டது. தேவனைப்போல நீங் 22
களும் [11]என்னைத் துன்பப்படுத்துவானேன்?
என் மாம்சம் பட்சிக்கப்பட்டாலும் நீங்கள்
திருப்தியற்றிருக்கிறதென்ன?
ஆ, நான் இப்பொழுது சொல்லும் வார்த் 23
தைகள் எழுதப்பட்டால் நலமாயிருக்கும்;
அவைகள் ஒரு புஸ்தகத்தில் வரையப்பட்டு,
அல்லது என்றைக்கும் நிலைக்க அவைகள் 24
கருங்கல்லிலே உளிவெட்டாகவும் ஈய எழுத்
தாகவும் பதிந்தால் நலமாயிருக்கும். என் மீட் 25
பர் உயிரோடிருக்கிறார் என்றும், அவர் கடை
சிநாளில் பூமியின்மேல் நிற்பார் என்றும் நான்
அறிந்திருக்கிறேன். இந்த என் தோல் முத 26
லானவை அழுகிப்போன பின்பு, [12]நான் என்
மாம்சத்தில் இருந்து தேவனைப் பார்ப்பேன்.
அவரை நானே பார்ப்பேன்; அந்நிய கண்கள் 27
அல்ல, என் கண்களே அவரைக் காணும்;
இந்த வாஞ்சையால் என் உள்ளிந்திரியங்கள்
எனக்குள் சோர்ந்துபோகிறது.
காரியத்தின் மூலம் எனக்குள் கண்டுபிடிக் 28
கப்படுகையில், நாம் ஏன் அவனைத் துன்பப்
படுத்துகிறோம் என்று நீங்கள் சொல்லவேண்
டியதாமே. பட்டயத்துக்குப் பயப்படுங்கள்; 29
நியாயத்தீர்ப்பு உண்டென்கிறதை நீங்கள் அறி
யும்பொருட்டு, [13]மூர்க்கமானது பட்டயத்தி
னால் உண்டாகும் ஆக்கினையை வரப்பண்ணும்
என்றான்.

அப்பொழுது நாகமாத்தியனான சோப் 20
பார் பிரதியுத்தரமாக: இதற்காக மறுஉத்தரவு 2
கொடுக்க என் சிந்தனைகள் என்னை ஏவுகிறபடி
யால் நான் தீவிரித்துச் சொல்லுகிறேன். நிந் 3
தித்தேன் என்று நான் கடிந்துகொள்ளப்பட்
டதைக் கேட்டேன்; ஆனாலும் உணர்வினால்
என் ஆவி பிரதியுத்தரம் சொல்ல என்னை
ஏவுகிறது.
துன்மார்க்கனின் கெம்பீரம் குறுகினது 4
என்பதையும், மாயக்காரனின் சந்தோஷம்
[14]ஒரு நிமிஷம்மாத்திரம் நிற்கும் என்பதையும்,
அவர் மனுஷனைப் பூமியில் வைத்த ஆதிகால 5
முதல் இப்படியிருக்கிறது என்பதையும் நீர்
அறியீரோ? அவனுடைய மேன்மை வான 6
பரியந்தம் [15]உயர்ந்தாலும், அவனுடைய தலை
மேகங்கள்மட்டும் எட்டினாலும், அவன் தன் 7
மலத்தைப்போல என்றைக்கும் அழிந்துபோ
வான்; [16]அவனைக் கண்டவர்கள், அவன் எங்
கே என்பார்கள்? அவன் ஒரு சொப்பனத் 8
தைப்போல் பறந்துபோய்க் காணப்படாதவனா
வான்; [17]இரவில் தோன்றும் தரிசனத்தைப்
போல் பறக்கடிக்கப்படுவான். அவனைப் 9
பார்த்த கண் இனி அவனைப் பார்ப்பதில்லை;
[18]அவன் இருந்த ஸ்தலம் இனி அவனைக் காண்
பதில்லை. அவன் பிள்ளைகள் எளிமையான 10
வர்களின் சகாயத்தைத் தேடுவார்கள்; [19]அவன்
பறித்ததை அவன் கைகள் திரும்பக் கொடுக்க
வேண்டியதாகும். அவன் எலும்புகள் அவ 11

1 2 தெச. 1. 8
2 ஆதி. 31. 7
3 சங். 38. 16
4 சங். 38. 8
5 புல. 2. 5, 6
6 சங். 38. 11
7 2 இரா. 2. 28
8 சங். 41. 9
9 சங். 102. 5
10 சங். 38. 2
11 சங். 69. 26
12 சங். 17. 15. 1 கொ. 15. 58. 1 யோ. 3. 2
13 சங். 58. 10, 11
14 21. 13
15 ஏசா. 14. 18, 14
16 1 இரா. 14. 10
17 சங். 78. 20
18 7. 8
19 18. [illegible]

னுடைய வாலவயதின் பாவங்களினால் நிறைந்
திருந்து, [1]அவனோடேகூட மண்ணிலே படுத்
துக்கொள்ளும்.
12 பொல்லாப்பு அவன் வாயிலே இனிமை
யாயிருப்பதால், [2]அவன் அதைத் தன் நாவின்
13 கீழ் அடக்கி, அதை விடாமல், பதனம்
பண்ணி, தன் வாய்க்குள்ளே வைத்துக்கொண்
14 டிருந்தாலும், அவன் போஜனம் அவன்
குடல்களில் மாறி, அவனுக்குள் விரியன்
15 பாம்புகளின் *பிச்சாய்ப்போகும். அவன்
விழுங்கின ஆஸ்தியைக் கக்குவான்; தேவன்
அதை அவன் வயிற்றிலிருந்து வெளியே தள்
ளிவிடுவார்.
16 அவன் விரியன் பாம்புகளின் விஷத்தை
உறிஞ்சுவான்; [3]விரியனின் நாக்கு அவனைக்
17 கொல்லும். தேனும் நெய்யும் ஓடும் வாய்க்
கால்களையும் ஆறுகளையும் அவன் காண்ப
18 தில்லை. தான் பிரயாசப்பட்டுத் தேடினதை
அவன் விழுங்காமல் திரும்பக் கொடுப்பான்;
அவன் திரும்பக் கொடுக்கிறது அவன் ஆஸ்
திக்குச் சரியாயிருக்கும்; அவன் களிகூராதி
19 ருப்பான். அவன் ஒடுக்கி, ஏழைகளைக் கை
விட்டு, தான் கட்டாத வீட்டைப் பறித்தபடி
20 யினாலும், தன் வயிறு திருப்தியற்றிருந்தபடி
யினாலும், அவன் இச்சித்த காரியங்களில்
21 [4]அவனுக்கு ஒன்றும் இருப்பதில்லை. அவன்
போஜனத்தில் ஒன்றும் மீதியாவதில்லை;
ஆகையால் அவன் ஆஸ்தி நிலைநிற்பதில்லை.
22 அவன் வேண்டுமென்கிற பரிபூரணம் அவ
னுக்கு வந்தபின், அவனுக்கு வியாகுலம் உண்
டாகும்; சிறுமைப்படுகிற ஒவ்வொருவருடைய
கையும் அவன்மேல் வரும்.
23 தன் வயிற்றை நிரப்பத்தக்கது இன்னும்
அவனுக்கு இருந்தாலும், அவர் அவன்மேல்
தமது கோபத்தின் உக்கிரத்தை வரவிட்டு,
அவன் போஜனம் பண்ணுகையில், [5]அதை
24 அவன்மேல் சொரியப்பண்ணுவார். இருப்பு
ஆயுதத்துக்கு அவன் தப்பியோடினாலும் உரு
25 க்குவில் அவனை உருவ எய்யும். உருவினபட்
டயம் அவன் சரீரத்தையும், மின்னுகிற அம்பு
அவன் பிச்சையும் உருவிப்போகும்; பயங்
26 கரங்கள் [6]அவன்மேல் வரும். அவன் ஒளிக்
கும் இடங்களில் காரிருள் அடங்கியிருக்கும்;
அவியாத அக்கினி அவனைப் பட்சிக்கும்;
[7]அவன் கூடாரத்தில் மீதியாயிருக்கிறவன்
27 தீங்கு அநுபவிப்பான். வானங்கள் அவன்
அக்கிரமத்தை வெளிப்படுத்தி, பூமி அவனு
28 க்கு விரோதமாக எழும்பும். அவன் வீட்டின்
சம்பத்துப் போய்விடும்; அவருடைய கோபத்
தின் நாளிலே அவைகள் கரைந்துபோகும்.
29 இதுவே தேவனால் துன்மார்க்கனுக்குக்
கிடைக்கும் பங்கும், [8]அவன் செய்கைக்கு
தேவனால் அவனுக்கு வரும் சுதந்தரமுமாம்
என்றான்.

21 2 யோபு பிரதியுத்தரமாக: என் வசனத்
தைக் கவனமாய்க் கேளுங்கள்; இது நீங்கள்
என்னைத் தேற்றரவுபண்ணுவதுபோல இருக்
கும். நான் பேசப்போகிறேன், சகித்திருங் 3
கள்; [9]நான் பேசினபின்பு பரியாசம்பண்ணுங்
கள். நான் மனுஷனைப் பார்த்தா அங்கலாய்க் 4
கிறேன்? அப்படியானாலும் என் ஆவி விசனப்
படாதிருக்குமா? என்னைக் கவனித்துப் பாருங் 5
கள், [10]அப்பொழுது நீங்கள் பிரமித்து, உங்கள்
வாயைக் கையால் பொத்திக்கொள்வீர்கள்.
இதை நான் நினைக்கையில் கலங்குகிறேன்; 6
நடுக்கம் என் மாம்சத்தைப் பிடிக்கும். துன் 7
மார்க்கர் ஜீவித்து [11]விருத்தராகி, வல்லவராவா
னேன்? அவர்களோடேகூட அவர்கள் சந் 8
ததியார் அவர்களுக்கு முன்பாகவும், அவர்கள்
பிள்ளைகள் அவர்கள் கண்களுக்கு முன்பாக
வும் திடப்படுகிறார்கள். அவர்கள் வீடுகள் 9
பயமில்லாமல் பத்திரப்பட்டிருக்கும்; தேவ
னுடைய மிலாறு [12]அவர்கள்மேல் வருகிற
தில்லை. அவர்களுடைய எருது பொலிந் 10
தால், வீணாய்ப் போகாது; [13]அவர்களுடைய
பசு சினை அழியாமல் ஈனுகிறது. அவர்கள் 11
தங்கள் குழந்தைகளை ஒரு மந்தையைப்போல
வெளியே போகவிடுகிறார்கள்; அவர்கள் பிள்
ளைகள் குதித்து விளையாடுகிறார்கள். அவர் 12
கள் தம்புரையும் சுரமண்டலத்தையும் எடுத்
துப் பாடி, கின்னரத்தின் ஓசைக்குச் சந்தோ
ஷப்படுகிறார்கள். அவர்கள் செல்வவான்க 13
ளாய்த் தங்கள் நாட்களைப் போக்கி, ஒரு
க்ஷணப்பொழுதிலே பாதாளத்தில் இறங்கு
கிறார்கள். அவர்கள் தேவனை நோக்கி: எங் 14
களை விட்டு விலகியிரும், [14]உம்முடைய வழி
களை அறிய விரும்போம்; சர்வவல்லவரை 15
நாம் சேவிக்க அவர் யார்? [15]அவரை நோக்கி
ஜெபம்பண்ணுவதினால் நமக்குப் பிரயோசனம்
என்ன என்கிறார்கள்.
ஆனாலும் அவர்கள் வாழ்வு அவர்கள் கையி 16
ராது; துன்மார்க்கரின் ஆலோசனை [16]எனக்
குத் தூரமாயிருப்பதாக. எத்தனைச் சடிதியில் 17
துன்மார்க்கரின் விளக்கு அணைந்துபோம்;
அவர் தமது கோபத்தினால் வேதனைகளைப்
பகிர்ந்து கொடுக்கையில், [17]அவர்கள் ஆபத்து
அவர்கள்மேல் வரும். அவர்கள் காற்று முகத் 18
திலிருக்கிற துரும்பைப்போலவும், பெருங்
காற்று பறக்கடிக்கிற பதரைப்போலவும் இருக்
கிறார்கள். தேவன் அவனுடைய அக்கிரமத் 19
தை அவன் [18]பிள்ளைகளுக்கு வைத்து வைக்கி
றார்; அவன் உணரத்தக்கவிதமாய் அதை அவ
னுக்குப் பலிக்கப்பண்ணுகிறார். அவனுடைய 20
அழிவை அவனுடைய கண்கள் காணும்,
[19]சர்வவல்லவருடைய உக்கிரத்தைக் குடிப்
பான். அவன் மாதங்களின் தொகை குறுக் 21
கப்படும்போது, அவனுக்குப் பிற்பாடு அவன்
வீட்டைப்பற்றி அவனுக்கு இருக்கும் விருப்ப
மென்ன?
உயர்ந்தோரை நியாயந்தீர்க்கிற தேவனுக்கு 22
அறிவை [20]உணர்த்த யாராலாகும்? ஒருவன் 23
நிர்வாகத்தோடும் சுகத்தோடும் வாழ்ந்து குறை
யற்ற பெலனுள்ளவனாய்ச் சாகிறான். அவ 24
னுடைய பால்பாத்திரங்கள் பாலால் நிரம்பி

1 13. 26
2 15. 16
* விஷம்.
3 ரோ. 3. 13
4 யோ. 5. 13, 14
5 சங். 78. 30, 31
6 சங். 78. 9
7 சங். 21. 9. மத். 3. 12
8 27. 18; 31. 2, 3
9 16. 10; 17. 2
10 40. 4
11 எரே. 12. 1, 2
12 சங். 73. 5
13 யாத். 23. 26
14 22. 17
15 யாத். 5. 2. மல். 3. 14
16 சங். 1. 1
17 லூ. 12. 46
18 யாத். 20. 5. எசே. 18. 14
19 வெளி. 14. 10
20 ஏசா. 40. 13. ரோ. 11. 34. 1 கொ. 2. 16

யிருக்கிறது, அவன் எலும்புகளில் ஊன் புஷ்
25 டியாயிருக்கிறது. வேறொருவன் ஒருநாளா
வது சந்தோஷத்தோடே சாப்பிடாமல், மனக்
26 கிலேசத்தோடே சாகிறான். இருவரும் சம
மாய் [1]மண்ணிலே படுத்துக்கொள்ளுகிறார்
கள்; புழுக்கள் அவர்களை மூடும்.
27 இதோ, நான் உங்கள் நினைவுகளையும், நீங்
கள் என்னைப்பற்றி அநியாயமாய்க் கொண்டி
ருக்கும் ஆலோசனைகளையும் அறிவேன்.
28 பிரபுவினுடைய வீடு எங்கே? துன்மார்க்க
ருடைய கூடாரம் எங்கே? என்று சொல்
29 லுகிறீர்கள். வழிநடந்து போகிறவர்களை நீங்
கள் கேட்கவில்லையா, அவர்கள் சொல்லும்
30 குறிப்புகளை நீங்கள் அறியவில்லையா? துன்
மார்க்கன் ஆபத்து நாளுக்கென்று வைக்கப்படு
கிறான்; [2]அவன் கோபாக்கினையின் நாளுக்
31 கென்று கொண்டுவரப்படுகிறான். அவன்
வழியை [3]அவன் முகத்துக்கு முன்பாகத் தூண்
டிக் காண்பிக்கிறவன் யார்? அவன் செய்கைக்
குத்தக்க பலனை அவனுக்குச் சரிக்கட்டுகிற
32 வன் யார்? அவன் கல்லறைக்குக் கொண்டு
வரப்படுகிறான்; அவன் கோரி காக்கப்பட்
33 டிருக்கும். பள்ளத்தாக்கின் புல்பத்தைகள்
அவனுக்கு இன்பமாயிருக்கும்; [4]அவனுக்கு
முன்னாக எண்ணிறந்த ஜனங்கள் போனது
போல, அவனுக்குப் பின்னாக ஒவ்வொருவரும்
34 அவ்விடத்துக்குச் செல்லுவார்கள். நீங்கள்
வீணான ஆறுதலை எனக்குச் சொல்லுகிறது
என்ன? [5]உங்கள் மறுமொழிகளில் உண்மைக்
கேடு இருக்கிறது என்றான்.

**22** அப்பொழுது தேமானியனான எலிப்
2 பாஸ் பிரதியுத்தரமாக: ஒரு மனுஷன் விவே
கியாயிருந்து, [6]தனக்குத்தான் பிரயோசனமா
யிருக்கிறதினால் தேவனுக்குப் பிரயோசனமா
3 யிருப்பானோ? நீர் நீதிமானாயிருப்பதினால் சர்வ
வல்லவருக்கு நன்மை யுண்டாகுமோ? நீர் உம்
முடைய வழிகளை உத்தமமாக்குகிறது அவ
4 ருக்கு ஆதாயமாயிருக்குமோ? அவர் உமக்
குப் பயந்து உம்மோடே வழக்காடி, உம்மோ
5 டே நியாயத்துக்கு வருவாரோ? உம்முடைய
பொல்லாப்பு பெரியதும், உம்முடைய அக்கிர
மங்கள் முடிவில்லாதவைகளுமாய் இருக்கிற
6 தல்லவோ? முகாந்தரமில்லாமல் உம்முடைய
சகோதரர் கையில் [7]அடகுவாங்கி, ஏழைக
ளின் வஸ்திரங்களைப் பறித்துக்கொண்டீர்?
7 விடாய்த்தவனுக்குத் தாகத்துக்குத் தண்ணீர்
கொடாமலும், [8]பசித்தவனுக்குப் போஜனம்
8 கொடாமலும் போனீர். பலவானுக்கே தேசத்
தில் இடமுண்டாயிற்று; கனவான் அதில்
9 குடியேறினான். விதவைகளை வெறுமையாய்
அனுப்பிவிட்டீர்; [9]தாய்தகப்பன் இல்லாதவர்
10 களின் புயங்கள் முறிக்கப்பட்டது. ஆகை
யால் கண்ணிகள் உம்மைச் சூழ்ந்திருக்கி
றது; [10]அசுப்பிலே உமக்கு வந்த பயங்கரம்
11 உம்மைக் கலங்கப்பண்ணுகிறது. நீர் பார்க்கக்
கூடாதபடிக்கு இருள் வந்தது, ஜலப்பிரவாகம்
உம்மை மூடுகிறது.

1 பிர. 9. 3
2 சங். 16. 4. 2 பே. 2. 9
3 கலா. 2. 11
4 எபி. 9. 27
5 16. 2
6 சங். 16. 2. லூ 17. 10,
7 யாத். 22. 26, 27. எசே. 18. 12
8 31. 17. மத். 25. 42
9 31. 21. எசா. 10. 1. எசே. 22. 7
10 சங். 11. 6
11 சங். 10. 11
12 சங். 189. 11, 12
13 அப். 14. 15-17
14 21. 14
* பொருள்.
15 ஏசா. 27. 5. பிலி. 4. 7
16 சங். 119. 11
17 ஓசி. 14. 1, 2
18 2 தீமோ. 2. 19
19 சங். 66. 17-20
20 மத். 21. 22
21 1 பே. 5. 5
22 சங். 77. 2-9
23 ஏசா. 26. 8. 55. 6, 7

தேவன் பரலோகத்தின் உன்னதங்களி 12
லிருக்கிறார் அல்லவோ? நட்சத்திரங்களின்
உயரத்தைப் பாரும், அவைகள் எத்தனை உயர
மாயிருக்கிறது. நீர்: தேவன் எப்படி அறி 13
வார், [11]அந்தகாரத்துக்கு அப்புறத்திலிருக்கிற
வர் நியாயம் விசாரிக்கக்கூடுமோ? அவர் பாரா 14
தபடிக்கு மேகங்கள் அவருக்கு மறைவாயிருக்
கிறது; [12]பரமண்டலங்களின் சக்கரத்திலே
அவர் உலாவுகிறார் என்று சொல்லுகிறீர்.
அக்கிரம மாந்தர் பூர்வத்தில் நடந்த மார்க்கத் 15
தைக் கவனித்துப் பார்த்தீரோ? காலம் வரு 16
முன்னே அவர்கள் வாடிப்போனார்கள்; அவர்
களுடைய அஸ்திபாரத்தின்மேல் வெள்ளம்
புரண்டது. தேவன் அவர்கள் வீடுகளை [13]நன் 17
மையால் நிரப்பியிருந்தாலும், அவர்கள் அவ
ரை நோக்கி: எங்களை விட்டு விலகும், [14]சர்வ
வல்லவராலே எங்களுக்கு என்ன ஆகும் என்
றார்கள். ஆகையால் துன்மார்க்கரின் ஆலோ 18
சனை எனக்குத் தூரமாயிருப்பதாக. எங்கள் 19
*நிலைமை நிர்மூலமாகாமல், அவர்களுக்கு மீதி
யானதையோ அக்கினி பட்சித்த தென்பதை
நீதிமான்கள் கண்டு சந்தோஷப்படுகிறார்கள்.
குற்றமில்லாதவன் அவர்களைப் பார்த்து நகைக் 20
கிறான்.

நீர் அவரோடே பழகி சமாதானமாயிரும்; 21
[15]அதினால் உமக்கு நன்மை வரும். அவர் 22
வாயினின்று பிறந்த வேதப்பிரமாணத்தை ஏற்
றுக்கொண்டு, [16]அவர் வார்த்தைகளை உம்மு
டைய இருதயத்தில் வைத்துக்கொள்ள வேண்
டுகிறேன். நீர் சர்வவல்லவரிடத்தில் மனந் 23
திரும்பினால், [17]திரும்பக் கட்டப்படுவீர்; அக்
கிரமத்தை [18]உமது கூடாரத்துக்குத் தூரமாக்கு
வீர். அப்பொழுது தூளைப்போல் பொன்னை 24
யும், ஆற்றுக்கற்களைப்போல் ஓப்பீரின் தங்கத்
தையும் சேர்த்துவைப்பீர். அப்பொழுது சர்வ 25
வல்லவர் தாமே உமக்குப் பசும்பொன்னும்,
உமக்குச் சொக்கவெள்ளியுமாயிருப்பார். அப் 26
பொழுது சர்வவல்லவர்மேல் மனமகிழ்ச்சியா
யிருந்து, தேவனுக்கு நேராக உம்முடைய
முகத்தை ஏறெடுப்பீர். நீர் அவரை நோக்கி 27
விண்ணப்பம்பண்ண, [19]அவர் உமக்குச் செவி
கொடுப்பார்; அப்பொழுது நீர் உம்முடைய
பொருத்தனைகளைச் செலுத்துவீர். நீர் ஒரு 28
காரியத்தை நிருணயம்பண்ணினால், [20]அது
உமக்கு நிலைவரப்படும்; உம்முடைய பாதை
களில் வெளிச்சம் பிரகாசிக்கும். மனுஷர் 29
ஒடுக்கப்படும்போது திடப்படக்கடவர்கள்
என்று நீர் சொல்ல, [21]தாழ்ந்தோர் ரட்சிக்கப்படு
வார்கள். குற்றமற்றிராதவனையுங்கூடத் தப்பு 30
விப்பார்; உம்முடைய கைகளின் சுத்தத்தினி
மித்தம் அவன் தப்பிப்போவான் என்றான்.

யோபு பிரதியுத்தரமாக: இன்றையதின 2 **23**
மும் என் அங்கலாய்ப்பு முரண்டுத்தனமாக
எண்ணப்படுகிறது; [22]என் தவிப்பைப்பார்க்கி
லும் என் வாதை கடினமானது. நான் அவரை 3
எங்கே கண்டு சந்திக்கலாம் என்பதை அறிந்
தால் நலமாயிருக்கும்; [23]அப்பொழுது நான்

அவர் ஆசனத்துக்கு முன்பாக வந்து சேர்ந்து,
4 என் நியாயத்தை அவருக்கு முன்பாக வரிசை
யாய் வைத்து, [1]காரியத்தை ரூபிக்கும் வார்த்
5 தைகளால் என் வாயை நிரப்புவேன். அவ
ருடைய மறுமொழிகளை நான் அறிந்து, அவர்
எனக்குச் சொல்வதை உணர்ந்துகொள்ளு
6 வேன். அவர் தம்முடைய மகா வல்லமையின்
படியே என்னோடே வழக்காடுவாரோ? [2]அவர்
அப்படிச் செய்யாமல் என்மேல் தயை வைப்
7 பார். அங்கே சன்மார்க்கன் அவரோடே
வழக்காடலாம்; அப்பொழுது என்னை நியாயந்
தீர்க்கிறவரின் கைக்கு என்றைக்கும் நீங்க
8 லாய்த் தப்புவித்துக்கொள்வேன். இதோ,
நான் முன்னாகப் போனாலும் அவர் இல்லை;
பின்னாகப் போனாலும் அவரைக் காணேன்.
9 இடதுபுறத்தில் அவர் கிரியைசெய்தும் அவ
ரைக் காணேன்; வலதுபுறத்திலும் நான் அவ
10 ரைக் காணாதபடிக்கு ஒளித்திருக்கிறார். ஆனா
லும் நான் போகும் வழியை அவர் அறிவார்;
[3]அவர் என்னைச் சோதித்தபின் நான் பொன்
11 னாக விளங்குவேன். என் கால்கள் அவர்
அடிகளைப் பற்றிப்பிடித்தது; [4]அவருடைய
நெறியைவிட்டு நான் சாயாமல் அதைக் கைக்
12 கொண்டேன். அவர் உதடுகளின் கற்பனை
களை விட்டு நான் பின்வாங்குவதில்லை; அவ
ருடையவாயின் வார்த்தைகளை எனக்கு வேண்
டிய ஆகாரத்தைப்பார்க்கிலும் [5]அதிகமாய்க்
காத்துக்கொண்டேன்.
13 அவரோவென்றால் ஒரே மனமாயிருக்கி
றார்; அவரைத் திருப்பத்தக்கவர் யார்? [6]அவரு
டைய சித்தத்தின்படியெல்லாம் செய்வார்.
14 எனக்குக் குறித்திருக்கிறதை அவர் நிறைவேற்
றுவார்; [7]இப்படிப்பட்டவைகள் இன்னும் அநே
15 கம் அவரிடத்தில் உண்டு. ஆகையால் அவ
ருக்கு முன்பாகக் கலங்குகிறேன்; [8]நான் சிந்
திக்கிறபோது, அவருக்குப் பயப்படுகிறேன்.
16 தேவன் என் இருதயத்தை இளக்கரிக்கப்பண்
ணினார்; சர்வவல்லவர் என்னைக் கலங்கப்பண்
17 ணினார். அந்தகாரம் வராததற்குமுன்னே
நான் சங்கரிக்கப்படாமலும், இருளை அவர்
எனக்கு மறைக்காமலும் போனதினால் இப்
படியிருக்கிறேன்.

**24** சர்வவல்லவருக்குக் காலங்கள் மறைக்கப்
படாதிருக்க, [9]அவரை அறிந்தவர்கள் அவர்
நியமித்த நாட்களை அறியாதிருக்கிறதென்ன?
2 சிலர் எல்லைக்குறிப்புகளை [10]ஒற்றி, மந்தை
களைப் பலாத்காரமாய்ச் சாய்த்துக்கொண்டு
3 போய் பட்சிக்கிறார்கள். தாய் தகப்பன் இல்
லாதவர்களின் கழுதையை ஓட்டிக்கொண்டு
போய், [11]விதவையின் மாட்டை ஈடாக எடுத்
4 துக்கொள்ளுகிறார்கள். தேசத்தில் சிறுமைப்
பட்டவர்கள் ஏகமாய் ஒளித்துக்கொள்ளத்தக்
கதாக, [12]எளிமையானவர்களை வழியை விட்டு
5 விலக்குகிறார்கள். இதோ, அவர்கள் காட்
டுக்கழுதைகளைப்போல இரைதேட அதிகா
லமே தங்கள் வேலைக்குப் புறப்படுகிறார்கள்;
வனாந்தர வெளிதான் அவர்களுக்கும் அவர்

1 ஏசா. 43. 26
2 ஏசா. 57. 16
3 1 பே. 1. 7
4 சங். 44. 19
5 சங். 19. 9, 10. யோ. 4. 32, 34
6 ரோ. 9. 19
7 1 தெச. 3. 3
8 சங். 119. 120
9 அப். 1. 7
10 உபா. 19. 14
11 உபா. 24. 6, 10, 12
12 நீதி. 28. 28
13 யாத். 22. 26, 27. உபா. 24. 12, 13
14 புல. 4. 5
15 சங். 10. 8-11
16 நீதி. 7. 8, 9
17 யோ. 3. 20
18 சங். 73. 18, 19
19 நீதி. 10. 7. ஏசா. 26. 14

கள் பிள்ளைகளுக்கும் ஆகாரம் கொடுக்கவேண்
டும். துன்மார்க்கனுடைய வயலில் அவர் 6
கள் அவனுக்காக அறுப்பு அறுத்து, அவனு
டைய திராட்சத்தோட்டத்தின் பழங்களைச்
சேர்க்கிறார்கள். குளிரிலே போர்த்துக்கொள் 7
ளுகிறதற்கு ஒன்றும் இல்லாததினால், [13]வஸ்
திரமில்லாமல் ராத்தங்கி, மலைகளிலிருந்து 8
வரும் மழைகளிலே நனைந்து, [14]ஒதுக்கிட
மில்லாததினால் கன்மலையிலே அண்டிக்
கொள்ளுகிறார்கள்.
அவர்களோ தகப்பனில்லாத பிள்ளையை 9
முலையைவிட்டுப் பறித்து, தரித்திரன் போர்த்
துக் கொண்டிருக்கிறதை அடகு வாங்குகிறார்
கள். அவனை வஸ்திரமில்லாமல் நடக்கவும், 10
பட்டினியாய் அரிக்கட்டுகளைச் சுமக்கவும்,
தங்கள் மதில்களுக்குள்ளே செக்காட்டவும், 11
தாகத்தவனமாய் ஆலையாட்டவும் பண்ணுகி
றார்கள். ஊரில் மனுஷர் தவிக்கிறார்கள், 12
குற்றுயிராய்க் கிடக்கிறவர்களின் ஆத்துமா
கூப்பிடுகிறது; என்றாலும், தேவன் அதைக்
குற்றமாக அவர்கள்மேல் சுமத்துகிறதில்லை.
அவர்கள் வெளிச்சத்துக்கு விரோதமாய் 13
நடக்கிறவர்களின் கூட்டத்தார்; அவர்கள்
அவருடைய வழிகளை அறியாமலும், அவரு
டைய பாதைகளில் தரிக்காமலும் இருக்கிறார்
கள். கொலைபாதகன் பொழுது விடிகிற 14
போது எழுந்து, [15]சிறுமையும் எளிமையுமான
வனைக் கொன்று, ராக்காலத்திலே திருடனைப்
போல் திரிகிறான். விபசாரனுடைய கண் 15
[16]மாலைமயங்குகிற வேளைக்குக் காத்திருந்து:
என்னை ஒரு கண்ணும் காணமாட்டாதென்று
முகத்தை மூடிக்கொள்ளுகிறான். அவர்கள் 16
பகலில் அடையாளம் பார்த்த வீடுகளை இருட்
டிலே கன்னமிடுகிறார்கள்; [17]அவர்கள் வெளிச்
சத்தை அறியார்கள். விடியுங்காலமும் அவர் 17
களுக்கு மரண இருள்போல் இருக்கிறது;
அப்படிப்பட்டவன் மரண இருளின் பயங்
கரத்தோடு பழகியிருக்கிறான். நீரோட்டத் 18
தைப்போல் தீவிரமாய்ப் போவான்; [18]தேசத்
தில் அவன் பங்கு சபிக்கப்பட்டுப் போகிறதி
னால், அவன் திராட்சத்தோட்டங்களின் வழி
யை இனிக் காண்பதில்லை.
வறட்சியும் உஷ்ணமும் உறைந்த மழை 19
யைப் பட்சிக்கும்; அப்படியே பாதாளமானது
பாவிகளைப் பட்சிக்கும். அவனைப் பெற்ற 20
கர்ப்பம் அவனை மறக்கும்; புழு திருப்திகர
மாய் அவனைத் தின்னும்; [19]அவன் அப்புறம்
நினைக்கப்படுவதில்லை; அக்கிரமமானது பட்ட
மரத்தைப்போல முறிந்துவிழும்.
பிள்ளைபெறாத மலடியின் ஆஸ்தியைப் 21
பட்சித்துவிட்டு, விதவைக்கு நன்மை செய்யா
தேபோகிறான். தன் பலத்தினாலே வல்ல 22
வர்களைத் தன் பாரிசமாக்குகிறான்; அவன்
எழும்புகிறபோது ஒருவனுக்கும் பிராணனைப்
பற்றி நிச்சயமில்லை. தேவன் அவனுக்குச் 23
சுகவாழ்வைக் கட்டளையிட்டால், அதின்மேல்
உறுதியாய் நம்பிக்கை வைக்கிறான்; ஆனா

லும் அவருடைய கண்கள் [1]அப்படிப்பட்ட
வர்களின் வழிகளுக்கு விரோதமாயிருக்கிறது.
24 அவர்கள் கொஞ்சக்காலம் உயர்ந்திருந்து, [2]கா
ணாமற்போய், தாழ்த்தப்பட்டு, மற்ற எல்லா
ரைப்போலும் அடக்கப்படுகிறார்கள்; கதிர்
களின் நுனியைப்போல அறுக்கப்படுகிறார்
25 கள். அப்படியில்லையென்று என்னைப் பொ
ய்யனாக்கி, என் வார்த்தைகளை வியர்த்தமாக்
கத்தக்கவன் யார் என்றான்.

**25** அப்பொழுது சூகியனான பில்தாத் பிரதி
2 யுத்தரமாக: அதிகாரமும் பயங்கரமும் அவ
ரிடத்தில் இருக்கிறது; [3]அவர் தமது உன்
னதமான ஸ்தலங்களில் சமாதானத்தை உண்
3 டாக்குகிறார். அவருடைய சேனைகளுக்குத்
தொகையுண்டோ? [4]அவருடைய வெளிச்சம்
4 யார்மேல் உதிக்காமலிருக்கிறது? இப்படி
யிருக்க, மனுஷன் தேவனுக்கு முன்பாக நீதி
மானாயிருப்பது எப்படி? [5]ஸ்திரீயினிடத்தில்
5 பிறந்தவன் [6]சுத்தமாயிருப்பது எப்படி? சந்தி
ரனை அண்ணாந்துபாரும், அதுவும் பிரகாசியா
மலிருக்கிறது; நட்சத்திரங்களும் அவர் பார்
6 வைக்குச் சுத்தமானவைகள் அல்ல. புழுவா
யிருக்கிற மனிதனும், பூச்சியாயிருக்கிற மனு
புத்திரனும் [7]எம்மாத்திரம் என்றான்.

**26** 2 யோபு மறுமொழியாக: திடனில்லாதவ
னுக்கு நீ எப்படி ஒத்தாசை பண்ணினாய்?
[8]பெலனற்ற கையை நீ எப்படி ஆதரித்தாய்?
3 நீ ஞானமில்லாதவனுக்கு எப்படி உசாவு
துணையாயிருந்து, மெய்ப்பொருளைக் குறை
4 வற அறிவித்தாய்? யாருக்கு அறிவைப் போதி
த்தாய்? உன்னிடத்திலிருந்து புறப்பட்ட
[9]ஆவி யாருடையது?
5 ஜலத்தின்கீழ் மடிந்தவர்களுக்கும், அவர்க
ளோடே தங்குகிறவர்களுக்கும் தத்தளிப்பு
6 உண்டு. அவருக்கு முன்பாகப் பாதாளம்
வெளியாய்த் திறந்திருக்கிறது; [10]நரகம் மூடப்
7 படாதிருக்கிறது. அவர் உத்தரமண்டலத்
தை வெட்டவெளியிலே [11]விரித்து, பூமியை
8 அந்தரத்திலே தொங்கவைக்கிறார். அவர்
தண்ணீர்களைத் தம்முடைய கார்மேகங்களில்
கட்டிவைக்கிறார்; [12]அதின் பாரத்தினால் மே
9 கம் கிழிகிறதில்லை. அவர் தமது சிங்காசனம்
நிற்கும் ஆகாசத்தை ஸ்திரப்படுத்தி, அதின்
10 மேல் தமது மேகத்தை [13]விரிக்கிறார். அவர்
தண்ணீர்கள்மேல் சக்கரவட்டம் தீர்த்தார்;
[14]வெளிச்சமும் இருளும் முடியுமட்டும் அப்
11 படியே இருக்கும். அவருடைய கண்டிதத்
தால் [15]வானத்தின் தூண்கள் அதிர்ந்து தத்த
12 ளிக்கும். அவர் தமது வல்லமையினால் சமுத்
திரக் கொந்தளிப்பை அமரப்பண்ணி, [16]தமது
ஞானத்தினால் அதின் மூர்க்கத்தை அடக்கு
13 கிறார். தமது ஆவியினால் வானத்தை அலங்
கரித்தார்; [17]அவருடைய கரம் நெளிவான சர்
14 ப்ப நட்சத்திரத்தை உருவாக்கிற்று. இதோ,
இவைகள் அவருடைய கிரியையில் கடை
கோடியானவைகள், [18]அவரைக்குறித்து நாங்
கள் கேட்டது எவ்வளவு கொஞ்சம்; அவரு
டைய வல்லமையின் இடிமுழக்கத்தை அறிந்
தவன் யார் என்றான்.

யோபு பின்னும் தன் பிரசங்கவாக்கியத் **27**
தைத் தொடர்ந்து சொன்னது: என் சுவா 2
சம் என்னிலும், [19]தேவன் தந்த ஆவி என் நா
சியிலும் இருக்குமட்டும், என் உதடுகள் 3
தீமையைச் சொல்வதுமில்லை; என் நாக்கு
கபடம் பேசுவதுமில்லையென்று, என் நியா 4
யத்தைத் தள்ளிவிடுகிற தேவனும், [20]என் ஆத்
துமாவைக் கசப்பாக்குகிற சர்வவல்லவருமான
வருடைய ஜீவனைக்கொண்டு சொல்லுகி
றேன். நீங்கள் பேசுகிறது நீதியென்று நான் 5
ஒத்துக்கொள்வது எனக்குத் தூரமாயிருப்ப
தாக; [21]என் ஆவி பிரியுமட்டும் என் உத்தமத்
தை என்னைவிட்டு விலக்கேன். என் நீதி 6
யைக் கெட்டியாய்ப் பிடித்திருக்கிறேன்;
அதை நான் விட்டுவிடேன்; [22]நான் உயிரோ
டிருக்குமளவும் என் இருதயம் என்னை நிந்
திக்காது. என் பகைஞன் ஆகாதவனைப்போ 7
லும், எனக்கு விரோதமாய் எழும்புகிறவன்
அக்கிரமக்காரனைப்போலும் இருப்பானாக.
மாயக்காரன் பொருளைத் தேடிவைத்திருந் 8
தாலும், தேவன் அவன் ஆத்துமாவை எடுத்
துக்கொள்ளும்போது [23]அவன் நம்பிக்கை
யென்ன? ஆபத்து அவன்மேல் வரும்போது, 9
[24]தேவன் அவன் கூப்பிடுதலைக் கேட்பாரோ?
அவன் சர்வவல்லவர்மேல் மனமகிழ்ச்சியா 10
யிருப்பானோ? அவன் எப்பொழுதும் [25]தேவ
னைத் தொழுதுகொண்டிருப்பானோ?
தேவனுடைய கரத்தின் கிரியையைக் குறி 11
த்து உங்களுக்கு உபதேசிப்பேன்; சர்வவல்ல
வரிடத்தில் இருக்கிறதை நான் மறைக்கமாட்
டேன். இதோ, நீங்கள் எல்லாரும் அதைக் 12
கண்டிருந்தும், நீங்கள் இத்தனை வீண் எண்
ணங்கொண்டிருக்கிறது என்ன? பொல்லாத 13
மனுஷனுக்கு தேவனிடத்திலிருந்து வருகிற
பங்கும், கொடூரக்காரர் சர்வவல்லவரால்
அடைகிற சுதந்தரமும் என்னவெனில், அவ 14
னுடைய குமாரர் பெருகினால் [26]பட்டயத்
துக்கு இரையாவார்கள்; அவன் கர்ப்பப்பிறப்
புகள் ஆகாரத்தினால் திருப்தியாவதில்லை.
அவனுக்கு மீதியானவர்கள் செத்துப் புதைக் 15
கப்படுவார்கள்; அவனுடைய விதவைகள்
[27]புலம்புவதில்லை. அவன் புழுதியைப்போலப் 16
பணத்தைக் குவித்துக்கொண்டாலும், மண்
ணைப்போல வஸ்திரங்களைச் சவதரித்தாலும்,
அவன் சவதரித்ததை நீதிமான் உடுத்திக்கொ 17
ண்டு, [28]குற்றமில்லாதவன் அவன் பணத்தைப்
பகிர்ந்துகொள்ளுவான். அவனுடைய வீடு 18
பொட்டுப்பூச்சி கட்டின வீட்டைப்போலும்,
காவல்காக்கிறவன் போட்ட குடிசையைப்
போலுமாகும். அவன் ஐசுவரியவானாய்த் 19
தூங்கிக் கிடந்து, [29]ஒன்றும் பறிகொடாதே
போனாலும், அவன் தன் கண்களைத் திறக்கும்
போது ஒன்றுமில்லாதிருக்கும். வெள்ளத் 20
தைப்போல திகில்கள் அவனை வாரிக்கொண்
டுபோகும்; இராக்காலத்தில் பெருங்காற்று

1 சங். 11. 4. நீதி. 15. 3
2 சங். 37. 35, 36
3 தானி. 4. 3, 34
4 மத். 5. 45. யாக். 1. 17
5 4. 17. ஒ. சங். 143. 2. ஒ. ரோ. 5. 1, 21
6 சகரி. 13. 1. 1 கொ. 6. 11. 1 யோ. 1. 9. வெளி. 1. 5
7 சங். 22. 6
8 ஏசா. 40. 14
9 பிர. 12. 7
10 சங். 139. 8, 11. நீதி. 15. 11. எபி. 4. 13
11 சங். 104. 2
12 ஆதி. 1. 6, 7. நீதி. 30. 4
13 சங். 97. 2
14 நீதி. 8. 29
15 எபி. 12. 26
16 யாத். 14. 21. ஏசா. 51. 15
17 சங். 33. 6, 7
18 1 கொ. 13. 9, 12
19 ஆதி. 2. 7
20 ரூத். 1. 20
21 2. 3, 9
22 அப். 24. 16. 1 யோ. 3. 19–21
23 மத். 16. 26
24 நீதி. 1. 28
25 மத். 13. 21
26 உபா. 28. 41. 2 இரா. 10. 7, 8. ஓசி. 9, 13
27 சங். 78. 64
28 பிர. 2. 26
29 லூக். 16. 22, 23

21 அவனை அடித்துக்கொண்டுபோகும். கொண்
டல்காற்று அவனைத் தூக்கிக்கொண்டுபோக,
அவன் போய்விடுவான்; அது அவனை அவன்
ஸ்தலத்திலிருந்து தள்ளிக்கொண்டு போகும்.
22 அவர் இவைகளை அவன்மேல் வரப்பண்ணி
அவனைத் தப்பவிடாதிருப்பார்; அவருடைய
23 கைக்குத் தப்பியோடப் பார்ப்பான். ஜனங்கள்
அவனைப் பார்த்துக் கைகொட்டி, அவனை அவ
ன் ஸ்தலத்தைவிட்டு வெருட்டிவிடுவார்கள்.

**28** வெள்ளிக்கு விளைவிடம் உண்டு, பொன்
2 னுக்குப் புடமிடும் ஸ்தலமுமுண்டு. இரும்பு
மண்ணிலிருந்து எடுக்கப்படும்; செம்பு கற்
3 களில் உருக்கி எடுக்கப்படும். மனிதன் அந்த
காரத்திலும் மரண இருளிலும் இருக்கிற கற்
களைக் கடையாந்தரமட்டும் ஆராய்ந்து தேடி,
இருளுக்கும் அங்கே முடிவுண்டாக்குகிறான்.
4 கடக்கக்கூடாததும் நிலையாததுமான ஆறு
எழும்பினாலும், உழைப்பாளியானவன் அதை
மனுஷரால் வற்றிப்போகப்பண்ணிச் செல்லு
5 கிறான். பூமியின்மேல் ஆகாரம் விளையும்;
அதின் கீழிடங்களிலிருக்கிறவைகளோ, அக்
6 கினியால் மாறினதுபோலிருக்கும். அதின்
கல்லுகளில் இந்திரநீலம் விளையும்; அதின்
பொடியில் பொன்பொடிகளும் உண்டாயிருக்
7 கும். ஒரு வழியுண்டு, அது ஒரு பட்சிக்
கும் தெரியாது; வல்லூறின் கண்ணும் அதைக்
8 கண்டதில்லை; துஷ்டமிருகங்களின் கால்
அதில் படவில்லை; சிங்கம் அதைக் கடந்த
9 தில்லை. அவன் தன் கைகளைக் கற்பாறை
யின்மேல் நீட்டி, மலைகளை வேரோடே புரட்
10 டுகிறான். கன்மலைகளுக்குள்ளும் நீர்க்கால்
களை [1]வெட்டுகிறான்; அவன் கண் விலையுயர்
11 ந்த எல்லாவற்றையும் காணும். ஒரு துளியும்
கசியாதபடி ஆறுகளை [2]அடைக்கிறான்; மறை
விடத்திலிருக்கிறதை வெளிச்சத்திலே [3]கொ
ண்டுவருகிறான்.
12 ஆனாலும் ஞானம் கண்டெடுக்கப்படுவது
13 எங்கே? [4]புத்தி விளைகிற இடம் எது? அதின்
விலை மனுஷனுக்குத் தெரியாது; [5]அது ஜீவ
னுள்ளோருடைய தேசத்திலே அகப்படுகிற
14 தில்லை. ஆழமானது: அது என்னிடத்தில்
இல்லையென்கிறது; [6]சமுத்திரமானதும், அது
15 என்னிடத்தில் இல்லையென்கிறது. அதற்கு
ஈடாகத் தங்கத்தைக் கொடுக்கவும், [7]அதற்குக்
கிரயமாக வெள்ளியை நிறுக்கவும் கூடாது.
16 ஓப்பீரின் தங்கமும், விலையேறப்பெற்ற கோ
மேதகமும், இந்திர நீலக்கல்லும் அதற்கு
17 ஈடல்ல. பொன்னும் பளிங்கும் அதற்கு
ஒப்பல்ல; பசும்பொன்னாபரணங்களுக்கு
18 அதை மாற்றக்கூடாது. பவளத்தையும் ஸ்
படிகத்தையும் அத்தோடே ஒப்பிட்டுப் பேச
லாகாது; முத்துகளைப்பார்க்கிலும் ஞானத்தின்
19 விலை உயர்ந்தது. எத்தியோப்பியாவின் புஷ்
பராகம் அதற்கு நிகரல்ல; பசும்பொன்னும்
அதற்குச் சரியல்ல.
20 இப்படியிருக்க, ஞானம் எங்கேயிருந்து
21 வரும்; [8]புத்தி தங்கும் இடம் எங்கே? அது

1 ஆப. 3. 9
2 26. 8
3 1 கொ. 4. 5
4 பிர. 7. 24
5 நீதி. 3. 13-15
6 ரோ. 11. 33, 34
7 நீதி. 8. 11, 19. 16. 16
8 12. வச. யாக். 1. 5, 17
9 நீதி. 2. 6
10 நீதி. 15. 3
11 சங். 135. 7
12 உபா. 4. 6, சங். 111. 10, நீதி. 1. 7. 9. 10, பிர. 12. 13, யாக். 3. 17
13 7. 8
14 சங். 18. 28, 23. 4
15 சங். 25. 14
16 உபா. 33. 24
17 லூ. 4. 22, 11. 27
18 சங். 72. 12, நீதி. 21. 13, 24. 11, 12
19 ஏசா. 61. 10, எபே. 6. 14
20 எண். 10. 31

ஜீவனுள்ள சகலருடைய கண்களுக்கும் ஒளித்
தும், ஆகாசத்துப் பறவைகளுக்கு மறைந்தும்
இருக்கிறது. நாசமும் மரணமும், நாங்கள் 22
எங்கள் காதுகளினாலேமாத்திரம் அதின் கீர்த்
தியைக் கேட்டோம் என்கிறது.
தேவனே அதின் வழியை அறிவார், 23
[9]அதின் ஸ்தானம் அவருக்கே தெரியும்.
அவர் பூமியின் கடையாந்தரங்களைப் பார்த்து, 24
[10]வானங்களின் கீழ் இருக்கிறதையெல்லாம்
காண்கிறார். அவர் காற்றுக்கு அதின் நிறை 25
யை நியமித்து, [11]ஜலத்துக்கு அதின் அள
வைப் பிரமாணித்து, மழைக்குத் திட்டத் 26
தையும், இடிமுழக்கத்தோடே கூடிய மின்ன
லுக்கு வழியையும் ஏற்படுத்துகிறார். அவர் 27
அதைப்பார்த்துக் கணக்கிட்டார்; அதை ஆரா
ய்ந்து ஆயத்தப்படுத்தி, மனுஷனை நோக்கி: 28
இதோ, ஆண்டவருக்குப் பயப்படுவதே ஞா
னம்; [12]பொல்லாப்பை விட்டு விலகுவதே
புத்தி என்றார் என்று சொன்னான்.
பின்னும் யோபு தன் பிரசங்க வாக்கியத் **29**
தைத் தொடர்ந்து சொன்னது: சென்று 2
போன மாதங்களிலும், [13]தேவன் என்னைக்
காப்பாற்றிவந்த நாட்களிலும் எனக்கு உண்
டாயிருந்த சீர் இப்பொழுது இருந்தால் நல
மாயிருக்கும். அப்பொழுது அவர் தீபம் 3
என்தலையின்மேல் பிரகாசித்தது; அவர் அரு
ளின வெளிச்சத்தினால் [14]இருளைக் கடந்து
போனேன். தேவனுடைய இரகசியச்செ 4
யல் [15]என் கூடாரத்தின்மேல் இருந்தது.
அப்பொழுது சர்வவல்லவர் என்னோடிருந் 5
தார்; என் பிள்ளைகள் என்னைச் சூழ்ந்திருந்
தார்கள். என் பாதங்களை நான் நெய்யினால் 6
கழுவினேன்; [16]கன்மலைகளிலிருந்து எனக்
காக எண்ணெய் நதிபோல ஓடிவந்தது; அந்
தச் செல்வநாட்களின் சீர் இப்போதிருந்தால்
நலமாயிருக்கும்.
நான் பட்டண வீதியால் வாசலுக்குள் 7
புறப்பட்டுப் போய், வீதியில் என் ஆசனத்
தைப் போடும்போது, வாலிபர் என்னைக் 8
கண்டு ஒளித்துக்கொள்வார்கள்; முதியோர்
எழுந்திருந்து நிற்பார்கள். பிரபுக்கள் பேச 9
கிறதை நிறுத்தி, கையினால் தங்கள் வாயைப்
பொத்திக்கொள்வார்கள். பெரியோரின் சத் 10
தம் அடங்கி, அவர்கள் நாக்கு அவர்கள் மேல்
வாயோடு ஒட்டிக்கொள்ளும். என்னைக் கே 11
ட்ட காது என்னைப் பாக்கியவான் என்றது;
[17]என்னைக் கண்ட கண் எனக்குச் சாட்சியிட்
டது. முறையிடுகிற ஏழையையும், திக்கற்ற 12
பிள்ளையையும், உதவியற்றவனையும் [18]ரட்சித்
தேன். கெட்டுப்போக இருந்தவனுடைய 13
ஆசீர்வாதம் என்மேல் வந்தது; விதவையின்
இருதயத்தைக் கெம்பீரிக்கப் பண்ணினேன்.
நீதியைத் தரித்துக்கொண்டேன்; [19]அது என் 14
உடுப்பாயிருந்தது; என் நியாயம் எனக்குச்
சால்வையும் பாகையுமாய் இருந்தது. நான் 15
குருடனுக்குக் கண்ணும், [20]சப்பாணிக்குக் கா
லுமாயிருந்தேன். நான் எளியவர்களுக்குத் 16

தகப்பனாயிருந்து, [1]நான் அறியாத வழக்கை
17 ஆராய்ந்து பார்த்தேன். நான் அநியாயக்
காரருடைய கடைவாய்ப் பற்களை உடைத்து,
அவர்கள் பறித்ததை அவர்கள் பற்களிலிருந்து
18 பிடுங்கினேன். என் கூட்டிலே நான் ஜீவித்
துப்போவேன்; [2]என் நாட்களை மணலத்தனை
யாய்ப் பெருகப்பண்ணுவேன் என்றேன்.
19 என் வேர் தண்ணீர்களின் ஓரமாய்ப் படர்ந்
தது; என் கிளையின்மேல் பனி ராமுழுதும்
20 தங்கியிருந்தது. என் மகிமை என்னில் செ
ழித்தோங்கி, என் கையிலுள்ள என் வில்
[3]புதுப்பெலன்கொண்டது.
21 எனக்குச் செவிகொடுத்துக் காத்திருந்தார்
கள்; என் ஆலோசனையைக் கேட்டு மவுனமா
22 யிருந்தார்கள். என் பேச்சுக்குப் பேசாம
லிருந்தார்கள்; என் வசனம் அவர்கள்மேல்
23 துளிதுளியாய் விழுந்தது. மழைக்குக் காத்
திருக்கிறதுபோல் எனக்குக் காத்திருந்து,
[4]பின்மாரிக்கு ஆசையுள்ளவர்கள்போல் தங்கள்
24 வாயை ஆவென்று திறந்திருந்தார்கள். நான்
அவர்களைப் பார்த்து நகைக்கும்போது, அவர்
கள் துணிகரங் கொள்ளவில்லை; என் முகக்
25 களையை மாறச்செய்யவும் இல்லை. அவர்
கள் வழியே போக எனக்குச் சித்தமாகும்
போது, நான் தலைவனாய் உட்கார்ந்து, ராணு
வத்துக்குள் ராஜாவைப்போலும், துக்கித்தவர்
களைத் தேற்றாவுபண்ணுகிறவனைப்போலும்
இருந்தேன்.

30 இப்போதோ என்னிலும் இளவயதான
வர்கள் என்னைப் பரியாசம்பண்ணுகிறார்
கள்; இவர்களுடைய பிதாக்களை நான் என்
மந்தையைக் காக்கும் நாய்களோடே வைக்க
2 வுங்கூட வெட்கப்பட்டிருப்பேன். விருத்
தாப்பியத்தினாலே பெலனற்றுப்போன அவர்
கள் கைகளினால் எனக்கு என்ன உதவி
3 யிருந்தது. குறைச்சலினாலும் பசியினாலும்
அவர்கள் வாடி, வெகுநாளாய்ப் பாழும்
வெறுமையுமான அந்தரவெளிக்கு ஓடிப்
4 போய், செடிகளுக்குள் இருக்கிற தழை
களைப் பிடுங்குவார்கள்; காட்டுப்பூண்டுகளின்
கிழங்குகள் அவர்களுக்கு ஆகாரமாயிருந்தது.
5 அவர்கள் மனுஷரின் நடுவிலிருந்து துரத்தப்
பட்டார்கள்; கள்ளனைத் துரத்துகிறதுபோல்:
கள்ளன் கள்ளன் என்று அவர்களைத் துரத்தி
6 விட்டார்கள். அவர்கள் பள்ளத்தாக்குகளின்
வெடிப்புகளிலும், பூமியின் கெபிகளிலும்,
கன்மலைகளிலும் போய் குடியிருந்தார்கள்.
7 செடிகளுக்குள்ளிருந்து கதறி, காஞ்சொறி
8 களின்கீழ் ஒதுங்கினார்கள். அவர்கள் மூட
ரின் மக்களும், நீசரின் பிள்ளைகளும், தேசத்
திலிருந்து துரத்துண்டவர்களுமாய் இருந்தார்
9 கள். ஆனாலும் இப்போது நான் அவர்களுக்
குப் [5]பாட்டும் பழமொழியும் ஆனேன்.
10 என்னை அருவருத்து, எனக்குத் தூரமாகி,
என் *முகத்துக்கு முன்பாகத் துப்பக் கூசா
11 திருக்கிறார்கள். நான் கட்டின கட்டை
அவர் அவிழ்த்து, என்னைச் சிறுமைப்படுத்
தினபடியினால், அவர்களும் கடிவாளத்தை
என் முகத்துக்கு முன்பாக உதறிவிட்டார்கள்.
வலதுபாரிசத்தில் வாலிபர் எழும்பி, என் 12
கால்களைத் தவறிவிழப்பண்ணி, தங்கள் கே
டான வழிகளை எனக்கு நேராக ஆயத்தப்
படுத்துகிறார்கள். என் பாதையைக் கெடுத்து, 13
என் ஆபத்தை வர்த்திக்கப்பண்ணுகிறார்கள்;
அதற்கு அவர்களுக்கு ஒத்தாசைபண்ணுகிற
வர்கள் தேவையில்லை. பெரிதான திறப்புண் 14
டாக்கி, தாங்கள் கெடுத்த வழியில் புரண்டு
வருகிறார்கள். பயங்கரங்கள் என்மேல் திரும்பி 15
வருகிறது, அவைகள் காற்றைப்போல என்
ஆத்துமாவைப் பின்தொடருகிறது; என் சுக
வாழ்வு ஒரு மேகத்தைப்போல் கடந்து
போயிற்று

ஆகையால் இப்போது என் ஆத்துமா 16
என்னில் முறிந்துபோயிற்று; [6]உபத்திரவத்
தின் நாட்கள் என்னைப் பிடித்துக்கொண்டது.
இராக்காலத்திலே என் எலும்புகள் துளைக்கப் 17
பட்டு, என் நரம்புகளுக்கு இளைப்பாறுதல் இல்
லாதிருக்கிறது. நோயின் உக்கிரத்தினால் என் 18
உடுப்பு வேறுபட்டுப்போயிற்று; அது என்
அங்கியின் கழுத்துப் பட்டையைப்போல,
என்னைச் சுற்றிக்கொண்டது. சேற்றிலே 19
தள்ளப்பட்டேன்; [7]தூளுக்கும் சாம்பலுக்கும்
ஒப்பானேன். உம்மை நோக்கிக் கூப்பிடுகி 20
றேன்; நீர் எனக்கு மறு உத்தரவு கொடாதி
ருக்கிறீர்; கெஞ்சி நிற்கிறேன், என்மேல் பரா
முகமாயிருக்கிறீர். என்மேல் கொடூரமுள்ள 21
வராக மாறினீர்; உம்முடைய கரத்தின் வல்
லமையால் என்னை விரோதிக்கிறீர். நீர் என் 22
னைத் தூக்கி, என்னைக் காற்றிலே பறக்கவிட்
டு, என்னைப் பயத்தினால் உருகிப்போகப்பண்
ணுகிறீர். சகல ஜீவாத்துமாக்களுக்கும் குறிக் 23
கப்பட்ட தாவரமாகிய மரணத்துக்கு [8]என்னை
ஒப்புக்கொடுப்பீர் என்று அறிவேன். ஆனா 24
லும் நான் யாதொருவனை அவன் ஆபத்திலே
தவிக்கப்பண்ணினதும், †துன்னாளைக் கண்ட 25
வனுக்காக நான் அழாதிருந்ததும், எளியவ
னுக்காக என் ஆத்துமா வியாகுலப்படாதிருந்
ததும் உண்டானால், [9]அவர் என் மனுவுக்கு
இடங்கொடாமல், எனக்கு விரோதமாய்த்
தமது கையை நீட்டுவாராக. நன்மைக்குக் 26
காத்திருந்த எனக்குத் தீமை வந்தது; [10]வெளிச்
சத்தை வரப் பார்த்துக்கொண்டிருந்த எனக்கு
இருள் வந்தது.

என் குடல்கள் கொதித்து, அமராதிருக்கி 27
றது; உபத்திரவநாட்கள் என்மேல் வந்தது.
வெயில் படாதிருந்தும், [11]நான் கறுகறுத்துத் 28
திரிகிறேன்; நான் சபையிலிருந்து எழுந்திருக்
கும்போது அலறுகிறேன். நான் மலைப்பாம் 29
புகளுக்குச் சகோதரனும், கோட்டான்களுக்
குத் தோழனுமானேன். என் தோல் என் 30
மேல் கறுத்துப்போயிற்று; [12]என் எலும்புகள்
உஷ்டணத்தினால் காய்ந்துபோயிற்று. என் சுர 31
மண்டலம் புலம்பலாகவும், என் கின்னரம்
அழுகிறவர்களின் ஓலமாகவும் மாறின.

1 நீதி. 29. 7
2 சங். 30. 6
3 ஆதி. 49. 24
4 சகரி. 10. 1
5 சங். 69. 12. புல. 3. 14, 63
* முகத்தில். ஏசா. 50. 6. மத். 26. 67; 27. 30
6 சங். 42. 4
7 9. 31
8 ஆதி. 3. 19
† துன்பத்தை
9 சங். 35. 13, 14. ரோ. 12. 15
10 எரே. 8. 15
11 சங். 38. 6
12 புல. 4. 8; 5. 10

**31** என் கண்களோடே உடன்படிக்கை
பண்ணின [1]நான் ஒரு கன்னிகையின்மேல்
2 நினைப்பாயிருப்பதெப்படி? அப்பொழுது
உன்னதங்களிலிருந்து தேவன் அளிக்கும் பங்
கும், உன்னதத்திலிருந்து சர்வவல்லவர் கொ
3 டுக்கும் சுதந்தரமும் கிடைக்குமோ? மாறுபா
டானவனுக்கு ஆபத்தும், அக்கிரமச் செய்
கைக்காரருக்கு ஆக்கினையுமல்லவோ கிடைக்
4 கும். அவர் என் வழிகளைப் பார்த்து, [2]என்
நடைகளையெல்லாம் எண்ணுகிறார் அல்ல
5 வோ? நான் மாயையிலே நடந்தேனோ, [3]என்
6 கால் கபடுசெய்யத் தீவிரித்ததோ என்று, சமு
த்திரையான தராசிலே தேவன் என்னை நிறு
7 த்து, என் உத்தமத்தை அறிவாராக. என்
நடைகள் வழியைவிட்டு விலகினதும், [4]என்
இருதயம் என் கண்களைப் பின்தொடர்ந்ததும்,
ஏதாகிலும் ஒரு மாசு என் கைகளில் ஒட்டிக்
8 கொண்டதும் உண்டானால், அப்பொழுது
நான் விதைத்ததை வேறொருவன் புசிப்பா
னாக; [5]என் பயிர்கள் வேரற்றுப்போகக்கட
9 வது. என் மனம் யாதொரு ஸ்திரீயின்மேல்
மயங்கி, அயலானுடைய வாசலை நான் எட்
10 டிப்பார்த்ததுண்டானால், அப்பொழுது என்
மனைவி [6]வேறொருவனுக்கு மாவரைப்பா
ளாக; வேற்று மனிதர் அவள்மேல் சாய்வார்
11 களாக. அது தோஷம், அது நியாயாதிபதிக
12 ளால் விசாரிக்கப்படும் [7]அக்கிரமமாமே. அது
பாதாளபரியந்தம் பட்சிக்கும் [8]அக்கினியாய்
என் சம்பத்தையெல்லாம் நிர்மூலமாக்கும்.
13 என் வேலைக்காரனானாலும், என் வேலைக்
காரியானாலும், என்னோடு வழக்காடும்போது,
அவர்கள் நியாயத்தை நான் அசட்டைபண்ணி
14 யிருந்தால், தேவன் எழும்பும்போது, நான்
என்னசெய்வேன்; அவர் விசாரிக்கும்போது,
நான் அவருக்கு என்ன மறு உத்தரவு சொல்
15 லுவேன். தாயின் கர்ப்பத்தில் என்னை உண்டு
பண்ணினவர் அவனையும் உண்டுபண்ணினார்
அல்லவோ? ஒரேவிதமான கர்ப்பத்தில் எங்
களை [9]உருவாக்கினார் அல்லவோ?
16 எளியவர்கள் வாஞ்சித்ததை நான் கொடா
திருந்து, விதவையின் கண்களைப் பூத்துப்போ
17 கப்பண்ணி, தாய் தகப்பனில்லாத பிள்ளை
என் ஆகாரத்தில் சாப்பிடாமல், நான் ஒருவ
18 னாய்ச் சாப்பிட்டதுண்டோ? என் சிறுவயது
முதல் அவன் தகப்பனிடத்தில் வளர்வது
போல என்னோடே வளர்ந்தான்; நான் என்
தாயின் கர்ப்பத்திலே பிறந்ததுமுதல் அப்ப
டிப்பட்டவர்களைக் கைலாகுகொடுத்து நடத்தி
19 னேன். ஒருவன் உடுப்பில்லாததினால் மடிந்து
போகிறதையும், ஏழைக்கு மூட வஸ்திரமில்லா
20 திருக்கிறதையும் நான் கண்டபோது, அவன்
என் ஆட்டுமயிர்க் கம்பளியினாலே அனல்
கொண்டதினால், [10]அவன் இடை என்னைப்
21 புகழாதிருந்ததும், ஒலிமுகவாசலில் எனக்
குச் செல்வாக்கு உண்டென்று நான் கண்டு,
திக்கற்றவனுக்கு விரோதமாய் என் கையை
22 நீட்டினதும் உண்டானால், என் கைப்பட்டை

1 நீதி. 6. 25. மத். 5. 28
2 எரே. 32. 19. லூக். 1. 48
3 சங். 44. 20, 21
4 எசே. 14. 3-7
5 லேவி. 26. 16
6 2 சாமு. 12. 11. எரே. 8. 10
7 லேவி. 20. 10
8 மல். 3. 5. எபி. 13. 4
9 நீதி. 22. 2
10 உபா. 24. 13
11 சங். 76. 7; 119. 20
12 மாற். 10. 24. 1 தீமோ. 6. 17
13 சங். 62. 10. நீதி. 11. 28
14 உபா. 4. 19; 11. 16; 17. 2—7. எசே. 8. 16
15 நீதி. 17. 5
16 பிர. 5. 6
17 ஏசா. 58. 7. எபி. 13. 2. 1 பே. 4. 9
18 ஆதி. 3. 8, 12. நீதி. 28. 13. ஓசி. 6. 7
19 யாத். 23. 2
* முறைப்பாட்டுப்பத்திரம்
20 1 இரா. 21. 19. யாக். 5. 4
21 ஆதி. 3. 18

தோளிலிருந்து சரிந்து, என் புயத்து எலும்பு
முறிந்துபோவதாக. தேவன் ஆக்கினையிடு 23
வார் என்றும், அவருடைய மகத்துவத்தை உத்
தரிக்கக்கூடாது என்றும், [11]எனக்குப் பயங்கர
மாயிருந்தது.
நான் பொன்னின்மேல் என் நம்பிக்கை 24
யை வைத்து, [12]தங்கத்தைப் பார்த்து: நீ என்
ஆதரவு என்று நான் சொன்னதும், என் 25
ஆஸ்தி பெரியதென்றும், [13]என் கைக்கு மிகுதி
யும் கிடைத்ததென்றும் நான் மகிழ்ந்ததும்,
சூரியன் பிரகாசிக்கும்போதும், அல்லது சந்தி 26
ரன் மகிமையாய்ச் செல்லும்போதும், நான்
அதை நோக்கி: என் மனம் இரகசியமாய் 27
மயக்கப்பட்டு, என் வாய் என் கையை முத்தி
செய்ததுண்டானால், இதுவும் நியாயாதிபதி 28
களால் விசாரிக்கப்படத்தக்க அக்கிரமமாயிரு
க்கும்; [14]அதினால் உன்னதத்திலிருக்கிற தே
வனை மறுதலிப்பேனே. என் பகைஞனுடைய 29
ஆபத்திலே நான் மகிழ்ந்து, [15]பொல்லாப்பு
அவனுக்கு நேரிட்டபோது களிகூர்ந்திருந்தே
னோ? அவன் ஜீவனுக்குச் சாபத்தைக் கொடுக் 30
கும்படி விரும்பி, [16]வாயினால் பாவஞ்செய்ய
நான் இடங்கொடுக்கவில்லை. அவன் இனத் 31
தார்களில் திருப்தியாகாதவனைக் காண்பிப்ப
வன் யாரென்று என் கூடாரத்தின் மனுஷர்
சொல்லார்களோ? பரதேசி வீதியிலே ராத்தங் 32
கினதில்லை; [17]வழிப்போக்கனுக்கு என் வாசல்
களைத் திறந்தேன். நான் ஆதாமைப்போல 33
என் மீறுதல்களை மூடி, [18]என் அக்கிரமத்தை
என் மடியிலே ஒளித்துவைத்தேனோ? திர 34
ளான என் கூட்டத்துக்கு நான் பயந்ததினாலா
வது, இனத்தார் ஜனத்தார் பண்ணும் இகழ்
ச்சி என்னைத் திடுக்கிடப்பண்ணினதினாலா
வது, [19]நான் பேசாதிருந்து, வாசற்படியை
விட்டுப் புறப்படாதிருந்தேனோ?
ஆ, என் வழக்கைக் கேட்கிறவன் ஒருவன் 35
இருந்தால் நலமாயிருக்கும்; இதோ, சர்வவல்
லவர் எனக்கு உத்தரவு அருளிச்செய்யவும்,
என் எதிராளி *தன் வழக்கை எழுதிக்கொ
டுக்கவும் எனக்கு விருப்பமுண்டு. அதை 36
நான் என் தோளின்மேல் வைத்து, எனக்குக்
கிரீடமாகத் தரித்துக்கொள்வேனே. அவ 37
னுக்கு நான் என் நடைகளைத் தொகை தொ
கையாய்க் காண்பித்து, ஒரு பிரபுவைப்போல
அவனிடத்தில் போவேன்.
எனக்கு விரோதமாக என் காணி பூமி கூப் 38
பிடுகிறதும், அதின் படைச்சால்கள் கூட அழு
கிறதும், கூலிகொடாமல் நான் அதின் பல 39
னைப் புசித்து, [20]பயிரிட்டவர்களின் ஆத்துமா
வை உபத்திரவப்படுத்தினதும் உண்டானால்,
அதில் கோதுமைக்குப் பதிலாக முள்ளும், 40
வாற்கோதுமைக்குப் பதிலாகக் [21]களையும்
முளைக்கக்கடவது என்றான். யோபின் வார்த்
தைகள் முடிந்தது.
யோபு தன் பார்வைக்கு நீதிமானாயிருந்த **32**
படியினால், அவனுக்கு அந்த மூன்று மனுஷ
ரும் பிரதியுத்தரம் சொல்லி ஓய்ந்தார்கள்.

2 அதினால் ராமின் வம்சத்தானான பூசியனா
கிய பரகெயேலின் குமாரன் எலிகூவுக்குக்
கோபம் மூண்டது; யோபு, தேவனைப்பார்க்கி
லும் தன்னைத்தான் நீதிமானாக்கினதினிமித்
தம், அவன்மேலும் அவனுக்குக் கோபம் மூண்
3 டது. கொடுக்கத்தக்க மறுமொழி யோபின்
மூன்று சிநேகிதருக்கும் அகப்படாதிருந்தும்,
அவர்கள் அவனை ஆகாதவனென்று தீர்த்ததி
னிமித்தம், அவர்கள்மேலும் அவனுக்குக் கோ
4 பம் மூண்டது. அவர்கள் தன்னைப்பார்க்கி
லும் வயது சென்றவர்களானபடியினால், எலி
கூ யோபின் வார்த்தைகள் முடிந்து தீருமட்
5 டும் காத்திருந்தான். அந்த மூன்று மனுஷ
ரின் வாயிலும் மறு உத்தரவு பிறக்கவில்லை
யென்று எலிகூ கண்டபோது, அவனுக்குக்
கோபம் மூண்டது.
6 ஆதலால் பரகெயேலின் குமாரன் எலிகூ
என்னும் பூசியன் பிரதியுத்தரமாக: நான் இள
வயதுள்ளவன், [1]நீங்களோ விருத்தாப்பியர்;
ஆகையால் நான் அஞ்சி, என் அபிப்பிராயத்
தை உங்களுக்கு முன்பாக வெளிப்படுத்தப்
7 பயந்திருந்தேன். முதியோர் பேசட்டும்,
வயதுசென்றவர்கள் ஞானத்தை அறிவிக்கட்
8 டும் என்றிருந்தேன். ஆனாலும் மனுஷரில்
ஒரு ஆவியுண்டு; சர்வவல்லவருடைய சுவாச
மே அவர்களை [2]உணர்வுள்ளவர்களாக்கும்.
9 பெரியோரெல்லாம் ஞானிகளல்ல; [3]முதியோ
10 ரெல்லாம் நீதியை அறிந்தவர்களுமல்ல. ஆகை
யால் எனக்குச் செவிகொடுங்கள்; நானும்
என் அபிப்பிராயத்தை வெளிப்படுத்துவேன்
என்றேன்.
11 இதோ, உங்கள் வசனங்கள் முடியுமட்டும்
காத்திருந்தேன்; நீங்கள் சொல்லத்தக்கதை
ஆராய்ந்து தேடுமட்டும், உங்கள் நியாயங்களுக்
12 குச் செவிகொடுத்தேன். நான் உங்கள்
சொல்லைக் கவனித்தேன்; ஆனாலும் இதோ,
உங்களில் யோபுக்கு நியாயத்தைத் தெரியக்
காட்டி, அவருடைய வசனங்களுக்கு ஏற்ற
13 பிரதியுத்தரம் சொல்லுகிறவனில்லை. ஞான
த்தைக் கண்டுபிடித்தோம் என்று நீங்கள்
சொல்லாதபடி பாருங்கள்; [4]மனுஷனல்ல,
தேவனே அவனை ஜெயங்கொள்ளவேண்டும்.
14 அவர் என்னைப் பார்த்துப் பேசினதில்லை; நீங்
கள் சொன்ன வார்த்தைகளினால் நான் அவ
ருக்குப் பிரதியுத்தரம் சொல்வதுமில்லை.
15 அவர்கள் கலங்கி, அப்புறம் பிரதியுத்தரம்
சொல்லாதிருக்கிறார்கள்; அவர்களுக்குப் பே
16 ச்சு அற்றுப்போயிற்று. அவர்கள் பேசார்
களோ என்று காத்திருந்தேன்; ஆனாலும் அவர்
கள் அப்புறம் மறுமொழி கொடாமலிருந்த
17 படியினால், நானும் பிரதியுத்தரமாக எனக்
குத் தோன்றியமட்டும் சொல்லுவேன்; நானும்
என் அபிப்பிராயத்தை வெளிப்படுத்துவேன்.
18 வார்த்தைகள் எனக்குள் நிறைந்திருக்கிறது;
என் உள்ளத்திலுள்ள ஆவி என்னை நெருக்கி
19 ஏவுகிறது. இதோ, என் உள்ளம் அடைக்கப்
பட்டிருந்து, புதுத் துருத்திகளை முதலாய்ப்

[1] 15. 10
[2] நீதி. 2. 6. தானி. 2. 21. யாக். 1. 5
[3] மத். 11. 25. 1 கொ. 1. 27
[4] எரே. 7. 23. 1 கொ. 1. 29
[5] சங். 12. 2, 3. கலா. 1. 10
[6] நீதி. 8. 6–9. தீத். 2. 7, 8
[7] ஆதி. 2. 7
[8] 9. 32, 33
[9] 9. 34
[10] 10. 7. 16. 17: 23. 11, 12. 27. 5, 6. 29. 14
[11] 19. 11
[12] 13. 27
[13] ஏசா. 45. 9. தானி. 4. 35
[14] 40. 5. சங். 62. 11
[15] ஏசா. 23. 9

பீறப்பண்ணுகிற புது ரசத்தைப்போலிருக்கி
றது. நான் ஆறுதலடையும்படி பேசுவேன்; 20
என் உதடுகளைத் திறந்து பிரதியுத்தரம் சொல்
லுவேன். நான் ஒருவனுடைய முகத்தைப் 21
பாராமலும், ஒரு மனுஷனுக்கும் இச்சகம்
பேசாமலும் இருப்பேனாக. நான் இச்சகம் 22
பேச அறியேன்; [5]பேசினால் என்னை உண்
டாக்கினவர் சீக்கிரமாய் என்னை எடுத்துக்
கொள்வார்.

யோபே, என் நியாயங்களைக் கேளும்; 33
என் வார்த்தைகளுக்கெல்லாம் செவிகொடும்.
இதோ, என் வாயை இப்போது திறந்தேன்; 2
என் வாயிலிருக்கிற என் நாவானது பேசும்.
என் வார்த்தைகள் என் இருதயத்தின் உண் 3
மைக்கு ஒத்திருக்கும்; [6]நான் அறிந்ததை என்
உதடுகள் சுத்தமாய் வசனிக்கும். தேவனு 4
டைய ஆவியானவர் என்னை உண்டாக்கினார்;
[7]சர்வவல்லவருடைய சுவாசம் எனக்கு உயிர்
கொடுத்தது. உம்மாலே கூடுமானால் எனக்கு 5
மறுமொழி கொடும்; நீர் ஆயத்தப்பட்டு என
க்கு எதிராக நில்லும். இதோ, உம்மைப் 6
போல நானும் தேவனால் உண்டானவன்;
[8]நானும் மண்ணினால் உருவாக்கப்பட்டவன்.
இதோ, நீர் எனக்குப் பயப்பட்டுக் கலங்கத் 7
தேவையில்லை; [9]என் கை உம்மேல் பாரமா
யிருக்கமாட்டாது.

நான் காதாரக் கேட்க நீர் சொன்னதும், 8
[10]எனக்குக் கேள்வியான உம்முடைய வார்த்
தைகளின் சத்தமும் என்னவென்றால்: நான் 9
மீறுதல் இல்லாத சுத்தன், நான் குற்றமற்ற
வன், என்னில் அக்கிரமமில்லை. இதோ, 10
என்னில் அவர் குற்றம்பிடிக்கப் பார்க்கிறார்,
[11]என்னைத் தமக்குச் சத்துருவாக எண்ணிக்
கொள்ளுகிறார். அவர் என் கால்களைத் 11
தொழுவிலே மாட்டி, [12]என் நடைகளையெல்
லாம் காவல்படுத்துகிறார் என்று சொன்னீர்.
இதிலே நீர் நீதியுள்ளவர் அல்லவென்று உமக் 12
குப் பிரதியுத்தரமாகச் சொல்லுகிறேன்; மனு
ஷனைப்பார்க்கிலும் தேவன் பெரியவராயிருக்
கிறார்.

அவர் தம்முடைய செயல்கள் எல்லாவற் 13
றையுங்குறித்துக் காரணம் சொல்லவில்லை
யென்று [13]நீர் அவரோடே ஏன் வழக்காடுகி
றீர்? தேவன் ஒருவிசை சொல்லியிருக்கிற 14
காரியத்தை இரண்டாம்விசை [14]பார்த்துத்
திருத்துகிறவரல்லவே. கனநித்திரை மனு 15
ஷர்மேல் இறங்கி, அவர்கள் படுக்கையின்
மேல் அயர்ந்திருக்கையில், அவர் இராக்கா 16
லத்துத் தரிசனமான சொப்பனத்திலே மனு
ஷருடைய செவிக்குத் தாம் செய்யும் காரி
யத்தை வெளிப்படுத்தி, அதை அவர்களுக்கு
வரும் தண்டனையினாலே முத்திரைபோட்டு,
மனுஷன் தன்னுடைய செய்கையை விட்டு 17
நீங்கவும், [15]மனுஷருடைய பெருமை அடங்க
வும் செய்கிறார். இவ்விதமாய் அவன் ஆத்து 18
மாவைப் படுகுழிக்கும், அவன் ஜீவனைப் பட்
டய வெட்டுக்கும் தப்புவிக்கிறார்.

19 அவன் தன் படுக்கையிலே வாதையினு
லும், [1]தன் சகல எலும்புகளிலும் அகோர
மான நோவினுலும் தண்டிக்கப்படுகிறுன்.
20 அவன் ஜீவன் அப்பத்தையும், அவன் ஆத்
துமா ருசிகரமான போஜனத்தையும் அரோ
21 சிக்கும். அவன் மாம்சம் காணப்படாதபடி
க்கு அழிந்து, மூடப்பட்டிருந்த அவன் எலும்
22 புகள் வெளிப்படுகிறது. அவன் ஆத்துமா
பாதாளத்துக்கும், அவன் பிராணன் சாவுக்
23 கும் சமீபிக்கிறது. ஆயிரத்தில் ஒருவராகிய
*சாமாசிபண்ணுகிற தூதனானவர் மனுஷனுக்
குத் தம்முடைய நிதானத்தை அறிவிக்கும்
படிக்கு, அவனுக்கு அநுசாரியாயிருந்தாரே
24 யாகில், அவர் அவனுக்கு இரங்கி, அவன்
படுகுழியில் இறங்காதபடிக்கு: நீர் அவனை
ரட்சியும்; மீட்கும் பொருளை நான் கண்டு
25 பிடித்தேன் என்பார். அப்பொழுது அவன்
மாம்சம் வாலிபத்தில் இருந்ததைப்பார்க்கி
லும் ஆரோக்கியமடையும்; தன் வாலவயது
26 நாட்களுக்குத் திரும்புவான். அவன் தேவனை
நோக்கி விண்ணப்பம்பண்ணும்போது, அவன்
அவருடைய சமுகத்தைக் கெம்பீரத்தோடே
பார்க்கும்படி அவர் அவன்மேல் பிரியமாகி,
அந்த மனுஷனுக்கு அவனுடைய நீதியின்
27 பலனைக் கொடுப்பார். அவன் மனுஷரை
நோக்கிப் பார்த்து: [2]நான் பாவஞ்செய்து செம்
மையானதைப் புரட்டினேன்; அது எனக்குப்
28 [3]பிரயோசனமாயிருக்கவில்லை. என் ஆத்துமா
படுகுழியில் இறங்காதபடி, அவர் அதை ரட்
சிப்பார்; ஆகையால் என் பிராணன் வெளிச்
சத்தைக் காணும் என்று சொல்லுவான்.
29 இதோ, தேவன் மனுஷனுடைய ஆத்துமா
வைப் படுகுழிக்கு விலக்குகிறதற்கும், அவனை
ஜீவனுள்ளோரின் வெளிச்சத்தினாலே [4]பிரகா
30 சிப்பிக்கிறதற்கும், அவர் இவைகளையெல்
லாம் அவனிடத்தில் பலமுறை நடப்பிக்கிறார்.
31 யோபே, நீர் கவனித்து என் சொல்லைக்
கேளும்; நான் பேசப்போகிறேன், நீர் மவுன
32 மாயிரும். சொல்லத்தக்க நியாயங்கள் இருந்
ததேயானால், எனக்கு மறுஉத்தரவு கொடும்;
நீர் பேசும், உம்மை நீதிமானாகத் தீர்க்க என
33 க்கு ஆசையுண்டு. ஒன்றும் இல்லாதிருந்த
தேயாகில், நீர் என் சொல்லைக் கேளும், [5]மவு
னமாயிரும், நான் உமக்கு ஞானத்தை உபதே
சிப்பேன் என்றான்.

34 2 பின்னும் எலிகூ மாறுத்தரமாக: ஞானி
களே, என் வார்த்தைகளைக் கேளுங்கள்;
அறிவாளிகளே, எனக்குச் செவிகொடுங்கள்.
3 வாயானது போஜனத்தை ருசிபார்க்கிறது
போல, செவியானது வார்த்தைகளைச் சோதித்
4 துப் பார்க்கும். நமக்காக நியாயமானதைத்
தெரிந்துகொள்வோமாக; நன்மை இன்ன
தென்று நமக்குள்ளே அறிந்துகொள்வோமாக.
5 யோபு: நான் நீதிமான்; [6]தேவன் என் நியாயத்
6 தைத் தள்ளிவிட்டார் என்றும், நியாயம் என்னி
டத்தில் இருந்தும் நான் பொய்யனென்று எண்
ணப்படுகிறேன்; மீறுதல் இல்லாதிருந்தும்,
அம்பினால் எனக்கு உண்டான காயம் ஆறாத
தாயிருக்கிறதென்றும் சொன்னாரே. யோபை 7
ப்போலவே, பரியாசம் பண்ணுதலைத் தண்
ணீரைப்போல் குடித்து, அக்கிரமக்காரரோ 8
டே கூடிக்கொண்டு, துன்மார்க்கரோடே திரி
கிறவன் யார்? எப்படியெனில், தேவன் 9
மேல் பிரியம் வைக்கிறது [7]மனுஷனுக்குப்
பிரயோசனம் அல்ல என்றாரே.
ஆகையால் புத்திமான்களே, எனக்குச் 10
செவிகொடுங்கள்; அக்கிரமம் தேவனுக்கும்,
[8]அநீதி சர்வவல்லவருக்கும் தூரமாயிருக்கி
றது. மனுஷனுடைய செய்கைக்குத் தக்கதை 11
அவனுக்குச் சரிக்கட்டி, [9]அவனவன் நடக்
கைக்குத் தக்கதாக அவனவனுக்குப் பலன
ளிக்கிறார். தேவன் அநியாயஞ் செய்யாம 12
லும், சர்வவல்லவர் நீதியைப் புரட்டாமலும்
இருக்கிறது மெய்யே. பூமியின்மேல் மனுஷ 13
னுக்கு அதிகாரம் கொடுத்தவர் யார்? பூச்சக்க
ரம் முழுவதையும் ஒழுங்குப்படுத்தினவர் யார்?
அவர் தம்முடைய இருதயத்தை அவனுக்கு 14
விரோதமாகத்திருப்பினாரானால், அவனுடைய
ஆவியையும் அவனுடைய சுவாசத்தையும் தம்
மிடத்தில் இழுத்துக்கொள்ளுவார். அப்ப 15
டியே மாம்சமான யாவும் ஏகமாய் ஜீவித்துப்
போம், [10] மனுஷன் தூளுக்குத் திரும்புவான்.
உமக்கு உணர்விருந்தால் இதைக் கேளும், 16
என் வார்த்தைகளின் சத்தத்துக்குச் செவி
கொடும். நீதியைப் பகைக்கிற ஒருவன் ஆளக் 17
கூடுமோ? [11]மகா நீதிபரனைக் குற்றப்படுத்து
வீரோ? ஒரு ராஜாவைப் பார்த்து, நீ பொல் 18
லாதவன் என்றும், [12]அதிபதிகளைப் பார்த்து,
நீங்கள் அக்கிரமக்காரர் என்றும் சொல்லத்த
குமோ? இப்படியிருக்க, பிரபுக்களின் முகத் 19
தைப் பாராமலும், †ஏழையைப்பார்க்கிலும்
ஐசுவரியவானை அதிகமாய் எண்ணாமலும்
இருக்கிறவரை நோக்கி இப்படிச் சொல்ல
லாமா? [13]இவர்கள் எல்லாரும் அவர் கரங்
களின் கிரியையே. இப்படிப்பட்டவர்கள் 20
[14]சடிதியில் சாவார்கள்; ஜனங்கள் பாதி ஜாமத்
தில் கலங்கி ஒழிந்துபோவார்கள்; காணுதகை
யினால் பலவந்தர் அழிந்துபோவார்கள். அவ 21
ருடைய கண்கள் மனுஷருடைய வழிகளை
நோக்கியிருக்கிறது; [15]அவர்களுடைய நடை
களையெல்லாம் அவர் பார்க்கிறார். அக்கிர 22
மக்காரர் ஒளித்துக்கொள்ளத்தக்க அந்தகாரமு
மில்லை, [16]மரண இருளுமில்லை. மனுஷன் 23
தேவனோடே வழக்காடும்படி அவர் அவன்
மேல் மிஞ்சினதொன்றையும் . [17]சுமத்தமாட்
டார். ஆராய்ந்து முடியாத நியாயமாய் அவர் 24
வல்லமை யுள்ளவர்களை நொறுக்கி, வேறே
மனுஷரை அவர்கள் ஸ்தானத்திலே நிறுத்து
கிறார். அவர்கள் கிரியைகளை அவர் அறிந்தவ 25
ரானபடியால், அவர்கள் நசுங்கிப்போகத்தக்க
தாய் இராக்காலத்தில் அவர்களைக் கவிழ்த்துப்
போடுகிறார். அவர்கள் அவரை விட்டுப் பின் 26
வாங்கி, [18]அவருடைய எல்லா வழிகளையும்
உணர்ந்துகொள்ளாமல் போனபடியினாலும்,

1 சங். 107. 17
* மத்தியஸ்தன்=அர்த்தஞ்சொல்லுகிறவன்.
2 தூ. 15. 21. 1 கொ. 1. 9
3 ரோ. 6. 21
4 சங். 40. 1, 2; 56. 13. ஏசா. 38. 17. அப். 26. 18
5 சங். 34. 11
6 27. 4
7 9. 22, 23
8 ஆதி. 18. 25. ரோ. 9. 14
9 மத். 16. 27. ரோ. 2. 6. வெளி. 22. 12
10 ஆதி. 3. 19. பிர. 12. 7
11 ஆதி. 18. 25. 2 சாமு. 23. 3
12 யாத். 22. 28
† எபி. 12. 28
13 அப். 10. 34. ரோ. 2. 11. 1 பே. 1. 17
14 யாத். 12. 29, 30
15 2 நாளா. 16. 9
16 சங். 139. 2, 3. ஆமோ. 9. 2, 3. எபி. 4. 13. வெளி. 6. 15, 16
17 ஏசா. 42. 3. 1 கொ. 10. 13
18 நீதி. 1. 29, 30

27 எளியவர்களின் கூக்குரல் அவரிடத்தில் சே
ரும்படி செய்ததினாலும், [1]சிறுமையானவனு
28 டைய கூக்குரலைக் கேட்கிற அவர், எல்லாரும்
பார்க்கும்படி [2]அவர்களைத் துன்மார்க்கரென்று
29 அடிக்கிறார். மாயக்காரன் ஆளாதபடிக்கும்,
[3]ஜனங்கள் சிக்கிக்கொள்ளப்படாதபடிக்கும்,
30 ஒரு ஜனத்துக்கானாலும் ஒரு மனுஷனுக்கானா
லும் அவர் சமாதானத்தை அருளினால் யார்
கலங்கப்பண்ணுவான்? [4]அவர் தமது முகத்தை
மறைத்தால் அவரைக் காண்கிறவன் யார்?
31 நான் தண்டிக்கப்பட்டேன்; [5]நான் இனிப்
32 பாவஞ் செய்யமாட்டேன். நான் காணாத
காரியத்தை நீர் எனக்குப் போதியும்; [6]நான்
அநியாயம் பண்ணினேனானால், நான் இனி
அப்படிச்செய்வதில்லை என்று தேவனை நோக்
33 கிச் சொல்லத்தகுமே. நீர் அப்படிச் செய்ய
மாட்டோமென்கிறபடியினால், உம்மோடி
ருக்கிறவர்களில் ஒருவனை உமக்குப் பதிலாக
அதைச் செய்யச்சொல்வீரோ? நான் அல்ல,
நீரே தெரிந்துகொள்ளவேண்டும்; அல்லவென்
றால், நீர் அறிந்திருக்கிறதைச் சொல்லும்.
34 யோபு அறிவில்லாமல் பேசினார்; [7]அவர்
வார்த்தைகள் ஞானமுள்ளவைகள் அல்லவெ
35 ன்று, புத்தியுள்ள மனுஷர் என் பட்சமாய்ப்
பேசுவார்கள்; ஞானமுள்ள மனுஷனும் எனக்
36 குச் செவிகொடுப்பான். அக்கிரமக்காரர் சொ
ன்ன மறுஉத்தரவுகளினிமித்தம் யோபு முற்ற
முடிய சோதிக்கப்படவேண்டியதே என்
37 அபேட்சை. தம்முடைய பாவத்தோடே
மீறுதலைக் கூட்டினார்; அவர் எங்களுக்குள்ளே
கைகொட்டி, தேவனுக்கு விரோதமாய்த் தம்
முடைய வார்த்தைகளை மிகுதியாக வசனித்
தார் என்றான்.

35 2 பின்னும் எலிகூ மாறுத்தரமாக: என்
நீதி தேவனுடைய நீதியைப்பார்க்கிலும் பெ
ரியதென்று நீர் சொன்னது [8]நியாயம் என்று
3 எண்ணுகிறீரோ? நான் பாவியாயிராததினால்
எனக்குப் பிரயோசனமென்ன? [9]பலன்
4 என்ன? என்று சொன்னீர். உமக்கும் உம்
மோடே இருக்கிற உம்முடைய சிநேகிதருக்
கும் நான் பிரதியுத்தரம் சொல்லுகிறேன்.
5 நீர் வானத்தை அண்ணாந்துபார்த்து, உம்
மைப்பார்க்கிலும் உயரமாயிருக்கிற ஆகாய
6 மண்டலங்களைக் கண்ணோக்கும். நீர் பாவஞ்
செய்தால் அதினாலே அவருக்கு என்ன நஷ்
டம்? [10]உம்முடைய மீறுதல்கள் மிகுதியானா
லும், அதினாலே அவருக்கு என்ன சேதம்?
7 நீர் நீதிமானாயிருந்தால், அதினாலே அவருக்கு
என்ன கிடைக்கும்? [11]அல்லது அவர் உம்
முடைய கையில் என்ன லாபத்தைப் பெறு
8 வார்? உம்முடைய பாவத்தினால் உம்மைப்
போன்ற மனுஷனுக்கு நஷ்டமும், உம்மு
டைய நீதியினால் மனுபுத்திரனுக்கு லாபமும்
9 உண்டாகும்? அநேகரால் பலவந்தமாய் ஒடுக்
கப்பட்டவர்கள் முறையிட்டு, வல்லவர்களு
டைய புயத்தினிமித்தம் அலறுகிறார்கள்.
10 பூமியின் மிருகங்களைப் பார்க்கிலும் எங்களைப்
புத்திமான்களும், ஆகாசத்துப் பறவைகளைப்
பார்க்கிலும் எங்களை ஞானவான்களுமாக்கி,
என்னை உண்டாக்கினவரும், [12]இரவிலும் கீதம் 11
பாட அருள்செய்கிறவருமாகிய என் சிருஷ்டி
கர்த்தாவாகிய தேவன் எங்கே என்று கேட்
பவன் ஒருவனுமில்லை. அங்கே அவர்கள் 12
பொல்லாதவர்களின் பெருமையினிமித்தம்
கூப்பிடுகிறார்கள்; [13]அவரோ மறுஉத்தரவுகொ
டுக்கிறதில்லை.
தேவன் வீண்வார்த்தைக்குச் செவிகொ 13
டார், [14]சர்வவல்லவர் அதைக் கவனியார். அவ 14
ருடைய தரிசனம் உமக்குக் கிடைக்கிறதில்லை
என்று நீர் சொல்லுகிறீரே; ஆனாலும் நியா
யத்தீர்ப்பு அவரிடத்தில் இருக்கிறது; [15]ஆகை
யால் அவருக்குக் காத்துக்கொண்டிரும். இப் 15
போது அவருடைய கோபமானது நியாயத்
தை முற்றிலும் விசாரியாது; [16]அவர் இன்
னும் ஒன்றையும் குறையற்றவிதமாய்த் தீர்க்க
வில்லை. ஆகையால் யோபு வீணாய்த் தம்மு 16
டைய வாயைத்திறந்து, அறிவில்லாமல் வார்த்
தைகளை மிகுதியாய் வசனிக்கிறார் என்றான்.

பின்னும் எலிகூ: நான் பேசி முடியுமட் 2 36
டும் சற்றே பொறும்; இன்னும் தேவன் பட்
சத்தில் நான் சொல்லவேண்டிய நியாயங்களை
உமக்குச் சொல்லிக் காண்பிப்பேன். நான் 3
தூரத்திலிருந்து என் ஞானத்தைக் கொண்டு
வந்து, என்னை உண்டாக்கினவருடைய நீதி
யை விளங்கப்பண்ணுவேன். மெய்யாகவே 4
என் வார்த்தைகள் பொய்யற்றிருக்கும்; உம்
மோடே பேசுகிறவன் அறிவில் தேறினவன்.
இதோ, தேவன் மகத்துவமுள்ளவர், [17]அவர் 5
ஒருவரையும் புறக்கணியார்; மன உருக்கத்தி
லும் அவர் மகத்துவமுள்ளவர். அவர் துன் 6
மார்க்கரைப் பிழைக்க ஒட்டாதிருக்கிறார்; சிறு
மையானவர்களின் நியாயத்தை விசாரிக்கி
றார். அவர் தம்முடைய கண்களை நீதிமான் 7
களைவிட்டு விலக்காமல், அவர்களை ராஜாக்
களோடே கூட சிங்காசனத்தில் ஏறவும்,
[18]உயர்ந்த ஸ்தலத்தில் என்றைக்கும் உட்கார்ந்
திருக்கவும் செய்கிறார். அவர்கள் விலங்கு 8
கள் போடப்பட்டு, [19]உபத்திரவத்தின் கயிறு
களால் கட்டப்பட்டிருந்தாலும், அவர், அவர் 9
கள் கிரியையையும், மிஞ்சிப்போன அவர்களு
டைய மீறுதல்களையும் அவர்களுக்குத் தெரி
யப்படுத்தி, அக்கிரமத்தை விட்டுத் திரும் 10
பும்படி அவர்கள் செவியைத் திறந்து கடிந்து
கொள்ளுகிறார். அவர்கள் அடங்கி அவரைச் 11
சேவித்தால், [20]தங்கள் நாட்களை நன்மையாக
வும், தங்கள் வருஷங்களைச் செல்வ வாழ்வா
கவும் போக்குவார்கள். அடங்கார்களேயா 12
கில் பட்டயத்துக்கு இரையாகி, ஞானம்
அடையாமல் மாண்டுபோவார்கள்.
மாயமுள்ள இருதயத்தார் குரோதத்தைக் 13
குவித்துக்கொள்ளுகிறார்கள்; [21]அவர்களை அவர்
கட்டிவைக்கும்போது கெஞ்சிக் கூப்பிடுவார
கள். அவர்கள் வாலவயதிலே மாண்டுபோ 14
வார்கள்; [22]இலச்சையானவர்களுக்குள்ளே

1 யாத். 22. 27
2 1 தெச. 5. 24
3 1 இரா. 12. 28
4 ரோ. 8. 31-34
5 தானி. 9. 7-14
6 சங். 32. 8. எபே. 4. 22
7 38. 2
8 9. 17, 34
9 31. 2. ஓ
10 எரே. 7. 19
11 சங். 16. 2. நீதி. 9. 12. ரோ. 11. 35
12 ஏசா. 51. 3. சங். 42. 8
13 நீதி. 1. 28
14 ஏசா. 1. 15
15 சங். 77. 5-10
16 ஓசி. 11. 8, 9
17 எரே. 32. 19
18 சங். 113. 8
19 சங். 107. 11
20 ஏசா. 1. 19, 20
21 ரோ. 2. 5
22 சங். 55. 23

15 அவர்கள் பிராணன் முடியும். சிறுமைப்பட்
டவர்களை அவர் சிறுமைக்கு நீங்கலாக்கி, அவர்
கள் ஒடுக்கப்பட்டிருக்கையில் அவர்கள் செவி
16 யைத் திறக்கிறார். அப்படியே அவர் உம்
மையும் நெருக்கத்தினின்று விலக்கி, [1]ஒடுக்க
மில்லாத விசாலத்திலே வைப்பார்; உம்மு
டைய போஜனபந்தி கொழுமையான [2]பதார்த்
17 தங்களால் நிறைந்திருக்கும். ஆகாதவன்மேல்
வரும் நியாயத்தீர்ப்பு நிறைவேறப் பார்ப்பீர்;
18 நியாயமும் நீதியும் உம்மை ஆதரிக்கும். உக்
கிரமுண்டாயிருக்கிறதினால் அவர் உம்மை
ஒரு அடியினால் வாரிக்கொண்டுபோகாதபடி
க்கு எச்சரிக்கையாயிரும்; அப்பொழுது மீட்
கும்பொருளை [3]மிகுதியாய்க் கொடுத்தாலும்
19 அதற்கு நீர் நீங்கலாகமாட்டீர். உம்முடைய
செல்வத்தை அவர் மதிப்பாரோ? [4]உம்மு
டைய பொன்னையும், பூரண பராக்கிரமத்தை
20 யும் அவர் மதிக்கமாட்டாரே. ஜனங்கள் தங்
கள் இடத்தைவிட்டு வாரிக்கொள்ளப்படப்
21 போகிற இரவை வாஞ்சிக்காதிரும். அக்கிர
மத்துக்குத் திரும்பாதபடிக்கு எச்சரிக்கையா
யிரும்; உபத்திரவத்தைப் பார்க்கிலும் அக்கிர
மத்தைத் தெரிந்துகொண்டீரே.
22 இதோ, தேவன் தம்முடைய வல்லமையில்
உயர்ந்திருக்கிறார்; [5]அவரைப்போல் போதிக்
23 கிறவர் யார்? அவருடைய வழியின் நியாயத்
தை விசாரிக்கத்தக்கவன் யார்? நீர் அநியாயம்
24 செய்தீர் என்று சொல்லத்தக்கவன் யார்? மனு
ஷர் நோக்கிப்பார்க்கிற அவருடைய [6]கிரியை
25 யை நீர் மகிமைப்படுத்த நினையும். எல்லா
மனுஷரும் அதைக் காண்கிறார்களே; தூரத்தி
லிருந்து அது மனுஷருக்கு வெளிப்படுகிறது.
26 இதோ,தேவன் மகத்துவமுள்ளவர்; நாம் அவ
ரை அறிய முடியாது; [7]அவருடைய வருஷங்க
27 ளின் இலக்கம் ஆராய்ந்து முடியாதது. அவர்
நீர்த்துளிகளை அணுவைப்போல ஏறப்பண்ணு
கிறார்; [8]அவைகள் மேகத்திலிருந்து மழையா
28 ய்ச் சொரிகிறது. அதை மேகங்கள் பெய்து,
[9]மனுஷர்மேல் மிகுதியாய்ப் பொழிகிறது.
29 மேகங்களின் பரவுதலையும், அவருடைய கூடா
ரத்திலிருந்து எழும்பும் குமுறல்களையும் அறிய
30 முடியுமோ? இதோ, அதின்மேல் தம்முடைய
மின்னலின் ஒளியை விரிக்கிறார்; [10]சமுத்திரத்
31 தின் ஆழங்களையும் மூடுகிறார். அவைகளால்
ஜனங்களை தண்டிக்கிறவரும், [11]ஆகாரம் கொ
32 டுத்து ரட்சிக்கிறவருமாயிருக்கிறார். அவர் மின்
னலின் ஒளியைத் தமது கைக்குள்ளே மூடி,
அது இன்னின்னதை அடிக்கவேண்டுமென்று
33 கட்டளையிடுகிறார். அதினால் அவர் செய்ய
நினைக்கிறதையும், [12]மந்தாரம் எழும்பப்போகி
றதையும், ஆடுமாடுகள் அறியப்படுத்தும்.

**37** இதினால் என் இருதயம் தத்தளித்து, [13]தன்
2 னிடத்தைவிட்டுத் தெறிக்கிறது. அவருடைய
சத்தத்தினால் உண்டாகிற அதிர்ச்சியையும்,
அவர் வாயிலிருந்து புறப்படுகிற முழக்கத்தை
3 யும் கவனமாய்க் கேளுங்கள். அவர் வானத்
தின் கீழெங்கும் அந்தத் தொனியையும், பூமி

1 சங். 31. 8
2 சங். 23. 5
3 சங். 49. 7
4 நீதி. 11. 4
5 சங். 94. 18. ஏசா. 40. 13, 14
6 சங். 111. 2-8
7 சங். 102. 24, 27. எபி. 1. 12
8 சங். 147. 8, 9
9 நீதி. 3. 20
10 ஓசி. 17. 24
11 சங். 136. 25. அப். 14. 17
12 1 இரா. 18. 41, 45
13 தானி. 10. 7, 8. மத். 28. 2—4. அப். 16. 26-29
14 சங். 29. 3; 68. 33
15 சேர. 11. 33. வெளி. 15. 3
16 சங். 109. 27
17 சங். 104. 22
18 சங். 147. 17, 18
19 சங். 148. 8
20 1 சாமு. 12. 18. 1 இரா. 18. 45. யோவே. 2. 23
21 36. 4
22 ஆதி. 1. 6. எரே. 40. 22; 44. 24

யின் கடையாந்தரங்கள்மேல் அதின் மின்னலை
யும் செல்லவிடுகிறார். அதற்குப் பின்பு அவர் 4
சத்தமாய் முழங்கி, தம்முடைய மகத்துவத்தின்
சத்தத்தைக் குமுறப்பண்ணுகிறார்; [14]அவரு
டைய சத்தம் கேட்கப்படும்போது அதைத்
தவிர்க்க முடியாது. தேவன் தம்முடைய சத் 5
தத்தை ஆச்சரியமானவிதமாய்க் குமுறப்பண்
ணுகிறார்; [15]நாம் கிரகிக்கக்கூடாத பெரிய காரி
யங்களை அவர் செய்கிறார். அவர் உறைந்த 6
மழையையும், கல்மழையையும், தம்முடைய
வல்லமையின் பெருமழையையும் பார்த்து:
பூமியின்மேல் பெய்யுங்கள் என்று கட்டளை
யிடுகிறார். தாம் உண்டாக்கின சகல மனுஷ 7
ரும் தம்மை அறியும்படிக்கு, [16]அவர் சகல
மனுஷருடைய கையையும் முத்திரித்துப்போ
டுகிறார். அப்பொழுது காட்டுமிருகங்கள் தங் 8
கள் குகைகளில் புகுந்து, [17]தங்கள் கெபிகளில்
தங்கும்.
தெற்கேயிருந்து சூறாவளியும், வடகாற்றி 9
னால் குளிரும் வரும். தம்முடைய சுவாசத் 10
தினால் தேவன் குளிரைக் கொடுக்கிறார்; [18]அப்
பொழுது ஜலத்தின் மேற்பரப்பானது உறைந்
துபோம். அவர் நீர்த்துளிகளை மேகத்தில் 11
ஏற்றி, மின்னலினால் மேகத்தைச் சிதறப்பண்
ணுகிறார். அவர் அவைகளுக்குக் கட்டளை 12
யிடுகிற யாவையும், அவைகள் பூச்சக்கரத்தில்
நடப்பிக்கும்படி, [19]அவர் அவைகளைத் தம்மு
டைய ஞான ஆலோசனைகளின்படியே சுற்
றித்திரியப்பண்ணுகிறார். ஒன்றில் தண்டனை 13
யாகவும், ஒன்றில் தம்முடைய பூமிக்கு உப
யோகமாகவும், ஒன்றில் கிருபையாகவும்,
[20]அவைகளை வரப்பண்ணுகிறார்.
யோபே, இதற்குச் செவிகொடும்; தரித்து 14
நின்று தேவனுடைய ஆச்சரியமான கிரியை
களைத் தியானித்துப்பாரும். தேவன் அவை 15
களைத் திட்டம்பண்ணி, தம்முடைய மேகத்
தின் மின்னலைப் பிரகாசிக்கப்பண்ணும் விதத்
தை அறிவீரோ? மேகங்கள் தொங்கும்படி 16
வைக்கும் நிறையையும், [21]பூரண ஞானமுள்ள
வரின் அற்புதமான செய்கைகளையும், தென் 17
றலினால் அவர் பூமியை அமையப்பண்ணும்
போது, உம்முடைய வஸ்திரங்கள் உஷ்ணமா
யிருக்கும் வகையையும் அறிவீரோ? வார்க் 18
கப்பட்ட கண்ணாடியைப்போல் கெட்டியான
ஆகாயமண்டலங்களை [22]நீர் அவரோடேகூட
இருந்து விரித்தீரோ? அவருக்கு நாம் சொல் 19
லத்தக்கதை எங்களுக்குப் போதியும்; அந்த
காரத்தினிமித்தம் முறைதப்பிப் பேசுகிறோம்.
நான் பேசத் துணிந்தேன் என்று யாதாமொரு 20
வன் அவருக்கு முன்பாகச் சொல்லத்தகுமோ?
ஒருவன் பேசத்துணிந்தால் அவன் விழுங்கப்
பட்டுப்போவானே.
இப்போதும் காற்று வீசி ஆகாயமண்டலங் 21
களிலுள்ள மப்பு நீங்கப்பண்ணியிருக்கிற சம
யத்தில் வடக்கேயிருந்து பொன்மயமான காந்தி
வருகிறபோது, ஆகாயமண்டலத்திலே பிரகா 22
சிக்கிற சூரியனை முதலாய் ஒருவரும் நோக்கிப்

பார்க்கக்கூடாதே; தேவனிடத்திலோ பயங்கர
23 மான மகத்துவமுண்டு. சர்வவல்லவரை நாம்
கண்டு பிடிக்கக்கூடாது; [1]அவர் வல்லமையி
லும் நியாயத்திலும் பெருத்தவர்; [2]அவர் மகா
24 நீதிபரர்; அவர் ஒடுக்கமாட்டார். ஆகையால்
மனுஷர் அவருக்குப் பயப்படவேண்டும்;
[3]தங்கள் எண்ணத்தில் ஞானிகளாயிருக்கிற
[4]எவர்களையும் அவர் மதிக்கமாட்டார்
என்றான்.

38 அப்பொழுது கர்த்தர்: பெருங்காற்றிலி
2 ருந்து யோபுக்கு உத்தரவாக: அறிவில்லாத
வார்த்தைகளினால் ஆலோசனையை அந்தகா
3 ரப்படுத்துகிற [5]இவன் யார்? இப்போதும்
புருஷனைப்போல் இடைகட்டிக்கொள்; நான்
உன்னைக் கேட்பேன்; [6]நீ எனக்கு உத்தரவு
சொல்லு.
4 நான் பூமியை அஸ்திபாரப்படுத்துகிற
போது நீ எங்கேயிருந்தாய்? [7]நீ அறிவாளியா
5 னால் அதை அறிவி. அதற்கு அளவு குறித்த
வர் யார்? அதின்மேல் நூல்போட்டவர் யார்?
6 இதை நீ அறிந்திருந்தால் சொல்லு. அதின்
ஆதாரங்கள் எதின்மேல் போடப்பட்டது?
7 அதின் கோடிக்கல்லை வைத்தவர் யார்? அப்
பொழுது விடியற்காலத்து நட்சத்திரங்கள் ஏக
மாய்ப் பாடி, [8]தேவபுத்திரர் எல்லாரும் கெம்
பீரித்தார்களே.
8 கர்ப்பத்திலிருந்து உதிக்கிறதுபோல் சமுத்
திரம் புரண்டுவந்தபோது, [9]அதைக் கதவுக
9 ளால் அடைத்தவர் யார்? மேகத்தை அதற்கு
வஸ்திரமாகவும், இருளை அதற்குப் புடவை
10 யாகவும் நான் உடுத்தினபோதும், நான் அதற்கு
எல்லையைக் குறித்து, [10]அதற்குத் தாழ்ப்பாள்க
11 ளையும் கதவுகளையும்போட்டு: இம்மட்டும் வா,
மிஞ்சிவராதே; உன் அலைகளின் பெருமை
இங்கே அடங்கக்கடவது [11]என்று நான் சொல்
லுகிறபோதும் நீ எங்கேயிருந்தாய்?
12 துஷ்டர்கள் பூமியிலிருந்து உதறிப்போடப்
படும்படிக்கு, அதின் கடையாந்தரங்களைப்
13 பிடிக்கும்பொருட்டு, உன் ஜீவகாலத்தில்
எப்போதாவது நீ விடியற்காலத்துக்குக் கட்
டளைகொடுத்து, [12]அருணோதயத்துக்கு அதின்
14 இடத்தைக் காண்பித்ததுண்டோ? பூமி முத்
திரையிடப்பட்ட களிமண்போல் வேறே ரூபம்
கொள்ளும்; சகலமும் வஸ்திரம் தரித்திருக்கி
15 றதுபோல் காணப்படும். துன்மார்க்கரின் ஒளி
அவர்களைவிட்டு எடுபடும்; மேட்டிமையான
[13]புயம் முறிக்கப்படும்.
16 நீ சமுத்திரத்தின் அடித்தலங்கள்மட்டும்
புகுந்து, [14]ஆழத்தின் அடியில் உலாவினதுண்
17 டோ? மரணவாசல்கள் உனக்குத் திறந்த
துண்டோ? [15]மரண இருளின் வாசல்களை நீ
18 பார்த்ததுண்டோ? நீ பூமியின் விசாலங்களை
ஆராய்ந்து அறிந்ததுண்டோ? இவைகளை
19 யெல்லாம் நீ அறிந்திருந்தால் சொல்லு. வெ
ளிச்சம் வாசமாயிருக்கும் இடத்துக்கு வழி
யெங்கே? இருள் குடிகொண்டிருக்கும் ஸ்தான
20 மெங்கே? அதின் எல்லை இன்னதென்று
உனக்குத் தெரியுமோ? அதின் வீட்டுக்குப்
போகிற பாதையை அறிந்திருக்கிறாயோ? நீ 21
அதை அறியும்படி அப்போது பிறந்திருந்
தாயோ? உன் நாட்களின் தொகை அவ்வளவு
பெரிதோ?
உறைந்த மழையின் பண்டசாலைகளுக்குள் 22
நீ பிரவேசித்தாயோ? [16]கல்மழையிருக்கிற பண்
டசாலைகளைப் பார்த்தாயோ? ஆபத்து வரும் 23
காலத்திலும், கலகமும் யுத்தமும் வருங்காலத்
திலும், பிரயோகிக்கும்படி [17]நான் அவைகளை
வைத்துவைத்திருக்கிறேன்.
வெளிச்சம் பரவப்படுகிறதற்கும், கீழ்காற் 24
றுப் பூமியின்மேல் வீசுகிறதற்குமான வழி
எங்கே? பாழும் அந்தரவெளியுமான தரை 25
யைத் திருப்தியாக்கி, இளம் பூண்டுகளின்
முளைகளை முளைக்கப்பண்ணும்படி, பூமியெங் 26
கும் மனுஷர் குடியில்லாத இடத்திலும், மனுஷ
சஞ்சாரமில்லாத வனாந்தரத்திலும் [18]மழையை
வருஷிக்கப்பண்ணி, வெள்ளத்துக்கு நீர்க் 27
கால்களையும், இடிமுழக்கங்களோடு வரும் மின்
னலுக்கு வழிகளையும் பகுத்தவர் யார்?
மழைக்கு ஒரு தகப்பனுண்டோ? [19]பனித் 28
துளிகளை ஜநிப்பித்தவர் யார்? உறைந்த தண் 29
ணீர் யாருடைய வயிற்றிலிருந்து புறப்படு
கிறது? [20]ஆகாயத்தினுடைய உறைந்த பனி
யைப் பெற்றவர் யார்? ஜலம் கல்லுருவங் 30
கொண்டு மறைந்து, [21]ஆழத்தின் முகம் கெட்டி
யாய் உறைந்திருக்கிறதே?
*அறுமீன் நட்சத்திரத்தின் சுகிர்தசம்பந் 31
தத்தை நீ இணைக்கக்கூடுமோ? அல்லது †மிரு
கசீரிஷத்தின் கட்டுகளை அவிழ்ப்பாயோ?
இராசிகளை அதினதின் காலத்திலே வரப்பண் 32
ணுவாயோ? துருவச்சக்கர நட்சத்திரத்தையும்
அதைச்சேர்ந்த நட்சத்திரங்களையும் வழிநடத்
துவாயோ? வானத்தின் நியமங்களை நீ [22]அறி 33
வாயோ? அது பூமியையாளும் ஆளுகையை நீ
திட்டம் பண்ணுவாயோ? ஏராளமான தண் 34
ணீர் உன்மேல் சொரியவேணும் என்று
உன் சத்தத்தை மேகங்கள் பரியந்தம் உயர்த்து
வாயோ? நீ மின்னல்களை அழைத்தனுப்பி, 35
அவைகள் புறப்பட்டுவந்து: இதோ, இங்கே
யிருக்கிறோம் என்று உனக்குச் சொல்லும்படி
செய்வாயோ? அந்தக்கரணங்களில் ஞானத் 36
தை வைத்தவர் யார்? [23]உள்ளத்தில் புத்தியைக்
கொடுத்தவர் யார்? ஞானத்தினாலே கொடி 37
மாசிகளை எண்ணுபவர் யார்? தூளானது 38
ஏகபாளமாகவும், மண்கட்டிகள் ஒன்றோ
டொன்று ஒட்டிக்கொள்ளவும், ஆகாயத் துருத்
திகளிலுள்ள தண்ணீரைப் பொழியப்பண்ணு
கிறவர் யார்? நீ சிங்கத்துக்கு இரையை வேட் 39
டையாடி, சிங்கக்குட்டிகள் தாங்கள் தங்கும் 40
இடங்களிலே கிடந்து கெபியிலே பதிவிருக்
கிறபோது, [24]அவைகளின் ஆசையைத் திருப்
தியாக்குவாயோ? காக்கைக் குஞ்சுகள் தே 41
வனை நோக்கிக் கூப்பிட்டு, ஆகாரமில்லாமல்
பறந்து அலைகிறபோது, [25]அவைகளுக்கு இரை
யைச் சவதரித்துக் கொடுக்கிறவர் யார்?

[1] I தீமோ. 6. 16
[2] சங். 62.11: 99. 4
[3] மத். 10. 28
[4] மத். 11. 25. 1 கொ. 1. 26
[5] 34. 35
[6] 40. 7
[7] நீதி. 8. 22–30. 30. 4
[8] 1. 6. வெளி. 2. 28
[9] ஆதி. 1. 9. சங். 33. 7
[10] 26. 10
[11] சங். 89,9:93,4
[12] 24. 16
[13] சங். 10. 15
[14] சங். 77. 19
[15] சங். 9. 13
[16] சங். 135. 7
[17] யாத். 9. 18, 24. யோசு. 10. 11. ஏசா. 30. 30. வெளி. 16. 21
[18] சங். 107. 35
[19] சங். 147. 8. எரே. 14. 22
[20] சங். 147. 16
[21] 37. 10
* சப்த நட்சத்திரம் கார்த்திகை நட்சத்திரம். 9. 9. காண்க
† மார்கழி நட்சத்திரம். ஆமோஸ் 5,8
[22] எரே. 31. 35
[23] சங். 51. 6. பிர. 2. 26
[24] சங். 104. 21
[25] சங். 147. 9. மத். 6. 26

39 வனாயாடுகள் ஈனுங்காலத்தை அறிவா
யோ? [1]மான்கள் குட்டிபோடுகிறதைக் கவ
2 னித்தாயோ? அவைகள் சினைப்பட்டிருந்து
வருகிற மாதங்களை நீ எண்ணி, அவைகள்
3 ஈனுங் காலத்தை அறிவாயோ? அவைகள்
நொந்து குனிந்து தங்கள் குட்டிகளைப்போட்டு,
4 தங்கள் வேதனைகளை நீக்கிவிடும். அவை
களின் குட்டிகள் பலத்து, வனத்திலே வளர்
ந்து, அவைகளண்டைக்குத் திரும்ப வராமற்
போய்விடும்.
5 காட்டுக் கழுதையைத் தன்னிச்சையாய்த்
திரியவிட்டவர் யார்? [2]அந்தக் காட்டுக்கழுதை
6 யின் கட்டுகளை அவிழ்த்தவர் யார்? அதற்கு
நான் வனாந்தரத்தை வீடாகவும், [3]உவர்நிலத்
7 தை வாசஸ்தலமாகவும் கொடுத்தேன். அது
பட்டணத்தின் இரைச்சலை அலட்சியம்பண்
ணி, ஓட்டுகிறவனுடைய கூக்குரலை மதிக்கிற
8 தில்லை. அது மலைகளிலே தன் மேய்ச்சலைக்
கண்டுபிடித்து, சகலவிதப் பச்சைப் பூண்டு
களையும் தேடித்திரியும்.
9 *காண்டாமிருகம் உன்னிடத்தில் சேவிக்
கச் சம்மதிக்குமோ? அது உன் முன்னணைக்கு
10 முன்பாக இராத்தங்குமோ? படைச்சால்களை
உழ நீ காண்டாமிருகத்தைக் கயிறுபோட்டு
ஏரிலே பூட்டுவாயோ? அது உனக்கு இசை
11 ந்து பரம்படிக்குமோ? அது அதிக பெல
முள்ளதென்று நீ நம்பி அதினிடத்தில் வேலை
12 வாங்குவாயோ? உன் தானியத்தை அது
உன் வீட்டில் கொண்டுவந்து, உன் களஞ்சி
யத்தில் சேர்க்கும் என்று நீ அதை நம்பு
வாயோ?
13 †தீக்குருவிகள் தங்கள் செட்டைகளை அசை
வாட்டி ஓடுகிற ஓட்டம், நாரை தன் செட்
டைகளாலும் இறகுகளாலும் பறக்கிறதற்குச்
14 சமானமல்லவோ? அது தன் முட்டைகளைத்
தரையிலே இட்டு, அவைகளை மணலிலே
15 அனலுறைக்க வைத்துவிட்டுப் போய், கா
லால் மிதிபட்டு உடைந்துபோம் என்பதை
யும், காட்டுமிருகங்கள் அவைகளை மிதித்து
16 விடும் என்பதையும் நினைக்கிறதில்லை. அது
தன் குஞ்சுகள் தன்னுடைய தல்லாததுபோல
அவைகளைக் காக்காத கடின குணமுள்ளதா
யிருக்கும்; [4]அவைகளுக்காக அதற்குக் கவலை
யில்லாதபடியினால் அதுபட்ட வருத்தம் விரு
17 தாவாம். தேவன் அதற்குப் புத்தியைக் கொ
18 டாமல், [5]ஞானத்தை விலக்கிவைத்தார். அது
செட்டை விரித்து எழும்பும்போது, குதிரை
யையும் அதின்மேல் ஏறியிருக்கிறவனையும்
அலட்சியம்பண்ணும்.
19 குதிரைக்கு நீ வீரியத்தைக் கொடுத்தாயோ?
அதின் தொண்டையில் குமுறலை வைத்தா
20 யோ? ஒரு வெட்டுக்கிளியை மிரட்டுகிறது
போல அதை மிரட்டுவாயோ? அதினுடைய
நாசியின் செருக்கு பயங்கரமாயிருக்கிறது.
21 அது தரையிலே தாளடித்து, [6]தன் பலத்தில்
களித்து, ஆயுதங்களைத் தரித்தவருக்கு எதிரா
22 கப் புறப்படும். அது கலங்காமலும், பட்ட
யத்துக்குப் பின்வாங்காமலுமிருந்து, பயப்படு
தலை அலட்சியம்பண்ணும். அம்பறாத்தூணி 23
யும், மின்னுகிற ஈட்டியும், கேடகமும் அதின்
மேல் கலகலக்கும்போது, கர்வமும் மூர்க்க 24
முங்கொண்டு தரையை விழுங்கிவிடுகிறது
போல் அநுமானித்து, எக்காளத்தின் தொ
னிக்கு அஞ்சாமல் பாயும். எக்காளம் தொ 25
னிக்கும்போது அது நிகியென்று கனைக்கும்;
யுத்தத்தையும், படைத்தலைவரின் ஆர்ப்பரிப்
பையும், சேனைகளின் ஆரவாரத்தையும் தூரத்
திலிருந்து மோப்பம் பிடிக்கும்.
உன் புத்தியினாலே ராஜாளி பறந்து, தெற் 26
குக்கு எதிராகத் தன் செட்டைகளை விரிக்கிற
தோ? உன் கற்பனையினாலே கழுகு உயரப் 27
பறந்து, உயரத்திலே தன் [7]கூட்டைக் கட்டு
மோ? அது கன்மலையிலும், கன்மலையின் 28
சிகரத்திலும், அரணான ஸ்தலத்திலும் தங்கி
வாசம்பண்ணும். அங்கேயிருந்து இரையை 29
நோக்கும்; அதின் கண்கள் தூரத்திலிருந்து
அதைப் பார்க்கும். அதின் குஞ்சுகள் ரத்தத் 30
தை உறிஞ்சும்; பிணம் எங்கேயோ [8]அங்கே
கழுகு சேரும் என்றார்.
பின்னும் **கர்த்தர்** யோபுக்கு உத்தரமாக: 40
சர்வவல்லவரோடே வழக்காடி அவருக்குப் 2
புத்தி படிப்பிக்கிறவன் யார்? [9]தேவன்பே
ரில் குற்றம் பிடிக்கிறவன் இவைகளுக்கு உத்
தரவு சொல்லக்கடவன் என்றார்.
அப்பொழுது யோபு **கர்த்தருக்குப்** பிரதி 3
யுத்தரமாக: இதோ, நான் நீசன்; [10]நான் 4
உமக்கு என்ன மறு உத்தரவு சொல்லுவேன்;
என் கையினால் என் வாயைப் [11]பொத்திக்
கொள்ளுகிறேன். நான் இரண்டொருதரம் 5
பேசினேன்; இனி நான் பிரதியுத்தரம் கொ
டாமலும் பேசாமலும் இருப்பேன் என்றான்.
அப்பொழுது **கர்த்தர்** பெருங்காற்றில் 6
இருந்து யோபுக்கு உத்தரவு அருளினார்:
இப்போதும் புருஷனைப்போல நீ அரை 7
கட்டிக்கொள்; நான் உன்னைக் கேட்பேன்;
நீ எனக்கு உத்தரவு சொல்லு. நீ என் நியா 8
யத்தை அவமாக்குவாயோ? [12]நீ உன்னை நீதி
மானாக்கிக்கொள்ளும்படிக்கு என்மேல் குற்
றஞ்சுமத்துவாயோ? தேவனுடைய புயத் 9
தைப்போல் உனக்குப் புயமுண்டோ? [13]அவ
ரைப்போல் இடிமுழக்கமாய்ச் சத்தமிடக்கூடு
மோ? இப்போதும் நீ முக்கியத்தாலும் மகத் 10
துவத்தாலும் உன்னை அலங்கரித்து, [14]மகிமை
யையும் கனத்தையும் தரித்துக்கொண்டு, நீ 11
உன் கோபத்தின் உக்கிரத்தை வீசி, அகந்தை
யுள்ளவனையெல்லாம் தேடிப்பார்த்து தாழ்த்
திவிட்டு, பெருமையுள்ளவனையெல்லாம் கவ 12
னித்து, [15]அவனைப் பணியப்பண்ணி, துன்
மார்க்கரை அவர்களிருக்கிற ஸ்தலத்திலே
மிதித்துவிடு. நீ அவர்களை ஏகமாய்ப் புழுதி 13
யிலே புதைத்து, அவர்கள் முகங்களை அந்தரங்
கத்திலே கட்டிப்போடு. அப்பொழுது உன் 14
வலதுகை உனக்கு ரட்சிப்பு உண்டுபண்ணும்
என்று சொல்லி நான் உன்னைப் புகழுவேன்.

[1] சங். 29. 9
[2] எரே. 2. 24. ஓசி. 8. 9
[3] 24. 5
* எண். 23. 22. உபா. 33. 17. சங். 92. 10
† மயிலுக்குச்சிறந்த சிறகுகளையும், ஒட்டகப் பட்சிக்குச் சிறகுகளையும் இறகுகளையும் கொடுத்தாயோ?
[4] புல. 4. 3
[5] 35. 10
[6] எரே. 8. 6
[7] எரே. 49. 16
[8] மத். 24. 28. லூக். 17. 37
[9] 33. 13. ஏசா. 27. 4
[10] 42. 6. எஸ்றா 9. 6. சங். 51. 4. ஏசா. 6. 5; 64. 6. தானி. 9. 5, 7. லூக். 18. 13
[11] 29. 9. மீகா. 7. 16. சகரி. 2. 13. ரோ. 3. 19
[12] ரோ. 3. 4
[13] சங். 29. 3, 4
[14] சங். 93. 1; 104. 1
[15] ஏசா. 2. 12. தானி. 4. 37

15 இப்போதும் *பிகமோத்தை நீ கவனித்துப்
பார்; உன்னை உண்டாக்கினதுபோல அதை
யும் உண்டாக்கினேன்; அது மாட்டைப்
16 போல் புல்லைத் தின்னும். இதோ, அதினு
டைய பெலன் அதின் இடுப்பிலும், அதின்
வீரியம் அதின் வயிற்றின் நரம்புகளிலும்
17 இருக்கிறது. அது தன் வாலைக் கேதுருமரத்
தைப்போல் நீட்டுகிறது; அதின் இடுப்பு
18 நரம்புகள் பின்னிக்கொண்டிருக்கிறது. அ
தின் எலும்புகள் கெட்டியான வெண்கலத்
தைப்போலவும், அதின் அஸ்திகள் இருப்புக்
19 கம்பிகளைப்போலவும் இருக்கிறது. அது தே
வனுடைய கிரியைகளில் பிரதானமான ஒரு
கிரியை, அதை உண்டாக்கினவர் அதற்கு ஒரு
20 பட்டயத்தையும் கொடுத்தார். காட்டுமிருகங்
கள் யாவும் விளையாடுகிற மலைகள் அதற்கு
21 மேய்ச்சலை [1]விளைவிக்கும். அது நிழலுள்ள
செடிகளின் கீழும், நாணலின் மறைவிலும்,
22 உளையிலும் படுத்துக்கொள்ளும். தழைகளின்
நிழல் அதைக் கவிந்து, நதியின் அலரிகள்
23 அதைச் சூழ்ந்துகொள்ளும். இதோ, நதி
புரண்டுவந்தாலும் அது பயந்தோடாது; யோர்
தான் நதியத்தனை தண்ணீர் அதின் முகத்தில்
மோதினாலும் அது அசையாமலிருக்கும்.
24 அதின் கண்கள் பார்த்திருக்க அதை யார்
பிடிக்கக்கூடும்? மூக்கணாங்கயிறுபோட அதின்
மூக்கை யார் குத்தக்கூடும்?

41 †லிவியாதானை தூண்டிலினால் பிடிக்கக்
கூடுமோ? அதின் நாக்கை நீ விடுகிற கயிற்றி
2 னாலே பிடிக்கக்கூடுமோ? அதின் மூக்கை
நார்க்கயிறு போட்டுக் கட்டக்கூடுமோ? [2]குறட்
டினால் அதின் தாடையை உருவக் குத்தக்கூடு
3 மோ? அது உன்னைப் பார்த்து அநேக விண்
ணப்பஞ்செய்யுமோ? உன்னை நோக்கி இச்சக
4 வார்த்தைகளைச் சொல்லுமோ? அது உன்
னோடே உடன்படிக்கைபண்ணுமோ? அதைச்
5 சதாகாலமும் அடிமை கொள்வாயோ? ஒரு
குருவியோடே விளையாடுகிறதுபோல், நீ அத
னோடே விளையாடி, அதை நீ உன் பெண்
6 மக்களண்டையிலே கட்டிவைப்பாயோ? கூட்
டாளிகள் அதைப் பிடிக்கப் பிரயத்தனப்பட்டு,
அதை வியாபாரிகளுக்குப் பங்கிடுவார்களோ?
7 நீ அதின் தோலை அநேக அம்புகளினாலும்,
அதின் தலையை எறிவல்லையங்களினாலும் எறி
8 வாயோ? அதின்மேல் உன் கையைப் போடு,
யுத்தத்தை நினைத்துக்கொள்; இனி அப்படிச்
9 செய்யத் துணியமாட்டாய். இதோ, அதைப்
பிடிக்கலாம் என்று நம்பினவன் மோசம்
போய், அதைப் பார்த்தவுடனே விழுவான்
அல்லவோ?
10 அதை எழுப்பத்தக்க தைரியவான் இல்லா
11 திருக்க, எனக்கு முன்பாக நிற்பவன் யார்? தன
க்குப் பதில் கொடுக்கப்படும்படி [3]முந்தி எனக்
குக் கொடுத்தவன் யார்? [4]வானத்தின் கீழுள்ள
வைகள் எல்லாம் என்னுடையவைகள்.
12 அதின் அங்கங்களும், அதின் வீரியமும்,
அதின் உடல் இசைவின் நேர்த்தியும் இன்ன
தென்று நான் சொல்லாமல் மறைக்கமாட்
டேன். அது மூடியிருக்கிற அதின் போர்வை 13
யைக் கிளப்பக்கூடியவன் யார்? அதின் இர
ண்டு தாடைகளின் நடுவே கடிவாளம் போட
த்தக்கவன் யார்? அதின் முகத்தின் கதவைத் 14
திறக்கக்கூடியவன் யார்? சுற்றிலுமிருக்கிற
அதின் பற்கள் பயங்கரமானவைகள். முத்தி 15
ரைப் பதிப்புப்போல அழுத்தங்கொண்டு அட
ர்த்தியாயிருக்கிற அதின் பரிசைகளின் அர
ணிப்பு மகா சிறப்பாயிருக்கிறது. அவைகள் 16
நடுவே காற்றும் புகமாட்டாத நெருக்கமாய்
அவைகள் ஒன்றோடொன்று இணைக்கப்பட்
டிருக்கிறது. அவைகள் ஒன்றோடொன்று 17
ஒட்டிக்கொண்டு இணைபிரியாமல் பிடித்துக்
கொண்டிருக்கிறது. அது தும்முகையில் 18
ஒளி வீசும்; அதின் கண்கள் அருணோதயத்
தின் புருவங்களைப்போல் இருக்கிறது. அதின் 19
வாயிலிருந்து எரிகிற பந்தங்கள் புறப்பட்டு,
அக்கினிப்பொறிகள் பறக்கும். கொதிக்கிற 20
சட்டியிலும் கொப்பரையிலும் இருந்து புறப்
படுகிறதுபோல, அதின் நாசிகளிலிருந்து
புகை புறப்படும். அதின் சுவாசம் கரிகளைக் 21
கொளுத்தும், அதின் வாயிலிருந்து ஜுவாலை
புறப்படும். அதின் கழுத்திலே பெலன் குடி 22
கொண்டிருக்கும்; பயங்கரம் அதற்குமுன்
கூத்தாடும். அதின் உடற்கூறுகள் அசை 23
யாத கெட்டியாய் ஒன்றோடொன்று ஒட்டிக்
கொண்டிருக்கும். அதின் நெஞ்சு கல்லைப் 24
போலவும், எந்திரத்தின் அடிக்கல்லைப்போல
வும் கெட்டியாயிருக்கும்.
அது எழும்பும்போது பலசாலிகள் அஞ்சி 25
பயத்தினால் மயங்கித் திகைப்பார்கள். அதைத் 26
தாக்குகிறவனுடைய பட்டயம், ஈட்டி, வல்
லையம், கவசம், ஒன்றும் அதற்குமுன் நிற்
காது. அது இரும்பை வைக்கோலாகவும், 27
வெண்கலத்தை உளுத்த மரமாகவும் எண்
ணும். அம்பு அதைத் துரத்தாது; கவண்கற் 28
கள் அதற்குத் துரும்பாகும். அது பெருந் 29
தடிகளைத் தாளடிகளாக எண்ணி, ஈட்டியின்
அசைவை இகழும்.
அதின் கீழாகக் கூர்மையான கற்கள் கிடந் 30
தாலும், அது சேற்றின்மேல் ஓடுகிறதுபோ
லக் கருக்கான அவைகளின்மேலும் ஓடும்.
அது ஆழத்தை உலைப்பானையைப்போல் பொ 31
ங்கப்பண்ணி, கடலைத் தைலம்போலக் கலக்கி
விடும். அது தனக்குப் பின்னாகப் பாதை 32
யைத் துலங்கப்பண்ணும்; ஆழமானது வெ
ளுப்பான நரையைப்போல் விளங்கும். பூமி 33
யின்மேல் அதற்கு ஒப்பானது ஒன்றுமில்லை;
அது நிர்ப்பயமாயிருக்க உண்டுபண்ணப்பட்
டது. அது மேட்டிமையானதை யெல்லாம் 34
அற்பமாய் எண்ணுகிறது; அது அகங்கார
முள்ள ஜீவன்களுக்கெல்லாம் ராஜாவாயிருக்
கிறது என்றார்.

அப்பொழுது யோபு கர்த்தருக்குப் பிரதி 42
யுத்தரமாக: தேவரீர் சகலத்தையும் செய்ய 2
வல்லவர்; நீர் செய்ய நினைத்தது தடைபடாது

* கடல் குதிரை.
[1] சங். 104. 14
† முதலே. 3. 8. சங். 104. 26. ஏசா. 27. 1
[2] ஏசா. 37. 29
[3] ரோ. 11. 35
[4] யாத். 19. 5. உபா. 10. 14. சங். 24. 1; 50. 12. 1 கொ. 10. 26, 28

3 என்பதை [1]அறிந்திருக்கிறேன். அறிவில்லா
மல் ஆலோசனையை மறைக்கிற இவன் யார்?
[2]ஆகையால் நான் எனக்குத் தெரியாததையும்,
என் புத்திக்கு எட்டாததையும், [3]நான் அறியா
4 ததையும் அலப்பினேன் என்கிறேன். நீர்
எனக்குச் செவிகொடும், [4]அப்பொழுது நான்
பேசுவேன்; நான் உம்மைக் கேள்வி கேட்
5 பேன், நீர் எனக்கு உத்தரவு சொல்லும். என்
காதினால் உம்மைக் குறித்துக் கேள்விப்பட்
டேன்; இப்பொழுதோ என் கண் உம்மைக்
6 காண்கிறது. ஆகையால் நான் [5]என்னை அரு
வருத்து, தூளிலும் சாம்பலிலும் இருந்து [6]மன
ஸ்தாபப்படுகிறேன் என்றான்.
7 கர்த்தர் இந்த வார்த்தைகளை யோபோடே
பேசினபின் கர்த்தர் தேமானியனான எலிப்
பாசை நோக்கி: உன்மேலும் உன் இரண்டு
சிநேகிதர்மேலும் எனக்குக் கோபம் மூளு
கிறது; என் தாசனாகிய யோபு பேசினது
போல், நீங்கள் என்னைக்குறித்து நிதானமா
8 ய்ப் பேசவில்லை. ஆதலால் நீங்கள் ஏழு
காளைகளையும், [7]ஏழு ஆட்டுக் கடாக்களையும்
தெரிந்துகொண்டு, என் தாசனாகிய யோபி
னிடத்தில் போய், உங்களுக்காகச் சர்வாங்க
தகனபலிகளை இடுங்கள்; என் தாசனாகிய
யோபும் உங்களுக்காக வேண்டுதல் செய்
வான்; [8]நான் அவன் முகத்தைப் பார்த்து, உங்
களை உங்கள் புத்தியீனத்துக்குத் தக்கதாக
நடத்தாதிருப்பேன்; என் தாசனாகிய யோபு
பேசினதுபோல், நீங்கள் என்னைக்குறித்து
9 நிதானமாய்ப் பேசவில்லை என்றார். அப்பொ
ழுது தேமானியனான எலிப்பாசும் சூகிய
னான பில்தாதும் நாகமாத்தியனான சோப்பா
ரும் போய், கர்த்தர் தங்களுக்குச் சொன்ன
படியே செய்தார்கள்; அப்பொழுது கர்த்தர்

யோபின் *முகத்தைப் பார்த்தார். யோபு தன் 10
சிநேகிதருக்காக வேண்டுதல் செய்தபோது,
கர்த்தர் அவன் †சிறையிருப்பை மாற்றினார்.
யோபுக்கு முன் இருந்த எல்லாவற்றைப் பார்
க்கிலும் இரண்டத்தனையாய்க் [9]கர்த்தர் அவ
னுக்குத் தந்தருளினார். அப்பொழுது அவ 11
னுடைய எல்லாச் [10]சகோதரரும் சகோதரி
களும், முன் அவனுக்கு அறிமுகமான அனை
வரும் அவனிடத்தில் வந்து, அவன் வீட்டி
லே அவனோடே போஜனம்பண்ணி, கர்த்தர்
அவன்மேல் வரப்பண்ணின சகல தீங்கினி
மித்தம் அவனுக்காக அங்கலாய்த்து, அவ
னுக்கு ஆறுதல் சொல்லி, அவரவர் ஒவ்வொரு
தங்கக்காசையும், அவரவர் ஒவ்வொரு பொன்
ஆபரணத்தையும் அவனுக்குக் கொடுத்தார்கள்.
கர்த்தர் யோபின் முன்னிலைமையைப் பார்க் 12
கிலும் அவன் பின்னிலைமையை ஆசீர்வதித்
தார்; [11]பதினாலாயிரம் ஆடுகளும், ஆறாயிரம்
ஒட்டகங்களும், ஆயிரம் ஏர்களும், ஆயிரம்
கழுதைகளும் அவனுக்கு உண்டாயின. ஏழு 13
குமாரரும், [12]மூன்று குமாரத்திகளும் அவனுக்
குப் பிறந்தார்கள். மூத்த மகளுக்கு எமீமாள் 14
என்றும், இரண்டாம் மகளுக்குக் கெத்சியாள்
என்றும், மூன்றாம் மகளுக்குக் கேரேனாப்புக்
என்றும் பேரிட்டான். தேசத்தில் எங்கும் 15
யோபின் குமாரத்திகளைப்போல் சௌந்தரிய
மான பெண்கள் காணப்படவில்லை; அவர்கள்
தகப்பன் அவர்கள் சகோதரரின் நடுவிலே
அவர்களுக்குச் சுதந்தரம் கொடுத்தான். இதற் 16
குப்பின்பு யோபு நூற்று நாற்பது வருஷம்
உயிரோடிருந்து, [13]நாலு தலைமுறையாகத் தன்
பிள்ளைகளையும் தன் பிள்ளைகளுடைய பிள்ளை
களையும் கண்டான். யோபு நெடுநாளிருந்து, 17
[14]பூரண வயதுள்ளவனாய் மரித்தான்.

[1] ஆதி. 18. 14. எசா. 43. 13. மத். 19. 26
[2] 38. 2, 3
[3] சங். 131. 1: 139. 6
[4] 40. 7
[5] 40. 4. எஸ்றா 9. 6. சங். 51. 17. எரே. 31. 19. யாக். 4. 10
[6] தானி. 9. 3. மத். 11. 21
[7] எண். 23. 1
[8] யாக். 5. 16. 1 யோ. 5. 16
* யோபை கடாட்சித்தார். சதி. 3. 11, 12
† சிறையை. ஆதி. 20. 17, 18. சங். 14. 7: 126. 1
[9] எசா. 40. 2
[10] 19. 13
[11] 8. 7. உபா. 8. 16. யாக். 5. 11
[12] 1. 2
[13] சதி. 3. 16
[14] 5. 26. ஆதி. 25. 8

# THE BOOK OF PSALMS

# சங்கீத புஸ்தகம்*

## 1

1 துன்மார்க்கருடைய ஆலோசனையில் நடவா
மலும், [1]பாவிகளுடைய வழியில் நில்லாமலும்,
பரியாசக்காரர் உட்காரும் [2]இடத்தில் உட்
2 காராமலும், **கர்த்தருடைய** வேதத்தில் பிரி
யமாயிருந்து, [3]இரவும் பகலும் அவருடைய
வேதத்தில் தியானமாயிருக்கிற [4]மனுஷன்
3 பாக்கியவான். அவன் நீர்க்கால்களின் ஓர
மாய் நடப்பட்டு, தன் காலத்தில் தன் கனி
யைத் தந்து, இலையுதிராதிருக்கிற [5]மரத்தைப்
போலிருப்பான்; அவன் செய்வதெல்லாம்
வாய்க்கும்.
4 துன்மார்க்கரோ அப்படியிராமல், காற்றுப்
பறக்கடிக்கும் [6]பதரைப்போல் இருக்கிறார்
5 கள். ஆகையால் துன்மார்க்கர் நியாயத்தீர்ப்
பிலும், பாவிகள் நீதிமான்களின் சபையிலும்
6 [7]நிலைநிற்பதில்லை. **கர்த்தர்** நீதிமான்களின்
வழியை அறிந்திருக்கிறார்; [8]துன்மார்க்கரின்
வழியோ அழியும்.

## 2

ஜாதிகள் கொந்தளித்து, [9]ஜனங்கள் விரு
2 தாக்காரியத்தைச் சிந்திப்பானேன்? **கர்த்த**
**ருக்கு** விரோதமாகவும், அவர் அபிஷேகம்
பண்ணினவருக்கு [10]விரோதமாகவும், பூமி
யின் ராஜாக்கள் எழும்பி நின்று, அதிகாரிகள்
3 ஏகமாய் ஆலோசனைபண்ணி: அவர்கள் கட்
டுகளை அறுத்து, [11]அவர்கள் கயிறுகளை நம்
மைவிட்டு எறிந்துபோடுவோம் என்கிறார்கள்.
4 பரலோகத்தில் வீற்றிருக்கிறவர் நகைப்
5 பார்; ஆண்டவர் அவர்களை [12]இகழுவார். அப்
பொழுது அவர் தமது கோபத்திலே அவர்க
ளோடே பேசி, தமது உக்கிரத்திலே அவர்
6 களைக் கலங்கப்பண்ணுவார். நான் என்னு
டைய பரிசுத்த பர்வதமாகிய சீயோன்மீதில்
என்னுடைய ராஜாவை [13]அபிஷேகம் பண்
ணிவைத்தேன் என்றார்.
7 தீர்மானத்தின் விவரம் சொல்லுவேன்; **கர்**
**த்தர்** என்னை நோக்கி: [14]நீர் என்னுடைய
குமாரன், இன்று நான் உம்மை ஜநிப்பித்
8 தேன்; என்னைக் கேளும், [15]அப்பொழுது
ஜாதிகளை உமக்குச் சுதந்தரமாகவும், பூமியின்
எல்லைகளை உமக்குச் சொந்தமாகவும் கொடுப்
9 பேன்; இருப்புக்கோலால் அவர்களை நொ
றுக்கி, [16]குயக்கலத்தைப்போல் அவர்களை
உடைத்துப்போடுவீர் என்று சொன்னார்.

[1] நீதி. 4. 14, 15
[2] 26. 4. எரே. 15. 17
[3] யோபு 23. 12
[4] 119. 97
[5] எரே. 17. 8
[6] மத். 3. 12
[7] மத். 25. 41, 46
[8] யோபு 23. 10. நீதி. 15. 9
[9] 46. 6. அப். 4. 25, 26
[10] 45. 7
[11] லூ. 19. 14
[12] நீதி. 1. 26
[13] அப். 5. 31
[14] அப். 13. 33. மத். 3. 17; 17. 5
[15] தானி. 7. 13, 14
[16] வெளி. 2. 27
[17] எபி. 12. 28
[18] யோ. 5. 23
[19] 84. 12
[20] 71. 11
[21] 4. 8; 127. 2
[22] 27. 1. ஓ
[23] 115. 13. எசா. 43. 11. வெளி. 7. 10; 19. 1

இப்போதும் ராஜாக்களே, உணர்வடையுங் 10
கள், பூமியின் நியாயாதிபதிகளே, எச்சரிக்
கையாயிருங்கள். பயத்துடனே **கர்த்தரைச்** 11
சேவியுங்கள், [17]நடுக்கத்துடனே களிகூருங்
கள். குமாரன் கோபங்கொள்ளாமலும், நீங் 12
கள் வழியிலே அழியாமலும் இருக்கும்படி
க்கு, [18]அவரை முத்தஞ்செய்யுங்கள்; கொஞ்
சக்காலத்திலே அவருடைய கோபம் பற்றி
யெரியும்; அவரை அண்டிக்கொள்ளுகிற [19]யா
வரும் பாக்கியவான்கள்.

## 3

(தாவீது தன் குமாரன் அப்சலோமுக்குத் தப்பி
ஓடிப்போகையில் பாடின சங்கீதம்.)

**கர்த்தாவே**, என் சத்துருக்கள் எவ்வள
வாய்ப்பெருகியிருக்கிறார்கள்! எனக்கு விரோ
தமாய் எழும்புகிறவர்கள் அநேகர். தேவனி 2
டத்தில் அவனுக்கு ரட்சிப்பு இல்லையென்று,
[20]என் ஆத்துமாவைக்குறித்துச் சொல்லுகிற
வர்கள் அநேகராயிருக்கிறார்கள். (சேலா.)
ஆனாலும் **கர்த்தாவே**, நீர் என் கேடகமும், 3
என் மகிமையும், என் தலையை உயர்த்துகிற
வருமாயிருக்கிறீர். நான் **கர்த்தரை** நோக்கிச் 4
சத்தமிட்டுக் கூப்பிட்டேன்; அவர் தமது பரி
சுத்த பர்வதத்திலிருந்து எனக்குச் செவிகொ
டுத்தார். (சேலா.)
நான் படுத்து நித்திரைசெய்தேன்; [21]விழித் 5
துக்கொண்டேன்; **கர்த்தர்** என்னைத் தாங்கு
கிறார். எனக்கு விரோதமாகச் சுற்றிலும் 6
படையெடுத்து வருகிற பதினாயிரம்பேருக்கும்
[22]நான் பயப்படேன்.
**கர்த்தாவே**, எழுந்தருளும்; என் தேவனே, 7
என்னை ரட்சியும். நீர் என் பகைஞர் எல்
லாரையும் தாடையிலே அடித்து, துன்மார்க்க
ருடைய பற்களைத் தகர்த்துப்போட்டீர். இர 8
ட்சிப்பு **கர்த்தருடையது**; [23]தேவரீருடைய
ஆசீர்வாதம் உம்முடைய ஜனத்தின்மேல்
இருப்பதாக. (சேலா.)

## 4

(நெகிலோத் தென்னும் வாத்தியத்தில் வாசிக்க
சாகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

என் நீதியின் தேவனே, நான் கூப்பிடு
கையில் எனக்குச் செவிகொடும்; நெருக்கத்
தில் இருந்த எனக்கு விசாலமுண்டாக்கினீர்;
எனக்கு இரங்கி, என் விண்ணப்பத்தைக்
கேட்டருளும்.

* லூ. 20. 43. அப். 1. 20.

2 மனுபுத்திரரே, எதுவரைக்கும் என் மகிமை
யை அவமானப்படுத்தி, வீணானதை விரும்பி,
3 பொய்யை நாடுவீர்கள். (சேலா.) பக்தியுள்ள
வனைக் **கர்த்தர்** தமக்காகத் தெரிந்துகொண்
டாரென்று அறியுங்கள்; [1]நான் **கர்த்தரை**
நோக்கிக் கூப்பிடுகையில் அவர் கேட்பார்.
4 நீங்கள் கோபங்கொண்டாலும், [2]பாவஞ்
செய்யாதிருங்கள்; [3]உங்கள் படுக்கையிலே உங்
கள் இருதயத்தில் பேசிக்கொண்டு அமர்ந்தி
5 ருங்கள். (சேலா.) நீதியின் பலிகளைச் செ
லுத்தி, [4]**கர்த்தர்**மேல் நம்பிக்கையாயிருங்கள்.
6 எங்களுக்கு நன்மை காண்பிப்பவன் யார்
என்று சொல்லுகிறவர்கள் அநேகர்; [5]**கர்த்தா
வே**, உம்முடைய முகத்தின் ஒளியை எங்கள்
7 மேல் பிரகாசிக்கப்பண்ணும். அவர்களுக்குத்
தானியமும் திராட்சரசமும் பெருகியிருக்கிற
காலத்தின் சந்தோஷத்தைப் பார்க்கிலும்,
[6]அதிக சந்தோஷத்தை என் இருதயத்தில் தந்
8 தீர். சமாதானத்தோடே படுத்துக்கொண்டு
நித்திரைசெய்வேன்; [7]**கர்த்தாவே**, நீர் ஒரு
வரே என்னைச் சுகமாய்த் தங்கப்பண்ணுகிறீர்.

**5** (நெகிலோத்தென்னும் வாத்தியத்தில் வாசிக்க
ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

**கர்த்தாவே**, என் வார்த்தைகளுக்குச் செவி
2 கொடும், என் தியானத்தைக் கவனியும். நான்
உம்மிடத்தில் விண்ணப்பம் பண்ணுவேன்;
என் ராஜாவே, என் தேவனே, என் வேண்டு
தலின் சத்தத்தைக் கேட்டருளும்.
3 **கர்த்தாவே**, காலையிலே என் சத்தத்தைக்
கேட்டருளுவீர்; காலையிலே உமக்கு நேரே
4 வந்து ஆயத்தமாகி, காத்திருப்பேன். நீர்
துன்மார்க்கத்தில் பிரியப்படுகிற தேவன்
அல்ல; [8]தீமை உம்மிடத்தில் சேர்வதில்லை.
5 வீம்புக்காரர் உம்முடைய கண்களுக்கு முன்
பாக நிலைநிற்கமாட்டார்கள்; அக்கிரமக்காரர்
6 யாவரையும் வெறுக்கிறீர். பொய் பேசுகிற
வர்களை அழிப்பீர்; [9]இரத்தப்பிரியனையும் சூது
ள்ள மனுஷனையும் **கர்த்தர்** அருவருக்கிறார்.
7 நானோ உமது மிகுந்த கிருபையினாலே உமது
ஆலயத்துக்குள் பிரவேசித்து, உமது பரி
சுத்த சந்நிதிக்கு நேரே பயபக்தியுடன் பணி
ந்துகொள்ளுவேன்.
8 **கர்த்தாவே**, என் சத்துருக்களினிமித்தம்
என்னை உம்முடைய நீதியிலே நடத்தி, என
க்கு முன்பாக உம்முடைய வழியைச் செவ்
9 வைப்படுத்தும். அவர்கள் வாயில் உண்மை
இல்லை, அவர்கள் உள்ளம் கேடுபாடுள்ளது;
அவர்கள் தொண்டை திறக்கப்பட்ட பிரேதக்
குழி; [10]தங்கள் நாவினால் இச்சகம் பேசுகிறார்
10 கள். தேவனே, அவர்களைக் குற்றவாளிகளா
கத் தீரும்; அவர்கள் தங்கள் [11]ஆலோசனைக
ளாலேயே விழும்படி செய்யும்; அவர்கள்
துரோகங்களினுடைய திரட்சியினிமித்தம்
அவர்களைத் தள்ளிவிடும்; உமக்கு விரோதமா
11 ய்க் கலகம்பண்ணினார்களே. உம்மை நம்பு
கிறவர்கள் யாவரும் சந்தோஷித்து, [12]எந்நா
ளும் கெம்பீரிப்பார்களாக; நீர் அவர்களைக்
காப்பாற்றுவீர்; உம்முடைய நாமத்தை நேசிக்
கிறவர்கள் உம்மில் களிகூருவார்களாக. **கர்த்** 12
**தாவே**, நீர் நீதிமானை ஆசீர்வதித்து, காருணி
யம் என்னுங் கேடகத்தினால் அவனைச் சூழ்
ந்துகொள்ளுவீர்.

(நெகிநோத்தென்னும் வாத்தியத்தில் செமினீத்தென்னும் **6**
ராகத்தால் வாசிக்க ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்
பட்ட தாவீதின் சங்கீதம்.)

**கர்த்தாவே**, உம்முடைய கோபத்திலே
என்னைக் கடிந்துகொள்ளாதேயும், [13]உம்மு
டைய உக்கிரத்திலே என்னைத் தண்டியாதே
யும். என்மேல் இரக்கமாயிரும் **கர்த்தாவே**, 2
நான் பெலனற்றுப்போனேன்; என்னைக்
குணமாக்கும் **கர்த்தாவே**, [14]என் எலும்புகள்
நடுங்குகிறது. என் ஆத்துமா மிகவும் வியா 3
குலப்படுகிறது; **கர்த்தாவே**, [15]எதுவரைக்கும்
இரங்காதிருப்பீர்.
திரும்பும் **கர்த்தாவே**, என் ஆத்துமாவை 4
விடுவியும்; [16]உம்முடைய கிருபையினிமித்தம்
என்னை ரட்சியும். மரணத்தில் உம்மை நினைவு 5
கூர்வதில்லை, [17]பாதாளத்தில் உம்மைத் துதிப்
பவன் யார்?
என் பெருமூச்சினால் இளைத்துப் போ 6
னேன்; [18]இராமுழுவதும் என் கண்ணீரால்
என் படுக்கையை மிகவும் ஈரமாக்கி, என் கட்
டிலை நனைக்கிறேன். துயரத்தினால் என் 7
கண்கள் குழிவிழுந்துபோயிற்று, என் சத்
துருக்கள் அனைவர் நிமித்தமும் மங்கிப்போ
யிற்று.
அக்கிரமக்காரரே, நீங்கள் எல்லாரும் 8
[19]என்னைவிட்டு அகன்றுபோங்கள்; **கர்த்தர்**
என் அழுகையின் சத்தத்தைக் கேட்டார்.
**கர்த்தர்** என் விண்ணப்பத்தைக் கேட்டார்; 9
**கர்த்தர்** என் ஜெபத்தை ஏற்றுக்கொள்ளுவார்.
என் பகைஞர் எல்லாரும் வெட்கி மிகவும் 10
கலங்கிப்போவார்கள்; அவர்கள் பின்னாகத்
திரும்பிச் சடிதியிலே வெட்கப்படுவார்கள்.

(பென்யமீனியனாகிய கூஷ் என்பவனுடைய வார்த்தை **7**
களினிமித்தம் தாவீது கர்த்தரை நோக்கிப் பாடின
சிகாயோன் என்னும் சங்கீதம்.)

என் தேவனாகிய **கர்த்தாவே**, உம்மை
நம்பியிருக்கிறேன்; [20]என்னைத் துன்பப்படுத்து
கிறவர்கள் எல்லாருக்கும் என்னை விலக்கி
ரட்சியும். சத்துரு சிங்கம்போல் என் ஆத்து 2
மாவைப் பிடித்துக்கொண்டுபோய், [21]விடுவிக்
கிறவன் இல்லாமையால், அதைப் பீறுதபடி
க்கு என்னைத் தப்புவியும்.
என் தேவனாகிய **கர்த்தாவே**, நான் 3
இதைச் செய்ததும், என் கைகளில் நியாயக்
கேடிருக்கிறதும், என்னோடே சமாதானமா 4
யிருந்தவனுக்கு நான் தீமைசெய்ததும், [22]கார
ணமில்லாமல் எனக்குச் சத்துருவானவனை
நான் கொள்ளையிட்டதும் உண்டானால்,
பகைஞன் என் ஆத்துமாவைத் தொடர்ந்து 5
பிடித்து, என் பிராணனைத் தரையிலே தள்ளி
மிதித்து, என் மகிமையைத் தூளிலே தாழ்த்
தக்கடவன். (சேலா.)

[1] 2 தீமோ. 2. 19. 2 பே. 2. 9
[2] எபே. 4. 26
[3] 2 கொ. 13. 5
[4] உபா. 33. 19
[5] எண். 6. 26
[6] ஏசா. 9. 3
[7] 3. 5
[8] ஆப. 1. 13
[9] வெளி. 21. 8
[10] லூ. 11. 44. ரோ. 3. 13
[11] 2 சாமு. 15. 31
[12] ஏசா. 65. 13–16
[13] எரே. 10. 24
[14] 41. 4. 57. 8. ஓசி. 6. 1
[15] 90. 13
[16] எபே. 2. 7, 8
[17] ஏசா. 38. 18
[18] யோபு 7. 3
[19] மத். 7. 23; 25. 41
[20] 31. 15
[21] ஏசா. 38. 13
[22] 1 சாமு. 24. 7

6 **கர்த்தாவே**, நீர் உம்முடைய கோபத்தில்
எழுந்திருந்து, [1]என் சத்துருக்களுடைய மூர்க்
கங்களினிமித்தம் உம்மை உயர்த்தி, எனக்காக
விழித்துக்கொள்ளும்; [2]நியாயத்தீர்ப்பை நிய
7 மித்திருக்கிறீரே. ஜனக்கூட்டம் உம்மைச்
சூழ்ந்துகொள்ளும்; அவர்களுக்காகத் திரும்ப
வும் உன்னதத்திற்கு எழுந்தருளும்.
8 **கர்த்தர்** ஜனங்களுக்கு நியாயஞ்செய்வார்;
**கர்த்தாவே**, [3]என் நீதியின்படியும் என்னி
லுள்ள உண்மையின்படியும் எனக்கு நியாயஞ்
9 செய்யும். துன்மார்க்கனுடைய பொல்லாங்
கை ஒழியப்பண்ணும்; நீதிமானை ஸ்திரப்படு
த்துவீராக; நீதியுள்ளவராயிருக்கிற தேவரீர்
[4]இருதயங்களையும் உள்ளிந்திரியங்களையும்
10 சோதித்தறிகிறவர். செம்மையான இருதய
முள்ளவர்களை ரட்சிக்கிற தேவனிடத்தில்
என் கேடகம் இருக்கிறது.
11 தேவன் நீதியுள்ள நியாயாதிபதி; அவர்
நாள்தோறும் பாவியின்மேல் சினங்கொள்ளு
12 கிற தேவன். அவன் மனந்திரும்பாவிட்
டால் [5]அவர் தம்முடைய பட்டயத்தைக் கருக்
காக்குவார்; அவர் தம்முடைய வில்லை நா
ணேற்றி, அதை ஆயத்தப்படுத்தியிருக்கிறார்.
13 அவனுக்கு மரணாயுதங்களை ஆயத்தம் பண்
ணினார்; தம்முடைய [6]அம்புகளை அக்கினி
அம்புகளாக்கினார்.
14 இதோ, அவன் அக்கிரமத்தைப் பெறக்
கர்ப்ப வேதனைப்படுகிறான்; [7]தீவினையைக்
கர்ப்பந்தரித்து, பொய்யைப் பெறுகிறான்.
15 குழியை வெட்டி, அதை ஆழமாக்கினான்;
[8]தான் வெட்டின குழியில் தானே விழுந்
16 தான். அவன் தீவினை அவன் சிரசின்மேல்
திரும்பும், அவன் கொடுமை அவன் உச்சந்
தலையின்மேல் இறங்கும்.
17 நான் **கர்த்தரை** அவருடைய நீதியின்படி
துதித்து, உன்னதமான **கர்த்தருடைய** நாமத்
தைக் கீர்த்தனம்பண்ணுவேன்.

## 8

(கித்தீத் வாத்தியத்தில் வாசிக்க ராகத்தலைவனுக்கு
ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

எங்கள் ஆண்டவராகிய **கர்த்தாவே**, உம்
முடைய நாமம் பூமியெங்கும் எவ்வளவு
[9]மேன்மையுள்ளதாயிருக்கிறது! உம்முடைய
மகத்துவத்தை வானங்களுக்கு மேலாக வைத்
2 தீர். பகைஞனையும் பழிகாரனையும் அடக்
கிப்போட, தேவரீர் உம்முடைய சத்துருக்க
ளினிமித்தம் [10]குழந்தைகள் பாலகர் வாயினால்
3 பெலன் உண்டுபண்ணினீர். உமது விரல்
களின் கிரியையாகிய உம்முடைய வானங்
களையும், நீர் ஸ்தாபித்த சந்திரனையும் நட்சத்
4 திரங்களையும் நான் பார்க்கும்போது, மனு
ஷனை நீர் நினைக்கிறதற்கும், [11]மனுஷகுமா
ரனை நீர் விசாரிக்கிறதற்கும் அவன் எம்மாத்தி
5 ரம் என்கிறேன். நீர் அவனை தேவதூதரி
லும் சற்று சிறியவனாக்கினீர்; மகிமையினாலும்
6 கனத்தினாலும் அவனை முடிசூட்டினீர். உம்
முடைய கரத்தின் கிரியைகளின்மேல் நீர்
அவனுக்கு ஆளுகை தந்து, [12]சகலத்தையும்
அவனுடைய பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தினீர்.
ஆடுமாடுகளெல்லாவற்றையும், காட்டு மிரு 7
கங்களையும், ஆகாயத்துப் பறவைகளையும், 8
சமுத்திரத்து மச்சங்களையும், கடல்களில் சஞ்
சரிக்கிறவைகளையும் அவனுடைய பாதங்க
ளுக்குக் கீழ்ப்படுத்தினீர்.
எங்கள் ஆண்டவராகிய **கர்த்தாவே**, உம் 9
முடைய நாமம் பூமியெங்கும் எவ்வளவு மேன்
மையுள்ளதாயிருக்கிறது!

## 9

(முத்லபேன் வாத்தியத்தில் வாசிக்க ராகத்தலைவனுக்கு
ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

**கர்த்தாவே**, என் முழு இருதயத்தோடும்
உம்மைத் துதிப்பேன்; [13]உம்முடைய அதி
சயங்களையெல்லாம் விவரிப்பேன். உம்மில் 2
மகிழ்ந்து களிகூருவேன்; உன்னதமானவரே,
[14]உமது நாமத்தைக் கீர்த்தனம் பண்ணுவேன்.
என் சத்துருக்கள் பின்னாகத் திரும்பும் 3
போது, உமது சமுகத்தில் அவர்கள் இட
றுண்டு அழிந்துபோவார்கள். நீர் என் நியா 4
யத்தையும் என் வழக்கையும் தீர்த்து, நீதியுள்ள
நியாயாதிபதியாய் சிங்காசனத்தின்மேல் வீற்
றிருக்கிறீர். ஜாதிகளைக் கடிந்துகொண்டு, 5
துன்மார்க்கரை அழித்து, [15]அவர்கள் நாமத்தை
என்றென்றைக்கும் இல்லாதபடி குலைத்துப்
போட்டீர்.
சத்துருக்கள் என்றென்றைக்கும்பாழாக்கப் 6
பட்டார்கள்; அவர்கள் பட்டணங்களை நிர்
மூலமாக்கினீர்; அவர்கள் பேரும் [16]அவர்க
ளோடே கூட ஒழிந்துபோயிற்று.
**கர்த்தரோ** என்றென்றைக்கும் இருப்பார்; 7
[17]தம்முடைய சிங்காசனத்தை நியாயத்தீர்ப்
புக்கு ஆயத்தம் பண்ணினார். அவர் பூச்சக்கர 8
த்தை நீதியாய் நியாயந்தீர்த்து, [18]சகல ஜனங்க
ளுக்கும் செம்மையாய் நீதிசெய்வார். சிறு 9
மைபட்டவனுக்குக் **கர்த்தர்** அடைக்கலமா
னவர்; [19]நெருக்கப்படுகிற காலங்களில் அவ
ரே தஞ்சமானவர். **கர்த்தாவே**, உம்மைத் 10
தேடுகிறவர்களை நீர் கைவிடுகிறதில்லை; ஆத
லால், உமது நாமத்தை [20]அறிந்தவர்கள் உம்
மை நம்பியிருப்பார்கள்.
சீயோனில் வாசமாயிருக்கிற **கர்த்தரைக்** 11
கீர்த்தனம்பண்ணி, அவர் செய்கைகளை ஜனங்
களுக்குள்ளே அறிவியுங்கள். இரத்தப்பழிக 12
ளைக்குறித்து அவர் விசாரணை செய்யும்போது,
[21]அவைகளை நினைக்கிறார்; சிறுமைப்பட்ட
வர்களுடைய கூப்பிடுதலை மறவார்.
மரணவாசல்களிலிருந்து என்னைத் தூக்கி 13
விடுகிற **கர்த்தாவே**, நான் உம்முடைய துதி
களையெல்லாம் சீயோன்குமாரத்தியின்வாசல்
களில் விவரித்து, உம்முடைய ரட்சிப்பினால்
[22]களிகூரும்படிக்கு, தேவரீர் எனக்கு இரங்கி, 14
என்னைப் பகைக்கிறவர்களால் எனக்கு வரும்
துன்பத்தை நோக்கிப்பாரும்.
ஜாதிகள் தாங்கள் வெட்டின குழியில் தாங் 15
களே விழுந்தார்கள்; [23]அவர்கள் மறைவாய் வை
த்த வலையில் அவர்களுடைய காலே அகப்பட்
டுக்கொண்டது. **கர்த்தர்** தாம் செய்த நியாயத் 16

1 94. 1, 2
2 44. 23. எசா. 51. 9
3 18. 20
4 வெளி. 2. 23
5 மத். 3. 10
6 45. 5. உபா. 32. 23
7 யோபு 15. 35. எசா. 33. 11
8 எஸ்தர் 7. 10. 9. 25. பிர. 10, 8
9 148. 13
10 மத். 11. 25; 21. 16. 1 கொ. 1. 27
11 144. 3. யோபு 7. 17. எபி. 2. 6-9
12 ஆதி. 1. 26, 28. 1 கொ. 15. 27. எபி. 2. 8
13 139. 14
14 83. 17
15 உபா. 9. 14. நீதி. 10. 7
16 2 இரா. 19. 25. ஷ
17 102. 26. எபி. 1. 11
18 வெளி. 20. 12, 13
19 32. 7
20 91. 14. நீதி. 18. 10
21 ஆதி. 9. 5
22 13. 5
23 நீதி. 5. 22

திஞல் அறியப்படுகிறூர்; துன்மார்க்கன் தன்
கைகளின் செய்கையிலே சிக்கிக்கொண்
டான். (இகாயோன், *சேலா.)
17 துன்மார்க்கரும், தேவனை மறக்கிற எல்லா
ஜாதிகளும், [1]நரகத்திலே தள்ளப்படுவார்கள்.
18 எளியவன் என்றைக்கும் மறக்கப்படுவதில்லை;
[2]சிறுமைப்பட்டவர்களுடைய நம்பிக்கை ஒரு
போதும் கெட்டுப்போவதில்லை.
19 எழுந்தருளும் **கர்த்தாவே**, மனுஷன் பெ
லன் கொள்ளாதபடி செய்யும்; ஜாதிகள் உம்மு
டைய சமுகத்தில் நியாயந்தீர்க்கப்படக்கடவர்
20 கள். ஜாதிகள் தங்களை மனுஷரென்று அறி
யும்படிக்கு, அவர்களுக்குப் பயமுண்டாக்கும்,
[3]**கர்த்தாவே**. (சேலா.)

**10** **கர்த்தாவே**, ஏன் தூரத்தில் நிற்கிறீர்?
ஆபத்துநேரிடுகிற சமயங்களில் நீர் ஏன் மறை
2 ந்திருக்கிறீர்? துன்மார்க்கன் தன் பெருமை
யினுல் சிறுமைப்பட்டவனைக் கடூரமாய்த் துன்
பப்படுத்துகிறுன்; [4]அவர்கள் நினைத்த சதி
மோசங்களில் அவர்களே அகப்படுவார்கள்.
3 துன்மார்க்கன் தன் உள்ளம் இச்சித்ததைப்
பெற்றதினுல் பெருமைபாராட்டி, [5]பொருளை
அபகரித்துத் தன்னைத்தான் போற்றி, **கர்த்த**
4 **ரை** அசட்டைபண்ணுகிறுன். துன்மார்க்
கன் தன் கர்வத்தினுல் தேவனைத் தேடான்;
[6]அவன் நினைவுகளெல்லாம் †தேவன் இல்லை
5 யென்பதே. அவன் வழிகள் எப்போதும்
கேடுள்ளவைகள்; உம்முடைய நியாயத்தீர்ப்பு
கள் அவன் பார்வைக்கு எட்டாமல் மிகவும்
[7]உயரமாயிருக்கிறது; தன் எதிராளிகளெல்
6 லார்மேலும் சீறுகிறுன். நான் அசைக்கப்
படுவதில்லை, [8]தலைமுறை தலைமுறைதோறும்
தீங்கு என்னை அணுகுவதில்லையென்று தன்
இருதயத்தில் சொல்லிக்கொள்ளுகிறுன்.
7 அவன் வாய் சபிப்பினுலும் கபடத்தினுலும்
கொடுமையினுலும்நிறைந்திருக்கிறது; [9]அவன்
நாவின்கீழ் தீவினையும் அக்கிரமமும் உண்டு.
8 கிராமங்களின் ஒளிப்பிடங்களிலே பதிவிருந்
து, மறைவிடங்களிலே குற்றமற்றவனைக் கொ
ல்லுகிறுன்; [10]திக்கற்றவர்களைப்பிடிக்க அவன்
9 கண்கள் நோக்கிக்கொண்டிருக்கிறது. தன்
கெபியிலிருக்கிற சிங்கத்தைப்போல [11]மறை
வில் பதிவிருக்கிறுன்; ஏழையைப் பிடிக்கப்
பதிவிருந்து, ஏழையைத் தன் வலைக்குள் இழு
10 த்துப் பிடித்துக்கொள்ளுகிறுன். திக்கற்ற
வர்கள் தன் ‡பலவான்கள் கையில் விழும்படி
11 அவன் பதுங்கிக்கிடக்கிறுன். தேவன் அதை
மறந்தார் என்றும், அவர் தம்முடைய முகத்
தை மறைத்து, [12]ஒருக்காலும் அதைக் காண
மாட்டார் என்றும், தன் இருதயத்திலே சொல்
லிக்கொள்ளுகிறுன்.
12 **கர்த்தாவே**, எழுந்தருளும்; தேவனே, உம்
முடைய கையை உயர்த்தும்; [13]ஏழைகளை மற
13 வாதேயும். துன்மார்க்கன் தேவனை அசட்
டைபண்ணி: நீர் கேட்டு விசாரிப்பதில்லை
என்று தன் இருதயத்தில் சொல்லிக்கொள்வா
14 னேன்? அதைப் பார்த்திருக்கிறீரே! உபத்
திரவத்தையும் குரோதத்தையும் கவனித்திருக்
கிறீரே; நீர் பதிலளிப்பீர்; ஏழையானவன்
தன்னை உமக்கு ஒப்புவிக்கிறுன்; [14]திக்கற்ற
பிள்ளைகளுக்குச் சகாயர் நீரே. துன்மார்க்க 15
னும் பொல்லாதவனுமா யிருக்கிறவனுடைய
புயத்தை முறித்துவிடும்; [15]அவனுடைய ஆகா
மியம் காணுமற்போகுமட்டும் அதைத் தேடி
விசாரியும்.
**கர்த்தர்** சதாகாலங்களுக்கும் ராஜாவாயிருக் 16
கிறுர்; [16]புறஜாதியார் அவருடைய தேசத்தி
லிருந்து அழிந்துபோவார்கள். **கர்த்தாவே**, 17
சிறுமைப்பட்டவர்களுடைய வேண்டுதலைக்
கேட்டிருக்கிறீர்; [17]அவர்கள் இருதயத்தை ஸ்தி
ரப்படுத்துவீர். மண்ணுன மனுஷன் இனிப் 18
பலவந்தஞ்செய்யத் தொடராதபடிக்கு, தேவ
ரீர் திக்கற்ற பிள்ளைகளுக்கும் ஒடுக்கப்பட்ட
வர்களுக்கும் நீதிசெய்ய [18]உம்முடைய செவி
களைச் சாய்த்துக் கேட்டருளுவீர்.

**11**
(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

நான் **கர்த்தரை** நம்பியிருக்கிறேன்; [19]பின்
னை ஏன் நீங்கள் என் ஆத்துமாவை நோக்கி:
பட்சியைப்போல உன் மலைக்குப் பறந்துபோ
என்று சொல்லுகிறீர்கள். இதோ, துன்மார்க் 2
கர் வில்லை வளைத்து, [20]செம்மையான இருத
யத்தார்மேல் அந்தகாரத்தில் எய்யும்படி தங்
கள் அம்புகளை நாணிலே தொடுக்கிறுர்கள்.
அஸ்திபாரங்களும் நிர்மூலமாகிறதே, [21]நீதி 3
மான் என்னசெய்வான்?
**கர்த்தர்** தம்முடைய பரிசுத்த ஆலயத்தில் 4
[22]இருக்கிறுர்; **கர்த்தருடைய** சிங்காசனம் [23]பர
லோகத்தில் இருக்கிறது; அவருடைய கண்
கள் மனுபுத்திரரைப் பார்க்கிறது; அவரு
டைய இமைகள் அவர்களைச் சோதித்தறிகி
றது. **கர்த்தர்** நீதிமானைச் சோதித்தறிகிறுர்; 5
[24]துன்மார்க்கனையும் கொடுமையில் பிரியமுள்
ளவனையும் அவருடைய உள்ளம் வெறுக்கி
றது. துன்மார்க்கர்மேல் கண்ணிகளை வரு 6
ஷிக்கப்பண்ணுவார்; [25]அக்கினியும் கந்தகமும்
கடுங்கோடைக் கொந்தளிப்பும் அவர்கள் குடிக்
கும் பாத்திரத்தின் பங்கு. **கர்த்தர்** நீதியுள்ள 7
வர், நீதியின்மேல் பிரியப்படுவார்; அவரு
டைய முகம் செம்மையானவனை நோக்கியி
ருக்கிறது.

**12**
(செமினீத்தென்னும் எண்ணரம்புக் கின்னரத்தில்
வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீ
தின் சங்கீதம்.)

இரட்சியும் **கர்த்தாவே**, பக்தியுள்ளவன்
அற்றுப்போகிறுன்; [26]உண்மையுள்ளவர்கள்
மனுபுத்திரரில் குறைந்திருக்கிறுர்கள். அவ 2
ரவர் தங்கள் தோழரோடே பொய் பேசுகிறுர்
கள்; [27]இச்சக உதடுகளால் இருமனதாய்ப்
பேசுகிறுர்கள்.
இச்சகம் பேசுகிற எல்லா உதடுகளையும், 3
[28]பெருமைகளைப் பேசுகிற நாவையும் **கர்த்தர்**
அறுத்துப்போடுவார். அவர்கள்: எங்கள் நா 4
வுகளால் மேற்கொள்ளுவோம், எங்கள் உதடு

* நியாயா. 19.14
1 50. 22
2 நீதி. 23. 18. ஏசா. 41. 17
3 88. 15, 16
4 நீதி. 5. 22
5 நீதி. 28. 4. ரோ. 1. 32
6 14. 1, 2
† தேவனைப் பற்றும் சிந்தனை அவனுக்குள் இல்லை. எபே. 2. 12
7 நீதி. 24. 7. ஏசா. 26. 11
8 பிர. 8. 11. ஏசா. 56. 12. வெளி. 18. 7
9 யோபு 20. 12
10 ஆப. 3. 14
11 மீகா. 7. 2
‡ வல்லமைக்குள்.
12 பிர. 8. 11
13 மீகா. 5. 9
14 ஓசி. 14. 3. 2 தீமோ. 1. 12. 1 பே. 4. 19
15 37. 17
16 1 தீமோ. 6. 15, 16
17 ஏசா. 65. 24
18 ஏசா. 11. 4
19 56. 11. 1 சாமு. 26. 19, 20
20 64. 2–4
21 82. 5. 2 தீமோ. 2. 19
22 ஆப. 2. 20
23 ஏசா. 66. 1. மத். 5. 34. வெளி. 4. 2
24 ஆதி. 22. 1. யாக். 1. 12
25 ஆதி. 19. 24
26 ஏசா. 57. 1
27 ரோ. 16. 18
28 1 சாமு. 2. 3. தானி. 7. 8, 25

கள் எங்களுடையது; யார் எங்களுக்கு ஆண்ட
வன் என்று சொல்லுகிறார்கள்.
5 ஏழைகள் பாழாக்கப்பட்டதினிமித்தமும்,
எளியவர்கள் விடும் பெருமூச்சினிமித்தமும்,
நான் இப்பொழுது எழுந்து, அவன்மேல்
சீறுகிறவர்களுக்கு அவனைக் காத்துச் சுகமா
யிருக்கப்பண்ணுவேன் என்று **கர்த்தர்** சொல்
6 லுகிறார். **கர்த்தருடைய** சொற்கள் மண்கு
கையில் எழுதரம் உருக்கி, [1]புடமிடப்பட்ட
வெள்ளிக்கொப்பான சுத்த சொற்களாயிருக்
கிறது.
7 **கர்த்தாவே**, நீர் அவர்களைக் காப்பாற்றி,
அவர்களை என்றைக்கும் இந்தச் சந்ததிக்கு
8 விலக்கிக் காத்துக்கொள்ளுவீர். மனுபுத்திர
ரில் சண்டாளர் உயர்ந்திருக்கும்போது, துன்
மார்க்கர் எங்கும் சுற்றித்திரிவார்கள்.

## 13

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

**கர்த்தாவே**, எதுவரைக்கும் என்னை மறந்
திருப்பீர், [2]எதுவரைக்கும் உம்முடைய முகத்
2 தை எனக்கு மறைப்பீர்? என் இருதயத்தி
லே சஞ்சலத்தை நித்தம் நித்தம் வைத்து, எது
வரைக்கும் என் ஆத்துமாவிலே ஆலோசனை
பண்ணிக்கொண்டிருப்பேன்? எதுவரைக்கும்
என் சத்துரு என்மேல் தன்னை உயர்த்து
3 வான்? என் தேவனாகிய **கர்த்தாவே**, நீர்
நோக்கிப்பார்த்து, எனக்குச் செவிகொடுத்தரு
ளும்; [3]நான் மரணநித்திரை அடையாதபடி
4 க்கு என் கண்களைத் தெளிவாக்கும். அவனை
மேற்கொண்டேன் என்று என் பகைஞன்
சொல்லாதபடிக்கும், நான் தள்ளாடுகிறதினால்
என் சத்துருக்கள் களிகூராதபடிக்கும் இப்ப
5 டிச் செய்தருளும். நான் உம்முடைய கிரு
பையின்மேல் நம்பிக்கையாயிருக்கிறேன்; உம்
முடைய இரட்சிப்பினால் என் இருதயம் களி
6 கூரும். **கர்த்தர்** எனக்கு நன்மை செய்தபடி
யால் அவரைப் பாடுவேன்.

## 14

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

தேவன் இல்லை என்று மதிகெட்டவன்
தன் இருதயத்தில் சொல்லிக்கொள்ளுகிறான்.
[4]அவர்கள் தங்களைக் கெடுத்து, அருவருப்பான
கிரியைகளைச் செய்துவருகிறார்கள்; [5]நன்மை
2 செய்கிறவன் ஒருவனும் இல்லை. தேவனைத்
தேடுகிற உணர்வுள்ளவன் உண்டோ என்று
பார்க்க, **கர்த்தர்** பரலோகத்திலிருந்து மனு
3 புத்திரரைக் கண்ணோக்கினார். எல்லாரும்
வழிவிலகி, ஏகமாய்க் கெட்டுப்போனார்கள்;
நன்மை செய்கிறவன் இல்லை, ஒருவனாகிலும்
இல்லை.
4 அக்கிரமக்காரரில் ஒருவனுக்கும் அறிவு
இல்லையோ? அப்பத்தைப்பட்சிக்கிறதுபோல்,
என் ஜனத்தைப் பட்சிக்கிறார்களே; [6]அவர்
கள் **கர்த்தரைத்** தொழுதுகொள்ளுகிறதில்லை.
5 அங்கே அவர்கள் மிகவும் பயந்தார்கள்; தேவன்
நீதிமானுடைய சந்ததியோடே இருக்கிறாரே.
6 சிறுமைப்பட்டவனுக்குக் **கர்த்தர்** அடைக்கல

[1] 119. 140. 2 சாமு. 22. 31. நீதி. 30. 5
[2] 88. 14. ஏசா. 59. 2
[3] எரே. 51. 39
[4] 10. 4; 53. 1. மு
[5] ஆதி. 6. 11, 12. ரோ. 3. 10, மு
[6] எரே. 10. 25
[7] ரோ. 11. 26
[8] 24. 3. மு
[9] ஏசா. 33. 15. எபே. 4. 25
[10] நியா. 11. 35
[11] எசே. 18. 8, 17; 22. 12
[12] 2 பே. 1. 10
[13] தன்மைவாழ்வு. யோபு 35. 7, 8. லூ. 17. 10
[14] மல். 3. 17, 18
[15] ஓசி. 2. 16, 17
[16] புல. 3. 24
[17] 73. 23—26. அப். 2. 25. மு
[18] அப். 3. 15

மாயிருக்கிறார் என்று சொல்லி, நீங்கள் அவனு
டைய ஆலோசனையை அலட்சியம் பண்ணி
னீர்கள்.
சீயோனிலிருந்து [7]இஸ்ரவேலுக்கு ரட் 7
சிப்பு வருவதாக; **கர்த்தர்** தம்முடைய ஜனத்
தின் சிறையிருப்பைத் திருப்பும்போது, யாக்
கோபுக்குக் களிப்பும், இஸ்ரவேலுக்கு மகிழ்ச்
சியும் உண்டாகும்.

## 15

(தாவீதின் சங்கீதம்.)

**கர்த்தாவே**, யார் உம்முடைய கூடாரத்
தில் தங்குவான்? [8]யார் உம்முடைய பரிசுத்த
பர்வதத்தில் வாசம்பண்ணுவான்? உத்தமனாய் 2
நடந்து, நீதியை நடப்பித்து, [9]மனதாரச் சத்
தியத்தைப் பேசுகிறவன்தானே. அவன் தன் 3
நாவினால் புறங்கூறாமலும், தன் தோழனுக்குத்
தீங்கு செய்யாமலும், தன் அயலான்மேல் சொ
ல்லப்படும் நிந்தையான பேச்சை எடுக்காம
லும் இருக்கிறான். ஆகாதவன் அவன் பார் 4
வைக்குத் தீழ்ப்பானவன்; **கர்த்தருக்குப்** பயந்த
வர்களையோ கனம்பண்ணுகிறான்; ஆணை
யிட்டதில் தனக்கு நஷ்டம் வந்தாலும் [10]தவறா
திருக்கிறான். தன் பணத்தை வட்டிக்குக் 5
கொடாமலும், [11]குற்றமில்லாதவனுக்கு விரோ
தமாய்ப் பரிதானம் வாங்காமலும் இருக்கிறான்.
இப்படிச் செய்கிறவன் என்றென்றைக்கும்
[12]அசைக்கப்படுவதில்லை.

## 16

(தாவீது எழுதின மிக்தாம் என்னும் பொற்பணதிக்கீதம்.)

தேவனே, என்னைக் காப்பாற்றும், உம்
மை நம்பியிருக்கிறேன். என் நெஞ்சமே, 2
நீ **கர்த்தரை** நோக்கி: தேவரீர் என் ஆண்ட
வராயிருக்கிறீர், என் செல்வம் [13]உமக்கு வே
ண்டியதாயிராமல்; பூமியிலுள்ள பரிசுத்த 3
வான்களுக்கும், நான் என் முழுப்பிரியத்தை
யும் வைத்திருக்கிற மகாத்துமாக்களுக்கும்,
[14]அது வேண்டியதாயிருக்கிறது என்று சொன்
னாய்.
அந்நிய தேவனை நாடிப் பின்பற்றுகிறவர் 4
களுக்கு வேதனைகள் பெருகும்; அவர்கள்
செலுத்துகிற ரத்த பானபலிகளை நான் செ
லுத்தமாட்டேன், [15]அவர்கள் நாமங்களை என்
உதடுகளினால் உச்சரிக்கவுமாட்டேன். **கர்த்** 5
**தர்** என் சுதந்தரமும் [16]என் பாத்திரத்தின் பங்
குமானவர்; என் சுதந்தரத்தை தேவரீர் காப்
பாற்றுகிறீர். நேர்த்தியான இடங்களில் 6
எனக்குப் பங்கு கிடைத்தது; ஆம், சிறப்பான
சுதந்தரம் எனக்கு உண்டு.
எனக்கு ஆலோசனை தந்த **கர்த்தரைத்** துதிப் 7
பேன்; இராக்காலங்களிலும் என் உள்ளிந்திரி
யங்கள் என்னை உணர்த்தும். **கர்த்தரை** எப் 8
பொழுதும் எனக்கு முன்பாக வைத்திருக்
கிறேன்; [17]அவர் என் வலதுபாரிசத்தில் இருக்
கிறபடியால் நான் அசைக்கப்படுவதில்லை.
ஆகையால் என் இருதயம் பூரித்தது, என் மகி 9
மை களிகூர்ந்தது; என் மாம்சமும் நம்பிக்கை
யோடே தங்கியிருக்கும். என் ஆத்துமாவைப் 10
பாதாளத்தில் விடீர்; [18]உம்முடைய பரிசுத்த
வானை அழிவைக் காணவொட்டீர். ஜீவ 11

மார்க்கத்தை [1]எனக்குத் தெரியப்படுத்துவீர்;
உம்முடைய சமுகத்தில் பரிபூரண ஆனந்த
மும், [2]உம்முடைய வலதுபாரிசத்தில் நித்திய
பேரின்பமும் உண்டு.

**17** (தாவீதின் விண்ணப்பம்.)

**கர்த்தாவே**, நியாயத்தைக் கேட்டருளும்,
என் கூப்பிடுதலைக் கவனியும்; கபடமில்லாத
உதடுகளினின்று பிறக்கும் என் விண்ணப்பத்
2 திற்குச் செவிகொடும். உம்முடைய சந்நிதி
யிலிருந்து என் நியாயம் வெளிப்படுவதாக;
உம்முடைய கண்கள் நியாயமானவைகளை
நோக்குவதாக.
3 நீர் என் இருதயத்தைப் பரிசோதித்து,
[3]இராக்காலத்தில் அதை விசாரித்து, என்னைப்
புடமிட்டுப் பார்த்தும் ஒன்றும் காணாதிருக்கி
றீர்; [4]என் வாய் மீறாதபடிக்குத் தீர்மானம்
4 பண்ணினேன். மனுஷரின் செய்கைகளைக்
குறித்து, நான் உம்முடைய உதடுகளின் வாக்
கினாலே [5]துஷ்டனுடைய பாதைகளுக்கு
விலக்கமாய் என்னைக் காத்துக்கொள்ளுகி
5 றேன். என் காலடிகள் வழுவாதபடிக்கு,
[6]என் நடைகளை உமது வழிகளில் ஸ்திரப்
படுத்தும்.
6 தேவனே, நான் உம்மை நோக்கிக் கெஞ்சு
கிறேன், எனக்குச் செவிகொடுக்கிறீர்; என்
னிடத்தில் உம்முடைய செவியைச் சாய்த்து,
7 என் வார்த்தையைக் கேட்டருளும். உம்மை
நம்புகிறவர்களை அவர்களுக்கு விரோதமாய்
எழும்புகிறவர்களினின்று உமது வலதுகரத்
தினால் தப்புவித்து ரட்சிக்கிறவரே! உம்மு
டைய அதிசயமான கிருபையை விளங்கப்
8 பண்ணும். கண்மணியைப்போல [7]என்னைக்
9 காத்தருளும். என்னை ஒடுக்குகிற துன்மார்க்
கருக்கும், என்னைச் சூழ்ந்துகொள்ளுகிற என்
பிராணப்பகைஞருக்கும் மறைவாக, [8]உம்மு
டைய செட்டைகளின் நிழலிலே என்னைக்
10 காப்பாற்றும். அவர்கள் நிணந்துன்னியிருக்
கிறார்கள், தங்கள் வாயினால் வீம்பு பேசுகிறார்
11 கள். நாங்கள் செல்லும் பாதைகளில் இப்
பொழுது எங்களை வளைந்துகொண்டார்கள்;
எங்களைத் தரையிலே தள்ளும்படி அவர்கள்
கண்கள் எங்களை நோக்கிக்கொண்டிருக்கிறது.
12 பீறுகிறதற்கு ஆவலுள்ள சிங்கத்துக்கும், மறை
விடங்களில் பதிவிருக்கிற பாலசிங்கத்துக்கும்
ஒப்பாயிருக்கிறார்கள்.
13 **கர்த்தாவே**, நீர் எழுந்திருந்து, அவனுக்கு
எதிரிட்டு, அவனை மடங்கடியும்; **கர்த்தாவே**,
என் ஆத்துமாவைத் துன்மார்க்கனுடைய கை
க்கு [9]உம்முடைய பட்டயத்தினால் தப்புவியும்.
14 மனுஷனுடைய கைக்கும், இம்மையில் தங்
கள் பங்கைப் பெற்றிருக்கிற [10]உலக மக்களின்
கைக்கும் உம்முடைய கரத்தினால் என்னைத்
தப்புவியும்; அவர்கள் வயிற்றை உமது திரவி
யத்தினால் நிரப்புகிறீர்; அவர்கள் புத்திரபாக்
கியத்தினால் திருப்தியடைந்து, தங்களுக்கு
மீதியான பொருளைத் தங்கள் குழந்தைகளுக்கு
வைக்கிறார்கள்.

[1] மத். 7. 14
[2] 36. 8. மத். 5. 8; 25. 23. 1 கொ. 13. 12. 1 யோ. 3. 2
[3] 139. 1, 23
[4] 39. 1, 2
[5] நீதி. 2. 10-15
[6] 119. 133
[7] உபா. 32. 10. சக. 2. 8
[8] ரூத். 2. 12
[9] ஏசா. 10. 5
[10] 16. 25. யாக். 5. 5
[11] 1 யோ. 3. 2
[12] 1 யோ. 4. 19.
[13] வெளி. 5. 11-18
* பரலோகம். 2 நாளா. 30. 27
[14] அப். 4. 31
[15] 144. 5
[16] 1 சாமு. 7. 10
[17] 106. 9

நானோ நீதியில் உம்முடைய முகத்தைத் 15
தரிசிப்பேன்; [11]நான் விழிக்கும்போது உமது
சாயலால் திருப்தியாவேன்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதம். கர்த்த **18**
ருடைய தாசனாகிய தாவீது இந்தப் பாட்டின் வார்த்தை
களைக் கர்த்தர் தன்னைத் தன்னுடைய எல்லாச் சத்துருக்
களின் கைக்கும் சவுலின் கைக்கும் நீங்கலாக்கி விடுவித்த
நாளிலே பாடினது.)

என் பெலனாகிய **கர்த்தாவே**, [12]உம்மில்
அன்புகூருவேன். **கர்த்தர்** என் கன்மலை 2
யும், என் கோட்டையும், என் ரட்சகரும்,
என் தேவனும், நான் நம்பியிருக்கிற என் துரு
கமும், என் கேடகமும், என் ரட்சணியக்கொம்
பும், என் உயர்ந்த அடைக்கலமுமாயிருக்கி
றார். துதிக்குப் பாத்திரராகிய **கர்த்தரை** 3
நோக்கிக் கூப்பிடுவேன்; [13]அதனால் என் சத்
துருக்களுக்கு நீங்கலாகி ரட்சிக்கப்படுவேன்.
மரணக்கட்டுகள் என்னைச் சுற்றிக்கொண்டது; 4
துர்ச்சனப்பிரவாகம் என்னைப் பயப்படுத்தி
னது. பாதாளக்கட்டுகள் என்னைச் சூழ்ந்து 5
கொண்டது; மரணக் கண்ணிகள் என்மேல்
விழுந்தது. எனக்கு உண்டான நெருக்கத் 6
திலே **கர்த்தரை** நோக்கிக் கூப்பிட்டு, என்
தேவனை நோக்கி அபயமிட்டேன்; தமது *ஆ
லயத்திலிருந்து என் சத்தத்தைக் கேட்டார்,
என் கூப்பிடுதல் அவர் சந்நிதியில் போய்,
அவர் செவிகளில் ஏறிற்று.
அப்பொழுது பூமி அசைந்து அதிர்ந்தது; 7
[14]அவர் கோபங்கொண்டபடியால் பர்வதங்
களின் அஸ்திபாரங்கள் குலுங்கி அசைந்தது.
அவர் நாசியிலிருந்து புகை எழும்பிற்று, அவர் 8
வாயிலிருந்து பட்சிக்கிற அக்கினி புறப்பட்
டது; அதனால் தழல் மூண்டது. வானங்களைத் 9
தாழ்த்தி இறங்கினார்; [15]அவர் பாதங்களின்கீழ்
காரிருள் இருந்தது. கேருபீன்மேல் ஏறி 10
வேகமாய்ச் சென்றார்; காற்றின் செட்டை
களைக்கொண்டு பறந்தார். இருளைத் தமக்கு 11
மறைவிடமாக்கினார்; கரும்புனல்களையும், ஆ
காயத்துக் கார்மேகங்களையும் தம்மைச் சூழக்
கூடாரமாக்கினார். அவருடைய சந்நிதிப்பிர 12
காசத்தினால் அவருடைய மேகங்கள் பறந்து
விலகிற்று, கல்மழையும் நெருப்புத்தழலும்
விழுந்தது. **கர்த்தர்** வானங்களிலே குமுறி 13
னார், [16]உன்னதமானவர் தமது சத்தத்தைத்
தொனிக்கப்பண்ணினார்; கல்மழையும் நெருப்
புத்தழலும் விழுந்தது. தம்முடைய அம்புகளை 14
எய்து, அவர்களைச் சிதறடித்தார்; மின்னல்
களைப் பிரயோகித்து, அவர்களைக் கலங்கப்
பண்ணினார். அப்பொழுது **கர்த்தாவே**, உம் 15
முடைய கண்டிதத்தினாலும் உம்முடைய நாசி
யின் சுவாசக்காற்றினாலும் தண்ணீர்களின்
மதகுகள் திறவுண்டு, [17]பூதலத்தின் அஸ்திபா
ரங்கள் காணப்பட்டது.
உயரத்திலிருந்து அவர் கைநீட்டி, என் 16
னைப்பிடித்து, ஜலப்பிரவாகத்திலிருக்கிற என்
னைத் தூக்கிவிட்டார். என்னிலும் அதிக பல 17
வான்களாயிருந்த என் பலத்த சத்துருவுக்கும்

என்னைப் பகைக்கிறவர்களுக்கும் என்னை விடு
18 வித்தார். என் ஆபத்துநாளில் எனக்கு எதிரிட்டு
வந்தார்கள்; [1]**கர்த்தரோ** எனக்கு ஆதரவாயிருந்
19 தார். அவர் விசாலமான இடத்திலே என்னைக்
கொண்டுவந்து என்மேல் பிரியமாயிருந்தபடி
20 யால், என்னைத்தப்புவித்தார். **கர்த்தர்** என் நீதி
க்குத்தக்கதாக எனக்குப் பதிலளித்தார்; [2]என்
கைகளின் சுத்தத்திற்குத் தக்கதாக எனக்குச்
21 சரிக்கட்டினார். **கர்த்தருடைய** வழிகளைக் கைக்
கொண்டுவந்தேன்; நான் என் தேவனுக்குத் து
22 ரோகம்பண்ணினதில்லை. அவருடைய நியா
யங்களையெல்லாம் எனக்கு முன்பாக நிறுத்தி
னேன்; அவருடைய பிரமாணங்களை நான்
23 தள்ளிப்போடவில்லை. அவர் முன்பாக நான்
மனவுண்மையாயிருந்து, என் துர்க்குணத்து
க்கு என்னை விலக்கிக் காத்துக்கொண்டேன்.
24 ஆகையால் **கர்த்தர்** என் நீதிக்கும், [3]தம்மு
டைய கண்களுக்கு முன்னிருக்கிற என் கைக
ளின் சுத்தத்திற்கும் தக்கதாக எனக்குப் பல
25 னளித்தார். தயவுள்ளவனுக்கு நீர் தயவுள்ள
வராகவும், [4]உத்தமனுக்கு நீர் உத்தமராகவும்;
26 புனிதனுக்கு நீர் புனிதராகவும், மாறுபாடுள்
ளவனுக்கு நீர் மாறுபடுகிறவராகவும் தோன்று
27 வீர். தேவரீர் சிறுமைப்பட்ட ஜனத்தை ரட்சிப்
பீர்; [5]மேட்டிமையான கண்களைத் தாழ்த்துவீர்.
28 தேவரீர் என் விளக்கை ஏற்றுவீர்; [6]என் தேவ
னாகிய **கர்த்தர்** என் இருளை வெளிச்சமாக்கு
29 வார். உம்மாலே நான் ஒரு சேனைக்குள்
பாய்ந்துபோவேன்; என் தேவனாலே ஒரு
30 மதிலைத் தாண்டுவேன். தேவனுடைய வழி
உத்தமமானது; **கர்த்தருடைய** வசனம் புட
மிடப்பட்டது; [7]தம்மை நம்புகிற அனைவருக்
31 கும் அவர் கேடகமாயிருக்கிறார். **கர்த்தரை**
யல்லாமல் தேவன் யார்? [8]நம்முடைய தேவனை
32 யன்றிக் கன்மலையும் யார்? என்னைப் பலத்
தால் இடைகட்டி, [9]என் வழியைச் செவ்
33 வைப்படுத்துகிறவர் தேவனே. அவர் என்
கால்களை மான்களுடைய கால்களைப்போ
லாக்கி, என்னுடைய உயர்தலங்களில் என்னை
34 நிறுத்துகிறார். வெண்கல வில்லும் என் புயங்
களால் வளையும்படி, என் கைகளை யுத்தத்திற்
35 குப் பழக்குவிக்கிறார். உம்முடைய ரட்சிப்
பின் கேடகத்தையும் எனக்குத் தந்தீர்; உம்மு
டைய வலதுகரம் என்னைத் தாங்குகிறது;
[10]உம்முடைய காருணியம் என்னைப் பெரிய
36 வனாக்கும். என் கால்கள் வழுவாதபடிக்கு,
[11]நான் நடக்கிற வழியை அகலமாக்கினீர்.
37 என் சத்துருக்களைப் பின்தொடர்ந்து, அவர்
களைப் பிடிப்பேன்; அவர்களை நிர்மூலமாக்
38 கும்வரைக்கும் திரும்பேன். அவர்கள் எழுந்
திருக்க மாட்டாதபடிக்கு, [12]என் பாதங்களின்
கீழ் விழத்தக்கதாக அவர்களை வெட்டினேன்.
39 யுத்தத்திற்கு நீர் என்னைப் பலத்தால் இடை
கட்டி, என்மேல் எழும்பினவர்களை என்கீழ்
40 மடங்கப்பண்ணினீர். நான் என் பகைஞ
ரைச் சங்கரிக்கும்படியாக, என் சத்துருக்க
ளின் பிடரியை எனக்கு ஒப்புக்கொடுத்தீர்.

[1] 1 சாமு. 30. 6
[2] 1 சாமு. 24. 17, 20
[3] 1 சாமு. 26. 23
[4] 2 சாமு. 22. 27. 1 இரா. 8. 32
[5] நீதி. 6. 16, 17
[6] நீதி. 20. 27
[7] 12. 6. நீதி. 30. 5
[8] உபா. 32. 31, 39. ஏசா. 45. 5
[9] 2 கொ. 3. 5
[10] 2 சாமு. 22. 36
[11] நீதி. 4. 12
[12] 2 சாமு. 5. 20
[13] எபி. 11. 11
[14] ஏசா. 55. 5
[15] மீகா. 7. 17
[16] 2 சாமு. 7. 13. ரோ. 11. 29
[17] ஆதி. 1. 6. ஏசா. 40. 22. ரோ. 1. 19, 20
[18] ரோ. 1. 19, 28; 10. 18
[19] பிர. 1. 5
[20] 111. 7
[21] 12. 6

அவர்கள் கூப்பிடுகிறார்கள், அவர்களை ரட்சிப் 4
பார் ஒருவருமில்லை; **கர்த்தரை** நோக்கிக் கூப்
பிடுகிறார்கள், [13]அவர்களுக்கு அவர் உத்தரவு
கொடுக்கிறதில்லை. நான் அவர்களைக் காற்று 42
முகத்திலே பறக்கிற தூளாக இடித்து, தெருக்
களிலுள்ள சேற்றைப்போல் அவர்களை எறிந்
துபோடுகிறேன். ஜனங்களின் சண்டைக 43
ளுக்கு நீர் என்னைத் தப்புவித்து, ஜாதிகளுக்கு
என்னைத் தலைவனாக்குகிறீர்; நான் அறியாத
ஜனங்கள் [14]என்னைச் சேவிக்கிறார்கள். அவர் 44
கள் என் சத்தத்தைக் கேட்டவுடனே எனக்
குக் கீழ்ப்படிகிறார்கள்; அந்நியரும் எனக்கு
இச்சகம் பேசி அடங்குகிறார்கள். அந்நியர் 45
முனைவிழுந்துபோய், [15]தங்கள் அரண்களி
லிருந்து தத்தளிப்பாய்ப் புறப்படுகிறார்கள்.
**கர்த்தர்** ஜீவனுள்ளவர்; என் கன்மலையான 46
வர் துதிக்கப்படுவாராக; என் ரட்சிப்பின் தே
வன் உயர்ந்திருப்பாராக. அவர் எனக்காகப் 47
பழிக்குப் பழிவாங்கி, ஜனங்களை எனக்குக்
கீழ்ப்படுத்துகிற தேவனானவர். அவரே என் 48
சத்துருக்களுக்கு என்னை விலக்கி விடுவிக்கிற
வர்; எனக்கு விரோதமாய் எழும்புகிறவர்கள்
மேல் என்னை நீர் உயர்த்தி, கொடுமையான
மனுஷனுக்கு என்னைத் தப்புவிக்கிறீர். இநி 49
மித்தம் **கர்த்தாவே**, ஜாதிகளுக்குள்ளே
உம்மைத் துதித்து, உம்முடைய நாமத்திற்குச்
சங்கீதம் பாடுவேன். தாம் ஏற்படுத்தின ராஜா 50
வுக்கு மகத்தான ரட்சிப்பை அளித்து, [16]தாம்
அபிஷேகம் பண்ணின தாவீதுக்கும் அவன்
சந்ததிக்கும் சதாகாலமும் கிருபை செய்கிறார்.

## 19

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

வானங்கள் தேவனுடைய மகிமையை
வெளிப்படுத்துகிறது, [17]ஆகாயவிரிவு அவரு
டைய கரங்களின் கிரியையை அறிவிக்கிறது.
பகலுக்குப் பகல் வார்த்தைகளைப் பொழிகி 2
றது, இரவுக்கு இரவு அறிவைத் தெரிவிக்கி
றது. அவைகளுக்குப்பேச்சுமில்லை, வார்த்தை 3
யுமில்லை, அவைகளின் சத்தம் கேட்கப்படுவது
மில்லை. ஆகிலும் அவைகளின் சத்தம் பூமி 4
யெங்கும், [18]அவைகளின் வசனங்கள் பூச்சக்
கரத்துக் கடைசிவரைக்கும் செல்லுகிறது;
அவைகளில் சூரியனுக்கு ஒரு கூடாரத்தை
ஸ்தாபித்தார். அது தன் மணவறையிலிருந்து 5
புறப்படுகிற மணவாளனைப்போ லிருந்து,
[19]பராக்கிரமசாலியைப்போல் தன் பாதையில்
ஓட மகிழ்ச்சியாயிருக்கிறது. அது வானங்க 6
ளின் ஒரு முனையிலிருந்து புறப்பட்டு, அவை
களின் மறுமுனைவரைக்கும் சுற்றியோடுகிறது;
அதின் காந்திக்கு மறைவானது ஒன்றுமில்லை.
**கர்த்தருடைய** வேதம் குறைவற்றதும், [20]ஆத் 7
துமாவை உயிர்ப்பிக்கிறதுமாயிருக்கிறது; **கர்த்**
**தருடைய** சாட்சி சத்தியமும், பேதையை
ஞானியாக்குகிறதுமா யிருக்கிறது. **கர்த்தரு** 8
**டைய** நியாயங்கள் செம்மையும், [21]இருதயத்
தைச் சந்தோஷிப்பிக்கிறதுமாயிருக்கிறது; **கர்**
**த்தருடைய** கற்பனை தூய்மையும், கண்களைத்

9 தெளிவிக்கிறதுமாயிருக்கிறது. **கர்த்தருக்குப்**
பயப்படுகிற பயம் சுத்தமும், என்றைக்கும்
நிலைக்கிறதுமாயிருக்கிறது; **கர்த்தருடைய**நியா
யங்கள் உண்மையும், அவைகள் அனைத்தும்
10 நீதியுமாயிருக்கிறது. அவைகள் பொன்னி
லும், மிகுந்த பசும் பொன்னிலும் விரும்பப்
படத்தக்கதும், [1]தேனிலும் தேன்கூட்டிலி
ருந்து ஒழுகும் தெளிதேனிலும் மதுரமுள்ளது
11 மாய் இருக்கிறது. அன்றியும் அவைகளால்
உமது அடியேன் எச்சரிக்கப்படுகிறேன்;
[2]அவைகளைக் கைக்கொள்ளுகிறதினால் மிகுந்த
பலன் உண்டு.
12 தன் பிழைகளை உணருகிறவன் யார்? [3]மறை
வான குற்றங்களுக்கு என்னை நீங்கலாக்கும்.
13 துணிகரமான பாவங்களுக்கு உமது அடி
யேனை விலக்கிக் காரும்; [4]அவைகள் என்னை
ஆண்டுகொள்ள ஒட்டாதிரும்; அப்பொழுது
நான் உத்தமனாகி, பெரும் பாதகத்துக்கு நீங்க
14 லாயிருப்பேன். என் கன்மலையும் என் மீட்
பருமாகிய **கர்த்தா**வே, என் வாயின் வார்த்தை
களும், என் இருதயத்தின் தியானமும், உமது
சமுகத்தில் *பிரீதியாயிருப்பதாக.

## 20

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

ஆபத்துநாளிலே **கர்த்தர்** உமது ஜெபத்
தைக் கேட்பாராக; [5]யாக்கோபின் தேவனு
டைய நாமம் உமக்கு உயர்ந்த அடைக்கலமா
2 வதாக. அவர் பரிசுத்த ஸ்தலத்திலிருந்து
உமக்கு ஒத்தாசையனுப்பி, சீயோனிலிருந்து
3 உம்மை ஆதரிப்பாராக. நீர்செலுத்தும்காணிக்
கைகளையெல்லாம் அவர் நினைத்து, உமது சர்
வாங்க தகனபலியைப் பிரியமாய் ஏற்றுக்
4 கொள்வாராக. (சேலா.) அவர் உமது மன
விருப்பத்தின்படி உமக்குத் தந்தருளி, [6]உமது
ஆலோசனைகளையெல்லாம் நிறைவேற்றுவா
5 ராக. நாங்கள் உமது ரட்சிப்பினால்மகிழ்ந்து,
எங்கள் தேவனுடைய நாமத்திலே கொடியேற்
றுவோம்; உமது வேண்டுதல்களையெல்லாம்
**கர்த்தர்** நிறைவேற்றுவாராக.
6 **கர்த்தர்** தாம் அபிஷேகம் பண்ணினவனை
[7]ரட்சிக்கிறார் என்பதை இப்பொழுது அறிந்
திருக்கிறேன்; தமது வலதுகரம் செய்யும் ரட்
சிப்பின் வல்லமைகளைக் காண்பித்து, தமது
பரிசுத்த வானத்திலிருந்து அவருடையஜெபத்
தைக் கேட்பார்.
7 சிலர் ரதங்களைக்குறித்தும், சிலர் குதிரை
களைக்குறித்தும் மேன்மை பாராட்டுகிறார்கள்;
நாங்களோ எங்கள் தேவனாகிய **கர்த்தருடைய**
நாமத்தைக் குறித்தே [8]மேன்மைபாராட்டு
8 வோம். அவர்கள் முறிந்து விழுந்தார்கள்; நாங்
9 களோ எழுந்து நிமிர்ந்து நிற்கிறோம். **கர்த்தா**
**வே**, ரட்சியும்; நாங்கள் கூப்பிடுகிற நாளிலே
ராஜா எங்களுக்குச் செவிகொடுப்பாராக.

## 21

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

**கர்த்தாவே**, உம்முடைய வல்லமையிலே
1 ராஜா மகிழ்ச்சியாயிருக்கிறார்; உம்முடைய
ரட்சிப்பிலே எவ்வளவாய்க் களிகூருகிறார்!
அவருடைய மனவிருப்பத்தின்படி நீர் அவ 2
ருக்குத் தந்தருளி, [9]அவருடைய உதடுகளின்
விண்ணப்பத்தைத் தள்ளாதிருக்கிறீர். (சேலா.)
உத்தம ஆசீர்வாதங்களோடு நீர் அவருக்கு 3
எதிர்கொண்டுவந்து, [10]அவர் சிரசில் பொற்கிரீ
டம் தரிப்பிக்கிறீர். அவர் உம்மிடத்தில் ஆயு 4
சைக் கேட்டார்; [11]நீர் அவருக்கு என்றென்
றைக்குமுள்ள நீர்க்காயுசை அளித்தீர். உமது 5
ரட்சிப்பினால் அவர் மகிமை பெரிதாயிருக்
கிறது; மேன்மையையும் மகத்துவத்தையும்
அவருக்கு அருளினீர். அவரை நித்திய ஆசீர் 6
வாதங்களுள்ளவராக்குகிறீர்; [12]அவரை உம்மு
டைய சமுகத்தின் மகிழ்ச்சியினால் பூரிப்பாக்
குகிறீர். ராஜா **கர்த்தர்**மேல் நம்பிக்கையா 7
யிருக்கிறார்; [13]உன்னதமானவருடைய தயவி
னால் அசைக்கப்படாதிருப்பார்.
உமது கை உமது சத்துருக்களெல்லாரை 8
யும் எட்டிப்பிடிக்கும்; [14]உமது வலதுகரம் உம்
மைப் பகைக்கிறவர்களைக் கண்டுபிடிக்கும்.
உமது கோபத்தின் காலத்திலே அவர்களை 9
அக்கினிச் சூளையாக்கிப்போடுவீர்; [15]**கர்த்தர்**
தமது கோபத்திலே அவர்களை அழிப்பார்;
[16]அக்கினி அவர்களைப் பட்சிக்கும். அவர்கள் 10
கனியைப் பூமியிலிராதபடி நீர் அழித்து,
[17]அவர்கள் சந்ததியை மனுபுத்திரரிலிராதபடி
ஒழியப்பண்ணுவீர். அவர்கள் உமக்கு விரோ 11
தமாய்ப் பொல்லாங்கு நினைத்தார்கள்; தீவி
னையை எத்தனம்பண்ணினார்கள்; ஒன்றும்
வாய்க்காமற்போயிற்று. அவர்களை இலக்காக 12
வைத்து, உம்முடைய அம்புகளை நாணேற்றி
அவர்கள் முகத்திற்கு நேரே விடுகிறீர். **கர்த்** 13
**தாவே**, உம்முடைய பலத்திலே நீர் எழுந்
தருளும்; [18]அப்பொழுது உம்முடைய வல்ல
மையைப் பாடிக் கீர்த்தனம்பண்ணுவோம்.

## 22

(அகிலேத் ஷகார் என்னும் ராகத்தில் பாடி இராகத்
தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

என் தேவனே, என் தேவனே, ஏன் என்
னைக் கைவிட்டீர்? [19]எனக்கு உதவிசெய்யா
மலும், நான் கதறிச் சொல்லும் வார்த்தைக
ளைக் கேளாமலும் ஏன் தூரமாயிருக்கிறீர்?
என் தேவனே நான் பகலிலே கூப்பிடுகி 2
றேன், உத்தரவு கொடீர்; இரவிலே கூப்பிடு
கிறேன், எனக்கு அமைதலில்லை.
இஸ்ரவேலின் துதிகளுக்குள் [20]வாசமாயி 3
ருக்கிற தேவரீரே பரிசுத்தர். எங்கள் பிதாக் 4
கள் உம்மிடத்தில் நம்பிக்கை வைத்தார்கள்;
நம்பின அவர்களை நீர் விடுவித்தீர். உம்மை 5
நோக்கிக் கூப்பிட்டுத் தப்பினார்கள்; உம்மை
நம்பி வெட்கப்பட்டுப் போகாதிருந்தார்கள்.
நானோ ஒரு †புழு, மனுஷனல்ல; மனுஷ 6
ரால் நிந்திக்கப்பட்டும், [21]ஜனங்களால் அவ
மதிக்கப்பட்டும் இருக்கிறேன். என்னைப் 7
பார்க்கிறவர்களெல்லாரும் என்னைப் பரியா
சம்பண்ணி, [22]உதட்டைப் பிதுக்கி, தலை
யைத் துலுக்கி: **கர்த்தர்**மேல் நம்பிக்கையா 8
யிருந்தானே, அவர் இவனை விடுவிக்கட்டும்;

1 119. 72, 127. நீதி. 8. 10, 11, 19
2 நீதி. 29. 18
3 40. 12; 90. 8
4 ஆதி. 20. 6. சோ. 6. 12–14
* அங்கீகரிக்கப் படுவதாக.
5 நீதி. 18. 10
6 21. 2
7 2. 2
8 எரே. 9. 23, 24
9 20. 4, 5
10 2 சாமு. 12. 30
11 2 சாமு. 7. 19
12 16. 11. அப். 2. 28
13 1 சாமு. 30. 6
14 ஆமோ. 9. 2, 3
15 மல். 4. 1
16 ஏசா. 26. 11
17 37. 28
18 பேது. 9. 19
19 மத். 27. 46. லூக். 24. 44
20 65. 1. உபா. 10. 21
† பூச்சி. ஏசா. 41. 14
21 ஏசா. 53. 3
22 புல. 1. 22. மத். 27. 39. மா. 15. 29. லூ. 23. 35. லூ

[1]இவன்மேல் பிரியமாயிருக்கிருரே, இப்பொ
ழுது இவனை மீட்டுவிடட்டும் என்கிருர்கள்.
9 நீரே என்னைக் கர்ப்பத்திலிருந்து எடுத்தவர்;
என் தாயின் முலைப்பாலை நான் உண்கையில்
என்னை உம்முடையபேரில் நம்பிக்கையா
10 யிருக்கப்பண்ணினீர். கர்ப்பத்திலிருந்து வெ
ளிப்பட்டபோதே உமது சார்பில் விழுந்தேன்;
[2]நான் என் தாயின் வயிற்றில் இருந்ததுமுதல்
நீர் என் தேவனுயிருக்கிறீர்.
11 என்னை விட்டுத் தூரமாகாதேயும்; ஆபத்து
12 கிட்டியிருக்கிறது, சகாயரும் இல்லை. அநே
கம் காளைகள் என்னைச் சூழ்ந்திருக்கிறது;
[3]பாசான் தேசத்துப் பலத்த எருதுகள் என்னை
13 வளைந்துகொண்டது. பீறி கெர்ச்சிக்கிற சிங்
கத்தைப்போல், என்மேல் தங்கள் வாயைத்
14 திறக்கிருர்கள். தண்ணீரைப்போல ஊற்றுண்
டேன்; என் எலும்புகளெல்லாம் கட்டுவிட்
டது, [4]என் இருதயம் மெழுகுபோலாகி,
15 என் குடல்களின் நடுவே உருகிற்று. என்
பெலன் ஓட்டைப்போல் காய்ந்தது; என்
நாவு மேல்வாயோடே [5]ஒட்டிக்கொண்டது;
16 என்னை மரணத்தூளிலே போடுகிறீர். நாய்
கள் [6]என்னைச் சூழ்ந்திருக்கிறது; பொல்லா
தவர்களின் கூட்டம் என்னை வளைந்துகொண்
டது; என் கைகளையும் என் கால்களையும்
17 [7]உருவக் குத்தினுர்கள். என் எலும்புகளை
யெல்லாம் நான் எண்ணலாம்; [8]அவர்கள்
என்னைநோக்கிப் பார்த்துக்கொண்டிருக்கிருர்
18 கள். என் வஸ்திரங்களைத் தங்களுக்குள்ளே
பங்கிட்டு, [9]என் உடையின்பேரில் சீட்டுப்
போடுகிருர்கள்.
19 ஆனுலும் **கர்த்தாவே**, நீர் எனக்குத் தூர
மாகாதேயும்; என் பெலனே, எனக்குச் சகா
20 யம்பண்ணத் தீவிரித்துக்கொள்ளும். என் ஆத்
துமாவைப் பட்டயத்திற்கும், *எனக்கு அரு
மையானதை நாய்களின் துஷ்டத்தனத்திற்
21 கும் தப்புவியும். என்னைச் சிங்கத்தின் வாயி
லிருந்து ரட்சியும்; [10]நான் காண்டாமிருகத்
தின் கொம்புகளில் இருக்கும்போது எனக்
குச் செவிகொடுத்தருளினீர்.
22 உம்முடைய நாமத்தை என் சகோதரருக்கு
[11]அறிவித்து, சபைநடுவில் உம்மைத் துதிப்
23 பேன். **கர்த்தருக்குப்** பயப்படுகிறவர்களே,
[12]அவரைத் துதியுங்கள்; யாக்கோபின் சந்ததி
யாரே, நீங்கள் எல்லாரும் அவரைக் கனம்
பண்ணுங்கள்; இஸ்ரவேலின் வம்சத்தாரே,
நீங்கள் எல்லாரும் அவர்பேரில் பயபக்தியா
24 யிருங்கள். உபத்திரவப்பட்டவனுடைய உபத்
திரவத்தை அவர் அற்பமாயெண்ணுமலும் அரு
வருக்காமலும், தம்முடைய முகத்தை அவ
னுக்கு மறைக்காமலுமிருந்து, [13]தம்மைநோக்கி
அவன் கூப்பிடுகையில் அவனைக் கேட்டருளி
25 னுர். மகாசபையிலே நான் உம்மைத் துதிப்பே
ன்; [14]அவருக்குப் பயப்படுகிறவர்களுக்கு முன்
பாக என் பொருத்தனைகளைச் செலுத்துவேன்.
26 சாந்தகுணமுள்ளவர்கள் [15]புசித்துத் திருப்தி
யடைவார்கள்; **கர்த்தரைத்** தேடுகிறவர்கள்
அவரைத் துதிப்பார்கள்; உங்கள் இருதயம்
என்றென்றைக்கும் வாழும். பூமியின் எல் 27
லைகளெல்லாம் †நினைவுகூர்ந்து **கர்த்தரிடத்**
**தில்** திரும்பும்; ஜாதிகளுடைய சந்ததிகளெல்
லாம் உமது சமுகத்தில் தொழுதுகொள்ளும்.
ராஜ்யம் **கர்த்தருடையது**; [16]அவர் ஜாதிகளை 28
ஆளுகிறவர். பூமியின் செல்வவான்கள் யாவ 29
ரும் புசித்துப் பணிந்துகொள்வார்கள்; [17]புழுதி
யில் இறங்குகிறவர்கள் யாவரும் அவருக்கு
முன்பாக வணங்குவார்கள். ஒருவனும் தன்
ஆத்துமா அழியாதபடி அதைக் காக்கக்
கூடாதே. ஒரு சந்ததி அவரைச் சேவிக்கும்; 30
தலைமுறை தலைமுறையாக அது ஆண்டவ
ருடைய சந்ததி என்னப்படும். அவர்கள் 31
வந்து: அவரே இவைகளைச் செய்தார் என்று
பிறக்கப்போகிற ஜனங்களுக்கு [18]அவருடைய
நீதியை அறிவிப்பார்கள்.

## 23

(தாவீதின் சங்கீதம்.)

**கர்த்தர்** என் மேய்ப்பராயிருக்கிருர்;
[19]நான் ‡தாழ்ச்சியடையேன். அவர் என்னைப் 2
புல்லுள்ள இடங்களில் மேய்த்து, [20]அமர்ந்த
தண்ணீர்கள் அண்டையில் என்னைக்கொண்டு
போய் விடுகிருர். அவர் என் ஆத்துமாவைத் 3
தேற்றி, [21]தம்முடைய நாமத்தினிமித்தம்
என்னை நீதியின் பாதைகளில் நடத்துகிருர்.
நான் மரண இருளின் பள்ளத்தாக்கிலே நடந் 4
தாலும் பொல்லாப்புக்குப் பயப்படேன்;
[22]தேவரீர் என்னேடேகூட இருக்கிறீர்; உமது
கோலும் உமது தடியும் என்னைத் தேற்றும்.
என் சத்துருக்களுக்கு முன்பாக [23]நீர் எனக்கு 5
ஒரு பந்தியை ஆயத்தப்படுத்தி, என் தலையை
எண்ணெயால் அபிஷேகம் பண்ணுகிறீர்;
என் பாத்திரம் நிரம்பி வழிகிறது. என் ஜீவ 6
னுள்ள நாளெல்லாம் நன்மையும் கிருபையும்
என்னைத் தொடரும்; நான் **கர்த்தருடைய** வீட்
டிலே [24]நீடித்த நாட்களாய் நிலைத்திருப்பேன்.

## 24

(தாவீதின் சங்கீதம்.)

பூமியும் அதின் நிறைவும், [25]உலகமும் அதி
லுள்ள குடிகளும் **கர்த்தருடையது**. அவரே 2
அதைக் கடல்களுக்கு மேலாக அஸ்திபாரப்
படுத்தி, [26]அதை நதிகளுக்கு மேலாக ஸ்தா
பித்தார்.
யார் **கர்த்தருடைய** பர்வதத்தில் ஏறுவான்? 3
[27]யார் அவருடைய பரிசுத்த ஸ்தலத்தில் நிலைத்
திருப்பான்?
கைகளில் சுத்தமுள்ளவனும் இருதயத்தில் 4
மாசில்லாதவனுமாயிருந்து, [28]தன் ஆத்துமா
வை மாயைக்கு ஒப்புக்கொடாமலும், கபடாய்
ஆணையிடாமலும் இருக்கிறவனே. அவன் 5
**கர்த்தரால்** ஆசீர்வாதத்தையும், [29]தன் ரட்சிப்
பின் தேவனுல் நீதியையும் பெறுவான். இது 6
வே அவரைத் தேடி விசாரித்து, §அவரு
டைய சமுகத்தை நாடுகிற யாக்கோபு என்
னும் சந்ததி. (சேலா.)
வாசல்களே, உங்கள் தலைகளை உயர்த்துங் 7
கள்; அநாதி கதவுகளே, உயருங்கள்; [30]மகி
மையின் ராஜா உட்பிரவேசிப்பார்.

---

1 91. 14
2 ஏசா. 46. 3; 49. 1
3 எசே. 39. 18
4 தானி. 5. 6
5 யோ. 19. 28
6 வெளி. 22. 15
7 யோ. 19. 23; 20. 25–27
8 ஏசா. 52. 14 லூ. 23. 27, 35
9 லூ. 23. 24. யோ. 19. 23, 24
* என் ஆருயிரை.
10 2 தீமோ. 4. 17
11 40. 9. எபி. 2. 11, 12
12 115. 11, 13
13 எபி. 5. 7
14 66. 13, 16
15 மத். 5. 5
† புத்தி தெளிந்து. லூ. 15. 17
16 மத். 6. 13
17 ஏசா. 26. 19. பிலி. 2. 10
18 ஏசா. 60. 3. ரோ. 3. 21–26
19 ஏசா. 40. 11. யோ. 10. 11, 14
‡ எனக்கு ஒருகுறை வுமில்லை. 84. 11. உபா. 2. 7-9. பிலி. 4–19
20 எசே. 34. 14. வெளி. 7. 17
21 தீத். 8. 20
22 ஏசா. 43. 2
23 104. 15
24 யோ. 8. 35. 1 தீமோ. 3. 15
25 1 கொ. 10. 26, 28
26 ஆதி. 1. 9. 2 பே. 3. 5
27 சங். 15
28 மத். 5. 8
29 ஏசா. 33. 15, 16
§ உம்முடைய சமுகத்தை நாடுகிற யாக்கோபின் தேவனே.
30 ஏசா. 26. 2. ஆகாய் 2. 7. மல். 3. 1. 1 கொ. 2. 8

8 யார் இந்த மகிமையின் ராஜா? அவர் வல்ல
மையும் பராக்கிரமமுமுள்ள **கர்த்தர்**; அவர்
யுத்தத்தில் பராக்கிரமமுள்ள **கர்த்தராமே**.
9 வாசல்களே, உங்கள் தலைகளை உயர்த்துங்
கள்; அநாதி கதவுகளே, உயருங்கள்; மகிமை
யின் ராஜா உட்பிரவேசிப்பார்.
10 யார் இந்த மகிமையின் ராஜா? அவர் சே
னைகளின் **கர்த்தரானவர்**; அவரே மகிமை
யின் ராஜா. (சேலா.)

## 25

(தாவீதின் சங்கீதம்.)

**கர்த்தாவே**, உம்மிடத்தில் என் ஆத்து
2 மாவை உயர்த்துகிறேன். என் தேவனே,
உம்மை நம்பியிருக்கிறேன், நான் வெட்கப்பட்
டுப்போகாதபடி செய்யும்; [1]என் சத்துருக்கள்
என்னை மேற்கொண்டு மகிழவிடாதேயும்.
3 உம்மை நோக்கிக் காத்திருக்கிற ஒருவரும்
வெட்கப்பட்டுப்போகாதபடி செய்யும்; முகாந்
தரமில்லாமல் துரோகம் பண்ணுகிறவர்களே
4 வெட்கப்பட்டுப்போவார்களாக. **கர்த்தாவே**,
உம்முடைய வழிகளை எனக்குத் தெரிவியும்;
[2]உம்முடைய பாதைகளை எனக்குப் போதித்
5 தருளும். உம்முடைய சத்தியத்திலே என்னை
நடத்தி, என்னைப் போதித்தருளும்; நீரே என்
ரட்சிப்பின் தேவன், உம்மை நோக்கி நான்
6 முழுதும் காத்திருக்கிறேன். **கர்த்தாவே**,
உம்முடைய இரக்கங்களையும் உம்முடைய
காருணியங்களையும் நினைத்தருளும், [3]அவை
7 கள் அநாதிகாலமுதல் இருக்கிறதே. என்
இளவயதின் பாவங்களையும் என் மீறுதல்களை
யும் நினையாதிரும்; [4]**கர்த்தாவே**, உம்முடைய
தயவினிமித்தம் என்னை உமது கிருபையின்
படியே [5]நினைத்தருளும்.
8 **கர்த்தர்** நல்லவரும் உத்தமருமாயிருக்கிறார்;
ஆகையால் பாவிகளுக்கு வழியைத் தெரிவிக்
9 கிறார். சாந்தகுணமுள்ளவர்களை நியாயத்தி
லே நடத்தி, சாந்தகுண முள்ளவர்களுக்குத்
10 தமது வழியைப் போதிக்கிறார். **கர்த்தரு
டைய** உடன்படிக்கையையும் அவருடைய
சாட்சிகளையும் கைக்கொள்ளுகிறவர்களுக்கு,
[6]அவருடைய பாதைகளெல்லாம் கிருபையும்
11 சத்தியமுமானவைகள். **கர்த்தாவே**, என்
அக்கிரமம் பெரிது; [7]உம்முடைய நாமத்தினி
மித்தம் அதை மன்னித்தருளும்.
12 **கர்த்தருக்குப்** பயப்படுகிற மனுஷன் எவ
னோ [8]அவனுக்குத் தாம் தெரிந்துகொள்ளும்
13 வழியைப் போதிப்பார். அவன் ஆத்துமா
நன்மையில் தங்கும்; அவன் சந்ததி பூமியைச்
14 சுதந்தரித்துக்கொள்ளும். **கர்த்தருடைய** ரக
சியம் அவருக்குப் பயந்தவர்களிடத்தில் இருக்
கிறது; [9]அவர்களுக்குத் தம்முடைய உடன்
படிக்கையைத் தெரியப்படுத்துவார்.
15 என் கண்கள் எப்போதும் **கர்த்தரை** நோ
க்கிக்கொண்டிருக்கிறது; அவரே என் கால்
16 களை வலைக்கு நீங்கலாக்கி விடுவார். என்மேல்
நோக்கமாகி, எனக்கு இரங்கும்; [10]நான் தனி
த்தவனும் சிறுமைப்படுகிறவனுமா யிருக்கி
17 றேன். என் இருதயத்தின் வியாகுலங்கள்
பெருகியிருக்கிறது; [11]என் இடுக்கண்களுக்கு
என்னை நீங்கலாக்கிவிடும். என் துன்பத்தை 18
யும் என் வருத்தத்தையும் பார்த்து, என் பாவ
ங்களையெல்லாம் மன்னித்தருளும். என் சத் 19
துருக்களைப் பாரும்; அவர்கள் பெருகியிருந்
து, உக்கிரபகையாய் என்னைப் பகைக்கிறார்
கள். என் ஆத்துமாவைக் காப்பாற்றி என்னை 20
விடுவியும்; நான் வெட்கப்பட்டுப் போகாதபடி
செய்யும்; உம்மை நம்பியிருக்கிறேன். உத்த 21
மமும் நேர்மையும் என்னைக் காக்கக்கடவது;
நான் உமக்குக் காத்திருக்கிறேன். தேவனே, 22
இஸ்ரவேலை *அவனுடைய எல்லா இக்கட்டு
களுக்கும் நீங்கலாக்கி [12]மீட்டுவிடும்.

## 26

(தாவீதின் சங்கீதம்.)

**கர்த்தாவே**, என்னை நியாயம் விசாரி
யும், நான் என் உத்தமத்திலே நடக்கிறேன்;
நான் **கர்த்தரை** நம்பியிருக்கிறேன், ஆகை
யால் நான் தள்ளாடுவதில்லை. **கர்த்தாவே**, 2
என்னைப் பரீட்சித்து, என்னைச் சோதித்துப்
பாரும்; [13]என் உள்ளிந்திரியங்களையும் என்
இருதயத்தையும் புடமிட்டுப்பாரும்.
உம்முடைய கிருபை என் கண்களுக்கு 3
முன்பாக இருக்கிறது; உம்முடைய சத்தியத்
திலே நடந்துகொள்ளுகிறேன். வீணரோடே 4
நான் உட்காரவில்லை, [14]வஞ்சகரிடத்தில் நான்
சேருவதில்லை. பொல்லாதவர்களின் கூட் 5
டத்தைப் பகைக்கிறேன்; துன்மார்க்கரோடே
உட்காரேன். **கர்த்தாவே**, நான் துதியின் 6
சத்தத்தை தொனிக்கப்பண்ணி, உம்முடைய
அதிசயங்களை யெல்லாம் விவரிப்பதற்காக,
நான் †குற்றமில்லாமையிலே என் கைகளைக் 7
கழுவி, உம்முடைய பீடத்தைச் சுற்றிவரு
கிறேன்.
**கர்த்தாவே**, உமது ஆலயமாகிய வாசஸ் 8
தலத்தையும், [15]உமது மகிமை தங்கிய ஸ்தானத்
தையும் வாஞ்சிக்கிறேன். என் ஆத்துமா 9
வைப் பாவிகளோடும், என் ஜீவனை ரத்தப்
பிரியரோடுங்கூட வாரிக்கொள்ளாதேயும்.
அவர்கள் கைகளிலே தீவினை யிருக்கிறது; 10
[16]அவர்கள் வலதுகை பரிதானங்களால் நிறைந்
திருக்கிறது. நானோ என் உத்தமத்திலே நட 11
ப்பேன்; என்னை மீட்டுக்கொண்டு என்மேல்
இரக்கமாயிரும். என் கால் செம்மையான 12
இடத்திலே நிற்கிறது; சபைகளிலே நான்
**கர்த்தரைத்** துதிப்பேன்.

## 27

(தாவீதின் சங்கீதம்.)

**கர்த்தர்** என் [17]வெளிச்சமும் என் ரட்சிப்
புமானவர், யாருக்குப் பயப்படுவேன்? **கர்த்
தர்** என் ஜீவனின் பெலனானவர், யாருக்கு
அஞ்சுவேன்? என் சத்துருக்களும் என் 2
பகைஞருமாகிய பொல்லாதவர்கள் என் மாம்
சத்தைப் பட்சிக்க, [18]என்னை நெருக்குகையில்
அவர்களே இடறி விழுந்தார்கள். எனக்கு 3
விரோதமாக ஒரு பாளயமிறங்கினாலும், என்
இருதயம் பயப்படாது; என்மேல் யுத்தம் எழு
ம்பினாலும், இதிலே நான் நம்பிக்கையாயிருப
பேன். **கர்த்தரிடத்தில்** ஒன்றை நான் கேட் 4

1 ஏசா. 49. 23
2 ஏசா. 2. 3. எரே. 50. 5
3 ஏசா. 63. 15
4 யோபு 13. 26
5 51. 1
6 ஓசி. 14. 9
7 எசே. 36. 22, 32, ரோ. 5. 15–21, 1 யோ. 2. 12
8 37. 23
9 நீதி. 3. 32. யோ. 7. 17. எபே. 1. 9, 18
10 மீகா. 7. 19
11 ஆப. 3. 17, 19
* அதின்.
12 130. 8
13 139. 23. சகரி. 13. 9
14 1. 1
† என் குற்றமில்லாமை விளங்க, யாத். 30. 19, 20. மத். 27. 24. 1 தீமோ. 2. 8
15 27. 4. 84. 1, 2
16 ஏசா. 33. 15
17 ஏசா. 60. 19, 20. மீகா. 7. 7, 8
18 14. 4

டேன், அதையே நாடுவேன்; நான் கர்த்த
நுடைய மகிமையைப் பார்க்கும்படியாகவும்,
[1]அவருடைய ஆலயத்தில் ஆராய்ச்சி செய்யும்
படியாகவும், நான் என் ஜீவனுள்ள நாளெல்
லாம் கர்த்தருடைய ஆலயத்தில் தங்கியிருப்ப
5 தையே நாடுவேன். தீங்குநாளில் அவர் என்
னைத் தம்முடைய கூடாரத்தில் மறைத்து;
[2]என்னைத் தமது கூடாரமறைவிலே ஒளித்து
வைத்து, என்னைக் கன்மலையின்மேல் உயர்த்
6 துவார். இப்பொழுது என் தலை என்னைச்
சுற்றிலும் இருக்கிற என் சத்துருக்களுக்கு
மேலாக உயர்த்தப்படும்; அதினிமித்தம் அவ
ருடைய கூடாரத்திலே நான் ஆனந்த பலி
களையிட்டு, கர்த்தரைப் பாடி, அவரைக் கீர்த்
தனம் பண்ணுவேன்.
7 கர்த்தாவே, நான் கூப்பிடுகிற சத்தத்தை
நீர் கேட்டு, எனக்கு இரங்கி, எனக்கு உத்த
8 ரவு அருளிச்செய்யும். என் முகத்தைத் தே
டுங்கள் என்று சொன்னீரே, [3]உம்முடைய
முகத்தையே தேடுவேன் கர்த்தாவே, என்று
என் இருதயம் உம்மிடத்தில் சொல்லிற்று.
9 உமது முகத்தை எனக்கு மறையாதேயும்; நீர்
கோபத்துடன் உமது அடியேனை விலக்கிப்
போடாதேயும்; நீரே எனக்குச் சகாயர்; என்
ரட்சிப்பின் தேவனே, என்னை நெகிழவிடா
10 மலும் என்னைக் கைவிடாமலும் இரும். என்
தகப்பனும் என் தாயும் என்னைக் கை
விட்டாலும், [4]கர்த்தர் என்னைச் சேர்த்துக்
11 கொள்ளுவார். கர்த்தாவே, உமது வழியை
எனக்குப் போதித்து, என் எதிராளிகளினி
மித்தம் செவ்வையான பாதையில் என்னை
12 நடத்தும். என் சத்துருக்களின் இஷ்டத்துக்கு
என்னை ஒப்புக்கொடாதேயும்; [5]பொய்ச்சாட்
சிகளும் ஆக்கிரமித்துச் சீறுகிறவர்களும் என
க்கு விரோதமாய் எழும்பியிருக்கிறார்கள்.
13 நானோ, ஜீவனுள்ளோர் தேசத்திலே கர்த்
தருடைய நன்மையைக் காண்பேன் என்று
விசுவாசியாதிருந்தால் [6]கெட்டுப்போயிருப்
14 பேன். கர்த்தருக்குக் காத்திரு; [7]அவர் உன்
இருதயத்தை ஸ்திரப்படுத்துவார்; திடமனதா
யிருந்து, கர்த்தருக்கே காத்திரு.

## 28

(தாவீதின் சங்கீதம்.)

என் கன்மலையாகிய கர்த்தாவே, உம்
மை நோக்கிக் கூப்பிடுகிறேன்; நீர் கேளாத
வர்போல மவுனமாயிராதேயும்; நீர் மவுனமா
யிருந்தால் நான் குழியில் இறங்குகிறவர்களு
2 க்கு ஒப்பாவேன். நான் உம்மை நோக்கிச்
சத்தமிட்டு, உம்முடைய பரிசுத்த சந்நிதிக்கு
நேராகக் கையெடுக்கையில், [8]என் விண்ணப்
3 பங்களின் சத்தத்தைக் கேட்டருளும். அய
லானுக்குச் சமாதான வாழ்த்துதலைச் சொல்
லியும், தங்கள் இருதயங்களில் பொல்லாப்பை
வைத்திருக்கிற துன்மார்க்கரோடும் அக்கிர
மக்காரரோடும் என்னை [9]வாரிக்கொள்ளாதே
4 யும். அவர்களுடைய கிரியைகளுக்கும் அவர்
களுடைய நடத்தைகளின் பொல்லாங்குக்கும்
தக்கதாக அவர்களுக்குச் செய்யும்; [10]அவர்கள்
கைகளின் செய்கைக்குத் தக்கதாக அவர்க
ளுக்கு அளியும், அவர்களுக்குச் சரிக்குச்
சரிக்கட்டும். அவர்கள் கர்த்தருடைய செய் 5
கைகளையும் அவர் கரத்தின் கிரியைகளையும்
கவனியாதபடியால், [11]அவர்களை இடித்துப்
போடுவார், அவர்களைக் கட்டமாட்டார்.
கர்த்தருக்கு ஸ்தோத்திரம்; அவர் என் விண் 6
ணப்பங்களின் சத்தத்தைக் கேட்டார். கர்த் 7
தர் என் பெலனும் என் கேடகமுமாயிருக்கி
றார்; என் இருதயம் அவரை நம்பியிருந்தது;
நான் சகாயம் பெற்றேன்; ஆகையால் என்
இருதயம் களிகூருகிறது; என் பாட்டினால்
அவரைத் துதிப்பேன். கர்த்தர் அவர்களு 8
டைய பெலன்; அவரே தாம் அபிஷேகம்
பண்ணினவனுக்கு அரணான அடைக்கல
மானவர்.
தேவரீர் உமது ஜனத்தை ரட்சித்து, உமது 9
சுதந்தரத்தை ஆசீர்வதியும்; [12]அவர்களைப் போ
ஷித்து, அவர்களை என்றென்றைக்கும் உயர்த்
தியருளும்.

## 29

(தாவீதின் சங்கீதம்.)

பலவான்களின் புத்திரரே, கர்த்தருக்கு
மகிமையையும் வல்லமையையும் செலுத்துங்
கள்; [13]கர்த்தருக்கே அதைச் செலுத்துங்கள்.
கர்த்தருடைய நாமத்திற்குரிய மகிமையை 2
அவருக்குச் செலுத்துங்கள்; [14]பரிசுத்த அலங்
காரத்துடனே கர்த்தரைத் தொழுதுகொள்
ளுங்கள்.
கர்த்தருடைய சத்தம் தண்ணீர்களின்மேல் 3
தொனிக்கிறது; [15]மகிமையுள்ள தேவன் முழங்
குகிறார்; கர்த்தர் திரளான தண்ணீர்களின்
மேல் இருக்கிறார். கர்த்தருடைய சத்தம் வல் 4
லமையுள்ளது; கர்த்தருடைய சத்தம் மகத்துவ
முள்ளது. கர்த்தருடைய சத்தம் கேதுருமரங் 5
களை முறிக்கிறது; [16]கர்த்தர் லீபனோனின் கே
துருமரங்களை முறிக்கிறார். அவைகளைக் 6
கன்றுக்குட்டிகளைப்போலவும், லீபனோனை
யும் [17]சீரியோனையும் காண்டாமிருகக் குட்டி
களைப்போலவும் துள்ளப்பண்ணுகிறார். கர்த் 7
தருடைய சத்தம் அக்கினிஜுவாலைகளைப் பிள
க்கும். கர்த்தருடைய சத்தம் வனாந்தரத்தை 8
அதிரப்பண்ணும்; கர்த்தர் [18]காதேஸ் வனாந்
தரத்தை அதிரப்பண்ணுகிறார். கர்த்தருடைய 9
சத்தம் பெண்மான்களை ஈனும்படி செய்து,
[19]காடுகளை வெளியாக்கும்; அவருடைய ஆல
யத்திலுள்ள யாவரும் [20]அவருடைய மகிமை
யைப் பிரஸ்தாபிக்கிறார்கள்.
கர்த்தர் *ஜலப்பிரவாகத்தின்மேல் உட்கார 10
ந்திருக்கிறார்; [21]கர்த்தர் என்றென்றைக்கும்
ராஜாவாக வீற்றிருக்கிறார். கர்த்தர் தமது 11
ஜனத்திற்குப் பெலன் கொடுப்பார்; [22]கர்த்தர்
தமது ஜனத்திற்குச் சமாதானம் அருளி, [23]அ
வர்களை ஆசீர்வதிப்பார்.

## 30

(பிரதிஷ்டையின் பாட்டாகிய
தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, என் சத்துருக்கள் என்னை
மேற்கொண்டு மகிழவொட்டாமல், நீர் என்

1 68.2; 65 4. ஏசா. 2. 27
2 ஏசா. 4. 5, 6
3 24. 6
4 ஏசா. 40. 15
5 35. 25. அப். 9. 1
6 எபே. 2. 8
7 ஏசா. 25. 9. ஆப. 2. 3
8 138. 2
9 125. 5. எரே. 9. 8
10 2 இரா. 14. 4. வெளி. 18. 6
11 யோபு 34. 26, 27. ஏசா. 5. 12
12 1 இரா. 8. 51, 53
13 96. 7-9. 1நாளா. 16. 28, 29
14 90. 17. 2நாளா. 20. 21
15 யோபு 37. 4, 5
16 ஏசா. 2. 13
17 உபா. 3. 9
18 எண். 13. 26
19 யோபு 39. 1–8
20 63. 2
* ஆதி. 8. 1, 2
21 2. 6—9
22 ஏசா. 40. 29-31
23 85. 8, 10

னேக் கைதூக்கி எடுத்தபடியினுல், நான் உம்
2 மைப்போற்றுவேன். என் தேவனுகிய **கர்த்**
**தாவே**, உம்மை நோக்கிக் கூப்பிட்டேன்,
3 [1]என்னை நீர் குணமாக்கினீர். **கர்த்தாவே**,
நீர் என் ஆத்துமாவைப் பாதாளத்திலிருந்து
ஏறப்பண்ணி, [2]நான் குழியில் இறங்காதபடி
என்னை உயிரோடே காத்தீர்.
4 **கர்த்தருடைய** பரிசுத்தவான்களே, அவ
ரைக் கீர்த்தனம்பண்ணி, அவருடைய *பரி
சுத்தத்தின் நினைவுகூருதலைக் கொண்டாடுங்
5 கள். அவருடைய கோபம் ஒரு நிமிஷம்,
அவருடைய தயவோ நீடியவாழ்வு; [3]சாயங்
காலத்தில் அழுகை தங்கும், விடியற்காலத்தி
லே களிப்புண்டாகும்.
6 நான் ஒருக்காலும் அசைக்கப்படுவதில்லை
யென்று, [4]என் வாழ்விலே சொன்னேன்.
7 **கர்த்தாவே**, உம்முடைய தயவினுல் நீர் என்
பர்வதத்தைத் திடமாய் நிற்கப்பண்ணியிருக்
கிர்; [5]உமது முகத்தை நீர் மறைத்துக்கொண்
8 டபோதோ நான் கலங்கினவனுனேன். நான்
குழியில் இறங்குகையில் என் இரத்தத்தால்
என்ன லாபமுண்டு? புழுதி உம்மைத் துதித்து,
9 உமது சத்தியத்தை அறிவிக்குமோ? **கர்த்**
**தாவே**, நீர் எனக்குச் செவிகொடுத்து என்
மேல் இரக்கமாயிரும்; **கர்த்தாவே**, நீர் எனக்
10 குச் சகாயராயிரும் என்று சொல்லி; **கர்த்**
**தாவே**, உம்மை நோக்கிக் கூப்பிட்டேன்;
11 **கர்த்தரை** நோக்கிக் கெஞ்சினேன். என்
புலம்பலை [6]ஆனந்தக்களிப்பாக மாறப்பண்ணி
னீர்; †என் மகிமை அமர்ந்திராமல் உம்மைக்
கீர்த்தனம்பண்ணும்படியாக நீர் என் இரட்
டைக் களைந்துபோட்டு, மகிழ்ச்சியென்னும்
12 கட்டினுல் என்னை இடைகட்டினீர். என்
தேவனுகிய **கர்த்தாவே**, உம்மை என்றென்
றைக்கும் துதிப்பேன்.

## 31

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

**கர்த்தாவே**, உம்மை நம்பியிருக்கிறேன்;
[7]நான் ஒருக்காலும் வெட்கமடையாதபடி செய்
யும்; உமது நீதியினிமித்தம் [8]என்னை விடுவி
2 யும். உமது செவியை எனக்குச் சாய்த்து,
சீக்கிரமாய் என்னைத் தப்புவியும்; நீர் எனக்
குப் பலத்த துருகமும், எனக்கு அடைக்கல
3 மான அரணுமாயிரும். என் கன்மலையும்
என் கோட்டையும் நீரே; உமது நாமத்தினி
மித்தம் எனக்கு வழிகாட்டி, என்னை நடத்
4 தியருளும். அவர்கள் எனக்கு மறைவாய்
வைத்த வலைக்கு என்னை நீங்கலாக்கிவிடும்;
5 தேவரீரே எனக்கு அரண். உமது கையில்
என் ஆவியை ஒப்புவிக்கிறேன்; [9]சத்தியபர
னுகிய **கர்த்தாவே**, நீர் என்னை மீட்டுக்கொ
6 ண்டீர். வீண் ‡மாயைகளைப் பற்றிக்கொள்
ளுகிறவர்களை நான் வெறுத்து, **கர்த்தரையே**
7 நம்பியிருக்கிறேன். உமது கிருபையிலே களி
கூர்ந்து மகிழுவேன்; நீர் என் உபத்திரவத்
தைப் பார்த்து, என் ஆத்தும வியாகுலங்களை
8 [10]அறிந்திருக்கிறீர். சத்துருவின் கையில்
என்னை ஒப்புக்கொடாமல், [11]என் பாதங்களை
விசாலத்திலே நிறுத்தினீர்.
எனக்கு இரங்கும் **கர்த்தாவே**, நான் நெ 9
ருக்கப்படுகிறேன்; துக்கத்தினுல் என் [12]கண்
ணும் என் ஆத்துமாவும் என் வயிறுங்கூடக்
கருகிப்போயிற்று. என் பிராணன் சஞ்சலத் 10
தினுலும், என் வருஷங்கள் தவிப்பினுலும்
கழிந்துபோயிற்று; என் அக்கிரமத்தினுலே
என் பெலன் குறைந்து, என் எலும்புகள்
உலர்ந்துபோயிற்று. என் சத்துருக்களாகிய 11
யாவர்நிமித்தமும், நான் என் அயலாருக்கு
நிந்தையும், [13]எனக்கு அறிமுகமானவர்களுக்கு
அருக்களிப்புமானேன்; வீதியிலே என்னைக்
கண்டவர்கள் எனக்கு விலகி ஓடிப்போனுர்
கள். செத்தவனைப்போல எல்லாராலும் முழு 12
வதும் மறக்கப்பட்டேன்; [14]உடைந்த பாத்தி
ரத்தைப்போலானேன். அநேகர் சொல்லும் 13
அவதூறைக் கேட்டேன்; எனக்கு விரோத
மாக அவர்கள் ஏகமாய் ஆலோசனைபண்ணு
கிறதினுல் திகில் என்னைச் சூழ்ந்துகொண்
டது; என் பிராணனை வாங்கத் தேடுகிருர்கள்.
நானோ, **கர்த்தாவே**, உம்மை நம்பியிருக்கி 14
றேன்; நீரே என் தேவன் என்று சொன்
னேன். என் §காலங்கள் உமது கரத்திலிருக் 15
கிறது; என் சத்துருக்களின் கைக்கும் என்
னைத் துன்பப்படுத்துகிறவர்களின் கைக்கும்
என்னைத் தப்புவியும். நீர் உமது முகத்தை 16
உமது ஊழியக்காரன்மேல் பிரகாசிக்கப்பண்
ணி, [15]உமது கிருபையினுலே என்னை ரட்சி
யும். **கர்த்தாவே**, உம்மை நோக்கிக் கூப் 17
பிட்டேன்; நான் வெட்கப்பட்டுப்போகாதபடி
செய்யும்; துன்மார்க்கர் வெட்கப்பட்டுப் பா
தாளத்தில் மவுனமாயிருக்கட்டும். நீதிமானு 18
க்கு விரோதமாய்ப் பெருமையோடும் இகழ்ச்சி
யோடும் கடினமாய்ப் பேசுகிற பொய் உதடு
கள் கட்டப்பட்டுப்போவதாக.
உமக்குப் பயந்தவர்களுக்கும், மனுபுத்திர 19
ருக்கு முன்பாக உம்மை நம்புகிறவர்களுக்கும்,
நீர் உண்டுபண்ணிவைத்திருக்கிற உம்முடைய
நன்மை [16]எவ்வளவு பெரிதாயிருக்கிறது!
மனுஷருடைய அகங்காரத்துக்கு அவர்களை 20
உமது சமுகத்தின் மறைவிலே மறைத்து, நா
வுகளின் சண்டைக்கு அவர்களை விலக்கி,
[17]உமது கூடாரத்திலே ஒளித்துவைத்துக் காப்
பாற்றுகிறீர். **கர்த்தர்** அரணான நகரத்தில் 21
எனக்குத் தமது கிருபையை அதிசயமாய்
விளங்கப் பண்ணினபடியால், [18]அவருக்கு
ஸ்தோத்திரம். உம்முடைய கண்களுக்கு முன் 22
பாக இராதபடிக்கு வெட்டுண்டேன் [19]என்று
நான் என் மனக்கலக்கத்திலே சொன்னேன்;
ஆனுலும் நான் உம்மை நோக்கிக் கூப்பிட்ட
போது, [20]என் விண்ணப்பங்களின் சத்தத்
தைக் கேட்டீர்.
**கர்த்தருடைய** பரிசுத்தவான்களே, [21]நீங்க 23
ளெல்லாரும் அவரில் அன்பு கூருங்கள்; உண்
மையானவனைக் **கர்த்தர்** தற்காத்து, இடும்பு
செய்கிறவனுக்குப் பூரணமாய்ப் பதிலளிப

[1] 16. 2; 108. 3
[2] ஏசா. 38. 17
* பரிசுத்த நாமத்தைத். யாத். 3. 15. ஏசா. 26. 8
[3] 2 கொ. 4. 17
[4] யோபு 29. 18
[5] 18. 35, 36
[6] 126. 12. ஏசா. 61. 3. எரே. 31. 4
† என் நாவு, அல்லது ஆத்துமா. 16. 9. ஆதி. 49. 6
[7] 71. 1–4
[8] 143. 1
[9] லூ. 23. 46. அப். 7. 59
‡ விக்கிரகங்களை, யோனா 2. 8
[10] 142. 3
[11] 18. 19
[12] 6. 7
[13] யோபு 19. 13 ஏசா. 53. 4
[14] 88. 4, 5
§ சமயங்கள்.
[15] எண். 6. 25, 26
[16] ஏசா. 64. 4. 1 கொ. 2. 9
[17] யோபு 5. 21
[18] 1 சாமு. 23. 7
[19] யோபு 35. 14
[20] ஏசா. 38. 11, 12. யோனா 2. 4
[21] 34. 9

24 பார். கர்த்தருக்குக் காத்திருக்கிறவர்களே,
நீங்களெல்லாரும் திடமனதாயிருங்கள், [1]அவர்
உங்கள் இருதயத்தை ஸ்திரப்படுத்துவார்.

32 (மஸ்கீல் என்னும் தாவீதின் போதக சங்கீதம்.)

எவனுடைய மீறுதல் மன்னிக்கப்பட்ட
தோ, [2]எவனுடைய பாவம் மூடப்பட்டதோ,
2 அவன் பாக்கியவான். எவனுடைய அக்கிர
மத்தைக் கர்த்தர் [3]எண்ணாதிருக்கிறாரோ, எவ
னுடைய ஆவியில் [4]கபடமில்லாதிருக்கிறதோ,
அவன் பாக்கியவான்.
3 நான் அடக்கிவைத்தமட்டும், நித்தம் என்
கதறுதலினாலே என் எலும்புகள் உலர்ந்துபோ
4 யிற்று. இரவும் பகலும் என்மேல் உம்மு
டைய கை பாரமாயிருந்ததினால், [5]என் சாரம்
உஷ்ணகால வறட்சிபோல வறண்டுபோயிற்று.
(சேலா.)
5 நான் என் அக்கிரமத்தை மறைக்காமல், என்
பாவத்தை உமக்கு அறிவித்தேன்; [6]என் மீறு
தல்களைக் கர்த்தருக்கு அறிக்கையிடுவேன் என்
றேன்; தேவரீர் என் பாவத்தின் *தோஷத்தை
மன்னித்தீர். (சேலா.)
6 இதற்காகச் சகாயங்கிடைக்குங் காலத்தில்
பக்தியுள்ளவனெவனும் உம்மை நோக்கி விண்
ணப்பஞ்செய்வான்; [7]அப்பொழுது மிகுந்த
ஜலப்பிரவாகம் வந்தாலும் அது அவனை அணு
7 காது. [8]நீர் எனக்கு மறைவிடமாயிருக்கிறீர்;
என்னை நீர் இக்கட்டுக்கு விலக்கிக் காத்து,
இரட்சணியப் பாடல்கள் [9]என்னைச் சூழ்ந்து
கொள்ளும்படி செய்வீர். (சேலா.)
8 நான் உனக்குப் போதித்து, நீ நடக்கவேண்
டிய வழியை உனக்குக் காட்டுவேன்; உன்
மேல் என் கண்ணை †வைத்து, உனக்கு
9 ஆலோசனை சொல்லுவேன். வாரினாலும்
கடிவாளத்தினாலும் வாய் [10]கட்டப்பட்டாலொ
ழிய, உன் கிட்டச் சேராத [11]புத்தியில்லாக்
குதிரையைப்போலவும் கோவேறு கழுதை
10 யைப்போலவும் இருக்கவேண்டாம். துன்
மார்க்கனுக்கு அநேக வேதனைகளுண்டு; [12]கர்த்
தரை நம்பியிருக்கிறவனையோ கிருபை சூழ்ந்து
11 கொள்ளும். நீதிமான்களே, கர்த்தருக்குள்
மகிழ்ந்து களிகூருங்கள்; செம்மையான இரு
தயமுள்ளவர்களே, நீங்கள் எல்லாரும் ஆனந்த
முழக்கமிடுங்கள்.

33 நீதிமான்களே, [13]கர்த்தருக்குள் களிகூருங்
கள்; துதி செய்வது செம்மையானவர்களுக்
2 குத் தகும். சுரமண்டலத்தினால் கர்த்தரைத்
துதித்து, பத்துநரம்பு வீணையினாலும் அவரைக்
3 கீர்த்தனம் பண்ணுங்கள். அவருக்குப் புதுப்
பாட்டைப் பாடுங்கள்; [14]ஆனந்த சத்தத்தோ
டே வாத்தியங்களை நேர்த்தியாய் வாசியுங்கள்.
4 கர்த்தருடைய வார்த்தை உத்தமமும், அவ
ருடைய செய்கையெல்லாம் சத்தியமுமாயிருக்
5 கிறது. அவர் நீதியிலும் நியாயத்திலும் பிரி
யப்படுகிறார்; பூமி கர்த்தருடைய காருணியத்
தினால் [15]நிறைந்திருக்கிறது.
6 கர்த்தருடைய வார்த்தையினால் வானங்க
ளும், [16]அவருடைய வாயின் சுவாசத்தினால்
அவைகளின் சர்வ சேனையும் உண்டாக்கப்
பட்டது. அவர் சமுத்திர ஜலங்களைக் குவிய 7
லாகச் சேர்த்து, [17]ஆழமான ஜலங்களைப் பொ
க்கிஷவைப்பாக வைக்கிறார். பூமியெல்லாம் 8
கர்த்தருக்குப் பயப்படுவதாக; [18]உலகத்திலுள்ள
குடிகளெல்லாம் அவருக்கு அஞ்சியிருப்பதாக.
அவர் சொல்ல ஆகும், [19]அவர் கட்டளையிட 9
நிற்கும்.
கர்த்தர் ஜாதிகளின் ஆலோசனையை விரு 10
தாவாக்கி, [20]ஜனங்களுடைய நினைவுகளை அவ
மாக்குகிறார். கர்த்தருடைய ஆலோசனை நித் 11
திய காலமாகவும், [21]அவருடைய இருதயத்
தின் நினைவுகள் தலைமுறை தலைமுறையாகவும்
நிற்கும். கர்த்தரைத் தங்களுக்குத் தெய்வமா 12
கக்கொண்ட ஜாதியும், [22]அவர் தமக்குச் சுதந்
தரமாகத் தெரிந்துகொண்ட ஜனமும் பாக்கிய
முள்ளது.
கர்த்தர் வானத்திலிருந்து நோக்கிப்பார்த்து, 13
எல்லா மனுபுத்திரரையும் காண்கிறார். தாம் 14
வாசமாயிருக்கிற ஸ்தானத்திலிருந்து பூமியின்
குடிகள் எல்லார்மேலும் [23]கண்ணோக்கமாயி
ருக்கிறார். அவர்களுடைய இருதயங்களை 15
யெல்லாம் அவர் உருவாக்கி, அவர்கள் செய்
கைகளையெல்லாம் கவனித்திருக்கிறார். எந்த 16
ராஜாவும் தன் சேனையின் மிகுதியால் ரட்சிக்
கப்படான்; [24]சவுரியவானும் தன் பலத்தின்
மிகுதியால் தப்பான். இரட்சிக்கிறதற்குக் 17
குதிரை விருதா; [25]அது தன் மிகுந்த வீரியத்
தால் தப்புவியாது. தமக்குப் பயந்து, தமது 18
கிருபைக்குக் காத்திருக்கிறவர்களின் ஆத்து
மாக்களை மரணத்திற்கு விலக்கி விடுவிக்கவும்;
பஞ்சத்தில் அவர்களை உயிரோடே காக்கவும், 19
கர்த்தருடைய கண் [26]அவர்கள்மேல் நோக்க
மாயிருக்கிறது.
நம்முடைய ஆத்துமா கர்த்தருக்குக் காத் 20
திருக்கிறது; [27]அவரே நமக்குத் துணையும்
நமக்குக் கேடகமுமானவர். அவருடைய பரி 21
சுத்த நாமத்தை நாம் நம்பியிருக்கிறபடியால்,
[28]நம்முடைய இருதயம் அவருக்குள் களி
கூரும். கர்த்தாவே, நாங்கள் உம்மை நம்பி 22
யிருக்கிறபடியே உமது கிருபை எங்கள்மேல்
இருப்பதாக.

(தாவீது அபிமெலேக்குக்கு முன்பாக வேஷமாறினபோது 34
அவனால் துரத்திவிடப்படுகையில் பாடின சங்கீதம்.)

கர்த்தரை நான் எக்காலத்திலும் ஸ்தோத்தி
ரிப்பேன்; [29]அவர் துதி எப்போதும் என் வாயி
லிருக்கும். கர்த்தருக்குள் என் ஆத்துமா 2
மேன்மைபாராட்டும்; [30]சிறுமைப்பட்டவர்கள்
அதைக் கேட்டு [31]மகிழுவார்கள். என்னோடே 3
கூடக் கர்த்தரை மகிமைப்படுத்துங்கள்; [32]நாம்
ஒருமித்து அவர் நாமத்தை உயர்த்துவோமாக.
நான் கர்த்தரைத் தேடினேன், [33]அவர் என 4
க்குச் செவிகொடுத்து, என்னுடைய எல்லாப்
பயத்துக்கும் என்னை நீங்கலாக்கிவிட்டார்.
அவர்கள் அவரை நோக்கிப்பார்த்துப் பிரகாச 5
மடைந்தார்கள்; அவர்கள் முகங்கள் வெட்கப்
படவில்லை.

1 27. 14
2 ரோ. 4. 6-8
3 2 கொ. 5. 19
4 யோ. 1. 47
5 1 சாமு. 5. 6, 11
6 2 சாமு. 12. 13. நீதி. 28. 13. ஏசா. 65. 24. லூ. 15. 18, 21. ஓ. 1 யோ. 1. 9
* கொடுமையை.
7 ஏசா. 55. 6. 1 தீமோ. 1. 16
8 143. 9. ஏசா. 43. 2
9 யாத். 15. 1. நீதி. வெளி. 15. 2, 3
† உன்னைக் கடாட்சித்து. ஏசா. 30. 21
10 நீதி. 26. 3. யாக். 3. 3
11 யோபு 35. 11
12 16. 4. 1 தீமோ. 6. 10. 1 பே. 2. 8
13 97. 12. பிலி. 4. 4
14 144. 9. வெளி. 5. 9
15 119. 64
16 ஆதி. 2. 1. யோ. 1. 1-3. எபி. 11. 3
17 யோபு 26. 10. 38. 8-10
18 எரே. 10. 7
19 ஆதி. 1. 3. ஓ
20 ஏசா. 44. 25
21 ஏசா. 46. 10
22 65. 4; 144. 15
23 நீதி. 15. 3
24 44. 3-7
25 நீதி. 21. 31 ஓசி. 14. 3
26 37. 19. 1 பே. 3. 12
27 115. 9-11
28 ஏசா. 25. 9. சகரி. 10. 7. யோ. 16. 22
29 எபே. 5. 20
30 1 கொ. 1. 31
31 119. 74
32 லூ. 1. 46. ஓ
33 லூ. 11. 9

6 இந்த ஏழை கூப்பிட்டான், **கர்த்தர்** கேட்
டு, [1]அவனை அவன் இடுக்கண்களுக்கெல்லாம்
7 நீங்கலாக்கி ரட்சித்தார். **கர்த்தருடைய** தூதன்
[2]அவருக்குப் பயந்தவர்களைச் சூழப் பாளய
மிறங்கி, அவர்களை விடுவிக்கிறார்.
8 **கர்த்தர்** நல்லவர் என்பதை [3]ருசித்துப்பா
ருங்கள்; அவர்மேல் நம்பிக்கையாயிருக்கிற
9 மனுஷன் பாக்கியவான். **கர்த்தருடைய** பரி
சுத்தவான்களே, அவருக்குப் பயந்திருங்கள்;
அவருக்குப் பயந்தவர்களுக்குக் குறைவில்லை.
10 சிங்கக்குட்டிகள் தாழ்ச்சியடைந்து பட்டினி
யாயிருக்கும்; [4]**கர்த்தரைத்** தேடுகிறவர்களுக்
கோ ஒரு நன்மையுங் குறைவுபடாது.
11 பிள்ளைகளே, வந்து எனக்குச் செவிகொ
டுங்கள்; **கர்த்தருக்குப்** பயப்படுதலை உங்களுக்
12 குப் போதிப்பேன். நன்மையைக் காணும்
படி, ஜீவனை விரும்பி, [5]நீடித்த நாட்களை
13 அபேட்சிக்கிற மனுஷன் யார்? உன் நாவைப்
பொல்லாப்புக்கும், உன் உதடுகளைக் கபட்டு
வசனிப்புக்கும் விலக்கிக் காத்துக்கொள்.
14 தீமையை விட்டு விலகி, [6]நன்மை செய்;
சமாதானத்தைத் தேடி, [7]அதைத் தொடர்ந்து
கொள்.
15 **கர்த்தருடைய** கண்கள் நீதிமான்கள்மேல்
நோக்கமாயிருக்கிறது; [8]அவருடைய செவி
கள் அவர்கள் கூப்பிடுதலுக்குத் திறந்திருக்கி
16 றது. தீமை செய்கிறவர்களுடைய பேரைப்
பூமியில் இராமல் அற்றுப்போகப்பண்ண,
[9]**கர்த்தருடைய** முகம் அவர்களுக்கு விரோத
மாயிருக்கிறது.
17 நீதிமான்கள் கூப்பிடும்போது **கர்த்தர்** கே
ட்டு, [10]அவர்களை அவர்களுடைய எல்லா உப
18 த்திரவங்களுக்கும் நீங்கலாக்கிவிடுகிறார். நொ
றுங்குண்ட இருதயமுள்ளவர்களுக்குக் **கர்த்தர்**
சமீபமாயிருந்து, [11]நருங்குண்ட ஆவியுள்ளவர்
19 களை ரட்சிக்கிறார். நீதிமானுக்கு வரும் துன்
பங்கள் அநேகமாயிருக்கும்; [12]**கர்த்தர்** அவை
களெல்லாவற்றிலும் நின்று அவனை விடுவிப்
20 பார். அவனுடைய எலும்புகளையெல்லாம்
காப்பாற்றுகிறார்;[13]அவைகளில் ஒன்றும் முறி
21 க்கப்படுவதில்லை. தீமை துன்மார்க்கனைக்
கொல்லும்; நீதிமானைப் பகைக்கிறவர்கள் குற்
22 றவாளிகளாவார்கள். **கர்த்தர்** தமது ஊழியக்
காரரின் ஆத்துமாவை மீட்டுக்கொள்ளுகிறார்;
[14]அவரை நம்புகிற ஒருவன்மேலும் குற்றஞ்
சுமராது.

## 35

(தாவீதின் சங்கீதம்.)

**கர்த்தாவே**, நீர் என் வழக்காளிகளோடே
வழக்காடி, [15]என்னோடு யுத்தம் பண்ணுகிறவர்
2 களோடே யுத்தம் பண்ணும். நீர் கேடகத்
தையும் பரிசையையும் பிடித்து, [16]எனக்கு ஒத்
3 தாசையாக எழுந்து நில்லும். என்னைத் துன்
பப்படுத்துகிறவர்களோடெதிர்த்து நின்று, ஈட்
டியையோங்கி அவர்களை மறித்து: நான் உன்
ரட்சிப்பு என்று என் ஆத்துமாவுக்குச் சொல்
4 லும். என் பிராணனை வாங்கத் தேடுகிறவர்
கள் வெட்கப்பட்டுக் கலங்குவார்களாக; [17]என
க்குத்தீங்குசெய்யநினைக்கிறவர்கள் நாணமடை
வார்களாக. அவர்கள் காற்றுமுகத்தில் பறக்கும் 5
[18]பதரைப்போலாவார்களாக; **கர்த்தருடைய**
தூதன் அவர்களைத் துரத்துவானாக. அவர் 6
களுடைய வழி இருளும் சறுக்கலுமாயிருப்ப
தாக; **கர்த்தருடைய** தூதன் அவர்களைப் பின்
தொடருவானாக. முகாந்தரமில்லாமல் எனக் 7
காகத் தங்கள் வலையைக் குழியில் ஒளித்து
வைத்தார்கள்; முகாந்தரமில்லாமல் என் ஆத்து
மாவுக்குப் படுகுழி வெட்டினார்கள்.
அவன் நினையாத அழிவு அவனுக்கு வர 8
வும், அவன் மறைவாய் வைத்த வலை அவ
னையே பிடிக்கவும் கடவது; அவனே அந்தக்
குழியில் விழுந்து அழிவானாக. என் ஆத் 9
துமா **கர்த்தரில்** களிகூர்ந்து, அவருடைய
ரட்சிப்பில் மகிழ்ந்திருக்கும். சிறுமைப்பட் 10
டவனை அவனிலும் பலவானுடைய கைக்கும்,
[19]சிறுமையும் எளிமையுமானவனைக் கொள்ளை
யிடுகிறவனுடைய கைக்கும் தப்புவிக்கிற உமக்
கொப்பானவர் யார் **கர்த்தாவே**, என்று என்
எலும்புகளெல்லாம் சொல்லும்.
கொடுமையான சாட்சிகள் எழும்பி, [20]நான் 11
அறியாததை என்னிடத்தில் கேட்கிறார்கள்.
நான் செய்த நன்மைக்குப் பதிலாகத் தீமை 12
செய்கிறார்கள்; [21]என் ஆத்துமா திக்கற்றுப்
போகப் பார்க்கிறார்கள். அவர்கள் வியாதி 13
யாயிருந்தபோது இரட்டு என் உடுப்பாயிருந்
தது; நான் உபவாசத்தால் என் ஆத்துமாவை
உபத்திரவப்படுத்தினேன்; என் ஜெபமும்
என் மடியிலே திரும்ப வந்தது. நான் அவனை 14
என் சிநேகிதனாகவும் சகோதரனாகவும் பாவி
த்து நடந்துகொண்டேன்; தாய்க்காகத் துக்
கிக்கிறவனைப்போல் துக்கவஸ்திரம் தரித்துத்
தலைகவிழ்ந்து நடந்தேன். ஆனாலும் எனக்கு 15
ஆபத்துண்டானபோது அவர்கள் சந்தோஷப்
பட்டுக் கூட்டங்கூடினார்கள்; நீசரும் [22]நான்
அறியாதவர்களும் எனக்கு விரோதமாய்க் கூட்
டங்கூடி, ஓயாமல் என்னை நிந்தித்தார்கள்.
அப்பத்திற்காக இச்சகம் பேசுகிற பரியாசக் 16
காரரோடே சேர்ந்துகொண்டு என்பேரில்
[23]பற்கடிக்கிறார்கள்.
ஆண்டவரே, எதுவரைக்கும் இதைப் பார்த் 17
துக்கொண்டிருப்பீர்? என் ஆத்துமாவை அழி
வுக்கும், *எனக்கு அருமையானதைச் சிங்கக்
குட்டிகளுக்கும் தப்புவியும். மகா சபையிலே 18
உம்மைத் துதிப்பேன்; திரளான ஜனங்களுக்
குள்ளே உம்மைப் புகழுவேன். வீணாய் 19
எனக்குச் சத்துருக்களானவர்கள் என்னிமித்
தம் சந்தோஷியாமலும், முகாந்தரமில்லாமல்
[24]என்னைப் பகைக்கிறவர்கள் கண்சிமிட்டாம
லும் இருப்பார்களாக. அவர்கள் சமாதான 20
மாய்ப் பேசாமல், தேசத்திலே அமைதலா
யிருக்கிறவர்களுக்கு விரோதமாய் [25]வஞ்சக
மான காரியங்களைக் கருதுகிறார்கள். எனக்கு 21
விரோதமாகத் தங்கள் வாயை விரிவாய்த் திற
ந்து, ஆ ஆ, ஆ ஆ, எங்கள் கண் கண்டது
என்கிறார்கள்.

1 8. 4
2 தானி. 6. 22. எபி. 1. 14
3 1 பே. 2. 3
4 யோபு 4. 10, 11
5 1 பே. 3. 10. மு
6 2 தீமோ. 2. 19
7 மத். 5. 9. ரோ. 12. 18
8 1 பே. 3. 12
9 எசே. 14. 7, 8
10 ஏசா. 65. 24
11 ஏசா. 57. 15
12 2 தீமோ. 3. 11, 12
13 யோவா. 19. 36
14 84. 11, 12
15 புல. 3. 58
16 ஏசா. 42. 13
17 71. 24
18 யோபு 21. 18
19 சங். 22. 22, 23
20 27. 12. மத். 26. 59-61
21 யோவா. 10. 32
22 யோபு 30. 1, 8. மு
23 புல. 2. 16. அப். 7. 54
* என் ஆருயிரை. 22. 20
24 யோவா. 15. 25
25 மத். 12. 24

22 **கர்த்தாவே**, நீர் இதைக் கண்டீர், மவுன
மாயிராதேயும்; [1]ஆண்டவரே, எனக்குத் தூர
23 மாகாதேயும். என் தேவனே, என் ஆண்ட
டவரே, எனக்கு நியாயஞ்செய்யவும் என்
வழக்கைத் தீர்க்கவும் விழித்துக்கொண்டு[2]எழு
24 ந்தருளும். என் தேவனாகிய **கர்த்தாவே**,
உம்முடைய நீதியின்படி [3]என்னை நியாயம்
விசாரியும், என்னைக்குறித்து அவர்களை மகிழ
25 வொட்டாதிரும். அவர்கள் தங்கள் இருத
யத்திலே: ஆ ஆ, இதுவே நாங்கள் விரும்பி
னது என்று சொல்லாதபடிக்கும், அவனை
விழுங்கிவிட்டோம் என்று பேசாதபடிக்கும்
26 செய்யும். எனக்கு நேரிட்ட ஆபத்துக்காகச்
சந்தோஷிக்கிறவர்கள் ஏகமாய் வெட்கி நாணி,
எனக்கு விரோதமாய்ப் பெருமைபாராட்டுகி
றவர்கள் வெட்கத்தாலும் இலச்சையாலும்
27 மூடப்படக்கடவர்கள். என் நீதி விளங்க
விரும்புகிறவர்கள் கெம்பீரித்து மகிழ்ந்து,
[4]தமது ஊழியக்காரனுடைய சுகத்தை விரும்
புகிற **கர்த்தருக்கு** மகிமை உண்டாவதாக
என்று எப்போதும் சொல்லக்கடவர்கள்.
28 என் நாவு உமது நீதியையும், நாள்முழுதும்
உமது துதியையும், [5]சொல்லிக்கொண்டிருக்
கும்.

## 36

(கர்த்தருடைய தாசனாகிய தாவீது ராகத்தலைவனுக்கு
ஒப்புவித்த சங்கீதம்.)

துன்மார்க்கனுடைய துரோகப்பேச்சு என்
உள்ளத்திற்குத் தெரியும்; [6]அவன் கண்க
2 ளுக்குமுன் தெய்வபயம் இல்லை. அவன்,
தன் அக்கிரமம் அருவருப்பானதென்று காண
ப்படுமளவும், [7]தன் பார்வைக்கேற்றபடி தனக்
3 குத்தானே இச்சகம் பேசுகிறான். அவன்
வாயின் வார்த்தைகள் அக்கிரமமும் வஞ்சக
முமுள்ளது; புத்தியாய் நடந்துகொள்வதையும்
[8]நன்மை செய்வதையும் விட்டுவிட்டான்.
4 அவன் தன் படுக்கையின்மேல் அக்கிரமத்தை
யோசித்து, [9]நல்லதல்லாத வழியிலே நிலைத்து,
[10]பொல்லாப்பை வெறுக்காதிருக்கிறான்.
5 **கர்த்தாவே**, உமது கிருபை வானங்களில்
விளங்குகிறது; உமது சத்தியம் மேகமண்ட
6 லங்கள் பரியந்தம் எட்டுகிறது. உமது நீதி
மகத்தான பர்வதங்கள்போலவும், உமது நியா
யங்கள் மகா ஆழமாகவும் [11]இருக்கிறது; **கர்த்**
**தாவே**, மனுஷரையும் மிருகங்களையும் காப்
7 பாற்றுகிறீர். தேவனே, உம்முடைய கிருபை
எவ்வளவு அருமையானது! அதினால் மனு
புத்திரர் உமது செட்டைகளின் நிழலிலே
8 வந்தடைகிறார்கள். உமது ஆலயத்திலுள்ள
சம்பூரணத்தினால் திருப்தியடைவார்கள்; [12]உ
மது பேரின்ப நதியினால் அவர்கள் தாகத்
9 தைத் தீர்க்கிறீர். ஜீவஊற்று உம்மிடத்தில்
இருக்கிறது; [13]உம்முடைய வெளிச்சத்திலே
வெளிச்சம் காண்கிறோம்.
10 உம்மை அறிந்தவர்கள்மேல் உமது கிருபை
யையும், செம்மையான இருதயமுள்ளவர்கள்
மேல் உமது நீதியையும் பாராட்டியருளும்.
11 பெருமைக்காரரின் கால் என்மேல் வாராம
லும், துன்மார்க்கருடைய கை என்னைப் பறக்
கடியாமலும் இருப்பதாக. அதோ அக்கிர 12
மக்காரர் விழுந்தார்கள்; எழுந்திருக்கமாட்டா
மல் தள்ளுண்டுபோனார்கள்.

## 37

(தாவீதின் சங்கீதம்.)

பொல்லாதவர்களைக்குறித்து எரிச்சலடை
யாதே; [14]நியாயக்கேடு செய்கிறவர்கள்மேல்
பொறாமைகொள்ளாதே. அவர்கள் புல்லைப் 2
போல் சீக்கிரமாய் அறுப்புண்டு, பசும் பூண்
டைப்போல் வாடிப்போவார்கள். **கர்த்தரை** 3
நம்பி நன்மை செய்; தேசத்தில் குடியிருந்து
சத்தியத்தை மேய்ந்துகொள். **கர்த்தரிடத்தில்** 4
மனமகிழ்ச்சியாயிரு; [15]அவர் உன் இருதயத்
தின் வேண்டுதல்களை உனக்கு அருள்செய்
வார். உன் வழியைக் [16]**கர்த்தருக்கு** ஒப்பு 5
வித்து, அவர்மேல் நம்பிக்கையாயிரு; அவரே
காரியத்தை வாய்க்கப்பண்ணுவார். உன் நீதி 6
யை வெளிச்சத்தைப்போலவும், [17]உன் நியா
யத்தைப் பட்டப்பகலைப்போலவும் விளங்கப்
பண்ணுவார்.
**கர்த்தரை** நோக்கி அமர்ந்து, அவருக்குக் 7
காத்திரு; [18]காரியசித்தியுள்ளவன்மேலும் தீவி
னைகளைச் செய்கிற மனுஷன்மேலும் எரிச்ச
லாகாதே. கோபத்தை நெகிழ்ந்து, [19]உக்கி 8
ரத்தை விட்டுவிடு; பொல்லாப்புச் செய்ய எது
வான எரிச்சல் உனக்கு வேண்டாம்.
பொல்லாதவர்கள் அறுப்புண்டு போவார் 9
கள்; **கர்த்தருக்குக்** காத்திருக்கிறவர்களோ [20]பூ
மியைச் சுதந்தரித்துக்கொள்வார்கள். இன் 10
னுங் கொஞ்சநேரந்தான், அப்போது துன்
மார்க்கன் இரான்; [21]அவன் ஸ்தானத்தை
உற்று விசாரித்தாயானால் அவன் இல்லை.
சாந்தகுணமுள்ளவர்கள் பூமியைச் சுதந்தரித் 11
து, [22]மிகுந்த சமாதானத்தினால் மனமகிழ்ச்
சியாயிருப்பார்கள்.
துன்மார்க்கன் நீதிமானுக்கு விரோதமாய்த் 12
தீங்கு நினைத்து, அவன்பேரில் பற்கடிக்கி
றான். ஆண்டவர் அவனைப் பார்த்து நகைக் 13
கிறார்; அவனுடைய நாள் வருகிறதென்று
காண்கிறார். சிறுமையும் எளிமையுமானவனை 14
மடிவிக்கவும், செம்மை மார்க்கத்தாரை விழப்
பண்ணவும், துன்மார்க்கர் பட்டயத்தை உ
ருவி, தங்கள் வில்லை நாணேற்றுகிறார்கள்.
ஆனாலும் அவர்கள் பட்டயம் அவர்களுடைய 15
இருதயத்திற்குள் உருவிப்போம்; அவர்கள்
வில்லுகள் முறியும். அநேக துன்மார்க்கருக் 16
குள்ள செல்வத்திரட்சியைப் பார்க்கிலும்,
[23]நீதிமானுக்குள்ள கொஞ்சமே நல்லது. துன் 17
மார்க்கருடைய புயங்கள் முறியும்; நீதிமான்
களையோ **கர்த்தர்** தாங்குகிறார்.
உத்தமர்களின் நாட்களைக் **கர்த்தர்** அறிந் 18
திருக்கிறார்; [24]அவர்கள் சுதந்தரம் என்றென்
றைக்கும் இருக்கும். அவர்கள் ஆபத்துக்கா 19
லத்திலே வெட்கப்பட்டுப்போகாதிருந்து, பஞ்
சகாலத்திலே திருப்தியடைவார்கள். துன்மார் 20
க்கரோ அழிந்துபோவார்கள், **கர்த்தருடைய**
சத்துருக்கள் ஆட்டுக்குட்டிகளின் நிணத்தைப்

[1] 50. 21. ஏசா. 65. 6
[2] 80. 2
[3] 1 பே. 2. 23
[4] 70. 4
[5] 34. 1
[6] ரோ. 3. 18
[7] உபா. 29. 19
[8] எரே. 4. 22
[9] நீதி. 4. 16
[10] 97. 10
[11] ரோ. 11. 33
[12] 65. 4. வெளி. 22. 1, 17
[13] எரே. 2. 13. யோ. 4. 10, 14. 1 பே. 2. 9
[14] 1 சாமு. 1. 6. நீதி. 24. 17–19
[15] ஏசா. 58. 14
[16] மத். 6. 25. 1 பே. 5. 7
[17] யோபு 11. 17. மீகா. 7. 8, 9
[18] நீதி. 20. 22. புல. 3. 25, 26
[19] எபே. 4. 26
[20] ஏசா. 57. 13
[21] யோபு 7. 10
[22] மத். 5. 5
[23] நீதி. 15. 16. 1 தீமோ. 6. 6
[24] 1 பே. 1. 3, 4

போல் புகைந்துபோவார்கள், அவர்கள் புகை
21 யாய்ப் புகைந்துபோவார்கள். துன்மார்க்
கன் கடன்வாங்கிச் செலுத்தாமற்போகிறான்;
22 [1]நீதிமானோ இரங்கிக் கொடுக்கிறான். அவ
ரால் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் பூமியைச்
சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்; [2]அவரால்
சபிக்கப்பட்டவர்களோ அறுப்புண்டுபோவார்
கள்.
23 நல்ல மனுஷனுடைய நடைகள் கர்த்த
ரால் உறுதிப்படும்; [3]அவனுடைய வழியின்
24 மேல் அவர் பிரியமாயிருக்கிறார். அவன்
விழுந்தாலும் தள்ளுண்டுபோவதில்லை; [4]கர்த்
தர் தமது கையினால் அவனைத் தாங்குகிறார்.
25 நான் இளைஞனாயிருந்தேன், முதிர் வயதுள்ள
வனுமானேன்; [5]ஆனாலும் நீதிமான் கைவி
டப்பட்டதையும், அவன் சந்ததி அப்பத்து
க்கு இரந்து திரிகிறதையும் நான் காணவில்லை.
26 அவன் நித்தம் இரங்கிக் கடன்கொடுக்கிறான்,
[6]அவன் சந்ததி ஆசீர்வதிக்கப்படும்.
27 தீமையை விட்டு விலகி, நன்மை செய்;
28 [7]என்றென்றைக்கும் நிலைத்திருப்பாய். கர்த்
தர் நியாயத்தை விரும்புகிறவர்; [8]அவர் தமது
பரிசுத்தவான்களைக் கைவிடுவதில்லை; [9]அவர்
கள் என்றைக்கும் காக்கப்படுவார்கள்; [10]துன்
மார்க்கருடைய சந்ததியோ அறுப்புண்டுபோம்.
29 நீதிமான்கள் பூமியைச் சுதந்தரித்துக்கொ
ண்டு, என்றைக்கும் அதிலே வாசமாயிருப்
30 பார்கள். நீதிமானுடைய வாய் ஞானத்தை
உரைத்து, [11]அவனுடைய நாவு நியாயத்தைப்
31 பேசும். அவனுடைய தேவன் அருளிய
வேதம் அவன் இருதயத்தில் இருக்கிறது;
[12]அவன் நடைகளில் ஒன்றும் பிசகுவதில்லை.
32 துன்மார்க்கன் நீதிமான்மேல் கண்வைத்து,
33 அவனைக் கொல்ல வகைதேடுகிறான். கர்த்த
ரோ அவனை இவன் கையில் விடுவதில்லை;
[13]அவன் நியாயம் விசாரிக்கப்படுகையில் அவ
னை [14]ஆக்கினைக்குள்ளாகத் தீர்ப்பதுமில்லை.
34 நீ கர்த்தருக்குக் காத்திருந்து, [15]அவருடைய
வழியைக் கைக்கொள்; அப்பொழுது நீ பூமி
யைச் சுதந்தரித்துக்கொள்வதற்கு அவர் உன்
னை உயர்த்துவார்; துன்மார்க்கர் அறுப்புண்டு
35 போவதை நீ காண்பாய். கொடிய பலவந்த
னை ஒரு துன்மார்க்கனைக் கண்டேன், [16]அவ
ன் தனக்கேற்ற நிலத்தில் முளைத்திருக்கிற
பச்சைமரத்தைப்போல் தழைத்தவனா யிருந்
36 தான். ஆனாலும் அவன் ஒழிந்துபோனான்;
பாருங்கள், அவன் இல்லை: [17]அவனைத் தேடி
37 னேன், அவன் காணப்படவில்லை. நீ உத்த
மனை நோக்கி, செம்மையானவனைப் பார்த்
திரு; [18]அந்த மனுஷனுடைய முடிவு சமா
38 தானம். அக்கிரமக்காரர் ஏகமாய் அழிக்கப்
படுவார்கள்; [19]அறுப்புண்டு போவதே துன்
39 மார்க்கரின் முடிவு. நீதிமான்களுடைய ரட்
சிப்பு கர்த்தரால் வரும்; இக்கட்டுக்காலத்தில்
40 அவரே அவர்கள் அடைக்கலம். கர்த்தர்
அவர்களுக்கு உதவிசெய்து, அவர்களை விடு
விப்பார்; அவர்கள் அவரை நம்பியிருக்கிறபடி
யால், [20]அவர்களைத் துன்மார்க்கருடைய கைக்
குத் தப்புவித்து ரட்சிப்பார்.

## 38

(நினைவுகூருதலுக்காகத் தாவீது பாடின வியாகூர் என்னும் சங்கீதம்.)

கர்த்தாவே, உம்முடைய கோபத்தில் என்
னைக் கடிந்துகொள்ளாதேயும்; [21]உம்முடைய
உக்கிரத்தில் என்னைத் தண்டியாதேயும். உம் 2
முடைய அம்புகள் எனக்குள்ளே தைத்திருக்
கிறது; [22]உமது கை என்னை இருத்துகிறது.
உமது கோபத்தினால் என் மாம்சத்தில் ஆரோக் 3
கியமில்லை; [23]என் பாவத்தினால் என் எலும்பு
களில் சுகமில்லை. என் அக்கிரமங்கள் 4
என் தலைக்கு மேலாகப் பெருகிற்று, [24]அவை
கள் பாரச்சுமையைப்போல என்னால் தாங்கக்
கூடாத பாரமாயிற்று. என் மதிகேட்டினிமித் 5
தம் என் புண்கள் அழுகி [25]நாற்றமெடுத்தது.
நான் வேதனைப்பட்டு ஒடுங்கினேன்; நாள் 6
முழுதும் துக்கப்பட்டுத் திரிகிறேன். என் 7
குடல்கள் எரிபந்தமாய் எரிகிறது; [26]என் மாம்
சத்தில் ஆரோக்கியம் இல்லை. நான் பெல 8
னற்றுப்போய், மிகவும் நொறுக்கப்பட்டேன்;
என் இருதயத்தின் கொந்தளிப்பினால் கதறு
கிறேன். ஆண்டவரே, என் ஏக்கமெல்லாம் 9
உமக்கு முன்பாக இருக்கிறது; என் தவிப்பு
உமக்கு மறைவாயிருக்கவில்லை. என் உள் 10
ளம் குழம்பி அலைகிறது; என் பெலன் என்
னைவிட்டு விலகி, என் கண்களின் ஒளிமுத
லாய் இல்லாமற்போயிற்று. என் சிநேகித 11
ரும் என் தோழரும் என் வாதையைக் கண்டு
விலகுகிறார்கள்; [27]என் இனத்தாரும் தூரத்தி
லே நிற்கிறார்கள். என் பிராணனை வாங்கத் 12
தேடுகிறவர்கள் எனக்கு கண்ணிகளை வைக்கி
றார்கள்; எனக்குப் பொல்லாங்கு தேடுகிறவர்
கள் கேடானவைகளைப் பேசி, நாள் முழுதும்
வஞ்சனைகளை யோசிக்கிறார்கள். நானோ 13
செவிடனைப்போலக் கேளாதவனாகவும், [28]ஊ
மையனைப்போல வாய் திறவாதவனாகவும் இரு
க்கிறேன். காது கேளாதவனும், தன் வாயில் 14
மறு உத்தரவுகள் இல்லாதவனுமாயிருக்கிற
மனுஷனைப்போலானேன். கர்த்தாவே, 15
உமக்குக் காத்திருக்கிறேன்; என் தேவனாகிய
ஆண்டவரே, நீர் மறுஉத்தரவு கொடுப்பீர்.
அவர்கள் என்னிமித்தம் சந்தோஷப்படாத 16
படிக்கு இப்படிச் சொன்னேன்; என் கால்
தவறும்போது என்மேல் பெருமை பாராட்டு
வார்களே. நான் தடுமாறி விழ ஏதுவாயிருக் 17
கிறேன்; என் துக்கம் எப்பொழுதும் என்
முன்பாக இருக்கிறது. என் அக்கிரமத்தை 18
நான் அறிக்கையிட்டு, [29]என் பாவத்தினிமித்
தம் விசாரப்படுகிறேன். என் சத்துருக்கள் 19
வாழ்ந்து பலத்திருக்கிறார்கள்; முகாந்தரமில்
லாமல் என்னைப் பகைக்கிறவர்கள் பெருகி
யிருக்கிறார்கள். நான் நன்மையைப் பின்பற் 20
றுகிறபடியால், [30]நன்மைக்குத் தீமைசெய்கிற
வர்கள் என்னை விரோதிக்கிறார்கள். கர்த் 21
தாவே, என்னைக் கைவிடாதேயும்; என் தே
வனே, எனக்குத் தூரமாயிராதேயும். என் 22

[1] 112. 5, 9
[2] நீதி. 8. 33
[3] 1 சாமு. 2. 9. நீதி. 16. 9
[4] மீகா.7. 8. 2கொ. 4. 9
[5] ஏசா. 33. 16. எபி. 13. 5, 6
[6] உபா. 15. 8–10
[7] ஏசா. 1. 16, 17
[8] ஏசா. 30. 18
[9] 1 பே. 1. 5
[10] ஏசா. 14. 20
[11] மத். 12. 35
[12] உபா. 6. 6. ஏசா. 51. 7
[13] 2 பே. 2. 9
[14] ரோ. 8. 1, 34
[15] 7, 9. வச.
[16] யோபு 5. 3. ஏசா. 14. 14, 19
[17] யோ. 20. 5. ஷ
[18] நீதி. 14. 32. ஏசா. 32. 17; 57. 2
[19] மத். 13. 30
[20] தானி. 3. 17–28
[21] 6. 1
[22] யோபு 6. 4
[23] 51. 8
[24] எஸ்றா 9. 6
[25] ஏசா. 1. 5, 6
[26] யோபு 7. 5
[27] லூக். 10. 31, 32; 23. 49
[28] 2 சாமு. 16. 10. ஷ. ஏசா. 42. 19, 20
[29] நீதி. 28. 13. 2 கொ. 7. 9, 10
[30] 1 பே. 3. 13. 1 யோ. 3. 12

ரட்சிப்பாகிய ஆண்டவரே, [1]எனக்குச் சகா
யஞ்செய்யத் தீவிரியும்.

# 39

(எதுதூன் இடத்தில் ஒப்புவித்த
தாவீதின் சங்கீதம்.)

என் நாவினால் பாவஞ்செய்யாதபடிக்கு
நான் என் வழிகளைக் காத்து, [2]துன்மார்க்கன்
எனக்கு முன்பாக இருக்குமட்டும் என் வா
யைக் கடிவாளத்தால் அடக்கிவைப்பேன்
2 என்றேன். நான் மவுனமாகி, ஊமையனா
யிருந்தேன், *நலமானதையும் பேசாமல் அமர்
ந்திருந்தேன்; ஆனாலும் என் துக்கம் அதிகரித்
3 தது; என் இருதயம் எனக்குள்ளே அனல்
கொண்டது; [3]நான் தியானிக்கையில் அக்கினி
மூண்டது; அப்பொழுது என் நாவினால் விண்
4 ணப்பம் செய்தேன். **கர்த்தாவே**, நான் எவ்
வளவாய் நிலையற்றவன் என்று உணரும்படி
என் முடிவையும், [4]என் நாட்களின் அளவு
இவ்வளவு என்பதையும் எனக்குத் தெரிவி
5 யும். இதோ, என் நாட்களை நாலு விரற்
கடையளவாக்கினீர்; என் ஆயுசு உமது பார்
வைக்கு இல்லாததுபோலிருக்கிறது; எந்த
மனுஷனும் மாயையே என்பது நிச்சயம்.
6 (சேலா.) வேஷமாகவே மனுஷன் திரிகி
றான்; [5]விருதாவாகவே சஞ்சலப்படுகிறான்;
ஆஸ்தியைச் சேர்க்கிறான், யார் அதை வாரிக்
கொள்ளுவான் என்று அறியான்.
7 இப்போதும் ஆண்டவரே, நான் எதற்கு
எதிர்பார்த்திருக்கிறேன்? நீரே என் நம்பிக்
8 கை. என் மீறுதல்கள் எல்லாவற்றிலுமிருந்து
என்னை விடுதலையாக்கும், மூடனுடைய நிந்
9 தனைக்கு என்னை ஒப்புக்கொடாதேயும். நீரே
இதைச் செய்தீர் [6]என்று நான் என் வாயைத்
10 திறவாமல் மவுனமாயிருந்தேன். என்னிலிரு
ந்து உம்முடைய வாதையை எடுத்துப்போ
டும்; [7]உமது கரத்தின் அடிகளால் நான் சோர்
11 ந்துபோனேன். அக்கிரமத்தினிமித்தம் நீர்
மனுஷனைக் கடிந்துகொண்டு தண்டிக்கிற
போது, அவன் வடிவைப் பொட்டரிப்பைப்
போல் அழியப்பண்ணுகிறீர்; [8]நிச்சயமாக
12 எந்த மனுஷனும் மாயையே. (சேலா.) **கர்த்
தாவே**, என் ஜெபத்தைக் கேட்டு, என் கூப்
பிடுதலுக்குச் செவிகொடும்; என் கண்ணீரு
க்கு மவுனமாயிராதேயும்; என் பிதாக்களெல்
லாரையும்போல நானும் உமக்கு முன்பாக [9]அந்
13 நியனும் பரதேசியுமாயிருக்கிறேன். நான்
இனி இராமற்போகுமுன்னே, †தேறுதலடை
யும்படி என்னிடத்தில் பொறுமையாயிரும்.

# 40

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

**கர்த்தருக்காகப்** பொறுமையுடன் காத்தி
ருந்தேன்; அவர் என்னிடமாய்ச் சாய்ந்து,
2 என் கூப்பிடுதலைக் கேட்டார். பயங்கரமான
குழியிலும் உளையான சேற்றிலுமிருந்து என்
னைத் தூக்கியெடுத்து, என் கால்களைக் கன்
மலையின்மேல் நிறுத்தி, என் அடிகளை உறு
3 திப்படுத்தி, நமது தேவனைத் துதிக்கும் புதுப்
பாட்டை அவர் என் வாயிலே கொடுத்தார்;

1 ஏசா. 12. 2
2 நீதி. 21. 23. கொலோ. 4. 5. யாக். 3. 2
* நல்வார்த்தை.
3 எரே. 20. 9
4 90. சங்கீதம் காண்க.
5 பிர. 2. 18. லூ. 12 20, 21. 1 கொ. 7. 31. யாக். 4. 14
6 2 சாமு. 16. 10. யோபு 2. 10
7 யோபு 9. 34: 13. 21
8 ஓசி. 5. 12
9 ஆதி. 23. 4. எபி. 11. 13. 1 பே. 1. 17
† தெளிவடையும்படி. யோபு 10. 20, 21: 14. 5–12
‡ பொய்மை விக்கிரகத்தை. 15. 4: 125. 5
10 யோபு 9. 10
11 1 சாமு. 15. 22. யோபு 33. 16. ஓசி. 6. 6. மத். 12. 7. எபி 10. 4–26
§ வேதத்தில். லூ. 24. 44. யோ. 5. 39
12 யோ. 4. 34. ரோ. 7. 22
13 லூ. 4. 16–22
14 அப். 20. 20, 27
15 85. 10
16 லூ. 18. 13, 14
17 1 பே. 5. 7

அநேகர் அதைக் கண்டு, பயந்து, **கர்த்தரை**
நம்புவார்கள். அகங்காரிகளையும் ‡பொய்யைச் 4
சார்ந்திருக்கிறவர்களையும் நோக்காமல், **கர்த்த
ரையே** தன் நம்பிக்கையாக வைக்கிற மனு
ஷன் பாக்கியவான்.
என் தேவனாகிய **கர்த்தாவே**, நீர் எங்கள் 5
நிமித்தஞ் செய்த உம்முடைய அதிசயங்களும்
உம்முடைய யோசனைகளும் அநேகமாயிருக்
கிறது; [10]ஒருவரும் அவைகளை உமக்கு விவ
ரித்துச் சொல்லிமுடியாது; நான் அவைகளைச்
சொல்லி அறிவிக்கவேண்டுமானால் அவைகள்
எண்ணிக்கைக்கு மேலானவைகள். பலியை 6
யும் காணிக்கையையும் நீர் விரும்பாமல்,
[11]என் செவிகளைத் திறந்தீர்; சர்வாங்க தகன
பலியையும் பாவநிவாரண பலியையும் நீர்
கேட்கவில்லை. அப்பொழுது நான்: இதோ, 7
வருகிறேன், §புஸ்தகச்சுருளில் என்னைக்
குறித்து எழுதியிருக்கிறது; என் தேவனே, 8
உமக்குப் பிரியமானதைச் செய்ய விரும்பு
கிறேன்; [12]உமது நியாயப்பிரமாணம் என்
உள்ளத்திற்குள் இருக்கிறது என்று சொன்
னேன். மகா சபையிலே நீதியைப் பிரசங் 9
கித்தேன்; [13]என் உதடுகளை மூடேன்; **கர்த்
தாவே**, நீர் அதை அறிவீர். உம்முடைய 10
நீதியை நான் என் இருதயத்திற்குள் மறைத்
துவைக்கவில்லை; [14]உமது சத்தியத்தையும்
உமது ரட்சிப்பையும் சொல்லியிருக்கிறேன்;
உமது கிருபையையும் உமது உண்மையை
யும் [15]மகா சபைக்கு அறிவியாதபடிக்கு நான்
ஒளித்துவைக்கவில்லை.
**கர்த்தாவே**, நீர் உம்முடைய இரக்கங்களை 11
எனக்குக் கிடையாமற்போகப்பண்ணாதேயும்;
உமது கிருபையும் உமது உண்மையும் எப்
பொழுதும் என்னைக் காக்கக்கடவது. எண் 12
ணிக்கைக்கு அடங்காத தீமைகள் என்னைச்
சூழ்ந்துகொண்டது, என் அக்கிரமங்கள் என்
னைத் தொடர்ந்து பிடித்தது, நான் நிமிர்ந்து
பார்க்கக்கூடாதிருக்கிறது, [16]அவைகள் என்
தலைமயிரிலும் அதிகமாயிருக்கிறது, என் இரு
தயம் சோர்ந்துபோகிறது. **கர்த்தாவே**, என் 13
னை விடுவித்தருளும்; **கர்த்தாவே**, எனக்குச்
சகாயம்பண்ணத் தீவிரியும். என் பிராணனை 14
அழிக்கத் தேடுகிறவர்கள் ஏகமாய் வெட்கி
நாணி, எனக்குத் தீங்குசெய்ய விரும்புகிறவர்
கள் பின்னிட்டு லச்சையடைவார்களாக. என் 15
பேரில் ஆ ஆ! ஆ ஆ! என்று சொல்லுகிறவர்
கள், தங்கள் வெட்கத்தின் பலனையடைந்து
கைவிடப்படுவார்களாக. உம்மைத் தேடுகிற 16
அனைவரும் உமக்குள் மகிழ்ந்து சந்தோஷப்
படுவார்களாக; உம்முடைய இரட்சிப்பை
விரும்புகிறவர்கள் **கர்த்தருக்கு** மகிமை உண்
டாவதாக என்று எப்பொழுதும் சொல்வார்
களாக. நான் சிறுமையும் எளிமையுமான 17
வன், [17]**கர்த்தரோ** என்மேல் நினைவாயிருக்கி
றார்; தேவரீர் என் துணையும் என்னை விடுவிக்
கிறவருமாயிருக்கிறீர்; என் தேவனே, தாமதி
யாதேயும்.

## 41

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

சிறுமைப்பட்டவன்மேல் சிந்தையுள்ளவன்
பாக்கியவான்; [1]தீங்குநாளில் **கர்த்தர்** அவனை
2 விடுவிப்பார். **கர்த்தர்** அவனைப் பாதுகாத்து
அவனை உயிரோடே வைப்பார்; பூமியில்
அவன் பாக்கியவானாயிருப்பான்; அவன் சத்து
ருக்களின் இஷ்டத்திற்கு நீர் அவனை ஒப்புக்
3 கொடீர். படுக்கையின்மேல் வியாதியாய்க்
கிடக்கிற அவனைக் **கர்த்தர்** தாங்குவார்; அவ
னுடைய வியாதியிலே அவன் படுக்கை முழு
வதையும் மாற்றிப்போடுவீர்.
4 **கர்த்தாவே**, என்மேல் இரக்கமாயிரும்;
உமக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தேன்,
[2]என் ஆத்துமாவைக் குணமாக்கும் என்று
5 நான் சொன்னேன். அவன் எப்பொழுது
சாவான், அவன் பேர் எப்பொழுது அழியும்?
என்று என் சத்துருக்கள் எனக்கு விரோத
6 மாய்ச் சொல்லுகிறார்கள். ஒருவன் என்னைப்
பார்க்கவந்தால் வஞ்சனையாய்ப் பேசுகிறான்;
[3]அவன் தன் இருதயத்தில் அக்கிரமத்தைச்
சேகரித்துக்கொண்டு, தெருவிலே போய், அ
7 தைத் தூற்றுகிறான். என் பகைஞரெல்லா
ரும் என்மேல் ஏகமாய் முணுமுணுத்து,
எனக்கு விரோதமாயிருந்து, எனக்குப் பொல்
8 லாங்கு நினைத்து, தீராவியாதி அவனைப்
பிடித்துக்கொண்டது; படுக்கையில் கிடக்கிற
அவன்: இனி எழுந்திருப்பதில்லை என்கிறார்
9 கள். என் பிராணசிநேகிதனும், நான் நம்
பினவனும், என் அப்பம் புசித்தவனுமாகிய
மனுஷனும், [4]என்மேல் தன் குதிகாலைத்
தூக்கினான்.
10 **கர்த்தாவே**, நீர் எனக்கு இரங்கி, நான்
அவர்களுக்குச் சரிக்கட்ட என்னை எழுந்திருக்
11 கப்பண்ணும். என் சத்துரு என்மேல் ஜெ
யங்கொள்ளாததினால், நீர் என்மேல் பிரிய
12 மாயிருக்கிறீரென்று அறிவேன். நீர் என்
உத்தமத்திலே என்னைத் தாங்கி, என்றென்
றைக்கும் உம்முடைய சமுகத்தில் என்னை
நிலைநிறுத்துவீர்.
13 இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்** அநாதி
யாய் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களி
லும் ஸ்தோத்திரிக்கப்படத்தக்கவர். ஆமென்,
ஆமென்.

## 42

(கோராகின் புத்திரரிலுள்ள ராகத்தலைவனுக்கு
ஒப்புவிக்கப்பட்ட மஸ்கீல் என்னும் தாவீதின் சங்கீதம்.)

மானானது நீரோடைகளை வாஞ்சித்துக்
கதறுவதுபோல, தேவனே, என் ஆத்துமா
2 உம்மை வாஞ்சித்துக் கதறுகிறது. என் ஆத்
துமா தேவன்மேல், ஜீவனுள்ள தேவன்மே
லேயே தாகமாயிருக்கிறது; [5]நான் எப்பொ
ழுது தேவனுடைய சந்நிதியில் வந்து நிற்
3 பேன்? உன் தேவன் எங்கே என்று அவர்
கள் நாள்தோறும் என்னிடத்தில் சொல்லுகிற
படியால், இரவும் பகலும் என் கண்ணீரே
4 எனக்கு உணவாயிற்று. முன்னே நான் பண்
டிகையை ஆசரிக்கிற ஜனங்களோடேகூட

[1] சநீ. 14. 21, எபி. 6. 10
[2] 147. 3. ஓசி. 6. 1
[3] சநீ. 26. 24, 26
[4] யோபு 19. 19. யோ. 13. 18
[5] 63. 1. 84. 2. யோ. 7. 37
[6] 122. 1. ஏசா. 30. 29
* எண். 6. 26
† அலைமேலலை, விக்கினத்தின்மேல் விக்கினம். எரே. 4. 20. எசே. 7. 26. யோவே 2. 3
‡ ஊரீம்தும்மீம், யாத் 28. 30
[7] 42. 5, 11

நடந்து, கூட்டத்தின் களிப்பும் துதியுமான
சத்தத்தோடே [6]தேவாலயத்திற்குப் போய்வரு
வேனே; இவைகளை நான் நினைக்கும்போது
என் உள்ளம் எனக்குள்ளே உருகுகிறது.
என் ஆத்துமாவே, நீ ஏன் கலங்குகிறாய்? ஏன் 5
எனக்குள் தியங்குகிறாய்? தேவனை நோக்கிக்
காத்திரு; *அவர் சமுகத்து ரட்சிப்பினிமித்தம்
நான் இன்னும் அவரைத் துதிப்பேன்.
என் தேவனே, என் ஆத்துமா எனக்குள் 6
கலங்குகிறது; ஆகையால் யோர்தான் தேசத்
திலும் எர்மோன் மலைகளிலும் சிறுமலையிலு
மிருந்து உம்மை நினைக்கிறேன். உமது மத 7
குகளின் இரைச்சலால் †ஆழத்தை ஆழம் கூப்
பிடுகிறது; உமது அலைகளும் திரைகளும் எல்
லாம் என்மேல் புரண்டுபோகிறது. ஆகிலும் 8
**கர்த்தர்** பகற்காலத்திலே தமது கிருபையைக்
கட்டளையிடுகிறார்; இராக்காலத்திலே அவ
ரைப் பாடும் பாட்டு என் வாயிலிருக்கிறது;
என் ஜீவனுடைய தேவனை நோக்கி விண்
ணப்பஞ்செய்கிறேன். நான் என் கன்மலை 9
யாகிய தேவனை நோக்கி: ஏன் என்னை மறந்
தீர்? சத்துருவினால் ஒடுக்கப்பட்டு, நான் ஏன்
துக்கத்துடனே திரியவேண்டும் என்று சொல்
லுகிறேன். உன் தேவன் எங்கே என்று என் 10
சத்துருக்கள் நாள்தோறும் என்னோடே சொல்
லி, என்னை நிந்திப்பது என் எலும்புகளை
உருவக்குத்துகிறதுபோல் இருக்கிறது. என் 11
ஆத்துமாவே, நீ ஏன் கலங்குகிறாய்? ஏன்
எனக்குள் தியங்குகிறாய்? தேவனை நோக்கிக்
காத்திரு; என் முகத்திற்கு ரட்சிப்பும் என்
தேவனுமாயிருக்கிறவரை நான் இன்னும்
துதிப்பேன்.

## 43

தேவனே, நீர் என் நியாயத்தை விசா
ரித்து, பக்தியில்லாத ஜாதியாரோடு எனக்
காக வழக்காடி, சூதும் அநியாயமுமான மனு
ஷனுக்கு என்னைத் தப்புவியும். என் அரணா 2
கிய தேவன் நீர்; ஏன் என்னைத் தள்ளிவிடுகி
றீர்? சத்துருவினால் ஒடுக்கப்பட்டு நான் ஏன்
துக்கத்துடனே திரியவேண்டும்? உமது ‡வெ 3
ளிச்சத்தையும் உமது சத்தியத்தையும் அனுப்பி
யருளும்; அவைகள் என்னை நடத்தி, உமது
பரிசுத்த பர்வதத்திற்கும் உமது வாசஸ்தலங்க
ளுக்கும் என்னைக் கொண்டுபோவதாக. அப் 4
பொழுது நான் தேவனுடைய பீடத்தண்டைக்
கும், எனக்கு ஆனந்த மகிழ்ச்சியாயிருக்கிற
தேவனிடத்திற்கும் பிரவேசிப்பேன். தேவ
னே, என் தேவனே, உம்மைச் சுரமண்டலத்
தால் துதிப்பேன். என் ஆத்துமாவே, நீ ஏன் 5
கலங்குகிறாய்? ஏன் எனக்குள் தியங்குகிறாய்?
[7]தேவனை நோக்கிக் காத்திரு; என் முகத்திற்கு
ரட்சிப்பும் என் தேவனுமாயிருக்கிறவரை நான்
இன்னும் துதிப்பேன்.

## 44

(கோராகின் புத்திரரில் ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்
பட்ட மஸ்கீல் என்னும் சங்கீதம்.)

தேவனே, எங்கள் பிதாக்களுடைய நாட்
களாகிய பூர்வநாட்களில் நீர் நடப்பித்த கிரி
யைகளை அவர்கள் எங்களுக்கு அறிவித்தார்

கள்; [1]அவைகளை எங்கள் காதுகளால் கேட்
2 டோம். தேவரீர் உம்முடைய கையினாலே
ஜாதிகளைத் துரத்தி, [2]இவர்களை நாட்டி; ஜனங்
களைத் துன்பப்படுத்தி, இவர்களைப் பரவப்
3 பண்ணினீர். அவர்கள் தங்கள் பட்டயத்தால்
தேசத்தைக் கட்டிக்கொள்ளவில்லை; [3]அவர்கள்
புயமும் அவர்களை ரட்சிக்கவில்லை; நீர் அவர்
கள்மேல் பிரியமாயிருந்தபடியால், [4]உம்மு
டைய வலதுகரமும், உம்முடைய புயமும்,
உம்முடைய முகத்தின் பிரகாசமும் அவர்களை
4 ரட்சித்தது. தேவனே, நீர் என் ராஜா; *யாக்
5 கோபுக்கு ரட்சிப்பைக் கட்டளையிடும். உம்
மாலே எங்கள் சத்துருக்களைக் கீழே விழத்தா
க்கி, [5]எங்களுக்கு விரோதமாய் எழும்புகிற
வர்களை உம்முடைய நாமத்தினால் மிதிப்போம்.
6 என் வில்லை நான் நம்பேன், [6]என் பட்டயம்
7 என்னை ரட்சிப்பதில்லை. நீரே எங்கள் சத்து
ருக்களினின்று எங்களை ரட்சித்து, எங்களைப்
8 பகைக்கிறவர்களை வெட்கப்படுத்துகிறீர். தேவ
னுக்குள் நித்தம் மேன்மை பாராட்டுவோம்;
[7]உமது நாமத்தை என்றென்றைக்கும் துதிப்
போம். (சேலா.)
9 நீர் எங்களைத் தள்ளிவிட்டு, [8]நாணப்பண்
ணுகிறீர்; எங்கள் சேனைகளுடனே செல்லா
10 திருக்கிறீர். சத்துருவுக்கு நாங்கள் இடைந்து
[9]பின்னிட்டுத் திரும்பிப்போகப் பண்ணுகிறீர்;
எங்கள் பகைஞர் தங்களுக்கென்று எங்களைக்
11 கொள்ளையிடுகிறார்கள். நீர் எங்களை ஆடு
களைப்போல இரையாக ஒப்புக்கொடுத்து,
[10]ஜாதிகளுக்குள்ளே எங்களைச் சிதறடிக்கிறீர்.
12 நீர் உம்முடைய ஜனங்களை இலவசமாக விற்
கிறீர்; [11]அவர்கள் கிரயத்தினால் உமக்கு லாப
13 மில்லையே. எங்கள் அயலாருக்கு எங்களை
நிந்தையாகவும், [12]எங்கள் சுற்றுப்புறத்தாருக்
குப் பரியாசமும் சக்கந்தமுமாகவும் வைக்கி
14 றீர். நாங்கள் ஜாதிகளுக்குள்ளே பழமொழி
யாயிருக்கவும், ஜனங்கள் எங்களைக்குறித்துத்
15 தலைதுலுக்கவும் செய்கிறீர். நிந்தித்துத் தூஷிக்
கிறவனுடைய சத்தத்தினிமித்தமும், சத்துரு
வினிமித்தமும், [13]பழிவாங்குகிறவனிமித்த
16 மும், என் இலச்சை நித்தம் எனக்குமுன்
பாக இருக்கிறது; என் முகத்தின் வெட்கம்
என்னை மூடுகிறது.
17 இவையெல்லாம் எங்கள்மேல் வந்திருந்தும்,
உம்மை நாங்கள் மறக்கவும் இல்லை, [14]உம்மு
டைய உடன்படிக்கைக்குத் துரோகம்பண்ண
18 வும் இல்லை. நீர் எங்களை வலுசர்ப்பங்களுள்ள
இடத்திலே நொறுக்கி, [15]மரண இருளினாலே
19 எங்களை மூடியிருந்தும், எங்கள் இருதயம்
பின்வாங்கவும் இல்லை, [16]எங்கள் காலடி உம்
முடைய பாதையை விட்டு விலகவும் இல்லை.
20 நாங்கள் எங்கள் தேவனுடைய நாமத்தை
மறந்து, [17]அந்நிய தேவனை நோக்கிக் கையெ
21 டுத்திருந்தோமானால், தேவன் அதை ஆரா
ய்ந்து, விசாரியாதிருப்பாரோ? இருதயத்தின்
அந்தரங்கங்களை அவர் அறிந்திருக்கிறாரே.
22 உமது நிமித்தம் எந்நேரமும் கொல்லப்படுகி

1 யாத். 12. 26, 27
2 யாத். 15. 17. உபா. 7. 1
3 யோசு. 24. 12
4 உபா. 4. 37
* இஸ்ரவேலுக்கு.
5 தானி. 8. 4
6 ஓசி. 1. 7
7 எரே. 9. 24. கொ. 2. 17
8 74. 1. புல. 3. 31, 32
9 லேவி. 26. 17. உபா. 28. 25, 64
10 உபா. 4. 27
11 உபா. 32. 30. ஏசா. 52. 3, 4
12 உபா. 28. 37. எரே. 24. 9
13 8. 2
14 தானி. 9. 13
15 ஏசா. 35. 7
16 யோபு 23. 11, 12
17 யோபு 31. 26-28
18 ரோ. 8. 36
19 9. வச.
20 யோபு 13. 24
21 உன்ன. 5. 9-16. யோ. 7. 46
22 லூ. 4. 22
23 ஏசா. 49. 2. எபி. 4. 12. வெளி. 1. 16
24 வெளி. 6. 2
25 38. 2
26 93. 2. எபி. 1. 8, 9
27 1 இரா. 1. 39, 40. ஏசா. 61. 1, 3. கொலோ. 1. 18, 19
28 உன்ன. 1. 3; 3. 6
29 1 இரா. 2. 19. உன்ன. 6. 8
30 ஆதி. 2. 24. உபா. 33. 9. மத். 10. 37
31 உன்ன. 4. 9. ஏசா. 54. 5
32 95. 6
33 ஏசா. 23. 18; 60. 3. அப். 21. 3-6

றோம்; [18]அடிக்கப்படும் ஆடுகளைப்போல எண்
ணப்படுகிறோம்.
ஆண்டவரே, விழித்துக்கொள்ளும்; ஏன் 23
நித்திரைபண்ணுகிறீர்? எழுந்தருளும், [19]எங்
களை என்றைக்கும் தள்ளிவிடாதிரும். ஏன் 24
உம்முடைய முகத்தை மறைத்து, [20]எங்கள்
சிறுமையையும் எங்கள் நெருக்கத்தையும் மற
ந்துவிடுகிறீர்? எங்கள் ஆத்துமா புழுதிமட் 25
டும் தாழ்ந்திருக்கிறது; எங்கள் வயிறு தரை
யோடு ஒட்டியிருக்கிறது. எங்களுக்கு ஒத் 26
தாசையாக எழுந்தருளும்; உம்முடைய கிரு
பையினிமித்தம் எங்களை மீட்டுவிடும்.

(சோஷனீம் என்னும் வாத்தியத்திலே வாசிக்கக் கோரா 45
கின் புத்திரரிலுள்ள ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்
பட்ட நேசப்பாட்டாகிய சங்கீதம்.)

என் இருதயம் நல்ல விசேஷத்தினால்
பொங்குகிறது; நான் ராஜாவைக் குறித்துப்
பாடின கவியைச் சொல்லுகிறேன்; என்
நாவு விரைவாய் எழுதுகிறவனுடைய எழுத்
தாணி.
எல்லா மனுபுத்திரரிலும் நீர் மகா சவுந்தரிய 2
முள்ளவர்; [21]உம்முடைய உதடுகளில் அருள்
பொழிகிறது; [22]ஆகையால் தேவன் உம்மை
என்றென்றைக்கும் ஆசீர்வதிக்கிறார்.
சவுரியவானே, உமது மகிமையும் உமது 3
மகத்துவமுமாகிய [23]உம்முடைய பட்டயத்தை
நீர் உம்முடைய அரையிலே கட்டிக்கொண்டு,
சத்தியத்தினிமித்தமும், நீதியுடன் கூடிய சாந் 4
தத்தினிமித்தமும், [24]உமது மகத்துவத்திலே
ஜெயமாக ஏறிவாரும்; உமது வலதுகரம் பயங்
கரமானவைகளை உமக்கு விளங்கப்பண்ணும்.
உம்முடைய அம்புகள் கூர்மையானவைகள், 5
[25]அவைகள் ராஜாவுடைய சத்துருக்களின்
இருதயத்திற்குள் பாயும்; ஜனசதளங்கள் உமக்
குக் கீழே விழுவார்கள்.
தேவனே, உமது சிங்காசனம் என்றென் 6
றைக்குமுள்ளது, [26]உமது ராஜ்யத்தின் செங்
கோல் நீதியுள்ள செங்கோலாயிருக்கிறது. நீர் 7
நீதியை விரும்பி, அக்கிரமத்தை வெறுக்கிறீர்;
ஆதலால் தேவனே, உம்முடைய தேவன்
உமது தோழரைப்பார்க்கிலும் [27]உம்மை ஆன
ந்த தைலத்தினால் அபிஷேகம்பண்ணினார்.
தந்தத்தினால் செய்த அரமனைகளிலிருந்து 8
புறப்படுகையில், நீர் மகிழும்படி உமது வஸ்
திரங்களெல்லாம் வெள்ளைப்போளம் சந்தனம்
லவங்கம் இவைகளின் [28]வாசனை பொருந்திய
தாயிருக்கிறது. உமது நாயகிகளுக்குள்ளே 9
அரசரின் குமாரத்திகளுண்டு, [29]ராஜஸ்திரீ
ஓப்பீரின் தங்கம் அணிந்தவளாய் உமது வலது
பாரிசத்தில் நிற்கிறாள்.
குமாரத்தியே கேள், நீ உன் செவியைச் 10
சாய்த்துச் சிந்தித்துக்கொள்; [30]உன் ஜனத்தை
யும் உன் தகப்பன் வீட்டையும் மறந்துவிடு.
அப்பொழுது ராஜா உன் அழகில் பிரியப்படு 11
வார்; [31]அவர் உன் ஆண்டவர், [32]ஆகையால்
அவரைப் பணிந்துகொள். தீருகுமாரத்தி 12
காணிக்கை கொண்டுவருவாள்; [33]ஜனங்களில்

ஐசுவரியவான்களும் உன் தயவை நாடி
வணங்குவார்கள்.
13 ராஜகுமாரத்தி உள்ளாக பூரண மகிமையுள்
ளவள்; அவள் *உடை பொற்சரிகையாயிருக்
14 கிறது. சித்திரத்தையலாடை தரித்தவளாய்,
[1]ராஜாவினிடத்தில் அழைத்துக்கொண்டு வரப்
படுவாள்; அவள் பின்னாலே செல்லும் அவ
ளுடைய தோழிகளாகிய கன்னிகைகள் உம்
மிடத்தில் கூட்டிக்கொண்டு வரப்படுவார்கள்.
15 அவர்கள் மகிழ்ச்சியோடும் [2]களிப்போடும்
வந்து, ராஜ அரமனைக்குள் பிரவேசிப்பார்
கள்.
16 உமது பிதாக்களுக்குப் பதிலாக உமது குமா
ரர் இருப்பார்கள்; [3]அவர்களைப் பூமியெங்கும்
17 பிரபுக்களாக வைப்பீர். உமது நாமத்தை
எல்லாத் தலைமுறைகளிலும் [4]பிரஸ்தாபப்படுத்
துவேன்; இதினிமித்தம் ஜனங்கள் உம்மை
என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களிலும்
துதிப்பார்கள்.

46 (அலாமோத்தில் வாசிக்கக் கோராகின் புத்திரரி
லுள்ள ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட பாட்டு.)

தேவன் நமக்கு அடைக்கலமும் பெலனும்,
[5]ஆபத்துக்காலத்தில் அநுகூலமான துணையு
2 மானவர். ஆகையால் பூமி நிலைமாறினாலும்,
மலைகள் நடுச்சமுத்திரத்தில் சாய்ந்துபோனா
3 லும், அதின் ஜலங்கள் கொந்தளித்துப்
பொங்கி, [6]அதின் பெருக்கினால் பர்வதங்கள்
அதிர்ந்தாலும், நாம் பயப்படோம். (சேலா.)
4 ஒரு நதியுண்டு, [7]அதின் நீர்க்கால்கள் தேவ
னுடைய நகரத்தையும், உன்னதமானவர் வா
சம்பண்ணும் பரிசுத்த ஸ்தலத்தையும் சந்தோ
5 ஷிப்பிக்கும். தேவன் அதின் நடுவில் இருக்
கிறார், [8]அது அசையாது; அதிகாலையிலே
6 தேவன் அதற்குச் சகாயம்பண்ணுவார். ஜாதி
கள் கொந்தளித்தது, ராஜ்யங்கள் தத்தளித்
தது; [9]அவர் தமது சத்தத்தை முழங்கப்பண்
7 ணினார், பூமி உருகிப்போயிற்று. சேனைக
ளின் **கர்த்தர்** நம்மோடிருக்கிறார்; [10]யாக்கோ
பின் தேவன் நமக்கு உயர்ந்த அடைக்கல
மானவர். (சேலா.)
8 பூமியிலே பாழ்க்கடிப்புகளை நடப்பிக்கிற
**கர்த்தருடைய** செய்கைகளை வந்து பாருங்கள்.
9 அவர் பூமியின் கடைமுனைமட்டும் யுத்தங்களை
ஓயப்பண்ணுகிறார்; வில்லை ஒடித்து, ஈட்
டியை முறிக்கிறார்; [11]இரதங்களை நெருப்பி
10 னால் சுட்டெரிக்கிறார். நீங்கள் அமர்ந்திருந்து,
நானே தேவனென்று அறிந்துகொள்ளுங்கள்;
[12]ஜாதிகளுக்குள்ளே உயர்ந்திருப்பேன், பூமி
11 யிலே உயர்ந்திருப்பேன். சேனைகளின்
**கர்த்தர்** நம்மோடிருக்கிறார், யாக்கோபின்
தேவன் நமக்கு உயர்ந்த அடைக்கலமானவர்.
(சேலா.)

47 (கோராகின் புத்திரரிலுள்ள ராகத்தலைவனுக்கு ஒப்பு
விக்கப்பட்ட சங்கீதம்.)

சகல ஜனங்களே, கைகொட்டி, [13]தேவ
னுக்கு முன்பாகக் கெம்பீரசத்தமாய் ஆர்ப்பரி
2 யுங்கள். உன்னதமானவராகிய **கர்த்தர்** பயங்
கரமானவரும், [14]பூமியின்மீதெங்கும் மகத்துவ
மான ராஜாவுமாயிருக்கிறார். ஜனங்களை 3
நமக்கு வசப்படுத்தி, ஜாதிகளை நம்முடைய
பாதங்களுக்குக் கீழ்ப்படுத்துவார். தமக்குப் 4
பிரியமான யாக்கோபின் சிறப்பான தேசத்
தை [15]நமக்குச் சுதந்தரமாகத் தெரிந்தளிப்பார்.
(சேலா.)
தேவன் ஆர்ப்பரிப்போடும், **கர்த்தர்** எக் 5
காள சத்தத்தோடும் [16]உயர எழுந்தருளினார்.
தேவனைப் போற்றிப் பாடுங்கள், பாடுங்கள்; 6
நம்முடைய ராஜாவைப் போற்றிப் பாடுங்கள்,
பாடுங்கள். தேவன் பூமியனைத்திற்கும் ராஜா; 7
[17]கருத்துடனே அவரைப் போற்றிப் பாடுங்
கள். தேவன் ஜாதிகள்மேல் அரசாளுகிறார்; 8
தேவன் தமது பரிசுத்த சிங்காசனத்தின்மேல்
வீற்றிருக்கிறார். ஜனங்களின் பிரபுக்கள் 9
ஆபிரகாமின் தேவனுடைய ஜனங்களாகச்
சேர்க்கப்படுகிறார்கள்; [18]பூமியின் கேடகங்
கள் தேவனுடையவைகள்; அவர் மகா உன்
னதமானவர்.

48 (கோராகின் புத்திரருக்கு ஒப்புவிக்கப்பட்ட
சங்கீதப்பாட்டு.)

**கர்த்தர்** பெரியவர், அவர் நமது தேவனு
டைய நகரத்திலும், [19]தமது பரிசுத்த பர்வதத்
திலும் மிகவும் துதிக்கப்படத்தக்கவர். வட 2
திசையிலுள்ள சீயோன் பர்வதம் வடிப்பமான
ஸ்தானமும் சர்வபூமியின் மகிழ்ச்சியுமாயிருக்
கிறது, [20]அதுவே மகாராஜாவின் நகரம்.
அதின் அரமனைகளில் தேவன் உயர்ந்த அடை 3
க்கலமாக அறியப்பட்டிருக்கிறார்.
இதோ, ராஜாக்கள் கூடிக்கொண்டு, [21]ஏக 4
மாய்க் கடந்துவந்தார்கள். அவர்கள் அதைக் 5
கண்டபோது பிரமித்துக் கலங்கி விரைந்தோடி
னார்கள். அங்கே நடுக்கங்கொண்டு, [22]பிரசவ 6
வேதனைப்படுகிற ஸ்திரீயைப்போல வேத
னைப்பட்டார்கள். கீழ்காற்றினால் தர்ஷீசின் 7
கப்பல்களை [23]நீர் உடைக்கிறீர். நாம் கேள்விப் 8
பட்டபடியே நமது தேவனுடைய நகரமாகிய
சேனைகளுடைய **கர்த்தரின்** நகரத்திலே கண்
டோம்; [24]தேவன் அதை என்றென்றைக்கும்
ஸ்திரப்படுத்துவார். (சேலா.)
தேவனே, உமது ஆலயத்தின் நடுவிலே, 9
உமது கிருபையைச் சிந்தித்துக்கொண்டிருக்
கிறோம். தேவனே, உமது நாமம் விளங்கு 10
கிறதுபோல [25]உமது புகழ்ச்சியும் பூமியின்
கடையாந்தரங்கள்பரியந்தமும் விளங்குகிறது;
உமது வலதுகரம் நீதியால் நிறைந்திருக்கிறது.
உம்முடைய நியாயத்தீர்ப்புகளினிமித்தம் 11
சீயோன் பர்வதம் மகிழ்வதாக, யூதாவின் குமா
ரத்திகள் களிகூருவார்களாக. சீயோனைச் 12
சுற்றி உலாவி, அதின் கொத்தளங்களை எண்
ணுங்கள். பின்வரும் சந்ததிக்கு நீங்கள் விவ 13
ரிப்பதற்காக, அதின் அலங்கத்தைக் கவனி
த்து, அதின் அரமனைகளை உற்றுப்பாருங்கள்.
இந்த தேவன் என்றென்றைக்குமுள்ள சதா 14
காலங்களிலும் நம்முடைய தேவன்; †மரண
பரியந்தம் நம்மை நடத்துவார்.

* உடுப்பு. ஏசா. 61. 10. வெளி. 19. 7, 8
[1] உன். 1. 4
[2] ஏசா. 35. 10. யூதா 24. வெளி. 19. 7
[3] 1 பே. 2. 9. வெளி. 1. 6; 5. 10; 20. 6
[4] மல். 1. 11
[5] உபா. 4. 7
[6] எரே. 5. 22. மத். 7. 25
[7] ஏசா. 8. 7; 60. 14. எசே. 47. 1-12. வெளி. 21. 2, 3; 22. 1, 2
[8] உபா. 23. 4. ஏசா. 12. 6
[9] 2. 1-4
[10] எண். 14. 9
[11] எசே. 39. 9, 10
[12] ஏசா. 2. 11, 17
[13] ஏசா. 55. 12
[14] உபா. 7. 21; மல். 1. 14
[15] 1 பே. 1. 4
[16] 68. 18, 33. அப். 1. 5, 11
[17] சகரி. 14. 9. 1 கொரி. 14. 15, 16
[18] நீதி. 30. 5
[19] 65. 1. ஏசா. 2. 2, 3. சகரி. 8. 3
[20] 50. 2. புல. 2. 15, ஏசா. 14. 13. மத். 5. 35
[21] 2 சாமு. 10. 6-19
[22] யாத். 15. 14-16
[23] எசே. 27. 25, 26
[24] ஏசா. 2. 2
[25] யோசு. 7. 9. மல். 1. 11, 14
† என்றைக்கும். 73. 24. ஏசா. 58. 11

49 (கோராகின் புத்திரருள்ள ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதம்.)

ஜனங்களே, நீங்கள் எல்லாரும் இதைக்
2 கேளுங்கள். பூமியின் குடிகளே, [1]சிறியோ
ரும் பெரியோரும் ஐசுவரியவான்களும் எளிய
வர்களுமாகிய நீங்கள் எல்லாரும் ஏகமாய்ச்
3 செவிகொடுங்கள். என் வாய் ஞானத்தைப்
பேசும்; என் இருதயம் உணர்வைத் தியானிக்
4 கும். என் செவியை உவமைமொழிக்குச்
சாய்த்து, [2]என் மறைபொருளைச் சுரமண்ட
லத்தின்மேல் வெளிப்படுத்துவேன்.
5 என்னைத் தொடருகிறவர்களுடைய அக்
கிரமம் என்னைச் சூழ்ந்துகொள்ளும் தீங்கு
நாட்களில், [3]நான் பயப்பட வேண்டியதெ
6 ன்ன? தங்கள் செல்வத்தை நம்பி, தங்கள்
திரளான ஐசுவரியத்தினால்பெருமைபாராட்டு
7 கிற, ஒருவனாவது, தன் சகோதரன் அழி
வைக் காணாமல் [4]இனி என்றைக்கும் உயிரோ
8 டிருக்கும்படி, எவ்விதத்தினாலாவது அவனை
மீட்டுக்கொள்ளவும், [5]அவனிமித்தம் மீட்கும்
பொருளை தேவனுக்குக் கொடுக்கவுங்கூடா
9 தே. அவர்கள் ஆத்துமமீட்பு மிகவும் அரு
மையாயிருக்கிறது; அது ஒருபோதும் முடி
10 யாது. ஞானிகளும் மரித்து, அஞ்ஞானிகளும்
நிர்மூடரும் ஏகமாய் அழிந்து, [6]தங்கள் ஆஸ்
தியை மற்றவர்களுக்கு வைத்துப்போகிற
11 தைக் காண்கிறான். தங்கள் வீடுகள் நித்திய
காலமாகவும், தங்கள் வாசஸ்தலங்கள் தலை
முறை தலைமுறையாகவும் இருக்குமென்பது
அவர்கள் உள்ளத்தின் அபிப்பிராயம்; [7]அவர்
கள் தங்கள் நாமங்களைத் தங்கள் நிலங்களுக்
12 குத் தரிக்கிறார்கள். ஆகிலும் கனம்பொருந்
தியவனாயிருக்கிற மனுஷன் நிலைத்திருக்கிற
தில்லை; [8]அழிந்துபோகும் மிருகங்களுக்கு
ஒப்பாயிருக்கிறான்.
13 இதுதான் அவர்கள் வழி, இதுதான் அவர்
கள் பைத்தியம்; ஆகிலும் அவர்கள் சந்
ததியார் அவர்கள் சொல்லை மெச்சிக்கொள்
14 ளுகிறார்கள். (சேலா.) ஆட்டுமந்தையைப்
போல பாதாளத்திலே கிடத்தப்படுகிறார்
கள்; மரணம் அவர்களை *மேய்ந்துபோ
டும்; [9]செம்மையானவர்கள் அதிகாலையில் அவர்
களை ஆண்டுகொள்வார்கள்; அவர்கள் தங்கள்
வாசஸ்தலத்தில் நிலைத்திருக்கக்கூடாதபடி
அவர்களுடைய ரூபத்தைப் பாதாளம் அழிக்
15 கும். ஆனாலும் தேவன் என் ஆத்துமாவைப்
பாதாளத்தின் வல்லமைக்குத் தப்புவித்து மீட்
பார், அவர் என்னை ஏற்றுக்கொள்வார்.
(சேலா.)
16 ஒருவன் ஐசுவரியவானாகி, அவன் வீட்
டின் மகிமை பெருகும்போது, நீ பயப்படா
17 தே. அவன் மரிக்கும்போது ஒன்றும் கொ
ண்டுபோவதில்லை; [10]அவன் மகிமை அவனைப்
18 பின்பற்றிச் செல்வதுமில்லை. அவன் உயி
ரோடிருக்கையில் தன் ஆத்துமாவை வாழ்த்
தினாலும்: நீ உனக்கு நன்மையைநாடினாய்
என்று மனுஷர் அவனைப் புகழ்ந்தாலும்,
அவன் என்றென்றைக்கும் வெளிச்சத்தைக் 19
காணாத [11]தன் பிதாக்களின் சந்ததியைச் சேரு
வான். கனம்பொருந்தினவனாயிருந்தும் அறி 20
வில்லாத மனுஷன் [12]அழிந்துபோகும் மிருகங்
களுக்கு ஒப்பாயிருக்கிறான்.

(ஆசாபின் சங்கீதம்.) 50

வல்லமையுள்ள [13]தேவனாகிய கர்த்தர் வச
னித்து, சூரியன் உதிக்குந் திசைதொடங்கி
அது அஸ்தமிக்குந் திசைவரைக்குமுள்ள
†பூமியைக் கூப்பிடுகிறார். பூரண வடிவுள்ள 2
சீயோனிலிருந்து [14]தேவன் பிரகாசிக்கிறார்.
நம்முடைய தேவன் வருவார், [15]மவுனமாயி 3
ரார்; அவருக்கு முன் அக்கினி பட்சிக்கும்;
[16]அவரைச் சுற்றிலும் மகாபுசல் கொந்தளிப்பா
யிருக்கும். அவர் தம்முடைய ஜனத்தை நியா 4
யந்தீர்க்க உயர இருக்கும் வானங்களையும்
பூமியையும் [17]கூப்பிடுவார். பலியினாலே என் 5
னோடே உடன்படிக்கை பண்ணின என்னு
டைய பரிசுத்தவான்களை [18]என்னிடத்தில்
கூட்டுங்கள் என்பார். வானங்கள் அவரு 6
டைய நீதியை அறிவிக்கும்; [19]தேவனே நியா
யாதிபதி. (சேலா.)
என் ஜனமே, [20]கேள், நான் பேசுவேன்; 7
இஸ்ரவேலே, உனக்கு விரோதமாய்ச் சாட்சி
யிடுவேன்; நானே தேவன், உன் தேவனாயி
ருக்கிறேன். உன் பலிகளினிமித்தம் உன் 8
னைக் கடிந்துகொள்ளேன்; [21]உன் தகனபலி
கள் எப்போதும் எனக்கு முன்பாக இருக்
கிறது. உன் வீட்டிலிருந்து காளைகளையும், 9
[22]உன் தொழுவங்களிலிருந்து ஆட்டுக்கடாக்
களையும் நான் வாங்கிக்கொள்வதில்லை. சகல 10
காட்டுஜீவன்களும், பர்வதங்களில் ஆயிரமா
யிரமாய்த் திரிகிற மிருகங்களும் என்னுடைய
வைகள். மலைகளிலுள்ள பறவைகளையெல் 11
லாம் அறிவேன்; வெளியில் நடமாடுகிறவைக
ளெல்லாம் என்னுடையவைகள். நான் பசி 12
யாயிருந்தால் உனக்குச் சொல்லேன்; [23]பூமி
யும் அதின் நிறைவும் என்னுடையவைகளே.
நான் எருதுகளின் மாம்சம் புசித்து, ஆட்டுக் 13
கடாக்களின் ரத்தம் குடிப்பேனோ? நீ தேவ 14
னுக்கு ஸ்தோத்திரபலியிட்டு, [24]உன்னதமான
வருக்கு உன் பொருத்தனைகளைச் செலுத்தி;
ஆபத்துக்காலத்தில் என்னை நோக்கிக் கூப் 15
பிடு; [25]நான் உன்னை விடுவிப்பேன், நீ என்னை
மகிமைப்படுத்துவாய்.
தேவன் துன்மார்க்கனை நோக்கி: [26]நீ 16
என் பிரமாணங்களை எடுத்துரைக்கவும், என்
உடன்படிக்கையை உன் வாயினால் சொல்ல
வும், உனக்கு என்ன நியாயமுண்டு. சிட் 17
சையை நீ பகைத்து, [27]என் வார்த்தைகளை
உனக்குப் பின்னாக எறிந்து போடுகிறாய்.
நீ திருடனைக் காணும்போது அவனோடு ஒரு 18
மித்துப்போகிறாய்; [28]விபசாரரோடும் உனக்
குப் பங்குண்டு. உன் வாயைப் பொல்லாப் 19
புக்குத் திறக்கிறாய், உன் நாவு சற்பனையைப்
பிணைக்கிறது. நீ உட்கார்ந்து உன் சகோதர 20
னுக்கு விரோதமாய்ப் பேசி, உன் தாயின்

1 62. 9
2 78. 2, மத். 13. 35
3 ஓசி. 7. 2. ரோ. 8. 33, 34
4 அப். 13. 33-37
5 யோபு 36. 18. மத். 16. 26. 1 பே. 1. 18, 19
6 பிர. 2. 16-21
7 2 சாமு. 18. 18
8 39. 5
* பட்சிக்கும்.
9 தானி. 7. 22. வெளி. 2. 26, 27
10 லூக். 12. 20
11 ஆதி. 15. 15
12 பிர. 3. 18, 19
13 ஏசா. 9. 6
† பூமியின் குடிகளை.
14 68. 24
15 வெளி. 22. 20
16 தானி. 7. 10
17 ஏசா. 1. 2
18 மத். 24. 31. எபி. 12. 24
19 வெளி. 20. 12
20 மீகா. 6. 1-8
21 ஏசா. 1. 11
22 அப். 17. 25. எபி. 10. 4, 6
23 1 கொரி. 10. 26, 28
24 பிர. 5. 4, 5. ஓசி. 14. 2. எபி. 13. 15
25 107. 6. சகரி. 13. 9
26 ஏசா. 1. 11-15. ரோ. 4. 24. ரோ. 2. 21, 22
27 நீதி. 5. 12, 13
28 ரோ. 1. 32. 1 தீமோ. 5. 22

மகனுக்கு அவதூறு உண்டாக்குகிறாய்.
21 இவைகளை நீ செய்யும்போது நான் [1]மவுன
மாயிருந்தேன்; உன்னைப்போல் நானும் இருப்
பேன் என்று நினைவுகொண்டாய்; ஆனாலும்
நான் உன்னைக் கடிந்துகொண்டு, அவைகளை
உன் கண்களுக்கு முன்பாக ஒவ்வொன்றாக
22 நிறுத்துவேன். தேவனை [2]மறக்கிறவர்களே,
இதைச் சிந்தித்துக்கொள்ளுங்கள்; இல்லா
விட்டால் நான் உங்களைப் பீறிப்போடுவேன்,
23 ஒருவரும் உங்களை விடுவிப்பதில்லை. ஸ்தோத்
திரபலியிடுகிறவன் [3]என்னை மகிமைப்படுத்
துகிறான்; [4]தன் வழியைச் செவ்வைப்படுத்து
கிறவனுக்கு தேவனுடைய ரட்சிப்பை வெ
ளிப்படுத்துவேன் என்று சொல்லுகிறார்.

**51** (பத்சேபாளிடத்தில் தாவீது பாவத்திற்குட்பட்டபின்பு நாத்தான் தீர்க்கதரிசி அவனிடத்தில் வந்து, அவன் பாவத்தை உணர்த்தினபோது பாடி, சாகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

தேவனே, உமது கிருபையின்படி எனக்கு
இரங்கும், [5]உமது மிகுந்த இரக்கங்களின்படி
என் மீறுதல்கள் நீங்க என்னைச் சுத்திகரியும்.
2 என் அக்கிரமம் நீங்க என்னை முற்றிலும்
கழுவி, [6]என் பாவமற என்னைச் சுத்திகரியும்.
3 என் மீறுதல்களை நான் அறிந்திருக்கிறேன்;
[7]என் பாவம் எப்பொழுதும் எனக்கு முன்
4 பாக நிற்கிறது. தேவரீர் ஒருவருக்கே விரோத
மாக நான் பாவஞ்செய்து, [8]உமது கண்க
ளுக்கு முன்பாகப் பொல்லாங்கானதை நடப்
பித்தேன்; நீர் பேசும்போது உம்முடைய நீதி
விளங்கவும், நீர் நியாயந்தீர்க்கும்போது உம்மு
டைய பரிசுத்தம் விளங்கவும் இதை அறிக்
கையிடுகிறேன்.
5 இதோ, நான் துர்க்குணத்தில் உருவா
னேன்; [9]என் தாய் என்னைப் பாவத்தில் கர்ப்
6 பந்தரித்தாள். இதோ, உள்ளத்தில் உண்மை
யிருக்க விரும்புகிறீர்; [10]அந்தக்கரணத்தில் ஞா
7 னத்தை எனக்குத் தெரியப்படுத்துவீர். நீர்
என்னை ஈசோப்பினால் சுத்திகரியும், அப்பொ
ழுது நான் சுத்தமாவேன்; [11]என்னைக் கழுவி
யருளும், அப்பொழுது நான் உறைந்த மழை
8 யிலும் வெண்மையாவேன். நான் சந்தோ
ஷமும் மகிழ்ச்சியும் கேட்கும்படி செய்யும்,
[12]அப்பொழுது நீர் நொறுக்கின எலும்புகள்
களிகூரும்.
9 என்பாவங்களைப் பாராதபடிக்கு நீர் [13]உமது
முகத்தை மறைத்து, என் அக்கிரமங்களை
10 யெல்லாம் நீக்கியருளும். தேவனே, சுத்த
இருதயத்தை என்னிலே சிருஷ்டியும், [14]நிலை
வரமான ஆவியை என் உள்ளத்திலே புதுப்
11 பியும். உமது சமுகத்தை விட்டு என்னைத்
தள்ளாமலும், [15]உமது பரிசுத்த ஆவியை என்
னிடத்திலிருந்து எடுத்துக்கொள்ளாமலும் இ
12 ரும். உமது ரட்சணியத்தின் சந்தோஷத்
தைத் திரும்பவும் எனக்குத் தந்து, [16]உற்சாக
மான ஆவி என்னைத் தாங்கும்படி செய்யும்.
13 அப்பொழுது பாதகருக்கு உமது வழிகளை
[17]உபதேசிப்பேன்; பாவிகள் உம்மிடத்தில்

1 பிர. 8. 11, 12. ரோ. 2. 4. 2பே. 3. 9
2 9. 17. ஏசா. 51. 13
3 ரோ. 12. 1, 1பே. 2. 9
4 அப். 10. 2–4. கலா. 6. 16 பிலி. 1. 27
5 ஏசா. 43. 25; 44. 22. அப். 3. 19, 20
6 எபி. 9. 14. 1யோ. 1. 7, 9. வெளி. 1. 5
7 நீதி. 28. 13. ஏசா. 59. 12
8 2 சாமு. 12. 13. லூ. 15. 21. ரோ. 3. 4
9 யோபு 14. 4. யோ. 3. 6, ரோ. 5. 12. எபே. 2. 3
10 யோபு 38. 36
11 லேவி. 14. 4–9. எண். 19. 18. ஏசா. 1. 18. எபி. 9. 19
12 மத். 5. 4
13 எரே. 16. 17
14 எசே. 36. 25–27. யோ. 3. 3. அப். 15. 9. எபே. 2. 10
15 ஆதி. 4. 14. லூ. 11. 13. ரோ. 8. 9
16 ரோ. 8. 15. 2 கொ. 3. 17. கலா. 4. 6, 7
17 சக. 3. 1–8. மாற். 5. 19, 20
18 2சாமு. 11. 17; 12. 9
19 ஓசி. 6. 6. மீகா. 6. 7, 8. எபி. 10. 4–10
20 ஏசா. 57. 15; 66. 2
21 4. 5. மல். 3. 3. ரோ. 12. 1
22 136. 1, 2
23 எரே. 9. 4, 5
24 நீதி. 19. 5, 9
25 1 தீமோ. 6. 17
26 எரே. 11. 16. ஓசி. 14. 6
* உமது நாமத்தை நம்பியிருப்பேன். புல. 3. 25, 26
27 54. 6; 73. 28
28 10. 4; 14. 1. ஓ. எபே. 5. 12
29 ரோ. 3. 10–12

மனந்திரும்புவார்கள். தேவனே, என்னை ரட் 14
சிக்குந் தேவனே, இரத்தப்பழிகளுக்கு என்
னை நீங்கலாக்கிவிடும்; [18]அப்பொழுது என்
நாவு உம்முடைய நீதியைக் கெம்பீரமாய்ப்
பாடும். ஆண்டவரே, என் உதடுகளைத் திறந் 15
தருளும்; அப்பொழுது என் வாய் உம்முடைய
புகழை அறிவிக்கும். பலியை நீர் விரும்புகிற 16
தில்லை, [19]விரும்பினால் செலுத்துவேன்; தகன
பலியும் உமக்குப் பிரியமானதல்ல. தேவ 17
னுக்கேற்கும் பலிகள் நொறுங்குண்ட ஆவி
தான்; [20]தேவனே, நொறுங்குண்டதும் நருங்
குண்டதுமான இருதயத்தை நீர் புறக்கணியீர்.
சீயோனுக்கு உமது பிரியத்தின்படி நன் 18
மை செய்யும்; எருசலேமின் மதில்களைக் கட்டு
வீராக. அப்பொழுது தகனபலியும் சர்வாங்க 19
தகனபலியுமாகிய நீதியின் பலிகளில் பிரியப்
படுவீர்; [21]அப்பொழுது உமது பீடத்தின்மேல்
காளைகளைப் பலியிடுவார்கள்.

**52** (தாவீது அபிமெலேக்கின் வீட்டுக்கு வந்தானென்று ஏதோமியனாகிய தோவேக்கு வந்து சவுலுக்கு அறிவித்தபின்பு தாவீதினால் பாடப்பட்டு சாகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட மஸ்கீல் என்னும் சங்கீதம்.)

பலவானே, பொல்லாப்பில் ஏன் பெருமை
பாராட்டுகிறாய்? [22]தேவனுடைய கிருபை எந்
நாளுமுள்ளது. நீ கேடுகளைச் செய்ய எத் 2
தனம்பண்ணுகிறாய், கபடுசெய்யும் உன் நாவு
தீட்டப்பட்ட சவரகன் கத்தியைப்போல்
இருக்கிறது. நன்மையைப்பார்க்கிலும் தீமை 3
யையும், [23]யதார்த்தம் பேசுகிறதைப்பார்க்கி
லும் பொய்யையும் விரும்புகிறாய். (சேலா.)
கபடமுள்ள நாவே, சங்கரிக்கும் சகல வார்த் 4
தைகளையும் நீ விரும்புகிறாய்.
தேவன் உன்னை என்றென்றைக்கும் இரா 5
தபடி அழித்துப்போடுவார்; [24]அவர் உன்னைப்
பிடித்து, உன் வாசஸ்தலத்திலிருந்து பிடுங்கி,
நீ ஜீவனுள்ளோர் தேசத்தில் இராதபடிக்கு
உன்னை நிர்மூலமாக்குவார். (சேலா.) நீதி 6
மான்கள் அதைக் கண்டு பயந்து, அவனைப்
பார்த்து நகைத்து: இதோ, தேவனைத் தன் 7
பெலனாக எண்ணாமல், தன் செல்வப் பெருக்
கத்தை [25]நம்பி, தன் தீவினையில் பலத்துக்
கொண்ட மனுஷன் இவன்தான் என்பார்
கள். நானோ தேவனுடைய ஆலயத்தில் பச்சை 8
யான ஒலிவமரத்தைப்போலிருக்கிறேன், [26]தே
வனுடைய கிருபையை என்றென்றைக்கும்
நம்பியிருக்கிறேன். நீரே இதைச் செய்தீர் 9
என்று உம்மை என்றென்றைக்கும் துதித்து,
*உமது நாமத்திற்குக் காத்திருப்பேன்; [27]உம்
முடைய பரிசுத்தவான்களுக்கு முன்பாக அது
நலமாயிருக்கிறது.

**53** (மகலாத் என்னும் வாத்தியத்தில் வாசிக்கப்படும்படி தாவீதினால் பாடப்பட்டு சாகந்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட மஸ்கீல் என்னும் சங்கீதம்.)

தேவன் இல்லை என்று மதிகேடன் தன்
இருதயத்தில் சொல்லிக்கொள்ளுகிறான்;
[28]அவர்கள் தங்களைக்கெடுத்து, அருவருப்பான
அக்கிரமங்களைச் செய்துவருகிறார்கள்; [29]நன்

2 மைசெய்கிறவன் ஒருவனும் இல்லை. தேவ
னைத் தேடுகிற உணர்வுள்ளவன் உண்டோ
என்று பார்க்க, [1]தேவன் பரலோகத்திலிருந்து
3 மனுபுத்திரரைக் கண்ணோக்கினார். அவர்கள்
எல்லாரும் வழிவிலகி, ஏகமாய்க் கெட்டுப்
போனார்கள்; நன்மை செய்கிறவன் இல்லை,
ஒருவனாகிலும் இல்லை.
4 அக்கிரமக்காரருக்கு [2]அறிவு இல்லையா?
அப்பத்தைப் பட்சிக்கிறதுபோல் என் ஜனத்
தைப் பட்சிக்கிறார்களே; அவர்கள் தேவனைத்
5 தொழுதுகொள்ளுகிறதில்லை. உனக்கு வி
ரோதமாய்ப் பாளயமிறங்கினவனுடைய எலும்
புகளை தேவன் சிதறப்பண்ணினபடியால், [3]பய
மில்லாத இடத்தில் மிகவும் பயந்தார்கள்; தே
வன் அவர்களை வெறுத்தபடியினால் நீ அவர்
களை வெட்கப்படுத்தினாய்.
6 சீயோனிலிருந்து இஸ்ரவேலுக்கு ரட்சிப்பு
வருவதாக; [4]தேவன் தம்முடைய ஜனத்தின்
சிறையிருப்பைத் திருப்பும்போது, யாக்கோ
புக்குக் களிப்பும் இஸ்ரவேலுக்கு மகிழ்ச்சி
யும் உண்டாகும்.

54 (தாவீது தங்களிடத்தில் ஒளித்துக்கொண்டிருக்கிறான்
என்று சிப்பூரார் வந்து சவுலுக்குச் சொன்னபோது,
நெகினோத்தில் வாசிக்கத் தாவீது பாடி ராகத்தலைவ
னுக்கு ஒப்புவித்த மஸ்கீல் என்னும் சங்கீதம்.)

தேவனே, உமது நாமத்தினிமித்தம் என்
னை ரட்சித்து, உமது வல்லமையினால் எனக்கு
2 நியாயஞ்செய்யும். தேவனே, என் விண்
ணப்பத்தைக் கேட்டு, என் வாயின் வார்த்
3 தைகளுக்குச் செவிகொடும். அந்நியர் எனக்கு
விரோதமாய் எழும்புகிறார்கள்; கொடியர் என்
பிராணனை வாங்கத் தேடுகிறார்கள்; [5]தேவ
னைத் தங்களுக்கு முன்பாக நிறுத்தி நோக்
கார்கள். (சேலா.)
4 இதோ, தேவன் எனக்குச் சகாயர்; [6]ஆண்
டவர் என் ஆத்துமாவை ஆதரிக்கிறவர்களோ
5 டே இருக்கிறார். அவர் என் சத்துருக்களுக்
குத் தீமைக்குத் தீமையைச் சரிக்கட்டுவார்;
உமது சத்தியத்தினிமித்தம் அவர்களை நிர்மூல
6 மாக்கும். உற்சாகத்துடன் நான் உமக்குப்
பலியிடுவேன்; **கர்த்தாவே**, உமது நாமத்தைத்
7 துதிப்பேன், அது நலமானது. அவர் எல்
லா நெருக்கத்தையும் நீக்கி, என்னை விடுவித்
தார்; [7]என் கண் என் சத்துருக்களில் நீதி
சரிக்கட்டுதலைக் கண்டது.

55 (நெகினோத்தில் வாசிக்கத் தாவீது பாடி ராகத்தலைவ
னுக்கு ஒப்புவித்த மஸ்கீல் என்னும் சங்கீதம்.)

தேவனே, என் ஜெபத்தைக் கேட்டரு
ளும்; என் விண்ணப்பத்திற்கு மறைந்திராதே
2 யும். எனக்குச் செவிகொடுத்து, உத்தரவு
அருளிச்செய்யும்; சத்துருவினுடைய கூக்குர
லினிமித்தமும், துன்மார்க்கர் செய்யும் இடுக்
கத்தினிமித்தமும் என் தியானத்தில் [8]முறை
3 யிடுகிறேன். அவர்கள் என்மேல் பழிசாட்டி,
[9]குரோதங்கொண்டு, என்னைப் பகைக்கிறார்
4 கள். என் இருதயம் எனக்குள் வியாகுலப்
படுகிறது; [10]மரணத்திகில் என்மேல் விழுக்
தது. பயமும் நடுக்கமும் என்னைப் பிடித் 5
தது; அருக்களிப்பு என்னை மூடிற்று. அப் 6
பொழுது நான்: ஆ, எனக்குப் புறாவைப்
போல் சிறகுகள் இருந்தால், நான் பறந்து
போய் இளைப்பாறுவேன். நான் தூரத்தில் 7
அலைந்து திரிந்து வனாந்தரத்தில் தங்கியிருப்
பேன். (சேலா.) பெருங்காற்றுக்கும் புசலுக் 8
கும் தப்பத் தீவிரித்துக்கொள்ளுவேன் என்
றேன்.
ஆண்டவரே, அவர்களை அழித்து, அவர் 9
கள் பாஷையைப் பிரிந்துபோகப்பண்ணும்;
[11]கொடுமையையும் சண்டையையும் நகரத்தி
லே கண்டேன்; அவைகள் இரவும் பகலும் 10
அதின் மதில்கள்மேல் சுற்றித்திரிகிறது; அக்
கிரமமும் வாதையும் அதின் நடுவில் இருக்
கிறது; கேடுபாடுகள் அதின் நடுவில் இருக் 11
கிறது; கொடுமையும் கபடும் அதின் வீதியை
விட்டு விலகிப்போகிறதில்லை.
என்னை நிந்தித்தவன் சத்துரு அல்ல, அப் 12
படியிருந்தால் சகிப்பேன்; [12]எனக்கு விரோத
மாய்ப் பெருமைபாராட்டினவன் என் பகை
ஞன் அல்ல, அப்படியிருந்தால் அவனுக்கு
மறைந்திருப்பேன். எனக்குச் சமமான மனு 13
ஷனும், என் வழிகாட்டியும், என் தோழனு
மாகிய நீயே அவன். நாம் ஒருமித்து, இன்ப 14
மான ஆலோசனைபண்ணி, கூட்டத்தோடே
தேவாலயத்துக்குப்போனோம். மரணம் அவர் 15
களைத் தொடர்ந்து பிடிப்பதாக; [13]அவர்கள் உயி
ரோடே பாதாளத்தில் இறங்குவார்களாக; அவர்
கள் வாசஸ்தலங்களிலும் அவர்கள் உள்ளத்தி
லும் பொல்லாங்கு இருக்கிறது.
நானோ தேவனை நோக்கிக் கூப்பிடுவேன்; 16
**கர்த்தர்** என்னை ரட்சிப்பார். அந்திசந்தி மத் 17
தியான வேளைகளிலும் [14]நான் தியானம்பண்
ணி முறையிடுவேன்; அவர் என் சத்தத்தைக்
கேட்பார். திரளான கூட்டமாய்க் கூடி என் 18
னோடு எதிர்த்தார்கள்; [15]அவரோ எனக்கு நே
ரிட்ட போரை நீக்கி, என் ஆத்துமாவைச்
சமாதானத்துடன் மீட்டுவிட்டார். ஆதிமுத 19
லாய் வீற்றிருக்கிற தேவன் கேட்டு, அவர்க
ளுக்குப் பதிலளிப்பார்; அவர்களுக்கு மாறு
தல்கள் நேரிடாததினால், [16]அவர்கள் தேவனுக்
குப் பயப்படாமற்போகிறார்கள். (சேலா.)
அவன் தன்னோடே சமாதானமாயிருந்தவர் 20
களுக்கு விரோதமாய்த் தன் கையை நீட்டி,
தன் உடன்படிக்கையைமீறி நடந்தான். அவன் 21
வாயின் சொற்கள் வெண்ணெயைப்போல
மெதுவானவைகள், அவன் இருதயமோ யுத்
தம்; [17]அவன் வார்த்தைகள் எண்ணெயிலும்
மிருதுவானவைகள், ஆனாலும் அவைகள் உரு
வின பட்டயங்கள்.
**கர்த்தர்**மேல் உன் பாரத்தை வைத்துவிடு, 22
[18]அவர் உன்னை ஆதரிப்பார்; [19]நீதிமானை ஒரு
போதும் தள்ளாடவொட்டார். தேவனே, 23
நீர் அவர்களை அழிவின் குழியில் இறங்
கப்பண்ணுவீர்; இரத்தப்பிரியரும் சூதுள்ள
மனுஷரும் தங்கள் ஆயுளின் நாட்களில் பாதி

1 11. 4
2 எரே. 4. 22
3 நீதி. 28. 1. லே. 26. 17, 36
4 14. 7; 126. 1-3
5 36. 1
6 118. 7
7 1 சாமு. 26. 14
8 எசா. 38. 14
9 2 சாமு. 16. 7, 8
10 116. 3
11 எரே. 6. 7
12 41. 9; 42. 4. 2 சாமு. 15. 12. எரே. 9. 4
13 எண். 16. 30-33
14 தானி. 6. 10. அப். 3. 1; 10. 3, 9, 30
15 2 நாளா. 32. 7, 8. 1 யோ. 4. 4
16 73. 8. ஏ. பிர. 8. 11
17 நீதி. 5. 3, 4. மத். 26. 49
18 மத். 6. 25-34. 1 பே. 5. 7
19 37. 24; 121. 3

வளையிலாகிலும் பிழைத்திருக்கமாட்டார்கள்;
[1]நானோ உம்மை நம்பியிருக்கிறேன்.

56 (பெலிஸ்தர் தாவீதைக் காத்தூரில் பிடித்தபோது யோ
னத் எலம் ரிக்கோகீம் என்னும் வாத்தியத்தில் வாசிக்
கும்படி தாவீது பாடி ராகத்தலைவனுக்கு ஒப்புவித்த
மிக்தாம் என்னும் சங்கீதம்.)

தேவனே, எனக்கு இரங்கும்; மனுஷன்
என்னை [2]விழுங்கப் பார்க்கிறான்; நாள்தோறும்
2 போர்செய்து, என்னை ஒடுக்குகிறான். என்
சத்துருக்கள் நாள்தோறும் என்னை விழுங்கப்
பார்க்கிறார்கள்; உன்னதமானவரே, எனக்கு
விரோதமாய் அகங்கரித்துப் போர்செய்கிறவர்
3 கள் அநேகர். நான் பயப்படுகிற நாளில் [3]உம்
4 மை நம்புவேன். தேவனை முன்னிட்டு அவ
ருடைய வார்த்தையைப் புகழுவேன்; தேவனை
நம்பியிருக்கிறேன், நான் பயப்படேன்; [4]மாம்
சமானவன் எனக்கு என்னசெய்வான்?
5 நித்தமும் என் வார்த்தைகளைப் புரட்டுகிறார்
கள்; [5]எனக்குத் தீங்குசெய்வதே அவர்கள்
6 முழு எண்ணமாயிருக்கிறது. அவர்கள் ஏக
மாய்க் கூடி, பதிவிருக்கிறார்கள்; என் பிராண
னை வாங்க விரும்பி, [6]என் காலடிகளைத் தொ
டர்ந்துவருகிறார்கள்.
7 அவர்கள் தங்கள் அக்கிரமத்தினால் தப்புவார்
களோ? [7]தேவனே, கோபங்கொண்டு ஜனங்
8 களைக் கீழே தள்ளும். என் அலைச்சல்களை
தேவரீர் எண்ணியிருக்கிறீர்; என் கண்ணீரை
உம்முடைய துருத்தியில் வையும்; அவைகள்
உம்முடைய *கணக்கில் அல்லவோ இருக்கி
9 றது? நான் உம்மை நோக்கிக் கூப்பிடும் நா
ளில் என் சத்துருக்கள் பின்னிட்டுத் திரும்பு
வார்கள்; [8]தேவன் என் பட்சத்தில் இருக்கி
10 றார் என்பதை அறிவேன். தேவனை முன்
னிட்டு அவருடைய வார்த்தையைப் புகழு
வேன்; கர்த்தரை முன்னிட்டு அவருடைய
11 வார்த்தையைப் புகழுவேன். தேவனை நம்பி
யிருக்கிறேன், நான் பயப்படேன்; மனுஷன்
எனக்கு என்னசெய்வான்?
12 தேவனே, [9]நான் உமக்குப் பண்ணின
பொருத்தனைகள் என்மேல் இருக்கிறது; உம
13 க்கு ஸ்தோத்திரங்களைச் செலுத்துவேன். நான்
தேவனுக்கு முன்பாக [10]ஜீவனுள்ளோருடைய
வெளிச்சத்திலே நடக்கும்படி, நீர் என் ஆத்து
மாவை மரணத்துக்கும் என் கால்களை இடற
லுக்கும் தப்புவியாதிருப்பீரோ?

57 (தாவீது சவுலுக்குத் தப்பியோடி கெபியில் ஒதுங்குகை
யில் தனக்கு நஷ்டம் நேரிடாதபடி அல்தஷ்கேத் என்
னும் வாத்தியத்தில் வாசிக்கத் தாவீது பாடி ராகத்
தலைவனுக்கு ஒப்புவித்த மிக்தாம் என்னும் சங்கீதம்.)

எனக்கு இரங்கும், தேவனே, எனக்கு
இரங்கும்; உம்மை என் ஆத்துமா அண்டிக்
கொள்ளுகிறது; [11]விக்கினங்கள் கடந்துபோகு
மட்டும் உமது செட்டைகளின் நிழலிலே வந்
2 து அடைவேன். எனக்காக யாவையும் செ
ய்து முடிக்கப்போகிற [12]தேவனாகிய உன்னத
3 மான தேவனை நோக்கிக் கூப்பிடுவேன். என்
னை விழுங்கப் பார்க்கிறவன் என்னை நிந்திக்

1 நீதி. 10. 27. பிர. 7. 17
2 ஓசி. 8. 8
3 1 சாமு. 30. 6
4 லூ. 12. 4, 5. ரோ. 8. 31
5 லூ. 11. 54
6 37. 32
7 பிர. 8. 8
* புஸ்தகத்தில். மல். 3. 16
8 ரோ. 8. 31
9 66. 13, 14. ஆதி. 28. 20–22
10 116. 8, 9
11 63. 7. ஏசா. 26. 20
12 138. 8. ஏசா. 26. 12
13 51. 21; 52. 2
14 மீகா. 7. 2
† ஆத்துமா அல்லது நாவு. 108. 1–5
15 21. 11. ஏசா. 10. 1
16 ஏசா. 48. 8
17 ரோ. 3. 13
18 112. 10
19 யோபு 3. 16. பிர. 6. 2
20 நீதி. 10. 25

கையில், அவர் பரலோகத்திலிருந்து ஒத்தா
சை அனுப்பி, என்னை ரட்சிப்பார்: (சேலா.)
தேவன் தமது கிருபையையும் தமது சத்தியத்
தையும் அனுப்புவார். என் ஆத்துமா சிங்கங் 4
களின் நடுவிலிருக்கிறது; தீயை இறைக்கிற
மனுபுத்திரருக்குள்ளே கிடக்கிறேன்; அவர்
கள் பற்கள் ஈட்டிகளும் அம்புகளும், அவர்
கள் நாவு [13]கருக்கான பட்டயமுமாயிருக்கிறது.
தேவனே, வானங்களுக்கு மேலாக உயர்ந்தரு 5
ளும்; உமது மகிமை பூமியனைத்தின்மேலும்
உயர்ந்திருப்பதாக. என் கால்களுக்குக் கண் 6
ணியை வைத்திருக்கிறார்கள்; [14]என் ஆத்துமா
தொய்ந்துபோயிற்று; எனக்கு முன்பாகக் குழி
யை வெட்டி, அதின் நடுவிலே விழுந்தார்கள்.
(சேலா.) என் இருதயம் ஆயத்தமாயிருக்கி 7
றது, தேவனே, என் இருதயம் ஆயத்தமாயிரு
க்கிறது; நான் பாடிக் கீர்த்தனம்பண்ணுவேன்.
என் †மகிமையே, விழி; வீணையே, சுரமண் 8
டலமே, விழியுங்கள்: அதிகாலையில் விழித்
துக்கொள்வேன். ஆண்டவரே, ஜனங்களுக் 9
குள்ளே உம்மைத் துதிப்பேன்; ஜாதிகளுக்
குள்ளே உம்மைக் கீர்த்தனம்பண்ணுவேன்.
உமது கிருபை வானபரியந்தமும், உமது சத் 10
தியம் மேகமண்டலங்கள் பரியந்தமும் எட்டு
கிறது. தேவனே வானங்களுக்கு மேலாக 11
உயர்ந்தருளும்; உமது மகிமை பூமியனைத்தின்
மேலும் உயர்ந்திருப்பதாக.

58 (தான் கெட்டுப்போகாதபடிக்கு அல்தஷ்கேத் என்னும்
வாத்தியத்தில் வாசிக்கத் தாவீது பாடி ராகத்தலைவனு
க்கு ஒப்புவித்த மிக்தாம் என்னும் சங்கீதம்.)

மவுனமாயிருக்கிறவர்களே, நீங்கள் மெய்
யாய் நீதியைப் பேசுவீர்களோ? மனுபுத்திர
ரே, நியாயமாய்த் தீர்ப்பு செய்வீர்களோ? மன 2
தார நியாயக்கேடு செய்கிறீர்கள்; [15]பூமியிலே
உங்கள் கைகளின் கொடுமையை நிறுத்திக்
கொடுக்கிறீர்கள். துன்மார்க்கர் கர்ப்பத்தில் 3
உற்பவித்ததுமுதல்பேதலிக்கிறார்கள்;[16]தாயின்
வயிற்றிலிருந்து பிறந்ததுமுதல் பொய்சொல்
லி வழிதப்பிப்போகிறார்கள். சர்ப்பத்தின் 4
விஷத்திற்கு ஒப்பான [17]விஷம் அவர்களில்
இருக்கிறது. பாம்பாட்டிகள் விநோதமாய் 5
ஊதினாலும் அவர்கள் ஊதும் சத்தத்திற்குச் செ
விகொடாதபடிக்குத் தன் காதை அடைக்கிற
செவிட்டு விரியனைப்போல் இருக்கிறார்கள்.
தேவனே, அவர்கள் வாயிலுள்ள பற்களைத் 6
தகர்த்துப்போடும்; கர்த்தாவே, பால சிங்
கங்களின் கடைவாய்ப்பற்களை நொறுக்கிப்
போடும். கடந்தோடுகிற தண்ணீரைப்போல் 7
அவர்கள் கழிந்துபோகட்டும்; [18]அவன் தன்
அம்புகளைத் தொடுக்கும்போது அவைகள்
சின்னபின்னமாய்ப் போகக்கடவது. கரைந் 8
துபோகிற நத்தையைப்போல் ஒழிந்துபோ
வார்களாக; [19]ஸ்திரீயின் முதிராப் பிண்டத்
தைப்போல் சூரியனைக் காணாதிருப்பார்களாக.
முள்நெருப்பினால் உங்கள் பானைகளில் சூடே 9
றுமுன்னே பச்சையானதையும் எரிந்துபோன
தையும் அவர் [20]சுழல்காற்றினால் அடித்துக்

10 கொண்டுபோவார். பழிவாங்குதலை [1]நீதிமான்
காணும்போது மகிழுவான்; அவன் தன் பா
தங்களைத் துன்மார்க்கனுடைய ரத்தத்திலே
11 கழுவுவான். அப்பொழுது, மெய்யாய் நீதி
மானுக்குப் பலன் உண்டென்றும், [2]மெய்
யாய்ப் பூமியிலே நியாயஞ்செய்கிற தேவன்
உண்டென்றும் மனுஷன் சொல்லுவான்.

**59** (சவுல் தாவீதைக் கொல்லுதற்காக ஏவலாட்களை அனு
ப்பினபோது அல்தஷ்கேத் என்னும் வாத்தியத்தில்
வாசிக்க அவன் பாடி ராகத்தலைவனுக்கு ஒப்புவித்த
மிக்தாம் என்னும் சங்கீதம்.)

என் தேவனே, என் சத்துருக்களுக்கு என்
னைத் தப்புவியும்; [3]என்மேல் எழும்புகிறவர்
களுக்கு என்னை விலக்கி உயர்ந்த அடைக்
2 கலத்திலே வையும். அக்கிரமக்காரருக்கு என்
னைத் தப்புவித்து, இரத்தப்பிரியரான மனுஷ
3 ருக்கு என்னை விலக்கி ரட்சியும். இதோ,
என் பிராணனுக்குப் பதிவிருக்கிறார்கள்;
கர்த்தாவே, [4]என்னிடத்தில் மீறுதலும் பாவ
மும் இல்லாதிருந்தும், பலவான்கள் என
4 க்கு விரோதமாய்க் கூட்டங்கூடுகிறார்கள். என்
னிடத்தில் அக்கிரமம் இல்லாதிருந்தும், ஓடி
த்திரிந்து யுத்தத்துக்கு ஆயத்தமாகிறார்கள்;
எனக்குத் துணைசெய்ய விழித்து என்னை
5 நோக்கிப் பாரும். சேனைகளின் தேவனாகிய
கர்த்தாவே, இஸ்ரவேலின் தேவனே, நீர்
சகல ஜாதிகளையும் விசாரிக்க விழித்தெழும்
பும்; வஞ்சகமாய்த் துரோகஞ்செய்கிற ஒரு
வருக்கும் தயை செய்யாதேயும். (சேலா.)
6 அவர்கள் சாயங்காலத்தில் திரும்பிவந்து, நாய்
களைப்போல ஊளையிட்டு, ஊரைச்சுற்றித் திரி
7 கிறார்கள். இதோ, தங்கள் வார்த்தைகளைக்
கக்குகிறார்கள்; [5]அவர்கள் உதடுகளில் பட்ட
யங்கள் இருக்கிறது, கேட்கிறவன் யார் என்
8 கிறார்கள். ஆனாலும் கர்த்தாவே, நீர் அவர்
களைப் பார்த்து நகைப்பீர்; [6]புறஜாதிகள் யாவ
9 ரையும் இகழுவீர். அவன் வல்லமையை நான்
கண்டு, உமக்குக் காத்திருப்பேன்; தேவனே
10 எனக்கு உயர்ந்த அடைக்கலம். என் தே
வன் தம்முடைய கிருபையினால் என்னைச்
சந்திப்பார்; [7]தேவன் என் சத்துருக்களுக்கு
வரும் நீதி சரிக்கட்டுதலை நான் காணும்படி
11 செய்வார். அவர்களைக் கொன்றுபோடாதே
யும், [8]என் ஜனங்கள் மறந்து போவார்களே;
எங்கள் கேடகமாகிய ஆண்டவரே, உமது வல்
லமையினால் அவர்களைச் சிதறடித்து, அவர்
12 களைத் தாழ்த்திப்போடும். அவர்கள் உதடு
களின் பேச்சு அவர்கள் வாயின் பாவமாயிருக்
கிறது; [9]அவர்கள் இட்ட சாபமும் சொல்லிய
பொய்யும் ஆகிய இவைகளினிமித்தம் தங்கள்
13 பெருமையில் அகப்படுவார்களாக. தேவன்
பூமியின் எல்லைவரைக்கும் யாக்கோபிலே
அரசாளுகிறவர் என்று அவர்கள் அறியும்பொ
ருட்டு, அவர்களை உம்முடைய உக்கிரத்திலே
நிர்மூலமாக்கும்; இனி இராதபடிக்கு அவர்
14 களை நிர்மூலமாக்கும். (சேலா.) அவர்கள்
சாயங்காலத்தில் திரும்பிவந்து, நாய்களைப்
போல ஊளையிட்டு, ஊரைச்சுற்றித் திரிகிறார்
கள். அவர்கள் உணவுக்காக அலைந்து திரிந்து 15
திருப்தியடையாமல், முறுமுறுத்துக்கொண்
டிருப்பார்கள். நானோ உம்முடைய வல்ல 16
மையைப் பாடி, காலையிலே உம்முடைய கிரு
பையை மகிழ்ச்சியோடு புகழுவேன்; எனக்கு
நெருக்கமுண்டான நாளிலே நீர் எனக்குத்
தஞ்சமும் உயர்ந்த அடைக்கலமுமானீர். என் 17
பெலனே, உம்மைக் கீர்த்தனம்பண்ணுவேன்;
[10]தேவன் எனக்கு உயர்ந்த அடைக்கலமும்,
கிருபையுள்ள என் தேவனுமாயிருக்கிறார்.

**60** (தாவீது மெசொபொத்தாமியா தேசத்துச் சீரியரோ
டும், சோபாதேசத்துச் சீரியரோடும் யுத்தம்பண்ணின
போது, யோவாப் திரும்பி உப்புப்பள்ளத்தாக்கிலே
ஏதோமியரில் பன்னிராயிம்பேரை வெட்டினபோது, அ
வன் சாட்சியை விளக்குவிக்கும் ஆறுநாம்புக் கின்னரத்
திலே போதிப்பதற்காகப் பாடினதும் ராகத்தலைவனுக்கு
ஒப்புவித்ததுமான மிக்தாம் என்னும் சங்கீதம்.)

தேவனே, நீர் எங்களைக் கைவிட்டீர், [11]எங்
களைச் சிதறடித்தீர், எங்கள்மேல் கோபமாயி
ருந்தீர்; மறுபடியும் எங்களிடமாய்த் [12]திரும்பிய
ருளும். பூமியை அதிரப்பண்ணி, அதை 2
வெடிப்பாக்கினீர்; [13]அதின் வெடிப்புகளைப்
பொருந்தப்பண்ணும்; அது அசைகின்றது.
உம்முடைய ஜனங்களுக்குக் கடினமான காரி 3
யத்தைக் காண்பித்தீர்; [14]தத்தளிப்பின் மதுபா
னத்தை எங்களுக்குக் குடிக்கக்கொடுத்தீர். சத் 4
தியத்தினிமித்தம் ஏற்றும்படியாக, [15]உமக்குப்
பயந்து நடக்கிறவர்களுக்கு ஒரு கொடியைக்
கொடுத்தீர். (சேலா.)
உமது பிரியர் விடுவிக்கப்படும்படி, [16]உமது 5
வலதுகரத்தினால் ரட்சித்து, எனக்குச் செவி
கொடுத்தருளும். தேவன் தமது பரிசுத்தத் 6
தைக்கொண்டு விளம்பினார், ஆகையால் களி
கூருவேன்; சீகேமைப் பங்கிட்டு, சுக்கோத்
தின் பள்ளத்தாக்கை அளந்துகொள்ளுவேன்.
கீலேயாத் என்னுடையது, மனாசேயும் என் 7
னுடையது, எப்பிராயீம் என் தலையின் பெ
லன், [17]யூதா என் *நியாயப்பிரமாணிகன்.
மோவாப் என் பாதபாத்திரம், ஏதோமின் 8
மேல் என் பாதரட்சையை எறிந்துபோடு
வேன்; பெலிஸ்தியாவே, [18]என்னிமித்தம்
ஆர்ப்பரித்துக்கொள்.
அரணான பட்டணத்திற்குள் [19]என்னை 9
நடத்திக்கொண்டு போகிறவர் யார்? ஏதோம்
மட்டும் எனக்கு வழிகாட்டுகிறவர் யார்? எங் 10
கள் சேனைகளோடே [20]புறப்படாமலிருந்த தே
வரீர் அல்லவோ? எங்களைத் தள்ளிவிட்டிருந்த
தேவரீர் அல்லவோ? இக்கட்டில் எங்களுக்கு 11
உதவிசெய்யும்; மனுஷனுடைய உதவி விரு
தா. தேவனாலே பராக்கிரமம் செய்வோம்; 12
அவரே எங்கள் சத்துருக்களை [21]மிதித்துப்
போடுவார்.

**61** (நெகிநோத் என்னும் வாத்தியத்தில் வாசிக்க ராகத்தலை
வனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

தேவனே, என் கூப்பிடுதலைக் கேட்டு,
என் விண்ணப்பத்தைக் கவனியும். என் 2
இருதயம் தொய்யும்போது [22]பூமியின் கடை

[1] வெளி. 11. 17, 18
[2] சங். 8. 10, 11
[3] 18. 48
[4] 1 சாமு. 24. 11, 17
[5] நீதி. 12. 18, சங். 29. 13
[6] 1 சாமு. 19. 16
[7] 21. 8; 54. 7
[8] ஆதி. 4. 12, 15
[9] நீதி. 12. 13
[10] 18. 1
[11] 44. 9
[12] புல. 3. 31, 32. சகரி. 10. 6
[13] 2 நாளா. 7. 14. எரே. 30. 17
[14] ஏசா. 51. 17, 22
[15] 20. 5. உன்ன. 2. 4
[16] 108. 6. முத
[17] ஆதி. 49. 10
* செங்கோல்.
[18] 2 சாமு. 8. 1, 2, 14
[19] 2 சாமு. 11. 1
[20] யோசு. 7. 12
[21] ஏசா. 63. 3
[22] ஏசா. 54. 11

யாந்தரத்திலிருந்து உம்மை நோக்கிக் கூப்பிடு
வேன்; எனக்கு எட்டாத உயரமான கன்மலை
3 யில் என்னைக் கொண்டுபோய்விடும். நீர்
எனக்கு அடைக்கலமும், [1]சத்துருவுக்கு எதி
4 ரே பெலத்த துருகமுமாயிருந்தீர். நான் உம்
முடைய கூடாரத்தில் சதாகாலமும் தங்கு
வேன்; உமது செட்டைகளின் மறைவிலே
வந்து அடைவேன். (சேலா.)
5 தேவனே, நீர் என் பொருத்தனைகளைக்
கேட்டீர்; உமது நாமத்திற்குப் பயப்படுகிற
6 வர்களின் சுதந்தரத்தை எனக்குத் தந்தீர். ரா
ஜாவின் நாட்களோடே நாட்களைக் கூட்டு
வீர்; [2]அவர் வருஷங்கள் தலைமுறை தலைமுறை
7 யாக இருக்கும். அவர் தேவனுக்கு முன்பாக
என்றென்றைக்கும் நிலைத்திருப்பார்; [3]தயை
யும் உண்மையும் அவரைக் காக்கக் கட்டளை
8 யிடும். இப்படியே தினமும் என் பொருத்த
னைகளை நான் செலுத்தும்படியாக, உமது நாமத்
தை என்றைக்கும் கீர்த்தனம்பண்ணுவேன்.

## 62

(எதுதூன் என்னும் ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

தேவனையே நோக்கி என் ஆத்துமா அமர்ந்
திருக்கிறது; அவரால் என் ரட்சிப்பு வரும்.
2 அவரே என் கன்மலையும், என் ரட்சிப்பும்,
என் உயர்ந்த அடைக்கலமுமானவர்; [4]நான்
3 அதிகமாய் அசைக்கப்படுவதில்லை. நீங்கள்
எதுவரைக்கும் ஒரு மனுஷனுக்குத் தீங்கு
செய்ய நினைப்பீர்கள், நீங்கள் அனைவரும்
சங்கரிக்கப்படுவீர்கள், [5]சாய்ந்த மதிலுக்கும்
4 இடிந்த சுவருக்கும் ஒப்பாவீர்கள். அவனு
டைய மேன்மையிலிருந்து அவனைத் தள்ளும்
படிக்கே அவர்கள் ஆலோசனைபண்ணி, அப
த்தம்பேச விரும்புகிறார்கள்; தங்கள் வாயினால்
ஆசீர்வதித்து, தங்கள் உள்ளத்தில் சபிக்கிறார்
கள். (சேலா.)
5 என் ஆத்துமாவே, தேவனையே நோக்கி
அமர்ந்திரு; நான் நம்புகிறது அவராலே வரும்.
6 அவரே என் கன்மலையும், என் ரட்சிப்பும்,
என் உயர்ந்த அடைக்கலமுமானவர்; நான்
7 அசைக்கப்படுவதில்லை. என் ரட்சிப்பும்,
என் மகிமையும் தேவனிடத்தில் இருக்கி
றது; [6]பெலனான என் கன்மலையும் என்
அடைக்கலமும் தேவனுக்குள் இருக்கிறது.
8 ஜனங்களே, எக்காலத்திலும் அவரை நம்புங்
கள்; [7]அவர் சமுகத்தில் உங்கள் இருதயத்தை
*ஊற்றிவிடுங்கள்; தேவன் நமக்கு அடைக்கல
மாயிருக்கிறார். (சேலா.)
9 கீழ்மக்கள் மாயையும், மேன்மக்கள் பொய்யு
மாமே; [8]தராசிலே வைக்கப்பட்டால் அவர்
களெல்லாரும் மாயையிலும் லேசானவர்கள்.
10 கொடுமையை நம்பாதிருங்கள்; கொள்ளையி
னால் பெருமை பாராட்டாதிருங்கள்; [9]ஐசுவரி
யம் விருத்தியானால் இருதயத்தை அதின்மேல்
11 வைக்காதேயுங்கள். தேவன் ஒருதரம் விளம்
பினார், இரண்டுதரம் கேட்டிருக்கிறேன்;
12 [10]வல்லமை தேவனுடையது என்பதே. கிரு
பையும் உம்முடையது, [11]ஆண்டவரே! தேவ

[1] நீதி. 18. 10
[2] 21. 4
[3] 43. 3. நீதி. 20. 28
[4] 37. 24. மீகா. 7. 8
[5] ஏசா. 30. 13
[6] எரே. 3. 23
[7] 1 சாமு. 1. 15.
* உருகப்பண்ணுங்கள்.
[8] ஏசா. 40. 15, 17
[9] லூ. 12. 15, 21. 1 தீமோ. 6. 17
[10] வெளி. 19. 1
[11] 2 கொ. 5. 10. வெளி. 22. 12
† [illegible] 42, 1. நீதி. 8. 17. உன்ன. 3. 1-3. யோ. 7. 37
[12] 27. 4
[13] 30. 5. 1 பே. 3. 2
[14] உன்ன. 1. 4
[15] உன்ன. 5. 2
[16] 18. 35
[17] ஏசா. 65. 16
[18] ஆதி. 49. 6
[19] எரே. 9. 3
[20] நீதி. 1. 11-13. ஏசா. 29. 15

நீர் அவனவன் செய்கைக்குத் தக்கதாகப் பல
னளிக்கிறீர்.

## 63

(தாவீது யூதாவின் வனாந்தரத்திலிருக்கையில்
பாடின சங்கீதம்.)

தேவனே, நீர் என்னுடைய தேவன்;
†அதிகாலமே உம்மைத் தேடுகிறேன்; வறண்
டதும் விடாய்த்ததும் தண்ணீரற்றதுமான
நிலத்திலே என் ஆத்துமா உம்மேல் தாகமா
யிருக்கிறது, என் மாம்சமானது உம்மை வாஞ்
சிக்கிறது. இப்படியே பரிசுத்த ஸ்தலத்தில் உம் 2
மைப் பார்க்க ஆசையாயிருந்து, [12]உமது வல்ல
மையையும் உமது மகிமையையும் கண்டேன்.
ஜீவனைப்பார்க்கிலும் [13]உமது கிருபை நல் 3
லது; என் உதடுகள் உம்மைத் துதிக்கும்.
என் ஜீவனுள்ளமட்டும் நான் உம்மைத் துதி 4
த்து, உமது நாமத்தைச் சொல்லிக் கையெடுப்
பேன். நிணத்தையும் கொழுப்பையும் உண் 5
டதுபோல என் [14]ஆத்துமா திருப்தியாகும்;
என் வாய் ஆனந்தக் களிப்புள்ள உதடுகளால்
உம்மைப் போற்றும். என் படுக்கையின்மேல் 6
நான் உம்மை நினைக்கும்போது, [15]இராச்சாம
ங்களில் உம்மைத் தியானிக்கிறேன். நீர் 7
எனக்குத் துணையாயிருந்ததினால், உமது செ
ட்டைகளின் நிழலிலே களிகூருகிறேன்.
என் ஆத்துமா உம்மைத் தொடர்ந்து பற்றிக் 8
கொண்டிருக்கிறது; [16]உமது வலதுகரம் என்
னைத் தாங்குகிறது.
என் பிராணனை அழிக்கத் தேடுகிறவர்க 9
ளோ, பூமியின் தாழ்விடங்களில் இறங்குவார்
கள். அவர்கள் பட்டயத்தால் விழுவார்கள்; 10
நரிகளுக்கு இரையாவார்கள். ராஜாவோ 11
தேவனில் களிகூருவார்; அவர்பேரில் சத்தி
யம் பண்ணுகிறவர்கள் யாவரும் மேன்மை
பாராட்டுவார்கள்; [17]பொய் பேசுகிறவர்களின்
வாய் அடைக்கப்படும்.

## 64

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

தேவனே, என் விண்ணப்பத்தில் என்
சத்தத்தைக் கேட்டருளும்; சத்துருவால் வரும்
பயத்தை நீக்கி, என் பிராணனைக் காத்தரு
ளும். துன்மார்க்கர் செய்யும் இரகசிய ஆலோ 2
சனைக்கும், [18]அக்கிரமக்காரருடைய கலகத்
துக்கும் என்னை விலக்கி மறைத்தருளும்.
அவர்கள் தங்கள் நாவைப் பட்டயத்தைப்போ 3
ல் [19]கூர்மையாக்கி, மறைவுகளில் உத்தமன் 4
மேல் எய்யும்பொருட்டுக் கசப்பான வார்த்
தைகளாகிய தங்கள் அம்புகளை நாணேற்று
கிறார்கள்; சற்றும் பயமின்றிச் சடுதியில் அவ
ன்மேல் எய்கிறார்கள். அவர்கள் பொல்லாத 5
காரியத்தில் தங்களை உறுதிப்படுத்திக்கொண்டு,
[20]மறைவான கண்ணிகளை வைக்க ஆலோசனை
பண்ணி, அவைகளைக் காண்பவன் யார் என்
கிறார்கள். அவர்கள் நியாயக்கேடுகளை ஆய்ந் 6
து தேடி, தந்திரமான யோசனை நிறைவேறும்
படி பிரயத்தனம் பண்ணுகிறார்கள்; அவர்
களில் ஒவ்வொருவனுடைய உட்கருத்தும்
இருதயமும் ஆழமாயிருக்கிறது.

7 ஆனாலும் தேவன் அவர்கள்மேல் அம்பு
களை எய்வார், சடிதியாய் அவர்கள் காயப்படு
8 வார்கள். அவர்கள் தள்ளப்பட்டு, கீழே
விழும்படி அவர்கள் நாவுகளே அவர்களைக்
கெடுக்கும்; [1]அவர்களைக் காண்கிற யாவரும்
9 ஓடிப்போவார்கள். எல்லா மனுஷரும் பய
ந்து, தேவனுடைய செயலை அறிவித்து,
[2]அவர் கிரியையை உணர்ந்துகொள்வார்கள்.
10 நீதிமான் கர்த்தருக்குள் மகிழ்ந்து, அவரை
நம்புவான்; செம்மையான இருதயமுள்ளவர்
கள் யாவரும் மேன்மை பாராட்டுவார்கள்.

## 65

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதமாகிய பாட்டு.)

தேவனே, சீயோனில் உமக்காகத் துதி
யானது அமைந்து காத்திருக்கிறது; [3]பொரு
2 த்தனை உமக்குச் செலுத்தப்படும். ஜெபத்
தைக் கேட்கிறவரே, *மாம்சமான [4]யாவரும்
3 உம்மிடத்தில் வருவார்கள். அக்கிரம விஷ
யங்கள் என்மேல் மிஞ்சி வல்லமைகொண்
டது; [5]தேவரீரோ எங்கள் மீறுதல்களை நிவிர்
4 த்தியாக்குகிறீர். உம்முடைய பிராகாரங்க
ளில் வாசமாயிருக்கும்படி நீர் தெரிந்துகொ
ண்டு சேர்த்துக்கொள்ளுகிறவன் பாக்கிய
வான்; [6]உம்முடைய பரிசுத்த ஆலயமாகிய
உமது வீட்டின் நன்மையால் திருப்தியா
வோம்.
5 பூமியின் கடையாந்தரங்களிலும் †தூர
மான சமுத்திரங்களிலுமுள்ளவர்கள் எல்லா
ரும் நம்பும் நம்பிக்கையாயிருக்கிற எங்கள்
ரட்சிப்பின் தேவனே, [7]நீர் பயங்கரமான
காரியங்களைச் செய்கிறதினால் எங்களுக்கு நீதி
6 யுள்ள உத்தரவு அருளுகிறீர். வல்லமையை
இடைகட்டிக்கொண்டு, உம்முடைய பலத்தி
7 னால் பர்வதங்களை உறுதிப்படுத்தி, சமுத்தி
ரங்களின் மும்முரத்தையும் [8]அலைகளுடைய
அலைகளையும் இரைச்சலையும், ஜனங்களின்
8 அமளியையும் அமர்த்துகிறீர். கடையாந்தர
இடங்களில் குடியிருக்கிறவர்களும் உம்மு
டைய அடையாளங்களினிமித்தம் பயப்படு
கிறார்கள்; காலையையும் மாலையையும் களி
கூரப்பண்ணுகிறீர்.
9 தேவரீர் பூமியை விசாரித்து அதற்கு நீர்ப்
பாய்ச்சுகிறீர்; தண்ணீர் நிறைந்த தேவநதியி
னால் அதை மிகவும் செழிப்பாக்குகிறீர்; இப்
படி நீர் அதைத் திருத்தி, அவர்களுக்குத் தா
10 னியத்தை விளைவிக்கிறீர். அதின் வரப்பு
கள் தணியத்தக்கதாய் அதின் படைச்சால்
களுக்குத் தண்ணீர் இறைத்து, அதை மழை
களால் கரையப்பண்ணி, அதின் பயிரை ஆசீர்
11 வதிக்கிறீர். வருஷத்தை உம்முடைய நன்
மையால் முடிசூட்டுகிறீர்; உமது பாதைகள்
12 நெய்யாய்ப் பொழிகிறது. வனாந்தர தாபரங்
களிலும் பொழிகிறது; மேடுகள் சுற்றிலும்
13 பூரிப்பாயிருக்கிறது. மேய்ச்சலுள்ள வெளி
களில் ஆடுகள் நிறைந்திருக்கிறது; பள்ளத்தாக்
குகள் தானியத்தால் மூடியிருக்கிறது; [9]அவை
கள் கெம்பீரித்துப் பாடுகிறது.

## 66

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதமாகிய பாட்டு.)

பூமியின் குடிகளே, நீங்கள் எல்லாரும்
தேவனுக்கு முன்பாகக் கெம்பீரமாய்ப் பாடுங்
கள். அவர் நாமத்தின் மகத்துவத்தைக் கீர்த் 2
தனம்பண்ணி, அவருடைய துதியின் மகிமை
யைக் கொண்டாடுங்கள். தேவனை நோக்கி: 3
உமது கிரியைகளில் எவ்வளவு பயங்கரமாயி
ருக்கிறீர்; உமது மகத்துவமான வல்லமையி
னிமித்தம் உம்முடைய சத்துருக்கள் உமக்கு
இச்சகம்பேசி அடங்குவார்கள். பூமியின் 4
மீதெங்கும் உம்மைப் பணிந்துகொண்டு உம்
மைத் துதித்துப் பாடுவார்கள்; அவர்கள் உம்மு
டைய நாமத்தைத் துதித்துப் பாடுவார்கள்
என்று சொல்லுங்கள். (சேலா.)
தேவனுடைய செய்கைகளை வந்து பாருங் 5
கள்; அவர் மனுபுத்திரரிடத்தில் நடப்பிக்குங்
கிரியையில் பயங்கரமானவர். கடலை உலர் 6
ந்த தரையாக மாற்றினார்; [10]ஆற்றைக் கால்
நடையாய்க் கடந்தார்கள்; அங்கே அவரில்
களிகூர்ந்தோம். அவர் தம்முடைய வல்ல 7
மையினால் என்றென்றைக்கும் அரசாளுகி
றார்; அவருடைய கண்கள் ஜாதிகள்மேல்
நோக்கமாயிருக்கிறது; துரோகிகள் தங்களை
உயர்த்தாதிருப்பார்களாக. (சேலா.)
ஜனங்களே, நம்முடைய தேவனை ஸ்தோத் 8
திரித்து, அவரைத் துதிக்குஞ்சத்தத்தைக் கேட்
கப்பண்ணுங்கள். அவர் நம்முடைய கால்க 9
ளைத் தள்ளாடவொட்டாமல், நம்முடைய ஆத்
துமாவை உயிரோடே வைக்கிறார். தேவ 10
னே, எங்களைச் சோதித்தீர்; [11]வெள்ளியைப்
புடமிடுகிறதுபோல எங்களைப் புடமிட்டீர்.
எங்களை வலையில் அகப்படுத்தி, [12]எங்கள் இடுப் 11
புகளின்மேல் வருத்தமான பாரத்தை ஏற்றி
னீர். மனுஷரை எங்கள் தலையின்மேல் ஏறிப் 12
போகப்பண்ணினீர்; தீயையும் தண்ணீரையும்
கடந்துவந்தோம்; செழிப்பான இடத்தில் எங்
களைக் கொண்டுவந்து விட்டீர்.
சர்வாங்க தகனபலிகளோடே [13]உமது ஆல 13
யத்திற்குள் பிரவேசிப்பேன்; என் இக்கட் 14
டில் நான் என் உதடுகளைத் திறந்து, என் வாயி
னால் சொல்லிய என் பொருத்தனைகளை [14]உம
க்குச் செலுத்துவேன். ஆட்டுக்கடாக்களின் 15
நிணப்புகையுடனே கொழுமையானவைகளை
உமக்குத் தகனபலியாக இடுவேன்; காளைகளை
யும் செம்மறியாட்டுக்கடாக்களையும் உமக்குப்
பலியிடுவேன். (சேலா.)
தேவனுக்குப் பயந்தவர்களே, நீங்கள் எல் 16
லாரும் வந்து கேளுங்கள்; [15]அவர் என் ஆத்து
மாவுக்குச் செய்ததைச் சொல்லுவேன். அவ 17
ரை நோக்கி என் வாயினால் கூப்பிட்டேன்,
என் நாவினால் அவர் புகழப்பட்டார். என் 18
இருதயத்தில் அக்கிரமசிந்தைகொண்டிருந்தே
னானால், [16]ஆண்டவர் எனக்குச் செவிகொடார்.
மெய்யாய் தேவன் எனக்குச் செவிகொடுத் 19
தார், [17]என் ஜெபத்தின் சத்தத்தைக் கேட்டார்.
என் ஜெபத்தைத் தள்ளாமலும், தமது கிரு 20

1 நீதி. 12. 18
2 எரே. 50. 28
3 62. 1
* மனுஷர்.
4 ஏசா. 66. 33
5 1 யோவா. 1. 7, 9
6 68. 5
† அகன்ற கடலிலும்.
7 45. 4
8 மத். 8. 26
9 ஏசா. 55. 12
10 யாத். 14. 21. யோசு. 3. 14, 16
11 ஏசா. 48. 10. சக. 13. 9. 1பே. 1. 6, 7
12 ஓசி. 7. 12
13 100. 4
14 பிர. 5. 4
15 84. 2-11. மாற். 5. 19
16 நீதி. 28. 9. யோவா. 9. 31. யாக். 4. 3
17 116. 1, 2

பையை என்னைவிட்டு விலக்காமலும் இருந்த
தேவனுக்கு ஸ்தோத்திரமுண்டாவதாக.

67 (நெகிநோத் என்னும் வாத்தியத்தில் வாசிக்க
ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதப்பாட்டு.)

தேவனே, பூமியில் உம்முடைய வழியும்,
[1]எல்லா ஜாதிகளுக்குள்ளும் உம்முடைய ரட்
2 சணியமும் விளங்கும்படியாய், தேவரீர் எங்
களுக்கு இரங்கி, எங்களை ஆசீர்வதித்து, [2]உம்
முடைய முகத்தை எங்கள்மேல் பிரகாசிக்கப்
பண்ணும். (சேலா.)
3 தேவனே, ஜனங்கள் உம்மைத் துதிப்பார்க
ளாக; [3]சகல ஜனங்களும் உம்மைத் துதிப்பார்
4 களாக. தேவரீர் ஜனங்களை நிதானமாய் நியா
யந்தீர்த்து, [4]பூமியிலுள்ள ஜாதிகளை நடத்து
வீர்; ஆதலால் ஜாதிகள் சந்தோஷித்து, கெம்
பீரத்தோடே மகிழக்கடவர்கள். (சேலா.)
5 தேவனே, ஜனங்கள் உம்மைத் துதிப்பார்
களாக; சகல ஜனங்களும் உம்மைத் துதிப்பார்
6 களாக. பூமி தன் பலனைத் தரும், [5]தேவனாகிய
எங்கள் தேவனே எங்களை ஆசீர்வதிப்பார்.
7 தேவன் எங்களை ஆசீர்வதிப்பார்; [6]பூமியின்
எல்லைகளெல்லாம் அவருக்குப் பயந்திருக்கும்.

68 (இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின்
பாட்டாகிய சங்கீதம்.)

தேவன் எழுந்தருளுவார், [7]அவருடைய
சத்துருக்கள் சிதறுண்டு, அவரைப் பகைக்
கிறவர்கள் அவருக்கு முன்பாக ஓடிப்போ
2 வார்கள். புகை பறக்கடிக்கப்படுவதுபோல
அவர்களைப் பறக்கடிப்பீர்; [8]மெழுகு அக்கி
னிக்குமுன் உருகுவதுபோல துன்மார்க்கர்
3 தேவனுக்குமுன் அழிவார்கள். நீதிமான்க
ளோ தேவனுக்கு முன்பாக மகிழ்ந்து களி
கூர்ந்து, [9]ஆனந்த சந்தோஷமடைவார்கள்.
4 தேவனைப் பாடி, அவருடைய நாமத்தைக்
கீர்த்தனம்பண்ணுங்கள்; வனாந்தரங்களில் ஏறி
வருகிறவருக்கு வழியை ஆயத்தப்படுத்துங்
கள்; அவருடைய நாமம் *யேகோவா, அவ
5 ருக்கு முன்பாகக் களிகூருங்கள். தம்மு
டைய பரிசுத்த வாசஸ்தலத்திலிருக்கிற தே
வன், திக்கற்ற பிள்ளைகளுக்குத் தகப்பனும்,
[10]விதவைகளுக்கு நியாயம் விசாரிக்கிறவருமா
6 யிருக்கிறார். தேவன் தனிமையானவர்களு
க்கு வீடுவாசல் ஏற்படுத்தி, [11]கட்டுண்டவர்களை
விடுதலையாக்குகிறார்; துரோகிகளோ வறண்ட
பூமியில் தங்குவார்கள்.
7 தேவனே, நீர் உம்முடைய ஜனங்களுக்கு
முன்னே சென்று, [12]அவாந்தர வெளியிலே
8 நடந்துவருகையில், (சேலா.) பூமி அதிர்ந்
தது; [13]தேவனாகிய உமக்கு முன்பாக வான
மும் பொழிந்தது; இஸ்ரவேலின் தேவனாயி
ருக்கிற தேவனுக்கு முன்பாகவே இந்தச்
9 சீனாய் மலையும் [14]அசைந்தது. தேவனே, சம்
பூரண மழையைப் பெய்யப்பண்ணினீர்;
[15]இளைத்துப்போன உமது சுதந்தரத்தைத்
10 திடப்படுத்தினீர். உம்முடைய மந்தை அ
திலே தங்கியிருந்தது; [16]தேவனே, உம்முடைய
தயையினாலே ஏழைகளைப் பராமரிக்கிறீர்.
ஆண்டவர் வசனம் தந்தார்; அதைப் பிர 11
சித்தப்படுத்துகிறவர்களின் கூட்டம் மிகுதி.
சேனைகளின் ராஜாக்கள் தத்தளித்து ஓடினார் 12
கள்; [17]வீட்டிலிருந்த ஸ்திரீயானவள் கொள்
ளைப் பொருளைப் பங்கிட்டாள். நீங்கள் அடுப் 13
பினடியில் கிடந்தவர்களாயிருந்தாலும், [18]வெ
ள்ளியால் அலங்கரிக்கப்பட்ட புறாச்சிறகுகள்
போலவும், பசும்பொன் நிறமாகிய அதின்
இறகுகளின் சாயலாகவும் இருப்பீர்கள். சர் 14
வவல்லவர் அதில் ராஜாக்களைச் சிதறடித்த
போது, [19]அது சல்மோன் மலையின் உறைந்த
மழைபோல் வெண்மையாயிற்று.
தேவபர்வதம் பாசான் பர்வதம்போலிருக் 15
கிறது; பாசான் பர்வதம் உயர்ந்த சிகரங்க
ளுள்ளது. உயர்ந்த சிகரமுள்ள பர்வதங்களே, 16
ஏன் துள்ளுகிறீர்கள்; [20]இந்தப் பர்வதத்தில்
வாசமாயிருக்க தேவன் விரும்பினார்; ஆம்,
கர்த்தர் இதிலே என்றென்றைக்கும் வாசமா
யிருப்பார். தேவனுடைய இரதங்கள் பதி 17
னாயிரங்களும் ஆயிரமாயிரங்களுமாயிருக்கி
றது; [21]ஆண்டவர் பரிசுத்த ஸ்தலமான சீனாயி
லிருந்தவண்ணமாய் அவைகளுக்குள் இருக்
கிறார். தேவரீர் உன்னதத்திற்கு ஏறி, [22]சிறை 18
ப்பட்டவர்களைச் சிறையாக்கிக்கொண்டு போ
னீர்; தேவனாகிய கர்த்தர் மனுஷருக்குள்
வாசம்பண்ணும்பொருட்டு [23]துரோகிகளாகிய
மனுஷர்களுக்காகவும் வரங்களைப் பெற்றுக்
கொண்டீர். எந்நாளும் ஆண்டவருக்கு ஸ்தோ 19
த்திரமுண்டாவதாக; நம்மேல் பாரஞ்சுமத்தி
னாலும் நம்மை ரட்சிக்கிற தேவன் அவரே.
(சேலா.)
நம்முடைய தேவன் ரட்சிப்பை அருளும் 20
தேவனாயிருக்கிறார்; [24]ஆண்டவராகிய கர்த்த
ரால் மரணத்திற்கு நீங்கும் வழிகளுண்டு.
மெய்யாகவே தேவன் தம்முடைய சத்துருக்க 21
ளின் சிரசையும், [25]தன் அக்கிரமங்களில் துணி
ந்து நடக்கிறவனுடைய மயிருள்ள உச்சந்தலை
யையும் உடைப்பார். உன் கால்கள் சத்து 22
ருக்களின் இரத்தத்தில் பதியும்படியாகவும்,
[26]உன் நாய்களின் நாவு அதை நக்கும்படியா
கவும், என்னுடைய ஜனத்தைப் பாசானிலி 23
ருந்து திரும்ப அழைத்துவருவேன்; [27]அதைச்
சமுத்திர ஆழங்களிலிருந்தும் திரும்ப அழைத்
துவருவேன் என்று ஆண்டவர் சொன்னார்.
தேவனே, உம்முடைய நடைகளைக் கண் 24
டார்கள்; என் தேவனும் என் ராஜாவும் பரி
சுத்த ஸ்தலத்திலே நடந்துவருகிற நடைக
ளையே கண்டார்கள். முன்னாகப் பாடுகிற 25
வர்களும், [28]பின்னாக வீணைகளை வாசிக்கிறவர்
களும், சுற்றிலும் தம்புரு வாசிக்கிற கன்னி
கைகளும் நடந்தார்கள். இஸ்ரவேலின் ஊற் 26
றிலிருந்து [29]தோன்றினவர்களே, சபைகளின்
நடுவே ஆண்டவராகிய தேவனை ஸ்தோத்தி
ரியுங்கள்.
அங்கே அவர்களை ஆளுகிற சின்ன பென் 27
யமீனும், [30]யூதாவின் பிரபுக்களும், அவர்கள்
கூட்டமும், செபுலோனின் பிரபுக்களும், நப்

1 மத். 28. 19. லூக். 2. 30, 31. அப். 13. 25. தீத். 2. 11
2 எண். 6. 25
3 66. 4
4 96. 10, 13
5 லேவி. 26. 4. எசே. 34. 27. ஓசி. 2. 21, 22
6 22. 27. சகரி. 9. 10. மல். 1. 11
7 எண். 10. 35. ஏசா. 33. 3
8 ஓசி. 13. 3. மீகா. 1. 4
9 1 தெச. 5. 16
* ஆதி. 2. 4. யாத். 6. 3. காண்க
10 எரே. 49. 11
11 107. 10
12 யாத். 13. 21
13 ஆப. 3. 13
14 யாத். 19. 16
15 உபா. 11. 11-14
16 1 சாமு. 2. 8. மத். 11. 5
17 எண். 31. 8, 9, 54. யோசு. 10. 16
18 81. 6
19 யோசு. 12. 1
20 1 இரா. 9. 3
21 உபா. 33. 2
22 அப். 1. 2, 9. 2. 4, 33. எபே. 4. 8
23 1 கொ. 6. 9-11. 1 தீமோ. 1. 13, 15
24 உபா. 32. 39. வெளி. 1. 18
25 ஆப. 3. 13
26 ஏசா. 63. 1-6
27 யாத். 14. 22. எண். 21. 33
28 1 நாளா. 13. 8. வெளி. 15. 2, 3
29 உபா. 33. 28. ஏசா. 48. 1
30 1 சாமு. 9. 21. 10. 20-24

28 தலியின் பிரபுக்களும் உண்டு. உன் தேவன்
உனக்குப் பலத்தைக் கட்டளையிட்டார்; [1]தே
வனே, நீர் எங்கள்நிமித்தம் உண்டுபண்ணி
29 னதைத் திடப்படுத்தும். எருசலேமிலுள்ள
உம்முடைய ஆலயத்தினிமித்தம், [2]ராஜாக்கள்
உமக்குக் காணிக்கைகளைக் கொண்டுவருவார்
30 கள். நாணலிலுள்ள மிருககூட்டத்தையும்,
*ஜனங்களாகிய கன்றுகளோடுகூடரிஷபகூட்
டத்தையும் அதட்டும்; ஒவ்வொருவனும் வெள்
ளிப்பணங்களைக் கொண்டுவந்து பணிந்துகொ
ள்ளுவான்; யுத்தங்களில் பிரியப்படுகிற ஜனங்
31 களைச் சிதறடிப்பார். பிரபுக்கள் எகிப்திலி
ருந்து வருவார்கள்; [3]எத்தியோப்பியா தேவனை
நோக்கி கையெடுக்கத் தீவிரிக்கும்.
32 பூமியின் ராஜ்யங்களே, தேவனைப் பாடி,
33 ஆண்டவரைக் கீர்த்தனம்பண்ணுங்கள். (சே
லா.) ஆதிமுதலாயிருக்கிற வானாதி வானங்க
ளின்மேல் எழுந்தருளியிருக்கிறவரைப் பாடுங்
கள்; இதோ, தமது சத்தத்தைப் பலத்த சத்த
34 மாய் முழங்கப்பண்ணுகிறார். தேவனுடைய
வல்லமையைப் பிரசித்தப்படுத்துங்கள்; அவ
ருடைய மகிமை இஸ்ரவேலின்மேலும், அவ
ருடைய வல்லமை மேகமண்டலங்களிலும்
35 உள்ளது. தேவனே, உமது பரிசுத்த ஸ்தலங்
களிலிருந்து பயங்கரமாய் விளங்குகிறீர்; [4]இஸ்
ரவேலின் தேவன் தம்முடைய ஜனங்களுக்
குப் பெலனையும் சத்துவத்தையும் அருளுகிற
வர்; தேவனுக்கு ஸ்தோத்திரமுண்டாவதாக.

**69** (சோஷனீம் வாத்தியத்தில் வாசிக்க ராகத்தலைவனுக்கு
ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

தேவனே, என்னை ரட்சியும்; [5]வெள்ளங்
கள் என் ஆத்துமாமட்டும் பெருகிவருகிறது.
2 ஆழமான உளையில் அமிழ்ந்திருக்கிறேன்,
நிற்க நிலையில்லை, [6]நிலையாத ஜலத்தில் ஆழ்ந்
திருக்கிறேன்; வெள்ளங்கள் என்மேல் புரண்
3 டுபோகிறது. நான் கூப்பிடுகிறதினால் இளைத்
தேன்; என் தொண்டை வறண்டுபோயிற்று;
[7]என் தேவனுக்கு நான் காத்திருக்கையால்,
4 என் கண்கள் பூத்துப்போயிற்று. நிமித்த
மில்லாமல் என்னைப் பகைக்கிறவர்கள் [8]என்
தலைமயிரிலும் அதிகமாயிருக்கிறார்கள்; வீணாக
எனக்குச் சத்துருக்களாகி என்னைச் சங்கரிக்க
வேண்டுமென்றிருக்கிறவர்கள் பலத்திருக்கி
றார்கள்; நான் எடுத்துக்கொள்ளாததை நான்
கொடுக்கவேண்டியதாயிற்று.
5 தேவனே, நீர் என் புத்தியீனத்தை அறிந்
திருக்கிறீர்; என் குற்றங்கள் உமக்கு மறைந்
6 திருக்கவில்லை. சேனைகளின் கர்த்தராகிய
ஆண்டவரே, உமக்காகக் காத்திருக்கிறவர்கள்
என்னிமித்தம் வெட்கப்பட்டுப் போகாதிருப்
பார்களாக; இஸ்ரவேலின் தேவனே, உம்
மைத் தேடுகிறவர்கள் என்னிமித்தம் நாணம
7 டையாதிருப்பார்களாக. உமதுநிமித்தம் நிந்
தையைச் சகித்தேன்; இலச்சை என் முகத்தை
8 மூடிற்று. என் சகோதரருக்கு வேற்று மனு
ஷனும், [9]என் தாயின் பிள்ளைகளுக்கு அந்நி
9 யனுமானேன். உம்முடைய வீட்டைக்குறி

த்து உண்டான பக்திவைராக்கியம் என்னைப்
பட்சித்தது; [10]உம்மை நிந்திக்கிறவர்களுடைய
நிந்தனைகள் என்மேல் விழுந்தது. என் ஆத் 10
துமா வாடும்படி உபவாசித்து அழுதேன்;
[11]அதுவும் எனக்கு நிந்தையாய் முடிந்தது.
இரட்டை என் உடுப்பாக்கினேன்; [12]அப் 11
பொழுதும் அவர்களுக்குப் பழமொழியா
னேன். வாசலில் உட்கார்ந்திருக்கிறவர்கள் 12
எனக்கு விரோதமாய்ப் பேசுகிறார்கள்; மது
பானம் பண்ணுகிறவர்களின் பாடலானேன்.
ஆனாலும் கர்த்தாவே, [13]அநுக்கிரககாலத் 13
திலே உம்மை நோக்கி விண்ணப்பஞ்செய்கி
றேன்; தேவனே, உமது மிகுந்த கிருபையி
னாலும் உமது ரட்சிப்பின் சத்தியத்தினாலும்
எனக்குச் செவிகொடுத்தருளும். நான் அமி 14
ழ்ந்திப்போகாதபடிக்குச் சேற்றினின்று என்
னைத் தூக்கிவிடும்; என்னைப் பகைக்கிறவர்
களினின்றும் நிலையாத ஜலத்தினின்றும் நான்
நீங்கும்படி செய்யும். ஜலப்பிரவாகங்கள் என் 15
மேல் புரளாமலும், [14]ஆழம் என்னை விழுங்
காமலும், பாதாளம் என்மேல் தன் வாயை
[15]அடைத்துக்கொள்ளாமலும் இருப்பதாக.
கர்த்தாவே, என் விண்ணப்பத்தைக் கேட் 16
டருளும், உம்முடைய தயை நலமாயிருக்கி
றது; [16]உமது உருக்கமான இரக்கங்களின்
படி என்னைக் கடாட்சித்தருளும். உமது 17
முகத்தை உமது அடியேனுக்கு மறையாதே
யும்; நான் வியாகுலப்படுகிறேன், எனக்குத்
தீவிரமாய்ச் செவிகொடுத்தருளும். நீர் என் 18
ஆத்துமாவினிடத்தில் வந்து அதை விடுதலை
பண்ணும்; என் சத்துருக்களினிமித்தம் என்
னை மீட்டுவிடும். தேவரீர் என் நிந்தையை 19
யும் என் வெட்கத்தையும் என் [17]அவமானத்
தையும் அறிந்திருக்கிறீர்; என் சத்துருக்கள்
எல்லாரும் உமக்கு முன்பாக இருக்கிறார்கள்.
நிந்தை என் இருதயத்தைப் பிளந்தது; நான் 20
மிகவும் வேதனைப்படுகிறேன்; எனக்காக பரி
தபிக்கிறவனுண்டோ என்று காத்திருந்தேன்,
ஒருவனும் இல்லை; [18]தேற்றுகிறவர்களுக்குக்
காத்திருந்தேன், ஒருவனையும் காணேன். என் 21
ஆகாரத்தில் கசப்புக் கலந்து கொடுத்தார்கள்,
[19]என் தாகத்துக்குக் காடியைக் குடிக்கக் கொ
டுத்தார்கள்.
அவர்களுடைய பந்தி அவர்களுக்குக் கண் 22
ணியும், [20]அவர்களுடைய செல்வம் அவர்க
ளுக்கு வலையுமாயிருக்கக்கடவது. அவர்களு 23
டைய கண்கள் காணாதபடி [21]அந்தகாரப்படக்
கடவது; அவர்கள் இடுப்புகளை எப்போதும்
தள்ளாடப்பண்ணும். உம்முடைய உக்கிரத் 24
தை அவர்கள்மேல் ஊற்றும்; [22]உம்முடைய
கோபாக்கினி அவர்களைத் தொடர்ந்து பிடிப்ப
தாக. அவர்கள் வாசஸ்தலம் பாழாகக்கட 25
வது; [23]அவர்களுடைய கூடாரங்களில் குடி
யில்லாமற்போவதாக. தேவரீர் அடித்தவனை 26
அவர்கள் துன்பப்படுத்தி, [24]நீர் காயப்படுத்
தினவர்களை நோகப் பேசுகிறார்களே. அக் 27
கிரமத்தின்மேல் அக்கிரமத்தை அவர்கள்மேல்

[1] ஏசா. 40. 31
[2] ஏசா. 60. 16, 17
* கோவேறுகள், புல்லவர்.
[3] ஏசா. 19. 18-25. செப். 3. 10. அப். 8. 27
[4] யாத். 15. 11. ஏசா. 45. 24
[5] யோனா 2. 5
[6] 40. 2
[7] ஏசா. 38. 14
[8] யோ. 15. 25
[9] யோ. 1. 11; 7. 5
[10] யோ. 2. 17. ரோ. 15. 3
[11] 35. 12. யூ. நூ. 7. 33
[12] 1 இரா. 9. 7
[13] 32. 6. ஏசா. 49. 8; 55. 6. 2 கொ. 6. 2
[14] ஏசா. 43. 1, 2
[15] 16. 10. அப். 2. 24. யூ
[16] 86. 16. மீகா. 7. 19
[17] 22. 6, 7. ஏசா. 53. 3. எபி. 12. 2
[18] ஏசா. 63. 5. மாற். 14. 50
[19] மத். 27. 34, 48. யோ. 19. 29, 30
[20] ரோ. 11. 8-10
[21] 2 கொ. 3. 14
[22] 1 தெச. 2. 15, 16
[23] மத். 23. 38. அப். 1. 20
[24] ஏசா. 53. 5. சகரி. 1. 15

சுமத்தும், [1]அவர்கள் உமது நீதிக்கு வந்தெட்
28 டாதிருப்பார்களாக. ஜீவபுஸ்தகத்திலிருந்து
அவர்கள் பேர் கிறுக்கப்பட்டுப்போவதாக;
[2]நீதிமான்கள் பேரோடே அவர்கள் பேர்
29 எழுதப்படாதிருப்பதாக. நானோ சிறுமையும்
துயரமுமுள்ளவன்; தேவனே, உம்முடைய
ரட்சிப்பு எனக்கு உயர்ந்த அடைக்கலமாவதாக.
30 தேவனுடைய நாமத்தைப் பாட்டினால்
துதித்து, அவரை ஸ்தோத்திரத்தினால் மகி
31 மைப்படுத்துவேன். கொம்பும் விரிகுளம்பு
முள்ள காளையெருதைப்பார்க்கிலும், [3]இது
32 வே கர்த்தருக்குப் பிரியமாயிருக்கும். சாந்த
குணமுள்ளவர்கள் இதைக் கண்டு சந்தோ
ஷப்படுவார்கள்; தேவனைத் தேடுகிறவர்களே,
33 உங்கள் இருதயம் வாழும். கர்த்தர் எளியவர்க
ளின் விண்ணப்பத்தைக் கேட்கிறார், [4]கட்டுண்
ட தம்முடையவர்களை அவர் புறக்கணியார்.
34 வானமும் பூமியும் சமுத்திரங்களும் அவை
களில் சஞ்சரிக்கிற யாவும் அவரைத் துதிக்
35 கக்கடவது. தேவன் சீயோனை ரட்சித்து,
யூதாவின் பட்டணங்களைக் கட்டுவார்; [5]அப்
பொழுது அங்கே குடியிருந்து அதைச் சுதந்
36 தரித்துக்கொள்வார்கள். அவருடைய ஊழி
யக்காரரின் சந்ததியார் அதைச் சுதந்தரித்துக்
கொள்வார்கள்; [6]அவருடைய நாமத்தை நே
சிக்கிறவர்கள் அதில் வாசமாயிருப்பார்கள்.

## 70

(நினைப்பூட்டுதலாகப் பாடி ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

தேவனே, என்னை விடுவியும், [7]கர்த்
தாவே, எனக்குச் சகாயஞ்செய்யத் தீவிரியும்.
2 என் பிராணனை வாங்கத் தேடுகிறவர்கள்
வெட்கி நாணுவார்களாக; எனக்குத் தீங்கு
வரும்படி விரும்புகிறவர்கள் பின்னிட்டுத்
3 திரும்பி இலச்சையடைவார்களாக. ஆ ஆ,
ஆ ஆ, என்பவர்கள் தாங்கள் அடையும் வெட்
4 கத்தினால் பின்னிட்டுப்போவார்களாக. உம்
மைத் தேடுகிற யாவரும் உம்மில் மகிழ்ந்து
சந்தோஷப்படுவார்களாக; [8]உமது ரட்சிப்
பில் பிரியப்படுகிறவர்கள் தேவனுக்கு மகிமை
யுண்டாவதாக என்று எப்பொழுதும் சொல்
5 வார்களாக. நானோ சிறுமையும் எளிமையு
மானவன்; [9]தேவனே, என்னிடத்தில் தீவிர
மாய் வாரும்: நீரே என் துணையும் என்னை
விடுவிக்கிறவருமானவர், கர்த்தாவே, தாமதி
யாதேயும்.

## 71

கர்த்தாவே, உம்மை நம்பியிருக்கிறேன்;
[10]நான் ஒருபோதும் வெட்கம் அடையாதபடி
2 செய்யும். உமது நீதியினிமித்தம் என்னை
விடுவித்து, என்னைக் காத்தருளும்; உமது
செவியை எனக்குச் சாய்த்து, என்னை ரட்சி
3 யும். நான் எப்பொழுதும் வந்தடையத்தக்க
கன்மலையாயிரும்; [11]என்னை ரட்சிப்பதற்குக்
கட்டளையிட்டீரே; நீரே என் கன்மலையும்
4 என் கோட்டையுமாய் இருக்கிறீர். என்
தேவனே, துன்மார்க்கனுடைய கைக்கும்,
நியாயக்கேடும் கொடுமையுமுள்ளவனுடைய
கைக்கும் என்னைத் தப்புவியும்.

கர்த்தராகிய ஆண்டவரே, நீரே என் 5
நோக்கமும், [12]என் சிறுவயதுதொடங்கி என்
நம்பிக்கையுமாயிருக்கிறீர். நான் கர்ப்பத்தில் 6
உற்பவித்ததுமுதல் உம்மால் ஆதரிக்கப்பட்
டேன்; [13]என் தாயின் வயிற்றிலிருந்து என்னை
எடுத்தவர் நீரே; உம்மையே நான் எப்பொழு
தும் துதிப்பேன். அநேகருக்கு நான் ஒரு 7
[14]புதுமைபோலானேன்; நீரோ எனக்குப் பல
த்த அடைக்கலமாயிருக்கிறீர். என் வாய் 8
உமது துதியினாலும், நாள்தோறும் உமது
மகத்துவத்தினாலும் நிறைந்திருப்பதாக.
முதிர்ந்த வயதில் என்னைத் தள்ளிவிடாம 9
லும், என் பெலன் ஒடுங்கும்போது என்னைக்
கைவிடாமலும் இரும். என் சத்துருக்கள் 10
எனக்கு விரோதமாய்ப் பேசி, என் ஆத்துமா
வுக்குக் காத்திருக்கிறவர்கள் ஏகமாய் [15]ஆலோ
சனைபண்ணி: தேவன் அவனைக் கைவிட் 11
டார், அவனைத் தொடர்ந்து பிடியுங்கள்;
அவனை விடுவிப்பார் இல்லை என்கிறார்கள்.
தேவனே, எனக்குத் தூரமாயிராதேயும்; என் 12
தேவனே, எனக்குச் சகாயம்பண்ணத் தீவிரி
யும். என் ஆத்துமாவை விரோதிக்கிறவர் 13
கள் வெட்கி அழியவும், எனக்குப் பொல்
லாப்புத் தேடுகிறவர்கள் நிந்தையாலும் இலச்
சையாலும் மூடப்படவுங்கடவர்கள்.
நானோ எப்பொழுதும் நம்பிக்கைகொண் 14
டிருந்து, மேன்மேலும் உம்மைத் துதிப்பேன்.
என் வாய் நாள்தோறும் உமது நீதியையும் 15
உமது ரட்சிப்பையும் சொல்லும்; [16]அவைக
ளின் தொகையை நான் அறியேன். கர்த்த 16
ராகிய ஆண்டவருடைய வல்லமையை முன்
னிட்டு நடப்பேன்; உம்முடைய நீதியைப்
பற்றியே [17]மேன்மை பாராட்டுவேன். தேவ 17
னே, என் சிறுவயதுமுதல் எனக்குப் போதி
த்துவந்தீர்; இதுவரைக்கும் உம்முடைய அதி
சயங்களை அறிவித்து வந்தேன். இப்பொ 18
ழுதும் தேவனே, இந்தச் சந்ததிக்கு உமது
வல்லமையையும், வரப்போகிற யாவருக்கும்
உமது பராக்கிரமத்தையும் நான் அறிவிக்கு
மளவும், [18]முதிர்வயதும் நரைமயிருமுள்ளவ
னாகும்வரைக்கும் என்னைக் கைவிடீராக.
தேவனே, உம்முடைய நீதி உன்னதமானது, 19
[19]பெரிதானவைகளை நீர் செய்தீர்; தேவனே,
உமக்கு நிகரானவர் யார்? அநேக இக்கட்டு 20
களையும் ஆபத்துகளையும் காணும்படி செய்த
என்னை நீர் திரும்பவும் உயிர்ப்பித்து, [20]திரும்
பவும் என்னைப் பூமியின் பாதாளங்களி
லிருந்து ஏறப்பண்ணுவீர். என் மேன்மை 21
யைப் பெருகப்பண்ணி, என்னை மறுபடியும்
தேற்றுவீர். என் தேவனே, நான் வீணை 22
யைக்கொண்டு உம்மையும் உம்முடைய சத்தி
யத்தையும் துதிப்பேன்; இஸ்ரவேலின் பரி
சுத்தரே, சுரமண்டலத்தைக்கொண்டு உம்
மைப் பாடுவேன். நான் பாடும்போது என் 23
உதடுகளும், நீர் மீட்டுக்கொண்ட என் ஆத்து
மாவும் [21]கெம்பீரித்து மகிழும். எனக்குப் 24
பொல்லாப்பைத் தேடுகிறவர்கள் வெட்கி இல

1 ரோ. 1. 28
2 லூ. 10. 20. வெளி. 13. 8
3 50. 13, 14, 23
4 எபே. 3. 1
5 எசே. 36. 35, 36
6 யோ. 14. 23. வெளி. 21. 27
7 40. 13-17
8 புல. 3. 25. ஏசா. 61. 10
9 102. 28
10 31. 1-3
11 நீதி. 18. 10
12 எரே. 17. 7, 17
13 22. 9, 10. ஏசா. 46. 3, 4
14 ஏசா. 8. 18. சக. 3. 8. 1 கொ. 4. 9
15 2 சாமு. 17. 1. மத். 27. 1
16 139. 17, 18
17 ஏசா. 45. 24, 25. பிலி. 3. 9
18 ஏசா. 46. 4
19 ஏசா. 55. 9
20 ஓசி. 6. 1, 2
21 103. 4

ச்சையடைந்தபடியால், நாள்தோறும் என்
நாவு உமது நீதியைக் கொண்டாடும்.

# 72

(சாலொமோனைப்பற்றிய சங்கீதம்.)

தேவனே, ராஜாவுக்கு உம்முடைய நியா
யத்தீர்ப்புகளையும், [1]ராஜாவின் குமாரனுக்கு
உம்முடைய நீதியையும் கொடுத்தருளும்.
2 அவர் உம்முடைய ஜனங்களை நீதியோடும்,
[2]உம்முடைய ஏழைகளை நியாயத்தோடும் விசா
3 ரிப்பார். பர்வதங்கள் ஜனத்திற்குச் சமாதா
னத்தைத் தரும், [3]மேடுகள் நீதியின் விளை
4 வோடிருக்கும். ஜனத்தில் சிறுமைப்படுகிற
வர்களை அவர் நியாயம் விசாரித்து, ஏழை
யின் பிள்ளைகளை ரட்சித்து, [4]இடுக்கண் செய்
5 கிறவனை நொறுக்குவார். சூரியனும் சந்திரனு
முள்ளமட்டும், அவர்கள் உமக்குத் தலைமுறை
6 தலைமுறையாகப் பயந்திருப்பார்கள். புல்
லறுப்புண்ட வெளியின்மேல் பெய்யும் மழை
யைப்போலவும், [5]பூமியை நனைக்கும் தூற
7 லைப்போலவும் இறங்குவார். அவருடைய
நாட்களில் நீதிமான் செழிப்பான்; சந்திரனு
ள்ளவரைக்கும் மிகுந்த சமாதானம் இருக்கும்.
8 ஒரு சமுத்திரந்தொடங்கி மறு சமுத்திரம்
வரைக்கும், [6]நதிதொடங்கிப் பூமியின் எல்லை
9 கள்வரைக்கும் அவர் அரசாளுவார். வனாந்
தரத்தார் அவருக்கு முன்பாகக் குனிந்து
வணங்குவார்கள்; [7]அவருடைய சத்துருக்கள்
10 மண்ணை நக்குவார்கள். தர்ஷீசின் ராஜாக்
களும் [8]தீவுகளின் ராஜாக்களும் காணிக்கை
களைக் கொண்டுவருவார்கள்; ஷேபாவிலும்
சேபாவிலுமுள்ள ராஜாக்கள் வெகுமானங்
11 களைக் கொண்டுவருவார்கள். சகல ராஜாக்
களும் அவரைப் பணிந்துகொள்வார்கள்; சகல
12 [9]ஜாதிகளும் அவரைச் சேவிப்பார்கள். கூப்
பிடுகிற எளியவனையும், [10]உதவியற்ற சிறுமை
13 யானவனையும் அவர் விடுவிப்பார். பலவீன
னுக்கும் எளியவனுக்கும் அவர் இரங்கி, எளி
14 யவர்களின் ஆத்துமாக்களை ரட்சிப்பார். அவர்
கள் ஆத்துமாக்களை வஞ்சகத்திற்கும் கொடு
மைக்கும் தப்புவிப்பார்; அவர்களுடைய இரத்
தம் அவருடைய பார்வைக்கு அருமையா
15 யிருக்கும். அவர் பிழைத்திருப்பார், [11]ஷே
பாவின் பொன் அவருக்குக் கொடுக்கப்படும்;
அவர்நிமித்தம் இடைவிடாமல் ஜெபம் பண்
ணப்படும், [12]எந்நாளும் ஸ்தோத்திரிக்கப்படு
16 வார். பூமியிலே மலைகளின் உச்சிகளில் ஒரு
பிடி தானியம்விதைக்கப்பட்டிருக்கும்; அதின்
விளைவு லீபனோனைப்போல அசையும்; [13]பூமி
யின் புல்லைப்போல நகரத்தார் செழித்தோங்
17 குவார்கள். அவருடைய நாமம் என்றென்
றைக்கும் இருக்கும்; சூரியனுள்ளமட்டும் அவ
ருடைய நாமம் சந்தான பரம்பரையாய் நிலைக்
கும்; [14]மனுஷர் அவருக்குள் ஆசீர்வதிக்கப்படு
வார்கள், எல்லா ஜாதிகளும் அவரைப் பாக்
கியமுடையவர் என்று வாழ்த்துவார்கள்.
18 இஸ்ரவேலின் தேவனாயிருக்கிற **கர்த்தரா**
கிய தேவனுக்கு ஸ்தோத்திர முண்டாவதாக;
19 [15]அவரே அதிசயங்களைச் செய்கிறவர். அவ
ருடைய மகிமைபொருந்திய நாமத்துக்கு என்
றென்றைக்கும் ஸ்தோத்திரமுண்டாவதாக;
[16]பூமிமுழுவதும் அவருடைய மகிமையால்
நிறைந்திருப்பதாக. ஆமென், ஆமென்.
ஈசாயின் புத்திரனாகிய தாவீதின் விண் 20
ணப்பங்கள் முடிந்தது.

# 73

(ஆசாபின் சங்கீதம்.)

சுத்த இருதயமுள்ளவர்களாகிய இஸ்ரவே
லருக்கு தேவன் நல்லவராகவே இருக்கிறார்.
ஆனாலும் என் கால்கள் தள்ளாடுதலுக்கும், 2
என் அடிகள் சறுக்குதலுக்கும் சற்றே தப்
பிற்று. துன்மார்க்கரின் வாழ்வை நான் கா 3
ண்கையில், [17]வீம்புக்காரராகிய அவர்கள்மேல்
பொறாமை கொண்டேன். மரணபரியந்தம் 4
அவர்களுக்கு இடுக்கண்களில்லை; அவர்களு
டைய பெலன் உறுதியாயிருக்கிறது. நரர் 5
படும் வருத்தத்தில் அகப்படார்கள்; [18]மனுஷர்
அடையும் உபாதியை அடையார்கள். ஆகை 6
யால் பெருமை சரப்பணியைப்போல் அவர்
களைச் சுற்றிக்கொள்ளும், [19]கொடுமை ஆடை
யைப்போல் அவர்களை மூடிக்கொள்ளும்.
அவர்கள் கண்கள் கொழுப்பினால் எடுப்பாய்ப் 7
பார்க்கிறது; [20]அவர்கள் இருதயம் விரும்புவ
திலும் அதிகமாய் நடந்தேறுகிறது. அவர்கள் 8
சீர்கெட்டுப்போய், அகந்தையாய்க் கொடுமை
பேசுகிறார்கள்; [21]இறுமாப்பாய்ப் பேசுகிறார்
கள். தங்கள் வாய் வானமட்டும் எட்டப் பே 9
சுகிறார்கள்; [22]அவர்கள் நாவு பூமியெங்கும்
உலாவுகிறது. ஆகையால் அவருடைய ஜனங் 10
கள் இந்த வழியாகவே திரும்புகிறார்கள்; தண்
ணீர்கள் அவர்களுக்குப் பரிபூரணமாய்ச் சுரந்
து வரும். தேவனுக்கு அது எப்படித் தெரியும்? 11
[23]உன்னதமானவருக்கு அதைப்பற்றி அறிவு
உண்டோ? என்று சொல்லுகிறார்கள்.
இதோ, இவர்கள் துன்மார்க்கர்; இவர்கள் 12
என்றும் சுகஜீவிகளாயிருந்து, ஆஸ்தியைப்
பெருகப்பண்ணுகிறார்கள். நான் விருதாவா 13
கவே என் இருதயத்தைச் சுத்தம்பண்ணி,
[24]குற்றமில்லாமையிலே என் கைகளைக் கழு
வினேன். நாள்தோறும் நான் வாதிக்கப்பட் 14
டும், காலைதோறும் தண்டிக்கப்பட்டும் இருக்
கிறேன். இவ்விதமாய்ப் பேசுவேன் என்று 15
நான் சொன்னேனானால், இதோ, உம்மு
டைய பிள்ளைகளின் சந்ததிக்குத் துரோகியா
வேன். இதை அறியும்படிக்கு யோசித்துப் 16
பார்த்தேன்; நான் தேவனுடைய பரிசுத்த ஸ்த
லத்துக்குள் பிரவேசித்து, அவர்கள் முடி 17
வைக் கவனித்து உணருமளவும், [25]அது என்
பார்வைக்கு விசனமாயிருந்தது.
நிச்சயமாகவே நீர் அவர்களைச் சறுக்கலான 18
இடங்களில் நிறுத்தி, பாழான இடங்களில்
விழப்பண்ணுகிறீர். அவர்கள் ஒரு நிமிஷத் 19
தில் எவ்வளவு பாழாய்ப்போகிறார்கள்! பயங்
கரங்களால் அழிந்து நிர்மூலமாகிறார்கள். நித் 20
திரை தெளிந்தவுடனே சொப்பனம் ஒழிவது
போல், [26]ஆண்டவரே, நீர் விழிக்கும்போது,
அவர்கள் வேஷத்தை இகழுவீர்.

[1] 1 இரா. 1. 36, 37
[2] ஏசா. 11. 2-4. 32. 1
[3] 85. 10, 11. ஏசா. 32. 17
[4] ஏசா. 11. 4. 51. 12, 13. வெளி. 12. 10.
[5] 2 சாமு. 23. 4 ஓசி. 6. 3
[6] 1 இரா. 4. 20—24. சகரி. 9. 10
[7] ஏசா. 49. 23. மீகா. 7. 17
[8] 2 நாளா. 9. 21. மத். 2. 11
[9] ஏசா. 49. 7, 23
[10] ஏசா. 41. 17. எபி. 7. 25
[11] வெளி. 1. 18
[12] யூதா 25
[13] ஓசி. 14. 5-7
[14] ஆதி. 12. 3. எபே. 4. 2
[15] யாத். 15. 11
[16] எண். 14. 21. ஆப. 2. 14. வெளி. 5. 13
[17] 37. 1
[18] யோபு 21. 9
[19] 109. 18
[20] யோபு 15. 27
[21] யூதா. 16
[22] வெளி. 13. 6
[23] யோபு 22. 13
[24] 26. 7. யோபு 9. 27—31
[25] 37. 38
[26] யோபு 20. 8. ஏசா. 29. 7, 8

21 இப்படியாக என் மனம் கசந்தது, என்
22 உள்ளிந்திரியங்களிலே குத்துண்டேன். நான்
காரியம் அறியாத மூடனுனேன்; [1]உமக்கு
23 முன்பாக மிருகம்போலிருந்தேன். ஆனாலும்
நான் எப்பொழுதும் உம்மோடிருக்கிறேன்;
என் வலது கையைப் பிடித்துத் தாங்குகிறீர்.
24 உம்முடைய ஆலோசனையின்படி நீர் என்னை
நடத்தி, [2]முடிவிலே என்னை மகிமையில்
25 ஏற்றுக்கொள்வீர். பரலோகத்தில் உம்மை
யல்லாமல் எனக்கு யார் உண்டு? பூலோகத்தில்
உம்மைத் தவிர எனக்கு வேறே விருப்ப
26 மில்லை. என் மாம்சமும் என் இருதயமும்
மாண்டுபோகிறது; [3]தேவன் என்றென்றைக்
கும் என் இருதயத்தின் கன்மலையும் என்
பங்குமாயிருக்கிறார்.
27 இதோ, உம்மைவிட்டுத் தூரமாய்ப் போகி
றவர்கள் நாசமடைவார்கள்; உம்மைவிட்டுச்
சோரம்போகிற அனைவரையும் சங்கரிப்பீர்.
28 எனக்கோ, [4]தேவனை அண்டிக்கொண்டிருப்
பதே நலம்; நான் உமது கிரியைகளையெல்
லாம் சொல்லிவரும்படி கர்த்தராகிய ஆண்
டவர்மேல் என் நம்பிக்கையை வைத்திருக்
கிறேன்.

## 74

(மஸ்கீல் என்னும் ஆசாபின் போதக சங்கீதம்.)

தேவனே, நீர் எங்களை என்றென்றைக்
கும் ஏன் தள்ளிவிடுகிறீர்? [5]உமது மேய்ச்ச
லின் ஆடுகள்மேல் உமது கோபம் ஏன் புகைகி
2 றது? நீர் பூர்வகாலத்தில் சம்பாதித்த உமது
சபையையும், [6]நீர் மீட்டுக்கொண்ட உமது
சுதந்தரமான கோத்திரத்தையும், நீர் வாசமா
யிருந்த சீயோன் பர்வதத்தையும் நினைத்தரு
3 ளும். நெடுங்காலமாகப் பாழாய்க் கிடக்கிற
ஸ்தலங்களில் உம்முடைய பாதங்களை எழுந்
தருளப்பண்ணும்; பரிசுத்த ஸ்தலத்திலே சத்
துரு அனைத்தையும் கெடுத்துப்போட்டான்.
4 உம்முடைய சத்துருக்கள் உம்முடைய *ஆல
யங்களுக்குள்ளே கெர்ச்சித்து, தங்கள் கொடி
களை [7]அடையாளங்களாக நாட்டுகிறார்கள்.
5 கோடரிகளை ஓங்கிச் சோலையிலே மரங்களை
6 வெட்டுகிறவன் பேர் பெற்றவனானான். இப்
பொழுதோ அவர்கள் அதின் சித்திரவேலை
கள் முழுவதையும் வாச்சிகளாலும் சம்மட்டிக
7 ளாலும் [8]தகர்த்துப்போடுகிறார்கள். உமது
பரிசுத்த ஸ்தலத்தை அக்கினிக்கு இரையாக்கி,
உமது †நாமத்தின் வாசஸ்தலத்தைத் தரைமட்
8 டும் இடித்து, [9]அசுத்தப்படுத்தினார்கள். அவர்
களை ஏகமாய் நிர்த்தூளியாக்குவோம் என்று
தங்கள் இருதயத்தில் சொல்லி, தேசத்திலுள்ள
ஆலயங்களையெல்லாம் சுட்டெரித்துப்போட்
9 டார்கள். எங்களுக்கு இருந்த அடையாளங்
களைக் காணோம்; தீர்க்கதரிசியும் இல்லை;
[10]இது எதுவரைக்கும் என்று அறிகிறவனும்
எங்களிடத்தில் இல்லை.
10 தேவனே, எதுவரைக்கும் சத்துரு நிந்திப்
பான்? பகைவன் உமது நாமத்தை எப்பொழு
11 தும் தூஷிப்பானோ? உமது வலதுகரத்தை
ஏன் முடக்கிக்கொள்ளுகிறீர்; அதை உமது
மடியிலிருந்து எடுத்து ஓங்கி நிர்மூலமாக்கும்.
பூமியின் நடுவில் ரட்சிப்புகளைச் செய்துவரு 12
கிற தேவன் பூர்வகாலமுதல் என்னுடைய
[11]ராஜா.
தேவரீர் உமது வல்லமையினால் சமுத்திரத் 13
தை இரண்டாகப் பிளந்து, [12]ஜலத்திலுள்ள
வலுசர்ப்பங்களின் தலைகளை உடைத்தீர். தேவ 14
ரீர் முதலைகளின் தலைகளை நருக்கிப்போட்டு,
[13]அதை வனாந்தரத்து ஜனங்களுக்கு உணவா
கக் கொடுத்தீர். ஊற்றையும் ஆற்றையும் பிள 15
ந்துவிட்டீர்; [14]மகா நதிகளையும் வற்றிப்போ
கப்பண்ணினீர். பகலும் உம்முடையது, இர 16
வும் உம்முடையது; [15]தேவரீர் ஒளியையும்
சூரியனையும் படைத்தீர். பூமியின் எல்லைகளை 17
யெல்லாம் திட்டம்பண்ணினீர்; [16]கோடை
காலத்தையும் மாரிகாலத்தையும் உண்டாக்கி
னீர்.
கர்த்தாவே, சத்துரு உம்மை நிந்தித்தமை 18
யும், [17]மதியீன ஜனங்கள் உமது நாமத்தைத்
தூஷித்ததையும் நினைத்துக்கொள்ளும். உமது 19
காட்டுப்புறாவின் ஆத்துமாவைத் [18]துஷ்ட
ருடைய கூட்டத்திற்கு ஒப்புக்கொடாதேயும்;
உமது ஏழைகளின் கூட்டத்தை என்றைக்
கும் மறவாதேயும். உம்முடைய உடன் 20
படிக்கையை [19]நினைத்தருளும்; பூமியின் இரு
ளான இடங்கள் கொடுமையுள்ள குடியிருப்பு
களால் நிறைந்திருக்கிறதே. துன்பப்பட்ட 21
வன் வெட்கத்தோடே திரும்பவிடாதிரும்;
சிறுமையும் எளிமையுமானவன் உமது நாமத்
தைத் துதிக்கும்படி செய்யும். தேவனே, 22
எழுந்தருளும், உமக்காக நீரே வழக்காடும்;
மதியீனனாலே நாடோறும் உமக்கு வரும் நிந்
தையை நினைத்துக்கொள்ளும். உம்முடைய 23
சத்துருக்களின் ஆரவாரத்தை மறவாதேயும்;
உமக்கு விரோதமாய் எழும்புகிறவர்களின்
அமளி எப்பொழுதும் அதிகரிக்கிறது.

## 75

(அல்தஷ்கேத் என்னும் வாத்தியத்தில் வாசிக்கும்படி
ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட ஆசாபின் சங்கீத
மாகிய பாட்டு.)

உம்மைத் துதிக்கிறோம், தேவனே, உம்
மைத் துதிக்கிறோம்; உமது நாமம் ‡சமீபமா
யிருக்கிறதென்று உமது அதிசயமான கிரியை
கள் அறிவிக்கிறது. நியமிக்கப்பட்ட காலத் 2
திலே, [20]யதார்த்தமாய் நியாயந்தீர்ப்பேன். பூமி 3
யானது அதின் எல்லாக் குடிகளோடும் கரை
ந்துபோகிறது; அதின் தூண்களை நான் நிலை
நிறுத்துகிறேன். (சேலா.)
வீம்புக்காரரை நோக்கி, வீம்பு பேசாதேயுங் 4
கள் என்றும்; துன்மார்க்கரை நோக்கி, [21]கொம்
பை உயர்த்தாதிருங்கள் என்றும் சொன்னேன்.
உங்கள் கொம்பை உயரமாய் உயர்த்தாதிருங் 5
கள்; இறுமாப்புள்ள கழுத்துடையவர்களாய்ப்
பேசாதிருங்கள். கிழக்கிலும் மேற்கிலும் வனாந் 6
தரதிசையிலுமிருந்து ஜெயம் வராது. தேவ 7
னே நியாயாதிபதி; [22]ஒருவனைத் தாழ்த்தி, ஒரு
வனை உயர்த்துகிறார். கலங்கிப் பொங்குகிற 8
மதுபானத்தினால் நிறைந்த பாத்திரம் கர்த்தரு

1 நீதி. 30. 2
2 48. 15. ஏசா. 58. 8
3 யோபு 19. 25–27. புல. 3. 24
4 1 கொ. 6. 17. எபி. 10. 22
5 எரே. 31. 37
6 யாத். 15. 16
* சபைகளுக்குள். புல. 2. 7
7 தானி. 6. 27
8 1 இரா. 6. 18 ழ
† நாமம் விளங்கிய. உபா. 12. 5
9 2 இரா. 25 9
10 1 சாமு. 3. 1. ஆமோ. 8. 11
11 44. 4
12 யாத். 14. 21. ஏசா. 51. 9, 10. எசே. 29. 3
13 எண். 14. 9
14 யாத். 17. 5, 6 யோசு. 3. 13. ழ
15 ஆதி. 1. 14. ழ
16 அப். 17. 26
17 94. 7, 8. வெளி. 16. 19
18 68. 13. உன்ன. 2. 14
19 ஆதி. 17. 7, 8. லேவி. 26. 45 எரே. 33. 20, 21 எபி. 8. 10
‡ பிரசித்தமாய்.
20 2 சாமு. 23. 3, 4
21 சகரி. 1. 21
22 1 சாமு. 2. 7, 8. தானி. 2. 21

டைய கையிலிருக்கிறது; [1]அதிலிருந்து வார்க்
கிறார்; பூமியிலுள்ள துன்மார்க்கர் யாவரும்
அதின் வண்டல்களை உறிஞ்சிக் குடிப்பார்
9 கள். நானோ என்றென்றைக்கும் இதை அறி
வித்து, யாக்கோபின் தேவனைக் கீர்த்தனம்
10 பண்ணுவேன். துன்மார்க்கருடைய [2]கொம்
புகளையெல்லாம் வெட்டிப்போடுவேன்; நீதி
மானுடைய கொம்புகளோ உயர்த்தப்படும்.

## 76

(நெகிநோத்தென்னும் வாத்தியத்தில் வாசிக்க ராகத்தலை
வனுக்கு ஒப்புவிக்கப்பட்ட ஆசாபின் சங்கீதமாகிய
பாட்டு.)

யூதாவில் தேவன் அறியப்பட்டவர்; [3]இஸ்ர
2 வேலில் அவருடைய நாமம் பெரியது. சா
லேமில் [4]அவருடைய கூடாரமும், சீயோனில்
3 அவருடைய வாசஸ்தலமும் இருக்கிறது. அங்
கேயிருந்து வில்லின் அம்புகளையும், [5]கேடகத்
தையும், பட்டயத்தையும், யுத்தத்தையும் முறித்
தார். (சேலா.)
4 மகத்துவமுள்ளவரே, கொள்ளையுள்ள [6]பர்
வதங்களைப்பார்க்கிலும் நீர் பிரகாசமுள்ளவர்.
5 தைரிய நெஞ்சுள்ளவர்கள் கொள்ளையிடப்பட்
டு, நித்திரையடைந்து அசந்தார்கள்; [7]வல்ல
மையுள்ள எல்லா மனுஷருடைய கைகளும்
6 அவர்களுக்கு உதவாமற்போயிற்று. யாக்கோ
பின் தேவனே, உம்முடைய கண்டிதத்தினால்
இரதங்களும் குதிரைகளும் [8]உறங்கிவிழுந்தது.
7 நீர், நீரே, *பயங்கரமானவர்; உமது கோ
பம் மூளும்போது உமக்கு முன்பாக நிற்பவன்
8 யார்? நியாயம் விசாரிக்கவும் பூமியில் சிறு
மைப்பட்டவர்கள் யாவரையும் ரட்சிக்கவும்,
9 தேவரீர் எழுந்தருளினபோது, வானத்திலி
ருந்து நியாயத்தீர்ப்புக் கேட்கப்பண்ணினீர்;
[9]பூமி பயந்து அமர்ந்தது. (சேலா.)
10 மனுஷனுடைய கோபம் உமது மகிமையை
விளங்கப்பண்ணும்; மிஞ்சுங்கோபத்தை நீர்
11 அடக்குவீர். பொருத்தனைபண்ணி [10]அதை
உங்கள் தேவனாகிய கர்த்தருக்கு நிறைவேற்
றுங்கள்; [11]அவரைச் சூழ்ந்திருக்கிற அனைவ
ரும் பயங்கரமானவருக்குக் காணிக்கைகளைக்
12 கொண்டுவரக்கடவர்கள். பிரபுக்களின் ஆவி
யை அடக்குவார்; [12]பூமியின் ராஜாக்களுக்கு
அவர் பயங்கரமானவர்.

## 77

(எதுதூன் என்னும் ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்
கப்பட்ட ஆசாபின் சங்கீதம்.)

நான் தேவனை நோக்கி என் சத்தத்தை
உயர்த்திக் கெஞ்சினேன், என் சத்தத்தைதேவ
னிடத்தில் உயர்த்தினேன், [13]அவர் எனக்குச்
2 செவிகொடுத்தார். என் ஆபத்துநாளில் ஆண்
டவரைத் தேடினேன்; இரவிலும் என் கை
தளராமல் விரிக்கப்பட்டிருந்தது; [14]என் ஆத்து
3 மா ஆறுதலடையாமற்போயிற்று. நான் தே
வனை நினைத்தபோது அலறினேன்; [15]நான்
தியானிக்கும்போது என் ஆவி தொய்ந்து
போயிற்று. (சேலா.)
4 நான் தூங்காதபடி என் கண்ணிமைகளைப்
பிடித்திருக்கிறீர்; நான்பேசமாட்டாதபடி சஞ்
5 சலப்படுகிறேன். பூர்வநாட்களையும், [16]ஆதி
காலத்து வருஷங்களையும்சிந்திக்கிறேன். இரா 6
க்காலத்தில் என் சங்கீதத்தை நான் நினைத்து,
[17]என் இருதயத்தோடே சம்பாஷித்துக்கொள்
ளுகிறேன்; என் ஆவி ஆராய்ச்சிசெய்தது.
ஆண்டவர் நித்தியகாலமாய்த் தள்ளிவிடுவா 7
ரோ? [18]இனி ஒருபோதும் தயை செய்யாதிருப்
பாரோ? அவருடைய கிருபை முற்றிலும் 8
அற்றுப்போயிற்றோ? [19]வாக்குத்தத்தமானது
தலைமுறை தலைமுறைக்கும் ஒழிந்துபோயிற்
றோ? தேவன் இரக்கஞ்செய்ய மறந்தாரோ? 9
[20]கோபத்தினாலே தமது உருக்கமான இரக்கங்
களை அடைத்துக்கொண்டாரோ? என்றேன்.
(சேலா.) அப்பொழுது நான்: [21]இது என் 10
பலவீனம்; ஆனாலும் உன்னதமானவருடைய
வலதுகரத்திலுள்ள வருஷங்களை நினைவுகூரு
வேன். கர்த்தருடைய செயல்களை நினைவு 11
கூருவேன்; [22]உம்முடைய பூர்வகாலத்து அதி
சயங்களையே நினைவுகூருவேன்; உம்முடைய 12
கிரியைகளையெல்லாம் தியானித்து, உம்மு
டைய செயல்களை யோசிப்பேன் என்றேன்.
தேவனே, உமது வழி பரிசுத்தஸ்தலத்திலுள் 13
ளது; [23]நம்முடைய தேவனைப்போலப் பெ
ரிய தேவன் யார்? அதிசயங்களைச் செய்கிற 14
தேவன் நீரே; ஜனங்களுக்குள்ளே உம்மு
டைய வல்லமையை விளங்கப்பண்ணினீர்.
யாக்கோபு யோசேப்பு என்பவர்களின் புத்திர 15
ராகிய உம்முடைய ஜனங்களை, [24]உமது புயத்
தினாலே மீட்டுக்கொண்டீர். (சேலா.)
ஜலங்கள் உம்மைக் கண்டது; [25]தேவனே, 16
ஜலங்கள் உம்மைக் கண்டு தத்தளித்தது; ஆழங்
களும் கலங்கினது. மேகங்கள் ஜலங்களைப் 17
பொழிந்தது; ஆகாயமண்டலங்கள் முழக்க
மிட்டது; உம்முடைய அம்புகளும் தெறிப்
புண்டு பறந்தது. உம்முடைய குமுறலின் 18
சத்தம் சுழல்காற்றில் முழங்கினது; [26]மின்னல்
கள் பூச்சக்கரத்தைப் பிரகாசிப்பித்தது; பூமி
குலுங்கி அதிர்ந்தது.
உமது வழி கடலிலும், உமது பாதைகள் 19
திரண்ட தண்ணீர்களிலும் இருந்தது; உமது
காலடிகள் தெரியப்படாமற்போயிற்று. மோ 20
சே ஆரோன் என்பவர்களின் கையால், [27]உம
து ஜனங்களை ஒரு ஆட்டுமந்தையைப்போல
வழி நடத்தினீர்.

## 78

(ஆசாப் எழுதின மஸ்கீல் என்னும் போதக
சங்கீதம்.)

என் ஜனங்களே, என் உபதேசத்தைக் கே
ளுங்கள்; [28]என் வாயின் வசனங்களுக்கு உங்
கள் செவிகளைச் சாயுங்கள். என் வாயை 2
உவமைகளால் திறப்பேன்; [29]பூர்வகாலத்து
மறைபொருள்களை வெளிப்படுத்துவேன்.
அவைகளை நாங்கள் கேள்விப்பட்டு அறிந் 3
தோம்; எங்கள் பிதாக்கள் அவைகளை எங்களுக்
குத்தெரிவித்தார்கள். பின்வரும் சந்ததியான 4
பிள்ளைகளுக்கு நாங்கள் அவைகளை மறைக்கா
மல், [30]கர்த்தரின் துதிகளையும், அவருடைய
பலத்தையும், அவர் செய்த அவருடைய அதி
சயங்களையும் விவரிப்போம்.

1 வெளி. 14 9, 10
2 101. 8
3 48. 1. ஆ. உபா. 4. 7, 8
4 132. 13
5 எசே. 37. 35, 36
6 எசே. 38. 12, 13
7 ஏசா. 46. 12. எரே. 51. 39
8 சகரி. 12. 4
* பயப்படத்தக்கவர். எரே. 10. 7. நாகூ. 1. 6
9 யாத். 19. 10. ஆ
10 யாத். 9. 16. தானி. 3 19, 28
11 பிர. 5. 4–6
12 2. 5, 10
13 3 4
14 ஏசா. 26. 9, 16
15 143. 4, 5. புல. 3. 17. ஆ
16 உபா. 32. 7. ஏசா. 63 11
17 42 8. புல. 3 40
18 74. 1
19 ரோ. 9. 6
20 ஏசா. 49. 15
21 31. 22
22 143. 5
23 68. 24. யாத். 15. 11. ஆ
24 யாத். 6, 6. உபா. 9. 29
25 ஆப. 3. 8. ஆ
26 2 சாமு. 22. 14
27 ஏசா. 63 11
28 ஏசா. 57. 4
29 மத். 13 13, 35
30 யாத். 13 8, 14

5 அவர் யாக்கோபிலே சாட்சியை ஏற்படுத்தி,
இஸ்ரவேலிலே வேதத்தை ஸ்தாபித்து,
[1]அவைகளைத் தங்கள் பிள்ளைகளுக்கு அறி
விக்கும்படி நம்முடைய பிதாக்களுக்குக் கட்ட
6 ளையிட்டார். இனிப் பிறக்கும் பிள்ளைகளா
கிய பின் சந்ததியார் அதை அறிந்துகொண்டு,
[2]அவர்கள் எழும்பித் தங்கள் பிள்ளைகளுக்கு
7 அவைகளைச் சொல்லும்படிக்கும்; தேவன்
மேல் அவர்கள் தங்கள் நம்பிக்கையை வைத்து,
தேவனுடைய செயல்களை மறவாமல், அவர்
8 கற்பனைகளைக் கைக்கொள்ளும்படிக்கும்; இரு
தயத்தைச் செவ்வைப்படுத்தாமலும், தேவனை
உறுதியாய்ப் பற்றிக்கொள்ளாமலும் இருந்த
முரட்டாட்டமும் கலகமுமுள்ள [3]சந்ததியா
கிய தங்கள் பிதாக்களுக்கு அவர்கள் ஒப்பாகாத
படிக்கும், இவைகளைக் கட்டளையிட்டார்.
9 ஆயுதமணிந்த வில்வீரரான எப்பிராயீம் புத்
திரர் யுத்தநாளிலே [4]முதுகு காட்டினார்கள்.
10 அவர்கள் தேவனுடைய உடன்படிக்கையைக்
கைக்கொள்ளாமலும், [5]அவருடைய கட்டளைக
11 ளின்படி நடக்கச் சம்மதியாமலும், அவரு
டைய செயல்களையும், [6]அவர் தங்களுக்குக்
காண்பித்த அதிசயங்களையும் மறந்தார்கள்.
12 அவர்களுடைய பிதாக்களுக்கு முன்பாக,
[7]எகிப்துதேசத்துச் சோவான் வெளி
யிலே, அவர் அதிசயமானவைகளைச் செய்
13 தார். கடலைப் பிளந்து, [8]அவர்களைக் கடக்
கப்பண்ணி, ஜலத்தைக் குவியலாக நிற்கும்
14 படி செய்தார். பகலிலே மேகத்தினாலும்,
[9]இராமுழுதும் அக்கினி வெளிச்சத்தினாலும்
15 அவர்களை வழிநடத்தினார். வனாந்தரத்திலே
கன்மலைகளைப் பிளந்து, [10]மகா ஆழங்களிலிரு
ந்து தண்ணீரை அவர்களுக்குக் குடிக்கக் கொ
16 டுத்தார். கன்மலையிலிருந்து நீரோட்டங்களைப்
புறப்படப்பண்ணி, [11]தண்ணீரை நதிபோல
ஓடிவரும்படி செய்தார்.
17 என்றாலும், அவர்கள் பின்னும் அவருக்கு
விரோதமாய்ப் பாவஞ்செய்து, [12]வறண்ட வெ
ளியிலே உன்னதமானவருக்குக் கோபம் மூட்
18 டினார்கள். தங்கள் இச்சைக்கேற்ற போஜ
னத்தைக் கேட்டு, [13]தங்கள் இருதயத்தில் தேவ
19 னைப் பரீட்சைபார்த்தார்கள். அவர்கள் தேவ
னுக்கு விரோதமாய்ப் பேசி: [14]தேவன் வனாந்
தரத்திலே போஜனபந்தியை ஆயத்தப்படுத்தக்
20 கூடுமோ? இதோ, அவர் கன்மலையை அடித்
ததினால் தண்ணீர் புறப்பட்டு, நதிகளாய்ப்
புரண்டுவந்தது; அவர் அப்பத்தையும் கொடுக்
கக்கூடுமோ? தம்முடைய ஜனத்திற்கு மாம்
சத்தையும் ஆயத்தப்படுத்துவாரோ? என்றார்
21 கள். ஆகையால் கர்த்தர் அதைக் கேட்டுக்
[15]கோபங்கொண்டார்; அவர்கள் தேவனை விசு
வாசியாமலும், [16]அவருடைய ரட்சிப்பை நம்
22 பாமலும் போனதினால், யாக்கோபுக்கு விரோ
தமாய் அக்கினி பற்றியெரிந்தது; இஸ்ரவே
லுக்கு விரோதமாய்க் கோபம் மூண்டது.
23 அவர் உயரத்திலுள்ள மேகங்களுக்குக் கட்
டளையிட்டு, வானத்தின் கதவுகளைத் திறந்து,

மன்னாவை அவர்களுக்கு ஆகாரமாக வரு 24
ஷிக்கப்பண்ணி, [17]வானத்தின் தானியத்தை
அவர்களுக்குக் கொடுத்தார். தூதர்களின் அப் 25
பத்தை மனுஷன் சாப்பிட்டான்; அவர்க
ளுக்கு ஆகாரத்தைப் பூரணமாய் அனுப்பி
னார். ஆகாசத்திலே கீழ்காற்றை வரப்பண்ணி, 26
தம்முடைய வல்லமையினால் தென்றலையும்
வீசச்செய்து, மாம்சத்தைத் தூளத்தனையா 27
யும், [18]சிறகுள்ள பறவைகளைக் கடற்கரை
மணலத்தனையாயும் வருஷிக்கப்பண்ணி,
அவைகளை அவர்கள் பாளயத்தின் நடுவிலும், 28
அவர்கள் கூடாரங்களைச் சுற்றிலும் இறங்கப்
பண்ணினார். அவர்கள் புசித்துத் திருப்தி 29
யடைந்தார்கள். [19]அவர்கள் இச்சித்ததை அவர்
களுக்குக் கொடுத்தார். அவர்கள் தங்கள் இச் 30
சையை வெறுக்கவில்லை; அவர்களுடைய
போஜனம் அவர்கள் வாயில் இருக்கும்போ
தே, தேவ கோபம் அவர்கள்மேல் எழும்பி, 31
அவர்களில் கொழுத்தவர்களைச் சங்கரித்து,
இஸ்ரவேலில் விசேஷித்தவர்களை மடியப்
பண்ணிற்று. இவையெல்லாம் நடந்தும், 32
அவர் செய்த அதிசயங்களை அவர்கள் நம்பா
மல், பின்னும் பாவஞ்செய்தார்கள். ஆதலால் 33
அவர்கள் நாட்களை விருதாவிலும், [20]அவர்கள்
வருஷங்களைப் பயங்கரத்திலும் கழியப்பண்
ணினார்.
அவர்களை அவர் கொல்லும்போது, [21]அவ 34
ரைக்குறித்து விசாரித்து, அவர்கள் திரும்பி
வந்து தேவனை அதிகாலமே தேடி; தேவன் 35
தங்கள் கன்மலையென்றும், [22]உன்னதமான
தேவன் தங்கள் மீட்பர் என்றும், நினைவு
கூர்ந்தார்கள். ஆனாலும் அவர்கள் தங்கள் வாயி 36
னால் அவருக்கு [23]இச்சகம்பேசி, தங்கள் நாவி
னால் அவரிடத்தில் பொய்சொன்னார்கள்.
அவர்கள் இருதயம் அவரிடத்தில் நிலைவரப் 37
படவில்லை; அவருடைய உடன்படிக்கையில்
அவர்கள் உண்மையாயிருக்கவில்லை. அவரோ 38
அவர்களை அழிக்காமல், [24]இரக்கமுள்ளவராய்
அவர்கள் அக்கிரமத்தை மன்னித்தார்; அவர்
தமது உக்கிரம் முழுவதையும் எழுப்பாமல்,
அநேகந்தரம் தமது கோபத்தை விலக்கிவிட்
டார். அவர்கள் மாம்சமென்றும், [25]திரும்பி 39
வாராமல் அகலுகிற காற்றென்றும் நினைவு
கூர்ந்தார்.
எத்தனைதரமோ வனாந்தரத்திலே அவருக் 40
குக் கோபம் மூட்டி, [26]அவாந்தர வெளியிலே
அவரை விசனப்படுத்தினார்கள். அவர்கள் 41
திரும்பி தேவனைப் பரீட்சைபார்த்து, [27]இஸ்ர
வேலின் பரிசுத்தரை மட்டுப்படுத்தினார்கள்.
அவருடைய கரத்தையும், அவர் தங்களைச் 42
சத்துருவுக்கு விலக்கி மீட்ட நாளையும் நினை
யாமற்போனார்கள். அவர் எகிப்திலே தம்மு 43
டைய அடையாளங்களையும், சோவான் வெ
ளியிலே தம்முடைய அற்புதங்களையும் செய்
தார். அவர்களுடைய நதிகளை இரத்தமாக 44
மாற்றி, [28]அவர்களுடைய ஆறுகளிலுள்ள
ஜலத்தைக் குடிக்கக்கூடாதபடி செய்தார்.

[1] உபா. 6, 7: 11. 19
[2] 102. 18
[3] எசே. 2. 3-8
[4] உபா. 1. 41-44
[5] 2 இரா. 17. 15
[6] 106. 13
[7] யாத். 7,12. அபி. எசா. 19. 11,13
[8] யாத். 14. 21: 15. 8
[9] யாத். 13. 21
[10] யாத் 17. 6. எண். 20. 11. 1 கொ. 10. 3, 4
[11] 105. 41
[12] உபா. 9. 22. எபி. 3. 16-19
[13] யாத். 16. 2. ழ
[14] எண். 11. 4
[15] எண். 11. 1 ழ
[16] எபி. 3. 18
[17] யாத். 16. 4, 14. யோ. 6. 31. 1 கொ. 10. 3
[18] எண். 11. 18. ழ
[19] 106. 15
[20] எண். 14. 16, 17. அபி.
[21] ஏசா. 26. 16. ஓசி. 5. 15
[22] உபா. 32. 4, 15
[23] உபா. 5. 28, 29
[24] எண். 14. 18, 20. ஏசா. 48. 9.
[25] 103. 14. யாக். 4. 14
[26] 95. 8, 10. எபி. 3. 16, 17
[27] எண். 14. 22. உபா. 6. 16
[28] யாத். 7. 20

45 அவர்களை அழிக்கும்படி வண்டு ஜாதிகளை
யும், [1]அவர்களைக் கெடுக்கும்படி தவளைகளை
46 யும் அவர்களுக்குள்ளே அனுப்பினார். அவர்
களுடைய விளைச்சலைப் புழுக்களுக்கும்,
[2]அவர்களுடைய பிரயாசத்தின் பலனை வெட்
47 டுக்கிளிகளுக்கும் கொடுத்தார். கல்மழையி
னால் அவர்களுடைய திராட்சச்செடிகளையும்,
[3]ஆலாங்கட்டியினால் அவர்களுடைய அத்தி
48 மரங்களையும் அழித்து, அவர்களுடைய மிருக
ஜீவன்களைக் கல்மழைக்கும், அவர்களுடைய
ஆடுமாடுகளை இடிகளுக்கும் ஒப்புக்கொடுத்
49 தார். தமது உக்கிரமான கோபத்தையும்,
மூர்க்கத்தையும், சினத்தையும், உபத்திரவத்
தையும், தீங்குசெய்யும் தூதர்களையும் அவர்க
50 ளுக்குள்ளே அனுப்பினார். அவர் தம்முடைய
கோபத்துக்கு வழிதிறந்து, அவர்கள் ஆத்து
மாவை மரணத்துக்கு விலக்கிக் காவாமல்,
அவர்கள் ஜீவனைக் கொள்ளைநோய்க்கு ஒப்
51 புக்கொடுத்தார். எகிப்திலே தலைச்சன்கள்
அனைத்தையும், [4]காமின் கூடாரங்களிலே
அவர்களுடைய பெலனில் முதற்பலனான யா
52 வரையும் அழித்து; தம்முடைய ஜனங்களை
ஆடுகளைப்போல் புறப்படப்பண்ணி, அவர்
களை வனாந்தரத்திலே மந்தையைப்போல் கூட்
53 டிக்கொண்டுபோய்; அவர்கள் பயப்படாத
படிக்கு அவர்களைப் பத்திரமாய் வழிநடத்தி
னார்; [5]அவர்கள் சத்துருக்களைக் கடல் மூடிப்
54 போட்டது. அவர்களைத் தமது பரிசுத்த ஸ்த
லத்தின் எல்லைவரைக்கும், தமது வலதுகரம்
சம்பாதித்த இந்தப் பர்வதமட்டுக்கும் அழைத்
55 துக்கொண்டுவந்து, அவர்கள் முகத்திற்கு
முன்பாக ஜாதிகளைத் துரத்திவிட்டு, தேசத்
தை நூல்போட்டுப் பங்கிட்டு, [6]அவர்களுடைய
கூடாரங்களில் இஸ்ரவேலின் கோத்திரங்க
ளைக் குடியேற்றினார்.
56 ஆனாலும் அவர்கள் உன்னதமான தேவ
னைப் பரீட்சை பார்த்து, அவருக்குக் கோபம்
மூட்டி, அவருடைய சாட்சிகளைக் கைக்
57 கொள்ளாமற்போய், தங்கள் பிதாக்களைப்
போல வழிவிலகி, துரோகம்பண்ணி, மோ
58 சம்போக்கும் வில்லைப்போல் துவண்டு, தங்
கள் மேடைகளினால் அவருக்குக் கோபம்
மூட்டி, [7]தங்கள் விக்கிரகங்களினால் எரிச்சல்
உண்டாக்கினார்கள்.
59 தேவன் அதைக் கேட்டு உக்கிரமாகி, இஸ்
60 ரவேலை மிகவும் வெறுத்து, தாம் மனுஷருக்
குள்ளே போட்ட கூடாரமாகிய சீலோவி
61 லுள்ள வாசஸ்தலத்தை [8]விட்டு விலகி, தமது
பலத்தைச் சிறையிருப்புக்கும், தமது மகிமை
யைச் சத்துருவின் கைக்கும் ஒப்புக்கொடுத்து,
62 தமது ஜனத்தைப் பட்டயத்துக்கு இரையாக்கி,
[9]தமது சுதந்தரத்தின்மேல் கோபங்கொண்டார்.
63 அவர்கள் வாலிபரை அக்கினி பட்சித்தது,
[10]அவர்கள் கன்னியாஸ்திரீகள் வாழ்க்கைப்
64 படாதிருந்தார்கள். அவர்களுடைய ஆசாரி
யர்கள் பட்டயத்தால் விழுந்தார்கள், [11]அவர்க
ளுடைய விதவைகள் அழவில்லை.

[1] யாத். 8. 6, 24
[2] யாத். 10. 13
[3] யாத். 9. 23-25
[4] யாத். 12. 29
[5] யாத். 14, 15. அதி.
[6] யோசு. 19. 51
[7] உபா. 2. 12, 20
[8] யோசு. 1. 5. 1 சாமு. 5. 10, 16
[9] 1 சாமு. 4 3-11
[10] எரே. 7. 34
[11] 1 சாமு. 4. 11
[12] 7. 6
[13] 1 சாமு. 5, 6-12
[14] ஆதி. 49. 10
[15] 87. 2
[16] 2 சாமு. 7. 8
[17] ஏசா. 40. 11
[18] 1 இரா. 9. 4
[19] புல. 1. 10
[20] 74. 2-7. 2 இரா. 25. 9, 11. மீகா. 3. 12
[21] எரே. 16. 4 34 20
[22] உபா. 28. 37
[23] செப். 1. 18
[24] எரே. 10. 25. வெளி. 14. 1
[25] 130. 3. ஏசா. 64. 9
[26] உபா. 28. 43

அப்பொழுது ஆண்டவர் நித்திரை தெளிந் 65
தவனைப்போலவும், [12]திராட்சரசத்தால் கெம்
பீரிக்கிற பராக்கிரமசாலியைப்போலவும் விழி
த்து, தம்முடைய சத்துருக்களைப் பின்புற 66
மாக அடித்து, [13]அவர்களுக்கு நித்திய நிந்
தையை வரப்பண்ணினார். அவர் யோசேப் 67
பின் கூடாரத்தைப் புறக்கணித்தார்; எப்பிரா
யீம் கோத்திரத்தை அவர் தெரிந்துகொள்ளா
மல், யூதா கோத்திரத்தையும் [14]தமக்குப் பிரிய 68
மான சீயோன் [15]பர்வதத்தையும் தெரிந்து
கொண்டார். தம்முடைய பரிசுத்த ஸ்தலத்தை 69
மலைகளைப்போலவும், என்றைக்கும் நிற்கும்படி
தாம் அஸ்திபாரப்படுத்தின பூமியைப்போல
வும் கட்டினார். தம்முடைய தாசனாகிய தாவீ 70
தைத் தெரிந்துகொண்டு, [16]ஆட்டுத்தொழுவங்
களிலிருந்து அவனை எடுத்தார். கறவலாடு 71
களின் பின்னாகத் திரிந்த அவனை, தம்மு
டைய ஜனமாகிய யாக்கோபையும் [17]தம்மு
டைய சுதந்தரமாகிய இஸ்ரவேலையும் மேய்ப்
பதற்காக, அழைத்துக்கொண்டுவந்தார். இவன் 72
அவர்களைத் தன் இருதயத்தின் உண்மையின்
படியே மேய்த்து, [18]தன் கைகளின் திறமை
யினால் அவர்களை நடத்தினான்.

## 79

(ஆசாபின் சங்கீதம்.)

தேவனே, புறஜாதியார் உமது சுதந்தரத்
தில் வந்து, [19]உமது பரிசுத்த ஆலயத்தைத் தீட்
டுப்படுத்தி, [20]எருசலேமை மண்மேடுகளாக்கி
னார்கள். உமது ஊழியக்காரரின் பிரேதங் 2
களை ஆகாயத்துப் பறவைகளுக்கும், உமது
பரிசுத்தவான்களின் மாம்சத்தைப் பூமியின்
மிருகங்களுக்கும் இரையாகக் கொடுத்தார்கள்.
எருசலேமைச் சுற்றிலும் அவர்களுடைய 3
இரத்தத்தைத் தண்ணீரைப்போலச் சிந்தினார்
கள்; [21]அவர்களை அடக்கம்பண்ணுவாருமில்லை.
எங்கள் அயலாருக்கு நிந்தையும், [22]எங்கள் சுற் 4
றுப்புறத்தாருக்குப் பரியாசமும் சக்கந்தமுமா
னோம். எதுவரைக்கும் கர்த்தாவே! நீர் என் 5
றைக்கும் கோபமாயிருப்பீரோ? உம்முடைய
எரிச்சல் [23]அக்கினியைப்போல் எரியுமோ?
உம்மை அறியாத ஜாதிகள்மேலும், உமது நா 6
மத்தைத் தொழுதுகொள்ளாத ராஜ்யங்கள்மே
லும், [24]உம்முடைய உக்கிரத்தை ஊற்றிவிடும்.
அவர்கள் யாக்கோபைப் பட்சித்து, அவன் 7
குடியிருப்பைப் பாழாக்கினார்களே.
பூர்வகாலத்து அக்கிரமங்களை [25]எங்களுக்கு 8
விரோதமாக நினையாதேயும், உம்முடைய
இரக்கங்கள் சீக்கிரமாய் எங்களுக்கு நேரிடுவ
தாக; நாங்கள் மிகவும் [26]தாழ்த்தப்பட்டுப்போ
னோம். எங்களை ரட்சிக்கும் தேவனே, நீர் 9
உமது நாமத்தின் மகிமையினிமித்தம் எங்களு
க்கு உதவிசெய்து, உமது நாமத்தினிமித்தம்
எங்களை விடுவித்து, எங்கள் பாவங்களை நிவிர்
த்தியாக்கும். அவர்களுடைய தேவன் எங்கே 10
என்று புறஜாதிகள் சொல்வானேன்? உமது
ஊழியக்காரருடைய சிந்துண்ட இரத்தத்தின்
பழிவாங்குதல் ஜாதிகளுக்குள்ளே எங்கள்
கண்களுக்கு முன்பாக விளங்கும்படி செய்யும்.

11 கட்டுண்டவனுடையபெருமூச்சுஉமக்குமுன்
பாக வரட்டும்; [1]கொலைக்கு நியமிக்கப்பட்ட
வர்களை உமது புயபலத்தினால் உயிரோடே
12 காத்தருளும். ஆண்டவரே, எங்கள் அய
லார் உம்மை நிந்தித்த நிந்தையை, [2]ஏழத்தனை
யாக அவர்கள் மடியிலே திரும்பப்பண்ணும்.
13 அப்பொழுது, உம்முடைய ஜனங்களும் உம்
முடைய மேய்ச்சலின் ஆடுகளுமாகிய நாங்கள்
உம்மை என்றென்றைக்கும் புகழுவோம்;
[3]தலைமுறை தலைமுறையாக உமது துதியைச்
சொல்லிவருவோம்.

## 80

(சாட்சி விளங்கும்படி சோஷானீம் ஏதேத் என்னும்
வாத்தியத்தில் வாசிக்க ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்
கப்பட்ட ஆசாபின் சங்கீதம்.)

இஸ்ரவேலின் மேய்ப்பரே, யோசேப்பை
ஆட்டுமந்தையைப்போல் நடத்துகிறவரே, செ
விகொடும்; [4]கேருபீன்கள் மத்தியில் வாசம்
2 பண்ணுகிறவரே, பிரகாசியும். எப்பிராயீம்
பென்யமீன் மனாசே என்பவர்களுக்கு முன்
பாக, [5]நீர் உமது வல்லமையை எழுப்பி, எங்
3 களை ரட்சிக்கவந்தருளும். தேவனே, எங்
களைத் திருப்பிக்கொண்டு வாரும், [6]உமது
முகத்தைப் பிரகாசிக்கப்பண்ணும், அப்பொ
ழுது ரட்சிக்கப்படுவோம்.
4 சேனைகளின் தேவனாகிய **கர்த்தாவே**,
உமது ஜனத்தின் விண்ணப்பத்துக்கு விரோத
மாய் நீர் எதுவரைக்கும் கோபங்கொள்வீர்.
5 கண்ணீராகிய அப்பத்தை அவர்களுக்குப்போ
ஜனமாகவும், [7]மிகுதியான கண்ணீரையே
6 அவர்களுக்குப் பானமாகவும் கொடுத்தீர். எங்
கள் அயலாருக்கு எங்களை வழக்காக வைக்கி
றீர்; [8]எங்கள சத்துருக்கள் எங்களைப் பரியா
7 சம் பண்ணுகிறார்கள். சேனைகளின் தேவ
னே, எங்களைத் திருப்பிக்கொண்டு வாரும்,
உமது முகத்தைப் பிரகாசிக்கப்பண்ணும், அப்
பொழுது ரட்சிக்கப்படுவோம்.
8 நீர் எகிப்திலிருந்து ஒரு திராட்சக்கொடி
யைக் கொண்டுவந்து, [9]ஜாதிகளைத் துரத்தி
9 விட்டு, அதை நாட்டினீர். அதற்கு இடத்
தை ஆயத்தப்படுத்தினீர்; அது வேரூன்றி,
10 தேசமெங்கும் படர்ந்தது. அதின் நிழலால்
மலைகளும், அதின் கிளைகளால் திவ்வியமான
11 கேதுருக்களும் மூடப்பட்டது. அது தன் கொ
டிகளைச் சமுத்திரமட்டாகவும், தன் கிளைகளை
12 நதிமட்டாகவும் படரவிட்டது. இப்பொழு
தோ வழிநடக்கிற யாவரும் அதைப் பறிக்கும்
படியாக, [10]அதின் அடைப்புகளை ஏன் தகர்த்
13 துப்போட்டீர்? காட்டுப்பன்றி அதை உழுது
போடுகிறது, வெளியின் மிருகங்கள் அதை
மேய்ந்துபோடுகிறது.
14 சேனைகளின் தேவனே, திரும்பிவாரும்,
[11]வானத்திலிருந்து கண்ணோக்கிப் பார்த்து,
இந்தத் திராட்சச்செடியை விசாரித்தருளும்;
15 உம்முடைய வலதுகரம் நாட்டின கொடியை
யும், [12]உமக்கு நீர் திடப்படுத்தின கிளையை
16 யும் கடாட்சித்தருளும். அது அக்கினியால்
சுடப்பட்டும் வெட்டுண்டும் போயிற்று; [13]உம்
முடைய முகத்தின் பயமுறுத்தலால் அழிந்து
போகிறார்கள். உமது கரம் உமது வலதுபாரி 17
சத்துப் புருஷன்மீதிலும்; [14]உமக்கு நீர் திடப்
படுத்தின மனுஷகுமாரன்மீதிலும் இருப்ப
தாக. அப்பொழுது உம்மைவிட்டுப் பின் 18
வாங்கமாட்டோம்; எங்களை [15]உயிர்ப்பியும்,
அப்பொழுது உமது நாமத்தைத் தொழுது
கொள்ளுவோம். சேனைகளின் தேவனாகிய 19
**கர்த்தாவே**, எங்களைத் திருப்பிக்கொண்டு வா
ரும்; உமது முகத்தைப் பிரகாசிக்கப்பண்ணும்,
அப்பொழுது ரட்சிக்கப்படுவோம்.

## 81

(கித்தீத் என்னும் வாத்தியத்தில் வாசிக்கும்படி
ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட ஆசாபின் சங்கீதம்.)

நம்முடைய பெலனாகிய தேவனைக் கெம்
பீரமாய்ப் பாடி, யாக்கோபின் தேவனைக்குறி
த்து ஆர்ப்பரியுங்கள். தம்புரு வாசித்து, வீணை 2
யையும் இனிய ஓசையான சுரமண்டலத்தை
யும் எடுத்து, சங்கீதம் பாடுங்கள். மாதப்பிறப் 3
பிலும், நியமித்த காலத்திலும், நம்முடைய
பண்டிகை நாட்களிலும், எக்காளம் ஊதுங்
கள். இது இஸ்ரவேலுக்குப் பிரமாணமும், 4
[16]யாக்கோபின் தேவன் விதித்த நியாயமுமா
யிருக்கிறது. நாம் அறியாத பாஷையைக் 5
[17]கேட்ட எகிப்துதேசத்தை விட்டுப் புறப்படு
கையில், இதை யோசேப்பிலே சாட்சியாக
ஏற்படுத்தினார். அவன் தோளைச் சுமைக்கு 6
விலக்கினேன்; [18]அவன் கைகள் கூடைக்கு
நீங்கலாக்கப்பட்டது. நெருக்கத்திலே நீ கூப் 7
பிட்டாய், நான் உன்னைத் தப்புவித்தேன்;
இடிமுழக்கம் உண்டாகும் மறைவிடத்திலிரு
ந்து உனக்கு உத்தரவு அருளினேன்; மேரிபா
வின் [19]தண்ணீர்களிடத்தில் உன்னைச் சோ
தித்து அறிந்தேன். (சேலா.) என் ஜனமே 8
கேள், உனக்குச் சாட்சியிட்டுச் சொல்லு
வேன்; இஸ்ரவேலே, நீ எனக்குச் செவிகொ
டுத்தால் நலமாயிருக்கும். உனக்குள் வேறு 9
தேவன் உண்டாயிருக்கவேண்டாம்; [20]அந்நிய
தேவனை நீ நமஸ்கரிக்கவும் வேண்டாம்.
உன்னை எகிப்து தேசத்திலிருந்து புறப்படப் 10
பண்ணின உன் தேவனாகிய **கர்த்தர்** நானே;
[21]உன் வாயை விரிவாய்த் திற, நான் அதை
நிரப்புவேன். என் ஜனமோ என் சத்தத்துக்குச் 11
செவிகொடுக்கவில்லை; [22]இஸ்ரவேல் என்னை
விரும்பவில்லை. ஆகையால் அவர்களை அவர் 12
கள் இருதயத்தின் கடினத்திற்கு விட்டுவிட்
டேன்; [23]தங்கள் யோசனைகளின்படியே நடந்
தார்கள். ஆ, என் ஜனம் எனக்குச் செவி 13
கொடுத்து, [24]இஸ்ரவேல் என் வழிகளில் நடந்
தால் நலமாயிருக்கும்! நான் சீக்கிரத்தில் அவர் 14
கள் எதிராளிகளைத் தாழ்த்தி, என் கையை
அவர்கள் சத்துருக்களுக்கு விரோதமாகத் திரு
ப்புவேன். அப்பொழுது **கர்த்தரைப்** பகைக் 15
கிறவர்கள் அவருக்கு இச்சகம்பேசி அடங்கு
வார்கள்; அவர்களுடைய காலம் என்றென்றை
க்கும் இருக்கும். உச்சிதமான கோதுமையி 16
னால் அவர்களைப் போஷிப்பார்; [25]கன்மலையின்
தேனினால் உன்னைத் திருப்தியாக்குவேன்.

[1] 102. 19
[2] 74. 18. ஆதி. 4. 15
[3] ஏசா. 43. 21
[4] யாத். 25. 20-22. உபா. 33. 2
[5] எண். 2. 18-24
[6] புல. 5. 21. தானி. 9. 17
[7] 42. 3. ஏசா. 30. 20
[8] 79. 4
[9] ஏசா. 5. 1-7. எரே. 2. 21. எசே. 15. 6
[10] நாகூ. 2. 2
[11] ஏசா. 63. 15
[12] ஏசா. 11. 1. சகரி. 3. 8
[13] 76. 7
[14] ஏசா. 53. 5
[15] எபே. 2. 1, 5
[16] லேவி. 23. 24. 26
[17] 114. 1
[18] யாத். 1. 14. ஏசா. 9. 4
[19] யாத். 17. 2-7
[20] யாத். 20. 3-5
[21] யாத். 20. 2. யோவா. 15. 7. எபே. 3. 20
[22] உபா. 32. 15, 18
[23] அப். 7. 42. ரோம. 1. 24, 26
[24] உபா. 32. 19. ஏசா. 48. 18
[25] உபா. 32. 13, 14

# 82

(ஆசாபின் சங்கீதம்.)

தேவசபையிலே தேவன் எழுந்தருளியிருக்
கிறார்; [1]தேவர்களின் நடுவிலே அவர் நியாயம்
2 விசாரிக்கிறார். எதுவரைக்கும் நீங்கள் அநி
யாயத்தீர்ப்புச் செய்து, துன்மார்க்கருக்கு முக
3 தாட்சிணியம் பண்ணுவீர்கள். (சேலா.) ஏழை
க்கும் திக்கற்றபிள்ளைக்கும் நியாயஞ்செய்து,
[2]சிறுமைப்பட்டவனுக்கும் திக்கற்றவனுக்கும்
4 நீதிசெய்யுங்கள். பலவீனனையும் எளியவனை
யும் விடுவித்து, [3]துன்மார்க்கரின் கைக்கு
அவர்களைத் தப்புவியுங்கள்.
5 அறியாமலும் உணராமலும் இருக்கிறார்கள்,
அந்தகாரத்திலே நடக்கிறார்கள்; [4]தேசத்தின்
6 அஸ்திபாரங்களெல்லாம் அசைகிறது. நீங்
கள் தேவர்கள் என்றும், [5]நீங்களெல்லாரும்
உன்னதமானவரின் மக்கள் என்றும் நான்
7 சொல்லியிருந்தேன். ஆனாலும் நீங்கள் மனுஷ
ரைப்போலச் செத்து, லோகப் பிரபுக்களில்
ஒருவனைப்போல விழுந்துபோவீர்கள்.
8 தேவனே, எழுந்தருளும், பூமிக்கு நியாயத்
தீர்ப்புச் செய்யும்; [6]நீரே சகல ஜாதிகளையும்
சுதந்தரமாகக் கொண்டிருப்பவர்.

# 83

(ஆசாபின் சங்கீதமாகிய பாட்டு.)

தேவனே, மவுனமாயிராதேயும், பேசா
மலிராதேயும்; தேவனே, சும்மாயிராதேயும்.
2 இதோ, உம்முடைய சத்துருக்கள் கொந்
தளித்து, [7]உம்முடைய பகைஞர் தலையெடுக்
3 கிறார்கள். உமது ஜனத்துக்கு விரோதமாக
உபாயதந்திரங்களை யோசித்து, [8]உமது மறை
விலிருக்கிறவர்களுக்கு விரோதமாக ஆலோ
4 சனை பண்ணுகிறார்கள். அவர்கள் இனி ஒரு
ஜாதியாராயிராமலும், இஸ்ரவேலின் பேர்
இனி நினைக்கப்படாமலும் போவதற்காக,
[9]அவர்களை அதம்பண்ணுவோம் வாருங்கள்
5 என்கிறார்கள். இப்படி, ஏதோமின் கூடாரத்
தாரும், இஸ்ரவேலரும், மோவாபியரும், ஆகா
6 ரியரும், கேபாலரும், அம்மோனியரும், அம
லேக்கியரும், தீருவின் குடிகளோடு கூடிய
7 பெலிஸ்தரும், ஏகமன நிர்ணயமாய் ஆலோ
சனைசெய்து, [10]உமக்கு விரோதமாய் ஒப்பந்தம்
8 பண்ணிக்கொண்டிருக்கிறார்கள். அசீரியரும்
அவர்களோடேகூடக் கலந்து, லோத்தின் புத்
திரருக்குப் புயபலமானார்கள். (சேலா.)
9 மீதியானியருக்குச் செய்ததுபோலவும்,
[11]கீசோன் என்னும் ஆற்றண்டை எந்தோரிலே
10 அழிக்கப்பட்டு, நிலத்துக்கு எருவாய்ப்போன
சிசெரா, யாபீன் என்பவர்களுக்குச் செய்தது
11 போலவும், அவர்களுக்குச் செய்யும். அவர்
களையும் அவர்கள் அதிபதிகளையும் [12]ஓரேபுக்
கும் சேபுக்கும், அவர்கள் பிரபுக்களையெல்
லாம் சேபாவுக்கும் சல்முனாவுக்கும் சமமாக்
12 கும். தேவனுடைய வாசஸ்தலங்களை எங்க
ளுக்குச் சுதந்தரமாக நாங்கள் கட்டிக்கொள்
13 வோம் என்று சொல்லுகிறார்களே. என்
தேவனே, அவர்களைச் சுழல்காற்றின் புழுதிக்
கும், [13]காற்றுமுகத்தில் பறக்கும் துரும்புக்கும்
14 சமமாக்கும். நெருப்பு காட்டைக் கொளுத்
துவதுபோலவும், அக்கினிஜுவாலைகள் மலை
களை எரிப்பதுபோலவும், நீர் உமது புசலி 15
னாலே அவர்களைத் தொடர்ந்து, உமது பெருங்
காற்றினாலே அவர்களைக் கலங்கப்பண்ணும்.
கர்த்தாவே, அவர்கள் உமது நாமத்தைத் தே 16
டும்படிக்கு, அவர்கள் முகங்களை அவமானத்
தாலே மூடும். யேகோவா என்னும் நாமத் 17
தையுடைய தேவரீர் ஒருவரே [14]பூமியனைத்
தின்மேலும் உன்னதமானவர் என்று மனுஷர்
உணரும்படி, அவர்கள் என்றைக்கும் வெட் 18
கிக் கலங்கி, நாணமடைந்து அழிந்துபோ
வார்களாக.

# 84

(கித்தீத் என்னும் வாத்தியத்தில் வாசிக்க கோராகின் புத்திரரிலுள்ள ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதம்.)

சேனைகளின் கர்த்தாவே, [15]உமது வாசஸ்
தலங்கள் எவ்வளவு இன்பமானவைகள்! என் 2
ஆத்துமா கர்த்தருடைய ஆலயப்பிராகாரங்களி
ன்மேல் வாஞ்சையும் தவனமுமாயிருக்கிறது;
[16]என் இருதயமும் என் மாம்சமும் ஜீவனுள்ள
தேவனை நோக்கிக் கெம்பீர சத்தமிடுகிறது.
என் ராஜாவும் என் தேவனுமாகிய சேனைக 3
ளின் கர்த்தாவே, உம்முடைய பீடங்களண்
டையில் அடைக்கலான் குருவிக்கு வீடும்,
தகைவிலான் குருவிக்குத் தன் குஞ்சுகளை
வைக்கும் கூடும் கிடைத்ததே. உம்முடைய 4
வீட்டில் வாசமாயிருக்கிறவர்கள் பாக்கியவான்
கள்; [17]அவர்கள் எப்பொழுதும் உம்மைத் துதித்
துக்கொண்டிருப்பார்கள். (சேலா.)
உம்மிலேபெலன்கொள்ளுகிறமனுஷனும், 5
தங்கள் இருதயங்களில் செவ்வையான வழிக
ளைக் கொண்டிருக்கிறவர்களும் பாக்கியவான்
கள். அழுகையின் *பள்ளத்தாக்கை உருவ 6
நடந்து அதை நீரூற்றாக்கிக்கொள்ளுகிறார்கள்;
மழையும் குளங்களை நிரப்பும். அவர்கள் பலத் 7
தின்மேல் பலம் அடைந்து, [18]சீயோனிலே
தேவசந்நிதியில் வந்து காணப்படுவார்கள்.
சேனைகளின் தேவனாகிய கர்த்தாவே, 8
என் விண்ணப்பத்தைக் கேளும்; யாக்கோபின்
தேவனே, செவிகொடும். (சேலா.) எங்கள் 9
கேடகமாகிய தேவனே, [19]கண்ணோக்கமாயி
ரும்; நீர் அபிஷேகம் பண்ணினவரின் முகத்
தைப் பாரும். ஆயிரம் நாளைப்பார்க்கிலும் 10
உமது பிராகாரங்களில் செல்லும் ஒரேநாள்
நல்லது; ஆகாமியக் கூடாரங்களில் வாசமாயி
ருப்பதைப்பார்க்கிலும் என் தேவனுடைய
ஆலயத்தின் வாசற்படியில் காத்திருப்பதையே
தெரிந்துகொள்ளுவேன். தேவனாகிய கர்த் 11
தர் [20]சூரியனும் கேடகமுமானவர்; கர்த்தர்
கிருபையையும் மகிமையையும் அருளுவார்;
[21]உத்தமமாய் நடக்கிறவர்களுக்கு நன்மையை
வழங்காதிரார். சேனைகளின் கர்த்தாவே, உம் 12
மை நம்பியிருக்கிற மனுஷன் பாக்கியவான்.

# 85

(கோராகின் புத்திரரிலுள்ள ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதம்.)

கர்த்தாவே, உமது தேசத்தின்மேல் பிரியம்
வைத்து, [22]யாக்கோபின் சிறையிருப்பைத்

1 2 நாளா. 19. 6, 7. பி. 5. 8. ஏசா. 3. 14
2 எரே. 22. 3
3 யோபு 29. 12. நீதி. 24. 11
4 75. 3. யோ. 12. 34, 35. 2 தீமோ. 2. 19
5 யாத். 22. 9, 28. யோ. 10. 34, 35
6 வெளி. 11. 15
7 எசே. 37. 29. அப். 4. 25
8 27. 5; 31. 20
9 எஸ்தர் 3. 6, 9
10 2. 2
11 எண். 31. 1-12
12 நியா. 7. 25
13 ஏசா. 17. 13, 14. மத். 3. 12
14 யாத். 6. 3. ஏசா. 42. 8
15 27. 4.
16 42. 1, 2
17 65. 4. 134. 1
* பாகா, 2 சாமு. 5. 23
18 யோபு 17. 9. நீதி. 4. 18. யோ. 10. 28
19 89. 20. ஆதி. 15. 1
20 ஏசா. 60. 19
21 பிலி. 4. 19
22 77. 7

2 திருப்பினீர் உமது ஜனத்தின் அக்கிரமத்தை
மன்னித்து, [1]அவர்கள் பாவத்தையெல்லாம்
3 மூடினீர். (சேலா.) உமது உக்கிரத்தையெல்
லாம் அடக்கிக்கொண்டு, [2]உமது கோபத்தின்
எரிச்சலை விட்டுத் திரும்பினீர்.
4 எங்கள் ரட்சிப்பின் தேவனே, நீர் எங்களைத்
திருப்பிக் கொண்டுவாரும், எங்கள்மேலுள்ள
5 உமது கோபத்தை ஆறப்பண்ணும். என்றைக்
கும் எங்கள்மேல் கோபமாயிருப்பீரோ? தலை
முறை தலைமுறையாக உமது கோபத்தை நீடித்
6 திருக்கப் பண்ணுவீரோ? உமது ஜனங்கள் உம்
மில் மகிழ்ந்திருக்கும்படி நீர் எங்களைத் திரும்ப
7 [3]உயிர்ப்பிக்கமாட்டீரோ? **கர்த்தாவே**, உமது
கிருபையை எங்களுக்குக் காண்பித்து, உமது
ரட்சிப்பை எங்களுக்கு அருளிச்செய்யும்.
8 **கர்த்தராகிய** தேவன் விளம்புவதைக் கேட்
பேன்; அவர் தம்முடைய ஜனங்களுக்கும் தம்
முடைய பரிசுத்தவான்களுக்கும் சமாதானம்
கூறுவார்; [4]அவர்களோ மதிகேட்டுக்குத் திரும்
9 பாதிருப்பார்களாக. நம்முடைய தேசத்தில்
மகிமை [5]வாசமாயிருக்கும்படி, அவருடைய
ரட்சிப்பு அவருக்குப் பயந்தவர்களுக்குச் சமீப
10 மாயிருக்கிறது. கிருபையும் சத்தியமும் ஒன்
றையொன்று சந்திக்கும், [6]நீதியும் சமாதான
11 மும் ஒன்றையொன்று முத்தஞ்செய்யும். சத்
தியம் பூமியிலிருந்து முளைக்கும், [7]நீதி வானத்
12 திலிருந்து தாழப் பார்க்கும், **கர்த்தர்** நன்மை
யானதைத் தருவார்; [8]நம்முடைய தேசமும்
13 தன் பலனைக் கொடுக்கும். நீதி அவருக்கு முன்
னாகச் சென்று, [9]அவருடைய அடிச்சுவடுக
ளின் வழியிலே நம்மை நிறுத்தும்.

**86**

(தாவீதின் விண்ணப்பம்.)

**கர்த்தாவே**, உமது செவியைச் சாய்த்து,
என் விண்ணப்பத்தைக் கேட்டருளும்; நான்
2 சிறுமையும் எளிமையுமானவன். என் ஆத்து
மாவைக் காத்தருளும், நான் *பக்தியுள்ளவன்;
என் தேவனே, உம்மை நம்பியிருக்கிற [10]உமது
3 அடியேனை நீர் ரட்சியும். ஆண்டவரே, என
க்கு இரங்கும், நாடோறும் உம்மை நோக்கிக்
4 கூப்பிடுகிறேன். உமது அடியேனுடைய ஆத்
துமாவை மகிழ்ச்சியாக்கும்; ஆண்டவரே, உம்
மிடத்தில் என் ஆத்துமாவை உயர்த்துகிறேன்.
5 ஆண்டவரே, நீர் நல்லவரும், [11]மன்னிக்கிறவ
ரும், உம்மை நோக்கிக் கூப்பிடுகிற யாவர்மே
6 லும் கிருபை மிகுந்தவருமாயிருக்கிறீர். **கர்த்
தாவே**, என் ஜெபத்திற்குச் செவிகொடுத்து,
என் விண்ணப்பங்களின் சத்தத்தைக்கவனியும்.
7 நான் துயரப்படுகிற நாளில் உம்மை நோக்கிக்
கூப்பிடுவேன்; நீர் என்னைக் கேட்டருளுவீர்.
8 ஆண்டவரே, தேவர்களுக்குள்ளே [12]உமக்கு
நிகருமில்லை; [13]உம்முடைய கிரியைகளுக்கு
9 ஒப்புமில்லை. ஆண்டவரே, நீர் உண்டாக்கின
எல்லா ஜாதிகளும் வந்து, [14]உமக்கு முன்பாகப்
பணிந்து, உமது நாமத்தை மகிமைப்படுத்து
10 வார்கள். தேவரீர் மகத்துவமுள்ளவரும் அதிச
யங்களைச் செய்கிறவருமாயிருக்கிறீர்; [15]நீர்
ஒருவரே தேவன்.

1 கொலோ. 2. 13
2 உபா. 13. 18
3 ஆப. 3 2
4 130. 4. ஆகாய் 2. 7, 9. சகரி. 9. 10. வெளி. 5. 14. 2 பே. 2. 20, 21
5 ஏசா. 46. 13 வெளி. 1. 14
6 ஏசா. 32. 16, 17 லூ. 2. 14
7 ஏசா. 45. 8
8 84. 11. யாக். 1. 17
9 89. 14. 119. 35. ஏசா. 58. 8
* பரிசுத்தன், அடியேன்.
10 4. 3. நீதி. 2. 8. ஏசா. 26. 3
11 யோவே. 2. 13
12 யாத். 15. 11. ஏசா. 40. 18, 25
13 உபா. 3. 24
14 வெளி. 15. 4
15 உபா. 32. 39. ஏசா. 37. 16. 1 கொ. 8 4
16 119 33. யோ. 17 20, 21. 1 கொ. 6. 17
17 103. 11. 1 தெச. 1. 10
18 10. 4
19 நெகே. 9. 17
20 ஏசா. 45 24
21 41. 11, 12. 2 கொ. 5. 5
† அவர் போட்ட அஸ்திபாரம். ஏசா. 14. 32
22 27. 4; 48. 1
23 78, 67, 68
24 ஏசா. 54. 2 முதல் வெளி. 21. 2. முதல்
‡ எகிப்து.
25 ஏசா. 51. 9
26 ஏசா. 19. 23–25
27 68. 31. அப். 8. 27
28 ஏசா. 60. 1–9. வெளி. 1. 12, 13. கலா. 4. 26
29 எசே. 13. 9. லூக். 4. 16. லூ. 10. 20. வெளி. 20. 12
30 1 நாளா. 23. 5. யாக். 1. 17
31 லூ. 18. 7

**கர்த்தாவே**, உமது வழியை எனக்குப் 11
போதியும், நான் உமது சத்தியத்திலே நடப்
பேன்; [16]நான் உமது நாமத்திற்குப் பயந்திருக்
கும்படி என் இருதயத்தை ஒருமுகப்படுத்தும்.
என் தேவனாகிய ஆண்டவரே, உம்மை என் 12
முழு இருதயத்தோடும் துதித்து, உமது நா
மத்தை என்றென்றைக்கும் மகிமைப்படுத்து
வேன். நீர் எனக்குப் பாராட்டின உமது 13
கிருபை பெரியது; [17]என் ஆத்துமாவைத்
தாழ்ந்த பாதாளத்திற்குத் தப்புவித்தீர்.
தேவனே, அகங்காரிகள் எனக்கு விரோத 14
மாய் எழும்புகிறார்கள், கொடுமைக்காரராகிய
கூட்டத்தார் என் பிராணனை வாங்கத் தேடுகி
றார்கள். [18]உம்மைத் தங்களுக்கு முன்பாக
நிறுத்தி நோக்காதிருக்கிறார்கள். ஆனாலும் 15
ஆண்டவரே, நீர் மனவுருக்கமும், இரக்கமும்,
நீடிய பொறுமையும், [19]பூரண கிருபையும், சத்
தியமுமுள்ள தேவன். என்மேல் நோக்க 16
மாகி, எனக்கு இரங்கும்; உமது வல்லமையை
உமது அடியானுக்கு அருளி, [20]உமது அடி
யாளின் குமாரனை ரட்சியும். **கர்த்தாவே**, 17
நீர் எனக்குத் துணைசெய்து என்னைத் தேற்று
கிறதை என் பகைஞர் கண்டு வெட்கப்படும்
படிக்கு, [21]எனக்கு அநுகூலமாக ஒரு அடை
யாளத்தைக் காண்பித்தருளும்.

**87**

(கோராகின் புத்திரருக்கு ஒப்புவிக்கப்பட்ட
பாட்டாகிய சங்கீதம்.)

அவர் †அஸ்திபாரம் [22]பரிசுத்த பர்வதங்க
ளில் இருக்கிறது. **கர்த்தர்** யாக்கோபின் வா 2
சஸ்தலங்களெல்லாவற்றைப்பார்க்கிலும் [23]சீ
யோனின் வாசல்களில் பிரியமாயிருக்கிறார்.
தேவனுடைய நகரமே! [24]உன்னைக்குறித்து 3
மகிமையான விசேஷங்கள் வசனிக்கப்படும்.
(சேலா.)
என்னை அறிந்தவர்களுக்குள்ளே ‡ராகாபை 4
யும் பாபிலோனையும் [25]குறித்துப் பேசுவேன்;
இதோ, பெலிஸ்தியரிலும், தீரியரிலும், [26]எத்
தியோப்பியரிலுங்கூட, [27]இன்னான் அங்கே
பிறந்தான் என்றும்; சீயோனைக்குறித்து, 5
[28]இன்னான் இன்னான் அதிலே பிறந்தானென்
றும் சொல்லப்படும்; உன்னதமானவர்தாமே
அதை ஸ்திரப்படுத்துவார். **கர்த்தர்** ஜனங்க 6
ளைப் பேரெழுதும்போது, [29]இன்னான் அதி
லே பிறந்தான் என்று அவர்களைத் தொகை
யிடுவார். (சேலா.) எங்கள் ஊற்றுகளெல் 7
லாம் உன்னில் இருக்கிறது என்று [30]பாடுவா
ரும் ஆடுவாரும் ஏகமாய்ச் சொல்லுவார்கள்.

**88**

(மகலாத்லேயன்னோத் வாத்தியத்தில் வாசிக்க, கோராகின்
புத்திரரிலுள்ள ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
எஸ்ராகியனாகிய ஏமானின் போதக சங்கீதம்.)

என் ரட்சிப்பின் தேவனாகிய **கர்த்தாவே**,
[31]இரவும் பகலும் உம்மை நோக்கிக் கூப்பிடு
கிறேன். என் விண்ணப்பம் உமது சமுகத் 2
தில் வருவதாக; என் கூப்பிடுதலுக்கு உமது
செவியைச் சாய்த்தருளும். என் ஆத்துமா 3
துக்கத்தால் நிறைந்திருக்கிறது; என் ஜீவன்
பாதாளத்திற்குச் சமீபமாய் வந்திருக்கிறது

4 நான் குழியில் இறங்குகிறவர்களோடு எண்
ணப்பட்டு, பெலனற்ற மனுஷனைப்போலா
5 னேன். மரித்தவர்களில் ஒருவனைப்போல்
நெகிழப்பட்டிருக்கிறேன்; நீர் இனி ஒருபோ
தும் நினையாதபடி, உமது கையால் அறுப்
புண்டுபோய்ப் பிரேதக்குழிகளிலே கிடக்கிற
6 வர்களைப்போலானேன். என்னைப் பாதாளக்
குழியிலும் இருளிலும் ஆழங்களிலும் வைத்
7 தீர். உம்முடைய கோபம் என்னை இருத்து
கிறது; [1]உம்முடைய அலைகள் எல்லாவற்றி
னாலும் என்னை வருத்தப்படுத்துகிறீர். (சே
8 லா.) எனக்கு அறிமுகமானவர்களை எனக்
குத் தூரமாக விலக்கி, [2]அவர்களுக்கு என்னை
அருவருப்பாக்கினீர்; நான் வெளியே புறப்
படக் கூடாதபடி அடைபட்டிருக்கிறேன்.
9 துக்கத்தினால் என் கண் தொய்ந்துபோயிற்று;
**கர்த்தாவே**, அநுதினமும் நான் உம்மை நோக்
கிக் கூப்பிட்டு, உமக்கு நேராக என் கைகளை
விரிக்கிறேன்.
10 மரித்தவர்களுக்கு அதிசயங்களைச் செய்வீ
ரோ? [3]செத்துப்போன வீரர் எழுந்து உம்
11 மைத் துதிப்பார்களோ? (சேலா.) பிரேதக்
குழியில் உமது கிருபையும், அழிவில் உமது
12 உண்மையும் விவரிக்கப்படுமோ? இருளில்
உமது அதிசயங்களும், [4]மறதியின் பூமியில்
13 உமது நீதியும் அறியப்படுமோ? நானோ **கர்த்
தாவே**, உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன்;
காலையிலே என் விண்ணப்பம் உமக்கு முன்
பாக வரும்.
14 **கர்த்தாவே**, ஏன் என் ஆத்துமாவைத் தள்
ளிவிடுகிறீர்? ஏன் உமது முகத்தை எனக்கு
15 மறைக்கிறீர்? சிறுவயதுமுதல் நான் சிறு
மைப்பட்டவனும் மாண்டுபோகிறவனுமாயி
ருக்கிறேன்; [5]உம்மால் வரும் திகில்கள் என்
மேல் சுமந்திருக்கிறது, நான் மனங்கலங்குகி
16 றேன். உம்முடைய எரிச்சல்கள் என்மேல்
புரண்டுபோகிறது; [6]உம்முடைய பயங்கரங்
17 கள் என்னை அதம்பண்ணுகிறது. அவைகள்
நாடோறும் தண்ணீரைப்போல் என்னைச் சூழ்
ந்து, ஏகமாய் என்னை வளைந்துகொள்ளுகி
18 றது. சிநேகிதனையும் தோழனையும் எனக்குத்
தூரமாக விலக்கினீர்; [7]எனக்கு அறிமுகமான
வர்கள் மறைந்துபோனார்கள்.

## 89

(எஸ்ராகியனாகிய ஏத்தானின் மஸ்கீல் என்னும் போதக சங்கீதம்.)

**கர்த்தரின்** கிருபைகளை என்றென்றைக்
கும் பாடுவேன்; உமது உண்மையைத் தலை
முறை தலைமுறையாக என் வாயினால் அறி
2 விப்பேன். கிருபை என்றென்றைக்கும்
ஸ்திரப்பட்டிருக்கும்; உமது உண்மையை வா
3 னங்களிலே ஸ்தாபிப்பீர் என்றேன். என்
னால் தெரிந்துகொள்ளப்பட்டவனோடே
உடன்படிக்கைபண்ணி, [8]என் தாசனாகிய தா
4 வீதை நோக்கி: என்றென்றைக்கும் உன்
சந்ததியை நிலைப்படுத்தி, தலைமுறை தலைமு
றையாக உன் சிங்காசனத்தை ஸ்தாபிப்பேன்
என்று ஆணையிட்டேன் என்றீர். (சேலா.)

[1] 42. 7
[2] யோபு 12. 14. 19. 13. ழ
[3] ஏசா. 38. 18
[4] பிர. 8. 10; 9. 5
[5] யோபு 6. 4
[6] வெளி. 6. 17
[7] யோபு 19. 13
[8] 2 சாமு. 7. 11. ழ ஏசா. 42. 1
[9] 19. 1. வெளி. 7. 10–12
[10] 1 சாமு. 2. 2
[11] யோபு 38. 11. மாற். 4. 39, 41
* எகிப்து. யாத். 14. 26–28
[12] யோசு. 12. 1. நியா. 4. 6, 12
[13] 97. 2
[14] யோவா. 1. 17. ரோ. 10. 18
[15] எண். 6. 26
[16] 71. 15, 16. 1 கொ. 1. 30
[17] 75. 10
[18] ஏசா. 33. 22
[19] ஏசா. 9. 6
[20] 1 சாமு. 16. 1–12. 2 சாமு. 7. 8–16
[21] 80. 17
[22] 72. 8

**கர்த்தாவே**, வானங்கள் உம்முடைய அதி 5
சயங்களைத் துதிக்கும், [9]பரிசுத்தவான்களின்
சபையிலே உம்முடைய உண்மையும் விளங்
கும். ஆகாயமண்டலத்தில் **கர்த்தருக்கு** நிகரா 6
னவர் யார்? பலவான்களின் புத்திரரில் **கர்த்
தருக்கு** ஒப்பானவர் யார்? தேவன் பரிசுத்த 7
வான்களுடைய ஆலோசனைச்சபையில் மிக
வும் பயப்படத்தக்கவர், தம்மைச் சூழ்ந்திருக்
கிற அனைவராலும் அஞ்சப்படத்தக்கவர். சே 8
னைகளின் தேவனாகிய **கர்த்தாவே**, உம்மைப்
போல் வல்லமையுள்ள **கர்த்தர்** யார்? [10]உம்மு
டைய உண்மை உம்மைச் சூழ்ந்திருக்கிறது.
தேவரீர் சமுத்திரத்தின் பெருமையை ஆளு 9
கிறவர்; [11]அதின் அலைகள் எழும்பும்போது
அவைகளை அடங்கப்பண்ணுகிறீர். நீர் *ரா 10
காபை வெட்டுண்ட ஒருவனைப்போல் நொ
றுக்கினீர்; [12]உமது வல்லமையான புயத்தினால்
உம்முடைய சத்துருக்களைச் சிதறடித்தீர். வா 11
னங்கள் உம்முடையது, பூமியும் உம்முடை
யது, பூலோகத்தையும் அதிலுள்ள யாவையும்
நீரே அஸ்திபாரப்படுத்தினீர். வடக்கையும் 12
தெற்கையும் நீர் உண்டாக்கினீர்; தாபோரும்
எர்மோனும் உம்முடைய நாமம் விளங்கக் கெம்
பீரிக்கும். உமக்கு வல்லமையுள்ள புயமிருக் 13
கிறது; உம்முடைய கரம் பராக்கிரமமுள்ளது;
உம்முடைய வலதுகரம் உன்னதமானது. நீதி 14
யும் நியாயமும் [13]உம்முடைய சிங்காசனத்தின்
ஆதாரம்; [14]கிருபையும் சத்தியமும் உமக்கு
முன்பாக நடக்கும். கெம்பீரசத்தத்தை அறி 15
யும் ஜனங்கள் பாக்கியமுள்ளவர்கள்; [15]**கர்த்தா
வே**, அவர்கள் உம்முடைய முகத்தின் வெ
ளிச்சத்தில் நடப்பார்கள். அவர்கள் உம்மு 16
டைய நாமத்தில் நாடோறும் களிகூர்ந்து,
[16]உம்முடைய நீதியால் உயர்ந்திருப்பார்கள்.
நீரே அவர்கள் பலத்தின் மகிமையாயிருக்கி 17
றீர்; [17]உம்முடைய தயவினால் எங்கள் கொம்பு
உயரும். **கர்த்தரால்** எங்கள் கேடகமும், 18
[18]இஸ்ரவேலின் பரிசுத்தரால் எங்களுடைய
ராஜாவும் உண்டு.
அப்பொழுது நீர் உம்முடைய பக்தனுக்குத் 19
தரிசனமாகி: [19]சகாயஞ்செய்யத்தக்க சத்தியை
ஒரு சவுரியவான்மேல் வைத்து, ஜனத்தில்
தெரிந்துகொள்ளப்பட்டவனை உயர்த்தினேன்.
என் தாசனாகிய தாவீதைக் கண்டுபிடித்தேன்; 20
[20]என் பரிசுத்த தைலத்தினால் அவனை அபி
ஷேகம்பண்ணினேன். என் கை அவனோ 21
டே உறுதியாயிருக்கும்; [21]என் புயம் அவ
னைப் பலப்படுத்தும். சத்துரு அவனை நெ 22
ருக்குவதில்லை; நியாயக்கேட்டின் மகன் அவ
னை ஒடுக்குவதில்லை. அவன் சத்துருக்களை 23
அவனுக்கு முன்பாக மடங்கடித்து, அவனைப்
பகைக்கிறவர்களை வெட்டுவேன். என் உண் 24
மையும் என் கிருபையும் அவனோடிருக்கும்;
என் நாமத்தினால் அவன் கொம்பு உயரும்.
அவன் கையைச் சமுத்திரத்தின்மேலும், 25
[22]அவன் வலதுகரத்தை ஆறுகள்மேலும் ஆளும்
படி வைப்பேன். அவன் என்னை நோக்கி: 26

நீர் என் பிதா, [1]என் தேவன், என் ரட்சிப்
27 பின் கன்மலையென்று சொல்லுவான். நான்
அவனை எனக்கு [2]முதற்பேறானவனும், பூமி
யின் ராஜாக்களைப்பார்க்கிலும் [3]மகா உயர்ந்த
28 வனுமாக்குவேன். என் கிருபையை என்
றென்றைக்கும் அவனுக்காகக் காப்பேன்;
என் உடன்படிக்கை அவனுக்காக உறுதிப்
29 படுத்தப்படும். அவன் சந்ததி என்றென்றைக்
கும் நிலைத்திருக்கவும், அவன் ராஜாசனம் வா
னங்களுள்ளமட்டும் நிலைநிற்கவும் செய்வேன்
30 அவன் பிள்ளைகள் என் நியாயங்களின்படி
நடவாமல், [4]என் வேதத்தைவிட்டு விலகி;
31 என் கட்டளைகளைக் கைக்கொள்ளாமல், என்
32 நியமங்களை மீறிநடந்தால்; அவர்கள் மீறுதலை
மிலாறினாலும், [5]அவர்கள் அக்கிரமத்தை வா
33 தைகளினாலும் தண்டிப்பேன். ஆனாலும் என்
கிருபையை அவனை விட்டு விலக்காமலும்,
[6]என் உண்மையில் பிசகாமலும் இருப்பேன்.
34 என் உடன்படிக்கையை மீறாமலும், [7]என்
உதடுகள் விளம்பினதை மாற்றாமலும் இருப்
35 பேன். ஒருவிசை என் பரிசுத்தத்தின்பேரில்
ஆணையிட்டேன், [8]தாவீதுக்கு நான் பொய்
36 சொல்லேன். அவன் சந்ததி என்றென்றைக்
கும் இருக்கும்; அவன் சிங்காசனம் சூரியனைப்
37 போல எனக்கு முன்பாக நிலைநிற்கும். சந்தி
ரனைப்போல அது என்றென்றைக்கும் உறுதி
யாயும், ஆகாயமண்டலத்துச் *சாட்சியைப்
போல் உண்மையாயும் இருக்கும் என்று
விளம்பினீர். (சேலா.)
38 ஆனாலும் நீர் எங்களை வெறுத்துத் தள்ளி
விட்டீர்; [9]நீர் அபிஷேகம் பண்ணுவித்தவன்
39 மேல் உக்கிரமானீர். உமது அடியானுடன்
நீர் பண்ணின உடன்படிக்கையை ஒழித்து
விட்டு, அவன் கிரீடத்தைத் தரையிலே தள்ளி
40 அவமானப்படுத்தினீர். அவன் [10]மதில்களை
யெல்லாம் தகர்த்துப்போட்டு, அவன் அர
41 ணான ஸ்தலங்களைப் பாழாக்கினீர். வழிநடக்
கிற யாவரும் அவனைக் கொள்ளையிடுகிறார்கள்;
42 தன் அயலாருக்கு நிந்தையானான். அவன்
சத்துருக்களின் வலதுகையை நீர் உயர்த்தி,
அவன் விரோதிகள் யாவரும் சந்தோஷிக்கும்
43 படி செய்தீர். அவன் பட்டயத்தின் கருக்
கை மழுக்கிப்போட்டு, அவனை யுத்தத்தில்
44 நிற்காதபடி செய்தீர். அவன் மகிமையை
அற்றுப்போகப்பண்ணி, அவன் சிங்காசனத்
45 தைத் தரையிலே தள்ளினீர். அவன் வாலிப
நாட்களைக் குறுக்கி, அவனை வெட்கத்தால்
மூடினீர். (சேலா.)
46 எதுவரைக்கும், **கர்த்தாவே!** நீர் என்றைக்
கும் மறைந்திருப்பீரோ? [11]உமது கோபம் அக்
47 கினியைப்போல எரியுமோ? என் ஜீவன்
எவ்வளவு நிலையற்றது என்பதை நினைத்தரு
ளும்; [12]மனுபுத்திரர் யாவரையும் வீணாகச்
48 சிருஷ்டிக்கவேண்டியதென்ன? மரணத்தைக்
காணாமல் உயிரோடிருப்பவன் யார்? [13]தன்
ஆத்துமாவைப் பாதாள வல்லடிக்கு விலக்கி
விடுகிறவன் யார்? (சேலா.)

ஆண்டவரே, நீர் தாவீதுக்கு உம்முடைய 49
உண்மையைக்கொண்டு [14]சத்தியம்பண்ணின
உமது பூர்வ கிருபைகள் எங்கே? ஆண்டவ 50
ரே, உம்முடைய சத்துருக்கள் உம்முடைய
ஊழியக்காரரையும், நீர் அபிஷேகம்பண்ணின
வனின் காலடிகளையும் நிந்திக்கிறபடியினால்,
**கர்த்தாவே**, உமது அடியார் சுமக்கும் நிந்தை 51
யையும், [15]வலுமையான ஜனங்களெல்லாரா
லும் நான் என் மடியில் சுமக்கும் என் நிந்தை
யையும் நினைத்தருளும். **கர்த்தருக்கு** என் 52
றென்றைக்கும் [16]ஸ்தோத்திரமுண்டாவதாக.
ஆமென், ஆமென்.

(தேவனுடைய மனிதனாகிய மோசேயின் ஜெபம்.) **90**

ஆண்டவரே, தேவரீர் தலைமுறை தலை
முறையாக [17]எங்களுக்கு அடைக்கலமானவர்.
பர்வதங்கள் தோன்றுமுன்னும், நீர் பூமியை 2
யும் உலகத்தையும் உருவாக்குமுன்னும்,
[18]நீரே அநாதியாய் என்றென்றைக்கும் தேவ
னாயிருக்கிறீர்.
நீர் மனுஷனை நிர்த்தூளியாக்கி, மனுபுத் 3
திரரே, [19]திரும்புங்கள் என்கிறீர். உமது பார் 4
வைக்கு ஆயிரம் வருஷம் [20]நேற்றுக்கழிந்த
நாள்போலவும் இராச்சாமம்போலவும் இருக்
கிறது. அவர்களை வெள்ளம்போல் வாரிக் 5
கொண்டு போகிறீர்; நித்திரைக்கு ஒத்திருக்கி
றார்கள்; [21]காலையிலே முளைக்கிற புல்லுக்கு
ஒப்பாயிருக்கிறார்கள். அது காலையிலே 6
முளைத்துப் பூத்து, [22]மாலையிலே அறுப்புண்டு
உலர்ந்துபோம். நாங்கள் உமது கோபத்தினால் 7
அழிந்து, உமது உக்கிரத்தினால் கலங்கிப்
போகிறோம்.
எங்கள் அக்கிரமங்களை உமக்கு முன்பாக 8
வும், [23]எங்கள் அந்தரங்க பாவங்களை உமது
முகத்தின் வெளிச்சத்திலும் நிறுத்தினீர். எங் 9
கள் நாட்களெல்லாம் உமதுகோபத்தால்போய்
விட்டது; ஒரு கதையைப்போல் எங்கள் வரு
ஷங்களைக் கழித்துப்போட்டோம். எங்கள் 10
ஆயுசுநாட்கள் எழுபது வருஷம், பெலத்தின்
மிகுதியால் எண்பது வருஷமாயிருந்தாலும்,
அதின் மேன்மையானது வருத்தமும் சஞ்சல
முமே; [24]அது சீக்கிரமாய்க் கடந்துபோகிறது,
நாங்களும் பறந்துபோகிறோம். உமது கோ 11
பத்தின் வல்லமையையும், உமக்குப் பயப்
படத்தக்கவிதமாய் உமது உக்கிரத்தையும் அறி
ந்துகொள்ளுகிறவன் யார்?
நாங்கள் ஞான இருதயமுள்ளவர்களாகும் 12
படி, [25]எங்கள் நாட்களை எண்ணும் அறிவை
எங்களுக்குப் போதித்தருளும். **கர்த்தாவே**, 13
திரும்பிவாரும், எதுவரைக்கும் கோபமாயிருப்
பீர்? [26]உமது அடியாருக்காகப் பரிதபியும்.
நாங்கள் எங்கள் வாழ்நாளெல்லாம் களிகூர் 14
ந்து மகிழும்படி, காலையிலே எங்களை உமது
கிருபையால் திருப்தியாக்கும். தேவரீர் எங் 15
களைச் சிறுமைப்படுத்தின நாட்களுக்கும், நாங்
கள் துன்பத்தைக் கண்ட வருஷங்களுக்கும்
சரியாய் எங்களை மகிழ்ச்சியாக்கும். உமது 16
கிரியை உமது ஊழியக்காரருக்கும், [27]உமது

1 2 சாமு. 7. 14. 22. 47
2 கொலோ. 1. 15, 16. வெளி. 19. 6
3 ஏசா. 49. 7
4 2 சாமு. 7. 14. எரே. 9. 13–16
5 1 இரா. 11. 6, 39
6 புல. 3. 31, 32
7 எரே. 33. 20
8 ஆமோ. 4. 2
* வானவில். ஆதி. 9. 12
9 1 நாளா. 28. 9. ஓசி. 9. 17
10 ஏசா. 5. 5, 6
11 79. 5; 85. 5
12 யோபு 7. 7; 10. 9
13 எபி. 11. 5
14 2 சாமு. 7. 15. ஏசா. 55. 3
15 69. 9, 10; 74. 22
16 41. 13
17 71. 3 உபா. 33. 27. எசே. 11. 16
18 நீதி. 8. 25, 26
19 ஆதி. 3. 19. பிர. 12. 7
20 2 பே. 3. 8
21 ஏசா. 40. 6
22 யோபு 14. 2
23 50. 21. எரே. 2. 22; 16. 17
24 யாக். 4. 14
25 நீதி. 4. 7
26 உபா. 32. 36
27 ஆப. 3. 2

மகிமை அவர்கள் பிள்ளைகளுக்கும் விளங்குவ
17 தாக. எங்கள் தேவனாகிய ஆண்டவரின் *பிரி
யம் எங்கள்மேல் இருப்பதாக; எங்கள் கைக
ளின் கிரியையை எங்களிடத்தில் உறுதிப்
படுத்தும்; [1]ஆம், எங்கள் கைகளின் கிரியை
யை எங்களிடத்தில் உறுதிப்படுத்தியருளும்.

**91** உன்னதமானவரின் மறைவிலிருக்கிற
வன் [2]சர்வவல்லவருடைய நிழலில் தங்கு
2 வான். நான் கர்த்தரை நோக்கி: [3]நீர் என்
அடைக்கலம், என் கோட்டை, என் தேவன்,
நான் நம்பியிருக்கிறவர் என்று சொல்லுவேன்.
3 அவர் உன்னை வேடனுடைய கண்ணிக்கும்,
[4]பாழாக்கும் கொள்ளைநோய்க்கும் தப்புவிப்
4 பார். அவர் தமது சிறகுகளாலே உன்னை
மூடுவார்; [5]அவர் செட்டைகளின் கீழே அ
டைக்கலம் புகுவாய்; அவருடைய சத்தியம்
5 உனக்குப் பரிசையும் கேடகமுமாகும். இர
வில் உண்டாகும் பயங்கரத்துக்கும், [6]பகலில்
6 பறக்கும் அம்புக்கும், இருளில் நடமாடும்
கொள்ளைநோய்க்கும், மத்தியானத்தில் பா
ழாக்கும் சங்காரத்துக்கும் பயப்படாதிருப்பாய்.
7 உன் பக்கத்தில் ஆயிரம்பேரும், உன் வலது
புறத்தில் பதினாயிரம்பேரும் விழுந்தாலும்,
8 அது உன்னை அணுகாது. உன் கண்களால்
மாத்திரம் நீ அதைப் பார்த்து, [7]துன்மார்க்க
9 ருக்கு வரும் பலனைக் காண்பாய். எனக்கு
அடைக்கலமாயிருக்கிற உன்னதமான கர்த்த
ரை உனக்குத் தாபரமாகக் கொண்டாய்.
10 ஆகையால் பொல்லாப்பு உனக்கு நேரிடாது,
11 [8]வாதை உன் கூடாரத்தை அணுகாது. உன்
வழிகளிலெல்லாம் உன்னைக் காக்கும்படி,
[9]உனக்காகத் தம்முடைய தூதர்களுக்குக் கட்
12 டளையிடுவார். உன் பாதம் கல்லில் இடறாத
படிக்கு [10]அவர்கள் உன்னைத் தங்கள் கைக
13 ளில் ஏந்திக்கொண்டு போவார்கள். சிங்கத்
தின்மேலும் விரியன் பாம்பின்மேலும் நீ நட
ந்து, பாலசிங்கத்தையும் வலுசர்ப்பத்தையும்
மிதித்துப்போடுவாய்.
14 அவன் என்னிடத்தில் வாஞ்சையாயிருக்
கிறபடியால் அவனை விடுவிப்பேன்; என்
நாமத்தை அவன் அறிந்திருக்கிறபடியால்
[11]அவனை உயர்ந்த அடைக்கலத்திலே வைப்
15 பேன். அவன் என்னை நோக்கிக் கூப்பிடு
வான், நான் அவனுக்கு மறுஉத்தரவு அருளிச்
செய்வேன்; [12]ஆபத்தில் நானே அவனோ
டிருந்து, அவனைத் தப்புவித்து, [13]அவனைக்
16 கனப்படுத்துவேன். நீடித்த நாட்களால் அவ
னைத் திருப்தியாக்கி, [14]என் ரட்சிப்பை அவ
னுக்குக் காண்பிப்பேன்.

**92** (ஓய்வுநாளின் பாட்டாகிய சங்கீதம்.)

கர்த்தரைத் துதிப்பதும், [15]உன்னதமான
வரே, உமது நாமத்தைக் கீர்த்தனம் பண்ணு
2 வதும், பத்துநரம்பு வீணையினாலும் தம்புருவி
னாலும், தியானத்தோடு வாசிக்கும் சுரமண்டல
3 த்தினாலும், காலையிலே [16]உமது கிருபையை
யும், இரவிலே உமது சத்தியத்தையும் அறி
4 விப்பதும் நலமாயிருக்கும். கர்த்தாவே, உமது
செய்கைகளால் என்னை மகிழ்ச்சியாக்கினீர்,
உமது கரத்தின் கிரியைகளினிமித்தம் ஆன
ந்த சத்தமிடுவேன்.
கர்த்தாவே, உமது கிரியைகள் எவ்வளவு 5
மகத்துவமானவைகள்! [17]உமது யோசனைகள்
மகா ஆழமானவைகள். மிருககுணமுள்ள 6
மனுஷன் அதை அறியான்; மூடன் அதை
உணரான். துன்மார்க்கர் புல்லைப்போலே 7
தழைத்து, அக்கிரமக்காரர் யாவரும் செழிக்
கும்போது, [18]அது அவர்கள் என்றென்றைக்
கும் அழிந்துபோவதற்கே ஏதுவாகும். கர்த் 8
தாவே, நீர் என்றென்றைக்கும் உன்னதமான
வராயிருக்கிறீர். கர்த்தாவே, உமது சத்து 9
ருக்கள் அழிவார்கள்; உமது சத்துருக்கள்
அழிந்தேபோவார்கள்; [19]சகல அக்கிரமக்கார
ரும் சிதறுண்டுபோவார்கள். என் கொம்பைக் 10
காண்டாமிருகத்தின் கொம்பைப்போல உயர்
த்துவீர்; புது எண்ணெயால் [20]அபிஷேகம்
பண்ணப்படுகிறேன். என் சத்துருக்களுக்கு 11
நேரிடுவதை என் கண் காணும்; எனக்கு
விரோதமாய் எழும்புகிற துன்மார்க்கருக்கு நே
ரிடுவதை என் காது கேட்கும். நீதிமான் பனை 12
யைப்போல் செழித்து, [21]லீபனோனிலுள்ள
கேதுருவைப்போல் வளருவான். கர்த்தரு 13
டைய ஆலயத்திலே நாட்டப்பட்டவர்கள் எங்
கள் தேவனுடைய பிராகாரங்களில் செழித்தி
ருப்பார்கள். கர்த்தர் உத்தமரென்றும், [22]என் 14
கன்மலையாகிய அவரிடத்தில் அநீதியில்லை
யென்றும், விளங்கப்பண்ணும்படி, அவர்கள் 15
முதிர்வயதிலும் கனிதந்து, புஷ்டியும் பசுமை
யுமாயிருப்பார்கள்.

கர்த்தர் ராஜரிகம்பண்ணுகிறார், [23]மகத்து **93**
வத்தை அணிந்துகொண்டிருக்கிறார்; கர்த்தர்
பராக்கிரமத்தை அணிந்து, அவர் அதைக் கச்
சையாகக் கட்டிக்கொண்டிருக்கிறார்; ஆத
லால் பூச்சக்கரம் அசையாதபடி நிலைபெற்
றிருக்கிறது. உமது சிங்காசனம் [24]பூர்வமுதல் 2
உறுதியானது; நீர் அநாதியாயிருக்கிறீர். கர்த் 3
தாவே, நதிகள் எழும்பின; நதிகள் இரைச்ச
லிட்டு எழும்பின; நதிகள் அலைதிரண்டு
எழும்பின. திரளான தண்ணீர்களின் இரைச் 4
சலைப்பார்க்கிலும், [25]சமுத்திரத்தின் வலுமை
யான அலைகளைப்பார்க்கிலும், கர்த்தர் உன்ன
தத்திலே வல்லமையுள்ளவர். உமது சாட்சிகள் 5
மிகவும் உண்மையுள்ளவைகள்; கர்த்தாவே,
பரிசுத்தமானது [26]நித்தியநாளாக உமது ஆல
யத்தின் அலங்காரமாயிருக்கிறது.

நீதியைச் சரிக்கட்டுகிற தேவனாகிய கர்த் **94**
தாவே, [27]நீதியைச் சரிக்கட்டுகிற தேவனே,
பிரகாசியும். பூமியின் நியாயாதிபதியே, [28]நீர் 2
எழுந்து, பெருமைக்காரருக்குப் பதிலளியும்.
கர்த்தாவே, துன்மார்க்கர் எதுவரைக்கும் 3
மகிழ்ந்து, [29]துன்மார்க்கர் எதுவரைக்கும் களி
கூர்ந்திருப்பார்கள்? எதுவரைக்கும் அக்கிர 4
மக்காரர் யாவரும் வாயாடி, கடினமாய்ப்
பேசி, [30]பெருமை பாராட்டுவார்கள்? கர்த்தா 5
வே, அவர்கள் உமது ஜனத்தை நொறுக்கி,

* சங். 27. 4; 110. 3
1 யோபு 22. 28. நீதி. 16. 3. ஏசா. 26. 12
2 27. 5; 57. 1
3 142. 5
4 124. 7
5 17. 8
6 121. 5, 6
7 நீதி. 3. 25, 26. லூக். 1. 5
8 நீதி. 12. 21
9 மத். 4. 6. எபி. 1. 14
10 யோபு 5. 23
11 9. 10
12 ஏசா. 43. 2; 65. 24
13 1 சாமு. 2. 30
14 நீதி. 3. 2; 22. 4
15 147. 1
16 71. 15
17 ஏசா. 55. 9. ரோ. 11. 33, 34
18 73. 18—20. மல். 4. 1
19 மத். 7. 23
20 2 கொ. 1. 21. 1 யோ. 2. 20
21 52. 8. ஓசி. 14. 5, 6
22 உபா. 32. 4. செப். 3. 5. ரோ. 9. 14
23 ஏசா. 52. 7. வெளி. 19. 6
24 45. 6. நீதி. 8. 22. மீ.
25 89. 9
26 2 தீமோ. 2. 19. எபி. 12. 14. வெளி. 21. 27
27 உபா. 32. 35. நாகூ. 1. 2
28 ஆதி. 18. 25
29 யோபு 20. 4. எரே. 12. 1, 2
30 73. 8. யூதா 15

6 உமது சுதந்தரத்தை ஒடுக்குகிறார்கள். வித
வையையும் பரதேசியையும் கொன்று, திக்
7 கற்ற பிள்ளைகளைக் கொலைசெய்து: கர்த்தர்
பாரார், [1]யாக்கோபின் தேவன் கவனியார்
என்று சொல்லுகிறார்கள்.
8 ஜனத்தில் மிருககுணமுள்ளவர்களே,
[2]உணர்வடையுங்கள்; மூடரே, எப்பொழுது
9 புத்திமான்களாவீர்கள்? காதை உண்டாக்கி
னவர் கேளாரோ? [3]கண்ணை உருவாக்கின
10 வர் காணாரோ? ஜாதிகளை [4]தண்டிக்கிறவர்
கடிந்துகொள்ளாரோ? [5]மனுஷனுக்கு அறி
11 வைப் போதிக்கிறவர் அறியாரோ? மனுஷ
னுடைய யோசனைகள் [6]வீணென்று கர்த்தர்
அறிந்திருக்கிறார்.
12 கர்த்தாவே, துன்மார்க்கனுக்குக் குழிவெட்
டப்படும்வரைக்கும், நீர் தீங்கு நாட்களில்
13 அமர்ந்திருக்கப்பண்ணி, சிட்சித்து, [7]உம்மு
டைய வேதத்தைக்கொண்டு போதிக்கிற மனு
14 ஷன் பாக்கியவான். கர்த்தர் தம்முடைய
ஜனத்தை நெகிழவிடாமலும், [8]தம்முடைய
சுதந்தரத்தைக் கைவிடாமலும் இருப்பார்.
15 நியாயம் நீதியினிடமாகத் திரும்பும்; செம்மை
யான இருதயத்தார் யாவரும் அதைப் பின்
பற்றுவார்கள்.
16 துன்மார்க்கருக்கு விரோதமாய் என் பட்சத்
தில் எழும்புகிறவன் யார்? அக்கிரமக்காரருக்கு
விரோதமாய் என் பட்சத்தில் நிற்பவன் யார்?
17 கர்த்தர் எனக்குத் துணையாயிராவிட்டால்,
[9]என் ஆத்துமா சீக்கிரமாய் மவுனத்தில் வாசம்
18 பண்ணியிருக்கும். என் கால் சறுக்குகிறது
என்று, நான் சொல்லும்போது, [10]கர்த்தாவே,
19 உமது கிருபை என்னைத் தாங்குகிறது. என்
உள்ளத்தில் விசாரங்கள் பெருகுகையில்,
[11]உம்முடைய ஆறுதல்கள் என் ஆத்துமா
வைத் தேற்றுகிறது.
20 தீமையைக் கட்டளையினால் பிறப்பிக்கிற
கொடுங்கோலாசனம் [12]உமக்கு இசைந்திருக்
21 குமோ? அவர்கள் நீதிமானுடைய ஆத்துமா
வுக்கு விரோதமாய்க் கூட்டங்கூடி, [13]குற்ற
மில்லாத ரத்தத்தைக் குற்றப்படுத்துகிறார்கள்.
22 கர்த்தரோ எனக்கு அடைக்கலமும், என்
தேவன் நான் நம்பியிருக்கிற கன்மலையுமாயி
23 ருக்கிறார். அவர்களுடைய அக்கிரமத்தை அ
வர்கள்மேல் திருப்பி, [14]அவர்களுடைய பொல்
லாப்பினிமித்தம் அவர்களைச் சங்கரிப்பார்; நம்
முடைய தேவனாகிய கர்த்தரே அவர்களைச்
சங்கரிப்பார்.

**95** கர்த்தரைக் கெம்பீரமாய்ப் பாடி, [15]நம்
முடைய ரட்சணியக் கன்மலையைச் சங்கீர்த்
2 தனம் பண்ணக்கடவோம் வாருங்கள். துதித்
தலுடனே அவர் சந்நிதிக்கு முன்பாக வந்து,
சங்கீதங்களால் அவரை ஆர்ப்பரித்துப் பாடக்
கடவோம்.
3 கர்த்தரே மகா தேவனும், [16]எல்லா தேவர்
4 களுக்கும் மகா ராஜனுமாயிருக்கிறார். பூமி
யின் ஆழங்கள் அவர் கையில் இருக்கிறது;
பர்வதங்களின் *உயரங்களும் அவருடையவை
கள். சமுத்திரம் அவருடையது, [17]அவரே 5
அதை உண்டாக்கினார்; வெட்டாந்தரையை
யும் அவருடைய கரம் உருவாக்கிற்று.
நம்மை உண்டாக்கின கர்த்தருக்கு முன் 6
பாக நாம் பணிந்து குனிந்து [18]முழங்காற்படி
யிடக்கடவோம் வாருங்கள். அவர் நம்மு 7
டைய தேவன்; நாம் அவர் மேய்ச்சலின் ஜன
ங்களும், அவர் கைக்குள்ளான ஆடுகளுமாமே.
இன்று அவருடைய சத்தத்தைக் கேட்பீர்க 8
ளாகில், [19]வனாந்தரத்தில் கோபம் மூட்டின
போதும் சோதனைநாளிலும் நடந்ததுபோல,
உங்கள் இருதயத்தைக் கடினப்படுத்தாதேயுங்
கள். அங்கே உங்கள் பிதாக்கள் என்னைச் 9
சோதித்து, [20]என்னைப் பரீட்சைபார்த்து, என்
கிரியையையும் கண்டார்கள். நாற்பது வரு 10
ஷமாய் நான் அந்தச் சந்ததியை அரோசித்து,
அவர்கள் வழுவிப்போகிற இருதயமுள்ள ஜன
மென்றும், என்னுடைய வழிகளை அறியாத
வர்களென்றும் சொல்லி, என்னுடைய இளை 11
ப்பாறுதலில் அவர்கள் பிரவேசிப்பதில்லை
யென்று, [21]என்னுடைய கோபத்திலே ஆணை
யிட்டேன்.

கர்த்தருக்குப் புதுப்பாட்டைப் பாடுங்கள்; **96**
பூமியின் குடிகளே, [22]எல்லாரும் கர்த்தரைப்
பாடுங்கள். கர்த்தரைப் பாடி, அவருடைய 2
நாமத்தை ஸ்தோத்திரித்து, நாளுக்குநாள் அவ
ருடைய ரட்சிப்பைச் சுவிசேஷமாய் அறிவி
யுங்கள். ஜாதிகளுக்குள் அவருடைய மகி 3
மையையும், சகல ஜனங்களுக்குள்ளும் அவ
ருடைய அதிசயங்களையும் விவரித்துச் சொல்
லுங்கள். கர்த்தர் பெரியவரும், [23]மிகவும் 4
ஸ்தோத்திரிக்கப்படத்தக்கவருமா யிருக்கிறார்;
எல்லா தேவர்களிலும் பயப்படத்தக்கவர் அவ
ரே. சகல ஜனங்களுடைய தேவர்களும் விக் 5
கிரகங்கள்தானே, [24]கர்த்தரோ வானங்களை
உண்டாக்கினவர். மகிமையும் கனமும் அவர் 6
சமுகத்தில் இருக்கிறது; [25]வல்லமையும் மகத்
துவமும் அவர் பரிசுத்த ஸ்தலத்திலுள்ளது.
ஜனங்களின் வம்சங்களே, கர்த்தருக்கு மகி 7
மையையும் வல்லமையையும் செலுத்துங்கள்,
[26]கர்த்தருக்கே அதைச் செலுத்துங்கள். கர்த் 8
தருக்கு அவருடைய நாமத்திற்குரிய மகிமை
யைச் செலுத்தி, [27]காணிக்கைகளைக் கொண்டு
வந்து, அவருடைய பிராகாரங்களில் பிரவேசி
யுங்கள். பரிசுத்த அலங்காரத்துடனே கர்த் 9
தரைத் தொழுதுகொள்ளுங்கள்; பூலோகத்தா
ரே, நீங்கள் யாவரும் அவருக்கு முன்பாக நடு
ங்குங்கள். கர்த்தர் ராஜரிகம் பண்ணுகிறார், 10
[28]ஆகையால் பூச்சக்கரம் அசையாதபடி உறு
திப்பட்டிருக்கும்; அவர் ஜனங்களை நிதான
மாய் நியாயந்தீர்ப்பார் என்று ஜாதிகளுக்குள்
ளே சொல்லுங்கள்.
வானங்கள் மகிழ்ந்து, [29]பூமி பூரிப்பாகி, 11
சமுத்திரமும் அதின் நிறைவும் முழங்குவதாக.
நாடும் அதிலுள்ள யாவும் களிகூருவதாக; அப் 12
பொழுது கர்த்தருக்கு முன்பாகக் காட்டு விரு
ட்சங்களெல்லாம் கெம்பீரிக்கும். அவர் வரு 13

1 10. 10, 11
2 92. 6. ரோ. 3. 11
3 யாத். 4. 11. நீதி. 20. 12
4 எசே. 39. 21. ஆப. 3. 12
5 யோபு 35. 10. ஏசா. 28. 26
6 1 கொரி. 3. 19, 20
7 யோபு 5. 17. நீதி. 3. 11. எபி. 12. 5. ழ
8 1 சாமு. 12. 22. ரோ. 11. 1, 2
9 124. 1, 2
10 38. 16
11 63. 5, 6. 2 கொரி. 1. 3, 4
12 ஏசா. 10. 1
13 நீதி. 1. 11, 16. மத். 27. 1
14 நீதி. 5. 22
15 100. 1
16 97. 9. மல். 1. 14
* திரவியங்கள்.
17 ஆதி. 1. 9, 10
18 அப். 21. 5. 1 கொரி. 6. 20. பிலி. 2. 10
19 எபி. 3. 7, 15; 4. 7
20 1 கொரி. 10. 9
21 எபி. 3. 10, 17; 4. 3, 5
22 1 நாளா. 16. 23-33. வெளி. 5. 9, 10
23 18. 3
24 எரே. 10. 11, 12. ஏசா. 42. 5
25 63. 2
26 யூதா 25
27 மல். 1. 11. எபி. 13. 15
28 46. 6, 10. வெளி. 19. 6
29 69. 34

கிறார், அவர் பூமியை நியாயந்தீர்க்க வருகிறார்;
[1]அவர் பூலோகத்தை நீதியோடும், ஜனங்க
ளைச் சத்தியத்தோடும் நியாயந்தீர்ப்பார்.

97 கர்த்தர் ராஜரிகம் பண்ணுகிறார்; பூமி
பூரிப்பாகி, திரளான [2]தீவுகள் மகிழக்கட
2 வது. மேகமும் மந்தாரமும் அவரைச் சூழ்ந்தி
ருக்கிறது; [3]நீதியும் நியாயமும் அவருடைய
3 சிங்காசனத்தின் ஆதாரம். அக்கினி அவ
ருக்கு முன்சென்று, [4]சுற்றிலும் இருக்கிற அவ
ருடைய சத்துருக்களைச் சுட்டெரிக்கிறது.
4 அவருடைய மின்னல்கள் பூச்சக்கரத்தைப்
பிரகாசிப்பித்தது; [5]பூமி அதைக் கண்டு அதிர்
5 ந்தது. கர்த்தரின் பிரசன்னத்தினால் பர்வதங்
கள் மெழுகுபோல உருகிற்று, [6]சர்வ பூமியி
னுடைய ஆண்டவரின் பிரசன்னத்தினாலே
6 யே உருகிப்போயிற்று. வானங்கள் அவ
ருடைய நீதியை வெளிப்படுத்துகிறது; [7]சகல
ஜனங்களும் அவருடைய மகிமையைக் காண்
கிறார்கள்.
7 சொரூபங்களை வணங்கி, விக்கிரகங்களைப்
பற்றிப் பெருமைபாராட்டுகிற யாவரும் வெட்
கப்பட்டுப்போவார்களாக; [8]தேவர்களே, நீங்க
ளெல்லாரும் அவரைத் தொழுதுகொள்ளுங்
8 கள். சீயோன் கேட்டு மகிழ்ந்தது; கர்த்தா
வே, உம்முடைய நியாயத்தீர்ப்புகளினிமித்
தம் யூதாவின் குமாரத்திகள் களிகூர்ந்தார்கள்.
9 கர்த்தாவே, பூமி முழுவதுக்கும் நீர் உன்னத
மானவர்; எல்லா தேவர்களிலும் நீரே மிகவும்
உயர்ந்தவர்.
10 கர்த்தரில் அன்புகூருகிறவர்களே, தீமை
யை [9]வெறுத்துவிடுங்கள்; அவர் தம்முடைய
பரிசுத்தவான்களின் ஆத்துமாக்களைக் காப்பா
ற்றி, துன்மார்க்கரின் கைக்கு அவர்களைத்
11 தப்புவிக்கிறார். நீதிமானுக்காக வெளிச்சமும்,
[10]செம்மையான இருதயத்தாருக்காக மகிழ்ச்சி
12 யும் விதைக்கப்பட்டிருக்கிறது. நீதிமான்க
ளே, கர்த்தருக்குள் மகிழ்ந்து, [11]அவருடைய
*பரிசுத்தத்தின் நினைவுகூருதலைக் கொண்
டாடுங்கள்.

98 கர்த்தருக்குப் புதுப்பாட்டைப் பாடுங்கள்;
அவர் அதிசயங்களைச் செய்திருக்கிறார்;
[12]அவருடைய வலதுகரமும், அவருடைய பரி
சுத்த புயமும், ரட்சிப்பை உண்டாக்கினது.
2 கர்த்தர் தமது [13]ரட்சிப்பைப் பிரஸ்தாபமாக்கி,
தமது நீதியை ஜாதிகளுடைய கண்களுக்கு
3 முன்பாக விளங்கப்பண்ணினார். அவர் இஸ்
ரவேல் குடும்பத்துக்காகத் தமது கிருபையை
யும் உண்மையையும் நினைவுகூர்ந்தார்; [14]பூமி
யின் எல்லைகளெல்லாம் நமது தேவனுடைய
ரட்சிப்பைக் கண்டது.
4 பூமியின் குடிகளே, நீங்களெல்லாரும் கர்த்
தரை நோக்கி ஆனந்தமாய் ஆர்ப்பரியுங்கள்;
5 முழக்கமிட்டுக் கெம்பீரமாய்ப் பாடுங்கள். சுர
மண்டலத்தால் கர்த்தரைக் கீர்த்தனம் பண்
ணுங்கள், சுரமண்டலத்தாலும் கீதசத்தத்தா
6 லும் அவரைக் கீர்த்தனம்பண்ணுங்கள். கர்த்
தராகிய ராஜாவின் சமுகத்தில் பூரிகைகளா
லும் எக்காள சத்தத்தாலும் ஆனந்தமாய் ஆர்ப்
பரியுங்கள்.
சமுத்திரமும் அதின் நிறைவும், பூச்சக்கர 7
மும் அதின் குடிகளும் முழங்குவதாக. கர்த் 8
தருக்கு முன்பாக ஆறுகள் கைகொட்டி, பர்வ
தங்கள் ஏகமாய்க் கெம்பீரித்துப் பாடக்கட
வது. அவர் பூமியை நியாயந்தீர்க்க வருகி 9
றார்; [15]பூலோகத்தை நீதியோடும் ஜனங்களை
நிதானத்தோடும் நியாயந்தீர்ப்பார்.

கர்த்தர் ராஜரிகம் பண்ணுகிறார், [16]ஜனங் 99
கள் தத்தளிப்பார்களாக; அவர் கேருபீன்
களின் மத்தியில் வீற்றிருக்கிறார், பூமி அசை
வதாக. கர்த்தர் சீயோனில் பெரியவர், அவர் 2
எல்லா ஜனங்கள்மேலும் உயர்ந்தவர். மகத்து 3
வமும் பயங்கரமுமான [17]உமது நாமத்தை அவர்
கள் துதிப்பார்களாக; அது பரிசுத்தமுள்ளது.
ராஜாவின் வல்லமை நீதியில் பிரியப்படு 4
கிறது, [18]தேவரீர் நியாயத்தை நிலைநிறுத்து
கிறீர்; நீர் யாக்கோபில் நியாயமும் நீதியும்
செய்கிறீர். நம்முடைய தேவனாகிய கர்த்த 5
ரை உயர்த்தி, அவர் பாதபடியிலே பணியுங்
கள்; [19]அவர் பரிசுத்தமுள்ளவர்.
அவருடைய ஆசாரியரில் மோசேயும் ஆரோ 6
னும், அவர் நாமத்தைப்பற்றிக் கூப்பிடுகிறவர்
களில் சாமுவேலும், [20]கர்த்தரை நோக்கிக்
கூப்பிட்டார்கள்; அவர் அவர்களுக்கு மறுஉத்
தரவு அருளினார். மேகஸ்தம்பத்திலிருந்து 7
அவர்களோடே பேசினார்; [21]அவர்கள் அவ
ருடைய சாட்சிப் பிரமாணங்களையும் அவர்
தங்களுக்குக் கொடுத்த கட்டளையையும் கைக்
கொண்டார்கள். எங்கள் தேவனாகிய கர்த் 8
தாவே, நீர் அவர்களுக்கு உத்தரவு அருளி
னீர்; நீர் அவர்கள் கிரியைகளினிமித்தம் நீதி
சரிக்கட்டினபோதிலும், [22]அவர்களுக்கு மன்
னிக்கிற தேவனாயிருந்தீர். நம்முடைய தேவ 9
னாகிய கர்த்தரை உயர்த்தி, [23]அவருடைய
பரிசுத்த பர்வதத்திற்கு நேராகப் பணியுங்கள்;
நம்முடைய தேவனாகிய கர்த்தர் பரிசுத்த
முள்ளவர்.

(ஸ்தோத்திர சங்கீதம்.) 100
பூமியின் குடிகளே, எல்லாரும் கர்த்தரைக்
கெம்பீரமாய்ப் பாடுங்கள். மகிழ்ச்சியோடே 2
கர்த்தருக்கு ஆராதனை செய்து, ஆனந்த சத்த
த்தோடே அவர் சந்நிதிமுன் வாருங்கள்.
கர்த்தரே தேவனென்று அறியுங்கள்; நாம் 3
அல்ல, அவரே நம்மை உண்டாக்கினார்; [24]நாம்
அவர் ஜனங்களும், அவர் மேய்ச்சலின் ஆடு
களுமா யிருக்கிறோம். அவர் வாசல்களில் 4
துதியோடும், [25]அவர் பிராகாரங்களில் புகழ்ச்சி
யோடும் பிரவேசித்து, அவரைத் துதித்து,
அவருடைய நாமத்தை ஸ்தோத்திரியுங்கள்.
கர்த்தர் நல்லவர், அவருடைய கிருபை 5
என்றென்றைக்கும், அவருடைய உண்மை
தலைமுறை தலைமுறைக்கும் உள்ளது.

(தாவீதின் சங்கீதம்.) 101
இரக்கத்தையும் நியாயத்தையும் குறித்துப்
பாடுவேன்; கர்த்தாவே, உம்மைக் கீர்த்தனம்

1 வெளி. 19. 11: 20. 13
2 ஏசா. 60. 9
3 89. 14. 1 இரா. 8. 12
4 தானி. 7. 10. எபி. 12. 29
5 யாத். 19. 18
6 நியா. 5. 5. மீகா. 1. 4
7 எண். 14. 21. மத். 25. 31
8 யாத். 20. 4. எபி. 1. 6
9 நீதி. 3. 7. ரோம. 12. 9
10 யோபு 22. 28. நீதி. 4. 18
11 பிலி. 4. 4
* பரிசுத்தநாமத்தை.
12 யாத். 15. 6, 11. ஏசா. 59. 16
13 ஏசா. 52. 10: 62. 2. லூ. 2. 30, 31. ரோம. 3. 25, 26
14 லூ. 1. 54, 72. ரோம. 10. 12, 18
15 வெளி. 1. 7
16 98. 1. எரே. 5. 22
17 உபா. 28. 58. வெளி. 15. 4
18 யோபு 36. 5-7
19 1 நாளா. 28. 2
20 யாத். 15. 25. 1 சாமு. 7. 9
21 யாத். 33. 9
22 89. 33. எரே. 33. 25, 26
23 2. 6
24 149. 2. ஏசா. 63. 19. எசே. 34. 11, 31
25 65. 1. ஏசா. 35. 10

2 பண்ணுவேன். உத்தமமான வழியிலே[1]விவே
கமாய் நடப்பேன்; எப்பொழுது என்னிடத்
தில் வருவீர்! [2]என் வீட்டிலே உத்தம இரு
3 தயத்தோடு நடந்துகொள்ளுவேன். தீங்கான
காரியத்தை என் கண்முன் வைக்கமாட்டேன்;
வழி விலகுகிறவர்களின் செய்கையை வெறுக்
4 கிறேன்; [3]அது என்னைப் பற்றாது. மாறுபா
டான இருதயம் என்னைவிட்டு அகலவேண்
5 டும்; [4]பொல்லாதவனை அறியமாட்டேன். பிற
னை இரகசியமாய் அவதூறு பண்ணுகிறவ
னைச் சங்கரிப்பேன்; [5]மேட்டிமைக் கண்ண
னையும் பெருநெஞ்சுள்ளவனையும் பொறுக்க
6 மாட்டேன். தேசத்தில் உண்மையானவர்கள்
என்னோடே வாசம்பண்ணும்படி என் கண்
கள் அவர்கள்மேல் நோக்கமாயிருக்கும்; உத்
தமமான வழியில் நடக்கிறவன் என்னைச்
7 சேவிப்பான். கபடுசெய்கிறவன் என் வீட்டுக்
குள் இருப்பதில்லை; பொய் சொல்லுகிறவன்
8 [6]என் கண்முன் நிலைப்பதில்லை. அக்கிரமக்
காரர் ஒருவரும் **கர்த்தருடைய** நகரத்தில் இரா
தபடி வேர் அறுப்புண்டுபோக, [7]தேசத்திலுள்ள
அக்கிரமக்காரர் யாவரையும் அதிகாலமே
சங்கரிப்பேன்.

## 102

(துயரப்படுகிறவன் துக்கத்தில் மூழ்கி, கர்த்தரிடத்தில் தன் வியாகுலத்தைத் தெரிவித்துச் செய்யும் விண்ணப்பம்.)

**கர்த்தா**வே, என் விண்ணப்பத்தைக் கே
ளும்; [8]என் கூப்பிடுதல் உம்மிடத்தில் சேர்வ
2 தாக. என் ஆபத்துநாளிலே உமது முகத்தை
எனக்கு மறையாதேயும்; [9]உமது செவியை
என்னிடத்தில் சாயும்; நான் கூப்பிடுகிற நாளி
லே எனக்குத் தீவிரமாய் உத்தரவு அருளிச்
செய்யும்.
3 என் நாட்கள் புகையைப்போல் ஒழிந்தது;
[10]என் எலும்புகள் ஒரு கொள்ளியைப்போல்
4 எரியுண்டது. என் இருதயம் புல்லைப்போல்
வெட்டுண்டு உலர்ந்தது; என் போஜனத்தைப்
5 புசிக்க மறந்தேன். என் பெருமூச்சின் சத்
தத்தினால், என் எலும்புகள் என் மாம்சத்தோடு
6 ஒட்டிக்கொள்ளுகிறது. வனாந்தர நாரைக்கு
ஒப்பானேன்; [11]பாழான இடங்களில் தங்கும்
7 ஆந்தையைப்போலானேன். நான் நித்திரை
யில்லாமல் வீட்டின்மேல் தனித்திருக்கும்
8 குருவியைப்போல் இருக்கிறேன். நாடோ
றும் என் சத்துருக்கள் என்னை நிந்திக்கிறார்
கள்; [12]என்மேல் மூர்க்க வெறிகொண்டவர்கள்
எனக்கு விரோதமாய்ச் சாபம் இடுகிறார்கள்.
9 நீர் என்னை உயரத் தூக்கி, தாழத் தள்ளினீர்,
[13]உமது சினத்திற்கும் கடுங்கோபத்திற்கும் உள்
10 ளானேன். ஆதலால் நான் சாம்பலை அப்ப
மாகப் புசித்து, என் பானங்களைக் கண்ணீ
11 ரோடே கலக்கிறேன். என் நாட்கள் சாய்ந்
துபோகிற நிழலைப்போலிருக்கிறது; [14]புல்
லைப்போல் உலர்ந்துபோகிறேன்.
12 **கர்த்தராகிய** நீரோ என்றென்றைக்கும்
இருக்கிறீர்; [15]உம்முடைய பேர் பிரஸ்தாபம்
13 தலைமுறை தலைமுறையாக நிற்கும். தேவ
ரீர் எழுந்தருளி சீயோனுக்கு இரங்குவீர்;
[16]அதற்குத் தயை செய்யுங்காலமும், [17]அதற்
காகக் குறித்தநேரமும் வந்தது. உம்முடைய 14
ஊழியக்காரர் அதின் கல்லுகள்மேல் வாஞ்
சைவைத்து, அதின் மண்ணுக்குப் பரிதபிக்
கிறார்கள். **கர்த்தர்** சீயோனைக் கட்டி, தமது 15
மகிமையில் வெளிப்படுவார். திக்கற்றவர்க 16
ளுடைய ஜெபத்தை அலட்சியம்பண்ணாமல்,
[18]அவர்கள் விண்ணப்பத்தை அங்கீகரிப்பார்.
அப்பொழுது ஜாதிகள் **கர்த்தருடைய** நாமத் 17
துக்கும், பூமியிலுள்ள ராஜாக்களெல்லாரும்
உம்முடைய மகிமைக்கும் பயப்படுவார்கள்.
பின்சந்ததிக்காக [19]இது எழுதப்படும்; சிருஷ் 18
டிக்கப்படும் ஜனம் **கர்த்தரைத்** துதிக்கும்.
**கர்த்தர்** கட்டுண்டவர்களின் பெருமூச்சைக் 19
கேட்கவும், [20]கொலைக்கு நியமிக்கப்பட்டவர்
களை விடுதலையாக்கவும், தம்முடைய உயர்ந்த 20
பரிசுத்த ஸ்தலத்திலிருந்து பார்த்து, வானங்
களிலிருந்து பூமியின்மேல் கண்ணோக்கமா
னார். **கர்த்தருக்கு** ஆராதனைசெய்ய, ஜனங் 21
களும் ராஜ்யங்களும் ஏகமாய்க் கூடிக்கொள்
ளுகையில், சீயோனில் **கர்த்தருடைய** நாமத் 22
தையும், [21]எருசலேமில் அவருடைய துதியை
யும் பிரஸ்தாபப்படுத்துவார்கள்.
வழியிலே என் பெலனை அவர் ஒடுக்கி, 23
[22]என் நாட்களைக் குறுகப்பண்ணினார். அப் 24
பொழுது நான்: [23]என் தேவனே, பாதிவய
தில் என்னை எடுத்துக்கொள்ளாதேயும்; உம்
முடைய வருஷங்கள் தலைமுறை தலைமுறை
யாக இருக்கும். நீர் ஆதியிலே பூமியை 25
அஸ்திபாரப்படுத்தினீர்; [24]வானங்கள் உம்மு
டைய கரத்தின் கிரியையாயிருக்கிறது. அவை 26
கள் அழிந்துபோம், நீரோ நிலைத்திருப்பீர்;
[25]அவைகளெல்லாம் வஸ்திரம்போல் பழமை
யாய்ப்போம்; அவைகளை ஒரு சால்வையைப்
போல் மாற்றுவீர், அப்பொழுது மாறிப்போம்.
நீரோ மாறாதவராயிருக்கிறீர்; [26]உமது ஆண்டு 27
கள் முடிந்துபோவதில்லை. உமது அடியா 28
ரின் பிள்ளைகள் [27]தாபரித்திருப்பார்கள்; அவர்
கள் சந்ததி உமக்கு முன்பாக நிலைபெற்றிருக்
கும் என்று சொன்னேன்.

## 103

(தாவீதின் சங்கீதம்.)

என் ஆத்துமாவே, **கர்த்தரை** ஸ்தோத்திரி;
என் முழு உள்ளமே, அவருடைய பரிசுத்த
நாமத்தை ஸ்தோத்திரி. என் ஆத்துமாவே, 2
**கர்த்தரை** ஸ்தோத்திரி; அவர் செய்த சகல
உபகாரங்களையும் மறவாதே. அவர் உன் [28]அக் 3
கிரமங்களையெல்லாம் மன்னித்து, [29]உன் நோய்
களையெல்லாம் குணமாக்கி, உன் பிராணனை 4
அழிவுக்கு விலக்கி மீட்டு, உன்னைக் கிருபை
யினாலும் இரக்கங்களினாலும் முடிசூட்டி,
நன்மையினால் உன் வாயைத் திருப்தியாக்கு 5
கிறார்; [30]கழுகுக்குச் சமானமாய் உன் வயது
திரும்ப வாலவயதுபோலாகிறது.
ஒடுக்கப்படுகிற யாவருக்கும், **கர்த்தர்** நீதி 6
யையும் நியாயத்தையும் செய்கிறார். அவர் 7
தமது வழிகளை மோசேக்கும், தமது கிரியை

1 1 சாமு. 18. 14. 1 இரா. 9. 4
2 ஏசா. 33. 15
3 125. 5
4 1 கொ. 15. 33
5 நீதி. 6. 17
6 வெளி. 21. 27
7 எரே. 21. 12
8 145. 19
9 ஏசா. 43. 2. 1 கொ. 10. 13
10 யாக். 4. 14
11 யோபு 30. 29. ஏசா. 34. 11
12 அப். 28. 12; 26. 11
13 30. 7
14 பிர. 6. 12. யாக். 1. 10
15 புல. 5. 19
16 ஏசா. 60. 1. சக. 1. 12, 13
17 ஏசா. 40. 2
18 நெகே. 1. 6, 11; 2. 1—8
19 ரோ. 15. 4. 1 கொ. 10. 11
20 143. 7
21 1 பேது. 2. 9
22 யோபு 21. 21
23 39. 13. ஏசா. 38. 10
24 எபி. 1. 10–12
25 ஏசா. 34. 4. ரோ. 8. 20. 2 பே. 2. 7–12
26 மல். 3. 6. எபி. 13. 8. யாக். 1. 17
27 69. 36
28 மத். 9. 2-6. எபே. 1. 7
29 யாத். 15. 26. எரே. 17. 14
30 ஏசா. 40. 31

களை இஸ்ரவேல் புத்திரருக்கும் தெரியப்பண்
8 ணினார். **கர்த்தர்** உருக்கமும், [1]இரக்கமும்,
நீடிய சாந்தமும், மிகுந்த கிருபையுமுள்ளவர்.
9 அவர் எப்பொழுதும் கடிந்துகொள்ளார்; [2]என்
10 றைக்கும் கோபங்கொண்டிரார். அவர் நம்மு
டைய பாவங்களுக்குத் தக்கதாக நமக்குச் செய்
யாமலும், [3]நம்முடைய அக்கிரமங்களுக்குத்
தக்கதாக நமக்குச் சரிக்கட்டாமலும் இருக்கி
11 றார். பூமிக்கு வானம் எவ்வளவு உயரமா
யிருக்கிறதோ, [4]அவருக்குப் பயப்படுகிறவர்
கள்மேல் அவருடைய கிருபையும் அவ்வளவு
12 பெரிதாயிருக்கிறது. மேற்குக்கும் கிழக்குக்
கும் எவ்வளவு தூரமோ, [5]அவ்வளவு தூரமாய்
அவர் நம்முடைய பாவங்களை நம்மைவிட்டு
13 விலக்கினார். தகப்பன் தன் பிள்ளைகளுக்கு
இரங்குகிறதுபோல, [6]**கர்த்தர்** தமக்குப் பயந்
14 தவர்களுக்கு இரங்குகிறார். நம்முடைய உரு
வம் இன்னதென்று அவர் அறிவார்; [7]நாம்
15 மண்ணென்று நினைவுகூருகிறார். மனுஷ
னுடைய நாட்கள் புல்லுக்கு ஒப்பாயிருக்கி
றது; [8]வெளியின் புஷ்பத்தைப்போல் பூக்கி
16 றான். காற்று அதின்மேல் வீசினவுடனே
அது இல்லாமற்போயிற்று; [9]அது இருந்த
17 இடமும் இனி அதை அறியாது. **கர்த்தரு
டைய** கிருபையோ அவருக்குப் பயந்தவர்கள்
மேலும், அவருடைய நீதி அவர்கள் பிள்ளைக
ளுடைய பிள்ளைகள்மேலும் அநாதியாய் என்
18 றென்றைக்கும் உள்ளது. அவருடைய உடன்
படிக்கையைக் கைக்கொண்டு, [10]அவருடைய
கட்டளைகளின்படி செய்ய நினைக்கிறவர்கள்
மேலேயே உள்ளது.
19 **கர்த்தர்** வானங்களில் தமது சிங்காசனத்
தை ஸ்தாபித்திருக்கிறார்; [11]அவருடைய ராஜ
20 ரிகம் சர்வத்தையும் ஆளுகிறது. **கர்த்தருடைய**
வார்த்தையைக் கேட்டு, அவருடைய வசனத்
தின்படி செய்கிற [12]பலத்த சவுரியவான்களா
கிய அவருடைய தூதர்களே, அவரை ஸ்தோத்
21 திரியுங்கள். **கர்த்தருக்குப்** பிரியமானதைச்
செய்து, [13]அவர் பணிவிடைக்காரராயிருக்கிற
அவருடைய சர்வ சேனைகளே, அவரை
22 ஸ்தோத்திரியுங்கள். **கர்த்தர்** ஆளுகிற எவ்வி
டங்களிலுமுள்ள அவருடைய சகல கிரியை
களே, [14]அவரை ஸ்தோத்திரியுங்கள்; என்
ஆத்துமாவே, **கர்த்தரை** ஸ்தோத்திரி.

**104** என் ஆத்துமாவே, **கர்த்தரை** ஸ்தோத்
திரி; என் தேவனாகிய **கர்த்தாவே**, நீர்
மிகவும் பெரியவராயிருக்கிறீர்; [15]மகிமையை
யும் மகத்துவத்தையும் அணிந்துகொண்டிருக்
2 கிறீர். ஒளியை வஸ்திரமாகத் தரித்து, [16]வா
னங்களைத்திரையைப்போல்[17]விரித்திருக்கிறீர்.
3 தமது மேல்வீடுகளைத் தண்ணீர்களால் மச்சுப்
பாவி, [18]மேகங்களைத் தமது இரதமாக்கி, காற்
றினுடைய செட்டைகளின்மேல் செல்லுகி
4 றார். தம்முடைய தூதர்களைக் காற்றுகளாக
வும், [19]தம்முடைய ஊழியக்காரரை அக்கினி
5 ஜுவாலைகளாகவும் செய்கிறார். பூமி ஒரு
போதும் நிலைபெயராதபடி அதின் ஆதாரங்

[1] யாத். 34. 6, 7
[2] ஏசா. 57. 16. மீகா. 7. 18, 19
[3] எஸ்றா 9. 13
[4] எபே. 3. 18
[5] எரே. 50. 20
[6] மல். 3. 17
[7] ஆதி. 3. 19. பிர. 12. 7
[8] ஏசா. 40. 6, 8. யாக். 1. 10, 11
[9] யோபு 20. 9
[10] யாத். 20. 6. உபா. 7. 9
[11] 11. 4; 95. 5. தானி. 4. 34, 35
[12] யோவேல் 2. 11
[13] தானி. 7. 9, 10. எபி. 1. 14
[14] 145. 10
[15] வெளி. 1. 13. மு
[16] தானி. 7. 9. 1 தீமோ. 6. 16
[17] ஏசா. 40. 22
[18] ஏசா. 19. 1. ஆமோ. 9. 6
[19] 2 இரா. 2. 11; 6. 17. எபி. 1. 7
[20] ஆதி. 7. 19
[21] ஆதி. 8. 1-5
[22] யோபு 38. 10, 11
[23] யோபு 28. 5
[24] நீதி. 31. 6, 7
[25] ஆதி. 1. 14
[26] யோபு 38. 39
[27] ஆதி. 3. 19
[28] நீதி. 3. 19
* லிவியாதான். யோபு 41. 1. மு

கள்மேல் அதை ஸ்தாபித்தார். அதை வஸ்தி 6
ரத்தினால் மூடுவதுபோல ஆழத்தினால் மூடி
னீர்; [20]பர்வதங்களின்மேல் தண்ணீர்கள் நின்
றது. அவைகள் உமது கண்டிதத்தால் விலகி 7
யோடி, [21]உமது குமுறலின் சத்தத்தால் விரை
ந்துபோயிற்று. அவைகள் மலைகளில் ஏறி, 8
பள்ளத்தாக்குகளில் இறங்கி, நீர் அவைக
ளுக்கு ஏற்படுத்தின இடத்தில் சென்றது.
அவைகள் திரும்பவும் வந்து பூமியை மூடிக் 9
கொள்ளாதபடி [22]கடவாதிருக்கும் எல்லையை
அவைகளுக்கு ஏற்படுத்தினீர். அவர் பள்ளத் 10
தாக்குகளில் நீரூற்றுகளை வரவிடுகிறார்; அவை
கள் மலைகள் நடுவே ஓடுகிறது. அவைகள் 11
வெளியின் ஜீவன்களுக்கெல்லாம் தண்ணீர்
கொடுக்கும்; அங்கே காட்டுக்கழுதைகள் தங்
கள் தாகத்தைத் தீர்த்துக்கொள்ளும். அவை 12
களின் ஓரமாய் ஆகாயத்துப் பறவைகள் சஞ்
சரித்து, கிளைகள்மேலிருந்து பாடும். தம்மு 13
டைய மேல்வீடுகளிலிருந்து பர்வதங்களுக்குத்
தண்ணீர் இறைக்கிறார்; உமது கிரியைகளின்
பலனாலே பூமி திருப்தியாயிருக்கிறது. பூமி 14
யிலிருந்து ஆகாரம் உண்டாகும்படி, அவர்
மிருகங்களுக்குப் புல்லையும், [23]மனுஷருக்கு
உபயோகமான பயிர்வகைகளையும் முளைப்பிக்
கிறார். மனுஷனுடைய இருதயத்தை மகிழ்ச் 15
சியாக்கும் திராட்சரசத்தையும், [24]அவனுக்கு
முகக்களையை உண்டுபண்ணும் எண்ணெயை
யும், மனுஷனுடைய இருதயத்தை ஆதரிக்
கும் ஆகாரத்தையும் விளைவிக்கிறார். **கர்த்த** 16
**ருடைய** விருட்சங்களும், அவர் நாட்டின லீப
னோனின் கேதுருக்களும் சாரத்தினால் நிறைந்
திருக்கும். அங்கே குருவிகள் கூடுகட்டும்; 17
தேவதாரு விருட்சங்கள் கொக்குகளின் குடி
யிருப்பு. உயர்ந்த பர்வதங்கள் வரையாடுக 18
ளுக்கும், கன்மலைகள் குழிமுசல்களுக்கும்
அடைக்கலம்.
சந்திரனைக் காலக்குறிப்புகளுக்காகப் படை 19
த்தார்; [25]சூரியன் தன் அஸ்தமனத்தை அறி
யும். நீர் இருளைக் கட்டளையிடுகிறீர், இராக் 20
காலமாகும்; அதிலே சகல காட்டுஜீவன்களும்
நடமாடும். பாலசிங்கங்கள் [26]இரைக்காக கெர்ச் 21
சித்து, தேவனால் தங்களுக்கு ஆகாரம் கிடைக்
கும்படித் தேடும். சூரியன் உதிக்கையில் 22
அவைகள் ஒதுங்கி, தங்கள் தாபரங்களில் படுத்
துக்கொள்ளும். அப்பொழுது மனுஷன் சா 23
யங்காலமட்டும் தன் வேலைக்கும், [27]தன் பண்
ணைக்கும் புறப்படுகிறான். **கர்த்தாவே**, உமது 24
கிரியைகள் எவ்வளவு திரளாயிருக்கிறது!
அவைகளையெல்லாம் ஞானமாய்ப் படைத்தீர்;
[28]பூமி உம்முடைய பொருள்களினால் நிறைந்
திருக்கிறது. பெரிதும் விஸ்தாரமுமான இந் 25
தச் சமுத்திரமும் அப்படியே நிறைந்திருக்
கிறது; அதிலே சஞ்சரிக்கும் சிறியவைகளும்
பெரியவைகளுமான எண்ணிறந்த ஜீவன்கள்
உண்டு. அதிலே கப்பல்கள் ஓடும்; அதிலே 26
விளையாடும்படி நீர் உண்டாக்கின *திமிங்கி
லங்களும் உண்டு. ஏற்ற வேளையில் ஆகாரத் 27

தைத் தருவீர் என்று அவைகளெல்லாம் உம்
28 மை நோக்கிக் காத்திருக்கும். நீர் கொடுக்க,
அவைகள் வாங்கிக்கொள்ளும்; [1]நீர் உம்மு
டைய கையைத் திறக்க, அவைகள் நன்மை
29 யால் திருப்தியாகும். நீர் உமது முகத்தை
மறைக்க, திகைக்கும்; [2]நீர் அவைகளின் சுவா
சத்தை வாங்கிக்கொள்ள, அவைகள் மாண்டு,
30 தங்கள் மண்ணுக்குத் திரும்பும். நீர் உம்மு
டைய ஆவியை அனுப்பும்போது, [3]அவை
கள் சிருஷ்டிக்கப்படும்; நீர் பூமியின் ரூபத்தை
யும் புதிதாக்குகிறீர்.
31 **கர்த்தருடைய** மகிமை என்றென்றைக்கும்
விளங்கும்; [4]**கர்த்தர்** தம்முடைய கிரியைக
32 ளிலே மகிழுவார். அவர் பூமியை நோக்கிப்
பார்க்க, அது அதிரும்; [5]அவர் பர்வதங்களைத்
33 தொட, அவைகள் புகையும். நான் உயிரோ
டிருக்குமட்டும் என் **கர்த்தரைப்** பாடுவேன்;
நான் உள்ளளவும் என் தேவனைக் கீர்த்தனம்
34 பண்ணுவேன். நான் அவரைத் தியானிக்கும்
தியானம் இனிதாயிருக்கும்; நான் **கர்த்தருக்**
35 **குள்** மகிழுவேன். பாவிகள் பூமியிலிருந்து
நிர்மூலமாகி, [6]துன்மார்க்கர் இனி இராமற்
போவார்கள். என் ஆத்துமாவே, **கர்த்தரை**
ஸ்தோத்திரி, அல்லேலூயா.

**105** **கர்த்தரைத்** துதித்து, [7]அவருடைய நா
மத்தைப் பிரஸ்தாபமாக்குங்கள்; அவரு
டைய செய்கைகளை ஜனங்களுக்குள்ளே பிர
2 சித்தப்படுத்துங்கள். அவரைப் பாடி, அவ
ரைக் கீர்த்தனம் பண்ணுங்கள்; அவருடைய
அதிசயங்களையெல்லாம் தியானித்துப் பேசுங்
3 கள். அவருடைய பரிசுத்த நாமத்தைக்குறி
த்து மேன்மைபாராட்டுங்கள்; **கர்த்தரைத்** தே
4 டுகிறவர்களின் இருதயம் மகிழ்வதாக. **கர்த்**
**தரையும்** அவர் வல்லமையையும் நாடுங்கள்;
5 [8]அவர் சமுகத்தை நித்தமும் தேடுங்கள். அவ
ருடைய தாசனாகிய ஆபிரகாமின் சந்ததியே!
அவரால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களாகிய
6 யாக்கோபின் புத்திரரே! அவர் செய்த அதி
சயங்களையும், அவருடைய அற்புதங்களையும்,
அவர் வாக்கின் நியாயத்தீர்ப்புகளையும் நினைவு
7 கூருங்கள். அவரே நம்முடைய தேவனாகிய
**கர்த்தர்**, [9]அவருடைய நியாயத்தீர்ப்புகள் பூமி
யெங்கும் விளங்கும்.
8 ஆயிரந்தலைமுறைக்கென்று அவர் கட்டளை
யிட்ட வாக்கையும், [10]ஆபிரகாமோடே அவர்
9 பண்ணின உடன்படிக்கையையும், அவர்
ஈசாக்குக்கு இட்ட ஆணையையும் என்றென்
10 றைக்கும் நினைத்திருக்கிறார். அதை யாக்
கோபுக்குப் பிரமாணமாகவும், [11]இஸ்ரவே
லுக்கு நித்திய உடன்படிக்கையாகவும் உறு
11 திப்படுத்தி: உங்கள் சுதந்தர பாகமான கா
னான் தேசத்தை உனக்குத் தருவேன் என்றார்.
12 அக்காலத்தில் அவர்கள் கொஞ்சத் தொகைக்
குட்பட்ட சொற்ப ஜனங்களும் [12]பரதேசிகளு
13 மாயிருந்தார்கள். அவர்கள் ஒரு ஜனத்தை
விட்டு மறுஜனத்தண்டைக்கும், ஒரு ராஜ்யத்
தைவிட்டு மறுதேசத்தாரண்டைக்கும் போ
னார்கள். அவர்களை ஒடுக்கும்படி ஒருவருக் 14
கும் இடங்கொடாமல், அவர்கள்நிமித்தம் ரா
ஜாக்களைக் கடிந்துகொண்டு: நான் அபிஷே 15
கம் பண்ணினவர்களை நீங்கள் தொடாமலும்
[13]என்னுடைய தீர்க்கதரிசிகளுக்குத் தீங்குசெய்
யாமலும் இருங்கள் என்றார்.
அவர் தேசத்திலே பஞ்சத்தை வருவித்து, 16
[14]ஆகாரமென்னும் ஆதாரக்கோலை முற்றிலும்
முறித்தார். அவர்களுக்கு முன்னாலே ஒரு 17
புருஷனை அனுப்பினார்; [15]யோசேப்பு சிறை
யாக விற்கப்பட்டான். அவன் கால்களை 18
விலங்குபோட்டு ஒடுக்கினார்கள்; அவன் பிரா
ணன் இரும்பில் அடைபட்டிருந்தது. **கர்த்** 19
**தர்** சொன்ன வார்த்தை நிறைவேறுமளவும்
[16]அவருடைய வசனம் அவனைப் புடமிட்டது.
ராஜா ஆள் அனுப்பி, [17]அவனைக் கட்டவிழ்க் 20
கச் சொன்னான்; ஜனங்களின் அதிபதி அவ
னை விடுதலைபண்ணினான். தன் பிரபுக்களை 21
அவன் மனதின்படி கட்டவும், தன் மூப்பர்
களை ஞானிகளாக்கவும், அவனைத் தன் 22
வீட்டுக்கு ஆண்டவனும், தன் ஆஸ்திக்கெல்
லாம் அதிபதியுமாக்கினான். அப்பொழுது 23
இஸ்ரவேல் எகிப்திற்கு வந்தான்; [18]யாக்கோபு
காமின் தேசத்திலே பரதேசியாயிருந்தான்.
அவர் தம்முடைய ஜனங்களை மிகவும் பலுகப் 24
பண்ணி, [19]அவர்களுடைய சத்துருக்களைப்
பார்க்கிலும் அவர்களைப் பலவான்களாக்கினார்.
தம்முடைய ஜனங்களைப் பகைக்கவும், தம்மு 25
டைய ஊழியக்காரரை வஞ்சனையாய் நடத்த
வும், அவர்களுடைய இருதயத்தை மாற்றி
னார். தம்முடைய தாசனாகிய மோசேயையும் 26
[20]தாம் தெரிந்துகொண்ட ஆரோனையும் அனுப்
பினார். இவர்கள் அவர்களுக்குள் அவரு 27
டைய அடையாளங்களையும், [21]காமின் தேசத்
திலே அற்புதங்களையும் செய்தார்கள். அவர் 28
இருளை அனுப்பி, அந்தகாரத்தை உண்டாக்கி
னார்; [22]அவருடைய வார்த்தைகளை எதிர்ப்பா
ரில்லை.
அவர்களுடைய தண்ணீர்களை இரத்தமாக 29
மாற்றி, [23]அவர்களுடைய மச்சங்களைச் சாகப்
பண்ணினார். அவர்களுடைய தேசம் தவளை 30
களைத் திரளாய்ப் பிறப்பித்தது; [24]அவர்களு
டைய ராஜாக்களின் அறைவீடுகளிலும் அவை
கள் வந்தது. அவர் கட்டளையிட, [25]அவர்க 31
ளுடைய எல்லைகளிலெங்கும் வண்டுகளும்
பேன்களும் வந்தது. அவர்களுடைய மழை 32
களைக் கல்மழையாக்கி, [26]அவர்களுடைய தே
சத்திலே ஜுவாலிக்கிற அக்கினியை வரப்
பண்ணினார். அவர்களுடைய திராட்சச்செடி 33
களையும் அத்திமரங்களையும் அழித்து, அவர்
களுடைய எல்லைகளிலுள்ள மரங்களையும் முறி
த்தார். அவர் கட்டளையிட, [27]எண்ணிமுடி 34
யாத வெட்டுக்கிளிகளும் பச்சைப் புழுக்க
ளும் வந்து, அவர்களுடைய தேசத்திலுள்ள 35
சகல பூண்டுகளையும் அரித்து, அவர்களுடைய
நிலத்தின் கனியைத் தின்றுபோட்டது. அவர் 36
களுடைய தேசத்திலே [28]தலைச்சன்கள் அனைத்

[1] 145. 16
[2] யோபு 34. 14, 15 பிர. 12. 7
[3] ஏசா. 32. 14, 15 எசே. 37. 9
[4] ஆதி. 1. 31. ஏசா. 62. 5
[5] ஆப. 3. 10 யாத். 19. 18
[6] நீதி 2. 22
[7] 1 நாளா. 16. 8-22. ஏசா. 12. 4
[8] 27. 8. ஆமோ. 5. 4, 6
[9] ஏசா. 26. 9
[10] ஆதி. 17. 2. 26, 8. லூக். 1. 72. எபி. 6. 17
[11] ஆதி. 28. 13-15
[12] உபா. 7. 7
[13] ஆதி. 20. 7
[14] ஆதி. 41. 54 ஏசா. 3. 1
[15] ஆதி. 45. 5. 39. 1, 20
[16] ஆதி. 41. 25
[17] ஆதி. 41. 14, 40
[18] ஆதி. 46. 6, 7
[19] யாத். 1. 7. ழ
[20] யாத். 4. 12. ழ
[21] யாத். 7-12. அதி.
[22] யாத். 10. 21-23
[23] யாத். 7. 20, 21
[24] யாத். 8. 5, 6
[25] யாத். 8. 17, 24
[26] யாத். 9. 23-25
[27] யாத். 10. 12-14
[28] யாத். 12. 29

தையும், அவர்களுடைய பெலனில் முதற்பெ
37 லனை யாவனாயும் சங்கரித்தார். அப்பொ
ழுது அவர்களை [1]வெள்ளியோடும் பொன்னோ
டும் புறப்படப் பண்ணினார்; அவர்கள் கோத்
திரங்களில் பலவீனப்பட்டவன் ஒருவனும்
38 இருந்ததில்லை. எகிப்தியர் அவர்களுக்குப்
பயந்ததினால், [2]அவர்கள் புறப்பட்டபோது
மகிழ்ந்தார்கள்.
39 அவர் [3]மேகத்தை மறைவுக்காக விரித்து,
இரவை வெளிச்சமாக்குகிறதற்காக அக்கினி
40 யையும் தந்தார். கேட்டார்கள், [4]அவர் காடை
களை வரப்பண்ணினார்; வான அப்பத்தினா
41 லும் அவர்களைத் திருப்தியாக்கினார். கன்மலை
யைத் திறந்தார், [5]தண்ணீர்கள் புறப்பட்டு,
42 வறண்ட வெளிகளில் ஆறாய் ஓடிற்று. அவர்
தம்முடைய பரிசுத்த வாக்குத்தத்தத்தையும்,
[6]தம்முடைய தாசனாகிய ஆபிரகாமையும் நினை
43 த்து, தம்முடைய ஜனத்தைக் களிப்போ
டும், தாம் தெரிந்துகொண்டவர்களைக் கெம்பீர
44 சத்தத்தோடும் புறப்படப்பண்ணி, தமது கட்
டளைகளைக் காத்து நடக்கும்படிக்கும், [7]தமது
நியாயப்பிரமாணங்களைக் கைக்கொள்ளும்படி
45 க்கும், அவர்களுக்குப் புறஜாதிகளுடைய
தேசங்களைக் கொடுத்தார்; [8]அந்நிய ஜனங்களு
டைய பிரயாசத்தின் பலனைச் சுதந்தரித்துக்
கொண்டார்கள். அல்லேலூயா.

**106** அல்லேலூயா, [9]**கர்த்தரைத்** துதியுங்கள்;
அவர் நல்லவர், அவர் கிருபை என்றுமுள்
2 ளது. **கர்த்தருடைய** வல்லமையான செய்
கைகளைச் சொல்லி, [10]அவருடைய துதியை
யெல்லாம் பிரஸ்தாபப்படுத்தத்தக்கவன் யார்?
3 நியாயத்தைக்கைக்கொள்ளுகிறவர்களும், [11]எக்
காலத்திலும் நீதியைச் செய்கிறவர்களும் பாக்
4 கியவான்கள். **கர்த்தாவே**, நீர் தெரிந்துகொ
ண்டவர்களின் [12]நன்மையை நான் கண்டு,
[13]உம்முடைய ஜாதியின் மகிழ்ச்சியால் மகிழ்ந்
து, [14]உம்முடைய சுதந்தரத்தோடே மேன்மை
5 பாராட்டும்படிக்கு, உம்முடைய ஜனங்களு
க்கு நீர் பாராட்டும் கிருபையின்படி என்னை
நினைத்து, [15]உம்முடைய ரட்சிப்பினால் என்
னைச் சந்தித்தருளும்.
6 எங்கள் பிதாக்களோடுங்கூட நாங்களும் பா
வஞ்செய்து, [16]அக்கிரமம் நடப்பித்து, ஆகாமி
7 யம் பண்ணினோம். எங்கள் பிதாக்கள் எகிப்
திலே உம்முடைய அதிசயங்களை உணராம
லும், உம்முடைய கிருபைகளின் திரட்சியை
நினையாமலும் போய், [17]சிவந்தசமுத்திர ஓரத்
8 திலே கலகம்பண்ணினார்கள். ஆனாலும்
அவர் தமது வல்லமையை வெளிப்படுத்தும்
படி, தம்முடைய நாமத்தினிமித்தம் [18]அவர்
9 களை ரட்சித்தார். அவர் சிவந்த சமுத்திரத்
தை அதட்டினார், அது வற்றிப்போயிற்று;
[19]வெட்டாந்தரையில் நடக்கிறதுபோல அவர்
களை ஆழங்களில் நடந்துபோகப்பண்ணினார்.
10 பகைஞன் கைக்கு அவர்களை விலக்கி ரட்சித்
து, சத்துருவின் கைக்கு அவர்களை விலக்கி
11 மீட்டார். அவர்கள் சத்துருக்களைத் தண்ணீர்
கள் மூடிக்கொண்டது; [20]அவர்களில் ஒருவ
னும் மீந்திருக்கவில்லை. அப்பொழுது அவர் 12
கள் அவருடைய வார்த்தைகளை விசுவாசித்து,
[21]அவருடைய துதியைப் பாடினார்கள்.
ஆனாலும் சீக்கிரமாய் அவருடைய கிரியை 13
களை மறந்தார்கள்; [22]அவருடைய ஆலோசனை
க்கு அவர்கள் காத்திராமல், வனாந்தரத்திலே 14
இச்சையுள்ளவர்களாகி, [23]அவாந்தரவெளியி
லே தேவனைப் பரீட்சைபார்த்தார்கள். அப் 15
பொழுது அவர்கள் கேட்டதை அவர்களுக்குக்
கொடுத்தார், [24]அவர்கள் ஆத்துமாக்களிலோ
இளைப்பை அனுப்பினார். பாளயத்தில் அவர் 16
கள் மோசேயின்மேலும், [25]**கர்த்தருடைய** பரி
சுத்தனாகிய ஆரோனின்மேலும் பொறாமை
கொண்டார்கள். பூமி பிளந்து தாத்தானை 17
விழுங்கி, [26]அபிராமின் கூட்டத்தை மூடிப்
போட்டது. அவர்கள் கூட்டத்தில் அக்கினி 18
பற்றியெரிந்தது; [27]அக்கினிஜுவாலை துன்
மார்க்கரை எரித்துப்போட்டது. அவர்கள் 19
ஓரேபிலே ஒருகன்றுக்குட்டியையுண்டாக்கி,
வார்ப்பிக்கப்பட்ட விக்கிரகத்தை நமஸ்கரித்
தார்கள். தங்கள் *மகிமையைப் புல்லைத்தின் 20
கிற மாட்டின் சாயலாக மாற்றினார்கள். எகிப் 21
திலே பெரிய கிரியைகளையும், காமின் தேசத்
திலே அதிசயங்களையும், சிவந்த சமுத்திரத்
தண்டையிலே பயங்கரமானவைகளையும் செய்
தவராகிய, தங்கள் ரட்சகரான தேவனை மறந் 22
தார்கள். ஆகையால், அவர்களை நாசம்பண் 23
ணுவேன் என்றார்; அப்பொழுது அவரால்
தெரிந்துகொள்ளப்பட்ட மோசே, அவர்களை
அவர் அழிக்காதபடிக்கு, அவருடைய உக்கிர
த்தை ஆற்றும்பொருட்டு, [28]அவருக்கு முன்பா
கத் திறப்பின் வாயிலே நின்றான்.
அவருடைய வார்த்தையை விசுவாசியா 24
மல், [29]இச்சிக்கப்படத்தக்க தேசத்தை அசட்
டைபண்ணினார்கள். **கர்த்தருடைய** சத்தத் 25
திற்குச் செவிகொடாமல், தங்கள் கூடாரங்க
ளில் முறுமுறுத்தார்கள். அப்பொழுது அவர் 26
கள் வனாந்தரத்திலே மடியவும், அவர்கள் சந்
ததி ஜாதிகளுக்குள்ளே அழியவும், அவர்கள் 27
பற்பல தேசங்களிலே சிதறடிக்கப்படவும்,
அவர்களுக்கு விரோதமாகத் தம்முடைய கை
யை எடுத்தார். அவர்கள் பாகால்பேயோரைப் 28
[30]பற்றிக்கொண்டு, ஜீவனில்லாதவைகளுக்கு
இட்ட பலிகளைப் புசித்து, தங்கள் கிரியைக 29
ளினால் அவருக்குக் கோபம் மூட்டினார்கள்;
ஆகையால் வாதை அவர்களுக்குள் புகுந்தது.
அப்பொழுது பினெகாஸ் எழுந்து நின்று நியா 30
யஞ்செய்தான்; அதினால் வாதை நிறுத்தப்பட்
டது. அது தலைமுறை தலைமுறையாக என் 31
றைக்கும் அவனுக்கு நீதியாக எண்ணப்பட்
டது. மேரிபாவின் தண்ணீர்களிடத்திலும் 32
[31]அவருக்குக்கடுங்கோபம்மூட்டினார்கள்;அவர்
கள்நிமித்தம் மோசேக்கும் பொல்லாப்பு வந்
தது. அவர்கள் அவன் ஆவியை விசனப்படுத் 33
தினதினாலே, தன் உதடுகளினால் பதறிப்
பேசினான்.

1 யாத். 12. 35
2 யாத். 12. 33
3 யாத். 13. 21. நெகே. 9. 12
4 78. 18
5 யாத். 17. 6. எண். 20. 11. 1 கொ. 10. 4
6 ஆதி. 15. 14
7 உபா. 4. 1, 40
8 யோசு. 21. 43
9 1 நாளா. 16. 34
10 40. 5
11 15. 2. கலா. 6. 9
12 எபே. 1. 4
13 எசா. 35. 10 பேர். 16. 22
14 எபே. 1. 18
15 119. 132
16 தானி. 9. 5
17 யாத். 14. 11, 12
18 யாத். 9. 16
19 யாத். 14. 21. மு
20 யாத். 14. 27
21 யாத். 14. 31
22 யாத். 15-17. அதி.
23 எண். 11. 4, 33
24 ஏசா. 10. 16
25 எண். 16. 1. மு
26 எண். 16. 31, 32
27 யாத். 9. 23-25
* ஜீவனுள்ள தேவனை, எரே. 2. 11
28 எசே. 20. 13
29 உபா. 8. 7
30 எண். 25. 2. மு
31 எண். 20. 3. மு

34 **கர்த்தர்** தங்களுக்குச் சொன்னபடி, [1]அவர்
35 கள் அந்த ஜனங்களை அழிக்கவில்லை. ஜாதி
களுடனே கலந்து, அவர்கள் கிரியைகளைக்
36 கற்று; அவர்களுடைய விக்கிரகங்களைச் சே
வித்தார்கள்; [2]அவைகள் அவர்களுக்குக் கண்
37 ணியாயிற்று. அவர்கள் தங்கள் குமாரரையும்
[3]தங்கள் குமாரத்திகளையும் பிசாசுகளுக்குப்
38 பலியிட்டார்கள். அவர்கள் கானான்தேசத்து
விக்கிரகங்களுக்குப் பலியிட்டு, தங்கள் குமா
ரர் குமாரத்திகளுடைய குற்றமில்லாத ரத்தத்
தைச் சிந்தினார்கள்; [4]தேசம் ரத்தத்தால் தீட்டுப்
39 பட்டது. அவர்கள் தங்கள் கிரியைகளினால்
அசுத்தமாகி, [5]தங்கள் செய்கைகளினால்சோரம்
40 போனார்கள். அதினால் **கர்த்தருடைய** கோபம்
தமது ஜனத்தின்மேல் மூண்டது; [6]அவர்
41 தமது சுதந்தரத்தை அருவருத்தார். அவர்களை
ஜாதிகளுடைய கையில் ஒப்புக்கொடுத்தார்;
அவர்களுடைய பகைஞர் அவர்களை ஆண்டார்
42 கள். அவர்களுடைய சத்துருக்கள் அவர்களை
ஒடுக்கினார்கள்; அவர்களுடைய கையின்கீழ்த்
43 தாழ்த்தப்பட்டார்கள். அநேகந்தரம் அவர்களை
விடுவித்தார்; அவர்களோ தங்கள் யோசனை
யினால் அவருக்கு விரோதமாய்க் கலகம்பண்
ணி, தங்களுடைய அக்கிரமத்தினால்சிறுமைப்
44 படுத்தப்பட்டார்கள். அவர்கள் கூப்பிடுதலை
அவர் கேட்கும்போதோ, [7]அவர்களுக்கு உண்
45 டான இடுக்கத்தை அவர் கண்ணோக்கி, அவர்
களுக்காகத் தமது உடன்படிக்கையை நினை
த்து, தமது மிகுந்த கிருபையின்படி மனஸ்
46 தாபப்பட்டு, அவர்களைச் சிறைபிடித்த யாவ
ரும் [8]அவர்களுக்கு இரங்கும்படி செய்தார்.
47 எங்கள் தேவனாகிய **கர்த்தாவே**, நாங்கள்
உமது பரிசுத்த நாமத்தைப் போற்றி, உம்மைத்
துதிக்கிறதில் மேன்மை பாராட்டும்படி எங்
களை ரட்சித்து, [9]எங்களை ஜாதிகளிலிருந்து
48 சேர்த்தருளும். இஸ்ரவேலின் தேவனாகிய
**கர்த்தர்** அநாதியாய் என்றென்றைக்கும்
[10]ஸ்தோத்திரிக்கப்படத்தக்கவர். ஜனங்களெல்
லாரும்: ஆமென், அல்லேலூயா, என்பார்
களாக.

**107** கர்த்தரைத் துதியுங்கள்; அவர் நல்ல
வர், [11]அவர் கிருபை என்றுமுள்ளது.
2 **கர்த்தரால்** சத்துருவின் கைக்கு நீங்கலாக்கி
3 [12]மீட்கப்பட்டு, கிழக்கிலும் மேற்கிலும் வடக்
கிலும் தெற்கிலுமுள்ள பல தேசங்களிலுமிரு
ந்து சேர்க்கப்பட்டவர்கள், [13]அப்படிச் சொல்
லக்கடவர்கள்.
4 அவர்கள் தாபரிக்கும் ஊரைக் காணாமல்,
5 [14]வனாந்தரத்திலே அவாந்தரவழியாய், பசியா
கவும், தாகமாகவும், ஆத்துமா தொய்ந்ததாக
6 வும் அலைந்து திரிந்தார்கள். தங்கள் ஆபத்திலே
**கர்த்தரை** நோக்கிக் கூப்பிட்டார்கள், [15]அவர்
கள் இக்கட்டுகளிலிருந்து அவர்களை விடுவித்
7 தார். தாபரிக்கும் ஊருக்குப்போய்ச் சேர,
அவர்களைச் செவ்வையான [16]வழியிலே நடத்
8 தினார். தவனமுள்ள ஆத்துமாவைக் **கர்த்தர்**
திருப்தியாக்கி, [17]பசியுள்ள ஆத்துமாவை நன்
மையினால் நிரப்புகிறாரென்று, அவருடைய 9
கிருபையினிமித்தமும், மனுபுத்திரருக்கு அ
வர் செய்கிற அதிசயங்களினிமித்தமும் அவ
ரைத் துதிப்பார்களாக.
தேவனுடைய வார்த்தைகளுக்கு விரோத 10
மாய்க் கலகம்பண்ணி, [18]உன்னதமானவரு
டைய ஆலோசனையை அசட்டைபண்ணின
வர்கள், அந்தகாரத்திலும் மரணஇருளிலும் 11
வைக்கப்பட்டிருந்து, [19]ஒடுக்கத்திலும் இரும்
பிலும் கட்டுண்டுகிடந்தார்கள். அவர்களுடைய 12
இருதயத்தை அவர் வருத்தத்தால் தாழ்த்தினார்;
[20]சகாயரில்லாமல் விழுந்துபோனார்கள். தங் 13
கள் ஆபத்திலே **கர்த்தரை** நோக்கிக் கூப்பிட்
டார்கள்; அவர்கள் இக்கட்டுகளிலிருந்து அ
வர்களை நீங்கலாக்கி ரட்சித்தார். அந்தகாரத் 14
திலும் மரண இருளிலுமிருந்து அவர்களை
வெளிப்படப்பண்ணி, [21]அவர்கள் கட்டுகளை
அறுத்தார். **கர்த்தர்** வெண்கலக் கதவுகளை 15
உடைத்து, [22]இருப்புத் தாழ்ப்பாள்களை முறித்
தாரென்று, அவருடைய கிருபையினிமித்த 16
மும், மனுபுத்திரருக்கு அவர் செய்கிற அதி
சயங்களினிமித்தமும் அவரைத் துதிப்பார்
களாக.
நிர்மூடர் தங்கள் பாதகமார்க்கத்தாலும் தங் 17
கள் அக்கிரமங்களாலும் [23]நோய்கொண்டு ஒடுங்
கிப்போகிறார்கள். அவர்கள் ஆத்துமா சகல 18
போஜனத்தையும் அரோசிக்கிறது, அவர்கள்
மரணவாசல்கள் பரியந்தம் சமீபிக்கிறார்கள்.
தங்கள் ஆபத்திலே **கர்த்தரை** நோக்கிக் கூப் 19
பிடுகிறார்கள்; [24]அவர்கள் இக்கட்டுகளுக்கு
அவர்களை நீங்கலாக்கி ரட்சிக்கிறார். அவர் தமது 20
வசனத்தை அனுப்பி அவர்களைக் குணமாக்கி,
[25]அவர்களை அழிவுக்குத் தப்புவிக்கிறார். அவர் 21
கள் **கர்த்தரை** அவருடைய கிருபையினிமித்
தமும், மனுபுத்திரருக்கு அவர் செய்கிற அதிச
யங்களினிமித்தமும் துதித்து, ஸ்தோத்திர 22
பலிகளைச் செலுத்தி, [26]அவருடைய கிரியை
களை ஆனந்த சத்தத்தோடே விவரிப்பார்
களாக.
கப்பலேறி, கடல்யாத்திரைபண்ணி, திர 23
ளான தண்ணீர்களிலே தொழில் செய்கிறார்
களே, அவர்கள் **கர்த்தருடைய** கிரியைகளை 24
யும், ஆழத்திலே அவருடைய அதிசயங்களை
யும் காண்கிறார்கள். அவர் கட்டளையிட பெ 25
ருங்காற்று எழும்பி, [27]அதின் அலைகளைக் கொ
ந்தளிக்கப்பண்ணும். அவர்கள் ஆகாயத்தில் 26
ஏறி, ஆழங்களில் இறங்குகிறார்கள், [28]அவர்கள்
ஆத்துமா கிலேசத்தினால் கரைந்துபோகிறது.
வெறித்தவனைப்போல் அலைந்து தடுமாறுகி 27
றார்கள்; அவர்களுடைய ஞானமெல்லாம் முழு
கிப்போகிறது. அப்பொழுது தங்கள் ஆபத் 28
திலே அவர்கள் **கர்த்தரை** நோக்கிக் கூப்பிடு
கிறார்கள், அவர்கள் இக்கட்டுகளுக்கு அவர்
களை நீங்கலாக்கி விடுவிக்கிறார். கொந்தளிப் 29
பை அமர்த்துகிறார், [29]அதின் அலைகள் அடங்
குகின்றது. அமைதலுண்டானதி னிமித்தம் 30
அவர்கள் சந்தோஷப்படுகிறார்கள்; தாங்கள்

[1] யோசு. 1. 21. ழ
[2] நியா. 2. 3. ழ
[3] எசே. 16. 20
[4] எண். 35. 33
[5] எசே. 20. 18
[6] நியா. 2. 14. ழ. நெகே. 9. 27. ழ. புல. 2. 7
[7] லேவி. 26. 40-42
[8] எஸ்ரா. 9. 9
[9] 1 நாளா. 16. 35
[10] 41. 13
[11] 119. 68. மத். 19. 17
[12] 106. 10
[13] ஏசா. 43. 5, 6
[14] உபா. 32. 10
[15] ஓசி. 5. 15
[16] எஸ்றா. 8. 21. ஏசா. 30. 21
[17] லூ. 1. 53
[18] புல. 3. 42. லூ. 7. 30
[19] யோபு 36. 8, 9
[20] யோபு 9. 13
[21] 146. 7. அப். 12. 7. ழ
[22] ஏசா. 45. 2
[23] 88. 3, 5
[24] யோபு 33. 19. ழ
[25] 2 இரா. 20. 4, 5. மத். 8. 8
[26] லேவி. 7. 12. எபி. 13. 15
[27] யோனா 1. 4. ழ
[28] நெகே. 2. 10
[29] 89. 9. மத். 8. 26

நாடின துறைமுகத்தில் அவர்களைக் கொண்டு
31 வந்து சேர்க்கிறார். அவர்கள் **கர்த்தரை** அவ
ருடைய கிருபையினிமித்தமும், மனுபுத்திர
ருக்கு அவர் செய்கிற அதிசயங்களினிமித்த
32 மும் துதித்து, ஜனங்களின் சபையிலே அவ
ரை உயர்த்தி, [1]மூப்பர்களின் சங்கத்திலே
அவரைப் போற்றுவார்களாக.
33 அவர் ஆறுகளை அவாந்தரவெளியாகவும்,
34 [2]நீரூற்றுகளை வறண்ட ஸ்தலமாகவும், குடிக
ளுடைய பொல்லாப்பினிமித்தம் செழிப்
பான தேசத்தை [3]உவர்நிலமாகவும் மாற்று
35 கிறார். அவர் அவாந்தரவெளியைத் தண்ணீர்த்
தடாகமாகவும், [4]வறண்ட நிலத்தை நீரூற்று
36 களாகவும் மாற்றி, பசித்தவர்களை அங்கே
குடியேற்றுகிறார்; அங்கே அவர்கள் குடியிரு
37 க்கும் நகரத்தைக் கட்டி, வயல்களை உண்
டாக்கி விதைத்து, திராட்சத்தோட்டங்களை
நாட்டுகிறார்கள், அவைகள் வரத்துள்ள பல
38 னைத் தரும். அவர்களை ஆசீர்வதிக்கிறார், மிகுதி
யும் பெருகுகிறார்கள்; அவர்களுடைய மிருக
ஜீவன்கள் குறையாதிருக்கப் பண்ணுகிறார்.
39 பின்பு அவர்கள் இடுக்கத்தினாலும், ஆபத்
தினாலும், [5]துயரத்தினாலும் குறைவுபட்டுத்
40 தாழ்வடைகிறார்கள். அவர் பிரபுக்களின்மேல்
இகழ்ச்சிவரப்பண்ணி, [6]வழியில்லாத அவாந்
தரவெளியிலே அவர்களைத் திரியச்செய்து,
41 எளியவனையோ சிறுமையினின்று எடுத்து,
[7]உயர்ந்த அடைக்கலத்திலே வைத்து, அவன்
வம்சங்களை மந்தையைப்போ லாக்குகிறார்.
42 உத்தமர்கள் [8]அதைக் கண்டு மகிழுவார்கள்;
நியாயக்கேடெல்லாம் தன் வாயை மூடும்.
43 எவன் ஞானமுள்ளவனோ அவன் இவை
களைக் கவனிக்கக்கடவன்; [9]ஞானவான்கள்
**கர்த்தருடைய** கிருபைகளை உணர்ந்துகொள்
வார்கள்.

## 108

(தாவீதின் சங்கீதமாகிய பாட்டு.)

தேவனே, என் இருதயம் ஆயத்தமாயிருக்
கிறது; [10]நான் பாடிக் கீர்த்தனம் பண்ணு
2 வேன்; என் மகிமையும் பாடும். வீணையே,
சுரமண்டலமே, விழியுங்கள், நான் அதிகா
3 லையில் விழிப்பேன். **கர்த்தாவே**, ஜனங்க
ளுக்குள்ளே உம்மைத் துதிப்பேன்; ஜாதிக
ளுக்குள்ளே உம்மைக் கீர்த்தனம் பண்ணு
4 வேன். உமது கிருபை வானங்களுக்கு மே
லாகவும், உமது சத்தியம் மேகமண்டலங்கள்
5 பரியந்தமும் எட்டுகிறது. தேவனே, வானங்
களுக்கு மேலாக உயர்ந்திரும்; உமது மகிமை
பூமியனைத்தின்மேலும் உயர்ந்திருப்பதாக.
6 உமது பிரியர் விடுவிக்கப்படும்பொருட்டு,
[11]உமது வலதுகரத்தினால் இரட்சித்து, எங்கள்
7 ஜெபத்தைக் கேட்டருளும். தேவன் தமது
பரிசுத்தத்தைக்கொண்டு விளம்பினார், ஆகை
யால் களிகூருவேன்; சீகேமைப் பங்கிட்டு,
சுக்கோத்தின் பள்ளத்தாக்கை அளந்துகொள்
8 ளுவேன். கீலேயாத் என்னுடையது, மனா
சேயும் என்னுடையது; எப்பிராயீம் என் தலை
யின் பெலன்; [12]யூதா என் நியாயப்பிரமாணி
கன். மோவாப் என் பாதபாத்திரம்; ஏதோ 9
மின்மேல் என் பாதரட்சையை எறிவேன்;
பெலிஸ்தியாவின்மேல் ஆர்ப்பரிப்பேன்.
அரணான பட்டணத்திற்குள் என்னை நடத் 10
திக்கொண்டு போகிறவன் யார்? ஏதோம்மட்
டும் எனக்கு வழிகாட்டுகிறவன் யார்? எங்கள் 11
சேனைகளோடே புறப்படாமலிருந்த தேவ
ரீரல்லவா? எங்களைத் தள்ளிவிட்டிருந்த தேவ
ரீரல்லவா? இக்கட்டில் எங்களுக்கு உதவி 12
செய்யும்; [13]மனுஷனுடைய உதவி விருதா.
தேவனாலே பராக்கிரமஞ் செய்வோம்; 13
[14]அவரே எங்கள் சத்துருக்களை மிதித்துப்
போடுவார்.

## 109

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

நான் துதிக்கும் தேவனே, [15]மவுனமாயிரா
தேயும். துன்மார்க்கனுடைய வாயும், கபட்டு 2
வாயும், எனக்கு விரோதமாய்த் திறந்திருக்
கிறது; [16]கள்ள நாவினால் என்னோடே பேசு
கிறார்கள். பகையுண்டாக்கும் வார்த்தைக 3
ளால் என்னைச் சூழ்ந்துகொண்டு, [17]முகாந்தர
மில்லாமல் என்னோடே போர்செய்கிறார்கள்.
என் சிநேகத்துக்குப் பதிலாக என்னை விரோ 4
திக்கிறார்கள்,[18]நானோ ஜெபம்பண்ணிக்கொண்
டிருக்கிறேன். நன்மைக்குப் பதிலாக எனக் 5
குத் தீமை செய்கிறார்கள், [19]என் சிநேகத்துக்
குப் பதிலாக என்னைப் பகைக்கிறார்கள்.
அவனுக்கு மேலாகத் துஷ்டனை ஏற்படு 6
த்திவையும், [20]சாத்தான் அவன் வலது பக்கத்
தில் நிற்பானாக. அவன் நியாயம் விசாரிக்கப் 7
படும்போது குற்றவாளியாகக்கடவன்; [21]அவன்
ஜெபம் பாவமாகக்கடவது. அவன் நாட்கள் 8
கொஞ்சமாகக்கடவது; [22]அவன் உத்தியோகத்
தை வேறொருவன் பெறக்கடவன். அவன் 9
பிள்ளைகள் திக்கற்றவர்களும், [23]அவன் மனைவி
விதவையுமாகக் கடவர்கள். அவன் பிள்ளை 10
கள் அலைந்து திரிந்து பிச்சையெடுத்து, தங்
கள் பாழான வீடுகளிலிருந்து இரந்துண்ணக்
கடவர்கள். கடன் கொடுத்தவன் [24]அவனுக்கு 11
உள்ளதெல்லாவற்றையும் அபகரித்துக்கொள்
வானாக; அவன் பிரயாசத்தின் பலனை அந்
நியர் பறித்துக்கொள்ளக்கடவர்கள். அவனு 12
க்கு ஒருவரும் இரக்கங் காண்பியாமலும், அவ
னுடைய திக்கற்ற பிள்ளைகளுக்குத் தயவு
செய்யாமலும் போவார்களாக. அவன் சந்ததி 13
யார் நிர்மூலமாகக்கடவர்கள், [25]இரண்டாந்
தலைமுறையில் அவர்கள் பேர் அற்றுப்போ
வதாக. அவன் பிதாக்களின் அக்கிரமம் [26]**கர்த்** 14
**தருக்கு** முன்பாக நினைக்கப்படக் கடவது,
அவன் தாயின் பாவம் நீங்காமலிருப்பதாக.
அவைகள் நித்தமும் **கர்த்தருக்கு** முன்பாக 15
இருக்கக்கடவது; அவர்கள் பேர் பூமியிலிரா
மல் நிர்மூலமாவதாக. அவன் தயைசெய்ய 16
நினையாமல், சிறுமையும் எளிமையு மானவ
னைத் துன்பப்படுத்தி, மனமுறிவுள்ளவனைக்
கொலைசெய்யும்படி தேடினானே. சாபத்தை 17
[27]விரும்பினான், அது அவனுக்கு வரும்; அவன்

[1] 22. 22; 66. 16; 111. 1
[2] 1 இரா. 17. 1, 7
[3] ஆதி. 13. 10; 19. 25
[4] ஏசா. 41. 18
[5] 2 இரா. 10. 32
[6] யோபு 12. 21, 24
[7] 1 சாமு. 2. 5-8
[8] யோபு 5. 15, 16
[9] எரே. 9. 12, ஓசி. 14. 9
[10] 57. 7-11
[11] 60. 5. ழ
[12] ஆதி. 49. 10
[13] யோபு 16. 2 ஏசா. 2. 22
[14] ரோ. 16. 20. 2 கொ. 2. 14
[15] 83. 1. எரே. 17. 14
[16] மத். 26. 60. அப். 6. 13
[17] யோ. 15. 25
[18] தா. 6. 11, 12
[19] 35. 7, 12
[20] சக. 3. 1
[21] நீதி. 28. 9
[22] அப். 1. 20
[23] யாத். 22. 24
[24] யோபு 18. 9, 19
[25] 37. 28. நீதி. 10. 7. ஏசா. 14. 20
[26] யாத். 20. 5. ஏசா. 43. 25
[27] நீதி. 14. 14. எசே. 35. 6

ஆசீர்வாதத்தை விரும்பாமற்போனுன், அது
18 அவனுக்குத் தூரமாய் விலகிப்போம். சாபத்
தை அவன் தனக்கு அங்கியாக உடுத்திக்கொ
ண்டான்; அது அவன் உள்ளத்தில் தண்ணீ
ரைப்போலவும், [1]அவன் எலும்புகளில் எண்
19 ணெயைப்போலவும் பாயும். அது அவன்
மூடிக்கொள்ளுகிற வஸ்திரமாகவும், நித்தமும்
கட்டிக்கொள்ளுகிற கச்சையாகவும் இருப்ப
20 தாக. இதுதான் என்னை விரோதிக்கிறவர்க
ளுக்கும், என் ஆத்துமாவுக்கு விரோதமாய்த்
தீங்கு பேசுகிறவர்களுக்கும் **கர்த்தரால்** வரும்
பலன்.
21 ஆண்டவராகிய **கர்த்தாவே**, நீர் உமது
நாமத்தினிமித்தம் [2]என்னை ஆதரித்து, உமது
கிருபை நலமானதினுல், என்னை விடுவித்தரு
22 ளும். நான் சிறுமையும் எளிமையுமானவன்,
என் இருதயம் எனக்குள் குத்துண்டிருக்கி
23 றது. சாயும் நிழலைப்போல் அகன்றுபோ
னேன்; [3]வெட்டுக்கிளியைப்போல் பறக்கடிக்
24 கப்படுகிறேன். உபவாசத்தினுல் என் முழங்
கால்கள் தளர்ச்சியடைகிறது; [4]என் மாம்சம்
25 புஷ்டியற்று உலர்ந்துபோகிறது. நான் அவர்
களுக்கு நிந்தையானேன்; [5]அவர்கள் என்
னைப் பார்த்து, தங்கள் தலையைத் துலுக்குகி
26 றார்கள். என் தேவனுகிய **கர்த்தாவே**, என
க்குச் சகாயம்பண்ணும்; உமது கிருபையின்
27 படி என்னை ரட்சியும். இது உமது கரம்
என்றும், [6]**கர்த்தாவே**, தேவரீர் இதைச் செய்
28 தீர் என்றும், அவர்கள் அறிவார்களாக. அவர்
கள் சபித்தாலும், நீர் ஆசீர்வதியும்; அவர்கள்
எழும்பினுலும் வெட்கப்பட்டுப் போவார்க
ளாக; [7]உமது அடியானே மகிழக்கடவன்.
29 என் விரோதிகள் இலச்சையால் மூடப்பட்டு,
[8]தங்கள் வெட்கத்தைச் சால்வையைப்போல்
30 தரித்துக்கொள்ளக்கடவர்கள். **கர்த்தரை** நான்
என் வாயினுல் மிகவும் துதித்து, அநேகர்
31 நடுவிலே அவரைப் புகழுவேன். ஆக்கினைக்
குள்ளாகத் தீர்க்கிறவர்களினின்று எளியவ
னுடைய ஆத்துமாவை ரட்சிக்கும்படி [9]அவர்
அவன் வலதுபாரிசத்தில் நிற்பார்.

# 110

(தாவீதின் சங்கீதம்.)

**கர்த்தர்** என் ஆண்டவரை நோக்கி: [10]நான்
உம்முடைய சத்துருக்களை உமக்குப் பாதபடி
யாக்கிப் போடும்வரைக்கும், நீர் என்னுடைய
2 வலதுபாரிசத்தில் உட்காரும் என்றார். **கர்த்**
**தர்** சீயோனிலிருந்து உமது வல்லமையின்
செங்கோலை அனுப்புவார்; நீர் உம்முடைய
சத்துருக்களின் நடுவே ஆளுகை செய்யும்.
3 உமது பராக்கிரமத்தின் நாளிலே உம்முடைய
ஜனங்கள் [11]மனப்பூர்வமும் பரிசுத்த அலங்
காரமுமுள்ளவர்களா யிருப்பார்கள்; விடியற்
காலத்துக் கர்ப்பத்தில் பிறக்கும் பனிக்குச்
சமானமாய் உம்முடைய யௌவன ஜனம்
4 உமக்குப் பிறக்கும். நீர் மெல்கிசேதேக்கின்
முறைமையின்படி என்றென்றைக்கும் ஆசா
ரியரா யிருக்கிறீர் [12]என்று **கர்த்தர்** ஆணையிட்
5 டார்; மனம் மாறாமலுமிருப்பார். உம்மு
டைய வலதுபாரிசத்தி லிருக்கிற ஆண்டவர்,
தமது கோபத்தின் நாளிலே [13]ராஜாக்களை
வெட்டுவார். அவர் ஜாதிகளுக்குள் நியாயந் 6
தீர்ப்பார்; எல்லா இடங்களையும் பிரேதங்
களால் நிரப்புவார்; [14]விஸ்தாரமான தேசங்
களின்மேல் தலைவர்களா யிருக்கிறவர்களை
நொறுக்கிப்போடுவார். வழியிலே அவர் நதி 7
யில் குடிப்பார்; [15]ஆகையால் அவர் தமது தலை
யை எடுப்பார்.

# 111

அல்லேலூயா, செம்மையானவர்களு
டைய சங்கத்திலும் சபையிலும் [16]**கர்த்தரை**
முழு இருதயத்தோடும் துதிப்பேன். **கர்த்** 2
**தரின்** செய்கைகள் பெரியவைகளும், [17]அவை
களில் பிரியப்படுகிற எல்லாராலும் ஆராயப்
படுகிறவைகளுமா யிருக்கிறது. அவருடைய 3
செயல் மகிமையும் மகத்துவமுமுள்ளது, அவ
ருடைய நீதி என்றென்றைக்கும் நிற்கும்.
அவர் தம்முடைய அதிசயமான செய்கை 4
களை நினைவுகூரும்படி செய்தார், **கர்த்தர்**
இரக்கமும் மன உருக்கமுமுள்ளவர். தமக் 5
குப் பயந்தவர்களுக்கு [18]ஆகாரம் கொடுத்தார்;
தமது உடன்படிக்கையை என்றென்றைக்
கும் நினைப்பார். ஜாதிகளின் சுதந்தரத்தைத் 6
தமது ஜனங்களுக்குக் கொடுத்ததினுல், தமது
கிரியைகளின் பெலத்தை அவர்களுக்குத்
தெரியப்படுத்தினுர். அவருடைய கரத்தின் 7
கிரியைகள் சத்தியமும் நியாயமுமானவை
கள்; [19]அவருடைய கட்டளைகளெல்லாம் உண்
மையானவைகள். அவைகள் என்றென்றைக் 8
குமுள்ள சதாகாலங்களுக்கும் உறுதியானவை
கள், அவைகள் உண்மையும் செம்மையுமாய்ச்
செய்யப்பட்டவைகள். அவர் தமது ஜனத் 9
திற்கு மீட்பை அனுப்பி, [20]தமது உடன்படிக்
கையை நித்திய உடன்படிக்கையாகக் கட்
டளையிட்டார்; [21]அவருடைய நாமம் பரிசுத்த
மும் பயங்கரமுமானது. **கர்த்தருக்குப்** பயப்ப 10
டுதலே [22]ஞானத்தின் ஆரம்பம்; அவருடைய
கற்பனைகளின்படி செய்கிற யாவருக்கும் நற்
புத்தியுண்டு; அவர் புகழ்ச்சி என்றைக்கும்
நிற்கும்.

# 112

அல்லேலூயா, **கர்த்தருக்குப்** பயந்து
[23]அவருடைய கட்டளைகளில் மிகவும் பிரி
யமாயிருக்கிற மனுஷன் பாக்கியவான். அவன் 2
சந்ததி பூமியில் பலத்திருக்கும், செம்மையா
னவர்களின் வம்சம் ஆசீர்வதிக்கப்படும். ஆஸ் 3
தியும் ஐசுவரியமும் [24]அவன் வீட்டிலிருக்கும்;
அவனுடைய நீதி என்றைக்கும் நிற்கும். செ 4
ம்மையானவர்களுக்கு இருளிலே [25]வெளிச்
சம் உதிக்கும்; அவன் இரக்கமும் மன உருக்க
மும் நீதியுமுள்ளவன். இரங்கிக் கடன் கொ 5
டுத்து, [26]தன் காரியங்களை நியாயமானபடி நட
ப்பிக்கிற மனுஷன் பாக்கியவான். அவன் 6
என்றென்றைக்கும் அசைக்கப்படாதிருப்பா
ன்; [27]நீதிமான் நித்திய கீர்த்தியுள்ளவன். துர்ச் 7
செய்தியைக் கேட்கிறதினுல் [28]பயப்படான்;
அவன் இருதயம் **கர்த்தரை** நம்பித் திடனு
யிருக்கும். அவன் இருதயம் உறுதியாயிருக் 8

1 எண். 5. 22
2 25. 11
3 102. 11: 144. 4
4 எபி. 12. 12
5 22. 6, 7. மத். 27. 39
6 17. 13, 14
7 2 சாமு. 16. 11, 12. ஏசா. 65. 14
8 35. 26
9 73. 23
10 மத். 22. 44. அப். 2. 34. 1 கொ. 15. 25. எபி. 1. 13
11 96. 9. நியா. 5. 2. கலா. 1. 15, 16
12 சகரி. 6. 13. எபி. 5. 6: 6. 20: 7. 17, 21
13 ரோ. 2. 5. வெளி. 6. 17
14 ஆப. 3. 13
15 நியா. 7. 5, 6
16 109. 30
17 யோபு 38. 41. வெளி. 15. 3
18 மத். 6. 26, 33
19 19. 7
20 மத். 1. 21
21 உபா. 28. 58. லூக். 1. 49
22 யோபு 28. 28. நீதி. 1. 7: 9, 10. பி 12. 13
23 1. 1–3: 119. 16
24 மத். 6. 33
25 ஏசா. 58. 10
26 லூக். 6. 35. எபே. 5. 15
27 நீதி. 10. 7
28 நீதி. 1. 33

கும்; அவன் தன் சத்துருக்களில் சரிக்கட்டு
தலைக் காணுமட்டும் பயப்படாதிருப்பான்.
9 வாரியிறைத்தான், [1]ஏழைகளுக்குக் கொடுத்
தான், அவனுடைய நீதி என்றென்றைக்கும்
நிற்கும்; [2]அவன் கொம்பு மகிமையாய் உயர்த்
தப்படும்.
10 துன்மார்க்கன் அதைக் கண்டு மனமடிவாகி,
தன் [3]பற்களைக் கடித்துக் கரைந்துபோவான்;
துன்மார்க்கருடைய ஆசை அழியும்.

**113** அல்லேலூயா, கர்த்தருடைய ஊழியக்
காரரே, துதியுங்கள்; கர்த்தருடைய நாமத்
2 தைத் துதியுங்கள். இதுமுதல் என்றென்
றைக்கும் கர்த்தருடைய நாமம் ஸ்தோத்தி
3 ரிக்கப்படக்கடவது. சூரியன் உதிக்கும் திசை
தொடங்கி [4]அது அஸ்தமிக்கும் திசைமட்டும்
4 கர்த்தருடைய நாமம் துதிக்கப்படுவதாக. கர்த்
தர் எல்லா ஜாதிகள்மேலும் உயர்ந்தவர்; அவரு
டைய மகிமை வானங்களுக்கு மேலானது.
5 உன்னதங்களில் வாசம்பண்ணுகிற நம்மு
டைய தேவனாகிய கர்த்தருக்குச் சமானமான
6 வர் யார்? அவர் வானத்திலும் பூமியிலுமுள்
ளவைகளைப் பார்க்கும்படி [5]தம்மைத் தாழ்த்
7 துகிறார். அவர் சிறியவனைப் புழுதியிலிரு
ந்து தூக்கிவிடுகிறார்; [6]எளியவனைக் குப்பை
8 யிலிருந்து உயர்த்துகிறார். அவனைப் பிரபுக்க
ளோடும், தமது ஜனத்தின் அதிபதிகளோடும்,
9 உட்காரப்பண்ணுகிறார். மலடியைச் சந்தோ
ஷமான பிள்ளைத்தாய்ச்சியாக்கி, [7]வீட்டிலே
குடியிருக்கப்பண்ணுகிறார். அல்லேலூயா.

**114** இஸ்ரவேல் எகிப்திலும், [8]யாக்கோபின்
குடும்பம் அந்நியபாஷைக்காரரான ஜனத்தி
2 லுமிருந்து புறப்பட்டபோது, யூதா அவருக்
குப் பரிசுத்த ஸ்தானமும், [9]இஸ்ரவேல் அவ
ருக்கு ராஜ்யமுமாயிற்று.
3 கடல் கண்டு விலகி ஓடிற்று; [10]யோர்தான்
4 பின்னிட்டுத் திரும்பினது. மலைகள் ஆட்டுக்
கடாக்களைப்போலவும், [11]குன்றுகள் ஆட்டுக்
குட்டிகளைப்போலவும் துள்ளினது.
5 கடலே, நீ விலகியோடுகிறதற்கும்; யோர்
தானே, நீ பின்னிட்டுத் திரும்புகிறதற்கும்;
6 மலைகளே, நீங்கள் ஆட்டுக்கடாக்களைப்போல
வும்; குன்றுகளே, நீங்கள் ஆட்டுக்குட்டிக
ளைப்போலவும் துள்ளுகிறதற்கும், உங்களுக்கு
என்ன வந்தது?
7 பூமியே, நீ ஆண்டவருக்கு முன்பாகவும்,
[12]யாக்கோபுடைய தேவனுக்கு முன்பாகவும்
8 அதிரு. அவர் கன்மலையைத் தண்ணீர்த் தடா
கமாகவும், [13]கற்பாறையை நீரூற்றுகளாகவும்
மாற்றுகிறார்.

**115** எங்களுக்கு அல்ல, கர்த்தாவே, எங்
களுக்கு அல்ல, [14]உமது கிருபையினிமித்
தமும், உமது சத்தியத்தினிமித்தமும், உம்
முடைய நாமத்திற்கே மகிமை வரப்பண்ணும்.
2 அவர்களுடைய தேவன் இப்பொழுது எங்கே
3 [15]என்று புறஜாதிகள் சொல்வானேன்? நம்
முடைய தேவன் [16]பரலோகத்தில் இருக்கிறார்;
தமக்குச் சித்தமான யாவையும் செய்கிறார்.
அவர்களுடைய விக்கிரகங்கள் வெள்ளியும் 4
பொன்னும், [17]மனுஷருடைய கைவேலையுமா
யிருக்கிறது. அவைகளுக்கு வாயிருந்தும் 5
பேசாது; அவைகளுக்குக் கண்களிருந்தும்
காணாது. அவைகளுக்குக் காதுகளிருந்தும் 6
கேளாது; அவைகளுக்கு மூக்கிருந்தும் முக
ராது. அவைகளுக்குக் கைகளிருந்தும் தொ 7
டாது; அவைகளுக்குக் கால்களிருந்தும் நட
வாது; தங்கள் தொண்டையால் சத்தமிடவும்
மாட்டாது. அவைகளைப் பண்ணுகிறவர்க 8
ளும், [18]அவைகளை நம்புகிறவர்கள் யாவரும்,
அவைகளைப்போலவே இருக்கிறார்கள்.
இஸ்ரவேலே, கர்த்தரை நம்பு; [19]அவரே 9
அவர்களுக்குத் துணையும் அவர்களுக்குக் கேட
கமுமாயிருக்கிறார். ஆரோன் குடும்பத்தாரே, 10
கர்த்தரை நம்புங்கள்; அவரே அவர்களுக்குத்
துணையும் அவர்களுக்குக் கேடகமுமாயிருக்
கிறார். கர்த்தருக்குப் பயப்படுகிறவர்களே, 11
கர்த்தரை நம்புங்கள்; அவரே அவர்களுக்குத்
துணையும் அவர்களுக்குக் கேடகமுமாயிருக்
கிறார்.
கர்த்தர் நம்மை [20]நினைத்திருக்கிறார், அவர் 12
ஆசீர்வதிப்பார்; இஸ்ரவேல் குடும்பத்தாரை
ஆசீர்வதிப்பார், அவர் ஆரோன் குடும்பத்தாரை
ஆசீர்வதிப்பார். கர்த்தருக்குப் பயப்படுகிற 13
[21]பெரியோரையும் சிறியோரையும் ஆசீர்வதிப்
பார். கர்த்தர் உங்களையும் உங்கள் பிள்ளை 14
களையும் வர்த்திக்கப்பண்ணுவார். வானத்தை 15
யும் பூமியையும் படைத்த கர்த்தராலே [22]நீங்
கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். வானங்கள் 16
கர்த்தருடையவைகள்; பூமியையோ மனுபுத்
திரருக்குக் கொடுத்தார். மரித்தவர்களும் மௌ 17
னத்தில் இறங்குகிற [23]அனைவரும் கர்த்தரைத்
துதியார்கள். நாமோ, இதுமுதல் என்றென் 18
றைக்கும் [24]கர்த்தரை ஸ்தோத்திரிப்போம்.
அல்லேலூயா.

கர்த்தர் என் சத்தத்தையும் என் விண் **116**
ணப்பத்தையும் கேட்டதினால், [25]அவரில்
அன்புகூருகிறேன். அவர் தமது செவியை 2
எனக்குச் சாய்த்தபடியால், நான் உயிரோ
டிருக்குமளவும் அவரைத் தொழுதுகொள்ளு
வேன்.
மரணக்கட்டுகள் என்னைச் சுற்றிக்கொண் 3
டது, [26]பாதாள இடுக்கண்கள் என்னைப் பிடித்
தது; இக்கட்டையும் சஞ்சலத்தையும் அடைந்
தேன். அப்பொழுது நான் கர்த்தருடைய 4
நாமத்தைத் தொழுதுகொண்டு: [27]கர்த்தாவே,
என் ஆத்துமாவை விடுவியும் என்று கெஞ்
சினேன். கர்த்தர் கிருபையும் நீதியுமுள்ள 5
வர்; [28]நம்முடைய தேவன் மன உருக்கமா
னவர். கர்த்தர் கபடற்றவர்களைக் காக்கிறார்; 6
நான் மெலிந்துபோனேன், அவர் என்னை
ரட்சித்தார். என் ஆத்துமாவே, கர்த்தர் உன 7
க்கு நன்மை செய்தபடியால், [29]நீ உன் இளைப்
பாறுதலுக்குத் திரும்பு. என் ஆத்துமாவை 8
மரணத்துக்கும், என் கண்ணைக் கண்ணீருக்
கும், [30]என் காலை இடறுதலுக்கும் தப்புவித்தீர்.

1 2 கொ. 9. 9
2 1 சாமு. 2. 1
3 அ. 13. 28
4 ஏசா. 59. 19. மல். 1. 11
5 ஏசா. 57. 15
6 1 சாமு. 2. 8
7 1 சாமு. 2. 5. ஏசா. 54. 1. கலா. 27
8 யாத். 13. 3. 12 41
9 யாத். 25. 8. உபா. 27. 9, 12
10 யாத். 14. 21. யோசு. 3. 13, 16
11 ஆப. 3. 6, 8
12 மீகா. 6. 1, 2
13 யாத். 17. 6. எண். 20. 11
14 ஏசா. 48. 11. பிர. 12. 13
15 யோவேல் 2. 17
16 தானி. 4. 35
17 உபா. 4. 28. ஏசா. 40. 19. எரே. 10. 3–7
18 ஏசா. 44. 9-11. யோனா 2. 8. ஆப. 2. 18, 19
19 நீதி. 30. 5
20 ஏசா. 44. 21
21 29. 11
22 எபே. 1. 3, 4
23 ஏசா. 38. 18, 19
24 தானி. 2. 20
25 18. 1–6
26 யோனா 2. 2. ழ
27 34. 6
28 103. 8. எஸ்ரா 9. 15. நெகே. 9. 8. தானி. 9. 7
29 எரே. 6. 16. மத். 11. 29. எபி. 4. 3
30 யூதா 24

9 நான் கர்த்தருக்கு முன்பாக ஜீவனுள்ளோர்
10 தேசத்திலே நடப்பேன். விசுவாசித்தேன்,
ஆகையால் பேசுகிறேன்; [1]நான் மிகுதியும்
11 வருத்தப்பட்டேன். எந்த மனுஷனும் பொய்
யன் என்று என் மனக்கலக்கத்திலே சொன்
னேன்.
12 கர்த்தர் எனக்குச் செய்த எல்லா உபகாரங்
களுக்காகவும், அவருக்கு என்னத்தைச் செலு
13 த்துவேன். இரட்சிப்பின் பாத்திரத்தை [2]எ
டுத்துக்கொண்டு, கர்த்தருடைய நாமத்தைத்
14 தொழுதுகொள்ளுவேன். நான் கர்த்தருக்குச்
செய்த பொருத்தனைகளை [3]அவருடைய ஜன
ங்களெல்லாருக்கு முன்பாகவும் செலுத்து
15 வேன். கர்த்தருடைய பரிசுத்தவான்களின்
மரணம் [4]அவர் பார்வைக்கு அருமையானது.
16 கர்த்தாவே, நான் உமது அடியேன்; நான்
உமது அடியாளின் புத்திரனும், உமது ஊழி
யக்காரனுமாயிருக்கிறேன்; என் கட்டுகளை
17 அவிழ்த்துவிட்டீர். நான் உமக்கு ஸ்தோத்
திரபலியைச் செலுத்தி, [5]கர்த்தருடைய நாமத்
18 தைத் தொழுதுகொள்ளுவேன். நான் கர்த்
தருக்குச் செய்த பொருத்தனைகளை [6]அவரு
டைய ஜனங்களெல்லாருக்கு முன்பாகவும்,
19 கர்த்தருடைய ஆலயத்தின் பிராகாரங்களி
லும், [7]எருசலேமே உன் நடுவிலும் நிறை
வேற்றுவேன். அல்லேலூயா.

117 ஜாதிகளே, எல்லாரும் கர்த்தரைத் துதி
யுங்கள்; [8]ஜனங்களே, எல்லாரும் அவ
2 ரைப் போற்றுங்கள். அவர் நம்மேல் வைத்த
கிருபை பெரியது; கர்த்தரின் உண்மை [9]என்
றென்றைக்குமுள்ளது. அல்லேலூயா.

118 கர்த்தரைத் துதியுங்கள், [10]அவர் நல்ல
2 வர்; அவர் கிருபை என்றுமுள்ளது. அவர்
கிருபை என்றுமுள்ளதென்று [11]இஸ்ரவேல்
3 சொல்வதாக. அவர் கிருபை என்றுமுள்ள
தென்று, ஆரோனின் குடும்பத்தார் சொல்
4 வார்களாக. அவர் கிருபை என்றுமுள்ள
தென்று, கர்த்தருக்குப் பயப்படுகிறவர்கள்
சொல்வார்களாக.
5 நெருக்கத்திலிருந்து கர்த்தரை நோக்கிக்
கூப்பிட்டேன், [12]கர்த்தர் என்னைக் கேட்டரு
6 ளி விசாலத்திலே வைத்தார். கர்த்தர் என்
பட்சத்தில் இருக்கிறார், [13]நான் பயப்படேன்;
7 மனுஷன் எனக்கு என்ன செய்வான்? என
க்கு அநுகூலம்பண்ணுகிறவர்கள் நடுவில் கர்த்
தர் என் பட்சத்தில் இருக்கிறார்; என் சத்து
8 ருக்களில் சரிக்கட்டுதலைக் காண்பேன். மனு
ஷனை நம்புவதைப்பார்க்கிலும், [14]கர்த்தர் பே
9 ரில் பற்றுதலாயிருப்பதே நலம். பிரபுக்களை
நம்புவதைப்பார்க்கிலும், [15]கர்த்தர் பேரில் பற்
10 றுதலாயிருப்பதே நலம். எல்லா ஜாதியாரும்
என்னை வளைந்துகொள்ளுகிறார்கள்; கர்த்தரு
டைய நாமத்தினால் அவர்களைச் சங்கரிப்பேன்.
11 என்னைச் சுற்றிலும் வளைந்துகொள்ளுகிறார்
கள்; கர்த்தருடைய நாமத்தினால் அவர்களைச்
12 சங்கரிப்பேன். தேனீக்களைப்போல [16]என்னை
வளைந்துகொள்ளுகிறார்கள்; முள்ளில் பற்றின
நெருப்பைப்போல [17]அணைந்துபோவார்கள்;
கர்த்தருடைய நாமத்தினால் அவர்களைச் சங்
கரிப்பேன். நான் விழும்படி நீ என்னைத் 13
தள்ளினாய்; [18]கர்த்தரோ எனக்கு உதவிசெய்
தார். கர்த்தர் என் பெலனும், என் கீதமு 14
மானவர்; [19]அவர் எனக்கு ரட்சிப்புமானார்.
நீதிமான்களுடைய கூடாரங்களில் ரட்சிப் 15
பின் கெம்பீரசத்தம் உண்டு; கர்த்தரின் வலது
கரம் பராக்கிரமஞ் செய்யும். கர்த்தரின் வல 16
துகரம் உயர்ந்திருக்கிறது; கர்த்தரின் வலது
கரம் பராக்கிரமஞ் செய்யும்.
நான் சாவாமல், பிழைத்திருந்து, [20]கர்த்தரு 17
டைய செய்கைகளை விவரிப்பேன். கர்த்தர் 18
என்னை [21]வெகுவாய்த் தண்டித்தும், என்னைச்
சாவுக்கு ஒப்புக்கொடுக்கவில்லை. நீதியின் 19
வாசல்களைத் திறவுங்கள்; [22]நான் அவைகளுக்
குள் பிரவேசித்துக் கர்த்தரைத் துதிப்பேன்.
கர்த்தரின் வாசல் இதுவே; நீதிமான்கள் 20
இதற்குள் பிரவேசிப்பார்கள். நீர் எனக்குச் 21
செவிகொடுத்து, எனக்கு ரட்சிப்பாயிருந்த
படியால், நான் உம்மைத் துதிப்பேன். வீடு 22
கட்டுகிறவர்கள் ஆகாதென்று தள்ளின கல்லே,
[23]மூலைக்குத் தலைக்கல்லாயிற்று. அது கர்த்த 23
ராலே ஆயிற்று, அது நம்முடைய கண்களுக்கு
ஆச்சரியமாயிருக்கிறது. இது கர்த்தர் உண்டு 24
பண்ணின நாள்; இதிலே களிகூர்ந்து மகிழக்
கடவோம். கர்த்தாவே, இரட்சியும்; கர்த் 25
தாவே, காரியத்தை வாய்க்கப்பண்ணும். கர்த் 26
தருடைய நாமத்தினாலே வருகிறவர் [24]ஸ்தோத்
திரிக்கப்பட்டவர்; கர்த்தருடைய ஆலயத்தி
லிருந்து உங்களை ஆசீர்வதிக்கிறோம். கர்த்தர் 27
நம்மைப் பிரகாசிப்பிக்கிற [25]தேவனாயிருக்கி
றார்; பண்டிகைப் பலியைக் கொண்டுபோய்
பலிபீடத்தின் கொம்புகளில் கயிறுகளால் கட்
டுங்கள். நீர் என் தேவன், [26]நான் உம்மைத் 28
துதிப்பேன்; நீர் என் தேவன், நான் உம்மை
உயர்த்துவேன்.
கர்த்தரைத் துதியுங்கள், அவர் நல்லவர்; 29
அவர் கிருபை என்றுமுள்ளது.

119

א ஆலெப்.

கர்த்தருடைய வேதத்தின்படி நடக்கிற உத்
தமமார்க்கத்தார் [27]பாக்கியவான்கள். அவரு 2
டைய சாட்சிகளைக் கைக்கொண்டு; [28]அவரை
முழு இருதயத்தோடும் தேடுகிறவர்கள் பாக்கிய
வான்கள். அவர்கள் அநியாயம் [29]செய்வதில்லை; 3
அவருடைய வழிகளில் நடக்கிறார்கள். உமது 4
கட்டளைகளை நாங்கள் கருத்தாய்க் கைக்கொள்
ளும்படி [30]நீர் கற்பித்தீர். உமது பிரமாணங் 5
களைக் கைக்கொள்ளும்படி, என் நடைகள்
ஸ்திரப்பட்டால் நலமாயிருக்கும். நான் உம் 6
முடைய கற்பனைகளையெல்லாம் கண்ணோக்
கும்போது, [31]வெட்கப்பட்டுப் போவதில்லை.
உம்முடைய நீதி நியாயங்களை நான் கற்றுக் 7
கொள்ளும்போது, செம்மையான இருதயத்
தால் உம்மைத் துதிப்பேன். உமது பிரமா 8
ணங்களைக் கைக்கொள்ளுவேன்; முற்றிலும்
என்னைக் கைவிடாதேயும்.

[1] 2 கொ. 4. 13
[2] நா. 22. 17
[3] யோனா 2. 9
[4] 72. 14
[5] லேவி. 7. 12
[6] பிர. 5. 5
[7] 96. 8; 100. 4
[8] ரோ. 15. 11
[9] சங். 25. 1. யோ. 14. 6. 1 யோ. 5. 6
[10] 1 நாளா. 16. 8, 24. எஸ்றா 3, 10, 11
[11] 115. 9. ழ
[12] 120. 1
[13] 27. 1 எபி. 13. 6
[14] எரே. 17. 5, 7
[15] 146. 3
[16] உபா. 1. 44
[17] 2 சாமு. 28. 6. நாகூம் 1. 10
[18] மீகா 7. 8
[19] யாத். 15. 2, 6. ஏசா. 12. 2
[20] ஆப. 1. 12
[21] 2 கொ. 6. 9
[22] ஏசா. 26. 2. வெளி. 22. 14
[23] மத். 21. 42. அப். 4. 11. எபே. 2. 20. 1 பே. 2. 4, 7
[24] மத். 21. 9; 23 39
[25] எஸ்தர் 8. 16. 1 பே. 2. 9
[26] யாத். 15. 2. ஏசா. 25. 1
[27] 128. 1
[28] நீதி. 23. 26. 1 யோ. 3. 20
[29] 1 யோ. 3. 9 5. 18
[30] உபா. 6. 17
[31] 1 யோ. 2. 28

ב பேத்.

9 வாலிபன் தன் வழியை எதினால் சுத்தம்
பண்ணுவான்? [1]உமது வசனத்தின்படி தன்
10 னைக் காத்துக்கொள்ளுகிறதினால்தானே. என்
முழு இருதயத்தோடும் உம்மைத்தேடுகிறேன்,
[2]என்னை உமது கற்பனைகளை விட்டு வழிதப்ப
11 விடாதேயும். நான் உமக்கு விரோதமாய்ப்
பாவஞ்செய்யாதபடிக்கு, [3]உமது வாக்கை என்
12 இருதயத்தில் வைத்துவைத்தேன். **கர்த்தா
வே**, நீர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்; [4]உம்மு
13 டைய பிரமாணங்களை எனக்குப் போதியும்.
உம்முடைய வாக்கின் நியாயத்தீர்ப்புகளையெல்
லாம் என் உதடுகளால் விவரித்திருக்கிறேன்.
14 திரளான செல்வத்தில் களிகூருவதுபோல,
நான் உமது சாட்சிகளின் வழியில் களிகூரு
15 கிறேன். உமது கட்டளைகளைத் தியானித்து,
16 உமது வழிகளைக் கண்ணோக்குகிறேன். உமது
பிரமாணங்களில்மன மகிழ்ச்சியாயிருக்கிறேன்
உமது வசனத்தை மறவேன்.

ג கிமெல்.

17 உமது அடியேனுக்கு [5]அநுகூலமாயிரும்;
அப்பொழுது நான் பிழைத்து, உமது வசனத்
18 தைக் கைக்கொள்ளுவேன். உமது வேதத்தி
லுள்ள அதிசயங்களை நான் பார்க்கும்படிக்கு
19 என் கண்களைத் திறந்தருளும். பூமியிலே
நான் [6]பரதேசி; உமது கற்பனைகளை எனக்கு
20 மறையாதேயும். உமது நியாயங்கள்மேல் என்
ஆத்துமா எக்காலமும் வைத்திருக்கிற [7]வாஞ்
21 சையினால் தொய்ந்துபோகிறது. உமது கற்
பனைகளை விட்டு வழிவிலகின சபிக்கப்பட்ட
22 அகங்காரிகளை [8]நீர் கடிந்துகொள்ளுகிறீர். நிந்
தையையும் அவமானத்தையும் என்னைவிட்டு
கற்றும்; நான் உம்முடைய சாட்சிகளைக் கைக்
23 கொள்ளுகிறேன். பிரபுக்களும் உட்கார்ந்து
எனக்கு விரோதமாய்ப் பேசிக்கொள்ளுகிறார்
கள்; உமது அடியேனோ, உமது பிரமாணங்
24 களைத் தியானிக்கிறேன். உம்முடைய சாட்
சிகள் எனக்கு இன்பமும், [9]என் ஆலோசனைக்
காரருமாயிருக்கிறது.

ד டாலெத்.

25 என் ஆத்துமா மண்ணோடு ஒட்டிக்கொண்
டிருக்கிறது; உமது வசனத்தின்படி என்னை
26 உயிர்ப்பியும். என் வழிகளை நான் உமக்கு
விவரித்துக் காட்டினபோது எனக்குச் செவி
கொடுத்தீர்; உமது பிரமாணங்களை எனக்குப்
27 போதியும். உமது கட்டளைகளின் வழியை
எனக்கு உணர்த்தியருளும்; அப்பொழுது
28 உமது அதிசயங்களைத் தியானிப்பேன். சஞ்ச
லத்தால் என் ஆத்துமா கரைந்துபோகிறது;
உமது வசனத்தின்படி என்னை எடுத்து நிறுத்
29 தும். பொய்வழியை என்னைவிட்டு விலக்கி,
[10]உம்முடைய வேதத்தை எனக்கு அருள்செய்
30 யும். மெய்வழியை நான் தெரிந்துகொண்டு,
உம்முடைய நியாயங்களை எனக்கு முன்பாக
31 நிறுத்தினேன். உமது சாட்சிகள்மேல் பற்று
தலாயிருக்கிறேன்; **கர்த்தாவே**, என்னை [11]வெ
32 ட்கத்திற்குட்படப் பண்ணாதேயும். நீர் என்
இருதயத்தை விசாலமாக்கும்போது, [12]நான்
உமது கற்பனைகளின் வழியாக ஓடுவேன்.

ה ஏ.

**கர்த்தாவே** உமது பிரமாணங்களின் வழி 33
யை எனக்குப் போதியும்; [13]முடிவுபரியந்தம்
நான் அதைக் காத்துக்கொள்ளுவேன். எனக்கு 34
உணர்வைத் தாரும்; [14]அப்பொழுது நான்
உமது வேதத்தைப் பற்றிக்கொண்டு, என்
முழு இருதயத்தோடும் அதைக் கைக்கொள்ளு
வேன். உமது கற்பனைகளின் பாதையில் 35
என்னை நடத்தும்; நான் அதில் பிரியமாயிருக்
கிறேன். என் இருதயம் பொருளாசையைச் 36
சாராமல், [15]உமது சாட்சிகளைச் சாரும்படி
செய்யும். மாயையைப் பாராதபடி நீர் என் 37
கண்களை விலக்கி [16]உமது வழிகளில் என்னை
உயிர்ப்பியும். உமக்குப் பயப்படுகிறதற்கு ஏற்ற 38
உமது வாக்கை [17]உமது அடியேனுக்கு உறுதிப்
படுத்தும். நான் அஞ்சுகிற நிந்தையை விலக் 39
கியருளும்; உம்முடைய நியாயத்தீர்ப்புகள்
நல்லவைகள். இதோ, உம்முடைய கட்டளை 40
கள்மேல் வாஞ்சையாயிருக்கிறேன்; [18]உமது
நீதியால் என்னை உயிர்ப்பியும்.

ו வௌ.

**கர்த்தாவே**, உம்முடைய வாக்கின்படி, 41
உமது தயவும் உமது இரட்சிப்பும் எனக்கு
வருவதாக. அப்பொழுது என்னை நிந்திக்கிற 42
வனுக்கு உத்தரவு சொல்லுவேன்; உம்மு
டைய வசனத்தை நம்பியிருக்கிறேன். சத்திய 43
வசனம் முற்றிலும் என் வாயினின்று நீங்க
விடாதேயும்; [19]உம்முடைய நியாயத்தீர்ப்புக
ளுக்குக் காத்திருக்கிறேன். நான் எப்பொழு 44
தும் என்றைக்கும் உமது வேதத்தைக் காத்துக்
கொள்ளுவேன். நான் உம்முடைய கட்டளை 45
களை ஆராய்கிறபடியால், [20]விசாலத்திலே
நடப்பேன். நான் உம்முடைய சாட்சிக 46
ளைக்குறித்து, [21]ராஜாக்களுக்கு முன்பாகவும்
வெட்கப்படாமல் பேசுவேன். நான் பிரியப் 47
படுகிற உமது கற்பனைகளின்பேரில் மனம
கிழ்ச்சியாயிருப்பேன். நான் பிரியப்படுகிற 48
உமது கற்பனைகளுக்குக் கையெடுப்பேன்,
உமது பிரமாணங்களைத் தியானிப்பேன்.

ז சாயீன்.

நீர் என்னை நம்பப்பண்ணின வசனத்தை 49
[22]உமது அடியேனுக்காக நினைத்தருளும். அது 50
வே என் சிறுமையில் எனக்கு ஆறுதல், [23]உம்
முடைய வாக்கு என்னை உயிர்ப்பித்தது.
அகந்தைக்காரர் என்னை மிகவும் பரியாசம் 51
பண்ணியும், [24]நான் உமது வேதத்தைவிட்டு
விலகினதில்லை. **கர்த்தாவே**, ஆதிமுதலான 52
உமது நியாயத்தீர்ப்புகளை நான் நினைத்து,
என்னைத் தேற்றுகிறேன். உமது வேதத்தை 53
விட்டு விலகுகிற துன்மார்க்கர் நிமித்தம் நடுக்
கம் [25]என்னைப் பிடித்தது. நான் பரதேசியாய்த் 54
தங்கும் வீட்டிலே உமது பிரமாணங்கள் எனக்
குக் கீதங்களாயின. **கர்த்தாவே**, இராக்கா 55
லத்தில் உமது நாமத்தை நினைத்து, [26]உமது
வேதத்தைக் கைக்கொள்ளுகிறேன். நான் 56

[1] நீதி. 1. 4
[2] 2 நாளா. 15. 15
[3] 1. 2
[4] 25. 4
[5] 116. 7
[6] எபி. 11. 13. 1 பே. 2. 11
[7] 63. 1
[8] 1 பே. 5. 5
[9] நீதி. 7. 1-4
[10] நீதி. 30. 8
[11] ஏசா. 49. 23
[12] ஏசா. 60. 5. 2 கொ. 6. 11
[13] மத். 10. 22. வெளி. 2. 26
[14] உபா. 4. 6. நீதி. 2. 6. யாக். 1. 5
[15] எசே. 33. 31. லூ. 12. 15. 1 தீமோ. 6. 10. எபி. 13. 5
[16] நீதி. 23. 5. ஏசா. 33. 15
[17] 2 சாமு. 7. 25. 2 கொ. 1. 20
[18] யோ. 10. 10
[19] ஏசா. 59. 21
[20] யோ. 8. 32, 36. கலா. 5. 1, 13
[21] மத். 10. 18, 19. அப். 26. 1. ழ
[22] 1 பே. 1. 13, 21
[23] ரோ. 15. 4
[24] யோபு 23. 11. ஏசா. 38. 3
[25] எஸ்றா 9. 3
[26] 63. 6

உமது கட்டளைகளைக் கைக்கொண்டபடியி
ஞல், இது எனக்குக் கிடைத்தது.

ח சேத்.

57 கர்த்தாவே, நீரே என் [1]பங்கு; நான் உமது
வசனங்களைக் கைக்கொள்ளுவேன் என்
58 றேன். முழு இருதயத்தோடும் [2]உம்முடைய
தயவுக்காகக் கெஞ்சுகிறேன்; உமது வாக்கின்
59 படி எனக்கு இரங்கும். என் வழிகளைச் சிந்
தித்துக்கொண்டு, [3]என் கால்களை உம்முடைய
60 சாட்சிகளுக்கு நேராகத் திருப்பினேன். உமது
கற்பனைகளைக் கைக்கொள்ளும்படி, நான்
61 தாமதியாமல் தீவிரித்தேன். துன்மார்க்கரின்
கூட்டங்கள் என்னைக் கொள்ளையிட்டும், உம்
முடைய வேதத்தை நான் மறக்கவில்லை.
62 உமது நீதியான நியாயத்தீர்ப்புகளினிமித்தம்,
உம்மைத் துதிக்கும்படி பாதிராத்திரியில் [4]எழு
63 ந்திருப்பேன். உமக்குப் பயந்து, உமது கட்
டளைகளைக் கைக்கொள்ளுகிற அனைவருக்கும்
64 [5]நான் தோழன். கர்த்தாவே, பூமி உமது
கிருபையினால் நிறைந்திருக்கிறது; உமது பிர
மாணங்களை எனக்குப் போதியும்.

ט தேத்.

65 கர்த்தாவே, உமது வசனத்தின்படி உமது
66 அடியேனை நன்றாய் நடத்தினீர். உத்தம நிதா
னிப்பையும் அறிவையும் எனக்குப் [6]போதித்
தருளும், உம்முடைய கற்பனைகளின்பேரில்
67 விசுவாசமாயிருக்கிறேன். நான் உபத்திரவப்
படுவதற்கு முன் [7]வழிதப்பி நடந்தேன்;
இப்பொழுதோ உம்முடைய வார்த்தையைக்
68 காத்து நடக்கிறேன். தேவரீர் நல்லவரும்,
[8]நன்மை செய்கிறவருமா யிருக்கிறீர்; உமது
69 பிரமாணங்களை எனக்குப் போதியும். அகங்
காரிகள் எனக்கு விரோதமாய்ப் பொய்களைப்
பிணைக்கிறார்கள்; நானோ, முழு இருதயத்தோ
டும் உம்முடைய கட்டளைகளைக் கைக்கொள்
70 ளுவேன். அவர்கள் இருதயம் நிணத்துன்
னிக் கொழுத்திருக்கிறது; நானோ, உம்மு
டைய வேதத்தில் மனமகிழ்ச்சியாயிருக்கி
71 றேன். நான் உபத்திரவப்பட்டது எனக்கு
நல்லது; [9]அதினால் உமது பிரமாணங்களைக்
72 கற்றுக்கொள்ளுகிறேன். அநேகமாயிரம்
பொன் வெள்ளியைப்பார்க்கிலும், [10]நீர் விளம்
பின வேதமே எனக்கு நலம்.

י யோட்.

73 உம்முடைய கரங்கள் என்னை உண்டாக்கி,
என்னை உருவாக்கிற்று; [11]உம்முடைய கற்
பனைகளைக் கற்றுக்கொள்ள என்னை உணர்
74 வுள்ளவனாக்கும். நான் உம்முடைய வசனத்
திற்குக் காத்திருக்கிறபடியால், உமக்குப் பயந்
தவர்கள் [12]என்னைக் கண்டு சந்தோஷப்படு
75 வார்கள். கர்த்தாவே, உமது நியாயத்தீர்ப்பு
கள் நீதியுள்ளதென்றும், [13]உண்மையின்படி
என்னை உபத்திரவப்படுத்தினீரென்றும் அறி
76 வேன். நீர் உமது அடியேனுக்குக் கொடுத்த
உமது வாக்கின்படி, உமது கிருபை என்னைத்
77 தேற்றுவதாக. நான் பிழைத்திருக்கும்படிக்கு
உமது இரக்கங்கள் எனக்குக் கிடைப்பதாக;
உம்முடைய வேதம் என் மனமகிழ்ச்சி. அகங் 78
காரிகள் என்னைப் பொய்களினால் கெடுக்கப்
பார்த்தபடியால் வெட்கப்பட்டுப் போவார்க
ளாக; நானோ உமது கட்டளைகளைத் தியானிப்
பேன். உமக்குப் பயந்து, உமது சாட்சிகளை 79
அறிந்திருக்கிறவர்கள் என்னண்டைக்குத் திரு
ம்புவார்களாக. நான் வெட்கப்பட்டுப் போகா 80
தபடிக்கு, [14]என் இருதயம் உமது பிரமாணங்
களில் உத்தமமாயிருக்கக்கடவது.

כ கப்.

உம்முடைய ரட்சிப்புக்கு [15]என் ஆத்துமா 81
தவிக்கிறது; உம்முடைய வசனத்துக்குக் காத்
திருக்கிறேன். எப்பொழுது என்னைத் தேற் 82
றுவீர் என்று, உம்முடைய வாக்கின்மேல்
நோக்கமாய் என் கண்கள் பூத்துப்போகிறது.
புகையிலுள்ள [16]துருத்தியைப்போலானேன்; 83
உமது பிரமாணங்களையோ மறவேன். உமது 84
அடியேனுடைய [17]நாட்கள் எம்மாத்திரம்? என்
னைத் துன்பப்படுத்துகிறவர்களுக்கு நீர் எப்
பொழுது [18]நியாயத்தீர்ப்பு செய்வீர்? உம்மு 85
டைய வேதத்துக்கு விரோதமாய் அகங்காரி
கள் [19]எனக்குக் குழிகளை வெட்டினார்கள். உம் 86
முடைய கற்பனைகளெல்லாம் உண்மையாயி
ருக்கிறது; அநியாயமாய் என்னைத் துன்பப்
படுத்துகிறார்கள்; நீர் எனக்குச் சகாயம் பண்
ணும். அவர்கள் என்னைப் பூமியிலிராமல் 87
நீக்கிவிடச் சற்றே தப்பிற்று; ஆனாலும் நான்
உமது கட்டளைகளை விட்டுவிடவில்லை. உமது 88
கிருபையின்படியே என்னை உயிர்ப்பியும்;
அப்பொழுது நான் உம்முடைய வாக்கின்
சாட்சியைக் காத்து நடப்பேன்.

ל லாமேட்.

கர்த்தாவே, உமது வசனம் என்றென்றைக் 89
கும் [20]வானங்களில் நிலைத்திருக்கிறது. உம்மு 90
டைய உண்மை தலைமுறை தலைமுறையாக
இருக்கும்; பூமியை உறுதிப்படுத்தினீர், அது
நிலைத்திருக்கிறது. உம்முடைய பிரமாணங் 91
களை நிறைவேற்றும்படி அவைகள் இந்நாள்
வரைக்கும் நிற்கிறது; [21]சமஸ்தமும் உம்மைச்
சேவிக்கும். உமது வேதம் என் மனமகிழ்ச் 92
சியாயிராதிருந்தால், என் துக்கத்திலே அழிந்
துபோயிருப்பேன். நான் ஒருபோதும் உம் 93
முடைய கட்டளைகளை மறக்கமாட்டேன்;
அவைகளால் நீர் என்னை உயிர்ப்பித்தீர். நான் 94
உம்முடையவன், [22]என்னை ரட்சியும்; உம்மு
டைய கட்டளைகளை ஆராய்கிறேன். துன் 95
மார்க்கர் என்னை அழிக்கக் காத்திருக்கிறார்
கள்; நான் உமது சாட்சிகளைச் சிந்தித்துக்
கொண்டிருக்கிறேன். சகல சம்பூரணத்திற் 96
கும் எல்லையைக் கண்டேன்; [23]உம்முடைய
கற்பனையோ மகா விஸ்தாரம்.

מ மேம்.

உமது வேதத்தில் நான் எவ்வளவு பிரியமா 97
யிருக்கிறேன்! நாள் முழுதும் அது என் தியா
னம். நீர் உம்முடைய கற்பனைகளைக்கொண்டு 98
என்னை என் சத்துருக்களிலும் அதிக ஞான
முள்ளவனாக்குகிறீர்; [24]அவைகள் என்றைக்

[1] எரே. 10. 16. புல. 3. 24
[2] எபி. 10. 22
[3] புல. 3. 40, 41. லூ. 15. 17, 18
[4] அப். 16. 25
[5] நீதி. 13. 20
[6] எரே. 3. 15
[7] எரே. 21. 18, 19. எபி. 12. 11
[8] 25. 8. மத். 19. 17
[9] எபி. 12. 10, 11
[10] நீதி. 8. 11, 19
[11] 111. 10
[12] 34. 2
[13] எபி. 12. 10. வெளி. 3. 19
[14] உபா. 26. 16. எசே. 11. 19
[15] 84. 2
[16] யோபு 30. 30
[17] 39. 4
[18] 2 தெச. 1. 6. வெளி. 6. 10
[19] 35. 7. நீதி. 16. 27
[20] மத். 24. 34, 35. 1 பே. 1. 25
[21] எரே. 33. 25
[22] செப். 3. 17
[23] மத். 5. 18; 24. 35
[24] உபா. 4. 6, 8

99 கும் என்னுடனே இருக்கிறது. உம்முடைய
சாட்சிகள் என் தியானமாயிருக்கிறபடியால்,
[1]எனக்குப் போதித்தவர்களெல்லாரிலும் அறி
100 வுள்ளவனாயிருக்கிறேன். உம்முடைய கட்
டளைகளை நான் கைக்கொண்டிருக்கிறபடி
யால், [2]முதியோர்களைப் பார்க்கிலும் ஞான
101 முள்ளவனாயிருக்கிறேன். உம்முடைய வச
னத்தை நான் காத்து நடக்கும்படிக்கு, [3]சகல
பொல்லாத வழிகளுக்கும் என் கால்களை
102 விலக்குகிறேன். நீர் எனக்குப் போதித்
திருக்கிறபடியால், நான் உம்முடைய நியா
103 யங்களை விட்டு விலகேன். உம்முடைய
வார்த்தைகள் என் நாவுக்கு எவ்வளவு இனி
மையானவைகள்; [4]என் வாய்க்கு அவைகள்
104 தேனிலும் மதுரமாயிருக்கும். உமது கட்ட
ளைகளால் உணர்வடைந்தேன், [5]ஆதலால்
எல்லாப் பொய்வழிகளையும் வெறுக்கிறேன்.

נ நூன்.

105 உம்முடைய வசனம் என் கால்களுக்குத்
தீபமும், [6]என் பாதைக்கு வெளிச்சமுமாயி
106 ருக்கிறது. உம்முடைய நீதி நியாயங்களைக்
காத்து நடப்பேன் என்று ஆணையிட்டேன்;
107 [7]அதை நிறைவேற்றுவேன். நான் மிகவும்
உபத்திரவப்படுகிறேன்; கர்த்தாவே, உம்மு
டைய வசனத்தின்படியே என்னை உயிர்ப்
108 பியும். கர்த்தாவே, [8]என் வாயின் உற்சாக
பலிகளை நீர் அங்கீகரித்து, உமது நியாயங்
109 களை எனக்குப் போதித்தருளும். என் பிரா
ணன் எப்பொழுதும் என் கையில் இருக்கி
றது; [9]ஆனாலும் உம்முடைய வேதத்தை மற
110 வேன். துன்மார்க்கர் எனக்குக் கண்ணி
வைக்கிறார்கள்; ஆனாலும் நான் உம்முடைய
111 கட்டளைகளை விட்டு வழிதவறேன். உம்
முடைய சாட்சிகளை நித்திய சுதந்தரமாக்கிக்
கொண்டிருக்கிறேன், [10]அவைகளே என்
112 இருதயத்தின் மகிழ்ச்சி. முடிவுபரியந்தம்
[11]இடைவிடாமல் உம்முடைய பிரமாணங்க
ளின்படி செய்ய என் இருதயத்தைச் சாய்த்
தேன்.

ס சாமெக்.

113 வீண் சிந்தனைகளை [12]நான் வெறுத்து,
114 உமது வேதத்தில் பிரியப்படுகிறேன். என்
மறைவிடமும் என் [13]கேடகமும் நீரே; உம்
முடைய வசனத்துக்குக் காத்திருக்கிறேன்.
115 பொல்லாதவர்களே, என்னைவிட்டு அகன்று
போங்கள்; [14]என் தேவனுடைய கற்பனைகளை
116 நான் கைக்கொள்ளுவேன். நான் பிழைத்
திருப்பதற்கு உமது வார்த்தையின்படி என்னை
ஆதரித்தருளும்; என் நம்பிக்கை [15]விருதா
வாய்ப் போக என்னை வெட்கத்திற்கு உட்ப
117 டுத்தாதேயும். என்னை ஆதரித்தருளும்; அப்
பொழுது நான் ரட்சிக்கப்பட்டு, எக்காலமும்
உம்முடைய பிரமாணங்களின்பேரில் நோக்
118 கமாயிருப்பேன். [16]உமது பிரமாணங்களை
விட்டு வழிவிலகுகிற யாவரையும் [16]மிதித்துப்
போடுகிறீர்; அவர்களுடைய உபாயம் வெ
119 றும் [17]பொய்யே. பூமியிலுள்ள துன்மார்க்கர்

1 2 தீமோ. 3. 15
2 யோபு 32. 7–9
3 நீதி. 1. 15
4 19. 10. யோபு 23. 12
5 நீதி. 8. 13
6 நீதி. 6. 23
7 நெகே. 10. 29
8 எபி. 13. 15
9 யோபு 13. 14
10 எரே. 15. 16
11 வெளி. 2. 10
12 எரே. 4. 14
13 32. 7
14 மத். 7. 23. 1 கொ. 15. 33
15 ரோ. 5. 5
16 மல். 4. 3
17 1 பே. 2. 21
18 எசே. 22. 18
19 ஆப. 3. 16
20 எபி. 7. 22
21 103. 10
22 116. 16
23 19. 10. நீதி. 8. 11
24 ஏசா. 25. 1
25 நீதி. 1. 4; 9. 4–6. 2 கொ. 4. 4, 6
26 2 தெச. 1. 6, 7
27 17. 5. ரோ. 6. 12, 14
28 எண். 6. 25, 26
29 எரே. 13. 17; 14. 17. எசே. 9. 4
30 தானி. 9. 7
31 69. 9. யோ. 2. 17

யாவரையும் களிம்பைப்போல அகற்றிவிடுகி
றீர்; [18]ஆகையால் உமது சாட்சிகளில் பிரியப்
படுகிறேன். உமக்குப் பயப்படும் பயத்தால் 120
என் உடம்பு [19]சிலிர்க்கிறது; உமது நியாயத்
தீர்ப்புகளுக்குப் பயப்படுகிறேன்.

ע ஆயின்.

நியாயமும் நீதியும் செய்கிறேன்; என்னை 121
ஒடுக்குகிறவர்களுக்கு என்னை ஒப்புக்கொ
டாதேயும். உமது அடியேனுக்கு நன்மை 122
யாகத் துணைநில்லும்; [20]அகங்காரிகள் என்னை
யொடுக்க வொட்டாதேயும். உமது ரட்சிப் 123
புக்கும் உமது நீதியின் வார்த்தைக்கும் காத்
திருக்கிறதினால் என் கண்கள் பூத்துப்போகி
றது. உமது அடியேனை உமது [21]கிருபை 124
யின்படியே நடத்தி, உமது பிரமாணங்களை
எனக்குப் போதியும். நான் உமது [22]அடி 125
யேன்; உம்முடைய சாட்சிகளை நான் அறி
யும்படி என்னை உணர்வுள்ளவனாக்கும். நீதி 126
யைச் செய்யக் கர்த்தருக்கு வேளை வந்தது;
அவர்கள் உம்முடைய நியாயப் பிரமாணத்
தை மீறினார்கள். ஆதலால் நான் பொன்னி 127
லும் பசும்பொன்னிலும் [23]அதிகமாய் உமது
கற்பனைகளில் பிரியப்படுகிறேன். எல்லா 128
வற்றைப்பற்றியும் நீர் அருளின எல்லாக் கட்
டளைகளும் செம்மையென்று எண்ணி, சகல
பொய்வழிகளையும் வெறுக்கிறேன்.

פ பே.

உம்முடைய சாட்சிகள் அதிசயமானவை 129
கள்; [24]ஆகையால் என் ஆத்துமா அவைகளைக்
கைக்கொள்ளும். உம்முடைய வசனத்தின் 130
பிரசித்தம் வெளிச்சம் தந்து, [25]பேதைகளை
உணர்வுள்ளவர்களாக்கும். உம்முடைய கற் 131
பனைகளை நான் வாஞ்சிக்கிறபடியால், என்
வாயை ஆவென்று திறந்து அவைகளுக்கு
ஏங்குகிறேன். உம்முடைய நாமத்தை நே 132
சிக்கிறவர்களுக்கு வழங்கும் நியாயத்தின்ப
டியே [26]என்னை நோக்கிப் பார்த்து, எனக்கு
இரங்கும். உம்முடைய வார்த்தையிலே என் 133
காலடிகளை நிலைப்படுத்தி, [27]ஒரு அநியாய
மும் என்னை ஆளவொட்டாதேயும். மனு 134
ஷர் செய்யும் இடுக்கத்துக்கு என்னை விலக்கி
விடுவித்தருளும்; அப்பொழுது நான் உம்மு
டைய கட்டளைகளைக் காத்துக்கொள்
வேன். உமது அடியேன்மேல் உமது முகத் 135
தைப் பிரகாசிக்கப்பண்ணி, [28]உமது பிரமா
ணங்களை எனக்குப் போதியும். உம்மு 136
டைய வேதத்தை மனுஷர் காத்து நடவாத
படியால், [29]என் கண்களிலிருந்து நீர்த்தாரை
கள் ஓடுகிறது.

צ த்சாடே.

கர்த்தாவே, நீர் நீதிபரர், [30]உமது நியாயத் 137
தீர்ப்புகள் செம்மையானவைகள். நீர் கட் 138
டளையிட்ட சாட்சிகள் நீதியும், மகா உண்
மையுமானவைகள். என் சத்துருக்கள் உம் 139
முடைய வசனங்களை மறந்தபடியால், [31]என்
பக்திவைராக்கியம் என்னைப் பட்சிக்கிறது.
உமது வார்த்தை மிகவும் புடமிடப்பட்டது, 140

[1]உமது அடியேன் அதில் பிரியப்படுகிறேன்.
141 நான் சிறியவனும் அசட்டை பண்ணப்பட்
டவனுமாயிருக்கிறேன்; ஆனாலும் உமது
142 கட்டளைகளை மறவேன். உம்முடைய நீதி
நித்திய நீதி, [2]உம்முடைய வேதம் சத்தியம்.
143 இக்கட்டும் நெருக்கமும் என்னைப் பிடித்தது;
ஆனாலும் உம்முடைய கற்பனைகள் என் மன
144 மகிழ்ச்சி. உம்முடைய சாட்சிகளின் நீதி
என்றைக்கும் நிற்கும்; என்னை உணர்வுள்ள
வனாக்கும், [3]அப்பொழுது நான் பிழைத்தி
ருப்பேன்.

ק கோப்.

145 முழு இருதயத்தோடும் கூப்பிட்டேன்,
**கர்த்தாவே**, என் ஜெபத்தைக் கேளும்; உம்
முடைய பிரமாணங்களைக் கைக்கொள்ளு
146 வேன். உம்மை நோக்கிக் கூப்பிட்டேன்,
என்னை இரட்சியும்; அப்பொழுது நான்
உம்முடைய சாட்சிகளைக் காத்துக்கொள்ளு
147 வேன். அதிகாலையில் [4]நான் எழுந்து சத்த
மிட்டேன்; உம்முடைய வசனத்துக்குக் காத்
148 திருக்கிறேன். உமது வசனத்தைத் தியானி
க்கும்படி, [5]குறித்த சாமங்களுக்குமுன்னே
149 என் கண்கள் விழித்துக்கொள்ளும். உம்மு
டைய கிருபையின்படி என் சத்தத்தைக்
கேளும்; **கர்த்தாவே**, உம்முடைய நியாயத்
150 தின்படி என்னை உயிர்ப்பியும். தீவினையைப்
பின்பற்றுகிறவர்கள் சமீபிக்கிறார்கள்; அவர்
கள் உம்முடைய வேதத்துக்குத் தூரமாயிருக்
151 கிறார்கள். **கர்த்தாவே**, [6]நீர் சமீபமாயிருக்கி
152 றீர்; உமது கற்பனைகளெல்லாம் உண்மை. நீர்
உம்முடைய சாட்சிகளை [7]என்றென்றைக்கும்
நிற்க ஸ்தாபித்தீர் என்பதை, அவைகளால்
நான் நெடுநாளாய் அறிந்திருக்கிறேன்.

ר ரேஷ்.

153 என் உபத்திரவத்தைப் [8]பார்த்து, என்னை
விடுவியும்; உமது வேதத்தை மறவேன்.
154 எனக்காக நீர் வழக்காடி [9]என்னை மீட்டுக்
கொள்ளும், உம்முடைய வார்த்தையின்படி
155 யே என்னை உயிர்ப்பியும். இரட்சிப்பு துன்
மார்க்கருக்குத் தூரமாயிருக்கிறது, [10]அவர்கள்
156 உமது பிரமாணங்களைத் தேடார்கள். **கர்த்**
**தாவே**, உம்முடைய இரக்கங்கள் மிகுதியா
யிருக்கிறது; உமது நியாயங்களின்படி என்
157 னை உயிர்ப்பியும். என்னைத் துன்பப்படுத்து
கிறவர்களும் என்னை விரோதிக்கிறவர்களும்
அநேகர்; ஆனாலும் உம்முடைய சாட்சிகளை
158 விட்டு விலகேன். உமது வசனத்தைக் காத்
துக்கொள்ளாத துரோகிகளை நான் கண்ட
போது, [11]எனக்கு அருவருப்பாயிருந்தது.
159 இதோ, உம்முடைய கட்டளைகளை நேசிக்கி
றேன்; **கர்த்தாவே**, உமது கிருபையின்
160 படி என்னை உயிர்ப்பியும். உம்முடைய வச
னம் சமூலமும் சத்தியம், உம்முடைய நீதி
நியாயமெல்லாம் நித்தியம்.

ש ஷீன்.

161 பிரபுக்கள் காரணமில்லாமல் [12]என்னைத்
துன்பப்படுத்தினார்கள், ஆனாலும் என் இரு
தயம் உமது வசனத்திற்கே பயப்படுகிறது.
மிகுந்த கொள்ளையுடைமையைக் கண்டுபி 162
டிக்கிறவன் மகிழ்கிறதுபோல, நான் உமது
வார்த்தையின்பேரில் மகிழுகிறேன். பொய் 163
யைப் பகைத்து அருவருக்கிறேன்; உம்மு
டைய வேதத்தையோ நேசிக்கிறேன். உமது 164
நீதி நியாயங்களினிமித்தம், ஒருநாளில் ஏழு
தரம் உம்மைத் துதிக்கிறேன். உம்முடைய 165
வேதத்தை நேசிக்கிறவர்களுக்கு மிகுந்த [13]சமா
தானமுண்டு; அவர்களுக்கு இடறலில்லை.
**கர்த்தாவே**, உம்முடைய ரட்சிப்புக்கு நான் 166
காத்திருந்து, [14]உம்முடைய கற்பனைகளின்
படி செய்கிறேன். என் ஆத்துமா உமது 167
சாட்சிகளைக் காக்கும்; அவைகளை நான் மிக
வும் நேசிக்கிறேன். உமது கட்டளைகளையும் 168
உமது சாட்சிகளையும் காத்து நடக்கிறேன்;
[15]என் வழிகளெல்லாம் உமக்கு முன்பாக
இருக்கிறது.

ת தௌ.

**கர்த்தாவே**, என் கூப்பிடுதல் உமது சந் 169
நிதியில் வருவதாக; உமது வசனத்தின்ப
டியே என்னை உணர்வுள்ளவனாக்கும். என் 170
விண்ணப்பம் உமது சந்நிதியில் வருவதாக;
உமது வார்த்தையின்படி என்னை விடுவித்
தருளும். உம்முடைய பிரமாணங்களை நீர் 171
எனக்குப் போதிக்கும்போது, என் உதடுகள்
உமது துதியைப் பிரஸ்தாபப்படுத்தும். உமது 172
கற்பனைகளெல்லாம் நீதியுள்ளவைகள்; ஆத
லால், என் நாவு உம்முடைய வசனத்தை
விவரித்துச் சொல்லும். நான் உம்முடைய 173
கட்டளைகளைத் தெரிந்துகொண்டபடியால்,
[16]உமது கரம் எனக்குத் துணையாயிருப்பதாக.
**கர்த்தாவே**, உம்முடைய ரட்சிப்பின்மேல் 174
ஆவலாயிருக்கிறேன்; உம்முடைய வேதம்
என் மனமகிழ்ச்சி. என் ஆத்துமா பிழைத் 175
திருந்து உம்மைத் துதிக்கக்கடவது; உமது
நியாயத்தீர்ப்புகள் எனக்கு உதவியாயிருப்ப
தாக. காணாமற்போன ஆட்டைப்போல 176
[17]வழி தப்பிப்போனேன்; உமது அடியே
னைத் தேடுவீராக; உமது கற்பனைகளை நான்
மறவேன்.

## 120

(ஆரோகண சங்கீதம்.)

என் நெருக்கத்திலே [18]**கர்த்தரை** நோக்கிக்
கூப்பிட்டேன், அவர் எனக்குச் செவிகொடுத்
தார். **கர்த்தாவே**, பொய் உதடுகளுக்கும் கபட 2
நாவுக்கும் என் ஆத்துமாவைத் தப்புவியும்.
கபடநாவே, உனக்கு என்ன கிடைக்கும்? 3
உனக்கு என்ன செய்யப்படும்? பலவானு 4
டைய கூர்மையான அம்புகளும், சூரைச்செடி
களை எரிக்கும் தழலுமே கிடைக்கும்.
ஐயோ! நான் மேசேக்கிலே சஞ்சரித்தது 5
போதும், [19]கேதாரின் கூடாரங்களண்டையி
லே குடியிருந்ததும் போதும்! சமாதானத் 6
தைப் பகைக்கிறவர்களிடத்தில் என் ஆத்துமா
குடியிருந்ததும் போதும்! நான் சமாதானத் 7
தை நாடுகிறேன்; அவர்களோ, நான் பேசும்
போது யுத்தத்துக்கு எத்தனப்படுகிறார்கள்.

1 நீதி. 30. 5
2 யோ. 17. 17
3 நீதி. 10. 21
4 130. 6
5 63. 1, 6
6 139. 2. ழ
7 லூ. 21. 33
8 புல. 5. 1
9 மீகா. 7. 9. 1 யோ. 2. 1
10 லூ. 16. 24
11 எசே. 9. 4
12 1 சாமு. 24. 11, 17: 26. 21, 23
13 நீதி. 3. 2 ஏசா. 32. 17. யோ. 14. 27. பிலி. 4. 7
14 ஆதி. 49. 18
15 நீதி. 5. 21
16 யோசு. 24. 22. நீதி. 1. 29. லூ. 10. 42
17 ஏசா. 53. 6. லூ. 15. 4. ழ. 1 பே. 2. 25
18 யோனா 2. 2
19 ஆதி. 10. 2: 25. 13

## 121

(ஆரோகண சங்கீதம்.)

எனக்கு ஒத்தாசை வரும் பர்வதங்களுக்கு
நேராக [1]என் கண்களை ஏறெடுக்கிறேன்.
2 வானத்தையும் பூமியையும் உண்டாக்கின
**கர்த்தரிடத்திலிருந்து** [2]எனக்கு ஒத்தாசைவரும்.
3 உன் காலைத் தள்ளாடவொட்டார்; [3]உன்னைக்
4 காக்கிறவர் உறங்கார். இதோ, இஸ்ரவேலைக்
காக்கிறவர் உறங்குகிறதுமில்லை தூங்குகிறது
5 மில்லை. **கர்த்தர்** உன்னைக் காக்கிறவர்; **கர்த்**
**தர்** உன் வலதுபக்கத்திலே உனக்கு [4]நிழலா
6 யிருக்கிறார். பகலிலே வெயிலாகிலும், [5]இர
விலே நிலவாகிலும் உன்னைச் சேதப்படுத்து
7 வதில்லை. **கர்த்தர்** உன்னை எல்லாத் தீங்குக்
கும் விலக்கிக் காப்பார்; [6]அவர் உன் ஆத்துமா
8 வைக் காப்பார். **கர்த்தர்** உன் போக்கையும்
உன் வரத்தையும் [7]இதுமுதற்கொண்டு என்
றைக்குங் காப்பார்.

## 122

(தாவீது பாடின ஆரோகண சங்கீதம்.)

**கர்த்தருடைய** ஆலயத்துக்குப் போவோம்
வாருங்கள் என்று எனக்கு அவர்கள் சொன்
2 னபோது [8]மகிழ்ச்சியாயிருந்தேன். எருசலே
மே, உன் வாசல்களில் எங்கள் கால்கள் நிற்க
3 லாயிற்று. எருசலேம் இசைவிணைப்பான [9]நக
4 ரமாய்க் கட்டப்பட்டிருக்கிறது. அங்கே இஸ்
ரவேலுக்குச் சாட்சியாகக் **கர்த்தருடைய** ஜன
ங்களாகிய கோத்திரங்கள் [10]**கர்த்தரின்** நாமத்தை
5 ஸ்தோத்திரிப்பதற்குப் போகும். அங்கே தாவீ
தின் வம்சத்தாருடைய சிங்காசனங்களாகிய
[11]நியாயாசனங்கள் வைக்கப்பட்டிருக்கிறது.
6 எருசலேமின் சமாதானத்துக்காக வேண்
டிக்கொள்ளுங்கள்; [12]உன்னை நேசிக்கிறவர்கள்
7 சுகித்திருப்பார்களாக. உன் அலங்கத்திற்குள்
ளே சமாதானமும், உன் அரமனைகளுக்குள்
8 ளே சுகமும் இருப்பதாக. என் சகோதரர்
நிமித்தமும் என் சிநேகிதர் நிமித்தமும், உன்
னில் சமாதானம் இருப்பதாக என்பேன்.
9 எங்கள் தேவனாகிய **கர்த்தரின்** ஆலயத்தினி
மித்தம் [13]உனக்கு நன்மையுண்டாகத் தேடு
வேன்.

## 123

(ஆரோகண சங்கீதம்.)

பரலோகத்தில்வாசமாயிருக்கிறவரே, [14]உம்
மிடத்திற்கு என் கண்களை ஏறெடுக்கிறேன்.
2 இதோ, வேலைக்காரரின் கண்கள் தங்கள் எஜ
மான்களின் கையை நோக்கியிருக்குமாப்போ
லவும், வேலைக்காரியின் கண்கள் தன் எஜ
மாட்டியின் கையை நோக்கியிருக்குமாப்போ
லவும், எங்கள் தேவனாகிய **கர்த்தர்** எங்களுக்கு
இரக்கஞ்செய்யும் வரைக்கும், எங்கள் கண்
3 கள் அவரை நோக்கியிருக்கிறது. எங்களுக்கு
இரங்கும் **கர்த்தாவே**, எங்களுக்கு இரங்கும்;
நிந்தனையினால் மிகவும் நிறைந்திருக்கிறோம்.
4 சுகஜீவிகளுடைய நிந்தனையினாலும், அகங்கா
ரிகளுடைய இகழ்ச்சியினாலும், எங்கள் ஆத்
துமா மிகவும் நிறைந்திருக்கிறது.

## 124

(தாவீது பாடின ஆரோகண சங்கீதம்.)

மனுஷர் நமக்கு விரோதமாய் எழும்பின
போது, [15]**கர்த்தர்** நமது பக்கத்திலிராவிட்
டால், **கர்த்தர்** தாமே நமது பக்கத்திலிரா 2
விட்டால், அவர்கள் கோபம் நம்மேல் எரி 3
கையில், [16]நம்மை உயிரோடே விழுங்கியிருப்
பார்கள். அப்பொழுது தண்ணீர்கள் நம்மேல் 4
பாய்ந்து, வெள்ளங்கள் நமது ஆத்துமாவின்
மேல் பெருகி, கொந்தளிக்கும் ஜலங்கள் 5
நமது ஆத்துமாவின்மேல் புரண்டுபோயிருக்
கும் என்று இஸ்ரவேல் இப்பொழுது சொல்
வதாக.

நம்மை அவர்களுடைய பற்களுக்கு இரை 6
யாக ஒப்புக்கொடாதிருக்கிற **கர்த்தருக்கு**
ஸ்தோத்திரம். வேடருடைய கண்ணிக்குத் 7
தப்பின குருவியைப்போல நம்முடைய ஆத்
துமா தப்பிற்று, [17]கண்ணி தெறித்தது, நாம்
தப்பினோம். நம்முடைய சகாயம் [18]வானத் 8
தையும் பூமியையும் உண்டாக்கின **கர்த்தரு**
**டைய** நாமத்தில் உள்ளது.

## 125

(ஆரோகண சங்கீதம்.)

**கர்த்தரை** நம்புகிறவர்கள் என்றென்றைக்
கும் அசையாமல் நிலைத்திருக்கும் சீயோன்
பர்வதத்தைப்போல் இருப்பார்கள். பர்வதங் 2
கள் எருசலேமைச் சுற்றிலும் இருக்குமாப்
போல், **கர்த்தர்** இதுமுதல் என்றென்றைக்
கும் தம்முடைய ஜனத்தைச் சுற்றிலும் இருக்
கிறார். நீதிமான்கள் அநியாயத்திற்குத் தங் 3
கள் கைகளை நீட்டாதபடிக்கு, [19]ஆகாமியத்தின்
கொடுங்கோல் நீதிமான்களுடைய சுதந்தரத்
தின்மேல் நிலைத்திராது.

**கர்த்தாவே**, நல்லவர்களுக்கும் இருதயத் 4
தில் செம்மையானவர்களுக்கும் நன்மைசெய்
யும். தங்கள் கோணலான வழிகளுக்குச் 5
சாய்கிறவர்களைக் **கர்த்தர்** அக்கிரமக்காரரோ
டே போகப்பண்ணுவார். இஸ்ரவேலுக்கோ
[20]சமாதானம் உண்டு.

## 126

(ஆரோகண சங்கீதம்.)

சீயோனின் சிறையிருப்பைக் **கர்த்தர்** திரு
ப்பும்போது, [21]சொப்பனம் காண்கிறவர்கள்
போல் இருந்தோம். அப்பொழுது நம்மு 2
டைய வாய் நகைப்பினாலும், [22]நம்முடைய நாவு
ஆனந்த சத்தத்தினாலும் நிறைந்திருந்தது; அப்
பொழுது: **கர்த்தர்** இவர்களுக்குப் பெரிய
காரியங்களைச் செய்தார் என்று புறஜாதிக
ளுக்குள்ளே சொல்லிக்கொண்டார்கள். **கர்த்** 3
**தர்** நமக்குப் பெரிய காரியங்களைச் செய்தார்;
இதினிமித்தம் நாம் மகிழ்ந்திருக்கிறோம்.

**கர்த்தாவே**, தெற்கத்தி வெள்ளங்களைத் 4
திருப்புவதுபோல, எங்கள் சிறையிருப்பைத்
திருப்பும். கண்ணீரோடே விதைக்கிறவர்கள் 5
[23]கெம்பீரத்தோடே அறுப்பார்கள். அள்ளித் 6
தூவும் விதையைச் சுமக்கிறவன் அழுதுகொ
ண்டு போகிறான்; [24]ஆனாலும் தான் அறுத்த
அரிகளைச் சுமந்துகொண்டு கெம்பீரத்தோடே
திரும்பி வருவான்.

## 127

(சாலொமோன் பாடின ஆரோகண சங்கீதம்.)

**கர்த்தர்** வீட்டைக் கட்டாராகில், [25]அதைக்
கட்டுகிறவர்களின் பிரயாசம் விருதா; **கர்த்** 2
**தர்** நகரத்தைக் காவாராகில் காவலாளர் விழித்

[1] எரே. 3. 23
[2] ஓசி. 13. 9
[3] 1 சாமு. 2. 9. நீதி. 3. 25, 26. ஏசா. 27. 3
[4] ஏசா. 25. 4
[5] ஏசா. 49. 10. வெளி. 7. 16
[6] 2 தீமோ. 4. 18
[7] உபா. 28. 6. நீதி. 2. 8
[8] ஏசா. 2. 2, 3. எரே. 30. 5. சகரி. 8. 21
[9] 2 சாமு. 5. 9
[10] யாத். 23. 17. உபா. 16. 16
[11] உபா. 17. 8
[12] 51. 18
[13] நெகே. 2. 10
[14] 121. 1
[15] யாத். 15. 1. ழ
[16] நீதி. 1. 12
[17] நீதி. 6. 5
[18] 121. 2
[19] நீதி. 22. 8. ஏசா. 14. 5, 6
[20] கலா. 6. 16
[21] 53. 6. 85. 1. ஓசி. 6. 11
[22] பேது 8. 21
[23] எரே. 31. 9-14.
[24] 30. 5.
[25] 1 கொ. 3. 6, 7

3 திருக்கிறது விருதா. நீங்கள் அதிகாலையில்
எழுந்து, நேரப்பட வேலையிலே தரித்து,
வருத்தத்தின் [1]அப்பத்தைச் சாப்பிடுகிறதும்
விருதா; அவரே தமக்குப் பிரியமானவனுக்கு
நித்திரை அளிக்கிறார்.
4 இதோ, பிள்ளைகள் **கர்த்தரால்** வரும் சுதந்
தரம், [2]கர்ப்பத்தின் கனி அவரால் கிடைக்கும்
5 பலன். வாலவயதின் குமாரர் பலவான் கையி
லுள்ள அம்புகளுக்கு ஒப்பாயிருக்கிறார்கள்.
6 அவைகளால் தன் அம்பறாத்தூணியை நிரப்
பின புருஷன் பாக்கியவான்; அவர்கள் நாண
மடையாமல் [3]ஒலிமுகவாசலில் சத்துருக்க
ளோடே பேசுவார்கள்.

## 128

(ஆரோகண சங்கீதம்.)

**கர்த்தருக்குப்** பயந்து, அவர் வழிகளில்
நடக்கிறவன் எவனோ, [4]அவன் பாக்கியவான்.
2 உன் கைகளின் பிரயாசத்தை நீ சாப்பிடுவாய்;
[5]உனக்குப் பாக்கியமும் நன்மையும் உண்டா
3 யிருக்கும். உன் மனைவி உன் வீட்டோரங்
களில் கனிதரும் [6]திராட்சக் கொடியைப்
போல் இருப்பாள்; உன் பிள்ளைகள் உன் பந்
தியைச் சுற்றிலும் [7]ஒலிவமரக் கன்றுகளைப்
4 போல் இருப்பார்கள். இதோ, **கர்த்தருக்குப்**
பயப்படுகிற மனுஷன் இவ்விதமாய் ஆசீர்வ
5 திக்கப்படுவான். **கர்த்தர்** சீயோனிலிருந்து
உன்னை ஆசீர்வதிப்பார்; [8]நீ ஜீவனுள்ள
நாளெல்லாம் எருசலேமின் வாழ்வைக் காண்
6 பாய். நீ உன் பிள்ளைகளின் [9]பிள்ளைகளை
யும், இஸ்ரவேலுக்கு உண்டாகும் [10]சமாதா
னத்தையும் காண்பாய்.

## 129

(ஆரோகண சங்கீதம்.)

என் சிறுவயது தொடங்கி [11]அநேகந்தரம்
2 என்னை நெருக்கினார்கள்; என் சிறுவயது
தொடங்கி அநேகந்தரம் என்னை நெருக்கியும்,
3 [12]என்னை மேற்கொள்ளாமற்போனார்கள். உழு
கிறவர்கள் என் முதுகின்மேல் உழுது, [13]தங்
4 கள் படைச்சால்களை நீளமாக்கினார்கள். **கர்த்**
**தரோ** நீதியுள்ளவர்; துன்மார்க்கருடைய கயி
றுகளை அவர் அறுத்தார் என்று, இஸ்ரவேல்
இப்பொழுது சொல்வதாக.
5 சீயோனைப் பகைக்கிற அனைவரும் வெட்
6 கிப் [14]பின்னிட்டுத் திரும்பக்கடவர்கள். வீட்
டின்மேல் முளைக்கும் புல்லுக்கு அவர்கள்
ஒப்பாவார்களாக; [15]அது வளருமுன் உலர்
7 ந்துபோம். அறுக்கிறவன் அதினால் தன் கை
யையும், அரிகளைக் கட்டுகிறவன் தன் மடி
8 யையும் நிரப்புவதில்லை. **கர்த்தருடைய** ஆசீர்
வாதம் உங்களுக்கு உண்டாவதாக; [16]**கர்த்**
**தரின்** நாமத்தினால் உங்களை ஆசீர்வதிக்
கிறோம் என்று வழிப்போக்கர் சொல்வது
மில்லை.

## 130

(ஆரோகண சங்கீதம்.)

**கர்த்தாவே,** ஆழங்களிலிருந்து [17]உம்மை
2 நோக்கிக் கூப்பிடுகிறேன். ஆண்டவரே, என்
சத்தத்தைக் கேளும்; என் விண்ணப்பங்களின்
சத்தத்திற்கு [18]உமது செவிகள் கவனித்திருப்
பதாக.

1 ஆதி. 3. 17, 19
2 ஆதி. 33. 5. 1 சாமு. 2. 5
3 யோபு 5. 4
4 112. 1
5 ஏசா. 3. 10
6 எசே. 19. 10
7 144. 12
8 134. 3
9 ஆதி. 50. 23. யோபு 42. 16
10 125. 5
11 யாத். 1. 13, 14. புல. 1. 3
12 யோ. 16. 33
13 ஏசா. 50. 6
14 1 கொ. 16. 22
15 மத். 13. 6, 21
16 ரூத். 2. 4
17 புல. 3. 55. யோனா 2. 2
18 2 நாளா. 6. 40
19 143. 2. ரோ. 3. 20–24
20 எரே. 33. 8, 9. 2 தீமோ. 2. 19
21 யாத். 34. 7. தானி. 9. 9. ரோ. 2. 4; 8. 1. 1 யோ. 2. 1, 2
22 ஏசா. 8. 17; 26. 8
23 71. 5. ரோ. 8. 24. எபி. 10. 35
24 மத். 1. 21
25 ரோ. 12. 16
26 மத். 18. 3. 1 கொ. 14. 20
27 அப். 7. 46
* கர்த்தர்பேரில்.
28 65. 1. 2 சாமு. 7. 1–ழ
29 1 சாமு. 17. 12
30 112. 1
31 99. 5
32 78. 61
33 ஏசா. 61. 10. 65. 14

**கர்த்தாவே,** நீர் அக்கிரமங்களைக் கவனித் 3
திருப்பீரானால், [19]யார் நிலைநிற்பான், ஆண்ட
வரே. உமக்குப் [20]பயப்படும்படிக்கு உம்மி 4
டத்தில் [21]மன்னிப்பு உண்டு.
**கர்த்தருக்குக்** காத்திருக்கிறேன்; என் ஆத் 5
துமா காத்திருக்கிறது; அவருடைய வார்த்
தையை நம்பியிருக்கிறேன். எப்பொழுது விடி 6
யும் என்று விடியற்காலத்திற்குக் காத்திருக்
கிற சாமக்காரரைப்பார்க்கிலும் அதிகமாய் என்
ஆத்துமா ஆண்டவருக்குக் [22]காத்திருக்கிறது.
இஸ்ரவேல் **கர்த்தரை** நம்பியிருப்பதாக; 7
[23]**கர்த்தரிடத்தில்** கிருபையும், அவரிடத்தில்
திரளான மீட்பும் உண்டு. அவர் இஸ்ரவேலை 8
[24]அதின் சகல அக்கிரமங்களினின்றும் மீட்டுக்
கொள்வார்.

## 131

(தாவீது பாடின ஆரோகண சங்கீதம்.)

**கர்த்தாவே,** என் இருதயம் இறுமாப்புள்
ளதல்ல, [25]என் கண்கள் மேட்டிமையுள்ளவை
களுமல்ல; பெரிய காரியங்களிலும், எனக்கு
மிஞ்சின கருமங்களிலும் நான் தலையிடுகிறது
மில்லை. தாயின் பால்மறந்த குழந்தையைப் 2
போல நான் என் ஆத்துமாவை அடக்கி அம
ரப்பண்ணினேன்; [26]என் ஆத்துமா பால்மறந்த
குழந்தையைப்போல் இருக்கிறது. இதுமுதல் 3
என்றென்றைக்கும் இஸ்ரவேல் **கர்த்தரை**
நம்பியிருப்பதாக.

## 132

(ஆரோகண சங்கீதம்.)

**கர்த்தாவே,** தாவீதையும் அவனுடைய சகல
உபத்திரவத்தையும் நினைத்தருளும். அவன்: 2
நான் **கர்த்தருக்கு** ஒரு இடத்தையும், [27]யாக்
கோபின் வல்லவருக்கு ஒரு வாசஸ்தலத்தை
யும் காணுமட்டும், என் வீடாகிய கூடாரத் 3
தில் பிரவேசிப்பதுமில்லை, என் படுக்கையா
கிய கட்டிலின்மேல் ஏறுவதுமில்லை; என் 4
கண்களுக்கு நித்திரையையும், என் இமைக
ளுக்கு உறக்கத்தையும் வரவிடுவதுமில்லை
என்று, ****கர்த்தருக்கு** ஆணையிட்டு, [28]யாக்கோ 5
பின் வல்லவருக்குப் பொருத்தனை பண்ணி
னான்.
இதோ, நாம் எப்பிராத்தாவிலே அதின் 6
செய்தியைக் கேட்டு, [29]வனத்தின் வெளிக
ளில் அதைக் கண்டோம். அவருடைய [30]வாச 7
ஸ்தலங்களுக்குள் பிரவேசித்து, [31]அவர் பாத
படியில் பணிவோம். **கர்த்தாவே,** உமது 8
வல்லமை விளங்கும் பெட்டியுடன் [32]நீர் உமது
தாபர ஸ்தலத்திற்குள் எழுந்தருளும். உம்மு 9
டைய ஆசாரியர்கள் நீதியைத் தரித்து, [33]உம்
முடைய பரிசுத்தவான்கள் கெம்பீரிப்பார்க
ளாக. நீர் அபிஷேகம் பண்ணுவித்தவனின் 10
முகத்தை உமது தாசனாகிய தாவீதினிமித்தம்
புறக்கணியாதிரும்.
உன் கர்ப்பத்தின் கனியை உன் சிங்காச 11
னத்தின்மேல் வைப்பேன் என்றும், உன் 12
குமாரர் என் உடன்படிக்கையையும், நான்
போதிக்கும் என் சாட்சிகளையும் காத்து நடந்
தால், அவர்கள் குமாரரும் என்றென்றைக்
கும் உன் சிங்காசனத்தில் வீற்றிருப்பார்கள்

என்றும், கர்த்தர் தாவீதுக்கு உண்மையாய்
13 [1]ஆணையிட்டார்; அவர் தவறமாட்டார். கர்த்
தர் சீயோனைத் தெரிந்துகொண்டு, அது தம
க்கு வாசஸ்தலமாகும்படி விரும்பினார்.
14 இது என்றென்றைக்கும் நான் தங்கும்
இடம்; [2]இதை நான் விரும்பினபடியால்,
15 இங்கே வாசம்பண்ணுவேன். அதின் ஆகா
ரத்தை நான் ஆசீர்வதித்து வருவேன்; [3]அதின்
ஏழைகளை நான் அப்பத்தினால் திருப்தியாக்கு
16 வேன். அதின் ஆசாரியர்களுக்கு ரட்சிப்பை
[4]உடுத்துவேன்; அதிலுள்ள பரிசுத்தவான்
17 கள் மிகவும் கெம்பீரிப்பார்கள். அங்கே தாவீ
துக்காக ஒரு கொம்பை முளைக்கப்பண்ணு
வேன்; [5]நான் அபிஷேகம்பண்ணுவித்தவனு
க்காக ஒரு விளக்கை ஆயத்தம்பண்ணினேன்.
18 அவன் சத்துருக்களுக்கு வெட்கத்தை உடுத்து
வேன்; அவன் மீதிலோ அவன் கிரீடம் பூக்
கும் என்றார்.

## 133

(தாவீது பாடின ஆரோகண சங்கீதம்.)

இதோ, சகோதரர் ஒருமித்து வாசம்பண்
ணுகிறது [6]எத்தனை நன்மையும் எத்தனை இன்
2 பமுமானது? அது ஆரோனுடைய சிரசின்
மேல் ஊற்றப்பட்டு, [7]அவனுடைய தாடியிலே
வடிகிறதும், அவனுடைய அங்கிகளின்மேல்
3 இறங்குகிறதுமான நல்ல தைலத்துக்கும், எர்
மோன்மேலும், [8]சீயோன் பர்வதங்கள்மேலும்
இறங்கும் பனிக்கும் ஒப்பாயிருக்கிறது; அங்
கே கர்த்தர் என்றென்றைக்கும் [9]ஆசீர்வாதத்
தையும் ஜீவனையும் கட்டளையிடுகிறார்.

## 134

(ஆரோகண சங்கீதம்.)

இதோ, இராக்காலங்களில் கர்த்தருடைய
ஆலயத்தில்நிற்கும்கர்த்தரின் ஊழியக்காரரே,
[10]நீங்களெல்லாரும் கர்த்தரை ஸ்தோத்திரியுங்
2 கள். உங்கள் கைகளைப் பரிசுத்த ஸ்தலத்திற்கு
நேராகஎடுத்து, [11]கர்த்தரைஸ்தோத்திரியுங்கள்.
3 வானத்தையும் பூமியையும் உண்டாக்கின
கர்த்தர் சீயோனிலிருந்து உன்னை ஆசீர்வதிப்
பாராக.

## 135

அல்லேலூயா, கர்த்தருடைய நாமத்தைத்
துதியுங்கள், [12]கர்த்தரின் ஊழியக்காரரே,
2 துதியுங்கள். கர்த்தருடைய வீட்டிலும், [13]நமது
தேவனுடைய ஆலயப் பிராகாரங்களிலும் நிற்
3 கிறவர்களே, கர்த்தரைத் துதியுங்கள். கர்த்
தர் நல்லவர்; அவருடைய நாமத்தைக் கீர்த்த
னம்பண்ணுங்கள்; [14]அது இன்பமானது.
4 கர்த்தர் யாக்கோபைத் தமக்காகவும், [15]இஸ்
ரவேலைத் தமக்குச் சொந்தமாகவும் தெரிந்து
5 கொண்டார். கர்த்தர் பெரியவர் என்றும்,
நம்முடைய ஆண்டவர் எல்லா தேவர்களுக்கும்
6 மேலானவர் என்றும் நான் அறிவேன். வான
த்திலும் பூமியிலும், சமுத்திரங்களிலும், எல்
லா ஆழங்களிலும், [16]கர்த்தர் தமக்குச் சித்தமா
7 னதையெல்லாம் செய்கிறார். அவர் பூமியின்
கடையாந்தரங்களிலிருந்து மேகங்களை எழும்
பப்பண்ணி, [17]மழையுடன் மின்னலையும்
உண்டாக்கி, காற்றைத் தமது பண்டசாலைக
ளிலிருந்து புறப்படப்பண்ணுகிறார்.

1 1 இரா. 8. 25. அப். 2. 30
2 68. 17
3 லூ. 1. 53
4 2 நாளா. 6. 41. ஓசி. 11. 12
5 2 நாளா. 21. 7
6 ஆதி. 13. 8. எபி. 13. 1. 1பே. i. 10
7 யாத். 30. 25, 30
8 உபா. 4. 48
9 உபா. 28. 8
10 1 நாளா. 9. 33
11 1 தீமோ. 2. 8
12 145. 1. வெளி. 9. 5
13 92. 13
14 147. 1
15 யாத். 19. 5. உபா. 7. 6, 7. 1 பே. 2. 9
16 தானி. 4. 35
17 எரே. 10. 13: 14. 22. சகரி. 10. 1
18 யாத். 12. 12, 29
19 யாத். 7. அதி. மு
20 எண். 21. 24–35
21 யோசு. 12. 7
22 யாத். 3. 15
23 உபா. 32. 36
24 ஏசா. 44. 12. மு
25 1 நாளா. 16. 34
26 உபா. 10. 17
27 72. 18
28 நீதி. 3. 19
29 ஆதி. 1. 9. மு. எரே. 10. 12
30 ஆதி. 1. 14. மு
31 யாத். 12. 29. மு

அவர் எகிப்திலே மனுஷருடைய தலைப் 8
பிள்ளைகளையும் [18]மிருகத்தின் தலையீற்றுகளை
யும் அடித்தார். எகிப்து தேசமே, உன் நடு 9
வில் பார்வோன்மேலும் அவனுடைய எல்லா
ஊழியக்காரர்மேலும் அடையாளங்களையும்
[19]அற்புதங்களையும் அனுப்பினார். அவர் அநே 10
கம் ஜாதிகளை அடித்து, [20]பலத்த ராஜாக்களைக்
கொன்று; எமோரியரின் ராஜாவாகிய சீகோ 11
னையும், பாசானின் ராஜாவாகிய ஓகையும்,
கானானின் சகல ராஜ்யங்களையும் அழித்து,
அவர்கள் தேசத்தைத் [21]தம்முடைய ஜனமாகிய 12
இஸ்ரவேலுக்குச் சுதந்தரமாகக் கொடுத்தார்.
கர்த்தாவே, உம்முடைய நாமம் என்றைக் 13
குமுள்ளது; [22]கர்த்தாவே, உம்முடைய பிரஸ்
தாபம் தலைமுறை தலைமுறைக்கும் இருக்கும்.
கர்த்தர் தம்முடைய ஜனத்தின் நியாயத்தை 14
விசாரித்து, [23]தம்முடைய ஊழியக்காரர்மேல்
பரிதாபப்படுவார்.
அஞ்ஞானிகளுடைய விக்கிரகங்கள் வெள் 15
ளியும் பொன்னும், [24]மனுஷருடைய கைவே
லையுமாயிருக்கிறது. அவைகளுக்கு வாயிருந் 16
தும் பேசாது, அவைகளுக்குக் கண்களிருந்
தும் காணாது. அவைகளுக்குக் காதுகளிருந் 17
தும் கேளாது, அவைகளுடைய வாயிலே சுவா
சமுமில்லை. அவைகளைப் பண்ணுகிறவர்க 18
ளும், அவைகளை நம்புகிறவர்கள் யாவரும்,
அவைகளைப்போல் இருக்கிறார்கள்.
இஸ்ரவேல் குடும்பத்தாரே, கர்த்தரை 19
ஸ்தோத்திரியுங்கள்; ஆரோன் குடும்பத்தாரே,
கர்த்தரை ஸ்தோத்திரியுங்கள். லேவி குடும் 20
பத்தாரே, கர்த்தரை ஸ்தோத்திரியுங்கள்; கர்த்
தருக்குப் பயந்தவர்களே, கர்த்தரை ஸ்தோத்
திரியுங்கள். எருசலேமில் வாசம்பண்ணுகிற 21
கர்த்தருக்கு சீயோனிலிருந்து ஸ்தோத்திர
முண்டாவதாக. அல்லேலூயா.

## 136

கர்த்தரைத் துதியுங்கள்; அவர் நல்லவர்;
[25]அவர் கிருபை என்றுமுள்ளது. தேவாதி 2
தேவனைத் [26]துதியுங்கள்; அவர் கிருபை என்று
முள்ளது. கர்த்தாதி கர்த்தரைத் துதியுங்கள்; 3
அவர் கிருபை என்றுமுள்ளது.
ஒருவராய்ப் பெரிய [27]அதிசயங்களைச் செய் 4
கிறவரைத் துதியுங்கள்; அவர் கிருபை என்
றுமுள்ளது. வானங்களை [28]ஞானமாய் உண் 5
டாக்கினவரைத் துதியுங்கள்; அவர் கிருபை
என்றுமுள்ளது: தண்ணீர்களுக்கு [29]மேலே 6
பூமியைப் பரப்பினவரைத் துதியுங்கள்; அவர்
கிருபை என்றுமுள்ளது. பெரிய சுடர்களை 7
[30]உண்டாக்கினவரைத் துதியுங்கள்; அவர் கிரு
பை என்றுமுள்ளது; பகலில் ஆளச் சூரிய 8
னைப் படைத்தவரைத் துதியுங்கள்; அவர் கிரு
பை என்றுமுள்ளது: இரவில் ஆளச் சந்திர 9
னையும் நட்சத்திரங்களையும் படைத்தவரைத்
துதியுங்கள்; அவர் கிருபை என்றுமுள்ளது.
எகிப்தியருடைய [31]தலைச்சன்களைச் சங்க 10
ரித்தவரைத் துதியுங்கள்; அவர் கிருபை என்
றுமுள்ளது. அவர்கள் நடுவிலிருந்து இஸ்ர 11
வேலைப் புறப்படப்பண்ணினவரைத் துதியுங்

12 கள்; அவர் கிருபை என்றுமுள்ளது. பலத்த
கையினாலும் ஓங்கிய புயத்தினாலும் அதைச்
செய்தவரைத் துதியுங்கள்; அவர் கிருபை என்
13 றுமுள்ளது. சிவந்த சமுத்திரத்தை [1]இரண்
டாகப் பிரித்தவரைத் துதியுங்கள்; அவர் கிரு
14 பை என்றுமுள்ளது. அதின் நடுவே இஸ்ர
வேலைக் கடந்துபோகப் பண்ணினவரைத்
துதியுங்கள்; அவர் கிருபை என்றுமுள்ளது.
15 பார்வோனையும் அவன் சேனைகளையும் [2]சிவந்த
சமுத்திரத்தில் கவிழ்த்துப் போட்டவரைத்
துதியுங்கள்; அவர் கிருபை என்றுமுள்ளது.
16 தம்முடைய ஜனங்களை [3]வனாந்தரத்தில் நடத்
தினவரைத் துதியுங்கள்; அவர் கிருபை என்று
17 முள்ளது. பெரிய ராஜாக்களைச் சங்கரித்தவ
ரைத் துதியுங்கள்; அவர் கிருபை என்றுமுள்
18 ளது. பிரபலமான ராஜாக்களை [4]அழித்தவ
ரைத் துதியுங்கள்; அவர் கிருபை என்றுமுள்
19 ளது. எமோரியரின் ராஜாவாகிய சீகோனை
[5]அழித்தவரைத் துதியுங்கள்; அவர் கிருபை
20 என்றுமுள்ளது. பாசானின் ராஜாவாகிய
[6]ஓகை அழித்தவரைத் துதியுங்கள்; அவர் கிரு
21 பை என்றுமுள்ளது. அவர்கள் தேசத்தைச்
[7]சுதந்தரமாகத் தந்தவரைத் துதியுங்கள்; அவர்
22 கிருபை என்றுமுள்ளது. அதைத் தம்முடைய
தாசனாகிய இஸ்ரவேலுக்குச் சுதந்தரமாகவே
தந்தவரைத் துதியுங்கள்; அவர் கிருபை என்று
முள்ளது.
23 நம்முடைய தாழ்வில் [8]நம்மை நினைத்தவ
ரைத் துதியுங்கள்; அவர் கிருபை என்றுமுள்
24 ளது. நம்முடைய சத்துருக்களின் கையிலி
ருந்து நம்மை விடுதலைபண்ணினவரைத் துதி
யுங்கள்; அவர் கிருபை என்றுமுள்ளது.
25 மாம்ச தேகமுள்ள யாவுக்கும் [9]ஆகாரம் கொ
டுக்கிறவரைத் துதியுங்கள்; அவர் கிருபை
26 என்றுமுள்ளது. பரலோகத்தின் தேவனைத்
துதியுங்கள்; அவர் கிருபை என்றுமுள்ளது.

**137** பாபிலோன் ஆறுகள் அருகே நாங்கள்
உட்கார்ந்து, அங்கே சீயோனை நினைத்து
2 அழுதோம். அதின் நடுவிலிருக்கும் அலரிச்
செடிகளின்மேல் எங்கள் கின்னரங்களைத்
3 தூக்கிவைத்தோம். எங்களைச் சிறைபிடித்த
வர்கள் அங்கே எங்கள் பாடல்களையும், எங்
களைப் பாழாக்கினவர்கள் [10]மங்களகீதத்தையும்
விரும்பி: சீயோனின் பாட்டுகளில் சிலதை
எங்களுக்குப் பாடுங்கள் என்று சொன்னார்கள்.
4 **கர்த்தரின்** பாட்டை அந்நிய தேசத்தில்
5 நாங்கள் பாடுவதெப்படி? எருசலேமே, நான்
உன்னை மறந்தால் [11]என் வலதுகை தன்
6 தொழிலை மறப்பதாக. நான் உன்னை நினை
யாமலும், எருசலேமை என் முக்கியமான
மகிழ்ச்சியிலும் அதிகமாக எண்ணாமலும்போ
னால், என் நாவு என் மேல்வாயோடு ஒட்டிக்
கொள்வதாக.
7 **கர்த்தாவே**, எருசலேமின் நாளில் ஏதோ
மின் புத்திரரை நினையும்; அவர்கள்: அதை
இடித்துப் போடுங்கள், [12]அஸ்திபாரமட்டும்
இடித்துப்போடுங்கள் என்று சொன்னார்களே.

பாபிலோன் குமாரத்தியே, [13]பாழாய்ப் போகி 8
றவளே, நீ எங்களுக்குச் செய்தபடி உனக்
குப் பதில் செய்கிறவன் பாக்கியவான். உன் 9
குழந்தைகளைப் பிடித்து, கல்லின்மேல் மோதி
யடிக்கிறவன் பாக்கியவான்.

**138** (தாவீதின் சங்கீதம்.)

உம்மை என் முழு இருதயத்தோடும் துதிப்
பேன்; தேவர்களுக்கு முன்பாக உம்மைக்
கீர்த்தனம் பண்ணுவேன். உமது பரிசுத்த 2
ஆலயத்திற்கு நேராக நான் பணிந்து, உமது
கிருபையினிமித்தமும் உமது உண்மையினி
மித்தமும் உமது நாமத்தைத் துதிப்பேன்; உம
து சகல பிரஸ்தாபத்தைப்பார்க்கிலும் [14]உமது
வார்த்தையை நீர் மகிமைப்படுத்தியிருக்கிறீர்.
நான் கூப்பிட்ட நாளிலே எனக்கு மறு உத்த 3
ரவு அருளினீர்; என் ஆத்துமாவிலே பெலன்
தந்து என்னைத் தைரியப்படுத்தினீர்.
**கர்த்தாவே**, பூமியின் ராஜாக்களெல்லா 4
ரும் உமது வாயின் வார்த்தைகளைக் கேட்கும்
போது உம்மைத் துதிப்பார்கள். **கர்த்தரின்** 5
மகிமை பெரிதாயிருப்பதினால், அவர்கள் **கர்த்**
**தரின்** வழிகளைப் பாடுவார்கள்.
**கர்த்தர்** உயர்ந்தவராயிருந்தும், [15]தாழ்மை 6
யுள்ளவனை நோக்கிப் பார்க்கிறார்; மேட்டிமை
யானவனையோ தூரத்திலிருந்து அறிகிறார்.
நான் துன்பத்தின் நடுவில் நடந்தாலும் [16]நீர் 7
என்னை உயிர்ப்பிப்பீர்; என் சத்துருக்களின்
கோபத்திற்கு விரோதமாக உமது கையை நீட்
டுவீர்; உமது வலதுகரம் என்னை ரட்சிக்கும்.
**கர்த்தர்** எனக்காக யாவையும் செய்து [17]முடிப் 8
பார்; **கர்த்தாவே**, உமது கிருபை என்று
முள்ளது; உமது கரத்தின் கிரியைகளை நெகிழ
விடாதிருப்பீராக.

**139** (இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

**கர்த்தாவே**, நீர் என்னை ஆராய்ந்து, [18]அறிந்
திருக்கிறீர். என் உட்காருதலையும் என் எழுந் 2
திருக்குதலையும் நீர் அறிந்திருக்கிறீர்; [19]என்
நினைவுகளைத் தூரத்திலிருந்து அறிகிறீர். நான் 3
நடந்தாலும் படுத்திருந்தாலும் என்னைச் சூழ்ந்
திருக்கிறீர், [20]என் வழிகளெல்லாம் உமக்குத்
தெரியும். என் நாவில் சொல் பிறவாததற்கு 4
முன்னே, இதோ, **கர்த்தாவே**, [21]அதையெல்
லாம் நீர் அறிந்திருக்கிறீர். முற்புறத்திலும் பிற் 5
புறத்திலும் நீர் என்னை நெருக்கி, உமது கரத்
தை என்மேல் வைக்கிறீர். இந்த அறிவு என 6
க்கு மிகுந்த ஆச்சரியமும், [22]எனக்கு எட்டாத
உயரமுமாயிருக்கிறது.
உம்முடைய ஆவிக்கு மறைவாக எங்கே 7
போவேன்? [23]உம்முடைய சமுகத்தைவிட்டு
எங்கே ஓடுவேன்? நான் வானத்திற்கு ஏறி 8
னாலும், [24]நீர் அங்கே இருக்கிறீர்; நான் பாதா
ளத்தில் படுக்கை போட்டாலும், [25]நீர் அங்கே
யும் இருக்கிறீர். நான் விடியற்காலத்துச் செட் 9
டைகளை எடுத்து, சமுத்திரத்தின் கடையாந்
தரங்களிலே போய்த் தங்கினாலும், அங்கே 10
யும் உமது கை என்னை நடத்தும், உமது வல

1 யாத். 14. 21, 22
2 யாத். 14. 27
3 யாத். 13. 18. உபா. 8. 15
4 உபா. 29. 7
5 எண். 21. 21
6 எண். 21. 33
7 யோசு. 12. 1. ழ
8 உபா. 32. 36. ஓச. 1. 48
9 145. 15
10 79. 1
11 தானி. 6. 10, 11
12 எரே. 49. 7. புல. 4. 22
13 ஏசா. 13. 1. ழ. வெளி. 18. 6
14 ஏசா. 42. 21
15 ஏசா. 57. 15; 66. 1, 2. 1 பே. 5. 5
16 மீகா. 7. 8, 9
17 பிலி. 1. 6. 1 தெச. 5. 24
18 எரே. 17. 10. வெளி. 2. 23
19 2 இரா. 19. 27. மத். 9. 4. யோ. 2. 24, 25
20 யோபு 31. 4
21 எபி. 4. 13
22 யோபு 42. 3. ரோ. 11. 33
23 எரே. 23. 24. யோனா 1. 3
24 ஆமோ. 9. 2, 4
25 யோபு 26. 6. நீதி. 15. 11

11 துகாம் என்னைப் பிடிக்கும். இருள் என்னை
மூடிக்கொள்ளுமென்றாலும், இரவும் என்னைச்
12 சுற்றி வெளிச்சமாயிருக்கும். உமக்கு மறை
வாக இருளும் அந்தகாரப்படுத்தாது, [1]இரவும்
பகலைப்போல வெளிச்சமாயிருக்கும்; உமக்கு
இருளும் வெளிச்சமும் சரி.
13 நீர் என் உள்ளிந்திரியங்களைக் கைக்கொண்
டிருக்கிறீர்; என் தாயின் கர்ப்பத்தில் என்
14 னைக் காப்பாற்றினீர். நான் பிரமிக்கத்தக்க
அதிசயமாய் உண்டாக்கப்பட்டபடியால், உம்
மைத் துதிப்பேன்; உமது கிரியைகள் அதிசய
மானவைகள், அது என் ஆத்துமாவுக்கு நன்
15 றாய்த் தெரியும். நான் ஒளிப்பிடத்திலே உண்
டாக்கப்பட்டு, பூமியின் தாழ்விடங்களிலே
விசித்திர விநோதமாய் உருவாக்கப்பட்டபோ
து, [2]என் *எலும்புகள் உமக்கு மறைவாயிருக்
16 கவில்லை. என் கருவை உம்முடைய கண்
கள் கண்டது; என் அவயவங்களில் ஒன்றாகி
லும் இல்லாதபோதே அவைகள் அனைத்தும்,
அவைகள் உருவேற்படும் நாட்களும், உமது
17 புஸ்தகத்தில் எழுதியிருந்தது. தேவனே,
உமது ஆலோசனைகள் எனக்கு எத்தனை அரு
மையானவைகள்; [3]அவைகளின் தொகை எவ்
18 வளவு அதிகம். அவைகளை நான் எண்ணப்
போனால், மணலைப்பார்க்கிலும் அதிகமாம்;
நான் விழிக்கும்போது இன்னும் உம்மண்டை
யில் இருக்கிறேன்.
19 தேவனே, நீர் துன்மார்க்கனை [4]அழித்தீரா
னால் நலமாயிருக்கும்; இரத்தப்பிரியரே, நீங்
20 கள் என்னைவிட்டு அகன்றுபோங்கள். அவர்
கள் உம்மைக் குறித்துத் துன்மார்க்கமாய்ப்
பேசுகிறார்கள்; [5]உம்முடைய சத்துருக்கள்
உமது நாமத்தை வீணாய் வழங்குகிறார்கள்.
21 கர்த்தாவே, உம்மைப் பகைக்கிறவர்களை
நான் பகையாமலும், [6]உமக்கு விரோதமாய்
எழும்புகிறவர்களை அருவருக்காமலும் இருப்
22 பேனோ? முழுப்பகையாய் அவர்களைப் பகை
க்கிறேன்; அவர்களை எனக்குப் பகைஞராக
23 எண்ணுகிறேன். தேவனே, என்னை ஆராய்ந்
து, என் இருதயத்தை அறிந்துகொள்ளும்;
[7]என்னைச் சோதித்து, என் சிந்தனைகளை அறிந்
24 துகொள்ளும். வேதனை உண்டாக்கும் வழி
என்னிடத்தில் உண்டோ என்று பார்த்து,
நித்திய வழியிலே என்னை நடத்தும்.

## 140

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, பொல்லாத மனுஷனுக்கு
என்னைத் தப்புவியும்; கொடுமையுள்ளவனுக்கு
2 என்னை விலக்கி ரட்சியும். அவர்கள் தங்கள்
இருதயத்தில் பொல்லாப்புகளைச் சிந்தித்து,
யுத்தஞ்செய்ய நாள்தோறும் கூட்டங்கூடுகி
3 றார்கள். சர்ப்பத்தைப்போல் தங்கள் நாவைக்
கூர்மையாக்குகிறார்கள்; [8]அவர்கள் உதடுகளி
ன்கீழ் விரியன்பாம்பின் விஷம் இருக்கிறது.
4 (சேலா.) கர்த்தாவே, துன்மார்க்கனுடைய
கைகளுக்கு என்னை நீங்கலாக்கி, கொடியவ
னுக்கு என்னை விலக்கி ரட்சியும்; அவர்கள்
என் நடைகளைக் கவிழ்க்கப் பார்க்கிறார்கள்.
அகங்காரிகள் எனக்குக் கண்ணியையும் கயிறு 5
களையும் மறைவாய் வைக்கிறார்கள்; [9]வழியோ
ரத்திலே வலையை விரித்து, எனக்குச் சுருக்கு
களை வைக்கிறார்கள். (சேலா.)
நான் கர்த்தரை நோக்கி: நீர் என் தேவன் 6
என்றேன்; கர்த்தாவே, என் விண்ணப்பங்
களின் சத்தத்துக்குச் செவிகொடும். ஆண்ட 7
வராகிய கர்த்தாவே, என் ரட்சிப்பின் பெல
னே, யுத்தநாளில் என் தலையை மூடினீர்.
கர்த்தாவே, துன்மார்க்கனுடைய ஆசைகள் 8
சித்தியாதபடி செய்யும்; அவன் தன்னை
உயர்த்தாதபடி அவனுடைய யோசனையை
நடந்தேற வொட்டாதேயும். (சேலா.)
என்னை வளைந்துகொள்ளுகிறவர்களுடைய 9
உதடுகளின் தீவினைகள் [10]அவர்கள் தலைகளை
யே மூடுவதாக. நெருப்புத்தழல் அவர்கள் 10
மேல் விழுவதாக; [11]அக்கினியிலும், அவர்கள்
எழுந்திருக்கக்கூடாத படுகுழிகளிலும் தள்ளப்
படுவார்களாக. பொல்லாத நாவுள்ளவன் பூமி 11
யிலே நிலைப்பதில்லை; கொடுமையான மனு
ஷனைப் பறக்கடிக்கப் பொல்லாப்பு அவனை
வேட்டையாடும். சிறுமையானவனின் வழக் 12
கையும், [12]எளியவர்களின் நியாயத்தையும் கர்த்
தர் விசாரிப்பாரென்று அறிவேன். நீதிமான் 13
கள் உமது நாமத்தைத் துதிப்பார்கள்; செம்
மையானவர்கள் உமது சமுகத்தில் வாசம்பண்
ணுவார்கள்.

## 141

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, உம்மை நோக்கிக் கூப்பிடு
கிறேன், என்னிடத்திற்கு வரத் தீவிரியும்;
நான் உம்மை நோக்கிக் கூப்பிடுகையில், என்
சத்தத்திற்குச் செவிகொடும். என் விண்ணப் 2
பம் உமக்கு முன்பாகத் தூபமாகவும், [13]என்
கையெடுப்பு அந்திப்பலியாகவும் இருக்கக்
கடவது.
கர்த்தாவே, என் வாய்க்குக் காவல் வை 3
யும்; என் உதடுகளின் வாசலைக் காத்துக்கொள்
ளும். அக்கிரமஞ்செய்கிற மனுஷரோடே 4
ஆகாமியக் கிரியைகளை நடப்பிக்கும்படி என்
இருதயத்தைத் துன்மார்க்கத்திற்கு இணங்க
வொட்டாதேயும்; அவர்களுடைய ருசியுள்ள
பதார்த்தங்களில் ஒன்றையும் [14]நான் சாப்பிடா
மல் இருப்பேனாக.
நீதிமான் என்னைத் தயவாய்க் குட்டி, என் 5
னைக் கடிந்துகொள்ளட்டும்; [15]அது என் தலை
க்கு எண்ணெயைப்போலிருக்கும்; என் தலை
அதை அல்லத்தட்டுவதில்லை; அவர்கள் இக்
கட்டுகளில் நான் இன்னும் ஜெபம்பண்ணு
வேன். அவர்களுடைய நியாயாதிபதிகள் கன் 6
மலைச் சார்புகளிலிருந்து தள்ளுண்டுபோகிற
போது, என் வார்த்தைகள் [16]இன்பமானவைக
ளென்று கேட்பார்கள்.
பூமியின்மேல் ஒருவன் மரத்தை வெட்டிப் 7
பிளக்கிறதுபோல, எங்கள் எலும்புகள் பாதா
ளவாய்க்கு நேராய்ச் சிதறடிக்கப்பட்டிருக்
கிறது.

[1] தானி. 2. 22. எபி. 4. 13
[2] யோபு 10. 8, 9. பிர. 11. 5
* பரக்கை.
[3] 40. 5
[4] ஏசா. 11. 4
[5] யூதா. 15
[6] 2 நாளா. 19. 2
[7] யோபு 31. 6
[8] ரோ. 3. 13
[9] எரே. 18. 22
[10] நீதி. 12. 13
[11] 11. 6
[12] 1 இரா. 8. 45
[13] வெளி. 5. 8
[14] நீதி. 23. 6
[15] நீதி. 9. 8. கலா. 6. 1
[16] 2 சாமு. 23. 1

8 ஆனாலும் ஆண்டவராகிய கர்த்தாவே,
[1]என் கண்கள் உம்மை நோக்கியிருக்கிறது;
உம்மை நம்பியிருக்கிறேன்; என் ஆத்துமாவை
9 வெறுமையாக விடாதேயும். அவர்கள் என
க்கு வைத்த கண்ணியின் சிக்குகளுக்கும்,
[2]அக்கிரமக்காரரின் சுருக்குகளுக்கும் என்னை
10 விலக்கி ரட்சியும். துன்மார்க்கர் தங்கள் வலை
களில் அகப்படுவார்களாக; நானோ அதற்குத்
தப்பிக் கடந்துபோவேன்.

## 142

(தாவீது கெபியிலிருக்கும்போது பண்ணின விண்ணப்பமாகிய மஸ்கீல் என்னும் சங்கீதம்.)

**கர்த்தரை** நோக்கிச் சத்தமிட்டுக் கூப்பிடு
கிறேன்; **கர்த்தரை** நோக்கிச் சத்தமிட்டுக்
2 கெஞ்சுகிறேன். அவருக்கு முன்பாக என்
சஞ்சலத்தை ஊற்றுகிறேன்; [3]அவருக்கு முன்
பாக என் நெருக்கத்தை அறிக்கையிடுகிறேன்.
3 என் ஆவி என்னில் தியங்கும்போது, [4]நீர் என்
பாதையை அறிந்திருக்கிறீர்; நான் நடக்கிற
வழியில் மறைவாக எனக்குக் கண்ணிவைத்
4 தார்கள். வலதுபுறமாய்க் கண்ணோக்கிப்பா
ரும், [5]என்னை அறிவார் ஒருவரும் இல்லை;
எனக்கு அடைக்கலமில்லாமற்போயிற்று; என்
ஆத்துமாவை விசாரிப்பார் ஒருவரும் இல்லை.
5 **கர்த்தாவே**, உம்மை நோக்கிக் கூப்பிடுகி
றேன்; நீரே என் அடைக்கலமும், [6]ஜீவ
னுள்ளோர் தேசத்திலே என் பங்குமாயிருக்கி
6 றீர் என்றேன். என் கூக்குரலுக்குச் செவி
கொடும், நான் மிகவும் தாழ்த்தப்பட்டேன்;
என்னைப் பின் தொடருகிறவர்களுக்கு என்
னைத் தப்புவியும், [7]அவர்கள் என்னிலும் பல
7 வான்களாயிருக்கிறார்கள். உமது நாமத்தை
நான் துதிக்கும்படி, என் ஆத்துமாவைக் காவ
லுக்கு நீங்கலாக்கிவிடும்; [8]எனக்கு நீர் தயவு
செய்யும்போது [9]நீதிமான்கள் என்னைச் சூழ்ந்
துகொள்ளுவார்கள்.

## 143

(தாவீதின் சங்கீதம்.)

**கர்த்தாவே**, என் ஜெபத்தைக் கேளும்,
என் விண்ணப்பங்களுக்குச் செவிகொடும்;
உமது உண்மையின்படியும் [10]உமது நீதியின்
படியும் எனக்கு உத்தரவு அருளிச்செய்யும்.
2 ஜீவனுள்ள ஒருவனும் உமக்கு முன்பாக [11]நீதி
மான் அல்லாததினாலே, அடியேனை நியாயத்
3 தீர்க்கப் பிரவேசியாதேயும். சத்துரு என்
ஆத்துமாவைத் தொடர்ந்து, என் பிராண
னைத் தரையோடே நசுக்கி, வெகு காலத்துக்கு
முன் மரித்தவர்கள்போல என்னை இருளில்
4 இருக்கப்பண்ணுகிறான். என் ஆவி என்
னில் தியங்குகிறது; என் இருதயம் எனக்
5 குள் சோர்ந்துபோகிறது. பூர்வ நாட்களை
நினைக்கிறேன், [12]உமது செய்கைகளையெல்
லாம் தியானிக்கிறேன்; உமது கரத்தின் கிரி
6 யைகளை யோசிக்கிறேன். என் கைகளை
உமக்கு நேராக விரிக்கிறேன்; வறண்ட நிலத்
தைப்போல் என் ஆத்துமா உம்மேல் [13]தாகமா
யிருக்கிறது. (சேலா.)
7 **கர்த்தாவே**, சீக்கிரமாய் எனக்குச் செவி
கொடும், என் ஆவி தொய்ந்துபோகிறது; நான்
குழியில் இறங்குகிறவர்களுக்கு ஒப்பாகாதப
டிக்கு, உமது முகத்தை எனக்கு மறையாதே
யும். அதிகாலையில் [14]உமது கிருபையைக் 8
கேட்கப்பண்ணும், உம்மை நம்பியிருக்கி
றேன், நான் நடக்கவேண்டிய வழியை எனக்
குக் காண்பியும்; உம்மிடத்தில் என் ஆத்து
மாவை உயர்த்துகிறேன். கர்த்தாவே, என் 9
சத்துருக்களுக்கு என்னைத் தப்புவியும்; உம்
மைப் புகலிடமாகக் கொள்ளுகிறேன். உமக் 10
குப் பிரியமானதைச் செய்ய எனக்குப் [15]போ
தித்தருளும், நீரே என் தேவன்; உம்முடைய
நல்ல ஆவி [16]என்னைச் செம்மையான வழியி
லே [17]நடத்துவாராக. **கர்த்தாவே**, உம்முடைய 11
நாமத்தினிமித்தம் என்னை [18]உயிர்ப்பியும்; உம்
முடைய நீதியின்படி என் ஆத்துமாவை இடுக்
கத்திற்கு நீங்கலாக்கிவிடும். உம்முடைய கிரு 12
பையின்படி என் சத்துருக்களை அழித்து, என்
ஆத்துமாவை ஒடுக்குகிற யாவரையும் சங்கா
ரம்பண்ணும்; நான் உமது அடியேன்.

## 144

(தாவீதின் சங்கீதம்.)

என் கைகளைப் போருக்கும் என் விரல்
களை யுத்தத்திற்கும் படிப்பிக்கிற [19]என் கன்
மலையாகிய **கர்த்தருக்கு** ஸ்தோத்திரம். அவர் 2
என் தயாபரரும், [20]என் கோட்டையும், என்
உயர்ந்த அடைக்கலமும், என்னை விடுவிக்கிற
வரும், என் கேடகமும், நான் நம்பினவரும்,
என் ஜனங்களை எனக்குக் கீழ்ப்படுத்துகிறவ
ருமாயிருக்கிறார். **கர்த்தாவே**, மனுஷனை நீர் 3
கவனிக்கிறதற்கும், [21]மனுபுத்திரனை நீர் எண்
ணுகிறதற்கும் அவன் எம்மாத்திரம்? மனு 4
ஷன் [22]மாயைக்கு ஒப்பாயிருக்கிறான்; அவன்
நாட்கள் கடந்துபோகிற *நிழலுக்குச் சமானம்.
**கர்த்தாவே**, நீர் உமது வானங்களைத் தாழ் 5
த்தி இறங்கி, [23]பர்வதங்கள் புகையும்படி அவை
களைத் தொடும். மின்னல்களை வரவிட்டுச் 6
சத்துருக்களைச் சிதறடியும், உமது அம்புகளை
எய்து அவர்களைக் கலங்கடியும். உயரத்தி 7
லிருந்து உமது கரத்தை நீட்டி, ஜலப்பிரவா
கத்துக்கு என்னை விலக்கி ரட்சியும். மாயை 8
யைப் பேசும் வாயும், கள்ளத்தனமான வலது
கையும் உடைய அந்நிய புத்திரரின் கைக்கு
என்னை விலக்கித் தப்புவியும்.
**கர்த்தாவே**, நான் உமக்குப் புதுப்பாட் 9
டைப் பாடுவேன்; தம்புரினாலும் பத்துநரம்பு
வீணையினாலும் உம்மைக் கீர்த்தனம்பண்ணு
வேன். நீரே ராஜாக்களுக்கு ஜெயத்தைத் 10
தந்து, உமதடியானாகிய தாவீதைப் பொல்லாத
பட்டயத்திற்குத் தப்புவிக்கிறவர். மாயை 11
யைப் பேசும் வாயும், கள்ளத்தனமான வலது
கையும் உடைய அந்நிய புத்திரரின் கைக்கு
என்னை விலக்கித் தப்புவியும்.
அப்பொழுது எங்கள் குமாரர் இளமையில் 12
ஓங்கி வளருகிற [24]விருட்சக்கன்றுகளைப்போல
வும், எங்கள் குமாரத்திகள் சித்திரந்தீர்ந்த அர
மனை மூலைக்கற்களைப்போலவும் இருப்பார்
கள். எங்கள் களஞ்சியங்கள் சகலவித வஸ் 13
துக்களையும் கொடுக்கத்தக்கதாய் நிரம்பியிருக்

1 2 நாளா. 20. 12
2 நீதி. 13. 14
3 ஏசா. 26. 16
4 2 143. 4
5 69. 20
6 46. 1; 73. 26
7 ரோ. 8. 33, 37
8 ஏசா. 61. 1
9 13. 6; 119. 17
10 31. 1
11 யாத். 34. 7. யோபு 9. 2, 3; 14. 3. பிர. 7. 20. ரோ. 3. 20. கலா. 2. 16
12 77. 5, 11
13 63. 1
14 30. 5; 73. 24
15 மீகா. 4. 2, 1 யோ. 2. 27
16 நெகே. 9. 20
17 ஏசா. 26. 10
18 ஆப. 3. 2. எபே. 2. 1
19 ஏசா. 45. 24
20 2 சாமு. 22. 2, 3, 40, 47
21 8. 4. யோபு 7. 17. எபி. 2. 6
22 39. 5
* சவாசம்.
23 ஏசா. 64. 2
24 128. 3

கும்; எங்கள் கிராமங்களில் எங்கள் ஆடுகள்
14 ஆயிரம் பதினாயிரமாய்ப் பலுகும். எங்கள்
எருதுகள் பலத்தவைகளாயிருக்கும்; சத்துரு
உட்புகுதலும், குடியோடிப்போகுதலும் இரா
து; எங்கள் வீதிகளில் கூக்குரலும் உண்டா
காது.
15 இவ்விதமான சீரைப்பெற்ற ஜனம் பாக்கிய
முள்ளது; [1]**கர்த்தரை** தெய்வமாகக் கொண்
டிருக்கிற ஜனம் பாக்கியமுள்ளது.

## 145 (தாவீது பாடின ஸ்தோத்திர சங்கீதம்.)

ராஜாவாகிய என் தேவனே, உம்மை உயர்
த்தி, உம்முடையநாமத்தைஎப்பொழுதும்என்
2 றென்றைக்கும் ஸ்தோத்திரிப்பேன். நாடோ
றும் உம்மை ஸ்தோத்திரித்து, எப்பொழுதும்
என்றென்றைக்கும் உம்முடைய நாமத்தைத்
3 துதிப்பேன். **கர்த்தர்** பெரியவரும் மிகவும்
புகழப்படத்தக்கவருமா யிருக்கிறார்; [2]அவரு
டைய மகத்துவம் ஆராய்ந்து முடியாது.
4 தலைமுறை தலைமுறையாக உம்முடைய கிரி
யைகளின் புகழ்ச்சியைச் சொல்லி, [3]உம்மு
டைய வல்லமையுள்ள செய்கைகளை அறி
5 விப்பார்கள். உம்முடைய சிறந்த மகிமைப்
பிரதாபத்தையும், உம்முடைய அதிசயமான
6 கிரியைகளையுங்குறித்துப் பேசுவேன். ஜனங்
கள் உம்முடைய பயங்கரமான கிரியைகளின்
வல்லமையைச்சொல்லுவார்கள்; உம்முடைய
7 மகத்துவத்தை நான் விவரிப்பேன். அவர்கள்
உமதுமிகுந்ததயவை நினைத்துவெளிப்படுத்தி,
உமது நீதியைக் கெம்பீரித்துப் பாடுவார்கள்.
8 **கர்த்தர்** இரக்கமும் மன உருக்கமும், [4]நீடிய
சாந்தமும் மிகுந்த கிருபையும் உள்ளவர்.
9 **கர்த்தர்** எல்லார்மேலும் தயவுள்ளவர்; [5]அவர்
இரக்கங்கள் அவருடைய எல்லாக் கிரியை
10 களின் மேலுமுள்ளது. **கர்த்தாவே**, உம்மு
டைய கிரியைகளெல்லாம் உம்மைத் துதிக்
கும்; உம்முடைய பரிசுத்தவான்கள் உம்மை
11 ஸ்தோத்திரிப்பார்கள். மனுபுத்திரருக்கு உமது
வல்லமையுள்ள செய்கைகளையும், உமது ராஜ்
யத்தின் சிறந்த மகிமைப்பிரதாபத்தையும் தெரி
12 விக்கும்படிக்கு; உமது ராஜ்யத்தின் மகி
மையை அறிவித்து, உமது வல்லமையைக்
13 குறித்துப் பேசுவார்கள். உம்முடைய ராஜ்
யம் சதாகாலங்களிலுமுள்ள ராஜ்யம், [6]உம்மு
டைய ஆளுகை தலைமுறை தலைமுறையாகவும்
உள்ளது.
14 **கர்த்தர்** விழுகிற யாவரையும் தாங்கி, மடங்
கடிக்கப்பட்ட யாவரையும் தூக்கிவிடுகிறார்.
15 எல்லா ஜீவன்களின் கண்களும் உம்மை
நோக்கிக்கொண்டிருக்கிறது; ஏற்றவேளையி
லே நீர் அவைகளுக்கு ஆகாரங்கொடுக்கிறீர்.
16 நீர் உமது கையைத் திறந்து, [7]சகல பிராணி
களின் வாஞ்சையையும் திருப்தியாக்குகிறீர்.
17 **கர்த்தர்** தமது வழிகளிலெல்லாம் நீதியுள்ள
வரும், தமது கிரியைகளிலெல்லாம் கிருபை
யுள்ளவருமாயிருக்கிறார்.
18 தம்மை நோக்கிக் கூப்பிடுகிற யாவருக்கும்,
உண்மையாய்த் தம்மை நோக்கிக் கூப்பிடுகிற
யாவருக்கும், [8]**கர்த்தர்** சமீபமாயிருக்கிறார்.
அவர் தமக்குப் பயந்தவர்களுடைய விருப்பத் 19
தின்படி செய்து, அவர்கள் கூப்பிடுதலைக்
கேட்டு, அவர்களை இரட்சிக்கிறார். **கர்த்தர்** 20
தம்மில் அன்புகூருகிற [9]யாவரையும் காப்
பாற்றி, துன்மார்க்கர் யாவரையும் அழிப்பார்.
என் வாய் **கர்த்தரின்** துதியைச் சொல்வதாக; 21
மாம்சதேகமுள்ள யாவும் [10]அவருடைய பரி
சுத்த நாமத்தை எப்பொழுதும் என்றென்றைக்
கும் ஸ்தோத்திரிக்கக்கடவது.

## 146

அல்லேலூயா, என் ஆத்துமாவே, [11]**கர்த்**
**தரைத்** துதி. நான் உயிரோடிருக்கும்மட்டும் 2
**கர்த்தரைத்** துதிப்பேன்; [12]நான் உள்ளளவும்
என் தேவனைக் கீர்த்தனம்பண்ணுவேன். பிர 3
புக்களையும், இரட்சிக்கத் திராணியில்லாத
மனுபுத்திரனையும் [13]நம்பாதேயுங்கள். அவ 4
னுடைய ஆவி பிரியும், [14]அவன் தன் மண்
ணுக்குத் திரும்புவான்; அந்நாளிலே அவன்
யோசனைகள் அழிந்துபோம். யாக்கோபின் 5
தேவனைத் தன் துணையாகக் கொண்டிருந்து,
[15]தன் தேவனாகிய **கர்த்தர்**மேல் நம்பிக்கையை
வைக்கிறவன் பாக்கியவான். அவர் வானத் 6
தையும் பூமியையும் சமுத்திரத்தையும் [16]அவை
களிலுள்ள யாவையும் உண்டாக்கினவர்; அவர்
என்றென்றைக்கும் உண்மையைக் காக்கிற
வர். அவர் ஒடுக்கப்பட்டவர்களுக்கு நியா 7
யஞ்செய்கிறார்; பசியாயிருக்கிறவர்களுக்கு
ஆகாரங்கொடுக்கிறார்; கட்டுண்டவர்களைக்
**கர்த்தர்** விடுதலையாக்குகிறார். குருடரின் கண் 8
களைக் **கர்த்தர்** திறக்கிறார்; [17]மடங்கடிக்கப்பட்
டவர்களைக் **கர்த்தர்** தூக்கிவிடுகிறார்; நீதிமான்
களைக் **கர்த்தர்** சிநேகிக்கிறார். பரதேசிகளைக் 9
**கர்த்தர்** காப்பாற்றுகிறார்; அவர் திக்கற்ற
பிள்ளையையும் [18]விதவையையும் ஆதரிக்கிறார்;
துன்மார்க்கரின் வழியையோ [19]கவிழ்த்துப்
போடுகிறார். **கர்த்தர்** சதாகாலங்களிலும் அர 10
சாளுகிறார்; சீயோனே, உன் தேவன் தலை
முறை தலைமுறையாகவும் ராஜரிகம்பண்ணு
கிறார். அல்லேலூயா.

## 147

**கர்த்தரைத்**துதியுங்கள்;நம்முடையதேவ
னைக் கீர்த்தனம்பண்ணுகிறது நல்லது, [20]துதித்
தலே இன்பமும் ஏற்றதுமாயிருக்கிறது. **கர்த்** 2
**தர்** எருசலேமைக் கட்டுகிறார்; [21]துரத்துண்ட
இஸ்ரவேலரைக் கூட்டிச்சேர்க்கிறார். இரு 3
தயம் நொறுங்குண்டவர்களைக் குணமாக்கு
கிறார், [22]அவர்களுடைய காயங்களைக் கட்டு
கிறார். அவர் நட்சத்திரங்களின் இலக்கத்தை 4
எண்ணி, [23]அவைகளுக்கெல்லாம் பேரிட்டு
அழைக்கிறார். நம்முடைய ஆண்டவர் பெரி 5
யவரும் மகா பெலமுள்ளவருமாயிருக்கிறார்;
[24]அவருடைய அறிவு அளவில்லாதது. **கர்த்** 6
**தர்** சாந்தகுணமுள்ளவர்களை உயர்த்துகிறார்;
[25]துன்மார்க்கரைத் தரைமட்டும் தாழ்த்துகிறார்.
**கர்த்தரைத்** துதியுடன் பாடிக் கொ 7
ண்டாடுங்கள்; நம்முடைய தேவனைச் சுர
மண்டலத்தால் கீர்த்தனம் பண்ணுங்கள். அ 8
வர் வானத்தை மேகங்களால் மூடி, பூமிக்கு

[1] உபா. 33. 29
[2] ரோ. 11. 33
[3] ஏசா. 38. 19
[4] எண். 14. 18
[5] நாகூம் 1. 7
[6] தானி. 2. 44. 1 தீமோ. 1. 17
[7] 104. 28
[8] உபா. 4. 7. யோ. 4. 24
[9] யாத். 20. 6
[10] வெளி. 5. 13
[11] 103. 1
[12] 104. 33
[13] ஏசா. 2. 22. எரே. 17. 6, 7
[14] பிர. 12. 7
[15] எரே. 17. 7
[16] வெளி. 14. 7
[17] மத். 9. 30. யோ. 9. 6. ஷ
[18] நீதி. 15. 25
[19] யோபு 5. 12, 13. நீதி. 4. 19
[20] 92. 1
[21] உபா. 30. 3, 4
[22] ஏசா. 61. 1.
[23] ஆதி. 15. 5. ஏசா. 40. 26
[24] ஏசா. 40. 28
[25] 25. 9. மத். 5. 5. 1 பே. 3. 4

மணழயை ஆயத்தப்படுத்தி, மலைகளில் புல்லை
9 முளைப்பிக்கிறார். அவர் மிருகஜீவன்களுக்
கும் கூப்பிடுகிற [1]காக்கைக் குஞ்சுகளுக்கும்
10 ஆகாரங் கொடுக்கிறார். அவர் குதிரையின்
பலத்தில் விருப்பமாயிரார்; வீரனுடைய கால்
11 களில் பிரியப்படார். தமக்குப் பயந்து,
[2]தமது கிருபைக்குக் காத்திருக்கிறவர்கள்
மேல் கர்த்தர் பிரியமாயிருக்கிறார்.
12 எருசலேமே, கர்த்தரை ஸ்தோத்திரி; சீயோ
13 னே, உன் தேவனைத் துதி. அவர் உன் வாசல்
களின் தாழ்ப்பாள்களைப் பலப்படுத்தி, உன்
னிடத்திலுள்ள உன் பிள்ளைகளை ஆசீர்வதிக்
14 கிறார். அவர் உன் எல்லைகளைச் சமாதான
முள்ளவைகளாக்கி, உசிதமான கோதுமை
15 யினால் உன்னைத் திருப்தியாக்குகிறார். அவர்
தமது வார்த்தையைப் பூமியிலே அனுப்புகி
றார்; [3]அவருடைய சொல் மகா தீவிரமாய்ச்
16 செல்லுகிறது. பஞ்சைப்போல் உறைந்த
மழையைத் தருகிறார்; [4]சாம்பலைப்போல
17 உறைந்த பனியைத் தூவுகிறார். அவர் தமது
கல்மழையைத் துணிக்கைகளாக அனுப்புகி
றார்; அவருடைய குளிருக்கு முன்பாக நிற்ப
18 வன் யார்? அவர் தமது வார்த்தையை அனுப்பி,
அவைகளை உருகப்பண்ணுகிறார்; தமது காற்
றை வீசும்படி செய்ய, தண்ணீர்கள் ஓடும்.
19 யாக்கோபுக்குத் தம்முடைய வசனங்களையும்,
[5]இஸ்ரவேலுக்குத் தமது பிரமாணங்களையும்
20 தமது நியாயங்களையும் அறிவிக்கிறார். அவர்
வேறே எந்த ஜாதிக்கும் இப்படிச் செய்த
தில்லை; [6]அவருடைய நியாயங்களை அறியா
மற்போகிறார்கள். அல்லேலூயா.

148 அல்லேலூயா, வானங்களில் உள்ளவைக
ளே, கர்த்தரைத் துதியுங்கள்; உன்னதங்
2 களில் அவரைத் துதியுங்கள். அவருடைய தூதர்
களே, [7]நீங்கள் யாவரும் அவரைத் துதியுங்கள்;
அவருடைய சேனைகளே, நீங்கள் யாவரும்
3 அவரைத் துதியுங்கள். சூரிய சந்திரரே, அவ
ரைத் துதியுங்கள்; பிரகாசமுள்ள சகல நட்சத்
4 திரங்களே, அவரைத் துதியுங்கள். வானாதி
வானங்களே, [8]அவரைத் துதியுங்கள்; ஆகாய
மண்டலத்தின்மேலுள்ள தண்ணீர்களே, அவ
5 ரைத் துதியுங்கள். அவைகள் கர்த்தரின்
நாமத்தைத் துதிக்கக்கடவது; [9]அவர் கட்டளை
6 யிட அவைகள் சிருஷ்டிக்கப்பட்டது. அவர்
அவைகளை என்றைக்குமுள்ள சதாகாலங்களி
லும் நிலைக்கும்படி செய்தார்; மாறாத பிரமாண
த்தை அவைகளுக்கு நியமித்தார்.
7 பூமியிலுள்ளவைகளே, கர்த்தரைத் துதியுங்
கள்; [10]மகா மச்சங்களே, சகல ஆழங்களே,
8 அக்கினியே, கல்மழையே, உறைந்த மழை
யே, மூடுபனியே, அவர் சொற்படி செய்யும்
9 பெருங்காற்றே, மலைகளே, சகல மேடுகளே,
10 கனிமரங்களே, சகல கேதுருக்களே, காட்டு
மிருகங்களே, சகல நாட்டு மிருகங்களே,

1 யோபு 38. 41. மத். 6. 26
2 எசா. 62. 4. மல். 3. 16, 17
3 107. 20
4 யோபு 37. 6
5 உபா. 33. 3, 4. மல். 4. 4. ரோ. 3. 2
6 உபா. 4. 32–34. ரோ. 3. 1, 2
7 103. 20, 21
8 1 இரா. 8. 27. 2 கொ. 12. 2
9 ஆதி. 1. 1. மு
10 எசா. 43. 20
11 8. 1. எசா. 12. 4
12 எபே. 2. 13, 17
13 எசா. 42. 10
14 100. 3
15 சகரி. 9. 9. மத். 21. 5
16 147. 11
17 உபா. 7. 1, 2
18 எபி. 4. 12. வெளி. 1. 16
19 உபா. 3. 24
20 தானி. 3. 5. மு
21 யாத். 15. 20
22 1 நாளா. 15. 16. மு
23 உபா. 4. 32–34

ஊரும் பிராணிகளே, இறகுள்ள பறவைகளே,
பூமியின் ராஜாக்களே, சகல ஜனங்களே, 11
பிரபுக்களே, பூமியிலுள்ள சகல நியாயாதிப
திகளே, வாலிபரே, கன்னிகைகளே, முதிர் 12
வயதுள்ளவர்களே, பிள்ளைகளே, கர்த்தரைத்
துதியுங்கள். அவர்கள் கர்த்தரின் நாமத்தைத் 13
துதிக்கக்கடவர்கள்; அவருடைய நாமம் மாத்
திரம் [11]உயர்ந்தது; அவருடைய மகிமை பூமிக்
கும் வானத்திற்கும் மேலானது. அவர் தம்மு 14
டைய பரிசுத்தவான்கள் யாவருக்கும், [12]தம்
மைச் சேர்ந்த ஜனமாகிய இஸ்ரவேல் புத்தி
ரருக்கும் கொண்டாட்டமாக, தம்முடைய
ஜனத்திற்கு ஒரு கொம்பை உயர்த்தினார்.
அல்லேலூயா.

அல்லேலூயா, கர்த்தருக்குப் புதுப்பாட் 149
டைப் பாடுங்கள்; [13]பரிசுத்தவான்களின் சபை
யிலே அவருடைய துதி விளங்குவதாக. இஸ் 2
ரவேல் தன்னை உண்டாக்கினவரில் மகிழவும்;
[14]சீயோன் குமாரர் தங்கள் ராஜாவில் [15]களிகூர
வுங்கடவர்கள். அவருடைய நாமத்தை நட 3
னத்தோடே துதித்து, தம்புரினாலும் கின்னரத்
தினாலும் அவரைக் கீர்த்தனம் பண்ணக்கட
வர்கள். கர்த்தர் தம்முடைய [16]ஜனத்தின்மேல் 4
பிரியம் வைக்கிறார்; சாந்தகுணமுள்ளவர்களை
ரட்சிப்பினால் அலங்கரிப்பார்.
பரிசுத்தவான்கள் மகிமையோடே களிகூர் 5
ந்து, தங்கள் படுக்கைகளின்மேல் கெம்பீரிப்
பார்கள். ஜாதிகளிடத்தில் பழிவாங்கவும், ஜன 6
ங்களை தண்டிக்கவும், அவர்களுடைய ராஜா 7
க்களைச் சங்கிலிகளாலும், அவர்களுடைய
மேன்மக்களை இருப்பு விலங்குகளாலும் கட்ட
வும், எழுதப்பட்ட நியாயத்தீர்ப்பை [17]அவர்கள்
பேரில் செலுத்தவும், அவர்கள் வாயில் கர்த் 8
தரை உயர்த்தும் துதியும், [18]அவர்கள் கையில்
இருபுறமும் கருக்குள்ள பட்டயமும் இருக்கும்.
இந்தக் கனம் அவருடைய பரிசுத்தவான்கள் 9
யாவருக்கும் உண்டாகும். அல்லேலூயா.

அல்லேலூயா, தேவனை அவருடைய 150
பரிசுத்த ஸ்தலத்தில் துதியுங்கள்; அவருடைய
வல்லமை விளங்கும் ஆகாய விரிவைப்பார்த்து
அவரைத் துதியுங்கள். அவருடைய வல்ல 2
மையுள்ள கிரியைகளுக்காக அவரைத் துதியுங்
கள்; மாட்சிமைபொருந்திய அவருடைய மகத்
துவத்திற்காக [19]அவரைத் துதியுங்கள். எக் 3
காள தொனியோடே அவரைத் துதியுங்கள்;
[20]வீணையோடும் சுரமண்டலத்தோடும் அவரைத்
துதியுங்கள். தம்புரோடும் நடனத்தோடும் அவ 4
ரைத் துதியுங்கள்; [21]யாழோடும் தீங்குழலோ
டும் அவரைத் துதியுங்கள். ஓசையுள்ள கைத் 5
தாளங்களோடும் அவரைத் துதியுங்கள்; [22]பே
ரோசையுள்ள கைத்தாளங்களோடும் அவரைத்
துதியுங்கள்.
சுவாசமுள்ள யாவும் [23]கர்த்தரைத் துதிப் 6
பதாக. அல்லேலூயா.

THE PROVERBS

# நீதிமொழிகள்

1 தாவீதின் குமாரனும் இஸ்ரவேலின் ரா
ஜாவுமாகிய சாலொமோனின் [1]நீதிமொழிகள்:
2 இவைகளால் ஞானத்தையும் போதகத்தையும்
3 அறிந்து, புத்திமதிகளை உணர்ந்து, விவே
கம், நீதி, நியாயம், நிதானம் என்பவைகளைப்
4 பற்றிய [2]உபதேசத்தை அடையலாம். இவை
கள் பேதைகளுக்கு வினவையும், [3]வாலிப
ருக்கு அறிவையும் விவேகத்தையும் கொடுக்
5 கும். புத்திமான் இவைகளைக் கேட்டு, அறி
வில் தேறுவான்; விவேகி நல்லாலோசனைகளை
6 அடைந்து; நீதிமொழியையும், அதின் அர்த்
தத்தையும், ஞானிகளின் வாக்கியங்களையும்,
அவர்கள் உரைத்த புதைபொருள்களையும்
[4]அறிந்துகொள்வான்.
7 கர்த்தருக்குப் பயப்படுதலே [5]ஞானத்தின்
ஆரம்பம்; மூடர் ஞானத்தையும் போதகத்தை
யும் அசட்டைபண்ணுகிறார்கள்.
8 என் மகனே, உன் தகப்பன் புத்தியைக்
கேள், உன் தாயின் போதகத்தைத் தள்ளாதே.
9 அவைகள் உன் சிரசுக்கு அலங்காரமான முடி
யும், உன் கழுத்துக்குச் சரப்பணியுமாயி
ருக்கும்.
10 என் மகனே, பாவிகள் உனக்கு நயங்காட்
11 டினாலும் [6]நீ சம்மதியாதே. எங்களோடே
வா, இரத்தஞ்சிந்தும்படி நாம் பதிவிருந்து,
குற்றமற்றிருக்கிறவர்களை முகாந்தரமின்றிப்
12 பிடிக்கும்படி ஒளித்திருப்போம்; பாதாளம்
விழுங்குவதுபோல் நாம் அவர்களை உயிரோ
டே விழுங்குவோம்; குழியில் இறங்குகிறவர்
கள் விழுங்கப்படுவதுபோல் அவர்களை முழு
13 மையும் விழுங்குவோம்; விலையுயர்ந்த சகல
விதப் பொருள்களையும் கண்டடைவோம்;
கொள்ளைப்பொருளினால் நம்முடைய வீடு
14 களை நிரப்புவோம். எங்களோடே பங்காளி
யாயிரு; நம்மெல்லாருக்கும் ஒரே பை இருக்
கும் என்று அவர்கள் சொல்வார்களாகில்;
15 என் மகனே, நீ அவர்களோடே வழி நடவா
மல், [7]உன் காலை அவர்கள் பாதைக்கு விலக்கு
16 வாயாக. அவர்கள் கால்கள் தீங்குசெய்ய ஓடி,
17 [8]இரத்தஞ்சிந்தத் தீவிரிக்கிறது. எவ்வகையான
பட்சியானாலும் சரி, அதின் கண்களுக்கு முன்
18 பாக வலையை விரிப்பது விருதா. இவர்களோ
தங்கள் ரத்தத்திற்கே பதிவிருக்கிறார்கள், தங்
கள் பிராணனுக்கே * ஒளிவைத்திருக்கிறார்கள்.
பொருளாசையுள்ள [9]எல்லாருடைய வழியும் 19
இதுவே; இது தன்னையுடையவர்களின் உயி
ரை வாங்கும்.
ஞானமானது வெளியே நின்று கூப்பிடுகி 20
றது, [10]வீதிகளில் சத்தமிடுகிறது. அது சந் 21
தடியுள்ள தெருக்களின் சந்திலும் ஒலிமுக
வாசலிலும் நின்று கூப்பிட்டு, பட்டணத்தில்
தன் வார்த்தைகளை வசனித்துச் சொல்லுகி
றது: பேதைகளே, நீங்கள் பேதைமையை 22
விரும்புவதும், நிந்தனைக்காரரே, நீங்கள் நிந்
தனையில் பிரியப்படுவதும், மதியீனரே, நீங்
கள் ஞானத்தை வெறுப்பதும், எதுவரைக்கும்
இருக்கும்? என் கடிந்துகொள்ளுதலுக்குத் 23
திரும்புங்கள்; இதோ, [11]என் ஆவியை உங்களு
க்கு அருளுவேன், என் வார்த்தைகளை உங்க
ளுக்குத் தெரிவிப்பேன்.
நான் கூப்பிட்டும், [12]நீங்கள் கேட்கமாட் 24
டோம் என்கிறீர்கள்; நான் என் கையை நீட்
டியும் கவனிக்கிறவன் ஒருவனும் இல்லை.
என் ஆலோசனையையெல்லாம் நீங்கள் தள்ளி, 25
[13]என் கடிந்துகொள்ளுதலை வெறுத்தீர்கள்.
ஆகையால், நானும் உங்கள் ஆபத்துக்காலத் 26
தில் [14]நகைத்து, நீங்கள் பயப்படுங் காரியம்
வரும்போது ஆகடியம்பண்ணுவேன். நீங் 27
கள் பயப்படுங் காரியம் புசல்போல் வரும்
போதும், ஆபத்து சூறாவளிபோல் உங்களுக்கு
நேரிடும்போதும், நெருக்கமும் இடுக்கணும்
உங்கள்மேல் வரும்போதும், ஆகடியம்பண்
ணுவேன். அப்பொழுது அவர்கள் என்னை 28
நோக்கிக் கூப்பிடுவார்கள்; [15]நான் மறுஉத்தரவு
கொடுக்கமாட்டேன்; அவர்கள் அதிகாலையி
லே என்னைத் தேடுவார்கள், என்னைக் காண
மாட்டார்கள். அவர்கள் [16]அறிவை வெறுத் 29
தார்கள், கர்த்தருக்குப் பயப்படுதலைத் தெரிந்
துகொள்ளாமற் போனார்கள். என் ஆலோச 30
னையை அவர்கள் விரும்பவில்லை; என் கடிந்து
கொள்ளுதலையெல்லாம் அசட்டை பண்ணி
னார்கள். ஆகையால் அவர்கள் தங்கள் [17]வழி 31
யின் பலனைப் புசிப்பார்கள்; தங்கள் யோசனை
களினால் திருப்தியடைவார்கள். பேதைக 32
ளின் மாறுபாடு அவர்களைக் கொல்லும், மூட
ரின் நிர்விசாரம் அவர்களை அழிக்கும். எனக் 33

1 1 இரா. 4. 32. பிர. 12. 9
2 2. 1, 9
3 9. 4. ஏ. சங். 119. 9
4 சங். 49. 4. 78. 2
5 சங். 111. 10. பிர. 12. 13
6 ஆதி. 39. 7. ஏ. எபே. 5. 11
7 சங். 1. 1; 119. 101
8 ஏசா. 59. 7. ரோ. 3. 15
* பதிவிடை.
9 ஆப. 2. 9–12. 1 தீமோ. 6. 10.
10 8. 1. ஏ. யோ. 7. 37
11 யோவேல் 2. 28. தூ. 11. 13
12 ஏசா. 65. 12; 66. 4. எரே. 7. 13. சகரி. 7. 11-14
13 சங். 107. 10. தூ. 7. 30
14 சங். 2. 4. தூ. 14. 24
15 ஆதி. 6. 3. யோபு 27. 9. ஏசா. 1 15. எரே. 11. 11; 14. 12 எசே. 8. 18. மீகா. 3. 4. யாக். 4. 3
16 யோபு 21. 14
17 எரே. 2. 19; 6. 19

குச் செவிகொடுக்கிறவன் எவனே, [1]அவன்
விக்கினமின்றி வாசம்பண்ணி, ஆபத்திற்குப்
பயப்படாமல் அமைதியாயிருப்பான்.

2 என் மகனே, நீ உன் செவியை ஞானத்
திற்குச் சாய்த்து, [2]உன் இருதயத்தைப் புத்
2 திக்கு அமையப்பண்ணும்பொருட்டு, நீ என்
வார்த்தைகளை ஏற்றுக்கொண்டு, என் கட்ட
3 ளைகளை உன்னிடத்தில் பத்திரப்படுத்தி, ஞா
னத்தை வா என்று கூப்பிட்டு, புத்தியைச் சத்
4 தமிட்டு அழைத்து, அதை வெள்ளியைப்
போல் நாடி, [3]புதையல்களைத் தேடுகிறது
5 போல் தேடுவாயாகில், அப்பொழுது **கர்த்
தருக்குப்** பயப்படுதல் இன்னதென்று நீ உண
ர்ந்து, தேவனை அறியும் அறிவைக் கண்ட
6 டைவாய். **கர்த்தர்** ஞானத்தைத் தருகிறார்;
[4]அவர் வாயினின்று அறிவும் புத்தியும் வரும்.
7 அவர் நீதிமான்களுக்கென்று மெய்ஞ்ஞானத்
தை வைத்துவைத்திருக்கிறார்; உத்தமமாய் நட
க்கிறவர்களுக்கு அவர் கேடகமாயிருக்கிறார்.
8 அவர் நியாயத்தின் நெறிகளைத் தற்காத்து, தம்
முடைய பரிசுத்தவான்களின் [5]பாதையைக்
9 காப்பாற்றுகிறார். அப்பொழுது நீதியையும்,
நியாயத்தையும், நிதானத்தையும், [6]சகல நல்
வழிகளையும் அறிந்துகொள்ளுவாய்.
10 ஞானம் உன் இருதயத்தில் பிரவேசித்து,
அறிவு உன் ஆத்துமாவுக்கு இன்பமாயிருக்
11 கும்போது, நல்யோசனை உன்னைக் காப்பாற்
12 றும், புத்தி உன்னைப் பாதுகாக்கும். அதி
னால் நீ துன்மார்க்கனுடைய வழிக்கும், மாறு
13 பாடு பேசுகிற மனுஷனுக்கும், அந்தகார வழி
14 களில் நடக்க [7]நீதிநெறிகளைவிட்டு, தீமை
செய்ய மகிழ்ந்து, [8]துன்மார்க்கருடைய மாறு
15 பாடுகளில் களிகூருகிறவர்களுக்கும், மாறு
பாடான பாதைகளிலும் கோணலான வழி
களிலும் [9]நடக்கிறவர்களுக்கும் நீ தப்புவிக்கப்
16 படுவாய். தன் இளவயதின் நாயகனை விட்டு,
[10]தன் தேவனுடைய உடன்படிக்கையை மற
17 ந்து, இச்சகமான வார்த்தைகளைப் பேசும்
அந்நிய பெண்ணாகிய [11]பரஸ்திரீக்கும் தப்பு
18 விக்கப்படுவாய். அவளுடைய வீடு மரணத்
துக்கும், [12]அவளுடைய பாதைகள் மரித்தோ
19 ரிடத்திற்கும் சாய்கிறது. அவளிடத்தில் போ
கிறவர்களில் ஒருவரும் திரும்புகிறதில்லை,
[13]ஜீவபாதைகளில் வந்து சேருகிறதுமில்லை.
20 ஆதலால் நீ நல்லவர்களின் வழியிலே நடந்து,
நீதிமான்களின் பாதைகளைக் காத்துக்கொள்
21 வாயாக. செவ்வையானவர்கள் பூமியிலே
வாசம்பண்ணுவார்கள்; உத்தமர்கள் அதிலே
22 தங்கியிருப்பார்கள். துன்மார்க்கரோ பூமியி
லிருந்து அறுப்புண்டுபோவார்கள்; துரோகி
கள் அதில் இராதபடிக்கு நிர்மூலமாவார்கள்.

3 என் மகனே, என் போதகத்தை மறவா
தே; [14]உன் இருதயம் என் கட்டளைகளைக்
2 காக்கக்கடவது. அவைகள் உனக்கு நீடித்த
நாட்களையும் [15]தீர்க்காயுசையும், சமாதானத்தை
3 யும்பெருகப்பண்ணும். கிருபையும்சத்தியமும்
உன்னைவிட்டு விலகாதிருப்பதாக; நீ அவை
களை உன் கழுத்திலே பூண்டு, அவைகளை
உன் இருதயமாகிய பலகையில் [16]எழுதிக்
கொள். அதினால் தேவனுடைய பார்வை 4
யிலும் மனுஷருடைய பார்வையிலும் [17]தயை
யும் நற்புத்தியும் பெறுவாய்.
உன் சுயபுத்தியின்மேல் சாயாமல், [18]உன் 5
முழு இருதயத்தோடும் **கர்த்தரில்** நம்பிக்கை
யாயிருந்து, உன் வழிகளிலெல்லாம் அவரை 6
நினைத்துக்கொள்; [19]அப்பொழுது அவர் உன்
பாதைகளைச் செவ்வைப்படுத்துவார். நீ உன் 7
னை ஞானியென்று எண்ணாதே; [20]**கர்த்தருக்
குப்** பயந்து, தீமையை விட்டு விலகு. அது 8
உன் நாபிக்கு ஆரோக்கியமும், [21]உன் எலும்
புகளுக்கு ஊனுமாகும்.
உன் பொருளாலும், உன் எல்லா விளை 9
வின் முதற்பலனாலும் [22]**கர்த்தரைக்** கனம்
பண்ணு. அப்பொழுது உன் களஞ்சியங்கள் 10
பூரணமாய் நிரம்பும்; [23]உன் ஆலைகளில் திரா
ட்சரசம் புரண்டோடும்.
என் மகனே, நீ **கர்த்தருடைய** சிட்சையை 11
அற்பமாக எண்ணாதே, [24]அவர் கடிந்துகொள்
ளும்போது சோர்ந்துபோகாதே. தகப்பன் 12
தான் நேசிக்கிற புத்திரனைச் சிட்சிக்கிறது
போல, [25]**கர்த்தரும்** எவனிடத்தில் அன்புகூரு
கிறாரோ அவனைச் சிட்சிக்கிறார்.
ஞானத்தைக் கண்டடைகிற மனுஷனும், 13
புத்தியைச் சம்பாதிக்கிற மனுஷனும் [26]பாக்
கியவான்கள். அதின் வர்த்தகம் வெள்ளி 14
வர்த்தகத்திலும், [27] அதின் ஆதாயம் பசும்பொன்
னிலும், உத்தமமானது. முத்துக்களைப்பார்க் 15
கிலும் அது விலையேறப்பெற்றது; [28]நீ இச்சிக்
கத்தக்கதொன்றும் அதற்கு நிகரல்ல. அதின் 16
வலதுகையில் தீர்க்காயுசும், [29] அதின் இடது
கையில் செல்வமும் கனமும் இருக்கிறது.
அதின் வழிகள் இனிதான வழிகள், [30] அதின் 17
பாதைகளெல்லாம் சமாதானம். அது தன்னை 18
அடைந்தவர்களுக்கு [31]ஜீவவிருட்சம், அதைப்
பற்றிக்கொள்ளுகிற எவனும் பாக்கியவான்.
**கர்த்தர்** ஞானத்தினாலே [32]பூமியை அஸ்தி 19
பாரப்படுத்தி, புத்தியினாலே வானங்களை ஸ்தா
பித்தார். அவருடைய ஞானத்தினாலே ஆழங் 20
கள் பிரிந்தது, [33]ஆகாயமும் பனியைப் பெய்
கிறது.
என் மகனே, இவைகள் உன் கண்களை 21
விட்டுப் பிரியாதிருப்பதாக; மெய்ஞ்ஞானத்
தையும் நல்லாலோசனையையும் காத்துக்கொ
ள். அவைகள் உன் ஆத்துமாவுக்கு ஜீவனும், 22
உன் கழுத்துக்கு அலங்காரமுமாயிருக்கும்.
அப்பொழுது நீ பயமின்றி உன் வழியில் 23
நடப்பாய் உன் கால் இடறாது. நீ படுக்கும் 24
போது பயப்படாதிருப்பாய்; [34]நீ படுத்துக்
கொள்ளும்போது உன் நித்திரை இன்பமா
யிருக்கும். சடிதியான திகிலும், [35]துஷ்டர்க 25
ளின் பாழ்க்கடிப்பும் வரும்போது நீ அஞ்ச
வேண்டாம். **கர்த்தர்** உன் நம்பிக்கையாயிரு 26
ந்து, [36]உன் கால் சிக்கிக்கொள்ளாதபடி காப்
பார்.

1 சங். 25. 12, 13. 112. 7. ஏசா. 48. 18
2 ஏசா. 55. 3
3 மத். 13. 44
4 1 இரா. 3. 9, 12. யாக். 1. 5
5 1 சாமு. 2. 9 பூசா 2. 5
6 சங். 119. 99
7 நீதி. 3. 19, 20; 12. 35
8 நீதி. 1. 32
9 சங். 125. 5
10 ஆதி. 2. 24. மல். 2. 14, 15
11 5. 20
12 7. 27
13 பிர. 7. 26
14 ஏசா. 51. 7. நீதி. 31. 33
15 உபா. 30. 16, 20. 1 தீமோ. 4. 8
16 2 கொ. 3. 3
17 லூ. 2. 52. அப். 2. 47. நீதி. 14. 8
18 எரே. 10. 23. நீதி. 12. 16
19 1 நாளா. 28. 9. எரே. 10. 23
20 நீதி. 12. 16
21 யோபு 21. 24
22 யாத். 22. 29. மல். 3. 8–12. 1 கொரி. 16. 2
23 பிர. 11. 1, 2. மத். 10. 42
24 எபி. 12. 5, 6. வெளி. 3. 19
25 உபா. 8. 5
26 8. 35, 36
27 சங். 19. 10. பிலி. 3. 8, 9
28 யோபு 28. 13. மத். 13. 44
29 8. 18. 1 தீமோ. 4. 8
30 மத். 11. 29, 30
31 ஆதி. 3. 22, 24. வெளி. 22. 2
32 எரே. 51. 15
33 ஆதி. 7. 11. யோபு 36. 27
34 லேவி. 26. 6. சங். 147. 1
35 சங். 112. 7
36 1 சாமு. 2. 9

27 நன்மை செய்யும்படி உனக்குத் திராணி
யிருக்கும்போது, [1]அதைச் செய்யத்தக்கவர்
28 களுக்குச் செய்யாமல் இராதே. உன்னிடத்
தில் பொருள் இருக்கையில் உன் அயலானை
நோக்கி: [2]நீ போய்த் திரும்பவா, நாளைக்குத்
29 தருவேன் என்று சொல்லாதே. அச்சமின்றி
உன்னிடத்தில் வாசம்பண்ணுகிற உன் அய
லானுக்கு விரோதமாகத் தீங்கு நினையாதே.
30 ஒருவன் உனக்குத் தீங்கு செய்யாதிருக்க,
[3]காரணமின்றி அவனோடே வழக்காடாதே.
31 கொடுமையுள்ளவன்மேல் பொறாமை கொள்
ளாதே; அவனுடைய வழிகளில் ஒன்றையும்
32 தெரிந்துகொள்ளாதே. மாறுபாடுள்ளவன் கர்த்
தருக்கு அருவருப்பானவன்; நீதிமான்களோ
டே [4]அவருடைய *ரகசியம் இருக்கிறது.
33 துன்மார்க்கனுடைய வீட்டில் கர்த்தரின் சா
பம் இருக்கிறது, [5]நீதிமான்களுடைய வாச
34 ஸ்தலத்தையோ அவர் ஆசீர்வதிக்கிறார். இகழ்
வோரை அவர் இகழுகிறார்; [6]தாழ்மையுள்ள
35 வர்களுக்கோ கிருபையளிக்கிறார். ஞான
வான்கள் [7]கனத்தைச் சுதந்தரிப்பார்கள்; மதி
கேடரோ கனவீனத்தை அடைவார்கள்.

4 பிள்ளைகளே, நீங்கள் தகப்பன் போதகத்
தைக் கேட்டு, புத்தியை அடையும்படி கவ
2 னியுங்கள். நான் உங்களுக்கு நற்போதகத்
தைத் தருகிறேன்; [8]என் உபதேசத்தை விடா
3 திருங்கள். நான் என் தகப்பனுக்குப் பிரிய
மான குமாரனும், [9]என் தாய்க்கு மிகவும்
4 அருமையான ஒரே பிள்ளையுமானவன். அவர்
எனக்குப் போதித்துச் சொன்னது: [10]உன்
இருதயம் என் வார்த்தைகளைக் காத்துக்கொள்
ளக்கடவது; என் கட்டளைகளைக் கைக்கொள்,
5 அப்பொழுது பிழைப்பாய். ஞானத்தைச்
சம்பாதி, புத்தியையும் சம்பாதி; என் வாயின்
வார்த்தைகளை மறவாமலும் விட்டு விலகாம
6 லும் இரு. அதை விடாதே, அது உன்னைத்
தற்காக்கும்; [11]அதின்மேல் பிரியமாயிரு, அது
7 உன்னைக் காத்துக்கொள்ளும். ஞானமே முக்
கியம், ஞானத்தைச் சம்பாதி; [12]என்னத்தைச்
சம்பாதித்தாலும் புத்தியைச் சம்பாதித்துக்
8 கொள். நீ அதை மேன்மைப்படுத்து, அது
உன்னை மேன்மைப்படுத்தும்; [13]நீ அதைத்
தழுவிக்கொண்டால், அது உன்னைக் கனம்
9 பண்ணும். அது உன் தலைக்கு அலங்காரமான
முடியைக் கொடுக்கும்; அது மகிமையுள்ள
கிரீடத்தை உனக்குச் சூட்டும்.
10 என் மகனே, கேள், என் வார்த்தைகளை
ஏற்றுக்கொள்; அப்பொழுது உன் ஆயுசின்
11 வருஷங்கள் அதிகமாகும். ஞானமார்க்கத்தை
நான் உனக்குப் போதித்தேன்; செவ்வையான
12 பாதைகளிலே உன்னை நடத்தினேன். நீ
அவைகளில் நடக்கும்போது உன் நடைக
ளுக்கு இடுக்கண் உண்டாவதில்லை; நீ அவை
13 களில் ஓடினாலும் இடறமாட்டாய்; புத்திமதி
யை உறுதியாய்ப் பற்றிக்கொள், அதை விட்டு
விடாதே; அதைக் காத்துக்கொள், அதுவே
உனக்கு ஜீவன்.

துன்மார்க்கருடைய பாதையில் பிரவேசி 14
யாதே; [14]தீயோருடைய வழியில் நடவாதே.
அதை வெறுத்து விடு, அதின் வழியாய்ப் 15
போகாதே; அதை விட்டு விலகிக் கடந்துபோ.
பொல்லாப்புச் செய்தாலொழிய அவர்களுக்கு 16
நித்திரை வராது; [15]அவர்கள் யாரையாகிலும்
விழப்பண்ணாதிருந்தால் அவர்கள் தூக்கம் கலை
ந்துபோம். அவர்கள் ஆகாமியத்தின் அப்பத் 17
தைப் புசித்து, கொடுமையின் ரசத்தைக் குடி
க்கிறார்கள். நீதிமான்களுடைய பாதை நடுப் 18
பகல்வரைக்கும் அதிகமதிகமாய்ப் பிரகாசிக்
கிற [16]சூரியப் பிரகாசம்போலிருக்கும். துன் 19
மார்க்கருடைய பாதையோ காரிருளைப்போ
லிருக்கும்; [17]தாங்கள் இடறுவது இன்னதில்
என்று அறியார்கள்.
என் மகனே, என் வார்த்தைகளைக் கவனி; 20
என் வசனங்களுக்கு உன் செவியைச் சாய்.
அவைகள் உன் கண்களை விட்டுப் பிரியா 21
திருப்பதாக; அவைகளை உன் இருதயத்துக்
குள்ளே காத்துக்கொள். அவைகளைக் கண்டு 22
பிடிக்கிறவர்களுக்கு அவைகள் ஜீவனும்,
அவர்கள் உடலுக்கெல்லாம் ஆரோக்கியமு
மாம். எல்லாக் காவலோடும் உன் இருதயத் 23
தைக் காத்துக்கொள், †அதினிடத்தினின்று
ஜீவஊற்று புறப்படும். வாயின் தாறுமாறு 24
களை உன்னை விட்டகற்றி, உதடுகளின் மாறு
பாட்டை உனக்குத் தூரப்படுத்து. உன் கண் 25
கள் நேராய் நோக்கக்கடவது; உன் கண்ணி
மைகள் உனக்கு முன்னே செவ்வையாய்ப்
பார்க்கக்கடவது. உன் கால்நடையைச் சீர் 26
தூக்கிப் பார்; உன் வழிகளெல்லாம் நிலைவரப்
பட்டிருப்பதாக. வலதுபுறமாவது இடதுபுற 27
மாவது சாயாதே; [18]உன் காலைத் தீமைக்கு வில
க்குவாயாக.

என் மகனே, என் ஞானத்தைக் கவனி 5
த்து, என் புத்திக்கு உன் செவியைச் சாய்;
அப்பொழுது நீ விவேகத்தைப் பேணிக்கொள் 2
வாய், [19]உன் உதடுகள் அறிவைக் காத்துக்
கொள்ளும்.
பரஸ்திரீயின் உதடுகள் தேன்கூடுபோல் 3
ஒழுகும்; [20]அவள் வாய் எண்ணெயிலும் மிரு
துவாயிருக்கும். அவள் செய்கையின் முடி 4
வோ எட்டியைப்போலக் கசக்கும், [21]இருபுற
மும் கருக்குள்ள பட்டயம்போல் கூர்மையுமா
யிருக்கும். அவள் காலடிகள் மரணத்துக்கு 5
இறங்கும்; [22]அவள் நடைகள் பாதாளத்தைப்
பற்றிப்போகும். நீ ஜீவமார்க்கத்தைச் சிந்தித் 6
துக்கொள்ளாதபடிக்கு, அவளுடைய நடை
கள் மாறிமாறி விகாரப்படும்; அவைகளை
அறிய முடியாது.
ஆதலால் பிள்ளைகளே, இப்பொழுது எனக் 7
குச் செவிகொடுங்கள்; என் வாயின் வசனங்
களை விட்டு நீங்காதிருங்கள். உன் வழியை 8
அவளுக்குத் தூரப்படுத்து; அவளுடைய வீட்
டின் வாசலைக் கிட்டிச் சேராதே. சேர்ந்தால் 9
உன் ‡மேன்மையை அந்நியர்களுக்கும், உன்
ஆயுசின் காலத்தைக் கொடூரருக்கும் கொடுத்து

1 ரோ. 13. 7. கலா. 6. 10
2 லேவி. 19. 13
3 25. 8. ரோ. 12. 18
4 சங். 25. 14
* தயவு.
5 யோபு 8. 6, 7. சக. 5. 4
6 யாக். 4. 6. 1 பே. 5. 5
7 தானி. 12. 3
8 உபா. 32. 2
9 1 நாளா. 29. 1
10 1 நாளா. 28. 9. எபே. 6. 4
11 2 தெச. 2. 1
12 மத். 13. 44. லூக். 10. 42
13 1 சாமு. 2. 30
14 சங். 1. 1
15 ஏசா. 57. 20
16 சங். 84. 7. மத். 5. 14, 45. பிலி. 2. 14, 15
17 யோ. 12. 35
† உபா. 4. 9. மத். 15. 19
18 உபா. 28. 14. ரோ. 12. 9
19 மல். 2. 7
20 6. 24
21 சங். 55. 21. பிர. 7. 26
22 7. 27
‡ யௌவனத்தை.

10 விடுவாய். அந்நியர் உன் *செல்வத்தினால்
திருப்தியடைவார்கள்; உன் பிரயாசத்தின்
பலன் புறத்தியாருடைய வீட்டில் சேரும்.
11 முடிவிலே உன் மாம்சமும் உன் சரீரமும்
12 உருவழியும்போது நீ துக்கித்து: ஐயோ,
போதகத்தை நான் வெறுத்தேனே, [1]கடிந்து
கொள்ளுதலை என் மனம் அலட்சியம் பண்
13 ணினதே! என் போதகரின் சொல்லை நான்
கேளாமலும், எனக்கு உபதேசம் பண்ணின
வர்களுக்கு என் செவியைச் சாயாமலும் போ
14 னேனே! சபைக்குள்ளும் சங்கத்துக்குள்ளும்
கொஞ்சங்குறைய எல்லாத் தீமைக்கு முள்ளா
னேனே! என்று முறையிடுவாய்.
15 உன் கிணற்றிலுள்ள தண்ணீரையும், [2]உன்
துரவில் ஊறுகிற ஜலத்தையும் பானம்
16 பண்ணு. உன் ஊற்றுகள் வெளியிலும் உன்
17 வாய்க்கால்கள் வீதிகளிலும் பாய்வதாக. அவை
கள் அந்நியருக்கும் உரியவைகளாயிராமல்,
18 உனக்கே உரியவைகளாயிருப்பதாக. உன்
ஊற்றுக்கண் ஆசீர்வதிக்கப்படுவதாக; [3]உன்
இளவயதின் மனைவியோடே மகிழ்ந்திரு.
19 அவளே நேசிக்கப்படத்தக்க பெண்மானும்,
[4]அழகான வரையாடும்போ லிருப்பாளாக;
அவளுடைய ஸ்தனங்களே எப்பொழுதும்
உன்னைத் திருப்தி செய்வதாக; அவளுடைய
நேசத்தால் நீ எப்பொழுதும் மயங்கியிருப்பா
20 யாக. என் மகனே, நீ பரஸ்திரீயின்மேல்
மயங்கித் திரிந்து, அந்நிய ஸ்திரீயின் மார்பைத்
21 தழுவவேண்டிய தென்ன? மனுஷனுடைய
வழிகள் **கர்த்தரின்** கண்களுக்கு முன்பாக
இருக்கிறது; [5]அவனுடைய வழிகளெல்லா
22 வற்றையும் அவர் சீர்தூக்கிப் பார்க்கிறார். துன்
மார்க்கனை அவனுடைய அக்கிரமங்களே பிடி
த்துக்கொள்ளும்; தன் பாவக்கயிறுகளால் கட்
23 டப்படுவான். அவன் புத்தியைக் கேளாததி
னால் மடிந்து, [6]தன் மதிகேட்டின் மிகுதியி
னால் மயங்கிப்போவான்.

**6** என் மகனே, நீ உன் சிநேகிதனுக்காகப்
பிணைப்பட்டு, [7]அந்நியனுக்குக் கையடித்துக்
2 கொடுத்தாயானால், நீ உன் வாய் மொழிகளால்
சிக்குண்டாய், உன் வாயின் வார்த்தைகளால்
3 பிடிபட்டாய். இப்பொழுது என் மகனே,
உன் சிநேகிதனுடைய கையில் நீ அகப்பட்
டுக்கொண்டபடியால், நீ உன்னைத் தப்புவித்
4 துக்கொள்ள ஒன்று செய். உன் கண்ணுக்கு
நித்திரையும், உன் கண்ணிமைக்குத் தூக்க
மும் வரவிடாமல், உன் சிநேகிதனிடத்தில்
போய், உன்னைத் தாழ்த்தி, அவனை வருந்திக்
5 கேட்டுக்கொள். வெளிமான் வேட்டைக்கா
ரன் கைக்கும், குருவி வேடன் கைக்கும்
தப்புவதுபோல, நீ உன்னைத் தப்புவித்துக்
கொள்.
6 சோம்பேறியே, [8]நீ எறும்பினிடத்தில்
போய், அதின் வழிகளைப் பார்த்து, ஞானத்
7 தைக் கற்றுக்கொள். அதற்குப் பிரபுவும்,
தலைவனும், அதிகாரியும் இல்லாதிருந்தும்,
8 கோடைகாலத்தில் தனக்கு ஆகாரத்தைச் சம்

* பெலத்தினால்.
[1] சகரி. 7. 11-14
[2] 1 கொ. 7. 2
[3] மல். 2. 14
[4] உன்னத. 2. 9: 7. 3-8
[5] 2 நாளா. 16. 9. யோபு 31. 4. எரே. 16. 17: 32. 19. ஓசி. 7. 2. எபி. 4. 13
[6] யோபு 36. 12
[7] 11. 15: 17. 18: 22. 26
[8] யோபு 12. 7
[9] 24. 33, 34
[10] யோபு 15. 12
[11] ஏசா. 57. 20. ரோ. 16. 17
[12] 2 நாளா. 36. 16. எரே. 19. 11
[13] 2 இரா. 24. 3, 4. ஏசா. 1. 15. வெளி. 22. 15
[14] ஏசா. 59. 7. மீகா. 2. 1
[15] 19. 9. 3 யோ. 9, 10. லூக்.
[16] எபே. 6. 1
[17] உபா. 11. 18-21
[18] 119. 105
[19] மத். 5. 28
[20] 29. 3. ஆதி. 39. 14. ஓ. எசே. 13. 18
[21] யாத். 22. 1, 4

பாதித்து, அறுப்புக்காலத்தில் தனக்குத் தானி
யத்தைச் சேர்த்துவைக்கும். சோம்பேறியே, 9
நீ எவ்வளவுநேரம் படுத்திருப்பாய்? எப்பொ
ழுது உன் தூக்கத்தைவிட்டு எழுந்திருப்பாய்?
இன்னுங் கொஞ்சம் தூங்கட்டும், [9]இன்னுங் 10
கொஞ்சம் உறங்கட்டும், இன்னுங் கொஞ்சம்
கைமுடக்கிக்கொண்டு நித்திரை செய்யட்டும்
என்பாயோ? உன் தரித்திரம் வழிப்போக் 11
கனைப்போலவும், உன் வறுமை ஆயுதமணிந்த
வனைப்போலவும் வரும்.
பேலியாளின் மனுஷனாகிய ஒரு துன் 12
மார்க்கன் ஆகடியம் பேசித் திரிகிறான். அவன் 13
தன் கண்களால் சைகை காட்டி, [10]தன் கால்
களால் பேசி, தன் விரல்களால் போதனை
செய்கிறான். அவன் இருதயத்திலே திரியா 14
வரமுண்டு; இடைவிடாமல் பொல்லாப்பைப்
பிணைத்து, [11]வழக்குகளை உண்டுபண்ணுகி
றான். ஆகையால் சடிதியில் அவனுக்கு ஆப 15
த்து வரும்; [12]சகாயமின்றிச் சடிதியில் நாச
மடைவான்.
ஆறு காரியங்களைக் **கர்த்தர்** வெறுக்கிறார், 16
ஏழும் அவருக்கு அருவருப்பானவைகள்.
அவையாவன: மேட்டிமையான கண், [13]பொய் 17
நாவு, குற்றமற்றவர்களுடைய ரத்தம் சிந்துங்
கை, துராலோசனையைப் பிணைக்கும் இருத 18
யம், [14]தீங்குசெய்வதற்கு விரைந்தோடுங்கால்,
அபத்தம் பேசும் பொய்ச்சாட்சி, [15]சகோதர 19
ருக்குள்ளே விரோதத்தை உண்டுபண்ணுதல்
ஆகிய இவைகளே.
என் மகனே, உன் தகப்பன் கற்பனையைக் 20
[16]காத்துக்கொள்; உன் தாயின் போதகத்தைத்
தள்ளாதே. அவைகளை எப்பொழுதும் உன் 21
இருதயத்திலே அணிந்து, அவைகளை உன்
கழுத்திலே கட்டிக்கொள். நீ நடக்கும்போது 22
அது உனக்கு வழிகாட்டும்; [17]நீ படுக்கும்
போது அது உன்னைக் காப்பாற்றும்; நீ விழிக்
கும்போது அது உன்னோடே சம்பாஷிக்கும்.
கட்டளையே விளக்கு, [18]வேதமே வெளிச் 23
சம், போதக சிட்சையே ஜீவவழி. அது உன் 24
னைத் துன்மார்க்க ஸ்திரீக்கும், இச்சகம்பேசும்
நாவையுடையபரஸ்திரீக்கும்விலக்கிக்காக்கும்.
உன் இருதயத்திலே அவள் அழகை [19]இச்சி 25
யாதே; அவள் தன் கண்ணிமைகளினால் உன்
னைப் பிடிக்கவிடாதே. வேசியினிமித்தம் ஒரு 26
அப்பத்துணிக்கையையும் இரக்கவேண்டியதா
கும்; [20]விபசாரியானவள் அருமையான உயிரை
வேட்டையாடுகிறாள். தன் வஸ்திரம் வேகா 27
மல் மடியிலே எவனாவது நெருப்பை வைத்
துக்கொள்ளக்கூடுமோ? தன் கால் சுடாமல் 28
எவனாவது தழலின்மேல் நடக்கக்கூடுமோ?
பிறனுடைய மனைவியிடத்தில் பிரவேசிப்ப 29
வனும், அப்படியே அவளைத் தொடுகிற எவ
னும், ஆக்கினைக்குத் தப்பான். திருடன் தன் 30
பசியை ஆற்றத் திருடினால் ஜனங்கள் அவனை
இகழமாட்டார்கள்; அவன் கண்டுபிடிக்கப் 31
பட்டால், ஏழுமடங்கு கொடுத்துத் தீரவேண்
டும்; [21]தன் வீட்டிலுள்ள பொருள்களையெல்

32 லாம் கொடுக்கவேண்டியதாகும். ஸ்திரீ
யுடனே விபசாரம்பண்ணுகிறவன் மதிகெட்
டவன்; [1]அப்படிச் செய்கிறவன் தன் ஆத்து
33 மாவைக் கெடுத்துப்போடுகிறான். வாதை
யையும் இலச்சையையும் அடைவான்; அவன்
34 நிந்தை ஒழியாது. ஸ்திரீயைப்பற்றிய *எரிச்
சல் புருஷனுக்கு மூர்க்கத்தை உண்டுபண்ணு
ம்; [2]அவன் பழிவாங்கும் நாளில் தப்பவிடான்.
35 அவன் எந்த ஈட்டையும் பாரான்; அநேகம்
†வெகுமதிகளைக் கொடுத்தாலும் அமர்ந்திருக்
கமாட்டான்.

7 என் மகனே, நீ என் வார்த்தைகளைக் காத்
து, என் கட்டளைகளை உன்னிடத்தில் பத்தி
2 ரப்படுத்து. என் கட்டளைகளையும் என் போ
தகத்தையும் உன் கண்மணியைப்போல் காத்
துக்கொள், [3]அப்பொழுது பிழைப்பாய்.
3 அவைகளை உன் விரல்களில் கட்டி, [4]அவை
களை உன் இருதய பலகையில் எழுதிக்கொள்.
4 இச்சகவார்த்தைகளைப் பேசும் அந்நிய பெண்
ணாகிய பரஸ்திரீக்கு உன்னை விலக்கிக் காப்ப
5 தற்காக, ஞானத்தை நோக்கி, நீ என் சகோ
தரி என்றும், புத்தியைப்பார்த்து, நீ என் இன
த்தான் என்றும் சொல்வாயாக.
6 நான் என் வீட்டின் ஜன்னலருகே நின்று,
7 பலகணிவழியாய்ப் பார்த்தபோது, பேதை
யர்களாகிய வாலிபருக்குள்ளே [5]ஒரு புத்தியீன
வாலிபனைக் கண்டு அவனைக் கவனித்தேன்.
8 அவன் மாலைமயங்கும் அஸ்தமன நேரத்திலும்,
9 இரவின் இருண்ட அந்தகாரத்திலும், அவள்
இருக்கும் சந்துக்கடுத்த தெருவில் சென்று,
[6]அவள் வீட்டு வழியாய் நடந்துபோனான்.
10 அப்பொழுது இதோ, வேசியின் ஆடையாப
ரணந்தரித்த தந்திரமனமுள்ள ஒரு ஸ்திரீ அவ
11 னுக்கு எதிர்ப்பட்டாள். அவள் வாயாடியும்
அடங்காதவளுமானவள்; [7]அவள் கால்கள்
12 வீட்டிலே தரிக்கிறதில்லை. சிலவேளை வெளி
யிலிருப்பாள், சிலவேளை வீதியிலிருப்பாள்,
13 சந்துகள்தோறும் பதிவிருப்பாள். அவள் அவ
னைப் பிடித்து முத்தஞ்செய்து, முகம் நாணாமல்
14 அவனைப் பார்த்து: சமாதான பலிகள் என்
மேல் சுமந்திருந்தது, இன்றைக்குத்தான் என்
15 பொருத்தனைகளை நிறைவேற்றினேன். ஆத
லால், நான் உன்னைச் சந்திக்கப் புறப்பட்டு,
உன் முகத்தை ஆவலோடு தேடினேன்; இப்
16 பொழுது உன்னைக் கண்டுபிடித்தேன். என்
மஞ்சத்தை இரத்தின கம்பளங்களாலும், எகி
ப்து தேசத்து விசித்திரமான [8]மெல்லிய வஸ்தி
17 ரங்களாலும் சிங்காரித்தேன். என் படுக்கை
யை வெள்ளைப்போளத்தாலும் சந்தனத்தா
லும் இலவங்கப்பட்டையாலும் வாசனை கட்
18 டினேன். வா, விடியற்காலம்வரைக்கும் சம்
போகமாயிருப்போம், இன்பங்களினால் பூரிப்
19 போம். புருஷன் வீட்டிலே இல்லை, தூரப்
20 பிரயாணம் போனான். பணப்பையைத் தன்
கையிலே கொண்டுபோனான், குறிக்கப்பட்ட
நாளிலே வீட்டுக்கு வருவான் என்று சொல்லி,
21 தன் மிகுதியான இனிய சொற்களால் [9]அவ
னை வசப்படுத்தி, தன் உதடுகளின் மதுரவாக்
கினால் [10]அவனை இணங்கப்பண்ணினாள். உட 22
னே அவன் அவள் பின்னே சென்றான்; ஒரு
மாடு அடிக்கப்படும்படி செல்வதுபோலும்,
ஒரு மூடன் விலங்கிடப்பட்டு தண்டனைக்குப்
போவதுபோலும், ஒரு குருவி தன் பிரா 23
ணனை வாங்கும் கண்ணியை அறியாமல் [11]அ
தில் விழத் தீவிரிக்கிறதுபோலும், அவளுக்குப்
பின்னே போனான்; அம்பு அவன் ஈரலைப்
பிளந்தது.
ஆதலால் பிள்ளைகளே, எனக்குச் செவி 24
கொடுங்கள்; என் வாயின் வார்த்தைகளைக்
கவனியுங்கள். உன் இருதயம் அவள் வழி 25
யிலே சாயவேண்டாம்; அவள் பாதையிலே
மயங்கித் திரியாதே. அவள் அநேகரைக் கா 26
யப்படுத்தி, விழப்பண்ணினாள்; [12]பலவான்
கள் அநேகரைக் கொலைசெய்தாள். அவள் 27
வீடு பாதாளத்துக்குப் போம் வழி; [13]அது மர
ண அறைகளுக்குக் கொண்டுபோய்விடும்.
ஞானம் கூப்பிடுகிறதில்லையோ? [14]புத்தி 8
சத்தமிடுகிறதில்லையோ? அது வழியருகே 2
யுள்ள மேடைகளிலும், நாற்சந்திகளிலும் நிற்
கிறது. அது நகர வாசல்களின் ஓரத்திலும், 3
பட்டணத்தின் முகப்பிலும், நடை கூடங்களி
லும் நின்று சத்தமிட்டு: மனுஷரே, உங்களை 4
நோக்கிக் கூப்பிடுகிறேன்; என் சத்தம் மனு
புத்திரருக்குத் தொனிக்கும். பேதைகளே, 5
விவேகம் அடையுங்கள்; [15]மூடர்களே, புத்தி
யுள்ள சிந்தையாயிருங்கள். கேளுங்கள், மே 6
ம்பாடான காரியங்களைப் பேசுவேன்; [16]என்
உதடுகள் உத்தம காரியங்களை வசனிக்கும்.
என் வாய் சத்தியத்தை விளம்பும், [17]ஆகாமி 7
யம் என் உதடுகளுக்கு அருவருப்பானது.
என் வாயின் வாக்குகளெல்லாம் நீதியானவை 8
கள்; [18]அவைகளில் புரட்டும் விபரீதமும் இல்
லை. அவைகளெல்லாம் புத்தியுள்ளவனுக்குத் 9
தெளிவும், [19]ஞானத்தைப் பெற்றவர்களுக்கு
யதார்த்தமுமாயிருக்கும். வெள்ளியைப்பார்க் 10
கிலும் என் புத்திமதியையும், [20]பசும்பொன்னை
ப்பார்க்கிலும் ஞானத்தையும் அங்கீகரித்துக்
கொள்ளுங்கள். முத்துக்களைப்பார்க்கிலும் 11
ஞானமே நல்லது; [21]இச்சிக்கப்படத்தக்கவை
களெல்லாம் அதற்கு நிகரல்ல.
ஞானமாகிய நான் விவேகத்தோடே வாசம் 12
பண்ணி, நல்யுக்தியான அறிவுகளைக் கண்ட
டைகிறேன். தீமையை வெறுப்பதே கர்த்த 13
ருக்குப் பயப்படும் பயம்; [22]பெருமையையும்,
அகந்தையையும், தீய வழியையும், புரட்டு வா
யையும் நான் வெறுக்கிறேன். ஆலோசனை 14
யும் மெய்ஞ்ஞானமும் என்னுடையவைகள்;
நானே புத்தி, [23]வல்லமை என்னுடையது.
என்னாலே ராஜாக்கள் அரசாளுகிறார்கள், 15
[24]பிரபுக்கள் நீதி செலுத்துகிறார்கள். என்னா 16
லே அதிகாரிகளும், பிரபுக்களும், பூமியிலு
ள்ள சகல நியாயாதிபதிகளும் ஆளுகை செய்
துவருகிறார்கள். என்னைச் சிநேகிக்கிறவர் 17
களை நான் சிநேகிக்கிறேன்; [25]அதிகாலையில்

[1] எபி. 13. 4
* காமவியுறவு.
[2] உன்ன. 8. 6
† கன்கொடைகளை.
[3] லேவி. 18. 5 உபா. 32. 10. ஏசா. 55. 3
[4] 6. 21. உபா. 6. 8
[5] 6. 32
[6] 5. 9
[7] 9. 13. எரே. 3. 3. 1 திமோ. 5. 13. தீத். 2. 5
[8] ஏசா. 19. 9
[9] 5. 3
[10] சங். 12. 2
[11] பிர. 9. 12
[12] நியா. 16. 19–30. எசே. 18. 26
[13] 5. 5
[14] 1. 20; 9. 3. யூ
[15] ஏசா. 55. 1–3. 1 கொ. 1. 27; 6. 9–11
[16] 22. 20. சங். 19. 7–11
[17] யோவா. 17. 17
[18] சங். 12. 6
[19] மீகா. 2. 7
[20] 23. 23
[21] 3. 14, 15; 16. 16. யோபு 28. 15. பிலி. 3. 8, 9
[22] 16. 6. சங். 97. 10. ரோ. 12. 9. 1 தெச. 5. 22. 2 தீமோ. 2. 19
[23] பிர. 7. 19
[24] தானி. 2. 21. ரோ. 13. 1
[25] 1 சாமு. 2. 30. ஏசா. 45. 19. யோவா. 14. 21

என்னைத் தேடுகிறவர்கள் என்னைக் *கண்ட
18 டைவார்கள். ஐசுவரியமும், [1]கனமும், நிலை
யான பொருளும், நீதியும் என்னிடத்தில்
19 உண்டு. பொன்னையும் தங்கத்தையும்பார்க்கி
லும் என் பலன் நல்லது; சுத்த வெள்ளியைப்
20 பார்க்கிலும் என் வருமானம் நல்லது. என்
னைச் சிநேகிக்கிறவர்கள் மெய்ப்பொருளைச்
சுதந்தரிக்கும்படிக்கும், அவர்களுடைய களஞ்
21 சியங்களை நான் நிரப்பும்படிக்கும், அவர்
களை நீதியின் வழியிலும், நியாயபாதைகளுக்
குள்ளும் நடத்துகிறேன்.
22 கர்த்தர் தமது கிரியைகளுக்குமுன் *பூர்வ
முதல் என்னைத் தமது வழியின் ஆதியாகக்
23 கொண்டிருந்தார். பூமி உண்டாகு முன்னும்,
ஆதிமுதற்கொண்டும் அநாதியாய் நான் [2]அபி
24 ஷேகம் பண்ணப்பட்டேன். ஆழங்களும்,
ஜலம் புரண்டுவரும் ஊற்றுகளும் உண்டாகு
25 முன்னே நான் ஜநிப்பிக்கப்பட்டேன். மலை
கள் நிலைபெறுவதற்கு முன்னும், [3]குன்றுகள்
26 உண்டாவதற்கு முன்னும், அவர் பூமியை
யும் அதின் வெளிகளையும், பூமியிலுள்ள மண்
ணின் திரள்களையும் உண்டாக்கு முன்னும்
27 நான் ஜநிப்பிக்கப்பட்டேன். அவர் வானங்
களைப் படைக்கையில் [4]நான் அங்கே இருந்
தேன்; அவர் சமுத்திர விலாசத்தை வட்ட
28 ணிக்கையிலும், உயரத்தில் மேகங்களை ஸ்தா
பித்து, சமுத்திரத்தின் ஊற்றுகளை அடைத்து
29 வைக்கையிலும், சமுத்திர ஜலம் தன் கரை
யைவிட்டு மீறாதபடிக்கு அதற்கு எல்லையைக்
கட்டளையிட்டு, [5]பூமியின் அஸ்திபாரங்களை
30 நிலைப்படுத்துகையிலும், நான் அவர் அருகே
செல்லப்பிள்ளையா யிருந்தேன்; [6]நித்தம் அவ
ருடைய மனமகிழ்ச்சியாயிருந்து, எப்பொழு
31 தும் அவர் சமுகத்தில் களிகூர்ந்தேன். அவரு
டைய பூவுலகத்தில் சந்தோஷப்பட்டு, [7]மனு
மக்களுடனே மகிழ்ந்துகொண்டிருந்தேன்.
32 ஆதலால் பிள்ளைகளே, எனக்குச் செவி
கொடுங்கள்; என் வழிகளைக் காத்து நடக்கிற
33 வர்கள் பாக்கியவான்கள். நீங்கள் புத்தியைக்
கேட்டு, ஞானமடையுங்கள்; அதை விட்டு
34 விலகாதிருங்கள். என் வாசற்படியில் நித்தம்
விழித்திருந்து, என் கதவுநிலையருகே காத்தி
ருந்து, [8]எனக்குச் செவிகொடுக்கிற மனுஷன்
35 பாக்கியவான். என்னைக் கண்டடைகிறவன்
ஜீவனைக் கண்டடைகிறான்; [9]கர்த்தரிடத்தில்
36 தயவையும் பெறுவான். எனக்கு விரோதமா
கப் பாவஞ்செய்கிறவனோ, தன் ஆத்துமா
வைச் சேதப்படுத்துகிறான்; என்னை வெறுக்
கிறவர்கள் யாவரும் மரணத்தை விரும்புகிற
வர்கள் என்று சொல்லுகிறது.

9 ஞானம் தன் வீட்டைக் கட்டி, [10]தன்
2 ஏழு தூண்களையும் சித்திரந்தீர்த்து, தன் கொ
ழுத்த ஜந்துக்களை [11]அடித்து, திராட்சரசத்தை
வார்த்துவைத்து, தன் போஜனபந்தியை ஆயத்
3 தப்படுத்தி, தன் பணிவிடைக்காரிகளை அனு
ப்பி, [12]பட்டணத்தின் உயர்ந்த மேடைகளின்
4 மேல் நின்று கூப்பிட்டு, புத்தியீனனை நோ
க்கி: எவன் பேதையோ அவன் இவ்விடத்
தில் வரக்கடவன். நீங்கள் வந்து என் அப் 5
பத்தைப் புசித்து [13]நான் வார்த்த திராட்சரசத்
தைப் பானம்பண்ணுங்கள். பேதைமையை 6
விட்டு விலகுங்கள், அப்பொழுது பிழைத்
திருப்பீர்கள்; புத்தியின் வழியிலே நடவுங்
கள் என்று விளம்புகிறது.
பரியாசக்காரனைக் கண்டிக்கிறவன் இலச் 7
சையடைகிறான்; துன்மார்க்கனைக் கண்டிக்
கிறவன் தன்னைக் கறைப்படுத்திக்கொள்ளுகி
றான். பரியாசக்காரனைக் கடிந்துகொள்ளா 8
தே, [14]அவன் உன்னைப் பகைப்பான்; ஞான
முள்ளவனைக் கடிந்துகொள், அவன் உன்னை
நேசிப்பான். ஞானமுள்ளவனுக்குப் போத 9
கம்பண்ணு, [15]அவன் ஞானத்தில் தேறுவான்;
நீதிமானுக்கு உபதேசம்பண்ணு, அவன் அறி
வில் விருத்தியடைவான். கர்த்தருக்குப் பயப் 10
படுதலே [16]ஞானத்தின் ஆரம்பம்; பரிசுத்தரின்
அறிவே அறிவு. என்னாலே உன் நாட்கள் 11
பெருகும்; [17]உன் ஆயுசின் வருஷங்கள் விருத்
தியாகும். நீ ஞானியானால் உனக்கென்று 12
ஞானியாவாய்; [18]நீ பரியாசக்காரனானால் நீயே
அதின் பயனை அநுபவிப்பாய் என்று சொல்
லுகிறது.
மதியற்ற ஸ்திரீ வாயாடியும், [19]ஒன்றுமறி 13
யாத நிர்மூடமுமாயிருக்கிறாள். அவள் தன் 14
வீட்டுவாசற்படியிலும் பட்டணத்தின் மேடை
களிலும் ஆசனம்போட்டு உட்கார்ந்து, தங் 15
கள் வழிகளை நோக்கி நேரே போகும் வழிப்
போக்கரைப் பார்த்து: எவன் பேதையோ 16
அவன் இவ்விடத்தில் வரக்கடவன் என்றும்,
மதியீனனை நோக்கி: திருட்டுத்தண்ணீர் தித் 17
திக்கும், அந்தரங்கத்தில் புசிக்கும் அப்பம்
இன்பமாயிருக்கும் என்றும் சொல்லிக் கூப்
பிடுகிறாள். ஆயினும் மரித்தவர்கள் அவ்வி 18
டத்தில் உண்டென்றும், [20]அவளுடைய விருந்
தாளிகள் நரகபாதாளங்களில் கிடக்கிறார்களெ
ன்றும் அவன் அறியான்.

சாலொமோனின் நீதிமொழிகள்: ஞான 10
முள்ள மகன் தகப்பனைச் சந்தோஷப்படுத்து
கிறான்; [21]மூடத்தனமுள்ளவனோ தாய்க்குச்
சஞ்சலமாயிருக்கிறான்.
அநியாயத்தின் திரவியங்கள் ஒன்றுக்கும் 2
உதவாது; [22]நீதியோ மரணத்துக்குத் தப்பு
விக்கும்.
கர்த்தர் நீதிமான்களைப் பசியினால் வருந்த 3
விடார்; [23]துன்மார்க்கருடைய பொருளையோ
அகற்றிவிடுகிறார்.
சோம்பற்கையால் வேலை செய்கிறவன் 4
ஏழையாவான்; [24]சுறுசுறுப்புள்ளவன் கையோ
செல்வத்தை உண்டாக்கும்.
கோடைகாலத்தில் சேர்க்கிறவன் புத்தி 5
யுள்ள மகன்; அறுப்புக்காலத்தில் தூங்குகிற
வனோ இலச்சையை உண்டாக்குகிற மகன்.
நீதிமானுடைய சிரசின்மேல் ஆசீர்வாதங் 6
கள் தங்கும்; கொடுமையோ [25]துன்மார்க்கனு
டைய வாயை அடைக்கும்.

[1] மத். 6. 33
* ஆதியிலே. யோ. 1. 1. ழ
[2] சங். 2. 6
[3] ஏசா. 53. 8
[4] எபி. 1. 2
[5] யோபு 38. 10, 11. எரே. 5. 22
[6] மத். 3. 17. கொலோ. 1. 13
[7] சங். 16. 3
[8] மத். 7. 24. லூ. 11. 28
[9] 12. 2
[10] மத். 16. 18. எபே. 2. 20–22. 1 பே. 2. 5
[11] மத். 22. 3. ழ
[12] கோ. 10. 15
[13] ஏசா. 55. 1. யோ. 6. 27
[14] மத். 7. 6
[15] 1, 5. மத். 13. 12
[16] 1. 7. யோபு 28. 28. சங். 111. 10
[17] 10. 27
[18] யோபு 35. 6, 7. எசே. 18. 20
[19] 7. 11
[20] 2. 18
[21] 15. 20
[22] தானி. 4. 27. லூ. 12. 19–21. பிலி. 3. 9
[23] சங். 37. 25
[24] 12. 24. 13. 4
[25] எஸ்தர் 7. 8

7 நீதிமானுடைய பேர் புகழ்பெற்று விளங்
கும்; [1]துன்மார்க்கனுடைய பேரோ அழிந்து
போகும்.
8 இருதயத்தில் ஞானமுள்ளவன் கட்டளை
களை ஏற்றுக்கொள்ளுகிறான்; அலப்புகிற மூட
னே விழுவான்.
9 உத்தமமாய் நடக்கிறவன் [2]பத்திரமாய் நடக்
கிறான்; கோணலான வழிகளில் நடக்கிறவ
னே கண்டுபிடிக்கப்படுவான்.
10 கண்சாடை காட்டுகிறவன் [3]நோவு உண்
டாக்குகிறான்; அலப்புகிற மூடன் விழுவான்.
11 நீதிமானுடைய வாய் [4]ஜீவஊற்று; கொடு
மையோ துன்மார்க்கனுடைய வாயை அடைக்
கும்.
12 பகை விரோதங்களை எழுப்பும்; அன்போ
[5]சகல பாவங்களையும் மூடும்.
13 புத்திமானுடைய உதடுகளில் விளங்குவது
ஞானம்; மதிகேடனுடைய முதுகுக்கு ஏற்
றது [6]பிரம்பு.
14 ஞானவான்கள் அறிவைச் சேர்த்துவைக்கி
றார்கள்; [7]மூடனுடைய வாய்க்குக் கேடு சமீ
பித்திருக்கிறது.
15 ஐசுவரியவானுடைய பொருள் அவனுக்கு
[8]அரணான பட்டணம்; ஏழைகளின் வறுமை
யோ அவர்களைக் கலங்கப்பண்ணும்.
16 நீதிமானுடைய பிரயாசம் ஜீவனையும், துன்
மார்க்கனுடைய விளைவோ பாவத்தையும் பிறப்
பிக்கும்.
17 புத்திமதிகளைக் காத்துக் கொள்ளுகிறவன்
[9]ஜீவவழியில் இருக்கிறான்; கண்டனையை
வெறுக்கிறவனோ மோசம்போகிறான்.
18 பகையை மறைக்கிறவன் பொய் உதடன்;
புறங்கூறுகிறவன் மதிகேடன்.
19 சொற்களின் மிகுதியில் [10]பாவமில்லாமற்
போகாது; தன் உதடுகளை அடக்குகிறவனே
புத்திமான்.
20 நீதிமானுடைய நாவு சுத்தவெள்ளி; துன்
மார்க்கனுடைய மனம் அற்பவிலையும்
பெறாது.
21 நீதிமானுடைய உதடுகள் அநேகரைப் போ
ஷிக்கும்; மூடரோ மதியீனத்தினால் மாளு
வார்கள்.
22 **கர்த்தரின்** ஆசீர்வாதமே ஐசுவரியத்தைத்
தரும்; [11]அதனோடே அவர் வேதனையைக்
கூட்டார்.
23 தீவினை செய்வது மூடனுக்கு விளையாட்
டு; புத்திமானுக்கோ ஞானம் உண்டு.
24 துன்மார்க்கன் பயப்படும் காரியம் அவ
னுக்கு வந்து நேரிடும்; நீதிமான் விரும்புகிற
காரியம் [12]அவனுக்குக் கொடுக்கப்படும்.
25 சுழல்காற்று கடந்துபோவதுபோல் துன்
மார்க்கன் கடந்துபோவான்; நீதிமானோ [13]நித்
திய அஸ்திபாரமுள்ளவன்.
26 பற்களுக்குக் காடியும், கண்களுக்குப் புகை
யும் எப்படியிருக்கிறதோ, அப்படியே சோம்
பேறியும்தன்னை அனுப்புகிறவர்களுக்கு இருக்
கிறான்.

[1] சங். 112. 6. பிர. 8. 10
[2] ஏசா. 33. 15, 16
[3] 6. 13
[4] சங். 37. 30
[5] 1 கொ. 13. 4-7. 1 பே. 4. 8
[6] 26. 3
[7] மத். 12. 35; 13. 52
[8] சங். 52. 7. பிர. 7. 12
[9] 2 பே. 1. 5-11
[10] பிர. 5. 2, 3. யாக். 3. 2
[11] ஆதி. 24. 35. சங். 37. 22
[12] சங். 145. 19. மத். 5. 6. யோ. 5. 14, 15
[13] மத். 7. 24, 25
[14] 9. 11. பிர. 7. 17
[15] யோபு 8. 13
[16] பிர. 12. 9-11. தீத். 2. 8
[17] உபா. 25. 13-16
[18] தானி. 4. 30, 31
[19] 18. 6
[20] எசே. 7. 19. செப். 1. 18
[21] ஆதி. 7. 1
[22] எஸ்தர் 8. 15
[23] 14. 34
[24] 1 இரா. 12. 1. ...

**கர்த்தருக்குப்** பயப்படுதல் ஆயுசுநாட்களைப் 27
பெருகப்பண்ணும்; [14]துன்மார்க்கருடைய வரு
ஷங்களோ குறுகிப்போம்.
நீதிமான்களின் நம்பிக்கை மகிழ்ச்சியாகும்; 28
துன்மார்க்கருடைய [15]அபேட்சையோ அழி
யும்.
**கர்த்தரின்** வழி உத்தமர்களுக்கு அரண், 29
அக்கிரமக்காரருக்கோ கலக்கம்.
நீதிமான் என்றும் அசைக்கப்படுவதில்லை; 30
துன்மார்க்கர் பூமியில் வசிப்பதில்லை.
நீதிமானுடைய வாய் ஞானத்தை வெளிப் 31
படுத்தும்; மாறுபாடுள்ள நாவோ அறுப்புண்டு
போம்.
நீதிமான்களுடைய உதடுகள் பிரியமான 32
வைகளைப்பேச அறியும், [16]துன்மார்க்கருடைய
வாயோ மாறுபாடுள்ளது.
கள்ளத்தராசு **கர்த்தருக்கு** அருவருப்பான **11**
து; [17]சுமுத்திரையான நிறைகல்லோ அவருக்
குப் பிரியம்.
அகந்தை வந்தால் [18]இலச்சையும் வரும்; 2
தாழ்ந்த சிந்தையுள்ளவர்களிடத்தில் ஞானம்
உண்டு.
செம்மையானவர்களுடைய உத்தமம் [19]அ 3
வர்களை நடத்தும்; துரோகிகளின் மாறுபா
டோ அவர்களைப் பாழாக்கும்.
கோபாக்கினை நாளில் [20]ஐசுவரியம் உத 4
வாது; [21]நீதியோ மரணத்துக்குத் தப்புவிக்கும்.
உத்தமனுடைய நீதி அவன் வழியைச் செம் 5
மைப்படுத்தும்; துன்மார்க்கனோ தன் துன்
மார்க்கத்தினால் விழுவான்.
செம்மையானவர்களுடைய நீதி அவர்களைத் 6
தப்புவிக்கும்; துரோகிகளோ தங்கள் தீவினை
யிலே பிடிபடுவார்கள்.
துன்மார்க்கன் மரிக்கும்போது அவன் நம் 7
பிக்கை அழியும்; அக்கிரமக்காரரின் அபேட்
சை கெட்டுப்போம்.
நீதிமான் இக்கட்டினின்று விடுவிக்கப்படு 8
வான்; அவன் இருந்த இடத்திலே துன்மார்க்
கன் வருவான்.
மாயக்காரன் தனக்கு அடுத்தவனை வாயினால் 9
கெடுக்கிறான்; நீதிமானோ அறிவினால் தப்பு
கிறான்.
நீதிமான்கள் நன்றாயிருந்தால் பட்டணம் 10
களிகூரும்; [22]துன்மார்க்கர் அழிந்தால் கெம்
பீரம் உண்டாகும்.
செம்மையானவர்களுடைய ஆசீர்வாதத்தி 11
னால் [23]பட்டணம் நிலைபெற்றோங்கும்; துன்
மார்க்கருடைய வாயினால் அது இடிந்துவிழும்.
மதிகெட்டவன் பிறனை அவமதிக்கிறான்; 12
புத்திமானோ தன் வாயை அடக்கிக்கொண்டி
ருக்கிறான்.
புறங்கூறித் திரிகிறவன் இரகசியத்தை வெ 13
ளிப்படுத்துகிறான்; ஆவியில் உண்மையுள்ள
வனோ காரியத்தை அடக்குகிறான்.
ஆலோசனையில்லாத இடத்தில் ஜனங்கள் 14
விழுந்துபோவார்கள்; [24]அநேக ஆலோசனைக்
காரர் உண்டானால் சுகம் உண்டாகும்.

15 அந்நியனுக்காகப் பிணைப்படுகிறவன் வெகு
பாடுபடுவான்; பிணைப்படுவதை வெறுப்பவன்
சுகமாயிருப்பான்.
16 நல்லொழுக்கமுள்ள ஸ்திரீ [1]மானத்தைக்
காப்பாள்; பராக்கிரமசாலிகள் ஐசுவரியத்
தைக் காப்பார்கள்.
17 தயையுள்ள மனுஷன் தன் ஆத்துமாவுக்கு
[2]நன்மை செய்துகொள்ளுகிறான்; கரோனோ
தன் உடலை அலைக்கழிக்கிறான்.
18 துன்மார்க்கன் விருதா வேலையைச் செய்கி
றான்; நீதியை விதைக்கிறவனோ [3]மெய்ப்பல
னைப் பெறுவான்.
19 நீதி ஜீவனுக்கு ஏதுவாகிறதுபோல், தீமை
யைப் பின்தொடருகிறவன் மரணத்துக்கு ஏது
வாகிறான்.
20 மாறுபாடுள்ள இருதயமுடையவர்கள் கர்த்
தருக்கு அருவருப்பானவர்கள்; உத்தம மார்க்
கத்தாரோ அவருக்குப் பிரியமானவர்கள்.
21 கையோடே கைகோத்தாலும், [4]துஷ்டன்
தண்டனைக்குத் தப்பான்; நீதிமான்களுடைய
சந்ததியோ விடுவிக்கப்படும்.
22 மதிகேடாய் நடக்கிற அழகுள்ள ஸ்திரீ,
பன்றியின் மூக்கிலுள்ள பொன் மூக்குத்திக்
குச் சமானம்.
23 நீதிமான்களுடைய ஆசை நன்மையே;
[5]துன்மார்க்கருடைய நம்பிக்கையோ கோபாக்
கினையாய் முடியும்.
24 வாரியிறைத்தும் [6]விருத்தி யடைவாரும்
உண்டு; அதிகமாய்ப் பிசினித்தனம்பண்ணி
யும் வறுமையடைவாரும் உண்டு.
25 உதாரகுணமுள்ள ஆத்துமா [7]செழிக்கும்;
எவன் தண்ணீர் பாய்ச்சுகிறானோ அவனுக்
குத் தண்ணீர் பாய்ச்சப்படும்.
26 தானியத்தைக் கட்டிவைக்கிறவனை ஜனங்
கள் சபிப்பார்கள்; [8]விற்கிறவனுடைய தலை
யின்மேல் ஆசீர்வாதம் தங்கும்.
27 நன்மையை ஜாக்கிரதையுடன் தேடுகிற
வன் தயையைப் பெறுவான்; [9]தீமையைத்
தேடுகிறவனுக்கோ தீமையே வரும்.
28 தன் ஐசுவரியத்தை நம்புகிறவன் [10]விழு
வான்; நீதிமான்களோ துளிரைப்போலே
தழைப்பார்கள்.
29 தன் வீட்டைக் கலைக்கிறவன் காற்றைச்
[11]சுதந்தரிப்பான்; மூடன் ஞானமுள்ளவனு
க்கு அடிமையாவான்.
30 நீதிமானுடைய பலன் ஜீவவிருட்சம்; [12]ஆத்
துமாக்களை ஆதாயப்படுத்திக்கொள்ளுகிறவன்
ஞானமுள்ளவன்.
31 இதோ, நீதிமானுக்குப் பூமியில் சரிக்கட்
டப்படுமே; [13]துன்மார்க்கனுக்கும் பாவிக்கும்
எத்தனை அதிகம்.

## 12

புத்திமதிகளை விரும்புகிறவன் அறிவை
விரும்புகிறான்; கடிந்துகொள்ளுதலை வெறுக்
கிறவனோ மிருககுணமுள்ளவன்.
2 நல்லவன் கர்த்தரிடத்தில் தயை பெறுவா
ன்; துர்ச்சிந்தனைகளுள்ள மனுஷனை அவர்
ஆக்கினைக்குட்படுத்துவார்.

துன்மார்க்கத்தினால் [14]மனுஷன் நிலைவரப் 3
படான்; நீதிமான்களுடைய வேரோ அசை
யாது.
குணசாலியான ஸ்திரீ [15]தன் புருஷனுக் 4
குக் கிரீடமாயிருக்கிறாள்; இலச்சை உண்டு
பண்ணுகிறவளோ அவனுக்கு எலும்புருக்கி
யாயிருக்கிறாள்.
நீதிமான்களுடைய நினைவுகள் நியாயமா 5
னவைகள்; துன்மார்க்கருடைய ஆலோசனை
களோ சூதானவைகள்.
துன்மார்க்கரின் வார்த்தைகள் ரத்தஞ் சிந் 6
தப் பதிவிருப்பதைப் பற்றியது; உத்தமர்களு
டைய வாயோ அவர்களைத் தப்புவிக்கும்.
துன்மார்க்கர் [16]கவிழ்க்கப்பட்டு ஒழிந்து 7
போவார்கள்; நீதிமான்களுடைய வீடோ நிலை
நிற்கும்.
தன் புத்திக்குத்தக்கதாக மனுஷன் புகழப் 8
படுவான்; மாறுபாடான [17]இருதயமுள்ளவ
னோ இகழப்படுவான்.
ஆகாரமில்லாதவனாயிருந்தும், தன்னைத்தா 9
ன் கனம்பண்ணிக்கொள்ளுகிறவனைப்பார்க்கி
லும், கனமற்றவனாயிருந்தும் பணிவிடைக்கா
ரனுள்ளவன் உத்தமன்.
நீதிமான் தன் மிருக ஜீவனைக் [18]காப்பாற் 10
றுகிறான்; துன்மார்க்கருடைய இரக்கமும்
கொடுமையே.
தன் நிலத்தைப் பயிரிடுகிறவன் ஆகாரத் 11
தினால் திருப்தியடைவான்; [19]வீணரைப் பின்
பற்றுகிறவனோ மதியற்றவன்.
துன்மார்க்கன் துஷ்டருடைய *வலையை 12
விரும்புகிறான்; நீதிமானுடைய வேர் கனி
கொடுக்கும்.
துன்மார்க்கனுக்கு அவன் உதடுகளின் து 13
ரோகமே கண்ணி; [20]நீதிமானோ நெருக்கத்தி
னின்று நீங்குவான்.
அவனவன் தன் தன் வாயின் பலனால் 14
திருப்தியடைவான்; அவனவன் கைக்கிரியை
யின் பலனுக்குத் தக்கதாக [21]அவனவனுக்குக்
கிடைக்கும்.
மதியீனனுடைய வழி அவன் பார்வைக் 15
குச் செம்மையாயிருக்கும்; [22]ஆலோசனைக்குச்
செவிகொடுக்கிறவனோ ஞானமுள்ளவன்.
மூடனுடைய கோபம் சீக்கிரத்தில் வெளிப் 16
படும்; இலச்சையை மூடுகிறவனோ விவேகி.
சத்தியவாசகன் நீதியை வெளிப்படுத்து 17
வான்; பொய்ச்சாட்சிக்காரனோ வஞ்சகத்தை
வெளிப்படுத்துவான்.
பட்டயக் குத்துகள்போல் பேசுகிறவர் 18
களும் உண்டு; [23]ஞானமுள்ளவர்களுடைய
நாவோ ஒளஷதம்.
சத்திய உதடு என்றும் நிலைத்திருக்கும்; 19
பொய் நாவோ ஒரு நிமிஷமாத்திரம் இரு
க்கும்.
தீங்கைப் பிணைக்கிறவர்களின் இருதயத் 20
தில் இருக்கிறது கபடம்; சமாதானம்பண்ணு
கிற ஆலோசனைக்காரருக்கு உள்ளது சந்
தோஷம்.

1 31. 30
2 மத். 5. 7; 25. 34. ஞ
3 ஓசி. 10. 12 கலா. 6. 8, 9. யாக். 3. 18
4 எசா. 27. 4
5 ரோ. 2. 8, 9. எபி. 10. 27
6 உபா. 15. 10. ஆகா. 1. 6, 9-11. 2 கொ. 9. 6
7 எசா. 32. 8
8 யோபு 29. 13. ஆமோ. 8. 4-6
9 எஸ்தர். 7. 10
10 மாற். 10. 24. 1 தீமோ. 6. 9, 17
11 பிர. 5. 16
12 தானி. 12. 6. மத். 4. 19. 1 கொ. 9. 19. ஞ. யாக். 5. 20
13 எரே. 25. 29. 1 பே. 4. 17, 18
14 பிர. 8. 8
15 1 சாமு. 25. 33. 1 கொ. 11. 7
16 மத். 7. 24-27
17 1 சாமு. 25. 17
18 உபா. 25. 4
19 சங். 128. 2. யோசு 2. 8
* சம்பாத்தியத்தை. ஆப. 1. 15, 16
20 2 பே. 2. 9
21 எசா. 3. 10, 11
22 3. 7
23 சங். 57. 4

21 நீதிமானுக்கு [1]ஒரு கேடும் வராது; துன்
மார்க்கரோ தீமையினால் நிறையப்படுவார்
கள்.
22 பொய் உதடுகள் கர்த்தருக்கு [2]அருவருப்
பானவைகள்; உண்மையாய் நடக்கிறவர்க
ளோ அவருக்குப் பிரியம்.
23 விவேகமுள்ள மனுஷன் அறிவை அடக்கி
வைக்கிறான்; [3]மூடருடைய இருதயமோ மதி
யீனத்தைப் பிரசித்தப்படுத்தும்.
24 ஜாக்கிரதை யுள்ளவர்களுடைய கை ஆளு
கைசெய்யும்; சோம்பேறியோ பகுதி கட்டு
வான்.
25 மனுஷனுடைய இருதயத்திலுள்ள கவலை
அதை ஒடுக்கும்; [4]நல்வார்த்தையோ அதை
மகிழ்ச்சியாக்கும்.
26 நீதிமான் தன் அயலானைப்பார்க்கிலும் மே
ன்மையுள்ளவன்; துன்மார்க்கருடைய வழி
யோ அவர்களை மோசப்படுத்தும்.
27 சோம்பேறி தான் வேட்டையாடிப் பிடித்
ததைச் சமைப்பதில்லை; ஜாக்கிரதையுள்ளவ
னுடைய பொருளோ அருமையானது.
28 நீதியின் பாதையில் ஜீவன் உண்டு; அந்தப்
பாதையில் மரணம் இல்லை.
**13** ஞானமுள்ள மகன் தகப்பனுடைய போத
கத்தைக் கேட்கிறான்; [5]பரியாசக்காரனோ கடி
ந்துகொள்ளுதலுக்குச் செவிகொடான்.
2 மனுஷன் தன் வாயின் பலனால் நன்மை
யைப் புசிப்பான்; [6]துரோகிகளின் ஆத்துமா
வோ கொடுமையைப் புசிக்கும்.
3 தன் வாயைக் காக்கிறவன் [7]தன் பிராண
னைக் காக்கிறான்; தன் உதடுகளை விரிவாய்த்
திறக்கிறவனோ கலக்கமடைவான்.
4 சோம்பேறியுடைய ஆத்துமா விரும்பியும்
[8]ஒன்றும் பெறாது; ஜாக்கிரதையுள்ளவர்களு
டைய ஆத்துமாவோ புஷ்டியாகும்.
5 நீதிமான் பொய்ப்பேச்சை வெறுக்கிறான்;
துன்மார்க்கனோ வெட்கமும் இலச்சையும்
உண்டாக்குகிறான்.
6 நீதி உத்தமமார்க்கத்தானைத் தற்காக்கும்;
துன்மார்க்கமோ பாவியைக் கவிழ்த்துப்
போடும்.
7 ஒன்றுமில்லாதிருக்கத் தன்னைச் செல்வனா
கப் பாராட்டுகிறவனும் உண்டு; [9]மிகுந்த செ
ல்வமிருக்கத் தன்னைத் தரித்திரனாகப் பாராட்
டுகிறவனும் உண்டு.
8 மனுஷனுடைய ஐசுவரியம் அவன் பிரா
ணனை மீட்கும்; தரித்திரனோ மிரட்டுதலைக்
கேளாதிருக்கிறான்.
9 நீதிமான்களின் வெளிச்சம் சந்தோஷிப்
பிக்கும்; துன்மார்க்கரின் தீபமோ அணைந்து
போம்.
10 அகந்தையினால் மாத்திரம் வாது பிறக்கும்;
ஆலோசனையைக் கேட்கிறவர்களிடத்திலோ
ஞானம் உண்டு.
11 வஞ்சனையால் தேடின பொருள் [10]குறைந்
துபோம்; கைப்பாடாய்ச்சேர்க்கிறவனோ விரு
த்தியடைவான்.

[1] 1 பே. 3. 13
[2] 6. 16, 17. வெளி. 22. 15
[3] 15. 2. பிர. 10. 3, 12-14
[4] ஏசா. 50. 4
[5] 1 சாமு. 2. 25. ஏசா. 28. 14, 15
[6] சங். 75. 8. எரே. 25. 27-31
[7] யாக். 3. 2. ஞ
[8] 10. 4
[9] பிர. 11. 1, 2
[10] 20. 21
[11] 2 நாளா. 36. 16. லூ. 16. 31
[12] 14. 27. 2 சாமு. 22. 6, 7
[13] 15. 5
[14] 1 கொ. 15. 33
[15] சங். 32. 10; 140. 11
[16] பிர. 2. 26
[17] 19. 18; 22. 15
[18] 2 தெச. 3. 10
[19] 24. 4. ரூத். 4. 11
[20] சங். 25. 21. ரோ. 2. 4
[21] யாத். 20. 16; 23. 1

நெடுங்காலமாய்க் காத்திருக்குதல் இருதயத் 12
தை இளைக்கப்பண்ணும்; விரும்பினது வரும்
போதோ ஜீவவிருட்சம்போல் இருக்கும்.
திருவசனத்தை அவமதிக்கிறவன் நாசமடை 13
வான்; [11]கற்பனைக்குப் பயப்படுகிறவனோ பல
னடைவான்.
ஞானவான்களுடைய போதகம் ஜீவ ஊற் 14
று; [12]அதினால் மரணக்கண்ணிகளுக்குத் தப்
பலாம்.
நற்புத்தி தயையை உண்டாக்கும்; துரோ 15
கிகளுடைய வழியோ கரடுமுரடானது.
விவேகியானவன் அறிவோடு நடந்துகொள் 16
ளுகிறான்; மூடனோ தன் மூடத்தனத்தை
வெளிப்படுத்துகிறான்.
துரோகமுள்ள தூதன் தீதிலே விழுவான்; 17
உண்மையுள்ள ஸ்தானாபதியோ ஔஷதம்.
புத்திமதிகளைத் தள்ளுகிறவன் தரித்திரத் 18
தையும் இலச்சையையும் அடைவான்; கடிந்
துகொள்ளுதலைக் கவனித்து நடக்கிறவனோ
[13]கனமடைவான்.
வாஞ்சை நிறைவேறுவது ஆத்துமாவுக்கு 19
இனிது; தீமையைவிட்டு விலகுவது மூடரு
க்கு அருவருப்பு.
ஞானிகளோடே சஞ்சரிக்கிறவன் ஞான 20
மடைவான்; [14]மூடருக்குத் தோழனோ நாச
மடைவான்.
பாவிகளைத் [15]தீவினை தொடரும்; நீதிமான் 21
களுக்கோ நன்மை பலனாக வரும்.
நல்லவன் தன் பிள்ளைகளின் பிள்ளைகளுக் 22
குச் சுதந்தரம் வைத்துப்போகிறான்; பாவி
யின் ஆஸ்தியோ [16]நீதிமானுக்காகச் சேர்த்து
வைக்கப்படும்.
ஏழைகளின் வயல் மிகுதியான ஆகாரத்தை 23
விளைவிக்கும்; நியாயம் கிடையாமல் கெட்டுப்
போகிறவர்களும் உண்டு.
பிரம்பைக் கையாடாதவன் தன் மகனைப் 24
பகைக்கிறான்; [17]அவன்மேல் அன்பாயிருக்கிற
வனோ அவனை ஏற்கனவே தண்டிக்கிறான்.
நீதிமான் தனக்குத் திருப்தியாகப் புசிக்கி 25
றான்; துன்மார்க்கருடைய வயிறோ [18]பசித்
திருக்கும்.
புத்தியுள்ள ஸ்திரீ தன் வீட்டைக் கட்டுகி **14**
றாள்; [19]புத்தியில்லாத ஸ்திரீயோ தன் கைகளி
னால் அதை இடித்துப்போடுகிறாள்.
நிதானமாய் நடக்கிறவன் கர்த்தருக்குப் 2
பயப்படுகிறான்; [20]தன் வழிகளில் தாறுமா
றானவனோ அவரை அலட்சியம் பண்ணுகி
றான்.
மூடன் வாயிலே அவன் அகந்தைக்கேற்ற 3
மிலாறுண்டு; ஞானவான்களின் உதடுகளோ
அவர்களைக் காப்பாற்றும்.
எருதுகளில்லாத இடத்தில் களஞ்சியம் 4
வெறுமையாயிருக்கும்; காளைகளின் பெலத்தி
னாலோ மிகுந்த வரத்துண்டு.
மெய்ச்சாட்சிக்காரன் பொய்சொல்லான்; 5
[21]பொய்ச்சாட்சிக்காரனோ பொய்களை ஊதுகி
றான்.

6 பரியாசக்காரன் ஞானத்தைத் தேடியும் கண்டுபிடியான்; [1]புத்தியுள்ளவனுக்கோ அறிவு லேசாய் வரும்.

7 மூடனுடைய முகத்துக்கு விலகிப்போ; அறிவுள்ள உதடுகளை அங்கே காணாய்.

8 தன் வழியைச் சிந்தித்துக்கொள்வது விவேகியின் ஞானம்; மூடர்களுடைய வஞ்சனையோ மூடத்தனம்.

9 மூடர் பாவத்தைக்குறித்துப் [2]பரியாசம்பண்ணுகிறார்கள்; நீதிமான்களுக்குள்ளே தயை உண்டு.

10 இருதயத்தின் கசப்பு இருதயத்திற்கே தெரியும்; அதின் மகிழ்ச்சிக்கு அந்நியன் உடந்தையாகான்.

11 துன்மார்க்கனுடைய [3]வீடு அழியும்; செம்மையானவனுடைய கூடாரமோ செழிக்கும்.

12 மனுஷனுக்குச்செம்மையாய்த்தோன்றுகிற வழி உண்டு, [4]அதின் முடிவோ மரணவழிகள்.

13 நகைப்பிலும் மனதுக்குத் துக்கமுண்டு; [5]அந்த மகிழ்ச்சியின் முடிவு சஞ்சலம்.

14 பின்வாங்கும் இருதயமுள்ளவன் தன் [6]வழிகளிலேயும், நல்ல மனுஷனோ தன்னிலே தானும் திருப்தியடைவான்.

15 பேதையானவன் எந்த வார்த்தையையும் நம்புவான்; [7]விவேகியோ தன் நடையின்மேல் கவனமாயிருக்கிறான்.

16 ஞானமுள்ளவன் பயந்து [8]தீமைக்கு விலகுகிறான்; மதியீனனோ மூர்க்கங்கொண்டு துணிகரமாயிருக்கிறான்.

17 முற்கோபி [9]மதிகேட்டைச் செய்வான்; துர்ச்சிந்தனைக்காரன் வெறுக்கப்படுவான்.

18 பேதையர் புத்தியீனத்தைச் சுதந்தரிக்கிறார்கள்; விவேகிகளோ அறிவினால் முடிசூட்டப்படுகிறார்கள்.

19 தீயோர் நல்லோருக்கு முன்பாகவும், [10]துன்மார்க்கர் நீதிமான்களுடைய வாசற்படிகளிலும் குனிவதுண்டு.

20 தரித்திரன் தனக்கடுத்தவனாலும் [11]பகைக்கப்படுகிறான்; ஐசுவரியவானுக்கோ அநேக சிநேகிதருண்டு.

21 பிறனை அவமதிக்கிறவன் பாவஞ் செய்கிறான்; [12]தரித்திரனுக்கு இரங்குகிறவனோ பாக்கியமடைவான்.

22 தீமையை யோசிக்கிறவர்கள் தவறுகிறார்களல்லவோ? நன்மையை யோசிக்கிறவர்களுக்கோ கிருபையும் சத்தியமுமுண்டு.

23 சகல பிரயாசத்தினாலும் பிரயோஜனமுண்டு; உதடுகளின் பேச்சோ வறுமையைமாத்திரம் தரும்.

24 ஞானிகளுக்கு முடி அவர்கள் செல்வம்; மூடரின் மதியீனம் மூடத்தனமே.

25 மெய்ச்சாட்சி சொல்லுகிறவன் உயிர்களை ரட்சிக்கிறான்; வஞ்சனைக்காரனோ பொய்களை ஊதுகிறான்

26 கர்த்தருக்குப் பயப்படுகிறவனுக்குத் திடநம்பிக்கை உண்டு; [13]அவன் பிள்ளைகளுக்கும் அடைக்கலம் கிடைக்கும்.

27 கர்த்தருக்குப்பயப்படுதல் ஜீவஊற்று; [14]அதினால் மரணக்கண்ணிகளுக்குத் தப்பலாம்.

28 ஜனத்திரட்சி ராஜாவின் மகிமை; ஜனக்குறைவு தலைவனின் முறிவு.

29 நீடிய சாந்தமுள்ளவன் மகா புத்திமான்; [15]முற்கோபியோ புத்தியீனத்தை விளங்கப்பண்ணுகிறான்.

30 சொஸ்தமனம் உடலுக்கு ஜீவன்; பொறாமையோ எலும்புருக்கி.

31 தரித்திரனை ஒடுக்குகிறவன் [16]அவனை உண்டாக்கினவரை நிந்திக்கிறான்; தரித்திரனுக்குத் தயைசெய்கிறவனோ அவரைக் கனம்பண்ணுகிறான்.

32 துன்மார்க்கன் தன் தீமையிலே வாரிக்கொள்ளப்படுவான்; நீதிமானோ தன் [17]மரணத்திலே நம்பிக்கையுள்ளவன்.

33 புத்திமானுடைய இருதயத்தில் ஞானம் தங்கும்; [18]மதியீனரிடத்தில் உள்ளதோ வெளிப்படும்.

34 நீதி ஜனத்தை *உயர்த்தும்; பாவமோ எந்த ஜனத்துக்கும் இகழ்ச்சி.

35 ராஜாவின் தயை விவேகமுள்ள பணிவிடைக்காரன்மேலிருக்கும்; [19]அவனுடைய கோபமோ இலச்சையுண்டாக்குகிறவன்மேலிருக்கும்.

**15** மெதுவான பிரதியுத்தரம் [20]உக்கிரத்தை மாற்றும்; கடுஞ்சொற்களோ கோபத்தை எழுப்பும்.

2 ஞானிகளின் நாவு அறிவை உபயோகப்படுத்தும்; மூடரின் வாயோ புத்தியீனத்தைக் கக்கும்.

3 கர்த்தரின் கண்கள் எவ்விடத்திலுமிருந்து, [21]நல்லோரையும் தீயோரையும் நோக்கிப்பார்க்கிறது.

4 ஆரோக்கியமுள்ள [22]நாவு ஜீவவிருட்சம்; நாவின் மாறுபாடோ ஆவியை நொறுக்கும்.

5 மூடன் தன் தகப்பன் புத்தியை அலட்சியம்பண்ணுகிறான்; கடிந்துகொள்ளுதலைக் கவனித்து நடக்கிறவனோ [23]விவேகி.

6 நீதிமானுடைய வீட்டில் அதிக பொக்கிஷமுண்டு; துன்மார்க்கனுடைய வருமானத்திலோ துன்பமுண்டு.

7 ஞானிகளின் உதடுகள் அறிவை இறைக்கும்; மூடரின் இருதயமோ அப்படியல்ல.

8 துன்மார்க்கருடைய பலி [24]கர்த்தருக்கு அருவருப்பானது; செம்மையானவர்களின் ஜெபமோ அவருக்குப் பிரியம்.

9 துன்மார்க்கனுடைய வழி கர்த்தருக்கு அருவருப்பானது; நீதியைப் பின்பற்றுகிறவனையோ [25]அவர் நேசிக்கிறார்.

10 வழியை விட்டு விலகுகிறவனுக்குப் புத்திமதி விசனமாயிருக்கும்; [26]கடிந்துகொள்ளுதலை வெறுக்கிறவன் சாவான்.

11 பாதாளமும் அழிவும் கர்த்தரின் பார்வைக்குப் பிரத்தியட்சமாயிருக்க, [27]மனுபுத்திரருடைய இருதயம் அதிக பிரத்தியட்சமாயிருக்குமல்லவோ?

1 8. 9
2 10. 23
3 யோபு 8. 15. மத். 7. 26, 27
4 ரோ. 6. 21
5 பிர. 2. 2
6 1. 31. எரே. 2. 19
7 4. 26
8 16. 6
9 யாக். 1. 19
10 சங். 49. 14. மல். 4. 3
11 19. 7
12 சங். 41. 1-3. மத். 25. 34.
13 பிர. 7. 18
14 எரே. 33. 6
15 16. 32. யாக். 1. 19
16 17. 5. மத். 25. 40, 45
17 சங். 23. 4
18 29. 11
* 2 நாளா. 17. 2-5, 10, 11
19 மத். 24. 45, 47
20 நியா. 8. 1-3. 1 சாமு. 25. 24.
21 யோபு 34. 21. எரே. 32. 19. எபி. 4. 13
22 1 தீமோ. 6. 3
23 13. 18
24 28. 9. ஏசா. 1. 11. எரே. 6. 20. ஆமோ. 5. 22. யோ. 4. 24
25 ஏசா. 26. 7. 1 தீமோ. 6. 11
26 4. 26. 5. 11, 12
27 யோபு 26. 6. சங். 139. 8

12 பரியாசக்காரன் தன்னைக் கடிந்துகொள்ளு
கிறவனை [1]நேசியான்; ஞானவான்களிடத்தில்
போகவுமாட்டான்.
13 மனமகிழ்ச்சி முகமலர்ச்சியைத் தரும்;
[2]மனோதுக்கத்தினாலே ஆவி முறிந்துபோம்.
14 புத்திமானுடைய மனம் அறிவைத் தேடும்;
மூடரின் வாயோ மதியீனத்தை மேயும்.
15 சிறுமைப்பட்டவனுடைய நாட்களெல்லாம்
தீங்குள்ளவைகள்; [3]மனரம்மியமோ நித்திய
விருந்து.
16 சஞ்சலத்தோடு கூடிய அதிகப் பொருளி
லும், [4]கர்த்தரைப் பற்றும் பயத்தோடுகூடிய
கொஞ்சப்பொருளே உத்தமம்.
17 பகையோடிருக்கும் கொழுத்த எருதின்
கறியைப்பார்க்கிலும், [5]சிநேகத்தோடிருக்கும்
இலைக்கறியே நல்லது.
18 கோபக்காரன் சண்டையையெழுப்புகிறான்;
நீடிய சாந்தமுள்ளவனோ சண்டையை அமர்த்
துகிறான்.
19 சோம்பேறியின் வழி முள்வேலிக்குச் சமா
னம்; [6]நீதிமானுடைய வழியோ ராஜபாதை.
20 ஞானமுள்ள மகன் தகப்பனைச் சந்தோஷப்
படுத்துகிறான்; [7]மதியற்ற மனுஷனோ தன்
தாயை அலட்சியம் பண்ணுகிறான்.
21 மூடத்தனம் புத்தியீனனுக்குச் சந்தோஷம்;
புத்திமானோ தன் நடக்கையைச் செம்மைப்
படுத்துகிறான்.
22 ஆலோசனையில்லாமையால் எண்ணங்கள்
சித்தியாமற்போம்; [8]ஆலோசனைக்காரர் அநே
கர் இருந்தால் அவைகள் உறுதிப்படும்.
23 மனுஷனுக்குத் தன் வாய்மொழியினால்
மகிழ்ச்சியுண்டாகும்; [9]ஏற்றகாலத்தில் சொன்
ன வார்த்தை எவ்வளவு நல்லது!
24 கீழான பாதாளத்தை விட்டு விலகும்படி,
[10]விவேகிக்கு ஜீவவழியானது உன்னதத்தை
நோக்கும் வழியாம்.
25 அகங்காரியின் வீட்டைக் கர்த்தர் பிடுங்கிப்
போடுவார்; விதவையின் எல்லையையோ நிலை
ப்படுத்துவார்.
26 துன்மார்க்கருடைய நினைவுகள் கர்த்தருக்கு
அருவருப்பானவைகள்; [11]சுத்தவான்களுடை
ய வார்த்தைகளோ இன்பமானவைகள்.
27 பொருளாசைக்காரன் தன் வீட்டைக் கலைக்
கிறான்; [12]பரிதானங்களை வெறுக்கிறவனோ
பிழைப்பான்.
28 நீதிமானுடைய மனம் பிரதியுத்தரம்சொல்ல
யோசிக்கும்; [13]துன்மார்க்கனுடைய வாயோ
தீமைகளைக் கொப்பளிக்கும்.
29 துன்மார்க்கருக்குக் [14]கர்த்தர் தூரமாயிருக்
கிறார்; நீதிமான்களின் ஜெபத்தையோ கேட்
கிறார்.
30 கண்களின் ஒளி இருதயத்தைப் பூரிப்பாக்
கும்; நற்செய்தி எலும்புகளைப் புஷ்டியாக்கும்.
31 ஜீவனுக்கேதுவான கடிந்துகொள்ளுதலை
ஏற்றுக்கொள்ளும் காது [15]ஞானிகளிடத்தே
தங்கும்.
32 புத்திமதியைத் தள்ளிவிடுகிறவன் தன் ஆத்
துமாவை வெறுக்கிறான்; கடிந்துகொள்ளுத
லைக் கேட்கிறவனோ ஞானமடைவான்.
கர்த்தருக்குப் பயப்படுதல் ஞானத்தைப் 33
போதிக்கும்; மேன்மைக்கு [16]முன்னானது
தாழ்மை.
மனதின் யோசனைகள் மனுஷனுடையது; **16**
[17]நாவின் பிரதியுத்தரம் கர்த்தரால் வரும்.
மனுஷனுடைய வழிகளெல்லாம் அவன் 2
பார்வைக்குச் சுத்தமானவைகள்; கர்த்தரோ
[18]ஆவிகளை நிறுத்துப்பார்க்கிறார்.
உன் செய்கைகளைக் கர்த்தருக்கு ஒப்புவி; 3
[19]அப்பொழுது உன் யோசனைகள் உறுதிப்
படும்.
கர்த்தர் சகலத்தையும் தமக்கென்று படைத் 4
தார்; [20]தீங்குநாளுக்காகத் துன்மார்க்கனையும்
உண்டாக்கினார்.
மனமேட்டிமையுள்ளவனெவனும் [21]கர்த்த 5
ருக்கு அருவருப்பானவன்; கையோடே கை
கோத்தாலும் அவன் தண்டனைக்குத் தப்பான்.
கிருபையினாலும் சத்தியத்தினாலும் [22]பாவம் 6
நிவிர்த்தியாகும்; கர்த்தருக்குப் பயப்படுகிறதி
னால் [23]மனுஷர் தீமையை விட்டு விலகுவார்
கள்.
ஒருவனுடைய வழிகள் கர்த்தருக்குப் பிரிய 7
மாயிருந்தால், [24]அவனுடைய சத்துருக்களும்
அவனோடே சமாதானமாகும்படி செய்வார்.
அநியாயமாய் வந்த அதிக வருமானத்தி 8
லும், நியாயமாய் வந்த கொஞ்ச வருமானமே
உத்தமம்.
மனுஷனுடைய இருதயம் [25]அவனுடைய 9
வழியை யோசிக்கும்; அவனுடைய நடைகளை
உறுதிப்படுத்துகிறவரோ கர்த்தர்.
ராஜாவின் உதடுகளில் திவ்வியவாக்கு பிறக் 10
கும்; நியாயத்தில் அவன் வாய் தவறாது.
சுமுத்திரையான நிறைகோலும் தராசும் 11
கர்த்தருடையது; [26]பையிலிருக்கும் நிறைகல்
லெல்லாம் அவருடைய செயல்.
அநியாயஞ்செய்வது ராஜாக்களுக்கு அரு 12
வருப்பு; [27]நீதியினால் சிங்காசனம் உறுதிப்படும்.
நீதியுள்ள உதடுகள் ராஜாக்களுக்குப் பிரி 13
யம்; நிதானமாய்ப் பேசுகிறவனில் ராஜாக்கள்
பிரியப்படுவார்கள்.
ராஜாவின் கோபம் மரணதூதருக்குச் சமா 14
னம்; ஞானமுள்ளவனோ அதை ஆற்றுவான்.
ராஜாவின் முகக்களையில் ஜீவன் உண்டு; 15
[28]அவனுடைய தயை பின்மாரி பெய்யும் மே
கத்தைப்போல் இருக்கும்.
பொன்னைச் சம்பாதிப்பதிலும் ஞானத்தைச் 16
சம்பாதிப்பது எவ்வளவு உத்தமம்! [29]வெள்ளி
யைச் சம்பாதிப்பதிலும் புத்தியைச் சம்பாதிப்
பது எவ்வளவு மேன்மை!
தீமையைவிட்டு விலகுவதே செம்மையான 17
வர்களுக்குச் சமனான பாதை; தன் நடையைக்
கவனித்திருக்கிறவன் [30]தன் ஆத்துமாவைக்
காக்கிறான்.
அழிவுக்கு முன்னானது அகந்தை; [31]விழு 18
தலுக்கு முன்னானது மனமேட்டிமை.

[1] ஆமோ. 5. 10. 2 தீமோ. 1. 3
[2] 12. 25
[3] 17. 22
[4] 1 தீமோ. 6. 6
[5] 17. 1
[6] 22. 5, 13. சங். 27. 11. ஏசா. 35. 8
[7] 10. 1; 29. 3
[8] 11. 14; 20. 18
[9] 25. 11
[10] யோ. 14. 6. பிலி. 3. 20. கொலோ. 3. 1, 2
[11] 6. 16, 18. சங். 37. 30
[12] ஏசா. 5. 8. ஆபகூ. 2. 9, 10
[13] 1 பே. 3. 15
[14] சங். 10. 1; 34. 16
[15] 5. உச. யோ. 15. 3, 4
[16] மாக். 4. 10
[17] 20. 24. எரே. 10. 23. மத். 10. 19, 20
[18] 1 சாமு. 16. 7
[19] சங். 37. 5. மத். 6. 25. பிலி. 4. 6, 1 பே. 5. 7
[20] யோபு 21. 30. ரோ. 9. 22
[21] 8. 13
[22] சங். 85. 10. தானி. 4. 27
[23] 14. 27
[24] ரோ. 8. 31
[25] 19. 21. எரே. 10. 23
[26] லேவி. 19. 36
[27] 29. 14
[28] யோபு 29. 23. சகரி. 10. 1
[29] 8. 11, 19
[30] 10. 9
[31] எஸ்தர் 6. 6. ழ தானி. 4. 31

19 அகங்காரிகளோடே கொள்ளைப் பொரு
ளைப் பங்கிடுவதைப்பார்க்கிலும், சிறுமையான
வர்களோடே மனத்தாழ்மையாயிருப்பது நலம்.
20 விவேகத்துடன் காரியத்தை நடப்பிக்கிற
வன் நன்மை பெறுவான்; **கர்த்தரை** நம்புகிற
வன் பாக்கியவான்.
21 இருதயத்தில் ஞானமுள்ளவன் விவேகி
யென்னப்படுவான்; உதடுகளின் மதுரம் கல்
வியைப் பெருகப்பண்ணும்.
22 புத்தி தன்னை உடையவர்களுக்கு ஜீவ ஊற்
று; மதியீனரின் போதனை மதியீனமே.
23 ஞானியின் இருதயம் அவன் வாய்க்கு அறி
வை யூட்டும்; அவன் உதடுகளுக்கு அது மேன்
மேலும் கல்வியைக் கொடுக்கும்.
24 இனிய சொற்கள் தேன் கூடுபோல் ஆத்து
மாவுக்கு மதுரமும், எலும்புகளுக்கு ஔஷத
முமாகும்.
25 மனுஷனுக்குச் செம்மையாய்த் தோன்று
கிற வழியுண்டு; [1]அதின் முடிவோ மரண
வழிகள்.
26 பிரயாசப்படுகிறவன் தனக்காகவே பிரயா
சப்படுகிறான்; அவன் வாய் அதை அவனி
டத்தில் வருந்திக் கேட்கும்.
27 பேலியாளின் மகன் கிண்டிவிடுகிறான்;
எரிகிற அக்கினிபோன்றது அவன் உதடுக
ளில் இருக்கிறது.
28 மாறுபாடுள்ளவன் சண்டையைக் கிளப்பி
விடுகிறான்; [2]கோள் சொல்லுகிறவன் பிராண
சிநேகிதரையும் பிரித்துவிடுகிறான்.
29 கொடுமையானவன் தன் அயலானுக்கு
நயங்காட்டி, அவனை நலமல்லாத வழியிலே
நடக்கப்பண்ணுகிறான்.
30 அவன் மாறுபாடானவைகளை யோசிக்கும்
படி தன் கண்களை மூடி, தீமையைச் செய்யும்
படி தன் உதடுகளைக் கடிக்கிறான்.
31 நீதியின் வழியில் உண்டாகும் நரைமயிரா
னது [3]மகிமையான கிரீடம்.
32 பலவானைப்பார்க்கிலும் நீடிய சாந்தமுள்ள
வன் உத்தமன்; [4]பட்டணத்தைப் பிடிக்கிற
வனைப்பார்க்கிலும் தன் மனதை அடக்குகிற
வன் உத்தமன்.
33 *சீட்டு மடியிலே போடப்படும்; காரியசித்
தியோ **கர்த்தரால்** வரும்.

**17** சண்டையோடுகூடிய வீடுநிறைந்த கொழு
மையான பதார்த்தங்களைப்பார்க்கிலும், [5]அம
ரிக்கையோடே சாப்பிடும் வெறும் துணிக்கை
யே நலம்.
2 புத்தியுள்ள வேலைக்காரன் இலச்சையுண்
டாக்குகிற புத்திரனை ஆண்டு, [6]சகோதரருக்
குள்ள சுதந்தரத்தில் பங்கடைவான்.
3 வெள்ளியைக் குகையும், பொன்னைப் புட
மும் சோதிக்கும்; [7]இருதயங்களைச் சோதிக்கிற
வரோ **கர்த்தர்**.
4 துஷ்டன் அக்கிரம உதடுகள் சொல்வதை
உற்றுக்கேட்கிறான்; பொய்யன் கேடுள்ள நா
வுக்குச் செவிகொடுக்கிறான்.
5 ஏழையைப் பரியாசம்பண்ணுகிறவன் அவ
னை [8]உண்டாக்கினவரை நிந்திக்கிறான்; ஆபத்
தைக்குறித்துக் களிக்கிறவன் தண்டனைக்குத்
தப்பான்.
பிள்ளைகளின் பிள்ளைகள் [9]முதியோருக்குக் 6
கிரீடம்; பிள்ளைகளின் மேன்மை அவர்கள்
பிதாக்களே.
மேன்மையானவைகளைப் பேசும் உதடு 7
மூடனுக்குத் தகாது; பொய்பேசும் உதடு பிரபு
வுக்கு எவ்வளவேனும் தகாது.
பரிதானம் வாங்குகிறவர்களின் பார்வைக்கு 8
அது ரத்தினம்போலிருக்கும்; [10]அது நோக்
கும் திசையெல்லாம் காரியம் வாய்க்கும்.
குற்றத்தை மூடுகிறவன் சிநேகத்தை நாடுகி 9
றான்; [11]கேட்டதைச் சொல்லுகிறவன் பிராண
சிநேகிதரையும் பிரித்துவிடுகிறான்.
மூடனை நூறடி அடிப்பதைப்பார்க்கிலும், 10
[12]புத்திமானை வாயினால் கண்டிப்பதே அதிக
மாய் உறைக்கும்.
துஷ்டன் கலகத்தையே தேடுகிறான்; குரூ 11
ரதூதன் அவனுக்கு விரோதமாக அனுப்பப்
படுவான்.
தன் மதிகேட்டில் திரியும் மதியீனனுக்கு 12
எதிர்ப்படுவதைப்பார்க்கிலும், [13]குட்டிகளைப்
பறிகொடுத்த கரடிக்கு எதிர்ப்படுவது வாசி.
நன்மைக்குத் தீமை செய்கிறவன் எவனோ, 13
[14]அவன் வீட்டைவிட்டுத் தீமை நீங்காது.
சண்டையின் ஆரம்பம் மதகைத் திறந்து 14
விடுகிறதுபோலிருக்கும்; [15]ஆதலால் விவாதம்
எழும்புமுன் அதை விட்டுவிடு.
துன்மார்க்கனை நீதிமானாக்குகிறவனும், 15
[16]நீதிமானைக் குற்றவாளியாக்குகிறவனுமாகிய
இவ்விருவரும் **கர்த்தருக்கு** அருவருப்பான
வர்கள்.
ஞானத்தைக் கொள்ளும்படி மூடன் கையி 16
லே ரொக்கம் என்னத்திற்கு? அதின்மேல்
அவனுக்கு மனமில்லையே.
சிநேகிதன் எல்லாக் காலத்திலும் சிநேகிப் 17
பான்; [17]இடுக்கணில் உதவவே சகோதரன்
பிறந்திருக்கிறான்.
புத்தியீனன் தன் சிநேகிதனுக்கு முன்பாகக் 18
கையடித்துக் கொடுத்துப் [18]பிணைப்படுகிறான்.
வாதுப் பிரியன் [19]பாதகப் பிரியன்; தன் 19
வாசலை உயர்த்திக் கட்டுகிறவன் அழிவை
நாடுகிறான்.
மாறுபாடான இருதயமுள்ளவன் நன்மை 20
யைக் கண்டடைவதில்லை; புரட்டு நாவுள்ள
வன் தீமையில் விழுவான்.
மூடபுத்திரனைப் பெறுகிறவன் தனக்குச் 21
சஞ்சலமுண்டாக அவனைப் பெறுகிறான்; மதி
யீனனுடைய தகப்பனுக்கு மகிழ்ச்சியில்லை.
மனமகிழ்ச்சி நல்ல ஔஷதம்; [20]முறிந்த 22
ஆவியோ எலும்புகளை உலரப்பண்ணும்.
துன்மார்க்கன், நீதியின் வழியைப் புரட்ட, 23
[21]மடியிலுள்ள பரிதானத்தை வாங்குகிறான்.
ஞானம் புத்திமானுக்கு [22]முன்பாக இருக் 24
கும்; மூடனுடைய கண்களோ பூமியின் கடை
யாந்தரங்களில் செல்லும்.

[1] 14. 12
[2] 6. 14; 17. 9
[3] 20. 29
[4] 19. 11
* திருவுளச்சீட்டு. யோனா 1. 7. அப். 1. 26
[5] 15. 17
[6] 10. 5; 19. 26
[7] எரே. 17. 10. மல். 3. 3
[8] 14. 31
[9] சங். 127. 5
[10] 18. 16; 19. 6
[11] 10. 12; 16. 28
[12] 15. 5
[13] ஓசி. 13. 8
[14] ரோ. 12. 17. 1 தெச. 5. 15. 1 பே. 3. 9
[15] 20. 3. 1 தெச. 4. 11
[16] யாத். 23. 7. ஏசா. 5. 23, 24
[17] 18. 24. ரூத் 1. 16
[18] 6. 1; 11. 15
[19] யாக். 3. 16
[20] 18. 14
[21] யாத். 23. 8
[22] பிர. 2. 14

25 மூடபுத்திரன் தன் பிதாவுக்குச் சலிப்பும்,
தன்னைப் பெற்றவளுக்குக் கசப்புமானவன்.
26 நீதிமானை தண்டம் பிடிக்கிறதும், நியாயஞ்
செய்கிறவனைப் பிரபுக்கள் அடிக்கிறதும் தகு
தியல்ல.
27 அறிவாளி தன் வார்த்தைகளை [1]அடக்குகி
றான்; விவேகி குளிர்ந்த மனமுள்ளவன்.
28 பேசாதிருந்தால் மூடனும் ஞானவான் என்
று எண்ணப்படுவான்; தன் உதடுகளை மூடுகிற
வன் புத்திமான் என்று எண்ணப்படுவான்.
18 பிரிந்துபோகிறவன் தன் இச்சையின்படி
செய்யப் பார்க்கிறான், எல்லா ஞானத்திலும்
தலையிட்டுக்கொள்ளுகிறான்.
2 மூடன் ஞானத்தில் பிரியங்கொள்ளாமல்,
தன் மனதிலுள்ளவைகளை வெளிப்படுத்தப்
பிரியப்படுகிறான்.
3 துன்மார்க்கன் வர அவமானம் வரும்; அவ
மானத்தோடே நிந்தையும் வரும்.
4 மனுஷனுடைய வாய்மொழிகள் ஆழமான
ஜலம்போலிருக்கும்; [2]ஞானத்தின் ஊற்று
பாய்கிற ஆற்றைப்போலிருக்கும்.
5 வழக்கிலே நீதிமானைத் தோற்கடிக்கிற
தற்கு, துன்மார்க்கனுக்கு [3]முகதாட்சிணியம்
பண்ணுவது நல்லதல்ல.
6 மூடனுடைய உதடுகள் விவாதத்தில் நுழை
யும், அவன் வாய் அடிகளை வரவழைக்கும்.
7 மூடனுடைய வாய் அவனுக்குக் கேடு, [4]அ
வன் உதடுகள் அவன் ஆத்துமாவுக்குக் கண்ணி.
8 கோள்காரனுடைய வார்த்தைகள் விளை
யாட்டுப்போலிருக்கும், [5]ஆனாலும் அவைகள்
உள்ளத்திற்குள் தைக்கும்.
9 தன் வேலையில் அசதியாயிருப்பவன் [6]அழி
ம்பனுக்குச் சகோதரன்.
10 **கர்த்தரின்** நாமம் பலத்த துருகம்; [7]நீதி
மான் அதற்குள் ஓடிச் சுகமாயிருப்பான்.
11 ஐசுவரியவானுடைய பொருள் அவனுக்கு
அரணான பட்டணம்; அது அவன் எண்ணத்
தில் உயர்ந்த மதில்போலிருக்கும்.
12 அழிவு வருமுன் மனுஷனுடைய இருதயம்
இறுமாப்பாயிருக்கும்; [8]மேன்மைக்கு முன்னா
னது தாழ்மை.
13 காரியத்தைக் கேட்குமுன் உத்தரம் சொல்
லுகிறவனுக்கு, [9]அது புத்தியீனமும் வெட்க
முமாயிருக்கும்.
14 மனுஷனுடைய ஆவி அவன் பலவீனத்
தைத் தாங்கும்; [10]முறிந்த ஆவி யாரால் தாங்கக்
கூடும்?
15 புத்திமானுடைய மனம் அறிவைச் சம்பா
திக்கும்; ஞானியின் செவி அறிவை நாடும்.
16 ஒருவன் கொடுக்கும் வெகுமதி அவனுக்கு
வழியுண்டாக்கி, [11]பெரியோர்களுக்கு முன்
பாக அவனைக் கொண்டுபோய் விடும்.
17 தன் வழக்கிலே முதல் பேசுகிறவன் நீதி
மான்போல் காணப்படுவான்; அவன் அய
லானோ வந்து அவனைப் பரிசோதிக்கிறான்.
18 சீட்டுப்போடுதல் விரோதங்களை ஒழித்து,
[12]பலவான்கள் நடுவே சிக்கறுக்கும்.

அரணான பட்டணத்தை வசப்படுத்துவ 19
தைப்பார்க்கிலும் [13]கோபங்கொண்ட சகோத
ரனை வசப்படுத்துவது அரிது; அவர்களுடைய
விரோதங்கள் கோட்டைத் தாழ்ப்பாள்கள்
போலிருக்கும்.
அவனவன் வாயின் பலனால் அவனவன் 20
வயிறு நிரம்பும்; [14]அவனவன் உதடுகளின்
விளைவினால் அவனவன் திருப்தியாவான்.
மரணமும் ஜீவனும் நாவின் அதிகாரத்திலி 21
ருக்கும்; [15]அதில் பிரியப்படுகிறவர்கள் அதின்
கனியைப் புசிப்பார்கள்.
மனைவியைக் கண்டடைகிறவன் நன்மை 22
யானதைக் [16]கண்டடைகிறான்; **கர்த்தரால்**
தயையும் பெற்றுக்கொள்ளுகிறான்.
தரித்திரன் கெஞ்சிக்கேட்கிறான்; [17]ஐசுவரி 23
யவான் கடினமாய் உத்தரவு கொடுக்கிறான்.
சிநேகிதருள்ளவன் சிநேகம் பாராட்ட 24
வேண்டும்; [18]சகோதரனிலும் அதிக தொந்த
மாய்ச் சிநேகிப்பவனுமுண்டு.
மாறுபாடான உதடுகளுள்ள மூடனைப் 19
பார்க்கிலும், [19]உத்தமனாய் நடக்கிற தரித்தி
ரனே வாசி.
ஆத்துமா அறிவில்லாமலிருப்பது நல்ல 2
தல்ல; கால் துரிதமானவன் தப்பி நடக்கிறான்.
மனுஷனுடைய மதியீனம் அவன் வழி 3
யைத் தாறுமாறாக்கும்; என்றாலும் [20]அவன்
மனம் **கர்த்தருக்கு** விரோதமாய்த் தாங்க
லடையும்.
செல்வம் அநேக சிநேகிதரைச் சேர்க்கும்; 4
[21]தரித்திரனோ தன் சிநேகிதனாலும் நெகிழப்
படுவான்.
பொய்ச்சாட்சிக்காரன் [22]ஆக்கினைக்குத் தப் 5
பான்; பொய்களைப் பேசுகிறவனும் தப்புவ
தில்லை.
பிரபுவின் தயையை அநேகர் வருந்திக் 6
கேட்பார்கள்; கொடை கொடுக்கிறவனுக்கு
எவனும் சிநேகிதன்.
தரித்திரனை அவனுடைய சகோதரர் எல்லா 7
ரும் பகைக்கிறார்களே, எத்தனை அதிகமாய்
அவன் சிநேகிதர் அவனுக்குத் தூரமாவார்கள்;
அவர்களுடைய வார்த்தைகளை அவன் நாடுகி
றான், அவைகளோ வெறும் வார்த்தைகளே.
ஞானத்தைப் பெற்றுக்கொள்ளுகிறவன் 8
தன் ஆத்துமாவைச் சிநேகிக்கிறான்; புத்தி
யைக் காக்கிறவன் நன்மை யடைவான்.
பொய்ச்சாட்சிக்காரன் ஆக்கினைக்குத் தப் 9
பான்; பொய்களைப் பேசுகிறவன் நாசமடை
வான்.
மூடனுக்குச் செல்வம் தகாது; பிரபுக்களை 10
ஆண்டுகொள்வது அடிமைக்கு [23]எவ்வளவும்
தகாது.
மனுஷனுடைய விவேகம் அவன் கோபத் 11
தை அடக்கும்; [24]குற்றத்தை மன்னிப்பது அவ
னுக்கு மகிமை.
ராஜாவின் கோபம் சிங்கத்தின் கெர்ச்சிப் 12
புக்குச் சமானம்; [25]அவனுடைய தயை புல்
லின்மேல் பெய்யும் பனிபோலிருக்கும்.

1 யாக். 1, 19
2 10, 11
3 லேவி. 19. 15. உபா. 16, 19
4 பிர. 10. 12
5 12, 18
6 28. 24
7 சங். 18. 2
8 நூ. 14, 11
9 யோ. 7. 51
10 சங். 147. 3
11 ஆதி. 32. 20. 1 சாமு. 25. 27
12 எண். 26. 55
13 ஆதி. 27. 41
14 12. 14; 18. 2
15 மத். 12. 37
16 12. 4; 19. 14; 31. 10
17 யாக். 2. 3
18 17. 17
19 28. 6
20 ஏசா. 8. 21. யோனா 4. 1, 4, 9
21 14. 20
22 யாத். 28. 1
23 பிர. 10. 6, 7
24 16. 32
25 ஓசி. 14. 5

13 மூடனாகிய மகன் தன் தகப்பனுக்கு மிகுந்த
துக்கம்; மனைவியின் சண்டைகள் [1]ஓயாத
ஒழுக்கு.
14 வீடும் ஆஸ்தியும் [2]பிதாக்கள் வைக்கும்
சுதந்தரம்; புத்தியுள்ள மனைவியோ [3]கர்த்தர்
அருளும் ஈவு.
15 சோம்பல் தூங்கிவிழப்பண்ணும்; [4]அசதி
யானவன் பட்டினியாயிருப்பான்.
16 கட்டளையைக் காத்துக் கொள்ளுகிறவன்
[5]தன் ஆத்துமாவைக் காக்கிறான்; தன் வழி
களை அவமதிக்கிறவன் சாவான்.
17 ஏழைக்கு இரங்குகிறவன் **கர்த்தருக்குக்**
[6]கடன் கொடுக்கிறான்; அவன் கொடுத்ததை
அவர் திரும்பக் கொடுப்பார்.
18 நம்பிக்கையிருக்குமட்டும் [7]உன் மகனைச்
சிட்சைசெய்; ஆனாலும் அவனைக் கொல்ல
உன் ஆத்துமாவை எழும்பவொட்டாதே.
19 கடுங்கோபி ஆக்கினைக்குள்ளாவான்; நீ அவ
னைத் தப்புவித்தால் திரும்பவும் தப்புவிக்க
வேண்டியதாய் வரும்.
20 உன் அந்தியகாலத்தில் நீ ஞானமுள்ளவனா
யிருக்கும்படி, [8]ஆலோசனையைக் கேட்டு,
புத்திமதியை ஏற்றுக்கொள்.
21 மனுஷனுடைய இருதயத்தின் எண்ணங்
கள் அநேகம்; [9]ஆனாலும் **கர்த்தருடைய** யோ
சனையே நிலைநிற்கும்.
22 நன்மைசெய்ய மனுஷன் கொண்டிருக்கும்
ஆசையே தயை; பொய்யனைப்பார்க்கிலும்
தரித்திரன் வாசி.
23 **கர்த்தருக்குப்** பயப்படுதல் ஜீவனுக்கேது
வானது; [10]அதை அடைந்தவன் திருப்திய
டைந்து நிலைத்திருப்பான்; தீமை அவனை
அணுகாது.
24 சோம்பேறி தன் கையைக் கலத்திலே
வைத்து, அதைத் திரும்பத் தன் வாயண்
டைக்கு எடுக்காமலிருக்கிறான்.
25 பரியாசக்காரனை அடி, அப்பொழுது
பேதை எச்சரிக்கப்படுவான்; புத்திமானைக்
கடிந்துகொள், அவன் அறிவுள்ளவனாவான்.
26 தன் தகப்பனைக் கொள்ளையடித்து, தன்
தாயைத் துரத்திவிடுகிறவன், [11]இலச்சை
யையும் அவமானத்தையும் உண்டாக்குகிற
மகன்.
27 என் மகனே, அறிவைத் தரும் வார்த்தை
களை விட்டு விலகச்செய்யும் போதகங்களை நீ
கேளாதே.
28 பேலியாளின் சாட்சிக்காரன் நியாயத்தை
நிந்திக்கிறான்; [12]துன்மார்க்கருடைய வாய் அக்
கிரமத்தை விழுங்கும்.
29 பரியாசக்காரருக்கு தண்டனைகளும், [13]மூட
ருடைய முதுகுக்கு அடிகளும் ஆயத்தமாயி
ருக்கிறது.

**20** திராட்சரசம் பரியாசஞ்செய்யும், மதுபா
னம் அமளிபண்ணும்; [14]அதினால் மயங்குகிற
ஒருவனும் ஞானவானல்ல.
2 ராஜாவின் உறுக்குதல் சிங்கத்தின் கெர்ச்
சிப்புக்குச் சமானம்; அவனைக் கோபப்படுத்து
கிறவன் தன் பிராணனுக்கே துரோகஞ்செய்
கிறான்.
வழக்குக்கு விலகுவது [15]மனுஷனுக்கு மே 3
ன்மை; மூடனானவன் எவனும் அதிலே தலை
யிட்டுக்கொள்வான்.
சோம்பேறி குளிருகிறதென்று உழமாட் 4
டான்; [16]அறுப்பிலே பிச்சைகேட்டாலும் அவ
னுக்கு ஒன்றுங்கிடையாது.
மனுஷனுடைய இருதயத்திலுள்ள யோ 5
சனை ஆழமான தண்ணீர்போலிருக்கிறது;
புத்திமானோ அதை மொண்டெடுப்பான்.
மனுஷர் பெரும்பாலும் தங்கள் தயாளத் 6
தைப் பிரசித்தப்படுத்துவார்கள்; [17]உண்மை
யான மனுஷனைக் கண்டுபிடிப்பவன் யார்?
நீதிமான் தன் உத்தமத்திலே நடக்கிறான்; 7
அவனுக்குப் பிறகு அவன் பிள்ளைகளும் பாக்
கியவான்களாயிருப்பார்கள்.
நியாயாசனத்தில் வீற்றிருக்கும் ராஜா தன் 8
கண்களினால் [18]சகல பொல்லாப்பையும் *சித
றப்பண்ணுகிறான்.
என் இருதயத்தைச் சுத்தமாக்கினேன், 9
[19]என் பாவமறத் துப்புரவானேன் என்று
சொல்லத்தக்கவன் யார்?
வெவ்வேறான நிறைகல்லும், [20]வெவ்வே 10
றான மரக்காலும் ஆகிய இவ்விரண்டும் **கர்த்
தருக்கு** அருவருப்பானவைகள்.
பிள்ளையானாலும், அதின் செய்கை சுத்த 11
மோ செம்மையோ என்பது, [21]அதின் நடக்
கையினால் விளங்கும்.
கேட்கிற காதும், காண்கிற கண்ணும், 12
[22]ஆகிய இவ்விரண்டையும் **கர்த்தர்** உண்டாக்
கினார்.
தூக்கத்தை விரும்பாதே, [23]விரும்பினால் 13
தரித்திரனாவாய்; கண் விழித்திரு, அப்பொ
ழுது ஆகாரத்தினால் திருப்தியாவாய்.
கொள்ளுகிறவன்: நல்லதல்ல, நல்லதல்ல 14
என்பான்; போய்விட்டபின்போ மெச்சிக்
கொள்வான்.
பொன்னும் மிகுதியான முத்துக்களும் 15
உண்டு; [24]அறிவுள்ள உதடுகளோ விலையுயர்ந்த
†ரத்தினம்.
அந்நியனுக்காகப் பிணைப்பட்டவனுடைய 16
வஸ்திரத்தை எடுத்துக்கொள்; அந்நிய ஸ்திரீயி
னிமித்தம் அவன் கையில் ஈடுவாங்கிக்கொள்.
வஞ்சனையினால் வந்த போஜனம் மனுஷனு 17
க்கு இன்பமாயிருக்கும்; பின்போ அவனு
டைய வாய் பருக்கைக்கற்களால் நிரப்பப்படும்.
ஆலோசனையினால் எண்ணங்கள் ஸ்திரப் 18
படும்; [25]நல்யோசனை செய்து யுத்தம்பண்ணு.
தூற்றிக்கொண்டு திரிகிறவன் இரகசியங் 19
களை வெளிப்படுத்துவான்; ஆதலால் தன் உத
டுகளினால் [26]அலப்புகிறவனோடே கலவாதே.
தன் தகப்பனையும் தன் தாயையும் தூஷிக் 20
கிறவனுடைய தீபம் [27]காரிருளில் அணைந்து
போம்.
ஆரம்பத்திலே துரிதமாகக் கிடைத்த சுதந் 21
தரம் முடிவிலே ஆசீர்வாதம் பெறாது.

[1] 27. 15
[2] 2 கொ. 12. 14
[3] 18. 22
[4] 2 தெச. 3. 10
[5] லூ. 10. 28
[6] பிர. 11. 1. 2 கொ. 9. 6-9
[7] 23. 13, 14
[8] உபா. 32. 29. சங். 90. 12, 14
[9] 16. 1, 9: 21. 30. யோபு 23. 13. சங். 33. 10, 11. ஏசா. 14. 26, 27. அப். 5. 39
[10] 1 தீமோ. 4. 8
[11] 17. 2
[12] யோபு 15. 16. ஓசி. 4. 8
[13] ஏசா. 29. 20
[14] ஏசா. 28. 7 ஓசி. 4. 11
[15] 17. 14
[16] 19. 15
[17] மத். 6. 2. லூ. 18. 8, 11
[18] 2 சாமு. 23. 3, 4
* ஆராய்சி.
[19] 2 நாளா. 6. 36. 1 யோவா. 1. 8
[20] உபா. 25. 13
[21] மத். 7. 16
[22] சங். 94. 9
[23] ரோ. 12. 11
[24] 8. 19
† பாத்திரம்.
[25] 24. 6. லூ. 14. 31
[26] ரோ. 16. 18
[27] மத். 15. 4

22 தீமைக்குச் சரிக்கட்டுவேன் என்று சொல்
லாதே; [1]கர்த்தருக்குக் காத்திரு, அவர் உன்னை
ரட்சிப்பார்.
23 வெவ்வேறான நிறைகற்கள் கர்த்தருக்கு
அருவருப்பானவைகள்; கள்ளத்தராசு நல்ல
தல்ல.
24 கர்த்தராலே [2]மனுஷருடைய நடைகள்
வாய்க்கும்; ஆகையால் மனுஷன் தன் வழி
யை அறிந்துகொள்வதெப்படி?
25 பரிசுத்தமானதை விழுங்குகிறதும், பொ
ருத்தனை செய்தபின்பு யோசிக்கிறதும், மனு
ஷனுக்குக் கண்ணியாயிருக்கும்.
26 ஞானமுள்ள ராஜா துன்மார்க்கரைச் சித
றடித்து, அவர்கள்மேல் உருளையை உருட்டு
வான்.
27 மனுஷனுடைய ஆவி [3]கர்த்தர் தந்த தீப
மாயிருக்கிறது; அது உள்ளத்தில் உள்ளவை
களையெல்லாம் ஆராய்ந்துபார்க்கும்.
28 தயையும் சத்தியமும் ராஜாவைக் காக்கும்;
தயையினாலே தன் சிங்காசனத்தை நிற்கப்
பண்ணுவான்.
29 வாலிபரின் அலங்காரம் அவர்கள் பராக்கிர
மம்; முதிர்வயதானவர்களின் மகிமை அவர்
கள் நரை.
30 காயத்தின் தழும்புகளும், உள்ளத்தில்
உறைக்கும் அடிகளும், [4]பொல்லாதவனை
அழுக்கறத் துடைக்கும்.
21 ராஜாவின் இருதயம் கர்த்தரின் கையில்
நீர்க்கால்களைப்போலிருக்கிறது; அதைத் தமது
சித்தத்தின்படி அவர் திருப்புகிறார்.
2 மனுஷனுடைய வழியெல்லாம் அவன்
பார்வைக்குச் செம்மையாகத் தோன்றும்; கர்த்
தரோ இருதயங்களை [5]நிறுத்துப்பார்க்கிறார்.
3 பலியிடுவதைப்பார்க்கிலும், [6]நீதியும் நியாய
மும் செய்வதே கர்த்தருக்குப் பிரியம்.
4 மேட்டிமையான பார்வையும், அகந்தை
யான மனமுமுள்ள துன்மார்க்கர் போடும் வெ
ளிச்சம் பாவமே.
5 ஜாக்கிரதையுள்ளவனுடைய நினைவுகள்
செல்வத்துக்கும், பதறுகிறவனுடைய நினைவு
கள் தரித்திரத்துக்கும் ஏதுவாகும்.
6 பொய்நாவினால் பொருளைச் சம்பாதிப்பது
[7]சாவைத் தேடுகிறவர்கள் விடுகிற சுவாசம்போ
லிருக்கும்.
7 துன்மார்க்கர் நியாயஞ்செய்ய மனதில்லா
திருக்கிறபடியால், அவர்கள் பாழ்க்கடிக்கப்
பட்டுப்போவார்கள்.
8 குற்றமுள்ளவன் தன் வழிகளில் மாறுபா
டுள்ளவன்; சுத்தமுள்ளவனோ தன் கிரியை
யில் செம்மையானவன்.
9 சண்டைக்காரியோடே ஒரு பெரிய வீட்
டில் குடியிருப்பதைப்பார்க்கிலும், வீட்டின்
மேல் ஒரு மூலையில் தங்கியிருப்பதே நலம்.
10 துன்மார்க்கனுடைய மனம் பொல்லாப்
பைச் செய்ய விரும்பும்; அவன் கண்க
ளில் அவன் அயலானுக்கு இரக்கங் கிடை
யாது.

1 ரோ. 12. 17, 19
2 எரே. 10. 23
3 ரோ. 2. 15. 1 கொ. 2. 11
4 எபி. 12. 10
5 லூ. 16. 15
6 1 சாமு. 15. 22. ஏசா. 1. 11-17
7 2 பே. 2. 3
8 19. 25
9 சங். 107. 43. ஓசி. 14. 9
10 மத். 18. 33, 34. 25. 41, 46. யாக். 2. 13
11 17. 8, 28. 18. 16
12 மத். 7. 23
13 13. 20
* நெய்யையும்,
14 11. 8. ஏசா. 43. 3, 4
15 மத். 25. 3, 4. லூ. 6. 45
16 மத். 5. 6. ரோ. 2. 7
17 பிர. 9. 14-16
18 யாக். 3. 2
19 13. 4
20 சங். 37. 26. 112. 9
21 ஏசா. 1. 11-15
22 19. 5, 9
† உணர்வுள்ளவனே.

பரியாசக்காரனை தண்டிக்கும்போது பே 11
தை ஞானமடைவான்; [8]ஞானவான் போதிக்
கப்படும்போது அறிவடைவான்.
நீதிபரர் துன்மார்க்கருடைய வீட்டைக் 12
[9]கவனித்துப்பார்க்கிறார்; துன்மார்க்கரைத் தீங்
கில் கவிழ்த்துப்போடுவார்.
ஏழையின் கூக்குரலுக்குத் தன் செவியை 13
அடைத்துக்கொள்ளுகிறவன், [10]தானும் சத்த
மிட்டுக் கூப்பிடும்போது கேட்கப்படமாட்
டான்.
அந்தரங்கமாய்க் கொடுக்கப்பட்ட வெகுமதி 14
கோபத்தைத் தணிக்கும்; [11]மடியிலுள்ள பரி
தானம் குரோதத்தை ஆற்றும்.
நியாயந்தீர்ப்பது நீதிமானுக்குச் சந்தோஷ 15
மும், [12]அக்கிரமக்காரருக்கோ அழிவுமாம்.
விவேகத்தின் வழியை விட்டுத் தப்பிநடக் 16
கிற மனுஷன் [13]செத்தவர்களின் கூட்டத்தில்
தாபரிப்பான்.
சிற்றின்பப்பிரியன் தரித்திரனாவான்; மது 17
பானத்தையும் *எண்ணெயையும் விரும்புகிற
வன் ஐசுவரியவானாவதில்லை.
நீதிமானுக்குப் பதிலாகத் துன்மார்க்கனும், 18
[14]செம்மையானவனுக்குப் பதிலாக துரோகி
யும் மீட்கும்பொருளாவார்கள்.
சண்டைக்காரியும் கோபக்காரியுமான ஸ்தி 19
ரீயுடன் குடியிருப்பதைப்பார்க்கிலும் வனாந்
தரத்தில் குடியிருப்பது நலம்.
வேண்டிய திரவியமும் எண்ணெயும் ஞான 20
வானுடைய [15]வாசஸ்தலத்தில் உண்டு; மூட
னோ அதைச் செலவழித்துப்போடுகிறான்.
நீதியையும் தயையையும் பின்பற்றுகிறவன் 21
[16]ஜீவனையும் நீதியையும் மகிமையையும் கண்
டடைவான்.
பலவான்களுடைய பட்டணத்தின் மதிலை 22
ஞானமுள்ளவன் ஏறிப் பிடித்து, [17]அவர்கள்
நம்பின அரணை இடித்துப்போடுவான்.
தன் வாயையும் தன் நாவையும் காக்கிற 23
வன் [18]தன் ஆத்துமாவை இடுக்கண்களுக்கு
விலக்கிக் காக்கிறான்.
அகங்காரமும் இடும்புமுள்ளவனுக்குப் பரி 24
யாசக்காரனென்று பெயர், அவன் அகந்தை
யான சினத்தோடே நடக்கிறான்.
சோம்பேறியின் கைகள் வேலைசெய்யச் 25
[19]சம்மதியாததினால், அவன் ஆசை அவனைக்
கொல்லும்.
அவன் நாள்தோறும் ஆவலுடன் இச்சிக் 26
கிறான்; நீதிமானோ பிசினித்தனமில்லாமல்
[20]கொடுப்பான்.
துன்மார்க்கருடைய [21]பலி அருவருப்பான 27
து; அதைத் துர்ச்சிந்தையோடே செலுத்தினா
லோ எத்தனை அதிகமாய் அருவருக்கப்படும்.
பொய்ச்சாட்சிக்காரன் [22]கெட்டுப்போவா 28
ன்; †செவிகொடுக்கிறவனோ எப்பொழுதும்
பேசத்தக்கவனாவான்.
துன்மார்க்கன் தன் முகத்தைக் கடினப் 29
படுத்துகிறான்; செம்மையானவனோ தன் வழி
யை நேர்ப்படுத்துகிறான்.

30 கர்த்தருக்கு விரோதமான [1]ஞானமுமில்லை,
புத்தியுமில்லை, ஆலோசனையுமில்லை.
31 குதிரை யுத்தநாளுக்கு ஆயத்தமாக்கப்படும்;
[2]ஜெயமோ கர்த்தரால் வரும்.
22 திரளான ஐசுவரியத்தைப்பார்க்கிலும்
[3]நற்கீர்த்தியே தெரிந்துகொள்ளப்படத் தக்
கது; பொன் வெள்ளியைப்பார்க்கிலும் தயை
யே நலம்.
2 ஐசுவரியவானும் தரித்திரனும் ஒருவரை
யொருவர் சந்திக்கிறார்கள்; [4]அவர்கள் அனை
வரையும் உண்டாக்கினவர் கர்த்தர்.
3 விவேகி ஆபத்தைக் கண்டு மறைந்துகொ
ள்ளுகிறான்; [5]பேதைகள் நெடுகப்போய் தண்
டிக்கப்படுகிறார்கள்.
4 தாழ்மைக்கும் கர்த்தருக்குப் பயப்படுதலுக்
கும் வரும் பலன் [6]ஐசுவரியமும் மகிமையும்
ஜீவனுமாம்.
5 மாறுபாடுள்ளவனுடைய வழியிலே முள்
ளுகளும் கண்ணிகளுமுண்டு; [7]தன் ஆத்துமா
வைக் காக்கிறவன் அவைகளுக்குத் தூரமாய்
விலகிப்போவான்.
6 பிள்ளையானவன் நடக்கவேண்டிய வழி
யிலே அவனை நடத்து; [8]அவன் முதிர்வயதி
லும் அதை விடாதிருப்பான்.
7 ஐசுவரியவான் தரித்திரனை ஆளுகிறான்;
[9]கடன் வாங்கினவன் கடன்கொடுத்தவனுக்கு
அடிமை.
8 அநியாயத்தை விதைக்கிறவன் [10]வருத்தத்
தை அறுப்பான்; அவன் உக்கிரத்தின் மிலாறு
ஒழியும்.
9 கருணைக்கண்ணன் [11]ஆசீர்வதிக்கப்படுவான்;
அவன் தன் ஆகாரத்தில் தரித்திரனுக்குக்
கொடுக்கிறான்.
10 பரியாசக்காரனைத் துரத்திவிடு; [12]அப்பொ
ழுது வாது நீங்கும், விரோதமும் அவமான
மும் ஒழியும்.
11 சுத்த இருதயத்தை விரும்புகிறவனுடைய
உதடுகள் இனிமையானவைகள்; [13]ராஜா அவ
னுக்குச் சிநேகிதனாவான்.
12 கர்த்தருடைய கண்கள் ஞானத்தைக் காக்
கும்; [14]துரோகிகளின் வார்த்தைகளையோ அ
வர் தாறுமாறாக்குகிறார்.
13 வெளியிலே சிங்கம், [15]வீதியிலே கொலை
யுண்பேன் என்று சோம்பேறி சொல்லுவான்.
14 பரஸ்திரீகளின் வாய் ஆழமான படுகுழி;
[16]கர்த்தருடைய கோபத்திற்கு ஏதுவானவன்
அதிலே விழுவான்.
15 பிள்ளையின் நெஞ்சில் மதியீனம் ஒட்டி
யிருக்கும்; [17]அதை தண்டனையின் பிரம்பு
அவனைவிட்டு அகற்றும்.
16 தனக்கு அதிகம் உண்டாகத் தரித்திரனை
ஒடுக்குகிறவன் [18]தனக்குக் குறைச்சலுண்டா
கவே ஐசுவரியவானுக்குக் கொடுப்பான்.
17 உன் செவியைச் சாய்த்து, ஞானிகளுடைய
வார்த்தைகளைக் கேட்டு, [19]என் போதகத்தை
18 உன் இருதயத்தில் வை. அவைகளை உன்
உள்ளத்தில் காத்து, அவைகளை உன் உதடு
களில் நிலைத்திருக்கப் பண்ணும்போது, அது
இன்பமாயிருக்கும். உன் நம்பிக்கை கர்த்தர் 19
மேல் இருக்கும்படி, இன்றையதினம் அவை
களை உனக்குத் தெரியப்படுத்துகிறேன்.
சத்திய வார்த்தைகளின் யதார்த்தத்தை நான் 20
உனக்குத் தெரிவிக்கும்படிக்கும், [20]நீ உன்னை
அனுப்பினவர்களுக்குச் சத்திய வார்த்தைகளை
மறுமொழியாகச் சொல்லும்படிக்கும், ஆலோ 21
சனையையும் ஞானத்தையும் பற்றி நான் உன
க்கு முக்கியமானவைகளை எழுதவில்லையா?
ஏழையாயிருக்கிறான் என்று ஏழையைக் 22
கொள்ளையிடாதே; [21]சிறுமையானவனை நியா
யஸ்தலத்தில் உபத்திரவப்படுத்தாதே. கர்த்தர் 23
அவர்களுக்காக வழக்காடி, [22]அவர்களைக் கொ
ள்ளையிடுகிறவர்களுடைய பிராணனைக் கொ
ள்ளையிடுவார்.
கோபக்காரனுக்குத் தோழனாகாதே; உக்கிர 24
முள்ள மனுஷனோடே நடவாதே. அப்படிச் 25
செய்தால், நீ அவனுடைய வழிகளைக் கற்
றுக்கொண்டு, உன் ஆத்துமாவுக்குக் கண்ணி
யை வருவிப்பாய்.
கையடித்து உடன்பட்டு, [23]கடனுக்காகப் 26
பிணைப்படுகிறவர்களில் ஒருவனாகாதே. செ 27
லுத்த உனக்கு ஒன்றுமில்லாதிருந்தால், நீ
படுத்திருக்கும் படுக்கையையும் அவன் எடுத்
துக்கொள்ளவேண்டியதாகுமே.
உன் பிதாக்கள் நாட்டின [24]பூர்வ எல்லைக் 28
குறியை மாற்றாதே.
தன் வேலையில் [25]ஜாக்கிரதையாயிருக்கிற 29
வனை நீ கண்டால், அவன் நீசருக்கு முன்
பாக நில்லாமல், ராஜாக்களுக்கு முன்பாக நிற்
பான்.
நீ ஒரு அதிபதியோடே போஜனம்பண் 23
ண உட்கார்ந்தால், உனக்கு முன்பாக இருக்
கிறதை நன்றாய்க் கவனித்துப்பார். நீ போஜ 2
னப்பிரியனாயிருந்தால், உன் தொண்டையி
லே கத்தியை வை. அவனுடைய ருசியுள்ள 3
பதார்த்தங்களை இச்சியாதே; அவைகள் கள்
ளப்போஜனமாமே.
ஐசுவரியவானாக வேண்டுமென்று பிரயா 4
சப்படாதே; [26]சுயபுத்தியைச் சாராதே. இல் 5
லாமற்போகும் பொருள்மேல் உன் கண்களைப்
பறக்கவிடுவானேன்? அது கழுகைப்போல
சிறகுகளைத் தனக்கு உண்டுபண்ணிக்கொண்
டு, ஆகாயமார்க்கமாய்ப் பறந்துபோம்.
வன்கண்ணனுடைய ஆகாரத்தைப் புசியா 6
தே; அவனுடைய ருசியுள்ள பதார்த்தங்களை
இச்சியாதே. அவன் இருதயத்தின் நினைவு 7
எப்படியோ, அப்படியே அவன் இருக்கிறான்;
புசியும், பானம்பண்ணும் என்று அவன் உன்
னோடே சொன்னாலும், அவன் இருதயம்
உன்னோடே இராது. நீ புசித்த துணிக்கை 8
யை வாந்திபண்ணி, உன் இனிய சொற்களை
இழந்துபோவாய்.
மூடனுடைய செவிகள் கேட்கப்பேசாதே; 9
[27]அவன் உன் வார்த்தைகளின் ஞானத்தை
அசட்டைபண்ணுவான்.

[1] ஆதி. 11. 4. ஏசா. 8. 9, 10. அப். 5. 39
[2] ஏசா. 31. 1
[3] பிர. 7. 1
[4] 1 கொரி. 12. 21
[5] 14. 16; 27. 12
[6] மத். 6. 33
[7] யோபு 18. 8
[8] எபே. 6. 4
[9] யாக். 2. 6
[10] யோபு 4. 8. ஓசி. 10. 13
[11] 2 கொரி. 9. 6
[12] ஆதி. 21. 9, 10
[13] சங். 101. 6. மத். 5. 8
[14] ஏசா. 59. 19-21
[15] 26. 13-15
[16] பிர. 7. 26
[17] 13. 24
[18] மீகா 2. 2-5
[19] 2. 2. சங். 90. 12
[20] 1 பே. 3. 15
[21] யாத். 23. 6. சகரி. 7. 10
[22] மல்கி. 3. 5
[23] 6. 1; 11. 15
[24] உபா. 19. 14
[25] 12. 24
[26] ரோ. 12. 16. 1 தீமோ. 6. 9, 10
[27] மத். 7. 6

10 பூர்வ எல்லைக்குறியை மாற்றாதே; [1]திக்
கற்ற பிள்ளைகளுடைய நிலங்களை அபகரித்
11 துக்கொள்ளாதே. அவர்களுடைய மீட்பர்
வல்லவர்; [2]அவர் உன்னுடனே அவர்களுக்
காக வழக்காடுவார்.
12 உன் இருதயத்தைப் புத்திமதிக்கும், உன்
செவிகளை அறிவின் வார்த்தைகளுக்கும் சாய்ப்
பாயாக.
13 பிள்ளையை தண்டியாமல் விடாதே; [3]அவ
னைப் பிரம்பினால் அடித்தால் அவன் சாகான்.
14 நீ பிரம்பினால் அவனை அடிக்கிறதினால் [4]பா
தாளத்துக்கு அவன் ஆத்துமாவைத் தப்புவிப்
பாயே.
15 என் மகனே, [5]உன் இருதயம் ஞானமுள்
ளதாயிருந்தால், என்னிலே என் இருதயம்
16 மகிழும். உன் உதடுகள் செம்மையானவை
களைப் பேசினால், என் உள்ளிந்திரியங்கள்
மகிழும்.
17 உன் மனதைப் பாவிகள்மேல் [6]பொறாமை
கொள்ள விடாதே; நீ நாடோறும் கர்த்தரைப்
18 பற்றும் பயத்தோடிரு. நிச்சயமாகவே *முடி
வு உண்டு; உன் நம்பிக்கை வீண்போகாது.
19 என் மகனே, நீ செவிகொடுத்து ஞானம
டைந்து, [7]உன் இருதயத்தை நல்வழியிலே
20 நடத்து. மதுபானப் பிரியனாயும் [8]மாம்சப்
21 பெருந்தீனிக்காரனாயும் சேராதே. குடிய
னும் போஜனப்பிரியனும் தரித்திரராவார்கள்;
தூக்கம் கந்தைகளை உடுத்துவிக்கும்.
22 உன்னைப் பெற்ற தகப்பனுக்குச் [9]செவி
கொடு; உன் தாய் வயதுசென்றவளாகும்போ
து அவளை அசட்டைபண்ணாதே.
23 சத்தியத்தை வாங்கு, அதை விற்காதே;
[10]அப்படியே ஞானத்தையும் உபதேசத்தையும்
புத்தியையும் வாங்கு.
24 நீதிமானுடைய தகப்பன் மிகவும் களிகூரு
வான்; [11]ஞானமுள்ள பிள்ளையைப் பெற்ற
25 வன் அவனால் மகிழுவான். உன் தகப்ப
னும் உன் தாயும் சந்தோஷப்படுவார்கள்;
உன்னைப் பெற்றவள் மகிழுவாள்.
26 என் மகனே, உன் இருதயத்தை எனக்
குத் தா; [12]உன் கண்கள் என் வழிகளை நோக்
27 குவதாக. வேசி ஆழமான படுகுழி; [13]பரஸ்
28 திரீ இடுக்கமான கிணறு. அவள் கொள்ளைக்
காரனைப்போல் பதிவிருந்து, [14]மனுஷருக்குள்
ளே பாதகரைப் பெருகப்பண்ணுகிறாள்.
29 ஐயோ! யாருக்கு வேதனை? யாருக்குத் துக்
கம்? யாருக்குச் சண்டைகள்? யாருக்குப்
புலம்பல்? யாருக்குக் காரணமில்லாத காயங்
கள்? யாருக்கு இரத்தங்கலங்கின கண்கள்?
30 மதுபானம் இருக்கும் இடத்திலே தங்கித்தரிப்
பவர்களுக்கும், [15]கலப்புள்ள சாராயத்தை நா
31 டுகிறவர்களுக்குந்தானே. மதுபானம் இரத்
தவருணமாயிருந்து, பாத்திரத்தில் பளபளப்
பாய்த் தோன்றும்போது, நீ அதைப் பாராதே;
32 அது மெதுவாய் இறங்கும். முடிவிலே அது
பாம்பைப்போல் கடிக்கும், விரியனைப்போல்
33 தீண்டும். உன் கண்கள் பரஸ்திரீகளை நோக்
கும்; உன் உள்ளம் தாறுமாறானவைகளைப்
பேசும். நீ நடுக்கடலிலே சயனித்திருக்கிற 34
வனைப்போலும், பாய்மரத்தட்டிலே படுத்தி
ருக்கிறவனைப்போலும் இருப்பாய். என்னை 35
அடித்தார்கள், எனக்கு நோகவில்லை; என்னை
அறைந்தார்கள், எனக்குச் சுரணையில்லை;
[16]நான் அதைப் பின்னும் தொடர்ந்து தேட
எப்பொழுது விழிப்பேன் என்பாய்.

பொல்லாத மனுஷர்மேல் [17]பொறாமை 24
கொள்ளாதே; அவர்களோடே இருக்கவும்
விரும்பாதே. அவர்கள் இருதயம் கொடு 2
மையை யோசிக்கும், [18]அவர்கள் உதடுகள்
தீவினையைப் பேசும்.
வீடு ஞானத்தினாலே கட்டப்பட்டு [19]விவே 3
கத்தினாலே நிலைநிறுத்தப்படும். அறிவினா 4
லே அறைகளில் அருமையும் இனிமையுமான
சகலவிதப் பொருள்களும் நிறைந்திருக்கும்.
ஞானமுள்ளவன் பெலமுள்ளவன்; [20]அறி 5
வுள்ளவன் தன் வல்லமையை அதிகரிக்கப்
பண்ணுகிறான். நல்யோசனைசெய்து யுத்தம் 6
பண்ணு; [21]ஆலோசனைக்காரர் அநேகரால்
ஜெயங்கிடைக்கும்.
மூடனுக்கு ஞானம் எட்டாத உயரமாயிருக் 7
கும்; [22]அவன் நியாயஸ்தலத்தில் தன் வாயைத்
திறவான்.
தீவினைசெய்ய உபாயஞ்செய்கிறவன் 8
[23]துஷ்டன் என்னப்படுவான்.
தியநோக்கம் [24]பாவமாம்; பரியாசக்காரன் 9
மனுஷருக்கு அருவருப்பானவன்.
ஆபத்துக்காலத்தில் [25]நீ சோர்ந்து போவா 10
யானால், உன் பெலம் குறுகினது.
மரணத்துக்கு ஒப்பிக்கப்பட்டவர்களையும், 11
கொலையுண்ணப்போகிறவர்களையும் [26]விடுவிக்
கக் கூடுமானால் விடுவி. அதை அறியோம் 12
என்பாயாகில், இருதயங்களைச் சோதிக்கிறவர்
அறியாரோ? உன் ஆத்துமாவைக் காக்கிறவர்
கவனியாரோ? [27]அவர் மனுஷருக்கு அவன
வன் கிரியைக்குத் தக்கதாகப் பலனளியாரோ?
என் மகனே, தேனைச் சாப்பிடு, அது நல் 13
லது; கூட்டிலிருந்து ஒழுகும் தேன் உன் வா
ய்க்கு இன்பமாயிருக்கும். அப்படியே ஞா 14
னத்தை அறிந்துகொள்வது உன் ஆத்துமா
வுக்கு இன்பமாயிருக்கும்; [28]அதைப் பெற்றுக்
கொண்டால், அது †முடிவில் உதவும், உன்
நம்பிக்கை வீண்போகாது.
துஷ்டனே, நீ நீதிமானுடைய வாசஸ்தல 15
த்துக்கு விரோதமாய்ப் பதிவிராதே; அவன்
தங்கும் இடத்தைப் பாழாக்கிப்போடாதே. நீதி 16
மான் ஏழுதரம் விழுந்தாலும் திரும்பவும் எழுந்
திருப்பான்; [29]துன்மார்க்கரோ தீங்கிலே இட
றுண்டு கிடப்பார்கள். உன் சத்துரு விழும் 17
போது சந்தோஷப்படாதே; [30]அவன் இடறும்
போது உன் இருதயம் களிகூராதிருப்பதாக.
கர்த்தர் அதைக் காண்பார், அது அவர் பார் 18
வைக்குப் பொல்லாப்பாயிருக்கும்; அப்பொ
ழுது அவனிடத்திலிருந்து அவர் தமது கோ
பத்தை நீக்கிவிடுவார்.

[1] 22. 28. உபா. 19. 14
[2] 22. 23
[3] 13. 24
[4] 1 கொ. 5. 5
[5] 23. 8
[6] சங். 37. 1-3: 73. 3, 17
* பலன், மறுமை.
[7] 4. 23
[8] ஏசா. 5. 22. மத். 24. 49. லூ. 21. 34. ரோ. 13. 13. எபே. 5. 18
[9] 30. 17. எபே. 6. 1, 2
[10] ஏசா. 55. 1. மத். 13. 44. வெளி. 3. 18
[11] 10. 1: 15. 20
[12] சங். 119. 9-11
[13] 22. 14
[14] 7. 12. பிர. 7. 26
[15] ஆதி. 49. 12. ஏசா. 5. 11, 22. ஆப. 2. 5. எபே. 5. 18
[16] எரே. 5. 3
[17] 23. 17
[18] சங். 10. 7
[19] 14. 1: 20. 15
[20] 21. 22. பிர. 9. 16
[21] லூ. 14. 31
[22] சங். 10. 5
[23] 14. 22
[24] மத். 5. 28
[25] எபி. 12. 5
[26] சங். 82. 4. ஏசா. 58. 6, 7
[27] எரே. 32. 19. ரோ. 2. 6. வெளி. 2. 23
[28] சங். 19. 10: 119. 103. எரே. 15. 16
† மறுமை.
[29] மீகா 7. 8. ஆமோ. 8. 14
[30] யோபு 31. 29

19 பொல்லாதவர்களைக்குறித்து எரிச்சலாகா
தே; துன்மார்க்கர்மேல் பொறாமைகொள்ளா
20 தே. துன்மார்க்கனுக்கு நல்முடிவு இல்லை;
[1]துன்மார்க்கனுடைய விளக்கு அணைந்து
போம்.
21 என் மகனே, [2]நீ கர்த்தருக்கும் ராஜாவுக்
கும் பயந்து நட; கலகக்காரரோடு கலவாதே.
22 சடிதியில் அவர்களுடைய ஆபத்து எழும்
பும்; அவர்கள் இருவரின் சங்காரத்தையும்
அறிந்தவன் யார்?
23 பின்னும் ஞானமுள்ளவர்களின் புத்திமதி
கள் என்னவெனில்: [3]நியாயத்திலே முகதாட்
24 சிணியம் நல்லதல்ல. துன்மார்க்கனைப் பார்
ர்த்து: நீதிமானாயிருக்கிறாய் என்று சொல்லுகி
றவனை ஜனங்கள் சபிப்பார்கள், [4]பிரஜைகள்
25 அவனை வெறுப்பார்கள். அவனைக் கடிந்து
கொள்ளுகிறவர்கள்மேல் பிரியமுண்டாகும்,
அவர்களுக்கு உத்தம ஆசீர்வாதம் கிடைக்கும்.
26 செம்மையான மறுமொழி சொல்லுகிறவன்
உதடுகளை முத்தமிடுகிறவனுக்குச் சமானம்.
27 வெளியில் உன் வேலையை எத்தனப்படு
த்தி, வயலில் அதை ஒழுங்காக்கி, [5]பின்பு
28 உன் வீட்டைக் கட்டு. நியாயமின்றிப் பிறனு
க்கு விரோதமாய்ச் சாட்சியாக ஏற்படாதே;
[6]உன் உதடுகளினால் வஞ்சகம் பேசாதே.
29 அவன் எனக்குச் செய்தபிரகாரம் நானும்
அவனுக்குச் செய்வேன், [7]அவன் செய்த
செய்கைக்குத்தக்கதாக நானும் அவனுக்குச்
சரிக்கட்டுவேன் என்று நீ சொல்லாதே.
30 சோம்பேறியின் வயலையும், மதியீனனு
டைய திராட்சத் தோட்டத்தையும் கடந்து
31 போனேன். இதோ, அதெல்லாம் முள்ளுக்
காடாயிருந்தது; நிலத்தின் முகத்தை காஞ்
சொறி மூடினது, அதின் கற்சுவர் இடிந்து
32 கிடந்தது. அதைக் கண்டு சிந்தனைபண்ணி
னேன்; அதை நோக்கிப் புத்தியடைந்தேன்.
33 இன்னுங்கொஞ்சம் உறங்கட்டும், [8]இன்னுங்
கொஞ்சம் கைமுடக்கிக்கொண்டு நித்திரை
34 செய்யட்டும் என்பாயோ? உன் தரித்திரம்
வழிப்போக்கனைப்போலும், உன் வறுமை
ஆயுதமணிந்தவனைப்போலும் வரும்.

**25** யூதாவின் ராஜாவாகிய எசேக்கியாவின்
மனுஷர் பேர்த்தெழுதின [9]சாலொமோனு
டைய நீதிமொழிகள்:
2 காரியத்தை மறைப்பது [10]தேவனுக்கு மேன்
மை; காரியத்தை ஆராய்வதோ [11]ராஜாக்களு
3 க்கு மேன்மை. வானத்தின் உயரமும், பூமி
யின் ஆழமும், ராஜாக்களின் இருதயங்களும்
ஆராய்ந்து முடியாது.
4 வெள்ளியினின்று களிம்பை நீக்கிவிடு, அப்
பொழுது தட்டானால் நல்ல உடைமை பிறக்
5 கும். ராஜாவின் முன்னின்று துஷ்டனை நீக்
கிவிடு, அப்பொழுது அவனுடைய சிங்காச
னம் நீதியினால் நிலைநிற்கும்.
6 ராஜாவின் சமுகத்தில் [12]மேன்மை பாராட்
டாதே; பெரியோர்களுடைய ஸ்தானத்தில்
நில்லாதே.
உன் கண்கள் கண்ட பிரபுவின் சமுகத் 7
தில் நீ தாழ்த்தப்படுவது நல்லதல்ல; அவன்
உன்னைப் பார்த்து: மேலே வா என்று சொல்
வதே உனக்கு மேன்மை.
வழக்காடப் பதற்றமாய்ப் போகாதே; [13]முடி 8
விலே உன் அயலான் உன்னை வெட்கப்படுத்
தும்போதும், நீ என்னசெய்யலாம் என்று
நினைப்பாயே நீ உன் அயலானுடனே மாத் 9
திரம் உன் வியாஜ்யத்தைக்குறித்து வழக்காடு,
மற்றவனிடத்தில் இரகசியத்தை வெளிப்படுத்
தாதே. மற்றப்படி அதைக் கேட்கிறவன் 10
உன்னை நிந்திப்பான்; உன் அவமானம் உன்
னைவிட்டு நீங்காது.
ஏற்ற சமயத்தில் சொன்ன வார்த்தை [14]வெ 11
ள்ளித்தட்டில் வைக்கப்பட்ட பொற்பழங்க
ளுக்குச் சமானம்.
கேட்கிற செவிக்கு, ஞானமாய்க் கடிந்து 12
கொண்டு புத்திசொல்லுகிறவன், [15]பொற்கடுக்
கனுக்கும் அபரஞ்சிப் பூஷணத்திற்கும் சரி.
கோடைகாலத்தில் உறைந்த மழையின் 13
குளிர்ச்சி எப்படியிருக்கிறதோ, அப்படியே
உண்மையான ஸ்தானாபதியும் தன்னை அனுப்
பினவனுக்கு இருப்பான்; [16]அவன் தன் எஜ
மான்களுடைய ஆத்துமாவைக் குளிரப்பண்
ணுவான்.
கொடுப்பேன் என்று சொல்லியும் கொடா 14
மலிருக்கிற வஞ்சகன் [17]மழையில்லாத மேகங்
களுக்கும் காற்றுக்கும் சரி.
நீண்ட பொறுமையினால் பிரபுவையும் சம் 15
மதிக்கப்பண்ணலாம்; [18]இனிய நாவு எலும்
பையும் நொறுக்கும்.
தேனைக் கண்டுபிடித்தாயானால் மட்டாய்ச் 16
சாப்பிடு; மிதமிஞ்சிச் சாப்பிட்டால் வாந்தி
பண்ணுவாய். உன் அயலான் சலித்து உன்னை 17
வெறுக்காதபடிக்கு, அடிக்கடி அவன் வீட்
டில் கால்வைக்காதே.
பிறனுக்கு விரோதமாய்ப் பொய்ச்சாட்சி 18
சொல்லுகிற மனுஷன் தண்டாயுதத்துக்கும்
கட்கத்துக்கும் கூர்மையான அம்புக்கும் ஒப்
பானவன்.
ஆபத்துக்காலத்தில் துரோகியை நம்புவது 19
உடைந்த பல்லுக்கும் *மொழிபுரண்ட காலுக்
கும் சமானம்.
மனத்துக்கமுள்ளவனுக்குப் [19]பாட்டுகளைப் 20
பாடுகிறவன், குளிர்காலத்தில் வஸ்திரத்தைக்
களைகிறவனைப்போலவும், வெடியுப்பின்மேல்
வார்த்த காடியைப்போலவும் இருப்பான்.
உன் சத்துரு பசியாயிருந்தால், அவனுக்குப் 21
புசிக்க ஆகாரங் கொடு; [20]அவன் தாகமாயிருந்
தால், குடிக்கத் தண்ணீர் கொடு. அதினால் நீ 22
அவன் தலையின்மேல் எரிகிற தழல்களைக் குவி
ப்பாய்; [21]கர்த்தர் உனக்குப் பலனளிப்பார்.
வடகாற்று மழையையும், புறங்கூறுகிற 23
நாவு கோபமுகத்தையும் பிறப்பிக்கும்.
சண்டைக்காரியோடே ஒரு பெரிய வீட் 24
டில் குடியிருப்பதைப்பார்க்கிலும், [22]வீட்டின்
மேல் ஒரு மூலையில் தங்குவதே நலம்.

[1] யோபு 18. 5, 6
[2] 1 பே. 2. 13-17
[3] லேவி. 19. 15. யோ. 7. 24
[4] ஏசா. 5. 23
[5] 1 இரா. 5. 17, 18. லூ. 14. 28
[6] எபே. 4. 25
[7] மத். 5. 39, 44. ரோ. 12. 17, 19
[8] 6. 9- மு.
[9] 1 இரா. 4. 22
[10] உபா. 29. 29. ரோ. 11. 33
[11] யோபு 29. 16
[12] லூ. 14. 8-10
[13] மத். 5, 25. 18. 15
[14] 15. 23. ஏசா. 50. 4
[15] 1. 8, 9
[16] 13. 17. பிலி. 2. 25-28
[17] லூ. 18.10, மு. யூதா 12. வச.
[18] ஆதி. 32. 4. மு. 1 சாமு. 25. 24. மு.
* மூட்டுச்சறுக்கிய.
[19] தானி. 4. 18. ரோ. 12. 15
[20] யாத். 23. 4, 5. மத். 5. 44. ரோ. 12. 20
[21] 2 சாமு. 16. 12
[22] 19. 13

25 தூரதேசத்திலிருந்து வரும் நற்செய்தி வி
டாய்த்த ஆத்துமாவுக்குக் கிடைக்கும் குளிர்ந்த
தண்ணீருக்குச் சமானம்.
26 துன்மார்க்கருக்கு முன்பாக நீதிமான் தள்
ளாடுவது கலங்கின கிணற்றுக்கும் கெட்டுப்
போன சுனைக்கும் ஒப்பாகும்.
27 தேனை மிகுதியாய் உண்பது நல்லதல்ல,
[1]தற்புகழை நாடுவதும் புகழல்ல.
28 தன் ஆவியை அடக்காத மனுஷன் [2]மதி
லிடிந்த பாழான பட்டணம்போலிருக்கிறான்.

**26** உஷ்ணகாலத்திலே உறைந்த பனியும்
[3]அறுப்புக்காலத்திலே மழையும் தகாதது
போல, மூடனுக்கு மகிமை தகாது.
2 அடைக்கலான் குருவி அலைந்துபோவது
போலும், தகைவிலான் குருவி பறந்துபோ
வதுபோலும், காரணமில்லாமலிட்ட [4]சாபம்
தங்காது.
3 குதிரைக்குச் சவுக்கும், கழுதைக்குக் கடி
வாளமும், மூடனுடைய முதுகுக்குப் பிரம்
பும் ஏற்றது.
4 மூடனுக்கு அவன் மதியீனத்தின்படி மறு
உத்தரவு கொடாதே; கொடுத்தால் நீயும் அவ
5 னைப்போலாவாய். மூடனுக்கு அவன் மதியீ
னத்தின்படி மறு உத்தரவு கொடு; [5]கொடா
விட்டால் அவன் தன் பார்வைக்கு ஞானியா
யிருப்பான்.
6 மூடன் கையிலே செய்தி அனுப்புகிறவன்
தன் கால்களையே தறித்துக்கொண்டு, கஷ்டத்
தை அடைகிறான்.
7 சொண்டியின் கால்கள் குந்திக்குந்தி நடக்
கும், அப்படியே மூடரின் வாயிலுள்ள உவ
மைச்சொல்லும் குந்தும்.
8 மூடனுக்குக் கனத்தைக் கொடுக்கிறவன்
கவணிலே கல்லைக் கட்டுகிறவன்போலிருப்
பான்.
9 மூடன் வாயில் அகப்பட்ட பழமொழி
வெறியன் கையில் அகப்பட்ட முள்ளு.
10 . பெலத்தவன் அனைவரையும் நோகப்பண்
ணி, மூடனையும் வேலைகொள்ளுகிறான், மீறி
நடக்கிறவர்களையும் வேலைகொள்ளுகிறான்.
11 நாயானது தான் கக்கினதைத் தின்னும்
படி [6]திரும்புவதுபோல, மூடனும் தன் மூடத்
தனத்துக்குத் திரும்புகிறான்.
12 தன் பார்வைக்கு ஞானியாயிருப்பவனைக்
கண்டாயானால், [7]அவனைப்பார்க்கிலும் மூட
னைக்குறித்து அதிக நம்பிக்கையாயிருக்கலாம்.
13 வழியிலே சிங்கம் இருக்கும், நடுவீதியிலே
சிங்கம் இருக்கும் என்று சோம்பேறி சொல்
லுவான்.
14 கதவு கீல்முளையில் ஆடுகிறதுபோல, சோம்
பேறியும் படுக்கையில் ஆடிக்கொண்டிருக்கி
15 றான். சோம்பேறி தன் கையைக் கலத்திலே
வைத்து [8]அதைத் தன் வாய்க்குத் திரும்ப
16 எடுக்க வருத்தப்படுகிறான். புத்தியுள்ள மறு
உத்தரவு சொல்லத்தகும் ஏழுபேரைப்பார்க்
கிலும் சோம்பேறி தன் பார்வைக்கு அதிக
ஞானமுள்ளவன்.

வழியே போகையில் தனக்கடாத வழக்கில் 17
தலையிடுகிறவன் நாயைக் காதைப் பிடித்திழுக்
கிறவனைப்போலிருக்கிறான்.
கொள்ளிகளையும் அம்புகளையும் சாவுக்கேது 18
வானவைகளையும் எறிகிற பைத்தியக்காரன்
எப்படியிருக்கிறானோ, அப்படியே, தனக் 19
கடுத்தவனை வஞ்சித்து: நான் விளையாட்டுக்
கல்லவோ செய்தேன் என்று சொல்லுகிற
மனுஷனும் இருக்கிறான்.
விறகில்லாமல் நெருப்பு அவியும்; கோள் 20
சொல்லுகிறவனில்லாமல் சண்டை அடங்கும்.
கரிகள் தழலுக்கும், விறகு நெருப்புக்கும் 21
ஏதுவானதுபோல, வாதப்பிரியன் சண்டை
களை மூட்டுகிறதற்கு ஏதுவானவன்.
கோள்காரனுடைய வார்த்தைகள் விளை 22
யாட்டுப்போலிருக்கும்; ஆனாலும் அவைகள்
உள்ளத்திற்குள் தைக்கும்.
நேச அனலைக் காண்பிக்கிற உதடுகளோடு 23
கூடிய தீயநெஞ்சம் வெள்ளிப்பூச்சு பூசிய
ஓட்டைப்போலிருக்கும்.
பகைஞன் தன் உள்ளத்தில் கபடத்தை 24
மறைத்து, தன் உதடுகளினால் சூது பேசுகி
றான். அவன் இதம் பேசினாலும் அவனை 25
நம்பாதே; அவன் இருதயத்தில் ஏழு அரு
வருப்புகள் உண்டு. பகையை வஞ்சகமாய் 26
மறைத்து வைக்கிறவனெவனோ, அவனுடைய
பொல்லாங்கு மகா சபையிலே வெளிப்படுத்
தப்படும்.
படுகுழியை வெட்டுகிறவன் தானே அதில் 27
விழுவான்; [9]கல்லைப் புரட்டுகிறவன்மேல் அந்
தக் கல் திரும்ப விழும். கள்ளநாவு தன்னால் 28
கிலேசப்பட்டவர்களைப் பகைக்கும்; இச்சகம்
பேசும் வாய் அழிவை உண்டுபண்ணும்.
நாளையத்தினத்தைக் குறித்துப் பெருமை **27**
பாராட்டாதே; [10]ஒருநாள் பிறப்பிப்பதை அறி
யாயே. உன் வாய் அல்ல, [11]புறத்தியானே 2
உன்னைப் புகழட்டும்; உன் உதடு அல்ல, அந்
நியனே உன்னைப் புகழட்டும்.
கல் கனமும், மணல் பாரமுமாயிருக்கும்; 3
மூடனுடைய கோபமோ இவ்விரண்டிலும்
பாரமாம்.
உக்கிரம் கொடுமையுள்ளது, கோபம் நிஷ்டு 4
ரமுள்ளது; பொறாமையோ வென்றால்,
[12]அதற்கு முன்னிற்கத்தக்கவன் யார்?
மறைவான சிநேகத்தைப்பார்க்கிலும் [13]வெ 5
ளிப்படையான கடிந்துகொள்ளுதல் நல்லது.
சிநேகிதன் அடிக்கும் அடிகள் உண்மையான 6
வைகள்; [14]சத்துரு இடும் முத்தங்களோ வஞ்ச
னையுள்ளவைகள்.
திருப்தியடைந்தவன் தேன்கூட்டையும் 7
*மிதிப்பான்; [15]பசியுள்ளவனுக்கோ கசப்பான
பதார்த்தங்களும் தித்திப்பாயிருக்கும்.
தன் கூட்டைவிட்டு அலைகிற குருவி எப் 8
படியிருக்கிறதோ, அப்படியே தன் ஸ்தானத்
தைவிட்டு அலைகிற மனுஷனும் இருக்கிறான்.
பரிமள தைலமும் சுகந்த தூபமும் இருத 9
யத்தைக் களிப்பாக்குவதுபோல, ஒருவனு

[1] 27. 2
[2] 16. 32
[3] 1 சாமு. 12. 17
[4] எண். 23. 8. உபா. 23. 5
[5] மத். 16. 1-4. 21. 24-27
[6] 2 பே. 2. 22
[7] ஏசா. 18. 11. ரோ. 11. 16. வெளி. 3. 17
[8] 19. 24
[9] சங். 7. 15, 16. பிர. 10. 8
[10] லூ. 12. 19. யாக். 4. 13-16
[11] 25. 27
[12] 1 கொ. 3. 12
[13] 28. 23. கலா. 2. 14
[14] சங். 141. 5 மத். 26. 49
* வெறுப்பான்.
[15] யோபு 6. 7

டைய சிநேகிதன் உட்கருத்தான ஆலோச
னையினால் பாராட்டும் இன்பமானது களிப்
பாக்கும்.
10 உன் சிநேகிதனையும், உன் தகப்பனுடைய
சிநேகிதனையும் விட்டுவிடாதே; உன் ஆபத்
துக்காலத்தில் உன் சகோதரனுடைய வீட்
டிற்குப் போகாதே; [1]தூரத்திலுள்ள சகோதர
னிலும் சமீபத்திலுள்ள அயலானே வாசி.
11 என் மகனே, என்னை நிந்திக்கிறவனுக்கு
நான் உத்தரவு கொடுக்கத்தக்கதாக, [2]நீ ஞான
வானாகி, என் இருதயத்தைச் சந்தோஷப்
படுத்து.
12 விவேகி ஆபத்தைக் கண்டு மறைந்துகொள்
ளுகிறான்; [3]பேதைகளோ நெடுகப்போய் தண்
டிக்கப்படுகிறார்கள்.
13 அந்நியனுக்காகப் [4]பிணைப்படுகிறவனு
டைய வஸ்திரத்தை எடுத்துக்கொள், அந்நிய
ஸ்திரீக்காக ஈடுவாங்கிக்கொள்.
14 ஒருவன் அதிகாலையிலே எழுந்து உரத்த
சத்தத்தோடே தன் சிநேகிதனுக்குச் சொல்
லும் ஆசீர்வாதம் சாபமாக எண்ணப்படும்.
15 அடைமழைநாளில் ஓயாத ஒழுக்கும் [5]சண்
16 டைக்காரியான ஸ்திரீயும் சரி. அவளை அடக்
கப் பார்க்கிறவன் காற்றை அடக்கித் தன் வல
துகையினால் எண்ணெயைப் பிடிக்கப் பார்க்
கிறான்.
17 இரும்பை இரும்பு *கருக்கிடும்; அப்படியே
மனுஷனும் தன் சிநேகிதனுடைய முகத்தைக்
கருக்கிடுகிறான்.
18 அத்திமரத்தைக் காக்கிறவன் [6]அதின் கனி
யைப் புசிப்பான்; தன் எஜமானைக் காக்கிற
வன் [7]கனமடைவான்.
19 தண்ணீரில் முகத்துக்கு முகம் ஒத்திருக்கு
மாப்போல, மனுஷரில் இருதயத்திற்கு இரு
தயம் ஒத்திருக்கும்.
20 பாதாளமும் அழிவும் திருப்தியாகிறதில்லை;
[8]அதுபோல மனுஷனுடைய கண்களும்
திருப்தியாகிறதில்லை.
21 வெள்ளிக்குக் குகையும், பொன்னுக்குப்
புடமும் சோதனை; [9]மனுஷனுக்கு அவனுக்கு
உண்டாகும் புகழ்ச்சியே சோதனை.
22 மூடனை உரலில் போட்டு உலக்கையி
னால் நொய்யோடே நொய்யாகக் குத்தினா
லும், [10]அவனுடைய மூடத்தனம் அவனை
விட்டு நீங்காது.
23 உன் ஆடுகளின் நிலைமையை நன்றாய் அறி
ந்துகொள்; உன் மந்தைகளின்மேல் கவனமா
24 யிரு. செல்வம் என்றைக்கும் நிலையாது;
கிரீடம் தலைமுறை தலைமுறைதோறும் நிலை
25 நிற்குமோ? புல் முளைக்கும், பச்சிலைகள்
தோன்றும், மலைப் பூண்டுகள் சேர்க்கப்படும்.
26 ஆட்டுக்குட்டிகள் உனக்கு வஸ்திரத்தையும்,
கடாக்கள் வயல் வாங்கத்தக்க கிரயத்தையும்
27 கொடுக்கும். வெள்ளாட்டுப்பால் உன் ஆகா
ரத்துக்கும், உன் வீட்டாரின் ஆகாரத்துக்கும்,
உன் வேலைக்காரிகளின் பிழைப்புக்கும்
போதுமானபடியிருக்கும்.

1 18. 24
2 23. 15, 24
3 சங். 57, 1–3
4 யாத். 22. 26
5 19. 13
* சோபிக்கச் செய்யும். பிர. 4. 9, 10
6 1 கொ. 9. 7, 13
7 மாற். 10. 43. கொலோ. 3. 22. 1 பே. 2. 18, 21
8 30. 16. பிர. 1. 8; 6. 7
9 17. 3
10 ஏசா. 1. 5. எரே. 5. 3
11 லேவி. 26. 17, 36. சங். 53. 5
12 மத். 18. 28–30
13 சங். 10. 3. எபே. 5. 11
14 சங். 92. 6. யோ. 7. 17. 1 கொ. 2. 15. 1 யோ. 2. 20, 27
15 யோபு 27. 16. பிர. 2. 26
16 சகரி. 7. 11, 12
17 சங். 32. 3, 5. 1 யோ. 1. 8–10
18 ரோ. 2. 5
19 மத். 2. 16. 1 பே. 5. 8
20 ஆதி. 9. 6. யாத். 21. 14

ஒருவனும் தொடராதிருந்தும் துன்மார்க் 28
கர் ஓடிப்போகிறார்கள்; [11]நீதிமான்களோ சிங்
கத்தைப்போலே தைரியமாயிருக்கிறார்கள்.
தேசத்தின் பாவத்தினிமித்தம் அதின் அதி 2
காரிகள் அநேகராயிருக்கிறார்கள்; புத்தியும்
அறிவுமுள்ள மனுஷனாலோ அதின் நற்சீர்
நீடித்திருக்கும்.
ஏழைகளை ஒடுக்குகிற தரித்திரன் ஆகாரம் 3
விளையாதபடி வெள்ளமாய் அடித்துக்கொண்
டுபோகிற [12]மழையைப்போலிருக்கிறான்.
வேதப்பிரமாணத்தை விட்டு விலகுகிறவர் 4
கள் துன்மார்க்கனைப் புகழுகிறார்கள்; [13]வேதப்
பிரமாணத்தைக் கைக்கொள்ளுகிறவர்களோ
அவர்களோடே போராடுகிறார்கள்.
துஷ்டர் நியாயத்தை அறியார்கள்; [14]கர்த் 5
தரைத் தேடுகிறவர்களோ சகலத்தையும் அறி
வார்கள்.
இருவழிகளில் நடக்கிற திரியாவரக்காரன் 6
ஐசுவரியவானாயிருந்தாலும், நேர்மையாய் நட
க்கிற தரித்திரன் அவனிலும் வாசி.
வேதப்பிரமாணத்தைக் கைக்கொள்ளுகிற 7
வன் விவேகமுள்ள புத்திரன்; போஜனப்பிரி
யருக்குத் தோழனாயிருக்கிறவனோ தன் தகப்
பனை அவமானப்படுத்துகிறான்.
அநியாய வட்டியினாலும் ஆதாயத்தினாலும் 8
தன் ஆஸ்தியைப் பெருகப்பண்ணுகிறவன்,
[15]தரித்திரர்பேரில் இரங்குகிறவனுக்காக அ
தைச் சேகரிக்கிறான்.
வேதத்தைக் கேளாதபடி தன் செவியை 9
விலக்குகிறவனுடைய ஜெபமும் [16]அருவருப்
பானது.
உத்தமர்களை மோசப்படுத்தி, பொல்லாத 10
வழியிலே நடத்துகிறவன் தான் வெட்டின
குழியில் தானே விழுவான்; உத்தமர்களோ
நன்மையைச் சுதந்தரிப்பார்கள்.
ஐசுவரியவான் தன் பார்வைக்கு ஞான 11
வான்; புத்தியுள்ள தரித்திரனோ அவனைப்
பரிசோதிக்கிறான்.
நீதிமான்கள் களிகூரும்போது மகா கொண் 12
டாட்டம் உண்டாகும்; துன்மார்க்கர் எழும்
பும்போதோ மனுஷர் மறைந்துகொள்ளுகிறார்
கள்.
தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடை 13
யமாட்டான்; [17]அவைகளை அறிக்கைசெய்து
விட்டுவிடுகிறவனோ இரக்கம் பெறுவான்.
எப்பொழுதும் பயந்திருக்கிறவன் பாக்கி 14
யவான்; [18]தன் இருதயத்தைக் கடினப்படுத்து
கிறவனோ தீங்கில் விழுவான்.
ஏழை ஜனங்களை ஆளும் துஷ்ட அதிகாரி 15
கெர்ச்சிக்கும் [19]சிங்கத்துக்கும் அலைந்துதிரிகிற
கரடிக்கும் ஒப்பாயிருக்கிறான்.
பிரபு புத்தியீனனாயிருந்தால் அவன் செய் 16
யும் இடுக்கண் மிகுதி; பொருளாசையை வெ
றுக்கிறவன் தீர்க்காயுசைப் பெறுவான்.
இரத்தப்பழிக்காக ஒடுக்கப்பட்டவன் [20]குழி 17
யில் ஒளிக்க ஓடிவந்தால், அவனை ஆதரிக்க
வேண்டாம்.

18 உத்தமனாய் நடக்கிறவன் [1]ரட்சிக்கப்படு
வான்; மாறுபாடான இருவழியில் நடக்கிற
வனோ அவற்றில் ஒன்றிலே விழுவான்.
19 தன் நிலத்தைப் [2]பயிரிடுகிறவன் ஆகாரத்
தால் திருப்தியாவான்; வீணரைப் பின்பற்று
கிறவனோ வறுமையால் நிறைந்திருப்பான்.
20 உண்மையுள்ள மனுஷன் பரிபூரண ஆசீர்
வாதங்களைப் பெறுவான்; [3]ஐசுவரியவானாகிற
தற்குத் தீவிரிக்கிறவனோ ஆக்கினைக்குத் தப்
பான்.
21 முகதாட்சிணியம் நல்லதல்ல, முகதாட்சி
ணிய முள்ளவன் ஒரு துண்டு அப்பத்துக்காக
[4]அநியாயஞ்செய்வான்.
22 வன்கண்ணன் செல்வனாகிறதற்குப் பதறு
கிறான், வறுமை தனக்கு வருமென்று அறியா
திருக்கிறான்.
23 தன் நாவினால் முகஸ்துதி பேசுகிறவனைப்
பார்க்கிலும், [5]கடிந்துகொள்ளுகிறவன் முடி
வில் அங்கீகாரம் பெறுவான்.
24 தன் தகப்பனையும் தன் தாயையும் கொள்
ளையிட்டு, [6]அது துரோகமல்ல என்பவன்
பாழ்க்கடிக்கிற மனுஷனுக்குத் தோழன்.
25 *பெருநெஞ்சன் வழக்கைக் கொளுவுகி
றான்; **கர்த்தரை** நம்புகிறவனோ செழிப்பான்.
26 தன் இருதயத்தை நம்புகிறவன் மூடன்;
ஞானமாய் நடக்கிறவனோ ரட்சிக்கப்படுவான்.
27 தரித்திரருக்குக் [7]கொடுப்பவன் தாழ்ச்சி
யடையான்; தன் கண்களை ஏழைகளுக்கு
விலக்குகிறவனுக்கோ அநேக சாபங்கள் வரும்.
28 துன்மார்க்கர் எழும்பும்போது மனுஷர் மறைந்
துகொள்ளுகிறார்கள்; அவர்கள் அழியும்
போதோ நீதிமான்கள் பெருகுகிறார்கள்.

**29** அடிக்கடி கடிந்துகொள்ளப்பட்டும் தன்
பிடரியைக் கடினப்படுத்துகிறவன் [8]சகாய
மின்றிச் சடிதியில் நாசமடைவான்.
2 நீதிமான்கள் பெருகினால் ஜனங்கள் மகிழு
வார்கள்; [9]துன்மார்க்கர் ஆளும்போதோ ஜன
ங்கள் தவிப்பார்கள்.
3 ஞானத்தில் பிரியப்படுகிறவன் [10]தன் தகப்
பனை மகிழப்பண்ணுகிறான்; வேசிகளோடே
தொந்திப்பானவனோ ஆஸ்தியை அழிக்
கிறான்.
4 நியாயத்தினால் ராஜா தேசத்தை நிலைநிறுத்
துகிறான்; பரிதானப்பிரியனோ அதைக் கவி
ழ்க்கிறான்.
5 பிறனை முகஸ்துதி செய்கிறவன், அவன்
கால்களுக்கு வலையை விரிக்கிறான்.
6 துஷ்டனுடைய துரோகத்திலே கண்ணி
யிருக்கிறது; நீதிமானோ பாடி மகிழுகிறான்.
7 நீதிமான் ஏழைகளின் நியாயத்தைக் கவ
னித்தறிகிறான்; துன்மார்க்கனோ அதை
அறிய விரும்பான்.
8 பரியாசக்காரர் பட்டணத்தில் தீக்கொளுத்
திவிடுகிறார்கள்; ஞானிகளோ குரோதத்தை
விலக்குகிறார்கள்.
9 ஞானி மூடனுடன் வழக்காடுகையில், சினந்
தாலும் சிரித்தாலும் [11]அமைதியில்லை.

1 சங். 84. 11
2 12. 11
3 1 தீமோ. 6. 9
4 எசே. 13. 19
5 27. 5, 6
6 மத். 15. 5
* பொருளாசைக்காரன்.
7 உபா. 15. 7. ஷ
8 1 சாமு. 2. 25, 34
9 எஸ்தர் 8. 15
10 15. 20. லூ. 15. 13, 30
11 மத். 11. 17
12 2 ராஜா. 18. 7. 1 பேது. 3. 12, 13
13 பிர. 16. 17
† அநீதிவட்டி வாங்குகிறவனும்.
14 மத். 5. 45 எபே. 2. 1
15 சங். 89. 2
16 10. 1; 17. 21, 25
17 13. 14; 19. 18
‡ வேதம்.
18 1 சாமு. 3. 1. ஆமோ. 8. 11–13
19 26. 12
§ பெருமை. தானி. 5. 20, 21. மத். 23. 12. அப். 12. 23. யாக். 4. 10
20 ஆதி. 12, 12; 20. 11. பிர. 7. 18
|| தயவை. சங். 62. 12

இரத்தப்பிரியர் உத்தமனைப் [12]பகைக்கிறார் 10
கள்; செம்மையானவர்களோ அவனுடைய
பிராணனைக் காப்பாற்றுகிறார்கள்.
மூடன் தன் உள்ளத்தையெல்லாம் வெளிப் 11
படுத்துகிறான்; [13]ஞானியோ அதைப் பின்
னுக்கு அடக்கிவைக்கிறான்.
அதிபதியானவன் பொய்களுக்குச் செவி 12
கொடுத்தால், அவன் ஊழியக்காரர் யாவரும்
துன்மார்க்கராவார்கள்.
தரித்திரனும் †கொடுமைக்காரனும் ஒருவ 13
ரையொருவர் சந்திக்கிறார்கள்; [14]அவ்விருவரு
டைய கண்களுக்கும் **கர்த்தர்** வெளிச்சங் கொ
டுக்கிறார்.
ஏழைகளுடைய நியாயத்தை உண்மையாய் 14
விசாரிக்கிற ராஜாவின் சிங்காசனம் [15]என்றும்
நிலைபெற்றிருக்கும்.
பிரம்பும் கடிந்துகொள்ளுதலும் ஞானத் 15
தைக் கொடுக்கும்; [16]தன் இஷ்டத்திற்கு விடப்
பட்ட பிள்ளையோ தன் தாய்க்கு வெட்கத்தை
உண்டுபண்ணுகிறான்.
துன்மார்க்கர் பெருகினால் பாவமும் பெரு 16
கும்; நீதிமான்களோ அவர்கள் விழுவதைக்
காண்பார்கள்.
உன் மகனைச் சிட்சைசெய், அவன் உனக்கு 17
ஆறுதல் செய்வான், [17]உன் ஆத்துமாவுக்கு
ஆனந்தத்தையும் உண்டாக்குவான்.
‡தீர்க்கதரிசனமில்லாத இடத்தில் ஜனங் 18
கள் [18]சீர்கெட்டுப்போவார்கள்; வேதத்தைக்
காக்கிறவனோ பாக்கியவான்.
அடிமையானவன் வார்த்தைகளினாலே 19
அடங்கான்; அவைகளை அவன் அறிந்தாலும்
உத்தரவுகொடான்.
தன் வார்த்தைகளில் [19]பதறுகிற மனுஷ 20
னைக் கண்டாயானால், அவனை நம்புவதைப்
பார்க்கிலும் மூடனை நம்பலாம்.
ஒருவன் தன் அடிமையைச் சிறு பிராயமு 21
தல் இளக்காரமாக வளர்த்தால், முடிவிலே
அவன் தன்னைப் புத்திரனாகப் பாராட்டுவான்.
கோபக்காரன் வழக்கைக் கொளுவுகிறான்; 22
மூர்க்கன் பெரும்பாதகன்.
மனுஷனுடைய அகந்தை §அவனைத் தாழ் 23
த்தும்; மனத்தாழ்மையுள்ளவனோ கனமடை
வான்.
திருடனோடே பங்கிட்டுக்கொள்கிறவன் 24
தன் ஆத்துமாவைப் பகைக்கிறான்; சாபத்தை
அவன் கேட்டாலும் காரியத்தை வெளிப்படுத்
தமாட்டான்.
மனுஷனுக்குப் பயப்படும் பயம் கண் 25
ணியை வருவிக்கும்; [20]**கர்த்தரை** நம்புகிற
வனோ உயர்ந்த அடைக்கலத்திலே வைக்கப்
படுவான்.
ஆளுகை செய்கிறவனுடைய ||முகதரிசன 26
த்தைத் தேடுகிறவர்கள் அநேகர்; ஆனாலும் அவ
னவனுடைய நியாயம் **கர்த்தராலே** தீரும்.
நீதிமானுக்கு அநியாயக்காரன் அருவருப் 27
பானவன்; சன்மார்க்கனும் துன்மார்க்கனுக்கு
அருவருப்பானவன்.

**30** யாக்கேயின் குமாரனாகிய ஆகூர் என்
னும் புருஷன் ஈத்தியேலுக்கு வசனித்து,
ஈத்தியேலுக்கும் ஊகாலுக்கும் உரைத்த உப
தேச வாக்கியங்களாவன:
2 மனுஷரெல்லாரிலும் நான் மூடன்; [1]மனு
3 ஷருக்கேற்ற புத்தி எனக்கு இல்லை. நான்
ஞானத்தைக் கற்கவும் இல்லை, பரிசுத்தரின்
4 அறிவை அறிந்துகொள்ளவும் இல்லை. வா
னத்துக்கு ஏறியிறங்கினவர் யார்? காற்றைத்
தமது கைப்பிடிகளில் அடக்கினவர் யார்?
தண்ணீர்களை வஸ்திரத்திலே கட்டினவர் யார்?
பூமியின் எல்லைகளையெல்லாம் ஸ்தாபித்த
வர் யார்? [2]அவருடைய நாமம் என்ன? அவர்
குமாரனுடைய நாமம் என்ன? அதை அறி
வாயோ?
5 தேவனுடைய வசனமெல்லாம் புடமிடப்
பட்டவைகள்; [3]தம்மை அண்டிக்கொள்ளுகிற
6 வர்களுக்கு அவர் கேடகமானவர். அவரு
டைய வசனங்களோடு ஒன்றையுங் கூட்
டாதே, [4]கூட்டினால் அவர் உன்னைக் கடிந்து
கொள்வார், நீ பொய்யனாவாய்.
7 இரண்டு மனு உம்மிடத்தில் கேட்கிறேன்;
நான் மரிக்கும்பரியந்தமும் அவைகளை எனக்கு
8 மறுக்காமல் தாரும். மாயையையும் பொய்
வசனிப்பையும் எனக்குத் தூரப்படுத்தும்;
தரித்திரத்தையும் ஐசுவரியத்தையும் எனக்குக்
9 கொடாதிருப்பீராக. நான் பரிபூரணம் அடை
கிறதினால் மறுதலித்து, [5]கர்த்தர் யார் என்று
சொல்லாதபடிக்கும், தரித்திரப்படுகிறதினால்
திருடி, என் தேவனுடைய நாமத்தை வீணி
லே வழங்காதபடிக்கும், என் படியை எனக்கு
அளந்து [6]என்னைப் போஷித்தருளும்.
10 எஜமானிடத்தில் அவனுடைய வேலைக்கா
ரன்மேல் குற்றஞ்சுமத்தாதே; அவன் உன்
னைச் சபிப்பான், நீ குற்றவாளியாகக் காணப்
படுவாய்.
11 தங்கள் தகப்பனைச் சபித்தும், தங்கள் தா
யை ஆசீர்வதியாமலும் இருக்கிற சந்ததியாரு
12 முண்டு. தாங்கள் அழுக்கறக் கழுவப்படாம
லிருந்தும், [7]தங்கள் பார்வைக்குச் சுத்தமாகத்
13 தோன்றுகிற சந்ததியாருமுண்டு. வேறொரு
சந்ததியாருமுண்டு; அவர்கள் கண்கள் எத்
தனை மேட்டிமையும் அவர்கள் இமைகள் எத்
14 தனை நெறிப்புமானவைகள். தேசத்தில் சிறு
மையானவர்களையும் மனுஷரில் எளிமையான
வர்களையும் [8]பட்சிப்பதற்குக் கட்கங்களையொ
த்த பற்களையும் கத்திகளையொத்த கடைவாய்ப்
பற்களையுமுடைய சந்ததியாருமுண்டு.
15 தா, தா, என்கிற இரண்டு குமாரத்திகள்
அட்டைக்கு உண்டு. திருப்தியடையாத மூன்
றுண்டு, போதும் என்று சொல்லாத நான்கு
16 முண்டு. அவையாவன: பாதாளமும், [9]மலட்
டுக் கர்ப்பமும், தண்ணீரால் திருப்தியடை
யாத நிலமும், போதுமென்று சொல்லாத
அக்கினியுமே.
17 தகப்பனைப் பரியாசம்பண்ணி, தாயின் கட்
டளையை அசட்டைபண்ணுகிற [10]கண்ணை
நதியின் காகங்கள் பிடுங்கும், கழுகின் குஞ்சு
கள் தின்னும்.
எனக்கு மிகவும் ஆச்சரியமானவைகள் 18
மூன்றுண்டு, என் புத்திக்கெட்டாதவைகள்
நான்குமுண்டு. அவையாவன: ஆகாயத்தில் 19
கழுகினுடைய வழியும், கன்மலையின்மேல்
பாம்பினுடைய வழியும், நடுக்கடலில் கப்பலி
னுடைய வழியும், ஒரு கன்னிகையை நாடிய
மனுஷனுடைய வழியுமே. அப்படியே 20
விபசாரஸ்திரீயினுடைய வழியும் இருக்கி
றது; அவள் தின்று, தன் வாயைத் துடை
த்து: [11]நான் ஒரு பாவமும் செய்யவில்லை
என்பாள்.
மூன்றினிமித்தம் பூமி சஞ்சலப்படுகிறது, 21
நான்கையும் அது தாங்கமாட்டாது. அரசாளு 22
கிற அடிமையினிமித்தமும், [12]போஜனத்தால்
திருப்தியான மூடனிமித்தமும், பகைக்கப் 23
படத்தக்கவளாயிருந்தும், புருஷனுக்கு வாழ்க்
கைப்பட்ட ஸ்திரீயினிமித்தமும், தன் நாச்சி
யாருக்குப் பதிலாக இல்லாளாகும் அடிமைப்
பெண்ணினிமித்தமுமே.
பூமியில் சிறியவைகளாயிருந்தும், மகா ஞா 24
னமுள்ளவைகள் நான்குண்டு. அவையா 25
வன: அற்பமான ஜெந்துவாயிருந்தும், [13]கோ
டைகாலத்திலே தங்கள் ஆகாரத்தைச் சம்பா
திக்கிற எறும்பும், சத்துவமற்ற ஜெந்துவா 26
யிருந்தும், தங்கள் வீட்டைக் கன்மலையிலே
தோண்டிவைக்கும் [14]குழிமுசல்களும், ராஜா 27
இல்லாதிருந்தும், பவுஞ்சு பவுஞ்சாய்ப் புறப்
படுகிற வெட்டுக்கிளிகளும், தன் கைகளி 28
னால் வலையைப் பின்னி, அரசர் அரமனை
களிலிருக்கிற சிலந்திப்பூச்சியுமே.
விநோதமாய் அடிவைத்து நடக்கிறவைகள் 29
மூன்றுண்டு; விநோத நடையுள்ளவைகள் நா
லுமுண்டு. அவையாவன: மிருகங்களில் 30
சவுரியமானதும் ஒன்றுக்கும் பின்னிடையா
ததுமாகிய சிங்கமும், போர்க்குதிரையும், 31
வெள்ளாட்டுக்கடாவும், ஒருவரும் எதிர்க்கக்
கூடாத ராஜாவுமே.
நீ மேட்டிமையானதினால் பைத்தியமாய் 32
நடந்து, துர்ச்சிந்தனையுள்ளவனாயிருந்தாயா
னால், கையினால் வாயை மூடு. பாலைக் கடை 33
தல் வெண்ணெயைப் பிறப்பிக்கும்; மூக்கைப்
பிசைதல் ரத்தத்தைப் பிறப்பிக்கும்; [15]அப்படி
யே கோபத்தைக் கிண்டிவிடுதல் சண்டை
யைப் பிறப்பிக்கும்.
ராஜாவாகிய லேமுவேலுக்கடுத்த வசனங் **31**
கள்; அவன் தாய் [16]அவனுக்குப் போதித்த
உபதேசமாவது:
என் மகனே, என் கர்ப்பத்தின் குமார 2
னே, என் பொருத்தனைகளின் புத்திரனே,
ஸ்திரீகளுக்கு உன் பெலனையும் [17]ராஜாக்க 3
ளைக் கெடுக்கும் காரியங்களுக்கு உன் வழி
களையும் கொடாதே. திராட்சரசம் குடிப் 4
பது ராஜாக்களுக்குத் தகுதியல்ல; [18]லேமு
வேலே, அது ராஜாக்களுக்குத் தகுதியல்ல;
மதுபானம் பிரபுக்களுக்குத் தகுதியல்ல. மது 5

[1] சங். 78. 22
[2] யோபு 11. 7. ஏசா. 53. 8
[3] சங். 12. 6: 84. 11
[4] உபா. 4. 2: 12. 32. வெளி. 22. 18, 19
[5] உபா. 8. 12. நெகே. 9. 25, 26
[6] மத். 6. 11
[7] லூ. 18. 11. மு.
[8] ஆமோ. 8. 4. ஆப. 3. 14
[9] ஆப. 2. 5
[10] 20. 20. ஆதி. 9. 22, 25. லேவி. 20. 9
[11] 7. 14
[12] 2 இரா. 8. 12. பிர. 10. 7
[13] 6. 6. மு.
[14] சங். 104. 18
[15] 17. 14
[16] 2 தீமோ. 1. 5: 3. 15
[17] உபா. 17. 17. நெகே. 13. 26. ஓசி. 4. 11
[18] பிர. 10. 17

பானம் பண்ணினால் அவர்கள் நியாயப்பிர
மாணத்தை மறந்து, [1]சிறுமைப்படுகிறவர்களு
6 டைய நியாயத்தையும் புரட்டுவார்கள். மடிந்
துபோகிறவனுக்கு மதுபானத்தையும், [2]மனங்
கசந்தவர்களுக்குத் திராட்சரசத்தையும் கொ
7 டுங்கள்; அவன் குடித்துத் தன் குறைவை
மறந்து, தன் வருத்தத்தை அப்புறம் நினையா
திருக்கட்டும்.
8 ஊமையனுக்காகவும் திக்கற்றவர்களெல்லா
ருடைய நியாயத்துக்காகவும் [3]உன் வாயைத்
9 திற. உன் வாயைத் திறந்து, நீதியாய் நியாயந்
தீர்த்து, [4]சிறுமையும் எளிமையுமானவனுக்கு
நியாயஞ்செய்.
10 குணசாலியான ஸ்திரீயைக் கண்டுபிடிப்
பவன் யார்? [5]அவளுடைய விலை முத்துக்க
11 ளைப்பார்க்கிலும் உயர்ந்தது. அவள் புருஷ
னுடைய இருதயம் அவளை நம்பும்; அவன்
12 சம்பத்துக் குறையாது. அவள் உயிரோடிருக்
கிற நாளெல்லாம் அவனுக்குத் தீமையை
13 யல்ல, நன்மையையே செய்கிறாள். ஆட்டு
மயிரையும் சணலையும் தேடி, தன் கைகளி
னால் உற்சாகத்தோடே வேலைசெய்கிறாள்.
14 அவள் வியாபாரக் கப்பல்களைப்போலிருக்கி
றாள்; தூரத்திலிருந்து தன் ஆகாரத்தைக்
15 கொண்டுவருகிறாள். இருட்டோடே எழுந்து
தன் வீட்டாருக்கு ஆகாரங்கொடுத்து, [6]தன்
16 வேலைக்காரிகளுக்குப் படியளக்கிறாள். ஒரு
வயலை விசாரித்து அதை வாங்குகிறாள்; தன்
கைகளின் சம்பாத்தியத்தினால் திராட்சத்
17 தோட்டத்தை நாட்டுகிறாள். தன்னைப் பெ
லத்தால் இடைக்கட்டிக்கொண்டு, தன் கைக
18 ளைப் பலப்படுத்துகிறாள். தன் வியாபாரம்
பிரயோஜன முள்ளதென்று அறிந்திருக்கி

[1] ஆப. 2. 5
[2] சங். 104. 15
[3] யோபு 29. 15, 16. 1 சாமு. 19. 14. எஸ்தர் 4. 16
[4] லேவி. 1. 7. உபா. 22. 16
[5] 12. 4; 18. 22; 19. 14. பிர. 7. 28
[6] லூ. 12. 42
[7] சங். 41. 1. எபி. 13. 16
[8] 12. 4
[9] 1 பே. 3. 1-6
[10] பிர. 7. 18; 12. 13
[11] மத். 7. 16, 20

றாள்; இரவிலே அவள் விளக்கு அணையா
திருக்கும். தன் கைகளை இராட்டினத்தில் 19
வைக்கிறாள்; அவள் விரல்கள் கதிரைப் பிடிக்
கும். சிறுமையானவர்களுக்குத் தன் கை 20
யைத் திறந்து, [7]ஏழைகளுக்குத் தன் கரங்களை
நீட்டுகிறாள். தன் வீட்டார் அனைவருக்கும் 21
இரட்டைப்புரை உடுப்பிருக்கிறதால், தன்
வீட்டாரினிமித்தம் குளிருக்குப் பயப்படாள்.
இரத்தினக் கம்பளங்களைத் தனக்கு உண்டு 22
பண்ணுகிறாள்; மெல்லிய புடவையும் இரத்
தாம்பரமும் அவள் உடுப்பு. அவள் புருஷன் 23
தேசத்து மூப்பர்களோடே நியாயஸ்தலங்க
ளில் உட்கார்ந்திருக்கையில் [8]பேர்பெற்றவனா
யிருக்கிறான். மெல்லிய புடவைகளை உண்டு 24
பண்ணி விற்கிறாள்; கச்சைகளை வர்த்தகரிடத்
தில் ஒப்புவிக்கிறாள். அவள் உடை பல 25
மும் அலங்காரமுமாயிருக்கிறது; வருங்காலத்
தைப் பற்றியும் மகிழுகிறாள். தன் வாயை 26
ஞானம் விளங்கத் திறக்கிறாள், [9]தயையுள்ள
போதகம் அவள் நாவின்மேல் இருக்கிறது.
அவள் சோம்பலின் அப்பத்தைப் புசியாமல், 27
தன் வீட்டுக்காரியம் எப்படி நடக்கிறது என்று
கண்ணோக்கமாயிருக்கிறாள். அவள் பிள்ளை 28
கள் எழும்பி, அவளைப் பாக்கியவதி என்கி
றார்கள்; அவள் புருஷனும் அவளைப் பார்த்து:
அநேகம் பெண்கள் குணசாலிகளாயிருந்த 29
துண்டு; நீயோ அவர்கள் எல்லாருக்கும் மேற்
பட்டவள் என்று அவளைப் புகழுகிறான்.
சௌந்தரியம் வஞ்சனையுள்ளது, அழகும் 30
வீண், [10]கர்த்தருக்குப் பயப்படுகிற ஸ்திரீயே
புகழப்படுவாள். அவள் கைகளின் [11]பலனை 31
அவளுக்குக் கொடுங்கள்; அவளுடைய செய்
கைகள் வாசல்களில் அவளைப் புகழக்கடவது

# ECCLESIASTES; OR, THE PREACHER

# பிரசங்கி

1 தாவீதின் குமாரனும் எருசலேமின் ராஜா
வுமாகிய பிரசங்கியின் [1]வாக்கியங்கள்.
2 மாயை, மாயை, எல்லாம் மாயை [2]என்று
3 பிரசங்கி சொல்லுகிறான். சூரியனுக்குக்
கீழே மனுஷன் படுகிற எல்லாப் பிரயாசத்தி
4 னாலும் [3]அவனுக்குப் பலன் என்ன? ஒரு
சந்ததி போகிறது, மறு சந்ததி வருகிறது; [4]பூமி
5 யோ என்றைக்கும் நிலைத்திருக்கிறது. சூரி
யன் உதிக்கிறது, சூரியன் அஸ்தமிக்கிறது;
தான் உதித்த இடத்திற்கே அது திரும்பவும்
6 தீவிரிக்கிறது. காற்று தெற்கே போய், வட
க்கேயுஞ்சுற்றி, [5]சுழன்று சுழன்று அடித்து,
தான் சுற்றின இடத்துக்கே திரும்பவும் வரும்.
7 எல்லா நதிகளும் சமுத்திரத்திலே ஓடி
விழுந்தும் [6]சமுத்திரம் நிரம்பாது; தாங்கள்
உற்பத்தியான இடத்திற்கே நதிகள் மறுபடி
8 யும் திரும்பும். எல்லாம் வருத்தத்தினால்
நிறைந்திருக்கிறது; அது மனுஷரால் சொல்லி
முடியாது; [7]காண்கிறதினால் கண் திருப்தியா
கிறதில்லை, கேட்கிறதினால் செவி நிரப்பப்ப
9 டுகிறதுமில்லை. முன் இருந்ததே இனிமே
லும் இருக்கும்; முன் செய்யப்பட்டதே பின்
னும் செய்யப்படும்; *சூரியனுக்குக் கீழே
10 நூதனமானது ஒன்றுமில்லை. இதைப் பார்,
இது நூதனம் என்று சொல்லப்படத்தக்க காரி
யம் ஒன்றுண்டோ? அது நமக்கு முன்னுள்ள
11 பூர்வகாலங்களிலும் இருந்ததே. முன் இருந்
தவைகளைப்பற்றி ஞாபகம் இல்லை; [8]அப்ப
டியே பின்வரும் காரியங்களைப்பற்றியும் இனி
மேலிருப்பவர்களுக்கு ஞாபகம் இராது.
12 பிரசங்கியாகிய நான் [9]எருசலேமில் இஸ்ர
13 வேலருக்கு ராஜாவாயிருந்தேன். வானத்தின்
கீழ் நடப்பதை யெல்லாம் ஞானமாய் விசா
ரித்து ஆராய்ச்சி செய்கிறதற்கு என் மனதைப்
பிரயோகம் பண்ணினேன்; [10]மனுபுத்திரர்
இந்தக் கடுந்தொல்லையில் அடிபடும்படிக்கு
தேவன் அதை அவர்களுக்கு நியமித்திருக்கி
14 றார். சூரியனுக்குக் கீழே செய்யப்படுகிற
காரியங்களையெல்லாம் கவனித்துப் பார்த்
தேன்; இதோ, எல்லாம் மாயையும், மனதுக்
15 குச் சஞ்சலமுமாயிருக்கிறது. கோணலான
தை நேராக்கக் கூடாது; [11]குறைவானதை
16 எண்ணிமுடியாது. இதோ, நான் பெரியவ

[1] 12. 8-10
[2] சங். 39. 5, 6: 144. 4. மத். 8. 36, 37. ரோ. 8. 20, 21
[3] 2. 22: 3. 9
[4] சங். 104. 5
[5] யோ. 3. 8
[6] யோபு 38. 10. சங். 104. 8, 9
[7] நீதி. 27. 20
* பிரபஞ்சத்தில். 3. 15: 7. 10
[8] 2. 16
[9] 1 இரா. 4. 1. ழ
[10] ஆதி. 3. 19
[11] 7. 13. யோபு 11. 6
[12] 1 இரா. 4. 29-31: 10. 23, 24
[13] 7. 23, 25. 1 தெச. 5. 21
[14] 12. 12
[15] 8. 15. லூ. 12. 19, 20. தீத். 3. 3
[16] நீதி. 14. 13
[17] நீதி. 20. 1
[18] 1 இரா. 9. 28: 10. 10. ழ
[19] 2 சாமு. 9. 11

னாயிருந்து, எனக்குமுன் எருசலேமிலிருந்த
எல்லாரைப்பார்க்கிலும் ஞானமடைந்து தேறி
னேன்; [12]என் மனம் மிகுந்த ஞானத்தையும்
அறிவையும் கண்டறிந்தது என்று நான்
என் உள்ளத்திலே சொல்லிக்கொண்டேன்.
ஞானத்தை அறிகிறதற்கும், பைத்தியத்தை 17
யும் மதியீனத்தையும் அறிகிறதற்கும், [13]நான்
என் மனதைப் பிரயோகம்பண்ணினேன்;
இதுவும் மனதுக்குச் சஞ்சலமாயிருக்கிற
தென்று கண்டேன். அதிக ஞானத்திலே 18
[14]அதிக சலிப்புண்டு; அறிவு பெருத்தவன்
நோவு பெருத்தவன்.

நான் என் உள்ளத்திலே சொல்லிக்கொண் 2
டது என்னவென்றால்: வா, இப்பொழுது
உன்னைச் சந்தோஷத்தினாலே சோதித்துப்
பார்ப்பேன், [15]இன்பத்தை அநுபவி என்
றேன்; இதோ, இதுவும் மாயையாயிருந்தது.
நகைப்பைக் குறித்து, [16]அது பைத்தியம் என் 2
றும், சந்தோஷத்தைக்குறித்து, அது என்ன
செய்யும்? என்றும் சொன்னேன். வானத் 3
தின் கீழ் மனுபுத்திரர் உயிரோடிருக்கும் நாள
ளவும் பெற்று அநுபவிக்கத்தக்கது இன்ன
தென்று அறியும்பொருட்டு, என் இருத
யத்தை ஞானத்தால் தேற்றிக்கொண்டிருக்கும்
போதே, நான் என் தேகத்தை மதுபானத்தால்
சீராட்டிக்கொண்டிருக்கவும், [17]மதியீனத்தைப்
பற்றிக்கொண்டிருக்கவும் என் உள்ளத்தில்
வகைதேடினேன். நான் பெரிய வேலைகளைச் 4
செய்தேன்; எனக்காக வீடுகளைக் கட்டினேன்,
திராட்சத்தோட்டங்களை நாட்டினேன். எனக் 5
காகத் தோட்டங்களையும் சிங்காரவனங்களை
யும் உண்டாக்கி, அவைகளில் சகலவகைக்
கனிவிருட்சங்களையும் நாட்டினேன். மரங்கள் 6
பயிராகும் தோப்புக்கு நீர்ப்பாய்ச்சுகிறதற்குக்
குளங்களை உண்டுபண்ணினேன். வேலைக் 7
காரரையும் வேலைக்காரிகளையும் சம்பாதித்
தேன்; வீட்டிலும் வேலைக்காரர் பிறந்தார்கள்;
எனக்குமுன் எருசலேமிலிருந்த எல்லாரைப்
பார்க்கிலும் ஆடுமாடு முதலான திரண்ட ஆஸ்
திகள் எனக்கு இருந்தது. வெள்ளியையும் 8
பொன்னையும், [18]ராஜசம்பத்தையும் மாகாணங்
களிலுள்ள பொருள்களையும் சேகரித்தேன்;
[19]சங்கீதக்காரரையும் சங்கீதக்காரிகளையும்,

மனுபுத்திரருக்கு இன்பமான பலவித வாத்தி
9 யங்களையும் சம்பாதித்தேன். எனக்கு முன்
எருசலேமிலிருந்த எல்லாரைப் பார்க்கிலும்
நான் பெரியவனும் திரவிய சம்பன்னனுமா
னேன்; என் ஞானமும் என்னோடேகூட
10 இருந்தது. என் கண்கள் இச்சித்தவைகளில்
ஒன்றையும் நான் அவைகளுக்குத் தடைபண்
ணவில்லை; என் இருதயத்துக்கு ஒரு சந்தோ
ஷத்தையும் நான் வேண்டாமென்று விலக்க
வில்லை; நான் செய்த முயற்சிகளிலெல்லாம்
என் மனம் மகிழ்ச்சிகொண்டிருந்தது; [1]இது
வே என் பிரயாசங்கள் எல்லாவற்றினாலும்
11 எனக்கு வந்த பலன். என் கைகள் செய்த
சகல வேலைகளையும், நான் பட்ட எல்லாப்
பிரயாசத்தையும் கண்ணோக்கிப் பார்த்தேன்;
[2]இதோ, எல்லாம் மாயையும், மனதுக்குச்
சஞ்சலமுமாயிருந்தது; சூரியனுக்குக் கீழே
பலன் ஒன்றுமில்லை.
12 பின்பு நான், ஞானமானது என்ன என்றும்,
[3]பைத்தியமும் மதியீனமும் என்ன என்றும்
பார்த்து அறியும்படி திரும்பினேன்; ராஜாவுக்
குப் பின்வரும் மனுஷன் என்ன செய்யக்
13 கூடும்? செய்ததையே செய்வான். இருளைப்
பார்க்கிலும் வெளிச்சம் எவ்வளவு உத்தமமோ,
[4]அவ்வளவாய் மதியீனத்தைப்பார்க்கிலும் ஞா
14 னம் உத்தமமென்று கண்டேன். ஞானி
யின் கண்கள் [5]அவன் முகத்திலே இருக்கி
றது; மூடனோ இருளிலே நடக்கிறான்; ஆகி
லும் அவர்களெல்லாருக்கும் [6]ஒரேவிதமாய்ச்
15 சம்பவிக்கிறது என்று கண்டேன். மூடனுக்
குச் சம்பவிக்கிறதுபோல எனக்கும் சம்பவிக்
கிறதே; அப்படியிருக்க நான் அதிக ஞான
மடைந்ததினால் காரியமென்ன என்று சிந்
தித்தேன்; இதுவும் மாயை என்று என் உள்
16 ளத்தில் எண்ணினேன். மூடன் என்றாலும்
ஞானியென்றாலும் என்றைக்கும் நினைவில்
இருப்பதில்லை; இப்பொழுது இருக்கிறதெல்
லாம் வருங்காலத்தில் மறக்கப்பட்டுப்போம்;
[7]மூடன் எப்படிச் சாகிறானோ அப்படியே
ஞானியும் சாகிறான்.
17 ஆகையால் இந்த ஜீவனை வெறுத்தேன்;
சூரியனுக்குக் கீழே செய்யப்படும் கிரியை
யெல்லாம் எனக்கு விசனமாயிருந்தது; எல்
லாம் மாயையும், மனதுக்குச் சஞ்சலமுமாயி
18 ருக்கிறது. சூரியனுக்குக் கீழே நான் பட்ட
பிரயாசத்தையெல்லாம் வெறுத்தேன்; [8]எனக்
குப் பின் வரப்போகிறவனுக்கு அதை நான்
19 வைத்துப்போகவேண்டியதாகுமே. அவன் புத்
திமானாயிருப்பானோ, மூடனாயிருப்பானோ,
அதை யார் அறிவார்? [9]ஆகிலும் சூரியனுக்குக்
கீழே நான் பிரயாசப்பட்டு ஞானமாய்ச் சம்
பாதித்த சகல வஸ்துக்களின்பேரிலும் அவன்
20 அதிகாரியாவான்; இதுவும் மாயையே. ஆகை
யால் சூரியனுக்குக் கீழே நான் பட்ட எல்லாப்
பிரயாசத்தின்மேலுமுள்ள ஆசையை விட்டு
21 விட வகைபார்த்தேன். ஒருவன் புத்தி, யுக்தி,
நிதானத்தோடு பிரயாசப்படுகிறான்; ஆகிலும்

[1] 3. 22: 5. 18: 9. 9
[2] 11. 8. 1 தீமோ. 6. 6. 1 யோ. 2. 16, 17
[3] 7. 25
[4] 7. 12. மல்கி. 3. 18: 4. 1, 2
[5] நீதி. 17. 24
[6] சங். 49. 10
[7] எபி. 9. 27
[8] சங். 49. 10
[9] 1 இரா. 12. 8. ம
[10] மத். 16. 26
[11] யோபு 5. 7: 14, 1
[12] 3. 12: 5. 18, 19
[13] யோபு 27. 16, 17. நீதி. 13. 22: 28. 8
[14] 8. 6
[15] எபி. 9. 27
[16] ரோ. 12. 15
[17] மத். 19. 15. யோவே. 2. 16. 1 கொ. 7. 3–5
[18] சங். 139. 21. லூ. 14. 26. வெளி. 2. 2
[19] 1. 13
* நித்தியத்தையும்.
[20] யோபு 11. 7, 8. ரோ. 11. 33

அப்படிப் பிரயாசப்படாதிருந்த வேறொருவ
வனுக்கு அவன் அதைச் சொந்தமாக விட்டு
விடவேண்டியதாகும்; இதுவும் மாயையும்
பெரிய தீங்குமாய் இருக்கிறது. மனுஷன் 22
சூரியனுக்குக் கீழே படுகிற எல்லாப் பிரயாசத்
தினாலும் அவனுடைய இருதயத்தின் எண்
ணங்களினாலும் [10]அவனுக்குப் பலன் என்ன?
அவன் நாட்களெல்லாம் அலுப்புள்ளது. 23
[11]அவன் வேலைகள் வருத்தமுள்ளது; இராத்
திரியிலும் அவன் மனதுக்கு இளைப்பாறுத
லில்லை; இதுவும் மாயையே.
மனுஷன் புசித்துக் குடித்து, தன் பிரயா 24
சத்தின் பலனை அநுபவிப்பதைப் பார்க்கி
லும், அவனுக்கு ஒரு நன்மையும் இல்லை;
[12]இதுவும் தேவனுடைய கரத்திலிருந்து வரு
கிறது என்று நான் கண்டேன். என்னைப் 25
பார்க்கிலும் சம்பிரமமாய்ச் சாப்பிடத்தக்கவன்
யார்? என்னைப்பார்க்கிலும் துரிதமாய்ச் சம்
பாதிக்கத்தக்கவன் யார்? தேவன் தமது பார் 26
வைக்கு நல்லவனாயிருக்கிறவனுக்கு ஞானத்
தையும் அறிவையும் இன்பத்தையும் அளிக்
கிறார்; [13]பாவஞ்செய்கிறவனுக்கோ தமது பார்
வைக்கு நல்லவனாயிருக்கிறவன் வசமாய் வை
த்துவிட்டுப் போகும்பொருட்டுச் சேர்த்துக்
குவித்துவைக்கும் தொல்லையை அவர் நிய
மித்திருக்கிறார்; இதுவும் மாயையும், மன
துக்குச் சஞ்சலமுமாயிருக்கிறது.
ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு காலமு 3
ண்டு; [14]வானத்தின் கீழிருக்கிற ஒவ்வொரு
காரியத்துக்கும் ஒவ்வொரு சமயமுண்டு.
பிறக்க ஒரு காலமுண்டு, இறக்க ஒரு கால 2
முண்டு; [15]நட ஒரு காலமுண்டு, நட்டதைப்
பிடுங்க ஒரு காலமுண்டு; கொல்ல ஒரு கால 3
முண்டு, குணமாக்க ஒரு காலமுண்டு, இடி
க்க ஒரு காலமுண்டு, கட்ட ஒரு காலமுண்டு;
அழ ஒரு [16]காலமுண்டு, நகைக்க ஒரு கால 4
முண்டு; புலம்ப ஒரு காலமுண்டு, நடனம்
பண்ண ஒரு காலமுண்டு; கற்களை எறிந்து 5
விட ஒரு காலமுண்டு, கற்களைச் சேர்க்க ஒரு
காலமுண்டு; தழுவ ஒரு காலமுண்டு, [17]தழு
வாமலிருக்க ஒரு காலமுண்டு; தேட ஒரு 6
காலமுண்டு, இழக்க ஒரு காலமுண்டு; காப்
பாற்ற ஒரு காலமுண்டு, எறிந்துவிட ஒரு
காலமுண்டு; கிழிக்க ஒரு காலமுண்டு, தை 7
க்க ஒரு காலமுண்டு; மவுனமாயிருக்க ஒரு
காலமுண்டு, பேச ஒரு காலமுண்டு; சிநே 8
கிக்க ஒரு காலமுண்டு, [18]பகைக்க ஒரு கால
முண்டு; யுத்தம்பண்ண ஒரு காலமுண்டு,
சமாதானம்பண்ண ஒரு காலமுண்டு. வருத் 9
தப்பட்டுப் பிரயாசப்படுகிறவனுக்கு அதினால்
பலன் என்ன? மனுபுத்திரர் பாடுபடும்படி 10
[19]தேவன் அவர்களுக்கு நியமித்த தொல்லை
யைக் கண்டேன். அவர் சகலத்தையும் அதி 11
னதின் காலத்திலே நேர்த்தியாகச் செய்திருக்
கிறார்; *உலகத்தையும் அவர்கள் உள்ளத்திலே
வைத்திருக்கிறார்; [20]ஆதலால் தேவன் ஆதி
முதல் அந்தம்மட்டும் செய்துவரும் கிரியை

12 யை மனுஷன் கண்டுபிடியான். மகிழ்ச்சி
யாயிருப்பதும், [1]உயிரோடிருக்கையில் நன்
மை செய்வதுமேயல்லாமல், வேறொரு நன்
மையும் மனுஷனுக்கு இல்லையென்று அறிந்
13 தேன். அன்றியும் மனுஷர் யாவரும் புசித்
துக் குடித்து தங்கள் சகலப் பிரயாசத்தின்
பலனையும் அநுபவிப்பது [2]தேவனுடைய
14 அநுக்கிரகம். தேவன் செய்வது எதுவோ
அது என்றைக்கும் நிலைக்கும் என்று அறி
வேன்; [3]அதினோடே ஒன்றும் கூட்டவுங்
கூடாது, அதிலிருந்து ஒன்றும் குறைக்கவுங்
கூடாது; மனுஷர் தமது சமுகத்தில் பயந்
திருக்கும்படி தேவன் இப்படிச் செய்துவரு
15 கிறார். முன் நடந்ததே இப்பொழுதும் நடக்
கிறது; [4]இனி நடக்கப்போகிறதும் முன்
னமே நடந்தது; நடந்ததையோ தேவன்
விசாரிப்பார்.
16 பின்னும் சூரியனுக்குக் கீழே நான் நியா
யஸ்தலத்தைக் கண்டேன், [5]அங்கே அநி
யாயம் இருந்தது; நீதிஸ்தலத்தையும் கண்
17 டேன், அங்கே அநீதி இருந்தது. சகல
எண்ணங்களையும் சகல செய்கைகளையும் நியா
யந்தீர்க்குங் காலம் இனி இருக்கிறபடியால்
சன்மார்க்கனையும் துன்மார்க்கனையும் [6]தேவன்
நியாயந்தீர்ப்பார் என்று என் உள்ளத்தில்
18 எண்ணினேன். மனுபுத்திரர் தாங்கள் மிரு
கங்களைப்போல் [7]இருக்கிறார்களென்பதை
அவர்கள் காணும்படிக்கு தேவன் அவர்களைச்
சோதிக்கிறாரென்று நான் மனுஷருடைய
நிலைமையைக்குறித்து என் உள்ளத்தில் எண்
19 ணினேன். மனுபுத்திரருக்குச் சம்பவிக்கி
றது மிருகங்களுக்கும் சம்பவிக்கும்; அவர்க
ளுக்கும் இவைகளுக்கும் ஏக சம்பவமுண்டு;
இவைகள் சாகிறதுபோலவே அவர்களும்
சாகிறார்கள்; ஜீவன்களுக்கெல்லாம் சுவாசம்
ஒன்றே; மிருகத்தைப்பார்க்கிலும் மனுஷன்
மேன்மையுள்ளவன் அல்ல; எல்லாம் மாயை
20 யே. எல்லாம் ஒரே இடத்துக்குப் போகி
றது; [8]எல்லாம் மண்ணிலே உண்டாகிறது,
21 எல்லாம் மண்ணுக்குத் திரும்புகிறது. உயர
ஏறும் மனுஷனுடைய ஆவியையும், [9]தாழப்
பூமியிலிறங்கும் மிருகங்களுடைய ஆவியை
22 யும் அறிகிறவன் யார்? இப்படியிருக்கிற
படியால், மனுஷன் தன் செய்கைகளில் மகி
ழ்ச்சியாயிருக்கும் நன்மையையே யல்லாமல்,
வேறே நன்மை இல்லையென்று கண்டேன்;
[10]இதுவே அவன் பங்கு; தனக்குப் பின்வரும்
காரியங்களைக் காணும்படிக்கு அவனைத்
திரும்பி வரப்பண்ணுகிறவன் யார்?

4 இதற்குப் பின்பு நான் சூரியனுக்குக் கீழே
செய்யப்படும் கொடுமைகளையெல்லாம் சிந்
தித்துப் பார்த்தேன்; [11]இதோ, ஒடுக்கப்பட்ட
வர்களின் கண்ணீரைக் கண்டேன், அவர்க
ளைத் தேற்றுவாரில்லை; ஒடுக்குகிறவர்கள் பட்
சத்தில் பெலம் இருந்தது, அப்படியிருந்தும்
2 தேற்றுவாரில்லை. ஆதலால் இன்னும் உயி
ரோடிருந்து பிழைக்கிறவர்களைப் பார்க்கிலும்
[12]முன்னமே காலஞ்சென்று மரித்தவர்களையே
பாக்கியவான்கள் என்றேன். இவ்விருதிறத் 3
தாருடைய நிலைமையைப்பார்க்கிலும் இன்
னும் பிறவாதவனுடைய நிலைமையே வாசி;
[13]அவன் சூரியனுக்குக் கீழே செய்யப்படும்
துர்ச்செய்கைகளைக் காணவில்லையே.
மனுஷன் படும் எல்லாப் பிரயாசமும், 4
பயன்படும் எல்லாக் கிரியையும், [14]அயலா
னுடைய பொறாமைக்கு ஏதுவாயிருக்கிறதை
நான் கண்டேன்; இதுவும் மாயையும், மன
துக்குச் சஞ்சலமுமாயிருக்கிறது. மூடன் தன் 5
கைகளைக் கட்டிக்கொண்டு, [15]தன் சதையை
யே தின்கிறான். வருத்தத்தோடும் மனச்சஞ் 6
சலத்தோடும் இரண்டு கைப்பிடியும் நிறையக்
கொண்டிருப்பதைப் பார்க்கிலும் [16]அமைச்ச
லோடு ஒரு கைப்பிடி நிறையக் கொண்டிருப்
பதே நலம்.
பின்பு நான் திரும்பிக்கொண்டு சூரியனுக் 7
குக் கீழே மாயையான வேறொரு காரியத்
தைக் கண்டேன். ஒருவன் ஒண்டிக்காரனா 8
யிருக்கிறான்; அவனுக்கு உடனாளியுமில்லை,
அவனுக்குப் பிள்ளையும் சகோதரனுமில்லை;
அப்படியிருந்தும் அவன் படும் பிரயாசத்
துக்கு முடிவில்லை; அவன் கண் ஐசுவரியத்
தால் திருப்தியாகிறதுமில்லை; [17]நான் ஒரு நன்
மையையும் அநுபவியாமல் யாருக்காகப் பிர
யாசப்படுகிறேன் என்று அவன் சிந்திக்கிறது
மில்லை; இதுவும் மாயை, தீராத தொல்லை.
ஒண்டியாயிருப்பதிலும் இருவர் கூடியிருப் 9
பது நலம்; அவர்களுடைய பிரயாசத்தினால்
அவர்களுக்கு நல்ல பலனுண்டாகும். ஒரு 10
வன் விழுந்தால் அவன் உடனாளி அவனைத்
தூக்கிவிடுவான்; ஒண்டியாயிருந்து விழுகிற
வனுக்கு ஐயோ, அவனைத் தூக்கிவிடத் துணை
யில்லையே? இரண்டுபேராய்ப் படுத்துக் 11
கொண்டிருந்தால் அவர்களுக்குச் சூடுண்டா
கும்; ஒண்டியாயிருக்கிறவனுக்குச் சூடுண்டா
வது எப்படி? ஒருவனை யாதாமொருவன் 12
மேற்கொள்ளவந்தால் இருவரும் அவனுக்கு
எதிர்த்து நிற்கலாம்; முப்புரிநூல் சீக்கிரமாய்
அறாது.
இனி ஆலோசனையைக் கேளாத கிழவனும் 13
மூடனுமாகிய ராஜாவைப்பார்க்கிலும், ஏழை
யும் ஞானியுமாகிய இளைஞனே வாசி. அர 14
சாளச் சிறைச்சாலையிலிருந்து புறப்படுவாரு
முண்டு; ராஜாங்கத்தில் பிறந்து ஏழையாவாரு
முண்டு. சூரியனுக்குக் கீழே ஜீவனுள் 15
ளோர் யாவரும் ராஜாவின் பட்டத்திற்கு வரப்
போகிற பிள்ளையின் பட்சத்தில் சார்ந்திருப்
பதைக் கண்டேன். அவர்களுக்கு முன் அப் 16
படிச் செய்த ஜனங்களின் இலக்கத்திற்கு
முடிவில்லை; இனி இருப்பவர்கள் இவன்மே
லும் பிரியம் வைக்காமற்போவார்கள்; இது
வும் மாயையும், மனதுக்குச் சஞ்சலமுமா
யிருக்கிறது.

நீ தேவாலயத்துக்குப் போகும்போது 5
[18]உன் நடையைக் காத்துக்கொள்; மூடர் பலி

[1] சங். 37. 3
[2] 2. 24
[3] சதி. 30. 6. யாக். 1. 17
[4] 1. 9
[5] 5. 8. எரே. 5. 1, 2
[6] மத். 25. 32. ரோ. 2. 6-8. 2 கொ. 5. 10. 2 தெச. 1. 6-10
[7] சங். 49. 12, 20; 73. 22
[8] ஆதி. 3. 19
[9] 12. 7
[10] 2. 24
[11] 3. 16
[12] யோபு 3. 17, மு.
[13] 6. 3. யோபு 3. 11, மு.
[14] ஆதி. 37. 4-11
[15] சதி. 6. 10; 24. 33
[16] சதி. 15. 16, 17
[17] சங். 39. 6. சதி. 27. 20. 1 யோ. 2. 16
[18] யாத். 3. 5. 2 நாளா. 26. 16. ஏசா. 1. 12

யிடுவதுபோலப் பலியிடுவதைப்பார்க்கிலும்
[1]செவிகொடுக்கச் சேர்வதே நலம்; தாங்கள்
செய்கிறது தீமையென்று அறியாதிருக்கிறார்
2 கள். தேவசமுகத்தில் நீ துணிகரமாய் உன்
வாயினால் பேசாமலும், மனம் பதறி ஒரு வார்த்
தையையும் சொல்லாமலும் இரு; தேவன்
வானத்திலிருக்கிறார், நீ பூமியிலிருக்கிறாய்,
[2]ஆதலால் உன் வார்த்தைகள் சுருக்கமாயிருப்
3 பதாக. தொல்லையின் திரட்சியினால் சொப்
பனம் பிறக்கிறதுபோல, [3]வார்த்தைகளின்
திரட்சியினால் மூடனுடைய சத்தம் பிறக்கும்.
4 நீ தேவனுக்கு ஒரு பொருத்தனை பண்ணிக்
கொண்டால், [4]அதைச் செலுத்தத் தாமதி
யாதே; அவர் மூடரில் பிரியப்படுகிறதில்லை;
5 நீ நேர்ந்துகொண்டதைச் செய். நீ நேர்ந்து
கொண்டதைச் செய்யாமற் போவதைப்
பார்க்கிலும், நேர்ந்துகொள்ளாதிருப்பதே
6 நலம். உன் மாம்சத்தைப் பாவத்துக்குள்
ளாக்க உன் வாய்க்கு இடங்கொடாதே; அது
புத்திபிசகினால் செய்தது [5]என்று தூதனுக்கு
முன் சொல்லாதே; தேவன் உன் வார்த்தை
களினாலே கோபங்கொண்டு, உன் கைகளின்
7 கிரியையை அழிப்பானேன்? அநேக சொப்
பனங்கள் மாயையாயிருப்பதுபோல, அநேக
வார்த்தைகளும் வியர்த்தமாயிருக்கும்; [6]ஆகை
யால் நீ தேவனுக்குப் பயந்திரு.
8 ஒரு தேசத்தில் ஏழைகள் ஒடுக்கப்படுகிற
தையும், நியாயமும் நீதியும் புரட்டப்படுகிற
தையும் [7]நீ காண்பாயானால், அதைக்குறித்து
ஆச்சரியப்படாதே; உயர்ந்தவன்மேல் உயர்ந்
தவன் காவலாளியாயிருக்கிறான்; அவர்கள்
9 மேல் உயர்ந்தவரும் ஒருவருண்டு. பூமியில்
விளையும் பலன் யாவருக்கு முரியது; ராஜா
வும் வயலின் பலனால் ஆதரிக்கப்படுகிறான்.
10 பணப்பிரியன் பணத்தினால் திருப்தியடை
வதில்லை; [8]செல்வப்பிரியன் செல்வப்பெருக்
கினால் திருப்தியடைவதில்லை; இதுவும் மா
11 யையே. பொருள் பெருகினால் அதைத் தின்
கிறவர்களும் பெருகுகிறார்கள்; அதை உடைய
வர்கள் தங்கள் கண்களினால் அதைக் காண்
பதேயன்றி அவர்களுக்குப் பிரயோஜனம்
12 என்ன? வேலைசெய்கிறவன் கொஞ்சமாய்ப்
புசித்தாலும் அதிகமாய்ப் புசித்தாலும் அவன்
நித்திரை இன்பமாயிருக்கும்; செல்வனுடைய
பெருக்கோ அவனைத் தூங்கவொட்டாது.
13 சூரியனுக்குக் கீழே நான் கண்ட வேறொரு
கொடிய தீங்குமுண்டு; அதாவது, [9]ஐசுவரிய
மானது அதை உடையவர்களுக்கே கேடுண்
டாகும்படி சேகரித்து வைக்கப்படுவதாம்.
14 அந்த ஐசுவரியம் விக்கினத்தால் அழிந்துபோ
கிறது; அவன் ஒரு புத்திரனைப் பெறுகிறான்,
15 *அவன் கையில் யாதொன்றும் இல்லை. தன்
தாயின் கர்ப்பத்திலிருந்து நிர்வாணியாய் வந்
தான்; [10]வந்ததுபோலவே நிர்வாணியாய்த்திரு
ம்பப் போவான்; அவன் தன் பிரயாசத்தினால்
உண்டான பலனொன்றையும் தன் கையிலே
16 எடுத்துக்கொண்டு போவதில்லை. அவன் வந்த

[1] 1 சாமு. 15. 22. நீதி. 21. 27. ஓசி. 6. 6
[2] நீதி. 10. 10. மத். 6. 7
[3] நீதி. 10. 19
[4] எண். 30. 2. உபா. 23. 21–25. சங். 66. 13, 14
[5] 1 கொ. 11. 10
[6] 12. 13
[7] 3. 16. சங். 12. 5; 58. 11; 95. 3
[8] மத். 6. 19, 24
[9] 1 தீமோ. 6. 9. யாக். 5. 1, 2
* அவனுக்குக் கொடுக்க.
[10] யோபு 1. 21. சங். 49. 17. 1 தீமோ. 6. 7
[11] நீதி. 11. 29. ஓசி. 8. 7
[12] 1 தீமோ. 6. 17
[13] 2. 24; 3. 12, 13
[14] யோபு 21. 10. ஷ
[15] லூ. 12. 20
[16] 2 இரா. 9. 35-37. ஏசா. 14. 19, 20. எரே. 22. 19
[17] சங். 58. 8
[18] நீதி. 16. 26

பிரகாரமே போகிறான், இதுவும் கொடுமை
யான தீங்கு; [11]அவன் காற்றுக்குப் பிரயாசப்
பட்டதினால் அவனுக்கு லாபம் என்ன? அவன் 17
தன் நாட்களிலெல்லாம் இருளிலே புசித்து,
மிகவும் சலித்து, நோயும் துன்பமும் அடை
கிறான்.
இதோ, உயிரோடிருக்கும்படி தேவன் அரு 18
ளிச்செய்த நாளெல்லாம் மனுஷன் புசித்துக்
குடித்து, சூரியனுக்குக் கீழே தான் படும் பிர
யாசம் அனைத்தின் பலனையும் அநுபவிப்பதே
நலமும் உத்தமுமான காரியமென்று நான்
கண்டேன், [12]இதுவே அவன் பங்கு. தேவன் 19
ஐசுவரியத்தையும் சம்பத்தையும் எவனுக்குக்
கொடுத்திருக்கிறாரோ, அவன் அதிலே புசிக்க
வும், தன் பங்கைப் பெறவும், [13]தன் பிரயாசத்தி
லே மகிழ்ச்சியாயிருக்கவும் அவனுக்கு அதிகா
ரம் அளிப்பது தேவனுடைய அநுக்கிரகம்.
அவனுடைய இருதயத்திலே மகிழும்படி தே 20
வன் அவனுக்கு அநுக்கிரகம் பண்ணுகிறபடி
யினால், அவன் தன் ஜீவனுள்ள நாட்களை
அதிகமாய் நினையான்.

சூரியனுக்குக் கீழே நான் கண்ட வேறொரு 6
தீங்குமுண்டு; அது மனுஷருக்குள்ளே பெ
ரும்பாலும் நடந்துவருகிறது. அதாவது, ஒரு 2
வனுக்கு தேவன் செல்வத்தையும் சம்பத்தை
யும் கனத்தையும் கொடுக்கிறார்; அவன் என்ன
இச்சித்தாலும் அதெல்லாம் [14]அவனுக்குக்
குறைவில்லாமல் கிடைக்கும்; [15]ஆனாலும்
அவைகளை அநுபவிக்கும் சக்தியை தேவன்
அவனுக்குக் கொடுக்கவில்லை; அந்நிய மனு
ஷன் அதை அநுபவிக்கிறான்; இதுவும் மா
யையும், கொடிய நோயுமானது. ஒருவன் 3
நூறு பிள்ளைகளைப் பெற்று, அநேகம் வருஷம்
ஜீவித்து, தீர்க்காயுசை அடைந்திருந்தாலும்,
அவன் ஆத்துமா அந்தச் செல்வத்தால் திருப்
தியடையாமலும், அவனுக்குப் பிரேதக்கல்ல
றைமுதலாய் இல்லாமலும் போகுமானால்,
[16]அவனைப்பார்க்கிலும் கருவழிந்த பிண்டம்
வாசி என்கிறேன். அது மாயையாய்த் தோ 4
ன்றி இருளிலே மறைந்துபோய்விடுகிறது;
அதின்பேர் அந்தகாரத்தால் மூடப்படும். அது 5
சூரியனைக் கண்டதுமில்லை, [17]ஒன்றையும்
அறிந்ததுமில்லை; அவனுக்கு இல்லாத அமைச்
சல் அதற்கு உண்டு. அவன் இரண்டாயிரம் 6
வருஷம் பிழைத்திருந்தாலும் ஒரு நன்மை
யையும் காண்பதில்லை; எல்லாரும் ஒரே இட
த்துக்குப் போகிறார்கள் அல்லவா? மனு 7
ஷன் படும் பிரயாசமெல்லாம் அவன் வாய்க்
காகத்தானே; [18]அவன் மனதுக்கோ திருப்தி
யில்லை. இப்படியிருக்க, மூடனைப்பார்க்கி 8
லும் ஞானிக்கு உண்டாகும் மேன்மை என்ன?
ஜீவனுள்ளோருக்கு முன்பாக நடந்துகொள்
ளும்படி அறிந்த ஏழைக்கும் உண்டாகும்
மேன்மை என்ன? ஆசையானது அலைந்து 9
தேடுகிறதைப்பார்க்கிலும் கண்கண்டதே நலம்;
இதுவும் மாயையும், மனதைச் சஞ்சலப்படுத்
துகிறதுமாயிருக்கிறது.

10 இருக்கிறவன் எவனும் தோன்றுமுன்னமே
பேரிடப்பட்டிருக்கிறான்; அவன் மனுஷனெ
ன்று தெரிந்திருக்கிறது; [1]தன்னிலும் பலத்தவ
11 ரோடே போராட அவனால் கூடாது. மா
யையைப் பெருகப்பண்ணுகிற அநேக விசே
ஷங்கள் உண்டாயிருக்கிறபடியால் [2]அதினா
லே மனுஷனுக்குப் பிரயோஜனமென்ன?
12 நிழலைப்போன்ற மாயையான தன் ஜீவகாலத்
தைப் போக்கும் மனுஷனுக்கு இந்த ஜீவனில்
நன்மை இன்னதென்று அறிந்தவன் யார்?
[3]தனக்குப் பின்பு சூரியனுக்குக் கீழே சம்
பவிக்குங் காரியம் இன்னதென்று மனுஷ
னுக்கு அறிவிப்பவன் யார்?

**7** பரிமள தைலத்தைப்பார்க்கிலும் [4]நற்கீர்த்தி
யும், ஒருவனுடைய ஜநநதினத்தைப்பார்க்கிலும் மர
2 ணநாளும் நல்லது. விருந்துவீட்டுக்குப் போ
வதிலும் துக்கவீட்டுக்குப் போவது நலம்; இதி
லே எல்லா மனுஷரின் முடிவும் காணப்ப
டும்; உயிரோடிருக்கிறவன் இதைத் தன் மன
3 திலே சிந்திப்பான். நகைப்பைப்பார்க்கிலும்
துக்கிப்பு நலம்; [5]முகதுக்கத்தினாலே இருதயம்
4 சீர்ப்படும். ஞானிகளின் இருதயம் துக்க
வீட்டிலே இருக்கும்; மூடரின் இருதயம் களி
5 ப்புவீட்டிலே இருக்கும். ஒருவன் மூடரின்
பாட்டைக் கேட்பதிலும், [6]ஞானியின் கடிந்து
6 கொள்ளுதலைக் கேட்பது நலம். மூடனின்
நகைப்பு பானையின்கீழ் எரிகிற முள்ளுகளின்
படபடப்பைப்போலிருக்கும்; இதுவும் மாயை
7 யே. இடுக்கணானது ஞானியையும் பைத்தி
யக்காரனாக்கும்; [7]பரிதானம் இருதயத்தைக்
8 கெடுக்கும். ஒரு காரியத்தின் துவக்கத்தைப்
பார்க்கிலும் அதின் முடிவு நல்லது; [8]பெரு
மையுள்ளவனைப்பார்க்கிலும் பொறுமையுள்ள
9 வன் உத்தமன். உன் மனதில் சீக்கிரமாய்க்
கோபங்கொள்ளாதே; [9]மூடரின் நெஞ்சிலே
10 கோபம் குடிகொள்ளும். இந்நாட்களைப்பார்க்
கிலும் முன்நாட்கள் நலமாயிருந்தது என்று
சொல்லாதே; நீ இதைக்குறித்துக் கேட்பது
11 ஞானமல்ல. சுதந்தரத்தோடே ஞானம் நல்
லது; சூரியனைக் காண்கிறவர்களுக்கு இதினா
12 லே பிரயோஜனமுண்டு. ஞானம் கேடகம்,
திரவியமும் கேடகம்; ஞானம் தன்னை உடை
யவர்களுக்கு [10]ஜீவனைத் தரும்; இதுவே அறி
13 வின் மேன்மை. தேவனுடைய செயலைக்
கவனித்துப்பார்; [11]அவர் கோணலாக்கினதை
14 நேர்மையாக்கத்தக்கவன் யார்? வாழ்வுகாலத்
தில் நன்மையை அநுபவித்திரு, தாழ்வுகாலத்
தில் சிந்தனைசெய்; மனுஷன் தனக்குப்பின்
வருவதொன்றையும் கண்டுபிடியாதபடிக்கு
தேவன் இவ்விரண்டையும் ஒன்றுக்கொன்று
எதிரிடையாக [12]வைத்திருக்கிறார்.

15 இவை எல்லாவற்றையும் என் மாயையின்
நாட்களில் கண்டேன்; தன் நீதியிலே கெட்
டுப்போகிற நீதிமானுமுண்டு, [13]தன் பாவத்தி
16 லே நீடித்திருக்கிற பாவியுமுண்டு. மிஞ்சின
நீதிமானாயிராதே, [14]உன்னை அதிக ஞானியு
மாக்காதே; உன்னை நீ ஏன் கெடுத்துக்கொள்ள
வேண்டும்? மிஞ்சின துஷ்டனாயிராதே, 17
அதிக பேதையுமாயிராதே; [15]உன் காலத்துக்கு
முன்னே நீ ஏன் சாகவேண்டும்? நீ இதைப் 18
பற்றிக்கொள்வதும் அதைக் கைவிடாதிருப்
பதும் நலம்; [16]தேவனுக்குப் பயப்படுகிறவன்
இவைகள் எல்லாவற்றினின்றும் காக்கப்படு
வான்.

நகரத்திலுள்ள பத்து அதிபதிகளைப்பார்க்கி 19
லும், [17]ஞானம் ஞானியை அதிக பெலவானாக்
கும். ஒரு பாவமும் செய்யாமல், [18]நன்மை 20
யே செய்யத்தக்க நீதிமான் பூமியிலில்லை. சொ 21
ல்லப்படும் எல்லா வார்த்தைகளையும் கவனியா
தே; [19]கவனித்தால் உன் வேலைக்காரன் உன்
னை நிந்திப்பதைக் கேள்விப்படவேண்டியதா
கும். அநேகந்தரம் நீயும் பிறரை நிந்தித்தா 22
யென்று, உன் மனதுக்குத் தெரியுமே.

இவை எல்லாவற்றையும் ஞானத்தினால் 23
சோதித்துப்பார்த்தேன்: [20]நான் ஞானவானா
வேன் என்றேன், அது எனக்குத் தூரமாயி
ற்று. தூரமும் மகா ஆழமுமாயிருக்கிறதைக் 24
[21]கண்டடைகிறவன் யார்? ஞானத்தையும், 25
காரணகாரியத்தையும் விசாரித்து ஆராய்ந்து
அறியவும், மதிகேட்டின் ஆகாமியத்தையும் புத்
திமயக்கத்தின் பைத்தியத்தையும் அறியவும்
என் மனதைச் செலுத்தினேன். கண்ணி 26
களும் வலைகளுமாகிய நெஞ்சமும், கயிறுகளு
மாகிய கைகளுமுடைய ஸ்திரீயானவள், சா
விலும் அதிக கசப்புள்ளவளென்று கண்டே
ன்; [22]தேவனுக்கு முன்பாக சற்குணனாயிருக்
கிறவன் அவளுக்குத் தப்புவான்; பாவியோ
அவளால் பிடிபடுவான். காரியத்தை அறியும் 27
படிக்கு ஒவ்வொன்றாய் விசாரணைபண்ணி,
இதோ, இதைக் கண்டுபிடித்தேன் என்று பிர
சங்கி சொல்லுகிறான்: என் மனம் இன்னும் 28
ஒன்றைத் தேடுகிறது, அதை நான் கண்டுபிடிக்
கவில்லை; [23]ஆயிரம்பேருக்குள்ளே ஒரு புருஷ
னைக் கண்டேன்; இவர்களெல்லாருக்குள்ளும்
ஒரு ஸ்திரீயை நான் காணவில்லை. இதோ, 29
தேவன் மனுஷனைச் செம்மையானவனாக
உண்டாக்கினார்; [24]அவர்களோ அநேக உபா
யதந்திரங்களைத் தேடிக்கொண்டார்கள்; இதை
மாத்திரம் கண்டேன்.

ஞானமுள்ளவனுக்கு ஒப்பானவன் யார்? **8**
காரியத்தின் *தாற்பரியத்தை அறிந்தவன் யார்?
[25]மனுஷனுடைய ஞானம் அவன் முகத்தைப்
பிரகாசிக்கப்பண்ணும், அவன் முகத்தின்
மூர்க்கம் மாறும். ராஜாவின் கட்டளையைக் 2
கைக்கொண்டு நட என்று நான் உனக்கு எச்
சரிக்கிறேன்; [26]நீ தேவனுக்கு இட்ட ஆணை
யின்படியே இதைச்செய். நீ அவன் சமு 3
கத்தைவிட்டு விலகத் [27]துரிதப்படாதே; பொல்
லாத காரியத்திலே பிடிவாதமாய் நில்லாதே;
அவன் தனக்கு இஷ்டமானதெல்லாம் செய்
வான். ராஜாவின் வார்த்தை எங்கேயோ அங் 4
கே அதிகாரம் உண்டு; [28]நீர் என்ன செய்கிறீர்
என்று அவனுக்குச் சொல்லத்தக்கவன் யார்?
கற்பனையைக் கைக்கொள்ளுகிறவன் [29]ஒரு 5

1 யோபு 40. 2. ஏசா. 45. 9
2 சங். 78. 6
3 சங். 47. 4; 102. 11. யாக். 4. 14
4 நீதி. 15. 30; 22. 1
5 2 கொரி. 7. 10
6 சங். 141. 5
7 யாத். 23. 8. உபா. 16. 19
8 நீதி. 14. 29
9 நீதி. 14. 17. யாக். 1. 19
10 நீதி. 8. 35
11 யோபு 12. 14 ஏசா. 14. 27
12 யோவா. 16. 33. அப். 14. 22
13 8. 14, ஏசா. 65. 20. யோவா. 16. 2. அப். 7. 59
14 ரோ. 10. 2, 3
15 சங். 55. 23. நீதி 10. 27
16 8. 12, 13. மல்கி. 4. 2
17 நீதி. 21. 22; 24. 5
18 2 நாளா. 6, 36. 1 யோவா. 1, 8
19 ஏசா. 29. 21
20 ரோ. 1. 22. 1 கொரி. 1. 20
21 ரோ. 11. 33
22 நீதி. 5. 3, 5; 22. 14
23 சங். 12. 1
24 ஆதி. 1. 27; 3. 6; 11. 4–6. எரே. 2. 13. ரோ. 1. 22, 23
* வியாக்கியானத்தை. நீதி. 1. 5, 6
25 அப். 6. 15
26 ரோ. 13. 1–6
27 10. 4
28 யோபு 34. 18
29 சங். 119. 6. 1 பே. 3. 13

தீங்கையும் அறியான்; ஞானியின் இருதயம்
6 காலத்தையும் நியாயத்தையும் அறியும். எல்
லாக் காரியத்துக்கும் காலமும் நியாயமுமு
ண்டு; [1]ஆதலால் மனுஷனுக்கு நேரிடும் சஞ்
7 சலம் மிகுதி. இன்னது சம்பவிக்கும் என்று
அவன் அறியானே; [2]அது இன்னவிதமாய்ச்
சம்பவிக்கும் என்று அவனுக்குச் சொல்லத்தக்
8 வன் யார்? ஆவியை விடாதிருக்கிறதற்கு
ஆவியின்மேல் ஒரு மனுஷனுக்கும் அதிகார
மில்லை; [3]மரண நாளின்மேலும் அவனுக்கு
அதிகாரமில்லை, அந்தப் போருக்கு நீங்கிப
போவதுமில்லை, துன்மார்க்கரைத் துன்மார்க்
9 கம் விடுவிக்கவு மாட்டாது. இவையெல்
லாவற்றையும் நான் பார்த்து, சூரியனுக்குக்
கீழே செய்யப்படும் எல்லாக் கிரியைகளையும்
சிந்தித்தேன்; ஒரு மனுஷன் தனக்கே கேடுண்
டாக வேறொரு மனுஷனை ஆளுகிற காலமு
முண்டு.
10 பரிசுத்த ஸ்தலத்துக்குப் போக்கு வரவு
செய்த துன்மார்க்கர் அடக்கம் பண்ணப்பட்
டதைக் கண்டேன்; [4]அவர்கள் அப்படி செய்
துவந்த பட்டணத்திலேயே மறக்கப்பட்டுப்
11 போனார்கள்; இதுவும் மாயையே. துர்க்கிரி
யைக்குத்தக்க தண்டனை சீக்கிரமாய் நடவாத
படியால், [5]மனுபுத்திரரின் இருதயம் பொல்
லாப்பைச் செய்ய அவர்களுக்குள்ளே துணி
12 கரங் கொண்டிருக்கிறது. பாவி நூறுதரம்
பொல்லாப்பைச் செய்து நீடித்து வாழ்ந்தா
லும் என்ன? [6]தேவனுக்கு அஞ்சி அவருக்கு
முன்பாக, பயந்திருப்பவர்களே நன்றாயிருப
13 பார்கள் என்று அறிந்திருக்கிறேன். துன்
மார்க்கனோ நன்றாயிருப்பதில்லை; அவன் தேவ
னுக்கு முன்பாக பயபபடாதிருக்கிறபடியால்,
நிழலைப்போலிருக்கிற அவனுடைய வாழ்
14 நாள் நீடித்திருப்பதுமில்லை. பூமியின்மேல்
நடக்கிற வேறொரு மாயையான காரியமு
முண்டு; அதாவது, துன்மார்க்கரின் கிரி
யைக்கு வருவதுபோல, நீதிமான்களுக்கும்
வரும்; நீதிமான்களின் கிரியைக்கு வருவது
போல, [7]துன்மார்க்கருக்கும் வரும்; இதுவும்
15 மாயை என்றேன். ஆகையால் நான் களிப்
பைப் புகழ்ந்தேன்; புசிப்பதும் குடிப்பதும்
மகிழ்வதுமேயல்லாமல் சூரியனுக்குக் கீழே
மனுஷனுக்கு வேறொரு நன்மையும் இல்லை;
[8]சூரியனுக்குக் கீழே தேவன் அவனுக்குத்
தந்த ஜீவகாலத்தில் அவன் பிரயாசத்தினால்
அவனுக்கு நிலைக்கும் பலன் இதுவே.
16 நான் ஞானத்தை அறியவும், மனுஷன்
இரவும் பகலும் கண்ணுறக்கமில்லாமல் பூமி
யிலே செய்யும் வேலைகளைப் பார்க்கவும் என்
17 மனதைச் செலுத்தினபோது, தேவன் செய்
யும் சகல கிரியைகளையும் நான் கவனித்துப்
பார்த்து, சூரியனுக்குக் கீழே செய்யப்படும்
கிரியையை மனுஷன் கண்டுபிடிக்கக் கூடா
தென்று கண்டேன். [9]அதை அறியும்படி மனு
ஷன் பிரயாசப்பட்டாலும் அறியமாட்டான்;
அதை அறியலாம் என்று ஞானி எண்ணி
னாலும் அவனும் அதை அறிந்துகொள்ள
மாட்டான்.

## 9

இவை எல்லாவற்றையும் நான் என் மன
திலே வகையறுக்கும்படிக்குச் சிந்தித்தேன்;
[10]நீதிமான்களும் ஞானிகளும், தங்கள் கிரியை
களுடன், தேவனுடைய கைவசமாயிருக்கிறார்
கள்; தனக்கு முன் இருக்கிறவர்களைக்கொ
ண்டு ஒருவனும் விருப்பையாவது வெறுப்பை
யாவது அறியான். எல்லாருக்கும் எல்லாம் 2
ஒரேவிதமாய்ச் சம்பவிக்கும்; [11]சன்மார்க்கனுக்
கும் துன்மார்க்கனுக்கும், நற்குணமும் சுத்தமு
முள்ளவனுக்கும் சுத்த மில்லாதவனுக்கும்,
பலியிடுகிறவனுக்கும் பலியிடாதவனுக்கும்,
ஒரேவிதமாய்ச் சம்பவிக்கும்; நல்லவனுக்கு
எப்படியோ பொல்லாதவனுக்கும் அப்படி
யே; ஆணையிடுகிறவனுக்கும் ஆணையிடப்
பயப்படுகிறவனுக்கும் சமமாய்ச் சம்பவிக்கும்.
எல்லாருக்கும் ஒரேவிதமாய்ச் சம்பவிக்கிறது 3
சூரியனுக்குக் கீழே நடக்கிறதெல்லாவற்றி
லும் விசேஷித்த தீங்காம்; ஆதலால் மனுபுத்
திரரின் இருதயம் தீமையினால் நிறைந்திருக்
கிறது; [12]அவர்கள் உயிரோடிருக்கும் நாளள
வும் அவர்கள் இருதயம் பைத்தியங்கொண்டி
ருந்து, பின்பு அவர்கள் செத்தவர்களிடத்திற்
குப் போகிறார்கள். இதற்கு நீங்கலாயிருக்கி 4
றவன் யார்? உயிரோடிருக்கிற அனைவரிடத்தி
லும் நம்பிக்கையுண்டு; செத்த சிங்கத்தைப்
பார்க்கிலும் உயிருள்ள நாய் வாசி. உயிரோ 5
டிருக்கிறவர்கள் தாங்கள் மரிப்பதை அறிவார்
களே, [13]மரித்தவர்கள் ஒன்றும் அறியார்கள்;
இனி அவர்களுக்கு ஒரு பலனுமில்லை, [14]அவர்
கள் பேர் முதலாய் மறக்கப்பட்டிருக்கிறது.
அவர்கள் சிநேகமும், அவர்கள் பகையும், [15]அ 6
வர்கள் பொறாமையும் எல்லாம் ஒழிந்துபோ
யிற்று; சூரியனுக்குக் கீழே செய்யப்படுகிற
தொன்றிலும் அவர்களுக்கு இனி என்றைக்
கும் பங்கில்லை.
நீ போய், உன் ஆகாரத்தைச் சந்தோஷத் 7
துடன் புசித்து, [16]உன் திராட்சரசத்தை மன
மகிழ்ச்சியுடன் குடி; தேவன் உன் கிரியை
களை அங்கீகாரம்பண்ணியிருக்கிறார். உன் 8
வஸ்திரங்கள் எப்பொழுதும் [17]வெள்ளையாயும்,
உன் தலைக்கு எண்ணெய் குறையாததாயும்
இருப்பதாக. சூரியனுக்குக் கீழே தேவன் 9
உனக்கு நியமித்திருக்கிற மாயையான நாட்
களிலெல்லாம் நீ நேசிக்கிற மனைவியோடே
நிலையில்லாத இந்த ஜீவவாழ்வை அநுபவி;
[18]இந்த ஜீவனுக்குரிய வாழ்விலும், நீ சூரிய
னுக்குக் கீழே படுகிற பிரயாசத்திலும் பங்கு
இதுவே. செய்யும்படி உன் கைக்கு நேரிடு 10
கிறது எதுவோ, [19]அதை உன் பெலத்தோடே
செய்; நீ போகிற பாதாளத்திலே [20]செய்கை
யும் வித்தையும் அறிவும் ஞானமும் இல்லையே.
நான் திரும்பிக்கொண்டு சூரியனுக்குக் 11
கீழே கண்டதாவது: [21]ஓடுகிறதற்கு வேகமுள்
ளவர்களின் வேகமும், யுத்தத்துக்குச் சவுரிய
வான்களின் சவுரியமும் போதாது; பிழைப்

1 8. 1
2 நீதி. 24. 22
3 யோபு 14. 5. சங். 49. 6, 7: 73. 18. ழி
4 எரே. 17. 13. எபி. 10. 38
5 சங். 10. 6: 50 21. 2 பே. 2. 3, 4
6 7. 15. சங். 37. 18, 19. ஏசா. 3. 10, 11. ரோ. 2. 5
7 யோபு 21. 7. சங். 73. 14. மல்கி. 3. 15
8 5. 18: 9. 7. 1 தீமோ. 4. 8, 4: 6. 17
9 யோபு 5. 9. சங். 40. 5, ரோ. 11. 33
10 12. 9, 10
11 மல்கி. 3. 15, 18
12 ஆதி. 6. 5. எரே. 17. 9. மத். 15. 19
13 யோபு 14. 21. ஏசா. 63. 16
14 யோபு 7. 8–10. ஏசா. 26. 14
15 யாத். 1. 8. மத். 2. 20
16 8. 15: 10. 19
17 மத் 6 17. வெளி. 16. 15
18 நீதி. 5. 15–19
19 1 கொரி. 9. 24–26
20 ஏசா. 38. 18. யோவா. 9. 4
21 சங். 75. 6, 7. எரே. 9. 23. ஆமோ. 2. 14, 15

புக்கு ஞானமுள்ளவர்களின் ஞானமும் போ
தாது; ஐசுவரியம் அடைகிறதற்குப் புத்திமான்
களின் புத்தியும் போதாது; தயவு அடைகிற
தற்கு வித்தவான்களின் அறிவும் போதாது;
அவர்களெல்லாருக்கும் சமயமும் தேவச்செய
12 லும் நேரிடவேண்டும். தன் காலத்தை மனு
ஷன் அறியான்; மச்சங்கள் கொடிய வலையில்
அகப்படுவதுபோலவும், குருவிகள் கண்ணி
யில் பிடிபடுவதுபோலவும், [1]மனுபுத்திரர்
பொல்லாத காலத்திலே சடிதியில் தங்களுக்கு
நேரிடும் ஆபத்தில் அகப்படுவார்கள்.
13 சூரியனுக்குக் கீழே ஞானமுள்ள காரியத்
தையும் கண்டேன்; அது என் பார்வைக்குப்
14 பெரிதாய்த் தோன்றிற்று. ஒரு சிறு பட்ட
ணம் இருந்தது, அதிலே இருந்த குடிகள்
கொஞ்ச மனிதர்; [2]அதற்கு விரோதமாய் ஒரு
பெரிய ராஜா வந்து, அதை வளைந்துகொண்டு,
அதற்கு எதிராகப் பெரிய கொத்தளங்களைக்
15 கட்டினான். அதிலே ஞானமுள்ள ஒரு ஏழை
மனிதன் இருந்தான்; அவன் தன் ஞானத்தி
னாலே அந்தப் பட்டணத்தை விடுவித்தான்;
ஆனாலும் அந்த ஏழை மனிதனை ஒருவரும்
16 நினைக்கவில்லை. ஆகையால் ஏழையின் ஞானம்
அசட்டை பண்ணப்பட்டு, [3]அவன் வார்த்
தைகள் கேட்கப்படாமற்போனாலும், [4]பெலத்
தைப்பார்க்கிலும் ஞானமே உத்தமம் என்
17 றேன். மூடரை ஆளும் அதிபதியின் கூக்கு
ரலைப்பார்க்கிலும் [5]ஞானிகளுடைய அமரிக்கை
யான வார்த்தைகளே கேட்கப்படத்தக்கவை
18 கள். யுத்த ஆயுதங்களைப்பார்க்கிலும் ஞானமே
நலம்; [6]பாவியான ஒருவன் மிகுந்த நன்மை
யைக் கெடுப்பான்.

10 செத்த ஈக்கள் தைலக்காரனுடைய பரி
மளதைலத்தை நாறிக் கெட்டுப்போகப்பண்
ணும்; ஞானத்திலும் கனத்திலும் பேர்பெற்
றவனைச் சொற்ப மதியீனமும் அப்படியே
2 செய்யும். ஞானியின் இருதயம் வலதுகை
யிலும், மூடனின் இருதயமோ இடதுகையி
3 லும் இருக்கும். மூடன் வழியிலே நடக்கிற
போதும் மதிகெட்டவனாயிருக்கிறான்; தான்
[7]மூடனென்று அவன் எல்லாருக்கும் சொல்
4 லுகிறான். அதிபதியின் கோபம் உன்மேல்
எழும்பினால் உன் ஸ்தானத்தை விட்டு வில
காதே; [8]இணங்குதல் பெரிய குற்றங்களையும்
5 அமர்த்திப்போடும். நான் சூரியனுக்குக் கீழே
கண்ட ஒரு தீங்குண்டு, அது அதிபதியினி
6 டத்தில் தோன்றும் தப்பிதமே. மூடர் மகா
உயர்ந்த நிலையில் வைக்கப்படுகிறார்கள்;
[9]சீமான்களோ தாழ்ந்த நிலையில் உட்கார்ந்
7 திருக்கிறார்கள். வேலைக்காரர் குதிரைகள்
மேல் ஏறிப்போகிறதையும், [10]பிரபுக்கள் வே
லைக்காரர்போல் தரையிலே நடக்கிறதையும்
8 கண்டேன். படுகுழியை வெட்டுகிறவன்
[11]அதிலே விழுவான்; அடைப்பைப் பிடுங்கு
9 கிறவனைப் பாம்பு கடிக்கும். கல்லுகளைப்
பேர்க்கிறவன் அவைகளால் காயப்படுவான்;
மரத்தைப் பிளக்கிறவன் அதினால் மோசப்
படுவான். இருப்பு ஆயுதம் மழுங்கலாயிருக்க, 10
அதை ஒருவன் தீட்டாமற்போனால், அதிக
பலத்தைப் பிரயோகம்பண்ணவேண்டியதா
கும்; ஆகையால் [12]ஒரு காரியத்தைச் செவ்
வையாய்ச் செய்வதற்கு ஞானமே பிரதானம்.
தடைகட்டப்படாத பாம்பு [13]கடிக்குமே, அல 11
ப்புவாயனும் அதற்கு ஒப்பானவன். ஞானி 12
யினுடைய வாய்மொழிகள் தயை உள்ளவை
கள்; [14]மூடனுடைய உதடுகளோ அவனையே
விழுங்கும். அவன் வாய்மொழிகளின் துவக் 13
கம் மதியீனமும், அவன் வாக்கின் முடிவு
கொடிய பைத்தியமுமாம். மூடன் மிகுதி 14
யாய்ப் பேசுகிறான், [15]நடக்கப்போகிறது இன்
னதென்று மனுஷன் அறியான்; தனக்குப்
பிற்பாடு சம்பவிக்கப்படுகிறதை அவனுக்கு
அறிவிப்பவன் யார்? ஊருக்குப் போகும் 15
வழியை மூடன் அறியாததினால், அவன்
தொல்லை ஒவ்வொருவரையும் இளைக்கப்பண்
ணும். ராஜா சிறுபிள்ளையுமாய், பிரபுக்கள் 16
அதிகாலமே உண்கிறவர்களுமாயிருக்கப்பட்ட
தேசமே, [16]உனக்கு ஐயோ! ராஜா குலமக 17
னுமாய், பிரபுக்கள் வெறிக்க உண்ணாமல்
பெலன்கொள்ள ஏற்றவேளையில் உண்கிற
வர்களுமாயிருக்கப்பட்ட தேசமே, [17]நீ பாக்
கியமுள்ளது. மிகுந்த சோம்பலினால் மேல் 18
மச்சுப் பழுதாகும்; கைகளின் நெகிழ்வினாலே
வீடு ஒழுக்காகும். விருந்து சந்தோஷத்துக் 19
கென்று செய்யப்படும்; [18]திராட்சரசம் ஜீவ
னுள்ளோரைக் களிப்பாக்கும்; பணமோ எல்
லாவற்றிற்கும் உதவும். ராஜாவை உன் மன 20
திலும் நிந்தியாதே, [19]ஐசுவரியவானை உன்
படுக்கையிலும் நிந்தியாதே; [20]ஆகாயத்துப்
பறவை அந்தச் சத்தத்தைக் கொண்டுபோகும்,
செட்டைகளுள்ளது அந்தச் செய்தியை அறி
விக்கும்.

உன் *ஆகாரத்தைத் தண்ணீர்கள்மேல் 11
போடு; [21]அநேக நாட்களுக்குப் பின்பு அதின்
பலனைக் காண்பாய். ஏழுபேருக்கும் எட்டு 2
பேருக்கும் பங்கிட்டுக் கொடு; [22]பூமியின்மேல்
என்ன ஆபத்து நேரிடுமோ உனக்குத் தெரி
யாது. மேகங்கள் நிறைந்திருந்தால் மழையைப் 3
பூமியின்மேல் பொழியும்; மரமானது தெற்கே
விழுந்தாலும் வடக்கே விழுந்தாலும், விழுந்த
இடத்திலேயே மரம் கிடக்கும். காற்றைக் 4
கவனிக்கிறவன் விதைக்கமாட்டான்; மேகங்
களை நோக்குகிறவன் அறுக்கமாட்டான். ஆவி 5
யின் வழி [23]இன்னதென்றும், [24]கர்ப்பவதி
யின் வயிற்றில் எலும்புகள் உருவாகும் விதம்
இன்னதென்றும் நீ அறியாதிருக்கிறதுபோ
லவே, எல்லாவற்றையும் செய்கிற தேவனு
டைய செயல்களையும் நீ அறியாய். காலை 6
யிலே உன் விதையை விதை; மாலையிலே
உன் கையை நெகிழவிடாதே; [25]அதுவோ,
இதுவோ, எது வாய்க்குமோ என்றும், இரண்
டும் சரியாய்ப் பயன்படுமோ என்றும் நீ அறி
யாயே. வெளிச்சம் இன்பமும், சூரியனைக் 7
காண்பது கண்களுக்குப் பிரியமுமாமே. மனு 8

[1] நீதி. 12. 20, 39; 21, 34. 1 தெச. 5. 3
[2] 2 சாமு. 20. 16-22
[3] மாற். 6. 2, 3
[4] நீதி. 21. 22; 24. 5, 6
[5] நீதி. 28. 23
[6] யோசு. 7. 1. ஷ
[7] நீதி. 13. 16
[8] 8. 3. 1 சாமு. 25 24. ஷ. நீதி. 25. 15
[9] எஸ்தர் 3. 1
[10] நீதி. 19. 10; 30 22
[11] சங். 7. 15. நீதி. 26. 27
[12] 1 ராஜா. 12. 32
[13] சங். 58. 4, 5. எரே. 8. 17
[14] நீதி. 10. 32; 18. 7
[15] நீதி. 15. 2
[16] ஏசா. 3. 4, 12; 5. 11
[17] நீதி. 31. 4
[18] சங். 104. 15
[19] யாத். 22. 28. அப். 23. 5
[20] லூக். 19. 40
* விதை தானியத்தை = நெல்லை. ஏசா. 32. 20
[21] உபா. 15. 10. சங். 41. 1, 2. நீதி. 11. 25; 19. 17. ஏசா. 32. 8. 8. மத். 10. 42. 2 கொ. 9. 8. எபி. 6. 10, 11
[22] மீகா 5. 5. லூக். 6. 30. 1 தீமோ. 6. 18, 19
[23] யோ. 3. 8
[24] சங். 139. 14, 15
[25] 1 கொ. 3. 7

ஷன் அநேக வருஷம் ஜீவித்து, அவைகளி
லெல்லாம் மகிழ்ச்சியாயிருந்தாலும், [1]அவன்
இருளின் நாட்களையும் நினைக்கவேண்டும்;
[2]அவைகள் அநேகமாயிருக்கும்; வந்து சம்ப
விப்பதெல்லாம் மாயையே.
9 வாலிபனே! உன் இளமையிலே சந்தோ
ஷப்படு, உன் வாலிப நாட்களிலே உன் இரு
தயம் உன்னைப் பூரிப்பாக்கட்டும்; உன் நெஞ்
சின் வழிகளிலும், உன் கண்ணின் காட்சி
களிலும் நட; [3]ஆனாலும் இவையெல்லாவற்றி
னிமித்தமும் தேவன் உன்னை [4]நியாயத்திலே
10 கொண்டுவந்து நிறுத்துவார் என்று அறி. நீ
உன் இருதயத்திலிருந்து சஞ்சலத்தையும்,
[5]உன் மாம்சத்திலிருந்து தீங்கையும் நீக்கிப்
போடு; இளவயதும் வாலிபமும் மாயையே.
12 நீ உன் வாலிபப்பிராயத்திலே உன்
சிருஷ்டிகரை நினை; [6]தீங்குநாட்கள் வராத
தற்குமுன்னும், [7]எனக்குப் பிரியமானவைக
ளல்ல என்று நீ சொல்லும் வருஷங்கள்
2 சேராததற்குமுன்னும், சூரியனும், வெளிச்ச
மும், சந்திரனும், நட்சத்திரங்களும், அந்த
3 காரப்படாததற்கு முன்னும், மழைக்குப்பின்
மேகங்கள் திரும்பத்திரும்ப வாராததற்குமுன்
னும், வீட்டுக் காவலாளிகள் தள்ளாடி, பெல
சாலிகள் கூனிப்போய், எந்திரம் அரைக்கிற
வர்கள் கொஞ்சமானதினால் ஓய்ந்து, பலகணி
வழியாய்ப் பார்க்கிறவர்கள் இருண்டுபோகிற
4 தற்கு முன்னும், எந்திர சத்தம் தாழ்ந்ததி
னால் தெருவாசலின் கதவுகள் அடைபட்டு,
குருவியின் சத்தத்துக்கும் எழுந்திருக்கவேண்
டியதாகி, கீதவாத்தியக் கன்னிகைகளெல்
லாம் [8]அடங்கிப்போகாததற்கு முன்னும்,
5 மேட்டுக்காக அச்சமுண்டாகி, வழியிலே
பயங்கள் தோன்றி, வாதுமைமரம் பூப்பூத்து,
வெட்டுக்கிளியும் பாரமாகி, பசித்தீபனமும்
அற்றுப்போகாததற்கு முன்னும், மனுஷன்
தன் நித்திய வீட்டுக்குப் போகிறதினாலே,
[9]துக்கங்கொண்டாடுகிறவர்கள் வீதியிலே திரி
யாததற்கு முன்னும், வெள்ளிக்கயிறு கட்டு 6
விட்டு, பொற்கிண்ணி நசுங்கி, ஊற்றின்
அருகே சால் உடைந்து, துரவண்டையில்
உருளை நொறுங்கி, இவ்விதமாய் மண்ணா 7
னது தான் முன்னிருந்த பூமிக்குத் திரும்பி,
[10]ஆவி தன்னைத் தந்த தேவனிடத்திற்கு மறு
படியும் போகாததற்கு முன்னும், அவரை உன்
வாலிபப்பிராயத்திலே நினை. மாயை மாயை, 8
எல்லாம் மாயை என்று பிரசங்கி சொல்
லுகிறான்.
மேலும், பிரசங்கி ஞானவானாயிருந்தபடி 9
யால், அவன் ஜனத்துக்கு அறிவைப் போதி
த்து, கவனமாய்க் கேட்டாராய்ந்து, [11]அநே
கம் நீதிமொழிகளைச் சேர்த்து எழுதினான்.
இதமான வார்த்தைகளைக் கண்டுபிடிக்க பிர 10
சங்கி வகைதேடினான்; எழுதின வாக்கியங்
கள் செவ்வையும் சத்தியமுமானவைகள்.
ஞானிகளின் வாக்கியங்கள் தாற்றுக்கோல்கள் 11
போலவும், சங்கத்தலைவர்களால் அறையப்
பட்ட ஆணிகள்போலவும் இருக்கிறது; அவை
கள் ஒரே மேய்ப்பனால் அளிக்கப்பட்டது.
என் மகனே! இவைகளினாலே புத்தியடைவா 12
யாக; அநேகம் புஸ்தகங்களை உண்டுபண்ணு
கிறதற்கு முடிவில்லை; [12]அதிக படிப்பு உட
லுக்கு இளைப்பு.
காரியத்தின் கடைத்தொகையைக் கேட் 13
போமாக, [13]தேவனுக்குப் பயந்து, அவர் கற்
பனைகளைக் கைக்கொள்; எல்லா மனுஷர்மே
லும் விழுந்த கடமை இதுவே. ஒவ்வொரு கிரி 14
யையையும், அந்தரங்கமான ஒவ்வொரு காரி
யத்தையும் நன்மையானாலும் தீமையானாலும்,
[14]தேவன் நியாயத்திலே கொண்டுவருவார்.

[1] யோவே. 12. 35
[2] யோபு 14. 10
[3] எண். 15. 39, உபா. 29. 19, 20
[4] 12. 14. ரோ. 2. 6-11. எபி. 9. 27
[5] 2 கொ. 7. 1. 2 தீமோ. 2. 22
[6] நீதி. 22. 6. ஏசா. 26. 8
[7] 2 சாமு. 19. 35
[8] 2 சாமு. 19. 35
[9] யோபு 17. 13. எரே. 9. 17
[10] ஆதி. 3. 19. யோபு 34. 14. சங். 146. 4. ஏசா. 57. 16
[11] 1 இரா. 4. 32
[12] 1. 18
[13] உபா. 6. 2; 10. 12
[14] மத். 12. 36. அப். 17. 30, 31. ரோ. 2. 16; 14. 10, 12. 1 கொ. 4. 5. 2 கொ. 5. 10

THE SONG OF SOLOMON

# சாலொமோனின் உன்னதப்பாட்டு

1 சாலொமோன் பாடின [1]உன்னதப்பாட்டு.
2 அவர் தமது வாயின் முத்தங்களால் [2]என்னை
முத்தமிடுவாராக: [3]உமது நேசம் திராட்சரசத்
3 தைப்பார்க்கிலும் இன்பமானது. உமது பரி
மளதைலங்கள் இன்பமான வாசனையுள்ள
வைகள்; [4]உமது நாமம் ஊற்றுண்ட பரிமள
தைலமாயிருக்கிறது; ஆகையால் கன்னியர்
4 கள் உம்மை நேசிக்கிறார்கள். என்னை [5]இழுத்
துக்கொள்ளும், உமக்குப் பின்னே ஓடிவரு
வோம்; [6]ராஜா என்னைத் தமது அறைகளில்
அழைத்துக்கொண்டு வந்தார்; நாங்கள் உமக்
குள் களிகூர்ந்து மகிழுவோம்; திராட்சரசத்
தைப்பார்க்கிலும் உமது நேசத்தை நினைப்
போம், உத்தமர்கள் உம்மை நேசிக்கிறார்கள்.
5 எருசலேமின் குமாரத்திகளே! கேதாரின்
கூடாரங்களைப்போலவும், சாலொமோனின்
திரைகளைப்போலவும் நான் கறுப்பாயிருந்தா
6 லும், அழகாயிருக்கிறேன். நான் கறுப்பா
யிருக்கிறேன் என்று பாராதேயுங்கள்; வெய்
யில் என்மேற்பட்டது; என் தாயின் பிள்ளை
கள் என்மேல் கோபமாயிருந்து, [7]என்னைத்
திராட்சத்தோட்டங்களுக்குக் காவற்காரியாக
வைத்தார்கள்; என் சொந்தத் திராட்சத்தோட்
டத்தையோ நான் காக்கவில்லை.
7 என் ஆத்தும நேசரே! உமது மந்தையை
எங்கே மேய்த்து, [8]அதை மத்தியானத்தில்
எங்கே மடக்குகிறீர்? எனக்குச் சொல்லும்;
உமது தோழரின் மந்தைகள் அருகே அலைந்து
திரிகிறவளைப்போல நான் இருக்கவேண்டிய
தென்ன?
8 ஸ்திரீகளில் ரூபவதியே! அதை நீ அறியா
யாகில், மந்தையின் காலடிகளைத் தொடர்ந்து
போய், மேய்ப்பர்களுடைய கூடாரங்களண்
டையில் உன் ஆட்டுக்குட்டிகளை மேயவிடு.
9 என் பிரியமே! பார்வோனுடைய இரதங்
களில் பூண்டிருக்கிற [9]பரிகள் பவுஞ்சுக்கு
10 உன்னை ஒப்பிடுகிறேன். ஆபரணதிகள்
பூண்ட உன் கன்னங்களும், [10]ஆரங்கள் பூண்
11 ட உன் கழுத்தும் அழகாயிருக்கிறது. வெள்
ளிப் பொட்டுகளுள்ள பொன் ஆபரணங்களை
உனக்குப் பண்ணுவோம்.
12 ராஜா தமது பந்தியிலிருக்குந்தனையும் என்
னுடைய நளததைலம் தன் வாசனையை

[1] 1 இரா. 4. 32
[2] சங். 2. 12
[3] 4. 10
[4] சங். 27. 9; 45. 17; 119. 55
[5] ஓசி. 11. 4. யோ. 6. 44; 12. 32
[6] யோ. 14. 2. எபே. 2. 6, 7
[7] மத். 10. 22, 25
[8] சங். 23. 2, 3
[9] 2 நாளா. 1. 16, 17
[10] எசே. 16, 11–13. 1 பே. 3. 3, 4
[11] மத். 10. 16. பிலி. 2. 15
[12] வெளி. 22. 1, 2
[13] யோ. 15. 9–15
[14] 8. 3, 5
[15] 3. 5
[16] 2 சாமு. 2. 18

வீசும். என் நேசர் எனக்கு என் ஸ்தனங் 13
களின் நடுவில் தங்கும் வெள்ளைப்போளச்
செண்டு. என் நேசர் எனக்கு எங்கேதி 14
ஊர் திராட்சத்தோட்டங்களில் முளைக்கும்
மருதோன்றிப் பூங்கொத்து.
என் பிரியமே! நீ ரூபவதி; நீ ரூபவதி; 15
உன் கண்கள் புறாக்கண்கள்.
நீர் ரூபமுள்ளவர்; என் நேசரே! நீர் இன்ப 16
மானவர்; நம்முடைய மஞ்சம் பசுமையானது.
நம்முடைய வீட்டின் உத்திரங்கள் கேதுரு 17
மரம், நம்முடைய மச்சு தேவதாருமரம்.
நான் சாரோனின் ரோஜாவும், பள்ளத் 2
தாக்குகளின் லீலிபுஷ்பமுமாயிருக்கிறேன்.
முள்ளுகளுக்குள்ளே லீலிபுஷ்பம் எப்படி 2
யிருக்கிறதோ, [11]அப்படியே குமாரத்திகளுக்
குள்ளே எனக்குப் பிரியமானவளும் இருக்
கிறாள்.
காட்டுமரங்களுக்குள்ளே கிச்சிலிமரம் எப் 3
படியிருக்கிறதோ, அப்படியே குமாரருக்
குள்ளே என் நேசர் இருக்கிறார்; அதின் நிழ
லிலே வாஞ்சையாய் உட்காருகிறேன், [12]அதின்
கனி என் வாய்க்கு மதுரமாயிருக்கிறது.
என்னை விருந்துசாலைக்கு அழைத்துக்கொண் 4
டுபோனார்; என்மேல் பறந்த அவருடைய
கொடி [13]நேசமே. திராட்சரசத்தால் என்னைத் 5
தேற்றுங்கள், கிச்சிலிப்பழங்களால் என்னை
ஆற்றுங்கள்; நேசத்தால் சோகமடைந்திருக்
கிறேன். அவர் இடதுகை என் தலையின்கீழ் 6
இருக்கிறது, [14]அவர் வலதுகை என்னை அணைத்
துக்கொள்ளுகிறது.
எருசலேமின் குமாரத்திகளே! எனக்குப் 7
பிரியமானவளுக்கு மனதாகுமட்டும், [15]நீங்கள்
அவளை விழிக்கப்பண்ணாமலும் எழுப்பாமலு
மிருக்கும்படி வெளிமான்கள்மேலும் வெளி
யின் மரைகள்மேலும் உங்களை ஆணையிடு
கிறேன்.
இது என் நேசருடைய சத்தம்! இதோ, 8
அவர் மலைகள்மேல் குதித்தும் மேடுகள்மேல்
துள்ளியும் வருகிறார். என் நேசர் வெளிமா 9
னுக்கும் [16]மரைக்குட்டிக்கும் ஒப்பாயிருக்கி
றார்; இதோ, அவர் எங்கள் மதிலுக்குப்
புறம்பே நின்று, பலகணிவழியாய்ப் பார்த்து,
கிராதியின்வழியாய்த் தமது மலர்ந்த முகத்

10 தைக் காண்பிக்கிறார். என் நேசர் என்னோ
டே பேசி: என் பிரியமே! என் ரூபவதியே!
11 எழுந்துவா. இதோ, மாரிகாலம் சென்றது,
12 [1]மழை பெய்து ஒழிந்தது. பூமியிலே புஷ்பங்
கள் காணப்படுகிறது; குருவிகள் பாடுங்கா
லம் வந்தது, காட்டுப்புறாவின் சத்தம் நமது
13 தேசத்தில் கேட்கப்படுகிறது. அத்திமரம்
காய்காய்த்தது; திராட்சக்கொடிகள் பூப்பூத்து
வாசனையும் பரிமளிக்கிறது; என் பிரியமே!
14 என் ரூபவதியே! நீ எழுந்துவா. கன்மலை
யின் வெடிப்புகளிலும் சிகரங்களின் மறை
விடங்களிலும் தங்குகிற என் புறாவே! உன்
முகரூபத்தை எனக்குக் காண்பி, உன் சத்தத்
தை நான் கேட்கட்டும்; உன் சத்தம் இன்ப
மும், உன் முகரூபம் அழகுமாயிருக்கிறது
என்றார்.
15 திராட்சத்தோட்டங்களைக் கெடுக்கிற குழி
நரிகளையும் [2]சிறுநரிகளையும் நமக்குப் பிடியுங்
கள்; நம்முடைய திராட்சத்தோட்டங்கள்
பூவும் பிஞ்சுமாயிருக்கிறதே.
16 என் நேசர் என்னுடையவர், [3]நான் அவரு
டையவள். அவர் லீலிபுஷ்பங்களுக்குள்ளே
17 மேய்கிறார். என் நேசரே! பகல் குளிர்ச்சி
யாகி, [4]நிழல் சாய்ந்துபோகும்வரைக்கும், நீர்
திரும்பி, குன்றும் பிளப்புமான கன்மலைகளில்
குதித்துவரும் கலைமானுக்கும் மரைகளின்
குட்டிக்கும் சமானமாயிரும்.

3 இராக்காலங்களில் என் படுக்கையிலே
என் ஆத்துமநேசரைத் தேடினேன்; [5]தேடி
2 யும் நான் அவரைக் காணவில்லை. நான்
எழுந்து நகரத்தின் வீதிகளிலும் தெருக்களி
லும் திரிந்து, என் ஆத்துமநேசரைத் தேடு
வேன் என்றேன்; தேடியும் நான் அவரைக்
3 காணவில்லை. நகரத்திலே திரிகிற காவலா
ளர் [6]என்னைக் கண்டார்கள்: என் ஆத்தும
நேசரைக் கண்டீர்களா என்று அவர்களைக்
4 கேட்டேன். நான் அவர்களை விட்டுக் கொஞ்
சதூரம் கடந்துபோனவுடனே, [7]என் ஆத்
துமநேசரைக் கண்டேன்; அவரை நான் என்
தாயின் வீட்டிலும் என்னைப் பெற்றவளின்
அறையிலும் கொண்டுவந்து விடுமட்டும் விடா
மல் [8]பற்றிக்கொண்டேன்.
5 எருசலேமின் குமாரத்திகளே! எனக்குப்
பிரியமானவளுக்கு மனதாகுமட்டும் நீங்கள்
அவளை விழிக்கப்பண்ணாமலும் எழுப்பாமலு
மிருக்கும்படி, வெளிமான்கள்மேலும் வெளி
யின் மரைகள்மேலும் உங்களை ஆணையிடு
கிறேன்.
6 வெள்ளைப்போளத்தினாலும் சாம்பிராணி
யினாலும் வர்த்தகருடைய சகலவித கந்தப்
பொடியினாலும் உண்டாகிய வாசனையை வீசி,
தூபஸ்தம்பங்களைப்போல் வனாந்தரத்திலிருந்
7 து வருகிற இவர் யார்? இதோ, சாலொமோ
னுடைய மஞ்சம்; இஸ்ரவேலின் சவுரிய
வான்களில் அறுபது சவுரியவான்கள் அதைச்
8 சுற்றி நிற்கிறார்கள். இவர்களெல்லாரும் பட்
டயம் பிடித்து, யுத்தத்துக்குப் பழகினவர்க
ளாயிருக்கிறார்கள்; இராக்கால பயத்தினிமித்
தம் அவனவனுடைய பட்டயம் அவனவன்
அரையிலிருக்கிறது. சாலொமோன் ராஜா 9
தனக்கு லீபனோனின் மரத்தினால் ஒரு ரதத்
தைப் பண்ணுவித்தார். அதின் தூண்களை 10
வெள்ளியினாலும், அதின் தட்டைப் பொன்
னினாலும், அதின் ஆசனத்தை இரத்தாம்பரத்
தினாலும் பண்ணுவித்தார்; அதின் உட்புறத்தி
லே எருசலேமின் குமாரத்திகளினிமித்தம்
நேசம் என்னும் சமுக்காளம் விரித்திருந்தது.
சீயோன் குமாரத்திகளே! நீங்கள் புறப் 11
பட்டுப்போய், ராஜாவாகிய சாலொமோனின்
கலியாண நாளிலும், மனமகிழ்ச்சியின் நாளி
லும், அவருடைய தாயார் அவருக்குச்சூட்டின
முடியோடிருக்கிற [9]அவரைப் பாருங்கள்.

நீ ரூபவதி, என் பிரியமே! [10]நீ ரூபவதி, 4
உன் முக்காட்டின் நடுவே உன் கண்கள் புறாக்
கண்களாயிருக்கிறது; உன் கூந்தல் கீலேயாத்
மலையில் தழைமேயும் வெள்ளாட்டு மந்தை
யைப்போலிருக்கிறது. உன் பற்கள், மயிர் 2
கத்தரிக்கப்பட்டபின் குளிப்பாட்டப்பட்டுக்
கரையேறுகிறவைகளும், [11]ஒன்றாகிலும் மல
டாயிராமல் எல்லாம் இரட்டைக்குட்டி யீன்ற
வைகளுமான ஆட்டுமந்தையைப்போலிருக்கி
றது. உன் உதடுகள் சிவப்புநூலுக்குச் சமா 3
னமும், [12]உன் வாக்கு இன்பமுமாயிருக்கிறது;
உன் முக்காட்டின் நடுவே உன் கன்னங்கள்
வெடித்த மாதளம்பழம்போலிருக்கிறது. உன் 4
கழுத்து, பராக்கிரமசாலிகளின் கேடகங்களா
கிய ஆயிரம் பரிசைகள் தூக்கியிருக்கிற ஆயுத
சாலையாக்கப்பட்ட [13]தாவீதின் கோபுரம்போ
லிருக்கிறது. உன் இரண்டு ஸ்தனங்களும் 5
லீலிபுஷ்பங்களில் மேயும் [14]வெளிமானின்
இரட்டைக் குட்டிகளுக்குச் சமானம்.
பகல் குளிர்ச்சியாகி நிழல் சாய்ந்துபோ 6
கும்வரைக்கும், [15]நான் வெள்ளைப்போள மலை
யிலும் சாம்பிராணி மலையிலும் போயிருப்
பேன். என் பிரியமே! நீ பூரண ரூபவதி; 7
[16]உன்னில் பழுதொன்றுமில்லை. லீபனோ 8
னிலிருந்து என்னோடே வா, என் மணவா
ளியே! [17]லீபனோனிலிருந்து என்னோடே
வா. அமனாவின் கொடுமுடியிலிருந்தும், சே
னீர் எர்மோனின் [18]கொடுமுடியிலிருந்தும்,
சிங்கங்களின் தாபரங்களிலிருந்தும், சிவிங்கி
களின் மலைகளிலிருந்தும் கீழேபார். என் 9
இருதயத்தைக் கவர்ந்துகொண்டாய்; என்
சகோதரியே! என் மணவாளியே! உன் கண்
களிலொன்றினாலும் உன் கழுத்திலுள்ள ஒரு
சரப்பணியினாலும் என் இருதயத்தைக் கவர்ந்
துகொண்டாய். உன் நேசம் எவ்வளவு இன் 10
பமாயிருக்கிறது; என் சகோதரியே! என் மண
வாளியே! திராட்சரசத்தைப்பார்க்கிலும் உன்
நேசம் எவ்வளவு மதுரமாயிருக்கிறது! சகல
கந்தவர்க்கங்களைப்பார்க்கிலும் உன் பரிமள
தைலங்கள் எவ்வளவு வாசனையாயிருக்கிறது!
என் மணவாளியே! உன் உதடுகளிலிருந்து 11
தேன் ஒழுகுகிறது, [19]உன் நாவின்கீழ் தேனும்

[1] எபே. 5. 8
[2] எசே. 13. 4 லூ. 13. 33
[3] சங். 63. 1. 1 கொ. 3. 23
[4] 2 பே. 1. 19
[5] யோபு 23. 8, 9. ஏசா. 26. 9
[6] 5. 7. எசே. 3. 17
[7] 6. 12. ஏசா. 45 19. எரே. 29. 12, 13
[8] வெளி. 3. 11, 12
[9] ஏசா. 62 5. யோ. 3. 29. எபி. 2. 9. வெளி. 1. 7: 21. 9, 10
[10] எசே. 16. 14
[11] 6. 6
[12] சங். 31. 26 கொலோ. 4. 6
[13] நெகே. 3. 19
[14] 7. 3. நீதி. 5. 19
[15] 2. 17
[16] எபே. 5. 27
[17] ஏசா. 54. 5. ஓசி. 2. 19, 20
[18] உபா. 3. 9
[19] நீதி. 24 13, 14

பாலும் இருக்கிறது, உன் வஸ்திரங்களின்
வாசனை [1]லீபனோனின் வாசனைக்கொப்பா
12 யிருக்கிறது. என் சகோதரியே! என் மண
வாளியே! நீ அடைக்கப்பட்ட தோட்டமும்,
மறைவு கட்டப்பட்ட நீரூற்றும், முத்திரிக்கப்
13 பட்ட கிணறுமாயிருக்கிறாய். உன் தோட்
டம் மாதளஞ்செடிகளும், அருமையான கனி
மரங்களும், மருதோன்றிச் செடிகளும், நள
14 தச்செடிகளும், நளதமும், குங்குமமும், வசம்
பும், லவங்கமும், சகலவித தூபவர்க்க மரங்க
ளும், வெள்ளைப்போளச் செடிகளும், சந்தன
விருட்சங்களும், சகலவித கந்தவர்க்கச் செடி
15 களுமுள்ள சிங்கார வனமாயிருக்கிறது. தோ
ட்டங்களுக்கு நீரூற்றும், ஜீவதண்ணீரின் துர
வும், [2]லீபனோனிலிருந்து ஓடிவரும் வாய்க்
கால்களும் உண்டாயிருக்கிறது.
16 வாடையே! எழும்பு; தென்றலே! வா;
க்ந்தப்பிசின்கள் வடிய என் தோட்டத்தில்
வீசு; என் நேசர் தம்முடைய தோட்டத்துக்கு
வந்து, தமது அருமையான கனிகளைப் புசிப்
பாராக.

5 என் சகோதரியே! என் மணவாளியே!
[3]நான் என் தோட்டத்தில் வந்தேன், என்
வெள்ளைப்போளத்தையும் என் கந்தவர்க்கங்
களையும் சேர்த்தேன்; என் தேன்கூட்டை என்
தேனோடு புசித்தேன்; என் திராட்சரசத்தை
என் பாலோடுங் குடித்தேன்; சிநேகிதரே!
புசியுங்கள்; [4]பிரியமானவர்களே! குடியுங்கள்,
பூர்த்தியாய்க் குடியுங்கள்.
2 நான் நித்திரைபண்ணினேன், என் இதய
மோ விழித்திருந்தது; [5]கதவைத் தட்டுகிற
என் நேசரின் சத்தத்தைக் கேட்டேன்: என்
சகோதரியே! என் பிரியமே! என் புறாவே!
என் உத்தமியே! கதவைத் திற; என் தலை
பனியினாலும், என் தலைமயிர் இரவில் பெய்
யும் தூறலினாலும் நனைந்திருக்கிறது என்றார்.
3 என் வஸ்திரத்தைக் கழற்றிப்போட்டேன்;
நான் எப்படி அதைத் திரும்பவும் உடுப்பேன்;
என் பாதங்களைக் கழுவினேன், நான் எப்படி
அவைகளைத் திரும்பவும் அழுக்காக்குவேன்
என்றேன்.
4 என் நேசர் தமது கையைக் கதவுத்துவாரத்
தின் வழியாய் நீட்டினார், அப்பொழுது என்
5 உள்ளம் அவர்நிமித்தம் பொங்கினது. என்
நேசருக்குக் கதவைத் திறக்க நான் எழுந்தே
ன்; பூட்டின கைப்பிடிகள்மேல் என் கைகளி
லிருந்து வெள்ளைப்போளமும், என் விரல்
களிலிருந்து வாசனையுள்ள வெள்ளைப்போள
6 மும் வடிந்தது. என் நேசருக்குக் கதவைத்
திறந்தேன்; என் நேசரோ இல்லை, போய்
விட்டார்; அவர் சொன்ன வார்த்தையால்,
என் ஆத்துமா *சோர்ந்துபோயிற்று. அவரைத்
தேடினேன், [6]அவரைக் காணவில்லை; அவ
ரைக் கூப்பிட்டேன், அவர் எனக்கு மறுஉத்
7 தரவு கொடுக்கவில்லை. நகரத்தில் திரிகிற
காவலாளர் என்னைக் கண்டு, என்னை அடி
த்து, [7]என்னைக் காயப்படுத்தினார்கள்; அலங்

[1] ஆதி. 27. 27. ஓசி. 14. 6, 7
[2] யோ. 4. 10, 14; 7. 38
[3] 4. 11, 16
[4] ஏசா. 55. 1, 2. யோ. 3. 29; 15. 13–15. வெளி. 22. 17
[5] வெளி. 3. 20
* உருகிப்போயிற்று.
[6] 3. 1, 3
[7] சங். 141. 5. ஓசி. 6. 5
[8] 1. 8. சங். 45. 13
[9] 4. 1
[10] வெளி. 1. 14-16
[11] சங். 18. 20
[12] 2. 16; 7. 10
[13] 4. 1-3
[14] 4. 2

கத்தின் காவற்காரர் என்மேலிருந்த என் போர்
வையை எடுத்துக்கொண்டார்கள்.
எருசலேமின் குமாரத்திகளே! என் நேச 8
ரைக் கண்டீர்களானால், நான் நேசத்தால் சோ
கமடைந்திருக்கிறேன் என்று அவருக்குச்
சொல்லும்படி உங்களை ஆணையிடுகிறேன்.
ஸ்திரீகளுக்குள் ரூபவதியே! [8]மற்ற நேச 9
ரைப்பார்க்கிலும் உன் நேசர் எதினால் விசே
ஷித்தவர்? நீ இப்படி எங்களை ஆணையிட,
மற்ற நேசரைப்பார்க்கிலும் உன் நேசர் எதி
னால் விசேஷித்தவர்?
என் நேசர் வெண்மையும் சிவப்புமானவர்; 10
பதினாயிரம்பேர்களில் சிறந்தவர். அவர் தலை 11
தங்கமயமாயிருக்கிறது; அவர் தலைமயிர் சுருள்
சுருளாயும், காகத்தைப்போல் கருமையாயு
மிருக்கிறது. அவருடைய கண்கள் தண் 12
ணீர் நிறைந்த நதிகளின் ஓரமாய்த் தங்கும்
புறாக்கண்களுக்கு ஒப்பானவைகளும், [9]பா
லில் கழுவப்பட்டவைகளும், நேர்த்தியாய்ப்
பதிக்கப்பட்டவைகளுமாயிருக்கிறது. அவர் 13
கன்னங்கள் கந்தவர்க்கப் பாத்திகளைப்போல
வும், வாசனையுள்ள புஷ்பங்களைப்போலவு
மிருக்கிறது; அவர் உதடுகள் லீலிபுஷ்பங்க
ளைப்போன்றது, வாசனையுள்ள வெள்ளைப்
போளம் அதிலிருந்து வடிகிறது. அவர் கரங் 14
கள் படிகப்பச்சை பதித்த பொன் வளையல்
களைப்போலிருக்கிறது; அவர் அங்கம் இந்திர
நீல ரத்தினங்கள் இழைத்த பிரகாசமான யா
னைத் தந்தத்தைப்போலிருக்கிறது. அவர் கால் 15
கள் பசும்பொன் ஆதாரங்களின்மேல் நிற்கிற
வெள்ளைக்கல் தூண்களைப்போலிருக்கிறது;
[10]அவர் ரூபம் லீபனோனைப்போலவும் கேதுருக்
களைப்போலவும் சிறப்பாயிருக்கிறது. அவர் 16
வாய் மிகவும் மதுரமாயிருக்கிறது; அவர் முற்
றிலும் அழகுள்ளவர். இவரே என் நேசர்;
எருசலேமின் குமாரத்திகளே! இவரே என்
சிநேகிதர்.

உன் நேசர் எங்கே போனார்? ஸ்திரீகளில் 6
ரூபவதியே! உன் நேசர் எவ்விடம் போய்
விட்டார்? உன்னோடேகூட நாங்களும் அவ
ரைத் தேடுவோம்.
தோட்டங்களில் மேயவும், [11]லீலி புஷ்பங் 2
களைக் கொய்யவும், என் நேசர் தமது தோட்
டத்துக்கும் கந்தவர்க்கப் பாத்திகளுக்கும் போ
னார். நான் என் நேசருடையவள், [12]என் நே 3
சர் என்னுடையவர்; அவர் லீலி புஷ்பங்களுக்
குள்ளே மேய்கிறார்.
என் பிரியமே! நீ திர்சாவைப்போல் சௌந் 4
தரியமும், எருசலேமைப்போல் வடிவமும்,
கொடிகள் பறக்கும் படையைப்போல் கெடி
யுமானவள். உன் கண்களை என்னைவிட்டுத் 5
திருப்பு, அவைகள் என்னை வென்றது; [13]உன்
அளகபாரம் கீலேயாத் மலையிலே தழைமே
யும் வெள்ளாட்டு மந்தையைப்போலிருக்கி
றது. உன் பற்கள் குளிப்பாட்டப்பட்டுக் 6
கரையேறுகிறவைகளும், ஒன்றாகிலும் மல
டாயிராமல் [14]இரட்டைக் குட்டியீன்றவைக

ளுமான ஆட்டு மந்தையைப்போலிருக்கிறது.
7 உன் முக்காட்டின் நடுவே உன் கன்னங்கள்
8 வெடித்த மாதளம்பழம்போலிருக்கிறது. ராஜ
ஸ்திரீகள் அறுபதுபேரும், மறுமனையாட்டி
கள் எண்பதுபேருமுண்டு; [1]கன்னியருக்குத்
9 தொகையில்லை. என் புறாவோ, என் உத்த
மியோ ஒருத்தியே; அவள் தன் தாய்க்கு ஒரே
பிள்ளை; அவள் தன்னைப் பெற்றவளுக்கு அரு
மையானவள்; குமாரத்திகள் அவளைக் கண்டு,
அவளை வாழ்த்தினார்கள்; ராஜஸ்திரீகளும் மறு
மனையாட்டிகளும், அவளைப் போற்றினார்கள்.
10 சந்திரனைப்போல் அழகும், சூரியனைப்
போல்பிரகாசமும், கொடிகள் பறக்கும் படை
யைப்போல் கெடியுமுள்ளவளாய், [2]அருணோ
தயம்போல் உதிக்கிற இவள் யார்?
11 பள்ளத்தாக்கிலே பழுத்த கனிகளைப் பார்க்
கவும், திராட்சச்செடிகள் துளிர்விட்டு, [3]மாத
ளஞ்செடிகள் பூத்ததா என்று அறியவும்,
வாதுமைத் தோட்டத்துக்குப் போனேன்.
12 நினையாததுக்குமுன்னே என் ஆத்துமா என்
னை அம்மினதாபின் இரதங்களுக்கு ஒப்பாக்
கிற்று.
13 திரும்பிவா, திரும்பிவா, *சூலமித்தியே!
நாங்கள் உன்னைப் பார்க்கும்படிக்கு, திரும்பி
வா, திரும்பிவா.
சூலமித்தியில் நீங்கள் என்னத்தைப் பார்க்கி
றீர்கள்? [4]அவள் இரண்டு சேனையின் கூட்
டத்துக்குச் சமானமானவள்.

**7** ராஜகுமாரத்தியே! பாதரட்சைகளிட்ட
உன் பாதங்கள் மிகவும் அழகாயிருக்கிறது;
[5]உன் இடுப்பின் வடிவு விசித்திரத்தொழிற்
காரரின் வேலையாகிய பூஷணம்போலிருக்கி
2 றது. உன் நாபி திராட்சரசம் நிறைந்த வட்
டக்கலசம்போலிருக்கிறது; உன் வயிறு லீலி
புஷ்பங்கள் சூழ்ந்த கோதுமை அம்பாரம்போ
3 லிருக்கிறது. உன் இரண்டு ஸ்தனங்களும்
[6]வெளிமானின் இரட்டைக் குட்டிகளுக்குச்
4 சமானமாயிருக்கிறது. உன் கழுத்து யானைத்
தந்தத்தினால் செய்த கோபுரத்தைப்போலவும்,
உன் கண்கள் எஸ்போனிலே பத்ரபீம் வாச
லண்டையிலிருக்கும் குளங்களைப்போலவும்,
உன் மூக்கு தமஸ்குவின் திசையை நோக்கும்
லீபனோனின் கோபுரத்தைப்போலவும் இருக்
5 கிறது. உன் சிரசு கர்மேல் மலையைப்போ
லிருக்கிறது; உன் தலைமயிர் இரத்தாம்பரமய
மாயிருக்கிறது; ராஜா நடைக்காவணங்களில்
மயங்கி நிற்கிறார்.
6 மனமகிழ்ச்சியை உண்டாக்கும் என் பிரிய
மே! நீ எவ்வளவு ரூபவதி, நீ எவ்வளவு இன்
7 பமுள்ளவள்! உன் உயரம் பனைமரத்தொ
ழுங்குபோலவும், உன் ஸ்தனங்கள் திராட்சக்
8 குலைகள்போலவும் இருக்கிறது. நான் பனை
மரத்திலேறி, அதின் மடல்களைப் பிடிப்பேன்
என்றேன்; இப்பொழுதும் உன் ஸ்தனங்கள்
திராட்சக்குலைகள்போலவும், உன் மூக்கின்
வாசனை கிச்சிலிப்பழங்கள்போலவும் இருக்
கிறது.
உன் தொண்டை, என் நேசர் குடிக்கை 9
யில் மெதுவாயிறங்குகிறதும், உறங்குகிறவர்
களின் உதடுகளைப் பேசப்பண்ணுகிறதுமான,
நல்ல திராட்சரசத்தைப்போலிருக்கிறது.
நான் என் நேசருடையவள், [7]அவர் பிரி 10
யம் என்மேலிருக்கிறது. வாரும் என் நேச 11
ரே! வயல்வெளியில் போய், கிராமங்களில்
தங்குவோம். அதிகாலையிலே திராட்சத்தோட் 12
டங்களுக்குப் போவோம்; திராட்சக்கொடி
துளிர்த்து அதின் பூ மலர்ந்ததோ என்றும்,
மாதளஞ் செடிகள் பூப்பூத்ததோ என்றும்
பார்ப்போம்; அங்கே என் நேசத்தின் உச்சி
தங்களை [8]உமக்குத் தருவேன். தூதாயீம் [9]பழம் 13
வாசனை வீசும்; நமது வாசல்களண்டையிலே
புதியவைகளும் பழையவைகளுமான சகல
வித அருமையான கனிகளுமுண்டு; என் நேச
ரே! அவைகளை உமக்கு வைத்திருக்கிறேன்.

ஆ, நீர் என் தாயின் பால்குடித்த என் **8**
[10]சகோதரனைப்போலிருந்தீரானால், நான் உம்
மை வெளியிலே சந்தித்து முத்தமிடுவேன்;
என்னை நிந்திக்கவுமாட்டார்கள். நான் உம் 2
மைக் கூட்டிக்கொண்டு, என் தாயின் வீட்டு
க்கு அழைத்துக்கொண்டுபோவேன்; நீர் என்
னைப் போதிப்பீர், கந்தவர்க்கமிட்ட திராட்ச
ரசத்தையும், [11]என் மாதளம்பழ ரசத்தையும்
உமக்குக் குடிக்கக் கொடுப்பேன். அவர் 3
இடதுகை என் தலையின் கீழிருக்கும், அவர்
வலதுகை என்னை அணைக்கும்.
எருசலேமின் குமாரத்திகளே! எனக்குப் 4
பிரியமானவளுக்கு மனதாகுமட்டும் [12]நீங்கள்
அவளை விழிக்கப்பண்ணாமலும் எழுப்பாம
லும் இருக்க உங்களை ஆணையிடுகிறேன்.
தன் நேசர்மேல் சார்ந்துகொண்டு வனாந்தர 5
த்திலிருந்து [13]வருகிற இவள் யார்? கிச்சிலி
மரத்தின்கீழ் உம்மை எழுப்பினேன்; அங்கே
உமது தாய் உம்மைப் பெற்றாள்; அங்கே உம்
மைப் பெற்றவள் வேதனைப்பட்டு உம்மைப்
பெற்றாள்.
நீர் என்னை உமது இருதயத்தின்மேல் 6
முத்திரையைப்போலவும், உமது புயத்தின்
மேல் முத்திரையைப்போலவும் வைத்துக்
கொள்ளும்; [14]நேசம் மரணத்தைப்போல் வலி
து; நேசவைராக்கியம் பாதாளத்தைப்போல்
[15]கொடியதாயிருக்கிறது; அதின் தழல் அக்கி
னித்தழலும் அதின் ஜவாலை கடும் ஜவாலையுமா
யிருக்கிறது. திரளான தண்ணீர்கள் நேசத்தை 7
அவிக்கமாட்டாது, வெள்ளங்களும் அதைத்
தணிக்கமாட்டாது; ஒருவன் தன் வீட்டி
லுள்ள ஆஸ்திகளையெல்லாம் நேசத்துக்காகக்
கொடுத்தாலும், அது முற்றிலும் அசட்டை
பண்ணப்படும்.
நமக்கு ஒரு சிறிய சகோதரியுண்டு, [16]அவளு 8
க்கு ஸ்தனங்களில்லை; நம்முடைய சகோதரி
யைக் கேட்கும்நாளில் அவளுக்காக நாம் என்
னசெய்வோம்?
அவள் ஒரு மதிலானால், அதின்மேல் வெள் 9
ளிக்கோட்டையைக் கட்டுவோம்; அவள் கத

[1] சங். 45. 14. வெளி. 7. 9
[2] வெளி. 21. 10, 11
[3] 7. 12. யோ. 15. 16
* சூலமி = சமாதானம்.
[4] கலா. 5. 17
[5] சங். 45. 10, 13. எபே. 6. 15
[6] 4. 5
[7] 2. 16; 6. 3. சங். 45, 11
[8] யாத். 25. 22. சங். 122. 5. எபி. 4. 16
[9] ஆதி. 30. 14. 1 கொ. 2. 9
[10] எபி. 2. 11, 12
[11] நீதி. 9. 2, 5
[12] 2. 7; 3. 5
[13] 3. 6
[14] ஏசா. 49. 16. எரே. 22. 24. ஆகா. 2. 23. 2 தீமோ. 2. 19
[15] நீதி. 6. 34, 35
[16] எசே. 23. 33

வாஞல், கேதருப் பலகைகளை அதற்கு இணை
ப்போம்.
10 நான் மதில்தான், என் ஸ்தனங்கள் கோபு
ரங்கள்; அவருடைய கண்களில் கடாட்சம்
பெறலானேன்.
11 பாகால் ஆமோனிலே சாலொமோனுக்கு
[1]ஒரு திராட்சத்தோட்டம் உண்டாயிருந்தது,
அந்தத் தோட்டத்தைக் காவலாளிகள் வசத்தி
லே அதின் பலனுக்காக, ஒவ்வொருவன் ஆயி
ரம் வெள்ளிக்காசு கொண்டுவரும்படி விட்
டார். என் திராட்சத்தோட்டம் எனக்கு 12
முன்பாக இருக்கிறது; சாலொமோனே! உம
க்கு அந்த ஆயிரமும், அதின் கனியைக் காக்கி
றவர்களுக்கு இருநூறும் சேரும்.
தோட்டங்களில் வாசம்பண்ணுகிறவளே! 13
தோழர் உன் சத்தத்தைக் கேட்கிறார்கள்; [2]நா
னும் அதைக் கேட்கட்டும்.
என் நேசரே! நீவிரியும், [3]கந்தவர்க்கங்க 14
ளின் மலைகள்மேலுள்ள வெளிமானுக்கும்
மரைகளின் குட்டிக்கும் சமானமாயிரும்.

[1] மத். 21, 33
[2] 2. 14
[3] வெளி. 22, 17, 20

ISAIAH

# எசாயா தீர்க்கதரிசியின் புஸ்தகம்

1 ஆமோத்சின் குமாரனாகிய எசாயா,
யூதாவின் ராஜாக்களாகிய உசியா, யோதாம்,
ஆகாஸ், எசேக்கியா என்பவர்களின் நாட்க
ளில், யூதாவையும் எருசலேமையும் குறித்துக்
கண்ட [1]தரிசனம்.
2 வானங்களே, கேளுங்கள்; [2]பூமியே, செவி
கொடு; **கர்த்தர்** பேசுகிறார்; நான் பிள்ளைகளை
வளர்த்து ஆதரித்தேன்; அவர்களோ எனக்கு
3 விரோதமாய்க் கலகம்பண்ணினார்கள். மாடு
தன் எஜமானையும், [3]கழுதை தன் ஆண்ட
வனின் முன்னணையையும் அறியும்; இஸ்ர
வேலோ அறிவில்லாமலும், என் ஜனம் உணர்
4 வில்லாமலும் இருக்கிறது என்கிறார். ஐயோ,
பாவமுள்ள ஜாதியும், அக்கிரமத்தால் பாரஞ்
சுமந்த ஜனமும், [4]பொல்லாதவர்களின் சந்ததி
யும், கேடு உண்டாக்குகிற புத்திரருமாயிருக்
கிறார்கள்; **கர்த்தரை** விட்டு, இஸ்ரவேலின்
பரிசுத்தருக்குக் கோபமுண்டாக்கி, பின்வாங்
5 கிப்போனார்கள். இன்னும் நீங்கள் ஏன் அடிக்
கப்படவேண்டும்? [5]அதிகம் அதிகமாய் விலகிப்
போகிறீர்களே; தலையெல்லாம் வியாதியும்,
இருதயமெல்லாம் பலட்சயமுமாய் இருக்கி
6 றது. உள்ளங்கால்தொடங்கி உச்சந்தலைமட்
டும் அதிலே சுகமேயில்லை; அது காயமும்,
வீக்கமும், நொதிக்கிற இரணமுமுள்ளது;
[6]அது சீழ் பிதுக்கப்படாமலும், கட்டப்படா
மலும், எண்ணெயினால் ஆற்றப்படாமலும்
7 இருக்கிறது. உங்கள் தேசம் [7]பாழாயிருக்கி
றது; உங்கள் பட்டணங்கள் அக்கினியினால்
சுட்டெரிக்கப்பட்டது; உங்கள் நாட்டை அந்
நியர் உங்கள் கண்களுக்கு முன்பாக பட்சிக்
கிறார்கள்; அது அந்நியரால் கவிழ்க்கப்பட்ட
8 பாழ்ந்தேசம்போல் இருக்கிறது. சீயோன்
குமாரத்தி திராட்சத்தோட்டத்திலுள்ள ஒரு
குச்சுபோலவும், [8]வெள்ளரித் தோட்டத்தி
லுள்ள ஒரு குடிசைபோலவும், முற்றிக்கை
போடப்பட்ட ஒரு பட்டணம்போலவும் மீந்
9 திருக்கிறாள். சேனைகளின் **கர்த்தர்** நமக்குக்
கொஞ்சம் மீதியை வைக்காதிருந்தாரானால்,
[9]நாம் சோதோமைப்போலாகி, கொமோரா
வுக்கு ஒத்திருப்போம்.
10 சோதோமின் அதிபதிகளே, **கர்த்தருடைய**
வார்த்தையைக் கேளுங்கள்; [10]கொமோராவின்
ஜனமே, நமது தேவனுடைய வேதத்துக்குச்
செவிகொடுங்கள். உங்கள் பலிகளின் திரள் 11
எனக்கு என்னத்துக்கு என்று **கர்த்தர்** சொல்
லுகிறார்; [11]ஆட்டுக்கடாக்களின் தகனபலிக
ளும், கொழுத்த மிருகங்களின் நிணமும் என
க்கு அரோசிகமாயிருக்கிறது; காளைகள், ஆட்
டுக்குட்டிகள், கடாக்களுடைய இரத்தத்தின்
மேல் எனக்குப் பிரியமில்லை. நீங்கள் என் 12
சந்நிதியில் வரும்போது, [12]என் பிராகாரங்களை
இப்படி மிதிக்கவேண்டுமென்று உங்களிடத்
தில் கேட்டது யார்? இனி வீண் காணிக்கை 13
களைக் கொண்டுவரவேண்டாம்; [13]தூபங்காட்
டுதல் எனக்கு அருவருப்பாயிருக்கிறது; நீங்கள்
அக்கிரமத்தோடே ஆசரிக்கிற மாதப்பிறப்பை
யும், ஓய்வுநாளையும், சபைக்கூட்டத்தையும்
நான் இனிச் சகிக்கமாட்டேன். உங்கள் மாதப் 14
பிறப்புகளையும், உங்கள் பண்டிகைகளையும்
என் ஆத்துமா வெறுக்கிறது; [14]அவைகள் என
க்குவருத்தமாயிருக்கிறது; அவைகளைச்சுமந்து
இளைத்துப்போனேன். நீங்கள் உங்கள் [15]கை 15
களைவிரித்தாலும், என்கண்களை உங்களைவிட்டு
மறைக்கிறேன்; நீங்கள் மிகுதியாய் ஜெபம்
பண்ணினாலும் கேளேன்; உங்கள் கைகள்
இரத்தத்தினால் நிறைந்திருக்கிறது. உங்களைக் 16
கழுவிச் [16]சுத்திகரியுங்கள்; உங்கள் கிரியைக
ளின் பொல்லாப்பை என் கண்களுக்கு மறை
வாக அகற்றிவிட்டு, தீமைசெய்தலை விட்டு
ஓயுங்கள்; நன்மைசெய்யப் படியுங்கள்; நியா 17
யத்தைத் தேடுங்கள் [17]ஒடுக்கப்பட்டவனை ஆத
ரித்து, திக்கற்ற பிள்ளையின் நியாயத்தையும்,
விதவையின் வழக்கையும் விசாரியுங்கள்.
வழக்காடுவோம் வாருங்கள் என்று **கர்த்தர்** 18
சொல்லுகிறார்; [18]உங்கள் பாவங்கள் சிவேரென்
றிருந்தாலும் உறைந்தமழையைப்போல் வெண்
மையாகும்; அவைகள் இரத்தாம்பரச் சிவப்பா
யிருந்தாலும் பஞ்சைப்போலாகும். நீங்கள் 19
மனம் பொருந்திச் செவிகொடுத்தால், தேசத்
தின் நன்மையைப் புசிப்பீர்கள். மாட்டோம் 20
என்று எதிர்த்து நிற்பீர்களாகில் பட்டயத்
துக்கு இரையாவீர்கள்; [19]**கர்த்தரின்** வாய்
இதைச் சொல்லிற்று.
உண்மையுள்ள நகரம் எப்படி வேசியாய்ப் 21
போயிற்று! [20]அது நியாயத்தால் நிறைந்திருந்

1 எண். 12. 6
2 உபா. 32. 1. எரே. 2. 12. மீகா 6. 1, 2
3 எரே. 8. 7
4 மத். 3. 7
5 எரே. 2. 30
6 எரே. 8. 22
7 உபா. 28. 51, 52
8 புல. 2. 6
9 ஆதி. 19. 24. புல. 2. 22. ரோ. 9. 29
10 உபா. 32. 32. எசே. 16. 46
11 சங். 50. 8. ழ. ஆமோ. 5. 21, 22
12 யாத். 23. 17; 34. 23
13 மத். 15. 9 லூ. 11. 42
14 லேவி. 23. 2. ழ. எண். 28. 11
15 மீகா 3. 4. 1 தீமோ. 2. 8.
16 எரே. 4. 14. ரோ. 12. 9. 1 பே. 3. 11
17 எரே. 22. 3, 16
18 43. 26. சங். 51. 7. மீகா 6. 2. வெளி. 7. 14
19 லேவி. 26. 3. எண். 28. 19
20 எரே. 2. 20, 21

தது, நீதி அதில் குடிகொண்டிருந்தது; இப்
பொழுதோ அதின் குடிகள் கொலைபாதகர்.
22 உன் வெள்ளி களிம்பாயிற்று; [1]உன் திராட்ச
23 ரசம் தண்ணீர்க் கலப்பானது. உன் பிரபுக்கள்
முரடரும் திருடரின் தோழருமாயிருக்கிறார்
கள்; அவர்களில் ஒவ்வொருவனும் பரிதானத்
தை விரும்பி, கைக்கூலியை நாடித்திரிகிறான்;
[2]திக்கற்ற பிள்ளையின் நியாயத்தை விசாரியார்
கள்; விதவையின் வழக்கு அவர்களிடத்தில்
ஏறுகிறதில்லை.
24 ஆகையால் சேனைகளின் **கர்த்தரும்** இஸ்ர
வேலின் வல்லவருமாகிய ஆண்டவர் சொல்லு
கிறதாவது: [3]ஓகோ, நான் என் சத்துருக்களில்
கோபம் ஆறி, என் பகைஞருக்கு நீதியைச்
25 சரிக்கட்டுவேன். நான் என் கையை உன்னிட
மாய்த் திருப்பி உன் களிம்பு நீங்க உன்னைச்
சுத்தமாய்ப் புடமிட்டு, [4]உன் ஈயத்தையெல்
26 லாம் நீக்குவேன். உன் நியாயாதிபதிகளை முன்
இருந்ததுபோலவும், உன் ஆலோசனைக்கா
ரரை ஆதியில் இருந்ததுபோலவும் திரும்பக்
கட்டளையிடுவேன்; [5]பின்பு நீ நீதிபுரம் என்
றும், சத்தியநகரம் என்றும் பெயர் பெறுவாய்.
27 சீயோன் நியாயத்தினாலும், [6]அதிலே திரும்பி
வருகிறவர்கள் நீதியினாலும் மீட்கப்படுவார்கள்.
28 துரோகிகளும் பாவிகளுமோ ஏகமாய் நொறுங்
குண்டுபோவார்கள்; [7]**கர்த்தரை** விட்டு விலகு
29 கிறவர்கள் நிர்மூலமாவார்கள். நீங்கள் விரும்
பின கர்வாலிமரங்களினிமித்தம் வெட்கப்படு
வீர்கள்; [8]நீங்கள் தெரிந்துகொண்ட தோப்புக
30 ளினிமித்தம் நாணமடைவீர்கள். இலையுதிர்ந்த
கர்வாலிமரத்தைப்போலவும் தண்ணீரில்லாத
31 தோப்பைப்போலவும் இருப்பீர்கள். பராக்
கிரமசாலி சணற்கூளமும், [9]அவன் கிரியை
அக்கினிப்பொறியுமாகி, இரண்டும் அவிப்பா
ரில்லாமல் ஏகமாய் வெந்துபோம் என்று
சொல்லுகிறார்.

**2** ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா யூதாவை
யும் எருசலேமையும் குறித்துக் கண்ட தரிசனம்.
2 கடைசிநாட்களில் **கர்த்தருடைய** ஆலயமா
கிய பர்வதம் பர்வதங்களின் கொடுமுடியில்
ஸ்தாபிக்கப்பட்டு, [10]மலைகளுக்குமேலாய் உயர்
த்தப்படும்; [11]எல்லாஜாதிகளும் அதற்கு ஓடி
3 வருவார்கள். திரளான ஜனங்கள் புறப்பட்டு
வந்து: நாம் **கர்த்தரின்** பர்வதத்துக்கும் [12]யாக்
கோபின் தேவனுடைய ஆலயத்துக்கும் போ
வோம் வாருங்கள்; அவர் தமது வழிகளை நமக்
குப்போதிப்பார், நாம் அவர் பாதைகளில் நடப்
போம் என்பார்கள்; [13]ஏனெனில் சீயோனி
லிருந்து வேதமும், எருசலேமிலிருந்து **கர்த்த**
4 **ரின்** வசனமும் வெளிப்படும். அவர் ஜாதிக
ளுக்குள் நியாயந்தீர்த்து, திரளான ஜனங்களைக்
கடிந்துகொள்வார்; அப்பொழுது அவர்கள்
தங்கள் பட்டயங்களை மண்வெட்டிகளாகவும்,
தங்கள் ஈட்டிகளை அரிவாள்களாகவும் அடிப்
பார்கள்; [14]ஜாதிக்கு விரோதமாய் ஜாதி பட்ட
யம் எடுப்பதில்லை, இனி அவர்கள் யுத்தத்
தைக் கற்பதுமில்லை.

1 எரே. 6. 28, 30. எசே. 22. 18, 19
2 நீதி. 29. 24. எரே. 5. 28; 22. 17. ஓசி. 9. 15
3 உபா. 28. 63. எசே. 5. 13
4 மல். 3. 3
5 எரே. 33. 7. சகரி. 8. 3
6 1 கொ. 1. 30
7 சங். 125. 5. செப். 1. 6. லூக். 12. 45, 46
8 57. 5; 65. 3; 66. 17
9 எசே. 32. 21
10 மீகா. 4. 1. மு
11 சங். 2. 8.
12 எரே. 31. 6; 50. 5
13 லூ. 24. 47
14 சங். 46. 9. ஓசி. 2. 18. சகரி. 9. 10
15 எபே. 5. 8
16 உபா. 18. 14. நெகே. 13. 23
17 உபா. 17. 17
18 எரே. 2. 28
19 வெளி. 6. 15, 16
20 5. 16. சங். 18. 27. செப். 3. 11, 16. சகரி. 9. 16
21 எசே. 31. 3. சகரி. 11. 1, 2
22 1 இரா. 10. 22
23 11. வச.
24 ஆகா. 2. 6, 21. எபி. 12. 26, 27
25 லூ. 23. 30. வெளி. 6. 16; 9. 6
26 30. 22; 31. 7
27 யோபு 27. 3. சங். 146. 3, 4. எரே. 17. 5

யாக்கோபின் வம்சத்தாரே, **கர்த்தரின்** 5
வெளிச்சத்திலே [15]நடப்போம் வாருங்கள்.
யாக்கோபின் வம்சத்தாராகிய உம்முடைய 6
ஜனத்தைக் கைவிட்டீர்; [16]அவர்கள் கீழ்த்
திசையாரின் போதகத்தால் நிறைந்து, பெலிஸ்
தரைப்போல் நாள்பார்க்கிறவர்களாயிருந்து,
அந்நிய புத்திரர்மேல் பிரியப்படுகிறார்களே.
அவர்கள் தேசம் வெள்ளியினாலும் பொன்னி 7
னாலும் நிறைந்திருக்கிறது; [17]அவர்கள் பொக்
கிஷங்களுக்கு முடிவில்லை; அவர்கள் தேசம்
குதிரைகளாலும் நிறைந்திருக்கிறது; அவர்
கள் இரதங்களுக்கும் முடிவில்லை. அவர்கள் 8
தேசம் விக்கிரகங்களாலும் நிறைந்திருக்கி
றது; [18]தங்கள் கைகளின் கிரியையையும், தங்
கள் விரல்கள் உண்டுபண்ணினதையும் பணிந்
துகொள்ளுகிறார்கள். சிறியவனும் குனிகி 9
றான், பெரியவனும் பணிகிறான்; ஆகை
யால் அவர்களுக்கு மன்னியாதிருப்பீர். **கர்த்** 10
**தரின்** பயங்கரத்திற்கும், அவருடைய மகி
மைப்பிரதாபத்திற்கும் விலகி, [19]நீ கன்மலையில்
ஒதுங்கி, மண்ணில் ஒளித்துக்கொள். நரரின் 11
மேட்டிமையான கண்கள் தாழ்த்தப்படும்,
மனுஷரின் வீறாப்பும் தணியும்; [20]**கர்த்தர்** ஒரு
வரே அந்நாளில் உயர்ந்திருப்பார். எல்லாம் 12
தாழ்த்தப்படும் பொருட்டு சேனைகளுடைய
**கர்த்தரின்** நாளானது பெருமையும் மேட்டி
மையுமானவை எல்லாவற்றின்மேலும், உய
ர்ந்தவை எல்லாவற்றின்மேலும், லீபனோ 13
னிலுள்ள உயரமும் ஓங்கலுமான எல்லாக்
கேதுருக்களின்மேலும், [21]பாசானிலுள்ள எல்
லாக் கர்வாலி மரங்களின்மேலும், உன்னத 14
மான எல்லாப் பர்வதங்களின்மேலும், உயர
மான எல்லா மலைகளின்மேலும், உயர்ந்த 15
எல்லாக் கோபுரத்தின்மேலும், அரணான எல்
லா மதிலின்மேலும், தர்ஷீசின் கப்பல்கள் 16
எல்லாவற்றின்மேலும், [22]எல்லாச் சித்திர
விநோதங்களின்மேலும் வரும். அப்பொழுது 17
நரரின் மேட்டிமை தாழ்ந்து, [23]மனுஷரின்
வீறாப்புத் தணியும்; **கர்த்தர்** ஒருவரே அந்நா
ளில் உயர்ந்திருப்பார். விக்கிரகங்கள் கட் 18
டோடே ஒழிந்துபோம். பூமியைத் தத்தளிக் 19
கப் பண்ணக் **கர்த்தர்** எழும்பும்போது, [24]அவ
ருடைய பயங்கரத்திற்கும், அவருடைய மகி
மைப் பிரதாபத்திற்கும் விலகி, கன்மலைகளின்
கெபிகளிலும், [25]பூமியின் குகைகளிலும் புகுந்
துகொள்வார்கள். பூமியைத் தத்தளிக்கப்பண் 20
ணக் **கர்த்தர்** எழும்பும் அந்நாளிலே, அவரு
டைய பயங்கரத்திற்கும், அவருடைய மகி
மைப் பிரதாபத்திற்கும் விலகி, கன்மலைகளின்
வெடிப்புகளிலும் குன்றுகளின் சந்துகளிலும்
புகுந்துகொள்ளும்படிக்கு, மனுஷன் பணிந் 21
துகொள்ளத் தனக்கு உண்டாக்கியிருந்த தன்
வெள்ளி விக்கிரகங்களையும், தன் பொன் விக்
கிரகங்களையும், [26]மூஞ்சூறுகளுக்கும் துரிஞ்சில்
களுக்கும் எறிந்துவிடுவான். நாசியிலே சுவாச 22
முள்ள மனுஷனை நம்புவதை விட்டுவிடுங்கள்;
[27]எண்ணப்படுவதற்கு அவன் எம்மாத்திரம்.

3 இதோ, சேனைகளின் **கர்த்தராகிய** ஆண்
டவர் எருசலேமிலிருந்தும் யூதாவிலிருந்தும்
சகலவிதமான ஆதரவுகளாகிய அப்பமென்
கிற [1]எல்லா ஆதாரவையும், தண்ணீரென்கிற
2 எல்லா ஆதாரவையும்; பராக்கிரமசாலியை
யும், [2]யுத்தவீரனையும், நியாயாதிபதியையும்,
தீர்க்கதரிசியையும், சாஸ்திரியையும், மூப்ப
3 னையும்; ஐம்பதுபேருக்கு அதிபதியையும்,
கனம்பொருந்தினவனையும், ஆலோசனைக்கா
ரனையும், தொழில்களில் சாமர்த்தியமுள்ளவ
4 னையும், சாதுரியனையும் விலக்குவார். வாலி
பரை அவர்களுக்கு அதிபதிகளாகத் தருவேன்
என்கிறார்; [3]பிள்ளைகள் அவர்களை ஆளுவார்
5 கள். ஜனங்கள் ஒடுக்கப்படுவார்கள்; ஒருவ
ருக்கொருவரும், அயலானுக்கு அயலானும்
விரோதமாயிருப்பார்கள்; வாலிபன் முதிர்வய
துள்ளவனுக்கும், கீழ்மகன் மேன்மகனுக்கும்
6 இடும்புசெய்வான். அப்பொழுது ஒருவன் தன்
தகப்பன் வீட்டாருகிய தன் சகோதரனைப்பிடி
த்து: உனக்கு வஸ்திரம் இருக்கிறது, நீ எங்க
ளுக்கு அதிபதியாயிரு; கேட்டுக்கு இனமான
இந்தக்காரியம் உன் கையின் கீழாவதாக என்று
7 சொல்ல; அவன் அந்நாளிலே தன் கையை
உயர்த்தி: நான் *சீர்ப்படுத்துகிறவனு யிருக்க
மாட்டேன்; என் வீட்டிலே அப்பமுமில்லை,
வஸ்திரமுமில்லை; என்னை ஜனங்களுக்கு அதி
8 பதியாக வைக்கவேண்டாம் என்பான். ஏனெ
ன்றால் எருசலேம் பாழாக்கப்பட்டது, யூதா
விழுந்துபோயிற்று; [4]அவர்கள் நாவும், அவர்
கள் கிரியைகளும், **கர்த்தருடைய** மகிமையின்
கண்களுக்கு எரிச்சல் உண்டாக்கத்தக்கதாக
9 அவருக்கு விரோதமாயிருக்கிறது. அவர்கள்
முகப்பார்வை அவர்களுக்கு விரோதமாய்ச்
சாட்சியிடும்; [5]அவர்கள் தங்கள் பாவத்தை
மறைக்காமல், சோதோம் ஊராரைப்போல
வெளிப்படுத்துகிறார்கள்; [6]அவர்கள் ஆத்துமா
வுக்கு ஐயோ! தங்களுக்கே தீமையை வருவித்
10 துக்கொள்ளுகிறார்கள். உங்களுக்கு நன்மை
யுண்டாகும் என்று நீதிமான்களுக்குச் சொல்
லுங்கள்; [7]அவர்கள் தங்கள் கிரியைகளின்
11 பலனை அநுபவிப்பார்கள். துன்மார்க்கனுக்கு
ஐயோ! அவனுக்குக் கேடு உண்டாகும்; அவன்
கைகளின் பலன் அவனுக்குக் கிடைக்கும்.
12 பிள்ளைகள் என் ஜனங்களை ஒடுக்குகிறவர்க
ளாயிருக்கிறார்கள்; ஸ்திரீகள் அவர்களை ஆளு
கிறார்கள். என் ஜனமே, [8]உன்னை நடத்துகி
றவர்கள் உன்னை மோசம்போக்கி, நீ நடக்க
வேண்டிய வழியை அழித்துப்போடுகிறார்கள்.
13 **கர்த்தர்** வழக்காட எழுந்திருந்து, [9]ஜனங்களை
14 நியாயந்தீர்க்க நிற்கிறார். **கர்த்தர்** தமது ஜனத்
தின் மூப்பரையும், அதின் பிரபுக்களையும்
நியாயம் விசாரிப்பார். நீங்களே இந்தத் திராட்
சத்தோட்டத்தைப் பட்சித்துப்போட்டீர்கள்;
[10]சிறுமையானவனிடத்தில் கொள்ளையிட்ட
15 பொருள் உங்கள் வீடுகளில் இருக்கிறது. நீங்
கள் என் ஜனத்தை நொறுக்கிச் சிறுமையான
வர்களின் முகத்தை நெரிக்கிறது என்னவெ
ன்று [11]சேனைகளின் **கர்த்தராகிய** ஆண்டவர்
உரைக்கிறார்.
பின்னும் **கர்த்தர்** சொல்லுகிறதாவது: 16
சீயோன் குமாரத்திகள் அகந்தையாயிருந்து,
கழுத்தை நெறித்து நடந்து, கண்களால் மருட்
டிப்பார்த்து, ஒய்யாரமாய் நடந்து, தங்கள்
கால்களில் சிலம்பு ஒலிக்கத் திரிகிறார்கள்.
ஆதலால் ஆண்டவர் சீயோன் குமாரத்திகளின் 17
[12]உச்சந்தலையை மொட்டையாக்குவார்; **கர்த்**
**தர்** அவர்கள் மானத்தைக் குலைப்பார். அந்நா 18
ளிலே ஆண்டவர் அவர்களுடைய ஆபரணங்
களாகிய சிலம்புகளையும், சுட்டிகளையும்,
பிறைச்சிந்தாக்குகளையும், ஆரங்களையும், அஸ் 19
தகடகங்களையும், தலைமுக்காடுகளையும், சிர 20
பூஷணங்களையும், பாதசரங்களையும், மார்க்கச்
சைகளையும், சுகந்த பரணிகளையும், தாயித்து 21
களையும், மோதிரங்களையும், மூக்குத்திகளை
யும், விநோத வஸ்திரங்களையும், சால்வை 22
களையும், போர்வைகளையும், குப்பிகளையும்,
கண்ணாடிகளையும், சல்லாக்களையும், குல்லாக் 23
களையும், துப்பட்டாக்களையும் உரிந்துபோடு
வார். அப்பொழுது, சுகந்தத்துக்குப் பதிலா 24
கத் துர்க்கந்தமும், கச்சைக்குப் பதிலாகக் கயி
றும், மயிர்ச்சுருளுக்குப் பதிலாக மொட்டை
யும், [13]ஆடம்பரமான வஸ்திரங்களுக்குப் பதி
லாக இரட்டுக்கச்சும், அழகுக்குப் பதிலாகக்
கருகிப்போகுதலும் இருக்கும். உன் புருஷர் 25
கட்கத்தினாலும், உன் பெலசாலிகள் யுத்தத்தி
லும் விழுவார்கள். அவளுடைய வாசல்கள் 26
துக்கித்துப் புலம்பும்; [14]அவள் வெறுமையாக்
கப்பட்டுத் தரையிலே உட்காருவாள் என்கி
றார். அந்நாளில் ஏழு ஸ்திரீகள் ஒரே புருஷ 4
னைப் பிடித்து: நாங்கள் எங்கள் சொந்த ஆகா
ரத்தைப் புசித்து, எங்கள் சொந்த வஸ்திரத்தை
உடுப்போம்; எங்கள் நிந்தை நீங்கும்படிக்கு
உன் பேர்மாத்திரம் எங்கள்மேல் விளங்கட்
டும் என்பார்கள்.
இஸ்ரவேலில் தப்பினவர்களுக்கு அந்நா 2
ளிலே **கர்த்தரின்** †கிளை [15]அலங்காரமும் மகி
மையுமாயிருக்கும்; பூமியின் கனி அவர்களுக்
குச் சிறப்பும் அலங்காரமுமாயிருக்கும். அப் 3
பொழுது ஆண்டவர், சீயோன் குமாரத்திக
ளின் அழுக்கைக் கழுவி, [16]நியாயத்தின் ஆவி
யினாலும், சுட்டெரிப்பின் ஆவியினாலும், எரு
சலேமின் இரத்தப்பழிகளை அதின் நடுவிலி
ருந்து நீக்கிவிடும்போது, சீயோனில் மீதி 4
யாயிருந்து, எருசலேமில் தரித்திருந்து ஜீவ
னுக்கென்று பேரெழுதப்பட்டவனெவனும்
பரிசுத்தனென்று [17]சொல்லப்படுவான். அப் 5
பொழுது **கர்த்தர்** சீயோன் மலையிலுள்ள
எல்லா வாசஸ்தலங்களிலும், அதின் சபைக
ளின்மேலும், பகலில் மேகத்தையும் புகை
யையும், [18]இரவில் கொழுந்துவிட்டு எரி
யும் அக்கினிப்பிரகாசத்தையும் உண்டாக்கு
வார்; மகிமையானவைகளின் மேலெல்லாம்
காவல் உண்டாயிருக்கும். பகலிலே வெயி 6
லுக்கு நிழலாகவும், பெருங்காற்றுக்கும் மழைக்

[1] 36, 12. லேவி. 26. 26. எசே. 38. 9
[2] 2 இரா. 24. 14
[3] பிர. 10. 16
* குணப்படுத்துகிற.
[4] புல. 5. 16, 17. மீகா 3. 12. 1 கொ. 10. 22
[5] எரே. 3. 3
[6] ஆதி. 13. 13: 18. 20, 21
[7] பிர. 8. 12, 13
[8] 9. 16
[9] மீகா. 6. 2
[10] மத். 21. 33
[11] 58. 4. மீகா 3. 2, 6
[12] உபா. 28. 27
[13] மீகா 1. 16
[14] புல. 1. 4: 2. 10
† முளை=சந்ததி.
[15] எரே. 23. 5, 6. சகரி. 3. 8; 6. 12, 13
[16] சகரி. 13. 1. மல்கி. 3. 2, 3
[17] 60. 21. பிலி. 4. 3, எபி. 12. 14. வெளி. 3. 5
[18] யாத். 13. 21. சகரி. 2. 5

கும் அடைக்கலமாகவும், [1]மறைவிடமாகவும்,
ஒரு கூடாரம் உண்டாயிருக்கும்.
5 இப்பொழுது நான் என் நேசரிடத்தில்
அவருடைய திராட்சத்தோட்டத்தைக் குறி
த்து என் நேசருக்கேற்ற ஒரு பாட்டைப் பாடு
வேன்; [2]என் நேசருக்கு மகா செழிப்பான
மேட்டிலே ஒரு திராட்சத்தோட்டம் உண்டு.
2 அவர் அதை வேலியடைத்து, அதிலுள்ள கற்
களைப் பொறுக்கி, அதிலே நற்குல திராட்சச்
செடிகளை நட்டு, [3]அதின் நடுவில் ஒரு கோபு
ரத்தைக் கட்டி, அதில் ஆலையையும் உண்டு
பண்ணி, அது நல்ல திராட்சப்பழங்களைத்
தருமென்று காத்திருந்தார்; அதுவோ கசப்
3 பான பழங்களைத் தந்தது. எருசலேமின் குடி
களே, யூதாவின் மனுஷரே, [4]எனக்கும் என்
திராட்சத்தோட்டத்துக்கும் நியாயந்தீருங்கள்.
4 நான் என் திராட்சத்தோட்டத்திற்காகச் செய்
யாத எந்த வேலையை அதற்கு இனிச் செய்ய
லாம்? அது நல்ல திராட்சப்பழங்களைத் தரு
மென்று நான் காத்திருக்க, அது கசப்பான பழ
5 ங்களைத் தந்ததென்ன? இப்போதும் நான் என்
திராட்சத்தோட்டத்துக்குச் செய்வதை உங்க
ளுக்கு அறிவிப்பேன்; அதின் வேலியை எடுத்
துப்போடுவேன், [5]அது மேய்ந்துபோடப்ப
டும்; அதின் அடைப்பைத் தகர்ப்பேன், அது
6 மிதியுண்டுபோம். அதைப் பாழாக்கிவிடுவேன்;
அதின் கிளை நறுக்கப்படாமலும், களைகொத்தி
எடுக்கப்படாமலும் போவதினால், முட்செடி
யும் நெரிஞ்சிலும் முளைக்கும்; அதின்மேல்
மழை பெய்யாதபடிக்கு மேகங்களுக்கும் கட்
7 டளையிடுவேன் என்கிறார். சேனைகளின்
**கர்த்தருடைய** திராட்சத்தோட்டம் இஸ்ரவே
லின் வம்சமே; அவருடைய மனமகிழ்ச்சி
யின் நாற்று யூதாவின் மனுஷரே; அவர் நியா
யத்துக்குக் காத்திருந்தார், இதோ, கொடுமை;
நீதிக்குக் காத்திருந்தார், இதோ, முறைப்பாடு.
8 தாங்கள்மாத்திரம் தேசத்தின் நடுவில் வாச
மாயிருக்கும்படி மற்றவர்களுக்கு இடமில்லா
மற்போகுமட்டும், [6]வீட்டோடே வீட்டைச்
சேர்த்து, வயலோடே வயலைக் கூட்டுகிறவர்க
9 ளுக்கு ஐயோ! சேனைகளின் **கர்த்தர்** என்
செவி கேட்கச் சொன்னது: [7]மெய்யாகவே
அந்தத் திரளான வீடுகள் பாழாகும்; பெரிய
வைகளும் நேர்த்தியானவைகளுமாகிய வீடு
10 கள் குடியில்லாதிருக்கும். பத்தேர் நிலமா
கிய திராட்சத்தோட்டம் ஒரேபடி ரசம் தரும்;
[8]ஒரு கல விதை ஒரு குறுணி விளையும்.
11 சாராயத்தை நாடி அதிகாலமே எழுந்து,
[9]மதுபானம் தங்களைச் சூடாக்கும்படி தரித்
திருந்து, இருட்டிப்போகுமளவும் குடித்துக்
கொண்டே இருக்கிறவர்களுக்கு ஐயோ!
12 அவர்கள் சுரமண்டலத்தையும், [10]தம்புருவை
யும், மேளத்தையும், நாகசுரத்தையும், மதுபா
னத்தையும் வைத்து விருந்து கொண்டாடுகி
றார்கள்; ஆனாலும் **கர்த்தரின்** கிரியையை
நோக்குகிறதுமில்லை, [11]அவர் கரத்தின் செய்
13 கையைச் சிந்திக்கிறதுமில்லை. என் ஜனங்

1 25. 4
2 சங். 80. 8. உன்னத. 8. 12. மத். 21. 33. மாற். லூக். 20. 9. மா
3 எரே. 2. 21
4 ரோ. 3. 4
5 சங். 80. 12, 13
6 மீகா 2. 2
7 22. 14
8 ஆகா. 1. 9-11.
9 நீதி. 23. 29, 30. பிர. 10. 16
10 ஆமோ. 6. 5, 6
11 யோபு 34. 26. சங். 28. 5
12 ஓசி. 4. 6. லூக் 19. 44
13 10. 16
14 66. 5. எரே. 17. 15. ஆமோ. 5. 18. 2 பே. 3. 3, 4
15 நீதி. 3. 7: 26. 12. ரோ. 1. 22: 12. 16
16 நீதி. 17. 15: 24. 24
17 யாத். 15. 7. ஓசி. 9. 16. மத். 3. 12
18 லேவி. 26. 14. ஆப. 3. 6

கள் [12]அறிவில்லாமையினால் சிறைப்பட்டுப்
போகிறார்கள்; அவர்களில் கனமுள்ளவர்கள்
பட்டினியினால் தொய்ந்துபோகிறார்கள்;
அவர்களுடைய திரளான கூட்டத்தார் தாகத்
தால் நாவறண்டுபோகிறார்கள். அதினிமித் 14
தம் பாதாளம் தன்னை விரிவாக்கி, தன் வாயை
ஆவென்று மட்டில்லாமல் திறந்தது; அவர்கள்
மகிமையும், அவர்கள் திரள்கூட்டமும், அவர்
கள் ஆடம்பரமும், அவர்களில் களிகூருகிற
வர்களும் அதற்குள் இறங்கிப்போவார்கள்.
சிறியவன் தாழ்த்தப்படுவான், பெரியவனும் 15
தாழ்ச்சியடைவான்; மேட்டிமையானவர்க
ளின் கண்கள் தாழ்ந்துபோம். சேனைகளின் 16
**கர்த்தர்** நியாயத்தீர்ப்பினால் உயர்ந்து, பரி
சுத்தமுள்ள தேவன் நீதியினால் பரிசுத்தராய்
விளங்குவார். அப்பொழுது ஆட்டுக்குட்டி 17
கள் கண்டவிடமெல்லாம் மேயும்; கொழுத்த
வர்களுடையதாயிருந்து பாழாய்ப்போன நிலங்
களைப் [13]பரதேசிகள் அநுபவிப்பார்கள்.
மாயையின் கயிறுகளால் அக்கிரமத்தையும், 18
வண்டில் வடங்களால் பாவத்தையும் இழுத்
துக்கொண்டுவந்து, நாம் பார்க்கும்படி அவர் 19
தீவிரித்துத் தமது கிரியையைச் சீக்கிரமாய்
நடப்பிக்கட்டுமென்றும், [14]இஸ்ரவேலின் பரி
சுத்தருடைய ஆலோசனை நாம் அறியும்
படி அது சமீபித்து வரட்டுமென்றும் சொல்
லுகிறவர்களுக்கு ஐயோ! தீமையை நன்மை 20
யென்றும், நன்மையைத் தீமையென்றும்
சொல்லி, இருளை வெளிச்சமும், வெளிச்
சத்தை இருளுமாகப் பாவித்து, கசப்பைத்
தித்திப்பும், தித்திப்பைக் கசப்புமென்று சா
திக்கிறவர்களுக்கு ஐயோ! தங்கள் பார்வை 21
க்கு ஞானிகளும், [15]தங்கள் எண்ணத்துக்குப்
புத்திமான்களுமாய் இருக்கிறவர்களுக்கு
ஐயோ! சாராயத்தைக் குடிக்க வீரரும், மது 22
வைக் கலந்துவைக்கப் பராக்கிரமசாலிகளுமா
யிருந்து, பரிதானத்திற்காகக் குற்றவாளியை 23
நீதிமானாகத் தீர்த்து [16]நீதிமானின் நியாயத்
தை அவனுக்கு விரோதமாய்ப் புரட்டுகிறவர்
களுக்கு ஐயோ! இதினிமித்தம் [17]அக்கினி 24
ஜுவாலை வைக்கோலைப் பட்சிப்பதுபோல
வும், செத்தையானது நெருப்புக்கு இரை
யாகி எரிந்துபோவதுபோலவும், அவர்கள்
வேர் வாடி, அவர்கள் துளிர் தூசியைப்போல்
பறந்துபோகும்; அவர்கள் சேனைகளின் **கர்த்
தருடைய** வேதத்தை வெறுத்து, இஸ்ரவேலி
லுள்ள பரிசுத்தருடைய வசனத்தை அசட்
டைபண்ணினார்களே.
ஆகையால் **கர்த்தருடைய** கோபம் தமது 25
ஜனங்களுக்கு விரோதமாய் மூண்டது; அவர்
தமது கையை அவர்களுக்கு விரோதமாய்
நீட்டி, பர்வதங்கள் அதிரத்தக்கதாயும், அவர்
கள் பிணங்கள் நடுவீதிகளில் குப்பைபோ
லாகத்தக்கதாயும், அவர்களை அடித்தார்; [18]இ
வை எல்லாவற்றிலும் அவருடைய கோபம்
ஆறாமல், இன்னும் அவருடைய கை நீட்டின
படியே இருக்கிறது. அவர் தூரத்திலுள்ள 26

ஜாதியாருக்கு ஒரு கொடியை ஏற்றி, அவர்
களைப் பூமியின் கடையாந்தரங்களிலிருந்து
பயில்காட்டி அழைப்பார்; அப்பொழுது
அவர்கள் தீவிரமும் வேகமுமாய் வருவார்கள்.
27 அவர்களில் விடாய்த்தவனும் இடறுகிறவ
னும் இல்லை; [1]தூங்குகிறவனும் உறங்குகிறவ
னும் இல்லை; அவர்களில் ஒருவனுடைய
இடுப்பின் கச்சை அவிழ்வதும், பாதரட்சை
28 களின் வார் அறுந்துபோவதும் இல்லை. அவர்
கள் அம்புகள் கூர்மையும், அவர்கள் வில்லுக
ளெல்லாம் நாணேற்றினவைகளும், அவர்கள்
குதிரைகளின் குளம்புகள் கற்பாறையாக எண்
ணப்பட்டவைகளும், அவர்கள் உருளைகள்
29 சுழல்காற்றுக்கு ஒத்தவைகளுமாயிருக்கும். அ
வர்கள் கெர்ச்சிப்பு சிங்கத்தின் கெர்ச்சிப்பு
போலிருக்கிறது; பாலசிங்கங்களைப்போலக்
கெர்ச்சித்து, உறுமி, இரையைப் பிடித்து,
தப்புவிக்கிறவன் இல்லாமல், அதை எடுத்துக்
30 கொண்டு போய்விடுவார்கள். அந்நாளில்,
சமுத்திரம் இரைவதுபோல் அவர்களுக்கு
விரோதமாய் இரைவார்கள்; அப்பொழுது
தேசத்தைப் பார்த்தால், இதோ, அந்தகாரமும்
வியாகுலமும் உண்டு; அதின் மேகங்களினால்
வெளிச்சம் இருண்டுபோம்.

6 உசியா ராஜா மரணமடைந்த வருஷத்தில்,
[2]ஆண்டவர் உயரமும் உன்னதமுமான சிங்கா
சனத்தின்மேல் வீற்றிருக்கக் கண்டேன்;
[3]அவருடைய வஸ்திரத்தொங்கலால் தேவால
2 யம் நிறைந்திருந்தது. சேராபீன்கள் அவ
ருக்கு மேலாக நின்றார்கள்; அவர்களில் ஒவ்
வொருவனுக்கும் அவ்வாறு செட்டைகளிருந்
தன; [4]அவனவன் இரண்டு செட்டைகளால்
தன் தன் முகத்தை மூடி, இரண்டு செட்டை
களால் தன் தன் கால்களை மூடி, இரண்டு
3 செட்டைகளால் பறந்து; ஒருவரையொருவர்
நோக்கி: [5]சேனைகளின் கர்த்தர் பரிசுத்தர்,
பரிசுத்தர், பரிசுத்தர், பூமியனைத்தும் அவ
ருடைய மகிமையால் நிறைந்திருக்கிறது
4 என்று கூப்பிட்டுச் சொன்னார்கள். கூப்பிடு
கிறவர்களின் சத்தத்தால் வாசல்களின் நிலை
கள் அசைந்து, [6]ஆலயம் புகையினால் நிறைந்
5 தது. அப்பொழுது நான்: ஐயோ! அதமா
னேன், நான் அசுத்த உதடுகளுள்ள மனு
ஷன், அசுத்த உதடுகளுள்ள ஜனங்க
ளின் நடுவில் வாசமாயிருக்கிறவன்; [7]சேனை
களின் **கர்த்தராகிய** ராஜாவை என் கண்கள்
6 கண்டதே என்றேன். அப்பொழுது சேரா
பீன்களில் ஒருவன் பலிபீடத்திலிருந்து,
[8]தன் கையிலே பிடித்த குறட்டால் ஒரு நெருப்
புத்தழலை எடுத்து, என்னிடத்தில் பறந்து
7 வந்து, அதினால் என் வாயைத் தொட்டு:
[9]இதோ, இது உன் உதடுகளைத் தொட்டதி
னால் உன் அக்கிரமம் நீங்கி, உன் பாவம்
8 நிவிர்த்தியானது என்றான். பின்பு: யாரை
நான் அனுப்புவேன், யார் நமது காரியமாய்ப்
போவான் என்று உரைக்கிற ஆண்டவருடைய
சத்தத்தைக் கேட்டேன். [10]அதற்கு நான்:

1 பேரே. 2. 8-11
2 2 இரா. 15. 7
3 1 இரா. 22. 19. யோ. 12. 41. வெளி. 4. 2
4 எசே. 1. 11
5 சங். 72. 19. ஆப. 2. 14. வெளி. 4. 8
6 யாத். 40. 34. 1 இரா. 8. 10
7 சகரி. 3. 1-7
8 வெளி. 8, 3
9 எரே. 1. 9. தானி. 10. 16
10 ஆதி. 1. 26. 3. 22
11 மத். 13. 14. அப். 28. 26. ரோ. 11. 8
12 மீகா 3. 12
13 2 இரா. 25. 21
14 ரோ. 11. 5
15 2 இரா. 16. 5
16 2 இரா. 18. 17
* சலவைத்தொழி. 36. 2
17 நீதி. 21. 30

இதோ, அடியேன் இருக்கிறேன்; என்னை
அனுப்பும் என்றேன். அப்பொழுது அவர்: 9
நீ போய், இந்த ஜனங்களை நோக்கி, [11]நீங்
கள் காதாரக்கேட்டும் உணராமலும், கண்ணா
ரக்கண்டும் அறியாமலும் இருங்கள் என்று
சொல். இந்த ஜனங்கள் தங்கள் கண்களி 10
னால் காணாமலும், தங்கள் காதுகளினால்
கேளாமலும், தங்கள் இருதயத்தினால் உணர்
ந்து குணப்படாமலும், நான் அவர்களை
ஆரோக்கியமாக்காமலுமிருக்க, நீ அவர்கள்
இருதயத்தைக் கொழுத்ததாக்கி, அவர்கள் கா
துகளை மந்தப்படுத்தி, அவர்கள் கண்களை
மூடிப்போடு என்றார். அப்பொழுது நான்: 11
ஆண்டவரே, எதுவரைக்கும் என்று கேட்
டேன். அதற்கு அவர்: பட்டணங்கள் குடி
யில்லாமலும், வீடுகள் மனுஷசஞ்சாரமில்லா
மலும் பாழாகி, [12]பூமி அவாந்தரவெளியாகி,
**கர்த்தர்** மனுஷரைத் தூரமாக விலக்குவதி 12
னால், [13]தேசத்தின் நடுமையம் முற்றிலும்
வெறுமையாக்கப்படும்வரைக்குமே. ஆகிலும் 13
அதில் இன்னும் பத்தில் ஒருபங்கிருக்கும்,
அதுவும் திரும்ப நிர்மூலமாக்கப்படும்; கர்
வாலிமரமும் அரசமரமும் இலையற்றுப்போன
பின்பு, அவைகளின் அடிமரம் இருப்பது
போல, [14]அதின் அடிமரமும் பரிசுத்த வித்தா
யிருக்கும் என்றார்.

உசியாவினுடைய குமாரனாகிய யோதா 7
மின் குமாரன் ஆகாஸ் என்னும் யூதாதேசத்து
ராஜாவின் நாட்களிலே, [15]ரேத்சீன் என்னும்
சீரியாவின் ராஜாவும், ரெமலியாவின் குமார
னாகிய பெக்கா என்னும் இஸ்ரவேலின் ராஜா
வும் எருசலேமின்மேல் யுத்தம்பண்ண வந்
தார்கள், அவர்களால் அதைப் பிடிக்கக் கூடா
மற்போயிற்று. சீரியர் எப்பிராயீமைச் சார்ந் 2
திருக்கிறார்களென்று தாவீதின் குடும்பத்துக்கு
அறிவிக்கப்பட்டபோது, ராஜாவின் இருதய
மும் அவன் ஜனத்தின் இருதயமும் காட்டி
லுள்ள மரங்கள் காற்றினால் அசைகிறதுபோல்
அசைந்தது.

அப்பொழுது **கர்த்தர்** ஏசாயாவை நோக்கி: 3
[16]நீயும் உன் மகன் சேயார் யாசூபுமாக வண்
ணார் துறைவழியிலுள்ள மேற்குளத்து *மத
கின் கடைசிமட்டும் ஆகாசுக்கு எதிர்கொண்டு
போய், நீ அவனை நோக்கி: சீரியர் எப்பிரா 4
யீமோடும், ரெமலியாவின் மகனோடும் உன
க்கு விரோதமாகத் துராலோசனைபண்ணி,
நாம் யூதாவுக்கு விரோதமாய்ப் போய், அதை 5
நெருக்கி, அதை நமக்குள்ளே பங்கிட்டுக்
கொண்டு, அதற்குத் தபேயாலின் குமாரனை
ராஜாவாக ஏற்படுத்துவோம் என்று சொன்ன
நிமித்தம்; நீ பயப்படாமல் அமர்ந்திருக் 6
கப்பார்; இந்த இரண்டு புகைகிற கொள்ளிக்
கட்டைகளாகிய சீரியரோடே வந்த ரேத்சீ
னும், ரெமலியாவின் மகனும் கொண்ட உக்
கிரக்கோபத்தினிமித்தம் உன் இருதயம் துவள
வேண்டாம். **கர்த்தராகிய** ஆண்டவர்: அந்த 7
ஆலோசனை நிலைநிற்பதில்லை; [17]அதின்படி

8 சம்பவிப்பதுமில்லை; சீரியாவின் தலை தமஸ்கு,
தமஸ்குவின் தலை ரேத்சீன்; இன்னும் அறு
பத்தைந்து வருஷங்களிலே எப்பிராயீம் ஒரு
ஜனமாயிராதபடிக்கு நொறுங்குண்டுபோம்.
9 எப்பிராயீமின் தலை சமாரியா, சமாரியாவின்
தலை ரெமலியாவின் மகன்; நீங்கள் விசுவாசி
யாவிட்டால் நிலைபெறமாட்டீர்கள் என்று
சொல் என்றார்.
10 பின்னும் கர்த்தர் ஆகாசை நோக்கி:
11 நீ உன் தேவனாகிய **கர்த்தரிடத்தில்** [1]ஒரு
அடையாளத்தை வேண்டிக்கொள்; அதை
ஆழத்திலிருந்தாகிலும், உன்னதத்திலிருந்தாகி
லும் உண்டாகக் கேட்டுக்கொள் என்று சொ
12 ன்னார். ஆகாசோ: நான் கேட்கமாட்டேன்,
நான் **கர்த்தரைப்** பரீட்சை செய்யமாட்டேன்
13 என்றான். அப்பொழுது ஏசாயா: தாவீதின்
வம்சத்தாரே, கேளுங்கள்; நீங்கள் மனுஷரை
விசனப்படுத்துகிறது போதாதென்று என்
தேவனையும் விசனப்படுத்தப் பார்க்கிறீர்க
14 ளோ? ஆதலால் ஆண்டவர் தாமே உங்களுக்கு
ஒரு அடையாளத்தைக் கொடுப்பார்; [2]இதோ,
ஒரு கன்னிகை கர்ப்பவதியாகி ஒரு குமார
னைப் பெறுவாள், அவருக்கு இம்மானுவேல்
15 என்று பேரிடுவாள். தீமையை வெறுத்து நன்
மையைத் தெரிந்துகொள்ள அறியும் வயது
மட்டும் அவர் வெண்ணெயையும் தேனையும்
16 சாப்பிடுவார். அந்தப் பிள்ளை தீமையை வெ
றுக்கவும், நன்மையைத் தெரிந்துகொள்ளவும்
அறிகிறதற்குமுன்னே, [3]நீ அருவருக்கிற தே
சம் அதின் இரண்டு ராஜாக்களால் விட்டு
17 விடப்படும். எப்பிராயீம் யூதாவைவிட்டுப்
பிரிந்தநாள்முதல் வராத நாட்களைக் **கர்த்தர்**
உன்மேலும், உன் ஜனத்தின்மேலும், உன்
பிதாவுடைய வம்சத்தின்மேலும், அசீரியா
வின் ராஜாவினாலே வரப்பண்ணுவார்.
18 அந்நாட்களிலே, **கர்த்தர்** எகிப்து நதிகளின்
கடையாந்தரத்திலுள்ள ஈயையும், அசீரியா
தேசத்திலிருக்கும் தேனீயையும் பயில்காட்டி
19 அழைப்பார். அவைகள் வந்து [4]ஏகமாய்
வனாந்தரங்களின் பள்ளத்தாக்குகளிலும், கன்
மலைகளின் வெடிப்புகளிலும், எல்லா முட்
காடுகளிலும், மேய்ச்சலுள்ள எல்லா இடங்க
20 ளிலும் தங்கும். அக்காலத்திலே ஆண்டவர்
கூலிக்கு வாங்கின சவரகன் கத்தியினால்,
[5]அதாவது, நதியின் அக்கரையிலுள்ள அசீரி
யா ராஜாவினால், தலைமயிரையும் கால்மயிரை
யும் சிரைப்பித்து, தாடியையும் வாங்கிப் போ
டுவிப்பார்.
21 அக்காலத்தில் ஒருவன் ஒரு இளம்பசுவை
22 யும், இரண்டு ஆடுகளையும் வளர்த்தால், அ
வைகள் பூரணமாய்ப் பால்கறக்கிறபடியினால்
வெண்ணெயைச் சாப்பிடுவான்; தேசத்தின்
நடுவில் மீதியாயிருப்பவனெவனும் வெண்
ணெயையும் தேனையுமே சாப்பிடுவான்.
23 அந்நாளிலே, ஆயிரம் வெள்ளிக்காசு
பெறும் ஆயிரம் திராட்சச்செடியிருந்த நில
மெல்லாம் முட்செடியும் நெரிஞ்சிலுமாகும்.
தேசமெங்கும் முட்செடியும் நெரிஞ்சிலும் 24
உண்டாயிருப்பதினால், அம்புகளையும் வில்லை
யும் பிடித்து அங்கே போகவேண்டியதாயிருக்
கும். மண்வெட்டியால் கொத்தப்படுகிற மலை 25
கள் உண்டே; முட்செடிகளுக்கும் நெரிஞ்சில்
களுக்கும் பயப்படுவதினால் அவைகளில் ஒன்
றிற்கும் போகக்கூடாமையினால், அவைகள்
மாடுகளை ஓட்டிவிடுவதற்கும், ஆடுகள் மிதிப்ப
தற்குமான இடமாயிருக்கும் என்றான்.

பின்னும் **கர்த்தர்** என்னை நோக்கி: நீ ஒரு **8**
பெரிய பத்திரத்தை எடுத்து மனுஷன் எழுது
கிற பிரகாரமாய் அதிலே *மகேர்–சாலால்–
அஷ்–பாஸ் என்று எழுது என்றார். அப் 2
பொழுது நான் உண்மையுள்ள சாட்சிக்கார
ராகிய ஆசாரியனான உரியாவையும், [6]யெபெ
ரெகியாவின் குமாரனான சகரியாவையும்
அதற்குச் சாட்சிகளாக வைத்துக்கொண்டே
ன். நான் தீர்க்கதரிசியானவளைச் சேர்ந்த 3
போது, அவள் கர்ப்பவதியாகி ஒரு குமார
னைப்பெற்றாள்; அப்பொழுது **கர்த்தர்** என்னை
நோக்கி: மகேர்–சாலால்–அஷ்–பாஸ் என்
னும் பேரை அவனுக்கு இடு. இந்தப் 4
பாலகன், அப்பா, அம்மா என்று கூப்பிட
அறியுமுன்னே, [7]தமஸ்குவின் ஆஸ்தியும்,
சமாரியாவின் கொள்ளையும், அசீரியாவின்
ராஜாவுக்கு முன்பாகக் கொண்டுபோகப்படும்
என்றார்.
பின்னும் **கர்த்தர்** என்னை நோக்கி: இந்த 5, 6
ஜனம் மெதுவாய் ஓடுகிற [8]சீலோவாவின்
தண்ணீர்களை அசட்டைபண்ணி, ரேத்சீனை
யும் ரெமலியாவின் குமாரனையும் சார்ந்து சந்
தோஷிக்கிறபடியினால், இதோ, ஆண்டவர் 7
வல்லமையுள்ள திரளான ஆற்றுநீரைப்போன்
ற அசீரியாவின் ராஜாவையும், [9]அவனுடைய
சகல ஆடம்பரத்தையும் அவர்கள்மேல் புர
ளப்பண்ணுவார்; அது அவர்களுடைய ஓடை
களெல்லாவற்றின்மேலும் போய், அவர்களு
டைய எல்லாக் கரைகள்மேலும் புரண்டு,
யூதாவுக்குள் புகுந்து பிரவாகித்துக் கடந்து, 8
கழுத்துமட்டும் வரும் என்றார். [10]இம்மானு
வேலே, அவன் செட்டைகளின் விரிவு உமது
தேசத்தின் விசாலத்தை மூடும்.
ஜனங்களே, நீங்கள் கூட்டங்கூடுங்கள், 9
முறியடிக்கப்படுவீர்கள்; [11]தூரதேசத்தாராகிய
நீங்கள் எல்லாரும் செவிகொடுங்கள்; இடை
கட்டிக்கொள்ளுங்கள், முறிந்தோடுவீர்கள்,
ஆலோசனை செய்யுங்கள், அது அபத்தமாகும்; 10
வார்த்தையை வசனியுங்கள், அது நிற்காது;
[12]தேவன் எங்களோடே இருக்கிறார். **கர்த்த** 11
**ருடைய** கரம் என்மேல் அமர்ந்து, அவர் என்
னுடனே பேசி, [13]நான் இந்த ஜனத்தின் வழி
யிலே நடவாதபடி எனக்குப் புத்திசொல்லி
விளம்பினதாவது: இந்த ஜனங்கள் கட்டுப் 12
பாடு என்று சொல்லுகிறதையெல்லாம் நீங்
கள் கட்டுப்பாடு என்று சொல்லாமலும், அவர்
கள் பயப்படுகிற பயத்தின்படி நீங்கள் பயப்
படாமலும், [14]கலங்காமலும், சேனைகளின் 13

1 38. 7, 22. சங். 86. 17. மத். 12. 38
2 மத். 1. 23. லூக். 1. 31, ...
3 8. 4. 1 இரா. 15. 30
4 எரே. 16. 16
5 எசே. 5. 1
* கொள்ளைக்குக் கடுகிச் சூறைக்குத் தீவிரிப்பான்.
6 2 இரா. 16. 10
7 7. 16; 17. 3
8 நெகே. 3. 15. யோவா. 9. 7
9 7. 16, 17; 10. 12
10 7. 14; 36. 1
11 யோவே. 3. 9, 11
12 7. 14. சங். 46. 1, 7. அப். 5. 38, 39. ரோ. 8. 31
13 நீதி. 1. 15
14 1 பேது. 3. 14, 15.

**கர்த்தரையே** பரிசுத்தம்பண்ணுங்கள்; [1]அவ
ரே உங்கள் பயமும், அவரே உங்கள் அச்சமு
14 மாயிருப்பாராக. அவர் உங்களுக்குப் பரி
சுத்த *ஸ்தலமாயிருப்பார்; [2]ஆகிலும் இஸ்ர
வேலின் இரண்டு கோத்திரத்துக்கும் தடுக்க
லின் கல்லும், [3]இடறுதலின் கன்மலையும்,
எருசலேமின் குடிகளுக்குச் சுருக்கும் கண்
15 ணியுமாயிருப்பார். அவர்களில் அநேகர்
இடறிவிழுந்து நொறுங்கிச் சிக்குண்டு பிடி
படுவார்கள்.
16 சாட்சி ஆகமத்தைக் கட்டி, [4]என் சீஷருக்
குள்ளே வேதத்தை முத்திரையிடு என்றார்.
17 நானோ யாக்கோபின் குடும்பத்துக்குத் தமது
முகத்தை மறைக்கிற **கர்த்தருக்காகக்** காத்தி
ருந்து, [5]அவருக்கு எதிர்பார்த்திருப்பேன்.
18 இதோ, நானும், [6]**கர்த்தர்** எனக்குக் கொ
டுத்த பிள்ளைகளும் சீயோன் பர்வதத்தில் வா
சமாயிருக்கிற சேனைகளின் **கர்த்தராலே**
இஸ்ரவேலில் அடையாளங்களாகவும் அற்பு
தங்களாகவும் இருக்கிறோம்.
19 அவர்கள் உங்களை நோக்கி: அஞ்சனம்பார்க்
கிறவர்களிடத்திலும், முணுமுணென்று ஓது
கிற குறிகாரரிடத்திலும் விசாரியுங்கள் என்று
சொல்லும்போது, [7]ஜனங்கள் தன் தேவனி
டத்தில் விசாரிக்கவேண்டியதல்லவோ? உயி
ருள்ளவர்களுக்காகச் செத்தவர்களிடத்தில் வி
20 சாரிக்கலாமோ? வேதத்தையும் [8]சாட்சி ஆக
மத்தையும் கவனிக்கவேண்டும்; இந்த வார்த்
தையின்படியே சொல்லாவிட்டால், அவர்க
21 ளுக்கு விடியற்காலத்து வெளிச்சமில்லை. இடு
க்கண் அடைந்தவர்களாயும் பட்டினியாயும்
தேசத்தைக் கடந்துபோவார்கள்; அவர்கள்
பட்டினியாயிருக்கும்போது, மூர்க்க வெறி
கொண்டு, [9]தங்கள் ராஜாவையும் தங்கள் தேவ
22 னையும் தூஷிப்பார்கள். அவர்கள் அண்ணாந்
துபார்ப்பார்கள், பூமியையும் நோக்கிப் பார்ப்
பார்கள்; ஆனாலும் இதோ, இக்கட்டும் அந்த
காரமும் இருக்கும்; இடுக்கத்தால் இருளடை
ந்து, அந்தகாரத்திலே தள்ளுண்டு அலைவார்
9 கள். ஆகிலும் அவர் செபுலோன் நாட்டை
யும், நப்தலி நாட்டையும் இடுக்கமாய் ஈனப்
படுத்தின முந்தின காலத்திலிருந்ததுபோல
அது இருண்டிருப்பதில்லை; எனென்றால்
அவர் கடற்கரையருகிலும், யோர்தான் நதி
யோரத்திலுமுள்ள புறஜாதியாருடைய கலி
லேயாவாகிய அத்தேசத்தைப் பிற்காலத்திலே
2 மகிமைப்படுத்துவார். இருளில் நடக்கிற
ஜனங்கள் பெரிய வெளிச்சத்தைக் கண்டார்
கள்; [10]மரண இருளின் தேசத்தில் குடியிருக்
கிறவர்களின்மேல் வெளிச்சம் பிரகாசித்தது.
3 அந்த ஜாதியைத் திரளாக்கி, அதற்கு மகிழ்ச்சி
யைப் பெருகப்பண்ணினீர்; அறுப்பில் மகிழ்
கிறதுபோலவும், [11]கொள்ளையைப் பங்கிட்டுக்
கொள்ளுகையில் களிகூருகிறது போலவும்,
4 உமக்கு முன்பாக மகிழுகிறார்கள். மீதியானி
யரின் நாளில் நடந்ததுபோல, [12]அவர்கள்
சுமந்த நுகத்தடியையும், அவர்கள் தோளின்
மேலிருந்த மிலாற்றையும், அவர்கள் ஆளோட்
டியின் கோலையும் முறித்துப்போட்டீர். அம 5
ளியாய் யுத்தம்பண்ணுகிற வீரருடைய ஆயுத
வர்க்கங்களும், இரத்தத்தில் புரண்ட உடுப்பும்
அக்கினிக்கு இரையாகச் சுட்டெரிக்கப்படும்.
நமக்கு ஒரு பாலகன் பிறந்தார்; [13]நமக்கு ஒரு 6
குமாரன் கொடுக்கப்பட்டார்; [14]கர்த்தத்துவம்
அவர் தோளின்மேலிருக்கும்; [15]அவர் நாமம்
†**அதிசயமானவர், ஆலோசனைக் கர்த்தா,**
[16]**வல்லமையுள்ள தேவன், நித்திய பிதா,**
[17]**சமாதானப்பிரபு** என்னப்படும். தாவீதின் 7
சிங்காசனத்தையும் அவனுடைய ராஜ்யத்தை
யும்அவர் திடப்படுத்தி, [18]அதை இதுமுதற்கொ
ண்டு என்றென்றைக்கும் நியாயத்தினாலும்
நீதியினாலும் நிலைப்படுத்தும்படிக்கு, அவரு
டைய கர்த்தத்துவத்தின் பெருக்கத்துக்கும்,
அதின் சமாதானத்துக்கும் முடிவில்லை, [19]சே
னைகளின் **கர்த்தருடைய** வைராக்கியம் இதைச்
செய்யும்.
ஆண்டவர் யாக்கோபுக்கு ஒரு வார்த்தை 8
யை அனுப்பினார்; அது இஸ்ரவேலின்மேல்
இறங்கிற்று. செங்கல்கட்டு இடிந்துபோயி 9
ற்று, பொளிந்த கல்லாலே திரும்பக் கட்டு
வோம்; காட்டத்திமரங்கள் வெட்டிப்போடப்
பட்டது, அவைகளுக்குப் பதிலாகக் கேதுரு
மரங்களை வைப்போம் என்று, அகந்தையும், 10
மனப்பெருமையுமாய்ச் சொல்லுகிற எப்பிரா
யீமரும், சமாரியாவின் குடிகளுமாகிய எல்லா
ஜனத்துக்கும் அது தெரியவரும். ஆதலால் 11
**கர்த்தர்** ரேத்சீனுடைய சத்துருக்களை அவர்
கள்மேல் உயர்த்தி, அவர்களுடைய மற்றச்
சத்துருக்களை அவர்களோடே கூட்டிக் கலப்
பார். முற்புறத்தில் சீரியரும்; பிற்புறத்தில் 12
பெலிஸ்தரும் வந்து, இஸ்ரவேலைத் திறந்த
வாயால் பட்சிப்பார்கள்; இவையெல்லாவற்
றிலும் அவருடைய கோபம் ஆறாமல், இன்
னும் அவருடைய கை நீட்டினபடியே இருக்
கிறது.
ஜனங்கள் தங்களை அடிக்கிறவரிடத்தில் 13
திரும்பாமலும், [20]சேனைகளின் **கர்த்தரைத்**
தேடாமலும் இருக்கிறார்கள். ஆகையால் 14
**கர்த்தர்** இஸ்ரவேலிலே தலையையும், வாலை
யும், கிளையையும், நாணலையும், [21]ஒரே நாளி
லே வெட்டிப்போடுவார். மூப்பனும் கனம் 15
பொருந்தினவனுமே தலை, பொய்ப்போதகம்
பண்ணுகிற தீர்க்கதரிசியே வால். இந்த ஜன 16
த்தை நடத்துகிறவர்கள் எத்தருமாய், அவர்
களால் நடத்தப்படுகிறவர்கள் நாசமடைகிறவர்
களுமாய் இருக்கிறார்கள். ஆதலால், ஆண்ட 17
வர் அவர்கள் வாலிபர்மேல் பிரியமாயிருப்பதி
ல்லை; அவர்களிலிருக்கிற திக்கற்ற பிள்ளைகள்
மேலும்விதவைகள்மேலும்இரங்குவதுமில்லை;
அவர்கள் அனைவரும் மாயக்காரரும் பொல்
லாதவர்களுமாயிருக்கிறார்கள்; எல்லா வாயும்
ஆகாமியம் பேசும்; இவையெல்லாவற்றிலும்
அவருடைய கோபம் ஆறாமல், இன்னும் அவ
ருடைய கை நீட்டினபடியே இருக்கிறது.

[1] நா. 12. 5
* கருணாலயம்.
[2] எரே. 11. 16
[3] மத். 13. 57. ரோ. 9. 33. 1 பே. 2. 8
[4] சீஷ. 8. 8, 9. தானி. 12. 4. மத். 13. 11. வெளி. 5. 1, 5
[5] 50. 10; 54. 8. ஆப. 2. 3. லூ. 2. 25, 38
[6] எபி. 2. 13
[7] 1 சாமு. 28. 8. சங். 106. 28
[8] மீகா 3. 6. லூ. 16. 29. யோ. 5. 39
[9] சீஷ. 19 3. வெளி 16. 11
[10] மத். 4. 15, 16. எபே. 5. 8, 14
[11] கியா. 5. 30
[12] கியா. 7. 21. ழ
[13] 7. 14. லூ. 2. 11. யோ. 3. 16
[14] மத். 28. 18
[15] கியா. 18. 18
† அற்புதமூர்த்தி.
[16] தீத். 2. 13. எபி. 1. 8
[17] எபே. 2. 14
[18] தானி. 2. 44. லூ. 1. 32, 33. 1 கொ. 15. 25
[19] 2 இரா. 19. 31
[20] எரே. 5. 3. ஓசி. 7. 10
[21] 10. 17. வெளி. 18. 8

18 ஆகாமியமானது அக்கினியைப்போல எரி
கிறது; [1]அது முட்செடியையும் நெரிஞ்சிலை
யும் பட்சிக்கும், அது நெருங்கிய காட்டைக்
19 கொளுத்தும், புகை திரண்டு எழும்பும். சே
னைகளின் **கர்த்தருடைய** சினத்தால் தேசம்
அந்தகாரப்பட்டு, ஜனங்கள் அக்கினிக்கு
இரையாவார்கள்; [2]ஒருவனும் தன் சகோதர
20 னைத் தப்பவிடான். வலதுபுறத்தில் *பட்
சித்தாலும் பசித்திருப்பார்கள்; இடதுபுறத்தில்
தின்றாலும் திருப்தியடையார்கள்; [3]அவனவன்
தன்தன் புயத்தின் மாம்சத்தைத் தின்பான்.
21 மனாசே எப்பிராயீமையும், எப்பிராயீம் மனா
சேயையும் பட்சிப்பார்கள்; இவர்கள் ஏகமாய்
யூதாவுக்கு விரோதமாயிருப்பார்கள்; இவை
யெல்லாவற்றிலும் அவருடைய கோபம் ஆறா
மல், இன்னும் அவருடைய கை நீட்டினபடி
யே இருக்கிறது.

**10** ஏழைகளை வழக்கிலே தோற்கப்பண்ண
வும், என் ஜனத்தில் சிறுமையானவர்களின்
நியாயத்தைப் புரட்டவும் விதவைகளைச் சூறை
யாடவும், திக்கற்ற பிள்ளைகளைக் கொள்ளை
2 யிடவும், அநியாயமான தீர்ப்புகளைச் செய்
கிறவர்களுக்கும், கொடுமையான கட்டளை
3 களை எழுதுகிறவர்களுக்கும் ஐயோ! விசா
ரிப்பின் நாளிலும், [4]தூரத்திலிருந்து வரும்
பாழ்க்கடிப்பின் நாளிலும் நீங்கள் என்னசெய்
வீர்கள்? உதவி பெறும்படி யாரிடத்தில் ஓடு
வீர்கள்? உங்கள் மகிமையை எங்கே வைத்து
4 விடுவீர்கள்? கட்டுண்டவர்களின்கீழ் முடங்
கினாலொழிய கொலை செய்யப்பட்டவர்
களுக்குள் விழுவார்கள்; இவையெல்லாவற்
றிலும் அவருடைய கோபம் ஆறாமல், இன்
னும் அவருடைய கை நீட்டினபடியே
இருக்கிறது.

5 என் கோபத்தின் கோலாகிய அசீரியனுக்கு
ஐயோ! [5]அவன் கையிலிருக்கிறது என் சினத்
6 தின் தண்டாயுதம். அவபக்தியான ஜனங்களு
க்கு விரோதமாய் நான் அவனை அனுப்பி, எனக்
குக் கோபமூட்டின ஜனத்தைக் கொள்ளையிட
வும், சூறையாடவும், [6]அதை வீதிகளின் சேற்
றைப்போல் மிதித்துப்போடவும் அவனுக்குக்
7 கட்டளை கொடுப்பேன். அவனோ அப்படி
எண்ணுகிறதுமில்லை, [7]அவன் இருதயம் அப்
படிப்பட்டதை நினைக்கிறதுமில்லை; அநேகம்
ஜாதிகளை அழிக்கவும், சங்கரிக்கவுமே தன்
8 மனதிலே நினைவுகொள்ளுகிறான். அவன்
என் பிரபுக்கள் அனைவரும் [8]ராஜாக்களல்ல
9 வோ? கல்னோ பட்டணம் கர்கேமிசைப்போ
லானதில்லையோ? ஆமாத் அர்பாத்தைப்போ
லானதில்லையோ? சமாரியா தமஸ்குவைப்போ
10 லானதில்லையோ? எருசலேமையும் சமாரி
யாவையும் பார்க்கிலும் விசேஷித்த சிலைகளு
ள்ள விக்கிரக ராஜ்யங்களை என் கை கண்டு
11 பிடித்திருக்க, நான் சமாரியாவுக்கும், அதின்
விக்கிரகங்களுக்கும் செய்ததுபோல், எருச
லேமுக்கும் அதின் விக்கிரகங்களுக்கும் செய்
யாமலிருப்பேனோ என்று சொல்லுகிறான்.

[1] மல். 4. 1
[2] மீகா 7. 2, 6. அப். 2. 20
* புசித்தாலும்.
[3] லேவி. 26. 26. எரே. 19. 9
[4] யோபு 31. 14. ஓசி. 9. 7. லூ. 19. 44. வெளி. 6. 17
[5] எரே. 51. 20, 21
[6] எரே. 47. 6, 7
[7] மீகா 4. 12
[8] 2 இரா. 18. 24
† கனி.
[9] ஏசா. 37. 24
[10] 5. 17. எபி. 12. 29
[11] 37. 36
[12] 2 நாளா. 28. 20. ஓசி. 14. 3
[13] 6. 13; 65. 8, 9
[14] தானி. 9. 27. ரோ. 9. 27, 28

ஆதலால்: ஆண்டவர் சீயோன் மலையிலும் 12
எருசலேமிலும் தமது செயலையெல்லாம்
முடித்திருக்கும்போது, அசீரிய ராஜாவினு
டைய பெருமையான நெஞ்சின் †வினையை
யும், அவன் கண்களின் மேட்டிமையான பார்
வையையும் நான் விசாரிப்பேன் என்கிறார்.
அவன்: என் கையின் பெலத்தினாலும், என் 13
ஞானத்தினாலும் இதைச் செய்தேன்; [9]நான்
புத்திமான், நான் ஜனங்களின் எல்லைகளை
மாற்றி, அவர்கள் பண்டகசாலைகளைக் கொள்
ளையிட்டு வல்லவனைப்போல் குடிகளைத் தாழ்த்
தினேன். ஒரு குருவிக்கூட்டைக் கண்டுபிடிக் 14
கிறதுபோல் என் கை ஜனங்களின் ஆஸ்தியைக்
கண்டுபிடித்தது; விட்டுவிடப்பட்ட முட்டை
களை வாரிக்கொள்வதுபோல் பூமியையெல்
லாம் நான் வாரிக்கொண்டேன்; ஒருவரும்
செட்டையை அசைத்ததுமில்லை, வாயைத் தி
றந்ததுமில்லை, கீச்சென்று சத்தமிட்டதுமில்லை
என்று சொல்லுகிறான். கோடரியானது தன் 15
னால் வெட்டுகிறவனுக்கு விரோதமாய் மேன்
மை பாராட்டலாமோ? வாளானது தன்னைக்
கையாடுகிறவனுக்கு விரோதமாய்ப் பெருமை
பாராட்டலாமோ? பாராட்டினால், தடியானது
தன்னைப் பிடித்தவனை மிரட்டினாற்போலவும்,
கோலானது நான் மரக்கட்டையல்லவென்று
எழும்பினாற்போலவும் இருக்குமே.

ஆகையால் சேனைகளின் ஆண்டவராகிய 16
கர்த்தர், அவனைச் சேர்ந்த கொழுத்தவர்களுக்
குள்ளே [10]இளைப்பை அனுப்புவார்; பட்சிக்
கும் அக்கினியைப்போலும் ஒரு அக்கினியை
அவன் மகிமையின்கீழ் கொளுத்துவார். இஸ் 17
ரவேலின் ஒளியானவர் அக்கினியும், அதின்
பரிசுத்தர் அக்கினி ஜுவாலையுமாகி, [11]ஒரே
நாளிலே அவனுடைய முட்செடிகளையும், நெ
ரிஞ்சில்களையும் தகித்துப் பட்சித்து, அவ 18
னுடைய வனத்தின் மகிமையையும், அவனு
டைய பயிர்நிலத்தின் மகிமையையும், உள்
ளும் புறம்புமாய் அழியப்பண்ணுவார்; கொடி
பிடிக்கிறவன் களைத்து விழுவதுபோலாகும்.
காட்டில் அவனுக்கு மீதியான மரங்கள் கொ 19
ஞ்சமாயிருக்கும், ஒரு சிறுபிள்ளை அவைகளை
எண்ணி எழுதலாம்.

அக்காலத்திலே இஸ்ரவேலில் மீதியான 20
வர்களும், யாக்கோபின் வம்சத்தில் தப்பின
வர்களும், பின்னொருபோதும் தங்களை அடித்த
வனைச் சார்ந்துகொள்ளாமல், [12]இஸ்ரவேலின்
பரிசுத்தராகிய **கர்த்தரையே** உண்மையாய்ச்
சார்ந்துகொள்வார்கள். மீதியாயிருப்பவர்கள், 21
யாக்கோபில் மீதியாயிருப்பவர்களே, [13]வல்ல
மையுள்ள தேவனிடத்தில் திரும்புவார்கள்.
இஸ்ரவேலே, உன் ஜனங்கள் சமுத்திரத்தின் 22
மணலத்தனையாயிருந்தாலும், அவர்களில் மீதி
யாயிருப்பவர்கள்மாத்திரம் திரும்புவார்கள்;
[14]தீர்மானிக்கப்பட்ட அழிவு நிறைந்த நீதி
யோடே புரண்டுவரும். சேனைகளின் கர்த் 23
தராகிய ஆண்டவர் தேசத்துக்குள் ளெங்கும்
தீர்மானிக்கப்பட்ட அழிவை வரச்செய்வார்.

24 ஆகையால் சீயோனில் வாசமாயிருக்கிற
என் ஜனமே, அசீரியனுக்குப் பயப்படாதே;
[1]அவன் உன்னைக் கோலால் அடித்து, எகிப்
தியனைப்போல் தன் தண்டாயுதத்தை உன்
25 மேல் ஓங்குவான். ஆனாலும் இன்னும் கொஞ்
சக்காலத்துக்குள்ளே என் உக்கிரமும், [2]அவர்
களைச் சங்கரிக்கப்போகிறதினால் என் கோப
மும் தீர்ந்துபோம் என்று சேனைகளின் **கர்த்**
26 **தராகிய** ஆண்டவர் சொல்லுகிறார். ஓரேப்
கன்மலைபண்டையிலே [3]மீதியானியர் வெட்
டுண்டதுபோல் சேனைகளின் **கர்த்தர்** அவன்
மேல் ஒரு சவுக்கை எழும்பிவரப்பண்ணி,
எகிப்திலே தமது கோலைக் கடலின்மேல் ஓங்
கினதுபோல் அதை அவன்மேல் ஓங்குவார்.
27 அக்காளில் உன் தோளினின்று அவன் சுமை
யும், உன் கழுத்தினின்று அவன் நுகமும் நீக்
கப்படும்; [4]அபிஷேகத்தின் *நுகம் முறிந்து
போம்.
28 அவன் ஆயாத்துக்கு வந்து, மிக்ரோனைக்
கடந்து, மிக்மாசிலே தன் ரஸ்துக்களை வைத்
29 திருக்கிறான். கணவாயைத் தாண்டி, கேபா
விலே பாளயமிறங்குகிறார்கள்; [5]ராமா அதிர்
கிறது; சவுலின் ஊராகிய கிபியா ஓடிப்போ
30 கிறது. காலீம் குமாரத்தியே, உரத்த சத்த
மாய்க் கூப்பிடு; ஏழை ஆனதோத்தே, லாயீஸ்
31 ஊர்மட்டும் எட்ட சத்தமிட்டுக் கூப்பிடு. மத்
மேனா வலசைவாங்கிப்போம், கேபிமின் குடி
32 கள் தப்பி ஓடக் கூட்டங்கூடுகிறார்கள். இனி
ஒருநாள் நோபிலே தங்கி, சீயோன் குமாரத்
தியின் பர்வதத்துக்கும், எருசலேமின் மேட்
டுக்கும் விரோதமாய்க் கைநீட்டி மிரட்டுவான்.
33 இதோ, சேனைகளின் **கர்த்தராகிய** ஆண்ட
வர் தோப்புகளைப் பயங்கரமாய் வெட்டுவார்;
[6]ஓங்கி வளர்ந்தவைகள் வெட்டுண்டு மேட்டி
34 மையானவைகள் தாழ்த்தப்படும். அவர் காட்
டின் அடர்த்தியைக் கோடரியினாலே வெட்
டிப் போடுவார்; மகத்துவமானவராலே லீப
னோன் விழும்.

**11** ஈசாயென்னும் அடிமரத்திலிருந்து ஒரு
துளிர் தோன்றி, [7]அவன் வேர்களிலிருந்து
2 ஒரு கிளை எழும்பிச் செழிக்கும். ஞானத்
தையும் உணர்வையும் அருளும் ஆவியும்,
ஆலோசனையையும் பெலனையும் அருளும்
ஆவியும், [8]அறிவையும் **கர்த்தருக்குப்** பயப்படு
கிற பயத்தையும் அருளும் ஆவியுமாகிய **கர்த்த**
**ருடைய** ஆவியானவர் அவர்மேல் தங்கியிருப்
3 பார். **கர்த்தருக்குப்** பயப்படுதல் அவருக்கு
உகந்த வாசனையாயிருக்கும்; அவர் தமது கண்
கண்டபடி நியாயந்தீர்க்காமலும், தமது காது
4 கேட்டபடி தீர்ப்புச்செய்யாமலும், நீதியின்படி
ஏழைகளை நியாயம் விசாரித்து, [9]யதார்த்தத்
தின்படி பூமியிலுள்ள சிறுமையானவர்களுக்
குத் தீர்ப்புச்செய்து, பூமியைத் தமது வாக்
கின் கோலால் அடித்து, [10]தமது வாயின் சுவா
5 சத்தால் துன்மார்க்கனைச் சங்கரிப்பார். நீதி
அவருக்கு அரைக்கட்டும், [11]சத்தியம் அவ
6 ருக்கு இடைக்கச்சையுமாயிருக்கும். அப்பொ
ழுது ஓநாய் ஆட்டுக்குட்டியோடே தங்கும்,
[12]புலி வெள்ளாட்டுக் குட்டியோடே படுத்துக்
கொள்ளும்; கன்றுக்குட்டியும், பாலசிங்க
மும், காளையும், ஒருமித்திருக்கும்; ஒரு சிறு
பையன் அவைகளை நடத்துவான். பசுவும் கர 7
டியும் கூடிமேயும், அவைகளின் குட்டிகள்
ஒருமித்துப் படுத்துக்கொள்ளும்; சிங்கம் மாட்
டைப்போல் வைக்கோல் தின்னும். பால் 8
குடிக்குங் குழந்தை விரியன்பாம்பு வளையின்
மேல் விளையாடும், பால்மறந்த பிள்ளை கட்டு
விரியன் புற்றிலே தன் கையை வைக்கும்.
என் பரிசுத்த பர்வதமெங்கும் தீங்கு செய்வாரு 9
மில்லை; [13]கேடு செய்வாருமில்லை; சமுத்திரம்
ஜலத்தினால் நிறைந்திருக்கிறதுபோல், [14]பூமி
**கர்த்தரை** அறிகிற அறிவினால் நிறைந்
திருக்கும்.
அக்காலத்திலே, ஜனங்களுக்குக் கொடி 10
யாக நிற்கும் ஈசாயின் வேருக்காக ஜாதிகள்
விசாரித்துக் கேட்பார்கள்; [15]அவருடைய தாப
ரஸ்தலம் மகிமையாயிருக்கும்.
அக்காலத்திலே, ஆண்டவர் அசீரியாவி 11
லும், [16]எகிப்திலும், பத்ரோசிலும், எத்தியோப்
பியாவிலும், பெர்சியாவிலும், சிநேயாரிலும்,
ஆமாத்திலும், சமுத்திரதீவுகளிலும், தம்மு
முடைய ஜனத்தில் மீதியானவர்களை மீட்டுக்
கொள்ளத் திரும்ப இரண்டாம்விசை தமது
கரத்தை நீட்டி, ஜாதிகளுக்கு ஒரு கொடியை 12
ஏற்றி, [17]இஸ்ரவேலில் துரத்துண்டவர்களைச்
சேர்த்து, [18]யூதாவில் சிதறடிக்கப்பட்டவர்க
ளைப் பூமியின் நான்கு திசைகளிலுமிருந்து
கூட்டுவார். எப்பிராயீமின் பொறாமை நீங் 13
கும், யூதாவின் சத்துருக்கள் சங்கரிக்கப்படு
வார்கள்; [19]எப்பிராயீம் யூதாவின்மேல் பொறா
மையாயிரான், யூதா எப்பிராயீமைத் துன்பப்
படுத்தான். அவர்கள் இருவரும் ஏகமாய்க் 14
கூடி மேற்கே யிருக்கிற பெலிஸ்தருடைய
†எல்லைகளின்மேல் பாய்ந்து, கீழ்த்திசையா
ரைக் கொள்ளையிட்டு, ஏதோமின்மேலும் மோ
வாபின்மேலும் கை போடுவார்கள்; [20]அம்
மோன் புத்திரர் அவர்களுக்குக் கீழ்ப்படிவார்
கள். எகிப்தின் சமுத்திரமுனையைக் **கர்த்தர்** 15
முற்றிலும் அழித்து, [21]தம்முடைய காற்றின்
வலுமையினால் நதியின்மேல் தமது கையை
நீட்டி, ஏழாறுகளாகப் பிரித்து, ஜனங்கள் கால்
நனையாமல் கடந்துபோகும்படி பண்ணுவார்.
இஸ்ரவேலர் எகிப்துதேசத்திலிருந்து புறப் 16
பட்ட நாளில் அவர்களுக்கு இருந்ததுபோல,
[22]அசீரியாவிலே அவருடைய ஜனத்தில் மீதி
யானவர்களுக்கு ஒரு பெரும் பாதையிருக்கும்.

அக்காலத்திலே நீ சொல்வது: **கர்த்** **12**
**தாவே**, நான் உம்மைத் துதிப்பேன்; [23]நீர்
என்மேல் கோபமாயிருந்தீர்; ஆனாலும் உம்
முடைய கோபம் நீங்கிற்று; நீர் என்
னைத் தேற்றுகிறீர். இதோ, தேவனே என் 2
ரட்சிப்பு; நான் பயப்படாமல் நம்பிக்கையாயி
ருப்பேன்; [24]**கர்த்தராகிய யேகோவா** என்
பெலனும், என் கீதமுமானவர்; அவரே என

[1] 37. 6
[2] 2 இரா. 19. 35. தானி. 11. 36
[3] நியா. 9. 25
[4] தானி. 9. 24
* கொழுமையின்.
[5] எரே. 31. 15
[6] ஆமோ. 2. 9
[7] 53. 2. எரே. 23. 5. சகரி. 6. 12. அப். 13. 23. வெளி. 22. 16
[8] 61. 1. மத். 3. 16. யோ. 3. 34. 1 கொ. 1. 30
[9] சங். 72. 2, 4. வெளி. 19. 11
[10] வெளி. 2. 16: 19. 15
[11] எபே. 6. 14
[12] 65. 25. எசே. 34. 25
[13] 35. 9
[14] சங். 72. 19. ஆப. 2. 14
[15] மத். 11. 28. ரோ. 15. 9–12. எபி. 4. 1. ம்
[16] சகரி. 10. 10, 11
[17] 18. 3: 27. 31: 56. 8
[18] யோ. 7. 35. யாக். 1. 1
[19] எரே. 3. 18. எசே. 37. 17, 22. ஓசி. 1. 11
† தோளின்.
[20] 60. 14
[21] சகரி. 10. 11. வெளி. 16. 12
[22] யாத். 14. 29. சங். 51. 10; 63. 12, 13
[23] சங். 30. 5: 34. 1. ம். ஓசி. 6. 1
[24] யாத். 15. 2. சங். 118. 14

3 க்கு ரட்சிப்புமானவர். நீங்கள் ரட்சிப்பின்
ஊற்றுகளிலிருந்து [1]மகிழ்ச்சியோடே தண்
4 ணீர் மொண்டுகொள்வீர்கள். அக்காலத்திலே
நீங்கள் சொல்வது: **கர்த்தரைத்** துதியுங்கள்;
[2]அவர் நாமத்தைத் தொழுதுகொள்ளுங்கள்;
அவருடைய செய்கைகளை ஜனங்களுக்குள்
ளே அறிவியுங்கள்; அவருடைய நாமம் உயர்ந்
5 ததென்று பிரஸ்தாபம்பண்ணுங்கள். **கர்த்த**
**ரைக்** கீர்த்தனம் பண்ணுங்கள்; [3]அவர் மகத்
துவமான கிரியைகளைச் செய்தார்; இது பூமி
யெங்கும் அறியப்படக்கடவது என்பீர்கள்.
6 சீயோனில் வாசமாயிருக்கிறவளே, நீ சத்த
மிட்டுக் கெம்பீரி; [4]இஸ்ரவேலின் பரிசுத்தர்
உன் நடுவில் பெரியவராயிருக்கிறார்.

**13** ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா பாபி
2 லோன்மேல் வரக்கண்ட [*]பாரம். உயர்ந்த
பர்வதத்தின்மேல் கொடியேற்றுங்கள்; உரத்த
சத்தமிட்டு ஜனங்களை வரவழையுங்கள்; அவர்
கள் பிரபுக்களின் வாசல்களுக்குள் பிரவேசிப்
3 பதற்குச் சைகை காட்டுங்கள். நான் பரிசுத்
தமாக்கினவர்களுக்கு கட்டளை கொடுத்தேன்;
என் கோபத்தை நிறைவேற்ற என் பராக்கிரம
சாலிகளை அழைத்தும் இருக்கிறேன்; [5]அவர்
கள் என் மகத்துவத்தினாலே களிகூருகிறவர்
4 கள் என்கிறார். திரளான ஜனங்களின் சத்
தத்துக்கொத்த வெகு கூட்டத்தின் இரைச்
சலும், கூட்டப்பட்ட ஜாதிகளுடைய ராஜ்யங்
களின் அமளியான இரைச்சலும் மலைகளில்
கேட்கப்படுகிறது; சேனைகளின் **கர்த்தர்** யுத்த
5 ராணுவத்தை இலக்கம் பார்க்கிறார். **கர்த்தர்**
வருகிறார்; அவருடைய கோபத்தின் ஆயுதங்க
ளும், தேசத்தையெல்லாம் அழிக்க, வானங்
கவிழ்ந்த கடையாந்தர தேசத்திலிருந்து வருகி
6 றது. அலறுங்கள், **கர்த்தரின்** நாள் சமீபமா
யிருக்கிறது; [6]அது சர்வ வல்லவரிடத்திலி
7 ருந்து மகா சங்காரமாய் வரும். ஆதலால்
எல்லாக் கைகளும் நெகிழ்ந்து, எல்லா மனு
8 ஷரின் இருதயமும் கரைந்துபோம். அவர்
கள் திகிலடைவார்கள்; வேதனைகளும் வாதை
களும் அவர்களைப் பிடிக்கும்; பிள்ளை பெருகி
றவளைப்போல வேதனைப்படுவார்கள்; ஒருவ
ரையொருவர் பிரமித்துப் பார்ப்பார்கள்; அவர்
கள் முகங்கள் நெருப்பான முகங்களாயிருக்
9 கும். இதோ, தேசத்தைப் பாழாக்கி, [7]அதின்
பாவிகளை அதிலிருந்து அழிப்பதற்காகக் **கர்த்**
**தருடைய** நாள் கரோமும், மூர்க்கமும், உக்கிர
10 கோபமுமாய் வருகிறது. வானத்தின் நட்
சத்திரங்களும் ராசிகளும் ஒளிகொடாதிருக்
கும்; [8]சூரியன் உதிக்கையில் இருண்டுபோம்;
11 சந்திரன்ஒளிகொடாதிருக்கும். பாவத்தினிமித்
தம் உலகத்தையும், அக்கிரமத்தினிமித்தம் துன்
மார்க்கரையும் நான் தண்டித்து, அகங்காரரின்
பெருமையை ஒழியப்பண்ணி, [9]கொடியரின்
12 இடும்பைத் தாழ்த்துவேன். புருஷனைப் பசும்
பொன்னிலும், மனுஷனை ஓப்பீரின் தங்கத்தி
13 லும் அபூருவமாக்குவேன். இதினிமித்தம்
சேனைகளின் **கர்த்தருடைய** உக்கிரத்தினால்
அவருடைய கடுங்கோபத்தின் நாளிலே பூமி
தன்னிடத்தைவிட்டு நீங்கும்படி [10]வானத்தை
அதிரப்பண்ணுவேன். துரத்தப்பட்ட வெளி 14
மானைப்போலும், யாரும் சேர்க்காத ஆட்டைப்
போலும் இருப்பார்கள்; அவரவர் தங்கள் ஜனத்
தண்டைக்குப்போகமுகத்தைத்திருப்பி, [11]அவ
ரவர் தங்கள் தேசத்துக்கு ஓடிப்போவார்கள்.
அகப்பட்டவனெவனும் குத்துண்டு, அவர்க 15
ளைச் சேர்ந்திருந்தவனெவனும் பட்டயத்தால்
விழுவான். அவர்கள் குழந்தைகள் அவர்கள் 16
கண்களுக்கு முன்பாக மோதியடிக்கப்படும்;
[12]அவர்கள் வீடுகள் கொள்ளையிடப்படும்; அவர்
கள் மனைவிகள் அவமானப்படுவார்கள். இதோ 17
நான் அவர்களுக்கு விரோதமாய் மேதியரை
எழுப்புவேன்; [13]அவர்கள் வெள்ளியை மதியா
மலும், பொன்னின்மேல் பிரியப்படாமலும்,
வில்லுகளால் இளைஞரைச் சிதைத்துவிடுவார் 18
கள்; கர்ப்பக்கனியின்மேல் அவர்கள் இரங்
குவதில்லை; அவர்கள் கண் பிள்ளைகளைத் தப்ப
விடுவதுமில்லை. ராஜ்யங்களுக்குள் அலங்கா 19
ரமும், கல்தேயருடைய பிரதான மகிமையு
மாகிய பாபிலோனானது தேவனால் சோதோ
மும் கொமோராவும் கவிழ்க்கப்பட்டதுபோல
[14]கவிழ்க்கப்படும். இனி ஒருபோதும் அதில் 20
ஒருவரும் குடியேறுவதுமில்லை, [15]தலைமுறை
தோறும் அதில் ஒருவரும் தங்கித் தரிப்பது
மில்லை; அங்கே அரபியன் கூடாரம்போடுவது
மில்லை; அங்கே மேய்ப்பர் மந்தையை மறிப்
பதுமில்லை. காட்டுமிருகங்கள் அங்கே படுத் 21
துக்கொள்ளும்; [16]ஊளையிடும் பிராணிகள் அவர்
கள் வீடுகளை நிரப்பும்; கோட்டான்கள் அங்கே
குடிகொள்ளும்; காட்டாடு அங்கே துள்ளும்.
அவர்கள் பாழான மாளிகைகளில் ஓரிகள் 22
ஊளையிடும்; வலுசர்ப்பங்கள் அவர்கள் செல்
விக்கையான அரமனைகளில் ஏகமாய்க் கூடும்;
[17]அதின் காலம் சீக்கிரம் வரும், அதின் நாட்
கள் நீடித்திராது என்கிறார்.

**கர்த்தர்** யாக்கோபுக்கு இரங்கி, [18]பின்னும் **14**
இஸ்ரவேலரைத் தெரிந்துகொண்டு, [19]அவர்
களை அவர்கள் தேசத்திலே தாபரிக்கப்பண்ணு
வார்; அந்நியரும் அவர்களோடுசேர்க்கையாகி,
யாக்கோபின் வம்சத்தோடே கூடிக்கொள்வார்
கள். ஜனங்கள் அவர்களை அழைத்துக்கொண் 2
டுபோய் அவர்கள் ஸ்தானத்தில் விடுவார்கள்;
[20]இஸ்ரவேல் வம்சத்தார் **கர்த்தருடைய** தேசத்
திலே அவர்களை வேலைக்காரராகவும் வேலைக்
காரிகளாகவும்கையாண்டு,தங்களைச்சிறையாக்
கினவர்களைச் சிறையாக்கி, தங்களை ஒடுக்கின
வர்களை ஆளுவார்கள். **கர்த்தர்** உன் துக்கத்தை 3
யும், உன் தத்தளிப்பையும், நீ அடிமையாக்கப்
பட்டிருந்த கடினமான அடிமைத்தனத்தையும்
நீக்கி, [21]உன்னை இளைப்பாறப்பண்ணும் அக்
காலத்திலே, நீ பாபிலோன் ராஜாவின்மேல் 4
சொல்லும் வாக்கியமாவது: [22]ஒடுக்கினவன்
ஒழிந்துபோனானே! பொன்னகரி ஒழிந்து
போயிற்றே! **கர்த்தர்** துஷ்டரின் தண்டாயுதத் 5
தையும், [23]அரசாண்டவர்களின் செங்கோலை

1 யோ. 4. 10, 14; 7. 37, 38. வெளி. 7. 17
2 சங். 145. 4-6
3 யாத். 15. 1, 21. சங். 98. 1
4 சங். 89. 18. செப். 3. 14
* கன்னதம். 21, 47. அதி. எரே. 50, 51. அதி.
5 சங். 149. 2, 5. யோவே. 2. 11; 3. 11
6 செப். 1. 7. வெளி. 6. 17
7 எஸ். 4. 1
8 மத். 24. 29
9 2. 17
10 ஆகா. 2. 6. 2 பே. 3. 10, 11
11 எரே. 50. 16; 51. 9
12 சங். 137. 8, 9
13 தானி. 5. 28, 31
14 ஆதி. 19. 24, 25
15 எரே. 50. 3, 39; 51. 29, 62. வெளி. 18. 2, ழ
16 34. 11-15
17 எரே. 51. 33
18 சங். 102. 13
19 சகரி. 1. 17; 2. 12
20 18. 7; 60. 4, ழ; 66. 20
21 எசே. 28. 24
22 ஆப. 2. 6. வெளி. 18. 16
23 சங். 125. 3

6 யும் முறித்துப்போட்டார். உக்கிரங்கொண்டு
ஓயாத அடியாய் ஜனங்களை அடித்து, [1]கோப
மாய் ஜாதிகளை அரசாண்டவன், தடுப்பாரில்லா
7 மல் துன்பப்படுத்தப்படுகிறான். பூமிமுழுதும்
இளைப்பாறி அமைந்திருக்கிறது; கெம்பீரமாய்
8 முழங்குகிறார்கள். தேவதாரு விருட்சங்களும்,
[2]லீபனோனின் கேதுருக்களும், உன்னிமித்தம்
சந்தோஷப்பட்டு, நீ விழுந்துகிடந்தது முதற்
கொண்டு எங்களை வெட்ட வருவார் ஒருவரும்
9 இல்லை என்று சொல்லுகிறது. கீழே இருக்கிற
பாதாளம் [3]உன்னிமித்தம் அதிர்ந்து, உன் வரு
கைக்கு எதிர்கொண்டு, பூமியில் அதிபதிகளாயி
ருந்து செத்த ராட்சதர் யாவரையும் உன்னிமித்
தம் எழுப்பி, ஜாதிகளுடைய எல்லா ராஜாக்
களையும் அவர்களுடைய சிங்காசனங்களிலி
10 ருந்து எழுந்திருக்கப்பண்ணுகிறது. அவர்க
ளெல்லாரும் உன்னை நோக்கி: நீயும் எங்களைப்
போல பலட்சயமானாயோ? எங்களுக்குச் சமா
11 னமானாயோ? என்று சொல்லுவார்கள். உன்
ஆடம்பரமும், உன் வாத்தியங்களின்
முழக்கமும் பாதாளத்தில் தள்ளுண்டுபோ
யிற்று; புழுக்களே உன் படுக்கை, பூச்சிகளே
12 உன் போர்வை. அதிகாலையின் மகனாகிய
[4]விடிவெள்ளியே, நீ வானத்திலிருந்து விழுந்
தாயே! ஜாதிகளை ஈனப்படுத்தினவனே, நீ
13 தரையிலே விழ வெட்டப்பட்டாயே! நான்
வானத்துக்கு ஏறுவேன், [5]தேவனுடைய நட்
சத்திரங்களுக்கு மேலாக என் சிங்காசனத்தை
உயர்த்துவேன்; [6]வடபுறங்களிலுள்ள ஆராத
னைக் கூட்டத்தின் பர்வதத்திலே வீற்றிருப்
14 பேன் என்றும், நான் மேகங்களுக்கு மேலாக
உன்னதங்களில் ஏறுவேன்; [7]உன்னதமான
வருக்கு ஒப்பாவேன் என்றும் நீ உன் இருத
15 யத்தில் சொன்னாயே. ஆனாலும் நீ அகாதமான
16 பாதாளத்திலே [8]தள்ளுண்டுபோனாய். உன்
னைக் காண்கிறவர்கள் உன்னை உற்றுப்பார்த்து,
உன்னைக்குறித்துச் சிந்தித்து: இவன்தானா பூமி
யைத் தத்தளிக்கவும், ராஜ்யங்களை அதிரவும்
17 செய்து, உலகத்தை வனாந்தரமாக்கி, அதின்
நகரங்களை அழித்து, சிறைப்பட்டவர்களைத்
தங்கள் வீடுகளுக்குப் போகவிடாமலிருந்தவன்
18 என்பார்கள். ஜாதிகளுடைய சகல ராஜாக்க
ளும், அவரவர் தங்கள் அறையிலே மகிமை
19 யோடே கிடத்தப்பட்டிருக்கிறார்கள். நீயோ
அழுகிப்போன கிளையைப்போலவும், பட்டயக்
குத்தால் கொலையுண்டவர்களின் உடுப்பைப்
போலவும், ஒரு குழியின் கற்களுக்குள்ளே
கிடக்கிறவர்களைப்போலவும், காலால் மிதிக்
கப்பட்ட பிணத்தைப்போலவும், உன் கல்ல
றைக்குப் புறம்பாய் எறிந்துவிடப்பட்டாய்.
20 நீ அவர்களோடே அடக்கம் பண்ணப்படுவ
தில்லை; நீ உன் தேசத்தைக் கெடுத்து உன்
ஜனத்தைக் கொன்றுபோட்டாய்; [9]தீமை செய்
கிறவர்களுடைய சந்ததி ஒருபோதும் பேர்பெ
21 றுவதில்லை. அவன் புத்திரர் எழும்பித் தேசத்
தைச் சுதந்தரித்துக்கொண்டு, உலகத்தைப் பட்
டணங்களால் நிரப்பாதபடிக்கு, அவர்கள்

1 33. 1
2 எசே. 31. 16
3 எசே. 32. 21
4 34. 4. லூக். 10. 18
5 தானி. 8. 10
6 சங். 48. 2
7 47. 8. 2 தெச. 2. 4
8 மத். 11. 23
9 யோபு 18. 16. சங். 37. 28
10 யாத். 20. 5. மத். 23. 25
11 நீதி. 10. 7. எரே. 51. 62
12 10. 27
13 2 நாளா. 20. 6. யோபு 28. 18. நீதி. 21. 30. தானி. 4. 35
14 2 இரா. 16. 20
15 2 நாளா. 26. 6
16 2 இரா. 18. 8
17 சங். 87. 1–6. செப். 3. 12. சகரி. 11. 11
18 எரே. 48. 1. மு. எசே. 25. 8–11. ஆமோ. 2. 1–3
19 லேவி. 21. 5. எரே. 47. 5

பிதாக்களுடைய அக்கிரமத்தினிமித்தம் [10]அவர்
களைக் கொலைசெய்ய ஆயத்தம்பண்ணுங்கள்.
நான் அவர்களுக்கு விரோதமாய் எழும்புவேன் 22
என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்;
[11]பாபிலோனுடைய பேரையும், அதில் மீந்
திருக்கிறதையும், புத்திரனையும் பௌத்திரனை
யும் சங்கரிப்பேனென்று கர்த்தர் சொல்லுகி
றார். அதை முள்ளம்பன்றிகளுக்குச் சுதந்தா 23
மும், தண்ணீர் நிற்கும் பள்ளங்களுமாக்கி,
அதைச் சங்காரம் என்னும் துடைப்பத்தினால்
பெருக்கிவிடுவேன் என்று சேனைகளின் கர்த்
தர் சொல்லுகிறார்.
நான் நினைத்திருக்கிறபடியே நடக்கும்; நான் 24
நிர்ணயித்தபடியே நிலைநிற்கும் என்று சேனை
களின் கர்த்தர் ஆணையிட்டுச் சொன்னார். அசீ 25
ரியனை என் தேசத்திலே முறித்து, என் மலைக
ளின்மேல் அவனை மிதித்துப் போடுவேன்;
[12]அப்பொழுது அவனுடைய நுகம் அவர்கள்
மேலிருந்து விலகி, அவனுடைய சுமை அவர்
கள் தோளிலிருந்து நீங்கும். தேசமனைத்தின் 26
மேலும் நிர்ணயிக்கப்பட்ட யோசனை இதுவே;
சகல ஜாதிகள்மேலும் நீட்டப்பட்டிருக்கிற
கையும் இதுவே என்றார். சேனைகளின் கர்த் 27
தர் இப்படி நிர்ணயித்திருக்கிறார், [13]யார் அதை
வியர்த்தமாக்குவான்? அவருடைய கை நீட்டப்
பட்டிருக்கிறது, யார் அதைத் திருப்புவான்?
ஆகாஸ் ராஜா மரணமடைந்த வருஷத்திலே 28
[14]உண்டான பாரம் என்னவென்றால்:
முழு பெலிஸ்தியாவே, உன்னை அடித்த 29
கோல் முறிந்ததென்று அக்களிப்பாயிராதே;
[15]பாம்பின் வேரிலிருந்து கட்டுவிரியன் தோன்
றும்; அதின் கனி பறக்கிற [16]அக்கினி சர்ப்பமா
யிருக்கும். தரித்திரரின் தலைப்பிள்ளைகள் திருப் 30
தியாய்ப் புசித்து, எளியவர்கள் சுகமாய்ப்
படுத்திருப்பார்கள்; உன் வேரைப் பஞ்சத்தி
னாலே சாகப்பண்ணுவேன், உன்னில் மீதியா
னவர்களை அவன் கொன்றுபோடுவான். வாச 31
லே அலறு; நகரமே கதறு; பெலிஸ்தியாவே,
நீ முழுதும் கரைந்துபோகிறாய்; ஏனென்றால்,
வடக்கே இருந்து புகைக்காடாய் வருகிறான்;
அவன் கூட்டங்களில் தனித்தவனில்லை. இப் 32
போதும் இந்த ஜாதியின் ஸ்தானாபதிகளுக்கு
என்ன மாறுத்தரவு சொல்லப்படும்? கர்த்தர்
சீயோனை அஸ்திபாரப்படுத்தினார்; [17]அவரு
டைய ஜனத்தில் சிறுமையானவர்கள் அதிலே
திடன்கொண்டு தங்குவார்கள் என்பதே.
மோவாபின் பாரம்: [18]இரவிலே மோவா 15
பிலுள்ள ஆர் என்னும் பட்டணம் பாழாக்
கப்பட்டது, அது சங்காரமாயிற்று; இரவிலே
மோவாபிலுள்ள கீர் என்னும் பட்டணம் பா
ழாக்கப்பட்டது, அது சங்காரமாயிற்று. அழும் 2
படி மேடைகளாகிய பாயித்துக்கும் தீபோ
னுக்கும் போகிறார்கள்; நேபோவினிமித்
தமும் மேதேபாவினிமித்தமும் மோவாப்
அலறுகிறது; அவர்களுடைய தலைகளெல்
லாம் மொட்டையடித்திருக்கும்; [19]தாடிகளெல்
லாம் கத்தரித்திருக்கும். அதின் வீதிகளில் 3

இரட்டைக் கட்டிக்கொண்டு, எல்லாரும் அ
தின் வீடுகள்மேலும், அதின் தெருக்களிலும்
4 அலறி, [1]அழுதுகொண்டிருக்கிறார்கள். எஸ்
போன் ஊராரும் எலெயாலே ஊராரும் கூக்
குரலிடுகிறார்கள்; அவர்கள் சத்தம் யாகாஸ்
மட்டும் கேட்கப்படுகிறது; ஆகையால் மோ
வாபின் ஆயுதபாணிகள் கதறுகிறார்கள்; அவ
னவனுடைய ஆத்துமா அவனவனில் கிலே
5 சப்படுகிறது. என் இருதயம் மோவாபினி
மித்தம் ஓலமிடுகிறது; [2]அதிலிருந்து ஓடிவரு
கிறவர்கள் மூன்று வயது கிடாரியைப்போல
அலேகிறார்கள்; லூகித்துக்கு ஏறிப்போகிற
வழியிலே அழுகையோடே ஏறுகிறார்கள்;
ஒரோனாயீமின் வழியிலே நொறுங்குதலின்
6 கூக்குரல் இடுகிறார்கள். நிம்ரீமின் நீர்ப்பா
ய்ச்சலான இடங்கள் பாழாய்ப்போம்; புல்
உலர்ந்து, முளை அழிந்து, பச்சையில்லாமற்
7 போகிறது. ஆதலால் மிகுதியாகச் சேர்த்
ததையும், அவர்கள் சம்பாதித்து வைத்ததை
யும், அலரிகளின் ஆற்றுக்கப்பாலே எடுத்துக்
8 கொண்டுபோவார்கள். கூக்குரல் மோவாபின்
எல்லேயெங்கும் சுற்றும்; எக்லாயிம்மட்டும்
அதின் அலறுதலும், பெரேலீம்மட்டும் அதின்
9 புலம்புதலும் எட்டும். தீமோனின் தண்ணீர்
கள் இரத்தத்தால் நிறைந்திருக்கும்; தீமோ
னின்மேல் அதிக கேடுகளைக் கட்டளேயிடு
வேன்; மோவாபிலே தப்பினவர்கள்மேலும்,
[3]தேசத்தில் மீதியானவர்கள்மேலும் சிங்கத்தை
வரப்பண்ணுவேன்.

**16** [4]தேசாதிபதிக்குச் செலுத்தும் ஆட்டுக்குட்
டிகளை [4]நீங்கள் சேலாபட்டணந்துவக்கி
வனாந்தரமட்டும் சேர்த்துச் சீயோன் குமாரத்
2 தியின் மலேக்கு அனுப்புங்கள். இல்லாவிட்
டால் கூட்டைவிட்டுத் துரத்தப்பட்டு அலே
கிற குருவியைப்போல [5]மோவாபின் குமா
ரத்திகள் அர்னோன் நதியின் துறைகளிடத்தி
3 லிருப்பார்கள். நீ ஆலோசனைபண்ணி, நியா
யஞ்செய்து, மத்தியானத்திலே உன் நிழலே
இரவைப்போலாக்கி, துரத்தப்பட்டவர்களை
மறைத்துக்கொள், ஓடிவருகிறவர்களைக் காட்
4 டிக்கொடாதிரு. மோவாபே, துரத்திவிடப்
பட்ட என் ஜனங்கள் உன்னிடத்தில் தங்கட்
டும்; சங்கரிக்கிறவனுக்குத் தப்ப அவர்களுக்கு
அடைக்கலமாயிரு; ஒடுக்குகிறவன் இல்லா
தேபோவான்; சங்கரிப்பு ஒழிந்துபோம்; மிதி
க்கிறவர்கள் தேசத்தில் இராதபடிக்கு அழிந்து
5 போவார்கள். கிருபையினாலே சிங்காசனம்
ஸ்தாபிக்கப்படும்; [6]நியாயம் விசாரித்துத் துரி
தமாய் நீதிசெய்கிற ஒருவர் அதின்மேல் தாவீ
தின் கூடாரத்திலே நியாயாதிபதியாய் உண்
மையோடே வீற்றிருப்பார்.
6 மோவாபின் பெருமையையும், [7]அவன்
மேட்டிமையையும், அவன் அகங்காரத்தை
யும், அவன் உக்கிரத்தையும் குறித்துக் கேட்
டோம்; அவன் மெத்தப் பெருமைக்காரன்;
7 ஆனாலும் அவன் வீம்பு செல்லாது. ஆகை
யால், மோவாபியர் ஒருவருக்காக ஒருவர்

1 எரே. 48. 38
2 16. 11. எரே. 48. 31
3 2 இரா. 17. 25
4 2 இரா. 3. 4
5 எண். 21. 13
6 நாகூ. 7. 24, 27. மீகா 4. 7. லூ. 1. 32, 33
7 செப். 2. 10
8 2 இரா. 3. 25
9 எரே. 48. 32. ஓ
10 24. 8. எரே. 48. 32
11 63. 15
12 26. 16. சங். 1. 28
13 21. 16
14 எரே. 49. 23. ஆமோ. 1. 3-5. சகரி. 9. 1
15 எரே. 7. 33
16 10. 16
17 எரே. 51. 33
18 24. 13

அலறுவார்கள், எல்லாரும் ஏகமாய் அலறு
வார்கள்; கிராரேசேத் ஊரின் அஸ்திபாரங்
கள் தகர்க்கப்பட்டதே [8]என்று அவைகளுக்
காகப் பெருமூச்சு விடுவார்கள். எஸ்போன் 8
ஊர் வயல்கள் வாடிப்போயின; சிப்மா ஊர்த்
திராட்சச்செடியின் நல்ல கொடிகளை ஜாதி
களின் அதிபதிகள் நறுக்கிப்போட்டார்கள்;
அவைகள் யாசேர்மட்டும் சென்று வனாந்தரத்
தில் படர்ந்திருந்தது; அவைகளின் கொடி
கள் நீண்டுக் கடலுக்கப்பாலே எட்டியிருந்
தது. ஆகையால் யாசேருக்காக அழுதது 9
போல, [9]சிப்மாஊர் திராட்சச்செடிக்காகவும்
மிகவும் அழுவேன்; எஸ்போனே, எலெயா
லேயே, உனக்கு என் கண்ணீரைப் பாய்ச்சு
வேன்; உன் வசந்தகாலத்துப் பழங்களுக்காக
வும், உன் திராட்சப்பழ அறுப்புக்காகவும்
ஆரவாரிக்கிற சந்தோஷ சத்தம் விழுந்துபோ
யிற்று. பயிர்வெளியிலிருந்து சந்தோஷமும் 10
களிப்பும் அற்றுப்போயின; [10]திராட்சத்தோட்
டங்களில் பாடலுமில்லே ஆர்ப்பரிப்புமில்லே;
ஆலேயில் இரசத்தை மிதிக்கிறவனுமில்லே;
சந்தோஷ ஆரவாரத்தை ஓயப்பண்ணினேன்.
ஆகையால் மோவாபினிமித்தம் என் குடல் 11
களும், [11]கிராரேசினிமித்தம் என் உள்ளமும்
சுரமண்டலத்தைப்போல தொனிக்கிறது.
மோவாப் மேடைகளின்மேல் சலித்துப்போ 12
ஞன் என்று காணப்படும்போது, பிரார்த்
தனே செய்யத் தன் பரிசுத்த ஸ்தானத்திலே
பிரவேசிப்பான்; [12]ஆனாலும் அநுகூலப்பட
மாட்டான்.
மோவாபைக்குறித்து அக்காலத்திலே கர்த் 13
தர் சொன்ன வார்த்தை இதுவே. ஒரு கூலிக் 14
காரனுடைய வருஷங்களுக்கொத்த மூன்று
வருஷங்களுக்குள்ளே [13]மோவாபின் மகிமை
யும் அதின் மகா ஜனக்கூட்டமும் சீரழிந்து
போம்; அதில் மீதியாயிருப்பது மிகவும் சிறி
தும் அற்பமுமாயிருக்கும் என்று கர்த்தர் இப்
பொழுது சொல்லுகிறார்.
தமஸ்குவின் பாரம். [14]இதோ, தமஸ்கு **17**
வானது நகரமாயிராமல் தள்ளப்பட்டு, பா
ழான மண்மேடாகும். ஆரோவேரின் பட் 2
டணங்கள் பாழாய் விடப்பட்டு, மந்தைகளின்
வெளியாயிருக்கும்; மிரட்டுவாரில்லாமல் [15]அ
வைகள் அங்கே படுத்துக்கொள்ளும். அரண் 3
எப்பிராயீமையும், ராஜாங்கம் தமஸ்குவையும்
விட்டொழியும்; இஸ்ரவேல் புத்திரருடைய
மகிமைக்கு நேரிட்டதுபோல சீரியாவில் மீதி
யாயிருப்பவர்களுக்கும் நேரிடும் என்று சே
னைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.
அக்காலத்திலே யாக்கோபின் மகிமை 4
குறைந்துபோம், [16]அவனுடைய கொழுத்த
தேகம் மெலிந்துபோம். ஒருவன் ஓங்கின 5
பயிரை அரிந்து, தன் கையினால் கதிர்களை
அறுத்து, [17]ரெப்பாயீம் பள்ளத்தாக்கிலே கதிர்
களைச் சேர்க்கிறதுபோலிருக்கும். ஆனாலும் 6
ஒலிவமரத்தை உலுக்கும்போது நுனிக்கொம்
பிலே இரண்டு மூன்று காய்களும், [18]காய்க்

கிற அதின் கிளைகளிலே நாலைந்து காய்களும்
மீதியாயிருப்பதுபோல, அதிலே பின்பறிப்
புக்குக் கொஞ்சம் மீதியாயிருக்குமென்று
இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்** சொல்லு
7 கிறார். அக்காலத்திலே மனுஷன் தன் கை
களின் கிரியையாகிய பீடங்களை நோக்காம
லும், தன் விரல்கள் உண்டுபண்ணின தோ
ப்பு விக்கிரகங்களையும், சிலைகளையும் நோக்
8 காமலும், தன்னை உண்டாக்கினவரையே
நோக்குவான், [1]அவன் கண்கள் இஸ்ரவே
லின் பரிசுத்தரையே நோக்கிக்கொண்டிருக்
9 கும். அக்காலத்திலே அவர்களுடைய அர
ணான பட்டணங்கள் இஸ்ரவேல் புத்திரருக்கு
மீதியாய் வைக்கப்பட்ட தழையைப்போல
வும், நுனிக்கொம்பைப்போலவுமாகி, பாழா
10 ய்க் கிடக்கும். உன் பெலமாகிய கன்மலை
யை நீ நினையாமல், உன் ரட்சிப்பாகிய தே
வனை மறந்தாய்; [2]ஆதலால் நீ கீர்த்தியான
நாற்றுகளை நட்டாலும், அந்நிய தேசத்துக்
11 கன்றுகளை வைத்தாலும், பகற்காலத்திலே
உன் நாற்றை வளரவும், விடியற்காலத்திலே
உன் விதையை முளைக்கவும் பண்ணினாலும்,
[3]பலனைச் சேர்க்கும் நாளிலே துக்கமும் கடும்
வேதனையுமே உங்கள் அறுப்பாயிருக்கும்.
12 ஐயோ! கடல்கள் கொந்தளிக்கிறதுபோல
கொந்தளிக்கிற அநேக ஜனங்களின் திரளும்,
[4]பலத்த தண்ணீர்கள் இரைகிறதுபோல இரை
கிற ஜனக்கூட்டங்களின் அமளியும் உண்
13 டாயிருக்கிறது. ஜனக்கூட்டங்கள் திரளான
தண்ணீர்கள் இரைகிறதுபோல இரைந்தா
லும், [5]அவர்களை அவர் அதட்டுவார்; அவர்
கள் தூரமாய் ஓடிப்போவார்கள்; மலைகளிலே
காற்றினால் பறக்கடிக்கிற பதரைப்போலவும்,
[6]சுழல்காற்றிலே அகப்பட்ட துரும்பைப்போ
14 லவும் துரத்தப்படுவார்கள். இதோ, சாயங்
காலத்திலே கலக்கமுண்டாகும், விடியற்கா
லத்துக்குமுன் அவர்கள் ஒழிந்துபோவார்கள்;
இதுவே நம்மைக் கொள்ளையாடுகிறவர்களின்
பங்கும், [7]நம்மைச் சூறையாடுகிறவர்களின்
வீதமுமாயிருக்கும்.

18 எத்தியோப்பியாவின் [8]நதிகளுக்கு அக்
கரையிலே நிழலிடும் செட்டைகளுடையதும்,
2 கடல் வழியாய்த் தண்ணீர்களின்மேல் நாணல்
படவுகளிலே ஸ்தானாபதிகளை அனுப்புகிறது
மான தேசத்துக்கு ஐயோ! வேகமான தூதர்
களே, நெடுந்தூரமாய்ப் பரவியிருக்கிறதும்,
சிரைக்கப்பட்டதும், துவக்கமுதல் இதுவரை
க்கும் கெடியாயிருந்ததும், அளவிடப்பட்ட
தும், மிதிக்கப்பட்டதும், நதிகள் பாழாக்கு
கிறதுமான ஜாதியண்டைக்குப் போங்கள்.
3 பூச்சக்கரத்தில் வாசமாயிருக்கிறவர்களும்,
தேசத்துக் குடிகளுமாகிய நீங்களெல்லாரும்,
[9]மலைகளின்மேல் கொடியேற்றப்படும்போது
பாருங்கள், எக்காளம் ஊதப்படும்போது கே
4 ளுங்கள். நான் அமர்ந்திருந்து பயிரின்மேல்
காயும் காந்தியுள்ள வெயிலைப்போலவும்,
அறுப்புக்காலத்து உஷ்ணத்தில் உண்டாகும்
பனி மேகத்தைப்போலவும், என் வாசஸ்
தலத்திலிருந்து கண்ணோக்குவேன் என்று
**கர்த்தர்** என்னுடனே சொன்னார். திரா 5
ட்சச்செடிகள் அறுப்புக்கு முன்னே பூப்பூ
த்து முற்றிக் காய்க்கிற காய்கள் பிஞ்சாயிருக்
கும்போதே, அவர் அரிவாள்களினாலே கப்
புக்கவர்களை அறுத்துக் கொடிகளையரிந்து அக
ற்றிப்போடுவார். அவைகள் ஏகமாய் மலைகளி 6
ன் பட்சிகளுக்கும், பூமியின் மிருகங்களுக்கும்
விடப்படும்; பட்சிகள் அதின்மேல் கோடை
காலத்திலும், காட்டுமிருகங்களெல்லாம் அதி
ன்மேல் மாரிகாலத்திலும் தங்கும். அக்காலத் 7
திலே நெடுந்தூரமாய்ப் பரவியிருக்கிறதும்,
சிரைக்கப்பட்டதும், துவக்கமுதல் இதுவரைக்
கும் கெடியாயிருந்ததும், அளவிடப்பட்டதும்,
மிதிக்கப்பட்டதும், நதிகள் பாழாக்குகிற
துமான ஜாதியானது, சேனைகளின் **கர்த்த**
**ரின்** நாமம் தங்கும் ஸ்தலமாகிய சீயோன் மலை
யில், சேனைகளின் **கர்த்தருக்குக்** [10]காணிக்
கையாகக் கொண்டுவரப்படும்.

எகிப்தின் பாரம். [11]இதோ, **கர்த்தர்** வேக 19
மான மேகத்தின்மேல் ஏறி எகிப்துக்கு வரு
வார்; அப்பொழுது எகிப்தின் விக்கிரகங்கள்
அவருக்கு முன்பாகக் குலுங்கும், எகிப்தின்
இருதயம் தனக்குள்ளே கரைந்துபோகும்.
சகோதரனோடே சகோதரனும், சிநேகிதனோ 2
டே சிநேகிதனும், பட்டணத்தோடே பட்ட
ணமும், ராஜ்யத்தோடே ராஜ்யமும் யுத்தம்
பண்ணும்படியாய், எகிப்தியரை எகிப்தியரோ
டே போர் கலக்கப்பண்ணுவேன். அதினால் 3
எகிப்தியருடைய ஆவி அவர்களுக்குள் சோர்
ந்துபோகும்; [12]அவர்கள் ஆலோசனையை முழு
கிப்போகப்பண்ணுவேன்; அப்பொழுது விக்
கிரகங்களையும், மந்திரவாதிகளையும், சன்னதக்
காரர்களையும், குறி சொல்லுகிறவர்களையும்
[13]தேடுவார்கள். நான் எகிப்தியரைக் கடின 4
மான அதிபதியின் கையில் ஒப்பிப்பேன்;
[14]கடூரமான ராஜா அவர்களை ஆளுவான் என்று
சேனைகளின் **கர்த்தராகிய** ஆண்டவர் சொல்
லுகிறார். அப்பொழுது கடலின் தண்ணீர் 5
கள் குறைந்து, [15]நதியும் வற்றி வறண்டுபோம்.
ஆறுகளைத் திருப்பிவிடுவார்கள்; அரணிப் 6
பான அகழிகள் வெறுமையாகி வறண்டு
போம்; [16]கொறுக்கையும் நாணலும் வாடும்.
நதியோரத்திலும் நதிமுகத்திலும் இருக்கிற 7
மடலுள்ள செடிகளும், நதியருகே விதைக்கப்
பட்ட யாவும் உலர்ந்துபோம்; அது பறக்கடிக்
கப்பட்டு இல்லாதேபோம். மீன் பிடிக்கிறவர் 8
கள் பெருமூச்சு விடுவார்கள், நதியிலே தூண்
டில்போடுகிற யாவரும் துக்கிப்பார்கள்; தண்
ணீர்களின்மேல் வலைகளை வீசுகிறவர்கள் சவி
த்துப்போவார்கள். மெல்லிய சணலைப் பக் 9
குவப்படுத்துகிறவர்களும், [17]சல்லாக்களை நெய்
கிறவர்களும் நாணுவார்கள். மீன் வளர்க்கிற 10
குளங்களும் கூலிக்கு அணைக்கட்டுகிற அனை
வருடைய அணைக்கட்டுகளும் உடைந்துபோம்.
சோவான் பட்டணத்தின் [18]பிரபுக்களானவர் 11

1 மீகா 7. 7
2 எரே. 17. 13
3 எரே. 5. 31
4 எரே. 6. 23
5 சங். 9. 5
6 சங். 83. 13. ஓசி. 13. 3
7 எரே. 2. 3
8 20. 3–5. எசே. 30. 4–9. செப். 2. 12; 3. 10
9 5. 26
10 16. 1. சங். 68. 31; 72. 10. செப். 3. 10. மல். 1. 11
11 எரே. 46. 13. எசே. 29, 30 அதி.
12 எசே. 22. 14
13 8. 19; 47. 12
14 20. 4. எரே. 46. 26. எசே. 29. 19
15 எரே. 51. 36. எசே. 30. 12
16 2 இரா. 19. 24
17 1 இரா. 10. 28. நீதி. 7. 16
18 எண். 13. 22

கள் மூடர்கள்; பார்வோனுடைய ஞானமுள்
ள ஆலோசனைக்காரரின் ஆலோசனை மதியீன
மாயிற்று. நான் ஞானிகளின் புத்திரன், நான்
பூர்வ ராஜாக்களின் குமாரன் என்று பார்
வோனுடனே எப்படிச் சொல்லுகிறீர்கள்?
12 அவர்கள் எங்கே? உன் ஞானிகள் எங்கே?
[1]சேனைகளின் **கர்த்தர்** எகிப்தைக்குறித்துப்
பண்ணின யோசனையை அவர்கள் உனக்குத்
தெரிவிக்கட்டும்; அல்லது தாங்களே அறிந்து
13 கொள்ளட்டும். சோவான் பிரபுக்கள் [2]மூட
ரானார்கள்; நோப்பின் பிரபுக்கள் [3]மோசம்
போனார்கள்; எகிப்தையும் அதின் கோத்திரத்
தலைவரையும் வழிதப்பப் பண்ணுகிறார்கள்.
14 **கர்த்தர்** அதின் நடுவில் தாறுமாறுகளின் ஆவி
யை வரப்பண்ணினார்; [4]ஆனதுகொண்டு வெ
றியன் வாந்திபண்ணி, தள்ளாடித் திரிகிற
துபோல, அவர்கள் எகிப்தை அதின் எல்லாச்
செய்கையிலும் தள்ளாடித் திரியப்பண்ணுகி
15 றார்கள். எகிப்தில் தலையாகிலும் வாலாகி
லும் கிளையாகிலும் [5]நாணலாகிலும் செய்யும்
வேலை ஒன்றுமிராது.
16 அக்காலத்திலே எகிப்தியர் பெண்டுகளைப்
போலிருந்து, [6]சேனைகளின் **கர்த்தர்** தங்கள்
மேல் அசைக்கும் கையசைவினாலே அஞ்சி
17 நடுங்குவார்கள். சேனைகளின் **கர்த்தர்** அவர்
களுக்கு விரோதமாக நிர்ணயித்துக்கொண்ட
ஆலோசனையினிமித்தம் யூதாவின் தேசம் எகி
ப்தியருக்குப் பயங்கரமாயிருக்கும்; தனக்குள்
அதை நினைக்கிறவனெவனும் திடுக்கிடுவான்.
18 அக்காலத்திலே எகிப்து தேசத்திலிருக்கும்
ஐந்து பட்டணங்கள் கானான் பாஷையைப்
பேசி, சேனைகளின் [7]**கர்த்தரை** முன்னிட்டு
ஆணையிடும்; அவைகளில் ஒன்று *நிர்மூல
19 மான பட்டணம் என்னப்படும். அக்காலத்
திலே எகிப்துதேசத்தின் நடுவிலே **கர்த்தருக்**
**கு** ஒரு பலிபீடமும், [8]அதின் எல்லையருகே
**கர்த்தருக்கு** ஒரு ஸ்தம்பமும் உண்டாயிருக்
20 கும். அது எகிப்துதேசத்திலே சேனைகளின்
**கர்த்தருக்கு** அடையாளமும் சாட்சியுமாயிருக்
கும்; [9]ஒடுக்குகிறவர்களினிமித்தம் அவர்கள்
**கர்த்தரை** நோக்கிக் கூப்பிடுவார்கள்; அப்
பொழுது அவர்களுக்கு ஒரு ரட்சகனையும்,
ஒரு பெலவானையும் அனுப்பி அவர்களை விடு
21 விப்பார். அப்பொழுது **கர்த்தர்** எகிப்திய
ருக்கு அறியப்படுவார்; எகிப்தியர் **கர்த்தரை**
அக்காலத்திலே அறிந்து, அவருக்குப் பலிக
ளோடும் காணிக்கைகளோடும் ஆராதனைசெ
ய்து, [10]**கர்த்தருக்குப்** பொருத்தனைகளைப்பண்
22 ணி அவைகளைச் செலுத்துவார்கள். **கர்த்தர்**
எகிப்தியனை வாதையினால் அடிப்பார்; அடி
த்து குணமாக்குவார்; அவர்கள் **கர்த்தரிடத்**
**தில்** மனந்திரும்புவார்கள்; அப்பொழுது அவர்
கள் விண்ணப்பத்தைக் கேட்டு, அவர்களைக்
குணமாக்குவார்.
23 அக்காலத்திலே எகிப்திலிருந்து அசீரியா
வுக்குப் போகிற பெரும்பாதை உண்டாயிருக்
கும்; [11]அசீரியர் எகிப்துக்கும், எகிப்தியர் அசி

[1] 44. 7, 8. 1 கொ. 1. 20
[2] ரோ. 1. 22
[3] எரே. 2. 16
[4] 1 இரா. 22. 22, 23
[5] 9. 14
[6] எரே. 51. 30. நாகூ. 3. 13
[7] செப். 3. 9
* சூரியபுரம்.
[8] ஆதி. 28. 18. யாத். 24. 4
[9] யோசு. 4. 20
[10] மல். 1. 11
[11] 11. 16
[12] 1 பே. 2. 10
[13] எபே. 2. 10
[14] 2 இரா. 18. 17
[15] சகரி. 13. 4
[16] 8. 18
[17] 2 சாமு. 10. 4. எரே. 13. 22, 26. மீகா 1. 11
[18] 2 இரா. 18. 21
[19] சகரி. 9. 14
[20] 33. 1; 13. 17 எரே. 49. 34
[21] 15. 5; 13. 8
[22] உபா. 28. 67. தானி. 5. 5, 10

ரியாவுக்கும் வந்து, எகிப்தியர் அசீரியரோடுங்
கூட ஆராதனை செய்வார்கள். அக்காலத்தி 24
லே இஸ்ரவேல் எகிப்தோடும் அசீரியாவோ
டும் மூன்றாவதாக பூமியின் நடுவில் ஆசீர்வாத
மாயிருக்கும். அவர்களைக்குறித்துச் சேனைக 25
ளின் **கர்த்தர்**: எகிப்தியராகிய என் ஜனமும்,
[12]அசீரியராகிய என் கரத்தின் கிரியையும்,
[13]இஸ்ரவேலராகிய என் சுதந்தரமும் ஆசீர்வ
திக்கப்பட்டது என்று சொல்லி, அவர்களை
ஆசீர்வதிப்பார்.

தர்த்தான், [14]அசீரியாராஜாவாகிய சர்கோ **20**
னாலே அனுப்பப்பட்டு, அஸ்தோத்துக்கு
வந்து, அஸ்தோத்தின்மேல் யுத்தம்பண்ணி,
அதைப் பிடித்த வருஷத்திலே, **கர்த்தர்** ஆ 2
மோத்சின் குமாரனாகிய ஏசாயாவை நோக்கி:
நீ போய் உன் அரையிலிருக்கிற இரட்டை
அவிழ்த்து, உன் கால்களிலிருக்கிற பாதரட்
சைகளைக் கழற்று என்றார்; [15]அவன் அப்படி
யே செய்து, வஸ்திரமில்லாமலும் வெறுங்கா
லுமாய் நடந்தான். அப்பொழுது **கர்த்தர்**: 3
எகிப்தின் மேலும் எத்தியோப்பியாவின் மே
லும்வரும்மூன்றுவருஷத்துக்காரியங்களுக்கு
அடையாளமும் [16]குறிப்புமாக என் ஊழியக்
யக்காரனாகிய ஏசாயா வஸ்திரமில்லாமலும்
வெறுங்காலுமாய் நடக்கிறதுபோல, அசீரி 4
யா ராஜா, தான் சிறைபிடிக்கப்போகிற எகி
ப்தியரும், தான் குடிவிலக்கப்போகிற எத்தி
யோப்பியருமாகிய இளைஞரையும் கிழவரை
யும், [17]வஸ்திரமில்லாமலும் வெறுங்காலுமாய்
எகிப்தியருக்குவெட்கமுண்டாகும்படி, இருப்
பிடம் மூடப்படாதவர்களாய்க் கொண்டுபோ
வான். அப்பொழுது இந்தக் கடற்கரைக் 5
குடிகள் தாங்கள் நம்பியிருந்த எத்தியோப்பியா
வைக் குறித்தும், [18]தாங்கள் பெருமைபாராட்
டின எகிப்தைக்குறித்தும் கலங்கி வெட்கி:
இதோ, அசீரிய ராஜாவின் முகத்துக்குத் தப் 6
பும்படிக்கு நாங்கள் நம்பி, சகாயத்துக்கென்று
ஓடிவந்து அண்டினவன் இப்படியானானே;
நாங்கள் எப்படி விடுவிக்கப்படுவோம் என்று
அக்காலத்திலே சொல்லுவார்கள் என்றார்.

கடல் வனாந்தரத்தின் பாரம். சுழல்காற்று **21**
தென்திசையிலிருந்து எழும்பிக் கடந்துவரு
கிறதுபோல, [19]பயங்கரமான தேசமாகிய வனாந்
தரத்திலிருந்து அது வருகிறது. கொடிய தரி 2
சனம் எனக்குத் தெரிவிக்கப்பட்டது; துரோ
கி துரோகம்பண்ணி, [20]பாழாக்கிறவன் பாழாக்
கிக்கொண்டே இருக்கிறான்; ஏலாமே எழும்பு;
மேதியாவே முற்றிக்கைபோடு; அதினாலே
உண்டான தவிப்பையெல்லாம் ஒழியப்பண்
ணினேன். ஆகையால், என் இடுப்பு மகா 3
வேதனையால் நிறைந்திருக்கிறது; [21]பிள்ளைபெ
றுகிறவளின் வேதனைகளுக்கு ஒத்த வேதனை
கள் என்னைப் பிடித்தது; கேட்டதினால் உளை
வுகொண்டு, கண்டதினால் கலங்கினேன். என் 4
இருதயம் திகைத்தது; திகில் என்னைத் திடுக்
கிடப்பண்ணிற்று; [22]எனக்கு இன்பந்தந்த
இரவு பயங்கரமாயிற்று. பந்தியை ஆயத்தப் 5

படுத்துங்கள், சாமக்காரரை வையுங்கள், புசி
யுங்கள், குடியுங்கள்; பிரபுக்களே, எழுந்து
6 பரிசைகளுக்கு எண்ணெய் பூசுங்கள். ஆண்
டவர் என்னை நோக்கி: நீ போய், காண்ப
தைத் தெரிவிக்கும்படி சாமக்காரனை வை
7 என்றார். அவன் ஒரு இரதத்தையும், ஜோடு
ஜோடான குதிரைவீரரையும், ஜோடுஜோடா
கக் கழுதைகளின்மேலும் ஒட்டகங்களின்மே
லும் ஏறிவருகிறவர்களையும் கண்டு, மிகுந்த கவ
னமாய்க் கவனித்துக்கொண்டே இருந்து:
8 ஆண்டவரே, நான் பகல்முழுதும் என் காவ
லிலே நின்று, [1]இராமுழுதும் நான் என் காவ
லிடத்திலே தரித்திருக்கிறேன் என்று சிங்கத்
தைப்போல் சத்தமிட்டுக் கூப்பிடுகிறான்.
9 இதோ, ஒரு ஜோடு குதிரைபூண்ட இரதத்
தின்மேல் ஏறியிருக்கிற ஒரு மனுஷன் வருகி
றான்: பாபிலோன் விழுந்தது, விழுந்தது;
[2]அதின் விக்கிரக தேவர்களையெல்லாம் தரை
யோடே மோதி உடைத்தார் என்று பிரதியுத்
10 தரம் சொல்லுகிறான். என் போரடிப்பின் தா
னியமே, [3]என் களத்தின் கோதுமையே,
இஸ்ரவேலின் தேவனாகிய சேனைகளின் **கர்த்**
**தரால்** [4]நான் கேள்விப்பட்டதை உங்களுக்கு
அறிவித்தேன்.
11 தூமாவின் பாரம். [5]சேயீரிலிருந்து என்னை
நோக்கி: சாமக்காரனே, இரவு எவ்வளவு
12 சென்றது? என்று கூப்பிட்டுக் கேட்க; அ
தற்கு சாமக்காரன்: விடியற்காலம் வருகிறது,
இராக்காலமும் வருகிறது; நீங்கள் கேட்க
மனதானால் திரும்பிவந்து கேளுங்கள் என்று
சொல்லுகிறான்.
13 அரபியாவின் பாரம். [6]திதானியராகிய பய
ணக்கூட்டங்களே, நீங்கள் அரபியாவின் காடு
14 களில் இராத்தங்குவீர்கள். தேமா தேசத்தின்
குடிகளே, நீங்கள் தாகமாயிருக்கிறவர்களுக்
குத் தண்ணீர் கொண்டுபோய், தப்பி ஓடுகிற
வர்களுக்கு அப்பங்கொடுக்க எதிர்கொண்டு
15 போங்கள். அவர்கள், பட்டயங்களுக்கும்,
உருவின கட்கத்துக்கும், நாணேற்றின வில்
லுக்கும், யுத்தத்தின் கொடுமைக்கும் தப்பி
16 ஓடுகிறார்கள். ஆண்டவர் என்னை நோக்கி:
ஒரு கூலிக்காரனுடைய வருஷங்களுக்கொத்த
ஒரே வருஷத்திலே [7]கேதாருடைய மகிமை
17 யெல்லாம் அற்றுப்போம். கேதார் புத்திர
ராகிய பராக்கிரம வில்வீரரின் தொகையில்
மீதியானவர்கள் கொஞ்சப்பேராயிருப்பார்கள்
என்றார்; இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்**
இதை உரைத்தார்.

**22** தரிசனப் பள்ளத்தாக்கின் பாரம். உன்
னில் உள்ளவர்கள் எல்லாரும் வீடுகளின்
மேல் ஏறுவதற்கு உனக்கு இப்பொழுது வந்
2 தது என்ன? சந்தடிகளால் நிறைந்து ஆரவா
ரம்பண்ணி, களிகூர்ந்திருந்த நகரமே, [8]உன்
னிடத்தில் கொலையுண்டவர்கள் பட்டயத்தால்
கொலையுண்டதில்லை, யுத்தத்தில் செத்ததும்
3 இல்லை. உன் அதிபதிகள் எல்லாரும் ஏக
மாய் ஓடி அலைந்தும், [9]வில்வீரரால் கட்டப்

1 ஆப. 2. 1
2 எரே. 51. 8. ஹ: 50. 2. வெளி. 14. 8; 18. 2
3 எரே. 51. 33
4 எசே. 3. 17–19, அப். 20. 26, 27
5 1 நாளா. 1. 30, எரே. 49. 7; ஹ. எசே. 35. 2. ஹ. ஒபதி.
6 எரே. 49. 28.
7 யோபு 7. 1
8 32. 13
9 2 இரா. 25. 5, 11
10 எரே. 4. 19; 9. 1. புல. 1. 2
11 15; 1
12 1 இரா. 7. 2; 10. 17
13 2 நாளா. 32. 4
14 37. 26
15 யோவேல் 1. 13
16 யோபு 1 20. மீகா 1. 16
17 56. 12. 1 கொ 15. 32
18 1 சாமு. 3. 14. எசே. 24. 13
19 2 இரா. 18. 37
20 2 சாமு. 18. 18. மத். 27. 60

படுகிறார்கள்; உன்னில் அகப்பட்ட யாவரும்
தூரத்துக்கு ஓடியும் ஏகமாய்க் கட்டப்படுகி
றார்கள். ஆகையால், என்னை நோக்கிப் பா 4
ராதேயுங்கள்; என் ஜனமாகிய குமாரத்தி பா
ழாய்ப்போனதினிமித்தம் மனங்கசந்து அழு
வேன்; [10]எனக்கு ஆறுதல் சொல்ல வராதே
யுங்கள் என்கிறேன். சேனைகளின் **கர்த்த** 5
**ராகிய** ஆண்டவராலே இது தரிசனப் பள்ளத்
தாக்கிலே அமளியும், மிதியுண்குதலும், கலக்
கமுமுள்ள நாளாயிருக்கிறது; இது அலங்கத்
தைத் தகர்த்து, பர்வதத்துக்கு நேரே ஆர்ப்ப
ரிக்கும் நாளாயிருக்கிறது. ஏலாமியன் அம் 6
பறாத்தூணியை எடுத்து, இரதங்களோடும்
காலாட்களோடும் குதிரைவீரரோடும் வருகி
றான்; கீர் [11]கேடகத்தை வெளிப்படுத்தும்.
மகா வடிவான உன் பள்ளத்தாக்குகள் இர 7
தங்களால் நிரப்பப்படும்; குதிரைவீரர் வாசல்
கள்மட்டும் வந்து அணிவகுத்து நிற்பார்கள்.
அவன் யூதாவின் மறைவை நீக்கிப்போடு 8
வான்; [12]அந்நாளிலே வனமாளிகையாகிய ஆ
யுதச்சாலையை நோக்குவாய். நீங்கள் தாவீது 9
நகரத்தின் இடிதல்கள் அநேகமாயிருப்பதைக்
கண்டு, [13]கீழ்க்குளத்துத் தண்ணீர்களைக் கட்டி
வைத்து, எருசலேமின் வீடுகளை எண்ணி, 10
அலங்கத்தை அரணிப்பாக்கும்படி வீடுகளை
இடித்து, இரண்டு மதில்களுக்கு நடுவே 11
பழைய குளத்துத் தண்ணீர்களுக்கு ஒரு அக
ழை உண்டுபண்ணுவீர்கள்; ஆனாலும் அதைச்
செய்தவரை நீங்கள் நோக்காமலும், [14]அதை
ஏற்படுத்தித் தூரத்திலிருந்து வரப்பண்ணின
வரைக் கவனியாமலும் போகிறீர்கள். சே 12
னைகளின் **கர்த்தராகிய** ஆண்டவர் அக்காலத்
திலே அழவும், [15]புலம்பவும், மொட்டையிட
வும், [16]இரட்டுடுத்தவும் கட்டளையிட்டார். நீங் 13
களோ, சந்தோஷித்துக் களித்து, ஆடுமாடு
களை அடித்து, இறைச்சியைச் சாப்பிட்டு,
திராட்ச ரசத்தைக் குடித்து: [17]புசிப்போம்
குடிப்போம், நாளைக்குச் சாவோம் என்று
சொல்வீர்கள். மெய்யாகவே நீங்கள் சாகு 14
மட்டும் இந்த அக்கிரமம் உங்களுக்கு நிவிர்த்தி
யாவதில்லை [18]என்று சேனைகளின் **கர்த்தரா**
**கிய** ஆண்டவர் சொல்லுகிறாரென்பது என்
செவி கேட்கும்படி சேனைகளின் **கர்த்தரால்**
தெரிவிக்கப்பட்டது.
சேனைகளின் **கர்த்தராகிய** ஆண்டவர் 15
உரைத்ததாவது: நீ அரமனை விசாரிப்புக்கார
னும் பொக்கிஷக்காரனுமாகிய செப்னா [19]என்
பவனிடத்தில் போய்ச் சொல்லவேண்டியது
என்னவென்றால், உயர்ந்த ஸ்தலத்திலே தன் 16
கல்லறையை வெட்டி, கன்மலையிலே தனக்கு
வாசஸ்தலத்தைத் தோண்டுகிறவனைப்போல,
[20]நீ உனக்கு இங்கே கல்லறையை வெட்டும்
படிக்கு உனக்கு இங்கே என்ன இருக்கிறது?
உனக்கு இங்கே யார் இருக்கிறார்கள்? இதோ, 17
பெலவான் ஒருவனைத் தூரத்துகிறவண்ணமா
கக் **கர்த்தர்** உன்னைத் தூரத்திவிட்டு, நிச்சய
மாய் உன்னை மூடிப்போடுவார். அவர் உன் 18

னை உண்டையைப்போல அகலமும் விசால
முமான தேசத்திலே சுழற்றி எறிந்துவிடுவார்;
அங்கே நீ சாவாய்; அங்கே உன் மகிமையின்
ரதங்கள் உன் ஆண்டவனுடைய வீட்டுக்கு
19 இகழ்ச்சியாக இருக்கும். உன்னை உன் நிலை
யைவிட்டுத் துரத்திவிடுவேன்; உன் ஸ்தானத்
20 திலிருந்து நீ பிடுங்கிப் போடப்படுவாய். அந்
நாளிலே இல்க்கியாவின் குமாரனாகிய எலி
யாக்கீம் [1]என்னும் என் ஊழியக்காரனை நான்
21 அழைத்து; உன் வஸ்திரத்தை அவனுக்குத்
தரித்து, உன் கச்சையால் அவனை இடை
கட்டி, உன் அதிகாரத்தை அவன் கையிலே
கொடுப்பேன்; அவன் எருசலேமின் குடிக
ளுக்கும், யூதாவின் வம்சத்துக்கும் தகப்பனா
22 யிருப்பான். தாவீதுடைய வீட்டின் திறவு
கோலை அவன் தோளின்மேல் வைப்பேன்;
[2]ஒருவரும் பூட்டக்கூடாதபடிக்கு அவன்
திறப்பான், ஒருவரும் திறக்கக்கூடாதபடிக்கு
23 அவன் பூட்டுவான். அவனை உறுதியான
இடத்திலே ஆணியாகக் கடாவுவேன்; [3]அவன்
தன் தகப்பன் வீட்டுக்கு மகிமையான சிங்கா
24 சனமாக இருப்பான். அதின்மேல் அவன்
தகப்பன் வம்சத்தாராகிய புத்திரர் பௌத்திர
ருடைய மகிமை அனைத்தையும், சிறிதும் பெ
ரிதுமான சகல பானபாத்திரங்களையும் தூக்கி
25 வைப்பார்கள். உறுதியான இடத்தில் கடா
வப்பட்டிருந்த ஆணி அந்நாளிலே பிடுங்கப்
பட்டு, முறிந்து விழும்; அப்பொழுது அதின்
மேல் தொங்கின பாரம் அறுந்துவிழும் என்று
சேனைகளின் **கர்த்தர்** உரைக்கிறார்; **கர்த்தரே**
இதை உரைக்கிறார் என்று சொல் என்றார்.

**23** தீருவின் பாரம். [4]தர்ஷீஸ் கப்பல்களே,
அலறுங்கள்; அது வீடு இல்லாதபடிக்கும்,
அதில் வருவார் இல்லாதபடிக்கும் பாழாக்கப்
பட்டது; இந்தச் செய்தி கித்தீம் தேசத்திலி
ருந்து அவர்களுக்குத் தெரிவிக்கப்படுகிறது.
2 தீவுக்குடிகளே, மவுனமாயிருங்கள்; சீதோ
னின் வர்த்தகர் சமுத்திரத்திலே யாத்திரைப
3 ண்ணி உன்னை நிரப்பினார்கள். சீகோர் நதி
யின் மிகுந்த நீர்ப்பாய்ச்சல்களால் விளையும்
பயிர்வகைகளும், ஆற்றங்கரையின் அறுப்பும்
அதின் வருமானமாயிருந்தது; [5]அது ஜாதிக
4 ளின் சந்தையாயிருந்தது. சீதோனே, வெட்
கப்படு; நான் இனிக் கர்ப்பவேதனைப் படுகிற
தும் இல்லை; பெறுகிறதும் இல்லை; இளைஞ
ரை வளர்க்கிறதும் இல்லை; கன்னிகைகளை
ஆதரிக்கிறதும் இல்லை என்று சமுத்திரக்
கோட்டையான கடல்துறை சொல்லுகிறது.
5 எகிப்தின் செய்தி கேட்கப்பட்டதினால் நோய்
உண்டானதுபோல, [6]தீருவின் செய்தி கேட்
6 கப்படுவதினாலும் நோய் உண்டாகும். கரை
துறைக் குடிகளே, நீங்கள் தர்ஷீஸ்மட்டும்
7 புறப்பட்டுப்போய் அலறுங்கள். பூர்வநாட்
கள் முதல் நிலைபெற்று களிகூர்ந்திருந்த உங்
கள் பட்டணம் இதுதானா? [7]பரதேசம்போய்ச்
சஞ்சரிக்கிறதற்கு அவள் கால்களே அவளைத்
8 தூரமாய்க் கொண்டுபோம். கிரீடம் தரிப்

[1] 2 இரா. 18. 18
[2] 9. 6. யோபு 12. 14. வெளி. 3. 7.
[3] எஸ்றா 9. 8
[4] எரே. 25. 22; 47. 4. எசே. 26. 28. ஆமோ. 1. 9, 10. சகரி. 9. 2–4
[5] எசே. 27. 3
[6] 19. 16
[7] 22. 2
[8] எசே. 28. 2, 12
[9] 1 கொ. 1. 28, 29
[10] செப். 2. 14, 15. வெளி. 18. 22
[11] சங். 72. 9, 10
[12] எசே. 27. 25, 30
[13] வெளி. 17. 2
[14] சகரி. 14. 20, 21
[15] ஓசி. 4. 9. எபே. 6. 8, 9
[16] எசே. 7. 12, 13

பிக்கும் தீருவுக்கு விரோதமாக இதை யோ
சித்துத் தீர்மானித்தவர் யார்? [8]அதின் வர்த்த
கர் பிரபுக்களும், அதின் வியாபாரிகள் பூமி
யின் கனவான்களுமாமே. சர்வசிங்காரத்தின் 9
மேன்மையைக் குலைக்கவும், பூமியின் கன
வான்கள் யாவரையும் கன ஈனப்படுத்தவும்,
[9]சேனைகளின் **கர்த்தரே** இதை யோசித்துத்
தீர்மானித்தார். தர்ஷீஸின் குமாரத்தியே, 10
நதியைப்போல நீ உன் தேசத்தில் பாய்ந்து
போ, உனக்கு அணையில்லை. **கர்த்தர்** தமது 11
கையைச் சமுத்திரத்தின்மேல் நீட்டி, ராஜ்
யங்களைக் குலுங்கப்பண்ணினார்; கானானின்
அரண்களை அழிக்க அவர் அதற்கு விரோத
மாய்க் கட்டளை கொடுத்து: ஒடுக்குண்ட கன் 12
னியாகிய சீதோன் குமாரத்தியே, [10]இனிக்
களிகூர்ந்துகொண்டிராய்; எழுந்து கித்தீமுக்
குப் புறப்பட்டுப் போ, அங்கும் உனக்கு இ
ளைப்பாறுதல் இல்லையென்றார். கல்தேயரு 13
டைய தேசத்தைப் பார்; அந்த ஜனம் முன்
னிருந்ததில்லை; [11]அசீரியன் வனாந்தரத்தாருக்
காக அதை அஸ்திபாரப்படுத்தினான்; அவர்
கள் அதின் கோபுரங்களை உண்டாக்கி,
அதின் அரமனைகளைக் கட்டினார்கள்; அவர்
அதை அழிவுக்கென்று நியமித்தார். தர்ஷீஸ் 14
கப்பல்களே, அலறுங்கள்; [12]உங்கள் அரண்
பாழாக்கப்பட்டது. அக்காலத்திலே தீரு, 15
ஒரு ராஜாவுடைய நாட்களின்படி, எழுபது
வருஷம் மறக்கப்பட்டிருக்கும்; எழுபது வரு
ஷங்களின் முடிவிலே தீருவுக்குச் சம்பவிப்
பது வேசியின் பாடலுக்குச் சமானமாயிருக்
கும். மறக்கப்பட்ட வேசியே, நீ வீணையை 16
எடுத்து நகரத்தைச் சுற்றித்திரி; நீ நினைக்கப்
படும்படி அதை இனிதாக வாசித்துப் பல
பாட்டுகளைப் பாடு. எழுபது வருஷங்களின் 17
முடிவிலே **கர்த்தர்** வந்து தீருவைச் சந்திப்
பார்; அப்பொழுது அது தன் பணையத்துக்
குத் திரும்பிவந்து, [13]பூமியிலுள்ள சகல ராஜ்
யங்களோடும் வேசித்தனம் பண்ணும். அதின் 18
வியாபாரமும், அதின் பணையமும் **கர்த்தருக்**
**குப்** பரிசுத்தமாக்கப்படும்; [14]அது பொக்கிஷ
மாய்ச் சேர்க்கப்படுவதும் இல்லை; பூட்டிவைக்
கப்படுவதும் இல்லை; **கர்த்தருடைய** சமுகத்
தில் வாசமாயிருக்கிறவர்கள் திருப்தியாகச் சா
ப்பிடவும் நல்ல வஸ்திரங்களைத் தரிக்கவும்
அதின் வியாபாரம் அவர்களைச் சேரும்.

இதோ, **கர்த்தர்** தேசத்தை வெறுமையும் **24**
பாழுமாக்கி, அதைக் கவிழ்த்து, அதின் குடி
களைச் சிதறடிப்பார். அப்பொழுது, ஜனத் 2
துக்கு எப்படியோ அப்படியே ஆசாரியனுக்
கும், [15]வேலைக்காரனுக்கு எப்படியோ அப்படி
யே எஜமானுக்கும், வேலைக்காரிக்கு எப்படி
யோ அப்படியே எஜமானிக்கும், கொண்ட
வனுக்கு எப்படியோ அப்படியே விற்றவ
னுக்கும், [16]கடன் கொடுத்தவனுக்கு எப்படி
யோ அப்படியே கடன் வாங்கினவனுக்கும்,
வட்டி வாங்கினவனுக்கு எப்படியோ அபபடி
யே வட்டி கொடுத்தவனுக்கும், எல்லாருக்

3 கும் சரியாக நடக்கும். தேசம் முழுதும்
கொள்ளையாகி, முற்றிலும் வெறுமையாகும்;
4 இது கர்த்தர் சொன்ன வார்த்தை. தேசம்
புலம்பி வாடும்; பூமி சத்துவமற்று உலர்ந்து
போகும்; தேசத்து ஜனத்திலே உயர்ந்தவர்கள்
5 தவிப்பார்கள். தேசம் தன் குடிகளின் மூல
மாய் தீட்டுப்பட்டது; [1]அவர்கள் நியாயப்பிர
மாணங்களை மீறி, கட்டளையை மாறுபாடா
க்கி, நித்திய உடன்படிக்கையை முறித்தார்
6 கள். இதினிமித்தம் சாபம் தேசத்தைப் பட்சித்
தது, [2]அதின் குடிகள் தண்டிக்கப்பட்டார்கள்;
தேசத்தார் தகிக்கப்பட்டார்கள், [3]சிலர்மாத்திரம்
7 மீந்திருக்கிறார்கள். திராட்சரசம் துக்கங்கொ
ண்டாடும், [4]திராட்சச்செடி வதங்கும்; மனக்
களிப்பாயிருந்தவர்கள் எல்லாரும் பெருமூச்சு
8 விடுவார்கள். மேளங்களின் சந்தோஷம்
ஓயும், [5]களிகூருகிறவர்களின் சந்தடி ஒழியும்,
9 வீணையின் களிப்பு நின்றுபோம். பாடலோ
டே திராட்சரசம் குடியார்கள்; மதுபானம்
10 அதைக் குடிக்கிறவர்களுக்குக் கசக்கும். வெ
றுமையாய்ப்போன நகரம் தகர்ந்து, ஒருவரும்
உள்ளே பிரவேசிக்கக் கூடாதபடி, வீடுகளெல்
11 லாம் அடைபட்டுக்கிடக்கும். திராட்சரசத்துக்
காக வீதிகளிலே கூக்குரல் உண்டு; எல்லாச்
சந்தோஷமும் மங்கி, தேசத்தின் மகிழ்ச்சி அ
12 ற்றுப்போம். நகரத்தில் மீதியாயிருப்பது அழி
வே; [6]வாசல்கள் இடிக்கப்பட்டுப் பாழாய்க்
13 கிடக்கும். ஒலிவமரத்தை உலுக்கும்போதும்,
[7]திராட்சப்பழங்களை அறுத்துத்தீரும்போதும்,
பின்பறிப்புக்குக் கொஞ்சம் மீந்திருப்பது
போல, தேசத்துக்குள்ளும இந்த ஜனங்களின்
14 நடுவிலும் கொஞ்சம் மீந்திருக்கும். அவர்கள்
சத்தமிட்டுக் கெம்பீரிப்பார்கள்; [8]கர்த்தரு
டைய மகத்துவத்தினிமித்தம் சமுத்திரத்தி
15 னின்று ஆர்ப்பரிப்பார்கள். ஆகையால் கர்த்
தரை, வெளுக்குந் திசையிலும், இஸ்ரவே
லின் தேவனாகிய கர்த்தரின் நாமத்தைச் சமுத்
திரத் தீவுகளிலும் மகிமைப்படுத்துங்கள்.
16 நீதிபரனுக்கு மகிமை என்று பாடும் கீதங்க
ளைப் பூமியின் கடையாந்தரத்திலிருந்து கேட்
கிறோம; நானோ, இளைத்துப்போனேன், இளை
த்துபபோனேன்; எனக்கு ஐயோ! [9]துரோகி
கள் துரோகம்பண்ணுகிறார்கள்; துரோகிகள்
மிகுதியாய்த் துரோகம்பண்ணுகிறார்கள் என்
17 கிறேன். தேசத்துக் குடிகளே, [10]திகிலும்,
படுகுழியும், கண்ணியும் உங்களுக்கு நேரிடும்.
18 அப்பொழுது, திகிலின் சத்தத்திற்கு விலகி
ஓடுகிறவன் படுகுழியில் விழுவான்; படுகுழியி
லிருந்து ஏறுகிறவன் கண்ணியில் அகபபடு
வான்; உயர இருக்கும் மதகுகள் திறவுண்டு,
19 [11]பூமியின் அஸ்திபாரங்கள் குலுங்கும். தேசம்
நொறுங்கவே நொறுங்கும், [12]தேசம் முறியவே
20 முறியும், தேசம் அசையவே அசையும். வெறி
த்தவனைப்போல தேசம் தள்ளாடி, [13]ஒரு குடி
லைப்போலப் பெயர்த்துப் போடப்படும்; அதி
ன் பாதகம் அதின்மேல் பாரமாயிருக்கையால்,
[14]அது விழுந்துபோம், இனி எழுந்திராது.

அக்காலத்தில் கர்த்தர் உன்னதமான 21
சேனையை உன்னதத்திலும், [15]பூமியின் ராஜாக்
களைப் பூமியிலும் விசாரிப்பார். அவர்கள் 22
கெபியில் ஏகமாய்க் கட்டுண்டவர்களாகச்
சேர்ந்து, காவலில் அடைக்கப்பட்டு, அநேக
நாள் சென்றபின்பு விசாரிக்கப்படுவார்கள்.
அப்பொழுது சேனைகளின் கர்த்தர் சீயோன் 23
மலையிலும் எருசலேமிலும் ஆளுகைசெய்வ
தால், [16]சந்திரன் கலங்கும், சூரியன் நாணம
டையும்; அவருடைய மூப்பர்களுக்கு முன்
பாக மகிமை உண்டாயிருக்கும்.

கர்த்தாவே, நீரே என் தேவன்; [17]உம்மை **25**
உயர்த்தி, உமது நாமத்தைத் துதிப்பேன்;
நீர் அதிசயமானவைகளைச் செய்தீர்; [18]உமது
பூர்வ ஆலோசனைகள் சத்தியமும் உறுதியுமா
னவைகள். நீர் நகரத்தை மண்மேடும், அர 2
ணான பட்டணத்தைப் பாழுமாக்கினீர்; [19]அந்
நியரின் ராஜதானியை ஊராயிராதபடிக்கும்,
என்றைக்கும் கட்டப்படாதபடிக்கும் செய்
தீர். ஆகையால் பலத்த ஜனங்கள் உம்மை 3
மகிமைப்படுத்துவார்கள்; [20]கொடூரமான ஜாதி
களின் நகரம் உமக்குப் பயப்படும். கொடூர 4
மானவர்களின் சீறல் மதிலை மோதியடிக்கிற
பெருவெள்ளத்தைப்போல் இருக்கையில், நீர்
ஏழைக்குப் பெலனும், நெருக்கப்படுகிற எளி
யவனுக்குத் திடனும், பெருவெள்ளத்துக்குத்
தப்பும் அடைக்கலமும், [21]வெயிலுக்கு ஒதுங்
கும் நிழலுமானீர். வறட்சியான இடத்தின் 5
காங்கை மேகத்தினால் தணிவதுபோல், அந்
நியரின் மும்முரத்தைத் தணியப்பண்ணுவீர்;
மேகத்தின் நிழலினால் வெயில் தணிகிறது
போல் பெலவந்தரின் ஆரவாரம் தணியும்.
சேனைகளின் கர்த்தர் இந்த மலையிலே சகல 6
ஜனங்களுக்கும் ஒரு விருந்தை ஆயத்தப்
படுத்துவார்; [22]அது கொழுமையான பதார்த்
தங்களும், பழமையான திராட்சரசமும்,
ஊனும் நிணமுமுள்ள பதார்த்தங்களும்,
தெளிந்த பழமையான திராட்சரசமும் நிறை
ந்த விருந்தாயிருக்கும். சகல ஜனங்கள்மேலு 7
முள்ள முக்காட்டையும், [23]சகல ஜாதிகளையும்
மூடியிருக்கிற மூடலையும், இந்த மலையிலே
அகற்றிப்போடுவார். அவர் மரணத்தை [24]ஜெ 8
யமாக விழுங்குவார்; கர்த்தராகிய தேவன்
எல்லா முகங்களிலுமிருந்து கண்ணீரைத் து
டைத்து, [25]தமது ஜனத்தின் நிந்தையைப் பூமி
யிலிராதபடிக்கு முற்றிலும் நீக்கிவிடுவார்; கர்த்
தரே இதைச் சொன்னார்.

அக்காலத்திலே: இதோ, இவரே நம்மு 9
டைய தேவன்; [26]இவருக்காகக் காத்திருந்
தோம், இவர் நம்மை ரட்சிப்பார்; இவரே
கர்த்தர், இவருக்காகக் காத்திருந்தோம்; இவ
ருடைய ரட்சிப்பினால் களிகூர்ந்து மகிழு
வோம் [27]என்று சொல்லப்படும். கர்த்தரு 10
டைய கரம் இந்த மலையிலே தங்கும்; கூளம்
எருக்களத்தில் மிதிக்கப்படுவதுபோல, மோ
வாப் அவர்கீழ் மிதிக்கப்பட்டுப்போம். நீந்து 11
கிறவன் நீந்துவதற்காகத் தன் கைகளை விரிப்

[1] ஆதி. 3. 17. எண். 35. 33
[2] சக. 4. 6
[3] 2 பே. 3. 10
[4] 16. 8, 9. யோவே. 1. 10, 12
[5] எரே. 7. 34. ஓசி. 2. 11. வெளி. 18. 22
[6] புல. 1. 1; 2. 9
[7] 6. 13; 17. 5, 6. மீகா. 2, 12
[8] செப். 2. 14, 15. மல். 1. 11. 1 பே. 3. 15
[9] 48. 8. எரே. 5. 11
[10] எரே. 48. 43, 44. ஆமோ. 5. 19
[11] ஆதி. 7. 11. சங். 18. 7
[12] எரே. 4. 23
[13] 19. 14. வெளி. 21. 1
[14] சகரி. 14 20, 21
[15] சங். 76. 12
[16] எசே. 32. 7. யோவே. 2. 31
[17] சங். 46. 10
[18] எண். 23. 19
[19] எரே. 51. 37
[20] வெளி. 11. 13
[21] 4. 6
[22] 2. 2, 3. சதி. 9. 2. மத். 8. 11; 22. 2. லூ. உன்னத. 5. 1
[23] 2 கொ. 3. 15-18. எபே. 4. 18
[24] ஓசி. 13. 14. 1 கொ. 15. 54
[25] மல். 3. 17, 18. வெளி. 21. 4
[26] ஆதி. 49. 18. தீத். 2. 13
[27] சங். 20. 5

பதுபோல் அவர் தமது கைகளை அவர்கள்
நடுவிலே விரித்து, அவர்கள் பெருமையை
யும், அவர்கள் கைகளின் சதிசர்ப்பனைகளை
12 யும் தாழ்த்திவிடுவார். அவர் உன் மதில்க
ளுடைய உயர்ந்த அரணைக் கீழே தள்ளித்
[1]தாழ்த்தித் தரையிலே தூளாக அழிப்பார்.

26 அக்காலத்திலே யூதாதேசத்தில் பாடப்படும்
பாட்டாவது: பெலனான நகரம் நமக்கு உண்டு;
[2]ரட்சிப்பையே அதற்கு மதிலும் அரணுமாக
2 ஏற்படுத்துவார். சத்தியத்தைக் கைக்கொண்டு
வருகிற நீதியுள்ள ஜாதி [3]உள்ளே பிரவேசிப்
3 பதற்காக வாசல்களைத் திறவுங்கள். உம்மை
உறுதியாய்ப் பற்றிக்கொண்ட மனதையுடை
யவன் உம்மையே நம்பியிருக்கிறபடியால்,
[4]நீர் அவனைப் பூரண சமாதானத்துடன் காத்
4 துக்கொள்வீர். கர்த்தரை என்றென்றைக்கும்
நம்புங்கள்; கர்த்தராகிய யேகோவா நித்திய
5 *கன்மலையாயிருக்கிறார். அவர் உயரத்திலே
வாசமாயிருக்கிறவர்களையும் கீழே தள்ளுகிறார்,
உயர்ந்த நகரத்தையும் தாழ்த்துகிறார்; அவர்
தரைமட்டும் தாழ்த்தி, அது மண்ணுகுமட்டும்
6 இடியப்பண்ணுவார். கால் அதை மிதிக்கும்,
[5]சிறுமையானவர்களின் காலும் எளிமையான
7 வர்களின் அடிகளுமே அதை மிதிக்கும். நீதி
மானுடைய பாதை செம்மையாயிருக்கிறது;
[6]மகா நீதிபரராகிய நீர் நீதிமானுடைய பாதை
8 யைச் செம்மைப்படுத்துகிறீர். கர்த்தாவே,
உம்முடைய நியாயத்தீர்ப்புகளின் வழியிலே
உமக்குக் காத்திருக்கிறோம்; [7]உமது நாமமும்,
உம்மை நினைக்கும் நினைவும் எங்கள் ஆத்தும
9 வாஞ்சையாயிருக்கிறது. என் ஆத்துமா இரா
விலே உம்மை வாஞ்சிக்கிறது; [8]எனக்குள்
இருக்கிற என் ஆவியால் அதிகாலையிலும்
உம்மைத் தேடுகிறேன்; உம்முடைய நியாயத்
தீர்ப்புகள் பூமியிலே நடக்கும்போது பூச்சக்க
ரத்துக்குடிகள் நீதியைக்கற்றுக்கொள்வார்கள்.
10 துன்மார்க்கனுக்குத் தயை செய்தாலும் நீதி
யைக் கற்றுக்கொள்ளான்; [9]நீதியுள்ள தேசத்தி
லும் அவன் அநியாயஞ்செய்து கர்த்தருடைய
மகத்துவத்தைக் கவனியாதே போகிறான்.
11 கர்த்தாவே, உமது கை ஓங்கியிருக்கிறது,
அவர்கள் அதைக் காணுதிருக்கிறார்கள்; [10]ஆனா
லும் உமது ஜனத்துக்காக நீர் கொண்ட
வைராக்கியத்தைக் கண்டு வெட்கப்படுவார்
கள்; அக்கினி உம்முடைய சத்துருக்களைப்
12 பட்சிக்கும். கர்த்தாவே, எங்களுக்குச் சமா
தானத்தைக் கட்டளையிடுவீர்; எங்கள் கிரியை
களையெல்லாம் எங்களுக்காக நடத்திவருகிற
13 வர் நீரே. எங்கள் தேவனாகிய கர்த்தாவே,
உம்மையல்லாமல் வேறே ஆண்டவன்மார்
எங்களை ஆண்டார்கள்; [11]இனி உம்மைமாத்
திரம் சார்ந்து உம்முடைய நாமத்தைப் பிரஸ்
14 தாபப்படுத்துவோம். அவர்கள் செத்தவர்கள்,
ஜீவிக்கமாட்டார்கள்; மாண்டராட்சதர் திரும்ப
எழுந்திரார்கள்; நீர் அவர்களை விசாரித்துச்
சங்கரித்து, அவர்கள் பேரையும் அழியப்பண்
15 ணினீர். இந்த ஜாதியைப் பெருகப்பண்ணி
னீர்; கர்த்தாவே இந்த ஜாதியைப் பெருகப்
பண்ணினீர்; நீர் மகிமைப்பட்டீர், தேசத்தின்
எல்லை எல்லாவற்றையும் நெடுந்தூரத்தில்
தள்ளிவைத்தீர்.
கர்த்தாவே, நெருக்கத்தில் உம்மைத் தேடி 16
னார்கள்; [12]உம்முடைய தண்டனை அவர்கள்
மேலிருக்கையில் அந்தரங்க வேண்டுதல் செய்
தார்கள். கர்த்தாவே, பேறுகாலம் சமீபித்தி 17
ருக்கையில் வேதனைப்பட்டு, தன் அம்பாயத்
தில் கூப்பிடுகிற கர்ப்பவதியைப்போல, [13]உம
க்கு முன்பாக இருக்கிறோம். நாங்கள் கர்ப்ப 18
மாயிருந்து வேதனைப்பட்டு, காற்றைப் பெற்
றவர்களைப்போல் இருக்கிறோம்; தேசத்தில்
ஒரு ரட்சிப்பையும் செய்யமாட்டாதிருக்கி
றோம்; பூச்சக்கரத்துக் குடிகள் விழுகிறது
மில்லை. மரித்த உம்முடையவர்கள் பிரேத 19
மான என்னுடையவர்களோடேகூட எழுந்தி
ருப்பார்கள்; [14]மண்ணிலே தங்கியிருக்கிறவர்
களே, விழித்துக் கெம்பீரியுங்கள்; உம்மு
டைய பனி பூண்டுகளின்மேல் பெய்யும் பனி
போல் இருக்கும்; மரித்தோரைப் பூமி †புறப்
படப்பண்ணும்.
என் ஜனமே, நீ போய் உன் அறைகளுக் 20
குள்ளே பிரவேசித்து, உன் கதவுகளைப் பூட்
டிக்கொண்டு, [15]சினம் கடந்துபோகுமட்டும்
கொஞ்சநேரம் ஒளித்துக்கொள். இதோ, பூமி 21
யினுடைய குடிகளின் அக்கிரமத்தினிமித்தம்
அவர்களை விசாரிக்கும்படி கர்த்தர் தம்முடைய
ஸ்தானத்திலிருந்து புறப்பட்டுவருவார்; [16]பூமி
தன் இரத்தப்பழிகளை வெளிப்படுத்தி, தன்
னிடத்தில் கொலைசெய்யப்பட்டவர்களை இனி
மூடாதிருக்கும்.

அக்காலத்திலே கர்த்தர் லிவியாதான் 27
என்னும் நீண்ட பாம்பை, [17]லிவியாதான்
என்னும் கோணலான சர்ப்பத்தையே, கடி
தும் பெரிதும் பலத்ததுமான தமது பட்டயத்
தால் தண்டிப்பார்; சமுத்திரத்தில் இருக்கிற
வலுசர்ப்பத்தைக் கொன்றுபோடுவார்.
அக்காலத்திலே நல்ல திராட்சரசத்தைத் 2
தரும் திராட்சத்தோட்டம் உண்டாயிருக்கும்;
[18]அதைக்குறித்துப் பாடுங்கள். கர்த்தராகிய 3
நான் அதைக் காப்பாற்றி, [19]அடிக்கடி அதற்
குத் தண்ணீர்ப் பாய்ச்சி, ஒருவரும் அதைச்
சேதப்படுத்தாதபடிக்கு அதை இரவும் பக
லும் காத்துக்கொள்வேன். உக்கிரம் என்னி 4
டத்தில் இல்லை, [20]முட்செடியையும் நெரிஞ்
சிலையும் எனக்கு விரோதமாய் யுத்தத்தில்
கொண்டுவருகிறவன் யார்? நான் அவைகள்
மேல் வந்து, அவைகளை ஏகமாய்க் கொளுத்தி
விடுவேன். இல்லாவிட்டால் அவன் என் 5
பெலனைப் பற்றிக்கொண்டு [21]என்னோடே ஒப்
புரவாகட்டும்; அவன் என்னோடே ஒப்புர
வாவான். யாக்கோபு வேர்பற்றி, [22]இஸ்ர 6
வேல் பூத்துக் காய்த்து உலகத்தைப் பலனால்
நிரப்பும் நாட்கள் வரும்.
அவர் அவனை அடித்தவர்களை அடித்தது 7
போல இவனை அடிக்கிறாரோ? அவர்கள்

1 26. 5
2 60. 18. சங். 74. 14
3 சங். 118. 19, 20
4 பிலி. 4. 7
* பெலன் உபா. 32. 4
5 மல். 4. 3
6 சங். 37. 23. எபே. 2. 10
7 64. 4, 5. சங். 63. 1, 6
8 உன்னத. 3. 1
9 பிர. 8. 12. ரோ. 2. 4
10 யோபு 24. 27. எரே. 5. 3
11 2 நாளா. 12. 8. ரோ. 6. 16-18
12 ஓசி. 5. 15
13 13. 8. யோ. 16. 21
14 எசே. 37. 1. ஞ. தானி. 12. 2
† பிறப்பிக்கும்.
15 யாத். 12. 22, 23
16 மீகா 1. 3. யூதா 14, 15.
17 சங். 74. 13, 14
18 எரே. 2. 21. மத். 20. 9. ஞ
19 சங். 121. 4, 5
20 2 சாமு. 23. 6
21 25. 4; 45. 24. யோபு 22. 21
22 ஓசி. 14. 5, 6

கொல்லப்படும் கொலையாய் இவன் கொல்லப்
8 படுகிறானோ? தேவரீர் ஜனத்தைத் துரத்தி
விடுகையில் மட்டாய் அதனோடே வழக்காடு
கிறீர்; கொண்டல் காற்றடிக்கிற நாளிலே
[1]அவர் தம்முடைய கடுங்காற்றினால் அதை
9 விலக்கிவிடுகிறார். ஆகையால், அதினால் யாக்
கோபின் [2]அக்கிரமம் நிக்கிரகம் பண்ணப்ப
டும்; தோப்புவிக்கிரகங்களும் சிலைகளும் இனி
நிற்காதபடி அவர்கள் பலிபீடங்களின் கல்லு
களையெல்லாம் நொறுக்கப்பட்ட சுண்ணாம்பு
கல்லுகளாக்கிவிடும்போது, அவர்களுடைய
பாவத்தை அவர் அகற்றுவாரென்பதே அதி
10 னால் உண்டாகும் பலன். அரணான நகரம்
அவாந்தரையாகும், அந்த வாசஸ்தலம் தள்
ளுண்டு வனாந்தரத்தைப்போல விட்டுவிடப்
பட்டதாயிருக்கும்; கன்றுக்குட்டிகள் அங்கே
மேய்ந்து, அங்கே படுத்துக்கொண்டு, அதின்
11 தழைகளைத் தின்னும். அதின் கொப்புகள்
உலரும்போது ஒடிந்துபோம்; ஸ்திரீகள் வந்து
அவைகளைக் கொளுத்திவிடுவார்கள்; அது
உணர்வுள்ள ஜனமல்ல; [3]ஆகையால் அதை
உண்டாக்கினவர் அதற்கு இரங்காமலும்,
அதை உருவாக்கினவர் அதற்குக் கிருபை
செய்யாமலும் இருப்பார்.
12 அக்காலத்திலே, **கர்த்தர்** ஆற்றங்கரையின்
விளைவுதொடங்கி எகிப்தின் நதிமட்டும் போ
ரடிப்பார்; இஸ்ரவேல் புத்திரரே, [4]நீங்கள் ஒவ்
13 வொருவராய்ச் சேர்க்கப்படுவீர்கள். அக்கா
லத்திலே பெரிய எக்காளம் ஊதப்படும்; [5]அப்
பொழுது, அசீரியாதேசத்திலே சிதறடிக்கப்
பட்டவர்களும், எகிப்து தேசத்திலே துரத்தி
விடப்பட்டவர்களும் வந்து, எருசலேமிலுள்ள
பரிசுத்த பர்வதத்திலே **கர்த்தரைப்** பணிந்து
கொள்ளுவார்கள்.

**28** எப்பிராயீமுடைய வெறியரின் பெரு
மையான கிரீடத்துக்கு ஐயோ, மதுபானத்
தால் மயக்கமடைந்தவர்களின் செழிப்பான
பள்ளத்தாக்குடைய கொடுமுடியின்மேலுள்ள
அலங்கார ஜோடிப்பு வாடிப்போகும் புஷ்
2 பமே! இதோ, திராணியும் வல்லமையுமு
டைய ஒருவன் ஆண்டவரிடத்தில் இருக்கி
றான்; [6]அவன் கல்மழைபோலவும், சங்காரப்
புசல்போலவும், புரண்டுவருகிற பெருவெள்
ளம்போலவும் வந்து, கையினாலே அதைத்
3 தரையில் தள்ளிவிடுவான். எப்பிராயீமுடைய
வெறியரின் பெருமையான கிரீடம் காலால்
4 மிதித்துப் போடப்படும். செழிப்பான பள்
ளத்தாக்குடைய கொடுமுடியின் மேலுள்ள
அலங்கார ஜோடிப்பாகிய வாடிய புஷ்பம்,
பருவகாலத்துக்குமுன் பழுத்ததும், காண்கிற
வன் பார்த்து, அது தன் கையில் இருக்கும்
போதே விழுங்குகிறதுமான முதல் கனி
5 யைப்போல இருக்கும். அக்காலத்திலே
சேனைகளின் **கர்த்தர்** தமது ஜனத்தில் மீதியா
னவர்களுக்கு மகிமையான கிரீடமாகவும்,
6 அலங்காரமான முடியாகவும், நியாயம் விசா
ரிக்க உட்காருகிறவனுக்கு நியாயத்தின் ஆவி

[1] 57. 16
[2] எபி. 12. 6
[3] உபா. 32. 28. ஓசி. 4. 6
[4] மேர். 6. 37
[5] மத். 25. 31. 1 தெச. 4. 16. வெளி. 11. 15
[6] எசே. 13. 11
[7] 56. 10–12. நீதி. 20. 1. ஓசி. 4. 11
[8] எரே. 6. 10
[9] 1 கொ. 14. 21
[10] ஓசி. 6. 5; 8. 12
[11] பிர. 8. 8. ஆமோ. 2. 4
[12] ஆதி. 40. 24. சங். 118. 22. மத். 21. 42. அப். 4. 11. ரோ. 9. 33; 10. 11. எபே. 2. 20. 1 பே. 2. 6–8
[13] மல். 4. 3

யாகவும், யுத்தத்தை அதின் வாசல்மட்டும்
திருப்புகிறவர்களின் பராக்கிரமமாகவும் இருப்
பார். ஆனாலும் இவர்களும் திராட்சரசத்தால் 7
மயங்கி, மதுபானத்தால் வழிதப்பிப்போகி
றார்கள், [7]ஆசாரியனும் தீர்க்கதரிசியும் மதுபா
னத்தால் மதிமயங்கி, திராட்சரசத்தால் விழுங்
கப்பட்டு, சாராயத்தினால் வழிதப்பி, தீர்க்க
தரிசனத்தில் மோசம்போய், நியாயந்தீர்க்கிற
தில் இடறுகிறார்கள். போஜனபீடங்களெல் 8
லாம் வாந்தியினாலும் அசுத்தத்தினாலும் நிறைந்
திருக்கிறது; சுத்தமான இடமில்லை. அவர் 9
யாருக்கு அறிவைப் போதிப்பார்? [8]யாருக்கு
உபதேசத்தை உணர்த்துவார்? பால் மறந்தவர்
களுக்கும் முலைமறக்கப் பண்ணப்பட்டவர்க
ளுக்குமே. கற்பனையின்மேல் கற்பனையும், 10
கற்பனையின்மேல் கற்பனையும், பிரமாணத்
தின்மேல் பிரமாணமும், பிரமாணத்தின்மேல்
பிரமாணமும், இங்கே கொஞ்சமும் அங்கே
கொஞ்சமுமாம் என்கிறார்கள். பரியாச உதடு 11
களினாலும் அந்நிய பாஷையினாலும் [9]இந்த
ஜனத்தோடே பேசுவார். இதுவே நீங்கள் 12
இளைத்தவனை இளைப்பாறப் பண்ணத்தக்க
இளைப்பாறுதல்; இதுவே ஆறுதல் என்று அ
வர்களோடே அவர் சொன்னாலும் கேட்கமாட்
டோம் என்கிறார்கள். ஆதலால் அவர்கள் 13
போய், பின்னிட்டு விழுந்து, நொறுங்கும்
படிக்கும், சிக்குண்டு பிடிபடும்படிக்கும், **கர்த்**
**தருடைய** வார்த்தை அவர்களுக்குக் கற்பனை
யின்மேல் கற்பனையும், [10]கற்பனையின்மேல்
கற்பனையும், பிரமாணத்தின்மேல் பிரமாண
மும், பிரமாணத்தின்மேல் பிரமாணமும், இங்
கே கொஞ்சமும் அங்கே கொஞ்சமுமாக
இருக்கும்.
ஆகையால் எருசலேமிலுள்ள இந்த ஜனத் 14
தை ஆளுகிற நிந்தனைக்காரரே, **கர்த்தருடைய**
வார்த்தையைக் கேளுங்கள். நீங்கள்: மரணத் 15
தோடே உடன்படிக்கையும், பாதாளத்தோடே
ஒப்பந்தமும் பண்ணினோம்; வாதை பெரு
வெள்ளமாய்ப் புரண்டுவந்தாலும் எங்களை
அணுகாது; [11]நாங்கள் பொய்யை எங்களுக்கு
அடைக்கலமாக்கி, மாயையின் மறைவிலே
வந்து அடைந்தோம் என்கிறீர்களே. ஆத 16
லால் கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதா
வது: இதோ, அஸ்திபாரமாக ஒரு கல்லை
நான் சீயோனிலே வைக்கிறேன்; [12]அது பரீட்
சிக்கப்பட்டதும், விலையேறப்பெற்றதும்,
திட அஸ்திபாரமுள்ளதுமான மூலைக்கல்லா
யிருக்கும், விசுவாசிக்கிறவன் பதறான். நான் 17
நியாயத்தை நூலும், நீதியைத் தூக்குநூலுமாக
வைப்பேன்; பொய் என்னும் அடைக்கலத்
தைக் கல்மழை அழித்துவிடும்; மறைவிடத்தை
ஜலப்பிரவாகம் அடித்துக்கொண்டுபோகும்.
நீங்கள் மரணத்தோடு செய்த உடன்படிக்கை 18
விருதாவாகி, நீங்கள் பாதாளத்தோடு செய்த
ஒப்பந்தம் நிற்காதேபோம்; [13]வாதை புரண்டு
வரும்போது அதின்கீழ் மிதிக்கப்படுவீர்கள்.
அது புரண்டுவந்தமாத்திரத்தில் உங்களை அடித் 19

துக்கொண்டுபோம்; அது நாள்தோறும் இரவும்
பகலும் புரண்டுவரும்; அதைப்பற்றிப் பிறக்
குஞ் செய்தியைக் கேட்பதும் சஞ்சலத்தை
20 உண்டாக்கும். கால் நீட்டப் படுக்கையின்
நீளம் போதாது; மூடிக்கொள்ளப் போர்வை
21 யின் அகலமும் போதாது. **கர்த்தர்** தமது கிரி
யையாகிய அபூர்வமான கிரியையைச் செய்ய
வும், [1]தமது வேலையாகிய அபூர்வமான வேலே
யை நிறைவேற்றவும், அவர் பொராத்சீம் மலே
யிலே எழும்பினதுபோல எழும்பி, [2]கிபியோ
னின் பள்ளத்தாக்கில் கோபங்கொண்டது
22 போல கோபங்கொள்வார். இப்பொழுதும்
உங்கள் கட்டுகள் பலத்துப்போகாதபடிக்குப்
பரியாசம் பண்ணுதிருங்கள்; தேசம் அனைத்
தின்மேலும் நிர்ணயிக்கப்பட்ட சங்காரத்தின்
செய்தியைச் [3]சேனைகளின் கர்த்தராகிய ஆண்
டவராலே கேள்விப்பட்டிருக்கிறேன்.
23 செவிகொடுத்து என் சத்தத்தைக் கேளுங்
கள்; நான் சொல்வதைக் கவனித்துக் கேளுங்
24 கள். உழுகிறவன் விதைக்கிறதற்காக நாள்தோ
றும் உழுகிறதுண்டோ? தன் நிலத்தைக்
கொத்தி நாள்தோறும் பரம்படிக்கிறது உண்
25 டோ? அவன் அதை மேலாக நிரவினபின்பு,
அததற்கேற்ற இடத்தில் உளுந்தைத்தெளித்து,
சீரகத்தைத் தூவி, முதல்தரமான கோதுமை
யையும் தெரிந்துகொண்ட வால்கோதுமையை
யும் கம்பையும் விதைக்கிறான் அல்லவோ?
26 அவனுடைய தேவன் அவனை நன்றாய்ப் போ
27 தித்து, அவனை உணர்த்துகிறார். உளுந்து
தூலத்தாலே போரடிக்கப்படுகிறதில்லை; சீர
கத்தின்மேல் வண்டிலின் உருளைச் சுற்ற
விடப்படுகிறதுமில்லை; உளுந்து கோலினு
லும், சீரகம் மிலாற்றினுலும் அடிக்கப்படும்.
28 அப்பத்துக்குத் தானியம் இடிக்கப்படும்;
இடைவிடாமல் அவன் அதைப் போரடிக்கிற
தில்லை; அவன் தன் வண்டிலின் உருளையால்
அதை நசுக்குகிறதுமில்லை, தன் குதிரைக
29 ளால் அதை நொறுக்குகிறதுமில்லை. இது
வும் சேனைகளின் **கர்த்தராலே** உண்டா
கிறது; [4]அவர் ஆலோசனையில் ஆச்சரியமா
னவர், செயலில் மகத்துவமானவர்.

**29** தாவீதுவாசம்பண்ணின நகரமாகிய*அரி
யேலே, அரியேலே, ஐயோ! வருஷாவரு
ஷம் பண்டிகைகளை அநுசரித்துவந்தாலும்,
2 அரியேலுக்கு இடுக்கம் உண்டாக்குவேன்;
அப்பொழுது துக்கமும்சலிப்பும் உண்டாகும்;
அது எனக்கு அரியேலாகத்தான் இருக்கும்.
3 உன்னைச் சூழப் பாளயமிறங்கி, உன்னைத்
தெற்றுகளால் முற்றிக்கைபோட்டு, [5]உனக்கு
விரோதமாகக் கொத்தளங்களை எடுப்பிப்பேன்.
4 அப்பொழுது நீ தாழ்த்தப்பட்டுத் தரையிலிரு
ந்து பேசுவாய்; உன் பேச்சுப் பணிந்ததாய்
மண்ணிலிருந்து புறப்பட்டு, உன் சத்தம்
அஞ்சனம் பார்க்கிறவனுடைய சத்தத்தைப்
போல் தரையிலிருந்து முணுமுணுத்து, உன்
வாக்கு மண்ணிலிருந்து கசுகுசென்று உரைக்
5 கும். உன்மேல் வருகிற அந்நியரின் திரள்

1 புல. 3. 33
2 யோசு. 10. 10. ஓ. 2 சாமு. 5. 20
3 தானி. 9. 27
4 சங். 92. 5. எரே. 32. 19. ரோ. 11. 33
* தேவசிங்கம்=தேவபீடம். 2 சாமு. 5. 9. எசே. 43. 15
5 2 இரா. 25. 1. ஓ
6 யோபு 21. 18. 1 தெச. 5. 3
7 30. 30
8 37. 36
9 சங். 78. 20
10 51. 21
11 1 சாமு. 9. 9. ரோ. 11. 8
12 தானி. 12. 4, 9. வெளி. 5. 1-9
13 எசே. 33. 31. மத். 15. 6-9
14 கொலோ. 2. 32
15 எரே. 49. 7. ஆப. 1. 5. ஒப. 8. 1 கொ. 1. 19
16 30. 1. சங். 94. 7; 139. 7. ஓ

பொடித்தூளத்தனையாகவும், பலவந்தரின் திர
ள் பறக்கும் பதர்களத்தனையாகவும் இருக்கும்;
[6]அது திடீரென்று சடிதியாய்ச் சம்பவிக்கும்.
இடிகளினுலும், பூமி அதிர்ச்சியினுலும், பெ 6
ரிய இரைச்சலினுலும், பெருங்காற்றினுலும்,
புசலினுலும், பட்சிக்கிற அக்கினிஜுவாலையி
னுலும், [7]சேனைகளின் **கர்த்தராலே** விசாரிக்
கப்படுவாய். அரியேலின்மேல் யுத்தம்பண்ணு 7
கிற திரளான சகல ஜாதிகளும், [8]அதின்மே
லும் அதின் அரண்மேலும் யுத்தம்பண்ணி,
அதற்கு இடுக்கண்செய்கிற அனைவரும், இராக்
காலத் தரிசனமாகிய சொப்பனத்தைக் காண்
கிறவர்களுக்கு ஒப்பாயிருப்பார்கள். அது, 8
பசியாயிருக்கிறவன் தான் புசிக்கிறதாகச்சொப்
பனம் கண்டும், விழிக்கும்போது அவன் வெறு
மையாயிருக்கிறதுபோலவும், தாகமாயிருக்கிற
வன், தான் குடிக்கிறதாகச் சொப்பனம் கண்
டும் [9]விழிக்கும்போது அவன் விடாய்த்து தவ
னத்தோடிருக்கிறதுபோலவும் சீயோன் மலே
க்கு விரோதமாக யுத்தம்பண்ணுகிற திரளான
சகல ஜாதிகளும் இருக்கும்.
தரித்து நின்று திகையுங்கள்; பிரமித்துக் கூப் 9
பிடுங்கள்; வெறித்திருக்கிறார்கள், திராட்ச
ரசத்தினுல் அல்ல; [10]தள்ளாடுகிறார்கள், மது
பானத்தினுல் அல்ல. **கர்த்தர்** உங்கள்மேல் 10
கனநித்திரையின் ஆவியை வரப்பண்ணி, உங்
கள் கண்களை அடைத்து, [11]ஞானதிருஷ்டிக்
காரராகிய உங்கள் தீர்க்கதரிசிகளுக்கும் தலே
வர்களுக்கும் முக்காடு போட்டார். ஆதலால் 11
தரிசனமெல்லாம் உங்களுக்கு முத்திரிக்கப்
பட்ட புஸ்தகத்தின் வசனங்களைப்போலிருக்
கும்; [12]வாசிக்க அறிந்திருக்கிற ஒருவனுக்கு
அதைக் கொடுத்து: நீ இதை வாசி என்றால்,
அவன்: இது என்னுல் கூடாது, இது முத்
திரித்திருக்கிறது என்பான். அல்லது வாசிக் 12
கத் தெரியாதவனிடத்தில் புஸ்தகத்தைக் கொ
டுத்து: நீ இதை வாசி என்றால், அவன்: என
க்கு வாசிக்கத் தெரியாது என்பான்.
இந்த ஜனங்கள் தங்கள் வாயினுல் என்னி 13
டத்தில் சேர்ந்து, [13]தங்கள் உதடுகளினுல் என்
னைக் கனம்பண்ணுகிறார்கள்; அவர்கள் இரு
தயமோ எனக்குத் தூரமாய் விலகியிருக்கிறது;
அவர்கள் எனக்குப் பயப்படுகிற பயம் மனுஷ
ராலே போதிக்கப்பட்ட [14]கற்பனையாயிருக்கி
றது. ஆதலால் இதோ, நான் அற்புதமும் 14
ஆச்சரியமுமான பிரகாரமாக இந்த ஜனங்க
ளுக்குள்ளே ஒரு அதிசயத்தைச் செய்வேன்;
[15]அவர்களுடைய ஞானிகளின் ஞானம் கெட்
டு, அவர்களுடைய விவேகிகளின் விவேகம்
மறைந்துபோகும் என்று ஆண்டவர் சொல்
லுகிறார்.
தங்கள் ஆலோசனையைக் **கர்த்தருக்கு** 15
மறைக்கும்படிக்கு மறைவிடங்களில் ஒளித்து,
தங்கள் கிரியைகளை அந்தகாரத்தில் நடப்
பித்து: [16]நம்மைக் காண்கிறவர் யார்? நம்மை
அறிகிறவர் யார்? என்கிறவர்களுக்கு ஐயோ!
ஆ, நீங்கள் எவ்வளவு மாறுபாடுள்ளவர்கள்! 16

குயவன் களிமண்ணுக்குச் சமானமாக எண்
ணப்படலாமோ? உண்டாக்கப்பட்டது தன்னை
உண்டாக்கினவனைக்குறித்து: [1]அவர் என்னை
உண்டாக்கினதில்லை என்றும்; உருவாக்கப்
பட்டது தன்னை உருவாக்கினவனைக்குறித்து:
அவருக்குப் புத்தியில்லையென்றும் சொல்லத்
17 தகுமோ? இன்னும் கொஞ்சக்காலத்திலல்
லவோ லீபனோன் செழிப்பான வயல் வெளி
யாக மாறும்; [2]செழிப்பான வயல் வெளி
18 காடாக எண்ணப்படும். அக்காலத்திலே செவி
டர் புஸ்தகத்தின் வசனங்களைக் கேட்பார்கள்;
[3]குருடரின் கண்கள் இருளுக்கும் அந்தகாரத்
19 திக்கும் நீங்கலாகிப் பார்வையடையும். சிறு
மையானவர்கள் **கர்த்தருக்குள்** மிகவும் மகிழ்
ந்து, [4]மனுஷரில் எளிமையானவர்கள் இஸ்ர
வேலின் பரிசுத்தருக்குள் களிகூருவார்கள்.
20 கொடியன் அற்றுப்போவான், [5]சக்கந்தக்கா
21 ரன் இல்லாமற்போவான். ஒரு வார்த்தையி
னிமித்தம் மனுஷனைக் குற்றப்படுத்தி, நியாய
வாசலில் தங்களைக் கடிந்துகொள்ளுகிறவனுக்
குக் கண்ணிவைத்து, [6]நீதிமானை நிர்நிமித்த
மாய்த் தூரத்தி, [7]இப்படி அக்கிரமஞ்செய்ய
வகைதேடுகிற யாவரும் சங்கரிக்கப்படுவார்கள்.
22 ஆகையால், [8]ஆபிரகாமை மீட்டுக்கொண்ட
**கர்த்தர்** யாக்கோபின் வம்சத்தைக்குறித்து:
இனி யாக்கோபு வெட்கப்படுவதில்லை; இனி
23 அவன் முகம் செத்துப்போவதுமில்லை. அவன்
என் கரங்களின் செயலாகிய [9]தன் பிள்ளை
களை தன் நடுவிலே காணும்போது, என் நாமத்
24 தைப் பரிசுத்தப்படுத்துவார்கள்; யாக்கோபின்
பரிசுத்தரை அவர்கள் பரிசுத்தப்படுத்தி, இஸ்ர
25 வேலின் தேவனுக்குப் பயப்படுவார்கள். வழு
விப்போகிற மனதை உடையவர்கள் புத்தி
மான்களாகி, [10]முறுமுறுக்கிறவர்கள் உபதே
சம் கற்றுக்கொள்ளுவார்கள்.

**30** பாவத்தோடே பாவத்தைக் கூட்டும்படி,
[11]என்னை அல்லாமல் ஆலோசனைபண்ணி,
என் ஆவியை அல்லாமல் தங்களை மூடிக்
2 கொள்ளப் பார்க்கிறவர்களும், என் வாக்
கைக் கேளாமல் பார்வோனின் பெலத்தி
னாலே பெலக்கவும், [12]எகிப்தின் நிழலிலே
ஒதுங்கவும் வேண்டும் என்று எகிப்துக்குப்
போகிறவர்களுமாகிய முரட்டாட்டமுள்ள
புத்திரருக்கு ஐயோ! என்று **கர்த்தர்** சொல்
3 லுகிறார். பார்வோனுடைய பெலன் உங்க
ளுக்கு வெட்கமாகவும், [13]எகிப்தினுடைய நிழ
லொதுக்கு உங்களுக்கு இலச்சையாகவும்
4 இருக்கும். அவர்கள் பிரபுக்கள் சோவானி
லே போய், அவர்கள் ஸ்தானாபதிகள் ஆனே
5 ஸ்மட்டும் சேருகிறார்கள். ஆனாலும் தங்கள்
சகாயத்துக்கும் பிரயோஜனத்துக்கும் உத
வாமல், [14]வெட்கத்துக்கும் நிந்தைக்குமே
உதவும் ஜனத்தினாலே யாவரும் வெட்கப்படு
வார்கள்.
6 தெற்கே போகிற மிருகஜீவன்களின் பா
ரம், [15]துஷ்டசிங்கமும், கிழச்சிங்கமும், விரி
யனும், பறக்கிற கொள்ளிவாய்ச்சர்ப்பமும்
வருகிறதும், நெருக்கமும் இடுக்கமும் அடை
விக்கிறதுமான தேசத்துக்கு, அவர்கள் கழு
தைமறிகளுடைய முதுகின்மேல் தங்கள் ஆஸ்
திகளையும், ஒட்டகங்களுடைய முதுகின்மேல்
தங்கள் பொக்கிஷங்களையும், தங்களுக்கு உத
வாத ஜனத்தண்டைக்கு ஏற்றிக்கொண்டு போ
கிறார்கள். எகிப்தியர் [16]சகாயம் பண்ணுவது 7
வியர்த்தமும் வீணுமாம்; ஆகையால், [17]சும்மாயி
ருப்பதே அவர்களுக்குப் பெலன் என்று அதற்
காகக் கூறுகிறேன். இப்பொழுது நீ போய், 8
இது பிற்காலத்துக்கு என்றென்றைக்கும்
இருக்கும்படி, [18]இதை அவர்களுக்கு முன்
பாக ஒரு பலகையில் எழுதி, ஒரு புஸ்தகத்
தில் வரை. இவர்கள் கலகமுள்ள ஜனங்க 9
ளும், [19]பொய்பேசுகிற பிள்ளைகளும், **கர்த்தரு
டைய** வேதத்தைக் கேட்க மனதில்லாத புத்தி
ரருமாயிருக்கிறார்கள். இவர்கள் தரிசனக் 10
காரரை நோக்கி: [20]தரிசனங்காணவேண்டாம்
என்றும், ஞானதிருஷ்டிக்காரரை நோக்கி:
யதார்த்தமாய் எங்களுக்குத் தரிசனஞ்சொல்
லாமல், எங்களுக்கு இதமான சொற்களை
உரைத்து, மாயமானவைகளைத் திருஷ்டியுங்
கள் என்றும், நீங்கள் வழியைவிட்டு, பாதை 11
யினின்று விலகி, இஸ்ரவேலின் பரிசுத்தரை
எங்கள் முன்பாக இராமல் ஓயப்பண்ணுங்
கள் என்றும் சொல்லுகிறார்கள். நீங்கள் இந்த 12
வார்த்தையை வெறுத்து, இடுக்கமும் தாறு
மாறும் செய்கிறதை நம்பி, அதைச் சார்ந்து
கொள்ளுகிறபடியால், இந்த அக்கிரமம் உங் 13
களுக்கு உயர்ந்த சுவரில் விழப் பிதுங்கிநிற்
கிறதும், [21]திடீரென்று சடிதியாய் இடியப்
போகிறதுமான வெடிப்பைப்போல இருக்
கும் என்று இஸ்ரவேலின் பரிசுத்தர் சொல்லு
கிறார். அவர்களை அவர் தப்பவிடாமல் உடை 14
யும்படி குயக்கலத்தை நொறுக்குவதுபோல
[22]அவர்களை நொறுக்குவார்; அடுப்பிலே நெ
ருப்பு எடுக்கிறதற்கும், குளத்திலே தண்ணீர்
மொள்ளுகிறதற்கும் நொறுங்கின துண்டுக
ளில், ஒரு ஓடாகிலும் அகப்படாதேபோம்.
நீங்கள் மனந்திரும்பி அமர்ந்திருந்தால் ரட் 15
சிக்கப்படுவீர்கள்; [23]அமரிக்கையும் நம்பிக்கை
யுமே உங்கள் பெலனாயிருக்கும் என்று இஸ்ர
வேலின் பரிசுத்தராயிருக்கிற **கர்த்தராகிய**
தேவன் சொல்லுகிறார்; நீங்களோ அப்படிச்
செய்ய மனதாயிராமல்; அப்படியல்ல, குதி 16
ரைகளின்மேல் ஏறி ஓடிப்போவோம் என்
கிறீர்கள்; அப்படியே ஓடிப்போவீர்கள், வேக
மான வாகனங்களின்மேல் ஏறிப்போவோம்
என்கிறீர்கள்; அப்படியே உங்களைத் துரத்து
கிறவர்கள் வேகமாய்த் துரத்துவார்கள். நீங் 17
கள் மலையுச்சியின்மேல் ஒரு கம்பத்தைப்
போலவும், மேட்டின்மேல் ஒரு கொடியைப்
போலவும் மீந்திருக்குமட்டாக, [24]ஒருவன்
பயமுறுத்த ஆயிரம்பேரும், ஐந்துபேர் பய
முறுத்த நீங்கள் அனைவரும் ஓடிப்போவீர்
கள். ஆனாலும் உங்களுக்கு இரங்கும்படி 18
**கர்த்தர்** காத்திருப்பார், உங்கள்மேல் மனதுரு

1 45. 9. ரோ. 9. 20
2 32. 15. மத். 19. 30
3 35. 5. லூ. 7. 22
4 61. 1. யாக். 2. 5
5 28. 14, 22. 51. 13. வெளி. 12. 10
6 ஆமோ. 5. 10, 12
7 எரே. 20. 10. மீகா 2. 1
8 யோசு. 24. 3
9 60. 21. எபே. 2. 10
10 28. 7. 1 கொ. 6. 11
11 29. 15. உபா. 29. 19. ரோ. 2. 5
12 31. 1. எண். 27. 21. எரே. 21. 8: 42. 2, 20
13 20. 5. எரே. 37. 5, 7
14 எரே. 2. 36
15 57. 9. ஓசி. 8. 9: 12. 1
16 எரே. 37. 1
17 15. ஏசா. 7. 4
18 ஆப. 2. 2
19 உபா. 32. 20
20 1 இரா. 22. 13. எரே. 11. 21. ஆமோ. 2. 12: 7. 13. மீகா 2. 6, 11
21 சங். 62. 8, 10
22 சங். 2. 9. எரே. 19. 11
23 7. ஏசா: 7. 4. மத். 23. 37
24 லேவி. 26. 8. உபா. 32. 30. யோசு. 23. 10

கும்படி எழுந்திருப்பார்; **கர்த்தர்** நீதிசெய்
கிற தேவன்; [1]அவருக்குக் காத்திருக்கிற
அனைவரும் பாக்கியவான்கள்.
19 சீயோனைச் சேர்ந்த ஜனங்கள் எருசலே
மில் வாசமாயிருப்பார்கள்; [2]இனி நீ அழுது
கொண்டிராய்; உன் கூப்பிடுதலின் சத்தத்
துக்கு அவர் உருக்கமாய் இரங்கி, அதைக்
கேட்டவுடனே உனக்கு மறுஉத்தரவு அருளு
20 வார். ஆண்டவர் உங்களுக்குத் துன்பத்தின்
அப்பத்தையும், உபத்திரவத்தின் தண்ணீரை
யும் கொடுத்தாலும், [3]உன் போதகர்கள் இனி
ஒருபோதும் மறைந்திருக்கமாட்டார்கள்;
உன் கண்கள் உன் போதகர்களைக் காணும்.
21 நீங்கள் வலதுபுறமாய்ச் சாயும்போதும், இடது
புறமாய்ச் சாயும்போதும்: [4]வழி இதுவே,
இதிலே நடவுங்கள் என்று உங்களுக்குப்
பின்னாலே சொல்லும் வார்த்தையை உங்கள்
22 காதுகள் கேட்கும். உன் சுரூபங்களை மூடிய
வெள்ளித்தகட்டையும், உன் விக்கிரகங்க
ளின் பொன் ஆடையாபரணத்தையும் தீட்
டாக எண்ணி, [5]அவைகளைத் தீட்டுப்பட்ட
வஸ்திரம்போல எறிந்துவிட்டு, அதைச் சீ!
23 போ என்பாய். அப்பொழுது நீ நிலத்தில்
விதைக்கும் உன் விதைக்கு அவர் மழையை
யும், [6]நிலத்தின் பலனாகிய ஆகாரத்தையும்
தருவார்; அது கொழுமையும் புஷ்டியுமாய்
இருக்கும்; அக்காலத்திலே உன் ஆடுமாடு
கள் விஸ்தாரமான மேய்ச்சலுள்ள ஸ்தலத்
24 திலே மேயும்; நிலத்தை உழுகிற எருது
களும் கழுதைமறிகளும், முறத்தினாலும்
தூற்றுக்கூடையினாலும் தூற்றப்பட்ட ருசி
25 யுள்ள கப்பிகளைத் தின்னும். கோபுரங்கள்
விழுகிற மகா சங்காரத்தின் நாளிலே, உயர
மான சகல மலைகளின்மேலும், உயரமான
சகல மேடுகளின்மேலும் ஆறுகளும் வாய்க்
26 கால்களும் உண்டாகும். **கர்த்தர்** தமது ஜனத்
தின் முறிவைக் கட்டி, அதின் அடிக்காயத்
தைக் குணமாக்கும் நாளிலே, [7]சந்திரனுடைய
வெளிச்சம் சூரியனுடைய வெளிச்சத்தைப்
போலவும், சூரியனுடைய வெளிச்சம் ஏழத்
தனையாய் ஏழுபகலின் வெளிச்சத்தைப்போ
லவும் இருக்கும்.
27 இதோ, **கர்த்தருடைய** நாமம் தூரத்திலி
ருந்து வரும்; அவருடைய கோபம் எரிகிற
தும் கனன்று புகைகிறதுமாயிருக்கும்; அவ
ருடைய உதடுகள் சினத்தால் நிறைந்து, [8]அவ
ருடைய நாவு பட்சிக்கிற அக்கினிபோல
28 இருக்கும். நாசம் என்னும் சல்லடையிலே
ஜாதிகளை அரிக்கும்படிக்கு அவர் ஊதும்
சுவாசம் கழுத்துமட்டும் எட்டுகிற ஆற்று வெள்
ளத்தைப்போலவும், [9]ஜனங்களுடைய வாயி
லே போட்டு அலைக்கழிக்கிற கடிவாளத்தைப்
29 போலவும் இருக்கும். பண்டிகை ஆசரிக்கப்
படும் இராத்திரியிலே பாடுகிறதுபோலப் பாடு
வீர்கள்; [10]**கர்த்தருடைய** பர்வதமாகிய இஸ்ர
வேலின் கன்மலையண்டைக்குப் போக நாக
சுரத்தோடே நடந்துவருகிறபோது மகிழுகிற

1 சங். 34. 8. நீதி. 16. 20. எரே. 17. 7
2 65. 9, 24
3 சங். 74. 9; 80. 5. ஆமோ. 8. 11, 12
4 யோசு. 1. 7. சங். 32. 8
5 2 நாளா. 31. 1. ஓசி. 14. 8
6 மத். 6. 33. 1 தீமோ. 4. 8
7 60. 19, 20
8 செப். 3. 8
9 37. 29. தா. 22. 31
10 உபா. 32. 4. சங். 42. 3, 4
11 எரே. 7. 31
12 எசே. 17. 15. ஓசி. 7. 7
13 சங். 146. 3-5
14 ஓசி. 11. 10
15 உபா. 32. 11
16 எரே. 3. 12. ஓசி. 9. 9
17 2. 20. 30. 22. 1 இரா. 12. 30
18 37. 36. 2 இரா. 19. 35, 37

துபோல மகிழுவீர்கள். **கர்த்தர்** மகத்துவ 30
மானவர்; தமது சத்தத்தைக் கேட்கப்பண்ணி,
உக்கிர கோபத்தினாலும், பட்சிக்கிற அக்கினி
ஜுவாலையினாலும், இடி பெருவெள்ளம் கல்
மழையினாலும், தமது புயத்தின் வல்லமை
யைக் காண்பிப்பார். அப்பொழுது தண்டா 31
யுதத்தினால் அடித்த அசீரியன் **கர்த்தருடைய**
சத்தத்தினாலே நொறுங்குண்டு போவான்.
**கர்த்தர்** அவன்மேல் சுமத்தும் ஆக்கினைத்தண் 32
டம் செல்லுமிடமெங்கும், மேளங்களும் வீணை
களும் அதினுடன் போகும்; கொடிய யுத்தங்
களினால் அவனை எதிர்த்து யுத்தஞ்செய்வார்.
தோப்பேத் ஏற்கனவே ஏற்படுத்தப்பட்டது; 33
[11]ராஜாவுக்கு அது ஆயத்தப்படுத்தப்பட்டது;
அதை ஆழமும் விசாலமுமாக்கினார்; வேகும்
படி அக்கினியும் மிகுந்த விறகுமுண்டு; **கர்த்**
**தரின்** சுவாசம் கெந்தகத்தீயைப்போல அதைக்
கொளுத்தும்.

சகாயமடையும்படி இஸ்ரவேலுடைய பரி **31**
சுத்தரை நோக்காமலும், [12]**கர்த்தரைத்** தேடா
மலும், எகிப்துக்குப் போய், குதிரைகள்மேல்
நம்பிக்கை வைத்து, இரதங்கள் அநேகமா
யிருப்பதினால் அவைகளை நாடி, குதிரைவீரர்
மகா பெலசாலிகளாயிருப்பதினால் அவர்களை
நம்பிக்கொண்டிருக்கிறவர்களுக்கு ஐயோ!
அவரும் ஞானமுள்ளவர்; அவர் தம்முடைய 2
வார்த்தைகளை மறுக்காமல், தீங்கு வரப்பண்
ணி, தீமைசெய்கிறவர்களின் வீட்டுக்கும்,
அக்கிரமக்காரருக்குச் சகாயஞ் செய்கிறவர்க
ளுக்கும் விரோதமாக எழும்புவார். எகிப்தி 3
யர் தெய்வம் அல்ல, மனுஷர்தானே; [13]அவர்
களுடைய குதிரைகள் ஆவியல்ல, மாம்சந்
தானே; **கர்த்தர்** தமது கரத்தை நீட்டுவார்,
அப்பொழுது சகாயம் செய்கிறவனும் இடறி,
சகாயம் பெறுகிறவனும் விழுந்து, அனைவ
ரும் ஏகமாய் அழிந்துபோவார்கள். **கர்த்தர்** 4
என்னுடனே சொன்னது: சிங்கமும் பால
சிங்கமும் தங்கள் இரையைப் பிடித்திருக்கும்
போது கெர்ச்சித்து, [14]தங்களுக்கு விரோத
மாய்க் கூப்பிடுகிற திரளான மேய்ப்பரின்
சத்தத்தினாலே கலங்காமலும், அவர்கள் அம
ளியினாலே பணியாமலும் இருக்கிறதுபோல,
சேனைகளின் **கர்த்தர்** சீயோன் மலைக்காக
வும், அதின் மேட்டுக்காகவும் யுத்தம்பண்ண
இறங்குவார். பறந்து காக்கிற பட்சிகளைப் 5
போல, [15]சேனைகளின் **கர்த்தர்** எருசலேமின்
மேல் ஆதரவாக இருப்பார்; அவர் அதைக்
காத்துத் தப்பப்பண்ணுவார்; அவர் கடந்து
வந்து அதை விடுவிப்பார். இஸ்ரவேல் புத் 6
திரரே, [16]நீங்கள் முற்றிலும் விட்டு விலகின
வரிடத்தில் திரும்புங்கள். உங்களுக்குப் பாவ 7
மாக உங்கள் கைகள் செய்திருந்த வெள்ளி
விக்கிரகங்களையும், [17]பொன் விக்கிரகங்க
ளையும் உங்களில் ஒவ்வொருவரும் அக்கா
லத்திலே வெறுத்துவிடுவீர்கள். அப்பொ 8
ழுது வீரனுடைய பட்டயம் அல்லாத பட்ட
யத்தாலே அசீரியன் விழுவான்; [18]நீசனு

டைய பட்டயம் அல்லாத பட்டயமே அவ
னைப் பட்சிக்கும்; அவன் பட்டயத்துக்குத்
தப்ப ஓடுவான்; அவன் வாலிபர் கலைந்துபோ
9 வார்கள். அவனுடைய கன்மலை பயத்தினால்
ஒழிந்துபோம், அவர்களுடைய பிரபுக்கள்
கொடியைக் கண்டு கலங்குவார்கள் என்ப
தை, [1]சீயோனில் நெருப்பையும் எருசலே
மில் சூளையையுமுடைய **கர்த்தர்** சொல்லு
கிறார்.

**32** இதோ, [2]ஒரு ராஜா நீதியாக அரசாளு
வார்; பிரபுக்களும் நியாயமாகத் துரைத்தனம்
2 பண்ணுவார்கள். அவர் காற்றுக்கு ஒதுக்கா
கவும், [3]பெருவெள்ளத்துக்குப் புகலிடமாக
வும், வறண்ட நிலத்துக்கு நீர்க்கால்களாகவும்,
விடாய்த்த பூமிக்குப் பெருங் கன்மலையின்
3 நிழலாகவும் இருப்பார். அப்பொழுது காண்
கிறவர்களின் கண்கள் மங்கலாயிராது; கேட்
கிறவர்களின் செவிகள் கவனித்தே இருக்கும்.
4 பதற்றமுள்ளவர்களின் இருதயம் அறிவை
உணர்ந்துகொள்ளும், [4]தெற்றுவாயருடைய
நாவு தடையின்றித் தெளிவாய்ப் பேசும்.
5 மூடன் இனி *தயாளன் என்று மதிக்கப்ப
டான்; லோபி இனி உதாரன் என்று சொல்
6 லப்படுவதுமில்லை. ஏனென்றால் மூடன்,
மூடத்தனத்தைப் பேசுகிறான்; அவன் இரு
தயம் அநியாயத்தை நடப்பிக்கும்; அவன்
மாயம்பண்ணி, **கர்த்தருக்கு** விரோதமாய் விப
ரீதம் பேசி, பசியுள்ள ஆத்துமாவை 'வெறு
மையாக வைத்து, தாகமுள்ளவனுக்குத் தாகந்
7 தீர்க்காதிருக்கிறான். லோபியின் எத்தனங்க
ளும் பொல்லாதவைகள்; ஏழைகள் நியாய
மாய்ப் பேசும்போது அவன் கள்ளவார்த்தைக
ளாலே எளியவர்களைக் கெடுக்கும்படி தீவினை
8 களை யோசிக்கிறான். தயாளகுணமுள்ள
வன் தயாளமானவைகளை யோசிக்கிறான்,
தயாளமானவைகளிலே நிலைத்தும் இருக்
கிறான்.
9 சுகஜீவிகளாகிய ஸ்திரீகளே, எழுந்திருந்து
என் வார்த்தைகளைக் கேளுங்கள்; [5]நிர்விசார
மான குமாரத்திகளே, என் வசனத்துக்குச்
10 செவிகொடுங்கள். நிர்விசாரிகளே, ஒரு வரு
ஷமும் சிலநாட்களுமாய்த் தத்தளிப்பீர்கள்;
திராட்சப்பலன் அற்றுப்போம்; அறுப்புக்கா
11 லம் வராது. சுகஜீவிகளே, நடுங்குங்கள்; நிர்
விசாரிகளே, தத்தளியுங்கள்; உடையை உரி
ந்து களைந்துபோட்டு, அரையில் இரட்டைக்
12 கட்டிக்கொள்ளுங்கள். செழிப்பான வயல்
களினிமித்தமும் கனிதரும் திராட்சச்செடி
களினிமித்தமும் மாரடித்துப் புலம்புவார்கள்.
13 என் ஜனத்தினுடைய நிலத்திலும், களிகூர்ந்
திருந்த நகரத்திலுள்ள சந்தோஷம் நிறைந்த
எல்லா வீடுகளிலும், [6]முட்செடியும் நெரிஞ்சி
14 லும் முளைக்கும். அரமனை பாழாக விடப்ப
டும், [7]ஜனம் நிறைந்த நகரம் வெறுமையாகும்,
மேடும் துருக்கமும் என்றைக்கும் கெபிக
ளாகும், அவைகள் காட்டுக்கழுதைகள் களிக்
கும் இடமாயும், மந்தைகளுக்கு மேய்ச்சலிட
மாயும் இருக்கும். உன்னதத்திலிருந்து நம் 15
மேல் ஆவி ஊற்றப்படுமட்டும் அப்படியே
இருக்கும்; [8]அப்பொழுது வனாந்தரம் செழிப்
பான வயல்வெளியாகும்; செழிப்பான வயல்
வெளி காடாக எண்ணப்படும். வனாந்தரத்தி 16
லே நியாயம் வாசமாயிருக்கும், செழிப்பான
வயல்வெளியிலே நீதி தங்கித் தரிக்கும். நீதி 17
யின் கிரியை சமாதானமும், [9]நீதியின் பலன்
என்றுமுள்ள அமரிக்கையும் சுகமுமாம். என் 18
ஜனம் சமாதான தாபரங்களிலும், நிலை
யான வாசஸ்தலங்களிலும், [10]அமைதியாய்த்
தங்கும் இடங்களிலும் குடியிருக்கும். ஆனா 19
லும் காடு அழிய கல்மழை பெய்யும், [11]அந்த
நகரம் மகா தாழ்வாய்த் தாழ்ந்துபோம். மாடு 20
களையும் கழுதைகளையும் நடத்திக்கொண்டு
போய், [12]நீர்வளம்பொருந்திய இடங்களிலெல்
லாம் விதை விதைக்கிற நீங்கள் பாக்கிய
வான்கள்.

கொள்ளையிடப்படாதிருந்தும், கொள்ளை **33**
யிடுகிறவனும், [13]துரோகம் பண்ணாதிருக்கி
றவர்களுக்குத் துரோகம் பண்ணுகிறவனுமா
கிய உனக்கு ஐயோ! நீ கொள்ளையிட்டு முடிந்
தபின்பு கொள்ளையிடப்படுவாய்; நீ துரோகம்
பண்ணித் தீர்ந்தபின்பு உனக்குத் துரோகம்
பண்ணுவார்கள். **கர்த்தாவே**, எங்களுக்கு 2
இரங்கும், [14]உமக்குக் காத்திருக்கிறோம்; தேவ
ரீர் காலையில் அவர்கள் புயமும், இக்கட்டுக்கா
லத்தில் எங்கள் ரட்சிப்புமாயிரும். அமளி 3
யின் சத்தத்தினாலே ஜனங்கள் அலைந்தோடி,
நீர் எழுந்திருக்கும்போது ஜாதிகள் சிதறடிக்
கப்படுவார்கள். வெட்டுக்கிளிகள் சேர்க்கிறது 4
போல உங்கள் கொள்ளை சேர்க்கப்படும்; வெட்
டுக்கிளிகள் குதித்துத்திரிகிறதுபோல மனுஷர்
அதின்மேல் குதித்துத் திரிவார்கள். **கர்த்தர்** 5
உயர்ந்தவர், [15]அவர் உன்னதத்தில் வாசமாயி
ருக்கிறார்; அவர் சீயோனை நியாயத்தினாலும்
நீதியினாலும் நிரப்புகிறார். பூரண ரட்சிப்பும் 6
ஞானமும் அறிவும் உன் காலங்களுடைய உறு
தியாயிருக்கும்; [16]**கர்த்தருக்குப்** பயப்படுதலே
அதின் பொக்கிஷம்.

இதோ, அவர்களுடைய பராக்கிரமசாலி 7
கள் வெளியிலே அலறுகிறார்கள்; [17]சமாதா
னத்து ஸ்தானாபதிகள் மனங்கசந்து அழுகி
றார்கள். பாதைகள் பாழாயின; வழிப்போக் 8
கர் இல்லை; உடன்படிக்கையை மீறுகிறான்;
[18]நகரங்களை இகழ்ச்சி பண்ணுகிறான்; மனு
ஷனை எண்ணாதேபோகிறான். தேசம் துக் 9
கித்து விடாய்த்திருக்கிறது; [19]லீபனோன் வெ
ட்கி வாடுகிறது; சாரோன் வனாந்தரத்துக்கு
ஒப்பாகிறது; பாசானும் கர்மேலும் பாழாக்கப்
படுகிறது. இப்பொழுது எழுந்தருளுவேன், 10
[20]இப்பொழுது உயருவேன், இப்பொழுது
மேன்மைப்படுவேன் என்று **கர்த்தர்** சொல்
லுகிறார். பதரைக் கர்ப்பந்தரித்துத் தாளடி 11
யைப் பெறுவீர்கள்; [21]அக்கினியைப்போல்
உங்கள் சுவாசமே உங்களைப் பட்சிக்கும்.
ஜனங்கள் சுண்ணாம்பைப்போல நீற்றப்படு 12

1 சகரி. 2. 5
2 சங். 45. 1, 6, 7. எரே. 23. 5, 6. சகரி. 9. 9. ரோ. 5. 21
3 4. 6; 44. 3
4 29. 18; 35. 5, 6
* மேன்மையானவன்.
5 ஆமோ. 6. 1
6 ஓசி. 9. 6. 10. 8
7 27. 10
8 சங். 104. 30. யோவே. 2. 28, 29
9 சங். 85. 10, 11. யாக். 3. 18
10 எபி. 4. 9
11 30. 30
12 30. 24. பிர. 11. 1, 2
13 21. 2. ஆப. 2. 8. வெளி. 13. 10
14 25. 9
15 சங். 97. 9
16 யோ. 14. 27
17 2 இரா. 18. 18, 37
18 2 இரா. 18. 14-17
19 24. 4
20 சங். 12. 5; 46. 10
21 59. 4. சங். 7. 14

வார்கள்; [1]வெட்டப்பட்ட முட்செடிகளைப்
போலத் தீயில் எரிக்கப்படுவார்கள்.
13 தூரத்திலுள்ளவர்களே, [2]நான் செய்கிற
தைக் கேளுங்கள்; சமீபத்திலிருக்கிறவர்களே,
என் பராக்கிரமத்தை அறிந்துகொள்ளுங்கள்
14 என்கிறார். சீயோனிலுள்ள பாவிகள் திகைக்
கிறார்கள்; [3]மாயக்காரரை நடுக்கம் பிடிக்கிறது;
பட்சிக்கும் அக்கினிக்கு முன்பாக நம்மில்
தரித்திருப்பவன் யார்? நித்திய ஜுவாலைக்கு
முன்பாக நம்மில் தாபரிப்பவன் யார் என்கி
15 றார்கள். நீதியாய் நடந்து, செம்மையானவை
களைப் பேசி, [4]இடுக்கண் செய்வதால் வரும்
ஆதாயத்தை வெறுத்து, பரிதானங்களை வாங்
காதபடிக்குத் தன் கைகளை உதறி, இரத்தஞ்
சிந்துவதற்கான யோசனைகளைக் கேளாதபடிக்
குத் தன் செவியை அடைத்து, பொல்லாப்
பைக் காணாதபடிக்குத் தன் கண்களை மூடுகிற
16 வனெவனோ, அவன் உயர்ந்த இடங்களில்
வாசம்பண்ணுவான்; கன்மலைகளின் அரண்
கள் அவனுடைய உயர்ந்த அடைக்கலமாகும்;
அவன் *அப்பம் அவனுக்குக் கொடுக்கப்ப
டும்; அவன் தண்ணீர் அவனுக்கு நிச்சயமாய்க்
17 கிடைக்கும். உன் கண்கள் ராஜாவை மகி
மைபொருந்தினவராகக் காணும், தூரத்திலு
18 ள்ள தேசத்தையும் பார்க்கும். உன் மனம்
பயங்கரத்தை நினைவுகூரும்; கணக்கன் எங்
கே? தண்டல்காரன் எங்கே? கோபுரங்களை
19 எண்ணினவன் எங்கே? உனக்கு விளங்காத
பாஷையையும், [5]அறிதற்கரிய ஒருவிதமான
பேச்சையுமுடைய அந்தக் குரூர ஜனங்களை
20 இனி நீ காணாய். நம்முடைய பண்டிகை
கள் ஆசரிக்கப்படும் நகரமாகிய சீயோனை
நோக்கிப் பார்; [6]உன் கண்கள் எருசலேமை
அமரிக்கையான தாபரமாகவும், பெயர்க்கப்
படாதகூடாரமாகவும் காணும்; இனி அதின்
முளைகள் என்றைக்கும் பிடுங்கப்படுவதுமில்
லை, அதின் கயிறுகளில் ஒன்றும் அறுந்து
21 போவதுமில்லை. மகிமையுள்ள **கர்த்தர்** அங்
கே நமக்கு மகா விசாலமான நதிகளும் ஆறுக
ளுமுள்ள ஸ்தலம்போலிருப்பார்; வலிக்கிற
படவு அங்கே ஓடுவதும் இல்லை; பெரிய
22 கப்பல் கடந்து வருவதும் இல்லை. **கர்த்**
**தர்** நம்முடைய நியாயாதிபதி, [7]**கர்த்தர்** நம்
முடைய நியாயப்பிரமாணிகர், **கர்த்தர்** நம்
முடைய ராஜா, அவர் நம்மை ரட்சிப்பார்.
23 உன் கயிறுகள் தளர்ந்துபோம்; பாய்மரத்தைக்
கெட்டிப்படுத்தவும், பாயை விரிக்கவுங் கூடா
மற்போம்; அப்பொழுது திரளான கொள்
ளைப்பொருள் பங்கிடப்படும்; [8]சப்பாணிக
24 ளும் கொள்ளையாடுவார்கள். வியாதிப்பட்டி
ருக்கிறேன் என்று நகரவாசிகள் சொல்வதில்
லை; [9]அதில் வாசமாயிருக்கிற ஜனத்தின் அக்
கிரமம் மன்னிக்கப்பட்டிருக்கும்.

34 ஜாதிகளே, கேட்கிறதற்குக் கிட்டி வா
ருங்கள்; [10]ஜனங்களே, கவனியுங்கள்; பூமி
யும் அதின் நிறைவும், பூச்சக்கரமும் அதில்
2 உற்பத்தியான யாவும் கேட்கக்கடவது. சகல
ஜாதிகளின்மேலும் **கர்த்தருடைய** கடுங்கோ
பமும், [11]அவைகளுடைய சகல சேனைக
ளின்மேலும் அவருடைய உக்கிரமும் மூளு
கிறது; அவர்களைச் சங்காரத்துக்கு நியமித்து,
கொலைக்கு ஒப்புக்கொடுக்கிறார். அவர் 3
களிலே கொலைசெய்யப்பட்டவர்கள் வெளி
யே எறியுண்டு கிடப்பார்கள்; அவர்களு
டைய பிரேதங்கள் நாற்றமெடுக்கும்; [12]அவர்க
ளுடைய ரத்தத்தினாலே மலைகளும் கரைந்து
போம். வானத்தின் சர்வ சேனையும் கரை 4
ந்து, [13]வானங்கள் புஸ்தகச் சுருளைப்போல்
சுருட்டப்பட்டு, அவைகளின் சர்வ சேனையும்
திராட்சச்செடியின் இலைகள் உதிருகிறது
போலவும், அத்திமரத்தின் காய்கள் உதிருகி
றதுபோலவும் உதிர்ந்து விழும். வானங்களில் 5
என் பட்டயம் வெறிகொண்டது; [14]இதோ,
ஏதோமின்மேலும், நான் சங்காரத்துக்கு நிய
மித்த ஜனத்தின்மேலும், அது நியாயஞ்செய்ய
இறங்கும். போஸ்றாவிலே **கர்த்தருக்கு** ஒரு 6
யாகமும், [15]ஏதோம் தேசத்திலே மகா சங்கார
மும் உண்டு; **கர்த்தருடைய** பட்டயம் ரத்
தத்தால் திருப்தியாகி, நிணத்தினால் பூரிக்
கின்றது; ஆட்டுக்குட்டிகள் கடாக்களுடைய
ரத்தத்தினாலும், ஆட்டுக்கடாக்களுடைய குண்
டிக்காய்களின் கொழுப்பினாலும் திருப்தியா
கும். அவைகளோடே காண்டாமிருகங்க 7
ளும், ரிஷபங்களோடே காளைகளும் வந்து
மடியும்; அவர்கள் தேசம் ரத்தவெறிகொண்டு,
அவர்கள் மண் நிணத்தினால் கொழுத்துப்
போம். அது **கர்த்தர்** பழிவாங்கும் நாள், 8
[16]சீயோனுடைய வழக்கினிமித்தம் பதிலளிக்
கும் வருஷம். அதின் ஆறுகள் பிசினாகவும், 9
[17]அதின் மண் கந்தகமாகவும் மாறி, அதின்
நிலம் எரிகிற கீலாய்ப்போம். இரவும் பகலும் 10
அது அவியாது; [18]அதின் புகை என்றென்
றைக்கும் எழும்பும்; தலைமுறை தலைமுறை
யாக அது பாழாயிருக்கும்; சதாகாலம் சதாகா
லமாக அதை ஒருவரும் கடந்துபோவதில்லை.
நாரையும் முள்ளம்பன்றியும் அதைச் சுதந்த 11
ரிக்கும், [19]ஆந்தையும் காக்கையும் அதிலே குடி
யிருக்கும்; அதின்மேல் வெட்டவெளியின்
நூலையும், வெறுமையின் தூக்கையும் பிடிப்
பார். ராஜ்யபாரம்பண்ண அதின் மேன்மக் 12
களை அழைத்தால், அங்கே அவர்களில் ஒரு
வரும் இரார்கள்; அதின் பிரபுக்கள் அனைவ
ரும் இல்லாமற்போவார்கள். அதின் அரம 13
னைகளில் முட்செடிகளும், அதின் கோட்
டைகளில் காஞ்சொறிகளும் முட்பூண்டுக
ளும் முளைக்கும்; அது வலுசர்ப்பங்களின்
தாபரமும், கோட்டான்களின் மாளிகையுமா
யிருக்கும். அங்கே காட்டுமிருகங்களும் ஓரி 14
களும் ஒன்றையொன்று சந்தித்து, காட்டாட்
டைக் காட்டாடு கூப்பிடும்; அங்கே சாக்குரு
விகளும் தங்கி, இளைப்பாறும் இடத்தைக்
கண்டடையும். அங்கே வல்லூறும் கூடுகட்டி, 15
முட்டையிட்டு, குஞ்சுபொரித்து, அவைக
ளைத் தன் நிழலிலே கூட்டிக்கொள்ளும்;

[1] 9. 18
[2] 49. 1
[3] மத். 22. 12
[4] சங். 15. 2; 119. 37
* ஆமோ. மத். 6. 11
[5] உபா. 28. 49, 50. 2 இரா. 19. 32. எரே. 5. 15
[6] சங். 48. 12; 46. 5. வெளி. 3. 12
[7] சங். 89. 18. யாக். 4. 12
[8] 1 கொ 1. 27
[9] எரே. 50. 20. வெளி. 21. 4
[10] உபா. 32. 1. சங். 49. 1
[11] எரே. 25. 15–29
[12] யோவே. 2. 20
[13] சங். 102. 26. எசே. 32. 7, 8. யோவே. 2. 31; 3. 15. மத். 24. 29. 2 பே. 3. 10. வெளி. 6. 13, 14
[14] எரே. 46. 10; 49. 7. மூ. மல். 1. 4
[15] 63. 1. எரே. 49. 13. செப். 1. 7
[16] 63. 4. எரே. 46. 10
[17] உபா. 29. 23
[18] வெளி. 14. 11; 18. 18; 19. 3
[19] 14. 23. செப். 2. 14. வெளி. 18. 2. 2 இரா. 21. 13

அங்கே கூளிகளும் ஜோடுஜோடாகச் சேரும்.
16 **கர்த்தருடைய** புஸ்தகத்திலே தேடி வாசி
யுங்கள்; [1]இவைகளில் ஒன்றும் குறையாது;
இவைகளில் ஒன்றும் ஜோடில்லாதிராது;
அவருடைய வாய் இதைச் சொல்லிற்று; அவ
17 ருடைய ஆவி அவைகளைச் சேர்க்கும். அவ
ரே அவைகளுக்குச் சீட்டுப் போட்டார்; அவ
ருடைய கையே அதை அவைகளுக்கு அளவு
நூலால் பகிர்ந்துகொடுத்தது; அவைகள் என்
றைக்கும் அதைச் சுதந்தரித்துத் தலைமுறை
தலைமுறையாக அதிலே சஞ்சரிக்கும்.

35 வனாந்தரமும் வறண்ட நிலமும் மகிழ்ந்து,
கடுவெளி களித்து, *புஷ்பத்தைப்போல [2]செ
2 ழிக்கும். அது மிகுதியாய்ச் செழித்து [3]பூரி
த்து ஆனந்தக்களிப்புடன் பாடும்; லீபனோனின்
மகிமையும், கர்மேல் சாரோன் என்பவை
களின் அலங்காரமும் அதற்கு அளிக்கப்ப
டும்; அவர்கள் **கர்த்தருடைய** மகிமையையும்,
நமது தேவனுடைய மகத்துவத்தையும் காண்
பார்கள்.
3 தளர்ந்த கைகளைத் திடப்படுத்தி, [4]தள்
ளாடுகிற முழங்கால்களைப் பலப்படுத்துங்கள்.
4 மனம் பதறுகிறவர்களைப் பார்த்து: நீங்கள் பய
ப்படாதிருங்கள், திடன்கொள்ளுங்கள்; இ
தோ, உங்கள் தேவன் நீதியைச் சரிக்கட்ட
வும், உங்கள் தேவன் பதிலளிக்கவும் வருவார்;
அவர் வந்து உங்களை ரட்சிப்பார் என்று சொல்
5 லுங்கள். அப்பொழுது குருடரின் கண்கள்
திறக்கப்பட்டு, [5]செவிடரின் செவிகள் திற
6 வுண்டுபோம். அப்பொழுது முடவன் மா
னைப்போல் குதிப்பான்; ஊமையன் நாவும்
கெம்பீரிக்கும்; [6]வனாந்தரத்திலே தண்ணீர்
களும், கடுவெளியிலே ஆறுகளும் பாய்ந்
7 தோடும். வெட்டாந்தரை தண்ணீர்த்தடாக
மும், வறண்ட நிலம் நீரூற்றுகளுமாகும்;
[7]வலுசர்ப்பங்கள் தாபரித்துக்கிடந்த இடங்
களிலே புல்லும் கொறுக்கையும் நாணலும்
8 உண்டாகும். அங்கே பெரும்பாதையான
வழியும் இருக்கும்; [8]அது பரிசுத்த வழி என்
னப்படும்; தீட்டுள்ளவன் அதிலே நடந்து
வருவதில்லை; அந்த வழியில் நடக்கிறவர்கள்
பேதையராயிருந்தாலும் திசைகெட்டுப் போவ
9 தில்லை. அங்கே சிங்கம் இருப்பதில்லை;
[9]துஷ்டமிருகம் அங்கே போவதுமில்லை, அங்
கே காணப்படவுமாட்டாது; மீட்கப்பட்ட
10 வர்களே அதில் நடப்பார்கள். **கர்த்தரால்**
மீட்கப்பட்டவர்கள் திரும்பி, [10]ஆனந்தக்களிப்
புடன் பாடி, சீயோனுக்கு வருவார்கள்; நித்
திய மகிழ்ச்சி அவர்கள் தலையின்மேலிருக்கும்;
சந்தோஷமும் மகிழ்ச்சியும் அடைவார்கள்;
சஞ்சலமும் தவிப்பும் ஓடிப்போம்.

36 எசேக்கியா ராஜா அரசாண்ட பதினா
லாம் வருஷத்திலே அசீரியா ராஜாவாகிய
சனகெரிப் யூதாவிலிருக்கிற அரணான சகல
பட்டணங்களுக்கும் விரோதமாய் வந்து,
2 [11]அவைகளைப் பிடித்துக்கொண்டான். அப்
பொழுது அசீரியா ராஜா லாகீசிலிருந்து ரப்

[1] மல்கி. 3. 16
* ரோஜா.
[2] 55. 12, 13
[3] 32. 15
[4] யோபு 4. 3, 4. எபி. 12. 12
[5] மத். 11. 5
[6] 41. 18; 43. 19. யோ. 7. 38, 39
[7] யோ. 4. 14; 7. 38
[8] 52. 1. யோவே. 3. 17. வெளி. 21. 27
[9] எசே. 34. 25
[10] 51. 10, 11. வெளி. 7. 17; 21. 4
[11] 2 இரா. 18. 13. 2 நாளா. 32. 1
[12] எசே. 29. 6, 7
[13] 2 இரா. 18. 27

சாக்கேயைப் பெரிய சேனையோடே எருச
லேமுக்கு எசேக்கியா ராஜாவினிடத்தில் அ
னுப்பினான்; அவன் வந்து வண்ணார் துறை
யின் வழியிலுள்ள மேல்குளத்துச் சாலகத்
தண்டையிலே நின்றான். அப்பொழுது 3
இல்க்கியாவின் குமாரனாகிய எலியாக்கீம் என்
னும் அரமனை விசாரிப்புக்காரனும், செப்னா
என்னும் சம்பிரதியும், ஆசாப்பின் குமாரனா
கிய யோவாக் என்னும் கணக்கனும் அவ
னிடத்திற்குப் புறப்பட்டுப் போனார்கள். ரப் 4
சாக்கே அவர்களை நோக்கி: அசீரியா ராஜாவா
கிய மகாராஜாவானவர் உரைக்கிறதும், நீங்
கள் எசேக்கியாவுக்குச் சொல்லவேண்டியதும்
என்னவென்றால்: நீ நம்பியிருக்கிற இந்த நம்
பிக்கை என்ன? யுத்தத்துக்கு மந்திராலோச 5
னையும் வல்லமையும் உண்டென்று சொல்லு
கிறாயே, அது வாய்ப்பேச்சேயன்றி வேறல்
ல; நீ என்னை விரோதிக்கும்படி யார்மேல்
நம்பிக்கை வைத்திருக்கிறாய்? இதோ, நெ 6
ரிந்த நாணல்கோலாகிய அந்த எகிப்தை நம்பு
கிறாய்; [12]அதின்மேல் ஒருவன் சாய்ந்தால்,
அது அவன் உள்ளங்கையில் பட்டுருவிப்
போம்; எகிப்தின் ராஜாவாகிய பார்வோன்
தன்னை நம்புகிற யாவருக்கும் அப்படியே
இருப்பான். நீ என்னிடத்தில்: நாங்கள் எங் 7
கள் தேவனாகிய **கர்த்தரை** நம்புகிறோம் என்று
சொல்வாயாகில், அவருடைய மேடைகளை
யும் அவருடைய பலிபீடங்களையும் அல்ல
வோ எசேக்கியா அகற்றி; யூதாவையும், எரு
சலேமையும் நோக்கி: இந்தப் பலிபீடத்தின்
முன் பணியுங்கள் என்றானே. நான் உனக் 8
கு இரண்டாயிரம் குதிரைகளைக் கொடுப்
பேன்; நீ அவைகள்மேல் ஏறத்தக்கவர்களைச்
சம்பாதிக்கக் கூடுமானால் அசீரியா ராஜாவா
கிய என் ஆண்டவனோடே சபதங்கூறு.
கூறாதேபோனால், நீ என் ஆண்டவனுடைய 9
ஊழியக்காரரில் ஒரே ஒரு சிறிய தலைவனு
டைய முகத்தை எப்படித் திருப்புவாய்? இர
தங்களோடு குதிரைவீரரும் வருவார்கள் என்று
எகிப்தையா நம்புகிறாய்? இப்பொழுதும் **கர்த்** 10
**தருடைய** கட்டளையில்லாமல் இந்தத் தேசத்
தை அழிக்கவந்தேனோ? இந்தத் தேசத்துக்கு
விரோதமாய்ப் போய் அதை அழித்துப்போடு
என்று **கர்த்தர்** என்னோடே சொன்னாரே
என்று சொன்னான். அப்பொழுது எலியாக் 11
கீமும் செப்னாவும் யோவாகும், ரப்சாக்கே
யைப் பார்த்து: உம்முடைய அடியாரோடே
சீரியபாஷையிலே பேசும், அது எங்களுக்
குத் தெரியும்; அலங்கத்திலிருக்கிற ஜனத்தின்
செவிகள் கேட்க எங்களோடே யூதபாஷையி
லே பேசவேண்டாம் என்றார்கள். அதற்கு 12
ரப்சாக்கே: உங்களோடுங்கூடத் தங்கள் மலத்
தைத் தின்னவும், [13]தங்கள் நீரைக் குடிக்கவும்,
அலங்கத்திலே தங்கியிருக்கிற புருஷரண்
டைக்கே அல்லாமல், உன் ஆண்டவனண்
டைக்கும், உன்னண்டைக்குமா, என் ஆண்
டவன் இந்த வார்த்தைகளைப் பேச என்னை

13 அனுப்பினுர் என்று சொல்லி; ரப்சாக்கே
நின்றுகொண்டு, யூதபாஷையிலே உரத்த சத்
தமாய்: அசீரியா ராஜாவாகிய மகாராஜாவு
14 டைய வார்த்தைகளைக் கேளுங்கள். எசேக்கி
யா உங்களை வஞ்சியாதபடி பாருங்கள்; அவன்
15 உங்களைத் தப்புவிக்கமாட்டான். **கர்த்தர்** நம்
மை நிச்சயமாய்த் தப்புவிப்பார், இந்த நகரம்
அசீரியா ராஜாவின் கையில் ஒப்புக்கொடுக்
கப்படுவதில்லை என்று சொல்லி, எசேக்கியா
உங்களைக் **கர்த்தரை** நம்பப்பண்ணுவான்;
அதற்கு இடங்கொடாதிருங்கள் என்று ராஜா
16 சொல்லுகிருர். எசேக்கியாவின் சொல்லைக்
கேளாதிருங்கள். அசீரியா ராஜா சொல்லு
கிறதாவது: நீங்கள் என்னேடே ராஜியாகி,
காணிக்கையோடே என்னிடத்தில் வாருங்
17 கள். நான் வந்து, உங்களைத் தானியமும்
திராட்சத்தோட்டமுமுள்ள தேசமும், அப்ப
மும் திராட்சரசமுமுள்ள தேசமுமாகிய உங்
கள் தேசத்துக்கு ஒப்பான தேசத்துக்கு அழைத்
துக்கொண்டு போகுமளவும், [1]அவனவன் தன்
தன் திராட்சச்செடியின் கனியையும், தன்
தன் அத்திமரத்தின் கனியையும் புசித்து, அவ
னவன் தன் தன் கிணற்றின் தண்ணீரைக்
18 குடியுங்கள். **கர்த்தர்** நம்மைத் தப்புவிப்பார்
என்று உங்களைப் போதனைசெய்ய எசேக்கி
யாவுக்குச் செவிகொடாதிருங்கள்; ஜாதிகளு
டைய தேவர்களில் யாராவது தங்கள் தேசத்
தை அசீரியா ராஜாவின் கைக்குத் தப்புவித்த
19 துண்டோ? ஆமாத் அர்பாத் பட்டணங்களின்
தேவர்கள் எங்கே? செப்பர்வாயீமின் தேவர்கள்
எங்கே? அவர்கள் சமாரியாவை என் கைக்குத்
20 தப்புவித்ததுண்டோ? **கர்த்தர்** எருசலேமை
என் கைக்குத் தப்புவிப்பார் என்பதற்கு, அந்
தத் தேசங்களுடைய எல்லா தேவர்களுக்குள்
ளும் தங்கள் தேசத்தை என் கைக்குத் தப்புவித்
தவர் யார் என்று ராஜா சொல்லுகிருர் என்
21 ருன். அவர்களோ அவனுக்கு ஒரு வார்த்
தையையும் பிரதியுத்தரமாகச் சொல்லாமல்
மவுனமாயிருந்தார்கள்; அவனுக்கு மறுஉத்
தரவு சொல்லவேண்டாம் என்று ராஜா கட்
22 டளையிட்டிருந்தான். அப்பொழுது இல்க்கி
யாவின் குமாரனுகிய எலியாக்கீம் என்னும்
அரமனை விசாரிப்புக்காரனும், செப்னு என்
னும் சம்பிரதியும், ஆசாப்பின் குமாரனுகிய
யோவாக் என்னும் கணக்கனும், வஸ்திரங்
களைக் கிழித்துக்கொண்டு, எசேக்கியாவினி
டத்தில் வந்து, ரப்சாக்கேயின் வார்த்தைகளை
அவனுக்கு அறிவித்தார்கள்.

**37** ராஜாவாகிய எசேக்கியா அதைக் கேட்ட
போது, தன் வஸ்திரங்களைக் கிழித்து, [2]இர
ட்டு உடுத்திக்கொண்டு, **கர்த்தருடைய** ஆலயத்
2 தில் பிரவேசித்து, அரமனை விசாரிப்புக்கா
ரனுகிய எலியாக்கீமையும், சம்பிரதியாகிய
செப்னுவையும், ஆசாரியர்களின் மூப்பரை
யும், ஆமோத்சின் குமாரனுகிய ஏசாயா என்
னும் தீர்க்கதரிசியினிடத்திற்கு இரட்டு உடுத்த
3 வர்களாக அனுப்பினுன். இவர்கள் அவனை
நோக்கி: இந்த நாள் நெருக்கமும், கண்டித
மும், தூஷணமும் அநுபவிக்கிற நாள்; பிள்ளை
பேறு நோக்கியிருக்கிறது; [3]பெறவோ பெ
லன் இல்லை. ஜீவனுள்ள தேவனை நிந்திக் 4
கும்படி, அசீரியா ராஜாவாகிய தன் ஆண்ட
வனுல் அனுப்பப்பட்ட ரப்சாக்கே சொன்ன
வார்த்தைகளை உமது தேவனுகிய **கர்த்தர்** கே
ட்டிருக்கிருர்; உமது தேவனுகிய **கர்த்தர்**
கேட்டிருக்கிற வார்த்தைகளினிமித்தம் தண்
டனை செய்வார்; ஆகையால், [4]இன்னும் மீதி
யாயிருக்கிறவர்களுக்காக விண்ணப்பஞ் செய்
வீராக என்று எசேக்கியா சொல்லச் சொன்
னுர் என்ருர்கள். இவ்விதமாய் எசேக்கியா 5
ராஜாவின் ஊழியக்காரர் ஏசாயாவினிடத்தில்
வந்து சொன்னுர்கள். அப்பொழுது ஏசாயா 6
அவர்களை நோக்கி: அசீரியா ராஜாவின் ஊழி
யக்காரர் என்னைத் தூஷித்ததும் நீர் கேட்டது
மான வார்த்தைகளினுலே பயப்படாதேயும்.
இதோ, அவன் ஒரு செய்தியைக் கேட்டு, 7
தன் தேசத்துக்குத் திரும்புவதற்கான ஆவியை
நான் அவனுக்குள் அனுப்பி, அவனை அவன்
தேசத்திலே பட்டயத்தால் விழப்பண்ணு
வேன் என்று **கர்த்தர்** உரைக்கிருர் என்பதை
உங்கள் ஆண்டவனிடத்தில் சொல்லுங்கள்
என்ருன்.

அசீரியா ராஜா லாகீசைவிட்டுப் புறப்பட் 8
டான் என்று கேள்விப்பட்டு, ரப்சாக்கே
திரும்பிப்போய், அவன் லிப்னுவின்மேல் யுத்
தம் பண்ணுகிறதைக் கண்டான். அப்பொ 9
ழுது, எத்தியோப்பியாவின் ராஜாவாகிய திரா
க்கா உம்மோடு யுத்தம் பண்ணப் புறப்பட்
டான் என்று சொல்லக் கேள்விப்பட்டான்;
அதைக் கேட்டபோது அவன் எசேக்கியாவி
னிடத்துக்கு ஸ்தானுபதிகளை அனுப்பி: நீங் 10
கள் யூதாவின் ராஜவாகிய எசேக்கியாவுக்குச்
சொல்லவேண்டியது என்னவென்ருல், எரு
சலேம் அசீரியா ராஜாவின் கையில் ஒப்புக்
கொடுக்கப்படுவதில்லை என்று நீ நம்பியிருக்
கிற உன் தேவன் உன்னை எத்தவொட்டா
தே. இதோ, அசீரியா ராஜாக்கள் சகல தே 11
சங்களையும் சங்கரித்த செய்தியை நீ கேள்விப்
பட்டிருக்கிருய்; நீ தப்புவாயோ? என் பிதா 12
க்கள் அழித்துவிட்ட கோசானையும், ஆரானை
யும், ரேத்சேப்பையும், தெலாசாரிலிருந்த ஏதே
னின் புத்திரரையும் அவர்களுடைய தேவர்
கள் தப்புவித்ததுண்டோ? ஆமாத்தின் ராஜா 13
வும், அர்பாத்தின் ராஜாவும், செப்பர்வாயீம்
ஏனு ஈவா பட்டணங்களின் ராஜாவும் எங்கே
[5]என்று சொல்லுங்கள் என்ருர். எசேக்கியா 14
ஸ்தானுபதிகளின் கையிலிருந்து நிருபத்தை
வாங்கி வாசித்தான்; பின்பு எசேக்கியா **கர்த்த
ருடைய** ஆலயத்திற்குப் போய் அதைக் **கர்த்த
ருக்கு** முன்பாக விரித்து, **கர்த்தரை** நோக்கி: 15
சேனைகளின் **கர்த்தாவே**, கேருபீன்களின் மத் 16
தியில் வாசம்பண்ணுகிற இஸ்ரவேலின் தேவ
னே, [6]நீர் ஒருவரே பூமியின் ராஜ்யங்களுக்கெ
ல்லாம் தேவனுனவர்; நீர் வானத்தையும் பூமி

[1] சகரி. 3. 10
[2] 2 இரா. 19. 1. யோபு 1. 20.
[3] 66. 9
[4] ரோ. 9. 27
[5] எரே. 49. 23
[6] யாத். 25. 22. சங். 80. 1.

17 யையும் உண்டாக்கினீர். **கர்த்தாவே**, உமது
செவியைச் சாய்த்துக் கேளும்; [1]**கர்த்தாவே**,
நீர் உமது கண்களைத் திறந்துபாரும், சனகெ
ரிப் ஜீவனுள்ள தேவனை நிந்திக்கும்படிக்குச்
சொல்லியனுப்பின வார்த்தைகளையெல்லாம்
18 கேளும். **கர்த்தாவே**, அசீரியா ராஜாக்கள்
அந்த ஜாதிகளையும், அவர்கள் தேசத்தையும்
19 நாசமாக்கி, அவர்களுடைய தேவர்களை நெ
ருப்பிலே போட்டுவிட்டது மெய்தான்; அவை
கள் தேவர்கள் அல்லவே, மனுஷர் கைவேலை
யான மரமும் கல்லுந்தானே; ஆகையால் அவை
20 களை நிர்த்தூளியாக்கினார்கள். இப்போதும்
எங்கள் தேவனாகிய **கர்த்தாவே**, நீர் ஒருவரே
**கர்த்தர்** என்று பூமியின் ராஜ்யங்களெல்லாம்
அறியும்படிக்கு, எங்களை அவன் கைக்கு
நீங்கலாக்கி ரட்சியும் என்று விண்ணப்பம்
பண்ணினான்.
21 அப்பொழுது ஆமோத்சின் குமாரனாகிய
ஏசாயா, எசேக்கியாவுக்குச் சொல்லியனுப்பி
னது: இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்**
உரைக்கிறது என்னவென்றால், அசீரியா ரா
ஜாவாகிய சனகெரிபினிமித்தம் நீ என்னை
22 நோக்கி விண்ணப்பம் பண்ணினாயே. அவ
னைக்குறித்துக் **கர்த்தர்** சொல்லுகிற வசனமா
வது: சீயோன் குமாரத்தியாகிய கன்னியாஸ்
திரீ உன்னை இகழ்ந்து, உன்னைப் பரிகாசம்
பண்ணுகிறாள்; எருசலேம் குமாரத்தி உன்
23 பின்னாலே தலையைத் துலுக்குகிறாள். யாரை
நிந்தித்துத் தூஷித்தாய்? யாருக்கு விரோதமாய்
உன் சத்தத்தை உயர்த்தினாய்? நீ இஸ்ரவே
லின் பரிசுத்தருக்கு விரோதமாய் அல்லவோ
உன் கண்களை மேட்டிமையாய் ஏறெடுத்தாய்.
24 உன் ஊழியக்காரரைக்கொண்டு நீ ஆண்டவ
ரை நிந்தித்து: என் இரதங்களின் திரளினாலே
நான் மலைகளின் கொடுமுடிகளுக்கும் லீப
னோனின் சிகரங்களுக்கும் வந்து ஏறினேன்;
அதின் உயரமான கேதுருமரங்களையும், உச்
சிதமான தேவதாரு விருட்சங்களையும் நான்
வெட்டி, உயர்ந்த அதின் கடைசி எல்லைமட்
டும், அதின் செழுமையான வனமட்டும், வரு
25 வேன் என்றும், நான் கிணறுவெட்டித் தண்
ணீர் குடித்தேன்; என் உள்ளங்காலினால் அர
ணிப்பான இடங்களின் அகழிகளையெல்லாம்
வறளவும் பண்ணினேன் என்றும் சொன்னாய்.
26 நான் வெகுகாலத்துக்குமுன் அதை நியமித்து,
பூர்வநாட்கள்முதல் அதைத் திட்டம்பண்ணி
னேன் என்பதை நீ கேட்டதில்லையோ? இப்
பொழுது நீ அரணான பட்டணங்களைப் பா
ழான மண்மேடுகளாக்கும்படி நானே அதைச்
27 சம்பவிக்கப் பண்ணினேன். அதினாலே
அவைகளின் குடிகள் கையிளைத்தவர்களாகி,
கலங்கி வெட்கப்பட்டு, வெளியின் பூண்டுக்
கும், பச்சிலைக்கும், வீடுகளின்மேல் முளைக்கும்
புல்லுக்கும், ஓங்கி வளருமுன் தீய்ந்துபோம்
28 பயிருக்கும் சமானமானார்கள். உன் இருப்
பையும், உன் போக்கையும், உன் வரவையும்,
நீ எனக்கு விரோதமாய்க் கொந்தளிக்கிறதை
யும் அறிவேன். நீ எனக்கு விரோதமாய்க் 29
கொந்தளித்து, வீரியம் பேசினது என் செவி
களில் ஏறினபடியினாலே, நான் என் துறட்
டை உன் மூக்கிலும், [2]என் கடிவாளத்தை உன்
வாயிலும் போட்டு, நீ வந்த வழியே உன்னைத்
திரும்பப்பண்ணுவேன். உனக்கு அடையா 30
ளமாயிருப்பது என்னவென்றால்: இந்த வரு
ஷத்திலே தப்பிப் பயிராகிறதையும், இரண்
டாம் வருஷத்திலே தானாய் விளைகிறதையும்
சாப்பிடுவீர்கள்; மூன்றாம் வருஷத்திலோ
விதைத்து அறுத்து, திராட்சத்தோட்டங்களை
நாட்டி, அவைகளின் கனிகளைப் புசிப்பீர்கள்.
யூதா வம்சத்தாரில் தப்பி மீந்திருக்கிறவர்கள் 31
மறுபடியும் கீழே வேர்பற்றி மேலே கனிகொ
டுப்பார்கள். மீதியாயிருக்கிறவர்கள் எருசலே 32
மிலும், [3]தப்பினவர்கள் சீயோன்மலையிலுமி
ருந்து புறப்படுவார்கள்; சேனைகளுடைய **கர்த்**
**தரின்** வைராக்கியம் இதைச் செய்யும். ஆகை 33
யால் **கர்த்தர்** அசீரியா ராஜாவைக்குறித்து:
அவன் இந்தநகரத்துக்குள் பிரவேசிப்பதில்லை;
இதின்மேல் அம்பு எய்வதுமில்லை; இதற்கு
முன்பாகக் கேடகத்தோடே வருவதுமில்லை;
இதற்கு எதிராகக் கொத்தளம் போடுவது
மில்லை. அவன் இந்த நகரத்துக்குள் பிரவே 34
சியாமல், தான் வந்தவழியே திரும்பிப்போ
வான். என்னிமித்தமும் என் தாசனாகிய 35
தாவீதினிமித்தமும், [4]நான் இந்த நகரத்தை
ரட்சிக்கும்படிக்கு இதற்கு ஆதரவாயிருப்
பேன் என்பதைக் **கர்த்தர்** உரைக்கிறார் என்று
சொல்லியனுப்பினான்.
அப்பொழுது **கர்த்தருடைய** தூதன் புறப் 36
பட்டு, [5]அசீரியரின் பாளயத்தில் லட்சத்தெண்
பத்தையாயிரம் பேரைச் சங்கரித்தான்; அதி
காலமே எழுந்திருக்கும்போது, இதோ, அவர்
களெல்லாரும் செத்த பிரேதங்களாய்க் கிடந்
தார்கள். அப்பொழுது அசீரியா ராஜாவா 37
கிய சனகெரிப் பிரயாணப்பட்டுத் திரும்பிப்
போய், நினிவேயில் இருந்துவிட்டான்.
அவன் தன் தேவனாகிய நிஸ்ரோகின் கோவி 38
லிலே பணிந்துகொள்ளுகிறபோது, அவன்
குமாரராகிய அத்ரமலேக்கும் சரேத்சேரும்
அவனைப் பட்டயத்தினால் வெட்டிப்போட்டு,
அரராத் தேசத்துக்குத் தப்பி ஓடிப்போனார்
கள்; அவன் குமாரனாகிய எசாத்தோன் அவன்
பட்டத்திற்கு வந்து அரசாண்டான்.

அந்நாட்களில் எசேக்கியா வியாதிப்பட்டு **38**
மரணத்துக்கு ஏதுவாயிருந்தான்; [6]அப்பொ
ழுது ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா என்
னும் தீர்க்கதரிசி அவனிடத்தில் வந்து, அவனை
நோக்கி: நீர் உமது வீட்டுக் காரியத்தை ஒழுங்
குப்படுத்தும், நீர் பிழைக்கமாட்டீர், மரித்துப்
போவீர் என்று **கர்த்தர்** சொல்லுகிறார் என்
றான். அப்பொழுது எசேக்கியா தன் முகத் 2
தைச் சுவர்ப்புறமாகத் திருப்பிக்கொண்டு, **கர்**
**த்தரை** நோக்கி: ஆ **கர்த்தாவே**, நான் உமக்கு 3
முன்பாக உண்மையும் மனஉத்தமமுமாய்
நடந்து, [7]உமது பார்வைக்கு நலமானதைச்

[1] யோபு 36. 7. தானி. 9. 18
[2] 30. 28. எசே. 38. 4
[3] 9. 7. 2 இரா. 19. 31
[4] 38. 6. 2 இரா. 20. 6
[5] 2 இரா. 19. 35
[6] 2 இரா. 20. 1. மு. 2 நாளா. 32. 24
[7] நெகே. 13. 14

செய்தேன் என்பதை நினைத்தருளும் என்று
விண்ணப்பம்பண்ணி, எசேக்கியா மிகவும்
4 அழுதான். அப்பொழுது ஏசாயாவுக்கு உண்
5 டான கர்த்தருடைய வார்த்தையாவது: நீ
போய் எசேக்கியாவை நோக்கி: உன் தகப்ப
னாகிய தாவீதின் தேவனாயிருக்கிற கர்த்தர்
சொல்லுகிறது என்னவென்றால், உன் விண்
ணப்பத்தைக் கேட்டேன்; உன் கண்ணீரைக்
கண்டேன்; இதோ, உன் நாட்களோடே பதி
6 னைந்து வருஷம் கூட்டுவேன். நான் உன்
னையும் இந்த நகரத்தையும் அசீரியா ராஜா
வின் கைக்குத் தப்புவித்து, [1]இந்த நகரத்துக்கு
7 ஆதரவாயிருப்பேன். இதோ, ஆகாசுடைய
சூரிய கடியாரத்தில் பாகைக்குப் பாகை இறங்
கின சாயையைப் பத்துப்பாகை பின்னிட்
8 டுத் திருப்புவேன் என்றார். தாம் சொன்ன
இந்த வார்த்தையின்படி கர்த்தர் செய்வார்
என்பதற்கு இது கர்த்தரால் உனக்கு அடை
யாளமாயிருக்கும் என்று சொல் என்றார்; [2]அப்
படியே கடியாரத்தில் இறங்கியிருந்த சூரிய
சாயை பத்துப்பாகை திரும்பிற்று.
9 யூதாவின் ராஜாவாகிய எசேக்கியா வியா
திப்பட்டு, தன் வியாதி நீங்கிச் சொஸ்தமான
போது எழுதிவைத்ததாவது:
10 நான் என் பூரண ஆயுசின் வருஷங்களுக்
குச் சேராமல் [3]பாதாளத்தின் வாசல்களுக் குட்
படுவேன் என்று என் நாட்கள் அறுப்புண்கி
11 றபோது சொன்னேன். கர்த்தரை, கர்த்
தரை, நான் இனி உயிரோடிருக்கிறவர்களின்
தேசத்திலே தரிசிப்பதில்லை; [4]இனி பூலோ
கக் குடிகளோடே இருந்து மனுஷரை நான்
12 காண்பதில்லை. என் ஆயுசு மேய்ப்பனுடைய
கூடாரத்தைப்போல என்னைவிட்டுப் பெயர்ந்
துபோகிறது; நெய்கிறவன் பாவை அறுக்கி
றதுபோல என் ஜீவனை அறுக்கக் கொடுக்கி
றேன்; என்னைப் பாவிலிருந்து அறுத்துவிடு
கிறார்; இன்று இரவுக்குள்ளே என்னை முடி
13 வடையப்பண்ணுவீர். விடியற்காலமட்டும்
நான் எண்ணமிட்டுக்கொண்டிருந்தேன்; அவர்
சிங்கம்போல என் எலும்புகளையெல்லாம் நொ
றுக்குவார்; இன்று இரவுக்குள்ளே என்னை
முடிவடையப்பண்ணுவீர் என்று சொல்லி,
14 நமுட்டைப்போலும், தகைவிலான் குருவி
யைப்போலும் கூவினேன், [5]புறாவைப்போல்
புலம்பினேன்; என் கண்கள் உயரப் பார்க்கிற
தினால் பூத்துப்போயின; கர்த்தாவே, ஒடுங்
கிப்போகிறேன்; என் காரியத்தை மேற்போட்
டுக்கொள்ளும் என்றேன்.
15 நான் என்ன சொல்லுவேன்? அவர் எனக்கு
வாக்கு அருளினார்; அந்தப்பிரகாரமே செய்
தார்; என் ஆயுசின் வருஷங்களிலெல்லாம்
என் ஆத்துமாவின் கசப்பை நினைத்து நடந்து
16 கொள்வேன். ஆண்டவரே, இவைகளினால்
மனுஷர் பிழைக்கிறார்கள்; [6]இவைகளெல்
லாம் என் உயிர்க்கு உயிராயிருக்கிறது; என்
னைச் சொஸ்தப்படவும் பிழைக்கவும் பண்ணி
17 னீர். இதோ, சமாதானத்துக்குப் பதிலாக்

[1] 37. 35
[2] 2 இரா. 20. 8. ழ
[3] யோபு 7. 7. ழ சங். 77. 3. ழ
[4] சங். 27. 13
[5] 59. 11
[6] மத். 4. 4
[7] சங். 40. 2
[8] சங். 6. 5. பிர. 9. 10
[9] உபா. 4. 9; 6. 7. சங். 78. 3, 4
[10] 2 இரா. 20. 7, 8
[11] 2 இரா. 20. 12. ழ. 2 நாளா. 32. 31
[12] எரே. 20. 5
[13] தானி. 1. 2, 7

மகா கசப்பு வந்திருந்தது, தேவரீரோ என்
ஆத்துமாவை நேசித்து [7]அழிவின் குழிக்கு
விலக்கினீர்; என் பாவங்களையெல்லாம் உமது
முதுகுக்குப் பின்னாக எறிந்துவிட்டீர். பாதா 18
ளம் உம்மைத் துதியாது, [8]மரணம் உம்மைப்
போற்றாது; குழியில் இறங்குகிறவர்கள் உம்மு
டைய சத்தியத்தை நியானிப்பதில்லை. நான் 19
இன்று செய்கிறதுபோல, உயிரோடிருக்கிற
வன், உயிரோடிருக்கிறவனே, உம்மைத் துதி
ப்பான், [9]தகப்பன் பிள்ளைகளுக்கு உமது சத்
தியத்தைத் தெரிவிப்பான். கர்த்தர் என்னை 20
ரட்சிக்க வந்தார்; ஆகையால் எங்கள் ஜீவநா
ளெல்லாம் கர்த்தருடைய ஆலயத்திலே என்
கீதவாத்தியங்களை வாசித்துப் பாடுவோம்
என்று எழுதிவைத்தான்.
அத்திப்பழத்து அடையைக் கொண்டுவந்து, 21
பிளவையின்மேல் பற்றுப்போடுங்கள்; [10]அப்
பொழுது பிழைப்பார் என்று ஏசாயா சொல்லி
யிருந்தான். அப்பொழுது எசேக்கியா: நான் 22
கர்த்தருடைய ஆலயத்துக்குப் போவதற்கு
அடையாளம் என்னவென்று கேட்டிருந்தான்.
அக்காலத்திலே பலாதானின் குமாரனா 39
கிய மெரோதாக்பலாதான் என்னும் பாபி
லோனின் ராஜா, எசேக்கியா வியாதிப்பட்டி
ருந்து ஆரோக்கியமானதைக் கேள்விப்பட்டு,
[11]அவனிடத்திற்கு நிருபங்களையும் வெகுமா
னத்தையும் அனுப்பினான். எசேக்கியா அவர் 2
களைக் கண்டு சந்தோஷப்பட்டு, தன் பொக்கி
ஷசாலையையும், வெள்ளியையும், பொன்னை
யும், கந்தவர்க்கங்களையும், நல்ல பரிமளதை
லத்தையும், தன் ஆயுதசாலை அனைத்தையும்,
தன் பொக்கிஷசாலைகளில் உள்ளதெல்லாவற்
றையும் அவர்களுக்குக் காண்பித்தான்; எசேக்
கியா தன் அரமனையிலும், தன் ராஜ்யத்தில்
எங்கும் அவர்களுக்குக் காண்பியாத பொருள்
ஒன்றும் இல்லை. அப்பொழுது ஏசாயா தீர்க்க 3
தரிசி எசேக்கியா ராஜாவினிடத்தில் வந்து:
அந்த மனுஷர் என்ன சொன்னார்கள், எங்கே
யிருந்து உம்மிடத்தில் வந்தார்கள் என்று கேட்
டான். அதற்கு எசேக்கியா: பாபிலோன் என்
னும் தூரதேசத்திலிருந்து என்னிடத்திற்கு
வந்தார்கள் என்றான். அப்பொழுது அவன்: 4
உம்முடைய வீட்டில் என்னத்தைப் பார்த்தார்
கள் என்று கேட்டான். அதற்கு எசேக்கியா:
என் வீட்டிலுள்ளதெல்லாவற்றையும் பார்த்
தார்கள்; என் பொக்கிஷங்களில் நான் அவர்
களுக்குக் காண்பியாத பொருள் ஒன்றும்
இல்லை என்றான். அப்பொழுது ஏசாயா 5
எசேக்கியாவை நோக்கி: சேனைகளுடைய
கர்த்தரின் வார்த்தையைக் கேளும். இதோ, 6
நாட்கள் வரும்; [12]அப்பொழுது உன் வீட்டில்
உள்ளதிலும், உன் பிதாக்கள் இந்நாள்வரைக்
கும் சேர்த்ததிலும் ஒன்றும் மீதியாய் வைக்கப்
படாமல் எல்லாம் பாபிலோனுக்குக் கொண்டு
போகப்படும். நீ பெறப்போகிற உன் சந்த 7
தியாகிய உன் குமாரரிலும் சிலர் பாபிலோன்
ராஜாவின் அரமனையிலே [13]அரமனை வேலைக்

காராயிருப்பார்கள் என்று **கர்த்தர்** சொல்லு
8 கிறுர் என்றுன். அப்பொழுது எசேக்கியா
ஏசாயாவை நோக்கி: [1]நீர் சொன்ன **கர்த்தரு**
**டைய** வார்த்தை நல்லதுதான் என்று சொல்லி,
என் நாட்களிலாவது சமாதானமும் உண்மை
யும் இருக்குமே என்றுன்.

**40** என் ஜனத்தை ஆற்றுங்கள், [2]தேற்றுங்
2 கள்; எருசலேமுடன் பட்சமாய்ப் பேசி,
அதின் போர் முடிந்தது என்றும், அதின்
அக்கிரமம் நிவிர்த்தியாயிற்று என்றும், அது
தன் சகல பாவங்களினிமித்தமும் **கர்த்தரின்**
கையில் இரட்டிப்பாய் அடைந்து தீர்ந்தது
என்றும், [3]அதற்குக் கூறுங்கள் என்று உங்
கள் தேவன் சொல்லுகிறுர்.
3 **கர்த்தருக்கு** வழியை ஆயத்தப்படுத்துங்கள்,
[4]அவாந்தரவெளியிலே நம்முடைய தேவனுக்
குப் பாதையைச் செவ்வை பண்ணுங்கள் என்
4 றும், பள்ளமெல்லாம் உயர்த்தப்பட்டு, [5]சகல
மலையும் குன்றும் தாழ்த்தப்பட்டு, கோணலா
னது செவ்வையாகி, கரடுமுரடானவை சம
5 மாக்கப்படும் என்றும், **கர்த்தரின்** மகிமை
வெளியரங்கமாகும், மாம்சமான யாவும் அதை
ஏகமாய்க் காணும், **கர்த்தரின்** வாக்கு அதை
உரைத்தது என்றும் வனாந்தரத்திலே கூப்பிடு
6 கிற சத்தம் உண்டாயிற்று. பின்னும் கூப்
பிட்டுச் சொல் என்று ஒரு சத்தம் உண்டா
யிற்று; என்னத்தைக் கூப்பிட்டுச் சொல்வேன்
என்றேன். [6]அதற்கு: மாம்சமெல்லாம் புல்
லைப்போலவும், அதின் மேன்மையெல்லாம்
வெளியின் பூவைப்போலாவும் இருக்கிறது.
7 **கர்த்தரின்** ஆவி அதின்மேல் ஊதும்போது,
8 புல் உலர்ந்து, பூ உதிரும்; ஜனமே புல். புல்
உலர்ந்து பூ உதிரும்; [7]நமது தேவனுடைய
வசனமோ என்றென்றைக்கும் நிற்கும் என்
பதையே சொல் என்று உரைத்தது.
9 சீயோன் என்னும் சுவிசேஷகியே, நீ
உயர்ந்த பர்வதத்தில் ஏறு; [8]எருசலேம் என்
னும் சுவிசேஷகியே, நீ உரத்த சத்தமிட்டுக்
கூப்பிடு, பயப்படாமல் சத்தமிட்டு, யூதா பட்
டணங்களை நோக்கி: இதோ, உங்கள் தேவன்
10 என்று கூறு. இதோ, கர்த்தராகிய ஆண்ட
வர் பராக்கிரமசாலியாக வருவார்; அவர் தமது
புயத்தினுல் அரசாளுவார்; இதோ, அவர்
அளிக்கும் பலன் அவரோடேகூட வருகிறது;
[9]அவர் கொடுக்கும் பிரதிபலன் அவருடைய
முகத்துக்கு முன்பாகச் செல்லுகிறது.
11 மேய்ப்பனைப்போல தமது மந்தையை மேய்ப்
பார்; [10]ஆட்டுக்குட்டிகளைத் தமது புயத்தினுல்
சேர்த்து, தமது மடியிலே சுமந்து, கறவலாடு
களை மெதுவாய் நடத்துவார்.
12 தண்ணீர்களைத் தமது கைப்பிடியால் அள
ந்து, வானங்களைச் சாணளவாய்ப் பிரமாணி
த்து, பூமியின் மண்ணை மரக்காலில் அடக்கி,
[11]பர்வதங்களைத் துலாக்கோலாலும், மலைகளைத்
13 தராசாலும் நிறுத்தவர் யார்? **கர்த்தருடைய**
ஆவியை அளவிட்டு, [12]அவருக்கு ஆலோச
னைக்காரனுயிருந்து, அவருக்குப் போதித்த
வன் யார்? தமக்கு அறிவை உணர்த்தவும், 14
தம்மை நியாயவழியிலே உபதேசிக்கவும், தம
க்கு ஞானத்தைக் கற்றுக்கொடுக்கவும், தமக்கு
விவேகத்தின் வழியை அறிவிக்கவும், அவர்
யாரோடே ஆலோசனைபண்ணினுர்? இதோ, 15
ஜாதிகள் ஏற்றச்சாலில் தொங்கும் துளிபோல
வும், தராசிலே படியும் தூசிபோலவும் எண்
ணப்படுகிறுர்கள்; இதோ, தீவுகளை ஒரு அணு
வைப்போல் தூக்குகிறுர். லீபனோன் எரிக் 16
கும் விறகுக்குப் போதாது; அதிலுள்ள மிருக
ஜீவன்கள் தகனபலிக்கும் போதாது. சகல 17
ஜாதிகளும் அவருக்குமுன்பாக ஒன்றுமில்லை,
[13]அவர்கள் சூனியத்தில் சூனியமாகவும், மா
யையாகவும் எண்ணப்படுகிறுர்கள். இப்படி 18
யிருக்க, தேவனை யாருக்கு ஒப்பிடுவீர்கள்?
[14]எந்தச் சாயலை அவருக்கு ஒப்பிடுவீர்கள்?
கன்னுன் ஒரு சுரூபத்தை வார்க்கிறுன், [15]தட் 19
டான் பொன்தகட்டால் அதை மூடி, அத
ற்கு வெள்ளிச் சங்கிலிகளைப் பொருந்தவைக்
கிறுன். அதற்குக் கொடுக்க வகையில்லாத 20
வன் உளுத்துப்போகாத மரத்தைத் தெரிந்து
கொண்டு, அசையாத ஒரு சுரூபத்தைச் செய்
யும்படி நிபுணனை ஒரு தச்சனைத் தேடுகி
றுன். நீங்கள் அறியீர்களா? நீங்கள் கேள் 21
விப்படவில்லையா? [16]ஆதிமுதல் உங்களுக்குத்
தெரிவிக்கப்படவில்லையா? பூமி அஸ்திபாரப்
பட்டதுமுதல் உணராதிருக்கிறீர்களா? அவர் 22
பூமி உண்டையின்மேல் வீற்றிருக்கிறவர்;
[17]அதின் குடிகள் வெட்டுக்கிளிகளைப்போல
இருக்கிறுர்கள்; அவர் வானங்களை மெல்லிய
திரையாகப் பரப்பி, அவைகளைக் குடியிருக்
கிறதற்கான கூடாரமாக விரிக்கிறுர். அவர் 23
பிரபுக்களை மாயையாக்கி, [18]பூமியின் நியாயாதி
பதிகளை அவாந்தரமாக்குகிறுர். அவர்கள் 24
திரும்ப நாட்டப்படுவதுமில்லை, விதைக்கப்படு
வதுமில்லை; அவர்களுடைய அடிமரம் திரும்
பப் பூமியிலே வேர் விடுவதுமில்லை; அவர்
கள்மேல் அவர் ஊதவே பட்டுப்போவார்கள்;
பெருங்காற்று அவர்களை ஒரு துரும்பைப்
போல் அடித்துக்கொண்டுபோம். இப்படி 25
யிருக்க, என்னை யாருக்கு ஒப்பிடுவீர்கள்?
எனக்கு யாரை நிகராக்குவீர்கள்? [19]என்று
பரிசுத்தர் சொல்லுகிறுர். உங்கள் கண்களை 26
ஏறெடுத்துப் பாருங்கள்; அவைகளைச் சிருஷ்
டித்தவர் யார்? அவர் அவைகளின் சேனையை
இலக்கத்திட்டமாகப் புறப்படப்பண்ணி,
[20]அவைகளையெல்லாம் பேர்பேராக அழைக்
கிறவராமே; அவருடைய மகா பெலத்தினு
லும், அவருடைய மகா வல்லமையினுலும்,
அவைகளில் ஒன்றும் குறையாமலிருக்கிறது.
யாக்கோபே, இஸ்ரவேலே: என் வழி **கர்த்** 27
**தருக்கு** மறைவாயிற்று என்றும், என் நியாயம்
என்தேவனிடத்தில்எட்டாமல்போகிறதுஎன்
றும் நீ சொல்வானேன்? பூமியின் கடையாந் 28
தரங்களைச் சிருஷ்டித்த **கர்த்தராகிய** அநாதி
தேவன் சோர்ந்துபோவதுமில்லை, இளைப்
படைவதுமில்லை; இதை நீ அறியாயோ, இதை

1 1 சாமு. 3. 18
2 எபி. 6. 17, 18
3 61. 7. யோபு 42. 10
4 மல். 3. 1. மத். 3. 3
5 45. 2
6 யோபு 14. 2. சங். 103. 15, 16. யாக். 1. 10, 11. 1 பே. 1. 24
7 மாற். 13. 31. யோ. 12. 34. 1 பே. 1. 25
8 41. 27. 52. 7
9 வெளி. 22. 12
10 சங். 23. யோ. 10. 11. எபி. 13. 20. 1 பே. 2. 25. வெளி. 7. 17
11 நீதி. 30. 4
12 யோபு 21. 22. ரோ. 11. 34. 1 கொ. 2. 16
13 தானி. 4. 35. சங். 62. 9
14 அப். 17. 29
15 41. 6, 7: 44. 12. எரே. 10. 3. ஃ
16 சங். 19. 1. அப். 14. 17. ரோ. 1. 19, 20
17 யோபு 9. 8
18 யோபு 12. 21. சங். 107. 40
19 உபா. 4. 15. ஃ
20 சங். 147. 4

நீ கேட்டதில்லையோ? [1]அவருடைய புத்தி
29 ஆராய்ந்து முடியாதது. சோர்ந்துபோகிறவ
னுக்கு அவர் பெலன் கொடுத்து, [2]சத்துவமில்
லாதவனுக்குச் சத்துவத்தைப் பெருகப்பண்
30 ணுகிறார். இளைஞர் இளைப்படைந்து சோர்ந்
துபோவார்கள், வாலிபரும் இடறிவிழுவார்
31 கள். **கர்த்தருக்குக்** காத்திருக்கிறவர்களோ
புதுப்பெலன் அடைந்து, [3]கழுகுகளைப்போ
லச் செட்டைகளை அடித்து எழும்புவார்கள்;
அவர்கள் ஓடினாலும் இளைப்படையார்கள்,
நடந்தாலும் சோர்ந்துபோகார்கள்.

**41** தீவுகளே, எனக்கு முன்பாக மவுனமா
யிருங்கள்; [4]ஜனங்கள் தங்கள் பெலனைப் புதி
தாக்கிக்கொண்டு, சமீபித்து வந்து, பின்பு
பேசக்கடவர்கள்; நாம் ஒருமிக்க நியாயாசனத்
2 துக்கு முன்பாகச் சேருவோம். கிழக்கிலிருந்து
நீதிமானை எழுப்பி, தமது பாதபடியிலே வர
வழைத்தவர் யார்? [5]ஜாதிகளை அவனுக்கு ஒப்
புக்கொடுத்து, அவனை ராஜாக்களுக்கு ஆண்ட
வனாக்கி, அவர்களை அவன் பட்டயத்துக்குத்
தூசியும், அவன் வில்லுக்குச் சிதறடிக்கப்பட்ட
3 தாளடியுமாக்கி, அவன் அவர்களைத் துரத்த
வும், தன் கால்கள் நடவாதிருந்த பாதையிலே
சமாதானத்தோடே நடக்கவும் பண்ணினவர்
4 யார்? அதைச் செய்து நிறைவேற்றி, ஆதி
முதற்கொண்டு தலைமுறைகளை வரவழைக்கிற
வர் யார்? [6]முந்தினவராயிருக்கிற **கர்த்தராகிய**
நான்தானே; பிந்தினவர்களோடும் இருப்பவ
5 ராகிய நான்தானே. தீவுகள் அதைக் கண்டு
பயப்படும், பூமியின் கடையாந்தரங்கள் நடுங்
6 கும்; அவர்கள் சேர்ந்துவந்து, ஒருவருக்கு
ஒருவர் ஒத்தாசைசெய்து திடன்கொள் என்று
சகோதரனுக்குச் சகோதரன் சொல்லுகிறான்.
7 சித்திரவேலைக்காரன் தட்டானையும், சுத்தியா
லே மெல்லிய தகடு தட்டுகிறவன் அடைகல்
லின்மேல் அடிக்கிறவனையும் உற்சாகப்படுத்தி,
இசைக்கிறதற்கான பக்குவமென்று சொல்லி,
அது அசையாதபடிக்கு அவன் ஆணிகளால்
அதை இறுக்குகிறான்.
8 என் தாசனாகிய இஸ்ரவேலே, நான் தெரிந்
துகொண்ட யாக்கோபே, [7]என் சிநேகிதனான
9 ஆபிரகாமின் சந்ததியே, நான் பூமியின் கடை
யாந்தரங்களிலிருந்து, உன்னை எடுத்து, அதின்
எல்லைகளிலிருந்து அழைத்துவந்து: நீ என்
தாசன், நான் உன்னைத் தெரிந்துகொண்டேன்,
நான் உன்னை வெறுத்துவிடவில்லை என்று
10 சொன்னேன். நீ பயப்படாதே, [8]நான் உன்
னுடனே இருக்கிறேன்; திகையாதே, நான்
உன் தேவன்; நான் உன்னைப் பலப்படுத்தி
உனக்குச் சகாயம்பண்ணுவேன்; என் நீதியின்
வலதுகரத்தினால் உன்னைத் தாங்குவேன்.
11 இதோ, உன்மேல் எரிச்சலாயிருக்கிற யாவ
ரும் வெட்கி இலச்சையடைவார்கள்; [9]உன்
னோடே வழக்காடுகிறவர்கள் நாசமாகி ஒன்று
12 மில்லாமற்போவார்கள். உன்னோடே போரா
டினவர்களைத் தேடியும் காணாதிருப்பாய்; உன்
னோடே யுத்தம்பண்ணின மனுஷர் ஒன்று

[1] சங். 147. 5. ரோ. 11. 33
[2] 2 கொ. 12. 9
[3] சங். 103. 5. 2 கொ. 4. 16
[4] சகரி. 2. 13
[5] 46. 11. ஆதி. 14. 14.
[6] வெளி. 1. 17 22. 13
[7] உபா. 7. 6. 2 நாளா. 20. 7. சங். 135. 4. யாக். 2. 23
[8] 43. 5. உபா. 31. 6, 8
[9] யாத். 23. 22. சகரி. 12. 3
[10] மீகா. 4. 13. 2 கொ. 10. 4, 5
[11] எரே. 51. 2. மத். 3. 12
[12] 45. 25
[13] 35. 6, 7
[14] யோபு 12. 9
[15] 45. 21. யோ. 13. 19
[16] எரே. 10. 5
[17] சங். 115. 8. 1 கொ. 8. 4

மில்லாமல் இல்பொருளாவார்கள். உன் தேவ 13
னாயிருக்கிற **கர்த்தராகிய** நான் உன் வலது
கையைப் பிடித்து: பயப்படாதே, நான் உனக்
குத் துணைநிற்கிறேன் என்று சொல்லுகிறேன்.
யாக்கோபு என்னும் பூச்சியே, இஸ்ரவேலின் 14
சிறு கூட்டமே, பயப்படாதே; நான் உனக்
குத் துணைநிற்கிறேன் என்று **கர்த்தரும்** இஸ்ர
வேலின் பரிசுத்தருமாகிய உன் மீட்பர் உரைக்
கிறார். இதோ, போரடிக்கிறதற்கு நான் உன் 15
னைப் புதிதும் கூர்மையுமான பற்களுள்ள யந்
திரமாக்குகிறேன்; [10]நீ மலைகளை மிதித்து நொ
றுக்கி, குன்றுகளைப் பதருக்கு ஒப்பாக்கிவிடு
வாய். அவைகளைத் தூற்றுவாய், [11]அப்பொ 16
ழுது காற்று அவைகளைக் கொண்டுபோய்,
சுழல்காற்று அவைகளைப் பறக்கடிக்கும்;
[12]நீயோ **கர்த்தருக்குள்ளே** களிகூர்ந்து, இஸ்ர
வேலின் பரிசுத்தருக்குள்ளே மேன்மைபாராட்
டிக்கொண்டிருப்பாய். சிறுமையும் எளிமை 17
யுமானவர்கள் தண்ணீரைத் தேடி, அது கிடை
யாமல், அவர்கள் நாவு தாகத்தால் வறளும்
போது, **கர்த்தராகிய** நான் அவர்களுக்குச்
செவி கொடுத்து, இஸ்ரவேலின் தேவனா
கிய நான் அவர்களைக் கைவிடாதிருப்பேன்.
உயர்ந்த மேடுகளில் ஆறுகளையும், பள்ளத்தாக் 18
குகளின் நடுவே ஊற்றுகளையும் திறந்து,
[13]வனாந்தரத்தைத் தண்ணீர்த்தடாகமும், வற
ண்ட பூமியை நீர்க்கேணிகளுமாக்கி, வனாந் 19
தரத்திலே கேதுருமரங்களையும், சீத்திம்மரங்
களையும், மிருதுச்செடிகளையும், ஒலிவமரங்க
ளையும் நட்டு, அவாந்தரவெளியிலே தேவதாரு
விருட்சங்களையும், பாய்மர விருட்சங்களையும்,
புன்னைமரங்களையும் உண்டுபண்ணுவேன்.
**கர்த்தருடைய** கரம் அதைச் செய்தது என்றும், 20
[14]இஸ்ரவேலின் பரிசுத்தர் அதைப் படைத்தார்
என்றும், யாவரும் கண்டு உணர்ந்து சிந்தித்து
அறிவார்கள்.
உங்கள் வழக்கைக் கொண்டுவாருங்கள் 21
என்று **கர்த்தர்** சொல்லுகிறார்; உங்கள் பல
மான நியாயங்களை வெளிப்படுத்துங்கள்
என்று யாக்கோபின் ராஜா உரைக்கிறார்.
அவர்கள் அவைகளைக் கொண்டுவந்து, சம்ப 22
விக்கப்போகிறவைகளை நமக்குத் தெரிவிக்கட்
டும்; [15]அவைகளில் முந்தி சம்பவிப்பவைகள்
இன்னவைகளென்று சொல்லி, நாம் நம்மு
டைய மனதை அவைகளின்மேல் வைக்கும்
படிக்கும், பிந்தி சம்பவிப்பவைகளையும் நாம்
அறியும்படிக்கும் நமக்குத் தெரிவிக்கட்டும்;
வருங்காரியங்களை நமக்கு அறிவிக்கட்டும்.
பின்வரும் காரியங்களை எங்களுக்குத் தெரிவி 23
யுங்கள்; அப்பொழுது நீங்கள் தேவர்கள் என்று
அறிவோம்; [16]அல்லது நன்மையாவது தீமை
யாவது செய்யுங்கள்; அப்பொழுது நாங்கள்
திகைத்து ஏகமாய்க் கூடி அதைப் பார்ப்போம்.
இதோ, நீங்கள் சூனியத்திலும் சூனியமா 24
யிருக்கிறீர்கள்; [17]உங்கள் செயல் வெறுமை
யிலும் வெறுமையானது; உங்களைத் தெரிந்து
கொள்ளுகிறவன் அருவருப்பானவன்.

25 நான் வடக்கேயிருந்து ஒருவனை எழும்பப்
பண்ணுவேன், அவன் வருவான்; சூரியோ
தய திசையிலிருந்து என் நாமத்தைத் தொ
ழுதுகொள்ளுவான்; [1]அவன் வந்து அதிபதி
களைச் சேற்றைப்போலவும், குயவன் களி
மண்ணை மிதிப்பதுபோலவும் மிதிப்பான்.
26 நாம் அதை அறியும்படியாக ஆதியில் சொன்
னவன் யார்? நாம் அவனை யதார்த்தவான்
என்று சொல்லும்படி பூர்வகாலத்தில் அறி
வித்தவன் யார்? அறிவிக்கிறவன் ஒருவனும்
இல்லையே; உரைக்கிறவனும் இல்லையே;
உங்கள் வார்த்தைகளைக் கேட்டிருக்கிறவனும்
27 இல்லையே. முதல்முதல், நானே, சீயோனை
நோக்கி: [2]இதோ, அவைகளைப் பார் என்று
சொல்லி, எருசலேமுக்குச் சுவிசேஷகனைக்
28 கொடுக்கிறேன். நான் பார்த்தேன், அவர்
களில் அறிவிக்கிறவன் ஒருவனுமில்லை; நான்
கேட்குங் காரியத்துக்குப் பிரதியுத்தரம் கொ
டுக்கத்தக்க ஒரு ஆலோசனைக்காரனும் அவர்
29 களில் இல்லை. இதோ, அவர்கள் எல்லா
ரும் மாயை, அவர்கள் கிரியைகள் விருதா;
அவர்களுடைய விக்கிரகங்கள் காற்றும் வெறு
மையுந்தானே.

42 இதோ, நான் ஆதரிக்கிற என் தாசன்,
[3]நான் தெரிந்துகொண்டவரும், என் ஆத்து
மாவுக்குப் பிரியமானவரும் இவரே; [4]என்
ஆவியை அவர்மேல் அமரப்பண்ணினேன்;
அவர் புறஜாதிகளுக்கு நியாயத்தை வெளிப்
2 படுத்துவார். அவர் கூக்குரலிடவுமாட்டார்,
தம்முடைய சத்தத்தை உயர்த்தவும் அதை
3 வீதியிலே கேட்கப்பண்ணவுமாட்டார். அவர்
நெரிந்த நாணலை முறியாமலும், மங்கியெரி
கிற திரியை அணையாமலும், நியாயத்தை
4 உண்மையாக வெளிப்படுத்துவார். அவர்
நியாயத்தைப் பூமியிலே நிலைப்படுத்துமட்டும்
இளக்கரிப்பதுமில்லை, பதறுவதுமில்லை; [5]அவ
ருடைய வேதத்துக்குத் தீவுகள் காத்திருக்கும்.
5 வானங்களைச் சிருஷ்டித்து, [6]அவைகளை
விரித்து, பூமியையும், அதிலே உற்பத்தியா
கிறவைகளையும் பரப்பினவரும், அதில் இருக்
கிற ஜனத்துக்குச் சுவாசத்தையும், [7]அதில்
நடமாடுகிறவர்களுக்கு ஆவியையும் கொடுக்
கிறவருமான **கர்த்தராகிய** தேவன் சொல்லு
6 கிறதாவது: நீர் குருடருடைய கண்களைத்
திறக்கவும், [8]கட்டுண்டவர்களைக் காவலிலிருந்
தும், இருளில் இருக்கிறவர்களைச் சிறைச்
7 சாலையிலிருந்தும் விடுவிக்கவும், **கர்த்தராகிய**
நான் நீதியின்படி உம்மை அழைத்து, உம்மு
டைய கையைப் பிடித்து, உம்மைத் தற்
காத்து, [9]உம்மை ஜனத்திற்கு உடன்படிக்கை
யாகவும், ஜாதிகளுக்கு ஒளியாகவும் வைக்கி
8 றேன். நான் *கர்த்தர், இது என் நாமம்; என்
மகிமையை வேறொருவனுக்கும், [10]என் துதி
9 யை விக்கிரகங்களுக்கும் கொடேன். பூர்வ
காலத்தில் தெரிவிக்கப்பட்டவைகள், இதோ,
நிறைவேறலாயின; புதியவைகளையும் நானே
அறிவிக்கிறேன்; அவைகள் தோன்றுததற்கு
முன்னே, அவைகளை உங்களுக்குச் சொல்லு
கிறேன்.
சமுத்திரத்தில் யாத்திரைபண்ணுகிறவர்க 10
ளே, அதிலுள்ளவைகளே, தீவுகளே, அவை
களின் குடிகளே, **கர்த்தருக்குப்** புதுப்பாட்
டைப் பாடுங்கள்; பூமியின் கடையாந்தரத்தி
லிருந்து அவருடைய துதியைப் பாடுங்கள்.
வனாந்தரமும், அதின் ஊர்களும், கேதாரியர் 11
குடியிருக்கிற கிராமங்களும் உரத்த சத்தமிடக்
கடவது; கன்மலைகளிலே குடியிருக்கிறவர்
கள் கெம்பீரித்து, பர்வதங்களின் கொடுமுடி
யிலிருந்து ஆர்ப்பரிப்பார்களாக. **கர்த்தருக்கு** 12
மகிமையைச் செலுத்தி, அவர் துதியைத் தீவு
களில் அறிவிப்பார்களாக. **கர்த்தர்** பராக் 13
கிரமசாலியைப்போல் புறப்பட்டு, யுத்தவீர
னைப்போல் வைராக்கியமூண்டு, முழங்கிக்
கெர்ச்சித்து, தம்முடைய சத்துருக்களை மேற்
கொள்ளுவார். நான் வெகுகாலம் மவுனமா 14
யிருந்தேன்; சும்மாயிருந்து எனக்குள்ளே
அடக்கிக்கொண்டிருந்தேன்; இப்பொழுது
பிள்ளை பெறுகிறவளைப்போலச் சத்தமிட்டு,
அவர்களைப் பாழாக்கி விழுங்குவேன். நான் 15
மலைகளையும் குன்றுகளையும் பாழாக்கி, அவை
களிலுள்ள பூண்டுகளையெல்லாம் வாடப்பண்
ணி, ஆறுகளைத் திட்டுகளாக்கி, ஏரிகளை
வற்றிப்போகப்பண்ணுவேன். குருடரை 16
அவர்கள் அறியாத வழியிலே நடத்தி, அவர்
களுக்குத் தெரியாத பாதைகளில் அவர்களை
அழைத்துக்கொண்டு வந்து, அவர்களுக்கு
முன்பாக இருளை வெளிச்சமும், கோணலைச்
செவ்வையுமாக்குவேன்; இந்தக் காரியங்களை
நான் அவர்களுக்குச் செய்து, அவர்களைக்
கைவிடாதிருப்பேன். சித்திரவேலையான விக் 17
கிரகங்களை நம்பி, [11]வார்ப்பிக்கப்பட்ட சுரூ
பங்களை நோக்கி: நீங்கள் எங்கள் தேவர்கள்
என்று சொல்லுகிறவர்கள் பின்னிடைந்து
மிகவும் வெட்கப்படுவார்கள்.
செவிடரே, கேளுங்கள்; குருடரே, நீங் 18
கள் காணும்படி நோக்கிப்பாருங்கள். என் 19
தாசனையல்லாமல் குருடன் யார்? நான் அனுப்
பிய தூதனையல்லாமல் செவிடன் யார்? [12]உத்
தமனையல்லாமல் குருடன் யார்? **கர்த்தரு**
**டைய** ஊழியக்காரனை யல்லாமல் அந்தகன்
யார்? நீ அநேக காரியங்களைக் கண்டும் கவ 20
னியாதிருக்கிறாய்; [13]அவனுக்குச் செவிகளைத்
திறந்தாலும் கேளாதேபோகிறான். **கர்த்தர்** 21
தமது நீதியினிமித்தம் அவன்மேல் பிரியம்
வைத்திருந்தார்; [14]அவர் வேதத்தை முக்கியப்
படுத்தி அதை மகிமையுள்ளதாக்குவார். இந்த 22
ஜனமோ கொள்ளையிடப்பட்டும், சூறையா
டப்பட்டும் இருக்கிறார்கள்; அவர்கள் அனை
வரும் கெபிகளிலே அகப்பட்டு, காவலறை
களிலே அடைக்கப்பட்டிருக்கிறார்கள்; தப்பு
விப்பார் இல்லாமல் கொள்ளையாகி, விட்டு
விடு என்பார் இல்லாமல் சூறையாவார்கள்.
உங்களில் இதற்குச் செவிகொடுத்துப் பின் 23
வருகிறதைக் கவனித்துக் கேட்கிறவன் யார்?

1 எஸ்றா 1. 2
2 40. 9
3 மத். 12. 18-20: 17. 5. யோ. 3. 34. எபே. 1. 6. பிலி. 2. 7
4 61. 1-3. மத். 11. 28
5 ஆதி. 49. 10. சங். 72. 2-4
6 44. 24. சகரி. 12. 1
7 அப். 17. 25
8 லூ. 4. 18. 2 தீமோ. 2. 26
9 லூ. 2. 30. அப். 13. 47
* யேகோவா.
10 48. 11
11 சங். 97. 7
12 எபே. 12. 2. யோ. 9. 39, 41
13 ரோ. 2. 21
14 மத். 5. 17. ரோ. 10. 3, 4. பிலி. 3. 9

24 யாக்கோபைச் சூறையிட்டு இஸ்ரவேலைக்
கொள்ளைக்காரருக்கு ஒப்புக்கொடுக்கிறவர்
யார்? அவர்கள் பாவஞ்செய்து விரோதித்த
**கர்த்தர்** அல்லவோ? அவருடைய வழிகளில்
நடக்க மனதாயிராமலும், அவருடைய வே
தத்துக்குச் செவிகொடாமலும் போனார்களே.
25 இவர்கள்மேல் அவர் தமது கோபத்தின் உக்
கிரத்தையும், யுத்தத்தின் வலிமையையும் வரப்
பண்ணி, அவர்களைச் சூழ அக்கினிஜுவாலை
களைக் கொளுத்தியிருந்தும் உணராதிருந்தார்
கள்; அது அவர்களைத் தகித்தும், அதை மன
திலே வைக்காதேபோனார்கள்.

**43** இப்போதும் யாக்கோபே, உன்னைச்
சிருஷ்டித்தவரும், இஸ்ரவேலே, உன்னை
உருவாக்கினவருமாகிய **கர்த்தர்** சொல்லுகிற
தாவது: [1]பயப்படாதே; உன்னை மீட்டுக்
கொண்டேன்; உன்னைப் பேர்சொல்லி
2 அழைத்தேன்; நீ என்னுடையவன். நீ தண்
ணீர்களைக் கடக்கும்போது நான் உன்னோடே
இருப்பேன்; நீ [2]ஆறுகளைக் கடக்கும்போது
அவைகள் உன்மேல் புரளுவதில்லை; நீ அக்
கினியில் நடக்கும்போது வேகாதிருப்பாய்;
[3]அக்கினிஜுவாலை உன்பேரில் பற்றாது.
3 நான் இஸ்ரவேலின் பரிசுத்தரும் உன் ரட்
சகருமாயிருக்கிற உன் தேவனாகிய **கர்த்தர்**;
[4]உன்னை மீட்கும்பொருளாக எகிப்தையும்,
உனக்கு ஈடாக எத்தியோப்பியாவையும் சே
4 பாவையும் கொடுத்தேன். நீ என் பார்வை
க்கு அருமையானபடியினால் கனம்பெற்றாய்;
நானும் உன்னைச் சிநேகித்தேன், ஆதலால்
உனக்குப் பதிலாக மனுஷர்களையும், உன்
ஜீவனுக்கு ஈடாக ஜனங்களையும் கொடுப்
5 பேன். பயப்படாதே, நான் உன்னோடே
இருக்கிறேன்; நான் உன் சந்ததியைக் கிழக்கி
லிருந்து வரப்பண்ணி, உன்னை மேற்கிலும்
6 இருந்து கூட்டிச்சேர்ப்பேன். நான் வடக்கை
நோக்கி: கொடு என்றும், தெற்கை நோக்கி:
வைத்திராதே என்றும் சொல்லி, தூரத்தி
லிருந்து என் குமாரரையும், பூமியின் கடை
யாந்தரத்திலிருந்து என் குமாரத்திகளையும்,
7 நான் என் மகிமைக்கென்று சிருஷ்டித்து உரு
வாக்கிப் படைத்து, [5]என் நாமந்தரிக்கப்பட்ட
8 யாவரையும் கொண்டுவா என்பேன். கண்க
ளிருந்தும் குருடராயிருக்கிற ஜனத்தையும்,
[6]காதுகளிருந்தும் செவிடராயிருக்கிறவர்களை
9 யும் புறப்பட்டு வரப்பண்ணுங்கள். சகல ஜா
திகளும் ஏகமாய்ச் சேர்ந்துகொண்டு, சகல
ஜனங்களும் கூடிவரட்டும்; இதை அறிவித்து,
முந்தி சம்பவிப்பவைகளை நமக்குத் தெரிவிக்கி
றவன் யார்? கேட்டு மெய்யென்று சொல்லக்
கூடும்படிக்கு, அவர்கள் தங்கள் சாட்சிகளைக்
கொண்டுவந்து யதார்த்தவான்களாய் விளங்கட்
10 டும். நானே அவரென்று நீங்கள் உணர்ந்து,
என்னை அறிந்து விசுவாசிக்கும்படிக்கு, [7]நீங்
களும் நான் தெரிந்துகொண்ட என் தாசனும்
எனக்குச் சாட்சிகளாயிருக்கிறீர்கள் என்று **கர்
த்தர்** சொல்லுகிறார்; எனக்குமுன் ஏற்பட்ட
தேவன் இல்லை; எனக்குப்பின் இருப்பதும்
இல்லை. நான், நானே **கர்த்தர்**; [8]என்னையல் 11
லாமல் ரட்சகர் இல்லை. நானே அறிவித்து, 12
இரட்சித்து, விளங்கப்பண்ணினேன்; உங்க
ளில் இப்படிச் செய்யத்தக்க அந்நிய தேவன்
இல்லை; [9]நானே தேவன் என்பதற்கு நீங்கள்
எனக்குச் சாட்சிகள் என்று **கர்த்தர்** சொல்லு
கிறார். நாள் உண்டாகாததற்கு முன்னும் 13
நானே இருக்கிறேன்; [10]என் கைக்குத் தப்பு
விக்கத்தக்கவன் இல்லை; நான் செய்கிறதைத்
தடுப்பவன் யார்?

நான் உங்களுக்காக அரண்களெல்லாம் 14
இடிந்து விழவும், கல்தேயர் படவுகளிலிருந்து
அலறவும் செய்யத்தக்கவர்களைப் பாபிலோ
னுக்கு அனுப்பினேனென்று, உங்கள் மீட்ப
ரும் இஸ்ரவேலின் பரிசுத்தருமாகிய **கர்த்தர்**
சொல்லுகிறார். நானே உங்கள் பரிசுத்தரா 15
கிய **கர்த்தரும்**, இஸ்ரவேலின் சிருஷ்டிகரும்,
உங்கள் ராஜாவுமானவர். சமுத்திரத்திலே 16
வழியையும் [11]வலிய தண்ணீர்களிலே பாதை
யையும் உண்டாக்கி, இரதங்களையும் குதிரை 17
களையும் இராணுவங்களையும் பராக்கிரமசாலிக
ளையும் புறப்படப்பண்ணி, [12]அவைகள் எழுந்தி
ராதபடிக்கு ஒருமித்து விழுந்துகிடக்கவும், ஒரு
திரி அணைகிறதுபோல் அவைகள் அணைந்து
போகவும்பண்ணுகிற **கர்த்தர்** சொல்லுகிறதா
வது: முந்தினவைகளை நினைக்கவேண்டாம்; 18
[13]பூர்வமானவைகளைச் சிந்திக்கவேண்டாம்.
இதோ, நான் புதிய காரியத்தைச் செய்கி 19
றேன்; இப்பொழுதே அது தோன்றும்; நீங்
கள் அதை அறியீர்களா? [14]நான் வனாந்தரத்தி
லே வழியையும், அவாந்தரவெளியிலே ஆறுக
ளையும் உண்டாக்குவேன். நான் தெரிந்து 20
கொண்ட என் ஜனத்தின் தாகத்துக்கு வனாந்
தரத்திலே தண்ணீர்களையும் அவாந்தரவெளி
யிலே ஆறுகளையும் உண்டாக்குவதினால், கா
ட்டு மிருகங்களும், வலுசர்ப்பங்களும், கோட்
டான் குஞ்சுகளும் என்னைக் கனம்பண்ணும்.
இந்த ஜனத்தை எனக்கென்று ஏற்படுத்தி 21
னேன்; [15]இவர்கள் என் துதியைச் சொல்லி
வருவார்கள். ஆனாலும் யாக்கோபே, நீ என்னை 22
நோக்கிக் கூப்பிடவில்லை; [16]இஸ்ரவேலே,
நீ என்னைக்குறித்து மனஞ்சலித்துப்போனாய்.
உன் ஆடுகளை தகனபலிகளாக நீ எனக்குச் 23
செலுத்தவில்லை; உன் பலிகளாலே நீ என்
னைக் கனம்பண்ணவுமில்லை; [17]காணிக்கைக
ளைச் செலுத்தும்படி நான் உன்னைச் சங்கடப்
படுத்தாமலும், தூபங்காட்டும்படி உன்னை வரு
த்தப்படுத்தாமலும் இருந்தேன். நீ எனக்குப் 24
பணங்களால் சுகந்த பட்டையைக் கொள்ளா
மலும், உன் பலிகளின் நிணத்தினால் என்
னைத் திருப்தியாக்காமலும், உன் பாவங்களி
னால் என்னைச் சங்கடப்படுத்தி, [18]உன் அக்கி
ரமங்களினால் என்னை வருத்தப்படுத்தினாய்.
நான், நானே உன் மீறுதல்களை என் நிமித்த 25
மாகவே குலைத்துப்போடுகிறேன்; [19]உன் பா
வங்களை நினையாமலும் இருப்பேன். நாம் 26

1 எரே. 33. 24, 26
2 சங். 66. 12. அப். 27. 20–25
3 தானி. 3. 25–27
4 நீதி. 11. 8: 21. 18
5 63. 19. யோ. 3. 3, 5. 2 கொ. 5. 17. எபே. 2. 10. யாக். 2. 7
6 எசே. 12. 2
7 44. 8
8 ஓசி. 13. 4, 5
9 உபா. 32. 16
10 யோ. 8. 58
11 யாத். 14. 16, 22. யோசு. 3. 13, 16
12 யாத். 14. 4–9, 25
13 எரே. 16. 14
14 யாத். 17. 6. உபா. 8. 15
15 லூ. 1. 74, 75. எபே. 1. 5, 6, 12
16 மல். 1. 13
17 ஆமோ. 5. 25
18 மல். 2. 17
19 எரே. 31. 34. எசே. 36. 22. மீ

ஒருவரோடொருவர் வழக்காடும்படி எனக்கு
நினைப்பூட்டு; [1]நீ நீதிமானாக விளங்கும்படி
27 உன் காரியத்தைச் சொல். உன் ஆதி தகப்
பன் பாவஞ்செய்தான்; [2]உனக்கு முன்னி
ன்று பேசுகிறவர்களும் எனக்கு விரோதமாய்த்
28 துரோகம்பண்ணினார்கள். ஆகையால், நான்
பரிசுத்த ஸ்தலத்தின் தலைவர்களைப் பரிசுத்தக்
குலைச்சலாக்கி, [3]யாக்கோபைச் சாபத்துக்
கும், இஸ்ரவேலை நிந்தனைக்கும் ஒப்புக்கொ
டுப்பேன்.

44 இப்போதும், என் தாசனாகிய யாக்கோ
பே, நான் தெரிந்துகொண்ட இஸ்ரவேலே,
2 கேள். உன்னை உண்டாக்கினவரும், தாயின்
கர்ப்பத்தில் உன்னை உருவாக்கினவரும், உன
க்குத் துணைசெய்கிறவருமாகிய **கர்த்தர்** சொல்
லுகிறதாவது: [4]என் தாசனாகிய யாக்கோபே,
நான் தெரிந்துகொண்ட *யெஷூரனே, பயப்ப
3 டாதே. தாகமுள்ளவன்மேல் தண்ணீரையும்,
வறண்ட நிலத்தின்மேல் ஆறுகளையும் ஊற்று
வேன்; [5]உன் சந்ததியின்மேல் என் ஆவியை
யும், உன் சந்தானத்தின்மேல் என் ஆசீர்வா
4 தத்தையும் ஊற்றுவேன். அதினால் அவர்கள்
புல்லின் நடுவே நீர்க்கால்களின் ஓரத்திலு
ள்ள அலரிச்செடிகளைப்போல வளருவார்கள்.
5 ஒருவன், நான் **கர்த்தருடையவன்** என்பான்;
[6]ஒருவன், யாக்கோபின் பேரைத் தரித்துக்
கொள்வான்; ஒருவன், தான் **கர்த்தருடைய**
**வன்** என்று கையெழுத்துப்போட்டு, இஸ்ர
வேலின் நாமத்தைத் தரித்துக்கொள்வான்.
6 நான் முந்தினவரும், நான் பிந்தினவருந்
தானே; [7]என்னைத்தவிர தேவன் இல்லை
என்று, இஸ்ரவேலின் ராஜாவாகிய **கர்த்தரும்**,
சேனைகளின் **கர்த்தராகிய** அவனுடைய மீட்
7 பரும் சொல்லுகிறார். பூர்வகாலத்து ஜனங்
களை நான் ஸ்தாபித்தது முதற்கொண்டு, [8]என்
னைப்போல எதையாகிலும் வரவழைத்து, இன்
னின்னதென்று முன்னறிவித்து, எனக்கு
முன்னே வரிசையாக நிறுத்தத்தக்கவன் யார்?
நிகழ்காரியங்களையும் வருங்காரியங்களையும் தங்
8 களுக்கு அவர்கள் அறிவிக்கட்டும். நீங்கள்
கலங்காமலும் பயப்படாமலும் இருங்கள்; [9]அக்
காலமுதற்கொண்டு நான் அதை உனக்கு விள
ங்கப்பண்ணினதும் முன்னறிவித்ததும் இல்
லையோ? [10]இதற்கு நீங்களே என் சாட்சிகள்;
என்னைத்தவிர தேவனுண்டோ? வேறொரு
கன்மலையும் இல்லையே; [11]ஒருவனையும் அறி
9 யேன். விக்கிரகங்களை உருவாக்குகிற யாவரும்
வீணர்; அவர்களால் இச்சிக்கப்பட்டவைகள்
ஒன்றுக்கும் உதவாது; [12]அவைகள் ஒன்றும் கா
ணாமலும், ஒன்றும் அறியாமலும் இருக்கிற
தென்று தங்களுக்கு வெட்கமுண்டாக அவைக
ளுக்குத் தாங்களே சாட்சிகளாயிருக்கிறார்கள்.
10 ஒன்றுக்கும் உதவாத தெய்வத்தை உருவாக்கி,
[13]விக்கிரகத்தை வார்ப்பிக்கிறவன் எப்படிப்
11 பட்டவன்? இதோ, அவனுடைய கூட்டாளிக
ளெல்லாரும் வெட்கமடைவார்கள்; [14]தொழி
லாளிகள் நரஜீவன்கள்தானே; அவர்கள் எல்
லாரும் கூடிவந்து நிற்கட்டும்; அவர்கள் ஏகமா
ய்த் திகைத்து வெட்கப்படுவார்கள். கொல்லன் 12
இரும்பைக் குறட்டால் இடுக்கி, உலையிலே
காயவைத்து, சுத்திகளால் அதை உருவாக்கி,
[15]தன் புயபலத்தினால் அதைப் பண்படுத்துகி
றான்; பட்டினியாயிருந்து பெலனற்றுப்போ
கிறான்; தண்ணீர் குடியாமல் களைத்துப்போகி
றான். தச்சன் நூல்பிடித்து, மட்டப்பலகை 13
யால் மரத்துக்குக் குறிபோட்டு, உளிகளினால்
உருப்படுத்தி, கவராசத்தினால் அதை வகுத்து,
மனுஷசாயலாக மனுஷரூபத்தின்படி உருவ
மாக்குகிறான்; அதைக் கோவிலிலே நாட்டி
வைக்கிறான். அவன் தனக்குக் கேதுருக்களை 14
வெட்டுகிறான்; ஒரு மருத மரத்தையாவது,
ஒரு கர்வாலிமரத்தையாவது தெரிந்துகொண்
டு, காட்டுமரங்களிலே பெலத்த மரத்தைத்
தன் காரியத்துக்காக வளர்க்கிறான்; அல்லது
அசோகமரத்தை நடுகிறான், மழை அதை வள
ரச்செய்யும். மனுஷனுக்கு அவைகள் அடுப்பு 15
க்காகும்போது, அவன் அவைகளில் எடுத்துக்
குளிர்காய்கிறான்; நெருப்பை மூட்டி அப்ப
மும் சுடுகிறான்; அதினால் ஒரு தெய்வத்தை
யும் உண்டுபண்ணி, அதைப் பணிந்துகொள்
ளுகிறான்; ஒரு விக்கிரகத்தையும் அதினால்
செய்து, அதை வணங்குகிறான். அதில் ஒரு 16
துண்டை அடுப்பில் எரிக்கிறான்; ஒரு துண்
டினால் இறைச்சியைச் சமைத்துப் புசித்து,
பொரியலைப் பொரித்து திருப்தியாகி, குளிரு
ங்காய்ந்து: ஆஆ, அனலானேன்; நெருப்பைக்
கண்டேன் என்று சொல்லி; அதில் மீதியான 17
துண்டைத் தனக்கு விக்கிரக தெய்வமாகச்
செய்து, அதற்குமுன் விழுந்து, அதை வண
ங்கி: நீ என் தெய்வம், என்னை ரட்சிக்கவேண்
டும் என்று அதை நோக்கி மன்றாடுகிறான்.
அறியாமலும் உணராமலும் இருக்கிறார்கள்; 18
[16]காணாதபடிக்கு அவர்கள் கண்களும், உண
ராதபடிக்கு அவர்கள் இருதயமும் அடைக்
கப்பட்டிருக்கிறது. அதில் பாதியை அடுப் 19
பில் எரித்தேன்; அதின் தழலின்மேல் அப்
பத்தையும் சுட்டு, இறைச்சியையும் பொரித்
துப் புசித்தேன்; அதில் மீதியான துண்டை
நான் அருவருப்பான விக்கிரகமாக்கலாமா?
ஒரு மரக்கட்டையை வணங்கலாமா என்று
சொல்ல, தன் மனதில் அவனுக்குத் தோன்ற
வில்லை; [17]அம்மாத்திரம் அறிவும் சொரணை
யும் இல்லை. அவன் சாம்பலை †மேய்கிறான்; 20
[18]வஞ்சிக்கப்பட்ட மனம் அவனை மோசப்
படுத்தினது; அவன் தன் ஆத்துமாவைத்
தப்புவிக்காமலும்: என் வலதுகையிலே அபத்
தம் அல்லவோ இருக்கிறதென்று சொல்லாம
லும் இருக்கிறான்.
யாக்கோபே, இஸ்ரவேலே, இவைகளை 21
நினை; நீ என் தாசன்; நான் உன்னை உரு
வாக்கினேன்; நீ என் தாசன்; [19]இஸ்ரவேலே,
நீ என்னால் மறக்கப்படுவதில்லை. உன் மீறு 22
தல்களை மேகத்தைப்போலவும், உன் பாவங்க
ளைக் கார்மேகத்தைப்போலவும் அகற்றிவிட்

1 ரோ. 8. 33.
2 ஓசி. 2. 7, 8
3 எரே. 24. 9. தானி. 9. 11. சகரி. 8. 13
4 43. 1, 7. உபா. 32. 15. ரோ. 8. 30. எபே. 1. 4
* உத்தமனே.
5 யோவே. 2. 28. யோ. 7. 38. அப். 2. 18, 41
6 எரே. 50. 5. 2 கொ. 8. 5
7 43. 1, 14. வெளி. 1. 8, 17: 22. 13
8 46. 9, 10
9 ஏசா. 3. 25, 26
10 1 யோ. 5. 10
11 உபா. 32. 4
12 41. 24, 29. சங். 115. 4. ழ
13 எரே. 10. 5. ஆப. 2. 18. 1 கொ. 8. 4
14 சங். 97. 7
15 40. 19. ழ எரே. 10. 8. ழ
16 45. 20. 2 தெச. 2. 11
17 46. 8. ஓசி. 7. 2
† தின்கிறான்.
18 ஓசி. 4. 12. ரோ. 1. 21. 2 தெச. 2. 11
19 49. 14, 15.

டேன்; என்னிடத்தில் திரும்பு; [1]உன்னை
23 நான் மீட்டுக்கொண்டேன். வானங்களே,
களித்துப் பாடுங்கள்; [2]கர்த்தர் இதைச் செய்
தார்; பூதலத்தின் தாழ்விடங்களே, ஆர்ப்பரி
யுங்கள்; பர்வதங்களே, காடுகளே, காட்டி
லுள்ள சகல மரங்களே, கெம்பீரமாய் முழங்
குங்கள்; கர்த்தர் யாக்கோபை மீட்டு, இஸ்ர
வேலிலே மகிமைப்படுகிறார்.
24 உன் மீட்பரும், தாயின் கர்ப்பத்தில் உன்
னை உருவாக்கினவருமான கர்த்தர் சொல்லு
கிறதாவது: [3]நானே எல்லாவற்றையும் செய்
கிற கர்த்தர்; நான் ஒருவராய் வானங்களை
விரித்து, நானே பூமியைப் பரப்பினவர்.
25 நான் கட்டுக்கதைக்காரரின் குறிகளை அபத்த
மாக்கி, குறிசொல்லுகிறவர்களை நிர்மூடராக்
கி, ஞானிகளை வெட்கப்படுத்தி, [4]அவர்கள்
அறிவைப் பைத்தியமாகப் பண்ணுகிறவர்.
26 நான் என் ஊழியக்காரரின் வார்த்தையை
நிலைப்படுத்தி, [5]என் ஸ்தானாபதிகளின் ஆலோ
சனையை நிறைவேற்றி: குடியேறுவாய் என்று
எருசலேமுக்கும், கட்டப்படுவீர்கள் என்று
யூதாவின் பட்டணங்களுக்கும் சொல்லி,
அவைகளின் பாழான ஸ்தலங்களை எடுப்பிப்ப
27 வர். நான் ஆழத்தை நோக்கி: [6]வற்றிப்போ
என்றும்; உன் நதிகளை வெட்டாந்தரையாக்கு
28 வேன் என்றும் சொல்லுகிறவர். கோரே
சைக்குறித்து: அவன் என் மேய்ப்பன்; அவன்
எருசலேமை நோக்கி: [7]நீ கட்டப்படு என்
றும்; தேவாலயத்தை நோக்கி: நீ அஸ்திபாரப்
படு என்றும் சொல்லி, எனக்குப் பிரியமான
தையெல்லாம் நிறைவேற்றுவான் என்று
சொல்லுகிறவர் நான்.

45 கர்த்தராகிய நான் அபிஷேகம்பண்ணின
கோரேசுக்கு முன்பாக ஜாதிகளைக் கீழ்ப்
படுத்தி, [8]ராஜாக்களின் இடைக்கட்டுகளை
அவிழ்க்கும்படிக்கும், அவனுக்கு முன்பாக
வாசல்கள் பூட்டப்படாதிருக்க, கதவுகளைத்
திறந்துவைக்கும்படிக்கும், அவனைப் பார்த்து,
அவன் வலது கையைப் பிடித்துக்கொண்டு,
2 அவனுக்குச் சொல்லுகிறதாவது: நான்
உனக்கு முன்னே போய், [9]கோணலானவை
3 களைச் செவ்வையாக்குவேன். உன்னைப் பெ
யர்சொல்லி [10]அழைக்கிற இஸ்ரவேலின் தே
வனாகிய கர்த்தர் நானே என்று நீ அறியும்
4 படிக்கு, வெண்கலக் கதவுகளை உடைத்து,
இருப்புத்தாழ்ப்பாள்களை முறித்து, அந்தகாரத்
தில் இருக்கிற பொக்கிஷங்களையும், ஒளிப்பி
டத்தில் இருக்கிற புதையல்களையும் உனக்குக்
கொடுப்பேன்; நான் என் தாசனாகிய யாக்
கோபினிமித்தமும், நான் தெரிந்துகொண்ட
இஸ்ரவேலினிமித்தமும், [11]நான் உன்
னைப் பெயர்சொல்லி அழைத்து, நீ என்னை
அறியாதிருந்தும், உனக்கு நாமம் தரித்தேன்.
5 நானே கர்த்தர், வேறொருவர் இல்லை; [12]என்
6 னைத்தவிர தேவன் இல்லை. என்னைத்தவிர
ஒருவரும் இல்லையென்று சூரியன் உதிக்கிற
திசையிலும், [13]அது அஸ்தமிக்கிற திசையி
லும் அறியப்படும்படிக்கு நீ என்னை அறியா
திருந்தும் நான் உனக்கு இடைக்கட்டு கட்டி
னேன்; நானே கர்த்தர், வேறொருவர் இல்லை.
ஒளியைப் படைத்து, [14]இருளையும் உண்டாக் 7
கினேன், சமாதானத்தைப் படைத்து தீங்கை
யும் உண்டாக்குகிறவர் நானே; கர்த்தராகிய
நானே இவைகளையெல்லாம் செய்கிறவர்.
வானங்களே, உயர இருந்து சொரியுங்கள்; 8
[15]ஆகாயமண்டலங்கள் நீதியைப் பொழியக்கட
வது; பூமி திறவுண்டு, இரட்சிப்பின் கனி
யைத் தந்து, நீதியுங்கூட விளைவதாக; கர்த்த
ராகிய நான் இவைகளை உண்டாக்குகிறேன்.
மண்ணோடுகளுக்கொத்த ஓடாயிருந்தும், 9
தன்னை உருவாக்கினவரோடே வழக்காடுகிற
வனுக்கு ஐயோ! [16]களிமண் தன்னை உருவாக்
கினவனை நோக்கி: என்ன செய்கிறாயென்று
சொல்லத்தகுமோ? உன் கிரியையானது:
அவருக்குக் கைகள் இல்லையென்று சொல்ல
லாமோ? தகப்பனை நோக்கி: என் ஜநிப்பித் 10
தாய் என்றும், தாயை நோக்கி: என் பெற்றாய்
என்றும் சொல்லுகிறவனுக்கு ஐயோ! இஸ்ர 11
வேலின் பரிசுத்தரும் அவனை உருவாக்கின
வருமாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது: வருங்
காரியங்களை என்னிடத்தில் கேளுங்கள்; என்
பிள்ளைகளைக்குறித்தும், [17]என் கரங்களின் கிரி
யைகளைக்குறித்தும் எனக்குக் கட்டளையிடுங்
கள். நான் பூமியை உண்டுபண்ணி, [18]நானே 12
அதின்மேல் இருக்கிற மனுஷனைச் சிருஷ்
டித்தேன்; என் கரங்கள் வானங்களை விரித்
தன; அவைகளின் சர்வசேனையையும் நான்
கட்டளையிட்டேன். நான் நீதியின்படி அவ 13
னை எழுப்பினேன்; அவன் வழிகளையெல்
லாம் செவ்வைப்படுத்துவேன்; [19]அவன் என்
நகரத்தைக் கட்டி, சிறைப்பட்டுப்போன என்
னுடையவர்களைக் கிரயமில்லாமலும் [20]பரிதா
னமில்லாமலும் விடுதலையாக்குவான் என்று
சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.
எகிப்தின் சம்பாத்தியமும், எத்தியோப்பி 14
யாவின் வர்த்தக லாபமும், நெடிய ஆட்களா
கிய சபேயரின் வர்த்தக லாபமும், உன்னிடத்
திற்குத் தாண்டிவந்து, [21]உன்னுடையதாகும்;
அவர்கள் உன் பின்னே சென்று, [22]விலங்கி
டப்பட்டு நடந்துவந்து: [23]உன்னுடனே மாத்
திரம் தேவன் இருக்கிறார் என்றும், அவரை
யல்லாமல் வேறே தேவன் இல்லையென்றும்
சொல்லி, உன்னைப் பணிந்துகொண்டு, உன்
னை நோக்கி விண்ணப்பம் பண்ணுவார்கள்
என்று கர்த்தர் சொல்லுகிறார். இஸ்ரவே 15
லின் தேவனும் ரட்சகருமாகிய நீர் மெய்யாக
வே [24]உம்மை மறைத்துக்கொண்டிருக்கிற தே
வனாயிருக்கிறீர். விக்கிரகங்களை உண்டுபண் 16
ணுகிற அனைவரும் வெட்கப்பட்டு இலச்சை
யடைந்து, [25]ஏகமாய்க் கலங்கிப்போவார்கள்.
இஸ்ரவேலோ, கர்த்தராலே நித்திய ரட்சிப்பி 17
னால் ரட்சிக்கப்படுவான்; [26]நீங்கள் என்றென்
றைக்குமுள்ள சதாகாலங்களிலும் வெட்கப்
படாமலும் கலங்காமலும் இருப்பீர்கள்.

1 1. 18. சங். 103. 12. 1 கொ. 6. 20. 1 பே. 1. 18, 19. வெளி. 5. 9
2 சங். 96. 11, 12. வெளி. 18. 20
3 சங். 104. 2
4 2 சாமு. 18. 11, 34. எரே. 50. 36. 1 கொ. 1. 20. 3. 19
5 சகரி. 1. 6. 2 பே. 1. 19
6 எரே. 50. 38. 51. 32, 36
7 2 நாளா. 36. 22, 23. எஸ்றா. 1. 1. ஃ
8 41. 2, 13. தானி. 5. 6, 30
9 40. 4
10 48. 15
11 44. 1. 1 தெச. 4. 5
12 46. 9. உபா. 4. 35, 39
13 சங். 37. 20. மல். 1. 11
14 ஆதி. 1. 3, 4. ஆமோ. 3. 6
15 சங். 85. 11
16 எரே. 18. 6. ரோ. 9. 20
17 29. 23. எரே. 31. 1, 9. கலா. 3. 26
18 சங். 102. 25. எபி. 11. 3
19 2 நாளா. 36. 22. எஸ்றா 1. 1. ஃ
20 52. 3. ரோ. 3. 24
21 49. 23. 60. 9–16. சங். 68. 31. சகரி. 8. 22, 23
22 சங். 149. 7, 8
23 சகரி. 8. 20–23. 1 கொ. 14. 25
24 8. 17. சங். 44. 24
25 சங். 97. 7
26 எரே. 31. 3. ரோ. 2. 28, 29. 11. 26. 1 பே. 2. 6

18 வானங்களைச் சிருஷ்டித்து, பூமியையும்
வெறுமையாயிருக்கச் சிருஷ்டியாமல் அதைக்
குடியிருப்புக்காகச் செய்து படைத்து, அதை
உருவேற்படுத்தின தேவனாகிய கர்த்தர் சொல்
லுகிறதாவது: நானே கர்த்தர், வேறொருவர்
19 இல்லை. நான் அந்தரங்கத்திலும், பூமியின்
அந்தகாரமான இடத்திலும் பேசினதில்லை;
[1]விருதாவாக என்னைத் தேடுங்களென்று நான்
யாக்கோபின் சந்ததிக்குச் சொன்னதுமில்லை;
நான் நீதியைப் பேசி, யதார்த்தமானவைகளை
20 அறிவிக்கிற கர்த்தர். ஜாதிகளினின்று தப்
பினவர்களே, கூட்டங்கூடி வாருங்கள்; ஏக
மாய்ச் சேருங்கள்; [2]தங்கள் விக்கிரகமாகிய
மரத்தைச் சுமந்து, இரட்சிக்கமாட்டாத தே
வனைத் தொழுதுகொள்ளுகிறவர்கள் அறிவில்
21 லாதவர்கள். நீங்கள் தெரிவிக்கும்படி சேர்ந்
து, ஏகமாய் யோசனைபண்ணுங்கள்; இதைப்
பூர்வகாலமுதற்கொண்டு விளங்கப்பண்ணி,
அந்நாள் துவக்கி இதை அறிவித்தவர் யார்?
கர்த்தராகிய நான் அல்லவோ? [3]நீதிபரரும்
ரட்சகருமாகிய என்னையல்லாமல் வேறே
தேவன் இல்லை; என்னைத்தவிர வேறொரு
22 வரும் இல்லை. பூமியின் எல்லையெங்குமுள்
ளவர்களே, என்னை நோக்கிப்பாருங்கள்; [4]அப்
பொழுது ரட்சிக்கப்படுவீர்கள்; நானே தே
23 வன், வேறொருவரும் இல்லை. முழங்கால்
யாவும் எனக்கு முன்பாக முடங்கும், [5]நாவு
யாவும் என்னை முன்னிட்டு ஆணையிடும்
என்று நான் என்னைக்கொண்டே ஆணையிட்
டிருக்கிறேன்; [6]இந்த நீதியான வார்த்தை
என் வாயிலிருந்து புறப்பட்டது; இது மாறு
24 வது இல்லையென்கிறார். கர்த்தரிடத்தில்
மாத்திரம் [7]நீதியும் வல்லமையுமுண்டென்று
அவனவன் சொல்லி அவரிடத்தில் வந்து
சேருவான்; அவருக்கு விரோதமாய் எரிச்சல்
கொண்டிருக்கிற யாவரும் வெட்கப்படுவார்
25 கள். இஸ்ரவேலின் சந்ததியாகிய யாவரும்
கர்த்தருக்குள் நீதிமான்களாக்கப்பட்டு [8]மேன்
மைபாராட்டுவார்கள்.

46 பேல் பணியும், நேபோ குனியும்,
[9]அவைகளின் விக்கிரகங்கள் காட்டுமிருகங்க
ளுக்கும் நாட்டுமிருகங்களுக்கும் சுமையாகும்;
நீங்கள் சுமந்த சுமைகள் இளைத்துப்போன
2 மிருகங்களுக்குப் பாரமாயிருக்கும். அவை
கள் ஏகமாய்க் குனிந்து பணியும்; சுமைகளை
அவைகள் தப்புவிக்கமாட்டாது; அவைகள்
தாமே சிறைப்பட்டுப்போகும்.
3 யாக்கோபின் சந்ததியாரே, இஸ்ரவேல்
சந்ததியில் மீதியாகிய சகல ஜனங்களே,
எனக்குச் செவிகொடுங்கள்; [10]தாயின் வயிற்
றில் தோன்றினதுமுதல் உங்களை ஏந்தி,
தாயின் கர்ப்பத்தில் உற்பத்தியானதுமுதல்
4 உங்களைத் தாங்கினேன். உங்கள் முதிர்வய
துவரைக்கும் நான் அப்படிச் செய்வேன்;
[11]நரைவயதுமட்டும் நான் உங்களைத் தாங்கு
வேன்; நான் அப்படிச் செய்துவந்தேன்;
இனிமேலும் நான் ஏந்துவேன், நான் சுமப்
பேன், தப்புவிப்பேன். யாருக்கு என்னைச் 5
சாயலும் சமமுமாக்கி, [12]யாருக்கு நான் ஒப்பா
கும்படிக்கு என்னை ஒப்பிடுவீர்கள்? பையி 6
லிருக்கிற பொன்னைக் கொட்டி, வெள்ளி
யைத் தராசில் நிறுத்து, தட்டானுடனே கூலி
பொருத்திக்கொள்ளுகிறார்கள்; [13]அவன் ஒரு
தெய்வத்தை உண்டாக்குகிறான்; அதை வணங்
கிப் பணிந்துகொள்ளுகிறார்கள். அதைத் தோ 7
ளின்மேல் எடுத்து, அதைச் சுமந்து, அதை
அதின் ஸ்தானத்திலே வைக்கிறார்கள்; அங்
கே அது நிற்கும்; தன் இடத்தைவிட்டு அசை
யாது; [14]ஒருவன் அதை நோக்கிக் கூப்பிட்
டால், அது மறு உத்தரவு கொடுக்கிறதுமில்
லை, அவன் இக்கட்டை நீக்கி அவனை ரட்சிக்
கிறதுமில்லை.
இதை நினைத்துப் புருஷராயிருங்கள்; 8
[15]பாதகரே, இதை மனதில் வையுங்கள். முந் 9
திப் பூர்வகாலத்தில் நடந்தவைகளை நினையுங்
கள்; [16]நானே தேவன், வேறொருவரும் இல்
லை; நானே தேவன், எனக்குச் சமானமில்லை.
அந்தத்திலுள்ளவைகளை ஆதிமுதற்கொண்டும், 10
இன்னும் செய்யப்படாதவைகளைப் பூர்வகால
முதற்கொண்டும் அறிவிக்கிறேன்; [17]என்
ஆலோசனை நிலைநிற்கும், எனக்குச் சித்தமான
வைகளையெல்லாம் செய்வேன் என்று சொ
ல்லி, உராய்ஞ்சுகிற ஒரு பட்சியைக் கிழக்கிலி 11
ருந்தும், [18]என் ஆலோசனையை நிறைவேற்
றும் மனுஷனை தூரதேசத்திலிருந்தும் வரவ
ழைக்கிறவராயிருக்கிறேன்; அதைச் சொன்
னேன், அதை நிறைவேற்றுவேன்; அதைத்
திட்டம்பண்ணினேன், அதைச் செய்து முடி
ப்பேன். முரட்டு இருதயமுள்ளவர்களே, 12
[19]நீதிக்குத் தூரமானவர்களே, எனக்குச் செவி
கொடுங்கள். என் நீதியைச் சமீபிக்கப்பண் 13
ணுகிறேன், அது தூரமாயிருப்பதில்லை; என்
ரட்சிப்புத் தாமதிப்பதுமில்லை; [20]நான் சீயோ
னில் ரட்சிப்பையும், இஸ்ரவேலுக்கு என் மகி
மையையும் கட்டளையிடுவேன்.

பாபிலோன் குமாரத்தியாகிய கன்னிகை 47
யே, நீ இறங்கி மண்ணிலே உட்காரு; [21]கல்
தேயரின் குமாரத்தியே, தரையிலே உட்காரு;
உனக்குச் சிங்காசனமில்லை. நீ செருக்குக்காரி
யும் சுகசெல்வியும் என்று இனி அழைக்கப்
படுவதில்லை. ஏந்திரத்தை எடுத்து மாவரை; 2
உன் முக்காட்டை நீக்கிவிடு; வெறுங்காலும்
அம்மணத் தொடையுமாய் ஆறுகளைக் கடந்து
போ. உன் நிர்வாணம் வெளிப்படும்; உன் 3
இலச்சை காணப்படும்; [22]நான் ஒருவனையும்
பாராமல் நீதியைச் சரிக்கட்டுவேன். எங்கள் 4
மீட்பருடைய நாமம் இஸ்ரவேலின் பரிசுத்த
ராகிய [23]சேனைகளுடைய கர்த்தர் என்பது.
கல்தேயரின் குமாரத்தியே, நீ அந்தகாரத்துக் 5
குள் பிரவேசித்து மவுனமாய் உட்காரு; [24]இனி
நீ ராஜ்யங்களின் நாயகி யென்று அழைக்கப்
படுவதில்லை. நான் என் ஜனத்தின்மேல் 6
கடுங்கோபமடைந்து, என் சுதந்தரத்தைப் பரி
சுத்தக் குலைச்சலாக்கி, அவர்களை உன் கையில்

1 உபா. 29. 29: 30. 11. ஞ. சங். 9. 10: 69. 32.
2 சேர. 1. 22, 28. எபே. 2. 12–16
3 சேர. 3. 24–26
4 சங். 22. 27. யோ. 3. 14, 15
5 உபா. 6. 13. சேர. 14. 11. பிலி. 2. 10
6 ஆதி. 22. 16–18. எபி. 6. 13
7 எரே. 23. 6. சகரி. 10. 6–12. 1 கொ. 1. 30, 31. எபே 6. 10
8 சேர. 5. 1
9 21. 9. எரே. 50. 2: 51. 44
10 யாத். 19. 4. சங். 71. 6, 18
11 சங். 48. 14
12 40. 18, 25
13 41. 7. ஞ. எரே. 10. 3
14 45. 20. எரே. 10. 5
15 44. 19: 47. 7
16 உபா. 32. 7
17 நீதி. 19. 21: 21. 30. அப். 5. 39. எபி. 6. 17
18 41. 2, 25
19 அப். 7. 51, சேர. 10. 3
20 சங். 46. 1, 5. ஆப. 2. 3. சேர. 1. 17: 3. 21
21 சங். 18. 27. எரே. 48. 18
22 சேர. 12. 19
23 எரே. 50. 34
24 1 சாமு. 2. 9. தானி. 2. 37

ஒப்புக்கொடுத்தேன்; [1]நீ அவர்கள்மேல் இரக்
கம்வையாமல், முதிர்வயதுள்ளவர்களின்மேல்
7 உன் நுகத்தை மகா பாரமாக்கி, என்றென்
றைக்கும் நாயகியாயிருப்பேனென்று சொல்
லி, [2]இந்தக் காரியங்களை இதுவரைக்கும் உன்
மனதிலே வையாமலும், [3]அதின் முடிவை
நினையாமலும் போனாய்.
8 இப்பொழுதும் சுகசெல்வியே, விசாரமில்
லாமல் வாழ்கிறவளே: [4]நான்தான், என்னைத்
தவிர ஒருவருமில்லை; நான் விதவையாவதி
ல்லை, நான் சந்தான சேதத்தை அறிவதில்லை
யென்று உன் இருதயத்திலே சொல்லுகிறவ
9 ளே, நான் சொல்லுகிறதைக் கேள். சந்தான
சேதமும் விதவையிருப்பும் ஆகிய இவ்விரண்
டும் உனக்குச் சடிதியாக ஒரேநாளில் வரும்;
[5]உன் திரளான சூனியங்களினிமித்தமும்,
உன் வெகுவான ஸ்தம்பன வித்தைகளினிமித்
தமும் அவைகள் பூரணமாய் உன்மேல் வரும்.
10 உன் துன்மார்க்கத்திலே நீ திடநம்பிக்கையா
யிருந்து: என்னைப் பார்க்கிறவர் ஒருவரும்
இல்லையென்றாய். [6]உன் ஞானமும் உன் அறி
வுமே உன்னைக் கெடுத்தது; நான்தான், என்
னைத்தவிர ஒருவருமில்லையென்று உன் இரு
11 தயத்தில் எண்ணினாய். ஆகையால் தீங்கு
உன்மேல் வரும், அது எங்கேயிருந்து உதித்த
தென்று நீ அறியாய்; விக்கினம் உன்மேல்
வரும், நீ அதை நிவிர்த்தியாக்கமாட்டாய்; [7]நீ
அறியாதபடிக்குச் சடிதியாய் உண்டாகும் பா
12 ழ்க்கடிப்பு உன்மேல் வரும். நீ உன் சிறு
வயதுமுதல் பிரயாசப்பட்டுப் பழகிவருகிற
உன் ஸ்தம்பன வித்தைகளையும், உன் திர
ளான சூனியங்களையும் நீ அநுசரித்து நில்;
அவைகளால் உனக்குப் பிரயோஜனம் உண்
13 டோ, பலன் உண்டோ, பார்ப்போம். உன்
திரளான யோசனைகளினால் நீ இளைத்துப்
போனாய்; [8]இப்பொழுதும் ஜோசியரும், நட்
சத்திரம் பார்க்கிறவர்களும், அமாவாசி கணிக்
கிறவர்களும் எழும்பி, உனக்கு நேரிடுகிறவை
களுக்கு உன்னை விலக்கி ரட்சிக்கட்டும்.
14 இதோ, அவர்கள் தாளடியைப்போல இருப்
பார்கள், நெருப்பு அவர்களைச் சுட்டெரிக்கும்;
[9]அவர்கள் தங்கள் பிராணனை அக்கினிஜுவா
லையினின்று விடுவிப்பதில்லை; அது குளிர்
காயத்தக்க தழலுமல்ல; எதிரே உட்காரத்தக்க
15 அடுப்புமல்ல. உன் சிறுவயதுமுதல் நீ பிர
யாசப்பட்டு எவர்களுடன் வியாபாரம்பண்ணி
னாயோ, [10]அவர்களும் அப்படியே இருப்பார்
கள்; அவரவர் தங்கள் *போக்கிலே போய்
அலைவார்கள்; உன்னை ரட்சிப்பார் இல்லை.

48 இஸ்ரவேலென்னும் பெயர்பெற்று, யூதா
வின் நீரூற்றிலிருந்து சுரந்தவர்களும், [11]கர்த்
தருடைய நாமத்தின்மேல் ஆணையிட்டு, [12]உண்
மையும் நீதியும் இல்லாமல் இஸ்ரவேலின்
தேவனை அறிக்கையிடுகிறவர்களுமான யாக்
2 கோபின் வம்சத்தாரே, கேளுங்கள். அவர்
கள் தங்களைப் பரிசுத்த நகரத்தார் என்று
சொல்லி, [13]சேனைகளின் கர்த்தர் என்னும்
நாமமுள்ள இஸ்ரவேலின் தேவன்மேல் பற்
றுதலாயிருக்கிறார்கள். பூர்வகாலத்தில் நடந்த 3
வைகளை ஆதிமுதல் அறிவித்தேன், அவை
கள் என் வாயிலிருந்து பிறந்தன, அவைகளை
வெளிப்படுத்தினேன், அவைகளைச் சடிதி
யாய்ச் செய்தேன், அவைகள் நடந்தன. நீ 4
கடினமுள்ளவனென்றும், [14]உன் பிடரி நரம்பு
இரும்பென்றும், உன் நெற்றி வெண்கல
மென்றும் அறிந்திருக்கிறேன். ஆகையால்: 5
என் விக்கிரகம் அவைகளைச் செய்ததென்
றும், நான் செய்த சுரூபமும், நான் வார்ப்பித்த
விக்கிரகமும் அவைகளைக் கட்டளையிட்டதெ
ன்றும் நீ சொல்லாதபடிக்கு, நான் அவைகளை
முன்னமே உனக்கு அறிவித்து, அவைகள்
வராததற்குமுன்னே உனக்கு வெளிப்படுத்தி
னேன். அவைகளைக் கேள்விப்பட்டாயே, 6
அவைகளையெல்லாம் பார்; இப்பொழுது நீங்
களும் அவைகளை அறிவிக்கலாமல்லவோ?
இதுமுதல் புதியவைகளானவைகளையும், [15]நீ
அறியாத மறைபொருளானவைகளையும் உனக்
குத் தெரிவிக்கிறேன். அவைகள் ஆதிமுதற் 7
கொண்டு அல்ல, இப்பொழுதே உண்டாக்கப்
பட்டன; இதோ, அவைகளை அறிவேன்
என்று நீ சொல்லாதபடிக்கு, இந்நாட்களுக்கு
முன்னே நீ அவைகளைக் கேள்விப்படவில்லை.
நீ கேள்விப்படவுமில்லை, அறியவுமில்லை; ஆதி 8
முதல் உன் செவி திறந்திருக்கவுமில்லை; [16]நீ
துரோகம்பண்ணுவாயென்பதையும், தாயின்
கர்ப்பந்தொடங்கி நீ மீறுகிறவனென்று பெயர்
பெற்றதையும் அறிந்திருக்கிறேன். என் நா 9
மத்தினிமித்தம் என் கோபத்தை நிறுத்திவைத்
தேன்; [17]உன்னைச் சங்கரிக்காதபடிக்கு நான்
என் புகழ்ச்சியினிமித்தம் உன்மேல் பொறு
மையாயிருப்பேன். இதோ, உன்னைப் புட 10
மிட்டேன்; [18]ஆனாலும் வெள்ளியைப்போ
லல்ல, உபத்திரவத்தின் குகையிலே உன்னைத்
தெரிந்துகொண்டேன். என்னிமித்தம், என் 11
னிமித்தமே, அப்படிச் செய்வேன்; [19]என் நா
மத்தின் பரிசுத்தம் எப்படிக் குலைக்கப்பட
லாம்? என் மகிமையை நான் வேறொருவருக்
குக் கொடேன்.
யாக்கோபே, நான் அழைத்திருக்கிற இஸ்ர 12
வேலே, எனக்குச் செவிகொடு; நான் அவரே,
[20]நான் முந்தினவரும், நான் பிந்தினவருமா
மே. என் கரமே பூமியை அஸ்திபாரப்ப 13
டுத்தி, [21]என் வலதுகை வானங்களை அளவிட்
டது; நான் அவைகளுக்குக் கட்டளையிட,
அவைகள் அனைத்தும் நிற்கும். நீங்களெல் 14
லாரும் கூடிவந்து கேளுங்கள்; [22]கர்த்தருக்குப்
பிரியமானவன் அவருக்குச் சித்தமானதைப்
பாபிலோனில் செய்வான்; அவன் புயம் கல்
தேயரின்மேல் இருக்கும் என்பதை இவர்க
ளில் அறிவித்தவன் யார்? நான், நானே 15
அதைச் சொன்னேன்; நான் அவனை அழைத்
தேன்; [23]நான் அவனை வரப்பண்ணினேன்;
அவன் வழி வாய்க்கும். நீங்கள் என் சமீபத் 16
தில் வந்து, நான் சொல்வதைக் கேளுங்கள்;

[1] 2 சாமு. 28. 9. ஒபதி. 10, 16. சகரி. 1. 15
[2] வெளி. 18. 7
[3] 46. 8. உபா. 32. 29
[4] செப். 2. 15
[5] 51. 19. நாகூம் 3. 4. 1 தெச. 5. 3
[6] சங். 94. 7. பிர. 8. 8. எசே. 8. 12. 9. 9
[7] 1 தெச. 5. 3
[8] எரே. 24. 12. தானி. 2. 2.
[9] நாகூம் 1. 10. மல்கி. 4. 1
[10] 56. 11. வெளி. 18. 11
* வழியே.
[11] சங். 68. 26
[12] உபா. 5. 28, 29. எரே. 5. 2. யோ. 4. 24
[13] 52. 1. மீகா 3. 11. ரோ. 2. 17
[14] யாத். 32. 9. உபா. 31. 27
[15] 1 கொரி. 2. 9, 10
[16] எரே. 5. 11. ஓசி. 5. 7: 6. 7
[17] சங். 79. 9. எசே. 20. 9.
[18] சங். 66. 10. சகரி. 13. 9. 1 பே. 4. 12
[19] 42. 8. உபா. 32. 26, 27. எசே. 20. 9
[20] வெளி. 1. 17: 22. 13
[21] சங். 102. 25
[22] 44. 28
[23] 45. 1, 2. எஸ்றா 1. 2

நான் ஆதிமுதற்கொண்டு அந்தரங்கத்தில் பேச
வில்லை; அது உண்டான காலந்துவக்கி அங்
கே நான் இருந்தேன்; [1]இப்பொழுதோ கர்த்
தராகிய ஆண்டவரும், அவருடைய ஆவியும்
17 என்னை அனுப்புகிறார். இஸ்ரவேலின் பரி
சுத்தராயிருக்கிற உன் மீட்பரான கர்த்தர்
சொல்லுகிறதாவது: [2]பிரயோஜனமாயிருக்கிற
தை உனக்குப் போதித்து, நீ நடக்கவேண்டிய
வழியிலே உன்னை நடத்துகிற உன் தேவனு
18 கிய கர்த்தர் நானே. ஆ, என் கற்பனைகளைக்
கவனித்தாயானால் நலமாயிருக்கும்; [3]அப்பொ
ழுது உன் சமாதானம் நதியைப்போலும், உன்
நீதி சமுத்திரத்தின் அலைகளைப்போலும் இருக்
19 கும். அப்பொழுது உன் சந்ததி மணலத்தனை
யாகவும், உன் கர்ப்பப் பிறப்பு [4]அதின் அணுக்
களத்தனையாகவும் இருக்கும்; அப்பொழுது
அதின் பெயர் நம்மை விட்டு அற்றுப்போகா
மலும் அழிக்கப்படாமலும் இருக்கும்.
20 பாபிலோனிலிருந்து புறப்படுங்கள்; [5]கல்
தேயரைவிட்டு ஓடிவாருங்கள்; கர்த்தர் தம்மு
டைய தாசனாகிய யாக்கோபை மீட்டுக்கொண்
டாரென்று சொல்லுங்கள்; [6]இதைக் கெம்பீர
சத்தமாய்க் கூறிப் பிரசித்தப்படுத்துங்கள்,
பூமியின் கடையாந்தரமட்டும் வெளிப்படுத்
21 துங்கள் என்கிறார். அவர் அவர்களை வனாந்
தரங்களில் நடத்தும்போது, அவர்களுக்குத்
தாகவிடாயிருந்ததில்லை; [7]கன்மலையிலிருந்து
தண்ணீரை அவர்களுக்குச் சுரக்கப்பண்ணி
னார், கன்மலையைப் பிளந்தார் தண்ணீர் ஓடி
22 வந்தது. துன்மார்க்கருக்குச் சமாதானம் இல்
லையென்று [8]கர்த்தர் சொல்லுகிறார்.

49 தீவுகளே, எனக்குச் செவிகொடுங்கள்;
தூரத்திலிருக்கிற ஜனங்களே, கவனியுங்
கள்; தாயின் கர்ப்பத்திலிருந்தது முதல் கர்த்
தர் என்னை அழைத்து, [9]நான் என் தாயின்
வயிற்றில் இருக்கையில் என் நாமத்தைப் பிர
2 ஸ்தாபப்படுத்தினார். அவர் என் வாயைக்
கூர்மையான பட்டயமாக்கி, [10]தமது கரத்தின்
நிழலினால் என்னை மறைத்து, என்னைத் துலக்
கமான அம்பாக்கி, என்னைத் தமது அம்பறாத்
3 தூணியிலே மூடிவைத்தார். அவர் என்னை
நோக்கி: நீ என் தாசன்; இஸ்ரவேலே, [11]நான்
4 உன்னில் மகிமைப்படுவேன் என்றார். அத
ற்கு நான்: விருதாவாய் உழைக்கிறேன்,
[12]வீணும் வியர்த்தமுமாய் என் பெலனைச் செல
வழிக்கிறேன்; ஆகிலும் என் நியாயம் கர்த்த
ரிடத்திலும், என் பலன் என் தேவனிடத்தி
5 லும் இருக்கிறது என்று சொன்னேன். யாக்
கோபைத் தம்மிடத்தில் திருப்பும்படி நான்
தாயின் கர்ப்பத்திலிருந்தது முதல் கர்த்தர்
தமக்குத் தாசனாக என்னை உருவாக்கினார்;
இஸ்ரவேலோ சேராதேபோகிறது; [13]ஆகிலும்
கர்த்தருடைய பார்வையில் கனமடைவேன்,
6 என் தேவன் என் பெலனாயிருப்பார். யாக்
கோபின் கோத்திரங்களை எழுப்பவும், இஸ்ர
வேலில் காக்கப்பட்டவர்களைத் திருப்பவும்,
நீர் எனக்குத் தாசனாயிருப்பது அற்பகாரியமா

1 61. 1. சகரி. 2. 8–11. லூ. 4. 18-21
2 உபா. 8. 17, 18. சங். 32. 8: 73. 24. மீகா 4. 2
3 உபா. 32. 29. சங். 119. 165
4 ஆதி. 22. 17. ஓசி. 1. 10
5 எரே. 51. 6, 45
6 2 சாமு. 7. 23. வெளி. 5. 9
7 யாத். 17. 6 எண். 20. 11
8 57. 21
9 எரே. 1. 5. மத். 1. 21. லூ. 1. 15, 31: 2. 21. கலா. 1. 15. எபி. 5. 5
10 ஓசி. 6. 5. எபி. 4. 12. வெளி. 1. 16
11 43. 21. யோ. 13. 31. 1 பே. 2. 9
12 எசே. 3. 19
13 மத். 23. 37
14 லூ. 2. 30. அப். 13. 47
15 53. 3. லூ. 23. 18–23
16 சங். 72. 10, 11
17 சங். 69. 13. 2 கொ. 6. 2. எபே. 1. 6
18 சகரி. 9. 12. 1 பே. 2. 9
19 சங். 23. 2. வெளி. 7. 16
20 சங். 107. 4, 7
21 43. 5, 6
* சீனா.
22 44. 23
23 40. 27. சங். 77. 9, 10
24 44. 21. மல். 3. 17. மத். 7. 11
25 யாத். 13. 9. உன்னத. 8. 6
26 எசே. 28. 24. மத். 13. 41, 42. வெளி. 22. 15
27 60. 8. சகரி. 2. 4; 10. 10

யிருக்கிறது; [14]நீர் பூமியின் கடைசிபரியந்த
மும் என்னுடைய ரட்சிப்பாயிருக்கும்படி,
உம்மை ஜாதிகளுக்கு ஒளியாகவும் வைப்
பேன் என்கிறார். இஸ்ரவேலின் மீட்பரும் 7
அதின் பரிசுத்தருமாகிய கர்த்தர், மனுஷரால்
அசட்டை பண்ணப்பட்டவரும், ஜாதியாரால்
அருவருக்கப்பட்டவரும், அதிகாரிகளுக்கு
ஊழியக்காரனுமா யிருக்கிறவரை நோக்கி,
[15]உண்மையுள்ள கர்த்தர் நிமித்தமும், உம்
மைத் தெரிந்துகொண்ட இஸ்ரவேலின் பரி
சுத்தர் நிமித்தமும், [16]ராஜாக்கள் கண்டு எழுந்தி
ருந்து, பிரபுக்கள் பணிந்துகொள்வார்கள்
என்று சொல்லுகிறார். பின்னும் கர்த்தர். 8
அநுக்கிரக காலத்திலே நான் உமக்குச் செவி
கொடுத்து, [17]ரட்சணியநாளிலே உமக்கு உதவி
செய்தேன்; நீர் [1]பூமியைச் சீர்ப்படுத்தி,
பாழாய்க்கிடக்கிற இடங்களைச் சுதந்தரிக்கப்
பண்ணவும்; கட்டுண்டவர்களை நோக்கி: புறப் 9
பட்டுப்போங்கள் என்றும்; இருளில் இருக்கி
றவர்களை நோக்கி: [18]வெளிப்படுங்கள் என்றும்
சொல்லவும், நான் உம்மைக் காப்பாற்றி,
உம்மை ஜனங்களுக்கு உடன்படிக்கையாக
ஏற்படுத்துவேன்; அவர்கள் வழியோரங்க
ளிலே மேய்வார்கள்; சகல மேடுகளிலும் அவர்
களுக்கு மேய்ச்சல் உண்டாயிருக்கும். அவர் 10
கள் பசியாயிருப்பதுமில்லை, தாகமாயிருப்பது
மில்லை; [19]உஷ்ணமாகிலும், வெயிலாகிலும்
அவர்கள்மேல் படுவதுமில்லை; அவர்களுக்கு
இரங்குகிறவர் அவர்களை நடத்தி, அவர்களை
நீரூற்றுகளிடத்திற்குக் கொண்டுபோய் விடு
வார். என் மலைகளையெல்லாம் வழிகளாக்கு 11
வேன்; [20]என் பாதைகள் உயர்த்தப்படும்.
இதோ, இவர்கள் தூரத்திலிருந்து வருவார் 12
கள்; [21]இதோ, அவர்கள் வடக்கிலும் மேற்கிலு
மிருந்து வருவார்கள்; இவர்கள் *சீனீம்தேசத்
திலுமிருந்து வருவார்கள் என்கிறார். வானங் 13
களே, கெம்பீரித்துப் பாடுங்கள்; பூமியே, களி
கூரு; பர்வதங்களே, கெம்பீரமாய் முழங்குங்
கள்; [22]கர்த்தர் தம்முடைய ஜனத்துக்கு ஆறு
தல் செய்தார்; சிறுமைப்பட்டிருக்கிற தம்மு
டையவர்கள்மேல் இரக்கமாயிருப்பார்.
சீயோனோ: கர்த்தர் என்னைக் கைவிட்டார், 14
[23]ஆண்டவர் என்னை மறந்தார் என்று சொல்லு
கிறாள். ஸ்திரீயானவள் தன் கர்ப்பத்தின் 15
பிள்ளைக்கு இரங்காமல், தன் பாலகனை மறப்
பாளோ? [24]அவர்கள் மறந்தாலும், நான் உன்னை
மறப்பதில்லை. இதோ, என் உள்ளங்கை 16
களில் உன்னை வரைந்திருக்கிறேன்; [25]உன்
மதில்கள் எப்போதும் என் முன் இருக்கிறது.
உன் குமாரர் தீவிரித்து வருவார்கள்; [26]உன்னை 17
நிர்மூலமாக்கினவர்களும் உன்னைப் பாழாக்கி
னவர்களும் உன்னைவிட்டுப் புறப்பட்டுப்போ
வார்கள். உன் கண்களை ஏறெடுத்துச் சுற்றி 18
லும் பார்; அவர்களெல்லாரும் ஏகமாய்க் கூடி
உன்னிடத்தில் வருகிறார்கள்; [27]நீ அவர்களெல்
லாரையும் ஆபரணமாகத் தரித்து, மணமகள்
அணிந்துகொள்வதுபோல, நீ அவர்களை அணி

ந்துகொள்வாய் என்று, என் ஜீவனைக்கொண்டு
சொல்லுகிறேன் என்று **கர்த்தர்** உரைக்கிறார்.
19 அப்பொழுது உன் வனாந்தரங்களும், உன்
பாழிடங்களும், நிர்மூலமான உன் தேசமும்,
[1]இனிக் குடிகளின் திரளினாலே உனக்கு
நெருக்கமாயிருக்கும்; உன்னை விழுங்கினவர்
20 கள் தூரமாவார்கள். பிள்ளைகளற்றிருந்த
உனக்கு உண்டாயிருக்கப்போகிற பிள்ளைகள்:
[2]இடம் எங்களுக்கு நெருக்கமாயிருக்கிறது;
நாங்கள் குடியிருக்கும்படிக்கு விலகியிரு என்
று, உன் காதுகள் கேட்கச் சொல்லுவார்கள்.
21 அப்பொழுது நீ: இவர்களை எனக்குப் பிறப்பித்
தவர் யார்? நான் பிள்ளைகளற்றும், தனித்தும்,
சிறைப்பட்டும், நிலையற்றும் இருந்தேனே;
இவர்களை எனக்கு வளர்த்தவர் யார்? இதோ,
நான் ஒன்றியாய் விடப்பட்டிருந்தேனே; இவ
ர்கள் எங்கேயிருந்தவர்கள்? என்று உன் இரு
தயத்தில் சொல்லுவாய்.
22 இதோ, ஜாதிகளுக்கு நேராக என் கரத்தை
உயர்த்தி, ஜனங்களுக்கு நேராக என் கொடி
யை எற்றுவேன்; [3]அப்பொழுது உன் குமார
ரைக் கொடுங்கைகளில் ஏந்திக்கொண்டு வரு
வார்கள்; உன் குமாரத்திகள் தோளின்மேல்
எடுத்துக்கொண்டு வரப்படுவார்கள் என்று கர்த்
23 தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். ராஜாக்
கள் உன்னை வளர்க்கும் தந்தைகளும், அவர்க
ளுடைய நாயகிகள் உன் கைத்தாய்களுமா
யிருப்பார்கள்; [4]தரையிலே முகங்குப்புற
விழுந்து உன்னைப் பணிந்து, உன் கால்க
ளின் தூளை நக்குவார்கள்; நான் **கர்த்தர்**,
எனக்குக் காத்திருக்கிறவர்கள் வெட்கப்படுவ
தில்லை என்பதை அப்பொழுது அறிந்து
24 கொள்வாய். பராக்கிரமன் கையிலிருந்து
கொள்ளைப் பொருளைப் பறிக்கக்கூடுமோ?
[5]அல்லது நீதியாய்ச் சிறைப்பட்டுப்போனவர்
25 களை விடுவிக்கக்கூடுமோ? என்றாலும் இதோ,
பராக்கிரமனால் சிறைப்படுத்தப்பட்டவர்களும்
விடுவிக்கப்படுவார்கள்; பெலவந்தனால் கொள்
ளையிடப்பட்டதும் விடுதலையாக்கப்படும்; உன்
னோடு வழக்காடுகிறவர்களோடே நான் வழக்
காடி, உன் பிள்ளைகளை ரட்சித்துக்கொள்ளு
26 வேன். உன்னை ஒடுக்கினவர்களுடைய மாம்
சத்தை அவர்களுக்கே தின்னக்கொடுப்பேன்;
மதுபானத்தால் வெறிகொள்வதுபோல் தங்க
ளுடைய ரத்தத்தினால் வெறிகொள்வார்கள்;
[6]**கர்த்தரும்** யாக்கோபின் வல்லவருமாகிய
நான் உன் ரட்சகரும் உன் மீட்பருமாயிருக்கி
றதை மாம்சமான யாவரும் அறிந்துகொள்வார்
களென்று **கர்த்தர்** சொல்லுகிறார்.

**50** **கர்த்தர்** சொல்லுகிறார்: நான் உங்கள்
தாயை அனுப்பிவிட்டபோது, அவளுக்குக்
கொடுத்த தள்ளுதற்சீட்டு எங்கே? [7]அல்லது
எனக்குக் கடன்கொடுத்த எவனுக்கு உங்களை
நான் விற்றுப்போட்டேன்? இதோ, உங்கள்
அக்கிரமங்களினிமித்தம் நீங்கள் விற்கப்பட்
டீர்கள்; [8]உங்கள் பாதகங்களினிமித்தம் உங்கள்
2 தாய் அனுப்பிவிடப்பட்டாள். நான் வந்த

1 சகரி. 2. 4
2 மத். 8. 9. ரோ. 11. 11, 12. ஞ
3 60. 4: 66. 20
4 சங். 72. 9. மீகா 7. 17. ரோ. 5. 5; 9. 33; 10. 11
5 மத். 12. 29
6 வெளி. 14. 20; 16. 6
7 எரே. 3. 8. ஓசி. 2. 2
8 52. 3
9 வெளி. 6. 12
10 மத். 11. 28; 13. 54
11 சங். 40. 6-8. மத். 26. 39. யோ. 14. 31
12 மத். 26. 67; 27. 26
13 எசே. 3. 8, 9
14 ரோ. 8. 32-34
15 சகரி. 3. 1. வெளி. 12. 10
16 51. 8. யோபு 13. 28
17 யோபு 13. 15, சங். 23. 4; 52. 8. மீகா 7. 8. நாகூம் 1. 7. எபி. 10. 35-37
18 சங். 16. 4. பிர. 11. 9
19 ரோ. 3. 30, 31
20 ஆதி. 22. 17; 24. 1, 35. ரோ. 4. 1, 16. எபி. 11. 8-12

போது ஒருவனும் இல்லாமற்போனதென்ன?
நான் கூப்பிட்டபோது மறுஉத்தரவு கொடுக்க
ஒருவனும் இல்லாமற்போனதென்ன? மீட்கக்
கூடாதபடிக்கு என் கரம் குறுகிற்றோ? விடு
விக்கிறதற்கு என்னிடத்தில் பெலனில்லாமற்
போயிற்றோ? இதோ, என் கண்டிதத்தினாலே
கடலை வற்றப்பண்ணி, நதிகளை வெட்டாந்த
ரையாக்கிப் போடுகிறேன்; அவைகளிலுள்ள
மீன் தண்ணீரில்லாமல் தாகத்தால் செத்து
நாறுகின்றது. நான் வானங்களுக்குக் காரிருளை 3
உடுத்தி, [9]இரட்டை அவைகளின் மூடுசீலை
யாக்குகிறேன்.
இளைப்படைந்தவனுக்கு சமயத்திற்கேற்ற 4
வார்த்தை சொல்ல நான் அறியும்படிக்கு, கர்த்
தராகிய ஆண்டவர் எனக்குக் கல்விமானின்
நாவைத் தந்தருளினார்; [10]காலைதோறும் என்னை
எழுப்புகிறார்; கற்றுக்கொள்ளுகிறவர்களைப்
போல, நான் கேட்கும்படி என் செவியைக்
கவனிக்கச் செய்கிறார். கர்த்தராகிய ஆண்ட 5
வர் என் செவியைத் திறந்தார்; [11]நான் எதிர்க்
கவுமில்லை, நான் பின்வாங்கவுமில்லை. அடிக் 6
கிறவர்களுக்கு என் முதுகையும், தாடைமயி
ரைப் பிடுங்குகிறவர்களுக்கு என் தாடைகளை
யும் ஒப்புக்கொடுத்தேன்; [12]அவமானத்துக்கும்
உமிழ்நீருக்கும் என் முகத்தை மறைக்கவில்
லை. கர்த்தராகிய ஆண்டவர் எனக்குத் துணை 7
செய்கிறார்; ஆகையால் நான் வெட்கப்படே
ன்; நான் வெட்கப்பட்டுப்போவதில்லை யெ
ன்று அறிந்திருக்கிறேன்; [13]ஆதலால் என்
முகத்தைக் கற்பாறையைப்போலாக்கினேன்.
என்னை நீதிமானாக்குகிறவர் சமீபமாயிருக்கி 8
றார்; [14]என்னோடே வழக்காடுகிறவன் யார்?
ஏகமாய் நிற்போமாக, யார் எனக்கு எதிராளி?
[15]அவன் என்னிடத்தில் வரட்டும். இதோ, 9
கர்த்தராகிய ஆண்டவர் எனக்குத் துணைசெய்
கிறார்; என்னை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்
கிறவன் யார்? இதோ, அவர்கள் எல்லாரும் ஒரு
வஸ்திரத்தைப்போலப் பழசாவார்கள்; [16]பொட்
டுப்பூச்சி அவர்களை அரிக்கும்.
உங்களில் எவன் **கர்த்தருக்குப்** பயந்து, 10
அவருடைய தாசனின் சொல்லைக் கேட்டு,
தனக்கு வெளிச்சமில்லாததினால் இருட்டிலே
நடக்கிறானோ, [17]அவன் **கர்த்தருடைய** நாமத்
தை நம்பி, தன் தேவனைச் சார்ந்துகொள்ளக்
கடவன். இதோ, நெருப்பைக் கொளுத்தி, 11
அக்கினிப் பொறிகளால் சூழப்பட்டிருக்கிற
நீங்கள் அனைவரும், உங்கள் அக்கினி தீபத்
திலும், நீங்கள் மூட்டின அக்கினிஜுவாலையி
லும் நடவுங்கள்; [18]வேதனையில் கிடப்பீர்கள்;
என் கரத்தினால் இது உங்களுக்கு உண்
டாகும்.
நீதியைப் பின்பற்றி, [19]**கர்த்தரைத்** தேடு **51**
கிற நீங்கள் எனக்குச் செவிகொடுங்கள்; நீங்
கள் வெட்டி எடுக்கப்பட்ட கன்மலையையும்,
நீங்கள் தோண்டி எடுக்கப்பட்ட துரவின்
குழியையும் நோக்கிப்பாருங்கள். உங்கள் 2
தகப்பனாகிய ஆபிரகாமையும், [20]உங்களைப்

பெற்றசாராளையும்நோக்கிப்பாருங்கள்; அவன்
ஒருவனாயிருக்கையில் நான் அவனை அழை
த்து, அவனை ஆசீர்வதித்து, அவனைப் பெரு
3 கப்பண்ணினேன். **கர்த்தர்** சீயோனுக்கு
ஆறுதல் செய்வார்; [1]அவர் அதின் பாழான
ஸ்தலங்களையெல்லாம் தேறுதலடையச் செய்
து, அதின் வனாந்தரத்தை ஏதேனைப்போல
வும், அதின் அவாந்தரவெளியைக் **கர்த்தரின்**
தோட்டத்தைப்போலவும் ஆக்குவார்; [2]சந்
தோஷமும் மகிழ்ச்சியும் துதியும் கீதசத்தமும்
அதில் உண்டாயிருக்கும்.
4 என் ஜனங்களே, எனக்குச் செவிகொடுங்
கள்; என் ஜாதியாரே, என் வாக்கைக் கவனி
யுங்கள்; வேதம் என்னிலிருந்து வெளிப்படும்;
[3]என் பிரமாணத்தை ஜனங்களின் வெளிச்ச
5 மாக ஸ்தாபிப்பேன். என் நீதி சமீபமாயிருக்
கிறது; [4]என் ரட்சிப்பு வெளிப்படும்; என்
புயங்கள் ஜனங்களை நியாயந்தீர்க்கும்; தீவுகள்
எனக்குக் காத்திருந்து, என் புயத்தின்மேல்
6 நம்பிக்கையாயிருக்கும். உங்கள் கண்களை
வானத்துக்கு ஏறெடுங்கள், கீழே இருக்கிற
பூமியையும்நோக்கிப்பாருங்கள்;வானம் புகை
யைப்போல் ஒழிந்துபோம், [5]பூமி வஸ்திரத்
தைப்போல் பழசாய்ப்போம்; அதின் குடி
களும் அப்படியே ஒழிந்துபோவார்கள்; என்
ரட்சிப்போ என்றென்றைக்கும் இருக்கும்;
[6]என் நீதி அற்றுப்போவதில்லை.
7 நீதியை அறிந்தவர்களே, என் வேதத்தை
இருதயத்தில் பதித்திருக்கிற ஜனங்களே,
[7]எனக்குச் செவிகொடுங்கள்; மனுஷரின்
நிந்தனைக்குப் பயப்படாமலும், [8]அவர்கள்
தூஷணங்களால் கலங்காமலும் இருங்கள்.
8 பொட்டுப்பூச்சி அவர்களை வஸ்திரத்தைப்
போல் அரித்து, புழு அவர்களை ஆட்டுமயி
ரைப்போல் தின்னும்; [9]என்னுடைய நீதியோ
என்றென்றைக்கும் நிலைக்கும், என் ரட்சிப்பு
தலைமுறை தலைமுறைதோறும் இருக்கும்.
9 எழும்பு, எழும்பு, [10]பெலன்கொள்; **கர்த்த
ரின்** புயமே, முந்தின நாட்களிலும் பூர்வ
தலைமுறைகளிலும் எழும்பினபடி எழும்பு;
[11]இராகாபைத் துண்டித்ததும் வலுசர்ப்பத்தை
10 வதைத்ததும் நீதானல்லவோ? மகா ஆழத்
தின் தண்ணீர்களாகிய சமுத்திரத்தை வற்றிப்
போகப்பண்ணினதும், [12]மீட்கப்பட்டவர்கள்
கடந்துபோகக் கடலின் பள்ளங்களை வழியாக்
11 கினதும் நீதானல்லவோ? அப்படியே **கர்த்
தரால்** மீட்கப்பட்டவர்கள் ஆனந்தக்களிப்பு
டன் பாடி சீயோனுக்குத் திரும்பி வருவார்
கள்; [13]நித்திய மகிழ்ச்சி அவர்கள் தலையின்
மேல் இருக்கும்; சந்தோஷமும் மகிழ்ச்சியும்
அடைவார்கள்; சஞ்சலமும் தவிப்பும் ஓடிப்
12 போம். நான், நானே உங்களுக்கு ஆறுதல்
செய்கிறவர்; [14]சாகப்போகிற மனுஷனுக்
கும், புல்லுக்கொப்பாகிற மனுபுத்திரனுக்கும்
பயப்படுகிறதற்கும், வானங்களை விரித்து,
பூமியை அஸ்திபாரப்படுத்தி, உன்னை உண்
டாக்கின **கர்த்தரை** மறக்கிறதற்கும் நீ யார்?

1 52. 9. சங். 85. 8
2 1 பே. 1. 8
3 42. 4. எரே. 8. 2
4 56. 1; 60. 9. எரே. 1. 16, 17
5 மத். 24. 35. எபி. 1. 11, 12. 2 பே. 3. 10, 12
6 தானி. 9. 24
7 சங். 37. 31
8 மத். 10. 28. அப். 5. 41
9 யோபு 4. 19-21
10 வெளி. 11. 17
11 சங். 87. 4
12 யாத். 14. 21
13 35. 10. மத். 26. 37: 27. 26. லூக் 24
14 2 கொ. 1. 3. 1 பே. 1. 24
15 யோபு 20. 7
16 சகரி. 9. 11
17 49. 3. யோ. 3. 34. 2 பே. 3. 13
18 சங். 75. 8
19 புல. 2. 11-13. ஆமோ. 7. 2
20 புல. 3. 15
21 சங். 35. 1. எரே. 50. 34. மீகா 7. 9
22 சங். 66. 11, 12. எரே. 25. 17-25
23 நெகே. 11. 1. நாகூம் 1. 15. வெளி. 21. 2, 27
24 சகரி. 2. 7

இடுக்கண் செய்கிறவன் அழிக்க ஆயத்தமாகி 13
றபோது, நீ அவனுடைய உக்கிரத்துக்கு நித்
தம் இடைவிடாமல் பயப்படுகிறதென்ன;
[15]இடுக்கண் செய்கிறவனுடைய உக்கிரம் எங்
கே? சிறைப்பட்டுப்போனவன் தீவிரமாய் 14
விடுதலையாவான்; அவன் கிடங்கிலே சாவது
மில்லை, [16]அவனுடைய அப்பம் குறைவுபடு
வதுமில்லை. உன் தேவனாயிருக்கிற **கர்த்தர்** 15
நானே; அலைகள் கொந்தளிக்கத்தக்கதாய்
சமுத்திரத்தைக் குலுக்குகிற சேனைகளின்
**கர்த்தர்** என்கிற நாமமுள்ளவர். நான் வான 16
த்தை நிலைப்படுத்தி, பூமியை அஸ்திபாரப்ப
டுத்தி, சீயோனை நோக்கி: [17]நீ என் ஜனமென்று
சொல்வதற்காக, நான் என் வார்த்தையை உன்
வாயிலே அருளி, என் கரத்தின் நிழலினால்
உன்னை மறைக்கிறேன்.
எழும்பு, எழும்பு, **கர்த்தருடைய** உக்கிரத் 17
தின் பாத்திரத்தை அவர் கையில் வாங்கிக்
குடித்திருக்கிற எருசலேமே, எழுந்து நில்,
[18]தத்தளிக்கச்செய்யும் பாத்திரத்தின் வண்டல்
களை உறிஞ்சிக் குடித்தாய். அவள் பெற்ற 18
புத்திரரெல்லாரிலும் அவளை நடத்துவார் ஒரு
வருமில்லை; அவள் வளர்த்த குமாரரெல்லா
ரிலும் அவளைக் கைகொடுத்து அழைப்பார்
ஒருவருமில்லை. இவ்விரண்டும் உனக்குச் 19
சம்பவித்தது; உனக்குப் பரிதபிக்கிறவன்
யார்? பாழ்க்கடிப்பும், சங்காரமும், பஞ்சமும்,
பட்டயமும் வந்தன; [19]யாரைக்கொண்டு உன
க்கு ஆறுதல் செய்வேன்? உன் குமாரர் மூர்ச் 20
சித்து விழுந்தார்கள்; அவர்கள், வலையிலே
சிக்குண்ட கலைமானைப்போல, எல்லா வீதி
களின் முனையிலும், **கர்த்தருடைய** உக்கிரத்
தினாலும், உன் தேவனுடைய கண்டிதத்தி
னாலும் நிறைந்தவர்களாய்க் கிடக்கிறார்கள்.
ஆகையால் சிறுமைப்பட்டவளே, மதுபானங் 21
குடியாமல் வெறிகொண்டவளே, [20]நீ கேள்.
**கர்த்தராகிய** உன் ஆண்டவரும் தம்முடைய 22
ஜனத்துக்காக வழக்காடப்போகிற உன் தேவ
னுமானவர் சொல்லுகிறது என்னவென்றால்:
இதோ, தத்தளிப்பின் பாத்திரத்தை உன்
கையிலிருந்து நீக்கிப்போடுகிறேன், [21]இனி
என் உக்கிரத்தினுடைய பாத்திரத்தின் வண்
டல்களை நீ குடிப்பதில்லை. உன்னை நோ 23
க்கி: நாங்கள் கடந்து போகும்படிக்குக் குனி
யென்று சொல்லி, கடந்துபோகிறவர்களுக்கு
நீ உன் முதுகைத் தரையும் வீதியுமாக்கும்படி,
[22]உன்னைச் சஞ்சலப்படுத்தினவர்களின் கை
யில் அதைக் கொடுப்பேன் என்றார்.
எழும்பு, எழும்பு, சீயோனே, உன் வல் **52**
லமையைத் தரித்துக்கொள்; பரிசுத்த நகர
மாகிய எருசலேமே, [23]உன் அலங்கார வஸ்
திரங்களை உடுத்திக்கொள்; விருத்தசேதனமில்
லாதவனும் அசுத்தனும் இனி உன்னிடத்தில்
வருவதில்லை. தூசியை உதறிவிட்டு எழுந் 2
திரு; [24]எருசலேமே, வீற்றிரு; சிறைப்பட்
டுப்போன சீயோன் குமாரத்தியே, உன் கழு
த்திலுள்ள கட்டுகளை அவிழ்த்துவிடு.

3 விலையின்றி விற்கப்பட்டீர்கள், [1]பண
மின்றி மீட்கப்படுவீர்கள் என்று **கர்த்தர்** சொ
4 ல்லுகிறார். பூர்வத்தில் என் ஜனங்கள் தங்
கும்படி எகிப்துக்குப் போனார்கள்; [2]அசீரிய
னும் முகாந்தரமில்லாமல் அவர்களை ஒடுக்கி
னான் என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்
5 லுகிறார். இப்பொழுது எனக்கு இங்கே
என்ன இருக்கிறது, என் ஜனங்கள் விருதா
வாய்க் கொண்டுபோகப்பட்டார்கள்; அவர்
களை ஆளுகிறவர்கள் அவர்களை அலறப்பண்
ணுகிறார்கள்; நித்தமும் இடைவிடாமல் என்
நாமம் [3]தூஷிக்கப்படுகிறது என்று **கர்த்தர்**
6 சொல்லுகிறார். இதினிமித்தம், என் ஜனங்
கள் என் நாமத்தை அறிவார்கள்; இதைச்
சொல்லுகிறவர் நானே என்று அக்காலத்தி
லே அறிவார்கள்; இதோ, இங்கே இருக்கி
றேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறார்.
7 சமாதானத்தைக் கூறி, நற்காரியங்களைச்
சுவிசேஷமாய் அறிவித்து, ரட்சிப்பைப் பிர
சித்தப்படுத்தி: [4]உன் தேவன் ராஜரிகம்பண்ணு
கிறாரென்று சீயோனுக்குச் சொல்லுகிற சுவி
சேஷகனுடைய பாதங்கள் மலைகளின்மேல்
8 எவ்வளவு அழகாயிருக்கின்றன. உன் சாமக்
காருடைய சத்தம் கேட்கப்படும்; அவர்கள்
சத்தமிட்டு ஏகமாய்க் கெம்பீரிப்பார்கள்;
ஏனென்றால், **கர்த்தர்** சீயோனைத் திரும்பி
வரப் பண்ணும்போது, [5]அதைக் கண்ணாரக்
9 காண்பார்கள். எருசலேமின் பாழான ஸ்த
லங்களே, முழங்கி ஏகமாய்க் கெம்பீரித்துப்
பாடுங்கள்; **கர்த்தர்** தம்முடைய ஜனங்களுக்கு
ஆறுதல்செய்து, எருசலேமை மீட்டுக்கொண்
10 டார். எல்லா ஜாதிகளின் கண்களுக்கு முன்
பாகவும் **கர்த்தர்** தம்முடைய பரிசுத்த புயத்தை
வெளிப்படுத்துவார்; [6]பூமியின் எல்லைகளில்
உள்ளவர்களெல்லாரும் நமது தேவனுடைய
11 ரட்சிப்பைக் காண்பார்கள். புறப்படுங்கள்,
புறப்படுங்கள், அவ்விடம்விட்டுப் போங்கள்;
[7]அசுத்தமானதைத் தொடாதிருங்கள்; **கர்த்த
ருடைய** பாத்திரங்களைச் சுமக்கிறவர்களே,
அதின் நடுவிலிருந்து புறப்பட்டு உங்களைச்
12 சுத்திகரியுங்கள். நீங்கள் தீவிரித்துப் புறப்
படுவதில்லை; நீங்கள் ஓடிப்போகிறவர்கள்
போல ஓடிப்போவதுமில்லை; **கர்த்தர்** உங்கள்
முன்னே போவார்; இஸ்ரவேலின் தேவன்
உங்கள் பிறகே உங்களைக் காக்கிறவராயிருப்
பார்.
13 இதோ என் தாசன் ஞானமாய் நடப்பார்,
[8]அவர் உயர்த்தப்பட்டு, மேன்மையும் மகா
14 உன்னதமுமாயிருப்பார். மனுஷனைப்பார்க்
கிலும் அவருடைய முகப்பார்வையும், மனு
புத்திரரைப்பார்க்கிலும் அவருடைய ரூபமும்,
இவ்வளவு அந்தக்கேடு அடைந்தபடியினா
லே, [9]அவரைக் கண்ட அநேகர் பிரமிப்
15 படைந்தார்கள். அப்படியே, அவர் அநேகம்
ஜாதிகள்மேல் தெளிப்பார்; [10]அவர்நிமித்தம்
ராஜாக்கள் தங்கள் வாயை மூடுவார்கள்;
ஏனெனில், [11]தங்களுக்குத் தெரிவிக்கப்படா

1 ரோ. 7. 14, 25
2 ஆதி. 46. 6, அப். 7. 14
3 எசே. 36. 20, 23. ரோ. 2. 24
4 நாகூம் 1. 15. ரோ. 2. 10, 11. ரோ. 10. 15
5 1 கொ. 13. 12.
6 சங். 98. 2, 3. லூ. 3. 5, 6
7 லேவி. 22. 2. 2 கொ. 6. 17. வெளி. 18. 4
8 53. 10. எரே. 23. 5. பிலி. 2. 9
9 53. 2, 3. சங். 22. 6, 7
10 எசே. 36. 25
11 ரோ. 15. 21; 16. 25, 26. எபே. 3. 5, 9
12 யோ. 1. 7, 12; 12. 37. ரோ. 10. 16. 1 கொ. 1. 18. எபே. 1. 18, 19
13 52. 14. மாற். 9. 12
14 சங். 22. 6. லூ. 23. 18. யோ. 1. 10, 11. எபி. 4. 15
15 மத். 8. 17. எபி. 9. 28
16 1 கொ. 15. 3. 1 பே. 2. 24, 25
17 ரோ. 4. 25. 1 பே. 3. 18
18 மத். 26. 63; 27. 12–14. அப். 8. 32. 1 பே. 2. 23
* அவருடைய ஆயுசை எண்ணுபவர் யார்?
19 தானி. 9. 26. அப். 8. 32, 35
20 மத். 27. 57–60. 1 பே. 2. 22. 1 யோ. 3. 5
21 2 கொ. 5. 21. எபி. 9. 24–26. 1 பே. 2. 24
22 ரோ. 6. 9. எபே. 1. 5, 9. 2 தெச. 1. 12

திருந்ததை அவர்கள் காண்பார்கள்; கேள்விப்
படாதிருந்ததை அவர்கள் அறிந்துகொள்வார்
கள்.

எங்கள் மூலமாய்க் கேள்விப்பட்டதை **53**
விசுவாசித்தவன் யார்? [12]**கர்த்தருடைய** புயம்
யாருக்கு வெளிப்பட்டது? இளங்கிளையைப் 2
போலவும், வறண்ட நிலத்திலிருந்து துளிர்க்
கிற வேரைப்போலவும் அவனுக்கு முன்பாக
எழும்புகிறார்; [13]அவருக்கு அழகுமில்லை,
சௌந்தரியமுமில்லை; அவரைப் பார்க்கும்
போது, நாம் அவரை விரும்பத்தக்க ரூபம் அவ
ருக்கு இல்லாதிருந்தது. அவர் அசட்டை 3
பண்ணப்பட்டவரும், மனுஷரால் புறக்க
ணிக்கப்பட்டவரும், துக்கம் நிறைந்தவரும்,
பாடு அநுபவித்தவருமாயிருந்தார்; [14]அவரை
விட்டு, நம்முடைய முகங்களை மறைத்துக்
கொண்டோம்; அவர் அசட்டைபண்ணப்பட்
டிருந்தார்; அவரை எண்ணாமற்போனோம்.
மெய்யாகவே அவர் நம்முடைய பாடுகளை 4
ஏற்றுக்கொண்டு, நம்முடைய துக்கங்களைச்
சுமந்தார்; [15]நாமோ, அவர் தேவனால் அடி
பட்டு வாதிக்கப்பட்டு, சிறுமைப்பட்டவ
ரென்று எண்ணினோம். நம்முடைய மீறு 5
தல்களினிமித்தம் அவர் காயப்பட்டு, நம்மு
டைய அக்கிரமங்களினிமித்தம் அவர் நொறுக்
கப்பட்டார்; [16]நமக்குச் சமாதானத்தை உண்டு
பண்ணும் ஆக்கினை அவர்மேல் வந்தது; அவ
ருடைய தழும்புகளால் குணமாகிறோம்.
நாமெல்லாரும் ஆடுகளைப்போல வழிதப்பித் 6
திரிந்து, அவனவன் தன்தன் வழியிலே போ
னோம்; [17]**கர்த்தரோ** நம்மெல்லாருடைய அக்
கிரமத்தையும் அவர்மேல் விழப்பண்ணினார்.
அவர் நெருக்கப்பட்டும் ஒடுக்கப்பட்டும் 7
இருந்தார், ஆனாலும் தம்முடைய வாயை அவர்
திறக்கவில்லை; [18]அடிக்கப்படும்படி கொண்டு
போகப்படுகிற ஒரு ஆட்டுக்குட்டியைப்போ
லவும், தன்னை மயிர்கத்தரிக்கிறவனுக்கு முன்
பாகச் சத்தமிடாதிருக்கிற ஆட்டைப்போல
வும், அவர் தம்முடைய வாயைத் திறவாதிருந்
தார். இடுக்கணிலும் நியாயத்தீர்ப்பிலுமிருந்து 8
அவர் எடுக்கப்பட்டார்; *அவருடைய வம்சத்
தை யாரால் சொல்லிமுடியும்? [19]ஜீவனுள்
ளோருடைய தேசத்திலிருந்து அறுப்புண்டு
போனார்; என் ஜனத்தின் மீறுதலினிமித்தம்
அவர் வாதிக்கப்பட்டார். துன்மார்க்கரோடே 9
அவருடைய பிரேதக்குழியை நியமித்தார்கள்;
ஆனாலும் அவர் மரித்தபோது ஐசுவரியவா
னோடே இருந்தார்; [20]அவர் கொடுமை செய்ய
வில்லை; அவர் வாயில் வஞ்சனை இருந்தது
மில்லை.
**கர்த்தரோ** அவரை நொறுக்கச் சித்தமாகி, 10
அவரைப் பாடுகளுக்குட்படுத்தினார்; [21]அவ
ருடைய ஆத்துமா தன்னைக் குற்றநிவாரண
பலியாக ஒப்புக்கொடுக்கும்போது, அவர்
தமது சந்ததியைக் கண்டு, நீடித்தநாளாயிருப்
பார்; [22]**கர்த்தருக்குச்** சித்தமானது அவர் கையி
னால் வாய்க்கும். அவர் தமது ஆத்தும வருத் 11

தத்தின் பலனைக் கண்டு திருப்தியாவார்; [1]என்
தாசனாகிய நீதிபரர் தம்மைப் பற்றும் அறிவி
னால் அநேகரை நீதிமான்களாக்குவார்; அவர்
களுடைய அக்கிரமங்களைத் தாமே சுமந்து
12 கொள்வார். அவர் தம்முடைய ஆத்துமாவை
மரணத்திலூற்றி, [2]அக்கிரமக்காரரில் ஒருவ
ராக எண்ணப்பட்டு, அநேகருடைய பாவத்
தைத் தாமே சுமந்து, அக்கிரமக்காரருக்காக
வேண்டிக்கொண்டதினிமித்தம் அநேகரை
அவருக்குப் பங்காகக் கொடுப்பேன்; [3]பல
வான்களை அவர் தமக்குக் கொள்ளையாகப்
பங்கிட்டுக்கொள்வார்.

54 பிள்ளைபெறாத மலடியே, மகிழ்ந்து பாடு;
[4]கர்ப்பவேதனைப்படாதவளே, கெம்பீரமாய்ப்
பாடி ஆனந்த சத்தமிடு; [5]வாழ்க்கைப்பட்டவ
ளுடைய பிள்ளைகளைப்பார்க்கிலும், அநாத
ஸ்திரீயினுடைய பிள்ளைகள் அதிகம் என்று
2 **கர்த்தர்** சொல்லுகிறார். உன் கூடாரத்தின்
இடத்தை விசாலமாக்கு; உன் வாசஸ்தலங்
களின் திரைகள் விரிவாகட்டும்; தடைசெய்
யாதே; உன் கயிறுகளை நீளமாக்கி, உன்
3 முளைகளை உறுதிப்படுத்து. நீ வலதுபுறத்தி
லும் இடதுபுறத்திலும் இடங்கொண்டு பெரு
குவாய்; உன் சந்ததியார் ஜாதிகளைச் சுதந்த
ரித்துக்கொண்டு, பாழாய்க்கிடந்த பட்டணங்
4 களைக் குடியேற்றுவிப்பார்கள். பயப்படாதே,
நீ வெட்கப்படுவதில்லை; நாணாதே, நீ இலச்
சையடைவதில்லை; உன் வாலிபத்தின் வெட்
கத்தை நீ மறந்து, உன் விதவையிருப்பின்
5 நிந்தையை இனி நினையாதிருப்பாய். உன்
சிருஷ்டிகரே உன் நாயகர்; [6]சேனைகளின்
**கர்த்தர்** என்பது அவருடைய நாமம், [7]இஸ்ர
வேலின் பரிசுத்தர் உன் மீட்பர், அவர் சர்வ
6 பூமியின் தேவன் என்னப்படுவார். கைவிடப்
பட்டு மனம் நொந்தவளான ஸ்திரீயைப்போ
லவும், [8]இளம்பிராயத்தில் விவாகஞ்செய்து
தள்ளப்பட்ட மனைவியைப்போலவும் இருக்
கிற உன்னைக் **கர்த்தர்** அழைத்தார் என்று
7 உன் தேவன் சொல்லுகிறார். இமைப்பொ
ழுது உன்னைக் கைவிட்டேன்; [9]ஆனாலும்
உருக்கமான இரக்கங்களால் உன்னைச் சேர்த்
8 துக்கொள்வேன். அற்பகாலம் மூண்ட கோ
பத்தினால் என் முகத்தை இமைப்பொழுது
உனக்கு மறைத்தேன்; [10]ஆனாலும் நித்திய கிரு
பையுடன் உனக்கு இரங்குவேன் என்று
**கர்த்தராகிய** உன் மீட்பர் சொல்லுகிறார்.
9 இது எனக்கு நோவாவின் காலத்திலுண்
டான வெள்ளம்போலிருக்கும்; [11]நோவாவின்
காலத்திலுண்டான வெள்ளம் இனி பூமியின்
மேல் புரண்டுவருவதில்லை என்று நான்
ஆணையிட்டதுபோல, உன்மேல் நான் கோபங்
கொள்வதில்லை யென்றும், உன்னை நான்
கடிந்துகொள்வதில்லையென்றும் ஆணையிட்
10 டேன். மலைகள் விலகினாலும், பர்வதங்கள்
நிலைபெயர்ந்தாலும், [12]என் கிருபை உன்னை
விட்டு விலகாமலும், என் சமாதானத்தின்
உடன்படிக்கை நிலைபெயராமலும் இருக்கும்
என்று, உன்மேல் மனதுருகுகிற **கர்த்தர்**
சொல்லுகிறார்.
சிறுமைப்பட்டவளே, பெருங்காற்றில் அடி 11
பட்டவளே, தேற்றரவற்றவளே, இதோ,
நான் உன் கல்லுகளைப் பிரகாசிக்கும்படி
வைத்து, [13]நீலரத்தினங்களை உன் அஸ்திபார
மாக்கி, உன் *பலகணிகளைப் பளிங்கும், 12
உன் வாசல்களை மாணிக்கக் கற்களும், உன்
மதில்களையெல்லாம் உச்சிதமான கற்களுமாக்
குவேன். உன் பிள்ளைகளெல்லாரும் **கர்த்த** 13
**ரால்** போதிக்கப்பட்டிருப்பார்கள்; [14]உன்
பிள்ளைகளுடைய சமாதானம் பெரிதாயிருக்
கும். நீதியினால் ஸ்திரப்பட்டிருப்பாய்; 14
கொடுமைக்குத் தூரமாவாய்; பயமில்லாதிருப்
பாய்; திகிலுக்குத் தூரமாவாய், [15]அது உன்னை
அணுகுவதில்லை. இதோ, உனக்கு விரோத 15
மாய்க் கூட்டங்கூடினால், அது என்னாலே
கூடுகிற கூட்டமல்ல; எவர்கள் உனக்கு
விரோதமாய்க் கூடுகிறார்களோ, அவர்கள்
உன் பட்சத்தில் வருவார்கள். இதோ, கரி 16
நெருப்பை ஊதி, தன் கிரியைக்கான ஆயு
தத்தை உண்டுபண்ணுகிற கொல்லனையும்
நான் சிருஷ்டித்தேன்; கெடுத்து நிக்கிரகமாக்
குகிறவனையும் நான் சிருஷ்டித்தேன். உனக்கு 17
விரோதமாய் உருவாக்கப்படும் எந்த ஆயுதமும்
வாய்க்காதேபோம்; உனக்கு விரோதமாய்
நியாயத்தில் எழும்பும் எந்த நாவையும் நீ குற்
றப்படுத்துவாய்; [16]இது **கர்த்தருடைய** ஊழி
யக்காரரின் சுதந்தரமும், என்னாலுண்டான
அவர்களுடைய நீதியுமாயிருக்கிறதென்று **கர்**
**த்தர்** சொல்லுகிறார்.

ஓ, தாகமாயிருக்கிறவர்களே, [17]நீங்கள் எல் 55
லாரும் தண்ணீர்களண்டைக்கு வாருங்கள்;
பணமில்லாதவர்களே, நீங்கள் வந்து, வாங்
கிச் சாப்பிடுங்கள்; [18]நீங்கள் வந்து, பணமு
மின்றி விலையுமின்றித் திராட்சரசமும் பா
லும் கொள்ளுங்கள். நீங்கள் அப்பமல்லாத 2
தற்காகப் பணத்தையும், திருப்திசெய்யாத
பொருளுக்காக உங்கள் பிரயாசத்தையும் செல
வழிப்பானேன்? [19]நீங்கள் எனக்குக் கவனமா
ய்ச் செவிகொடுத்து, நலமானதைச் சாப்பிடுங்
கள்; அப்பொழுது உங்கள் ஆத்துமா கொழுப்
பான பதார்த்தத்தினால் மகிழ்ச்சியாகும். உங் 3
கள் செவியைச் சாய்த்து, என்னிடத்தில் வா
ருங்கள்: கேளுங்கள், அப்பொழுது உங்கள்
ஆத்துமா பிழைக்கும்; [20]தாவீதுக்கு அருளின
நிச்சயமான கிருபைகளை உங்களுக்கு நித்
திய உடன்படிக்கையாக ஏற்படுத்துவேன்.
இதோ, அவரை ஜனக்கூட்டங்களுக்குச் சாட் 4
சியாகவும், [21]ஜனங்களுக்குத் தலைவராகவும்,
அதிபதியாகவும் ஏற்படுத்தினேன். இதோ, 5
நீ அறியாதிருந்த ஜாதியை வரவழைப்பாய்;
[22]உன்னை அறியாதிருந்த ஜாதி உன் தேவனா
கிய **கர்த்தரின்** நிமித்தமும், இஸ்ரவேலுடைய
பரிசுத்தரின் நிமித்தமும் உன்னிடத்திற்கு
ஓடிவரும்; அவர் உன்னை மேன்மைப்படுத்தி
யிருக்கிறார்.

1 யோ. 17. 3. ரோ. 3. 24 5. 18, 19. 2 பே. 1. 2, 3. 1 யோ. 2. 1
2 லூ. 23. 34. ரோ. 8. 34. எபி. 7. 25. 9. 24. 1 யோ. 2. 1
3 சங். 2. 8. பிலி 2. 9. கொலோ. 2. 15
4 செப். 3. 14. கலா. 4. 27
5 1 சாமு. 2. 5
6 எரே. 3. 14 31. 32. ஓசி. 2. 19
7 சகரி. 14. 9. லூ. 1. 32. ரோ. 3. 29
8 62. 4
9 சங். 30. 5. 2 கொ. 4. 17
10 55. 3. எரே. 31. 3
11 ஆதி. 8. 21. எரே. 31. 35, 36
12 சங். 46. 1-3. மத். 5. 18, 34, 35
13 வெளி. 21. 18. ஷ
* ஜன்னல்களை.
14 எரே. 31. 34. யோ. 6. 45. 1 கொ. 2. 10. 1 தெச. 4. 9. 1 யோ. 2. 20
15 நீதி. 3. 25, 26
16 ரோ. 8. 1, 33. பிலி. 3. 9
17 யோ. 4. 10, 14 7. 37. வெளி. 21 6. 22. 17
18 உன்னத. 5. 1. மத். 13. 44-46. வெளி. 3. 18
19 மத். 22. 4
20 2 சாமு. 23. 5. எரே. 32. 40. அப். 13. 34
21 எசே. 34. 23. தானி. 9. 25. யோ. 18. 37. எபே. 5. 24. வெளி. 1. 5
22 60. 5. சகரி. 8. 23. அப். 3. 13. எபே. 2. 11, 12

6 **கர்த்தரைக்** கண்டடையத்தக்க சமயத்தில்
அவரைத் தேடுங்கள்; [1]அவர் சமீபமாயிருக்
7 கையில் அவரை நோக்கிக் கூப்பிடுங்கள். துன்
மார்க்கன் தன் வழியையும், அக்கிரமக்காரன்
தன் நினைவுகளையும் விட்டு, **கர்த்தரிடத்தில்**
திரும்பக்கடவன்; [2]அவர் அவன்மேல் மன
திருகுவார்; நம்முடைய தேவனிடத்திற்கே
திரும்பக்கடவன்; [3]அவர் மன்னிக்கிறதற்குத்
8 தயை பெருத்திருக்கிறார். என் நினைவுகள் உங்
கள் நினைவுகள் அல்ல; [4]உங்கள் வழிகள் என்
வழிகளும் அல்லவென்று **கர்த்தர்** சொல்லு
9 கிறார். பூமியைப்பார்க்கிலும் வானங்கள் எப்
படி உயர்ந்திருக்கிறதோ, அப்படியே உங்கள்
வழிகளைப்பார்க்கிலும் என் வழிகளும், [5]உங்
கள் நினைவுகளைப்பார்க்கிலும் என் நினைவுக
10 ளும் உயர்ந்திருக்கிறது. மாரியும் உறைந்த
மழையும் வானத்திலிருந்து இறங்கி, [6]அவ்வி
டத்துக்குத் திரும்பாமல் பூமியை நனைத்து,
அதில் முளைகிளம்பி விளையும்படிச் செய்து,
விதைக்கிறவனுக்கு விதையையும், புசிக்கிறவ
னுக்கு ஆகாரத்தையும் கொடுக்கிறது எப்படி
11 யோ, அப்படியே என் வாயிலிருந்து புறப்
படும் வசனமும் இருக்கும்; [7]அது வெறுமை
யாய் என்னிடத்திற்குத் திரும்பாமல், அது
நான் விரும்புகிறதைச் செய்து, நான் அதை
12 அனுப்பின காரியமாகும்படி வாய்க்கும். நீங்
கள் மகிழ்ச்சியாய்ப் புறப்பட்டு, சமாதானமா
ய்க் கொண்டுபோகப்படுவீர்கள்; பர்வதங்களும்
மலைகளும் உங்களுக்கு முன்பாகக் கெம்பீர
மாய் முழங்கி, வெளியின் மரங்களெல்லாம்
13 கைகொட்டும். முட்செடிக்குப் பதிலாகத் தே
வதாரு விருட்சம் முளைக்கும்; *காஞ்சொறிக்
குப் பதிலாக மிருதுச்செடி எழும்பும்; [8]அது
**கர்த்தருக்குக்** கீர்த்தியாகவும், நிர்மூலமாகாத
நித்திய அடையாளமாகவும் இருக்கும்.

**56** **கர்த்தர்** சொல்லுகிறார்: நீங்கள் நியாயத்
தைக் கைக்கொண்டு, நீதியைச் செய்யுங்
கள்; [9]என் ரட்சிப்பு வரவும், என் நீதி வெ
2 ளிப்படவும் சமீபமாயிருக்கிறது. இப்படிச்
செய்கிற மனுஷனும், இதைப் பற்றிக்கொண்
டிருந்து, ஓய்வுநாளைப் பரிசுத்தக் குலைச்சலாக்
காதபடி ஆசரித்து, [10]ஒரு பொல்லாப்பையும்
செய்யாதபடி தன் கையைக் காத்துக்கொண்
3 டிருக்கிற மனுபுத்திரனும் பாக்கியவான். **கர்த்**
**தரைச்**சேர்ந்த அந்நிய புத்திரன்: [11]**கர்த்தர்** என்
னைத் தம்முடைய ஜனத்தைவிட்டு முற்றிலும்
பிரித்துப் போடுவாரென்று சொல்லானாக;
அண்ணகனும்: [12]இதோ, நான் பட்டமரமெ
4 ன்று சொல்லானாக. என் ஓய்வுநாட்களை
ஆசரித்து, எனக்கு இஷ்டமானவைகளைத்
தெரிந்துகொண்டு, என் உடன்படிக்கையைப்
பற்றிக்கொள்ளுகிற அண்ணகர்களைக் குறித்
துக் **கர்த்தர்** சொல்லுகிறது என்னவென்
5 றால்: நான் அவர்களுக்கு என் ஆலயத்திலும்,
[13]என் மதில்களுக்குள்ளும் குமாரருக்கும் குமா
ரத்திகளுக்குமுரிய இடத்தையும் கீர்த்தியை
யும்பார்க்கிலும், உத்தம இடத்தையும் கீர்த்தி
யையும் கொடுப்பேன், என்றும் அழியாத
நித்திய நாமத்தை அவர்களுக்கு அருளுவேன்.
**கர்த்தரைச்** சேவிக்கவும், **கர்த்தருடைய** நாமத் 6
தை நேசிக்கவும், அவருக்கு ஊழியக்காரரா
யிருக்கவும், [14]அவரைச் சேர்ந்து, ஓய்வுநாளைப்
பரிசுத்தக் குலைச்சலாக்காதபடி ஆசரித்து,
என் உடன்படிக்கையைப் பற்றிக்கொண்டி
ருக்கிற அந்நியபுத்திரர் அனைவரையும், நான் 7
என் பரிசுத்த பர்வதத்துக்குக் கொண்டுவந்து,
[15]என் ஜெபவீட்டிலே அவர்களை மகிழப்பண்
ணுவேன்; அவர்களுடைய சர்வாங்க தகனங்க
ளும், அவர்களுடைய பலிகளும், என் பலி
பீடத்தின்மேல் அங்கிகரிக்கப்பட்டிருக்கும்;
[16]என்னுடைய வீடு சகல ஜனங்களுக்கும் ஜெப
வீடு என்னப்படும். இஸ்ரவேலில் தள்ளுண் 8
டவர்களைச் சேர்க்கிற **கர்த்தராகிய** ஆண்ட
வர்: [17]அவனிடத்தில் சேர்க்கப்பட்டவர்களை
யல்லாமல் இன்னும் அவனிடத்தில் சேர்ப்
பேன் என்கிறார்.

வெளியில் சஞ்சரிக்கிற சகல மிருகங்களே, 9
[18]காட்டிலுள்ள சகல மிருகங்களே, பட்சிக்க
வாருங்கள். அவனுடைய காவற்காரர் எல் 10
லாரும் ஒன்றும் அறியாத குருடர்; [19]அவர்க
ளெல்லாரும் குலைக்கமாட்டாத ஊமையான
நாய்கள்; தூக்கமயக்கமாய்ப் புலம்புகிறவர்கள்;
படுத்துக்கொள்ளுகிறவர்கள்; நித்திரைப் பிரி
யர்; திருப்தியடையாமலிருக்கும் பெருவயி 11
ற்று நாய்கள்; [20]பகுத்தறிவில்லாத மேய்ப்பர்;
அவர்களில் ஒவ்வொருவனும் தன் தன் வழி
யையும், அவனவன் தன் தன் மூலையிலிருந்து
தன் தன் பொழிவையும் நோக்கிக்கொண்டி
ருக்கிறான். வாருங்கள், திராட்சரசத்தைக் 12
கொண்டுவருவேன், மதுவைக் குடிப்போம்;
[21]நாளையத்தினம் இன்றையத்தினம்போலவும்,
இதற்கு அதிகமாகவும் இருக்கும் என்பார்கள்.

நீதிமான் மடிந்துபோகிறான், ஒருவரும் **57**
அதை மனதில் வைக்கிறதில்லை; [22]புத்திமான்
கள் எடுத்துக்கொள்ளப்படுகிறார்கள், ஆனா
லும் தீங்குவராததற்குமுன்னே நீதிமான் எடுத்
துக்கொள்ளப்படுகிறான் என்பதைச் சிந்திப்
பார் இல்லை. நேர்மையாய் நடந்தவர்கள் சமா 2
தானத்துக்குள் பிரவேசித்து, [23]தங்கள் படுக்
கைகளில் இளைப்பாறுகிறார்கள்.

நாள் பார்க்கிறவளின் பிள்ளைகளே, விபசா 3
ரனுக்கும் வேசிக்கும் பிறந்த சந்ததியாரே,
[24]நீங்கள் இங்கே கிட்டிவாருங்கள். நீங்கள் 4
யாரைப் பரியாசம் பண்ணுகிறீர்கள்? யாருக்கு
விரோதமாய் வாயைத் திறந்து, நாக்கை நீட்டு
கிறீர்கள்? நீங்கள் துரோகம்பண்ணுகிற பிள்
ளைகளும், கள்ளச் சந்ததியாருமல்லவோ?
நீங்கள் பச்சையான சகல மரத்தின்கீழும், 5
[25]விக்கிரக தேவர்களோடே மோகாக்கினியில்
வெந்து, பள்ளத்தாக்குகளிலே கன்மலை வெ
டிப்புகளின் கீழ்ப் பிள்ளைகளைக் கொன்று
போடுகிறவர்கள். பள்ளத்தாக்குகளிலுள்ள 6
வழவழப்பான சிலைகளிடத்தில் உன் பங்கு
இருக்கிறது; அவைகள், அவைகளே உன்

1 யோ. 7. 34 2 கொ. 6. 1, 2. எபி. 2. 3. 3. 13
2 மாற். 7. 21-23
3 சங். 130. 7
4 2 சாமு. 7. 19
5 சங். 103. 11
6 உபா. 32. 2
7 மத். 24. 35. 2 கொ. 9. 10
* நெரிஞ்சி.
8 41. 19. எரே. 13. 11. மீகா. 7. 4
9 மத். 3. 2: 4. 17. ரோ. 13. 11, 12
10 58. 13. லூ. 12. 43
11 எண். 18. 4, 7. அப். 10. 34, 35
12 அப். 8. 27. ஷ
13 யோ. 1. 12. 1 தீமோ. 3. 15. 1 யோ. 3. 1
14 எரே. 50. 5
15 ரோ 12. 1 எபே. 2. 11-13. 1 பே. 2. 5
16 மல். 1. 11, மத். 21. 13
17 யோ. 10. 16: 18. 37. வெளி. 1. 5
18 எரே. 12. 9
19 மத். 15. 14: 23. 16. பிலி. 3. 2
20 எசே. 34. 2, 8. மீகா 3. 11
21 சங். 10. 6. நீதி. 23. 35. லூ. 12. 19. 1 கொ. 15. 32
22 சங். 12. 1. மீகா 7. 2
23 லூ. 2. 29
24 மத். 16. 4
25 2. இரா. 16. 3, 4. 17. 10. ஷ

வீதம்; அவைகளுக்கு நீ பானபலியை வார்த்
து, போஜனபலியையும் செலுத்துகிறாய்;
7 இவைகளின்மேல் பிரியப்படுவேனோ? நீ
உயரமும் உன்னதமுமான மலைகளின்மேல்
உன் மஞ்சத்தை வைக்கிறாய்; [1]அங்கேயும்
8 பலியிடும்படி ஏறுகிறாய். கதவுகளுக்கும்
நிலைகளுக்கும் பின்னாக உன் ஞாபகக்குறியை
வைக்கிறாய்; நீ என்னை விட்டுப்போய் மற்ற
வர்களுக்கு உன்னை வெளிப்படுத்தினாய்; ஏறிப்
போய் உன் மஞ்சத்தை அகலமாக்கி, அவர்க
ளோடே உடன்படிக்கைபண்ணினாய்; அவர்
களுடைய மஞ்சத்தைக் காண்கிற எல்லா
9 இடத்திலும் அதை நேசிக்கிறாய். நீ தைலத்
தைப் பூசிக்கொண்டு ராஜாவினிடத்தில் போ
கிறாய்; [2]உன் பரிமளங்களை மிகுதியாக்கி,
உன் ஸ்தானாபதிகளைத் தூரத்துக்கு அனு
ப்பி, உன்னைப் பாதாளமட்டும் தாழ்த்துகிறாய்.
10 வழிதூரமானதால் உழன்றுபோகிறாய்; [3]அது
விருதாவென்று நீ சொல்லுகிறதில்லை; உன்
கைபெலத்தைக் கண்டுபிடித்தாய்; ஆகையால்
11 நீ ஆயாசப்படவில்லை. நீ யாருக்கு அஞ்சிப்
பயப்படுகிறாய், நீ பொய்சொல்லுகிறாயே; நீ
என்னை நினையாமலும், உன் மனதிலே வைக்
காமலும்போகிறாய்; [4]நான் வெகுகாலம் மவு
னமாயிருந்தேன் அல்லவா? ஆகையால் எனக்
12 குப் பயப்படாதிருக்கிறாய். உன் நீதியை
யும் உன் கிரியைகளையும் நான் வெளிப்படுத்
13 துவேன், அவைகள் உனக்கு உதவாது. நீ
கூப்பிடும்போது, உன் *கணங்கள் உன்னைத்
தப்புவிக்கட்டும்; காற்று அவைகளையெல்லாம்
பறக்கடித்து, மாயை அவைகளைக் கொண்டு
போம்; என்னை நம்பியிருக்கிறவனோ தேசத்
தைச் சுதந்தரித்து, [5]என் பரிசுத்த பர்வதத்தி
14 லே காணியாட்சிக்காரனாயிருப்பான். வழி
யை உயர்த்தி உயர்த்தி, அதைச் செம்மைப்
படுத்தி, [6]இடறல்களை என் ஜனத்தின் வழியி
லிருந்து எடுத்துப்போடுங்கள் என்னப்படும்.
15 நித்தியவாசியும் பரிசுத்தர் என்கிற நாமமுள்
ளவருமாகிய மகத்துவமும் உன்னதமுமான
வர் சொல்லுகிறார்: [7]உன்னதத்திலும் பரிசுத்த
ஸ்தலத்திலும் வாசம்பண்ணுகிற நான், பணிந்
தவர்களின் ஆவியை உயிர்ப்பிக்கிறதற்கும்,
நொறுங்கினவர்களின் இருதயத்தை உயிர்ப்
பிக்கிறதற்கும், நொறுங்குண்டு பணிந்த ஆவி
யுள்ளவர்களிடத்திலும் வாசம்பண்ணுகிறேன்.
16 நான் எப்போதும் வழக்காடமாட்டேன்; [8]நான்
என்றைக்கும் கோபமாயிருப்பதுமில்லை; ஏ
னென்றால், ஆவியும், நான் உண்டுபண்ணின
ஆத்துமாக்களும், என் முகத்துக்கு முன்பாகச்
17 சோர்ந்துபோகுமே. நான் அவர்கள் பொரு
ளாசையென்னும் அக்கிரமத்தினிமித்தம் கடுங்
கோபமாகி, அவர்களை அடித்தேன்; [9]நான்
மறைந்து, கடுங்கோபமாயிருந்தேன்; தங்கள்
மனம்போன போக்கிலே மாறுபாடாய் நடந்
18 தார்களே. அவர்கள் வழிகளை நான் பார்த்து,
அவர்களைக் குணமாக்குவேன்; [10]அவர்களை நட
த்தி, திரும்பவும் அவர்களுக்கும் அவர்களிலே
துக்கப்படுகிறவர்களுக்கும் ஆறுதல் அளிப்
பேன். தூரமாயிருக்கிறவர்களுக்கும் சமீபமா 19
யிருக்கிறவர்களுக்கும் சமாதானம் சமாதானம்
என்று கூறும் †உதடுகளின் பலனைச் சிருஷ்
டிக்கிறேன்; [11]அவர்களைக் குணமாக்குவேன்
என்று கர்த்தர் சொல்லுகிறார். துன்மார்க்கரோ 20
கொந்தளிக்குங் கடலைப்போலிருக்கிறார்கள்;
[12]அது அமர்ந்திருக்கக்கூடாமல், அதின் ஜலங்
கள் சேற்றையும் அழுக்கையும் கரையில் ஒதுக்
குகிறது. துன்மார்க்கருக்குச் சமாதானம் இல் 21
லையென்று [13]என் தேவன் சொல்லுகிறார்.

சத்தமிட்டுக் கூப்பிடு; அடக்கிக்கொள் 58
ளாதே, எக்காளத்தைப்போல் உன் சத்தத்
தை உயர்த்தி, என் ஜனத்துக்கு அவர்கள்
மீறுதலையும், யாக்கோபின் வம்சத்தாருக்கு
அவர்கள் பாவங்களையும் தெரிவி. தங்கள் 2
தேவனுடைய நியாயத்தை விட்டு விலகாமல்
நீதியைச் செய்துவருகிற ஜாதியாரைப்போல்
அவர்கள் நாடோறும் என்னைத் தேடி, என்
வழிகளை அறிய விரும்புகிறார்கள்; [14]நீதிநியா
யங்களை என்னிடத்தில் விசாரித்து, தேவனி
டத்தில் சேர விரும்புகிறார்கள். நாங்கள் உப 3
வாசம் பண்ணும்போது நீர் நோக்காமலிருக்
கிறதென்ன? நாங்கள் எங்கள் ஆத்துமாக்களை
ஒடுக்கும்போது நீர் அதை அறியாமலிருக்கிற
தென்ன என்கிறார்கள்; [15]இதோ, நீங்கள் உப
வாசிக்கும் நாளிலே உங்கள் இச்சையின்படி
நடந்து, உங்கள் வேலைகளையெல்லாம் கட்டா
யமாய்ச் செய்கிறீர்கள். இதோ, வழக்குக்கும் 4
வாதுக்கும், துஷ்டத்தனத்தையுடைய கையி
னால் குத்துகிறதற்கும் உபவாசிக்கிறீர்கள்;
[16]நீங்கள் உங்கள் கூக்குரலை உயரத்திலே கேட்
கப்பண்ணும்படியாய், இந்நாளில் உபவாசிக்
கிறதுபோல் உபவாசியாதிருங்கள். மனுஷன் 5
தன் ஆத்துமாவை ஒடுக்குகிறதும், தலைவணா
ங்கி நாணலைப்போல் இரட்டிலும் சாம்பலி
லும் படுத்துக்கொள்ளுகிறதும், எனக்குப் பிரி
யமான உபவாசநாளாயிருக்குமோ? [17]இதையா
உபவாசமென்றும் **கர்த்தருக்குப்** பிரியமான
நாளென்றும் சொல்லுவாய்? அக்கிரமத்தின் 6
கட்டுகளை அவிழ்க்கிறதும், நுகத்தடியின்
பிணையல்களை நெகிழ்க்கிறதும், [18]நெருக்கப்
பட்டிருக்கிறவர்களை விடுதலையாக்கி விடுகிற
தும், சகல நுகத்தடிகளையும் உடைத்துப்போடு
கிறதும், பசியுள்ளவனுக்கு உன் ஆகாரத் 7
தைப் பகிர்ந்துகொடுக்கிறதும், [19]துரத்துண்ட
சிறுமையானவர்களை வீட்டிலே சேர்த்துக்
கொள்ளுகிறதும், [20]வஸ்திரமில்லாதவனைக்
கண்டால் அவனுக்கு வஸ்திரங் கொடுக்கிற
தும், உன் ‡மாம்சமானவனுக்கு உன்னை
ஒளிக்காமலிருக்கிறதும் அல்லவோ எனக்கு
உகந்த உபவாசம். அப்பொழுது விடியற்கால 8
வெளுப்பைப்போல உன் வெளிச்சம் எழு
ம்பி, உன் சுகவாழ்வு சீக்கிரத்தில் துளிர்த்து,
உன் நீதி உனக்கு முன்னாலே செல்லும்; [21]**கர்
த்தருடைய** மகிமை உன்னைப் பின்னாலே காக்
கும். அப்பொழுது நீ கூப்பிடுவாய், **கர்த்தர்** 9

1 எசே. 16. 16, 25, 26. 28. 2, 41
2 ஓசி. 7. 11; 12. 1
3 எரே. 2. 25, 36
4 சங். 50. 20
* சேனைகள்=தேவர்கள்.
5 சங். 37. 3–9
6 1 கொ. 1. 23
7 66. 1, 2. சங். 34. 18; 138. 6. மத். 5. 4
8 சங். 103. 9. மீகா 7. 18. எபி. 12. 9
9 எரே. 6. 13
10 எரே. 3. 22
† ஸ்தோத்திரபலி. எபி. 13. 5
11 அப். 2. 39. எபே. 2. 13, 17
12 யோபு 15. 20. நீதி. 4. 16
13 2 இரா. 9. 22
14 உபா. 5. 28, 29
15 லேவி. 16. 29, 31. மல். 3. 14
16 1 இரா. 21. 9, 12, 13
17 தானி. 9. 3. சகரி. 7. 5
18 நெகே. 5. 10-12. எரே. 34. 8, 9. யோனா. 3. 5-10
19 எசே. 18. 7, 16. மத். 25. 35
20 ஆதி. 29. 14
‡ உடன்பிறந்தவனுக்கு. நெகே. 5. 5
21 யாத். 14. 19. யோபு 11. 17

மறுஉத்தரவு கொடுப்பார்; நீ சத்தமிடுவாய்:
இதோ, நான் இருக்கிறேன் என்று சொல்லு
வார். நுகத்தடியையும், விரல் நீட்டுதலையும்,
நிபச்சொல்லையும், [1]நீ உன் நடுவிலிருந்து
10 அகற்றி, பசியுள்ளவனிடத்தில் உன் ஆத்து
மாவைச் சாய்த்து, சிறுமைப்பட்ட ஆத்துமா
வைத் திருப்தியாக்கினால், அப்பொழுது இரு
ளில் உன் வெளிச்சம் உதித்து, உன் அந்தகா
11 ரம் மத்தியானத்தைப்போலாகும். **கர்த்தர்**
நித்தமும் உன்னை நடத்தி, மகா வறட்சியான
காலங்களில் உன் ஆத்துமாவைத் திருப்தியா
க்கி, [2]உன் எலும்புகளை நிணமுள்ளதாக்குவார்;
நீ நீர்ப்பாய்ச்சலான தோட்டத்தைப்போல
வும், வற்றாத நீரூற்றைப்போலவும் இருப்பாய்.
12 உன்னிடத்திலிருந்து தோன்றினவர்கள் பூர்வ
முதல் பாழாய்க்கிடந்த ஸ்தலங்களைக் கட்டு
வார்கள்; [3]தலைமுறை தலைமுறையாக இருக்
கும் அஸ்திபாரங்கள்மேல் நீ கட்டுவாய்; திறப்
பானதை அடைக்கிறவன் என்றும், குடியிரு
க்கும்படி பாதைகளைத் திருத்துகிறவன் என்
13 றும் நீ பெயர்பெறுவாய். என் பரிசுத்தநாளா
கிய ஓய்வுநாளிலே உனக்கு இஷ்டமான
தைச் செய்யாதபடி, [4]உன் காலை விலக்கி,
உன் வழிகளின்படி நடவாமலும், உனக்கு
இஷ்டமானதைச் செய்யாமலும், உன் சொந்
தப்பேச்சைப் பேசாமலிருந்து, ஓய்வுநாளை
மனமகிழ்ச்சியின் நாளென்றும், **கர்த்தருடைய**
பரிசுத்தநாளை மகிமையுள்ள நாளென்றும்
சொல்லி, அதை மகிமையாக எண்ணுவாயா
14 னால், அப்பொழுது **கர்த்தரில்** மனமகிழ்ச்சி
யாயிருப்பாய்; பூமியின் உயர்ந்த இடங்களில்
உன்னை ஏறியிருக்கும்படி பண்ணி, [5]உன்
தகப்பனாகிய யாக்கோபுடைய சுதந்தரத்தால்
உன்னைப் போஷிப்பேன்; **கர்த்தருடைய** வாய்
இதைச் சொல்லிற்று.

**59** இதோ, இரட்சிக்கக்கூடாதபடிக்குக் **கர்**
**த்தருடைய** கை குறுகிப்போகவுமில்லை; [6]கே
ட்கக்கூடாதபடிக்கு அவருடைய செவி மந்த
2 மாகவுமில்லை. உங்கள் அக்கிரமங்களே உங்க
ளுக்கும் உங்கள் தேவனுக்கும் நடுவாகப் பிரி
வினை உண்டாக்குகிறது; உங்கள் பாவங்களே
அவர் உங்களுக்குச் செவிகொடாதபடிக்கு
அவருடைய முகத்தை உங்களுக்கு மறைக்கி
3 றது. ஏனென்றால், உங்கள் கைகள் இரத்
தத்தாலும், உங்கள் விரல்கள் அக்கிரமத்தாலும்
கறைப்பட்டிருக்கிறது; [7]உங்கள் உதடுகள்
பொய்யைப் பேசி, உங்கள் நாவு நியாயக்கேட்
4 டை வசனிக்கிறது. நீதியைத் தேடுகிறவனு
மில்லை, சத்தியத்தின்படி வழக்காடுகிறவனு
மில்லை; [8]மாயையை நம்பி, அபத்தமானதைப்
பேசுகிறார்கள்; தீமையைக் கர்ப்பந்தரித்து;
5 அக்கிரமத்தைப் பெறுகிறார்கள். கட்டுவிரிய
னின் முட்டைகளை அடைகாத்து, சிலந்தி
யின் நெசவுகளை நெய்கிறார்கள்; அவைகளின்
முட்டைகளைச் சாப்பிடுகிறவன் சாவான்;
[9]அவைகள் நெருக்கப்பட்டதேயானால் விரி
6 யன் புறப்படும். அவைகளின் நெசவுகள்

1 சங். 12. 2
2 சங். 37. 19
3 61. 4
4 56. 2
5 உபா. 32. 13; 33. 29. யோபு 22. 26. மீகா 4. 4
6 50. 2, எண். 11. 23
7 1. 15
8 யோபு 15. 35. சங். 7. 14
9 மத். 3. 7; 12. 34
10 ரோமு 8. 14, 15
11 நீதி. 1. 16. ரோ. 3. 15. ழ
12 சங். 125. 5. நீதி. 2. 15; 28. 18
13 எரே. 8. 15. புல. 5. 16, 17
14 உபா. 28. 29. ஆமோ. 8. 9
15 எரே. 8. 15. எசே. 7. 16
16 தானி. 9. 5. ழ
17 48. 8. எரே. 3. 9, 21. மத். 12. 34
18 சங். 98. 1. எசே. 22. 30. மாற். 6. 6
19 எபே. 6. 14, 17. 1 தெச. 5. 8
20 63. 6

வஸ்திரங்களுக்கேற்றவைகள் அல்ல; [10]தங்கள்
கிரியைகளாலே தங்களை மூடிக்கொள்ளமாட்
டார்கள்; அவர்கள் கிரியைகள் அக்கிரமக் கிரி
யைகள்; கொடுமையான செய்கை அவர்கள்
கைகளிலிருக்கிறது. அவர்கள் கால்கள் பொல் 7
லாப்புச்செய்ய ஓடி, குற்றமில்லாத இரத்தத்
தைச் சிந்தத் தீவிரிக்கிறது; [11]அவர்கள் நினைவு
கள் அக்கிரமநினைவுகள்; பாழ்க்கடிப்பும் அழி
வும் அவர்கள் வழிகளிலிருக்கிறது. சமா 8
தான வழியை அறியார்கள்; அவர்கள் நடை
களில் நியாயமில்லை; தங்கள் பாதைகளைத்
தாங்களே கோணலாக்கிக் கொண்டார்கள்;
[12]அவைகளில் நடக்கிற ஒருவனும் சமாதானத்
தை அறியான். ஆதலால், நியாயம் எங்களுக் 9
குத் தூரமாயிருக்கிறது; [13]நீதி எங்களைத் தொ
டர்ந்து பிடிக்காது; வெளிச்சத்துக்குக் காத்திரு
ந்தோம், இதோ, இருள்; பிரகாசத்துக்குக் காத்
திருந்தோம், ஆனாலும் அந்தகாரத்திலே நடக்
கிறோம். நாங்கள் குருடரைப்போல் சுவரைப் 10
பிடித்து, கண்ணில்லாதவர்களைப்போல் தடவு
கிறோம்; [14]இரவில் இடறுகிறதுபோலப் பட்
டப்பகலிலும் இடறுகிறோம்; செத்தவர்களைப்
போல் பாழிடங்களில் இருக்கிறோம். நாங் 11
கள் அனைவரும் கரடிகளைப்போல உறுமி,
புறாக்களைப்போலக் கூவிக்கொண்டிருக்கி
றோம், [15]நியாயத்துக்குக் காத்திருந்தோம்,
அதைக் காணோம்; இரட்சிப்புக்குக் காத்திருந்
தோம், அது எங்களுக்குத் தூரமாயிற்று. எங் 12
கள் மீறுதல்கள் உமக்கு முன்பாக மிகுதியா
யிருந்து, [16]எங்கள் பாவங்கள் எங்களுக்கு
விரோதமாய்ச் சாட்சி சொல்லுகிறது; எங்கள்
மீறுதல்கள் எங்களோடே இருக்கிறது; எங்கள்
அக்கிரமங்களை அறிந்திருக்கிறோம். **கர்த்த** 13
**ருக்கு** விரோதமாய்த் துரோகம்பண்ணி, பொய்
பேசி, எங்கள் தேவனைவிட்டுப் பின்வாங்கி
னோம்; [17]கொடுமையாகவும் கலகமாகவும் பேசி
னோம்; கள்ளவார்த்தைகளைக் கர்ப்பந்தரித்து,
இருதயத்திலிருந்து பிறப்பிக்கப்பண்ணி
னோம். நியாயம் பின்னிட்டு அகன்றது; 14
நீதி தூரமாய் நின்றது; சத்தியம் வீதியிலே
இடறி, யதார்த்தம் வந்து சேரமாட்டாமற்
போகிறது. சத்தியம் தள்ளுபடியாயிற்று; 15
பொல்லாப்பை விட்டு விலகுகிறவன் கொள்
ளையாகிறான்; இதைக் **கர்த்தர்** பார்த்து நியாய
மில்லையென்று விசனமுள்ளவரானார். ஒரு 16
வரும் இல்லையென்று கண்டு, விண்ணப்பம்
பண்ணுகிறவன் இல்லையென்று ஆச்சரியப்
பட்டார்; [18]ஆதலால் அவருடைய புயமே அவ
ருக்கு ரட்சிப்பாகி, அவருடைய நீதியே அவ
ரைத் தாங்குகிறது. அவர் நீதியை மார்க்கவ 17
சமாக அணிந்து, [19]இரட்சிப்பென்னும் சீரா
வைத் தமது சிரசில் தரித்து, நீதி சரிக்கட்டுத
லென்னும் வஸ்திரங்களை உடுப்பாக உடுத்து,
வைராக்கியத்தைச் சால்வையாகப் போர்த்துக்
கொண்டார். கிரியைகளுக்குத்தக்க பலனை 18
அளிப்பார்; [20]தம்முடைய சத்துருக்களிடத்தில்
உக்கிரத்தைச் சரிக்கட்டி, தம்முடைய பகை

ளுருக்குத்தக்க பலனையும், தீவுகளுக்குத்தக்க
19 பலனையும் சரிக்கட்டுவார். அப்பொழுது சூரி
யன் அஸ்தமிக்குந் திசைதொடங்கி **கர்த்தரின்**
நாமத்துக்கும், சூரியன் உதிக்குந் திசை
தொடங்கி அவருடைய மகிமைக்கும் பயப்
படுவார்கள்; வெள்ளம்போல் சத்துரு வரும்
போது, [1]**கர்த்தருடைய** ஆவியானவர் அவ
னுக்கு விரோதமாய்க் கொடியேற்றுவார்.
20 மீட்பர் சீயோனுக்கும், [2]யாக்கோபிலே மீறு
தலைவிட்டுத் திரும்புகிறவர்களுக்கும், வரு
21 வார் என்று **கர்த்தர்** சொல்லுகிறார். உன்
மேலிருக்கிற என் ஆவியும், நான் உன்
வாயில் அருளிய என் வார்த்தைகளும், இது
முதல் என்றென்றைக்கும் உன் வாயிலிருந்
தும், உன் சந்ததியின் வாயிலிருந்தும், உன்
சந்ததியினுடைய சந்ததியின் வாயிலிருந்தும்
நீங்குவதில்லையென்று **கர்த்தர்** சொல்லுகி
றார்; [3]இது எனக்கு அவர்களோடிருக்கும்
என் உடன்படிக்கை யென்று **கர்த்தர்**
சொல்லுகிறார்.

**60** எழும்பிப் *பிரகாசி; உன் ஒளி வந்தது,
**கர்த்தருடைய** மகிமை உன்மேல் உதித்தது.
2 இதோ, இருள் பூமியையும், காரிருள் ஜனங்
களையும் மூடும்; ஆனாலும் உன்மேல் **கர்த்தர்**
உதிப்பார்; [4]அவருடைய மகிமை உன்மேல்
3 காணப்படும். உன் வெளிச்சத்தினிடத்துக்கு
ஜாதிகளும், [5]உதிக்கிற உன் ஒளியினிடத்
4 துக்கு ராஜாக்களும் நடந்துவருவார்கள். சுற்
றிலும் உன் கண்களை ஏறெடுத்துப்பார்; அவர்
கள் எல்லாரும் ஏகமாய்க்கூடி உன்னிடத்
திற்கு வருகிறார்கள்; [6]உன் குமாரர் தூரத்தி
லிருந்து வந்து, உன் குமாரத்திகள் உன் பக்
5 கத்திலே வளர்க்கப்படுவார்கள். அப்பொழுது
நீ அதைக் கண்டு ஓடிவருவாய்; உன் இரு
தயம் அதிசயப்பட்டுப் பூரிக்கும்; கடற்கரை
யின் திரளான கூட்டம் உன் வசமாகத் திரும்
பும், [7]ஜாதிகளின் †பலத்த சேனை உன்னி
6 டத்துக்கு வரும். ஒட்டகங்களின் ஏராள
மும், மீதியான் ஏப்பாத்தேசங்களின் வேக
மான ஒட்டகங்களும் உன்னை மூடும்; [8]சேபா
விலுள்ளவர்கள் யாவரும் பொன்னையும் தூப
வர்க்கத்தையும் கொண்டுவந்து, **கர்த்தரின்**
7 துதிகளைப் பிரசித்தப்படுத்துவார்கள். கேதா
ரின் ஆடுகளெல்லாம் உன்னிடத்தில் சேர்க்
கப்படும்; நெபாயோத்தின் கடாக்கள் உன்
னைச் சேவித்து, அங்கிகரிக்கப்பட்டதாய் என்
பலிபீடத்தின்மேல் ஏறும்; [9]என் மகிமையின்
8 ஆலயத்தை மகிமைப்படுத்துவேன். மேகத்
தைப்போலவும், தங்கள் பலகணித் துவா
ரங்களுக்குத் தீவிரிக்கிற புறாக்களைப்போல
9 வும் பறந்துவருகிற இவர்கள் யார்? தீவுகள்
எனக்குக் காத்திருக்கும்; அவர் உன்னை மகி
மைப்படுத்தினார் என்று, உன் பிள்ளைகளையும்,
அவர்களோடேகூட அவர்கள் பொன்னையும்,
[10]அவர்கள் வெள்ளியையும் உன் தேவனாகிய
**கர்த்தரின்** நாமத்துக்கென்றும், இஸ்ரவே
லின் பரிசுத்தருக்கென்றும், தூரத்திலிருந்து
கொண்டுவர, தர்ஷீசின் கப்பல்களும் ஏற்க
னவே எனக்குக் காத்திருக்கும். அந்நியரின் 10
புத்திரர் உன் மதில்களைக் கட்டி, அவர்களு
டைய ராஜாக்கள் உன்னைச் சேவிப்பார்கள்;
[11]என் கடுங்கோபத்தினால் உன்னை அடித்
தேன்; ஆனாலும் என் கிருபையினால் உனக்கு
இரங்கினேன். உன்னிடத்துக்கு ஜாதிகளின் 11
பலத்த சேனையைக் கொண்டுவரும்படிக்கும்,
அவர்களுடைய ராஜாக்களை அழைத்துவரும்
படிக்கும், [12]உன் வாசல்கள் இரவும் பகலும்
பூட்டப்படாமல்எப்பொழுதும்திறந்திருக்கும்.
உன்னைச் சேவிக்காதஜாதியும் ராஜ்யமும் அழி 12
யும்; [13]அந்த ஜாதிகள் நிச்சயமாய்ப் பாழாகும்.
என் பரிசுத்த ஸ்தானத்தைச் சிங்காரிக்கும்ப 13
டிக்கு, [14]லீபனோனின் மகிமையும், தேவதாரு
விருட்சங்களும், பாய்மர விருட்சங்களும்,
புன்னைமரங்களுங்கூட உன்னிடத்திற்குக்
கொண்டுவரப்படும்; [15]என் பாதஸ்தானத்தை
மகிமைப்படுத்துவேன். உன்னை ஒடுக்கின 14
வர்களின் பிள்ளைகளும் குனிந்து உன்னிடத்
தில் வந்து, [16]உன்னை அசட்டை பண்ணின
யாவரும் உன் காலடியில் பணிந்து, உன்னைக்
**கர்த்தருடைய** நகரம் என்றும், [17]இஸ்ரவேலு
டைய பரிசுத்தரின் சீயோன் என்றும் சொல்
வார்கள். நீ நெகிழப்பட்டதும், கைவிடப் 15
பட்டதும், ஒருவரும் கடந்து நடவாததுமாயி
ருந்தாய்; [18]ஆனாலும் உன்னை நித்திய மாட்சி
மையாகவும், தலைமுறை தலைமுறையாயிருக்
கும் மகிழ்ச்சியாகவும் வைப்பேன். நீ ஜாதி 16
களின் பாலைக் குடித்து, ராஜாக்களின் ‡முலை
ப்பாலையும் உண்டு, [19]**கர்த்தராகிய** நான் ரட்
சகரென்றும், யாக்கோபின் வல்லவர் உன்
மீட்பரென்றும் அறிந்துகொள்வாய். நான் 17
வெண்கலத்துக்குப் பதிலாகப் பொன்னையும்,
இரும்புக்குப் பதிலாக வெள்ளியையும், மரங்
களுக்குப் பதிலாக வெண்கலத்தையும், கற்க
ளுக்குப் பதிலாக இரும்பையும் வரப்பண்ணி,
உன் கண்காணிகளைச் சமாதானமுள்ளவர்க
ளும், [20]உன் தண்டற்காரரை நீதியுள்ளவர்களு
மாக்குவேன். இனிக் கொடுமை உன் தேசத் 18
திலும், அழிவும் நாசமும் உன் எல்லைகளி
லும் கேட்கப்படமாட்டாது; [21]உன் மதில்களை
ரட்சிப்பென்றும், உன் வாசல்களைத் துதி
யென்றும் சொல்லுவாய். இனிச் சூரியன் 19
உனக்குப் பகலிலே வெளிச்சமாயிராமலும்,
சந்திரன் தன் வெளிச்சத்தால் உனக்குப் பிர
காசியாமலும், [22]**கர்த்தரே** உனக்கு நித்திய
வெளிச்சமும், உன் தேவனே உனக்கு மகி
மையுமாயிருப்பார். உன் சூரியன் இனி 20
அஸ்தமிப்பதில்லை; [23]உன் சந்திரன் மறை
வதில்லை; **கர்த்தரே** உனக்கு நித்திய
வெளிச்சமாயிருப்பார்; உன் துக்கநாட்கள்
முடிந்துபோம். உன் ஜனங்கள் யாவரும் 21
நீதிமான்களும், [24]என்றைக்கும் பூமியைச்
சுதந்தரிக்குங் குடிகளும், [25]நான் நட்ட கிளைக
ளும், [26]நான் மகிமைப்படும்படி [27]என் கரங்
களின் கிரியைகளுமாயிருப்பார்கள். சின் 22

1 மல். 1. 11. வெளி. 12. 15, 16
2 ரோ. 11. 26
3 எபி. 8. 8, 10; 10. 16
* வெளிச்சமாகு. எபே. 5. 8, 14
4 மல். 4. 2
5 49. 6, 23. வெளி. 21. 24
6 49. 18–22; 66. 12
7 ரோ. 11. 25
† செல்வம்.
8 ஆதி. 25. 4, 13. சங். 72. 10. மத். 2. 11
9 ஆகா. 2. 7, 9
10 42. 4; 55. 5. சங். 68. 30, 31; 72. 10. எரே. 3. 17. சகரி. 14. 14
11 57. 17. சகரி. 6. 15. வெளி. 21. 24
12 வெளி. 21. 25
13 சகரி. 14. 17, 19. மத். 21. 44
14 சங். 96. 6. ஓசி. 14. 6, 7
15 சங். 132. 7
16 49. 23. வெளி. 3. 9
17 எபி. 12. 22. வெளி. 14. 1
18 புல. 1. 4. வெளி. 3. 12
‡ செல்வத்தை.
19 43. 3; 66. 11, 12.
20 2 பே. 3. 13
21 26. 1
22 சகரி. 2. 5. வெளி. 21. 23; 22. 5
23 ஆமோ. 8. 9. வெளி. 21. 4
24 4. 3. வெளி. 21. 27
25 மத். 5. 5
26 மத். 15. 13. யோ. 15. 2
27 எபே. 2. 10

னவன் ஆயிரமும், சிறியவன் பலத்த ஜாதியு
மாவான்; **கர்த்தராகிய** நான் ஏற்றகாலத்தில்
இதைத் தீவிரமாய் நடப்பிப்பேன்.

61 **கர்த்தராகிய** தேவனுடைய ஆவியானவர்
என்மேல் இருக்கிறார்; [1]சிறுமைப்பட்டவர்
களுக்குச் சுவிசேஷத்தை அறிவிக்கக் **கர்த்தர்**
என்னை அபிஷேகம்பண்ணினார்; [2]இருதயம்
நொறுங்குண்டவர்களுக்குக் காயங்கட்டுதலை
யும், சிறைப்பட்டவர்களுக்கு விடுதலையை
யும், [3]கட்டுண்டவர்களுக்குக் கட்டவிழ்த்தலை
2 யும் கூறவும், **கர்த்தருடைய** அநுக்கிரக வரு
ஷத்தையும், [4]நம்முடைய தேவன் நீதியைச்
சரிக்கட்டும் நாளையும் கூறவும், துயரப்பட்ட
3 அனைவருக்கும் [5]ஆறுதல் செய்யவும், சீயோ
னிலே துயரப்பட்டவர்களைச் சீர்ப்படுத்தவும்,
அவர்களுக்குச் சாம்பலுக்குப் பதிலாகச் சிங்
காரத்தையும், துயரத்துக்குப் பதிலாக ஆனந்த
தைலத்தையும், [6]ஒடுங்கின ஆவிக்குப் பதிலா
கத் துதியின் உடையையும் கொடுக்கவும்,
அவர் என்னை அனுப்பினார்; அவர்கள் **கர்த்**
**தர்** தம்முடைய மகிமைக்கென்று நாட்டின
[7]நீதியின் விருட்சங்களென்னப்படுவார்கள்.
4 அவர்கள் நெடுங்காலம் பாழாய்க்கிடந்தவைக
ளைக் கட்டி, பூர்வத்தில் நிர்மூலமானவைகளை
எடுப்பித்து, [8]தலைமுறை தலைமுறையாய்
இடிந்துகிடந்த பாழான பட்டணங்களைப் புதி
5 தாய்க் கட்டுவார்கள். மறுஜாதியார் நின்று
கொண்டு உங்கள் மந்தைகளை மேய்த்து,
[9]அந்நிய புத்திரர் உங்கள் பண்ணையாட்க
ளும், உங்கள் திராட்சத்தோட்டக்காரருமாயி
6 ருப்பார்கள். நீங்களோ **கர்த்தரின்** ஆசாரிய
ரென்று சொல்லப்படுவீர்கள்; [10]உங்களை நமது
தேவனுடைய பணிவிடைக்காரரென்பார்
கள்; நீங்கள் ஜாதிகளின் செல்வத்தை அநுப
வித்து, [11]அவர்கள் மகிமையைக்கொண்டு
7 மேன்மைபாராட்டுவீர்கள். உங்கள் வெட்
கத்துக்குப் பதிலாக இரண்டத்தனையாய்ப்
பலன் வரும்; [12]இலச்சைக்குப் பதிலாகத் தங்
கள் பாகத்தில் சந்தோஷப்படுவார்கள்; அதி
னிமித்தம் தங்கள் தேசத்தில் இரட்டிப்பான
சுதந்தரம் அடைவார்கள்; நித்திய மகிழ்ச்சி
8 அவர்களுக்கு உண்டாகும். **கர்த்தராகிய**
நான் நியாயத்தை விரும்பி, கொள்ளைப்பொ
ருளினால் இடப்பட்ட தகனபலியை வெறுக்
கிறேன்; [13]நான் அவர்கள் கிரியையை உண்
மையாக்கி, அவர்களோடே நித்திய உடன்
9 படிக்கை பண்ணுவேன். அவர்கள் சந்ததி
யானது ஜாதிகளின் நடுவிலும், அவர்கள் சந்
தானமானது ஜனங்களின் நடுவிலும் அறியப்
பட்டிருக்கும்; [14]அவர்களைப் பார்க்கிற யாவ
ரும் அவர்கள் **கர்த்தரால்** ஆசீர்வாதம் பெற்ற
சந்ததியென்று அறிந்துகொள்வார்கள்.
10 **கர்த்தருக்குள்** பூரிப்பாய் மகிழுகிறேன்;
[15]என் தேவனுக்குள் என் ஆத்துமா களிகூர்ந்
திருக்கிறது; மணவாளன் ஆபரணங்களினால்
தன்னை அலங்கரித்துக் கொள்ளுகிறதற்கும்,
மணவாட்டி நகைகளினால் தன்னைச் சிங்கா
ரித்துக் கொள்ளுகிறதற்கும் ஒப்பாக, [16]அவர்
ரட்சிப்பின் வஸ்திரங்களை எனக்கு உடுத்தி,
நீதியின் சால்வையை எனக்குத் தரித்தார்.
பூமி தன் பூண்டுகளை விளைவிப்பதுபோலவும், 11
தோட்டம் தன்னில் விதைக்கப்பட்டவைகளை
முளைவிப்பதுபோலவும், [17]**கர்த்தராகிய** ஆண்
டவர் எல்லா ஜாதிகளுக்கும் முன்பாக நீதி
யையும் துதியையும் முளைக்கப்பண்ணுவார்.

சீயோனினிமித்தமும் எருசலேமினிமித் 62
தமும் நான் மவுனமாயிராமலும், [18]அதின் நீதி
பிரகாசத்தைப்போலவும், அதின் ரட்சிப்பு
எரிகிற தீவட்டியைப்போலவும் வெளிப்படு
மட்டும் அமராமலும் இருப்பேன். ஜாதிகள் 2
உன் நீதியையும், சகல ராஜாக்களும்
உன் மகிமையையும் காண்பார்கள்; [19]**கர்த்தரு**
**டைய** வாய் சொல்லும் புது நாமத்தால் நீ
அழைக்கப்படுவாய். நீ **கர்த்தருடைய** கை 3
யில் அலங்காரமான கிரீடமும், [20]உன்தேவனு
டைய கரத்தில் ராஜமுடியுமாயிருப்பாய். நீ 4
இனிக் கைவிடப்பட்டவள் என்னப்படாம
லும், [21]உன் தேசம் இனிப் பாழான தேச
மென்னப்படாமலும், நீ *எப்சிபா என்றும்,
உன் தேசம் †பியூலா என்றும் சொல்லப்ப
டும்; **கர்த்தர்** உன்மேல் பிரியமாயிருக்கிறார்;
உன் தேசம் வாழ்க்கைப்படும். வாலிபன் 5
கன்னிகையை விவாகம்பண்ணுவதுபோல,
உன் மக்கள் உன்னை விவாகம்பண்ணுவார்
கள்; மணவாளன் மணவாட்டியின்மேல் மகி
ழ்ச்சியாயிருப்பதுபோல, [22]உன் தேவன் உன்
மேல் மகிழ்ச்சியாயிருப்பார்.

எருசலேமே, உன் மதில்களின்மேல் பகல் 6
முழுதும் இராமுழுதும் ஒருக்காலும் மவுன
மாயிராத சாமக்காரரைக் கட்டளையிடுகிறேன்.
[23]**கர்த்தரைப்** பிரஸ்தாபம்பண்ணுகிறவர்களே,
நீங்கள் அமரிக்கையாயிருக்கலாகாது. அவர் 7
எருசலேமை ஸ்திரப்படுத்தி, [24]பூமியிலே
அதைப் புகழ்ச்சியாக்கும்வரைக்கும் அவரை
அமர்ந்திருக்க விடாதிருங்கள். இனி நான் 8
உன் தானியத்தை உன் சத்துருக்களுக்கு
ஆகாரமாகக் கொடேன்; [25]உன் பிரயாசத்தினா
லாகிய உன் திராட்சரசத்தை அந்நிய புத்தி
ரர் குடிப்பதுமில்லையென்று **கர்த்தர்** தமது
வலதுகரத்தின்மேலும் தமது வல்லமையுள்ள
புயத்தின்மேலும் ஆணையிட்டார். அதைச் 9
சேர்த்தவர்களே அதைப் புசித்துக் **கர்த்தரைத்**
துதிப்பார்கள்; [26]அதைக் கூட்டிவைத்தவர்
களே என் பரிசுத்த ஸ்தலத்தின் பிராகாரங்க
ளில் அதைக் குடிப்பார்கள்.

வாசல்கள் வழியாய்ப் பிரவேசியுங்கள், 10
பிரவேசியுங்கள்; ஜனத்துக்கு வழியைச் செவ்
வைப்படுத்துங்கள்; [27]பாதையை உயர்த்துங்
கள், உயர்த்துங்கள்; அதிலுள்ள கற்களைப்
பொறுக்கிப் போடுங்கள்; ஜனங்களுக்காகக்
கொடியை ஏற்றுங்கள். நீங்கள் சீயோன் 11
குமாரத்தியை நோக்கி: இதோ, உன் ரட்சிப்பு
வருகிறது; [28]இதோ, அவர் அருளும் பலன்
அவரோடும், அவர் செய்யும் பிரதிபலன்

1 லூக். 4. 16-21. யோ. 1. 32; 3. 34
2 சங். 45. 7. 147. 3
3 யோ. 8. 31-36. ரோ. 7. 23-25
4 லேவி. 25. 9. ஷ. 2 கொ. 6. 2. 2 தெச. 1. 9
5 மத். 5. 4
6 சங். 30. 11
7 60. 21. யோ. 15. 8
8 58. 12. எசே. 36. 33-36
9 எபே. 2. 12
10 யாத். 19. 6. எசே. 44. 11. எபே. 4. 11, 12. 1 பே. 2. 5, 9. வெளி. 1. 6
11 60. 5, 11, 16
12 40. 2. சகரி. 9. 12.
13 55. 3 சங். 50. 3
14 65. 23
15 நெகே. 8. 10. ஆப. 3. 17, 18. ரோ. 14. 17
16 வெளி. 19. 18; 21. 2
17 62. 7. சங். 72. 3. 85. 11
18 நீதி. 4. 18
19 60. 3 65, 15. வெளி. 2. 17
20 சகரி. 9. 16
21 ஓசி. 1. 10. எபி. 13. 5. 1 பே. 2. 10
* பிரியமானவள்.
† வாழ்க்கைப்பட்டவள்.
22 65. 15. எரே. 32. 41
23 எசே. 3. 17. 33. 7
24 61. 11. செப். 3. 20
25 உபா. 28. 31. எரே. 5. 17
26 உபா. 12. 12
27 57. 14
28 சகரி. 9. 9. மத். 21. 5. யோ. 12. 14, 15. வெளி. 22. 12

அவர் முன்பாகவும் வருகிறது என்று சொல்
லுங்கள் என்று, **கர்த்தர்** பூமியின் கடையாந்த
12 ரம்வரைக்கும் கூறுகிறார். அவர்களைப் பரி
சுத்த ஜனமென்றும், **கர்த்தரால்** மீட்கப்பட்
டவர்களென்றும் சொல்லுவார்கள்; [1]நீ தேடிக்
கொள்ளப்பட்டதென்றும், கைவிடப்படாத
நகரமென்றும் பெயர் பெறுவாய்.

**63** ஏதோமிலும் அதிலுள்ள போஸ்றா பட்ட
ணத்திலுமிருந்து, சாயந்தீர்ந்த வஸ்திரங்களு
டையவராகவும், மகத்துவமாய் உடுத்திருக்கி
றவராகவும், தமது மகத்தான வல்லமையிலே
எழுந்தருளினவராகவும் வருகிற இவர் யார்?
நீதியாய்ப் பேசி ரட்சிக்க வல்லவராகிய நான்
2 தானே. உம்முடைய உடுப்புச் சிவப்பாக
வும், [2]உம்முடைய வஸ்திரங்கள் ஆலையை
மிதிக்கிறவன் வஸ்திரங்கள்போலவும் இருக்
3 கிறதென்ன? நான் ஒருவனாய் ஆலையை
மிதித்தேன்; ஜனங்களில் ஒருவனும் என்னோ
டிருந்ததில்லை; [3]நான் என் கோபத்திலே அவர்
களை மிதித்து, என் உக்கிரத்திலே அவர்களை
நசுக்கிப்போட்டேன்; அதினால் அவர்கள்
இரத்தம் என் வஸ்திரங்களின்மேல் தெறித்
தது, என் உடுப்பையெல்லாம் கறைப்படுத்
4 திக்கொண்டேன். நீதியைச் சரிக்கட்டும் நாள்
என் மனதிலிருந்தது; [4]என்னுடையவர்களை
5 மீட்கும் வருஷம் வந்தது. நான் பார்த்தேன்,
துணைசெய்வார் ஒருவருமில்லை; தாங்குவார்
ஒருவருமில்லை என்று ஆச்சரியப்பட்டேன்;
[5]அப்பொழுது என் புயமே எனக்கு ரட்சிப்
பாகி, என் உக்கிரமே என்னைத் தாங்கிற்று.
6 நான் என் கோபத்திலே ஜனங்களை மிதித்து,
என் உக்கிரத்திலே அவர்களை வெறியாக்கி,
[6]அவர்கள் சாரத்தைத் தரையிலே இறங்கப்
பண்ணினேன்.

7 **கர்த்தர்** எங்களுக்குச் செய்தருளின எல்லா
வற்றிற்கும் தக்கதாகவும், [7]அவர் தம்முடைய
இரக்கங்களின்படியும் தம்முடைய திரளான
தயவுகளின்படியும், இஸ்ரவேல் வம்சத்துக்
குச் செய்த மகா நன்மைக்குத் தக்கதாகவும்,
**கர்த்தருடைய** கிரியைகளையும், **கர்த்தரு**
**டைய** துதிகளையும் பிரஸ்தாபம்பண்ணுவேன்.
8 அவர்கள் என் ஜனந்தானென்றும், அவர்கள்
வஞ்சனை செய்யாதிருக்கும் பிள்ளைகளென்
றும சொல்லி, அவர்களுக்கு ரட்சகரானார்.
9 அவர்களுடைய எல்லா நெருக்கத்திலும் அவர்
நெருக்கப்பட்டார்; [8]அவருடைய சமுகத்தின்
தூதனானவர் அவர்களை ரட்சித்தார்; அவர்
தமது அன்பினிமித்தமும், தமது பரிதாபத்
தினிமித்தமும் அவர்களை மீட்டு, [9]பூர்வ
நாட்களிலெல்லாம் அவர்களைத் தூக்கிச்
10 சுமந்துவந்தார். அவர்களோ கலகம்பண்ணி,
அவருடைய பரிசுத்த ஆவியை விசனப்
படுத்தினார்கள்; [10]அதினால் அவர் அவர்க
ளுக்குச் சத்துருவாய் மாறி, அவரே அவர்
களுக்கு விரோதமாய் யுத்தம்பண்ணினார்.
11 ஆகிலும் அவர் பூர்வநாட்களையும், மோசேயை
யும், தம்முடைய ஜனத்தையும் நினைவுகூர்ந்
தார்; [11]ஆனாலும் அவர்களையும், தமது மந்தை
யின் மேய்ப்பனையும் சமுத்திரத்திலிருந்து
ஏறப்பண்ணினவர் இப்பொழுது எங்கே?
அவர்கள் நடுவிலே தம்முடைய பரிசுத்த ஆவி 12
யை இருக்கக் கட்டளையிட்டு, [12]மோசேயின்
வலதுகையைக்கொண்டு அவர்களைத் தமது
மகிமையின் புயத்தினாலே நடத்தி, [13]தமக்கு
நித்திய கீர்த்தியை உண்டாக்க அவர்களுக்கு
முன்பாகத் தண்ணீரைப் பிளந்து, ஒரு குதி 13
ரை வனாந்தர வெளியிலே நடக்கிறதுபோல,
அவர்கள் இடறாதபடிக்கு அவர்களை ஆழங்க
ளில் நடக்கப்பண்ணினவர் எங்கே? **கர்த்த** 14
**ருடைய** ஆவியானவர் அவர்களைப் பள்ளத்தாக்
கிலே போய் இறங்குகிற மிருகஜீவன்களைப்
போல இளைப்பாறப்பண்ணினார்; [14]இப்ப
டியே தேவரீர், உமக்கு மகிமையுள்ள கீர்த்தி
யை உண்டாக்கும்படி உம்முடைய ஜனத்தை
நடத்தினீர். தேவரீர் பரலோகத்திலிருந்து 15
கண்ணோக்கி, பரிசுத்தமும் மகிமையுமுள்ள
உம்முடைய வாசஸ்தலத்திலிருந்து பாரும்,
[15]உம்முடைய வைராக்கியமும், உம்முடைய
வல்லமையும் எங்கே? உம்முடைய உள்ளத்
தின் கொதிப்பையும், [16]உம்முடைய மன
உருக்கத்தையும் எனக்கு முன்பாக அடக்கிக்
கொள்ளுகிறீரோ. தேவரீர் எங்கள் பிதாவா 16
யிருக்கிறீர்; [17]ஆபிரகாம் எங்களை அறியான்,
இஸ்ரவேலுக்கு நாங்கள் அறியப்பட்டவர்க
ளுமல்ல; **கர்த்தாவே**, நீர் எங்கள் பிதாவும்,
எங்கள் மீட்பருமாயிருக்கிறீர்; இது பூர்வகால
முதல் உம்முடைய நாமம். **கர்த்தாவே**, 17
நீர் எங்களை உம்முடைய வழிகளை விட்டுத்
தப்பிப்போகப்பண்ணி, [18]எங்கள் இருதயத்
தை உமக்குப் பயப்படாதபடிக்குக் கடினப்ப
டுத்துவானேன்? உம்முடைய ஊழியக்காரரி
னிமித்தமும், உம்முடைய சுதந்தரமான கோத்
திரங்களினிமித்தமும் [19]திரும்பியருளும். பரி 18
சுத்தமுள்ள உமது ஜனங்கள் கொஞ்சக்கால
மாத்திரம் அதைச் சுதந்தரித்தார்கள்; [20]எங்கள்
சத்துருக்கள் உம்முடைய பரிசுத்த ஸ்தலத்தை
மிதித்துப்போட்டார்கள். நாங்களே உம்மு 19
டையவர்கள், அவர்களை ஒருபொழுதும் நீர்
ஆண்டதில்லை, [21]அவர்களுக்கு உமது நாமம்
தரிக்கப்பட்டதுமில்லை.

ஆ, உமது நாமத்தைச் சத்துருக்களுக் **64**
குத் தெரியப்பண்ணுவதற்கும், ஜாதிகள் உம்
முடைய சந்நிதிக்குமுன் தத்தளிப்பதற்கும்,
தேவரீர் வானங்களைக் கிழித்திறங்கி, [22]உருக் 2
கும் அக்கினி எரியுமாப்போலவும், அக்கினி
தண்ணீரைப்பொங்கப்பண்ணுமாப்போலவும்,
பர்வதங்கள் உமக்கு முன்பாக உருகும்படி
செய்யும். நாங்கள் எதிர்பார்த்திராத பயங் 3
கரமான காரியங்களை நீர் செய்தபோது, [23]நீர்
இறங்கினீர், உமது சந்நிதியில் பர்வதங்கள்
உருகிப்போயின. தேவனே, உமக்குக் காத் 4
திருக்கிறவர்களுக்கு நீர் செய்பவைகளை, நீரே
யல்லாமல் உலகத்தோற்றம் முதற்கொண்டு
ஒருவரும் கேட்டதுமில்லை, [24]செவியால் உண

1 4. வச. எசே. 34. 11–16
2 வெளி. 19. 13, 15
3 புல. 1. 15, வெளி. 14. 19, 20. 19. 15
4 செப். 3. 8
5 41. 28 59. 16
6 எரே. 25. 26, 27. வெளி. 16. 6
7 சங். 63. 3. ஓசி. 2. 19
8 யாத். 14. 19. 19. 4. நியா. 10. 16. சகரி. 2. 8. மத். 25. 40, 43. அப். 9. 4
9 உபா. 32. 11, 12
10 புல. 2. 5. அப். 7. 51. எபே. 4. 30
11 யாத். 14. 30. லேவி. 26. 42
12 எண். 11. 17, 25. நெகே. 9. 20. தானி. 4. 8
13 யாத். 14. 21.
14 2 சாமு. 7. 23
15 உபா. 26. 15. 2 நாளா. 30. 27
16 எரே. 31. 20. ஓசி. 11. 8
17 உபா. 32. 6. 1 நாளா. 29. 10
18 சங். 119. 10. யோ. 12. 40. ரோ. 9. 17, 18
19 எண். 10. 36. சங். 90. 13
20 சங். 74. 6–8
21 65. 1
22 நியா. 5. 5. சங். 144. 5. மீகா. 1. 4
23 சங். 65. 5. ஆப. 3. 3–6
24 சங். 31. 19. 1 கொ. 2. 9

ர்ந்ததுமில்லை, அவைகளைக் கண்டதுமில்லை.
5 மகிழ்ச்சியாய் நீதியைச் செய்கிறவர்களையும்,
உம்முடைய வழிகளில் உம்மை நினைக்கிற
வர்களையும் சந்திக்கிறீர்; [1]நாங்களோ, அவை
களுக்கு விரோதமாக எப்பொழுதும் பாவஞ்
செய்தபடியினாலே, தேவரீர் கடுங்கோபங்கொ
6 ண்டீர்; [2]இன்னமும் தப்பியிருக்கிறோம். நாங்
கள் அனைவரும் தீட்டானவர்கள்போல இருக்
கிறோம்; எங்களுடைய நீதிகளெல்லாம்[3] அழுக்
கான கந்தைபோல இருக்கிறது, நாங்கள்
அனைவரும் இலைகளைப்போல் உதிருகிறோம்;
எங்கள் அக்கிரமங்கள் காற்றைப்போல் எங்
7 களை அடித்துக்கொண்டுபோகிறது. உமது
நாமத்தை நோக்கிக் கூப்பிடுகிறவனும், உம்
மைப் பற்றிக்கொள்ளும்படிக்கு விழித்துக்
கொள்ளுகிறவனும் இல்லை; [4]தேவரீர் உம்
முடைய முகத்தை எங்களை விட்டு மறைத்து,
எங்கள் அக்கிரமங்களினிமித்தம் எங்களைக்
8 கரையப்பண்ணுகிறீர். இப்பொழுதும் **கர்த்**
**தாவே**, நீர் எங்களுடைய பிதா, நாங்கள்
களிமண்; [5]நீர் எங்களை உருவாக்குகிறவர், நா
ங்கள் அனைவரும் உமது கரத்தின் கிரியை.
9 **கர்த்தாவே**, அதிகமாய்க் கடுங்கோபங் கொள்
ளாமலும், என்றைக்கும் அக்கிரமத்தை நினைத்
துக்கொள்ளாமலும் இருப்பீராக; [6]இதோ,
பாரும், நாங்கள் அனைவரும் உம்முடைய
10 ஜனங்களே. உமது பரிசுத்த பட்டணங்கள்
வனாந்தரமாயின; சீயோன் வனாந்தரமாயிற்று;
11 எருசலேம் பாழாய்க் கிடக்கிறது. எங்கள்
பிதாக்கள் உம்மைத் துதித்த பரிசுத்தமும் மகி
மையுமான எங்களுடைய ஆலயம் அக்கினி
க்கு இரையாகி, [7]இன்பமான எங்களுடைய
12 ஸ்தானங்களெல்லாம் பாழாயின. **கர்த்தாவே**,
இவைகள் இப்படியிருந்தும் அடக்கிக்கொண்
டிருப்பீரோ? [8]மவுனமாயிருந்து, அதிகமாய்
எங்களைச் சிறுமைப்படுத்துவீரோ?

**65** என்னைக்குறித்து விசாரித்துக் கேளா
திருந்தவர்களாலே தேடப்பட்டேன்; என்
னைத் தேடாதிருந்தவர்களாலே கண்டறியப்
பட்டேன்; [9]என்னுடைய நாமம் விளங்காதி
ருந்த ஜாதியை நோக்கி: இதோ, இங்கே இரு
2 க்கிறேன் என்றேன். நலமல்லாத வழியிலே
தங்கள் நினைவுகளின்படி நடக்கிற முரட்டா
ட்டமான ஜனத்தண்டைக்கு [10]நாள்முழுதும்
3 என் கைகளை நீட்டினேன். அந்த ஜனங்கள்
என் சந்நிதியிலே நித்தம் எனக்குக் கோபமு
ண்டாக்கி, [11]தோட்டங்களிலே பலியிட்டு, செ
4 ங்கற்களின்மேல் தூபங்காட்டி, பிரேதக்குழி
களண்டையில் உட்கார்ந்து, பாழான ஸ்த
லங்களில் இராத்தங்கி, பன்றியிறைச்சியைத்
தின்று, [12]தங்கள் பாத்திரங்களில் அருவருப்
பானவைகளின் ஆணத்தை வைத்திருந்து:
5 நீ உன்மட்டிலிரு, என் சமீபத்தில் வராதே,
உன்னைப்பார்க்கிலும் நான் பரிசுத்தன் என்று
சொல்லுகிறார்கள்; [13]இவர்கள் என் கோபத்
தாலாகிய புகையும், நாள்முழுதும் எரிகிற
6 அக்கினியுமாயிருப்பார்கள். இதோ, அது
எனக்கு முன்பாக எழுதியிருக்கிறது; [14]நான்
மவுனமாயிராமல் சரிக்குச் சரிக்கட்டுவேன்.
உங்கள் அக்கிரமங்களுக்கும், மலைகளில் தூப 7
ங்காட்டி, மேடைகளின்மேல் என்னை நிந்
தித்த உங்கள் பிதாக்களுடைய அக்கிரமங்
களுக்கும் தக்கதாக அவர்கள் மடியிலே சரிக்
கட்டுவேன்; [15]நான் அவர்கள் முந்தின செய்
கையின் பலனை அவர்கள் மடியிலே அளப்
பேனென்று **கர்த்தர்** சொல்லுகிறார்.

**கர்த்தர்** சொல்லுகிறது என்னவென்றால்: 8
ஒரு திராட்சக்குலையில் இரசம் காணப்படும்
போது: [16]அதை அழிக்காதே, அதிலே ஆசீர்
வாதம் உண்டென்று சொல்லுகிறபடி, நான்
என் ஊழியக்காரரினிமித்தம் அனைத்தையும்
அழிக்காதபடி செய்வேன். யாக்கோபிலிரு 9
ந்து ஒரு வித்தையும், யூதாவிலிருந்து என்
மலைகளைச் சுதந்தரிப்பவனையும் எழும்பப்பண்
ணுவேன்; [17]நான் தெரிந்துகொண்டவர்கள்
அதைச் சுதந்தரித்துக்கொண்டு, என் ஊழியக்
காரர் அங்கே வாசம்பண்ணுவார்கள். என் 10
னைத் தேடுகிற என் ஜனத்துக்குச் சாரோன்
ஆட்டுத்தொழுவமாகவும், [18]ஆகோரின் பள்ளத்
தாக்கு மாட்டுக்கிடையாகவும் இருக்கும். ஆனா 11
லும் **கர்த்தரை** விட்டு, [19]என் பரிசுத்த பர்வதத்
தை மறந்து, *காத் என்னும் தெய்வத்துக்குப்
பந்தியை ஆயத்தம்பண்ணி, †மேனி என்
னும் தெய்வத்துக்குப் பானபலியை நிறைய
வார்க்கிறவர்களே, உங்களை நான் பட்டயத் 12
துக்கு எண்ணிக்கொடுப்பேன்; நீங்கள் அனை
வரும் கொலை செய்யப்படக் குனிவீர்கள்;
[20]நான் கூப்பிட்டும் நீங்கள் மறுஉத்தரவு கொ
டுக்கவில்லை; நான் பேசியும் நீங்கள் கேட்க
வில்லை; என் பார்வைக்குப் பொல்லாப்பான
தைச் செய்து, எனக்குப் பிரியமல்லாததைத்
தெரிந்துகொண்டீர்கள்.

ஆதலால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு 13
கிறார்: இதோ, என் ஊழியக்காரர் புசிப்பார்
கள், நீங்களோ பசியாயிருப்பீர்கள்; இதோ,
என் ஊழியக்காரர் குடிப்பார்கள், நீங்களோ
தாகமாயிருப்பீர்கள்; இதோ, என் ஊழியக்
காரர் சந்தோஷப்படுவார்கள், நீங்களோ வெ
ட்கப்படுவீர்கள். இதோ, என் ஊழியக்காரர் 14
மனமகிழ்ச்சியினாலே கெம்பீரிப்பார்கள், [21]நீங்
களோ மனநோவினாலே அலறி, ஆவியின்
முறிவினாலே புலம்புவீர்கள். நான் தெரிந்து 15
கொண்டவர்களுக்கு நீங்கள் உங்கள் நாமத்
தைச் சாபவார்த்தையாகப் பின்வைத்துப்போ
வீர்கள்; [22]கர்த்தராகிய ஆண்டவர் உன்னைக்
கொன்றுபோட்டு, தம்முடைய ஊழியக்கார
ருக்கு வேறே நாமத்தைத் தரிப்பார். அதி 16
னாலே பூமியிலே தன்னை ஆசீர்வதிக்கிறவன்
சத்திய தேவனுக்குள் தன்னை ஆசீர்வதிப்பான்;
பூமியிலே ஆணையிடுகிறவன் சத்திய தேவன்
பேரில் ஆணையிடுவான்; [23]முந்தின இடுக்கண்
கள் மறக்கப்பட்டு, அவைகள் என் கண்க
ளுக்கு மறைந்துபோயின. இதோ, நான் 17
புதிய வானத்தையும் புதிய பூமியையும் சிருஷ்

[1] அப். 10. 35
[2] மல். 3. 6
[3] பிலி. 3. 9
[4] ஓசி. 5. 15. 7. 7
[5] எரே. 18. 6. ரோ. 9. 19, 21. எபே. 2. 10
[6] சங். 79. 8.
[7] 2 இரா. 25. 9. புல. 2. 7
[8] 42. 14
[9] ரோ. 9. 24-30. எபே. 2. 12, 13
[10] ரோ. 10. 20, 21
[11] லேவி. 17. 5. உபா. 32. 21
[12] லேவி. 11. 7
[13] மத். 9. 11
[14] உபா. 32. 34. எரே. 16. 18. மல். 3. 16
[15] யாத். 20. 5. எசே. 18. 6. 20. 27, 28
[16] யோவே. 2. 14
[17] மத். 24. 22. ரோ. 11. 5-7
[18] யோசு. 7. 24, 26. ஓசி. 2. 15
[19] எசே. 23. 41. 1 கொரி. 10. 21
* சீதேவி.
† மூதேவி.
[20] 2 நாளா. 36. 15, 16. நீதி. 1. 24. மத். 21. 34-43
[21] மத். 8. 12
[22] சகரி. 8. 13. அப். 11. 26
[23] உபா. 6. 13. சங். 63. 11. எரே. 4. 2

டிக்கிறேன்; [1]முந்தினவைகள் இனி நினைக்
கப்படுவதுமில்லை, மனதிலே தோன்றுவது
18 மில்லை. நான் சிருஷ்டிக்கிறதினாலே நீங்கள்
என்றென்றைக்கும் மகிழ்ந்து களிகூர்ந்திருங்
கள்; [2]இதோ, எருசலேமைக் களிகூருதலாக
வும், அதின் ஜனத்தை மகிழ்ச்சியாகவும்
19 சிருஷ்டிக்கிறேன். நான் எருசலேமின்மேல்
களிகூர்ந்து, என் ஜனத்தின்மேல் மகிழ்ச்சி
யாயிருப்பேன்; [3]அழுகையின் சத்தமும், கூக்
குரலின் சத்தமும் அதில் இனிக் கேட்கப்
20 படுவதில்லை. அங்கே இனி அற்ப ஆயுசுள்ள
பாலகனும், தன் நாட்கள் பூரணமாகாத கிழ
வனும் உண்டாயிரார்கள்; [4]நூறுவயது செ
ன்று மரிக்கிறவனும் வாலிபனென்று எண்
ணப்படுவான், நூறு வயதுள்ளவனாகிய பா
21 வியோ சபிக்கப்படுவான். வீடுகளைக் கட்டி,
அவைகளில் குடியிருப்பார்கள், [5]திராட்சத்
தோட்டங்களை நாட்டி, அவைகளின் கனி
22 யைப் புசிப்பார்கள். அவர்கள் கட்டுகிறதும்,
வேறொருவர் குடியிருக்கிறதும்; [6]அவர்கள்
நாட்டுகிறதும், வேறொருவர் கனிபுசிக்கிறது
மாயிருப்பதில்லை; ஏனெனில், விருட்சத்தின்
நாட்களைப்போல [7]என் ஜனத்தின் நாட்களி
ருக்கும், நான் தெரிந்துகொண்டவர்கள் தங்
கள் கைகளின் கிரியைகளை நெடுநாளாய்
23 அநுபவிப்பார்கள். அவர்கள் விருதாவாக உ
ழைப்பதில்லை; [8]அவர்கள் துன்பமுண்டாகப்
பிள்ளைகளைப் பெறுவதுமில்லை; அவர்களும்,
அவர்களோடேகூட அவர்கள் சந்தானமும்
**கர்த்தரா**லே ஆசீர்வதிக்கப்பட்ட சந்ததியா
24 யிருப்பார்கள். அப்பொழுது அவர்கள் கூப்
பிடுகிறதற்கு முன்னே நான் மறுஉத்தரவு
கொடுப்பேன்; [9]அவர்கள் பேசும்போதே நான்
25 கேட்பேன். ஓநாயும் ஆட்டுக்குட்டியும் ஒரு
மித்துமேயும்; [10]சிங்கம் மாட்டைப்போல வைக்
கோலைத் தின்னும்; [11]புழுதி சர்ப்பத்துக்கு
இரையாகும்; என் பரிசுத்த பர்வதமெங்கும்
அவைகள் தீங்குசெய்வதுமில்லை, கேடுண்டாக்
குவதுமில்லையென்று **கர்த்தர்** சொல்லுகிறார்.

66 **கர்த்தர்** சொல்லுகிறது என்னவென்
றால்: வானம் எனக்குச் சிங்காசனம், பூமி
எனக்குப் பாதபடி; [12]நீங்கள் எனக்குக் கட்
டும் ஆலயம் எப்படிப்பட்டது? நான் தங்கியி
2 ருக்கும் ஸ்தலம் எப்படிப்பட்டது? என்னு
டைய கரம் இவைகளையெல்லாம் சிருஷ்டித்
ததினால் இவைகளெல்லாம் உண்டாயின
என்று **கர்த்தர்** சொல்லுகிறார்; [13]ஆனாலும்
சிறுமைப்பட்டு, ஆவியில் நொறுங்குண்டு,
என் வசனத்துக்கு நடுங்குகிறவனையே நோக்
3 கிப் பார்ப்பேன். மாட்டை வெட்டுகிறவன்
மனுஷனைக் கொல்லுகிறவனாகவும், ஆட்
டைப் பலியிடுகிறவன் நாயைக் கழுத்தறுக்கிற
வனாகவும், காணிக்கையைப் படைக்கிறவன்
பன்றி இரத்தத்தைப் படைக்கிறவனாகவும்,
[14]தூபங்காட்டுகிறவன் விக்கிரகத்தை ஸ்தோத்
திரிக்கிறவனாகவும் இருக்கிறான்; இவர்கள் தங்
கள் வழிகளையே தெரிந்துகொள்ளுகிறார்கள்;
இவர்களுடைய ஆத்துமா தங்கள் அருவருப்பு
களின்மேல் விருப்பமாயிருக்கிறது. நான் கூப் 4
பிட்டும் மறுஉத்தரவு கொடுக்கிறவனில்லாம
லும், நான் பேசியும் அவர்கள் கேளாமலும்,
அவர்கள் என் பார்வைக்குப் பொல்லாப்பான
தைச் செய்து, நான் விரும்பாததைத் தெரிந்து
கொண்டதினிமித்தம், [15]நானும் அவர்களு
டைய ஆபத்தைத் தெரிந்துகொண்டு, அவர்க
ளுடைய திகில்களை அவர்கள்மேல் வரப்பண்
ணுவேன்.

**கர்த்தருடைய** வசனத்துக்கு நடுங்குகிறவர் 5
களே, அவருடைய வார்த்தையைக் கேளுங்
கள்; என் [16]நாமத்தினிமித்தம் உங்களைப் பகை
த்து, உங்களை அப்புறப்படுத்துகிற உங்கள்
சகோதரர், **கர்த்தர்** மகிமைப்படுவாராக என்
கிறார்களே; அவர் உங்களுக்குச் சந்தோஷம்
உண்டாகும்படி காணப்படுவார்; அவர்களோ
வெட்கப்படுவார்கள். நகரத்திலிருந்து அம 6
ளியின் இரைச்சலும், தேவாலயத்திலிருந்து
சத்தமும் கேட்கப்படும்; அது தமது சத்துருக்
களுக்குச் சரிக்குச் சரிக்கட்டுகிற **கர்த்தரு**
**டைய** சத்தந்தானே. பிரசவவேதனைப்படு 7
முன் பெற்றாள், கர்ப்பவேதனை வருமுன்
ஆண்பிள்ளையைப் பெற்றாள். இப்படிப்பட் 8
டவைகளைக் கேள்விப்பட்டது யார்? இப்படிப்
பட்டவைகளைக் கண்டது யார்? ஒரு தேசத்
துக்கு ஒரேநாளில் பிள்ளைப்பேறு வருமோ?
ஒரு ஜாதி ஒருமிக்கப் பிறக்குமோ? சீயோனோ
வெனில், ஒருமிக்க வேதனைப்பட்டும், [17]தன்
குமாரரைப் பெற்றும் இருக்கிறது. பெறப் 9
பண்ணுகிறவராகிய நான் பெறச்செய்யாமல்
இருப்பேனோ என்று **கர்த்தர்** சொல்லுகிறார்;
பிரசவிக்கப்பண்ணுகிறவராகிய நான் பிரச
வத்தைத் தடுப்பேனோ என்று உன் தேவன்
சொல்லுகிறார்.

எருசலேமை நேசிக்கிற நீங்களெல்லாரும் 10
அவளோடேகூடச் சந்தோஷப்பட்டு, அவ
ளைக்குறித்துக் களிகூருங்கள்; [18]அவள்நிமித்
தம் துக்கித்திருந்த நீங்களெல்லாரும் அவளோ
டேகூட மிகவும் மகிழுங்கள். நீங்கள் அவளு 11
டைய ஆறுதல்களின் முலைப்பாலை உண்டு
திருப்தியாகி, [19]நீங்கள் சூப்பிக்குடித்து, அவளு
டைய மகிமையின் பிரகாசத்தினால் மனமகிழ்
ச்சியாகுங்கள். **கர்த்தர்** சொல்லுகிறது என்ன 12
வென்றால்: இதோ, நான் சமாதானத்தை ஒரு
நதியைப்போலவும், ஜாதிகளின் மகிமையைப்
புரண்டு ஓடுகிற ஆற்றைப்போலவும் அவளிட
மாகப் பாயும்படி செய்கிறேன்; [20]அப்பொழுது
நீங்கள் முலைப்பால் குடிப்பீர்கள்; இடுப்பில்
வைத்துச் சுமக்கப்படுவீர்கள்; முழங்காலில்
வைத்துத் தாலாட்டப்படுவீர்கள். ஒருவனை 13
அவன் தாய் தேற்றுவதுபோல் நான் உங்க
ளைத் தேற்றுவேன்; நீங்கள் எருசலேமிலே
தேற்றப்படுவீர்கள். நீங்கள் அதைக் காணும் 14
போது, உங்கள் இருதயம் மகிழ்ந்து, [21]உங்கள்
எலும்புகள் பசும்புல்லைப்போலச் செழிக்கும்;
அப்பொழுது **கர்த்தருடைய** ஊழியக்காரரி

1 2 பே. 3. 13. வெளி. 21. 1
2 51. 11. 1 தெச. 5. 16
3 62. 5. வெளி. 7. 17. 21. 4
4 பிர. 8. 12, 13
5 ஆமோ. 9. 14
6 லேவி. 26. 16
7 சங். 92. 12
8 61. 9. ஓசி. 9. 12. ரோ. 9. 7, 8
9 சங். 32. 5. தானி. 9. 20, 21
10 11. 6–9
11 ஆதி. 3. 14
12 2 நாளா. 6. 18. மத். 5. 34, 35. அப். 17. 24
13 எஸ்றா 9. 4. நீதி. 28. 14. மத். 5. 3
14 உபா. 28. 18.
15 65. 12. நீதி. 1. 24. எரே. 7. 13, 14. 2 தெச. 2. 11
16 2 தெச. 1. 10. தீத். 2. 13
17 அப். 2. 41, 47
18 சங். 26. 8: 84. 1–4
19 1 பே. 2. 2
20 60. 4, 16
21 நீதி. 3. 8. எசே. 37. 1–14. யோ. 16. 22

டத்தில் அவருடைய காமும், அவருடைய
சத்துருக்களிடத்தில் அவருடைய சினமும்
15 அறியப்படும். இதோ, தம்முடைய கோபத்
தை உக்கிரமாகவும், தம்முடைய கடிந்து
கொள்ளுதலை அக்கினிஜுவாலையாகவும் செ
லுத்தக் கர்த்தர் அக்கினியோடும் வருவார்,
[1]பெருங்காற்றைப்போன்ற தம்முடைய இர
16 தங்களோடும் வருவார். கர்த்தர் அக்கினியா
லும் தமது பட்டயத்தாலும், மாம்சமான எல்
லாரோடும் வழக்காடுவார்; [2]கர்த்தரால் கொ
17 லையுண்டவர்கள் அநேகராயிருப்பார்கள். தங்
களைத் தாங்களே பரிசுத்தப்படுத்திக்கொள்ளு
கிறவர்களும், [3]தோப்புகளின் நடுவிலே தங்க
ளைத் தாங்களே ஒருவர்பின் ஒருவராய்ச் சுத்தி
கரித்துக்கொள்ளுகிறவர்களும், பன்றியிறைச்
சியையும், அருவருப்பானதையும், எலியையும்
சாப்பிடுகிறவர்களும், ஏகமாய்ச் சங்கரிக்கப்
படுவார்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்.
18 நான் அவர்கள் கிரியைகளையும், அவர்கள்
நினைவுகளையும் அறிந்திருக்கிறேன்; நான் சகல
ஜாதியாரையும் பாஷைக்காரரையும் கூட்டிச்
சேர்க்குங்காலம் வரும்; அவர்கள் வந்து என்
19 மகிமையைக் காண்பார்கள். நான் அவர்களில்
ஒரு அடையாளத்தைக் கட்டளையிடுவேன்;
[4]அவர்களில் தப்பினவர்களை, என் கீர்த்தியைக்
கேளாமலும், என் மகிமையைக் காணாமலுமி
ருக்கிற ஜாதிகளின் தேசங்களாகிய தர்ஷீசுக்
கும், வில்வீரர் இருக்கிற பூலுக்கும், லூதுக்கு
ம், தூபாலுக்கும், யாவானுக்கும், தூரத்திலுள்

[1] 2 தெச. 1. 8
[2] 27. 1
[3] 65. 3, 4
[4] 18. 3, 7. லூ. 2. 34
[5] மல். 1. 11. மத். 28. 19
[6] ரோ. 15.15, 16
[7] யாத். 19. 16. 1பே. 2.9. வெளி. 1. 6
[8] 65. 17. 2 பே. 3. 13. வெளி. 21. 1
[9] சங். 65. 2. சகரி. 14. 16
[10] தானி. 12. 2. மாற். 9. 44-48

ள தீவுகளுக்கும் அனுப்புவேன்; [5]அவர்கள் என்
மகிமையை ஜாதிகளுக்குள்ளே அறிவிப்பார்
கள். இஸ்ரவேல் புத்திரர் சுத்தமான பாத்தி 20
ரத்தில் காணிக்கையைக் கர்த்தருடைய ஆல
யத்துக்குக் கொண்டுவருகிறதுபோல, உங்கள்
சகோதரரெல்லாரையும் அவர்கள் குதிரைக
ளின்மேலும், இரதங்களின்மேலும், குலாரி
வண்டில்களின்மேலும், கோவேறுகழுதை
களின்மேலும், வேகமான ஒட்டகங்களின்
மேலும், [6]சகல ஜாதிகளிடத்திலுமிருந்து எரு
சலேமிலுள்ள கர்த்தருக்குக் காணிக்கையாக
என் பரிசுத்த பர்வதத்துக்குக் கொண்டுவரு
வார்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார். அவர் 21
களிலும் சிலரை ஆசாரியராகவும் [7]லேவியராக
வும் தெரிந்துகொள்வேன் என்று கர்த்தர்
சொல்லுகிறார். நான் படைக்கப்போகிற புதிய 22
வானமும் புதிய பூமியும் [8]எனக்குமுன்பாக
நிற்பதுபோல, உங்கள் சந்ததியும், உங்கள் நா
மமும் நிற்குமென்று கர்த்தர் சொல்லுகிறார்.
அப்பொழுது: மாதந்தோறும், ஓய்வுநாள்தோ 23
றும், [9]மாம்சமான யாவரும் எனக்கு முன்பா
கத் தொழுதுகொள்வார்களென்று கர்த்தர்
சொல்லுகிறார். அவர்கள் வெளியே போய் 24
எனக்கு விரோதமாய்ப் பாதகஞ்செய்த மனு
ஷருடைய பிரேதங்களைப் பார்ப்பார்கள்;
[10]அவர்களுடைய பூச்சி சாகாமலும், அவர்களு
டைய அக்கினி அவியாமலும் இருக்கும்;
அவர்கள் மாம்சமான யாவருக்கும் அரோசிக
மாயிருப்பார்கள்.

# எரேமியா தீர்க்கதரிசியின் புஸ்தகம்

1 பென்யமீன் தேசத்திலுள்ள ஆனதோத்
ஊரிலிருந்த ஆசாரியர்களில் ஒருவனுகிய
இல்க்கியாவின் குமாரன் [1]எரேமியாவினு
2 டைய வசனங்கள்: ஆமோனுடைய குமார
னுகிய யோசியா என்கிற யூதாவுடைய ராஜா
வின் நாட்களில், அவன் அரசாண்ட [2]பதின்
மூன்றும் வருஷத்தில் இவனுக்குக் **கர்த்தரு**
3 **டைய** வார்த்தை உண்டாயிற்று. அப்புறம்
யோசியாவின் குமாரனுகிய யோயாக்கீம் என்
கிற யூதாவுடைய ராஜாவின் நாட்களிலும்,
யோசியாவின் குமாரனுகிய சிதேக்கியா என்
கிற யூதாவுடைய ராஜாவின் பதினோராம் வரு
ஷத்து முடிவுமட்டாகவும், [3]எருசலேம் ஊரார்
ஐந்தாம் மாதத்தில் சிறைப்பட்டுப்போகும்
வரைக்கும் **கர்த்தருடைய** வார்த்தை அவனு
க்கு உண்டாயிற்று.
4 **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண்டா
5 கி, அவர்: நான் உன்னைத் தாயின் வயிற்றில்
உருவாக்குமுன்னே உன்னை அறிந்தேன்;
[4]நீ கர்ப்பத்திலிருந்து வெளிப்படுமுன்னே
நான் உன்னைப் பரிசுத்தம்பண்ணி, உன்னை
ஜாதிகளுக்குத் தீர்க்கதரிசியாகக் கட்டளையிட்
6 டேன் என்று சொன்னார். அப்பொழுது
நான்: ஆ கர்த்தராகிய ஆண்டவரே, இதோ,
நான் பேச அறியேன்; [5]சிறுபிள்ளையாயிருக்கி
7 றேன் என்றேன். ஆனாலும் **கர்த்தர்**: நான்
சிறுபிள்ளையென்று நீ சொல்லாதே, நான் உன்
னை அனுப்புகிற எல்லாரிடத்திலும் நீ போய்,
[6]நான் உனக்குக் கட்டளையிடுகிறவைகளையெ
8 ல்லாம் நீ பேசுவாயாக. நீ அவர்களுக்குப்
பயப்படவேண்டாம்; [7]உன்னைக் காக்கும்படி
க்கு நான் உன்னுடனே இருக்கிறேன் என்று
9 **கர்த்தர்** சொல்லி, **கர்த்தர்** தமது கரத்தை
நீட்டி, என் வாயைத் தொட்டு: [8]இதோ, என்
வார்த்தைகளை உன் வாயிலே வைக்கிறேன்.
10 பார், பிடுங்கவும், இடிக்கவும், அழிக்கவும்,
கவிழ்க்கவும், கட்டவும், நாட்டவும் உன்னை
நான் இன்றையத்தினம் ஜாதிகளின்மேலும்
ராஜ்யங்களின்மேலும் ஏற்படுத்தினேன் [9]என்
று **கர்த்தர்** என்னுடனே சொன்னார்.
11 பின்னும் **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு
உண்டாகி, அவர்: எரேமியாவே, நீ என்னத்
தைக் காண்கிறாய் என்று கேட்டார்; வாதுமை
மரத்தின் கிளையைக் காண்கிறேன் என்றேன்.
அப்பொழுது **கர்த்தர்**: நீ கண்டது சரியே; 12
என் வார்த்தையைத் தீவிரமாய் நிறைவேற்று
வேன் என்றார். **கர்த்தருடைய** வார்த்தை 13
இரண்டாந்தரம் எனக்கு உண்டாகி, அவர்: நீ
காண்கிறது என்ன என்று கேட்டார்; பொங்
குகிற பானையைக் காண்கிறேன், [10]அதின் வாய்
வடக்கேயிருந்து நோக்குகிறது என்றேன்.
அப்பொழுது **கர்த்தர்** என்னை நோக்கி: 14
[11]வடக்கேயிருந்து தீங்கு தேசத்தினுடைய குடி
கள் எல்லார்மேலும் வரும். இதோ, நான் 15
வடதிசை ராஜ்யங்களின் வம்சங்களை யெல்
லாம் கூப்பிடுவேன் என்று **கர்த்தர்** சொல்லு
கிறார்; அவர்கள் வந்து அவனவன் தன் தன்
சிங்காசனத்தை எருசலேமின் ஒலிமுகவாசல்
களுக்கும், அதின் சுற்றுமதில்கள் எல்லாவற்
றுக்கும் விரோதமாகவும், யூதாதேசத்து எல்
லாப் பட்டணங்களுக்கும் விரோதமாகவும்
வைப்பார்கள். அவர்கள் என்னைவிட்டு அந் 16
நிய தேவர்களுக்குத் தூபங்காட்டி, [12]தங்கள்
கைகளின் கிரியையைப் பணிந்துகொண்ட
அவர்களுடைய சகல தீமைகளினிமித்தமும்
நான் என் நியாயத்தீர்ப்புகளை அவர்களுக்கு
விரோதமாகக் கூறுவேன். ஆகையால் நீ உன் 17
அரையைக் கட்டிக்கொண்டு நின்று, நான்
உனக்குக் கட்டளையிடுகிறவைகளையெல்லாம்
அவர்களுக்குச் சொல்; [13]நான் உன்னை அவர்க
ளுக்கு முன்பாகக் கலங்கப்பண்ணாதபடிக்கு,
நீ அவர்கள் முகத்துக்கு அஞ்சாதிரு. இதோ, 18
தேசமனைத்துக்கும், யூதாவின் ராஜாக்களுக்
கும், அதின் பிரபுக்களுக்கும், அதின் ஆசாரி
யர்களுக்கும், [14]தேசத்தின் ஜனங்களுக்கும்எதி
ராக நான் உன்னை இன்றையத்தினம் அர
ணிப்பான பட்டணமும், இருப்புத்தூணும்,
வெண்கல அலங்கமும் ஆக்கினேன். அவர் 19
கள் உனக்கு விரோதமாக யுத்தம்பண்ணுவார்
கள்; ஆனாலும் உன்னை மேற்கொள்ளமாட்
டார்கள்; [15]உன்னை ரட்சிக்கும்படிக்கு நான்
உன்னுடனே இருக்கிறேன் என்று **கர்த்தர்**
சொல்லுகிறார்.

**கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண் 2
டாகி, அவர்: நீ போய், எருசலேமின் செ 2
விகள் கேட்கும்படிக் கூப்பிட்டுச் சொல்ல

[1] 1 நாளா. 6. 60. 2. நாளா. 36. 21
[2] 25. 1-3
[3] 39. 2 52. 12, 15. 2 இரா. 25. 8
[4] ஏசா. 49. 1, 5. லூக். 1. 15, 41. கலா. 1. 15, 16
[5] யாத். 4. 10. ஏசா. 6. 5
[6] மத். 28. 20. அப். 20. 27
[7] எசே. 2. 6 3. 9. அப். 26. 17. எபி. 13. 6
[8] ஏசா. 6. 7
[9] 18. 7. 2 கொ. 10. 4, 5
[10] எசே. 11. 3, 7. 24. 3 ஆ
[11] 4. 6 6. 1, 22
[12] 17. 18. உபா. 28. 20
[13] யோபு 38. 3. எசே. 2. 6. லூக். 12. 35
[14] 15. 20. ஏசா. 50. 7
[15] யோவா. 1. 9

வேண்டியது என்னவென்றால்: விதைக்கப்
படாத தேசமாகிய வனாந்தரத்திலே நீ என்
னைப் பின்பற்றிவந்த உன் இளவயதின் பக்தி
யையும், [1]நீ வாழ்க்கைப்பட்டபோது உனக்கி
ருந்த நேசத்தையும் நினைத்திருக்கிறேன் என்று
3 **கர்த்தர்** சொல்லுகிறார். இஸ்ரவேல் **கர்த்த**
**ருக்குப்** பரிசுத்தமும், அவருடைய விளைவின்
முதற்பலனுமாயிருந்தது; [2]அதைப் பட்சித்த
யாவரும் குற்றவாளிகளானார்கள்; பொல்லா
ப்பு அவர்கள்மேல் வந்ததென்று **கர்த்தர்**
சொல்லுகிறார்.
4 யாக்கோபின் குடும்பத்தாரே, இஸ்ரவேல்
குடும்பத்தின் வம்சங்களே, நீங்கள் எல்லாரும்
**கர்த்தருடைய** வார்த்தையைக் கேளுங்கள்.
5 **கர்த்தர்** சொல்லுகிறது என்னவென்றால்: எங்
களை எகிப்துதேசத்திலிருந்து வரப்பண்ணின
வரும், [3]அவாந்தரவெளியும், பள்ளங்களுமு
ள்ள தேசமும், வறட்சியும், மரண இருளுமு
ள்ள தேசமும், ஒருவனும் கடவாமலும் ஒரு
மனுஷனும் குடியிராமலும் இருக்கிற தேசமு
மான வனாந்தரத்தில் எங்களை நடத்தினவரு
மாகிய **கர்த்தர்** எங்கேயென்று உங்கள் பிதாக்
6 கள் கேளாமல், என்னை விட்டுத் தூரப்பட்டு,
[4]மாயையைப் பின்பற்றி, வீணராய்ப் போகிற
தற்கு என்னிடத்தில் என்ன அநியாயத்தைக்
7 கண்டார்கள்? செழிப்பான [5]தேசத்தின் கனி
யையும் நன்மையையும் சாப்பிடும்படிக்கு நான்
உங்களை அவ்விடத்துக்கு அழைத்துக்கொண்
டுவந்தேன்; [6]ஆனாலும் நீங்கள் அதற்குள் பிர
வேசித்தபோது, என் தேசத்தைத் தீட்டுப்ப
டுத்தி, என் சுதந்தரத்தை அருவருப்பாக்கினீர்
8 கள். **கர்த்தர்** எங்கேயென்று ஆசாரியர்கள்
சொல்லாமலும், [7]வேதத்தைப் போதிக்கிறவர்
கள் என்னை அறியாமலுமிருந்து, மேய்ப்பர்
கள் எனக்குத் துரோகம்பண்ணினார்கள்; தீர்க்
கதரிசிகள் பாகாலைக்கொண்டு தீர்க்கதரிசனஞ்
சொல்லி, [8]வீணானவைகளைப் பின்பற்றினார்
9 கள். ஆதலால் இன்னும் நான் உங்களோ
டே வழக்காடுவேன், [9]உங்கள் பிள்ளைகளின்
பிள்ளைகளோடும் வழக்காடுவேன் என்று **கர்த்**
10 **தர்** சொல்லுகிறார். நீங்கள் கித்தீமின் தீவு
கள்மட்டும் கடந்துபோய்ப் பார்த்து, கேதா
ருக்கு ஆள் அனுப்பி நன்றாய் விசாரித்து, இப்
11 படிப்பட்ட காரியம் உண்டோ என்றும், எந்த
ஜாதியாவது தேவர்களல்லாத தங்கள் தேவர்
களை மாற்றினது உண்டோ என்றும் பாருங்
கள்; [10]என் ஜனங்களோ வீணானவைகளுக்கா
12 கத் தங்கள் மகிமையை மாற்றினார்கள். வானங்
களே, [11]இதினிமித்தம் பிரமித்துக் கொந்த
ளித்து, மிகவும் திகைத்திடுங்கள் என்று **கர்த்தர்**
13 சொல்லுகிறார். என் ஜனங்கள் இரண்டு தீமை
களைச் செய்தார்கள்; [12]ஜீவத்தண்ணீர் ஊற்றா
கிய என்னை விட்டுவிட்டார்கள்; தண்ணீர்
நிற்காத தொட்டிகளாகிய வெடிப்புள்ள தொ
ட்டிகளைத் தங்களுக்கு வெட்டிக்கொண்டார்
14 கள். இஸ்ரவேல் ஒரு வேலைக்காரனோ?
[13]அவன் வீட்டில் பிறந்த அடிமையோ? என்
கொள்ளையானான்? பாலசிங்கங்கள் அவன் 15
மேல் கெர்ச்சித்து, முழங்கி, [14]அவன் தேசத்
தைப் பாழாக்கிவிட்டன; அவன் பட்டணங்
கள் குடியிராமல் சுட்டெரிக்கப்பட்டன.
நோப், தகபானேஸ் என்னும் பட்டணங்க 16
ளின் புத்திரரும், உன் உச்சந்தலையை கொறுக்
கினார்கள். உன் தேவனாகிய **கர்த்தர்** உன்னை 17
வழியிலே நடத்திக்கொண்டுபோகும் காலத்
தில், [15]நீ அவரைவிட்டுப் போகிறதினால் அல்
லவோ இதை உனக்கு நேரிடப்பண்ணினாய்?
இப்போதும் *சீகோரின் தண்ணீரைக் குடிப்ப 18
தற்கு எகிப்துக்குப் போகிறதினால் உனக்
குப் பிரயோசனம் என்ன? [16]ஐப்பிராத்து நதி
யின் தண்ணீரைக் குடிப்பதற்கு அசீரியாவுக்
குப் போகிறதினால் உனக்குப் பிரயோஜனம்
என்ன? உன் தீமை உன்னைத் தண்டிக்கும், 19
[17]உன் மாறுபாடுகள் உன்னைக் கண்டிக்கும்; நீ
உன் தேவனாகிய **கர்த்தரை** விடுகிறதும், என்
னைப்பற்றும் பயம் உன்னிடத்தில் இல்லாமலி
ருக்கிறதும், எத்தனை பொல்லாப்பும் கசப்புமா
ன காரியம் என்று உணர்ந்துகொள் என்று சே
னைகளின் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகி
றார். பூர்வகாலந் துவக்கி நான் உன் நுகத்தடி 20
யை முறித்து, [18]உன் கட்டுகளை அறுத்தேன்;
நான் அடிமைப்படுவதில்லையென்று நீயும் சொ
ன்னாயே; ஆகிலும், உயரமான சகல மேட்
டின்மேலும், பச்சையான சகல மரத்தின்கீ
ழும் நீ வேசியாய்த் திரிகிறாய். நான் உன்னை 21
முற்றிலும்நற்கனிதரும்[19]உயர்குலத் திராட்சச்
செடியாக நாட்டினேன்; நீ எனக்குக் காட்டு
திராட்சச்செடியின் ஆகாத கொடிகளாய் மா
றிப்போனது என்ன? நீ உன்னை உவர்மண் 22
ணினாலே கழுவி, [20]அதிக சவுக்காரத்தைக் கை
யாடினாலும், உன் அக்கிரமத்தின் கறைகள்
எனக்கு முன்பாக இருக்குமென்று கர்த்தரா
கிய ஆண்டவர் சொல்லுகிறார். நான் தீட்டு 23
ப்படவில்லை; [21]நான் பாகால்களைப் பின்பற்ற
வில்லை என்று நீ எப்படிச் சொல்லுகிறாய்?
பள்ளத்தாக்கிலே நீ நடக்கிற மார்க்கத்தைப்
பார்; நீ செய்ததை உணர்ந்துகொள்; தாறுமா
றாய் ஓடுகிற வேகமான பெண்ஒட்டகம்
நீ. வனாந்தரத்திலே பழகினதும், தன் இச் 24
சையின் மதவெறியிலே காற்றை உட்கொள்
ளுகிறதுமான காட்டுக்கழுதை நீ; [22]அதின்
ஆவலை திருத்தி, அதைத்திருப்புகிறவன் யார்?
அதைத் தேடுகிறவர்கள் ஒருவரும் வருத்தப்
பட வேண்டியதில்லை; அதின் மாசத்தில்
அதைக் கண்டுபிடிப்பார்கள். உன் கால் வெ 25
றுங்காலாகாதபடிக்கும், உன் தொண்டை வற
ட்சியடையாதபடிக்கும் அடக்கிக்கொள் என்
றால், நீ: அது கூடாதகாரியம்; நான் அப்படிச்
செய்யமாட்டேன்;[23]அந்நியரை நேசிக்கிறேன்;
அவர்கள் பிறகே போவேன் என்கிறாய். திரு 26
டன் அகப்படுகிறபோது, எப்படி வெட்கப்
படுகிறானோ, அப்படியே இஸ்ரவேல் வம்சத்
தார் வெட்கப்படுவார்கள்; கட்டையைப்பார்
த்து, நீ என் தகப்பன் என்றும்; [24]கல்லைப்பார்

1 உபா. 2. 7. ஓசி. 2. 15
2 யாத். 19. 5, 6 யோவே. 1. 3, 7, 8. 1 பே. 2. 9
3 உபா. 32. 10. எசா. 63. 11, 13. ஓசி. 13. 4
4 2 இரா. 17, 15. எசா. 5, 4. மீகா. 6, 3
5 எண். 13. 27
6 சங். 106. 38
7 மல். 2. 6, 7
8 ஆப. 2. 18
9 மீகா. 4. 5
10 சங். 106. 20. ரோ. 1. 23
11 எசா. 1. 2
12 சங். 36. 9; 81. 11. யோ. 4. 14. வெளி. 21. 6
13 யாத். 4. 22
14 47. 3. எசா. 1. 6, 7
15 ஓசி. 13. 9
* நீல்நதி.
16 எசா. 30. 1, 2
17 எசா. 3. 9. ஓசி. 5. 5
18 யாத். 19. 8. 1 சாமு. 12. 10. உபா. 12. 2. எசா. 1. 1, 21
19 உபா. 32. 32. நீதி. 28. 28. மத். 21. 33
20 யோபு 9. 30
21 நீதி. 30. 12–20
22 யோபு 39. 5. ஓ
23 உபா. 32. 16
24 எசா. 44. 19.

த்து, நீ என்னைப் பெற்ருய் என்றும் சொல்லு
கிற அவர்களும், அவர்கள் ராஜாக்களும், அவர்
கள் பிரபுக்களும், அவர்கள் ஆசாரியர்களும்,
அவர்கள் தீர்க்கதரிசிகளும் வெட்கப்படுவார்
27 கள். அவர்கள் தங்கள் முகத்தையல்ல, தங்
கள் முதுகை எனக்குக் காட்டிஞர்கள்; தங்கள்
ஆபத்துக்காலத்திலோ எழுந்து எங்களை ரட்சி
28 யும் என்ருர்கள். நீ உனக்கு உண்டுபண்
ணின தேவர்கள் எங்கே? உன் ஆபத்துக்கால
த்தில் உன்னை ரட்சிக்கக்கூடுமாஞல் அவை
கள் எழும்பட்டும்; [1]யூதாவே, உன் பட்ட
ணங்களின் இலக்கமும், உன் தேவர்களின்
இலக்கமும் சரி.
29 என்னோடே நீங்கள் வழக்காடுவானேன்;
நீங்கள் அனைவரும் எனக்கு விரோதமாய்த்
துரோகம்பண்ணினீர்கள் என்று கர்த்தர்
30 சொல்லுகிருர். நான் உங்கள் பிள்ளைகளை
அடித்தது விருதா; [2]சிட்சையை ஏற்றுக்கொள்
ளாமற்போஞர்கள்; அழிக்கிற சிங்கத்தைப்
போல உங்கள் பட்டயம் உங்கள் தீர்க்கதரிசி
31 களைப் பட்சித்தது. சந்ததியாரே, நீங்கள் கர்த்
தருடைய வார்த்தையைச் சிந்தித்துப்பாருங்
கள்: நான் இஸ்ரவேலுக்கு வனாந்தரமும், காரி
ருளான பூமியுமாக இருந்தேனே? பின்னை
ஏன் என் ஜனங்கள்: நாங்களே எஜமான்கள்,
இனி உம்மிடத்தில் நாங்கள் வருவதில்லை
32 யென்று சொல்லுகிருர்கள்? ஒரு பெண்
தன் ஆபரணத்தையும், ஒரு மணவாட்டி தன்
ஆடைகளையும் மறப்பாளோ? [3]என் ஜனங்க
ளோ எண்ணிமுடியாத நாட்களாய் என்னை
33 மறந்துவிட்டார்கள். நேசத்தைத் தேடும்படி
க்கு நீ உன் வழிகளை நயப்படுத்துகிறதென்ன?
இவ்விதமாய் நீ பொல்லாத ஸ்திரீகளுக்கும்
34 உன் வழிகளைக் கற்றுக்கொடுத்தாய். உன்
வஸ்திர ஓரங்களிலும் குற்றமில்லாத ஏழை
ஆத்துமாக்களின் இரத்தம் காணப்படுகிறது;
[4]அதைத் தோண்டித் தேடுகிறதிஞல் அல்ல,
அது எல்லாவற்றின்மேலும் வெளியாயிருக்
35 கிறதிஞல் அதைக் கண்டுபிடித்தேன். ஆகி
லும்: [5]குற்றமில்லாதிருக்கிறேன் என்றும்,
அவருடைய கோபம் என்னைவிட்டுத் திரும்
பிற்று என்றும் சொல்லுகிருய்; இதோ, நான்
பாவஞ் செய்யவில்லையென்று நீ சொல்லுகிற
திஞிமித்தம் நான் உன்னோடே வழக்காடு
36 வேன். நீ உன் வழியை மாற்றிமாற்றி இவ்
வளவாய் விலகிப்போகிறது என்ன? [6]நீ அசீ
ரியாவிஞல் வெட்கிப்போனதுபோல எகிப்தி
37 ஞலும் வெட்கிப்போவாய். நீ உன் கைகளை
உன் தலையின்மேல் வைத்துக்கொண்டு இவ்
விடத்திலிருந்து புறப்பட்டுப்போவாய்; ஏனெ
னில், உன் நம்பிக்கைகளைக் கர்த்தர் வெறுத்
திருக்கிருர்; அவைகளால் உனக்குக் காரியம்
வாய்க்காது.

3 ஒரு புருஷன் தன் மனைவியைத் தள்ளி
விட, அவள் அவனிடத்திலிருந்து புறப்பட்
டுப் போய், அந்நிய புருஷனுக்கு மனைவியா
ஞல், அவன் அவளிடத்தில் இனித் திரும்பப்
போவானே? [7]அந்த தேசம் மிகவும் தீட்டுப்படு
மல்லவோ? என்று மனுஷர் சொல்லுவார்கள்;
நீயோவென்ருல் அநேக நேசரோடே வேசித்
தனம் பண்ணிஞய்; ஆகிலும் என்னிடத்திற்
குத் திரும்பிவா என்று கர்த்தர் சொல்லுகி
ருர். நீ மேடுகளின்மேல் உன் கண்களை 2
ஏறெடுத்து, [8]நீ வேசித்தனம்பண்ணுத இடம்
ஒன்று உண்டோ என்று பார்; [9]வனாந்தரத்தி
லே அரபியன் காத்துக்கொண்டிருக்கிறது
போல, நீ வழி ஓரங்களில் உன் நேசருக்குக்
காத்துக்கொண்டிருந்து, உன் வேசித்தனங்க
ளாலும், உன் அக்கிரமங்களாலும் தேசத்தைத்
தீட்டுப்படுத்திஞய். அதினிமித்தம் மழை வரு 3
ஷியாமலும், [10]பின்மாரியில்லாமலும் போயிற்
று; உனக்கோ, சோரஸ்திரீயின் நெற்றியிருக்
கிறது; நீயோ: நாணமாட்டேன் என்கிருய்.
நீ இதுமுதல் என்னைநோக்கி: [11]என் பிதாவே, 4
தேவரீர் என் இளவயதின் அதிபதியென்று
சொல்லி, சதாகாலமும் கோபத்தை வைப் 5
பாரோ? [12]அதை என்றென்றைக்கும் காப்பா
ரோ என்கிருய் அல்லவோ? இதோ, இப்படி
நீ சொல்லியும் பொல்லாப்புகளைச் செய்து,
மிஞ்சிப்போகிருய் என்கிருர்.
யோசியா ராஜாவின் நாட்களிலே கர்த்தர் 6
என்னை நோக்கி: சீர்கெட்ட இஸ்ரவேல் என்
பவள் செய்ததைக் கண்டாயா? அவள் உயர
மான சகல மலையின்மேலும், பச்சையான
சகல மரத்தின்கீழும் போய், அங்கே வேசித்
தனம் பண்ணிஞள். அவள் இப்படியெல் 7
லாம் செய்தபின்பு: [13]நீ என்னிடத்தில் திரும்
பிவா என்று நான் சொன்னேன்; அவளோ
திரும்பவில்லை; [14]இதை அவளுடைய சகோ
தரியாகிய யூதா என்கிற துரோகி கண்டாள்.
சீர்கெட்ட இஸ்ரவேல் என்பவள் விபசாரம் 8
பண்ணின முகாந்தரங்கள் எல்லாவற்றினிமி
த்தமும் நான் அவளை அனுப்பிவிட்டு, அவளு
டைய தள்ளுதற்சீட்டை அவளுக்குக் கொடு
த்தபோதும், அவளுடைய சகோதரியாகிய
யூதா என்கிற துரோகி பயப்படாமல்; இவ
ளும்போய் வேசித்தனம் பண்ணிஞள், இதை
நான் கண்டேன். பிரசித்தமான அவளுடைய 9
வேசித்தனத்திஞலே தேசம் தீட்டுப்பட்டுப்
போயிற்று; [15]கல்லோடும் மரத்தோடும் விபசா
ரம் பண்ணிக்கொண்டிருந்தாள் என்ருர்.
இவைகளையெல்லாம் கண்டும், யூதா என்கிற 10
அவளுடைய சகோதரியாகிய துரோகி, கள்
ளத்தனமாய்த் திரும்பிஞளேயன்றி, [16]முழு
இருதயத்தோடும் என்னிடத்தில் திரும்ப
வில்லை என்று கர்த்தர் சொல்லுகிருர். பின் 11
னும் கர்த்தர் என்னை நோக்கி: யூதா என்கிற
துரோகியைப்பார்க்கிலும் [17]சீர்கெட்ட இஸ்ர
வேல் என்பவள் தன்னை நீதியுள்ளவளாக்கி
ஞள். நீ போய் வடதிசையை நோக்கிக் கூற 12
வேண்டிய வார்த்தைகள் என்னவென்ருல்:
சீர்கெட்ட இஸ்ரவேலே, திரும்பு என்று கர்த்
தர் சொல்லுகிருர்; நான் உங்கள்மேல் என்
கோபத்தை இறங்கப்பண்ணுவதில்லை; [18]நான்

[1] 11. 13. உபா. 32. 37. ஓசி. 10. 1
[2] 2 நாளா. 36. 16. எசா. 9. 13. மாற். 12. 2-8
[3] ஓசி. 8. 14
[4] சங். 106. 38
[5] நீதி. 28. 13. ரோ. 7. 9. 1 யோ. 1. 8, 10
[6] 2 நாளா. 28. 20. ஓசி. 12. 1
[7] எசே. 16. 26. ழ. சகரி. 1. 9
[8] உபா. 12. 2
[9] ஆதி. 38. 14
[10] 9. 12: 14. 4. லேவி. 26. 19. உபா. 28. 23 24. எசே. 3. 7. செப். 3. 5
[11] நீதி. 2. 17. ஓசி. 2. 15
[12] சங். 77. 7-9. எசா. 57. 16
[13] 2 இரா. 17. 10, 13. எசே. 23. 2. ழ
[14] எசே. 16. 46
[15] 2. 7, 27
[16] 2 நாளா. 34. 33. ஓசி. 7. 14
[17] எசே. 16. 51: 23. 11
[18] 2 நாளா. 30. 9. சங். 86. 15

கிருபையுள்ளவரென்று **கர்த்தர்** சொல்லுகி
ரூர்; நான் என்றைக்கும் கோபம் வைக்கமாட்
13 டேன். நீயோ, உன் தேவனுகிய **கர்த்தருக்கு**
விரோதமாய்த் துரோகம்பண்ணி, பச்சை
யான சகல மரத்தின் கீழும் அந்நியரோடே
சோரமார்க்கமாய் நடந்து, உன் அக்கிரமத்தை
யும், என் சத்தத்துக்குச் செவிகொடாமற்
போனதையும் [1]ஒத்துக்கொள் என்று **கர்த்தர்**
14 சொல்லுகிருர். சீர்கெட்ட பிள்ளைகளே,
திரும்புங்கள் என்று **கர்த்தர்** சொல்லுகிருர்;
[2]நான் உங்கள் நாயகர்; நான் உங்களை ஊரில்
ஒருவனும், வம்சத்தில் இரண்டுபேருமாகத்
தெரிந்து, உங்களைச் சீயோனுக்கு அழைத்துக்
15 கொண்டுவந்து, உங்களுக்கு என் இருதயத்
துக்கு எற்ற மேய்ப்பர்களைக் கொடுப்பேன்,
[3]அவர்கள் உங்களை அறிவோடும் புத்தியோ
16 டும் மேய்ப்பார்கள். நீங்கள் தேசத்திலே பெரு
கிப் பலுகுகிற அந்நாட்களிலே, அவர்கள் **கர்த்**
**தருடைய** உடன்படிக்கைப் பெட்டியென்று
இனிச் சொல்வதில்லை; அது அவர்கள் மனதில்
எழும்புவதும் இல்லை; [4]அது அவர்கள் நினை
வில் வருவதும் இல்லை; அதைக்குறித்து விசா
ரிப்பதும் இல்லை; அது இனிச் செப்பனிடப்
படுவதும் இல்லை என்று **கர்த்தர்** சொல்லுகி
17 ருர். அக்காலத்திலே எருசலேமைக் **கர்த்த**
**ருடைய** சிங்காசனம் என்பார்கள்; சகல ஜாதி
யாரும் எருசலேமில் விளங்கிய **கர்த்தருடைய**
நாமத்தினிமித்தம் அதினிடமாகச் சேர்வார்
கள்; [5]அவர்கள் இனித் தங்கள் பொல்லாத
இருதயத்தின் இச்சையின்படி நடவார்கள்.
18 அந்நாட்களிலே யூதா வம்சத்தார் இஸ்ரவேல்
வம்சத்தாரோடே சேர்ந்து, [6]அவர்கள் ஏகமாய்
வடதேசத்திலிருந்து புறப்பட்டு, நான் தங்கள்
பிதாக்களுக்குச் சுதந்தரமாகக் கொடுத்த தேசத்
19 திற்கு வருவார்கள். நான் உன்னைப் பிள்ளை
களின் வரிசையிலே வைத்து, ஜனக்கூட்
டங்களுக்குள்ளே நல்ல சுதந்தரமாகிய தேசத்
தைஉனக்குக்கொடுப்பதுஎப்படியென்றுசொ
ன்னேன்; ஆனாலும் நீ என்னை நோக்கி, [7]என்
பிதாவே என்று அழைப்பாய்; நீ என்னைவிட்
டு விலகுவதில்லை என்று திரும்பவும் சொன்
20 னேன். ஒரு மனைவி தன் புருஷனுக்குத்
துரோகம் செய்வதுபோல, [8]இஸ்ரவேல் வம்
சத்தாராகிய நீங்கள் எனக்குத் துரோகம் செய்
தது மெய் என்று **கர்த்தர்** சொல்லுகிருர்.
21 இஸ்ரவேல் புத்திரர் தங்கள் வழியை மாறுபா
டாக்கி, [9]தங்கள் தேவனுகிய **கர்த்தரை** மறந்த
தினிமித்தம் அழுதுகொண்டு விண்ணப்பஞ்
செய்யும் சத்தம் உயர்ந்த ஸ்தானங்களிலே
22 கேட்கப்படும். சீர்கெட்ட பிள்ளைகளே,
திரும்புங்கள்; உங்கள் சீர்கேடுகளைக் குண
மாக்குவேன் என்றார். [10]இதோ, உம்மிடத்
தில் வருகிறோம்; நீரே எங்கள் தேவனுகிய
23 **கர்த்தர்**. குன்றுகளையும், திரளான மலைகளை
யும் நம்புகிறது விருதா என்பது மெய்; [11]இஸ்
ரவேலின் ரட்சிப்பு எங்கள் தேவனுகிய **கர்த்**
24 **தருக்குள்** இருப்பது என்பது மெய்யே. இந்த

*இலச்சையானது எங்கள் சிறுவயதுமுதல்
எங்கள் பிதாக்களுடைய பிரயாசத்தையு
அவர்கள் ஆடுகளையும் மாடுகளையும், [12]அவர்
கள் குமாரரையும் குமாரத்திகளையும் பட்சித்
துப்போட்டது. எங்கள் இலச்சையிலே கிடக் 25
கிறோம்; [13]எங்கள் அவமானம் எங்களை மூடி
யிருக்கிறது; நாங்களும், எங்கள் பிதாக்களும்
எங்கள் சிறுவயதுமுதல் இந்நாள்வரைக்கும்
எங்கள் தேவனுகிய **கர்த்தருக்கு** விரோதமா
கப் பாவஞ்செய்தோம்; எங்கள் தேவனுகிய
**கர்த்தருடைய** சொல்லைக் கேளாமலும் போ
னேம்.

இஸ்ரவேலே, நீ திரும்புகிறதற்கு மன 4
தாயிருந்தால் என்னிடத்தில் திரும்பு என்று
**கர்த்தர்** சொல்லுகிருர்; [14]நீ உன் அருவருப்பு
களை என் பார்வையினின்று அகற்றிவிட்
டால், நீ இனி அலைந்து திரிவதில்லை. நீ 2
உண்மையோடும், நியாயத்தோடும், நீதியோ
டும், [15]**கர்த்தருடைய** ஜீவனைக்கொண்டு ஆ
ணையிடுவாய்; [16]புறஜாதிகளும் அவருக்குள்
ஆசீர்வதிக்கப்பட்டு, அவருக்குள் மேன்மை
பாராட்டுவார்கள்.

யூதா மனுஷரோடும், எருசலேமியரோடும் 3
**கர்த்தர்** சொல்லுகிறது என்னவென்றால்:
[17]நீங்கள் முள்ளுகளுக்குள்ளே விதையாதிருங்
கள், உங்கள் தரிசு நிலத்தைப் பண்படுத்துங்
கள். யூதா மனுஷரே, எருசலேமின் குடிக 4
ளே, உங்கள் கிரியைகளுடைய பொல்லாப்பி
னிமித்தம் என் உக்கிரம் அக்கினியைப்போல
எழும்பி, அவிப்பார் இல்லாமல் எரியாதப
டிக்கு நீங்கள் **கர்த்தருக்கென்று** உங்களை விரு
த்தசேதனம்பண்ணி, [18]உங்கள் இருதயத்தின்
நுனித்தோலை நீக்கிப்போடுங்கள். தேசத்தில் 5
எக்காளம் ஊதுங்கள் என்று சொல்லி, யூதா
வில் அறிவித்து, எருசலேமில் கேட்கப்பண்
ணுங்கள்; நாம் அரணான பட்டணங்களுக்கு
உட்படும்படிக்குச்சேருங்கள்என்றுசொல்லி,
உரத்தசத்தமாய்க் கூப்பிடுங்கள். சீயோனுக்கு 6
நேரே கொடியேற்றுங்கள்; கூடுங்கள், நிற்
காதிருங்கள்; நான் வடக்கேயிருந்து பொல்
லாப்பையும், மகா சங்காரத்தையும் வரப்பண்
ணுகிறேன். உன் தேசத்தைப் பாழாக்கி 7
விடும்படிக்குச் சிங்கம் தன் புதரிலிருந்து
எழும்பி, ஜாதிகளைச் சங்கரிக்கிறவன் தன்
ஸ்தானத்திலிருந்து புறப்பட்டு வருகிருன்;
[19]உன் பட்டணங்கள் குடியிராதபடி அழிக்
கப்படும் என்கிருர். இதினிமித்தம் இரட் 8
டைக் கட்டிக்கொள்ளுங்கள்; [20]புலம்பி அல
றுங்கள்; **கர்த்தருடைய** உக்கிரகோபம் நம்மை
விட்டுத் திரும்பவில்லையே. அந்நாளிலே ரா 9
ஜாவின் இருதயமும், பிரபுக்களின் இருதய
மும் மடிந்துபோம்; ஆசாரியர்கள் திடுக்கிட்டு,
தீர்க்கதரிசிகள் திகைப்பார்கள் என்று **கர்த்தர்**
சொல்லுகிருர். அப்பொழுது நான்: ஆ, 10
கர்த்தராகிய ஆண்டவரே, உங்களுக்குச் சமா
தானமிருக்கும் என்று சொன்னதினால், [21]மெய்
யாகவே இந்த ஜனத்துக்கும் எருசலேமுக்கும்

[1] உபா. 30. 1-6
[2] 31. 32. ஏசா. 54. 5
[3] யோ. 21. 15-17. அப். 20. 28. எபே. 4. 11. 1 பே. 5. 2
[4] ஏசா. 65. 17
[5] ஏசா. 60. 9. ரோ. 6. 14
[6] ஏசா. 11. 13. எசே. 37. 16-22
[7] ஏசா. 63. 16. ரோ. 8. 15
[8] ஏசா. 48. 8
[9] சநி. 19. 3. 2 கொ. 7. 10
[10] ஓசி. 6. 1: 14. 1, 4
[11] சங். 121. 1, 2. ஏசா. 63. 16
* விக்கிரகாராதனை.
[12] ஓசி. 9. 10
[13] எஸ்றா 9. 6, 7. ரோ. 6. 21
[14] யோவே. 2. 12
[15] உபா. 10. 20. ஏசா. 48. 1
[16] ஆதி. 22. 18. சங். 72. 17. ஏசா. 45. 25. 1 கொ. 1. 31
[17] ஓசி. 10. 12. மத். 13. 7, 22
[18] உபா. 10. 16. ரோ. 2. 28, 29. கொலோ. 2. 11
[19] 2 இரா. 24. 1: 25. 1. தானி. 7. 4
[20] ஏசா. 22. 12
[21] எசே. 37. 35. 2 தெச. 2. 11

மிகுதியான மோசத்தை வரப்பண்ணினீர்;
[1]பட்டயம் பிராணன்மட்டும் எட்டுகிறதே
11 என்றேன். வனாந்தரத்திலுள்ள உயர்நிலங்க
ளிலிருந்து, ஒரு தீக்காற்று என் ஜனமாகிய
குமாரத்திக்கு நேராக அடிக்கும் என்று அக்
காலத்திலே இந்த ஜனத்தோடும் எருசலே
மோடும் சொல்லப்படும்; [2]அது தூற்றவுமாட்
12 டாது சுத்திகரிக்கவுமாட்டாது. இதைப்பார்
க்கிலும் பலமான காற்று என் காரியமாய்
வரும்; இப்பொழுது நானும் அவர்களோடே
13 நியாயம் பேசுவேன். இதோ, மேகங்களைப்
போல எழும்பிவருகிறான்; அவனுடைய இர
தங்கள் பெருங்காற்றைப்போ லிருக்கிறது;
[3]அவன் குதிரைகள் கழுகுகளிலும் வேகமான
வைகள்; நமக்கு ஐயோ! நாம் பாழாக்கப்படு
14 கிறோமே. எருசலேமே, நீ ரட்சிக்கப்படும்
படிக்கு உன் இருதயத்தைப் பொல்லாப்பறக்
கழுவு; [4]எந்தமட்டும் அக்கிரமநினைவுகள் உன்
15 உள்ளத்திலே தங்கும். தாணிலிருந்து ஒரு
சத்தம் வந்து, செய்தியை அறிவிக்கிறது; எப்
பிராயீமின் மலையிலிருந்து வந்து, தீங்கைப்பிர
16 சித்தம்பண்ணுகிறது, ஜாதிகளுக்கு அதை
நீங்கள் பிரஸ்தாபம்பண்ணுங்கள்; இதோ,
காவற்சேவகர் தூரதேசத்திலிருந்து வந்து,
யூதாவுடைய பட்டணங்களுக்கு விரோதமாய்
உரத்த சத்தமிடுவார்கள் என்று எருசலேமுக்
17 குக் கூறுங்கள். அதற்கு விரோதமாய் அவர்
கள் வயல்வெளிகளின் காவற்காரரைப்போ
லச் சுற்றிலுமிருப்பார்கள்; [5]அது எனக்கு
விரோதமாய்க் கலகஞ்செய்தது என்று **கர்த்தர்**
18 சொல்லுகிறார். உன் நடக்கையும் உன் கிரி
யைகளுமே இவைகளை உனக்கு நேரிடப்பண்
ணின; [6]இது இத்தனை கசப்பாயிருந்து, உன்
இருதயமட்டும் எட்டுகிறதற்குக் காரணம் உன்
பொல்லாப்புத்தானே.
19 என் குடல்கள், என் குடல்களே நோகி
றது: [7]என் உள்ளம் வேதனைப்படுகிறது, என்
இருதயம் என்னில் கதறுகிறது; நான் பேசா
மல் அமர்ந்திருக்கக்கூடாது; என் ஆத்துமா
வே, எக்காளத்தின் சத்தத்தையும், யுத்தத்தின்
20 ஆர்ப்பரிப்பையும் கேட்டாயே. நாசத்துக்கு
மேல் நாசம் வருகிறதாகக் கூறப்படுகிறது;
[8]தேசமெல்லாம் பாழாகிறது; அசுப்பிலே என்
கூடாரங்களும், ஒரு நிமிஷத்திலே என் திரை
21 களும் பாழாக்கப்படுகிறது. நான் எதுவரைக்
கும் கொடியைக் கண்டு, எக்காளத்தின் சத்
22 தத்தைக் கேட்பேன். என் ஜனங்களோ மதி
யற்றவர்கள், என்னை அவர்கள் அறியாதிருக்கி
றார்கள்; அவர்கள் பைத்தியமுள்ள பிள்ளைகள்,
அவர்களுக்கு உணர்வே இல்லை; [9]பொல்லாப்
புச்செய்ய அவர்கள் அறிவாளிகள், நன்மை
செய்யவோ அவர்கள் அறிவில்லாதவர்கள்.
23 பூமியைப் பார்த்தேன், அது ஒழுங்கின்
மையும் வெறுமையுமாயிருந்தது; [10]வானங்க
ளைப் பார்த்தேன், அவைகளுக்கு ஒளியில்லா
24 திருந்தது. பர்வதங்களைப் பார்த்தேன், [11]அவை
கள் அதிர்ந்தன; எல்லாக் குன்றுகளும் அசைந்
தன. பின்னும் நான் பார்க்கும்போது, மனு 25
ஷனில்லை; [12]ஆகாசத்துப் பறவைகளெல்லாம்
பறந்துபோயின. பின்னும் நான் பார்க்கும் 26
போது, **கர்த்தராலும்**, [13]அவருடைய உக்கிர
கோபத்தாலும் பயிர்நிலம் வனாந்தரமாயிற்று;
அதின் பட்டணங்களெல்லாம் இடிந்துபோ
யின. தேசமெல்லாம் பாழாய்ப்போம்; ஆகி 27
லும் சர்வசங்காரம் செய்யேன் என்று **கர்த்தர்**
சொல்லுகிறார். இதினிமித்தம் பூமி புலம்பும், 28
உயர இருக்கிற வானங்கள் கறுத்துப்போம்;
[14]நான் அதைச் சொன்னேன், அதை நிர்ண
யம் பண்ணினேன்; நான் மனஸ்தாபப்படுவ
தும் இல்லை; நான் அதை விட்டுத் திரும்புவ
தும் இல்லை. குதிரைவீரரும் வில்வீரரும் 29
இடும் சத்தத்தினாலே சகல ஊராரும் ஓடி,
அடர்த்தியான காடுகளில் புகுந்து, கன்மலை
களிலும் ஏறுவார்கள்; ஒரு மனுஷனும் அவை
களிலே குடியிராதபடி எல்லா ஊர்களும் விட
ப்பட்டிருக்கும். பாழாய்ப்போன நீ இப்பொ 30
ழுது என்னசெய்வாய்? நீ இரத்தாம்பரம் உடுத்
தாலும், பொன்னாபரணங்களால் உன்னைச்
சிங்காரித்தாலும், உன் கண்களில் மையிட்டுக்
கொண்டாலும், வீணாய் உன்னை அழகுபடுத்து
வாய்; [15]சோரநாயகர் உன்னை அசட்டைபண்
ணி, உன் பிராணனை வாங்கத் தேடுவார்கள்.
கர்ப்பவேதனைப் படுகிறவளின் சத்தமாகவும், 31
முதல்விசை பிள்ளை பெறுகிறவளின் வியா
குலமாகவும், சீயோன் குமாரத்தியின் சத்தத்
தைக் கேட்கிறேன்; அவள் பெருமூச்சுவிட்டு,
தன் கைகளை விரித்து: [16]ஐயோ! கொலைபாத
கர்களாலே என் ஆத்துமா சோர்ந்துபோகிற
தே என்கிறாள்.

நியாயஞ்செய்கிற மனுஷனைக் கண்டுபிடிப் **5**
பீர்களோ என்றும், [17]சத்தியத்தைத் தேடுகி
றவன் உண்டோ என்றும், எருசலேமின்
தெருக்களிலே திரிந்துபார்த்து, விசாரித்து,
அதின் வீதிகளிலே தேடுங்கள்; காண்பீர்களா
னால் அதற்கு மன்னிப்புத் தருவேன். அவர் 2
கள்: **கர்த்தருடைய** ஜீவனைக்கொண்டு சொல்
லுகிறோம் என்றாலும், [18]பொய்யாணையிடுகி
றார்களே. **கர்த்தாவே**, உம்முடைய கண் 3
கள் சத்தியத்தை அல்லவோ நோக்குகின்றது;
[19]அவர்களை அடிக்கிறீர், ஆனாலும் அவர்க
ளுக்கு நோகாது; அவர்களை நிர்மூலமாக்குகி
றீர், [20]ஆனாலும் புத்தியை ஏற்றுக்கொள்ள
மாட்டோம் என்கிறார்கள்; தங்கள் முகங்க
ளைக் கன்மலையைப்பார்க்கிலும் கெட்டியா
க்கி, திரும்பமாட்டோம் என்கிறார்கள். அப் 4
பொழுது நான்: இவர்கள் நீசராமே, இவர்
கள் மதியற்றவர்கள்; **கர்த்தருடைய** வழியை
யும், தங்கள் தேவனுடைய நியாயத்தையும்
அறியாதிருக்கிறார்கள் என்றும்; நான் பெரி 5
யோர்களிடத்திலே போய், அவர்களோடே
பேசுவேன்; அவர்கள் **கர்த்தருடைய** வழியை
யும், தங்கள் தேவனுடைய நியாயத்தையும்
அறிவார்கள் என்றும் சொன்னேன்; [21]அவர்
களோ ஏகமாய் நுகத்தடியை முறித்து, கட்

1 புல. 2. 21
2 எசே. 17. 10 ஓசி. 13. 15
3 உபா. 28. 49, 50. ஏசா. 5. 28. ஓசி. 8. 1
4 யாக். 4. 8
5 நெகே. 9. 26, 30. புல. 1. 8
6 ஏசா. 50. 1
7 ஏசா. 15. 5. லூக். 19. 42
8 சங். 42. 7. எசே. 7. 26
9 மீகா. 2. 1. ரோ. 16. 19
10 ஆதி. 1. 2. ஏசா. 24. 19
11 ஏசா. 5. 25. எசே. 38. 20. ஆப. 3. 6
12 செப். 1. 3
13 சங். 76. 7
14 ஓசி. 4. 3
15 எசே. 23. 40. புல. 1. 2, 19
16 ஏசா. 1. 15. புல. 1. 17
17 ஆதி. 18. 23. மு. எசே. 22. 30
18 தீத். 1. 16
19 2 நாளா. 16. 9. ஏசா. 9. 13. செப். 3. 1, 2
20 எபி. 12. 9
21 சங். 2. 3. மீகா 3. 1

6 டுகளை அறுத்துப்போட்டார்கள். ஆகையால்
காட்டிலிருந்து வரும் சிங்கம் அவர்களைக்
கொல்லும், [1]வனாந்தரத்திலுள்ள ஓநாய்கள்
அவர்களைப் பீறும், சிவிங்கி அவர்கள் பட்ட
ணங்களின்மேல் நோக்கமாயிருக்கும்; அவை
களிலிருந்து புறப்படுகிறவன் எவனும் பீறப்
படுவான்; அவர்கள் மீறுதல்கள் பெருகி,
7 அவர்கள் சீர்கேடுகள் அதிகரித்தது. இவை
களை நான் உனக்கு மன்னிப்பது எப்படி?
உன் பிள்ளைகள் என்னை விட்டுவிட்டு,
தெய்வம் அல்லாதவைகள்பேரில் ஆணையிடு
கிறார்கள்; [2]நான் திருப்தியாக்கின அவர்கள்
விபசாரம்பண்ணி, [3]வேசிவீட்டிலே கூட்டங்
8 கூடுகிறார்கள். அவர்கள் கொழுத்த குதிரை
களைப்போல் காலமே எழும்பி, [4]அவனவன்
தன் தன் அயலானுடைய பெண்ஜாதியின்
9 பின்னாலே கனைக்கிறான். இவைகளை விசா
ரியாதிருப்பேனோ? இப்படிப்பட்ட ஜாதிக்கு
என் ஆத்துமா நீதியைச் சரிக்கட்டாதிருக்கு
மோ என்று **கர்த்தர்** சொல்லுகிறார்.
10 அதின் மதில்கள்மேலேறி அழித்துப்போ
டுங்கள்; ஆனாலும் சர்வசங்காரம் செய்யாதி
ருங்கள்; [5]அதின் கொத்தளங்களை இடித்துப்
போடுங்கள்; அவைகள் **கர்த்தருடையவைகள்**
11 அல்ல. இஸ்ரவேல் வம்சத்தாரும், யூதா வம்
சத்தாரும் எனக்கு விரோதமாய் மிகுதியும்
துரோகம்பண்ணினார்கள் என்று **கர்த்தர்** சொ
12 ல்லுகிறார். அவர் அப்படிப்பட்டவர் அல்ல
வென்றும், [6]பொல்லாப்பு நம்மேல் வராது,
நாம் பட்டயத்தையாகிலும், [7]பஞ்சத்தையாகி
13 லும் காண்பதில்லையென்றும், தீர்க்கதரிசி
கள் காற்றாய்ப் போவார்கள்; திருவாக்கு அவர்
களில் இல்லை; அவர்களுக்கே அப்படி ஆகக்
கடவதென்றும், அவர்கள் சொல்லிக் **கர்த்**
14 **தரை** மறுதலித்தார்கள். ஆகையால் சேனை
களின் தேவனாகிய **கர்த்தர்** சொல்லுகிறது
என்னவென்றால்: நீங்கள் இந்த வார்த்தை
யைச் சொன்னபடியினால், இதோ, நான் உன்
வாயிலிட்ட என் வார்த்தைகளை அக்கினியும்,
[8]இந்த ஜனத்தை விறகும் ஆக்குவேன், அது
15 இவர்களைப் பட்சிக்கும். இஸ்ரவேல் வம்சத்
தாரே, இதோ, தூரத்திலிருந்து நான் உங்கள்
மேல் ஒரு ஜாதியைக் கொண்டுவருவேன்
என்று **கர்த்தர்** சொல்லுகிறார்; [9]அது பலத்த
ஜாதி, அது பூர்வகாலத்து ஜாதி, அவர்கள் நீ
அறியாத பாஷையைப் பேசும் ஜாதி, அவர்
கள் பேசுகிறது இன்னதென்று உனக்கு விளங்
16 காது. திறந்த பிரேதக்குழிகளைப்போல் அவர்
கள் அம்பறாத்தூணிகள் இருக்கும்; அவர்கள்
17 அனைவரும் பராக்கிரமசாலிகள். அவர்கள்
உன் குமாரரும் உன் குமாரத்திகளும் சாப்பி
டவேண்டிய உன் விளைச்சலையும், [10]உன் அப்
பத்தையும் சாப்பிட்டு, உன் ஆடுகளையும் உன்
மாடுகளையும் பட்சித்து, உன் திராட்சப்பழங்
களையும் உன் அத்திப்பழங்களையும் சாப்பிட்டு,
நீ நம்பின உன்னுடைய அரணான பட்ட
ணங்களைப் பட்டயத்தாலே வெறுமையாக்கு

வார்கள். ஆகிலும் நான் அந்நாட்களிலும் 18
உங்களைச் சர்வசங்காரம் செய்யாதிருப்பேன்
என்று **கர்த்தர்** சொல்லுகிறார். எங்கள் தேவ 19
னாகிய **கர்த்தர்** எங்களுக்கு இவைகளையெல்
லாம் எதினிமித்தம் செய்தார் என்று நீங்கள்
கேட்டால், அப்பொழுது நீ அவர்களைப்
பார்த்து: [11]நீங்கள் என்னைவிட்டு, உங்களு
டைய தேசத்திலே அந்நிய தேவர்களைச் சே
வித்ததுபோல, [12]உங்களுடையதல்லாத தே
சத்திலே அந்நியர்களைச் சேவிப்பீர்களென்று
சொல்வாயாக.

நீங்கள் யாக்கோபின் வீட்டிலே அறிவி 20
த்து, யூதாவிலே சொல்லிக் கூறவேண்டியது
என்னவென்றால், கண்கள் இருந்தும் காணா 21
மலும், [13]காதுகள் இருந்தும் கேளாமலுமிருக்
கிற அறிவில்லாத ஜனங்களே, கேளுங்கள்.
எனக்குப் பயப்படாதிருப்பீர்களோ என்று 22
**கர்த்தர்** சொல்லுகிறார்; [14]அலைகள் மோதி
யடித்தாலும்மேற்கொள்ளாதபடிக்கும், அவை
கள் இரைந்தாலும் கடவாதபடிக்கும், கடக்கக்
கூடாத நித்திய பிரமாணமாக சமுத்திரத்தின்
மணலை எல்லையாய் வைத்திருக்கிறவராகிய
எனக்கு முன்பாக [15]அதிராதிருப்பீர்களோ?
இந்த ஜனங்களோ முரட்டாட்டமும் கலகமு 23
மான இருதயமுள்ளவர்கள்; [16]முரட்டாட்டம்
பண்ணிப் போய்விடுகிறார்கள். அந்தந்தப் 24
பருவத்திலே எங்களுக்கு மழையையும், முன்
மாரியையும் பின்மாரியையும் கொடுத்து,
[17]அறுப்புக்கு நியமித்த வாரங்களை எங்களுக்
குத் தற்காக்கிற எங்கள் தேவனாகிய **கர்த்தருக்**
**குப்** பயந்திருப்போம் என்று அவர்கள் தங்கள்
இருதயத்திலே சொல்லுகிறதில்லை. உங்கள் 25
அக்கிரமங்கள் இவைகளை விலக்கி, [18]உங்கள்
பாவங்கள் உங்களுக்கு நன்மையை வரவொட்
டாதிருக்கிறது. குருவிபிடிக்கிறவர்கள் பதுங் 26
குகிறதுபோல் பதுங்கி, [19]மனுஷரைப் பிடிக்
கக் கண்ணிகளை வைக்கிற துன்மார்க்கர் என்
ஜனங்களில் காணப்படுகிறார்கள். குருவிக 27
ளால் கூண்டு நிறைந்திருக்கிறதுபோல், அவர்
கள் வீடுகள் கபடங்களால் நிறைந்திருக்கிறது;
[20]ஆதலால் அவர்கள் பெருகி ஐசுவரியவான்க
ளாகிறார்கள். கொழுத்து, சளுக்குப்பண் 28
ணுகிறார்கள்; [21]துன்மார்க்கனுடைய செயல்க
ளைக் கண்டிக்காமல் விடுகிறார்கள்; திக்கற்றவ
னுடைய வழக்கை விசாரியாமல், தாங்கள்
மாத்திரம் வாழுகிறார்கள்; [22]எளியவர்களின்
நியாயத்தைத் தீரார்கள். இவைகளை விசாரி 29
யாதிருப்பேனோ? இப்படிப்பட்ட ஜாதிக்கு
என் ஆத்துமா நீதியைச் சரிக்கட்டாதிருக்கு
மோ என்று **கர்த்தர்** சொல்லுகிறார்.

திகைத்துத் திடுக்கிடத்தக்க காரியம் [23]தே 30
சத்திலே நடந்துவருகிறது. தீர்க்கதரிசிகள் 31
கள்ளத் தீர்க்கதரிசனம் சொல்லுகிறார்கள்;
[24]ஆசாரியர்கள் அவர்கள் மூலமாய் ஆளுகிறார்
கள்; இப்படியிருப்பது என் ஜனத்துக்குப்
பிரியமாயிருக்கிறது; ஆனாலும் முடிவிலே
என்ன செய்வீர்கள்?

1 எசே. 22. 27. ஓசி. 13. 7. ஆமோ. 5. 18, 19. செப். 3. 3
2 யோசு. 23. 7. செப். 1. 5
3 உபா. 32. 15
4 எசே. 22. 11
5 4. 27. 30. 11
6 2 நாளா. 36. 16. ஏசா. 28. 15
7 14. 13, 15
8 20. 9, 11
9 உபா. 28. 49. ஏசா. 5. 26. 39. 3, 6
10 லேவி. 26. 16. உபா. 28. 31. 33
11 உபா. 29. 24. புல. 1 இரா. 9. 8, 9
12 உபா. 28. 48
13 ஏசா. 6. 9. எசே. 12. 2. யோவா. 12. 40. ரோ. 11. 8
14 10. 7. வெளி. 15. 4
15 யோபு 38. 11. நீதி. 8. 29
16 ஏசா. 31. 6. ஓசி. 4. 8
17 ஆதி. 8. 22. உபா. 11. 13, 14. மத். 5. 45. அப். 14. 17
18 3. 3
19 நீதி. 1. 11, 17, 18
20 17. 11
21 உபா. 32. 15
22 22. 15–19
23 ஓசி. 6. 10
24 எசே. 13. 6. மீகா 2. 11

6 பென்யமீன் புத்திரரே, நீங்கள் எருசலே
மின் நடுவிலிருந்து ஏகமாய்க் கூடியோடி,
தெக்கோவாவில் எக்காளம் ஊதி, பெத்கே
ரேமின்மேல் அடையாளமாகத் தீ வெளிச்சங்
காட்டுங்கள்; [1]ஒரு தீங்கும் மகா சங்காரமும்
வடக்கேயிருந்து தோன்றுகிறதாயிருக்கிறது.
2 செல்வமாய் வளர்ந்த ரூபவதியான சீயோன்
3 குமாரத்தியைப் பாழாக்குவேன். மேய்ப்பர்
தங்கள் மந்தைகளோடே அவளிடத்துக்கு வரு
வார்கள்; [2]அவர்கள் அவளுக்கு விரோதமாய்ச்
சுற்றிலும் கூடாரம்போட்டு, அவனவன் தன்
4 தன் ஸ்தலத்தில் மேய்த்து, அவளுக்கு விரோ
தமாய் யுத்தஞ்செய்ய ஆயத்தம்பண்ணுங்கள்
என்றும், மத்தியானத்தில்தானே நாம் போயே
றும்படிக்கு எழுந்திருங்கள்; ஐயோ! [3]பொ
ழுது சாய்ந்து, அந்தி நிழல்கள் நீண்டுபோகி
5 றதே; எழுந்திருங்கள், நாம் இராக்காலத்தி
லாகிலும் போயேறி, அவளுடைய அரமனை
களை அழிப்போம் என்றும் சொல்லுவார்கள்.
6 சேனைகளுடைய **கர்த்தர்** சொல்லுகிறது என்
னவென்றால், மரங்களை வெட்டி, எருசலே
முக்கு விரோதமாய்க் கொத்தளம் போடுங்
கள், அதுவே விசாரிக்கப்படவேண்டிய நக
ரம்; அதின் உட்புறமெல்லாம் கொடுமை.
7 ஊற்றானது, தன் தண்ணீரைச் சுரக்கப்பண்
ணுமாப்போல, அது தன் தீங்கைச் சுரக்கப்
பண்ணுகிறது; [4]அதிலே கொடுமையும் அழிம்
பும் கேட்கப்படுகிறது; துக்கமும் காயங்களும்
நித்தமும் எனக்கு முன்பாகக் காணப்படுகி
8 றது. எருசலேமே, என் ஆத்துமா உன்னை
விட்டுப் பிரியாதபடிக்கும், [5]நான் உன்னைப்
பாழும் குடியற்ற தேசமும் ஆக்காதபடிக்கும்
புத்திகேள்.
9 திராட்சக்குலைகளை அறுக்கிறவனைப்போல
உன் கையைத் திரும்பக் கூடைகளின்மேல்
போடென்று சொல்லி, அவர்கள் இஸ்ரவே
லில் மீதியாயிருந்த கனியைத் திராட்சச்செடி
யின் கனியைப்போல் நன்றாய்ப் பொறுக்கிக்
கொண்டுபோவார்கள் என்று சேனைகளின்
10 **கர்த்தர்** சொல்லுகிறார். அவர்கள் கேட்கும்
படி நான் யாரோடே பேசி எச்சரிப்பேன்?
[6]அவர்களுடைய செவி விருத்தசேதனமில்லா
தது; அவர்கள் கேட்கமாட்டார்கள்; **கர்த்தரு**
**டைய** வசனம் அவர்களுக்கு நிந்தையாயிருக்
கிறது; [7]அதின்மேல் அவர்களுக்கு விருப்ப
11 மில்லை. ஆகையால் நான் **கர்த்தருடைய** உக்
கிரத்தால் நிறைந்திருக்கிறேன்; அதை அட
க்கி இளைத்துப்போனேன்; [8]வீதிகளிலுள்ள
பிள்ளைகளின்மேலும், வாலிபருடைய கூட்
டத்தின்மேலும் ஏகமாய் அதை ஊற்றிவிடு
வேன்; புருஷரும், ஸ்திரீகளும், கிழவரும்,
பூரண வயதுள்ளவர்களுங்கூடப் பிடிக்கப்படு
12 வார்கள். அவர்களுடைய வீடுகளும், அவர்
களுடைய காணிபூமிகளும், அவர்களுடைய
மனைவிகளோடே ஏகமாய் அந்நியர் வசமா
கும்; [9]என் கையை இந்தத் தேசத்தின் குடி
களுக்கு விரோதமாக நீட்டுவேன் என்று **கர்த்**
**தர்** சொல்லுகிறார். அவர்களில், சிறியோர் 13
முதல் பெரியோர்மட்டும், ஒவ்வொருவரும்
பொருளாசைக்காரர்; [10]இதுவுமல்லாமல் தீர்க்
கதரிசிகள் முதல் ஆசாரியர்கள் மட்டும் ஒவ்
வொருவரும் பொய்யர். *சமாதானமில்லா 14
திருந்தும்: சமாதானம் சமாதானம் என்று
சொல்லி, [11]என் ஜனத்தின் காயங்களை மேற்
பூச்சாய்க் குணமாக்குகிறார்கள். அவர்கள் 15
அருவருப்பானதைச் செய்ததினிமித்தம் வெட்
கப்படுகிறார்களோ? பரிச்சேதம் வெட்கப்ப
டார்கள், நாணவும் அறியார்கள்; [12]ஆதலால்
விழுகிறவர்களுக்குள்ளே விழுவார்கள்; நான்
அவர்களை விசாரிக்குங்காலத்தில் இடறுண்டு
போவார்கள் என்று **கர்த்தர்** சொல்லுகிறார்.
வழிகளிலே நின்று, பூர்வபாதைகள் எவை 16
யென்று கேட்டு விசாரித்து, நல்லவழி எங்
கே என்று பார்த்து, அதிலே நடவுங்கள்; [13]அப்
பொழுது உங்கள் ஆத்துமாவுக்கு இளைப்பாறு
தல் கிடைக்கும் என்று **கர்த்தர்** சொல்லுகி
றார்; அவர்களோ, நாங்கள் அதிலே நடக்க
மாட்டோம் என்கிறார்கள். நான் உங்கள் 17
மேல் காவலாளரையும் வைத்து, [14]எக்காள சத்
தத்துக்குச் செவிகொடுங்கள் என்றும் சொன்
னேன்; அவர்களோ: நாங்கள் கேட்கமாட்
டோம் என்கிறார்கள். ஆகையால் ஜாதிகளே, 18
கேளுங்கள்; சபையே, அவர்களுக்குள் நடக்
கிறதை அறிந்துகொள். பூமியே, கேள்; 19
இந்த ஜனங்கள் என் வார்த்தைகளைக் கேளா
மலிருந்து, என் நியாயப்பிரமாணத்துக்குச்
செவிகொடாமல் அதை வெறுத்துவிடுகிறார்
கள்; [15]அவர்கள்மேல் நான் அவர்கள் நினைவு
களின் பலனாகிய தீங்கை வரப்பண்ணுவேன்.
சேபாவிலிருந்து வருகிற தூபவர்க்கமும், தூர 20
தேசத்திலுடைய சுகந்தப்பட்டையும் எனக்கு
என்னத்துக்கு? [16]உங்கள் சர்வாங்க தகனங்கள்
எனக்கு விருப்பமல்ல; உங்கள் பலிகள் என
க்கு இன்பமாயிராது. ஆகையால் இதோ, 21
நான் இந்த ஜனத்துக்கு இடறல்களை வைப்
பேன்; [17]அவைகள்மேல் பிதாக்களும், பிள்
ளைகளும், குடியானவனும், அவனுக் கடுத்த
வனும், ஏகமாய் இடறுண்டு அழிவார்கள்
என்று **கர்த்தர்** சொல்லுகிறார்.
இதோ, வடதேசத்திலிருந்து ஒரு ஜனம் 22
வந்து, [18]பூமியின் கடையெல்லைகளிலிருந்து
ஒரு பெரிய ஜாதி எழும்பும். அவர்கள் வில் 23
லும் வேலும் பிடித்துவருவார்கள்; அவர்கள்
கொடியர், இரக்கம் அறியாதவர்கள்; [19]அவர்
கள் சத்தம் சமுத்திர இரைச்சலுக்குச் சமான
மாயிருக்கும்; சீயோன் குமாரத்தியே, அவர்
கள் உனக்கு விரோதமாக யுத்தசன்னத்தராய்க்
குதிரைகளின்மேலேறி அணியணியாக வரு
வார்கள் என்று **கர்த்தர்** சொல்லுகிறார். அவர் 24
கள் வருகிற செய்தியைக் கேட்டோம்; நம்
முடைய கைகள் தளர்ந்தது; [20]இடுக்கணும்,
கர்ப்பவதிக்கு உண்டாகும் வேதனைக்கொப்
பான வேதனையும் நம்மைப் பிடித்தது. வயல் 25
வெளியிலே புறப்படாதிருங்கள்; வழியிலும்

1 நெகே. 3. 14
2 2 இரா. 25. 1, 4
3 8. 20. உன்னத. 2. 17
4 ஏசா. 57. 20. எசே. 7. 11, 23
5 நீதி. 4. 13. எசே. 23. 18. செப். 3. 7
6 ஏசா. 53. 1. அப். 7. 51
7 20. 8, 9
8 8. 10: 9. 21
9 உபா. 28. 30
10 மீகா 3. 5, 11
* அதம்.
11 8. 11, 12. புல. 2. 14
12 3. 3. நீதி. 29. 1
13 18. 15: 50. 5. உன்னத. 1. 7. மல். 4. 4. மத். 11. 29. கொலோ. 2. 6
14 எசே. 3. 17. ஆப. 2. 1
15 நீதி. 1. 31: 28. 9
16 சங். 50. 7–9. ஏசா. 1. 11. ஆமோ. 5. 21, 22. மீகா 6. 6-8
17 எசே. 3. 20. ரோ. 11. 9
18 1. 15. 5. 15
19 ஏசா. 5. 30
20 13. 21. நீதி. 1. 27, 28. புல. 1. 12

நடவாதிருங்கள்; [1]சுற்றிலும் சத்துருவின் பட்
26 டயமும் பயங்கரமுமுண்டு. என் ஜனமாகிய
குமாரத்தியே, நீ இரட்டைக் கட்டிக்கொ
ண்டு, சாம்பலிலே புரண்டு, [2]ஒரே புத்திர
னுக்காகத் துக்கிக்கிறதுபோல மனங்கசந்து
புலம்பு; பாழாக்குகிறவன் சடிதியாய் நம்மேல்
27 வருவான். நீ என் ஜனத்தின் வழியை அறி
ந்துகொள்ளவும் சோதித்துப்பார்க்கவும் நான்
உன்னை அவர்களுக்குள்ளே துருகமாகவும்,
28 அரணாகவும் வைத்தேன். அவர்களெல்லாரும்
முரட்டாட்டமான அகங்காரிகளும், தூற்றித்
திரிகிறவர்களுமாயிருக்கிறார்கள்; [3]அவர்கள்
வெண்கலமும் இரும்புமானவர்கள்; அவர்க
29 ளெல்லாரும் கெட்டவர்கள். துருத்தி வெந்
தது; ஈயம் நெருப்பினால் அழிந்தது; புடமிடு
கிறவனுடைய பிரயாசம் விருதாவாய்ப்போ
யிற்று; பொல்லாப்புகள் அற்றுப்போகவில்லை.
30 அவர்கள் தள்ளுபடியான வெள்ளி என்னப்
படுவார்கள்; [4]**கர்த்தர்** அவர்களைத் தள்ளி
விட்டார்.

**7** **கர்த்தரால்** எரேமியாவுக்கு உண்டான
2 வசனம்: நீ **கர்த்தருடைய** ஆலயத்தின் வாச
லிலே நின்று, [5]அங்கே கூறிச் சொல்லவே
ண்டிய வசனம் என்னவென்றால், **கர்த்தரை**
பணிந்துகொள்ள இந்த வாசல்களுக்குள்ளே
பிரவேசிக்கிற யூத ஜனங்களாகிய நீங்களெல்
லாரும் **கர்த்தருடைய** வார்த்தையைக் கேளுங்
3 கள். இஸ்ரவேலின் தேவனாகிய சேனைக
ளின் **கர்த்தர்** சொல்லுகிறார்: [6]உங்கள் வழி
களையும் உங்கள் கிரியைகளையும் சீர்ப்படுத்
துங்கள், அப்பொழுது உங்களை இந்த ஸ்தலத்
4 திலே குடியிருக்கப்பண்ணுவேன். **கர்த்த**
**ரின்** ஆலயம், **கர்த்தரின்** ஆலயம், **கர்த்தரின்**
ஆலயம் இதுவே என்று சொல்லி, [7]பொய் வார்
5 த்தைகளை நம்பிக்கொள்ளாதிருங்கள். நீங்கள்
உங்கள் வழிகளையும் உங்கள் கிரியைகளையும்
நன்றாய்ச் சீர்ப்படுத்தி, [8]நீங்கள் மனுஷனுக்
கும் மனுஷனுக்குமுள்ள வழக்கை நியாயமா
6 ய்த் தீர்த்து, பரதேசியையும் திக்கற்றவனையும்
விதவையையும் ஒடுக்காமலும், குற்றமில்லாத
இரத்தத்தை இந்த ஸ்தலத்திலே சிந்தாமலும்;
[9]உங்களுக்குக் கேடுண்டாக அந்நிய தேவர்க
ளைப் பின்பற்றாமலும் இருப்பீர்களேயாகில்,
7 அப்பொழுது நான் உங்கள் பிதாக்களுக்குக்
கொடுத்த தேசமாகிய இந்த ஸ்தலத்திலே [10]உங்
களைச் சதாகாலமும் குடியிருக்கப்பண்ணு
8 வேன். இதோ, ஒன்றுக்கும் உதவாத பொய்
9 வார்த்தைகளை நீங்கள் நம்புகிறீர்கள். நீங்கள்
திருடி, [11]கொலைசெய்து, விபசாரம்பண்ணி,
பொய்யாணையிட்டு, பாகாலுக்குத் தூபங்காட்
டி, நீங்கள் அறியாத அந்நிய தேவர்களைப் பின்
10 பற்றி, பிற்பாடு வந்து, என் நாமம் தரிக்கப்
பட்ட இந்த ஆலயத்திலே எனக்கு முன்பாக
நின்று: [12]இந்த அருவருப்புகளையெல்லாம்
செய்வதற்காக விடுதலைபெற்றிருக்கிறோமெ
11 ன்று சொல்வீர்களோ? என் நாமம் தரிக்கப்
பட்ட இந்த ஆலயம் உங்கள் பார்வைக்குக்

[1] 4. 10. ஏசா. 1. 20
[2] 25. 34. புல. 1. 16. மீகா 1. 10
[3] 9. 4. எசே. 22. 18
[4] ஏசா. 1. 22, 25. மத். 5. 13
[5] 26. 2
[6] ஏசா. 1. 16, 17. மத். 3. 8
[7] மீகா 3. 11. மத். 3. 9, 10
[8] 22. 3
[9] உபா. 6. 14, 15
[10] உபா. 4. 40
[11] ஓசி. 4. 1, 2. செப். 2. 2, 17. ஷ
[12] எசே. 23. 29
[13] 2 நாளா. 6. 33. மத். 21. 13
[14] உபா. 12. 11. யோசு. 18. 1
[15] 2 நாளா. 36. 15. ஏசா. 65. 12; 66. 4
[16] 1 சாமு. 4. 10, 11
[17] 2 இரா. 17. 23. சங். 78, 67. ஓசி. 9. 3
[18] 15. 1. 1 யோ. 5. 16
* அஸ்தரோத் = சந்திரன். 2 இரா. 23. 13
[19] உபா. 32. 16, 21. 1 கொ. 10. 22
[20] ஆமோ. 5. 21
[21] 1 சாமு. 15. 22. சங். 40. 6, ஓசி. 6. 6
[22] யாத். 15. 26; 19. 5. லேவி. 26. 3, 12. உபா. 6. 3

கள்ளர் குகையாயிற்றோ? [13]இதோ, நானும்
இதைக் கண்டேன் என்று **கர்த்தர்** சொல்லு
கிறார். நான் முந்தி என் நாமம் விளங்கப் 12
பண்ணின சீலோவிலுள்ள என் ஸ்தலத்து
க்கு நீங்கள் போய், [14]இஸ்ரவேல் ஜனத்தினு
டைய பொல்லாப்பினிமித்தம் நான் அதற்குச்
செய்ததைப் பாருங்கள். நீங்கள் இந்தக் கிரி 13
யைகளையெல்லாம் செய்தீர்கள், நான் உங்
களுக்கு ஏற்கனவே சொல்லிவந்திருந்தும்,
நீங்கள் கேளாமலும், [15]நான் உங்களைக் கூப்
பிட்டும், நீங்கள் உத்தரவுகொடாமலும் போ
னபடியினால், என் நாமம் தரிக்கப்பட்டதும், 14
நீங்கள் நம்பிக்கை கொண்டிருக்கிறதுமான
இந்த ஆலயத்துக்கும், உங்களுக்கும் உங்கள்
பிதாக்களுக்கும் நான்கொடுத்த ஸ்தலத்துக்கும்,
[16]நான் சீலோவுக்குச் செய்ததுபோலச் செய்
வேன். நான் உங்களுடைய எல்லாச் சகோத 15
ரருமாகிய எப்பிராயீம் சந்ததி அனைத்தையும்
தள்ளிப்போட்டதுபோல, [17]உங்களையும் என்
முகத்தைவிட்டுத் தள்ளிப்போடுவேன் என்று
**கர்த்தர்** சொல்லுகிறார்.

நீ இந்த ஜனத்துக்காக விண்ணப்பம் செய்ய 16
வேண்டாம், அவர்களுக்காக மன்றாடவும்
கெஞ்சவும் வேண்டாம், என்னிடத்தில் அவர்
களுக்காகப் பரிந்துபேசவும் வேண்டாம், [18]நா
ன் உனக்குச் செவிகொடுப்பதில்லை. யூதா 17
வின் பட்டணங்களிலும் எருசலேமின் வீதி
களிலும் அவர்கள் செய்கிறதை நீ காணவில்
லையா? எனக்கு மனமடிவுண்டாக அந்நிய 18
தேவர்களுக்குப் பானபலிகளை வார்க்கிறார்
கள்; அவர்கள் *வானராக்கினிக்குப் பணி
யாரங்களைச் சுடும்படி பிள்ளைகள் விறகு பொ
றுக்குகிறார்கள், பிதாக்கள் நெருப்பு மூட்டுகி
றார்கள், ஸ்திரீகள் மாப்பிசைகிறார்கள். அவர் 19
கள் எனக்கா மனமடிவுண்டாக்குகிறார்கள்?
தங்கள் முகங்கள் வெட்கத்துக் குட்படும்படி
[19]அவர்கள் தங்களுக்கே அல்லவோ மனமடி
வுண்டாக்குகிறார்கள் என்று **கர்த்தர்** சொல்லு
கிறார். ஆதலால் இதோ, என் கோபமும் 20
என் உக்கிரமும் இந்த ஸ்தலத்தின்மேலும்,
மனுஷர்மேலும், மிருகங்கள்மேலும், வெளி
யின் மரங்கள்மேலும், பூமியின் கனிகள்மே
லும் ஊற்றப்படும்; அது அவியாமல் எரியும்
என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

இஸ்ரவேலின் தேவனாகிய சேனைகளின் 21
**கர்த்தர்** சொல்லுகிறதென்னவென்றால்: [20]உங்
கள் தகனபலிகளை மற்றப் பலிகளோடுங்
கூட்டி, இறைச்சியைச் சாப்பிடுங்கள். நான் 22
உங்கள் பிதாக்களை எகிப்து தேசத்திலிருந்து
அழைத்துவந்த நாளிலே, [21]தகனபலியைக்
குறித்தும், மற்றப் பலிகளைக்குறித்தும் நான்
அவர்களோடே பேசினதையும் கட்டளையிட்
டதையும் பார்க்கிலும், என் வாக்குக்குச் 23
செவிகொடுங்கள், [22]அப்பொழுது நான் உங்
கள் தேவனாயிருப்பேன், நீங்கள் என் ஜன
மாயிருப்பீர்கள்; நான் உங்களுக்குக் கற்பிக்
கும் எல்லாவழியிலும், நீங்கள் உங்களுக்கு

நன்மையுண்டாகும்படிக்கு நடவுங்கள் என்
கிற விசேஷத்தையே அவர்களுக்குச் சொல்
24 லிக் கட்டளையிட்டேன். அவர்களோ அதைக்
கேளாமலும், தங்கள் செவியைச் சாயாமலும்
போய், தங்கள் பொல்லாத இருதயத்தின்
யோசனைகளின்படியும் கடினத்தின்படியும்
நடந்து, [1]முன்னிட்டல்ல பின்னிட்டே
25 போனார்கள். உங்கள் பிதாக்கள் எகிப்து
தேசத்திலிருந்து புறப்பட்ட நாள்முதல் இந்
நாள்மட்டும் நான் தீர்க்கதரிசிகளாகிய என்
ஊழியக்காரரையெல்லாம் தினந்தினம் உங்
களண்டைக்கு ஏற்கனவே அனுப்பிக்கொண்
26 டிருந்தேன். ஆனாலும் அவர்கள் என் சொல்
லைக் கேளாமலும், தங்கள் செவியைச் சாயா
மலும் போய், தங்கள் கழுத்தைக் கடினப்ப
டுத்தி, [2]தங்கள் பிதாக்களைப்பார்க்கிலும் அதிக
பொல்லாப்பு செய்தார்கள்.
27 நீ இந்த வார்த்தைகளையெல்லாம் அவர்க
ளுக்குச் சொன்னாலும், அவர்கள் உனக்குச்
செவிகொடுக்கமாட்டார்கள்; [3]நீ அவர்களை
நோக்கிக் கூப்பிட்டாலும், அவர்கள் உனக்கு
28 மறுஉத்தரவு கொடுக்கமாட்டார்கள். ஆகை
யால் தங்கள் தேவனாகிய **கர்த்தருடைய** சத்
தத்தைக் கேளாமலும், புத்தியை ஏற்றுக்கொள்
ளாமலும் இருக்கிற [4]ஜாதி இதுதான் என்
றும், சத்தியம் அழிந்து, அது அவர்கள் வாயி
லிருந்து அற்றுப்போனதென்றும் அவர்களுக்
குச் சொல்.
29 நீ உன் தலைமயிரைச் சிரைத்து, [5]எறிந்து
விட்டு, உயர்தலங்களிலே புலம்பிக்கொண்
டிரு; **கர்த்தர்** தமது சினத்துக்கு ஏதுவான
30 சந்ததியை வெறுத்து கெகிழவிட்டார். யூதா
புத்திரர் என் பார்வைக்குப் பொல்லாப்பான
தைச் செய்தார்கள் என்று **கர்த்தர்** சொல்லு
கிறார்; [6]என் நாமம் தரித்திருக்கிற ஆலயத்
தைத் தீட்டுப்படுத்தத் தங்கள் அருவருப்பு
31 களை அதிலே வைத்தார்கள். தங்கள் குமார
ரையும் தங்கள் குமாரத்திகளையும் அக்கினி
யிலே தகனிக்கிறதற்காக, [7]அவர்கள் இன்
னோம் குமாரனின் பள்ளத்தாக்கிலுள்ள
தோப்பேத்தின் மேடைகளைக் கட்டினார்கள்;
அதை நான் கட்டளையிடவுமில்லை, அது
32 என் மனதில் தோன்றவுமில்லை. ஆதலால்,
இதோ, நாட்கள் வருமென்று **கர்த்தர்** சொல்
லுகிறார்; அப்பொழுது அது அப்புறம் தோப்
பேத் என்றும், இன்னோம் குமாரனின் பள்
ளத்தாக்கென்றும் சொல்லப்படாமல், சங்கா
ரப் பள்ளத்தாக்கென்று சொல்லப்படும்;
[8]தோப்பேத்திலே இடங்கிடையாமற்போகு
மட்டும் சவங்களை அடக்கம்பண்ணுவார்கள்.
33 இந்த ஜனத்தின் பிணங்கள் ஆகாயத்தின் பற
வைகளுக்கும் பூமியின் மிருகங்களுக்கும்
இரையாகும்; [9]அவைகளை வெருட்டுவாரும்
34 இல்லாதிருப்பார்கள். நான் யூதாவின் பட்
டணங்களிலும் எருசலேமின் வீதிகளிலும்
களிப்பின் சத்தத்தையும், மகிழ்ச்சியின் சத்
தத்தையும், [10]மணவாளனின் சத்தத்தையும்,
மணவாட்டியின் சத்தத்தையும் ஓயப்பண்ணு
வேன்; [11]தேசம் பாழாகும்.
அக்காலத்திலே யூதாவினுடைய ராஜாக்க 8
ளின் எலும்புகளையும், [12]அவர்களுடைய பிர
புக்களின் எலும்புகளையும், ஆசாரியர்களின்
எலும்புகளையும், தீர்க்கதரிசிகளின் எலும்புக
ளையும், எருசலேமுடைய குடிகளின் எலும்
புகளையும், அவர்களுடைய பிரேதக்குழிகளி
லிருந்து எடுத்து, அவர்கள் நேசித்ததும், 2
சேவித்ததும், பின்பற்றினதும், நாடினதும்,
பணிந்துகொண்டதுமாயிருந்த சூரியனுக்கும்,
சந்திரனுக்கும், வானத்தின் சர்வசேனைக்கும்
[13]முன்பாக அவைகளைப் பரப்பிவைப்பார்கள்
என்று **கர்த்தர்** சொல்லுகிறார்; [14]அவைகள்
வாரி அடக்கம் பண்ணப்படாமல் பூமியின்
மேல் எருவாகும். இந்தத் துஷ்டவம்சத்தில் 3
மீதியாயிருந்து, என்னால் எல்லா இடங்களி
லும் துரத்திவிடப்பட்டு மீந்திருக்கிற யாவருக்
கும், [15]ஜீவனைப்பார்க்கிலும் மரணமே விருப்
பமாயிருக்குமென்று சேனைகளின் **கர்த்தர்**
சொல்லுகிறார்.
நீ அவர்களை நோக்கி: விழுந்தவர்கள் எழுந் 4
திருக்கிறதில்லையோ? வழிதப்பிப் போனவர்
கள் திரும்புகிறதில்லையோ? ஆனாலும் எருச 5
லேமியராகிய இந்த ஜனம் என்றைக்கும் வழி
தப்பிப் போகிறதென்ன? கபடத்தை உறுதி
யாய்ப் பிடித்திருக்கிறார்கள்; [16]திரும்பமாட்
டோம் என்கிறார்கள். நான் கவனித்துக் கேட் 6
டேன், [17]அவர்கள் யதார்த்தம் பேசவில்லை;
என்ன செய்தேனென்று சொல்லி, தன்
பொல்லாப்பினிமித்தம் மனஸ்தாபப்படுகிற
வன் ஒருவனுமில்லை; யுத்தத்துக்குள் பாய்கிற
குதிரையைப்போல அவரவர் வேகமாய்
ஓடிப்போனார்கள். ஆகாயத்திலுள்ள நாரை 7
முதலாய்த் தன் வேளையை அறியும்; [18]காட்
டுப்புறாவும், கொக்கும், தகைவிலான் குருவி
யும் தாங்கள் வரத்தக்க காலத்தை அறியும்;
என் ஜனங்களோ **கர்த்தரின்** நியாயத்தை அறி
யார்கள் என்று **கர்த்தர்** உரைக்கிறாரென்று
சொல். நாங்கள் ஞானிகளென்றும், [19]**கர்த்த** 8
**ருடைய** வேதம் எங்களிடத்திலிருக்கிறதென்
றும் நீங்கள் சொல்லுகிறதெப்படி? [20]மெய்யா
கவே, இதோ, வேதபாரகரின் கள்ள எழுத்
தாணி அதை அபத்தமாக்குகிறது. ஞானிகள் 9
வெட்கி, கலங்கிப் பிடிபடுவார்கள்; இதோ,
**கர்த்தருடைய** சொல்லை வெறுத்துப்போட்
டார்கள்; [21]அவர்களுக்கு ஞானமேது? ஆகை 10
யால் அவர்களுடைய ஸ்திரீகளை அந்நியருக்
கும், அவர்களுடைய வயல்களை அவைகளைக்
கட்டிக்கொள்பவர்களுக்கும் கொடுப்பேன்;
[22]அவர்களிலே சிறியோர் தொடங்கிப் பெரி
யோர்மட்டும் ஒவ்வொருவரும் பொருளா
சைக்காரராயிருக்கிறார்கள்; தீர்க்கதரிசிகள்
தொடங்கி ஆசாரியர்கள்மட்டும் ஒவ்வொருவ
ரும் பொய்யராயிருந்து, சமாதானமில்லாதி 11
ருந்தும், சமாதானம் சமாதானம் என்று
சொல்லி, [23]என் ஜனமாகிய குமாரத்தியின்

1 11. 7, 18. சங். 81. 11, 12. ஓசி. 4. 16
2 16. 12. நெகே. 9. 17, 29
3 எசே. 2. 7
4 32. 33
5 யோபு 1. 20. மீகா 1. 16
6 2 இரா. 21. 4, 7. எசே. 8. 5. ழ
7 2 இரா. 23. 10. சங். 106. 38
8 19. 6, 11. எசே. 6. 5. ழ
9 உபா. 28. 26. சங். 79. 2
10 ஏசா. 24. 7, 8. ஓசி. 2. 11
11 லேவி. 26. 33. ஏசா. 3. 26
12 எசே. 37. 1
13 2 இரா. 23. 5. எசே. 8. 16
14 2 இரா. 9. 36, 37
15 யோபு 3. 21. வெளி. 9. 6
16 ஏசா. 5. 40
17 2 பே. 3. 9
18 உன்னத. 2. 12. ஏசா. 1. 3
19 யோ 9. 41. ரோ. 2. 17. ழ
20 மத். 15. 6
21 ஏசா. 8. 20
22 உபா. 28. 30. ஏசா. 56. 11
23 எசே. 13. 10

காயங்களை மேற்பூச்சாய்க் குணமாக்குகிறார்
12 கள். தாங்கள் அருவருப்பானதைச் செய்த
தினிமித்தம் வெட்கப்படுகிறார்களா? பரிச்சே
தம் வெட்கப்படார்கள், நாணவும் அறியார்
கள்; ஆகையால் விழுகிறவர்களுக்குள்ளே
விழுவார்கள்; [1]நான் அவர்களை விசாரிக்குங்
காலத்திலே இடறுண்டுபோவார்கள் என்று
13 கர்த்தர் சொல்லுகிறார். அவர்களை முற்றி
லும் அழித்துப்போடுவேன் என்று கர்த்தர்
சொல்லுகிறார்; திராட்சச்செடியிலே குலை
கள் இராது; [2]அத்திமரத்திலே பழங்கள்
இராது, இலையும் உதிரும், [3]நான் அவர்க
ளுக்குக் கொடுத்தது அவர்களைவிட்டுத் தாண்
14 டிப் போகுமென்று சொல். நாம் சும்மாயி
ருப்பானேன்? கூடிவாருங்கள்; நாம் அர
ணான பட்டணங்களுக்குள் பிரவேசித்து,
அங்கே *சங்காரமாவோம்; நாம் கர்த்தருக்கு
விரோதமாய்ப் பாவஞ்செய்தபடியால், நம்மு
டைய தேவனாகிய கர்த்தர் நம்மைச் †சங்கா
ரம்பண்ணி, நமக்குப் பிச்சுக்கலந்த தண்ணீ
15 ரைக் [4]குடிக்கக் கொடுக்கிறார். சமாதானத்
துக்குக் காத்திருந்தோம், பிரயோஜனமில்லை;
[5]ஆரோக்கிய காலத்துக்குக் காத்திருந்தோம்,
16 இதோ, ஆபத்து. தாணிலிருந்து அவர்களு
டைய குதிரைகளின் மூச்செறிதல் கேட்கப்
படுகிறது; அவர்களுடைய பலத்த அஸ்வங்
கள் கனைக்கிற சத்தத்தினால் தேசமெல்லாம்
அதிருகிறது; [6]அவர்கள் வந்து தேசத்தையும்
அதில் உள்ளவைகளையும், பட்டணத்தையும்
17 அதின் குடிகளையும் பட்சிப்பார்கள். மெய்
யாய், இதோ, தடைகட்டப்படாத சர்ப்பங்
களையும், [7]கட்டுவிரியன்களையும் உங்களுக்
குள் அனுப்புகிறேன், அவைகள் உங்களைக்
கடிக்கும் என்று கர்த்தர் சொல்லுகிறார்.
18 நான் சஞ்சலத்தில் ஆறுதலடையப்பார்த்
தும், [8]என் இருதயம் பலட்சயமாயிருக்கிறது.
19 இதோ, சீயோனில் கர்த்தர் இல்லையோ?
அதில் ராஜா இல்லையோ? [9]என்று, என்
ஜனமாகிய குமாரத்தி தூரதேசத்திலிருந்து
கூப்பிடும் சத்தம் கேட்கப்படுகிறது; [10]ஆனால்,
அவர்கள் தங்கள் சுரூபங்களினாலும் அந்நிய
ரின் ‡மாயைகளினாலும் எனக்குக் கோப
20 முண்டாக்கினது என்ன என்கிறார். அறுப்
புக்காலம் சென்றது, கோடைக்காலமும்
முடிந்தது, [11]நாமோ ரட்சிக்கப்படவில்லை.
21 என் ஜனமாகிய குமாரத்தியின் காயங்களி
னால் நானும் காயப்பட்டேன்; [12]கரிகறுத்தி
ருக்கிறேன்; திகைப்பு என்னைப் பிடித்தது.
22 கீலேயாத்திலே பிசின் தைலம் இல்லையோ?
இரணவைத்தியனும் அங்கே இல்லையோ?
[13]பின்னை ஏன் என் ஜனமாகிய குமாரத்தி
சொஸ்தமடையாமற்போனாள்.

9 ஆ, என் தலை தண்ணீரும், என் கண்கள்
கண்ணீரூற்றுமானால் நலமாயிருக்கும்; [14]அப்
பொழுது என் ஜனமாகிய குமாரத்தி கொலை
யுண்ணக் கொடுத்தவர்கள் நிமித்தம் நான் இரா
2 வும் பகலும் அழுவேன். ஆ, வனாந்தரத்தில்
வழிப்போக்கரின் தாபரம் எனக்கு இருந்தால்
நலமாயிருக்கும்; அப்பொழுது நான் என் ஜனத்
தைவிட்டு, அவர்களிடத்தில் இராதபடிக்குப்
போய்விடுவேன்; [15]அவர்களெல்லாரும் விப
சாரரும் துரோகிகளின் கூட்டமுமாயிருக்கி
றார்கள். அவர்கள் பொய்யைப் பிரயோகிக் 3
கத் தங்கள் நாவாகிய வில்லை வளைக்கிறார்கள்;
[16]அவர்கள் இந்தத் தேசத்திலே பலத்துக்கொள்
வது சத்தியத்துக்காக அல்ல; பொல்லாப்பிலி
ருந்து பொல்லாப்புக்கு நடந்தேறுகிறார்கள்;
[17]என்னையோ அறியாதிருக்கிறார்கள் என்று
கர்த்தர் சொல்லுகிறார். நீங்கள் அவனவன் 4
தன் தன் சிநேகிதனுக்கு எச்சரிக்கையாயிருங்
கள், [18]எந்தச் சகோதரனையும் நம்பாதிருங்கள்;
எந்தச் சகோதரனும் மோசம்பண்ணுகிறான்,
எந்தச் சிநேகிதனும் தூற்றித்திரிகிறான். அவ 5
ர்கள் மெய்யைப் பேசாமல் ஒவ்வொருவரும்
தமக்கடுத்தவனை எய்க்கிறார்கள்; பொய்யைப்
பேசத் தங்கள் நாவைப் பழக்குகிறார்கள், அக்
கிரமஞ்செய்ய உழைக்கிறார்கள். கபடத்தின் 6
நடுவிலே குடியிருக்கிறாய்; கபடத்தினிமித்தம்
அவர்கள் என்னை அறியமாட்டோமென்கிறார்
கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்.
ஆகையால், இதோ, நான் அவர்களை உரு 7
க்கி, அவர்களைப் புடமிடுவேன் என்று சேனை
களின் கர்த்தர் சொல்லுகிறார்; [19]என் ஜனமா
கிய குமாரத்தியை வேறெந்தப்பிரகாரமாக
நடத்துவேன்? அவர்கள் நாவு கூர்மையாக் 8
கப்பட்ட அம்பு, அது கபடம் பேசுகிறது,
[20]அவனவன் தன் தன் அயலானோடே தன்
தன் வாயினாலே சமாதானமாய்ப் பேசுகிறான்,
ஆனாலும் தன் உள்ளத்திலே அவனுக்குப்
பதிவிடை வைக்கிறான். இவைகளினிமித் 9
தம் அவர்களை விசாரியாதிருப்பேனோ? இப்
படிப்பட்ட ஜாதிக்கு என் ஆத்துமா நீதியைச்
சரிக்கட்டாதிருக்குமோ என்று கர்த்தர் சொல்
லுகிறார்.
மலைகளுக்காக அழுது துக்கங்கொண்டாடு 10
வேன்; வனாந்தரத் தாபரங்களுக்காகப் புலம்
புவேன்; ஒருவனும் அவைகளைக் கடந்து
போகாதவண்ணமாய் அவைகள் பாழாக்கப்
பட்டுக் கிடக்கின்றன; ஆடுமாடுகளின் சத்
தம் கேட்கப்படுகிறதுமில்லை; ஆகாசத்துப் பற
வைகளும் மிருகஜீவன்களும் எல்லாம் ஓடிச்
சிதறிப்போயின. நான் எருசலேமை மண் 11
மேடுகளும் வலுசர்ப்பங்களின் தாபரமுமாக்
குவேன்; [21]யூதாவின் பட்டணங்களையும் குடி
யில்லாதபடி பாழாக்கிப்போடுவேன். இதை 12
உணரத்தக்க ஞானமுள்ளவன் யார்? [22]தேசம்
அழிந்து, ஒருவனும் கடந்துபோகாதபடி அது
பாழாக்கப்படுகிற முகாந்தரமென்னவென்று
கர்த்தருடைய வாய் தன்னுடனே சொல்லுகி
றதைக் கேட்டு அறிவிக்கத்தக்கவன் யார்?
நான் அவரவருக்கு விதித்த என் நியாயப் 13
பிரமாணத்தை அவர்கள் விட்டு, [23]என் சொல்
லைக் கேளாமலும், அதின்படி நடவாமலும்,
தங்களுடைய இருதயத்தின் கடினத்தையும், 14

[1] உபா. 32. 35. ஓசி. 5. 9
[2] மத். 21. 19. லூ; 13. 6. ஓ
[3] ஓசி. 2. 8, 9
* மவுனமாயிருப்போம்.
† மவுனமாக்கி.
[4] 23. 15
[5] 14. 19
[6] 4. 15. கிபா. 5. 22
[7] சங். 58. 4, 5. பிர. 10. 11
[8] புல. 1. 16, 17
[9] 33. 22. எசா. 39. 3
[10] உபா. 32. 21
‡ விக்கிரகங்கள்.
[11] மத். 25. 1–12
[12] யோவேல் 2. 6
[13] 46. 11. ஆதி. 37. 35. மத். 9. 11, 12
[14] எசா. 22. 4. புல. 2. 11 3. 48
[15] 5. 7, 8. மீகா 7. 2–5
[16] எசா. 59. 3, 4. பூதா 3. வச.
[17] ஓசி. 4. 1–3
[18] மீகா 7. 5, 6
[19] எசா. 1. 25. மல். 3. 3
[20] சங். 28. 3 64. 3, 4
[21] புல. 2. 2, 7, 8
[22] ஓசி. 14. 9
[23] உபா. 29. 24–28

தங்கள் பிதாக்கள் தங்களுக்குக் கற்றுக்கொடுத்
தபடி பாகால்களையும் பின்தொடர்ந்தார்களே
15 என்று **கர்த்தர்** சொல்லுகிறார். ஆதலால்,
இதோ, நான் இந்த ஜனத்துக்குப் புசிக்க எட்
டியையும், [1]குடிக்கப் பிச்சுக்கலந்த தண்ணீ
16 ரையும் கொடுத்து, அவர்களும், அவர்கள்
பிதாக்களும் அறியாத புறஜாதிகளுக்குள்ளே
அவர்களைச் சிதறடித்து, [2]பட்டயம் அவர்களை
நிர்மூலமாக்குமட்டும் அதை அவர்களுக்குப்
பின்னாக அனுப்புவேன் என்று இஸ்ரவே
லின் தேவனாகிய சேனைகளின் **கர்த்தர்** சொ
ல்லுகிறார்.
17 நீங்கள் யோசனைபண்ணி, புலம்பற்காரி
களை வரவழைத்து, [3]அதிலே பழகின ஸ்திரீ
களைக் கூப்பிடுங்களென்று சேனைகளின் **கர்த்**
18 **தர்** சொல்லுகிறார். அவர்கள் சீக்கிரமாய்
வந்து, நம்முடைய கண்கள் கண்ணீராய்ச்
சொரியத்தக்கதாகவும், நம்முடைய இமைகள்
தண்ணீராய் ஓடத்தக்கதாகவும், ஒப்பாரி சொ
19 ல்லக்கடவர்கள். எத்தனையாய்ப் பாழாக்கப்
பட்டோம்! மிகவும் கலங்கியிருக்கிறோம்; நாங்
கள் தேசத்தைவிட்டுப் போகிறோம், எங்கள்
வாசஸ்தலங்களை அவர்கள் கவிழ்த்துப்போட்
டார்கள் என்று சீயோனிலிருந்து உண்டா
20 கிற புலம்பலின் சத்தம் கேட்கப்படும். ஆத
லால் ஸ்திரீகளே, **கர்த்தருடைய** வார்த்தை
யைக் கேளுங்கள்; [4]உங்கள் செவி அவரு
டைய வாயின் வசனத்தை ஏற்றுக்கொள்ளட்
டும்; நீங்கள் உங்கள் குமாரத்திகளுக்கு ஒப்
பாரியையும், அவனவள் தன் தன் தோழிக்
21 குப் புலம்பலையும் கற்றுக்கொடுங்கள். வீதியி
லிருக்கிற குழந்தைகளையும், தெருக்களிலிருக்
கிற இளைஞரையும் சங்காரம்பண்ணச் சாவு
நம்முடைய பலகணிகளிலேறி, நம்முடைய
22 அரமனைகளில் பிரவேசித்தது. மனுஷரின்
சவங்கள் வயல்வெளியின்மேல் எருவைப்
போலவும், அறுக்கிறவனுக்குப் பின்னாலே
ஒருவனும் வாரிக்கொள்ளாதிருக்கிற அரியை
ப்போலவும் கிடக்கும் என்று **கர்த்தர்** உரைத்
தாரென்று சொல்.
23 ஞானி தன் ஞானத்தைக்குறித்து மேன்மை
பாராட்டவேண்டாம்; பராக்கிரமன் தன் பரா
க்கிரமத்தைக்குறித்து மேன்மை பாராட்ட
வேண்டாம்; [5]ஐசுவரியவான் தன் ஐசுவரியத்
தைக்குறித்து மேன்மை பாராட்டவேண்
24 டாம்; மேன்மை பாராட்டுகிறவன் பூமியிலே
கிருபையையும் நியாயத்தையும் நீதியையும்
செய்கிற **கர்த்தர்** நான் என்று என்னை அறிந்து
உணர்ந்திருக்கிறதைக் குறித்தே மேன்மைபா
ராட்டக்கடவன் என்று **கர்த்தர்** சொல்லுகி
றார்; [6]இவைகளின்மேல் பிரியமாயிருக்கி
25 றேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறார். இதோ,
நாட்கள் வரும்; [7]அப்பொழுது விருத்தசே
தனமில்லாதவர்களோடுங்கூட விருத்தசேதன
26 முள்ள யாவரையும், எகிப்தையும், யூதாவை
யும், ஏதோமையும், அம்மோன் புத்திரரையும்,
மோவாபையும், கடைசி எல்லைகளிலுள்ள

1 சங். 80. 5. புல. 3. 15, 19
2 லேவி. 26. 33. உபா. 28. 64
3 2 நாளா. 35. 25. ஆமோ. 5. 16. மத். 9. 23
4 ஏசா. 32. 9-13
5 பிர. 9. 11
6 1 கொ. 1. 31. 2 கொ. 10. 17
7 ரோ. 2. 8, 9
8 லேவி. 18. 3: 20. 23
9 ஏசா. 40. 19. ஹ
10 ஏசா. 41. 7: 46. 7
11 சங். 115. 5 ஹ. ஆப. 2. 19. 1 கொ. 12. 2
12 யாத். 15. 11
13 சங். 89. 6. வெளி. 15. 4
14 ஏசா. 41. 29. ரோ. 1. 21, 22
15 தானி. 10. 5
16 சங். 10. 16: 31. 5. 1 தீமோ. 6. 17
17 சகரி. 13. 2
18 51. 15-19. ஆதி. 1. 1-9.
19 யோபு 38. 34.

வனாந்தரக்குடிகளான யாவரையும் தண்டிப்
பேன்; புறஜாதியார் அனைவரும் விருத்தசேத
னமில்லாதவர்கள்; ஆனாலும், இஸ்ரவேல் வம்
சத்தார் அனைவரும் இருதயத்திலே விருத்த
சேதனமில்லாதவர்கள் என்று **கர்த்தர்** சொல்
லுகிறார்.

10 இஸ்ரவேல் வீட்டாரே, **கர்த்தர்** உங்க
ளுக்குச் சொல்லுகிற வசனத்தைக் கேளுங்
கள்: புறஜாதிகளுடைய மார்க்கத்தைக் கற் 2
றுக்கொள்ளாதிருங்கள்; [8]வானத்தின் அடை
யாளங்களாலே புறஜாதிகள் கலங்குகிறார்க
ளே என்று சொல்லி, நீங்கள் அவைகளாலே
கலங்காதிருங்கள். ஜனங்களின் வழிபாடுகள் 3
வீணாயிருக்கிறது; [9]காட்டில் ஒரு மரத்தை
வெட்டுகிறார்கள்; அது தச்சன் கையாடுகிற
வாச்சியால் பணிப்படும். வெள்ளியினாலும் 4
பொன்னினாலும் அதை அலங்கரித்து, [10]அது
அசையாதபடிக்கு அதை ஆணிகளாலும் சுத்
திகளாலும் உறுதியாக்குகிறார்கள். அவைகள் 5
பனையைப்போல நெட்டையாய் நிற்கிறது,
அவைகள் பேசமாட்டாதவைகள், அவைகள்
நடக்கமாட்டாததினால் சுமக்கப்படவேண்டும்;
[11]அவைகளுக்குப் பயப்படவேண்டாம்; அவை
கள் தீமை செய்யக்கூடாது, நன்மை செய்ய
வும் அவைகளுக்குச் சக்தி இல்லையென்று
**கர்த்தர்** சொல்லுகிறார். **கர்த்தாவே**, உமக்கு 6
ஒப்பானவன் இல்லை; [12]நீரே பெரியவர்; உமது
நாமமே வல்லமையில் பெரியது. ஜாதிகளின் 7
ராஜாவே, உமக்குப் பயப்படாதிருப்பவன்
யார்? தேவரீருக்கே பயப்படவேண்டியது;
[13]ஜாதிகளுடைய எல்லா ஞானிகளிலும், அவர்
களுடைய எல்லா ராஜ்யத்திலும் உமக்கு ஒப்
பானவன் இல்லை. அவர்கள் யாவரும் மிருக 8
குணமும் மதியீனமுமுள்ளவர்கள்; [14]அந்
தக் கட்டை மாயையான போதகமாயிருக்கி
றது. தகடாக்கப்பட்ட வெள்ளி தர்ஷீசிலும், 9
[15]பொன் ஊப்பாசிலுமிருந்து கொண்டுவரப்
பட்டு, அவைகள் தொழிலாளியினாலும், தட்
டான் கைகளினாலும் செய்யப்படுகிறது; இள
நீலமும் இரத்தாம்பரமும் அவைகளின் உடு
மானம்; அவைகளெல்லாம் தொழிலாளிகளின்
கைவேலையாயிருக்கிறது. **கர்த்தரோ** மெய் 10
யான தெய்வம்; அவர் ஜீவனுள்ள தேவன்,
நித்திய ராஜா; [16]அவருடைய கோபத்தினால்
பூமி அதிரும்; அவருடைய உக்கிரத்தை ஜாதி
கள் சகிக்கமாட்டார்கள்.
வானத்தையும் பூமியையும் உண்டாக்காத 11
தெய்வங்கள், [17]பூமியிலும் இந்த வானத்தின்
கீழும் இராதபடிக்கு அழிந்துபோகும் என்
பதை அவர்களுக்குச் சொல்லுங்கள். அவ 12
ரே பூமியைத் தம்முடைய வல்லமையினால்
உண்டாக்கி, பூச்சக்கரத்தைத் தம்முடைய
ஞானத்தினால் படைத்து, [18]வானத்தைத் தம்
முடைய அறிவினால் விரித்தார். அவர் சத்த 13
மிடுகையில் வானத்திலே திரளான தண்ணீர்
உண்டாகிறது; [19]அவர் பூமியின் கடையாந்த
ரத்திலிருந்து மேகங்களை எழும்பப்பண்ணி,

மழையுடனே மின்னல்களை உண்டாக்கி, காற்
றைத் தமது பண்டகசாலைகளிலிருந்து புறப்
14 படப்பண்ணுகிறார். மனுஷர் அனைவரும்
அறிவில்லாமல் மிருககுணமுள்ளவர்களானார்
கள்; [1]தட்டார் அனைவரும் வார்ப்பித்த சுரூபங்க
ளாலே வெட்கிப்போகிறார்கள்; அவர்கள் வார்
ப்பித்தவிக்கிரகம்பொய்யே, அவைகளில் ஆவி
15 இல்லை. அவைகள் மாயையும், மகா எத்தான
கிரியையுமாயிருக்கிறது; அவைகள் விசாரிக்
16 கப்படும் நாளிலே அழியும். யாக்கோபின் பங்
காயிருக்கிறவர் அவைகளைப்போல் அல்ல;
[2]அவர் சர்வத்தையும் உருவாக்கினவர்; இஸ்ர
வேல் அவருடைய சுதந்தரமான கோத்திரம்;
சேனைகளின் **கர்த்தர்** என்பது அவருடைய
17 நாமம். அரணில் குடியிருக்கிறவளே, தேசத்தி
லிருந்து உன் பொருள்களைச் சேர்த்துக்கொள்.
18 இதோ, நான் இந்தமுறை தேசத்தின் குடிக
ளைக் கவண்கொண்டெறிந்து, [3]அவர்கள்
கண்டு உணரும்படி அவர்களுக்கு நெருக்க
முண்டாக்குவேன் என்று **கர்த்தர்** சொல்லுகி
19 றார். ஐயோ! நான் நொறுக்கப்பட்டேன்;
என் காயம் கொடிதாயிருக்கிறது; [4]ஆனாலும்
இது நான் சகிக்கவேண்டிய என் நோய்
20 என்று நான் சொல்லுவேன். என் கூடாரம்
அழிந்துபோயிற்று, என் கயிறுகளெல்லாம்
அறுப்புண்டுபோயின; என் பிள்ளைகள் என்
னைவிட்டுப் போய்விட்டார்கள்; அவர்களில்
ஒருவனுமில்லை; இனி என் கூடாரத்தை விரி
த்து, என் திரைகளைத் தூக்கிக் கட்டுவாரில்லை.
21 மேய்ப்பர்கள் மிருககுணமுள்ளவர்களாகி,
[5]**கர்த்தரைத்** தேடாமற்போனார்கள்; ஆகை
யால், அவர்கள் காரியம் வாய்க்காமற்போய்,
அவர்கள் மந்தையெல்லாம் சிதறடிக்கப்பட்
22 டது. இதோ, யூதாவின் பட்டணங்களைப்
பாழும் வலுசர்ப்பங்களின் தாவுமாக்கிப்போ
டும் செய்தியின் சத்தமும், வடதேசத்திலிரு
23 ந்து பெரிய கொந்தளிப்பும் வருகிறது. **கர்த்**
**தாவே**, மனுஷனுடைய வழி அவனாலே
ஆகிறதல்லவென்றும், [6]தன் நடைகளை நடத்து
வது நடக்கிறவனாலே ஆகிறதல்லவென்றும்
24 அறிவேன். **கர்த்தாவே**, என்னை தண்டியும்;
[7]ஆனாலும் நான் அவமாய்ப்போகாதபடிக்கு
உம்முடைய கோபத்தினாலே அல்ல, மட்டாய்
25 தண்டியும். உம்மை அறியாத ஜாதிகளின்
மேலும், உமது நாமத்தைத் தொழுதுகொள்
ளாத வம்சங்களின்மேலும், உம்முடைய உக்
கிரத்தை ஊற்றிவிடும்; [8]அவர்கள் யாக்கோ
பைப் பட்சித்து, அவனை விழுங்கி, அவனை
நிர்மூலமாக்கி, அவன் வாசஸ்தலத்தைப் பாழா
க்கினார்களே.

**11** **கர்த்தராலே** எரேமியாவுக்கு உண்டான
2 வசனம்: நீங்கள் கேட்டு யூதாவின் மனுஷருக்
கும் எருசலேமின் குடிகளுக்கும் சொல்ல
வேண்டிய உடன்படிக்கையின் வார்த்தைக
3 ளாவன: என் சத்தத்தைக் கேட்டு, நான்
உங்களுக்குக் கற்பிக்கிறபடியே எல்லாக் காரி
யங்களையும் செய்யுங்கள்; அப்பொழுது நீங்
கள் என் ஜனமாயிருப்பீர்கள், நான் உங்கள்
தேவனாயிருப்பேன்; நான் உங்கள் பிதாக் 4
களை இருப்புக் காளவாயாகிய எகிப்துதேசத்
திலிருந்து புறப்படப்பண்ணின நாளிலே
[9]அவர்களுக்குக் கற்பித்த இந்த உடன்படிக்
கையின் வார்த்தைகளைக் கேளாத மனுஷன்
சபிக்கப்பட்டவனென்று, இஸ்ரவேலின் தே
வனாகிய **கர்த்தர்** உரைக்கிறாரென்று அவர்க
ளுக்குச் சொல்லு. இன்றையத்தினம் இருக் 5
கிறபடி, பாலும் தேனும் ஓடுகிற தேசத்தை
உங்கள் பிதாக்களுக்குக் கொடுப்பேன் என்று
நான் அவர்களுக்கு இட்ட ஆணையை நான்
திடப்படுத்தும்படி இப்படி ஆகும் என்றார்;
[10]அதற்கு நான் பிரதியுத்தரமாக, அப்படியே
*ஆகக்கடவது **கர்த்தாவே** என்றேன்.

அப்பொழுது **கர்த்தர்** என்னை நோக்கி: நீ 6
யூதாவின் பட்டணங்களிலும் எருசலேமின்
வீதிகளிலும் இந்த வார்த்தைகளையெல்லாம்
கூறி: இந்த உடன்படிக்கையின் வார்த்தை
களை நீங்கள் கேட்டு, [11]அவைகளின்படியே
செய்யுங்கள். நான் உங்கள் பிதாக்களை எகிப்து 7
தேசத்திலிருந்து வரப்பண்ணின நாள்முதல்,
இந்நாள்மட்டும் நான் அவர்களுக்குத் திடச்சா
ட்சியாய் என் சத்தத்தைக் கேளுங்களென்று
[12]ஏற்கனவே சாட்சி விளங்கத்தக்கவிதமாய் எச்
சரித்துவந்தேன். ஆனாலும் அவர்கள் கேளா 8
மலும், தங்கள் செவியைச் சாயாமலும் போய்,
அவரவர் தம்தம் பொல்லாத இருதய கடினத்
தின்படி நடந்தார்கள்; ஆதலால் நான் அவர்
கள் செய்யும்படி கட்டளையிட்டதும், அவர்
கள் செய்யாமற்போனதுமான இந்த உடன்
படிக்கையின் வார்த்தைகளையெல்லாம் அவர்
களுக்குப் பலிக்கப்பண்ணுவேன் என்று
சொல் என்றார்.

பின்னையும் **கர்த்தர்** என்னை நோக்கி: யூதா 9
வின் மனுஷருக்குள்ளும் எருசலேமின் குடி
களுக்குள்ளும் [13]ஒரு கட்டுப்பாடு காணப்படு
கிறது. அவர்கள் என் வார்த்தைகளைக் கேட்க 10
மாட்டோமென்று அந்நிய தேவர்களைச் சே
விக்க அவைகளைப் பின்பற்றி, [14]தங்களுடைய
முன்னோர்களின் அக்கிரமங்களுக்குத் திரும்பி
னார்கள்; நான் தங்கள் பிதாக்களோடே பண்
ணின உடன்படிக்கையை இஸ்ரவேல் குடும்
பத்தாரும் யூதா குடும்பத்தாரும் மீறிப்போட்
டார்கள். ஆகையினால் இதோ, அவர்கள் 11
தப்பித்துக்கொள்ளமாட்டாத தீங்கை அவர்கள்
மேல் வரப்பண்ணுவேன்; அப்பொழுது என்
னை நோக்கிக் கூப்பிடுவார்கள்; [15]நான் அவர்
களைக் கேளாதிருப்பேன் என்று **கர்த்தர்**
சொல்லுகிறார். அப்பொழுது யூதா பட்ட 12
ணங்களின் மனுஷரும், எருசலேமின் குடி
களும் போய்த் தாங்கள் தூபங்காட்டியிருந்த
தேவர்களை நோக்கிக் கூப்பிட்டும், [16]அவைகள்
அவர்களுடைய ஆபத்துக்காலத்தில் அவர்களை
ரட்சிப்பதில்லை. யூதாவே, உன் பட்டணங்க 13
ளின் இலக்கமும் உன் தேவர்களின் இலக்க
மும் சரி; [17]எருசலேமுடைய வீதிகளின் இலக்

1 சங். 92. 6; 94. 8. ஏசா. 42. 17
2 உபா. 32. 9. சங். 16. 5
3 1 சாமு. 25. 29. எசே. 6. 10
4 மீகா 7. 9
5 2. 8. எசே. 34. 2–10. சகரி. 10. 3
6 நீதி. 16. 1; 20. 24
7 30. 11. சங். 6. 1
8 சங். 79. 6, 7. புல. 2. 22
9 உபா. 4. 20. 27. 26. கலா. 3. 10
10 உபா. 7. 12, 13. சங். 105. 8–11
* ஆமென். உபா. 27. 15–26
11 ரோ. 2. 13. யாக். 1. 22
12 7. 13. ஷ
13 எசே. 22. 25. ஓசி. 6. 9
14 எசே. 20. 18, 27–30
15 நீதி. 1. 28. சகரி. 7. 13
16 உபா. 32. 37, 38
17 2. 28. ஓசி. 9. 10

கமும், நீங்கள் பாகாலுக்குத் தூபங்காட்டும்
படி இந்த இலச்சையான காரியத்துக்கு ஸ்தா
14 பித்த பீடங்களின் இலக்கமும் சரி. ஆதலால்
நீ இந்த ஜனத்துக்காக விண்ணப்பம் பண்ண
வேண்டாம், [1]அவர்களுக்காக மன்றாடவும்
கெஞ்சவும் வேண்டாம்; அவர்கள் தங்கள் ஆப
த்தினிமித்தம் என்னை நோக்கிக் கூப்பிடுங்கா
லத்திலே நான் அவர்களைக் கேளாதிருப்பேன்.
15 துர்ச்சனரோடு மகா தீவினை செய்யும்போ
து, *என் பிரியமானவளுக்கு என் வீட்டில்
என்ன இருக்கிறது? †[2]பரிசுத்த மாம்சத்தை
உன்னைவிட்டுத் தாண்டிப்போகப் பண்ணு
வார்கள்; [3]உன் பொல்லாப்பு நடக்கும்போது
16 நீ களிகூருகிறாயே. நல்ல கனி உண்டா
யிருக்கிற நேர்த்தியும் பச்சையுமான [4]ஒலிவமர
மென்னும் பேரைக் கர்த்தர் உனக்கு இட்
டார்; ஆனால் மகா அமளியின் சத்தமாய்
அதைச் சுற்றிலும் நெருப்பைக் கொளுத்துகி
றார், அதின் கொம்புகள் முறிக்கப்பட்டது.
17 பாகாலுக்குத் தூபங்காட்டுகிறதினாலே எனக்
குக் கோபமுண்டாக்க இஸ்ரவேல் குடும்பத்
தாரும், யூதா குடும்பத்தாரும் தங்களுக்குக்
கேடாகச் செய்த பொல்லாப்பினிமித்தம் [5]உன்
மேல் தீங்கை வரப்பண்ணுவேன் என்று
உன்னை நாட்டின சேனைகளின் கர்த்தர்
சொல்லுகிறார்.
18 அதைக் கர்த்தர் எனக்கு அறிவித்ததினாலே
அறிந்துகொண்டேன்; [6]அவர்களுடைய செய்
கைகளை அப்பொழுது எனக்குத் தெரியக்கா
19 ட்டினீர். மரத்தை அதின் கனிகளோடுங்
கூட அழித்துப்போடுவோமென்றும், [7]அவன்
ஜீவனுள்ளோருடைய தேசத்தி லிராமலும்,
அவன் பேர் இனி நினைக்கப்படாமலும் போக
அவனைச் சங்கரிப்போமென்றும், எனக்கு
விரோதமாய் ஆலோசனைபண்ணினார்கள் என்
பதை அறியாதிருந்து, நான் அடிக்கப்படுவதற்
குக் கொண்டுபோகப்படும் சாதுவான ஆட்டுக்
20 குட்டியைப்போல இருந்தேன். சேனைகளின்
கர்த்தாவே, உள்ளிந்திரியங்களையும் இருதயத்
தையும் சோதித்தறிகிற நீதியுள்ள நியாயாதி
பதியே, [8]நீர் அவர்களுக்கு நீதியைச் சரிக்
கட்டுகிறதைப் பார்ப்பேனாக; என் வழக்கை
உமக்கு வெளிப்படுத்திவிட்டேன் என்றேன்.
21 ஆதலால் நீ எங்கள் கையினாலே சாகாதபடிக்
குக் கர்த்தருடைய நாமத்தினாலே தீர்க்கதரி
சனம் சொல்லவேண்டாம் என்று சொல்லி,
[9]உன் பிராணனை வாங்கத் தேடுகிற ஆனதோத்
தின் மனுஷரைக்குறித்துக் கர்த்தர் சொல்லு
22 கிறார்: இதோ, இதினிமித்தம் உங்களை விசா
ரிப்பேன்; இளவயதுள்ளவர்கள் பட்டயத்தா
லே சாவார்கள்; அவர்கள் குமாரரும் அவர்கள்
குமாரத்திகளும் பஞ்சத்தாலே சாவார்கள்.
23 அவர்களில் மீதியாய் இருப்பவர்களில்லை;
[10]நான் ஆனதோத்தின் மனுஷரை விசாரிக்கும்
வருஷத்திலே அவர்கள்மேல் ஆபத்தை வரப்
பண்ணுவேன் என்று சேனைகளின் கர்த்தர்
சொல்லுகிறார்.

கர்த்தாவே, உம்மோடே நான் வழக்கா 12
டப்போனால், தேவரீர் நீதியுள்ளவராமே; [11]ஆ
கிலும் உம்முடைய நியாயங்களைக்குறித்து உம்
மோடே நான் பேசும்படி வேண்டுகிறேன்;
[12]ஆகாதவர்களின் வழி வாய்க்கிறதென்ன?
துரோகஞ் செய்துவருகிற அனைவரும் சுகித்
திருக்கிறதென்ன? நீர் அவர்களை நாட்டினீர், 2
வேர்பற்றித் தேறிப்போனார்கள், கனியும் கொ
டுக்கிறார்கள்; நீர் அவர்கள் வாய்க்குச் சமீப
மும், [13]அவர்கள் உள்ளிந்திரியங்களுக்கோ தூர
முமாயிருக்கிறீர். கர்த்தாவே, நீர் என்னை 3
அறிந்திருக்கிறீர், என்னைக் காண்கிறீர்; [14]என்
இருதயம் உமக்கு முன்பாக எப்படிப்பட்ட
தென்று சோதித்து அறிகிறீர்; அடிக்கப்படும்
ஆடுகளைப்போல அவர்களைப் பிடுங்கிப்போட்
டு, [15]கொலைநாளுக்கு அவர்களை நியமியும்.
எந்தமட்டும் தேசம் புலம்பி, எல்லா வெளி 4
யின் புல்லும் வாடி, அதின் குடிகளுடைய
பொல்லாப்பினிமித்தம் மிருகங்களும் பறவை
களும் அழியவேண்டும்! [16]எங்கள் முடிவை
அவன் காண்பதில்லையென்கிறார்கள். நீ கா 5
லாட்களோடே ஓடும்போதே உன்னை இளைக்
கப்பண்ணினார்களானால், குதிரைகளோடே
எப்படிச் சேர்ந்து ஓடுவாய்? சமாதானமுள்ள
தேசத்திலேயே நீ அடைக்கலம் தேடினால்,
[17]யோர்தான் பிரவாகித்து வரும்போது நீ என்
னசெய்வாய்? உன் சகோதரரும், உன் தகப் 6
பன் வம்சத்தாரும் உனக்கு துரோகம்பண்ணி,
[18]அவர்களும் உன்னைப் பின்தொடர்ந்து மிக
வும் ஆரவாரம்பண்ணினார்கள்; அவர்கள் உன்
னோடே இனிய வார்த்தைகளைப் பேசினாலும்
[19]அவர்களை நம்பவேண்டாம்.
நான் என் வீட்டைவிட்டுவிட்டேன், [20]என் 7
சுதந்தரத்தை நெகிழவிட்டேன்; என் ஆத்து
மா நேசித்தவனை அவனுடைய சத்துருவின்
கையிலே ஒப்புக்கொடுத்தேன். என் சுதந் 8
தரம் காட்டிலுள்ள சிங்கத்தைப்போல் எனக்
காயிற்று; அது எனக்கு விரோதமாய் கெர்ச்
சிக்கிறது; ஆதலால் அதை வெறுக்கிறேன்.
என் சுதந்தரம் பலவர்ணமான பட்சியைப் 9
போல எனக்காயிற்று; ஆகையால், பட்சிகள்
அதைச் சுற்றிலும் வருவதாக; [21]வெளியின்
சகல ஜீவன்களே, அதைப் பட்சிக்கும்படி
கூடிவாருங்கள். அநேக மேய்ப்பர்கள் என் 10
திராட்சத்தோட்டத்தை அழித்து, [22]என் பங்
கைக் காலால் மிதித்து, என் பிரியமான பங்
கைப் பாழான வனாந்தரமாக்கினார்கள். அ 11
தைப் பாழாக்கிவிட்டார்கள்; பாழாய்க்கிடக்
கிற அது என்னை நோக்கிப் புலம்புகிறது;
தேசமெல்லாம் பாழாயிற்று; [23]ஒருவனும் அ
தை மனதிலே வைக்கிறதில்லை. கொள்ளைக் 12
காரர் வனாந்தரத்திலுள்ள எல்லா உயர்நிலங்க
ளின்மேலும் வருகிறார்கள்; கர்த்தருடைய பட்
டயம் தேசத்தின் ஒரு முனைதொடங்கித் தேச
த்தின் மறுமுனைமட்டும் பட்சித்துக்கொண்டி
ருக்கும்; மாம்சமாகிய ஒன்றுக்கும் சமாதான
மில்லை. கோதுமையை விதைத்தார்கள், 13

[1] 7. 16. யாத். 32. 10
* யூதா என்பவள். 12. 7
† பரிசுத்தமானதை, அல்லது பரிசுத்தமானவனை.
[2] ஆகா. 2. 12–14. மத். 22. 12
[3] நீதி. 2. 14
[4] சங். 52. 8. ரோ. 11. 17
[5] 2. 21. ஏசா. 5. 2
[6] எசே. 8. 6. ஆமோ. 3. 7
[7] 18. 18. லூ. 20. 10–15
[8] 1 சாமு. 28. 9. வெளி. 2. 23
[9] ஏசா. 30. 10. ஆமோ. 2. 12; 7. 13–16. மீகா. 2. 6
[10] லூ. 19. 44
[11] சங். 51. 4. தானி. 9. 7
[12] யோபு 21. 7. சங். 73. 3. ஆப. 1. 4. மல். 3. 15
[13] மத். 15. 8. மாற். 7. 6. தீத். 1. 16
[14] சங். 17. 3; 139. 1, 23
[15] யாக். 5. 5
[16] சங். 107. 34
[17] யோசு. 3. 15
[18] மீகா 7. 6
[19] நீதி. 26. 24, 25
[20] சங். 78. 59, 60
[21] ஏசா. 56. 9
[22] 6. 3. ஏசா. 5. 1, 5. 63. 18
[23] ஏசா. 42. 25

[1]முள்ளுகளை அறுப்பார்கள்; பிரயாசப்படு
வார்கள், பிரயோஜனமடையார்கள்; **கர்த்த
ருடைய** உக்கிரகோபத்தினால் உங்களுக்கு
வரும் பலனைக்குறித்து வெட்கப்படுங்கள்.
14 இதோ, நான் என் ஜனமாகிய இஸ்ரவே
லுக்குக் காணியாட்சியாகக் கொடுத்த என்
சுதந்தரத்தைத் [2]தொடுகிற துஷ்டரான அய
லார் அனைவரையும் தங்கள் தேசத்தில் இராத
படிக்குப் பிடுங்கிப்போடுவேன் என்று, **கர்த்
தர்** அவர்களைக் குறித்துச் சொல்லுகிறார்; யூதா
வம்சத்தாரையும் அவர்கள் நடுவில் இராதபடிக்
15 குப் பிடுங்கிப்போடுவேன். அவர்களை நான்
பிடுங்கிப்போட்ட பிற்பாடு, நான் திரும்பவும்
அவர்கள்மேல் இரங்கி, [3]அவர்களைத் தங்கள்
தங்கள் சுதந்தரத்துக்கும் தங்கள் தங்கள் பூமிக்
16 கும் திரும்பப்பண்ணுவேன். அப்புறம் அவர்
கள் என் ஜனத்துக்குப் பாகாலின்மேல் ஆணை
யிடக் கற்றுக்கொடுத்ததுபோல, **கர்த்தருடைய**
ஜீவனைக்கொண்டு என்று சொல்லி, என் நா
மத்தின்மேல் ஆணையிடும்படி என் ஜனத்தின்
வழிகளை நன்றாய்க் கற்றுக்கொண்டால், [4]அ
வர்கள் என் ஜனத்தின் நடுவிலே ஊன்றக்
17 கட்டப்படுவார்கள். கேளார்களேயாகில்,
[5]நான் அப்படிப்பட்ட ஜாதியை வேரோடே
பிடுங்கிப்போட்டு அழித்துவிடுவேன் என்று
**கர்த்தர்** சொல்லுகிறார்.

**13** **கர்த்தர்** என்னை நோக்கி: நீ போய், உன
க்கு ஒரு சணல்கச்சையை வாங்கி, அதை
உன் அரையிலே கட்டிக்கொள்; அதைத் தண்
2 ணீரிலே படவொட்டாதே என்றார். நான்
**கர்த்தருடைய** வார்த்தையின்படியே ஒரு கச்
சையை வாங்கி, அதை என் அரையிலே கட்
3 டிக்கொண்டேன். இரண்டாம்விசை **கர்த்த
ருடைய** வார்த்தை எனக்கு உண்டாகி, அவர்:
4 நீ வாங்கினதும் உன் அரையிலிருக்கிறதுமான
கச்சையை எடுத்துக்கொண்டு எழுந்து, ஐப்பி
ராத்து நதிமட்டும் போய், அதை அங்கே ஒரு
கன்மலை வெடிப்பிலே ஒளித்துவை என்றார்.
5 நான் போய், **கர்த்தர்** எனக்குக் கட்டளையிட்
டபடியே அதை ஐப்பிராத்து நதியின் ஓரத்
6 தில் ஒளித்துவைத்தேன். அநேகநாள் சென்ற
பின்பு **கர்த்தர்** என்னை நோக்கி: நீ எழுந்து
ஐப்பிராத்து நதிக்குப் போய் அங்கே ஒளித்து
வைக்க நான் உனக்குக் கட்டளையிட்ட கச்சை
யை அவ்விடத்திலிருந்து எடுத்துக்கொண்டு
7 வா என்றார். அப்பொழுது நான் ஐப்பிராத்து
நதிக்குப் போய், கச்சையை ஒளித்துவைத்த
இடத்திலே தோண்டி அதை எடுத்தேன்;
ஆனால், இதோ, அந்தக் கச்சை கெட்டு ஒன்
8 றுக்கும் உதவாமற்போயிற்று. அப்பொழுது
**கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண்டாகி,
9 அவர்: இப்படியே நான் யூதாவுடைய பெரு
மையையும், [6]எருசலேமுடைய மிகுந்த பெரு
மையையும் கெட்டுப்போகப் பண்ணுவேன்.
10 என் வார்த்தைகளைக் கேட்கமாட்டோம் என்று
மறுத்து, தங்கள் இருதயத்தின் கடினத்தின்
படி நடந்து, [7]அந்நிய தேவர்களைச் சேவிக்க
வும் அவர்களைப் பணிந்துகொள்ளவும் அவர்க
ளைப் பின்பற்றுகிற இந்தப் பொல்லாத ஜனங்
கள் ஒன்றுக்கும் உதவாமற்போன இந்தக் கச்
சையைப்போலாவார்கள் என்று **கர்த்தர்** சொ
ல்லுகிறார். கச்சையானது மனுஷனுடைய 11
அரைக்குச் சேர்க்கையா யிருக்கிறதுபோல,
நான் இஸ்ரவேல் குடும்பத்தார் அனைவரை
யும் யூதாவின் குடும்பத்தார் அனைவரையும்,
எனக்கு ஜனங்களாகவும், கீர்த்தியாகவும், துதி
யாகவும், மகிமையாகவும் சேர்க்கையாக்கிக்
கொண்டேன்; [8]ஆனாலும் அவர்கள் செவிகொ
டாமற்போனார்கள் என்று **கர்த்தர்** சொல்லுகி
றார். சகல ஜாடிகளும் திராட்சரசத்தினாலே 12
நிரப்பப்படுமென்று, இஸ்ரவேலின் தேவனா
கிய **கர்த்தர்** உரைக்கிறார் என்கிற வார்த்தை
யை அவர்களுடனே சொல்; அதற்கு அவர்
கள்: சகல ஜாடிகளும் திராட்சரசத்தினாலே
நிரப்பப்படுவது எங்களுக்குத் தெரியாதா என்
று உன்னுடனே சொல்லுவார்கள். அப்பொ 13
ழுது நீ அவர்களை நோக்கி: இதோ, இந்தத்
தேசத்தின் குடிகளெல்லாரையும், தாவீதின்
சிங்காசனத்தின்மேல் உட்கார்ந்திருக்கிற ராஜா
க்களையும், ஆசாரியர்களையும், தீர்க்கதரிசிகளை
யும், எருசலேமின் குடிகள் எல்லாரையும் [9]நான்
வெறியினால் நிரப்பி, பிதாக்களும் பிள்ளை 14
களுமாகிய அவர்களை ஒருவர்மேல் ஒருவர்
மோதி விழும்படிப் பண்ணுவேன் என்று **கர்
த்தர்** சொல்லுகிறார்; [10]நான் அவர்களை அழிப்
பதேயன்றி மன்னிப்பதுமில்லை, தப்பவிடுவது
மில்லை, இரங்குவதுமில்லையென்று **கர்த்தர்**
உரைக்கிறார் என்று சொல் என்றார்.
நீங்கள் செவிகொடுத்துக் கேளுங்கள்; மேட் 15
டிமையாய் இராதேயுங்கள்; **கர்த்தர்** விளம்பி
னார். அவர் அந்தகாரத்தை வரப்பண்ணுவ 16
தற்கு முன்னும், இருண்ட மலைகளில் உங்கள்
கால்கள் இடறுவதற்கு முன்னும், நீங்கள் வெ
ளிச்சத்துக்குக் காத்திருக்கும்போது, [11]அவர்
அதை அந்தகாரமும் காரிருளுமாக மாறப்பண்
ணுவதற்கு முன்னும், [12]உங்கள் தேவனாகிய **கர்
த்தருக்கு** மகிமையைச் செலுத்துங்கள். நீங்கள் 17
இதைக் கேளாமற்போனீர்களானால், [13]என்
ஆத்துமா மறைவிடங்களில் உங்கள் பெருமை
யினிமித்தம் துக்கித்து, **கர்த்தருடைய** மந்தை
சிறைப்பட்டுப்போனதென்று. என் கண் மிக
வும் அழுது கண்ணீர் சொரியும். நீங்கள் ரா 18
ஜாவையும், ராஜாத்தியையும் நோக்கி: தாழ
வந்து உட்காருங்கள்; [14]உங்கள் சிரசின் சிங்கார
மாகிய உங்கள் மகிமையின் கிரீடம் விழுந்த
தென்று சொல்லுங்கள். தெற்கிலுள்ள பட்ட 19
ணங்கள் அடைக்கப்பட்டன; அவைகளைத்
திறப்பார் இல்லை; யூதா அனைத்தும் குடிவிலக்
கப்பட்டுப்போம்; [15]அது சமூலமாய்ச் சிறைப்
பட்டுப்போம்.
உங்கள் கண்களை ஏறெடுத்து, வடக்கேயி 20
ருந்து வருகிறவர்களைப் பாருங்கள்; உனக்குக்
கொடுக்கப்பட்டிருந்த மந்தையும், [16]உன் மகி
மையான ஆட்டுக்கிடையும் எங்கே? அவர் 21

[1] லேவி. 26. 16. உபா. 28. 38
[2] சகரி. 2. 8, 9
[3] உபா. 30. 3. எசே. 28. 25
[4] எபே. 2. 19–22. 1 பே. 2. 5
[5] ஏசா. 60. 12
[6] லேவி. 26. 19
[7] 16. 12. ஏசா. 3. 24
[8] யாத். 19. 5
[9] 25. 15, 27. ஏசா. 51. 11, 21: 68. 6
[10] சங். 2. 9
[11] ஏசா. 59. 1, 9. ஆமோ. 8. 9
[12] யோசு. 7. 19
[13] 9. 1. சங். 119. 136
[14] 22. 26. 2 இரா. 24. 12
[15] 2 இரா. 25. 21
[16] 6. 22–24

உன்னை விசாரிக்கும்போது என்னசொல்லு
வாய்? அவர்கள் உன்மேல் ஆதிக்கக்காரரும்
தலைவருமாயிருக்க, நீ அவர்களைப் பழக்குவித்
தாயே; கர்ப்பவதிக்குப் பிரசவவேதனை உண்
டாகும்போது உண்டாகும் வேதனைகளைப்
போல் வேதனைகள் உன்னைப் பிடிப்பதில்லை
22 யோ? இவைகள் எனக்கு நேரிட்டது ஏனெ
ன்று நீ உன் இருதயத்தில் சொன்னாயாகில்,
[1]உன் திரளான அக்கிரமத்தினிமித்தமே உன்
வஸ்திரத்து ஓரங்கள் விலக்கப்பட்டு, உன்
பாதங்கள் பலவந்தஞ் செய்யப்படுகின்றன.
23 எத்தியோப்பியன் தன் தோலையும், சிவிங்கி
தன் புள்ளிகளையும் மாற்றக்கூடுமோ? கூடுமா
னால், தீமைசெய்யப் பழகின நீங்களும் நன்
24 மைசெய்யக் கூடும். ஆதலால் வனாந்தரக் காற்
றால் பறக்கடிக்கப்படும் துரும்பைப்போல
25 [2]அவர்களைச் சிதறடிப்பேன். நீ என்னை மறந்
து, பொய்யை நம்பினபடியினாலே, [3]இது உன்
னுடைய வீதமும், என்னால் உனக்கு அளக்கப்
படும் உன்னுடைய பங்குமாயிருக்கும் என்று
26 கர்த்தர் சொல்லுகிறார். உன் மானம் காணப்
பட நான் உன் வஸ்திரத்து ஓரங்களை [4]உன்
27 முகமட்டாக எடுத்துப்போடுவேன். உன்
விபசாரங்களையும், உன் கனைக்குதல்களையும்,
வெளியிலே மேடுகளின்மேல் நீ பண்ணின
வேசித்தனத்தின் முறைகேடுகளாகிய உன்
அருவருப்புகளையும் நான் கண்டேன்; [5]எருச
லேமே, உனக்கு ஐயோ! நீ சுத்திகரிக்கப்பட
மாட்டாயா? இது இன்னும் எத்தனை காலத்
துக்குப்பின் நடக்கும் என்கிறார்?

**14** மழைத்தாழ்ச்சியைக்குறித்து எரேமியா
வுக்கு உண்டான **கர்த்தருடைய** வசனம்:
2 யூதா துக்கிக்கிறது, அதின் *வாசல்கள் பெல
னற்றுக் கிடக்கிறது; [6]தரைமட்டும் குனி
ந்து, கரிகறுத்துத் திரிகிறார்கள்; எருசலேமின்
3 கூக்குரல் எழும்புகிறது. அவர்களில் பிரபல
மானவர்கள் தங்கள் சிறுவர்களைத் தண்ணீ
ருக்கு அனுப்புகிறார்கள்; இவர்கள் பள்ளங்க
ளுக்குப் போய் தண்ணீரைக் காணாமல்
வெறும் பாத்திரங்களோடே திரும்பிவருகி
றார்கள்; வெட்கி நாணி, தங்கள் தலையை
4 மூடிக்கொள்ளுகிறார்கள். தேசத்தின்மேல்
மழை இல்லாததினால் தரை வெடித்திருக்கி
றது; பயிர் செய்கிறவர்கள் வெட்கி, தங்கள்
5 தலையை மூடிக்கொள்ளுகிறார்கள். வெளி
யின் பெண்மானும் குட்டிப்போட்டு, புல்லில்
லாததினால் அதை விட்டு ஓடிப்போகும்.
6 காட்டுக்கழுதைகள் மேடுகளில் நின்று, வலு
சர்ப்பங்களைப்போல் காற்றை உட்கொள்ளு
கிறது; புல் இல்லாததினால் அவைகளுடைய
கண்கள் பூத்துப்போகிறது என்றார்.
7 **கர்த்தாவே**, எங்கள் அக்கிரமங்கள் எங்
களுக்கு விரோதமாய்ச் சாட்சியிட்டாலும்,
[7]உம்முடைய நாமத்தினிமித்தம் கிருபைசெய்
யும்; எங்கள் சீர்கேடுகள் மிகுதியாயிருக்கிறது;
உமக்கு விரோதமாய்ப் பாவஞ் செய்தோம்.
8 இஸ்ரவேலின் நம்பிக்கையே, [8]ஆபத்துக்கா
லத்தில் அதின் ரட்சகரே, நீர் தேசத்தில் பர
தேசியைப்போலவும், இராத்தங்க இறங்குகிற
வழிப்போக்கனைப்போலவும் இருப்பானேன்?
நீர் விடாய்த்துப்போன புருஷனைப்போல 9
வும், ரட்சிக்கமாட்டாத பராக்கிரமசாலி
யைப்போலவும் இருப்பானேன்? [9]**கர்த்தாவே**,
நீர் எங்கள் நடுவிலிருக்கிறவராமே; உம்மு
டைய நாமம் எங்களுக்குத் தரிக்கப்பட்டிருக்
கிறதே; எங்களை விட்டுப் போகாதிரும்.
அவர்கள் தங்கள் கால்களை அடக்கிக்கொள் 10
ளாமல், [10]அலைய விரும்புகிறார்களென்று **கர்த்**
**தர்** இந்த ஜனத்தைக் குறித்துச் சொல்லுகி
றார்; ஆகையால், **கர்த்தர்** அவர்கள்மேல் பிரிய
மாயிராமல், இப்பொழுது அவர்கள் அக்கிர
மத்தை நினைத்து, அவர்கள் பாவங்களை விசா
ரிப்பார். **கர்த்தர்** என்னை நோக்கி: நீ இந்த 11
ஜனத்துக்கு நன்மையுண்டாக [11]விண்ணப்பம்
பண்ணவேண்டாம். அவர்கள் உபவாசித்தா 12
லும், நான் அவர்கள் விண்ணப்பத்தைக் கேட்
பதில்லை; [12]அவர்கள் தகனபலிகளையும் காணிக்
கைகளையும் செலுத்தினாலும், நான் அவர்கள்
மேல் பிரியமாயிருப்பதில்லை; பட்டயத்தினா
லும் பஞ்சத்தினாலும் கொள்ளைநோயினாலும்
நான் அவர்களை நிர்மூலமாக்குவேன் என்றார்.
அப்பொழுது நான்: ஆ கர்த்தராகிய ஆண்ட 13
வரே, இதோ, [13]நீங்கள் பட்டயத்தைக் காண்
பதில்லை, உங்களுக்குப் பஞ்சமும் வருவ
தில்லை; உறுதியான சமாதானத்தையே இவ்வி
டத்தில் உங்களுக்குத் தருவோமென்றார் என்று
தீர்க்கதரிசிகள் அவர்களுக்குச் சொல்லுகிறார்
களே என்றேன். அப்பொழுது **கர்த்தர்** 14
என்னை நோக்கி: தீர்க்கதரிசிகள் என் நாமத்
தைக்கொண்டு பொய்யாய்த் தீர்க்கதரிசனஞ்
சொல்லுகிறார்கள். [14]நான் அவர்களை அனுப்
பினதுமில்லை, அவர்களுக்குக் கற்பித்தது
மில்லை, அவர்களோடே பேசினதுமில்லை;
அவர்கள் கள்ளத் தரிசனத்தையும், கள்ள சகு
னத்தையும், இல்லாத விசேஷத்தையும், தங்
கள் இருதயத்தின் கபடத்தையுமே, [15]உங்க
ளுக்குத் தீர்க்கதரிசனமாய்ச் சொல்லுகிறார்
கள். ஆதலால், நான் அனுப்பாதிருந்தும், 15
என் நாமத்தைக்கொண்டு தீர்க்கதரிசனஞ்
சொல்லி, [16]இந்தத் தேசத்திலே பட்டயமும்
பஞ்சமும் வருவதில்லையென்கிற தீர்க்கதரிசி
களைக்குறித்து: இப்படிப்பட்ட தீர்க்கதரிசிகள்
பட்டயத்தாலும் பஞ்சத்தாலும் சாவார்கள்.
அவர்களிடத்தில் தீர்க்கதரிசனம் கேட்கும் 16
ஜனங்களும், எருசலேமின் வீதிகளிலே பட்
டயத்தாலும் பஞ்சத்தாலும் அழிந்து, [17]அவர்க
ளும் அவர்கள் மனைவிகளும், அவர்கள் குமா
ரரும், அவர்கள் குமாரத்திகளும் அடக்கம்
பண்ணுவாரில்லாமல் கிடப்பார்கள்; அவர்க
ளுடைய பொல்லாப்பை அவர்கள்மேல் வரப்
பண்ணுவேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறார்.
என் கண்களிலிருந்து இரவும் பகலும் ஓயா 17
மல் கண்ணீர் ஓடிக்கொண்டிருக்கும்; [18]என்
ஜனமென்கிற குமாரத்தியாகிய கன்னிகை

[1] 16. 10, 11. ஓசி. 12. 8
[2] சங். 1. 4. ஓசி. 13. 3
[3] ஏசா. 28. 15
[4] ஓசி. 2. 10
[5] ஏசா. 65. 7. எசே. 6. 13. ஓசி. 8. 5
* பட்டணங்கள்.
[6] ஏசா. 3. 26. புல. 2. 9. ழ
[7] சங். 25. 11. தானி. 9. 9
[8] 17. 13. சங். 46. 1. யோவே. 3. 16. 1 தீமோ. 1. 1
[9] யாத். 29. 45, 46. ஏசா. 59. 1
[10] 2. 25. ஓசி. 9. 9
[11] யாத். 32. 10
[12] நீதி. 1. 28. ஏசா. 1. 15. சகரி. 7. 13
[13] 28. 2. ழ
[14] 27. 10, 15
[15] ஏசா. 30. 10. புல. 2. 14
[16] 5. 12, 13
[17] சங். 79. 3
[18] 8. 21. புல. 1. 16; 2. 1, 13, 18

மகா வேதனையுள்ள அடியினாலும் கொடிய
18 காயத்தினாலும் சேதப்பட்டிருக்கிறாள். நான்
வெளியே போனால், [1]இதோ, பட்டயத்தால்
கொல்லப்பட்டவர்கள்; நகரத்தில் வந்தால்,
இதோ, பஞ்சத்தால் வருந்துகிறவர்கள்; தீர்க்
கதரிசிகளும் ஆசாரியர்களும் ஒன்றும் அறி
யாமல் தேசத்தில் அலைகிறார்கள் என்னும்
இந்த வார்த்தையை அவர்களுக்குச் சொல்
என்றார்.
19 யூதாவை முற்றிலும் வெறுத்தீரோ? [2]சீ
யோன் உம்முடைய ஆத்துமாவுக்கு அரோசி
கமாயிற்றோ? நாங்கள் ஆரோக்கியம் அடையக்
கூடாதபடி எங்களை ஏன் அடித்தீர்? [3]சமாதா
னத்துக்குக் காத்திருந்தோம், ஒரு நன்மையு
மில்லை; ஆரோக்கியகாலத்துக்குக் காத்திருந்
20 தோம், இதோ, ஆபத்து. **கர்த்தாவே**, எங்
கள் தீமையையும் எங்கள் பிதாக்களின் அக்கி
ரமத்தையும் நாங்கள் *அறிந்திருக்கிறோம்;
[4]உமக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தோம்.
21 உம்முடைய நாமத்தினிமித்தம் எங்களை அரு
வருக்காதிரும், [5]உமது மகிமையின் சிங்கா
சனத்தைக் கனவீனப் படுத்தாதேயும்; [6]எங்
களோடே உமக்கு இருக்கிற உடன்படிக்கை
†அபத்தமாகாதபடி எங்களை நினைத்தருளும்.
22 புறஜாதிகளுடைய வீணான தேவர்களுக்குள்
மழை வருஷிக்கப்பண்ணத்தக்கவர்கள் உண்
டோ? [7]அல்லது, வானங்கள் தானாய் மழை
களைக் கொடுக்குமோ? எங்கள் தேவனாகிய
**கர்த்தராயிருக்கிற** நீரல்லவோ அதைச் செய்
கிறவர், [8]ஆகையால், உமக்குக் காத்திருக்கி
றோம்; தேவரீர் இவைகளையெல்லாம் உண்டு
பண்ணினீர்.

15 **கர்த்தர்** என்னை நோக்கி: மோசேயும்
சாமுவேலும் என் முகத்துக்கு முன்பாக நின்
றாலும், என் மனம் இந்த ஜனங்கள் பட்ச
மாய்ச் சாராது; [9]இவர்கள் என் முகத்தைவிட்
டுப் புறப்பட்டுப்போகும்படி இவர்களைத் துரத்
2 திவிடு, எங்கே புறப்பட்டுப்போவோம் என்று
இவர்கள் உன்னைக் கேட்டால், நீ அவர்களை
நோக்கி: சாவுக்கு ஏதுவானவர்கள் சாவுக்கும்,
[10]பட்டயத்துக்கு ஏதுவானவர்கள் பட்டயத்
துக்கும், பஞ்சத்துக்கு ஏதுவானவர்கள் பஞ்
சத்துக்கும், சிறையிருப்புக்கு ஏதுவானவர்கள்
சிறையிருப்புக்கும் நேராய்ப் போகவேண்
டும் என்று **கர்த்தர்** உரைக்கிறார் என்று சொ
3 ல்லு. கொன்றுபோடப் பட்டயமும், பிடி
த்து இழுக்க நாய்களும், பட்சித்து அழிக்க
ஆகாயத்துப் பறவைகளும், பூமியின் மிருகங்
களும் [11]ஆகிய நான்குவிதமான வாதைகளை
நான் அவர்கள்மேல் வரக் கட்டளையிடுவேன்
4 என்று **கர்த்தர்** சொல்லுகிறார். எசேக்கியா
வின் குமாரனும், யூதாவின் ராஜாவுமாகிய ம
னாசே எருசலேமில் செய்தவைகளினிமித்தம்
[12]அவர்களைப் பூமியிலுள்ள எல்லா ராஜ்யங்க
5 ளிலும் அலையப்பண்ணுவேன். எருசலேமே,
யார் உன்மேல் இரங்குவார்கள்? [13]யார் உன்
மேல் பரிதபிப்பார்கள்? யார் உன்னிடத்தில்
குத்திரும்பி, உன் சுகசெய்தியை விசாரிப்பார் 6
கள்? நீ என்னை விட்டுப் பின்வாங்கிப்போ
னாய்; ஆகையால், என் கையை உனக்கு
விரோதமாய் நீட்டி, உன்னை அழிப்பேன்;
[14]நான் பொறுத்துப் பொறுத்து இளைத்துப்போ
னேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறார். தேசத் 7
தின் வாசல்களில் அவர்களைத் [15]தூற்றுக்கூ
டையால் தூற்றிப்போடுவேன்; [16]என் ஜனங்
கள் தங்கள் வழிகளை விட்டுத் திரும்பாதபடி
யினால் நான் அவர்களைப் பிள்ளைகள் அற்றவர்
களாக்கி அழிப்பேன். சமுத்திரக்கரை மணலைப் 8
பார்க்கிலும் அதிக விதவைகள் அவர்களில்
உண்டாயிருப்பார்கள்; பட்டப்பகலிலே பாழா
க்குகிறவனைத் தாயின்மேலும் பிள்ளைகளின்
மேலும் வரப்பண்ணுவேன்; அவர்கள்மேல்
பட்டணத்தின் கலகத்தையும், பயங்கரங்களை
யும் விழப்பண்ணுவேன். ஏழு பிள்ளைகளைப் 9
பெற்றவள் களைத்துப்போகிறாள்; அவள் தன்
பிராணனை விட்டுவிட்டாள்; [17]இன்னும் பக
லாயிருக்கையில் அவளுடைய சூரியன் அஸ்
தமித்தது; வெட்கமும் இலச்சையும் அடைந்
தாள்; அவர்களில் மீதியாகிறவர்களையோ
அவர்களுடைய சத்துருக்களுக்கு முன்பாகப்
பட்டயத்துக்கு ஒப்புக்கொடுப்பேன் என்று
**கர்த்தர்** சொல்லுகிறார்.
என் தாயே, தேசத்துக்கெல்லாம் வழக்குக் 10
கும் வாதுக்கும் உள்ளானவனாயிருக்கும்படி
என்னை நீ பெற்றாயே; [18]ஐயோ! நான் அவர்
களுக்கு வட்டிக்குக் கொடுத்ததுமில்லை, அவர்
கள் எனக்கு வட்டிக்குக் கொடுத்ததுமில்லை;
ஆனாலும், எல்லாரும் என்னைச் சபிக்கிறார்
கள். உன்னில் மீதியாயிருப்பவர்கள் நன்மை 11
யடைவார்கள்; [19]தீங்கின் காலத்திலும் நெருக்
கத்தின் காலத்திலும் உனக்காக நான் சத்
துருவுக்கு எதிர்ப்பட்டு, உனக்குச் சகாயஞ்
செய்வேன் என்று மெய்யாகவே சொல்லுகி
றேன்.
வடக்கேயிருந்து வரும் இரும்பையும் 12
வெண்கலத்தையும் இரும்பு நொறுக்குமோ?
உன்னுடைய எல்லாப் பாவங்களினிமித்த 13
மும், உன்னுடைய எல்லா எல்லைகளிலும்,
நான் உன் ஆஸ்தியையும், [20]உன் பொக்கிஷங்
களையும் கிரயமில்லாமல் சூறையிடுவிப்பேன்.
நீ அறியாத தேசத்தில் உன் சத்துருக்கள் வச 14
மாக நான் உன்னைத் தாண்டிப் போகப்பண்
ணுவேன்; [21]உங்கள்மேல் எரியப்போகிற அக்
கினி என் கோபத்தினாலே மூண்டது என்று
**கர்த்தர்** சொன்னார்.
**கர்த்தாவே**, நீர் அதை அறிவீர்; தேவரீர் 15
என்னை நினைத்து, என்னை விசாரித்து, [22]என்
னைத் துன்பப்படுத்துகிறவர்களுக்கு என்னி
மித்தம் நீதியைச் சரிக்கட்டும்; உம்முடைய
நீடிய பொறுமையினிமித்தம் என்னை வாரிக்
கொள்ளாதிரும்; [23]நான் உம்முடைய நிமித்
தம் நிந்தையைச் சகிக்கிறேன் என்று அறி
யும். உம்முடைய வார்த்தைகள் கிடைத்தவு 16
டனே அவைகளை ‡உட்கொண்டேன்; [24]உம்

1 புல. 1. 20. எசே. 7. 15
2 புல. 5. 22
3 15. 18
* அறிக்கையிடுகி றோம்.
4 சங். 106. 6. தானி. 9. 8
5 சங். 51. 11
6 சங். 74. 1, 2, 20; 106. 45
† மீறுதபடி.
7 சகரி. 10. 1, 2
8 சங். 135. 7. எசா. 30. 23
9 1 சாமு. 7. 9. சங். 99. 6. எசே. 14. 14. ழி
10 43. 11. எசே. 5. 2, 12. சகரி. 11. 9
11 லேவி. 26. 16. எசே. 14. 21
12 உபா. 28. 25. 2 இரா. 24. 3, 4
13 எசா. 51. 19
14 ஓசி. 13. 14
15 மத். 3. 12
16 ஆமோ. 4. 10, 11
17 1 சாமு. 2. 5. ஆமோ. 8. 9
18 யோபு 3. 1. ழி
19 சங். 106. 46. பிர. 8. 12
20 17. 3. சங். 44. 12
21 உபா. 32. 22
22 12. 3. யாத். 18. 7, 8. சோ. 12. 19
23 சங். 69. 7. மத். 19. 29
‡ புசித்தேன், எசே. 3. 1–3. வெளி. 10. 9, 10
24 யோபு 23. 12. சங். 119. 72, 111; எசே. 3. 1, 3. வெளி. 10. 9, 10

முடைய வார்த்தைகள் எனக்குச் சந்தோஷ
மும், என் இருதயத்துக்கு மகிழ்ச்சியுமாயிருந்
தது; சேனைகளின் தேவனாகிய **கர்த்தாவே**,
உம்முடைய நாமம் எனக்குத் தரிக்கப்பட்டி
17 ருக்கிறது. நான் பரிகாசக்காரருடைய கூட்
டத்தில் உட்கார்ந்து களிகூர்ந்ததில்லை; [1]உமது
கரத்தினிமித்தம் தனித்து உட்கார்ந்தேன்;
18 சலிப்பினால் என்னை நிரப்பினீர். என் நோவு
நித்திய காலமாகவும், [2]என் காயம் ஆறாத
கொடிய புண்ணாகவும் இருப்பானேன்? நீர்
எனக்கு நம்பப்படாத ஊற்றைப்போலவும்,
வற்றிப்போகிற ஜலத்தைப்போலவும் இருப்
பீரோ?
19 இதினிமித்தம்: நீ திரும்பினால் நான் உன்
னைத் திரும்பச் சீர்ப்படுத்துவேன்; [3]என் முக
த்துக்கு முன்பாக நிலைத்துமிருப்பாய்; நீ தீழ்
ப்பானதினின்று விலையேறப்பெற்றதைப் பி
ரித்தெடுத்தால், [4]என் வாய்போலிருப்பாய்;
நீ அவர்களிடத்தில் திரும்பாமல், அவர்கள்
உன்னிடத்தில் திரும்புவார்களாக என்று **கர்**
20 **த்தர்** சொல்லுகிறார். உன்னை இந்த ஜனத்
துக்கு எதிரே அரணான வெண்கல அலங்க
மாக்குவேன்; அவர்கள் உனக்கு விரோதமாக
யுத்தம்பண்ணுவார்கள், ஆனாலும் உன்னை
மேற்கொள்ளமாட்டார்கள்; உன்னை ரட்சிப்
பதற்காகவும், உன்னைத் தப்புவிப்பதற்காக
வும், நான் உன்னுடனே இருக்கிறேன் என்று
21 **கர்த்தர்** சொல்லுகிறார். நான் உன்னைப் பொ
ல்லாதவர்களின் கைக்குத் தப்புவித்து, உன்
னைப் பலவந்தரின் கைக்கு நீங்கலாக்கி விடு
விப்பேன் என்கிறார்.

16 **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண்
2 டாகி, அவர்: நீ பெண்ணை விவாகம் பண்ண
வேண்டாம்; இவ்விடத்தில் உனக்குக் குமார
ரும் குமாரத்திகளும் இருக்கவேண்டாம் என்
3 றார். இவ்விடத்திலே பிறக்கிற குமாரரை
யும் குமாரத்திகளையும், இந்த தேசத்தில் அவர்
களைப் பெற்ற தாய்களையும் அவர்களைப் பெ
ற்ற பிதாக்களையுங் குறித்துக் **கர்த்தர்** சொல்
4 லுகிறது என்னவென்றால், மகா கொடிய
வியாதிகளால் சாவார்கள், [5]அவர்களுக்காகப்
புலம்புவாரும், அவர்களை அடக்கம் பண்ணு
வாருமில்லை, நிலத்தின்மேல் எருவாவார்கள்;
பட்டயத்தாலும் பஞ்சத்தாலும் மடிந்துபோ
வார்கள்; அவர்களுடைய பிரேதம் ஆகாசத்
துப் பறவைகளுக்கும் பூமியின் மிருகங்களுக்
5 கும் இரையாகும். ஆகையால், நீ துக்கவீட்
டில் பிரவேசியாமலும், புலம்பப்போகாமலும்,
[6]அவர்களுக்குப் பரிதபிக்காமலும் இருப்பா
யாக என்று **கர்த்தர்** சொல்லுகிறார்; என் சமா
தானத்தையும், கிருபையையும், இரக்கத்தை
யும், இந்த ஜனத்தைவிட்டு எடுத்துப்போட்
6 டேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறார். இந்த
தேசத்திலே பெரியோரும் சிறியோரும் சா
வார்கள்; அவர்களை அடக்கம் பண்ணுவாரி
ல்லை; [7]அவர்களுக்காகப் புலம்புவாருமில்லை;
அவர்கள் நிமித்தம் கீறிக்கொண்டு, மொட்

1 சங். 1. 1. 26. 4, 5
2 30. 15
3 சகரி. 3. 7
4 எசே. 22. 26: 44. 23
5 15. 2
6 எசே. 24. 17, 22, 23
7 22. 18. லேவி. 19. 28. உபா. 14. 1. ஏசா. 22. 12
8 நீதி. 31. 6, 7
9 சங். 26. 4. 1 கொரி. 5. 11
10 ஓசி. 2. 11. வெளி. 18. 23
11 உபா. 29. 24
12 உபா. 29. 25
13 உபா. 4. 26-28: 28. 63-65
14 23. 7, 8. ஏசா. 43. 18
15 24. 6: 30. 3: 32. 37
16 ஆமோ. 4. 2. ஆப. 1. 15

டையடித்துக் கொள்வாருமில்லை. செத்தவர் 7
கள்நிமித்தம் உண்டான துக்கத்தை ஆற்ற
அவர்களுக்கு அப்பம் பங்கிடப்படுவதுமில்லை;
ஒருவனுடைய தகப்பனுக்காவது, ஒருவனு
டைய தாய்க்காவது துக்கப்படுகிறவர்களுக்
குத் [8]தேற்றரவின் பாத்திரத்தைக் குடிக்கக்
கொடுப்பாருமில்லை. நீ அவர்களோடே புசி 8
த்துக் குடிக்க [9]உட்காரும்படி விருந்து வீட்டி
லும் பிரவேசியாயாக. ஏனெனில், இதோ, 9
இவ்விடத்திலே நான் உங்கள் கண்களுக்கு
முன்பாகவும், உங்கள் நாட்களிலுமே, சந்தோ
ஷத்தின் சத்தத்தையும், மகிழ்ச்சியின் சத்தத்
தையும், மணவாளனின் சத்தத்தையும், மண
வாட்டியின் சத்தத்தையும் ஓயப்பண்ணுவேன்
[10]என்று இஸ்ரவேலின் தேவனாகிய சேனை
களின் **கர்த்தர்** சொல்லுகிறார். நீ இந்த வார்த் 10
தைகளையெல்லாம் இந்த ஜனத்துக்கு அறி
விக்கும்போது, அவர்கள் உன்னை நோக்கி:
**கர்த்தர்** எங்கள்மேல் இத்தனை பெரிய தீங்
கைக் கூறுவானேனென்றும், [11]நாங்கள் செ
ய்த அக்கிரமம் என்ன? நாங்கள் எங்கள் தே
வனாகிய **கர்த்தருக்கு** விரோதமாகச் செய்த
எங்கள் பாவம் என்ன? என்றும் கேட்பார்க
ளானால், நீ அவர்களை நோக்கி: [12]உங்கள் 11
பிதாக்கள் என்னை விட்டு அந்நிய தேவர்
களைப் பின்பற்றி, அவர்களைச் சேவித்து,
அவர்களைப் பணிந்துகொண்டு, என் நியாயப்
பிரமாணத்தைக் கைக்கொள்ளாமல் என்னை
விட்டுவிட்டார்களே. நீங்கள் உங்கள் பிதாக் 12
களைப்பார்க்கிலும் அதிக கேடாக நடந்தீர்
களே; இதோ, உங்களில் ஒவ்வொருவரும்
என் சொல்லைக் கேளாதபடிக்கு, உங்கள்
பொல்லாத இருதய கடினத்தின்படி நடக்கி
றீர்கள். ஆதலால், உங்களை இந்த தேசத்தி 13
லிருந்து நீங்களும் உங்கள் பிதாக்களும் அறி
யாத தேசத்திற்குத் துரத்திவிடுவேன்; [13]அங்
கே இரவும் பகலும் அந்நிய தேவர்களைச் சே
விப்பீர்கள்; அங்கே நான் உங்களுக்குத் தயை
செய்வதில்லை.
ஆதலால், இதோ, நாட்கள் வரும், [14]அப் 14
பொழுது இஸ்ரவேல் புத்திரரை எகிப்து தே
சத்திலிருந்து வரப்பண்ணின **கர்த்தருடைய**
ஜீவனைக்கொண்டு இனிமேல் சத்தியம்பண்
ணாமல், இஸ்ரவேல் புத்திரரை வடதேசத்தி 15
லும், தாம் அவர்களைத் துரத்திவிட்ட எல்லா
தேசங்களிலுமிருந்து வரப்பண்ணின **கர்த்தரு**
**டைய** ஜீவனைக்கொண்டு சத்தியம் பண்ணு
வார்கள்; [15]நான் அவர்கள் பிதாக்களுக்குக் கொ
டுத்த அவர்களுடைய தேசத்துக்கு அவர்களைத்
திரும்பி வரப்பண்ணுவேன் என்று **கர்**
**த்தர்** சொல்லுகிறார். இதோ, நான் மீன் 16
பிடிக்கிற அநேகரை அழைத்தனுப்புவேன்,
[16]இவர்கள் அவர்களைப் பிடிப்பார்கள்; அதற்
குப் பின்பு வேட்டைக்காரராகிய அநேகரை
அழைத்தனுப்புவேன், இவர்கள் அவர்களை
எல்லா மலைகளிலும், எல்லாக் குன்றுகளி
லும், கன்மலைகளின் வெடிப்புகளிலும் வேட்

17 டையாடுவார்கள். என் கண்கள் அவர்களு
டைய எல்லா வழிகளின்மேலும் நோக்கமா
யிருக்கிறது; [1]அவைகள் என் முகத்துக்கு
முன்பாக மறைந்திருக்கிறதில்லை; அவர்களு
டைய அக்கிரமம் என் கண்களுக்கு முன்பாக
18 மறைவாயிருக்கிறதுமில்லை. முதலாவது நான்
அவர்களுடைய அக்கிரமத்துக்கும், அவர்களு
டைய பாவத்துக்கும் இரட்டிப்பாய் நீதியைச்
சரிக்கட்டுவேன்; [2]அவர்கள் என் தேசத்தைத்
தீட்டுப்படுத்தி, என் சுதந்தரத்தைச் சீயென்று
அருவருக்கப்படத்தக்க தங்கள் காரியங்களின்
நாற்றமான விக்கிரகங்களினாலே நிரப்பினார்
19 கள் என்று **கர்த்தர்** சொல்லுகிறார். என்
பெலனும், என் கோட்டையும், நெருக்கப்
படுகிற நாளில் என் அடைக்கலமுமாகிய
**கர்த்தாவே**, [3]புறஜாதிகள் பூமியின் கடை
யாந்தரங்களிலிருந்து உம்மிடத்தில் வந்து:
[4]மெய்யாகவே, எங்கள் பிதாக்கள் பிரயோ
ஜனமில்லாத பொய்யையும் மாயையையும்
20 கைப்பற்றினார்கள் என்பார்கள். மனுஷன்
தனக்கு தேவர்களை உண்டுபண்ணலாமோ?
21 [5]அவைகள் தேவர்கள் அல்லவே. ஆதலால்,
இதோ, இப்பொழுது நான் அவர்களுக்குத்
தெரியப்பண்ணுவேன்; என் கரத்தையும்
என் பெலத்தையுமே அவர்களுக்குத் தெரி
யப்பண்ணுவேன்; என் நாமம் *யேகோவா
என்று அறிந்துகொள்வார்கள்.

**17** யூதாவின் பாவம் இரும்பெழுத்தாணியினா
லும், [6]வைரத்தின் நுனியினாலும் எழுதப்
பட்டு, அவர்களுடைய இருதயத்தின் பலகை
யிலும் உங்கள் பலிபீடங்களுடைய கொம்பு
2 களிலும் பதிந்திருக்கிறது. உயர்ந்த மேடுக
ளின்மேல் பச்சையான மரங்களண்டையில்
இருந்த அவர்களுடைய பலிபீடங்களையும்
அவர்களுடைய தோப்புகளையும் [7]அவர்கள்
பிள்ளைகள் நினைக்கும்படி இப்படிச் செய்தி
3 ருக்கிறது. வயல் நிலத்திலுள்ள என் மலையே,
[8]நீ உன் எல்லைகளிலெல்லாம் செய்த பாவத்
தினிமித்தம் நான் உன் ஆஸ்தியையும், உன்
எல்லாப் பொக்கிஷங்களையும், உன் மேடை
4 களையுங் கூடச் சூறையிடுவிப்பேன். அப்ப
டியே நான் உனக்குக் கொடுத்த சுதந்தரத்தை
நீதானே விட்டுவிடுவாய்; நீ அறியாத தேசத்
தில் உன்னை உன் சத்துருக்களுக்கு அடிமை
யுமாக்குவேன்; [9]என்றென்றைக்கும் எரியத்
தக்க என் கோபத்தின் அக்கினியை மூட்டி
விட்டீர்களே.

5 மனுஷன்மேல் நம்பிக்கைவைத்து, [10]மாம்
சமானதைத் தன் புயபலமாக்கிக்கொண்டு,
**கர்த்தரை** விட்டு விலகுகிற இருதயமுள்ள
மனுஷன் சபிக்கப்பட்டவன் என்று **கர்த்தர்**
6 சொல்லுகிறார். அவன் அந்தரவெளியில் கற
ளையாய்ப்போன செடியைப்போலிருந்து, நன்
மை வருகிறதைக் காணாமல், [11]வனாந்தரத்தின்
வறட்சியான இடங்களிலும், குடியில்லாத
7 உவர்நிலத்திலும் தங்குவான். **கர்த்தர்**மேல்
நம்பிக்கைவைத்து, [12]**கர்த்தரைத்** தன் நம்பிக்
கையாகக் கொண்டிருக்கிற மனுஷன் பாக்கி
யவான். அவன் தண்ணீரண்டையிலே நாட் 8
டப்பட்டதும், [13]கால்வாய் ஓரமாகத் தன் வேர்
களை விடுகிறதும், உஷ்ணம் வருகிறதைக்
காணாமல் இலை பச்சையாயிருக்கிறதும்,
மழைத்தாழ்ச்சியான வருஷத்தில் வருத்த
மின்றித் தப்பாமல் கனிகொடுக்கிறதுமான
மரத்தைப்போலிருப்பான். எல்லாவற்றைப் 9
பார்க்கிலும் இருதயமே திருக்குள்ளதும் மகா
கேடுள்ளதுமாயிருக்கிறது, [14]அதை அறியத்
தக்கவன் யார்? **கர்த்தராகிய** நானே ஒவ் 10
வொருவனுக்கும், அவனவன் வழிகளுக்கும்
செய்கைகளின் பலன்களுக்கும் தக்கதைக்
கொடுக்கும்படிக்கும், [15]இருதயத்தை ஆராய்
கிறவரும் உள்ளிந்திரியங்களைச் சோதித்தறிகி
றவருமாயிருக்கிறேன். அநியாயமாய் ஐசுவ 11
ரியத்தைச் சம்பாதிக்கிறவன் முட்டையிட்டு
அவயங்காத்தும், குஞ்சுபொரிக்காமற்போகிற
கவுதாரிக்குச் சமானமாயிருக்கிறான்; [16]அவன்
தன் பாதி வயதிலே அதை விட்டு, தன் முடி
விலே மூடனாயிருப்பான்.

எங்கள் பரிசுத்த ஸ்தானம் ஆதிமுதற் 12
கொண்டு [17]உயர்ந்த மகிமையுள்ள சிங்காசன
மாயிருக்கிறது. இஸ்ரவேலின் நம்பிக்கையா 13
கிய **கர்த்தாவே**, உம்மைவிட்டு விலகுகிற
யாவரும் வெட்கப்படுவார்கள்; அவர்கள் ஜீவ
னுள்ள தண்ணீரின் ஊற்றாகிய [18]**கர்த்தரை**
விட்டு விலகிப்போனபடியால், உம்மைவிட்டு
அகன்று போகிறவர்களின் பெயர் புழுதியில்
எழுதப்படும். **கர்த்தாவே**, என்னைக் குண 14
மாக்கும், அப்பொழுது குணமாவேன்; என்
னை ரட்சியும், அப்பொழுது ரட்சிக்கப்படு
வேன்; தேவரீரே [19]என் துதி. இதோ, 15
இவர்கள் என்னைப் பார்த்து: **கர்த்தருடைய**
வார்த்தை எங்கே? [20]அது இப்பொழுது வரட்
டும் என்கிறார்கள். நானோ உம்மைப் பின் 16
பற்றுகிற மேய்ப்பன், இதற்கு நான் மிஞ்சி
நடக்கவில்லை; ஆபத்துநாளை விரும்புகிறது
மில்லையென்று நீர் அறிவீர்; என் உதடுகளி
லிருந்து புறப்பட்டது உமக்கு முன்பாகச்
செவ்வையாயிருந்தது. நீர் எனக்குப் பயங் 17
கரமாயிராதேயும்; [21]தீங்குநாளில் நீரே என்
அடைக்கலம். நான் வெட்கப்படாமல், என் 18
னைத் துன்பப்படுத்துகிறவர்கள் வெட்கப்படு
வார்களாக; நான் கலங்காமல், அவர்கள்
கலங்குவார்களாக; தேவரீர் தீங்குநாளை அவர்
கள்மேல் வரப்பண்ணி, இரட்டிப்பான நொ
றுக்குதலால் அவர்களை நொறுக்கும்.

**கர்த்தர்** என்னை நோக்கி: நீ போய் யூதா 19
வின் ராஜாக்கள் வரத்தும் போக்குமாயிருக்
கிற இந்த ஜனங்களின் புத்திரருடைய வாச
லிலும் எருசலேமின் எல்லா வாசல்களிலும்
நின்றுகொண்டு, அவர்களுடனே சொல்ல 20
வேண்டியது என்னவென்றால்: இந்த வாசல்
களில் பிரவேசிக்கிற யூதாவின் ராஜாக்களும்,
எல்லா யூதரும், எருசலேமின் எல்லாக் குடி
களுமாகிய நீங்கள் **கர்த்தருடைய** வார்த்தை

1 32. 19. யோபு. 34. 21, 22. சங். 139. 3
2 ஏசா. 40. 2. எசே. 48. 7. 9
3 சங். 18. 2; 27. 5. ஏசா. 60. 3; 62. 2
4 ஏசா. 44. 10
5 ஏசா. 37. 19. கலா. 4. 8
* கர்த்தர். சங். 83. 17
6 யோபு 19. 24. நீதி. 3. 3, 2 கொ. 3. 3
7 2 நாளா. 24. 18. ஏசா. 1. 29
8 15. 13. புல. 5. 17, 18
9 நெகே. 9. 28
10 சங். 146. 3-5. ஏசா. 30. 1, 2; 31. 1-3
11 நியா. 9. 45
12 சங். 2. 12; 34. 8; 84. 12. நீதி. 16. 20
13 சங். 1. 3
14 மத். 15. 19
15 1 நாளா. 28. 9. ரோ. 8. 27. கலா. 6. 7, 8. வெளி. 2. 23
16 ஆப. 2. 6-11. லூ. 12. 20
17 சங். 96. 6; 103. 19
18 யோ. 10. 20. யோ. 4. 10, 14
19 உபா. 10. 21
20 ஏசா. 5. 19. 2 பே. 3. 4
21 16. 19

21 யைக் கேளுங்கள். நீங்கள் ஓய்வுநாளில் சுமை
களை எடுத்து, [1]அவைகளை எருசலேமின்
வாசல்களுக்குள் கொண்டுவராதபடிக்கும்,
22 ஓய்வுநாளில் உங்கள் வீடுகளிலிருந்து சுமை
யை வெளியே கொண்டுபோகாதபடிக்கும்,
ஒரு வேலையையும் செய்யாதபடிக்கும், உங்
கள் ஆத்துமாக்களுக்காக எச்சரிக்கையாயிரு
ந்து, [2]நான் உங்கள் பிதாக்களுக்குக் கட்டளை
யிட்டபடி ஓய்வுநாளைப் பரிசுத்தமாக்குங்கள்
23 என்று **கர்த்தர்** சொல்லுகிறார். அவர்களோ
கேளாமலும் தங்கள் செவிகளைச் சாயாமலும்
போய், கேளாதபடிக்கும் புத்தியை ஏற்றுக்
கொள்ளாதபடிக்கும், [3]தங்கள் கழுத்தைக் கடி
24 னப்படுத்தினார்கள். நீங்களோவெனில், ஓய்வு
நாளில் இந்த நகரத்தின் வாசல்களுக்குள்ளே
சுமையைக் கொண்டுவராதபடிக்கும், [4]ஓய்வு
நாளில் ஒரு வேலையையும் செய்யாமல் அதைப்
பரிசுத்தமாக்கும்படிக்கும் என் சொல்லைக்
25 கேட்பீர்களானால், அப்பொழுது தாவீதின்
சிங்காசனத்தில் உட்கார்ந்திருக்கிறவர்களும்,
[5]இரதங்களின்மேலும் குதிரைகளின்மேலும்
ஏறுகிறவர்களுமாகிய ராஜாக்களும் ராஜகுமா
ரர்களும், அவர்கள் பிரபுக்களும், யூதாவின்
மனுஷரும், எருசலேமின் குடிகளும் இந்த
நகரத்தின் வாசல்களுக்குள் பிரவேசிப்பார்
கள்; இந்த நகரமும் என்றைக்கும் குடியுள்ள
26 தாயிருக்கும். யூதாவின் பட்டணங்களிலும்,
எருசலேமின் சுற்றுப்புறமான ஊர்களிலும்,
பென்யமீன் தேசத்திலும், பள்ளத்தாக்கான
சீமையிலும், மலைநாட்டிலும், தெற்கிலுமி
ருந்து ஜனங்கள் சர்வாங்க தகனங்களையும்,
பலிகளையும், போஜனபலிகளையும், தூபவர்க்
கங்களையும், [6]ஸ்தோத்திரபலிகளையும் **கர்த்தரு**
**டைய** ஆலயத்துக்குக் கொண்டுவருவார்கள்.
27 நீங்கள் ஓய்வுநாளைப் பரிசுத்தமாக்கும்படிக்
கும் ஓய்வுநாளிலே சுமையை எருசலேமின்
வாசல்களுக்குள் எடுத்துவராதிருக்கும்படிக்
கும், என் சொல்லைக் கேளாமற்போனீர்களா
கில், [7]நான் அதின் வாசல்களில் தீக்கொ
ளுத்துவேன்; அது எருசலேமின் அரமனைக
ளைப் பட்சித்தும், அவிந்துபோகாதிருக்கும்
என்று **கர்த்தர்** சொல்லுகிறார்.

**18** கர்த்தரால் எரேமியாவுக்கு உண்டான
2 வசனம்: நீ எழுந்து, குயவன் வீட்டிற்குப்
போ; அங்கே என் வார்த்தைகளை உனக்குத்
3 தெரிவிப்பேன் என்றார். அப்படியே நான்
குயவன் வீட்டிற்குப் போனேன்; இதோ,
அவன் திரிகையினாலே வனைந்துகொண்டி
4 ருந்தான். குயவன் வனைந்துகொண்டிருந்த
மண்பாண்டம் அவன் கையிலே கெட்டுப்
போயிற்று; அப்பொழுது அதைத் திருத்த
மாய்ச் செய்யும்படிக்கு, தன் பார்வைக்குச்
சரியாய்க் கண்டபடி குயவன் அதைத் திரு
ம்ப வேறே பாண்டமாக வனைந்தான்.
5 அப்பொழுது **கர்த்தருடைய** வசனம் என
6 க்கு உண்டாகி, அவர்: இஸ்ரவேல் குடும்பத்தா
ரே, இந்தக் குயவன் செய்ததுபோல நான் உங்
களுக்குச் செய்யக்கூடாதோ என்று **கர்த்தர்**
சொல்லுகிறார்; [8]இதோ, இஸ்ரவேல் வீட்டா
ரே, களிமண் குயவன் கையில் இருக்கிறது
போல நீங்கள் என் கையில் இருக்கிறீர்கள்.
பிடுங்குவேன், இடிப்பேன், அழிப்பேன் 7
என்று நான் ஒரு ஜாதிக்கு விரோதமாகவும்,
ஒரு ராஜ்யத்துக்கு விரோதமாகவும் சொன்ன
மாத்திரத்தில், நான் விரோதமாய்ப் பேசின 8
அந்த ஜாதியார் தங்கள் தீங்கைவிட்டுத் திரும்
பினால், [9]நானும் அவர்களுக்குச் செய்ய நினை
த்த தீங்கைச் செய்யாதபடிக்கு மனம் மாறு
வேன். கட்டுவேன், நாட்டுவேன் என்றும், 9
ஒரு ஜாதியையும் ஒரு ராஜ்யத்தையும் குறி
த்து நான் சொல்லுகிறதுமுண்டு. அவர்கள் 10
என் சத்தத்தைக் கேளாமல், என் பார்வைக்
குப் பொல்லாப்பானதைச் செய்வார்களா
னால், நானும் அவர்களுக்கு அருள்செய்வேன்
என்று சொன்ன நன்மையைச் செய்யாதபடி
க்கு மனம் மாறுவேன். இப்பொழுதும், நீ 11
யூதாவின் மனுஷரையும் எருசலேமின் குடி
களையும் நோக்கி: இதோ, நான் உங்களுக்கு
விரோதமாக ஒரு தீங்கை உருப்படுத்தி, உங்
களுக்கு விரோதமாக ஒரு காரியத்தை
யோசிக்கிறேன்; ஆகையால், [10]உங்களில் ஒவ்
வொருவரும் தன் தன் பொல்லாத வழியை
விட்டுத் திரும்பி, உங்கள் வழிகளையும், உங்கள்
கிரியைகளையும் சீர்ப்படுத்துங்களென்று **கர்த்**
**தர்** உரைக்கிறாரென்று சொல். ஆனாலும் 12
அவர்கள்: [11]அது கூடாதகாரியம், நாங்கள்
எங்கள் யோசனைகளின்படியே நடந்து, அவ
ரவர் தம் தம் பொல்லாத இருதயத்தினுடைய
கடினத்தின்படியே செய்வோம் என்கிறார்
கள்.

ஆகையால் **கர்த்தர்** சொல்லுகிறார்: இப்ப 13
டிப்பட்டவைகளைக் கேள்விப்பட்டவன் யார்
என்று புறஜாதிகளுக்குள்ளே விசாரித்துப்
பாருங்கள்; [12]மிகவும் திடுக்கிடத்தக்க காரியத்
தை இஸ்ரவேல் என்னும் கன்னிகை செய்
கிறாள். லீபனோனின் உறைந்த மழை வயல் 14
வெளியின் கல்மலையிலிருந்து அற்றுப்போகி
றதுண்டோ? ஓடிவருகிற அந்நிய தேசத்துக்
குளிர்ந்த தண்ணீர்கள் வடிந்துபோகிறதுண்
டோ? என் ஜனங்களோ என்னை மறந்து, 15
மாயையான விக்கிரகங்களுக்குத் தூபங்காட்
டுகிறார்கள்; [13]செப்பனிடப்படாத பாதைகளி
லும் வழியிலும் அவர்கள் நடக்கும்படி, அவை
கள் அவர்களைப் [14]பூர்வ பாதைகளாகிய அவர்க
ளுடைய வழிகளிலிருந்து இடறும்படி செய்
கிறது. நான் அவர்களுடைய தேசத்தைப் 16
பாழாக்கவும், என்றென்றைக்கும் ஈசலிட்டு
நிந்திக்கும் நிந்தையாக்கவும் செய்யும்படி இப்
படிச் செய்கிறார்கள்; [15]அதைக் கடந்துபோகி
றவன் எவனும் பிரமித்து, தன் தலையைத்
துலுக்குவான். கொண்டல்காற்றுப் பறக் 17
கடிக்குமாப்போல் நான் அவர்களை அவர்கள்
சத்துருக்களுக்கு முன்பாகப் பறக்கடிப்பேன்;
[16]அவர்களுடைய ஆபத்தின் நாளிலே என்

[1] நெகே. 13. 19
[2] எசே. 20. 12
[3] 7. 24, 26. நீதி. 29. 1
[4] ஏசா. 58. 13,14
[5] 22. 4
[6] சங். 107. 22: 116. 17. எபி. 13. 15
[7] புல. 4. 11. ஆமோ. 2. 4, 5
[8] ஏசா. 45. 9: 64. 8. ரோ. 9. 20, 21
[9] எசே. 18. 21: 33. 11, 18. யோனா 3. 10
[10] 2 இரா. 17. 13
[11] 2. 25
[12] 2. 10. 5. 30. 1 கொ. 5. 1
[13] 2. 32. ஏசா. 41. 29
[14] 6. 16
[15] உபா. 28. 59. 1 இரா. 9. 8. மீகா 6. 16
[16] சங். 48. 7. நீதி. 1. 25, 26

முகத்தையல்ல, என் முதுகை அவர்களுக்குக்
காட்டுவேன் என்று சொல் என்றார்.
18 அதற்கு அவர்கள்: எரேமியாவுக்கு விரோ
தமாக ஆலோசனை செய்வோம் வாருங்கள்;
[1]ஆசாரியரிடத்திலே வேதமும், ஞானிகளி
டத்திலே ஆலோசனையும், தீர்க்கதரிசிகளிடத்
திலே வசனமும் ஒழிந்துபோவதில்லை. இவன்
வார்த்தைகளை நாம் கவனியாமல், இவனை நா
வினாலே வெட்டிப்போடுவோம் வாருங்கள்
என்றார்கள்.
19 கர்த்தாவே, நீர் என்னைக் கவனித்து,
[2]என்னோடே வழக்காடுகிறவர்களின் சத்தத்
20 தைக் கேளும். நன்மைக்குத் தீமையைச்
சரிக்கட்டலாமோ? [3]என் ஆத்துமாவுக்குப் படு
குழியை வெட்டுகிறார்களே; உம்முடைய உக்
கிரத்தை அவர்களை விட்டுத் திருப்பும்படிக்கு
நான் அவர்களுக்காக நன்மையைப்பேச உம
க்கு முன்பாக நின்றதை நினைத்தருளும்.
21 ஆகையால், அவர்களுடைய பிள்ளைகளைப்
பஞ்சத்துக்கு ஒப்புக்கொடுத்து, அவர்களைப்
பட்டயத்துக்கு இரையாக்கிவிடும்; அவர்கள்
மனைவிகள் பிள்ளைகளற்றவர்களும் விதவைக
ளுமாகி, அவர்கள் புருஷர்கள் கொலைசெய்
யப்பட்டு, அவர்கள் வாலிபர்கள் யுத்தத்திலே
22 பட்டய வெட்டால் மடியக்கடவர்கள். நீர்
சடிதியில் அவர்கள்மேல் இராணுவத்தை வரப்
பண்ணுகையால், கூக்குரல் அவர்கள் வீடுகளி
லிருந்து கேட்கப்படக்கடவது; என்னைப்
பிடிக்கப் படுகுழியை வெட்டி, என் கால்க
23 ளுக்குக் கண்ணிகளை வைத்தார்களே. ஆனா
லும் கர்த்தாவே, அவர்கள் எனக்கு விரோத
மாய்ச் செய்யும் கொலைபாதக யோசனையை
யெல்லாம் நீர் அறிவீர்; அவர்களுடைய அக்
கிரமத்தை உமது கண்ணுக்கு மறைவாக மூடா
மலும், [4]அவர்கள் பாவத்தைக் குலைக்காம
லும் இருப்பீராக; அவர்கள் உமக்கு முன்பா
கக் கவிழ்க்கப்படக்கடவர்கள்; உமது கோபத்
தின் காலத்திலே இப்படி அவர்களுக்குச்
செய்யும்.
**19** கர்த்தர் சொன்னது: நீ போய்க் குயவன்
வேலையான ஒரு கலசத்தைக்கொண்டு, ஜனத்
தின் மூப்பரிலும் ஆசாரியர்களின் மூப்பரி
2 லும் சிலரைக் கூட்டிக்கொண்டு, கிழக்கு
வாசலுக்கு எதிரான இன்னோமுடைய குமா
ரனின் [5]பள்ளத்தாக்கிலே புறப்பட்டுப்போய்,
நான் உன்னோடே சொல்லும் வார்த்தைகளை
3 அங்கே பிரசித்தப்படுத்தி. நீ அவர்களை
நோக்கி: யூதாவின் ராஜாக்களே, எருசலே
மின் குடிகளே, கர்த்தருடைய வார்த்தைக
ளைக் கேளுங்கள்; இஸ்ரவேலின் தேவனாகிய
சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்: இதோ,
நான் இந்த ஸ்தலத்தின்மேல் ஒரு பொல்லாப்
பை வரப்பண்ணுவேன்; [6]அதைக் கேட்கிற
யாவருடைய காதுகளிலும் அது தொனித்துக்
4 கொண்டிருக்கும். அவர்கள் என்னை விட்டு
விட்டு, [7]இந்த ஸ்தலத்தை அந்நிய ஸ்தலமாக்கி,
தாங்களும், தங்கள் பிதாக்களும், யூதாவின்
ராஜாக்களும், அறியாதிருந்த அந்நிய தேவர்
களுக்கு அதிலே தூபங்காட்டி, இந்த ஸ்தலத்
தைக் [8]குற்றமில்லாதவர்களின் இரத்தத்தினா
லே நிரப்பினபடியினாலும், தங்கள் பிள்ளை 5
களைப் பாகாலுக்குத் தகனபலிகளாகத் தகனிக்
கும்படி பாகாலின் மேடைகளைக் கட்டினபடி
யினாலும் இப்படி வரப்பண்ணுவேன்; இவை
களை நான் கற்பித்ததுமில்லை, [9]சொன்னது
மில்லை, இவைகள் என் இருதயத்தில் தோன்
றினதுமில்லை. ஆகையால், இதோ, நாட் 6
கள் வரும், அப்பொழுது இந்த ஸ்தலம் தோப்
பேத்தென்றும், [10]இன்னோமுடைய குமா
ரனின் பள்ளத்தாக்கென்றும் இனிச் சொல்லப்
படாமல், சங்கார பள்ளத்தாக்கென்று சொல்
லப்படும். அப்பொழுது நான் யூதாவுக்கும் 7
எருசலேமுக்கும் கொண்டிருந்த ஆலோசனை
யை இந்த ஸ்தலத்திலே வெறுமையாக்கி, [11]அ
வர்கள் சத்துருக்களுக்கு முன்பாக அவர்க
ளைப் பட்டயத்தினாலும், அவர்கள் பிராணனை
வாங்கத் தேடுகிறவர்களின் கையினாலும் விழப்
பண்ணி, அவர்கள் பிரேதங்களை ஆகாயத்துப்
பறவைகளுக்கும், பூமியின் மிருகங்களுக்கும்
இரையாகக் கொடுத்து, இந்த நகரத்தைப் 8
பாழாகவும், ஈசலிட்டு நிந்திக்கிற நிந்தையாக
வும் வைப்பேன்; [12]அதைக் கடந்துபோகிறவன்
எவனும் பிரமித்து, அதின் எல்லா வாதைகளி
னிமித்தமும் ஈசலிடுவான். அவர்களுடைய 9
சத்துருக்களும் அவர்கள் பிராணனை வாங்கத்
தேடுகிறவர்களும், அவர்களை இறுகப் பிடிக்
கப்போகிற முற்றிக்கையிலும் இடுக்கத்திலும்,
நான் அவர்களைத் தங்கள் குமாரரின் மாம்சத்
தையும் தங்கள் குமாரத்திகளின் மாம்சத்தை
யும் தின்னப்பண்ணுவேன்; [13]அவனவன்
தனக்கு அடுத்தவனுடைய மாம்சத்தைத் தின்
பான் என்று கர்த்தர் சொல்லுகிறார் என்று நீ
சொல்லி, உன்னோடே கூடவந்த மனுஷரு 10
டைய கண்களுக்கு முன்பாக [14]அந்தக் கலசத்
தை உடைத்துப்போட்டு, அவர்களை நோக்கி: 11
திரும்பச் செப்பனிடப்படக்கூடாத குயவனு
டைய மண்பாண்டத்தை உடைத்துப்போட்ட
வண்ணமாக நான் இந்த ஜனத்தையும் இந்த
நகரத்தையும் உடைத்துப்போடுவேன்; [15]புதை
க்கிறதற்கு இடமில்லாததினால் தோப்பேத்தி
லே சவங்களைப் புதைப்பார்கள் என்று சேனை
களின் கர்த்தர் சொல்லுகிறார். இவ்விதமாக 12
நான் இந்த ஸ்தலத்துக்கும் இதின் குடிகளுக்
கும் செய்து, இந்த நகரத்தைத் தோப்பேத்துக்
குச் சரியாக்குவேன். எந்த வீடுகளின்மேல் 13
வானத்தின் சகல சேனைக்கும் தூபங்காட்டி,
அந்நிய தேவர்களுக்குப் பானபலிகளை வார்த்
தார்களோ, [16]அந்த வீடுகளாகிய எருசலேமின்
வீடுகளும் யூதாவுடைய ராஜாவின் வீடுகளும்
தோப்பேத் என்கிற ஸ்தலத்தைப்போல் தீட்
டுப்பட்டவைகளாய் இருக்குமென்று கர்த்தர்
சொல்லுகிறார் என்று சொல் என்றார்.
பின்பு எரேமியா, கர்த்தர் தன்னைத் தீர்க்க 14
தரிசனஞ் சொல்ல அனுப்பின தோப்பேத்தி

[1] 11. 19. லேவி. 10. 11. மல். 2. 7. யோ. 7. 48, 49
[2] சங். 64. 1–4
[3] சங். 109. 4. நீதி. 17. 13
[4] சங். 37. 32, 33
[5] 7. 31. யோசு. 15. 8
[6] 17. 20. 1 சாமு. 3. 11. 2 இரா. 21. 12
[7] 2. 13, 14. உபா. 28. 20. ஏசா. 65. 11
[8] 2 இரா. 21. 16; 24. 4
[9] லேவி. 18. 21
[10] யோசு. 15. 8
[11] லேவி. 26. 17. உபா. 28. 25. சங். 79. 2
[12] 18. 16. 1 இரா. 9. 8
[13] லேவி. 26. 29. உபா. 28. 53. ஏசா. 9. 20. புல. 4. 10
[14] 51. 63, 64
[15] சங். 2. 9. ஏசா. 30. 14. புல. 4. 2
[16] 2 இரா. 23. 10. செப். 1. 5

விருந்து வந்து, [1]**கர்த்தருடைய** ஆலயத்தின்
பிராகாரத்திலே நின்றுகொண்டு, எல்லா
15 ஜனங்களையும் பார்த்து: இதோ, நீங்கள் என்
வார்த்தைகளைக் கேளாதபடிக்கு உங்கள் கழுத்
தைக் கடினப்படுத்தினபடியினால், [2]நான் இந்த
நகரத்துக்கு விரோதமாய்ச் சொன்ன எல்லாத்
தீங்கையும் இதின்மேலும் இதற்கடுத்த பட்
டணங்களின்மேலும் வரப்பண்ணுவேன்
என்று இஸ்ரவேலின் தேவனாகிய சேனைக
ளின் **கர்த்தர்** சொல்லுகிறார் என்றான்.

**20** எரேமியா இந்த வார்த்தைகளைத் தீர்க்க
தரிசனமாகச் சொல்லுகிறதை ஆசாரியனான
இம்மேருடைய [3]குமாரனும், **கர்த்தருடைய**
ஆலயத்துப் பிரதான விசாரணைக் கர்த்தனுமா
2 கிய பஸ்கூர் கேட்டபோது, எரேமியா தீர்க்
கதரிசியைப் பஸ்கூர் அடித்து, அவனைக் **கர்த்**
**தருடைய** ஆலயத்திலே பென்யமீன் கோத்
திரத்தாரைச் சேர்ந்த மேல்வாசலில் இருக்கும்
3 காவலறையிலே போட்டான். மறுநாளில்
பஸ்கூர் எரேமியாவைக் காவலறையிலிருந்து
வெளியே போகவிட்டான்; அப்பொழுது
எரேமியா அவனை நோக்கி: **கர்த்தர்** உன்னைப்
பஸ்கூர் என்று அழைக்காமல், *மாகோர் மீசா
4 பீப் என்று அழைக்கிறார். மேலும் **கர்த்தர்**:
இதோ, நான் உன்னையும், உன் எல்லாச் சிநே
கிதரையும் பயத்துக்கு ஒப்புக்கொடுக்கிறேன்;
உன் கண்கள் காண இவர்கள் சத்துருக்களின்
பட்டயத்தால் விழுவார்கள்; யூதா அனைத்
தையும் நான் பாபிலோன் ராஜாவின் கையில்
ஒப்புக்கொடுப்பேன்; அவன் அவர்களைச்
சிறைபிடித்து, சிலரைப் பாபிலோனுக்குக்
கொண்டுபோய், சிலரைப் பட்டயத்தால் வெட்
5 டிப்போடுவான். இந்த நகரத்தின் எல்லாப்
பலத்தையும், அதின் எல்லாச் சம்பத்தையும்,
அதின் அருமையான எல்லாப் பொருள்களை
யும், யூதா ராஜாக்களின் எல்லாப் பொக்கி
ஷங்களையும், நான் அவர்கள் சத்துருக்கள் கை
யில் ஒப்புக்கொடுப்பேன்; [4]அவர்கள் அவை
களைக் கொள்ளையிட்டு, பாபிலோனுக்குக்
6 கொண்டுபோவார்கள். பஸ்கூரே, நீயும் உன்
வீட்டில் வாசமாயிருக்கிற யாவரும் சிறைப்பட்
டுப்போவீர்கள்; [5]நீயும் உன் கள்ளத்தீர்க்கதரி
சனத்துக்குச் செவிகொடுத்த உன் சிநேகிதர்
யாவரும் பாபிலோனுக்குப் போய், அங்கே
மரித்து, அங்கே அடக்கம்பண்ணப்படுவீர்க
ளென்று சொல்லுகிறார் என்றான்.

7 **கர்த்தாவே**, என்னை இணங்கப் பண்ணி
னீர், நான் இணங்கினேன்; நீர் என்னிலும்
பலத்தவராயிருந்து, என்னை மேற்கொண்டீர்;
நாள்தோறும் நகைப்புக்கு இடமானேன்; [6]எல்
லாரும் என்னைப் பரிகாசம் பண்ணுகிறார்கள்.
8 நான் பேசினதுமுதற்கொண்டு கதறுகிறேன்;
கொடுமையென்றும் பாழ்க்கடிப்பென்றும் சத்
தமிட்டுக் கூறுகிறேன்; [7]நான் கூறின **கர்த்த**
**ருடைய** வார்த்தை நாள்தோறும் எனக்கு நிந்
9 தையும், பரிகாசமுமாயிற்று. ஆதலால் நான்
அவரைப் பிரஸ்தாபம் பண்ணாமலும் இனிக்

[1] 2 ராஜா. 20. 5
[2] 17. 23. சங். 58. 2–5
[3] 1 ராஜா. 24. 14
*பயஞ்சூழ்ந்திருத்தல். 10. வச.
[4] 2 இரா. 20. 17: 24. 12–16: 25. 13. ழ
[5] 14. 13–15: 29. 21
[6] புல. 3. 14
[7] 5. 1: 6. 7: 7. 29
[8] யோபு 32. 18, 19. அப். 4. 20 18. 5. 1 கொ. 9. 16, 17
[9] சங். 31. 13
[10] நீதி. 10. 18
[11] யோபு 19. 19. சங். 41. 9. லூ. 11. 53
[12] 1. 8, 19: 15. 20: 23, 40
[13] 17, 10. சங். 59. 10. எசா. 38. 14. 1 பே. 2. 23: 4. 19
[14] சங். 35. 9, 10.
[15] 15. 10. யோபு 3. 3
[16] ஆதி. 19. 25
[17] யோ. 6. 3
[18] சங். 90. 10. புல. 3. 1
[19] 2 இரா. 25. 18
[20] 37. 3, 7. எசே. 14. 4, 5

**கர்த்தருடைய** நாமத்திலே பேசாமலும் இருப்
பேன் என்றேன்; [8]ஆனாலும் அவருடைய வார்
த்தை என் எலும்புகளில் அடைபட்டு எரிகிற
அக்கினியைப்போல் என் இருதயத்தில் இரு
ந்தது; அதைச் சகித்து இளைத்துப்போனேன்;
எனக்குப் பொறுக்கக்கூடாமற் போயிற்று.
அநேகர் சொல்லும் அவதூறைக் கேட்டேன், 10
[9]பயஞ் சூழ்ந்திருந்தது; அறிவியுங்கள், [10]அப்
பொழுது நாங்கள் அதை அறிவிப்போம் என்
கிறார்கள்; என்னோடே சமாதானமாயிருந்த
அனைவரும் நான் தவறிவிழும்படிக் காத்திரு
ந்து: [11]ஒருவேளை இணங்குவான், அப்பொ
ழுது அவனை மேற்கொண்டு, அவனில் குரோ
தந் தீர்த்துக்கொள்வோம் என்கிறார்கள். **கர்** 11
**த்தரோ** பயங்கரமான பராக்கிரமசாலியாய்
[12]என்னோடு இருக்கிறார்; ஆகையால் என்னைத்
துன்பப்படுத்துகிறவர்கள் மேற்கொள்ளாமல்
இடறுவார்கள்; தங்கள் காரியம் வாய்க்காதபடி
யால் மிகவும் வெட்கப்படுவார்கள்; மறக்கப்
படாத நித்திய இலச்சை அவர்களுக்கு உண்
டாகும். ஆனாலும் நீதிமானைச் சோதித்தறி 12
ந்து, உள்ளிந்திரியங்களையும் இருதயத்தையும்
பார்க்கிற சேனைகளின் **கர்த்தாவே**, நீர் அவர்
களுக்கு நீதியைச் சரிக்கட்டுகிறதைக் காண்
பேனாக; [13]என் காரியத்தை உம்மிடத்தில் சாட்
டிவிட்டேன். **கர்த்தரைப்** பாடுங்கள், **கர்த்த** 13
**ரைத்** துதியுங்கள்; [14]அவர் எளியவனுடைய
ஆத்துமாவைப் பொல்லாதவர்களின் கைக்குத்
தப்புவிக்கிறார்.

நான் பிறந்தநாள் சபிக்கப்படுவதாக; [15]என் 14
தாயார் என்னைப் பெற்றநாள் ஆசீர்வதிக்கப்
படாதிருப்பதாக. உமக்கு ஒரு ஆண்பிள்ளை 15
பிறந்ததென்று என் தகப்பனுக்கு நற்செய்தி
யாக அறிவித்து, அவனை மிகவும் சந்தோஷப்
படுத்தின மனுஷன் சபிக்கப்படக்கடவன்.
அந்த மனுஷன், **கர்த்தர்** மனம் மாறாமல் கவி 16
ழ்த்துப்போட்ட பட்டணங்களைப்போ லிரு
ந்து, [16]காலமே அலறுதலையும் மத்தியான வே
ளையிலே கூக்குரலையும் கேட்கக்கடவன். என் 17
தாயார் எனக்குப் பிரேதக்குழியும், [17]நான்
என்றைக்கும் பிரசவியாத சூலுமாய் இருக்கத்
தக்கதாகக் கர்ப்பத்திலே நான் கொலைசெய்யப்
படாமற் போனதென்ன? நான் வருத்தத்தை 18
யும் சஞ்சலத்தையும் கண்டு, [18]என் நாட்கள்
வெட்கமாய்க் கழியும்படிக்கு நான் கர்ப்பத்தி
லிருந்து வெளிப்பட்டதென்ன?

சிதேக்கியா ராஜா மல்கியாவின் குமாரனா **21**
கிய பஸ்கூரையும், [19]ஆசாரியனான மாசெயா
வின் குமாரனாகிய செப்பனியாவையும் எரே
மியாவினிடத்தில் அனுப்பி: நீர் எங்களுக்கா 2
கக் **கர்த்தரிடத்தில்** விசாரியும்; [20]பாபிலோன்
ராஜாவாகிய நேபுகாத்நேச்சார் எங்களுக்கு
விரோதமாய் யுத்தஞ்செய்கிறான்; ஒருவேளை
**கர்த்தர்** தம்முடைய எல்லா அற்புதச் செய
லின்படியேயும் எங்களுக்கு அநுக்கிரகஞ்செ
ய்து, அவனை எங்களை விட்டுப் போகப்பண்
ணுவார் என்று சொல்லி யனுப்பினபோது,

3 எரேமியா அவர்களைப்பார்த்து, நீங்கள்
சிதேக்கியாவுக்குச் சொல்ல வேண்டியது:
4 இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்** உரைக்கி
றது என்னவென்றால், இதோ, உங்களை அல
ங்கத்துக்கு வெளியே முற்றிக்கைபோட்ட
பாபிலோன் ராஜாவோடும் கல்தேயரோடும்,
நீங்கள் யுத்தம்பண்ணும்படி உங்கள் கைகளில்
பிடித்திருக்கிற யுத்த ஆயுதங்களை நான் திருப்பி
விட்டு, [1]அவர்களை இந்த நகரத்தின் நடுவிலே
5 சேர்த்து, நான் நீட்டின கையினாலும் [2]பல
த்த புயத்தினாலும் கோபமும் உக்கிரமும்
மகா கடுமையுமாக உங்களோடே யுத்தம்
6 பண்ணி, இந்த நகரத்தின் குடிகளையும், மனு
ஷரையும், மிருகங்களையும் சங்கரிப்பேன்;
7 மகா கொள்ளைநோயால் சாவார்கள். அதற்
குப்பின்பு நான் யூதாவின் ராஜாவாகிய சிதேக்
கியாவையும், [3]அவன் ஊழியக்காரரையும்,
ஜனத்தையும், இந்த நகரத்திலே கொள்ளை
நோய்க்கும் பட்டயத்துக்கும் பஞ்சத்துக்கும்
தப்பி மீதியானவர்களையும் பாபிலோன் ரா
ஜாவாகிய நேபுகாத்நேச்சாருடைய கையிலும்,
அவர்கள் சத்துருக்களின் கையிலும், அவர்
கள் பிராணனை வாங்கத் தேடுகிறவர்களின்
கையிலும் ஒப்புக்கொடுப்பேன்; அவன்
அவர்களைப் பட்டயக் கருக்கினால் வெட்டு
வான்; [4]அவன் அவர்களைத் தப்பவிடுவது
மில்லை, அவன் மன்னிப்பதுமில்லை, இரங்கு
வதுமில்லையென்று **கர்த்தர்** உரைக்கிறார் என்
8 றான். பின்னையும் அவர், இந்த ஜனங்களை
நோக்கி: இதோ, நான் உங்கள் முன்னே ஜீவ
வழியையும் [5]மரணவழியையும் வைக்கிறேன்
9 என்று **கர்த்தர்** சொல்லுகிறார். இந்த நகரத்
திலே தரிக்கிறவன் பட்டயத்தாலும், [6]பஞ்சத்
தாலும், கொள்ளைநோயாலும் சாவான்; உங்
களை முற்றிக்கைபோடும் கல்தேயர் வசமாய்ப்
புறப்பட்டுப் போய்விடுகிறவனோ பிழைப்
பான்; அவன் பிராணன் அவனுக்குக் கிடை
த்த கொள்ளைப் பொருளைப்போல் இருக்கும்.
10 என் முகத்தை இந்த நகரத்துக்கு விரோதமாய்
நன்மைக்கு அல்ல, தீமைக்கே வைத்தேன்
என்று **கர்த்தர்** சொல்லுகிறார்; [7]அது பாபி
லோன் ராஜாவின் கையில் ஒப்புக்கொடுக்கப்
படும்; அவன் அக்கினியால் அதைச் சுட்டெ
ரிப்பானென்று சொல் என்றார்.
11 யூதாராஜாவின் குடும்பத்தாரையும் நோக்கி:
**கர்த்தருடைய** வார்த்தையைக் கேளுங்கள்.
12 தாவீதின் குடும்பத்தாரே, உங்கள் செய்கைக
ளுடைய பொல்லாப்பினிமித்தம் என் உக்கி
ரம் அக்கினியைப்போல் புறப்பட்டு, அவிக்
கிறவன் இல்லாமல் எரியாதபடிக்கு, நீங்கள்
ஏற்கனவே நியாயங்கேட்டு, [8]பறிகொடுத்த
வனை ஒடுக்குகிறவனுடைய கைக்குத் தப்புவி
13 யுங்கள் என்று **கர்த்தர்** சொல்லுகிறார். இதோ,
பள்ளத்தாக்கில் வாசம்பண்ணுகிறவளே, சம
னான இடத்தில் கல்மலையாய் இருக்கிறவளே,
எங்களுக்கு விரோதமாய் வருகிறவன் யார்
என்றும், [9]எங்கள் வாசஸ்தலங்களுக்குள் வரு
கிறவன் யார் என்றும் சொல்லுகிற உனக்கு
நான் எதிராளியாயிருக்கிறேன் என்று **கர்த்**
**தர்** சொல்லுகிறார். நான் உங்கள் கிரியை 14
களின் பலனுக்குத் தக்கதாய் உங்களை விசாரிப்
பேன்; [10]நான் அதின் காட்டிலே தீக்கொளுத்
துவேன்; [11]அது அதைச் சுற்றிலுமுள்ள யாவை
யும் பட்சிக்கும் என்று **கர்த்தர்** உரைக்கிறார்
என்று சொல் என்றார்.

**கர்த்தர்** சொன்னது: நீ யூதா ராஜாவின் **22**
அரமனைக்குப் போய், அங்கே சொல்லவே
ண்டிய வசனம் என்னவென்றால்: தாவீதின் 2
சிங்காசனத்தில் வீற்றிருக்கிற யூதாவின் ராஜா
வே, நீரும் உம்முடைய ஊழியக்காரரும் இந்த
வாசல்களுக்குள் பிரவேசிக்கிற உம்முடைய
ஜனமும் **கர்த்தருடைய** [12]வார்த்தையைக் கேளு
ங்கள். நீங்கள் நியாயமும் நீதியும் செய்து, 3
[13]பறிகொடுத்தவனை ஒடுக்குகிறவனுடைய கை
க்குத் தப்புவியுங்கள்; நீங்கள் பரதேசியையும்
திக்கற்றவனையும் விதவையையும் ஒடுக்காம
லும், கொடுமைசெய்யாமலும், இவ்விடத்தில்
குற்றமில்லாத இரத்தத்தைச் சிந்தாமலும் இரு
ங்கள். இந்த வார்த்தையின்படியே நீங்கள் 4
மெய்யாய்ச் செய்வீர்களாகில், தாவீதின் சிங்கா
சனத்தில் உட்கார்ந்திருக்கிற ராஜாக்கள் ரதங்
கள்மேலும் குதிரைகள்மேலும் ஏறி, அவ
னும் அவன் ஊழியக்காரரும் அவன் ஜனமு
மாக இந்த அரமனை வாசல்களின் வழியாய்
உட்பிரவேசிப்பார்கள் என்று **கர்த்தர்** சொல்
லுகிறார். நீங்கள் இந்த வார்த்தைகளைக் கே 5
ளாமற் போனீர்களேயாகில் [14]இந்த அரமனை
பாழாய்ப்போம் என்று என்பேரில் ஆணையிட்
டேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறார். யூதா 6
ராஜாவின் அரமனையைக்குறித்துக் **கர்த்தர்**:
நீ எனக்குக் கீலியாத்தைப்போலவும் லீபனோ
னின் கொடுமுடியைப்போலவும் இருக்கிறாய்;
ஆனாலும் மெய்யாகவே நான் உன்னை வனாந்
தரத்தைப்போலவும், குடியில்லாத பட்டணங்
களைப்போலவும் ஆக்கிவிடுவேன். சங்காரக் 7
காரரை அவரவர் ஆயுதங்களோடுங்கூட நான்
உனக்கு விரோதமாக ஆயத்தப்படுத்துவேன்;
உன் உச்சிதமான கேதுருக்களை அவர்கள்
வெட்டி, [15]அக்கினியிலே போடுவார்கள்.
அநேகம் ஜாதிகள் இந்த நகரத்தைக் கடந்து 8
வந்து, அவனவன் தன்தன் அயலானை நோக்கி:
[16]இந்தப் பெரிய நகரத்துக்குக் **கர்த்தர்** இப்
படிச் செய்தது என்னவென்று கேட்பார்கள்.
அதற்குப் பிரதியுத்தரமாக: அவர்கள் தங்கள் 9
தேவனாகிய **கர்த்தரின்** உடன்படிக்கையை
விட்டுவிட்டு, [17]அந்நிய தேவர்களைப் பணிந்து
கொண்டு, அவைகளுக்கு ஆராதனை செய்த
படியினால் இப்படியாயிற்று என்பார்கள்
என்று சொல்லுகிறார்.

மரித்தவனுக்காக அழவேண்டாம், அவனுக் 10
காகப் பரிதபிக்கவும் வேண்டாம், [18]சிறைப்பட்
டுப் போனவனுக்காகவே அழுங்கள்; அவன்
இனித்திரும்பிவருவதுமில்லை, தன் ஜநந பூமி
யைக் காண்பதுமில்லை. தன் தகப்பனாகிய 11

1 சகா. 13. 4. புல. 2. 5
2 யாத். 6. 6
3 37. 17: 39. 5. ழ: 52. 9. ழ. 2 இரா. 25. 5. ழ
4 உபா. 28. 50. 2 நாளா. 36. 17
5 உபா. 30. 19
6 38. 2, 17. 39. 18
7 44. 11: 52. 13. ஆமோ. 9. 4
8 செப். 3. 5. சகரி. 7. 9, 10
9 49. 4, 5
10 நீதி. 1. 31. ஏசா. 3. 10, 11
11 52. 13, 2 நாளா. 36. 19
12 17. 20. ழ
13 21. 12
14 2 நாளா. 7. 10, 22. எபி. 6. 13, 17
15 21. 14. நெகி. 8. 8
16 உபா. 29. 24, 25. 1 இரா. 9. 8, 9
17 2 இரா. 22. 17. 2 நாளா. 34. 25
18 பிர. 4. 2. ஏசா. 57. 1

யோசியாவின் பட்டத்துக்கு வந்து, அரசா
ண்டு, இவ்விடத்திலிருந்து புறப்பட்டுப்போன
யூதாவின் ராஜாவாயிருந்த யோசியாவின் குமா
ரனுகிய சல்லூமைக்குறித்து: [1]அவன் இனி
12 இங்கே திரும்ப வராமல், தான் கொண்டுபோ
கப்பட்ட ஸ்தலத்திலே மரிப்பான்; [2]இந்த தே
சத்தை அவன் இனிக் காண்பதில்லையென்று
கர்த்தர் சொல்லுகிருர்.
13 தனக்கு விஸ்தாரமான வீட்டையும், காற்று
வீசும் விசாலமான மேலறைகளையும் கட்டுவே
னென்று சொல்லி, பலகணிகளைத் தனக்குத்
திறந்து, கேதுரு பலகைகளை வைத்து, ஜாதி
14 லிங்க வருணம் பூசி, அநீதியினுலே தன் வீட்
டையும், அநியாயத்தினுலே தன் மேலறை
களையும் கட்டி, [3]தன் அயலான் செய்யும் வே
லைக்குக் கூலி கொடாமல், அவனைச் சும்மா
15 வேலைகொள்ளுகிறவனுக்கு ஐயோ! நீ கே
துருமா மாளிகைகளில் உலாவுகிறபடியினு
லே ராஜாவாயிருப்பாயோ? உன் தகப்பன்
போஜனபானம்பண்ணி, [4]நியாயமும் நீதியுஞ்
செய்தபோது அவன் சுகமாய் வாழ்ந்திருக்க
16 வில்லையோ? அவன் சிறுமையும் எளிமையு
மானவனுடைய நியாயத்தை விசாரித்தான்;
[5]அப்பொழுது சுகமாய் வாழ்ந்தான்; அப்படிச்
செய்வதல்லவோ என்னை அறிகிற அறிவு
17 என்று கர்த்தர் சொல்லுகிருர். உன் கண்
களும் உன் மனதுமோவென்றுல் தற்பொழி
வின்மேலும், குற்றமில்லாத இரத்தத்தைச்
சிந்துவதின்மேலும், இடுக்கமும் நொறுக்குத
லும் செய்வதின்மேலுமே அல்லாமல் [6]வே
ருென்றின்மேலும் வைக்கப்படவில்லை.
18 ஆகையால் கர்த்தர் யோசியாவின் குமாரனு
கிய யோயாக்கீம் என்கிற யூதாவின் ராஜா
வைக்குறித்து: ஐயோ! என் சகோதரனே,
ஐயோ! சகோதரியே, என்று அவனுக்காகப்
புலம்புவதில்லை; ஐயோ! ஆண்டவனே,
ஐயோ! அவருடைய மகத்துவமே, [7]என்று
19 அவனுக்காகப் புலம்புவதில்லை. ஒரு கழுதை
புதைக்கப்படுகிறவண்ணமாய் [8]அவன் எருச
லேமின் வாசல்களுக்கு வெளியே இழுத்தெ
றிந்து புதைக்கப்படுவான் என்று சொல்லு
கிருர்.
20 லீபனேனின்மேலேறிப் புலம்பு, பாசா
னில் உரத்த சத்தமிடு, ஆபரீமிலிருந்து கூப்
பிட்டுக்கொண்டிரு; [9]உன் நேசர் அனைவரும்
21 முறிந்தார்கள். நீ சுகமாய் வாழ்ந்திருக்கை
யில் நான் உனக்குச் சொன்னேன், நீ கே
ளேன் என்ருய்; உன் சிறுவயதுமுதல் நீ என்
சத்தத்தைக் கேளாமற்போகிறதே [10]உன் வழக்
22 கம். உன் மேய்ப்பர்கள் எல்லாரையும் காற்று
அடித்துக்கொண்டுபோகும்; [11]உன் நேசர்
சிறைப்பட்டுப் போவார்கள்; அப்போதல்ல
வோ உன் எல்லாப் பொல்லாப்பினிமித்தமும்
23 நீ வெட்கப்பட்டு இலச்சையடைவாய். லீப
னேனில் வாசமாயிருந்து, கேதுருமரங்களில்
கூடுகட்டிக்கொண்டிருக்கிறவளே, வேதனைக
ளும்பிள்ளைப்பெறுகிறவர்களுக்கொத்த வாதை
யும் உனக்கு வருகையில், [12]நீ எவ்வளவு பரி
தபிக்கப்படத்தக்கவளாயிருப்பாய்! யூதாவின் 24
ராஜாவாகிய யோயாக்கீமின் குமாரன் கோனி
யா, என் வலதுகையின் முத்திரை மோதிர
மாயிருந்தாலும், [13]அதிலிருந்து உன்னைக் கழ
ற்றி எறிந்துபோடுவேன் என்று என் ஜீவ
னைக்கொண்டு சொல்லுகிறேன் என்று கர்த்
தர் சொல்லுகிருர். உன் பிராணனை வாங் 25
கத் தேடுகிறவர்களின் கையிலும், நீ பயப்படு
கிறவர்களின் கையிலும் உன்னை ஒப்புக்கொ
டுப்பேன்; [14]பாபிலோன் ராஜாவாகிய நேபு
காத்நேச்சாரின் கையிலும் கல்தேயரின் கை
யிலும் ஒப்புக்கொடுப்பேன். உன்னையும், 26
உன்னைப் பெற்ற தாயையும், உங்கள் ஜநந
பூமியல்லாத அந்நிய தேசத்திலே துரத்திவிடு
வேன். [15]அங்கே சாவீர்கள். திரும்புவதற் 27
குத் தங்கள் ஆத்துமா வாஞ்சிக்கும் தேசத்து
க்கு அவர்கள் திரும்பிவருவதில்லை. கோனி 28
யா என்கிற இந்த மனுஷன் அவமதிக்கப்
பட்ட உடைந்த சிலையோ? [16]ஒருவரும் விரும்
பாத பாத்திரமோ? அவனும் அவன் சந்ததியும்
தள்ளுண்டதும், தாங்கள் அறியாத தேசத்தி
லே துரத்திவிடப்பட்டதும் ஏது? தேசமே! 29
தேசமே! *தேசமே! [17]கர்த்தருடைய வார்த்தை
யைக் கேள். இந்தப் புருஷன் சந்தானமற்ற 30
வன், [18]தன் நாட்களில் வாழ்வடையாதவன்
என்று இவனைக்குறித்து எழுதுங்கள்; அவன்
வித்தில் ஒருவனுகிலும் வாழ்வடைந்து, தாவீ
தின் சிங்காசனத்தில் வீற்றிருந்து, யூதாவில்
அரசாளப்போகிறதில்லை என்று கர்த்தர் சொ
ல்லுகிருர்.

23 என் மேய்ச்சலின் ஆடுகளைக் கெடுத்துச்
சிதறடிக்கிற மேய்ப்பர்களுக்கு ஐயோ! [19]என்
று கர்த்தர் சொல்லுகிருர். இஸ்ரவேலின் 2
தேவனுகிய கர்த்தர் தமது ஜனத்தை மேய்க்
கிற மேய்ப்பர்களுக்கு விரோதமாகச் சொல்லு
கிறது என்னவென்ருல், [20]நீங்கள் என் ஆடுக
ளைப் பராமரியாமல், அவைகளைச் சிதறடித்து
அவைகளைத் துரத்திவிட்டீர்கள்; இதோ, நான்
உங்கள்பேரில் உங்கள் செய்கைகளின் பொல்
லாப்புக்கேற்ற தண்டனையை உங்கள்மேல்
வருவிப்பேன் என்று கர்த்தர் சொல்லுகிருர்.
நான் என் ஆடுகளில் மீதியாயிருப்பவைகளைத் 3
துரத்தியிருந்த எல்லா தேசங்களிலுமிருந்து
சேர்த்து, [21]அவைகளைத் திரும்ப அவைகளின்
தொழுவங்களுக்குக் கொண்டுவருவேன்; அப்
பொழுது அவைகள் பலுகிப்பெருகும். அவை 4
களை மேய்க்கத்தக்கவர்களையும் அவைகள்மேல்
ஏற்படுத்துவேன்; [22]இனி அவைகள் பயப்படு
வதுமில்லை, கலங்குவதுமில்லை, காணுமற்போ
வதுமில்லையென்று கர்த்தர் சொல்லுகிருர்.
இதோ, நாட்கள் வருமென்று கர்த்தர் சொல் 5
லுகிருர், அப்பொழுது தாவீதுக்கு ஒரு நீதி
யுள்ள [23]கிளையை எழும்பப்பண்ணுவேன்;
அவர் ராஜாவாயிருந்து, ஞானமாய் ராஜரிகம்
பண்ணி, பூமியிலே நியாயத்தையும் நீதியை
யும் நடப்பிப்பார். அவர் நாட்களில் யூதா 6

[1] 2 இரா. 23. 30. 1 நாளா. 3. 15
[2] 2 இரா. 23. 34
[3] லேவி. 19. 13. உபா. 24. 14, 15. மீகா 3. 10. ஆப. 2. 9. யாக். 5. 4
[4] 2 இரா. 23. 25
[5] சங். 3. 10
[6] எசே. 19. 6
[7] 16. 4, 6. 1 இரா. 13. 30
[8] 36. 30. இ. மு. 590. *சிறைசேர்ந்த.
[9] 30. 14
[10] 3. 25: 7. 23. ழ
[11] 23. 1. ழ
[12] 6. 24
[13] 37. 1. 2 இரா. 24. 6–8. உன்ன. 8. 6. ஆகா. 2. 23
[14] 34. 20
[15] 44. 14. 2 இரா. 24. 15
[16] ஓசி. 8. 8
*பூமியே.
[17] உபா. 32. 1. ஏசா. 1. 2. மீகா. 1. 2
[18] 36. 30. லூக். 1. 11, 12
[19] 10. 21. எசே. 34. 2
[20] அப். 20. 29
[21] 32. 37. உபா. 30. 1–6. எசே. 34. 13. ழ
[22] 3. 15
[23] 33. 14-16. சங். 72. 2. ஏசா. 4. 2: 11. 1–5: 40. 9-11. தானி. 9. 24. சகரி. 3. 8: 6. 12. யோ. 1. 45

ரட்சிக்கப்படும். [1]இஸ்ரவேல் சுகமாய் வாசம்
பண்ணும்; அவருக்கு இடும் நாமம் *நமது
7 நீதியாயிருக்கிற **கர்த்தர்** என்பதே. ஆதலால்,
இதோ, நாட்கள் வரும், [2]அப்பொழுது இஸ்ர
வேல் புத்திரரை எகிப்துதேசத்திலிருந்து,
அழைத்துக்கொண்டு வந்த **கர்த்தருடைய** ஜீவ
8 னைக்கொண்டு சத்தியம்பண்ணுமல், இஸ்ர
வேல் வீட்டின் சந்ததியாரைத் தங்கள் சுயதே
சத்தில் குடியிருக்கும்படிக்கு வடதேசத்திலும்,
நான் அவர்களைத் துரத்தியிருந்த எல்லா
தேசங்களிலுமிருந்து அழைத்து வழிநடத்திக்
கொண்டுவந்த **கர்த்தருடைய** ஜீவனைக்
கொண்டு [3]சத்தியம் பண்ணுவார்களென்று
**கர்த்தர்** சொல்லுகிருர்.
9 தீர்க்கதரிசிகளினிமித்தம் என் இருதயம்
என் உள்ளத்திலே நொறுங்கியிருக்கிறது; என்
எலும்புகளெல்லாம் அதிருகிறது; [4]**கர்த்தர்**
நிமித்தமும், அவருடைய பரிசுத்த வார்த்தை
களினிமித்தமும் நான் வெறித்திருக்கிற மனு
ஷனைப்போலவும் மதுபானம் மேற்கொண்ட
10 வனைப்போலவும் இருக்கிறேன். தேசம் விப
சாரக்காரரால் நிறைந்திருக்கிறது, [5]தேசம்
சாபத்தினுல் துக்கிக்கிறது, வனாந்தரத்தின்
மேய்ச்சல்கள் வாடிப்போகிறது; அவர்கள்
ஓட்டம் பொல்லாதது; அவர்கள் பெலன்
11 அநியாயமாயிருக்கிறது. தீர்க்கதரிசியும் ஆசா
ரியனும் மாயக்காரராயிருக்கிருர்கள்; [6]என்
ஆலயத்திலும் அவர்களுடைய பொல்லாப்
பைக் கண்டேன் என்று **கர்த்தர்** சொல்லுகி
12 ருர். ஆதலால், அவர்கள் வழி அவர்களுக்கு
இருட்டிலே சறுக்கலான வழியாயிருக்கும்,
[7]துரத்துண்டு அதிலே விழுவார்கள்; [8]அவர்
கள் விசாரிக்கப்படும் வருஷத்திலே அவர்கள்
மேல் பொல்லாப்பை வரப்பண்ணுவேன்
13 என்று **கர்த்தர்** சொல்லுகிருர். சமாரியாவின்
தீர்க்கதரிசிகளிலோ மதிகேட்டைக் கண்
டேன்; [9]பாகாலைக்கொண்டு தீர்க்கதரிசனஞ்
சொல்லி, இஸ்ரவேல் என்னும் என் ஜனத்
14 தை மோசம்போக்கினூர்கள். எருசலேமின்
தீர்க்கதரிசிகளிலும் திடுக்கிடத்தக்க காரியத்
தைக் காண்கிறேன்; விபசாரம்பண்ணி, வஞ்
சகமாய் நடந்து, ஒருவனும் தன் பொல்லாப்
பைவிட்டுத் திரும்பாதபடிக்குப் பொல்லாத
வர்களின் கைகளைத் திடப்படுத்துகிருர்கள்;
[10]அவர்கள் எல்லாரும் எனக்குச் சோதோ
மைப்போலும், அதின் குடிகள் கொமோரா
வைப்போலும் இருக்கிருர்கள்.
15 ஆதலால் சேனைகளின் **கர்த்தர்** தீர்க்கதரிசி
களைக்குறித்து: இதோ, நான் அவர்களுக்குப்
புசிக்க எட்டியையும், [11]குடிக்கப் பிச்சுக்கலந்த
தண்ணீரையும் கொடுப்பேன்; எருசலேமின்
தீர்க்கதரிசிகளிலிருந்து மாயமானது தேச
மெங்கும் பரம்பிற்றே என்று சொல்லுகிருர்.
16 உங்களுக்குத் தீர்க்கதரிசனம் சொல்லுகிற தீர்க்
கதரிசிகளின் வார்த்தைகளைக் கேளாதிருங்கள்;
[12]அவர்கள் உங்களை வீண்பெருமை கொள்ளும்
படி செய்கிருர்கள்; **கர்த்தருடைய** வாக்கை
அல்ல, தாங்கள் யூகித்த தரிசனத்தைச் சொல்
லுகிருர்கள் என்று சேனைகளின் **கர்த்தர்** சொல்
லுகிருர். அவர்கள் என்னை அசட்டை பண் 17
ணுகிறவர்களை நோக்கி: [13]உங்களுக்குச் சமா
தானம் இருக்குமென்று **கர்த்தர்** சொன்னு
ரென்று சொல்லுகிறதுமல்லாமல்; தங்கள்
இருதயத்தின் கடினத்திலே நடக்கிற யாவரை
யும் நோக்கி: [14]உங்கள்மேல் பொல்லாப்பு வரா
தென்றும் சொல்லுகிருர்கள். **கர்த்தருடைய** 18
ஆலோசனையில் கூடநின்று, அவருடைய
வார்த்தையைக் கேட்டறிந்தவன் யார்? [15]அவ
ருடைய வார்த்தையைக் கவனித்துக் கேட்ட
வன் யார்? இதோ, **கர்த்தருடைய** பெருங் 19
காற்ருகிய கொடிய புசல் புறப்பட்டது; [16]அது
துன்மார்க்கருடைய தலையின்மேல் உக்கிர
மாய் மோதும். **கர்த்தர்** தம்முடைய இருதயத் 20
தின் நினைவுகளை நடப்பித்து நிறைவேற்று
மளவும், [17]அவருடைய கோபம் தணியாது;
கடைசிநாட்களில் அதை நன்ருய் உணருவீர்
கள். அந்தத் தீர்க்கதரிசிகளை நான் அனுப்பா 21
திருந்தும் அவர்கள் ஓடினூர்கள்; [18]அவர்களோ
டே நான் பேசாதிருந்தும் அவர்கள் தீர்க்கதரி
சனஞ் சொன்னூர்கள். அவர்கள் என் ஆலோ 22
சனையிலே நிலைத்திருந்தார்களேயாகில், [19]அப்
பொழுது அவர்கள் என் வார்த்தைகளை ஜனங்
களுக்குத் தெரிவித்து, அவர்களைத் தங்கள்
பொல்லாத வழிகளையும் தங்கள் செய்கைக
ளின் பொல்லாப்பையும் விட்டுத் திருப்புவார்
கள். நான் சமீபத்திற்குமாத்திரமா தேவன், 23
தூரத்திற்கும் தேவன் அல்லவோ என்று **கர்த்**
**தர்** சொல்லுகிருர். யாவனுகிலும் தன்னை 24
நான் காணுதபடிக்கு மறைவிடங்களில் ஒளித்
துக்கொள்ளக் கூடுமோ என்று **கர்த்தர்** சொல்
லுகிருர்; [20]நான் வானத்தையும் பூமியையும்
நிரப்புகிறவர் அல்லவோ என்று **கர்த்தர்** சொ
ல்லுகிருர். சொப்பனங்கண்டேன், சொப்ப 25
னங்கண்டேன் என்று, என் நாமத்தைச் சொல்
லிப் பொய்த்தீர்க்கதரிசனம் உரைக்கிற தீர்க்க
தரிசிகள் சொல்லுகிறதைக் கேட்டேன். எது 26
வரைக்கும் இப்படியிருக்கும்? பொய்த் தீர்க்க
தரிசனம் சொல்லுகிற தீர்க்கதரிசிகளின் இரு
தயத்தில்ஏதாகிலுமுண்டோ? இவர்கள் தங்கள்
இருதயத்தின் வஞ்சகத்தையே தீர்க்கதரிசன
மாகச் சொல்லுகிறவர்கள். என் ஜனத்தின் 27
பிதாக்கள் பாகாலினிமித்தம் என் நாமத்தை
மறந்ததுபோல, [21]இவர்கள் தங்கள் அயலா
ருக்கு விவரிக்கிற தங்கள் சொப்பனங்களி
னுலே என் நாமத்தை அவர்கள் மறக்கும்படி
செய்யப் பார்க்கிருர்கள். சொப்பனங்கண்ட 28
தீர்க்கதரிசி சொப்பனத்தை விவரிப்பானுக;
என் வார்த்தையுள்ளவனே, என் வார்த்தையை
உண்மையாய்ச் சொல்வானுக; கோதுமைக்கு
முன் பதர் எம்மாத்திரம்? என்று **கர்த்தர்**
சொல்லுகிருர். என் வார்த்தை அக்கினி 29
யைப்போலும், [22]கல்மலையை நொறுக்கும்
சம்மட்டியைப்போலும் இருக்கிறதல்லவோ?
என்று **கர்த்தர்** சொல்லுகிருர்.

[1] உபா. 33. 27, 28. சகரி. 14. 9, 11
* யெகோவாத்சிட்கேனு = யெகோவா நமதுநீதி = புண்ணியாதர். 1கொ. 1. 30
[2] 16. 14, 15
[3] ஏசா. 43. 5, 6. ஆமோ. 9. 14, 15. செப். 3. 20
[4] ஆப. 3. 16
[5] 9. 2. ஓசி. 4. 2, 3
[6] எசே. 8. 16, 17. செப். 3. 4. மத். 21. 13
[7] நீதி. 4. 19
[8] யாத். 32. 34
[9] 2. 8. ஏசா. 9. 16
[10] ஏசா. 1. 9, 10; 41. 6, 7
[11] 9. 15
[12] 14. 14
[13] எசே. 13. 10. சகரி. 10. 2
[14] மீகா 3. 11
[15] 2 நாளா. 18. 23
[16] 30. 23, 24
[17] நீதி. 21. 30
[18] 14. 14. 27. 15
[19] 1 தெச. 5. 6
[20] 1 இரா. 8. 27. ஆமோ. 9. 2, 3
[21] நியா. 3. 7. 8. 33, 34
[22] எபி. 4. 12

30 ஆகையால், இதோ, ஒவ்வொருவராய்த் தன்
தன் அயலாரிடத்தில் என் வார்த்தையைத்
திருட்டுத்தனமாய் எடுக்கிற தீர்க்கதரிசிகளுக்கு
[1]நான் விரோதி என்று **கர்த்தர்** சொல்லுகி
31 றார். இதோ, தங்கள் நாவின் சொல்லையே
வழங்கி: அவர் அதை உரைத்தார் என்று சொல்
லுகிற தீர்க்கதரிசிகளுக்கு நான் விரோதி
32 என்று **கர்த்தர்** சொல்லுகிறார். இதோ,
பொய்ச் சொப்பனங்களைத் தீர்க்கதரிசனமா
கச் சொல்லி, அவைகளை விவரித்து, என்
ஜனத்தைத் தங்கள் பொய்களினாலும், [2]தங்
கள் வீம்புகளினாலும், மோசம் போக்குகிறவர்
களுக்கு நான் விரோதி என்று **கர்த்தர்** சொல்
லுகிறார்; நான் அவர்களை அனுப்பினது
மில்லை, அவர்களுக்குக் கற்பித்ததுமில்லை;
அவர்கள் இந்த ஜனத்துக்கு ஒரு பிரயோஜன
மாய் இருப்பதுமில்லை என்று **கர்த்தர்** சொல்
33 லுகிறார். **கர்த்தராலே** சுமரும்பாரம் என்ன
வென்று இந்த ஜனமாகிலும் ஒரு தீர்க்கதரிசி
யாகிலும் ஒரு ஆசாரியனாகிலும் உன்னைக்
கேட்டால், [3]உங்களைத் தள்ளிவிடுவேன் என்
பதே பாரம் என்று நீ அவர்களுடனே சொல்
34 லவேண்டும். **கர்த்தரால்** சுமரும் பாரம் என்று
சொல்லுகிற தீர்க்கதரிசியாகிலும் ஆசாரியனா
கிலும் ஜனமாகிலும் சரி, அப்படிச்சொல்லுகிற
மனுஷனையும் அவன் வீட்டாரையும் தண்டிப்
35 பேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறார். **கர்த்**
**தர்** என்ன மறு உத்தரவு கொடுத்தார்? **கர்த்தர்**
என்ன சொன்னார்? என்று நீங்கள் அவரவர்
தங்கள் அயலானையும் அவரவர் தங்கள் சகோ
36 தரனையும்கேட்பீர்களாக. ஆனால் **கர்த்தரால்**
சுமரும் பாரம் என்கிற சொல்லை இனி வழங்
காதிருப்பீர்களாக; அவனவன் வார்த்தையே
அவனவனுக்குப் பாரமாயிருக்கும்; [4]அதே
னென்றால், நமது தேவனாகிய சேனைகளின்
**கர்த்தர்** என்கிற ஜீவனுள்ள தேவனுடைய
37 வார்த்தைகளைப் புரட்டுகிறீர்கள். **கர்த்தர்**
உனக்கு என்ன மறுஉத்தரவு கொடுத்தார்?
**கர்த்தர்** என்ன சொன்னார்? என்று நீ தீர்க்க
38 தரிசியைக் கேட்பாயாக. நீங்களோவெனில்,
**கர்த்தரால்** சுமரும்*பாரம் என்று சொல்லுகிற
படியினாலே: **கர்த்தரின்** பாரம் என்று சொல்
லாதிருங்களென்று நான் உங்களுக்குச் சொ
ல்லி அனுப்பியும், நீங்கள் இந்த வார்த்தை
யைக் **கர்த்தரின்** பாரம் என்று சொல்லுகிறீர்
39 களே. ஆதலால், இதோ, நான் உங்களை
மறக்கவே மறந்து, [5]உங்களையும், நான் உங்க
ளுக்கும் உங்கள் பிதாக்களுக்கும் கொடுத்த
நகரத்தையும், எனக்குமுன்பாக இராதபடிக்
40 குக் கைவிட்டு, மறக்கப்படாத நித்திய நிந்
தையையும், [6]நித்திய இலச்சையையும் உங்
கள்மேல் வரப்பண்ணுவேன் என்று **கர்த்தர்**
சொல்லுகிறார்.

**24** பாபிலோன் ராஜாவாகிய நேபுகாத்நேச்
சார், [7]யோயாக்கீமின் குமாரனாகிய எகொ
னியா என்கிற யூதாவின் ராஜாவையும், யூதா
வின் பிரபுக்களையும், எருசலேமிலுள்ள தச்ச
ரையும் கொல்லரையும் சிறைப்பிடித்து, பாபி
லோனுக்குக் கொண்டுபோனபின்பு, இதோ,
[8]**கர்த்தருடைய** ஆலயத்தின்முன் வைக்கப்பட்
டிருந்த அத்திப்பழங்களுள்ள இரண்டு கூடை
களைக் **கர்த்தர்** எனக்குக் காண்பித்தார். ஒரு 2
கூடையிலே முதல் கந்தாயத்து அத்திப்பழங்
களுக்குச் சமானமான மிகவும் நல்ல அத்திப்
பழங்களும், மற்றக் கூடையிலே புசிக்கத்தகாத
மிகவும் கெட்ட அத்திப்பழங்களும் இருந்தது.
**கர்த்தர்** என்னை நோக்கி: எரேமியாவே, நீ 3
என்னத்தைக் காண்கிறாய் என்றார்; அதற்கு
நான்: அத்திப்பழங்களைக் காண்கிறேன்; நல்
லவைகளான அத்திப்பழங்கள் மிகவும் நல்ல
வைகளும், [9]கெட்டவைகளோ புசிக்கத்தகாத
மிகவும் கெட்டவைகளுமா யிருக்கிறது என்
றேன். அப்பொழுது **கர்த்தருடைய** வார்த்தை 4
எனக்கு உண்டாகி, அவர்: நான் இவ்விடத் 5
திலிருந்து, கல்தேயர் தேசத்துக்குச் சிறைப்
பட்டுப் போகவிட்ட யூதரை நான் இந்த நல்ல
அத்திப்பழங்களுக்கு ஒப்பிட்டு, [10]அவர்களுக்கு
நன்மையுண்டாக அவர்களை அங்கிகரிப்பேன்.
அவர்களுக்கு நன்மையுண்டாக நான் என் கண் 6
களை அவர்கள்மேல் வைத்து, [11]அவர்களை இந்த
தேசத்துக்குத் திரும்பிவரப்பண்ணி, அவர்க
ளைக் கட்டுவேன், அவர்களை இடிக்கமாட்
டேன், அவர்களை நாட்டுவேன், அவர்களைப்
பிடுங்கமாட்டேன். நான் **கர்த்தர்** என்று 7
அறியும் இருதயத்தை அவர்களுக்குக் கொடுப்
பேன்; [12]அவர்கள் என் ஜனமாயிருப்பார்கள்,
நான் அவர்கள் தேவனாயிருப்பேன்; [13]அவர்
கள் தங்கள் முழு இருதயத்தோடும் என்னிடத்
திற்குத் திரும்புவார்கள் என்று இஸ்ரவேலின்
தேவனாகிய **கர்த்தர்** சொல்லுகிறார். புசிக்கத் 8
தகாத கெட்ட அத்திப்பழங்களைத் தள்ளிவிடு
வதுபோல, நான் சிதேக்கியா என்கிற யூதா
வின் ராஜாவையும் அவனுடைய பிரபுக்களை
யும், இந்த தேசத்திலே மீதியான எருசலே
மின் குடிகளையும், எகிப்து தேசத்தில் குடியி
ருக்கிறவர்களையும் தள்ளிவிட்டு, அவர்களுக் 9
குத் தீமையுண்டாக அவர்களைப் பூமியிலுள்ள
எல்லா ராஜ்யங்களிலும் அலைந்து திரிகிறவர்க
ளாகவும், [14]நான் அவர்களைத் துரத்திவிட்ட
எல்லா இடங்களிலும் நிந்தையாகவும், பழ
மொழியாகவும், வசைச்சொல்லாகவும், சாப
மாகவும் வைத்து, அவர்களுக்கும் அவர்கள் 10
பிதாக்களுக்கும் நான் கொடுத்த தேசத்தில்
அவர்கள் இராதபடிக்கு நிர்மூலமாகுமட்டும்,
[15]அவர்களுக்குள்ளே பட்டயத்தையும், பஞ்சத்
தையும், கொள்ளைநோயையும் அனுப்புவேன்
என்று **கர்த்தர்** சொல்லுகிறார்.

யோசியாவின் குமாரனாகிய யோயாக் **25**
கீம் என்கிற யூதாவுடைய ராஜாவின் நாலாம்
வருஷத்துக்குச் சரியான, பாபிலோன் ராஜா
வாகிய நேபுகாத்நேச்சார் அரசாண்ட முத
லாம் வருஷத்திலே யூதாவின் ஜனம்
அனைத்தையுங்குறித்து எரேமியாவுக்கு உண்
டான வார்த்தை; அதைத் தீர்க்கதரிசியாகிய 2

1 உபா. 18. 20
2 செப். 3. 4
3 மல். 1. 1
4 கலா. 6. 5. 2பே. 3. 16
* வார்த்தை.
5 நீதி. 13. 13. ஓசி. 4. 6
6 நீதி. 8. 36
7 2 இரா. 24. 12. ஷ
8 ஆமோ. 7. 1, 4: 8. 1
9 மத். 21. 32, 33
10 எபி. 12. 10
11 29. 10, 19
12 32. 39, 40. உபா. 30. 6. எசே. 11. 19
13 3. 10. ரோ. 6. 17
14 உபா. 28. 25-37. 1 இரா. 9. 7. சங். 44. 13, 14
15 34. 17

எரேமியா யூதாவின் ஜனம் அனைத்துக்கும்,
எருசலேமின் குடிகள் எல்லாருக்கும் அறி
3 விக்கிறதற்காக அவர்களை நோக்கி: ஆமோ
னின் குமாரனாகிய யோசியாவின் பதின்
மூன்றாம் வருஷம் துவக்கி *இந்நாள்மட்டும்
சென்ற இந்த இருபத்துமூன்று வருஷமாகக்
**கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண்டா
யிற்று; [1]அதை நான் உங்களுக்கு ஏற்கனவே
சொல்லிக்கொண்டுவந்தும் நீங்கள் கேளாமற்
4 போனீர்கள். **கர்த்தர்** உங்களிடத்திற்குத் தீர்க்
கதரிசிகளாகிய தம்முடைய சகல ஊழியக்கார
ரையும் ஏற்கனவே அனுப்பிக்கொண்டேயிருந்
தும், நீங்கள் கேளாமலும், கேட்கும்படிக்கு
உங்கள் செவிகளைச் சாயாமலும் போனீர்கள்.
5 அவர்களைக்கொண்டு அவர்: உங்களில் அவன
வன் தன் தன் பொல்லாத வழியையும், [2]உங்
கள் கிரியைகளின் பொல்லாப்பையும் விட்டுத்
திரும்பி, **கர்த்தர்** உங்களுக்கும் உங்கள் பிதாக்
களுக்கும் கொடுத்த தேசத்தில் சதாகாலமும்
6 குடியிருந்து, அந்நிய தேவர்களைப் பின்பற்
றாமலும், அவைகளுக்கு ஆராதனை செய்யா
மலும், அவைகளைப் பணியாமலுமிருந்து,
[3]நான் உங்களுக்குத் தீமை செய்யாதபடிக்கு
உங்கள் கைகளின் செய்கைகளால் எனக்குக்
கோபமூண்டாக்காமலும் இருங்கள் என்று
7 சொல்லியனுப்பினேன். நீங்களோ, உங்களு
க்குத் தீமையாக உங்கள் கைகளின் செய்கை
களாலே எனக்குக் கோபமூட்டும்படிக்கு,
[4]என் சொல்லைக் கேளாமற்போனீர்கள் என்
8 று **கர்த்தர்** சொல்லுகிறார் என்றான். நீங்
கள் என் வார்த்தைகளைக் கேளாமற்போன
9 படியினால், இதோ, நான் வடக்கேயிருக்
கிற சகல வம்சங்களையும், [5]என் ஊழியக்கார
னாகிய நேபுகாத்நேச்சார் என்கிற பாபி
லோன் ராஜாவையும் அழைத்தனுப்பி, அவர்
களை இந்த தேசத்துக்கு விரோதமாகவும்,
இதின் குடிகளுக்கு விரோதமாகவும், சுற்றிலு
மிருக்கிற இந்த எல்லா ஜாதிகளுக்கும் விரோ
தமாகவும் வரப்பண்ணி, அவைகளைச் சங்கா
ரத்துக்கு ஒப்புக்கொடுத்து, அவைகளைப் பா
ழாகவும் இகழ்ச்சிக்குறியாகிய ஈசல்போடுத
லாகவும், நித்திய வனாந்தரங்களாகவும் செய்
வேன் என்று சேனைகளின் **கர்த்தர்** சொல்லு
10 கிறார். மகிழ்ச்சியின் சத்தத்தையும், சந்தோ
ஷத்தின் சத்தத்தையும், மணவாளனின் சத்
தத்தையும், மணவாட்டியின் சத்தத்தையும்,
எந்திரத்தின் சத்தத்தையும் [6]விளக்கின் வெ
ளிச்சத்தையும் அவர்களிலிருந்து நீங்கப்பண்
ணுவேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறார்.
11 இந்த தேசமெல்லாம் வனாந்தரமும் பாழுமா
கும்; இந்த ஜாதிகளோ, [7]எழுபதுவருஷமா
கப் பாபிலோன் ராஜாவைச் சேவிப்பார்கள்.
12 எழுபது வருஷம் நிறைவேறினபின்பு, நான்
பாபிலோன் ராஜாவினிடத்திலும், அந்த ஜாதி
யினிடத்திலும், கல்தேயருடைய தேசத்தினி
டத்திலும், அவர்களுடைய அக்கிரமத்தை
விசாரித்து, [8]அதை நித்திய பாழிடமாக்கி,
நான் அந்த தேசத்துக்கு விரோதமாய் உரை 13
த்த என் வார்த்தைகளையெல்லாம், [9]எரேமியா
சகல ஜாதிகளுக்கும் விரோதமாகத் தீர்க்க
தரிசனமாய்ச் சொன்னதும், இந்தப் புஸ்தகத்
தில் எழுதியிருக்கிறதுமான யாவையும் அதின்
மேல் வரப்பண்ணுவேன் என்று **கர்த்தர்**
சொல்லுகிறார். அநேகம் ஜாதிகளும் பெரிய 14
ராஜாக்களும் அவர்களை அடிமைகொள்வார்
கள்; [10]நான் அவர்களுக்கு அவர்கள் கிரியை
களுக்குத் தக்கதாகவும், அவர்கள் கைகளின்
செய்கைகளுக்குத் தக்கதாகவும் பதில் அளிப்
பேன் என்கிறார்.

இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்** என்னை 15
நோக்கி: நான் உன்னை அனுப்புகிற ஜாதிகள்
குடித்து, நான் தங்களுக்குள் அனுப்பும் பட்
டயத்தால் அவர்கள் தள்ளாடி, புத்திகெட்டுப்
போகும்படிக்கு, இந்த உக்கிரமாகிய மது 16
பானத்தின் பாத்திரத்தை நீ என் கையிலிரு
ந்து வாங்கி, [11]அவர்கள் எல்லாருக்கும் அதி
லே குடிக்கக் கொடு என்றார். அப்பொழுது 17
நான் அந்தப் பாத்திரத்தைக் **கர்த்தருடைய**
கையிலிருந்து வாங்கி, **கர்த்தர்** என்னை அனு
ப்பின எல்லா ஜாதிகளுக்கும் குடிக்கக் கொ
டுத்தேன். எருசலேமுக்கும், யூதாவின் பட் 18
டணங்களுக்கும், அதின் ராஜாக்களுக்கும்,
அதின் பிரபுக்களுக்கும், அவர்களை இந்நாளி
லிருக்கிறபடி வனாந்தரமும் பாழும் இகழ்ச்சிக்
குறியாகிய ஈசல் போடுதலும் சாபமுமாக்கிப்
போடும்படி குடிக்கக் கொடுத்தேன். எகிப் 19
தின் ராஜாவாகிய பார்வோனுக்கும், அவன்
ஊழியக்காரருக்கும், [12]அவன் பிரபுக்களுக்
கும், அவனுடைய எல்லா ஜனத்துக்கும்,
கலந்து குடியிருக்கிற அனைவருக்கும், [13]ஊ 20
த்ஸ் தேசத்தினுடைய எல்லா ராஜாக்களுக்
கும், பெலிஸ்தருடைய தேசத்தில் இருக்கிற
எல்லா ராஜாக்களுக்கும், அஸ்கலோனுக்கும்,
காசாவுக்கும், எக்ரோனுக்கும், அஸ்தோத்தில்
மீதியானவர்களுக்கும், ஏதோமுக்கும், மோ 21
வாபுக்கும், அம்மோன் புத்திரருக்கும், தீரு 22
வினுடைய எல்லா ராஜாக்களுக்கும், சீதோ
னுடைய எல்லா ராஜாக்களுக்கும், சமுத்திரத்
துக்கு அக்கரையான தீவுகளின் ராஜாக்களுக்
கும், தேதானுக்கும், தேமாவுக்கும், பூசுக் 23
கும், கடையாந்தரங்களிலுள்ள அனைவருக்
கும், அரபிதேசத்து எல்லா ராஜாக்களுக்கும், 24
[14]வனாந்தரத்தில் கலந்து குடியிருக்கிறவர்களு
டைய எல்லா ராஜாக்களுக்கும், சிம்ரியினு 25
டைய எல்லா ராஜாக்களுக்கும், ஏலாமினு
டைய எல்லா ராஜாக்களுக்கும், மேதியாவி
னுடைய எல்லா ராஜாக்களுக்கும், வடக் 26
கேயிருக்கிற எல்லா ராஜாக்களுக்கும், சமீப
மானவர்களும் தூரமானவர்களுமாகிய அவ
ரவர்களுக்கும், பூமியின்மீதிலுள்ள சகல தே
சத்து ராஜ்யங்களுக்கும் குடிக்கக் கொடுத்
தேன்; †[15]சேசாக்கு என்கிற ராஜாவும் அவர்
களுக்குப் பிற்பாடு குடிப்பான் என்றார்.
நீங்கள் குடித்து, [16]வெறித்து, வாந்திபண்ணி, 27

* கி. மு. 629 முதல் 606. வரைக்கும்
1 1. 2: 7. 13. ழ: 11. 7. ழ: 29. 19. எசா. 55. 2. யோ. 8. 47
2 2 இரா. 17. 13. யோனா 3. 8
3 உபா. 32. 21. 1 இரா. 14. 22
4 சிறி. 8. 36
5 சிறி. 21. 1. எசா. 10. 5 44. 28
6 பிர. 12. 2–4. எசா. 24. 7, 8. ஓசி. 2. 11
7 2 இரா. 14. 1. எஸ்றா 1. 1. தானி. 9. 2. கி. மு. 606 முதல் 536 வரைக்கும்
8 எசா. 14. 23: 21. 1 ழ: 47. 1
9 தானி. 5. 28, 31
10 27. 7
11 யோபு 21. 20. சங். 75. 8. எசா. 51. 17. எசே 23. 34. நாகூம் 3. 11. வெளி. 14. 10
12 46. 2. ழ
13 யாத். 12. 38. எண். 11. 4. யோபு 1. 1
14 எசே. 30. 5
† பாபிலோன்
15 51. 41
16 எசா. 51. 21 63. 6. ஆப். 2. 16

நான் உங்களுக்குள் அனுப்பும் பட்டயத்தா
லே எழுந்திராதபடிக்கு விழுங்கள் என்று
இஸ்ரவேலின் தேவனாகிய சேனைகளின் கர்
த்தர் உரைக்கிறார் என்று நீ அவர்களுக்குச்
சொல்லு.
28 அவர்கள் குடிக்கிறதற்கு அந்தப் பாத்திரத்
தை உன் கையில் வாங்கமாட்டோம் என்று
சொல்வார்களானால், நீ அவர்களை நோக்கி:
நீங்கள் குடித்துத் தீரவேண்டும் என்று சே
னைகளின் கர்த்தர் சொல்லுகிறார் என்று
29 சொல்லு. இதோ, தீங்கைக் கட்டளையிட
நான் என் நாமம் தரிக்கப்பட்ட நகரத்திலே
துவக்கும்போது, [1]நீங்கள் தண்டனைக்குத்
தப்புவீர்களோ? நீங்கள் தப்புவதில்லை; நான்
பூமியின் எல்லாக் குடிகளின்மேலும் பட்டய
த்தை வரவழைக்கிறேன் என்று சேனைகளின்
30 கர்த்தர் சொல்லுகிறார். ஆதலால் நீ அவர்
களுக்கு விரோதமாக இந்த வார்த்தைகளை
யெல்லாம் தீர்க்கதரிசனமாக உரைத்து, அவர்
களை நோக்கி: கர்த்தர் உயரத்திலிருந்து கெர்
ச்சித்து, [2]தமது பரிசுத்த வாசஸ்தலத்திலிரு
ந்து தம்முடைய சத்தத்தைக் *காட்டி, தம்மு
டைய தாபரத்துக்கு விரோதமாய்க் கெர்ச்சிக்
கவே கெர்ச்சித்து, [3]ஆலையை மிதிக்கிறவர்கள்
ஆர்ப்பரிப்பதுபோல் பூமியினுடைய எல்
லாக் குடிகளுக்கும் விரோதமாக ஆர்ப்பரிப்
31 பார் என்று சொல் என்றார். ஆரவாரம்
பூமியின் கடையாந்தரமட்டும் போய் எட்டும்;
ஜாதிகளோடே கர்த்தருக்கு வழக்கு இருக்
கிறது; [4]மாம்சமான யாவரோடும் அவர் நியா
யத்துக்குள் பிரவேசிப்பார்; துன்மார்க்கரைப்
பட்டயத்துக்கு ஒப்புக்கொடுப்பார் என்று கர்
த்தர் சொல்லுகிறார்.
32 இதோ, ஜாதிஜாதிக்குத் தீமை பரம்பும்,
[5]பூமியின் எல்லைகளிலிருந்து மகா புசல்
33 எழும்பும். அக்காலத்திலே பூமியின் ஒரு
முனை துவக்கி பூமியின் மறுமுனைமட்டும் கர்
த்தரால் கொலையுண்டவர்கள் கிடப்பார்கள்;
[6]அவர்கள் புலம்பப்படாமலும் சேர்க்கப்படா
மலும் அடக்கம்பண்ணப்படாமலும் பூமியின்
34 மேல் எருவாவார்கள். மேய்ப்பர்களே, அலறுங்
கள்; மந்தையில் பிரஸ்தாபமானவர்களே, சாம்
பலில் புரண்டு கதறுங்கள்; [7]நீங்கள் வெட்
டப்படவும் சிதறடிக்கப்படவும் உங்கள் நாட்
கள் நிறைவேறின; உச்சிதமான பாத்திரம்
35 போல் விழுந்து நொறுங்குவீர்கள். மேய்ப்பர்
கள் ஓடிப்போகிறதற்கும், [8]மந்தையில் பிரஸ்
தாபமானவர்கள் தப்பித்துக் கொள்ளுகிறதற்
36 கும் இடமிராது. தங்கள் மேய்ச்சலைக் கர்த்தர்
பாழாக்கினதினிமித்தம் மேய்ப்பர்கள் கூப்பி
டுகிறதும், மந்தையில் பிரஸ்தாபமானவர்கள்
37 அலறுகிறதுமான சத்தமுண்டாகும். அவர்
கள் சுகித்திருந்த தாபரங்கள் கர்த்தருடைய கோ
38 பத்தின் எரிச்சலாலே சங்காரமாயின. அவர்
பதிவிருந்துபுறப்படும் [9]சிங்கத்தைப்போலிருப்
பார்; ஒடுக்குகிறவனுடைய உக்கிரத்தினாலும்,
அவனுடைய உக்கிரகோபத்தினாலும் அவர்கள்

[1] நீதி. 11. 31. எசே. 9. 6. லூ. 23. 31. 1 பே. 4. 17
[2] 2 நாளா. 30. 27. ஏசா. 42. 13
* இட்டு.
[3] ஏசா. 16. 9
[4] ஏசா. 66. 15
[5] செப். 3. 8
[6] வெளி. 14. 19, 20
[7] 28. 1
[8] ஆமோ. 2, 14
[9] சங். 76. 2. சகரி. 2. 13
[10] 23, 28. எசே. 3. 10, 11. மத். 28. 20. அப். 20. 26, 27
[11] 1 இரா. 21. 27, 29. யோனா 3. 8-10
[12] லேவி. 26. 14. உபா. 28. 15.
[13] 1 சாமு. 4. 10-12. ஏசா. 65. 15
[14] 38. 4, 5

தேசம் பாழாயிற்றென்று சேனைகளின் கர்த்தர்
சொல்லுகிறார் என்று சொல் என்றார்.
யோசியாவின் குமாரனும் யூதாவின் 26
ராஜாவுமாகிய யோயாக்கீமுடைய ராஜ்யபா
ரத்தின் துவக்கத்திலே கர்த்தரால் உண்டான
வார்த்தை: நீ கர்த்தருடைய ஆலயத்தின் பிரா 2
காரத்திலேநின்றுகொண்டு, கர்த்தருடைய ஆல
யத்திலே பணியவருகிற யூதாவுடைய பட்ட
ணங்களின் குடிகள் அனைவரோடும் சொல்
லும்படி நான் உனக்குக் கற்பித்த எல்லா
வார்த்தைகளையும் அவர்களுக்குச் சொ
ல்லு; [10]ஒரு வார்த்தையையும் குறைத்துப்
போடாதே என்று கர்த்தர் சொல்லுகிறார்.
அவர்கள் செய்கைகளுடைய பொல்லாப்பி 3
னிமித்தம் நான் அவர்களுக்குச் செய்ய
நினைக்கிற தீங்குக்கு நான் மனஸ்தாபப்பட
த்தக்கதாக ஒருவேளை அவர்கள் கேட்டு,
[11]அவரவர் தம்தம் பொல்லாத வழியைவிட்
டுத் திரும்புவார்கள். நீ அவர்களை நோக்கி: 4
நான் உங்களிடத்துக்கு ஏற்கனவே அனுப்பிக்
கொண்டிருந்தும், [12]நீங்கள் கேளாமற்போன
என் ஊழியக்காரராகிய தீர்க்கதரிசிகளின் வா
ர்த்தைகளை நீங்கள் கேட்கும்படிக்கும், நான் 5
உங்கள் முன்வைத்த என் நியாயப்பிரமாணத்
தின்படி நீங்கள் நடக்கும்படிக்கும், நீங்கள் என்
சொல்லைக்கேளாமற்போனால், நான் இந்த ஆல 6
யத்தைச் சீலோவாவைப்போலாக்கி, [13]இந்த
நகரத்தைப் பூமியிலுள்ள எல்லா ஜாதிகளுக்கு
முன்பாகவும் சாபமாக்கிப்போடுவேன் என்று
கர்த்தர் உரைக்கிறார் என்று சொல் என்றார்.
எரேமியா இந்த வார்த்தைகளையெல்லாம் கர்த் 7
தருடைய ஆலயத்திலே சொல்லும்போது,
ஆசாரியர்களும், தீர்க்கதரிசிகளும், சகல
ஜனங்களும் கேட்டார்கள். சகல ஜனங்க 8
ளுக்கும் சொல்லக் கர்த்தர் தனக்குக் கற்பித்த
வைகளையெல்லாம் எரேமியா சொல்லி முடி
த்தபோது, ஆசாரியர்களும் தீர்க்கதரிசிகளும்
சகல ஜனங்களும் அவனைப் பிடித்து: நீ சாகவே
சாகவேண்டும். இந்த ஆலயம் சீலோவைப் 9
போலாகி, இந்த நகரம் குடியில்லாமல் பாழா
ய்ப்போம் என்று, நீ கர்த்தருடைய நாமத்
திலே தீர்க்கதரிசனம் சொல்வானேன் என்று
சொல்லி; ஜனங்கள் எல்லாரும் கர்த்தருடைய
ஆலயத்திலே எரேமியாவுக்கு விரோதமாய்க்
கூடினார்கள்.
யூதாவின் பிரபுக்கள் இந்த வர்த்தமானங்க 10
ளைக் கேட்டு, ராஜாவின் வீட்டிலிருந்து கர்த்
தருடைய ஆலயத்துக்குப் போய், கர்த்தரு
டைய புதிய வாசலில் உட்கார்ந்தார்கள். அப் 11
பொழுது ஆசாரியர்களும் தீர்க்கதரிசிகளும்,
பிரபுக்களையும் சகல ஜனங்களையும் நோக்கி:
இந்த மனுஷன் மரண ஆக்கினைக்குப் பாத்தி
ரன்; உங்கள் செவிகளாலே நீங்கள் கேட்ட
படி, [14]இந்த நகரத்துக்கு விரோதமாகத் தீர்க்க
தரிசனம் சொன்னானே என்றார்கள். அப் 12
பொழுது எரேமியா எல்லாப் பிரபுக்களையும்,
எல்லா ஜனங்களையும் நோக்கி: நீங்கள் கேட்ட

எல்லா வார்த்தைகளையும் இந்த ஆலயத்துக்
கும் இந்த நகரத்துக்கும் விரோதமாகத் தீர்க்க
தரிசனமாய்ச் சொல்லக் **கர்த்தர்** என்னை அனு
13 ப்பினார். இப்பொழுதும் நீங்கள் உங்கள் வழி
களையும், உங்கள் கிரியைகளையும் சீர்ப்படுத்தி,
[1]உங்கள் தேவனாகிய **கர்த்தருடைய** சத்தத்
தைக் கேளுங்கள்; அப்பொழுது **கர்த்தர்** உங்
களுக்கு விரோதமாய்ச் சொன்ன தீங்குக்கு
14 மனஸ்தாபப்படுவார். நானோவெனில், இதோ,
உங்கள் கையில் இருக்கிறேன்; உங்கள் பார்
வைக்கு நன்மையும் நியாயமுமாயிருக்கிறதை
15 எனக்குச் செய்யுங்கள். ஆகிலும் நீங்கள்
என்னைக் கொன்றுபோட்டால், நீங்கள் குற்ற
மில்லாத இரத்தப்பழியை உங்கள்மேலும்
இந்த நகரத்தின்மேலும் இதின் குடிகளின்
மேலும் சுமத்திக்கொள்வீர்களென்று நிச்சய
மாய் அறியுங்கள்; இந்த வார்த்தைகளையெல்
லாம் உங்கள் செவிகளிலே சொல்லக் **கர்த்**
**தர்** மெய்யாகவே என்னை உங்களிடத்திற்கு
16 அனுப்பினார் என்று சொன்னான். அப்பொ
ழுது பிரபுக்களும் சகல ஜனங்களும், ஆசாரி
யர்களையும் தீர்க்கதரிசிகளையும் நோக்கி: இந்த
மனுஷன் மரண ஆக்கினைக்குப் பாத்திர
னல்ல; நம்முடைய தேவனாகிய **கர்த்தரின்**
நாமத்திலே நம்முடனே பேசினான் என்றார்
17 கள். தேசத்திலே மூப்பானவர்களில் சிலர்
எழும்பி, [2]சபையாகிய ஜனங்களை நோக்கி:
18 யூதாவின் ராஜாவாகிய எசேக்கியாவின் நாட்
களில் மொரேசா ஊரானாகிய மீகா தீர்க்க
தரிசனஞ்சொல்லி, [3]யூதாவின் சகல ஜனங்க
ளையும் பார்த்து: சீயோன் வயல்வெளியாக
உழப்பட்டு, எருசலேம் மண்மேடுகளாய்ப்
போம்; இந்த ஆலயத்தின் பர்வதம் காட்டி
லுள்ள மேடுகளாய்ப்போம் என்று சேனைக
ளின் **கர்த்தர்** உரைத்தார் என்று சொன்னான்.
19 அவனை யூதாவின் ராஜாவாகிய எசேக்கியா
வும் மற்ற யூதர்களும் சேர்ந்து கொன்றுபோட்
டார்களா? அவன் **கர்த்தருக்குப்** பயந்து, **கர்த்**
**தரின்** முகத்தை நோக்கிக் கெஞ்சினானல்
லவா? [4]அப்பொழுது **கர்த்தர்** அவர்களுக்கு
விரோதமாகச் சொல்லியிருந்த தீங்குக்கு
மனஸ்தாபப்பட்டார்; இப்போதும், [5]நாம் நம்
முடைய ஆத்துமாவுக்கு விரோதமாக மகா
பொல்லாப்பை வரப்பண்ணுகிறவர்களாயி
20 ருக்கிறோமே. கீரியாத்யாரீம் ஊரானாகிய
செமாயாவின் குமாரன் உரியா என்னும் ஒரு
மனுஷனும் **கர்த்தருடைய** நாமத்திலே தீர்க்க
தரிசனம் சொல்லுகிறவனாயிருந்தான்; அவன்
எரேமியாவின் வார்த்தைகளுக்குச் சரியாக
இந்த நகரத்துக்கும் இந்த தேசத்துக்கும் விரோ
21 தமாகத் தீர்க்கதரிசனம் சொன்னான். யோயாக்
கீம் ராஜாவும் அவனுடைய சகல பராக்கிரம
சாலிகளும் பிரபுக்களும் அவன் வார்த்தைக
ளைக் கேட்டபோது, ராஜா அவனைக் கொன்று
போடும்படி எத்தனித்தான்; அதை உரியா
கேட்டு, பயந்து, [6]ஓடிப்போய், எகிப்திலே
22 சேர்ந்தான். அப்பொழுது யோயாக்கீம் ராஜா

[1] 7. 3–7
[2] அப். 5. 34. ழ
[3] மீகா 1. 1; 3. 12
[4] 2 சாமு. 24. 16. 2 நாளா. 32. 26
[5] அப். 5. 39
[6] மத். 10. 23
[7] 2 இரா. 22. 12, 14. ஏசா. 37. 32, 33
[8] எசே. 4. 1; 12. 3
[9] சங். 146. 6. ஏசா. 45. 12
[10] உபா. 32. 8, 9. சங். 115. 16. தானி. 4. 17, 32
[11] 25. 9; 28. 14; 43. 10. எசே. 29. 18–20. தானி. 2. 38
[12] 2 நாளா. 36. 20. தானி. 5. 19. 26–31
[13] 25. 14
[14] ஏசா. 47. 12-14

அக்போரின் குமாரனாகிய எல்நாத்தானையும்
அவனோடேகூட வேறே சிலரையும் எகிப்து
வரைக்கும் அனுப்பினான். இவர்கள் உரி 23
யாவை எகிப்திலிருந்து கொண்டுவந்து,
அவனை யோயாக்கீம் ராஜாவினிடத்தில் விட்
டார்கள்; அவன் பட்டயத்தாலே அவனை
வெட்டி, அவன் உடலை நீச ஜனங்களின் பிரே
தக்குழிகளிடத்திலே எறிந்துவிட்டான் என்
றார்கள். ஆகிலும் எரேமியாவைக் கொல்ல 24
ஜனங்களின் கையில் ஒப்புக்கொடாதபடி,
[7]சாப்பானுடைய குமாரனாகிய அகீக்காம் அவ
னுக்குச் சகாயமாயிருந்தான்.

**27** யோசியாவின் குமாரனும் யூதாவின்
ராஜாவுமாகிய யோயாக்கீமுடைய ராஜ்யபாரத்
தின் துவக்கத்திலே **கர்த்தரால்** எரேமியா
வுக்கு உண்டான வார்த்தை: **கர்த்தர்** என்னை 2
நோக்கி: நீ உனக்குக் கயிறுகளையும் நுகங்க
ளையும் உண்டுபண்ணி, [8]அவைகளை உன்
கழுத்திலே பூட்டிக்கொண்டு, அவைகளை 3
எருசலேமுக்குச் சிதேக்கியா ராஜாவினிடத்
தில் வரும் ஸ்தானாபதிகள் கையிலே ஏதோ
மின் ராஜாவுக்கும், மோவாபின் ராஜாவுக்கும்,
அம்மோன் புத்திரரின் ராஜாவுக்கும், தீரு
வின் ராஜாவுக்கும், சீதோனின் ராஜாவுக்கும்
அனுப்பி, அவர்கள் தங்கள் எஜமான்களுக் 4
குச் சொல்லும்படிக் கற்பிக்கவேண்டுமென்று
இஸ்ரவேலின் தேவனாகிய சேனைகளின்
**கர்த்தர்** உரைக்கிறது என்னவென்றால், நான் 5
பூமியையும் மனுஷனையும் [9]பூமியின்மேலுள்ள
மிருகஜீவன்களையும் என் மகா பலத்தினாலும்
ஓங்கிய என் புயத்தினாலும் உண்டாக்கி
னேன்; [10]எனக்கு இஷ்டமானவனுக்கு
அதைக் கொடுக்கிறேன். இப்பொழுதும் 6
நான் இந்த தேசங்களையெல்லாம் என் ஊழி
யக்காரனாகிய நேபுகாத்நேச்சார் என்கிற பாபி
லோன் ராஜாவின் கையிலே கொடுத்தேன்;
[11]அவனுக்கு ஊழியஞ்செய்யும்படி வெளியின்
மிருகஜீவன்களையும் கொடுத்தேன். அவனு 7
டைய தேசத்துக்குக் காலம் வருகிறவரையில்
சகல ஜாதிகளும் அவனையும் அவனுடைய
புத்திர பௌத்திரரையும் சேவிப்பார்கள்;
[12]அதின்பின்பு அநேகம் ஜாதிகளும் பெரிய
ராஜாக்களும்[13]அவனை அடிமைகொள்வார்கள்.
எந்த ஜாதியாவது, எந்த ராஜ்யமாவது பாபி 8
லோன் ராஜாவாகிய நேபுகாத்நேச்சார் என்
பவனைச் சேவியாமலும், தன் கழுத்தைப்
பாபிலோன் ராஜாவின் நுகத்துக்குக் கீழ்ப்
படுத்தாமலும் போனால், அந்த ஜாதியை நான்
அவன் கையாலே நிர்மூலமாக்குமளவும், பட்
டயத்தாலும் பஞ்சத்தாலும் கொள்ளைநோயா
லும் தண்டிப்பேன் என்று **கர்த்தர்** சொல்
லுகிறார். பாபிலோன் ராஜாவை நீங்கள் 9
சேவிப்பதில்லையென்று உங்களுக்குச் சொல்
லுகிற உங்கள் தீர்க்கதரிசிகளுக்கும், உங்கள்
குறிகாரருக்கும், உங்கள் சொப்பனக்காரருக்
கும், உங்கள் நாட்பார்க்கிறவர்களுக்கும், [14]உங்
கள் சூனியக்காரருக்கும் நீங்கள் செவிகொடா

10 திருங்கள். நான் உங்களை உங்கள் தேசத்தி
லிருந்து தூரப்படுத்துகிறதற்கும், உங்களைத்
துரத்திவிடுகிறதற்கும், [1]நீங்கள் அழிகிறதற்கு
மாக அவர்கள் உங்களுக்குப் பொய்யான தீர்க்க
11 தரிசனம் சொல்லுகிறார்கள். ஆனாலும் எந்த
ஜாதி தன் கழுத்தைப் பாபிலோன் ராஜாவின்
நுகத்துக்குக் கீழ்ப்படுத்தி, அவனைச் சேவிக்
குமோ, அந்த ஜாதியைத் தன் தேசத்தைப்
பயிரிட்டு, அதிலே குடியிருந்து தாபரிக்கப்
பண்ணுவேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறார்.
12 இந்த எல்லா வார்த்தைகளின்படியே நான்
யூதாவின் ராஜாவாகிய சிதேக்கியாவோடு
பேசி: [2]உங்கள் கழுத்தைப் பாபிலோன்
ராஜாவின் நுகத்துக்குக் கீழ்ப்படுத்தி, அவனை
யும் அவன் ஜனத்தையும் சேவியுங்கள்; [3]அப்
13 பொழுது பிழைப்பீர்கள். பாபிலோன் ராஜா
வைச் சேவியாமற்போகிற ஜாதிக்கு விரோத
மாகக் **கர்த்தர்** சொன்னதின்படியே, நீயும்
உன் ஜனமும் பட்டயத்தாலும் பஞ்சத்தா
லும் கொள்ளைநோயாலும் [4]சாவானேன்?
14 நீங்கள் பாபிலோன் ராஜாவைச் சேவிப்பதில்
லையென்று உங்களுடனே சொல்லுகிற தீர்க்க
தரிசிகளின் வார்த்தைகளைக் கேளாதிருங்கள்;
[5]அவர்கள் உங்களுக்குப் பொய்யான தீர்க்க
15 தரிசனம் சொல்லுகிறார்கள். நான் அவர்களை
அனுப்பினதில்லை; நான் உங்களைத் துரத்தி
விடுகிறதற்கும், நீங்களும் உங்களுக்குத் தீர்க்க
தரிசனம் சொல்லுகிற [6]தீர்க்கதரிசிகளும்
அழிந்துபோகிறதற்கும் அல்லவோ இவர்
கள் என் நாமத்தைச் சொல்லி, பொய்
யான தீர்க்கதரிசனம் உரைக்கிறார்கள்
என்று **கர்த்தர்** சொல்லுகிறார் என்றேன்.
16 மேலும் நான் ஆசாரியரையும் இந்த எல்லா
ஜனங்களையும் நோக்கி: இதோ, **கர்த்தருடைய**
ஆலயத்தின் பணிமுட்டுகள் இப்பொழுது
சீக்கிரத்திலே பாபிலோனிலிருந்து திரும்பிக்
கொண்டுவரப்படுமென்று, உங்களுக்குத் தீர்க்
கதரிசனம் சொல்லுகிற உங்களுடைய தீர்க்க
தரிசிகளின் வார்த்தைகளைக் கேளாதிருங்கள்
என்று **கர்த்தர்** சொல்லுகிறார்; [7]அவர்கள் உங்
களுக்குப் பொய்யான தீர்க்கதரிசனம் சொல்
17 லுகிறார்கள். அவர்களுக்குச் செவிகொடா
திருங்கள்; பாபிலோன் ராஜாவைச் சேவியுங்
கள், அப்பொழுது பிழைப்பீர்கள்; இந்த நக
18 ரம் பாழாய்ப் போகவேண்டியதென்ன? அல்
லது அவர்கள் தீர்க்கதரிசிகளாயிருந்து, [8]அவ
ர்களிடத்திலே **கர்த்தருடைய** வார்த்தை இருக்
தால், **கர்த்தருடைய** ஆலயத்திலும், யூதா ராஜா
வின் அரமனையிலும், எருசலேமிலும் மீதி
யான பணிமுட்டுகள் பாபிலோனுக்குப் போ
காதபடிக்கு அவர்கள் சேனைகளின் **கர்த்தரை**
19 நோக்கி மன்றாடட்டுமே. பாபிலோன் ராஜா
வாகிய நேபுகாத்நேச்சார் யோயாக்கீமின் குமா
ரனாகிய எகொனியா என்னும் யூதாவின் ரா
ஜாவையும், யூதாவிலும் எருசலேமிலுமிருந்த
பெரியோர் அனைவரையும், [9]எருசலேமிலி
ருந்து பாபிலோனுக்குச் சிறைப்பிடித்துக்
கொண்டுபோகையில், எடுக்காமல் விட்ட 20
[10]சகல தூண்களையும், கடல் தொட்டியையும்,
ஆதாரங்களையும், இந்த நகரத்தில் மீதியான
மற்றப் பணிமுட்டுகளையுங் குறித்துச் சேனை
களின் **கர்த்தர்** சொல்லுகிறது என்னவென்
றால், **கர்த்தருடைய** ஆலயத்திலும், யூதா ரா 21
ஜாவின் அரமனையிலும், எருசலேமிலும் மீதி
யான அந்தப் பணிமுட்டுகள் பாபிலோனுக்
குக் கொண்டுபோகப்படுமென்று [11]இஸ்ரவே
லின் தேவனாகிய சேனைகளின் **கர்த்தர்** சொ
ல்லுகிறார். நான் அவைகளை விசாரிக்கும் 22
நாள்வரைக்கும் அவைகள் அங்கே இருக்கும்;
[12]பின்பு அவைகளைத் திரும்ப இந்த ஸ்தலத்
திற்குக் கொண்டுவரப்பண்ணுவேன் என்று
**கர்த்தர்** சொல்லுகிறார் என்றேன்.

யூதாவுடைய ராஜாவாகிய சிதேக்கியா **28**
அரசாளத் துவக்கின [13]நாலாம் வருஷம் ஐந்
தாம் மாதத்திலே, அசூரின் குமாரனாகிய அன
னியா என்னப்பட்ட கிபியோன் ஊரானாகிய
தீர்க்கதரிசி **கர்த்தருடைய** ஆலயத்திலே ஆசா
ரியர்களும் சகல ஜனங்களும் பார்த்திருக்க
என்னை நோக்கி: இஸ்ரவேலின் தேவனாகிய 2
சேனைகளின் **கர்த்தர்** உரைக்கிறது என்ன
வென்றால், [14]பாபிலோன் ராஜாவின் நுகத்
தை முறித்தேன். பாபிலோன் ராஜாவாகிய 3
நேபுகாத்நேச்சார் இவ்விடத்திலிருந்து எடுத்
துப் பாபிலோனுக்குக் கொண்டுபோன **கர்த்
தருடைய** ஆலயத்தின் பணிமுட்டுகளையெல்
லாம் நான் இரண்டு வருஷகாலத்திலே [15]இவ்
விடத்துக்குத் திரும்பக் கொண்டுவரப்பண்
ணுவேன். யோயாக்கீமின் குமாரனாகிய 4
எகொனியா என்கிற யூதாவுடைய ராஜாவை
யும் பாபிலோனுக்குச் சிறையாகக் கொண்டு
போகப்பட்ட யூதர் அனைவரையும் நான் இவ்
விடத்துக்குத் திரும்பிவரப்பண்ணுவேன்; பா
பிலோன் ராஜாவின் நுகத்தை உடைப்பேன்
என்றார் என்று சொன்னான். அப்பொழுது 5
எரேமியா தீர்க்கதரிசி ஆசாரியர்கள் பார்த்தி
ருக்கவும், **கர்த்தருடைய** ஆலயத்தில் நின்றி
ருந்த ஜனங்களெல்லாரும் பார்த்திருக்கவும்
அனனியா தீர்க்கதரிசியை நோக்கி: ஆமென், 6
**கர்த்தர்** அப்படியே செய்வாராக; [16]**கர்த்தரு
டைய** ஆலயத்தின் பணிமுட்டுகளையும் சிறை
ப்பட்டுப்போன அனைவரையும் பாபிலோனி
லிருந்து திரும்பிவரப்பண்ணுவாரென்று நீ
தீர்க்கதரிசனமாகச் சொன்ன உன் வார்த்தை
களைக் **கர்த்தர்** நிறைவேற்றுவாராக. ஆகிலும், 7
உன் செவிகளும் சகல ஜனத்தின் செவிக
ளும் கேட்க நான் சொல்லும் வார்த்தையைக்
கேள். பூர்வகாலமுதல் எனக்கு முன்னும் 8
உனக்கு முன்னும் இருந்த தீர்க்கதரிசிகள்
அநேகம் தேசங்களுக்கு விரோதமாகவும், பெ
ரிய ராஜ்யங்களுக்கு விரோதமாகவும், [17]யுத்
தத்தையும் பஞ்சத்தையும் கொள்ளைநோயை
யுங் குறித்துத் தீர்க்கதரிசனம் சொன்னார்கள்.
சமாதானம் வரும் என்று தீர்க்கதரிசி தீர்க்க 9
தரிசனம் சொல்லியிருக்க, அந்தத் தீர்க்கதரிசி

[1] எசே. 14. 9-11
[2] 28. 1. 38. 17
[3] நீதி. 1. 33
[4] எசே. 18. 31
[5] 14. 14
[6] மத். 15. 14
[7] 28. 3. 2 நாளா. 36. 7, 10. தானி. 1. 2
[8] 1 இரா. 18. 24, 26. மல். 1. 9. யாக். 5. 16-18
[9] 24. 1. 2 இரா. 24. 14, 15
[10] 52. 17-23. 2 இரா. 25. 13-27
[11] 32. 5
[12] 29. 10. எஸ்று 1. 7; 7. 19. நீதி. 21. 30
[13] 27. 1
[14] 27. 12
[15] 27. 16
[16] 1 இரா. 1. 36
[17] லேவி. 13. 18. ஆமோ. 1. 11. யோவே. 1. 2

சொன்ன வார்த்தையின்படியே வந்தால்,
[1]அப்பொழுது அவன் கர்த்தர் மெய்யாய்
அனுப்பின தீர்க்கதரிசியாக விளங்குவானெ
ன்று எரேமியா தீர்க்கதரிசி சொன்னான்.
10 அப்பொழுது அனனியா என்கிற தீர்க்கதரிசி
எரேமியா தீர்க்கதரிசியின் கழுத்திலிருந்த
நுகத்தை எடுத்து [2]அதை உடைத்துப்போட்
11 டான். பின்பு அனனியா சகல ஜனங்களு
க்கு முன்பாகவும்: இந்தப் பிரகாரமாக
இரண்டு வருஷகாலத்திலே பாபிலோன் ரா
ஜாவாகிய நேபுகாத்நேச்சாருடைய நுகத்தைச்
சகல ஜாதிகளின் கழுத்திலுமிருந்து விலக
உடைத்துப்போடுவேன் என்று கர்த்தர் சொல்
லுகிறார் என்றான். [3]அப்பொழுது எரேமியா
12 தீர்க்கதரிசி தன் வழியே போனான். அனனி
யா என்கிற தீர்க்கதரிசி எரேமியா தீர்க்கதரிசி
யின் கழுத்திலிருந்த நுகத்தை உடைத்துப்
போட்ட பிற்பாடு, கர்த்தருடைய வார்த்தை
13 எரேமியாவுக்கு உண்டாகி, அவர்: நீ போய்,
அனனியாவை நோக்கி: நீ மர நுகத்தை உடை
த்தாய்; அதற்குப் பதிலாக இருப்பு நுகத்தை
14 உண்டுபண் என்று கர்த்தர் சொன்னார். பாபி
லோன் ராஜாவாகிய நேபுகாத்நேச்சாரைச்
சேவிக்கும்படிக்கு இருப்பு நுகத்தை இந்த
எல்லா ஜாதிகளுடைய கழுத்தின்மேலும் போ
ட்டேன்; [4]அவர்கள் அவனைச் சேவிப்பார்
கள்; வெளியின் மிருகஜீவன்களையும் அவனு
க்கு ஒப்புக்கொடுத்தேன் என்று இஸ்ரவே
லின் தேவனாகிய சேனைகளின் கர்த்தர்
15 உரைக்கிறார் என்று சொல் என்றார். பின்பு
எரேமியா தீர்க்கதரிசி அனனியா என்கிற
தீர்க்கதரிசியை நோக்கி: இப்போதும் அனனி
யாவே, கேள்; கர்த்தர் உன்னை அனுப்பின
தில்லை; [5]நீயோ இந்த ஜனத்தைப் பொய்யை
16 நம்பும்படிச் செய்தாய். ஆகையால், இதோ,
உன்னைப் பூமியின்மேல் இராதபடிக்கு அகற்
றிவிடுவேன்; [6]இந்த வருஷத்திலே நீ சாவாய்
என்று கர்த்தர் சொல்லுகிறார்; கர்த்தருக்கு
விரோதமாய்க் கலகம் உண்டாகப் பேசினாயே
17 என்றான். அப்படியே அனனியா என்கிற
தீர்க்கதரிசி அவ்வருஷத்திலேதானே [7]ஏழாம்
மாதத்தில் செத்துப்போனான்.

**29** எகொனியா என்னும் ராஜாவும், [8]ராஜஸ்
திரீயும், பிரதானிகளும், யூதாவிலும் எருச
லேமிலுமுள்ள பிரபுக்களும், தச்சரும், கொல்
லரும் எருசலேமைவிட்டுப் புறப்பட்டுப் போ
2 ன்பிற்பாடு, எரேமியா தீர்க்கதரிசி சிறைப்
பட்டுப்போன மூப்பர்களில் மீதியானவர்க
ளுக்கும், ஆசாரியர்களுக்கும், தீர்க்கதரிசிக
ளுக்கும், நேபுகாத்நேச்சார் சிறைப்படுத்தி
எருசலேமிலிருந்து பாபிலோனுக்குக் கொண்
3 டுபோன சகல ஜனங்களுக்கும் எழுதி, யூதா
வின் ராஜாகிய சிதேக்கியா பாபிலோன் ராஜா
வாகிய நேபுகாத்நேச்சாரிடத்தில் கொடுக்கும்
படி சாப்பானின் குமாரனாகிய எலெயாசா
ரின் கையிலும், இல்க்கியாவின் குமாரனாகிய
கெமரியாவின் கையிலும் கொடுத்து, எருச
லேமிலிருந்து பாபிலோனுக்கு அனுப்பின
நிருபத்தின் விபரம்: இஸ்ரவேலின் தேவ 4
னாகிய சேனைகளின் கர்த்தர், தாம் எருசலே
மிலிருந்து பாபிலோனுக்குச் சிறைப்பட்டுப்
போகப்பண்ணின அனைவருக்கும் அறிவிக்கி
றது என்னவென்றால், நீங்கள் வீடுகளைக் 5
கட்டி, குடியிருந்து, தோட்டங்களை நாட்டி,
அவைகளின் கனியைச் சாப்பிடுங்கள். நீங் 6
கள் பெண்களை விவாகம்பண்ணி, குமாரரை
யும் குமாரத்திகளையும் பெற்று, உங்கள் குமா
ரருக்குப் பெண்களைக்கொண்டு, உங்கள் குமா
ரத்திகளைப் புருஷருக்குக் கொடுங்கள்; இவர்
களும் குமாரரையும் குமாரத்திகளையும் பெறட்
டும்; நீங்கள் அங்கே குறுகாமல் பெருகி,
நான் உங்களைச் சிறைப்பட்டுப் போகப்பண் 7
ணின பட்டணத்தின் சமாதானத்தைத் தேடி,
[9]அதற்காகக் கர்த்தரை விண்ணப்பம்பண்ணுங்
கள்; அதற்குச் சமாதானமிருக்கையில் உங்க
ளுக்கும் சமாதானமிருக்கும். மேலும், உங் 8
கள் நடுவிலிருக்கிற உங்கள் தீர்க்கதரிசிகளும்
உங்கள் குறிகாரரும் உங்களை மோசம்போக்க
வொட்டாதிருங்கள்; [10]சொப்பனம்காணப்பண்
ணுகிற உங்கள் சொப்பனக்காரருக்குச் செவி
கொடாமலும் இருங்கள் என்று இஸ்ரவேலின்
தேவனாகிய சேனைகளின் கர்த்தர் சொல்லுகி
றார். அவர்கள் என் நாமத்தைச் சொ 9
ல்லி உங்களுக்குப் பொய்யான தீர்க்கதரிச
னம் உரைக்கிறார்கள்; நான் அவர்களை அனுப்
பினதில்லை என்று கர்த்தர் சொல்லுகிறார்.
பாபிலோனிலே எழுபது வருஷம் நிறைவே 10
றினபின்பு நான் உங்களைச் சந்தித்து, [11]உங்களை
இவ்விடத்துக்குத் திரும்பிவரப் பண்ணும்படி
க்கு உங்கள்மேல் என் நல்வார்த்தையை நிறை
வேறப்பண்ணுவேன் என்று கர்த்தர் சொல்
லுகிறார். நீங்கள் எதிர்பார்த்திருக்கும் முடிவை 11
உங்களுக்குக் கொடுக்கும்படிக்கு நான் உங்கள்
பேரில் நினைத்திருக்கிற நினைவுகளை அறி
வேன் என்று கர்த்தர் சொல்லுகிறார்; அவை
கள் தீமைக்கல்ல, [12]சமாதானத்துக்கேதுவான
நினைவுகளே. அப்பொழுது நீங்கள் கூடி 12
வந்து என்னைத் தொழுதுகொண்டு, என்னை
நோக்கி விண்ணப்பம் பண்ணுவீர்கள்; [13]நான்
உங்களுக்குச் செவிகொடுப்பேன். உங்கள் 13
முழு இருதயத்தோடும் என்னைத் தேடினீர்க
ளானால், [14]என்னைத் தேடுகையில் கண்டுபிடி
ப்பீர்கள். நான் உங்களுக்குக் காணப்படு 14
வேன் என்று கர்த்தர் சொல்லுகிறார்; [15]நான்
உங்கள் சிறையிருப்பைத் திருப்பி, நான் உங்
களைத் துரத்திவிட்ட எல்லா ஜாதிகளிலும்
எல்லா இடங்களிலுமிருந்து உங்களைச் சேர்
த்து, [16]நான் உங்களை விலக்கியிருந்த ஸ்தலத்
துக்கே உங்களைத் திரும்பி வரப்பண்ணுவேன்
என்று கர்த்தர் சொல்லுகிறார். கர்த்தர் எங் 15
களுக்குப் பாபிலோனிலும் தீர்க்கதரிசிகளை
[17]எழுப்பினார் என்று சொல்லுகிறீர்கள். ஆனால் 16
தாவீதின் சிங்காசனத்தில் உட்கார்ந்திருக்கிற
ராஜாவைக் குறித்தும், உங்களோடேகூடச்

1 உபா. 18. 22. எசே. 13. 10. ழ
2 27. 2
3 நீதி. 14. 7
4 உபா. 28. 48. தானி. 2. 38
5 29. 31, 32. புல. 2. 14
6 உபா. 13. 5
7 ஏசா. 44. 25, 26
8 2 இரா. 24. 12–16
9 எஸ்றா 6. 10. தானி. 4. 27: 6. 5. 1 தீமோ. 2. 1, 2
10 14. 14: 27. 14, 15
11 27. 22. 2 நாளா. 36. 21–23. எஸ்றா 1. 1. தானி. 9. 2
12 ஏசா. 55. 8, 9
13 நெகே. 2. 4. ழ. ஏசா. 65. 24. தானி. 9. 3. ழ
14 லேவி. 26. 40. உபா. 30. 1. ழ
15 சங். 32. 6: 46. 1. ஏசா. 45. 19: 55. 6
16 சங். 126. 1, 4. எசே. 36. 24. ஆமோ. 9. 14. மீகா 4. 12. செப். 3. 20
17 எசே. 1. 1, 3

சிறையிருப்பில் புறப்பட்டுப்போகாமல் இந்த
நகரத்தில் குடியிருக்கிற உங்கள் சகோதரரா
17 கிய எல்லா ஜனங்களைக்குறித்தும், இதோ,
நான் பட்டயத்தையும், பஞ்சத்தையும், கொள்
ளைநோயையும், அவர்களுக்குள் அனுப்பு
வேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறார்; [1]புசிக்
கத்தகாத கெட்டுப்போன அத்திப்பழங்களுக்கு
அவர்களை ஒப்பாக்குவேன் என்று சேனை
18 களின் **கர்த்தர்** சொல்லுகிறார். அவர்கள்
என் வார்த்தைகளைக் கேளாமற்போனபடி
யால், நான் அவர்களைப் பட்டயத்தாலும், பஞ்
சத்தாலும், கொள்ளைநோயாலும் பின்தொடர்
ந்து, அவர்களைப் பூமியிலுள்ள எல்லா ராஜ்
யங்களிலும் அலைந்து திரிகிறவர்களாகவும்,
நான் அவர்களைத் துரத்துகிற எல்லா ஜாதிக
ளிடத்திலும் சாபமாகவும், [2]பாழாகவும், ஈச
லிடுதலுக்கிடமாகவும், நிந்தையாகவும் வைப்
19 பேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறார். நான்
உங்களிடத்திற்குத் தீர்க்கதரிசிகளாகிய என்
ஊழியக்காரரை ஏற்கனவே அனுப்பிக்கொண்
டேயிருந்தும், [3]நீங்கள் செவிகொடாமற்
போனீர்களே என்று **கர்த்தர்** சொல்லுகிறார்.
20 இப்போதும் சிறையிருக்கும்படி நான் எரு
சலேமிலிருந்து பாபிலோனுக்கு அனுப்பி
விட்ட நீங்களெல்லாரும் **கர்த்தருடைய** வார்த்
21 தையைக் கேளுங்கள். என் நாமத்தைச்
சொல்லி, உங்களுக்குப் பொய்யான தீர்க்கதரி
சனம் உரைக்கிற கொலாயாவின் குமாரனாகிய
ஆகாபையும், மாசெயாவின் குமாரனாகிய
சிதேக்கியாவையுங் குறித்து: இதோ, நான்
அவர்களைப் பாபிலோன் ராஜாவாகிய நேபு
காத்நேச்சாரின் கையிலே ஒப்புக்கொடுக்கி
றேன்; அவன் அவர்களை உங்கள் கண்களுக்கு
22 முன்பாகக் கொன்றுபோடுவான். பாபி
லோன் ராஜா அக்கினியினால் சுட்டுப்போ
ட்ட சிதேக்கியாவுக்கும் ஆகாபுக்கும் **கர்த்தர்**
உன்னைச் சமானமாக்கக்கடவரென்று, [4]அவர்
களைக்குறித்து ஒரு சாபவார்த்தை பாபிலோனி
லே சிறையிருக்கிற யூதா அனைவருக்குள்ளும்
வழங்கும் என்று இஸ்ரவேலின் தேவனா
கிய சேனைகளின் **கர்த்தர்** சொல்லுகிறார்.
23 அவர்கள் இஸ்ரவேலிலே மதிகெட்ட காரி
யத்தைச் செய்து, [5]தங்கள் அயலாருடைய
பெண்ஜாதிகளோடே விபசாரம் பண்ணி,
நான் அவர்களுக்குக் கற்பியாத பொய்யான
வார்த்தையை என் நாமத்தைச் சொல்லி உரை
த்தார்கள்; நான் அதை அறிவேன்; அதற்கு
நானே சாட்சி என்று **கர்த்தர்** சொல்லுகிறார்
என்று எழுதினான்.
24 பின்னும் **கர்த்தர்** என்னை நோக்கி: நீ நெ
கெலாமியனாகிய செமாயாவுக்கும் சொல்லி
25 யனுப்பவேண்டியது என்னவென்றால்: நீ
எருசலேமிலிருக்கிற எல்லா ஜனங்களுக்கும்,
[6]மாசெயாவின் குமாரனாகிய செப்பனியா
என்னும் ஆசாரியனுக்கும், மற்ற ஆசாரியர்க
ளுக்கும் உன் நாமத்திலே நிருபத்தை எழுதி
யனுப்பினது என்னவென்று இஸ்ரவேலின்
தேவனாகிய சேனைகளின் **கர்த்தர்** சொல்லுகி
றார். இவனுக்கு அவன் எழுதியிருந்த நிருப 26
மாவது: நீங்கள் **கர்த்தருடைய** ஆலயத்தின்
விசாரிப்புக்காரரா யிருக்கும்படிக்கும், [7]பிர
மைகொண்டு தன்னைத் தீர்க்கதரிசியாக்கிக்
கொள்ளுகிறவனாகிய எந்த மனுஷனையும் நீர்
காவல் அறையிலும் தொழுவிலும் போடும்படி
க்கும், **கர்த்தர்** உம்மை ஆசாரியனாயிருந்த
யோய்தாவின் ஸ்தானத்திலே ஆசாரியனாக
வைத்தாரே. இப்போதும் உங்களுக்குத் தீர்க்க 27
தரிசனம் கூறிவருகிற ஆனதோத் ஊரானா
கிய எரேமியாவை நீர் கடிந்துகொள்ளாமற்
போனதென்ன? இந்தச் சிறையிருப்பு நெடுங் 28
காலமாக இருக்கும்; நீங்கள் வீடுகளைக் கட்டி,
அவைகளில் குடியிருந்து, தோட்டங்களை
நாட்டி, அவைகளின் கனிகளைச் சாப்பிடுங்க
ளென்று பாபிலோனில் இருக்கிற எங்களுக்
குச் சொல்லியனுப்பினானென்று எழுதி
யிருந்தான். இந்த நிருபத்தைச் செப்பனியா 29
என்கிற ஆசாரியன் எரேமியா தீர்க்கதரிசியின்
காதுகள் கேட்க வாசித்தான். ஆதலால், **கர்த்த** 30
**ருடைய** வார்த்தை எரேமியாவுக்கு உண்டாகி,
அவர்: சிறையிருக்கிற அனைவருக்கும் நீ 31
சொல்லி யனுப்பவேண்டியது என்னவென்
றால்: நெகெலாமியனாகிய செமாயாவைக் குறி
த்து, **கர்த்தர்**: செமாயாவை நான் அனுப்பா
திருந்தும், [8]அவன் உங்களுக்குத் தீர்க்கதரிச
னஞ்சொல்லி, உங்களைப் பொய்யை நம்பப்
பண்ணுகிறபடியினால், இதோ, நான் நெகெ 32
லாமியனாகிய செமாயாவையும், அவன் சந்
ததியையும் தண்டிப்பேன்; இந்த ஜனத்தின்
நடுவிலே குடியிருப்பவன் ஒருவனும் அவனு
க்கு இல்லாதிருப்பான்; நான் என் ஜனத்துக்
குச் செய்யும் நன்மையை அவன் காண்ப
தில்லை என்று **கர்த்தர்** சொல்லுகிறார்; **கர்த்த**
**ருக்கு** விரோதமாய்க் கலகமுண்டாகப் பேசி
னான் என்று **கர்த்தர்** சொல்லுகிறார் என்று
சொல் என்றார்.

**கர்த்தரால்லே** எரேமியாவுக்கு உண்டான **30**
வார்த்தை:
இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்** சொல் 2
லுகிறது என்னவென்றால், நான் உன்னோ
டே சொன்ன எல்லா வார்த்தைகளையும் [9]ஒரு
புஸ்தகத்தில் எழுதிக்கொள். இதோ, நாட் 3
கள் வருமென்று **கர்த்தர்** சொல்லுகிறார், [10]அப்
பொழுது நான் இஸ்ரவேலும் யூதாவுமாகிய
என் ஜனத்தினுடைய சிறையிருப்பைத் திரு
ப்பி, நான் அவர்கள் பிதாக்களுக்குக் கொடுத்த
தேசத்துக்கு அவர்களைத் திரும்பிவரப் பண்
ணுவேன்; [11]அதை அவர்கள் சுதந்தரித்துக்
கொள்ளுவார்கள் என்று **கர்த்தர்** சொல்லுகி
றார்.
இவைகள் **கர்த்தர்** இஸ்ரவேலையும் யூதா 4
வையுங் குறித்துச் சொன்ன வார்த்தைகளே.
**கர்த்தர்** சொல்லுகிறது என்னவென்றால்: 5
நடுக்கத்தின் சத்தத்தைக் கேட்கிறோம்; திகி
லுண்டு, சமாதானமில்லை. ஆணாய்ப் பிறந்த 6

[1] 24. 8-10
[2] 15. 4. 34. 17. லேவி. 26. 33. உபா. 28. 25
[3] 25. 4. 32. 33
[4] ஏசா. 65. 15. சக. 8. 6
[5] 23. 14, 21
[6] 2 இரா. 25. 18
[7] 20. 1, 2. 2 இரா. 9. 11. அப். 26. 24
[8] 28. 15, 16. 2 பே. 2. 1
[9] 2 பே. 1. 21. வெளி. 1. 19: 10. 4
[10] 32. 27, 44. எசே. 39. 25, 26. ஆமோ. 9. 14, 15
[11] 16. 15. எஸ்றா 3. 1, 8, 12. எசே. 36. 24

வன் பிரசவிக்கிறதுண்டோ என்று கேட்டுப்
பாருங்கள்; பிரசவிக்கிற ஸ்திரீயைப்போல்
புருஷர் யாவரும் தங்கள் இடுப்புகளின்மேல்
தங்கள் கைகளை வைத்திருக்கிறதையும், முகங்
களெல்லாம் மாறி வெளுத்திருக்கிறதையும்
7 நான் காண்கிறதென்ன? ஐயோ! அந்த நாள்
பெரியது; [1]அதைப்போலொத்த நாளில்லை;
அது யாக்கோபுக்கு இக்கட்டுக்காலம்; ஆனு
லும் அவன் அதற்கு நீங்கலாகி ரட்சிக்கப்படு
8 வான். அந்நாளில் நான் அவன் நுகத்தை
உன் கழுத்தின்மேல் இராதபடிக்கு உடைத்து,
உன் கட்டுகளை அறுப்பேன் என்று சேனை
களின் கர்த்தர் சொல்லுகிறூர்; அந்நியர் இனி
9 அவனை அடிமை கொள்வதில்லை. தங்கள்
தேவனுகிய கர்த்தரையும், [2]நான் தங்களுக்கு
எழுப்பப்போகிற தங்கள் ராஜாவாகிய தாவீ
10 தையுமே சேவிப்பார்கள். ஆகையால் என்
தாசனுகிய யாக்கோபே, நீ பயப்படாதே;
[3]இஸ்ரவேலே, கலங்காதே என்று கர்த்தர்
சொல்லுகிறூர்; இதோ, நான் உன்னைத் தூர
த்திலும், உன் சந்ததியைத் தங்கள் சிறையிருப்
பின் தேசத்திலும் இராதபடிக்கு ரட்சிப்பேன்;
யாக்கோபு திரும்பிவந்து அமர்ந்து சுகித்திருப்
பான்; அவனைத் தத்தளிக்கப்பண்ணுகிறவ
11 னில்லை. உன்னை ரட்சிப்பதற்காக நான்
உன்னேடே இருக்கிறேன் என்று கர்த்தர்
சொல்லுகிறூர்; உன்னைச் சிதறடித்த எல்லா
ஜாதிகளையும் நான் நிர்மூலமாக்குவேன்; உன்
னையோ நான் நிர்மூலமாக்காமலும், [4]முற்றி
லும் தண்டியாமல் விடாமலும், மட்டாய் தண்
டிப்பேன்.
12 கர்த்தர் சொல்லுகிறது என்னவென்றூல்:
[5]உன் புண் ஆருததாயும் உன் காயம் கொடி
13 தாயும் இருக்கிறது. உன் காயங்களைக் கட்
டும்படி உனக்காக ஏற்படுவாரில்லை; [6]உன்
னைச் சொஸ்தப்படுத்தும் ஔஷதங்களு
14 மில்லை. உன் நேசர் யாவரும் உன்னை மறந்
தார்கள்; [7]அவர்கள் உன்னைத் தேடார்கள்;
திரளான உன் அக்கிரமத்தினிமித்தமும், உன்
பாவங்கள் பலத்துப்போனதினிமித்தமும்,
சத்துரு வெட்டும் வண்ணமாகவும், கொடிய
வன் தண்டிக்கிற வண்ணமாகவும் நான் உன்
15 னை தண்டித்தேன். உன் நொறுங்குதலினு
லும் உன் வேதனையின் மிகுதியினுலும் நீ
கூக்குரலிடுவானேன்? [8]திரளான உன் அக்
கிரமத்தினிமித்தமும் பலத்துப்போன உன்
பாவங்களினிமித்தமும் இப்படி உனக்குச்
16 செய்தேன். ஆதலால் உன்னைப் பட்சிக்கிற
வர்கள் யாவரும் பட்சிக்கப்படுவார்கள்; [9]உன்
சத்துருக்களெல்லாரும் சிறைப்பட்டுப் போ
வார்கள்; உன்னைச் சூறையாடுகிறவர்கள்
சூறையாடப்படுவார்கள்; உன்னைக் கொள்ளை
யிடுகிற அனைவரையும் கொள்ளைக்கு ஒப்புக்
17 கொடுப்பேன். அவர்கள்: உன்னை விசாரிப்
பாரற்ற சீயோன் என்று சொல்லி, உனக்குத்
தள்ளுண்டவள் என்று பேரிட்டபடியால்,
நான் உனக்கு ஆரோக்கியம் வரப்பண்ணி,

[1] தானி. 12. 1. யோவே. 2. 11, 31. செப். 1. 14. வெளி. 6. 17
[2] ஓசி. 3. 5. லூ. 1. 75
[3] எசா. 41. 13. 43. 5: 44. 2
[4] ஆமோ. 9. 8
[5] 2 நாளா. 36. 16
[6] 8. 22. எசா. 1. 6. 1 தீமோ. 2. 5, 6. 1 பேது. 2. 1
[7] புல. 1. 2: 2. 5. ஓசி. 2. 5, 7
[8] புல. 5. 16, 17
[9] யாத். 23. 22. எசா. 33. 1: 41. 11, 12.
[10] 33. 6. சங். 23. 3: 103. 3
[11] சங். 102. 13
[12] சங். 42. 4. எசா. 51. 11. சகரி. 10. 8
[13] எசா. 1. 26
[14] ஆதி. 49. 10
[15] எண். 16. 5
[16] எசே. 37. 27
[17] ஆதி. 49. 1
[18] 30. 22, 24
[19] எண். 10. 33. உபா. 1. 33
[20] ஓசி. 11. 4. ரோ. 11. 28, 29
[21] எசா. 2. 3. மீகா. 4. 2
[22] எசா. 12. 5, 6

[10]உன் காயங்களை ஆற்றுவேன் என்று கர்த்தர்
சொல்லுகிறூர். கர்த்தர் சொல்லுகிறது என்ன 18
வென்றூல்: இதோ, நான் யாக்கோபுடைய
கூடாரங்களின் சிறையிருப்பைத் திருப்பி,
[11]அவன் வாசஸ்தலங்களுக்கு இரக்கஞ்செய்
வேன்; நகரம் தன் மண்மேட்டின்மேல் கட்
டப்பட்டு, அரமனை முன்போல நிலைப்படும்.
அவைகளிலிருந்து ஸ்தோத்திரமும் ஆடல்பா 19
டலின் சத்தமும் புறப்படும்; [12]அவர்களை வர்த்
திக்கப்பண்ணுவேன், அவர்கள் குறுகிப்போ
வதில்லை; அவர்களை மகிமைப்படுத்துவேன்,
அவர்கள் சிறுமைப்படுவதில்லை. அவர்கள் 20
பிள்ளைகள் முன்போலிருப்பார்கள்; [13]அவர்
கள் சபை எனக்கு முன்பாகத் திடப்படும்;
அவர்களை ஒடுக்கின யாவரையும் தண்டிப்
பேன். அவர்களுடைய பிரபு அவர்களில் 21
ஒருவனுயிருக்க, [14]அவர்களுடைய அதிபதி
அவர்கள் நடுவிலிருந்து தோன்றுவார்; அவ
ரைச் சமீபித்து வரப்பண்ணுவேன், [15]அவர்
சமீபித்து வருவார், என்னிடத்தில் சேரும்
படி தன் இருதயத்தைப் பிணைப்படுத்துகிற
இவர் யார்? என்று கர்த்தர் சொல்லுகிறூர்.
நீங்கள் என் ஜனமாயிருப்பீர்கள், [16]நான் உங் 22
கள் தேவனுயிருப்பேன்.

இதோ, சோராவாரிக் காற்றுகிய கர்த்தரு 23
டைய பெருங்காற்று உக்கிரமா யெழும்பி,
அடித்து, துன்மார்க்கருடைய தலையின்மேல்
மோதும். கர்த்தர் தம்முடைய இருதயத்தின் 24
நினைவுகளை நடப்பித்து நிறைவேற்றுமளவும்,
அவருடைய உக்கிரகோபந் தணியாது; [17]கடை
சிநாட்களில் அதை உணர்ந்துகொள்வீர்கள்.

அக்காலத்திலே நான் இஸ்ரவேலின் வம் 31
சங்களுக்கெல்லாம் தேவனுயிருப்பேன், [18]அ
வர்கள் என் ஜனமாயிருப்பார்கள் என்று கர்த்
தர் சொல்லுகிறூர். பட்டயத்திற்குத் தப்பி, 2
மீந்த ஜனம் வனாந்தரத்தில் இரக்கம் பெற்
றது; [19]இஸ்ரவேலுக்கு இளைப்பாறுதலைக் கட்
டளையிடப்போகிறேன் என்று கர்த்தர் சொல்
லுகிறூர். பூர்வகாலமுதல் கர்த்தர் எனக்குத் 3
தரிசனையானூர் என்பாய்; ஆம் அநாதி சிநே
கத்தால் உன்னைச் சிநேகித்தேன்; [20]ஆதலால்
காருணியத்தால் உன்னை இழுத்துக்கொள்ளு
கிறேன். இஸ்ரவேல் என்னும் கன்னிகை 4
யே, மறுபடியும் உன்னைக் கட்டுவிப்பேன், நீ
கட்டப்படுவாய்; மறுபடியும் நீ மேளவாத்தி
யத்தோடும் ஆடல்பாடல் செய்கிறவர்களின்
களிப்புள்ள கூட்டத்தோடும் புறப்படுவாய்.
மறுபடியும் சமாரியாவின் மலைகளிலே திராட் 5
சத்தோட்டங்களை நாட்டுவாய்; நாட்டுகிறவர்
கள் அவைகளை நாட்டி, அதின் பலனை அநு
பவிப்பார்கள். எழுந்திருங்கள், [21]சீயோனில் 6
நம்முடைய தேவனுகிய கர்த்தரிடத்திற்குப்
போவோம் வாருங்கள் என்று எப்பிராயீமின்
மலைகளிலுள்ள ஜாமக்காரர் கூறுங்காலம்
வரும். கர்த்தர் சொல்லுகிறது என்னவென் 7
றூல்: யாக்கோபினிமித்தம் மகிழ்ச்சியாய்க் கெம்
பீரித்து, [22]ஜாதிகளுடைய தலைவரினிமித்தம்

ஆர்ப்பரியுங்கள்; சத்தத்தைக் கேட்கப்பண்ணி,
துதித்து: கர்த்தாவே, இஸ்ரவேலில் மீதியான
உமது ஜனத்தை ரட்சியும் என்று சொல்லுங்
8 கள். இதோ, நான் அவர்களை வடதேசத்தி
லிருந்து வரப்பண்ணி, அவர்களைப் பூமியின்
எல்லைகளிலிருந்து கூட்டிவருவேன்; [1]குரு
டரும், சப்பாணிகளும், கர்ப்பவதிகளும், *பிள்
ளைத்தாய்ச்சிகளுங்கூட அவர்களில் இருப்பார்
கள்; மகா கூட்டமாய் இவ்விடத்துக்குத் திரும்
9 புவார்கள். அழுகையோடும் விண்ணப்பங்க
ளோடும் வருவார்கள்; [2]அவர்களை வழிநடத்து
வேன்; [3]அவர்களைத் தண்ணீருள்ள நதிகளண்
டைக்கு இடறாத செம்மையான வழியிலே
நடக்கப்பண்ணுவேன்; இஸ்ரவேலுக்கு நான்
பிதாவாயிருக்கிறேன், [4]எப்பிராயீம் என்
ஜேஷ்டபுத்திரனாயிருக்கிறான்.
10 ஜாதிகளே, நீங்கள் கர்த்தருடைய வார்த்தை
யைக் கேட்டு, தூரத்திலுள்ள தீவுகளில் அறி
வித்து, இஸ்ரவேலைச் சிதறடித்தவர் அதைச்
சேர்த்துக்கொண்டு, [5]ஒரு மேய்ப்பன் தன் மந்
தையைக் காக்கும்வண்ணமாக அதைக் காப்
11 பார் என்று சொல்லுங்கள். கர்த்தர் யாக்கோ
பை மீட்டு, [6]அவனிலும் பலத்தவனுடைய
கைக்கு அவனை நீங்கலாக்கி விடுவிக்கிறார்.
12 அவர்கள் வந்து, சீயோனின் உச்சியிலே கெம்
பீரித்து, [7]கர்த்தர் அருளும் கோதுமை, திராட்
சரசம், எண்ணெய், ஆட்டுக்குட்டிகள், கன்
றுக்குட்டிகள் என்பவைகளாகிய இந்த நன்மை
களுக்காக ஓடிவருவார்கள்; அவர்களுடைய
ஆத்துமா நீர்ப்பாய்ச்சலான தோட்டம்போ
லிருக்கும்; [8]அவர்கள் இனித் தொய்ந்துபோவ
13 தில்லை. அப்பொழுது கன்னிகைகளும், வா
லிபரும், முதியோருங்கூட ஆனந்தக்களிப்
பாய் மகிழுவார்கள்; நான் அவர்கள் துக்கத்
தைச் சந்தோஷமாக மாற்றி, அவர்களைத் தேற்
றி, அவர்கள் சஞ்சலம் நீங்க அவர்களைச் சந்
14 தோஷப்படுத்துவேன். ஆசாரியர்களின் ஆத்
துமாவைக் கொழுமையானவைகளினால் பூரிப்
பாக்குவேன்; என் ஜனங்கள் நான் அளிக்கும்
நன்மையினால் திருப்தியாவார்கள் என்று கர்த்
தர் சொல்லுகிறார்.
15 ராமாவிலே புலம்பலும் கசப்பான அழுகை
யுமாகிய கூக்குரல் கேட்கப்பட்டது; [9]ராசேல்
தன் பிள்ளைகளுக்காக அழுது, தன் பிள்ளை
கள் இல்லாதபடியால் அவைகளினிமித்தம்
ஆறுதல் அடையாதிருக்கிறாள் என்று கர்த்தர்
16 சொல்லுகிறார். நீ அழாதபடிக்கு உன் சத்
தத்தை அடக்கி, நீ கண்ணீர்விடாதபடிக்கு
உன் கண்களைக் காத்துக்கொள் என்று கர்த்
தர் சொல்லுகிறார்; உன் கிரியைக்குப் பல
னுண்டென்று கர்த்தர் சொல்லுகிறார்; [10]அவர்
கள் சத்துருவின் தேசத்திலிருந்து திரும்பி
17 வருவார்கள். உன் முடிவைப்பற்றி உனக்கு
நம்பிக்கையுண்டு; உன் பிள்ளைகள் தங்கள் தே
சத்துக்குத் திரும்பி வருவார்கள் என்று கர்த்
18 தர் சொல்லுகிறார். நீர் என்னை தண்டித்தீர்,
நான் பணியாத மாடுபோல் அடிக்கப்பட்

டேன்; [11]என்னைத் திருப்பும், அப்பொழுது
திருப்பப்படுவேன்; நீரே என் தேவனாகிய
கர்த்தர். நான் திரும்பினபின்பு மனஸ்தா 19
பப்பட்டுக்கொண்டிருக்கிறேன், [12]நான் என்
னை அறிந்துகொண்டதற்குப் பின்பு விலாவில்
அடித்துக்கொண்டிருக்கிறேன், வெட்கி நா
ணிக்கொண்டுமிருக்கிறேன், [13]என் இளவய
தின் நிந்தையைச் சுமந்துவருகிறேன் என்று
எப்பிராயீம் துக்கித்துப் புலம்பிக்கொண்டிருக்
கிறதை நிச்சயமாய்க் கேட்டேன். எப்பிரா 20
யீம் எனக்கு அருமையான குமாரன் அல்ல
வோ? அவன் எனக்குப் பிரியமான பிள்ளை
யல்லவோ? [14]அவனுக்கு விரோதமாய்ப் பேசி
னது முதல் அவனை நினைத்துக்கொண்டே
இருக்கிறேன்; [15]ஆகையால் என் உள்ளம் அவ
னுக்காகக் கொதிக்கிறது; அவனுக்கு உருக்க
மாய் இரங்குவேன் என்று கர்த்தர் சொல்லு
கிறார்.
உனக்குக் குறிப்படையாளங்களை நிறுத்து; 21
உனக்குத் தூண்களை நாட்டு; [16]நீ நடந்த வழி
யாகிய பாதையின்மேல் உன் மனதை வை;
இஸ்ரவேலாகிய குமாரத்தியே, திரும்பு; இந்த
உன்னுடைய பட்டணங்களுக்கே திரும்பு.
சீர்கெட்டுப்போன குமாரத்தியே, எந்தமட்டும் 22
விலகித் திரிவாய்? [17]கர்த்தர் பூமியிலே ஒரு
புதுமையைச் சிருஷ்டிப்பார், ஸ்திரீயானவள்
புருஷனைச் †சூழ்ந்துகொள்ளுவாள்.
இஸ்ரவேலின் தேவனாகிய சேனைகளின் 23
கர்த்தர் சொல்லுகிறது என்னவென்றால்:
நான் அவர்கள் சிறையிருப்பைத் திருப்பும்
போது, அவர்கள்: நீதியின் வாசஸ்தலமே,
[18]பரிசுத்த பர்வதமே, கர்த்தர் உன்னை ஆசீர்வ
திக்கக்கடவரென்கிற வார்த்தையை யூதாவின்
தேசத்திலும் அதின் பட்டணங்களிலும் சொல்
லுவார்கள். அதிலே யூதாவும், அதினுடைய 24
எல்லாப் பட்டணங்களின் மனுஷரும் பயிரி
டுங் குடிகளும், மந்தைகளை மேய்த்துத் திரிகிற
வர்களும் ஏகமாய்க் குடியிருப்பார்கள். நான் 25
விடாய்த்த ஆத்துமாவைச் சம்பூரணமடையப்
பண்ணி, [19]தொய்ந்த எல்லா ஆத்துமாவையும்
நிரப்புவேன். இதற்காக நான் விழித்துப் 26
பார்த்துக்கொண்டிருக்கிறேன்; என் நித்திரை
எனக்கு இன்பமாயிருந்தது. இதோ, நாட் 27
கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார், அப்
பொழுது இஸ்ரவேல் குடும்பத்தையும் யூதா
குடும்பத்தையும் மனுஷ வித்தினாலும், [20]மிருக
வித்தினாலும் விதைப்பேன். அப்பொழுது 28
நான் பிடுங்கவும் இடிக்கவும் நிர்மூலமாக்கவும்
அழிக்கவும் தீங்குசெய்யவும் அவர்கள்பேரில்
எப்படி ஜாக்கிரதையாயிருந்தேனோ, அப்படி
யே கட்டவும் நாட்டவும் அவர்கள்பேரில் ஜாக்
கிரதையாயிருப்பேன் என்று கர்த்தர் சொல்லு
கிறார். பிதாக்கள் ‡திராட்சக்காய்களைத் தின் 29
றார்கள், [21]பிள்ளைகளின் பற்கள் கூசிப்போ
யின என்று அந்நாட்களில் சொல்லமாட்டார்
கள். அவனவன் தன் தன் அக்கிரமத்தினி 30
மித்தமே சாவான்; [22]எந்த மனுஷன் திராட்சக்

1 ஏசா. 40. 11. எசே. 20. 34, 41
* பிரசவஸ்திரீகளும்.
2 சங். 126. 5, 6. தானி. 9. 17, 18. மத். 5. 4. ரோ. 8. 26.
3 ஏசா. 35. 7, 8. வெளி. 7. 17
4 சங். 68. 16: 64. 8. மத். 6. 9
5 எசே. 34. 12–14
6 ஏசா. 44. 23; 49. 24, 25. மத். 12. 29
7 ஏசா. 35. 10; 58. 11
8 எசே. 17. 23. வெளி 21. 4
9 யோசு. 18. 25. மத். 2. 17, 18
10 எஸ்றா 1. 5. ஓசி. 1. 11
11 சங். 89. 8, 9: 80. 3, 7, 10. புல. 5. 21
12 2 கொ. 7. 10, 11
13 யோபு 13. 26
14 புல. 3. 31, 32
15 உபா. 32. 36. ஓசி. 11. 8
16 50. 5. சகரி. 10. 9
17 2. 18, 36
† பரிபாலனம் பண்ணுவாள்.
18 சங். 122. 5-8. சகரி. 8. 3
19 ஏசா. 50. 4. மத். 11. 28. ஓசி. 1. 53. பே. 4. 14
20 எசே. 36. 9-11. ஓசி. 2. 23
‡ புளிப்புள்ள.
21 எசே. 18. 2, 3
22 கலா. 6. 5, 7

காய்களைத் தின்பானே அவனுடைய பற்களே
கூசிப்போகும்.
31 இதோ, நாட்கள் வருமென்று **கர்த்தர்**
சொல்லுகிறார், [1]அப்பொழுது இஸ்ரவேல்
குடும்பத்தோடும் யூதா குடும்பத்தோடும் புது
32 உடன்படிக்கை பண்ணுவேன். நான் அவர்
கள் பிதாக்களை எகிப்துதேசத்திலிருந்து அழை
த்துவரக் கைப்பிடித்த நாளிலே, [2]அவர்க
ளோடே பண்ணின உடன்படிக்கையின்படி
அல்ல; ஏனெனில் நான் அவர்களுக்கு நாய
காயிருந்தும், அந்த என் உடன்படிக்கையை
அவர்கள் மீறி அவமாக்கிப்போட்டார்களே
33 என்று **கர்த்தர்** சொல்லுகிறார். அந்நாட்க
ளுக்குப் பிற்பாடு, நான் இஸ்ரவேல் குடும்பத்
தோடே பண்ணப்போகிற உடன்படிக்கை
யாவது; [3]நான் என் நியாயப்பிரமாணத்தை
அவர்கள் உள்ளத்திலே வைத்து, அதை அவர்
கள் இருதயத்திலே எழுதி, நான் அவர்கள்
தேவனாயிருப்பேன், அவர்கள் என் ஜனமா
யிருப்பார்கள் என்று **கர்த்தர்** சொல்லுகிறார்.
34 இனி ஒருவன் தன் அயலானையும், ஒருவன்
தன் சகோதரனையும் நோக்கி: **கர்த்தரை** அறி
ந்துகொள் என்று போதிப்பதில்லை; அவர்
களில் சிறியவன் முதல் பெரியவன் மட்டும்,
[4]எல்லாரும் என்னை அறிந்துகொள்வார்கள்
என்று **கர்த்தர்** சொல்லுகிறார்; நான் அவர்
கள் அக்கிரமத்தை மன்னித்து, [5]அவர்கள்
35 பாவங்களை இனி நினையாதிருப்பேன். சூரி
யனைப் பகல் வெளிச்சத்துக்காகவும், சந்திர
நட்சத்திர நியமங்களை இராவெளிச்சத்துக்
காகவும் கட்டளையிட்டவரும், [6]அலைகள்
கொந்தளிக்கத்தக்கதாக சமுத்திரத்தைக் *குலு
க்குகிறவரும், சேனைகளின் **கர்த்தர்** என்
னும் நாமமுள்ளவருமாகிய **கர்த்தர்** சொல்லு
36 கிறது என்னவென்றால்: இந்த நியமங்கள்
எனக்கு முன்பாக இல்லாதபடிக்கு ஒழிந்து
போனால், [7]அப்பொழுது இஸ்ரவேல் சந்ததி
யும் எனக்கு முன்பாக என்றைக்கும் ஒரு
ஜாதியாயிராதபடிக்கு அற்றுப்போம் என்று
37 **கர்த்தர்** சொல்லுகிறார். **கர்த்தர்** சொல்லுகி
றது என்னவென்றால்: மேலே இருக்கிற
வானங்கள் அளக்கப்படவும், கீழே இருக்கிற
பூமியின் அஸ்திபாரங்கள் ஆராயப்படவும்
கூடுமானால், [8]நான் இஸ்ரவேல் வம்சத்தார்
அனைவரையும் அவர்கள் செய்த எல்லாவற்றி
னிமித்தமும் வெறுத்துவிடுவேன் என்று **கர்த்**
38 **தர்** சொல்லுகிறார். இதோ நாட்கள் வரு
மென்று **கர்த்தர்** சொல்லுகிறார், அப்பொழுது
இந்த நகரம், [9]அனானெயேலின் கோபுரமு
தல் கோடிவாசல்மட்டும் **கர்த்தருக்கென்று**
39 கட்டப்படும். அப்புறமும் அளவுநூல் [10]அத
ற்கு எதிராய்க் காரேப் என்னும் மேட்டின்
மேல் சென்று கோவாத் புறமாக சுற்றிப்போம்.
40 பிரேதங்களைப் புதைக்கிறதும், சாம்பலைக்
கொட்டுகிறதுமான பள்ளத்தாக்கனைத்தும், கீத
ரோன் வாய்க்காலுக்கு இப்பாலே கிழக்கே
இருக்கிற [11]குதிரைவாசலின் கோடிமட்டும்

[1] எசே. 37. 26. எபி. 8. 8–12: 10. 16, 17
[2] உபா. 1. 31
[3] 24. 7: 32. 40. சங். 40. 8. எசே. 11. 19, 20. 2 கொ. 3. 3
[4] ஏசா. 54. 13. யோ. 6. 45. 1 யோ. 2. 20
[5] 33. 8. மீகா 7. 18. அப். 10. 43: 13. 39. எபே. 1. 7
[6] ஆதி. 1. 16. யாத். 14. 21, 22. ஏசா. 51. 15
* கலக்குகிற
[7] 33. 20–22. சங். 148. 6. ஏசா. 54. 9, 10
[8] 33. 22
[9] நெகே. 3. 1. சகரி. 14. 10
[10] எசே. 40. 18. சகரி. 2. 1, 2
[11] நெகே. 3. 28
[12] யோவே. 3. 17
[13] 39. 1, 2. 2 இரா. 25. 1, 2
[14] 33. 1: 39. 13, 14
[15] 39. 4, 6: 52. 9, 11
[16] 27. 22: 33. 5
[17] 34. 2, 3: 38. 18–23
[18] லேவி. 25. 24, 25. ரூத். 4. 4
[19] ஆதி. 23. 16. சகரி. 11. 12

உண்டான சகல நிலங்களும் **கர்த்தருக்குப்**
பரிசுத்தமாயிருக்கும்; [12]அப்புறம் அது என்
றென்றைக்கும் பிடுங்கப்படுவதுமில்லை இடிக்
கப்படுவதுமில்லை என்கிறார்.

நேபுகாத்நேச்சாரின் பதினெட்டாம் வரு **32**
ஷத்துக்குச் சரியான யூதாவின் ராஜாவாகிய
சிதேக்கியா அரசாண்ட பத்தாம் வருஷத்தில்,
[13]**கர்த்தரால்** எரேமியாவுக்கு உண்டான வார்த்
தை: அப்பொழுது பாபிலோன் ராஜாவின் 2
சேனை எருசலேமை முற்றிக்கை போட்டிருந்
தது; எரேமியா தீர்க்கதரிசியோ, [14]யூதா ராஜா
வின் அரமனையிலுள்ள காவற்சாலையின் முற்
றத்திலே அடைக்கப்பட்டிருந்தான். ஏனென் 3
றால், இதோ, இந்த நகரத்தைப் பாபிலோன்
ராஜாவின் கையில் ஒப்புக்கொடுக்கிறேன்;
அவன் இதைப் பிடிப்பான் என்று **கர்த்தர்**
சொல்லுகிறாரென்றும், யூதாவின் ராஜாவா 4
கிய சிதேக்கியா கல்தேயருடைய கைக்குத்
தப்பிப்போகாமல், [15]பாபிலோன் ராஜாவின்
கையில்நிச்சயமாக ஒப்புக்கொடுக்கப்படுவான்;
அவன் வாய் இவன் வாயோடே பேசும்,
அவன் கண்கள் இவன் கண்களைக் காணும்.
அவன் சிதேக்கியாவைப் பாபிலோனுக்குக் 5
கொண்டுபோவான்; நான் அவனைச் சந்திக்கு
மட்டும் அங்கே அவன் இருப்பான்; [16]நீங்கள்
கல்தேயரோடே யுத்தம் பண்ணினாலும் உங்க
ளுக்கு வாய்ப்பதில்லையென்று **கர்த்தர்** சொல்
லுகிறாரென்றும், நீ தீர்க்கதரிசனஞ் சொல்ல
வேண்டியது என்ன என்று சொல்லி, [17]யூதா
வின் ராஜாவாகிய சிதேக்கியா அங்கே அவனை
அடைத்துவைத்தான்.

அதற்கு எரேமியா சொன்னது: **கர்த்தரு** 6
**டைய** வார்த்தை எனக்கு உண்டாகி, அவர்:
இதோ, உன் பெரிய தகப்பனாகிய சல்லூமின் 7
குமாரன் அனாமெயேல் உன்னிடத்தில் வந்து:
ஆனதோத்திலிருக்கிற என் நிலத்தை நீ வாங்
கிக்கொள்; [18]அதைக் கொள்ளுகிறதற்கு உன
க்கே மீட்கும் அதிகாரம் அடுத்ததென்று
சொல்வான் என்று உரைத்தார். அப்படியே 8
என் பெரிய தகப்பன் மகனாகிய அனாமெ
யேல், **கர்த்தருடைய** வார்த்தையின்படி காவற்
சாலையின் முற்றத்தில் என்னிடத்துக்கு வந்து:
பென்யமீன்நாட்டு ஆனதோத்தூரிலுள்ள என்
நிலத்தை நீர் வாங்கிக்கொள்ளும்; சுதந்தர
பாத்தியம் உமக்குண்டு, அதை மீட்கும் அதி
காரம் உமக்கு அடுத்தது; அதை வாங்கிக்கொள்
ளும் என்றான்; அப்பொழுது அது **கர்த்தரு**
**டைய** வார்த்தைஎன்று அறிந்துகொண்டேன்.
ஆகையால் என் பெரிய தகப்பன் மகனாகிய 9
அனாமெயேலின் கையில், நான் ஆனதோத்தி
லிருக்கிற அவனுடைய நிலத்தைக் கொண்டு,
[19]அதின் விலைக்கிரயமாகிய பதினேழு சேக்க
லிடை வெள்ளியை அவனுக்கு நிறுத்துக்கொ
டுத்தேன். நான் பத்திரத்தில் கையெழுத்தை 10
யும், முத்திரையையும் போட்டு, சாட்சிகளை
வைத்து, வெள்ளியைத் தராசிலே நிறுத்துக்
கொடுத்தபின்பு, நான் சட்டத்துக்கும் வழக் 11

கத்துக்கும் ஏற்றபடி முத்திரை போடப்பட்ட
கிரயப்பத்திரத்தையும் திறந்திருக்கிற பிரதி
12 யையும் எடுத்து, என் பெரிய தகப்பன் மக
னாகிய அனாமெயேலுடைய கண்களுக்கு முன்
பாகவும், கிரயப்பத்திரத்தில் கையெழுத்துப்
போட்ட சாட்சிகளுடைய கண்களுக்கு முன்
பாகவும், [1]காவற்சாலையின் முற்றத்தில் உட்
கார்ந்திருந்த எல்லா யூதருடைய கண்களுக்கு
முன்பாகவும், அதை மாசெயாவின் குமாரனா
கிய நேரியாவின் மகனான பாருக்கினிடத்தில்
13 கொடுத்து, அவர்களுடைய கண்களுக்கு முன்
14 பாகப் பாருக்கை நோக்கி: இஸ்ரவேலின்
தேவனாகிய சேனைகளின் **கர்த்தர்** சொல்லுகி
றது என்னவென்றால், நீ முத்திரைபோடப்
பட்ட கிரயப்பத்திரமும், திறந்திருக்கிற பிரதி
பத்திரமுமாகிய இந்தச் சாசனங்களை வாங்கி,
அவைகள் அநேகநாளிருக்கும்படிக்கு அவை
15 களை ஒரு மண்பாண்டத்திலே வை. ஏனெ
னில் இனி இந்த தேசத்தில் வீடுகளும் நிலங்
களும் திராட்சத் தோட்டங்களும் கொள்ளப்
படுமென்று, இஸ்ரவேலின் தேவனாகிய சேனை
களின் **கர்த்தர்** சொல்லுகிறார் என்றேன்.
16 நான் கிரயப்பத்திரத்தை நேரியாவின் குமா
ரனாகிய பாருக்கினிடத்தில் கொடுத்தபின்பு,
நான் **கர்த்தரை** நோக்கிப் பண்ணின விண்
17 ணப்பமாவது: ஆ, கர்த்தராகிய ஆண்டவரே,
இதோ, [2]தேவரீர் உம்முடைய மகா பலத்தினா
லும், நீட்டப்பட்ட உம்முடைய புயத்தினா
லும், வானத்தையும் பூமியையும் உண்டாக்கி
னீர்; உம்மாலே செய்யக்கூடாத அதிசயமான
18 காரியம் [3]ஒன்றுமில்லை. ஆயிரம் தலைமுறை
களுக்கும் கிருபை செய்கிறவரும், [4]பிதாக்களு
டைய அக்கிரமத்தை அவர்களுடைய பின்ன
டியார் பிள்ளைகளின் மடியிலே சரிக்கட்டுகிற
வருமாகிய சேனைகளின் **கர்த்தர்** என்னும்
நாமமுள்ள மகத்துவமும் வல்லமையுமுள்ள
19 தேவனே, யோசனையிலே பெரியவரும்,
[5]செயலிலே வல்லவருமாயிருக்கிறீர்; அவன
வனுக்கு அவனவனுடைய வழிக்குத் தக்கதா
கவும், அவனவனுடைய கிரியைகளின் பல
னுக்குத் தக்கதாகவும் அளிக்கும்படி, [6]உம்மு
டைய கண்கள் மனுபுத்திரருடைய எல்லா
வழிகளின்மேலும் நோக்கமாயிருக்கின்றன.
20 இஸ்ரவேலிலும் மற்ற மனுஷருக்குள்ளும் இந்
நாள்வரைக்கும் விளங்குகிற அடையாளங்க
ளையும் அற்புதங்களையும் தேவரீர் எகிப்து
தேசத்திலே செய்து, [7]அந்நாளில் நிற்கும்
21 கீர்த்தியை உமக்கு உண்டாக்கி, இஸ்ரவே
லாகிய உமது ஜனத்தை அடையாளங்களினா
லும், அற்புதங்களினாலும், பலத்த கையினா
லும், ஓங்கிய புயத்தினாலும், மகா பயங்கரத்தி
னாலும் எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்
22 பண்ணி, அவர்களுடைய பிதாக்களுக்கு நீர்
கொடுப்பேன் என்று ஆணையிட்ட பாலும்
தேனும் ஓடிய தேசமாயிருக்கிற இந்த தேசத்
23 தை [8]அவர்களுக்குக் கொடுத்தீர். அவர்கள்
அதற்குள் பிரவேசித்து, அதைச் சுதந்தரித்துக்

[1] 36. 4. ஏசா. 8. 2
[2] 2 இரா. 19. 15
[3] ஆதி. 18. 14. லூ. 1. 37
[4] உபா. 5. 10. ஏசா. 9. 6
[5] ஏசா. 28. 29
[6] 17. 10. வெளி. 2. 23
[7] யாத். 9. 16. 1 நாளா. 17. 21. ஏசா. 63. 12. தானி. 9. 15
[8] ஆதி. 17. 7, 8. யாத். 3. 8, 17
[9] நெகே. 9. 26. தானி. 9. 10–14
[10] எண். 16. 22
[11] 37. 8–10: 52. 13
[12] 3. 25. ஆதி. 8. 21. எசே. 20. 28
[13] 2 இரா. 23. 27: 24. 3, 4
[14] ஏசா. 1. 4, 6. தானி. 9. 8
[15] 7. 24

கொண்டார்கள்; ஆனாலும் அவர்கள் உமது
சத்தத்துக்குச் செவிகொடாமலும், உமது நியா
யப்பிரமாணத்தில் நடவாமலும், செய்யும்படி
நீர் அவர்களுக்குக் கற்பித்ததொன்றையும்
செய்யாமலும் போனார்கள்; [9]ஆதலால் இந்தத்
தீங்கையெல்லாம் அவர்களுக்கு நேரிடப்பண்
ணினீர். இதோ, கொத்தளங்கள் போடப்பட் 24
டிருக்கிறது; நகரத்தைப் பிடிக்க வருகிறார்கள்;
பட்டயத்தினிமித்தமும், பஞ்சத்தினிமித்த
மும், கொள்ளைநோயினிமித்தமும் இந்த நக
ரம் அதற்கு விரோதமாய் யுத்தம் பண்ணுகிற
கல்தேயரின் கையிலே கொடுக்கப்படுகிறது;
நீர் சொன்னபடி சம்பவிக்கிறது; இதோ, நீர்
அதைப் பார்க்கிறீர். கர்த்தராகிய ஆண்ட 25
வரே, நகரம் கல்தேயரின் கையிலே கொடுக்
கப்படுகிறதாயிருந்தும், தேவரீர் என்னை நோ
க்கி: நீ உனக்கு ஒரு நிலத்தை விலைக்கிரய
மாகக் கொண்டு, அதற்குச் சாட்சிகளை வை
யென்று சொன்னீரே என்றேன்.
அப்பொழுது **கர்த்தருடைய** வார்த்தை 26
எரேமியாவுக்கு உண்டாகி, அவர்: இதோ, 27
நான் மாம்சமான [10]யாவருக்கும் தேவனாகிய
**கர்த்தர்**; என்னாலே செய்யக்கூடாத அதிசய
மான காரியம் ஒன்றுண்டோ?
ஆதலால், இதோ, நான் இந்தநகரத்தைக் கல் 28
தேயரின் கையிலும், பாபிலோன் ராஜாவாகிய
நேபுகாத்நேச்சாரின் கையிலும் ஒப்புக்கொடுக்
கிறேன், அவன் இதைப் பிடிப்பான் என்று
**கர்த்தர்** சொல்லுகிறார். இந்த நகரத்துக்கு 29
விரோதமாய் யுத்தம்பண்ணுகிற கல்தேயர்
உட்பிரவேசித்து, இந்த நகரத்தைத் தீக்கொ
ளுத்தி, இதைச் சுட்டெரிப்பார்கள்; [11]எனக்
குக் கோபமுண்டாக்கும்படி எந்த வீடுகளின்
மேல் பாகாலுக்குத் தூபங்காட்டி, அந்நிய
தேவர்களுக்குப் பானபலிகளை வார்த்தார்க
ளோ, அந்த வீடுகளையும் சுட்டெரிப்பார்கள்.
இஸ்ரவேல் புத்திரரும் யூதாபுத்திரரும் தங்கள் 30
சிறுவயதுமுதல் என் பார்வைக்குப் பொல்
லாப்பானதையே செய்துவந்தார்கள்; [12]இஸ்ர
வேல் புத்திரர் தங்கள் கைகளின் செய்கையினா
லே எனக்குக் கோபத்தையே உண்டாக்கிவந்
தார்கள் என்று **கர்த்தர்** சொல்லுகிறார். அவர் 31
கள் இந்த நகரத்தைக் கட்டின நாள்முதற்கொ
ண்டு, இந்நாள்வரைக்கும் அது எனக்குக்
கோபமுண்டாகவும், எனக்கு உக்கிரமுண்
டாகவும், [13]நான் அதை என் முகத்தைவிட்டு
அகற்றுகிறதற்கு ஏதுவாகவும் இருந்தது.
எனக்குக் கோபமுண்டாகும்படிக்கு இஸ்ர 32
வேல் புத்திரரும், யூதா புத்திரரும், அவர்கள்
ராஜாக்களும், அவர்கள் பிரபுக்களும், அவர்
கள் ஆசாரியர்களும், அவர்கள் தீர்க்கதரிசி
களும், யூதாவின் மனுஷரும், [14]எருசலேமின்
குடிகளும் செய்த எல்லாப் பொல்லாப்பினி
மித்தமும் இப்படி நடக்கும். முகத்தையல்ல, 33
முதுகை எனக்குக் காட்டினார்கள்; [15]நான் ஏற்
கனவே அவர்களுக்கு உபதேசித்தும் அவர்கள்
புத்தியை ஏற்றுக்கொள்ளச் செவிகொடாமற்

34 போனார்கள். அவர்கள் என் நாமம் தரிக்கப்
பட்ட ஆலயத்தைத் தீட்டுப்படுத்தும்படிக்கு,
[1]தங்கள் அருவருப்புகளை அதிலே வைத்தார்
35 கள். அவர்கள் மோளேகுக்கென்று [2]தங்கள்
குமாரரையும் தங்கள் குமாரத்திகளையும் தீக்க
டக்கப்பண்ணும்படி இன்னோமுடைய குமார
னின் பள்ளத்தாக்கிலிருக்கிற பாகாலின் மே
டைகளைக் கட்டினார்கள்; யூதாவைப் பாவஞ்
செய்யப்பண்ணுவதற்கு அவர்கள் இந்த அரு
வருப்பான காரியத்தைச் செய்யவேண்டுமெ
ன்று நான் அவர்களுக்குக் கற்பித்ததுமில்லை,
அது என் மனதிலே தோன்றினதுமில்லை.
36 இப்படியிருக்கையில் பட்டயத்தாலும், பஞ்
சத்தாலும், கொள்ளைநோயாலும், பாபிலோன்
ராஜாவின் கையில் ஒப்புக்கொடுக்கப்பட்டுப்
போம் என்று நீங்கள் சொல்லுகிற இந்த நகர
த்தைக்குறித்து இஸ்ரவேலின் தேவனாகிய
37 கர்த்தர் சொல்லுகிறது என்னவென்றால்: இ
தோ, என் சினத்திலும், என் கோபத்திலும்,
என் மகா உக்கிரத்திலும், நான் அவர்களைத்
துரத்தின எல்லா தேசங்களிலுமிருந்து அவர்
களைச் சேர்த்துக்கொண்டு, [3]அவர்களை இந்த
ஸ்தலத்துக்குத் திரும்பிவரவும் இதிலே சுக
38 மாய்த் தங்கியிருக்கவும் பண்ணுவேன். அவர்
கள் என் ஜனமாயிருப்பார்கள், நான் அவர்
39 கள் தேவனாயிருப்பேன். அவர்கள் தங்களுக்
கும், தங்கள் பின்னடியாருக்கும், தங்கள்
பிள்ளைகளுக்கும் நன்மையுண்டாகும்படி சகல
நாட்களிலும் எனக்குப் பயப்படும்படிக்கு,
நான் அவர்களுக்கு ஒரே இருதயத்தையும்,
40 [4]ஒரே வழியையும் கட்டளையிட்டு, அவர்
களுக்கு நன்மை செய்யும்படி, நான் அவர்
களை விட்டுப் பின்வாங்குவதில்லை யென்கிற
நித்திய உடன்படிக்கையை அவர்களோடே
பண்ணி, [5]அவர்கள் என்னைவிட்டு அகன்று
போகாதபடிக்கு, எனக்குப் பயப்படும் பயத்
41 தை அவர்கள் இருதயத்திலே வைத்து, அவர்
களுக்கு நன்மை செய்யும்படி அவர்கள்மேல்
சந்தோஷமாயிருந்து, [6]என் முழு இருதயத்தோ
டும், என் முழு ஆத்துமாவோடும் அவர்களை
இந்த தேசத்திலே நிச்சயமாய் நாட்டுவேன்.
42 நான் இந்த ஜனத்தின்மேல் இந்தப் பெரிய
தீங்கையெல்லாம் வரப்பண்ணினதுபோல,
[7]அவர்களைக்குறித்துச் சொன்ன எல்லா நன்
மையையும் அவர்கள்மேல் வரப்பண்ணுவேன்
43 என்று கர்த்தர் சொல்லுகிறார். மனுஷனும்
மிருகமுமில்லாதபடிக்குப்பாழாய்ப்போயிற்று
என்றும், கல்தேயரின் கையிலே ஒப்புக்கொ
டுக்கப்பட்டுப்போயிற்று என்றும் நீங்கள் சொ
ல்லுகிற இந்த தேசத்திலே நிலங்கள் கொள்
44 ளப்படும். பென்யமீன் தேசத்திலும், எருச
லேமின் சுற்றுப்புறங்களிலும், யூதாவின் பட்
டணங்களிலும், மலைக்காடான பட்டணங்களி
லும், பள்ளத்தாக்கான பட்டணங்களிலும்,
தென்திசைப் பட்டணங்களிலும், நிலங்கள்
விலைக்கிரயமாகக் கொள்ளப்படுகிற பத்திரங்
களில் கையெழுத்துப்போடுகிறதும் முத்திரை

1 23. 11. 2 இரா. 21. 4-7
2 லேவி. 17. 21
3 29. 14. உபா. 30. 3-6. எசே. 37. 21, 22
4 எசா. 52. 8. எசே. 11. 19, 20
5 31. 31, 33. எசா. 55. 3
6 உபா. 30. 9. செப். 3. 17
7 33. 10, 11
8 சங். 126. 1-4
9 32. 2, 3
10 எசா. 37. 26. ஆமோ. 5. 8: 9. 8
11 29. 12. சங். 91. 15. எசா. 48. 6
12 21. 4, 5
13 30. 17
14 எசா. 1. 26
15 எசே. 36. 25. சகரி. 13. 1. 1 யோவா. 1. 9. வெளி. 1. 5
16 13. 11. எசா. 60. 5: 62. 7

யிடுகிறதும் அதற்கு சாட்சி வைக்கிறதும்
உண்டாயிருக்கும்; [8]அவர்கள்சிறையிருப்பைத்
திருப்புவேன் என்று கர்த்தர் சொல்லுகிறார்
என்றார்.

எரேமியா இன்னும் காவற்சாலையின் 33
முற்றத்திலே அடைக்கப்பட்டிருக்கையில்,
[9]கர்த்தருடைய வார்த்தை இரண்டாந்தரம் அவ
னுக்கு உண்டாகி, அவர்:
இதைச் செய்கிற கர்த்தருமாய், இதைத் 2
திடப்படுத்தும்படிக்கு [10]இதை உருவேற்படுத்
துகிற கர்த்தருமாயிருக்கிற யேகோவா என்
னும் நாமமுள்ளவர் சொல்லுகிறது என்ன
வென்றால்: என்னை நோக்கிக் கூப்பிடு, அப் 3
பொழுது நான் உனக்கு உத்தரவுகொடுத்து,
[11]நீ அறியாததும் உனக்கு எட்டாததுமான
பெரிய காரியங்களை உனக்கு அறிவிப்பேன்.
எதிர்க்கொத்தளங்களினாலும் பட்டயத்தாலும் 4
இடிக்கப்பட்டவைகளாகிய இந்த நகரத்தின்
வீடுகளையும், யூதா ராஜாக்களின் வீடுகளையுங்
குறித்து: இந்த நகரத்தின் எல்லாப் பொல் 5
லாப்பினிமித்தமும் நான் என் முகத்தை
மறைத்தபடியினாலே என் கோபத்திலும் உக்
கிரத்திலும் வெட்டுண்ட மனுஷப்பிரேதங்
களினாலே அவைகளை நான் நிரப்பும்படியாக
வே, [12]அவர்கள் கல்தேயரோடே யுத்தம்பண்
ணப்போகிறார்கள். இதோ, நான் அவர்களுக் 6
குச் சவுக்கியமும் ஆரோக்கியமும் வரப்பண்
ணி, [13]அவர்களைக் குணமாக்கி, அவர்களுக்
குப் பரிபூரண சமாதானத்தையும் சத்தியத்
தையும் வெளிப்படுத்துவேன். நான் யூதா 7
வின் சிறையிருப்பையும், இஸ்ரவேலின் சிறை
யிருப்பையும் திருப்பி, [14]முன்னிருந்ததுபோல
அவர்களைக் கட்டுவித்து, அவர்கள் எனக்கு 8
விரோதமாய்க் குற்றஞ்செய்த அவர்களுடைய
எல்லா அக்கிரமங்களுக்கும் அவர்களை நீங்க
லாக்கிச் சுத்திகரித்து, [15]அவர்கள் எனக்கு வி
ரோதமாய்க் குற்றஞ்செய்து, எனக்கு விரோ
மாய்த் துரோகம்பண்ணின அவர்களுடைய
எல்லா அக்கிரமங்களையும் மன்னிப்பேன்.
நான் அவர்களுக்குச் செய்யும் நன்மையை 9
யெல்லாம் கேட்கப்போகிற பூமியின் எல்லா
ஜாதிகளுக்கு முன்பாக அது எனக்கு மகிழ்ச்சி
யுள்ள கீர்த்தியாயும் புகழ்ச்சியாயும் மகிமையா
யும் இருக்கும்; [16]நான் அவர்களுக்கு அருளிச்
செய்யும் எல்லா நன்மையினிமித்தமும், எல்
லாச் சமாதானத்தினிமித்தமும் இவர்கள் பயந்
து நடுங்குவார்கள் என்று இஸ்ரவேலின் தேவ
னாகிய கர்த்தர் சொல்லுகிறார். மனுஷனில்லா 10
மலும் மிருகமில்லாமலும் அவாந்தரவெளி
யாய்க் கிடக்கிறதென்று, நீங்கள் சொல்லுகிற
இவ்விடத்திலும் யூதாவின் பட்டணங்களிலும்
மனுஷனாவது மிருகமாவது இல்லாத பாழான
எருசலேமின் வீதிகளிலும், இன்னும் களிப் 11
பின் சத்தமும், மகிழ்ச்சியின் சத்தமும், மண
வாளனின் சத்தமும், மணவாட்டியின் சத்த
மும்: சேனைகளின் கர்த்தரைத் துதியுங்கள்,
கர்த்தர் நல்லவர், அவர் கிருபை என்றுமுள்ள

தென்று சொல்லுகிறவர்களின் சத்தமும்,
[1]கர்த்தருடைய ஆலயத்துக்கு ஸ்தோத்திரபலி
களைக் கொண்டுவருகிறவர்களின் சத்தமும்
கேட்கப்படும் என்று கர்த்தர் சொல்லுகிறார்;
அவர்கள் முன்னிருந்ததுபோ லிருக்கும்படி
தேசத்தின் சிறையிருப்பைத் திருப்புவேன்
12 என்று கர்த்தர் சொல்லுகிறார். மனுஷனும்
மிருகமும் இல்லாமல் அவாந்தரவெளியாய்க்
கிடக்கிற இவ்விடத்திலும், இதற்கடுத்த பட்
டணங்களிலும், [2]ஆட்டுமந்தையை மேய்த்து
மடக்குகிற மேய்ப்பர்களின் தாபரங்கள் உண்
டாயிருக்கும் என்று சேனைகளின் கர்த்தர்
13 சொல்லுகிறார். மலைத்தேசமான பட்டணங்
களிலும், [3]பள்ளத்தாக்குகளான பட்டணங்
களிலும், தென்திசைப் பட்டணங்களிலும்,
பென்யமீன் நாட்டிலும், எருசலேமின் சுற்
றுப்புறங்களிலும், யூதாவின் பட்டணங்களி
லும், ஆட்டுமந்தைகள் தங்களைத் தொகையிடு
கிறவனுடைய கைக்குள்ளாகக் கடந்துவரும்
என்று கர்த்தர் சொல்லுகிறார்.
14 இதோ, நாட்கள் வருமென்று கர்த்தர் சொ
ல்லுகிறார், [4]அப்பொழுது நான் இஸ்ரவே
லின் குடும்பத்துக்கும், யூதாவின் குடும்பத்துக்
கும் சொன்ன நல்வார்த்தையை நிறைவேற்று
15 வேன். அந்நாட்களிலும், அக்காலத்திலும்
தாவீதுக்கு நீதியின் கிளையை முளைக்கப்பண்
ணுவேன்; [5]அவர் பூமியிலே நியாயத்தையும்
16 நீதியையும் நடப்பிப்பார். அந்நாட்களில் யூதா
ரட்சிக்கப்பட்டு, எருசலேம் சுகமாய்த் தங்கும்;
[6]அவர் எங்கள் நீதியாயிருக்கிற கர்த்தர் என்
17 பது அவருடைய நாமம். இஸ்ரவேல் வம்
சத்தின் சிங்காசனத்தின்மேல் உட்காரத்தக்க
புருஷன் தாவீதுக்கு[7]இல்லாமற்போவதில்லை.
18 தகனபலியிட்டு, போஜனபலி செலுத்தி,
[8]நாள்தோறும் பலியிடும் புருஷன் எனக்கு
முன்பாக ஆசாரியருக்கும் லேவியருக்கும்
இல்லாமற் போவதுமில்லை என்று கர்த்தர்
19 சொல்லுகிறார் என்றார். பின்னும் எரேமி
யாவுக்குக்கர்த்தருடைய வார்த்தை உண்டாகி,
20 அவர்: குறித்த நேரங்களில் பகற்காலமும்
இராக்காலமும் உண்டாகாதபடிக்கு, [9]நீங்கள்
பகற்காலத்தைக் குறித்து நான் பண்ணின
உடன்படிக்கையையும், இராக்காலத்தைக்குறி
த்து நான் பண்ணின உடன்படிக்கையையும்
21 அவமாக்கினால், அப்பொழுது என் தாசனா
கிய தாவீதோடே நான் பண்ணின உடன்
படிக்கையும், அவன் சிங்காசனத்தில் அரசா
ளும் குமாரன் அவனுக்கு இல்லாமற்போகும்
படியாக அவமாகும்; [10]என் ஊழியக்காரராகிய
லேவியரோடும் ஆசாரியரோடும் நான் பண்
ணின உடன்படிக்கையும் அப்பொழுது அவ
22 மாகும். வானத்து நட்சத்திரங்கள் எண்ணப்
படாததும் கடற்கரை மணல் அளக்கப்படா
ததுமா யிருக்கிறதுபோல, [11]நான் என் தாச
னாகிய தாவீதின் சந்ததியையும் எனக்கு ஊழி
யஞ்செய்கிற லேவியரையும் வர்த்திக்கப்பண்
ணுவேன் என்று கர்த்தர் சொல்லுகிறார் என்

[1] 25. 10. 2 நாளா. 5. 13. எஸ்றா 3. 11. சங். 136. 1. ஏசா. 12. 4
[2] ஏசா. 65. 10
[3] 17. 26: 50. 19, 20
[4] 29. 10
[5] ஏசா. 4. 2: 11. 1: 42. 21. சகரி. 6. 12, 13
[6] 23. 6. 1 கொ. 1. 30
[7] 2 சாமு. 7. 14-16. 1 இரா. 2. 4. சங். 89. 29, 36. ஏசா. 9. 7. லூ. 1. 32, 33
[8] ரோ. 15. 15. 1 பே. 2. 5, 9. வெளி. 1. 6
[9] சங். 89. 37. ஏசா. 54. 9, 10
[10] 2 சாமு. 23. 5
[11] 31. 37. வெளி. 7. 9, 10
[12] 21, 22. வச
[13] ஆதி. 8. 22. சங். 74. 16, 17
[14] எஸ்றா 2. 1, 70
[15] 39. 1. யூ: 52. 4 யூ. 2 இரா. 25. 1. யூ
[16] 21. 10: 32. 28, 29
[17] 2 நாளா. 16. 14: 21. 19. தானி. 2. 46
[18] 22. 18

றார். பின்னும் எரேமியாவுக்குக் கர்த்த 23
ருடைய வார்த்தை உண்டாகி, அவர்: கர்த்தர் 24
தெரிந்துகொண்ட இரண்டு வம்சங்களையும்
வெறுத்துப் போட்டாரென்று இந்த ஜனம்
சொல்லி, [12]தங்களுக்கு முன்பாக என் ஜனம்
இனி ஒரு ஜாதியல்லவென்று அதைத் தூஷி
க்கிறார்களென்பதை நீ காண்கிறதில்லையோ?
வானத்துக்கும் பூமிக்கும் குறித்திருக்கிற நிய 25
மங்களை நான் காவாமல், [13]பகற்காலத்தையும்
இராக்காலத்தையுங் குறித்து நான் பண்ணின
உடன்படிக்கை அற்றுப்போகிறது உண்டா
னால், அப்பொழுது நான் யாக்கோபின் சந் 26
ததியையும், என் தாசனாகிய தாவீதின் சந்ததி
யையும் தள்ளி, நான் ஆபிரகாம் ஈசாக்கு யாக்
கோபு என்பவர்களின் சந்ததியை ஆளத்தக்க
வர்களை அதிலிருந்து எடுக்காதபடிக்கு வெறு
த்துப்போடுவேன்; [14]அவர்களுடைய சிறை
யிருப்பை நான் திருப்பி, அவர்களுக்கு இரங்கு
வேன் என்று கர்த்தர் சொல்லுகிறார் என்றார்.

பாபிலோன் ராஜாவாகிய நேபுகாத்நேச் **34**
சாரும், [15]அவனுடைய சர்வசேனையும், அவன்
ஆளுகைக்குட்பட்ட பூமியின் சகல ராஜ்யங்க
ளும், சகல ஜனங்களும் எருசலேமுக்கும்
அதைச்சேர்ந்த சகல பட்டணங்களுக்கும்
விரோதமாக யுத்தம் பண்ணுகையில் எரேமி
யாவுக்குக் கர்த்தரால் உண்டான வார்த்தை:
இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் உரைக் 2
கிறது என்னவென்றால்: நீ போய், யூதாவின்
ராஜாவாகிய சிதேக்கியாவினிடத்தில் பேசி,
அவனுக்குச் சொல்லவேண்டியது: இதோ,
நான் இந்த நகரத்தைப் பாபிலோன் ராஜா
வின் கையில் ஒப்புக்கொடுக்கிறேன்; [16]அவன்
இதை அக்கினியால் சுட்டெரிப்பான். நீ 3
அவன் கைக்குத் தப்பிப்போகாமல், நிச்சய
மாய்ப் பிடிபட்டு, அவன் கையில் ஒப்புக்
கொடுக்கப்படுவாய்; உன் கண்கள் பாபி
லோன் ராஜாவின் கண்களைக் காணும்; அவன்
வாய் உன் வாயோடே பேசும்; நீ பாபிலோ
னுக்குப் போவாய் என்று கர்த்தர் சொல்லுகி
றார். ஆகிலும் யூதாவின் ராஜாவாகிய சிதேக்கி 4
யாவே, கர்த்தருடைய வார்த்தையைக் கேள்;
உன்னைக்குறித்துக் கர்த்தர் சொல்லுகிறது
என்னவென்றால்: நீ பட்டயத்தாலே சாவ
தில்லை. சமாதானத்தோடே சாவாய்; உன 5
க்கு முன்னிருந்த ராஜாக்களாகிய உன் பிதாக்
களினிமித்தம் சுகந்தவர்க்கங்களைக் கொளுத்தி
னதுபோல உன்னிமித்தமும் கொளுத்தி,
[17]ஐயோ! ஆண்டவனே, என்று சொல்லி,
உனக்காகப் புலம்புவார்கள்; [18]இது நான்
சொன்ன வார்த்தையென்று கர்த்தர் உரைத்
தார் என்று சொல் என்றார். இந்த வார்த்தை 6
களையெல்லாம் தீர்க்கதரிசியாகிய எரேமியா
எருசலேமிலே யூதாவின் ராஜாவாகிய சிதேக்
கியாவினிடத்தில் சொன்னான். அப்பொ 7
ழுது பாபிலோன் ராஜாவின் சேனைகள் எரு
சலேமுக்கு விரோதமாகவும், யூதாவின் எல்
லாப் பட்டணங்களிலும் மீந்த பட்டணங்க

ளாகிய லாகீசுக்கும், அசெக்காவுக்கும் விரோ
தமாகவும் யுத்தம் பண்ணிக்கொண்டிருந்தது;
[1]யூதாவின் அரணிப்பான பட்டணங்களில்
இவைகளே மீந்திருந்தவைகள்.
8 ஒருவனும் யூத ஜாதியானாகிய தன் சகோ
தரனை அடிமைகொள்ளாதபடிக்கு, அவன
வன் எபிரெயனாகிய தன் வேலைக்காரனையும்,
எபிரெய ஸ்திரீயாகிய தன் வேலைக்காரியை
யும் சுயாதீனராக அனுப்பிவிட வேண்டு
மென்று [2]அவர்களுக்கு விடுதலையைக் கூறும்
9 படி, ராஜாவாகிய சிதேக்கியா எருசலேமில்
இருக்கிற எல்லா ஜனத்தோடும் உடன்படிக்
கை பண்ணினபின்பு, எரேமியாவுக்குக் கர்த்
10 தரால் வார்த்தை உண்டாயிற்று. ஒவ்வொரு
வனும் தன் வேலைக்காரனையும் தன் வேலைக்
காரியையும் இனி அடிமைகொள்ளாதபடிக்கு,
சுயாதீனராக அனுப்பிவிட வேண்டுமென்று
உடன்படிக்கைக்கு உட்பட்ட எல்லாப் பிர
புக்களும் எல்லா ஜனங்களும் கேட்டபோது,
செவிகொடுத்து அவர்களை அனுப்பிவிட்டார்
11 கள். ஆனாலும் அதற்குப் பின்பு அவர்கள்
மாறாட்டம்பண்ணி, தாங்கள் சுயாதீனராக
அனுப்பிவிட்ட வேலைக்காரரையும் வேலைக்கா
ரிகளையும் மறுபடியும் அழைப்பித்து, அவர்
களை வேலைக்காரரும் வேலைக்காரிகளுமா யிரு
க்கும்படி அடிமைப்படுத்திக்கொண்டார்கள்.
12 ஆதலால், கர்த்தராலே எரேமியாவுக்கு வார்
13 த்தை உண்டாகி, அவர்: இஸ்ரவேலின் தே
வனாகிய கர்த்தர் உரைக்கிறது என்னவென்
றால், அவனவன் தனக்கு விற்கப்பட்ட எபி
ரெயனாகிய தன் சகோதரனை முடிவிலே நீங்
கள் ஏழாம் வருஷத்திலே அனுப்பிவிடவேண்
டும் என்றும், அவன் உனக்கு ஆறுவருஷம்
அடிமையாயிருந்தபின்பு, [3]அவனை உன்னிட
த்தில் வைக்காமல் சுயாதீனனாக அனுப்பிவிட
14 வேண்டும் என்றும், நான் உங்கள் பிதாக்
களை அடிமை வீடாகிய எகிப்து தேசத்திலிரு
ந்து புறப்படப்பண்ணின நாளிலே அவர்க
ளோடே உடன்படிக்கை பண்ணினேன்;
ஆனாலும் உங்கள் பிதாக்கள் என் சொல்லைக்
கேளாமலும், தங்கள் செவியைச் சாயாமலும்
15 போனார்கள். நீங்களோ, இந்நாளிலே மனந்
திரும்பி, அவனவன் தன் அயலானுக்கு விடு
தலையைக் கூறின விஷயத்திலே என் பார்
வைக்குச் செம்மையானதைச் செய்து, என்
நாமம் தரிக்கப்பட்ட ஆலயத்திலே இதற்காக
என் முகத்துக்குமுன் [4]உடன்படிக்கை பண்
16 ணியிருந்தீர்கள். ஆனாலும் நீங்கள் மாறாட்
டம்பண்ணி, என் நாமத்தைப் பரிசுத்தக் குலை
ச்சலாக்கி, [5]நீங்கள் அவனவன் விடுதலையாக
வும் சுயாதீனராகவும் அனுப்பிவிட்ட தன்
வேலைக்காரனையும் தன் வேலைக்காரியையும்
திரும்ப அழைத்துவந்து, [6]அவர்களை உங்களு
க்கு வேலைக்காரரும் வேலைக்காரிகளுமா யிரு
17 க்கும்படி அடிமைப்படுத்தினீர்கள். ஆகை
யால் கர்த்தர் சொல்லுகிறது என்னவென்
றால், நீங்கள் அவனவன் தன் சகோதரனுக்

1 2 இரா. 18. 13: 19. 8
2 லேவி. 25. 10
3 யாத். 21. 2. உபா. 15. 12
4 2 இரா. 23. 3. நெகே. 10. 29
5 யாத். 20. 7. லேவி. 19. 12
6 மத். 18. 28-34
7 மத். 7. 2. கலா. 6. 7. யாக். 2. 13
8 29. 18. உபா. 28. 25, 64
9 ஆதி. 15. 10, 17
10 7. 33: 16. 4: 19. 7
11 37. 5-11
12 40. 2, 3: 44. 2, 6: 52. 7, 13
13 2 இரா. 10. 15. 1 நாளா. 2. 55

கும், அவனவன் தன் அயலானுக்கும் விடு
தலையைக் கூறினவிஷயத்தில் என் சொல்
லைக் கேளாமற் போனீர்களே; [7]இதோ, நான்
உங்களைப் பட்டயத்துக்கும், கொள்ளைநோய்க்
கும், பஞ்சத்துக்கும் ஒப்புக்கொடுக்கிற விடு
தலையை உங்களுக்குக் கூறுகிறேன்; [8]பூமியின்
ராஜ்யங்களிலெல்லாம் அலைகிறதற்கும் உங்
களை ஒப்புக்கொடுப்பேன் என்று கர்த்தர்
சொல்லுகிறார். என் முகத்துக்குமுன் பண் 18
ணின உடன்படிக்கையின் வார்த்தைகளை
நிறைவேற்றாமல், என் உடன்படிக்கையை
மீறின மனுஷரை நான் துண்டங்களின் நடு
வாகக் கடந்துபோகும்படி [9]அவர்களை இரண்
டாகத் துண்டித்த கன்றுக்குட்டியைப்போல்
ஆக்குவேன்: கன்றுக்குட்டியின் துண்டுகளின் 19
நடுவே கடந்துபோன யூதாவின் பிரபுக்களை
யும், எருசலேமின் பிரபுக்களையும், பிரதானி
களையும், ஆசாரியர்களையும், தேசத்தின் சகல
ஜனங்களையும் அப்படிச் செய்து, நான் அவர் 20
களை அவர்கள் சத்துருக்களின் கையிலும்,
அவர்கள் பிராணனை வாங்கத் தேடுகிறவர்க
ளின் கையிலும் ஒப்புக்கொடுப்பேன்; [10]அவர்
களுடைய பிரேதம் ஆகாயத்தின் பறவைக
ளுக்கும் பூமியின் மிருகங்களுக்கும் இரையா
கும். யூதாவின் ராஜாவாகிய சிதேக்கியாவை 21
யும் அவனுடைய பிரபுக்களையும் அவர்கள்
சத்துருக்களின் கையிலும், அவர்கள் பிரா
ணனை வாங்கத் தேடுகிறவர்களின் கையிலும்,
[11]உங்களைவிட்டுப் போர்ந்துபோன பாபிலோன்
ராஜாவினுடைய சேனைகளின் கையிலும் ஒப்
புக்கொடுப்பேன். இதோ, நான் கட்டளைகொ 22
டுத்து, அவர்களை இந்த நகரத்துக்குத் திரும்
பப்பண்ணுவேன்; அவர்கள் அதற்கு விரோத
மாக யுத்தம்பண்ணி, அதைப் பிடித்து, அதை
அக்கினியால் சுட்டெரிப்பார்கள்; [12]யூதாவின்
பட்டணங்களையும், ஒருவரும் அவைகளில்
குடியிராதபடிப் பாழாய்ப்போகப்பண்ணுவே
ன என்று கர்த்தர் உரைக்கிறார் என்று சொல்
என்றார்.

யோசியாவின் குமாரனாகிய யோயாக்கீம் **35**
என்னும் யூதா ராஜாவின் நாட்களில் எரேமி
யாவுக்குக் கர்த்தரால் உண்டான வார்த்தை:
நீ ரேகாபியருடைய வீட்டுக்குப் போய், அவர் 2
களோடே பேசி, [13]அவர்களைக் கர்த்தருடைய
ஆலயத்தின் அறைகளில் ஒன்றிலே அழைத்
துவந்து, அவர்களுக்குத் திராட்சரசம் குடிக்
கக் கொடு என்றார். அப்பொழுது நான் அப 3
சினியாவின் குமாரனாகிய எரேமியாவுக்கு மக
னான யசினியாவையும், அவனுடைய சகோ
தரரையும், அவனுடைய குமாரர் எல்லாரை
யும், ரேகாபியருடைய குடும்பத்தார் அனைவ
ரையும் அழைத்து, கர்த்தருடைய ஆலயத்தி 4
லே பிரபுக்களுடைய அறையின் அருகேயும்,
வாசலைக் காக்கிற சல்லூமின் குமாரனாகிய
மாசெயாவினுடைய அறையின் மேலுமுள்ள
இக்தலியாவின் குமாரனும் தேவனுடைய
மனுஷனுமாகிய ஆனான் என்னும் புத்திரரு

டைய [1]அறையிலே அவர்களைக் கூட்டிக்
5 கொண்டுவந்து, திராட்சரசத்தினால் நிரப்பப்
பட்ட குடங்களையும் கிண்ணங்களையும் ரேகா
பியருடைய குடும்பத்தைச் சேர்ந்த புத்திரரின்
முன்னே வைத்து, அவர்களை நோக்கி: திராட்
6 சரசம் குடியுங்கள் என்றேன். அதற்கு அவர்
கள்: நாங்கள் திராட்சரசம் குடிக்கிறதில்லை;
ஏனென்றால், [2]ரேகாபின் குமாரனாகிய எங்க
ளுடைய தகப்பன் யோனதாப், [3]நீங்கள் பர
தேசிகளாய்த் தங்குகிற தேசத்தில் நீடித்திருக்
7 கும்படிக்கு, நீங்களும் உங்கள் பிள்ளைகளும்
என்றென்றைக்கும் திராட்சரசம் குடியாம
லும், வீட்டைக் கட்டாமலும், விதையை
விதையாமலும், திராட்சத்தோட்டத்தை நாட்
டாமலும், அதைக் கையாளாமலும், [4]உங்க
ளுடைய எல்லா நாட்களிலும் கூடாரங்களி
லே குடியிருப்பீர்களாக என்று எங்களுக்குக்
8 கட்டளையிட்டார். அப்படியே எங்களுடைய
எல்லா நாட்களிலும் நாங்களும் எங்கள் ஸ்திரீ
களும் எங்கள் குமாரரும் எங்கள் குமாரத்தி
9 களும் திராட்சரசம் குடியாமலும், நாங்கள்
குடியிருக்க வீடுகளைக் கட்டாமலும், ரேகா
பின் குமாரனாகிய எங்களுடைய தகப்பன்
யோனதாபின் சத்தத்துக்குக் கீழ்ப்படிந்திருக்
கிறோம்; எங்களுக்குத் திராட்சத்தோட்டமும்
10 வயலும் விதைப்பாடுமில்லை. நாங்கள் கூடா
ரங்களில் குடியிருந்து, எங்கள் தகப்பனாகிய
யோனதாப் எங்களுக்குக் கட்டளையிட்டபடி
யெல்லாம் கீழ்ப்படிந்து செய்துவந்தோம்.
11 ஆனாலும் பாபிலோன் ராஜாவாகிய நேபுகாத்
நேச்சார் இந்த தேசத்தில் வந்தபோது, நாம்
கல்தேயருடைய ராணுவத்துக்கும் சீரியரு
டைய ராணுவத்துக்கும் தப்பும்படி எருசலே
முக்குப் போவோம் வாருங்கள் என்று சொன்
னோம்; அப்படியே எருசலேமில் தங்கியிருக்
கிறோம் என்றார்கள்.
12 அப்பொழுது கர்த்தருடைய வார்த்தை எரே
13 மியாவுக்கு உண்டாகி, அவர்: இஸ்ரவேலின்
தேவனாகிய சேனைகளின் கர்த்தர் உரைக்கி
றது என்னவென்றால், நீ போய், யூதாவின்
மனுஷரையும் எருசலேமின் குடிகளையும்
நோக்கி: [5]நீங்கள் என் வார்த்தைகளைக் கேட்
டு, புத்தியை ஏற்றுக்கொள்ளுகிறதில்லையோ
14 என்று கர்த்தர் சொல்லுகிறார். திராட்சரசம்
குடியாதபடிக்கு, ரேகாபின் குமாரனாகிய யோ
னதாப் தன் புத்திரருக்குக் கட்டளையிட்ட
வார்த்தைகள் கைக்கொள்ளப்பட்டு வருகிறது;
அவர்கள் இந்நாள்மட்டும் அதைக் குடியாமல்,
தங்கள் தகப்பனுடைய கட்டளைக்குக் கீழ்ப்
படிகிறார்கள்; [6]ஆனாலும் நான் உங்களுக்கு
ஏற்கனவே சொல்லிக்கொண்டே யிருந்தும்,
15 எனக்குக் கீழ்ப்படியாமற்போனீர்கள். நீங்கள்
அந்நிய தேவர்களைச் சேவிக்கும்படி அவர்க
ளைப் பின்பற்றாமல், அவனவன் தன் பொல்
லாதவழியை விட்டுத் திரும்பி, உங்கள் நடக்
கையைச் சீர்திருத்துங்கள், அப்பொழுது உங்
களுக்கும் உங்கள் பிதாக்களுக்கும் நான் கொ
டுத்த தேசத்திலே குடியிருப்பீர்கள் என்று
சொல்லி, [7]தீர்க்கதரிசிகளாகிய என் ஊழியக்
காரரையெல்லாம் நான் உங்களிடத்துக்கு ஏற்
கனவே அனுப்பிக்கொண்டிருந்தும், நீங்கள்
உங்கள் செவியைச் சாயாமலும் எனக்குக்
கீழ்ப்படியாமலும் போனீர்கள். இப்போதும், 16
ரேகாபின் குமாரனாகிய யோனதாபின் புத்தி
ரர் தங்கள் தகப்பன் தங்களுக்குக் கட்டளை
யிட்ட கற்பனையைக் கைக்கொண்டிருக்கும்
போது, இந்த ஜனங்கள் எனக்குக் கீழ்ப்படியா
மற்போனபடியினாலும், இதோ, நான் அவர்க 17
ளிடத்தில் பேசியும் அவர்கள் கேளாமலும்,
நான் அவர்களை நோக்கிக் கூப்பிட்டும் அவர்
கள் மறு உத்தரவு கொடாமலும் போனபடியி
னாலும், யூதாவின்மேலும் எருசலேமின் குடி
கள் எல்லாரின்மேலும் நான் அவர்களுக்கு
விரோதமாகச் சொன்ன எல்லாத் தீங்கையும்
வரப்பண்ணுவேன் என்று [8]இஸ்ரவேலின்
தேவனும் சேனைகளின் தேவனுமாகிய கர்த்
தர் சொல்லுகிறார் என்று சொல் என்றார்.
பின்னும் எரேமியா ரேகாபியருடைய குடும் 18
பத்தாரை நோக்கி: நீங்கள் உங்கள் தகப்பனா
கிய யோனதாபின் கட்டளைக்குக் கீழ்ப்படி
ந்து, அவனுடைய கற்பனைகளையெல்லாம்
லைக்கொண்டு, [9]அவன் உங்களுக்குக் கட்டளை
யிட்டபடியெல்லாம் செய்துவந்தீர்களென்று,
இஸ்ரவேலின் தேவனாகிய சேனைகளின் கர்த்
தர் சொல்லுகிறார். ஆதலால் சகல நாட்களி 19
லும் எனக்கு முன்பாக நிற்கத்தக்க புருஷன்
ரேகாபின் குமாரனாகிய யோனதாபுக்கு இல்
லாமற்போவதில்லையென்று [10]இஸ்ரவேலின்
தேவனாகிய சேனைகளின் கர்த்தர் சொல்லு
கிறார் என்றான்.

யோசியாவின் குமாரனாகிய யோயாக் **36**
கீம் என்னும் யூதா ராஜாவின் நாலாம் வரு
ஷத்திலே கர்த்தரால் எரேமியாவுக்கு உண்
டான வார்த்தை என்னவென்றால்: நீ ஒரு 2
புஸ்தகச்சுருளை யெடுத்து, [11]யோசியாவின்
நாட்களிலே நான் உன்னுடனே பேசின நாள்
முதற்கொண்டு இந்நாள்மட்டும் இஸ்ரவேலைக்
குறித்தும், யூதாவைக்குறித்தும், சகல ஜாதிக
ளைக்குறித்தும் உன்னோடே சொன்ன எல்லா
வார்த்தைகளையும் அதிலே எழுது. யூதாவின் 3
குடும்பத்தார், அவரவர் தங்கள் பொல்லாத
வழியைவிட்டுத் திரும்பும்படியாகவும், தங்கள்
அக்கிரமத்தையும் தங்கள் பாவத்தையும் நான்
மன்னிக்கும்படியாகவும், [12]தங்களுக்கு நான்
செய்ய நினைத்திருக்கிற தீங்குகளைக்குறித்து
ஒருவேளை அவர்கள் கேட்பார்கள் என்றார்.
அப்பொழுது எரேமியா நேரியாவின் குமார 4
னாகிய பாருக்கை அழைத்தான்; பாருக்கு என்
பவன் கர்த்தர் எரேமியாவுடனே சொல்லி
வந்த எல்லா வார்த்தைகளையும் அவன் வாய்
சொல்ல ஒரு புஸ்தகச்சுருளில் எழுதினான்.
பின்பு எரேமியா பாருக்கை நோக்கி: நான் 5
அடைக்கப்பட்டவன்; நான் கர்த்தருடைய ஆல
யத்துக்குள் பிரவேசிக்கக்கூடாது. நீ உள்ளே 6

[1] 1 நாளா. 9. 18, 19. சங். 84. 10
[2] 2 இரா. 10. 15
[3] எபே. 6. 2, 3. 1 பே. 2. 11
[4] எபி. 11. 9, 13
[5] 32. 33
[6] 2 நாளா. 36. 15, 16
[7] 7. 13, 25: 25. 3-6. ஏசா. 10. 16: 13. 34, 35. 1 தெச. 4. 8
[8] நீதி. 1. 24. ஏசா. 65. 12: 66. 4
[9] யாத். 20. 12. எபே. 6. 2, 3
[10] 15. 19. சங். 5. 5. லூக். 21. 36
[11] ஏசா. 8. 1. எசே. 2. 9. ஆப. 8. 12. சகரி. 5. 1, 2
[12] 26. 3. யோனா 3. 8-10. அப். 3. 19

பிரவேசித்து, என் வாய் சொல்ல நீ எழுதின
சுருளிலுள்ள **கர்த்தருடைய** வார்த்தைகளைக்
**கர்த்தருடைய** ஆலயத்தில் உபவாசநாளிலே
ஜனங்களுடைய செவிகள் கேட்க வாசிப்பது
மன்றி, [1]தங்கள் பட்டணங்களிலிருந்து வரு
கிற எல்லா யூதா கோத்திரத்தாரும் கேட்கும்
7 படி அவைகளை வாசிப்பாயாக. ஒருவேளை
அவர்கள் **கர்த்தருடைய** முகத்துக்கு முன்பா
கப் பணிந்து விண்ணப்பம்பண்ணி, அவரவர்
தங்கள் பொல்லாத வழியைவிட்டுத் திரும்பு
வார்கள்; [2]**கர்த்தர்** இந்த ஜனத்துக்கு விரோத
மாகக் கூறியிருக்கிற கோபமும் உக்கிரமும்
8 பெரியது என்று சொன்னான். அப்படியே
நேரியாவின் குமாரனாகிய பாருக்கு அந்தப்
புஸ்தகத்தில், [3]**கர்த்தருடைய** ஆலயத்தில் **கர்த்**
**தருடைய** வார்த்தைகளை வாசிக்கும்படி எரே
மியா தீர்க்கதரிசி தனக்குக் கற்பித்தபடியெல்
லாம் செய்தான்:
9 யோசியாவின் குமாரனாகிய யோயாக்கீம்
என்னும் யூதா ராஜாவின் ஐந்தாம் வருஷத்து
ஒன்பதாம் மாதத்திலே, எருசலேமிலிருக்கிற
எல்லா ஜனத்துக்கும், யூதாவின் பட்டணங்
களிலிருந்து எருசலேமுக்கு வருகிற எல்லா
ஜனத்துக்கும், [4]**கர்த்தருக்கு** முன்பாக உப
வாசம் செய்யவேண்டுமென்று கூறப்பட்டது.
10 அப்பொழுது பாருக்கு **கர்த்தருடைய** ஆல
யத்தின் மேற்பிராகாரத்தில், [5]**கர்த்தருடைய**
ஆலயத்து வாசலின் நடைக்கு அருகான சாப்
பானுடைய குமாரனாகிய கெமரியா என்
னும் சம்பிரதியின் அறையிலே, அந்தப் புஸ்
தகத்திலுள்ள எரேமியாவின் வார்த்தைகளை
ஜனங்கள் எல்லாரும் கேட்க வாசித்தான்.
11 சாப்பானுடைய குமாரனாகிய கெமரியாவின்
மகன் மிகாயா அந்தப் புஸ்தகத்திலுள்ள **கர்த்**
**தருடைய** வார்த்தைகளையெல்லாம் வாசிக்கக்
12 கேட்டபோது, அவன் ராஜாவின் அரம
னைக்குப் போய், சம்பிரதியின் அறையில் பிர
வேசித்தான்; இதோ, அங்கே எல்லாப் பிர
புக்களும் சம்பிரதியாகிய எலிசாமாவும் செமா
யாவின் குமாரனாகிய தெலாயாவும், அக்போ
ரின் குமாரனாகிய எல்நாத்தானும், சாப்பா
னின் குமாரனாகிய கெமரியாவும், அனனியா
வின் குமாரனாகிய சிதேக்கியாவும், மற்ற எல்
லாப் பிரபுக்களும் உட்கார்ந்திருந்தார்கள்.
13 பாருக்கு ஜனத்தின் செவிகள் கேட்கப் புஸ்த
கத்திலுள்ளவைகளை வாசிக்கையில், தான்
கேட்ட எல்லா வார்த்தைகளையும் மிகாயா
14 அவர்களுக்குத் தெரிவித்தான். அப்பொழுது
எல்லாப் பிரபுக்களும் கூஷியின் குமாரனா
கிய செலேமியாவின் மகனான யெகுதியை
வினுடைய குமாரனாயிருக்கிற யெகுதியைப்
பாருக்கினிடத்தில் அனுப்பி, ஜனங்கள்கேட்க
நீ வாசித்துக்கொண்டிருந்த சுருளை உன்
கையில் எடுத்துக்கொண்டுவா என்று சொல்
லச் சொன்னார்கள்; ஆகையால், நேரியாவின்
குமாரனாகிய பாருக்கு சுருளைத் தன் கையில்
எடுத்துக்கொண்டு, அவர்களிடத்துக்கு வந்

[1] லேவி. 16. 29–31: 23. 27, 32. எசே. 2. 3–7. அப். 27. 9
[2] 2 இரா. 22. 13, 17
[3] நெகே. 8. 3. ஓசி. 4. 16. ஹி.
[4] யோவே. 2. 15. ஹி
[5] 26. 10
[6] 2, 4. வச.
[7] 2 நாளா. 25. 15, 16. சங். 28. 12. அப். 5. 40
[8] 23. 28: 26. 2. எசே. 2. 4, 5
[9] ஆமோ. 3. 15
[10] சங். 50. 17. நீதி. 18. 13: 19. 21: 21. 30. வெளி. 22. 19
[11] 2 இரா. 22. 11. ஏசா. 36. 22: 37. 1
[12] 18. 15–17. நீதி. 21. 29
[13] சங். 27. 5: 32. 7. 64. 2

தான். அவர்கள் அவனை நோக்கி: நீ உட் 15
கார்ந்துகொண்டு, நாங்கள் கேட்க வாசியென்
றார்கள்; அவர்கள் கேட்க வாசித்தான். அப் 16
பொழுது அவர்கள் எல்லா வார்த்தைகளையும்
கேட்கையில் பயமுற்றவர்களாய் ஒருவனை
யொருவர் பார்த்து, பாருக்கை நோக்கி: இந்த
எல்லா வார்த்தைகளையும் ராஜாவுக்கு நிச்சய
மாய் அறிவிப்போம் என்றார்கள். அவன் 17
வாய் சொல்ல, நீ இந்த வார்த்தைகளையெல்
லாம் எவ்விதமாய் எழுதினாய், அதை எங்க
ளுக்குச் சொல் என்று பாருக்கைக் கேட்டார்
கள். அதற்குப் பாருக்கு: அவர் தமது வாயி 18
னால் இந்த எல்லா வார்த்தைகளையும் உரைத்து,
என்னுடனே சொன்னார், [6]நான் மையினால்
புஸ்தகத்தில் எழுதினேன் என்றான். அப் 19
பொழுது பிரபுக்கள் பாருக்கை நோக்கி:
நீயும் எரேமியாவும் போய் ஒளித்துக்கொள்ளு
ங்கள்; [7]நீங்கள் இருக்கும் இடத்தை ஒருவரும்
அறியப்படாது என்று சொல்லி, சுருளைச் 20
சம்பிரதியாகிய எலிசாமாவின் அறையிலே
வைத்து, ராஜாவினிடத்துக்கு அரமனையிலே
போய், ராஜாவின் செவிகளுக்கு இந்த வார்த்
தைகளையெல்லாம் அறிவித்தார்கள். அப்பொ 21
ழுது ராஜா அந்தச் சுருளை எடுத்துக்கொண்
டுவர யெகுதியை அனுப்பினான்; யெகுதி
அதைச் சம்பிரதியாகிய எலிசாமாவின் அறை
யிலிருந்து எடுத்துக்கொண்டுவந்து, [8]ராஜா
கேட்கவும், ராஜாவினிடத்தில் நின்ற எல்
லாப் பிரபுக்களும் கேட்கவும் வாசித்தான்.
ஒன்பதாம் மாதத்திலே ராஜா, குளிர்காலத் 22
துக்குத் தங்கும் வீட்டில் உட்கார்ந்திருந்தான்;
[9]அவனுக்கு முன்பாகக் கணப்பு மூட்டியிருந்
தது. யெகுதி மூன்று நாலு பத்திகளை வாசித் 23
தபின்பு, ராஜா ஒரு சூரிக்கத்தியினால் அதை
அறுத்து, சுருளனைத்தும் கணப்பிலுள்ள அக்
கினியிலே வெந்துபோகும்படி, [10]கணப்பிலி
ருந்த அக்கினியில் எறிந்துபோட்டான். ராஜா 24
வாயினும், அந்த வார்த்தைகளையெல்லாம்
கேட்ட அவனுடைய சகல ஊழியக்காரராயி
னும் பயப்படவுமில்லை, [11]தங்கள் வஸ்திரங்க
ளைக் கிழித்துக்கொள்ளவுமில்லை. எல்நாத் 25
தானும், தெலாயாவும், கெமரியாவுமோ: அந்
தச் சுருளைச் சுட்டெரிக்கவேண்டாம் என்று
ராஜாவினிடத்தில் விண்ணப்பம் பண்ணினார்
கள்; [12]ஆனாலும், அவர்களுக்கு அவன் செவி
கொடாமல், பாருக்கு என்னும் சம்பிரதி 26
யையும் எரேமியா தீர்க்கதரிசியையும் பிடிக்
கும்படிக்கு, ராஜா அம்மெலேகின் குமாரனா
கிய யெரமெயேலுக்கும், அஸ்ரியேலின்
குமாரனாகிய செராயாவுக்கும், அப்தெயே
லின் குமாரனாகிய செலேமியாவுக்கும் கட்
டளை கொடுத்தான்; [13]ஆனாலும் **கர்த்தர்** அவர்
களை மறைத்தார்.
ராஜா அந்தச் சுருளையும், அதிலே எரேமி 27
யாவின் வாய்சொல்லப் பாருக்கு எழுதியி
ருந்த வார்த்தைகளையும் சுட்டெரித்தபின்பு,
எரேமியாவுக்குக் **கர்த்தருடைய** வார்த்தை

28 உண்டாகி, அவர்: நீ திரும்ப வேறொரு
சுருளை எடுத்து, யூதாவின் ராஜாவாகிய
யோயாக்கீம் சுட்டெரித்த முதலாம் சுருளிலி
ருந்த முந்தின வார்த்தைகளையெல்லாம்
29 [1]அதிலே எழுது என்றார். மேலும் நீ யூதா
வின் ராஜாவாகிய யோயாக்கீமை நோக்கி:
பாபிலோன் ராஜா நிச்சயமாய் வருவான் என்
பதையும், அவன் இந்த தேசத்தை அழித்து
அதிலிருந்து மனுஷரையும் மிருகங்களையும்
ஒழியப்பண்ணுவான் என்பதையும் நீ அதில்
எழுதினதேதென்று சொல்லி, அந்தச் சுருளை
நீ சுட்டெரித்தாயே என்று கர்த்தர் சொல்லு
30 கிறார். ஆகையால் யூதாவின் ராஜாவாகிய
யோயாக்கீமைக்குறித்து: தாவீதின் சிங்காச
னத்தின்மேல் உட்காரும்படி அவன் வம்சத்
தில் ஒருவனும் இரான்; [2]அவனுடைய பிரே
தமோவென்றால், பகலின் உஷ்ணத்துக்கும்
இரவின் குளிருக்கும் எறிந்துவிடப்பட்டுக்
31 கிடக்கும். நான் அவனிடத்திலும், அவன்
சந்ததியினிடத்திலும், அவன் பிரபுக்களினி
டத்திலும் அவர்கள் அக்கிரமத்தை விசாரித்து,
அவன்மேலும், எருசலேமின் குடிகள்மே
லும், யூதா மனுஷர்மேலும், நான் அவர்களுக்
குச் சொன்னதும், [3]அவர்கள் கேளாமற்போ
னதுமான தீங்கனைத்தையும் வரப்பண்ணு
வேன் என்று கர்த்தர் சொல்லுகிறார் என்று
32 சொல் என்றார். அப்பொழுது எரேமியா
வேறொரு சுருளை எடுத்து, அதை நேரியா
வின் குமாரனாகிய பாருக்கு என்னும் சம்பிர
தியினிடத்தில் கொடுத்தான்; அவன் யூதா
வின் ராஜாவாகிய யோயாக்கீம் அக்கினி
யால் சுட்டெரித்த புஸ்தகத்தின் வார்த்தைக
ளையெல்லாம், அதிலே எரேமியாவின் வாய்
சொல்ல எழுதினான்; இன்னும் அவைகளுக்
கொத்த அநேகம் வார்த்தைகளும் அவைக
ளோடே சேர்க்கப்பட்டது.

37 பாபிலோன் ராஜாவாகிய நேபுகாத்நேச்
சார் யூதாதேசத்தில் ராஜாவாக நியமித்த
யோயாக்கீமுடைய குமாரனாகிய கோனியா
வின்பட்டத்துக்குயோசியாவின் குமாரனாகிய
2 சிதேக்கியா வந்து [4]அரசாண்டான். கர்த்தர்
எரேமியா தீர்க்கதரிசியைக்கொண்டு சொன்ன
வார்த்தைகளுக்கு அவனாகிலும், அவனுடைய
ஊழியக்காரராகிலும், [5]தேசத்தின் ஜனங்க
ளாகிலும் செவிகொடுக்கவில்லை.
3 சிதேக்கியா ராஜாவோவெனில், செலேமி
யாவின் குமாரனாகிய யூகாலையும், மாசெயா
வின் குமாரனாகிய செப்பானியா என்னும்
ஆசாரியனையும் எரேமியா தீர்க்கதரிசியினிடத்
தில் அனுப்பி: [6]நீ நம்முடைய தேவனாகிய கர்த்
தரை நோக்கி எங்களுக்காக விண்ணப்பம்
பண்ணவேண்டும் என்று சொல்லச்சொன்
4 னான். அப்பொழுது எரேமியா ஜனத்தின்
நடுவே வரத்தும்போக்குமாயிருந்தான்; அவனை
அவர்கள் காவல் வீட்டில் இன்னும் போட
5 வில்லை. பார்வோனின் சேனையோவென்
றால், எகிப்திலிருந்து புறப்பட்டது; [7]எருச
லேமை முற்றிக்கைபோட்ட கல்தேயர் அவர்
களுடைய செய்தியைக் கேட்டு, [8]எருசலே
மைவிட்டு நீங்கிப்போனார்கள். அப்பொழுது 6
எரேமியா தீர்க்கதரிசிக்குக் கர்த்தருடைய
வார்த்தை உண்டாகி, அவர்: இஸ்ரவேலின் 7
தேவனாகிய கர்த்தர் உரைக்கிறது என்ன
வென்றால், என்னிடத்தில் விசாரிக்கும்படி
உங்களை என்னிடத்திற்கு அனுப்பின யூதா
வின் ராஜாவை நீங்கள் நோக்கி: [9]இதோ, உங்
களுக்கு ஒத்தாசையாகப் புறப்பட்ட பார்வோ
னின் சேனை தன் தேசமாகிய எகிப்துக்குத்
திரும்பிப்போகும். கல்தேயரோவென்றால், 8
திரும்பிவந்து இந்த நகரத்துக்கு விரோதமாக
யுத்தம்பண்ணி, [10]அதைப் பிடித்து, அக்கினி
யால் சுட்டெரிப்பார்கள். கல்தேயர் நம்மை 9
விட்டு நிச்சயமாய்ப் போய்விடுவார்களென்று
சொல்லி, நீங்கள் மோசம்போகாதிருங்கள்,
[11]அவர்கள் போவதில்லை. உங்களோடே யுத் 10
தம்பண்ணுகிற கல்தேயருடைய சேனையை
யெல்லாம் நீங்கள் முறிய அடித்தாலும், மீந்த
வர்கள் எல்லாரும் காயம்பட்டவர்களாயிருந்
தாலும், [12]அவர்கள் தங்கள் கூடாரங்களிலி
ருந்து எழும்பி, இந்த நகரத்தை அக்கினி
யால் சுட்டெரிப்பார்கள் என்று கர்த்தர்
உரைக்கிறார் என்று சொல்லுங்கள் என்றார்.
பார்வோனின் சேனை வருகிறதென்று, 11
கல்தேயருடைய சேனை எருசலேமைவிட்
டுப் போனபோது, எரேமியா அவ்விடத் 12
தைவிட்டு, ஜனத்தின் நடுவே சாடையாய்
விலகி, பென்யமீன் தேசத்துக்குப் போக
மனதாய் எருசலேமிலிருந்து புறப்பட்டுப்
போனான். அவன் பென்யமீன் வாசலில் 13
வந்தபோது, காவற்சேர்வையின் அதிபதியா
கிய யெரியா என்னும் நாமமுள்ள ஒருவன்
அங்கே இருந்தான்; அவன் அனனியாவின்
குமாரனாகிய செலேமியாவின் மகன்; அவன்:
நீ கல்தேயரைச் சேரப்போகிறவன் என்று
சொல்லி, எரேமியா தீர்க்கதரிசியைப் பிடித்
தான். அப்பொழுது எரேமியா: [13]அது 14
பொய், நான் கல்தேயரைச் சேரப்போகி
றவனல்ல என்றான்; ஆனாலும் யெரியா
எரேமியாவின் சொல்லைக் கேளாமல்,
அவனைப் பிடித்து, பிரபுக்களிடத்தில்
கொண்டுபோனான். அப்பொழுது பிரபுக் 15
கள்: எரேமியாவின்பேரில் கடுங்கோபங்கொ
ண்டு, அவனை அடித்து, [14]அவனைச் சம்பிரதி
யாகிய யோனத்தானுடைய வீட்டில் காவற்
படுத்தினார்கள்; அவர்கள் அதைக் காவற்கூட
மாக்கியிருந்தார்கள். அப்படியே எரேமியா 16
காவற்கிடங்கின் நிலவறைகளில் பிரவேசித்து,
[15]அங்கே அநேகநாள் இருந்தான். பின்பு சிதே 17
க்கியா ராஜா அவனை அழைத்தனுப்பி: கர்த்த
ரால் ஒரு வார்த்தை உண்டோ என்று ராஜா
அவனைத் தன் வீட்டிலே இரகசியமாய்க் கேட்
டான். அதற்கு எரேமியா: உண்டு, பாபி
லோன் ராஜாவின் கையில் ஒப்புக்கொடுக்கப்
படுவீர் என்று சொன்னான். பின்னும் எரே 18

1 மத். 24. 35
2 22. 19, 30
3 உபா. 28. 15. நீதி. 29. 1. மத். 23. 37
4 22. 24. 2 இரா. 24. 17. 2 நாளா. 36. 10
5 2 நாளா. 36. 12, 16
6 2. 27: 21. 1, 2: 42. 2, 20
7 2 இரா. 24. 7. எசே. 17. 15
8 11. வச. 34. 21
9 3. வச. 21. 2
10 34. 21, 22
11 யோபு 15. 31
12 13. 15-17. யோவே. 2. 11
13 சங். 5. 11, 12
14 அப். 5. 28, 40: 23. 2, 3
15 38. 6

மியா, சிதேக்கியா ராஜாவை நோக்கி: நீங்கள்
என்னைக் காவல்வீட்டிலே அடைப்பதற்கு,
[1]நான் உமக்கும் உம்முடைய ஊழியக்காரருக்
கும் இந்த ஜனத்துக்கும் விரோதமாக என்ன
19 குற்றஞ்செய்தேன்? பாபிலோன் ராஜா உங்
களுக்கும் இந்த தேசத்துக்கும் விரோதமாக
வருவதில்லையென்று [2]உங்களுக்குத் தீர்க்கதரி
சனம் சொன்ன உங்களுடைய தீர்க்கதரிசி
20 கள் எங்கே? இப்போதும் ராஜாவாகிய என்
ஆண்டவனே, எனக்குச் செவிகொடுத்து,
என் விண்ணப்பத்துக்கு தயைசெய்து, என்
னைச் சம்பிரதியாகிய யோனத்தானுடைய
வீட்டிற்குத் திரும்ப அனுப்பவேண்டாம்;
அனுப்பினால் நான் அங்கே செத்துப்போ
21 வேன் என்றான். அப்பொழுது எரேமியா
வைக் காவற்சாலையின் முற்றத்திலே காக்க
வும், நகரத்திலே அப்பமிருக்குமட்டும் அப்
பஞ்சுடுகிறவர்களின் வீதியிலே தினம் ஒரு
அப்பத்தை அவனுக்கு வாங்கிக்கொடுக்கவும்
கட்டளையிட்டான்; [3]அப்படியே எரேமியா
காவற்சாலையின் முற்றத்திலே இருந்தான்.

**38** இந்த நகரத்திலே தரித்திருக்கிறவன், பட்
டயத்தாலும், பஞ்சத்தாலும், கொள்ளைநோயா
லும் சாவான்; கல்தேயரிடத்துக்குப் புறப்பட்
டுப் போகிறவனோ உயிரோடிருப்பான்; அவ
னுடைய பிராணன் அவனுக்குக் கிடைத்த
கொள்ளையுடைமையைப்போலிருக்கும்; அவ
ன் பிழைப்பானென்பதைக் **கர்த்தர்** உரைக்கி
2 றார் என்றும், இந்த நகரம் [4]பாபிலோன் ரா
ஜாவினுடைய ராணுவத்தின் கையில் நிச்சய
மாக ஒப்புக்கொடுக்கப்படும்; அவன் அதைப்
பிடிப்பானென்பதைக் **கர்த்தர்** உரைக்கிறார்
3 என்றும், எரேமியா எல்லா ஜனத்தோடும்
சொல்லிக்கொண்டிருந்த வார்த்தைகளை மாத்
தானின் குமாரனாகிய செப்பத்தியாவும், பஸ்
கூரின் குமாரனாகிய கெதலியாவும், செலேமி
யாவின் குமாரனாகிய யூகாலும், மல்கியாவின்
4 குமாரனாகிய பஸ்கூரும் கேட்டார்கள். அப்
பொழுது பிரபுக்கள் ராஜாவை நோக்கி: இந்த
மனுஷன் கொல்லப்பட உத்தரவாகவேண்
டும்; அதேனென்றால், இந்த நகரத்தில் மீதி
யாயிருக்கிற யுத்த மனுஷரிடத்திலும், மற்று
முள்ள சகல ஜனங்களிடத்திலும், இவன் இப்
படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்லுகிறதினா
லே அவர்களுடைய கைகளைத் தளர்ந்துபோ
கப் பண்ணுகிறான்; [5]இவன் இந்த ஜனத்தின்
க்ஷேமத்தைத் தேடாமல், அவர்கள் கேட்டை
5 யே தேடுகிறான் என்றார்கள். அப்பொழுது
சிதேக்கியா ராஜா: இதோ, அவன் உங்கள்
கைகளில் இருக்கிறான்; உங்களுக்கு விரோத
மாய் ராஜா ஒன்றும் செய்யக்கூடாது என்
6 றான். அப்பொழுது அவர்கள் எரேமியா
வைப் பிடித்து, அவனைக் காவற்சாலையின்
முற்றத்திலிருந்த அம்மெலேகின் குமாரனா
கிய மல்கியாவினுடைய துரவிலே போட்
டார்கள்; [6]எரேமியாவைக் கயிறுகளினால் அதி
லே இறக்கிவிட்டார்கள்; அந்தத் துரவிலே
தண்ணீர் இல்லாமல் உளையாயிருந்தது, அந்த
உளையிலே எரேமியா அமிழ்ந்தினான். அவர் 7
கள் எரேமியாவைத் துரவிலே போட்டதை
ராஜாவின் அரமனையில் இருந்த எத்தியோப்
பியனாகிய எபெத்மெலேக் என்னும் ஒரு பிர
தானி கேள்விப்பட்டான்; [7]ராஜாவோ பென்ய
மீன் வாசலிலே உட்கார்ந்திருந்தான். அப் 8
பொழுது எபெத்மெலேக் ராஜாவின் அரமனை
யிலிருந்து புறப்பட்டுப்போய், ராஜாவை நோ
க்கி: ராஜாவாகிய என் ஆண்டவனே, இந் 9
தப் புருஷர் எரேமியா தீர்க்கதரிசியைத் துர
விலே போட்டுச் செய்தது எல்லாம் தகாத
செய்கையாயிருக்கிறது; [8]அவன் இருக்கிற
இடத்திலே பட்டினியினால் சாவானே, இனி
நகரத்திலே அப்பமில்லை யென்றான். அப் 10
பொழுது ராஜா எபெத்மெலேக் என்னும் எத்
தியோப்பியனை நோக்கி: நீ இவ்விடத்திலி
ருந்து முப்பது மனுஷரை உன்னுடனே கூட்
டிக்கொண்டுபோய், எரேமியா தீர்க்கதரிசி சா
காததற்குமுன்னே அவனைத் துரவிலிருந்து
தூக்கிவிடு என்று கட்டளையிட்டான். அப் 11
பொழுது எபெத்மெலேக் அந்த மனுஷரைத்
தன்னுடனே கூட்டிக்கொண்டு, ராஜாவின்
அரமனைப் பொக்கிஷசாலையின் கீழிருந்த
அறைக்குள் புகுந்து, கிழிந்துபோன பழம்
புடவைகளையும் கந்தைத்துணிகளையும் எடுத்
துக்கொண்டுபோய், அவைகளைக் கயிறுகளி
னால் எரேமியாவண்டைக்குத் துரவிலே இற
க்கிவிட்டு, எபெத்மெலேக் என்னும் எத்தி 12
யோப்பியன் எரேமியாவுடனே: கிழிந்து
போன இந்தப் பழம்புடவைகளையும் கந்தை
களையும் உம்முடைய அக்குள்களில் கயிறுக
ளுக்குள் அடங்கவைத்துப் போட்டுக்கொள்
ளும் என்றான்; எரேமியா அப்படியே செய்
தான். அப்பொழுது எரேமியாவைக் கயிறு 13
களால் தூக்கி, அவனைத் துரவிலிருந்து எடுத்
துவிட்டார்கள்; எரேமியா காவற்சாலையின்
முற்றத்தில் இருந்தான்.

பின்பு சிதேக்கியா ராஜா, எரேமியா தீர்க்க 14
தரிசியைக் **கர்த்தருடைய** ஆலயத்தில் இருக்
கும் மூன்றாம் வாசலிலே தன்னிடத்திற்கு
வரவழைத்தான்; அங்கே ராஜா, எரேமியா
வை நோக்கி: நான் உன்னிடத்தில் ஒரு காரி
யம் கேட்கிறேன்; நீ எனக்கு ஒன்றும் மறைக்க
வேண்டாம் என்றான். அப்பொழுது எரே 15
மியா சிதேக்கியாவை நோக்கி: நான் அதை
உமக்கு அறிவித்தால் என்னை நிச்சயமாய்க்
கொலைசெய்வீரல்லவா? நான் உமக்கு ஆலோ
சனை சொன்னாலும், என் சொல்லைக் கேட்க
மாட்டீர் என்றான். அப்பொழுது சிதேக்கி 16
யா ராஜா: நான் உன்னைக் கொல்லாமலும்,
உன் பிராணனை வாங்கத் தேடுகிற இந்த மனு
ஷர் கையில் உன்னை ஒப்புக்கொடாமலும்
இருப்பேன் என்பதை, [9]நமக்கு இந்த ஆத்து
மாவை உண்டுபண்ணின **கர்த்தருடைய** ஜீவ
னைக்கொண்டு சொல்லுகிறேன் என்று எரே
மியாவுக்கு இரகசியமாய் ஆணையிட்டான்.

1 26. 19. நீதி. 17. 13, 26. அப். 25. 11, 25: 26. 31
2 2. 28: 28. 2. ஜீ: 29. 31
3 32. 2: 38. 18, 28. சங். 37. 19. ஏசா. 33. 16
4 21. 10: 32. 6
5 26. 11
6 37. 21. சங். 109. 5. ஓசி. 8. 19, 20
7 39. 16
8 37. 21
9 எண். 16. 22; 27. 16. 2 இரா. 2. 2. ஏசா. 57. 16. சகரி. 12. 1

17 அப்பொழுது எரேமியா சிதேக்கியாவை நோ
க்கி: நீர் பாபிலோன் ராஜாவின் பிரபுக்களண்
டைக்குப் புறப்பட்டுப் போவீரானல், உம்மு
டைய ஆத்துமா உயிரோடிருக்கும்; [1]இந்தப்
பட்டணம் அக்கினியால் சுட்டெரிக்கப்படு
வதில்லை; நீரும் உம்முடைய குடும்பமும் உயி
18 ரோடிருப்பீர்கள். நீர் பாபிலோன் ராஜா
வின் பிரபுக்களிடத்திற்குப் புறப்பட்டுப் போ
காவிட்டால், அப்பொழுது இந்த நகரம் கல்
தேயர் கையில் ஒப்புக்கொடுக்கப்படும், அவர்
கள் இதை அக்கினியால் சுட்டெரிப்பார்கள்;
[2]நீர் அவர்களுக்குத் தப்பிப்போவதில்லை என்
கிறதை இஸ்ரவேலின் தேவனும் சேனைக
ளின் தேவனுமாகிய **கர்த்தர்** சொல்லுகிறார்
19 என்றான். அப்பொழுது சிதேக்கியா ராஜா
எரேமியாவை நோக்கி: கல்தேயர் தங்களைச்
சேர்ந்துபோன யூதரின் கையிலே என்னைப்
பரியாசம்பண்ண ஒப்புக்கொடுப்பார்களோ
[3]என்று நான் ஐயப்படுகிறேன் என்றான்.
20 அதற்கு எரேமியா: உம்மை ஒப்புக்கொடார்
கள்; நான் உம்மிடத்தில் சொல்லுகிற **கர்த்த
ருடைய** வார்த்தைக்குச் செவிகொடும், [4]அப்
பொழுது உமக்கு நன்மையாயிருக்கும், [5]உம்
21 முடைய ஆத்துமா பிழைக்கும். நான் புறப்
படுகிறதில்லை என்பீரேயாகில், [6]**கர்த்தர்** என
க்குத் தெரியப்படுத்தின வார்த்தையாவது:
22 இதோ, யூதா ராஜாவின் வீட்டிலே மீதியான
எல்லா ஸ்திரீகளும் வெளியே பாபிலோன்
ராஜாவின் பிரபுக்களண்டையில் கொண்டு
போகப்படுவார்கள்; அப்பொழுது, [7]இதோ,
அவர்கள்தானே உம்முடைய இஷ்டர்கள்;
அவர்கள் உமக்குப் போதனைசெய்து, உம்மை
மேற்கொண்டார்கள் என்றும், உம்முடைய
கால்கள் உளையிலே அமிழ்ந்தினபின்பு அவர்
கள் பின்வாங்கிப்போனார்கள் என்றும் அந்த
23 ஸ்திரீகளே சொல்லுவார்கள். உம்முடைய
எல்லா ஸ்திரீகளையும், உம்முடைய பிள்ளை
களையும் வெளியே கல்தேயரிடத்தில் கொண்
டுபோவார்கள்; [8]நீரும் அவர்கள் கைக்குத் தப்
பிப்போகாமல் பாபிலோன் ராஜாவின் கையி
னால் பிடிக்கப்பட்டு, இந்த நகரம் அக்கினி
யால் சுட்டெரிக்கப்படக் காரணமாயிருப்பீர்
24 என்றான். அப்பொழுது சிதேக்கியா எரேமி
யாவை நோக்கி: இந்த வார்த்தைகளை ஒருவ
ருக்கும் அறிவிக்கவேண்டாம்; அப்பொழுது
25 நீ சாவதில்லை. நான் உன்னோடே பேசின
தைப் பிரபுக்கள் கேள்விப்பட்டு, உன்னிடத்
தில் வந்து: நீ ராஜாவோடே பேசிக்கொண்ட
தை எங்களுக்குத் தெரிவி, எங்களுக்கு ஒன்
றும் மறைக்காதே, அப்பொழுது உன்னைக்
கொல்லாதிருப்போம்; ராஜா உன்னோடு
என்ன பேசினார் என்று உன்னைக் கேட்பார்
26 களேயாகில், நான் யோனத்தானுடைய
வீட்டிலே சாகாதபடிக்கு, [9]ராஜா என்னை அங்
கே திரும்ப அனுப்பவேண்டாம் என்று,
அவர் முகத்துக்கு முன்பாக விண்ணப்பம்
பண்ணினேன் என்று சொல்வாயாக என்
றான். பின்பு எல்லாப் பிரபுக்களும், எரே 27
மியாவினிடத்தில் வந்து, அவனைக் கேட்டார்
கள்; அப்பொழுது அவன்: ராஜா கற்பித்த
இந்த எல்லா வார்த்தைகளின்படியே அவர்க
ளுக்கு அறிவித்தான்; காரியம் கேள்விப்படா
மற்போனபடியினால், அவனோடே பேசாமலி
ருந்துவிட்டார்கள். அப்படியே எரேமியா, 28
எருசலேம் பிடிபடுகிற நாள்மட்டாக காவற்
சாலையின் முற்றத்தில் இருந்தான்; [10]எருச
லேம் பிடிபட்டுப் போனபோதும் அங்கேயே
இருந்தான்.

யூதாவின் ராஜாவாகிய சிதேக்கியா அர 39
சாண்ட ஒன்பதாம் வருஷம் பத்தாம் மாதத்
திலே பாபிலோன் ராஜாவாகிய நேபுகாத்நேச்
சாரும் அவனுடைய எல்லா ராணுவமும் எரு
சலேமுக்கு விரோதமாய் வந்து, [11]அதை முற்
றிக்கைபோட்டார்கள். சிதேக்கியா அரசாண்ட 2
பதினோராம் வருஷம் நாலாம் மாதம், ஒன்ப
தாம் தேதியிலே நகரத்து மதிலில் திறப்புக்
கண்டது. அப்பொழுது பாபிலோன் ராஜா 3
வின் பிரபுக்களாகிய [12]நெர்கல்சரேத்சேர், சம்
கார்நேபோ, சர்சேகிம், ரப்சாரீஸ், நெர்கல்ச
ரேத்சேர், ரப்மாக் என்பவர்களும், பாபி
லோன் ராஜாவின் மற்ற எல்லாப் பிரபுக்களும்
உட்பிரவேசித்து, நடுவாசலில் இருந்தார்கள்.
அப்பொழுது யூதாவின் ராஜாவாகிய சிதேக் 4
கியாவும் சகல யுத்தமனுஷரும் அவர்களைக்
கண்டபோது, ஓடி, ராத்திரிகாலத்தில் ராஜா
வுடைய தோட்டத்துவழியே, [13]இரண்டு மதில்
களுக்கு நடுவான வாசலால் நகரத்திலிருந்து
புறப்பட்டுப் போனார்கள்; அவன் வயல்வெளி
யின் வழியே போய்விட்டான். ஆனாலும், 5
கல்தேயருடைய ராணுவம் அவர்களைப் பின்
தொடர்ந்து, எரிகோவின் சமபூமியில் சிதேக்
கியாவைக் கிட்டி, [14]அவனைப் பிடித்து, அவனை
ஆமாத்தேசத்தின் ஊராகிய ரிப்லாவுக்கு, பாபி
லோன் ராஜாவாகிய நேபுகாத்நேச்சாரிடத்தில்
கொண்டுபோனார்கள்; அங்கே இவன் அவ
னைக்குறித்துத் தீர்ப்புச்செய்தான். பின்பு 6
பாபிலோன் ராஜா ரிப்லாவிலே, சிதேக்கியா
வின் குமாரரை அவன் கண்களுக்கு முன்பாக
வெட்டுவித்தான்; யூதா பிரபுக்கள் அனைவரை
யும் பாபிலோன் ராஜா வெட்டி, சிதேக்கியா 7
வின் கண்களைக் கெடுத்து, [15]அவனை பாபிலோ
னுக்குக் கொண்டுபோக அவனுக்கு இரண்டு
வெண்கல விலங்குகளைப் போட்டான். கல் 8
தேயர் ராஜாவின் அரமனையையும் ஜனத்தின்
வீடுகளையும் அக்கினியால் சுட்டெரித்து, [16]எரு
சலேமின் மதில்களை இடித்துப் போட்டார்
கள். நகரத்தில் தங்கியிருந்த ஜனங்களையும், 9
தன் பட்சத்தில் ஓடிவந்துவிட்டவர்களையும்,
மீதியான மற்ற ஜனங்களையும், காவற்சேனாதி
பதியாகிய நேபுசராதான் பாபிலோனுக்குச்
சிறைகளாகக் கொண்டுபோனான். காவற்சே 10
னாதிபதியாகிய நேபுசராதான் ஒன்றுமில்லாத
ஏழைகளில் சிலரை யூதாதேசத்திலே வைத்து,
அவர்களுக்கு அந்நாளிலே திராட்சத்தோட்

[1] 39. 3. 2 இரா. 24. 12
[2] 32. 4: 34. 3
[3] 1 சாமு. 31. 4
[4] 2 நாளா. 20. 20. மாக். 1. 22
[5] ஏசா. 55. 3
[6] நீதி. 1. 30, 31. ஏசா. 1. 19, 20
[7] சங். 69. 2, 14. ஏசா. 42. 17. புல. 1. 2. மீகா 7. 5
[8] 39. 6: 41. 10: 52. 8–13
[9] 37. 15, 20
[10] 39. 14
[11] 52. 4, 7. 2 இரா. 25. 1–4
[12] 38. 17
[13] 2 இரா. 25. ழ
[14] 32. 4: 38. 18, 23. புல. 1. 3
[15] 52. 11. எசே. 12. 13
[16] புல. 2. 2

டங்களையும் வயல் நிலங்களையும் கொடுத்
11 தான். ஆனாலும் எரேமியாவைக்குறித்து, பாபி
லோன் ராஜாவாகிய நேபுகாத்நேச்சார் காவற்
சேனாதிபதியாகிய நேபுசராதானை நோக்கி:
12 நீ அவனை அழைப்பித்து, அவனுக்கு ஒரு
பொல்லாப்பும் செய்யாமல், அவனைப் பத்திர
மாய்ப் பார்த்து, [1]அவன் உன்னோடே சொல்
லுகிறபடியெல்லாம் அவனை நடத்தென்று கட்
13 டளை கொடுத்தான். அப்படியே காவற்சேனாதி
பதியாகிய நேபுசராதானும், நேபுசஸ்பான்,
ரப்சாரீஸ், நெர்கல்சரேத்சேர், ரப்மாக் என்ப
வர்களும், பாபிலோன் ராஜாவின் எல்லாப்
14 பிரபுக்களும், எரேமியாவைக் காவற்சாலை
யின் முற்றத்திலிருந்து வரவழைத்து, [2]அவனை
வெளியே வீட்டுக்கு அழைத்துக்கொண்டு
போகும்படிக்கு அவனைச் சாப்பானுடைய
குமாரனாகிய அகிக்காமின் மகனான கெதலி
யாவினிடத்தில் ஒப்புவித்தார்கள்; அப்படியே
அவன் ஜனத்துக்குள்ளே தங்கியிருந்தான்.
15 இதுவுமல்லாமல், எரேமியா இன்னும்
காவற்சாலையின் முற்றத்திலே அடைக்கப்பட்
டிருக்கையில், அவனுக்குக் **கர்த்தரால்** உண்
16 டான வசனம்: நீ போய், எத்தியோப்பிய
னாகிய எபெத்மெலேக்குக்குச் சொல்லவேண்
டியது என்னவென்றால், [3]இதோ, என்னு
டைய வார்த்தைகளை இந்த நகரத்தின்மேல்
நன்மையாக அல்ல, தீமையாகவே வரப்பண்
ணுவேன்; அவைகள் அந்நாளிலே உன் கண்
களுக்கு முன்பாக நிறைவேறும் என்று இஸ்
ரவேலின் தேவனாகிய சேனைகளின் **கர்த்தர்**
17 சொல்லுகிறார். ஆனால் அந்நாளிலே உன்
னைத் தப்புவிப்பேன் என்று **கர்த்தர்** சொல்
லுகிறார்; [4]நீ பயப்படுகிற மனுஷரின் கை
18 யிலே ஒப்புக்கொடுக்கப்படுவதில்லை. உன்னை
நிச்சயமாக விடுவிப்பேன், நீ பட்டயத்துக்கு
இரையாவதில்லை; [5]நீ என்னை நம்பினபடியி
னால் உன் பிராணன் உனக்குக் கிடைத்த
கொள்ளைப்பொருளைப்போல இருக்குமென்று
**கர்த்தர்** சொல்லுகிறார் என்றார்.

**40** பாபிலோனுக்குக் கொண்டுபோகும்படி
எருசலேமிலும் யூதாவிலும் சிறைகளாய்ப்
பிடித்துவைக்கப்பட்ட ஜனங்களுக்குள் விலங்
கிடப்பட்டிருந்த எரேமியாவைக் காவற்சேனா
திபதியாகிய நேபுசராதான் விடுதலையாக்கி
ராமாவிலிருந்து அனுப்பிவிட்டபின்பு, [6]எரே
மியாவுக்குக் **கர்த்தரால்** உண்டான வசனம்:
2 காவற்சேனாதிபதி எரேமியாவை அழைப்பி
த்து, அவனை நோக்கி: [7]உன் தேவனாகிய **கர்த்**
**தர்** இந்த ஸ்தலத்துக்கு இந்தத் தீங்குவரு
3 மென்று சொல்லியிருந்தார். தாம் சொன்ன
படியே **கர்த்தர்** வரப்பண்ணியுமிருக்கிறார்;
நீங்கள் **கர்த்தருக்கு** விரோதமாய்ப் பாவஞ்
செய்து, [8]அவருடைய சத்தத்துக்குச் செவி
கொடாமற்போனீர்கள்; ஆகையால் உங்க
4 ளுக்கு இந்தக் காரியம் வந்தது. இப்போ
தும், இதோ, உன் கைகளிலிடப்பட்ட விலங்
குகளை இன்று நீக்கிப்போட்டேன்; என்

1 சங். 105. 15
2 38. 28
3 38. 7, 12. தானி. 9. 12
4 யோபு 19. 20. சங். 50. 15. தானி. 6. 16
5 21. 9: 45 b. 1 நாளா. 5. 20. சங். 37. 39, 40
6 39. 4
7 50. 7
8 உபா. 29. 24, 25. நெகே. 9. 28, 33. தானி. 9. 11
9 39. 12
10 41. 2
11 நியா. 20. 1
12 39. 10: 52. 16. 2 இரா. 25. 28. ஷ
13 41. 1
14 உபா. 1. 38
15 39. 10

னோடேகூடப் பாபிலோனுக்கு வர உனக்கு
நன்மையாய்த் தோன்றினால் வா, நான் உன்
னைப் பத்திரமாய்ப் பார்த்துக்கொள்வேன்;
[9]என்னோடேகூடப் பாபிலோனுக்கு வர
உனக்கு நன்றாய்த் தோன்றாவிட்டால், இருக்
கட்டும்; இதோ, தேசமெல்லாம் உனக்கு முன்
பாக இருக்கிறது, எவ்விடத்துக்குப் போக
உனக்கு நன்மையும் செவ்வையுமாய்க் காண்
கிறதோ அவ்விடத்துக்குப் போ என்றான்.
அவன் இன்னும் போகாமலிருக்கும்போது, 5
அவன் இவனை நோக்கி: நீ பாபிலோன்
ராஜா யூதா பட்டணங்களின்மேல் அதிகாரி
யாக வைத்த சாப்பானுடைய குமாரனாகிய
அகிக்காமின் மகனான கெதலியாவினிடத்துக்
குத் திரும்பிப் போய், [10]அவனோடே ஜனங்க
ளுக்குள்ளே தங்கியிரு; இல்லாவிட்டால், எவ்
விடத்துக்குப் போக உனக்குச் செவ்வையா
ய்த் தோன்றுகிறதோ, அவ்விடத்துக்குப் போ
என்று சொல்லி, காவற்சேனாதிபதி அவனுக்கு
வழிச்செலவையும் வெகுமதியையும் கொடுத்து
அவனை அனுப்பிவிட்டான். அப்படியே எரே 6
மியா மிஸ்பாவுக்கு அகிக்காமின் குமாரனாகிய
கெதலியாவினிடத்தில் போய், [11]தேசத்தில்
மீதியான ஜனங்களுக்குள் அவனோடே தங்கி
யிருந்தான்.
பாபிலோன் ராஜா அகிக்காமின் குமாரனா 7
கிய கெதலியாவை தேசத்தின்மேல் அதிகாரி
யாக்கினான் என்றும், பாபிலோனுக்குச் சிறை
களாகக் கொண்டுபோகப்பட்டிராத குடிக
ளில் ஏழைகளான புருஷரையும் ஸ்திரீகளை
யும் குழந்தைகளையும் அவனுடைய விசாரிப்
புக்கு ஒப்புவித்தான் என்றும், [12]வெளியிலி
ருக்கிற ராணுவச் சேர்வைக்காரர் அனைவரும்
அவர்களுடைய மனுஷரும் கேட்டபோது,
அவர்கள் மிஸ்பாவுக்குக் கெதலியாவினிடத் 8
தில் வந்தார்கள்; யாரெனில், நெத்தானியா
வின் குமாரனாகிய இஸ்மவேலும், [13]கரேயா
வின் குமாரனாகிய யோகனானும், யோனத்தா
னும், தன்கூமேத்தின் குமாரனாகிய செராயா
வும், நெத்தோபாத்தியனாகிய எப்பாயின் குமா
ரரும், மாகாத்தியனான ஒருவனுடைய குமார
னாகிய யெசனியாவும் ஆகிய இவர்களும்
இவர்களைச் சேர்ந்தவர்களுமே. அப்பொழுது 9
சாப்பானுடைய குமாரனாகிய அகிக்காமின்
மகன் கெதலியா அவர்களையும் அவர்கள் மனு
ஷரையும் நோக்கி: [14]நீங்கள் கல்தேயரைச் சே
விக்கப் பயப்படவேண்டாம், நீங்கள் தேசத்தி
லிருந்து பாபிலோன் ராஜாவைச் சேவியுங்
கள்; அப்பொழுது உங்களுக்கு நன்மையுண்
டாகும். நானோவெனில், இதோ, நம்மிடத் 10
திலே வருகிற கல்தேயரிடத்தில் சேவிக்கும்
படி மிஸ்பாவிலே குடியிருக்கிறேன்; [15]நீங்க
ளோ போய், திராட்சரசத்தையும் பழங்களை
யும் எண்ணெயையும் சேர்த்து, உங்கள் பாண்
டங்களில் வைத்து, உங்கள் வசமாயிருக்கிற
ஊர்களில் குடியிருங்கள் என்று ஆணையிட்டுச்
சொன்னான். மோவாபிலும் அம்மோன் புத்தி 11

ராரிடத்திலும் ஏதோமிலும் சகலதேசங்களிலும்
இருக்கிற யூதரும், பாபிலோன் ராஜா யூதாவில்
சிலர் மீதியாயிருக்கக் கட்டளையிட்டானென்
றும், சாப்பானுடைய குமாரனாகிய அகிக்கா
மின் மகனான கெதலியாவை அவர்கள்மேல்
அதிகாரியாக்கினானென்றும் கேட்டபோது,
12 எல்லா யூதரும் தாங்கள் துரத்துண்ட எல்லா
இடங்களிலுமிருந்து, யூதாதேசத்தில் கெதலி
யாவினிடத்தில் மிஸ்பாவுக்கு வந்து, திராட்
சரசத்தையும் பழங்களையும் மிகுதியாய்ச்சேர்த்
துவைத்தார்கள்.
13 அப்பொழுது கரேயாவின் குமாரனாகிய
யோகனானும் வெளியிலே இருந்த சகல ரா
ணுவச் சேர்வைக்காரரும் மிஸ்பாவுக்குக் கெ
14 தலியாவினிடத்தில் வந்து, உம்மைக் கொன்
றுபோடும்படிக்கு, அம்மோன் புத்திரரின் ரா
ஜாவாகிய பாலிஸ் என்பவன், நெத்தனியா
வின் குமாரனாகிய இஸ்மவேலை அனுப்பினா
னென்பதை நீர் அறியவில்லையோ என்றார்
கள்; [1]ஆனாலும் அகிக்காமின் குமாரனாகிய
கெதலியா அவர்கள் வார்த்தையை நம்பவில்லை.
15 பின்னும் கரேயாவின் குமாரனாகிய யோக
னான் மிஸ்பாவிலே கெதலியாவோடே இர
கசியமாய்ப் பேசி: நான் போய், ஒருவரும்
அறியாமல் நெத்தனியாவின் குமாரனாகிய
இஸ்மவேலை வெட்டிப்போட உத்தரவாக
வேண்டும்; உம்மிடத்தில் சேர்ந்த யூதரெல்
லாரும் சிதறுண்டுபோகவும் யூதாவில் மீந்த
வர்கள் அழியவும் அவன் உம்மைக் கொன்று
16 போடவேண்டியதென்ன என்றான். ஆனா
லும் அகிக்காமின் குமாரனாகிய கெதலியா
கரேயாவின் குமாரனாகிய யோகனானை நோக்
கி: நீ இந்தக் காரியத்தைச் செய்யாதே; இஸ்ம
வேலின்மேல் நீ பொய் சொல்லுகிறாய்
என்றான்.

41 பின்பு ஏழாம் மாதத்திலே ராஜவம்சத்தில்
பிறந்தவனும், எலிசாமாவின் குமாரனாகிய
நெத்தனியாவின் மகனுமான இஸ்மவேலும்,
[2]அவனுடனே கூட ராஜாவின் பிரபுக்களான
பத்துப்பேரும் மிஸ்பாவுக்கு அகிக்காமின்
குமாரனாகிய கெதலியாவினிடத்தில் வந்து,
அங்கே ஏகமாய் போஜனம்பண்ணினார்கள்.
2 அப்பொழுது நெத்தனியாவின் குமாரனாகிய
இஸ்மவேலும், அவனோடிருந்த பத்துப்பே
ரும் எழும்பி, பாபிலோன் ராஜா தேசத்தின்
மேல் அதிகாரியாக வைத்த சாப்பானின்
குமாரனாகிய அகிக்காமின் மகனான கெதலி
யாவைப் பட்டயத்தால் வெட்டினார்கள்.
3 மிஸ்பாவிலே கெதலியாவினிடத்தில் இருந்த
எல்லா யூதரையும், அங்கே காணப்பட்ட
யுத்தமனுஷராகிய கல்தேயரையும் இஸ்மவேல்
4 வெட்டிப்போட்டான். அவன் கெதலியா
வைக் கொன்றபின்பு, மறுநாளிலே அதை
ஒருவரும் இன்னும் அறியாதிருக்கையில்:
5 தாடியைச் சிரைத்து, [3]வஸ்திரங்களைக் கிழித்
து, தங்களைக் கீறிக்கொண்டிருந்த எண்பது
பேர் சீகேமிலும் சீலோவிலும் சமாரியாவிலு
மிருந்து, தங்கள் கைகளில் காணிக்கைகளை
யும் தூபவர்க்கங்களையும், [4]கர்த்தருடைய ஆல
யத்துக்குக் கொண்டுபோகும்படி வந்தார்கள்.
அப்பொழுது நெத்தனியாவின் குமாரனாகிய 6
இஸ்மவேல் மிஸ்பாவிலிருந்து புறப்பட்டு,
அவர்களுக்கு எதிராக அழுதுகொண்டே நடந்
துவந்து, அவர்களைச் சந்தித்தபோது, அவர்
களை நோக்கி: அகிக்காமின் குமாரனாகிய கெ
தலியாவினிடத்தில் வாருங்கள் என்றான்.
அவர்கள் நகரத்தின் மத்தியில் வந்தபோது, 7
நெத்தனியாவின் குமாரனாகிய இஸ்மவே
லும், அவனோடிருந்த மனுஷரும் அவர்களை
வெட்டி ஒரு பள்ளத்திலே தள்ளிப்போட்
டார்கள். ஆனாலும் அவர்களில் பத்துப்பேர் 8
மீந்திருந்தார்கள்; அவர்கள் இஸ்மவேலைப்
பார்த்து: எங்களைக் கொலைசெய்யவேண்டாம்;
[5]கோதுமையும் வாற்கோதுமையும் எண்ணெ
யும் தேனுமுள்ள புதையல்கள் எங்களுக்கு
நிலத்தின்கீழ் இருக்கிறது என்றார்கள்; அப்
பொழுது அவர்களை அவர்கள் சகோதரரோ
டுங்கூடக் கொலைசெய்யாமல் விட்டுவைத்
தான். இஸ்மவேல் கெதலியாவினிமித்தம் 9
வெட்டின மனுஷருடைய பிரேதங்களையெல்
லாம் எறிந்துபோட்ட பள்ளமோவெனில்,
ஆசா என்னும் ராஜா இஸ்ரவேலின் ராஜா
வாகிய பாஷாவினிமித்தம் உண்டுபண்ணின
பள்ளந்தானே; [6]அதை நெத்தனியாவின்
குமாரனாகிய இஸ்மவேல் வெட்டுண்ட பிரே
தங்களால் நிரப்பினான். பின்பு இஸ்மவேல் 10
மிஸ்பாவில் இருக்கிற மீதியான ஜனத்தை
யெல்லாம் சிறைப்படுத்திக் கொண்டுபோ
னான்; [7]ராஜாவின் குமாரத்திகளையும் காவற்
சேனாதிபதியாகிய நேபுசராதான் அகிக்கா
மின் குமாரனாகிய கெதலியாவின் விசாரிப்
புக்கு ஒப்புவித்துப்போன மிஸ்பாவிலுள்ள
மீதியான சகல ஜனங்களையும் நெத்தனியா
வின் குமாரனாகிய இஸ்மவேல் சிறைப்படுத்
திக்கொண்டு அம்மோன் புத்திரர் பட்சத்தில்
போகப் புறப்பட்டான்.
நெத்தனியாவின் குமாரனாகிய இஸ்ம 11
வேல் செய்த பொல்லாப்பையெல்லாம் கரே
யாவின் குமாரனாகிய யோகனானும், அவ
னோடிருந்த எல்லா ராணுவச் சேர்வைக்கார
ரும் கேட்டபோது, அவர்கள் புருஷரை 12
யெல்லாம் கூட்டிக்கொண்டு, நெத்தனியா
வின் குமாரனாகிய இஸ்மவேலோடே யுத்தம்
பண்ணப்போய், [8]அவனைக் கிபியோனிலிருக்
கும் பெருங்குளத்துத் தண்ணீரண்டையிலே
கண்டார்கள். அப்பொழுது இஸ்மவேலோ 13
டிருந்த சகல ஜனங்களும் கரேயாவின் குமார
னாகிய யோகனானையும், அவனோடிருந்த எல்
லா ராணுவச் சேர்வைக்காரரையும் கண்டு சந்
தோஷப்பட்டு, இஸ்மவேல் மிஸ்பாவிலிருந் 14
து சிறைபிடித்துக்கொண்டுபோன ஜனங்க
ளெல்லாம் பின்னிட்டுத் திரும்பி, கரேயா
வின் குமாரனாகிய யோகனானிடத்தில் வந்து
விட்டார்கள். நெத்தனியாவின் குமாரனா 15

[1] 41. 10
[2] 40. 6, 8. 2 இரா. 25. 25
[3] லேவி. 19. 27, 28. உபா. 14. 1. 2 சாமு. 10. 4. ஏசா. 15. 2
[4] 1 சாமு. 1. 7. 2 இரா. 25. 9
[5] யோபு 2. 4. நீதி. 13. 8, மத். 6. 25
[6] 1 இரா. 15. 22. 2 நாளா. 16. 6
[7] 43. 6
[8] 2 சாமு. 2. 13

கிய இஸ்மவேலோ, எட்டுப்பேரோடேகூட
யோகனானின் கைக்குத் தப்பி, அம்மோன்
16 புத்திரரிடத்தில் போனான். கரேயாவின்
குமாரனாகிய யோகனானும், அவனோடிருந்த
எல்லா ராணுவச் சேர்வைக்காரரும், அகிக்கா
மின் குமாரனாகிய கெதலியாவை வெட்டிப்
போட்ட நெத்தானியாவின் குமாரனாகிய இஸ்
மவேல் கொண்டுபோனதும், தாங்கள் கிபி
யோனிலே விடுதலையாக்கித் திரும்பப்பண்
ணினதுமான மீதியான சகல ஜனமுமாகிய
சேவகரான மனுஷரையும், ஸ்திரீகளையும்,
குழந்தைகளையும், அரமனைப் பிரதானிகளை
17 யும் சேர்த்துக்கொண்டு, பாபிலோன் ராஜா
தேசத்தின்மேல் அதிகாரியாக்கின [1]அகிக்கா
மின் குமாரனாகிய கெதலியாவை நெத்தானி
யாவின் குமாரனாகிய இஸ்மவேல் வெட்டிப்
போட்டதினிமித்தம், கல்தேயருக்குப் பயந்த
18 படியினால், தாங்கள் எகிப்துக்குப் போகப்
புறப்பட்டு, பெத்லகேமூருக்கு அருகான [2]கிம்
காமின் பேட்டையில் தங்கியிருந்தார்கள்.

**42** அப்பொழுது எல்லா ராணுவச்சேர்வைக்
காரரும், [3]கரேயாவின் குமாரனாகிய யோக
னானும், ஓசாயாவின் குமாரனாகிய யெசனி
யாவும், சிறியோர்முதல் பெரியோர்மட்டுமான
2 சகல ஜனங்களும் சேர்ந்துவந்து, தீர்க்கதரி
சியாகிய எரேமியாவை நோக்கி: [4]உம்மு
டைய தேவனாகிய **கர்த்தர்** நாங்கள் நடக்க
வேண்டிய வழியையும், செய்யவேண்டிய
காரியத்தையும் எங்களுக்குத் தெரியப்பண்
ணும்படிக்கு, நீர் எங்கள் விண்ணப்பத்துக்கு
இடங்கொடுத்து, [5]மீதியாயிருக்கிற இந்தச்
சகல ஜனங்களாகிய எங்களுக்காக உம்மு
டைய தேவனாகிய **கர்த்தரை** நோக்கி ஜெபம்
3 பண்ணும். உம்முடைய கண்கள் எங்களைக்
காண்கிறபடியே திரளான ஜனங்களில்
[6]கொஞ்சப்பேரே மீந்திருக்கிறோம் என்றார்
4 கள். அப்பொழுது எரேமியா தீர்க்கதரிசி
அவர்களை நோக்கி: நீங்கள் சொன்னதைக்
கேட்டேன்; இதோ, உங்கள் வார்த்தையின்
படியே உங்கள் தேவனாகிய **கர்த்தரை** நோக்கி
ஜெபம்பண்ணுவேன்; [7]**கர்த்தர்** உங்களுக்கு
மறு உத்தரவாகச் சொல்லும் எல்லா வார்த்
தைகளையும் நான் உங்களுக்கு ஒன்றையும்
5 மறைக்காமல் அறிவிப்பேன் என்றான். அப்
பொழுது அவர்கள் எரேமியாவை நோக்கி:
உம்முடைய தேவனாகிய **கர்த்தர்** உம்மைக்
கொண்டு எங்களுக்குச் சொல்லியனுப்பும்
எல்லா வார்த்தைகளின்படியும் நாங்கள் செய்
யாவிட்டால், [8]**கர்த்தர்** நமக்கு நடுவே சத்தி
யமும் உண்மையுமான சாட்சியாயிருக்கக்கட
6 வர். அது நன்மையானாலும் தீமையானாலும்
சரி, [9]எங்கள் தேவனாகிய **கர்த்தரின்** சத்தத்
துக்கு நாங்கள் கீழ்ப்படிவதினால் எங்களுக்கு
நன்மை யுண்டாகும்படி நாங்கள் உம்மை
அனுப்புகிற எங்கள் தேவனாகிய **கர்த்தரு
டைய** சத்தத்துக்குக் கீழ்ப்படிந்து நடப்போம்
என்றார்கள்.

பத்துநாள் சென்றபின்பு, **கர்த்தருடைய** 7
வார்த்தை எரேமியாவுக்கு உண்டாயிற்று.
அப்பொழுது அவன்: கரேயாவின் குமார 8
னாகிய யோகனானையும், அவனோடிருந்த
எல்லா ராணுவச் சேர்வைக்காரரையும், சிறி
யோர்முதல் பெரியோர்மட்டும் உண்டான
சகல ஜனங்களையும் அழைத்து, அவர்களை 9
நோக்கி: உங்களுக்காக விண்ணப்பஞ் செய்
யும்படிக்கு நீங்கள் என்னை அனுப்பின
இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்** உரைக்
கிறது என்னவென்றால், நீங்கள் இந்த தே 10
சத்திலே தரித்திருந்தால், நான் உங்களைக்
கட்டுவேன், உங்களை இடிக்கமாட்டேன்; உங்
களை நாட்டுவேன், உங்களைப் பிடுங்கமாட்
டேன்; [10]நான் உங்களுக்குச் செய்திருக்கிற
தீங்குக்கு மனஸ்தாபப்பட்டேன். நீங்கள் 11
பயப்படுகிற பாபிலோன் ராஜாவுக்கு பயப்பட
வேண்டாம், [11]அவனுக்கு பயப்படாதிருப்பீர்
களாக என்று **கர்த்தர்** சொல்லுகிறார்; [12]உங்
களை ரட்சிக்கும்படிக்கும், உங்களை அவன் கைக்
குத் தப்புவிக்கும்படிக்கும் நான் உங்களுடனே
இருந்து, அவன் உங்களுக்கு இரங்குகிறதற் 12
கும், [13]உங்கள் சுயதேசத்துக்கு உங்களைத்
திரும்பி வரப்பண்ணுகிறதற்கும் உங்களுக்கு
இரக்கஞ்செய்வேன். நீங்கள் உங்கள் தேவ 13
னாகிய **கர்த்தருடைய** சத்தத்துக்குச் செவி
கொடாமல், [14]நாங்கள் இந்ததேசத்திலே இருக்
கிறதில்லையென்றும், நாங்கள் யுத்தத்தைக் 14
காணாததும், எக்காள சத்தத்தைக் கேளாததும்,
அப்பத்தாழ்ச்சியினால் பட்டினியாய் இராதது
மான எகிப்து தேசத்துக்கே போய், [15]அங்கே
தரித்திருப்போம் என்றும் சொல்வீர்களேயா
கில், யூதாவில் மீந்திருக்கிறவர்களே, அதைக் 15
குறித்து உண்டான **கர்த்தருடைய** வார்த்தை
யைக் கேளுங்கள்: நீங்கள் எகிப்துக்குப் போக
உங்கள் முகங்களைத் திருப்பி, [16]அங்கே தங்கப்
போவீர்களானால், நீங்கள் பயப்படுகிற பட்ட 16
யம் எகிப்து தேசத்திலே உங்களைப் பிடிக்கும்;
[17]நீங்கள் ஐயப்படுகிற பஞ்சம் எகிப்திலே உங்
களைத் தொடர்ந்துவரும், அங்கே சாவீர்கள்.
எகிப்திலே தங்கவேண்டுமென்று அவ்விடத் 17
துக்குத் தங்கள் முகங்களைத் திருப்பின எல்லா
மனுஷருக்கும் என்ன சம்பவிக்குமென்றால்,
[18]பட்டயத்தாலும், பஞ்சத்தாலும், கொள்ளை
நோயாலும் சாவார்கள்; நான் அவர்கள்மேல்
வரப்பண்ணும் தீங்கினாலே அவர்களில் மீதி
யாகிறவர்களும் தப்புகிறவர்களுமில்லை என்று
இஸ்ரவேலின் தேவனாகிய சேனைகளின் **கர்த்
தர்** சொல்லுகிறார். என் கோபமும் என் 18
உக்கிரமும் எருசலேமின் குடிகள்மேல் எப்
படி மூண்டதோ, [19]அப்படியே என் உக்கிரம்
நீங்கள் எகிப்துக்குப் போகும்போது, உங்கள்
மேல் மூளும்; நீங்கள் சாபமாகவும் பாழாகவும்
பழிப்பாகவும் நிந்தையாகவும் இருந்து, [20]இவ்
விடத்தை இனிக் காணாதிருப்பீர்கள் என்று
இஸ்ரவேலின் தேவனாகிய சேனைகளின் **கர்த்
தர்** சொல்லுகிறார். யூதாவில் மீதியானவர் 19

[1] 40. 5
[2] 2 சாமு. 19. 37, 38
[3] 40. 8
[4] உபா. 5. 28, 29. எஸ்றா 8. 21
[5] 1 சாமு. 7. 8. ஏசா. 1. 15. யாக். 5. 16
[6] லேவி. 26. 22. புல. 1. 1
[7] யாத். 9. 29. 1 இரா. 22. 14. 1 சாமு. 3. 18. அப். 20. 20
[8] ஆதி. 31. 50. யாத். 20. 7
[9] உபா. 5. 27: 6. 3
[10] 18. 8: 31. 28. உபா. 32. 36
[11] மத். 10. 28
[12] ஏசா. 43. 5. ரோ. 8. 31
[13] சங். 106. 45, 46
[14] 44. 16
[15] உபா. 29. 19, 20
[16] உபா. 17. 16
[17] 44. 13. எசே. 11. 8
[18] 24. 10: 44. 14, 28
[19] 7. 20: 39. 18, 22. புல. 2. 5
[20] 24. 9. சகரி. 8. 13

களே, எகிப்துக்குப் போகாதிருங்க்ள் என்று
கர்த்தர் உங்களைக்குறித்துச் சொன்னரென்
பதை இந்நாளில் உங்களுக்குச் சாட்சியாக
20 அறிவித்தேன் என்று அறியுங்கள். உங்கள்
ஆத்துமாக்களுக்கு விரோதமாய் உங்களை மோ
சம்போக்கினீர்கள்; நீ எங்கள் தேவனாகிய **கர்த்**
**தரை** நோக்கி: எங்களுக்காக விண்ணப்பம்
பண்ணி, எங்கள் தேவனாகிய **கர்த்தர்** சொல்
வதையெல்லாம் எங்களுக்கு அறிவிக்கவேண்
டும்; அதின்படியே செய்வோம் என்று நீங்
கள் சொல்லி, என்னை உங்கள் தேவனாகிய
21 **கர்த்தரிடத்துக்கு** அனுப்பினீர்கள். நான் இந்
நாளில் அதை உங்களுக்கு அறிவித்தேன்;
[1]ஆனாலும், உங்கள் தேவனாகிய **கர்த்தரின்**
சத்தத்துக்கும், அவர் என்னைக்கொண்டு உங்க
ளுக்குச் சொல்லியனுப்பின எந்தக் காரியத்
22 துக்கும் செவிகொடாமற் போனீர்கள். இப்
போதும் தங்கியிருப்பதற்கு நீங்கள் போக
விரும்புகிற ஸ்தலத்தில்தானே பட்டயத்தா
லும், பஞ்சத்தாலும், கொள்ளைநோயாலும்
[2]சாவீர்களென்று நிச்சயமாய் அறியுங்கள்
என்றான்.

43 எரேமியா சகல ஜனங்களுக்கும் அவர்
களுடைய தேவனாகிய **கர்த்தர்** தன்னைக்
கொண்டு அவர்களுக்குச் சொல்லியனுப்பின
எல்லா வார்த்தைகளையும் சொன்னான்; அவர்
களுடைய தேவனாகிய **கர்த்தருடைய** எல்லா
வார்த்தைகளையும் அவன் அவர்களுக்குச்சொல்
2 லி முடித்தபின்பு, ஓசாயாவின் குமாரனாகிய
அசரியாவும், கரேயாவின் குமாரனாகிய யோக
னானும், அகங்காரிகளான எல்லா மனுஷரும்
எரேமியாவை நோக்கி: [3]நீ பொய் சொல்லு
கிறாய்; எகிப்திலே தங்கும்படிக்கு அங்கே
போகாதிருங்கள் என்று சொல்ல, எங்கள்
தேவனாகிய **கர்த்தர்** உன்னை எங்களிடத்துக்கு
3 அனுப்பவில்லை. கல்தேயர் எங்களைக் கொன்
றுபோடவும், எங்களைப் பாபிலோனுக்குச்
சிறைகளாகக் கொண்டுபோகவும், எங்களை
அவர்கள் கையில் ஒப்புக்கொடுக்கும்படி, நேரி
யாவின் குமாரனாகியபாருக்குத்தானே உன்னை
எங்களுக்கு விரோதமாக ஏவினான் என்றார்
4 கள். அப்படியே யூதாவின் தேசத்திலே தரித்
திருக்கவேண்டும் என்னும் **கர்த்தருடைய** சத்
தத்துக்குக் கரேயாவின் குமாரனாகிய யோக
னானும், சகல ராணுவச் சேர்வைக்காரரும்,
சகல ஜனங்களும் செவிகொடாமற்போனார்
5 கள். யூதாதேசத்தில் தங்கியிருப்பதற்கு, தாங்
கள் துரத்துண்டிருந்த சகல ஜாதிகளிடத்
திலுமிருந்து திரும்பிவந்த மீதியான யூதரெல்
லாரையும், புருஷரையும், ஸ்திரீகளையும், குழந்
தைகளையும், ராஜாவின் குமாரத்திகளையும்,
[4]காவற்சேனாதிபதியாகிய நேபுசராதான், சாப்
பானின் குமாரனாகிய அகிக்காமின் மகனான
கெதலியாவினிடத்தில் விட்டுப்போன சகல
ஆத்துமாக்களையும், தீர்க்கதரிசியாகிய எரேமி
யாவையும், நேரியாவின் குமாரனாகிய பாருக்
6 கையும், கரேயாவின் குமாரனாகிய யோகனா

[1] உபா. 11. 26, 27
[2] எசே. 6.11. ஓசி. 9. 6
[3] 42. 1. நீதி. 8. 13: 16. 5. ஏசா. 9.9,10. யாக். 4. 6
[4] 40. 11, 12
[5] 2. 16: 44. 1. ஏசா. 30. 4
[6] 25. 9: 27. 6. எசே. 29. 18, 20
[7] 46. 13
[8] 46. 25
* சூரியகோவில்
[9] 43. 7: 46. 14. யாத். 14. 2. ஏசா. 19. 13
[10] 19. 4. உபா. 13. 6: 32. 17
[11] 29. 19. 2 நாளா. 36. 15. எசே. 16. 36, 47
[12] வெளி. 2. 21, 22

னும் சகல ராணுவச் சேர்வைக்காரரும் கூட்
டிக்கொண்டு, **கர்த்தருடைய** சத்தத்துக்குச் 7
செவிகொடாதபடியினாலே, எகிப்துதேசத்துக்
குப் போக எத்தனித்து, [5]அதிலுள்ள தக்பா
னேஸ்மட்டும் போய்ச் சேர்ந்தார்கள். தக்பா 8
னேசிலே **கர்த்தருடைய** வார்த்தை எரேமியா
வுக்கு உண்டாகி, அவர்: நீ உன் கையிலே 9
பெரிய கற்களை எடுத்துக்கொண்டு, யூதா ஜனங்
களுக்கு முன்பாக அவைகளைத் தக்பானேசில்
இருக்கிற பார்வோனுடைய அரமனையின்
ஒலிமுகவாசலில் இருக்கிற சூளையின் களி
மண்ணிலே புதைத்துவைத்து, அவர்களை 10
நோக்கி: இதோ என் ஊழியக்காரனாகிய நேபு
காத்நேச்சார் என்கிற பாபிலோன் ராஜாவை
நான் அழைத்தனுப்பி, நான் புதைப்பித்த இந்
தக் கற்களின்மேல் அவனுடைய சிங்காசனத்
தை வைப்பேன்; [6]அவன் தன் ராஜ கூடாரத்
தை அவைகளின்மேல் விரிப்பான். அவன் 11
வந்து, எகிப்து தேசத்தை அழிப்பான்; சாவு
க்கு ஏதுவானவன் சாவுக்கும், சிறையிருப்
புக்கு ஏதுவானவன் சிறையிருப்புக்கும், [7]பட்
டயத்துக்கு ஏதுவானவன் பட்டயத்துக்
கும் உள்ளாவான். எகிப்தின் தேவர்களு 12
டைய கோவில்களில் அக்கினியைக் கொளுத்
துவேன்; [8]அவன் அவைகளைச் சுட்டெரித்து,
அவைகளைச் சிறைபிடித்துப்போய், ஒரு
மேய்ப்பன் தன் கம்பளியைப் போர்த்துக்கொ
ள்ளுமாப்போல் எகிப்துதேசத்தைப் போர்த்
துக்கொண்டு, அவ்விடத்திலிருந்து சுகமாய்ப்
புறப்பட்டுப்போவான். அவன் எகிப்துதேசத் 13
தில் இருக்கிற *பெத்ஷிமேசின் சிலைகளை
உடைத்து, எகிப்தின் தேவர்களுடைய கோ
வில்களை அக்கினியால் சுட்டுப்போடுவான்
என்று இஸ்ரவேலின் தேவனாகிய சேனை
களின் **கர்த்தர்** சொல்லுகிறார் என்று சொல்
என்றார்.

எகிப்துதேசத்தில் குடியேறி, மிக்தோலி 44
லும், தக்பானேசிலும், நோப்பிலும், பத்ரோஸ்
சீமையிலும் வாசமான எல்லா யூதரையுங்
குறித்து, [9]எரேமியாவுக்கு உண்டான வசனம்:
இஸ்ரவேலின் தேவனாகிய சேனைகளின் **கர்த்** 2
**தர்** சொல்லுகிறது என்னவென்றால், நான்
எருசலேமின்மேலும், யூதாவின் சகல பட்ட
ணங்களின்மேலும், வரப்பண்ணின தீங்கை
யெல்லாம் நீங்கள் கண்டீர்கள். இதோ, அவர் 3
களும் நீங்களும் உங்கள் பிதாக்களும் அறியாத
தேவர்களுக்கு தூபங்காட்டவும், ஆராதனை
செய்யவும் போய், எனக்குக் கோபமூட்டும்
படிக்குச் செய்த அவர்களுடைய பொல்லாப்பி
னிமித்தம், [10]அவைகள் இந்நாளில் பாழாய்க்
கிடக்கிறது, அவைகளில் குடியில்லை. நான் 4
வெறுக்கிற இந்த அருவருப்பான காரியத்தைச்
செய்யாதிருங்களென்று, [11]தீர்க்கதரிசிகளாகிய
என் ஊழியக்காரரைக்கொண்டு உங்களுக்கு
ஏற்கனவே சொல்லியனுப்பிக்கொண்டிருந்
தேன். ஆனாலும் அவர்கள் அந்நிய தேவர்க 5
ளுக்கு தூபங்காட்டாதபடிக்கு, [12]என் சொல்

லேக் கேளாமலும், பொல்லாப்பை விட்டுத்
திரும்புவதற்குச் செவியைச் சாய்க்காமலும்
6 போனார்கள். ஆகையால், என் உக்கிரமும்
என் கோபமும் மூண்டு, யூதாவின் பட்டணங்
களிலும் எருசலேமின் வீதிகளிலும் பற்றி
யெறிந்தது; [1]அவைகள் இந்நாளில் இருக்கிற
படி வனாந்தரமும் பாழுமாய்ப் போயிற்று.
7 இப்போதும் இஸ்ரவேலின் தேவனும் சேனை
களின் தேவனுமாகிய **கர்த்தர்** சொல்லுகிறது
என்னவென்றால், [2]நீங்கள் யூதாவில் ஒருவ
ரையும் உங்களுக்கு மீதியாக வைக்காமல்,
உங்களில் புருஷனையும் ஸ்திரீயையும் பிள்ளை
யையும் பால் குடிக்கிற குழந்தையையும் வே
ரற்றுப்போகப் பண்ணும்படிக்கு, [3]உங்கள்
கைகளின் கிரியைகளாலே எனக்குக் கோப
மூட்டுகிற பெரிய பொல்லாப்பை உங்கள்
ஆத்துமாக்களுக்கு விரோதமாகச் செய்து,
8 உங்களை வேரற்றுப்போகப்பண்ணுவதற்காக
வும், நீங்கள் பூமியின் சகல ஜாதிகளுக்குள்
ளும் சாபமும் நிந்தையுமாயிருப்பதற்காகவும்,
நீங்கள் தங்கியிருக்கவந்த எகிப்துதேசத்திலே
அந்நிய தேவர்களுக்கு தூபங்காட்டுவானேன்?
9 யூதாதேசத்திலும் எருசலேமின் வீதிகளிலும்
உங்கள் பிதாக்கள் செய்த பொல்லாப்புகளை
யும், யூதாவின் ராஜாக்கள் செய்த பொல்லாப்
புகளையும், அவர்கள் ஸ்திரீகள் செய்த பொல்
லாப்புகளையும், நீங்கள் செய்த பொல்லாப்பு
களையும், [4]உங்கள் ஸ்திரீகள் செய்த பொல்லா
10 ப்புகளையும் மறந்துபோனீர்களோ? அவர்கள்
இந்நாள்மட்டும் மனம் நொறுங்குண்டதுமில்
லை, அவர்கள் பயப்படுகிறதுமில்லை; [5]நான் உங்
கள் முன்பாகவும் உங்கள் பிதாக்கள் முன்பாக
வும் வைத்த என் வேதத்தின்படியும் என் கட்
11 டளைகளின்படியும் நடக்கிறதுமில்லை. ஆகை
யால், இஸ்ரவேலின் தேவனாகிய சேனைகளின்
**கர்த்தர்** சொல்லுகிறது என்னவென்றால்,
[6]இதோ, நான் உங்களுக்குத் தீங்குண்டாகவும்,
யூதாவனைத்தையும் சங்கரிக்கத் தக்கதாகவும்,
என் முகத்தை உங்களுக்கு விரோதமாகத் திரு
12 ப்பி, எகிப்துதேசத்திலே தங்கும்படிக்கு வரத்
தங்கள் முகங்களைத் திருப்பின மீதியான யூத
ரை வாரிக்கொள்ளுவேன்; அவர்கள் அனைவ
ரும் எகிப்துதேசத்திலே நிர்மூலமாவார்கள்;
[7]அவர்கள், சிறியவன் முதல் பெரியவன்
வரைக்கும், பட்டயத்துக்கு இரையாகி, பஞ்
சத்தாலும் நிர்மூலமாவார்கள்; அவர்கள் பட்ட
யத்தாலும் பஞ்சத்தாலும் செத்து, சாபமும் பா
13 ழும் பழிப்பும் நிந்தையுமாவார்கள். நான் எரு
சலேமை தண்டித்தபடி [8]எகிப்துதேசத்தில்
குடி யிருக்கிறவர்களையும், பட்டயத்தாலும்,
பஞ்சத்தாலும், கொள்ளை நோயாலும் தண்
14 டிப்பேன். எகிப்துதேசத்திலே தங்கவும், [9]மறு
படியும் தங்கள் ஆத்துமா வாஞ்சித்திருக்கிற
யூதாதேசத்திலே குடியேறுவதற்கு அங்கே
திரும்பிப்போகவும் வேண்டுமென்று இங்கே
வந்த மீதியான யூதரிலே மீதியாயிருக்கிறவர்க
ளும் தப்புகிறவர்களுமில்லை; [10]தப்பிப்போகிற

1 42. 18
2 7. 19; 25. 7. எண். 16. 38. நீதி. 8. 36
3 25. 6, 7. எசே. 3. 8. 1 கொ. 10. 22. எபி. 3. 16
4 எஸ்ரா 9. 13, 14
5 நீதி. 14. 16; 28. 14. பிர. 8. 12, 13. மல். 4. 2
6 லேவி. 17. 10. எசே. 14. 7, 8. ஆமோ. 9. 4
7 42. 15. ஜூ. நெகி. 4. 6
8 43. 11
9 எசா. 30. 1-3
10 28. வச
11 ரோம. 13. 26
12 6. 16
13 25. வச. சங். 12. 4
14 நெகி. 2. 5, 6
15 7. 18
16 எசா. 43. 24. மல். 2. 17
17 1 இரா. 9. 9. ரோம. 13. 18. தானி. 9. 11, 12
18 43. 7

வர்களாகிய மற்றவர்களேயொழிய அவர்க
ளில் ஒருவரும் அங்கே திரும்புவதில்லையென்
றார் என்று சொன்னான்.
அப்பொழுது தங்கள் ஸ்திரீகள் அந்நிய 15
தேவர்களுக்கு தூபங்காட்டினதாக அறிந்தி
ருந்த எல்லாப் புருஷரும், [11]பெரிய கூட்ட
மாய் நின்றிருந்த எல்லா ஸ்திரீகளும், எகிப்து
தேசத்தில் பத்ரோசிலே குடியிருந்த சகல
ஜனங்களும் எரேமியாவுக்குப் பிரதியுத்தர
மாக: நீ **கர்த்தருடைய** நாமத்தில் எங்களுக் 16
குச் சொன்ன வார்த்தையின்படியே [12]நாங்கள்
உனக்குச் செவிகொடாமல், எங்கள் வாயிலி 17
ருந்து புறப்பட்ட எல்லா வார்த்தையின்படி
யேயும் நாங்கள் செய்து, [13]வானராக்கினிக்கு
தூபங்காட்டி, அவளுக்குப் பானபலிகளை
வார்ப்போம்; நாங்களும், எங்கள் பிதாக்களும்,
எங்கள் ராஜாக்களும், எங்கள் பிரபுக்களும்,
யூதா பட்டணங்களிலும் எருசலேமின் வீதிக
ளிலும் செய்ததுபோலவே செய்வோம்; [14]அப்
பொழுது நாங்கள் அப்பத்தினால் திருப்தியாகி,
ஒரு பொல்லாப்பையும் காணாமல் வாழ்ந்திருந்
தோம். நாங்கள் வானராக்கினிக்கு தூபங் 18
காட்டாமலும், அவளுக்குப் பானபலிகளை வா
ர்க்காமலும்போனது முதற்கொண்டு, எல்லாம்
எங்களுக்குக் குறைவுபட்டது; பட்டயத்தா
லும் பஞ்சத்தாலும் அழிந்துபோனோம். மே 19
லும் நாங்கள் வானராக்கினிக்கு தூபங்காட்
டி, [15]அவளுக்குப் பானபலிகளை வார்த்த
போது, நாங்கள் எங்கள் புருஷரின் அநுமதி
யில்லாமல் அவளுக்குப் பணியாரங்களைச்
சுட்டு, பானபலிகளை வார்த்து, அவளை நமஸ்
கரித்தோமோ? என்றார்கள். அப்பொழுது 20
எரேமியா, தனக்கு இப்படிப்பட்ட மறுமொ
ழி கொடுத்த சகல ஜனங்களாகிய ஸ்திரீ புரு
ஷர்களையும் மற்ற யாவரையும் நோக்கி: யூதா 21
வின் பட்டணங்களிலும், எருசலேமின் வீதி
களிலும், நீங்களும் உங்கள் பிதாக்களும், உங்
கள் ராஜாக்களும், உங்கள் பிரபுக்களும், தே
சத்தின் ஜனங்களும் காட்டின தூபங்களை அல்
லவோ **கர்த்தர்** நினைத்துத் தம்முடைய மனதி
லே வைத்துக்கொண்டார். உங்கள் கிரியை 22
களின் பொல்லாப்பையும், நீங்கள் செய்த
அருவருப்புகளையும், **கர்த்தர்** அப்புறம் பொறு
த்திருக்கக்கூடாதபடியினால் அல்லவோ, [16]உங்
கள் தேசம் இந்நாளில் இருக்கிறபடி குடியற்ற
அந்தரவெளியும் பாழும் சாபமுமாயிற்று. நீங் 23
கள் தூபங்காட்டி, **கர்த்தருக்கு** விரோதமாகப்
பாவஞ்செய்து, **கர்த்தருடைய** சத்தத்துக்குச்
செவிகொடாமலும், அவருடைய வேதத்துக்
கும், அவருடைய கட்டளைகளுக்கும், அவ
ருடைய சாட்சிகளுக்கும் இணங்கி நடவா
மலும் போனபடியினாலே [17]இந்நாளில் இருக்
கிறபடி இந்தத் தீங்கு உங்களுக்கு நேரிட்டது
என்றான்.
பின்னும் எரேமியா சகல ஜனங்களையும், 24
சகல ஸ்திரீகளையும் நோக்கி: [18]எகிப்துதேசத்
தில் இருக்கிற யூதராகிய நீங்கள் எல்லாரும்

கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்.
25 இஸ்ரவேலின் தேவனாகிய சேனைகளின் கர்த்
தர் சொல்லுகிறது என்னவென்றால், வான
ராக்கினிக்கு தூபங்காட்டவும், அவளுக்குப்
பானபலிகளை வார்க்கவும், நாங்கள் நேர்ந்து
கொண்ட பொருத்தனைகளை எவ்விதத்திலும்
செலுத்துவோமென்று, [1]நீங்களும் உங்கள் ஸ்தி
ரீகளும், உங்கள் வாயினாலே சொல்லி, உங்கள்
கைகளினாலே நிறைவேற்றினீர்கள்; நீங்கள்
உங்கள் பொருத்தனைகளை ஸ்திரப்படுத்தினது
மெய்யே, அவைகளைச் செலுத்தினதும் மெய்
26 யே. ஆகையால், எகிப்துதேசத்தில் குடியிருக்
கிற யூதா ஜனங்களாகிய நீங்கள் எல்லாரும்
கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்;
[2]இதோ, கர்த்தராகிய ஆண்டவருடைய ஜீவனா
ணை என்று, எகிப்து தேசமெங்கும் ஒரு யூதா
மனுஷன் வாயினாலும் இனி என் நாமம் வழங்
கப்படுவதில்லையென்று நான் என் மகத்தான
நாமத்தைக்கொண்டு ஆணையிடுகிறேன் என்று
27 கர்த்தர் சொல்லுகிறார். இதோ, நான் அவர்
கள்மேல் நன்மைக்கல்ல தீமைக்கே ஜாக்கி
ரதையாயிருப்பேன்; [3]எகிப்துதேசத்திலிருக்
கிற யூதா மனுஷர் எல்லாரும் ஒழிந்து தீருமள
வும் பட்டயத்தாலும் பஞ்சத்தாலும் சங்காரமா
28 வார்கள். ஆனாலும் பட்டயத்துக்குத் தப்புகி
றவர்கள் எகிப்துதேசத்திலிருந்து யூதாதேசத்
துக்குக் கொஞ்சம்பேராய்த் திரும்புவார்கள்;
[4]அப்படியே எகிப்துதேசத்திலே தங்கியிருக்க
வந்த யூதாவில் மீதியான அனைவரும் அக்கா
லத்திலே தங்களுடைய வார்த்தையோ, என்
வார்த்தையோ, [5]யாருடைய வார்த்தை மெய்ப்
29 படும் என்று அறிவார்கள். நான் இவ்விடத்
தில் உங்களை தண்டிப்பேன் என்று உங்க
ளுக்கு விரோதமாய்ச் சொன்ன என் வார்த்
தைகள் மெய்ப்படுமென்று நீங்கள் அறிவதற்கு
உங்களுக்கு இதுவே அடையாளம் என்று
30 கர்த்தர் சொல்லுகிறார். இதோ, நான் யூதா
வின் ராஜாவாகிய சிதேக்கியாவை, அவனு
டைய சத்துருவும் அவன் பிராணனை வாங்கத்
தேடினவனுமாகிய நேபுகாத்நேச்சார் என்
னும் பாபிலோன் ராஜாவின் கையில் ஒப்புக்
கொடுத்ததுபோல, நான் பார்வோன் ஒப்பிரா
என்னும் எகிப்தின் ராஜாவையும், அவனு
டைய சத்துருக்களின் கையிலும், அவன் பிரா
ணனை வாங்கத் தேடுகிறவர்களின் கையிலும்
ஒப்புக்கொடுப்பேன் [6]என்று கர்த்தர் சொல்
லுகிறார் என்றான்.

45 யோசியாவின் குமாரனாகிய யோயாக்
கீம் என்னும் யூதா ராஜாவின் நாலாம் வரு
ஷத்திலே நேரியாவின் குமாரனாகிய பாருக்
[7]இந்த வசனங்களை எரேமியாவின் வாய்
சொல்ல ஒரு புஸ்தகத்தில் எழுதுகையில்,
எரேமியா தீர்க்கதரிசி அவனிடத்தில் பேசி,
2 பாருக்கே, உன்னைக்குறித்து இஸ்ரவேலின்
தேவனாகிய கர்த்தர் சொல்லுகிறது என்ன
3 வென்றால், நீ: இப்பொழுது எனக்கு ஐயோ!
கர்த்தர் என் நோவைச் சஞ்சலத்தால் வர்த்திக்
கப்பண்ணினார், என் தவிப்பினால் இளைத்
தேன், [8]இளைப்பாறுதலைக் காணாதேபோனே
ன் என்று சொன்னாய் என்கிறார். இதோ, 4
நான் கட்டினதையே நான் இடிக்கிறேன்;
[9]நான் நாட்டினதையே நான் பிடுங்குகிறேன்;
இந்த முழுத்தேசத்துக்கும் இப்படியே நடக்
கும். நீ உனக்குப் பெரிய காரியங்களைத் தே 5
டுகிறாயோ? [10]தேடாதே; இதோ, மாம்சமான
யாவர்மேலும் தீங்கை வரப்பண்ணுகிறேன்
என்று கர்த்தர் சொல்லுகிறார்; [11]ஆனாலும்,
நீ போகும் சகல ஸ்தலங்களிலும் உன் பிரா
ணனை உனக்குக் கிடைக்கும் கொள்ளைப்
பொருளாகத் தருகிறேன் என்று கர்த்தர்
சொல்லுகிறார் என்று அவனுடனே சொல்
என்றார்.

46 புறஜாதிகளுக்கு [12]விரோதமாய் எரேமியா
தீர்க்கதரிசிக்கு உண்டான கர்த்தருடைய வச
னம்: எகிப்தைக்குறித்தும், [13]ஐப்பிராத்து நதி 2
யண்டையில் கர்கேமிசிலே இருந்ததும் பாபி
லோன் ராஜாவாகிய நேபுகாத்நேச்சார், யோசி
யாவின் குமாரனாகிய யோயாக்கீம் என்னும்
யூதா ராஜாவின் நாலாம் வருஷத்திலே முறிய
அடித்ததுமான பார்வோன் நேகோ என்னப்
பட்ட எகிப்து ராஜாவின் ராணுவத்தைக்குறி
த்தும் அவர் சொல்லுகிறது என்னவென்றால்:
கேடகங்களையும் பரிசைகளையும் ஆயத்தம் 3
பண்ணி, [14]யுத்தத்துக்கு வாருங்கள். குதிரை 4
வீரரே, குதிரைகளின்மேல் சேணங்களை வை
த்து ஏறி, தலைச்சீராயை அணிந்துகொண்டு
நில்லுங்கள்; ஈட்டிகளைத் துலக்கி, கவசங்
களைத் தரித்துக்கொள்ளுங்கள். அவர்கள் கல 5
ங்கி, பின்வாங்குகிறதை நான் காண்கிறதென்
ன? [15]சுற்றிலுமுண்டான பயங்கரத்தினிமித்
தம் அவர்களுடைய பராக்கிரமசாலிகள் முறி
யுண்டு, திரும்பிப்பாராமல் ஓட்டமாய் ஓடிப்
போகிறார்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்.
வேகமாய் ஓடுகிறவன் ஓடிப்போகவேண்டாம்; 6
பராக்கிரமசாலி தப்பிப் போகவேண்டாம்;
[16]வடக்கே ஐப்பிராத்துநதியண்டையிலே அவர்
கள் இடறி விழுவார்கள். பிரவாகம்போல் 7
புரண்டுவருகிற இவன் யார்? [17]அலைகள் மோதி
யடிக்கிற நதிகள்போல் எழும்பிவருகிற இவன்
யார்? எகிப்தியனே பிரவாகத்தைப்போல் 8
புரண்டுவருகிறான், அவனே அலைகள் மோதி
யடிக்கிற நதிகள்போல எழும்பிவருகிறான்;
[18]நான் போய், தேசத்தை மூடி, நகரத்தையும்
அதில் குடியிருக்கிறவர்களையும் அழிப்பேன்
என்றான். குதிரைகளே, போய் ஏறுங்கள்; 9
இரதங்களே, கடகட என்று ஓடுங்கள்; பராக்
கிரமசாலிகளும், கேடகம் பிடிக்கிற எத்தி
யோப்பியரும், பூத்தியரும், [19]வில்லைப்பிடித்து
நாணேற்றுகிற லீதியரும் புறப்படக்கடவர்
கள். ஆனாலும், இது சேனைகளின் கர்த்தரா 10
கிய ஆண்டவரின் நாளும், அவர் தம்முடைய
சத்துருக்களுக்கு நீதியைச் சரிக்கட்டுகிற நாளு
மாயிருக்கிறது; [20]ஆகையால், பட்டயம் பட்சி
த்து, அவர்களுடைய இரத்தத்தால் திருப்தி

1 15. லூக். யோபு 34. 22. யாக். 1. 14, 15
2 ஆதி. 22. 16. எசே. 20. 39. ஆமோ. 6. 10. எபி. 6. 13
3 31. 28. 2 இரா. 21. 14. எசே. 7. 6
4 ஏசா. 27. 13
5 சங். 33. 11
6 39. 5; 46. 25, 26. எசே. 29. 3. ஷ: 30. 21. ஷ
7 36. 1, 4, 32
8 யோபு 23. 2. சங். 27. 13; 77. 3, 4
9 ஏசா. 5. 5
10 மத். 6. 25–32
11 25. 26; 39. 18. செப். 3. 8
12 25. 15. ஷ
13 2 இரா. 29. 29. 2 நாளா. 35. 20
14 51. 11, 12. நாகூம் 2. 1
15 6. 25; 49. 29. வெளி. 6. 15
16 பிர. 9. 11. தானி. 11. 19, 22. ஆமோ. 2. 14
17 47. 2
18 யாத். 15. 9
19 ஏசா. 66. 19
20 உபா. 32. 42. ஏசா. 13. 6

யாகி வெறித்திருக்கும்; வடதேசத்தில் ஐப்பி
ராத்து நதியண்டையிலே சேனைகளின் கர்த்த
ராகிய ஆண்டவருக்கு ஒரு *யாகமும் உண்டு.
11 எகிப்தின் குமாரத்தியாகிய கன்னிகையே, [1]நீ
கிலேயாத்துக்குப் போய், [2]பிசின் தைலம்
வாங்கு; திரளான அவிழ்தங்களை நீ கூட்டு
கிறது விருதா, [3]உனக்கு ஆரோக்கிய முண்
12 டாகாது. ஜாதிகள் உன் இலச்சையைக் கேள்
விப்பட்டார்கள்; உன் கூக்குரலால் தேசம்
நிறைந்தது; பராக்கிரமசாலியின்மேல் பராக்
கிரமசாலி இடறி, இருவரும் ஏகமாய் விழுந்
தார்கள் என்றார்.
13 எகிப்துதேசத்தை அழிக்கப் பாபிலோன்
ராஜாவாகிய நேபுகாத்நேச்சார் வருவானென்
பதைக் குறித்து, [4]எரேமியா தீர்க்கதரிசியி
னிடத்தில் **கர்த்தர்** சொன்ன வசனம்:
14 ஆயத்தப்பட்டு நில், பட்டயம் உன்னைச்
சுற்றிலும் உண்டானதைப் பட்சித்துப்போடு
கிறதென்று சொல்லி, எகிப்திலே அறிவித்து,
மிக்தோலிலே கூறி, நோப்பிலும் தக்பானேசி
15 லும் பிரசித்தம் பண்ணுங்கள். உன் வீரர்
வாரிக்கொள்ளப் படுகிறதென்ன? [5]**கர்த்தர்**
அவர்களைத் தள்ளினதால் அவர்கள் நிலைநிற்க
16 வில்லை. அநேகரை இடறப்பண்ணுகிறார்;
அவனவன் தனக்கடுத்தவன்மேல் விழுகிறான்;
[6]அவர்கள்: எழுந்திருங்கள், கொல்லுகிற பட்
டயத்துக்குத் தப்ப நமது ஜனத்தண்டைக்கும்,
நாம் பிறந்த தேசத்துக்கும் திரும்பிப்போ
17 வோம் என்கிறார்கள். எகிப்தின் ராஜாவா
கிய பார்வோன் பாழாக்கப்பட்டான்; அவனு
க்குக் குறித்த காலம் முடிந்ததென்று அங்கே
18 சத்தமிட்டுச் சொல்லுகிறார்கள். பர்வதங்களில்
தாபோரும், சமுத்திரத்தின் அருகே கர்மே
லும் இருக்கிற நிச்சயம்போல் அவன் வருவா
னென்று [7]சேனைகளின் **கர்த்தர்** என்னும்
நாமமுள்ள ராஜா தம்முடைய ஜீவனைக்
19 கொண்டு சொல்லுகிறார். எகிப்துதேசவாசி
யாகிய குமாரத்தியே, சிறை யிருப்புக்குப்
போகும் பிரயாண சாமான்களை ஆயத்தப்படு
த்து, [8]நோப் பாழாகும்; அது குடியில்லாமல்
20 சுட்டெரிக்கப்பட்டுக் கிடக்கும். எகிப்து மகா
நேர்த்தியான கடாரி, [9]அடிக்கிறவன் வடக்
21 கேயிருந்து வருகிறான். அதின் நடுவில் இரு
க்கிற அதின் கூலிப்படைகள் கொழுத்த காளை
கள்போலிருக்கிறார்கள்; இவர்களும் நிற்கா
மல், திரும்பிக்கொண்டு ஏகமாய் ஓடிப்போ
வார்கள்; [10]அவர்கள் விசாரிக்கப்படுகிற அவர்
களுடைய ஆபத்துநாள் அவர்கள்மேல் வந்
22 தது. அவன் பாம்பைப்போல் சீறிவருவான்,
இராணுவபலத்தோடே நடந்து, [11]காடுவெட்டி
களைப்போல் கோடரிகளோடு அதின்மேல்
23 வருவார்கள். எண்ணப்படாத மரங்களாயிரு
ந்தாலும் அந்தக் காட்டை வெட்டுவார்கள்
என்று **கர்த்தர்** சொல்லுகிறார்; அவர்கள் வெ
ட்டுக்கிளிகளைப் பார்க்கிலும் அதிகமானவர்
24 கள், அவர்களுக்குத் தொகையில்லை. எகிப்
தின் குமாரத்தி கலங்குவாள்; வடதிசை

ஜனத்தின் கையில் ஒப்புக்கொடுக்கப்படுவாள்.
இஸ்ரவேலின் தேவனாகிய சேனைகளின் கர்த் 25
தர் சொல்லுகிறது என்னவென்றால்: இதோ,
[12]நான் நோ என்னும் பட்டணத்திலுள்ள திர
ளான ஜனங்களையும், பார்வோனையும், எகிப்
தையும், அதின் தேவர்களையும், அதின் ராஜா
க்களையும், பார்வோனையும், அவனை நம்பியிரு
க்கிறவர்களையும் †விசாரித்து, அவர்கள் பிரா 26
ணனை வாங்கத் தேடுகிறவர்களின் கையிலும்,
பாபிலோன் ராஜாவாகிய நேபுகாத்நேச்சாரின்
கையிலும், அவனுடைய சேவகரின் கையி
லும், அவர்களை ஒப்புக்கொடுப்பேன்; [13]அதற்
குப் பின்பு அது பூர்வகாலத்தில் இருந்தது
போல் குடியேற்றப்படும் என்று **கர்த்தர்**
சொல்லுகிறார். என் தாசனாகிய யாக்கோபே, 27
நீ பயப்படாதே; [14]இஸ்ரவேலே, நீ கலங்கா
தே; இதோ, நான் உன்னைத் தூரத்திலும்,
உன் சந்ததியை அவர்கள் சிறையிருப்பின் தே
சத்திலுமிருந்து விடுவித்து ரட்சிப்பேன்; அப்
பொழுது யாக்கோபு திரும்பிவந்து, அமைதி
யோடும் சாங்கோபாங்கத்தோடும் இருப்பான்;
அவனைத் தத்தளிக்கப்பண்ணுவார் இல்லை.
என் தாசனாகிய யாக்கோபே, நீ பயப்படாதே 28
என்று **கர்த்தர்** சொல்லுகிறார்; நான் உன்னு
டனே இருக்கிறேன்; [15]உன்னைத் துரத்தி
விட்ட எல்லா ஜாதிகளையும் நான் நிர்மூலமா
க்குவேன்; உன்னையோ நான் நிர்மூலமாக்கா
மல், உன்னை மட்டாய்த் தண்டிப்பேன்; [16]ஆனா
லும் உன்னை நான் குற்றமில்லாமல் நீங்கலாக
விடுவதில்லை யென்கிறார்.

**47** பார்வோன் காத்சாவை அழிக்கு முன்
னே, [17]பெலிஸ்தருக்கு விரோதமாய்த் தீர்க்க
தரிசியாகிய எரேமியாவுக்கு உண்டான **கர்த்த**
**ருடைய** வசனம்:
கர்த்தர் சொல்லுகிறது என்னவென்றால்: 2
இதோ, வடக்கேயிருந்து ஜலம் பொங்கி பிர
வாகமாகி தேசத்தின்மேலும், [18]அதிலுள்ள எல்
லாவற்றின்மேலும் நகரத்தின்மேலும், அதில்
குடியிருக்கிறவர்களின்மேலும் புரண்டு ஓடும்;
அப்பொழுது மனுஷர் கூக்குரலிட்டு, தேசத்
தின் குடிகளெல்லாரும் அலறுவார்கள். அவர் 3
களுடைய பலத்த குதிரைகளுடைய குளம்பு
களின் சத்தத்தையும், அவர்களுடைய இரதங்
களின் கடகடப்பையும், அவர்களுடைய உரு
ளைகளின் இரைச்சலையும் கேட்டு, [19]தகப்பன்
மார் தங்கள் கை அயர்ந்துபோனதினால் தங்
கள் பிள்ளைகளையும் நோக்கிப் பாராதிருப்பார்
கள். பெலிஸ்தரை யெல்லாம் பாழாக்கவும், 4
தீருவுக்கும் சீதோனுக்கும் மீதியான சகாயரை
யெல்லாம் சங்காரம்பண்ணவும் வருகிற நாளி
லே இப்படியாகும்; [20]கப்தோர் என்னும் கடற்
கரையான தேசத்தாரில் மீதியாகிய பெலிஸ்
தரையும் **கர்த்தர்** பாழாக்குவார். காத்சா மொட் 5
டையடிக்கப்படும்; [21]அவர்களுடைய பள்ளத்
தாக்கிலே மீதியாகிய அஸ்கலோன் சங்கார
மாகும்; நீ எந்தமட்டுந்தான் உன்னைக் கீறிக்
கொள்ளுவாய். ஆ **கர்த்தரின்** பட்டயமே, 6

* பலி. எசே. 39. 17. செப். 1. 7
1 எசா. 47. 1
2 8. 22: 51. 8
3 எசே. 30. 21
4 43. 10, 11. எசா. 19. 1. எசே. 29, 30, 32. அதி
5 சங். 18. 14, 39
6 லேவி. 26. 37
7 எசா. 47. 4
8 எசா. 20. 4
9 47. 2. ஓசி. 10. 11
10 50. 27. உபா. 32. 35. சங். 37. 13
11 எசா. 29. 4
12 நாகூம் 3. 8
† தண்டித்து
13 44. 30. எசே. 32. 11
14 எசா. 43. 1, 5
15 30. 11
16 எசா. 27. 7-9. எபி. 12. 5-10. வெளி. 3. 19
17 எசே. 25. 15. ஆமோ. 1. 6-8. செப். 2. 4, 5
18 46. 20. எசா. 8. 7
19 8. 16. நாகூம் 3. 2
20 ஆதி. 10. 14
21 சகரி. 9. 5

எந்தமட்டும் அமராதிருப்பாய்? [1]உன் உறைக்
7 குள் திரும்பிவந்து, ஓய்ந்து அமர்ந்திரு. அது
எப்படி அமர்ந்திருக்கும்? அஸ்கலோனுக்கு
விரோதமாகவும் கடல்துறை தேசத்துக்கு
விரோதமாகவும் கர்த்தர் அதற்குக் கட்டளை
கொடுத்து, [2]அவ்விடங்களுக்கென்று அதைக்
குறித்தாரே.

48 மோவாபைக்குறித்து இஸ்ரவேலின் தே
வனுகிய சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறது
என்னவென்றால், [3]ஐயோ! நேபோ பாழாக்
கப்பட்டது; கீரியாத்தாயீம் வெட்கப்பட்டு,
பிடிக்கப்பட்டுப் போயிற்று; மிஸ்காப் வெட்
2 கப்பட்டு, கலங்கிப்போயிற்று. எஸ்போனைக்
குறித்து [4]மோவாபுக்கு இருந்த பெத்தரிக்கம்
இனி இராது; அது ஒரு ஜாதியா யிராதபடி
க்கு அதை நிர்மூலமாக்குவேன் வாருங்களெ
ன்று அதற்கு விரோதமாகப் பொல்லாப்பை
நினைத்திருக்கிறார்கள்; மத்மேனே, நீயும் சங்
காரமாவாய்; பட்டயம் உன்னைத் தொடரும்.
3 பாழ்க்கடிப்பினாலும் பெரிய நொறுக்குதலினா
லும் உண்டாகிற கூப்பிடுதலின் சத்தம் ஒரொ
4 னாயிமிலிருந்து கேட்கப்படும். மோவாப் நொ
றுங்குண்டது; அதிலுள்ள சிறுவர்கள் கூப்பி
5 டும் சத்தம் கேட்கப்படுகிறது. லூகித்துக்கு
ஏறிப்போகிற வழியிலே அழுகையின்மேல்
அழுகை எழும்பும்; ஒரொனாயிமுக்கு இறங்
கிப்போகிற வழியிலே நொறுக்குதல் செய்
கிறதினால் உண்டாகிய கூக்குரலைச் சத்துருக்
6 கள் கேட்கிறார்கள். உங்கள் பிராணன் தப்ப
ஓடிப்போங்கள்; [5]வனாந்தரத்திலுள்ள கறளை
யாய்ப் போன செடியைப்போலிருப்பீர்கள்.
7 நீ உன் *சம்பத்தையும் உன் பொக்கிஷங்களை
யும் நம்புகிறபடியினாலே [6]நீயும் பிடிக்கப்
படுவாய்; அப்பொழுது கேமோஷ் சிறை
யாக்கப்பட்டுப்போம்; [7]அதின் ஆசாரியரும்
பிரபுக்களும் ஏகமாய்ச் சிறைப்பட்டுப்போவார்
8 கள். பாழாக்குகிறவன் எல்லாப் பட்டணங்
களின்மேலும் வருவான்; ஒரு பட்டணமும்
தப்பிப்போவதில்லை; பள்ளத்தாக்குகளும் கெ
ட்டுப்போகும்; சமனான பூமியும் அழிக்கப்
9 படும் என்று கர்த்தர் சொன்னார். மோவாபுக்
குச் செட்டைகளைக் கொடுங்கள், [8]அது பறந்
துபோகட்டும்; அதின் பட்டணங்கள் குடிக
10 ளில்லாமல் பாழாய்ப்போகும். கர்த்தருடைய
வேலையை அசதியாய்ச் செய்கிறவன் சபிக்கப்
பட்டவன்; [9]இரத்தம் சிந்தாதபடிக்குத் தன்
பட்டயத்தை அடக்கிக்கொள்ளுகிறவன் சபிக்
11 கப்பட்டவன். மோவாப் தன் சிறுவயது
முதல் சுகமாய் வாழ்ந்தது; [10]அது ஒரு பாத்திர
த்திலிருந்து மறுபாத்திரத்தில் வார்க்கப்படா
மலும், அதின் வண்டல்களின்மேல் அசை
யாமலும் இருந்தது; அது சிறையிருப்புக்
குப் போனதில்லை; ஆதலால் அதின் ருசி
அதில் நிலைத்திருந்தது; அதின் வாசனை வேறு
12 படவில்லை. ஆகையால், இதோ, நாட்கள்
வருமென்று கர்த்தர் சொல்லுகிறார், அப்பொ
ழுது கவிழ்த்துப்போடுகிறவர்களை அதற்கு

அனுப்புவேன்; அவர்கள் அதைக் கவிழ்த்து,
அதின் பாத்திரங்களை வெறுமையாக்கி, அதின்
ஜாடிகளை உடைத்துப்போடுவார்கள். அப் 13
பொழுது இஸ்ரவேல் சந்ததி தங்கள் நம்பிக்
கையான பெத்தேலாலே வெட்கப்பட்டது
போல, [11]மோவாப் கேமோஷாலே வெட்கப்
படும். நாங்கள் பராக்கிரமசாலிகளென்றும், 14
[12]நாங்கள் யுத்தசன்னத்தரென்றும் நீங்கள் சொ
ல்லுகிறதென்ன? மோவாப் அழிந்தது, அதின் 15
பட்டணங்கள் எரிந்துபோயின; அதின் திற
மையுள்ள வாலிபர் கொலைக்களத்துக்கு இறங்
குகிறார்கள் என்று [13]சேனைகளின் கர்த்தர் என்
னும் நாமமுள்ள ராஜா சொல்லுகிறார். மோ 16
வாபின் ஆபத்துவரச் சமீபமாயிருக்கிறது;
அதின் தீங்கு மிகவும் தீவிரித்துவருகிறது.
அதின் சுற்றுப்புறத்தாரும் அதின் பேரை 17
அறிந்தவர்களுமாகிய நீங்கள் எல்லாரும் அதற்
காக அங்கலாய்த்துக்கொள்ளுங்கள்; [14]பெல
னான தடியும் அலங்காரமான கோலும் எப்படி
உடைந்ததென்று சொல்லுங்கள். தீபோன் 18
பட்டணவாசியான குமாரத்தியே, [15]நீ உன்
மகிமையை விட்டிறங்கி, தாகத்தோடே உட்
கார்ந்திரு; மோவாபைப் பாழாக்குகிறவன்
உனக்கு விரோதமாய் வந்து, உன் அரண்களை
அழித்துப்போடுவான். ஆரோவேரில் குடி 19
யிருக்கிறவளே, [16]நீ வழியிலே நின்று பார்த்
துக்கொண்டிரு; நடந்ததென்னவென்று ஓடி
வருகிறவனையும் தப்பிவருகிறவனையும் கேள்.
மோவாப் முறிய அடிக்கப்பட்டபடியினால் 20
கலங்கிப்போயிற்று; [17]அலறிக் கூப்பிடுங்கள்;
மோவாப் பாழாக்கப்பட்டதென்று அர்னோ
னில் அறிவியுங்கள். சமனான பூமியாகிய 21
ஓலோனின்மேலும், யாத்சாவின்மேலும், மே
ப்காத்தின்மேலும், தீபோனின்மேலும், நே 22
போவின்மேலும், பெத்திப்லாத்தாயீமின்மே
லும், கீரியாத்தாயீமின்மேலும், பேத்கமூலி 23
ன்மேலும், பெத்மெயோனின்மேலும், கீரி 24
யோத்தின்மேலும், போஸ்றாவின்மேலும்,
மோவாப் தேசத்திலே தூரத்திலும் சமீபத்தி
லும் இருக்கிற எல்லாப் பட்டணங்களின்
மேலும் நியாயத்தீர்ப்பு வரும். மோவாபின் 25
கொம்பு வெட்டுண்டது; [18]அவன் புயம் முறிக்
கப்பட்டதுஎன்றுகர்த்தர்சொல்லுகிறார். அவ 26
னை வெறிகொள்ளச்செய்யுங்கள்; [19]கர்த்தருக்கு
விரோதமாய்ப் பெருமைபாராட்டினான்; மோ
வாப் தான் வாந்திபண்ணி அதிலே புரளு
வான்; [20]அவன் பரியாசத்துக்கிடமாவான்.
இஸ்ரவேல் உனக்குப் பரியாசமாயிருந்தான் 27
அல்லவோ? [21]அவன் திருடருக்குள் கண்டு
பிடிக்கப்பட்டானோ? நீ அவனைக் குறித்துப்
பேசுகிறபோதெல்லாம், தலையைத் துலுக்கு
கிறாயே. மோவாப் தேசத்தின் குடிகளே, 28
நீங்கள் பட்டணங்களை விட்டுப்போய், கன்
மலையில் தங்கி, குகையின் வாய்ஓரங்களில்
கூடுகட்டுகிற புறாவுக்கு ஒப்பாயிருங்கள்.
அவன் மெத்தப் பெருமைக்காரன், [22]மோவா 29
வாபின் பெருமையையும், அவன் மேட்டிமை

[1] உபா. 32. 41. எசே. 21. 3-5
[2] எசே. 14. 17. மீகா 6. 9
[3] ஏசா. 15. 16. எசே. 25. 8, 9. ஆமோ. 2. 1, 2
[4] எண். 32. 37
[5] 51. 6. மாற். 13. 14-16
* இரட்சைகளையும்
[6] 1 தீமோ. 6. 17
[7] எண். 21. 29. நியா. 11. 24
[8] சங். 55. 6
[9] நியா. 5. 23. 1 சாமு. 15. 3, 9. 1 இரா. 20. 42
[10] செப். 1. 12
[11] 1 இரா. 12. 29
[12] ஏசா. 16. 6
[13] 51. 57. ஏசா. 40. 30, 31. யாக். 5. 4
[14] ஏசா. 9. 4: 14. 4, 5, 12
[15] 46. 19
[16] உபா. 2. 36
[17] ஏசா. 16. 7
[18] சங். 75. 10. எசே. 30. 21
[19] 25. 15, 27
[20] புல. 1. 21
[21] செப். 2. 8-10
[22] ஏசா. 16. 6. ஏசா. 16. 6

யையும், அவன் அகந்தையையும், அவன் பெத்
தரிக்கத்தையும், அவன் இருதயத்தின் மேட்டி
30 மையையும் குறித்துக் கேட்டேன். அவன்
மூர்க்கத்தை நான் அறிவேன் என்று கர்த்தர்
சொல்லுகிறார்; அப்படியாகாது, அவன் வீம்பு
31 செல்லாது என்கிறார். ஆகையால் மோவாபி
னிமித்தம் நான் அலறி, [1]மோவாப்தேசம் அனை
த்தினிமித்தமும் கூக்குரலிடுவேன்; கீராரேஸ்
மனுஷரினிமித்தம் பெருமூச்சு விடப்படும்.
32 சிப்மாவூரின் திராட்சச்செடியே, யாசேருக்
காக நான் அழுததுபோல உனக்காகவும் அழு
வேன்; உன் கொடிகள் கடலைக் கடந்துபோ
யின; அவைகள் யாசேர் கடல்மட்டும் போய்
எட்டின; பாழாக்குகிறவன் உன் வசந்தகா
லத்துப் பழங்களின்மேலும், உன் திராட்சப்
33 பழ அறுப்பின்மேலும் விழுந்தான். பயிர்
வெளியிலும் மோவாப் தேசத்திலுமிருந்து சந்
தோஷமும் களிப்பும் நீங்கிப்போயிற்று; திரா
ட்சரசம் ஆலைகளிலிருந்து பொழிகிறதை
ஓயப்பண்ணினேன்; ஆலையை மிதிக்கிறவர்
களின் பாடல் இல்லை; அது ஆரவாரமேயல்
34 லாமல் ஆலைமிதிக்கும் பாடலல்ல. எஸ்போன்
துவக்கி எலெயாலேமட்டும் யாகாஸ்வரைக்
கும் உண்டாகும் கூக்குரலினிமித்தம் அவர்
கள் மூன்று வயதுக் கடாரியைப்போல், சோ
வார்துவக்கி ஒரொனாயிம்மட்டும் சத்தமிடுவார்
கள்; நிம்ரீமின் ஜலங்களும் வற்றிப்போகும்.
35 மோவாப்தேசத்து மேடைகளில் பலியிடுகிறவ
னையும் தன் தேவர்களுக்கு தூபங்காட்டுகிறவ
னையும் ஓயப்பண்ணுவேன் என்று கர்த்தர்
36 சொல்லுகிறார். ஆகையால் மோவாபினிமித்
தம் என் இருதயம் நாகசுரம்போல் துயரமாய்
தொனிக்கும்; கீராரேஸ் மனுஷரினிமித்த
மும், என் இருதயம் நாகசுரம்போல் துயர
மாய் தொனிக்கும்; அவர்கள் சம்பாதித்த ஐசு
வரியம் அழிந்துபோகிறபடியினால் அப்படி
37 தொனிக்கும். தலைகள் எல்லாம் மொட்டை
யிடப்பட்டும், [2]தாடிகள் எல்லாம் கத்தரிக்கப்
பட்டும் இருக்கும்; கைகளில் எல்லாம் கீறுதல்
களும், [3]அரைகளில் இரட்டுடுப்பும் உண்டு.
38 மோவாபின் சகல வீடுகளின்மேலும் அதின்
தெருக்களிலேயும் ஏகப் புலம்பல் உண்டா
கும்; [4]ஒருவரும் விரும்பப்படாத பாத்திரம்
போல மோவாபை உடைத்துப்போட்டேன்
39 என்று கர்த்தர் சொல்லுகிறார். மோவாப்
எவ்வளவாய் முறிந்துபோயிற்றென்று அலறு
கிறார்கள்; அது முதுகைக்காட்டி எவ்வளவாய்
வெட்கப்படும்? இப்படி மோவாப் தன் சுற்
றுப்புறத்தார் அனைவருக்கும் பரியாசமும்
40 திகைப்புமாயிருக்கும். இதோ, ஒருவன் கழு
கைப்போல் பறந்துவந்து, [5]மோவாபின்மேல்
41 தன் செட்டைகளை விரிப்பான். கீரியோத்
பிடிக்கப்படும், கோட்டைகள் கைவசமாகும்;
அந்நாளிலே மோவாபின் பராக்கிரமசாலிகளு
டைய இருதயம் [6]பிரசவவேதனைப்படுகிற
42 ஸ்திரீயின் இருதயம்போல இருக்கும். மோ
வாப் கர்த்தருக்கு விரோதமாய்ப் பெருமை

பாராட்டினபடியால், [7]அது ஒரு ஜனமாயிராத
படிக்கு அழிக்கப்படும். மோவாப்தேசத்தின் 43
குடியானவனே, [8]திகிலும், படுகுழியும், கண்
ணியும் உன்மேல் வரும் என்று கர்த்தர் சொல்
லுகிறார். திகிலுக்கு விலக ஓடுகிறவன் படு 44
குழியிலே விழுவான்; படுகுழியிலிருந்து ஏறு
கிறவனோ கண்ணியிலே பிடிபடுவான்; [9]அவர்
கள் விசாரிக்கப்படும் வருஷத்தை அதின்மேல்,
அதாவது, மோவாபின்மேல் வரப்பண்ணு
வேன் என்று கர்த்தர் சொல்லுகிறார். வல்ல 45
டிக்குத் தப்ப ஓடிப்போகிறவர்கள் எஸ்போ
னின் நிழலில் தரித்து நின்றார்கள்; ஆனாலும்
நெருப்பு எஸ்போனிலும், அக்கினிஜுவாலை
சீகோன் நடுவிலுமிருந்து புறப்பட்டு, மோவாப்
தேசத்தின் எல்லைகளையும், கலகஞ்செய்கிறவர்
களின் உச்சந்தலையையும் பட்சிக்கும். மோவா 46
பே, உனக்கு ஐயோ! கேமோஷ் விக்கிரகத்தை
யடுத்த ஜனம் அழியும், உன் குமாரரும் சிறை
பிடிக்கப்படுகிறார்கள், உன் குமாரத்திகளும்
சிறைபிடிக்கப்பட்டுப் போகிறார்கள். ஆனா 47
லும் கடைசிநாட்களில் மோவாபின் சிறையி
ருப்பைத் திருப்புவேன் என்று கர்த்தர் சொல்
லுகிறார். [10]மோவாபின்மேல் வரும் நியாயத்தீர்
ப்பின் செய்தி இத்தோடே முடிந்தது.

அம்மோன் புத்திரரைக்குறித்துக் கர்த்தர் 49
சொல்லுகிறது என்னவென்றால்: [11]இஸ்ர
வேலுக்குக் குமாரர் இல்லையோ? அவனுக்
குச் சுதந்தரவாளி இல்லையோ? அவர்கள்
ராஜா காத்தேசத்தைச் சுதந்தரித்துக்கொண்டு,
அதின் ஜனம் இவன் பட்டணங்களில் குடி
யிருப்பானேன்? ஆகையால், இதோ, நாட் 2
கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார்,
அப்பொழுது அம்மோன் புத்திரரின் பட்டண
மாகிய ரப்பாவிலே யுத்தத்தின் ஆர்ப்பரிப்
பைக் கேட்கப்பண்ணுவேன்; அது பாழான
மண்மேடாகும்; அதற்கடுத்த ஊர்களும் அக்
கினியால் சுட்டெரிக்கப்படும்; ஆனாலும் இஸ்
ரவேல் தன் தேசத்தைச் சுதந்தரித்துக்கொண்
டவர்களின் தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்
ளும் என்று கர்த்தர் சொல்லுகிறார். எஸ் 3
போனே, அலறு; ஆயி பாழாக்கப்பட்டது;
ரப்பாவின் குமாரத்திகளே, ஓலமிடுங்கள்;
இரட்டை உடுத்திக்கொண்டு, புலம்பி, வேலி
களில் சுற்றித் திரியுங்கள்; அவர்கள் ராஜா
அதின் ஆசாரியர்களோடும் அதின் பிரபுக்க
ளோடுங்கூடச் சிறைபட்டுப்போவான். என 4
க்கு விரோதமாய் வருகிறவன் யார் என்று
சொல்லி, [12]உன் செல்வத்தை நம்பின சீர்கெ
ட்ட குமாரத்தியே, நீ பள்ளத்தாக்குகளைப்பற்
றிப் பெருமை பாராட்டுவானேன்? உன் பள்
ளத்தாக்குக் கரைந்துபோகிறது. இதோ, உன் 5
சுற்றுப்புறத்தார் எல்லாராலும் உன்மேல் தி
கிலை வரப்பண்ணுவேன் என்று சேனைகளின்
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்; நீங்
கள் அவரவர் தம்தம் முன் இருக்கும் வழியே
ஓடத் துரத்தப்படுவீர்கள்; வலசை வாங்கி ஓடு
கிறவர்களைச் சேர்ப்பார் ஒருவருமில்லை. அதற் 6

[1] ஏசா. 15. 5
[2] 47. 5
[3] ஆதி. 37. 34
[4] 22. 28. ரோ. 9. 21
[5] 49. 22. உபா. 28. 49. தானி. 7. 4. ஆப. 1. 8
[6] ஏசா. 21. 3. மீகா. 4. 9
[7] 26. ௸
[8] ஏசா. 24. 17, 18
[9] 11. 23
[10] 49. 6, 39
[11] எசே. 21. 28: 25. 2. ஆமோ. 1. 13–15. செப். 2. 8–10
[12] 21. 13

குப் பின்பு [1]அம்மோன் புத்திரருடைய சிறை
யிருப்பைத் திருப்புவேன் என்று **கர்த்தர்**
சொல்லுகிறூர்.
7 ஏதோமைக்குறித்துச் சேனைகளின் **கர்த்தர்**
சொல்லுகிறது என்னவென்றூல்: [2]தேமானி
லே இனி ஞானமில்லையோ? [3]ஆலோசனை
விவேகிகளை விட்டு அழிந்ததோ? அவர்களு
8 டைய ஞானம் கெட்டுப்போயிற்ரூ? தே
தானின் குடிகளே, ஓடுங்கள், முதுகைக்
காட்டுங்கள், பள்ளங்களில் பதுங்குங்கள்; [4]ஏ
சாவை விசாரிக்குங்காலத்தில் அவன் ஆபத்
9 தை அவன்மேல் வரப்பண்ணுவேன். திராட்
சப்பழங்களை அறுக்கிறவர்கள் உன்னிடத்
திலே வந்தார்களாகில், பின்பறிக்கிறதற்குக்
கொஞ்சம் வையார்களோ? இராத்திரியில் திரு
டர் வந்தார்களாகில், தங்களுக்குப் போது
மென்கிறமட்டும் கொள்ளையடிப்பார்கள் அல்
10 லவோ? நானே ஏசாவை வெறுமையாக்கி,
[5]அவன் ஒளித்துக்கொள்ளக் கூடாதபடிக்கு
அவனுடைய மறைவிடங்களை வெளிப்படுத்
திப்போடுவேன்; அவனுடைய சந்ததியாரும்
அவனுடைய சகோதரரும் அவனுடைய அய
லாரும் அழிக்கப்படுவார்கள்; [6]அவன் இனி
11 இரான். திக்கற்றவர்களாய்ப் போகும் உன்
பிள்ளைகளை ஒப்புவி, நான் அவர்களை உயி
ரோடே காப்பாற்றுவேன்; உன் விதவைகள்
12 என்னை நம்புவார்களாக. **கர்த்தர்** சொல்லு
கிறது என்னவென்றூல்: இதோ, பாத்திரத்
தில் குடிக்கவேண்டுமென்கிற நியாயத்தீர்ப்
புக்கு உள்ளாயிராதவர்கள் அதில் குடித்தார்
கள்; [7]நீ குற்றமற்று நீங்கலாயிருப்பாயோ?
நீ நீங்கலாயிராமல் அதில் நிச்சயமாய்க் குடிப்
13 பாய். போஸ்ரூ பாழும் நிந்தையும் அவாந்
தரமும்சாபமுமாக இருக்குமென்றும், [8]அதின்
பட்டணங்கள் எல்லாம் நித்திய வனாந்தரங்க
ளாயிருக்குமென்றும்என்னைக்கொண்டு ஆணை
யிட்டேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறூர்.
14 நீங்கள் கூடிக்கொண்டு, அதற்கு விரோத
மாக வந்து, யுத்தம்பண்ணுகிறதற்கு எழும்புங்
கள் என்று சொல்ல, [9]ஜாதிகளிடத்தில் ஸ்தா
னாதிபதியை அனுப்புகிற செய்தியைக் **கர்த்த**
15 **ரி**டத்திலே கேள்விப்பட்டேன். இதோ, உன்
னை ஜாதிகளுக்குள்ளே சிறியதும், [10]மனுஷ
ருக்குள்ளே அசட்டைபண்ணப்பட்டது மாக்
16 குகிறேன் என்கிறூர். கன்மலை வெடிப்பு
களில் வாசம்பண்ணி, மேடுகளின் உச்சி
யைப் பிடித்திருக்கிறவனே, உன்னுல் உன்
பயங்கரமும் உன் இருதயத்தின் அகந்தை
யும்உன்னை மோசம்போக்கிற்று; [11]நீ கழுகைப்
போல் உயரத்தில் உன் கூட்டைக் கட்டினு
லும் அங்கேயிருந்து உன்னை விழப்பண்ணு
17 வேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறூர். அப்
படியே ஏதோம் பாழாகும்; [12]அதைக் கடந்து
போகிறவன் எவனும் அதின் எல்லா வாதை
களினிமித்தமும் பிரமித்து ஈசல்போடுவான்.
18 சோதோமும் கொமோராவும் அவைகளின்
சுற்றுப்புறங்களும் கவிழ்க்கப்பட்டதுபோல

இதுவும் கவிழ்க்கப்படும் என்று **கர்த்தர்** சொ
ல்லுகிறூர்; [13]அங்கே ஒருவனும் குடியிருப்ப
தில்லை, அதில் ஒரு மனுபுத்திரனும் தங்குவ
தில்லை. இதோ, புரண்டு ஓடுகிற யோர்தா 19
னிடத்திலிருந்து சிங்கம் வருவதுபோல் பல
வானுடைய தாபரத்துக்கு விரோதமாக வரு
கிறூன்; [14]அவனைச் சடுதியிலே அங்கேயிரு
ந்து ஓடிவரப்பண்ணுவேன்; நான் அதற்கு
விரோதமாய்க் கட்டளையிட்டு அனுப்பத் தெரி
ந்துகொள்ளப்பட்டவன் யார்? எனக்குச் சமா
னமானவன் யார்? [15]எனக்கு மட்டுக்கட்டுகிற
வன் யார்? [16]எனக்குமுன்பாக நிலைநிற்கப்போ
கிற மேய்ப்பன் யார்? ஆகையால் **கர்த்தர்** 20
ஏதோமுக்கு விரோதமாக யோசித்த ஆலோ
சனையையும், அவர் தேமானின் குடிகளுக்கு
விரோதமாக நினைத்திருக்கிற நினைவுகளையும்
கேளுங்கள்; [17]மந்தையில் சிறியவர்கள் மெய்
யாகவே அவர்களைப் பிடித்திழுப்பார்கள்,
அவர்கள் இருக்கிற தாபரங்களை அவர் மெய்
யாகவே பாழாக்குவார். அவைகள் இடிந்து 21
விழும் சத்தத்தினுலே பூமி அதிரும்; கூக்குர
லின் சத்தம் சிவந்த சமுத்திரமட்டும் கேட்கப்
படும். இதோ, ஒரு கழுகைப்போல எழு 22
ம்பி, பறந்துவந்து, தன் செட்டைகளைப் போ
ஸ்ரூவின்மேல் விரிப்பான்; [18]அந்நாளிலே
ஏதோமுடைய பராக்கிரமசாலிகளின் இருத
யம் பிரசவவேதனைப்படுகிற ஸ்திரீயின் இரு
தயம்போல இருக்கும் என்கிறூர்.
தமஸ்குவைக்குறித்துச் சொல்வது: [19]ஆமா 23
த்தும் அர்ப்பாத்தும் கலங்குகிறது; பொல்லாத
செய்தியை அவர்கள் கேட்டபடியினுல் கரை
ந்துபோகிறூர்கள்; சமுத்திரத்தோரமாய்ச் சஞ்
சலமுண்டு; அதற்கு அமைதலில்லை. தமஸ்கு 24
தளர்ந்துபோம்,புறங்காட்டி ஓடிப்போம்;திகில்
அதைப் பிடித்தது; பிரசவ ஸ்திரீயைப்போல
இடுக்கமும் வேதனைகளும் அதைப் பிடித்தது.
சந்தோஷமான என் ஊராகிய அந்தப் புகழ்ச் 25
சியுள்ள நகரம் [20]தப்பவிடப்படாமற்போயிற்
றே! ஆதலால் அதின் வாலிபர் அதின் 26
வீதிகளில் விழுந்து, [21]யுத்தமனுஷர் எல்லா
ரும் அந்நாளிலே சங்காரமாவார்கள் என்று
சேனைகளின் **கர்த்தர்** சொல்லுகிறூர். தமஸ்கு 27
வின் மதில்களில் தீக்கொளுத்துவேன்; [22]அது
பெனாதாத்தின் அரமனைகளைப் பட்சிக்கும்
என்கிறூர்.
பாபிலோன் ராஜாவாகிய நேபுகாத்நேச்சார் 28
முறியடிக்கும் கேதாரையும் காத்சோருடைய
ராஜ்யங்களையும் குறித்துக் **கர்த்தர்** சொல்லு
கிறது என்னவென்றூல்: [23]எழும்பி, கேதாரு
க்கு விரோதமாகப் போய், கீழ்த்திசைப் புத்
திரரைப் பாழாக்குங்கள். அவர்களுடைய 29
கூடாரங்களையும் அவர்களுடைய மந்தைகளை
யும் வாங்கி, [24]அவர்களுடைய திரைகளையும்
அவர்களுடைய எல்லாத் தட்டுமுட்டுகளையும்
அவர்களுடைய ஒட்டகங்களையும் தங்களுக்
கென்று கொண்டுபோய், எத்திசையும் பயம்
என்று சொல்லி, அவர்கள்மேல் ஆர்ப்பரிப்

1 39. ௸. 48. 47
2 எசே. 25. 12. மு. ஆமோ. 1. 11, 12
3 யோபு 5. 12, 13. ஒப. 3. மு.
4 25. 23
5 மல். 1. 3
6 ஏசா. 17. 14
7 25. 29
8 ஏசா. 34. 6: 63. 1. ஆமோ. 6. 8
9 எசே. 7. 25, 26
10 1 சாமு. 2. 30. சங். 58. 5. ஒப. 2. மு.
11 ஆமோ. 9. 2
12 18. 16: 50. 13
13 50. 40. ஆதி. 19. 24, 25. உபா. 29. 23. ஆமோ. 4. 11
14 12. 5
15 யாத். 15. 11. ஏசா. 40. 25
16 யோபு 41. 10. சங். 76. 7. வெளி. 6. 17
17 50. 45. யோபு 6. 19, 20
18 48. 40, 41
19 ஏசா. 17. 1. மு. ஆமோ. 1. 3–5. சகரி. 9. 1, 2
20 33. 9. ஏசா. 1. 26
21 50. 30
22 ஆமோ. 1. 4
23 ஏசா. 21. 13–17
24 சங். 120. 5

30 பார்கள். காத்சோரின் குடிகளே, ஓடி,
தூரத்தில் அலையுங்கள்; பள்ளத்தில் ஒதுங்கிப்
பதுங்குங்கள் என்று **கர்த்தர்** சொல்லுகிறார்;
பாபிலோன் ராஜாவாகிய நேபுகாத்நேச்சார்
உங்களுக்கு விரோதமாக ஆலோசனைசெய்து,
உங்களுக்கு விரோதமாக உபாயங்களைச் சிந்
31 தித்திருக்கிறான். அஞ்சாமல் நிர்விசாரமா
ய்க் குடியிருக்கிற ஜாதிக்கு விரோதமாக எழும்
பிப்போங்கள் என்று **கர்த்தர்** சொல்லுகிறார்;
[1]அதற்கு வாசல்களுமில்லை, தாழ்ப்பாள்களு
மில்லை; அவர்கள் தனிப்படத் தங்கியிருக்கி
32 றார்கள். அவர்களுடைய ஒட்டகங்கள் கொ
ள்ளையும், அவர்களுடைய ஆடுமாடுகளின்
ஏராளம் சூறையுமாகும்; நான் அவர்களைச்
சகல திசைகளுமான கடையாந்தர மூலைகளில்
இருக்கிறவர்களிடத்துக்குச் சிதறடித்துவிட்டு,
[2]அதினுடைய சகல பக்கங்களிலுமிருந்து
அவர்களுக்கு ஆபத்தை வரப்பண்ணுவேன்
33 என்று **கர்த்தர்** சொல்லுகிறார். ஆத்சோர்
வலுசர்ப்பங்களின் தாபரமாகி, [3]என்றென்
றைக்கும் பாழாய்க் கிடக்கும்; ஒருவனும்
அங்கே குடியிருப்பதில்லை, ஒரு மனுபுத்திர
னும் அதிலே தங்குவதுமில்லை யென்கிறார்.
34 யூதா ராஜாவாகிய சிதேக்கியாவினுடைய
ராஜ்யபாரத்தின் துவக்கத்திலே, [4]ஏலாமுக்கு
விரோதமாக எரேமியா என்னும் தீர்க்கதரி
சிக்கு உண்டான **கர்த்தருடைய** வசனம்:
35 சேனைகளின் **கர்த்தர்** சொல்லுகிறது என்ன
வென்றால்: இதோ, நான் ஏலாமின் வில்லெ
ன்னும் அவர்களுடைய பிரதான வல்லமை
36 யை முறித்துப்போட்டு, வானத்தின் நாலு
திசைகளிலுமிருந்து நாலு காற்றுகளை ஏலா
மின்மேல் வரப்பண்ணி, அவர்களை இந்த எல்
லாத் திசைகளிலும் சிதறடிப்பேன்; ஏலாம்
தேசத்திலிருந்து துரத்துண்டவர்கள் சகல
37 ஜாதிகளிலும் சிதறப்படுவார்கள். நான் ஏலா
மியரை அவர்கள் சத்துருக்களுக்கு முன்பாக
வும், அவர்கள் பிராணனை வாங்கத் தேடு
கிறவர்களுக்கு முன்பாகவும் கலங்கப்பண்
ணி, என் கோபத்தின் உக்கிரமாகிய தீங்
கை அவர்கள்மேல் வரப்பண்ணுவேன்
என்று **கர்த்தர்** சொல்லுகிறார்; நான் அவர்
களை நிர்மூலமாக்குமட்டும் பட்டயத்தை
38 அவர்களுக்குப் பின்னாக அனுப்பி, என்
சிங்காசனத்தை ஏலாமிலே வைத்து, அங்கே
யிருந்து ராஜாவையும் பிரபுக்களையும் அழித்
துப்போடுவேன் என்று **கர்த்தர்** சொல்லுகி
39 றார். ஆனாலும் கடைசிநாட்களிலே [5]நான்
ஏலாமின் சிறையிருப்பைத் திருப்புவேன்
என்று **கர்த்தர்** சொல்லுகிறார்.

**50** **கர்த்தர்** தீர்க்கதரிசியாகிய எரேமியாவைக்
கொண்டு [6]பாபிலோனுக்கும் கல்தேயர் தே
சத்துக்கும் விரோதமாக உரைத்த வசனம்:
2 பாபிலோன் பிடிபட்டது; பேல் வெட்
கப்பட்டது; [7]மெரொதாக் நொறுங்குண்டது;
அதினுடைய சிலைகள் இலச்சையடைந்தது;
அதினுடைய விக்கிரகங்கள் நொறுங்கிப்போ
யின என்று ஜாதிகளுக்குள்ளே அறிவித்துப்
பிரசித்தம் பண்ணுங்கள்; இதை மறைக்காமல்
கொடியேற்றி விளம்பரம் பண்ணுங்கள். அத 3
ற்கு விரோதமாய் வடக்கேயிருந்து ஒரு ஜாதி
வந்து, அதின் தேசத்தைப் பாழாக்கிப்போடும்;
அதிலே குடியிருப்பாரில்லை; மனுஷரோடே
மிருகங்களும் ஓடிப்போய்விடும். அந்நாட்களி 4
லும் அக்காலத்திலும் இஸ்ரவேல் புத்திரர்
வருவார்கள்; [8]அவர்களும் யூதா புத்திரரும் ஏக
மாய் அழுது, நடந்துவந்து, தங்கள் தேவனா
கிய **கர்த்தரைத்** தேடுவார்கள் என்று **கர்த்தர்**
சொல்லுகிறார். மறக்கப்படாத நித்திய உடன் 5
படிக்கையினால் நாம் **கர்த்தரைச்** சேர்ந்து
கொள்வோம் வாருங்கள் என்று சீயோனுக்
கு நேராய் முகங்களைத் திருப்பி, [9]சீயோனுக்
குப் போகிற வழி எதுவென்று கேட்டு விசா
ரிப்பார்கள்.
என் ஜனங்கள் காணாமற்போன ஆடுகள், 6
[10]அவர்களுடைய மேய்ப்பர்கள் அவர்களைச்
சிதறப்பண்ணி, பர்வதங்களில் அலையவிட்டார்
கள்; ஒரு மலையிலிருந்து மறு மலைக்குப் போ
னார்கள்; [11]தங்கள் தொழுவத்தை மறந்துவிட்
டார்கள். அவர்களைக் கண்டுபிடித்தவர்கள் 7
எல்லாரும் அவர்களைப் பட்சித்தார்கள்; [12]அவர்
களுடைய சத்துருக்கள்: எங்கள்மேல் குற்ற
மில்லை; அவர்கள் நீதியின் வாசஸ்தலத்திலே
**கர்த்தருக்கு** விரோதமாக, தங்கள் பிதாக்கள்
நம்பின **கர்த்தருக்கு** விரோதமாகவே, [13]பாவஞ்
செய்தார்கள் என்றார்கள். பாபிலோனின் 8
நடுவிலிருந்தோடி, கல்தேயரின் தேசத்தை
விட்டுப் புறப்பட்டு, [14]மந்தையின்முன் நடக்
கும் கடாக்களைப்போல் இருங்கள். இதோ, 9
நான் பாபிலோனுக்கு விரோதமாக வடதேசத்
தில் இருக்கும் பெரிய ஜாதிகளின் கூட்டத்
தை எழுப்பி, அதை வரப்பண்ணுவேன்;
அவர்கள் அதற்கு விரோதமாக ஆயத்தம்பண்
ணுவார்கள்; அங்கேயிருந்து வருகிறவர்களால்
அது பிடிக்கப்படும்; அவர்களுடைய அம்புகள்
சாமர்த்தியமுள்ள பராக்கிரமசாலியின் அம்பு
களைப்போல் இருக்கும்; [15]அவைகள் விருதா
வாய்த் திரும்புவதில்லை. கல்தேயா கொள்ளை 10
யாகும், [16]அதைக் கொள்ளையிடுகிறவர்கள் எல்
லாரும் பரிபூரணமடைவார்கள் என்று **கர்த்தர்**
சொல்லுகிறார். என் சுதந்தரத்தைக் கொள்ளை 11
யிட்ட நீங்கள் சந்தோஷித்தீர்களே, களிகூர்ந்
தீர்களே, [17]புல்மேய்ந்து கொழுத்த கடாரி
யைப்போல் பூரித்து, வலிய ரிஷபம்போல்
முக்காரம்போடுகிறீர்களே. உங்கள் தாய் மிக 12
வும் வெட்கி, உங்களைப் பெற்றவள் நாணமடை
வாள்; இதோ, அவள் ஜாதிகளுக்குள்ளே கடை
சியாவதுமன்றி, வனாந்தரமும் வறட்சியும் அந்
தரவெளியுமாவாள். **கர்த்தரின்** கோபத்தி 13
னாலே அது குடியற்றதும் பெரும் பாழுமா
யிருக்கும்; [18]பாபிலோனைக் கடந்துபோகிற
எவனும் அதின் எல்லா வாதைகளினிமித்த
மும் பிரமித்து, ஈசல்போடுவான். நீங்கள் 14
எல்லாரும் பாபிலோனுக்கு விரோதமாய்ச்

[1] எண். 23. 9. எசே. 38. 11
[2] எசே. 5. 10
[3] மல். 1. 3
[4] 25. 25. ஏசா. 22. 6
[5] 6. வச
[6] ஏசா. 13. 21, 47. அதி
[7] 51. 44. ஏசா. 46. 1
[8] 31. 9. எஸ்றா 3. 12, 13. சங். 126. 5, 6. ஓசி. 1. 11: 3, 5. சகரி. 12. 10. அப். 2. 37
[9] 31. 33, 34. சங். 84. 7. ஏசா. 55. 3. 2 கொ. 8. 5
[10] ஏசா. 53. 6. 1 பே. 2. 25
[11] 3. 6, 23. உன்னத. 1. 7, 8
[12] 2. 3. சங். 79. 7
[13] சங். 22. 4: 90. 1. தானி. 9. 6
[14] 51. 6. 45. ஏசா. 48. 20. வெளி. 18. 4
[15] 2 சாமு. 1. 22
[16] வெளி. 17. 16
[17] ஏசா. 47. 6
[18] 25. 12. சகரி. 1. 15

சுற்றிலும் அணிவகுத்து நின்று, வில்லை
நாணேற்றி, அதின்மேல் அம்புகளை எய்யுங்
கள்; அம்புச் செலவைப் பாராதேயுங்கள்;
[1]அது, **கர்த்தருக்கு** விரோதமாய்ப் பாவஞ்
15 செய்தது. அதற்கு விரோதமாய்ச் சுற்றிலும்
ஆர்ப்பரியுங்கள்; அது தன்னைக் கையளித்தது;
[2]அதின் அஸ்திபாரங்கள் விழுந்தது, அதின்
மதில்கள் இடிக்கப்பட்டது; இது **கர்த்தர்** வாங்
கும் பழி; [3]அதினிடத்தில் பழிவாங்குங்கள்;
[4]அது செய்ததுபோலவே நீங்களும் அதற்குச்
16 செய்யுங்கள். விதைவிதைக்கிறவனையும் அறுப்
புக்காலத்தில் அரிவாளைப் பிடிக்கிறவனையும்
பாபிலோனில் இராதபடிச் சங்காரம்பண்ணுங்
கள்; கொல்லுகிற பட்டயத்துக்குத் தப்ப அவ
ரவர் தங்கள் ஜனத்தண்டைக்குத் திரும்பிக்
கொண்டு, அவரவர் தங்கள் தேசத்துக்கு ஓடிப்
போவார்கள்.
17 இஸ்ரவேல் தெறிபட்டுப்போன ஆடு, சிங்
கங்கள் அதைத் துரத்தின; முதலில் அசீரியா
ராஜா அதைப் பட்சித்தான்; [5]கடைசியில் பாபி
லோன் ராஜாவாகிய இந்த நேபுகாத்நேச்சார்
18 அதின் எலும்புகளை முறித்தான். ஆகையால்,
இஸ்ரவேலின் தேவனுகிய சேனைகளின்
**கர்த்தர்** சொல்லுகிறது என்னவென்ருல்:
[6]இதோ, நான் அசீரியா ராஜாவை தண்டித்
ததுபோல் பாபிலோன் ராஜாவையும் அவன்
19 தேசத்தையும் தண்டித்து, இஸ்ரவேலை அதின்
வாசஸ்தலத்துக்குத் திரும்பிவரப் பண்ணு
வேன்; [7]அப்பொழுது அது கர்மேலிலும் பாசா
னிலும் மேயும்; எப்பிராயீமின் மலைகளிலும்
கீலேயாத்திலும் அதின் ஆத்துமா திருப்தியா
20 கும். அந்நாட்களிலும் அக்காலத்திலும் இஸ்ர
வேலின் அக்கிரமம் தேடப்பட்டாலும் அது
காணுதிருக்கும்; [8]யூதாவின் பாவங்கள் தேடப்
பட்டாலும் அவைகள் கிடையாதிருக்கும்;
நான் மீதியாக வைக்கிறவர்களுக்கு மன்னிப்
பேன் என்று **கர்த்தர்** சொல்லுகிருர்.
21 மெராதாயீம் தேசத்துக்கு விரோதமாகவும்
பேகோடு குடிகளுக்கு விரோதமாகவும் நீ
போய், அவர்களைத் துரத்தி, யாவையும் பாழாக்
கிச் சங்காரம்பண்ணி, [9]நான் உனக்குக்
கட்டளையிட்டபடியெல்லாம் செய் என்று
22 **கர்த்தர்** சொல்லுகிருர். தேசத்திலே யுத்தத்
தின் சத்தமும் [10]மகா சங்காரமும் உண்டு.
23 சர்வ பூமியின் சம்மட்டி எப்படி முறித்து
உடைக்கப்பட்டது! [11]ஜாதிகளுக்குள்ளே பாபி
24 லோன் எப்படிப் பாழாய்ப்போயிற்று! பாபி
லோனே, உனக்குக் கண்ணியை வைத்தேன்,
[12]நீ அதை அறியாமல் அதிலே சிக்குண்டு
போனுய்; நீ அகப்பட்டும் பிடிபட்டும்
போனுய், நீ **கர்த்தரோடே** யுத்தங் கலந்தாயே.
25 **கர்த்தர்** தம்முடைய ஆயுதசாலையைத்திறந்து,
தம்முடைய சினத்தின் அஸ்திராயுதங்களை
எடுத்துக்கொண்டு வந்தார்; [13]இது கல்தேயர்
தேசத்திலே சேனைகளின் **கர்த்தராகிய** ஆண்
26 டவர் செய்கிற கிரியை. கடையாந்தரத்தி
லிருந்து அதற்கு விரோதமாக வந்து, அதின்

1 49. 35: 51. 2
2 1 நாளா. 29. 24
3 ஏசா. 63. 4
4 வெளி. 18. 6
5 2 இரா. 17. 6: 24. 10. ஷ
6 ஏசா. 37. 36-38
7 33. 12. ஏசா. 65. 9, 10. எசே. 34. 13-15
8 ஏசா. 6. 13. ரோ. 8. 33, 34. 2 பே. 3. 15
9 எசே. 23. 23
10 51. 54
11 51. 20. ஏசா. 14. 6
12 பிர. 9. 12. தானி. 5. 30, 31
13 சங். 45. 3, 5. ஏசா. 13. 5
14 46. 21. ஏசா. 34. 7
15 51. 10, 11. புல. 1. 10: 2. 6, 7
16 14, 15. ஷ. வெளி. 18. 6
17 ஏசா. 47. 10
18 சக. 16. 18
19 வெளி. 18. 8
20 ஏசா. 47. 4: 51. 22. வெளி. 18. 8
21 ஏசா. 47. 13
22 ஏசா. 44. 25. 2 தெச. 2. 11
23 25. 20, 24: 51. 30. எசே. 30. 5

களஞ்சியங்களைத் திறந்து, குவியல் குவியலா
கக் குவித்து, அதில் ஒன்றும் மீதியாகாத
படிக்கு அதை முற்றிலும் அழித்துப்போடுங்
கள். அதின் காளைகளையெல்லாம் வெட்டுங் 27
கள்; [14]அவைகள் கொலைக்களம்சேரக்கடவது;
ஐயோ! அவர்கள் விசாரிக்கப்படும் நாள் வந்
ததே. நம்முடைய தேவன் பழிவாங்கினதை, 28
[15]அவர் தமது ஆலயத்துக்காகப் பழிவாங்கின
தையே, சீயோனிலே அறிவிக்கும்படிக்கு,
பாபிலோன் தேசத்திலிருந்து தப்பியோடி வந்
தவர்களின் சத்தம் கேட்கப்படும். பாபிலோ 29
னுக்கு விரோதமாய் வரும்படி வில்வீரரை
அழையுங்கள்; வில் வளைக்கிறவர்களே, நீங்கள்
எல்லாரும் அதற்கு விரோதமாய்ச் சுற்றிலும்
பாளயமிறங்குங்கள், ஒருவரையும் தப்பவிடா
திருங்கள்; [16]அதின் கிரியைக்குத்தக்க பலனை
அதற்குச் சரிக்கட்டுங்கள்; அது செய்ததின்
படியெல்லாம் அதற்குச் செய்யுங்கள்; [17]அது
இஸ்ரவேலின் பரிசுத்தராகிய **கர்த்தருக்கு**
விரோதமாக இடும்பு செய்தது. ஆகையால் 30
அதின் வாலிபர் அதின் வீதிகளில் விழுவார்
கள்; அதின் யுத்தவீரர் எல்லாரும் அந்நாளிலே
சங்காரமாவார்கள் என்று **கர்த்தர்** சொல்லு
கிருர். இதோ, இடும்புள்ளவனே, நான் உன 31
க்கு விரோதமாக வருகிறேன் என்று சேனை
களின் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிருர்;
நான் உன்னை விசாரிக்குங்காலமாகிய உன்னு
டைய நாள் வந்தது. இடும்புள்ளவன் இடறி 32
விழுவான்; [18]அவனை எடுத்து நிறுத்துவாரி
ல்லை; [19]நான் அவனுடைய பட்டணங்களில்
அக்கினியைக் கொளுத்துவேன், அது அவன்
சுற்றுப்புறத்தார் எல்லாரையும் பட்சிக்கும்.
சேனைகளின் **கர்த்தர்** சொல்லுகிறது என்ன 33
வென்ருல்: இஸ்ரவேல் புத்திரரும் யூதா புத்
திரரும் ஏகமாய் ஒடுங்குண்டார்கள்; அவர்க
ளைச் சிறையாக்கின யாவரும் அவர்களை விட
மாட்டோம் என்று கெட்டியாய்ப் பிடித்துக்
கொண்டார்கள். அவர்களுடைய மீட்பரோ 34
வெனில் வல்லமையுள்ளவர், [20]சேனைகளின்
**கர்த்தர்** என்பது அவருடைய நாமம்;
தேசத்தை இளைப்பாறப் பண்ணுவதற்கும்,
பாபிலோன் குடிகளைத் தத்தளிக்கப்பண்ணுவ
தற்கும் அவர்களுடைய வழக்கை அவர் நடத்
துவார். பட்டயம் கல்தேயர்மேலும், பாபி 35
லோன் குடிகள்மேலும், அதினுடைய பிரபுக்
கள்மேலும், [21]அதினுடைய ஞானிகள்மேலும்
வருமென்று **கர்த்தர்** சொல்லுகிருர். பட் 36
டயம் பொய்களைப் பிணைக்கிறவர்கள்மேலும்
வரும்; [22]அவர்கள் பைத்தியக்காரராவார்
கள்; பட்டயம் அதின் பராக்கிரமசாலிகள்
மேலும் வரும், அவர்கள் கலங்குவார்கள்.
பட்டயம் அதின் குதிரைகள்மேலும், அதின் 37
இரதங்கள்மேலும், அதின் நடுவில் இருக்
கிற பல ஜாதியான ஜனங்கள் யாவர்மேலும்
வரும், [23]அவர்கள் பேடிகளாவார்கள்; பட்ட
யம் அதின் பொக்கிஷங்கள்மேல் வரும்,
அவைகள் கொள்ளையாகும். வறட்சி அதின் 38

தண்ணீர்கள்மேல் வரும், அவைகள் வறண்டு
போம்; [1]அது விக்கிரக தேசம்; அருக்களிப்
பான சிலைகளின்மேல் மனமயங்கியிருக்கிறார்
39 கள். ஆகையால் காட்டுமிருகங்களும் ஓரிக
ளும் அதிலே குடியிருக்கும்; [2]கோட்டான்கள்
அதிலே தங்கும்; இனி என்றென்றைக்கும்
அது குடியேற்றப்படுவதில்லை; தலைமுறை
தலைமுறையாக ஒருவரும் அதில் சஞ்சரிப்பது
40 மில்லை. தேவன் சோதோமையும் கொமோ
ராவையும் அதின் சுற்றுப்புறங்களையும் கவிழ்த்
துப்போட்டதுபோல [3]இதையும் கவிழ்த்துப்
போடுவேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறார்;
ஒருவரும் அதில் குடியிருப்பதில்லை, ஒரு
41 மனுபுத்திரனும் அதில் தங்குவதுமில்லை. இ
தோ, வடக்கேயிருந்து ஒரு ஜனமும் பெரிய
ஜாதியும் வரும்; [4]பூமியின் எல்லைகளிலிருந்து
42 பலத்த ராஜாக்கள் எழும்புவார்கள். அவர்கள்
வில்லும் வேலும் பிடித்துவருவார்கள்; அவர்
கள் இரக்கமில்லாத கொடியர்; [5]அவர்கள்
இரைச்சல் சமுத்திர இரைச்சல்போல் இருக்
கும்; பாபிலோன் குமாரத்தியே, அவர்கள்
உனக்கு விரோதமாக யுத்தத்துக்கு ஆயத்தப்
பட்ட ஆட்களாய்க் குதிரைகளின்மேல் ஏறி
43 வருவார்கள். அவர்கள் வருகிற செய்தியைப்
பாபிலோன் ராஜா கேட்கையில் அவன் கை
கள் தளரும்; [6]இடுக்கமும் பிரசவவேதனைப்
படுகிறவளுக் குண்டாகும் வேதனையைப்
போன்ற வேதனையும் அவனைப் பிடிக்கும்.
44 இதோ, புரண்டு ஓடுகிற யோர்தானிலிருந்து
சிங்கத்தைப்போல் பலவானுடைய தாபரத்
துக்கு விரோதமாக வருகிறான்; அவனை அங்
கேயிருந்து சடிதியிலே ஓடிவரப்பண்ணுவே
ன்; நான் அதற்கு விரோதமாகக் கட்டளை
யிட்டு, அனுப்பத் தெரிந்துகொள்ளப்பட்ட
வன் யார்? எனக்குச் சமானமானவன் யார்?
எனக்குத் திட்டஞ்சொல்பவன் யார்? எனக்கு
முன்பாக நிற்கப்போகிற [7]மேய்ப்பன் யார்?
45 ஆகையால் **கர்த்தர்** பாபிலோனுக்கு விரோத
மாக யோசித்த ஆலோசனையையும், அவர் கல்
தேயர் தேசத்துக்கு விரோதமாக நினைத்திருக்
கிற நினைவுகளையும் கேளுங்கள்; [8]மெய்யாக
வே மந்தையில் சிறியவர்கள் அவர்களைப் பிடித்
திழுப்பார்கள்; மெய்யாகவே அவர்கள் இருக்
46 கிற தாபரங்களை அவர் பாழாக்குவார். பாபி
லோன் பிடிபட்டதின் சத்தத்தினால் பூமி
அதிரும், [9]அதின் கூப்பிடுதல் ஜாதிகளுக்
குள்ளே கேட்கப்படும்.

**51** **கர்த்தர்** சொல்லுகிறது என்னவென்றால்:
இதோ, நான் பாபிலோனுக்கு விரோதமாக
வும், எனக்கு விரோதமாய் எழும்புகிறவர்
களின் மத்தியில் குடியிருக்கிறவர்களுக்கு
விரோதமாகவும் [10]அழிக்கும் காற்றை எழும்
2 பப்பண்ணி, தூற்றுவாரைப் பாபிலோனுக்கு
அனுப்புவேன்; [11]அவர்கள் அதைத் தூற்றி,
வெறுமையாக்கிப் போடுவார்கள்; ஆபத்துநா
ளிலே அதற்கு விரோதமாய்ச் சூழ்ந்துகொண்
3 டிருப்பார்கள். வில்லை நாணேற்றுகிறவனு
க்கு விரோதமாகவும், தன் கவசத்தில் பெரு
மை பாராட்டுகிறவனுக்கு விரோதமாகவும்,
வில்வீரன் தன் வில்லை நாணேற்றக்கடவன்;
அதின் வாலிபரைத் தப்பவிடாமல் அதின்
சேனையை எல்லாம் சங்காரம் பண்ணுங்கள்.
குத்திப்போடப்பட்டவர்கள் கல்தேயரின் தே 4
சத்திலும், [12]கொலைசெய்யப்பட்டவர்கள் அதி
ன் வீதிகளிலும் விழுவார்கள். அவர்கள் தே 5
சம் இஸ்ரவேலின் பரிசுத்தருக்கு விரோத
மாகச் செய்த அக்கிரமத்தினால் நிறைந்திருந்
தும், [13]யூதா தன் தேவனாலும் இஸ்ரவேல் சே
னைகளின் **கர்த்தராலும்** கைவிடப்படவில்லை.
நீங்கள் பாபிலோனின் அக்கிரமத்தில் சங்கா 6
ரமாகாதபடிக்கு அதின் நடுவிலிருந்து ஓடி,
அவரவர் தங்கள் ஆத்துமாவைத் தப்புவியுங்
கள்; [14]இது **கர்த்தர்** அதினிடத்தில் பழிவாங்
குகிற காலமாயிருக்கிறது; அவர் அதற்குப்
பதில் செலுத்துவார். பாபிலோன் **கர்த்தரு** 7
**டைய** கையிலுள்ள பொற்பாத்திரம்; [15]அது
பூமி அனைத்தையும் வெறிக்கப்பண்ணினது;
அதின் மதுவை ஜாதிகள் குடித்தார்கள்; ஆகை
யால் ஜாதிகள் புத்திமயங்கிப் போனார்கள்.
பாபிலோன் சடிதியில்விழுந்துதகர்ந்தது; அதற் 8
காக அலறுங்கள்; [16]அதின் நோவை ஆற்றப்
பிசின்தைலம் போடுங்கள்; ஒருவேளை குண
மாகும். பாபிலோனைக் குணமாக்கும்படிப் 9
பார்த்தோம், அது குணமாகவில்லை; [17]அதை
விட்டுவிடுங்கள்; நாம் அவரவர் நம்முடைய
தேசங்களுக்குப்போகக்கடவோம்; அதின் ஆக்
கினை வானமட்டும் எறி, ஆகாயமண்டலங்கள்
பரியந்தம் எட்டினது. **கர்த்தர்** நம்முடைய 10
நீதியை வெளிப்படுத்தினார்; [18]நம்முடைய தே
வனாகிய **கர்த்தரின்** செயலைச் சீயோனில் விவ
ரிப்போம் வாருங்கள். அம்புகளைத் துலக்குங் 11
கள்; [19]கேடகங்களை நன்றாய்ச் செப்பனிடுங்
கள்; **கர்த்தர்** மேதியருடைய ராஜாக்களின்
ஆவியை எழுப்பினார்; பாபிலோனை அழிக்க
வேண்டு மென்பதே அவருடைய நினைவு;
இது **கர்த்தர்** வாங்கும்பழி, [20]இது தமது ஆல
யத்துக்காக அவர் வாங்கும் பழி. பாபிலோ 12
னின் மதில்கள்மேல் கொடியேற்றுங்கள், [21]கா
வலைப் பலப்படுத்துங்கள், சாமங் காக்கிறவர்
களை நிறுத்துங்கள், பதிவிருப்பாரை வையுங்
கள்; ஆனாலும் **கர்த்தர்** எப்படி நினைத்தா
ரோ அப்படியே தாம் பாபிலோனின் குடி
களுக்கு விரோதமாகச் சொன்னதைச் செய்
வார். திரளான தண்ணீர்களின்மேல் வாசம் 13
பண்ணுகிறவளே, திரண்ட சம்பத்துடையவ
ளே, [22]உனக்கு முடிவும் உன் பொருளாசை
க்கு ஒழிவும் வந்தது. மெய்யாகவே, பச்சைக் 14
கிளிகளைப்போல் திரளான மனுஷரால் உன்
னை நிரம்பப்பண்ணுவேன்; [23]அவர்கள் உன்
மேல் ஆரவாரம்பண்ணுவார்கள் என்று சேனை
களின் **கர்த்தர்** தம்முடைய ஜீவனைக்கொண்டு
ஆணையிட்டார்.

அவர் பூமியைத் தமது வல்லமையினால் 15
உண்டாக்கி, பூச்சக்கரத்தைத் தமது ஞானத்தி

1 ஏசா. 44. 27. வெளி. 16. 12
2 26. 12. ஏசா. 13. 20
3 ஆதி. 19. 24, 25
4 6. 12: 51. 27. வெளி. 17. 16
5 ஏசா. 13. 17, 19
6 தானி. 5. 6
7 யோபு 41. 10
8 ஏசா. 14. 24, 27
9 வெளி. 18. 9, 15
10 4. 11, 12. 2 இரா. 19. 7
11 15. 7. மத். 3. 12
12 49. 26
13 31. 37. ஏசா. 44. 21. மீகா. 7. 18–20. சகரி. 2. 12
14 50. 18. ஞு. ஆதி. 19. 16, 17
15 25. 16. வெளி. 14. 8: 17. 4: 18. 3. ஞு
16 ஏசா. 13. 6, 7: 21. 9
17 8. 20. மத். 25. 10–13
18 50. 28. சங். 37. 8. மீகா 7. 9, 10
19 46. 4
20 50. 28
21 நாகூ. 2. 1; 3. 14
22 ஆப. 2. 9, 10. வெளி. 17. 1, 15
23 நாகூ. 3. 15, 17

னால் படைத்து, [1]வானத்தைத் தமது பேரறிவி
16 னால் விரித்தார். அவர் சத்தமிடுகையில் திர
ளான தண்ணீர் வானத்தில் உண்டாகிறது;
[2]அவர் பூமியின் எல்லைகளிலிருந்து மேகங்
களை எழும்பப்பண்ணி, மழையுடனே மின்
னல்களை உண்டாக்கி, காற்றைத் தமது பண்
17 டசாலையிலிருந்து புறப்படப்பண்ணுகிறார். மனுஷர்
அனைவரும் அறிவில்லாமல் மிருககுணமானார்
கள்; [3]தட்டார் அனைவரும் சுரூபங்களாலே
வெட்கிப்போகிறார்கள்; அவர்கள் வார்ப்பித்த
விக்கிரகம் பொய்யே, [4]அவைகளில் சுவாசம்
18 இல்லை. அவைகள் மாயையும் மகா எத்து
மான கிரியையாயிருக்கிறது; அவைகள் *விசா
19 ரிக்கப்படும் நாளிலே அழியும். யாக்கோபின்
பங்காயிருக்கிறவர் அவைகளைப்போல அல்ல,
[5]அவர் சர்வத்தையும் உண்டாக்கினவர்; இஸ்
ரவேல் அவருடைய சுதந்தரமான கோத்திரம்;
[6]சேனைகளின் கர்த்தர் என்பது அவருடைய
நாமம்.
20 நீ எனக்கு தண்டாயுதமும் அஸ்திராயுதமு
மானவன்; நான் உன்னைக்கொண்டு ஜாதி
களை நொறுக்குவேன்; [7]உன்னைக்கொண்டு
21 ராஜ்யங்களை அழிப்பேன். உன்னைக்கொண்டு
குதிரையையும், குதிரைவீரனையும் நொறுக்கு
வேன்; உன்னைக்கொண்டு இரதத்தையும் இர
22 தவீரனையும் நொறுக்குவேன். உன்னைக்கொ
ண்டு புருஷனையும் ஸ்திரீயையும் நொறுக்கு
வேன்; உன்னைக்கொண்டு கிழவனையும் இளை
ஞனையும் நொறுக்குவேன்; உன்னைக்கொண்டு
வாலிபனையும் கன்னிகையையும் நொறுக்கு
23 வேன். உன்னைக்கொண்டு மேய்ப்பனையும்
அவனுடைய மந்தையையும் நொறுக்குவேன்;
உன்னைக்கொண்டு உழவனையும் அவனுடைய
உழவு காளைகளையும் நொறுக்குவேன்; உன்
னைக்கொண்டு அதிபதிகளையும் அதிகாரிகளை
24 யும் நொறுக்குவேன். பாபிலோனுக்கும் கல்
தேயர் தேசத்தின் சகல குடிகளுக்கும், அவர்
கள் உங்கள் கண்களுக்கு முன்பாகச் சீயோ
னில் செய்த அவர்களுடைய எல்லாப் பொல்
லாப்புக்காகவும் [8]பழிவாங்குவேன் என்று
கர்த்தர் சொல்லுகிறார்.
25 இதோ, பூமியை எல்லாம் கெடுக்கிற கே
டான பர்வதமே, [9]நான் உனக்கு விரோத
மாக வந்து, என் கையை உனக்கு விரோத
மாக நீட்டி, உன்னைக் கன்மலைகளிலிருந்து
உருட்டி, உன்னை எரிந்துபோன பர்வதமாக்
கிப்போடுவேன் என்று கர்த்தர் சொல்லுகி
26 றார். மூலைக்கல்லுக்காகிலும் அஸ்திபாரக் கல்
லுக்காகிலும் ஒரு கல்லையும் உன்னிலிருந்து
எடுக்கமாட்டார்கள்; [10]நீ என்றென்றைக்கும்
பாழாய்க்கிடக்கிற ஸ்தலமாவாய் என்று கர்த்
27 தர் சொல்லுகிறார். தேசத்திலே கொடியேற்
றுங்கள்; ஜாதிகளுக்குள் எக்காளம் ஊதுங்கள்;
ஜாதிகளை அதற்கு விரோதமாக ஆயத்தப்படுத்
துங்கள்; [11]ஆராராத், மின்னி, அஸ்கெனாஸ்
என்னும் ராஜ்யங்களை அதற்கு விரோதமாக
வரவழைத்துக் கூப்பிடுங்கள்; அதற்கு விரோதமாகத் தள

1 ஆதி. 1. 1, 6. யோபு 9. 8. சங். 104. 2. நீதி. 3. 19. ஏசா. 40. 22
2 சங். 135. 7
3 ரோ. 1. 22
4 சங். 115. 5. ஆப
* தண்டிக்கப்படும்
5 சங். 16. 5; 73. 26
6 உபா. 32. 9 சங். 74. 2
7 ஏசா. 41. 15, 16. மீகா 4. 13
8 50. 15, 29
9 ஏசா. 13. 2. சகரி. 4. 7. வெளி 8. 8
10 தானி. 5. 24-31
11 25. 14; 50. 41
12 ஏசா. 19. 16
13 ஏசா. 17. 5. யோவே. 3. 13. ஆப. 3. 12. மத். 13. 39. வெளி. 14. 15, 18
14 50. 17. புல. 1. 15
15 சங். 137. 8, 9

கர்த்தனுக்குப் பட்டங் கட்டுங்கள்; சுணையுள்ள
வெட்டுக்கிளிகள்போன்ற குதிரைகளை வரப்
பண்ணுங்கள். மேதியாதேசத்தின் ராஜாக்க 28
ளும் அதின் தலைவரும் அதின் சகல அதிகாரிக
ளும் அவரவருடைய ராஜ்யபாரத்துக்குக்
கீழான சகல தேசத்தாருமாகிய ஜாதிகளை அத
ற்கு விரோதமாக ஆயத்தப்படுத்துங்கள். அப் 29
பொழுது தேசம் அதிர்ந்து வேதனைப்படும்; பா
பிலோன் தேசத்தைக் குடியில்லாதபடிப் பா
ழாக்க, பாபிலோனுக்கு விரோதமாய்க் கர்த்தர்
நினைத்தவைகள் நிலைக்கும். பாபிலோனின் 30
பராக்கிரமசாலிகள் யுத்தம்பண்ணாமல், கோட்
டைகளில் இருந்துவிட்டார்கள்; அவர்கள் பரா
க்கிரமம் அழிந்து பேடிகளானார்கள்; [12]அதின்
வாசஸ்தலங்களைக் கொளுத்திப்போட்டார்
கள்; அதின் தாழ்ப்பாள்கள் உடைக்கப்பட்
டது. கடையாந்தரமுனைதுவக்கி அவனு 31
டைய பட்டணம் பிடிபட்டது என்றும், துறை
வழிகள் அகப்பட்டுப்போய், நாணல்கள் அக்
கினியால் சுட்டெரிக்கப்பட்டது என்றும், யுத்த
மனுஷர் கலங்கியிருக்கிறார்கள் என்றும் பாபி
லோன் ராஜாவுக்கு அறிவிக்க, அஞ்சற்கா 32
ரன்மேல் அஞ்சற்காரனும், தூதன்மேல் தூத
னும் ஓடுகிறான்.
பாபிலோன் குமாரத்தி மிதிக்கப்படுங் கள 33
த்துக்குச் சமானம்; அதைப் போரடிக்குங்
காலம் வந்தது; [13]இன்னும் கொஞ்சக்காலத்தி
லே அறுப்புக்காலம் அதற்கு வரும் என்று
இஸ்ரவேலின் தேவனாகிய சேனைகளின் கர்
த்தர் சொல்லுகிறார். பாபிலோன் ராஜாவா 34
கிய நேபுகாத்நேச்சார் என்னைப் பட்சித்தான்,
என்னைக் கலங்கடித்தான், என்னை வெறும்
பாத்திரமாக வைத்துப்போனான்; [14]வலுசர்ப்
பம்போல என்னை விழுங்கி, என் சுவையுள்ள
பதார்த்தங்களால் தன் வயிற்றை நிரப்பினான்,
என்னைத் துரத்திவிட்டான். எனக்கும் என் 35
இனத்தாருக்கும் செய்த கொடுமையின் பழி
பாபிலோன்மேல் வரக்கடவதென்று சீயோ
னில் வாசமானவள் சொல்லுகிறாள்; [15]என்
ரத்தப்பழி கல்தேயர் தேசத்துக் குடிகளின்
மேல் வரக்கடவதென்று எருசலேம் என்பவ
ளும் சொல்லுகிறாள். ஆகையால் கர்த்தர் 36
சொல்லுகிறது என்னவென்றால்: இதோ,
நான் உனக்காக வழக்காடி, உன் பழிக்குப்
பழிவாங்கி, அதின் கடலை வறளவும் அதின்
ஊற்றைச் சுவறவும் பண்ணுவேன். அப்பொ 37
ழுது பாபிலோன் குடியில்லாத மண்மேடுக
ளும், வலுசர்ப்பங்களின் தாபரமும், பாழும்,
ஈசல்போடப்படுதலுக்கு இடமுமாய்ப் போ
கும். ஏகமாய் அவர்கள் சிங்கங்களைப்போலக் 38
கெர்ச்சித்து, சிங்கக்குட்டிகளைப்போலச் சத்த
மிடுவார்கள். அவர்கள் களிக்கும் சமயத்திலே 39
நான் அவர்கள் குடிக்கும் பானத்தை அவர்க
ளுக்குக் குடிக்கக் கொடுத்து, அவர்கள் துள்
ளத்தக்கதாக அவர்களை வெறியாக்குவேன்;
அதினால் அவர்கள் என்றென்றைக்கும் விழி
க்காத நித்திரை அடைவார்கள் என்று கர்த்தர்

40 சொல்லுகிறார். அவர்களை ஆட்டுக்குட்டிகளை
ப்போலவும், ஆட்டுக் கடாக்களைப்போலவும்
வெள்ளாட்டுக் கடாக்களைப்போலவும் அடிக்
41 கப்பட இறங்கிப்போகப் பண்ணுவேன். சே
சாக்கு பிடியுண்டு, [1]பூமி முழுதும் புகழும்
புகழ்ச்சி அகப்பட்டது எப்படி? ஜாதிகளுக்
குள்ளே பாபிலோன் பிரமிப்பானது எப்படி?
42 சமுத்திரம் பாபிலோன்மேல் புரண்டுவந்தது;
[2]அதின் அலைகளின் திரட்சியினால் அது மூட
43 ப்பட்டது. அதின் பட்டணங்கள் பாழுமாய்,
வறட்சியும் வனாந்தரமுமான பூமியுமாய், ஒரு
மனுஷனும் குடியிராததும் ஒரு மனுபுத்திர
னும் கடவாததுமான நிலமுமாய்ப் போயி
44 ற்று. நான் பாபிலோனில் இருக்கிற பேலைத்
தண்டிப்பேன்; [3]அது விழுங்கினதை அதின்
வாயிலிருந்து கக்கப்பண்ணுவேன்; ஜாதிகள்
இனி அதினிடத்திற்கு ஓடிவரமாட்டார்கள்,
பாபிலோனின் மதிலும் விழும்.
45 என் ஜனங்களே, நீங்கள் அதின் நடுவி
லிருந்து புறப்படுங்கள்; [4]**கர்த்தருடைய** கோப
த்தின் உக்கிரத்துக்குத் தப்பும்படி அவனவன்
தன்தன் ஆத்துமாவை ரட்சித்துக்கொள்ளக்
46 கடவன். உங்கள் இருதயம் துவளாமலும்,
தேசத்தில் கேட்கப்படும் செய்தியினால் நீங்கள்
பயப்படாமலும் இருங்கள்; [5]ஒருவருஷத்திலே
ஒரு செய்தி கேட்கப்பட்டு, பின்பு மறுவரு
ஷத்திலே வேறு செய்தி கேட்கப்படும்; தேச
த்திலே கொடுமை உண்டாகும்; ஆளுகிறவன்
47 மேல் ஆளுகிறவன் வருவான். ஆகையால்,
இதோ, நான் பாபிலோனின் விக்கிரகங்களை
தண்டிக்கும் நாட்கள் வரும், அப்பொழுது
அதின் தேசம் எல்லாம் கலங்கும்; அதில்
கொலையுண்கிற யாவரும் அதின் நடுவில்
48 விழுந்து கிடப்பார்கள். வானமும் பூமியும்
அவைகளிலுள்ள யாவும் பாபிலோன்மேல்
கெம்பீரிக்கும்; [6]பாழ்க்கடிக்கிறவர்கள் அதற்கு
வடக்கேயிருந்து வருவார்கள் என்று **கர்த்தர்**
49 சொல்லுகிறார். பாபிலோன் இஸ்ரவேலில்
கொலையுண்டவர்களை விழப்பண்ணினது
போல, பாபிலோனிலும் சமஸ்த தேசங்களி
50 லும் கொலையுண்கிறவர்கள் விழுவார்கள். பட்
டயத்துக்குத் தப்பினவர்களே, தங்கித்தரியா
மல் நடந்துவாருங்கள்; [7]தூரத்திலே **கர்த்தரை**
நினையுங்கள்; எருசலேம் உங்கள் ஞாபகத்தில்
51 வரக்கடவது. நிந்தையைக் கேட்டதினால்
வெட்கப்பட்டோம்; [8]**கர்த்தருடைய** ஆலயத்
தின் பரிசுத்த ஸ்தலங்களின்மேல் அந்நியர்
வந்ததினால் நாணம் நம்முடைய முகங்களை
52 மூடிற்று. ஆகையால், **கர்த்தர்** சொல்லு
கிறது என்னவென்றால்: இதோ, நான் அதின்
விக்கிரகங்களுக்கு விரோதமாய் விசாரிக்கும்
நாட்கள் வரும்; [9]அப்பொழுது அதின் தேச
மெங்கும் கொலையுண்கிறவர்கள் கத்துவார்கள்.
53 பாபிலோன் வானபரியந்தம் எறினாலும், [10]அது
தன் பலமான அரணை உயர்த்தினாலும்,
அதைப் பாழாக்குகிறவர்கள் என்னிடத்திலிரு
ந்து வருவார்கள் என்று **கர்த்தர்** சொல்லுகி

றார். பாபிலோனிலிருந்து கூக்குரலின் சத் 54
தமும், [11]கல்தேயர் தேசத்திலிருந்து மகா சங்
காரமும் கேட்கப்படும். **கர்த்தர்** பாபிலோ 55
னைப் பாழாக்கி, அதிலுள்ள பெரிய சத்தத்தை
ஒழியப்பண்ணுவார்; அவர்களுடைய அலை
கள் திரளான தண்ணீர்களைப்போல இரையும்,
அவர்களுடைய சத்தம் அமளியாயிருக்கும்.
பாபிலோனைப் பாழாக்குகிறவன் அதின்மேல் 56
வருகிறான்; அதின் பராக்கிரமசாலிகள் பிடி
படுவார்கள்; [12]அவர்களுடைய வில்லுகள் முறி
ந்துபோகும்; சரிக்கட்டுகிற தேவனாகிய **கர்த்**
**தர்** நிச்சயமாகப் பதில் அளிப்பார். அதின் 57
பிரபுக்களையும் அதின் ஞானிகளையும் அதின்
தலைவரையும் அதின் அதிகாரிகளையும் அதின்
பராக்கிரமசாலிகளையும் வெறிக்கப் பண்ணு
வேன்; [13]அப்பொழுது அவர்கள் என்றென்
றைக்கும் விழிக்காத தூக்கமாய்த் தூங்கி விழு
வார்கள் என்று சேனைகளின் **கர்த்தர்** என்
னும் நாமமுள்ள ராஜா சொல்லுகிறார். பாபி 58
லோனின் விஸ்தீரணமான மதில்கள் முற்றி
லும் தரையாக்கப்பட்டு, அதின் உயரமான
வாசல்கள் அக்கினியால் சுட்டெரிக்கப்படும்;
[14]அப்படியே ஜனங்கள் பிரயாசப்பட்டது விரு
தாவும் ஜாதிகள் வருத்தப்பட்டுச் சம்பாதித்தது
அக்கினிக்கு இரையுமாகுமென்று சேனைக
ளின் **கர்த்தர்** சொல்லுகிறார்.
பாபிலோன்மேல் வரும் எல்லாத் தீங்கை 59
யும், பாபிலோனுக்கு விரோதமாக எழுதப்
பட்ட இந்த எல்லா வசனங்களையும் எரே
மியா ஒரு புஸ்தகத்தில் எழுதினான். யூதா 60
வின் ராஜாவாகிய சிதேக்கியா ராஜ்யபாரம்
பண்ணும் நாலாம் வருஷத்திலே பாபிலோ
னுக்குப் போனசமயத்தில் அவனோடே கூடப்
போன மசெயாவின் மகனாகிய நேரியாவின்
குமாரனும் சாந்தகுணமுள்ள பிரபுவுமாகிய
செராயாவுக்கு எரேமியா தீர்க்கதரிசி கற்பித்த
வார்த்தை: எரேமியா செராயாவை நோக்கி: 61
நீ பாபிலோனுக்கு வந்தபின்பு நீ இதைப்
பார்த்து, இந்த எல்லா வசனங்களையும் வாசித்
துச் சொல்லவேண்டியது என்னவென்றால்:
**கர்த்தாவே**, இந்த ஸ்தலத்திலே மனுஷனும் 62
மிருகமுமுதலாய்த் தங்கித் தரிக்காதபடிக்கும்,
அது என்றென்றைக்கும் பாழாய்க் கிடக்கும்
படிக்கும், அதை அழித்துப் போடுவேன்
என்று தேவரீர் அதைக்குறித்து உரைத்தீர்
என்பதை நீ சொல்லி, நீ இந்தப் புஸ்தகத்தை 63
வாசித்துத் தீர்ந்தபோது, [15]அதிலே ஒரு கல்லைக்
கட்டி, அதை ஐப்பிராத்து நடுவில் எறிந்து
விட்டு, இப்படியே பாபிலோன் முழுகிப் 64
போகும், நான் அதின்மேல் வரப்பண்ணும்
தீங்கினால் எழுந்திருக்கமாட்டாமல் இளைத்து
விழுவார்கள் என்றார் என்று சொல்லுவாயாக
என்றான். எரேமியாவின் வசனங்கள் இவ்
வளவோடே முடிந்தது.
சிதேக்கியா ராஜாவாகிறபோது இருபத் **52**
தொரு வயதாயிருந்தான்; [16]அவன் பதினொரு
வருஷம் எருசலேமில் ராஜ்யபாரம் பண்ணி

1 தானி. 5. 4. ழ
2 சொ. 8. 7
3 ஏசா. 46. 1
4 50. 8. வெளி. 18. 4
5 ஹப. 13. 7
6 50. 3, 41. ஏசா. 44. 28. வெளி. 18. 20
7 44. 28. சங். 122. 6: 137. 5, 6
8 புல. 1. 10
9 ஏசா. 13. 15, 16. தானி. 5. 30, 31
10 49. 16. சங். 139. 8, 10. ஏசா. 14. 13. ஆமோ. 9. 2. ஒப. 4. ஊச
11 50. 22, 29
12 1 சாமு. 2. 2. சங். 94. 1: 137. 8
13 25. 27: 46. 18: 48. 15. ஆப. 2. 16
14 ஆப. 2. 13
15 வெளி. 18. 21
16 2 இரா. 24. 18

னன்; அவனுடைய தாயின் பேர் அமூத்தாள்,
அவள் லீப்னா ஊரானாகிய எரேமியாவின்
2 குமாரத்தி. யோயாக்கீம் செய்தபடியெல்லாம்
அவனும் **கர்த்தருடைய** பார்வைக்குப் பொல்
3 லாப்பானதைச் செய்தான். எருசலேமையும்
யூதாவையும் **கர்த்தர்** தம்முடைய சமுகத்தை
விட்டு அகற்றித் தீருமளவும், அவைகளின்
மேலுள்ள அவருடைய கோபத்தினால் இப்படி
நடந்ததும் அல்லாமல், சிதேக்கியா பாபி
லோன் ராஜாவுக்கு விரோதமாகக் கலகம்
4 பண்ணினான். அவன் ராஜ்யபாரம் பண்
ணும் ஒன்பதாம் வருஷம் பத்தாம் மாதம்
பத்தாந்தேதியிலே பாபிலோன் ராஜாவாகிய
நேபுகாத் நேச்சாரும், அவனுடைய எல்லா
ராணுவமும் எருசலேமுக்கு விரோதமாய்
வந்து, [1]அதற்கு எதிராகப் பாளயமிறங்கி,
சுற்றிலும் அதற்கு எதிராகக் கொத்தளங்களைக்
5 கட்டினார்கள். அப்படியே சிதேக்கியா ராஜா
வின் பதினோராம் வருஷமட்டும் நகரம் முற்
6 றிக்கை போடப்பட்டிருந்தது. நாலாம் மாதம்
ஒன்பதாந்தேதியிலே பஞ்சம் நகரத்திலே அதி
கரித்து, தேசத்தின் ஜனத்துக்கு ஆகாரமில்
7 லாமற்போயிற்று. நகரத்தின் மதில் இடிக்
கப்பட்டது; அப்பொழுது கல்தேயர் நகரத்
தைச் சூழ்ந்திருக்கையில், யுத்த மனுஷர் எல்
லாரும் இராத்திரிகாலத்தில் ஓடி, ராஜாவு
டைய தோட்டத்தின் வழியே இரண்டு மதில்
களுக்கும் நடுவான வாசலால் நகரத்திலிருந்து
புறப்பட்டு, வயல் வெளியின் வழியே போய்
8 விட்டார்கள். ஆனாலும் கல்தேயருடைய
ராணுவத்தார் ராஜாவைப் பின்தொடர்ந்து,
எரிகோவின் சமனான பூமியில் சிதேக்கியா
வைக் கிட்டினார்கள்; அப்பொழுது அவனு
டைய ராணுவத்தார் எல்லாரும் அவனைவிட்
9 டுச் சிதறிப்போயிருந்தார்கள். அவர்கள் ராஜா
வைப் பிடித்து, அவனை ஆமாத் தேசத்தின்
ஊராகிய ரிப்லாவுக்குப் பாபிலோன் ராஜவா
கிய நேபுகாத்நேச்சாரிடத்துக்குக் கொண்டு
போனார்கள்; [2]அங்கே இவனுக்கு நியாயத்தீர்ப்
10 புக் கொடுத்தான். பின்பு பாபிலோன் ராஜா
சிதேக்கியாவின் குமாரரை அவன் கண்களு
க்கு முன்பாக வெட்டினான்; [3]யூதாவின் பிர
புக்களெல்லாரையும் ரிப்லாவிலே வெட்டி
11 னான். சிதேக்கியாவின் கண்களைக் குரு
டாக்கி, அவனுக்கு இரண்டு விலங்குக
ளைப் போடுவித்தான்; பின்பு பாபிலோன்
ராஜா அவனைப் பாபிலோனுக்குக் கொண்டு
போய், அவன் மரணமடையும் நாள்மட்டும்
அவனைக் காவல் வீட்டில் அடைத்துவைத்
தான்.
12 ஐந்தாம் மாதம் பத்தாந்தேதியிலே, பாபி
லோன் ராஜாவுக்கு முன்பாக நிற்கிறவனாகிய
காவற்சேனாதிபதியான நேபுசராதான் எருச
லேமுக்கு வந்தான்; [4]அது நேபுகாத்நேச்சார்
என்னும் ராஜா பாபிலோனை அரசாளுகிற
13 பத்தொன்பதாம் வருஷமாயிருந்தது. அவன்
**கர்த்தருடைய** ஆலயத்தையும், ராஜாவின் அர

[1] 2 இரா. 25. 1. ழ. சகரி. 8. 19
[2] 32. 4, 5
[3] எசே. 12. 13
[4] சகரி. 7. 5: 8. 19
[5] 39. 10
[6] 27. 19, 22. 1 இரா. 7. 15. ழ
[7] யாத். 27. 3
[8] 1 இரா. 7. 47
[9] 1 இரா. 7. 20
[10] 2 இரா. 25. 18

மனையையும், எருசலேமிலுள்ள எல்லா வீடு
களையும் ஒவ்வொரு பெரிய மனிதனுடைய
வீட்டையும் அக்கினியினால் சுட்டெரித்துப்
போட்டான். காவற்சேனாதிபதியோடிருந்த 14
கல்தேயரின் ராணுவத்தாரெல்லாரும் எருச
லேமைச் சுற்றிலும் இருந்த அலங்கங்களை
இடித்துப்போட்டார்கள். ஜனத்தில் ஏழைக 15
ளான சிலரையும், நகரத்தில் மீதியான மற்ற
ஜனத்தையும், பாபிலோன் ராஜாவின் வசமாக
ஓடி வந்துவிட்டவர்களையும், மற்ற ஜனங்களை
யும் காவற்சேனாதிபதியாகிய நேபுசராதான்
சிறைகளாகக் கொண்டுபோனான். ஆனால் 16
தேசத்தாரில் ஏழைகளான சிலரைக் [5]காவற்
சேனாதிபதியாகிய நேபுசராதான் திராட்சத்
தோட்டக்காரராகவும் பயிரிடுங்குடிகளாகவும்
விட்டுவைத்தான். **கர்த்தருடைய** ஆலயத்தி 17
லிருந்த வெண்கலத் தூண்களையும், **கர்த்தரு
டைய** ஆலயத்திலிருந்த ஆதாரங்களையும்,
வெண்கலக் கடல் தொட்டியையும் கல்தேயர்
உடைத்துப்போட்டு, [6]அவைகளின் வெண்க
லத்தையெல்லாம் பாபிலோனுக்கு எடுத்துக்
கொண்டுபோனார்கள். செப்புச்சட்டிகளையும், 18
[7]சாம்பல் எடுக்கும் கரண்டிகளையும், வெட்டுக்
கத்திகளையும், கலங்களையும் கலயங்களையும்,
ஆராதனைக்குரிய சகல வெண்கலப் பணிமுட்
டுகளையும்எடுத்துக்கொண்டுபோனார்கள். பசும் 19
பொன்னும் சுத்த வெள்ளியுமான கிண்ணங்க
ளையும், தூபகலசங்களையும், கலங்களையும், சட்
டிகளையும், விளக்குத்தண்டுகளையும், கலயங்க
ளையும், கரகங்களையும் காவற்சேனாதிபதி எடுத்
துக்கொண்டான். சாலொமோன் ராஜா **கர்த்த** 20
**ருடைய** ஆலயத்துக்காகச் செய்துவைத்த இர
ண்டு தூண்களும் ஒரு கடல்தொட்டியும் ஆதா
ரங்களின் கீழ்நின்ற பன்னிரண்டு வெண்கல
ரிஷபங்களும் [8]ஆகிய இவைகளுக்குரிய வெ
ண்கலத்துக்கு நிறையில்லை. அந்தத் தூண்க 21
ளோவெனில், ஒவ்வொரு தூண் பதினெட்டு
முழ உயரமாயிருந்தது; பன்னிரண்டுமுழநூல்
அதைச் சுற்றும்; நாலு விரற்கடை அதின்
கனம்; உள்ளே குழாயாயிருந்தது. அதின் 22
மேல் வெண்கலக்குமிழ் இருந்தது; ஒரு குமி
ழின் உயரம் ஐந்து முழம், குமிழிலே சுற்றி
லும் பின்னலும் மாதளம்பழங்களும் செய்தி
ருந்தது; எல்லாம் வெண்கலமாயிருந்தது;
அதற்குச் சரியாய் மற்றத் தூணுக்கும் மாதளம்
பழங்களும் செய்திருந்தது. தொண்ணூற்றாறு 23
மாதளம்பழங்கள் நான்கு திசைகளுக்கும் எதி
ராகச் செய்திருந்தது; [9]குமிழைச் சுற்றிலும்
செய்திருந்த மாதளம்பழங்கள் நூறு. காவற் 24
சேனாதிபதி பிரதான ஆசாரியனாகிய செரா
யாவையும், [10]இரண்டாம் ஆசாரியனாகிய செப்
பனியாவையும், வாசற்படியின் மூன்று காவற்
காரரையும் பிடித்துக் கொண்டுபோனான். நக 25
ரத்திலேவென்றால் அவன் யுத்த மனுஷரின்
விசாரிப்புக்காரனாகிய பிரதானி ஒருவனையும்,
ராஜாவின் மந்திரிகளில் நகரத்தில் அகப்பட்ட
எழுபேரையும், தேசத்தின் ஜனத்தைச் சேவ

கம் எழுதுகிற தலைமையான சம்பிரதியையும்,
தேசத்து ஜனத்திலே பட்டணத்தின் நடுவில்
அகப்பட்ட அறுபதுபேரையும் பிடித்துக் கொ
26 ண்டுபோனான். அவர்களைக் காவற்சேனாதி
பதியாகிய நேபுசராதான் பிடித்து, அவர்களை
ரிப்லாவுக்குப் பாபிலோன் ராஜாவினிடத்திற்
27 குக் கொண்டுபோய் விட்டான். அப்பொ
ழுது பாபிலோன் ராஜா ஆமாத் என்னும்
தேசத்தின் பட்டணமாகிய ரிப்லாவிலே அவர்
களை வெட்டிக் கொன்றுபோட்டான்; [1]இவ்
விதமாக யூதர்கள் தங்கள் தேசத்திலிருந்து
சிறைகளாய்க் கொண்டுபோகப்பட்டார்கள்.
28 நேபுகாத்நேச்சார் சிறைபிடித்துப்போன ஜனங்
களின் தொகை எவ்வளவென்றால், [2]ஏழாம்
வருஷத்தில் மூவாயிரத்து இருபத்துமூன்று
29 யூதரும், நேபுகாத்நேச்சாருடைய பதினெட்
டாம் வருஷத்தில் எருசலேமிலிருந்து எண்
ணூற்று முப்பத்திரண்டுபேர்களும் கொண்டு
30 போகப்பட்டார்கள். நேபுகாத்நேச்சாருடைய
இருபத்துமூன்றாம் வருஷத்தில் காவற்சேனா
திபதியாகிய நேபுசராதான் யூதரில் எழுநூற்று
நாற்பத்தைந்துபேர்களைச் சிறைபிடித்துக் கொ
ண்டுபோனான்; ஆக நாலாயிரத்து அறுநூறு
பேர்களாம்.

யூதாவின் ராஜாவாகிய யோயாக்கீனுடைய 31
சிறையிருப்பின் முப்பத்தேழாம் வருஷம் பன்
னிரண்டாம் மாதம் இருபத்தைந்தாம் தேதி
யிலே, எவில்மெரோதாக் என்னும் பாபி
லோன் ராஜா, தான் ராஜாவான வருஷத்
திலே, யூதாவின் ராஜாவாகிய யோயாக்கீனைச்
சிறைச்சாலையிலிருந்து வெளிப்படப்பண்ணி,
[3]அவன் *தலையை உயர்த்தி, அவனோடே 32
அன்பாய்ப் பேசி, அவனுடைய ஆசனத்தைத்
தன்னோடே பாபிலோனில் இருந்த ராஜாக்க
ளுடைய ஆசனங்களுக்கு மேலாக வைத்து,
அவனுடைய சிறையிருப்பு வஸ்திரங்களை மாற் 33
றினான்; [4]அவன் உயிரோடிருந்த சகலநாளும்
தன் சமுகத்தில் நித்தம் போஜனம் பண்ணும்
படி செய்தான். அவன் உயிரோடிருந்த 34
நாளெல்லாம் அவனுடைய மரணநாள்பரியந்
தமும், [5]அவனுடைய செலவுக்காகப் பாபி
லோன் ராஜாவினால் கட்டளையான அநுதி
னத் திட்டத்தின்படி, அநுதினமும் அவனுக்
குக் கொடுக்கப்பட்டுவந்தது.

[1] புல. 1. 1, 3
[2] 2 இரா. 24. 1. ழ
[3] ஆதி. 40. 13, 20. 2 இரா. 25. 27
* அவனை மேன்மைப்படுத்தி
[4] 2 சாமு. 9. 13. 1 இரா. 2. 7. சகரி. 3. 3–5.
[5] லூ. 11. 3

# LAMENTATIONS

# எரேமியாவின் புலம்பல்

1 ஐயோ! ஜனம்பெருத்த நகரி தனிமையாக
உட்கார்ந்திருக்கிறாளே! [1]விதவைக்கு ஒப்பா
னாளே! ஜாதிகளில் பெரியவளும், சீமைக
ளில் நாயகியுமாயிருந்தவள் கப்பங்கட்டுகிறவ
2 ளானாளே! இராக்காலத்திலே அழுதுகொண்
டிருக்கிறாள், அவளுடைய கண்ணீர் அவள்
கன்னங்களில் வடிகிறது; [2]அவளுடைய
நேசர் எல்லாருக்குள்ளும் அவளைத் தேற்று
வார் ஒருவரும் இல்லை; அவளுடைய சிநேகி
தர் எல்லாரும் அவளுக்குத் துரோகிகளும்
3 சத்துருக்களுமானார்கள். யூதா ஜனங்கள் உபத்
திரவப்படவும், கொடுமையான அடிமைவேலை
செய்யவும் சிறைப்பட்டுப்போனார்கள். [3]அவள்
புறஜாதிகளுக்குள்ளே தங்குகிறாள், இளைப்
பாறுதல் அடையாள்; அவளைத் துன்பப்படு
த்துகிற யாவரும் அவளை இடுக்கமான இடங்
4 களிலே தொடர்ந்து பிடித்தார்கள். பண்டி
கைக்கு வருவார் இல்லாததினால், சீயோனுக்
குப் போகிற வழிகள் புலம்புகிறது; அவள்
வாசல்கள் எல்லாம் பாழாய்க் கிடக்கிறது;
அவள் ஆசாரியர்கள் தவிக்கிறார்கள்; அவள்
கன்னிகைகள் சஞ்சலப்படுகிறார்கள்; அவளு
5 க்குக் கசப்பே உண்டாயிருக்கிறது. அவள்
சத்துருக்கள் தலைமையானார்கள், அவள்
பகைஞர் சுகித்திருக்கிறார்கள்; [4]அவளுடைய
திரளான பாதகங்களினிமித்தம் **கர்த்தர்** அவ
ளைச் சஞ்சலப்படுத்தினார்; அவள் பிள்ளைகள்
சத்துருவுக்கு முன்பாகச் சிறைப்பட்டுப் போ
6 னார்கள். சீயோன் குமாரத்தியின் அழகெல்
லாம் அவளை விட்டுப்போயிற்று; [5]அவள் பிர
புக்கள் மேய்ச்சலைக் காணாத மான்களுக்கு
ஒப்பாகி, தொடருகிறவனுக்கு முன்பாகச்
7 சத்துவமில்லாமல் நடந்துபோனார்கள். தனக்
குச் சிறுமையும் தவிப்பும் உண்டாகிய நாட்
களிலே எருசலேம் பூர்வநாட்கள் முதற்கொ
ண்டு தனக்கு உண்டாயிருந்த இன்பமான
வைகளையெல்லாம் நினைக்கிறாள்; அவளுக்கு
உதவிசெய்வார் இல்லாமல் அவளுடைய ஜன
ங்கள் சத்துருவின் கையிலே விழுகையில்,
பகைஞர் அவளைப் பார்த்து, [6]அவளுடைய
ஓய்வுநாட்களைக் குறித்துப் பரியாசம்பண்ணி
8 னார்கள். எருசலேம் மிகுதியாய்ப் பாவஞ்
செய்தாள்; [7]ஆதலால் தூரஸ்திரீயைப்போலா

[1] எஸ்றா 4. 20. ஏசா. 47. 8. எரே. 52. 27
[2] எரே. 4. 30; 30. 14, 15
[3] உபா. 28. 64
[4] உபா. 28. 43. தானி. 9. 7, 16
[5] எரே. 52. 8, 11.
[6] சங். 137. 3
[7] 1 இரா. 8. 46
[8] எசே. 16. 37. ஓசி. 2. 9, 10
[9] உபா. 32. 29. எரே. 6. 21
[10] உபா. 23. 3. எரே. 51. 51
[11] எரே. 38. 9
[12] தானி. 9. 12
[13] எசே. 17. 20. ஓசி. 7. 12
[14] உபா. 28. 48. ஓசி. 5. 14

னாள்; அவளைக் கனம்பண்ணினவர்கள் எல்
லாரும் அவளை அசட்டைபண்ணுகிறார்கள்;
அவளுடைய மானத்தைக் கண்டார்கள்; [8]அவ
ளும் பெருமூச்சுவிட்டுப் பின்னிட்டுத் திரும்
பினாள். அவளுடைய அசுசம் அவள் வஸ் 9
திர ஓரங்களில் இருந்தது; தனக்கு வரப்போ
கிற முடிவை நினையாதிருந்தாள்; [9]ஆகையால்
அதிசயமாய்த் தாழ்த்தப்பட்டுப்போனாள்; தேற்
றுவார் இல்லை; **கர்த்தாவே**, என் சிறுமை
யைப் பாரும்; பகைஞன் பெருமை பாராட்டி
னானே. அவளுடைய இன்பமான எல்லா 10
வற்றின்மேலும் சத்துரு தன் கையை நீட்டி
னான்; [10]உம்முடைய சபையிலே வரலாகா
தென்று தேவரீர் விலக்கிய புறஜாதியார் உமது
பரிசுத்த ஸ்தலத்துக்குள் பிரவேசித்ததைக்
கண்டாள். அவளுடைய ஜனங்களெல்லா 11
ரும் அப்பந்தேடித் தவிக்கிறார்கள்; [11]தங்கள்
உயிரைக் காப்பாற்றத் தங்களுடைய இன்ப
மானவைகளை ஆகாரத்துக்கென்று கொடுத்து
விட்டார்கள்; **கர்த்தாவே**, நோக்கிப்பாரும்;
எண்ணமற்றவளானேனே.

வழியில் நடந்துபோகிற சகல ஜனங்களே, 12
இதைக்குறித்து உங்களுக்குக் கவையில்லையா?
**கர்த்தர்** தமது உக்கிரமான கோபமூண்ட நா
ளிலே என்னைச் சஞ்சலப்படுத்தினதினால்
எனக்கு உண்டான என் துக்கத்துக்குச் சரி
யான துக்கம் உண்டோ [12]என்று என்னை
நோக்கிப் பாருங்கள். உயரத்திலிருந்து என் 13
எலும்புகளில் அக்கினியை அனுப்பினார்,
அது அவைகளில் பற்றியெரிகிறது; [13]என்
கால்களுக்கு வலையை வீசினார், என்னைப்
பின்னிட்டு விழப்பண்ணினார்; என்னைப் பா
ழாக்கினார்; நித்தம் நான் பலட்சயப்பட்டுப்
போகிறேன். என் பாதகங்களின் நுகம் அவ 14
ருடைய கையால் பூட்டப்பட்டிருக்கிறது;
[14]அவைகள் பிணைக்கப்பட்டு என் கழுத்தைச்
சுற்றிக்கொண்டது; என் பெலனை விழப்பண்
ணினார்; நான் எழுந்திருக்கக் கூடாதபடிக்கு
ஆண்டவர் என்னை ஒடுக்குகிறவர்களின் கை
யில் ஒப்புக்கொடுத்தார். என்னிலுள்ள பராக் 15
கிரமசாலிகளாகிய என்னுடையவர்களெல்லா
ரையும் ஆண்டவர் மிதித்துப் போட்டார்;
என் வாலிபரை நொறுக்கும்படி எனக்கு

விரோதமாய் ஒரு கூட்டத்தை வரவழைத்தார்;
[1]திராட்சப்பழத்தை ஆலையில் மிதிக்கிறது
போல, ஆண்டவர் யூதா குமாரத்தியாகிய கன்
16 னிகையை மிதித்தார். இவைகளினிமித்தம்
நான் அழுகிறேன்; என் கண், என் கண்ணே
நீராய்ச் சொரிகிறது; [2]என் உயிரைக்
காப்பாற்றித் தேற்றுகிறவர் என்னைவிட்டுத்
தூரமானுர்; பகைஞன் மேற்கொண்டதினுல்
என் பிள்ளைகள் பாழாய்ப் போனுர்கள்.
17 சீயோன் தன் கைகளை விரிக்கிருள்; [3]அவ
ளைத் தேற்றுவார் ஒருவருமில்லை; **கர்த்தர்** யாக்
கோபின் சுற்றுப்புறத்தாரை அவனுக்குச் சத்
துருக்களாகக் கட்டளையிட்டார்; [4]அவர்களுக்
குள்ளே எருசலேம் தூரஸ்திரீக்கு ஒப்பானுள்.
18 **கர்த்தர்** நீதிபரர்; [5]அவருடைய வாக்குக்கு
விரோதமாய் நான் எழும்பினேன்; ஜனங்க
ளே, நீங்கள் எல்லாரும் இதைக் கேட்டு என்
துக்கத்தைப் பாருங்கள்; என் கன்னிகை
களும் என் வாலிபரும் சிறைப்பட்டுப்போ
19 னுர்கள். என்னைச் சிநேகித்தவர்களைக் கூப்
பிட்டேன், அவர்களோ என்னை மோசம்
போக்கினுர்கள்; [6]என் ஆசாரியர்களும் என்
மூப்பர்களும் தங்கள் உயிரைக் காப்பாற்றத்
தங்களுக்கு அப்பந் தேடுகையில் நகரத்தில்
20 மூச்சொடுங்கி மாண்டார்கள். **கர்த்தாவே,**
பாரும், நான் நெருக்கப்படுகிறேன்; என்
குடல் கொதிக்கிறது; [7]நான் கடுந்துரோகம்
பண்ணினபடியினுல் என் இருதயம் வியா
குலப்படுகிறது; வெளியிலே பட்டயம் என்
னைப் பிள்ளையற்றவளாக்கிற்று, வீட்டுக்குள்
21 ளே மரணம் வந்திருக்கிறது. நான் தவிக்கிற
தை அவர்கள் கேட்டாலும் என்னைத் தேற்று
வார் ஒருவரும் இல்லை; என் பகைஞர் எல்
லாரும் எனக்கு வந்த ஆபத்தைக் கேட்டு, தே
வரீர் அதைச் செய்தபடியால் சந்தோஷமாயி
ருக்கிருர்கள்; [8]நீர் கூறின நாளை வரப்பண்ணு
வீர், அப்பொழுது அவர்களும் என்னைப்போ
22 லாவார்கள். அவர்களுடைய பொல்லாப்பெ
ல்லாம் உமது முகத்துக்கு முன்பாக வரக்கட
வது. [9]என் சகல பாதகங்களினிமித்தமும் நீர்
எனக்குச்செய்ததுபோல அவர்களுக்கும்செய்
யும்; [10]என் பெருமூச்சுகள் மிகுதியாயின,
என் இருதயம் பலட்சயமாயிருக்கிறது.

**2** ஐயோ! ஆண்டவர் தமது கோபத்தில்
சீயோன் குமாரத்தியை மந்தாரத்தினுல் மூடி
னுர்; [11]அவர் தமது கோபத்தின் நாளிலே
தம்து பாதபீடத்தை நினையாமல் இஸ்ரவே
லின் மகிமையை வானத்திலிருந்து தரையி
2 லே விழத்தள்ளினுர். ஆண்டவர் தப்பவிடா
மல் யாக்கோபின் வாசஸ்தலங்களையெல்லாம்
விழுங்கினுர்; [12]அவர் யூதா குமாரத்தியின்
அரண்களையெல்லாம் தமது சினத்திலே இடி
த்து, தரையோடே தரையாக்கிப் போட்டார்;
ராஜ்யத்தையும் அதின் பிரபுக்களையும் பரிசுத்
3 தக் குலைச்சலாக்கினுர். அவர் தமது உக்கிர
கோபத்திலே இஸ்ரவேலின் கொம்பு முழுவ
தையும் வெட்டிப்போட்டார்; சத்துருவுக்கு
முன்பாக அவர் தமது வலதுகரத்தைப் பின்னு
கத்திருப்பி, [13]சுற்றிலும் இருப்பதைப் பட்சிக்
கிற அக்கினிஜுவாலையைப்போல் யாக்கோ
புக்கு விரோதமாக எரிந்தார். பகைஞனைப் 4
போல் தம்முடைய வில்லை நாணேற்றினுர்;
[14]சத்துருவைப்போல் தம்முடைய வலதுகரத்
தை நீட்டி நின்று, கண்ணுக்கு இன்பமான
தையெல்லாம் அழித்துப்போட்டார்; சீயோன்
குமாரத்தியின் கூடாரத்திலே தம்முடைய
உக்கிரத்தை அக்கினியைப்போல் சொரியப்
பண்ணினுர். ஆண்டவர் பகைஞன்போலா 5
னுர்; இஸ்ரவேலை விழுங்கினுர்; அதின் அர
மனைகளையெல்லாம் விழுங்கினுர்; அதின் அர
ண்களை அழித்து, யூதா குமாரத்திக்கு மிகுந்த
துக்கிப்பையும் சலிப்பையும் உண்டாக்கினுர்.
தோட்டத்தின் வேலியைப்போல இருந்த தம் 6
முடைய வேலியைப் பலவந்தமாய்ப் பிடுங்கிப்
போட்டார்; [15]சபைகூடுகிற தம்முடைய ஸ்த
லங்களை அழித்தார்; **கர்த்தர்** சீயோனிலே பண்
டிகையையும் ஓய்வுநாளையும் மறக்கப்பண்ணி,
[16]தமது உக்கிரமான கோபத்தில் ராஜாவையும்
ஆசாரியனையும் புறக்கணித்துவிட்டார். ஆண் 7
டவர் தமது பலிபீடத்தை ஒழித்துவிட்டார்;
தமது பரிசுத்த ஸ்தலத்தை வெறுத்துவிட்
டார்; [17]அதினுடைய அரமனைகளின் மதில்க
ளைச் சத்துருவின் கையில் ஒப்புக்கொடுத்தார்;
பண்டிகைநாளில் ஆரவாரம் பண்ணுகிறது
போல் [18]**கர்த்தரின்** ஆலயத்தில் ஆரவாரம்பண்
ணினுர்கள். **கர்த்தர்** சீயோன் குமாரத்தியின் 8
அலங்கத்தை நிர்மூலமாக்க நினைத்தார்;
நூலைப்போட்டார்; [19]அழிக்காதபடித் தம்மு
டைய கையை அவர் முடக்கிக்கொண்டதி
ல்லை; அரணிப்பையும் அலங்கத்தையும் புலம்
பச்செய்தார்; அவைகள் முற்றிலும் பெலனற்
றுக் கிடக்கிறது. அவள் வாசல்கள் தரையில் 9
அமிழ்ந்திக் கிடக்கிறது; அவள் தாழ்ப்பாள்
களை முறித்து உடைத்துப்போட்டார்; [20]அவள்
ராஜாவும் அவள் பிரபுக்களும் புறஜாதியா
ருக்குள் இருக்கிருர்கள்; வேதமுமில்லை;
அவள் தீர்க்கதரிசிகளுக்குக் **கர்த்தரால்** தரிச
சனம் கிடைக்கிறதுமில்லை. சீயோன் குமா 10
ரத்தியின் மூப்பர்கள் தரையில் உட்கார்ந்து
மௌனமாய் இருக்கிருர்கள், [21]தங்கள் தலைக
ளின்மேல் புழுதியைப போட்டுக்கொள்ளுகி
ருர்கள்; இரட்டு உடுத்தியிருக்கிருர்கள்; எரு
சலேமின் கன்னியர்கள் தலைகவிழ்ந்து தரை
யை நோக்கிக்கொண்டிருக்கிருர்கள். என் 11
ஜனமாகிய குமாரத்தியின் நொறுங்குதலினி
மித்தம் கண்ணீர் சொரிகிறதினுல் என் கண்
கள் பூத்துப்போகிறது; என் குடல்கள் கொ
திக்கிறது; என் ஈரல் இளகித் தரையிலே வடி
கிறது; குழந்தைகளும் பாலகரும் நகரத்தின்
வீதிகளிலே மூர்ச்சித்துக் கிடக்கிருர்கள்.
அவைகள் குத்துண்டவர்களைப்போல நகரத் 12
தின் வீதிகளிலே மூர்ச்சித்துக் கிடக்கும்
போதும், தங்கள் தாய்களின் மடியிலே தங்
கள் பிராணனை விடும்போதும், தங்கள் தாய்

[1] ஏசா. 63. 3. வெளி. 14. 19, 20
[2] எரே. 13. 17: 14. 17. ஓசி. 9. 12
[3] 2, 9. வச
[4] ஓசி. 8. 8
[5] நெகே. 9. 33. தானி. 9. 7, 14
[6] எரே. 2. 28: 30. 14
[7] உபா. 32. 25. சங். 51. 3, 4. எசே. 7. 15
[8] ஏசா. 13. 6. ஷி. எரே. 46. 10: 50. 15. 31
[9] சங். 137. 7–9. எரே. 51. 35
[10] தூ. 23. 31
[11] 2 சாமு. 1. 19. 1 நாளா. 28. 2. சங். 132. 7. யோவே. 2. 2
[12] சங். 89. 39. எரே. 13. 14
[13] சங். 74. 11: 89. 46
[14] ஏசா. 63. 10. எரே. 30. 14
[15] ஏசா. 5. 5
[16] 1. 4
[17] லேவி. 26. 31–44
[18] சங். 74. 4. ஷி
[19] 2 இரா. 21. 13, 14. ஏசா. 34. 11
[20] உபா. 28. 36. 2 இரா. 24. 15: 25. 7. எரே. 51. 30
[21] ஏசா. 3. 26: 15. 3

களை நோக்கி: தானியமும் திராட்சரசமும்
13 எங்கே என்கிறார்கள்? எருசலேம் குமாரத்
தியே, நான் உனக்குச் சாட்சியாக என்னத்
தைச் சொல்லுவேன்? [1]உன்னை எதற்கு ஒப்
பிடுவேன்? சீயோன் குமாரத்தியாகிய கன்னி
கையே, நான் உன்னைத் தேற்றும்படிக்கு
உன்னை எதற்கு நிகர்சொல்லுவேன்? உன்
காயம் சமுத்திரத்தைப்போல் பெரிதாயிருக்
கிறதே, உன்னைக் குணமாக்குகிறவன் யார்?
14 உன் தீர்க்கதரிசிகள் அபத்தமும் வியர்த்தமு
மான தரிசனங்களை உனக்காகத் தரிசித்தார்
கள்; [2]அவர்கள் உன் சிறையிருப்பை விலக்
கும்படி உன் அக்கிரமத்தை எடுத்துக்காட்டா
மல், அபத்தமானவைகளையும் கேடானவை
15 களையும் உனக்காக தரிசித்தார்கள். வழிப்
போக்கர் யாவரும் உன்பேரில் கைகொட்டுகி
றார்கள்; எருசலேம் குமாரத்தியின்பேரில்
ஈசற்போட்டு, தங்கள் தலைகளைத் துலுக்கி: [3]பூர
ணவடிவும் சர்வ பூமியின் மகிழ்ச்சியுமான நக
16 ரம் இதுதானா என்கிறார்கள். உன் பகைஞர்
எல்லாரும் உன்பேரில் தங்கள் வாயைத் திறக்
கிறார்கள்; [4]ஈசற்போட்டுப் பற்கடிக்கிறார்கள்:
அதை விழுங்கினோம், நாம் காத்திருந்தநாள்
இதுவே, இப்பொழுது நமக்குக் கிடைத்தது,
17 அதைக் கண்டோம் என்கிறார்கள். **கர்த்தர்**
தாம் நினைத்ததைச் செய்தார்; [5]பூர்வநாட்கள்
முதற்கொண்டு தாம் கட்டளையிட்ட தமது
வார்த்தையை நிறைவேற்றினார்; அவர் தப்ப
விடாமல் நிர்மூலமாக்கி, உன்மேல் பகைஞன்
சந்தோஷிக்கும்படி செய்தார்; உன் [6]சத்து
18 ருக்களின் கொம்பை உயர்த்தினார். அவர்
கள் இருதயம் ஆண்டவரை நோக்கிக் கூப்பிடு
கிறது; சீயோன் குமாரத்தியின் மதிலே, இர
வும் பகலும் நதியவ்வளவு கண்ணீர் விடு,
[7]ஓய்ந்திராதே, உன் கண்ணின் கறுப்புவிழி
19 சும்மாயிருக்கவொட்டாதே. எழுந்திரு, இராத்
திரியிலே முதற்சாமத்தில் கூப்பிடு; ஆண்டவ
ரின் சமுகத்தில் உன் இருதயத்தைத் தண்ணீ
ரைப்போல ஊற்றிவிடு; [8]எல்லாத் தெருக்க
ளின் முனையிலும் பசியினால் மூர்ச்சித்துப்
போகிற உன் குழந்தைகளின் பிராணனுக்
காக உன் கைகளை அவரிடத்திற்கு ஏறெடு.
20 **கர்த்தா**வே, யாருக்கு இந்தப்பிரகாரமா
கச் செய்தீரென்று நோக்கிப்பாரும்; ஸ்திரீகள்
கைக்குழந்தைகளாகிய தங்கள் கர்ப்பக்கனி
யைத் தின்னவேண்டுமோ? [9]ஆண்டவரு
டைய பரிசுத்த ஸ்தலத்தில் ஆசாரியனும் தீர்க்
கதரிசியும் கொலைசெய்யப்பட வேண்டுமோ?
21 இளைஞனும் முதிர்வயதுள்ளவனும் தெருக்க
ளில் தரையிலே கிடக்கிறார்கள்; [10]என் கன்
னிகைகளும் என் வாலிபரும் பட்டயத்தால்
விழுந்தார்கள்; உமது கோபத்தின் நாளிலே
வெட்டி, அவர்களைத் தப்பவிடாமல் கொன்று
22 போட்டீர். பண்டிகைநாளில் கும்புகளை வர
வழைப்பதுபோல் சுற்றிலுமிருந்து எனக்குத்
திகில்களை வரவழைத்தீர்; [11]**கர்த்தருடைய** கோ
பத்தின் நாளிலே தப்பினவனும் மீதியான
வனுமில்லை; [12]நான் கைகளில் ஏந்தி வளர்த்
தவர்களை என் பகைஞன் நாசம்பண்ணினான்.

**3**

ஆண்டவருடைய சினத்தின் மிலாற்றி
னால் உண்டான சிறுமையைக் கண்ட புரு
ஷன் நான். அவர் என்னை வெளிச்சத்திலே 2
அல்ல, [13]இருளிலே அழைத்து நடத்திவந்தார்.
அவர் தமது கையை எனக்கு விரோதமாகவே 3
நித்தமும் திருப்பினார். என் சதையையும் 4
என் தோலையும் முற்றலாக்கினார்; [14]என் எலும்
புகளை நொறுக்கினார். அவர் எனக்கு விரோ 5
தமாகக் கொத்தளங்கட்டி, கசப்பினாலும் வருத்
தத்தினாலும் என்னை வளைந்துகொண்டார்.
பூர்வகாலத்தில் செத்துக் கிடக்கிறவர்களைப் 6
போல [15]என்னை இருளான இடங்களில் கிடக்
கப்பண்ணினார். நான் புறப்படக்கூடாதபடி 7
என்னைச் சூழ வேலியடைத்தார்; [16]என் விலங்
கைப் பாரமாக்கினார். நான் சத்தமிட்டுக் கூப் 8
பிட்டாலும், [17]என் ஜெபத்துக்கு வழியை
அடைத்துப்போட்டார். வெட்டின கற்களின் 9
சுவரால் என் வழிகளை அடைத்துப்போட்
டார், என் பாதைகளைத் தாறுமாறாக்கினார்.
அவர் எனக்குப் பதிவிருக்கிற கரடியும், [18]மறை 10
விடங்களில் தங்குகிற சிங்கமுமாயிருக்கிறார்.
என் வழிகளை அப்புறப்படுத்தி, என்னைத் 11
துண்டித்துப் போட்டார்; [19]என்னைப் பாழாக்
கிவிட்டார். தமது வில்லை நாணேற்றி, [20]என்னை 12
அம்புக்கு இலக்காக வைத்தார். தம்முடைய 13
அம்பறாத்தூணியின் அம்புகளை [21]என் உள்ளிந்
திரியங்களில் படப்பண்ணினார். நான் என் 14
ஜனத்தார் யாவருக்கும் பரியாசமும், [22]நித்தம்
அவர்கள் கின்னரப்பாடலுமானேன். கசப்பி 15
னால் என்னை நிரப்பி, [23]எட்டியினால் என்னை
வெறிக்கச்செய்தார். அவர் பருக்கைக் கற்க 16
ளால் என் பற்களை நொறுக்கி, [24]என்னைச்
சாம்பலில் புரளப்பண்ணினார். என் ஆத் 17
துமாவைச் சமாதானத்துக்குத் தூரமாக்கினார்;
சுகத்தை மறந்தேன். என் பெலனும் நான் 18
**கர்த்தருக்குக்** காத்திருந்த நம்பிக்கையும் [25]அழி
ந்துபோயிற்று என்றேன். எட்டியும் பிச்சு 19
மாகிய [26]என் சிறுமையையும் என் தவிப்பை
யும் நினைத்தருளும். என் ஆத்துமா அவை 20
களை நினைத்து நினைத்து எனக்குள் முறிந்து
போகிறது. இதை என் மனதிலே வைத்து, 21
[27]நம்பிக்கை கொண்டிருப்பேன்.

நாம் நிர்மூலமாகாதிருக்கிறது **கர்த்தருடைய** 22
கிருபையே, [28]அவருடைய இரக்கங்களுக்கு
முடிவில்லை. அவைகள் காலைதோறும் புதிய 23
வைகள்; [29]உமது உண்மை பெரிதாயிருக்கி
றது. **கர்த்தர்** என் பங்கு என்று என் ஆத் 24
துமா சொல்லும்; [30]ஆகையால் அவரிடத்தில்
நம்பிக்கை கொண்டிருப்பேன். தமக்குக் காத் 25
திருக்கிறவர்களுக்கும் [31]தம்மைத் தேடுகிற ஆத்
துமாவுக்கும் **கர்த்தர்** நல்லவர். **கர்த்தருடைய** 26
ரட்சிப்புக்கு நம்பிக்கையோடு காத்திருக்கிறது
நல்லது. தன் இளம்பிராயத்தில் நுகத்தைச் 27
சுமக்கிறது [32]மனுஷனுக்கு நல்லது. அவரே 28
அதைத் தன்மேல் வைத்தாரென்று [33]அவன்

1 தானி. 9. 12
2 ஏசா. 58. 1 எசே. 27. 14, 15
3 சங். 48. 2: 50. 2
4 சங். 35. 21
5 லேவி. 26. 16. ழ. உபா. 28. 15. ழ. எரே. 18. 11. மீகா 2. 3
6 சங். 89. 42
7 எரே. 14. 17
8 சங். 62. 8. எசே. 5. 10, 16
9 உபா. 28. 53. எரே. 19. 9
10 2 நாளா. 36. 17
11 எரே. 6. 25
12 ஓசி. 9. 12, 13
13 ஆமோ. 5. 20
14 யோபு 16. 8. ழ. எரே. 50. 17
15 சங். 143. 3
16 ஓசி. 2. 6
17 யோபு 30. 20. சங். 22. 2
18 ஓசி. 5. 14: 13. 7, 8
19 ஓசி. 6. 1
20 யோபு 7. 20
21 யோபு 6. 4
22 சங். 69. 12
23 எரே. 9. 15
24 நீதி. 20. 17
25 சங். 31. 22
26 எரே. 9. 15
27 சங். 77. 5, ழ
28 எஸ்ரா 9. 8, 9 நெகே. 9. 31. மல். 3. 6
29 ஏசா. 33. 2
30 சங். 73. 26: 130. 7
31 ஏசா. 30. 18. மீகா 7. 7
32 மத். 11. 29
33 எரே. 15. 17

29 தனித்திருந்து மௌனமாயிருக்கக்கடவன். நம்
பிக்கைக்கு இடமுண்டோ என்று தன் வா
30 யைத் தூளில் நுழுந்துவானாக. தன்னை அடிக்
கிறவனுக்குத் தன் கன்னத்தைக் காட்டி, [1]நிந்
31 தையால் நிறைந்திருப்பானாக. ஆண்டவர்
32 என்றென்றைக்கும் [2]கைவிடமாட்டார். அவர்
சஞ்சலப்படுத்தினாலும் [3]தமது மிகுந்த கிரு
33 பையின்படி இரங்குவார். அவர் *மனப்பூர்
வமாய் மனுபுத்திரரைச் சிறுமையாக்கிச் [4]சஞ்
34 சலப்படுத்துகிறதில்லை. ஒருவன் பூமியில்
சிறைப்பட்டவர்கள் யாவரையும் தன் கால்க
35 ளின் கீழ் நசுக்குகிறதையும், உன்னதமான
வரின் சமுகத்தில் மனுஷருடைய நியாயத்
36 தைப் புரட்டுகிறதையும், மனுஷனை அவனு
டைய வழக்கிலே மாறுபாடாக்குகிறதையும்,
37 [5]ஆண்டவர் காணாதிருப்பாரோ? ஆண்டவர்
கட்டளையிடாதிருக்கக் [6]காரியம் சம்பவிக்கும்
38 என்று சொல்லுகிறவன் யார்? உன்னதமா
னவருடைய வாயிலிருந்து [7]தீமையும் நன்மை
39 யும் புறப்படுகிறதில்லையோ? உயிருள்ள மனு
ஷன் முறையிடுவானேன்? [8]அவன் தன் பாவ
த்துக்கு வரும் தண்டனையைக்குறித்து முறை
40 யிடுகிறதென்ன? நாம் நம்முடைய வழிகளைச்
சோதித்து ஆராய்ந்து, [9]**கர்த்தரிடத்தில்** திரும்
41 பக்கடவோம். நாம் நம்முடைய கைகளோ
டுங்கூட [10]நம்முடைய இருதயத்தையும் பர
லோகத்திலிருக்கிற தேவனிடத்திற்கு ஏறெ
42 டுக்கக்கடவோம். நாங்கள் துரோகஞ்செய்து,
கலகம் பண்ணினோம்; [11]ஆகையால் தேவரீர்
43 மன்னியாதிருந்தீர். தேவரீர் கோபத்தால்
மூடிக்கொண்டு, [12]எங்களைத் தப்பவிடாமல்
44 பின்தொடர்ந்து கொன்றீர். ஜெபம் உட்பிர
வேசிக்கக் கூடாதபடிக்கு [13]உம்மை மேகத்
45 தால் மூடிக்கொண்டீர். ஜனங்களுக்குள்ளே
எங்களைக் குப்பையும் [14]அருவருப்புமாக்கினீர்.
46 எங்கள் பகைஞர் எல்லாரும் எங்களுக்கு விரோ
47 தமாய்த் தங்கள் வாயைத் திறந்தார்கள். திகி
லும் படுகுழியும் [15]பாழ்க்கடிப்பும் சங்காரமும்
48 எங்களுக்கு நேரிட்டது. என் ஜனமாகிய
குமாரத்தி அடைந்த கேட்டினிமித்தம் என்
கண்களிலிருந்து நீர்க்கால்கள் பாய்கிறது.
49 **கர்த்தர்** பரலோகத்திலிருந்து [16]நோக்கிப் பார்
50 க்குமட்டும், என் கண் இடைவிடாமல் ஓய்
51 வின்றிச் சொரிகிறது. என் நகரத்தினுடைய
குமாரத்திகள் அனைவரினிமித்தமும், என்
கண் என் ஆத்துமாவுக்கு நோவுண்டாக்கு
52 கிறது. முகாந்தரம் இல்லாமல் என்னைப்
பகைக்கிறவர்கள் என்னை ஒரு பட்சியைப்
53 போல வேட்டையாடினார்கள். காவற்கிடங்
கிலே என் பிராணனை ஒடுக்கி, [17]என்மீதில்
54 கல்லை வைத்தார்கள். தண்ணீர் என் தலையின்
மேல் புரண்டது; [18]நாசமானேன் என்றேன்.
55 மகா ஆழமான கிடங்கிலிருந்து, [19]**கர்த்**
**தாவே**, உம்முடைய நாமத்தைப்பற்றிக் கூப்
56 பிட்டேன். என் சத்தத்தைக் கேட்டீர்; என்
பெருமூச்சுக்கும் என் கூப்பிடுதலுக்கும் உமது
57 செவியை அடைத்துக்கொள்ளாதேயும். நான்

[1] ஏசா. 50. 6. மத். 5. 39
[2] சங். 94. 14
[3] சங். 30. 5
* வேண்டுமென்று
[4] எசே. 31. 20. எசே. 33. 11. எபி. 12. 10
[5] ஆப. 1. 13
[6] சங். 33. 9
[7] யோபு 2. 10. ஏசா. 45. 7
[8] நீதி. 19. 3. மீகா 7. 9
[9] ஆகாய் 1. 5, 7
[10] சங். 86. 4
[11] தானி. 9. 5
[12] 2 நாளா. 36. 17
[13] 8. வச
[14] 1 கொ. 4. 13
[15] ஏசா. 24. 17: 51. 19
[16] ஏசா. 63. 15
[17] தானி. 6. 17
[18] யோனா 2. 3, 4, 7
[19] சங். 130. 1
[20] ஏசா. 43. 1, 2. யாக். 4. 8
[21] எரே. 51. 36
[22] சங். 35. 1, 23
[23] எரே. 11. 19, 20
[24] எரே. 11. 20. 2 தீமோ. 4. 14
[25] உபா. 25. 19. எரே. 10. 11
[26] 2 இரா. 25. 9, 10.
[27] 2 கொ. 4. 7. 2 தீமோ. 2. 20
[28] யோபு 39. 13–16
[29] யோபு 24. 8
[30] ஆதி. 19. 25
[31] 5. 10. யோவே. 2. 6
[32] சங். 102. 5

உம்மை நோக்கிக் கூப்பிட்டநாளிலே நீர்
அணுகி: [20]பயப்படாதே என்றீர். ஆண்ட 58
வரே, என் ஆத்துமாவின் வழக்கை நடத்தி
னீர்; [21]என் பிராணனை மீட்டுக்கொண்டீர்.
**கர்த்தாவே**, எனக்கு உண்டான அநியாயத் 59
தைக் கண்டீர்; [22]என் நியாயத்தைத் தீரும்.
அவர்களுடைய எல்லாக் குரோதத்தையும், 60
[23]அவர்கள் எனக்கு விரோதமாக நினைத்த
எல்லா நினைவுகளையும் கண்டீர். **கர்த்தாவே**, 61
அவர்கள் நிந்திக்கும் நிந்தையையும், அவர்கள்
எனக்கு விரோதமாய் நினைத்த எல்லா நினைவு
களையும், எனக்கு விரோதமாய் எழும்பினவர் 62
களின் வாய்மொழிகளையும், அவர்கள் நாள்
முழுதும் எனக்கு விரோதமாய் யோசிக்கும்
யோசனைகளையும் கேட்டீர். அவர்கள் உட் 63
கார்ந்திருப்பதையும் அவர்கள் எழுந்திருப்பதை
யும் நோக்கிப்பாரும்; நான் அவர்களுடைய
பாடலாயிருக்கிறேன்.
**கர்த்தாவே**, அவர்கள் கைகள் செய்த கிரி 64
யைகளுக்குத் தக்கதாக [24]அவர்களுக்குப் பலன்
அளிப்பீர். அவர்களுக்கு இருதய வேதனை 65
யைக் கொடுப்பீர், உம்முடைய சாபம் அவர்
கள்மேல் இருக்கும். கோபமாய் அவர்களைப் 66
பின்தொடர்ந்து, [25]**கர்த்தருடைய**வானங்களின்
கீழ் இராதபடிக்கு அவர்களை அழித்துவிடுவீர்.
ஐயோ! பொன் மங்கி, பசும்பொன் மாறி, **4**
[26]பரிசுத்தஸ்தலத்தில் கற்கள் சகல வீதிகளின்
முனையிலும்கொட்டுண்டுபோயிற்றே. ஐயோ! 2
தங்கத்துக் கொப்பான விலையேறப்பெற்ற
சீயோன் குமாரர் [27]குயவனுடைய கைவேலை
யான மண்பாண்டங்களாய் எண்ணப்படுகி
றார்களே. திமிங்கிலங்கள் முதலாய்க் கொங் 3
கைகளை நீட்டி, தங்கள் குட்டிகளுக்குப் பால்
கொடுக்கும்; என் ஜனமாகிய குமாரத்தியோ
வனாந்தரத்திலுள்ள தீக்குருவியைப்போல்
[28]குரூரமாயிருக்கிறாளே. குழந்தைகளின் 4
நாவு தாகத்தால் மேல்வாயோடே ஒட்டிக்
கொண்டிருக்கிறது; பிள்ளைகள் அப்பங் கேட்
கிறார்கள், அவர்களுக்குக் கொடுப்பாரில்லை.
ருசியான பதார்த்தங்களைச் சாப்பிட்டவர்கள் 5
வீதிகளில் பாழாய்க் கிடக்கிறார்கள்; [29]இரத்
தாம்பரம் உடுத்தி வளர்ந்தவர்கள் குப்பைமேடு
களை அணைத்துக்கொள்ளுகிறார்கள். கைச் 6
செய்கை யில்லாமல் ஒரு நிமிஷத்திலே
கவிழ்க்கப்பட்ட சோதோமின் பாவத்துக்கு
வந்த தண்டனையைப்பார்க்கிலும் [30]என் ஜன
மாகிய குமாரத்தியின் அக்கிரமத்துக்கு வந்த
தண்டனை பெரிதாயிருக்கிறது. அவளுடைய 7
நசரேயர் உறைந்த மழையைப்பார்க்கிலும்
சுத்தமும், பாலைப்பார்க்கிலும் வெண்மையும்,
பவளத்தைப்பார்க்கிலும் சிவப்பும், இந்திர
நீலத்தைப்பார்க்கிலும் மேனியுமா யிருந்தார்
கள். இப்பொழுதோ அவர்களுடைய முகம் 8
கரியிலும் கறுத்துப்போயிற்று; [31]வீதிகளில்
அறியப்படார்கள்; அவர்கள் தோல் அவர்கள்
எலும்புகளோடு ஒட்டிக்கொண்டு, [32]காய்ந்த
மரத்துக்கு ஒப்பாயிற்று. பசியினால் கொலை 9

யுண்டவர்களைப்பார்க்கிலும் பட்டயத்தால்
கொலையுண்டவர்கள் பாக்கியவான்களாயிருக்
கிறார்கள்; அவர்கள் வயலின் வரத்தில்லாமை
யால் குத்துண்டு, கரைந்துபோகிறார்கள்.
10 இரக்கமுள்ள ஸ்திரீகளின் கைகள் தங்கள்
பிள்ளைகளைச் சமைத்தன, [1]என் ஜனமாகிய
குமாரத்தியின் அழிவில் அவைகள் அவர்க
11 ளுக்கு ஆகாரமாயின. **கர்த்தர்** தமது கோபத்
தை நிறைவேற்றி, தமது உக்கிரகோபத்தை
ஊற்றி, [2]சீயோனில் அக்கினியைக் கொளுத்
தினார்; அது அதின் அஸ்திபாரங்களைப் பட்
12 சித்துப்போட்டது. சத்துருவும் பகைஞனும்
எருசலேமின் வாசல்களுக்குள் பிரவேசிப்
பான் என்கிறதைப் பூமியின் ராஜாக்களும்
பூச்சக்கரத்தின் சகல குடிகளும் நம்பமாட்
டாதிருந்தார்கள்.
13 அதின் நடுவில் நீதிமான்களின் இரத்தத்
தைச் சிந்தின அதின் தீர்க்கதரிசிகளின் பாவங்
களினாலும், [3]அதின் ஆசாரியர்களின் அக்கிர
14 மங்களினாலும் இப்படி வந்தது. குருடர்போல
வீதிகளில் அலைந்து, [4]ஒருவரும் அவர்கள் வஸ்
திரங்களைத் தொடக்கூடாதபடி இரத்தத்தால்
15 கறைப்பட்டிருந்தார்கள். விலகுங்கள், தீட்டுப்
பட்டவர்களே, தொடாமல் விலகுங்கள், [5]வில
குங்கள், என்று அவர்களை நோக்கிக் கூப்பிட்
டார்கள்; மெய்யாய்ப் பறந்தோடி அலைந்துபோ
னார்கள்; இனித் தங்கித் தரிக்கமாட்டார்கள்
என்று புறஜாதிகளுக்குள்ளே சொல்லப்பட்
16 டது. **கர்த்தருடைய** கோபம் அவர்களைச் சித
றடித்தது, அவர்களை இனி அவர் நோக்கார்;
ஆசாரியருடைய முகத்தைப் பாராமலும் முதி
17 யோரை மதியாமலும் போனார்கள். இன்னும்
எங்களுக்குச் சகாயம் வருமென்று நாங்கள்
வீணாய் எதிர்பார்த்திருந்ததினாலே எங்கள் கண்
கள் பூத்துப்போயின; [6]இரட்சிக்கமாட்டாத
ஜாதிக்கு எதிர்பார்த்துக்கொண்டிருந்தோம்.
18 நாங்கள் எங்கள் வீதிகளில் நடவாதபடிக்கு எங்
கள் அடிச்சுவடுகளை வேட்டையாடினார்கள்;
எங்கள் முடிவு சமீபித்தது; [7]எங்கள் நாட்கள்
நிறைவேறிப்போயின; எங்கள் முடிவு வந்து
19 விட்டது. எங்களைப் பின்தொடர்ந்தவர்கள்
ஆகாயத்துக் கழுகுகளைப்பார்க்கிலும் வேகமா
யிருந்தார்கள்; [8]பர்வதங்கள்மேல் எங்களைப்
பின்தொடர்ந்தார்கள்; வனாந்தரத்தில் எங்க
20 ளுக்குப் பதிவிருந்தார்கள். **கர்த்தரால்** அபி
ஷேகம் பண்ணப்பட்டவனும், எங்கள் நாசி
யின் சுவாசமாயிருந்தவனும் அவர்களுடைய
படுகுழியில் அகப்பட்டான்; [9]அவனுடைய
நிழலிலே ஜாதிகளுக்குள்ளே பிழைத்திருப்
போம் என்று அவனைக்குறித்துச் சொல்லி
யிருந்தோமே.
21 ஊத்ஸ் தேசவாசியாகிய ஏதோம் குமாரத்தி
யே, சந்தோஷித்துக் களிகூரு; [10]பாத்திரம்
உன்னிடத்திற்கும் தாண்டிவரும்; அப்பொ
ழுது நீ வெறித்து, மானபங்கமாய்க் கிடப்பாய்.
22 சீயோன் குமாரத்தியே, உன் அக்கிரமத்
துக்கு வரும் தண்டனை தீர்ந்தது; [11]அவர் இனி

1 உபா. 28. 56, 57
2 இரா. 6. 28, 29. எசே. 49. 15
2 எரே. 7. 20: 21. 14
3 எரே. 5. 31. எசே. 22. 26, 28. செப். 3. 4. மத். 23. 31, 37
4 எண். 19. 16. எரே. 2. 34
5 லேவி. 13. 45
6 சங். 30. 6, 7: 31. 1, 3. எரே. 37. 7, 8
7 எசே. 7. 2, 5, 6. ஆமோ. 8. 2
8 உபா. 28. 49
9 எரே. 52. 9
10 பிர. 11. 5. ஒப. 10, 15. மல
11 ஏசா. 40. 2
12 சங். 137. 7
13 சங். 89. 50, 51
14 சங். 79. 1. ஒ
15 நெகே. 9. 36, 37
16 நெகே. 5. 15
17 சகரி. 14. 2
18 ஏசா. 47. 6
19 கீர. 16. 21
20 யோபு 19. 9
21 ஆப. 1. 12
22 சங். 80. 3. ஒ. ஆப. 3. 2

உன்னை அப்புறம் சிறைப்பட்டுப் போகவி
டார்; ஏதோம் குமாரத்தியே, உன் அக்கிர
மத்தை அவர் விசாரிப்பார்; [12]உன் பாவங்களை
வெளிப்படுத்துவார்.

**கர்த்தாவே**, எங்களுக்கு நேரிட்டதை **5**
நினைத்தருளும்; [13]எங்கள் நிந்தையை நோக்கிப்
பாரும்.
எங்கள் சுதந்தரம் அந்நியர் வசமாகவும், 2
[14]எங்கள் வீடுகள் புறத்தேசத்தார் வசமாகவும்
தாண்டிப்போயின. திக்கற்றவர்களானோம், 3
தகப்பன் இல்லை; எங்கள் தாய்கள் விதவை
களைப்போல இருக்கிறார்கள். எங்கள் தண் 4
ணீரைப் பணத்துக்கு வாங்கிக் குடிக்கிறோம்;
எங்கள் விறகு விலைக்கிரயமாய் வருகிறது.
பாரஞ்சுமந்து எங்கள் கழுத்து நோகிறது; 5
நாங்கள் உழைக்கிறோம், [15]எங்களுக்கு இளைப்
பாறுதல் இல்லை. அப்பத்தால் திருப்தியா 6
கும்படி எகிப்தியருக்கும் அசீரியருக்கும் எங்
களைக் கையளித்தோம். எங்கள் பிதாக்கள் 7
பாவஞ்செய்து மாண்டுபோனார்கள்; நாங்கள்
அவர்களுடைய அக்கிரமங்களைச் சுமக்கிறோம்.
அடிமைகள் எங்களை ஆளுகிறார்கள்: [16]எங்களை 8
அவர்கள் கையிலிருந்து விடுவிப்பாரில்லை.
வனாந்தரத்தில் இருக்கிற பட்டயத்தினால் பிரா 9
ணமோசத்துக்கு ஏதுவானவர்களாய் எங்கள்
அப்பத்தைத் தேடுகிறோம். பஞ்சத்தின் கொடு 10
மையினால் எங்கள் தோல் அடுப்பங்கரையைப்
போல் கறுத்துப்போயிற்று. சீயோனில் இரு 11
ந்த ஸ்திரீகளையும் யூதா பட்டணங்களில் இரு
ந்த கன்னிகைகளையும் [17]அவமானப்படுத்தினார்
கள். பிரபுக்களுடைய கைகளை அவர்கள் 12
கட்டி, அவர்களை ஏறத் தூக்கினார்கள்; [18]முதி
யோரின் முகங்கள் மதிக்கப்படவில்லை.
வாலிபரை எந்திரம் அரைக்கக் கொண்டு 13
போனார்கள்; [19]இளைஞர் விறகு சுமந்து
இடறிவிழுகிறார்கள். முதியோர்கள் வாசல் 14
களில் உட்காருகிறதும் வாலிபர் கின்னரங்
களை வாசிக்கிறதும் நின்றுபோயிற்று. எங் 15
கள் இருதயத்தின் களிகூர்தல் ஒழிந்துபோ
யிற்று; எங்கள் சந்தோஷம் துக்கமாய் மாறிற்று.
எங்கள் தலையிலிருந்து கிரீடம் விழுந்தது; 16
[20]ஐயோ! நாங்கள் பாவஞ்செய்தோமே.
அதினால் எங்கள் இருதயம் பலட்சயமா 17
யிற்று; அதினால் எங்கள் கண்கள் இருண்டு
போயின. பாழாய்க்கிடக்கிற சீயோன் மலை 18
யின்மேல் நரிகள் ஓடித்திரிகிறது.
**கர்த்தாவே**, நீர் என்றென்றைக்கும் இருக் 19
கிறீர்; [21]உம்முடைய சிங்காசனம் தலைமுறை
தலைமுறையாக நிலைநிற்கும். தேவரீர் என் 20
றைக்கும் எங்களை மறந்து, நெடுங்காலமாக
எங்களைக் கைவிட்டிருப்பதென்ன? **கர்த்தா** 21
**வே**, எங்களை உம்மிடத்தில் திருப்பிக்கொள்
ளும், அப்பொழுது திரும்புவோம்; [22]பூர்வகா
லத்திலிருந்ததுபோல எங்கள் நாட்களைப் புதிய
வைகளாக்கும். எங்களை முற்றிலும் வெறுத்து 22
விடுவீரோ? எங்கள்பேரில் கடுங்கோபமாயி
ருக்கிறீரே!

EZEKIEL

# எசேக்கியேல் தீர்க்கதரிசியின்

## புஸ்தகம்

1 முப்பதாம் வருஷம் நாலாம் மாசம் ஐந்தாம்
தேதியிலே, நான் கேபார் நதியண்டையிலே
சிறைப்பட்டவர்கள் நடுவில் இருக்கும்போது,
சம்பவித்தது என்னவென்றால், வானங்கள்
திறக்கப்பட, [1]நான் தேவதரிசனங்களைக் கண்
2 டேன். அது யோயாக்கீன் ராஜாவுடைய
[2]சிறையிருப்பின் ஐந்தாம் வருஷமாயிருந்தது.
3 அந்த ஐந்தாந்தேதியிலே, கல்தேயர் தேசத்தி
லுள்ள கேபார் நதியண்டையிலே பூசியென்
னும் ஆசாரியனுடைய குமாரனாகிய எசேக்கி
யேலுக்குக் **கர்த்தருடைய** வார்த்தை உண்டா
கி, [3]அங்கே **கர்த்தருடைய** கரம் அவன்மேல்
4 அமர்ந்தது. இதோ, வடக்கேயிருந்து புசல்
காற்றும் பெரிய மேகமும், அத்தோடே கல
ந்த அக்கினியும் வரக்கண்டேன்; அதைச் சுற்
றிலும் பிரகாசமும், அதின் நடுவில் அக்கி
னிக்குள்ளிருந்து விளங்கிய *சொகுசாவின்
5 நிறமும் உண்டாயிருந்தது. அதின் நடுவிலி
ருந்து நாலு ஜீவன்கள் தோன்றின; [4]அவை
6 களின் சாயல் மனுஷசாயலாயிருந்தது. அ
வைகளில் ஒவ்வொன்றுக்கும் நந்நான்கு முகங்
களும், ஒவ்வொன்றுக்கும் நந்நான்கு செட்
7 டைகளும் இருந்தன. அவைகளுடைய கால்
கள் நிமிர்ந்த கால்களாயிருந்தன; அவைகளு
டைய உள்ளங்கால்கள் கன்றுக்குட்டியின் உள்
ளங்கால்களுக்கு ஒப்பாயிருந்தன; [5]அவைகள்
துலக்கப்பட்ட வெண்கலத்தின் வருணமாய்
8 மின்னிக்கொண்டிருந்தன. அவைகளுடைய
செட்டைகளின்கீழ் அவைகளின் நாலுபக்கங்
களிலும் மனுஷகைகள் இருந்தன; அந்த நாலு
க்கும் அதினதின் முகங்களும் அதினதின்
9 செட்டைகளும் உண்டாயிருந்தன. அவை
கள் ஒவ்வொன்றின் செட்டைகளும் மற்றதின்
செட்டைகளோடே சேர்ந்திருந்தன; அவைகள்
செல்லுகையில் திரும்பாமல் ஒவ்வொன்றும்
தன்தன் திசைக்கு நேர்முகமாய்ச் சென்றன.
10 அவைகளுடைய முகங்களின் சாயலாவது,
வலதுபக்கத்தில் நாலும் மனுஷமுகமும் சிங்க
முகமும், [6]இடதுபக்கத்தில் நாலும் எருது முக
11 மும் கழுகு முகமுமாயிருந்தன. அவைகளு
டைய முகங்கள் இப்படியிருக்க, அவைகளு
டைய செட்டைகள் மேலே பிரிந்திருந்தன,
ஒவ்வொன்றுக்குமுள்ள இரண்டிரண்டு செட்
டைகள் ஒன்றோடொன்று சேர்ந்திருந்தன;
[7]மற்ற இரண்டிரண்டு செட்டைகள் அவைக
ளுடைய உடல்களை மூடின. அவைகள் ஒவ் 12
வொன்றும் தன்தன் திசைக்கு நேர்முகமாய்ச்
சென்றது; ஆவி போகவேண்டுமென்றிருந்த
எவ்விடத்துக்கும் அவைகள் போயின; போ
கையில் அவைகள் திரும்பிப் பார்க்கவில்லை.
ஜீவன்களுடைய சாயல் எப்படியிருந்ததென் 13
றால், அவைகள் எரிகிற அக்கினித்தழலின்
தோற்றமும் தீவர்த்திகளின் தோற்றமுமாயிருந்
தது; [8]அந்த அக்கினி ஜீவன்களுக்குள்ளே
உலாவிப் பிரகாசமாயிருந்தது; அக்கினியிலி
ருந்து மின்னல் புறப்பட்டது. அந்த ஜீவன்கள் 14
[9]மின்னலின் தோற்றம்போல ஓடித்திரிந்தன.
நான் அந்த ஜீவன்களைப் பார்த்துக்கொண்டிரு 15
க்கையில், இதோ, பூமியில் ஜீவன்களண்டை
யிலே [10]நாலு முகங்களையுடைய ஒரு சக்கரத்
தைக் கண்டேன். சக்கரங்களின் ரூபமும் 16
அவைகளின் வேலையும் படிகப்பச்சை வருண
மாயிருந்தது; [11]அவைகள் நாலுக்கும் ஒரேவித
சாயல் இருந்தது; அவைகளின் ரூபமும் அவை
களின் வேலையும் சக்கரத்துக்குள் சக்கரம் இரு
க்குமாப்போல் இருந்தது. அவைகள் ஓடுகை 17
யில் தங்கள் நாலுபக்கங்களிலும் ஓடும், [12]ஓடுகை
யில் அவைகள் திரும்புகிறதில்லை. அவைகளின் 18
†வட்டங்கள் பயங்கரப்படத்தக்க உயரமாயிருந்
தன; [13]அந்த நாலு வட்டங்களும் சுற்றிலும் கண்
களால் நிறைந்திருந்தன. அந்த ஜீவன்கள் செ 19
ல்லும்போது, அந்தச் சக்கரங்கள் அவைகள்
அருகே ஓடின; [14]அந்த ஜீவன்கள் பூமியிலிரு
ந்து எழும்பும்போது சக்கரங்களும் எழும்பின.
ஆவி போகவேண்டுமென்றிருந்த எவ்விடத் 20
துக்கும் அவைகள் போயின; [15]அவ்விடத்துக்கு
அவைகளின் ஆவியும் போகவேண்டுமென்றி
ருந்தது; சக்கரங்களும் அவைகளின் அருகே
எழும்பின; ஜீவனுடைய ஆவி சக்கரங்களில்
இருந்தது. அவைகள் செல்லும்போது இவை 21
களும் சென்றன; அவைகள் நிற்கும்போது
இவைகளும் நின்றன; அவைகள் பூமியிலி
ருந்து எழும்பும்போது, சக்கரங்களும் அவை
கள் அருகே எழும்பின; ஜீவனுடைய ஆவி
சக்கரங்களில் இருந்தது. ஜீவனுடைய தலை 22
களின்மேல் பிரமிக்கத்தக்க வச்சிரப்பிரகாச

1 3. 15, 23. மத். 3. 16, வெளி. 19. 11

2 2 இரா. 24. 12, 15

3 1 இரா. 18. 46

* அம்பர்=தம்பாக்கு

4 10. 8. மு. வெளி. 4. 6. மு

5 தானி. 10. 6. வெளி. 1, 15

6 வெளி. 4. 7

7 ஏசா. 6. 2

8 வெளி. 4. 5

9 சங். 147. 15. சகரி. 4. 10. மத். 24. 27

10 10. 9, 10

11 தானி. 10. 6

12 12. வச

† பண்டிச்சில் வளையங்கள்

13 10. 12. சதி. 15. 3. ஏசா. 55. 9. சகரி. 4. 10

14 10. 16, 17

15 12. வச. 1 கொ. 14. 32

மான ஒரு மண்டலம் இருந்தது; [1]அது அவை
களுடைய தலைகளின்மேல் உயர விரிந்திருந்
23 தது. மண்டலத்தின்கீழ் அவைகளுடைய செ
ட்டைகள் ஒன்றுக்கொன்று எதிர்நேராய் விரிந்
திருந்தன; தங்கள் தங்கள் உடல்களை மூடிக்
கொள்ளுகிற இரண்டிரண்டு செட்டைகள்
இருபக்கத்திலும் இருக்கிற ஒவ்வொன்றுக்கும்
24 இருந்தன. அவைகள் செல்லும்போது அவை
களுடைய செட்டைகளின் இரைச்சலைக்
கேட்டேன்; அது பெருவெள்ளத்தின் இரை
ச்சல்போலவும், [2]சர்வவல்லவருடைய சத்தம்
போலவும், ஒரு ராணுவத்தின் இரைச்சலுக்கு
ஒத்த ஆரவாரத்தின் சத்தம்போலவுமிருந்தது;
[3]அவைகள் நிற்கும்போது தங்கள் செட்டைக
25 ளைத் தளரவிட்டிருந்தன. அவைகள் நின்று
தங்கள் செட்டைகளைத் தளரவிட்டிருக்கை
யில், அவைகளுடைய தலைகளுக்கு மேலான
மண்டலத்தின்மேலிருந்து ஒரு சத்தம் பிறந்
26 தது. அவைகளின் தலைகளுக்குமேலுள்ள ம
ண்டலத்தின் மீதில் நீலரத்தினம்போல விளங்
கும் ஒரு சிங்காசனத்தின் சாயலும், [4]அந்தச்
சிங்காசனத்தின் சாயலின்மேல் [5]மனுஷசாய
27 லுக்கு ஒத்த ஒரு சாயலும் இருந்தது. அவரு
டைய இடுப்பாகக் காணப்பட்டதுமுதல் மே
லெல்லாம் உட்புறம் சுற்றிலும் அக்கினிமய
மான *சொகுசாவின் நிறமாயிருக்கக் கண்
டேன்; அவருடைய இடுப்பாகக் காணப்பட்
டதுமுதல் கீழெல்லாம் அக்கினிமயமாகவும்,
அதைச் சுற்றிலும் பிரகாசமாகவும் இருக்கக்
28 கண்டேன். மழைபெய்யும் நாளில் மேகத்
தில் வானவில் எப்படிக் காணப்படுகிறதோ,
[6]அப்படியே சுற்றிலுமுள்ள அந்தப் பிரகாசம்
காணப்பட்டது, இதுவே **கர்த்தருடைய** மகி
மையின் சாயலுக்குரிய தரிசனமாயிருந்தது;
[7]அதை நான் கண்டபோது முகங்குப்புற
விழுந்தேன்; அப்பொழுது பேசுகிற ஒருவரு
டைய சத்தத்தைக் கேட்டேன்.

**2** அவர் என்னை நோக்கி: மனுபுத்திரனே,
உன் காலூன்றி நில்; [8]உன்னுடனே பேசு
2 வேன் என்றார். இப்படி அவர் என்னோடே
பேசும்போது, [9]ஆவி எனக்குள் வந்து, என்
னைக் காலூன்றி நிற்கும்படி செய்தது; அப்
பொழுது அவர் என்னுடனே பேசுகிறதைக்
3 கேட்டேன். அவர் என்னை நோக்கி: மனு
புத்திரனே, எனக்கு விரோதமாய் எழும்பின
கலகக்கார ஜாதியாகிய இஸ்ரவேல் புத்திரரி
டத்திற்கு நான் உன்னை அனுப்புகிறேன்;
[10]அவர்களும் அவர்கள் பிதாக்களும் இந்நாள்
வரைக்கும் எனக்கு விரோதமாய்த் துரோகஞ்
4 செய்தார்கள். அவர்கள் கடினமுகமும் முரட்
டாட்ட இருதயமுமுள்ள புத்திரர்; [11]அவர்க
ளிடத்திற்கு நான் உன்னை அனுப்புகிறேன்;
கர்த்தராகிய ஆண்டவர் இன்னின்னதை
உரைக்கிறார் என்று அவர்களோடே சொல்லு.
5 கலகவீட்டாராகிய அவர்கள் கேட்டாலும் சரி,
கேளாவிட்டாலும் சரி, [12]தங்களுக்குள்ளே
ஒரு தீர்க்கதரிசி உண்டென்கிறதை அவர்கள்
அறியவேண்டும். மனுபுத்திரனே, நீ அவர் 6
களுக்குப் பயப்படவேண்டாம்; [13]அவர்கள்
வார்த்தைகளுக்கும் அஞ்சவேண்டாம்; நெரிஞ்
சல்களுக்குள்ளும் முள்ளுகளுக்குள்ளும் நீ
தங்கியிருந்தாலும், நீ தேள்களுக்குள் வாசம்
பண்ணினாலும், நீ அவர்கள் வார்த்தைகளுக்
குப் பயப்படாமலும் அவர்கள் முகத்துக்குக்
கலங்காமலுமிரு; [14]அவர்கள் கலகவீட்டார்.
கலகக்காரராகிய அவர்கள் கேட்டாலும் சரி, 7
கேளாவிட்டாலும் சரி, நீ என் வார்த்தைகளை
அவர்களுக்குச் சொல்லு. மனுபுத்திரனே, 8
நீ அந்தக் கலகவீட்டாரைப்போலக் கலகக்கார
னாயிராமல், [15]நான் உன்னோடே சொல்லுகிற
தைக் கேள்; [16]உன் வாயைத் திறந்து நான் உன
க்குக் கொடுக்கிறதைப் †புசி என்றார். அப் 9
பொழுது இதோ, என்னிடத்திற்கு நீட்டப்
பட்ட ஒரு கையைக் கண்டேன்; [17]அந்தக் கை
யிலே ஒரு புஸ்தகச் சுருள் இருந்தது. அவர் 10
அதை எனக்கு முன்பாக விரித்தார்; அதில்
உள்ளும் புறம்பும் எழுதப்பட்டிருந்தது; அதி
லே புலம்பல்களும், தவிப்பும், ஐயோ என்
பதும் எழுதியிருந்தது. பின்பு அவர் என்னை **3**
நோக்கி: மனுபுத்திரனே, நீ காண்கிறதைப்
புசி; இந்தச் சுருளை நீ புசித்து, [18]இஸ்ரவேல்
சந்ததியாரிடத்தில் போய் அவர்களோடே
பேசு என்றார். அப்படியே என் வாயைத் 2
திறந்தேன்; அப்பொழுது அவர் அந்தச் சுரு
ளை எனக்குப் புசிக்கக் கொடுத்து: மனுபுத் 3
திரனே, நான் உனக்குக் கொடுக்கிற இந்தச்
சுருளை நீ உன் வயிற்றிலே உட்கொண்டு,
அதினால் உன் குடல்களை நிரப்புவாயாக என்
றார்; அப்பொழுது நான் அதைப் புசித்தேன்;
[19]அது என் வாய்க்குத் தேனைப்போல் தித்திப்
பாயிருந்தது.

பின்பு அவர் என்னை நோக்கி: மனுபுத்திர 4
னே, நீ போய், இஸ்ரவேல் சந்ததியாரிடத்
தில் சேர்ந்து, என் வார்த்தைகளைக்கொண்டு
அவர்களோடே பேசு. விளங்காத பேச்சும், 5
கடினமான பாஷையுமுள்ள ஜனத்தண்டைக்
கல்ல, இஸ்ரவேல் சந்ததியாரிடத்திற்கே நீ
அனுப்பப்படுகிறாய். விளங்காத பேச்சும், 6
தாங்கள் சொல்லும் வார்த்தைகளை நீ அறியாத
கடினமான பாஷையுமுள்ள அநேகமான ஜன
ங்களிடத்திற்கு நீ அனுப்பப்படவில்லை; நான்
அவர்களிடத்திற்கு உன்னை அனுப்பினாலும்,
[20]அவர்கள் உனக்குச் செவிகொடுப்பார்களோ?
இஸ்ரவேல் வீட்டாரோவெனில், உனக்குச் 7
செவிகொடுக்கமாட்டார்கள்; [21]எனக்கே செவி
கொடுக்கமாட்டோம் என்கிறார்களே; இஸ்ர
வேல் வம்சத்தார் அனைவரும் கடினமான நெ
ற்றியும் முரட்டாட்டமுள்ள இருதயமும் உள்
ளவர்கள். இதோ, உன் முகத்தை அவர்கள் 8
முகத்துக்கு எதிராகவும், உன் நெற்றியை
அவர்கள் நெற்றிக்கு எதிராகவும் கெட்டியாக்
கினேன். உன் நெற்றியை வச்சிரக்கல்லைப் 9
போலாக்கினேன், கன்மலையைப்பார்க்கிலும்
கெட்டியாக்கினேன்; [22]அவர்கள் கலகமுள்ள

1 யோபு 37. 22
2 43. 2. யோபு 37. 2–5. சங். 29. 3, 4: 68. 33. தானி. 10. 6. வெளி. 1. 15
3 2 இரா. 7. 6
4 சங். 45. 6. தானி. 7. 9. மத். 25. 31. எபி. 8. 1: 12. 2
5 யாத். 24. 10
* 4 வசனம்காண்க.
6 ஆதி. 9. 13. வெளி. 4. 3: 10. 1
7 யாத். 16. 7, 10: 24. 16, 17. தானி. 8. 17. அப். 9. 4. வெளி. 1. 17, 18
8 தானி. 10. 11
9 3. 24
10 20. 18–30. உபா. 9. 27. எரே. 3. 25. அப். 7. 51
11 3. 7. மத். 10. 16
12 3. 10, 27: 33. 33
13 எரே. 1. 8, 17. லூக். 12. 4. அப். 4. 29, 31
14 2 சாமு. 23. 6, 7. ஏசா. 9. 18. மீகா. 7. 4. 1 பே. 3. 14
15 ஏசா. 50. 5
16 வெளி. 10. 9, 10
† உட்கொள். எரே. 15. 16
17 3. 1: 8. 3. எரே. 1. 9
18 2. 8, 9
19 சங். 19. 10: 119. 103. எரே. 15. 16. வெளி. 10. 9
20 மத். 10. 23: 12. 41
21 யோவா. 15. 20
22 ஏசா. 50. 7. மீகா 3. 8. 2 தீமோ. 2. 3

வீட்டாரென்று நீ அவர்களுக்குப் பயப்படாம
லும் அவர்கள் முகங்களுக்குக் கலங்காமலும்
10 இரு என்றார். பின்னும் அவர் என்னை நோ
க்கி: மனுபுத்திரனே, நான் உன்னுடனே
சொல்லும் என் வார்த்தைகளையெல்லாம் நீ
உன் செவிகளாலே கேட்டு, [1]உன் இருதயத்
11 தில் ஏற்றுக்கொண்டு, நீ போய், சிறைப்ப
ட்ட உன் ஜனத்தின் புத்திரரிடத்திலே சேர்ந்
து, அவர்கள் கேட்டாலும் கேளாவிட்டாலும்
அவர்களோடே பேசி, கர்த்தராகிய ஆண்ட
டவர் இன்னின்னதை உரைக்கிறார் என்று
அவர்களோடே சொல் என்றார்.
12 அப்பொழுது ஆவி, என்னை உயர எடுத்
துக்கொண்டது; [2]**கர்த்தருடைய** ஸ்தானத்தி
லிருந்து விளங்கிய அவருடைய மகிமைக்கு
ஸ்தோத்திரம் உண்டாவதாக என்று எனக்குப்
பின்னாகக் கூப்பிட்ட மகா சத்தத்தின் இரைச்
13 சலைக் கேட்டேன். ஒன்றோடொன்று இணை
ந்திருக்கிற ஜீவன்களுடைய செட்டைகளின்
இரைச்சலையும், அதற்கெதிரே ஓடிய சக்கரங்
களின் இரைச்சலையும், மகா சத்தத்தின் இரை
14 ச்சலையும் கேட்டேன். ஆவி என்னை உயர
எடுத்துக்கொண்டது; நான் என் ஆவியின்
உக்கிரத்தினாலே மனங்கசந்துபோனேன்; [3]ஆ
னாலும் **கர்த்தருடைய** கரம் என்மேல் பலமாக
15 இருந்தது. கேபார் நதியண்டையிலே தெலா
பீபிலே தாபரிக்கிற சிறைப்பட்டவர்களிடத்
துக்கு நான் வந்து, அவர்கள் தாபரிக்கிற ஸ்த
லத்திலே தாபரித்து, [4]ஏழுநாள் அவர்கள் நடுவி
லே பிரமித்தவனாய்த் தங்கினேன்.
16 ஏழுநாள் முடிந்தபின்பு **கர்த்தருடைய** வார்
17 த்தை எனக்கு உண்டாகி, அவர்: மனுபுத்தி
ரனே, உன்னை இஸ்ரவேல் வம்சத்தாருக்குக்
காவலாளனாக வைத்தேன்; [5]நீ என் வாயினா
லே வார்த்தையைக்கேட்டு, என் நாமத்தினாலே
18 அவர்களை எச்சரிப்பாயாக. சாகவே சாவாய்
என்று நான் துன்மார்க்கனுக்குச் சொல்
லுகையில், நீ துன்மார்க்கனைத் தன் துன்மார்க்
கமான வழியில் இராதபடிக்கு எச்சரிக்கும்
படியாகவும், அவனை உயிரோடே காக்கும்படி
யாகவும், அதை அவனுக்குச் சொல்லாமலும்,
நீ அவனை எச்சரிக்காமலும் இருந்தால், [6]அந்த
துன்மார்க்கன் தன் துன்மார்க்கத்திலே சா
வான்; அவன் இரத்தப்பழியையோ உன்
19 கையிலே கேட்பேன். நீ துன்மார்க்கனை எச்
சரித்தும், அவன் தன் துன்மார்க்கத்தையும்
தன் ஆகாதவழியையும் விட்டுத் திரும்பாமற்
போவானாகில், அவன் தன் துன்மார்க்கத்திலே
சாவான்; [7]நீயோவென்றால் உன் ஆத்துமா
20 வைத் தப்புவிப்பாய். அப்படியே, நீதிமான்
தன் நீதியைவிட்டுத் திரும்பி, நீதிகேடு செய்
யும்போதும், நான் அவன்முன் இடறலை
வைக்கும்போதும், [8]அவன் சாவான்; நீ அவ
னை எச்சரிக்காதபடியினாலே அவன் தன் பாவ
த்திலே சாவான்; அவன் செய்த நீதிகள் நினை
க்கப்படுவதில்லை; அவனுடைய இரத்தப்பழி
21 யையோ உன் கையிலே கேட்பேன். நீதி
மான் பாவஞ்செய்யாதபடிக்கு நீ நீதிமானை
எச்சரித்தபின்பு அவன் பாவஞ்செய்யாவிட்
டால், அவன் பிழைக்கவே பிழைப்பான்;
அவன் எச்சரிக்கப்பட்டான்; [9]நீயும் உன் ஆத்
துமாவைத் தப்புவித்தாய் என்றார்.
அவ்விடத்திலே **கர்த்தருடைய** கரம் என் 22
மேல் அமர்ந்தது; அவர்: நீ எழுந்திருந்து பள்
ளத்தாக்குக்குப் புறப்பட்டுப் போ, அங்கே
உன்னுடனே பேசுவேன் என்றார். அப்படி 23
யே நான் எழுந்திருந்து, பள்ளத்தாக்குக்குப்
புறப்பட்டுப் போனேன்; இதோ, கேபார்
நதியண்டையிலே நான் கண்ட மகிமைக்குச்
சரியாக அங்கே **கர்த்தருடைய** மகிமை விளங்
கினது; [10]அப்பொழுது நான் முகங்குப்புற
விழுந்தேன். உடனே ஆவி எனக்குள்ளே 24
புகுந்து, [11]என்னைக் காலூன்றி நிற்கும்படி
செய்தது, அப்பொழுது அவர் என்னுடனே
பேசி: நீ போய், உன் வீட்டுக்குள்ளே உன்னை
அடைத்துக்கொண்டிரு. இதோ, மனுபுத்திர 25
னே, உன்மேல் கயிறுகளைப்போட்டு, அவை
களால் உன்னைக் கட்டப்போகிறார்கள்; ஆகை
யால் நீ அவர்களுக்குள்ளே போகவேண்டாம்.
நான் உன் நாவை உன் மேல்வாயோடே ஒட் 26
டிக்கொள்ளப்பண்ணுவேன்; [12]நீ அவர்களைக்
கடிந்துகொள்ளுகிற மனுஷனாயிராமல், ஊ
மையனாயிருப்பாய்; அவர்கள் கலகவீட்டார்.
நான் உன்னோடே பேசும்போது, உன் 27
வாயைத் திறப்பேன்; அப்பொழுது கர்த்தரா
கிய ஆண்டவர் இன்னின்னதை உரைத்தார்
என்று அவர்களோடே சொல்வாய்; கேட்கிற
வன் கேட்கட்டும், கேளாதவன் கேளாதிருக்
கட்டும்; அவர்கள் கலகவீட்டார்.

மனுபுத்திரனே, நீ ஒரு செங்கலை எடுத்து, **4**
அதை உன்முன் வைத்து, அதின்மேல் எருச
லேம் நகரத்தை வரைந்து, அதற்கு விரோத 2
மாக முற்றிக்கை போட்டு, [13]அதற்கு விரோத
மாகக் கொத்தளங்களைக் கட்டி, அதற்கு விரோ
தமாக மண்மேடு போட்டு, அதற்கு விரோத
மாக ராணுவங்களை நிறுத்தி, சுற்றிலும் அத
ற்கு விரோதமாக மதிலிடிக்கும் யந்திரங்களை
வை. மேலும் நீ ஒரு இருப்புச்சட்டியை 3
வாங்கி, அதை உனக்கும் நகரத்துக்கும் நடு
வாக இருப்புச் சுவராக்கி, அது முற்றிக்கை
யாய்க் கிடக்கும்படிக்கு உன் முகத்தை அத
ற்கு நேராய்த் திருப்பி, அதை முற்றிக்கை
போட்டுக்கொண்டிரு; [14]இது இஸ்ரவேல் வம்
சத்துக்கு அடையாளம்.
நீ உன் இடதுபக்கமாய் ஒருக்களித்துப் 4
படுத்து, அதின்மேல் இஸ்ரவேல் வம்சத்தா
ரின் அக்கிரமத்தைச் சுமத்திக்கொள்; நீ அந்
தப்பக்கமாய் ஒருக்களித்திருக்கும் நாட்களின்
இலக்கத்தின்படியே அவர்களுடைய அக்கிர
மத்தைச் சுமப்பாய். அவர்களுடைய அக்கிர 5
மத்தின் வருஷங்களை உனக்கு நாட்கணக்காய்
எண்ணக் கட்டளையிட்டேன்; [15]முந்நூற்றுத்
தொண்ணூறு நாட்கள்வரைக்கும் நீ இஸ்ர
வேல் வம்சத்தாரின் அக்கிரமத்தைச் சுமக்க

[1] 2 தீமோ. 2. 7
[2] 8. 3. 1 இரா. 18. 12. 2 இரா. 2. 16 அப். 8. 39
[3] 12. ஏசா. 2 இரா. 3. 15
[4] யோபு 2. 13. சங். 137. 1
[5] ஏசா. 52. 8: 56. 10. எரே. 6. 17. எபி. 13. 17
[6] 33. 6. யோ. 8. 21, 24
[7] ஏசா. 40. 4, 5. அப். 20. 26
[8] 18. 24: 33. 12, 13. 1 பே. 2. 6-8
[9] சங். 19. 11
[10] 1. 28
[11] 2. 2
[12] ஆமோ. 8. 11, 12. லூ. 1. 20, 22
[13] லூ. 19. 43, 44
[14] 12. 6, 11
[15] எண். 14. 34

6 வேண்டும். நீ இவைகளை நிறைவேற்றின
பின்பு, மறுபடியும் உன் வலதுபக்கமாய் ஒருக்
களித்து, யூதா வம்சத்தாரின் அக்கிரமத்தை
நாற்பது நாள்வரைக்கும் சுமக்கவேண்டும்;
ஒவ்வொரு வருஷத்துக்குப் பதிலாக ஒவ்
வொரு நாளை உனக்குக் கட்டளையிட்டேன்.
7 நீ எருசலேமின் முற்றிக்கைக்கு நேராகத்
திருப்பிய முகமும், திறந்த புயமுமாக இருந்து,
அதற்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம் சொ
8 ல்லு. இதோ, நீ அதை முற்றிக்கை போடும்
நாட்களை நிறைவேற்றுமட்டும் ஒரு பக்கத்தி
லிருந்து மறுபக்கத்தில் புரளக்கூடாதபடிக்கு
9 [1]உன்னைக் கயிறுகளால் கட்டுவேன். நீ
கோதுமையையும் வாற்கோதுமையையும் பெ
ரும்பயற்றையும் சிறுபயற்றையும் தினையை
யும் கம்பையும் வாங்கி, அவைகளை ஒரு பாத்
திரத்திலே போட்டு, அவைகளால் உனக்கு
அப்பஞ்சுடுவாய்; நீ ஒருக்களித்துப் படுக்கும்
நாட்களுடைய இலக்கத்தின்படியே முந்நூற்
றுத் தொண்ணூறுநாள் அதில் எடுத்துச் சாப்
10 பிடுவாயாக. நீ சாப்பிடும் போஜனம், நாள்
ஒன்றுக்கு இருபது சேக்கல் நிறையாயிருக்
கும்; அப்படி நாளுக்குநாள் சாப்பிடுவாயாக.
11 தண்ணீரையும் அளவாய் ஹின் என்னும் படி
யில் ஆறிலொரு பங்கைக் குடிப்பாய்; அப்படி
12 நாளுக்குநாள் குடிப்பாயாக. அதை வாற்கோ
துமை அடையைப்போல் சாப்பிடுவாயாக;
அது மனுஷனிலிருந்து கழிந்த கஷ்டத்
தின் வறட்டிகளால் அவர்கள் கண்களுக்கு
13 முன்பாகச் சுடப்படுவதாக. அதற்கு ஒத்த
படியே இஸ்ரவேல் புத்திரர், நான் அவர்
களைத் துரத்துகிற புறஜாதிகளுக்குள்ளே [2]தங்
கள் அப்பத்தைத் தீட்டுள்ளதாகச் சாப்பிடுவார்
14 கள் என்று கர்த்தர் சொன்னார். அப்பொ
ழுது நான்: ஆ, கர்த்தராகிய ஆண்டவரே,
இதோ, என் ஆத்துமா தீட்டுப்படவில்லை;
[3]தானாய்ச் செத்ததையாவது, பீறுண்டதையா
வது நான் என் சிறுவயதுமுதல் இதுவரைக்
கும் சாப்பிட்டதில்லை; [4]அருவருப்பான
இறைச்சி என் வாய்க்குட் பட்டதுமில்லை என்
15 றேன். அப்பொழுது அவர் என்னை நோக்கி:
பார், மனுஷ கஷ்டத்தின் வறட்டிக்குப் பதி
லாக உனக்கு மாட்டுச்சாணி வறட்டியைக்
கட்டளையிடுகிறேன்; அதினால் உன் அப்பத்
16 தைச் சுடுவாயாக என்றார். பின்னும் அவர்:
மனுபுத்திரனே, இதோ, அப்பமும் தண்ணீ
ரும அவர்களுக்குக் குறையவும், [5]அவனவன்
திடுக்கிடவும, அவர்கள் தங்கள் அக்கிரமத்தி
17 லே வாடிப்போகவும், நான் எருசலேமிலே
[6]அப்பம் என்னும் ஆதாரக்கோலை முறிக்கி
றேன்; அவர்கள் அப்பத்தை நிறையின்படியே
விசாரத்தோடே சாப்பிட்டு, தண்ணீரை அள
வின்படியே திடுக்கிடுதலோடே குடிப்பார்கள்.

5 பின்னும் அவர்: மனுபுத்திரனே, சவரகன்
கத்தியாகிய கருக்கான கத்தியை வாங்கி, [7]அதி
னால் உன் தலையையும் உன் தாடியையும்
சிரைத்துக்கொண்டு, பின்பு நிறுக்கும் தராசை

1 3. 25
2 ஓசி. 9. 3
3 அப். 10. 14
4 யாத். 22. 31. லேவி. 17. 15. உபா. 14. 3. ஏசா. 65. 4
5 24. 23. லேவி. 26. 39
6 5. 16: 12. 19: 14. 13. லேவி. 26. 26. சங். 105. 16. ஏசா. 3. 1
7 லேவி. 21. 5. ஏசா. 7. 20
8 எரே. 40. 6: 52. 16
9 எரே. 44. 14
10 16. 47. செகே. 9. 16. 17. எரே. 5. 3
11 புல. 4. 6. தானி. 9. 12. ஆமோ. 3. 2
12 லேவி. 26. 29. உபா. 28. 53. புல. 2. 20: 4. 10
13 12. 14. உபா. 28. 64. சகரி. 2. 6
14 8. 5. 2 நாளா. 36. 14
15 6. 12. எரே. 15. 2: 21. 9

எடுத்து, அந்த மயிரைப் பங்கிடக்கடவாய்.
மூன்றில் ஒரு பங்கை எடுத்து முற்றிக்கை 2
போடும் நாட்கள் முடிகிறபோது நகரத்தின்
நடுவிலே அக்கினியால் சுட்டெரித்து, மூன்
றில் ஒரு பங்கை எடுத்து, அதைச் சுற்றிலும்
கத்தியாலே வெட்டி, மூன்றில் ஒரு பங்கை
எடுத்துக் காற்றிலே தூற்றக்கடவாய்; அவைக
ளின் பின்னாக நான் பட்டயத்தை உருவு
வேன். அதில் கொஞ்சம்மாத்திரம் எடுத்து, 3
[8]அதை உன் வஸ்திரத்தோரங்களில் முடிந்து
வைப்பாயாக. பின்னும் அதில் கொஞ்சம் 4
எடுத்து, [9]அதைத் தீயின் நடுவில் எறிந்து,
அதை அக்கினியால் சுட்டெரிப்பாயாக; அதி
லிருந்து இஸ்ரவேல் வம்சத்தார் அனைவருக்
கும் விரோதமாக அக்கினி புறப்படும்.
**கர்த்தராகிய** ஆண்டவர் சொல்லுகிறது 5
என்னவென்றால், இதுவே எருசலேம், புற
ஜாதிகளின் நடுவிலே நான் அதை வைத்
தேன், அதைச் சுற்றிலும் தேசங்கள் இருக்
கிறது. அது புறஜாதிகளைப்பார்க்கிலும் என் 6
நியாயங்களையும், தன்னைச் சுற்றிலும் இருக்கிற
தேசங்களைப்பார்க்கிலும் என் கட்டளைகளை
யும் அக்கிரமமாக மாற்றிப்போட்டது; [10]அவர்
கள் என் நியாயங்களை வெறுத்து, என் கட்ட
ளைகளில் நடவாமற்போனார்கள். ஆகையால் 7
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறது என்ன
வென்றால், உங்களைச் சுற்றிலும் இருக்கிற
புறஜாதிகளைப்பார்க்கிலும் அதிகரிக்கிறவர்க
ளாகிய நீங்கள் என் கட்டளைகளிலே நடவா
மலும், என் நியாயங்களின்படி செய்யாம
லும், உங்களைச் சுற்றிலும் இருக்கிற புறஜாதி
களுடைய நீதி நியாயங்களின்படியாவது நட
வாமலும் போனபடியினாலே, இதோ, நான், 8
நானே உனக்கு விரோதமாக வந்து, புறஜாதி
களுடைய கண்களுக்கு முன்பாக உன் நடுவி
லே நீதி செலுத்தி, நான் முன்பு செய்யாததும் 9
இனிச் செய்யாதிருப்பதுமானவிதமாய் [11]உன
க்கு உன் எல்லா அருவருப்புகளினிமித்தமும்
செய்வேன். ஆதலால் உன் நடுவிலே பிதாக் 10
கள் பிள்ளைகளைத் தின்பார்கள்; [12]பிள்ளைகள்
பிதாக்களைத் தின்பார்கள்; நான் உன்னில்
நீதி செலுத்தி உன்னில் மீதியாயிருப்பவர்களை
யெல்லாம் சகல திசைகளிலும் [13]சிதறிப்போ
கப்பண்ணுவேன் என்று கர்த்தராகிய ஆண்ட
வர் சொல்லுகிறார். ஆதலால், நீ என்றிக 11
ழப்படத் தக்கதும் அருவருக்கப்படத் தக்கது
மான உன் கிரியைகளால் நீ என் பரிசுத்த
ஸ்தலத்தைத் தீட்டுப்படுத்தினபடியால் என்
கண் உன்னைத் தப்பவிடாது, [14]நான் உன்
னைக் குறுகிப்போகப் பண்ணுவேன், நான்
இரங்கமாட்டேன், இதை என் ஜீவனைக்கொ
ண்டு சொல்லுகிறேன் என்று கர்த்தராகிய
ஆண்டவர் உரைக்கிறார். உன்னிலே மூன் 12
றில் ஒரு பங்கு கொள்ளைநோயால் சாவார்
கள், [15]பஞ்சத்தாலும் உன் நடுவிலே மடிந்து
போவார்கள்; மூன்றில் ஒரு பங்கு உன்னைச்
சுற்றிலும் இருக்கிற பட்டயத்தால் வெட்டு

ண்டு விழுவார்கள்; மூன்றில் ஒரு பங்கை நான்
சகல திசைகளிலும் சிதறிப்போகப்பண்ணி,
[1]அவர்கள் பின்னே பட்டயத்தை உருவுவேன்.
13 இப்படி என் கோபம் நிறைவேறும்; இப்படி
நான் என் உக்கிரத்தை அவர்கள்மேல் தங்கப்
பண்ணுகிறதினால் என்னை ஆற்றிக்கொள்
வேன்; [2]நான் என் உக்கிரத்தை அவர்களில்
நிறைவேற்றும்போது, **கர்த்தராகிய** நான் என்
வைராக்கியத்திலே இதைப் பேசினேன் என்
14 று அறிவார்கள். கடந்துபோகிற யாவருடைய
கண்களுக்கு முன்பாகவும் உன் சுற்றுப்புறத்
தாராகிய ஜாதிகளுக்குள்ளே [3]நான் உன்னைப்
15 பாழும் நிந்தையுமாக்குவேன். நான் கோபத்
தாலும் உக்கிரத்தாலும் கொடிய கண்டனை
களாலும், உன்னில் நீதி செலுத்தும்போது,
[4]உன் சுற்றுப்புறத்தாராகிய ஜாதிகளுக்கு அது
நிந்தையும் தூர்க்கீர்த்தியும் எச்சரிப்பும் பிரமிப்
புமாய் இருக்கும்; **கர்த்தராகிய** நான் இதைச்
16 சொன்னேன். உங்களை அழிப்பதற்கு நான்
அனுப்பும் அழிவுக்கேதுவான பஞ்சத்தின்
கொடிய அம்புகளை நான் அவர்களுக்குள்ளே
எய்யும்போது, [5]நான் பஞ்சத்தை உங்கள்மேல்
அதிகரிக்கப்பண்ணி, உங்கள் அப்பம் என்
னும் ஆதாரகோலை முறித்துப்போடுவேன்.
17 பஞ்சத்தையும், உன்னைப் பிள்ளையில்லாமல்
போகப்பண்ணும் துஷ்டமிருகங்களையும் உங்
களுக்கு விரோதமாக அனுப்புவேன்; [6]கொள்
ளைநோயும் இரத்தஞ்சிந்துதலும் உன்னில் சுற்
றித்திரியும்; பட்டயத்தை நான் உன்மேல்
வரப்பண்ணுவேன்; **கர்த்தராகிய** நான் இதைச்
சொன்னேன் என்றார்.

**6** **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண்டாகி,
2 அவர்: மனுபுத்திரனே, நீ இஸ்ரவேலின் பர்
வதங்களுக்கு நேராக உன் முகத்தைத் திருப்பி,
[7]அவைகளுக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம்
உரைத்துச் சொல்லவேண்டியது என்னவென்
3 றால், இஸ்ரவேலின் பர்வதங்களே, கர்த்த
ராகிய ஆண்டவரின் வார்த்தையைக் கேளுங்
கள்; கர்த்தராகிய ஆண்டவர் பர்வதங்களையும்
குன்றுகளையும் ஓடைகளையும் பள்ளத்தாக்கு
களையும் நோக்கி: இதோ, உங்கள்மேல் நான்,
நானே பட்டயத்தை வரப்பண்ணி, [8]உங்கள்
4 மேடைகளை அழித்துப்போடுவேன். உங்கள்
பலிபீடங்கள் பாழாக்கப்பட்டு, உங்கள் சிலை
கள் தகர்க்கப்படும்; உங்களில் கொலையுண்கிற
வர்களை உங்கள் நரகலான விக்கிரகங்களுக்கு
5 முன்பாக விழப்பண்ணுவேன். நான் இஸ்ர
வேல் புத்திரருடைய பிரேதங்களை அவர்களு
டைய நரகலான விக்கிரகங்களின் முன்னே
கிடக்கப்பண்ணி, [9]உங்கள் பலிபீடங்களைச்
சுற்றிலும் உங்கள் எலும்புகளைச் சிதறப்பண்
6 ணுவேன். உங்கள் பலிபீடங்கள் நிர்மூலமும்
பாழுமாகும்படிக்கும், உங்கள் நரகலான விக்
கிரகங்கள் தகர்க்கப்பட்டு, ஓய்ந்து, உங்கள் சிலை
கள் வெட்டுண்டு, உங்கள் கிரியைகள் குலைந்து
போகும்படிக்கும், உங்களுடைய சகல வாசஸ்
தலங்களிலுமுள்ள பட்டணங்கள் நிர்மூலமும்

1 எரே. 9. 16
2 6. 12: 21. 17. ஏசா. 1. 24
3 செக. 2. 17
4 உபா. 28. 37. 1 இரா. 9. 7. சங். 79. 4. எரே. 24. 9. புல. 2. 15–17
5 உபா. 32. 23
6 38. 22. லேவி. 26. 22
7 20. 46: 36. 1
8 லேவி. 26. 30.
9 1 இரா. 13. 2. 2 இரா. 23. 14, 16
10 13. கச
11 ஏசா. 6. 13. எரே. 44. 28
12 சங். 137. 4. ஏசா. 43. 24. எரே. 3. 6, 13. தானி. 9. 2, 3
13 21. 14
14 5. 12, 13
15 5. 13
16 ஏசா. 57. 5, 7. எரே. 2. 20. ஓசி. 4. 13
17 ஏசா. 5. 25
18 புல. 1. 9. ஆமோ. 8. 2. மத். 24. 6, 13, 14

உங்கள் மேடைகள் பாழுமாகும். கொலை 7
செய்யப்பட்டவர்கள் உங்கள் நடுவில் விழுவார்
கள்; [10]அப்பொழுது நான் **கர்த்தர்** என்று
அறிந்துகொள்வீர்கள். நீங்கள் தேசங்களில் 8
சிதறடிக்கப்படும்போது புறஜாதிகளுக்குள்ளே
பட்டயத்துக்குத் தப்புவாரை [11]உங்களுக்கு மீதி
யாக வைப்பேன். என்னை விட்டுச் சோரம் 9
போகிற இருதயத்தைக்குறித்தும், தங்கள் நர
கலான விக்கிரகங்களின் பின்னே சோரம்
போகிற தங்கள் கண்களைக்குறித்தும் மனமடி
வானேன் என்று உங்களில் தப்பிப்போன
அவர்கள் தாங்கள் சிறைப்பட்டிருக்கும் புற
ஜாதிகளுக்குள்ளே என்னை நினைத்து, [12]தங்க
ளுடைய சகல அருவருப்புகளினாலும் தாங்
கள் செய்த பொல்லாப்புகளினிமித்தம் தங்க
ளையே வெறுத்து, இந்தத் தீங்குகளையெல் 10
லாம் தங்களுக்கு நேரிடப்பண்ணுவேன் என்று
**கர்த்தராகிய** நான் விருதாவாய்ச் சொன்ன
தில்லையென்று அறிந்துகொள்வார்கள் என்றார்.
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறது என் 11
னவென்றால்: நீ உன் கையில் அடித்து, [13]உன்
காலால் தட்டி, இஸ்ரவேல் வம்சத்தாருடைய
சகல பொல்லாத அருவருப்புகளி னிமித்த
மும் ஐயோ! என்று சொல்; [14]அவர்கள் பட்ட
யத்தாலும் பஞ்சத்தாலும் கொள்ளை நோயா
லும் விழுவார்கள். தூரத்திலிருக்கிறவன் 12
கொள்ளைநோயால் சாவான், சமீபத்திலிருக்
கிறவன் பட்டயத்தால் விழுவான்; மீதியாயி
ருந்து, முற்றிக்கை போடப்பட்டவன் பஞ்சத்
தால் சாவான்; [15]இப்படி அவர்களில் என் உக்
கிரத்தைத் தீர்த்துக்கொள்ளுவேன். அவர்கள் 13
தங்கள் நரகலான சகல விக்கிரகங்களுக்கும்
மதுரவாசனையான தூபத்தைக் காட்டின ஸ்த
லங்களாகிய உயர்ந்த சகல மேடுகளிலும், [16]பர்
வதங்களுடைய சகல சிகரங்களிலும், பச்சை
யான சகல விருட்சங்களின் கீழும், தழைத்தி
ருக்கிற சகல கர்வாலிமரங்களின் கீழும், அவர்
களுடைய நரகலான விக்கிரகங்களின் நடுவி
லும் அவர்களுடைய பலிபீடங்களைச் சுற்றி
லும், அவர்களில் கொலையுண்டவர்கள் கிடக்
கும்போது, நான் **கர்த்தர்** என்று அறிந்து
கொள்வார்கள். நான் என் கையை அவர்க 14
ளுக்கு விரோதமாக நீட்டி, [17]அவர்களுடைய
எல்லா வாசஸ்தலங்களுமுள்ள தேசத்தை
அழித்து, அதைத் திப்லாத்தின் வனாந்தரத்
தைப் பார்க்கிலும் அதிகமாய்ப் பாழாக்கு
வேன், அப்பொழுது நான் **கர்த்தர்** என்று
அறிந்துகொள்வார்கள் என்றார்.

பின்னும் **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு **7**
உண்டாகி, அவர்:
மனுபுத்திரனே, இஸ்ரவேல் தேசத்தைக் 2
குறித்துக் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகி
றது என்னவென்றால்: முடிவு வருகிறது, [18]தே
சத்தின் நாலு முனைகளின்மேலும் முடிவு வரு
கிறது. இப்போதே உன்மேல் முடிவு வருகி 3
றது; நான் என் கோபத்தை உன்மேல் வரு
வித்து, உன் வழிகளுக்குத் தக்கதாக உன்னை

நியாயந்தீர்த்து, உன் எல்லா அருவருப்புக
ளின் பலனையும் உன்மேல் வரப்பண்ணு
4 வேன். என் கண் உன்னைத் தப்பவிடாது;
[1]நான் இரங்காமல் உன் வழிகளுக்குத் தக்க
தை உன்மேல் வரப்பண்ணுவேன்; உன் அரு
வருப்புகளுக்குத் தக்கது உன் நடுவில் வந்தி
ருக்கும்; அப்பொழுது நான் **கர்த்தர்** என்று
அறிந்துகொள்வீர்கள்.
5 கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறது என்
னவென்றால்: தீங்கு வருகிறது; இதோ, ஏக
6 மான தீங்கு வருகிறது. முடிவு வருகிறது,
முடிவு வருகிறது, அது உன்மேல் நோக்கமா
7 யிருக்கிறது; இதோ, வருகிறது. தேசத்தில்
குடியிருக்கிறவனே, அந்நாளின் விடியற்காலம்
வருகிறது, காலம் வருகிறது, [2]அமளியின்
நாள் சமீபித்திருக்கிறது, மலைகளில் சந்தோஷ
8 சத்தம் இல்லை. இப்பொழுது விரைவில் என்
உக்கிரத்தை உன்மேல் ஊற்றி, என் கோபத்
தை உன்னில் தீர்த்துக்கொண்டு, உன்னை உன்
வழிகளுக்குத் தக்கதாக நியாயந்தீர்த்து, உன்
எல்லா அருவருப்புகளின் பலனையும் உன்
9 மேல் வரப்பண்ணுவேன். என் கண் உன்
னைத் தப்பவிடாது; நான் இரங்காமல் உன்
வழிகளுக்குத் தக்கதை உன்மேல் வரப்பண்
ணுவேன்; [3]உன் அருவருப்புகளுக்குத் தக்
கது உன் நடுவில் வந்திருக்கும்; [4]அப்பொழுது
அடிக்கிறவராகிய நான் **கர்த்தர்** என்று அறிந்
10 துகொள்வீர்கள். இதோ, அந்த நாள், இதோ,
வருகிறது, அந்நாளின் விடியற்காலம் உதிக்
கிறது, மிலாறு பூக்கிறது, [5]அகந்தை செழிக்
11 கிறது. அக்கிரமத்துக்கு மிலாறாகக் கொடு
மை எழும்புகிறது; [6]அவர்களிலும் அவர்களு
டைய திரளான கும்பிலும் அவர்களுடைய
அமளியிலும் ஒன்றும் மீதியாயிருப்பதில்லை;
அவர்கள்நிமித்தம் புலம்பல் உண்டாயிருப்பது
12 மில்லை. அந்தக் காலம் வருகிறது, அந்த நாள்
கிட்டுகிறது; கொள்ளுகிறவன் சந்தோஷப்ப
டாமலும், விற்கிறவன் துக்கப்படாமலும் இருப்
பானாக; அதின் திரளான கும்பின்மேலும்
13 உக்கிரம் இறங்கும். அவர்கள் ஜீவனுள்ளோ
ருக்குள்ளே இன்னும் உயிரோடிருந்தாலும்,
விற்றவன் விற்கப்பட்டதற்குத் திரும்பி வருவ
தில்லை; அதின் திரளான கும்பின்மேலும்
உண்டான தரிசனம் திரும்பாது; [7]தன் அக்
கிரமத்திலே வாழுகிற எவனும் தன்னைத்
14 திடப்படுத்தமாட்டான். அவர்கள் எக்காளம்
ஊதி, எல்லாவற்றையும் ஆயத்தம்பண்ணியும்,
யுத்தத்துக்குப் போகிறவனில்லை; என் உக்கி
ரம் அதின் திரளான கும்பின்மேலும் இறங்கு
15 கிறது. வெளியே பட்டயமும் உள்ளே கொ
ள்ளைநோயும் பஞ்சமும் உண்டு; [8]வயல்வெ
ளியில் இருக்கிறவன் பட்டயத்தால் சாவான்;
நகரத்தில் இருக்கிறவனையோ பஞ்சமும் கொ
16 ள்ளைநோயும் பட்சிக்கும். அவர்களில் தப்பு
கிறவர்கள் தப்புவார்கள்; ஆனாலும் அவர்கள்
அனைவரும் அவனவன் தன் தன் அக்கிரமத்
தினிமித்தம் துக்கித்துக் கூப்பிடுகிற பள்ளத்
தாக்குகளின் புறாக்களைப்போல மலைகளில்
இருப்பார்கள். எல்லாக் கைகளும் சலித்து, 17
[9]எல்லா முழங்கால்களும் தண்ணீரைப்போல்
தத்தளிக்கும். இரட்டை உடுத்திக்கொள்வார் 18
கள்; [10]தத்தளிப்பு அவர்களை மூடும்; எல்லா
முகங்களும் வெட்கப்படும், எல்லாத் தலைக
ளும் மொட்டையிடப்படும். தங்கள் வெள் 19
ளியைத் தெருக்களில் எறிந்து விடுவார்கள்;
அவர்களுடைய பொன் வேண்டாவெறுப்பா
யிருக்கும்; [11]**கர்த்தருடைய** சினத்தின் நா
ளிலே அவர்கள் வெள்ளியும் அவர்கள்
பொன்னும் அவர்களை விடுவிக்கமாட்டாது;
அவர்கள் அதினால் தங்கள் ஆத்துமாக்க
ளைத் திருப்தியாக்குவதும் இல்லை, தங்கள்
வயிறுகளை நிரப்புவதும் இல்லை; [12]அவர்கள்
அக்கிரமமே அவர்களுக்கு இடறலாயிருந்தது.
அவருடைய சிங்காரத்தின் மகிமையை அகந் 20
தைக்கென்று வைத்து, அதிலே அருவருக்கப்
படத்தக்கதும் சீயென் றிகழப்படத்தக்கது
மான காரியங்களின் விக்கிரகங்களை உண்டு
பண்ணினார்கள்; [13]ஆகையால் நான் அவைகளை
அவர்களுக்கு வேண்டாவெறுப்பாக்கி, அதை 21
அந்நியர் கையிலே கொள்ளையாகவும், பூமி
யில் துஷ்டர்களுக்குச் சூறையாகவும் கொடுப்
பேன்; அவர்கள் அதைப் பரிசுத்தக் குலைச்ச
லாக்குவார்கள். என் முகத்தை அவர்களை 22
விட்டுத் திருப்புவேன்; அதினால் என் அந்த
ரங்க ஸ்தலத்தைப் பரிசுத்தக் குலைச்சலாக்கு
வார்கள்; *பறிகாரர் அதற்குள் பிரவேசித்து,
அதைப் பரிசுத்தக் குலைச்சலாக்குவார்கள்.
ஒரு சங்கிலியைப் பண்ணிவை; தேசம் நியா 23
யத்தீர்ப்புக்குள்ளான இரத்தப்பழிகளால் நிறை
ந்திருக்கிறது; [14]நகரம் கொடுமையால் நிறைந்தி
ருக்கிறது. ஆகையால் புறஜாதிகளின் துஷ் 24
டர்களை வரப்பண்ணுவேன், [15]அவர்கள் இவர்
களுடைய வீடுகளைச் சுதந்தரித்துக்கொள்வார்
கள்; பலவான்களின் பெருமையை ஒழியப்
பண்ணுவேன், [16]அவர்கள் பரிசுத்த ஸ்தலங்
கள் பரிசுத்தக்குலைச்சலாகும். சங்காரம் வரு 25
கிறது; அப்பொழுது சமாதானத்தைத் தேடு
வார்கள்; ஆனாலும் அது கிடையாது. விக்கி 26
னத்தின்மேல் விக்கினம் வரும்; [17]துர்ச்செய்தி
யின்மேல் துர்ச்செய்தி பிறக்கும்; அப்பொ
ழுது தீர்க்கதரிசியினிடத்திலே தரிசனத்தைத்
தேடுவார்கள்; [18]ஆனாலும் ஆசாரியனிடத்திலே
வேதமும் மூப்பரிடத்திலே ஆலோசனையும்
இராமல் ஒழிந்துபோகும். ராஜா துக்கித்துக் 27
கொண்டிருப்பான்; பிரபுவைத் திகில் மூடிக்
கொண்டிருக்கும்; தேசத்து ஜனங்களின் கை
கள் தளர்ந்துபோகும்; நான் அவர்கள் வழிக
ளின்படியே அவர்களுக்குச் செய்து, அவர்
கள் நியாயங்களின்படியே அவர்களை நியாயந்
தீர்ப்பேன்; அப்பொழுது நான் **கர்த்தர்** என்று
அறிந்துகொள்வார்கள் என்றார்.

ஆறாம் வருஷத்து ஆறாம்மாதம் ஐந்தாந் 8
தேதியிலே, நான் என் வீட்டில் உட்கார்ந்தி
ருக்கிறபோதும், யூதாவின் மூப்பர்கள் எனக்கு

1 5. 11. ஓசி. 9. 7
2 செப். 1. 14, 15
3 கலா. 6. 7. வெளி. 20. 13
4 மீகா 6. 9
5 ஏசா. 16. 18
6 எரே. 6. 7
7 பிர. 8. 8
8 புல. 1. 20
9 சகா. 13. 7. எரே. 6. 24
10 ஆமோ. 8. 10
11 ஏசா. 11. 4. செப். 1. 18
12 14. 3, 4
13 எரே. 7. 30
* கொள்ளைக்காரர்
14 2 இரா. 21. 16
15 சங். 106. 41
16 2 நாளா. 7. 20. சங். 83. 12
17 உபா. 32. 23. எரே. 4. 20
18 20. 3. சங். 74. 9. புல. 2. 9

முன்பாக உட்கார்ந்திருக்கிறபோதும், [1]கர்த்த
ராகிய ஆண்டவருடைய கரம் அங்கே என்
2 மேல் அமர்ந்தது. அப்பொழுது இதோ,
அக்கினிச்சாயலாய்த் தோன்றுகிற ஒருவனைக்
கண்டேன்; [2]அவருடைய இடுப்புக்குக் கீழெ
ல்லாம் அக்கினியும் அவருடைய இடுப்புக்கு
மேலெல்லாம் சொகுசாவைப்போல் [3]பிரகா
3 சிக்கிற [*]சாயலுமாயிருந்தது. கைபோல் தோ
ன்றினதை அவர் நீட்டி, [4]என் தலைமயிரைப்
பிடித்து என்னைத் தூக்கினார்; ஆவியானவர்
என்னைப் பூமிக்கும் வானத்துக்கும் நடுவே
கொண்டுபோய் [5]தேவதரிசனத்திலே என்னை
எருசலேமில் வடதிசைக்கு எதிரான உள்வா
சலின் நடையிலே விட்டார்; [6]அங்கே எரிச்ச
லுண்டாக்குகிற விக்கிரகத்தின் ஸ்தானம்
4 இருந்தது. இதோ, நான் பள்ளத்தாக்கிலே
கண்டிருந்த தரிசனத்துக்குச் சரியாக [7]இஸ்ர
வேலின் தேவனுடைய மகிமை அங்கே விளங்
5 கினது. அவர் என்னைப் பார்த்து: மனுபுத்தி
ரனே, உன் கண்களை ஏறெடுத்து, வடக்கே
பார் என்றார்; அப்பொழுது நான் என் கண்
களை ஏறெடுத்து, வடக்கே பார்த்தேன்;
இதோ, பலிபீடத்தின் வாசலுக்கு வடக்கே
பார்த்தேன்; நடையிலே எரிச்சலுண்டாக்கு
6 கிற அந்த விக்கிரகம் இருந்தது. அவர் என்னை
நோக்கி: மனுபுத்திரனே, அவர்கள் செய்கிற
தைக் காண்கிறாயா? என் பரிசுத்த ஸ்தலத்தை
விட்டு என்னைத் தூரமாய்ப் போகப்பண்ணும்
படியான இஸ்ரவேல் வம்சத்தார் இங்கே செய்
கிற மிகுந்த அருவருப்புகளைக் காண்கிறாய்
அல்லவா? [8]இதிலும் அதிக அருவருப்புகளை
7 இன்னமும் காண்பாய் என்று சொல்லி, என்
னைப் பிராகாரத்தின் வாசலுக்குக் கொண்டு
போனார்; அப்பொழுது இதோ, சுவரில் ஒரு
8 துவாரத்தைக் கண்டேன். அவர் என்னை
நோக்கி: மனுபுத்திரனே, நீ சுவரிலே துவார
மிடு என்றார்; நான் சுவரிலே துவாரமிட்ட
9 போது, இதோ, ஒரு வாசல் இருந்தது. அவர்
என்னைப் பார்த்து: நீ உள்ளே போய், [9]அவர்
கள் இங்கே செய்கிற கொடிய அருவருப்புக
10 ளைப் பார் என்றார். நான் உள்ளே போய்ப்
பார்த்தபோது, [10]இதோ, சகலவித ஊரும்பிரா
ணிகளும் அருவருப்பான மிருகங்களுமாகிய
இவைகளின் சுரூபங்களும், இஸ்ரவேல் வம்
சத்தாருடைய நரகலான சகல விக்கிரகங்க
ளும் சுவரில் சுற்றிலும் சித்திரந்தீரப்பட்டிருந்
11 தன. இஸ்ரவேல் வம்சத்தாரின் மூப்பரில்
எழுபதுபேரும், [11]அவர்களின் நடுவிலே சாப்
பானுடைய குமாரனாகிய யசனியாவும், அவ
னவன் தன்தன் கையிலே தன்தன் தூபகல
சத்தைப் பிடித்துக்கொண்டு, அவைகளுக்கு
முன்பாக நின்றார்கள்; [12]தூபவர்க்கத்தினால்
12 மிகுந்த புகை எழும்பிற்று. அப்பொழுது
அவர் என்னை நோக்கி: மனுபுத்திரனே, இஸ்
ரவேல் வம்சத்தாரின் மூப்பர்கள் அந்தகாரத்
திலே அவரவர் தங்கள் விக்கிரகங்களின் சித்
திர விநோத அறைகளில் செய்கிறதை நீ

1 20. 1; 3. 14, 22
2 1. 26, 27
3 1. 4
* 1. 4, காண்க
4 தானி. 5. 5
5 40. 2
6 உபா. 32. 16, 21. எரே. 32. 34
7 3. 22, 23
8 சங். 78. 60. நீதி. 5. 14
9 20. 8
10 எரே. 23. 11. ரோ. 1. 23
11 எரே. 19. 1
12 எண். 16. 17
13 9. 9. எபே. 5. 12
14 2 தீமோ. 3. 13
15 எரே. 2. 27. யோவே. 2. 17
16 உபா. 4. 19. 2 இரா. 23. 5. எரே. 44. 17
17 5. 11. நீதி. 1. 28. மீகா 3. 4. சகரி. 7. 13
18 வெளி. 15. 16
19 3. 23
20 யாத். 12. 7. எரே. 13. 17. 2 கொ. 12. 21. 2 பே. 2. 8. வெளி. 7. 3

கண்டாயா? [13]கர்த்தர் எங்களைப் பார்க்கிற
தில்லை; கர்த்தர் தேசத்தைக் கைவிட்டார்
என்று சொல்லுகிறார்களே என்றார். பின் 13
னும் அவர்கள் செய்கிற அதிக அருவருப்பு
களை இன்னமும் காண்பாய் என்று அவர்
என்னுடனே சொல்லி, என்னைக் கர்த்தரு 14
டைய ஆலயத்து வடக்கு வாசலின் நடையிலே
கொண்டுபோனார்; இதோ, அங்கே தம்மூசுக்
காக அழுதுகொண்டிருக்கிற ஸ்திரீகள் உட்
கார்ந்திருந்தார்கள். அப்பொழுது அவர்: மனு 15
புத்திரனே, இதைக் கண்டாயா? [14]இதிலும் அ
திக அருவருப்புகளை இன்னமும் காண்பாய்
என்று என்னுடனே சொல்லி, என்னைக் கர்த் 16
தருடைய ஆலயத்தின் உட்பிராகாரத்திலேகொ
ண்டுபோனார்; இதோ, கர்த்தருடைய ஆலயத்
தின் வாசல் நடையிலே மண்டபத்துக்கும் பலி
பீடத்துக்கும் நடுவே, ஏறக்குறைய இருபத்
தைந்து புருஷர், [15]தங்கள் முதுகைக் கர்த்தரு
டைய ஆலயத்துக்கும் தங்கள் முகத்தைக் கீழ்த்
திசைக்கும் நேராகத் திருப்பினவர்களாய்க்
கிழக்கே இருக்கும் சூரியனை [16]நமஸ்கரித்தார்
கள். அப்பொழுது அவர் என்னை நோக்கி: 17
மனுபுத்திரனே, இதைக் கண்டாயா? இங்கே
யூதா வம்சத்தார் செய்கிற அருவருப்புகள் அற்
பமான காரியமா? அவர்கள் தேசத்தைக் கொ
டுமையினால் நிரப்பி என்னை அடிக்கடி கோப
மூட்டுகிறார்கள்; இதோ, அவர்கள் திராட்சக்
கிளையைத் தங்கள் நாசிக்கு நேராகப் பிடிக்கி
றார்கள். ஆகையால் நானும் உக்கிரத்தோடே 18
காரியத்தை நடத்துவேன்; என் கண் தப்பவி
டுவதில்லை, நான் இரங்குவதில்லை; [17]அவர்கள்
மகா சத்தமாய் என் செவிகள் கேட்கக் கூப்
பிட்டாலும் அவர்களுக்கு நான் செவிகொடுப்
பதில்லை என்றார்.

பின்பு அவர் என் காதுகள் கேட்க மகா 9
சத்தமாய்: நகரத்தின் விசாரிப்புக்காரர் சங்கரிக்
கும் ஆயுதங்களைத் தங்கள் கைகளில் பிடித்துக்
கொண்டு வரக்கடவர்கள் என்று சொன்னார்.
அப்பொழுது இதோ, ஆறு புருஷர், வெட்டு 2
கிற ஆயுதங்களைத் தங்கள் கைகளில் பிடித்துக்
கொண்டு, வடக்கே பார்த்த உயர்ந்த வாசலின்
வழியிலிருந்து வந்தார்கள்; அவர்களில் சணல்
நூல் அங்கி தரித்து, [18]தன் அரையில் கணக்க
னுடைய மைக்கூட்டை வைத்திருக்கிற ஒரு
வன் இருந்தான்; அவர்கள் உள்ளே பிரவே
சித்து, வெண்கல பலிபீடத்தண்டையிலே நின்
றார்கள். அப்பொழுது இஸ்ரவேலின் தேவ 3
னுடைய மகிமை கேருபீன்மேலிருந்தெ
ழும்பி, [19]ஆலயத்தின் வாசற்படியிலே வந்து,
சணல்நூல் அங்கி தரித்து, தன் அரையிலே
கணக்கனுடைய மைக்கூட்டை வைத்திருக்
கிற புருஷனைக் கூப்பிட்டு, கர்த்தர் அவனை 4
நோக்கி: நீ எருசலேம் நகரம் எங்கும் உருவப்
போய், அதற்குள்ளே செய்யப்படுகிற சகல
அருவருப்புகளினிமித்தமும் பெருமூச்சுவிட்
டழுகிற [20]மனுஷரின் நெற்றிகளில் அடை
யாளம்போடு என்றார். பின்பு அவர் என் 5

காதுகள் கேட்க மற்றவர்களை நோக்கி: நீங்கள்
இவன் பின்னாலே நகரமெங்கும் உருவப்
போய் வெட்டுங்கள்; [1]உங்கள் கண் தப்பவிடா
6 மலும், நீங்கள் இரங்காமலும், முதியோரை
யும், வாலிபரையும், கன்னிகைகளையும், குழந்
தைகளையும், ஸ்திரீகளையும் சங்கரித்துக்கொன்
றுபோடுங்கள்; [2]அடையாளம் போடப்பட்டி
ருக்கிற ஒருவனையும் கிட்டாதிருங்கள், [3]என்
பரிசுத்த ஸ்தலத்திலே துவக்குங்கள் என்று
என் காதுகள் கேட்கச் சொன்னார்; அப்பொ
ழுது அவர்கள் ஆலயத்துக்கு முன்னே இரு
ந்த மூப்பரிடத்தில் துவக்கம்பண்ணினார்கள்.
7 அவர் அவர்களை நோக்கி: நீங்கள் ஆலயத்
தைத் தீட்டுப்படுத்தி, பிராகாரங்களைக் கொலை
யுண்டவர்களாலே நிரப்பி, புறப்பட்டுப்போங்
கள் என்றார்; அவர்கள் நகரத்தில் போய் வெ
8 ட்டினார்கள். அவர்கள் வெட்டிக்கொண்டு
போகையில் நான்மாத்திரம் தனித்து, முகங்
குப்புற விழுந்து: ஆ, கர்த்தராகிய ஆண்டவ
ரே, தேவரீர் எருசலேமின்மேல் உமது உக்
கிரத்தை ஊற்றுகையில் இஸ்ரவேலில் மீதி
யானவர்களையெல்லாம் [4]அழிப்பீரோ என்று
9 முறையிட்டேன். அதற்கு அவர்: இஸ்ரவே
லும் யூதாவுமாகிய வம்சத்தாரின் அக்கிரமம்
மிகவும் பெரிது; [5]தேசம் இரத்தப்பழிகளால்
நிறைந்திருக்கிறது; நகரமும் மாறுபாட்டினால்
நிரப்பப்பட்டிருக்கிறது; கர்த்தர் தேசத்தைக்
கைவிட்டார்; [6]கர்த்தர் பார்க்கமாட்டார் என்று
10 சொல்லுகிறார்கள். ஆகையால் என் கண்
தப்பவிடுவதுமில்லை, நான் இரக்கஞ்செய்வது
மில்லை; அவர்களுடைய வழியின் பலனை
அவர்கள் சிரசின்மேல் இறங்கப்பண்ணுவேன்
11 என்றார். இதோ, சணல்நூல் அங்கி தரித்து,
தன் அரையில் மைக்கூட்டை வைத்திருக்கிற
புருஷன் வந்து: நீர் எனக்குக் கட்டளையிட்ட
படியே செய்தேன் என்று காரியத்தைத் தெரி
வித்தான்.

**10** இதோ, கேருபீன்களுடைய தலைக்கு
மேல் இருந்த மண்டலத்தில் இந்திரநீல ரத்
தினம்போன்ற சிங்காசனச் சாயலான ஒரு
தோற்றத்தைக் கண்டேன்; [7]அது அவைகளு
2 க்குமேல் காணப்பட்டது. அவர் சணல்நூல்
அங்கி தரித்திருந்த புருஷனை நோக்கி: நீ கேரு
பீனின்கீழ் இருக்கிற சக்கரங்களுக்கு நடுவி
லே பிரவேசித்து, கேருபீன்களின் நடுவே
இருக்கிற அக்கினித்தழலில் உன் கைநிறைய
எடுத்து, [8]அதை நகரத்தின்மேல் இறையென்
றார்; அப்படியே அவன் என் கண் காண
3 உள்ளே பிரவேசித்தான். அந்தப் புருஷன்
உள்ளே பிரவேசிக்கையில், கேருபீன்கள் ஆல
யத்தின் வலதுபுறத்தில் நின்றன; ஒரு மேகம்
4 உட்பிராகாரத்தை நிரப்பிற்று. கர்த்தருடைய
மகிமை கேருபீனின்மேலிருந்து எழும்பி,
[9]ஆலயத்தின் வாசற்படியிலே வந்தது; ஆல
யம் மேகத்தினாலே நிறைந்திருந்தது, பிராகா
ரமும் கர்த்தருடைய மகிமையின் பிரகாசத்தி
5 னால் நிரம்பிற்று. கேருபீன்களுடைய செட்
டைகளின் இரைச்சல் சர்வத்துக்கும் வல்ல
தேவன் பேசுகையில் உண்டாகும் சத்தம்
போல் [10]வெளிப்பிராகாரமட்டும் கேட்கப்பட்
டது. அவர் சணல்நூல் அங்கி தரித்திருந்த 6
புருஷனை நோக்கி: நீ கேருபீன்களுக்குள்
சக்கரங்களின் நடுவிலிருந்து அக்கினியை எடு
என்று கட்டளையிட்டவுடனே, [11]அவன் உள்
ளே பிரவேசித்து சக்கரங்களண்டையிலே
நின்றான். அப்பொழுது கேருபீன்களுக்குள் 7
ளே ஒரு கேருபீன் தன் கையைக் கேருபீன்
களின் நடுவில் இருக்கிற அக்கினியில் நீட்டி,
அதில் எடுத்து, சணல்நூல் அங்கி தரித்திருந்த
புருஷனுடைய கையில் கொடுத்தான்; அவன்
அதை வாங்கிக்கொண்டு வெளியே வந்தான்.
கேருபீன்களுடைய செட்டைகளின்கீழ் [12]ம 8
னுஷர் கையின் சாயலானது காணப்பட்டது.
இதோ, கேருபீன்களண்டையில் நாலு சக்கர 9
ங்கள் இருக்கக் கண்டேன்; [13]ஒவ்வொரு கேரு
பீன் அண்டையில் ஒவ்வொரு சக்கரம் இருந்
தது; சக்கரங்களின் தோற்றம் படிகப்பச்சை
வருணம்போலிருந்தது. அவைகள் நாலுக் 10
கும் ஒரே சாயலான ரூபம் இருந்தது; சக்கர
ங்களின் நடுவிலே சக்கரம் இருக்குமாப்போல்
காணப்பட்டது. அவைகள் ஓடுகையில் தங் 11
கள் நாலு பக்கங்களிலும் ஓடும்; [14]ஓடுகையில்
அவைகள் திரும்பினதில்லை; *தலைநோக்கும்
இடத்துக்கே அவைகள் அதின் பின்னாலே
ஓடின; ஓடுகையில் அவைகள் திரும்பினதில்லை.
அவைகளின் உடல் அனைத்தும், அவை 12
களின் முதுகுகளும், அவைகளின் கைகளும்,
அவைகளின் செட்டைகளும், அந்தச் சக்கரங்
களும், [15]சுற்றிலும் கண்களினாலே நிறைந்
திருந்தன; அவைகள் நாலுக்கும் இருந்த சக்
கரங்களும் அப்படியே இருந்தன. அந்தச் 13
சக்கரங்களைப் பார்த்து: சக்கரமே என்று ஒரு
வன் கூப்பிடுகிற சத்தத்தைக் கேட்டேன்.
ஒவ்வொன்றுக்கும் நாலு முகங்கள் இருந்தன; 14
[16]முதலாம் முகம் கேருபீன் முகமும், இரண்
டாம் முகம் மனுஷ முகமும், மூன்றாம் முகம்
சிங்க முகமும், நாலாம் முகம் கழுகு முகமுமா
யிருந்தது. கேருபீன்கள் மேலே எழும்பின; 15
இதுதான், [17]நான் கேபார் நதியண்டையிலே
கண்டிருந்த ஜீவன். கேருபீன்கள் செல்லு 16
கையில் சக்கரங்கள் அவைகள் அருகே ஓடின;
[18]பூமியிலிருந்து எழும்பக் கேருபீன்கள்
தங்கள் செட்டைகளை விரித்தபோது, சக்கரங்
களும் அவைகளைவிட்டு விலகிப்போகவில்லை.
அவைகள் நிற்கையில் இவைகளும் நின்றன; 17
[19]அவைகள் எழும்புகையில் இவைகளும்
எழும்பின; ஜீவனுடைய ஆவி இவைக
ளில் இருந்தது. கர்த்தருடைய மகிமை ஆல 18
யத்தின் வாசற்படியை விட்டுப் புறப்பட்டு,
[20]கேருபீன்களின்மேல் நின்றது. அப்பொழு 19
து கேருபீன்கள் தங்கள் செட்டைகளை விரி
த்து, [21]என் கண் காணப் பூமியைவிட்டு எழும்
பின; அவைகள் புறப்படுகையில் சக்கரங்
களும் அவைகளுக்குச் சரியாய்ச் சென்றன;

1 யாத். 32. 27. எண். 25. 7, 8. 1 இரா. 18. 40
2 வெளி. 9. 4
3 எரே. 25. 29. 1 பே. 4. 17
4 ஆதி. 18. 23. ழ
5 2 இரா. 24. 4. எரே. 5. 1
6 சங். 10. 11. ஏசா. 29. 15
7 1. 22, 26
8 யாத். 9. 8-10. வெளி. 8. 5
9 எண். 16. 19. 1 இரா. 8. 10, 11
10 1. 24
11 சங். 80. 1; 99. 1
12 1. 8; 21. ஏச
13 1. 15. ழ
14 1. 17
* முகம்
15 1. 18
16 1. 6, 10
17 1. 5
18 1. 19
19 1. 12, 20, 21
20 ஆதி. 3. 24. ஓசி. 9. 12
21 11. 22

கர்த்தருடைய ஆலயத்தின் கிழக்கு வாசலி
லே போய் நிற்க, இஸ்ரவேலின் தேவனு
டைய மகிமை அவைகளின்மேல் உயர இருந்
20 தது. இது நான் கேபார் நதியண்டையிலே
இஸ்ரவேலின் தேவனுக்குக் கீழே இருக்கக்
கண்ட அந்த ஜீவன்தானே; அவைகள் கேரு
21 பீன்கள் என்று அறிந்துகொண்டேன். அவை
களில் ஒவ்வொன்றுக்கும் நாலு முகமும் ஒவ்
வொன்றுக்கும் நாலு செட்டைகளும் இருந்
தன; அவைகளுடைய செட்டைகளின்கீழ்
22 மனுஷகைகளின் சாயல் இருந்தது. அவைக
ளுடைய முகங்கள் நான் கேபார் நதியண்டை
யிலே கண்டிருந்த அந்த முகங்களின் சாயலா
யிருந்தது; ஒவ்வொன்றும் தன்தன் முகத்துக்கு
எதிரான திசையை நோக்கிச் சென்றது.

11 பின்பு ஆவியானவர் என்னை எடுத்து,
என்னைக் **கர்த்தருடைய** ஆலயத்தின் கிழக்கு
முகமாயிருக்கிற வாசலுக்குக் கொண்டுபோ
னார்; [1]இதோ, அந்த வாசலின் நடையில் இரு
பத்தைந்து புருஷர் இருந்தார்கள்; [2]அவர்களின்
நடுவே ஜனத்தின் பிரபுக்களாகிய ஆசூரின்
குமாரனாகிய யசனியாவையும், பெனாயாவின்
குமாரனாகிய பெலத்தியாவையும் கண்டேன்.
2 அப்பொழுது அவர் என்னை நோக்கி: மனு
புத்திரனே, [3]இவர்கள் இந்த நகரத்திலே அக்
கிரமமான நினைவுகளை நினைத்து, துராலோ
3 சனை சொல்லுகிற மனுஷர். இது வீடுகளைக்
கட்டுவதற்குக் *காலமல்ல என்றும், இந்த
நகரம் பானை, [4]நாங்கள் அதிலுள்ள இறைச்சி
4 யென்றும் சொல்லுகிறார்கள். ஆகையால்
அவர்களுக்கு விரோதமாய்த் தீர்க்கதரிசனஞ்
சொல்லு, மனுபுத்திரனே, தீர்க்கதரிசனஞ்
5 சொல்லு என்றார். அப்பொழுது **கர்த்தரு
டைய** ஆவி என்மேல் இறங்கினார்; அவர்
என்னை நோக்கி: நீ சொல்லவேண்டியது
என்னவென்றால், இஸ்ரவேல் வம்சத்தாரே,
நீங்கள் இப்படிப் பேசுகிறது உண்டு; [5]உங்
கள் மனதில் எழும்புகிறதை நான் அறிவேன்.
6 இந்த நகரத்தில் நீங்கள் அநேகரைக் கொலை
செய்தீர்கள்; [6]அதின் வீதிகளைக் கொ
லையுண்டவர்களால் நிரப்பினீர்கள் என்று **கர்
7 த்தர்** சொல்லுகிறார். ஆகையால் நீங்கள் கொ
லைசெய்து, அதின் நடுவிலே போட்டுவிட்ட
வர்களே இறைச்சியும், இந்த நகரம் பானையு
மாமே; உங்களையோ அதற்குள் இராதபடிக்
குப் புறம்பாக்குவேன் என்று கர்த்தராகிய
8 ஆண்டவர் சொல்லுகிறார். பட்டயத்துக்குப்
பயப்பட்டீர்கள், பட்டயத்தையே உங்கள்மேல்
வரப்பண்ணுவேன் என்று கர்த்தராகிய ஆண்
9 டவர் சொல்லுகிறார். நான் உங்களை அதற்
குள் இராதபடிக்குப் புறம்பாக்கி, [7]உங்களை
அந்நியரின் கையில் ஒப்புக்கொடுத்து, உங்
களில் நியாயத்தீர்ப்புகளை நிறைவேற்றுவேன்.
10 பட்டயத்தால் விழுவீர்கள்; [8]இஸ்ரவேல் தே
சத்தின் எல்லையிலே உங்களை நியாயந்தீர்ப்
பேன்; [9]அப்பொழுது நான் **கர்த்தர்** என்று
11 அறிந்துகொள்வீர்கள். இந்த நகரம் உங்களுக்
குப் பானையாயிருப்பதுமில்லை, நீங்கள் அதி
லுள்ள இறைச்சியாயிருப்பதுமில்லை; இஸ்ர
வேல் தேசத்தின் எல்லையிலே உங்களை நியா
யந்தீர்ப்பேன். என் கட்டளைகளின்படி நடவா 12
மலும், [10]என் நியாயங்களின்படி செய்யாம
லும், [11]உங்களைச் சுற்றிலுமிருக்கிற புறஜாதி
களுடைய முறைமைகளின்படி செய்த நீங்
கள் அப்பொழுது நான் **கர்த்தர்** என்று அறி
ந்துகொள்வீர்கள் என்றுசொல் என்றார். நான் 13
இப்படித் தீர்க்கதரிசனஞ் சொல்லுகையில்,
பெனாயாவின் குமாரனாகிய பெலத்தியா செத்
தான்; [12]அப்பொழுது நான் முகங்குப்புற
விழுந்து, மகா சத்தமாய்: ஆ, கர்த்தராகிய
ஆண்டவரே, தேவரீர் இஸ்ரவேலில் மீதியா
னவர்களைச் சர்வசங்காரஞ் செய்வீரோ என்று
முறையிட்டேன்.

அப்பொழுது **கர்த்தருடைய** வார்த்தை 14
எனக்கு உண்டாகி, அவர்: மனுபுத்திரனே, 15
நீங்கள் **கர்த்தரை** விட்டுத் தூரமாய்ப் போங்
கள், எங்களுக்கு இந்த தேசம் சுதந்தரமாகக்
கொடுக்கப்பட்டதென்று, உன் சகோதரருக்
கும், உன் குடும்பத்தாருக்கும், உன் பந்துஜ
னங்களுக்கும், இஸ்ரவேல் வம்சத்தார் அனை
வருக்கும், எருசலேமின் குடிகள் சொல்லு
கிறார்கள்.

ஆகையால் நான் அவர்களைத் தூரமாகப் 16
புறஜாதிகளுக்குள்ளே துரத்தி யிருந்தாலும்,
நான் அவர்களை தேசங்களிலே சிதறடித்திருந்
தாலும், நான் அவர்கள் போன தேசங்களில்
அவர்களுக்குக் கொஞ்ச காலத்துக்குப் †பரி
சுத்த ஸ்தலமாக இருப்பேன் என்று கர்த்தரா
கிய ஆண்டவர் உரைக்கிறார் என்று சொல்.
ஆதலால் நான் உங்களை ஜனங்களிடத்திலி 17
ருந்து சேர்த்து, நீங்கள் சிதறடிக்கப்பட்ட
தேசங்களிலிருந்து உங்களைக் கூட்டிக்கொ
ண்டு, [13]இஸ்ரவேல் தேசத்தை உங்களுக்குக்
கொடுப்பேன் என்று கர்த்தராகிய ஆண்டவர்
உரைக்கிறார் என்று சொல்லு.

அவர்கள் அங்கே வந்து, [14]அதில் சீயென் 18
றிகழப்படத்தக்கதும் அருவருக்கப்படத்தக்கது
மாயிருக்கிறதை யெல்லாம் அதிலிருந்து அகற்
றுவார்கள். அவர்கள் என் கட்டளைகளின்படி 19
நடந்து, [15]என் நியாயங்களைக் கைக்கொண்டு,
அவைகளின்படி செய்ய நான் அவர்களுக்கு
[16]ஏக இருதயத்தைத் தந்து, [17]அவர்கள் உள்ளத்
தில் புதிய ஆவியைக் கொடுத்து, [18]கல்லான
இருதயத்தை அவர்கள் மாம்சத்திலிருந்து எடுத்
துப்போட்டு, சதையான இருதயத்தை அவர்க
ளுக்கு அருளுவேன். அவர்கள் என் ஜன 20
மாயிருப்பார்கள், [19]நான் அவர்கள் தேவனா
யிருப்பேன்.

ஆனாலும் சீயென்றிகழப்படத்தக்கதும் அரு 21
வருக்கப்படத் தக்கதுமான தங்கள் இருதயத்
தின் இச்சையிலே எவர்கள் நடக்கிறார்களோ,
[20]அவர்களுடைய வழியின் பலனை அவர்கள்
தலைகளின்மேல் சுமரப்பண்ணுவேன் என்று
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

1 8. 3; 10. 19
2 8. 16; 22. 27. எசா. 1. 10, 23. ஓசி. 5. 10
3 மீகா 2. 1
* இன்னும் சமீபிக்கவில்லை
4 24. 3. மு. எரே. 1. 13
5 சங். 139. 2, 3. யோ. 2. 24, 25. எபி. 4. 13. வெளி. 2. 23
6 7. 23; 22. 3, 4. 2 இரா. 24. 4. எசா. 1. 15. எரே. 2. 34. ஓசி. 4. 2. மீகா 3. 2, 3
7 உபா. 28. 36. நெகே. 9. 36, 37. சங். 106. 41
8 2 இரா. 14. 25 எரே. 52. 10
9 சங். 9. 16
10 2 இரா. 18. 12. எஸ்றா 9. 7. நெகே. 9. 34
11 8 10. மு. லேவி. 18. 3. உபா. 12. 30, 31. சங். 106. 35
12 1. வச. உபா. 7. 4. 9. 8. சகி. 6. 15. அப். 5. 5, 10
† புகலிடம். சங். 90. 1; 91. 9. எசா. 8. 14
13 28. 25; 34. 13; 36. 24. எரே. 30. 18. ஆமோ. 9. 14
14 37. 23. கொலோ. 3. 5, 8
15 சங். 105. 44. ரோ. 16. 26
16 எரே. 32. 39. 1 கொ. 1. 10
17 18 31. சங். 51. 10. தூ. 11. 13. யோ. 14. 26
18 சகரி. 7. 12
19 எரே. 24. 7. ஓசி. 2. 23
20 22. 31; எபி. 10. 38 நூதி 19. வச

22 அப்பொழுது கேருபீன்கள் தங்கள் செட்
டைகளை விரித்து எழும்பின; [1]சக்கரங்களும்
அவைகளுக்கு அருகே சென்றன; இஸ்ரவே
லின் தேவனுடைய மகிமை அவைகளின்
23 மேல் உயர இருந்தது. **கர்த்தருடைய** மகிமை
நகரத்தின் நடுவிலிருந்தெழும்பி, [2]நகரத்துக்
குக் கிழக்கே இருக்கிற மலையின்மேல் போய்
நின்றது.
24 பின்பு ஆவியானவர் என்னை எடுத்து,
என்னை தேவனுடைய ஆவிக்குள்ளான தரிச
னத்திலே கல்தேயாவுக்குச் சிறைப்பட்டுப்
போனவர்கள் இடத்திலே கொண்டுபோய்
விட்டார்; [3]அப்பொழுது நான் கண்ட தரிச
னம் என்னிலிருந்து எடுபட்டுப்போயிற்று.
25 **கர்த்தர்** எனக்குக் காண்பித்த யாவை
யும் சிறையிருப்பிலிருந்தவர்களுக்குச் சொன்
னேன்.

**12** **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண்
2 டாகி, அவர்: மனுபுத்திரனே, நீ கலகவீட்
டாரின் நடுவிலே தங்கியிருக்கிறாய்; [4]காணும்
படிக்கு அவர்களுக்குக் கண்கள் இருந்தாலும்
காணாமற் போகிறார்கள்; கேட்கும்படிக்கு
அவர்களுக்குக் காதுகள் இருந்தாலும் கேளா
மற் போகிறார்கள்; அவர்கள் கலகவீட்டார்.
3 இப்போதும் மனுபுத்திரனே, நீ பரதேசம்
போகும்படி பிரயாண சாமான்களை ஆயத்தப்
படுத்தி, பகற்காலத்திலே அவர்கள் கண்களுக்கு
முன்பாகப் பிரயாணப்படு; உன் ஸ்தலத்
தை விட்டு வேறே ஸ்தலத்துக்கு அவர்களு
டைய கண்களுக்கு முன்பாகப் புறப்பட்டுப்
போ; அவர்கள் கலகவீட்டாரானபோதிலும்
4 ஒருவேளை [5]சிந்தித்து உணருவார்கள். சிறை
யிருப்புக்குப் போகிறவனைப்போல் உன் சா
மான்களை நீ பகற்காலத்திலே அவர்கள் கண்க
ளுக்கு முன்பாக வெளியே வைத்து, நீ சாயங்
காலத்திலே அவர்கள் கண்களுக்கு முன்பா
கச் சிறையிருப்புக்குப் போகிறவனைப்போல்
5 புறப்படுவாயாக. அவர்களுடைய கண்க
ளுக்கு முன்பாக நீ சுவரிலே துவாரமிட்டு,
அதின் வழியாய் அவைகளை வெளியே கொண்
6 டுபோவாயாக. அவர்களுடைய கண்களுக்கு
முன்பாக அவைகளை உன் தோளின்மேல்
எடுத்து, மாலைமயங்கும் வேளையிலே வெளி
யே கொண்டுபோவாயாக; நீ தேசத்தைப் பாரா
தபடி உன் முகத்தை மூடிக்கொள்; இஸ்ர
வேல் வம்சத்தாருக்கு உன்னை [6]அடையாள
7 மாக்கினேன் என்றார். எனக்குக் கட்டளை
யிட்டபடியே நான் செய்தேன்; சிறைப்பட்டுப்
போகும்போது சாமான்களைக் கொண்டுபோ
வதுபோல என் சாமான்களைப் பகற்காலத்தில்
வெளியே வைத்தேன்; சாயங்காலத்திலோ கை
யினால் சுவரிலே துவாரமிட்டு, மாலைமயங்கும்
வேளையிலே அவைகளை வெளியே கொண்டு
போய், அவர்கள் கண்களுக்கு முன்பாக அவை
களைத் தோளின்மேல் எடுத்துக்கொண்டு போ
8 னேன். விடியற்காலத்திலே **கர்த்தருடைய**
9 வார்த்தை எனக்கு உண்டாகி, அவர்: மனு
புத்திரனே, கலகவீட்டாராகிய இஸ்ரவேல்
வம்சத்தார் உன்னைப் பார்த்து: [7]நீ செய்கிறது
என்னவென்று உன்னைக் கேட்டார்கள் அல்
லவா? இது எருசலேமில் இருக்கிற அதிபதி 10
யின்மேலும் அதின் நடுவில் இருக்கிற இஸ்ர
வேல் வம்சத்தார் அனைவரின்மேலும் [8]சுமரும்
பாரம் என்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்
கிறார் என்று அவர்களிடத்தில் சொல்லு.
நீ அவர்களை நோக்கி: நான் உங்களுக்கு அடை 11
யாளமாயிருக்கிறேன்; நான் செய்வது எப்
படியோ, அப்படியே அவர்களுக்கும் செய்யப்
படும்; [9]சிறைப்பட்டுப் பரதேசம் போவார்கள்.
அவர்கள் நடுவில் இருக்கிற [10]அதிபதி மாலை 12
மயங்கும்போது தோளின்மேல் சுமைசுமந்து
புறப்படுவான்; வெளியே சுமைகொண்டுபோ
கச் சுவரிலே துவாரமிடுவார்கள்; கண்ணினா
லே அவன் தன் தேசத்தைக் காணாதபடி தன்
முகத்தை மூடிக்கொள்வான். நான் என் 13
வலையை அவன்மேல் வீசுவேன், [11]அவன் என்
கண்ணியிலே பிடிபடுவான்; அவனைக் கல்
தேயர் தேசமாகிய பாபிலோனுக்குக் கொண்டு
போவேன்; அங்கே அவன் சாவான்; ஆகி
லும் அதைக் காணமாட்டான். அவனுக்கு 14
உதவியாக அவனைச் சுற்றிலும் இருக்கிற யாவ
ரையும் அவனுடைய எல்லா ராணுவங்களை
யும் நான் சகல திசைகளிலும் தூற்றி, [12]அவர்
கள் பின்னே பட்டயத்தை உருவுவேன்.
அப்படி நான் அவர்களை ஜாதிகளுக்குள்ளே 15
தூற்றி, [13]அவர்களை தேசங்களிலே சிதறடிக்
கும்போது, நான் **கர்த்தர்** என்று அறிந்து
கொள்வார்கள். ஆனாலும் தாங்கள் போய்ச் 16
சேரும் ஜாதிகளுக்குள்ளே தங்கள் அருவருப்
புகளையெல்லாம் விவரிக்கும்படி, [14]நான் அவர்
களில் கொஞ்சம்பேரைப் பஞ்சத்துக்கும் பட்
டயத்துக்கும் கொள்ளைநோய்க்கும் தப்பி மீந்
திருக்கப்பண்ணுவேன்; அப்பொழுது நான்
**கர்த்தர்** என்று அறிந்துகொள்வார்கள் என்று
சொல் என்றார்.
பின்னும் **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு 17
உண்டாகி, அவர்: மனுபுத்திரனே, [15]நீ உன் 18
அப்பத்தை நடுக்கத்தோடே புசித்து, உன் தண்
ணீரைத் தத்தளிப்போடும் விசாரத்தோடும் குடி
த்து, தேசத்திலுள்ள ஜனங்களை நோக்கி: 19
இஸ்ரவேல் தேசத்திலுள்ள எருசலேமின்
குடிகளைக் குறித்துக் கர்த்தராகிய ஆண்டவர்
சொல்லுகிறது என்னவென்றால், தங்கள் அப்
பத்தை விசாரத்தோடே புசித்து, தங்கள்
தண்ணீரைத் திகிலோடே குடிப்பார்கள்;
[16]அவர்களுடைய தேசத்துக் குடிகளுடைய
கொடுமைகளினிமித்தம் அதிலுள்ளதெல்லாம்
அழிய, அது பாழாகும். குடியேறியிருக்கிற 20
பட்டணங்கள் வனாந்தரங்களாகி, தேசம் பா
ழாய்ப் போகும்; அப்பொழுது நான் **கர்த்தர்**
என்று அறிந்துகொள்வீர்கள் என்று சொல்
என்றார்.
பின்னும் **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு 21
உண்டாகி, அவர்: மனுபுத்திரனே, நாட்கள் 22

[1] 10. 19
[2] சகரி. 14. 4
[3] 3. 12; 8. 3
[4] 2. 3, 8; 3. 26, 27. எரே. 5. 21. மத். 13. 13, 14
[5] 2 தீமோ. 2. 25
[6] 24. 24. ஏசா. 8. 18
[7] 24. 19
[8] 17. 12. மல். 1. 1
[9] 2 இரா. 25. 4. ழ
[10] எரே. 39. 4
[11] யோபு 19. 6. எரே. 52. 8. புல. 1. 13. ஓசி. 7. 12
[12] 5. 10, 12. 2 இரா. 25. 4
[13] சங். 9. 16
[14] 6. 8-10
[15] 4. 16
[16] சகரி. 7. 14

நீடிக்கும், [1]தரிசனம் எல்லாம் அவமாகும்
என்று இஸ்ரவேல் தேசத்திலே வழங்கும் பழ
23 மொழி என்ன? ஆகையால் நீ அவர்களை
நோக்கி: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறது
என்னவென்றால், அவர்கள் இனி இஸ்ரவே
லிலே இந்தப் பழமொழியைச் சொல்லிவராத
படிக்கு நான் அதை ஒழியப்பண்ணுவேன்;
[2]நாட்களும் எல்லாத் தரிசனத்தின் பொருளும்
சமீபித்து வந்தன என்று அவர்களோடே
24 சொல்லு. இஸ்ரவேல் வம்சத்தாரின் நடுவில்
இனிச் சகல கள்ளத்தரிசனமும் [3]முகஸ்துதி
யான குறிசொல்லுதலும் இராமற்போகும்.
25 நான் **கர்த்தர்**, நான் சொல்லுவேன், நான்
சொல்லும் வார்த்தை நிறைவேறும்; [4]இனித்
தாமதியாது; கலக வீட்டாரே, உங்கள் நாட்க
ளிலே நான் வார்த்தையைச் சொல்லுவேன்,
அதை நிறைவேறவும் பண்ணுவேன் என்று
கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார் என்று
சொல் என்றார்.
26 பின்னும் **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு
27 உண்டாகி, அவர்: மனுபுத்திரனே, இதோ,
இஸ்ரவேல் வம்சத்தார்: இவன் காண்கிற
தரிசனம் நிறைவேற அநேகநாள் செல்லும்;
[5]தூரமாயிருக்கிற காலங்களைக்குறித்து இவன்
தீர்க்கதரிசனம் சொல்லுகிறான் என்கிறார்
28 கள். ஆகையால் என் வார்த்தைகளில் ஒன்
றாகிலும் இனித் தாமதிப்பதில்லையென்று
கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார்; [6]நான்
சொன்ன வார்த்தை நிறைவேறும் என்று
கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார் என்று
அவர்களோடே சொல் என்றார்.

**13** **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண்
2 டாகி, அவர்: மனுபுத்திரனே, தீர்க்கதரிசனம்
சொல்லுகிற இஸ்ரவேலின் தீர்க்கதரிசிகளு
க்கு விரோதமாக நீ தீர்க்கதரிசனம் உரைத்து,
தங்கள் இருதயத்தில் இருக்கிறதையே எடுத்
துத் தீர்க்கதரிசனஞ்சொல்லுகிறவர்களோடே
நீ சொல்லவேண்டியது என்னவென்றால்:
[7]**கர்த்தருடைய** வார்த்தையைக் கேளுங்கள்.
3 கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதாவது: தா
ங்கள் ஒன்றும் தரிசியாதிருந்தும், தங்களுடைய
ஆவியின் ஏவுதலைப் பின்பற்றுகிற மதிகெட்ட
4 தீர்க்கதரிசிகளுக்கு ஐயோ! இஸ்ரவேலே,
[8]உன் தீர்க்கதரிசிகள் வனாந்தரங்களிலுள்ள
5 நரிகளுக்கு ஒப்பாயிருக்கிறார்கள். நீங்கள் **கர்த்**
**தருடைய** நாளிலே யுத்தத்தில் நிலைநிற்கும்
படிக்கு, [9]திறப்புகளில் ஏறினதுமில்லை; இஸ்
ரவேல்வம்சத்தாருக்காகச் சுவரை அடைத்தது
6 மில்லை. **கர்த்தர்** தங்களை அனுப்பாதிருந்தும்,
**கர்த்தர்** உரைத்தாரென்று சொல்லி, [10]அவர்
கள் அபத்தத்தையும் பொய்க்குறியையும் தரி
சித்து, காரியத்தை நிர்வாகம்பண்ணலாமெ
7 ன்று நம்பிக்கையாயிருக்கிறார்கள். நான் உ
ரைக்காதிருந்தும், நீங்கள் **கர்த்தர்** உரைத்தார்
என்று சொல்லும்போது, அபத்தமான தரிச
னையைத் தரிசித்து, பொய்க்குறியைச் சொல்
லுகிறீர்கள் அல்லவா?

1 ஆமோ. 6. 3. 2 பே. 3. 4
2 யோவே. 2. 1. செப். 1. 14
3 13. 23. புல. 2. 14
4 ஏசா. 14. 24; 53. 11. புல. 2. 17. தானி. 9. 12. லூ. 21. 33
5 2 பே. 3. 4
6 எரே. 44. 28
7 எரே. 14. 14; 23. 16, 26
8 உன்னத. 2. 15
9 சங். 106. 23. எபே. 6. 13, 14. வெளி. 6. 17
10 புல. 2. 14
11 1 இரா. 4. 1, 2
12 சங். 101. 7
13 எஸ்றா 2. 59, 62. நெகே. 7. 5. சங். 69. 28. வெளி. 20. 12
14 ஓசி. 9. 3. வெளி. 22. 15
15 எரே. 6. 14; 8. 11
16 22. 28
17 38. 22. ஏசா. 28. 2, 18
18 ஏசா. 30. 30. ஆகா. 2. 17
19 மத். 7. 26, 27
20 எரே. 5. 31
21 20. 46

ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் உரைக் 8
கிறது என்னவென்றால்: நீங்கள் அபத்தமான
தைச் சொல்லி, [11]பொய்யானதைத் தரிசிக்கிற
படியினால், இதோ, நான் உங்களுக்கு விரோ
தமானவர் என்று கர்த்தராகிய ஆண்டவர்
சொல்லுகிறார். அபத்தமானதைத் தரிசித்து, 9
பொய்க்குறியைச் சொல்லுகிற தீர்க்கதரிசிக
ளுக்கு என் கை விரோதமாயிருக்கும்; [12]அவர்
கள் என் ஜனத்தின் சங்கத்தில் இருப்பதுமில்
லை; [13]இஸ்ரவேல் வம்சத்தாரின் அட்டவணை
யில் எழுதப்படுவதுமில்லை; [14]இஸ்ரவேல் தே
சத்துக்குள் பிரவேசிப்பதுமில்லை; அப்பொ
ழுது நான் கர்த்தராகிய ஆண்டவரென்று அறி
ந்துகொள்வீர்கள். சமாதானம் இல்லாதிருந் 10
தும் சமாதானமென்று சொல்லி, [15]அவர்கள்
என் ஜனத்தைமோசம்போக்குகிறார்கள்; ஒரு
வன் மண்சுவரை வைக்கிறான்; [16]இதோ, மற்ற
வர்கள் சாரமில்லாத சாந்தை அதற்குப் பூசுகி
றார்கள். சாரமில்லாத சாந்தைப் பூசுகிறவர் 11
களை நோக்கி: அது இடிந்துவிழுமென்று
சொல்; [17]வெள்ளமாகப் பெருகுகிற மழை
பெய்யும்; மகா கல்மழையே, நீ சொரிவாய்;
கொடிய புசல்காற்றும் அதைப் பிளக்கும்.
இதோ, சுவர் விழும்போது: நீங்கள் பூசின 12
பூச்சு எங்கே என்று சொல்வார்கள் அல்லவா?
ஆகையால் என் உக்கிரத்திலே கொடிய புசல் 13
காற்றை எழும்பி அடிக்கப்பண்ணுவேன்;
என் கோபத்திலே வெள்ளமாக அடிக்கிற
மழையும், [18]என் உக்கிரத்திலே நிர்மூலமாக்
கத்தக்க பெருங்கல்மழையும் சொரியும் என்று
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். அப் 14
பொழுது நீங்கள் சாரமில்லாத சாந்தைப்பூ
சின சுவரை நான் இடித்து, அதின் அஸ்திபா
ரம் திறந்துகிடக்கும்படி அதைத் தரையிலே
விழப்பண்ணுவேன்; [19]உள்ளே இருக்கிற
நீங்கள் நிர்மூலமாகும்படி அது விழும்; அப்
பொழுது நான் **கர்த்தர்** என்று அறிந்துகொள்
வீர்கள். இப்படிச் சுவரிலும், அதற்குச் சார 15
மில்லாத சாந்தைப் பூசினவர்களிலும் நான்
என் உக்கிரத்தைத் தீர்த்துக்கொண்டு: சுவரு
மில்லை, அதற்குச் சாந்து பூசினவர்களுமில்லை;
எருசலேமைக் குறித்துத் தீர்க்கதரிசனஞ் 16
சொல்லி, [20]சமாதானம் இல்லாதிருந்தும் சமா
தானம் உண்டென்று தரிசனங் காண்கிற இஸ்
ரவேலின் தீர்க்கதரிசிகள் இல்லாமற்போவார்
கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்
என்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார்.
மனுபுத்திரனே, தங்களுடைய இருதயத் 17
தில் இருக்கிறதையேஎடுத்து, தீர்க்கதரிசனஞ்
சொல்லுகிற உன் ஜனத்தின் குமாரத்திகளுக்கு
எதிராக உன் முகத்தைத் திருப்பி, [21]அவர்க
ளுக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம் உரைத்து,
சொல்லவேண்டியது என்னவென்றால்: ஆத் 18
துமாக்களை வேட்டையாடும்படிக்குச் சகல
கைகளுக்கும் தழுவணைகளைத் தைத்து, அந்
தந்த வயதுள்ளவர்களுடைய தலைக்கும் தலைய
ணைகளை உண்டுபண்ணுகிறவர்களுக்கு ஐயோ!

[1]நீங்கள் என் ஜனத்தின் ஆத்துமாக்களை வேட்
டையாடி, அவைகளை உங்களுக்கு உயிரோ
19 டே காப்பாற்றுவீர்களோ? சாகத்தகாத ஆத்
துமாக்களைக் கொல்வதற்கும், உயிரோடே
இருக்கத்தகாத ஆத்துமாக்களை உயிரோடே
காப்பாற்றுவதற்குமாக நீங்கள் பொய்க்குச்
செவிகொடுக்கிற என் ஜனத்துக்குப் பொய்
சொல்லுகிறதினாலே [2]சில *சிறங்கை வாற்கோ
துமைக்காகவும் அப்பத்துண்டுகளுக்காகவும்
என்னை என் ஜனத்துக்குள்ளே பரிசுத்தக்
குலைச்சலாக்குவீர்களோ என்று கர்த்தராகிய
20 ஆண்டவர் உரைக்கிறார். ஆகையால் கர்த்த
ராகிய ஆண்டவர் சொல்லுகிறது என்னவென்
றால்: இதோ, நீங்கள் ஆத்துமாக்களைப் பறக்
கடிக்கும்படி வேட்டையாடுகிற உங்கள் தழு
வணைகளுக்கு விரோதமாக நான் வந்து, அவை
களை உங்கள் புயங்களிலிருந்து பிடுங்கிக் கிழி
த்து, நீங்கள் பறக்கடிக்க வேட்டையாடுகிற
21 ஆத்துமாக்களை நான் விடுதலைபண்ணி, உங்
கள் தலையணைகளைக் கிழித்து, என் ஜனத்தை
உங்கள் கைகளுக்கு நீங்கலாக்கிவிடுவேன்;
அவர்கள் இனி வேட்டையாடப்படும்படி உங்
கள் கைகளில் இரார்கள்; அப்பொழுது நான்
22 **கர்த்தர்** என்று அறிந்துகொள்வீர்கள். நான்
சஞ்சலப்படுத்தாத நீதிமானின் இருதயத்தை
நீங்கள் வீணாய் முறியப்பண்ணினபடியினா
லும், துன்மார்க்கன் தன் பொல்லாத வழியை
விட்டுத் திரும்பவும் நான் அவனை உயிரோ
டே காக்கவுங் கூடாதபடிக்கு நீங்கள் அவனு
டைய கைகளைத் திடப்படுத்தினபடியினாலும்,
23 நீங்கள் இனி அபத்தமானதைத் தரிசிப்பது
மில்லை, †சாஸ்திரம் பார்ப்பதுமில்லை; நான்
என் ஜனத்தை உங்கள் கைகளுக்கு நீங்கலாக்
கிவிடுவேன்; அப்பொழுது நான் **கர்த்தர்**
என்று அறிந்துகொள்வீர்கள் என்று சொல்
என்றார்.

**14** இஸ்ரவேலுடைய மூப்பரில் சிலர் என்னி
டத்தில் வந்து, [3]எனக்கு முன்பாக உட்கார்ந்
2 தார்கள். அப்பொழுது **கர்த்தருடைய** வார்த்
3 தை எனக்கு உண்டாகி, அவர்: மனுபுத்திர
னே, இந்த மனுஷர் தங்கள் நரகலான விக்கி
ரகங்களைத் தங்கள் இருதயத்தின்மேல் நாட்டி,
[4]தங்கள் அக்கிரமமாகிய இடறலைத் தங்கள்
முகத்துக்கு எதிராக வைத்துக்கொண்டிருக்கி
றார்களே; [5]இவர்கள் என்னிடத்தில் விசாரிக்
4 கத்தகுமா? ஆகையால் நீ அவர்களோடே பே
சிச் சொல்லவேண்டியது என்னவென்றால்:
இஸ்ரவேல் வம்சத்தாரில் தன்னுடைய நரக
லான விக்கிரகங்களைத் தன் இருதயத்தின்
மேல் நாட்டி, தன் அக்கிரமமாகிய இடறலைத்
தன் முகத்துக்கு எதிராக வைத்துக்கொண்டி
ருக்கிற எவனாகிலும் தீர்க்கதரிசியினிடத்தில்
வந்தால், **கர்த்தராகிய** நான் இஸ்ரவேல் வம்
சத்தாருடைய இருதயத்தில் இருக்கிறதைப்
பிடிக்கும்படியாக அப்படிப்பட்டவனுடைய
நரகலான விக்கிரகங்களின் திரட்சிக்குத் தக்க
5 தாக உத்தரவு கொடுப்பேன். அவர்கள் எல்

[1] 2 பே. 2. 14
[2] நீதி. 28. 21. மீகா 3. 5
* கைப்பிடி.
† குறிசொல்வது மி ல்லை. மீகா 3. 6
[3] 8. 1
[4] 7. 19
[5] 2 இரா. 3. 13, 14 எரே. 42. 20, 21
[6] லேவி. 17. 10: 20. 3–6. எண். 26. 10. உபா 28. 37. 1 கொ. 10. 11
[7] 1 இரா. 22. 23. யோபு 12. 16. எரே. 4. 10. 2 தெச. 2. 10–12
[8] சங். 119. 67. 1 பே. 2. 15, 25
[9] லேவி. 26. 26. ஏசா. 3. 1
[10] ஆதி. 7. 1. யோபு 42. 8. நீதி. 11. 4. எரே. 15. 1. தானி. 10. 11
[11] லேவி. 26, 22

லாரும் தங்கள் நரகலான விக்கிரகங்களைப் பின்
பற்றி, என்னைவிட்டுப் பேதலித்துப்போனார்
கள் என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகி
றார். ஆகையால், நீ இஸ்ரவேல் வம்சத்தா 6
ரை நோக்கி: திரும்புங்கள், உங்கள் நரகலான
விக்கிரகங்களை விட்டுத் திரும்புங்கள்; உங்கள்
சகல அருவருப்புகளையும் விட்டு உங்கள் முகங்
களைத் திருப்புங்கள் என்று கர்த்தராகிய ஆண்
டவர் உரைக்கிறார். இஸ்ரவேல் வம்சத்தாரி 7
லும் இஸ்ரவேலில் தங்குகிற அந்நியரிலும்
என்னைப் பின்பற்றாமல் பேதலித்து, தன் நரக
லான விக்கிரகங்களைத் தன் இருதயத்தின்
மேல் நாட்டி, தன் அக்கிரமமாகிய இடறலைத்
தன் முகத்துக்கெதிராக வைத்துக்கொண்டி
ருக்கிற எவனாகிலும் தீர்க்கதரிசியின் மூலமாய்
என்னிடத்தில் விசாரிக்க வந்தால், அவனுக்
குக் **கர்த்தராகிய** நானே உத்தரவு கொடுத்து,
அந்த மனுஷனுக்கு விரோதமாக என் முகத் 8
தைத் திருப்பி, [6]அவனை அடையாளமாகவும்
பழமொழியாகவும் வைத்து, அவனை என்
ஜனத்தின் நடுவில் இராதபடிக்குச் சங்கரித்
துப்போடுவேன்; அப்பொழுது நான் **கர்த்தர்**
என்று அறிந்துகொள்வீர்கள். ஒரு தீர்க்கதரிசி 9
எத்தப்பட்டு ஒரு விசேஷத்தைச் சொன்னா
கில், [7]அப்படிக்கொத்த தீர்க்கதரிசியைக் **கர்த்த
ராகிய** நானே எத்தப்படப்பண்ணினேன்; நான்
அவனுக்கு விரோதமாக என் கையை நீட்டி,
அவனை இஸ்ரவேல் ஜனத்தின் நடுவில் இராத
படிக்கு அழிப்பேன். அப்படியே அவரவர் தங் 10
கள் தங்கள் அக்கிரமத்தைச் சுமப்பார்கள்; தீர்க்
கதரிசியினிடத்தில் விசாரிக்கிறவனுடைய
தண்டனை எப்படியோ, அப்படியே தீர்க்கதரி
சியினுடைய தண்டனையும் இருக்கும். இஸ்ர 11
வேல் வம்சத்தார் இனி என்னைவிட்டு வழிதப்
பிப்போகாமலும், [8]தங்கள் எல்லா மீறுதல்களா
லும் இனி அசுசிப்படாமலும் இருக்கும்பொரு
ட்டாக இப்படிச் சம்பவிக்கும்; அப்பொழுது
அவர்கள் என் ஜனமாயிருப்பார்கள், நான்
அவர்கள் தேவனாயிருப்பேன் என்று கர்த்தரா
கிய ஆண்டவர் உரைக்கிறார் என்று சொல்
என்றார்.

**கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண் 12
டாகி, அவர்: மனுபுத்திரனே, ஒரு தேசம் 13
எனக்கு விரோதமாய்த் துரோகம் பண்ணிக்
கொண்டேயிருந்து, பாவஞ்செய்தால், நான்
அதற்கு விரோதமாக என் கையை நீட்டி,
[9]அதில் அப்பம் என்னும் ஆதாரக்கோலை முறி
த்து, அதில் பஞ்சத்தை அனுப்பி, மனுஷரை
யும் மிருகங்களையும் அதில் இராதபடிக்கு
நாசம்பண்ணுவேன். அப்பொழுது நோவா 14
தானியேல் யோபு ஆகிய இம்மூன்று புருஷ
ரும் அதின் நடுவில் இருந்தாலும், [10]அவர்கள்
தங்கள் நீதியினால் தங்கள் ஆத்துமாக்களைமாத்
திரம் தப்புவிப்பார்கள் என்று கர்த்தராகிய
ஆண்டவர் சொல்லுகிறார். நான் தேசத்தில் 15
[11]துஷ்டமிருகங்களை அனுப்ப, அம்மிருகங்களி
னிமித்தம் ஒருவரும் அதின் வழியாய் நடக்

சக்கூடாதபடி வெறுமையும் பாழுமாகும்போ
16 து, அந்த மூன்று புருஷரும் அதின் நடுவில்
இருந்தாலும், தாங்கள்மாத்திரம் தப்புவார்களே
யல்லாமல், குமாரனையாகிலும் குமாரத்திகளை
யாகிலும் தப்புவிக்கமாட்டார்கள்; தேசமும்
பாழாய்ப்போகும் என்று என் ஜீவனைக்கொ
ண்டு சொல்லுகிறேன் என்பதைக் கர்த்தராகிய
17 ஆண்டவர் உரைக்கிறார். அல்லது நான் அந்த
தேசத்தின்மேல் பட்டயத்தை வரப்பண்ணி:
[1]பட்டயமே, தேசத்தை உருவப்போ என்று
சொல்லி, அதிலுள்ள மனுஷரையும் மிருகங்
18 களையும் நாசம்பண்ணும்போது, அந்த மூன்று
புருஷரும் அதின் நடுவில் இருந்தாலும், தாங்
கள்மாத்திரம் தப்புவார்களே யல்லாமல், குமா
ரனையாகிலும் குமாரத்திகளையாகிலும் தப்பு
விக்கமாட்டார்கள் என்று என் ஜீவனைக்கொ
ண்டு சொல்லுகிறேன் என்பதைக் கர்த்தராகிய
19 ஆண்டவர் உரைக்கிறார். அல்லது நான் அந்த
தேசத்தில் கொள்ளைநோயை அனுப்பி, [2]அதி
லுள்ள மனுஷரையும் மிருகங்களையும் நாசம்
பண்ணும்படி அதின்மேல் இரத்தப்பழியாக
20 என் உக்கிரத்தை ஊற்றும்போது, நோவா
வும் தானியேலும் யோபும் அதின் நடுவில்
இருந்தாலும், அவர்கள் தங்கள் நீதியினால் தங்
கள் ஆத்துமாக்களைமாத்திரம் தப்புவிப்பார்க
ளேயல்லாமல், குமாரனையாகிலும், குமாரத்
தியையாகிலும் தப்புவிக்கமாட்டார்கள் என்று
என் ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேன் என்
பதைக் கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார்.
21 ஆகையால், கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு
கிறது என்னவென்றால்: நான் மனுஷரையும்
மிருகங்களையும் நாசம்பண்ணும்படி எருசலே
முக்கு விரோதமாகப் பட்டயம், பஞ்சம், துஷ்
டமிருகங்கள், [3]கொள்ளைநோய் என்னும் இந்
நான்கு கொடிய தண்டனைகளையும் அனுப்பும்
22 போது எவ்வளவு அதிக சங்காரமாகும்? ஆகி
லும், [4]இதோ, அதிலே தப்பி மீதியாகி வெளி
யே கொண்டுவரப்படுகிற குமாரரும் குமாரத்
திகளும் சிலர் இருப்பார்கள்; இதோ, அவர்
கள் உங்களண்டைக்குப் புறப்பட்டு வருவார்
கள்; அப்பொழுது நீங்கள் அவர்கள் மார்க்கத்
தையும் அவர்கள் கிரியைகளையும் கண்டு, [5]நான்
எருசலேமின்மேல் வரப்பண்ணின தீங்கை
யும் அதின்மேல் நான் வரப்பண்ணின எல்லா
23 வற்றையுங் குறித்துத் தேற்றப்படுவீர்கள். நீங்
கள் அவர்கள் மார்க்கத்தையும் அவர்கள் கிரி
யையையும் காணும்போது, அவர்கள் உங்க
ளுக்குத் தேற்றரவாயிருப்பார்கள்; [6]நான் அதி
லே செய்த எல்லாவற்றையும் முகாந்தரமில்
லாமல் செய்யவில்லையென்று அப்பொழுது
அறிந்துகொள்வீர்கள் என்பதைக் கர்த்தராகிய
ஆண்டவர் உரைக்கிறார் என்று சொன்னார்.

15 கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்
2 டாகி, அவர்: மனுபுத்திரனே, [7]காட்டிலிருக்
கிறசெடிகளுக்குள் மற்ற எல்லாச் செடிகொடி
களைப்பார்க்கிலும் திராட்சச்செடிக்கு மேன்
3 மை என்ன? யாதொரு வேலைசெய்ய அதி
லே ஒரு கட்டை எடுக்கப்படுமோ? யாதொரு
தட்டுமுட்டைத் தூக்கிவைக்கும்படி ஒரு முளை
யை அதினால் செய்வார்களோ? இதோ, அது 4
அக்கினிக்கு இரையாக எறியப்படும்; [8]அதின்
இரண்டு முனைகளையும் அக்கினி எரித்துப்போ
டும்; அதின் நடுத்துண்டும் வெந்துபோம்; அது
எந்த வேலைக்காவது உதவுமோ? இதோ, 5
அது வேகாதிருக்கும்போதே ஒரு வேலைக்கும்
உதவாதிருக்க, அக்கினி அதை எரித்து, அது
வெந்துபோனபின்பு, அது இனி ஒரு வேலை
க்கு உதவுவதெப்படி? ஆதலால், கர்த்தராகிய 6
ஆண்டவர் சொல்லுகிறது என்னவென்றால்:
காட்டுச்செடிகளுக் குள்ளிருக்கிற திராட்சச்
செடியை நான் அக்கினிக்கு இரையாக ஒப்புக்
கொடுத்ததுபோல, எருசலேமின் குடிகளையும்
அப்படியே ஒப்புக்கொடுத்து, என் முகத்தை 7
அவர்களுக்கு விரோதமாகத் திருப்புவேன்;
[9]அவர்கள் ஒரு அக்கினியிலிருந்து நீங்கித்
தப்பினாலும், வேறே அக்கினி அவர்களைப்
பட்சிக்கும்; அப்படியே நான் என் முகத்தை
அவர்களுக்கு விரோதமாய்த் திருப்பும்போது,
நான் **கர்த்தர்** என்று அறிந்துகொள்வீர்கள்.
அவர்கள் துரோகம் பண்ணினபடியினால், 8
நான் தேசத்தைப் பாழாய்ப் போகப்பண்ணு
வேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறார் என்றார்.

கர்த்தருடையவார்த்தைஎனக்குஉண்டாகி, 16
அவர்: மனுபுத்திரனே, [10]நீ எருசலேமின் அரு 2
வருப்புகளை அதற்கு அறிவித்துச் சொல்ல
வேண்டியது என்னவென்றால்: கர்த்தராகிய 3
ஆண்டவர் எருசலேமுக்குச் சொல்லுகிறார்,
கானான் தேசமே உன் உற்பத்திக்கும் உன்
பிறப்புக்கும் இடம், [11]உன் தகப்பன் எமோரி
யன், உன் தாய் ஏத்தித்தி. உன் பிறப்பின் 4
வர்த்தமானம் என்னவென்றால், [12]நீ பிறந்த நா
ளிலே உன் தொப்புள் அறுக்கப்படவுமில்லை;
நீ சுத்தமாவதற்குத் தண்ணீரினால் குளிப்பாட்
டப்படவுமில்லை; உப்பால் சுத்திகரிக்கப்படவு
மில்லை; துணிகளில் சுற்றப்படவுமில்லை. உ 5
னக்காகப் பரிதபித்து, இவைகளில் ஒன்றை
யாகிலும் உனக்குச் செய்ய ஒரு கண்ணும்
உன்பேரில் இரக்கமாயிருந்ததுமில்லை; நீ பிற
ந்தநாளில் நீ அருவருக்கப்பட்டதினால் வெ
ளியில் எறிந்துவிடப்பட்டாய். நான் உன் அரு 6
கே கடந்துபோகும்போது, *மிதிக்கப்படுவ
தற்கு ஏதுவாய் நீ உன் இரத்தத்தில் கிடக்கிற
தைக் கண்டு, உன் இரத்தத்தில் கிடக்கிற உன்
னைப் பார்த்து: பிழைத்திரு என்றேன்; ஆம்,
உன் இரத்தத்தில் கிடக்கிற உன்னைப் பார்த்து:
[13]பிழைத்திரு என்று சொன்னேன். உன்னை 7
வயலின் பயிரைப்போல அநேகமாயிரமாய்ப்
பெருகும்படி வைத்தேன்; [14]நீ வளர்ந்து பெரி
யவளாகி, மகா சௌந்தரியவதியானாய்; உன்
ஸ்தனங்கள் எழும்பின, உன் மயிர் வளர்ந்
தது; ஆனாலும், நீ நிர்வாணமும் அம்மணமு
மாயிருந்தாய். நான் உன் அருகே கடந்து 8
போனபோது, உன்னைப் பார்த்தேன்; இதோ,
உன் காலம் பருவகாலமா யிருந்தது; [15]அப்

1 லேவி. 26. 25. செப். 1. 3
2 2 சாமு. 24. 15
3 b. 17: 33. 27
4 6. 8. உபா. 4. 31
5 எசா. 40. 1, 2. எபி. 12. 6-11
6 உபா. 8. 2. நீதி. 26. 2. எரே. 22. 8, 9. தானி. 9. 7
7 சங். 80. 8. ஏசா. 5. 2, 7. எரே. 2. 21. ஓசி. 10. 1
8 யோ. 15. 6
9 லேவி. 17. 10. எசா. 24. 18. ஆமோ. 5. 18, 19
10 எசா. 58. 1
11 21. 30. ஆதி. 11. 26, 29. நெகே. 9. 7
12 ஓசி. 2. 3
* நீட்டுண்டதாய்
13 யாத். 3. 7, 8
14 யாத். 1. 7. உபா. 1. 10
15 ரூத். 3. 9

பொழுது என் வஸ்திரத்தை உன்மேல் விரித்
து, உன் நிர்வாணத்தை மூடி, உனக்கு ஆணை
யிட்டுக் கொடுத்து, [1]உன்னோடு உடன்படிக்
கை பண்ணினேன் என்று கர்த்தராகிய ஆண்
டவர் சொல்லுகிறார்; [2]இவ்விதமாய் நீ என்னு
9 டையவளானாய். நான் உன்னை ஜலத்தினால்
முழுக்காட்டி, [3]உன்னை இரத்தமற ஸ்நானம்
பண்ணுவித்து, உனக்கு எண்ணெய் பூசி,
10 சித்திரத் தையலாடையை உனக்கு உடுத்தி,
சாயந்தீர்ந்த பாதரட்சைகளை உனக்குத்
தரித்து, கட்ட மெல்லிய புடவையையும்,
மூடிக்கொள்ளப் பட்டுச்சால்வையையும் உன
11 க்குக் கொடுத்து, உன்னை ஆபரணங்களால்
அலங்கரித்து, [4]உன் கைகளிலே கடகங்களை
யும், உன் கழுத்திலே சரப்பணியையும்
12 போட்டு, உன் நெற்றியில் நெற்றிப்பட்டத்
தையும், [5]உன் காதுகளில் காதணியையும்,
உன் தலையின்மேல் சிங்காரமான கிரீடத்தை
13 யும் தரித்தேன். இவ்விதமாய்ப் பொன்னினா
லும் வெள்ளியினாலும் நீ அலங்கரிக்கப்பட்
டாய்; [6]உன் உடுப்பு மெல்லிய புடவையும்
பட்டும் சித்திரத்தையலாடையுமா யிருந்தது;
[7]மெல்லிய மாவையும் தேனையும் நெய்யையும்
சாப்பிட்டாய்; [8]நீ மிகவும் அழகுள்ளவளாகி,
ராஜ்யத்தைச் சுதந்தரிக்கும் சிலாக்கியத்தையும்
14 பெற்றாய். உன் அழகினாலே உன் கீர்த்தி
புறஜாதிகளுக்குள்ளே பிரசித்தமாயிற்று; [9]நான்
உன்மேல் வைத்த என் மகிமையினாலே அது
குறைவற்றதாய் இருந்ததென்று கர்த்தராகிய
ஆண்டவர் சொல்லுகிறார்.
15 நீயோவென்றால் உன் அழகை நம்பி, [10]உன்
கீர்த்தியினால் சோரமார்க்கமாய் நடந்து, வழிப்
போக்கரில் உனக்கு நேர்பட்ட யாவரோடும்
16 வேசித்தனம்பண்ணி, உன் வஸ்திரங்களில்
சிலவற்றை எடுத்து, [11]பலவருணச் சோடிப்
பான மேடைகளை உனக்கு உண்டாக்கி,
அவைகளின்மேல் வேசித்தனம் பண்ணினாய்;
அப்படிக்கொத்த காரியங்கள் ஒருக்காலும் சம்
17 பவித்ததுமில்லை, சம்பவிப்பதுமில்லை. நான்
உனக்குக் கொடுத்த என் பொன்னும் என்
வெள்ளியுமான உன் சிங்கார ஆபரணங்களை
நீ எடுத்து, உனக்கு ஆண் சுரூபங்களை உண்
டாக்கி, அவைகளோடே வேசித்தனம்பண்
18 ணி, உன் சித்திரத்தையலாடைகளை எடுத்து,
அவைகளை மூடி, என் எண்ணெயையும் என்
தூபவர்க்கத்தையும் அவைகளின்முன் படை
19 த்து, நான் உனக்குக் கொடுத்த என் அப்பத்
தையும், நீ சாப்பிடும்படி உனக்குக் கொடுத்த
மெல்லிய மாவையும் நெய்யையும் தேனையும்
நீ அவைகளின்முன் சுகந்த வாசனையாகப்
படைத்தாய்; காரியம் இப்படி ஆயிற்றென்று
20 கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். நீ
எனக்குப் பெற்ற உன் குமாரரையும் உன்
குமாரத்திகளையும் எடுத்து, [12]அவர்களை அவை
21 களுக்கு இரையாகப் பலியிட்டாய். நீ செய்த
வேசித்தனங்கள் போதாதென்று, நீ என் பிள்
ளைகளை அவைகளுக்குத் தீக்கடக்கப்பண்ண

1 யாத். 19. 5
2 எரே. 2. 2
3 1 பேது. 5. 8
4 ஆதி. 24. 22, 47. நீதி. 1. 9
5 ஏசா. 3. 21
6 சங். 45. 13, 14
7 உபா. 32. 13, 14
8 சங். 48. 2
9 உபா. 4. 7. 2 நாளா. 9. 23. சங். 50. 2. புல. 2. 15
10 ஏசா. 1. 21. எரே. 2. 20; 7. 4. ஓசி. 1. 2
11 2 இரா. 23. 7. ஓசி. 2. 8
12 2 இரா. 16. 3. ஏசா. 57. 5
13 சங். 106. 37
14 எரே. 2. 2
15 எரே. 3. 2
16 நீதி. 9. 14
17 20. 7, 8. ஏசா. 30. 2, 3
18 2 நாளா. 28. 18. ஓசி. 2. 9
19 எரே. 2. 18, 36
20 நீதி. 7. 11
21 ஏசா. 30. 6. ஓசி. 8. 9, 10
22 பேது. 4. 10, 18

ஒப்புக்கொடுத்து, [13]அவர்களைக் கொலைசெய்
தாய். நீ உன் எல்லா அருவருப்புகளிலும் 22
வேசித்தனங்களிலும் நடக்கும்போது, நிர்வா
ணமும் அம்மணமுமாயிருந்ததும், [14]உன் இரத்
தத்திலே மிதிக்கப்பட எதுவாய்க் கிடந்தது
மான உன் சிறுவயதின் நாட்களை நினையாமற்
போனாய், ஐயோ! உனக்கு ஐயோ! என்று 23
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்; நீ செ
ய்த பொல்லாப்புகளெல்லாம் தவிர, நீ உன 24
க்கு மண்டபங்களைக் கட்டி, [15]உனக்குச் சகல
வீதிகளிலும் உயர்ந்த மேடைகளை உண்டு
பண்ணினாய். நீ சகல வழி முகனையிலும் 25
உன் உயர்ந்த மேடைகளைக் கட்டி, [16]உன் அழ
கை அருவருப்பாக்கி, வழிப்போக்கர் யாவருக்
கும் உன் கால்களை விரித்து, உன் வேசித்த
னங்களைத் திரளாய்ப் பெருகப்பண்ணி, சதை 26
பெருத்த உன் அயல்தேசத்தாராகிய எகிப்திய
புத்திரரோடே வேசித்தனம்பண்ணி, [17]எனக்
குக் கோபம் உண்டாக்கும்படி உன் வேசித்
தனங்களைப் பெருகப்பண்ணினாய். ஆதலால், 27
இதோ, நான் என் கையை உனக்கு விரோத
மாக நீட்டி, உனக்கு நியமித்த போஜனத்தைக்
குறைக்கி, [18]உன் முறைகேடான மார்க்கத்தைக்
குறித்து வெட்கப்பட்ட உன் பகையாளிகளா
கிய பெலிஸ்தருடைய குமாரத்திகளின் இச்
சைக்கு உன்னை ஒப்புக்கொடுத்தேன். நீ 28
திருப்தியடையாததினால் அசீரிய புத்திரரோ
டும் வேசித்தனம்பண்ணினாய்; [19]அவர்களோ
டே வேசித்தனம்பண்ணியும் நீ திருப்தியடை
யவில்லை. நீ கானான் தேசத்திலே செய்த 29
வேசித்தனத்தை கல்தேயர்மட்டும் எட்டச்செ
ய்தாய்; அதினாலும் நீ திருப்தியடையாமற்போ
னாய். வெட்கங்கெட்ட வேசியின் கிரியை 30
களாகிய [20]இவைகளையெல்லாம் நீ செய்து,
சகல வழிமுகனையிலும் உன் மண்டபங்களைக் 31
கட்டி, சகல வீதிகளிலும் உன் மேடைகளை
உண்டாக்கினபடியால், உன் இருதயம் எவ்
வளவாய்க் களைத்துப்போயிருக்கிறது என்று
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்; நீ
பணையத்தை அலட்சியம்பண்ணுகிறதினால்,
நீ வேசியைப்போல இராமல், தன் புருஷ 32
னுக்குப் பதிலாக அந்நியரைச் சேர்த்துக்கொ
ள்ளுகிற விபசார ஸ்திரீயைப்போல இருக்கி
றாய். எல்லா வேசிகளுக்கும் பணையங் கொ 33
டுக்கிறார்கள்; [21]நீயோ உன் நேசர்கள் சுற்றுப்
புறங்களிலிருந்து உன்னிடத்தில் வேசித்தன
ஞ்செய்ய வரும்படி அவர்களுக்கெல்லாம் நீயே
பணையங் கொடுத்து, அவர்களுக்கு வெகுமதி
களைத் தருகிறாய். இவ்விதமாய் உன் வேசித் 34
தனங்களுக்கும் வேறே ஸ்திரீகளின் வேசித்
தனங்களுக்கும் வித்தியாசமுண்டு; வேசித்த
னம்பண்ண அவர்கள் உன்னைப் பின்செல்ல
மாட்டார்கள்; பணையம் உனக்குக் கொடுக்கப்
படாமல் நீயே பணையம் கொடுக்கிறபடியால்
நீ செய்வது விபரீதம்.
ஆகையால், [22]வேசியே, கர்த்தருடைய வார் 35
த்தையைக் கேள். கர்த்தராகிய ஆண்டவர் 36

சொல்லுகிறது என்னவென்றால்: உன் வேசித்
தனத்தின் அசுத்தம் பாய்ந்தபடியினாலும், நீ
உன் சாமவிகாரிகளோடும் அருவருப்பாகிய
உன் நரகலான விக்கிரகங்களோடும் வேசித்
தனம்பண்ணி, [1]இவைகளுக்கு உன் பிள்ளை
களின் இரத்தத்தைப் படைத்ததினால் உன்
37 நிர்வாணம் திறக்கப்பட்டபடியினாலும், இ
தோ, நீ சம்போகம்பண்ணின உன் எல்லாக்
காமவிகாரிகளையும், நீ நேசித்த யாவரையும், நீ
பகைத்திருக்கிற அனைவரோடும் நான் கூடிவ
ரச்செய்து, [2]சுற்றிலுமிருந்து அவர்களை உன
க்கு விரோதமாகச் சேர்த்து, அவர்கள் உன் நிர்
வாணத்தையெல்லாம் காணும்படி உன் நிர்வா
ணத்தை அவர்களுக்கு முன்பாகத் திறந்துவை
38 த்து, விபசாரிகளையும் இரத்தஞ்சிந்தினவர்களை
யும் நியாயந்தீர்க்கிறபடியே உன்னை நியாயந்தீர்
த்து, [3]உக்கிரத்தோடும் எரிச்சலோடும் இரத்
39 தப்பழியை உன்பேரில் சுமத்தி, உன்னை
அவர்கள் கையில் ஒப்புக்கொடுப்பேன்; அவர்
கள் உன் மண்டபங்களை இடித்து, உன் மே
டைகளைத் தரையாக்கிப்போட்டு, உன் வஸ்தி
ரங்களை உரிந்து, [4]உன் சிங்கார ஆபரணங்களை
எடுத்துக்கொண்டு, உன்னை அம்மணமும் நிர்
40 வாணமுமாக விட்டுப்போய், எனக்கு விரோ
தமாக ஒரு கூட்டத்தைக் கொண்டுவந்து, [5]உன்
னைக் கல்லெறிந்து, உன்னைத் தங்கள் பட்ட
41 யங்களால் குத்திப்போட்டு, உன் வீடுகளை
அக்கினியால் சுட்டெரித்து, [6]அநேக ஸ்திரீ
களின் கண்களுக்கு முன்பாக உன்னில் நியா
யத்தீர்ப்புகளைச் செய்வார்கள்; உன் வேசித்
தனத்தை ஒழியப்பண்ணுவேன்; நீ இனிப்
42 பணையங்கொடுப்பதில்லை. இவ்விதமாய் என்
எரிச்சல் உன்னைவிட்டு நீங்கும்படி, நான் என்
உக்கிரத்தை உன்னில் ஆறப்பண்ணி, இனி
43 கோபமாயிராமல் அமருவேன். நீ உன் இள
வயதின் நாட்களை நினையாமல், இவைகளெல்
லாவற்றினாலும் எனக்குக் கோபம் உண்டாக்
கினபடியினால், [7]இதோ, நான் உன் வழியின்
பலனை உன் தலையின்மேல் சுமரப்பண்ணு
வேன் என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்
லுகிறார்; [8]அதினாலே இனி உன் எல்லா அரு
வருப்புகளினாலும் இப்படிப்பட்ட முறைகே
டான காரியத்தைச் செய்யமாட்டாய்.
44 இதோ, பழமொழி சொல்லுகிறவர்கள் எல்
லாரும்: தாயைப்போல மகள் என்று உன்
னைக் குறித்துப் பழமொழி சொல்லுவார்கள்.
45 நீ, தன் புருஷனையும் தன் பிள்ளைகளையும்
அருவருத்த உன் தாயின் மகள்; நீ, தங்கள்
புருஷரையும் தங்கள் பிள்ளைகளையும் அருவரு
த்த உன் சகோதரிகளின் சகோதரி; [9]உங்கள்
தாய் ஏத்தித்தி; உங்கள் தகப்பன் எமோரியன்.
46 உன் இடதுபுறத்திலே, தானும் தன் குமாரத்
திகளுமாய்க் குடியிருந்த சமாரியா உன் தமக்
கை; [10]உன் வலதுபுறத்திலே, தானும் தன்
குமாரத்திகளுமாய்க் குடியிருந்த சோதோம்
47 உன் தங்கை. ஆகிலும் நீ அவர்களுடைய
மார்க்கங்களிலே நடவாமலும், அவர்களுடைய
அருவருப்புகளின்படி செய்யாமலும், அது
மகா அற்பகாரியம் என்கிறதுபோல [11]நீ உன்
எல்லா வழிகளிலேயும் அவர்களைப்பார்க்கி
லும் கேடாய் நடந்தாய். நீயும் உன் குமாரத் 48
திகளும் செய்ததுபோல, [12]உன் சகோதரியா
கிய சோதோமும் அவளுடைய குமாரத்திகளும்
செய்யவில்லை என்று என் ஜீவனைக்கொண்டு
சொல்லுகிறேன் என்று கர்த்தராகிய ஆண்ட
வர் உரைக்கிறார். இதோ, கெர்வமும், ஆகா 49
ரத்திரட்சியும், நிர்விசாரமான சாங்கோபாங்கமு
மாகிய இவைகளே உன் சகோதரியான சோ
தோமின் அக்கிரமம்; [13]இவைகளே அவளிடத்
திலும் அவள் குமாரத்திகளிடத்திலும் இருந்
தன; சிறுமையும் எளிமையுமானவனுடைய
கையை அவள் பலப்படுத்தவில்லை. அவர்கள் 50
அகந்தையுள்ளவர்களாகி, என் முகத்துக்கு முன்பாக
அருவருப்பானதைச் செய்தார்கள்; [14]அதை
நான் கண்டபோது, அவர்களை ஒழித்துவிட்
டேன். நீ செய்த பாவங்களில் அரைவாசி 51
யும் சமாரியா செய்யவில்லை; நீ உன் சகோதரி
களைப்பார்க்கிலும் உன் பாவங்களைப் பெருகப்
பண்ணி, [15]நீ செய்த உன் எல்லா அருவருப்
புகளினாலும் அவர்களை நீதியுள்ளவர்களென்று
விளங்கப்பண்ணினாய். இப்போதும் உன் 52
சகோதரிகளைக் குற்றவாளிகள் என்று தீர்த்த
நீ அவர்களைப்பார்க்கிலும் அருவருப்பாகச்
செய்த உன் பாவங்களினிமித்தம் உன் இலச்
சையைச் சுமந்துகொள்; [16]உன்னைப்பார்க்கி
லும் அவர்கள் நீதியுள்ளவர்கள்; உன் சகோ
தரிகளை நீதியுள்ளவர்களென்று விளங்கப்பண்
ணின நீ வெட்கமடைந்து, உன் இலச்சை
யைச் சுமந்துகொள். நான் சோதோமும் 53
அவள் குமாரத்திகளும் சிறையிருக்கிற அவர்
களுடைய சிறையிருப்பையும், சமாரியாவும்
அவள் குமாரத்திகளும் சிறையிருக்கிற சிறை
யிருப்பையும் திருப்பும்போது, [17]அவர்கள் நடு
விலே நீ சிறையிருக்கிற உன்னுடைய சிறை
யிருப்பையும் திருப்புவேன். அதினால் நீ 54
அவர்களுக்கு ஆறுதலாக இருந்து, உன் இலச்
சையைச் சுமந்து, நீ செய்த எல்லாவற்றினா
லும் வெட்கமடைவாய். உன் சகோதரிகளா 55
கிய சோதோமும் அவள் குமாரத்திகளும் தங்
கள் முந்தின சீருக்குத் திரும்புவார்கள்; சமா
ரியாவும் அவள் குமாரத்திகளும் தங்கள் முந்
தின சீருக்குத் திரும்புவார்கள்; நீயும் உன்
குமாரத்திகளும் உங்கள் முந்தின சீருக்குத்
திரும்புவீர்கள். உன்னை வெறுக்கும் சீரியா 56
வின் குமாரத்திகளும், [18]அவளைச் சுற்றிலும்
இருக்கிற பெலிஸ்தரின் குமாரத்திகளும் அவ
மானம்பண்ணினபோது உன் பொல்லாப்பு
வெளியாயிற்றே. அதற்குமுன் உன் கெர் 57
வத்தின் நாளிலே உன் சகோதரியாகிய சோ
தோமின் பெயரை உன் வாயினாலே உச்சரிக்
கவுமாட்டாய். உன் முறைகேட்டையும் உன் 58
அருவருப்புகளையும் நீ சுமப்பாய் என்று கர்த்
தர் சொல்லுகிறார். கர்த்தராகிய ஆண்டவர் 59
சொல்லுகிறது என்னவென்றால்: [19]உடன்ப

1 எரே. 2. 34
2 எரே. 13. 22, 26. புல. 1. 8. ஓசி. 2. 3, 10
3 யாத். 21. 12. லேவி. 20. 10. உபா. 22. 22. நாகூ. 1. 2
4 ஓசி. 2. 3
5 எரே. 25. 9. யோவே. 8. 5, 7
6 2 இரா. 25. 9. யோபு 34. 28. 1 தீமோ. 5. 20
7 சங். 78. 42
8 9. 10: 11. 21
9 3. ஓசி
10 உபா. 32. 32
11 2 இரா. 21. 9. 1 கொ. 5. 1
12 மத். 10. 15: 11. 24
13 ஆதி. 13. 10, 13: 18. 20
14 ஆதி. 19. 24. எரே. 20. 16
15 எரே. 3. 11. மத். 12. 41, 42
16 ரோ. 1. 32: 2. 1-10
17 எரே. 20. 16: 48. 47
18 2 இரா. 16. 5. ஏசா. 7. 1
19 உபா. 29. 12-15. மத். 7. 1, 2

டிக்கையை முறித்துப் போடுகிறதினால் ஆணை
யை அசட்டைபண்ணின நீ செய்ததுபோல
60 நான் உனக்கும் செய்வேன். ஆகிலும் உன்
இளவயதில் உன்னோடே பண்ணின என்
உடன்படிக்கையை நான் நினைத்து, [1]நித்திய
உடன்படிக்கையை உனக்கு ஏற்படுத்துவேன்.
61 அப்பொழுது உன் தமக்கைகளையும் உன் தங்
கைகளையும் நீ சேர்த்துக் கொள்ளுகையில்,
[2]உன் வழிகளை நினைத்து நாணுவாய்; [3]அவர்
களை நான் உனக்குக் குமாரத்திகளாகக் கொ
டுப்பேன்; [4]உன்னுடைய உடன்படிக்கை
62 யைப் பார்த்துக் கொடுப்பதில்லை. உன்னோ
டே என் உடன்படிக்கையைப்பண்ணி ஏற்
படுத்துவேன்; [5]அப்பொழுது நான் கர்த்தர்
63 என்று அறிவாய். நீ செய்த எல்லாவற்றை
யும் நான் மன்னித்தருளும்போது, [6]நீ நினைத்து
வெட்கி, உன் நாணத்தினால் உன் வாயை
இனித் திறக்கமாட்டாதிருப்பாய் என்று கர்த்
தராகிய ஆண்டவர் உரைக்கிறார் என்று சொல்
என்றார்.

17 கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்
2 டாகி, அவர்: மனுபுத்திரனே, நீ இஸ்ர
வேல் வம்சத்தாருக்கு ஒரு விடுகதையையும்
உவமையையும் கூறி, சொல்லவேண்டியது
3 என்னவென்றால்: கர்த்தராகிய ஆண்டவர்
சொல்லுகிறார், பெரிய செட்டைகளையும் நீள
மான இறகுகளையும் உடையதும், பலவருண
மான இறகுகளால் நிறைந்ததுமாகிய ஒரு
பெரிய கழுகு லீபனோனில் வந்து, [7]ஒரு
கேதுருவின் நுனிக்கிளையைப் பிடித்து,
4 அதின் இளங்கிளையிலுள்ள கொழுந்துகளைக்
கொய்து, அதை வர்த்தக தேசத்துக்குக் கொ
ண்டுபோய், அதை வர்த்தகருடைய நகரத்
5 திலே வைத்தது; தேசத்தின் விதையில்
ஒன்றை எடுத்து, அதைப் பயிர்நிலத்திலே
போட்டு, [8]அதை எடுத்து, மிகுந்த தண்ணீர்
6 ஓரத்திலே பத்திரமாய் நட்டது. அது துளிர்
த்து, படர்ந்து, [9]தாழ்ந்த அடிமரமுள்ள திராட்
சச்செடியாயிற்று; அதின் கொடிகள் அந்தக்
கழுகுக்கு நேராகவும், அதின் வேர்கள் அதின்
கீழாகவும் இருந்தன; இவ்விதமாய் அது திராட்
சச்செடியாகி, கிளைகளை வீசி, கொப்புகளை
7 விட்டது. அன்றியும் பெரிய செட்டைகளை
யும் திரளான இறகுகளையும் உடைய வே
றொரு பெரிய கழுகு இருந்தது; [10]இதோ,
அது தன் நடவாகிய பாத்திகளிலிருந்து அதற்
குத் தண்ணீர் பாய்ச்சும்படி இந்தத் திராட்சச்
செடி அதற்கு நேராகத் தன் வேர்களை விட்டு,
அதற்கு நேராகத் தன் கொடிகளை வீசினது.
8 கொப்புகளை விடுகிறதற்கும், கனியைத் தருகி
றதற்கும், மகிமையான திராட்சச்செடியாகிற
தற்கும் இது மிகுந்த தண்ணீர்களின் ஓரமா
9 கிய நல்ல நிலத்தில் நடப்பட்டிருந்தது. இது
செழிக்குமா? இது பட்டுப் போகத்தக்கதாய்
ஒருவன் இதின் வேர்களைப் பிடுங்காமலும்,
இதின் கனியை வெட்டாமலும் இருப்பானோ?
துளிர்த்த எல்லா இலைகளோடும் இது பட்டுப்

1 2 சாமு. 23. 5. சங். 106. 45. எரே. 32. 40; 50. 5
2 சங். 119. 59
3 ஏசா. 54. 1; 60. 4. கலா. 4. 26–31
4 எரே. 31. 31. பேர. 15. 16
5 ஓசி. 2. 19, 20
6 எஸ்றா 9. 6. தானி. 9. 7, 8. ரோ. 3. 19
7 2 இரா. 24. 12. ஓசி. 8. 1
8 உபா. 8. 7-9
9 14. வச
10 15. வச
11 2 இரா. 25. 7
12 19. 12. ஓசி. 12. 1; 13. 15
13 3. வச. 2 இரா. 24. 11–17
14 2 நாளா. 36. 13
15 2 இரா. 24. 20. எசா. 31. 1–3
16 12. 13. எரே. 52. 11
17 எரே. 37. 7
18 1 நாளா. 29. 24
19 32. 3

போகும்; [11]இதை வேரோடே பிடுங்கும்படி
ஒருவன் பலத்த புயத்தோடும் திரண்ட ஜனத்
தோடும் வரத்தேவையில்லை. இதோ, நடப் 10
பட்ட இது செழிப்பாயிருக்குமோ? [12]கொண்
டல்காற்று இதின்பேரில் படும்போது இது
வாடி உலர்ந்துபோகாதோ? இது நடப்பட்ட
பாத்திகளிலே வாடிப்போமென்று கர்த்தரா
கிய ஆண்டவர் உரைக்கிறார் என்று சொல்
என்றார்.

பின்பு கர்த்தருடைய வார்த்தை எனக்கு 11
உண்டாகி, அவர்: இப்போதும் இவைகளின் 12
தாற்பரியம் தெரியுமா என்று நீ கலகவீட்டா
ராக் கேட்டுச் சொல்லவேண்டியது என்ன
வென்றால், [13]இதோ, பாபிலோன் ராஜா எரு
சலேமுக்கு வந்து, அதின் ராஜாவையும் அதின்
பிரபுக்களையும் பிடித்து, அவர்களைத் தன்னிட
மாகப் பாபிலோனுக்குக் கொண்டுபோகும்
போது, அவன் ராஜவம்சத்திலே ஒருவனைத் 13
தெரிந்தெடுத்து, [14]அவனோடே உடன்படிக்
கை பண்ணி, ராஜ்யம் தன்னை உயர்த்தா 14
மல் தாழ்ந்திருக்கும்படிக்கும், தன் உடன்ப
டிக்கையை அவன் கைக்கொள்ளுகிறதினால்
அது நிலைநிற்கும்படிக்கும், அவனை ஆணைப்பி
ரமாணத்துக்கு உட்படுத்தி, தேசத்தில் பலசா
லிகளைப் பிடித்துக்கொண்டு போனானே;
இவன் அவனுக்கு விரோதமாய்க் கலகஞ் 15
செய்து, [15]தனக்குக் குதிரைகளையும் அநேகம்
ஆட்களையும் அனுப்பவேண்டுமென்று தன்
ஸ்தானாபதிகளை எகிப்துக்கு அனுப்பினான்;
இப்படிப்பட்டவனுக்கு வாய்க்குமோ? இப்ப
டிச் செய்கிறவன் தப்பித்துக்கொள்வானோ?
உடன்படிக்கையை முறித்தவன் தப்பித்துக்
கொள்வானோ? தன்னை ராஜாவாக ஏற்படுத் 16
திய ராஜாவினுடைய ஆணையை அசட்டை
பண்ணி, அவனுடைய உடன்படிக்கையை
முறித்துப்போட்டவன், [16]அந்த ராஜாவினு
டைய ஸ்தானமாகிய பாபிலோன் நடுவிலே
அவனண்டையில் இருந்து மரணமடைவா
னென்று என் ஜீவனைக்கொண்டு சொல்லுகி
றேன் என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு
கிறார். அவன் அநேகம் ஜனங்களை நாசம் 17
பண்ணும்படி அணைபோட்டு, கொத்தளங்க
ளைக் கட்டும்போது, [17]பார்வோன் பெரிய சே
னையோடும், திரளான கூட்டத்தோடும் வந்து
இவனுக்காக யுத்தத்தில் உதவமாட்டான்.
இதோ, இவன் கையடித்துக் கொடுத்திருந் 18
தும் உடன்படிக்கையை முறித்துப்போட்டு,
[18]ஆணையை அசட்டைபண்ணினான்; இப்படி
யெல்லாம் செய்தவன் தப்புவதில்லை. அதி 19
னிமித்தம் கர்த்தராகிய ஆண்டவர் சொல்
லுகிறது என்னவென்றால்: அவன் என் ஆணை
யை அசட்டைபண்ணினதையும் என் உடன்
படிக்கையை முறித்துப்போட்டதையும், நான்
அவனுடைய தலையின்மேல் வரப்பண்ணு
வேன் என்று என் ஜீவனைக்கொண்டு சொல்
லுகிறேன். அவன் என்னுடைய கண்ணி 20
யில் அகப்படும்படிக்கு [19]நான் என் வலையை

அவன்மேல் வீசி, அவனைப் பாபிலோனுக்குக்
கொண்டுபோய், அவன் எனக்கு விரோத
மாய்ப் பண்ணின துரோகத்தினிமித்தம் அங்
21 கே அவனை நியாயம் விசாரிப்பேன். அவ
னோடேகூட ஓடிப்போகிற யாவரும் அவனு
டைய எல்லா ராணுவங்களும் பட்டயத்தால்
விழுவார்கள்; [1]மீதியானவர்களோ சகல திசை
களிலும் சிதறடிக்கப்படுவார்கள்; அப்பொ
ழுது **கர்த்தராகிய** நான் இதைச் சொன்
னேன் என்று அறிந்துகொள்வீர்கள்.
22 கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறது என்
னவென்றால்: நான் உயர்ந்த கேதுருவின்
நுனிக்கிளைகளில் ஒன்றை எடுத்து, [2]அதை
நடுவேன்; [3]அதின் இளங்கிளையிலுள்ள கொ
ழுந்துகளில் இளசாயிருக்கிற ஒன்றைக் கொ
ய்து, [4]அதை உயரமும் உன்னதமுமான ஒரு
23 பர்வதத்தின்மேல் நாட்டுவேன். இஸ்ரவே
லின் உயரமான பர்வதத்திலே அதை நாட்டு
வேன்; அது கொப்புகளை விட்டு, கனிதந்து,
மகிமையான கேதுருவாகும்; [5]அதின் கீழே
சகலவித பட்சிஜாதிகளும் தங்கி, அதின் கிளை
24 களின் நிழலிலே தாபரிக்கும். அப்படியே
**கர்த்தராகிய** நான் உயர்ந்த விருட்சத்தைத்
தாழ்த்தி, [6]தாழ்ந்த விருட்சத்தை உயர்த்தி
னேன் என்றும், நான் பச்சையான விருட்
சத்தைப் பட்டுப்போகப் பண்ணி, பட்டுப்
போன விருட்சத்தைத் தழைக்கப் பண்ணி
னேன் என்றும் வெளியின் விருட்சங்களுக்கு
எல்லாம் தெரியவரும்; **கர்த்தராகிய** நான்
இதைச் சொனனேன், இதை நிறைவேற்றி
னேன் என்று உரைத்தார் என்று சொல்
என்றார்.

18 **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண்
2 டாகி, அவர்: பிதாக்கள் திராட்சக்காய்க
ளைத் தின்றார்கள், [7]பிள்ளைகளின் பற்கள்
கூசிப்போயின என்னும் பழமொழியை நீங்
கள் இஸ்ரவேல் தேசத்தைக்குறித்துச் சொல்
3 லுகிறது என்ன? இனி இஸ்ரவேலில் இக்
தப் பழமொழியைச் சொல்வது இல்லை என்
பதை என் ஜீவனைக்கொண்டு சொல்லுகி
றேன் என்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்
4 கிறார். இதோ, எல்லா ஆத்துமாக்களும் என்
னுடையவைகள்; தகப்பனின் ஆத்துமா எப்ப
டியோ, அப்படியே மகனின் ஆத்துமாவும்
என்னுடையது; [8]பாவஞ்செய்கிற ஆத்து
5 மாவே சாகும். ஒருவன் நீதிமானாயிருந்து,
6 நியாயத்தையும் நீதியையும் செய்து, மலைக
ளின்மேல் சாப்பிடாமலும், [9]இஸ்ரவேல் வம்
சத்தாரின் நரகலான விக்கிரகங்களுக்கு நேரா
கத் தன் கண்களை ஏறெடுக்காமலும், தன் அய
லானுடைய மனைவியைத் தீட்டுப்படுத்தாம
7 லும், தூர ஸ்திரீயோடே சேராமலும், ஒருவ
னையும் ஒடுக்காமலும், [10]கொள்ளையிடாமலுமிரு
ந்து, [11]கடன் வாங்கினவனுக்கு அடைமானத்
தைத் திரும்பக் கொடுத்து, தன் அப்பத்தைப்
பசித்தவனுக்குப் பங்கிட்டு, [12]வஸ்திரமில்லாத
8 வனுக்கு வஸ்திரம் தரிப்பித்து, வட்டிக்குக்
கொடாமலும், *[13]பொலிசை வாங்காமலும்,
அநியாயத்துக்குத் தன் கையை விலக்கி, [14]மனி
தருக்குள்ள வழக்கை உண்மையாய்த் தீர்த்து;
என் கட்டளைகளின்படி நடந்து, [15]என் நியா 9
யங்களைக் கைக்கொண்டு, உண்மையாயிருப்
பானாகில் அவனே நீதிமான்; அவன் பிழைக்
கவே பிழைப்பான் என்று கர்த்தராகிய ஆண்
டவர் சொல்லுகிறார். ஆனாலும் அவனுக்கு 10
ஒரு குமாரன் பிறந்து, [16]அவன் கள்ளனும்
இரத்தஞ்சிந்துகிறவனும், மேற்சொல்லிய கட
மைகளின்படி நடவாமல், இவைகளில் ஒன் 11
றுக்கொப்பானதைச் செய்கிறவனுமாயிருந்து,
மலைகளின்மேல் சாப்பிட்டு, தன் அயலானு
டைய மனைவியைத் தீட்டுப்படுத்தி, சிறு 12
மையும் எளிமையுமானவனை ஒடுக்கி, கொள்
ளைக்காரனாயிருந்து, அடைமானத்தைத் திரும்
பக் கொடாமல், நரகலான விக்கிரகங்களுக்கு
நேராகத் தன் கண்களை ஏறெடுத்து, அருவ
ருப்பானதைச்செய்து, வட்டிக்குக்கொடுத்து, 13
பொலிசை வாங்கினால், அவன் பிழைப்பா
னோ? அவன் பிழைப்பதில்லை; இந்த எல்லா
அருவருப்புகளையும் செய்தானே; அவன் சாக
வே சாவான்; [17]அவன் இரத்தப்பழி அவன்
மேல் இருக்கும். பின்னும், இதோ, அவனுக்கு 14
ஒரு குமாரன் பிறந்து, அவன் தன் தகப்பன்
செய்த எல்லாப் பாவங்களையும் கண்டு, தான்
அவைகளின்படி செய்யாதபடிக்கு எச்சரிக்
கையாயிருந்து, மலைகளின்மேல் சாப்பிடா 15
மலும், இஸ்ரவேல் வம்சத்தாரின் நரகலான
விக்கிரகங்களுக்கு நேராகத் தன் கண்களை
ஏறெடுக்காமலும், தன் அயலானுடைய மனை
வியைத் தீட்டுப்படுத்தாமலும், ஒருவனையும் 16
ஒடுக்காமலும், அடைமானத்தை வைத்துக்
கொண்டிராமலும், கொள்ளையிடாமலும், தன்
அப்பத்தைப் பசித்தவனுக்குப் பங்கிட்டு, வஸ்
திரமில்லாதவனுக்கு வஸ்திரந் தரிப்பித்து,
சிறுமையானவனுக்கு நோவுண்டாக்காதபடித் 17
தன் கையை விலக்கி, வட்டியும் பொலிசை
யும் வாங்காமலிருந்து என் நியாயங்களின்படி
செய்து, என் கட்டளைகளில் நடந்தால்,
அவன் தன் தகப்பனுடைய அக்கிரமத்தினி
மித்தம் சாகாமல் பிழைக்கவே பிழைப்பான்.
அவன் தகப்பனோவென்றால் கொடுமைசெ 18
ய்து, சகோதரனைக் கொள்ளையிட்டு, தகாத
தைத் தன் ஜனங்களின் நடுவிலே செய்தபடி
யினால், இதோ, [18]அவன் தன் அக்கிரமத்தி
லே சாவான். இதெப்படி, குமாரன் தகப்பனு 19
டைய அக்கிரமத்தைச் சுமக்கிறதில்லையா
என்று நீங்கள் கேட்டால், [19]குமாரன் நியாயத்
தையும் நீதியையும் செய்து, என் கட்டளை
களைக் கைக்கொண்டு, அவைகளின்படி செய்
ததினால், அவன் பிழைக்கவே பிழைப்பான்.
பாவஞ்செய்கிற ஆத்துமாவே சாகும்; [20]குமா 20
ரன் தகப்பனுடைய அக்கிரமத்தைச் சுமப்பது
யில்லை, தகப்பன் குமாரனுடைய அக்கிரமத்
தைச் சுமப்பதுமில்லை; [21]நீதிமானுடைய நீதி
அவன்மேல்தான் இருக்கும், துன்மார்க்கனு

1 ஆமோ. 9. 9, 10
2 எசா. 11. 1. எரே. 23. 5. சகரி. 3. 8
3 எசா. 53. 2
4 சங். 2. 6. எசா. 2. 2, 3. மீகா 4. 1, 2
5 31, 6. தானி. 4. 12. மத். 13. 47, 48. லூக். 14. 21–23
6 லூக். 1. 52, 53: 23. 31. 1 கொரி. 1. 27, 28
7 எரே. 31. 29. புல. 5. 7
8 ரோ. 6. 23
9 லேவி. 18. 19. ௸. 20, 10
10 யாத். 22. 21. ௸. நீதி. 3. 31
11 உபா. 24. 12, 13
12 உபா. 15. 7, 8. எசா. 58. 7. மத். 25. 35
* லஞ்சம்=லாபம்
13 லேவி. 25. 36, 37
14 லேவி. 19. 15, 35. சகரி. 8. 16
15 சங். 119. 1–6. ஆமோ. 5. 4
16 எண். 35. 31
17 33. 4. அப். 18. 6
18 லோ. 8. 24
19 யாத். 20. 5. 2 இரா. 23. 26: 24. 3, 4
20 உபா. 24. 16. 2 இரா. 14. 5, 6
21 ரோ. 2. 9

டைய துன்மார்க்கமும் அவன்மேல்தான்
21 இருக்கும். துன்மார்க்கன் தான் செய்த எல்
லா பாவங்களையும் விட்டுத் திரும்பி, [1]என்
கட்டளைகளையெல்லாம் கைக்கொண்டு, நியா
யத்தையும் நீதியையும் செய்வானேயாகில்,
அவன் பிழைக்கவே பிழைப்பான், அவன்
22 சாவதில்லை. அவன் செய்த எல்லா மீறுதல்
களும் நினைக்கப்படுவதில்லை; [2]அவன் தான்
23 செய்த நீதியிலே பிழைப்பான். துன்மார்க்
கன் சாகிறது எனக்கு எவ்வளவேனும் பிரிய
மோ? [3]அவன் தன் வழிகளைவிட்டுத் திரும்
பிப் பிழைப்பது அல்லவோ எனக்குப் பிரியம்
என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகி
24 றார். நீதிமான் தன் நீதியைவிட்டு விலகி,
அநீதி செய்து, துன்மார்க்கன் செய்கிற சகல
அருவருப்புகளின்படியும் செய்வானேயாகில்,
அவன் பிழைப்பானோ? [4]அவன் செய்த அவ
னுடைய எல்லா நீதிகளும் நினைக்கப்படுவதில்
லை; அவன் செய்த தன் துரோகத்திலேயும்
அவன் செய்த தன் பாவத்திலேயும் சாவான்.
25 நீங்களோ, ஆண்டவருடைய வழி செம்மை
யாய் இருக்கவில்லை என்கிறீர்கள்; இஸ்ர
வேல் வம்சத்தாரே, கேளுங்கள்; என் வழி
செம்மையாயிராதோ? உங்கள் வழிகள் அல்ல
26 வோ செம்மையல்லாததாயிருக்கிறது. நீதி
மான் தன் நீதியைவிட்டு விலகி, அநீதி செய்து
அதிலே செத்தால், அவன் செய்த தன் அநீதி
27 யினிமித்தம் அவன் சாவான். துன்மார்க்கன்
தான் செய்த துன்மார்க்கத்தை விட்டு விலகி,
நியாயத்தையும் நீதியையும் செய்வானேயா
கில், அவன் தன் ஆத்துமாவைப் பிழைக்கப்
28 பண்ணுவான். அவன் எச்சரிப்படைந்து,
[5]தான் செய்த எல்லா மீறுதல்களையும் விட்டுத்
திரும்புகிறபடியினாலே அவன் பிழைக்கவே
29 பிழைப்பான், அவன் சாவதில்லை. இஸ்ர
வேல் வம்சத்தாரோ: ஆண்டவருடைய வழி
செம்மையாய் இருக்கவில்லை என்கிறார்கள்;
[6]இஸ்ரவேல் வம்சத்தாரே, என் வழிகள் செம்
மையாயிராதோ? உங்கள் வழிகள் அல்லவோ
30 செம்மையல்லாததாயிருக்கிறது. ஆகையால்
இஸ்ரவேல் வம்சத்தாரே, நான் உங்களில்
அவனவனை அவனவன் வழிகளுக்குத் தக்க
தாக நியாயந் தீர்ப்பேன் என்று கர்த்தராகிய
ஆண்டவர் சொல்லுகிறார்; [7]நீங்கள் மனந்
திரும்புங்கள், உங்களுடைய எல்லா மீறுதல்
களையும் விட்டுத் திரும்புங்கள்; அப்பொழுது
அக்கிரமம் உங்கள் கேட்டுக்குக் காரணமாயி
31 ருப்பதில்லை. நீங்கள் துரோகம்பண்ணின
[8]உங்களுடைய எல்லாத் துரோகங்களையும்
உங்கள்மேல் இராதபடிக்கு விலக்கி, [9]உங்க
ளுக்குப் புது இருதயத்தையும் புது ஆவியை
யும் உண்டுபண்ணிக்கொள்ளுங்கள்; இஸ்ர
வேல் வம்சத்தாரே, நீங்கள் ஏன் சாகவேண்
32 டும்? மனந்திரும்புங்கள், அப்பொழுது
பிழைப்பீர்கள்; [10]சாகிறவனுடைய சாவை
நான் விரும்புகிறதில்லை என்று கர்த்தராகிய
ஆண்டவர் சொல்லுகிறார்.

1 அத. 33. 19. யாக். 2. 14-26
2 அ. 33. 16. சங். 103. 12. மீ. 7. 1
3 1 தீமோ. 2. 4. 2 பே. 3. 9
4 எபி. 6. 4, 6. 10, 26, 27. 2 பே. 2. 20
5 லூ. 15. 17. ஐ
6 அத. 18. 3
7 மத். 3. 2. வெளி. 2. 5
8 எபே. 4. 22, 23
9 சங். 51. 10. எரே. 32. 39
10 புல. 3. 33. 2 பே. 3. 9
11 26. 17; 27. 2
12 2 இரா. 23. 31-34. 2 நாளா. 36. 4-6. எரே. 22 11-18
13 2 இரா. 24. 2
14 உபா. 8. 7-9
15 தானி. 4. 11
16 17. 10. ஓசி. 13. 15
17 நியா. 9. 15. 2 இரா. 24. 20. சங். 80. 16
18 எசே. 9. 37. ஓசி. 3. 4. ஆமோ. 9. 12
19 8. 1; 14. 1

நீ இஸ்ரவேல் பிரபுக்களின்பேரில் [11]ஒரு **19**
புலம்பல் பாடி, சொல்லவேண்டியது என் 2
னவென்றால்: உன் தாய் எப்படிப்பட்டவள்?
அவள் ஒரு பெண்சிங்கம், அவள் சிங்கங்களுக்
குள்ளே படுத்திருந்து, பாலசிங்கங்களின் நடு
விலே தன் குட்டிகளை வளர்த்தாள். தன் 3
குட்டிகளில் ஒன்று வளர்ந்து, பாலசிங்கமாகி,
[12]இரைதேடப் பழகி, மனுஷரைப் பட்சித்தது.
புறஜாதிகளும் அதின் செய்தியைக் கேட்டார் 4
கள், அது அவர்களுடைய படுகுழியில் அகப்
பட்டது; அதைச் சங்கிலிகளினால் கட்டி,
எகிப்துதேசத்திற்குக் கொண்டுபோனார்கள்.
தாய்ச்சிங்கம் காத்திருந்து, தன் நம்பிக்கை 5
அபத்தமாய்ப் போயிற்றென்று கண்டு, அது
தன் குட்டிகளில் வேறொன்றை எடுத்து,
அதைப் பாலசிங்கமாக வைத்தது. அது சிங் 6
கங்களுக்குள்ளே சஞ்சரித்து, பாலசிங்கமாகி,
இரைதேடப் பழகி, மனுஷரைப் பட்சித்தது.
அவர்களுடைய பாழான அரமனைகளில் 7
திரிந்து, அவர்களுடைய பட்டணங்களைப்
பாழாக்கிற்று; அதினுடைய கெர்ச்சிப்பின்
சத்தத்துக்கு தேசமும் அதிலுள்ள யாவும்
திகைத்தது. அப்பொழுது சுற்றுப்புறத்து ஜா 8
திகள் அதற்கு விரோதமாக எழும்பிவந்து,
[13]தங்கள் வலையை அதின்மேல் வீசினார்கள்;
அது அவர்களுடைய படுகுழியிலே அகப்பட்
டது. அவர்கள் அதைச் சங்கிலிகளினால் 9
கட்டி, ஒரு கூட்டுக்குட்படுத்தி, அதை பாபி
லோன் ராஜாவினிடத்துக்குக் கொண்டுபோ
னார்கள்; இனி அதின் சத்தம் இஸ்ரவேலின்
பர்வதங்கள்மேல் கேட்கப்படாதபடிக்கு அதை
அரணான இடங்களில் கொண்டுபோய் அடை
த்தார்கள்.

நீ அமரிக்கையோடு இருக்கையில் உன் தாய் 10
தண்ணீர் ஓரமாய் நாட்டப்பட்டதும், [14]மிகுதி
யான நீர்ப்பாய்ச்சலால் கனிதருகிறதும்
தழைத்திருக்கிறதுமான திராட்சச்செடியாயி
ருந்தாள். ஆளுகிறவர்களின் செங்கோலுக் 11
கேற்ற பலத்த கொப்புகள் அதற்கு இருந்தது;
அதின் வளர்த்தி அடர்த்தியான கிளைகளுக்
குள்ளே உயர ஓங்கி, [15]தன் உயர்த்தியினாலே
தன் திரளான கொடிகளோடுங்கூடத் தோன்
றிற்று. ஆனாலும் அது உக்கிரமாய்ப் பிடுங்கப் 12
பட்டு, தரையிலே தள்ளுண்டது; [16]கீழ்காற்றி
னால் அதின் கனி காய்ந்துபோயிற்று; அதின்
பலத்த கொப்புகள் முறிந்து, பட்டுப்போயின;
அக்கினி அவைகளைப் பட்சித்தது. இப்பொ 13
ழுது அது வறண்டதும் தண்ணீர் இல்லாதது
மான வனாந்தர பூமியிலே நடப்பட்டிருக்கி
றது. அதின் கொடிகளிலுள்ள ஒரு கொப்பி 14
லிருந்து அக்கினி புறப்பட்டு, [17]அதின் கனி
யைப் பட்சித்தது; ஆளுகிற செங்கோலுக்
கேற்ற [18]பலத்த கொப்பு இனி அதில் இல்லை
யென்று சொல்; இதுவே புலம்பல், இதுவே
புலம்பலாயிருக்கும் என்றார்.

ஏழாம் வருஷத்து ஐந்தாம் மாதம் பத் **20**
தாந்தேதியிலே இஸ்ரவேலின் [19]மூப்பரில்

சிலர் கர்த்தரிடத்தில் விசாரிக்கும்படி வந்து,
2 எனக்கு முன்பாக உட்கார்ந்தார்கள். அப்
பொழுது கர்த்தருடைய வார்த்தை எனக்கு
3 உண்டாகி, அவர்: மனுபுத்திரனே, நீ இஸ்ர
வேல் மூப்பரோடே பேசி, அவர்களை நோக்கி:
கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறது என்ன
வென்றால், நீங்கள் என்னிடத்தில் விசாரிக்க
வந்தீர்களோ? [1]நீங்கள் என்னிடத்தில் விசா
ரிக்க இடங்கொடேன் என்று என் ஜீவனைக்
கொண்டு சொல்லுகிறேன் என்று கர்த்தரா
கிய ஆண்டவர் உரைக்கிறார் என்று சொல்.
4 மனுபுத்திரனே, நீ அவர்களுக்காக வழக்காடு
வாயோ? வழக்காட மனதானால், [2]நீ அவர்கள்
பிதாக்களின் அருவருப்புகளை அவர்களுக்குத்
5 தெரியக்காட்டி, அவர்களை நோக்கி: கர்த்த
ராகிய ஆண்டவர் உரைக்கிறது என்னவென்
றால், [3]நான் இஸ்ரவேலைத் தெரிந்துகொண்ட
நாளிலே யாக்கோபு வம்சத்து ஜனங்களுக்கு
நான் ஆணையிட்டு, [4]எகிப்துதேசத்தில் என்னை
அவர்களுக்குத் தெரியப்படுத்தி, நான் உங்கள்
தேவனாகிய கர்த்தர் என்று ஆணையிட்டேன்.
6 நான் அவர்களை எகிப்து தேசத்திலிருந்து
அழைப்பேன் என்றும், அவர்களுக்காக நான்
பார்த்து வைத்ததும், [5]பாலும் தேனும் ஓடுகிற
தும் எல்லா தேசங்களின் சிங்காரமுமான
தேசத்திலே அவர்களைக் கொண்டுவந்து விடு
வேன் என்றும் அந்நாளிலே ஆணையிட்டு,
7 உங்களில் அவரவர் தங்கள் கண்களால் நோக்
கின அருவருப்புகளைத் தள்ளிவிட்டு, [6]எகிப்
தின் நரகலான விக்கிரகங்களால் உங்களைத்
தீட்டுப்படுத்தாதிருப்பீர்களாக; உங்கள் தேவ
னாகிய கர்த்தர் நான் என்று அவர்களோடே
8 சொன்னேன். அவர்களோ, என் சொல்
லைக் கேட்க மனதில்லாமல் எனக்கு விரோத
மாய் இரண்டகம்பண்ணினார்கள்; [7]அவரவர்
தங்கள் கண்களால் நோக்கின அருவருப்பு
களைத் தள்ளிப்போடாமலும், எகிப்தின் நரக
லான விக்கிரகங்களை விடாமலும் இருந்தார்
கள்; [8]ஆதலால் எகிப்து தேசத்தின் நடுவிலே
என் கோபத்தை அவர்களிலே தீர்த்துக்கொள்
ளும்படிக்கு என் உக்கிரத்தை அவர்கள்மேல்
9 ஊற்றுவேன் என்றேன். ஆகிலும் நான் என்
னை இவர்களுக்கு வெளிப்படுத்தி, இவர்க
ளுக்கு முன்பாக என் நாமம் பரிசுத்தக் குலைச்
சலாகாதபடிக்கு, [9]இவர்களை எகிப்து தேசத்
திலிருந்து புறப்படப்பண்ணி, என் நாமத்தி
10 னிமித்தம் கிருபை செய்தேன். ஆகையால்,
நான் அவர்களை எகிப்துதேசத்திலிருந்து புறப்
படப்பண்ணி, [10]அவர்களை வனாந்தரத்தில்
11 அழைத்துவந்து, என் கட்டளைகளை அவர்
களுக்குக் கொடுத்து, [11]என் நியாயங்களை
அவர்களுக்குத்தெரியப்படுத்தினேன்;[12]அவை
களின்படி செய்கிற மனுஷன் அவைகளால்
12 பிழைப்பான். நான் தங்களைப் பரிசுத்தம்
பண்ணுகிற கர்த்தர் என்று அவர்கள் அறியும்
படிக்கு, எனக்கும் அவர்களுக்கும் [13]அடை
யாளமாய் இருப்பதற்கான என் ஓய்வுநாட்

களையும் அவர்களுக்குக் கட்டளையிட்டேன்.
ஆனாலும் இஸ்ரவேல் வம்சத்தார் வனாந்தரத் 13
தில் எனக்கு விரோதமாய் இரண்டகம் பண்
ணினார்கள்; [14]என் கட்டளைகளின்படியே
மனுஷன் செய்தால் அவைகளால் பிழைப்
பான்; அவர்களோ அவைகளில் நடவாமல்,
என் நியாயங்களை வெறுத்து, [15]என் ஓய்வு
நாட்களின் பரிசுத்தத்தை மிகவும் குலைத்துப்
போட்டார்கள்; ஆதலால் அவர்களை நிர்
மூலமாக்கும்படி வனாந்தரத்திலே என் உக்
கிரத்தை அவர்கள்மேல் ஊற்றுவேன் என்
றேன். ஆகிலும் நான் இவர்களைப் புறப்பட 14
பண்ணினதைக் கண்ட புறஜாதிகளுடைய
கண்களுக்கு முன்பாக என் நாமம் பரிசுத்தக்
குலைச்சலாகாதபடிக்கு, என் நாமத்தினிமித்
தம் கிருபை செய்தேன். ஆனாலும் அவர்களு 15
டைய இருதயம் அவர்களுடைய நரகலான
விக்கிரகங்களைப் பின்பற்றி, அவர்கள் என்
நியாயங்களை வெறுத்து, என் கட்டளைகளில்
நடவாமற்போய், [16]என் ஓய்வுநாட்களைப் பரி
சுத்தக் குலைச்சலாக்கினபடியால், நான் வாக் 16
குத்தத்தம்பண்ணினதும், பாலும் தேனும் ஓடு
கிறதும், எல்லாதேசங்களின் சிங்காரமாயிருக்
கிறதுமான தேசத்திலே அவர்களைக் கொண்டு
வந்து விடுவதில்லை என்று [17]வனாந்தரத்தில்
ஆணையிட்டேன். ஆகிலும் அவர்களை அழிக் 17
காதபடிக்கு, என் கண் அவர்களைத் தப்பவிட்
டது; [18]நான் அவர்களை வனாந்தரத்தில் நிர்மூல
மாக்கவில்லை. வனாந்தரத்தில் அவர்களுடைய 18
பிள்ளைகளை நோக்கி: [19]நீங்கள் உங்கள் பிதாக்
களின் முறைமைகளில் நடவாமலும், அவர்
களுடைய நியாயங்களைக் கைக்கொள்ளாம
லும், அவர்களுடைய நரகலான விக்கிரகங்க
ளால் உங்களைத் தீட்டுப்படுத்தாமலும் இருங்
கள். உங்கள் தேவனாகிய கர்த்தர் நானே; 19
[20]நீங்கள் என் கட்டளைகளில் நடந்து, என்
நியாயங்களைக் கைக்கொண்டு, அவைகளின்
படியே செய்து, என் ஓய்வுநாட்களைப் பரி 20
சுத்தமாக்குங்கள்; [21]நான் உங்கள் தேவனாகிய
கர்த்தர் என்று நீங்கள் அறியும்படிக்கு அவை
கள் எனக்கும் உங்களுக்கும் அடையாளமாயி
ருக்கும் என்றேன். ஆனாலும் பிள்ளைகளும் 21
எனக்கு விரோதமாய் எழும்பினார்கள்; [22]என்
கட்டளைகளின்படியே மனுஷன் செய்தால்
அவைகளால் பிழைப்பானே; அவர்களோ
அவைகளில் நடவாமலும், என் நியாயங்களைக்
கைக்கொண்டு அவைகளின்படி செய்யாம
லும், என் ஓய்வுநாட்களைப் பரிசுத்தக்குலைச்ச
லாக்கிப்போட்டார்கள்; ஆகையால் வனாந்தரத்
திலே என் கோபத்தை அவர்களில் தீர்த்துக்
கொள்ளும்படி என் உக்கிரத்தை அவர்கள்
மேல் ஊற்றுவேன் என்றேன். ஆகிலும் நான் 22
என் கையைத் திருப்பி, நான் இவர்களைப் புறப்
படப்பண்ணினதைக் கண்ட புறஜாதிகளு
டைய கண்களுக்கு முன்பாக என் நாமம் பரி
சுத்தக்குலைச்சலாகாதபடிக்கு, [23]என் நாமத்தி
னிமித்தம் கிருபை செய்தேன். ஆனாலும் 23

1 14. 1-3. ழ
2 16. 2
3 யாத். 6. 8. உபா. 7. 6
4 யாத். 3. 3. ழ. உபா. 4. 34, 35
5 உபா. 8. 7. ழ. சங். 48. 2
6 லேவி. 18. 3. உபா. 29. 16-18. யோசு. 24. 14
7 நியா. 2. 12-15. 1 இரா. 11. 5-8
8 2 இரா. 22. 16, 17
9 எண். 14. 13. ழ. உபா. 9. 28
10 யாத். 13. 18
11 உபா. 4. 8. நெகே. 9. 13, 14. சங். 147, 19, 20
12 லேவி. 18. 5. ரோ. 10. 5. கலா. 3. 12
13 யாத். 20. 8: 31. 13
14 எண். 14. 22. ஏசா. 63. 10
15 நெகே. 13. 18
16 சங். 78. 37. சகி. 1. 30, 31. ஆமோ. 5. 25, 26
17 சங். 95. 11
18 சங். 78. 38
19 உபா. 5-12. அதி
20 யாத். 20. 2. லேவி. 19. 4. ழ
21 எரே. 17. 22
22 எண். 25. 1, 2. உபா. 9. 23, 24: 31. 27
23 சங். 78. 38: 98. 2

அவர்கள் என் நியாயங்களின்படி செய்யாமல்,
என் கட்டளைகளை வெறுத்து, என் ஓய்வுநாட்
களைப் பரிசுத்தக் குலைச்சலாக்கினபடியாலும்,
[1]அவர்களுடைய கண்கள் அவர்கள் பிதாக்க
ளின் நரகலான விக்கிரகங்களின்மேல் நோக்க
24 மாயிருந்தபடியாலும், நான் அவர்களைப் புற
ஜாதிகளுக்குள்ளே சிதறடித்து, [2]அவர்களை
தேசங்களிலே தூற்றிப்போடுகிறதற்கு வனாந்த
25 ரத்திலே ஆணையிட்டேன். ஆகையால் நன்
மைக்கேதுவல்லாத கட்டளைகளையும் ஜீவனுக்
கேதுவல்லாத நியாயங்களையும் [3]நான் அவர்க
26 ளுக்குக் கொடுத்தேன். நான் கர்த்தர் என்று
அவர்கள் அறியத்தக்கதாக, நான் அவர்களைப்
பாழாக்கும்படி, [4]அவர்கள் கர்ப்பந்திறந்து
பிறக்கிறதையெல்லாம் தீக்கடக்கப்பண்ணி,
இவ்விதமாய் அவர்களுடைய பலிகளினாலே
அவர்களைத் தீட்டுப்படப்பண்ணினேன்.
27 ஆகையால் மனுபுத்திரனே, நீ இஸ்ரவேல்
வம்சத்தாரோடே பேசி, அவர்களை நோ
க்கி: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறது
என்னவென்றால், உங்கள் பிதாக்கள் இன்
னும் எனக்கு விரோதமாய்த் துரோகம்
28 பண்ணி, [5]என்னைத் தூஷித்தார்கள். அவர்
களுக்குக் கொடுப்பேன் என்று ஆணையிட்ட
தேசத்திலே நான் அவர்களைப் பிரவேசிக்கப்
பண்ணின பின்பு, அவர்கள் உயர்ந்த ஒரு
மேட்டையும் தழைந்த ஒரு விருட்சத்தையும்
எங்கெங்கே கண்டார்களோ, [6]அங்கங்கே
தங்கள் பலிகளைச் செலுத்தி, அவ்விடங்களி
லெல்லாம் எனக்கு எரிச்சல் உண்டாக்குகிற
தங்கள் காணிக்கைகளைப் படைத்து, சுகந்த
வாசனையான தங்கள் தூபங்களைக் காட்டி,
29 தங்கள் பானபலிகளை வார்த்தார்கள். அப்
பொழுது நான் அவர்களை நோக்கி: நீங்கள்
போகிற அந்த மேடு என்னவென்று கேட்
டேன்; அதினால் இந்நாள்வரைக்கும் அதற்
30 குப் *பாமா என்று பேர். ஆகையால் நீ இஸ்ர
வேல் வம்சத்தாரை நோக்கி: கர்த்தராகிய ஆண்
டவர் உரைக்கிறது என்னவென்றால், உங்கள்
பிதாக்களுடைய மார்க்கத்தின்படியே நீங்
களும் தீட்டுப்பட்டவர்கள் அல்லவோ? அவர்
களுடைய அருவருப்புகளை நீங்களும் பின்பற்
31 றிச் சோரம்போகிறீர்கள் அல்லவோ? நீங்கள்
உங்கள் பிள்ளைகளைத் தீக்கடக்கப்பண்ணி,
[7]உங்கள் பலிகளைச் செலுத்துகிறபோது, இந்
நாள்வரைக்கும் அவர்களுடைய எல்லா நரக
லான விக்கிரகங்களாலும் நீங்கள் தீட்டுப்படு
வீர்களே; நீங்கள் என்னிடத்தில் விசாரிக்க
இடங்கொடுப்பேனோ? இஸ்ரவேல் வம்சத்
தாரே, நீங்கள் என்னிடத்தில் விசாரிக்கும்
படி இடங்கொடுப்பதில்லை என்று என் ஜீவ
னைக்கொண்டு சொல்லுகிறேன் என்று கர்த்த
32 ராகிய ஆண்டவர் உரைக்கிறார். மரத்துக்கும்
கல்லுக்கும் ஆராதனை செய்து, [8]அஞ்ஞானி
களைப்போலவும் தேசத்து ஜனங்களின் ஜாதி
களைப்போலவும் இருப்போம் என்று சொல்லு
கிறீர்களே; உங்கள் மனதில் எழும்புகிற இந்த

[1] 16. 6
[2] லேவி. 26. 33. உபா. 28. 64. சங். 106. 26, 27
[3] சங். 81. 12. ஓசி. 8. 11. ரோ. 1. 24. 2 தெச. 2. 11
[4] 2 இரா. 17. 17. எரே. 32. 35
[5] ரோ. 2. 24
[6] ஏசா. 57. 5. ழ எரே. 3. 6
* மேடு
[7] 3. வச
[8] 11. 5. மத். 21. 44
[9] எரே. 21. 5
[10] உபா. 30. 5
[11] எரே. 2. 9, 35
[12] ஏசா. 1. 18
[13] எண். 14. அதி. ழ
[14] லேவி. 27. 32. எரே. 33. 13. மீகா 7. 14
[15] 34. 17. மத். 25. 32, 33. வெளி. 21. 27
[16] எரே. 44. 14
[17] நியா. 10. 14. ஆமோ. 4. 4
[18] ஏசா. 1. 13
[19] ஏசா. 2. 2, 3; 60. 7. சகரி. 8. 20. ழ. மல். 3. 4. ரோ. 12. 1
[20] எபே. 5. 2. பிலி. 4. 18
[21] 38. 23

நினைவின்படி ஆவதே இல்லை. பலத்த கையி 33
னாலும், ஓங்கிய புயத்தினாலும், ஊற்றப்பட்ட
உக்கிரத்தினாலும், உங்களை ஆளுவேன் [9]என்
பதை என் ஜீவனைக்கொண்டு சொல்லுகி
றேன் என்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்
கிறார். நீங்கள் ஜனங்களுக்குள் இராதபடிக்கு 34
நான் உங்களைப் புறப்படப்பண்ணி, [10]நீங்கள்
சிதறியிருக்கிற தேசங்களில் இராதபடிக்கு
நான் உங்களைப் பலத்த கையினாலும், ஓங்கிய
புயத்தினாலும், ஊற்றப்பட்ட உக்கிரத்தினா
லும் கூடிவரச்செய்து, உங்களை ஜனசதளங்க 35
ளின்வனாந்தரத்திலேகொண்டுபோய், [11]அங்கே
உங்களோடே [12]முகமுகமாய் வழக்காடுவேன்.
நான் எகிப்துதேசத்தின் வனாந்தரத்தில் உங் 36
கள் பிதாக்களோடு வழக்காடினதுபோல [13]உங்
களோடும் வழக்காடுவேன் என்று கர்த்தரா
கிய ஆண்டவர் சொல்லுகிறார். நான் உங் 37
களைக் கோலின்கீழ் செல்லும்படி செய்து,
[14]உங்களை உடன்படிக்கையின் கட்டுக்குட்
படுத்தி, கலகக்காரரையும் துரோகிகளையும் 38
உங்களைவிட்டுப்பிரித்துப்போடுவேன்; [15]அவர்
களைத் தாங்கள் தங்கும் தேசத்திலிருந்து புறப்
படப்பண்ணுவேன்; [16]ஆனாலும் அவர்கள்
இஸ்ரவேல் தேசத்தில் பிரவேசிப்பதில்லை;
அப்பொழுது நான் கர்த்தர் என்று அறிந்து
கொள்வீர்கள். இப்போதும் இஸ்ரவேல் வம் 39
சத்தாரே, நீங்கள் என் சொல்லைக் கேட்க
மனதில்லாதிருந்தால், நீங்கள் போய், [17]அவ
னவன் தன்தன் நரகலான விக்கிரகங்களை
இன்னும் சேவியுங்கள்; [18]ஆனாலும் என் பரி
சுத்த நாமத்தை உங்கள் காணிக்கைகளாலும்
உஙகள் நரகலான விக்கிரகங்களாலும் இனிப்
பரிசுத்தக் குலைச்சலாக்காதிருங்கள் என்று
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். இஸ்ர 40
வேலின் உயரமான மலையாகிய என் பரி
சுத்த மலையிலே இஸ்ரவேலுடைய எல்லா
வம்சத்தாருமாகிய தேசத்திலுள்ள அனைவரும்
என்னைச் சேவிப்பார்கள் என்று கர்த்தராகிய
ஆண்டவர் சொல்லுகிறார்; [19]அங்கே அவர்
கள்மேல் பிரியம் வைப்பேன்; அங்கே நீங்
கள் பரிசுத்தம்பண்ணுகிற எல்லாவற்றிலும்
உங்கள் காணிக்கைகளையும் உங்கள் முதற்
பலன்களையும் செலுத்தும்படி கேட்பேன்.
நான் உங்களை ஜனங்களிலிருந்து புறப்படப் 41
பண்ணி, நீங்கள் சிதறுண்டிருக்கிற தேசங்
களிலிருந்து உங்களைச் சேர்த்துக்கொள்ளும்
போது, சுகந்த வாசனையினிமித்தம் நான் உங்
கள்பேரில் பிரியமாயிருப்பேன்; [20]அப்பொ
ழுது புறஜாதிகளின் கண்களுக்கு முன்பாக
உங்களால் பரிசுத்தம் பண்ணப்படுவேன். உங் 42
கள் பிதாக்களுக்குக் கொடுப்பேன் என்று
ஆணையிட்ட தேசமாகிய இஸ்ரவேல் தேசத்
திலே நான் உங்களைத் திரும்பி வரப்பண்ணும்
போது, [21]நான் கர்த்தர் என்று நீங்கள் அறி
ந்துகொண்டு, அங்கே உங்களுடைய எல்லா 43
வழிகளையும், உங்களைத் தீட்டுப்படுத்தின உங்
களுடைய எல்லாக் கிரியைகளையும் நினைத்து,

[1]நீங்கள் செய்திருந்த உங்களுடைய எல்லாப்
பொல்லாப்புகளினிமித்தமும் உங்களை நீங்
44 களே அருவருப்பீர்கள். இஸ்ரவேல் வம்சத்
தாரே, உங்கள் பொல்லாதவழிகளுக்குத் தக்க
தாகவும், உங்கள் கெட்ட கிரியைகளுக்குத்
தக்கதாகவும் நான் உங்களுக்குச் செய்யாமல்,
என் நாமத்தினிமித்தம் உங்களுக்குக் கிருபை
செய்யும்போது, [2]நான் **கர்த்தர்** என்று அறிந்து
கொள்வீர்கள் என்கிறதைக் கர்த்தராகிய ஆண்
டவர் உரைக்கிறார் என்று சொல் என்றார்.
45 **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண்
46 டாகி, அவர்: மனுபுத்திரனே, நீ உன் முகத்
தைத் தென்திசைக்கு நேரே திருப்பி, தெற்
குக்கு விரோதமாக உன் வசனத்தைப் பொ
ழிந்து, தென்புறமான வயல்வெளியின் காட்
டுக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம் உரைத்து,
47 தென்திசைக் காட்டை நோக்கி: **கர்த்தரு
டைய** வார்த்தையைக் கேள், கர்த்தராகிய
ஆண்டவர் சொல்லுகிறது என்னவென்றால்,
இதோ, நான் உன்னில் அக்கினியைக் கொ
ளுத்துவேன்; அது [3]உன்னில் பச்சையான
சகல மரங்களையும் பட்டுப்போன சகல மரங்
களையும் பட்சிக்கும்; ஜுவாலிக்கிற ஜுவாலை
அவிக்கப்படமாட்டாது; தெற்கு துவக்கி வட
க்குமட்டுமுள்ள தேசமெங்கும் அதினால் வெ
48 ந்துபோகும். **கர்த்தராகிய** நான் அதைக்
கொளுத்தினேன் என்பதை எல்லா மாம்ச
மும் காணும்; அது அவிக்கப்படுவதில்லை
49 என்று சொல் என்றார். அப்பொழுது நான்:
ஆ, கர்த்தராகிய ஆண்டவரே, இவன் உவ
மைகளையல்லவோ சொல்லுகிறான் என்று
அவர்கள் என்னைக்குறித்துச் சொல்லுகிறார்
கள் என்றேன்.

**21** அப்பொழுது **கர்த்தருடைய** வார்த்தை
2 எனக்கு உண்டாகி, அவர்: மனுபுத்திரனே,
நீ உன் முகத்தை எருசலேமுக்கு நேராகத்
திருப்பி, [4]பரிசுத்தஸ்தலங்களுக்கு விரோத
மாக உன் வசனத்தைப் பொழிந்து, இஸ்ர
வேல் தேசத்துக்கு விரோதமாகத் தீர்க்கதரி
3 சனம் உரைத்து, இஸ்ரவேல் தேசத்தை
நோக்கி, கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கி
றது என்னவென்றால், இதோ, நான் உன
க்கு விரோதமாக வந்து, என் பட்டயத்தை
அதின் உறையிலிருந்து உருவி, [5]உன்னில்
சன்மார்க்கனையும் துன்மார்க்கனையும் சங்கா
4 ரம் பண்ணுவேன். நான் உன்னில் சன்
மார்க்கனையும் துன்மார்க்கனையும் சங்காரம்
பண்ணப்போகிறபடியினால் தெற்கு துவக்கி
வடக்குமட்டுமுள்ள எல்லா மாம்சத்துக்கும்
விரோதமாய் [6]என் பட்டயம் அதின் உறையி
5 லிருந்து புறப்படும். அப்பொழுது **கர்த்த
ராகிய** நான் என் பட்டயத்தை அதின் உறை
யிலிருந்து உருவினேன் என்பதை எல்லா
மாம்சமும் அறியும்; [7]அது இனி உறைக்குள்
6 திரும்புவதில்லை. ஆதலால் மனுபுத்திரனே,
உன் இடுப்பு நொறுங்கும்படி பெருமூச்சு
விடு; [8]அவர்கள் கண்களுக்கு முன்பாக மனங்
கசந்து பெருமூச்சுவிடு. நீ எதினிமித்தம் 7
பெருமூச்சு விடுகிறாய் என்று அவர்கள் உன்
னிடத்தில் கேட்டால், நீ அவர்களை நோக்கி:
[9]துர்ச்செய்தி வருகிறதினிமித்தமே; அதினால்,
இருதயங்களெல்லாம் உருகி, கைகளெல்லாம்
தளர்ந்து, மனமெல்லாம் தியங்கி, முழங்கால்
களெல்லாம் தண்ணீரைப்போல அலைவுண்
ணும்; இதோ, அது வந்து சம்பவிக்கும்
என்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார்
என்று சொல் என்றார்.
**கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண் 8
டாகி, அவர்: மனுபுத்திரனே, நீ தீர்க்கதரி 9
சனம் உரைத்து, சொல்லவேண்டியது என்
னவென்றால்: பட்டயம் கூர்மையாக்கப்பட்
டது, [10]பட்டயம் கூர்மையாக்கப்பட்டது;
அது துலக்கப்பட்டுமிருக்கிறது. மகா சங் 10
காரஞ்செய்வதற்கு அது கூர்மையாக்கப்பட்
டிருக்கிறது; மின்னத்தக்கதாய் அது துலக்
கப்பட்டிருக்கிறது; சந்தோஷப்படுவோமோ?
[11]அது என் குமாரனுடைய கோல், அது சகல
விருட்சங்களையும் அலட்சியம்பண்ணும்.
அதைக் கையாடும்படி அதைத் துலக்கக் கொ 11
டுத்தார்; கொல்லுகிறவன் கையிலே கொடுக்
கும்படி அந்தப் பட்டயம் கூர்மையாக்கப்பட்
டிருக்கிறது; அது துலக்கப்பட்டதுமாயிருக்
கிறது என்று **கர்த்தர்** உரைக்கிறார் என்று
சொல். மனுபுத்திரனே, நீ ஓலமிட்டு அல 12
று; பட்டயம் என் ஜனத்தின்மேல் வரும்;
அது இஸ்ரவேல் பிரபுக்கள் எல்லார்மேலும்
வரும்; அதினிமித்தம் என் ஜனத்துக்குள்ளே
திகில் உண்டாயிருக்கும்; [12]ஆகையால் உன்
விலாவிலே அடித்துக்கொள். யாவையும் கண் 13
டிக்கிற கோல் வந்தாலொழிய இனிச் [13]சோ
தனையினால் தீருகிறதென்னவென்று கர்த்த
ராகிய ஆண்டவர் சொல்லுகிறார். ஆகையால் 14
மனுபுத்திரனே, நீ தீர்க்கதரிசனம் சொல்லி,
கையோடே கைகொட்டு; பட்டயம் மூன்று
தரம் இரட்டித்துவரும்; அது கொலையுண்ட
வர்களின் பட்டயம்; அது கொலையுண்ணப்
போகிற பெரியவர்களின் உள்ளறைகளில்
பிரவேசிக்கிற பட்டயம். அவர்களுடைய 15
இருதயம் கரைந்து, அவர்களுடைய இடை
யூறுகள் திரளாகும்படி, பட்டயத்தின் கூர்
மையை அவர்களுடைய எல்லா வாசல்களுக்
கும் நேரிடக் கட்டளையிடுவேன்; ஆ, அது
மின்னும்படியாகப் பதமிடப்பட்டது, வெட்
டும்படியாகத் தீட்டிவைக்கப்பட்டது. ஏகபல 16
மாய் வலதுபுறமாக வெட்டு; திரும்பி இடது
புறமாகவும் வெட்டு; உன் முகம் திரும்புகிற
திக்கெல்லாம் வெட்டு. நானும் கையோடே 17
கைகொட்டி, என் உக்கிரத்தை ஆறப்பண்
ணுவேன் என்று **கர்த்தராகிய** நான் சொன்
னேன் என்றார்.
பின்னும் **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு 18
உண்டாகி, அவர்: மனுபுத்திரனே, பாபி 19
லோன் ராஜாவின் பட்டயம் வரத்தக்கதாக
இரண்டு வழிகளைக் குறித்துக்கொள்; இரண்

1 16. 61 யோபு 24. 6. ஓசி. 5. 15
2 சங். 25. 11: 103. 10. 1 யோ. 2. 12
3 எசே. 21. 14
4 உபா. 32. 2
5 யோபு 9. 22
6 சங். 45. 3
7 ஏசா. 45. 23: 55. 11
8 ஏசா. 22. 4
9 ஏசா. 28. 19
10 உபா. 32. 41
11 13. வச. 2 சாமு. 7. 14. சங். 89. 26, 27
12 எசே. 31. 19
13 மல். 3. 2, 3. 1 பேது. 3. 13

டும் ஒரே தேசத்திலிருந்து வரவேண்டும்; நீ
ஒரு இடத்தைத் தெரிந்துகொள், நகரத்துக்
குப்போகிற வழியின் முனையில் அந்த இடத்
20 தைத் தெரிந்துகொள். பட்டயம் அம்மோன்
புத்திரரின் பட்டணமாகிய [1]ரப்பாவுக்கு
விரோதமாக வரத்தக்க ஒரு வழியையும், யூதா
வில் இருக்கிற அரணான எருசலேமுக்கு
விரோதமாக வரத்தக்க ஒரு வழியையும் குறித்
21 துக்கொள். பாபிலோன் ராஜா இரண்டு வழி
களின் முனையாகிய வழிப்பிரிவிலே *நிமித்தம்
பார்க்கிறதற்காக நிற்பான்; அம்புகளைத் தீட்டி,
விக்கிரகங்களை உசாவி, ஈரலால் குறிபார்ப்
22 பான். தலைவரை நியமிக்கிறதற்கும், சங்கா
ரஞ்செய்யும்படி ஆர்ப்பரிக்கிறதற்கும், கெம்
பீரமாய்ச் சத்தமிடுகிறதற்கும், வாசல்களை
முட்டும் யந்திரங்களை வைக்கிறதற்கும், மண்
மேடு போடுகிறதற்கும், கொத்தளங்களைக்
கட்டுகிறதற்கும், எருசலேமைக் குறித்து நிமி
த்தம் பார்க்குதல் அவனுடைய வலதுபுறத்
23 திலே உண்டாயிருக்கும். இந்த நிமித்தமா
னது ஆணையிட்டவர்களுக்கு முன்பாகப்
பொய்யாகத் தோன்றும்; ஆயினும் அவர்கள்
பிடிக்கப்படும்படி அவன் அவர்கள் துரோ
கத்தை நினைப்பான்.
24 ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்
லுகிறது என்னவென்றால்: உங்கள் துரோகங்
கள் வெளியரங்கமாகிறதினாலும், [2]உங்கள் செ
ய்கைகளிலெல்லாம் உங்கள் பாவங்கள் தெரி
யவருகிறதினாலும், நீங்கள் உங்கள் அக்கிரமத்
தை நினைக்கப்பண்ணுகிறீர்களே; நீங்கள் இப்
படிப்பட்டவர்களென்று நினைக்கப்படுகிறீர்க
ளே; ஆதலால் கைப்பிடியாய்ப் பிடிக்கப்படு
25 வீர்கள். இஸ்ரவேலை ஆளுகிற அவபக்தியுள்ள
துன்மார்க்க அதிபதியே, [3]அக்கிரமத்துக்கு
முடிவுவருங்காலத்தில் உன் நாள் வந்தது.
26 பாகையைக் கழற்று, கிரீடத்தை எடுத்துப்
போடு; அது இனி முன்போலிராது; [4]தாழ்ந்
தவனை உயர்த்தி, உயர்ந்தவனைத் தாழ்த்து
27 வேன். அதைக் கவிழ்ப்பேன், கவிழ்ப்பேன்,
கவிழ்ப்பேன்; †உரிமைக்காரனானவர் வருமட்
டும் அது இல்லாதிருக்கும்; அவருக்கே அதைக்
கொடுப்பேன் என்று கர்த்தராகிய ஆண்டவர்
சொல்லுகிறார்.
28 பின்னும் மனுபுத்திரனே, நீ தீர்க்கதரிசனம்
சொல்லு: [5]அம்மோன் புத்திரரையும் அவர்
கள் சொல்லும் நிந்தனைகளையும் குறித்துக்
கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறது என்ன
29 வென்றால், அக்கிரமத்துக்கு முடிவுவருங்
காலத்தில் வந்த தங்களுடைய நாளுக்கு ஏது
வாகி, கொலையுண்டுபோனவர்களுடைய பிட
ரிகளோடேகூட உன்னைத் துன்மார்க்கரின்
கையினால் விழப்பண்ணும்படிக்கு, உனக்கு
அபத்தமானது தரிசிக்கப்படுகிறபோதும், உன
க்குப் பொய்நிமித்தம் பார்க்கப்படுகிறபோதும்
பட்டயம் உருவப்பட்டது, பட்டயமே உரு
வப்பட்டது; வெட்டவும் சங்கரிக்கவும் அது
மின்னத்தக்கதாய்த் துலக்கப்பட்டிருக்கிறது.

உன் பட்டயத்தை நீ திரும்ப அதின் உறை 30
யிலே போடு; [6]நீ சிருஷ்டிக்கப்பட்ட ஸ்தான
மாகிய உன் ஜெந்மதேசத்திலே நான் உன்னை
நியாயந்தீர்த்து, என் சினத்தை உன்மேல் 31
ஊற்றுவேன்; நான் என் மூர்க்கத்தின் அக்கி
னியை உன்மேல் ஊதி, மிருககுணமுள்ளவர்
களும், அழிக்கிறதற்குத் திறமையுள்ளவர்களு
மாகிய மனுஷரின் கையில் உன்னை ஒப்புக்
கொடுப்பேன். நீ அக்கினிக்கு இரையாவாய்; 32
உன் இரத்தம் உன் தேசத்தின் நடுவில் சிந்திக்
கிடக்கும்; நீ இனி நினைக்கப்படுவதில்லை;
கர்த்தராகிய நான் இதைச் சொன்னேன்
என்றார்.

பின்னும் கர்த்தருடைய வார்த்தை என 22
க்கு உண்டாகி, அவர்: இப்போதும் மனு 2
புத்திரனே, இரத்தஞ் சிந்தின நகரத்துக்காக
நீ வழக்காடுவாயோ? வழக்காட மனதானால்,
நீ அதின் அருவருப்புகளையெல்லாம் அதற்
குத் தெரியக்காட்டி, அதை நோக்கி: கர்த்த 3
ராகிய ஆண்டவர் உரைக்கிறது என்னவென்
றால், உன் காலம் வரத்தக்கதாக உன் நடுவிலே
இரத்தஞ்சிந்துகிறதும், உன்னைத் தீட்டுப்படுத்
தத் தக்கதாக உனக்கே விரோதமாய் நரக
லான விக்கிரகங்களை உண்டுபண்ணுகிறது
மான நகரமே, நீ சிந்தின உன் இரத்தத்தி 4
னால் நீ குற்றஞ்சுமந்ததாகி, [7]நீ உண்டுபண்
ணின உன் நரகலான விக்கிரகங்களால் நீ
தீட்டுப்பட்டு, உன் நாட்களைச் சமீபிக்கப்
பண்ணி, உன் வருஷங்களை நிறைவேற்றி
னாய்; ஆகையால் நான் உன்னைப் புறஜாதிக
ளுக்கு நிந்தையாகவும், தேசங்களுக்கெல்லாம்
பரியாசமாகவும் வைப்பேன். உனக்குச் சமீ 5
பமும் உனக்குத் தூரமுமான தேசங்களின்
மனுஷர் நீ அவகீர்த்தியுள்ளதென்றும், அமளி
பெருத்ததென்றும் உன்னைப் பரியாசம் பண்
ணுவார்கள். இதோ, இஸ்ரவேலின் அதி 6
பதிகளில் அவரவர் தங்கள் புயபலத்துக்குத்
தக்கதாக, [8]உன்னில் இரத்தஞ் சிந்தினார்கள்.
உன்னிலுள்ள தாய் தகப்பனை அற்பமாய் 7
எண்ணினார்கள்; உன் நடுவில் பரதேசிக்கு
இடுக்கண் செய்தார்கள்; உனக்குள் திக்கற்ற
வனையும் விதவையையும் ஒடுக்கினார்கள். நீ 8
என் பரிசுத்த வஸ்துக்களை அசட்டை பண்
ணி, என் ஓய்வுநாட்களைப் பரிசுத்தக் குலைச்ச
லாக்கினாய். இரத்தஞ் சிந்தும்படிக்கு அபா 9
ண்டம் பேசுகிறவர்கள் [9]உன்னிடத்தில் இருக்
கிறார்கள்; மலைகளின்மேல் சாப்பிடுகிறவர்க
ளும் உன்னிடத்தில் இருக்கிறார்கள்; முறை
கேடு செய்கிறவர்கள் உன் நடுவில் இருக்கி
றார்கள். தகப்பனை நிர்வாணமாக்கினவர்கள் 10
உன்னில் இருக்கிறார்கள்; [10]தூரஸ்திரீயைப்
பலவந்தப்படுத்தினவர்கள் உன்னில் இருக்கி
றார்கள். உன்னில் ஒருவன் தன் அயலானு 11
டைய மனைவியோடே அருவருப்பானதைச்
செய்கிறான்; வேறொருவன் முறைகேடாய்த்
தன் மருமகளைத் தீட்டுப்படுத்துகிறான்; வே
றொருவன் தன் தகப்பனுக்குப் பிறந்த தன்

1 எரே. 49. 2
* குறி
2 ஏசா. 64. 6
3 எரே. 52. 2
4 17. 24. லூ. 1. 51
† உடையவர். ஆதி. 49. 10. லூ. 1. 32, 33. யோ. 1. 49
5 எரே. 49. 1. செப். 2. 8–10
6 எரே. 47. 6, 7
7 2 இரா. 21. 16
8 ஏசா. 1. 23. மீகா 3. 1–3
9 யாத். 23. 1. லேவி. 19. 16
10 லேவி. 18. 7, 8. 1 கொ. 5. 1

சகோதரியைப் பலவந்தம் பண்ணுகிறான்.
12 இரத்தஞ் சிந்தும்படிக்குப் பரிதானம் வாங்கி
னவர்கள் உன்னில் இருக்கிறார்கள்; நீ வட்டி
யையும் பொலிசையையும் வாங்கி, பொருளா
சையினால் உன் அயலானுக்கு இடுக்கண் செ
ய்து, [1]என்னை மறந்துபோனாய் என்று கர்த்த
13 ராகிய ஆண்டவர் சொல்லுகிறார். இதோ,
நீ அநியாயமாய்ச் சம்பாதித்த பொருளினிமி
த்தமும், உன் நடுவில் நீ சிந்தின இரத்தத்தி
14 னிமித்தமும் நான் கைகொட்டுகிறேன். நான்
உன்னில் நியாயஞ்செய்யும் நாட்களில் உன்
இருதயம் தாங்குமோ? [2]அப்பொழுது உன்
கைகள் திடமாயிருக்குமோ? **கர்த்தராகிய** நான்
இதைச் சொன்னேன், இதை நிறைவேற்று
15 வேன். நான் உன்னைப் புறஜாதிகளுக்குள்
ளே சிதறடித்து, உன்னை தேசங்களிலே
தூற்றி, உன் அசுத்தத்தை உன்னில் ஒழியப்
16 பண்ணுவேன். நீ புறஜாதிகளின் கண்களுக்கு
முன்பாகப் பரிசுத்தக் குலைச்சலாயிருந்து,
நான் **கர்த்தர்** என்று அறிந்துகொள்வாய்
என்று சொல் என்றார்.
17 **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண்டா
18 கி, அவர்: மனுபுத்திரனே, இஸ்ரவேல் வம்சத்
தார் எனக்குக் களிம்பாய்ப் போனார்கள்;
[3]அவர்களெல்லாரும் குகையிலுள்ள பித்தளை
யும் தகரமும் இரும்பும் ஈயமுமாயிருக்கிறார்
கள்; அவர்கள் வெள்ளியின் களிம்பாய்ப்
19 போனார்கள். ஆதலால், கர்த்தராகிய ஆண்ட
வர் சொல்லுகிறது என்னவென்றால்: நீங்க
ளெல்லாரும் களிம்பாய்ப் போனபடியினால்,
இதோ, நான் உங்களை எருசலேமுக்குள் சேர்
20 ப்பேன். வெள்ளியையும் பித்தளையையும்
இரும்பையும் ஈயத்தையும் தகரத்தையும் அக்
கினியில் ஊதி உருக்குவதற்காகக் குகைக்குள்
சேர்க்கிறதுபோல, நான் என் கோபத்தினா
லும் என் உக்கிரத்தினாலும் உங்களைச் சேர்த்து
21 வைத்து உருக்குவேன். நான் உங்களைக்
கூட்டி, என் கோபமாகிய அக்கினியை உங்
கள்மேல் ஊதுவேன், அதற்குள்ளே நீங்கள்
22 உருகுவீர்கள். குகைக்குள் வெள்ளி உருகு
மாப்போல, நீங்கள் அதற்குள் உருகுவீர்கள்;
[4]அப்பொழுது **கர்த்தராகிய** நான் என் உக்கிர
த்தை உங்கள்மேல் ஊற்றிவிட்டேன் என்று
அறிந்துகொள்வீர்கள் என்றார்.
23 **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண்
24 டாகி, அவர்: மனுபுத்திரனே, நீ தேசத்தைப்
பார்த்து: நீ சுத்தம் பண்ணப்படாத தேசம்,
கோபத்தின்காலத்தில் மழைபெய்யாத தேசம்
25 என்று அதற்குச் சொல்லு. அதிலுள்ள தீர்க்க
தரிசிகள் அதின் நடுவில் கட்டுப்பாடு பண்ணு
கிறார்கள்; கெர்ச்சிக்கிற சிங்கம் இரை கவ்வு
கிறதுபோல, ஆத்துமாக்களை அவர்கள் பட்
சிக்கிறார்கள்; [5]திரவியத்தையும் விலையுயர்ந்த
பொருள்களையும் வாங்கிக்கொள்ளுகிறார்கள்;
அதின் நடுவில் அநேகரை விதவைகளாக்கு
26 கிறார்கள். அதின் ஆசாரியர்கள் என் வே
தத்துக்கு அநியாயஞ்செய்து, என் பரிசுத்த

[1] உபா. 32. 18, எரே. 3. 21
[2] 21. 17
[3] ஏசா. 1. 23, எரே. 6. 28, ழ
[4] 20. 8, 33
[5] ஓசி. 6. 6, மீகா 3. 11, செப். 3. 3, 4, மத். 23. 14
[6] மல். 2. 7, 8
[7] லேவி. 10. 10
[8] ஏசா. 1. 23
* பொய்க்குறி. புல. 2. 14
[9] யாத். 23. 9
[10] ஏசா. 63. 5. எரே. 5. 1
[11] ஏசா. 1. 31
[12] எரே. 3. 7–11
[13] லேவி. 17. 7. யோசு. 24. 12
† அவளுடைய வாசஸ்தலம்
‡ என் வாசஸ்தலம்
[14] 2 இரா. 15. 19; 16. 7; 17. 3

வஸ்துக்களைப் பரிசுத்தக் குலைச்சலாக்குகிறார்
கள்; [6]பரிசுத்தமுள்ளதற்கும் பரிசுத்தமில்லாத
தற்கும் வித்தியாசம் பண்ணாமலும், [7]அசுத்த
முள்ளதற்கும் அசுத்தமில்லாததற்கும் உண்
டான வேற்றுமையைக் காண்பியாமலும் இரு
ந்து, என் ஓய்வுநாட்களுக்குத் தங்கள் கண்
களை மூடிக்கொள்ளுகிறார்கள்; அவர்கள் நடு
விலே நான் கனஈனம் பண்ணப்படுகிறேன்.
அதின் நடுவில் இருக்கிற அதின் பிரபுக்கள் 27
இரை கவ்வுகிற ஓநாய்களைப்போல் இருக்கி
றார்கள்; [8]அநியாயமாய்ப் பொருள் சம்பாதிக்
கிறதற்கு இரத்தஞ் சிந்துகிறார்கள்; ஆத்துமாக்
களைக் கொள்ளையிடுகிறார்கள். அதின் தீர்க்க 28
தரிசிகள் அபத்தமானதைத் தரிசித்து, *பொய்ச்
சாஸ்திரத்தை அவர்களுக்குச் சொல்லி, **கர்த்**
**தர்** உரைக்காதிருந்தும், கர்த்தராகிய ஆண்ட
வர் உரைத்தாரென்று சொல்லி, அவர்களுக்
குச் சாரமற்ற சாந்தைப் பூசுகிறார்கள். தேசத் 29
தின் ஜனங்கள் இடுக்கண்செய்து, கொள்ளை
யடித்து, சிறுமையும் எளிமையு மானவனை
ஒடுக்கி, [9]அந்நியனை அநியாயமாய்த் தன்பப்
படுத்துகிறார்கள். நான் தேசத்தை அழிக்காத 30
படிக்குத் திறப்பிலே நிற்கவும் சுவரை அடை
க்கவும் தக்கதாக ஒரு மனுஷனைத் தேடி
னேன், [10]ஒருவனையும் காணேன். ஆகை 31
யால், நான் அவர்கள்மேல் என் கோபத்தை
ஊற்றி, என் மூர்க்கத்தின் அக்கினியால் அவர்
களை நிர்மூலமாக்கி, [11]அவர்களுடைய வழி
யின் பலனை அவர்கள் தலையின்மேல் சுமரப்
பண்ணுவேன் என்று கர்த்தராகிய ஆண்டவர்
உரைக்கிறார் என்றார்.
**கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண் **23**
டாகி, அவர்: மனுபுத்திரனே, [12]ஒரே தாயின் 2
குமாரத்திகளாகிய இரண்டு ஸ்திரீகள் இருந்
தார்கள். அவர்கள் எகிப்திலே வேசித்தனம் 3
பண்ணினார்கள்; [13]தங்கள் இளம்பிராயத்திலே
வேசித்தனம் பண்ணினார்கள்; அங்கே அவர்
களுடைய ஸ்தனங்கள் அமுக்கப்பட்டு, அவர்
களுடைய கன்னிமையின் கொங்கைகள் தொ
டப்பட்டது. அவர்களில் மூத்தவளின் பெ 4
யர் †அகோலாள், அவளுடைய தங்கையின்
பெயர் ‡அகோலிபாள்; அவர்கள் என்னுடை
யவர்களாகி, குமாரரையும் குமாரத்திகளையும்
பெற்றார்கள்; இவைகளே அவர்களுடைய
பெயர்கள்; அகோலாள் என்பதற்குச் சமாரியா
என்றும், அகோலிபாள் என்பதற்கு எருச
லேம் என்றும் பொருளாம். அகோலாள் 5
என்னுடையவளா யிருக்கும்போது [14]சோரம்
போனாள். நீலாம்பரந்தரித்த தலைவரும், அதி 6
பதிகளும், சௌந்தரிய வாலிபரும், குதிரை
களின்மேல் ஏறுகிற வீரருமாயிருந்த சமீப
தேசத்தாராகிய அசீரியரென்கிற தன் சிநேகி
தர்மேல் அவள் மோகித்து, அசீரியரின் புத் 7
திரரில் சிரேஷ்டமான அனைவரோடும், தான்
மோகித்த அனைவரோடும் தன் வேசித்தனங்
களை நடப்பித்து, அவர்களுடைய நரகலான
சகல விக்கிரகங்களாலும் தீட்டுப்பட்டுப்போ

8 ளுள். தான் எகிப்திலே பண்ணின வேசித்
தனங்களை அவள் விடவில்லை; அவர்கள் அவ
ளுடைய வாலிபத்திலே அவளோடே சய
னித்து, அவளுடைய கன்னிமையின் கொங்
கைகளைத் தொட்டு, அவளிடத்தில் தங்கள்
9 வேசித்தனத்தை நடப்பித்தார்கள். ஆகையால்
அவளுடைய சிநேகிதரின் கையிலே, அவள்
மோகித்திருந்த அசீரிய புத்திரரின் கையிலே,
10 [1]நான் அவளை ஒப்புக்கொடுத்தேன். அவர்கள்
அவளை நிர்வாணமாக்கினார்கள்; அவளுடைய
குமாரரையும் அவளுடைய குமாரத்திகளையும்
சிறைபிடித்து, அவளையோ பட்டயத்தினால்
கொன்றுபோட்டார்கள்; அப்படியே அவளி
டத்தில் ஆக்கினைகள் செய்யப்பட்டபடியினால்
ஸ்திரீகளுக்குள் அவகீர்த்தியுள்ளவளானாள்.
11 அவளுடைய தங்கையாகிய அகோலிபாள்
இதைக்கண்டும், [2]தன் மோகவிகாரத்தில் அவ
ளைப்பார்க்கிலும் கெட்டவளானாள்; தன் சகோ
தரியின் வேசித்தனங்களிலும் தன் வேசித்
12 தனங்கள் அதிகமாயிற்று. மகா அலங்கார
உடுப்புள்ள தலைவரும், அதிபதிகளும், குதி
ரைகள்மேல் ஏறுகிற வீரரும், [3]சௌந்தரிய
முள்ள வாலிபருமான சமீபதேசத்தாராகிய
அசீரிய புத்திரர்மேல் மோகங்கொண்டாள்.
13 அவளும் அசுத்தமானாளென்றும், அவர்கள்
இருவரும் ஒரே வழியில் போனார்களென்றும்
14 கண்டேன். அவள் தன் வேசித்தனங்களில்
அதிகரித்தாள்; சுவரில் ஜாதிலிங்கத்தால் சித்
திரந்தீர்ந்த கல்தேயரின் புருஷ சுரூபங்களைக்
15 கண்டாள். அவர்கள் எல்லாரும் தங்கள் ஜென்
மதேசமாகிய கல்தேயாவில் உள்ள பாபி
லோன் புத்திரரின் சாயலாகத் தங்கள் அரை
களில் கச்சை கட்டினவர்களும், தங்கள் தலை
களில் சாயந்தீர்ந்த பெரிய பாகைகளைத் தரித்
தவர்களும், பார்வைக்கு ராஜகுமாரர்களுமாக
16 இருந்தார்கள். அவளுடைய கண்கள் அவர்க
ளைப் பார்த்தவுடனே, [4]அவள் அவர்கள்மேல்
மோகித்து, கல்தேயாவுக்கு அவர்களண்டை
17 யிலே ஸ்தானாபதிகளை அனுப்பினாள். அப்
பொழுது பாபிலோன் புத்திரர் அவளண்டை
யிலே சிநேகசம்போகத்துக்கு வந்து, தங்கள்
வேசித்தனங்களால் அவளைத் தீட்டுப்படுத்தி
னார்கள்; அவள் இவர்களால் தீட்டுப்பட்டுப்
போனபின்பு, அவள் மனது அவர்களை விட்
18 டுப் பிரிந்தது. இவ்விதமாய் அவள் தன் வே
சித்தனங்களை வெளிப்படுத்தி, தன்னை நிர்
வாணமாக்கினபோது, [5]என் மனம் அவளு
டைய சகோதரியை விட்டுப் பிரிந்ததுபோல
19 அவளையும் விட்டுப் பிரிந்தது. அவள் எகிப்
துதேசத்திலே வேசித்தனம்பண்ணின தன்
வாலிபத்தின் நாட்களை நினைத்து, தன் வேசித்
20 தனங்களில் அதிகரித்துப்போனாள். கழுதை
மாம்சமான மாம்சமும், குதிரை இந்திரியமான
இந்திரியமுமுள்ள அவர்களுக்கு அவள் வைப்
பாட்டியாயிருக்கும்படி அவர்கள்மேல் மோ
21 கித்தாள். எகிப்தியரால் உன் கன்னிமையின்
ஸ்தனங்களாகிய கொங்கைகள் தொடப்பட்ட

காலத்தில் நீ உன் இளம்பிராயத்தில் செய்த
முறைகேடுகளை நினைத்துவருகிறாய்.
ஆகையால், அகோலிபாளே, கர்த்தராகிய 22
ஆண்டவர் சொல்லுகிறது என்னவென்றால்:
[6]இதோ, உன் மனது விட்டுப்பிரிந்த உன்
சிநேகிதரை நான் உனக்கு விரோதமாக எழு
ப்பி, உனக்கு விரோதமாக அவர்களைச் சுற்றி
லும் வரப்பண்ணுவேன். சௌந்தரியமுள்ள 23
வாலிபரும், தலைவரும், அதிபதிகளும், குதிரை
கள்மேல் ஏறுகிற வீரருமாகிய பேர்பெற்ற பிர
புக்களான பாபிலோன் புத்திரரையும், கல்தே
யர் எல்லாரையும், [7]பேகோடு, சோவா, கோ
வா என்கிறதேசங்களின் மனுஷரையும் அவர்
களோடேகூட அசீரிய புத்திரர் எல்லாரையும்
வரப்பண்ணுவேன். அவர்கள் வண்டில்க 24
ளோடும், இரதங்களோடும், யந்திரங்களோ
டும், ஜனக்கூட்டத்தோடும், கேடகங்களும்
பரிசைகளும் தலைச்சீராக்களும் தரித்தவர்க
ளாய், உனக்கு விரோதமாக வந்து, உன்னைச்
சுற்றிலும் பாளயமிறங்குவார்கள்; அவர்களு
க்கு முன்னே நான் நியாயத்தை விளங்கப்
பண்ணுவேன்; அவர்கள் தங்கள் நியாயங்க
ளின்படி உன்னை நியாயந்தீர்ப்பார்கள். உன 25
க்கு விரோதமாக என் எரிச்சலை விளங்கப்
பண்ணுவேன்; அவர்கள் உன்னை உக்கிர
மாய் நடப்பித்து, [8]உன் மூக்கையும் உன் காது
களையும் அறுத்துப்போடுவார்கள்; உன்னில்
மீதியாயிருப்பவர்கள் பட்டயத்தால் வெட்
டுண்டுபோவார்கள்; அவர்கள் உன் குமாரரை
யும் உன் குமாரத்திகளையும் பிடித்துக்கொள்
ளுவார்கள்; உன்னில் மீதியாயிருப்பவர்கள்
அக்கினிக்கு இரையாவார்கள். அவர்கள் உன் 26
வஸ்திரங்களை உரிந்து, [9]உன் சிங்காரமான
ஆபரணங்களைப் பறித்துக்கொள்ளுவார்கள்.
இவ்விதமாய் உன் முறைகேட்டையும், [10]நீ 27
எகிப்துதேசத்தில் துவக்கின உன் வேசித்
தனத்தையும் ஒழியப்பண்ணுவேன்; நீ இனி
அவர்களை நோக்க உன் கண்களை ஏறெடுக்
காமலும், எகிப்தை நினையாமலும் இருப்
பாய். கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறது 28
என்னவென்றால்: இதோ, நீ பகைக்கிறவர்
களின் கையிலும், உன் மனம் விட்டுப் பிரிந்
தவர்களின் கையிலும் நான் உன்னை ஒப்புக்
கொடுப்பேன். அவர்கள் உன்னை வெறுப் 29
பாய் நடத்தி, உன் பிரயாசத்தின் பலனையெல்
லாம் எடுத்துக்கொண்டு, உன்னை அம்மண
மும் நிர்வாணமு மாக்கிவிடுவார்கள்; அப்படி
யே உன் வெட்கக்கேடும் உன் முறைகேடு
மான உன் வேசித்தனத்தின் நிர்வாணம் வெ
ளிப்படுத்தப்படும். நீ புறஜாதிகளைப் பின் 30
தொடர்ந்து, அவர்களுடைய நரகலான விக்கி
ரகங்களால் உன்னைத் தீட்டுப்படுத்திக்கொ
ண்ட உன் வேசித்தனத்தினிமித்தம் இவை
கள் உனக்குச் செய்யப்படும். உன் சகோ 31
தரியின் வழியிலே நீ நடந்தாய்; [11]ஆகையால்
அவளுடைய பாத்திரத்தை உன் கையிலே
கொடுப்பேன். கர்த்தராகிய ஆண்டவர் சொல் 32

[1] 2 இரா. 17. 3: 18. 9-11
[2] 2 நாளா. 33. 9. எரே. 3. 11
[3] 2 நாளா. 28. 16
[4] 2 இரா. 20. 12. ஏசா. 24. 1
[5] எரே. 6. 8: 15 1
[6] எரே. 11. 11, 12. புல. 1. 3
[7] எரே. 50. 21
[8] எரே. 52. 6. ஓ
[9] ஏசா. 39. 4-7
[10] 16. 41: 22. 15
[11] எரே. 25. 15. ஏ

லுகிறது என்னவென்றால்: நீ உன் சகோதரி
யினுடைய ஆழமும் அகலமுமானதும் நிறைய
வார்க்கப்பட்டதுமான பாத்திரத்தைக்குடித்து,
33 [1]நகைப்பும் பரியாசமுமாவாய். சமாரியா என்
னும் உன் சகோதரியினுடைய பாத்திரமாயி
ருக்கிற பிரமிப்பும் பாழ்க்கடிப்பும் என்கிற
பாத்திரத்தால் வெறியினாலும் சஞ்சலத்தினா
34 லும் நிறையப்படுவாய். நீ அதில் இருக்கிற
தைக் குடித்து, [2]உறிஞ்சி, அதின் ஓடுகளை
உடைத்துப்போட்டு, உன் ஸ்தனங்களைக் கீறி
க்கொள்வாய்; நான் இதைச் சொன்னேன்
என்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார்.
35 ஆகையால், [3]நீ என்னை மறந்து, [4]என்னை
உனக்குப் புறம்பே தள்ளிவிட்டதினிமித்தம்,
நீ உன் முறைகேட்டையும் உன் வேசித்தனங்
களையும் சுமப்பாய் என்று கர்த்தராகிய ஆண்
டவர் சொல்லுகிறார்.
36 பின்னும் கர்த்தர் என்னை நோக்கி: மனு
புத்திரனே, நீ அகோலாளையும் அகோலிபா
ளையும் குறித்து வழக்காட மனதானால், [5]அவர்
களுடைய அருவருப்புகளை அவர்களுக்குத்
37 தெரியக்காட்டு. அவர்கள் விபசாரம்பண்ணி
னார்கள்; [6]அவர்கள் கைகளில் இரத்தமும்
இருக்கிறது; அவர்கள் தங்கள் நரகலான விக்
கிரகங்களோடே விபசாரம்பண்ணி, தாங்கள்
எனக்குப்பெற்ற தங்கள் பிள்ளைகளையும் அவை
களுக்கு இரையாகத் தீக்கடக்கப்பண்ணினார்
38 கள். அன்றியும் அவர்கள் என் பரிசுத்த
ஸ்தலத்தை அந்நாளிலேதானே தீட்டுப்படுத்தி,
[7]என் ஓய்வுநாட்களைப் பரிசுத்தக் குலைச்ச
39 லாக்கினார்கள். அவர்கள் தங்கள் பிள்ளைகளைத்
தங்கள் நரகலான விக்கிரகங்களுக்கென்று பலி
யிட்டபின்பு, அவர்கள் என் பரிசுத்த ஸ்தலத்
தைப் பரிசுத்தக்குலைச்சலாக்க அந்நாளில்தா
னே அதற்குள் பிரவேசித்தார்கள்; இதோ,
[8]என் ஆலயத்தின் நடுவிலே இப்படிச் செய்
40 தார்கள். இதுவுமல்லாமல், தூரத்திலுள்ள
புருஷரிடத்திற்குத் தூது அனுப்பி, [9]அவர்
களை வரவழைத்தார்கள், அவர்கள் வந்தார்கள்;
[10]அவர்களுக்கென்று நீ குளித்து, உன் கண்
களில் மையிட்டுக்கொண்டு, ஆபரணங்களால்
41 உன்னை அலங்கரித்து, சிறந்த மஞ்சத்தின்
மேல் உட்கார்ந்துகொண்டாய்; [11]அதின் முன்
னே ஒரு பீடம் ஆயத்தம் பண்ணப்பட்டிருந்
தது; [12]என் தூபவர்க்கத்தையும் என் எண்
42 ணெயையும் அதின்மேல் வைத்தாய். அவ
ளிடத்திலே அந்தச் சந்தடியின் இரைச்சல்
அடங்கினபின்பு, ஜனத்திரளான புருஷரை
யும் அழைத்தனுப்பினார்கள்; சபேயர் வனாந்
தரத்திலிருந்து கொண்டுவரப்பட்டார்கள்;
இவர்கள் அவர்களுடைய கைகளில் கடகங்
களையும் அவர்களுடைய தலைகளில் அலங்
43 காரமான கிரீடங்களையும்போட்டார்கள். விப
சாரங்களில் கிழவியானவளைக்குறித்து அவள்
இன்னும் தன் வேசித்தனங்களைச் செய்வா
44 ளோ என்றேன். பரஸ்திரீயினிடத்திலே பிர
வேசிக்குமாப்போல அவளிடத்தில் பிரவே

[1] 22. 4, 5
[2] சங். 75. 8. ஏசா. 51. 17
[3] உபா. 8. 11, 14. எரே. 13. 25
[4] 1 இரா. 14. 9. நெகே. 9. 26
[5] 20. 4: 22. 2. ஏசா. 58. 1
[6] ஓசி. 4. 2
[7] 22. 8
[8] 2 இரா. 21. 4, 7
[9] ஏசா. 57. 9
[10] 2 இரா. 9, 30. எரே. 4. 30
[11] ஆமோ. 2. 8
[12] நீதி. 7. 17. ஓசி. 2. 8
[13] 16. 40. ஏசா. 6. 11, 12. எரே. 4. 13, 30
[14] 24. 21. 2 நாளா. 36. 17, 19
[15] உபா. 13. 11. 2 பே. 2. 6
[16] எண். 14. 34. ஏசா. 53. 11. 1 பே. 2. 24
[17] 2 இரா. 25. 1. எரே. 39. 1; 52. 4
[18] எரே. 1. 13
[19] நீதி. 30. 12
[20] லேவி. 17. 13

சித்தார்கள்; இந்தப்பிரகாரமாக முறைகேடா
னவர்களாகிய அகோலாளிடத்திலும் அகோ
லிபாளிடத்திலும் பிரவேசித்தார்கள். ஆகை 45
யால், விபசாரிகளை நியாயந்தீர்க்கிற பிரகார
மாகவும், இரத்தஞ்சிந்தும் ஸ்திரீகளை நியாயந்
தீர்க்கிற பிரகாரமாகவும், நீதிமான்கள் அவர்
களை நியாயந்தீர்ப்பார்கள்; அவர்கள் விபசாரி
கள்; அவர்களுடைய கைகளில் இரத்தம்
இருக்கிறது. கர்த்தராகிய ஆண்டவர் சொல் 46
லுகிறது என்னவென்றால்: நான் அவர்களு
க்கு விரோதமாய் ஒரு கூட்டத்தை வரப்
பண்ணி, [13]அவர்களை அலைச்சலுக்கும் கொள்
ளைக்கும் ஒப்புக்கொடுப்பேன். அந்தக் கூட் 47
டத்தார் அவர்களைக் கல்லெறிந்து, தங்கள் பட்
டயங்களால் வெட்டிப்போடுவார்கள்; [14]அவர்
களுடைய குமாரரையும் அவர்களுடைய குமா
ரத்திகளையும் கொன்று, அவர்களுடைய வீடு
களை அக்கினியால் சுட்டெரிப்பார்கள். இவ் 48
விதமாய் எல்லா ஸ்திரீகளும் புத்தியடைந்து,
[15]உங்கள் முறைகேடுகளைச் செய்யாதிருக்கும்
படி, முறைகேட்டைத் தேசத்தைவிட்டு ஒழி
யப்பண்ணுவேன். உங்கள் முறைகேட்டை 49
உங்கள்மேல் சுமத்துவார்கள்; [16]அப்பொழுது
நீங்கள் உங்கள் நரகலான விக்கிரகங்களைச்
சேவித்த பாவங்களைச் சுமந்து, நான் கர்த்தரா
கிய ஆண்டவர் என்று அறிந்துகொள்வீர்கள்.

ஒன்பதாம் வருஷம் பத்தாம் மாதம் பத் 24
தாந் தேதியிலே கர்த்தருடைய வார்த்தை
எனக்கு உண்டாகி, அவர்: மனுபுத்திரனே, 2
இந்த நாளின் பேரையும் இந்தத் தேதியையும்
நீ எழுதிவை, [17]இந்தத் தேதியில்தானே பாபி
லோன் ராஜா எருசலேமில் பாளயமிறங்கி
னான். இப்போதும் நீ கலகவீட்டாருக்கு 3
ஒரு உபமானத்தைக் காண்பித்து, அவர்களை
நோக்கி: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறது
என்னவென்றால், [18]ஒரு கொப்பரையை அடுப்
பிலே வை; அதை அடுப்பிலே வைத்து,
அதிலே தண்ணீரை விடு. சகல நல்ல கண் 4
டங்களான பின்னந்தொடைகளும் முன்னந்
தொடைகளுமாகிய கண்டங்களைச் சேர்த்து
அதிலே போடு; நல்ல எலும்புகளால் அதை
நிரப்பு. ஆட்டுமந்தையில் தெரிந்துகொள்ளப் 5
பட்டதை அதற்காகக் கொண்டுவந்து; எலும்
புகளை அதின் கீழே குவித்து எரிக்கவேண்
டும்; அதிலுள்ள எலும்புகளும் வேகத்தக்கதாக
அதைப் பொங்கப் பொங்கக் காய்ச்சவேண்டும்.
இதற்காகக் கர்த்தராகிய ஆண்டவர் சொல் 6
லுகிறது என்னவென்றால்: [19]நுரை ஓட்டிக்
கொண்டிருக்கிறதும் நுரை நீங்காததுமாகிய
கொப்பரை என்னப்பட்ட இரத்தஞ் சிந்திய
நகரத்துக்கு ஐயோ! அதில் இருக்கிறதைக்
கண்டங் கண்டமாக எடுத்துக்கொண்டுபோ;
அதின்பேரில் சீட்டுப்போடலாகாது. அவள் 7
இரத்தம் அவள் நடுவில் இருக்கிறது; [20]மண்
ணிலே மறைந்துபோகும்படி அதைத் தரை
யிலே ஊற்றாமல் கற்பாறையிலே ஊற்றிப்
போட்டாள். நீதியைச் சரிக்கட்டுவதற்காகக் 8

கோபம் மூளும்படி [1]நான் அவள் இரத்தத்தை
மறைக்காமல் கன்மலையின்மேல் வைத்தேன்.
9 ஆதலால், கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகி
றது என்னவென்றால்: [2]இரத்தஞ்சிந்திய நக
ரத்துக்கு ஐயோ! நான் பெரிதான கட்டைக
10 ளைக் குவித்து எரியப்பண்ணுவேன். திர
ளான விறகுகளைக் கூட்டு, [3]தீயை மூட்டு,
இறைச்சியை முறுக வேவித்துச் சம்பாரங்
களை இடு; எலும்புகளை யெரித்துப்போடு.
11 பின்பு கொப்பரை காய்ந்து, அதின் களிம்பு
வெந்து, [4]அதற்குள் இருக்கிற அதின் அழு
க்கு உருகி, அதின் நுரை நீங்கும்படி அதை
12 வெறுமையாகத் தழலின்மேல் வை. அது
மகா வருத்தத்தை உண்டாக்கியும், அதின் திர
ளான நுரை அதைவிட்டு நீங்கவில்லை; அதின்
நுரை அக்கினிக்கு உள்ளாகவேண்டியது.
13 உன் அசுத்தத்தோடே முறைகேடும் இருக்கி
றது; [5]நான் உன்னைச் சுத்திகரித்தும், நீ சுத்த
மாகாதபடியினால், [6]இனி என் உக்கிரம் உன்
னில் ஆறித்தீருமட்டும் உன் அசுத்தம் நீங்கிச்
14 சுத்திகரிக்கப்படமாட்டாய். கர்த்தராகிய நான்
இதைச் சொன்னேன், இது நிறைவேறும்,
நான் இதைச் செய்வேன்; [7]நான் பின்வாங்கு
வதும் தப்பவிடுவதும் மனஸ்தாபப்படுவதும்
இல்லை, உன் வழிகளுக்கும் உன் செய்கைக
ளுக்குந் தக்கதாக உன்னை நியாயந்தீர்ப்பார்க
ளென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு
கிறார்.
15 பின்னும் கர்த்தருடைய வார்த்தை எனக்கு
16 உண்டாகி, அவர்: மனுபுத்திரனே, இதோ,
நான் உன் *கண்களுக்கு விருப்பமானவளை
[8]ஒரே அடியினாலே உன்னைவிட்டு எடுத்துக்
கொள்ளுவேன்; [9]ஆனாலும் நீ புலம்பாமலும்
அழாமலும் கண்ணீர்விடாமலும் இருப்பா
17 யாக. அலறாமல் பெருமூச்சுவிடு, [10]இழவு
கொண்டாடவேண்டாம்; [11]உன் பாகையை
உன் தலையிலே கட்டி, உன் பாதரட்சைகளை
உன் பாதங்களில் தொடுத்துக்கொள்; உன்
தாடியை மூடாமலும் துக்கங் கொண்டாடுகிற
வர்களின் அப்பத்தைப் புசியாமலும் இருக்கக்
18 கடவாய் என்றார். விடியற்காலத்தில் நான்
ஜனங்களோடே பேசினேன்; [12]அன்று சாயங்
காலத்தில் என் மனைவி செத்துப்போனாள்;
எனக்குக் கட்டளையிட்டபடியே விடியற்கா
19 லத்தில் செய்தேன். அப்பொழுது ஜனங்கள்
என்னை நோக்கி: நீர் செய்கிறவைகள் எங்க
ளுக்கு என்னத்திற்கு அடையாளம் என்பதை
எங்களுக்குத் தெரிவிக்கமாட்டீரா என்று கேட்
20 டார்கள். நான் அவர்களுக்குப் பிரதியுத்தர
மாக: கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்
21 டாகி, அவர்: நீ இஸ்ரவேல் வீட்டாரை
நோக்கி, கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறது
என்னவென்றால், இதோ, [13]உங்கள் பலத்தின்
முக்கியமும் உங்கள் கண்களின் விருப்பமும்
உங்கள் ஆத்துமாவின் வாஞ்சையுமாகிய என்
பரிசுத்த ஸ்தலத்தை நான் பரிசுத்தக்குலைச்ச
லாக்குகிறேன்; நீங்கள் விட்டுவந்த உங்கள்
குமாரரும் உங்கள் குமாரத்திகளும் பட்டயத்
தால் விழுவார்கள். அப்பொழுது நான் செய் 22
ததுபோல நீங்களும் செய்வீர்கள்; [14]தாடியை
மூடாமலும் துக்கங்கொண்டாடுகிறவர்களின்
அப்பத்தைப் புசியாமலும் இருப்பீர்கள். உங் 23
கள் பாகைகள் உங்கள் தலைகளிலும், உங்கள்
பாதரட்சைகள் உங்கள் கால்களிலும் இருக்
கும்; [15]நீங்கள் புலம்பாமலும் அழாமலும் இரு
ந்து, [16]உங்கள் அக்கிரமங்களில் வாடிப்போய்,
ஒருவரையொருவர் பார்த்துத் தவிப்பீர்கள்.
அப்படியே எசேக்கியேல் உங்களுக்கு அடை 24
யாளமாக இருப்பான்; [17]அவன் செய்தபடி
எல்லாம் நீங்களும் செய்வீர்கள்; [18]இப்படி
வரும்போது நான் கர்த்தராகிய ஆண்டவர்
என்று அறிந்துகொள்வீர்கள் என்று சொல்
என்று உரைத்தார் என்றேன்.
பின்னும் மனுபுத்திரனே, நான் எந்த 25
நாளிலே அவர்களுடைய பலத்தையும், அவர்
களுடைய அலங்காரத்தின் மகிழ்ச்சியையும்,
அவர்களுடைய கண்களின் விருப்பத்தையும்,
அவர்களுடைய ஆத்துமாவின் விசேஷித்த
வாஞ்சையையும், அவர்களுடைய குமாரரை
யும், அவர்களுடைய குமாரத்திகளையும் அவர்
களைவிட்டு எடுத்துக்கொள்ளுகிறேனோ, அந் 26
த நாளிலேதானே தப்பிவந்த ஒருவன் உன்னி
டத்தில் வந்து உன் காதுகள் கேட்கச் சொல்
லுவான் அல்லவோ? அந்த நாளிலேதானே 27
உன் வாய் திறக்கப்பட்டு, நீ தப்பிவந்தவ
னோடே பேசுவாய்; இனி மவுனமாயிருக்க
மாட்டாய்; இப்படி நீ அவர்களுக்கு அடை
யாளமாக இருப்பாய்; நான் கர்த்தர் என்று
அப்பொழுது அறிந்துகொள்வார்கள் என்றார்.
கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண் **25**
டாகி, அவர்: மனுபுத்திரனே, நீ அம்மோன் 2
புத்திரருக்கு எதிராக உன் முகத்தைத் திருப்பி,
[19]அவர்களுக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம்
உரைத்து,
அம்மோன் புத்திரருக்குச் சொல்லவேண் 3
டியது என்னவென்றால்: கர்த்தராகிய ஆண்
டவருடைய வார்த்தையைக் கேளுங்கள்; கர்த்
தராகிய ஆண்டவர் உரைக்கிறார்: என் பரி
சுத்த ஸ்தலம் பரிசுத்தக் குலைச்சலாக்கப்படுகிற
போதும், இஸ்ரவேல்தேசம் பாழாக்கப்படுகிற
போதும், யூதாவம்சத்தார் சிறையிருப்பிலே
போகிறபோதும், நீ அவர்களுக்கு விரோதமாக
[20]ஆ ஆ, என்று நிந்தித்தபடியினால், இதோ, 4
நான் உன்னைக் கிழக்குத் தேசத்தாருக்குச் சுதந்
தரமாக ஒப்புக்கொடுப்பேன், அவர்கள் உன்
னில் தங்கள் அரண்களைக் கட்டி, உன்னில்
தங்கள் வாசஸ்தலங்களை உண்டுபண்ணுவார்
கள்; அவர்கள் உன் கனிகளைப் புசித்து, உன்
பாலைக் குடிப்பார்கள். நான் ரப்பாவை ஒட் 5
டகங்களின் கொட்டகையும், அம்மோன்
புத்திரரின் தேசத்தை ஆட்டுக்கிடையுமாக்கு
வேன்; அப்பொழுது நான் கர்த்தர் என்று
அறிந்துகொள்வீர்கள். கர்த்தராகிய ஆண்ட 6
வர் சொல்லுகிறது என்னவென்றால்: இஸ்ர

1 ஆதி. 4. 10. மத். 7. 2
2 நாகூம் 3. 1. ஆப. 2. 12
3 ரோ. 2. 5
4 22. 15
5 வெளி. 2. 21, 22
6 5. 13: 8. 18: 16. 42
7 1 சாமு. 15. 29
* கண்களின் விருப்பத்தை
8 யோபு 1. 21
9 லேவி. 10. 6: 21. 10
10 எரே. 16. 5, 7
11 லேவி. 10. 6: 21. 10
12 சங். 90. 5, 6
13 1 இரா. 9. 8. எரே. 7. 14. சங். 48. 1-3
14 எரே. 16. 6, 7. புல. 4. 10
15 சங். 78. 64
16 33. 10. 11. லேவி. 26. 39
17 ஏசா. 20. 3
18 யோ. 14. 29
19 21. 28-32. எரே. 49. 1. ஆமோ. 1. 13-15. செப். 2. 9-11
20 26. 2. சங். 70. 2, 3. நீதி. 17. 5: 24. 17. 18

வேல்தேசத்துக்கு விரோதமாக நீ கைகொட்டி,
உன் காலால் தட்டி, வர்மம் வைத்து, ஆகடி
7 யம் பண்ணினபடியினால், இதோ, உனக்கு
விரோதமாக நான் என் கையை நீட்டி,
உன்னை ஜாதிகளுக்குக் கொள்ளையாக ஒப்புக்
கொடுத்து, உன்னை ஜனங்களுக்குள்ளே வே
ரற்றுப் போகப்பண்ணி, உன்னை தேசங்க
ளுக்குள்ளே அழித்து, உன்னை நிர்மூலமாக்
குவேன்; அப்பொழுது நான் **கர்த்தர்** என்று
அறிந்துகொள்வாய்.
8 கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறது என்ன
வென்றால்: இதோ, [1]யூதாவம்சத்தார் எல்லா
ஜாதிகளுக்கும் ஒத்தவர்களென்று மோவாபும்
9 சேயீரும் சொல்லுகிறபடியினால், இதோ,
அம்மோன் புத்திரரின் பேர் ஜாதிகளுக்குள்
இராதபடிக்கு நான் அம்மோன் புத்திரரின்
தேசத்தைக் கிழக்குத் தேசத்தாருக்குத் திறந்
துவைத்து, சுதந்தரமாய் ஒப்புக்கொடுக்கிற
10 வண்ணமாக, நான் மோவாப் தேசத்தின்
பக்கத்திலுள்ள அதின் கடையாந்தர ஊர்களா
கிய பட்டணங்கள் முதற்கொண்டுள்ள தேசத்
தின் அலங்காரமாகிய பெத்யெசிமோத்தையும்,
பாகால்மெயோனையும், கீரியாத்தாயீமையும்
11 அவர்களுக்குத் திறந்துவைத்து, மோவாபிலே
நியாயங்களைச் செய்வேன்; அப்பொழுது
நான் **கர்த்தர்** என்று அறிந்துகொள்வார்கள்.
12 கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறது என்
னவென்றால்: [2]ஏதோம் யூதாவம்சத்தாரிடத்
தில் குரோதந்தீர்த்து, பழிவாங்கி, பெரிய
13 குற்றஞ்செய்தபடியினால், கர்த்தராகிய ஆண்
டவர் சொல்லுகிறார்: நான் ஏதோம் தேசத்
துக்கு விரோதமாக என் கையை நீட்டி, அதில்
மனுஷரையும் மிருகங்களையும் இராதபடிக்குச்
சங்காரம்பண்ணி, அதைத் தேமான் துவக்கித்
தேதான்மட்டும் வனாந்தரமாக்குவேன்; பட்ட
14 யத்தால் விழுவார்கள். நான் இஸ்ரவேலா
கிய என் ஜனத்தின் கையினால் ஏதோமிடத்
தில் பழிவாங்குவேன்; [3]அவர்கள் என் கோ
பத்தின்படியும் என் உக்கிரத்தின்படியும் ஏதோ
முக்குச் செய்வார்கள்; அப்பொழுது நான்
பழிவாங்குவது இன்னதென்று அறிந்துகொள்
வார்கள் என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்
லுகிறார்.
15 கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறது என்ன
வென்றால்; [4]பெலிஸ்தர் குரோதக்காரராயிரு
ந்து, *பழம்பகையால் கேடு செய்யவேண்டு
மென்று, வர்மம் வைத்துப் பழிவாங்கினபடி
16 யினால், இதோ, நான் பெலிஸ்தருக்கு விரோ
தமாக என் கையை நீட்டி, [5]கிரேத்தியரைச்
சங்கரித்து, சமுத்திரக்கரையில் மீதியானவர்
17 களை அழித்து, உக்கிரமான தண்டனைகளி
னால் அவர்களில் கொடிதாய்ப் பழிவாங்கு
வேன்; நான் அவர்களில் பழிவாங்கும்போது
நான் **கர்த்தர்** என்று அறிந்துகொள்வார்கள்
என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.
**26** பதினோராம் வருஷம் முதலாந்தேதியிலே
**கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண்டாகி,

1 ஏசா. 15, 16. அதி. எரே. 48. 1. ஷ. ஆமோ. 2. 1-3
2 2 நாளா. 28. 17, 18.
3 ஏசா. 11. 14. எரே. 49. 2
4 2 நாளா. 28. 18. எரே. 25. 20. யோவே. 3. 4. ஷ. ஆமோ. 1. 6
* நித்தியப்பகை. 35. 5
5 செப். 2. 4. ஷ
6 ஏசா. 23. அதி. எசே. 25. 22. ஆமோ. 1. 9, 10. சகரி. 9. 2
7 38. 3. ஏசா. 5. 30
8 27. 32
9 எஸ்றா 7. 12. தானி. 2. 37
10 21. 22
11 ஏசா. 24. 8, 9. எரே. 16. 9. வெளி. 18. 22

அவர்: மனுபுத்திரனே, தீருவானது எரு 2
சலேமுக்கு விரோதமாக, [6]ஆ ஆ, ஜனசதளங்
களின் ஒலிமுகவாசலாயிருந்த நகரி இடிக்கப்
பட்டதென்றும், என்னிடமாக எல்லாம் புர
ண்டுவரும், அது பாழாக்கப்பட்டிருக்க நான்
நிரப்பப்படுவேன் என்றும் சொல்லுகிறபடியி
னால், கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறது 3
என்னவென்றால்: தீருவே, இதோ, நான் உன
க்கு விரோதமாக வருகிறேன்; சமுத்திரம் தன்
அலைகளை எழும்பி வரப்பண்ணுகிற வண்ண
மாய் [7]நான் அநேகம் ஜாதிகளை உனக்கு
விரோதமாக எழும்பி வரப்பண்ணுவேன்.
அவர்கள் தீருவின் மதில்களை அழித்து, அதின் 4
கொத்தளங்களை இடித்துப்போடுவார்கள்; நான்
அதின் மண்ணும் அதில் இராதபடிக்கு விளக்
கிப்போட்டு, அதை வெறும் பாறையாக்கிவிடு
வேன். அது வலைகளை விரிக்கிற [8]இடமா 5
கச் சமுத்திரத்தின் நடுவிலே இருக்கும்; நான்
இதைச் சொன்னேன் என்று கர்த்தராகிய
ஆண்டவர் உரைக்கிறார்; அது ஜாதிகளுக்குக்
கொள்ளையாகும். வெளியில் இருக்கிற அதின் 6
குமாரத்திகளோ பட்டயத்தால் கொன்றுபோ
டப்படுவார்கள்; அப்பொழுது நான் **கர்த்தர்**
என்று அறிந்துகொள்வார்கள். கர்த்தராகிய 7
ஆண்டவர் சொல்லுகிறது என்னவென்றால்:
இதோ, நான் [9]ராஜாதி ராஜாவாகிய நேபுகாத்
நேச்சார் என்னும் பாபிலோன் ராஜாவை
வடக்கேயிருந்து குதிரைகளோடும் இரதங்க
ளோடும் குதிரைவீரரோடும் கூட்டத்தோடும்
திரளான ஜனத்தோடும் தீருவுக்கு விரோதமாக
வரப்பண்ணுவேன். அவன் வெளியில் இருக் 8
கிற உன் குமாரத்திகளைப் பட்டயத்தினால்
கொன்று, [10]உனக்கு விரோதமாகக் கொத்தளங்
களைக் கட்டி, உனக்கு விரோதமாக அணைபோ
ட்டு, உனக்கு விரோதமாகக் கேடயங்களை
எடுத்து, உன் மதில்களை இடிக்கிற யந்திரங் 9
களை எதிரே வைத்து, தன் கட்டைப்பாரைக
ளால் உன் கொத்தளங்களை இடித்துப்போடு
வான். அவன் குதிரைகளின் ஏராளத்தினால் 10
தூள் எழும்பி உன்னை மூடும்; இடித்துத் திறப்
பாக்கப்பட்ட பட்டணத்தில் பிரவேசிக்கும்
வண்ணமாக அவன் உன் வாசல்களுக்குள் பிர
வேசிக்கையில், குதிரைவீரரும் வண்டில்க
ளும் இரதங்களும் இரைகிற சத்தத்தினாலே
உன் மதில்கள் அதிரும். தன் குதிரைகளின் 11
குளம்புகளினால் உன் வீதிகளையெல்லாம்
மிதிப்பான்; உன் ஜனத்தைப் பட்டயத்தினால்
கொன்றுபோடுவான்; உன் பலமான தூண்
கள் தரையிலே விழுந்துபோகும். அவர்கள் 12
உன் ஆஸ்தியைக் கொள்ளையிட்டு, உன் சரக்
குகளைச் சூறையாடி, உன் மதில்களை இடித்
து, உனக்கு விருப்பமான வீடுகளை அழித்து,
உன் கல்லுகளையும் உன் மரங்களையும் உன்
மண்ணையும் கடலின் நடுவிலே போட்டுவிடு
வார்கள். உன் பாட்டுகளின் சத்தத்தை ஓயப் 13
பண்ணுவேன்; [11]உன் சுரமண்டலங்களின் சத்
தம் இனிக் கேட்கப்படுவதில்லை. உன்னை 14

வெறும் பாறையாக்கிவிடுவேன்; நீ வலைகளை
விரிக்கிற ஸ்தலமாயிருப்பாய்; இனிக் கட்டப்
படாய்; [1]கர்த்தராகிய நான் இதைச் சொன்
னேன் என்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்
கிறார்.
15 தீருவுக்குக் கர்த்தராகிய ஆண்டவர் உரைக்
கிறது என்னவென்றால்: [2]காயம்பட்டவர்கள்
அலறும்போதும், உன் நடுவில் சங்காரம் நடக்
கும்போதும், நீ விழுகிற சத்தத்தினால் தீவு
16 கள் அதிராதோ? கடலரசர் எல்லாரும் தங்
கள் சிங்காசனங்களை விட்டு இறங்கி, தங்கள்
சால்வைகளைக் கழற்றி, தங்கள் சித்திரத்தை
யலாடைகளை உரிந்துபோடுவார்கள்; [3]நடுக்
கமே அவர்கள் உடையாகும்; தரையிலே உட்
கார்ந்து, நிமிஷந்தோறும் தத்தளித்து, உன்
17 னிமித்தம் பிரமிப்பார்கள். அவர்கள் உன்
னிமித்தம் புலம்பி, [4]உன்னைக்குறித்து: கடல்
சஞ்சாரிகள் குடியிருந்த புகழ்பெற்ற நகரியே,
ஐயோ! உன்னில் தங்கினவர்களுக்கெல்லாம்
பயமுண்டாக்கின உன் குடிகளோடுங்கூடச்
சமுத்திரத்திலே பலத்திருந்த நீ அழிந்துபோ
18 னாயோ! நீ விழும் நாளில் தீவுகள் தத்தளிக்
கும்; நீ அகன்றுபோகும்போது சமுத்திரத்தி
19 லுள்ள தீவுகள் கலங்கும் என்பார்கள். கர்த்த
ராகிய ஆண்டவர் சொல்லுகிறது என்ன
வென்றால்: நான் உன்னைக் குடியில்லாத நக
ரங்களைப்போலப் பாழான நகரமாக்கும்போ
தும், மிகுந்த தண்ணீர்கள் உன்னை மூடத்தக்க
தாய் நான் உன்மேல் சமுத்திரத்தை வரப்பண்
20 ணும்போதும், பூர்வகாலத்து ஜனத்தண்டைக்
குக் குழியில் இறங்குகிறவர்களோடே [5]நான்
உன்னை இறங்கப்பண்ணுவேன்; நீ குடியேறா
திருக்கும்படி பூர்வகால முதற்கொண்டு பாழா
யிருக்கிற பூமியின் தாழ்விடங்களிலே குழி
யில் இறங்குகிறவர்களோடேகூட நான் உன்
னைத் தங்கியிருக்கப்பண்ணுவேன்; ஜீவனுள்
ளோருடைய தேசத்திலோ மகிமை விளங்கச்
21 செய்வேன். உன்னை [6]மகா பயங்கரமாக
வைப்பேன்; இனி நீ இருக்கமாட்டாய்; நீ
தேடப்பட்டாலும் இனி என்றைக்கும் காணப்
படமாட்டாய் என்று கர்த்தராகிய ஆண்டவர்
சொல்லுகிறார் என்றார்.

**27** கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்
2 டாகி, அவர்: மனுபுத்திரனாகிய நீ இப்போது
3 [7]தீருவின்பேரிலே புலம்பி, சமுத்திரக்கரை
துறையிலே குடியிருந்து, அநேகம் தீவுகளின்
ஜனங்களோடே [8]வியாபாரம்பண்ணுகிற தீரு
வை நோக்கி: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்
கிறது என்னவென்றால், தீருவே, நீ உன்
4 னைப்பூரணசௌந்தரியவதி என்கிறாய். கடல்
களின் நடுமையத்திலே உன் தாபரம் இருக்
கிறது; உன்னைக் கட்டினவர்கள் உன்னைப்
5 பூரணவடிவாய்க் கட்டினார்கள். சேனீரிலி
ருந்துவந்த தேவதாருமரத்தால் உன் கப்பற்பல
கைகளைச் செய்தார்கள்; [9]பாய்மரங்களைச்செய்
யும்படிக்கு லீபனோனிலிருந்து கேதுருமரங்
6 களைக் கொண்டுவந்தார்கள். பாசானின் கர்வா
லிமரங்களினாலே [10]உன் துடுப்புகளைச் செய்
தார்கள்; கித்தீம் தீவுகளிலிருந்துவந்த ஆஷூர்
மரத்தால் உன் வாரிபலகைகளைச் செய்து,
[11]அதிலே யானைத்தந்தம் அழுத்தியிருந்தார்கள்.
எகிப்திலிருந்து வந்த சித்திரத் தையலுள்ள 7
சணல் நூல் புடவை நீ விரித்த பாயாயிருந்
தது; எலீசாதீவுகளின் இளநீலமும் இரத்தாம்
பரமும் உன் விதானமாயிருந்தது. சீதோன் 8
அர்வாத் என்னும் பட்டணங்களின் குடிகள்
உனக்குத் தண்டு வலிக்கிறவர்களாயிருந்தார்
கள். தீருவே, உன்னிடத்திலிருந்த உன் சாஸ்
திரிகள் உன் மாலுமிகளாயிருந்தார்கள். கேபா 9
ரின் முதியோரும் அதின் சாஸ்திரிகளும் உன்
னில் *கம்பத்துப்பார்க்கிறவர்களாயிருந்தார்
கள்; சமுத்திரத்தின் சகல கப்பல்களும் அவை
களிலுள்ள கப்பற்காரரும் உன்னோடே தொ
ழில் துறை வியாபாரம் பண்ணுகிறதற்காக
உன்னிடத்தில் இருந்தார்கள். பெர்சியரும், 10
[12]லூதியரும், பூத்தியரும் உன் இராணுவத்தில்
யுத்தவீரராயிருந்து, உனக்குள் கேடகமும்
தலைச்சீராவும் தூக்கிவைத்து, உன்னை அலங்
கரித்தார்கள். அர்வாத் புத்திரரும் உன் இரா 11
ணுவ மனுஷரும் உன் மதில்கள்மேல் சுற்றி
லும், †கம்மாத்தியர் உன் கொத்தளங்களிலும்
இருந்தார்கள்; இவர்கள் உன் மதில்கள்மேல்
சுற்றிலும் தங்கள் பரிசைகளைத் தூக்கிவை
த்து, [13]உன் வடிவத்தைப் பூரணப்படுத்தினார்
கள். சகலவித பொருள்களின் திரளினாலும் 12
[14]தர்ஷீஸ் ஊரார் உன்னோடே வியாபாரம்
பண்ணினார்கள்; வெள்ளியையும் இரும்பை
யும் தகரத்தையும் ஈயத்தையும் உன் சந்தை
களில் விற்கவந்தார்கள். யாவான், [15]தூபால், 13
மேசேக் என்னும் ஜாதியார் உன் வியாபாரிக
ளாயிருந்து, [16]மனுஷர்களையும் வெண்கலப்
பாத்திரங்களையும் உன் தொழில் துறைக்குக்
கொண்டுவந்தார்கள். தொகர்மா [17]வம்சத்தார் 14
குதிரைகளையும் குதிரைவீரரையும் கோவேறு
கழுதைகளையும் உன் சந்தைகளுக்குக் கொண்
டுவந்தார்கள். தேதான் புத்திரர் உன் வியா 15
பாரிகளா யிருந்தார்கள்; அநேகம் தீவுகளின்
வர்த்தகம் உன் வசமாகச்சேர்ந்தது; [18]யானைத்
தந்தங்களையும் கருங்காலிமரங்களையும் அவை
களுக்குப் பதிலாகக் கொண்டுவந்தார்கள்.
சீரியர் உன் வேலைப்பாடான பற்பல பொ 16
ருள்களினிமித்தம் உன்னோடே வியாபாரம்
பண்ணி, மரகதங்களையும், இரத்தாம்பரங்களை
யும், சித்திரத் தையலாடைகளையும், உயர்ந்த
வஸ்திரங்களையும், பவளங்களையும், பளிங்கை
யும் உன் சந்தைகளில் விற்கவந்தார்கள். யூத 17
ரும் இஸ்ரவேல் தேசத்தாரும் உன்னோடே
வியாபாரம்பண்ணி, [19]மின்னீத், பன்னாக்
என்கிற ஊர்களின் கோதுமையையும், தே
னையும், எண்ணெயையும், [20]பிசின் தைலத்தை
யும் உன் தொழில்துறைக்குக் கொண்டுவந்
தார்கள். தமஸ்கு உன் வேலைப்பாடான பற் 18
பல பொருள்களினிமித்தமும், சகலவிதப்
பொருள்களின் திரட்சியினிமித்தமும் உன்

1 ஏசா. 14. 27
2 31. 16. எரே. 49. 21
3 யோபு 2. 13. ஏசா. 23. 8. யோனா 3. 6
4 வெளி. 18. 9
5 32. 18, 24. எண். 16. 30, 33
6 28. 19
7 26. 17
8 ஏசா. 23. 3.
9 உபா. 3. 9
10 ஏசா. 2. 13
11 எரே. 2. 10
* கப்பல்முதபார்க்கிறவர்கள். 1 இரா. 5. 18
12 38. 5. எரே. 46. 9
† போர்வீரர்
13 3. ஏச
14 ஆதி. 10. 4. 2 நாளா. 20. 36
15 ஆதி. 10. 2.
16 வெளி. 18. 13
17 38. 6. ஆதி. 10. 3
18 1 இரா. 10. 22
19 நியா. 11. 33. 1 இரா. 5. 9, 11. எஸ்றா 3. 7. அப். 12. 20
20 எரே. 8. 22

ேனாடே வர்த்தகம்பண்ணி, கெல்போனின்
திராட்சரசத்தையும் வெண்மையான ஆட்டு
19 மயிரையும் உனக்கு விற்றார்கள். தாண் நாட்
டாரும், போக்கும் வரத்துமான யாவானரும்
துலக்கப்பட்ட இரும்பையும் இலவங்கத்தை
யும் வசம்பையும் உன் சந்தைகளில் கொண்டு
வந்து உன் தொழில்துறையில் விற்றார்கள்.
20 இரதங்களுக்குப் போடுகிற மேன்மையான
இரத்தினக்கம்பளங்களை [1]தேதானின் மனு
ஷர் கொண்டுவந்து, உன்னோடே வியாபாரம்
21 பண்ணினார்கள். அரபியரும், கேதாரின்
சகல பிரபுக்களும் [2]உனக்கு வாடிக்கையான
வர்த்தகராகி, ஆட்டுக்குட்டிகளையும் ஆட்டுக்
கடாக்களையும் வெள்ளாட்டுக்கடாக்களையும்
கொண்டுவந்து, உன்னோடே வியாபாரம்
22 பண்ணினார்கள். சேபா, ராமா பட்டணங்
களின் வியாபாரிகள் உன்னோடே வர்த்தகம்
பண்ணி, [3]மேல்தரமான சகலவித சம்பாரங்
களையும், சகலவித இரத்தினக்கற்களையும், பொ
ன்னையும் உன் சந்தைகளில் கொண்டுவந்தார்
23 கள். ஆரான், [4]கன்னே, ஏதேன் என்னும்
பட்டணத்தாரும், சேபாவின் வியாபாரிகளும்,
அசீரியரும், கில்மாத்பட்டணத்தாரும் உன்
24 னோடே வியாபாரம்பண்ணினார்கள். இவர்
கள் சகலவித உயர்ந்த சரக்குகளையும், இள
நீலப் பட்டுகளும் விசித்திரத் தையலாடை
களும் அடங்கிய புடவைக்கட்டுகளையும், விலை
யுயர்ந்த வஸ்திரங்கள் வைக்கப்பட்டு, கயிறுக
ளால் கட்டியிருக்கும் கேதுருமரப் பெட்டிக
ளையும் கொண்டுவந்து, உன்னோடே வியாபா
25 ரம்பண்ணினார்கள். உன் தொழில் துறை
யில் தர்ஷீசின் கப்பலாட்கள் உன்னைப்
போற்றிப் பாடினார்கள்; [5]நீ சமுத்திரத்தின்
நடுவிலே உன்னைப் பூரணப்படுத்தி, உன்னை
26 மிகவும் மகிமைப்படுத்தினாய். தண்டுவலிக்கிற
வர்கள் ஆழமான தண்ணீர்களில் உன்னை
வலித்துக் கொண்டுபோனார்கள்; [6]நடுச்சமுத்தி
ரத்திலே கொண்டற்காற்று உன்னை உடைத்
27 துப்போட்டது. நீ நாசமடையுங்காளிலே உன்
ஆஸ்தியோடும், [7]உன் சந்தைகளோடும், உன்
தொழில்துறையோடுங்கூட உன் கப்பலாட்
களும், உன் மாலுமிகளும், உன்னில் கம்பத்
துபபார்க்கிறவர்களும், உன் வியாபாரிகளும்,
உன்னிலுள்ள எல்லா யுத்தவீரரும், உன் நடு
வில் இருக்கிற எல்லாக்கூட்டத்தாரும் நடுச்
28 சமுத்திரத்திலே விழுவார்கள். உன் மாலுமி
கள் ஓலமிடும் சத்தத்தினால் சுற்றுப்புறங்கள்
29 அதிரும். தண்டுவலிக்கிற யாவரும், கப்ப
லாட்களும், கடல் மாலுமிகள் அனைவரும்,
தங்கள் கப்பல்களை விட்டு இறங்கி, கரை
30 யிலே நின்று, உன்னிமித்தம் சத்தமிட்டுப்
புலம்பி, மனங்கசந்து அழுது, [8]தங்கள் தலைக
ளின்மேல் புழுதியைப் போட்டுக்கொண்டு,
31 சாம்பலில் புரண்டு, உனக்காக மொட்டை
யிட்டு, [9]இரட்டுடுத்திக்கொண்டு, உனக்காக
மனங்கசந்து அழுது, துக்கங்கொண்டாடுவார்
32 கள். அவர்கள் உனக்காகத் தங்கள் துக்கத்தி

[1] ஆதி. 25. 3
[2] ஆதி. 25. 13. ஏசா. 60. 7
[3] ஆதி. 10. 7. 1 இரா. 10. 1, 2. சங். 72. 10, 15. ஏசா. 60. 5
[4] ஆதி. 11. 31. 2 இரா. 19. 12
[5] 1 இரா. 10. 22. ஏசா. 2. 16: 24. 14: 60. 9
[6] சங். 48. 7
[7] நீதி. 11. 4. வெளி. 18. 9. ழ
[8] எரே. 6. 26. யோனா 3. 6. வெளி. 18. 9, 19
[9] எஸ்தர் 4. 1-4. மீகா 1. 16
[10] வெளி. 18. 19
[11] எரே. 18. 16
[12] ஆப. 2. 4
[13] ஏசா. 31. 3. 2 தெச. 2. 4
[14] சகரி. 9. 2, 3
[15] சங். 62. 10. சகரி. 9. 3
[16] 30. 11. 31. 12: 32. 12
[17] 2. ஷ

லே ஓலமிட்டு, உன்னிமித்தம் புலம்பி, உன்
னைக்குறித்து: சமுத்திரத்தின் நடுவிலே அழி
ந்துபோன தீருவுக்குச் சமான நகரம் உண்
டோ? உன் சந்தைச் சரக்குகள் சமுத்திரங் 33
கள் வழியாய்க் கொண்டுவரப்படுகையில்,
அநேக ஜனங்களைத் திருப்தியாக்கினாய்;
[10]உன் ஆஸ்தியின் திரளினாலும் உன் வியாபா
ரத்தினாலும் பூமியின் ராஜாக்களை ஐசுவரிய
வான்களாக்கினாய். நீ சமுத்திரத் திரைகளினா 34
லே ஆழங்களில் உடைக்கப்பட்டபோது,
உன் தொழில்துறையும் உன் நடுவிலுள்ள
கூட்டம் அனைத்தும் அழிந்துபோயின என்
பார்கள். தீவுகளின் குடிகள் எல்லாம் உன் 35
னிமித்தம் திகைப்பார்கள்; அவர்களுடைய
ராஜாக்கள் மிகவும் பிரமித்து, கலங்கின முக
மாயிருப்பார்கள். சகல ஜனங்களிலுமுள்ள 36
வர்த்தகர் உன்பேரில் ஈசல்போடுவார்கள், [11]நீ
பயங்கரமாவாய்; இனி ஒருபோதும் இருக்க
மாட்டாய் என்கிறார் என்று சொல் என்றார்.

**கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண் **28**
டாகி, அவர்: மனுபுத்திரனே, நீ தீருவின் 2
அதிபதியை நோக்கி: கர்த்தராகிய ஆண்டவர்
உரைக்கிறது என்னவென்றால், உன் இரு
தயம் மேட்டிமைகொண்டு: [12]நான் தேவன்,
நான் சமுத்திரத்தின் நடுவே தேவாசனத்தில்
வீற்றிருக்கிறேன் என்று நீ சொல்லி, [13]உன்
இருதயத்தை தேவனின் இருதயத்தைப்போ
ல் ஆக்கினாலும், நீ மனுஷனேயல்லாமல் தே
வனல்ல. இதோ, [14]தானியேலைப்பார்க்கிலும் 3
நீ ஞானவான்; இரகசியமானதொன்றும் உன
க்கு மறைபொருள் அல்ல. நீ உன் ஞானத் 4
தினாலும் உன் புத்தியினாலும் பொருள் சம்பா
தித்து, பொன்னையும் வெள்ளியையும் உன்
பொக்கிஷசாலைகளில் சேர்த்துக்கொண்டாய்.
உன் வியாபாரத்தினாலும் உன் மகா ஞானத் 5
தினாலும் உன் பொருளைப் பெருகப்பண்ணி
னாய், [15]உன் இருதயம் உன் செல்வத்தினால்
மேட்டிமையாயிற்று. ஆகையால் கர்த்தராகிய 6
ஆண்டவர் சொல்லுகிறது என்னவென்றால்:
நீ உன் இருதயத்தை தேவனின் இருதயத்
தைப்போல ஆக்குகிறபடியினால், இதோ, ஜா 7
திகளில் மகா பலவான்களாகிய மறுதேசத்
தாரை உனக்கு விரோதமாய் வரப்பண்ணு
வேன்; [16]அவர்கள் உன் ஞானத்தின் அழ
குக்கு விரோதமாய்த் தங்கள் பட்டயங்களை
உருவி, உன் மினுக்கைக் குலைத்துப்போடு
வார்கள். உன்னைக் குழியிலே விழத்தள்ளு 8
வார்கள்; நீ சமுத்திரங்களின் நடுவே கொலை
யுண்டு சாகிறவர்களைப்போல் சாவாய். உன் 9
னைக் கொல்லுகிறவனுக்கு முன்பாக: [17]நான்
தேவனென்று நீ சொல்வாயோ? உன்னைக்
குத்திப்போடுகிறவன் கைக்கு நீ மனுஷனே
யல்லாமல் தேவனல்லவே. மறுதேசத்தாரின் 10
கையினால் நீ விருத்தசேதனமில்லாதவர்கள்
சாவதுபோல் சாவாய்; நான் இதைச் சொன்
னேன் என்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்
கிறார் என்று சொல் என்றார்.

11 பின்னும் **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு
12 உண்டாகி, அவர்: மனுபுத்திரனே, நீ தீரு
ராஜாவைக் குறித்துப் புலம்பி, அவனை நோ
க்கி: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறது
என்னவென்றால், [1]நீ விசித்திரமாய்ச் செய்
யப்பட்ட முத்திரை மோதிரம்; நீ ஞானத்
தால் நிறைந்தவன்; பூரண அழகுள்ளவன்.
13 நீ தேவனுடைய தோட்டமாகிய ஏதேனில்
இருந்தவன்; பத்மராகம், புஷ்பராகம், வைரம்,
படிகப்பச்சை, கோமேதகம், யஸ்பி, இந்திர
நீலம், மரகதம், மாணிக்கம் முதலான சகலவித
ரத்தினங்களும் பொன்னும் உன்னை மூடிக்
கொண்டிருக்கிறது; நீ சிருஷ்டிக்கப்பட்ட நா
ளில் உன் மேளவாத்தியங்களும் உன் நாகசுரங்
களும் உன்னிடத்தில் ஆயத்தப்பட்டிருந்தது.
14 நீ காப்பாற்றுகிறதற்காக அபிஷேகம்பண்ணப்
பட்ட கேருப்; [2]தேவனுடைய பரிசுத்த பர்வத
த்தில் உன்னை வைத்தேன்; அக்கினிமயமான
15 கற்களின் நடுவே உலாவினாய். நீ சிருஷ்டிக்
கப்பட்ட நாள்துவக்கி உன்னில் அநியாயம்
கண்டு பிடிக்கபபட்டதுமட்டும், [3]உன் வழிக
16 ளில் குறையற்றிருந்தாய். உன் வியாபாரத்
தின் மிகுதியினால், உன் கொடுமை அதிகரி
த்து நீ பாவஞ்செய்தாய்; ஆகையால் நான்
உன்னை தேவனுடைய பர்வதத்திலிருந்து
ஆகாதவனென்று தள்ளி, காப்பாற்றுகிற கே
ருபாய் இருந்த உன்னை அக்கினிமயமான கற்
களின் நடுவே இராதபடிக்கு அழித்துப்போடு
17 வேன். உன் அழகினால் உன் இருதயம் மே
ட்டிமையாயிற்று; [4]உன் மினுக்கினால் உன்
ஞானத்தைக் கெடுத்தாய்; உன்னைத் தரையிலே
தள்ளிப்போடுவேன்; ராஜாக்கள் உன்னைப்
பார்க்கும்படி உன்னை அவர்களுக்கு முன்
18 பாக வேடிக்கையாக்குவேன். உன் அக்கிர
மங்களின் ஏராளத்தினாலும், உன் வியாபாரத்
தின் அநீதத்தினாலும உன் பரிசுத்த ஸ்தலங்
களைப் பரிசுத்தக்குலைச்சலாக்கினாய்; [5]ஆகை
யால் உன்னைப் பட்சிப்பதாகிய ஒரு அக்கினி
யை நான் உன் நடுவிலிருந்து புறபபடப்பண்
ணி, உன்னைப் பார்க்கிற எல்லாருடைய கண்
களுக்கு முன்பாகவும் உன்னைப் பூமியின்
19 மேல் சாம்பலாக்குவேன். ஜனங்களில் உன்
னை அறிந்த அனைவரும் உன்னிமித்தம் திகை
ப்பார்கள்; மகா பயங்கரமாவாய்; [6]இனி ஒரு
போதும் இருக்கமாட்டாய் என்று உரைக்கி
றார் என்று சொல் என்றார்.
20 பின்னும் **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு
21 உண்டாகி, அவர்: மனுபுத்திரனே, நீ உன்
முகத்தைச் சீதோனுக்கு எதிராகத் திருப்பி,
[7]அதற்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம் உரை
த்து, சொல்லவேண்டியது என்னவென்றால்:
22 கர்த்தராகிய தேவன் சொல்லுகிறார்: சீதோ
னே, இதோ, நான் உனக்கு விரோதமாக வந்
து, உன் நடுவிலே மகிமைப்படுவேன்; [8]நான்
அதிலே நியாயத்தீர்ப்புகளைச் செய்து, அதி
லே பரிசுத்தரென்று விளங்கும்போது, நான்
23 **கர்த்தர்** என்று அறிந்துகொள்வார்கள். நான்
அதிலே கொள்ளைநோயையும், அதின் வீதி
களில் இரத்தத்தையும் வரப்பண்ணுவேன்;
அதற்கு விரோதமாய்ச் சுற்றிலும் வந்த பட்ட
யத்தினால் காயம்பட்டவர்கள் அதின் நடுவிலே
வெட்டுண்டு விழுவார்கள்; அப்பொழுது நான்
**கர்த்தர்** என்று அறிந்துகொள்வார்கள். இஸ் 24
ரவேல் வம்சத்தாரை இகழ்ந்த அவர்களுடைய
சுற்றுப்புறத்தாராகிய அனைவரிலும், [9]இனித்
தைக்கிற முள்ளும் நோவுண்டாக்குகிற நெரி
ஞ்சிலும் அவர்களுக்கு இராது; அப்பொழுது
நான் கர்த்தராகிய ஆண்டவரென்று அறிந்து
கொள்வார்கள்.
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறது 25
என்னவென்றால், [10]நான் இஸ்ரவேல் வம்சத்
தாரை, அவர்கள் சிதறடிக்கப்பட்டிருக்கிற
ஜனங்களிடத்திலிருந்து சேர்த்துக் கொண்டு
வந்து, அவர்களால் ஜாதிகளின் கண்களுக்கு
முனபாகப் பரிசுத்தரென்று விளங்கும்போது,
[11]அவர்கள் என் தாசனாகிய யாக்கோபுக்கு
நான் கொடுத்த தங்களுடைய தேசத்திலே
குடியிருப்பார்கள். அவர்களுடைய சுற்றுப்புற 26
த்தாரில் அவர்களை இகழ்ந்த அனைவரிலும்
நான் நியாயத்தீர்ப்புகளைச் செய்யும்போது,
[12]அவர்கள் அதிலே சுகமாய்க் குடியிருந்து,
வீடுகளைக் கட்டி, திராட்சத்தோட்டங்களை
நாட்டி, சுகமாய் வாழ்ந்து, நான் தங்கள் தேவ
னாகிய **கர்த்தர்** என்று அறிந்துகொள்வார்கள்
என்கிறார் என்று சொல் என்றார்.
பத்தாம் வருஷம் பத்தாம் மாதம் பன்னி **29**
ரண்டாந்தேதியிலே **கர்த்தருடைய** வார்த்தை
எனக்கு உண்டாகி, அவர்: மனுபுத்திரனே, 2
நீ எகிப்தின் ராஜாவாகிய பார்வோனுக்கு எதி
ராக உன் முகத்தைத் திருப்பி, [13]அவனுக்கும்
எகிப்து முழுதுக்கும் விரோதமாய்த் தீர்க்கதரி
சனம் உரைத்து, சொல்லவேண்டியது என்ன
வென்றால்: கர்த்தராகிய ஆண்டவர் சொல் 3
லுகிறார், எகிப்தின் ராஜாவாகிய பார்வோனே,
[14]நீ உன் நதிகளின் நடுவிலே படுத்துக்
கொண்டு: என் நதி என்னுடையது, நான்
அதை எனக்காக உண்டுபண்ணினேன்
என்று சொல்லுகிற பெரிய முதலையே,
இதோ, நான் உனக்கு விரோதமாய் வந்து,
உன் வாயிலே துறடுகளை மாட்டி, [15]உன் நதி 4
களின் மச்சங்களை உன் செதிள்களில் ஒட்டிக்
கொள்ளும்படி செய்து, உன்னை உன் நதிக
ளின் நடுவிலிருந்து தூக்கிவிடுவேன்; உன்
நதிகளின் மச்சங்களெல்லாம் உன் செதிள்
களில் ஒட்டிக்கொண்டிருக்கும். உன்னையும் 5
உன் நதிகளின் எல்லா மச்சங்களையும் வனாந்
தரத்திலேபோட்டுவிடுவேன்; [16]வெட்டவெளி
யிலே விழுவாய்; நீ சேர்த்துக்கொள்ளப்படுவ
தில்லை; உன்னை பூமியின் மிருகங்களுக்கும்
ஆகாயத்தின் பறவைகளுக்கும் இரையாகக்
கொடுப்பேன். அப்பொழுது எகிப்துதேசத் 6
தின் குடிகளெல்லாரும் நான் **கர்த்தர்** என்று
அறிந்துகொள்வார்கள்; [17]அவர்கள் இஸ்ரவேல்
வம்சத்தாருக்கு நாணற்கோலாயிருந்தார்களே.

1 31. 8, 9
2 20. 40. யாத். 25. 20
3 பிர. 7. 29. ரோ. 7. 9
4 ரோ. 1. 22
5 மாற். 8. 36
6 26. 21: 27. 36
7 32. 30. ஏசா. 23. 4, 12. எரே. 25. 22: 27. 3
8 யாத். 14. 4, 17. சங். 9. 16
9 எண். 33. 55. யோசு. 23. 13. ஏசா. 35. 9: 55. 13. வெளி. 21. 4
10 ஏசா. 11. 12, 13
11 ஆதி. 28. 13, 14. எரே. 23. 6
12 ஏசா. 65. 21. எரே. 31. 5. ஆமோ. 9. 14
13 28. 21, 22. எரே. 25. 19
14 ஏசா. 27. 1: 51. 9. தானி. 5. 30, 31
15 38. 4. ஏசா. 37. 29
16 எரே. 25. 33: 34. 20
17 2 இரா. 18. 21. ஏசா. 36. 6

7 அவர்கள் உன்னைக் கையிலே பிடிக்கும்போது,
[1]நீ ஒடிந்துபோய், அவர்கள் விலாவையெல்
லாம் பிளப்பாய்; அவர்கள் உன்மேல் சாயும்
போது, நீ முறிந்து, அவர்கள் இடுப்பு முழு
8 வதையும் மரத்துப்போகப்பண்ணுவாய். ஆகை
யால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறது
என்னவென்றால்: இதோ, நான் உன்மேல்
பட்டயத்தை வரப்பண்ணி, உன்னில் மனுஷ
ணையும் மிருகங்களையும் சங்காரம் பண்ணு
9 வேன். எகிப்து தேசம் பாழும் வனாந்தரமு
மாகும்; அப்பொழுது நான் **கர்த்தர்** என்று
அறிந்துகொள்வார்கள்: நதி என்னுடையது,
நான் அதை உண்டாக்கினேன் என்று சொன்
10 னானே. ஆகையால், இதோ, நான் உனக்
கும் உன் நதிகளுக்கும் விரோதமாக வந்து,
[2]மிக்தோல் முதல் எத்தியோப்பியாவின் எல்
லையிலுள்ள [3]செவெனேவரைக்கும் எகிப்து
தேசத்தை அவாந்தரமும் பாழுமான வனாந்தர
11 ங்களாக்குவேன். மனுஷனுடைய கால்
அதைக் கடப்பதுமில்லை, [4]மிருகஜீவனுடைய
கால் அதை மிதிப்பதுமில்லை; அது நாற்பது
12 வருஷம் குடியற்றிருக்கும். எகிப்துதேசத்
தைப் பாழாய்ப்போன தேசங்களின் நடுவிலே
பாழாய்ப் போகப்பண்ணுவேன்; அதின் பட்
டணங்கள் அவாந்தரமாக்கப்பட்ட பட்டணங்
களின் நடுவிலே நாற்பது வருஷம் பாழாய்க்
கிடக்கும்; நான் எகிப்தியரை ஜாதிகளுக்குள்
ளே சிதறடித்து, அவர்களை தேசங்களுக்குள்
13 ளே தூற்றிவிடுவேன். கர்த்தராகிய ஆண்ட
வர் சொல்லுகிறது என்னவென்றால்: [5]நாற்
பது வருஷம் முடியும்போது, நான் எகிப்தி
யரை அவர்கள் சிதறுண்டிருக்கிற ஜனங்களி
14 டத்திலிருந்து சேர்த்துக்கொண்டு, எகிப்தி
யரின் சிறையிருப்பைத் திருப்பி, அவர்களை
அவர்களுடைய ஜநநதேசமாகிய பத்ரோஸ்
தேசத்திலே திரும்பி வரப்பண்ணுவேன்;
[6]அங்கே அவர்கள் அற்ப ராஜ்யமாயிருப்பார்
15 கள். அது இனி ஜாதிகளின்மேல் தன்னை
உயர்த்தாமல், மற்ற ராஜ்யங்களிலும் அற்பமா
னதாயிருக்கும்; அவர்கள் இனி ஜாதிகளை
ஆளாதபடிக்கு அவர்களைக் குறுகிப்போகப்
16 பண்ணுவேன். அவர்களின் பிறகே போய்,
அவர்களை நோக்கிக்கொண் டிருக்கிறதினால்
இஸ்ரவேல் வம்சத்தார் எனக்குத் தங்கள் அக்
கிரமத்தை நினைப்பூட்டாதபடிக்கு, [7]இனி
அவர்கள் இவர்களுடைய நம்பிக்கையாயிரா
மற் போவார்கள்; அப்பொழுது நான் கர்த்தரா
கிய ஆண்டவர் என்று அறிந்துகொள்வார்கள்
என்கிறார் என்று சொல் என்றார்.
17 இருபத்தேழாம் வருஷம் முதலாம் மாதம்
முதலாந்தேதியிலே, **கர்த்தருடைய** வார்த்தை
18 எனக்கு உண்டாகி, அவர்: மனுபுத்திரனே,
பாபிலோன் ராஜாவாகிய நேபுகாத்நேச்சார்
தீருவின் முன்னே தன் சேனையினிடத்தில்
கடும் ஊழியம் வாங்கினான்; [8]ஒவ்வொரு தலை
யும் மொட்டையாயிற்று; ஒவ்வொரு தோள்
பட்டையின் தோலும் உரிந்துபோயிற்று; ஆனா

1 ஏசா. 30. 2-7. எரே. 37. 5 ழ
2 30, 12. ஆப. 3. 8
3 30. 6
4 32. 13
5 ஏசா. 19. 23. எரே. 46. 26
6 17. 6, 14. தானி. 11. 42, 43
7 ஏசா. 30. 1, 3: 36. 4, 6. எரே. 2. 36, 37. புல. 4. 17. ஓசி. 7. 11
8 26. 7. ஷ. எரே. 27. 6
9 எரே. 25. 9
10 சங். 132. 17
11 ஏசா. 13. 6
12 யோவே. 2. 1. செப். 1. 7
13 எரே. 50. 15
14 எரே. 25. 20, 24
15 29. 10, 12. யோபு 9. 13
16 ஏசா. 18. 1, 2: 32. 9-11

லும் அவன் தீருவுக்கு விரோதமாகச் செய்த
ஊழியத்தினாலே அவனுக்காவது அவன் சே
னைக்காவது கூலி கிடைக்கவில்லை. ஆகை 19
யால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறது
என்னவென்றால்: இதோ, நான் பாபிலோன்
ராஜாவாகிய நேபுகாத்நேச்சாருக்கு எகிப்து
தேசத்தைக் கொடுக்கிறேன்; அவன் அதின்
ஏராளமான ஜனத்தைச் சிறைபிடித்து, அதின்
ஆஸ்தியைச் சூறையாடி, அதின் கொள்ளைப்
பொருளை யெடுத்துக்கொள்வான்; இது அவனு
டைய சேனைக்குக் கூலியாயிருக்கும். அவன் 20
அதிலே செய்த வேலைக்கு எகிப்துதேசத்தை
நான் அவனுக்குக் கூலியாகக் கொடுத்தேன்;
[9]எனக்காக அதைச் செய்தார்களென்று கர்த்
தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.
அந்நாளிலே நான் இஸ்ரவேல் வம்சத்தா 21
ரின் கொம்பை முளைக்கப்பண்ணி, [10]அவர்
கள் நடுவிலே தாராளமாய்ப் பேசும் வாயை
உனக்குக் கட்டளையிடுவேன்; அப்பொழுது
நான் **கர்த்தர்** என்று அறிந்துகொள்வார்கள்
என்றார்.

**கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண் **30**
டாகி, அவர்: மனுபுத்திரனே, நீ தீர்க்கதரி 2
சனம் சொல்லு: [11]கர்த்தராகிய ஆண்டவர்
சொல்லுகிறது என்னவென்றால், ஐயோ!
ஆபத்துநாள் வருகிறதென்று அலறுங்கள். நாள் 3
சமீபமாயிருக்கிறது; ஆம், **கர்த்தருடைய** நாள்
சமீபமாயிருக்கிறது; [12]அது மந்தாரமான நாள்,
அது புறஜாதிகளுக்கு வரும் காலம். பட்ட 4
யம் எகிப்திலே வரும்; எகிப்திலே கொலை
யுண்கிறவர்கள் விழும்போது எத்தியோப்பி
யாவிலே மகா வேதனை யுண்டாயிருக்கும்;
[13]அதின் ஏராளமான ஜனத்தைப் பிடித்துக்
கொண்டு போவார்கள்; அதின் அஸ்திபாரங்
கள் நிர்மூலமாக்கப்படும். எத்தியோப்பிய 5
ரும், பூத்தியரும், லூத்தியரும், [14]கலந்த கூட்
டமாகிய அனைவரும், கூபியரும், உடன்
படிக்கைக்குள்ளான தேசத்தின் புத்திரரும்
அவர்களோடே கூடப் பட்டயத்தால் விழு
வார்கள்.
எகிப்தை ஆதரிக்கிறவர்களும் விழுவார்கள்; 6
அதினுடைய பலத்தின் முக்கியமும் தாழ்ந்து
போம் என்று **கர்த்தர்** சொல்லுகிறார்; [15]அதி
லே மிக்தோல் முதல் செவெனேவரைக்கும்
பட்டயத்தினால் விழுவார்களென்று கர்த்தரா
கிய ஆண்டவர் சொல்லுகிறார். பாழாய்ப் 7
போன தேசங்களின் நடுவிலே பாழாய்ப்போ
வார்கள்; அவாந்தரமாக்கப்பட்ட பட்டணங்
களில் அவர்கள் பட்டணங்களும் அவாந்தர
மாகும். நான் எகிப்திலே தீக்கொளுத்தும் 8
போதும், உனக்குத் துணைநின்ற யாவரும்
முறிக்கப்படும்போதும், நான் **கர்த்தர்** என்று
அறிந்துகொள்வார்கள். நிர்விசாரமான எத் 9
தியோப்பியரைத் தத்தளிக்கப்பண்ண அந்நா
ளிலே என் கட்டளையினால் தூதாட்கள் கப்
பல்களிலே போவார்கள்; [16]அப்பொழுது எகிப்
தின் நாளிலே உண்டானதுபோல அவர்களுக்

குள்ளே மகா வேதனை உண்டாயிருக்கும்;
இதோ, அது வருகிறது.
10 கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறது
என்னவென்றால்: [1]பாபிலோன் ராஜாவாகிய
நேபுகாத்நேச்சாரைக்கொண்டு எகிப்தின் சந்
11 ததியை ஒழியப்பண்ணுவேன். இவனும்
இவனோடேகூட ஜாதிகளில் மகா பலசாலிக
ளான இவனுடைய ஜனங்களும் தேசத்தை
அழிப்பதற்காக ஏவப்பட்டு வந்து, [2]தங்கள்
பட்டயங்களை எகிப்துக்கு விரோதமாக உருவி,
கொலையுண்டவர்களாலே தேசத்தை நிரப்பு
12 வார்கள். அப்பொழுது நான் நதிகளை வற்
றிப்போகப்பண்ணி, [3]தேசத்தை துஷ்டர்
களின் கையிலே விற்று, தேசத்தையும் அதி
லுள்ள யாவையும் அந்நியதேசத்தாரின் கை
யால் பாழாக்கிப்போடுவேன்; **கர்த்தராகிய**
நான் இதைச் சொன்னேன்.
13 கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறது
என்னவென்றால்: நான் நரகலான விக்கிரகங்
களை அழித்து, [4]நோப்பின் சிலைகளை ஒழியப்
பண்ணுவேன்; இனி எகிப்துதேசத்தில் ஒரு
அதிபதியும் இரான்; நான் எகிப்துதேசத்தில்
14 பயமுண்டாக்கி, பத்ரோசைப் பாழாக்கி,
சோவானிலே தீக்கொளுத்தி, [5]நோ பட்ட
15 ணத்தில் ஆக்கினைகளைச் செய்து, எகிப்தின்
பெலனாகிய *சீனின்மேல் என் உக்கிரத்தை
ஊற்றி, [6]நோ பட்டணத்தின் ஏராளமான
16 ஜனத்தைச் சங்கரிப்பேன். எகிப்தில் தீக்
கொளுத்துவேன்; சீன் மகா வேதனை அடை
யும்; நோ பட்டணம் தகர்ந்து இடிந்துபோ
கும்; நோப்புக்குத் தினந்தோறும் நெருக்கங்க
17 ளுண்டாகும். ஆவென், பிபேசெத் என்
கிற பட்டணங்களின் வாலிபர் பட்டயத்
தால் விழுவார்கள்; அவைகளின் குடிகள்
18 சிறையிருப்புக்குப் போவார்கள். எகிப்தின்
நுகங்களை நான் முறிக்கும்போதும், அதினு
டைய பெலத்தின் முக்கியம் அதிலே ஓயும்
போதும், மந்தாரம் அதை மூடும்; [7]தகபானேசி
லே பகல் இருண்டுபோகும்; அதின் குமாரத்தி
19 கள் சிறைப்பட்டுப்போவார்கள். இப்படி எகி
ப்திலே நியாயத்தீர்ப்புகளைச் செய்வேன்; அப்
பொழுது நான் **கர்த்தர்** என்று அறிந்துகொள்
வார்கள் என்கிறார் என்று சொல் என்றார்.
20 பதினோராம் வருஷம் முதலாம்மாதம் ஏழாந்
தேதியிலே, **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு
21 உண்டாகி, அவர்: மனுபுத்திரனே, எகிப்
தின் ராஜாவாகிய பார்வோனுடைய புயத்தை
முறித்துப்போடுவேன்; [8]இதோ, அது குண
மாகத்தக்கதாகக் கட்டப்படுவதில்லை; அது
பட்டயத்தைப் பிடிக்கத்தக்க பெலனை அடை
யும்படி பத்தை வைத்துக் கட்டப்படுவது
22 மில்லை. ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர்
சொல்லுகிறது என்னவென்றால்: இதோ,
நான் எகிப்தின் ராஜாவாகிய பார்வோனுக்கு
விரோதமாக வந்து, [9]பெலனுள்ளதும் முறிக்
கப்பட்டதுமாகிய அவனுடைய புயங்களை முறித்துப்
போடுவேன்; பட்டயத்தை நான் அவன் கை
யிலிருந்து விழப்பண்ணி, எகிப்தியரை ஜா 23
திகளுக்குள்ளே சிதறடித்து, அவர்களை தேசங்
களில் தூற்றிவிடுவேன். பாபிலோன் ராஜா 24
வின் புயங்களைப் பெலப்படுத்தி, அவன் கை
யிலே என் பட்டயத்தைக் கொடுத்து, பார்
வோனின் புயங்களை முறித்துவிடுவேன்; அப்
பொழுது அவன் கொலையுண்கிறவன் தவிக்
கிறதுபோல அவனுக்கு முன்பாகத் தவிப்
பான். பாபிலோன் ராஜாவின் புயங்களைப் 25
பெலப்படுத்துவேன்; பார்வோனின் புயங்
களோ விழுந்துபோம்; [10]என் பட்டயத்தை
நான் பாபிலோன் ராஜாவின் கையில் கொடுக்
கும்போதும், அவன் அதை எகிப்து தேசத்தின்
மேல் நீட்டும்போதும், நான் **கர்த்தர்** என்று
அறிந்துகொள்வார்கள். நான் எகிப்தியரை ஜா 26
திகளுக்குள்ளே சிதறடித்து, [11]அவர்களை தே
சங்களில் தூற்றிப்போடுவேன்; அப்பொழுது
நான் **கர்த்தர்** என்று அறிந்துகொள்வார்கள்.
பதினோராம் வருஷம் மூன்றாம் மாதம் **31**
முதலாந்தேதியிலே **கர்த்தருடைய** வார்த்தை
எனக்கு உண்டாகி, அவர்: மனுபுத்திரனே, 2
எகிப்தின் ராஜாவாகிய பார்வோனோடும் அவ
னுடைய திரளான ஜனத்தோடும் நீ சொல்ல
வேண்டியது என்னவென்றால்: [12]நீ உன் மகத்
துவத்திலே யாருக்கு ஒப்பாயிருக்கிறாய்?
இதோ, அசீரியன் லீபனோனிலே அலங்கா 3
ரக் கொப்புகளோடும், [13]நிழலிடும் தழைகளோ
டும், வளர்ந்தோங்கிய கேதுரு விருட்சமாயி
ருந்தான்; அதின் கிளைகளின் தழைகளுக்
குள்ளே அதின் நுனிக்கொழுந்து உயர்ந்திருந்
தது. தண்ணீர்கள் அதைப் பெரிதும், ஆழம் 4
அதை உயர்த்தியும் ஆக்கின; [14]அதின் ஆறுகள்
அதின் அடிமரத்தைச் சுற்றிலும் ஓடின; தன்
நீர்க்கால்களை வெளியின் விருட்சங்களுக்கெல்
லாம் பாயவிட்டது. ஆகையால் வெளியின் 5
சகல விருட்சங்களிலும் அது மிகவும் உயர்ந்
தது; [15]அது துளிர்விடுகையில் திரளான தண்
ணீரினால் அதின் கிளைகள் பெருகி, அதின்
கொப்புகள் நீளமாயின. அதின் கொப்புக 6
ளில் ஆகாயத்தின் பறவைகளெல்லாம் கூடு
கட்டின; [16]அதின் கொப்புகளின்கீழ் வெளி
யின் மிருகங்களெல்லாம் குட்டிகளைப் போட்
டன; பெரிதான சகல ஜாதிகளும் அதின்
நிழலிலே குடியிருந்தார்கள். அப்படியே 7
அதின் வேர் திரளான தண்ணீர்களருகே இரு
ந்ததினால் அது தன் செழுப்பினாலும் தன்
கொப்புகளின் நீளத்தினாலும் அலங்காரமாயி
ருந்தது. தேவனுடைய வனத்திலுள்ள [17]கே 8
துருக்கள் அதை மறைக்கக் கூடாதிருந்தது;
தேவதாரு விருட்சங்கள் அதின் கொப்புகளுக்
குச் சமானமல்ல; அர்மோன் மரங்கள் அதின்
கிளைகளுக்கு நிகரல்ல; தேவனுடைய வன
த்திலுள்ள ஒரு விருட்சமும் அலங்காரத்திலே
அதற்கு ஒப்பல்ல. அதின் கிளைகளின் திரளி 9
னால் அதை அலங்கரித்தேன்; [18]தேவனுடைய
வனமாகிய ஏதேனின் விருட்சங்களெல்லாம்
அதின்பேரில் பொறாமைகொண்டன.

1 29. 19
2 28. 7
3 ஏசா. 19. 4-6 வெளி. 16. 12
4 ஏசா. 19. 1. எரே. 42. 12; 46. 25. சகரி. 13. 2
5 29. 14. சங். 78. 12, 43
* பெலூசியம்
6 எரே. 46. 25. நாகூம் 3. 8-10
7 எரே. 2. 16
8 ஏசா. 1. 6. எரே. 46. 11; 48. 25
9 சங். 37. 17
10 எரே. 27. 6-8 ஏசா. 10. 15
11 தானி. 11. 42
12 18. வச
13 தானி. 4. 20, 22
14 எரே. 51. 36
15 தானி. 4. 11
16 17. 23. தானி. 4. 12
17 ஆதி. 2. 8; 13. 10. ஏசா. 51. 3
18 16. 14

10 ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்
லுகிறது என்னவென்றால்: அது தன் வளர்த்
தியிலே மேட்டிமையாகி, [1]கொப்புகளின்
தழைகளுக்குள்ளே தன் நுனிக்கிளையை ஓங்
கவிட்டபடியினாலும், அதின் இருதயம் தன்
மேட்டிமையினால் உயர்ந்துபோனபடியினாலு
11 ம், நான் அதை ஜாதிகளில் மகா வல்லமை
யுள்ளவன் கையிலே ஒப்புக்கொடுத்தேன்;
அவன் தனக்கு இஷ்டமானபடி அதற்குச்
செய்வான்; அதினுடைய அக்கிரமத்தினிமித்
12 தம் அதைத் தள்ளிப்போட்டேன். ஜாதிகளில்
வல்லவராகிய அந்நியதேசத்தார் அதை வெட்
டிப்போட்டு, விட்டுப் போனார்கள்; [2]அதின்
கொப்புகள் மலைகளின்மேலும் சகல பள்ளத்
தாக்குகளிலும் விழுந்தன; அதின் கிளைகள்
தேசத்தினுடைய எல்லா ஆறுகளினருகே
முறிந்தன; பூமியிலுள்ள ஜனங்களெல்லாரும்
அதின் நிழலைவிட்டுக் கலைந்துபோனார்கள்.
13 விழுந்துகிடக்கிற அதின்மேல் ஆகாயத்துப்
பறவைகளெல்லாம் தாபரித்தன; [3]அதின்
கொம்புகளின்மேல் வெளியின் மிருகங்களெல்
14 லாம் தங்கின. தண்ணீரின் ஓரமாய் வளரு
கிற எந்த விருட்சங்களும் தங்கள் உயர்த்தியினா
லே மேட்டிமைகொள்ளாமலும், தங்கள் கொப்
புகளின் தழைக்குள்ளே தங்கள் நுனிக்கிளை
யை ஓங்கவிடாமலும், தண்ணீரைக் குடிக்கிற
எந்த மரங்களும் தங்கள் உயர்த்தியினாலே தங்
கள்மேல் நம்பிக்கை வைக்காமலும் இருக்கும்
பொருட்டு இப்படிச் செய்வேன்; [4]மனுபுத்தி
ரரின் நடுவே அவர்கள் எல்லாரும் குழியில்
இறங்குகிறவர்களோடே கூட மரணத்துக்கு
ஒப்புக்கொடுக்கப்பட்டு, பூமியின் தாழ்விடங்
களில் போனார்கள்.
15 கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறது
என்னவென்றால்: அவன் பாதாளத்தில் இறங்
குகிற நாளிலே [5]புலம்பலை வருவித்தேன்;
நான் அவனிமித்தம் ஆழத்தை மூடிப்போட்டு,
திரளான தண்ணீர்கள் ஓடாதபடிக்கு அதின்
ஆறுகளை அடைத்து, அவனிமித்தம் லீபனோ
னை இருளடையப் பண்ணினேன்; வெளி
யின் விருட்சங்களெல்லாம் அவனிமித்தம் பட்
16 டுப்போயின. நான் அவனைக் குழியில் இற
ங்குகிறவர்களோடே கூடப் பாதாளத்தில்
இறங்கப்பண்ணுகையில், [6]அவன் விழுகிற
சத்தத்தினால் ஜாதிகளை அதிரப்பண்ணினேன்;
அப்பொழுது பூமியின் தாழ்விடங்களில் ஏதே
னின் விருட்சங்களும், லீபனோனின் மேன்
மையான சிறந்த விருட்சங்களும், தண்ணீர்
குடிக்கும் சகல மரங்களும் ஆறுதல் அடைந்
17 தன. அவனோடேகூட இவர்களும், [7]ஜாதி
களின் நடுவே அவன் நிழலில் குடியிருந்து
அவனுக்குப் புயபலமாயிருந்தவர்களும், பட்
டயத்தால் வெட்டுண்டவர்களண்டையிலே
பாதாளத்தில் இறங்கினார்கள்.
18 இப்படிப்பட்ட மகிமையிலும் மகத்துவத்தி
லும் ஏதேனின் விருட்சங்களில் நீ எதற்கு
ஒப்பானவன்? [8]ஏதேனின் விருட்சங்களோ
டேகூட நீயும் பூமியின் தாழ்விடங்களில் இற
க்கப்பட்டு, பட்டயத்தாலே வெட்டுண்டவர்
களோடேகூட விருத்தசேதனமில்லாதவர்க
ளின் நடுவிலே கிடப்பாய்; பார்வோனும்
அவன் கூட்டமும் இதுவே என்று கர்த்தரா
கிய ஆண்டவர் உரைக்கிறார் என்று சொல்
என்றார்.

32 பன்னிரண்டாம் வருஷம் பன்னிரண்
டாம் மாதம் முதலாந்தேதியிலே **கர்த்தரு
டைய** வார்த்தை எனக்கு உண்டாகி, அவர்:
மனுபுத்திரனே, [9]நீ எகிப்தின் ராஜாவாகிய 2
பார்வோனைக்குறித்துப் புலம்பி, அவனோடே
சொல்லவேண்டியது என்னவென்றால்: ஜாதி
களுக்குள்ளே [10]நீ பாலசிங்கத்துக்கு ஒப்பான
வன்; நீ பெருந்தண்ணீர்களில் முதலையைப்
போல் இருந்து, உன் நதிகளில் எழும்பி, உன்
கால்களால் தண்ணீர்களைக் கலக்கி, [11]அவைக
ளின் ஆறுகளைக் குழப்பிவிட்டாய். ஆகை 3
யால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்:
[12]நான் வெகுஜனக்கூட்டத்தைக்கொண்டு உன்
மேல் என் வலையை வீசுவேன்; அவர்கள் என்
வலையில் உன்னை இழுத்துக்கொள்வார்கள்.
உன்னைத் தரையிலே போட்டுவிடுவேன்; 4
[13]நான் உன்னை வெட்டவெளியில் எறிந்து
விட்டு, ஆகாயத்துப் பறவைகளையெல்லாம்
உன்மேல் இறங்கப்பண்ணி, பூமியனைத்தின்
மிருகங்களையும் உன்னால் திருப்தியாக்கி,
உன் சதையைப் பர்வதங்களின்மேல் போட் 5
டு, உன் உடலினாலே பள்ளத்தாக்குகளை நிர
ப்பி, நீ நீந்தின தேசத்தின்மேல் உன் இரத் 6
தத்தைப் பர்வதங்கள்மட்டும் பாயச்செய்வேன்;
[14]ஆறுகள் உன்னாலே நிரம்பும். உன்னை நான் 7
அணைத்துப்போடுகையில், வானத்தை மூடி,
அதின் நட்சத்திரங்களை இருண்டுபோகப்பண்
ணுவேன்; [15]சூரியனை மேகத்தினால் மூடுவே
ன், சந்திரனும் தன் ஒளியைக் கொடாதிருக்
கும். நான் வானஜோதியான விளக்குகளை 8
யெல்லாம் உன்மேல் இருண்டுபோகப்பண்
ணி, உன் தேசத்தின்மேல் அந்தகாரத்தை
வரப்பண்ணுவேன் என்று கர்த்தராகிய ஆண்
டவர் சொல்லுகிறார். உன் சங்காரத்தை ஜா 9
திகள்மட்டும், நீ அறியாத தேசங்கள்மட்டும்
நான் எட்டப்பண்ணுகையில், அநேகம் ஜனங்
களின் இருதயத்தை விசனமடையப்பண்ணு
வேன். அநேகம் ஜனங்களை உன்னிமித்தம் 10
திகைக்கப்பண்ணுவேன்; [16]அவர்களின் ரா
ஜாக்கள், [17]தங்கள் முகங்களுக்கு முன்பாக
என் பட்டயத்தை நான் வீசுகையில் மிகவும்
திடுக்கிடுவார்கள்; நீ விழும் நாளில் அவரவர்
தம்தம் பிராணனுக்காக நிமிஷந்தோறும் தத்த
ளிப்பார்கள். கர்த்தராகிய ஆண்டவர் சொல் 11
லுகிறது என்னவென்றால்: [18]பாபிலோன் ரா
ஜாவின் பட்டயம் உன்மேல் வரும். பராக் 12
கிரமசாலிகளின் பட்டயங்களால் உன் ஜனத்
திரளை விழப்பண்ணுவேன்; [19]அவர்களெல்லா
ரும் ஜாதிகளில் வல்லமையானவர்கள்; [20]அவர்
கள் எகிப்தின் ஆடம்பரத்தைக் கெடுப்பார்கள்;

1 தானி. 5. 20. மத். 23. 12
2 28. 7: 32. 4, 5
3 ஏசா. 18. 6
4 சங். 82. 7. தானி. 4. 32
5 வெளி. 18. 13
6 26. 15. ஏசா. 14. 15
7 புல. 4. 20
8 32. 19. 2 சாமு. 1. 20. எரே. 9. 25, 26
9 27. 2
10 19. 3, 6
11 34. 18
12 12. 13. பிர. 9. 12. ஓசி. 7. 12
13 யோவே. 3. 19.
14 யாத். 7. 17. வெளி. 16. 6
15 ஏசா. 13. 10. யோவே. 3. 15. மத். 24. 29
16 27. 35
17 உபா. 32. 41
18 எரே. 46. 24, 26
19 28. 7: 30. 4
20 சங். 82. 7

அதின் ஏராளமான கூட்டம் அழிக்கப்படும்.
13 திரளான தண்ணீர்களின் கரைகளில் நடமாடு
கிற அதின் மிருகஜீவன்களையெல்லாம் அழிப்
பேன்; [1]இனி மனுஷனுடைய கால் அவைக
ளைக் கலக்குவதுமில்லை, மிருகங்களுடைய
குளம்புகள் அவைகளைக் குழப்புவதுமில்லை.
14 அப்பொழுது அவர்களுடைய தண்ணீர்களைத்
தெளியப்பண்ணி, அவர்கள் ஆறுகளை எண்
ணெயைப்போல் ஓடப்பண்ணுவேன் என்று
15 கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். நான்
எகிப்துதேசத்தைப் பாழாக்கும்போதும், தே
சம் தன் நிறைவை இழந்து வெறுமையாய்க்
கிடக்கும்போதும், நான் அதில் குடியிருக்கிற
யாவரையும் சங்கரிக்கும்போதும், [2]நான் கர்த்
16 தர் என்று அறிந்துகொள்வார்கள். இது புலம்
பல்; [3]இப்படிப் புலம்புவார்கள்; இப்படி ஜாதி
களின் குமாரத்திகள் புலம்புவார்கள்; இப்படி
எகிப்துக்காகவும், அதினுடைய எல்லாத் திர
ளான ஜனங்களுக்காகவும் புலம்புவார்கள்
என்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார்
என்று சொல் என்றார்.
17 பின்னும் பன்னிரண்டாம் வருஷம் அந்த
மாதத்தின் பதினைந்தாந்தேதியிலே கர்த்தரு
டைய வார்த்தை எனக்கு உண்டாகி, அவர்:
18 மனுபுத்திரனே, நீ எகிப்தினுடைய ஏராள
மான ஜனத்தினிமித்தம் புலம்பி, [4]அவர்களை
யும் பிரபலமான ஜாதிகளின் குமாரத்திகளை
யும் குழியில் இறங்கினவர்கள் அண்டையி
லே பூமியின் தாழ்விடங்களில் தள்ளிவிடு.
19 மற்றவர்களைப்பார்க்கிலும் நீ அழகில் சிறந்தவ
ளோ? [5]நீ இறங்கி, விருத்தசேதனமில்லாதவர்
20 களிடத்தில் கிட. அவர்கள் பட்டயத்தால்
வெட்டுண்டவர்களின் நடுவிலே விழுவார்கள்;
பட்டயத்துக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கி
றார்கள்; அவளையும் அவளுடைய ஜனத்திரள்
21 யாவையும் பிடித்திழுங்கள். பராக்கிரமசாலி
களில் வல்லவர்களும், அவனுக்குத் துணை
நின்றவர்களும், [6]பாதாளத்தின் நடுவிலிருந்து
அவனோடே பேசுவார்கள்; அவர்கள் விருத்த
சேதனமில்லாதவர்களாய்ப் பட்டயத்தால் வெ
ட்டுண்டு, இறங்கி, அங்கே கிடக்கிறார்கள்.
22 அங்கே அசூரும் அவனுடைய எல்லாக் கூட்
டத்தாரும் கிடக்கிறார்கள்; அவனைச் சுற்றிலும்
அவர்களுடைய பிரேதக்குழிகள் இருக்கிறது;
அவர்கள் எல்லாரும் பட்டயத்தால் வெட்
23 டுண்டு விழுந்தவர்கள்தானே. பாதாளத்தின்
பக்கங்களில் அவர்களுடைய பிரேதக்குழிகள்
இருக்கிறது; [7]அவனுடைய பிரேதக்குழியைச்
சுற்றிலும் அவனுடைய கூட்டம் கிடக்கிறது;
ஜீவனுள்ளோருடைய தேசத்திலே கெடியுண்
டாக்கின அவர்களெல்லாரும் பட்டயத்தால்
24 வெட்டுண்டு விழுந்தவர்கள்தானே. அங்கே
ஏலாமும் அவனுடைய பிரேதக்குழியைச் சுற்
றிலும் [8]அவனுடைய எல்லா ஏராளமான ஜன
மும் கிடக்கிறார்கள்; அவர்களெல்லாரும் பட்
டயத்தால் வெட்டுண்டு விழுந்து, விருத்தசே
தனமில்லாதவர்களாய்ப் பூமியின் தாழ்விடங்
களில் இறங்கினார்கள்; ஜீவனுள்ளோருடைய
தேசத்திலே கெடியுண்டாக்கின அவர்கள்,
[9]குழியில் இறங்கினவர்களோடேகூடத் தங்
கள் அவமானத்தைச் சுமக்கிறார்கள். வெட் 25
டுண்டவர்களின் நடுவே அவனை அவனுடைய
எல்லா ஏராளமான ஜனத்துக்குள்ளும் கிடத்
தினார்கள்; அவனைச் சுற்றிலும் அவர்களுடைய
பிரேதக்குழிகள் இருக்கிறது; அவர்களெல்லா
ரும் பட்டயத்தால் வெட்டுண்ட விருத்தசே
தனமில்லாதவர்கள்; [10]ஜீவனுள்ளோருடைய
தேசத்திலே அவர்கள் கெடியுண்டாக்கினவர்
களாயிருந்தும், அவர்கள் குழியில் இறங்கின
வர்களோடேகூடத் தங்கள் அவமானத்தைச்
சுமக்கிறார்கள்; அவன் வெட்டுண்டவர்களின்
நடுவே வைக்கப்பட்டிருக்கிறான். அங்கே 26
மேசேக்கும் தூபாலும் அவர்களுடைய ஏராள
மான ஜனங்களும் கிடக்கிறார்கள்; [11]அவர்க
ளைச் சுற்றிலும் அவர்களுடைய பிரேதக்குழி
கள் இருக்கிறது; அவர்கள் ஜீவனுள்ளோரு
டைய தேசத்திலே கெடியுண்டாக்கினவர்க
ளாயிருந்தும், அவர்களெல்லாரும் விருத்தசே
தனமில்லாதவர்கள்; பட்டயத்தால் வெட்டு
ண்டு விழுவார்கள். ஜீவனுள்ளோருடைய 27
தேசத்திலே பராக்கிரமசாலிகளுக்குக் கெடி
யுண்டாக்குகிறவர்களா யிருந்தும், அவர்கள்
விருத்தசேதன மில்லாதவர்களாய் விழுந்து,
தங்கள் யுத்த ஆயுதங்களோடு பாதாளத்திலிறங்
கின பராக்கிரமசாலிகளோடே இவர்கள் கிட
ப்பதில்லை; [12]அவர்கள் தங்கள் பட்டயங்களைத்
தங்கள் தலைகளின்கீழ் வைத்தார்கள்; ஆனா
லும் அவர்களுடைய அக்கிரமம் தங்கள் எலும்
புகளின்மேல் இருக்கும். நீயும் விருத்த 28
சேதனமில்லாதவர்களின் நடுவே நொறுங்கு
ண்டு, பட்டயத்தால் வெட்டுண்டவர்களோ
டே கிடப்பாய். அங்கே ஏதோமும் [13]அதின் 29
ராஜாக்களும் அதின் எல்லாப் பிரபுக்களும்
கிடக்கிறார்கள்; பட்டயத்தால் வெட்டுண்ட
வர்களிடத்தில் இவர்கள் தங்கள் வல்ல
மையோடுங்கூடக் கிடத்தப்பட்டார்கள்;
இவர்கள் விருத்தசேதனமில்லாதவர்களிடத்தி
லும், குழியில் இறங்குகிறவர்களிடத்திலும்
கிடக்கிறார்கள். அங்கே வடதிசை அதிபதி 30
கள் அனைவரும் எல்லாச் சீதோனியரும் கிடக்
கிறார்கள்; [14]இவர்கள் கெடியுண்டாக்குகிறவர்
களா யிருந்தாலும் தங்கள் பராக்கிரமத்தைக்
குறித்து வெட்கப்பட்டு, வெட்டுண்டவர்களி
டத்தில் இறங்கி, பட்டயத்தால் வெட்டுண்ட
வர்களோடே விருத்தசேதனமில்லாதவர்களா
ய்க் கிடந்து, குழியில் இறங்கினவர்களிடத்
தில் தங்கள் அவமானத்தைச் சுமந்துகொண்
டிருக்கிறார்கள். பார்வோன் அவர்களைப் பார் 31
த்து, [15]தன் ஏராளமான ஜனத்தின்பேரிலும்
ஆறுதலடைவான்; பட்டயத்தால் வெட்டுண்
டார்களென்று, பார்வோனும் அவனுடைய
சர்வசேனையும் ஆறுதலடைவார்கள் என்று
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். என் 32
னைப்பற்றிய கெடியை ஜீவனுள்ளோர் தேசத்

[1] 29. 11
[2] யாத். 7. 5: 14. 4, 18
[3] 2 வச. 2 சாமு. 1. 17. 2 நாளா. 35. 25
[4] 31. 14
[5] 21, 24. வச
[6] ஏசா. 1. 31: 14. 9, 10
[7] ஏசா. 14. 15
[8] எரே. 49. 34 மு.
[9] எரே. 3. 24, 25. ஆப. 2. 16
[10] தா. 12. 4, 5
[11] 27. 13: 38. 2
[12] ஏசா. 14. 18, 19
[13] 25. 12
[14] 38. 6, 15. எரே. 1. 14
[15] 31. 16

தில் உண்டுபண்ணுகிறேன், [1]பார்வோனும்
அவனுடைய ஏராளமான ஜனமும் பட்டயத்
தால் வெட்டுண்டவர்களிடத்தில் விருத்தசேத
னமில்லாதவர்களின் நடுவே கிடத்தப்படுவார்
கள் என்கிறதைக் கர்த்தராகிய ஆண்டவர்
உரைக்கிறார் என்று சொல் என்றார்.

**33** கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்
2 டாகி, அவர்: மனுபுத்திரனே, நீ உன் ஜனத்
தின் புத்திரரோடே பேசி, அவர்களோடே
சொல்லவேண்டியதாவது: [2]நான் தேசத்தின்
மேல் பட்டயத்தை வரப்பண்ணுகையில்
தேசத்தின் ஜனம் தங்கள் எல்லைகளிலுள்ள
ஒருவனை அழைத்து, அவனைத் தங்களுக்குக்
3 காவல்காரனாக வைத்தபின்பு, இவன் தேசத்
தின்மேல் பட்டயம் வருவதைக் கண்டு, எக்
காளம் ஊதி, ஜனத்தை எச்சரிக்கும்போது,
4 எக்காளத்தின் சத்தத்தைக் கேட்கிறவன்
அதைக் கேட்டும், எச்சரிக்கையாயிராமல்,
பட்டயம் வந்து அவனை வாரிக்கொள்ளுகிறது
உண்டானால், [3]அவனுடைய இரத்தப்பழி
5 அவன் தலையின்மேல் சுமரும். அவன் எக்
காளத்தின் சத்தத்தைக் கேட்டும், எச்சரிக்
கையா யிருக்கவில்லை; [4]அவனுடைய இரத்தப்
பழி அவன்பேரிலே சுமரும்; எச்சரிக்கையா
யிருக்கிறவனோ தன் ஜீவனைத் தப்புவித்துக்
6 கொள்ளுவான். காவல்காரன் பட்டயம் வரு
வதைக் கண்டும், அவன் எக்காளம் ஊதாமலும்
ஜனங்கள் எச்சரிக்கப்படாமலும், பட்டயம் வந்
து அவர்களில் யாதொருவனை வாரிக்கொள்ளு
கிறது உண்டானால், அவன் தன் அக்கிரமத்
திலே வாரிக்கொள்ளப்பட்டான்; ஆனாலும்
அவன் இரத்தப்பழியைக் காவல்காரன் கை
7 யிலே கேட்பேன். மனுபுத்திரனே, நான்
உன்னை இஸ்ரவேல் வம்சத்தாருக்குக் காவல்
காரனாக வைத்தேன்; ஆகையால் நீ என் வாயி
னாலே வார்த்தையைக் கேட்டு, [5]என் நாமத்தி
8 னாலே அவர்களை எச்சரிப்பாயாக. நான்
துன்மார்க்கனை நோக்கி: துன்மார்க்கனே, நீ
சாகவே சாவாய் என்று சொல்லுகையில், நீ
துன்மார்க்கனைத் தன் துன்மார்க்கத்தில் இரா
தபடி எச்சரிக்கத்தக்கதாக அதை அவனுக்குச்
சொல்லாமற்போனால், அந்தத் துன்மார்க்கன்
தன் அக்கிரமத்திலே சாவான்; [6]ஆனாலும்
அவன் இரத்தப்பழியை உன் கையிலே கேட்
9 பேன். துன்மார்க்கன் தன் வழியைவிட்டுத்
திரும்பும்படி நீ அவனை எச்சரித்தும், அவன்
தன் வழியைவிட்டுத் திரும்பாமற்போனால்,
அவன் தன் அக்கிரமத்திலே சாவான்; [7]நீயோ
உன் ஆத்துமாவைத் தப்புவிப்பாய்.
10 மனுபுத்திரனே, நீ இஸ்ரவேல் வம்சத்தா
ரை நோக்கி: எங்கள் துரோகங்களும் எங்கள்
பாவங்களும் எங்கள்மேல் இருக்கிறது, நாங்
கள் சோர்ந்து போகிறோம், [8]நாங்கள் பிழைப்
பது எப்படியென்று நீங்கள் சொல்லுகிறீர்கள்.
11 கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறது என்ன
வென்றால்: [9]நான் துன்மார்க்கனுடைய மர
ணத்தை விரும்பாமல், துன்மார்க்கன் தன்
வழியைவிட்டுத் திரும்பிப் பிழைப்பதையே
விரும்புகிறேன் என்று என் ஜீவனைக்கொ
ண்டு சொல்லுகிறேன்; இஸ்ரவேல் வம்சத்
தாரே, உங்கள் பொல்லாத வழிகளைவிட்டுத்
திரும்புங்கள், திரும்புங்கள்; நீங்கள் ஏன் சாக
வேண்டும் என்கிறார் என்று அவர்களோடே
சொல்லு. மனுபுத்திரனே, நீ உன் ஜனத்தின் 12
புத்திரரை நோக்கி: நீதிமான் துரோகம் பண்
ணுகிறநாளிலே அவனுடைய நீதி அவனைத்
தப்புவிப்பதில்லை; துன்மார்க்கன் தன் துன்மார்
க்கத்தைவிட்டுத் திரும்புகிற நாளிலே அவன்
தன் அக்கிரமத்தினால் விழுந்துபோவதுமில்
லை; [10]நீதிமான் பாவஞ்செய்கிற நாளிலே தன்
நீதியினால் பிழைப்பதுமில்லை. பிழைக்கவே 13
பிழைப்பாய் என்று நான் நீதிமானுக்குச்
சொல்லும்போது, [11]அவன் தன் நீதியை நம்பி,
அநியாயஞ்செய்தால் அவனுடைய நீதியில்
ஒன்றும் நினைக்கப்படுவதில்லை; அவன் செய்த
தன் அநியாயத்திலே சாவான். பின்னும் 14
சாகவே சாவாய் என்று நான் துன்மார்க்கனுக்
குச் சொல்லும்போது, அவன் தன் பாவத்
தைவிட்டுத் திரும்பி, [12]நியாயமும் நீதியுஞ்
செய்து, துன்மார்க்கன் தான் வாங்கின அடை 15
மானத்தையும் தான் கொள்ளையிட்ட பொரு
ளையும் திரும்பக் கொடுத்துவிட்டு, [13]அநியாயம்
செய்யாதபடி [14]ஜீவப்பிரமாணங்களில் நடந்
தால், அவன் சாகாமல் பிழைக்கவே பிழைப்
பான். அவன் செய்த அவனுடைய எல்லாப் 16
பாவங்களும் அவனுக்கு விரோதமாக நினைக்
கப்படுவதில்லை; அவன் நியாயமும் நீதியும்
செய்தான்; பிழைக்கவே பிழைப்பான் என்று
சொல்லு. உன் ஜனத்தின் புத்திரரோ, ஆண் 17
டவருடைய வழி செம்மையானதல்ல என்கி
றார்கள்; [15]அவர்களுடைய வழியே செம்மை
யானதல்ல. நீதிமான் தன் நீதியைவிட்டுத் 18
திரும்பி, [16]அநியாயஞ் செய்தால், அவன் அதி
னால் சாவான். துன்மார்க்கன் தன் அக்கிர 19
மத்தைவிட்டுத் திரும்பி, நியாயமும் நீதியும்
செய்தால், அவன் அவைகளினால் பிழைப்
பான். நீங்களோ, ஆண்டவருடைய வழி 20
செம்மையானதல்ல என்கிறீர்கள், [17]இஸ்ர
வேல் வீட்டாரே, நான் உங்களில் ஒவ்வொரு
வனையும் அவனவன் வழிகளின்படியே நியா
யந் தீர்ப்பேன் என்று சொல் என்றார்.
எங்கள் சிறையிருப்பின் பன்னிரண்டாம் 21
வருஷம் பத்தாம் மாதம் ஐந்தாந்தேதியிலே
எருசலேமிலிருந்து தப்பின ஒருவன் என்னி
டத்தில் வந்து: [18]நகரம் அழிக்கப்பட்டது என்
றான். தப்பினவன் வருகிறதற்கு முந்தின 22
சாயங்காலத்திலே கர்த்தருடைய கை என்
மேல் அமர்ந்து, அவன் காலையில் என்னிடத்
தில் வருமட்டும் என் வாயைத் திறந்திருக்கப்
பண்ணிற்று; என் வாய் திறக்கப்பட்டது,
பின்பு நான் மௌனமாயிருக்கவில்லை. அப் 23
பொழுது கர்த்தருடைய வார்த்தை எனக்கு
உண்டாகி, அவர்: மனுபுத்திரனே, இஸ்ர 24
வேல் தேசத்தின் பாழான இடங்களிலுள்ள

1 ஆதி. 35. 5. யோபு 31. 23. 2 கொ. 5. 11
2 14. 17. 2 சாமு. 18. 24. 2 இரா. 9. 17. ஓசி. 9. 8
3 18. 13
4 சங். 95. 7, 8. எபி. 2. 1–4
5 3. 17. ஆ. 2 ஏசா. 9. 10. கொலோ. 1. 28
6 எரே. 7. 9, 10: 8. 13. சக. 2. 17
7 நீதி. 15. 10. யோவா. 8. 24. அப். 20. 26
8 24. 23: 37. 11. சங். 130. 7. ஏசா. 49. 17
9 2 சாமு. 14. 14. புல. 3. 33. ஓசி. 11. 8. 2 பே. 3. 9
10 2 நாளா. 7. 14. ரோ. 3. 25. 1 யோ. 2. 1
11 ரோ. 10. 3. பிலி. 3. 9
12 நீதி. 28. 18. அப். 3. 19, 20
13 18. 7. யாத். 22. 1, 4. லேவி. 6. 2. 5. லூக். 19. 8
14 லேவி. 18. 5. சங். 119. 93
15 18. 25. 29
16 எபி. 10. 38
17 நீதி. 19. 3. 2 கொ. 5. 10. வெளி. 20. 13
18 24. 26, 27. 2 இரா. 25. 4

குடிகள்: [1]ஆபிரகாம் ஒருவனாயிருந்து, தேசத்
தைச் சுதந்தரித்துக் கொண்டான்; நாங்கள்
அநேகராயிருக்கிறோம், எங்களுக்கு இந்த
தேசம் சுதந்தரமாகக் கொடுக்கப்பட்டது என்று
25 சொல்லுகிறார்கள். ஆகையால், நீ அவர்களை
நோக்கி: நீங்கள் இரத்தத்தோடே கூடியதைத்
தின்று, உங்கள் நரகலான விக்கிரகங்களுக்கு
நேராக உங்கள் கண்களை ஏறெடுத்து, இரத்
தத்தைச் சிந்தியிருக்கிறீர்கள், [2]நீங்கள் தேசத்
26 தைச் சுதந்தரித்துக் கொள்வீர்களோ? நீங்கள்
உங்கள் பட்டயத்தை நம்பிக்கொண்டு, அருவ
ருப்பானதைச் செய்து, உங்களில் அவனவன்
தன்தன் அயலான் மனைவியைத் தீட்டுப்படுத்
துகிறீர்கள்; [3]நீங்கள் தேசத்தைச் சுதந்தரித்
துக்கொள்வீர்களோ என்று கர்த்தராகிய ஆண்
27 டவர் உரைக்கிறார் என்று சொல்லு. நீ அவர்
களை நோக்கி: பாழான இடங்களில் இருக்கிற
வர்கள் பட்டயத்தால் விழுவார்கள்; வெளிக
ளில் இருக்கிறவனை மிருகங்களுக்கு இரை
யாக ஒப்புக்கொடுப்பேன்; கோட்டைகளிலும்
கெபிகளிலும் இருக்கிறவர்கள் கொள்ளைநோ
28 யால் சாவார்கள். நான் தேசத்தைப் பாழும்
அவாந்தரமுமாக்குவேன்; [4]அப்பொழுது அதி
னுடைய பெலத்தின் பெருமை ஒழிந்துபோ
கும்; அப்பொழுது இஸ்ரவேலின் மலைகள்
கடந்துபோவாரில்லாமல் அவாந்தரமாய்க் கிட
29 க்கும். அவர்கள் செய்த அவர்களுடைய எல்
லா அருவருப்புகளினிமித்தமும் நான் தேசத்
தைப் பாழும் அவாந்தரமுமாக்கும்போது,
நான் **கர்த்தர்** என்று அறிந்துகொள்வார்கள்,
இதை என் ஜீவனைக்கொண்டு சொல்லுகி
றேன் என்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்
30 கிறார் என்று சொல்லு. மேலும் மனுபுத்தி
ரனே, உன் ஜனத்தின் புத்திரர் சுவர் ஓரங்க
ளிலும் வீட்டுவாசல்களிலும் உன்னைக்குறித்
துப் பேசி, [5]**கர்த்தரிடத்திலிருந்து** புறப்பட்ட
வார்த்தை என்னவென்று கேட்போம் வாருங்
கள் என்று ஒருவரோடொருவரும் சகோதர
31 னோடே சகோதரனும் சொல்லி, ஜனங்கள்
கூடிவருகிற வழக்கத்தின்படி [6]உன்னிடத்
தில் வந்து, உனக்கு முன்பாக என் ஜனங்கள்
போல் உட்கார்ந்து, உன் வார்த்தைகளைக்
கேட்கிறார்கள்; ஆனாலும் அவர்கள் அவை
களின்படி செய்கிறதில்லை; அவர்கள் தங்
கள் வாயினாலே இன்பமாய்ப் பேசுகிறார்
கள், அவர்கள் இருதயமோ பொருளாசை
32 யைப் பின்பற்றிப்போகிறது. இதோ, நீ
இனிய குரலும் கீதவாத்தியம் வாசிப்பதில்
சாமர்த்தியமுமுடையவன் பாடும் இன்பமான
பாட்டுக்குச் சமானமாயிருக்கிறாய்; அவர்கள்
உன் வார்த்தைகளைக் கேட்கிறார்கள்; ஆனா
லும் அவைகளின்படி செய்யாமற்போகிறார்
33 கள். இதோ, அது வருகிறது, [7]அது வருகை
யில் தங்கள் நடுவிலே ஒரு தீர்க்கதரிசி இருந்
தான் என்று அறிந்துகொள்வார்கள் என்றார்.

**34** **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண்
2 டாகி, அவர்: மனுபுத்திரனே, இஸ்ரவேலின்
மேய்ப்பருக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம்
உரை; நீ தீர்க்கதரிசனம் உரைத்து, அவர்க
ளோடே சொல்லவேண்டியது என்னவென்
றால்: கர்த்தராகிய ஆண்டவர் மேய்ப்பருக்குச்
சொல்லுகிறார்; [8]தங்களையே மேய்க்கிற இஸ்ர
வேலின் மேய்ப்பருக்கு ஐயோ! மேய்ப்பர்
அல்லவா மந்தையை மேய்க்கவேண்டும். நீங் 3
கள் நெய்யைச் சாப்பிட்டு, ஆட்டுமயிரை உடு
ப்பாக்கிக்கொள்ளுகிறீர்கள்; கொழுத்ததை
அடிக்கிறீர்கள்; [9]மந்தையையோ மேய்க்காமற்
போகிறீர்கள். நீங்கள் பலவீனமானவைக 4
ளைப் பலப்படுத்தாமலும், [10]நசல்கொண்டவை
களைக் குணமாக்காமலும், எலும்புமுறிந்தவை
களைக் காயங்கட்டாமலும், துரத்துண்டவை
களைத் திருப்பிக்கொண்டுவாராமலும், [11]காணா
மற்போனவைகளைத்தேடாமலும்போய், [12]பலா
த்காரமும் கடூரமுமாய் அவைகளை ஆண்டீர்
கள். மேய்ப்பன் இல்லாததினால் அவைகள் 5
சிதறுண்டுபோயின; [13]சிதறுண்டுபோனவை
கள் காட்டு மிருகங்களுக்கெல்லாம் இரையா
யின. என் ஆடுகள் சகல மலைகளிலும் உயர 6
மான சகல மேடுகளிலும் அலைப்புண்டு, பூமி
யின்மீதெங்கும் என் ஆடுகள் சிதறித் திரிகி
றது; [14]விசாரிக்கிறவனுமில்லை, தேடுகிறவனு
மில்லை. ஆகையால் மேய்ப்பரே, **கர்த்தரு** 7
**டைய** வார்த்தையைக் கேளுங்கள். கர்த்தரா 8
கிய ஆண்டவராயிருக்கிற நான் என் ஜீவனைக்
கொண்டு சொல்லுகிறேன்; மேய்ப்பன் இல்
லாததினால் என் ஆடுகள் சூறையாகி, என் ஆடு
கள் காட்டுமிருகங்களுக்கெல்லாம் இரையாய்ப்
போயின; [15]என் மேய்ப்பர்கள் என் ஆடுகளை
விசாரியாமற்போனார்கள், மேய்ப்பர்கள் மந்
தையை மேய்க்காமல் தங்களையே மேய்த்தார்
கள். ஆகையால் மேய்ப்பரே, **கர்த்தருடைய** 9
வார்த்தையைக் கேளுங்கள். கர்த்தராகிய ஆ 10
ண்டவர் சொல்லுகிறார்; இதோ, நான் மேய்ப்
பருக்கு விரோதமாக வந்து, என் ஆடுகளை
அவர்கள் கையிலே கேட்டு, [16]மேய்ப்பர்
இனித் தங்களையே மேய்க்காதபடி, மந்தை
யை மேய்க்கும் தொழிலைவிட்டு அவர்களை
விலக்கி, என் ஆடுகள் அவர்களுக்கு ஆகார
மாயிராதபடி, அவைகளை அவர்கள் வாய்க்குத்
தப்பப்பண்ணுவேன் என்று சொல்லு. கர்த்த 11
ராகிய ஆண்டவர் சொல்லுகிறது என்னவென்
றால்: இதோ, நான் நானே என் ஆடுகளை
விசாரித்து, [17]அவைகளைத் தேடிப்பார்ப்பேன்.
ஒரு மேய்ப்பன் சிதறுண்ட தன் ஆடுகளின் 12
நடுவே இருக்கிற நாளில் தன் மந்தையைத்
தேடிக்கொண்டிருக்கிறதுபோல, நான் என்
ஆடுகளைத் தேடி, [18]மப்பும் மந்தாரமுமான நா
ளிலே அவைகள் சிதறுண்டுபோன எல்லா
இடங்களிலுமிருந்து அவைகளைத் தப்பிவரப்
பண்ணி, அவைகளை ஜனங்களிடத்திலிருந்து 13
புறப்படவும் தேசங்களிலிருந்து சேரவும்
பண்ணி, அவைகளுடைய சுயதேசத்திலே
அவைகளைக் கொண்டுவந்து, [19]இஸ்ரவேல்
மலைகளின்மேலும் ஆறுகள் அண்டையிலும்

1 ஏசா. 51. 2. யோ 8. 39
2 ஆதி. 9. 4, லேவி. 3. 17. எரே. 7. 9, 10
3 18. 6; 22. 11
4 எரே. 44. 2. ஓ
5 ஏசா. 29. 13
6 14. 1; 20. 1. ஏசா. 29. 13. மத். 13. 22
7 1 சாமு. 3. 19, 20
8 எரே. 23. 1. சகரி. 11. 16, 17
9 ஏசா. 56. 11. மீகா 3. 1-3
10 எரே. 8. 22. எபி. 12. 12
11 லூ. 15. 4
12 1 பே. 5. 2, 3
13 எரே. 12. 9. சகரி. 10. 2, 3. மத். 9. 36. யோ. 10. 12
14 யோ. 10. 16. 1 பே. 2. 15
15 அப். 20. 33. 1 கொ. 9. 15
16 3. 18, 20. எபி. 13. 17
17 சங். 119. 176. லூ. 19. 10
18 ஏசா. 50. 10. யோவே. 2. 1-3
19 ஏசா. 65. 9, 10. எரே. 23. 3, 4

தேசத்தின் சகல வாசஸ்தலங்களிலும் அவை
14 களை மேய்ப்பேன். அவைகளை நல்ல மேய்ச்
சலிலே மேய்ப்பேன்; [1]இஸ்ரவேலுடைய
உயர்ந்த மலைகளில் அவைகளுடைய தொழு
வம் இருக்கும்; அங்கே அவைகள் நல்ல தொ
ழுவத்தில் படுத்துக்கொள்ளும், இஸ்ரவேலின்
15 மலைகள்மேல் நல்ல மேய்ச்சலை மேயும். என்
ஆடுகளை நான் மேய்த்து, [2]அவைகளை நான்
மடக்குவேன் என்று கர்த்தராகிய ஆண்டவர்
16 சொல்லுகிறார். நான் காணமற்போனதைத்
தேடி, [3]துரத்துண்டதைத் திரும்பக் கொண்
டுவந்து, எலும்பு முறிந்ததைக் காயங்கட்டி,
நசல்கொண்டதைத் திடப்படுத்துவேன்;[4]நியா
யத்துக்குத் தக்கதாய் அவைகளை மேய்த்து,
புஷ்டியும் பெலமுமுள்ளவைகளை அழிப்
17 பேன். என் மந்தையே, கர்த்தராகிய ஆண்
டவர் சொல்லுகிறது என்னவென்றால்:
இதோ, ஆட்டுக்கும் ஆட்டுக்கும், [5]ஆட்டுக்க
டாக்களுக்கும் வெள்ளாட்டுக்கடாக்களுக்கும்
18 நான் நியாயந்தீர்ப்பேன். நீங்கள் நல்ல மேய்ச்
சலை மேய்ந்து, உங்கள் மேய்ச்சல்களில் மீதி
யானதை உங்கள் கால்களால் மிதிக்கலாமா?
[6]தெளிந்த தண்ணீரைக் குடித்து, மீதியாயிரு
க்கிறதை உங்கள் கால்களால் குழப்பிப் போட
19 லாமா? என் ஆடுகள் உங்கள் கால்களால்
மிதிக்கப்பட்டதை மேயவும், உங்கள் கால்க
ளால் குழப்பப்பட்டதைக் குடிக்கவும் வேண்
டுமோ?
20 ஆகையால், கர்த்தராகிய ஆண்டவர் அவை
களை நோக்கி: இதோ, நான், நானே கொழுத்த
ஆடுகளுக்கும் இளைத்த ஆடுகளுக்கும் நியா
21 யந்தீர்ப்பேன். நீங்கள் பலவீனமாயிருக்கிற
வைகளையெல்லாம் புறம்பாக்கிச் சிதறப்பண்
ணும்படி, அவைகளைப் பக்கத்தினாலும் முன்
னந்தொடையினாலும் தள்ளி [7]உங்கள் கொம்பு
22 களைக்கொண்டு முட்டுகிறபடியினாலே, நான்
என் ஆடுகளை இனிச் சூறையாகாதபடிக்கு
ரட்சித்து, ஆடுகளுக்கும் ஆடுகளுக்கும் நியா
23 யந்தீர்ப்பேன். அவர்களை மேய்க்கும்படி என்
தாசனாகிய தாவீது என்னும் ஒரே மேய்ப்பனை
நான் அவர்கள்மேல் விசாரிப்பாயிருக்க ஏற்ப
டுத்துவேன்; [8]இவர் அவர்களை மேய்த்து, இவ
24 ரே அவர்களுக்கு மேய்ப்பனாயிருப்பார். **கர்த்
தராகிய** நான் அவர்களுக்கு தேவனாக இருப்
பேன், [9]என் தாசனாகிய தாவீது அவர்கள் நடு
வில் அதிபதியாயிருப்பார்; **கர்த்தராகிய** நான்
25 இதைச் சொன்னேன். நான் அவர்களோடு
சமாதான உடன்படிக்கை செய்து, [10]துஷ்ட
மிருகங்களை தேசத்தில் இராதபடிக்கு ஒழியப்
பண்ணுவேன்; அவர்கள் சுகமாய் வனாந்தரத்
தில் தாபரித்து, காடுகளில் நித்திரைபண்ணு
26 வார்கள். நான் அவர்களையும் என் மேட்டின்
சுற்றுப்புறங்களையும் ஆசீர்வாதமாக்கி, [11]ஏற்ற
காலத்திலே மழையைப் பெய்யப்பண்ணு
27 வேன்; ஆசீர்வாதமான மழை பெய்யும். வெ
ளியின் விருட்சங்கள் தங்கள் கனியைத் தரும்;
பூமி தன் பலனைக் கொடுக்கும்; அவர்கள் தங்
கள் தேசத்தில் சுகமாயிருப்பார்கள்; [12]நான்
அவர்கள் நுகத்தின் கயிறுகளை அறுத்து, அவர்
களை அடிமை கொண்டவர்களின் கைக்கு
அவர்களை நீங்கலாக்கி விடுவிக்கும்போது,
நான் **கர்த்தர்** என்று அறிந்துகொள்வார்கள்.
இனி அவர்கள் புறஜாதிகளுக்குக் கொள்ளை 28
யாவதில்லை; [13]பூமியின் மிருகங்கள் அவர்க
ளைப் பட்சிப்பதுமில்லை; தத்தளிக்கப்பண்ணு
வார் இல்லாமல் சுகமாய்த் தங்குவார்கள். நான் 29
அவர்களுக்குக் கீர்த்திபொருந்திய [14]ஒரு நாற்
றை எழும்பப்பண்ணுவேன்; அவர்கள் இனி
தேசத்திலே பஞ்சத்தால் வாரிக்கொள்ளப்படு
வதுமில்லை, இனிப் புறஜாதிகள் செய்யும்
அவமானத்தைச் சுமப்பதுமில்லை. தங்கள் 30
தேவனாகிய **கர்த்தராயிருக்கிற** நான் தங்களோ
டே இருக்கிறதையும், இஸ்ரவேல் வம்சத்தா
ராகிய தாங்கள் என் ஜனமாயிருக்கிறதையும்,
அவர்கள் அறிந்துகொள்வார்களென்று கர்த்த
ராகிய ஆண்டவர் சொல்லுகிறார். என் மந் 31
தையும் என் மேய்ச்சலின் ஆடுகளுமாகிய நீங்
கள் மனுஷர்; [15]நான் உங்கள் தேவன் என்று
கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார் என்று
சொல் என்றார்.

**கர்த்தருடைய** வார்த்தை எனக்கு உண் **35**
டாகி, அவர்: மனுபுத்திரனே, [16]நீ உன் முகத் 2
தை சேயீர்மலைக்கு நேராகத் திருப்பி அத
ற்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம் உரைத்து,
அதற்குச் சொல்லவேண்டியது என்னவென் 3
றால்: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார்,
சேயீர்மலையே, இதோ, நான் உனக்கு விரோ
தமாக வந்து, என் கையை உனக்கு விரோத
மாக நீட்டி, உன்னைப் பாழும் அவாந்தர வெ
ளியுமாக்குவேன். உன் பட்டணங்களை வனாந் 4
தரமாக்கிப் போடுவேன்; நீ பாழாய்ப்போ
வாய்; நான் **கர்த்தர்** என்று அறிந்துகொள்
வாய். நீ பழைய பகையை வைத்து, இஸ்ர 5
வேல் புத்திரருடைய அக்கிரமம் நிறைவேறு
கையில் அவர்களுக்கு உண்டான ஆபத்தின்
காலத்திலே பட்டயத்தின் கூர்மையினால்
அவர்களுடைய இரத்தத்தைச் சிந்தினபடி
யால், நான் இரத்தப்பழிக்கு உன்னை ஒப்புவிப் 6
பேன்; இரத்தப்பழி உன்னைப் பின்தொடரும்
என்று கர்த்தராகிய ஆண்டவராயிருக்கிற நான்
என் ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேன்;
[17]நீ இரத்தத்தை வெறுக்காதபடியினால் இரத்
தம் உன்னைப் பின்தொடரும். நான் சேயீர் 7
மலையைப் பாழும் அவாந்தர இடமுமாக்கி,
[18]அதிலே போக்குவரவு செய்வார் இல்லாத
படி சங்காரஞ் செய்து, அதின் மலைகளைக் 8
கொலையுண்டவர்களாலே நிரப்புவேன்;[19]உன்
மேடுகளிலும் உன் பள்ளத்தாக்குகளிலும்
உன் எல்லா ஆறுகளிலும் பட்டயத்தால் வெட்
டுண்டவர்கள் விழுவார்கள். நீ என்றைக்கும் 9
அவாந்தர வெளியாயிருக்கும்படி செய்வேன்;
[20]உன் பட்டணங்கள் குடியேற்றப்படுவதில்லை;
அப்பொழுது நான் **கர்த்தர்** என்று அறிந்து
கொள்வார்கள். இரண்டு ஜாதிகளும் இரண்டு 10

1 சங். 23. 1, 2. ஏசா. 40. 11. எரே. 33. 12
2 எரே. 3. 15. யோ. 21. 15
3 ஏசா. 40. 11. மீகா 4. 6. மத். 18. 11-14. மாற். 2. 17. லூக். 5. 32
4 எரே. 10. 24. மீகா 7. 14
5 மத். 25. 32, 33
6 லூ. 11. 52
7 லூ. 13. 14-16
8 ஏசா. 40. 11. எரே. 23. 4, 5. யோ. 10. 11. எபி. 13. 20
9 யாத். 29. 45. ஏசா. 43. 2, 3. லூ. 1. 32, 33. வெளி. 21. 3
10 37. 26. ஏசா. 35. 9. எரே. 23. 6
11 சங். 133. 3. சகரி. 8. 13
12 லேவி. 26. 4. ஏசா. 4. 2
13 எரே. 30. 10
14 ஏசா. 11. 1. பு. எரே. 23. 5
15 சங். 100. 3. லூ. 12. 32. யோ. 10. 11
16 உபா. 2. 5. எரே. 49. 7. பு. ஆமோ. 1. 11, 12. ஒபதி. 10. பு
17 21. 25, 29. சங். 109. 17
18 கிய. 5. 6, 7
19 32. 5
20 மல். 1. 3, 4.

தேசங்களும் கர்த்தர் வசமாயிருந்தும், அவை
கள் என்னுடையவைகளாகும், [1]நான் அவை
களைச் சுதந்தரித்துக்கொள்ளுவேன் என்று
11 நீ சொல்லுகிறபடியினால், நீ அவர்கள்மேல்
வைத்த வர்மத்தினால் செய்த உன் கோபத்துக்
குத் தக்கதாகவும், [2]உன் பொறாமைக்குத் தக்க
தாகவும் நான் செய்து, கர்த்தராகிய ஆண்ட
வராயிருக்கிற நான் உன்னை நியாயந்தீர்க்கும்
போது, என்னை அவர்களுக்குள் அதினால்
அறியப்பண்ணுவேன் என்று என் ஜீவனைக்
12 கொண்டு சொல்லுகிறேன். இஸ்ரவேலின்
மலைகள் பாழாக்கப்பட்டு எங்களுக்கு இரை
யாகக் கொடுக்கப்பட்டது என்று, [3]நீ அவை
களுக்கு விரோதமாய்ச் சொன்ன உன் நிந்
தனைகளையெல்லாம் கர்த்தராகிய நான் கேட்
டேன் என்று அப்பொழுது அறிந்துகொள்
13 வாய். நீங்கள் உங்கள் வாயினால் எனக்கு
விரோதமாகப் பெருமைபாராட்டி, [4]எனக்கு
விரோதமாக உங்கள் வார்த்தைகளைப் பெருகப்
பண்ணினீர்கள்; அதை நான் கேட்டேன்.
14 பூமியெல்லாம் மகிழும்போது [5]நான் உன்
னைப் பாழாயிருக்கும்படி செய்வேன் என்று
15 கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். இஸ்ர
வேல் வம்சத்தாரின் சுதந்தரம் பாழாய்ப்போ
னதைக் கண்டு மகிழ்ந்தாயே, உனக்கும் அப்
படியே சம்பவிக்கச் செய்வேன்; [6]சேயீர்
மலையே, ஏதோமே, நீ முழுதும் பாழா
வாய்; அதினால் நான் கர்த்தர் என்று அறிந்து
கொள்வார்களென்று உரைத்தார் என்று
சொல்லு.

36 மனுபுத்திரனே, [7]நீ இஸ்ரவேல் மலைகளை
நோக்கித் தீர்க்கதரிசனம் உரைத்து, சொல்ல
வேண்டியது என்னவென்றால்: இஸ்ரவேல்
மலைகளே, கர்த்தருடைய வார்த்தையைக் கே
2 ளுங்கள். கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கி
றார்; [8]பகைஞன் உங்களைக்குறித்து ஆ ஆ,
நித்திய மேடுகள் எங்கள் வசமாயிற்று என்று
3 சொல்லுகிறபடியினால், நீ தீர்க்கதரிசனம்
உரைத்துச் சொல்லவேண்டியது என்னவென்
றால்: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார்,
நீங்கள் புறஜாதிகளில் மீதியானவர்களுக்குச்
சுதந்தரமா யிருக்கும்படி அவர்கள் உங்களைப்
பாழாக்கி, [9]உங்களைச் சுற்றிலுமிருந்து விழுங்
கினபடியினாலும், நீங்கள் வாயாடிகளுக்குப்
பேச்சும் ஜனங்களுக்கு அவதூறுமானவர்களா
4 னபடியினாலும், இஸ்ரவேல் மலைகளே, நீங்
கள் கர்த்தராகிய ஆண்டவருடைய வார்த்தை
யைக் கேளுங்கள்; மலைகளுக்கும், மேடுகளுக்
கும், ஆறுகளுக்கும், பள்ளத்தாக்குகளுக்கும்,
பாழாக்கப்பட்ட அவாந்தர இடங்களுக்கும்,
வெறுமையாய் விடப்பட்ட பட்டணங்களுக்
கும் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்:
[10]உங்களைச் சுற்றிலும் மீதியான புறஜாதிகளு
க்கு நீங்கள் கொள்ளையும் பரியாசமுமாய்ப்
5 போனபடியினால், கர்த்தராகிய ஆண்டவர்
சொல்லுகிறார்: என் தேசத்தைக் கொள்ளை
யிடப்பட்ட வெளியாக்கும்படிக்கு அதை

முழு இருதயத்தின் சந்தோஷத்தோடும் கர்வ
மான மனதோடும் தங்களுக்குச் சுதந்தரமாக
நியமித்துக்கொண்ட புறஜாதிகளில் மீதியா
னவர்களுக்கு விரோதமாகவும் ஏதோம்
அனைத்துக்கும் விரோதமாகவும், [11]என் அக்
கினியான எரிச்சலினால் பேசினேன்
என்று நிச்சயமாய்ச் சொல்லுகிறேன். ஆகை 6
யால், நீ இஸ்ரவேல் தேசத்தைக்குறித்துத்
தீர்க்கதரிசனம் உரைத்து, மலைகளுக்கும்,
மேடுகளுக்கும், ஆறுகளுக்கும், பள்ளத்தாக்கு
களுக்கும் சொல்லவேண்டியது என்னவென்
றால்: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார்,
இதோ, [12]நீங்கள் புறஜாதிகள் செய்யும் அவ
மானத்தைச் சுமந்தபடியினால் நான் என் எரிச்
சலினாலும் என் உக்கிரத்தினாலும் பேசினேன்.
ஆதலால், கர்த்தராகிய ஆண்டவராயிருக்கிற 7
[13]நான் என் கரத்தை உயர்த்துவேன், உங்க
ளைச் சுற்றிலும் இருக்கிற புறஜாதிகள் தங்க
ளுடைய அவமானத்தை நிச்சயமாய்ச் சுமப்
பார்கள் என்று சொல்லுகிறேன். இஸ்ர 8
வேல் மலைகளே, [14]நீங்கள் உங்கள் கொப்பு
களை விட்டு, என் ஜனமாகிய இஸ்ரவேலுக்கு
உங்கள் கனிகளைக் கொடுப்பீர்கள்; அவர்கள்
சமீபமாய் வந்துவிட்டார்கள். இதோ, நான் 9
உங்கள் பட்சத்திலிருந்து, உங்களைக் கண்
ணோக்குவேன்; [15]நீங்கள் பண்படுத்தப்பட்டு
விதைக்கப்படுவீர்கள். நான் உங்கள்மேல் 10
இஸ்ரவேல் வம்சமாகிய மனுஷர் யாவரை
யும் வர்த்திக்கப்பண்ணுவேன்; பட்டணங்கள்
குடியேற்றப்படும், [16]அவாந்தரமான ஸ்தலங்
கள் கட்டப்படும். உங்கள்மேல் மனுஷரையும் 11
மிருகஜீவன்களையும் [17]பெருகிப் பலுகும்படி
வர்த்திக்கப் பண்ணுவேன்; பூர்வநாட்களில்
நீங்கள் இருந்த நிலைமையில் நான் உங்களை
ஸ்தாபித்து, உங்கள் முந்தின சீரைப்பார்க்கி
லும் உங்களுக்கு நற்சீர் உண்டாகச்செய்வேன்;
[18]அதினால் நான் கர்த்தர் என்று அறிந்துகொள்
வீர்கள். நான் உங்கள்மேல் என் ஜனமாகிய 12
இஸ்ரவேலின் மனுஷரை நடமாடப்பண்ணு
வேன்; [19]அவர்கள் உன்னைக் கையாளுவார்கள்;
அவர்களுக்குச் சுதந்தரமாயிருப்பாய்; [20]நீ இனி
மேல் அவர்களைச் சாகக் கொடுப்பதில்லை.
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறது என்ன 13
வென்றால், ஜனங்கள் உன்னைப் பார்த்து:
[21]நீ மனுஷரைப் பட்சிக்கிற தேசமென்றும், நீ
உன் ஜனங்களைச் சாகக்கொடுக்கிற தேசமென்
றும் சொல்லுகிறபடியினால், நீ இனிமேல் 14
மனுஷரைப் பட்சிப்பதுமில்லை, இனிமேல்
உன் ஜனங்களைச் சாகக்கொடுப்பதுமில்லை
என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.
நான் இனிமேல் புறஜாதிகள் செய்யும் [22]அவ 15
மானத்தை உன்னிடத்திலே கேட்கப்பண்ணு
வதுமில்லை, நீ ஜனங்களின் நிந்தையை இனி
மேல் சுமப்பதுமில்லை; நீ இனிமேல் உன்
ஜாதிகளைச் சாகக் கொடுப்பதுமில்லையென்று
கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார் என்று
சொல் என்றார்.

1 சங். 48. 1-3: 132. 13
2 மத். 7. 2. யாக். 2. 13
3 சங். 9. 16: 94. 9, 10
4 1 சாமு. 2. 3. சங். 73. 8, 9. வெளி. 13. 6
5 ஏசா. 65. 13, 14
6 ஒபதி. 12, 15. வச
7 6. 2, 3
8 25. 3: 26. 2: 35. 10. உபா. 32. 13
9 உபா. 28. 37. சங். 79. 10. தானி. 9. 16
10 சங். 79. 4. எரே. 25. 9-13: 29. 10
11 35. 10, 12. உபா. 4. 24. ஏசா. 34. 5, 6
12 சங். 123. 3, 4
13 20. 5
14 ஆமோ. 9. 13, 14
15 சங். 99. 8
16 ஏசா. 58. 12: 61. 4
17 எரே. 31. 27: 33. 12
18 ஏசா. 52. 4
19 ஒபதி. 17. ஷ
20 எரே. 15. 7
21 எண். 13. 32
22 சங். 89. 50, 51. செப். 2. 8

16 பின்னும் கர்த்தருடைய வார்த்தை எனக்கு
17 உண்டாகி, அவர்: மனுபுத்திரனே, இஸ்ர
வேல் வம்சத்தார் தங்கள் சுயதேசத்திலே குடி
யிருக்கையில் அதைத் தங்கள் நடக்கையினாலும்
தங்கள் கிரியைகளினாலும் தீட்டுப்படுத்தி
னார்கள்; [1]அவர்களுடைய நடக்கை என் முகத்
துக்கு முன்பாக தூரஸ்திரீயின் தீட்டைப்போ
18 ல் இருந்தது. ஆகையினால் தேசத்திலே அவர்
கள் சிந்தின இரத்தத்தினிமித்தமும், [2]அதை
அவர்கள் தங்கள் நரகலான விக்கிரகங்களால்
தீட்டுப்படுத்தினதினிமித்தமும் நான் என் உக்
19 கிரத்தை அவர்கள்மேல் ஊற்றி, அவர்களைப்
புறஜாதிகளுக்குள்ளே சிதறடித்தேன்; தேசங்க
ளில் தூற்றிப் போடப்பட்டார்கள்; [3]அவர்க
ளுடைய நடக்கையின்படியேயும் அவர்களு
டைய கிரியைகளின்படியேயும் அவர்களை
20 நியாயந்தீர்த்தேன். அவர்கள் புறஜாதிகளிடத்
தில் போனபோது அந்த ஜனங்கள் இவர்க
ளைக் குறித்து: [4]இவர்கள் கர்த்தருடைய ஜனங்
கள், அவருடைய தேசத்திலிருந்து வந்தார்
கள் என்று சொன்னதினால், இவர்கள் என்
பரிசுத்த நாமத்தைப் பரிசுத்தக் குலைச்சலாக்கி
21 னார்கள். ஆனாலும் இஸ்ரவேல் வம்சத்தார்
தாங்கள் வந்துசேர்ந்த புறஜாதிகளிடத்திலே
பரிசுத்தக்குலைச்சலாக்கின [5]என் பரிசுத்தநாமத்
22 தினிமித்தமாகவே இரங்குகிறேன். ஆதலால்,
நீ இஸ்ரவேல் வம்சத்தாரை நோக்கி: கர்த்தரா
கிய ஆண்டவர் உரைக்கிறது என்னவென்
றால், இஸ்ரவேல் வம்சத்தாரே, உங்கள் நிமித்
தம் அல்ல, [6]நீங்கள் வந்து சேர்ந்த புறஜாதி
களிடத்தில் பரிசுத்தக்குலைச்சலாக்கின என்
பரிசுத்த நாமத்தினிமித்தமே நான் இப்படிச்
23 செய்கிறேன். புறஜாதிகளின் நடுவே நீங்கள்
பரிசுத்தக் குலைச்சலாக்கினதும் அவர்களுக்
குள் உங்களால் பரிசுத்தக் குலைச்சலாக்கப்பட்
டதுமான என் மகத்தான நாமத்தை [7]நான் பரி
சுத்தம்பண்ணுவேன்; அப்பொழுது புறஜாதி
கள் தங்கள் கண்களுக்குமுன்பாக நான் உங்க
ளுக்குள் பரிசுத்தம்பண்ணப்படுகையில், நான்
கர்த்தர் என்பதை அறிந்துகொள்வார்கள்
என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.
24 நான் உங்களைப் புறஜாதிகளிடத்திலிருந்து
அழைத்து, [8]உங்களைச் சகல தேசங்களிலு
மிருந்து சேர்த்து, உங்கள் சுயதேசத்திற்கு
25 உங்களைக் கொண்டுவருவேன். அப்பொ
ழுது நான் உங்கள்மேல் சுத்தமான ஜலம்
தெளிப்பேன்; [9]நான் உங்களுடைய எல்லா
அசுத்தங்களையும் உங்களுடைய எல்லா நரக
லான விக்கிரகங்களையும் நீக்கி உங்களைச் சுத்த
26 மாக்குவேன், நீங்கள் சுத்தமாவீர்கள். உங்க
ளுக்கு நவமான இருதயத்தைக் கொடுத்து,
[10]உங்கள் உள்ளத்திலே புதிதான ஆவியைக்
கட்டளையிட்டு, கல்லான இருதயத்தை உங்
கள் மாம்சத்திலிருந்து எடுத்துப்போட்டு,
சதையான இருதயத்தை உங்களுக்குக் கொ
27 டுப்பேன். உங்கள் உள்ளத்திலே [11]என் ஆவி
யை வைத்து, உங்களை என் கட்டளைகளில்
நடக்கவும் என் நியாயங்களைக் கைக்கொள்ள
வும் அவைகளின்படி செய்யவும்பண்ணு
வேன். உங்கள் பிதாக்களுக்கு நான் கொ 28
டுத்த தேசத்திலே நீங்கள் குடியிருப்பீர்
கள்; [12]நீங்கள் என் ஜனமாயிருப்பீர்கள்,
நான் உங்கள் தேவனாயிருந்து, உங்கள் 29
அசுத்தங்களையெல்லாம் நீக்கி, [13]உங்களை ரட்
சித்து, உங்கள்மேல் பஞ்சத்தைக் கட்டளை
யிடாமல், கோதுமையை வரவழைத்து,
அதைப் பெருகப்பண்ணி, நீங்கள் இனிமேல் 30
ஜாதிகளுக்குள்ளே பஞ்சத்தினாலுண்டாகும்
நிந்தையை அடையாதபடிக்கு, விருட்சத்தின்
கனிகளையும் வயலின் பலன்களையும் பெரு
கப்பண்ணுவேன். அப்பொழுது நீங்கள் உங் 31
கள் பொல்லாத மார்க்கங்களையும் உங்கள்
தகாத கிரியைகளையும் நினைத்து, [14]உங்கள்
அக்கிரமங்களினிமித்தமும் உங்கள் அருவருப்
புகளினிமித்தமும் உங்களையே அரோசிப்பீர்
கள். நான் இப்படிச் செய்வது உங்கள் நிமித் 32
தமாக அல்லவென்று [15]கர்த்தராகிய ஆண்ட
வர் சொல்லுகிறார், இது உங்களுக்கு அறியப்
பட்டிருக்கக்கடவது; இஸ்ரவேல் வம்சத்தா
ரே, உங்கள் வழிகளினிமித்தம் வெட்கி நா
ணுங்கள். கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு 33
கிறது என்னவென்றால்: நான் உங்கள் அக்கி
ரமங்களை யெல்லாம் நீக்கி, உங்களைச் சுத்த
மாக்கும் காலத்திலே [16]பட்டணங்களில் குடி
யேற்றுவிப்பேன்; அவாந்தரமான ஸ்தலங்க
ளும் கட்டப்படும். பாழாக்கப்பட்ட தேசம் 34
கடந்துபோகிற யாவருடைய பார்வைக்கும்
பாழாய்க் கிடந்ததற்குப் பதிலாகப் பயிரிடப்
படும். பாழாய்க்கிடந்த இத்தேசம், [17]ஏதேன் 35
தோட்டத்தைப்போ லாயிற்றென்றும், அவாந்
தரமும் பாழும் நிர்மூலமுமாயிருந்த பட்டணங்
கள் அரணிப்பானவைகளும் குடியேற்றப்பட்
டவைகளுமாய் இருக்கிறது என்றும் சொல்லு
வார்கள். கர்த்தராகிய நான் நிர்மூலமானவைக 36
ளைக் கட்டுகிறேன் என்றும், பாழானதைப்
பயிர்நிலமாக்குகிறேன் என்றும், அப்பொழுது
உங்களைச் சுற்றிலுமுள்ள மீதியான ஜாதிகள்
அறிந்துகொள்வார்கள்; [18]கர்த்தராகிய நான்
இதைச் சொன்னேன், இதைச் செய்வேன்.
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறது 37
என்னவென்றால்: இஸ்ரவேல் வம்சத்தாருக்
காக நான் இதை அநுக்கிரகஞ்செய்யும்படி
அவர்கள் என்னிடத்தில் விண்ணப்பம் பண்
ணவேண்டும்; [19]மந்தை பெருகுகிறதுபோல்
அவர்களில் மனிதரைப் பெருகப்பண்ணு
வேன். பண்டிகை காலங்களில் எருசலேமி 38
லே பரிசுத்தம் பண்ணப்பட்டுவருகிற மந்தை
கள் எப்படித் திரளாயிருக்கிறதோ, அப்படி
யே அவாந்தரமாயிருந்த பட்டணங்கள் மனு
ஷரின் மந்தையால் நிரம்பியிருக்கும்; அதி
னால் நான் கர்த்தர் என்பதை அறிந்துகொள்
வார்கள் என்று சொல் என்றார்.

**37** கர்த்தருடைய கை என்மேல் அமர்ந்து,
[20]கர்த்தர் என்னை ஆவிக்குள்ளாக்கி வெளியே

[1] லேவி. 18. 25–28. எரே. 2. 7
[2] 16. 36, 38: 23. 37
[3] 22. 15: 39. 24
[4] ஏசா. 52. 5. ரோ. 2. 24
[5] சங். 74. 18
[6] சங். 106. 8: 115. 1
[7] சங். 46. 10
[8] 34. 13: 37. 21.
[9] ஏசா. 52. 15. எபி. 10. 22
[10] எரே. 32. 39 சக. 7. 12. 2 கொ. 3. 3
[11] ரோ. 8. 9, 15. 1 கொ. 3. 16. எபே. 1. 13, 14. 1 யோ. 3. 24
[12] ஓசி. 1. 10
[13] ஓசி. 2. 21, 22. மத். 1. 21. ரோ. 6. 14: 11. 26
[14] ரோ. 6. 21
[15] உபா. 9. 5
[16] சகரி. 8. 7, 8
[17] ஏசா. 51. 3. யோவே. 2. 3
[18] ஓசி. 14. 4-9
[19] சகரி. 10. 6, 9. எபி. 4. 16: 10. 21, 22. 1 யோ. 5. 14
[20] லூக். 4. 1. அப். 8. 39

கொண்டுபோய், எலும்புகள் நிறைந்த ஒரு
2 பள்ளத்தாக்கின் நடுவில் நிறுத்தி, என்னை
அவைகளின் அருகே சுற்றி நடக்கப்பண்ணி
ஞர்; இதோ, பள்ளத்தாக்கின் வெட்டவெளி
யிலே அந்த எலும்புகள் மகா திரளாய்க் கிடந்
தது; அவைகள் மிகவும் உலர்ந்ததுமாயிருந்
3 தது. அவர் என்னை நோக்கி: மனுபுத்திரனே,
இந்த எலும்புகள் உயிரடையுமா என்று கேட்
டார்; அதற்கு நான்: கர்த்தராகிய ஆண்டவ
ரே, [1]தேவரீர் அதை அறிவீர் என்றேன்.
4 அப்பொழுது அவர்: நீ இந்த எலும்புகளைக்
குறித்துத் தீர்க்கதரிசனம் உரைத்து, அவை
களைப்பார்த்துச் சொல்லவேண்டியது என்ன
வென்றால்: உலர்ந்த எலும்புகளே, **கர்த்தரு**
5 **டைய** வார்த்தையைக் கேளுங்கள். கர்த்தரா
கிய ஆண்டவர் இந்த எலும்புகளை நோக்கி:
இதோ, [2]நான் உங்களுக்குள் ஆவியைப் பிர
வேசிக்கப்பண்ணுவேன், அப்பொழுது உயி
6 ரடைவீர்கள். நான் உங்கள்மேல் நரம்புகளைச்
சேர்த்து, உங்கள்மேல் மாம்சத்தை உண்டாக்
கி, உங்களைத் தோலினால் மூடி, உங்களில்
ஆவியைக் கட்டளையிடுவேன்; [3]அப்பொழுது
நீங்கள் உயிரடைந்து, நான் **கர்த்தர்** என்று
அறிந்துகொள்வீர்களென்று உரைக்கிறார் எ
7 ன்று சொல் என்றார். எனக்குக் கட்டளையிட்
டபடியே நான் தீர்க்கதரிசனம் உரைத்தேன்;
நான் தீர்க்கதரிசனம் உரைக்கையில் [4]ஒரு
இரைச்சல் உண்டாயிற்று; இதோ, அசை
வுண்டாகி, ஒவ்வொரு எலும்பும் தன்தன்
8 எலும்போடே சேர்ந்துகொண்டது. நான்
பார்த்துக்கொண்டிருக்கையில், இதோ, அவை
கள்மேல் நரம்புகளும் மாம்சமும் உண்டா
யிற்று, மேற்புறமெங்கும் தோலினால் மூடப்
பட்டது; ஆனாலும் அவைகளில் ஆவி இல்லா
9 திருந்தது. அப்பொழுது அவர் என்னைப்பா
ர்த்து: நீ ஆவியை நோக்கித் தீர்க்கதரிசனம்
உரை; மனுபுத்திரனே, நீ தீர்க்கதரிசனம்
உரைத்து, ஆவியை நோக்கி: கர்த்தராகிய
ஆண்டவர் உரைக்கிறது என்னவென்றால்,
[5]ஆவியே, நீ காற்றுத்திசை நான்கிலுமிருந்து
வந்து, கொலையுண்ட இவர்கள் உயிரடையும்
படிக்கு இவர்கள்மேல் ஊது என்கிறார்
10 என்று சொல் என்றார் எனக்குக் கற்பிக்கப்
பட்டபடி நான் தீர்க்கதரிசனம் உரைத்தேன்;
[6]அப்பொழுது ஆவி அவர்களுக்குள் பிரவே
சிக்க, அவர்கள் உயிரடைந்து, காலூன்றி,
11 மகா பெரிய சேனையாய் நின்றார்கள். அப்
பொழுது அவர் என்னை நோக்கி: மனுபுத்திர
னே, இந்த எலும்புகள் இஸ்ரவேல் வம்சத்
தார் அனைவருமே; இதோ, அவர்கள் எங்கள்
எலும்புகள் உலர்ந்துபோயிற்று; [7]எங்கள் நம்
பிக்கை அற்றுப்போயிற்று; நாங்கள் அறுப்
12 புண்டுபோகிறோம் என்கிறார்கள். ஆகையால்
நீ தீர்க்கதரிசனம் உரைத்து, அவர்களோடே
சொல்லவேண்டியது என்னவென்றால்: கர்த்
தராகிய ஆண்டவர் உரைக்கிறார், இதோ,
என் ஜனங்களே, [8]நான் உங்கள் பிரேதக்குழி
களைத் திறந்து, உங்களை உங்கள் பிரேதக்குழி
களிலிருந்து வெளிப்படவும், உங்களை இஸ்ர
வேல் தேசத்துக்கு வரவும் பண்ணுவேன்.
என் ஜனங்களே, நான் உங்கள் பிரேதக்குழி 13
களைத் திறந்து, உங்களை உங்கள் பிரேதக்குழி
களிலிருந்து வெளிப்படப் பண்ணும்போது,
நான் **கர்த்தர்** என்று அறிந்துகொள்வீர்கள்.
என் ஆவியை உங்களுக்குள் வைப்பேன்; 14
[9]நீங்கள் உயிரடைவீர்கள்; நான் உங்களை உங்
கள் தேசத்தில் வைப்பேன்; அப்பொழுது
நான் **கர்த்தர்** என்று அறிந்துகொள்வீர்கள்;
இதைச் சொன்னேன், இதைச் செய்வேன்
என்று **கர்த்தர்** உரைக்கிறார் என்று சொல்
என்றார்.

பின்னும் **கர்த்தருடைய** வார்த்தை எனக்கு 15
உண்டாகி, அவர்: மனுபுத்திரனே, நீ ஒரு 16
கோலை எடுத்து, [10]அதிலே யூதாவுக்கும் அதைச்
சேர்ந்த இஸ்ரவேல் புத்திரருக்கும் அடுத்தது
என்று எழுதி; பின்பு வேறொரு கோலை எடு
த்து, அதிலே எப்பிராயீமுக்கும் அதைச்சேர்
ந்த இஸ்ரவேல் வம்சத்தார் அனைவருக்கும்
அடுத்த யோசேப்பின் கோலென்று எழுதி,
அவைகளை ஒரே கோலாகும்படி ஒன்றோ 17
டொன்று இசையச் செய், அவைகள் உன்
கையில் ஒன்றாகும். இவைகளின் பொருள் 18
இன்னதென்று எங்களுக்கு அறிவிக்கமாட்
டீரோ என்று உன் ஜனத்தின் புத்திரர்
உன்னிடத்தில் கேட்டால், நீ அவர்களை 19
நோக்கி: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறது
என்னவென்றால், இதோ, எப்பிராயீமுக்கும்
அதைச்சேர்ந்த இஸ்ரவேல் கோத்திரங்களுக்
கும் அடுத்த யோசேப்பின் கோலை எடுத்து,
அதை யூதாவின் கோலோடே சேர்த்து, அவை
களை ஒரே கோலாக்குவேன்; [11]அவைகள் என்
கையில் ஒன்றாகும் என்கிறார் என்று சொல்.
சொல்லும்போது, நீ எழுதின கோல்கள் அவ 20
ர்களுடைய கண்களுக்கு முன்பாக உன் கை
யில் இருக்கவேண்டும். நீ அவர்களை நோக்கி: 21
கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறது என்ன
வென்றால், இதோ, நான் இஸ்ரவேல் வம்சத்
தாரை அவர்கள் போயிருக்கும் ஜாதிகளிடத்
திலிருந்து அழைத்து, [12]சுற்றிலுமிருந்து அவர்
களைச் சேர்த்து, அவர்களை அவர்கள் சுயதே
சத்திலே வரப்பண்ணி, அவர்களை இஸ்ரவே 22
லின் மலைகளாகிய தேசத்திலே ஒரேஜாதியாக்
குவேன்; [13]ஒரே ராஜா அவர்கள் எல்லாருக்
கும் ராஜாவாக இருப்பார்; அவர்கள் இனி
இரண்டு ஜாதிகளாக இருப்பதில்லை; அவர்
கள் இனி இரண்டு ராஜ்யங்களாகப் பிரிவது
மில்லை. அவர்கள் இனித் தங்கள் நரகலான 23
விக்கிரகங்களினாலும் தங்கள் அருவருப்புகளி
னாலும் தங்களுடைய சகல மீறுதல்களினாலும்
தங்களைத் தீட்டுப்படுத்துவதுமில்லை; [14]அவர்
கள் குடியிருந்து பாவஞ்செய்த எல்லா இடங்
களிலிருந்தும் நான் அவர்களை நீங்கலாக்கி
ரட்சித்து, அவர்களைச் சுத்தம்பண்ணுவேன்;
அப்பொழுது அவர்கள் என் ஜனமாயிருப்

1 உபா. 32. 39. 1 சாமு. 2. 6. யோ. 5. 21; 11. 25, 26. ரோ. 4: 17; 2கொ. 1. 9
2 9, 10. வச. சங். 104. 30
3 யோவே. 2. 27
4 அப். 2. 2. ஓ
5 சங். 104. 30. உன்னத. 4. 16
6 வெளி. 11. 11
7 சங். 141. 7. ஏசா. 49. 14
8 ஏசா. 26. 19. ஓசி. 13. 14. 1 தெச. 4. 16. வெளி. 20. 13
9 36. 27
10 எண். 17. 2. 2 நாளா. 30. 11, 18
11 சகரி. 10. 6
12 36. 24
13 ஏசா. 11. 12, 13. எரே. 3. 18; 50. 4. ஓசி. 1. 11. யோவா. 10. 16
14 36. 25, 28, 29

பார்கள்; நான் அவர்கள் தேவனாயிருப்பேன்.
24 என் தாசனாகிய தாவீது என்பவர் அவர்கள்
மேல் ராஜாவாக இருப்பார்; [1]அவர்கள் எல்
லாருக்கும் ஒரே மேய்ப்பர் இருப்பார்; அப்
பொழுது அவர்கள் என் நியாயங்களில் நடந்
து, என் கட்டளைகளைக் கைக்கொண்டு, அவை
25 களின்படியே செய்து, நான் என் தாசனாகிய
யாக்கோபுக்குக் கொடுத்ததும், உங்கள் பிதாக்
கள் குடியிருந்ததுமான தேசத்திலே குடியிருப்
பார்கள்; [2]அவர்களும் அவர்கள் பிள்ளைகளும்
அவர்களுடைய பிள்ளைகளின் பிள்ளைகளும்
அதிலே என்றென்றைக்கும் குடியிருப்பார்
கள்; என் தாசனாகிய தாவீது என்பவர் என்
றென்றைக்கும் அவர்களுக்கு அதிபதியாயிருப்
26 பார். நான் அவர்களோடே சமாதான உடன்
படிக்கை செய்வேன்; [3]அது அவர்களுக்கு நித்
திய உடன்படிக்கையாயிருக்கும்; நான் அவர்
களை நிலைப்படுத்தி, அவர்களை வர்த்திக்கப்பண்
ணி, [4]அவர்கள் நடுவிலே என் பரிசுத்த ஸ்தலத்
27 தை என்றென்றைக்கும் ஸ்தாபிப்பேன். என்
வாசஸ்தலம் [5]அவர்களிடத்தில் இருக்கும்,
நான் அவர்கள் தேவனாயிருப்பேன், அவர்கள்
28 என் ஜனமாயிருப்பார்கள். அப்படியே என்
பரிசுத்த ஸ்தலம் அவர்கள் நடுவிலே என்றென்
றைக்கும் இருக்கும்போது, [6]நான் இஸ்ரவே
லைப் பரிசுத்தம்பண்ணுகிற கர்த்தர் என்று
ஜாதிகள் அறிந்துகொள்வார்கள் என்கிறார்
என்று சொல் என்றார்.

**38** கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்
2 டாகி, அவர்: மனுபுத்திரனே, [7]மேசேக்
தூபால் ஜாதிகளின் தலைமையான அதிபதி
யாகிய மாகோகு தேசத்தானான கோகுக்கு
எதிராக நீ உன் முகத்தைத் திருப்பி, அவனு
க்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம் உரைத்து,
3 சொல்லவேண்டியது என்னவென்றால்: கர்த்
தராகிய ஆண்டவர் உரைக்கிறார், மேசேக்
தூபால் ஜாதிகளின் அதிபதியாகிய கோகே,
இதோ, நான் உனக்கு விரோதமாக வருவே
4 ன். நான் உன்னைத் திருப்பி, உன் வாயில்
துறடுகளைப் போட்டு, [8]உன்னையும் உன்னு
டைய எல்லாச் சேனையையும், குதிரைகளை
யும், சர்வாயுதந்தரித்த குதிரை வீரர்களையும்,
பரிசையும் கேடகமுமுடைய திரளான கூட்
டத்தையும் புறப்படப்பண்ணுவேன்; அவர்
கள் எல்லாரும் பட்டயங்களைப் பிடித்திருப்
5 பார்கள். அவர்களோடேகூட பெர்சியரும்,
எத்தியோப்பியரும், [9]லீபியரும் இருப்பார்கள்;
அவர்களெல்லாரும் கேடகம் பிடித்து, தலைச்
6 சீராவுந் தரித்திருப்பவர்கள். கோமேரும் [10]அவ
னுடைய எல்லா ராணுவங்களும் வடதிசையி
லுள்ள [11]தோகர்மா வம்சத்தாரும் அவர்களு
டைய எல்லா ராணுவங்களுமாகிய திரளான
ஜனங்கள் உன்னுடனேகூட இருப்பார்கள்.
7 நீ ஆயத்தப்படு, [12]உன்னுடனே கூடின உன்
எல்லாக் கூட்டத்தையும் ஆயத்தப்படுத்து; நீ
8 அவர்களுக்குக் காவலாளனாயிரு. அநேக நாட்
களுக்குப் பிற்பாடு [13]நீ விசாரிக்கப்படுவாய்;
பட்டயத்துக்கு நீங்கலாகி, பற்பல ஜனங்களி
லிருந்து சேர்த்துக்கொள்ளப்பட்டு வந்தவர்க
ளின் தேசத்தில் கடைசி வருஷங்களிலே
வருவாய்; நெடுநாள் பாழாய்க்கிடந்து, பிற்பாடு
ஜாதிகளிலிருந்து கொண்டுவரப்பட்டவர்கள்
எல்லாரும் சுகத்தோடே குடியிருக்கும் இஸ்ர
வேலின் மலைகளுக்கு விரோதமாய் வருவாய்;
அவர்கள் எல்லாரும் அஞ்சாமல் குடியிருக்கும்
போது, பெருங்காற்றைப்போல் எழும்பி வரு 9
வாய்; [14]நீயும் உன்னுடைய எல்லா ராணுவங்
களும் உன்னோடேகூட இருக்கும் திரளான
ஜனங்களும் கார்மேகம்போல் தேசத்தை மூடு
வீர்கள். கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு 10
கிறது என்னவென்றால்: [15]அந்நாளிலே பா
ழாய்க்கிடந்து திரும்பக் குடியேற்றப்பட்ட
ஸ்தலங்களுக்கு விரோதமாகவும், ஜாதிகளிட
த்திலிருந்து சேர்க்கப்பட்டதும், ஆடுகளையும்
மாடுகளையும் ஆஸ்திகளையும் சம்பாதித்து, தே
சத்தின் நடுவில் குடியிருக்கிறதுமான ஜனத்
துக்கு விரோதமாகவும், நீ உன் கையைத் திரு
ப்பும்படிக்கு, உன் இருதயத்தில் யோசனை 11
கள் எழும்ப, நீ பொல்லாத நினைவை நினை
த்து, நான் கொள்ளையிடவும் சூறையாடவும், 12
மதில்களில்லாமல் கிடக்கிற கிராமங்களுள்ள
தேசத்துக்கு விரோதமாய்ப் போவேன்; நிர்வி
சாரமாய் சுகத்தோடே குடியிருக்கிறவர்களின்
மேல் வருவேன்; அவர்கள் எல்லாரும் மதில்
களில்லாமல் குடியிருக்கிறார்கள்; அவர்களுக்
குத் தாழ்ப்பாளும் இல்லை, கதவுகளும் இல்லை
என்பாய். சேபா தேசத்தாரும், தேதான் தே 13
சத்தாரும், தர்ஷீசின் வர்த்தகரும் அதினு
டைய [16]பாலசிங்கங்களான அனைவரும் உன்
னை நோக்கி: நீ கொள்ளையிட அல்லவோ வரு
கிறாயென்றும், நீ சூறையாடி, வெள்ளியை
யும் பொன்னையும் ஆஸ்தியையும் எடுத்துக்
கொள்ளுகிறதற்கும், ஆடுகளையும் மாடுகளையும்
பிடிக்கிறதற்கும், மிகவும் கொள்ளையிடுகிறதற்
கும் அல்லவோ உன்னுடைய கூட்டத்தைக்
கூட்டினாயென்றும் சொல்லுவார்கள்.

ஆகையால் மனுபுத்திரனே, நீ தீர்க்கதரிச 14
னம் உரைத்து, கோகை நோக்கிச் சொல்ல
வேண்டியது என்னவென்றால்: கர்த்தராகிய
ஆண்டவர் உரைக்கிறார்; [17]என் ஜனமாகிய
இஸ்ரவேல் சுகமாய்க் குடியிருக்கிற அக்கால
த்திலே நீ அதை அறிவாய் அல்லவோ? அப் 15
பொழுது நீயும் உன்னுடனேகூடத் திரளான
ஜனங்களும் வடதிசையிலுள்ள உன் ஸ்தான
த்திலிருந்து வருவீர்கள்; அவர்கள் பெரிய
கூட்டமும் திரளான சேனையுமாயிருந்து, எல்
லாரும் குதிரைகளின்மேல் ஏறுகிறவர்களா
யிருப்பார்கள். நீ தேசத்தைக் கார்மேகம் 16
போல் மூட, [18]என் ஜனமாகிய இஸ்ரவேலுக்கு
விரோதமாக எழும்பிவருவாய்; கடைசி நாட்
களிலே இது சம்பவிக்கும்; கோகே, ஜாதி
களின் கண்களுக்கு முன்பாக உன்மூலமாய்
நான் பரிசுத்தர் என்று விளங்கப்படுகிறதினால்
அவர்கள் என்னை அறியும்படிக்கு உன்னை

1 ஏசா. 40. 11. எரே. 23. 5. ஓசி. 3. 5. யோ. 10. 16
2 ஏசா. 60. 21. யோவே. 3. 20. ஆமோ. 9. 15. யோ. 12. 34
3 34. 25. ஏசா. 55. 3. எரே. 32. 40. யோ. 14. 27
4 2 கொ. 6. 16
5 43. 7. யோ. 1. 14. வெளி. 21. 3
6 36. 23
7 35. 2, 3. வெளி. 20. 8, 9
8 29. 4. 2 இரா. 19. 28
9 27. 10; 30. 5
10 ஆதி. 10. 2
11 27. 14
12 ஏசா. 8. 9, 10. எரே. 46. 3, 4, 14
13 ஆதி. 49. 1. ஏசா. 29. 6
14 ஏசா. 28. 2. எரே. 4. 13
15 எரே. 49. 31
16 19. 3, 5. சங். 57. 4
17 ஏசா. 4. 1
18 யாத். 14. 4

என் தேசத்துக்கு விரோதமாக வரப்பண்ணு
17 வேன். உன்னை அவர்களுக்கு விரோதமாக
வரப்பண்ணுவேன் என்று பூர்வநாட்களிலே
அநேக வருஷகாலமாய்த் தீர்க்கதரிசனம் உரை
த்து, இஸ்ரவேலின் தீர்க்கதரிசிகளாகிய என்
ஊழியக்காரரைக்கொண்டு, அந்நாட்களிலே
நான் குறித்துச் சொன்னவன் நீ அல்லவோ
என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகி
18 றார். இஸ்ரவேல் தேசத்துக்கு விரோதமாக
கோகு வரும்காலத்தில் என் உக்கிரம் என்
நாசியில் ஏறுமென்று கர்த்தராகிய ஆண்டவர்
19 சொல்லுகிறார். அந்நாளிலே இஸ்ரவேல்
தேசத்திலே [1]பெரிய அதிர்ச்சி உண்டாகி,
20 என் பிரசன்னத்தினால் சமுத்திரத்து மச்சங்க
ளும், ஆகாயத்துப் பறவைகளும், வெளியின்
மிருகங்களும், தரையில் ஊருகிற சகல பிரா
ணிகளும், தேசமெங்குமுள்ள சகல நரஜீவன்
களும் அதிரும்; [2]பர்வதங்கள் இடியும்; செங்
குத்தானவைகள் விழும்; எல்லா மதில்களும்
தரையிலே விழுந்துபோம் என்று என் எரிச்ச
லினாலும் என் சினத்தின் அக்கினியினாலும்
21 நிச்சயமாய்ச் சொல்லுகிறேன். என் எல்லா
மலைகளிலும் பட்டயத்தை அவனுக்கு விரோ
தமாக வரவழைப்பேன் என்று கர்த்தராகிய
ஆண்டவர் சொல்லுகிறார்; [3]அவனவன் பட்ட
யம் அவனவன் சகோதரனுக்கு விரோதமா
22 யிருக்கும். கொள்ளைநோயினாலும் இரத்தம்
சிந்துதலினாலும் நான் அவனோடே வழக்காடி,
அவன்மேலும் அவன் ராணுவங்களின்மேலும்
அவனோடிருக்கும் திரளான ஜனங்களின்
மேலும் வெள்ளமாய் அடிக்கும் மழையையும்,
[4]பெருங் கல்மழையையும், அக்கினியையும்,
கந்தகத்தையும் வருஷிக்கப் பண்ணுவேன்.
23 இவ்விதமாய் நான் அநேக ஜாதிகளின் கண்க
ளுக்கு முன்பாக என் மகத்துவத்தையும் என்
பரிசுத்தத்தையும் விளங்கப்பண்ணி, [5]அறியப்
படுவேன்; அப்பொழுது நான் **கர்த்தர்** என்று
அறிந்துகொள்வார்கள்.

39 இப்போதும் மனுபுத்திரனே, [6]நீ கோகு
க்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம் உரைத்துச்
சொல்லவேண்டியது என்னவென்றால்: கர்த்
தராகிய ஆண்டவர் உரைக்கிறார், மேசேக்
தூபால் ஜாதிகளின் அதிபதியாகிய கோகே,
இதோ, [7]நான் உனக்கு விரோதமாக வருகி
2 றேன். நான் உன்னைத் திருப்பி உன்னை
ஆறு துறடுகளால் இழுத்து, உன்னை வடபுறங்
களிலிருந்து எழும்பவும் இஸ்ரவேல் மலைக
3 ளில் வரவும்பண்ணி, உன் வில்லை உன்
இடதுகையிலிருந்து தட்டிவிட்டு, உன் அம்பு
களை உன் வலதுகையிலிருந்து விழப்பண்ணு
4 வேன். நீயும் உன் எல்லா ராணுவங்களும்
உன்னோடிருக்கிற ஜனங்களும் இஸ்ரவேல்
மலைகளில் விழுவீர்கள்; [7]உராய்ஞ்சுகிற சகல
வித பட்சிகளுக்கும் வெளியின் மிருகங்களுக்
கும் உன்னை இரையாகக் கொடுப்பேன்.
5 விசாலமான வெளியில் விழுவாய்; நான்
இதைச் சொன்னேன் என்று கர்த்தராகிய

1 யோவே. 2. 18: 3. 16. ஆகா. 2. 6, 7. வெளி. 16. 18
2 எரே. 4. 24. நாகூம் 1. 5, 6
3 நியா. 7. 22
4 ஏசா. 66. 16. எரே. 25. 31. வெளி. 16. 21
5 36. 28. சங். 9. 16
6 38. 2, 3. ழ
7 வெளி. 19. 17–21
8 ஆமோ. 1. 4. ழ
9 யாத். 20. 7. லேவி. 18. 21
10 வெளி. 16. 17: 21. 6
11 சங். 46. 9
12 ஏசா. 14. 2
13 உபா. 21. 23
14 28. 22
* திரள்

ஆண்டவர் உரைக்கிறார். நான் மாகோகிடத் 6
திலும் தீவுகளில் நிர்விசாரமாய்க் குடியிருக்கி
றவர்களிடத்திலும் [8]அக்கினியை அனுப்பு
வேன்; அப்பொழுது நான் **கர்த்தர்** என்று
அறிந்துகொள்வார்கள். இவ்விதமாய் நான் 7
என் ஜனமாகிய இஸ்ரவேலின் நடுவிலே
[9]என் பரிசுத்த நாமத்தைத் தெரிவிப்பேன்;
என் பரிசுத்த நாமத்தை இனிப் பரிசுத்தக்
குலைச்சலாக்கவொட்டேன்; அதினால் நான்
இஸ்ரவேலில் பரிசுத்தராகிய **கர்த்தர்** என்று
புறஜாதிகள் அறிந்துகொள்வார்கள். இதோ, 8
அது வந்தது, [10]அது சம்பவித்தது என்று கர்த்
தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்; நான்
சொன்ன நாள் இதுவே. இஸ்ரவேல் பட்ட 9
ணங்களின் குடிகள் வெளியே போய், கேட
கங்களும், பரிசைகளும், வில்லுகளும், அம்பு
களும், வளைதடிகளும், ஈட்டிகளுமாகிய ஆயு
தங்களை எடுத்து எரிப்பார்கள்; [11]ஏழு வருஷம்
அவைகளை எடுத்து எரிப்பார்கள். அவர்கள் 10
வெளியிலிருந்து விறகு கொண்டுவராமலும்
காடுகளில் வெட்டாமலும், ஆயுதங்களை எடுத்
து எரிப்பார்கள்; [12]அவர்கள் தங்களைக் கொள்ளை
யிட்டவர்களைக் கொள்ளையிட்டு, தங்களைச்
சூறையாடினவர்களைச் சூறையாடுவார்கள்
என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

அந்நாளில் இஸ்ரவேல் தேசத்திலே சமுத் 11
திரத்துக்குக் கிழக்கே பிரயாணக்காரரின் பள்
ளத்தாக்கைப் புதைக்கிற ஸ்தானமாக கோகுக்
குக் கொடுப்பேன்; அது வழிப்போக்கர் மூக்
கைப் பொத்திக்கொண்டு போகப்பண்ணும்;
அங்கே கோகையும் அவனுடைய எல்லாச் சே
னையையும் புதைத்து, அதை ஆமோன் கோ
கின் பள்ளத்தாக்கு என்பார்கள். இஸ்ரவேல் 12
வம்சத்தார், தேசத்தைச் சுத்தம்பண்ணும்படி
க்கு [13]அவர்களைப் புதைத்துத்தீர ஏழுமாதம்
செல்லும். தேசத்தின் ஜனங்களெல்லாரும் 13
புதைத்துக்கொண்டிருப்பார்கள்; [14]நான் மகி
மைப்படும் அந்நாளிலே அது அவர்களுக்குக்
கீர்த்தியாக இருக்கும் என்று கர்த்தராகிய ஆண்
டவர் சொல்லுகிறார். தேசத்தைச் சுத்தம்பண் 14
ணுவதற்காக அதில் கிடக்கும் மற்றப் பிரே
தங்களைப் புதைக்கும்படிக்கு நித்தமும் தேசத்
தில் சுற்றித்திரியும் மனுஷரையும், சுற்றித்திரி
கிறவர்களோடே கூடப் புதைக்கிறவர்களையும்
தெரிந்து நியமிப்பார்கள்; ஏழு மாதங்கள்
முடிந்தபின்பும் இவர்கள் தேடிக்கொண்டிருப்
பார்கள். தேசத்தில் சுற்றித்திரிகிறவர்கள் திரி 15
ந்துகொண்டிருப்பார்கள்; யாராவது ஒருவன்
மனுஷனின் எலும்பைக் காணும்போது புதை
க்கிறவர்கள் அதை ஆமோன் கோகுடைய பள்
ளத்தாக்கிலே புதைக்குமட்டும் அதினண்டை
யிலே ஒரு அடையாளத்தை நாட்டுவான்.
அந்த நகரத்துக்கு *ஆமோனா என்று பெய 16
ரிடப்படும்; இவ்விதமாய் தேசத்தைச் சுத்தம்
பண்ணுவார்கள்.

மனுபுத்திரனே, கர்த்தராகிய ஆண்டவர் 17
சொல்லுகிறது என்னவென்றால்: நீ சகலவித

பட்சிகளையும் வெளியில் இருக்கிற சகல மிரு
கங்களையும் நோக்கி: [1]நீங்கள் ஏகமாய்க் கூடிக்
கொண்டு, இஸ்ரவேலின் மலைகளில் நான்
உங்களுக்காகச் செய்யும் யாகமாகிய மகா யா
கத்துக்குச் சுற்றிலுமிருந்து வந்து சேர்ந்து,
18 மாம்சம் தின்று இரத்தங் குடியுங்கள். நீங்கள்
பராக்கிரமசாலிகளின் மாம்சத்தைத் தின்று,
பூமியினுடைய பிரபுக்களின் இரத்தத்தைக்
குடிப்பீர்கள்; அவர்கள் எல்லாரும் [2]பாசானி
லே கொழுத்துப்போன ஆட்டுக்கடாக்களுக்
கும், ஆட்டுக்குட்டிகளுக்கும், வெள்ளாட்டுக்
கடாக்களுக்கும், காளைகளுக்கும் சமானமான
19 வர்கள். நான் உங்களுக்காகச் செய்யும் யா
கத்திலே நீங்கள் திருப்தியாகுமளவும் கொழுப்
பைத் தின்று, வெறியாகுமளவும் இரத்தத்தைக்
20 குடிப்பீர்கள். இவ்விதமாய் என் பந்தியிலே
குதிரைகளையும், [3]இரதவீரர்களையும், பராக்கிர
மசாலிகளையும், சகல யுத்தவீரர்களையும் தின்
று, திருப்தியாவீர்களென்று கர்த்தராகிய ஆண்
21 டவர் உரைக்கிறார் என்று சொல்லு. இவ்
விதமாய் என் மகிமையை நான் புறஜாதிக
ளுக்குள்ளே விளங்கப்பண்ணுவேன்; நான்
செய்த என் நியாயத்தையும், [4]அவர்கள்மேல்
நான் வைத்த என் கையையும் எல்லா ஜாதி
22 களும் காண்பார்கள். அன்றுமுதல் என்றும்
நான் தங்கள் தேவனாகிய **கர்த்தர்** என்று இஸ்
ரவேல் வம்சத்தார் அறிந்துகொள்வார்கள்.
23 இஸ்ரவேல் வம்சத்தார் தங்கள் அக்கிரமத்தி
னிமித்தமே சிறைப்பட்டுப்போனார்கள் என்று
அப்பொழுது புறஜாதிகள் அறிந்துகொள்வார்
கள்; அவர்கள் எனக்கு விரோதமாய்த் துரோ
கம்பண்ணினபடியால், [5]என் முகத்தை நான்
அவர்களுக்கு மறைத்து, அவர்கள் சத்துருக்க
ளின் கையில் அவர்களை ஒப்புக்கொடுத்தேன்;
அவர்கள் அனைவரும் பட்டயத்தால் விழுந்
24 தார்கள். அவர்களுடைய அசுத்தத்துக்குத்
தக்கதாவும், அவர்களுடைய மீறுதல்களுக்
குத் தக்கதாகவும், நான் அவர்களுக்குச் செய்
து, என் முகத்தை அவர்களுக்கு மறைத்
தேன்.
25 ஆதலால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு
26 கிறது என்னவென்றால்: அவர்கள் தங்கள்
அவமானத்தையும், பயப்படுத்துவார் இல்லா
மல், தாங்கள் சுகமாய்த் தங்கள் தேசத்தில்
குடியிருக்கும்போது எனக்கு விரோதமாய்த்
தாங்கள் செய்த எல்லாத் துரோகத்தையும்
சுமந்து தீர்த்தபின்பு, [6]நான் யாக்கோபின்
சிறையிருப்பைத் திருப்பி, இஸ்ரவேல் வம்ச
மனைத்துக்கும் இரங்கி, என் பரிசுத்த நாமத்
27 துக்காக வைராக்கியமாயிருப்பேன். நான்
அவர்களை ஜனசதளங்களிலிருந்து திரும்பி
வரப்பண்ணி, அவர்களுடைய பகைஞரின்
தேசங்களிலிருந்து அவர்களைக் கூட்டிக்கொ
ண்டுவந்து, திரளான ஜாதிகளுடைய கண்க
ளுக்கு முன்பாக அவர்களுக்குள் நான் பரிசுத்
28 தர் என்று விளங்கும்போது, தங்களைப் புற
ஜாதிகளிடத்தில் சிறைப்பட்டுப் போகப்பண்

[1] எசா. 18. 6. வெளி. 19. 17–21
[2] உபா. 32. 14. சங். 22. 12
[3] சங். 76. 5, 6. வெளி. 19. 18
[4] யாத். 7. 4
[5] உபா. 31. 17. எசா. 1. 15: 59. 2
[6] சங். 99. 8. எரே. 30. 11. தானி. 9. 16
[7] 33. 21
[8] 8. 3. வெளி. 21. 10. ழ
[9] தானி. 10. 6. வெளி. 11. 1: 21. 15
[10] 43. 10

ணின நான் தங்களில் ஒருவனையும் அங்கே
அப்புறம் வைக்காமல், தங்களைத் தங்கள் சுய
தேசத்திலே திரும்பக் கூட்டிக்கொண்டு வந்
தேன் என்பதினால், நான் தங்கள் தேவ
னாகிய **கர்த்தர்** என்று அறிந்துகொள்வார்
கள். நான் இஸ்ரவேல் வம்சத்தார்மேல் என் 29
ஆவியை ஊற்றினபடியினால் என் முக
த்தை இனி அவர்களுக்கு மறைக்கமாட்டேன்
என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்
என்றார்.

நாங்கள் சிறைப்பட்டுப்போன இருபத் **40**
தைந்தாம் வருஷத்தின் ஆரம்பத்தில் முத
லாம்மாதம் பத்தாந்தேதியாகிய அன்றே **கர்த்
தருடைய** கை என்மேல் அமர்ந்தது, அவர் என்
னை அவ்விடத்துக்குக் கொண்டுபோனார்; [7]அப்
பொழுது நகரம் அழிக்கப்பட்டுப் பதினாலு
வருஷமாயிற்று. தேவ தரிசனங்களில் அவர் 2
என்னை இஸ்ரவேல் தேசத்துக்குக் கொண்டு
போய், [8]என்னை மகா உயரமான ஒரு மலை
யின்மேல் நிறுத்தினார்; அதின்மேல் தெற்காக
ஒரு நகரம் கட்டியிருக்கிறதுபோல் காணப்
பட்டது. அவர் என்னை அங்கே கொண்டு 3
போனார்; இதோ, [9]அங்கே ஒரு புருஷன்
இருந்தார்; அவருடைய தோற்றம் வெண்கல
மயமாயிருந்தது; அவர் கையில் சணற்கயிறும்
ஒரு அளவுகோலும் இருந்தது; அவர் வாசலி
லே நின்றார். அந்தப் புருஷன் என்னை நோ 4
க்கி: மனுபுத்திரனே, நீ கண்ணாரப் பார்த்து,
காதாரக் கேட்டு, நான் உனக்குக் காண்பிப்ப
தெல்லாவற்றின்மேலும் உன் மனதை வை;
நான் உனக்கு அவைகளைக் காண்பிக்கும்படி
நீ இங்கே கொண்டுவரப்பட்டாய்; [10]நீ காண்
பதையெல்லாம் இஸ்ரவேல் வம்சத்தாருக்குத்
தெரிவி என்றார்.

இதோ, ஆலயத்துக்குப் புறம்பே சுற்றிலும் 5
ஒரு மதில் இருந்தது; அந்தப் புருஷன் கையி
லே ஆறுமுழ நீளமான ஒரு அளவுகோல்
இருந்தது; ஒவ்வொரு முழமும் நமது கை
முழத்திலும் நாலு விரற்கடை அதிகமானது;
அவர் அந்த மதிலை அளந்தார்; அகலம் ஒரு
கோலாகவும் உயரம் ஒரு கோலாகவும் இருந்
தது. பின்பு அவர் கிழக்குமுக வாசலுக்கு 6
வந்து, அதின் படிகளின்மேல் ஏறி, வாசற்படி
யை ஒரு கோல் அகலமாகவும், மறு வாசற்படி
யை ஒரு கோல் அகலமாகவும் அளந்தார்.
ஒவ்வொரு அறையும் ஒருகோல் நீளமும் ஒரு 7
கோல் அகலமுமாயிருந்தது; அறைவீடுகளுக்கு
நடுவே ஐந்துமுழ இடம் விட்டிருந்தது; வாச
லின் மண்டபத்தருகே உள்வாசற்படி ஒரு
கோலளவாயிருந்தது. வாசலின் மண்டபத் 8
தையும் உள்ளே ஒரு கோலளவாக அளந்தார்.
பின்பு வாசலின் மண்டபத்தை எட்டு முழமா 9
கவும், அதின் தூணாதாரங்களை இரண்டு முழ
மாகவும் அளந்தார்; வாசலின் மண்டபம் உட்
புறத்திலிருந்தது. கீழ்த்திசைக் கெதிரான 10
வாசலின் அறைகள் இந்தப்புறத்தில் மூன்றும்
அந்தப்புறத்தில் மூன்றுமாயிருந்தது; அவை

கள் மூன்றுக்கும் ஒரே அளவும், இந்தப்புறத்
திலும் அந்தப்புறத்திலும் இருந்த தூணாதாரங்
11 களுக்கு ஒரே அளவும் இருந்தது. பின்பு
வாசல் நடையின் அகலத்தைப் பத்து முழமாக
வும், வாசலின் நீளத்தைப் பதின்மூன்று முழ
12 மாகவும் அளந்தார். அறைகளுக்கு முன்னே
இந்தப்புறத்தில் ஒரு முழ இடமும் அந்தப்
புறத்தில் ஒரு முழ இடமும் இருந்தது; ஒவ்
வொரு அறை இந்தப்புறத்தில் ஆறு முழமும்
அந்தப்புறத்தில் ஆறு முழமுமாயிருந்தது.
13 பின்பு வாசலில் இருந்த அறையின் மெத்தை
யினின்று மற்ற அறையின் மெத்தைமட்டும்
இருபத்தைந்து முழமாக அளந்தார்; கதவுக்குக்
14 கதவு நேராயிருந்தது. தூணாதாரங்களை அறு
பது முழமாக அளந்தார்; இந்தத் தூணாதாரங்
களின் அருகே சுற்றிலும் முன்வாசலின் முற்
15 றம் இருந்தது. பிரவேசவாசலின் முகப்புத்
துவக்கி, உட்புறவாசல் மண்டப முகப்புமட்
16 டும் ஐம்பது முழமாயிருந்தது. வாசலுக்கு
உட்புறமாகச் சுற்றிலுமுள்ள அறைகளுக்கும்
அவைகளின் தூணாதாரங்களுக்கும் ஒடுக்க
மான ஜன்னல்கள் இருந்தது; [1]மண்டபங்களி
லும் அப்படியே இருந்தது; உட்புறமாய்ச்
சுற்றிலும் அந்த ஜன்னல்களும் தூணாதாரங்
களில் சித்திரிக்கப்பட்ட பேரீச்சமரங்களும்
இருந்தது.

17 பின்பு என்னை வெளிப்பிராகாரத்துக்கு
அழைத்துக்கொண்டுபோனார்; [2]அங்கே அறை
வீடுகளும், பிராகாரத்தின் சுற்றிலும் பதித்த
தளவரிசையும் இருந்தது; அந்தத் தளவரிசை
யின்மேல் முப்பது அறைவீடுகள் இருந்தது.
18 வாசலுக்குப் பக்கத்திலும் வாசல்களின் நீளத்
துக்கு எதிரிலுமுள்ள அந்தத் தளவரிசை தாழ்
19 வான தளவரிசையாயிருந்தது. பின்பு அவர்
கீழ்வாசலின் முகப்புத் துவக்கி, உட்பிராகா
ரத்துப் புறமுகப்புமட்டுமுள்ள விசாலத்தை
அளந்தார்; அது கிழக்கும் வடக்கும் நூறு முழ
20 மாயிருந்தது. வெளிப்பிராகாரத்துக்கு அடு
த்த வடதிசைக்கு எதிரான வாசலின் நீளத்
21 தையும் அகலத்தையும் அளந்தார். அதற்கு
இப்புறத்தில் மூன்று அறைகளும் அப்புறத்
தில் மூன்று அறைகளும் இருந்தது; அதின்
தூணாதாரங்களும் அதின் மண்டபங்களும்
முதல் வாசலின் அளவுக்குச் சரியாயிருந்தது;
அதின் நீளம் ஐம்பது முழமும், அகலம் இரு
22 பத்தைந்து முழமுமாயிருந்தது. அதின் ஜன்
னல்களும், அதின் மண்டபங்களும், அதின்
மேல் சித்திரிக்கப்பட்ட பேரீச்சமரங்களும்
கீழ்த்திசைக்கு எதிரான வாசலின் அளவுக்
குச் சரியாயிருந்தது; அதில் ஏறுகிறதற்கு ஏழு
படிகளிருந்தது; அதின் மண்டபங்கள் அவை
23 களுக்கு முன்னாக இருந்தது. வடதிசையி
லும் கீழ்த்திசையிலுமுள்ள ஒவ்வொரு வாச
லுக்கு எதிராக உட்பிராகாரத்துக்கும் வாசல்
கள் இருந்தது; ஒரு வாசல் துவக்கி மற்ற
24 வாசல்மட்டும் நூறு முழமாக அளந்தார். பின்பு
என்னைத் தென்திசைக்கு அழைத்துக்கொண்
டுபோனார்; அங்கே தென்திசைக்கு எதிரான
வாசல் இருந்தது; அதின் தூணாதாரங்களையும்
அதின் மண்டபங்களையும் அதற்குரிய அள
வின்படி அளந்தார். அந்த ஜன்னல்களுக்குச் 25
சரியாக அதற்கும் அதின் மண்டபங்களுக்கும்
ஜன்னல்கள் சுற்றிலும் இருந்தது; நீளம் ஐம்
பது முழமும் அகலம் இருபத்தைந்து முழமு
மாயிருந்தது. அதில் ஏறுகிறதற்கு ஏழு படி 26
களிருந்தது; அதற்கு முன்பாக அதின் மண்
டபங்களும் இருந்தது; அதின் தூணாதாரங்க
ளில் சித்திரிக்கப்பட்ட பேரீச்சமரங்களும் இந்
தப்புறத்தில் ஒன்றும் அந்தப்புறத்தில் ஒன்று
மாக இருந்தது. உட்பிராகாரத்துக்கும் ஒரு 27
வாசல் தென்திசைக்கு எதிராக இருந்தது;
தென்திசையிலுள்ள ஒரு வாசல் துவக்கி மற்ற
வாசல்மட்டும் நூறு முழமாக அளந்தார்.

பின்பு அவர் தெற்கு வாசலால் என்னை உட் 28
பிராகாரத்துக்கு அழைத்துக்கொண்டுபோய்,
அந்த அளவுக்குச் சரியாகத் தெற்கு வாசலையும்
அளந்தார். அதின் அறைகளும், அதின் 29
தூணாதாரங்களும், அதின் மண்டபங்களும்,
அந்த அளவுக்குச் சரியாக இருந்தது; அதற்
கும் அதின் மண்டபங்களுக்கும் ஜன்னல்கள்
சுற்றிலும் இருந்தது; நீளம் ஐம்பது முழமும்
அகலம் இருபத்தைந்து முழமுமாயிருந்தது.
இருபத்தைந்து முழ நீளமும் ஐந்து முழ அக 30
லமுமான மண்டபங்கள் சுற்றிலும் இருந்தது.
அதின் மண்டபங்கள் வெளிப்பிராகாரத்தில் 31
இருந்தது; அதின் தூணாதாரங்களில் சித்திரிக்
கப்பட்ட பேரீச்சமரங்களும் இருந்தது; அதில்
ஏறுகிறதற்கு எட்டுப்படிகள் இருந்தது. பின்பு 32
அவர் கீழ்த்திசை வழியாய் என்னை உட்பிரா
காரத்துக்கு அழைத்துக்கொண்டுபோய், அந்த
அளவுக்குச் சரியாக அந்த வாசலையும் அளந்
தார். அதின் அறைகளும் அதின் தூணாதா 33
ரங்களும் அதின் மண்டபங்களும் அந்த அள
வுகளுக்குச் சரியாக இருந்தது; அதற்கும்
அதின் மண்டபங்களுக்கும் ஜன்னல்கள் சுற்
றிலும் இருந்தது; நீளம் ஐம்பது முழமும் அக
லம் இருபத்தைந்து முழமுமாயிருந்தது.
அதின் மண்டபங்கள் வெளிப்பிராகாரத்தில் 34
இருந்தது; அதின் தூணாதாரங்களில் இந்தப்பு
றத்திலும் அந்தப்புறத்திலும் சித்திரிக்கப்பட்ட
பேரீச்சமரங்களும் இருந்தது; அதில் ஏறுகிற
தற்கு எட்டுப் படிகள் இருந்தது. பின்பு அவர் 35
என்னை வடக்கு வாசலுக்கு அழைத்துக்கொ
ண்டுபோய், அந்த அளவுக்குச் சரியாய் அதின்
வாசலை அளந்தார். அதின் அறைகளும் அதின் 36
தூணாதாரங்களும் அதின் மண்டபங்களும்
அளக்கப்பட்டது; அதைச்சுற்றி ஜன்னல்க
ளும் இருந்தது; நீளம் ஐம்பது முழமும்
அகலம் இருபத்தைந்து முழமுமாயிருந்தது.
அதின் தூணாதாரங்கள் வெளிப்பிராகாரத்தில் 37
இருந்தது; இந்தப்புறத்திலும் அந்தப்புறத்தி
லும் அதின் தூணாதாரங்களில் பேரீச்சமரங்க
ளும் சித்திரிக்கப்பட்டிருந்தது; அதில் ஏறுகிற
தற்கு எட்டுப் படிகள் இருந்தது.

[1] 1 இரா. 6. 4, 5
[2] வெளி. 11. 2

38 அதின் அறைகளும் அதின் கதவுகளும்
வாசல்களின் தூணுதாரங்களுக்கு அருகில்
இருந்தது; அங்கே தகனபலிகளைக் கழுவுவார்
39 கள். வாசலின் மண்டபத்திலே இந்தப்புறத்
தில் இரண்டு பீடங்களும் அந்தப்புறத்தில்
இரண்டு பீடங்களும் இருந்தது; [1]அவைக
ளின்மேல் தகன பலியையும் பாவநிவாரண
பலியையும் குற்றநிவாரண பலியையும் செலு
40 த்துவார்கள். வடக்கு வாசலுக்குள் பிரவே
சிக்கிறதற்கு ஏறிப்போகிற வெளிப்புறத்திலே
இரண்டு பீடங்களும், வாசலின் மண்டபத்தி
லுள்ள மறுபுறத்திலே இரண்டு பீடங்களும்
41 இருந்தது. வாசலின் அருகே இந்தப்புறத்
தில் நாலு பீடங்களும், அந்தப்புறத்தில் நாலு
பீடங்களும், ஆக எட்டுப் பீடங்கள் இருந்
தது; அவைகளின்மேல் பலிகளைச் செலுத்து
42 வார்கள். தகனபலிக்குரிய நாலு பீடங்கள்
வெட்டின கல்லாயிருந்தது; அவைகள் ஒன்
றரை முழ நீளமும், ஒன்றரை முழ அகல
மும், ஒரு முழ உயரமுமாயிருந்தது; அவைக
ளின்மேல் தகனபலிகளையும் மற்றப் பலிகளை
யும் செலுத்துகிற ஆயுதங்களை வைப்பார்கள்.
43 நாலு விரற்கடையான முளைகள் உள்ளே சுற்
றிலும் வரிசையாய் அடிக்கப்பட்டிருந்தது;
செலுத்தும் பலிகளின் மாம்சம் பீடங்களின்
44 மேல் வைக்கப்படும். உட்பிராகாரத்திலே
உள்வாசலுக்குப் புறம்பாகச் [2]சங்கீதக்காரரின்
அறைவீடுகள் இருந்தது; அவைகளில் வடக்கு
வாசலின் பக்கமாக இருந்தவைகள் தென்தி
சைக்கு எதிராகவும், கிழக்கு வாசலின் பக்க
மாக இருந்த வேறொரு வரிசை வடதிசைக்கு
45 எதிராகவும் இருந்தது. பின்பு அவர் என்னை
நோக்கி: தென்திசைக்கு எதிராயிருக்கிற இந்த
அறை [3]ஆலயக் காவலைக் காக்கிற ஆசாரியர்க
46 ளுடையது. வடதிசைக்கு எதிராயிருக்கிற
அறையோ, [4]பலிபீடத்தின் காவலைக் காக்கிற
ஆசாரியர்களுடையது; இவர்கள் லேவியின்
புத்திரரில் **கர்த்தருக்கு** ஆராதனை செய்கிற
தற்காக அவரிடத்தில் சேருகிற சாதோக்கின்
47 புத்திரர் என்றார். அவர் பிராகாரத்தை நூறு
முழ நீளமாகவும் நூறு முழ அகலமாகவும்
அளந்தார்; அது சதுரமாயிருந்தது; பலிபீட
மோ ஆலயத்துக்கு முன்பாக இருந்தது.
48 பின்பு அவர் என்னை ஆலய மண்டபத்
துக்கு அழைத்துக்கொண்டுபோய், மண்டபத்
தின் தூணுதாரத்தை இந்தப்புறத்தில் ஐந்து
முழமும் அந்தப்புறத்தில் ஐந்து முழமுமாக
அளந்தார்; வாசலின் அகலம் இந்தப்புறம்
மூன்று முழமும் அந்தப்புறம் மூன்று முழமு
49 மாயிருந்தது. மண்டபத்தின் நீளம் இருபது
முழமும், [5]அகலம் பதினொரு முழமுமாயிருந்
தது; அதற்கு ஏறிப்போகிற படிகளும் இருந்
தது; தூணுதாரங்களிலே இந்தப்புறத்தில் ஒரு
தூணும் அந்தப்புறத்தில் ஒரு தூணும் இருந்
தது.

41 பின்பு அவர் என்னை தேவாலயத்திற்கு
அழைத்துக்கொண்டுபோய், [6]தூணுதாரங்களை
இந்தப்புறத்தில் ஆறு முழ அகலமும் அந்தப்பு
றத்தில் ஆறு முழ அகலமுமாக அளந்தார்;
அது வாசஸ்தலத்தின் அகல அளவாம். வாசல் 2
நடையின் அகலம் பத்து முழமும் வாசல்
நடையின் பக்கங்கள் இந்தப்புறத்தில் ஐந்து மு
ழமும் அந்தப்புறத்தில் ஐந்து முழமுமாயிருந்
தது; அதின் நீளத்தை நாற்பது முழமும் அக
லத்தை இருபது முழமுமாக அளந்தார்.
பின்பு அவர் உள்ளேபோய், வாசல்நடையின் 3
தூணுதாரங்களை இரண்டு முழமாகவும், வாசல்
நடையை ஆறு முழமாகவும், வாசல்நடையின்
அகலத்தை ஏழு முழமாகவும் அளந்தார்.
பின்பு அவர் தேவாலயத்தின் முன்புறத்திலே 4
அதின் நீளத்தை இருபது முழமாகவும், [7]அதின்
அகலத்தை இருபது முழமாகவும் அளந்து,
என்னை நோக்கி: இது மகா பரிசுத்த ஸ்தலம்
என்றார். பின்பு அவர் ஆலயத்தின் சுவரை 5
ஆறு முழமாகவும், ஆலயத்தைச் சுற்றிலும்
இருந்த சுற்றுக்கட்டினுடைய அகலத்தை
நாலு முழமாகவும் அளந்தார். இந்தச் சுற்றுக் 6
கட்டுகள் பக்கக்கட்டின்மேல் பக்கக்கட்டான
வரிசைகளாய் முப்பத்துமூன்று இருந்தது;
[8]அவைகள் ஆலயத்தின் சுவருக்குள் ஊன்றி
யிராமல், சுற்றுக்கட்டுகளுக்காகச் சுற்றிலும்
அவைகள் ஊன்றும்படிக்கு ஆலயத்துக்கு
அடுத்திருந்த ஒட்டுச்சுவரிலே பாய்ந்திருந்தது.
உயர உயரச் சுற்றிலும் சுற்றுக்கட்டுகளுக்கு 7
அகலம் அதிகமாயிருந்தது; [9]ஆலயத்தைச் சுற்
றிலும் உயர உயர ஆலயத்தைச் சுற்றிச் சுற்றி
அகலம் வரவர அதிகமாயிருந்தது; ஆதலால்
இவ்விதமாய்க் கீழ்நிலையிலிருந்து நடுநிலை வழி
யாய் மேல்நிலைக்கு ஏறும் வழி யிருந்தது.
மாளிகைக்குச் சுற்றிலும் இருந்த உயரத்தை 8
யும் பார்த்தேன், சுற்றுக்கட்டுகளின் அஸ்திபா
ரங்கள் ஆறு பெரிய முழங்கொண்ட ஒரு
முழக்கோலின் உயரமாயிருந்தது. புறம்பே 9
சுற்றுக்கட்டுக்கு இருந்த சுவரின் அகலம்
ஐந்து முழமாயிருந்தது; ஆலயத்துக்கு இருக்
கும் சுற்றுக்கட்டுகளின் மாளிகையிலே வெறு
மையாய் விட்டிருந்த இடங்களும் அப்ப
டியே இருந்தது. ஆலயத்தைச் சுற்றிலும் 10
அறைவீடுகளுக்கு நடுவாக இருந்த விசாலம்
இருபது முழமாயிருந்தது. சுற்றுக்கட்டினு 11
டைய வாசல் நடைகள், வெறுமையாய் விட்
டிருந்த இடங்களிலிருந்து, ஒரு வாசல்நடை
வடக்கேயும், ஒரு வாசல்நடை தெற்கேயும்
இருந்தது; வெறுமையாய் விட்டிருந்த இடங்
களின் விசாலம் சுற்றிலும் ஐந்து முழமாயிருந்
தது. மேற்றிசையிலே பிரத்தியேகமான இடத் 12
துக்கு முன்னிருந்த மாளிகைமட்டும் அகலம்
எழுபது முழமும், மாளிகையினுடைய சுவ
ரின் அகலம் சுற்றிலும் ஐந்து முழமும், அதி
னுடைய நீளம் தொண்ணூறு முழமுமாயிருந்
தது. அவர் ஆலயத்தை நூறு முழ நீளமா 13
கவும், பிரத்தியேகமான இடத்தையும் மாளி
கையையும் அதின் சுவர்களையும் நூறு முழ
நீளமாகவும் அளந்தார். ஆலயத்தின் முற்புற 14

1 லேவி. 1. 3; 4. 2, 3; 5. 6; 7. 1
2 1 நாளா. 6. 31
3 லேவி. 8. 35. எண். 3. 27–38. 1 நாளா. 9. 23. சங். 134. 1. மல். 2. 4–7. 1 தீமோ. 6. 20
4 எண். 18. 5. 1 இரா. 2. 35
5 1 இரா. 7. 21. வெளி. 3. 12
6 வெளி. 21. 15
7 1 இரா. 6. 20. 2 நாளா. 3. 8
8 1 இரா. 6. 5, 6
9 1 இரா. 6. 8

மும் கிழக்குக்கு எதிரான பிரத்தியேகமான
இடமும் இருந்த அகலம் நூறு முழமாயி
ருந்தது.
15 பிரத்தியேகமான இடத்தின் பின்புறமாக
அதற்கு எதிரே இருந்த மாளிகையின் நீளத்
தையும், அதற்கு இந்தப்புறத்திலும் அந்தப்பு
றத்திலும் இருந்த நடைகாவணங்களையும் அளந்
தார்; உள்ளான தேவாலயமும் முற்றத்தின்
மண்டபங்களும் உட்பட நூறு முழமாயிருந்
16 தது. வாசற்படிகளும், [1]ஒடுக்கமான ஜன்னல்
களும், மூன்று பக்கங்களில் சுற்றிலும் வாசல்
களுக்கு எதிரான நடைகாவணங்களும் சுற்றி
லும் தரைதுவக்கி ஜன்னல்கள்மட்டாகப் பல
கை அடித்திருந்தது; ஜன்னல்கள் மூடப்பட்
17 டிருந்தது. வாசலின்மேலே துவக்கி ஆலயத்
தின் உட்புறமும் வெளிப்புறமும் சுற்றிலும்
சுவரின் உட்புறமும் வெளிப்புறமும் எல்லாம்
18 அளவிட்டிருந்தது. கேருபீன்களும் பேரீச்ச
மரங்களும் சித்திரிக்கப்பட்டிருந்தது; [2]கேருபீ
னுக்கும் கேருபீனுக்கும் நடுவாக ஒவ்வொரு
பேரீச்சமரம் இருந்தது; ஒவ்வொரு கேருபீ
னுக்கும் இரண்டிரண்டு முகங்கள் இருந்தது.
19 பேரீச்சமரத்துக்கு இந்தண்டையில் மனுஷ
முகமும், [3]பேரீச்சமரத்துக்கு அந்தண்டையில்
சிங்கமுகமும் இருந்தது; இப்படியே ஆலயத்
20 தைச் சுற்றிலும் செய்திருந்தது. தரைதுவக்கி
வாசலின் மேற்புறமட்டும், தேவாலயத்தின்
சுவரிலும், கேருபீன்களும் பேரீச்சமரங்களும்
21 சித்திரிக்கப்பட்டிருந்தது. தேவாலயத்தின்
கதவு நிலைகள் சதுரமும், பரிசுத்த ஸ்தலத்தினு
டைய முகப்பின் உருவம் அந்த உருவத்துக்
22 குச் சரியுமாயிருந்தது. மரத்தினால் செய்யப்
பட்ட [4]பலிபீடத்தின் உயரம் மூன்று முழ
மும், அதின் நீளம் இரண்டு முழமுமாயிருந்
தது; அதின் கோடிகளும் அதின் விளிம்புக
ளும் அதின் பக்கங்களும் மரத்தினால் செய்யப்
பட்டிருந்தது. அவர் என்னைநோக்கி: [5]இது
கர்த்தருடைய சந்நிதியிலிருக்கிற பீடம் என்
23 றார். தேவாலயத்துக்கும் [6]பரிசுத்த ஸ்தலத்
24 துக்கும் இரண்டு வாசல்களும், வாசல்களு
க்கு மடக்குக் கதவுகளாகிய இரட்டைக்கதவு
களும், இருந்தது; ஒரு வாசலுக்கு இரண்டு
கதவுகளும் மற்ற வாசலுக்கு இரண்டு கதவுக
25 ளும் இருந்தது. சுவர்களில் சித்திரிக்கப்பட்
டிருந்ததுபோல் ஆலயத்தினுடைய கதவுகளி
லும் கேருபீன்களும் பேரீச்சமரங்களும் சித்தி
ரிக்கப்பட்டிருந்தது; புறம்பே மண்டபத்தின்
26 முன்பாக உத்திரங்கள் வைத்திருந்தது. மண்
டபத்தின் பக்கங்களில் இந்தப்புறத்திலும் அந்
தப்புறத்திலும், [7]ஆலயத்தின் சுற்றுக்கட்டுகளி
லும் ஒடுக்கமான ஜன்னல்களும் சித்திரிக்
கப்பட்ட பேரீச்சமரங்களும் உத்திரங்களும்
இருந்தது.

42 பின்பு அவர் என்னை வடதிசையின் வழி
யாக வெளிப்பிராகாரத்திலே புறப்படப்பண்
ணி, [8]பிரத்தியேகமான இடத்துக்கு எதிரா
கவும், மாளிகைக்கு எதிராகவும் வடக்கே
இருந்த அறைவீடுகளுக்கு என்னை அழைத்
துக்கொண்டுபோனார். நூறு முழ நீளத்துக்கு 2
முன்னே வடக்குவாசல் இருந்தது; அவ்வி
டத்து அகலம் ஐம்பது முழம். உட்பிரா 3
காரத்தில் இருந்த இருபது முழத்துக்கு எதி
ராகவும் வெளிப்பிராகாரத்தில் இருந்த தளவ
ரிசைக்கு எதிராகவும் ஒன்றுக்கொன்று எதி
ரான மூன்று நிலைகளுள்ள [9]நடைகாவணங்
கள் இருந்தது. உட்புறத்திலே அறைவீடுக 4
ளின் முன்பாகப் பத்து முழ அகலமான வழி
யும், ஒரு முழ அகல்மான பாதையும் இருந்
தது; அவைகளின் வாசல்கள் வடக்கே இருந்
தது. உயர இருந்த அறைவீடுகள் அகலக்கட் 5
டையா யிருந்தது; நடைகாவணங்கள் கீழே
யிருக்கிற அறைவீடுகளுக்கும் நடுவே யிருக்
கிறவைகளுக்கும் அதிக உயரமான மாளிகை
யாயிருந்தது. அவைகள் மூன்று அடுக்குக 6
ளாயிருந்தது; பிராகாரங்களின் தூண்களுக்கு
இருந்ததுபோல, அவைகளுக்குத் தூண்க
ளில்லை; ஆகையால் தரையிலிருந்து அளக்க,
அவைகள் கீழேயும் நடுவேயும் இருக்கிறவை
களைப்பார்க்கிலும் அகலக்கட்டையா யிருந்
தது. புறம்பே அறைவீடுகளுக்கு எதிரே வெ 7
ளிப்பிராகாரத் திசையில் அறைவீடுகளுக்கு
முன்பாக இருந்த மதிலின் நீளம் ஐம்பது
முழம். வெளிப்பிராகாரத்திலுள்ள அறைவீ 8
டுகளின் நீளம் ஐம்பது முழம்; தேவாலயத்
துக்கு முன்னே நூறு முழமாயிருந்தது. கிழக் 9
கே வெளிப்பிராகாரத்திலிருந்து அந்த அறை
வீடுகளுக்குள் பிரவேசிக்கிற நடை அவைக
ளின் கீழே இருந்தது. கீழ்த்திசையான பிரா 10
காரத்து மதிலின் அகலத்திலே பிரத்தியேக
மான இடத்துக்கு முன்பாகவும் மாளிகைக்கு
முன்பாகவும் அறைவீடுகளும் இருந்தது.
அவைகளுக்கு முன்னான வழியிலே அந்த 11
அறைவீடுகள் நீளத்திலும் அகலத்திலும், எல்லா
வாசற்படிகளிலும், திட்டங்களிலும், வாசல்
நடைகளிலும் வடதிசையான அறைவீடுகளின்
சாயலாயிருந்தது. தென்திசையான அறைவீ 12
டுகளின் வாசல்நடைக்கு ஒப்பாக ஒரு வாசல்
நடைவழியின் முகப்பில் இருந்தது; கீழ்த்தி
சையில் அவைகளுக்குப் பிரவேசிக்கும் இடத்
திலே செம்மையான மதிலின் எதிரே இருந்த
வழியின் முகப்பில் ஒரு வாசலிருந்தது. அவர் 13
என்னை நோக்கி: பிரத்தியேகமான இடத்
துக்கு முன்னிருக்கிற வடபுறமான அறைவீ
டுகளும், தென்புறமான அறைவீடுகளும், பரி
சுத்த அறைவீடுகளாயிருக்கிறது; [10]கர்த்தரிடத்
தில் சேருகிற ஆசாரியர் அங்கே மகா பரிசுத்
தமானதையும், போஜனபலியையும், பாவநி
வாரண பலியையும், குற்றநிவாரண பலியை
யும் வைப்பார்கள்; அந்த ஸ்தலம் பரிசுத்தமா
யிருக்கிறது. ஆசாரியர் உட்பிரவேசிக்கும் 14
போது, [11]அவர்கள் பரிசுத்த ஸ்தலத்திலிருந்து
வெளிப்பிராகாரத்துக்கு வாராததற்குமுன்னே,
அங்கே தாங்கள் ஆராதனை செய்து, உடுத்தி
யிருந்த வஸ்திரங்களைக் கழற்றிவைப்பார்கள்;

[1] 40. 16
[2] 1 இரா. 6. 29. 2 நாளா. 3. 7
[3] 1. 10
[4] யாத். 30. 1
[5] யாத். 30. 8. மல். 1. 7, 12
[6] 1 இரா. 6. 31–35
[7] 40. 16
[8] 41. 12, 15
[9] 41. 16
[10] லேவி. 6. 14, 16, 26. லேவி. 13. 5
[11] 44. 19

அவ்வஸ்திரங்கள் பரிசுத்தமானவைகள்;
வேறே வஸ்திரங்களை உடுத்திக்கொண்டு, ஜன
த்தின் பிராகாரத்திலே போவார்கள் என்றார்.
15 அவர் *உள்வீட்டை அளந்து தீர்ந்தபின்பு,
கீழ்த்திசைக்கு எதிரான வாசல்வழியாய்
என்னைவெளியேஅழைத்துக்கொண்டுபோய்,
16 அதைச் சுற்றிலும் அளந்தார். கீழ்த்திசைப்
பக்கத்தை அளவுகோலால் அளந்தார்; அது
அளவுகோலின்படியே சுற்றிலும் ஐஞ்ஞூறு
17 கோலாயிருந்தது. வடதிசைப்பக்கத்தை அள
வுகோலால் சுற்றிலும் ஐஞ்ஞூறு கோலாய்
18 அளந்தார். தென்திசைப் பக்கத்தை அளவு
கோலால் ஐஞ்ஞூறு கோலாய் அளந்தார்.
19 மேற்றிசைப்பக்கத்துக்குத் திரும்பி அதை
அளவுகோலால்ஐஞ்ஞூறுகோலாய்அளந்தார்.
20 நாலு பக்கங்களிலும் அதை அளந்தார்; [1]பரி
சுத்தமானதற்கும் பரிசுத்தமல்லாததற்கும் வித்
தியாசம் பண்ணும்படிக்கு அதற்கு ஐஞ்ஞூறு
கோல் நீளமும் ஐஞ்ஞூறு கோல் அகலமு
மான மதில் சுற்றிலும் இருந்தது.
43 பின்பு அவர் என்னைக் கீழ்த்திசைக்கு
எதிர்வாசலாகிய [2]வாசலுக்கு அழைத்துக்
2 கொண்டுபோனார். இதோ, [3]இஸ்ரவேலின்
தேவனுடைய மகிமை கீழ்த்திசையிலிருந்து
வந்தது; [4]அவருடைய சத்தம் பெருவெள்ளத்
தின் இரைச்சலைப்போல இருந்தது; அவரு
3 டைய மகிமையினால் பூமி பிரகாசித்தது. நான்
கண்ட இந்த தரிசனம் நகரத்தை அழிக்க வந்
தபோது கண்ட தரிசனம்போல இருந்தது;
[5]இந்த தரிசனங்கள் கேபார் நதியண்டையிலே
நான் கண்டிருந்த தரிசனத்தைப்போலும் இருந்
4 தது; நான் முகங்குப்புற விழுந்தேன். **கர்த்த
ருடைய** மகிமை [6]கீழ்த்திசைக்கு எதிரான வா
சல் வழியாய் ஆலயத்துக்குள் பிரவேசித்தது.
5 அப்பொழுது ஆவி என்னை எடுத்து, உட்பிரா
காரத்திலே கொண்டுபோய்விட்டது; [7]இதோ,
**கர்த்தருடைய** மகிமை ஆலயத்தை நிரப்
6 பிற்று. அவர் ஆலயத்திலிருந்து என்னோடே
பேசுகிறதைக் கேட்டேன்; [8]அந்தப் புருஷன்
7 என்னண்டையில் நின்றிருந்தார். அவர்
என்னை நோக்கி: மனுபுத்திரனே, இது நான்
இஸ்ரவேல் புத்திரரின் நடுவே என்றென்
றைக்கும் வாசம்பண்ணும் [9]என் சிங்காசன
மும் என் பாதபீடத்தின் ஸ்தானமுமாயிருக்கி
றது; இனி இஸ்ரவேல் வம்சத்தாரும் அவர்
களுடைய ராஜாக்களும் என் பரிசுத்த
நாமத்தைத் தங்கள் மேடைகளில் தங்கள்
வேசித்தனத்தினாலும் தங்கள் ராஜாக்களின்
பிரேதங்களினாலும் [10]தீட்டுப்படுத்துவதில்லை.
8 அவர்கள் எனக்கும் தங்களுக்கும் நடுவே ஒரு
சுவர் இருக்கும்படி, [11]தங்கள் வாசற்படியை
என் வாசற்படியண்டையிலும், தங்கள் வாசல்
நிலைகளை என் வாசல் நிலைகளண்டையிலும்
சேர்த்து, என் பரிசுத்த நாமத்தைத் தாங்கள்
செய்த அருவருப்புகளினால் தீட்டுப்படுத்தி
னார்கள்; ஆகையால் என் கோபத்திலே அவர்
9 களை நாசமாக்கினேன். இப்பொழுதும் அவர்
கள் தங்கள் வேசித்தனத்தையும் தங்கள் ராஜாக்
களின் பிரேதங்களையும் என் சமுகத்தினின்று
அகற்றினால் [12]நான் என்றென்றைக்கும் அவர்
கள் நடுவே வாசமாயிருப்பேன்.
மனுபுத்திரனே, இஸ்ரவேல் வம்சத்தார் 10
தங்கள் அக்கிரமங்களினிமித்தம் வெட்கப்
படும்படிக்கு, [13]நீ அவர்களுக்கு இந்த ஆலயத்
தைக் காண்பி; அதின் அளவை அளக்கக்கட
வர்கள். அவர்கள் செய்த எல்லாவற்றினிமித் 11
தமும் வெட்கப்பட்டால், [14]அப்பொழுது
இந்த ஆலயத்தின் ரூபத்தையும், அதின் அள
வையும், அதின் முன்வாசல்களையும், அதின்
பின்வாசல்களையும், [15]அதின் எல்லா ஒழுங்கு
களையும், அதின் எல்லாக் கட்டளைகளையும்,
அதின் எல்லா நியமங்களையும், அதின் எல்
லாச் சட்டங்களையும் அவர்களுக்குத் தெரியப்
படுத்தி, அவர்கள் அதினுடைய எல்லா ஒழு
ங்குகளையும், [16]அதினுடைய எல்லா முறைமை
களையும் கைக்கொண்டு, அவைகளின்படி செய்
யும்படிக்கு அதை அவர்கள் கண்களுக்கு முன்
பாக எழுதிவை. ஆலயத்தினுடைய பிரமா 12
ணம் என்னவென்றால்; மலையுச்சியின்மேல்
சுற்றிலும் அதின் எல்லையெங்கும் மிகவும் பரி
சுத்தமாயிருக்கும்; இதுவே ஆலயத்தினுடைய
பிரமாணம்.
முழங்களின்படி அளக்கும் பலிபீடத்தின் 13
அளவுகளாவன; [17]ஒரு கை முழமும் நாலு விரற்
கடையும் கொண்டது ஒரு முழமாகும்; அதின்
படி சுற்றாதாரம், ஒரு முழ உயரமும், ஒரு
முழ அகலமும், அதின் ஓரத்தைச் சுற்றிலு
முள்ள விளிம்பு ஒரு ஜாணுமாயிருக்கும்; இது
பலிபீடத்தின் மேற்புறம். தரையில் இருக் 14
கிற ஆதாரந்துவக்கிக் கீழ்நிலைமட்டும் இரண்டு
முழமும், அகலம் ஒரு முழமும், சின்ன நிலை
துவக்கிப் பெரிய நிலைமட்டும் நாலு முழமும்,
அகலம் ஒரு முழமுமாயிருக்கும். பலிபீடத் 15
தின் சிகரம் நாலு முழ உயரமாயிருக்கும்;
பலிபீடத்தின் சிகரத்துக்கு மேலே நாலு
கொம்புகள் இருக்கும். பலிபீடத்தின் சிகரம் 16
பன்னிரண்டு முழ நீளமும், பன்னிரண்டு
முழ அகலமும், தன் நாலு பக்கங்களிலும்
நாற்சதுரமுமாயிருக்கும். அதின் நாலு பக்கங் 17
களிலுள்ள சட்டத்தின் நீளம் பதினாலு முழ
மும், அகலம் பதினாலு முழமும், அதைச் சுற்
றிலுமிருக்கிற விளிம்பு அரை முழமும், அத
ற்கு ஆதாரமானது சுற்றிலும் ஒரு முழமுமா
யிருக்கும்; [18]அதின் படிகள் கிழக்குக்கு எதிரா
யிருக்கும் என்றார்.
பின்னும் அவர் என்னை நோக்கி: மனுபுத் 18
திரனே, கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறது
என்னவென்றால், பலிபீடத்தை உண்டுபண்
ணும் நாளிலே அதின்மேல் தகனபலி யிடுகிற
தற்கும் [19]அதின்மேல் இரத்தம் தெளிக்கிறதற்
குமான கட்டளைகளாவன: எனக்கு ஆராதனை 19
செய்கிறதற்கு என்னிடத்தில் சேருகிற சாதோ
க்கின் வம்சத்தாரான லேவி கோத்திரத்தாரா
கிய ஆசாரியர்களுக்கு நீ பாவநிவாரணபலியாக

* உள்ளறையை

[1] 40. 2, 5. ஏசா. 26. 1. வெளி. 21. 16
[2] 10. 19: 44. 1: 46. 1
[3] 11. 23
[4] 1. 24: 10. 4. வெளி. 1. 15: 18. 1.
[5] 1. 3: 8. 4. எரே. 1. 10
[6] 10. 19
[7] 1 இரா. 8. 10, 11
[8] 40. 3
[9] யாத். 29. 45. 1 நாளா. 28. 2. சங். 99. 1, 5. பேரே. 8. 17. அப். 7. 48, 49
[10] 39. 7. எரே. 16. 18
[11] 23. 39. 2 இரா. 21. 4-7
[12] ஓசி. 2. 2. 2 கொர. 6. 16
[13] 40. 4
[14] எபி. 8. 5
[15] 1 கொர. 11. 2
[16] மத். 28. 20
[17] 40. 5: 41. 8
[18] யாத். 20. 26. 1 இரா. 6. 8. ஓசே. 9. 4
[19] லேவி. 1. 5. எபி. 12. 24

[1]ஒரு இளங்காளையைக் கொடுப்பாயாக என்று
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.
20 அதின் இரத்தத்தில் கொஞ்சம் எடுத்து, அதின்
நாலு கொம்புகளிலும், சட்டத்தின் நாலுகோடி
களிலும், சுற்றியிருக்கிற விளிம்பிலும் பூசி
பாவநிவிர்த்தி செய்து, அதைச் சுத்திகரித்து,
21 பின்பு பாவ நிவாரணத்தின் காளையைக்
கொண்டுபோய், [2]அதை ஆலயத்திலே பரி
சுத்த ஸ்தலத்துக்குப் புறம்பாகக் குறிக்கப்
பட்ட இடத்திலே சுட்டெரிக்கவேண்டும்.
22 இரண்டாம் நாளிலே பழுதற்ற ஒரு வெள்
ளாட்டுக்கடாவைப் பாவநிவாரணத்துக்காகப்
பலியிடுவாயாக; அவர்கள் இளங்காளையினு
லே பலிபீடத்தைச் சுத்திசெய்ததுபோலப்
23 பாவநிவாரணஞ் செய்யவேண்டும். நீ பாவ
நிவாரணத்தை முடித்தபின்பு, பழுதற்ற ஒரு
இளங்காளையையும், பழுதற்ற ஒரு ஆட்டுக்
கடாவையும் மந்தையிலிருந்தெடுத்துப் பலியிடு
24 வாயாக. அவைகளைக் **கர்த்தருடைய** சந்நிதி
யில் பலியிடுவாயாக; [3]ஆசாரியர்கள் அவைக
ளின்மேல் உப்பு தூவி, அவைகளைக் **கர்த்த**
25 **ருக்கு** தகனபலியாக இடக்கடவர்கள். ஏழு
நாள்வரைக்கும் தினந்தினம் பாவநிவாரணத்
துக்காக [4]ஒருவெள்ளாட்டுக்கடாவைப்படைப்
பாயாக; பழுதற்றவைகளான இளங்காளையை
யும் மந்தையிலிருந்தெடுத்த ஆட்டுக்கடாவை
26 யும் படைப்பார்களாக. ஏழுநாள்வரைக்கும்
பலிபீடத்தைப் பாவநிவிர்த்தி செய்து, அதைச்
சுத்திகரித்து, [5]பிரதிஷ்டை பண்ணக்கடவர்
27 கள். அந்நாட்கள் முடிந்தபின்பு [6]எட்டாம்
நாள்முதல் ஆசாரியர்கள் பலிபீடத்தின்மேல்
உங்கள் தகனபலிகளையும் உங்கள் ஸ்தோத்
திரபலிகளையும் படைப்பார்களாக; [7]அப்பொ
ழுது உங்களை அங்கீகரிப்பேன் என்று **கர்த்த
ராகிய ஆண்டவர்** சொல்லுகிறார்.

**44** பின்பு அவர் என்னைக் கிழக்குக்கு எதி
ரே பரிசுத்த ஸ்தலத்துப் புறவாசல் வழியே
திரும்பப்பண்ணினார்; [8]அது பூட்டப்பட்டிருந்
2 தது. அப்பொழுது **கர்த்தர்** என்னை நோக்கி:
இந்த வாசல் திறக்கப்படாமல் பூட்டப்பட்டி
ருக்கும்; [9]ஒருவரும் இதற்குள் பிரவேசிப்ப
தில்லை; இஸ்ரவேலின் தேவனாகிய **கர்த்தர்**
இதற்குள் பிரவேசித்தார், ஆகையால் இது
3 பூட்டப்பட் டிருக்கவேண்டும். இது அதி
பதிக்கே உரியது, அதிபதி **கர்த்தருடைய** சந்
நிதியில் [10]போஜனம்பண்ணும்படி இதில் உட்
காருவான்; [11]அவன் வாசல் மண்டபத்தின்
வழியாய்ப் பிரவேசித்து, மறுபடியும் அதின்
4 வழியாய்ப் புறப்படுவான் என்றார். பின்பு
அவர் என்னை வடக்கு வாசல்வழியாய் ஆல
யத்தின் முகப்பிலே அழைத்துக்கொண்டுபோ
னார்; இதோ, [12]**கர்த்தருடைய** ஆலயம் **கர்த்த
ருடைய** மகிமையால் நிறைந்ததை நான் கண்டு,
5 முகங்குப்புற விழுந்தேன். அப்பொழுது
**கர்த்தர்** என்னை நோக்கி: மனுபுத்திரனே,
**கர்த்தருடைய** ஆலயத்தின் சகல நியமங்களை
யும் அதின் சகல சட்டங்களையுங்குறித்து நான்
உன்னோடே சொல்வதையெல்லாம் நீ உன்
மனதிலே கவனித்து, [13]உன் கண்களினாலே
பார்த்து, உன் காதுகளினாலே கேட்டு, பரி
சுத்த ஸ்தலத்தினுடைய எல்லா வாசற்படி
களின் வழியாய் ஆலயத்துக்குள் பிரவேசிப்
பதும் அதிலிருந்து புறப்படுவதும் இன்னவித
மென்று நீ ஆலோசித்துப் பார்த்து, இஸ்ர 6
வேல் வம்சத்தாராகிய கலகக்காரரோடே சொ
ல்லவேண்டியது என்னவென்றால்; கர்த்தரா
கிய ஆண்டவர் உரைக்கிறார், இஸ்ரவேல் வம்
சத்தாரே, [14]நீங்கள் செய்த சகல அருவருப்பு
களும் போதும். நீங்கள் எனக்குச் செலுத்த 7
வேண்டிய ஆகாரமாகிய நிணத்தையும் இரத்
தத்தையும் செலுத்துகையில், என் ஆலயத்
தைப் பரிசுத்தக் குலைச்சலாக்கும்படி [15]விரு
த்தசேதனமில்லாத இருதயமும் விருத்தசேத
னமில்லாத மாம்சமுமுள்ள அந்நிய புத்திரரை
என் பரிசுத்த ஸ்தலத்துக்குள் இருக்கிறதற்
காக அழைத்துக்கொண்டு வந்தீர்கள்; நீங்கள்
செய்த எல்லா அருவருப்புகளினாலும் அவர்
கள் என் உடன்படிக்கையை மீறினார்கள்.
நீங்கள் என் பரிசுத்த வஸ்துக்களின் காவலைக் 8
காவாமல், [16]உங்களுக்கு இஷ்டமானவர்களை
என் பரிசுத்த ஸ்தலத்திலே என் காவலைக்
காக்கிறதற்காக வைத்தீர்கள். கர்த்தராகிய 9
ஆண்டவர் சொல்லுகிறது என்னவென்றால்:
இஸ்ரவேல் புத்திரரின் நடுவில் இருக்கிற
சகல அந்நிய புத்திரரிலும், விருத்தசேதன
மில்லாத இருதயமும் விருத்தசேதனமில்
லாத மாம்சமுமுள்ள அந்நிய புத்திரன் ஒரு
வனும் என் பரிசுத்த ஸ்தலத்துக்குள் பிரவே
சிப்பதில்லை. இஸ்ரவேல் வழிதப்பிப்போகை 10
யில், என்னைவிட்டுத் தூரமானவர்களும்,
[17]என்னைவிட்டு வழிதப்பித் தங்கள் நரகலான
விக்கிரகங்களைப் பின்பற்றினவர்களுமாகிய
லேவியரும் தங்கள் அக்கிரமத்தைச் சுமப்பார்
கள். ஆகிலும் அவர்கள் என் ஆலயத்தின் 11
வாசல்களைக் காத்து, என் ஆலயத்தில் ஊழி
யஞ்செய்து, என் பரிசுத்த ஸ்தலத்திலே பணி
விடைக்காரராயிருப்பார்கள்; [18]அவர்கள்ஜனங்
களுக்காக தகனபலிகளையும் மற்றப் பலிகளை
யும் செலுத்தி, இவர்களுக்கு ஊழியஞ்செய்கி
றதற்கு இவர்கள் முன்பாக என் பரிசுத்த ஸ்த
லத்திலே பணிவிடைக்காரராயிருப்பார்கள்.
அவர்கள் இவர்களுடையநரகலான விக்கிரகங் 12
களுக்கு முன்பாக நின்று இவர்களுக்கு ஊழி
யஞ்செய்து, [19]இஸ்ரவேல் வம்சத்தாரை அக்
கிரமத்தில் விழப்பண்ணினபடியினால், நான்
என் கையை அவர்களுக்கு விரோதமாய் உயர்
த்தினேன்; அவர்கள் தங்கள் அக்கிரமத்தைச்
சுமப்பார்கள் என்று கர்த்தராகிய ஆண்டவர்
சொல்லுகிறார். அவர்கள் எனக்கு ஆசாரிய 13
ராய் ஆராதனை செய்யும்படி என் சமீபத்தில்
வராமலும், மகா பரிசுத்தமான ஸ்தலத்தில்
என் பரிசுத்த வஸ்துக்களில் யாதொன்றையும்
கிட்டாமலும் இருக்கவேண்டும், அவர்கள்
தங்கள் இலச்சையையும் தாங்கள் செய்த அரு

1 45. 15. ழ யாத். 29. 10. ழ.
2 எபி. 13. 11
3 லேவி. 2. 13
4 யாத். 29. 35, 36
5 லேவி. 8. 33
6 லேவி. 9. 1
7 20. 40, 41. ரோ. 12. 1. 1 பே. 2. 5
8 43. 1
9 43. 2, 4
10 1 கொ. 10. 18
11 46. 2, 8
12 43. 5
13 40. 5
14 43. 8. 1 பே. 4. 3
15 லேவி. 26. 41. ரோ. 2. 28, 29
16 லேவி. 22. 2. ழ
17 1 தீமோ. 5. 22
18 எண். 16. 9. 1 நாளா. 26. 1. 2 நாளா. 29. 34
19 எண். 18. 3, 4. 2 இரா. 23. 9. ஏசா. 9. 16. மல். 2. 8

14 வருப்புகளையும் சுமக்கக்கடவர்கள். ஆலயத்
தின் சகலவேலைகளுக்கும் அதில் செய்யப்பட
வேண்டிய எல்லாவற்றிற்கும் நான் அவர்களை
அதில் காவல் காக்கிறவர்களாயிருக்கக் கட்
டளையிடுவேன்.
15 இஸ்ரவேல் புத்திரரே, என்னை விட்டு வழி
தப்பிப் போகையில், என் பரிசுத்த ஸ்தலத்
தின் காவலைக் காக்கிற சாதோக்கின் புத்திரரா
கிய லேவியரென்னும் ஆசாரியர்களே என
க்கு ஆராதனைசெய்ய என் சமீபத்தில் சேர்ந்
து, [1]நிணத்தையும் இரத்தத்தையும் எனக்குச்
செலுத்த என் சந்நிதியில் நிற்பார்களென்று
16 கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். இவர்
கள் என் பரிசுத்த ஸ்தலத்துக்குள் பிரவேசிப்
பார்கள்; [2]இவர்களே எனக்கு ஆராதனை செ
ய்ய என் பீடத்தைக் கிட்டிவந்து, என் காவ
17 லைக் காப்பார்கள். உட்பிராகாரத்தின் வாசல்
களுக்குள் பிரவேசிக்கிறபோது, [3]சணல்நூல்
வஸ்திரங்களை உடுத்திக்கொள்வார்களாக; அவ
ர்கள் உட்பிராகாரத்தின் வாசல்களிலும் உள்
ளேயும் ஆராதனை செய்கையில், ஆட்டுமயிர்
18 உடுப்பைத் தரிக்கலாகாது. அவர்களுடைய
தலைகளில் சணல்நூல் குல்லாக்களையும்,
[4]அவர்களுடைய இடைகளில் சணல்நூல் சல்
லடங்களையும் தரிக்கவேண்டும்; வேர்வை
யுண்டாக்கத்தக்க தொன்றையும் அரையில்
19 கட்டலாகாது. அவர்கள் வெளிப்பிராகாரமா
கிய புறமுற்றத்திலே ஜனங்களிடத்தில் போ
கும்போது, அவர்கள் தாங்கள் ஆராதனைசெய்
யும் சமயத்தில் உடுத்தியிருந்த தங்கள் வஸ்தி
ரங்களைக் கழற்றி, அவைகளைப் பரிசுத்த
அறைவீடுகளில் வைத்து, வேறே வஸ்திரங்
களை உடுத்திக்கொள்ளக்கடவர்கள்; [5]தங்கள்
வஸ்திரங்களாலே ஜனங்களைப் பரிசுத்தப்படுத்
20 தலாகாது. அவர்கள் தங்கள் தலைகளைச் சிரை
யாமலும், [6]தங்கள் மயிரை நீளமாய் வளர்க்கா
மலும், தங்கள் தலைமயிரைக் கத்தரிக்கக்கட
21 வர்கள். ஆசாரியர்களில் ஒருவனும், உட்பிரா
காரத்துக்குள் பிரவேசிக்கும்போது, [7]திராட்ச
22 ரசம் குடிக்கலாகாது. விதவையையும், தள்
ளிவிடப்பட்டவளையும் அவர்கள் விவாகம்
பண்ணாமல், [8]இஸ்ரவேல் வம்சத்தாளாகிய
கன்னிகையையாகிலும் ஒரு ஆசாரியனின்
மனைவியாயிருந்த விதவையையாகிலும் விவா
23 கம்பண்ணலாம். அவர்கள் பரிசுத்தமானதற்
கும் பரிசுத்தமல்லாததற்கும், [9]தீட்டானதற்கும்
தீட்டல்லாததற்கும் இருக்கும் வித்தியாசத்தை
என் ஜனத்துக்குப் போதித்து, அவர்களுக்குத்
24 தெரியப்பண்ணக்கடவர்கள். வழக்கிருந்தால்
அவர்கள் நியாயந்தீர்க்க ஆயத்தமாயிருந்து,
[10]என் நியாயங்களின்படி அதைத் தீர்த்து,
என்னுடைய பண்டிகைகளில் எல்லாம் என்
நியாயப்பிரமாணத்தையும் என் கட்டளைகளை
யும் கைக்கொண்டு, [11]என் ஓய்வுநாட்களைப் பரி
25 சுத்தமாக்கக்கடவர்கள். தகப்பன், தாய், குமா
ரன், குமாரத்தி, சகோதரன், புருஷனுக்கு
வாழ்க்கைப்படாத சகோதரி என்னும் இவர்க
ளுடைய சவத்தினால் அவர்கள் தீட்டுப்படலா
மேயல்லாமல், [12]அவர்களில் ஒருவனும் செ
த்த ஒருவனிடத்தில் போய்த் தீட்டுப்படலா
காது. அவன் சுத்திகரிக்கப்பட்ட பின்பு, 26
[13]அவனுக்கு ஏழுநாள் எண்ணப்படவேண்
டும். அவன் பரிசுத்த ஸ்தலத்தில் ஆராதனை 27
செய்யும்படி பரிசுத்த ஸ்தலம் இருக்கிற உட்
பிராகாரத்துக்குள் பிரவேசிக்கிற நாளிலே,
[14]அவன் தனக்காகப் பாவநிவாரணபலியைச்
செலுத்தக்கடவன் என்று கர்த்தராகிய ஆண்
டவர் சொல்லுகிறார். அவர்களுக்குரிய சுதந் 28
தரம் என்னவென்றால்: நானே அவர்கள் சுதந்
தரம்; [15]ஆகையால் இஸ்ரவேலில் அவர்களுக்
குக் காணியாட்சியைக் கொடாதிருப்பீர்களா
க; நானே அவர்கள் காணியாட்சி. போஜன 29
பலியையும் பாவநிவாரணபலியையும் குற்ற
நிவாரணபலியையும் அவர்கள் புசிப்பார்கள்;
[16]இஸ்ரவேலிலே பொருத்தனை பண்ணப்பட்
டதெல்லாம் அவர்களுடையதா யிருப்பதாக.
சகலவித முதற்கனிகளில் எல்லாம் முந்தின 30
பலனும், [17]நீங்கள் காணிக்கையாய்ச் செலுத்
தும் எவ்விதமான பொருள்களும் ஆசாரியர்க
ளுடையதாயிருப்பதாக; [18]உங்கள் வீட்டில் ஆ
சீர்வாதம் தங்கும்படிக்கு நீங்கள் பிசைந்தமா
வில் முதற்பாகத்தையும் ஆசாரியனுக்குக் கொ
டுக்கக்கடவீர்கள். பறவைகளிலும் மிருகங் 31
களிலும் தானாய்ச் செத்ததும் பீறுண்டது
மான ஒன்றையும் [19]ஆசாரியர்கள் புசிக்க
லாகாது.

**45** நீங்கள் சுதந்தரித்துக்கொள்ளும்படி தே
சத்தைச் சீட்டுப்போட்டுப் பங்கிடும்போது,
[20]தேசத்தில் இருபத்தையாயிரங்கோல் நீள
மும், பதினாயிரங்கோல் அகலமுமான பரி
சுத்த பங்கைக் **கர்த்தருக்கு** அர்ப்பிதமாகப் பிரி
த்து வைக்கக்கடவீர்கள்; இது தன் சுற்றெல்லை
எங்கும் பரிசுத்தமாயிருக்கும். இதிலே பரி 2
சுத்த ஸ்தலத்துக்கென்று ஐஞ்ஞூறு கோல்
நீளமும் ஐஞ்ஞூறு கோல் அகலமுமான நாற்
சதுரம் அளக்கப்படக்கடவது; [21]அதற்குச் சுற்
றிலும் ஐம்பது முழமான வெளிநிலம் இருக்க
வேண்டும். இந்த அளவு உட்பட இருபத்தை 3
யாயிரங்கோல் நீளத்தையும் பதினாயிரங்கோல்
அகலத்தையும் அளப்பாயாக; [22]அதற்குள் பரி
சுத்த ஸ்தலமும் மகா பரிசுத்த ஸ்தலமும் இரு
க்கவேண்டும். தேசத்தில் பரிசுத்த பங்காகிய 4
இது **கர்த்தருக்கு** ஆராதனை செய்யச் சேருகி
றவர்களும், பரிசுத்த ஸ்தலத்தில் ஆராதனை
செய்கிறவர்களுமான ஆசாரியருடையது;
இது அவர்களுக்கு வீடுகளுக்கான இடமும்,
பரிசுத்த ஸ்தலத்துக்கு அடுத்த இடமுமாயி
ருக்கவேண்டும். பின்னும் இருபத்தையாயிரங் 5
கோல்நீளமும்பதினாயிரங்கோல்அகலமுமான
இடம் ஆலயத்தின் பணிவிடைக்காரராகிய
லேவியருடையதாயிருக்கும்; [23]அது அவர்களு
டைய காணியாட்சி; அதில் இருபது அறைவீ
டுகள் இருக்கவேண்டும். பரிசுத்த பங்காகப் 6
படைக்கப்பட்டதற்கு எதிரேநகரத்தின் காணி

1 உபா. 10. 8
2 வெளி. 1. 6
3 யாத். 28. 39. ழ
4 யாத். 28. 40, 42
5 42. 14. லேவி. 6. 27
6 லேவி. 21. 5. ழ
7 லேவி. 10. 8. 1 தீமோ. 3. 3
8 லேவி. 21. 7, 14
9 லேவி. 10. 10, 11
10 2 நாளா. 19. 8, 10
11 ஏசா. 58. 13, 14. 1 தீமோ. 3. 15
12 லேவி. 21. 1. ழ
13 எண். 6. 10. ழ. 19. 11. ழ
14 லேவி. 4. 3
15 எண். 18. 20. உபா. 18. 1, 2. யோசு. 13. 14, 33
16 லேவி. 6. 18, 29. எண். 18, 14
17 யாத். 22. 29, 30
18 நீதி. 3. 9, 10. மல். 3. 10
19 யாத். 22. 31. லேவி. 22. 8
20 47. 22: 48. 8
21 42. 20
22 48. 10. ழ
23 40. 17

யாட்சியாக ஐயாயிரங்கோல் அகலத்தையும்
இருபத்தையாயிரங்கோல்நீளத்தையும்அளந்து
கொடுப்பீர்களாக; [1]அது இஸ்ரவேல் வம்சத்
7 தார் அனைவருக்கும் சொந்தமாயிருக்கும். பரி
சுத்த பங்காகப் படைக்கப்பட்டதற்கும் நகரத்
தின் காணியாட்சிக்கும் இந்தப்புறத்திலும்
அந்தப்புறத்திலும், [2]பரிசுத்த படைப்புக்கு
முன்பாகவும், நகரத்தின் காணிக்கு முன்பாக
வும், அதிபதியினுடைய பங்கு மேற்கிலே
மேற்புறமாகவும் கிழக்கிலே கீழ்ப்புறமாகவும்
இருப்பதாக; அதின் நீளம் மேல் எல்லை துவக்
கிக் கீழ் எல்லைமட்டும் பங்குகளில் ஒவ்
8 வொன்றுக்கும் எதிராயிருக்கவேண்டும். இது
அவனுக்கு இஸ்ரவேலிலே காணிபூமியாக
இருக்கக்கடவது; [3]என் அதிபதிகள் இனி
என் ஜனத்தை ஒடுக்காமல் தேசத்தை இஸ்ர
வேல் வம்சத்தாருக்கு அவர்களுடைய
கோத்திரங்களுக்குத் தக்கதாக விட்டுவிடுவார்க
ளாக.
9 **கர்த்தராகிய ஆண்டவர்** சொல்லுகிறது
என்னவென்றால்: இஸ்ரவேலின் அதிபதிக
ளே, நீங்கள் செய்தது போதும்; [4]நீங்கள் கொ
டுமையையும் கொள்ளையிடுதலையும் தவிர்த்து,
நியாயத்தையும் நீதியையும் செய்யுங்கள்; உங்
கள் *உத்தண்டங்களை என் ஜனத்தைவிட்டு
அகற்றுங்கள் என்று கர்த்தராகிய ஆண்டவர்
10 சொல்லுகிறார். சுமுத்திரையான தராசும்,
[5]சுமுத்திரையான மரக்காலும், சுமுத்திரை
யான அளவு குடமும் உங்களுக்கு இருக்கக்
11 கடவது. மரக்காலும் அளவுகுடமும் ஒரே
அளவாயிருந்து, மரக்கால் கலத்திலே பத்தில்
ஒரு பங்கும், அளவுகுடம் கலத்திலே பத்தில்
ஒரு பங்கும் பிடிக்கக்கடவது; கலத்தின்படி
யே அதின் அளவு நிருணயிக்கப்படுவதாக.
12 சேக்கலானது இருபது கேரா; [6]இருபது
சேக்கலும் இருபத்தைந்து சேக்கலும் பதினை
ந்து சேக்கலும் உங்களுக்கு ஒரு இராத்தலா
13 கும். நீங்கள் செலுத்தவேண்டிய காணிக்கை
யாவது: ஒரு கலம் கோதுமையிலே ஒரு மரக்
காலில் ஆறிலொரு பங்கையும், ஒரு கலம் வாற்
கோதுமையிலே ஒரு மரக்காலில் ஆறிலொரு
14 பங்கையும் படைக்கக்கடவீர்கள். அளவுகுடத்
தால் அளக்கிற எண்ணெயின் கட்டளையா
வது: பத்துக்குடம் பிடிக்கிற கலத்துக்குச் சரி
யான ஒரு ஜாடி எண்ணெயிலே பத்தில் ஒரு
பங்கைப் படைப்பீர்களாக; பத்து அளவுகு
15 டம் ஒரு கலமாகும். இஸ்ரவேல் தேசத்திலே
நல்ல மேய்ச்சலை மேய்கிற மந்தையிலே இரு
நூறு ஆடுகளில் ஒரு ஆடும், [7]அவர்களுடைய
பாவநிவாரணத்திற்காக போஜனபலியாகவும்
தகனபலியாகவும் சமாதானபலியாகவும் செ
லுத்தப்படக்கடவதென்று **கர்த்தராகிய ஆண்**
16 **டவர்** சொல்லுகிறார். இஸ்ரவேலின் அதிபதி
க்கு முன்பாக தேசத்தின் ஜனங்களெல்லா
ரும் [8]இந்தக் காணிக்கையைச் செலுத்தக்
17 கடனாளிகளாயிருக்கிறார்கள். இஸ்ரவேல் வம்
சத்தார் கூடிவரக் குறிக்கப்பட்ட சகல பண்டி

1 48. 15
2 48. 21
3 46. 18. எரே. 22. 17. யோசு. 11. 23
4 44. 6. எரே. 22. 3
* உ. அநியாயங்களை, சேதோடு. நெகே. 5. 1-13. 1 கொ. 6. 7, 8
5 லேவி. 19. 35, 36. நீதி. 11. 1
6 யாத். 30. 13. எண். 3. 47
7 லேவி. 1. 4. எபி. 9. 22, 23
8 யாத். 30. 14, 15
9 2 நாளா. 5. 6. எஸ்றா 1. 5; 6. 8, 9
10 லேவி. 16. 16
11 43. 20
12 லேவி. 4. 27
13 யாத். 12. 18. லேவி. 23. 5. ௸. எண். 9. 2, 3. உபா. 16. 1. ௸. 1 கொ. 5. 7, 8
14 எண். 28. 15. ௸
15 46. 5, 7
16 எண். 29. 12. உபா. 16. 13
17 44. 3. யோ. 10. ௸ 1-8. வெளி. 1. 28

கைகளிலும் மாதப்பிறப்புகளிலும் ஓய்வுநாட்
களிலும் தகனபலிகளையும் போஜனபலிகளை
யும் பானபலிகளையும் செலுத்துவது அதிபதி
யின்மேல் சுமந்த கடனாயிருக்கும்; [9]அவன்
இஸ்ரவேல் வம்சத்தாருக்காகப் பாவநிவார
ணம் பண்ணும்படிக்குப் பாவநிவாரணபலி
யையும் போஜனபலியையும் தகனபலியை
யும் சமாதானபலியையும் படைப்பானாக.
**கர்த்தராகிய ஆண்டவர்** சொல்லுகிறது எ 18
ன்னவென்றால்: [10]முதலாம் மாதம் முதலாந்
தேதியிலே நீ பழுதற்ற ஒரு காளையைக் கொ
ண்டுவந்து, பரிசுத்த ஸ்தலத்துக்குப் பாவநிவி
ர்த்தி செய்வாயாக. பாவநிவாரணபலியின் 19
இரத்தத்திலே கொஞ்சம் ஆசாரியன் எடுத்து,
[11]ஆலயத்தின் வாசல் நிலைகளிலும், பலிபீடத்
துச் சட்டத்தின் நாலு கோடிகளிலும், உட்
பிராகாரத்தின் வாசல் நிலைகளிலும் பூசக்கட
வன். பிழைசெய்தவனுக்காகவும், [12]அறியா 20
மல் தப்பிதம் செய்தவனுக்காகவும் அந்தப்பிர
காரமாக ஏழாந்தேதியிலும் செய்வாயாக; இவ்
விதமாய் ஆலயத்துக்குப் பாவநிவிர்த்தி செய்
வாயாக. முதலாம் மாதம் பதினாலாந்தேதியி 21
லே புளிப்பில்லாத அப்பம் புசிக்கப்படுகிற
[13]ஏழுநாள் பண்டிகையாகிய பஸ்கா ஆரம்ப
மாகும். அந்நாளிலே அதிபதி தன்னிமித்த 22
மும் தேசத்து எல்லா ஜனங்களினிமித்தமும்
பாவநிவாரணத்துக்காக ஒரு காளையைப் படை
ப்பானாக. ஏழுநாள் பண்டிகையில், அவன் 23
அந்த ஏழுநாளும் தினந்தோறும் **கர்த்தருக்குத்**
தகனபலியாகப் பழுதற்ற ஏழு காளைகளையும்
ஏழு ஆட்டுக்கடாக்களையும், [14]பாவநிவாரண
பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவையும் தின
ந்தோறும் படைப்பானாக. ஒவ்வொரு காளை 24
யோடே ஒரு மரக்கால் மாவும் ஒவ்வொரு
ஆட்டுக்கடாவோடே ஒரு மரக்கால் மாவுமான
போஜனபலியையும், [15]ஒவ்வொரு மரக்கால்
மாவோடே ஒரு படி எண்ணெயையும் படை
ப்பானாக. ஏழாம் மாதம் பதினைந்தாந் தேதி 25
யில் ஆரம்பமாகிற பண்டிகையிலே அவன்
அப்படியே [16]ஏழுநாளும் அதற்குச் சரியான
பிரகாரமாகப் பாவநிவாரண பலிகளையும் தக
னபலிகளையும் போஜனபலிகளையும், எண்
ணெயையும் படைக்கக்கடவன்.
**கர்த்தராகிய ஆண்டவர்** சொல்லுகிறது **46**
என்னவென்றால்: வேலைசெய்கிற ஆறுநாளி
லும் கிழக்குக்கு எதிரான உட்பிராகாரத்தி
னுடைய வாசல் பூட்டப்பட்டிருந்து, ஓய்வு
நாளிலும் மாதப்பிறப்பிலும் திறக்கப்படக்கட
வது. அப்பொழுது அதிபதி வெளிவாசல் 2
மண்டபத்தின் வழியாய்ப் பிரவேசித்து, [17]வா
சல் நிலையண்டையிலே நிற்கக்கடவன்; ஆசா
ரியர்களோ அவனுடைய தகனபலியையும்
அவனுடைய சமாதான பலிகளையும் படைக்
கக்கடவர்கள்; அவன் வாசற்படியிலே ஆரா
தனை செய்து, பின்பு புறப்படுவானாக; அந்த
வாசல் சாயங்காலமட்டும் பூட்டப்படாதிருப்ப
தாக. தேசத்து ஜனங்களும் ஓய்வுநாட்களி 3

லும் மாதப்பிறப்புகளிலும் [1]அந்த வாசலின்
நடையிலே **கர்த்தருடைய** சந்நிதியில் ஆரா
4 தனை செய்யக்கடவர்கள். அதிபதி ஓய்வுநாளி
லே **கர்த்தருக்குப்** பலியிடும் தகனபலி, [2]பழு
தற்ற ஆறு ஆட்டுக்குட்டிகளும் பழுதற்ற ஒரு
5 ஆட்டுக்கடாவுமே. ஆட்டுக்கடாவோடே போ
ஜனபலியாக ஒரு மரக்கால் மாவையும், [3]ஆட்
டுக்குட்டிகளோடே போஜனபலியாகத் தன்
திராணிக்குத்தக்கதாய்த் தருகிற ஈவையும், ஒவ்
வொரு மரக்கால் மாவோடே ஒருபடி எண்
6 ணெயையும் படைக்கக்கடவன். மாதப்பிறப்
பான நாளிலோ, அவன் பழுதற்ற ஒரு இளங்
காளையையும், பழுதற்ற ஆறு ஆட்டுக்குட்டி
களையும், ஒரு ஆட்டுக்கடாவையும் பலியிட்டு,
7 போஜனபலியாக இளங்காளையோடே ஒரு
மரக்கால் மாவையும், ஆட்டுக்கடாவோடே
ஒரு மரக்கால் மாவையும், ஆட்டுக்குட்டிக
ளோடே தன் திராணிக்குத் தக்கதாய், ஒவ்
வொரு மரக்கால் மாவோடே ஒரு படி எண்
8 ணெயையும் படைக்கக்கடவன். அதிபதி
வருகிறபோது வாசல்மண்டபத்தின் வழியா
ய்ப் பிரவேசித்து, [4]அது வழியாய்த் திரும்பப்
9 புறப்படக் கடவன். தேசத்தின் ஜனங்கள்
குறிக்கப்பட்ட நாட்களில் **கர்த்தருடைய** சந்
நிதியில் வரும்போது, [5]ஆராதனை செய்கிற
தற்காக வடக்கு வாசல்வழியாய் உட்பிரவேசி
த்தவன் தெற்கு வாசல்வழியாய்ப் புறப்பட
வும், தெற்கு வாசல்வழியாய் உட்பிரவேசித்த
வன் வடக்கு வாசல்வழியாய்ப் புறப்படவும்
கடவன்; தான் பிரவேசித்த வாசல்வழியாய்த்
திரும்பிப்போகாமல், தனக்கு எதிரான வழி
10 யாய்ப் புறப்பட்டுப் போவானாக. அவர்கள்
உட்பிரவேசிக்கும்போது, அதிபதி அவர்கள்
நடுவிலே அவர்களோடேகூட உட்பிரவேசி
த்து, அவர்கள் புறப்படும்போது அவனும்
11 கூடப் புறப்படுவானாக. பண்டிகைகளிலும்
குறிக்கப்பட்ட காலங்களிலும் அவன் படைக்
கும் போஜனபலியாவது: [6]காளையோடே
ஒரு மரக்கால் மாவும், ஆட்டுக்கடாவோடே
ஒரு மரக்கால் மாவும், ஆட்டுக்குட்டிகளோ
டே அவன் திராணிக்குத் தக்கதாய்த் தருகிற
ஒரு ஈவும், ஒவ்வொரு மரக்கால் மாவோடே
ஒருபடி எண்ணெயும் கொடுக்கவேண்டும்.
12 அதிபதி உற்சாகமான தகனபலியையாகிலும்,
சமாதான பலிகளையாகிலும் **கர்த்தருக்கு** உற்
சாகமாய்ச் செலுத்தவேண்டுமென்றால், அவ
னுக்குக் கிழக்கு நோக்கிய எதிரான வாசல்
திறக்கப்படுவதாக; [7]அப்பொழுது அவன் ஓய்
வுநாளில் செய்கிறதுபோல, தன் தகனபலி
யையும் தன் சமாதானபலியையும் செலுத்தி,
பின்பு புறப்படக்கடவன்; அவன் புறப்பட்ட
13 பின்பு வாசல் பூட்டப்படவேண்டும். தினந்
தோறும் ஒரு வயதான பழுதற்ற ஒரு ஆட்டுக்
குட்டியைக் **கர்த்தருக்குத்** தகனபலியாகப்
படைக்கக்கடவாய்; [8]காலைதோறும் அதைப்
14 படைக்கவேண்டும். அதினோடே காலைதோ
றும் போஜனபலியாக ஒரு மரக்கால் மாவிலே

1 யோ. 10. 9
2 45. 17
3 45. 24. உபா. 16. 17
4 2. வச
5 யாத். 23. 14-17. உபா. 16. 16. மல். 4. 4
6 5. வச
7 44. 3
8 யாத். 29. 38, எண். 28. 3
9 லேவி. 25. 10
10 34. 5, 6: 45. 8
11 44. 19. 2 நாளா. 35. 13

ஆறத்தொரு பங்கையும், மெல்லிய மாவைப்
பிசையும்படிக்கு ஒரு படி எண்ணெயிலே
மூன்றத்தொரு பங்கையும் படைக்கக்கடவாய்;
இது அன்றாடம் **கர்த்தருக்குப்** படைக்கவே
ண்டிய நித்திய கட்டளையான போஜனபலி.
இப்படிக் காலைதோறும் அன்றாட தகன 15
பலியாக ஆட்டுக்குட்டியையும் போஜனபலி
யையும் எண்ணெயையும் செலுத்துவார்க
ளாக.

**கர்த்தராகிய ஆண்டவர்** சொல்லுகிறது 16
என்னவென்றால்: அதிபதி தன் குமாரரில்
ஒருவனுக்குத் தன் சுதந்தரத்தில் ஒரு பங்கைக்
கொடுத்தால், அது அவன் குமாரருடையதா
யிருக்கும்; அது சுதந்தரவீதமாய் அவர்களுக்
குச் சொந்தமாகும். அவன் தன் ஊழியக்கா 17
ரரில் ஒருவனுக்குத் தன் சுதந்தரத்தில் ஒரு
பங்கைக் கொடுத்தானேயாகில், [9]அது விடு
தலையின் வருஷமட்டும் அவனுடையதா யிரு
ந்து, பின்பு திரும்ப அதிபதியின் வசமாய்ச்
சேரும்; அதின் சுதந்தரம் அவன் குமாரருக்கே
உரியது, அது அவர்களுடையதாயிருக்கும்.
அதிபதியானவன் ஜனத்தை இடுக்கண் 18
செய்து, அவர்களின் சொந்தமானதற்கு அவர்
களைப் புறம்பாக்கி, அவர்களுடைய சுதந்தரத்
திலிருந்து ஒன்றும் எடுக்கலாகாது; [10]என்
ஜனத்தில் ஒருவரும் தங்கள் சொந்தமானதற்
குப் புறம்பாக்கப்பட்டுச் சிதறடிக்கப் படாத
படிக்கு அவன் தன் சொந்தத்திலே தன் குமா
ரருக்குச் சுதந்தரம் கொடுக்கக்கடவன்.

பின்பு அவர் வாசலின் பக்கத்தில் இருந்த 19
நடைவழியாய் என்னை வடக்குக்கு எதிரான
ஆசாரியர்களுடைய பரிசுத்த அறைவீடுகளு
க்கு அழைத்துக்கொண்டு போனார்; அவ்விடத்
தில் மேற்கே இருபுறத்திலும் ஒரு இடம்
இருந்தது. அவர் என்னை நோக்கி: குற்ற 20
நிவாரணபலியையும் பாவ நிவாரணபலியை
யும் போஜனபலியையும் ஆசாரியர்கள் வெளி
ப்பிராகாரத்திலே கொண்டுபோய் ஜனங்க
ளைப் பரிசுத்தம்பண்ணாதபடிக்கு, [11]அவர்கள்
அவைகளைச் சமைக்கிறதற்கும் சுடுகிறதற்கு
மான ஸ்தலம் இதுவே என்றார். பின்பு 21
அவர் என்னை வெளிப்பிராகாரத்தில் அழைத்
துக்கொண்டுபோய், என்னைப் பிராகாரத்தின்
நாலு மூலைகளையும் கடந்துபோகப் பண்ணி
னார்; பிராகாரத்து ஒவ்வொரு மூலையிலும்
ஒவ்வொரு முற்றம் இருந்தது. பிராகாரத் 22
தின் நாலு மூலைகளிலும் புகைத்துவாரங்க
ளுள்ள இந்த முற்றங்கள் நாற்பது முழ நீள
மும், முப்பது முழ அகலமுமானவைகள்;
இந்த நாலு மூலை முற்றங்களுக்கும் ஒரே
அளவு இருந்தது. இந்த நாலுக்கும் சுற்றிலும் 23
உள்ளே ஒரு சுற்றுக்கட்டு உண்டாயிருந்தது;
இந்தச் சுற்றுக்கட்டுகளின் சுற்றிலும் அடுப்பு
கள் போடப்பட்டிருந்தது. அவர் என்னை 24
நோக்கி: இவைகள் ஜனங்கள் இடும் பலிகளை
ஆலயத்தின் பணிவிடைக்காரர் சமைக்கிற
வீடுகள் என்றார்.

**47** பின்பு அவர் என்னை ஆலயத்தின் வாச
லுக்குத் திரும்பிவரப்பண்ணினர்; [1]இதோ,
வாசற்படியின் கீழிருந்து தண்ணீர் புறப்பட்
டுக் கிழக்கே ஓடுகிறதாயிருந்தது; ஆலயத்தின்
முகப்பு கிழக்கு நோக்கியிருந்தது; அந்தத் தண்
ணீர் ஆலயத்தின் வலதுபுறமாய்ப் பலிபீடத்
2 துக்குத் தெற்கே பாய்ந்தது. அவர் என்னை
வடக்கு வாசல்வழியாய்ப் புறப்படப்பண்ணி,
என்னை வெளியிலே கீழ்த்திசைக்கு எதிரான
புறவாசல்மட்டும் சுற்றி நடத்திக்கொண்டு
போனர்; அங்கே தண்ணீர் வலதுபுறத்திலிரு
3 ந்து பாய்கிறதாயிருந்தது. அந்தப் புருஷன்
தமது கையில் நூலைப் பிடித்துக்கொண்டு,
[2]கிழக்கே புறப்படுகையில் ஆயிரமுழம் அள
ந்து, என்னைத் தண்ணீரைக் கடக்கப்பண்ணி
ஞர்; தண்ணீர் கணுக்கால் அளவாயிருந்தது.
4 பின்னும் அவர் ஆயிரமுழம் அளந்து, என்
னைத் தண்ணீரைக் கடக்கப்பண்ணினர்;
அங்கே தண்ணீர் முழங்கால் அளவாயிருந்
தது; பின்னும் அவர் ஆயிரமுழம் அளந்து
என்னைக் கடக்கப்பண்ணினர்; அங்கே தண்
5 ணீர் இடுப்பளவாயிருந்தது. பின்னும் அவர்
ஆயிரமுழம் அளந்தார்; அங்கே அது நான்
கடக்கக்கூடாத நதியாயிருந்தது; [3]தண்ணீர்
நீச்சாழமும் கடக்கமுடியாத நதியுமாயிருந்
6 தது. அவர் என்னை நோக்கி: மனுபுத்திர
னே, இதைக் கண்டாயா என்று சொல்லி,
என்னை நதியோரமாய்த் திரும்ப நடத்திக்
7 கொண்டு போனர். நான் நடந்துவருகையில்,
இதோ, நதியோரத்தில் இக்கரையிலும் அக்க
ரையிலும் வெகு திரளான விருட்சங்கள் இருந்
8 தது. அவர் என்னை நோக்கி: இந்தத் தண்
ணீர் கிழக்கு தேசத்துக்குப்புறப்பட்டுப்போய்,
*வனாந்தரவழியாய் ஓடி கடலில் விழும்; இது
கடலில் பாய்ந்து, விழுந்தபின்பு, அதின் தண்
9 ணீர் ஆரோக்கியமாகும். சம்பவிப்பது என்
னவென்றால், இந்த நதி போகுமிடமெங்கும்
சஞ்சரிக்கும் ஜீவபிராணிகள் யாவும் பிழைக்
கும்; இந்தத் தண்ணீர் அங்கே வந்தபடியினால்
வெகு ஏராளமான மச்சங்களும் உண்டாயி
ருக்கும்; [4]இந்த நதி போகுமிடமெங்குமுள்ள
10 யாவும் ஆரோக்கியப்பட்டுப் பிழைக்கும். அப்
பொழுது என்கேதி துவக்கி எனெக்லாயிம்
மட்டும் மீன்பிடிக்கிறவர்கள் அதின் கரையி
லே நிற்பார்கள்; [5]அதெல்லாம் வலைகளை விரிக்
கிற ஸ்தலமாயிருக்கும்; அதின் மச்சங்கள்
பெரிய சமுத்திரத்தின் மச்சங்களைப்போலப்
பல ஜாதியும் மகா ஏராளமுமாயிருக்கும்.
11 ஆனாலும் அதினுடைய உளையான பள்ளங்
களும் அதினுடைய மடுக்களும் ஆரோக்கிய
மாகாமல், [6]உப்பாகவே விட்டுவிடப்படும்.
12 நதியோரமாய் அதின் இக்கரையிலும் அக்
கரையிலும் புசிப்புக்கான சகலவித விருட்சங்
களும் வளரும்; அவைகளின் இலைகள் உதிர்
வதுமில்லை, அவைகளின் கனிகள் கெடுவது
மில்லை; [7]அவைகளுக்குப் பாயும் தண்ணீர்
பரிசுத்த ஸ்தலத்திலிருந்து பாய்கிறபடியினால்
மாதந்தோறும் புதுக்கனிகளைக் கொடுத்துக்
கொண்டேயிருக்கும்; அவைகளின் கனிகள்
புசிப்புக்கும், அவைகளின் இலைகள் அவிழ்
தத்துக்குமானவைகள்.

கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறது 13
என்னவென்றால்: நீங்கள் இஸ்ரவேலின் பன்
னிரண்டு கோத்திரங்களுடைய இலக்கத்தின்
படியே தேசத்தைச் சுதந்தரித்துக்கொண்டு
குறிக்கவேண்டிய எல்லையாவது: [8]யோசேப்
புக்கு இரண்டு பங்கு உண்டு. சகோதரனோ 14
டே சகோதரனுக்குச் சரிபங்கு உண்டாக
அதைச் சுதந்தரித்துக் கொள்ளக்கடவீர்கள்;
அதை உங்கள் பிதாக்களுக்குக் கொடுப்பேன்
என்று நான் ஆணையிட்டுக் கொடுத்தேன்;
[9]ஆகையால் உங்களுக்கு இந்த தேசம் சுதந்தர
மாகக் கிடைக்கும். தேசத்தின் எல்லையாவது: 15
வடபுறம் பெரிய சமுந்திரந்துவக்கி, [10]சேதா
துக்குப் போகிற எத்லோன் வழியாயிருக்கிற,
ஆமாத்தும், பேரொத்தாவும், தமஸ்குவின் 16
எல்லைக்கும் ஆமாத்தின் எல்லைக்கும் நடுவான
[11]சிப்ராயிமும், ஆப்ரானின் எல்லையோடே
சேர்ந்த ஆத்சார் அத்திகோனுமானது. அப்
படியே சமுத்திரத்திலிருந்து போகிற எல்லை 17
ஆத்சார் ஏனோனும், தமஸ்குவின் எல்லையும்,
[12]வடமூலையான வடக்கும் ஆமாத்தின் எல்லை
யுமானது; இது வடபுறம். கீழ்ப்புறத்தை ஆப் 18
ரானுக்கும் தமஸ்குவுக்கும் நடுவாகவும், கீலே
யாத்துக்கும் யோர்தானின் ஓரமான இஸ்ர
வேல் தேசத்துக்கும் நடுவாகவும் கீழ்க்கடல்
மட்டும் இருக்கும் எல்லையாய் அளப்பீர்களா
க; இது கீழ்ப்புறம். தென்மூலையான தென் 19
புறம் தாமார் துவக்கி, [13]காதேசிலுள்ள சண்
டைமூட்டுதலின் தண்ணீர்கள்மட்டமாகவும்,
ஆறுமட்டாகவும், பெரிய சமுத்திரமட்டாக
வும் இருப்பது; இது தென்மூலையான தென்
புறம். மேற்புறம் அந்த எல்லை துவக்கி ஆமா 20
த்துக்கு எதிராக வந்து சேருமட்டும் இருக்கிற
பெரிய சமுத்திரமே; இது மேற்புறம். இந்த 21
தேசத்தை நீங்கள் இஸ்ரவேல் கோத்திரங்க
ளின்படியே உங்களுக்குள்ளே பங்கிட்டுக்
கொள்வீர்களாக. உங்களுக்கும், உங்களுக்குள் 22
ளே தங்கி உங்களுக்குள்ளே பிள்ளைகளைப் பெ
றுகிற அந்நியர்களுக்கும், நீங்கள் அதைச் சீட்
டுப்போட்டுச் சுதந்தரமாக்கிக்கொள்வீர்களாக;
[14]இவர்கள் உங்களுக்கு இஸ்ரவேல் புத்திரரில்
பிறந்தவர்களைப்போல இருந்து, உங்களோ
டேகூட இஸ்ரவேல் கோத்திரங்களின் நடு
வே சுதந்தரத்துக்கு உடன்படுவார்களாக. அந் 23
நியன் எந்தக் கோத்திரத்தோடே தங்கியிருக்கி
றானோ, அதிலே அவனுடைய சுதந்தரத்தை
அவனுக்குக் கொடுக்கக்கடவீர்கள் என்று கர்த்
தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

கோத்திரங்களின் நாமங்களாவன: [15]வட **48**
முனை துவக்கி ஆமாத்துக்குப் போகிற எத்
லோன் வழியின் ஓரத்துக்கும், ஆத்சார் ஏனோ
னுக்கும், ஆமாத்தருகே வடக்கேயிருக்கிற தம
ஸ்குவின் எல்லைக்கும் உள்ளாகக் கீழ்த்திசை

1 ஏசா. 55. 1. எசே. 2. 13. யோவே. 2. 18. சகரி. 13. 1: 14. 8. வெளி. 22. 1, 17
2 40. 3
3 ஏசா. 11. 9. ஆப. 2. 14. மத். 13. 31, 32
* சமூம். உபா. 3. 17: 4. 49. யோசு. 3. 16
4 யாத். 15. 26. சங். 103. 3. ஏசா. 30. 26. யோ. 3. 16: 11. 26
5 எண். 24. 6. மத். 4. 19
6 எரே. 17. 6
7 சங். 1. 3. எரே. 17. 8 வெளி. 22. 2
8 ஆதி. 48. 5; 49. 26
9 48. 29
10 எண். 34. 8
11 2 சாமு. 8. 8
12 எண். 34. 9
13 48. 28. எண். 20. 13. உபா. 32. 51. சங். 81. 7
14 அப். 15. 9. ரோ. 10. 12. கலா. 3. 28. எபே. 2. 12, 13: 3. 6. கொலோ. 3. 11. வெளி. 7. 9, 10
15 47. 15.

துவக்கி மேற்றிசைமட்டும் தாணுக்கு ஒரு பங்
2 கும், தாணின் எல்லையருகே கீழ்த்திசை
துவக்கி மேற்றிசைமட்டும் ஆசேருக்கு ஒரு
3 பங்கும், ஆசேரின் எல்லையருகே கீழ்த்திசை
துவக்கி மேற்றிசைமட்டும் நப்தலிக்கு ஒரு
4 பங்கும், நப்தலியின் எல்லையருகே கீழ்த்
திசை துவக்கி மேற்றிசைமட்டும் மனாசேக்கு
5 ஒரு பங்கும், மனாசேயின் எல்லையருகே
கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்டும் எப்பி
6 ராயீமுக்கு ஒரு பங்கும், எப்பிராயீமின் எல்
லையருகே கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்
7 டும் ரூபேனுக்கு ஒரு பங்கும், ரூபேனின்
எல்லையருகே கீழ்த்திசை துவக்கி மேற்
றிசைமட்டும் யூதாவுக்கு ஒரு பங்கும் உண்
டாவதாக.
8 யூதாவின் எல்லையருகே கீழ்த்திசை துவக்கி
மேற்றிசைமட்டும் நீங்கள் [1]அர்ப்பிதமாக்கவே
ண்டிய பங்கு இருக்கும்; அது, இருபத்தை
யாயிரங்கோல் அகலமும், கீழ்த்திசை துவக்கி
மேற்றிசைமட்டும் இருக்கிற பங்குகளில் ஒவ்
வொன்றுக்கும் சரியான நீளமுமாம்; பரிசுத்த
9 ஸ்தலம் அதின் நடுவிலே இருப்பதாக. இதி
லே **கர்த்தருக்கு** நீங்கள் அர்ப்பிதமாக்கவேண்
டிய பங்கு இருபத்தையாயிரங்கோல் நீளமும்,
பதினாயிரங்கோல் அகலமுமா யிருப்பதாக.
10 வடக்கே இருபத்தையாயிரங்கோல் நீளமும்,
மேற்கே பதினாயிரங்கோல் அகலமும், கிழக்
கே பதினாயிரங்கோல் அகலமும், தெற்கே
இருபத்தையாயிரங்கோல் நீளமுமாகிய இந்
தப் பரிசுத்த அர்ப்பித நிலமானது ஆசாரியரு
டையதாயிருக்கும்; **கர்த்தருடைய** பரிசுத்த
11 ஸ்தலம் அதின் நடுவிலே இருப்பதாக. இஸ்ர
வேல் புத்திரர் வழிதப்பிப்போகையில், லேவி
யர் வழிதப்பிப்போனதுபோல வழிதப்பிப்
போகாமல், [2]என் காவலைக் காத்துக்கொண்ட
சாதோக்கின் புத்திரராகிய பரிசுத்தமாக்கப்
பட்ட ஆசாரியர்களுக்கு அது உரியதாகும்.
12 அப்படியே தேசத்தில் அர்ப்பிதமாக்கப்படுகிற
திலே மகா பரிசுத்தமான பங்கு அவர்களுக்கு
லேவியருடைய எல்லையருகே இருப்பதாக.
13 ஆசாரியரின் எல்லைக்கு எதிராக லேவியர்
அடையும் பங்கு இருபத்தையாயிரங்கோல்
நீளமும், பதினாயிரங்கோல் அகலமுமா யிருக்
கவேண்டும்; நீளம் இருபத்தையாயிரங்கோ
லும், அகலம் பதினாயிரங்கோலுமாயிருப்ப
14 தாக. அவர்கள் அதில் ஒன்றையும் விற்கவும்
தேசத்தின் முதல் விளைவை [3]மாற்றவும் மற்ற
வர்களுக்குக் கொடுக்கவும் தகாது; அது **கர்த்**
15 **தருக்குப்** பரிசுத்தமானது. இருபத்தையா
யிரங் கோலுக்கு எதிராக அகலத்தில் மீதியா
யிருக்கும் ஐயாயிரங்கோலோவென்றால், பரி
சுத்தமாயிராமல், [4]குடியேறும் நகரத்துக்கும்
வெளி நிலங்களுக்கும் விடவேண்டும்; நகரம்
16 அதின் நடுவில் இருப்பதாக. அதின் அளவு
களாவன: வடபுறம் நாலாயிரத்தைந்நூறு கோ
லும், தென்புறம் நாலாயிரத்தைந்நூறு கோ
லும், கீழ்ப்புறம் நாலாயிரத்தைந்நூறு கோ

[1] 45. 1–6
[2] 44. 15
[3] லேவி. 27. 10, 28, 33
[4] 42. 20
[5] 45. 6
* ஏசேபா. 47. 19
[6] 47. 14, 21. 22

லும், மேற்புறம் நாலாயிரத்தைந்நூறு கோ
லுமாம். நகரத்தின் வெளிநிலங்கள் வடக்கே 17
இருநூற்றைம்பது கோலும், தெற்கே இரு
நூற்றைம்பது கோலும், கிழக்கே இருநூற்
றைம்பது கோலும், மேற்கே இருநூற்றைம்
பது கோலுமா யிருப்பதாக. பரிசுத்த அர்ப் 18
பித நிலத்துக்கு எதிராக நீளத்தில் மீதியானது
கிழக்கே பதினாயிரங்கோலும் மேற்கே பதினா
யிரங்கோலுமாம்; அது பரிசுத்த அர்ப்பித நிலத்
துக்கு எதிராயிருக்கும்; அதின் வருமானம்
நகரத்திற்காக ஊழியஞ்செய்கிறவர்களுக்கு
ஆகாரமா யிருப்பதாக. இஸ்ரவேலின் சகல 19
கோத்திரங்களிலுமிருந்து குறிக்கப்பட்ட
[5]சிலர் நகரத்திற்காகப் பணிவிடை செய்வார்
கள். அர்ப்பித நிலமனைத்தும் இருபத்தையா 20
யிரங்கோல் நீளமும், இருபத்தையாயிரங்
கோல் அகலமுமாய் இருக்கக்கடவது; பட்
டணத்தின் காணி உட்பட இந்தப் பரிசுத்த
அர்ப்பிதநிலம் சதுரமாயிருக்கவேண்டும்.
பரிசுத்த அர்ப்பிதநிலத்துக்கும் நகரத்தின் 21
காணிக்கும் இந்தப்புறத்திலும் அந்தப்புறத்தி
லும், அர்ப்பிதநிலத்தினுடைய இருபத்தையா
யிரங்கோலின் முன்பாகக் கிழக்கு எல்லைமட்
டுக்கும், மேற்கிலே இருபத்தையாயிரங்கோ
லின் முன்பாக மேற்கு எல்லைமட்டுக்கும்
மீதியாயிருப்பது அதிபதியினுடையது; பங்கு
களுக்கு எதிரான அது அதிபதியினுடைய
தாயிருப்பதாக; அதற்கு நடுவாகப் பரிசுத்த
அர்ப்பிதநிலமும் ஆலயத்தின் பரிசுத்த ஸ்தல
மும் இருக்கும். அதிபதியினுடையதற்கு 22
நடுவேயிருக்கும் லேவியரின் காணிதுவக்கி
யும் நகரத்தின் காணிதுவக்கியும், யூதாவின்
எல்லைக்கும் பென்யமீனின் எல்லைக்கும் நடு
வேயிருக்கிறது அதிபதியினுடையது. மற்றக் 23
கோத்திரங்களுக்கு உண்டாகும் பங்குகளா
வன: கீழ்த்திசைதுவக்கி மேற்றிசைமட்டும்
பென்யமீனுக்கு ஒருபங்கும், பென்யமீன் 24
எல்லையருகே கீழ்த்திசைதுவக்கி மேற்றிசை
மட்டும் சிமியோனுக்கு ஒரு பங்கும், சிமி 25
யோனின் எல்லையருகே, கீழ்த்திசைதுவக்கி
மேற்றிசைமட்டும் ஈசக்காருக்கு ஒரு பங்கும்,
ஈசக்காரின் எல்லையருகே கீழ்த்திசைதுவக்கி 26
மேற்றிசைமட்டும் செபுலோனுக்கு ஒரு பங்
கும், செபுலோனின் எல்லையருகே, கீழ்த் 27
திசைதுவக்கி மேற்றிசைமட்டும் காத்துக்கு
ஒரு பங்கும் உண்டாயிருப்பதாக. காத்தின் 28
எல்லையருகே தென் மூலையாகிய தெற்கு
எல்லை, தாமார் துவக்கி காதேசிலுள்ள *சண்
டைமூட்டுதலின் தண்ணீர்கள் மட்டாகவும்
பெரிய சமுத்திரமட்டாகவும் போகும். சுதந் 29
தரிக்கும்படி இதுவே நீங்கள் இஸ்ரவேல்
கோத்திரங்களுக்குச் சீட்டுப்போட்டுப் பங்கி
டும் தேசம், [6]இவைகளே அவர்களின் பங்கு
கள் என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு
கிறார்.
நகரத்தினின்று புறப்படும் வழிகளாவன: 30
வடபுறத்திலே நாலாயிரத்தைந்நூறு கோலா

31 கிய அளவுண்டாயிருக்கும். நகரத்தின் வா
சல்கள், [1]இஸ்ரவேல் கோத்திரங்களுடைய
நாமங்களின்படியே பெயர் பெறக்கடவது;
வடக்கே ரூபேனுக்கு ஒரு வாசல், யூதாவுக்கு
ஒரு வாசல், லேவிக்கு ஒரு வாசல், ஆக மூன்
32 று வாசல்கள் இருப்பதாக. கிழ்ப்புறத்திலே நா
லாயிரத்தைந்நூறுகோல், அதில் யோசேப்
புக்கு ஒரு வாசல், பென்யமீனுக்கு ஒரு வா
சல், தாணுக்கு ஒரு வாசல், ஆக மூன்று வாசல்
33 கள் இருப்பதாக. தென்புறத்திலே நாலாயி
ரத்தைந்நூறு கோல், அதில் சிமியோனுக்கு
ஒரு வாசல், ஈசக்காருக்கு ஒரு வாசல், செபு
லோனுக்கு ஒரு வாசல், ஆக மூன்று வாசல்
கள் இருப்பதாக. மேற்புறத்திலே நாலாயிரத் 34
தைந்நூறு கோல், அதில் காத்துக்கு ஒரு
வாசல், ஆசேருக்கு ஒரு வாசல், நப்தலிக்கு
ஒரு வாசல், ஆக மூன்று வாசல்கள் இருப்ப
தாக. சுற்றிலும் அதின் அளவு பதினெண் 35
ணாயிரங்கோலாகும்; அந்நாள்முதல் நகரம்
*யேகோவா ஷம்மா என்னும் பெயர் பெறும்.

[1] வெளி. 21. 12.

* கர்த்தர் அங்கே இருக்கிறார். சங். 46. 5. எரே. 3. 17. யோவே. 3. 21. சக. 2. 10. வெளி. 21. 3; 22. 3

# தானியேலின் புஸ்தகம்

1 யூதாவின் ராஜாவாகிய யோயாக்கீம் அர
சாண்ட மூன்றாம் வருஷத்திலே பாபிலோ
னின் ராஜாவாகிய நேபுகாத்நேச்சார் எருச
லேமுக்கு வந்து, [1]அதை முற்றிக்கைபோட்
2 டான். அப்பொழுது ஆண்டவர் யூதாவின்
ராஜாவாகிய யோயாக்கீமையும் தேவனுடைய
ஆலயத்தின் பாத்திரங்களில் சிலவற்றையும்
அவன் கையில் ஒப்புக்கொடுத்தார்; [2]அவன்
அந்தப் பாத்திரங்களைச் சிநேயார் தேசத்தி
லுள்ள தன் தேவனுடைய கோவிலுக்குக்
கொண்டுபோய், அவைகளைத் தன் தேவனு
3 டைய பண்டசாலைக்குள் வைத்தான். அப்பொ
ழுது இஸ்ரவேல் புத்திரருக்குள்ளே ராஜ
குலத்தார்களிலும் துரைமக்களிலும் யாதொரு
மாசும் இல்லாதவர்களும், அழகானவர்களும்,
சகல ஞானத்திலும் தேறினவர்களும், அறி
வில் சிறந்தவர்களும், கல்வியில் நிபுணரும்,
[3]ராஜாவின் அரமனையிலே சேவிக்கத் திறமை
யுள்ளவர்களுமாகிய சில வாலிபரைக் கொண்
4 டுவரவும், அவர்களுக்குக் கல்தேயரின் [4]எழுத்
தையும் பாஷையையும் கற்றுக்கொடுக்கவும்
ராஜா தன் பிரதானிகளின் தலைவனாகிய அஸ்
5 பேனாசுக்குக் கற்பித்தான். ராஜா, தான் உண்
ணும் போஜனத்திலேயும் தான் குடிக்கும்
திராட்சரசத்திலேயும் தினம் ஒரு பங்கை
அவர்களுக்கு நியமித்து, அவர்களை மூன்று
வருஷம் வளர்க்கவும், [5]அதின் முடிவிலே
அவர்கள் ராஜாவுக்கு முன்பாக நிற்கும்படி
6 செய்யவும் கட்டளையிட்டான். அவர்களுக்குள்
யூதா புத்திரராகிய தானியேல், அனனியா,
மீஷாவேல், அசரியா என்பவர்கள் இருந்தார்
7 கள். பிரதானிகளின் தலைவன், [6]தானியே
லுக்கு பெல்தெஷாத்சார் என்றும், அனனி
யாவுக்கு சாத்ராக் என்றும், மீஷாவேலுக்கு
மேஷாக் என்றும், அசரியாவுக்கு ஆபேத்நே
8 கோ என்றும் மறு பெயரிட்டான். தானியேல்
ராஜாவின் போஜனத்தினாலும் அவர் பானம்
பண்ணும் திராட்சரசத்தினாலும் தன்னைத் தீட்
டுப்படுத்தலாகாதென்று, [7]தன் இருதயத்தில்
தீர்மானம் பண்ணிக்கொண்டு, தன்னைத் தீட்
டுப்படுத்தாதபடி பிரதானிகளின் தலைவனிடத்
9 தில் வேண்டிக்கொண்டான். தேவன் தானி
யேலுக்குப் பிரதானிகளின் தலைவனிடத்தில்

[1] 2 இரா. 24. 1 2. 2 நாளா. 36 6, 7
[2] ஆதி. 10. 11. ஏசா. 11. 11. சகரி. 5. 11
[3] லேவி. 24 19, 20. 2 இரா. 20. 17, 18. ஏசா. 39. 7
[4] அப். 7. 22
[5] ஆதி. 41. 46. 1 இரா. 10. 8
[6] 4. 8; 5. 12. ஆதி. 41. 45. 2 இரா. 24. 17
[7] உபா. 32. 38. எசே. 4. 13. ஓசி. 9. 3
[8] ஆதி. 39 21. சங். 106 46. நீதி. 16. 7
* உக்கிராணக்காரன்
[9] 1 இரா. 3. 12. அப். 7. 22. யாக். 1. 5, 17

[8]தயவும் இரக்கமும் கிடைக்கும்படி செய்தார்.
பிரதானிகளின் தலைவன் தானியேலை நோக்கி: 10
உங்களுக்குப் போஜனத்தையும் பானத்தையும்
குறித்திருக்கிற ராஜாவாகிய என் ஆண்டவ
னுக்கு நான் பயப்படுகிறேன்; அவர் உங்க
ளோடொத்த வாலிபரின் முகங்களைப்பார்க்
கிலும் உங்கள் முகங்கள் வாடிப்போனவைக
ளாகக் காணவேண்டியதென்ன? அதினால்
ராஜா என்னைச் சிரச்சேதம் பண்ணுவாரே
என்றான். அப்பொழுது பிரதானிகளின் தலை 11
வனாலே, தானியேல், அனனியா, மீஷா
வேல், அசரியா என்பவர்கள்மேல் விசாரிப்
புக்காரனாக வைக்கப்பட்ட *மேல்ஷார் என்
பவனை தானியேல் நோக்கி: பத்துநாள்வரைக் 12
கும் உமது அடியாரைச் சோதித்துப்பாரும்;
எங்களுக்குப் புசிக்க பருப்பு முதலான மரக்
கறிகளையும், குடிக்கத் தண்ணீரையும் கொ
டுத்து, எங்கள் முகங்களையும் ராஜபோஜனத் 13
தில் புசிக்கிற வாலிபருடைய முகங்களையும்
ஒத்துப்பாரும்; பின்பு நீர் காண்கிறபடி உமது
அடியாருக்குச் செய்யும் என்றான். அவன் 14
இந்தக் காரியத்திலே அவர்களுக்குச் செவி
கொடுத்து, பத்துநாளளவும் அவர்களைச் சோ
தித்துப்பார்த்தான். பத்துநாள் சென்றபின்பு, 15
ராஜபோஜனத்தைப் புசித்த எல்லா வாலிப
ரைப்பார்க்கிலும் அவர்கள் முகம் களையுள்ள
தாயும் சரீரம் புஷ்டியுள்ளதாயும் காணப்பட்
டது. ஆகையால் மேல்ஷார் அவர்கள் புசிக் 16
கக் கட்டளையான போஜனத்தையும், அவர்
கள் குடிக்கக் கட்டளையான திராட்சரசத்தை
யும் நீக்கிவைத்து, அவர்களுக்குப் பருப்பு முத
லானவைகளைக் கொடுத்தான். இந்த நாலு வா 17
லிபருக்கும் தேவன் சகல எழுத்திலும் ஞானத்
திலும் அறிவையும் சாமர்த்தியத்தையும் கொ
டுத்தார்; [9]தானியேலைச் சகல தரிசனங்களையும்
சொப்பனங்களையும் அறியத்தக்க அறிவுள்ளவ
னாக்கினார். அவர்களை ராஜாவினிடத்தில் கொ 18
ண்டுவருகிறதற்குக் குறித்த நாட்கள் நிறைவே
றினபோது, பிரதானிகளின் தலைவன் அவர்
களை நேபுகாத்நேச்சாருக்கு முன்பாகக் கொண்
டுவந்து விட்டான். ராஜா அவர்களோடே 19
பேசினான்; அவர்கள் எல்லாருக்குள்ளும் தானி
யேல், அனனியா, மீஷாவேல், அசரியா என்

பவர்களைப்போல வேறொருவரும் காணப்பட
வில்லை; ஆகையால் இவர்கள் ராஜசமுகத்
20 தில் நின்றார்கள். ஞானத்துக்கும் புத்திக்கும்
அடுத்த எந்த விஷயத்தில் ராஜா அவர்களைக்
கேட்டு விசாரித்தானோ, [1]அதிலே தன் ராஜ்
யம்எங்குமுள்ள சகல சாஸ்திரிகளிலும் ஜோசி
யரிலும் அவர்களைப் பத்துமடங்கு சமர்த்தரா
21 கக் கண்டான். கோரேஸ் ராஜ்யபாரம் பண்
ணும் முதலாம் வருஷமட்டும் [2]தானியேல்
அங்கே இருந்தான்.

**2** நேபுகாத்நேச்சார் ராஜ்யபாரம் பண்ணும்
இரண்டாம் வருஷத்திலே, நேபுகாத்நேச்சார்
சொப்பனங்களைக் கண்டான்; [3]அதினால் அவ
னுடைய ஆவி கலங்கி, அவனுடைய நித்திரை
2 கலைந்தது. அப்பொழுது ராஜா தன் சொப்
பனங்களைத் தனக்குத் தெரிவிக்கும்பொருட்டு
சாஸ்திரிகளையும் ஜோசியரையும் சூனியக்கார
ரையும் கல்தேயரையும் அழைக்கச்சொன்
னான்; [4]அவர்கள் வந்து, ராஜசமுகத்தில் நின்
3 றார்கள். ராஜா அவர்களை நோக்கி: ஒரு
சொப்பனம் கண்டேன்; அந்தச் சொப்ப
னத்தை அறியவேண்டுமென்று என் ஆவி
4 கலங்கியிருக்கிறது என்றான். அப்பொழுது
கல்தேயர் ராஜாவை நோக்கி: ராஜாவே, [5]நீர்
என்றும் வாழ்க; சொப்பனத்தை உமது அடி
யாருக்குச் சொல்லும், அப்பொழுது அதின்
அர்த்தத்தைவிடுவிப்போம்என்றுசிரியபாஷை
5 யிலே சொன்னார்கள். ராஜா கல்தேயருக்
குப் பிரதியுத்தரமாக: [6]என்னிடத்திலிருந்து
பிறக்கிற தீர்மானம் என்னவென்றால், நீங்கள்
சொப்பனத்தையும் அதின் அர்த்தத்தையும்
எனக்கு அறிவியாமற்போனால் துண்டித்துப்
போடப்படுவீர்கள்; உங்கள் வீடுகள் எருக்க
6 ளங்களாக்கப்படும். சொப்பனத்தையும் அதின்
அர்த்தத்தையும்தெரிவித்தீர்களேயாகில், [7]என்
னிடத்தில் வெகுமதிகளையும் *பரிசுகளையும்
மிகுந்த கனத்தையும் பெறுவீர்கள்; ஆகையால்
சொப்பனத்தையும் அதின் அர்த்தத்தையும்
7 எனக்குத் தெரிவியுங்கள் என்றான். அவர்
கள் மறுபடியும் பிரதியுத்தரமாக: ராஜா அடி
யாருக்குச் சொப்பனத்தைச் சொல்வாராக;
அப்பொழுது அதின் அர்த்தத்தை விடுவிப்
8 போம் என்றார்கள். அதற்கு ராஜா பிரதியுத்
தரமாக: என்னிடத்திலிருந்து தீர்மானம் பிறக்
தபடியினாலே நீங்கள் காலதாமசம் பண்ணப்
பார்க்கிறீர்களென்று நிச்சயமாக எனக்குத்
9 தெரியவருகிறது. காலம் மாறுமென்று நீங்
கள் எனக்கு முன்பாகப் பொய்யும் புரட்டு
மான விசேஷத்தைச் சொல்லும்படி எத்த
னம்பண்ணி இருக்கிறீர்கள்; நீங்கள் சொப்ப
னத்தை எனக்குத் தெரிவிக்காமற்போனால்,
உங்களெல்லாருக்கும் இந்த ஒரே தீர்ப்பு பிறக்
திருக்கிறது; [8]ஆகையால் சொப்பனத்தை
எனக்குச் சொல்லுங்கள்; அப்பொழுது அதின்
அர்த்தத்தையும் உங்களால் காண்பிக்கக்கூடு
மென்று அறிந்துகொள்ளுவேன் என்றான்.
10 கல்தேயர் ராஜசமுகத்தில் பிரதியுத்தரமாக:

[1] 1 இரா. 10. 1-3. சங். 119. 99
[2] 6. 28; 10. 1. சங். 110. 1; 112. 8
[3] 4. 5. ஆதி. 41. 8. எஸ்தர் 6. 1. யோபு 33. 15-17
[4] 5. 7. யாத். 7. 11
[5] 1 இரா. 1. 31
[6] 2 இரா. 10. 27. எஸ்றா 6. 11
[7] 5. 16
* தனத்தையும்
[8] எஸ்றா. 4. 11 ஏசா. 41. 23
[9] 28. ஏசா. 5. 11, ஏசா. 66. 1, 2
[10] மத். 2. 16
[11] 3. 17. 1 சாமு. 17. 37. மத். 18. 19. 2 தீமோ. 4. 17, 18
[12] எண். 12. 6. யோபு 33. 15, 16
[13] சங். 5. 23. எரே. 32. 19
[14] 1 நாளா. 29. 30. சங். 95. 6, 7
[15] சங். 2. 6, 7. லூக். 1. 5
[16] யோபு 12. 22. சங். 25. 14; 139. 11.
[17] 1 தீமோ. 6. 16. யாக். 1. 17. 1 யோவா. 1. 5

ராஜா கேட்கும் காரியத்தை அறிவிக்கத்தக்க
மனுஷன் பூமியில் ஒருவனும் இல்லை; ஆகை
யால் மகத்துவமும் வல்லமையுமான எந்த
ராஜாவும் இப்படிப்பட்ட காரியத்தை ஒரு
சாஸ்திரியினிடத்திலாவது ஜோசியனிடத்தி
லாவது கல்தேயனிடத்திலாவது கேட்ட
இல்லை. ராஜா கேட்கிற காரியம் மிகவும் 11
அருமையானது; [9]மாம்சமாயிருக்கிறவர்க
ளோடே வாசம்பண்ணாத தேவர்களையொ
ழிய ராஜசமுகத்தில் அதை அறிவிக்கத்தக்க
வர் ஒருவரும் இல்லை என்றார்கள். இதினி 12
மித்தம் ராஜா மகா கோபமும் உக்கிரமுங்
கொண்டு, [10]பாபிலோனில் இருக்கிற எல்லா
ஞானிகளையும் கொலைசெய்யும்படி கட்டளை
யிட்டான். ஞானிகளைக் கொலைசெய்யவே 13
ண்டுமென்கிற கட்டளை வெளிப்பட்டபோது,
தானியேலையும் அவன் தோழரையும் கொலை
செய்யத் தேடினார்கள். பாபிலோனின் ஞானி 14
களைக் கொலைசெய்யப் புறப்பட்ட ராஜாவினு
டைய தலையாரிகளுக்கு அதிபதியாகிய ஆரி
யோகோடே தானியேல் யோசனையும் புத்தி
யுமாய்ப் பேசி: இந்தக் கட்டளை ராஜாவி 15
னால் இத்தனை அவசரமாய்ப் பிறந்ததற்குக்
காரணம் என்ன என்று ராஜாவின் சேர்வைக்
காரனாகிய ஆரியோகினிடத்தில் கேட்டான்;
அப்பொழுது ஆரியோகு தானியேலுக்குக்
காரியத்தை அறிவித்தான். தானியேல் ராஜா 16
வினிடத்தில் போய், சொப்பனத்தின் அர்த்
தத்தை ராஜாவுக்குக் காண்பிக்கும்படித் தனக்
குத் தவணைகொடுக்க விண்ணப்பம் பண்ணி
னான்.

பின்பு தானியேல் தன் வீட்டுக்குப் போய், 17
[11]தானும் தன் தோழரும் பாபிலோனின் மற்ற
ஞானிகளோடேகூட அழியாதபடிக்கு இந்த
மறைபொருளைக்குறித்துப் பரலோகத்தின்
தேவனை நோக்கி இரக்கம் கேட்கிறதற்காக,
அனனியா, மீஷாவேல், அசரியா என்னும் 18
தன்னுடைய தோழருக்கு இந்தக் காரியத்தை
அறிவித்தான். பின்பு இராக்காலத்தில் தரி 19
சனத்திலே தானியேலுக்கு [12]மறைபொருள்
வெளிப்படுத்தப்பட்டது; அப்பொழுது தானி
யேல் பரலோகத்தின் தேவனை ஸ்தோத்திரித்
தான். பின்பு தானியேல் சொன்னது: தேவ 20
னுடைய நாமத்துக்கு என்றென்றைக்குமுள்ள
சதாகாலங்களிலும்ஸ்தோத்திரமுண்டாவதாக;
[13]ஞானமும் வல்லமையும் அவருக்கே உரியது.
அவர் காலங்களையும் சமயங்களையும் மாற்றுகி 21
றவர்; [14]ராஜாக்களைத் தள்ளி, ராஜாக்களை ஏற்
படுத்துகிறவர்; [15]ஞானிகளுக்கு ஞானத்தை
யும், அறிவாளிகளுக்கு அறிவையும் கொடுக்
கிறவர். அவரே ஆழமும் மறைபொருளுமா 22
னதை வெளிப்படுத்துகிறவர்; [16]இருளில் இருக்
கிறதை அவர் அறிவார்; [17]வெளிச்சம் அவரி
டத்தில் தங்கும். என் பிதாக்களின் தேவனே, 23
நீர் எனக்கு ஞானமும் வல்லமையும் கொடு
த்து, நாங்கள் உம்மிடத்தில் வேண்டிக்கொண்
டதை இப்பொழுது எனக்கு அறிவித்து,

ராஜாவின் காரியத்தை எங்களுக்குத் தெரிவித்
தபடியினால், உம்மைத் துதித்துப் புகழுகி
24 றேன் என்றான். பின்பு தானியேல் பாபி
லோனின் ஞானிகளை அழிக்க ராஜா கட்டளை
யிட்ட ஆரியோகினிடத்தில்போய்: பாபிலோ
னின் ஞானிகளை அழிக்காதேயும், என்னை
ராஜாவின் முன்பாக அழைத்துக்கொண்டு
போம்; ராஜாவுக்கு அர்த்தத்தைத் தெரிவிப்
பேன் என்று சொன்னான்.
25 அப்பொழுது ஆரியோகு தானியேலை ராஜா
வின் முன்பாகத் தீவிரமாய் அழைத்துக்கொ
ண்டுபோய்: சிறைப்பட்டுவந்த யூதேயா தேசத்
தாரில் ஒரு புருஷனைக் கண்டுபிடித்தேன்; அ
வன் ராஜாவுக்கு அர்த்தத்தைத் தெரிவிப்பான்
26 என்றான். ராஜா பெல்தெஷாத்சாரென்னும்
நாமமுள்ள தானியேலை நோக்கி: நான் கண்ட
சொப்பனத்தையும் அதின் அர்த்தத்தையும் நீ
எனக்கு அறிவிக்கக்கூடுமா என்று கேட்டான்.
27 தானியேல் ராஜசமுகத்தில் பிரதியுத்தரமாக:
[1]ராஜா கேட்கிற மறைபொருளை ராஜாவுக்குத்
தெரிவிக்க ஞானிகளாலும், ஜோசியராலும்,
சாஸ்திரிகளாலும், குறிசொல்லுகிறவர்களா
28 லும் கூடாது. மறைபொருள்களை வெளிப்
படுத்துகிற பரலோகத்திலிருக்கிற தேவன்
[2]கடைசி நாட்களில் சம்பவிப்பதை ராஜாவா
கிய நேபுகாத்நேச்சாருக்குத் தெரிவித்திருக்கி
றார்; உம்முடைய சொப்பனமும் உமது படுக்
கையின்மேல் உம்முடைய தலையில் உண்டான
29 தரிசனங்களும் என்னவென்றால்: ராஜாவே,
உம்முடைய படுக்கையின்மேல் நீர் படுத்திருக்
கையில், இனிமேல் சம்பவிக்கப்போகிற
தென்ன என்கிற நினைவுகள் உமக்குள் எழும்
பிற்று; [3]அப்பொழுது மறைபொருள்களை
வெளிப்படுத்துகிறவர் சம்பவிக்கப்போகிறதை
30 உமக்குத் தெரிவித்தார். உயிரோடிருக்கிற
எல்லாரைப்பார்க்கிலும் எனக்கு அதிக ஞா
னம் உண்டென்பதினாலே அல்ல; [4]அர்த்தம்
ராஜாவுக்குத் தெரியவரவும், உம்முடைய இரு
தயத்தின் நினைவுகளை நீர் அறியவும், இந்த
மறைபொருள் எனக்கு வெளியாக்கப்பட்டது.
31 ராஜாவே, நீர் ஒரு பெரிய சிலையைக் கண்டீர்;
அந்தப் பெரிய சிலை மிகுந்த பிரகாசமுள்ளதா
யிருந்தது; அது உமக்கு எதிரே நின்றது; அதின்
32 ரூபம் பயங்கரமாயிருந்தது. அந்தச் சிலை
யின் தலை பசும்பொன்னும், அதின் மார்பும்
அதின் புயங்களும் வெள்ளியும், அதின் வயி
றும் அதின் தொடையும் வெண்கலமும்,
33 அதின் கால்கள் இரும்பும், அதின் பாதங்கள்
பாதி இரும்பும் பாதி களிமண்ணுமாயிருந்
34 தது. நீர் பார்த்துக்கொண்டிருக்கும்போதே,
[5]கைகளால் பெயர்க்கப்படாத ஒரு கல் பெயர்
ந்து உருண்டுவந்தது; அது அந்தச் சிலையை
இரும்பும் களிமண்ணுமாகிய அதின் பாதங்
களில் மோதி, அவைகளை நொறுக்கிப்போட்
35 டது. அப்பொழுது அந்த இரும்பும் களி
மண்ணும் வெண்கலமும் வெள்ளியும் பொன்
னும் ஏகமாய் நொறுங்குண்டு, [6]கோடைக்காலத்
தில் போரடிக்கிற களத்திலிருந்து பறந்துபோ
கிற பதரைப்போலாயிற்று; அவைகளுக்கு
ஒரு இடமும் கிடையாதபடி காற்று அவை
களை அடித்துக்கொண்டுபோயிற்று; [7]சிலையை
மோதின கல்லோவென்றால், ஒரு பெரிய
பர்வதமாகிப் பூமியையெல்லாம் நிரப்பிற்று.
சொப்பனம் இதுதான்; அதின் அர்த்தத்தை 36
யும் ராஜசமுகத்தில் தெரிவிப்போம். ராஜா 37
வே, நீர் ராஜாதி ராஜாவாயிருக்கிறீர்; [8]பரலோ
கத்தின் தேவன் உமக்கு ராஜரீகத்தையும்
பராக்கிரமத்தையும் வல்லமையையும் மகிமை
யையும் அருளினார். சகல இடங்களிலு 38
முள்ள மனுபுத்திரரையும் வெளியின் மிருகங்
களையும் ஆகாயத்துப் பறவைகளையும் அவர்
உமது கையில் ஒப்புக்கொடுத்து, [9]உம்மை
அவைகளையெல்லாம் ஆளும்படி செய்தார்.
பொன்னான அந்தத் தலை நீரே. உமக்குப் 39
பிறகு உமக்குக் கீழ்த்தரமான [10]வேறொரு ரா
ஜ்யம் தோன்றும்; [11]பின்பு பூமியையெல்லாம்
ஆண்டுகொள்ளும் வெண்கலமான மூன்
றாம் ராஜ்யம் ஒன்று எழும்பும். நாலாவது 40
ராஜ்யம் இரும்பைப்போல உரமாயிருக்கும்;
[12]இரும்பு எல்லாவற்றையும் எப்படி நொறுக்
கிச் சின்னபின்னமாக்குகிறதோ, அப்படியே
இது நொறுக்கிப்போடுகிற இரும்பைப்போல
அவைகளையெல்லாம் நொறுக்கித் தகர்த்துப்
போடும். பாதங்களும் கால்விரல்களும் பாதி 41
குயவனின் களிமண்ணும், பாதி இரும்பு
மாயிருக்க நீர் கண்டீரே, அந்த ராஜ்யம்
பிரிக்கப்படும்; ஆகிலும் களிமண்ணோடே
இரும்பு கலந்திருக்க நீர் கண்டபடியே இரும்
பினுடைய உறுதியில் கொஞ்சம் அதிலே
இருக்கும். கால்விரல்கள் பாதி இரும்பும் 42
பாதி களிமண்ணுமாயிருந்தது என்னவென்
றால், அந்த ராஜ்யம் ஒரு பங்கு உரமும் ஒரு
பங்கு நெரிசலுமாயிருக்கும். நீர் இரும்பைக் 43
களிமண்ணோடே கலந்ததாகக் கண்டீரே,
அவர்கள் மற்ற மனுஷரோடே சம்பந்தங்
கலப்பார்கள்; ஆகிலும் இதோ, களிமண்ணோ
டே இரும்பு கலவாததுபோல அவர்கள்
ஒருவரோடொருவர் ஒட்டிக்கொள்ளாதிருப்
பார்கள். அந்த ராஜாக்களின் நாட்களிலே, 44
பரலோகத்தின் தேவன் என்றென்றைக்கும்
அழியாத ஒரு ராஜ்யத்தை எழும்பப்பண்ணு
வார்; [13]அந்த ராஜ்யம் வேறே ஜனத்துக்கு
விடப்படுவதில்லை; ஒரு கல் கையால் பெயர்க்
கப்படாமல் மலையிலிருந்து பெயர்ந்து, உருண்
டுவந்து, இரும்பையும் வெண்கலத்தையும்
களிமண்ணையும் வெள்ளியையும் பொன்னை
யும் நொறுக்கினதை நீர் கண்டீரே, [14]அப்
படியே அது அந்த ராஜ்யங்களையெல்லாம்
நொறுக்கி, நிர்மூலமாக்கி, தானோ என்றென்
றைக்கும் நிற்கும். இனிமேல் சம்பவிக்கப் 45
போகிறதை மகாதேவன் ராஜாவுக்குத் தெரி
வித்திருக்கிறார்; சொப்பனமானது நிச்சயம்,
அதின் அர்த்தம் சத்தியம் என்றான். அப் 46
பொழுது ராஜாவாகிய நேபுகாத்நேச்சார்

1 ஏசா. 47. 13, 14
2 ஆதி. 40. 8; 41. 16
3 ஆமோ. 4. 13
4 ஆதி. 41. 16. அப். 3. 12
5 சகரி. 4. 6. யோ. 1. 13. 2 கொ. 5. 1. எபி. 9. 24
6 சங். 1. 4; 37. 36. ஓசி. 13. 3
7 ஏசா. 2. 2, 3. 1 கொ. 15. 25
8 எஸ்றா 1. 2; 7. 12. ஏசா. 47. 5. எசே. 26. 7. ஓசி. 8. 10
9 எரே. 27. 6
10 5. 28
11 7. 7, 23
12 33. வச
13 மீகா 4. 7. லூக். 1. 32, 33
14 சங். 2. 9. ஏசா. 28. 16; 60. 12. 1 கொ. 15. 24

முகங்குப்புறவிழுந்து, [1]தானியேலை வணங்கி,
அவனுக்குக் காணிக்கை செலுத்தவும் தூபங்
47 காட்டவும் கட்டளையிட்டான். ராஜா தானி
யேலை நோக்கி: நீ இந்த மறைபொருளை
வெளிப்படுத்தினபடியினால், மெய்யாய் உங்
கள் தேவனே தேவர்களுக்கு தேவனும்,
ராஜாக்களுக்கு ஆண்டவரும், மறைபொருள்
களை வெளிப்படுத்துகிறவருமா யிருக்கிறார்
48 என்றான். பின்பு ராஜா தானியேலைப் பெரிய
வனாக்கி, [2]அவனுக்கு அநேகம் சிறந்த வெகு
மதிகளைக் கொடுத்து, அவனை பாபிலோன்
மாகாணம் முழுதுக்கும் அதிபதியாகவும்,
பாபிலோனிலுள்ள சகல ஞானிகளின்மேலும்
49 பிரதான அதிகாரியாகவும் நியமித்தான். தானி
யேல் ராஜாவை வேண்டிக்கொண்டதின்பே
ரில் அவன் சாத்ராக்கையும், [3]மேஷாக்கை
யும், ஆபேத்நேகோவையும் பாபிலோன் மாகா
ணத்துக் காரியங்களை விசாரிக்கும்படி வைத்
தான்; [4]தானியேலோவென்றால் ராஜாவின்
கொலுமண்டபத்தில் இருந்தான்.

3 ராஜாவாகியநேபுகாத்நேச்சார் அறுபதுமுழ
உயரமும் ஆறு முழ அகலமுமான ஒருபொற்
சிலையைப் பண்ணுவித்து, [5]பாபிலோன் மாகா
ணத்திலிருக்கிற தூரா என்னும் சமபூமியிலே
2 நிறுத்தினான். பின்பு ராஜாவாகிய நேபுகாத்
நேச்சார்தேசாதிபதிகளையும், அதிகாரிகளையும்,
தலைவரையும், நியாயாதிபதிகளையும், பொக்
கிஷக்காரரையும், நீதிசாஸ்திரிகளையும், விசா
ரிப்புக்காரரையும், நாடுகளிலுள்ள உத்தியோ
கஸ்தர் யாவரையும் நேபுகாத்நேச்சார் ராஜா
நிறுத்தின சிலையின் பிரதிஷ்டைக்கு வந்து
3 சேரும்படி அழைத்தனுப்பினான். அப்பொ
ழுது தேசாதிபதிகளும், அதிகாரிகளும், தலை
வரும், நியாயாதிபதிகளும், பொக்கிஷக்கார
ரும், நீதிசாஸ்திரிகளும், விசாரிப்புக்காரரும்,
நாடுகளிலுள்ள உத்தியோகஸ்தர் யாவரும்,
ராஜாவாகிய நேபுகாத்நேச்சார் நிறுத்தின சிலை
யின் பிரதிஷ்டைக்கு வந்து சேர்ந்து, நேபு
காத்நேச்சார் நிறுத்தின சிலைக்கு எதிராக
4 நின்றார்கள். கட்டியக்காரன் உரத்த சத்த
மாய்: [6]சகல ஜனங்களும், ஜாதிகளும், பாஷைக்
காரருமானவர்களே, உங்களுக்கு அறிவிக்கப்
5 படுகிறது என்னவென்றால்: எக்காளம், நாக
சுரம், கின்னரம், வீணை, சுரமண்டலம், தம்புரு
முதலான சகலவித கீதவாத்தியங்களின் சத்தத்
தை நீங்கள் கேட்கும்போது, நீங்கள் தாழ
விழுந்து, ராஜாவாகிய நேபுகாத்நேச்சார் நிறுத்
தின பொற்சிலையைப் பணிந்துகொள்ளக்
6 கடவீர்கள். எவனாகிலும் தாழ விழுந்து,
அதைப் பணிந்துகொள்ளாமற் போனால்,
[7]அவன் அந்நேரமே எரிகிற அக்கினிச்சூளை
யின் நடுவிலே போடப்படுவான் என்றான்.
7 ஆதலால் சகல ஜனங்களும், எக்காளம்,
நாகசுரம், கின்னரம், வீணை, சுரமண்டலம்
முதலான சகலவித கீதவாத்தியங்களின் சத்
தத்தைக் கேட்டவுடனே, சகல ஜனத்தாரும்
ஜாதியாரும் பாஷைக்காரரும் தாழ விழுந்து,
ராஜாவாகிய நேபுகாத்நேச்சார் நிறுத்தின
பொற்சிலையைப் பணிந்துகொண்டார்கள்.
அச்சமயத்தில் கல்தேயரில் சிலர் ராஜசமுகத் 8
தில் வந்து, [8]யூதர்பேரில் குற்றஞ்சாற்றி,
ராஜாவாகிய நேபுகாத்நேச்சாரை நோக்கி: 9
[9]ராஜாவே, நீர் என்றும் வாழ்க: எக்காளம், 10
நாகசுரம், கின்னரம், வீணை, சுரமண்டலம்,
தம்புரு முதலான சகலவித கீதவாத்தியங்க
ளின் சத்தத்தையும் கேட்கிற எந்த மனுஷனும்
தாழ விழுந்து, பொற்சிலையைப் பணிந்து
கொள்ள வேண்டுமென்றும், எவனாகிலும் 11
தாழ விழுந்து பணிந்துகொள்ளாமற்போனால்,
அவன் எரிகிற அக்கினிச்சூளையின் நடுவிலே
போடப்படவேண்டுமென்றும், ராஜாவாகிய
நீர் கட்டளையிட்டீரே. பாபிலோன் மாகா 12
ணத்தின் காரியங்களை விசாரிக்கும்படி நீர்
ஏற்படுத்தின சாத்ராக், மேஷாக், ஆபேத்
நேகோ என்னும் யூதரான மனுஷர் இருக்கி
றார்களே; அவர்கள் ராஜாவாகிய உம்மை
மதிக்கவில்லை; அவர்கள் உம்முடைய தேவர்க
ளுக்கு ஆராதனை செய்யாமலும், நீர் நிறுத்
தின பொற்சிலையைப் பணிந்துகொள்ளாம
லும் இருக்கிறார்கள் என்றார்கள். அப்பொ 13
ழுது நேபுகாத்நேச்சார் உக்கிரகோபங் கொ
ண்டு சாத்ராக்கையும், மேஷாக்கையும்,
ஆபேத்நேகோவையும் அழைத்துக்கொண்டு
வரும்படி கட்டளையிட்டான்; அவர்கள் அந்
தப் புருஷரை ராஜாவின் சமுகத்தில் கொண்
டுவந்து விட்டபோது, நேபுகாத்நேச்சார் அவர் 14
களை நோக்கி: சாத்ராக், மேஷாக், ஆபேத்
நேகோ என்பவர்களே, [10]நீங்கள் என் தேவர்க
ளுக்கு ஆராதனை செய்யாமலும் நான் நிறுத்
தின பொற்சிலையைப் பணிந்துகொள்ளாம
லும் இருந்தது மெய்தானா? இப்போதும் 15
எக்காளம், நாகசுரம், கின்னரம், வீணை, சுர
மண்டலம், தம்புரு முதலான சகலவித கீத
வாத்தியங்களின் சத்தத்தையும் நீங்கள் கேட்
கும்போது, தாழ விழுந்து, நான் பண்ணி
வைத்த சிலையைப் பணிந்துகொள்ள ஆயத்தமா
யிருந்தால் நல்லது; [11]பணிந்துகொள்ளாதிருந்
தீர்களேயாகில், அந்நேரமே எரிகிற அக்கினிச்
சூளையின் நடுவிலே போடப்படுவீர்கள்; [12]உங்
களை என் கைக்குத் தப்புவிக்கப்போகிற தே
வன் யார் என்றான். சாத்ராக், மேஷாக், 16
ஆபேத்நேகோ என்பவர்கள் ராஜாவை நோக்
கி: நேபுகாத்நேச்சாரே, இந்தக் காரியத்தைக்
குறித்து உமக்கு உத்தரவு சொல்ல [13]எங்களுக்கு
அவசியமில்லை. நாங்கள் ஆராதிக்கிற [14]எங் 17
கள் தேவன் எங்களைத் தப்புவிக்க வல்லவரா
யிருக்கிறார்; அவர் எரிகிற அக்கினிச்சூளைக்
கும், ராஜாவாகிய உம்முடைய கைக்கும் நீங்க
லாக்கி விடுவிப்பார். விடுவிக்காமற்போனா 18
லும், [15]நாங்கள் உம்முடைய தேவர்களு
க்கு ஆராதனை செய்வதுமில்லை; [16]நீர் நிறுத்
தின பொற்சிலையைப் பணிந்துகொள்
வதுமில்லை என்கிறது ராஜாவாகிய உம
க்குத் தெரிந்திருக்கக்கடவது என்றார்கள்.

[1] அப். 10. 25; 14 13; 28. 6. எஸ்ற 6. 10
[2] 4. 9; 5. 11
[3] 3. 12
[4] எஸ்தர் 2. 19; 3. 2
[5] 2 இரா. 19. 17, 18. சங். 115. 4 ஏ. ஏசா. 40. 19 ஏ. எரே. 16. 20. அப். 19. 26
[6] 4. 1; 6. 25
[7] 6. 24. எரே. 29. 22. வெளி. 13. 15
[8] 6. 12
[9] 2. 4. நெ. 13. 7
[10] யாத். 21. 13
[11] ஓசி. 4. 7, 8
[12] யாத். 5. 2. 2 இரா. 18. 25
[13] மத். 10. 19
[14] சங். 121. 5-7. அப். 27. 23-25
[15] பேது. 13. 15. அப். 4. 19
[16] யாத். 20. 3-5. லேவி. 19. 4

19 அப்பொழுது நேபுகாத்நேச்சாருக்குக் கடுங்
கோபமூண்டு: [1]சாத்ராக், மேஷாக், ஆபேத்நே
கோ என்பவர்களுக்கு விரோதமாய் அவனு
டைய முகம் வேறுபட்டது; [2]சூளையைச் சாதா
ரணமாய்ச் சூடாக்குவதைப்பார்க்கிலும் ஏழு
மடங்கு அதிகமாய்ச் சூடாக்கும்படி உத்தரவு
20 கொடுத்து, சாத்ராக், மேஷாக், ஆபேத்நே
கோ என்பவர்களை எரிகிற அக்கினிச்சூளையி
லே போடுவதற்கு அவர்களைக் கட்டும்படி,
தன் இராணுவத்தில் பலசாலிகளாகிய புருஷ
21 ருக்குக் கட்டளையிட்டான். அப்பொழுது
அவர்கள் தங்கள் சால்வைகளோடும் நிசார்க
ளோடும் பாகைகளோடும் மற்ற வஸ்திரங்க
ளோடும் கட்டப்பட்டு, எரிகிற அக்கினிச்
சூளையின் நடுவிலே போடப்பட்டார்கள்.
22 ராஜாவின் கட்டளை கடுமையாயிருந்தபடியி
னாலும், சூளை மிகவும் சூடாக்கப்பட்டிருந்தப
டியினாலும், அக்கினிஜுவாலையானது சாத்
ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்பவர்க
ளைத் தூக்கிக்கொண்டுபோன புருஷரைக்
23 கொன்றுபோட்டது. சாத்ராக், மேஷாக்,
ஆபேத்நேகோ என்னும் அந்த மூன்று புருஷ
ரும் கட்டுண்டவர்களாய் எரிகிற அக்கினிச்
24 சூளையின் நடுவிலே விழுந்தார்கள். அப்பொ
ழுது ராஜாவாகிய நேபுகாத்நேச்சார் பிரமித்
து, தீவிரமாய் எழுந்திருந்து, தன் மந்திரிமார்
களை நோக்கி: மூன்று புருஷரை அல்லவோ
கட்டுண்டவர்களாக அக்கினியிலே போடுவித்
தோம் என்றான்; அவர்கள் ராஜாவுக்குப் பிர
தியுத்தரமாக: ஆம், ராஜாவே என்றார்கள்.
25 அதற்கு அவன்: இதோ, நாலுபேர் விடுதலை
யாய் அக்கினியின் நடுவிலே உலாவுகிற
தைக் காண்கிறேன்; [3]அவர்களுக்கு ஒரு சேத
முமில்லை; [4]நாலாம் ஆளின் சாயல் தேவபுத்தி
26 ரனுக்கு ஒப்பாயிருக்கிறது என்றான். அப்
பொழுது நேபுகாத்நேச்சார் எரிகிற அக்கினிச்
சூளையின் வாசலண்டைக்கு வந்து, [5]உன்னத
மான தேவனுடைய தாசராகிய சாத்ராக், மே
ஷாக், ஆபேத்நேகோ என்பவர்களே, நீங்
கள் வெளியே வாருங்கள் என்றான்; அப்
பொழுது சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ
என்பவர்கள் அக்கினியின் நடுவிலிருந்து வெ
27 ளியே வந்தார்கள். தேசாதிபதிகளும், அதிகா
ரிகளும், தலைவரும், ராஜாவின் மந்திரிகளும்
கூடிவந்து, [6]அந்தப் புருஷருடைய சரீரங்க
ளின்மேல் அக்கினி பெலஞ்செய்யாமலும்,
அவர்களுடைய தலைமயிர் கருகாமலும், அவர்
களுடைய சால்வைகள் சேதப்படாமலும்,
அக்கினியின் மணம் அவர்களிடத்தில் வீசாம
28 லும் இருந்ததைக் கண்டார்கள். அப்பொழுது
நேபுகாத்நேச்சார் வசனித்து: சாத்ராக் மே
ஷாக், ஆபேத்நேகோ என்பவர்களுடைய
தேவனுக்கு ஸ்தோத்திரம்; அவர்கள் தங்களு
டைய தேவனைத்தவிர வேறொரு தேவனை
யும் சேவித்துப் பணியாமல், [7]அவரையே நம்
பி, ராஜாவின் கட்டளையைத் தள்ளி, [8]தங்கள்
சரீரங்களை ஒப்புக்கொடுத்ததினால், [9]அவர்
தமது தூதனை அனுப்பி, தம்முடைய தாச
ரை விடுவித்தார். ஆதலால் சாத்ராக், மே 29
ஷாக், ஆபேத்நேகோ என்பவர்களுடைய தேவ
னுக்கு விரோதமாகத் தூஷணவார்த்தையைச்
சொல்லுகிற எந்த ஜனத்தானும், எந்த ஜாதி
யானும், எந்தப் பாஷைக்காரனும் துண்டித்
துப் போடப்படுவான்; [10]அவன் வீடு எருக்
களமாக்கப்படும் என்று என்னாலே தீர்மானிக்
கப்படுகிறது; இவ்விதமாய் ரட்சிக்கத்தக்க தே
வன் வேறொருவரும் இல்லையென்றான்.
பின்பு ராஜா சாத்ராக், மேஷாக், ஆபேத்நே 30
கோ என்பவர்களைப் பாபிலோன் தேசத்தி
லே உயர்த்தினான்.

ராஜாவாகிய நேபுகாத்நேச்சார் பூமி எங் 4
கும் குடியிருக்கிற சகல ஜனத்தாருக்கும் ஜா
தியாருக்கும் பாஷைக்காரருக்கும் எழுதுகி
றது என்னவென்றால்; [11]உங்களுக்குச் சமா
தானம் பெருகக்கடவது. உன்னதமான தே 2
வன் [12]என்னிடத்தில் செய்த அடையாளங்க
ளையும் அற்புதங்களையும் பிரசித்தப்படுத்துவது
எனக்கு நன்மையாய்க் கண்டது. அவரு 3
டைய [13]அடையாளங்கள் எவ்வளவு மகத்துவ
மும், [14]அவருடைய அற்புதங்கள் எவ்வளவு
வல்லமையுமாயிருக்கிறது; [15]அவருடைய ராஜ்
யம் நித்திய ராஜ்யம் [16]அவருடைய ஆளுகை
தலைமுறை தலைமுறையாக நிற்கும்.

நேபுகாத்நேச்சாராகிய நான் என் வீட்டி 4
லே சவுக்கியமுள்ளவனாயிருந்து என் அரம
னையிலே வாழ்ந்துகொண்டிருந்தேன். நான் 5
ஒரு சொப்பனத்தைக் கண்டேன்; அது என
க்குத் திகிலை உண்டாக்கிற்று; [17]என் படுக்கை
யின்மேல் எனக்குள் உண்டான நினைவுகளும்,
என் தலையில் தோன்றின தரிசனங்களும்
என்னைக் கலங்கப்பண்ணிற்று. ஆகையால் 6
சொப்பனத்தின் அர்த்தத்தை எனக்குத் தெரி
விக்கிறதற்காக [18]பாபிலோன் ஞானிகளையெல்
லாம் என்னிடத்தில் கொண்டுவரும்படி கட்
டளையிட்டேன். அப்பொழுது சாஸ்திரிக 7
ளும், ஜோசியரும், கல்தேயரும், குறிசொல்
லுகிறவர்களும் என்னிடத்திலே வந்தார்கள்;
சொப்பனத்தை நான் அவர்களுக்குச் சொன்
னேன்; ஆனாலும் அதின் அர்த்தத்தை எனக்
குத் தெரிவிக்கமாட்டாமற் போனார்கள்.
கடைசியிலே என் தேவனுடைய நாமத்தின் 8
படியே பெல்தெஷாத்சார் என்னும் பெயரி
டப்பட்டு, [19]பரிசுத்த தேவர்களின் ஆவியை
யுடைய தானியேல் என்னிடத்தில் கொண்டு
வரப்பட்டான்; அவனிடத்தில் நான் சொப்ப
னத்தை விவரித்துச் சொன்னதாவது: சாஸ்தி 9
ரிகளின் அதிபதியாகிய பெல்தெஷாத்சாரே,
பரிசுத்த தேவர்களுடைய ஆவி உனக்குள்
இருக்கிறதென்றும், [20]எந்த மறைபொருளை
யும் அறிவது உனக்கு அரிதல்லவென்றும்
நான் அறிவேன்; நான் கண்ட என் சொப்ப
னத்தின் தரிசனங்களையும் அதின் அர்த்தத்
தையும் சொல்லு. நான் படுத்திருந்தபோது 10
என் தலையில் தோன்றின தரிசனங்கள் என்

1 ஏசா. 51. 13. நா. 12. 4, 5
2 நீதி. 16. 14
3 ஏசா. 43. 2
4 யோபு 1. 6. சங். 34. 7. நீதி. 30. 4. லூ. 1. 35. ரோ. 1. 5
5 ஆதி. 14. 18. கலா. 1. 10
6 ஏசா. 43. 2. எபி. 11. 34
7 எரே. 17. 7
8 ரோ. 12. 1. எபி. 11. 37
9 ஆதி. 19. 15, 16. சங். 34. 7, 8. எபி. 1. 14
10 2. 5: 6. 26, 27
11 3. 4: 6. 25, 26. 1 பே. 1. 2
12 3. 26
13 உபா. 4. 34. சங். 106. 27. எபி. 2. 4
14 சங். 72. 18: 86. 10. ஏசா. 25. 1: 28, 29
15 2. 44. வெளி. 11. 15
16 யோபு 25. 2. 1 பே. 4. 11
17 2. 1, 28, 29
18 2. 2
19 1. 7. எண். 11. 17. ஏசா. 63. 11
20 ஏசா. 33. 18: 54. 14

ணவென்றால்: [1]இதோ, தேசத்தின் மத்தியி
லே மிகவும் உயரமான ஒரு விருட்சத்தைக்
11 கண்டேன். அந்த விருட்சம் வளர்ந்து பலத்
து, தேசத்தின் எல்லைபரியந்தமும் காணப்
படத்தக்கதாக அதின் உயரம் வானபரியந்தம்
12 எட்டினது. அதின் இலைகள் நேர்த்தியும்,
அதின் கனி மிகுதியுமாயிருந்தது; [2]எல்லா
ஜீவனுக்கும் அதில் ஆகாரம் உண்டாயிருந்தது;
[3]அதின்கீழே வெளியின் மிருகங்கள் நிழலு
க்கு ஒதுங்கினது; அதின் கொப்புகளில்
ஆகாயத்துப் பட்சிகள் தாபரித்துச் சகல பிரா
ணிகளும் அதினால் போஷிக்கப்பட்டது.
13 நான் படுத்திருக்கையில் என் தலையில் தோன்
றின தரிசனங்களைக் காணும்போது, [4]காவலா
ளனாகிய பரிசுத்தவான் ஒருவன் வானத்திலி
14 ருந்து இறங்கக்கண்டேன். அவன் உரத்த சத்
தமிட்டு: [5]இந்த விருட்சத்தை வெட்டி, இதின்
கொப்புகளைத் தறித்துப்போடுங்கள்; இதின்
இலைகளை உதிர்த்து, இதின் கனிகளைச் சிதற
டியுங்கள்; இதின் கீழுள்ள மிருகங்களும்
இதின் கொப்புகளிலுள்ள பட்சிகளும் போய்
15 விடட்டும். ஆனாலும் இதின் [6]வேர்களாகிய
அடிமரம் பூமியில் இருக்கட்டும்; இரும்பும்
வெண்கலமுமான விலங்கு இடப்பட்டு, வெ
ளியின் பசும்புல்லிலே தங்கி, ஆகாயத்துப்
பனியிலே நனைவதாக; மிருகங்களோடே பூமி
யின் பூண்டிலே அவனுக்குப் பங்கு இருக்
16 கக்கடவது. அவனுடைய இருதயம் மனுஷ
இருதயமாயிராமல் மாறும்படி, [7]மிருக இரு
தயம் அவனுக்குக் கொடுக்கப்படக்கடவது;
இப்படியிருக்கிற அவன்மேல் ஏழு காலங்கள்
17 கடந்துபோக வேண்டும். உன்னதமானவர்
மனுஷருடைய ராஜ்யத்தில் ஆளுகைசெய்து
[8]தமக்குச் சித்தமானவனுக்கு அதைக் கொடு
த்து, [9]மனுஷரில் தாழ்ந்தவனையும் அதின்
மேல் அதிகாரியாக்குகிறார் என்று நாஜீவன்
கள் அறியும்படிக்குக் காவலாளரின் தீர்ப்பி
னால் இந்தக் காரியமும் பரிசுத்தவான்களின்
மொழியினால் இந்த விசாரணையும் தீர்மானிக்
18 கப்பட்டது என்றான். நேபுகாத்நேச்சார் என்
னும் ராஜாவாகிய நான் கண்ட சொப்பனம்
இதுவே; இப்போது பெல்தெஷாத்சாரே,
நீ இதின் அர்த்தத்தைச் சொல்லு; என் ராஜ்
யத்திலுள்ள ஞானிகள் எல்லாராலும் இதின்
அர்த்தத்தை எனக்குத் தெரிவிக்கக் கூடாமற்
போயிற்று; நீயோ இதைத் தெரிவிக்கத்தக்க
வன்; [10]பரிசுத்த தேவர்களுடைய ஆவி உனக்
குள் இருக்கிறதே என்றான்.
19 அப்பொழுது பெல்தெஷாத்சாரென்னும்
பெயருள்ள தானியேல் ஒரு நாழிகைமட்
டும் திகைத்துச் சிந்தித்துக் கலங்கினான்.
ராஜா அவனை நோக்கி: பெல்தெஷாத்சாரே,
சொப்பனமும் அதின் அர்த்தமும் உன்னைக்
கலங்கப்பண்ண வேண்டியதில்லை என்றான்;
[11]அப்பொழுது பெல்தெஷாத்சார் பிரதியுத்
தரமாக: என் ஆண்டவனே, அந்தச் சொப்ப
னம் உம்முடைய பகைவரிடத்திலும், அதின்
அர்த்தம் உம்முடைய சத்துருக்களிடத்திலும்
பலிக்கக்கடவது. நீர் கண்ட விருட்சம் வளர்ந்து 20
பலத்து, [12]தேசத்தின் எல்லைபரியந்தம் காணப்
படத்தக்கதாக அதின் உயரம் வானபரியந்தம்
எட்டினது. அதின் இலைகள் நேர்த்தியும், அ 21
தின் கனி மிகுதியுமாயிருந்தது; எல்லா ஜீவ
னுக்கும் அதில் ஆகாரம் உண்டாயிருந்தது;
அதின் கீழே வெளியின் மிருகங்கள் தங்கினது,
அதின் கொப்புகளில் ஆகாயத்துப் பட்சிகள்
தாபரித்தது. அது பெரியவரும் பலத்தவருமா 22
யிருக்கிற ராஜாவாகிய நீர்தாமே; [13]உமது மகத்
துவம் பெருகி வானபரியந்தமும், உமது கர்த்
தத்துவம் பூமியின் எல்லைபரியந்தமும் எட்டியி
ருக்கிறது. இந்த விருட்சத்தை வெட்டி, இதை 23
அழித்துப்போடுங்கள்; ஆனாலும் இதின் வேர்
களாகிய அடிமரம் தரையில் இருக்கட்டுமென்
றும், இரும்பும் வெண்கலமுமான விலங்கு
இடப்பட்டு, வெளியின் பசும்புல்லிலே தங்கி,
ஆகாயத்துப் பனியிலே நனைவதாக; ஏழு கால
ங்கள் அவன்மேல் கடந்துபோகுமட்டும் மிரு
கங்களோடே அவனுடைய பங்கு இருக்கக்
கடவதென்றும், [14]வானத்திலிருந்து இறங்கிச்
சொன்ன பரிசுத்த காவலாளனை ராஜாவாகிய
நீர் கண்டீரே. ராஜாவே, அதின் அர்த்தமும் 24
ராஜாவாகிய என் ஆண்டவன்பேரில் வந்த
உன்னதமானவருடைய தீர்மானமும் என்ன
வென்றால்: [15]மனுஷரினின்று நீர் தள்ளிவிடப்
படுவீர்; வெளியின் மிருகங்களோடே சஞ்சரி
ப்பீர்; மாடுகளைப்போலப் புல்லை மேய்ந்து,
ஆகாயத்துப் பனியிலே நனைவீர். உன்னத 25
மானவர் மனுஷருடைய ராஜ்யத்தில் ஆளு
கைசெய்து, தமக்குச் சித்தமா யிருக்கிறவ
னுக்கு அதைக் கொடுக்கிறார் என்பதை நீர்
அறிந்துகொள்ளுமட்டும் ஏழுகாலங்கள் உம்
முடையபேரில் கடந்துபோக வேண்டும்.
ஆனாலும் விருட்சத்தின் வேர்களாகிய அடி 26
மரம் தரையில் இருக்கட்டும் என்று சொல்லப்
பட்டது என்னவென்றால்: [16]நீர் பரம அதிகா
ரத்தை அறிந்தபின், ராஜ்யம் உமக்கு நிலைநிற்
கும். ஆகையால் ராஜாவே, நான் சொல்லும் 27
ஆலோசனையை நீர் அங்கீகரித்துக்கொண்டு
நீதியைச் செய்து உமது பாவங்களையும், [17]சிறு
மையானவர்களுக்கு இரங்கி உமது அக்கிர
மங்களையும் அகற்றிவிடும்; [18]அப்பொழுது உம்
முடைய வாழ்வு நீடித்திருக்கலாம் என்றான்.
இதெல்லாம் ராஜாவாகிய நேபுகாத்நேச்சா 28
ரின்மேல் வந்தது. பன்னிரண்டு மாதம் செ 29
ன்றபின்பு, ராஜா பாபிலோன் ராஜ்யத்தின்
அரமனைமேல் உலாவிக்கொண் டிருக்கும்
போது: இது என் வல்லமையின் பராக்கிர 30
மத்தினால், என் மகிமைப் பிரதாபத்துக்
கென்று, [19]ராஜ்யத்துக்கு அரமனையாக நான்
கட்டின மகா பாபிலோன் அல்லவா என்று
சொன்னான். இந்த வார்த்தை ராஜாவின் 31
வாயில் இருக்கும்போதே, [20]வானத்திலிருந்து
ஒரு சத்தம் உண்டாகி: ராஜாவாகிய நேபுகாத்
நேச்சாரே, ராஜ்யபாரம் உன்னைவிட்டு நீங்

1 எசே. 31. 3. ழ
2 எசே. 17. 23
3 புல. 4. 20
4 17, 23. வச. உபா. 33. 2. சகரி. 14. 5. மத். 25. 31. வெளி. 14. 10
5 மத். 3. 10. லூக். 13. 7
6 யோபு 14. 7–9
7 ஏசா. 6. 10
8 சங். 75. 6, 7
9 யாத். 9. 16. 1 இரா. 21. 25. 2 இரா. 21. 6
10 8. வச
11 2 சாமு. 18. 32. எரே. 29. 7
12 10–12. வச
13 2. 38
14 13, 14. வச
15 33. வச. சங். 106. 20
16 மத். 5. 34; 21. 25. லூக். 15. 18, 21
17 ஏசா. 55. 7. 1 பே. 4. 8
18 சங். 41. 1, 2
19 நீதி. 16. 18. லூக். 12. 19, 20.
20 1. தெச. 5. 3

32 கிற்று. மனுஷரினின்று தள்ளப்படுவாய்,
வெளியின் மிருகங்களோடே சஞ்சரிப்பாய்;
மாடுகளைப்போல் புல்லை மேய்வாய்; இப்படி
யே உன்னதமானவர் மனுஷருடைய ராஜ்
யத்தில் ஆளுகைசெய்து, தமக்குச் சித்தமா
யிருக்கிறவனுக்கு அதைக் கொடுக்கிறாரென்
பதை நீ அறிந்துகொள்ளுமட்டும் ஏழு காலங்
கள் உன்மேல் கடந்துபோகும் என்று உனக்
குச் சொல்லப்படுகிறது என்று விளம்பினது.
33 அந்நேரமே இந்த வார்த்தை நேபுகாத்நேச்சா
ரிடத்தில் நிறைவேறிற்று; அவன் மனுஷரி
னின்று தள்ளப்பட்டு, மாடுகளைப்போல் புல்
லை மேய்ந்தான்; அவனுடைய தலைமயிர் கழுகு
களுடைய இறகுகளைப்போலவும், அவனு
டைய நகங்கள் பட்சிகளுடைய நகங்களைப்
போலவும் வளருமட்டும் அவன் சரீரம் ஆகா
யத்துப் பனியிலே நனைந்தது.
34 அந்த நாட்கள் சென்றபின்பு, நேபுகாத்
நேச்சாராகிய நான் என் கண்களை வானத்
துக்கு ஏறெடுத்தேன்; என் புத்தி எனக்குத்
திரும்பிவந்தது; அப்பொழுது நான் உன்னத
மானவரை ஸ்தோத்திரித்து, [1]என்றென்றைக்
கும் ஜீவித்திருக்கிறவரைப் புகழ்ந்து மகிமைப்
படுத்தினேன்; [2]அவருடைய கர்த்தத்துவமே
நித்திய கர்த்தத்துவம், அவருடைய ராஜ்யமே
35 தலைமுறை தலைமுறையாக நிற்கும். பூமி
யின் குடிகள் எல்லாம் ஒன்றுமில்லையென்று
எண்ணப்படுகிறார்கள்; [3]அவர் தமது சித்தத்
தின்படியே வானத்தின் சேனையையும் பூமி
யின் குடிகளையும் நடத்துகிறார்; [4]அவருடைய
கையைத் தடுத்து, அவரை நோக்கி: என்ன
செய்கிறீரென்று சொல்லத்தக்கவன் ஒருவ
36 னும் இல்லை என்றேன். அவ்வேளையில்
என் புத்தி எனக்குத் திரும்பிவந்தது; என்
ராஜ்யபாரத்தின் மேன்மைக்காக என் மகிமை
யும் என் முகக்களையும் எனக்குத் திரும்பிவந்
தது; என் மந்திரிமாரும் என் பிரபுக்களும் என்
னைத்தேடிவந்தார்கள்; என் ராஜ்யத்திலே நான்
ஸ்திரப்படுத்தப்பட்டேன்; [5]அதிக மகத்துவ
37 மும் எனக்குக் கிடைத்தது. ஆகையால் நே
புகாத்நேச்சாராகிய நான் பரலோகத்தின் ரா
ஜாவைப் புகழ்ந்து, உயர்த்தி, மகிமைப்படுத்து
கிறேன்; [6]அவருடைய கிரியைகளெல்லாம் சத்
தியமும், அவருடைய வழிகள் நியாயமுமான
வைகள்; [7]அகந்தையாய் நடக்கிறவர்களைத்
தாழ்த்த அவராலே ஆகும் என்று எழுதினான்.

**5** பெல்ஷாத்சார் என்னும் ராஜா தன் பிர
புக்களில் ஆயிரம்பேருக்கு ஒரு பெரிய விரு
ந்துசெய்து, [8]அந்த ஆயிரம்பேருக்கு முன்பா
2 கத் திராட்சரசம் குடித்தான். பெல்ஷாத்சார்
திராட்சரசத்தை ருசித்துக்கொண் டிருக்கை
யில், [9]அவன் தன் *தகப்பனாகிய நேபுகாத்
நேச்சார் எருசலேம் தேவாலயத்திலிருந்து
கொண்டுவந்த பொன் வெள்ளி பாத்திரங்க
ளில், ராஜாவாகிய தானும் தன் பிரபுக்களும்
தன் மனைவிகளும் தன் வைப்பாட்டிகளும்
குடிக்கிறதற்காக அவைகளைக் கொண்டுவரும்
படி கட்டளையிட்டான். அப்பொழுது எரு 3
சலேமிலுள்ள தேவனுடைய வீடாகிய ஆல
யத்திலிருந்து எடுக்கப்பட்ட பொற்பாத்திரங்
களைக் கொண்டுவந்தார்கள்; அவைகளில் ரா
ஜாவும் அவனுடைய பிரபுக்களும் அவனு
டைய மனைவிகளும் அவனுடைய வைப்பாட்
டிகளும் குடித்தார்கள். அவர்கள் திராட்ச 4
ரசம் குடித்து, [10]பொன்னும் வெள்ளியும் வெ
ண்கலமும் இரும்பும் மரமும் கல்லுமாகிய
தேவர்களைப் புகழ்ந்தார்கள். அந்நேரத்திலே 5
மனுஷ கைவிரல்கள் தோன்றி, [11]விளக்குக்கு
எதிராக ராஜ அரமனையின் சாந்து பூசப்பட்ட
சுவரிலே எழுதிற்று; எழுதின அந்தக் கை
யுறுப்பை ராஜா கண்டான். அப்பொழுது 6
ராஜாவின் முகம் வேறுபட்டது; [12]அவனு
டைய நினைவுகள் அவனைக் கலங்கப்பண்ணி
னது; அவனுடைய இடுப்பின் கட்டுகள் தளர்
ந்தது, அவனுடைய முழங்கால்கள் ஒன்றோ
டொன்று மோதிக்கொண்டது. ராஜா உரத்த 7
சத்தமிட்டு: [13]ஜோசியரையும் கல்தேயரையும்
குறிசொல்லுகிறவர்களையும் உள்ளே அழைத்
துவரும்படி சொன்னான். ராஜா பாபிலோன்
ஞானிகளை நோக்கி: இந்த எழுத்தை வாசித்து,
இதின் அர்த்தத்தை எனக்கு வெளிப்படுத்து
கிறவன் எவனோ, அவன் இரத்தாம்பரமும்
கழுத்திலே பொற்சரப்பணியும் தரிக்கப்பட்டு,
[14]ராஜ்யத்திலே மூன்றாம் அதிபதியாய் இருப்
பான் என்று சொன்னான். அப்பொழுது 8
ராஜாவின் ஞானிகளெல்லாரும் வந்து சேர்ந்
தார்கள்; ஆனாலும் அவர்கள் அந்த எழுத்தை
வாசிக்கவும், அதின் அர்த்தத்தை ராஜாவுக்குத்
தெரிவிக்கவும் கூடாதிருந்தது. அப்பொழுது 9
ராஜாவாகிய பெல்ஷாத்சார் மிகவும் கலங்கி
னான்; அவனுடைய முகம் வேறுபட்டது;
அவனுடைய பிரபுக்கள் திகைத்தார்கள். ரா 10
ஜாவும் அவனுடைய பிரபுக்களும் சொன்ன
வைகளை ராஜாத்தி கேள்விப்பட்டு விருந்து
சாலைக்குள் பிரவேசித்தாள். அப்பொழுது
ராஜாத்தி: ராஜாவே, நீர் என்றும் வாழ்க;
உமது நினைவுகள் உம்மைக் கலங்கப்பண்ண
வும், உமது முகம் வேறுபடவும் வேண்டிய
தில்லை. உம்முடைய ராஜ்யத்திலே ஒரு புரு 11
ஷன் இருக்கிறான், அவனுக்குள் பரிசுத்த
தேவர்களுடைய ஆவி இருக்கிறது; உம்மு
டைய பிதாவின் நாட்களில் வெளிச்சமும்
விவேகமும் தேவர்களின் ஞானத்துக்கு ஒத்த
ஞானமும் அவனிடத்தில் காணப்பட்டது;
[15]ஆகையால் உம்முடைய பிதாவாகிய நேபுகாத்
நேச்சாரென்னும் ராஜாவானவர் அவனைச்
சாஸ்திரிகளுக்கும் ஜோசியருக்கும் கல்தேய
ருக்கும் குறிசொல்லுகிறவர்களுக்கும் அதிபதி
யாக வைத்தார். ராஜாவினால் பெல்தெஷாத் 12
சாரென்னும் பெயரிடப்பட்ட அந்த தானியே
லுக்குள் சொப்பனங்களை வியார்த்தி பண்ணு
கிறதும், [16]புதைபொருள்களை வெளிப்படுத்து
கிறதும், கருகலானவைகளைத் தெளிவிக்கிறது
மான அறிவும் புத்தியும் விசேஷித்த ஆவியும்

[1] 12. 7. வெளி. 4. 10.
[2] 2. 44. சங். 10. 16; 90. 1. எரே. 10. 10. மீகா. 4. 7. லூ. 1. 33
[3] ஏசா. 40. 15, 17 சங். 115. 3; 135. 6
[4] யோபு 9. 12. ஏசா. 43. 13; 45. 9. ரோ. 9. 20
[5] யோபு 42. 12. நீதி. 22. 4. மத். 6. 33
[6] உபா. 32. 4. சங். 33. 4. வெளி. 15. 3
[7] யாத். 18. 11. யோபு 40. 11, 12
[8] எஸ்தர் 1. 3
[9] 1. 2. எரே. 52. 19
* பாட்டன். 11, 18. வச. 2 சாமு. 9. 7. எரே. 27. 7
[10] வெளி. 9. 20
[11] 4. 31
[12] ஏசா. 21. 2-4. நாகூம் 2. 10
[13] 2. 2. ஏசா. 47. 13
[14] 6. 2
[15] 4. 8, 9
[16] 6. 3

உண்டென்று காணப்பட்டது; இப்போதும்
தானியேல் அழைக்கப்படட்டும், அவன் அர்த்
தத்தை வெளிப்படுத்துவான் என்முள்.
13 அப்பொழுது தானியேல் ராஜாவின்முன்
உள்ளே அழைத்துவந்து விடப்பட்டான்; ரா
ஜா தானியேலைப் பார்த்து: நீ என் பிதாவாகிய
ராஜா யூதாவிலிருந்து சிறைபிடித்துவந்த யூத
ரில் ஒருவனாகிய தானியேல் அல்லவா?
14 உனக்குள்ளே தேவர்களின் ஆவி உண்டென்
றும், வெளிச்சமும் புத்தியும் விசேஷித்த ஞா
னமும் உன்னிடத்தில் காணப்பட்டதென்
றும் உன்னைக்குறித்துக் கேள்விப்பட்டேன்.
15 இப்போதும் இந்த எழுத்தை வாசிக்கிறதற்
கும், இதின் அர்த்தத்தை எனக்குத் தெரி
விக்கிறதற்கும் சாஸ்திரிகளும் ஜோசியரும்
எனக்கு முன்பாக அழைத்துக்கொண்டுவரப்
பட்டார்கள்; ஆனாலும் இந்த வசனத்தின்
அர்த்தத்தை வெளிப்படுத்த அவர்களால்
16 கூடாமற்போயிற்று. பொருளை வெளிப்
படுத்தவும், கருகலானவைகளைத் தெளிவிக்க
வும் உன்னாலே கூடுமென்று உன்னைக்குறித்
துக் கேள்விப்பட்டேன்; இப்போதும் நீ இந்த
எழுத்தை வாசிக்கவும், இதின் அர்த்தத்தை
எனக்குத் தெரிவிக்கவும் உன்னாலே கூடுமா
னால், நீ இரத்தாம்பரமும் கழுத்திலே பொற்
சரப்பணியும் தரிக்கப்பட்டு, ராஜ்யத்திலே
மூன்றாம் அதிபதியாய் இருப்பாய் என்றான்.
17 அப்பொழுது தானியேல் ராஜசமுகத்தில் பிர
தியுத்தரமாக: [1]உம்முடைய வெகுமானங்கள்
உம்மிடத்திலேயே இருக்கட்டும்; உம்முடைய
*பரிசுகளை வேறொருவனுக்குக் கொடும்;
[2]இந்த எழுத்தை நான் ராஜாவுக்கு வாசித்து,
18 இதின் அர்த்தத்தைத் தெரிவிப்பேன். ராஜா
வே, உன்னதமான தேவன் உம்முடைய பிதா
வாகிய நேபுகாத்நேச்சாருக்கு ராஜ்யத்தையும்
மகத்துவத்தையும் கனத்தையும் மகிமையையும்
19 கொடுத்தார். அவருக்குக் கொடுக்கப்பட்ட
மகத்துவத்தினாலே [3]சகல ஜனங்களும் ஜாதி
யாரும் பாஷைக்காரரும் அவருக்கு முன்பாக
நடுங்கிப் பயந்திருந்தார்கள்; அவர் தமக்குச்
சித்தமானவனைக் கொன்றுபோடுவார், தமக்
குச் சித்தமானவனை உயிரோடே வைப்பார்;
தமக்குச் சித்தமானவனை உயர்த்துவார், தமக்
20 குச் சித்தமானவனைத் தாழ்த்துவார். அவரு
டைய இருதயம் மேட்டிமையாகி, [4]அவரு
டைய ஆவி கர்வத்தினாலே கடினப்பட்ட
போது, அவர் தமது சிங்காசனத்திலிருந்து
தள்ளப்பட்டார்; அவருடைய மகிமை அவரை
21 விட்டு அகன்றுபோயிற்று. அவர் மனுஷரி
னின்று தள்ளப்பட்டார்; அவருடைய இரு
தயம் மிருகங்களுடைய இருதயம்போலாயிற்
று; காட்டுக்கழுதைகளோடே சஞ்சரித்தார்;
உன்னதமான தேவன் மனுஷரின் ராஜ்யத்தில்
ஆளுகைசெய்து, தமக்குச் சித்தமானவனை
அதின்மேல் அதிகாரியாக்குகிறார் என்று
அவர் உணர்ந்துகொள்ளுமட்டும் மாடுகளைப்
போல் புல்லை மேய்ந்தார்; அவருடைய சரீரம்

ஆகாயத்துப் பனியிலே நனைந்தது. அவரு 22
டைய குமாரனாகிய பெல்ஷாத்சார் என்னும்
நீரோவென்றால், [5]இதையெல்லாம் அறிந்தி
ருந்தும், உமது இருதயத்தைத் தாழ்த்தாமல்,
பரலோகத்தின் ஆண்டவருக்கு விரோதமாக 23
உம்மை உயர்த்தினீர்; [6]அவருடைய ஆலயத்
தின் பாத்திரங்களை உமக்கு முன்பாகக் கொண்
டுவந்தார்கள்; நீரும், உம்முடைய பிரபுக்க
ளும், உம்முடைய மனைவிகளும், உம்முடைய
வைப்பாட்டிகளும் அவைகளில் திராட்சரசம்
குடித்தீர்கள்; இதுவுமன்றி, தம்முடைய கை
யில் உமது சுவாசத்தை வைத்திருக்கிறவரும்,
உமது வழிகளுக்கு எல்லாம் அதிகாரியுமாகிய
தேவனை நீர் மகிமைப்படுத்தாமல், [7]காணாம
லும் கேளாமலும் உணராமலும் இருக்கிற
வெள்ளியும் பொன்னும் வெண்கலமும் இரும்
பும் மரமும் கல்லுமாகிய தேவர்களைப் புகழ்ந்
தீர். அப்பொழுது அந்தக் கையுறுப்பு அவ 24
ரால் அனுப்பப்பட்டு, இந்த எழுத்து எழுதப்
பட்டது. எழுதப்பட்ட எழுத்து என்னவென் 25
றால்: †**மெனே, மெனே, தெக்கேல், உப்
பார்சின்** என்பதே. இந்த வசனத்தின் அர்த் 26
தமாவது: **மெனே** என்பதற்கு, தேவன் உன்
ராஜ்யத்தை மட்டிட்டு, அதற்கு முடிவுண்
டாக்கினார் என்றும், **தெக்கேல்** என்பதற்கு, 27
நீ தராசிலே நிறுக்கப்பட்டு, [8]குறையக் காணப்
பட்டாய் என்றும், **பேரேஸ்** என்பதற்கு, 28
உன் ராஜ்யம் பிரிக்கப்பட்டு, [9]மேதியருக்கும்
பெர்சியருக்கும் கொடுக்கப்பட்டது என்றும்
அர்த்தமாம் என்றான். அப்பொழுது பெல் 29
ஷாத்சார் தானியேலுக்கு இரத்தாம்பரத்தை
யும், அவனுடைய கழுத்தில் பொற்சரப்பணி
யையும் தரிப்பிக்கவும், [10]ராஜ்யத்திலே அவன்
மூன்றாம் அதிகாரியாயிருப்பவன் என்று அவ
னைக் குறித்துப் பறைமுறையிடவும் கட்டளை
யிட்டான். அன்று ராத்திரியிலே கல்தேய 30
ரின் ராஜாவாகிய பெல்ஷாத்சார் [11]கொலை
செய்யப்பட்டான். மேதியனாகிய தரியு [12]தன் 31
அறுபத்திரண்டாம் வயதில் ராஜ்யத்தைக் கட்
டிக்கொண்டான்.

ராஜ்யம் முழுவதையும் ஆளும்படிக்குத் **6**
தன் ராஜ்யத்தின்மேல் நூற்றிருபது தேசாதி
பதிகளையும், ராஜாவுக்கு நஷ்டம் வராதப 2
டிக்கு அந்த தேசாதிபதிகள் கணக்கு ஒப்பு
விக்கிறதற்காக அவர்களுக்கு மேலாக மூன்று
பிரதானிகளையும் ஏற்படுத்துவது தரியுவுக்கு
நலமென்று கண்டது; [13]இவர்களில் தானி
யேல் ஒருவனாயிருந்தான். இப்படியிருக்கை 3
யில் தானியேல், பிரதானிகளுக்கும் தேசாதி
பதிகளுக்கும் மேற்பட்டவனாயிருந்தான்; [14]தா
னியேலுக்குள் விசேஷித்த ஆவி இருந்தமை
யால் அவனை ராஜ்யம் முழுமைக்கும் அதிகாரி
யாக ஏற்படுத்த ராஜா நினைத்தான். அப்பொ 4
ழுது பிரதானிகளும் தேசாதிபதிகளும் ராஜ்
யத்தின் விசாரிப்பிலே தானியேலைக் குற்றப்
படுத்தும்படி முகாந்தரம் தேடினார்கள்; [15]ஆனா
லும் ஒரு முகாந்தரத்தையும் குற்றத்தையும்

1 ஆதி. 14. 23
* சன்மானங்களை
2 சங். 119. 46
3 4. 22. ஆ. எசே. 27. 7
4 4. 30, 37
5 2 நாளா. 33. 23; 36. 12. யாக். 4. 6.
6 3, 4. வச
7 ஏசா. 16. 23. சங். 115. 5, 8. ஏசா. 37. 19. எரே. 10. 23. ரோ. 1. 21
† எண்ணப்பட்டாய், எண்ணப்பட்டாய், நிறுக்கப்பட்டாய், பிரிக்கப்பட்டாய்
8 யோபு 31. 6. சங். 62. 9. மத். 22. 11, 12. 1 கொ. 3. 13
9 31. வச: 6. 28. ஏசா. 21. 2
10 7. வச
11 எரே. 51. 31, 39
12 9. 1
13 எஸ்றா 1. 1. நெ. 19. 13. ஆ. 1 கொ. 4. 2
14 5. 12. சிறி. 17. 27
15 சங். 37. 12. ஆ. பேர். 4. 4

கண்டுபிடிக்க அவர்களால் கூடாதிருந்தது;
அவன் உண்மையுள்ளவனா யிருந்தபடியால்
அவன்மேல் சுமத்த யாதொரு குற்றமும் குறை
5 வும் காணப்படவில்லை. அப்பொழுது அந்த
மனுஷர்: நாம் இந்த தானியேலை அவனுடைய
தேவனைப்பற்றிய வேதவிஷயத்திலே குற்
றப்படுத்தும் முகாந்தரத்தைக் கண்டுபிடித்
தாலொழிய அவனை வேறொன்றிலும் குற்
றப்படுத்தும் முகாந்தரத்தைக் கண்டுபிடிக்கக்
6 கூடாது என்றார்கள். பின்பு அந்தப் பிரதா
னிகளும் தேசாதிபதிகளும் கூட்டங்கூடி ரா
ஜாவினிடத்தில் போய், அவனை நோக்கி: தரியு
7 ராஜாவே, [1]நீர் என்றும் வாழ்க. எவனாகி
லும் முப்பது நாள்வரையில் ராஜாவாகிய உம்
மைத் தவிர எந்த தேவனையானாலும் மனுஷனை
யானாலும் நோக்கி, யாதொரு காரியத்தைக்
குறித்து விண்ணப்பம் பண்ணினால், அவன்
சிங்கங்களின் கெபியிலே போடப்பட, ராஜா
*கட்டளை பிறப்பித்து, உறுதியான தாக்கீது
செய்யவேண்டுமென்று ராஜ்யத்தினுடைய
எல்லாப் பிரதானிகளும் தேசாதிபதிகளும்
பிரபுக்களும் மந்திரிமார்களும் தலைவர்களும்
[2]ஆலோசனை பண்ணிக்கொண்டிருக்கிறார்கள்.
8 ஆதலால் இப்போதும் ராஜாவே, மேதியருக்
கும் பெர்சியருக்கும் இருக்கிற மாறாத பிரமா
ணத்தின்படியே, [3]அந்தத் தாக்கீது மாற்றப்
படாதபடி நீர் அதைக் கட்டளையிட்டு, அதற்
குக் கையெழுத்து வைக்கவேண்டும் என்றார்
9 கள். அப்படியே ராஜாவாகிய தரியு அந்தக்
கட்டளைப் பத்திரத்துக்குக் கையெழுத்து
10 வைத்தான். தானியேலோவென்றால், அந்
தப் பத்திரத்துக்குக் கையெழுத்து வைக்கப்
பட்டதென்று அறிந்தபோதிலும், [4]தன் வீட்
டுக்குள்ளே போய், [5]தன் மேல் அறையிலே
எருசலேமுக்கு நேராக †பலகணிகள் திறந்தி
ருக்க, அங்கே தான் முன் செய்துவந்தபடியே,
[6]தினம் மூன்றுவேளையும் தன் தேவனுக்கு
முன்பாக முழங்காற்படியிட்டு ஜெபம்பண்ணி,
11 [7]ஸ்தோத்திரம் செலுத்தினான். அப்பொழுது
அந்த மனுஷர் கூட்டங்கூடி, தானியேல் தன்
தேவனுக்கு முன்பாக ஜெபம்பண்ணி விண்
12 ணப்பஞ்செய்கிறதைக் கண்டார்கள். பின்பு
அவர்கள் ராஜாவுக்கு முன்பாக வந்து, [8]ராஜா
வின் தாக்கீதைக்குறித்து: எந்த மனுஷனாகி
லும் முப்பதுநாள்வரையில் ராஜாவாகிய உம்
மைத்தவிர எந்த தேவனையானாலும் மனுஷ
னையானாலும் நோக்கி யாதொரு காரியத்தைக்
குறித்து விண்ணப்பம்பண்ணினால், அவன்
சிங்கங்களின் கெபியிலே போடப்படவேண்
டும் என்று நீர் கட்டளைப்பத்திரத்தில் கையெ
ழுத்து வைத்தீர் அல்லவா என்றார்கள். அத
ற்கு ராஜா: அந்தக் காரியம் மேதியருக்கும்
பெர்சியருக்கும் இருக்கிற மாறாத பிரமாணத்
தின்படி உறுதியாக்கப்பட்டதே என்றான்.
13 அப்பொழுது அவர்கள் ராஜாவை நோக்கி:
சிறைபிடிக்கப்பட்ட யூதேயாதேசத்தின் புத்தி
ரரில் தானியேல் என்பவன் உம்மையும் நீர்
கையெழுத்து வைத்துக்கொடுத்த கட்டளையை
யும் மதியாமல், [9]தினம் மூன்று வேளையும்
தான் பண்ணும் விண்ணப்பத்தைப் பண்ணு
கிறான் என்றார்கள். ராஜா இந்த வார்த்தை 14
களைக் கேட்டபோது, [10]தன்னில் மிகவும் சஞ்
சலப்பட்டு, தானியேலைக் காப்பாற்றும்படிக்கு
அவன்பேரில் தன் மனதை வைத்து, அவனைத்
தப்புவிக்கிறதற்காகச் சூரியன் அஸ்தமிக்கு
மட்டும் பிரயாசப்பட்டுக்கொண் டிருந்தான்.
அப்பொழுது அந்த மனுஷர் ராஜாவினிடத் 15
தில் கூட்டமாய் வந்து: ராஜா கட்டளையிட்ட
எந்தத் தாக்கீதும் கட்டளையும் மாற்றப்படக்
கூடாதென்பது மேதியருக்கும் பெர்சியருக்
கும் பிரமாணமாயிருக்கிறதென்று அறிவீராக
என்றார்கள். அப்பொழுது ராஜா கட்டளை 16
யிட, [11]அவர்கள் தானியேலைக் கொண்டுவந்து,
அவனைச் சிங்கங்களின் கெபியிலே போட்
டார்கள். ராஜா தானியேலை நோக்கி: [12]நீ
இடைவிடாமல் ஆராதிக்கிற உன் தேவன்
உன்னைத் தப்புவிப்பார் என்றான். ஒரு கல் 17
கெபியினுடைய வாசலின்மேல் கொண்டு
வந்து வைக்கப்பட்டது; [13]தானியேலைப்பற்
றிய தீர்மானம் மாற்றப்படாதபடிக்கு ராஜா
தன் மோதிரத்தினாலும் தன் பிரபுக்களின்
மோதிரத்தினாலும் அதின்மேல் முத்திரை
போட்டான். பின்பு ராஜா தன் அரமனைக் 18
குப் போய், இராமுழுதும் போஜனம் பண்
ணாமலும், கீதவாத்தியம் முதலானவைகளைத்
தனக்கு முன்பாக வரவொட்டாமலும் இருந்
தான்; அவனுக்கு நித்திரையும் வராமற்போ
யிற்று. காலமே கிழக்கு வெளுக்கும்போது 19
ராஜா எழுந்திருந்து, சிங்கங்களின் கெபிக்குத்
தீவிரமாய்ப் போனான். ராஜா கெபியின் கிட் 20
டவந்தபோது, துயரசத்தமாய்த் தானியேலைக்
கூப்பிட்டு: தானியேலே, ஜீவனுள்ள தேவ
னுடைய தாசனே, நீ இடைவிடாமல் ஆரா
திக்கிற உன் தேவன் உன்னைச் சிங்கங்களுக்
குத் தப்புவிக்க வல்லவராயிருந்தாரா என்று
தானியேலைக் கேட்டான். அப்பொழுது 21
தானியேல்: ராஜாவே, நீர் என்றும் வாழ்க.
சிங்கங்கள் என்னைச் சேதப்படுத்தாதபடிக்கு 22
தேவன் தம்முடைய [14]தூதனை அனுப்பி,
[15]அவைகளின் வாயைக் கட்டிப்போட்டார்;
அதேனென்றால் அவருக்கு முன்பாக நான்
குற்றமற்றவனாய்க் காணப்பட்டேன்; ராஜா
வாகிய உமக்கு முன்பாகவும் நான் நீதிகேடு
செய்ததில்லை என்றான். அப்பொழுது ராஜா 23
தன்னில் மிகவும் சந்தோஷப்பட்டு, தானியே
லைக் கெபியிலிருந்து தூக்கிவிடச்சொன்னான்;
அப்படியே தானியேல் கெபியிலிருந்து தூக்கி
விடப்பட்டான்; [16]அவன் தன் தேவன்பே
ரில் விசுவாசித்திருந்தபடியால், அவனில்
ஒரு சேதமும் காணப்படவில்லை. தானி 24
யேலின்மேல் குற்றஞ்சாற்றின மனுஷ
ரையோவென்றால், ராஜா கொண்டுவரச்
சொன்னான்; [17]அவர்களையும் அவர்கள் குமார
ரையும் அவர்கள் மனைவிகளையும் சிங்கங்

1 நெகே. 2. 3
* 9, வச. வசனம
2 சங். 2. 2
3 எஸ்தர் 1. 19; 8. 8
4 தா. 14. 26. அப். 4. 17-19
5 1 இரா. 8. 44, 48. சங். 5. 7. யோனா 2. 4
† ஜன்னல்கள்
6 சங். 55. 17. அப். 2. 1, 2, 15; 3. 1; 10. 9
7 பிலி. 4. 6
8 3. 8
9 5. 13; 3. 12. அப். 5. 29
10 மாற். 6. 26
11 எரே. 26. 14. அப். 25. 11
12 3. 15, 17. சங். 37. 39, 40
13 புல. 3. 53. மத். 27. 66
14 3. 28
15 எபி. 11. 33
16 எபி. 11. 33
17 உபா. 19. 19; 24. 16. 2 இரா. 14. 6

களின் கெபியிலே போட்டார்கள்; [1]அவர்
கள் கெபியின் அடியிலே சேருமுன்னே
சிங்கங்கள் அவர்கள்மேல் பாய்ந்து, அவர்கள்
எலும்புகளையெல்லாம் நொறுக்கிப்போட்டது.
25 பின்பு ராஜாவாகிய தரியு தேசமெங்கும்
குடியிருக்கிற எல்லா ஜனங்களுக்கும் ஜாதியா
ருக்கும் பாஷைக்காரருக்கும் எழுதினது என்
னவென்றால்: [2]உங்களுக்குச் சமாதானம் பெரு
26 கக்கடவது. என் ராஜ்யத்தின் ஆளுகைக்
குள் எங்குமுள்ளவர்கள் யாவரும் தானியே
லின் [3]தேவனுக்கு முன்பாக நடுங்கிப் பயப்ப
டவேண்டுமென்று என்னாலே தீர்மானம் பண்
ணப்படுகிறது; [4]அவர் ஜீவனுள்ள தேவன்,
அவர் என்றென்றைக்கும் நிலைத்திருக்கிறவர்;
[5]அவருடைய ராஜ்யம் அழியாதது; அவரு
டைய கர்த்தத்துவம் முடிவுபரியந்தமும் நிற்
27 கும். தானியேலைச் சிங்கங்களின் கைக்குத்
தப்புவித்த [6]அவரே தப்புவிக்கிறவரும் ரட்சிக்
கிறவரும், [7]வானத்திலும் பூமியிலும் அடை
யாளங்களையும் அற்புதங்களையும் செய்கிறவரு
28 மாயிருக்கிறார் என்று எழுதினான். தரியுவின்
ராஜ்யபாரகாலத்திலும், [8]பெர்சியனாகிய கோ
ரேசுடைய ராஜ்யபாரகாலத்திலும் தானியே
லின் காரியம் ஜெயமாயிருந்தது.

7 பாபிலோன் ராஜாவாகிய பெல்ஷாத்சா
ரின் முதலாம் வருஷத்திலே தானியேல்
[9]ஒரு சொப்பனத்தையும் தன் படுக்கையின்
மேல் தன் தலையில் தோன்றின தரிசனங்களை
யும் கண்டான். பின்பு அவன் அந்தச் சொப்
பனத்தை எழுதி, காரியங்களின் தொகையை
2 விவரித்தான். தானியேல் சொன்னது: இராத்
திரிகாலத்தில் எனக்கு உண்டான தரிசனத்
திலே நான் கண்டது என்னவென்றால்:
இதோ, வானத்தின் நாலு காற்றுகளும் பெரிய
3 சமுத்திரத்தின்மேல் அடித்தது. அப்பொழுது
வெவ்வேறு ரூபமுள்ள [10]நாலு பெரிய மிருகங்
4 கள் சமுத்திரத்திலிருந்து எழும்பின. முந்தி
னது சிங்கத்தைப்போல இருந்தது; [11]அதற்குக்
கழுகின் செட்டைகள் உண்டாயிருந்தது;
நான் பார்த்துக்கொண்டிருக்கையில், அதின்
இறகுகள் பிடுங்கப்பட்டது; அது தரையிலி
ருந்து எடுக்கப்பட்டு, மனுஷனைப்போல இர
ண்டு காலின்மேல் நிமிர்ந்து நிற்கும்படி செய்
யப்பட்டது; மனுஷ இருதயம் அதற்குக் கொ
5 டுக்கப்பட்டது. பின்பு, கரடிக்கு ஒப்பாகிய
வேறே இரண்டாம் மிருகத்தைக் கண்டேன்;
[12]அது ஒரு பக்கமாய்ச் சாய்ந்து நின்று, தன்
வாயின் பற்களுக்குள்ளே மூன்று விலா
வெலும்புகளைக் கவ்விக்கொண்டிருந்தது; எழு
ம்பி வெகு மாம்சம் தின்னென்று அதற்குச்
6 சொல்லப்பட்டது. அதின்பின்பு, சிவிங்கி
யைப்போலிருக்கிற வேறொரு மிருகத்தைக்
கண்டேன்; அதின் முதுகின்மேல் பட்சியின்
செட்டைகள் நாலு இருந்தது; அந்த மிருகத்
துக்கு நாலு தலைகளும் உண்டாயிருந்தது;
7 [13]அதற்கு ஆளுகை அளிக்கப்பட்டது. அதற்
குப்பின்பு, இராத்தரிசனங்களில் நாலாம்மிரு
கத்தைக் கண்டேன்; [14]அது கெடியும் பயங்கர
முமம் மகா பலத்ததுமாயிருந்தது; அதற்குப்
பெரிய இருப்புப்பற்கள் இருந்தது; அது நொ
றுக்கிப் பட்சித்து, மீதியானதைத் தன் கால்
களால் மிதித்துப்போட்டது; அது தனக்கு
முன்னிருந்த எல்லா மிருகங்களைப்பார்க்கி
லும் வேற்றுருவமாயிருந்தது, [15]அதற்குப் பத்
துக் கொம்புகள் இருந்தது. அந்தக் கொம்பு 8
களை நான் கவனித்திருக்கையில், [16]இதோ,
அவைகளுக்கு இடையிலே வேறொரு சின்ன
கொம்பு எழும்பிற்று; அதற்கு முன்பாக முந்
தின கொம்புகளில் மூன்று பிடுங்கப்பட்டது;
[17]இதோ, அந்தக் கொம்பிலே மனுஷகண்க
ளுக்கு ஒப்பான கண்களும் பெருமையான
வைகளைப் பேசும் வாயும் இருந்தது. நான் 9
பார்த்துக்கொண்டிருக்கையில், [18]சிங்காசனங்
கள் வைக்கப்பட்டது; *நீண்ட ஆயுசுள்ளவர்
வீற்றிருந்தார்; [19]அவருடைய வஸ்திரம் உறை
ந்த மழையைப்போலவும், அவருடைய சிர
சின் மயிர் வெண்மையாகவும் பஞ்சைப்போல
துப்புரவாகவும் இருந்தது; அவருடைய சிங்
காசனம் அக்கினிஜுவாலையும், [20]அதின் சக்க
ரங்கள் எரிகிற நெருப்புமாயிருந்தது. அக் 10
கினி [21]நதி அவர் சந்நிதியிலிருந்து புறப்பட்டு
ஓடினது; ஆயிரமாயிரம்பேர் அவரைச் சேவித்
தார்கள்; [22]கோடாகோடிபேர் அவருக்கு முன்
பாக நின்றார்கள்; [23]நியாயசங்கம் உட்கார்ந்
தது; புஸ்தகங்கள் திறக்கப்பட்டது. அப் 11
பொழுது நான் பார்த்தேன்; நான் பார்த்
துக்கொண்டிருக்கையில் அந்தக் கொம்பு
பெருமையான பேச்சுகளைப் பேசினதினி
மித்தம் [24]அந்த மிருகம் கொலைசெய்யப்
பட்டது; அதின் உடல் அழிக்கப்பட்டு,
எரிகிற அக்கினிக்கு ஒப்புக்கொடுக்கப்பட்
டது. மற்ற மிருகங்களுடைய ஆளுகை 12
யோவென்றால், அவைகளை விட்டு நீக்கப்பட்
டது; ஆனாலும், அவைகளுக்குக் காலமும்
சமயமும் ஆகுமட்டும் அவைகள் உயிரோடே
இருக்கும்படி கட்டளையிடப்பட்டது. இராத் 13
தரிசனங்களிலே நான் பார்த்துக்கொண்டிருக்
கையில், [25]இதோ, மனுஷ குமாரனுடைய
சாயலான ஒருவர் வானத்து மேகங்களுடனே
வந்தார்; அவர் நீண்ட ஆயுசுள்ளவர் இடமட்
டும் வந்து, அவர் சமீபத்தில் கொண்டுவரப்
பட்டார். சகல ஜனங்களும் ஜாதியாரும் 14
பாஷைக்காரரும் அவரையே சேவிக்கும்படி,
[26]அவருக்குக் கர்த்தத்துவமும் மகிமையும் ராஜ
ரிகமும் கொடுக்கப்பட்டது; [27]அவருடைய
கர்த்தத்துவம் நீங்காத நித்திய கர்த்தத்துவமும்,
அவருடைய ராஜ்யம் அழியாததுமாயிருக்கும்.
தானியேலாகிய நான் என் தேகத்தினுள் 15
என் ஆவியிலே சஞ்சலப்பட்டேன்; என்
தலையில் தோன்றின தரிசனங்கள் என்னைக்
கலங்கப்பண்ணினது. சமீபத்தில் நிற்கிறவர் 16
களில் ஒருவனிடத்தில் நான் போய், இதன்
பொருள் எல்லாவற்றையும் எனக்குச் சொல்
லும்படி அவனை வேண்டிக்கொண்டே

1 சங். 54. 5
2 4. 1
3 சங். 99. 1
4 2. 44: 4. 34
5 லூக். 1. 33
6 சங். 18. 50: 32. 7
7 4. 3
8 1. 21. எஸ்றா 1. 1, 2
9 2. 28. எண். 12. 6. ஆமோ. 3. 7
10 வெளி. 13. 1
11 உபா. 28. 49. எரே. 4. 7. எசே. 17. 3. ஆப. 1. 8
12 2. 39
13 8. 8, 22
14 19. 23. வச. 2. 40
15 2. 41, 42. வெளி. 13. 1
16 20. 21, 24. வச
17 வெளி. 9. 7: 13. 5
18 1 கொ. 15. 24, 25. வெளி. 20. 4
* சித்திபர். 22. வச. சங். 90. 2. ஏசா. 9. 6.
19 சங். 45. 8: 104. 2. பிலி. 3. 9. வெளி. 1. 14
20 எசே. 1. 15, 16
21 சங். 50. 3. ஏசா. 66. 15, 16
22 1 இரா. 22. 19. சங். 68. 17. எபி. 12. 22
23 வெளி. 20. 4, 12
24 வெளி. 19. 20
25 மத். 24. 30: 25. 31: 26. 64. வெளி. 1. 7, 13: 14. 14
26 சங். 2. 6, 8. மத். 28. 18. யோ. 3. 35. 1 கொ. 15. 27. எபே. 1. 20, 22
27 சங். 145. 13. எபி. 12. 28

அவன் அந்தக் காரியங்களின் அர்த்தத்தை
எனக்கு அறிவித்துச்சொன்னது என்னவென்
17 ருல்: அந்த நாலு பெரிய மிருகங்களும் பூமி
18 யிலிருந்து எழும்புகிற நாலு ராஜாக்கள். ஆனு
லும் உன்னதமானவருடைய பரிசுத்தவான்
கள் ராஜரிகத்தைப் பெற்று,[1]என்றென்றைக்கு
முள்ள சதாகாலங்களிலும் ராஜ்யத்தைச் சுதந்
19 தரித்துக்கொள்வார்கள் என்ருன். அப்பொ
ழுது மற்றவைகளையெல்லாம் பார்க்கிலும்
வேற்றுருவும் கெடியுமுள்ளதுமாய், இருப்புப்
பற்களும், வெண்கல நகங்களுமுடையதாய்
நொறுக்கிப் பட்சித்து, மீதியானதைத் தன்
கால்களால் மிதித்துப்போட்டதுமாயிருந்த நா
20 லாம் மிருகத்தைக்குறித்தும், அதின் தலை
மேலுள்ள பத்துக் கொம்புகளைக்குறித்தும்,
தனக்கு முன்பாக மூன்று கொம்புகள் விழுந்து
போக எழும்பினதுமாய், கண்களையும் பெரு
மையானவைகளைப் பேசும் வாயையுமுடைய
துமாய், மற்றவைகளைப்பார்க்கிலும் பருமனு
கத் தோன்றினதுமாயிருந்த அந்த வேறே
கொம்பைக்குறித்தும், அவற்றின் பொருளை
21 அறிய மனதாயிருந்தேன். நீண்ட ஆயுசுள்ள
வர் வருமட்டாகவும், நியாயவிசாரிப்பு உன்ன
தமானவருடைய பரிசுத்தவான்களுக்குக் கொ
டுக்கப்பட்டு, பரிசுத்தவான்கள் ராஜ்யத்தைச்
சுதந்தரித்துக்கொள்ளும் காலம் வருமட்டாக
22 வும், இந்தக் கொம்பு பரிசுத்தவான்களோடே
யுத்தம்பண்ணி, [2]அவர்களை மேற்கொண்டது
23 என்று கண்டேன். அவன் சொன்னது:
நாலாம் மிருகம் பூமியிலே உண்டாகும் நாலாம்
ராஜ்யமாம்; [3]அது எல்லா ராஜ்யங்களைப்
பார்க்கிலும் வேருயிருந்து, பூமியை எல்
லாம் பட்சித்து, அதை மிதித்து, அதை
24 நொறுக்கிப்போடும். அந்தப் பத்துக் கொம்
புகள் என்னவென்ருல், அந்த ராஜ்யத்
திலே எழும்பும் பத்து ராஜாக்களாம்; அவர்
களுக்குப் பின்பு வேறொருவன் எழும்பு
வான்; அவன் முந்தினவர்களைப்பார்க்கிலும்
வேருயிருந்து, மூன்று ராஜாக்களைத் தாழ்த்
25 திப்போட்டு, உன்னதமானவருக்கு விரோ
தமாக வார்த்தைகளைப் பேசி, உன்னதமான
வருடைய பரிசுத்தவான்களை ஒடுக்கி, காலங்
களையும் பிரமாணங்களையும் மாற்ற நினைப்
பான்; [4]அவர்கள் ஒரு காலமும், காலங்களும்,
அரைக்காலமும் செல்லுமட்டும் அவன் கை
26 யில் ஒப்புக்கொடுக்கப்படுவார்கள். ஆனாலும்
நியாயசங்கம் உட்காரும்; அப்பொழுது முடி
வுபரியந்தம் அவனைச் சங்கரிக்கும்படியாகவும்
அழிக்கும்படியாகவும் அவனுடைய ஆளுகை
27 யை நீக்கிப்போடுவார்கள். வானத்தின் கீழெ
ங்குமுள்ள ராஜ்யங்களின் ராஜரிகமும் ஆளு
கையும் மகத்துவமும் உன்னதமானவருடைய
பரிசுத்தவான்களாகிய ஜனங்களுக்குக் கொடுக்
கப்படும்; [5]அவருடைய ராஜ்யம்; நித்தியராஜ்
யம்; சகல கர்த்தத்துவங்களும் அவரைச் சே
வித்து, அவருக்குக் கீழ்ப்பட்டிருக்கும் என்
ருன். அவன் சொன்ன வார்த்தை இத்தோடே

முடிந்தது. தானியேலாகிய நான் என் நினைவு
களால் மிகவும் கலங்கினேன்; என் முகம்
வேறுபட்டது; [6]இந்தக் காரியத்தை என் மன
திலே வைத்துக்கொண்டேன்.

8 தானியேலாகிய எனக்கு முதலில் காண்
பிக்கப்பட்ட தரிசனத்துக்குப் பின்பு, [7]ராஜா
வாகிய பெல்ஷாத்சார் ராஜ்யபாரம்பண்ணின
மூன்ரும் வருஷத்திலே வேறொரு தரிசனம்
எனக்குக் காண்பிக்கப்பட்டது. தரிசனத்தி 2
லே நான் கண்டது என்னவென்ருல்: [8]நான்
பார்க்கையில் ஏலாம் தேசத்திலுள்ள சூசான்
அரமனையில் இருந்தேன்; அங்கே நான்
ஊலாய் என்னும் ஆற்றங்கரையில் இருந்ததா
கத் தரிசனத்திலே கண்டேன். நான் என் 3
கண்களை ஏறெடுத்துப் பார்த்தேன்; இதோ,
இரண்டு கொம்புகளுள்ள ஒரு ஆட்டுக்கடா
ஆற்றிற்கு முன்பாக நின்றது; அதின் இரண்டு
கொம்புகளும் உயர்ந்தவைகளா யிருந்தது;
ஆகிலும் அவைகளில் ஒன்று மற்றதைப்பார்க்
கிலும் உயர்ந்திருந்தது; உயர்ந்த கொம்பு பிந்தி
முளைத்தெழும்பிற்று. அந்த ஆட்டுக்கடா 4
மேற்கும் வடக்கும் தெற்கும் பாய்கிறதைக்
கண்டேன்; ஒரு மிருகமும் அதின் முன்னே
நிற்கக் கூடாதிருந்தது; அதின் கைக்குத் தப்பு
விப்பாருமில்லை; [9]அது தன் இஷ்டப்படியே
செய்து வல்லமைகொண்டது. நான் அதைக் 5
கவனித்துக்கொண்டிருக்கையில், இதோ,
[10]மேற்கேயிருந்து ஒரு வெள்ளாட்டுக்கடா
நிலத்திலே கால் பாவாமல் தேசத்தின் மீதெங்
கும் சென்றது; அந்த வெள்ளாட்டுக்கடாவின்
கண்களுக்கு நடுவே விசேஷித்த ஒரு கொம்பு
இருந்தது. நான் ஆற்றின்முன்பாக நிற்கக் 6
கண்ட இரண்டு கொம்புகளுள்ள ஆட்டுக்க
டாவினிடமட்டும் அது வந்து, தன் பலத்
தின் உக்கிரத்தோடே அதற்கு எதிராகப் பாய்ந்
தது. அது ஆட்டுக்கடாவின் கிட்டச் சேரக் 7
கண்டேன்; அது ஆட்டுக்கடாவின்மேல் கடுங்
கோபங் கொண்டு, அதை முட்டி, அதின்
இரண்டு கொம்புகளையும் முறித்துப்போட்
டது; அதின் முன்நிற்க ஆட்டுக்கடாவுக்குப்
பலமில்லாமையால், வெள்ளாட்டுக்கடா
அதைத் தரையிலே தள்ளி மிதித்துப்போட்
டது; அதின் கைக்கு ஆட்டுக்கடாவைத் தப்
புவிப்பார் இல்லை. அப்பொழுது வெள்ளா 8
ட்டுக்கடா மிகுதியும் வல்லமைகொண்டது;
அது பலங்கொண்டிருக்கையில், அந்தப் பெ
ரிய கொம்பு முறிந்துபோயிற்று; [11]அதற்குப்
பதிலாக ஆகாயத்தின் நாலு திசைகளுக்கும்
எதிராய் விசேஷித்த நாலு கொம்புகள் முளைத்
தெழும்பினது. அவைகளில் ஒன்றிலிருந்து 9
சின்னதான [12]ஒரு கொம்பு புறப்பட்டு, தெற்
குக்கும், கிழக்குக்கும் எதிராகவும், [13]சிங்கார
மான தேசத்துக்கு நேராகவும் மிகவும் பெரிய
தாயிற்று. அது வானத்தின் சேனைபரியந் 10
தம் வளர்ந்து, [14]அதின் சேனையாகிய நட்சத்
திரங்களில் சிலவற்றை பூமியிலே விழப்
பண்ணி, அவைகளை மிதித்தது. அது சேனை 11

1 வெளி. 3. 21
2 வெளி. 11. 7: 13. 7: 17. 14: 19. 19
3 2. 40. வெளி. 17. 12
4 ஏசா. 37. 23. வெளி. 13. 5-7
5 ஏசா. 60. 12. லூ. 1. 33. யோ. 12. 34. வெளி. 11. 15
6 லூ. 2. 19, 51
7 7. 1
8 எஸ்தர் 1. 2
9 5. 19: 11. 3, 16. ஏசா. 10. 13, 14
10 21. வச.
11 7. 6. வ
12 11. 25. வ
13 சங். 48. 2. எசே. 20. 16.
14 ஏசா. 14. 13. வெளி. 12. 4

யினுடைய அதிபதி பரியந்தமும் தன்னை உய
ர்த்தி, [1]அவரிடத்திலிருந்து அன்றாடபலியை
நீக்கிற்று; அவருடைய பரிசுத்த ஸ்தானம் தள்
12 ளுண்டது. பாதகத்தினிமித்தம் அன்றாட
பலியோடேகூடச் சேனையும் அதற்கு ஒப்புக்
கொடுக்கப்பட்டது; [2]அது சத்தியத்தைத் தரை
யிலே தள்ளிற்று; அது கிரியைசெய்து அநு
13 கூலமடைந்தது. பரிசுத்தவானாகிய ஒருவன்
பேசக்கேட்டேன்; [3]அப்பொழுது வேறொரு
பரிசுத்தவான் பேசினவரை நோக்கி: அன்றாட
பலியைக்குறித்தும் பாழ்க்கடிப்பை உண்டாக்
கும் பாதகத்தைக்குறித்தும், பரிசுத்த ஸ்தலமும்
சேனையும்மிதிபட ஒப்புக்கொடுக்கப்படுவதைக்
குறித்தும், உண்டான தரிசனம் எதுவரைக்கும்
14 இருக்கும் என்று கேட்டான். அவன் என்னை
நோக்கி: இரண்டாயிரத்து முந்நூறு இராப்
பகல் செல்லும்வரைக்கும் இருக்கும்; பின்பு
பரிசுத்தஸ்தலம் சுத்திகரிக்கப்படும் என்றான்.
15 தானியேலாகிய நான் இந்தத் தரிசனத்
தைக் கண்டு, அதின் பொருளை அறிய வகை
தேடுகையில், இதோ, மனுஷசாயலான ஒரு
16 வன் எனக்கு எதிரே நின்றான். அன்றியும்
காபிரியேலே, [4]இவனுக்குத் தரிசனத்தை
விளக்கப்பண்ணென்று ஊலாயின் மத்தியிலே
கூப்பிட்டுச் சொல்லுகிற ஒரு மனுஷ சத்
17 தத்தையும் கேட்டேன். அப்பொழுது அவன்
நான் நின்ற இடத்துக்கு வந்தான்; அவன் வரு
கையில் நான் திடுக்கிட்டு முகங்குப்புற விழுந்
தேன்; [5]அவன் என்னை நோக்கி: மனுபுத்திர
னே கவனி; இந்தத் தரிசனம் முடிவுகாலத்து
18 க்கு அடுத்தது என்றான். அவன் என்னோ
டே பேசுகையில், நான் தரையில் முகங்குப்
புறக் கிடந்து, அயர்ந்த நித்திரைகொண்டேன்;
[6]அவனோ என்னைத் தொட்டு, நான் காலூன்றி
19 நிற்கும்படி செய்து: இதோ, கோபத்தின்
முடிவுகாலத்திலே சம்பவிப்பதை உனக்குத்
தெரிவிப்பேன்; [7]இது குறிக்கப்பட்ட முடிவு
20 காலத்துக்கு அடுத்தது. நீ கண்ட இரண்டு
கொம்புள்ள ஆட்டுக்கடா மேதியா பெர்சியா
21 தேசங்களின் ராஜாக்கள்; ரோமமுள்ள அந்த
வெள்ளாட்டுக்கடா கிரேக்கு தேசத்தின் ரா
ஜா; [8]அதின் கண்களுக்கு நடுவே இருந்த பெ
22 ரிய கொம்பு அதின் முதலாம் ராஜா; அது
முறிந்துபோனபின்பு அதற்குப் பதிலாக நாலு
கொம்புகள் எழும்பினது என்னவென்றால்,
அந்த ஜாதியிலே நாலு ராஜ்யங்கள் எழும்பும்;
ஆனாலும் அவனுக்கு இருந்த வல்லமை அவை
23 களுக்கு இராது. அவர்களுடைய ராஜ்யபா
ரத்தின் கடைசிக் காலத்திலோவென்றால்,
பாதகருடைய பாதகம் நிறைவேறும்போது,
[9]மூர்க்கமுகமும் சூதானபேச்சுமுள்ள சாமர்த்
24 தியமான ஒரு ராஜா எழும்புவான். அவனு
டைய வல்லமை பெருகும்; [10]ஆனாலும் அவ
னுடைய சுயபலத்தினால் அல்ல, அவன் அதி
சயமானவிதமாக அழிம்புண்டாக்கி, [11]அநுகூ
லம்பெற்றுக் கிரியை செய்து, பலவான்களை
யும் பரிசுத்த ஜனங்களையும் அழிப்பான்.

அவன் தன் உபாயத்தினால் வஞ்சகத்தைக் கை 25
கூடிவரப்பண்ணி, தன் இருதயத்தில் பெரு
மைகொண்டு, நிர்விசாரத்தோடிருக்கிற அநே
கரை அழித்து, அதிபதிகளுக்கு அதிபதியாயி
ருக்கிறவருக்கு விரோதமாய் எழும்புவான்;
[12]ஆனாலும் அவன் கையினாலல்ல வேறுவித
மாய் முறித்துப்போடப்படுவான். சொல்லப் 26
பட்ட இராப்பகல்களின் தரிசனம் சத்தியமா
யிருக்கிறது; [13]ஆதலால் இந்தத் தரிசனத்தை
நீ மறைத்துவை; அதற்கு இன்னும் அநேக
நாள் செல்லும் என்றான். தானியேலாகிய 27
நான் சோர்வடைந்து, சிலநாள் வியாதிப்பட்டி
ருந்தேன்; [14]பின்பு நான் எழுந்திருந்து, ராஜா
வின் வேலையைச் செய்து, அந்தத் தரிசனத்
தினால் திகைத்துக்கொண்டிருந்தேன்; ஒரு
வரும் அதை அறியவில்லை.

கல்தேயருடைய ராஜ்யத்தின்மேல் ராஜா 9
வாக்கப்பட்ட மேதிய குலத்தானாகிய அகாஸ்
வேருவின் [15]புத்திரனான தரியு ராஜ்யபாரம்
பண்ணுகிற முதலாம் வருஷத்திலே, தானி 2
யேலாகிய நான் எருசலேமின் பாழ்க்கடிப்பு
கள் நிறைவேறித்தீர எழுபதுவருஷம் செல்லு
மென்று **கர்த்தர்** [16]எரேமியா தீர்க்கதரிசியோ
டே சொல்லிய வருஷங்களின் தொகையைப்
புஸ்தகங்களால் அறிந்துகொண்டேன். நான் 3
உபவாசம்பண்ணி, இரட்டிலும் சாம்பலிலும்
உட்கார்ந்து, [17]தேவனாகிய ஆண்டவரை ஜெ
பத்தினாலும் விண்ணப்பங்களினாலும் தேட
என் முகத்தை அவருக்கு நேராக்கி, என் 4
தேவனாகிய **கர்த்தரை** நோக்கி ஜெபம்பண்
ணி, பாவ அறிக்கை செய்து: ஆ ஆண்டவரே,
உம்மில் அன்புகூர்ந்து, [18]உம்முடைய கற்பனை
களைக் கைக்கொள்ளுகிறவர்களுக்கு உடன்ப
டிக்கையையும் கிருபையையும் காக்கிற மகத்
துவமும் பயங்கரமுமான தேவனே, நாங் 5
கள் பாவஞ்செய்து, [19]அக்கிரமக்காராயிரு
ந்து, துன்மார்க்கமாய் நடந்து, கலகம்பண்ணி,
உம்முடைய கற்பனைகளையும் உம்முடைய
நியாயங்களையும் விட்டு அகன்றுபோனோம்.
உமது நாமத்தினாலே எங்கள் ராஜாக்களோ 6
டும் எங்கள் பிரபுக்களோடும் எங்கள் பிதாக்
களோடும் தேசத்தினுடைய சகல ஜனங்
களோடும் பேசின [20]தீர்க்கதரிசிகளாகிய உம்
முடைய ஊழியக்காரருக்குச் செவிகொடா
மற்போனோம். ஆண்டவரே, நீதி உமக்கே 7
உரியது; உமக்கு விரோதமாகச் செய்த துரோ
கத்தினிமித்தம் உம்மாலே சமீபமும் தூரமு
மான எல்லா தேசங்களிலும் துரத்தப்பட்டிரு
க்கிற யூதமனுஷரும் எருசலேமின் குடிகளும்
சகல இஸ்ரவேலருமாகிய நாங்கள் இந்நாளில்
இருக்கிறபடியே, [21]வெட்கம் எங்களுக்கே உரி
யது. ஆண்டவரே, [22]உமக்கு விரோதமாகப் 8
பாவஞ்செய்தபடியால், நாங்களும் எங்கள் ரா
ஜாக்களும் எங்கள் பிரபுக்களும் எங்கள் பிதா
க்களும் வெட்கத்துக்குரியவர்களானோம். அவ 9
ருக்கு விரோதமாக நாங்கள் கலகம்பண்ணி,
அவர் தீர்க்கதரிசிகளாகிய தம்முடைய ஊழி

1 மத். 29. 38 எசே. 46. 13
2 சங். 119. 43, 149. ஏசா. 50.14
3 1 பே. 1. 12
4 லூ. 1. 19, 26
5 எசே. 1. 28. வெளி. 1. 17
6 10. 9, 10
7 ஆப. 2. 3. வெளி. 10. 6
8 11. 3, 4
9 உபா. 28. 50
10 வெளி. 17. 13, 17
11 10, 12. ஏசா
12 யோபு 34. 20
13 வெளி. 10. 4
14 6. 2, 3; 7. 28
15 5. 31
16 எரே. 25. 11, 12
17 நெகே. 1. 4. ஆ. எரே. 29. 10–13. யாக். 4. 8–10
18 யாத். 20. 6. உபா. 7. 9. நெகே. 9. 32
19 சங். 106. 6. ஏசா. 64. 6, 7
20 2 நாளா. 36. 15, 16
21 சங். 51. 4
22 எசே. 16. 63

யக்காரரைக்கொண்டு எங்களுக்கு முன்பாக
வைத்த அவருடைய நியாயப் பிரமாணங்
களின்படி நடக்கத்தக்கதாக நாங்கள் அவரு
டைய சத்தத்துக்குச் செவிகொடாமற் போ
10 னோம். ஆனாலும் எங்கள் தேவனாகிய [1]ஆண்
டவரிடத்தில் இரக்கங்களும் மன்னிப்புகளும்
11 உண்டு. இஸ்ரவேலர் எல்லாரும் உமது நியா
யப்பிரமாணத்தை மீறி, [2]உமது சத்தத்துக்குச்
செவிகொடாமல் விலகிப்போனார்கள். அவ
ருக்கு விரோதமாகப் பாவஞ்செய்தோம்;
ஆகையால் தேவனுடைய தாசனாகிய மோசே
யின் நியாயப்பிரமாணப் புஸ்தகத்தில் எழுதி
யிருக்கிற சாபமும் ஆணையாக்கினையும் எங்
12 கள்மேல் சொரியப்பட்டன. எருசலேமில்
சம்பவித்ததுபோல வானத்தின்கீழ் எங்கும்
சம்பவியாதிருக்கிற பெரிய தீங்கை எங்கள்
மேல் வரப்பண்ணினதினால், [3]அவர் எங்களுக்
கும் எங்களை நியாயந்தீர்த்த நியாயாதிபதிக
ளுக்கும் விரோதமாகச் சொல்லியிருந்த தம்
முடைய வார்த்தைகளை நிறைவேற்றினார்.
13 மோசேயின் நியாயப்பிரமாணப் புஸ்தகத்தில்
[4]எழுதியிருக்கிறபடியே இந்தத் தீங்கெல்லாம்
எங்கள்மேல் வந்தது; ஆனாலும் நாங்கள் எங்
கள் அக்கிரமங்களை விட்டுத் திரும்புகிறதற்
கும், உம்முடைய சத்தியத்தைக் கவனிக்கிற
தற்கும், எங்கள் தேவனாகிய **கர்த்தரின்** முகத்
14 தை நோக்கிக் கெஞ்சினதில்லை. ஆதலால்
**கர்த்தர்** கவனமாயிருந்து, அந்தத் தீங்கை எங்
கள்மேல் வரப்பண்ணினார்; [5]எங்கள் தேவனா
கிய **கர்த்தர்** தாம் செய்துவருகிற தம்முடைய
கிரியைகளில் எல்லாம் நீதியுள்ளவர்; நாங்க
ளோ அவருடைய சத்தத்துக்குச் செவிகொடா
15 மற்போனோம். இப்போதும் உமது ஜனத்
தைப் பலத்த கையினால் எகிப்துதேசத்திலிரு
ந்து புறப்படப்பண்ணி, [6]இந்நாள்வரைக்கும்
இருக்கிறபடி, உமக்குக் கீர்த்தியை உண்டாக்
கின எங்கள் தேவனாகிய ஆண்டவரே, நாங்
கள் பாவஞ்செய்து, துன்மார்க்கராய் நடந்
16 தோம். ஆண்டவரே, [7]உம்முடைய சர்வ
நீதியின்படியே, உமது கோபமும் உமது உக்
கிரமும் உம்முடைய பரிசுத்த பர்வதமாகிய
எருசலேம் என்னும் உம்முடைய நகரத்தை
விட்டுத் திரும்பும்படி செய்யும்; எங்கள் பாவங்
களினாலும் எங்கள் பிதாக்களின் அக்கிரமங்
களினாலும் எருசலேமும் உம்முடைய ஜன
மாகிய நாங்களும் எங்கள் சுற்றுப்புறத்தார் யா
17 வருக்கும் நிந்தையானோம். இப்போதும் எங்
கள் தேவனே, நீர் உமது அடியானுடைய
விண்ணப்பத்தையும் அவனுடைய கெஞ்சுத
லையும் கேட்டு, [8]பாழாய்க்கிடக்கிற உம்மு
டைய பரிசுத்த ஸ்தலத்தின்மேல் ஆண்டவரி
னிமித்தம் உமது முகத்தைப் பிரகாசிக்கப்
18 பண்ணும். என் தேவனே, உம்முடைய செ
வியைச் சாய்த்துக் கேட்டருளும்; [9]உம்மு
டைய கண்களைத் திறந்து, எங்கள் பாழிடங்
களையும், உமது நாமம் தரிக்கப்பட்டிருக்கிற
நகரத்தையும் பார்த்தருளும்; நாங்கள் எங்கள்
நீதிகளை அல்ல, உம்முடைய மிகுந்த இரக்கங்
களையே நம்பி, எங்கள் விண்ணப்பங்களை
உமக்கு முன்பாகச் செலுத்துகிறோம். ஆண் 19
டவரே கேளும், ஆண்டவரே மன்னியும்,
ஆண்டவரே கவனியும்; என் தேவனே, [10]உம்
முடைய நிமித்தமாக அதைத் தாமதியாமல்
செய்யும்; உம்முடைய நகரத்துக்கும் உம்மு
டைய ஜனத்துக்கும் உம்முடைய நாமம் தரிக்
கப்பட்டிருக்கிறதே என்றேன்.
இப்படி நான் சொல்லி, ஜெபம்பண்ணி, 20
என் பாவத்தையும் என் ஜனமாகிய இஸ்ரவே
லின் பாவத்தையும் அறிக்கையிட்டு, [11]என்
தேவனுடைய பரிசுத்த பர்வதத்துக்காக என்
விண்ணப்பத்தை என் தேவனாகிய **கர்த்த
ருக்கு** முன்பாகச் செலுத்திக்கொண் டிருந்
தேன். அப்படி நான் ஜெபம்பண்ணிக்கொண் 21
டிருக்கும்போதே, முதல் தரிசனத்திலே நான்
கண்ட புருஷனாகிய காபிரியேல், வேகமாய்ப்
பறந்துவந்து, [12]அந்திப்பலியின் நேரமாகிய
வேளையிலே என்னைத் தொட்டான். அவன் 22
எனக்குத் தெளிவுண்டாக்கி, என்னோடே
பேசி: தானியேலே, உனக்கு அறிவை உணர்
த்தும்படி இப்போது புறப்பட்டு வந்தேன்.
நீ மிகவும் பிரியமானவன், ஆதலால், நீ வே 23
ண்டிக்கொள்ளத் தொடங்கினபோதே கட்
டளை வெளிப்பட்டது, நான் அதை அறிவிக்க
வந்தேன்; [13]இப்போதும் சொல்லுகிற வார்த்
தையை நீ கவனித்துக்கேட்டு, தரிசனத்தை
அறிந்துகொள். மீறுதலைத் தவிர்க்கிறதற்கும், 24
[14]பாவங்களைத் தொலைக்கிறதற்கும், அக்கிரமத்
தை நிவிர்த்திபண்ணுகிறதற்கும், [15]நித்திய நீதி
யை வருவிக்கிறதற்கும், தரிசனத்தையும் தீர்க்
கதரிசனத்தையும் முத்திரிக்கிறதற்கும், [16]மகா
பரிசுத்தமுள்ளவரை அபிஷேகம் பண்ணுகிற
தற்கும், [17]உன் ஜனத்தின்மேலும் உன் பரி
சுத்த நகரத்தின்மேலும் எழுபது வாரங்கள்
செல்லும்படி குறிக்கப்பட்டிருக்கிறது. இப் 25
போதும் நீ அறிந்து உணர்ந்துகொள்ளவேண்
டியது என்னவென்றால்: [18]எருசலேமைத்
திரும்ப எடுப்பித்துக்கட்டுகிறதற்கான கட்டளை
வெளிப்படுவதுமுதல், பிரபுவாகிய மேசியா
வருமட்டும் ஏழு வாரமும், அறுபத்திரண்டு
வாரமும் செல்லும்; அவைகளில் வீதிகளும்
அலங்கங்களும் மறுபடியும் கட்டப்படும்; ஆனா
லும் இடுக்கமான காலங்களில் இப்படியாகும்.
அந்த அறுபத்திரண்டு வாரங்களுக்குப் பின்பு 26
மேசியா சங்கரிக்கப்படுவார்; [19]ஆனாலும் தமக்
காக அல்ல. நகரத்தையும் பரிசுத்த ஸ்தலத்
தையும் வரப்போகிற பிரபுவின் ஜனங்கள்
அழித்துப் போடுவார்கள்; அதின் முடிவு
ஜலப்பிரவாகம்போல இருக்கும்; முடிவுபரி
யந்தம் யுத்தமும் நாசமும் உண்டாக நியமிக்
கப்பட்டது. அவர் ஒரு வாரமளவும் அநேக 27
ருக்கு உடன்படிக்கையை உறுதிப்படுத்தி,
[20]அந்த வாரம் பாதி சென்றபோது பலியை
யும் காணிக்கையையும் ஒழியப்பண்ணுவார்;
[21]அருவருப்பான செட்டைகளோடே பாழாக்

1 சங். 130. 4, 7
2 ஏசா. 1. 4-6. எரே. 8. 5, 10
3 புல. 1. 12. எசே. 5. 9. சகரி. 1. 6
4 லேவி. 26. 14. ழ. உபா. 28. 15. ழ. புல. 2. 15, 17
5 நெகே. 9. 33. எரே. 31. 28
6 யாத். 6. 1, 6: 32. 11
7 1 சாமு. 12. 7
8 சங். 67. 1. யோ. 16. 24
9 ஏசா. 37. 17. எரே. 25. 29
10 சங். 79. 9, 10: 102. 15, 16
11 ஏசா. 65. 24
12 1 இரா. 18. 36
13 மத். 24. 15
14 ஏசா. 53. 10, 11
15 எபி. 9. 12. வெளி. 14. 6
16 சங். 45. 7. லூ. 1. 35
17 எண். 14. 34. எசே. 4. 6
18 நெகே. 4. 8. ழ: 6. 15
19 ஏசா. 53. 8. லூ. 24. 26, 46. 1 பே. 2. 21
20 ஏசா. 42. 6; 53. 11. மத். 26. 28.
21 மத். 24. 15

குகிறவன் வந்து இறங்குவான், நிர்ணயிக்கப்
பட்டிருக்கிற நிர்மூலம் பாழாக்குகிறவன்
மேல் தீருமட்டும் சொரியும் என்றான்.
10 பெர்சியாவின் ராஜாவாகிய கோரேஸ் அர
சாண்ட மூன்றாம் வருஷத்திலே பெல்தெ
ஷாத்சார் என்று பெயரிடப்பட்ட தானியே
லுக்கு ஒரு காரியம் வெளியாக்கப்பட்டது;
[1]அந்தக் காரியம் சத்தியமும் நீடிய யுத்தத்
துக்கு அடுத்ததுமாயிருக்கிறது; அந்தக் காரி
யத்தை அவன் கவனித்து, தரிசனத்தின் பொ
2 ருளை அறிந்துகொண்டான். அந்நாட்களில்
தானியேலாகிய நான் மூன்று வாரமுழுவ
3 தும் துக்கித்துக்கொண்டிருந்தேன். அந்த
மூன்று வாரங்களாகிய நாட்கள் நிறைவேறு
மட்டும் ருசிகரமான அப்பத்தை நான் புசிக்க
வுமில்லை, இறைச்சியும் திராட்சரசமும் என்
வாய்க்குள் போகவுமில்லை, [2]நான் பரிமளதை
4 லம் பூசிக்கொள்ளவுமில்லை. முதலாம் மாதம்
இருபத்துநாலாந் தேதியிலே [3]நான் இதெக்
கேல் என்னும் பெரிய ஆற்றங்கரையில் இரு
5 ந்து, என் கண்களை ஏறெடுக்கையில், சணல்
வஸ்திரந்தரித்து, [4]தமது அரையில் ஊப்பா
சின் தங்கக் கச்சையைக் கட்டிக்கொண்டிருக்
6 கிற ஒரு புருஷனைக் கண்டேன். அவரு
டைய சரீரம் படிகப் பச்சையைப்போலவும்,
[5]அவருடைய முகம் மின்னலின் பிரகாசத்
தைப்போலவும், அவருடைய கண்கள் எரிகிற
தீபங்களைப்போலவும், அவருடைய புயங்க
ளும் அவருடைய கால்களும் துலக்கப்பட்ட
வெண்கல நிறத்தைப்போலவும், அவருடைய
வார்த்தைகளின் சத்தம் ஜனக்கூட்டத்தின்
7 ஆரவாரத்தைப்போலவும் இருந்தது. தானி
யேலாகிய நான்மாத்திரம் அந்தத் தரிசனத்
தைக் கண்டேன்; என்னோடே இருந்த மனு
ஷரோ அந்தத் தரிசனத்தைக் காணவில்லை;
[6]அவர்கள் மிகவும் நடுநடுங்கி, ஓடி ஒளித்துக்
8 கொண்டார்கள். நான் தனித்துவிடப்பட்டு
அந்தப் பெரிய தரிசனத்தைக் கண்டேன்;
[7]என் பெலனெல்லாம் போயிற்று; என் உரு
வம் மாறி வாடிப்போயிற்று; திடனற்றுப் போ
9 னேன். அவருடைய வார்த்தைகளின் சத்தத்
தைக் கேட்டேன்; [8]அவருடைய வார்த்தை
களின் சத்தத்தை நான் கேட்கும்போது, நான்
முகங்கவிழ்ந்து, நித்திரை போகிறவனாய்த்
தரையிலே முகங்குப்புற விழுந்துகிடந்தேன்.
10 இதோ, ஒருவன் கை என்னைத் தொட்டு, [9]என்
முழங்கால்களும் என் உள்ளங்கைகளும் தரை
யை ஊன்றியிருக்க என்னைத் தூக்கி வைத்
11 தது. அவன் என்னை நோக்கி: பிரியமான புரு
ஷனாகிய தானியேலே, நான் இப்போது உன்
னிடத்திற்கு அனுப்பப்பட்டு வந்தேன்; ஆத
லால், நான் உனக்குச் சொல்லும் வார்த்தை
களின்பேரில் நீ கவனமாயிருந்து, கால் ஊன்
றி நில் என்றான்; இந்த வார்த்தையை அவன்
என்னிடத்தில் சொல்லுகையில் நடுக்கத்தோ
12 டே எழுந்து நின்றேன். அப்பொழுது அவன்
என்னை நோக்கி: தானியேலே, பயப்படாதே;
[10]நீ அறிவை அடைகிறதற்கும், உன்னை உன்
னுடைய தேவனுக்கு முன்பாகச் சிறுமைப்
படுத்துகிறதற்கும், [11]உன் மனதைச் செலுத்
தின முதல்நாள் துவக்கி உன் வார்த்தைகள்
கேட்கப்பட்டது; உன் வார்த்தைகளினிமித்
தம் நான் வந்தேன். பெர்சியா ராஜ்யத்தின் 13
அதிபதி இருபத்தொரு நாள்மட்டும் என்னோடு
எதிர்த்து நின்றான்; ஆனாலும் பிரதான அதி
பதிகளில் ஒருவனாகிய மிகாவேல் எனக்கு
உதவியாக வந்தான்; ஆதலால் நான் அங்கே
பெர்சியாவின் ராஜாக்களிடத்தில் தரித்திருந்
தேன். இப்போதும் [12]கடைசிநாட்களில் உன் 14
ஜனங்களுக்குச் சம்பவிப்பதை உனக்குத் தெ
ரியப்பண்ணும்படிக்கு வந்தேன்; [13]இந்தத் தரி
சனம் நிறைவேற இன்னும் நாள் செல்லும்
என்றான். அவன் இந்த வார்த்தைகளை என் 15
னோடே சொல்லுகையில், நான் தலைகவிழ்ந்து,
தரையை நோக்கி, பேச்சற்றுப்போனேன்.
அப்பொழுது மனுபுத்திரரின் சாயலாகிய ஒரு 16
வன் [14]என் உதடுகளைத் தொட்டான்; உடனே
நான் என் வாயைத் திறந்து பேசி, எனக்கு
எதிரே நின்றவனை நோக்கி: என் ஆண்டவ
னே, தரிசனத்தினால் என் மூட்டுகள் புரண்
டன, பெலனற்றுப்போனேன். ஆகையால் 17
என் ஆண்டவனுடைய அடியேன் என் ஆண்
டவனோடே பேசக்கூடுவதெப்படி? இனி என்
னில் பெலனில்லை, என்னில் மூச்சுமில்லை
என்றேன். அப்பொழுது மனுஷரூபமான 18
ஒருவன் திரும்ப என்னைத் தொட்டு, என்
னைத் திடப்படுத்தி, பிரியமான புருஷனே, 19
பயப்படாதே; உனக்குச் சமாதானமுண்டா
வதாக, திடங்கொள், திடங்கொள் என்றான்;
இப்படி அவன் என்னோடே பேசுகையில்
நான் திடங்கொண்டு அவனை நோக்கி: என்
ஆண்டவன் பேசுவாராக; [15]என்னைத் திடப்
படுத்தினீரே என்றேன். அப்பொழுது அவன்: 20
நான் உன்னிடத்திற்கு வந்த காரணம் இன்ன
தென்று உனக்குத் தெரியுமா? [16]இப்போது
நான் பெர்சியாவின் பிரபுவோடே யுத்தம்பண்
ணத் திரும்பிப்போகிறேன்; நான் போனபி
ன்பு, கிரேக்கு தேசத்தின் அதிபதி வருவான்.
*சத்திய எழுத்திலே கண்டிருக்கிறதை நான் 21
உனக்குத் தெரிவிப்பேன்; [17]உங்கள் அதி
பதியாகிய மிகாவேலைத்தவிர என்னோடேகூட
அவர்களுக்கு விரோதமாய்ப் பலங்கொள்ளு
கிற வேறொருவரும் இல்லை. மேதியனாகிய 11
தரியு அரசாண்ட முதலாம் வருஷத்திலே
[18]நான் அவனைத் திடப்படுத்தவும் பலப்படுத்த
வும் அவனுக்குத் துணைநின்றேன்.
இப்போது நான் மெய்யான செய்தியை 2
உனக்கு அறிவிப்பேன்; [19]இதோ, இன்னும்
மூன்று ராஜாக்கள் பெர்சியாவில் எழும்பு
வார்கள்; அதின்பின்பு நாலாம் ராஜாவா
யிருப்பவன் எல்லாரிலும் மகா ஐசுவரிய சம்
பன்னனாகி, தன் ஐசுவரியத்தினால் பலங்
கொண்டு, கிரேக்கு ராஜ்யத்துக்கு விரோத
மாகச் சகலரையும் எழுப்பிவிடுவான். ஆனா 3

[1] வெளி. 19. 9
[2] மத். 6. 17
[3] ஆதி. 2. 14
[4] வெளி. 1. 13-17: 15. 6
[5] எசே. 1. 14,16. வெளி. 1. 15: 19. 12
[6] 2 இரா. 6. 17. அப். 9. 7
[7] 7. 28: 8. 27
[8] 8. 18
[9] எரே. 1. 9. வெளி. 1. 17
[10] வெளி. 1. 17
[11] அப். 10. 4
[12] ஆதி. 49. 1. 2 தீமோ. 3. 1
[13] 8. 26. ஆப. 2. 3
[14] ஏசா. 6, 7, 8. எரே. 1. 9
[15] 2 கொ. 12. 9
[16] 13. ஊ
* சத்திய வாசகம் = வேதம்
[17] யூதா 9. வெளி. 12. 7
[18] 1. 1: 5. 31
[19] ஆமோ. 3. 7

லும் பராக்கிரமமுள்ள ஒரு ராஜா எழும்பி,
[1]பிரபலமாய் ஆண்டு, தனக்கு இஷ்டமான
4 படி செய்வான். அவன் எழும்பினபின்பு,
[2]அவனுடைய ராஜ்யம் உடைந்துபோய், வா
னத்தின் நாலு திசைகளிலும் பகுக்கப்படும்;
ஆனாலும் அது அவனுடைய சந்ததியாருக்கு
அல்ல. அவன் செய்த ஆளுகையின்படியும்
அல்ல; அவனுடைய ராஜ்யம் பிடுங்கப்பட்டு,
அவனுடையவர்களல்லாதவேறே பேர்களிட
5 மாய்த் தாண்டிப்போம். தென்றிசை ராஜா
பலவானாயிருப்பான்; ஆனாலும் அவனுடைய
பிரபுக்களில் ஒருவன் அவனைப்பார்க்கிலும்
பலவானாகி ஆளுவான்; இவனுடைய ஆளு
6 கை பலத்த ஆளுகையாயிருக்கும். அவர்கள்
சிலவருஷங்களுக்குப் பின்பு, ஒருவரோடொ
ருவர் சம்பந்தம் பண்ணும்படிக்குத் தென்
றிசை ராஜாவின் குமாரத்தி வடதிசை ராஜா
வினிடத்தில் வருவாள்; ஆனாலும் அவளுக்
குப் புயபலம் இராமற்போம்; அவனும் அவ
னுடைய புயமும் நிலைநிற்பதில்லை; அவளும்
அவளை அழைத்துவந்தவர்களும், அவளைப்
பெற்றவனும், அவளை அக்காலங்களில் பலப்
படுத்தினவனும் ஒப்புக்கொடுக்கப்படுவார்கள்.
7 ஆனாலும் அவளுடைய வேர்களின் கிளையா
கிய ஒருவன் தன் ஸ்தானத்தில் எழும்பி, இ
ராணுவத்தோடே வந்து, வடதிசை ராஜாவின்
அரணிப்புக்குள் பிரவேசித்து, அவர்களை
8 விரோதித்து, அவர்களுடைய அதிபதிகளை
யும், அவர்களுடைய விலையேறப்பெற்ற வெள்
ளியும்பொன்னுமாகிய பாத்திரங்களையும், அவ
ர்களுடைய தெய்வங்களையுங்கூட எகிப்துக்
குக் கொண்டுபோய், சில வருஷங்கள்மட்டும்
வடதிசை ராஜாவைப்பார்க்கிலும் நிலையாய்
9 நிற்பான். தென்றிசை ராஜா அவன் ராஜ்
யத்துக்கு விரோதமாக வந்து, தன் தேசத்துக்
10 குத் திரும்பிப்போவான். ஆனாலும் அவனு
டைய குமாரர் யுத்தஞ்செய்ய எத்தனித்து,
திரளான சேனைகளைக் கூட்டுவார்கள்; [3]இவர்
களில் ஒருவன் நிச்சயமாய் வந்து, வெள்ளம்
போலக் கடந்து, திரும்பவும் தன்னுடைய
11 அரண்மட்டும் யுத்தங்கலந்து சேருவான். அப்
பொழுது தென்றிசை ராஜா கடுங்கோபங்
கொண்டு புறப்பட்டுப்போய், வடதிசை ரா
ஜாவோடே யுத்தம்பண்ணுவான்; இவன் பெ
ரிய சேனையை ஏகமாய் நிறுத்துவான்; [4]ஆனா
லும் இந்தச் சேனை அவன் கையில் ஒப்புக்
12 கொடுக்கப்படும். அவன் இந்தச் சேனையை
நீக்கினபின்பு, அவனுடைய இருதயம் கர்வங்
கொள்ளும்; அவன் அநேகமாயிரம்பேரை மடி
விப்பான்; ஆனாலும் பலங்கொள்ளமாட்டான்.
13 சில வருஷங்கள் சென்றபின்பு வடதிசை
ராஜா திரும்ப முந்தின சேனையிலும் பெரி
தான சேனையைச் சேர்த்து, மகா பெரிய
சேனையோடும் வெகு சம்பத்தோடும் நிச்சய
14 மாய் வருவான். அக்காலங்களில் தென்றிசை
ராஜாவுக்கு விரோதமாக அநேகர் எழும்புவார்
கள்; [5]அப்பொழுது உன் ஜனத்திலுள்ள துண்
டரிக்கக்காரரின் புத்திரர் தரிசனத்தை நிறை
வேற்றத் தங்களை உயர்த்துவார்கள். வடதி 15
சை ராஜா வந்து, கொத்தளம் போட்டு, அர
ணான நகரங்களைப் பிடிப்பான்; தென்றிசை
ராஜாவின் புயபலங்களும் அவன் தெரிந்து
கொண்ட தினமும் நில்லாமற்போம்; எதிர்க்
கிறதற்குப் பெலன் இராது. ஆகையால் அவ 16
னுக்கு விரோதமாக வருகிறவன் தன் இஷ்
டப்படிச் செய்வான்; [6]அவனுக்கு முன்பாக
நிலைநிற்பவன் ஒருவனும் இல்லை; அவன்
சிங்காரமான தேசத்தில் தங்குவான்; எல்லாம்
அவன் கைவசமாகும். தன் ராஜ்யத்தின் வல் 17
லமையோடெல்லாம் தானும் தன்னோடேகூ
டச் செம்மைமார்க்கத்தாரும் வர, இவன் தன்
முகத்தைத் திருப்புவான்; [7]இப்படிச் செய்து
கெடுதியுண்டாகும்படி அவனுக்கு ஒரு கன்
னிப்பெண்ணைக் கொடுப்பான், ஆனாலும் அவ
ளாலே ஸ்திரம்பெறான்; அவள் அவன் பட்
சத்தில் நில்லாள். பின்பு இவன் தன் முகத் 18
தைத் தீவுகளுக்கு நேராகத் திருப்பி, அநேகந்
தீவுகளைப் பிடிப்பான்; ஆனாலும் ஒரு சே
னாபதி இவன் செய்கிற நிந்தையை ஒழி
யப்பண்ணுவதுமல்லாமல், இவன் செய்த நிந்
தையினிமித்தம் இவனுக்குச் சரிக்குச் சரிக்
கட்டுவான். ஆகையால் தன் முகத்தைத் தன் 19
தேசத்தின் அரண்களுக்கு நேராகத் திருப்பு
வான்; [8]அங்கே இடறிவிழுந்து காணப்படா
மற்போவான். செழிப்பான ராஜ்யத்தில் தண் 20
டல்காரனைத் திரியப்பண்ணுகிற ஒருவன் தன்
ஸ்தானத்தில் எழும்புவான்; ஆகிலும் சில
நாளைக்குள் கோபமில்லாமலும் யுத்தமில்லாம
லும் நாசமடைவான். அவன் ஸ்தானத்தில் 21
அவமதிக்கப்பட்டவன் ஒருவன் எழும்புவான்;
இவனுக்கு ராஜ்யபாரத்தின் மேன்மையைக்
கொடாதிருப்பார்கள்; ஆனாலும் இவன் சமா
தானமாய் நுழைந்து, இச்சகம்பேசி, ராஜ்யத்
தைக் கட்டிக்கொள்ளுவான். பிரவாகமாய் 22
வருகிற சேனைகள் இவனாலே பிரவாகமாய்
முறிக்கப்படும்; [9]உடன்படிக்கையின் தலைவ
னும்முறிக்கப்படுவான். ஏனென்றால் அவனோ 23
டே சம்பந்தம்பண்ணின நாட்கள்முதல் அவன்
சூதாய் நடந்து, [10]கொஞ்ச ஜனங்களோடே
புறப்பட்டுவந்து பெலங்கொள்ளுவான். தே 24
சம் சுகவாழ்வோடும் சம்பூரணத்தோடும் இருக்
கையில், அவன் உட்பிரவேசித்து, தன் பிதாக்
களும் தன் பிதாக்களின் பிதாக்களும் செய்
யாததைச் செய்வான்; கொள்ளையிட்டுச் சூறை
யாடி; பொருளை அவர்களுக்கு இறைத்துப் பங்
கிட்டு, அரண்களுக்கு விரோதமாகத் தனக்குள்
உபாயங்களை யோசிப்பான்; சிலகாலமட்டும்
இப்படியிருக்கும். பின்னும் தென்றிசை ரா 25
ஜாவுக்கு விரோதமாகப் பெரிய சேனையோ
டே போர்செய்யத் தன் வல்லமையையும் தன்
ஸ்திரத்தையும் எழுப்புவான்; அப்பொழுது தெ
ன்றிசை ராஜா மிகவும் பலத்த பெரிய ராணு
வத்தோடே போய் யுத்தங்கலப்பான்; ஆனாலும்
அவர்கள் அவனுக்கு விரோதமாகத் துரோலோ

[1] 7. 6: 8. 4
[2] 8. 4. ஓ
[3] 9. 26. ஏசா. 8. 8
[4] சங். 33. 16. பிர. 9. 11, 12
[5] வெளி. 17. 17
[6] 8. 4, 7. யோசு. 1. 5
[7] 2 ராஜா. 20. 8. சங். 19. 21
[8] யோபு 20. 8. சங். 37. 36. எசே. 26. 21
[9] 10. ஏசா. 8. 10, 11, 25
[10] 8. 25

சனை பண்ணியிருந்தபடியால், அவன் நிற்க
26 மாட்டான். அவனுடைய போஜனங்களைச்
சாப்பிடுகிறவர்கள் அவனை நாசப்படுத்துவார்
கள்; ஆகையால் அவனுடைய ராணுவம்
பிரவாகமாய் வரும்; அநேகர் கொலையுண்டு
27 விழுவார்கள். இந்த இரண்டு ராஜாக்களின்
இருதயமும் தீமைசெய்ய நினைக்கும்; ஒரே
பந்தியிலிருந்து பொய் பேசுவார்கள்; ஆனா
லும் அது வாய்ப்பதில்லை; குறித்தகாலத்துக்கு
முடிவு இன்னும் நிறுத்திவைக்கப்பட்டிருக்
28 கும். அவன் மகா சம்பத்தோடே தன் தேசத்
துக்குத் திரும்பி, தன் இருதயத்தைப் பரிசுத்த
உடன்படிக்கைக்கு விரோதமாக வைத்து,
அதற்கானதைச் செய்து, தன் தேசத்துக்குத்
29 திரும்பிப் போவான். குறித்த காலத்திலே
திரும்பவும் தென்தேசத்திற்கு வருவான்; ஆனா
லும் அவனுடைய பின் நடபடி முன் நடபடி
30 யைப்போல் இராது. அவனுக்கு விரோத
மாகக் கித்தீமின் கப்பல்கள் வரும்; [1]அதினால்
அவன் மனநோவடைந்து, திரும்பிப்போய்,
பரிசுத்த உடன்படிக்கைக்கு விரோதமாகக்
குரோதங்கொண்டு அதற்கானதைச் செய்து,
பரிசுத்த உடன்படிக்கையைத் தள்ளினவர்
31 களை அநுசரிப்பான். ஆனாலும் அவனிடத்
திலிருந்து புறப்பட்ட சேனைகள் எழும்பி,
அரணான பரிசுத்த ஸ்தலத்தைப் பரிசுத்தக்
குலைச்சலாக்கி, [2]அன்றாட பலியை நீக்கி,
பாழாக்கும் அருவருப்பை அங்கே வைப்பார்
32 கள். உடன்படிக்கைக்குத் துரோகிகளாயிருக்
கிறவர்களை இச்சகப் பேச்சுகளினால் கள்ள
மார்க்கத்தாராக்குவான்; தங்கள் தேவனை அறிந்
திருக்கிற ஜனங்கள் திடங்கொண்டு, அதற்
33 கேற்றபடி செய்வார்கள். ஜனங்களில் அறி
வாளிகள் அநேகருக்கு அறிவை உணர்த்து
வார்கள்; [3]அநேகநாள்மட்டும் பட்டயத்தினா
லும் அக்கினியினாலும் சிறையிருப்பினாலும்
34 கொள்ளையினாலும் விழுவார்கள். இப்படி
அவர்கள் விழுகையில் கொஞ்சம் ஒத்தாசை
யால் சகாயமடைவார்கள்; அப்பொழுது அநே
கர் இச்சக வார்த்தைகளோடே அவர்களை
35 ஒட்டிக்கொள்வார்கள். அறிவாளிகளைப் புட
மிடுகிறதற்கும், [4]சுத்திகரிக்கிறதற்கும், வெண்
மையாக்குகிறதற்கும் அவர்களில் சிலர் விழு
வார்கள்; முடிவுகாலபரியந்தம் இப்படியிருக்
கும்; குறித்தகாலம் வர இன்னும் நாள்செல்
36 லும். ராஜா தனக்கு இஷ்டமானபடி செய்து,
[5]தன்னை உயர்த்தி, எந்ததேவனிலும் தன்னைப்
பெரியவனாக்கி, தேவாதி தேவனுக்கு விரோத
மாக ஆச்சரியமான காரியங்களைப்பேசுவான்;
கோபம் தீருமட்டும் அவனுக்குக் கைகூடி
வரும்; நிர்ணயிக்கப்பட்டது நடந்தேறும்.
37 அவன் தன் பிதாக்களின் தேவர்களை மதியா
மலும், ஸ்திரீகளின் சிநேகத்தையும், எந்த தேவ
னையும் மதியாமலும், [6]எல்லாவற்றிற்கும் தன்
38 னைப் பெரியவனாக்கி, அரண்களின் தேவ
னைத் தன் ஸ்தானத்திலே கனம்பண்ணி, தன்
பிதாக்கள் அறியாத ஒரு தேவனைப் பொன்
னினாலும், வெள்ளியினாலும், இரத்தினங்களி
னாலும், உச்சிதமான வஸ்துக்களினாலும் கனம்
பண்ணுவான். அவன் அரணிப்பான கோட் 39
டைகளுக்காகவும், அந்நிய தேவனுக்காகவும்
செய்வது என்னவென்றால், அவைகளை மதிக்
கிறவர்களுக்கு மகா கனமுண்டாக்கி, அவர்
கள் அநேகரை ஆளும்படிச் செய்து, அவர்
களுக்கு தேசத்தைக் கிரயத்துக்காகப் பங்கிடு
வான். முடிவுகாலத்திலோவென்றால், தென் 40
றிசை ராஜா அவனோடே *முட்டுக்கு நிற்
பான்; [7]வடதிசை ராஜாவும் இரதங்களோடும்
குதிரைவீரர்களோடும் அநேகம் கப்பல்களோ
டும் சூறைக்காற்றுபோல் அவனுக்கு விரோத
மாய் வருவான்; அவன் தேசங்களுக்குள் பிர
வேசித்து, அவைகளைப் பிரவாகித்துக் கடந்து
போவான். அவன் சிங்காரமான தேசத்தி 41
லும் வருவான்; அப்பொழுது அநேக தேசங்
கள் கவிழ்க்கப்படும்; [8]ஆனாலும் ஏதோமும்,
மோவாபும், அம்மோன் புத்திரரில் பிரதான
மானவர்களும் அவன் கைக்குத் தப்பிப்போ
வார்கள். அவன் தேசங்களின்மேல் தன் கை 42
யை நீட்டுவான்; எகிப்துதேசம் தப்புவதில்லை.
எகிப்தினுடைய பொன்னும் வெள்ளியுமான 43
ஐசுவரியங்களையும் உச்சிதமான எல்லா வஸ்
துக்களையும் ஆண்டுகொள்ளுவான்; [9]லீபியரும்
எத்தியோப்பியரும் அவனுக்குப் பின்செல்லு
வார்கள். ஆனாலும் கிழக்கிலும் வடக்கிலும் 44
இருந்துவரும் செய்திகள் அவனைக் கலங்கப்
பண்ணும்; அப்பொழுது அவன் அநேகரை
அழிக்கவும் சங்காரம்பண்ணவும் மகா உக்கிரத்
தோடே புறப்பட்டுப்போய், சமுத்திரங்க 45
ளுக்கு இடையிலுள்ள சிங்காரமான பரிசுத்த
பர்வதத்தண்டையிலே தன் அரமனையாகிய
கூடாரங்களைப் போடுவான்; [10]ஆனாலும் அவ
னுக்கு ஒத்தாசைபண்ணுவாரில்லாமல்,
அவன் முடிவடைவான்.

உன் ஜனத்தின் புத்திரருக்காக நிற்கிற 12
பெரிய அதிபதியாகிய மிகாவேல் அக்காலத்
திலே எழும்புவான்; [11]யாதொரு ஜாதியாரும்
தோன்றினதுமுதல் அக்காலமட்டும் உண்டா
யிராத ஆபத்துக்காலம் வரும்; [12]அக்காலத்திலே
புஸ்தகத்தில் எழுதியிருக்கிறவர்களாக காணப்
படுகிற உன் ஜனங்கள் அனைவரும் விடுவிக்கப்
படுவார்கள். பூமியின் தூளிலே நித்திரை 2
பண்ணுகிறவர்களாகிய அநேகரில் [13]சிலர் நித்
திய ஜீவனுக்கும், [14]சிலர் நித்திய நிந்தைக்கும்
இகழ்ச்சிக்கும் விழித்து எழுந்திருப்பார்கள்.
ஞானவான்கள் ஆகாயமண்டலத்தின் ஒளி 3
யைப்போலவும், [15]அநேகரை நீதிக்குட்படுத்து
கிறவர்கள் நட்சத்திரங்களைப்போலவும் என்
றென்றைக்குமுள்ள சதாகாலங்களிலும் பிர
காசிப்பார்கள். தானியேலாகிய நீயோவென் 4
றால், முடிவுகாலமட்டும் இந்த வார்த்தைகளைப்
புதைபொருளாக வைத்து வைத்து, [16]இந்தப்
புஸ்தகத்தை முத்திரைபோடு; அப்பொழுது
அநேகர் இங்கும் அங்கும் ஓடி ஆராய்வார்
கள், அறிவும் பெருகிப்போம் என்றான்.

[1] சங். 24. 34. எரே. 2. 10
[2] 8. 11; 12. 11
[3] சங். 2. 7. ஏசா. 11. 35.
[4] 2 நாளா. 32. 31. 1 பே. 1. 7
[5] ஏசா. 13. 13, 14. வெளி. 13. 5, 6
[6] ஏசா. 14. 13. 2 தெச. 2. 4. 1 தீமோ. 4. 3
* சண்டைக்கு
[7] ஏசா. 21. 1. சகரி. 9. 14. வெளி. 9. 16
[8] ஏசா. 11. 14, 15
[9] யாத். 11. 8
[10] சங். 48. 2. தெச. 2. 4, 8. வெளி. 19. 20
[11] 10. 13, 21. மத். 24. 21. யூதா 9.
[12] ஏசா. 30. 7. ரோ. 11. 26. வெளி. 13. 8
[13] மத். 25. 46. யோ. 5. 28, 29. அப். 24. 15
[14] ஏசா. 66. 24. ரோ. 9. 21
[15] நீதி. 4. 18. மத். 13. 43. 1 கொ. 15. 41, 42
[16] வெளி. 10. 4; 22. 10

5 அப்பொழுது, தானியேலாகிய நான் ஆற்
றுக்கு இக்கரையில் ஒருவனும் ஆற்றுக்கு அக்
கரையில் ஒருவனுமாகிய வேறே இரண்டு
6 பேர் நிற்கக்கண்டேன். சணல்வஸ்திரம் தரித்
தவரும், ஆற்றின் தண்ணீர்களின்மேல் நிற்
கிறவருமாகிய புருஷனை ஒருவன் நோக்கி:
[1]இந்த ஆச்சரியமானவைகளின் முடிவு வர
எவ்வளவுகாலம் செல்லும் என்று கேட்
7 டான். அப்பொழுது சணல்வஸ்திரம் தரித்
தவரும் ஆற்றின் தண்ணீர்களின்மேல் நிற்
கிறவருமாகிய புருஷன் தம்முடைய வலது
கரத்தையும் தம்முடைய இடதுகரத்தையும்
வானத்துக்கு நேராக ஏறெடுத்து, [2]ஒரு கால
மும், காலங்களும், அரைக்காலமும் செல்லும்
என்றும்; பரிசுத்த ஜனங்களின் வல்லமை
யைச் சிதறடித்தல் முடிவுபெறும்போதே
இவைகளெல்லாம் நிறைவேறித்தீருமென்றும்
என்றென்றைக்கும் ஜீவித்திருக்கிறவர்பேரில்
8 ஆணையிடக் கேட்டேன். நான் அதைக் கேட்
டும், அதின் பொருளை அறியவில்லை; ஆகை

1 8. 13: 10. 5
2 வெளி. 10. 5-7: 12. 14
3 4. வச
4 11. 35. சகரி. 13. 9
5 ஓசி. 14. 9. வெளி 9. 20: 22. 11
6 யோ. 7. 17: 8. 47: 18. 37
7 8. 11: 11. 31
8 ஏசா. 57. 2. வெளி. 14. 13

யால்: என் ஆண்டவனே, இவைகளின் முடி
வு என்னமாயிருக்கும் என்று கேட்டேன்.
அதற்கு அவன்: தானியேலே, போகலாம்; 9
[3]இந்த வார்த்தைகள் முடிவுகாலமட்டும் புதை
பொருளாக வைக்கப்பட்டும் முத்திரிக்கப்பட்
டும் இருக்கும். அநேகர் சுத்தமும் வெண்மை 10
யுமாக்கப்பட்டு, [4]புடமிடப்பட்டவர்களாய்
விளங்குவார்கள்; [5]துன்மார்க்கரோ துன்மார்க்
கமாய் நடப்பார்கள்; துன்மார்க்கரில் ஒருவ
னும் உணரான், [6]ஞானவான்களோ உணர்
ந்துகொள்ளுவார்கள். அன்றாட பலி நீக்கப் 11
பட்டு, பாழாக்கும் அருவருப்பு ஸ்தாபிக்கப்
படுங்காலமுதல் [7]ஆயிரத்திருநூற்றுத் தொண்
ணூறுநாள் செல்லும். ஆயிரத்து முந்நூற்று 12
முப்பத்தைந்து நாள்மட்டும் காத்திருந்து சேரு
கிறவன் பாக்கியவான். நீயோவென்றால் 13
முடிவு வருமட்டும் போயிரு; [8]நீ இளைப்பா
றிக்கொண்டிருந்து, நாட்களின் முடிவிலே
உன் சுதந்தர வீதத்துக்கு எழுந்திருப்பாய்
என்றான்.

# HOSEA

# ஓ சி யா

1 யூதாதேசத்து ராஜாக்களாகிய உசியா, யோ
தாம், ஆகாஸ், எசேக்கியா என்பவர்களின்
நாட்களிலும், யோவாசின் குமாரனாகிய யெஸ்
ரயேலின் ராஜாவாகிய யெரொபெயாம் என்
பவனின் நாட்களிலும், பெயேரியின் குமார
னாகிய ஓசியாவுக்கு உண்டான **கர்த்தருடைய**
வசனம்.
2 **கர்த்தர்** ஓசியாவைக்கொண்டு உரைக்கத்
தொடங்கினபோது, **கர்த்தர்** ஓசியாவை நோக்
கி: [1]நீ போய், ஒரு சோரஸ்திரீயையும் சோ
ரப்பிள்ளைகளையும் உன்னிடமாகச் சேர்த்துக்
கொள்; [2]தேசம் **கர்த்தரை** விட்டு விலகிச்
3 சோரம்போயிற்று என்றார். அவன் போய்,
திப்லாயிமின் குமாரத்தியாகிய கோமேரைச்
சேர்த்துக்கொண்டான்; அவள் கர்ப்பந்தரித்து,
4 அவனுக்கு ஒரு குமாரனைப் பெற்றாள். அப்
பொழுது **கர்த்தர்** அவனை நோக்கி: இவனுக்கு
யெஸ்ரயேல் என்னும் பேரிடு; [3]ஏனெனில்
இன்னும் கொஞ்சகாலத்திலே நான் ஏகூவின்
வம்சத்தாரிடத்திலே யெஸ்ரயேலின் இரத்தப்
பழியை விசாரித்து, இஸ்ரவேல் வம்சத்தா
ரின் ராஜ்யபாரத்தை ஒழியப்பண்ணுவேன்.
5 அக்நாளில் யெஸ்ரயேலின் பள்ளத்தாக்கிலே
இஸ்ரவேலின் வில்லை முறிப்பேன் என்றார்.
6 அவள் திரும்பக் கர்ப்பந்தரித்து, ஒரு குமாரத்
தியைப் பெற்றாள்; அப்பொழுது அவர் அவ
னை நோக்கி: இவளுக்கு *லோருகாமா என்
னும் பேரிடு; [4]ஏனெனில் நான் இனி இஸ்ர
வேல் வம்சத்தாருக்கு இரக்கஞ் செய்வதில்
லை, நான் அவர்களை முழுவதும் அகற்றிவிடு
7 வேன். யூதாவின் வம்சத்தாருக்கோ நான்
இரக்கஞ்செய்வேன்; [5]வில்லினாலும், பட்ட
யத்தினாலும், யுத்தத்தினாலும், குதிரைகளினா
லும், குதிரைவீரரினாலும் நான் அவர்களை
ரட்சியாமல், அவர்களுடைய தேவனாகிய **கர்த்**
**தராலே** அவர்களை ரட்சிப்பேன் என்றார்.
8 அவள் லோருகாமாவை முலைமரக்கப்பண்
ணின பிற்பாடு, கர்ப்பந்தரித்து ஒரு குமார
9 னைப் பெற்றாள். அப்பொழுது அவர்: இவ
னுக்கு †லோகம்மீ என்னும் பேரிடு; ஏனெ
னில் நீங்கள் என் ஜனமல்ல, நான் உங்கள்
தேவனாயிருப்பதில்லை.
10 என்றாலும், இஸ்ரவேல் புத்திரரின் தொ
கை அளக்கவும் எண்ணவுங்கூடாத கடற்கரை
மணலைப்போலிருக்கும்; [6]நீங்கள் என் ஜன
மல்லஎன்று அவர்களுக்குச்சொல்வதற்குப்பதி
லாக [7]நீங்கள் ஜீவனுள்ள தேவனுடைய பிள்ளை
கள் என்று அவர்களுக்குச் சொல்லப்படும்.
அப்பொழுது யூதா புத்திரரும் இஸ்ரவேல் 11
புத்திரரும் ஏகமாய்க் கூட்டப்பட்டு, [8]தங்க
ளுக்கு ஒரே அதிபதியை ஏற்படுத்தி, தேசத்தி
லிருந்து புறப்பட்டு வருவார்கள்; யெஸ்ரயே
லின் நாள் பெரிதாயிருக்கும்.
உங்கள் சகோதரரைப் பார்த்து ‡அம்மீ 2
என்றும், உங்கள் சகோதரிகளைப் பார்த்து
§ருகாமா என்றும் சொல்லுங்கள். உங்கள் 2
தாயோடே வழக்காடுங்கள்; [9]அவள் எனக்கு
மனைவியுமல்ல, நான் அவளுக்குப் புருஷனு
மல்ல; அவள் தன் வேசித்தனங்களைத் தன்
முகத்தினின்றும், தன் விபசாரங்களைத் தன்
ஸ்தனங்களின் நடுவினின்றும் விலக்கிப்போ
டக்கடவள். இல்லாவிட்டால் நான் அவளை 3
நிர்வாணமாக உரிந்து, [10]அவள் பிறந்தநாளில்
இருந்தவண்ணமாக அவளை நிறுத்தி, அவளை
அந்தர வெளியைப்போலாக்கி, அவளை வற
ண்ட பூமியைப்போல் விட்டு, [11]அவளைத் தா
கத்தால் சாகப்பண்ணுவேன்; அவளுடைய 4
பிள்ளைகள்சோரப்பிள்ளைகளாகையால் [12]அவர்
களுக்கு இரங்காதிருப்பேன். அவர்களுடைய 5
தாய் சோரம்போனாள், [13]அவர்களைக் கர்ப்பந்
தரித்தவள் இலச்சையான காரியங்களைச் செய்
தாள்: [14]அப்பத்தையும், தண்ணீரையும், ஆட்டு
மயிரையும், பஞ்சையும், எண்ணெயையும்,
பானங்களையும் கொடுத்துவருகிற என் நேசர்
களைப் பின்பற்றிப்போவேன் என்றாள். ஆகை 6
யால், இதோ, நான் உன் வழியை முள்ளுகளி
னால் அடைப்பேன்; [15]அவள் தன் பாதைக
ளைக் கண்டுபிடிக்கக் கூடாதபடிக்கு மதிலை
எழுப்புவேன். அவள் தன் நேசர்களைப் பின் 7
தொடர்ந்தும் அவர்களைச்சேருவதில்லை, அவர்
களைத் தேடியும் கண்டுபிடிப்பதில்லை; அப்
பொழுது அவள்: [16]நான் என் முந்தின புருஷ
னிடத்துக்குத் திரும்பிப்போவேன்; இப்பொ
ழுது இருக்கிறதைப்பார்க்கிலும் அப்பொழுது
எனக்கு நன்மையாயிருந்தது என்பாள். தன 8
க்கு நான் தானியத்தையும் திராட்சரசத்தை
யும் எண்ணெயையும் கொடுத்தவரென்றும்,
[17]தனக்கு நான் வெள்ளியையும் பொன்னையும்

1 3. 1
2 உபா. 31. 16. சங். 73. 27. எரே. 2. 13. எசே. 23. 3. ழ
3 2 இரா. 10. 11: 15. 10, 12, 29
* இரக்கம் பெறாதவள்
4 2 இரா. 17. 6, 23
5 2 இரா. 19. 35. ஏசா. 36. 67. அதி. சக. 4. 6; 9. 10
† என் ஜனமல்ல
6 ஆதி. 32. 12. ரோ. 9. 25–28. 1 பே. 2. 10
7 யோ. 1. 12. 1 யோ. 3. 1
8 ஏசா. 11. 12, 13. எரே. 3. 18. எசே. 34. 23; 37. 16–24
‡ என் ஜனம
§ இரக்கம்பெற்றவள்
9 ஏசா. 50; 1. எசே. 16. 25. ழ
10 எரே. 13. 22, 26. எசே. 16. 37, 39; 19. 13
11 ஆமோ. 8. 11, 13
12 யோ. 8. 41
13 ஏசா. 1. 21. எரே. 3. 1–9
14 எரே. 44. 17
15 யோபு 3. 23; 19. 8. புல. 3. 7, 9
16 எசே. 16. 8. லூ. 15. 18
17 ஏசா. 1. 3. எசே. 16. 17–19

பெருகப்பண்ணினவரென்றும் அவள் அறி
யாமற்போனள்; அவைகளை அவர்கள் பாகா
9 லுடைய தாக்கினர்கள். ஆதலால் நான் என்
தானியத்தை அதின் காலத்திலும், என் திரா
ட்சரசத்தை அதின் காலத்திலும் திரும்ப எடுத்
துக்கொண்டு, அவளுடைய நிர்வாணத்தை
மூடுகிறதற்கு நான் கொடுத்திருந்த ஆட்டுமயி
ரையும் சணலையும் திரும்பப் பிடுங்கிக்கொள்
10 வேன். இப்போதும் அவளுடைய நேசர்க
ளின் கண்களுக்கு முன்பாக அவளுடைய
அவலட்சணத்தை வெளிப்படுத்துவேன்; [1]ஒரு
வரும் அவளை என் கைக்கு நீங்கலாக்கி விடு
11 விப்பதில்லை. அவளுடைய எல்லா மகிழ்ச்சி
யையும், அவளுடைய பண்டிகைகளையும்,
[2]அவளுடைய மாதப்பிறப்புகளையும், அவளு
டைய ஓய்வுநாட்களையும், சபை கூடுகிற அவ
ளுடைய எல்லா ஆசரிப்புகளையும் ஒழியப்
12 பண்ணுவேன். என் நேசர்கள் எனக்குக்
கொடுத்த பணையம் என்று அவள் சொன்ன
அவளுடைய திராட்சச்செடிகளையும், [3]அவ
ளுடைய அத்திமரங்களையும் நான் பாழாக்கி,
அவைகளைக் காடாய்ப் போகப்பண்ணுவேன்;
காட்டுமிருகங்கள் அவைகளைத் தின்னும்.
13 அவள் பாகால்களுக்குத் தூபங்காட்டி, [4]தன்
நெற்றிபட்டங்களினாலும் தன் ஆபரணங்களி
னாலும் தன்னைச் சிங்காரித்துக்கொண்டு, தன்
நேசரைப் பின்தொடர்ந்து, என்னை மறந்து
போன நாட்களினிமித்தம் அவளை *விசாரிப்
14 பேன் என்று கர்த்தர் சொல்லுகிறார். ஆயி
னும், இதோ, நான் அவளுக்கு நயங்காட்டி,
[5]அவளை வனாந்தரத்தில் அழைத்துக்கொண்டு
15 போய், அவளோடே பட்சமாய்ப் பேசி, அவ்
விடத்திலிருந்து அவளுக்கு அவளுடைய திரா
ட்சத்தோட்டங்களையும், நம்பிக்கையின் வாச
லாக †ஆகோரின் [6]பள்ளத்தாக்கையும் கொ
டுப்பேன்; அப்பொழுது அவள் அங்கே, [7]தன்
இளவயதின் நாட்களிலும் தான் எகிப்துதே
சத்திலிருந்து வந்தநாளிலும் ‡பாடினதுபோல்
16 பாடுவாள். அக்காலத்தில் நீ என்னை இனி
§பாகாலி என்று சொல்லாமல், ||ஈஷி என்று
சொல்லுவாய் என்று கர்த்தர் உரைக்கிறார்.
17 பாகால்களுடைய நாமங்களை அவள் வாயிலி
ருந்து அற்றுப்போகப்பண்ணுவேன்; இனி
அவைகளின் பேரைச் சொல்லி, அவைகளை
நினைக்கிற நினைப்பும் இல்லாமற்போகும்.
18 அக்காலத்தில் நான் அவர்களுக்காகக் காட்டு
மிருகங்களோடும், ஆகாயத்துப் பறவைகளோ
டும், பூமியில் ஊரும் பிராணிகளோடும், [8]ஒரு
உடன்படிக்கைபண்ணி, வில்லையும் பட்டயத்
தையும் யுத்தத்தையும் தேசத்திலே இராதபடி
க்கு முறித்து, [9]அவர்களைச் சுகமாய்ப் படுத்
19 துக்கொண்டிருக்கப் பண்ணுவேன். நித்திய
விவாகத்துக்கென்று உன்னை எனக்கு நியமித்
துக்கொள்ளுவேன்; [10]நீதியும் நியாயமும் கிரு
பையும் உருக்க இரக்கமுமாய் உன்னை என
20 க்கு நியமித்துக்கொள்ளுவேன். உண்மையாய்
உன்னை எனக்கு நியமித்துக்கொள்ளுவேன்;

1 எசே. 16. 7: 28. 29.
2 ஆமோ. 8. 5, 10
3 சங். 80. 12, 13. ஏசா. 5. 5, 6
4 எசே. 23. 40, 42
* தண்டிப்பேன்
5 எசே. 20. 25
† கலகம்
6 யோசு. 7. 26. ஏசா. 65. 10
7 எரே. 2. 2. எசே. 16. 8, 22, 60
‡ மறுமொழிகூ: 21, 22. வச
§ என் ஆண்டவன்
|| என் புருஷன்
8 யோபு 5. 23. ஏசா. 11. 6-9 எசே. 34. 25
9 சகரி. 9. 10
10 ஏசா. 54. 5. எபே. 5. 23-27.
11 எரே. 31. 33, 34. யோ. 17. 3
12 சகரி. 8. 12.
13 1. 4
¶ தேவவிதைப்பு
14 1. 6
15 சகரி. 13. 9. ரோ. 9. 26. 1 பே. 2. 10
16 1. 2. எரே. 3. 20
17 உபா. 21. 13
18 10. 3. ஏசா. 19. 19. எரே. 15. 4, 5
** சுரூபம், ஆதி. 31. 19
19 5. 6, 15. எரே. 30. 9. எசே. 34. 23, 24
20 ஏசா. 2. 2, 3. எரே. 30. 24
21 ஏசா. 1. 18. மீகா. 6. 2
22 எரே. 4. 22, 23. 5. 4
23 எரே. 4. 22, 28
24 ஏசா. 59. 7
25 ஆமோ. 5. 16. செப். 1. 3
26 உபா. 17. 12
27 எரே. 6. 4, 5

[11]நீ கர்த்தரை அறிந்துகொள்ளுவாய். அக் 21
காலத்தில் நான் மறுமொழி கொடுப்பேன்
என்று கர்த்தர் சொல்லுகிறார்; [12]நான் வா
னங்களுக்கு மறுமொழி கொடுப்பேன், அவை
கள் பூமிக்கு மறுமொழி கொடுக்கும், பூமி 22
தானியத்துக்கும் திராட்சரசத்துக்கும் எண்
ணெய்க்கும் மறுமொழி கொடுக்கும், [13]இவை
கள் ¶யெஸ்ரயேலுக்கும் மறுமொழி கொடுக்
கும். நான் அவளை எனக்கென்று பூமியிலே 23
விதைத்து, [14]இரக்கம் பெறாதிருந்தவளுக்கு
இரங்குவேன்; என் ஜனமில்லாதிருந்தவர்
களை நோக்கி நீ என் ஜனமென்று சொல்லு
வேன்; [15]அவர்கள் என் தேவனே என்பார்கள்
என்றார்.

பின்பு கர்த்தர் என்னை நோக்கி: அந்நிய 3
தேவர்களை மதித்து, திராட்சரசமுள்ள பாத்தி
ரங்களை விரும்புகிறவர்களான இஸ்ரவேல் புத்
திரர்பேரில் கர்த்தர் வைத்திருக்கிற அன்புக்கு
ஒப்பாக நீ இன்னும் போய், [16]தன் நேசரால்
நேசிக்கப்பட்டவளும், விபசாரியுமான ஒரு
ஸ்திரீயை நேசித்துக்கொள் என்று சொன்
னார். அப்பொழுது நான் அவளை எனக்குப் 2
பதினைந்து வெள்ளிக்காசுக்கும், ஒன்றரைக்
கலம் வாற்கோதுமைக்கும் கொண்டு, அவளை 3
நோக்கி: நீ வேசித்தனம்பண்ணாமலும், ஒருவ
னையும் சேராமலும் [17]அநேகநாள் எனக்காகக்
காத்திரு; உனக்காக நானும் காத்திருப்பேன்
என்றேன். இஸ்ரவேல் புத்திரர் அநேகநாள் 4
[18]ராஜா இல்லாமலும், அதிபதி இல்லாமலும்,
பலி இல்லாமலும், சிலை இல்லாமலும்,
ஏபோத் வஸ்திரம் இல்லாமலும், **தேராபீம்
இல்லாமலும் இருப்பார்கள். பின்பு இஸ்ர 5
வேல் புத்திரர் திரும்பி, தங்கள் தேவனாகிய
கர்த்தரையும், [19]தங்கள் ராஜாவாகிய தாவீதை
யும் தேடி, [20]கடைசி நாட்களில் கர்த்தரையும்
அவருடைய தயவையும் நாடி அஞ்சிக்கையாய்
வருவார்கள்.

இஸ்ரவேல் புத்திரரே, கர்த்தருடைய வார்த் 4
தையைக் கேளுங்கள்; தேசத்துக் குடிக
ளோடே கர்த்தருக்கு [21]வழக்கு இருக்கிறது;
அதேதென்றால் தேசத்திலே உண்மையும்
இல்லை, [22]இரக்கமும் இல்லை; [23]தேவனைப்
பற்றிய அறிவும் இல்லை. பொய்யாணையிட்டு, 2
பொய்சொல்லி, [24]கொலைசெய்து, திருடி,
விபசாரம்பண்ணி, மிஞ்சிமிஞ்சிப் போகிறார்
கள்; இரத்தப்பழிகளோடே இரத்தப்பழிகள்
சேருகிறது. இதினிமித்தம் தேசம் புலம்பும்; 3
[25]அதில் குடியிருக்கிற அனைவரோடுங்கூட
மிருகஜீவன்களும் ஆகாயத்துப் பறவைகளும்
தொய்ந்துபோகும்; கடலின் மச்சங்களும் வாரி
க்கொள்ளப்படும். ஆகிலும் ஒருவனும் நியாயத் 4
தைக் காண்பிக்கவும், ஒருவனும் அவர்களைக்
கடிந்துகொள்ளவும் கூடாது; [26]உன் ஜனங்
கள் ஆசாரியனோடே வழக்காடுகிறவர்களைப்
போல இருக்கிறார்கள். ஆகையால் நீ பக 5
லிலே இடறி விழுவாய்; [27]இராவிலே உன்னோ
டேகூடத் தீர்க்கதரிசியும் இடறி விழுவான்;

உன் தாயை நான் சங்காரம் பண்ணுவேன்.
6 என் ஜனங்கள் அறிவில்லாமையினால் [1]சங்கா
ரமாகிறார்கள்; நீ அறிவை வெறுத்தாய், ஆகை
யால் நீ என் ஆசாரியனாயிராதபடிக்கு நானும்
உன்னை வெறுத்துவிடுவேன்; நீ உன் தேவனு
டைய வேதத்தை மறந்தாய், ஆகையால்
நானும் உன் பிள்ளைகளை மறந்துவிடுவேன்.
7 அவர்கள் எவ்வளவாய்ப் பெருகினார்களோ,
அவ்வளவாய் எனக்கு விரோதமாய்ப் பாவஞ்
செய்தார்கள்; [2]அவர்களுடைய மகிமையை
8 இலச்சையாக மாறப்பண்ணுவேன். அவர்
கள் என் ஜனத்தின் பாவத்தைத் தின்று,
[3]அவர்களுடைய அக்கிரமத்தின்பேரில் பசி
9 தாகமா யிருக்கிறார்கள். ஆதலால் ஜனங்க
ளுக்கு எப்படியோ ஆசாரியனுக்கும் அப்ப
டியே; [4]அவர்கள் வழிகளின்படி நான் அவர்
களை விசாரித்து, அவர்கள் கிரியைகளின்படி
10 அவர்களுக்குப் பலனளிப்பேன். அவர்கள்
**கர்த்தரை** மதியாமலிருக்கிறபடியினால் அவர்
கள் தின்றாலும் திருப்தியடையாதிருப்பார்
கள்; [5]அவர்கள் வேசித்தனம் பண்ணினாலும்
11 பலுகாதிருப்பார்கள். வேசித்தனமும் திராட்
சரசமும் [6]மதுபானமும் இருதயத்தை மயக்
12 கும். என் ஜனங்கள் கட்டையினிடத்தில்
ஆலோசனை கேட்கிறார்கள்; [7]அவர்களுடைய
கோல் அவர்களுக்குச் செய்தியை அறிவிக்கு
மென்றிருக்கிறார்கள்; வேசித்தன ஆவி அவர்
களை வழிதப்பித் திரியப்பண்ணிற்று; அவர்
கள் தங்கள் தேவனுக்குக் கீழ்ப்படிராமல்
13 சோரமார்க்கம் போனார்கள். அவர்கள் மலை
யுச்சியில் பலியிட்டு, மேடுகளிலே கர்வாலி
மரங்களின் கீழும், புன்னைமரங்களின் கீழும்,
அரசமரங்களின் கீழும், அவைகளின் நிழல்
நல்லதென்று, தூபங்காட்டுகிறார்கள்; [8]இநி
மித்தம் உங்கள் குமாரத்திகள் வேசித்தன
மும், உங்கள் *மருமக்கள்மார் விபசாரமும்
14 செய்கிறார்கள். உங்கள் குமாரத்திகள் வேசித்
தனம் செய்கிறதினிமித்தமும், உங்கள் மரு
மக்கள்மார் விபசாரம் செய்கிறதினிமித்தமும்,
நான் அவர்களை தண்டியாமலிருப்பேனோ?
[9]அவர்கள் விலகி வேசிகளோடே கூடப்போய்
தாசிகளோடே பலியிடுகிறார்கள்; உணர்வில்
லாத ஜனங்கள் அதினால் சிக்குண்டு விழுவார்
15 கள். இஸ்ரவேலே, நீ சோரம்போனாலும்,
யூதாவாகிலும் அந்தப் பாவத்துக்குள்ளாகாதி
ருப்பதாக; [10]கில்காலுக்கு வாராமலும், †பெத்
தாவேனுக்குப் போகாமலும் [11]**கர்த்தருடைய**
ஜீவனைக் கொண்டு ஆணையிடாமலும் இருப்பீர்
16 களாக. இஸ்ரவேல் அடங்காத கிடாரியைப்
போல் அடங்காதிருக்கிறது; இப்போது **கர்த்**
**தர்** அவர்களை விஸ்தாரமான வெளியிலே ஆட்
டுக்குட்டியைப்போல் மேய்த்து அலையப்பண்
17 ணுவார். எப்பிராயீம் விக்கிரகங்களோடு
இணைந்திருக்கிறான், [12]அவனைப் போகவிடு.
18 அவர்களுடைய மதுபானம் புளித்தது, அவர்
கள் [13]எப்போதும் சோரம்போகிறார்கள்; அவர்
களுடைய அதிபதிகள் தாருங்களென்று இலச்
சையானதை நாடுகிறார்கள். காற்று அவர்க 19
ளைத் தன் செட்டைகளில் இறுகப் பிடிக்கும்;
[14]அவர்கள் தங்கள் பலிகளால் வெட்கப்படு
வார்கள்.

ஆசாரியர்களே, இதைக் கேளுங்கள்; இஸ் **5**
ரவேல் வம்சத்தாரே, கவனியுங்கள்; ராஜா
வின் வீட்டாரே, செவிகொடுங்கள்; இந்த
நியாய விசாரிப்பு உங்கள்மேல் செல்லும்;
[15]நீங்கள் மிஸ்பாவில் கண்ணியும் தாபோரின்
மேல் விரிக்கப்பட்ட வலையுமானீர்கள். நெறி 2
தவறினவர்கள் [16]மிகுதியும் வதை செய்கிறார்
கள்; அவர்கள் எல்லாரையும் நான் தண்டிப்
பேன். எப்பிராயீமை நான் அறிவேன், 3
[17]இஸ்ரவேல் எனக்கு மறைவானதல்ல; எப்
பிராயீமே, இப்போது நீ சோரம்போனாயே,
இஸ்ரவேல் தீட்டுப்பட்டதே. அவர்கள் தங் 4
கள் தேவனிடத்துக்குத் திரும்புவதற்குத் தங்
கள் கிரியைகளைச் சீர்திருத்தமாட்டார்கள்,
[18]வேசித்தன ஆவி அவர்கள் உள்ளத்தில் இருக்
கிறது; **கர்த்தரை** அறியார்கள். இஸ்ரவே 5
லின் அகந்தை அவர்கள் முகத்துக்கு முன்பா
கச் சாட்சியிடுகிறது; ஆகையால் இஸ்ரவே
லும் எப்பிராயீமும் தங்கள் அக்கிரமத்தினால்
இடறுண்டு விழுவார்கள்; அவர்களோடே
யூதாவும் இடறுண்டு விழுவான். அவர்கள் 6
**கர்த்தரைத்** தேடும்படி தங்கள் ஆடுகளோடும்
தங்கள் மாடுகளோடும் போவார்கள்; [19]அவ
ரைக் காணமாட்டார்கள்; அவர் அவர்களை
விட்டு விலகினார். **கர்த்தருக்கு** விரோதமாக 7
துரோகம்பண்ணினார்கள்; [20]அந்நிய பிள்ளைக
ளைப் பெற்றார்கள்; இப்போதும் ‡ஒரு மாதத்
துக்குள்ளாக அவர்கள் தங்கள் பங்குகளோடே
பட்சிக்கப்படுவார்கள்.

கிபியாவிலே எக்காளத்தையும், ராமாவிலே 8
பூரிகையையும் ஊதுங்கள்; பெத்தாவேனிலே
கதறுங்கள்; பென்யமீனே உன்னைப் பின்
தொடருகிறார்கள். தண்டிப்பின் நாளிலே 9
எப்பிராயீம் பாழாவான்; [21]நிச்சயமாய் வரப்
போகிறதை இஸ்ரவேலின் கோத்திரங்களுக்
குள்ளே அறிவிக்கிறேன். யூதாவின் பிரபுக் 10
கள் எல்லைகளை ஒதுக்குகிறவர்களுக்கு ஒப்பா
னார்கள்; [22]அவர்கள்மேல் என் உக்கிரகோபத்
தைத் தண்ணீரைப்போல ஊற்றுவேன். எப் 11
பிராயீம் தகாத கற்பனையை மனதாரப் பின்
பற்றிப்போனபடியால் அவன் ஒடுங்குண்டு,
[23]நியாயவிசாரணையில் நொறுக்கப்பட்டுப்போ
கிறான். நான் எப்பிராயீமுக்குப் பொட்ட 12
ரிப்பைப்போலவும், [24]யூதாவின் வீட்டுக்கு
உளுப்பைப்போலவும் இருப்பேன். எப்பிரா 13
யீம் தன் வியாதியையும், யூதா தன் காயத்தை
யும் கண்டபோது, எப்பிராயீம் அசீரியனண்
டைக்குப் போய், யாரேப் ராஜாவினிடத்தில்
ஆள் அனுப்பினான்; [25]ஆனாலும் உங்களைக்
குணமாக்கவும் உங்களில் இருக்கிற காயத்தை
ஆற்றவும் அவனால் கூடாமற் போயிற்று.
நான் எப்பிராயீமுக்குச் சிங்கம்போலவும், யூதா 14
வின் வம்சத்தாருக்குப் பாலசிங்கம்போலவும்

1 ஏசா. 5. 13
2 13. 6. உபா. 32. 15. மல். 2. 9. பிலி. 3. 19
3 எசே. 14. 3–7
4 ஏசா. 24. 2. எரே. 5. 31
5 லேவி. 26. 26. மீகா 6. 14. ஆகாய் 1. 6
6 நீதி. 31. 3, 4. பிர. 7. 7. ஏசா. 28. 7
7 எரே. 2. 27. ஆப. 2. 19
8 ஆமோ. 7. 17. ரோ. 1. 28
* மனைவிகள்
9 1 கொரி. 6. 16
10 ஆமோ. 4. 4: 5. 5
† விக்கிரகவீட்டிலே
11 செப். 1. 5
12 மத். 15. 14
13 மீகா 3. 11
14 ஏசா. 1. 29. எரே. 2. 26
15 6. 9
16 ஏசா. 29. 15
17 எசே. 23. 5. ஆமோ. 3. 2
18 சங். 78. 8
19 ஏசா. 1. 15. யோ. 7. 34
20 ஏசா. 48. 8
‡ மாதப்பிறப்பு
21 யோபு 12. 14. ஆமோ. 3. 7
22 உபா. 19. 14
23 உபா. 28. 33. மீகா. 6. 16
24 நீதி. 12. 4
25 எரே. 30. 12

இருப்பேன்; நான் நானே பீறிவிட்டுப் போய்
விடுவேன்; தப்புவிப்பார் இல்லாமல் எடுத்துக்
15 கொண்டு போவேன். அவர்கள் தங்கள் குற்
றங்களை உணர்ந்து, என் முகத்தைத் தேடுமட்
டும் நான் என் ஸ்தானத்துக்குத் திரும்பிப்
போய்விடுவேன்; [1]தங்கள் ஆபத்தில் என்னைக்
கருத்தாய்த் தேடுவார்கள்.

6 கர்த்தரிடத்தில் திரும்புவோம் வாருங்கள்;
நம்மைப் பீறினார், அவரே நம்மைக் குணமாக்
குவார்; [2]நம்மை அடித்தார், அவரே நம்மு
2 டைய காயங்களைக் கட்டுவார். இரண்டு நா
ளுக்குப் பின்பு அவர் நம்மை உயிர்ப்பிப்பார்;
[3]மூன்றாம் நாளில் நம்மை எழுப்புவார்; அப்
பொழுது நாம் அவருடைய சமுகத்தில் பிழைத்
3 திருப்போம். அப்பொழுது நாம் அறிவடை
ந்து, [4]**கர்த்தரை** அறியும்படி தொடர்ந்துபோ
வோம்; அவருடைய புறப்படுதல் அருணோ
தயம்போல ஆயத்தமாயிருக்கிறது; அவர்
மழையைப்போலவும், [5]பூமியின்மேல் பெய்
யும் முன்மாரி பின்மாரியைப்போலவும் நம்
மிடத்தில் வருவார்.
4 எப்பிராயீமே, உனக்கு என்னசெய்வேன்?
யூதாவே, உனக்கு என்னசெய்வேன்? [6]உங்
கள் பக்தி காலையில் காணும் மேகத்தைப்போ
லவும், விடியற்காலையில் தோன்றும் பனி
5 யைப்போலவும் ஒழிந்துபோகிறது. ஆகை
யால் தீர்க்கதரிசிகளைக்கொண்டு அவர்களை
வெட்டினேன்; என் வாய்மொழிகளைக்கொ
ண்டு அவர்களை அதம்பண்ணினேன்; [7]உன்
மேல் வரும் தண்டனைகள் வெளிச்சத்தைப்
6 போல் வெளிப்படும். பலியை அல்ல இரக்
கத்தையும், [8]தகனபலிகளைப்பார்க்கிலும் [9]தே
வனை அறிகிற அறிவையும், விரும்புகிறேன்.
7 அவர்களோ ஆதாமைப்போல் உடன்படிக்
கையை மீறி, [10]அங்கே எனக்கு விரோதமாய்த்
8 துரோகம் பண்ணினார்கள். கீலேயாத் அக்கி
ரமம் செய்கிறவர்களின் பட்டணம்; [11]அது
இரத்தக் காலடிகளால் மிதிக்கப்பட்டிருக்கி
9 றது. பறிகாரரின் கூட்டங்கள் ஒருவனுக்
குக் காத்திருக்கிறதுபோல, சீகேமுக்குப் போ
கிற வழியிலே கொலைசெய்கிற ஆசாரியரின்
கூட்டம் காத்திருக்கிறது; [12]தோஷமான காரி
10 யங்களையே செய்கிறார்கள். பயங்கரமான
காரியத்தை இஸ்ரவேல் வம்சத்தாரில் கண்
டேன்; [13]அங்கே எப்பிராயீமின் வேசித்தனம்
உண்டு; இஸ்ரவேல் தீட்டுப்பட்டுப்போயிற்று.
11 யூதாவே, உனக்கு ஒரு அறுப்புக்காலம் நிய
மிக்கப்பட்டிருக்கிறது.

7 நான் என் ஜனத்தின் சிறையிருப்பைத்
திருப்பும்போதும், நான் இஸ்ரவேலைக் குண
மாக்க விரும்பும்போதும், எப்பிராயீமின் அக்
கிரமமும் சமாரியாவின் பொல்லாப்புகளும்
வெளிப்படுத்தப்படும்; [14]அவர்கள் வஞ்சனை
செய்கிறார்கள்; திருடன் உள்ளே வருகிறான்;
வெளியே பறிகாரரின் கூட்டத்தார் கொள்
2 ளையிடுகிறார்கள். அவர்கள் பொல்லாப்பை
யெல்லாம் நான் நினைவில் வைத்திருக்கிறேன்
என்று அவர்கள் தங்கள் இருதயத்தில் சிந்திக்
கிறதில்லை; [15]இப்போதும் அவர்களுடைய
கிரியைகள் அவர்களைச் சூழ்ந்துகொண்டது;
அவைகள் என் முகத்துக்குமுன் இருக்கி
றது. ராஜாவைத் தங்கள் பொல்லாப்பினா 3
லும், [16]அதிபதிகளைத் தங்கள் பொய்களினா
லும், சந்தோஷப்படுத்துகிறார்கள். அவர்கள் 4
எல்லாரும் விபசாரக்கள்ளர்; [17]அப்பஞ்சுடுகி
றவன் எரிக்கும் அடுப்பைப்போல் இருக்கிறார்
கள்; அவன் மாவைப் பிசைந்ததுமுதல் அது
உப்பிப்போகுமட்டும், அனலை மூட்டாமல்
ஓய்ந்திருக்கிறான். நம்முடைய ராஜாவின் 5
*நாளென்று சொல்லி, அதிபதிகள் திராட்ச
ரசத் துருத்திகளால் அவனுக்கு வியாதியுண்
டாக்குகிறார்கள்; சரசக்காரரோடேகூட
அவன் தன் கையை நீட்டுகிறான். அவர்கள் 6
பதிவிருக்கும்போது, தங்கள் இருதயத்தை
அடுப்பைப்போல் ஆயத்தப்படுத்துகிறார்கள்;
அவர்களில் அடுப்பு மூட்டுகிறவன் இராமுழு
தும் தூங்கினாலும், காலமேயோவென்றால்
அது ஜுவாலிக்கிற அக்கினியாய் எரியும்.
அவர்கள் எல்லாரும் அடுப்பைப்போல அன 7
லாகி, தங்கள் நியாயாதிபதிகளைப் பட்சித்தார்
கள்; [18]அவர்களுடைய ராஜாக்கள் எல்லாரும்
விழுந்தார்கள்; அவர்களில் என்னை நோக்கிக்
கூப்பிடுகிறவன் ஒருவனும் இல்லை. எப்பிரா 8
யீம் அந்நிய [19]ஜனங்களோடே கலந்திருக்கி
றான்; எப்பிராயீம் திருப்பிப்போடாத அப்பம்.
அந்நியர் அவனுடைய பலத்தைத் தின்கிறார் 9
கள்; அவனோ அதை அறியான்; நரைமயிரும்
அவனில் தெளித்திருக்கிறது, அவனோ அதை
அறியாதிருக்கிறான். இஸ்ரவேலின் அகந் 10
தை அவர்கள் முகத்துக்கு முன்பாகச் சாட்சி
யிட்டாலும், [20]அவர்கள் தங்கள் தேவனாகிய
கர்த்தரிடத்தில் திரும்பாமலும், இவையெல்
லாவற்றிலும் அவரைத் தேடாமலும் இருக்கி
றார்கள். எப்பிராயீம் பேதையான புறாவைப் 11
போல் இருக்கிறான், அவனுக்குப் புத்தி
யில்லை; [21]எகிப்தியனைக் கூப்பிடுகிறார்கள்;
அசீரியனிடத்துக்கும் போகிறார்கள். அவர் 12
கள் போகும்போது, [22]என் வலையை அவர்கள்
மேல் வீசுவேன்; அவர்களை ஆகாயத்துப் பற
வைகளைப்போல கீழே விழப்பண்ணுவேன்;
அவர்களுடைய சபையில் கேள்வியானதின்
படியே [23]அவர்களை தண்டிப்பேன். அவர்கள் 13
என்னைவிட்டு அலைந்து திரிகிறபடியினால்
அவர்களுக்கு ஐயோ! அவர்களுக்குக் கேடுவ
ரும்; எனக்கு விரோதமாக இரண்டகம் பண்
ணினார்கள்; [24]நான் அவர்களை மீட்டிருந்தும்,
அவர்கள் எனக்கு விரோதமாகப் பொய் பேசு
கிறார்கள்; அவர்கள் தங்கள் படுக்கைகளில் 14
அலறுகிறபோது, தங்கள் இருதயத்தில் என்னை
நோக்கிக் கூப்பிடுகிறதில்லை; [25]அவர்கள் தானி
யத்துக்காகவும் திராட்சரசத்துக்காகவும் கூடு
கிறார்கள்; என்னை வெறுத்து விலகிப்போகி
றார்கள். நான் அவர்களை தண்டித்தேன்; 15
அவர்களுடைய புயங்கள் திரும்பப் பலப்பட

1 சங். 78. 34. எரே. 29. 12, 13
2 உபா. 32. 39. எரே. 30. 17. புல. 3. 32, 33
3 1 கொ. 15. 4
4 ஏசா. 54. 13. மீகா 4. 2. எபி. 3. 14
5 உபா. 32. 2
6 11. 8: 13. 3
7 சங். 119. 130. எரே. 23. 29. எபி. 4. 12
8 1 சாமு. 15. 22. மத். 9. 13
9 எரே. 22. 16. யோ. 17. 3
10 யோபு. 31. 33
11 12. 11
12 எரே. 11. 9. எசே. 22. 25
13 எரே. 5. 30. எசே. 24. 13
14 5. 1: 6. 10
15 சங். 90. 8: ஏசா. 26. 16
16 சங். 62. 4
17 எரே. 9. 2
* ஜனனநாள்
18 2 இரா. 15. 10. ஏசா. 64. 7
19 சங். 106. 35
20 ஏசா. 9. 13. எரே. 3. 3
21 2 இரா. 17. 3, 4
22 பிர. 9. 12
23 வெளி. 3. 19
24 மீகா 6. 4
25 யோபு 35. 9, 10. எரே. 3. 10. சகரி. 7. 5

வும் பண்ணினேன்; ஆகிலும் எனக்கு விரோ
16 தமாகப்பொல்லாப்பு நினைக்கிறார்கள். திரும்
புகிறார்கள், ஆனாலும் உன்னதமானவரிடத்
திற்கு அல்ல; [1]மோசம்போக்குகிற வில்லைப்
போலிருக்கிறார்கள்; அவர்களுடைய அதிபதி
கள் தங்கள் நாவினுடைய உக்கிரத்தினிமித்
தம் பட்டயத்தால் விழுவார்கள்; இதுவே எகி
ப்துதேசத்தினிமித்தம் அவர்களுக்கு வரும்
நிந்தை.

8 உன் வாயிலே எக்காளத்தை வை; அவர்
கள் என் உடன்படிக்கையை மீறி, என் நியா
யப்பிரமாணத்துக்கு விரோதமாகத் துரோகம்
பண்ணினபடியினால், **கர்த்தருடைய** வீட்டின்
மேல் [2]சத்துரு கழுகைப்போல் பறந்துவருகி
2 றான். எங்கள் தேவனே, [3]உம்மை அறிந்தி
ருக்கிறோம் என்று சொல்லி இஸ்ரவேலர்
3 கூப்பிடுவார்கள். ஆனாலும் இஸ்ரவேலர்
நன்மையை வெறுத்தார்கள்; சத்துரு அவர்க
4 ளைத் தொடருவான். அவர்கள் ராஜாக்களை
ஏற்படுத்திக்கொண்டார்கள், ஆனாலும் என்
னாலே அல்ல; அதிபதிகளை வைத்துக்கொண்
டார்கள், ஆனாலும் நான் அறியேன்; [4]அவர்
கள் வேரறுப்புண்டு போகும்படித் தங்கள்
வெள்ளியினாலும் தங்கள் பொன்னினாலும்
தங்களுக்கு விக்கிரகங்களைச் செய்வித்தார்கள்.
5 சமாரியாவே, [5]உன் கன்றுக்குட்டி உன்னை
வெறுத்துவிடுகிறது; என் கோபம் அவர்கள்
மேல் மூண்டது; எதுவரைக்கும் சுத்தாங்கம்
6 அடையமாட்டாதிருப்பார்கள்? அதுவும்
இஸ்ரவேலருடைய செய்கையே; தட்டான்
அதைச் செய்தான், ஆதலால் அது தேவன்
அல்லவே, சமாரியாவின் கன்றுக்குட்டி துண்
7 டு துண்டாய்ப் போகும். அவர்கள் காற்றை
விதைத்து, [6]சூறைக்காற்றை அறுப்பார்கள்;
விளைச்சல் அவர்களுக்கு இல்லை; கதிர் மா
வைக் கொடுக்கமாட்டாது; கொடுத்தாலும்
8 அந்நியர் அதை விழுங்குவார்கள். இஸ்ரவே
லர் விழுங்கப்படுகிறார்கள்; [7]அவர்கள் இனிப்
புறஜாதிகளுக்குள்ளே விரும்பப்படாத பாத்
9 திரத்தைப்போல் இருப்பார்கள். அவர்கள்
தனித்துத் திரிகிற காட்டுக்கழுதையைப்போல
அசீரியரண்டைக்குப் போனார்கள்; எப்பிரா
யீமர் நேசரைக் கூலிக்குப் பொருத்திக்கொண்
10 டார்கள். அவர்கள் புறஜாதியாரைக் கூலிக்
குப் பொருத்திக்கொண்டாலும், [8]இப்பொ
ழுது நான் அவர்களைக் கூட்டுவேன்; அதிபதி
களின் ராஜா சுமத்தும் சுமையினால் அவர்கள்
கொஞ்ச காலத்துக்குள்ளே அகப்படுவார்கள்.
11 எப்பிராயீமர் பாவஞ்செய்வதற் கேதுவாய்
பலிபீடங்களைப் பெருகப் பண்ணினார்கள்;
ஆதலால் பலிபீடங்களே அவர்கள் பாவஞ்
12 செய்வதற்கு ஏதுவாகும். என் வேதத்தின்
மகத்துவங்களை அவர்களுக்கு எழுதிக்கொடுத்
தேன்; [9]அவைகளை அந்நிய காரியமாக எண்
13 ணினார்கள். எனக்குச் செலுத்தும் பலிகளின்
மாம்சத்தை அவர்கள் பலியிட்டுப் புசிக்கிறார்
கள்; [10]**கர்த்தர்** அவர்கள்மேல் பிரியமாயிரார்;
அவர்களுடைய அக்கிரமத்தை அவர் நினை
த்து, அவர்கள் பாவத்தை விசாரிக்கும்போ
தோவெனில், அவர்கள் எகிப்துக்குத் திரும்
பிப்போவார்கள். இஸ்ரவேல் தன்னை உண் 14
டாக்கினவரை மறந்து கோவில்களைக் கட்டுகி
றான்; [11]யூதா அரணான பட்டணங்களைப் பெ
ருகப்பண்ணுகிறான்; ஆனாலும் நான் அதின்
நகரங்களில் அக்கினியை வரப்பண்ணுவேன்,
அது அவைகளின் கோவில்களைப் பட்சிக்கும்.

இஸ்ரவேலே, மகிழ்ச்சியாயிராதே; மற்ற 9
ஜனங்களைப்போல் களிகூராதே; உன் தேவ
னைவிட்டு நீ சோரம்போனாய்; தானியம் போ
ரடிக்கிற சகல களங்களிலும் பணையத்தை
நாடுகிறாய். தானியக்களமும் *திராட்சத் 2
தொட்டியும் அவர்களைப் பிழைப்பூட்டுவதில்
லை; அவர்களுக்குத் திராட்சரசம் ஒழிந்துபோ
கும். அவர்கள் **கர்த்தருடைய** தேசத்தில் குடி 3
யிருப்பதில்லை; எப்பிராயீமர் திரும்ப †எகிப்
துக்குப் போவார்கள்; [12]அசீரியாவில் தீட்டுள்
ளதைப் புசிப்பார்கள். அவர்கள் **கர்த்தருக்** 4
**குத்** திராட்சரசத்தின் பானபலியை வார்ப்
பதுமில்லை, [13]அவருக்கு அங்கிகரிப்பா யிருப்
பதுமில்லை; அவர்களுடைய பலிகள் அவர்க
ளுக்குத் துக்கங் கொண்டாடுகிறவர்களின்
அப்பத்தைப்போல இருக்கும்; அதைப் புசிக்
கிற யாவரும் தீட்டுப்படுவார்கள்; [14]அவர்களு
டைய அப்பம் அவர்களுக்கே யாகும், அது
**கர்த்தருடைய** ஆலயத்தில் வருவதில்லை. ஆச 5
ரிப்புநாளிலும், **கர்த்தருடைய** பண்டிகைநாளி
லும் என்ன செய்வீர்கள்? இதோ, அவர்கள் 6
பாழ்க்கடிப்புக்குத் தப்பும்படி போய்விட்டார்
கள்; எகிப்து அவர்களைச்சேர்த்துக்கொள்ளும்;
‡மோப் பட்டணம் அவர்களை அடக்கம் பண்
ணும்; அவர்களுடைய வெள்ளியிருந்த விருப்
பமான இடங்கள் காஞ்சொறிகளுக்குச் சுதந்
தரமாகும்; [15]அவர்களுடைய வாசஸ்தலங்க
ளில் முட்செடிகள் முளைக்கும். §விசாரிப் 7
பின் நாட்கள் வரும், நீதிசரிக்கட்டும் நாட்கள்
வரும் என்பதை இஸ்ரவேலர் அறிந்துகொள்
வார்கள்; [16]உன் மிகுதியான அக்கிரமத்தினா
லேயும், மிகுதியான பகையினாலேயும் தீர்க்க
தரிசிகள் மூடரும், ஆவியைப் பெற்ற மனு
ஷர்கள் பித்தங்கொண்டவர்களுமா யிருக்கி
றார்கள். எப்பிராயீமின் காவற்காரர் என் தே 8
வனோடு எதிர்த்து நிற்கிறார்கள்; [17]தீர்க்கதரிசி
தன் வழிகளிலெல்லாம் குருவி பிடிக்கிறவ
னுடைய கண்ணியாகவும், தன் தேவனுடைய
ஆலயத்திலே பகையாளியாகவும் இருக்கி
றான். கிபியாவின் நாட்களில் நடந்ததுபோல, 9
[18]அவர்கள் தங்களை மிகவும் கெடுத்துக்கொண்
டார்கள்; அவர்களுடைய அக்கிரமத்தை அவர்
நினைப்பார், அவர்களுடைய பாவங்களை விசா
ரிப்பார். வனாந்தரத்தில் திராட்சக்குலைகளைக் 10
கண்டுபிடிப்பதுபோல [19]இஸ்ரவேலைக் கண்டு
பிடித்தேன்; அத்திமரத்தில் முதல்தரம் பழு
த்த கனிகளைப்போல உங்கள் பிதாக்களைக்
கண்டுபிடித்தேன்; ஆனாலும் அவர்கள் பாகால்

[1] சங். 78. 9: 78. 57
[2] உபா. 28. 49
[3] சங். 78. 34. தீத். 1. 16
[4] 2 இரா. 15. 13, 17, 25
[5] எரே. 13. 27
[6] நீதி. 22. 8
[7] இரா. 17. 6. எரே. 22. 28
[8] எசே. 16. 37
[9] உபா. 4. 6, 8. சங். 119. 18: 147. 19, 20
[10] எரே. 7. 21: 14. 10, 12
[11] உபா. 32. 18. ஏசா. 29. 23. எரே. 17. 27. எபே. 2. 10
* எண்ணெயாலையுஞ் செக்கும்
† அடிமைத்தனத்துக்கு
[12] எசே. 4. 13
[13] ஏசா. 1. 11-15
[14] ஆமோ. 8. 11, 12. யோவா. 6. 51
‡ நோப்=மெம்பிஸ். ஏசா. 19. 13
[15] ஏசா. 5. 6: 32. 13
§ தண்டனை
[16] எசே. 13. 3. மீகா 2. 11. செப். 3. 4
[17] எரே. 6. 17
[18] நியா. 19. 22
[19] உபா. 32. 10. ஏசா. 28. 4

பேயோர் அண்டைக்குப் போய், இலச்சை
யானதற்குத் தங்களை ஒப்புவித்து, [1]தாங்கள்
நேசித்தவைகளைப்போலத் தாங்களும் அரு
11 வருப்புள்ளவர்களானார்கள். எப்பிராயீமின்
மகிமை ஒரு பறவையைப்போல் பறந்து
போம்; அது பிறப்பதுமில்லை, வயிற்றிலிருப்
12 பதுமில்லை, கர்ப்பந்தரிப்பதுமில்லை. அவர்
கள் தங்கள் பிள்ளைகளை வளர்த்தாலும், அவர்
களுக்கு மனுஷர் இராதபடிக்கு அவர்களைப்
பிள்ளைகள் அற்றவர்களாக்குவேன்; [2]நான்
அவர்களை விட்டுப்போகையில் அவர்களுக்கு
13 ஐயோ! நான் எப்பிராயீமைத் தீருவின் திசை
மட்டும் இருக்கிறதைப் பார்க்கிறபோது, அது
நல்ல வசதியான ஸ்தலத்திலே நாட்டப்பட்டி
ருக்கிறது; [3]ஆனாலும் எப்பிராயீமர் தங்கள்
குமாரரைக் கொலைசெய்கிறவனிடத்தில் வெ
14 ளியே கொண்டுபோய் விடுவார்கள். **கர்த்தா**
வே, நீர் அவர்களுக்குக் கொடுப்பதைக் கொ
டும்; [4]அவர்களுக்கு விழுந்துபோகிற கர்ப்பத்
15 தையும் பாலற்ற முலைகளையும் கொடும். அவர்
களுடைய பொல்லாப்பெல்லாம் கில்காலிலே
நடக்கும்; [5]அங்கே நான் அவர்களை வெறுத்
தேன்; [6]அவர்களுடைய பொல்லாப்பினிமித்
தம் அவர்களை நான் என் சமுகத்தைவிட்டுத்
துரத்துவேன்; இனி அவர்களை நேசிக்கமாட்
டேன்; அவர்களுடைய அதிபதிகள் எல்லா
16 ரும் துரோகிகள். எப்பிராயீமர் வெட்டுண்டு
போனார்கள்; அவர்கள் வேர் உலர்ந்துபோ
யிற்று, கனிகொடுக்கமாட்டார்கள்; அவர்கள்
பிள்ளைகளைப் பெற்றாலும், அவர்களுடைய
கர்ப்பத்தின் பிரியமான கனிகளை அதம்பண்
17 ணுவேன். அவர்கள் அவருக்குச் செவிகொ
டாமற்போனபடியால் என் தேவன் அவர்
களை வெறுத்துவிடுவார்; [7]அவர்கள் அந்நிய
ஜாதிகளுக்குள்ளே அலைந்து திரிவார்கள்.

**10** இஸ்ரவேல் பலனற்ற திராட்சச்செடி,
அது தனக்குத்தானே கனிகொடுக்கிறது;
அவன் தன் கனியின் திரளுக்குச் சரியாய்ப்
பலிபீடங்களைத் திரளாக்குகிறான்; [8]தங்கள்
தேசத்தின் செழிப்புக்குச் சரியாய்ச் சிறப்பான
2 சிலைகளைச் செய்கிறார்கள். அவர்கள் இருத
யம் பிரிக்கப்பட்டிருக்கிறது; [9]இப்போதும்
குற்றஞ்சுமத்தப்படுவார்கள்; அவர் பலி
பீடங்களை இடித்து, அவர்கள் சிலைகளை நாச
3 மாக்குவார். நாம் **கர்த்தருக்குப்** பயப்படா
மற் போனபடியினால் நமக்கு ராஜா இல்லை;
[10]ராஜா இருந்தாலும் நமக்காக என்ன செய்
வான் என்று இனிச் சொல்லுவார்கள்.
4 பொய்யாணையிடுகிற வார்த்தைகளைச் சொ
ல்லி, உடன்படிக்கை பண்ணிக்கொண்டார்
கள்; [11]ஆகையால் வயல்வெளியின் படைச்
சால்களில் விஷப்பூண்டுகளைப்போல நியா
5 யத்தீர்ப்பு முளைக்கும். சமாரியாவின் குடி
கள் பெத்தாவேனிலுள்ள கன்றுக்குட்டியினி
மித்தம் பயம் அடைவார்கள்; [12]அதற்காகக் களி
கூர்ந்த அதின் ஜனமும், அதின் பூசாசாரிக
ளும் அதின் மகிமை அதைவிட்டு நீங்கிப்போ
யிற்றென்று அதற்காகத் துக்கங்கொண்டாடு
வார்கள். அதுவும் அசீரியாவிலே யாரேப் 6
ராஜாவுக்குக் காணிக்கையாகக் கொண்டுபோ
கப்படும்; எப்பிராயீம் இலச்சையடைவான்;
[13]இஸ்ரவேல் தன் ஆலோசனையினாலே வெட்
கப்படுவான். சமாரியாவின் ராஜா தண்ணீ 7
ரின்மேல் இருக்கிற *நுரையைப்போல் அழி
ந்துபோவான். இஸ்ரவேலுடைய பாவமா 8
கிய ஆபேனின் மேடைகள் அழிக்கப்படும்;
[14]முட்செடிகளும் முட்பூண்டுகளும் அவர்கள்
பலிபீடங்களின்மேல் முளைக்கும்; [15]பர்வதங்
களைப் பார்த்து எங்களை மூடுங்கள் என்றும்,
குன்றுகளைப் பார்த்து எங்கள்மேல் விழுங்கள்
என்றும் சொல்லுவார்கள். இஸ்ரவேலே, நீ 9
கிபியாவின் நாட்கள்முதல் பாவஞ்செய்து வந்
தாய்; கிபியாவிலே அக்கிரமக்காரர்மேல் வந்த
யுத்தம் தங்களைக் கிட்டுவதில்லையென்று அந்த
நிலையிலே நிற்கிறார்கள். நான் அவர்களை 10
தண்டிக்க விரும்புகிறேன்; [16]அவர்கள் செய்த
இரண்டுவித பாவங்களினிமித்தம் கட்டப்
படும்போது, ஜனங்கள் அவர்களுக்கு விரோ
தமாய்க் கூடுவார்கள். எப்பிராயீம் நன்றாய்ப் 11
பழக்கப்பட்டுப் போரடிக்க விரும்புகிற [17]கடா
ரியாயிருக்கிறான்; ஆனாலும் நான் அவன் அழ
கான கழுத்தின்மேல் நுகத்தடியை வைப்
பேன்; எப்பிராயீமை ஏர்பூட்டி ஓட்டுவேன்;
யூதா உழுவான், யாக்கோபு அவனுக்குப் பரம்
படிப்பான். நீங்கள் நீதிக்கென்று விதைவிதை 12
யுங்கள்; தயவுக்கொத்ததாய் அறுப்பு அறுங்
கள்; உங்கள் தரிசு நிலத்தைப் பண்படுத்துங்
கள்; [18]**கர்த்தர்** வந்து உங்கள்மேல் நீதியை வரு
ஷிக்கப்பண்ணுமட்டும், அவரைத்தேடக் கால
மாயிருக்கிறது. அநியாயத்தை உழுதீர்கள், 13
[19]தீவினையை அறுத்தீர்கள்; பொய்யின் கனி
களைப் புசித்தீர்கள்; உங்கள் வழியையும் உங்
கள் பராக்கிரமசாலிகளின் திரளையும் நம்பி
னீர்கள். ஆகையால் உங்கள் ஜனங்களுக்குள் 14
அமளி எழும்பும்; [20]பிள்ளைகளின்மேல் †தாய்
மோதியடிக்கப்பட்ட யுத்தநாளிலே பெத்தார்
பேலை சல்மான் அழித்ததுபோல, உங்கள்
எல்லா அரண்களும் அழிக்கப்படும். உங்கள் 15
கொடிய பொல்லாப்பினால் பெத்தேல் இப்
படிப்பட்டதை உங்களுக்குச் செய்யும்; [21]அதி
காலமே இஸ்ரவேலின் ராஜா முற்றிலும் சங்
கரிக்கப்படுவான்.

இஸ்ரவேல் இளைஞனாயிருந்தபோது நான் **11**
அவனை நேசித்தேன்; [22]எகிப்திலிருந்து என்
னுடைய குமாரனை வரவழைத்தேன். அவர் 2
கள் தங்களை அழைக்கிறவர்களின் முகத்துக்கு
விலகிப்போய்விட்டார்கள்; [23]பாகால்களுக்குப்
பலியிட்டு, விக்கிரகங்களுக்குத் தூபங்காட்டி
னார்கள். நான் எப்பிராயீமைக் கைபிடித்து 3
நடக்கப் பழக்கினேன்; [24]ஆனாலும் நான் தங்க
ளைக் குணமாக்குகிறவரென்று அறியாமற்போ
னார்கள். மனுஷரைக் கட்டி இழுக்கிற அன்பி 4
ன் கயிறுகளால் நான் அவர்களை இழுத்தேன்,
[25]அவர்கள் கழுத்துகளின்மேல் இருந்த நுகத்த

1 எரே. 5. 31; 11. 13. எசே. 20. 8
2 உபா. 31. 17
3 எசே. 27. 2
4 லூக். 23. 29
5 12. 11
6 சங். 78. 60
7 உபா. 28. 61, 65
8 எரே. 2. 28
9 மத். 6. 24
10 13. 11. மீகா. 4. 9
11 ஆமோ. 5. 7. அப். 8. 32. எபி. 12. 15
12 1 இரா. 12. 28, 29. செப். 1. 4
13 எரே. 2. 37
* குரும்பை
14 1 இரா. 12. 30
15 ஏசா. 2. 19. லூக். 23. 30. வெளி. 6. 16; 9. 6
16 உபா. 28. 63
17 எரே. 50. 11. மீகா 4. 13
18 நீதி. 11. 18. எரே. 4. 3
19 யோபு 4. 8. நீதி. 22. 8. கலா. 6. 7, 8
20 2 இரா. 18. 34; 19. 13
† பிள்ளைகளோடே தாய். 13. 16
21 7. வச
22 யாத். 4. 22, 23. மத். 2. 15
23 2 இரா. 17. 16
24 யாத். 15. 26. உபா. 1. 31. ஏசா. 46. 3
25 லேவி. 26. 13

டியை எடுத்துப்போடுகிறவனைப்போல் இரு
ந்து, அவர்கள் பட்சம் சாய்ந்து, அவர்களுக்கு
5 ஆகாரங்கொடுத்தேன். மனந்திரும்பமாட்டோ
மென்றதினுல் அவர்கள் எகிப்துதேசத்துக்குத்
திரும்பிப் போவதில்லை; [1]அசீரியன் அவர்க
6 ளுக்கு ராஜா. ஆகையால் அவர்களுடைய
ஆலோசனைகளினிமித்தம் பட்டயம் அவர்கள்
பட்டணங்களுக்குள் பாய்ந்து, அவர்கள் தாழ்ப்
பாள்களை நிர்மூலம்பண்ணி அவர்களைப் பட்
7 சிக்கும். என் ஜனங்கள் என்னைவிட்டு விலகு
கிற மாறுபாட்டைப் பற்றிக்கொண்டிருக்கிறார்
கள்; [2]அவர்களை உன்னதமானவரிடத்தில் வர
வழைத்தாலும் ஒருவனும் எழும்புகிறதில்லை.
8 எப்பிராயீமே, நான் உன்னை எப்படிக் கை
விடுவேன்? [3]இஸ்ரவேலே, நான் உன்னை
எப்படி ஒப்புக்கொடுப்பேன்? நான் உன்னை
எப்படி அத்மாவைப்போலாக்குவேன்? [4]உன்
னை எப்படி செபோயீமைப்போல வைப்
பேன்? [5]என் இருதயம் எனக்குள் குழம்பு
கிறது; என் பரிதாபங்கள் ஏகமாய்ப் பொங்கு
9 கிறது. என் உக்கிர கோபத்தின்படியே செய்
யமாட்டேன்; எப்பிராயீமை அழிக்கும்படித்
திரும்பமாட்டேன்; ஏனென்றால் நான் மனு
ஷனல்ல, [6]தேவனுயிருக்கிறேன்; நான் உன்
நடுவிலுள்ள பரிசுத்தர்; ஆகையால் பட்டணத்
10 துக்கு விரோதமாக வரேன். அவர்கள் கர்த்
தரைப் பின்பற்றுவார்கள்; [7]அவர் சிங்கத்தைப்
போல் கெர்ச்சிப்பார்; அவர் கெர்ச்சிக்கும்
போது அவர்கள் சந்ததியார் மேற்குத்திசையி
11 லிருந்து நடுங்கி வருவார்கள். எகிப்திலிருந்து
குருவிகளைப்போலவும், அசீரியா தேசத்திலி
ருந்து புறாக்களைப்போலவும் பயந்து வருவார்
கள்; [8]அப்பொழுது அவர்களை அவர்கள் வீடு
களில் குடியிருக்கப் பண்ணுவேன் என்று
கர்த்தர் சொல்லுகிறார்.
12 எப்பிராயீமர் பொய்களினாலும், இஸ்ர
வேல் வம்சத்தார் வஞ்சகத்தினாலும் என்னைச்
சூழ்ந்துகொண்டிருக்கிறார்கள்; யூதாவோவெ
னில் இன்னும் தேவனோடே அரசாண்டு,
பரிசுத்தவான்களோடே உண்மையாயிருக்கி
**12** றான். எப்பிராயீம் காற்றை மேய்ந்து, [9]கொ
ண்டற் காற்றைப் பின்தொடருகிறான்; அவன்
நாள்தோறும் பொய்யையும் கேட்டையும் வர்த்
திக்கப்பண்ணி, அசீரியரோடே உடன்படிக்
கை பண்ணுகிறான்; [10]எகிப்துக்கு எண்ணெய்
2 கொண்டுபோகப்படுகிறது. யூதாவோடும் கர்த்
தருக்கு வழக்கு இருக்கிறது, [11]அவர் யாக்கோ
பை அவன் வழிகளுக்குத் தக்கதாக விசாரிக்
கப்போகிறார்; அவன் கிரியைகளுக்குத் தக்க
தாக அவனுக்கு நீதியைச் சரிக்கட்டுவார்.
3 அவன் தாயின் கர்ப்பத்திலே தன் சகோதர
னுடைய குதிகாலைப் பிடித்தான்; [12]தன் பெல
4 த்தினால் தேவனோடே போராடினான். அவன்
தூதனானவரோடே போராடி மேற்கொண்
டான், அழுது அவரை நோக்கிக் கெஞ்சி
னான்; [13]பெத்தேலிலே அவர் அவனைக் கண்டு
சந்தித்து, அவ்விடத்திலும் நம்மோடே பேசி
னார். கர்த்தராகிய அவர் சேனைகளின் தே 5
வன்; யேகோவா என்பது அவருடைய *நாம
சங்கீர்த்தனம். இப்போதும் நீ உன் தேவனி 6
டத்தில் திரும்பு; [14]தயவையும் நியாயத்தையும்
கைக்கொண்டு, [15]இடைவிடாமல் உன் தே
வனை நம்பிக்கொண்டிரு.
அவன் வியாபாரி, [16]கள்ளத்தராசு அவன் 7
கையில் இருக்கிறது; அநியாயஞ்செய்ய விரும்
புகிறான். எப்பிராயீம்: [17]நான் ஐசுவரியவானா 8
னேன்; நான் பொருளைச் சம்பாதித்தேன்;
நான் பிரயாசப்பட்டுத் தேடின எல்லாவற்றி
லும் பாவமாகிய அக்கிரமம் என்னிடத்தில்
கண்டுபிடிக்கப்படுவதில்லை யென்று சொல்
லுகிறான். உன்னை எகிப்துதேசத்திலிருந்து 9
அழைத்துவந்தது முதற்கொண்டு உன் தேவ
னாகிய கர்த்தராயிருக்கிற நான், [18]பண்
டிகை நாட்களில் செய்யப்படுகிறதுபோல்,
திரும்பவும் உன்னைக் கூடாரங்களில் தாபரிக்
கப்பண்ணுவேன். அப்படியே தீர்க்கதரிசிக 10
ளோடே சொன்னேன்; [19]நான் அநேகம் தரி
சனங்களை அருளினேன்; தீர்க்கதரிசிகளைக்
கொண்டு உவமைகளால் பேசினேன். கீலே 11
யாத் அக்கிரம ஸ்தலமோ? [20]ஆம், அவர்கள்
அபத்தரானார்கள்; கில்காலிலே காளைகளைப்
பலியிடுகிறார்கள்; அவர்களுடைய பீடங்கள்
வயல்வரப்புகளில் இருக்கிற கற்குவியல்களைப்
போல் இருக்கிறது. யாக்கோபு சீரியா தேசத் 12
துக்கு ஓடிப்போய், [21]இஸ்ரவேல் ஒரு பெண்
ணுக்காக ஊழியஞ்செய்து, ஒரு பெண்ணுக்
காக ஆடு மேய்த்தான். கர்த்தர் ஒரு தீர்க்கதரி 13
சியைக்கொண்டு இஸ்ரவேலை எகிப்திலிருந்து
புறப்படப்பண்ணினார்; [22]தீர்க்கதரிசியினால்
காக்கப்பட்டான். எப்பிராயீமோ அவரை 14
மிகவும் கோபப்படுத்தினான்; [23]ஆகையால்
அவனுடைய ஆண்டவர் அவனுடைய இரத்
தப்பழிகளை அவன்மேல் சுமத்தி, அவன்
செய்த நிந்தையை அவன்மேல் திருப்புவார்.
எப்பிராயீம் பேசினபோது நடுக்கமுண் **13**
டாயிற்று; அவன் இஸ்ரவேலிலே மேன்மை
பெற்றான்; [24]அவன் பாகால் விஷயத்தில் குற்
றஞ்செய்து மடிந்துபோனான். இப்போதும் 2
அவர்கள் அதிகமதிகமாய்ப் பாவஞ்செய்து,
[25]தங்கள் வெள்ளியினால் வார்ப்பித்த சுரூபங்க
ளையும், தங்கள் புத்திக்கேற்க விக்கிரகங்களையும்
தங்களுக்கு உண்டுபண்ணுகிறார்கள்; இவைக
ளெல்லாம் தட்டாருடைய வேலை; †மனுஷ
ரில் பலியிடுகிறவர்கள் கன்றுக்குட்டிகளை முத்
தமிடலாமென்று இவைகளைக்குறித்துச் சொ
ல்லுகிறார்கள். ஆகையால் அவர்கள் காலை 3
யில் காணும் மேகத்தைப்போலவும், [26]விடி
யற்காலையில் ஒழிந்துபோகிற பனியைப்போ
லவும், பெருங்காற்று களத்திலிருந்து பறக்
கடிக்கிற பதரைப்போலவும், புகைக்கூண்டில்
ஏறிப்போகிற புகையைப்போலவும் இருப்
பார்கள். நான் உன்னை எகிப்துதேசத்திலிரு 4
ந்து அழைத்துவந்ததுமுதல் உன் தேவனாகிய
கர்த்தராயிருக்கிறேன்; [27]ஆகையால் நீ என்னை

1 2 இரா. 17. 13, 14
2 ஏசா. 3. 6
3 ஆதி. 9. 7
4 ஆதி. 14. 8
5 உபா. 32. 36. ஏசா. 63. 15. எரே. 31. 20
6 எண். 23. 19. ஏசா. 55. 8, 9. மல். 3. 6.
7 ஏசா. 31. 4. யோவே. 3. 16. ஆமோ. 1. 2
8 எசே. 28. 25, 26
9 3. 7. 2 இரா. 17. 4
10 ஏசா. 57. 9
11 மீகா. 6. 2. கலா. 6. 7, 8
12 ஆதி. 25. 26; 32. 24
13 ஆதி. 28. 11–19; 35. 9–15
* பேர் பிரஸ்தாபம். யாத். 3. 15. சங். 135. 13
14 சங். 37. 7. மீகா. 6. 8
15 சங். 37. 7
16 நீதி. 11. 1. ஆமோ. 8. 5
17 சகரி. 11. 5. வெளி. 3. 17
18 லேவி. 23. 42, 43. நெகே. 8. 17. சகரி. 14. 16
19 2 இரா. 17. 13, 14
20 ஆமோ. 5. 5
21 ஆதி. 28, 29. உபா. 26. 5
22 சங். 77. 20. ஏசா. 63. 11. மீகா. 6. 4
23 உபா. 28. 37. எசே. 18. 13
24 2 இரா. 17. 16, 18
25 ஏசா. 1. 5
† மனுஷரை
26 6. 4. தானி. 2. 35
27 ஏசா. 43. 11; 45. 21

யன்றி வேறே தேவனை அறியவேண்டாம்;
என்னையன்றி ரட்சகர் ஒருவரும் இல்லை.
5 நான் உன்னை மகா வறட்சியான தேசமாகிய
6 வனாந்தரத்திலே [1]அறிந்துகொண்டேன். தங்
களுக்கு இருந்தமேய்ச்சலினால்திருப்தியானார்
கள்; [2]திருப்தியானபின்பு அவர்கள் இருதயம்
மேட்டிமையாயிற்று; அதினால் என்னை மறந்
7 தார்கள். ஆகையால் நான் அவர்களுக்குச் சிங்
கத்தைப்போல் இருப்பேன்; [3]சிவிங்கியைப்
8 போல் வழியருகே பதிவிருப்பேன். குட்டி
களைப் பறிகொடுத்த கரடியைப்போல நான்
அவர்களை எதிர்த்து, [4]அவர்கள் ஈரற்குலையைக்
கிழித்து, அவர்களை அங்கே சிங்கம் பட்சிக்கி
றதுபோல் பட்சித்துப்போடுவேன்; காட்டு
9 மிருகங்கள் அவர்களைப் பீறிப்போடும். இஸ்ர
வேலே, நீ உனக்குக் கேடுண்டாக்கிக்கொண்
டாய்; [5]ஆனாலும் என்னிடத்தில் உனக்குச்
10 சகாயம் உண்டு. எனக்கு ராஜாவையும் அதி
பதிகளையும் ஏற்படுத்தவேண்டும் என்றாயே;
[6]இப்போதும் உன்னுடைய எல்லாப் பட்ட
ணங்களிலும் உன்னை ரட்சிக்கும் ராஜா எங்
11 கே? உன் நியாயாதிபதிகள் எங்கே? நான்
கோபத்திலே உனக்கு ராஜாவைக் கொடுத்
தேன்; [7]என் உக்கிரத்திலே அவனை எடுத்துக்
12 கொண்டேன். எப்பிராயீமின் அக்கிரமம்
கட்டிவைத்திருக்கிறது; [8]அவன் பாவம் பத்தி
13 ரப்படுத்தப்பட்டிருக்கிறது. பிரசவஸ்திரீயின்
வேதனை அவனுக்கு வரும்; [9]அவன் விவேக
மில்லாத பிள்ளை; பேறுகாலமட்டும் அவன்
14 நிற்கவில்லை. அவர்களை நான் பாதாளத்தின்
வல்லமைக்கு நீங்கலாக்கி மீட்பேன்; அவர்
களை மரணத்துக்கு நீங்கலாக்கி விடுவிப்பேன்;
[10]மரணமே, உன் வாதைகள் எங்கே? பாதாள
மே, உன் சங்காரம் எங்கே? [11]மனமாறுதல்
என் கண்களுக்கு மறைவானதாயிருக்கும்.
15 இவன் சகோதரருக்குள்ளே ஜனம் பெருத்த
வனாயிருந்தாலும், **கர்த்தருடைய** காற்றாகிய
கீழ்க்காற்று வனாந்தரத்திலிருந்து எழும்பிவ
ரும்; [12]அதனால் அவனுடைய ஊற்றுகள் வற்
றிப்போகும்; அவனுடைய துரவு சுவறிப்போ
கும்; அது இச்சிக்கப்படத்தக்க சகல பதார்த்
தங்களுள்ள உத்தம பதார்த்தங்களையும் வாரிக்
16 கொண்டு போகும். சமாரியா தன் தேவனுக்கு
விரோதமாகக் கலகம்பண்ணினபடியால், குற்
றஞ் சுமத்தப்பட்டதாயிருக்கும்; [13]அவர்கள்

1 உபா. 2. 7; 32. 10. சங். 63. 1
2 உபா. 8. 12, 14; 32. 15
3 எரே. 5. 6. புல. 3. 10
4 2 சாமு. 17. 8. நீதி. 17. 12
5 நீதி. 6. 32. மல். 1. 9
6 1 சாமு. 8. 5, 19. 2 இரா. 17. 4
7 1 சாமு. 8. 7; 31. 2-4
8 உபா. 32. 34. யோபு 14. 17
9 நீதி. 22. 3. ஏசா. 13. 8. எரே. 30. 6
10 ஏசா. 25. 8. எசே. 37. 12. 1 கொரி. 15. 54, 55
11 எரே. 15. 6. ரோ. 11. 29
12 ஆதி. 41. 52. எரே. 4. 11. எசே. 17. 10
13 2 இரா. 17. 6. 18. 12. ஏசா. 13. 16. ஆமோ. 1. 13
14 யோவே. 2. 13
15 எபி. 13. 15
* ஸ்தோத்திரபலி களை
16 உபா. 17. 16. எரே. 31. 18
17 சங். 10. 14; 68. 5
18 எரே. 5. 6; 14. 7. எபே. 1. 6
19 யோபு 29. 19. நீதி. 19. 12
20 சங். 52. 8; 128. 3
21 ஆதி. 27. 27. உன்னத. 4. 11
22 சங். 91. 1. உன்னத. 2. 3
23 எரே. 31. 18. யாக். 1. 17
24 சங். 107. 43. எரே. 9. 12. தானி. 12. 10. யோ. 8. 47
25 நீதி. 10. 29. லூக். 2. 34. 2 கொரி. 2. 16. 1 பே. 2. 7, 8

பட்டயத்தால் விழுவார்கள்; அவர்களுடைய
குழந்தைகள் மோதியடிக்கப்படும்; அவர்க
ளுடைய கர்ப்பவதிகள் கீறப்பட்டுப் போ
வார்கள்.

இஸ்ரவேலே, உன் தேவனாகிய **கர்த்தரி** **14**
**டத்தில்** திரும்பு; [14]நீ உன் அக்கிரமத்தினால்
விழுந்தாய். வார்த்தைகளைக்கொண்டு **கர்த்த** 2
**ரிடத்தில்** திரும்புங்கள்; அவரை நோக்கி: தே
வரீர் எல்லா அக்கிரமத்தையும் நீக்கி, எங்க
ளைத் தயவாய் அங்கீகரித்தருளும்; [15]அப்பொ
ழுது நாங்கள் எங்கள் *உதடுகளின் காளை
களைச் செலுத்துவோம். அசீரியா எங்களை 3
ரட்சிப்பதில்லை; நாங்கள் குதிரைகளின்மேல்
ஏறமாட்டோம்; எங்கள் கைகளின் கிரியை
யைப் பார்த்து: [16]நீங்கள் எங்கள் தேவர்கள்
என்று இனிச் சொல்லமாட்டோம்; [17]திக்கற்ற
வன் உம்மிடத்தில் இரக்கம் பெறுகிறான் என்
று சொல்லுங்கள். நான் அவர்கள் சீர்கேட் 4
டைக் குணமாக்குவேன்; [18]அவர்களை மனப்பூர்
வமாய்ச் சிநேகிப்பேன்; என் கோபம் அவர்களை
விட்டு நீங்கிற்று. நான் இஸ்ரவேலுக்குப் பனி 5
யைப்போலிருப்பேன்; [19]அவன் லீலிப்புஷ்
பத்தைப்போல் மலருவான்; லீபனோனைப்
போல் வேரூன்றி நிற்பான். அவன் கிளைகள் ஓங் 6
கிப் படரும், [20]அவன் அலங்காரம் ஒலிவமரத்
தினுடைய அலங்காரத்தைப்போலவும், [21]அவ
னுடைய வாசனை லீபனோனுடைய வாசனை
யைப்போலவும் இருக்கும். அவன் நிழலில் 7
குடியிருக்கிறவர்கள் திரும்புவார்கள்; [22]தானிய
விளைச்சலைப்போலச் செழித்து, திராட்சச்
செடிகளைப்போலப் படருவார்கள்; அவன்
வாசனை லீபனோனுடைய திராட்சரசத்தின்
வாசனையைப்போல இருக்கும். இனி எனக் 8
கும் விக்கிரகங்களுக்கும் என்ன என்று எப்
பிராயீம் சொல்லுவான்; [23]நான் அவனுக்குச்
செவிகொடுத்து, அவன்மேல் நோக்கமாயிருந்
தேன்: நான் பச்சையான தேவதாரு விருட்
சம்போலிருக்கிறேன்; என்னாலே உன் கனி
யுண்டாயிற்று என்று எப்பிராயீம் சொல்லு
வான். இவைகளை உணரத்தக்க ஞானமுள் 9
ளவன் யார்? [24]இவைகளைக் கிரகிக்கத்தக்க
புத்தியுள்ளவன் யார்? [25]**கர்த்தருடைய** வழிகள்
செம்மையானவைகள், நீதிமான்கள் அவை
களில் நடப்பார்கள்; பாதகரோவென்றால்
அவைகளில் இடறி விழுவார்கள்.

JOEL

# யோவேல்

1 பெத்துவேலின் குமாரனாகிய யோவே
லுக்கு உண்டான **கர்த்தருடைய** வசனம்.
2 முதியோரே, இதைக் கேளுங்கள்; தேசத்
தின் சகல குடிகளே, செவிகொடுங்கள்; [1]உங்
கள் நாட்களிலாவது உங்கள் பிதாக்களின்
நாட்களிலாவது இப்படிப்பட்டது சம்பவித்த
3 துண்டா? இதின் செய்தியை உங்கள் பிள்
ளைகளுக்குத் தெரிவியுங்கள்; [2]இதை உங்கள்
பிள்ளைகள் தங்கள் பிள்ளைகளுக்கும், அவர்
கள் தங்கள் பிள்ளைகளுக்கும் சந்ததியாருக்கும்
4 தெரிவிக்கக் கடவர்கள். பச்சைப்புழு விட்
டதை வெட்டுக்கிளி தின்றது; [3]வெட்டுக்கிளி
விட்டதைப் பச்சைக்கிளி தின்றது; பச்சைக்
கிளி விட்டதை முசுக்கட்டைப்பூச்சி தின்றது.
5 வெறியரே, விழித்து அழுங்கள்; திராட்சரசம்
குடிக்கிற சகல ஜனங்களே, புது திராட்ச
ரசத்தினிமித்தம் அலறுங்கள்; [4]அது உங்கள்
6 வாயினின்று விலக்கப்பட்டது. எண்ணிமுடி
யாத ஒரு பலத்த ஜாதி என் தேசத்தின்மேல்
வருகிறது; [5]அதின் பற்கள் சிங்கத்தின் பற்
கள்; துஷ்டசிங்கத்தின் கடைவாய்ப்பற்கள்
7 அதற்கு உண்டு. அது என் திராட்சச்செடி
யை அழித்து, [6]என் அத்திமரத்தை உரித்து,
அதின் பட்டையை முற்றிலும் தின்றுபோட்
டது; அதின் கிளைகள் வெண்மையாயிற்று.
8 தன் பாலிய வயதின் புருஷனுக்காக [7]இரட்
டுடுத்தியிருக்கிற பெண்ணைப்போலப் புலம்பு.
9 போஜனபலியும் பானபலியும் **கர்த்தருடைய**
ஆலயத்தை விட்டு அற்றுப்போயின; **கர்த்த
ரின்** ஊழியக்காரராகிய ஆசாரியர்கள் துக்கிக்
10 கிறார்கள். வயல்வெளி பாழாயிற்று, பூமி
துக்கங்கொண்டாடுகிறது; [8]விளைச்சல் அழிக்
கப்பட்டது; புது திராட்சரசம் வற்றிப்போ
11 யிற்று; எண்ணெய் மாண்டுபோயிற்று. பயிரி
டுங்குடிகளே, வெட்கப்படுங்கள்; [9]கோதுமை
யும் வாற்கோதுமையும் இல்லாமற்போயிற்று;
திராட்சத் தோட்டக்காரரே, அலறுங்கள்;
வயல்வெளியின் அறுப்பு அழிந்துபோயிற்று.
12 திராட்சச்செடி வதங்கி, அத்திமரம் சாரமற்
றுப்போகிறது; [10]மாதளை, பேரீச்சம், கிச்சிலி
முதலிய வெளியின் செடிகள் எல்லாம் வாடிப்
போயின; [11]சந்தோஷம் மனுபுத்திரரைவிட்டு
13 ஒழிந்துபோயிற்று. ஆசாரியர்களே, இரட்

1 2. 2
2 சங். 78. 4
3 2. 25. உபா. 28 38
4 ஏசா. 32. 10
5 2. 2, 11. நீதி. 30. 25–27. வெளி. 9. 7–10
6 ஏசா. 5. 6
7 நீதி. 2. 17. ஏசா. 22. 12. எரே. 3. 4
8 எரே. 12. 11
9 எரே. 14. 3, 4
10 ஆப. 3. 17, 18
11 ஏசா. 9. 3; 24. 11. எரே. 9. 21; 48. 33
12 எரே. 4. 8
13 2. 15, 16. லேவி. 23. 36. 2 நாளா. 20. 3, 4, 13
14 ஏசா. 13. 6, 9. எரே. 30. 7
15 உபா. 12. 6, 7. சங். 43. 4
16 ஓசி. 4. 3
17 சங். 50. 15. எரே. 9. 10. ஓசி. 18. 1–7
18 1 இரா. 18. 5. யோபு. 38. 41. சங். 104. 21; 145. 15
19 1. 15. எண். 10. 5, 9. எரே. 4. 5. செப். 1. 14, 15
20 ஆமோ. 5. 18, 20
21 யாத். 10. 14

டுடுத்திப் புலம்புங்கள்; [12]பலிபீடத்தின் பணி
விடைக்காரரே, அலறுங்கள்; என் தேவனு
டைய தொண்டரே, நீங்கள் உள்ளே பிரவே
சித்து இரட்டுடுத்தவர்களாய் இராத்தங்குங்
கள்; உங்கள் தேவனுடைய ஆலயத்தில் போ
ஜனபலியும் பானபலியும் செலுத்தப்படாமல்
நிறுத்தப்பட்டது. பரிசுத்த உபவாசநாளை நிய 14
மியுங்கள்; [13]விசேஷித்த ஆசரிப்பைக் கூறுங்
கள்; மூப்பரையும் தேசத்தின் எல்லாக் குடிக
ளையும், உங்கள் தேவனாகிய **கர்த்தரின்** ஆலயத்
திலே கூடிவரச்செய்து **கர்த்தரை** நோக்கிக்
கூப்பிடுங்கள். அந்த நாளினிமித்தம் ஐயோ! 15
[14]**கர்த்தருடைய** நாள் சமீபமாயிருக்கிறது; அது
சங்காரம்போல சர்வ வல்லவரிடத்திலிருந்து
வருகிறது. நம்முடைய கண்களைவிட்டு ஆகா 16
ரமும், [15]நம்முடைய தேவனின் ஆலயத்தை
விட்டுச் சந்தோஷமும் மகிழ்ச்சியும் நீக்கப்பட
வில்லையோ? விதையானது மண்கட்டிகளின் 17
கீழ் மக்கிப்போயிற்று; பயிர் தீய்ந்துபோகிறதி
னால் பண்டசாலைகள் பாழாகிக் களஞ்சியங்
கள் இடிந்துபோயின. மிருகங்கள் எவ்வளவா 18
ய்த் தவிக்கிறது; [16]மாட்டுமந்தைகள் தங்களுக்கு
மேய்ச்சல் இல்லாததினால் கலங்குகிறது; ஆட்
டுமந்தைகளும் சேதமாய்ப்போயிற்று. **கர்த்** 19
**தரே**, உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன்;
[17]அக்கினி வனாந்தரத்தின் மேய்ச்சல்களைப்
பட்சித்து, ஜுவாலை வெளியின் விருட்சங்களை
யெல்லாம் எரித்துப்போடுகிறது. வெளியின் 20
மிருகங்களும் உம்மை நோக்கிக் கதறுகிறது;
[18]நதிகளில் தண்ணீரெல்லாம் வற்றிப்போ
யிற்று; அக்கினி வனாந்தரத்தின் மேய்ச்சல்
களைப் பட்சித்துப்போட்டது.
சீயோனிலே எக்காளம் ஊதுங்கள், [19]என் 2
பரிசுத்த பர்வதத்திலே எச்சரிப்பின் சத்தமி
டுங்கள்; தேசத்தின் குடிகள் எல்லாம் தத்த
ளிக்கக்கடவர்கள்; ஏனெனில் **கர்த்தருடைய**
நாள் வருகிறது, அது சமீபமாயிருக்கிறது.
அது இருளும் அந்தகாரமுமான நாள்; அது 2
மப்பும் மந்தாரமுமான நாள்; [20]விடியற்கால
வெளுப்பு பர்வதங்களின்மேல் பரவுகிறது
போல ஏராளமான பலத்த ஒரு ஜாதி தீவிர
மாக வந்து பரவும்; [21]அப்படிப்பட்டது முன்
ஒருகாலத்திலும் உண்டானதுமில்லை, இனித்

தலைமுறை தலைமுறையாக வரும் வருஷங்க
3 ளிலும் உண்டாவதுமில்லை. அவைகளுக்கு
முன்னாக அக்கினி பட்சிக்கும், அவைகளுக்
குப் பின்னாக ஜுவாலை எரிக்கும்; [1]அவைக
ளுக்கு முன்னாக தேசம் ஏதேன் தோட்டத்
தைப்போலவும், அவைகளுக்குப் பின்னாகப்
பாழான வனாந்தரத்தைப்போலவும் இருக்
கும்; அவைகளுக்கு ஒன்றும் தப்பிப்போவ
4 தில்லை. அவைகளின் சாயல் குதிரைகளின்
சாயலை ஒத்தது; [2]அவைகள் குதிரைவீரரைப்
5 போல ஓடும். அவைகள் ஓடுகிற ரதங்களின்
இரைச்சல்போலவும், சேத்தைகளை எரிக்கிற
அக்கினிஜுவாலையின் இரைச்சல்போலவும்,
யுத்தத்துக்கு ஆயத்தப்பட்ட பலத்த ஜனத்தின்
இரைச்சல்போலவும், பர்வதங்களுடைய சிக
6 ரங்களின்மேல் குதிக்கும். அவைகளுக்கு
முன்பாக ஜனங்கள் நடுங்குவார்கள்; [3]எல்லா
7 முகங்களும் கருகிப்போகும். அவைகள் பராக்
கிரமசாலிகளைப்போல ஓடும்; யுத்தவீரரைப்
போல மதிலேறும்; வரிசைகள் பிசகாமல்,
ஒவ்வொன்றும் தன் தன் அணியிலே செல்
8 லும். ஒன்றை ஒன்று நெருக்காது; ஒவ்
வொன்றும் தன் தன் பாதையிலே செல்லும்;
அவைகள் ஆயுதங்களுக்குள் விழுந்தாலும்
9 காயம்படாமற்போகும். அவைகள் பட்டணம்
எங்கும் செல்லும்; மதிலின்மேல் ஓடும், வீடு
களின்மேல் ஏறும்; [4]பலகணிவழியாய்த் திரு
10 டனைப்போல உள்ளே நுழையும். அவைக
ளுக்கு முன்பாகப் பூமி அதிரும், [5]வானங்
கள் அசையும்; [6]சூரியனும் சந்திரனும் இரு
ண்டுபோகும்; நட்சத்திரங்கள் ஒளி மழுங்கும்.
11 **கர்த்தர்** தமது சேனைக்குமுன் சத்தமிடுவார்;
அவருடைய பாளயம் மகா பெரிது, அவரு
டைய வார்த்தையின்படி செய்கிறதற்கு வல்ல
மையுள்ளது; **கர்த்தருடைய** நாள் பெரிதும்
மகா பயங்கரமுமாயிருக்கும்; [7]அதைச் *சகிக்
12 கிறவன் யார்? ஆதலால் நீங்கள் இப்பொ
ழுதே உபவாசத்தோடும் அழுகையோடும் புல
ம்பலோடும் உங்கள் முழு இருதயத்தோடும்
[8]என்னிடத்தில் திரும்புங்கள் என்று **கர்த்தர்**
13 சொல்லுகிறார். நீங்கள் உங்கள் வஸ்திரங்க
ளையல்ல, [9]உங்கள் இருதயங்களைக் கிழித்து,
உங்கள் தேவனாகிய **கர்த்தர்** இடத்தில் திரும்
புங்கள்; [10]அவர் இரக்கமும், மன உருக்கமும்,
நீடிய சாந்தமும், மிகுந்த கிருபையுமுள்ளவர்;
அவர் தீங்குக்கு மனஸ்தாபப் படுகிறவருமாயி
14 ருக்கிறார். ஒருவேளை அவர் திரும்பி மனஸ்
தாபப்பட்டு, [11]உங்கள் தேவனாகிய **கர்த்தருக்**
**குப்** போஜனபலிகளையும் பானபலிகளையும்
செலுத்துகிறதற்கான [12]ஆசீர்வாதத்தைத் தந்த
ருளுவார்.
15 சீயோனிலே எக்காளம் ஊதுங்கள், [13]பரி
சுத்த உபவாசநாளை நியமியுங்கள், விசேஷி
16 த்த ஆசரிப்பைக் கூறுங்கள். ஜனத்தைக்
கூட்டுங்கள், சபையைப் பரிசுத்தப்படுத்துங்
கள்; முதியோரைச் சேருங்கள், [14]பிள்ளைகளை
யும் பாலுண்கிற குழந்தைகளையும் கூட்டுங்
கள்; மணவாளன் தன் அறையையும், மண
வாட்டி தன் மறைவையும் விட்டுப் புறப்படு
வார்களாக. **கர்த்தரின்** பணிவிடைக்காரரா 17
கிய ஆசாரியர்கள் மண்டபத்துக்கும் பலிபீ
டத்துக்கும் நடுவே அழுது: [15]**கர்த்தாவே**, நீர்
உமது ஜனத்தைத் தப்பவிட்டுப் புறஜாதிகள்
அவர்களைப் பழிக்கும் நிந்தைக்கு உமது சுதந்
தரத்தை ஒப்புக்கொடாதிரும்; [16]உங்கள் தே
வன் எங்கே என்று புறஜாதிகளுக்குள்ளே
சொல்லப்படுவானேன் என்பார்களாக.

அப்பொழுது **கர்த்தர்** தமது தேசத்துக்காக 18
வைராக்கியங்கொண்டு, [17]தமது ஜனத்தைக்
கடாட்சிப்பார். **கர்த்தர்** மறுமொழி கொடு 19
த்து, தமது ஜனத்தை நோக்கி: இதோ, நான்
உங்களை இனிப் புறஜாதிகளுக்குள்ளே நிந்
தையாக வைக்காமல், [18]உங்களுக்குத் தானி
யத்தையும் திராட்சரசத்தையும் எண்ணெயை
யும் கொடுத்தேன், நீங்கள் அதினால் திருப்தி
யாவீர்கள். வடதிசைச் சேனையை உங்களுக் 20
குத் தூரமாக விலக்கி, அதின் முன்தண்டு
கிழ்க்கடலுக்கும், அதின் பின்தண்டு மேற்கட
லுக்கும் நேராக அதை வறட்சியும் பாழுமான
தேசத்துக்குத் துரத்திவிடுவேன்; [19]அங்கே
அதின் நாற்றம் எழும்பி, அதின் துர்க்கந்தம்
வீசும்; அது பெரிய காரியங்களைச் செய்தது.
தேசமே, பயப்படாதே, மகிழ்ந்து களிகூரு; 21
[20]**கர்த்தர்** பெரிய காரியங்களைச் செய்வார்.
வெளியின் மிருகங்களே [21]பயப்படாதேயுங் 22
கள்; வனாந்தரத்திலே மேய்ச்சல்கள் உண்டா
கும்; விருட்சங்கள் காய்களைக் காய்க்கும்;
அத்திமரமும் திராட்சச்செடியும் பலனைத்த
ரும். சீயோன் குமாரரே, உங்கள் தேவனா 23
கிய **கர்த்தருக்குள்** [22]மகிழ்ந்து களிகூருங்கள்;
அவர் தக்கபடி உங்களுக்கு முன்மாரியைக்
கொடுத்து, உங்களுக்கு முன்மாரியையும் பின்
மாரியையும் ஏற்கனவே வருஷிக்கப்பண்ணு
வார். களங்கள் தானியத்தினால் நிரம்பும்; 24
ஆலைகளில் திராட்சரசமும் எண்ணெயும்
வழிந்தோடும். நான் உங்களிடத்தில் அனுப் 25
பின [23]என் பெரிய சேனையாகிய வெட்டுக்கி
ளிகளும், பச்சைக்கிளிகளும், முசுக்கட்டைப்
பூச்சிகளும், பச்சைப் புழுக்களும் பட்சித்த
வருஷங்களின் விளைவை உங்களுக்குத் திரு
ம்ப அளிப்பேன். நீங்கள் சம்பூரணமாகச் 26
சாப்பிட்டு, திருப்தியடைந்து, உங்களை அதிச
யமாய் நடத்திவந்த உங்கள் தேவனாகிய **கர்த்த**
**ருடைய** நாமத்தைத் துதிப்பீர்கள்; [24]என் ஜனங்
கள் ஒருபோதும்வெட்கப்பட்டுப்போவதில்லை.
நான் இஸ்ரவேலின் நடுவில் இருக்கிறவரென் 27
றும், [25]நானே உங்கள் தேவனாகிய **கர்த்தர்**, வே
றொருவர் இல்லையென்றும் அறிந்துகொள்வீர்
கள்; என் ஜனங்கள் ஒருபோதும் வெட்கப்
பட்டுப்போவதில்லை.

அதற்குப் பின்பு நான் மாம்சமான யாவர் 28
மேலும் என் ஆவியை ஊற்றுவேன்; [26]அப்
பொழுது உங்கள் குமாரரும் உங்கள் குமாரத்
திகளும் தீர்க்கதரிசனஞ் சொல்லுவார்கள்;

1 ஆதி. 2. 8. ஏசா. 51. 3. சகரி. 7. 14
2 வெளி. 9. 7, 9
3 எரே. 8. 21. புல. 4. 8 நாகூம் 2. 10
4 எரே. 9. 21. வெ.ர. 10. 1
5 சங். 18. 7
6 ஏசா. 13. 10. எசே. 32. 7. மத். 24. 29
7 மல். 3. 2. வெளி. 6. 17
* தாளுகிறவன்
8 புல. 3. 40, 41. ஓசி. 12. 6; 14. 1
9 ஆதி. 37. 34. 2 சாமு. 1. 11. சங். 34. 18; 51. 17. ஏசா. 66. 2
10 யாத். 34. 6. சங். 86. 5, 15 யோனா 4. 2
11 2 இரா. 19. 4. ஆமோ. 5. 15. யோனா 3. 9
12 ஏசா. 65. 8. ஆகாய் 2. 19
13 1. அ: 1. 14
14 யாத். 19. 10, 22. 2 நாளா. 20. 13. 1 கொ. 7. 5
15 யாத். 32. 11, 12. எசே. 8. 16. மத். 23. 35
16 சங். 42. 10. மீகா 7. 10
17 உபா. 32. 36. ஏசா. 60. 10. சகரி. 1. 14
18 மல். 3. 10–12
19 யாத். 10. 19. எரே. 1. 14. எசே. 47. 18. சகரி. 14. 8
20 சங். 126. 1–3
21 1. 18, 20. சகரி. 8. 12
22 ஏசா. 41. 16. சகரி. 10. 7
23 1. 4: 1. 4
24 லேவி. 26. 5, 26. செப். 3. 11
25 3. 17. லேவி. 26. 11, 12. எசே. 37. 25–28
26 ஏசா. 44. 3; 54. 13. எசே. 39. 29. சகரி. 12. 10. யோ. 7. 39. அப். 2. 17; 21. 9

உங்கள் மூப்பர் சொப்பனங்களையும், உங்கள்
வாலிபர் தரிசனங்களையும் காண்பார்கள்.
29 ஊழியக்காரர்மேலும்ஊழியக்காரிகள்மேலும்,
[1]அந்நாட்களிலே என் ஆவியை ஊற்றுவேன்.
30 வானத்திலும் பூமியிலும் இரத்தம் அக்கினி
புகைஸ்தம்பங்களாகிய [2]அதிசயங்களைக் காட்
31 டுவேன். **கர்த்தருடைய** பெரிதும் பயங்கர
முமான நாள் வருமுன்னே சூரியன் இருளா
கவும், [3]சந்திரன் இரத்தமாகவும் மாறும்.
32 அப்பொழுது **கர்த்தருடைய** நாமத்தைத் தொ
ழுதுகொள்ளுகிறவ னெவனோ [4]அவன் ரட்
சிக்கப்படுவான்; **கர்த்தர்** சொன்னபடி,
சீயோன் பர்வதத்திலும் எருசலேமிலும் **கர்த்**
**தர்** வரவழைக்கும் [5]மீதியாயிருப்பவர்களிடத்தி
லும் ரட்சிப்பு உண்டாயிருக்கும்.

**3** இதோ, யூதாவுக்கும் எருசலேமுக்கும்
உண்டாயிருக்கிற சிறையிருப்பை [6]நான் திரு
2 ப்பும் அந்நாட்களிலும் அக்காலத்திலும், நான்
சகல ஜாதியாரையும் கூட்டி, [7]யோசபாத்தின்
பள்ளத்தாக்கிலே அவர்களை இறங்கிப்போகப்
பண்ணி, அவர்கள் என் ஜனத்தையும் இஸ்ர
வேலென்னும் என் சுதந்தரத்தையும் புறஜாதி
களுக்குள்ளே சிதறடித்து என் தேசத்தைப்
3 பங்கிட்டுக்கொண்டதி னிமித்தமும், அவர்
கள் என் ஜனத்தின்பேரில் சீட்டுப்போட்டு,
[8]ஆண்குழந்தைகளை வேசிப்பணையமாகக் கொ
டுத்து, மதுபானம் பண்ணும்படி, பெண்கு
ழந்தைகளைத் திராட்சரசத்துக்குக் கிரயமாகக்
கொடுத்ததினிமித்தமும், அங்கே [9]அவர்க
4 ளோடு வழக்காடுவேன். தீருவே, சீதோனே,
பெலிஸ்தியாவின் சகல எல்லைகளே, [10]உங்க
ளுக்கும் எனக்கும் என்ன? இப்படி எனக்குச்
சரிக்கட்டுகிறீர்களோ? இப்படி எனக்குச் சரிக்
கட்டுவீர்களாகில், நான் தாமதமின்றி அதிசீக்
கிரமாய் நீங்கள் சரிக்கட்டுகிறதை உங்கள்
5 தலையின்மேல் திரும்பும்படி செய்வேன். நீங்
கள் என் வெள்ளியையும் என் பொன்னையும்
எடுத்து, [11]இன்பமும் உச்சிதமுமான என்
பொருள்களை உங்கள் கோவில்களிலே கொ
6 ண்டுபோய், யூதாவின் குமாரரையும் எருச
லேமின் குமாரரையும் அவர்களுடைய எல்லை
களுக்குத் தூரமாக்கும்படிக்கு, கிரேக்கரிடத்
7 தில் விற்றுப்போட்டீர்கள். இதோ, நீங்கள்
அவர்களை விற்றுப்போட்ட அவ்விடத்திலி
ருந்து நான் அவர்களை எழும்பிவரப்பண்ணி,
[12]நீங்கள் சரிக்கட்டினதை உங்கள் தலையின்
8 மேல் திரும்பும்படி செய்து, உங்கள் குமா
ரரையும் உங்கள் குமாரத்திகளையும் யூதா
புத்திரரின் கையிலே விற்பேன்; [13]இவர்கள்
அவர்களைத் தூரதேசத்தாராகிய சபேயரிடத்
தில் விற்றுப்போடுவார்கள்; **கர்த்தர்** இதைச்
சொன்னார்.

இதைப் புறஜாதிகளுக்குள்ளே கூறுங்கள்; 9
[14]யுத்தத்துக்கு ஆயத்தம்பண்ணுங்கள், பராக்
கிரமசாலிகளை எழுப்புங்கள்; யுத்தவீரர் எல்
லாரும் சேர்ந்து ஏறிவரக்கடவர்கள். உங்கள் 10
மண்வெட்டிகளைப் பட்டயங்களாகவும், [15]உங்
கள் அரிவாள்களை ஈட்டிகளாகவும் அடியுங்
கள்; [16]பலவீனனும் தன்னைப் பலவான் என்று
சொல்வானாக. சகல ஜாதிகளே, நீங்கள் சுற் 11
றிலுமிருந்து ஏகமாய் வந்து கூடுங்கள்; **கர்த்**
**தாவே**, நீரும் அங்கே உம்முடைய [17]பராக்கி
ரமசாலிகளை இறங்கப்பண்ணுவீராக. ஜாதி 12
கள் எழும்பி யோசபாத்தின் பள்ளத்தாக்குக்கு
வருவார்களாக; [18]சுற்றிலுமுள்ள ஜாதிகளை
நியாயந்தீர்க்க அங்கே நான் வீற்றிருப்பேன்.
பயிர் முதிர்ந்தது, [19]அரிவாளை நீட்டி அறுங் 13
கள், வந்து இறங்குங்கள்; ஆலை நிரம்பியிருக்
கிறது, ஆலையின் தொட்டிகள் வழிந்தோடுகி
றது; அவர்களுடைய பாதகம் பெரியது. நியா 14
யத்தீர்ப்பின் பள்ளத்தாக்கிலே ஜனங்கள்
திரள்திரளாய் இருக்கிறார்கள்; நியாயத்தீர்ப்
பின் பள்ளத்தாக்கிலே **கர்த்தரின்** நாள்
சமீபமாயிருக்கிறது. சூரியனும் சந்திரனும் 15
இருண்டுபோகும், [20]நட்சத்திரங்கள் ஒளிமழுங்
கும். **கர்த்தர்** சீயோனிலிருந்து கெர்ச்சித்து, 16
[21]எருசலேமிலிருந்து சத்தமிடுவார்; வானமும்
பூமியும் அதிரும்; ஆனாலும் **கர்த்தர்** தமது
ஜனத்துக்கு அடைக்கலமும் இஸ்ரவேல் புத்
திரருக்கு அரணான கோட்டையுமாயிருப்பார்.
என் பரிசுத்த பர்வதமாகிய சீயோனிலே வாச 17
மாயிருக்கிற நான் உங்கள் தேவனாகிய **கர்த்தர்**
என்று அப்பொழுது அறிந்துகொள்வீர்கள்;
[22]அப்பொழுது எருசலேம் பரிசுத்தமாயிருக்
கும்; அந்நியர் இனி அதைக் கடந்துபோவ
தில்லை. அக்காலத்தில் பர்வதங்கள் திராட்ச 18
ரசத்தைப் பொழியும், [23]மலைகள் பாலாய் ஓ
டும், யூதாவின் ஆறுகள் எல்லாம் பிரவாகித்து
ஓடும்; [24]ஒரு ஊற்று **கர்த்தருடைய** ஆலயத்தி
லிருந்து புறப்பட்டு சித்தீம் என்னும் பள்ளத்
தாக்கை நீர்ப்பாய்ச்சலாக்கும். யூதாபுத்திரரின் 19
தேசத்திலே குற்றமில்லாத இரத்தத்தைச்
சிந்தி, [25]அவர்களுக்குச் செய்த கொடுமையி
னிமித்தம் எகிப்து பாழாய்ப்போகும்; ஏதோம்
பாழான வனாந்தரமாகும். ஆனால் யூதாவோ 20
சதாகாலமாகவும், [26]எருசலேம் தலைமுறை தலை
முறையாகவும் குடியேற்றப்பட்டிருக்கும்.
நான் தண்டியாமல் விட்டிருந்த அவர்களுடைய 21
இரத்தப்பழியை தண்டியாமல், விடேன்;
[27]**கர்த்தர்** சீயோனிலே வாசமாயிருக்கிறார்.

[1] 1 கொரி. 12. 13. கலா. 3. 28. கொலோ. 3. 11
[2] மத். 24. 29
[3] லூக். 21. 25. வெளி. 6. 12
[4] ரோ. 10. 11-13: 11. 26
[5] ஏசா. 11. 11, 16. எரே. 31. 7. மீகா 4. 7. ரோ. 9. 27: 11. 5, 7
[6] எரே. 30. 3. எசே. 38. 14
[7] சக. 14. 2-4
[8] நாகூ. 3. 10
[9] ஏசா. 66. 16. எசே. 38. 22
[10] எசே. 25. 15-17. ஆமோ. 1. 6, 9
[11] தானி. 5. 2, 3: 11. 38
[12] ஏசா. 43. 5, 6: 49. 12. எரே. 23. 8
[13] எசே. 23. 42. எரே. 6. 20
[14] ஏசா. 8. 9, 10. எரே. 46. 3, 4. எசே. 38. 7
[15] ஏசா. 2. 4. மீகா 4. 3
[16] சக. 12. 8
[17] சங். 103. 20. ஏசா. 13. 3
[18] 2. வச. மீகா 4. 3
[19] மத். 13. 39. வெளி. 14. 15-20
[20] 2. 10, 31
[21] சங். 46. 1. எரே. 25. 30, 31. ஆமோ. 1. 2. ஆகா. 2. 6
[22] 21. வச: 2. 27. ஏசா. 35. 8, 9. நாகூ. 1. 15. சக. 14. 21. வெளி. 21. 27
[23] ஆமோ. 9. 13
[24] ஏசா. 30. 25. எசே. 47. 2. சக. 14. 8. வெளி. 22. 1
[25] ஏசா. 19. 1. எரே. 49. 17. எசே. 25. 12, 13
[26] ஏசா. 33. 20. ஆமோ. 9. 15
[27] ஏசா. 4. 4. எசே. 48. 35. வெளி. 21. 3

# ஆமோஸ்

1 தெக்கோவா ஊர் மேய்ப்பருக்குள் இருந்த
ஆமோஸ், [1]யூதாவின் ராஜாவாகிய உசியா
வின் நாட்களிலும், இஸ்ரவேலின் ராஜாவா
கிய யோவாசுடைய குமாரனாகிய எரொபெ
யாமின் நாட்களிலும், [2]பூமி அதிர்ச்சி உண்
டாக இரண்டு வருஷத்துக்குமுன்னே, இஸ்ர
வேலைக்குறித்துத் தரிசனங்கண்டு சொன்ன
வார்த்தைகள்.
2 கர்த்தர் சீயோனிலிருந்து கெர்ச்சித்து
[3]எருசலேமிலிருந்து சத்தமிடுவார்; அதினால்
மேய்ப்பரின் தாபரங்கள் துக்கங்கொண்டா
டும்; [4]கர்மேலின் கொடுமுடியும் காய்ந்து
போகும்.
3 கர்த்தர் சொல்லுகிறது என்னவென்றால்:
தமஸ்குவினுடைய மூன்று பாதகங்களினிமித்
தமும், [5]நாலு பாதகங்களினிமித்தமும், நான்
அதின் ஆக்கினையைத் திருப்பமாட்டேன்;
[6]அவர்கள் கீலேயாத்தை இருப்புக் கருவிகளி
4 னால் போரடித்தார்களே. ஆசகேலின் வீட்
டிலே தீக்கொளுத்துவேன்; [7]அது பெனாதா
5 தின் அரமனைகளைப் பட்சிக்கும். நான் தமஸ்
குவின் தாழ்ப்பாளை உடைத்து, [8]குடிகளை
ஆவேன் என்னும் பள்ளத்தாக்கிலும், செங்
கோல் செலுத்துகிறவனை பெத்ஏதேனிலும்
இராதபடிக்குச் சங்காரம்பண்ணுவேன்; [9]அப்
பொழுது சீரியாவின் ஜனங்கள் கீருக்குச்
சிறைப்பட்டுப்போவார்கள் என்று கர்த்தர்
சொல்லுகிறார்.
6 கர்த்தர் சொல்லுகிறது என்னவென்றால்:
காத்சாவினுடைய மூன்று பாதகங்களினிமித்
தமும், நாலு பாதகங்களினிமித்தமும், நான்
அதின் ஆக்கினையைத் திருப்பமாட்டேன்;
[10]அவர்கள் சிறைப்பட்டவர்களை ஏதோமிய
ரிடத்தில் ஒப்புவிக்கும்படி முழுதும் சிறை
7 யாக்கினார்களே. காத்சாவின் மதிலுக்குள் தீக்
கொளுத்துவேன்; [11]அது அதினுடைய அர
8 மனைகளைப் பட்சிக்கும். நான் குடிகளை அஸ்
தோத்திலும், செங்கோல் செலுத்துகிறவனை
அஸ்கலோனிலும் இராதபடிக்குச் சங்காரம்
பண்ணி, [12]பெலிஸ்தரில் மீதியானவர்கள் அழி
யும்படிக்கு என் கையை எக்ரோனுக்கு
விரோதமாகத் திருப்புவேன் என்று கர்த்தரா
கிய ஆண்டவர் சொல்லுகிறார்.
மேலும்: தீருவினுடைய மூன்று பாதகங்க 9
ளினிமித்தமும், நாலு பாதகங்களினிமித்தமும்,
நான் அதின் ஆக்கினையைத் திருப்பமாட்
டேன்; [13]அவர்கள் சகோதரரின் உடன்படிக்
கையை நினையாமல், சிறைப்பட்டவர்களை
முழுதும் ஏதோமியர் கையில் ஒப்பித்தார்க
ளே. தீருவின் மதிலுக்குள் தீக்கொளுத்துவே 10
ன்; அது அதின் அரமனைகளைப் பட்சிக்கும்
என்று கர்த்தர் சொல்லுகிறார்.
மேலும்: ஏதோமுடைய மூன்று பாதகங்க 11
ளினிமித்தமும், நாலு பாதகங்களினிமித்த
மும், நான் அவன் ஆக்கினையைத் திருப்ப
மாட்டேன்; [14]அவன் தன் சகோதரனைப் பட்
டயத்தோடே தொடர்ந்து, தன் மனதை இரக்
கமற்றதாக்கி, தன் கோபத்தினாலே என்றைக்
கும் அவனைப் பீறிப்போட்டு, [15]தன் மூர்க்
கத்தை நித்திய காலமாக வைத்திருக்கிறானே.
தேமானிலே தீக்கொளுத்துவேன்; அது 12
போஸ்றாவின் அரமனைகளைப் பட்சிக்கும்
என்று கர்த்தர் சொல்லுகிறார்.
கர்த்தர் சொல்லுகிறது என்னவென்றால்: 13
அம்மோன் புத்திரரின் மூன்று பாதகங்களினி
மித்தமும், நாலு பாதகங்களினிமித்தமும், நான்
அவர்கள் ஆக்கினையைத் திருப்பமாட்டேன்;
[16]அவர்கள் தங்கள் எல்லைகளை விஸ்தாரமாக்
கும்படிக்குக் கீலேயாத் தேசத்தின் கர்ப்பஸ்
திரீகளைக் கீறிப்போட்டார்களே. ரப்பாவின் 14
மதிலுக்குள் தீக்கொளுத்துவேன்; [17]அது யுத்
தநாளின் முழக்கமாகவும், பெருங்காற்றின்
புசலாகவும் அதின் அரமனைகளைப் பட்சிக்
கும். அவர்களுடைய ராஜாவும், [18]அவனு 15
டைய அதிபதிகளும் சிறைப்பட்டுப் போவார்
கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்.
கர்த்தர் சொல்லுகிறது என்னவென்றால்: 2
மோவாபின் மூன்று பாதகங்களினிமித்தமும்,
நாலு பாதகங்களினிமித்தமும், நான் அவன்
ஆக்கினையைத் திருப்பமாட்டேன்; [19]அவன்
ஏதோமுடைய ராஜாவின் எலும்புகளை நீறா
கச் சுட்டுப்போட்டானே, மோவாப் தேசத் 2

1 7. 14. 2 நாளா. 20. 20. ஓசி. 1.1
2 சகரி. 14. 5
3 எரே. 25. 30. யோவே. 3. 16
4 1 சாமு. 25. 2. ஏசா. 33. 9
5 எரே. 49. 23-27
6 2 இரா. 10. 32: 13. 7
7 எரே. 17. 27
8 எரே. 51. 30
9 2 இரா. 16. 9
10 2 நாளா. 21. 16, 17: 28, 18
11 செப். 2. 4
12 எரே. 47. 4
13 எசே. 26, 28. அதி
14 எரே. 49. 7. ஒப. 1. மு
15 எசே. 35. 5
16 எரே. 49. 1-6. எசே. 25. 2. மு
17 உபா. 3. 11. எரே. 40. 2
18 எரே. 49. 3
19 ஏசா. 15, 16. அதி. எசே. 25. 8. மு

தில் தீக்கொளுத்துவேன்; [1]அது கீரியோத்
தின் அரமனைகளைப் பட்சிக்கும்; மோவாபி
யர் அமளியோடும் ஆர்ப்பரிப்போடும் எக்காள
3 சத்தத்தோடும் சாவார்கள். நியாயாதிபதியை
அவர்கள் நடுவில் இராதபடிக்கு நான் சங்கா
ரம்பண்ணி, [2]அவனோடேகூட அவர்களு
டைய பிரபுக்களையெல்லாம் கொன்றுபோடு
வேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறார்.
4 மேலும்: யூதாவின் மூன்று பாதகங்களினி
மித்தமும், நாலு பாதகங்களினிமித்தமும்,
நான் அவர்கள் ஆக்கினையைத் திருப்பமாட்
டேன்; [3]அவர்கள் **கர்த்தருடைய** வேதத்தை
வெறுத்து, அவருடைய கட்டளைகளைக் கைக்
கொள்ளாமல், தங்கள் பிதாக்கள் பின்பற்றின
5 *பொய்களினால் மோசம்போனார்களே. யூதா
விலே நான் தீக்கொளுத்துவேன்; [4]அது எரு
சலேமின் அரமனைகளைப் பட்சிக்கும் என்று
**கர்த்தர்** சொல்லுகிறார்.
6 மேலும்: இஸ்ரவேலின் மூன்று பாதகங்க
ளினிமித்தமும், நாலு பாதகங்களினிமித்த
மும், நான் அவர்களுடைய ஆக்கினையைத்
திருப்பமாட்டேன்; [5]அவர்கள் நீதிமானைப்
பணத்துக்கும், எளியவனை ஒரு ஜோடு பாத
7 ரட்சைக்கும் விற்றுப்போட்டார்களே. அவர்
கள் தரித்திரருடைய தலையின்மேல் மண்ணை
வாரி இறைத்து, சிறுமையானவர்களின் வழி
யைப் புரட்டுகிறார்கள்; [6]என் பரிசுத்த நாமத்
தைக் குலைச்சலாக்கும்படிக்கு மகனும் தகப்ப
னும் ஒரு பெண்ணிடத்தில் பிரவேசிக்கிறார்
8 கள். அவர்கள் சகல பீடங்களருகிலும் அடை
மானமாய் வாங்கின வஸ்திரங்களின்மேல்
படுத்துக்கொண்டு, [7]தெண்டம் பிடிக்கப்பட்
டவர்களுடைய மதுபானத்தைத் தங்கள் தே
வர்களின் கோவிலிலே குடிக்கிறார்கள் என்று
9 **கர்த்தர்** சொல்லுகிறார். நானோ: கேதுருமரங்
களைப்போல் உயரமும், கர்வாலிமரங்களைப்
போல் வைரமுமாயிருந்த எமோரியனை அவர்
களுக்கு முன்பாக அழித்தேன்; [8]உயர இருந்த
அவனுடைய கனியையும், தாழ இருந்த அவ
னுடைய வேர்களையும் அழித்துப்போட்டு,
10 நீங்கள் எமோரியனுடைய தேசத்தைக் கட்டிக்
கொள்ளும்படிக்கு உங்களை நான் எகிப்துதே
சத்திலிருந்து வரப்பண்ணி, [9]உங்களை நாற்
பது வருஷமாக வனாந்தரத்திலே வழிநடத்தி,
11 உங்கள் குமாரரில் சிலரைத் தீர்க்கதரிசிகளா
கவும், [10]உங்கள் வாலிபரில் சிலரை நசரேயரா
கவும் எழும்பப் பண்ணினேன்; இஸ்ரவேல்
புத்திரரே, இப்படி நான் செய்யவில்லையா
12 என்று **கர்த்தர்** கேட்கிறார். நீங்களோ நச
ரேயருக்குத் திராட்சரசம் குடிக்கக்கொடுத்து,
தீர்க்கதரிசிகளை நோக்கி: [11]நீங்கள் தீர்க்கதரிச
னம் சொல்லவேண்டாம் என்று கற்பித்தீர்
13 கள். இதோ, கோதுமைக் கட்டுகள் நிறைபார
மாக ஏற்றப்பட்ட வண்டியில் இருத்துகிறது
போல, [12]நான் உங்களை நீங்கள் இருக்கிற
14 ஸ்தலத்தில் இருத்துவேன். அப்பொழுது
வேகமானவன் ஓடியும் புகலிடமில்லை; [13]பல
வான் தன் பலத்தினால் பலப்படுவதுமில்லை;
பராக்கிரமசாலி தன் பிராணனைத் தப்புவிப்ப
துமில்லை. வில்லைப் பிடிக்கிறவன் நிற்பது 15
மில்லை; வேகமானவன் தன் கால்களால் தப்
பிப்போவதுமில்லை; [14]குதிரையின்மேல் ஏறு
கிறவன் தன் பிராணனை ரட்சிப்பதுமில்லை.
பலசாலிகளுக்குள்ளே தைரியவான் அந்நா 16
ளிலே நிர்வாணியாய் ஓடிப்போவான் என்று
**கர்த்தர்** சொல்லுகிறார்.

இஸ்ரவேல் புத்திரரே, **கர்த்தராகிய** நான் 3
எகிப்துதேசத்திலிருந்து வரப்பண்ணின மு
ழுக்குடும்பமாகிய உங்களுக்கு விரோதமாய்ச்
சொல்லிய இந்த வசனத்தைக் கேளுங்கள்.
பூமியின் எல்லா வம்சங்களுக்குள்ளும் உங்களை 2
மாத்திரம் அறிந்துகொண்டேன்; [15]ஆகையால்
உங்களுடைய எல்லா அக்கிரமங்களினிமித்த
மும் உங்களை தண்டிப்பேன். இரண்டுபேர் 3
ஒருமனப்பட்டிருந்தாலொழிய [16]ஒருமித்து
நடந்துபோவார்களோ? தனக்கு இரை அகப் 4
படாமலிருக்கக் காட்டிலே சிங்கம் கெர்ச்சிக்
குமோ? [17]இரைபிடியாமல் இருக்கும்போது
பாலசிங்கம் தன் கெபியிலிருந்து சத்தமிடுமோ?
குருவிக்குத் தரையிலே சுருக்குப் போடப்ப 5
டாதிருந்தால், [18]அது கண்ணியில் அகப்படு
மோ? ஒன்றும் படாதிருக்கையில், கண்ணி
தரையிலிருந்து எடுக்கப்படுமோ? ஊரில் எக் 6
காளம் ஊதினால், ஜனங்கள் கலங்காதிருப்
பார்களோ? [19]**கர்த்தருடைய** செயல் இல்லாமல்
ஊரில் தீங்கு உண்டாகுமோ? கர்த்தராகிய 7
ஆண்டவர் தீர்க்கதரிசிகளாகிய தம்முடைய
ஊழியக்காரருக்குத் [20]தமது இரகசியத்தை
வெளிப்படுத்தாமல் ஒரு காரியத்தையும் செய்
யார். சிங்கம் கெர்ச்சிக்கிறது, யார் பயப்படா 8
திருப்பான்? [21]கர்த்தராகிய ஆண்டவர் பேசு
கிறார், [22]யார் தீர்க்கதரிசனம் சொல்லாதிருப்
பான்?
நீங்கள் சமாரியாவின் பர்வதங்களில் வந்து 9
கூடி, அதின் நடுவில் நடக்கிற பெரிய கலகங்
களையும் அதற்குள் செய்யப்படுகிற இடுக்கண்
களையும் பாருங்கள் என்று அஸ்தோத்தின்
அரமனைகள்மேலும், எகிப்துதேசத்தின் அர
மனைகள்மேலும் கூறுங்கள். அவர்கள் செம் 10
மையானதைச் செய்ய அறியாமல், [23]தங்கள்
அரமனைகளில் கொடுமையையும் கொள்ளை
யையும் குவித்துக்கொள்ளுகிறார்கள் என்று
**கர்த்தர்** சொல்லுகிறார். ஆகையால் சத்துரு 11
வந்து, தேசத்தைச் சூழ்ந்துகொண்டு, உன்
பெலத்தை உன்னிலிருந்து அற்றுப்போகப்
பண்ணுவான்; [24]அப்பொழுது உன் அரமனை
கள் கொள்ளையிடப்படும் என்று கர்த்தராகிய
ஆண்டவர் சொல்லுகிறார். மேலும்: ஒரு 12
மேய்ப்பன் இரண்டு கால்களையாவது ஒரு கா
தின் துண்டையாவது சிங்கத்தின் வாயிலிருந்து
பிடுங்கித்தப்புவிக்குமாப்போல, [25]சமாரியாவில்
குடியிருக்கிற இஸ்ரவேல் புத்திரர் ஒரு படுக்
கையின் மூலையிலிருந்தும், ஒரு மஞ்சத்தின்
மேலிருந்தும் தப்புவிக்கப்படுவார்கள் என்று

1 எரே. 48. 41
2 எண். 24. 17. எரே. 48. 7
3 ஏசா. 28. 15. ரோ. 1. 25
* விக்கிரகங்களினால் சங். 31. 6
4 2 நாளா. 28. 18. எரே. 17. 27
5 ஏசா. 29. 21
6 லேவி. 20. 3. எசே. 22. 11. ரோ. 2. 24
7 1 கொ. 8. 10: 10. 21
8 யோசு. 24. 8
9 யாத். 12. 51
10 எண். 6. 2
11 ஏசா. 30. 10
12 ஏசா. 1. 14
13 எரே. 9. 23
14 சங். 33. 17. பிர. 9. 11
15 உபா. 7. 6. சங். 147. 20. மத். 11. 22. ரோ. 2. 9. 1 பே. 4. 17
16 2 கொ. 6. 14, 15
17 சங். 104. 21
18 பிர. 9. 12
19 ஏசா. 45. 7
20 ஆதி. 6. 13: 18. 17, 18. சங். 25. 14. யோ. 15. 15
21 வெளி. 5. 5
22 எரே. 20. 9. அப். 4. 20. 1 கொ. 9. 16
23 எரே. 4. 22
24 2 இரா. 17. 3, 6: 18. 9, 11
25 ரோ. 11. 4, 5

13 கர்த்தர் சொல்லுகிறார். நீங்கள் கேட்டு யாக்
கோபு வம்சத்தாருக்குள்ளே சாட்சியாக அறி
விக்கவேண்டியது: சேனைகளின் தேவனாயி
ருக்கிற கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறது
14 என்னவென்றால், நான் இஸ்ரவேலுடைய
பாதகங்களினிமித்தம் அவனை விசாரிக்கும்
நாளிலே நான் பெத்தேலின் பலிபீடங்களை
விசாரிப்பேன்; [1]பலிபீடத்தின் கொம்புகள்
15 வெட்டுண்டு தரையிலே விழும். மாரிகாலத்து
வீட்டையும் கோடைகாலத்து வீட்டையும்
அழிப்பேன்; [2]அப்பொழுது யானைத்தந்தத்
தால் செய்யப்பட்ட வீடுகள் அழியும்; [3]பெரிய
வீடுகளுக்கும் முடிவுவரும் என்று **கர்த்தர்**
சொல்லுகிறார்.

**4** சமாரியாவின் மலைகளிலுள்ள பாசானின்
மாடுகளே, [4]நீங்கள் இந்த வார்த்தைகளைக் கே
ளுங்கள்; தரித்திரரை ஒடுக்கி, எளியவர்களை
நொறுக்கி, [*]அவர்களுடைய எஜமான்களை
நோக்கி: நாங்கள் குடிக்கும்படிக் கொண்டுவா
2 ருங்கள் என்று சொல்லுகிறீர்கள். இதோ,
கர்த்தராகிய ஆண்டவர் உங்களைத் துறடுகளா
லும், உங்கள் பின்சந்ததியை மீன்பிடிக்கிற
தூண்டில்களாலும் இழுத்துக்கொண்டுபோ
கும் நாட்கள் வருமென்று [5]அவர் தம்முடைய
3 பரிசுத்தத்தைக்கொண்டு ஆணையிட்டார். அப்
பொழுது நீங்கள் ஒவ்வொருவனும் அரமனை
க்குச் சுமந்துகொண்டு போவதை எறிந்து
விட்டு, [6]தனக்கு எதிரான திறப்புகளின் வழி
யாய்ப் புறப்பட்டுப்போவீர்கள் என்று **கர்த்தர்**
சொல்லுகிறார்.
4 பெத்தேலுக்குப் போய்த் துரோகம்பண்ணு
ங்கள், [7]கில்காலுக்கும் போய்த் துரோகத்தைப்
பெருகப்பண்ணி; காலைதோறும் உங்கள் பலி
களையும், [8]மூன்றாம் வருஷத்திலே உங்கள்
5 தசமபாகங்களையும் செலுத்தி, புளித்தமாவுள்ள
ஸ்தோத்திர பலியோடே தூபங்காட்டி, [9]உற்
சாகபலிகளைக் கூறித் தெரியப்படுத்துங்கள்;
இஸ்ரவேல் புத்திரரே, இப்படிச் செய்வதே
உங்களுக்குப் பிரியம் என்று கர்த்தராகிய ஆண்
6 டவர் சொல்லுகிறார். ஆகையால் நான் உங்
கள் பட்டணங்களில் எல்லாம் உங்கள் பல்லுக
ளுக்கு ஓய்வையும், உங்கள் ஸ்தலங்களில் எல்
லாம் அப்பக்குறைவையும் கட்டளையிட்டேன்;
[10]ஆகிலும் நீங்கள் என்னிடத்தில் திரும்பாமற்
போனீர்கள் என்று **கர்த்தர்** சொல்லுகிறார்.
7 இதுவுமல்லாமல், அறுப்புக்காலம் வர இன்
னும் மூன்றுமாதம் இருக்கும்போதே மழையை
நான் தடுத்தேன்; ஒரு பட்டணத்தின்மேல்
மழை பெய்யவும் ஒரு பட்டணத்தின்மேல்
மழை பெய்யாமலிருக்கவும் பண்ணினேன்;
ஒரு வயலின்மேல் மழை பெய்தது, மழைபெய்
8 யாத மற்ற வயல் காய்ந்துபோயிற்று. இர
ண்டு மூன்று பட்டணங்களின் மனுஷர் தண்
ணீர் குடிக்க ஒரே பட்டணத்துக்குப் போய்
அலைந்தும் தாகந்தீர்த்துக்கொள்ளவில்லை; ஆகி
லும் நீங்கள் என்னிடத்தில் திரும்பாமற்போ
9 னீர்கள் என்று **கர்த்தர்** சொல்லுகிறார். கருக்
காயினாலும் விஷப்பனியினாலும் உங்களைத் தண்
டித்தேன்; [11]உங்கள் சோலைகளிலும் திராட்சத்
தோட்டங்களிலும் அத்திமரங்களிலும் ஒலிவ
மரங்களிலும் மிகுதியானதைப் பச்சைப்புழு
அரித்துப்போட்டது; [12]ஆகிலும் என்னிடத்
தில் திரும்பாமற்போனீர்கள் என்று **கர்த்தர்**
சொல்லுகிறார். எகிப்திலே உண்டானதற்கு 10
ஒத்த கொள்ளைநோயை உங்களுக்குள் அனுப்
பினேன்; [13]உங்கள் வாலிபரைப் பட்டயத்தா
லே கொன்றேன்; உங்கள் குதிரைகளை அழித்
துப்போட்டேன்; உங்கள் பாளயங்களின்
நாற்றத்தை உங்கள் நாசிகளிலும் ஏறப்பண்ணி
னேன்; ஆகிலும் நீங்கள் என்னிடத்தில் திரும்
பாமற் போனீர்கள் என்று **கர்த்தர்** சொல்லு
கிறார். சோதோமையும் கொமோராவையும் 11
தேவன் கவிழ்த்துப்போட்டதுபோல, [14]உங்க
ளைக் கவிழ்த்துப்போட்டேன்; [15]நீங்கள் அக்கி
னியினின்று பறிக்கப்பட்ட கொள்ளியைப்
போல இருந்தீர்கள்; ஆகிலும் நீங்கள் என்னி
டத்தில் திரும்பாமற்போனீர்கள் என்று **கர்த்**
**தர்** சொல்லுகிறார். ஆகையால் இஸ்ரவே 12
லே, இந்தப்பிரகாரமாக உனக்குச் செய்வேன்;
[16]இஸ்ரவேலே, நான் இப்படி உனக்குச் செய்
யப்போகிறபடியினால் உன் தேவனைச் சந்
திக்கும்படி ஆயத்தப்படு. அவர் பர்வதங்களை 13
உருவாக்கினவரும், காற்றைச் சிருஷ்டித்த
வரும், [17]மனுஷனுடைய நினைவுகள் இன்ன
தென்று அவனுக்கு வெளிப்படுத்துகிறவரும்,
விடியற்காலத்தை அந்தகாரமாக்குகிறவரும்,
பூமியினுடைய உயர்ந்த ஸ்தானங்களின்மேல்
உலாவுகிறவருமாயிருக்கிறார்; சேனைகளின்
தேவனாகிய **கர்த்தர்** என்பது அவருடைய
நாமம்.

இஸ்ரவேல் வம்சத்தாரே, உங்களைக்குறித் **5**
து, [18]நான் புலம்பிச் சொல்லும் இந்த வசனத்
தைக் கேளுங்கள். இஸ்ரவேல் என்னும் 2
கன்னிகை விழுந்தாள், [19]அவள் இனி ஒரு
போதும் எழுந்திருக்கமாட்டாள்; தன் தேசத்
தில் விழுந்துகிடக்கிறாள், அவளை எடுப்பா
ரில்லை. நகரத்திலிருந்து புறப்பட்ட ஆயிரம் 3
பேரில் நூறுபேரும், நூறுபேரில் பத்துப்பே
ரும் இஸ்ரவேல் வம்சத்தாருக்கு மீந்திருப்பார்
கள் என்று **கர்த்தராகிய** தேவன் சொல்லு
கிறார். **கர்த்தர்** இஸ்ரவேல் வம்சத்தாருக்குச் 4
சொல்லுகிறது என்னவென்றால்: [20]என்னைத்
தேடுங்கள், அப்பொழுது பிழைப்பீர்கள்.
பெத்தேலைத் தேடாதேயுங்கள், [21]கில்காலிலும் 5
சேராதேயுங்கள், பெயெர்செபாவுக்கும் போ
காதேயுங்கள்; ஏனென்றால் கில்கால் சிறை
யிருப்பாகவும், பெத்தேல் பாழானஸ்தலமாக
வும் போகும். **கர்த்தரைத்** தேடுங்கள், அப் 6
பொழுது பிழைப்பீர்கள்; இல்லாவிட்டால்
பெத்தேலில் இருக்கிற ஒருவராலும் அவிக்
கப்படாத அக்கினி யோசேப்பின் வீட்டில்
பற்றி, அதைப் பட்சிக்கும். நியாயத்தை எட் 7
டியாக மாற்றி, நீதியைத் தரையிலே விழப்
பண்ணுகிறவர்களே, அவரைத் தேடுங்கள்.

1 ஓசி. 10. 14, 15
2 நியா. 3. 20. எரே. 36. 22
3 1 இரா. 22. 39
4 சங். 22. 12. எசே. 39. 18
* உங்களுடைய
5 சங். 89. 35. எரே. 16. 16
6 எசே. 12. 5. 12
7 3. 14. ஓசி. 4. 15; 12. 11
8 எண். 28. 3, 4. உபா. 14. 28
9 லேவி. 7. 13; 22. 18, 21. உபா. 23. 23
10 ஏசா. 26. 11. எசே. 16. 27
11 உபா. 28. 22
12 எரே. 5. 3
13 உபா. 28. 27, 60
14 ஆதி. 19. 24, 25
15 சகரி. 3. 2. யூதா 22, 23. வச
16 எசே. 13. 5. மத். 25. 13
17 தானி. 2. 28
18 எரே. 7. 29
19 புல. 2. 13
20 ஏசா. 55. 6, 7
21 4. 4. ஓசி. 4. 15

8 அவர் அறுமீனையும் [1]மிருகசீரிஷத்தையும்
உண்டாக்கினவர்; அவர் மரண இருளை விடி
யற்காலமாக மாற்றி, பகலை இராத்திரியாக
அந்தகாரப்படுத்துகிறவர்; அவர் சமுத்திரத்
தின் தண்ணீர்களை வரவழைத்து, அவைகளை
பூமியின் விசாலத்தின்மேல் ஊற்றுகிறவர்;
9 *கர்த்தர் என்பது அவருடைய நாமம். அர
ணான ஸ்தலத்தின்மேல் பாழ்க்கடிப்பு வரத்
தக்கதாக, அவர் கொள்ளை கொடுத்தவனைப்
பலத்தவனுக்கு விரோதமாய் லகுவடையப்
10 பண்ணுகிறவர். ஒலிமுகவாசலிலே கடிந்து
கொள்ளுகிறவனை அவர்கள் பகைத்து, [2]யதார்
த்தமாய்ப் பேசுகிறவனை வெறுக்கிறார்கள்.
11 நீங்கள் தரித்திரனை மிதித்து, அவன் கை
யிலே தானியத்தைச் சுமை சுமையாய் வாங்கு
கிறபடியினால், [3]நீங்கள் பொளிந்த கற்களால்
வீடுகளைக் கட்டினீர்கள், ஆனாலும் அவைக
ளில் நீங்கள் குடியிருப்பதில்லை; இன்பமான
திராட்சத்தோட்டங்களை நாட்டினீர்கள், ஆனா
லும் அவைகளின் ரசத்தை நீங்கள் குடிப்ப
12 தில்லை. உங்கள் மீறுதல்கள் மிகுதியென்
றும், உங்கள் பாவங்கள் பலத்ததென்றும் அறி
வேன்; [4]நீதிமானை ஒடுக்கி, பரிதானம் வாங்
கி, ஒலிமுகவாசலில் ஏழைகளின் நியாயத்
13 தைப் புரட்டுகிறீர்கள். ஆகையால் புத்தி
மான் அந்தக் காலத்திலே மௌனமாயிருக்க
வேண்டும்; [5]அந்தக் காலம் தீமையான காலம்.
14 நீங்கள் பிழைக்கும்படிக்குத் தீமையை அல்ல,
நன்மையைத் தேடுங்கள்; அப்பொழுது நீங்
கள் சொல்லுகிறபடியே சேனைகளின் தேவ
15 னாகிய கர்த்தர் உங்களோடே இருப்பார். நீங்
கள் தீமையை வெறுத்து, [6]நன்மையை விரு
ம்பி, ஒலிமுகவாசலில் நியாயத்தை நிலைப்
படுத்துங்கள்; [7]ஒருவேளை சேனைகளின் தேவ
னாகிய கர்த்தர் யோசேப்பிலே மீதியானவர்
16 களுக்கு இரங்குவார். ஆதலால் ஆண்டவ
ரும் சேனைகளின் தேவனுமாகிய கர்த்தர்
சொல்லுகிறது என்னவென்றால்: எல்லாத்
தெருக்களிலும் புலம்பல் உண்டாகும்; எல்லா
வீதிகளிலும் ஐயோ! ஐயோ! என்று ஓலமிடு
வார்கள்; பயிரிடுகிறவர்களைத் துக்கங்கொண்
டாடுகிறதற்கும், [8]ஒப்பாரி பாட அறிந்தவர்
களைப் புலம்புகிறதற்கும் வரவழைப்பார்கள்.
17 எல்லாத் திராட்சத்தோட்டங்களிலும் புலம்
பல் உண்டாயிருக்கும், [9]நான் உன் நடுவே
கடந்துபோவேன் என்று கர்த்தர் சொல்லு
18 கிறார். கர்த்தருடைய [10]நாளை விரும்புகிறவர்
களுக்கு ஐயோ! அதினால் உங்களுக்கு என்ன
உண்டு? கர்த்தருடைய நாள் வெளிச்சமாயிரா
19 மல் அந்தகாரமாயிருக்கும். சிங்கத்துக்குத்
தப்பினவனுக்குக் கரடி எதிர்ப்பட்டதுபோல
வும், [11]அல்லது வீட்டுக்குள்ளே வந்து சுவரின்
மேல் தன் கையை வைத்தபோது பாம்பு அவ
20 னைக் கடித்ததுபோலவும் இருக்கும். கர்த்த
ருடைய நாள் வெளிச்சமாயிராமல், இருளும்
†பிரகாசமற்ற அந்தகாரமுமா யிருக்குமல்ல
21 வோ? உங்கள் பண்டிகைகளைப் பகைத்து

1 யோபு 9. 9; 38. 31, 34
* யேகோவா
2 1 இரா. 22. 8. ஏசா. 29. 21
3 உபா. 28. 30. மீகா 6. 15. செப். 1. 13. ஆகா. 1. 6
4 சங். 26. 9, 10. ஏசா. 29. 21. யாக். 5. 6
5 6. 10. பிர. 3. 7
6 ஏசா. 55. 2
7 யாத். 32. 30. 2 இரா. 19. 4. யோவே. 2. 14
8 எரே. 9. 17, 19
9 யாத். 12. 12. நாகூம் 1. 12
10 ஏசா. 5. 19. யோவே. 2. 2. செப். 1. 15
11 எரே. 48. 14
12 நீதி. 21. 27. ஏசா. 1. 11–16
13 ஏசா. 66. 3. ஓசி. 8. 13. மீகா 6. 6, 7
† [illegible]
14 மீகா 6. 8
15 உபா. 32. 17–19. எசே. 20. 8, 24
16 1 இரா. 11. 33
17 2 இரா. 17. 6
18 லூ. 6. 24. 1 பே. 5. 7
19 ஏசா. 10. 9. மீகா 7. 18
20 எசே. 12. 27
21 1 நாளா. 23. 5. ஏசா. 5. 12
22 ஆதி. 37. 25
23 சங். 47. 4; 106. 40. எரே. 51. 14. எபி. 6. 13, 17

வெறுக்கிறேன்; [12]உங்கள் ஆசரிப்பு நாட்களில்
எனக்குப் பிரியமில்லை. உங்கள் தகனபலி 22
களையும்போஜனபலிகளையும்எனக்குப்படைத்
தாலும் நான் அங்கீகரிக்கமாட்டேன்; [13]கொழு
மையான உங்கள் மிருகங்களின் ஸ்தோத்திர
பலிகளையும நான் நோக்கிப் பார்க்கமாட்டேன்.
உன் *பாட்டுகளின் இரைச்சலை என்னைவிட்டு 23
அகற்று; உன் வீணைகளின் ஓசையை நான்
கேட்கமாட்டேன். நியாயம் தண்ணீரைப் 24
போலவும், [14]நீதி வற்றாத நதியைப்போலவும்
புரண்டுவரக்கடவது. இஸ்ரவேல் வம்சத்தா 25
ரே, [15]நீங்கள் வனாந்தரத்திலே இருந்த நாற்
பது வருஷம்வரையில் பலிகளையும் காணிக்
கைகளையும் எனக்குச் செலுத்தினீர்களோ?
நீங்கள் உங்களுக்கு உண்டாக்கின மோளோ 26
குடைய கூடாரத்தையும், [16]உங்கள் தேவர்
களின் நட்சத்திர ராசியாகிய உங்கள் சொரூ
பங்களின் சப்பாரத்தையும் சுமந்துகொண்டு
வந்தீர்களே. ஆகையால் உங்களைத் [17]தமஸ் 27
குவுக்கு அப்பாலே குடியோட்டுவேன் என்று
சேனைகளுடைய தேவன் என்னும் நாமமுள்ள
கர்த்தர் சொல்லுகிறார்.
சீயோனிலே நிர்விசாரமா யிருக்கிறவர்க 6
ளும் சமாரியாவின் பர்வதத்தை நம்பிக்கொண்
டிருக்கிறவர்களும், [18]ஜாதிகளின் தலைமை
யென்னப்பட்டு, இஸ்ரவேல் வம்சத்தார் தேடி
வருகிறவர்களுமாகிய உங்களுக்கு ஐயோ!
நீங்கள் கல்னேமட்டும் சென்று, [19]அவ்விடத்தி 2
லிருந்து ஆமாத் என்னும் பெரிய பட்டணத்
துக்குப் போய், பெலிஸ்தருடைய காத்பட்ட
ணத்துக்கு இறங்கி, அவைகள் இந்த ராஜ்யங்
களைப்பார்க்கிலும் நல்லவைகளோ என்றும்,
அவைகளின் எல்லைகள் உங்கள் எல்லை
களைப்பார்க்கிலும் விஸ்தாரமானவைகளோ
என்றும் பாருங்கள். தீங்குநாள் [20]தூரமென் 3
றெண்ணிக் கொடுமையின் ஆசனம் கிட்டி
வரும்படி செய்து, தந்தக் கட்டில்களில் படுத் 4
துக்கொண்டு, தங்கள் மஞ்சங்களின்மேல் சவுக்
கியமாய்ச் சயனித்து, மந்தையிலுள்ள ஆட்டுக்
குட்டிகளையும், மாட்டுத் தொழுவத்திலுள்ள
கன்றுக்குட்டிகளையும் தின்று, தம்புரா வா 5
சித்துப் பாடி, [21]தாவீதைப்போல் கீதவாத்தி
யங்களைத் தங்களுக்கு உண்டுபண்ணி, பெ 6
ரிய பாத்திரங்களில் மதுபானத்தைக் குடித்து,
சிறந்த பரிமள தைலங்களைப் பூசிக்கொள்ளு
கிறார்கள்; [22]ஆனாலும் யோசேப்புக்கு நேரிட்ட
ஆபத்துக்குக் கவலைப்படாமற்போகிறார்கள்.
ஆகையால் அவர்கள் சிறையிருப்புக்குப் போ 7
கிறவர்களின் முன்னணியிலே போவார்கள்;
இப்படியே செல்வமாய்ச் சயனித்தவர்களின்
விருந்துகொண்டாடல் நின்றுபோகும். நான் 8
யாக்கோபுடைய மேன்மையை வெறுத்து,
[23]அவனுடைய அரமனைகளைப்பகைக்கிறேன்;
நான் நகரத்தையும் அதின் நிறைவையும் ஒப்
புக்கொடுத்துவிடுவேன் என்று கர்த்தராகிய
ஆண்டவர் தம்முடைய ஜீவனைக்கொண்டு
ஆணையிட்டார் என்பதைச் சேனைகளின் தே

9 வணுகிய **கர்த்தர்** சொல்லுகிருர். ஒரு வீட்டி
லே பத்துப்பேர் மீதியாயிருந்தாலும் அவர்கள்
10 செத்துப்போவார்கள். அவர்களுடைய இனத்
தானுவது, பிரேதத்தைத் தகிக்கிறவனுவது
எலும்புகளை வீட்டிலிருந்து வெளியே கொண்
டுபோகும்படிக்கு, அவைகளை எடுத்து, வீட்
டின் உட்புறத்திலே இருக்கிறவனை நோக்கி:
[1]உன்னிடத்தில் இன்னும் யாராயினும் உண்
டோ என்று கேட்பான், அவன் இல்லை யெ
ன்பான்; அப்பொழுது இவன்: நீ மௌனமா
யிரு; **கர்த்தருடைய** நாமத்தைச் சொல்லலா
11 காது என்பான். இதோ, **கர்த்தர்** கட்டளை
யிட்டிருக்கிருர்; [2]பெரிய வீட்டைத் திறப்பு
கள் உண்டாகவும், சிறிய வீட்டை வெடிப்பு
12 கள் உண்டாகவும் அடிப்பார். கல்மலையின்
மேல் குதிரைகள் ஓடுமோ? அங்கே ஒருவன்
மாடுகளால் உழுவானே? [3]நியாயத்தை நஞ்சா
கவும், நீதியின் கனியை எட்டியாகவும் மாற்றி
13 னீர்கள். நாங்கள் எங்கள் பலத்தினுலே எங்
களுக்குக் கொம்புகளை உண்டாக்கிக்கொள்ள
வில்லையோ என்று சொல்லி, வீண்காரியத்
14 தில் மகிழுகிருர்கள். இஸ்ரவேல் வம்சத்தா
ரே, [4]இதோ, நான் ஒரு ஜாதியை உங்களுக்கு
விரோதமாக எழுப்புவேன்; [5]அவர்கள் ஆமா
த்துக்குள் பிரவேசிக்கிற வழிதொடங்கிச் சம
ணுன நாட்டின் ஆறுமட்டாக உங்களை ஒடுக்
குவார்கள் என்று சேனைகளின் தேவனுகிய
**கர்த்தர்** சொல்லுகிருர்.

7 கர்த்தராகிய ஆண்டவர் எனக்குக் காண்
பித்ததாவது: இதோ ராஜாவினுடைய புல்லறுப்
புக்குப் பின்பு இரண்டாம் கந்தாயத்துப் புல்
முளைக்கத் தொடங்குகையில் அவர் வெட்டுக்
2 கிளிகளை உண்டாக்கினுர். அவைகள் தேசத்
தின் புல்லைத் தின்று தீர்ந்தபோது, நான்: [6]கர்
த்தராகிய ஆண்டவரே, மன்னித்தருளும்;
[7]யாக்கோபு திரும்ப யாராலே எழுந்திருப்
பான்? அவன் சிறுத்துப்போனுன் என்றேன்.
3 **கர்த்தர்** [8]அதற்கு மனஸ்தாபப்பட்டு, அப்படி
ஆவதில்லை என்றுர்.
4 கர்த்தராகிய ஆண்டவர் எனக்குக் காண்பித்த
தாவது: இதோ, [9]அக்கினியாலே நியாயம்
விசாரிப்பேன் என்று கர்த்தராகிய ஆண்டவர்
எற்பட்டார்; அது மகா ஆழியைப் பட்சித்தது,
அதில் ஒரு பங்கைப் பட்சித்துத் தீர்ந்தது.
5 அப்பொழுது நான்: கர்த்தராகிய ஆண்டவரே,
நிறுத்துமே; யாக்கோபு திரும்ப யாராலே எழு
ந்திருப்பான்? அவன் சிறுத்துப்போனுன் என்
6 றேன். **கர்த்தர்** அதற்கு மனஸ்தாபப்பட்டு,
அப்படி ஆவதில்லை என்றுர்.
7 பின்பு அவர் எனக்குக் காண்பித்ததாவது:
இதோ, தூக்குநூல் பிரமாணத்தினுல் கட்டப்
பட்ட ஒரு மதிலின்மேல் நின்றுர்; அவர் கை
8 யில் தூக்குநூல் இருந்தது. **கர்த்தர்** என்னை
நோக்கி: ஆமோசே, நீ என்னத்தைக் காண்கி
ருய் என்றுர்; [10]தூக்குநூலைக் காண்கிறேன்
என்றேன், அப்பொழுது ஆண்டவர்: இதோ,
இஸ்ரவேலென்னும் என் ஜனத்தின் நடுவே
தூக்குநூலை விடுவேன்; [11]இனி அவர்களை
மன்னிக்கமாட்டேன். ஈசாக்கின் *மேடை 9
கள் பாழும், இஸ்ரவேலின் பரிசுத்த ஸ்தலங்
கள் அவாந்தரமுமாக்கப்படும்; நான் எரொ
பெயாம் வீட்டாருக்கு விரோதமாய்ப் பட்ட
யத்தோடே எழும்பிவருவேன் என்றுர்.
அப்பொழுது பெத்தேலில் ஆசாரியனுன 10
அமத்சியா இஸ்ரவேலின் ராஜாவாகிய எரொ
பெயாமுக்கு ஆள் அனுப்பி: [12]ஆமோஸ் இஸ்
ரவேல் வம்சத்தாரின் நடுவே உமக்கு விரோத
மாகக் கட்டுப்பாடு பண்ணுகிருன்; தேசம்
அவன் வார்த்தைகளையெல்லாம் சகிக்கமாட்
டாது. எரொபெயாம் பட்டயத்தினுல் சா 11
வான் என்றும், இஸ்ரவேல் தன் தேசத்திலி
ருந்து சிறைபிடித்துக் கொண்டுபோகப்படு
வான் என்றும் ஆமோஸ் சொல்லுகிருன்
என்று சொல்லச்சொன்னுன். அமத்சியா 12
ஆமோசை நோக்கி: தரிசனம் பார்க்கிறவனே,
போ; நீ யூதா தேசத்துக்கு ஓடிப்போ, அங்கே
அப்பம் தின்று, அங்கே தீர்க்கதரிசனம் சொ
ல்லு. பெத்தேலிலே இனித் தீர்க்கதரிசனம் 13
சொல்லாதே; [13]அது ராஜாவின் பரிசுத்தஸ்த
லமும் ராஜ்யத்தின் அரமனையுமாயிருக்கிறது
என்றுன். ஆமோஸ் அமத்சியாவுக்குப் பிரதி 14
யுத்தரமாக: [14]நான் தீர்க்கதரிசியுமல்ல, தீர்க்க
தரிசியின் புத்திரனுமல்ல; [15]நான் மந்தை மே
ய்க்கிறவனும், காட்டத்திப் பழங்களைப் பொ
றுக்குகிறவனுமாயிருந்தேன். ஆனல் மந்தை 15
யின் பின்னுலே போகிறபோது என்னைக்
**கர்த்தர்** அழைத்து, நீ போய் என் ஜனமாகிய
இஸ்ரவேலுக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம்
சொல்லு என்று **கர்த்தர்** உரைத்தார். இப்போ 16
தும் நீ **கர்த்தருடைய** வார்த்தையைக் கேள்;
இஸ்ரவேலுக்கு விரோதமாய்த் தீர்க்கதரிசனம்
சொல்லாதே, [16]ஈசாக்கின் வம்சத்தாருக்கு வி
ரோதமாக ஒன்றையும் சொல்லாதே என்று
சொல்லுகிருயே. இதினிமித்தம்: உன் பெ 17
ண்ஜாதி நகரத்தில் வேசியாவாள்; [17]உன் குமா
ரரும் உன் குமாரத்திகளும் பட்டயத்தால்
விழுவார்கள்; உன் வயல் அளவுநூலால் பங்
கிட்டுக்கொள்ளப்படும்; நீயோவெனில் அசுத்
தமான தேசத்திலே செத்துப்போவாய்; இஸ்ர
வேலும் தன் தேசத்திலிருந்து சிறைபிடிக்
கப்பட்டுக் கொண்டுபோகப்படுவான் என்று
**கர்த்தர்** சொல்லுகிருர் என்றுன்.
பின்பு கர்த்தராகிய ஆண்டவர் எனக்குக் 8
காண்பித்ததாவது: இதோ, பழுத்த பழங்க
ளுள்ள ஒரு கூடை இருந்தது. அவர்: ஆமோ 2
சே, நீ என்னத்தைக் காண்கிருய் என்று
கேட்டார்? பழுத்த பழங்களுள்ள ஒரு கூடை
யைக் காண்கிறேன் என்றேன். அப்பொழுது
கர்த்தர் என்னை நோக்கி: என் ஜனமாகிய
இஸ்ரவேலுக்கு முடிவுகாலம் வந்தது; [18]இனி
அவர்களை மன்னிக்கமாட்டேன். அங்கா 3
ளிலே தேவாலயப் பாட்டுகள் [19]அலறுதலாக
மாறும்; எல்லா இடத்திலும் திரளான பிரே
தங்கள் புலம்பலில்லாமல் எறிந்துவிடப்படும்

[1] 5. 18
[2] 3. 15
[3] 5. 7. ஓசி. 10. 4
[4] எசே. 5. 15
[5] எண். 34. 8. 1 இரா. 8. 65
[6] தானி. 9. 19
[7] ஏசா. 51. 19. சகரி. 4. 10
[8] உபா. 32. 36. யோனு 3. 10
[9] எபி. 1. 7
[10] புல. 2. 8
[11] மீகா 7. 18
* பெயெர்செபா. ஆதி. 26. 23. ஜ
[12] 1 இரா. 12. 32. 2 இரா. 14. 23
[13] 1 இரா. 12. 32; 13. 1
[14] 1 இரா. 20. 35. சகரி. 13. 5
[15] 1. 1
[16] எசே. 21. 2. மீகா. 2. 6
[17] எரே. 28. 12; 29. 21. ஓசி. 4. 13. சகரி. 14. 2
[18] 7. 8. எசே. 7. 2
[19] 5. 23; 6. 9, 10

என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகி
4 றார். தேசத்தில் சிறுமைப்பட்டவர்களை ஒழி
5 யப்பண்ண, [1]எளியவர்களை விழுங்கி: நாங்
கள் மரக்காலைக் குறைத்து, சேக்கல் நிறை
யை அதிகமாக்கி, கள்ளத்தராசினால் வஞ்
சித்து, [2]தரித்திரரைப் பணத்துக்கும், எளிய
வர்களை ஒருஜோடு பாதரட்சைக்கும் கொள்
ளும்படிக்கும், தானியத்தின் பதரை விற்கும்
6 படிக்கும், நாங்கள் *தவசம் விற்கத்தக்கதாக
மாதப்பிறப்பும், [3]நாங்கள் தானியத்தின் பண்
டசாலைகளைத் திறக்கத்தக்கதாக ஓய்வுநாளும்
எப்போது முடியும் என்று சொல்லுகிறவர்
7 களே, இதைக் கேளுங்கள். அவர்கள் செய்
கைகளையெல்லாம் [4]நான் ஒருபோதும் மறப்ப
தில்லையென்று **கர்த்தர்** யாக்கோபுடைய †மகி
8 மையின்பேரில் ஆணையிட்டார். இதினிமித்
தம் தேசம் [5]அதிரவும், அதின் குடிகள் எல்
லாம் துக்கிக்கவும், எங்கும் நதிகளாய்ப் புரண்
டோடவும், எகிப்தின் ஆற்றுவெள்ளத்தைப்
போல் ‡அடித்து, பெருவெள்ளமாகவும்
9 வேண்டாமோ? அந்நாளிலே நான் மத்தியா
னத்திலே சூரியனை அஸ்தமிக்கப்பண்ணி,
[6]பட்டப்பகலிலே தேசத்தை அந்தகாரப்
10 படுத்தி, உங்கள் பண்டிகைகளைத் துக்கிப்பா
கவும், உங்கள் பாட்டுகளையெல்லாம் புலம்ப
லாகவும் மாறப்பண்ணி, சகல அரைகளிலும்
இரட்டையும், சகல தலைகளிலும் மொட்டை
யையும் வருவித்து, [7]அவர்களுடைய துக்
கிப்பை ஒரே பிள்ளைக்காகத் துக்கிக்கிற துக்
கிப்புக்குச் சமானமாக்கி, அவர்களுடைய
முடிவைக் கசப்பான நாளாக்குவேன் என்று
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.
11 இதோ, நான் தேசத்தின்மேல் பஞ்சத்தை
அனுப்பும் நாட்கள் வரும்; ஆகாரக் குறைவி
னால் உண்டாகிய பஞ்சமல்ல, ஜலக்குறைவி
னால் உண்டாகிய தாகமுமல்ல, [8]**கர்த்தரு
டைய** வசனம் கேட்கக்கிடையாத பஞ்சத்தை
அனுப்புவேன் என்று கர்த்தராகிய ஆண்ட
12 வர் சொல்லுகிறார். அப்பொழுது அவர்கள்
**கர்த்தருடைய** வசனத்தைத் தேட ஒரு சமுத்
திரந்தொடங்கி மறு சமுத்திரமட்டும், வட
திசைதொடங்கிக் கீழ்த்திசைமட்டும் அலைந்து
திரிந்தும் அதைக் கண்டடையாமற் போவார்
13 கள். அந்நாளிலே சௌந்தரியமுள்ள கன்
னிகைகளும் வாலிபரும் [9]தாகத்தினால் சோ
14 ர்ந்துபோவார்கள். தாணே! உன் தேவனு
டைய ஜீவனைக்கொண்டும், §பெயெர்செபா
மார்க்கத்தின் தேவனுடைய ஜீவனைக்கொண்
டும் என்று சொல்லி, [10]சமாரியாவின் ||தோ
ஷத்தின்மேல் ஆணையிடுகிறவர்கள் விழுவார்
கள்; இனி ஒருபோதும் எழுந்திருக்கமாட்
டார்கள் என்றார்.

9 ஆண்டவரைப் பலிபீடத்தின்மேல் நிற்கக்
கண்டேன்; அவர்: [11]நீ வாசல் நிலைகள்
அசையும்படி போதிகையை அடித்து, அவை
களை அவர்கள் எல்லாருடைய தலையின்மே
லும் விழ உடைத்துப்போடு; அவர்களுக்குப்
பின்னாகவரும் மீதியானவர்களை நான் பட்ட
யத்தினால் கொன்றுபோடுவேன்; அவர்களில்
ஓடுகிறவன் ஒருவனும் தப்புவதுமில்லை, அவர்
களில் தப்புகிறவன் ஒருவனும் ரட்சிக்கப்படு
வதுமில்லை. அவர்கள் பாதாள பரியந்தம் 2
தோண்டிப் பதுங்கிக்கொண்டாலும், என் கை
அவ்விடத்திலிருந்து அவர்களைப் பிடித்துக்
கொண்டுவரும்; [12]அவர்கள் வானபரியந்தம் ஏறி
னாலும், அவ்விடத்திலுமிருந்து அவர்களை
இறங்கப்பண்ணுவேன்; அவர்கள் கர்மேலின் 3
கொடுமுடியிலே ஒளித்துக்கொண்டாலும், அ
ங்கே அவர்களைத் தேடிப்பிடிப்பேன்; அவர்
கள் சமுத்திரத்தின் ஆழத்திலே போய் என்
கண்களுக்கு மறைந்துகொண்டாலும், அங்கே
அவர்களைக் கடிக்கப் பாம்புகளுக்குக் கட்டளை
யிடுவேன். அவர்கள் தங்கள் சத்துருவுக்கு 4
முன்பாகச் சிறைப்பட்டுப்போனாலும், [13]அங்
கே அவர்களைக் கொன்றுபோட பட்டயத்
துக்கு நான் கட்டளையிட்டு, என் கண்களை
அவர்கள்மேல் நன்மைக்கல்ல, தீமைக்கென்
றே வைப்பேன். சேனைகளின் கர்த்தராகிய 5
ஆண்டவர் தேசத்தைத் தொட, அது உருகிப்
போம்; [14]அப்பொழுது அதின் குடிகளெல்லா
ரும் புலம்புவார்கள்; எங்கும் நதியாய்ப் புரண்
டோடி, எகிப்தினுடைய ஆற்று வெள்ளத்
தைப்போல் வெள்ளமாகும். அவர் வானத்தில் 6
தமது மேலறைகளைக் கட்டி, பூமியில் தமது
கீழறைகளை அஸ்திபாரப்படுத்தி, சமுத்திரத்
தின் தண்ணீர்களை வரவழைத்து, [15]அவை
களை பூமியினுடைய விசாலத்தின்மேல் ஊற்
றுகிறவர்; **கர்த்தர்** என்பது அவருடைய நா
மம். இஸ்ரவேல் புத்திரரே, நீங்கள் எனக்கு 7
எத்தியோப்பியரின் புத்திரரைப்போல் இருக்
கிறீர்கள் அல்லவோ என்று **கர்த்தர்** சொல்
லுகிறார்; [16]நான் இஸ்ரவேலை எகிப்துதேசத்தி
லிருந்தும், பெலிஸ்தரைக் கப்தோரிலிருந்தும்,
சீரியரைக் கீரிலிருந்தும் கொண்டுவரவில்லை
யோ? இதோ, கர்த்தராகிய ஆண்டவரின் 8
கண்கள் பாவமுள்ள ராஜ்யத்துக்கு விரோத
மாக வைக்கப்பட்டிருக்கிறது, அதை பூமியின்
மேல் இராதபடிக்கு அழித்துப்போடுவேன்;
[17]ஆகிலும் யாக்கோபின் வம்சத்தை முழுவதும்
அழிக்கமாட்டேன் என்று **கர்த்தர்** சொல்லு
கிறார். இதோ, சல்லடையினால் சலித்தரிக்கி 9
றதுபோல் இஸ்ரவேல் வம்சத்தாரை எல்லா
ஜாதிகளுக் குள்ளும் சலித்தரிக்கும்படிக்கு
நான் கட்டளையிடுவேன்; ஆனாலும் ஒரு கோ
துமைமணியும் தரையிலே விழுவதில்லை,
தீங்கு எங்களை அணுகுவதுமில்லை, எங்களு 10
க்கு நேரிடுவதுமில்லையென்று என் ஜனத்தில்
சொல்லுகிற பாவிகளெல்லாரும் பட்டயத்தி
னால் சாவார்கள்.

ஏதோமில் மீதியானவர்களையும், என் நா 11
மம் விளங்கிய சகல ஜாதிகளையும் வசமாக்கிக்
கொள்ளும்படிக்கு, அந்நாளிலே [18]விழுந்து 12
போன தாவீதின் கூடாரத்தை நான் திரும்ப
எடுப்பித்து, அதின் திறப்புகளை அடைத்து,

1 நீதி. 30. 14
2 2. 6. நெகே. 13. 15, 16
* தானியம்
3 மீகா 6. 10, 11
4 எரே. 17. 1. ஓசி. 8. 13
† மேன்மை. 6. 8
5 ஓசி. 4. 3
‡ பிரவாகித்த
6 ஏசா. 59. 9, 10. எரே. 15. 9
7 எரே. 6. 26. எசே. 7. 18. சகரி. 12. 10
8 1 சாமு. 3. 1. சங். 74. 9. எசே. 7. 26
9 சங். 63. 1. ஏசா. 41. 17-20
§ விக்கிரகாராதனை 5. 5
10 உபா. 9. 21. ஓசி. 4. 15
|| பொற்கன்றுக்குட்டி. உபா. 9. 21
11 சங். 68. 21. ஆப. 3. 13
12 சங். 139. 8-10. ஒப. 4. எசே
13 உபா. 28. 65. எரே. 44. 11. எசே. 5. 12
14 மீகா 1. 4
15 சங். 104. 3, 13
16 உபா. 2. 23. எரே. 47. 4
17 உபா. 4. 31. எரே. 30. 11
18 அப். 15. 15, 17

அதில் பழுதாய்ப் போனதைச் சீர்ப்படுத்தி,
பூர்வநாட்களில் இருந்ததுபோல அதை ஸ்தா
பிப்பேன் என்று இதைச் செய்கிற கர்த்தர்
13 சொல்லுகிறார். இதோ, உழுகிறவன் அறுக்
கிறவனையும், திராட்சப்பழங்களை ஆலையாடு
கிறவன் விதைக்கிறவனையும் தொடர்ந்துபிடி
த்து, [1]பர்வதங்கள் திராட்சரசமாய் வடிகிற
தும், மேடுகளெல்லாம் கரைகிறதுமான நாட்
கள் வரும் என்று கர்த்தர் சொல்லுகிறார்.
14 என் ஜனமாகிய இஸ்ரவேலின் சிறையிருப்
பைத் திருப்புவேன்; அவர்கள் பாழான நக
ரங்களைக் கட்டி, அவைகளில் குடியிருந்து,
[2]திராட்சத்தோட்டங்களை நாட்டி, அவைகளு
டைய பழரசத்தைக் குடித்து, தோட்டங்களை
உண்டாக்கி, அவைகளின் கனிகளைப் புசிப்
பார்கள். அவர்களை அவர்கள் தேசத்திலே 15
நாட்டுவேன்; [3]நான் அவர்களுக்குக் கொடுத்த
தேசத்திலிருந்து அவர்கள் இனிப் பிடுங்கப்
படுவதில்லையென்று உன் தேவனாகிய கர்த்தர்
சொல்லுகிறார் என்றார்.

1 லேவி. 26. 4, 5. யோவே. 3. 18, 20
2 எசே. 36. 33
3 எரே. 32. 41

# OBADIAH

# ஒபதியா

1 ஒபதியாவின் தரிசனம்: கர்த்தராகிய ஆண்
டவர் ஏதோமைக்குறித்துச் சொல்லுகிறது
என்னவென்றால்: [1]எழும்புங்கள், அதற்கு
விரோதமாக யுத்தம்பண்ண எழும்புவோம்
வாருங்கள் என்று அறிவிக்க, ஸ்தானாபதி
ஜாதிகளிடத்தில் அனுப்பப்படும் செய்தியைக்
2 **கர்த்தர்** சொல்லக் கேட்டோம். இதோ,
நான் உன்னை ஜாதிகளில் சிறுகப்பண்ணினே
ன்; நீ மெத்தவும் அசட்டை பண்ணப்பட்டி
3 ருக்கிறாய். கல்மலை வெடிப்புகளாகிய உன்
உயர்ந்த ஸ்தானத்திலே குடியிருந்து, [2]என்
னைத் தரையிலே விழத்தள்ளுகிறவன் யார்
என்று உன் இருதயத்தில் சொல்லுகிறவனே,
உன் இருதயத்தின் அகந்தை உன்னை மோசம்
4 போக்குகிறது. நீ கழுகைப்போல உயரப்
போனாலும், [3]நீ நட்சத்திரங்களுக்குள்ளே உன்
கூட்டைக் கட்டினாலும், அவ்விடத்திலிருந்
தும் உன்னை விழத்தள்ளுவேன் என்று **கர்த்**
5 **தர்** சொல்லுகிறார். நீ எவ்வளவாய்ச் சங்கரிக்
கப்பட்டுப் போனாய்! [4]திருடராகிலும் இராத்
திரியில் கொள்ளையடிக்கிறவர்க ளாகிலும்
உன்னிடத்தில் வந்தால், தங்களுக்குப் போது
மானமட்டும் திருடுவார்கள் அல்லவோ? திராட்
சப்பழங்களை அறுக்கிறவர்கள் உன்னிடத்தில்
வந்தால், சில பழங்களை விட்டுவிடுவார்கள் அல்
6 லவோ? ஏசாவினுடையவைகள் எவ்வளவாய்
த்தேடிப் பார்க்கப்பட்டது; [5]அவனுடைய அந்
தரங்கப் பொக்கிஷங்கள் எவ்வளவாய் ஆராய்ந்
7 தெடுத்துக்கொள்ளப்பட்டது. உன்னோடு உட
ன்படிக்கைசெய்த எல்லா மனுஷரும் உன்னை
எல்லைமட்டும் துரத்திவிட்டார்கள்; உன்னோடு
சமாதானமாயிருந்த மனுஷர் உன்னை மோசம்
போக்கி, உன்னை மேற்கொண்டார்கள்; உன்
அப்பத்தைச் சாப்பிட்டவர்கள் உனக்குக் கீழே
கண்ணிவைத்தார்கள். [6]அவனுக்கு உணர்
8 வில்லை. அந்நாளில் அல்லவோ நான் ஏதோ
மிலுள்ள ஞானிகளையும், [7]ஏசாவின் பர்வதத்
திலுள்ளபுத்திமான்களையும்அழிப்பேன்என்று
9 **கர்த்தர்** சொல்லுகிறார். தேமானே, ஏசா
வின் பர்வதத்திலுள்ள மனுஷர் யாவரும்
கொலையினால் சங்கரிக்கப்படும்படி உன் [8]பரா
க்கிரமசாலிகள் கலங்குவார்கள். நீ உன் 10
சகோதரனாகிய யாக்கோபுக்குச் செய்த கொடு
மையினிமித்தம் வெட்கம் உன்னை மூடும்; [9]நீ
முற்றிலும் சங்கரிக்கப்பட்டுப் போவாய். நீ 11
எதிர்த்துநின்ற நாளிலும், அந்நியர் அவன்
சேனையைச் சிறைபிடித்துப்போன நாளிலும்,
மறுதேசத்தார் அவன் வாசல்களுக்குள் பிரவே
சித்து [10]எருசலேமின்பேரில் சீட்டுப்போட்ட
காலத்தில், நீயும் அவர்களில் ஒருவனைப்
போல் இருந்தாய். உன் சகோதரன் அந்நி 12
யர் வசமான நாளாகிய அவனுடைய நாளை
நீ பிரியத்தோடே பாராமலும், யூதா புத்திரரு
டைய அழிவின் நாளிலே அவர்கள்நிமித்தம்
சந்தோஷப்படாமலும், [11]அவர்கள் நெருக்கப்
படுகிற நாளிலே நீ பெருமையாய்ப் பேசா
மலும் இருக்கவேண்டியதாயிருந்தது. என் 13
ஜனத்தின் ஆபத்துநாளிலே நீ அவர்கள் வாசல்
களுக்குள் பிரவேசியாமலும், அவர்கள் ஆபத்
துநாளிலே அவர்கள் அநுபவிக்கிற தீங்கை
நீ பிரியத்தோடே பாராமலும், அவர்கள் ஆப
த்துநாளிலே அவர்கள் ஆஸ்தியில் கைபோ
டாமலும், அவர்களில் தப்பினவர்களைச் சங் 14
கரிக்கும்படி வழிச்சந்திகளிலே நிற்காமலும்,
இக்கட்டுநாளில் அவர்களில் மீதியானவர்க
ளைக் காட்டிக்கொடாமலும் இருக்கவேண்டி
யதாயிருந்தது. எல்லா ஜாதிகளுக்கும் விரோ 15
தமான நாளாகிய **கர்த்தருடைய** நாள் சமீப
மாய் வந்திருக்கிறது; [12]நீ செய்தபடியே உனக்
கும் செய்யப்படும்; உன் செய்கையின் பலன்
உன் தலையின்மேல் திரும்பும். நீங்கள் என் பரி 16
சுத்த பர்வதத்தின்மேல் மதுபானம் பண்ணின
படியே எல்லா ஜாதிகளும் எப்பொழுதும் மது
பானம் பண்ணுவார்கள், [13]அவர்கள் குடித்து
விழுங்குவார்கள், *இராதவர்களைப்போல்
இருப்பார்கள். ஆனாலும் சீயோன் பர்வதத் 17
திலே தப்பியிருப்பார் உண்டு, [14]அவர்கள் பரி
சுத்தமாயிருப்பார்கள்; யாக்கோபின் வம்சத்
தார் தங்களுடைய சுதந்தரங்களைச் சுதந்தரித்
துக்கொள்வார்கள். யாக்கோபு வம்சத்தார் 18

1 ஏசா. 21. 11: 34. 5. ஏ. எரே. 49. 7. ஏ. எசே. 25. 12. யோவே. 3. 19. மல். 1. 3, 4

2 2 இரா. 14. 7. ஏசா. 14. 13, 15. வெளி. 18. 7

3 யோபு 20. 6. எரே. 49. 16. ஆப. 2. 9

4 உபா. 24. 21. எரே. 49. 9

5 சங். 139. 1. தானி. 2. 22

6 ஏசா. 19. 11–14

7 யோபு 5. 12. 13. ஏசா. 29. 14. எரே. 49. 7

8 சங். 76. 5

9 சங். 137. 7. எசே. 35. 5

10 யோவே. 3. 3. நாகூம் 3. 10

11 மீகா 4. 11: 7. 8–10

12 எசே. 30. 3: 35. 15. யோவே. 3. 14. ஆப. 2. 8

13 எரே. 25. 28, 29. யோவே. 3. 17. 1 பே. 4. 17

* பிறவாதவர்கள்

14 யோவே. 2. 32

அக்கினியும், யோசேப்பு வம்சத்தார் அக்கினி
ஜுவாலையுமாயிருப்பார்கள்; [1]ஏசா வம்சத்தா
ரோ வைக்கோல் துரும்பாயிருப்பார்கள்;
அவர்கள் இவர்களைக் கொளுத்தி, ஏசாவின்
வம்சத்தில் மீதியிராதபடி இவர்களைப் பட்சிப்
19 பார்கள்; **கர்த்தர்** இதைச் சொன்னார். தென்
தேசத்தார் ஏசாவின் மலையையும், சமனான
தேசத்தார் பெலிஸ்தரின் தேசத்தையும் சுதந்
தரித்துக்கொள்வார்கள்; [2]அவர்கள் எப்பிரா
யீமின் நாட்டையும், சமாரியாவின் நாட்டை
யும் சுதந்தரித்துக்கொள்வார்கள்; பென்ய
மீன் மனுஷர் கிலேயாத்தையும் சுதந்தரித்
துக்கொள்வார்கள். சர்பாத்மட்டும் கானானி 20
யருக்குள்ளே சிறைப்பட்டுப்போன இஸ்ர
வேல் புத்திரராகிய இந்தச் சேனையும், [3]சேப்
பாராத்தில் சிறைப்பட்டுப்போன எருசலேம்
நகரத்தாரும் தென்திசைப் பட்டணங்களைச்
சுதந்தரித்துக்கொள்வார்கள். ஏசாவின் பர்வ 21
தத்தை நியாயந் தீர்ப்பதற்காக *இரட்சகர்
கள் சீயோன் பர்வதத்தில் வந்தேறுவார்கள்;
[4]அப்பொழுது ராஜ்யம் **கர்த்தருடையதாயி**
இருக்கும்.

[1] ஏசா. 10. 17. சகரி. 12. 6
[2] ஆமோ. 9. 12. செப். 2. 7
[3] 1 இரா. 17. 2,9 எரே. 32. 44
* பரிபாலகர்கள் 1 தீமோ. 4. 16. யாக். 5. 20
[4] சங். 22. 28. தானி. 2. 44. சகரி. 14 9. லூ. 1. 33 வெளி. 11. 15; 19 6

# JONAH

# யோனா

1 அமித்தாயின்குமாரனாகிய [1]யோனாவுக்குக்
கர்த்தருடைய வார்த்தை உண்டாகி, அவர்:
2 நீ எழுந்து மகா நகரமாகிய நினிவேக்குப்
போய், [2]அதற்கு விரோதமாகப் பிரசங்கி;
[3]அவர்களுடைய அக்கிரமம் என் சமுகத்தில்
3 வந்து எட்டினது என்றார். அப்பொழுது
யோனா கர்த்தருடைய[4]சமுகத்தினின்றுவிலகி,
தர்ஷீசுக்கு ஓடிப்போகும்படி எழுந்து, [5]யோப்
பாவுக்குப் போய், தர்ஷீசுக்குப் போகிற ஒரு
கப்பலைக் கண்டு, கூலிகொடுத்து, தான் கர்த்
தருடைய சமுகத்தினின்று விலகும்படி, அவர்
களோடே தர்ஷீசுக்குப் போகக் கப்பல் ஏறி
4 னான். கர்த்தர் சமுத்திரத்தின்மேல் பெருங்
காற்றை [6]வரவிட்டார்; அதினால் கடலிலே
கப்பல் உடையுமென்று நினைக்கத்தக்க பெரிய
5 கொந்தளிப்பு உண்டாயிற்று. அப்பொழுது
கப்பற்காரர் பயந்து, அவனவன் தன் தன்
தேவனை நோக்கி வேண்டுதல்செய்து, [7]பாரத்
தை லேசாக்கும்படிக் கப்பலில் இருந்த சரக்கு
களைச் சமுத்திரத்தில் எறிந்துவிட்டார்கள்;
யோனாவோவென்றால் கப்பலின் கீழ்த்தட்
டில் இறங்கிப்போய்ப் படுத்துக்கொண்டு,
6 அயர்ந்த நித்திரை பண்ணினான். அப்பொ
ழுது மாலுமி அவனிடத்தில் வந்து: நீ நித்
திரை பண்ணுகிறது என்ன? [8]எழுந்திருந்து
உன் தேவனை நோக்கி வேண்டிக்கொள்;
நாம் அழிந்து போகாதபடிக்குச் சுவாமி ஒரு
வேளை நம்மை நினைத்தருளுவார் என்றான்.
7 அவர்கள் யார்நிமித்தம் இந்த ஆபத்து நமக்கு
நேரிட்டதென்று நாம் அறியும்படிக்குச் சீட்
டுப்போடுவோம் வாருங்கள் என்று ஒருவரோ
டொருவர் சொல்லிக்கொண்டு சீட்டுப்போட்
டார்கள்; [9]யோனாவின் பேருக்குச் சீட்டு
8 விழுந்தது. அப்பொழுது அவர்கள் அவனை
நோக்கி: [10]யார்நிமித்தம் இந்த ஆபத்து நமக்கு
நேரிட்டதென்று நீ எங்களுக்குச் சொல்ல
வேண்டும்; உன் தொழிலென்ன? நீ எங்கே
யிருந்து வருகிறாய்? உன் தேசம் எது? நீ என்ன
9 ஜாதியான் என்று கேட்டார்கள். அதற்கு
அவன்: நான் எபிரெயன்; [11]சமுத்திரத்தையும்
பூமியையும் உண்டாக்கின பரலோகத்தின்
தேவனாகிய *கர்த்தர் இடத்தில் பயபக்தியுள்
10 ளவன் என்றான். அவன் கர்த்தருடைய சமு
கத்தினின்று விலகி ஓடிப்போகிறவன் என்று
தங்களுக்கு அறிவித்ததினால், அந்த மனுஷர்
மிகவும் பயந்து, அவனை நோக்கி: நீ ஏன்
இதைச் செய்தாய் என்றார்கள். பின்னும் 11
சமுத்திரம் அதிகமாய்க் கொந்தளித்துக்கொண்
டிருந்தபடியால், அவர்கள் அவனை நோக்கி:
சமுத்திரம் நமக்கு அமரும்படி நாங்கள் உனக்கு
என்ன செய்யவேண்டும் என்று கேட்டார்கள்.
அதற்கு அவன்: நீங்கள் என்னை எடுத்துச் 12
சமுத்திரத்திலே போட்டுவிடுங்கள்; அப்பொ
ழுது சமுத்திரம் உங்களுக்கு அமர்ந்திருக்கும்;
[12]என்னிமித்தம் இந்தப்பெரிய கொந்தளிப்பு
உங்கள்மேல் வந்ததென்பதை நான் அறிவேன் *
என்றான். அந்த மனுஷர் கரைசேரும்படி 13
வேகமாய்த் தண்டு வலித்தார்கள்; [13]ஆனாலும்
சமுத்திரம் வெகு மும்முரமாய்க் கொந்தளித்
துக்கொண்டே யிருந்தபடியால் அவர்களால்
கூடாமற்போயிற்று. அப்பொழுது அவர்கள் 14
கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டு: ஆ கர்த்தாவே,
இந்த மனுஷனுடைய ஜீவனிமித்தம் எங்களை
அழித்துப் போடாதேயும்; [14]குற்றமில்லாத
இரத்தப்பழியை எங்கள்மேல் சுமத்தாதேயும்;
தேவரீர் கர்த்தர்; உமக்குச் சித்தமாயிருக்கிற
படி செய்கிறீர் என்று சொல்லி, யோனாவை 15
எடுத்துச் சமுத்திரத்திலே போட்டுவிட்
டார்கள்; [15]சமுத்திரம் தன் மும்முரத்தைவிட்டு
அமர்ந்தது. அப்பொழுது அந்த மனுஷர் 16
கர்த்தருக்கு மிகவும் பயந்து, [16]கர்த்தருக்குப்
பலியிட்டுப் பொருத்தனைகளைப் பண்ணினார்
கள். யோனாவை விழுங்கும்படி ஒரு பெரிய 17
மீனைக் கர்த்தர் ஆயத்தப்படுத்தியிருந்தார்;
[17]அந்த மீன் வயிற்றிலே யோனா இராப்பகல்
மூன்றுநாள் இருந்தான்.

அந்த மீனின் வயிற்றிலிருந்து, யோனா 2
தன் தேவனாகிய கர்த்தரை நோக்கி விண்ணப்
பம் பண்ணி:
என் நெருக்கத்தில் நான் கர்த்தரை நோக் 2
கிக் கூப்பிட்டேன்; அவர் எனக்கு உத்தரவு
அருளினார்; [18]நான் பாதாளத்தின் வயிற்றிலி
ருந்து கூக்குரலிட்டேன், நீர் என் சத்தத்
தைக் கேட்டீர். சமுத்திரத்தின் நடுமையமா 3
கிய ஆழத்திலே நீர் என்னைத் தள்ளிவிட்டீர்;
[19]நீரோட்டம் என்னைச் சூழ்ந்துகொண்டது;
உம்முடைய வெள்ளங்களும் அலைகளும் எல்
லாம் என்மேல் புரண்டது. நான் உமது 4
கண்களுக்கு எதிரே இராதபடிக்குத் தள்ளப்
பட்டேன்; [20]ஆகிலும் இன்னமும் உம்முடைய

1 2 இரா. 14. 25. மத். 12. 39
2 ஆதி. 10. 11, 12
3 எஸ்றா 9. 6. யாக். 5. 4. வெளி. 18. 5
4 சங். 139. 7
5 அப். 9. 36
6 சங். 107. 25
7 அப். 27. 18. ழ
8 சங். 107. 28. யோவே. 2. 14
9 யோசு. 7. 14, 16. 1 சாமு. 14. 41, 42. நீதி. 16. 33
10 யோசு. 7. 19 1 சாமு. 14. 43
11 சங். 146. 6. அப். 17. 24
* யேகோவா
12 யோசு. 7. 12 பிர. 9. 18. யோ. 11. 50
13 நீதி. 21. 30
14 உபா. 21. 8. சங். 115. 8
15 சங். 89. 9. மத். 8. 24
16 ஏசா. 26. 9. மாற். 4. 41. அப். 5. 11
17 மத். 12. 40
18 சங். 65. 2; 120. 1; 130. 1. ஏசா. 14. 9
19 சங். 42. 7; 88. 5–8
20 1 இரா. 8. 38, 39. சங். 31. 22

பரிசுத்த ஆலயத்தை நோக்குவேன் என்றேன்.
5 தண்ணீர்கள் பிராணபரியந்தம் என்னை நெரு
க்கினது; [1]ஆழி என்னைச் சூழ்ந்தது; கடற்
6 பாசி என் தலையைச் சுற்றிக்கொண்டது. பர்
வதங்களின் அடிவாரங்கள் பரியந்தமும் இறங்
கினேன்; [2]பூமியின் தாழ்ப்பாள்கள் என்றென்
றைக்கும் என்னை அடைக்கிறதாயிருந்தது;
ஆனாலும் என் தேவனாகிய **கர்த்தாவே**, நீர்
என் பிராணனை அழிவுக்குத் தப்புவித்தீர்.
7 என் ஆத்துமா என்னில் தொய்ந்துபோகை
யில் **கர்த்தரை** நினைத்தேன்; [3]அப்பொழுது
என் விண்ணப்பம் உமது பரிசுத்த ஆலயத்
8 திலே உம்மிடத்தில் வந்து சேர்ந்தது. பொய்
யான *மாயையைப் பற்றிக்கொள்ளுகிறவர்
கள் [4]தங்களுக்கு வரும் கிருபையைப் போக்
9 கடிக்கிறார்கள். நானோவெனில் துதியின்
சத்தத்தோடே உமக்குப் பலியிடுவேன்;
[5]நான் பண்ணின பொருத்தனையைச் செ
லுத்துவேன்; ரட்சிப்பு **கர்த்தருடையது**
10 என்றான். **கர்த்தர்** மீனுக்குக் கட்டளையிட்
டார், [6]அது யோனாவைக் கரையிலே கக்கி
விட்டது.

**3** இரண்டாந்தரம் **கர்த்தருடைய** வார்த்தை
2 யோனாவுக்கு உண்டாகி, அவர்: நீ எழுந்து
மகா நகரமாகிய நினிவேக்குப் போய், நான்
உனக்குக் கற்பிக்கும் வார்த்தையை அதற்கு
3 விரோதமாய்ப் பிரசங்கி என்றார். யோனா
எழுந்து, **கர்த்தருடைய** வார்த்தையின்படியே
நினிவேக்குப் போனான்; நினிவே மூன்று
நாள் பிரயாண விஸ்தாரமான மகா பெரிய
4 நகரமாயிருந்தது. யோனா நகரத்தில் பிரவே
சித்து, ஒருநாள் பிரயாணம்பண்ணி: இன்
னும் நாற்பதுநாள் உண்டு, [7]அப்பொழுது
நினிவே கவிழ்க்கப்பட்டுப்போம் என்று கூறி
5 னான். அப்பொழுது நினிவேயிலுள்ள ஜனங்
கள் தேவனை விசுவாசித்து, [8]உபவாசஞ் செய்
யும்படிக் கூறினார்கள்; பெரியோர்முதல் சிறி
யோர்மட்டும் இரட்டுடுத்திக்கொண்டார்கள்.
6 இந்தச் செய்தி நினிவேயின் ராஜாவுக்கு எட்
டினபோது, [9]அவன் தன் சிங்காசனத்தை
விட்டு எழுந்து, தான் உடுத்தியிருந்த உடுப்
பைக் கழற்றிப்போட்டு, இரட்டை உடுத்திக்
7 கொண்டு, சாம்பலிலே உட்கார்ந்தான். மே
லும் ராஜா, தானும் தன் பிரதானிகளும் நிர்
ணயம்பண்ணின கட்டளையாக, [10]நினிவேயி
லெங்கும் மனுஷரும் மிருகங்களும், மாடுக
ளும் ஆடுகளும் ஒன்றும் ருசிபாராதிருக்கவும்,
மேயாமலும் தண்ணீர் குடியாமலும் இருக்க
8 வும், மனுஷரும் மிருகங்களும் இரட்டினால்
மூடிக்கொண்டு, தேவனை நோக்கி உரத்தசத்த
மாய்க் கூப்பிடவும், [11]அவரவர் தம்தம் பொல்
லாத வழியையும் தம்தம் கைகளிலுள்ள கொடு
மையையும் விட்டுத் திரும்பவுங்கடவர்கள்.
9 யாருக்குத் தெரியும்; [12]நாம் அழிந்துபோகாத
படிக்கு ஒருவேளை தேவன் மனஸ்தாபப்பட்டு,
தம்முடைய உக்கிரகோபத்தைவிட்டுத் திரும்
பினாலும் திரும்புவார் என்று கூறச்சொன்

[1] சங். 69. 1. புல. 3. 54
[2] சங். 16. 10. ஏசா. 38. 17
[3] சங். 18. 6
* விக்கிரகத்தை
[4] 1 சாமு. 12. 21. 2 இரா. 17. 15. சங். 31. 6. எரே. 10. 8: 16. 19
[5] சங். 50. 14, 23. ஓசி. 14. 2. பிர. 12. 1. எபி. 13. 15
[6] ஏசா. 50. 2
[7] உபா. 18. 22. எரே. 18. 7–10
[8] மத். 12. 41
[9] யோபு 2. 8
[10] 1 ராஜா. 20. 8. யோவே. 2. 15
[11] ஏசா. 58. 6: 59. 6
[12] 2 சாமு. 12. 22. யோவே. 2. 14
[13] 1 இரா. 21. 27. எரே. 18. 8. ஆமோ. 7. 3, 6. ஓசி. 11. 32
[14] யாத். 34. 6. சங். 86. 5. யோவே. 2. 13
[15] 1 இரா. 19. 4. எரே. 20. 14–18
[16] 1. 2: 3. 2, 3. உபா. 1. 39. சங். 36. 6: 145. 9

னான். அவர்கள் தங்கள் பொல்லாத வழியை 10
விட்டுத் திரும்பினார்களென்று தேவன் அவர்க
ளுடைய கிரியைகளைப்பார்த்து, [13]தாம் அவர்
களுக்குச் செய்வேன் என்று சொல்லியிருந்த
தீங்கைக்குறித்து மனஸ்தாபப்பட்டு, அதைச்
செய்யாதிருந்தார்.

யோனாவுக்கு இது மிகவும் விசனமாயி **4**
ருந்தது; அவன் கடுங்கோபங்கொண்டு, **கர்த்** 2
**தரை** நோக்கி விண்ணப்பம்பண்ணி: ஆ **கர்த்**
**தாவே**, நான் என் தேசத்தில் இருக்கும்
போதே நான் இதைச் சொல்லவில்லையா?
[14]இதினிமித்தமே நான் முன்னமே தர்ஷீசுக்கு
ஓடிப்போனேன்; நீர் இரக்கமும் மன உருக்
கமும் நீடிய சாந்தமும் மிகுந்த கிருபையுமுள்
ளவரும், தீங்குக்கு மனஸ்தாபப்படுகிறவரு
மான தேவனென்று அறிவேன். இப்போ 3
தும் **கர்த்தாவே**, என் பிராணனை என்னை
விட்டு எடுத்துக்கொள்ளும்; [15]நான் உயிரோ
டிருக்கிறதைப்பார்க்கிலும் சாகிறது நலமாயி
ருக்கும் என்றான். அதற்குக் **கர்த்தர்**: நீ 4
எரிச்சலாயிருக்கிறது நல்லதோ என்றார்.
பின்பு யோனா நகரத்திலிருந்து புறப்பட்டு, 5
நகரத்துக்குக் கிழக்கே போய், அங்கே தனக்கு
ஒரு குடிசையைப் போட்டு, நகரத்துக்குச்
சம்பவிக்கப்போகிறதைத்தான் பார்க்குமட்டும்
அதின் கீழ் நிழலில் உட்கார்ந்திருந்தான்.
யோனாவுடைய தலையின்மேல் நிழலுண்டாயி 6
ருக்கவும், அவனை அவனுடைய மனமடிவுக்கு
நீங்கலாக்கவும் தேவனாகிய **கர்த்தர்** ஒரு ஆம
ணக்குச் செடியை முளைக்கக் கட்டளையிட்டு,
அதை அவன்மேல் ஓங்கி வளரப்பண்ணினார்;
அந்த ஆமணக்கின்மேல் யோனா மிகவும் சந்
தோஷப்பட்டான். மறுநாளிலோ கிழக்கு 7
வெளுக்கும் நேரத்தில் தேவன் ஒரு பூச்சி
யைக் கட்டளையிட்டார்; அது ஆமணக்குச்
செடியை அரித்துப்போட்டது; அதினால்
அது காய்ந்துபோயிற்று. சூரியன் உதித்த 8
போது தேவன் உஷ்ணமான கீழ்க்காற்றைக்
கட்டளையிட்டார்; அப்பொழுது வெயில் யோ
னாவுடைய தலையில் படுகிறதினால் அவன்
சோர்ந்துபோய், தனக்குள்ளே சாவை விரு
ம்பி: நான் உயிரோடிருக்கிறதைப் பார்க்கி
லும் சாகிறது நலமாயிருக்கும் என்றான். அப் 9
பொழுது தேவன் யோனாவை நோக்கி: நீ
ஆமணக்கினிமித்தம் எரிச்சலாயிருக்கிறது நல்
லதோ என்றார்; அதற்கு அவன்: நான் மரண
பரியந்தமும் எரிச்சலாயிருக்கிறது நல்லது
தான் என்றான். அதற்கு **கர்த்தர்**: நீ பிரயா 10
சப்படாததும், நீ வளர்க்காததும், ஒரு இராத்
திரியிலே முளைத்ததும், ஒரு இராத்திரியிலே
அழிந்துபோனதுமான ஆமணக்குக்காகப் பரி
தபிக்கிறாயே. வலதுகைக்கும் இடதுகைக் 11
கும் வித்தியாசம் அறியாத [16]இலட்சத்து இரு
பதினாயிரம்பேருக்கு அதிகமான மனுஷரும்
அநேக மிருகஜீவன்களும் இருக்கிற மகா நகர
மாகிய நினிவேக்காக நான் பரிதபியாமலிருப்
பேனோ என்றார்.

MICAH

# மீகா

1 யோதாம், ஆகாஸ், எசேக்கியா என்னும்
யூதா ராஜாக்களுடைய நாட்களில், மொரேசா
ஊரானாகிய [1]மீகாவுக்கு உண்டானதும்,
அவன் சமாரியாவுக்கும் எருசலேமுக்கும்
விரோதமாய்த் *தரிசித்ததுமான கர்த்தருடைய
வார்த்தை.
2 சகல ஜனங்களே, கேளுங்கள்; [2]பூமியே,
அதிலுள்ளவைகளே, செவிகொடுங்கள்; கர்த்
தராகிய ஆண்டவர், தம்முடைய பரிசுத்த
ஆலயத்திலிருக்கிற ஆண்டவரே, [3]உங்களுக்கு
3 விரோதமாகச் சாட்சியாயிருப்பார். இதோ,
கர்த்தர் தமது ஸ்தானத்திலிருந்து புறப்பட்டு
வருகிறார்; [4]அவர் இறங்கி பூமியின் உயர்ந்த
4 இடங்களை மிதிப்பார். மெழுகு அக்கினிக்கு
முன்பாக உருகுகிறதுபோலவும், மலைகளிலி
ருந்து பாயுந் தண்ணீர் தரையைப் பிளக்கிறது
போலவும், [5]பர்வதங்கள் அவர் கீழே உருகி,
5 பள்ளத்தாக்குகள் பிளந்துபோகும். இது எல்
லாம் யாக்கோபுடைய மீறுதலினிமித்தமும்,
[6]இஸ்ரவேல் வம்சத்தாருடைய பாவங்களினி
மித்தமும் சம்பவிக்கும்; யாக்கோபின் மீறுத
லுக்குக் காரணமென்ன? சமாரியா அல்ல
வோ? யூதாவின் மேடைகளுக்குக் காரணமெ
6 ன்ன? எருசலேம் அல்லவோ? ஆகையால்
நான் சமாரியாவை வெளியான மண்மேடும்,
[7]திராட்சச்செடி நடுகிற நிலமுமாக்கி, அதின்
கற்களைப் பள்ளத்தாக்கிலே புரண்டுவிழப்
பண்ணி, அதின் அஸ்திபாரங்களைத் திறந்து
7 வைப்பேன். அதின் சுரூபங்கள் எல்லாம்
நொறுக்கப்படும்; அதின் பணையங்கள் எல்
லாம் அக்கினியால் எரித்துப்போடப்படும்;
[8]அதின் விக்கிரகங்களை எல்லாம் பாழாக்கு
வேன்; வேசிப்பணையத்தினால் சேர்க்கப்பட்
டது, திரும்ப †வேசிப்பணையமாய்ப் போகும்.
8 இதினிமித்தம் நான் புலம்பி அலறுவேன்;
[9]பறிகொடுத்தவனாகவும் அம்மணமாகவும் நடப்
பேன்; நான் ஓரிகளைப்போல ஊளையிட்டு,
9 ஆந்தைகளைப்போல அலறுவேன். அதின்
காயம் ஆறாதது; [10]அது யூதாமட்டும் வந்தது;
என் ஜனத்தின் வாசலாகிய எருசலேம்மட்
10 டும் வந்தெட்டினது. அதைக் [11]காத்பட்ட
ணத்திலே அறிவியாதேயுங்கள், அழவே வே
ண்டாம்; பெத்அப்ராவிலே புழுதியில் புரளு.

1 எரே. 26. 18. ஆமோ 1. 1
* அருளப்பட்ட
2 ஏசா. 1. 2
3 சங். 50. 7. மல். 3. 5
4 ஏசா. 26. 21
5 ஏசா. 64. 1-3. ஆப. 3. 6, 10
6 புல. 5. 16
7 2 இரா. 19. 25
8 ஓசி. 2. 5, 12
† வேசி பரிசு
9 ஏசா. 21. 3
10 2 இரா. 18. 13
11 2 சாமு. 1. 20. எரே. 6. 26
12 ஆமோ. 3. 6
13 2 இரா. 18. 14, 17
14 2 சாமு. 8. 2
15 யோசு. 15. 44
16 ஏசா. 22. 12. எரே. 7. 29. புல. 4. 5-8
17 ஓசி. 7. 6
18 ஏசா. 5. 8
19 ஆமோ. 5. 13. எபே. 5. 16
‡ பழமொழி. ஆப. 2. 6
20 2 இரா. 17. 23, 24

சாப்பீரில்குடியிருக்கிறவளே, வெட்கத்துடன் 11
அம்மணமாய் அப்பாலே போ; சாயனானில்
குடியிருக்கிறவள் வெளியே வருவதில்லை;
பெத்ஏசேலின் புலம்பல் உங்களுக்கு அடைக்
கலமாயிராது. மாரோத்தில் குடியிருக்கிற 12
வள் நன்மை வருமென்று எதிர்பார்த்திருந்
தாள்; [12]ஆனாலும் தீமை கர்த்தரிடத்திலிருந்து
எருசலேமின் வாசல்வரைக்கும் வந்தது. லாகீ 13
சில் குடியிருக்கிறவளே, வேகமான குதிரை
களை ரதத்திலே பூட்டு; [13]நீயே சீயோன் குமா
ரத்தியின் பாவத்துக்குக் காரணி; உன்னிடத்
தில் இஸ்ரவேலின் பாதகங்கள் காணப்பட்
டது. ஆகையால் மோர்ஷேத்காத்தினிடத் 14
தில் உனக்கு இருக்கிறதைக் கொடுத்துவிடு
வாய்; [14]அக்சீபின் வீடுகள் இஸ்ரவேலின்
ராஜாக்களுக்கு அபத்தமாய்ப்போகும். மரே 15
ஷாவில் குடியிருக்கிறவளே, [15]உனக்கு இன்
னும் ஒரு சுதந்தரவாளியை வரப்பண்ணு
வேன்; அவன் இஸ்ரவேலின் மகிமையாகிய
அதுல்லாம்மட்டும் வருவான். உனக்கு அரு 16
மையான உன் பிள்ளைகளினிமித்தம் நீ உன்
தலையைச் சிரைத்து மொட்டையிட்டுக்கொள்;
[16]கழுகைப்போல முழுமொட்டையாயிரு, அ
வர்கள் உன்னை விட்டுச் சிறைப்பட்டுப்போ
கிறார்கள்.

அக்கிரமத்தை யோசித்து, [17]தங்கள் படுக் 2
கைகளின்மேல் பொல்லாப்பு செய்ய எத்த
னம்பண்ணித் தங்கள் கையில் வல்லமை இருக்
கிறபடியினால், விடியற்காலமாகிறபோது
அதை நடப்பித்து, வயல்களை இச்சித்துப் 2
பறித்துக்கொண்டு, [18]வீடுகளை இச்சித்து எடுத்
துக்கொண்டு, புருஷனையும் அவன் வீட்
டையும், மனுஷனையும் அவன் சுதந்தரத்தை
யும் ஒடுக்குகிறவர்களுக்கு ஐயோ! ஆகையால் 3
கர்த்தர்: நான் இந்த வம்சத்தாருக்கு விரோத
மாய்த் தீமையை வருவிக்க நினைக்கிறேன்;
அதினின்று நீங்கள் கழுத்தை நீக்கமாட்
டீர்கள்; நீங்கள் மேட்டிமையாய் நடப்ப
தில்லை; [19]அது தீமையான காலம். அந்நா 4
ளில் உங்கள்பேரில் ‡ஒப்புச்சொல்லி, நாம்
முற்றிலும் பாழானோம்; [20]நமது ஜனத்தின்
சுதந்தரத்தை மாற்றிப்போட்டார்; என்ன
மாய் அதை என்னைவிட்டு நீக்கிப்போட்

டார்! நமது வயல்களைப் பிடுங்கிப் பகிர்ந்து
கொடுத்தாரே என்று துயரமான புலம்பலாய்ப்
5 புலம்புவார்கள். **கர்த்தரின்** சபையில் சுதந்
தரவீதங்களை அளந்துகொடுக்கிறவர்கள் [1]உன
6 க்கு இல்லாதிருப்பார்கள். தீர்க்கதரிசனஞ்
[2]சொல்லாதிருப்பீர்களாக என்கிறார்கள்; அவர்
கள் தீர்க்கதரிசனஞ் சொல்லுவார்கள், இந்தப்
பிரகாரமாய் அவர்கள் தீர்க்கதரிசனஞ் சொல்
7 லாவிட்டால் நிந்தை நீங்காதே. யாக்கோபு
வம்சம் என்று பேர்பெற்றவர்களே, **கர்த்தரின்**
ஆவி குறுகியிருக்கிறதோ? அவருடைய கிரி
யைகள் இவைகள்தானோ? [3]செம்மையாய்
நடக்கிறவனுக்கு என் வார்த்தைகள் நன்மை
8 செய்யாதோ? என் ஜனங்கள் பூர்வமுதல்
சத்துருவைப்போல் எழும்பினார்கள். யுத்தத்தி
லிருந்து திரும்பிவந்து வழியில் அஞ்சாமல்
கடந்துபோகிறவர்களுடைய மேலங்கியையும்
9 வஸ்திரத்தையும் உரிந்துகொண்டீர்கள். என்
ஜனத்தின் ஸ்திரீகளை அவர்களுடைய சௌ
க்கியமான வீடுகளிலிருந்து துரத்திவிட்டீர்
கள்; அவர்களுடைய குழந்தைகளுக்கு இருந்த
என் அலங்காரத்தை என்றைக்கும் இல்லாத
10 படிக்குப் பறித்துக்கொண்டீர்கள். எழுந்தி
ருந்து போங்கள்; இது நீங்கள் இளைப்பாறும்
இடம் அல்ல, [4]இது தீட்டுப்பட்டது, இது
உங்களை நாசப்படுத்தும், அந்த நாசம் மிகவும்
11 கொடிதாயிருக்கும். மனம்போகிற போக்கின்
படி போய், அபத்தமானதை உரைக்கிற ஒரு
வன், [5]திராட்சரசத்தையும் மதுபானத்தையுங்
குறித்து நான் உனக்குப் *பிரசங்கிப்பேனென்
ருல், அவனே இந்த ஜனத்துக்கு ஏற்ற பிர
சங்கியாயிருப்பான்.
12 யாக்கோபின் ஜனங்களே, உங்களெல்லா
ரையும் நான் நிச்சயமாய்க் கூட்டுவேன், இஸ்
ரவேலில் மீதியானவர்களை நிச்சயமாய்ச் சேர்
ப்பேன்; [6]போஸ்றாவின் ஆடுகளைப்போல்
அவர்களை ஏகக்கூட்டமாக்குவேன்; தன் தொ
ழுவத்துக்குள்ளே சேர்ந்த மந்தைக்குச் சமான
மாய் ஜனத்திரளினாலே இரைச்சல் உண்டா
13 கும். தடைகளை †நீக்கிப்போடுகிறவர் அவர்
களுக்கு முன்பாக நடந்துபோகிறார்; அவர்
கள் தடைகளை நீக்கி, வாசலால் உட்பிரவே
சித்துக் கடந்துபோவார்கள்; [7]அவர்கள் ராஜா
அவர்களுக்கு முன்பாகப் போவார், **கர்த்தர்**
அவர்கள் முன்னணியில் நடந்துபோவார்.

**3** நான் சொன்னது: யாக்கோபின் தலைவர்
களே இஸ்ரவேல் வம்சத்து அதிபதிகளே,
[8]நியாயம் இன்னதென்று அறிவது உங்களுக்கு
2 அல்லவோ அடுத்தது. ஆனாலும் நன்மையை
வெறுத்து, தீமையை விரும்பி, அவர்கள்மேல்
இருக்கிற அவர்களுடைய தோலையும் அவர்
கள் எலும்புகள்மேல் இருக்கிற அவர்களு
3 டைய சதையையும் பிடுங்கி, என் ஜனத்தின்
சதையைத் தின்று, அவர்கள்மேல் இருக்கிற
அவர்களுடைய தோலை உரிந்துகொண்டு,
அவர்கள் எலும்புகளை முறித்து, [9]பானையிலே
போடும்வண்ணமாகவும் இறைச்சியைக் கொப்
பரைக்குள்ளே போடும்வண்ணமாகவும் அவை
களைத் துண்டிக்கிறார்கள். அப்பொழுது அவ 4
ர்கள் **கர்த்தரை** நோக்கிக் கூப்பிடுவார்கள்;
ஆனாலும் அவர்கள் தங்கள் கிரியைகளில்
பொல்லாதவர்களான படியினால், [10]அவர் அவர்
களுக்கு மறுஉத்தரவு கொடாமல், தமது முகத்
தை அக்காலத்திலே அவர்களுக்கு மறைத்துக்
கொள்ளுவார். தங்கள் பற்களினால் கடிக்கிற 5
வர்களாயிருந்து, சமாதானமென்று சொல்லி,
தங்கள் வாய்க்கு உணவைக் கொடாதவனுக்கு
விரோதமாகச் சண்டைக்கு ஆயத்தம்பண்ணி,
[11]என் ஜனத்தை மோசம்போக்குகிற தீர்க்கத
ரிசிகளுக்கு விரோதமாய்க் **கர்த்தர்** சொல்லு
கிறது என்னவென்றால்: தரிசனங் காணக் 6
கூடாத இராத்திரியும், குறிசொல்லக்கூடாத
அந்தகாரமும் உங்களுக்கு வரும்; [12]தீர்க்கதரிசி
களின்மேல் சூரியன் அஸ்தமித்து, அவர்கள்
மேல் பகல் காரிருளாய்ப் போகும். தரிசனம் 7
பார்க்கிறவர்கள் வெட்கி, குறிசொல்லுகிறவர்
கள் நாணி, [13]உத்தரவு கொடுக்கிற தேவன் இல்
லாததினால் அவர்கள் எல்லாரும் தங்கள் வாயை
மூடுவார்கள். நானோ, யாக்கோபுக்கு அவன் 8
மீறுதலையும், இஸ்ரவேலுக்கு அவன் பாவத்
தையும் அறிவிக்கும்படி, [14]**கர்த்தருடைய** ஆவி
அருளிய பலத்தினாலும், நியாயத்தினாலும்,
பராக்கிரமத்தினாலும் நிரப்பப்பட் டிருக்கி
றேன். நியாயத்தை அருவருத்து, செம்மையா 9
னவைகளையெல்லாம் கோணலாக்கி, சீயோ 10
னை இரத்தப்பழியினாலும், [15]எருசலேமை அநி
யாயத்தினாலும் கட்டுவிக்கிற யாக்கோபு வம்
சத்துத் தலைவர்களே, இஸ்ரவேல் வம்சத்து
அதிபதிகளே, இதைக் கேளுங்கள். அதின் 11
தலைவர்கள் பரிதானத்துக்கு நியாயந்தீர்க்கிறார்
கள்; [16]அதின் ஆசாரியர்கள் கூலிக்கு உபதே
சிக்கிறார்கள்; அதின் தீர்க்கதரிசிகள் பணத்
துக்குக் குறிசொல்லுகிறார்கள்; ஆகிலும் அவர்
கள் **கர்த்தரைச்** சார்ந்துகொண்டு: [17]**கர்த்தர்**
எங்கள் நடுவில் இல்லையோ? தீங்கு எங்கள்
மேல் வராது என்கிறார்கள். ஆகையால் உங் 12
கள் நிமித்தம் சீயோன் வயல்வெளியைப்
போல உழப்பட்டு, [18]எருசலேம் மண்மேடுக
ளாய்ப்போம், ஆலயத்தின் பர்வதம் காட்டு
மேடுகளாய்ப்போம்.

ஆனாலும், [19]கடைசிநாட்களில் **கர்த்தரு** **4**
**டைய** ஆலயமாகிய பர்வதம் பர்வதங்களின்
கொடுமுடியில் ஸ்தாபிக்கப்பட்டு, மலைகளுக்கு
மேலாய் உயர்த்தப்பட்டிருக்கும், எல்லா ஜாதி
களும் அதினிடத்திற்கு ஓடிவருவார்கள். திர 2
ளான ஜாதிகள் புறப்பட்டு வந்து: நாம் **கர்த்த**
**ரின்** பர்வதத்துக்கும், யாக்கோபின் தேவனு
டைய ஆலயத்துக்கும் போவோம் வாருங்கள்;
[20]அவர் தமது வழிகளை நமக்குப் போதிப்பார்,
நாம் அவர் பாதைகளில் நடப்போம் என்பார்
கள்; ஏனெனில் சீயோனிலிருந்து ‡வேத
மும், எருசலேமிலிருந்து **கர்த்தரின்** வசன
மும் வெளிப்படும். அவர் திரளான ஜனங் 3
களுக்குள் நியாயந்தீர்த்து, தூரத்திலுள்ள

[1] உபா. 32. 8, 9
[2] ஏசா. 30. 10. ஏசே. 21. 2
[3] ஓசி. 14. 9
[4] லேவி. 18. 25, 28. உபா. 12. 9. எரே. 3. 2
[5] ஏசே. 13. 3
* தீர்க்கதரிசனஞ் சொல்லுவேன். ஏசே. 13. 3
[6] எரே. 31. 10. ஏசே. 36. 37
† தானி. 2. 44
[7] ஏசா. 52. 12. ஓசி. 3. 6
[8] எரே. 5. 4, 5
[9] ஏசே. 11. 3, 7.
[10] நீதி. 1. 28. ஏசா. 1. 15. சகரி. 7. 13
[11] ஏசா. 56. 10. 11. ஏசே. 13. 10. ழு. மத். 7. 15
[12] ஏசா. 8. 20, 22. சகரி. 13. 4
[13] லேவி. 13. 45. சங். 74. 9. ஆமோ. 8. 11
[14] ஏசா. 58. 1. மாற். 3. 17
[15] எரே. 22. 13. ஏசே. 22. 17. ஆப. 2. 12. செப். 3. 3
[16] ஏசா. 1, 23. ஏசே. 1. 10. 1 பே. 5. 2
[17] மத். 3. 9. ரோ. 2. 17. ழு
[18] சங். 79. 1: 107. 34
[19] ஏசா. 2. 2. ழு. ஏசே. 17. 22-24
[20] ஓசி. 6. 3
‡ வேதப்பு. தூ. 24. 47

பலத்த ஜாதிகளைக் கடிந்துகொள்ளுவார்; [1]அப்
பொழுது அவர்கள் தங்கள் பட்டயங்களை
மண்வெட்டிகளாகவும், தங்கள் ஈட்டிகளை அரி
வாள்களாகவும் அடிப்பார்கள்; ஒரு ஜாதிக்கு
விரோதமாய் மறுஜாதி பட்டயம் எடுப்பதில்லை;
[2]இனி அவர்கள் யுத்தத்தைக் கற்பதுமில்லை.
4 அவனவன் தன்தன் திராட்சச்செடியின் நிழ
லிலும், தன்தன் அத்திமரத்தின் நிழலிலும்
பயப்படுத்துவார் இல்லாமல் [3]உட்காருவான்;
சேனைகளுடைய **கர்த்தரின்** வாய் இதைச்
5 சொல்லிற்று. சகல ஜனங்களும் [4]தங்கள்
தங்கள் தேவனுடைய நாமத்தைப் பற்றிக்
கொண்டு நடப்பார்கள்; [5]நாங்களும் எங்கள்
தேவனாகிய **கர்த்தருடைய** நாமத்தைப் பற்றிக்
கொண்டு என்றென்றைக்குமுள்ள சதாகாலங்
களிலும் நடப்போம்.
6 **கர்த்தர்** சொல்லுகிறது என்னவென்றால்:
அந்நாளிலே நான் நொண்டியானவளைச் சே
ர்த்து, [6]தள்ளுண்டவளையும் தீங்கு அநுபவித்
7 தவளையும் கூட்டிக்கொண்டு, நொண்டியா
னவளை மீதியான ஜனமாகவும், தூரமாய்த்
தள்ளுண்டு போனவளைப் பலத்த ஜாதியாக
வும் வைப்பேன்; [7]அவர்கள்பேரில் **கர்த்தர்**
சீயோன் பர்வதத்திலே இதுமுதல் என்றென்
8 றைக்கும் ராஜாவாயிருப்பார். மந்தையின்
துருக்கமே, சீயோன் குமாரத்தியின் அரணே,
முந்தின ஆளுகை உன்னிடத்தில் வரும்;
[8]ராஜரிகம் எருசலேம் குமாரத்தியினிடத்தில்
9 வரும். இப்போதும் நீ சத்தமிட்டுக் கதறு
வானேன்? [9]ராஜாவானவர் உன்னிடத்தில்
இல்லையோ? உன் ஆலோசனைக்காரர் அழிந்
துபோனார்களோ? பிரசவிக்கிற ஸ்திரீக்கு
10 ஒத்த வேதனை உனக்கு உண்டாகும். சீயோன்
குமாரத்தியே, [10]பிரசவ ஸ்திரீயைப்போல அம்
பாயப்பட்டு வேதனைப்படு; நீ இப்போது நக
ரத்திலிருந்து புறப்பட்டு, வெளிகளில் தங்கி,
பாபிலோன்வரைக்கும் போவாய், அங்கே விடு
விக்கப்படுவாய்; [11]அங்கே **கர்த்தர்** உன்னை
உன் சத்துருக்களின் கைக்கு நீங்கலாக்கி
11 மீட்பார். சீயோன் தீட்டுப்படுவாளாக, [12]எங்
கள் கண் அவளைக் காண்பதாக என்று சொல்
லி, அநேக ஜாதியார் உனக்கு விரோதமாகக்
12 கூடியிருக்கிறார்கள். ஆனாலும் அவர்கள் **கர்த்**
**தருடைய** நினைவுகளை அறியாமலும், [13]அவரு
டைய யோசனையை உணராமலும் இருக்கி
றார்கள்; [14]அவர் அரிக்கட்டுகளைப்போல அவர்
13 களைக் களத்திலே சேர்ப்பார். சீயோன் குமா
ரத்தியே, நீ எழுந்து போரடி; [15]நான் உன்
கொம்புகளை இரும்பும், உன் குளம்புகளை
வெண்கலமுமாக்குவேன்; நீ அநேக ஜனங்
களை நொறுக்கிப்போடுவாய்; அவர்கள் தே
டிச் சேர்த்ததை நீ **கர்த்தருக்கென்றும்**, [16]அவர்
களுடைய ஆஸ்தியை பூமிக்கெல்லாம் ஆண்
டவராயிருக்கிறவருக்கென்றும் நியமிப்பாய்.
5 சேனைகளையுடைய நகரமே, இப்போது தண்
டுதண்டாகக் கூடிக்கொள்; நமக்கு விரோத
மாக முற்றிக்கை போடப்படும்; [17]இஸ்ரவேலு

1 ஏசா. 2. 4. யோவே. 3. 10
2 சங். 72. 7
3 1 இரா. 4. 25. சகரி. 3. 10
4 எரே. 2. 11
5 சகரி. 10. 12. கொலோ. 2. 6
6 சங். 38. 17. எசே. 34. 13–17. செப். 3. 19. எபி. 12. 12, 13
7 ஏசா. 9. 6, 7. தானி. 7. 14, 27. லூ. 1. 33. வெளி. 11. 15
8 வெளி. 22. 5
9 எரே. 8. 19
10 ஏசா 66. 7, 8
11 ஓசி. 1. 10
12 புல. 2. 16. ஒப 12. வச
13 ஏசா. 55. 8. எரே. 29. 11. ரோ. 11. 33, 34
14 ஏசா. 21. 10. லூ. 3. 17
15 உபா. 33. 25. ஏசா. 41. 15, 16. தானி. 2. 44
16 ஏசா. 18. 7; 23. 18; 60. 6, 9. சகரி. 4. 14
17 மத். 5. 39; 27. 30
18 மத். 2. 6. யோ. 7. 42
19 ஆதி. 49. 10. ஏசா. 9. 6
20 நீதி. 8. 22, 23. யோ. 1. 1. கொலோ. 1. 17
21 4. 7, 10
22 ஏசா. 40. 11; 49. 10. எசே. 34. 23
23 சங். 72. 7, 8. ஏசா. 52. 13. லூ. 1. 32
24 ஏசா. 9. 6. சகரி. 9. 10. லூ. 2. 14. எபே. 2. 14
25 லூ. 1. 71, 74
26 உபா. 32. 2. சங். 72. 6; 110. 3
27 சகரி. 9. 10
28 ஏசா. 2. 6, 8. வெளி. 22. 15
29 ஏசா. 2. 8. சகரி. 13. 2

டைய நியாயாதிபதியைக் கோலினால் கன்
னத்திலே அடிப்பார்கள்.
எப்பிராத்தா என்னப்பட்ட பெத்லகேமே, 2
[18]நீ யூதேயாவிலுள்ள ஆயிரங்களுக்குள்ளே
சிறியதாயிருந்தும், [19]இஸ்ரவேலை ஆளப்போ
கிறவர் உன்னிடத்திலிருந்து புறப்பட்டு என்
னிடத்தில் வருவார்; அவருடைய புறப்படுதல்
[20]அநாதிநாட்களாகிய பூர்வத்தினுடையது.
ஆனாலும் பிரசவிக்கிறவள் பிரசவிக்கிறமட் 3
டும் அவர்களை ஒப்புக்கொடுப்பார்; [21]அப்பொ
ழுது அவருடைய சகோதரரில் மீதியானவர்
கள் இஸ்ரவேல் புத்திரரோடுங்கூடத் திரும்பு
வார்கள். அவர் நின்றுகொண்டு, **கர்த்தரு** 4
**டைய** பலத்தோடும் தம்முடைய தேவனாகிய
**கர்த்தருடைய** நாமத்தின் மகத்துவத்தோடும்
மேய்ப்பார்; [22]ஆகையால் அவர்கள் நிலைத்திருப்
பார்கள்; [23]அவர் இனி பூமியின் எல்லைகள்
பரியந்தமும் மகிமைப்படுவார். இவரே [24]சமா 5
தான காரணர்; அசீரியன் நம்முடைய தேசத்
திலே வரும்போதும், நம்முடைய அரண்
மனைகளை மிதிக்கும்போதும், ஏழு மேய்ப்ப
ரையும் மனுஷரில் எட்டு அதிபதிகளையும்
அவனுக்கு விரோதமாக நிறுத்துவேன். இவர் 6
கள் அசீரியாதேசத்தையும், நிம்ரோதின் தே
சத்தையும் அதினுடைய வாசல்களுக்கு உட்
புறமாகப் பட்டயத்திற்கு இரையாக்குவார்கள்;
[25]அசீரியன் நம்முடைய தேசத்தில் வரும்போ
தும், நம்முடைய எல்லைகளை மிதிக்கும்போ
தும், அவனுக்கு நம்மைத் தப்புவிப்பார். யாக் 7
கோபிலே மீதியானவர்கள் **கர்த்தராலே** வரு
கிற [26]பனியைப்போலவும், மனுஷனுக்குக்
காத்திராமலும், மனுபுத்திரருக்குத் தாமதியாம
லும், பூண்டுகள்மேல் வருகிற மழைகளைப்
போலவும், அநேக ஜனங்களின் நடுவிலே
இருப்பார்கள். யாக்கோபிலே மீதியானவர் 8
கள், சிங்கம் காட்டுமிருகங்களுக்குள்ளே இருக்
கிறதற்குச் சமானமாகவும், கடந்துபோய்மிதித்
துத் தப்புவிப்பார் இல்லாமல் பீறிப்போடுகிற
பாலசிங்கம் ஆட்டுமந்தைகளுக்குள்ளே இருக்
கிறதற்குச் சமானமாகவும் ஜாதிகளுக்குள்
அநேக ஜனங்களின் நடுவிலே இருப்பார்கள்.
உன்னுடைய கை உன் விரோதிகளின்மேல் 9
உயரும்; உன் சத்துருக்களெல்லாரும் சங்க
ரிக்கப்படுவார்கள்.
அந்நாளிலே நான் உன் குதிரைகளை உன் 10
நடுவில் இராதபடிக்குச் சங்கரித்து, [27]உன்
இரதங்களை அழித்து, உன் தேசத்துப் பட் 11
டணங்களைச் சங்கரித்து, உன் அரண்களை
யெல்லாம் நிர்மூலமாக்கி, சூனிய வித்தை 12
கள் உன் கையில் இராதபடிக்கு அகற்று
வேன்; [28]நாள் பார்க்கிறவர்கள் உன்னிடத்தில்
இல்லாமற் போவார்கள். உன் சுரூபங்களை 13
யும் உன் சிலைகளையும் உன் நடுவில் இராத
படிக்கு நிர்மூலமாக்குவேன்; [29]உன் கையின்
கிரியையை நீ இனிப் பணிந்துகொள்ளாய்.
நான் உன் விக்கிரகத்தோப்புகளை உன் நடு 14
வில் இராதபடிக்குப் பிடுங்கி, உன் பட்ட

15 ணங்களை அழித்து, செவிகொடாத புறஜா
திகளிடத்திலே கோபத்தோடும் உக்கிரத்தோ
டும் [1]நீதியைச் சரிக்கட்டுவேன் என்றார்.
6 **கர்த்தர்** சொல்லுகிறதைக் கேளுங்கள்; நீ
எழுந்து, பர்வதங்களுக்கு முன் உன் *வழக்
கைச் சொல்; [2]மலைகள் உன் சத்தத்தைக்
2 கேட்கக்கடவது. பர்வதங்களே, பூமியின் உறு
தியான அஸ்திபாரங்களே, **கர்த்தருடைய**
வழக்கைக் கேளுங்கள்; [3]**கர்த்தருக்கு** அவர்
ஜனத்தோடே வழக்கு இருக்கிறது; இஸ்ரவே
3 லோடே அவர் வழக்காடுவார். என் ஜனமே,
நான் உனக்கு என்னசெய்தேன்? [4]நான் எதி
னால் உன்னை விசனப்படுத்தினேன்? எனக்கு
4 எதிரே உத்தரவுசொல். நான் உன்னை எகிப்
துதேசத்திலிருந்து வரப்பண்ணி, அடிமைத்
தன வீட்டிலிருந்த உன்னை மீட்டுக்கொண்டு,
[5]மோசே ஆரோன் மீரியாம் என்பவர்களை
5 உனக்கு முன்பாக அனுப்பினேன். என்
ஜனமே, மோவாபின் ராஜாவாகிய பாலாக்
பண்ணின யோசனை இன்னதென்றும்,
[6]பேயோரின் குமாரனான பிலேயாம் அவ
னுக்குப் பிரதியுத்தரமாகச் சொன்னது இன்
னதென்றும், சித்தீம் தொடங்கி கில்கால்மட்
டும் நடந்தது இன்னதென்றும், [7]நீ **கர்த்தரு
டைய** நீதிகளை அறிந்துகொள்ளும்படி நினைத்
6 துக்கொள். என்னத்தைக்கொண்டு நான் **கர்த்
தருடைய** சந்நிதியில் வந்து, உன்னதமான
தேவனுக்குமுன்பாகப் பணிந்துகொள்வேன்?
தகனபலிகளைக்கொண்டும், ஒருவயது கன்றுக்
குட்டிகளைக்கொண்டும் அவர் சந்நிதியில் வர
7 வேண்டுமோ? ஆயிரங்களான ஆட்டுக்கடாக்க
ளின்பேரிலும், [8]எண்ணெயாய் ஓடுகிற பதி
னாயிரங்களான ஆறுகளின்பேரிலும், **கர்த்தர்**
பிரியமாயிருப்பாரோ? [9]என் அக்கிரமத்தைப்
போக்க என் முதற்பேறானவனையும், என்
ஆத்துமாவின் பாவத்தைப் போக்க என் கர்ப்
8 பக்கனியையும் கொடுக்கவேண்டுமோ? மனு
ஷனே, [10]நன்மை இன்னதென்று அவர் உன
க்கு அறிவித்திருக்கிறார்; [11]நியாயஞ்செய்து,
இரக்கத்தைச் சிநேகித்து, உன் தேவனுக்கு
முன்பாக மனத்தாழ்மையாய் நடப்பதை அல்
லாமல் வேறே என்னத்தைக் **கர்த்தர்** உன்
னிடத்தில் கேட்கிறார்.
9 **கர்த்தருடைய** சத்தம் நகரத்தை நோக்கிக்
கூப்பிடுகிறது; ஞானமுள்ளவன் உம்முடைய
நாமத்தை மதிப்பான்; மிலாற்றிற்கும் அதை
10 நேமித்தவருக்கும் செவிகொடுங்கள். துன்மார்
க்கனுடைய வீட்டிலே துன்மார்க்கத்தினால்
சம்பாதித்த பொக்கிஷங்களும், [12]அருவருக்கப்
பட்டத்தக்க குறைந்த மரக்காலும் இன்னும்
11 இருக்கிறதல்லவோ? கள்ளத்தராசும் கள்ளப்
படிக்கற்களுள்ள பையும் இருக்கும்போது,
[13]அவர்களைச் சுத்தமுள்ளவர்களென்று எண்
12 ணுவேனோ? அவர்களில் ஐசுவரியமுள்ளவர்
கள் கொடுமையால் நிறைந்திருக்கிறார்கள்;
அவர்களுக்குள் வாசமாயிருக்கிறவர்கள் பொய்
பேசுகிறார்கள்; [14]அவர்கள் வாயிலுள்ள நாவு

1 சங். 149. 7. 2 தெச. 1. 8
* வழக்காடு
2 எசே. 36. 1, 8
3 ஏசா. 1. 2, 18. ஓசி. 4. 1: 12. 2
4 எரே. 2. 5, 31
5 யாத். 12. 51. உபா. 4. 20. ஆமோ. 2. 10
6 எண். 22–25. அதி
7 நியா. 5. 11
8 சங். 51. 16. ஏசா. 1. 11
9 2 இரா. 3. 27: 16. 3. எரே. 7. 31. எசே. 23. 37
10 உபா. 10. 12. 1 சாமு. 15. 22. ஓசி. 6. 6: 12. 6
11 ஆதி. 18. 19 ஏசா. 1. 17
12 உபா. 25. 13–16. நீதி. 20. 10, 23
13 ஓசி. 12. 7
14 எரே. 9. 3–8
15 லேவி. 26. 16. ஓசி. 5. 9
16 லேவி. 26. 26. ஓசி. 4. 10
17 உபா. 28. 38–40
18 1 இரா. 16. 25–30: 21. 5. ஏசா. 25. 8. எரே. 51. 51. ஓசி. 5. 11
19 ஏசா. 17. 6 ஓசி. 9. 10
20 சங். 12. 1: 14. 1–3. ஏசா. 57. 1
21 ஆப. 1. 15
22 ஏசா. 1. 23. ஓசி. 4. 18
23 2 சாமு. 23. 6, 7. ஏசா. 53. 13. எசே. 2. 6
† விசாரிப்பின்
24 எரே. 9. 4
25 எசே. 22. 7. மத். 10. 21. 2 தீமோ. 3. 2, 3
26 ஏசா. 8. 17
27 சங். 37. 24. நீதி. 24. 16, 17
28 சங். 27. 1: 37. 24
29 எபி. 12. 6, 7

கபடமுள்ளது. ஆகையால் நான் உன் பாவங் 13
களினிமித்தம் உன்னை அடித்துப் பாழாக்கு
கிறதினால் [15]உன்னைப் பலட்சயமாக்குவேன்.
நீ புசித்தும் திருப்தியடையாதிருப்பாய்; [16]உ 14
னக்குள்ளே சோர்வுண்டாகும்; நீ பதனம்
பண்ணியும் தப்புவிப்பதில்லை; நீ தப்புவிப்ப
தையும் பட்டயத்துக்கு ஒப்புக்கொடுப்பேன்.
நீ விதைத்தும் அறுக்காமற்போவாய்; [17]நீ 15
ஒலிவப்பழங்களையும் திராட்சப்பழங்களையும்
ஆலையாடினபோதிலும், எண்ணெய் பூசிக்
கொள்வதுமில்லை, இரசம் குடிப்பதுமில்லை.
நான் உன்னைப் பாழாகவும் உன் குடிகளை 16
ஈசலிட்டு நிந்திக்கிற நிந்தையாகவும் வைக்கும்
படி, [18]உம்ரியினுடைய கட்டளைகளும் ஆகாப்
வீட்டாருடைய எல்லாச் செய்கைகளும் கைக்
கொள்ளப்பட்டு வருகிறது; அவர்களுடைய
ஆலோசனைகளிலே நடக்கிறீர்கள்; ஆகையால்
என் ஜனத்தின் நிந்தையைச் சுமப்பீர்கள்.
ஐயோ! உஷ்ணகாலத்துக் கனிகளைச் சே 7
ர்த்து, திராட்சப்பழங்களை அறுத்தபின்பு வரு
கிறவனைப்போல் இருக்கிறேன்; [19]புசிக்கிற
தற்கு ஒரு திராட்சக்குலையும் என் ஆத்துமா
இச்சித்தமுதல் அறுப்பின் கனியும் இல்லை.
தேசத்தில் பக்தியுள்ளவன் அற்றுப்போனான்; 2
[20]மனுஷரில் செம்மையானவன் இல்லை; அவ
ர்களெல்லாரும் இரத்தஞ்சிந்தப் பதிவிருக்கி
றார்கள்; [21]அவனவன் தன்தன் சகோதரனை
வலையிலே பிடிக்க வேட்டையாடுகிறான்.
பொல்லாப்புச் செய்ய அவர்கள் இரண்டு கை 3
களும் நன்றாய்க் கூடும்; [22]அதிபதி கொடு
என்கிறான்; நியாயாதிபதி கைக்கூலி கேட்கி
றான்; பெரியவன் தன் துராசையைத் தெரி
விக்கிறான்; இவ்விதமாய்ப் புரட்டுகிறார்கள்.
அவர்களில் நல்லவன் முட்செடிக்கொத்த 4
வன், [23]செம்மையானவன் நெரிஞ்சிலைப் பார்
க்கக் கடுங்கூர்மையானவன்; உன் காவற்காரர்
அறிவித்த உன் †தண்டனையின் நாள் வருகி
றது; இப்பொழுதே அவர்களுக்குக் கலக்கம்
உண்டு. சிநேகிதனை [24]விசுவாசிக்கவேண் 5
டாம், வழிகாட்டியை நம்பவேண்டாம்; உன்
மடியிலே படுத்துக்கொள்ளுகிறவளுக்கு முன்
பாக உன் வாயைத் திறவாமல் எச்சரிக்கையா
யிரு. மகன் தகப்பனைக் கனவீனப்படுத்துகி 6
றான்; மகள் தன் தாய்க்கு விரோதமாகவும்,
மருமகள் தன் மாமிக்கு விரோதமாகவும்
எழும்புகிறார்கள், [25]மனுஷனுடைய சத்து
ருக்கள் அவன் வீட்டார்தானே.
நானோவென்றால் **கர்த்தரை** நோக்கிக்கொ 7
ண்டு, [26]என் ரட்சிப்பின் தேவனுக்குக் காத்தி
ருப்பேன்; என் தேவன் என்னைக் கேட்டரு
ளுவார். என் சத்துருவே; [27]எனக்கு விரோத 8
மாய்ச் சந்தோஷப்படாதே; நான் விழுந்தா
லும் எழுந்திருப்பேன்; நான் இருளிலே உட்
கார்ந்தால், [28]**கர்த்தர்** எனக்கு வெளிச்சமா
யிருப்பார். நான் **கர்த்தருக்கு** விரோதமாகப் 9
பாவஞ்செய்தேன்; அவர் எனக்காக வழக்
காடி என் நியாயத்தை விசாரிக்குமட்டும் [29]அவ

ருடைய கோபத்தைச் சுமப்பேன்; [1]அவர்
என்னை வெளிச்சத்திலே கொண்டுவருவார்,
10 அவருடைய நீதியைப் பார்ப்பேன். உன் தே
வனாகிய **கர்த்தர்** [2]எங்கே என்று என்னோடே
சொல்லுகிற என் சத்துருவானவள் அதைப்
பார்க்கும்போது வெட்கம் அவளை மூடும்;
என் கண்கள் அவளைக் காணும்; [3]இனி வீதி
களின் சேற்றைப்போல மிதிக்கப்படுவாள்.
11 உன் மதில்களை எடுப்பிக்கும்நாள் வருகிறது;
[4]அந்நாளிலே பிரமாணம் வெகுதூரம் பரவிப்
12 போம். அந்நாளிலே அசீரியாமுதல் எகிப்
தின் பட்டணங்கள்வரைக்கும், எகிப்துமுதல்
நதிவரைக்கும், ஒரு சமுத்திரமுதல் மறு சமுத்
திரம்வரைக்கும், [5]ஒரு பர்வதமுதல் மறு பர்
வதம்வரைக்குமுள்ள ஜனங்கள் உன்னிடத்தி
13 ற்கு வருவார்கள். ஆனாலும் தன் குடிகளினி
மித்தமும் அவர்கள் கிரியைகளுடைய பலன்
களினிமித்தமும் [6]தேசம் பாழாயிருக்கும்.
14 கர்மேலின் நடுவிலே தனித்து வனவாசமா
யிருக்கிற உமது சுதந்தரமான மந்தையாகிய
உம்முடைய ஜனத்தை உமது [7]கோலினால்
மேய்த்தருளும்; பூர்வநாட்களில் மேய்ந்தது
போலவே அவர்கள் பாசானிலும் கீலேயாத்தி
15 லும் மேய்வார்களாக. நீ எகிப்துதேசத்திலிரு
ந்து புறப்பட்ட நாளில் நடந்ததுபோலவே
[8]உன்னை அதிசயங்களைக் காணப்பண்ணு
வேன். புறஜாதிகள் கண்டு தங்களுடைய எல் 16
லாப் பராக்கிரமத்தையுங்குறித்து வெட்கப்படு
வார்கள்; [9]கையை வாயின்மேல் வைத்துக்
கொள்வார்கள்; அவர்கள் காதுகள் செவிடா
ய்ப் போகும். பாம்பைப்போல [10]மண்ணை 17
நக்குவார்கள்; பூமியின் ஊர்வனவற்றைப்போ
லத் தங்கள் மறைவிடங்களிலிருந்து நடுநடுங்
கிப் புறப்படுவார்கள்; [11]நமது தேவனாகிய **கர்த்**
**தரிடத்திற்குத்** திகிலோடே சேர்ந்து, உனக்
குப் பயப்படுவார்கள். தமது சுதந்தரத்தில் 18
மீதியானவர்களுடைய அக்கிரமத்தைப் பொ
றுத்து, [12]மீறுதலை மன்னிக்கிற தேவரீருக்கு
ஒப்பான தேவன் யார்? அவர் கிருபைசெய்ய
விரும்புகிறபடியால், [13]அவர் என்றென்றைக்
கும் கோபம் வையார். அவர் திரும்ப நம் 19
மேல் இரங்குவார்; [14]நம்முடைய அக்கிரமங்
களை அடக்கி, [15]நம்முடைய பாவங்களையெல்
லாம் சமுத்திரத்தின் ஆழங்களில் போட்டுவிடு
வார். தேவரீர் பூர்வநாட்கள் முதல் எங்கள் 20
பிதாக்களுக்கு ஆணையிட்ட சத்தியத்தை யாக்
கோபுக்கும், [16]கிருபையை ஆபிரகாமுக்கும்
கட்டளையிடுவீராக.

1 சங். 37. 6
2 சங். 42. 3, 10
3 சகரி. 10. 5. மல். 4. 3
4 ஆமோ. 9. 11
5 ஏசா. 11. 16: 19. 23: 27. 13. ஓசி. 11. 11
6 எரே. 21. 14
7 சங். 23. 4: 28. 9. ஏசா. 37. 24
8 சங். 68. 22: 78. 12
9 ஏசா. 26. 11
10 சங். 72. 9. ஏசா. 49. 23
11 எரே. 33. 9
12 யாத். 15. 11: 34. 6, 7. எரே. 50. 20
13 புல. 3. 31, 32
14 ரோ. 6. 14
15 எரே. 50. 20
16 சங். 105. 9, 10. லூ. 1. 72. மு

NAHUM

# நாகூம்

**1** நினிவேயின் பாரம். [1]எல்கோசானாகிய
நாகூமின் தரிசனப் புஸ்தகம்.
2 **கர்த்தர்** *எரிச்சலுள்ளவரும் நீதியைச் சரிக்
கட்டுகிறவருமான தேவன், **கர்த்தர்** நீதியைச்
சரிக்கட்டுகிறவர், உக்கிரகோபமுள்ளவர்;
**கர்த்தர்** தம்முடைய சத்துருக்களுக்குப் பிரதி
பலன் அளிக்கிறவர், அவர் தம்முடைய பகை
ஞருக்காகக் கோபத்தை வைத்து வைக்கிற
3 வர். **கர்த்தர்** நீடிய சாந்தமும், [2]மிகுந்த
வல்லமையுமுள்ளவர்; அவர்களை ஆக்கினையில்
லாமல் தப்புவிக்கமாட்டார்; **கர்த்தருடைய**
வழி சுழல்காற்றிலும் பெருங்காற்றிலும் இரு
க்கிறது; மேகங்கள் அவருடைய பாதத்தூளா
4 யிருக்கிறது. அவர் சமுத்திரத்தை அதட்டி,
அதை வற்றிப்போகப்பண்ணி, [3]சகல ஆறு
களையும் வறட்சியாக்குகிறார்; பாசானும் கர்
மேலும் சோர்ந்து, லீபனோனின் செழிப்பு
5 வாடிப்போகும். அவர் சமுகத்தில் பர்வதங்
கள் அதிர்ந்து மலைகள் கரைந்துபோகும்;
[4]அவர் பிரசன்னத்தினால் பூமியும் பூச்சக்கர
மும் அதில் குடியிருக்கிற அனைவரோடும் எடு
6 பட்டுப்போம். அவருடைய கோபத்துக்கு
முன்பாக நிற்பவன் யார்? [5]அவருடைய உக்
கிரகோபத்திலே தரிப்பவன் யார்? அவரு
டைய எரிச்சல் அக்கினியைப்போல இறைக்
கப்படுகிறது; அவராலே கல்மலைகள் பேர்க்
7 கப்படும். **கர்த்தர்** நல்லவர், இக்கட்டுநாளி
லே அரணான கோட்டை; [6]தம்மை நம்புகிற
8 வர்களை அறிந்திருக்கிறார். ஆனாலும் நினி
வேயின் ஸ்தானத்தை, புரண்டுவருகிற வெள்
ளத்தினால் சர்வசங்காரம்பண்ணுவார்; [7]இருள்
9 அவர் சத்துருக்களைப் பின்தொடரும். நீங்
கள் **கர்த்தருக்கு** விரோதமாகச் செய்ய நினைக்
கிறதென்ன? [8]அவர் சர்வசங்காரம் பண்ணு
வார்; இடுக்கம் மறுபடியும் உண்டாகாது.
10 அவர்கள் சன்னபின்னலாயிருக்கிற முட்செடி
களுக்கு ஒப்பாயிருக்கையிலும், [9]தங்கள் மது
பானத்தினால் வெறிகொண்டிருக்கையிலும்,
அவர்கள் முழுதும் காய்ந்துபோன செத்தை
11 யைப்போல எரிந்துபோவார்கள். **கர்த்தருக்கு**
*விரோதமாகப் பொல்லாத நினைவுகொண்டி
ருக்கிற துராலோசனைக்காரன் [10]ஒருவன்
12 உன்னிடத்திலிருந்து புறப்பட்டான். **கர்த்**
**தர்** சொல்லுகிறது என்னவென்றால்: அவர்
கள் சம்பூரணமடைந்து அநேகராயிருந்தாலும்
அறுப்புண்டு போவார்கள்; அவன் ஒழிந்து
போவான்; உன்னை நான் சிறுமைப்படுத்தி

1 செப். 2. 13
* வைராக்கியமுள்ளவர், பழிவாங்குகிறவர். யாத். 20. 5: 34. 14. உபா. 4. 24: 32. 35
2 யாத். 34. 6, 7. ஆப. 3. 5, 11, 12
3 சங். 106. 9. ஏசா. 50. 2. மத். 8. 26
4 சங். 68. 8. 2பே. 3. 10
5 மல். 3. 2. வெளி. 16. 1
6 1 நாளா. 16. 34. சங். 27. 5. 2தீமோ. 2. 19
7 தானி. 9. 26; 11. 10, 22, 40
8 1 சாமு. 3. 12
9 2 சாமு. 23. 6, 7. மல். 4. 1. 1தெச. 5. 2, 3
10 2 இரா. 19. 22, 23
11 ஏசா. 2. 20; 30. 8
12 2 இரா. 19. 37
13 ஏசா. 52. 7. ரோ. 10. 15
14 ஏசா. 51. 11, 12
15 ஏசா. 10. 12. எரே. 25. 29
16 ஏசா. 63. 2, 3
17 ஏசா. 38. 14; 59. 11

னேன், இனி உன்னைச் சிறுமைப்படுத்தா
திருப்பேன். இப்போதும் நான் உன்மேல் 13
இருக்கிற அவன் நுகத்தை முறித்து, [11]உன்
கட்டுகளை அறுப்பேன். உன்னைக் குறித்துக் 14
**கர்த்தர்** கட்டளை கொடுத்திருக்கிறார்; இனி
உன்பேருக்கு வித்து விதைக்கப்படுவதில்லை;
உன் தேவர்களின் கோவிலில் இருக்கிற
வெட்டப்பட்ட விக்கிரகத்தையும், வார்க்கப்
பட்ட விக்கிரகத்தையும் நான் நிர்மூலம்பண்
ணுவேன்; [12]நீ கனவீனனானபடியால் அதை
உனக்குப் பிரேதக்குழியாக்குவேன். இதோ, 15
[13]சமாதானத்தைக் கூறுகிற சுவிசேஷகனு
டைய கால்கள் மலைகளின்மேல் வருகிறது;
யூதாவே, உன் பண்டிகைகளை ஆசரி, உன்
பொருத்தனைகளைச் செலுத்து; துஷ்டன்
இனி உன் வழியாய்க் கடந்துவருவதில்லை,
அவன் முழுவதும் சங்கரிக்கப்பட்டான்.
சிதறடிக்கிறவன் உன் முகத்துக்கு முன் **2**
பாக வருகிறான்; [14]அரணைக் காத்துக்கொள்,
வழியைக் காவல்பண்ணு, அரையைக் கெட்
டியாய்க் கட்டிக்கொள், உன் பெலனை மிக
வும் ஸ்திரப்படுத்து. வெறுமையாக்குகிறவர் 2
கள் அவர்களை வெறுமையாக்கி, [15]அவர்களு
டைய திராட்சக்கொடிகளைக் கெடுத்துப்போ
ட்டாலும், **கர்த்தர்** யாக்கோபின் மகிமை
யைத் திரும்பிவரப் பண்ணுவதுபோல், இஸ்ர
வேலின் மகிமையையும் திரும்பிவரப் பண்
ணுவார். அவனுடைய பராக்கிரமசாலிகளின் 3
கேடகம் [16]இரத்தமயமாகும்; அவனுடைய
யுத்தவீரர் இரத்தாம்பரந் தரித்துக்கொண்டி
ருக்கிறார்கள்; அவன் தன்னை ஆயத்தம்பண்
ணும்நாளிலே இரதங்கள் ஜுவாலிக்கிற கட்
கங்களை உடையதாயிருக்கும்; ஈட்டிகள் குலுங்
கும். இரதங்கள் தெருக்களில் கடகடவென் 4
றோடி, வீதிகளில் இடசாரி வலசாரி வரும்;
அவைகள் தீவட்டிகளைப்போல விளங்கி, மின்
னல்களைப்போல வேகமாய்ப் பறக்கும்.
அவன் தன் பிரபலஸ்தரை நினைவுகூருவான்; 5
அவர்கள் தங்கள் நடைகளில் இடறி, அலங்
கத்துக்கு விரைந்து ஓடுவார்கள்; மறைவிடம்
ஆயத்தப்படுத்தப்படும். ஆறுகளின் மதகுகள் 6
திறக்கப்படும், அரமனை கரைந்துபோம்.
அவள் சிறைப்பட்டுப்போகத் தீர்மானமாயி 7
ற்று; அவளுடைய தாதிமார்கள் தங்கள் மார்
பிலே அடித்துக்கொண்டு, [17]புறாக்களைப்போ
லச் சத்தமிட்டுக் கூடப்போவார்கள். நினி 8
வே பூர்வகாலமுதல் தண்ணீர்த்தடாகம்போல்

இருந்தது; இப்போதோ அவர்கள் ஓடிப்போ
கிருர்கள்; நில்லுங்கள் நில்லுங்கள் என்ரு
லும், திரும்பிப்பார்க்கிறவன் இல்லை.
9 வெள்ளியைக் கொள்ளையிடுங்கள், பொன்
னையும் கொள்ளையிடுங்கள்; சம்பத்துக்கு முடி
வில்லை; இச்சிக்கப்படத்தக்க சகலவித பொ
10 ருள்களும் இருக்கிறது. அவள் வெறுமை
யும் வெளியும் பாழுமாவாள்; [1]மனம் கரைந்து
போகிறது; முழங்கால்கள் தள்ளாடுகிறது;
எல்லா இடுப்புகளிலும் மிகுந்த வேதனை
உண்டு; எல்லாருடைய முகங்களும் கருகிப்
11 போகிறது. சிங்கங்களின் வாசஸ்தலம் எங்
கே? பாலசிங்கம் இரை தின்கிற இடம் எங்
கே? கிழச்சிங்கமாகிய சிங்கமும், சிங்கக்குட்
டிகளும் பயப்படுத்துவாரில்லாமல் சஞ்சரிக்
12 கிற ஸ்தானம் எங்கே? சிங்கம் தன் குட்டி
களுக்குத் தேவையானதைப் பீறி, தன் பெண்
சிங்கங்களுக்கு வேண்டியதைத் தொண்டை
யைப் பிடித்துக் கொன்று, இரைகளினல்
தன் கெபிகளையும், பீறிப்போட்டவைகளி
13 ஞல் தன் தாபரங்களையும் நிரப்பிற்று. இதோ,
நான் உனக்கு விரோதமாக வந்து, இரதங்க
ளைப் புகையெழும்ப எரித்துப்போடுவேன்;
பட்டயம் உன் பாலசிங்கங்களைப் பட்சிக்கும்;
நீ இரைக்காகப் பிடிக்கும் வேட்டையை தே
சத்தில் அற்றுப்போகப்பண்ணுவேன்; [2]உன்
ஸ்தானபதிகளின் சத்தம் இனிக் கேட்கப்
படுவதில்லை என்று சேனைகளின் **கர்த்தர்**
சொல்லுகிருர்.

3 இரத்தப்பழிகளின் நகரத்திற்கு ஐயோ!
[3]அது வஞ்சகத்தினலும் கொடுமையினலும்
நிறைந்திருக்கிறது; கொள்ளை ஓயாமல் நடக்
2 கிறது. சவுக்குகளின் ஓசையும், [4]உருளை
களின் அதிர்ச்சியும், குதிரைகளின் பாய்ச்ச
லும், இரதங்கள் கடகடவென்று ஓடுகிற சத்
3 தமும், வீரர் குதிரை ஏறுகிறதும், பட்ட
யங்கள் துலங்குகிறதும், ஈட்டிகள் மின்னு
கிறதும், வெட்டுண்டவர்களின் திரளும்,
பிரேதங்களின் ஏராளமும் அங்கே உண்டா
யிருக்கும்; பிணங்களுக்குத் தொகையில்லை;
அவர்கள் பிணங்களில் இடறி விழுகிருர்கள்.
4 தன் வேசித்தனங்களினல் ஜாதிகளையும், தன்
சூனியங்களினல் வம்சங்களையும் விற்கிற
[5]மகா சூனியக்காரியும் ரூபவதியுமாயிருக்கிற
வேசியினுடைய திரளான வேசித்தனங்களி
5 னிமித்தம், இதோ, நான் உனக்கு விரோத
மாக வந்து உன் வஸ்திரத்து ஓரங்களை உன்
முகமட்டும் தூக்கியெடுத்து, [6]ஜாதிகளுக்கு
உன் நிர்வாணத்தையும், ராஜ்யங்களுக்கு உன்
6 மானத்தையும் தெரியப்பண்ணி, உன்மேல்
தீட்டானவைகளை எறிந்து, [7]உன்னைக் கன
வீனப்படுத்தி, உன்னை வேடிக்கையாக்கிப்
போடுவேன் என்று சேனைகளின் **கர்த்தர்**
7 சொல்லுகிருர். அப்பொழுது உன்னைக்
காண்கிறவனெல்லாம் நினிவே பாழாய்ப்போ
யிற்று, [8]அதற்காகப் புலம்புகிறவர் யார்?
ஆறுதல் சொல்லுகிறவர்களை உனக்கு எங்கே
தேடுவேனென்று சொல்லி, உன்னை விட்
டோடிப்போவான். நதிகள் மத்தியிலிருந்த 8
நோ அம்மோனைப்பார்க்கிலும் நீ சிரேஷ்ட
மோ? [9]அதைச் சுற்றிலும் தண்ணீர் இருந்
தது; சமுத்திரம் அதின் அரணும், சமுத்தி
ரக்கால் அதின் மதிலுமாயிருந்தது. எத்தி 9
யோப்பியாவும் எகிப்தும் எண்ணிறந்த சேனை
யால் அதற்குப் பெலனாக இருந்தது; பூத்தும்
லூபீமும் அதற்குச் சகாயமாயிருந்தது. ஆயி 10
னும் அவள் குடிவிலக்கப்பட்டுச் சிறையிருப்பி
லே கொண்டுபோகப்பட்டாள்; [10]அவள் குழந்
தைகள் எல்லா வீதிகளின் முகனைகளிலும்
மோதியடிக்கப்பட்டார்கள்; [11]அவளுடைய கன
வான்கள்பேரில் சீட்டுப்போட்டார்கள்; அவ
ளுடைய பெரியவர்கள் எல்லாரும் சங்கிலிக
ளால் கட்டப்பட்டார்கள். நீயும் வெறிகொ 11
ண்டு ஒளித்துக்கொள்வாய்; [12]நீயும் உன் சத்
துருவுக்குத் தப்ப அரணான கோட்டையைத்
தேடுவாய். உன் அரண்களெல்லாம் முதல் 12
பழுக்கும் பழங்களுள்ள அத்திமரங்களைப்
போல் இருக்கும்; [13]அவைகள் குலுக்கப்பட்
டால் அவைகளின் பழம் தின்கிறவன் வாயி
லே விழும். இதோ, உன் நடுவில் இருக்கிற 13
ஜனங்கள் பேடிகள்; [14]உன் தேசத்தின் வாசல்
கள் உன் சத்துருவுக்குமுன் திறவுண்டுபோ
கும்; அக்கினி உன் தாழ்ப்பாள்களைப் பட்சிக்
கும். முற்றிக்கைக்குத் தண்ணீர் மொண்டு 14
வை, உன் அரண்களைப் பலப்படுத்து; சேற்
றிலே போய்க் களிமண்ணை மிதி, சூளையைக்
கெட்டிப்படுத்து. அங்கே அக்கினி உன்னைப் 15
பட்சிக்கும், பட்டயம் உன்னைச் சங்கரிக்கும்;
[15]அது பச்சைக்கிளிகளைப்போல் உன்னைப்
பட்சித்துப்போடும்; உன்னைப் பச்சைக்கிளிக
ளத்தனை யாக்கிக்கொள், உன்னை வெட்டுக்கி
ளிகளத்தனை யாக்கிக்கொள். உன் வர்த்தகரை 16
வானத்து நட்சத்திரங்களிலும் அதிகமாக்கி
னுய்; இந்தப் பச்சைக்கிளிகள் பரவிப் பறந்து
போகும். உன் மகுடவர்த்தனர் வெட்டுக் 17
கிளிகளுக்கும், உன் தளகர்த்தர் பெருங்கிளி
களுக்கும் சமானமாயிருக்கிருர்கள்; [16]அவை
கள் குளிர்ச்சியானநாளில் வேலிகளில் பாளை
யமிறங்கி சூரியன் உதித்தமாத்திரத்தில் பற
ந்துபோம்; பின்பு அவைகள் இருக்கும் இடம்
இன்னதென்று தெரியாது. அசீரியா ராஜா 18
வே, [17]உன் மேய்ப்பர்கள் உறங்குவார்கள்;
உன் பிரபலஸ்தர் படுத்திருப்பார்கள்; [18]உன்
ஜனங்கள் பர்வதங்களின்மேல் சிதறியிருக்கி
ருர்கள், அவைகளைக் கூட்டிச் சேர்ப்பவன்
இல்லை. உன் நொறுங்குதலுக்குப் பரிகாரம் 19
இல்லை; உன் காயம் கொடியது; உன் செய்தி
யைக் கேட்பவர் யாவரும் உன்பேரில் கை
கொட்டுவார்கள்; [19]உன் பொல்லாப்பு எந்நேர
மும் யார்பேரிலேதான் பாயாமற்போயிற்று?

1 ஏசா. 13. 7, 8. தானி. 5. 6. செப். 2. 13
2 2 இரா. 18. 17, 19. எசே. 29. 3
3 எசே. 24. 9
4 எரே. 47. 3
5 ஏசா. 47. 9, 12. வெளி. 18. 2, 3
6 ஏசா. 47. 2, 3
7 மல். 2. 9. எபி. 10. 33
8 எரே. 15. 5. வெளி. 18. 10
9 ஆமோ. 6. 2
10 சங். 137. 8, 9
11 யோவே. 3. 3
12 எரே. 25. 17–27
13 வெளி. 6. 13
14 எரே. 51. 30
15 யோவே. 1. 4: 2. 25
16 வெளி. 9. 7
17 சங். 76. 6
18 1 இரா. 22. 17
19 ஏசா. 14. 8. புல. 2. 15

# HABKKUK

# ஆபகூக்

1 ஆபகூக் என்னும் தீர்க்கதரிசி தரிசன
மாய்க் கண்ட பாரம்:
2 கர்த்தாவே, நான் எதுவரைக்கும் உம்மை
நோக்கிக் கூப்பிடுவேன், [1]நீர் கேளாமலிருக்
கிறீரே! கொடுமையினிமித்தம் நான் எதுவ
ரைக்கும் உம்மை நோக்கிக் கூப்பிடுவேன்,
3 நீர் ரட்சியாமலிருக்கிறீரே! நீர் எனக்கு அக்
கிரமத்தைக் காண்பித்து, என்னைத் தீவினை
யைப் பார்க்கப்பண்ணுகிறதென்ன? கொள்
ளையும் கொடுமையும் எனக்கு எதிரே நிற்கி
றது; வழக்கையும் வாதையும் எழுப்புகிறவர்
4 கள் உண்டு. ஆகையால் நியாயப்பிரமாணம்
பெலனற்றதாகி, நியாயம் ஒருபோதும் செல்
லாமற்போகிறது; [2]துன்மார்க்கன் நீதிமானை
வளைந்துகொள்ளுகிறான்; ஆதலால் நியாயம்
5 புரட்டப்படுகிறது. நீங்கள் புறஜாதிகளை நோக்
கிப்பார்த்து, ஆச்சரியப்பட்டுப் பிரமியுங்கள்;
[3]விவரிக்கப்பட்டாலும் நீங்கள் விசுவாசியாத
ஒரு கிரியையை உங்கள் நாட்களில் நடப்பிப்
6 பேன். இதோ, நான் கல்தேயரென்னும்
கொடிதும் வேகமுமான ஜாதியாரை எழுப்பு
வேன்; [4]அவர்கள் தங்களுடையதல்லாத வாச
ஸ்தலங்களைக் கட்டிக்கொள்ள தேசத்தின் வி
7 சாலங்களில் நடந்துவருவார்கள். அவர்கள்
கெடியும் பயங்கரமுமானவர்கள்; அவர்களு
டைய நியாயமும் அவர்களுடைய மேன்மை
8 யும் அவர்களாலேயே உண்டாகும். அவர்க
ளுடைய குதிரைகள் சிவிங்கிகளிலும் வேக
மும், சாயங்காலத்தில் திரிகிற ஓநாய்களிலும்
தீவிரமுமாயிருக்கும்; அவர்களுடைய குதிரை
வீரர் பரவுவார்கள்; அவர்களுடைய குதிரை
வீரர் தூரத்திலிருந்து வருவார்கள்; [5]இரைக்
குத் தீவிரிக்கிற கழுகுகளைப்போல் பறந்து
9 வருவார்கள். அவர்களெல்லாரும் கொடுமை
செய்ய வருவார்கள்; அவர்களுடைய முகங்
கள் சுவறச்செய்யும் கீழ்காற்றைப்போலிருக்
கும்; அவர்கள் மணலத்தனை ஜனங்களைச்
10 சிறைபிடித்துச் சேர்ப்பார்கள். அவர்கள் ரா
ஜாக்களை ஆகடியம் பண்ணுவார்கள்; அதிபதி
கள் அவர்களுக்குப் பரியாசமாயிருப்பார்கள்;
அவர்கள் அரண்களையெல்லாம் பார்த்து நகை
த்து, மண்மேடுகளைக் குவித்து அவைகளைப்
11 பிடிப்பார்கள். அப்பொழுது அவனுடைய
மனம் மாற, அவன், [6]தன் பெலன் தன் தேவ
னாலே உண்டானதென்று சொல்லி மிஞ்சிப்
போய்க் குற்றவாளியாவான். கர்த்தாவே, 12
நீர் பூர்வகாலமுதல் என் தேவனும், [7]என்
பரிசுத்தருமானவர் அல்லவா? நாங்கள் சாவ
தில்லை; கர்த்தாவே, நியாயத்தீர்ப்பு செய்ய
அவனை வைத்தீர்; கன்மலையே, தண்டனை
செய்ய அவனை நியமித்தீர். தீமையைப் 13
பார்க்கமாட்டாத [8]சுத்தக்கண்ணனே, அநியா
யத்தை நோக்கிக்கொண் டிருக்கமாட்டீரே;
பின்னை துரோகிகளை நீர் நோக்கிக்கொண்
டிருக்கிறதென்ன? துன்மார்க்கன் தன்னைப்
பார்க்கிலும் நீதிமானை விழுங்கும்போது நீர்
மௌனமா யிருக்கிறதென்ன? மனுஷரைச் 14
சமுத்திரத்து மச்சங்களுக்கும், அதிகாரியில்
லாத ஊர்வனவற்றிற்கும் சமான மாக்குகிற
தென்ன? அவர்களெல்லாரையும் தூண்டி 15
லினால் இழுத்துக்கொள்ளுகிறான்; [9]அவர்க
ளைத் தன் வலையினால் பிடித்து, தன் பறியிலே
சேர்த்துக்கொள்ளுகிறான்; அதினால் சந்தோ
ஷப்பட்டுக் களிகூருகிறான். ஆகையால் 16
அவைகளினால் தன் பங்கு கொழுப்புள்ள
தும், தன் போஜனம் ருசிகரமுள்ளதுமாயிற்று
என்று சொல்லி [10]அவன் தன் வலைக்குப்
பலியிட்டுத் தன் பறிக்குத் தூபங்காட்டுகி
றான். இதற்காக அவன் தன் வலையை இழு 17
த்து அதிலுள்ளவைகளைக் கொட்டிக்கொண்
டிருந்து, இரக்கமில்லாமல் ஜாதிகளை எப்போ
தும் கொன்றுபோடவேண்டுமோ?
நான் என் காவலிலே தரித்து, அரணிலே 2
நிலைகொண்டிருந்து, அவர் எனக்கு என்ன
சொல்லுவாரென்றும், [11]அவர் என்னைக் கண்
டிக்கும்போது நான் என்ன உத்தரவு சொல்
லுவேனென்றும் கவனித்துப் பார்ப்பேன்
என்றேன். அப்பொழுது கர்த்தர் எனக் 2
குப் பிரதியுத்தரமாக: [12]நீ தரிசனத்தை எழுதி,
அதைக் கடந்தோடுகிறவன் வாசிக்கும்படிப்
பலகைகளிலே தீர்க்கமாக வரை. குறித்த 3
காலத்துக்குத் தரிசனம் இன்னும் வைக்கப்
பட்டிருக்கிறது; [13]முடிவிலே அது விளங்
கும், அது பொய் சொல்லாது; அது தாமதித்
தாலும் அதற்குக் காத்திரு; அது நிச்சயமாய்
வரும், அது தாமதிப்பதில்லை. இதோ, அகங் 4

1 புல. 3. 8
2 யோபு 21. 7. சங். 94. 3
3 ஏசா. 29. 14. அப். 13. 41
4 உபா. 28. 49, 50. எரே. 5. 15
5 எரே. 4. 13: 5. 6. செப். 3. 3
6 தானி. 5. 4
7 2 இரா. 19. 25. ஏசா. 10. 5–7
8 சங். 5. 5. எரே. 12. 1
9 எரே. 16. 16. ஆமோ. 4. 2.
10 உபா. 8. 17. ஏசா. 10. 13–15
11 சங். 85. 8. ஏசா. 21. 8, 11
12 ஏசா. 8. 1: 30. 8
13 தானி. 10. 14: 11. 27, 35. எபி. 10. 37

ாரியாயிருக்கிறானே, அவனுடைய ஆத்துமா
அவனுக்குள் செம்மையானதல்ல; [1]தன் விசு
வாசத்தினாலே நீதிமான் பிழைப்பான். அவன்
மதுபானத்தினால் அக்கிரமஞ்செய்து அகங்கா
ரியாகி, வீட்டிலே தரியாமல், அவன் தன்
ஆத்துமாவைப் பாதாளத்தைப்போல விரிவாக்
கித் திருப்தியாகாமல், [2]மரணத்துக்குச் சமா
னமாய்ச் சகல ஜாதிகளையும் தன் வசமாகச்
சேர்த்து, சகல ஜனங்களையும் தன்னிடமாகக்
6 கூட்டிக்கொண்டாலும், இவர்களெல்லாரும்
அவன்பேரில் ஒரு பழமொழியையும், அவ
னுக்கு விரோதமான வசைச்சொல்லையும் வச
னித்து, [3]தன்னுடையதல்லாததைத் தனக்கா
கச் சேர்த்துக்கொள்ளுகிறவனுக்கு ஐயோ
என்றும், அது எந்தமட்டும் நிற்கும் என்றும்,
அவன் தன்மேல் களிமண் சுமையையல்லவா
சுமத்திக்கொள்ளுகிறான் என்றும் சொல்லு
7 வார்கள். உன்னைக் கடிப்பவர்கள் சடிதியாய்
எழும்புவதும், உன்னை அலைக்கழிப்பவர்கள்
விழிப்பது மில்லையோ? நீ அவர்களுக்குச்
8 சூறையாகாயோ? நீ அநேகம் ஜாதிகளைக்
கொள்ளையிட்டபடியினால் [4]ஜனங்களில் மீதி
யான யாவரும் நீ சிந்தின மனுஷரத்தத்தினி
மித்தமும் நீ செய்த கொடுமையினிமித்தமும்
உன்னைக் கொள்ளையிடுவார்கள்.
9 தீமையின் வல்லமைக்குத் தப்பவேண்டு
மென்று தன் கூட்டை உயரத்திலே வைக்கும்
படிக்கு, [5]தன் வீட்டுக்குப் பொல்லாத ஆதா
10 யத்தைத் தேடுகிறவனுக்கு ஐயோ! அநேக
ஜனங்களை வெட்டிப்போட்டதினால் உன் வீட்
டுக்கு வெட்கமுண்டாக ஆலோசனைபண்ணி
னாய்; உன் ஆத்துமாவுக்கு விரோதமாய்ப்
11 பாவஞ்செய்தாய். கல்லு சுவரிலிருந்து கூப்
பிடும், உத்திரம் மச்சிலிருந்து சாட்சியிடும்.
12 இரத்தப்பழிகளாலே பட்டணத்தைக்கட்டி,
[6]அநியாயத்தினாலே நகரத்தைப் பலப்படுத்து
13 கிறவனுக்கு ஐயோ! இதோ, ஜனங்கள்
அக்கினிக்கு இரையாக உழைத்து, [7]ஜனங்
கள் விருதாவாக இளைத்துப்போகிறது கர்த்
14 தருடைய செயல் அல்லவோ? சமுத்திரம்
ஜலத்தினால் நிறைந்திருக்கிறதுபோல், [8]பூமி
கர்த்தருடைய மகிமையை அறிகிற அறிவினால்
நிறைந்திருக்கும்.
15 தன் தோழருக்குக் குடிக்கக்கொடுத்துத்
தன் துருத்தியை அவர்களண்டையிலே
வைத்து, அவர்களுடைய நிர்வாணங்களைப்
பார்க்கும்படிக்கு, [9]அவர்களை வெறிக்கப்பண்
16 ணுகிறவனுக்கு ஐயோ! நீ மகிமையினால்
அல்ல, [10]இலச்சையினால் நிரப்பப்படுவாய்;
நீயும் குடித்து விருத்தசேதனமில்லாதவன்
என்று விளங்கு; [11]கர்த்தருடைய வலதுகை
யில் இருக்கிற பாத்திரம் உன்னிடத்திற்குத்
திரும்பும்; உன் மகிமையின்மேல் இலச்சை
17 யான வாந்திபண்ணுவாய். லீபனோனுக்குச்
செய்த கொடுமை உன்னை மூடும்; சிந்தின
மனுஷரத்தத்தி னிமித்தமும் தேசத்திற்கும்
பட்டணத்திற்கும் அதின் குடிகள் எல்லாருக்
கும் செய்த கொடுமையினிமித்தமும் மிருகங்
கள் செய்யும் பாழ்க்கடிப்பு உன்னைக் கலங்கப்
பண்ணும்.
சித்திரக்காரனுக்கு அவன் செய்த சுரூப 18
மும், [12]ஊமையான தெய்வங்களை உண்டு
பண்ணித் தான் உருவாக்கின சுரூபத்தை நம்
பினவனுக்கு வார்க்கப்பட்டதும் பொய்ப்போ
தகம் பண்ணுகிறதுமான விக்கிரகமும் என்
னத்துக்கு உதவும்? மரத்தைப்பார்த்து விழி 19
யென்றும், ஊமையான கல்லைப்பார்த்து எழு
ம்பு என்றும் சொல்லுகிறவனுக்கு ஐயோ!
அது போதிக்குமோ? [13]இதோ, அது பொன்
னும் வெள்ளியுமான தகட்டால் மூடப்பட்டி
ருக்கிறது; அதற்குள்ளே சுவாசம் இல்லையே?
கர்த்தரோவென்றால், தமது பரிசுத்த ஆலயத் 20
தில் இருக்கிறார்; [14]பூமியெல்லாம் அவருக்கு
முன்பாக மௌனமாயிருக்கக்கடவது.

ஆபகூக் தீர்க்கதரிசி சிகாயோனில் பாடின 3
விண்ணப்பம்.
கர்த்தாவே, நீர் வெளிப்படுத்தினதை நான் 2
கேட்டேன், எனக்குப் பயமுண்டாயிற்று;
[15]கர்த்தாவே, வருஷங்களின் நடுவிலே உம்மு
டைய கிரியையை உயிர்ப்பியும், வருஷங்
களின் நடுவிலே அதை விளங்கப்பண்ணும்;
கோபித்தாலும் இரக்கத்தை நினைத்தருளும்.
தேவன் *தேமானிலிருந்தும், [16]பரிசுத்தர் 3
பாரான் பர்வதத்திலிருந்தும் வந்தார்; சேலா.
அவருடைய மகிமை வானங்களை மூடிக்
கொண்டது; அவர் துதியினால் பூமி நிறைந்
தது. அவருடைய பிரகாசம் சூரியனைப்போ 4
லிருந்தது; அவருடைய கரத்திலிருந்து கிர
ணங்கள் வீசின; அங்கே அவருடைய பராக்
கிரமம் மறைந்திருந்தது. அவருக்கு முன்பா 5
கக் கொள்ளைநோய் சென்றது; [17]அவர் அடிக
ளிலிருந்து எரிபந்தமான காய்ச்சல் புறப்பட்
டது. அவர் நின்று பூமியை அளந்தார்; 6
அவர் பார்த்துப் புறஜாதிகளைக் கரையப்பண்
ணினார்; [18]பூர்வ பர்வதங்கள் சிதறடிக்கப்பட்
டது, என்றுமுள்ள மலைகள் தாழ்ந்தது; அவரு
டைய நடைகள் நித்திய நடைகளாயிருந்தது.
கூஷானின் கூடாரங்கள் வருத்தத்தில் அகப் 7
பட்டிருக்கக் கண்டேன்; மீதியான் தேசத்தின்
திரைகள் நடுங்கின. கர்த்தர் நதிகளின்மேல் 8
கோபமாயிருந்தாரோ? [19]தேவரீர் உம்முடைய
குதிரைகளின்மேலும் ரட்சிப்புண்டாக்குகிற
உம்முடைய ரதங்களின்மேலும் ஏறிவருகிற
போது, உமது கோபம் நதிகளுக்கும் உமது
சினம் சமுத்திரத்திற்கும் விரோதமாயிருந்த
தோ? கோத்திரங்களுக்கு ஆணையிட்டுக்கொ 9
டுத்த வாக்கின்படியே உம்முடைய வில்
நாணேற்றப்பட்டதாக விளங்கினது; சேலா.
[20]நீர் பூமியைப் பிளந்து ஆறுகளை உண்டாக்கி
னீர். பர்வதங்கள் உம்மைக் கண்டு நடுங்கின; 10
[21]ஜலம் பிரவாகித்துக் கடந்துபோயிற்று; ஆழி
இரைந்தது, அதின் கைகளை உயர எடுத்தது.
சந்திரனும் சூரியனும் தன் தன் மண்டலத் 11
தில் நின்றன; [22]உமது அம்புகளின் ஜோதியி

1 யோ. 3. 36. ரோ. 1. 17. கலா. 3. 11. எபி. 10. 38
2 நீதி. 27. 20: 30. 16
3 மீகா 2. 4
4 ஏசா. 33. 1
5 எரே. 22. 13
6 எரே. 22. 13. எசே. 24. 9. மீகா. 3. 10. நாகூம் 3. 1
7 எரே. 51. 58
8 எண். 14. 21. ஏசா. 11. 9: 45. 5, 6
9 ஆதி. 9. 22. ஓசி. 7. 5
10 பிலி. 3. 19
11 எரே. 25. 27–29
12 ஏசா. 44. 9, 10: 46. 2. எரே. 10. 6, 14. சகரி. 10. 2. 1 கொ. 12. 2
13 சங். 135. 17
14 சங். 11. 4. செப். 1. 7. சகரி. 2. 13
15 சங். 85. 6. யோ. 10. 10
* வடக்கு
16 உபா. 33. 2. நியா. 5. 4. சங். 68. 7
17 உபா. 32. 24. சங். 18. 8. நாகூம் 1. 3
18 ஆதி. 49. 26. மீகா 5. 2. நாகூம் 1. 6
19 உபா. 33. 26, 27. சங். 68. 4: 104. 3
20 சங். 78. 15, 16: 105. 41
21 யாத். 19. 16, 18. யோசு. 3. 16. நியா. 5. 4, 5. சங். 68. 8
22 யோசு. 10. 11–13. சங். 18. 14

லும், உமது ஈட்டியினுடைய மின்னல் பிரகா
12 சத்திலும் நடந்தன. நீர் கோபத்தோடே பூமி
யில் நடந்தீர், [1]உக்கிரத்தோடே ஜாதிகளைப்
13 போரடித்தீர். உமது ஜனத்தின் ரட்சிப்புக்கா
கவும் நீர் அபிஷேகம் பண்ணுவித்தவனின்
ரட்சிப்புக்காகவுமே நீர் புறப்பட்டீர்; [2]கழுத்
தளவாக அஸ்திபாரத்தைத் திறப்பாக்கி, துஷ்
டனுடைய வீட்டிலிருந்த தலைவனை வெட்
14 டினீர்; சேலா. என்னைச் சிதறடிப்பதற்
குப் பெருங்காற்றைப்போல் வந்தார்கள்; சிறு
மையானவனை மறைவிடத்திலே பட்சிப்பது
அவர்களுக்குச் சந்தோஷமாயிருந்தது; நீர் அவ
னுடைய ஈட்டிகளினாலேயே அவனுடைய
15 கிராமத்து அதிபதிகளை உருவக் குத்தினீர். திர
ளான தண்ணீர் குவியலாகிய சமுத்திரத்துக்
குள் [3]உமது குதிரைகளோடே நடந்துபோனீர்.
16 நான் கேட்டபொழுது என் குடல் குழம்
பிற்று; அந்தச் சத்தத்துக்கு என் உதடுகள்
துடித்தது; [4]என் எலும்புகளில் உக்கல் உண்
டாயிற்று; என் நிலையிலே நடுங்கினேன்; ஆனா
லும் எங்களோடே எதிர்க்கும் ஜனங்கள் வரும்
போது, இக்கட்டுநாளிலே நான் இளைப்பா
றுதல் அடைவேன்.
அத்திமரம் துளிர்விடாமற்போனாலும், திரா 17
ட்சச்செடிகளில் பழம் உண்டாகாமற்போனா
லும், ஒலிவமரத்தின் பலன் அற்றுப்போனா
லும், வயல்கள் தானியத்தை விளைவியாமற்போ
னாலும், கிடையில் ஆட்டுமந்தைகள் முதலற்
றுப்போனாலும், தொழுவத்திலே மாடு இல்
லாமற்போனாலும், நான் **கர்த்தருக்குள்** மகி 18
ழ்ச்சியாயிருப்பேன், [5]என் ரட்சிப்பின் தேவ
னுக்குள் களிகூருவேன். ஆண்டவராகிய 19
கர்த்தர் என் பெலன்; [6]அவர் என் கால்களை
மான் கால்களைப்போலாக்கி, உயர்மான ஸ்த
லங்களில் என்னை நடக்கப்பண்ணுவார்.
இது *நெகிநோத் என்னும் வாத்தியத்தில்
வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்
பட்ட சங்கீதம்.

1 எரே. 51. 33. ஆமோ. 1. 3. மீகா 4. 13
2 யோசு. 10. 34: 11. 8, 12. சங். 68. 21
3 சங். 77. 19
4 சங். 119. 120, எரே. 23. 9
5 யோபு 18. 15. ஏசா. 41. 16: 61. 10
6 உபா. 32. 13: 33. 29. 2 சாமு. 22. 34. சங். 18. 33: 27. 1
* வீணை

# ZEPHANIAH

# செப்பனியா

1 ஆமோனின் புத்திரனாகிய யோசியா என்
னும் யூதா ராஜாவின் நாட்களிலே, எஸ்கியா
வின் குமாரனாகிய ஆமரியாவுக்குக் குமார
னாகிய கெதலியா என்பவனுடைய மகனாகிய
கூஷின் குமாரன் செப்பனியாவுக்கு உண்
டான **கர்த்தருடைய** வசனம்.
2 தேசத்தில் உண்டானதை எல்லாம் முற்றி
லும் வாரிக்கொள்ளுவேன் என்று **கர்த்தர்**
3 சொல்லுகிறார். மனுஷரையும் மிருகஜீவன்
களையும் வாரிக்கொள்ளுவேன்; நான் ஆகா
யத்துப் பறவைகளையும், சமுத்திரத்து மச்சங்
களையும், [1]இடறுகிறதற் கேதுவானவைகளை
யும் துன்மார்க்கரோடேகூட வாரிக்கொண்டு,
தேசத்தில் உண்டான மனுஷரைச் சங்காரம்
பண்ணுவேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறார்.
4 நான் யூதாவின்மேலும், எருசலேமிலுள்ள
எல்லாக் குடிகளின்மேலும் என் கையை
நீட்டி, [2]பாகாலில் மீதியாயிருக்கிறதையும்,
ஆசாரியர்களோடேகூட *கெம்மரீம் என்பவர்
5 களின் பேரையும், வீடுகளின்மேல் வான
சேனையைப் பணிகிறவர்களையும், [3]**கர்த்தர்**
பேரில் ஆணையிட்டு, †மல்காமின்பேரிலும்
6 [4]ஆணையிட்டுப் பணிகிறவர்களையும், **கர்த்**
**தரை** விட்டுப் பின்வாங்குகிறவர்களையும்,
[5]**கர்த்தரைத்** தேடாமலும், அவரைக்குறித்து
விசாரியாமலு மிருக்கிறவர்களையும், இவ்
விடத்தில் இராதபடிக்குச் சங்காரம் பண்
ணுவேன்.
7 கர்த்தராகிய ஆண்டவருக்குமுன்பாக மௌ
னமாயிருங்கள்; [6]**கர்த்தருடைய** நாள் சமீபித்
திருக்கிறது; **கர்த்தர்** ஒரு ‡யாகத்தை ஆயத்தம்
பண்ணி, [7]அதற்கு விருந்தாளிகளையும் அழை
8 த்திருக்கிறார். **கர்த்தருடைய** யாகத்தின் நா
ளிலே நான் [8]அதிபதிகளையும் ராஜகுமாரரை
யும் §மறுதேசத்து வஸ்திரம் தரிக்கிற யாவரை
9 யும் தண்டிப்பேன். வாசற்படியைத் தாண்டி,
கொடுமையினாலும் வஞ்சகத்தினாலும் தங்கள்
எஜமான்களின் வீடுகளை நிரப்புகிற யாவரை
10 யும் அந்நாளிலே தண்டிப்பேன். அந்நாளி
லே மீன்வாசலிலிருந்து கூக்குரலின் சத்த
மும், நகரத்தின் இரண்டாம் பாகத்திலிருந்து
அலறுதலும், மேடுகளிலிருந்து மகா சங்காரத்
தின் இரைச்சலும் உண்டாகுமென்று **கர்த்தர்**
சொல்லுகிறார். ||மக்தேஷின் குடிகளே அல 11
றுங்கள்; [9]வர்த்தகரெல்லாரும் சங்காரமானார்
கள்; காசுக்காரர் யாவரும் வெட்டுண்டுபோ
னார்கள். அக்காலத்திலே நான் எருசலேமை 12
விளக்குக்கொளுத்திச் சோதித்து, வண்டல்
போலக் குழம்பியிருக்கிறவர்களும், [10]**கர்த்தர்**
நன்மை செய்வதும் இல்லை தீமை செய்வதும்
இல்லையென்று தங்கள் இருதயத்தில் சொல்
லுகிறவர்களுமான மனுஷரை தண்டிப்பேன்.
அவர்களுடைய ஆஸ்தி கொள்ளையாகும்; அவ 13
ர்களுடைய வீடுகள் பாழாய்ப்போகும்; [11]அவர்
கள் வீடுகளைக் கட்டியும், அவைகளில் குடி
யிருக்கமாட்டார்கள்; அவர்கள் திராட்சத்தோ
ட்டங்களை நாட்டியும், அவைகளின் பழரசத்
தைக் குடிப்பதில்லை. **கர்த்தருடைய** பெரிய 14
நாள் சமீபித்திருக்கிறது; அது கிட்டிச்சேர்ந்து
மிகவும் தீவிரித்துவருகிறது; [12]**கர்த்தருடைய**
நாளென்கிற சத்தத்துக்குப் பராக்கிரமசாலி
முதலாய் அங்கே மனங்கசந்து அலறுவான்.
அந்த நாள் உக்கிரத்தின் நாள்; [13]அது இக்கட் 15
டும் இடுக்கமுமான நாள்; அது அழிவும் பாழ்க்
கடிப்புமான நாள்; அது இருளும் அந்தகாரமு
மான நாள்; அது மப்பும் மந்தாரமுமான நாள்.
அது அரணிப்பான நகரங்களுக்கும், உயர 16
மான கொத்தளங்களுக்கும் விரோதமாக [14]எக்
காளம் ஊதுகிறதும் ஆர்ப்பரிக்கிறதுமான
நாள். மனுஷர் **கர்த்தருக்கு** விரோதமாய்ப் 17
பாவஞ்செய்தபடியால், [15]அவர்கள் குருடரைப்
போல் நடக்கும்படி நான் அவர்களை வருத்தப்
படுத்துவேன்; [16]அவர்கள் இரத்தம் புழுதியைப்
போல் சொரியப்படும்; அவர்கள் மாம்சம் எரு
வைப்போல் கிடக்கும். **கர்த்தருடைய** உக்கி 18
ரத்தின் நாளிலே அவர்கள் வெள்ளியும் அவர்
கள் பொன்னும் அவர்களைத் தப்புவிக்கமாட்
டாது; [17]அவருடைய எரிச்சலின் அக்கினியி
னால் தேசமெல்லாம் அழியும்; தேசத்தின்
குடிகளையெல்லாம் சடிதியாய் நிர்மூலம்பண்
ணுவார்.
விரும்பப்படாத ஜாதியே, கட்டளை பிறக்கு 2
முன்னும், பதரைப்போல நாள் பறந்துபோகு
முன்னும் [18]**கர்த்தருடைய** உக்கிரகோபம் உங்
கள்மேல் இறங்கு முன்னும், **கர்த்தருடைய**
கோபத்தின் நாள் உங்கள்மேல் வருமுன்னும்,

1 எசே. 7. 19. ஓசி. 4. 3. மத். 13. 41.
2 2 இரா. 23. 4, 5
* விக்கிரகபூஜாசாரிகள்
3 2 இரா. 23. 12. ஏசா. 48. 1. எரே. 19. 13. ஓசி. 4. 15
† தங்கள் ராஜாவின்
4 1 இரா. 11. 33
5 எபி. 2. 3: 10. 38
6 சகரி. 2. 13: பிலி. 4. 5
‡ பலி. ஏசா. 34. 6
7 மத். 22. 2. மூ. வெளி. 19. 18
8 எரே. 39. 6
§ அந்நிய
|| பேட்டைவீதி
9 யாக். 5. 1
10 சங். 94. 7. எரே. 48. 11. ஆமோ. 6. 1. வெளி. 2. 23
11 உபா. 28. 30, 39. ஆமோ. 5. 11. மீகா 6. 15
12 யோவே. 2. 1, 11. வெளி. 6. 15-17
13 ஏசா. 22. 5. எரே. 30. 7. ஆமோ. 5. 18
14 எரே. 4. 19
15 ஏசா. 59. 10
16 சங். 79. 3. எரே. 9. 22
17 நீதி. 11. 4. எசே. 7. 19
18 2 இரா. 22. 13, 17. சங். 97. 7, 8. ஓசி. 13. 3

2 நீங்கள் உங்களை [1]உய்த்து ஆராய்ந்து சோதி
3 யுங்கள். தேசத்திலுள்ள எல்லாச் *சிறுமை
யானவர்களே, கர்த்தருடைய நியாயத்தை நட
ப்பிக்கிறவர்களே, [2]அவரைத் தேடுங்கள்; நீதி
யைத் தேடுங்கள், மனத்தாழ்மையைத் தேடுங்
கள்; [3]அப்பொழுது ஒருவேளை கர்த்தருடைய
கோபத்தின் நாளிலே மறைக்கப்படுவீர்கள்.
4 காத்சா குடியற்று, அஸ்கலோன் பாழாகும்;
[4]அஸ்தோத்தைப் பட்டப்பகலிலே பறக்கடிப்
பார்கள்; எக்ரோன் வேரோடே பிடுங்கப்படும்.
5 சமுத்திரக்கரைக் குடிகளாகிய கிரேத்தியருக்கு
ஐயோ! பெலிஸ்தரின் தேசமாகிய கானானே,
[5]கர்த்தருடைய வார்த்தை உனக்கு விரோதமா
யிருக்கிறது; இனி உன்னில் குடியில்லாதபடி
6 க்கு உன்னை அழிப்பேன். சமுத்திரக்கரை
தேசம் [6]மேய்ப்பர் தங்கும் குடில்களும் ஆட்டுத்
7 தொழுவங்களுமாகும். அந்த தேசம் யூதா வம்சத்
தாரில் மீதியானவர்களின் வசமாகும்; [7]அவர்
கள் அவ்விடங்களில் மந்தை மேய்ப்பார்கள்;
அஸ்கலோனின் வீடுகளிலே சாயங்காலத்தி
லே படுத்துக்கொள்வார்கள்; [8]அவர்களுடைய
தேவனாகிய கர்த்தர் அவர்களை விசாரித்து,
[9]அவர்கள் சிறையிருப்பைத் திருப்புவார்.
8 மோவாப் செய்த நிந்தனையையும், அம்மோன்
புத்திரர் என் ஜனத்தை நிந்தித்து, [10]அவர்கள்
எல்லையைக் கடந்து பெருமைபாராட்டிச்சொ
9 ன்ன தூஷணங்களையும் கேட்டேன். ஆகை
யால் மோவாப் சோதோமைப்போலும், [11]அம்
மோன் புத்திரரின் தேசம் கொமோராவைப்
போலுமாகி, காஞ்சொறி படரும் இடமும்,
உப்புப்பள்ளமும், நித்திய பாழுமாயிருக்கும்;
என் ஜனத்தில் மீந்தவர்கள் அவர்களைக் கொ
ள்ளையிட்டு, என் ஜாதியில் மீதியானவர்கள்
அவர்களைச் சுதந்தரித்துக்கொள்வார்கள் என்
பதை என் ஜீவனைக்கொண்டு சொல்லுகி
றேன் என்று இஸ்ரவேலின் தேவனாகிய சே
10 னைகளின் கர்த்தர் உரைக்கிறார். அவர்கள்
சேனைகளுடைய கர்த்தரின் ஜனத்துக்கு வி
ரோதமாய்ப் பெருமைபாராட்டி அவர்களை
நிந்தித்தபடியினால், [12]இது அவர்கள் அகங்கா
ரத்துக்குப் பதிலாக அவர்களுக்குக் கிடைக்
11 கும். கர்த்தர் அவர்கள்மேல் †கெடியாயிருப்
பார்; பூமியிலுள்ள தேவர்களையெல்லாம் மெ
லிந்துபோகப் பண்ணுவார்; [13]அப்பொழுது
தீவுகளிலுள்ள சகல புறஜாதிகளும் அவரவர்
தங்கள் தங்கள் ஸ்தானத்திலிருந்து அவரைப்
12 பணிந்துகொள்வார்கள். எத்தியோப்பியராகிய
நீங்களும் [14]என் பட்டயத்தினால் கொலைசெய்
13 யப்படுவீர்கள். அவர் தமது கையை வடதே
சத்துக்கு விரோதமாய் நீட்டி, [15]அசீரியாவை
அழித்து, நினிவேயைப் பாழும் வனாந்தரத்
துக்கொத்த வறட்சியுமான ஸ்தலமாக்குவார்.
14 அதின் நடுவில் மந்தைகளும் ஜாதிஜாதியான
சகல மிருகங்களும் படுத்துக்கொள்ளும்; அதி
னுடைய சிகரங்களின்மேல் நாரையும் கோட்
டானும் இராத்தங்கும்; பலகணிகளில் கூவு
கிற சத்தம் பிறக்கும்; [16]வாசற்படிகளில் பாழ்க்
கடிப்பு இருக்கும்; கேதுருமரங்களின் மச்
சைத் திறப்பாக்கிப் போடுவார். நான்தான், 15
[17]என்னைத்தவிர வேறொருவரும் இல்லை
என்று தன் இருதயத்தில் சொல்லி, நிர்விசா
ரமாய் வாழ்ந்து களிகூர்ந்திருந்த நகரம் இது
வே; இது பாழும் மிருகஜீவன்களின் தாபரமு
மாய்ப் போய்விட்டதே! அதின் வழியாய்ப்
போகிறவன் எவனும் ஈசல்போட்டுத் தன்
கையைக் கொட்டுவான்.

இடுக்கண்செய்து, கறைப்பட்டதும் அழுக்கு 3
மாயிருக்கிற நகரத்துக்கு ஐயோ! அது சத் 2
தத்துக்குச் செவிகொடுக்கவில்லை; அது கடி
ந்துகொள்ளுதலை ஏற்றுக் கொள்ளவில்லை;
[18]அது கர்த்தரை நம்பவில்லை; அது தன்
தேவனிடத்தில் சேரவில்லை. அதற்குள் 3
ளே இருக்கிற அதின் அதிபதிகள் கெர்ச்
சிக்கிற சிங்கங்கள்; [19]அதின் நியாயாதிபதிகள்
சாயங்காலத்தில் புறப்படுகிறதும் விடியற்கால
மட்டும் ஒரு எலும்பையும் மீதியாக வைக்கா
ததுமான ஓநாய்கள். அதின் தீர்க்கதரிசிகள் 4
வீண்பெருமையும் வஞ்சகமு முள்ளவர்கள்;
[20]அதின் ஆசாரியர்கள் பரிசுத்தஸ்தலத்தைப்
பரிசுத்தக்குலைச்சலாக்கி, வேதத்துக்கு அநி
யாயஞ்செய்தார்கள். அதற்குள் இருக்கிற 5
கர்த்தர் நீதியுள்ளவர்; [21]அவர் அநியாயஞ்செய்
வதில்லை; அவர் குறைவில்லாமல் காலைதோ
றும் தம்முடைய நியாயத்தை விளங்கப்பண்
ணுகிறார்; [22]அநியாயக்காரனோ வெட்கம் அறி
யான். ஜாதிகளைச் சங்கரித்தேன்; அவர்கள் 6
துருகங்கள் பாழாயின; அவர்களுடைய வீதி
களை ஒருவரும் கடந்துபோகாதபடிக்குப் பா
ழாக்கினேன்; அவர்களுடைய பட்டணங்கள்
மனுஷர் இல்லாதபடிக்கும் குடியில்லாதபடிக்
கும் அவாந்தரையாயின. உன் வாசஸ்தலம் 7
நிர்மூலமாகாதபடிக்கு நீ எனக்குப் பயந்து,
கடிந்துகொள்ளுதலை ஏற்றுக்கொள் என்றேன்;
[23]நான் அவர்களை எப்படி தண்டித்தாலும்,
[24]அவர்கள் அதிகாலையில் எழுந்து தங்கள் கிரி
யைகளையெல்லாம் கேடாக்கினார்கள். ஆகை 8
யால் நான் கொள்ளையாட எழும்பும் நாள்மட்
டும் எனக்குக் காத்திருங்கள் என்று கர்த்தர்
சொல்லுகிறார்; [25]என் சினமாகிய உக்கிரகோ
பத்தையெல்லாம் அவர்கள்மேல் சொரியும்
படி ஜாதிகளைச் சேர்க்கவும், ராஜ்யங்களைக்
கூட்டவும் நான் தீர்மானம்பண்ணினேன்;
[26]பூமியெல்லாம் என் எரிச்சலின் அக்கினி
யினால் அழியும். அப்பொழுது ஜனங்களெல் 9
லாரும் கர்த்தருடைய நாமத்தைத் தொழுது
கொண்டு, [27]ஒருமனப்பட்டு அவருக்கு ஆரா
தனை செய்யும்படிக்கு, [28]நான் அவர்கள் பா
ஷையைச் சுத்தமான பாஷையாக மாறப்பண்
ணுவேன். எத்தியோப்பியாவின் நதிகளுக்கு 10
அக்கரையிலிருந்து என்னிடத்தில் விண்ணப்
பம்பண்ணுகிறவர்களாகிய [29]சிதறடிக்கப்பட்ட
வர்களின் ‡குமாரத்தியானவள் எனக்குக் கா
ணிக்கை கொண்டுவருவாள். எனக்கு விரோ 11
தமாய்த் துரோகம்பண்ணி, [30]நீ செய்த உன்

1 யோவே. 2. 16
* தாழ்ந்த சிந்தையுள்ளவர்களே
2 சங். 76. 9: 105. 4. ஆமோ. 5. 6, 15
3 யோனா 3. 9
4 எரே. 47. 5. சகரி. 9. 5, 6
5 எசே. 25. 16
6 ஏசா. 17. 2
7 ஏசா. 11. 11. மீகா 4. 7
8 லூ. 1. 74
9 சங். 126. 1-4. எரே. 29. 14
10 எரே. 48. 27: 49. 1. எசே. 25. 3, 6, 8
11 எரே. 48. 1. ஆதி
12 ஏசா. 16. 6. எரே. 48. 29
† பயங்கரம்
13 மல். 1. 11 யோ. 4. 21
14 ஏசா. 20. 4. எரே. 46. 9
15 ஏசா. 10. 12, 16
16 ஏசா. 13. 21: 34. 11, 14
17 ஏசா. 47. 8. வெளி. 18. 7
18 எரே. 5. 3: 22. 21
19 எசே. 22. 27. மீகா 3. 9-11. ஆப. 1. 8
20 எரே. 23. 11, 32. எசே. 22. 26
21 உபா. 32. 4. பிர. 3. 16, 17. மீகா. 3. 11
22 எரே. 8. 12
23 ஏசா. 63. 8. எரே. 8. 6
24 ஆதி. 6. 12. மீகா. 2. 1, 2
25 நீதி 20. 22. யோவே. 3. 2. மத். 25. 32
26 2 பே. 3. 10
27 அப். 2. 4. ஆதி
28 ஏசா. 19. 18
29 சங். 68. 31. ஏசா. 18. 1, 7. மல். 1. 11. அப். 8. 27
‡ சபை
30 சங். 49. 5. யோவே. 2. 26, 27

எல்லாக் கிரியைகளினிமித்தமும் அந்நாளிலே
வெட்கப்படாதிருப்பாய்;[1] அப்பொழுது நான்
உன் பெருமையைக்குறித்துக் களிகூர்ந்தவர்
களை உன் நடுவிலிருந்து விலக்கிவிடுவேன்;
நீ இனி என் பரிசுத்த பர்வதத்தில் அகங்கா
12 ரங்கொள்ளமாட்டாய். உன் நடுவில் சிறு
மையும் எளிமையுமான ஜனத்தை மீதியாக
வைப்பேன்; [2]அவர்கள் கர்த்தருடைய நாமத்
13 தின்மேல் நம்பிக்கையாயிருப்பார்கள். இஸ்ர
வேலில் மீதியானவர்கள் அநியாயஞ்செய்வ
தில்லை; அவர்கள் பொய் பேசுவதுமில்லை;
[3]வஞ்சகநாவு அவர்கள் வாயில் கண்டுபிடிக்கப்
படுவதுமில்லை; அவர்கள் தங்களைப் பயப்படு
த்துவாரில்லாமல் புசித்துப் படுத்துக்கொள்
14 வார்கள். சீயோன் குமாரத்தியே, [4]கெம்பீ
ரித்துப் பாடு; இஸ்ரவேலரே, ஆர்ப்பரியுங்
கள்; எருசலேம் குமாரத்தியே, நீ முழு இரு
15 தயத்தோடும் மகிழ்ந்து களிகூரு. கர்த்தர்
உன் ஆக்கினைகளை அகற்றி, உன் சத்துருக்
களை விலக்கினார்; [5]இஸ்ரவேலின் ராஜாவா
கிய கர்த்தர் உன் நடுவிலே இருக்கிறார்;
16 இனித் தீங்கைக் காணாதிருப்பாய். அந்நாளி
லே எருசலேமைப் பார்த்து; [6]பயப்படாதே
என்றும், சீயோனைப்பார்த்து, உன் கைகளைத்
தளரவிடாதே என்றும் சொல்லப்படும். உன் 17
தேவனாகிய கர்த்தர் உன் நடுவில் இருக்கி
றார்; அவர் வல்லமையுள்ளவர், [7]அவர் இரட்
சிப்பார்; அவர் உன்பேரில் சந்தோஷமாய்
மகிழ்ந்து, தம்முடைய அன்பினிமித்தம் அம
ர்ந்திருப்பார்; அவர் உன்பேரில் கெம்பீரமாய்க்
களிகூருவார். உன் சபையின் மனுஷராயி 18
ருந்து, பண்டிகை ஆசரிப்பில்லாமையால்
உண்டான நிந்தையினிமித்தம் சஞ்சலப்பட்
டவர்களை நான் ஏகமாய்க் கூட்டிக்கொள்ளு
வேன். இதோ, அக்காலத்திலே உன்னைச் 19
சிறுமைப்படுத்தின யாவரையும் தண்டிப்பேன்;
நொண்டியானவனை இரட்சித்து, தள்ளுண்ட
வனைச் சேர்த்துக்கொள்ளுவேன்; [8]அவர்கள்
வெட்கம் அநுபவித்த சகல தேசங்களிலும்
அவர்களுக்குப் புகழ்ச்சியும் கீர்த்தியும் உண்
டாகச்செய்வேன். அக்காலத்திலே உங்களைக் 20
கூட்டிக்கொண்டு வருவேன்; [9]அக்காலத்தி
லே உங்களைச் சேர்த்துக்கொள்ளுவேன்; உங்
கள் கண்காண நான் உங்கள் சிறையிருப்பைத்
திருப்பும்போது, பூமியிலுள்ள சகல ஜனங்க
ளுக்குள்ளும் நான் உங்களைக் கீர்த்தியும் புக
ழ்ச்சியுமாக வைப்பேன் என்று கர்த்தர் சொல்
லுகிறார்.

1 எரே. 7. 4. மத். 3. 9
2 ஏசா. 14. 32. சகரி. 11. 11. மத். 5. 5. 1 கொ. 1. 27, 28. யாக். 2. 5
3 ஏசா. 60. 21: 63. 8. மத். 13. 41. வெளி. 14. 5: 21. 27
4 ஏசா. 12. 6: 54. 1. சகரி. 2. 10: 9. 9
5 எசே. 48. 35. ரோ. 8. 33, 34. வெளி. 7. 15: 12. 10: 21. 3, 4
6 ஏசா. 35. 3, 4. எபி. 12. 12
7 உபா. 30. 9. ஏசா. 62. 5. எரே. 32. 41
8 எசே. 34. 16. மீகா 4. 6, 7
9 ஏசா. 11. 12: 27. 12: 56. 8. எசே. 28. 25: 37. 13. ஆமோ. 9. 14

# HAGGAI

---

# ஆகாய்

1 ராஜாவாகிய தரியு [1]அரசாண்ட இரண்
டாம் வருஷம் ஆறாம்மாதம் முதலாந்தேதியி
லே, கர்த்தருடையவார்த்தை ஆகாய் என்னும்
தீர்க்கதரிசியின் மூலமாய் செயல்த்தியேலின்
குமாரனாகிய செருபாபேல் என்னும் யூதா
வின் தலைவனுக்கும், யோத்சதாக்கின் குமார
னாகிய யோசுவா என்னும் பிரதான ஆசா
ரியனுக்கும் உண்டாகி, அவர் சொன்னது
2 என்னவென்றால்: இந்த ஜனங்கள் கர்த்தரு
டைய ஆலயத்தைக் கட்டுகிறதற்கு ஏற்ற கா
லம் இன்னும் வரவில்லை என்கிறார்கள் என்று
3 சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார். ஆனா
லும் ஆகாய் என்னும் தீர்க்கதரிசியின் மூல
மாய்க் கர்த்தருடைய வார்த்தை உண்டாகி,
4 அவர் சொல்லுகிறார்: இந்த வீடு பாழாய்க்கிடக்
கும்போது, [2]நீங்கள் மச்சுப்பாவப்பட்ட உங்
கள் வீடுகளில் குடியிருக்கும்படியான காலம்
5 இதுவோ? இப்போதும் சேனைகளின் கர்த்தர்
சொல்லுகிறார்: [3]உங்கள் வழிகளைச் சிந்தித்துப்
6 பாருங்கள். நீங்கள் திரளாய் விதைத்தும்
கொஞ்சமாய் அறுத்துக்கொண்டுவருகிறீர்கள்;
[4]நீங்கள் புசித்தும் திருப்தியாகவில்லை; [5]குடித்
தும் பரிபூரணமடையவில்லை; நீங்கள் வஸ்தி
ரம் உடுத்தியும் ஒருவனுக்கும் குளிர்விட
வில்லை; கூலியைச் சம்பாதிக்கிறவன் பொத்
தலான பையிலே போடுகிறவனாய் அதைச்
7 சம்பாதிக்கிறான். உங்கள் வழிகளைச் சிந்தித்
துப்பாருங்கள் என்று சேனைகளின் கர்த்தர்
8 சொல்லுகிறார். நீங்கள் மலையின்மேல் ஏறிப்
போய், மரங்களை வெட்டிக்கொண்டுவந்து,
ஆலயத்தைக் கட்டுங்கள்; அதின்பேரில் நான்
பிரியமாயிருப்பேன், அதினால் என் மகிமை
விளங்கும் என்று கர்த்தர் சொல்லுகிறார்.
9 அதிகமாய் வருமென்று நீங்கள் எதிர்பார்த்தி
ருந்தும், [6]இதோ, கொஞ்சம் கிடைத்தது;
நீங்கள் அறுத்து வீட்டுக்குக் கொண்டுவந்தும்,
நான் அதை ஊதிப்போடுகிறேன்; எதினிமித்த
மென்றால், என் வீடு பாழாய்க் கிடக்கும்
போது, நீங்கள் எல்லாரும் அவனவன் தன்
தன் வீட்டிற்கு ஓடிப்போகிறீர்களே, இதினி
மித்தமே என்று சேனைகளின் கர்த்தர் சொல்
10 லுகிறார். ஆதலால் உங்கள்மேல் இருக்கிற
வானம் பனியைப் பெய்யாமலும், [7]பூமி பல
னைக் கொடாமலும்போயிற்று. நான் நிலத் 11
தின்மேலும், மலைகளின்மேலும், தானியத்தின்
மேலும், புது திராட்சரசத்தின்மேலும், எண்
ணெயின்மேலும், பூமியில் விளைகிற எல்லா
வற்றின்மேலும், மனுஷரின்மேலும், மிருகங்
களின்மேலும், [8]கைப்பாடு அனைத்தின்மேலும்
வறட்சியை வருவித்தேன் என்றார்.
அப்பொழுது செயல்த்தியேலின் குமாரனா 12
கிய செருபாபேலும், [9]யோத்சதாக்கின் குமா
ரனாகிய யோசுவா என்னும் பிரதான ஆசாரி
யனும், ஜனத்தில் மீதியான அனைவரும் தங்
கள் தேவனாகிய கர்த்தருடைய சத்தத்துக்கும்,
தங்கள் தேவனாகிய கர்த்தர் அனுப்பின ஆகாய்
என்னும் தீர்க்கதரிசியினுடைய வார்த்தைக
ளுக்கும்செவிகொடுத்தார்கள், ஜனங்கள் கர்த்த
ருக்கு முன்பாகப் பயந்திருந்தார்கள். அப்பொ 13
ழுது கர்த்தருடைய [10]தூதனாகிய ஆகாய், கர்த்
தர் தூதனுப்பின வார்த்தையின்படி ஜனங்களை
நோக்கி: [11]நான் உங்களோடே இருக்கிறேன்
என்று கர்த்தர் சொல்லுகிறார் என்றான்.
பின்பு கர்த்தர் செயல்த்தியேலின் குமாரனா 14
கிய செருபாபேல் என்னும் யூதாவின் தலைவ
னுடைய ஆவியையும், யோத்சதாக்கின் குமா
ரனாகிய யோசுவா என்னும் பிரதான ஆசாரிய
னுடைய ஆவியையும், ஜனத்தில் மீதியான
எல்லாருடைய ஆவியையும் [12]எழுப்பினார்;
அவர்கள் வந்து, தங்கள் தேவனாகிய சேனைகளு
டைய கர்த்தரின் ஆலயத்திலே வேலைசெய்
தார்கள். தரியுராஜாவின் இரண்டாம் வரு 15
ஷம் ஆறாம்மாதம் இருபத்து நாலாந்தேதியி
லே இது நடந்தது.
ஏழாம் மாதம் இருபத்தோராந் தேதியிலே 2
ஆகாய் என்னும் தீர்க்கதரிசியின் மூலமாய்,
கர்த்தருடைய வார்த்தை உண்டாயிற்று; அவர்:
நீ செயல்த்தியேலின் குமாரனாகிய செருபா 2
பேல் என்னும் யூதாவின் தலைவனோடும்,
யோத்சதாக்கின் குமாரனாகிய யோசுவா என்
னும் பிரதான ஆசாரியனோடும், ஜனத்தில்
மீதியானவர்களோடும் சொல்லவேண்டியது
என்னவென்றால்: இந்த ஆலயத்தின் முந் 3
தின மகிமையைக் கண்டவர்களில் உங்களுக்
குள்ளே மீந்திருக்கிறவர்கள் யார்? [13]இப்பொ
ழுது இது உங்களுக்கு எப்படிக் காண்கிறது?

1 எஸ்றா 3. 2: 4. 24: 5. 1, 2
2 2 சாமு. 7. 2. சங். 132. 3. ழ
3 புல. 3. 40
4 உபா. 28. 38. ஓசி. 4. 10. மீகா. 6. 14, 15
5 சகரி. 8. 10
6 2. 16, 17
7 லேவி. 26. 19. உபா. 28. 23. 1 இரா. 8. 35. ஓசி. 2. 9
8 1 இரா. 17. 1. 2 இரா. 8. 1
9 எஸ்றா 5. 2
10 மல். 2. 7. 2 கொ. 5. 20
11 மத். 28. 20. ரோ. 8. 31
12 2 நாளா. 36. 22. எஸ்றா 1. 1: 5: 2, 8. 1 கொ. 12. 4-11
13 எஸ்றா 3. 12

[1]அதற்கு இது உங்கள் பார்வையில் ஒன்று
4 மில்லாததுபோல் காண்கிறதல்லவா? ஆனா
லும் செருபாபேலே, [2]நீ திடன்கொள் என்று
கர்த்தர் சொல்லுகிறார்; யோத்சதாக்கின் குமா
ரனாகிய யோசுவா என்னும் பிரதான ஆசா
ரியனே, நீ திடன்கொள்; தேசத்தின் எல்லா
ஜனங்களே, நீங்கள் திடன் கொள்ளுங்கள்,
வேலையை நடத்துங்கள் என்று கர்த்தர் சொல்
லுகிறார்; [3]நான் உங்களுடனே இருக்கிறேன்
என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.
5 நீங்கள் எகிப்திலிருந்து புறப்படுகிறபோது
நான் உங்களோடே [4]உடன்படிக்கை பண்
ணின வார்த்தையின்படியே, [5]என் ஆவியான
வரும் உங்கள் நடுவில் நிலைகொண்டிருப்பார்;
6 பயப்படாதேயுங்கள். சேனைகளின் கர்த்தர்
சொல்லுகிறார்: [6]கொஞ்சக்காலத்துக்குள்ளே
இன்னும் ஒருதரம் நான் வானத்தையும் பூமி
யையும் சமுத்திரத்தையும் வெட்டாந்தரையை
7 யும் அசையப்பண்ணுவேன். சகல ஜாதிக
ளையும் அசையப்பண்ணுவேன், [7]சகல ஜாதி
களாலும் *விரும்பப்பட்டவர் வருவார்; இந்த
ஆலயத்தை மகிமையினால் நிறையப்பண்ணு
வேன் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லு
8 கிறார். வெள்ளியும் என்னுடையது, [8]பொன்
னும் என்னுடையது என்று சேனைகளின்
9 கர்த்தர் சொல்லுகிறார். முந்தின ஆலயத்தின்
மகிமையைப்பார்க்கிலும், [9]இந்தப் பிந்தின
ஆலயத்தின் மகிமை பெரிதாயிருக்கும் என்று
சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்; [10]இவ்
விடத்திலே சமாதானத்தைக் கட்டளையிடு
வேன் என்று சேனைகளின் கர்த்தர் உரைக்
கிறார் என்று சொல் என்றார்.
10 தரியுவின் இரண்டாம் வருஷம் ஒன்பதாம்
மாதம் இருபத்துநாலாந்தேதியிலே, ஆகாய்
என்னும் தீர்க்கதரிசியின் மூலமாய்க் கர்த்தரு
11 டைய வார்த்தை உண்டாயிற்று; அவர்: ஒரு
வன் தன் வஸ்திரத்தின் தொங்கலிலே பரி
சுத்த மாம்சத்தைக் கொண்டுபோகையில் தன்
வஸ்திரத்தின் தொங்கல் அப்பத்தையாகிலும்,
சாதத்தையாகிலும், திராட்சரசத்தையாகிலும்,
எண்ணெயையாகிலும், மற்றெந்த போஜன
பதார்த்தத்தையாகிலும் தொட்டால் அது பரி
சுத்தமாகுமோ என்று [11]நீ ஆசாரியரிடத்தில்
வேதநியாயத்தைப்பற்றிக் கேள் என்று சேனை
களின் கர்த்தர் சொல்லுகிறார் என்றார்.
12 அதற்கு ஆசாரியர்கள் பிரதியுத்தரமாக: பரி
13 சுத்தமாகாது என்றார்கள். பிணத்தால் தீட்
டுப்பட்டவன் அவைகளில் எதையாகிலும்
தொட்டால், அது தீட்டுப்படுமோ என்று
ஆகாய் பின்னும் கேட்டான்; [12]அதற்கு ஆசா
ரியர்கள் பிரதியுத்தரமாக: தீட்டுப்படும் என்
14 றார்கள். அப்பொழுது ஆகாய்: [13]அப்படியே
இந்த ஜனங்களும் இந்த ஜாதியாரும் என் சமு
கத்தில் இருக்கிறார்கள் என்று கர்த்தர் சொல்
லுகிறார்; அவர்களுடைய கைகளின் எல்லாக்
கிரியைகளும் அப்படியே இருக்கிறது; அவர்
கள் அங்கே கொண்டுவந்து படைக்கிறதும் தீட்
டுப்பட்டிருக்கிறது. இப்போதும் கர்த்தரு 15
டைய ஆலயத்தைக் கட்டும்படி ஒரு கல்லின்
மேல் ஒரு கல் வைக்கப்பட்டதுமுதல் நடந்
ததை உங்கள் மனதிலே சிந்தித்துப் பாருங்
கள். அந்த நாட்கள்முதல் ஒருவன் இருபது 16
மரக்காலாகக் கண்ட அம்பாரத்தினிடத்தில்
வந்தபோது, பத்துமரக்கால் மாத்திரம் இருந்
தது; [14]ஒருவன் ஆலையின் தொட்டியில் ஐம்
பதுகுடம் மொள்ள ஆலையினிடத்திலே வந்த
போது இருபது குடம்மாத்திரம் இருந்தது.
கருக்காயினாலும் விஷப்பனியினாலும் கல் 17
மழையினாலும் உங்களை உங்கள் கைகளின்
வேலையிலெல்லாம் அடித்தேன்; [15]ஆனாலும்
நீங்கள் என்னிடத்தில் மனதைத் திருப்பாமல்
போனீர்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்.
இப்போதும் இதற்கு முந்தினகாலத்தில் நடந் 18
ததை உங்கள் மனதிலே சிந்தித்துப்பாருங்
கள்; [16]ஒன்பதாம் மாதம் இருபத்துநாலாந்
தேதியாகிய இந்நாள்முதல் கர்த்தருடைய
ஆலயத்தின் அஸ்திபாரம் போடப்பட்ட அந்
நாள்வரைக்கும் சென்றகாலத்தில் நடந்ததை
உங்கள் மனதிலேசிந்தித்துப்பாருங்கள். களஞ் 19
சியத்தில் இன்னும் விதைத்தானியம் உண்
டோ? [17]திராட்சச்செடியும் அத்திமரமும் மாத
ளஞ்செடியும் ஒலிவமரமும் கனிகொடுக்க
வில்லையே; நான் இன்றுமுதல் உங்களை
ஆசீர்வதிப்பேன் என்று சொல்லுகிறார்
என்றான்.

இருபத்துநாலாந் தேதியாகிய அந்நாளிலே 20
கர்த்தருடைய வார்த்தை இரண்டாம்விசை
ஆகாய் என்பவனுக்கு உண்டாகி, அவர்: நீ 21
யூதாவின் தலைவனாகிய செருபாபேலோ
டே சொல்லவேண்டியது என்னவென்றால்,
[18]நான் வானத்தையும் பூமியையும் அசையப்
பண்ணி, ராஜ்யங்களின் சிங்காசனத்தைக் 22
கவிழ்த்து, ஜாதிகளுடைய ராஜ்யங்களின்
பெலத்தை அழித்து, [19]இரதத்தையும் அதில்
ஏறியிருக்கிறவர்களையும் கவிழ்த்துப்போடு
வேன்; குதிரைகளோடே அவைகளின்மேல்
ஏறியிருப்பவர்களும் அவரவர் தங்கள் தங்கள்
சகோதரனின் பட்டயத்தினாலே விழுவார்
கள். சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்: 23
செயல்த்தியேலின் குமாரனாகியசெருபாபேல்
என்னும் என் ஊழியக்காரனே, உன்னை
நான் அந்நாளிலே சேர்த்துக்கொண்டு, [20]உன்
னை முத்திரைமோதிரமாக வைப்பேன் என்று
கர்த்தர் சொல்லுகிறார்; [21]நான் உன்னைத்
தெரிந்துகொண்டேன் என்று சேனைகளின்
கர்த்தர் உரைக்கிறார் என்று சொல் என்றார்.

1 சக. 4. 10
2 சக. 8. 9
3 1. 13
4 யாத். 29. 45, 46
5 நெகே. 9. 20. சங். 51. 11, 12. ஏசா. 63. 11, 14
6 யோவே. 3. 16. எபி. 12. 26
7 ஆதி. 49. 10. மல். 3. 1. லூக். 2. 27, 46
* சகல ஜாதிகளின் பொக்கிஷமானவர். ஏசா. 60. 3–17
8 1 நாளா. 29. 14
9 யோ. 1. 14. 2 கொ. 3. 9, 10
10 சங். 85. 8. லூக். 2. 14. எபே. 2. 14
11 லேவி. 10. 10, 11. உபா. 33. 10. மல். 2. 7
12 எண். 19. 11
13 தீத். 1. 15. நீதி. 28. [illegible]
14 சக. 8. 10
15 உபா. 28. 22. 1 இரா. 8. 37. ஆமோ. 4. 9
16 சக. 8. 9, 12
17 ஆப. 3. 17, 18
18 1. 14: 6, 7. எபி. 12. 26
19 தானி. 2. 44. மீகா 5. 10. சக. 4. 6: 9. 10. மத். 24. 7
20 உன்னத. 8. 6. எரே. 28. 24
21 ஏசா. 42. 1: 43. 10

# ZECHARIAH

# ச க ரி யா

1 தரியு அரசாண்ட இரண்டாம் வருஷம்
எட்டாம் மாதத்திலே இத்தோவின் மகனான
பெரகியாவின் குமாரனாகிய [1]சகரியாவுக்கு
உண்டான **கர்த்தருடைய** வார்த்தை:
2 **கர்த்தர்** உங்கள் பிதாக்களின்மேல் [2]கடுங்
3 கோபமாயிருந்தார். ஆகையால் நீ அவர்களை
நோக்கி: சேனைகளின் **கர்த்தர்** உரைக்கிறது
என்னவென்றால்: என்னிடத்தில் திரும்புங்
கள் என்று சேனைகளின் **கர்த்தர்** சொல்லு
கிறார்; [3]அப்பொழுது நான் உங்களிடத்துக்
குத் திரும்புவேன் என்று சேனைகளின் **கர்த்**
4 **தர்** சொல்லுகிறார். உங்கள் பிதாக்களைப்
போலிராதேயுங்கள்; முந்தின தீர்க்கதரிசிகள்
அவர்களை நோக்கி: [4]உங்கள் பொல்லாத வழி
களையும் உங்கள் பொல்லாத கிரியைகளையும்
விட்டுத் திரும்புங்கள் என்று சேனைகளின்
**கர்த்தர்** சொல்லுகிறார் என்று கூப்பிட்டார்
கள்; ஆனாலும் எனக்குச் செவிகொடாமலும்
என்னைக் கவனியாமலும் போனார்கள் என்று
5 **கர்த்தர்** சொல்லுகிறார். உங்கள் பிதாக்கள்
எங்கே? தீர்க்கதரிசிகள் என்றென்றைக்கும்
6 உயிரோடிருப்பார்களோ? இராமற்போனா
லும், தீர்க்கதரிசிகளாகிய என் ஊழியக்கார
ருக்கு நான் கட்டளையிட்ட என் வார்த்தை
களும் என் தீர்மானங்களும் [5]உங்கள் பிதாக்க
ளிடத்தில் பலிக்கவில்லையோ? எங்கள் வழிக
ளின்படியேயும், எங்கள் கிரியைகளின்படி
யேயும் சேனைகளின் **கர்த்தர்** எங்களுக்குச்
செய்ய நிர்ணயித்தபடியே எங்களுக்குச் செய்
தாரென்று [6]அவர்கள் திரும்பவந்து சொன்ன
தில்லையோ என்று சொல் என்றார்.
7 தரியு அரசாண்ட இரண்டாம் வருஷம்,
சேபாத் மாதமாகிய பதினோராம் மாதம் இரு
பத்துநாலாந்தேதியிலே, **கர்த்தருடைய** வார்த்
தை இத்தோவின் மகனான பெரகியாவின்
குமாரன் சகரியா என்னும் தீர்க்கதரிசிக்கு
8 உண்டாயிற்று; அவன் சொன்னது: இதோ,
இன்று ராத்திரி [7]சிவப்புக் குதிரையின்மேல்
ஏறியிருந்த ஒரு புருஷனைக் கண்டேன்; அவர்
பள்ளத்தாக்கில் இருக்கிற மிருதுச்செடிகளுக்
குள்ளே நின்றார்; [8]அவருக்குப் பின்னாலே
சிவப்பும் மங்கின நிறமும் வெண்மையுமான
9 குதிரைகள் இருந்தன. அப்பொழுது நான்:
என் ஆண்டவரே, இவர்கள் யாரென்று கேட்
டேன்; என்னோடே பேசுகிற தூதனானவர்:
இவர்கள் யாரென்று நான் உனக்குக் காண்
பிப்பேன் என்று சொன்னார். அப்பொழுது 10
மிருதுச்செடிகளுக்குள்ளே நின்ற அந்தப் புரு
ஷன் பிரதியுத்தரமாக: [9]இவர்கள் பூமியெங்
கும் சுற்றிப்பார்க்கக் **கர்த்தர்** அனுப்பினவர்
கள் என்றார். பின்பு அவர்கள் மிருதுச் செ 11
டிகளுக்குள்ளே நின்ற **கர்த்தருடைய** தூதனை
நோக்கி: நாங்கள் பூமியெங்கும் சுற்றிப்பார்த்
தோம்; இதோ, பூமி முழுவதும் அமைதலும்
அமரிக்கையுமாய் இருக்கிறது என்றார்கள்.
அப்பொழுது **கர்த்தருடைய** தூதன் மறு 12
மொழியாக: [10]சேனைகளின் **கர்த்தாவே**,
இந்த எழுபது வருஷமாய் நீர் கோபங்கொண்
டிருக்கிற எருசலேமின்மேலும் யூதா பட்ட
ணங்களின்மேலும் எந்தமட்டும் இரங்காதிருப்
பீர் என்று சொல்ல, அப்பொழுது **கர்த்தர்**, 13
என்னோடே பேசின தூதனுக்கு [11]நல்வார்த்
தைகளையும் ஆறுதலான வார்த்தைகளையும்
பிரதியுத்தரமாகச் சொன்னார். அப்பொழுது 14
என்னோடே பேசின தூதன் என்னை நோக்கி:
சேனைகளின் **கர்த்தர்** உரைக்கிறது என்ன
வென்றால்: [12]நான் எருசலேமுக்காகவும் சீயோ
னுக்காகவும் மகா வைராக்கியம் கொண்டிருக்
கிறேன். நான் கொஞ்சங் கோபங்கொண் 15
டிருந்தபோது அவர்கள் தங்கள் கேட்டை
அதிகரிக்கத் தேடினபடியினால், [13]சுகமாய்
வாழுகிற புறஜாதிகள்பேரில் நான் கடுங்கோ
பங்கொண்டேன். ஆகையால் மன உருக் 16
கத்தோடே [14]எருசலேமினிடத்தில் திரும்பி
னேன் என்று **கர்த்தர்** சொல்லுகிறார்; என்
ஆலயம் அதிலே கட்டப்படும்; எருசலேமின்
மேல் அளவுநூல் பிடிக்கப்படும் என்று சேனை
களின் **கர்த்தர்** சொல்லுகிறார் என்று கூறு
என்றார். இன்னும் என் பட்டணங்கள் நன் 17
மையினால் பரம்பியிருக்கும்; இன்னும் **கர்த்**
**தர்** சீயோனைத் தேற்றரவுபண்ணுவார்; [15]இன்
னும் எருசலேமைத் தெரிந்துகொள்ளுவார்
என்று சேனைகளின் **கர்த்தர்** சொல்லுகிறார்
என்று பின்னும் கூறு என்றார்.
நான் என் கண்களை ஏறெடுத்துப் பார்த்த 18
போது, இதோ, நாலு கொம்புகளைக் கண்

1 எஸ்றா 5. 1. ஆகாய் 1. 1. மத். 23. 35
2 2 நாளா. 36. 16. சங். 60. 1
3 எரே. 25. 5. மீகா 7. 19. மல். 3. 7. லூக். 15. 20. யாக். 4. 8
4 2 நாளா. 36. 15, 16. ஏசா. 31. 6. எரே. 3. 12: 18. 11. எசே. 18. 30. ஓசி. 14. 1
5 ஏசா. 55. 1, ஓசி. 6. 5
6 புல. 1. 18: 2. 17, யோவே. 2. 18
7 யோசு. 5. 13. வெளி. 6. 4
8 6. 2
9 எபி. 1. 14
10 7. 5. சங். 102. 13. எரே. 25. 11, 12. தானி. 9. 2. வெளி. 6. 10
11 எரே. 29. 10
12 8. 2, 3. யோவே. 2. 18
13 ஏசா. 47. 6, ஓபா. 15, 17. ...
14 ஏசா. 12. 1: 54. 8
15 ஏசா. 14. 1: 51. 3

19 டேன். அவைகள் என்னவென்று என்னோ
டே பேசின தூதனைக் கேட்டேன்; அதற்கு
அவர்: [1]இவைகள் யூதாவையும் இஸ்ரவேலை
யும் எருசலேமையும் சிதறடித்த கொம்புகள்
20 என்றார். பின்பு கர்த்தர் எனக்கு நாலு தொழி
21 லாளிகளைக் காண்பித்தார். இவர்கள் என்ன
செய்ய வருகிறார்களென்று கேட்டேன்;
அதற்கு அவர்: ஒருவனும் தன் தலையை எறெ
டுக்கக்கூடாதபடி அந்தக் கொம்புகள் யூதா
வைச் சிதறடித்ததே, [2]அவைகளுக்குப் பய
முறுத்துகிறதற்கும், யூதாவின் தேசத்தைப்
பாழாக்கத் தங்கள் கொம்பை எடுத்த ஜாதிக
ளுடைய கொம்புகளை விழத்தள்ளுகிறதற்கும்
இவர்கள் வந்தார்கள் என்றார்.

2 நான் என் கண்களை ஏறெடுத்துப் பார்த்த
போது, இதோ, [3]தன் கையிலே அளவுநூல்
2 பிடித்திருந்த ஒரு புருஷனைக் கண்டேன். நீர்
எவ்விடத்துக்குப் போகிறீர் என்று கேட்
டேன்; அதற்கு அவர்: [4]எருசலேமின் அகலம்
இவ்வளவு என்றும் அதின் நீளம் இவ்வளவு
என்றும் அறியும்படி அதை அளக்கிறதற்குப்
3 போகிறேன் என்றார். இதோ, என்னோடே
பேசின தூதன் புறப்பட்டபோது, வேறொரு
தூதன் அவரைச் சந்திக்கும்படிப் புறப்பட்டு
4 வந்தான். இவனை அவர் நோக்கி: நீ ஓடி
இந்த வாலிபனிடத்தில் சொல்லவேண்டியது
என்னவென்றால், [5]எருசலேம் தன் நடுவிலே
கூடும் மனுஷரின் திரளினாலும் மிருக ஜீவன்
களின் திரளினாலும் மதிலில்லாத பட்டணங்
5 கள்போல் வாசஸ்தலமாகும். நான் அதற்குச்
சுற்றிலும் அக்கினி மதிலாயிருந்து, [6]அதின்
நடுவில் மகிமையாக இருப்பேன் என்று கர்த்
6 தர் சொல்லுகிறார். ஓகோ, நீங்கள் எழும்பி
வடதேசத்திலிருந்து ஓடிவாருங்கள் என்று
கர்த்தர் சொல்லுகிறார்; [7]ஆகாயத்து நான்கு
திசைகளிலும் உங்களை நான் சிதறப்பண்ணி
7 னேன் என்று கர்த்தர் சொல்லுகிறார். பா
பிலோன் குமாரத்தியினிடத்தில் குடியிருக்
கிற சீயோனே, [8]உன்னை விடுவித்துக்கொள்.
8 பிற்பாடு மகிமையுண்டாகும் என்று சேனை
களின் கர்த்தர் சொல்லுகிறார்; உங்களைக்
கொள்ளையிட்ட ஜாதிகளிடத்துக்கு என்னை
அனுப்பினார்; [9]உங்களைத் தொடுகிறவன்
அவருடைய கண்மணியைத் தொடுகிறான்.
9 இதோ, நான் என் கையை [10]அவர்களுக்கு
விரோதமாக அசைப்பேன்; அதினால் அவர்
கள் தங்கள் அடிமைகளுக்குக் கொள்ளையா
வார்கள்; அப்பொழுது சேனைகளின் கர்த்தர்
என்னை அனுப்பினாரென்று அறிவீர்கள்.
10 சீயோன் குமாரத்தியே, கெம்பீரித்துப் பாடு;
[11]இதோ, நான் வந்து உன் நடுவில் வாசம்
பண்ணுவேன் என்று கர்த்தர் சொல்லுகிறார்.
11 அந்நாளிலே அநேகம் ஜாதிகள் கர்த்தரைச்
சேர்ந்து, [12]என் ஜனமாவார்கள்; [13]நான் உன்
நடுவில் வாசமாயிருப்பேன்; அப்பொழுது
சேனைகளின் கர்த்தர் என்னை உன்னிடத்தில்
12 அனுப்பினாரென்று அறிவாய். கர்த்தர் பரி
சுத்த தேசத்திலே யூதாவாகிய தமது பங்கைச்
சுதந்தரித்து, [14]திரும்பவும் எருசலேமைத் தெ
ரிந்துகொள்வார். மாம்சமான சகலமானபேர் 13
களே, கர்த்தருக்கு முன்பாக மௌனமாயிருங்
கள்; [15]அவர் தமது பரிசுத்த வாசஸ்தலத்தி
லிருந்து எழுந்தருளினார் என்று சொல்
என்றார்.

அவர் பிரதான ஆசாரியனாகிய யோசுவா 3
வை எனக்குக் காண்பித்தார்; [16]அவன் கர்த்த
ருடைய தூதனுக்கு முன்பாக நின்றான்; *சாத்
தான் [17]அவனுக்கு விரோதஞ்செய்ய அவன்
வலதுபக்கத்திலே நின்றான். அப்பொழுது 2
கர்த்தர் சாத்தானை நோக்கி: கர்த்தர் உன்னைக்
கடிந்துகொள்வாராக; [18]சாத்தானே, எருச
லேமைத் தெரிந்துகொண்ட கர்த்தர் உன்
னைக் கடிந்துகொள்வாராக; [19]இவன் அக்கி
னியினின்று தப்புவிக்கப்பட்ட கொள்ளி அல்
லவா என்றார். யோசுவாவோவெனில் [20]அழு 3
க்கு வஸ்திரம் தரித்தவனாய்த் தூதனுக்கு முன்
பாக நின்றிருந்தான். அவர் தமக்கு முன்பாக 4
நிற்கிறவர்களை நோக்கி: இவன்மேல் இருக்
கிற அழுக்கு வஸ்திரங்களைக் களைந்துபோடுங்
கள் என்றார்; பின்பு அவனை நோக்கி: [21]பார்,
நான் உன் அக்கிரமத்தை உன்னிலிருந்து நீங்
கச்செய்து, உனக்குச் †சிறந்த வஸ்திரங்களைத்
தரிப்பித்தேன் என்றார். அவன் சிரசின் 5
மேல் சுத்தமான பாகையை வைப்பார்களாக
என்றார்; [22]அப்பொழுது சுத்தமான பாகையை
அவன் சிரசின்மேல் வைத்து, அவனுக்கு
வஸ்திரங்களைத் தரிப்பித்தார்கள்; கர்த்தரு
டைய தூதன் அங்கே நின்றார். கர்த்தருடைய 6
தூதன் யோசுவாவுக்குச் சாட்சியாக: சேனை 7
களின் கர்த்தர் உரைக்கிறது என்னவென்
றால்: நீ என் வழிகளில் நடந்து என் காவலைக்
காத்தால், நீ என் ஆலயத்தில் நியாயம் விசா
ரிப்பாய்; என் பிராகாரங்களையும் காவல் காப்
பாய்; [23]இங்கே நிற்கிறவர்களுக்குள்ளே உலாவு
கிறதற்கு இடம் நான் உனக்குக் கட்டளையிடு
வேன். இப்போதும், பிரதான ஆசாரியனா 8
கிய யோசுவாவே, நீ கேள்; உனக்கு முன்
பாக உட்கார்ந்திருக்கிற உன் தோழரும் கேட்
கக்கடவர்கள்; இவர்கள் ‡ அடையாளமாயிருக்
கிற புருஷர்; இதோ, [24]கிளை என்னப்பட்டவ
ராகிய என் தாசனை நான் வரப்பண்ணுவேன்.
இதோ, நான் யோசுவாவுக்கு முன்பாக 9
வைத்த கல்; [25]இந்த ஒரே கல்லின்மேல் ஏழு
கண்களும் வைக்கப்பட்டிருக்கிறது; இதோ,
நான் அதின் சித்திரவேலையை நிறைவேற்றி,
இந்த தேசத்தின் அக்கிரமத்தை ஒரேநாளிலே
நீக்கிப்போடுவேன் என்று சேனைகளின் கர்த்
தர் சொல்லுகிறார். அந்நாளிலே நீங்கள் ஒரு 10
வரையொருவர் திராட்சச்செடியின் கீழும்
[26]அத்திமரத்தின் கீழும் வரவழைப்பீர்கள்
என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்
என்றார்.

என்னோடே பேசின தூதன் திரும்பி 4
வந்து நித்திரை பண்ணுகிற [27]ஒருவனை எழுப்

1 எஸ்றா 4.1, 4.7: 5. 3
2 சங். 75. 4, 5. தானி. 12. 7
3 எசே. 40. 3, 5
4 வெளி. 11. 1: 21. 15, 16
5 ஏசா. 26. 1, 2. எரே. 31.27. எசே. 36. 10, 11
6 9.8 சங்.3.3. ஏசா. 4. 5: 60. 19. வெளி. 21. 23
7 ஆதி. 19. 17. உபா.28.64. எசே. 17.21. ஆமோ.9.9
8 ஏசா. 48: 20: 52. 11. எரே. 50. 8: 51. 6, 45. வெளி. 18. 4
9 உபா. 32.10. சங். 17.8. மத்.25.40, 45. 2 தெச. 1. 6.
10 ஏசா. 19. 16
11 ஏசா.12 6. யோ. 1. 14 2 கொ. 6. 16
12 ஏசா. 54. 1–3
13 வெளி. 21. 3
14 உபா. 32.9. ஏசா. 41. 9
15 சங். 68. 5. ஏசா 57. 15: 63. 15. ஆப. 2. 20
16 ஆகா. 1. 1
* சத்துரு
17 யோபு 1. 6. சங். 109. 6. வெளி. 12. 10
18 ரோ. 8. 33. யூதா 9. 23. உச. வெளி. 12. 9, 10
19 ஆமோ. 4. 11. ரோ. 11. 5
20 ஏசா. 64. 6. மத். 22. 11. வெளி. 7. 13, 14: 19. 8
21 ஏசா. 61.10. லூக். 15. 22. ரோ. 6. 23. வெளி. 19. 8
† புதிய
22 6. 11. யாத். 29. 6
23 லேவி. 8. 35. உபா. 17. 9. 1 இரா. 2. 3. எசே. 44. 16. மல். 2. 7
‡ அற்புத மனுஷர். ஏசா. 8. 18: 20. 3. எசே. 12. 11
24 ஏசா. 11. 1. எரே. 23. 5
25 ஏசா. 28. 16. வெளி. 5. 6
26 ஏசா. 36. 16. மீகா 4. 4
27 தானி. 8, 18

2 புவதுபோல் என்னை எழுப்பி: நீ காண்கிறது
என்னவென்று கேட்டார்; அதற்கு நான்:
[1]இதோ, முழுவதும் பொன்னினால் செய்யப்
பட்ட குத்துவிளக்கைக் காண்கிறேன்; அதின்
உச்சியில் அதின் கிண்ணமும், அதின்மேல்
அதின் ஏழு அகல்களும், அதின் உச்சியில்
இருக்கிற அகல்களுக்குப் போகிற ஏழு
3 குழாய்களும் இருக்கிறது. அதின் அருகில்
கிண்ணத்திற்கு வலதுபுறமாக ஒன்றும், அத
ற்கு இடதுபுறமாக ஒன்றும், [2]ஆக இரண்டு
4 ஒலிவமரங்கள் இருக்கிறது என்றேன். நான்
என்னோடேபேசின தூதனை நோக்கி: ஆண்ட
வனே, இவைகள் என்னவென்று கேட்டேன்.
5 என்னோடே பேசின தூதன் மறுமொழியாக:
இவைகள் இன்னதென்று உனக்குத் தெரி
யாதா என்றார்; ஆண்டவனே, எனக்குத் தெரி
6 யாது என்றேன். அப்பொழுது அவர்: செரு
பாபேலுக்குச் சொல்லப்படுகிற **கர்த்தருடைய**
வார்த்தை என்னவென்றால், [3]பலத்தினாலும்
அல்ல, பராக்கிரமத்தினாலும் அல்ல, என்னு
டைய ஆவியினாலேயே ஆகும் என்று சேனை
7 களின் **கர்த்தர்** சொல்லுகிறார். பெரிய பர்வ
தமே, நீ எம்மாத்திரம்? [4]செருபாபேலுக்கு முன்
பாக நீ சமபூமியாவாய்; [5]தலைக்கல்லை அவன்
கொண்டுவருவான்; அதற்குக் கிருபையுண்
டாவதாக, கிருபையுண்டாவதாக என்று ஆர்ப்
8 பரிப்பார்கள் என்றார். பின்னும் **கர்த்தருடைய**
9 வார்த்தை எனக்கு உண்டாகி, அவர்: செரு
பாபேலின் கைகள் இந்த ஆலயத்துக்கு அஸ்தி
பாரம் போட்டது; [6]அவன் கைகளே இதை
முடித்துத் தீர்க்கும்; அதினால் சேனைகளின்
**கர்த்தர்** என்னை உங்களிடத்திற்கு அனுப்பினா
10 ரென்று அறிவாய். அற்பமான ஆரம்பத்தின்
நாளை யார் அசட்டைபண்ணலாம்? [7]பூமியெங்
கும் சுற்றிப் பார்க்கிறவைகளாகிய **கர்த்தரு
டைய** ஏழு கண்களும் செருபாபேலின் கை
யில் இருக்கிற தூக்குநூலைச் சந்தோஷமாய்ப்
11 பார்க்கிறது என்றார். பின்பு நான் அவரை
நோக்கி: குத்துவிளக்குக்கு வலதுபுறமாகவும்
அதற்கு இடதுபுறமாகவும் இருக்கிற இந்த
இரண்டு ஒலிவமரங்கள் என்னவென்று கேட்
12 டேன். மறுபடியும் நான் அவரை நோக்கி:
இரண்டு பொற்குழாய்களின் வழியாய்த்
தொங்கி, பொன்னிறமான எண்ணெயைத்
தங்களிலிருந்து இறங்கப்பண்ணுகிறவைகளா
13 கிய ஒலிவமரங்களின் இரண்டு கிளைகள்
என்னவென்று கேட்டேன். அதற்கு அவர்:
இவைகள் இன்னதென்று உனக்குத் தெரி
யாதா என்றார்; ஆண்டவனே, எனக்குத்
14 தெரியாது என்றேன். அப்பொழுது அவர்:
[8]இவைகள் இரண்டும் சர்வலோகத்துக்கும்
ஆண்டவராயிருக்கிறவரின் சமுகத்தில் நிற்
கிற அபிஷேகம் பெற்றவர்கள் என்றார்.

5 நான் திரும்பவும் என் கண்களை ஏறெடுத்
துப் பார்க்கையில், இதோ, [9]பறக்கிற ஒரு புஸ்
2 தகச்சுருளைக் கண்டேன். அவர்: நீ காண்
கிறது என்னவென்று கேட்டார்; பறக்கிற
ஒரு புஸ்தகச்சுருளைக் காண்கிறேன், அதின்
நீளம் இருபது முழமும் அதின் அகலம் பத்து
முழமுமாயிருக்கிறது என்றேன். அப்பொ 3
ழுது அவர்: இது பூமியின்மீதெங்கும் [10]புறப்
பட்டுப்போகிற சாபம்; எந்தத் திருடனும்,
அதின் ஒருபுறத்திலிருக்கிறதின்படியே அழிக்
கப்பட்டுப்போவான்; ஆணையிடுகிற எவனும்,
அதின் மறுபுறத்தில் இருக்கிறதின்படியே
அழிக்கப்பட்டுப்போவான். அது திருடன் 4
வீட்டிலும், [11]என் நாமத்தைக்கொண்டு பொய்
யாணையிடுகிறவன் வீட்டிலும் வந்து, அவ
னவன் வீட்டின் நடுவிலே தங்கி, அதை அதின்
மரங்களோடும் அதின் கல்லுகளோடுங்கூட
[12]நிர்மூலமாக்கும்படி அதைப் புறப்பட்டுப்
போகப்பண்ணுவேன் என்று சேனைகளின்
**கர்த்தர்** சொல்லுகிறார் என்றார்.
பின்பு என்னோடே பேசின தூதன் வெ 5
ளியே வந்து என்னை நோக்கி: நீ உன் கண்
களை ஏறெடுத்து, புறப்பட்டு வருகிறதை என்
னவென்று பார் என்றார். அது என்ன 6
வென்று கேட்டேன்; அதற்கு அவர்: அது
புறப்பட்டு வருகிறதாகிய ஒரு மரக்கால் என்
றார். பின்னும் அவர்: பூமியெங்கும் இது
தான் அவர்களுடைய* கண்ணோக்கம் என்றார்.
இதோ, ஒரு தாலந்து நிறையான ஈயமூடி 7
தூக்கிவரப்பட்டது; [13]மரக்காலின் நடுவிலே
ஒரு ஸ்திரீ உட்கார்ந்திருந்தாள். அப்பொ 8
ழுது அவர்: இவள் அக்கிரமக்காரி என்று
சொல்லி, அவளை மரக்காலுக்குள்ளே தள்ளி
ஈயக்கட்டியை அதின் வாயிலே போட்டார்.
அப்பொழுது நான் என் கண்களை ஏறெடுத்து, 9
இதோ, புறப்பட்டுவருகிற இரண்டு ஸ்திரீக
ளைக் கண்டேன்; அவர்களுக்கு நாரையின்செட்
டைகளுக்கொத்த செட்டைகள் இருந்தது;
அவர்கள் செட்டைகளில் காற்றிருந்தது; இவர்
கள் மரக்காலை பூமிக்கும் வானத்துக்கும் நடு
வாய்த் தூக்கிக்கொண்டு போனார்கள். நான் 10
என்னோடே பேசின தூதனை நோக்கி: இவர்
கள் மரக்காலை எங்கே கொண்டுபோகிறார்கள்
என்று கேட்டேன். அதற்கு அவர்: [14]சிநெ 11
யார் தேசத்திலே அதற்கு ஒரு வீட்டைக்
கட்டும்படிக்கு அதைக் கொண்டுபோகிறார்
கள்; அங்கே அது ஸ்தாபிக்கப்பட்டு, தன்
நிலையிலே வைக்கப்படும் என்றார்.

6 நான் திரும்பவும் என் கண்களை ஏறெ
டுத்து, இதோ, இரண்டு பர்வதங்களின் நடு
வாகப் புறப்பட்டுவருகிற நாலு இரதங்களைக்
கண்டேன்; அந்தப் பர்வதங்கள் வெண்கலப்
பர்வதங்களாயிருந்தன. முதலாம் இரதத்தில் 2
சிவப்புக்குதிரைகளும், [15]இரண்டாம் இரதத்
தில் கறுப்புக்குதிரைகளும், மூன்றாம் இர 3
தத்தில் வெள்ளைக்குதிரைகளும், நான்காம்
இரதத்தில் புள்ளிபுள்ளியான சிவப்புக் குதி
ரைகளும் பூட்டியிருந்தன. நான் என்னோ 4
டே பேசின தூதனை நோக்கி: ஆண்டவனே,
இவைகள் என்னவென்று கேட்டேன். அந் 5
தத் தூதன் எனக்குப் பிரதியுத்தரமாக: [16]இவை

1 யாத். 25. 31. வெளி. 1. 12: 4. 5
2 வெளி. 11. 4
3 ஓசி. 1. 7. ஆகாய். 2. 2–5
4 எரே. 51. 25. மத். 21. 21
5 எஸ்றா 3. 11, 13. சங். 118. 22
6 எஸ்றா 3. 8–13: 6. 14, 15
7 2 நாளா. 16. 9. நீதி. 15. 3. ஆகாய் 2. 3
8 6. 5. வெளி. 11. 4
9 எசே. 2. 9
10 மல். 4. 6
11 லேவி. 19. 12. மல். 8. 5
12 லேவி. 14. 45
* திருஷ்டாந்தம்
13 வெளி. 17. 1. ழ
14 ஆதி. 10. 10. எரே. 29. 5, 28
15 1, 8. வெளி. 6. 2, 4, 5
16 4. 14. 1 இரா. 22. 19. தானி. 7. 10 லூக். 1. 19. எபி. 1. 7, 14

கள் சர்வலோகத்துக்கும் ஆண்டவராயிருக்கிற
வருடைய சமுகத்தில் நின்று புறப்படுகிற
வானத்தினுடைய நாலு ஆவிகள் என்றார்.
6 ஒன்றில் பூட்டப்பட்டிருந்த கறுப்புக் குதி
ரைகள் வடதேசத்துக்குப் புறப்பட்டுப் போ
யின; [1]வெண்மையான குதிரைகள் அவைக
ளின் பின்னாலே புறப்பட்டுப்போயின; புள்ளி
புள்ளியான குதிரைகள் தென்தேசத்துக்குப்
7 புறப்பட்டுப் போயின. சிவப்புக் குதிரைக
ளோவென்றால் புறப்பட்டுப் போய், [2]பூமி
யிலே சுற்றித் திரியும்படி கேட்டுக்கொண்
டன; அதற்கு அவர்: போய் பூமியில் சுற்றித்
திரியுங்கள் என்றார்; அப்படியே பூமியிலே
8 சுற்றித்திரிந்தன. பின்பு அவர் என்னைக் கூப்
பிட்டு: பார், வடதேசத்துக்குப் புறப்பட்டுப்
போனவைகள் வடதேசத்திலே [3]என் கோபத்
தைச் சாந்திபண்ணிற்று என்று என்னோடே
சொன்னார்.
9 பின்பு கர்த்தருடைய வார்த்தை எனக்கு
10 உண்டாகி; அவர்: சிறையிருப்பின் மனுஷ
ராகிய எல்தாயும், தொபியாவும், யெதாயா
வும் பாபிலோனிலிருந்து வந்திருக்கும் அந்
நாளிலே நீ போய், செப்பனியாவின் குமா
ரனாகிய யோசியாவின் வீட்டுக்குள் பிரவே
11 சித்து, அங்கே அவர்கள் கையிலே வெள்ளி
யையும் பொன்னையும் வாங்கி, கிரீடங்களைச்
செய்வித்து, [4]யோத்சதாக்கின் குமாரனாகிய
யோசுவா என்னும் பிரதான ஆசாரியனு
12 டைய சிரசிலே வைத்து, அவனோடே சொல்
லவேண்டியது: சேனைகளின் கர்த்தர் உரைக்
கிறது என்னவென்றால், இதோ, ஒரு புரு
ஷன், [5]அவருடைய நாமம் கிளை என்னப்
படும்; அவர் தம்முடைய ஸ்தானத்திலிருந்து
முளைத்தெழும்பிக் கர்த்தருடைய [6]ஆலயத்
13 தைக் கட்டுவார். அவரே கர்த்தருடைய ஆல
யத்தைக் கட்டுவார்; [7]அவர் மகிமைபொருந்தின
வராய், தம்முடைய சிங்காசனத்தின்மேல் வீற்
றிருந்து ஆளுகை செய்வார்; [8]தம்முடைய சிங்
காசனத்தின்மேல் ஆசாரியராயும் இருப்பார்;
இவ்விரண்டின் நடுவாகச் சமாதானத்தின்
14 ஆலோசனை விளங்கும். இந்தக் கிரீடங்களோ
வென்றால், கர்த்தருடைய ஆலயத்திலே, எலே
முக்கும், தொபியாவுக்கும், யெதாயாவுக்கும்,
செப்பனியாவின் குமாரனாகிய எனுக்கும்
[9]நினைப்பூட்டுதலுக்கென்று வைக்கப்படுவதாக.
15 தூரத்திலுள்ளவர்கள் வந்து கர்த்தருடைய ஆல
யத்தைக் [10]கூட இருந்து கட்டுவார்கள்; அப்
பொழுது சேனைகளின் கர்த்தர் என்னை உங்க
ளிடத்திற்கு அனுப்பினாரென்று அறிந்து
கொள்வீர்கள்; [11]நீங்கள் உங்கள் தேவனாகிய கர்
த்தரின் சத்தத்தைக் கேட்டு நடந்தீர்களானால்
இது நிறைவேறும் என்று சொல் என்றார்.
**7** தரியு ராஜா அரசாண்ட நாலாம் வருஷம்,
கிஸ்லே என்னும் ஒன்பதாம் மாதம், நாலாந்
தேதியிலே, சகரியாவுக்குக் கர்த்தருடைய வார்
2 த்தை உண்டாயிற்று. கர்த்தருடைய சமுகத்
3 தில் விண்ணப்பம் பண்ணவும், நாங்கள் இத்

1 எரே. 1. 14
2 1. 10. யோபு 1. 7
3 பிர. 10. 4. ஏசா. 1. 24. எசே. 16. 42, 63
4 யாத். 28. 36. லேவி. 8. 9
5 3. 8
6 யோவா. 1. 45. 1 கொ. 3. 9. எபே. 2. 20-22. எபி. 3. 3. 1 பே. 2. 4, 5
7 ஏசா. 22. 24. வெளி. 5. 11, 13
8 சங். 110. 4. ரோ. 5. 1. கொலோ. 1. 2. எபி. 3. 1
9 யாத். 12. 14. மாற். 14. 9.
10 ஏசா. 57. 19; 60. 10. எபே. 2. 13, 19
11 ரோ. 16. 26
* தவம்பண்ண
12 1. 12. ஏசா. 58. 5. மத். 6. 16-18. ரோ. 14. 6
13 ஏசா. 58. 6, 7. எரே. 7. 23. மீகா 6. 8. மத். 23. 23
14 யாத். 22. 21, 22. உபா. 24. 17. ஏசா. 1. 17
15 எரே. 7. 24. ஓசி. 4. 16
16 நெகே. 9. 29, 30 எசே. 11. 19. தானி. 9. 11
17 எரே. 14. 12. மீகா 3. 4
18 உபா. 4. 27: 28. 33, 64. எசே. 36. 19
19 செப். 3. 6

தனை வருஷம்வரையிலே செய்ததுபோல ஐந்
தாம் மாதத்திலே அழுது *ஒடுக்கத்திலிருக்க
வேண்டுமோ என்று சேனைகளுடைய கர்த்த
ரின் ஆலயத்திலிருக்கும் ஆசாரியரிடத்திலும்
தீர்க்கதரிசிகளிடத்திலும் கேட்கவும், சரேத்
சேரும் ரெகெம்மெலேகும் அவனுடைய மனு
ஷரும் தேவனுடைய ஆலயத்துக்கு அனுப்பப்
பட்டார்கள். அப்பொழுது சேனைகளுடைய 4
கர்த்தரின் வார்த்தை எனக்கு உண்டாகி,
அவர்: நீ தேசத்தின் எல்லா ஜனத்தோடும் 5
ஆசாரியர்களோடும் சொல்லவேண்டியது என்
னவென்றால், [12]நீங்கள் இந்த எழுபது வருஷ
மாக ஐந்தாம் மாதத்திலும் ஏழாம் மாதத்திலும்
உபவாசம் பண்ணி துக்கங்கொண்டாடின
போது நீங்கள் எனக்கென்றுதானா உபவாசம்
பண்ணினீர்கள்? நீங்கள் புசிக்கிறபோதும் 6
குடிக்கிறபோதும் உங்களுக்கென்றல்லவா
புசிக்கிறீர்கள்? உங்களுக்கென்றல்லவா குடிக்
கிறீர்கள்? எருசலேமும் அதைச் சுற்றிலும் 7
இருந்த பட்டணங்களும் குடிநிறைந்து சுகமா
யிருந்த காலத்திலும், தெற்குநாடும் சமபூமியும்
குடியேறியிருந்த காலத்திலும் முன்னிருந்த
தீர்க்கதரிசிகளைக்கொண்டு கர்த்தர் கூறின
வார்த்தைகள் இவைகள் அல்லவோ என்று
சொல் என்றார்.
பின்பு கர்த்தருடைய வார்த்தை சகரியா 8
வுக்கு உண்டாகி, அவர்: சேனைகளின் கர்த் 9
தர் உரைக்கிறது என்னவென்றால், நீங்கள்
உண்மையாய் நியாயந்தீர்த்து, [13]அவனவன்
தன்தன் சகோதரனுக்குத் தயவும் இரக்கமும்
செய்து, விதவையையும் திக்கற்ற பிள்ளை 10
யையும் பரதேசியையும் சிறுமையானவனையும்
ஒடுக்காமலும், [14]உங்களில் ஒருவனும் தன்
சகோதரனுக்கு விரோதமாய்த் தன் இருதயத்
தில் தீங்கு நினையாமலும் இருங்கள் என்றார்.
அவர்களோ கவனிக்க மனதில்லாமல், [15]தங் 11
கள் தோளை முரட்டுத்தனமாய் விலக்கி,
கேளாதபடிக்குத் தங்கள் செவிகளை அடைத்
துக்கொண்டார்கள். வேதத்தையும் சேனைக 12
ளின் கர்த்தர் தம்முடைய ஆவியின் மூலமாய்
முந்தின தீர்க்கதரிசிகளைக்கொண்டு சொல்லி
யனுப்பின வார்த்தைகளையும் கேளாதபடிக்
குத் தங்கள் இருதயத்தை [16]வைரமாக்கினார்
கள்; ஆகையால் மகா கடுங்கோபம் சேனைக
ளின் கர்த்தரிடத்திலிருந்து உண்டாயிற்று.
ஆதலால் நான் கூப்பிட்டபோது, அவர்கள் எப் 13
படி கேளாமற்போனார்களோ, [17]அப்படியே
அவர்கள் கூப்பிட்டபோது நானும் கேளாம
லிருந்தேன் என்று சேனைகளின் கர்த்தர்
சொல்லுகிறார். அவர்கள் அறியாத புறஜாதி 14
களுக்குள்ளே [18]அவர்களைப் பறக்கடித்தேன்;
அதினால் அவர்கள் பின்வைத்துப்போன தே
சம் போக்குவரத்தில்லாமல் பாழாய்ப்போயி
ற்று; [19]அவர்கள் இன்பமான தேசத்தைப் பா
ழாய்ப்போகப் பண்ணினார்கள் என்றார்.
சேனைகளுடைய கர்த்தரின் வார்த்தை **8**
உண்டாகி, அவர்: நான் சீயோனுக்காக 2

கடும் வைராக்கியங்கொண்டேன்; [1]அதற்காக
மகா உக்கிரமான வைராக்கியங்கொண்டேன்
என்று சேனைகளின் **கர்த்தர்** சொல்லுகிறார்.
3 நான் சீயோனிடத்தில் திரும்பி, எருசலேமின்
நடுவிலே வாசம்பண்ணுவேன்; [2]எருசலேம்
சத்திய நகரம் என்றும், சேனைகளுடைய **கர்**
**த்தரின்** பர்வதம் பரிசுத்த பர்வதம் என்றும்
*அழைக்கப்படும் என்று **கர்த்தர்** சொல்லுகி
4 றார். திரும்பவும் எருசலேமின் வீதிகளில்
[3]முதிர்வயதினாலே தங்கள் கைகளில் கோலைப்
பிடித்து நடக்கிற கிழவரும் கிழவிகளும் குடி
5 யிருப்பார்கள். நகரத்தின் தெருக்களிலே
விளையாடுகிற ஆண்பிள்ளைகளும் பெண்பிள்
ளைகளும் அதின் வீதிகளில் நிறைந்திருக்கும்
என்று சேனைகளின் **கர்த்தர்** சொல்லுகிறார்.
6 சேனைகளின் **கர்த்தர்** சொல்லுகிறது என்ன
வென்றால்: அது இந்த ஜனத்தில் மீதியான
வர்களின் பார்வைக்கு இந்நாட்களில் ஆச்சரி
யமாயிருந்தாலும், [4]என் பார்வைக்கும் ஆச்சரி
யமாயிருக்குமோ என்று சேனைகளின் **கர்த்**
7 **தர்** சொல்லுகிறார். இதோ, கிழக்குதேசத்தி
லும் தெற்குதேசத்திலுமிருந்து [5]என் ஜனங்
8 களை நான் ரட்சித்து, அவர்களை அழைத்
துக்கொண்டு வருவேன்; [6]அவர்கள் எருசலே
மின் நடுவிலே குடியிருப்பார்கள்; [7]அவர்கள்
எனக்கு உண்மையும் நீதியுமான ஜனமாயி
ருப்பார்கள், நான் அவர்களுக்கு தேவனாயிருப்
பேன் என்று சேனைகளின் **கர்த்தர்** சொல்லு
9 கிறார். சேனைகளுடைய **கர்த்தரின்** வீடாகிய
ஆலயம் கட்டப்படும்படிக்கு அதின் அஸ்தி
பாரங்கள் போடப்பட்ட நாள் முதற்கொண்
டிருக்கிற தீர்க்கதரிசிகளின் வாயினால் இந்த
வார்த்தைகளை இந்நாட்களில் கேட்டுவருகிற
வர்களே, [8]உங்கள் கைகள் திடப்படக்கடவது
என்று சேனைகளின் **கர்த்தர்** சொல்லுகிறார்.
10 இந்நாட்களுக்கு முன்னே மனுஷனுடைய
வேலையால் பலனுமில்லை, மிருக ஜீவனு
டைய வேலையால் பலனுமில்லை; போகிறவ
னுக்கும் வருகிறவனுக்கும் நெருக்கிடையினி
மித்தம் சமாதானமுமில்லை; [9]எல்லா மனுஷ
ரையும் ஒருவரையொருவர் விரோதிக்கச் செய்
11 தேன். இப்போதோ இந்த ஜனத்தில் மீதி
யானவர்களுக்கு [10]நான் முந்தின நாட்களில்
இருந்ததுபோல இருக்கமாட்டேன் என்று
12 சேனைகளின் **கர்த்தர்** சொல்லுகிறார். விதைப்
புச் சமாதானமுள்ளதாயிருக்கும்; திராட்சச்
செடி தன் கனியைத் தரும்; [11]பூமி தன் பல
னைத் தரும்; வானம் தன் பனியைத் தரும்;
இந்த ஜனத்தில் மீதியானவர்கள் இதையெல்
13 லாம் [12]சுதந்தரிக்கக் கட்டளையிடுவேன். சம்
பவிப்பதென்னவென்றால்: யூதா வம்சத்தாரே,
இஸ்ரவேல் வம்சத்தாரே, நீங்கள் புறஜாதிக
ளுக்குள்ளே, சாபமாயிருந்ததுபோலவே; [13]ஆ
சீர்வாதமாயிருக்கும்படி நான் உங்களை இரட்
சிப்பேன்; பயப்படாதேயுங்கள், உங்கள் கை
14 கள் திடப்படக்கடவது. சேனைகளின் **கர்த்**
**தர்** சொல்லுகிறது என்னவென்றால்: உங்கள்
பிதாக்கள் எனக்குக் கோபமூட்டினபோது
[14]நான் உங்களை தண்டிக்க நினைத்து, மனம்
மாறாமல் இருந்ததுபோல, இந்நாட்களில் 15
எருசலேமுக்கும் யூதாவுக்கும் நன்மை செய்
யும்படித் திரும்ப நினைத்தேன்; [15]பயப்படா
தேயுங்கள். நீங்கள் செய்யவேண்டிய காரி 16
யங்கள் என்னவென்றால்: [16]அவனவன் பிற
னோடே உண்மையைப் பேசுங்கள்; உங்
கள் வாசல்களில் சத்தியத்துக்கும் சமாதானத்
துக்கும் ஏற்க நியாயந்தீருங்கள். ஒருவனும் 17
பிறனுக்கு விரோதமாய்த் தன் இருதயத்தில்
தீங்கு நினையாமலும், [17]பொய்யாணையின்மேல்
பிரியப்படாமலும் இருங்கள்; இவைகளெல்
லாம் நான் வெறுக்கிற காரியங்கள் என்று
**கர்த்தர்** சொல்லுகிறார்.
சேனைகளுடைய **கர்த்தரின்** வார்த்தை 18
எனக்கு உண்டாகி, அவர்: நாலாம் மாதத் 19
தின் உபவாசமும், ஐந்தாம் மாதத்தின் உபவா
சமும், ஏழாம் மாதத்தின் உபவாசமும், பத்
தாம் மாதத்தின் உபவாசமும், யூதாவம்சத்தா
ருக்கு மகிழ்ச்சியாகவும் சந்தோஷமாகவும்
நல்ல பண்டிகைகளாகவும் மாறிப்போகும்;
[18]ஆகையால் சத்தியத்தையும் சமாதானத்தை
யும் சிநேகியுங்கள் என்று சேனைகளின் **கர்த்**
**தர்** சொல்லுகிறார். இன்னும் ஜனங்களும் 20
அநேகம் பட்டணங்களின் குடிகளும் வரு
வார்கள் என்று சேனைகளின் **கர்த்தர்** சொல்
லுகிறார். ஒரு பட்டணத்தின் குடிகள் மறு 21
பட்டணத்தின் குடிகளிடத்தில் போய், [19]நாம்
**கர்த்தருடைய** சமுகத்தில் விண்ணப்பம்பண்
ணவும் சேனைகளின் **கர்த்தரைத்** தேடவும்
தீவிரித்துப்போவோம் வாருங்கள்; நாங்களும்
போவோம் என்று சொல்லுவார்கள். அநேக 22
ஜனங்களும் பலத்த ஜாதிகளும் எருசலேமி
லே சேனைகளின் **கர்த்தரைத்** தேடவும், [20]**கர்த்**
**தருடைய** சமுகத்தில் விண்ணப்பம்பண்ண
வும் வருவார்கள். அந்நாட்களில் பலவித பா 23
ஷைக்காரராகிய புறஜாதியாரில் பத்து மனு
ஷர் ஒரு யூதனுடைய வஸ்திரத் தொங்கலைப்
பிடித்துக்கொண்டு: [21]தேவன் உங்களோடே
இருக்கிறார் என்று கேள்விப்பட்டோம்; ஆகை
யால் உங்களோடேகூடப் போவோம் என்று
சொல்லி, அவனைப் பற்றிக்கொள்வார்கள்
என்று சேனைகளின் **கர்த்தர்** சொல்லுகிறார்
என்றார்.

ஆதிராக் தேசத்துக்கு விரோதமானதும், **9**
[22]தமஸ்குவின்மேல் வந்து தங்குவதுமான **கர்த்**
**தருடைய** வார்த்தையாகிய பாரம், [23]மனுஷ
ரின் கண்களும் இஸ்ரவேலுடைய சகல
கோத்திரங்களின் கண்களும் **கர்த்தரை** நோக்
கிக்கொண்டிருக்கும். ஆமாத்தும், [24]மிகவும் 2
ஞானமுள்ள தீருவும் சீதோனும் அதின் எல்
லைக்குள்ளாயிருக்கும். தீரு தனக்கு அரணைக் 3
கட்டி, [25]தூளைப்போல் வெள்ளியையும், வீதி
களின் சேற்றைப்போல் பசும்பொன்னையும்
சேர்த்துவைத்தது. இதோ, ஆண்டவர் அதைத் 4
தள்ளிவிட்டு, சமுத்திரத்தில் அதின் பலத்தை

1 1. 14–16. சாகம் 1, 2
2 ஏசா. 1. 21, 26: 2. 2, 3. எரே. 31. 23
* சொல்லப்படும்
3 1 சாமு. 2. 31. ஏசா. 65. 20, 22
4 ரோ. 4. 20, 21
5 ஏசா. 11. 11, 12: 43. 5, 6
6 13. 9
7 எரே. 4. 2: 31. 1, 33
8 எஸ்று. 5. 1, 2. ஆகா. 2. 4. மு
9 மத். 10. 34–36
10 ஏசா. 11. 13
11 சங். 67. 6, 7
12 1 கொ. 3. 21
13 ஆதி. 12. 2. ஏசா. 19. 24. எரே. 42. 18
14 எரே. 31. 28
15 லூ. 12. 32
16 எபே. 4. 25
17 நீதி. 3. 29
18 எஸ்தர் 8. 17. ஏசா. 35. 10. எரே. 41. 1, 2: 52. 4, 6, 12
19 சங். 122. 1. ஏசா. 2. 3. மீகா. 4. 1, 2
20 ஏசா. 60. 3. மு
21 ஏசா. 3. 6: 4. 1. 1 கொ. 14. 25
22 எரே. 23. 33. ஆமோ. 1. 3–5
23 2 நாளா. 20. 12. சங். 145. 15
24 எசே. 26–28. அதி
25 யோபு 27. 16. எசே. 28. 4, 5

முறிந்துப்போடுவார்; [1]அது அக்கினிக்கு
5 இரையாகும். அஸ்கலோன் அதைக் கண்டு
பயப்படும், காத்சாவும் அதைக் கண்டு மிகவும்
துக்கிக்கும், எக்ரோனும் தன் நம்பிக்கை அற்
றுப்போனபடியால் மிகவும் பிரலாபிக்கும்;
[2]காத்சாவில் ராஜா அழிந்துபோவான்; அஸ்க
6 லோன் குடியற்றிருக்கும். அஸ்தோத்தில்
[3]வேசிப்பிள்ளைகள் வாசம்பண்ணுவார்கள்;
நான் பெலிஸ்தரின் கர்வத்தை அழிப்பேன்.
7 அவனுடைய இரத்தத்தை அவன் வாயிலிருந்
தும், அவனுடைய அருவருப்புகளை அவன்
பல்லுகளின் நடுவிலிருந்தும் நீக்கிப்போடு
வேன்; அவனே நம்முடைய தேவனுக்கென்று
மீதியாக வைக்கப்பட்டு, யூதாவிலே பிரபு
வைப்போல இருப்பான்; எக்ரோன் எபூசிய
8 னைப்போல இருப்பான். சேனையானது புறப்
படும்போதும், திரும்பி வரும்போதும், என்
ஆலயம் காக்கப்படும்படி [4]அதைச் சுற்றிலும்
பாளயம்போடுவேன்; இனி ஒடுக்குகிறவன்
அவர்களிடத்தில் கடந்துவருவதில்லை; அதை
என் கண்களினாலே பார்த்துக்கொண்டிருக்
கிறேன்.
9 சீயோன் குமாரத்தியே, [5]மிகவும் களிகூரு;
எருசலேம் குமாரத்தியே, கெம்பீரி; [6]இதோ,
உன் ராஜா உன்னிடத்தில் வருகிறார்; அவர்
நீதியுள்ளவரும் இரட்சிக்கிறவரும் தாழ்மை
யுள்ளவரும், கழுதையின்மேலும் கழுதைக்
குட்டியாகிய மறியின்மேலும் ஏறிவருகிறவரு
10 மாயிருக்கிறார். எப்பிராயீமினின்று இரதங்
களையும் எருசலேமினின்று குதிரைகளையும்
அற்றுப்போகப்பண்ணுவேன், யுத்தவில்லும்
இல்லாமற்போகும்; [7]அவர் ஜாதிகளுக்குச்
சமாதானம் கூறுவார்; அவருடைய ஆளுகை
ஒரு சமுத்திரந்தொடங்கி மறு சமுத்திரம்
வரைக்கும், நதிதொடங்கி பூமியின் எல்லைகள்
11 பரியந்தமும் செல்லும். உனக்கு நான் செய்
வதென்னவென்றால், தண்ணீரில்லாத குழி
யிலே அடைபட்டிருக்கிற [8]உன்னுடையவர்
களை நான் உன் உடன்படிக்கையின் இரத்தத்
12 தினாலே விடுதலைபண்ணுவேன். நம்பிக்கை
யுடைய சிறைகளே, அரணுக்குத் திரும்புங்
கள்; [9]இரட்டிப்பான நன்மையைத் தரு
13 வேன், இன்றைக்கே தருவேன். நான் எனக்
கென்று யூதாவை நாணேற்றி, எப்பிராயீமி
லே வில்லை நிரப்பி, சீயோனே, உன் புத்திர
ரைக் கிரேக்குதேசப் புத்திரருக்கு விரோத
மாக எழுப்பி, உன்னைப் பராக்கிரமசாலியின்
14 பட்டயத்துக்கு ஒப்பாக்குவேன். அவர்கள்
பட்சத்தில் **கர்த்தர்** காணப்படுவார்; [10]அவரு
டைய அம்பு மின்னலைப்போலப் புறப்படும்;
**கர்த்தராகிய** ஆண்டவர் எக்காளம் ஊதி,
[11]தென்திசைச் சுழல்காற்றுகளோடே நடந்து
15 வருவார். சேனைகளின் **கர்த்தர்** அவர்களைக்
காப்பாற்றுவார்; அவர்கள் பட்சித்து, கவண்
கற்களால் கீழ்ப்படுத்திக்கொள்வார்கள்; அவர்
கள் குடித்துக் களிப்பினால் ஆரவாரிப்பார்
கள்; [12]பானபாத்திரங்கள்போலவும் பலிபீடத்

[1] ஏசா. 23. 1
[2] எரே. 47. 1, 5. செப். 2. 4
[3] ஆமோ. 1. 8
[4] சங். 34. 7. ஏசா. 60. 18
[5] ஏசா. 62. 11. மத். 21. 4, 5. யோ. 12. 14, 15
[6] ஏசா. 45. 21. எரே. 23. 5; 30. 9. லூ. 19. 38. யோ. 1. 49
[7] ஓசி. 1. 7. மீகா. 5. 10. ஆகா. 2. 22. எபே. 2. 14, 17
[8] ஏசா. 61. 1. எபி. 10. 29; 13. 20
[9] ஏசா. 49. 9; 61. 7
[10] சங். 144. 6
[11] ஏசா. 21. 1
[12] லேவி. 4. 18, 25. உபா. 12. 27
[13] ஏசா. 11. 12; 62. 3. மல். 3. 17
[14] சங். 31. 19. யோவே. 3. 18. ஆமோ. 9. 14
[15] உபா. 11. 13, 14. எரே. 14. 22
[16] யோபு 13. 4. எரே. 10. 8
[17] எசே. 34. 7. ழ
[18] எண். 24. 17–19. ஏசா. 22. 23
[19] சங். 18. 42. மல். 4. 3
[20] ஏசா. 54. 7–10. எரே. 3. 18
[21] சங். 104. 15
[22] ஏசா. 5. 26; 49. 19. எசே. 36. 37
[23] உபா. 30. 1–3. ஓசி. 2. 23. எரே. 11. 11–15

தின் கோடிகளைப்போலவும் நிறைந்திருப்பார்
கள். அந்நாளில் அவர்களுடைய தேவனாகிய 16
**கர்த்தர்** தம்முடைய ஜனமான மந்தையாகிய
அவர்களை இரட்சிப்பார்; [13]அவர்கள் அவரு
டைய தேசத்தில் ஏற்றப்பட்ட கொடிகளின்
கிரீடத்தில் பதிந்திருப்பார்கள். அவருடைய 17
காருண்ணியம் எத்தனை பெரியது? [14]அவரு
டைய சௌந்தரியம் எத்தனை பெரியது? தா
னியம் வாலிபரையும், புது திராட்சரசம் கன்
னிகைகளையும் வளர்க்கும்.
பின்மாரிகாலத்து மழையைக் **கர்த்தரிடத்** 10
**தில்** வேண்டிக்கொள்ளுங்கள்; [15]அப்பொழுது
**கர்த்தர்** மின்னல்களை உண்டாக்கி, வயல்
வெளியில் அவரவருக்குப் பயிருண்டாக அவர்
களுக்கு மழையைக் கட்டளையிடுவார். சுரூ 2
பங்கள் அபத்தமானதைச் சொல்லிற்று; [16]குறி
சொல்லுகிறவர்கள் பொய்யைத் தரிசித்தார்
கள்; சொப்பனக்காரர் வீணானதைச் சொல்லி,
வியர்த்தமாகத் தேற்றரவு பண்ணினார்கள்;
ஆகையால் ஜனங்கள் ஆடுகளைப்போலச் சிதறி,
மேய்ப்பனில்லாததினால் சிறுமைப்பட்டார்
கள். மேய்ப்பருக்கு விரோதமாக என் கோ 3
பம் மூண்டது; [17]கடாக்களை தண்டித்தேன்;
சேனைகளின் **கர்த்தர்** யூதா வம்சத்தாராகிய
தமது மந்தையை விசாரித்து, அவர்களை யுத்
தத்திலே தமது சிறந்த குதிரையாக நிறுத்து
வார். அவர்களிலிருந்து கோடிக்கல்லும், 4
[18]அவர்களிலிருந்து கூடாரமுளையும், அவர்களி
லிருந்து யுத்தவில்லும் வரும்; அவர்களிலிருந்
து ஆளுகிற யாவரும் ஏகமாய்ப் புறப்படுவார்
கள். அவர்கள் யுத்தத்திலே தங்கள் சத்து 5
ருக்களை வீதிகளின் சேற்றில் மிதிக்கிற பராக்
கிரமசாலிகளைப்போல இருந்து [19]யுத்தம்பண்
ணுவார்கள்; **கர்த்தர்** அவர்களோடேகூட
இருப்பார்; குதிரைகளின்மேல் ஏறிவருகிற
வர்கள் வெட்கப்படுவார்கள். நான் யூதாவம் 6
சத்தாரைப் பலப்படுத்தி, யோசேப்பு வம்சத்
தாரை இரட்சித்து, அவர்களைத் திரும்ப நிலைக்
கப்பண்ணுவேன்; நான் அவர்களுக்கு இரங்
கினேன்; [20]அவர்கள் என்னால் ஒருக்காலும்
தள்ளிவிடப்படாதவர்களைப்போல் இருப்பார்
கள்; நான் அவர்களுடைய தேவனாகிய **கர்த்**
**தர்**, நான் அவர்களுக்குச் செவிகொடுப்பேன்.
எப்பிராயீமர் பராக்கிரமரைப்போல இருப் 7
பார்கள்; மதுபானத்தால் களிப்பதுபோல,
அவர்களுடைய இருதயம் களிக்கும்; [21]அவர்க
ளுடைய பிள்ளைகளும் அதைக்கண்டு மகிழு
வார்கள்; அவர்கள் இருதயம் **கர்த்தருக்குள்**
களிகூரும். நான் அவர்களைப் பார்த்துப் 8
பயில்போட்டு அவர்களைக் கூட்டிக்கொள்ளு
வேன்; [22]அவர்களை மீட்டுக்கொண்டேன்;
அவர்கள் பெருகியிருந்ததுபோலவே பெரு
கிப்போவார்கள். நான் அவர்களை ஜனங் 9
களுக்குள்ளே இறைத்தபின்பு [23]அவர்கள் தூர
தேசங்களிலே என்னை நினைத்து, தங்கள் பிள்
ளைகளோடுங்கூடப் பிழைத்துத் திரும்புவார்
கள். நான் அவர்களை எகிப்து தேசத்திலி 10

ருந்து திரும்பிவரப்பண்ணி, அவர்களை அசீரி
யாவிலிருந்து கூட்டிக்கொண்டு, அவர்களைக்
கிலேயாத்தேசத்துக்கும்லீபனோனுக்கும்வரப்
பண்ணுவேன்; [1]அவர்களுக்கு இடம் போதா
11 மற்போகும். இடுக்கமென்கிற சமுத்திரத்
தைக் கடக்கையில் அவர் சமுத்திரத்தின் அலை
களை அடிப்பார்; [2]அப்பொழுது நதியின்
ஆழங்கள் எல்லாம் வறண்டுபோகும்; அசீரி
யாவின் கர்வம் தாழ்த்தப்படும்; எகிப்தின்
12 கொடுங்கோல் விலகிப்போகும். நான் அவர்
களைக் **கர்த்தருக்குள்** பலப்படுத்துவேன்;[3] அவர்
கள் அவருடைய நாமத்திலே நடந்துகொள்
வார்கள் என்று **கர்த்தர்** சொல்லுகிறார்.

**11** லீபனோனே, அக்கினி உன் கேதுருமரங்
களைப் பட்சிக்கும்படி உன் வாசல்களைத் திற.
2 தேவதாரு விருட்சங்களே, புலம்புங்கள்; [4]கே
துருமரங்கள் விழுந்ததே; பிரபலமானவைகள்
பாழாக்கப்பட்டன. பாசானின் கர்வாலிமரங்
களே, புலம்புங்கள்; அரணுள்ள சோலை
3 கீழே தள்ளப்பட்டது. மேய்ப்பர்களின் மகி
மை அழிந்துபோனபடியால், அவர்கள் அல
றுகிற சத்தம் கேட்கப்படுகிறது; யோர்தா
னின் பெருமை அழிந்துபோனபடியால்,
பாலசிங்கங்கள் கர்ச்சிக்கிற சத்தம் கேட்கப்
4 படுகிறது. என் தேவனாகிய **கர்த்தர்** சொல்
லுகிறது என்னவென்றால், [5]கொலையுண்கிற
5 ஆடுகளை மேய்க்கக்கடவாய். அவைகளை
உடையவர்கள், அவைகளைக் கொன்றுபோட்
டுத் தங்களுக்குக் குற்றமில்லையென்று எண்
ணுகிறார்கள். [6]அவைகளை விற்கிறவர்கள்,
**கர்த்தருக்கு** ஸ்தோத்திரம், நாங்கள் ஐசு
வரியமுள்ளவர்களானோம் என்கிறார்கள்;
அவைகளை மேய்க்கிறவர்கள், அவைகள்மேல்
6 இரக்கம் வைக்கிறதில்லை. நான் இனி தே
சத்துக் குடிகளின்மேல் இரக்கம் வையா
மல் மனுஷரில் யாவனையும் அவனவனு
டைய அயலான் கையிலும், அவனவனு
டைய ராஜாவின் கையிலும் அகப்படப்பண்
ணுவேன்; அவர்கள் தேசத்தை அழித்தும்,
நான் இவர்களை அவர்கள் கைக்குத் தப்புவிப்
பதில்லையென்று **கர்த்தர்** சொல்லுகிறார்.
7 கொலையுண்கிற மந்தையாகிய [7]சிறுமைப்பட்ட
உங்களை நான் மேய்ப்பேன்; நான் இரண்டு
கோல்களை எடுத்து, ஒன்றிற்கு *அநுக்கிரகம்
என்றும்; ஒன்றிற்கு †நிக்கிரகம் என்றும் பே
8 ரிட்டு மந்தையை மேய்த்து, ஒரே மாதத்தி
லே மூன்று மேய்ப்பரையும் அதம்பண்ணி
னேன்; [8]என் ஆத்துமா அவர்களை அரோசித்
தது; அவர்கள் ஆத்துமா என்னையும் வெறுத்
9 தது. இனி நான் உங்களை மேய்ப்பதில்லை;
சாகிறது சாகட்டும், அதமாகிறது அதமாகட்
டும்; [9]மீதியானவைகளோவென்றால், ஒன்
றின் மாம்சத்தை ஒன்று தின்னக்கடவது என்
10 று நான் சொல்லி, அநுக்கிரகம் என்னப்
பட்ட என் கோலை எடுத்து, நான் அந்த ஜன
ங்களெல்லாரோடும் பண்ணியிருந்த என்
உடன்படிக்கை அற்றுப்போகும்படிக்கு

1 ஏசா. 11. 11, 16: 49. 20. எரே. 30. 18
2 ஏசா. 14. 26. எசே. 30. 13
3 மீகா 4. 5. கொலோ. 2, 6
4 ஏசா. 32. 19
5 யோ. 21. 15-17
6 உபா. 29. 19-21. எரே. 2. 3
7 செப். 3. 12. மத். 11. 5
* தயவு
† பயம், அல்லது பந்தனம்
8 ஓசி. 5. 7
9 எரே. 15. 2: 43. 11
10 செப். 3. 12
11 யாத். 21. 32. மத். 26. 15
12 மத். 27. 3-10
13 எசே. 34. 2-4
14 எரே. 23. 1. எசே. 34. 21. யோ. 10. 12, 13
15 பிர. 12. 7. ஏசா. 42. 5. எபி. 12. 9
16 ஏசா. 51. 17, 22, 23
17 மத். 21. 44
18 சங். 76. 6. எசே. 38. 4

அதை முறித்துப்போட்டேன். அந்நாளிலே 11
அது அற்றுப்போயிற்று; [10]அப்படியே மந்தை
யில் எனக்குக் காத்திருந்த சிறுமைப்பட்டவை
கள் அது **கர்த்தருடைய** வார்த்தையென்று
அறிந்துகொண்டன. உங்கள் பார்வைக்கு 12
நன்றாய்க் கண்டால், என் கூலியைத் தாருங்
கள்; இல்லாவிட்டால் இருக்கட்டும் என்று
அவர்களோடே சொன்னேன்; [11]அப்பொ
ழுது எனக்குக் கூலியாக முப்பது வெள்ளிக்
காசை நிறுத்தார்கள். **கர்த்தர்** என்னை நோக் 13
கி: அதைக் குயவனிடத்தில் எறிந்துவிடு
என்றார்; [12]இதுவே நான் அவர்களால் மதிக்
கப்பட்ட மேன்மையான மதிப்பு; நான் அந்த
முப்பது வெள்ளிக்காசை எடுத்து, அவை
களைக் குயவனுக்கென்று **கர்த்தருடைய** ஆல
யத்திலே எறிந்துவிட்டேன். நான் யூதாவுக் 14
கும் இஸ்ரவேலுக்கும் இருக்கிற சகோதரக்
கட்டை அற்றுப்போகப் பண்ணும்படிக்கு,
நிக்கிரகம் என்னப்பட்ட என் இரண்டாம்
கோலையும் முறித்தேன்.
**கர்த்தர்** என்னை நோக்கி: நீ மதியற்ற ஒரு 15
மேய்ப்பனுடைய[13]ஆயுதங்களை இன்னும் எடுத்
துக்கொள். இதோ, நான் தேசத்திலே ஒரு 16
மேய்ப்பனை எழும்பப்பண்ணுவேன்; அவன்
அதமாகிறவைகளைப் பராமரிக்காமலும், சித
றுண்டதைத் தேடாமலும், நொறுங்குண்ட
தைக் குணமாக்காமலும், இளைத்திருக்கிறதை
ஆதரிக்காமலும், கொழுத்ததின் மாம்சத்தைத்
தின்று, அவைகளுடைய குளம்புகளை உடைத்
துப்போடுவான். மந்தையைக் கைவிடுகிற 17
அபத்தமான மேய்ப்பனுக்கு ஐயோ! [14]பட்ட
யம் அவன் புயத்தின்மேலும் அவன் வலது
கண்ணின்மேலும் வரும்; அவன் புயமுழுதும்
சூம்பிப்போம்; அவன் வலதுகண் முற்றிலும்
இருள் அடையும் என்றார்.

இஸ்ரவேலைக்குறித்துக் **கர்த்தர்** சொன்ன **12**
வார்த்தையின் பாரம்; [15]வானங்களை விரித்து,
பூமியை அஸ்திபாரப்படுத்தி, மனுஷனுடைய
ஆவியை அவனுக்குள் உண்டாக்குகிற **கர்த்**
**தர்** சொல்லுகிறது என்னவென்றால்: இதோ, 2
சுற்றிலும் இருக்கிற எல்லா ஜனங்களுக்கும்
நான் எருசலேமைத் தத்தளிப்பின் பாத்திர
மாக்குகிறேன்; [16]எருசலேமுக்கு விரோதமா
ய்ப் போடப்படும் முற்றிக்கையிலே யூதாவும்
அப்படியேயாகும். அந்நாளிலே நான் எரு 3
சலேமைச் சகல ஜனங்களுக்கும் பாரமான
கல்லாக்குவேன்; [17]அதைக் கிளப்புகிற யாவ
ரும் சிதைக்கப்படுவார்கள்; பூமியிலுள்ள ஜாதி
களெல்லாம் அதற்கு விரோதமாய்க் கூடிக்
கொள்வார்கள். அந்நாளிலே நான் குதிரை 4
களுக்கெல்லாம் திகைப்பையும், [18]அவைக
ளின்மேல் ஏறியிருக்கிறவர்களுக்கெல்லாம்
புத்திமயக்கத்தையும் வரப்பண்ணி, யூதாவம்
சத்தின்மேல் என் கண்களைத் திறந்துவைத்து,
ஜனங்களுடைய எல்லாக் குதிரைகளுக்கும்
குருட்டாட்டத்தை உண்டுபண்ணுவேன்
என்று **கர்த்தர்** சொல்லுகிறார். எருசலே 5

மின் குடிகள், சேனைகளின் **கர்த்தராகிய**
தங்கள் தேவனுடைய துணையினால் எங்களுக்
குப் பெலனானவர்கள் என்று அப்போது
யூதாவின் தலைவர் தங்கள் இருதயத்திலே சொ
6 ல்லுவார்கள். அந்நாளிலே யூதாவின் தலைவ
ரை விறகுகளுக்குள்ளே எரிகிற அக்கினி
அடுப்புக்கும், வைக்கோல் கட்டுகளுக்குள்ளே
எரிகிற தீவட்டிக்கும் ஒப்பாக்குவேன்; அவர்
கள் வலதுபுறமும் இடதுபுறமுமாகப் புறப்
பட்டு, சுற்றிலும் இருக்கிற எல்லா ஜனங்க
ளையும் பட்சிப்பார்கள்; எருசலேம் திரும்ப
வும் தன் ஸ்தானமாகிய எருசலேமிலே குடி
7 யேற்றப்பட்டிருக்கும். தாவீது வம்சத்தாரின்
மகிமையும், எருசலேமின் குடிகளுடைய மகி
மையும், யூதாவின்மேல் தன்னை உயர்த்தாத
படிக்கு, **கர்த்தர்** யூதாவின் கூடாரங்களை முத
8 ல்முதல் இரட்சிப்பார். அந்நாளிலே **கர்த்தர்**
எருசலேமின் குடிகளைக் காப்பாற்றுவார்;
[1]அவர்களில் தள்ளாடினவன் அந்நாளிலே தா
வீதைப்போல இருப்பான்; [2]தாவீது குடும்பத்
தார் அவர்களுக்கு முன்பாக தேவனைப்போ
லும் **கர்த்தருடைய** தூதனைப்போலும் இருப்
9 பார்கள். அந்நாளிலே எருசலேமுக்கு விரோ
தமாய் வருகிற எல்லா ஜாதிகளையும் [3]அழிக்கப்
10 பார்ப்பேன். நான் தாவீது குடும்பத்தாரின்மே
லும் எருசலேம் குடிகளின்மேலும் [4]கிருபை
யின் ஆவியையும் விண்ணப்பங்களின் ஆவியை
யும் ஊற்றுவேன்; [5]அப்பொழுது அவர்கள் தாங்
கள் குத்தின என்னை நோக்கிப்பார்த்து, ஒரு
வன் தன் ஒரே பேறானவனுக்காகப் புலம்புகி
றதுபோல எனக்காகப் புலம்பி, [6]ஒருவன் தன்
தலைச்சன் பிள்ளைக்காகத் துக்கிக்கிறதுபோல
11 எனக்காக மனங்கசந்து துக்கிப்பார்கள். அந்
நாளிலே மெகிதோன் பட்டணத்துப் பள்ளத்
தாக்கின் ஊராகிய ஆதாத்ரிம்மோனின் புலம்
பலைப்போல [7]எருசலேமின் புலம்பல் பெரி
12 தாயிருக்கும். தேசம் புலம்பிக்கொண்டிருக்
கும்; ஒவ்வொரு வம்சமும் தனித்தனியாகப்
புலம்பும்; [8]தாவீது குடும்பத்தார் தனியேயும்,
அவர்கள் ஸ்திரீகள் தனியேயும், நாத்தான்
குடும்பத்தார் தனியேயும், அவர்கள் ஸ்திரீகள்
13 தனியேயும், லேவி குடும்பத்தார் தனியேயும்,
அவர்கள் ஸ்திரீகள் தனியேயும், சிமேயி குடும்
பத்தார் தனியேயும், அவர்கள் ஸ்திரீகள் தனி
14 யேயும், மற்றுமுண்டான சகல குடும்பங்க
ளிலும் ஒவ்வொரு குடும்பத்தின் மனுஷர் தனி
த்தனியேயும் [9]அவர்களுடைய ஸ்திரீகள் தனித்
தனியேயும் புலம்புவார்கள்.

**13** அந்நாளிலே பாவத்தையும் அழுக்கையும்
நீக்க, தாவீதின் குடும்பத்தாருக்கும் எருசலே
மின் குடிகளுக்கும் திறக்கப்பட்ட [10]ஒரு ஊற்று
2 உண்டாயிருக்கும். அந்நாளிலே நான் விக்
கிரகங்களின் பேரும் தேசத்தில் இராதபடிக்கு
அழிப்பேன்; [11]அவைகள் இனி நினைக்கப்படு
வதில்லை; தரிசனம் சொல்லுகிறவர்களையும்,
அசுத்த ஆவியையும் தேசத்திலிருந்து போய்
விடவும் பண்ணுவேன் என்று சேனைகளின்
**கர்த்தர்** சொல்லுகிறார். இனி ஒருவன் தரி 3
சனம் சொன்னால், அவனைப் பெற்ற அவன்
தகப்பனும் அவன் தாயும் அவனை நோக்கி: நீ
**கர்த்தருடைய** நாமத்தைக்கொண்டு பொய்பேசு
கிறபடியால் நீ உயிரோடிருக்கப்படாது என்
று சொல்லி, [12]அவனைப் பெற்ற அவன் தகப்
பனும் அவன் தாயும் அவன் தரிசனம் சொல்
லும்போது அவனைக் குத்திப்போடுவார்கள்.
அந்நாளிலே தரிசனம் சொல்லுகிற அவனவ 4
வன் தான் சொன்ன தரிசனத்தினால் வெட்
கப்பட்டு, [13]பொய் சொல்லும்படிக்கு இனி
மயிர்ப்போர்வையைப் போர்த்துக்கொள்ளா
மல், நான் தரிசனம் சொல்லுகிறவன் அல்ல, 5
நான் நிலத்தைப் பயிரிடுகிறவன்; [14]என் சிறு
வயதுமுதல் ஒருவன் என்னை வேலைகொண்
டான் என்பான். அப்பொழுது ஒருவன் 6
அவனை நோக்கி: உன் கைகளில் இருக்கிற
இந்த வடுக்கள் ஏதென்று கேட்டால், என்
சிநேகிதரின் வீட்டிலே காயப்பட்டதினால்
உண்டானவைகள் என்பான்.

பட்டயமே, என் மேய்ப்பன்மேலும் என் 7
தோழனாகிய புருஷன்மேலும் எழும்பு என்று
சேனைகளின் **கர்த்தர்** சொல்லுகிறார்; [15]மேய்ப்
பனை வெட்டு அப்பொழுது ஆடுகள் சிதறிப்
போகும்; ஆனாலும் என் கரத்தைச் சிறுவர்
மேல் திரும்ப வைப்பேன். தேசமெங்கும் 8
சம்பவிக்கும் காரியம் என்னவென்றால்,
அதில் இருக்கிற இரண்டு பங்கு மனுஷர் சங்
கரிக்கப்பட்டு மாண்டுபோவார்கள்; [16]மூன்றாம்
பங்கோ அதில் மீதியாயிருக்கும். அந்த மூன் 9
றாம் பங்கை நான் அக்கினிக்குட்படப்பண்ணி,
[17]வெள்ளியை உருக்குகிறதுபோல அவர்களை
உருக்கி, பொன்னைப் புடமிடுகிறதுபோல
அவர்களைப் புடமிடுவேன்; அவர்கள் என்
நாமத்தைத் தொழுதுகொள்வார்கள்; நான்
அவர்கள் விண்ணப்பத்தைக் கேட்பேன்;
இது என் ஜனமென்று நான் சொல்லுவேன்,
**கர்த்தர்** என் தேவன் என்று அவர்கள் சொல்
லுவார்கள்.

இதோ, **கர்த்தருடைய** நாள் வருகிறது, **14**
[18]உன்னில் கொள்ளையானது உன் நடுவிலே
பங்கிடப்படும். எருசலேமுக்கு விரோதமாக 2
யுத்தம்பண்ணச் சகல ஜாதிகளையும் கூட்டு
வேன்; [19]நகரம் பிடிக்கப்படும்; வீடுகள் கொ
ள்ளையாகும்; ஸ்திரீகள் அவமானப்படுவார்
கள்; நகரத்தாரில் பாதிமனுஷர் சிறைப்பட்
டுப்போவார்கள்; மீதியான ஜனமோ நகரத்தை
விட்டு அறுப்புண்டுபோவதில்லை. **கர்த்தர்** 3
புறப்பட்டு, யுத்தநாளிலே போராடுவதுபோல்
அந்த ஜாதிகளோடே போராடுவார். அந்நா 4
ளிலே அவருடைய பாதங்கள் கிழக்கே எருச
லேமுக்கு எதிரே இருக்கிற ஒலிவமலையின்
மேல் நிற்கும்; [20]அப்பொழுது மகா பெரிய பள்
ளத்தாக்கு உண்டாகும்படி ஒலிவமலை தன்
நடுமையத்திலே கிழக்கு மேற்காய் எதிராகப்
பிளந்துபோம்; அதினாலே, ஒரு பாதி வடபக்
கத்திலும் ஒரு பாதி தென்பக்கத்திலும் சாயும்.

1 யோவே. 3. 10. எபி. 11. 34
2 யோ. 17. 21–23
3 ஏசா. 54. 17. ஆகாய் 2. 22
4 சங். 51. 12. எரே. 31. 9. எசே. 39. 29. ரோ. 8. 26
5 மத். 24. 30. யோ. 19. 34. வெளி. 1. 7
6 எரே. 6. 26. ஆமோ. 8. 10
7 2 நாளா. 35. 22–25. அப். 2. 37
8 2 சாமு. 5. 14. லூக். 24. 30. லூ. 3. 31. வெளி. 1. 7
9 ஏசா. 2. 18
10 எசே. 36. 25. எபி. 9. 14. 1 பே. 1. 19. வெளி. 1. 5: 7. 13, 14
11 மத். 23. 13. சங். 16. 4. தீ. 2. 18, 20: 11. 20
12 உபா. 13. 6, 9
13 மீகா. 3. 6, 7. மத். 3. 4
14 ஆமோ. 7. 14
15 ஏசா. 40. 11. எசே. 34. 23. மத். 18. 10, 14: 26. 31
16 ரோ. 11. 5
17 யோபு 23. 10. ஏசா. 48. 10. 1 பே. 1. 6, 7
18 ஏசா. 13. 9. அப். 2. 20
19 ஏசா. 13. 16. யோவே. 3. 2
20 எசே. 11. 23. யோவே. 3. 12, 14

5 அப்பொழுது என் மலைகளின் பள்ளத்தாக்கு
வழியாய் ஓடிப்போவீர்கள்; மலைகளின் பள்
ளத்தாக்கு ஆத்சால்மட்டும் போகும்; நீங்கள்
யூதாவின் ராஜாவாகிய உசியாவின் நாட்களில்
பூமியதிர்ச்சிக்குத் தப்பி ஓடிப்போனதுபோல்
ஓடிப்போவீர்கள்; [1]என் தேவனாகிய **கர்த்தர்**
வருவார், தேவரீரோடே எல்லாப் பரிசுத்த
6 வான்களும் வருவார்கள். அந்நாளில் வெ
ளிச்சம் இல்லாமல், ஒருவேளை பிரகாசமும்
7 ஒருவேளை மப்புமாயிருக்கும். ஒருநாள் உண்டு,
அது **கர்த்தருக்குத்** தெரிந்தது; அது பகலு
மல்ல இரவுமல்ல; [2]ஆனாலும் சாயங்காலத்தி
8 லே வெளிச்சமுண்டாகும். அந்நாளிலே ஜீவ
தண்ணீர்கள் எருசலேமிலிருந்து புறப்பட்டு,
[3]பாதி கிழக்குச் சமுத்திரத்துக்கும், பாதி மேற்
குச் சமுத்திரத்துக்கும் போய், மாரிகாலத்துக்
9 கும் கோடைகாலத்துக்கும் இருக்கும். அப்
பொழுது **கர்த்தர்** பூமியின்மீதெங்கும் ராஜா
வாயிருப்பார்; [4]அந்நாளில் ஒரே **கர்த்தர்** இருப்
பார், அவருடைய நாமமும் ஒன்றாயிருக்கும்.
10 தேசமெல்லாம் கேபா தொடங்கி எருசலே
முக்குத் தெற்கே இருக்கிற ரிம்மோன்வரைக்
கும் சமபூமியாகத் திருத்தப்படும்; எருசலே
மோ உயர்ந்ததாகி, தன் ஸ்தானத்திலே பென்
யமீன் வாசல்தொடங்கி முதல் வாசலென்
கிற ஸ்தலமட்டும் கோடிவாசல்வரைக்கும்,
[5]அனனெயேல் கோபுரம் துவக்கி ராஜாவின்
திராட்ச ஆலைகள்மட்டும் குடியேற்றப்பட்டி
11 ருக்கும். அதிலே ஜனங்கள் வாசம்பண்ணு
வார்கள்; [6]இனிச் சங்கரிப்பில்லாமல் எருச
12 லேம் சுகமாய்த் தங்கியிருக்கும். எருசலேமுக்கு
விரோதமாக யுத்தம்பண்ணின எல்லா ஜனங்
களையும் **கர்த்தர்** வாதிக்கும் வாதையாவது:
அவர்கள் காலூன்றி நிற்கையிலும் அவர்களு
டைய சதை அழிந்துபோகும்; அவர்கள் கண்
கள் தங்கள் குழிகளிலே கெட்டுப்போகும்;
அவர்கள் நாவு அவர்கள் வாயிலே அழுகிப்
13 போகும். அந்நாளிலே **கர்த்தரால்** பெரிய
[7]கலக்கம் அவர்களுக்குள் உண்டாகும்; அவன
வன் தன்தன் அயலானின் கையைப் பிடிப்
பான்; [8]அவனவனுடைய கை அவனவன்
அயலானுடைய கைக்கு விரோதமாக எழும்
பும். யூதாவும் எருசலேமிலே யுத்தம்பண் 14
ணும்; [9]அப்பொழுது சுற்றிலும் இருக்கிற
சகல ஜாதிகளுடைய ஆஸ்தியாகிய பொன்
னும் வெள்ளியும் வஸ்திரங்களும் மகா திரளா
கக் கூட்டப்படும். அந்தப் பாளயங்களில் 15
இருக்கும் குதிரைகள் கோவேறு கழுதைகள்
ஒட்டகங்கள் கழுதைகள் முதலான எல்லா
மிருகஜீவன்களுக்கும் வரும் வாதையும், அந்த
வாதையைப்போலவே இருக்கும். பின்பு, 16
எருசலேமுக்கு விரோதமாக வந்திருந்த எல்
லா ஜாதிகளிலும் மீதியான யாவரும் சேனை
களின் **கர்த்தராகிய** ராஜாவைத் தொழுது
கொள்ளும்படிக்கும், [10]கூடாரப் பண்டிகை
யை ஆசரிக்கும்படிக்கும், வருஷாவருஷம்
வருவார்கள். அப்பொழுது பூமியின் வம்சங் 17
களில் சேனைகளின் **கர்த்தராகிய** ராஜாவைத்
[11]தொழுதுகொள்ள எருசலேமுக்கு வராதவர்
கள் எவர்களோ அவர்கள்மேல் மழை வரு
ஷிப்பதில்லை. மழை வருஷிக்காத எகிப் 18
தின் வம்சம் வராமலும் சேராமலும்போனால்,
[12]கூடாரப்பண்டிகையை ஆசரிக்கவராதஜாதி
களைக் **கர்த்தர்** வாதிக்கும் வாதையே அவர்
கள்மேலும் வரும். இது எகிப்தியருடைய 19
பாவத்துக்கும், கூடாரப்பண்டிகையை ஆச
ரிக்கவராத சகல ஜாதிகளுடைய பாவத்துக்
கும் வரும் ஆக்கினை. அந்நாளிலே குதிரை 20
களின் மணிகளிலே **கர்த்தருக்குப் பரிசுத்தம்**
என்னும் விலாசம் எழுதியிருக்கும்; [13]**கர்த்தரு
டைய** ஆலயத்திலுள்ள பானைகள் பலிபீடத்
துக்குமுன்பாக இருக்கிறபாத்திரங்களைப்போ
லிருக்கும். அப்பொழுது எருசலேமிலும் 21
யூதாவிலுமுள்ள எல்லாப் பானைகளும் சேனை
களின் **கர்த்தருக்குப்** பரிசுத்தமாயிருக்கும்,
பலியிடுகிற யாவரும் வந்து அவைகளில் எடுத்
து, அவைகளில் சமைப்பார்கள்; [14]அந்நாள்
முதல் சேனைகளுடைய **கர்த்தரின்** ஆல
யத்திலே யாதொரு கானானியனும் இருப்ப
தில்லை.

[1] ஏசா. 29. 6. ஆமோ. 1. 1. யூதா. 14, 15, ‧ ச
[2] ஏசா. 30. 26. மத். 24. 36. வெளி. 21. 23: 22. 5
[3] எசே. 47. 1. வெளி. 22. 1
[4] தானி. 2. 44. எபே. 4. 5, 6. வெளி. 11. 15
[5] எரே. 31. 38
[6] எரே. 23. 6. வெளி. 21. 4
[7] 1 சாமு. 14. 15, 20
[8] எசே. 38. 21
[9] எசே. 39. 10, 17
[10] ஏசா. 66. 6, 23
[11] ஏசா. 60. 12
[12] உபா. 11. 10
[13] ஏசா. 23. 18
[14] ஏசா. 4. 3: 35. 8. யோவே. 3. 17. 1 கொ. 6. 9–11. எபே. 2. 19–22. வெளி. 21. 27: 22. 15

MALACHI

# மல்கியா

1 மல்கியாவைக்கொண்டு கர்த்தர் இஸ்ரவே
லுக்குச் சொன்ன வார்த்தையின் பாரம்.
2 நான் உங்களைச் சிநேகித்தேன் என்று கர்த்
தர் சொல்லுகிறார்; [1]அதற்கு நீங்கள்: எங்களை
எப்படிச் சிநேகித்தீர் என்கிறீர்கள்; கர்த்தர்
சொல்லுகிறார்: [2]ஏசா யாக்கோபுக்குச் சகோ
தரன் அல்லவோ? ஆகிலும் யாக்கோபை
3 நான் சிநேகித்தேன், ஏசாவையோ நான் வெ
றுத்தேன்; [3]அவனுடைய மலைகளைப் பாழும்,
அவனுடைய சுதந்தரத்தை வனாந்தரத்திலுள்ள
வலுசர்ப்பங்களின் தாவும் ஆக்கினேன்.
4 ஏதோமியர்: நாம் எளிமைப்பட்டோம்; ஆனா
லும் பாழானவைகளைத் திரும்பக் கட்டுவோம்
என்று சொல்லுகிறார்கள்; அதற்குக் கர்த்தர்:
அவர்கள் கட்டுவார்கள், நான் இடிப்பேன்.
அவர்கள் துன்மார்க்கத்தின் எல்லையென்றும்,
கர்த்தர் என்றைக்கும் சினம்வைக்கிற ஜன
மென்றும் சொல்லப்படுவார்கள் என்கிறார்.
5 இதை உங்கள் கண்கள் காணும்; அப்பொ
ழுது நீங்கள்: [4]கர்த்தர் இஸ்ரவேலுடைய
எல்லை துவக்கி மகிமைப்படுத்தப்படுவார்
என்பீர்கள்.
6 குமாரன் தன் பிதாவையும், ஊழியக்கா
ரன் தன் எஜமானையும் கனம்பண்ணுகிறார்க
ளே; [5]நான் பிதாவானால் என் கனம் எங்கே?
நான் எஜமானானால் எனக்குப் பயப்படும்
பயம் எங்கே என்று சேனைகளின் கர்த்தர்
தமது நாமத்தை அசட்டை பண்ணுகிற ஆசா
ரியர்களாகிய உங்களைக் கேட்கிறார்; அதற்கு
நீங்கள்: உமது நாமத்தை எதினாலே அசட்
7 டை பண்ணினோம் என்கிறீர்கள். என் பீடத்
தின்மேல் அசுத்தமான அப்பத்தைப் படைக்
கிறதினாலேயே; ஆனாலும் உம்மை எதினாலே
அசுத்தப்படுத்தினோம் என்கிறீர்கள்; [6]கர்த்தரு
டைய பந்தி எண்ணமற்றுப் போயிற்றென்று
8 நீங்கள் சொல்லுகிறதினாலேயே. நீங்கள் கண்
ஊனமானதைப் பலியிடக் கொண்டுவந்தா
லும் அது பொல்லாப்பல்ல, நீங்கள் காலூன
மானதையும் நசல் பிடித்ததையும் கொண்டு
வந்தாலும் அது பொல்லாப்பல்ல என்கிறீர்க
ளே; [7]அதை நீ உன் அதிபதிக்குச் செலுத்து,
அவன் உன்மேல் பிரியமாயிருப்பானோ? உன்
முகத்தைப் பார்ப்பானோ என்று சேனைகளின்

1 உபா. 7. 7, 8; 10. 15. எரே. 31. 8
2 ரோ. 9. 13
3 எரே. 49. 17, 18. எசே. 35. 3. ஒப. 10.
4 சங். 35. 27
5 யாத். 20. 12. உபா. 15. 21. ஏசா. 41. 22 ... 6. 46
6 1 கொ. 10. 21
7 லேவி 22. 8
8 ஓசி. 13. 9. ரோ. 2. 11. 1 பே. 1. 17
9 1 கொ. 9. 13
10 ஏசா. 1. 11. எரே. 6. 20. ஆமோ. 5. 21
11 சங். 113. 3 ஏசா. 59. 19; 60. 3, 5. லூக். 4. 21, 28. 1 தீமோ. 2. 8. வெளி. 8. 3
12 லேவி. 22. 20.
13 சங். 47. 2 1 தீமோ. 6. 15

கர்த்தர் கேட்கிறார். இப்போதும் தேவனு 9
டைய சமுகத்தை நோக்கிக் கெஞ்சுங்கள்;
அப்பொழுது நம்மேல் இரங்குவார்; இது
உங்களாலே வந்த காரியம்; [8]அவர் உங்களை
அங்கீகரிப்பாரோ என்று சேனைகளின் கர்த்
தர் கேட்கிறார். உங்களில் எவன் கூலியில் 10
லாமல் கதவுகளைப் பூட்டுவான்; [9]என் பலிபீ
டத்தின்மேல் அக்கினியைக் கூலியில்லாமல்
கொளுத்தவுமாட்டீர்கள்; உங்கள்பேரில் என
க்குப் பிரியமில்லையென்று சேனைகளின் கர்த்
தர் சொல்லுகிறார்; [10]உங்கள் கைகளிலுள்ள
காணிக்கை எனக்கு உகந்ததல்ல. சூரியன் 11
உதிக்கிற திசை தொடங்கி, அது அஸ்தமிக்
கிற திசைவரைக்கும், என் நாமம் ஜாதிகளுக்கு
ள்ளே மகத்துவமாயிருக்கும்; [11]எல்லா இடங்க
ளிலும் என் நாமத்துக்குத் தூபமும் சுத்தமான
காணிக்கையும் செலுத்தப்படும்; என் நாமம்
ஜாதிகளுக்குள்ளே மகத்துவமாயிருக்கும் என்
று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.
நீங்களோ கர்த்தருடைய பந்தி அசுத்தமானது 12
என்றும், அதின் ஆகாரமாகிய அதின் பலன்
அற்பமானது என்றும் சொல்லுகிறதினாலே,
என் நாமத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்குகி
றீர்கள். இதோ, இது எவ்வளவு வருத்தமெ 13
ன்று சொல்லி, அதை ஒரு திரணமாய்ப்
பேசி, பீறுண்டதையும் கால் ஊனமானதை
யும் நசல்கொண்டதையும் கொண்டுவந்து கா
ணிக்கையாகச் செலுத்துகிறீர்கள் என்று
சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்; [12]அதை
உங்கள் கைகளில் அங்கீகரித்துக்கொள்வே
னோ என்று கர்த்தர் கேட்கிறார். தன் மந் 14
தையில் கடா இருக்கையில் கெட்டுப்போன
தை ஆண்டவருக்கு நேர்ந்துகொண்டு பலியி
டுகிற கபடஸ்தன் சபிக்கப்பட்டவன்; [13]என்
நாமம் ஜாதிகளுக்குள்ளே பயங்கரமாயிருக்
கும்; நான் மகத்துவமான ராஜா என்று சேனை
களின் கர்த்தர் சொல்லுகிறார்.

இப்போதும் ஆசாரியர்களே, இந்தக் கட் 2
டளை உங்களுக்குரியது. நீங்கள் கேளாமலும் 2
என் நாமத்துக்கு மகிமையைச் செலுத்தும்
படி இதைச் சிந்தியாமலுமிருந்தால், நான்
உங்களுக்குள்ளே சாபத்தை அனுப்பி, உங்
கள் ஆசீர்வாதங்களையும் சாபமாக்குவேன்;

[1]ஆம், நீங்கள் அதைச் சிந்தியாமற்போனதி
னால் அவைகளைச் சபித்தேன் என்று சேனை
3 களின் கர்த்தர் சொல்லுகிறார். இதோ, நான்
உங்களுடைய பயிரைக் கெடுத்து, உங்கள் பண்
டிகைகளின் சாணியையே உங்கள் முகங்க
ளில் இறைப்பேன்; [2]அதனோடேகூட நீங்களும்
4 தள்ளுபடியாவீர்கள். லேவியோடே பண்ணி
ன என் உடன்படிக்கை நிலைத்திருக்கும்ப
டிக்கு இந்தக் கட்டளையை உங்களிடத்திற்கு
அனுப்பினேன் என்கிறதை அப்பொழுது
அறிந்துகொள்வீர்கள் என்று சேனைகளின்
5 கர்த்தர் சொல்லுகிறார். அவனோடே பண்
ணின என் உடன்படிக்கை ஜீவனும் சமாதா
னமுமாக இருந்தது; [3]அவன் எனக்குப் பயப்
படும் பயத்தோடே இருக்கவேண்டுமென்று,
இவைகளை அவனுக்குக் கட்டளையிட்டேன்;
அப்படியே அவன் என் நாமத்துக்குப் பயந்
6 தும் இருந்தான். சத்தியவேதம் அவன் வா
யில் இருந்தது; [4]அவனுடைய உதடுகளில்
அநியாயம் காணப்படவில்லை; அவன் என்
னோடே சமாதானமும் யதார்த்தமுமாய்ச் சஞ்
சரித்து, [5]அநேகரை அக்கிரமத்தினின்று திரு
7 ப்பினான். ஆசாரியனுடைய உதடுகள் அறி
வைக் காக்கவேண்டும்; [6]வேதத்தை அவன்
வாயிலே தேடுவார்களே; [7]அவன் சேனைகளு
8 டைய கர்த்தரின் தூதன். நீங்களோ வழியை
விட்டு விலகி, அநேகரை வேதத்தைக்குறித்து
இடறப்பண்ணினீர்கள்; [8]லேவியின் உடன்ப
டிக்கையைக் கெடுத்துப்போட்டீர்கள் என்று
9 சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார். நீங்கள்
என் வழிகளைக் கைக்கொள்ளாமல் வேதத்
தைக்குறித்துப் பட்சபாதம் பண்ணினபடியி
னால் நானும் உங்களை எல்லா ஜனத்துக்கு
முன்பாகவும் அற்பரும் நீசருமாக்கினேன்.
10 நம்மெல்லாருக்கும் ஒரே பிதா இல்லையோ?
[9]ஒரே தேவன் நம்மைச் சிருஷ்டித்ததில்லை
யோ? நாம் நம்முடைய பிதாக்களின் உடன்
படிக்கையைப் பரிசுத்தக் குலைச்சலாக்கி, அவ
னவன் தன்தன் சகோதரனுக்குத் துரோகம்
11 பண்ணுவானேன்? யூதா ஜனங்கள் துரோ
கம்பண்ணினார்கள்; இஸ்ரவேலிலும் எருசலே
மிலும் அருவருப்பான காரியம் செய்யப்பட்
டது; [10]கர்த்தர் சிநேகிக்கிற பரிசுத்தத்தை
யூதா ஜனங்கள் பரிசுத்தக் குலைச்சலாக்கி அந்
நிய தேவதையின் குமாரத்திகளை விவாகம்
12 பண்ணினார்கள். இப்படிச் செய்கிறவன் எவ
னோ, அவன் காவல் காக்கிறவனாயினும், உத்
தரவுகொடுக்கிறவனாயினும், சேனைகளின் கர்
த்தருக்குக் காணிக்கை செலுத்துகிறவனாயி
னும், [11]அவனை யாக்கோபின் கூடாரங்களில்
13 இராதபடிக்குக் கர்த்தர் சங்கரிப்பார். நீங்
கள் இரண்டாந்தரமும் இதைச் செய்து, [12]கர்த்
தருடைய பீடத்தைக் கண்ணீரினாலும் அழு
கையினாலும் பெருமூச்சினாலும் நிரப்புகிறீர்
கள்; ஆகையால், அவர் இனிக் காணிக்கை
யை மதியார், அதை உங்கள் கைகளில் பிரிய
14 மாய் ஏற்றுக்கொள்ளவுமாட்டார். ஏன் என்று

கேட்கிறீர்கள்; கர்த்தர் உனக்கும் உன் இள
வயதின் மனைவிக்கும் சாட்சியாயிருக்கிறார்;
[13]உன் தோழியும் உன் உடன்படிக்கையின்
மனைவியுமாகிய அவளுக்கு நீ துரோகம்பண்
ணினாயே. அவர் ஒருவனையல்லவா படைத் 15
தார்? [14]ஆவி அவரிடத்தில் பரிபூரணமாயிருந்
ததே, பின்னை ஏன் ஒருவனைப் படைத்தார்?
[15]தேவபக்தியுள்ள சந்ததியைப் பெறும்படிதா
னே, ஆகையால் ஒருவனும் தன் இளவயதின்
மனைவிக்குத் துரோகம் பண்ணாதபடிக்கு,
உங்கள் ஆவியைக்குறித்து எச்சரிக்கையாயி
ருங்கள். தள்ளிவிடுதலை [16]நான் வெறுக்கி 16
றேன் என்று இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்
தர் சொல்லுகிறார்; அப்படிப்பட்டவன் கொ
டுமையினால் தன் வஸ்திரத்தை மூடுகிறான்
என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகி
றார்; ஆகையால் நீங்கள் துரோகம்பண்ணாமல்
உங்கள் ஆவியைக்குறித்து எச்சரிக்கையா
யிருங்கள்.
உங்கள் வார்த்தைகளினாலே கர்த்தரை வரு 17
த்தப்படுத்துகிறீர்கள்; [17]ஆனாலும் எதினாலே
அவரை வருத்தப்படுத்துகிறோம் என்கிறீர்
கள்; பொல்லாப்பைச் செய்கிறவனெவனும்
கர்த்தரின் பார்வைக்கு நல்லவன் என்றும்,
அப்படிப்பட்டவர்கள்பேரில் அவர் பிரியமா
யிருக்கிறாரென்றும், நியாயந்தீர்க்கிற தேவன்
எங்கேயென்றும், நீங்கள் சொல்லுகிறதினா
லேயே. இதோ, நான் என் தூதனை அனுப் 3
புகிறேன், [18]அவன் எனக்குமுன்பாகப் போய்,
வழியை ஆயத்தம்பண்ணுவான்; [19]அப்பொ
ழுது நீங்கள் தேடுகிற ஆண்டவரும் நீங்கள்
விரும்புகிற உடன்படிக்கையின் தூதனுமான
வர் தம்முடைய ஆலயத்துக்குத் தீவிரமாய் வரு
வார்; இதோ, வருகிறார் என்று சேனைகளின்
கர்த்தர் சொல்லுகிறார். ஆனாலும் அவர் 2
வரும் நாளைச் சகிப்பவன் யார்? [20]அவர் வெளிப்
படுகையில் நிலை நிற்பவன் யார்? [21]அவர் புட
மிடுகிறவனுடைய அக்கினியைப்போலவும்,
வண்ணாருடைய சவுக்காரத்தைப்போலவும்
இருப்பார். அவர் உட்கார்ந்து வெள்ளியைப் 3
புடமிட்டுச் சுத்திகரித்துக்கொண்டிருப்பார்;
அவர் லேவியின் புத்திரரைச் சுத்திகரித்து,
அவர்கள் கர்த்தருடையவர்களாயிருக்கும்படிக்
கும், நீதியாய் காணிக்கையைச் செலுத்தும்
படிக்கும், [22]அவர்களைப் பொன்னைப்போலவும்
வெள்ளியைப்போலவும் புடமிடுவார். அப் 4
பொழுது பூர்வநாட்களிலும் முந்தின வருஷங்
களிலும் இருந்ததுபோல, [23]யூதாவின் காணிக்
கையும் எருசலேமின் காணிக்கையும் கர்த்த
ருக்குப் பிரியமாயிருக்கும். நான் நியாயத் 5
தீர்ப்பு செய்யும்படி உங்களிடத்தில் வந்து,
சூனியக்காரருக்கும் [24]விபசாரருக்கும் பொய்
யாணை இடுகிறவர்களுக்கும், எனக்குப் பயப்
படாமல் விதவைகளும் திக்கற்ற பிள்ளைகளு
மாகிய கூலிக்காரரின் கூலியை அபகரித்துக்
கொள்ளுகிறவர்களுக்கும், பரதேசிக்கு அநி
யாயஞ் செய்கிறவர்களுக்கும் விரோதமாய்த்

1 லேவி. 26. 14. உபா. 28. 15
2 1 இரா. 14. 10
3 எண். 25. 12, 13. உபா. 33. 8, 10
4 உபா. 33. 10
5 எரே. 23. 22. யாக். 5. 20
6 லேவி. 10. 11
7 அப். 16. 17. 2 கொ. 5. 20. கலா. 4. 14
8 1 சாமு. 2. 17, 30. நெகே. 13. 29 லூக். 11. 45, 46
9 யோபு 31. 15. 1 கொ. 8. 6. எபே. 4. 6
10 எஸ்றா. 9. 1, 2: 10. 2. நெகே. 13. 23
11 யோசு. 23. 12, 13
12 சங். 78. 34-37
13 நீதி. 2. 17: 5. 18
14 மத். 19. 4, 5
15 1 கொ. 7. 14
16 உபா. 24. 1. மத். 5. 32: 19. 8
17 சங். 73. 3-15 ஏசா. 43. 24
18 மத். 11. 10. லூக். 1. 76: 7. 27
19 ஏசா. 40. 3: 63. 9. ஆகா. 2. 7. லூக். 2. 27
20 மத். 25. 10. வெளி. 6. 17
21 ஏசா. 4. 4. மத். 3. 10-12. 1 கொ. 3. 13-15
22 ஏசா. 1. 25. சக. 13. 9. 1 பே. 2. 5
23 1. 11
24 சக. 5. 4. எபி. 13. 4. யாக். 5. 4, 12

தீவிரமான சாட்சியாயிருப்பேன் என்று சே
6 னைகளின் கர்த்தர் சொல்லுகிறார். நான் கர்த்
தர், நான் மாறாதவர்; [1]ஆகையால் யாக்கோபின்
புத்திரராகிய நீங்கள் நிர்மூலமாகவில்லை.
7 நீங்கள் உங்கள் பிதாக்களின் நாட்கள் தொ
டங்கி என் கட்டளைகளைக் கைக்கொள்ளாமல்,
அவைகளை விட்டு விலகிப்போனீர்கள்; என்
னிடத்திற்குத் திரும்புங்கள், [2]அப்பொழுது
உங்களிடத்திற்குத் திரும்புவேன் என்று சே
னைகளின் கர்த்தர் சொல்லுகிறார்; நாங்கள்
எந்த விஷயத்தில் திரும்பவேண்டும் என்கிறீர்
8 கள். மனுஷன் தேவனை வஞ்சிக்கலாமா? நீங்
களோ என்னை வஞ்சிக்கிறீர்கள். எதிலே
உம்மை வஞ்சித்தோம் என்கிறீர்கள்? [3]தசம
9 பாகத்திலும் காணிக்கைகளிலுந்தானே. நீங்
கள் சபிக்கப்பட்டவர்கள்; ஜனத்தாராகிய நீங்
10 கள் எல்லாரும் என்னை வஞ்சித்தீர்கள். என்
ஆலயத்தில் ஆகாரம் உண்டாயிருக்கும்படித்
தசமபாகங்களையெல்லாம் பண்டசாலையிலே
கொண்டுவாருங்கள்; [4]அப்பொழுது நான் வா
னத்தின் பலகணிகளைத் திறந்து, இடங்கொள்
ளாமற் போகுமட்டும் உங்கள்மேல் ஆசீர்வா
தத்தை வருஷிக்கமாட்டேனோ வென்று அதி
னால் என்னைச் சோதித்துப்பாருங்கள் என்று
11 சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார். பூமி
யின் கனியைப் பட்சித்துப்போடுகிறவைகளை
உங்கள்நிமித்தம் கண்டிப்பேன்; [5]அவைகள்
உங்கள் நிலத்தின் பலனை அழிப்பதில்லை,
வெளியிலுள்ள திராட்சக்கொடி பழமில்லா
மற்போவதுமில்லை என்று சேனைகளின் கர்த்
12 தர் சொல்லுகிறார். அப்பொழுது எல்லா
ஜாதிகளும் உங்களைப் பாக்கியவான்கள் என்
பார்கள்; [6]தேசம் விரும்பப்படத்தக்கதாயிருக்
கும் என்று சேனைகளின் கர்த்தர் சொல்
லுகிறார்.
13 நீங்கள் எனக்கு விரோதமாய்ப் பேசின
பேச்சுகள் கடினமாயிருக்கிறது என்று கர்த்தர்
சொல்லுகிறார்; [7]ஆனாலும் உமக்கு விரோத
மாக என்னத்தைப் பேசினோம் என்கிறீர்கள்.
14 தேவனைச் சேவிப்பது விருதா, அவருடைய
கட்டளைகளைக் கைக்கொள்ளுகிறதினாலும்
[8]சேனைகளின் கர்த்தருக்கு முன்பாகத் துக்
கித்து நடக்கிறதினாலும் என்ன பிரயோஜனம்?
15 இப்போதும் அகங்காரிகளைப் பாக்கியவான்
கள் என்கிறோம்; தீமை செய்கிறவர்கள் திட
ப்படுகிறார்கள்; [9]அவர்கள் தேவனைப் பரீட்
சை பார்த்தாலும் விடுவிக்கப்படுகிறார்களே
என்று சொல்லுகிறீர்கள். அப்பொழுது கர்த் 16
தருக்குப் பயந்தவர்கள் ஒருவரோடொருவர்
பேசிக்கொள்வார்கள்: [10]கர்த்தர் கவனித்துக்கே
ட்பார்; கர்த்தருக்குப் பயந்தவர்களுக்காகவும்,
அவருடைய நாமத்தைத் தியானிக்கிறவர்களுக்
காகவும் [11]ஞாபகப் புஸ்தகம் ஒன்று அவருக்கு
முன்பாக எழுதப்பட்டிருக்கிறது. என் [12]சம் 17
பத்தை நான் சேர்க்கும் நாளிலே அவர்கள்
என்னுடையவர்களா யிருப்பார்கள் என்று
சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்; ஒரு
மனுஷன் தனக்கு ஊழியஞ்செய்கிற தன்னு
டைய குமாரனைக் கடாட்சிக்கிறதுபோல
நான் அவர்களைக் கடாட்சிப்பேன். அப்பொ 18
ழுது நீங்கள் நீதிமானுக்கும் துன்மார்க்கனுக்
கும், தேவனுக்கு ஊழியஞ் செய்கிறவனுக்
கும் அவருக்கு ஊழியஞ் செய்யாதவனுக்கும்
இருக்கிற [13]வித்தியாசத்தைத் திரும்பவும் காண்
பீர்கள். இதோ, [14]சூளையைப்போல எரிகிற 4
நாள் வரும்; அப்பொழுது அகங்காரிகள் யாவ
ரும் அக்கிரமஞ்செய்கிற யாவரும் துரும்பாயி
ருப்பார்கள்; [15]வரப்போகிற அந்த நாள் அவர்
களைச் சுட்டெரிக்கும்; அது அவர்களுக்கு
வேரையும் கொப்பையும் வைக்காமற்போகும்
என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.
ஆனாலும் என் நாமத்துக்குப் பயந்திருக்கிற 2
உங்கள்மேல் நீதியின் சூரியன் உதிக்கும்;
[16]அதின் செட்டைகளின் கீழ் ஆரோக்கியம்
இருக்கும்; நீங்கள் வெளியே புறப்பட்டுப்
போய், கொழுத்த கன்றுகளைப்போல வளரு
வீர்கள். துன்மார்க்கரை மிதிப்பீர்கள்; [17]நான் 3
இதைச் செய்யும் நாளிலே அவர்கள் உங்கள்
உள்ளங்கால்களின் கீழ் சாம்பலாயிருப்பார்கள்
என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.
ஓரேபிலே இஸ்ரவேலரெல்லாருக்காகவும் 4
என் தாசனாகிய மோசேக்கு நான் கற்பித்த
[18]நியாயப்பிரமாணமாகிய கட்டளைகளையும்
நியாயங்களையும் நினையுங்கள். இதோ, கர்த்தரு 5
டைய பெரிதும் பயங்கரமுமான நாள் வருகிற
தற்குமுன்னே நான் உங்களிடத்திற்கு [19]எலி
யா தீர்க்கதரிசியை அனுப்புகிறேன். நான் 6
வந்து பூமியைச் சங்காரத்தால் அடிக்காதப
டிக்கு, [20]அவன் பிதாக்களுடைய இருதயத்
தைப் பிள்ளைகளிடத்திற்கும், பிள்ளைகளு
டைய இருதயத்தை அவர்கள் பிதாக்களிடத்
திற்கும் திருப்புவான்.

1 எண். 23. 19. சங். 78. 38, 57. புல. 3. 22. ரோ. 11. 29. யாக். 1. 17
2 சக. 1. 3. எசே. 23. 27. அப். 7. 51
3 நெகே. 13. 10–12
4 2 நாளா. 31. 10, 11. நீதி. 3. 9, 10
5 ஆமோ. 4. 9
6 தானி. 8. 9
7 2. 17
8 யோபு 21. 14, 15. சங். 73. 13. செப். 1. 13
9 சங். 72. 12; 95. 9
10 உபா. 24. 1. சங். 66. 16
11 வெளி. 20. 12
12 யாத். 19. 5. உபா. 7. 6. ஏசா. 62. 3. தீத். 2. 14. 1 பே. 2. 9
13 சங். 58. 11
14 2 பே. 3. 7, 10
15 மத். 3. 12
16 3. 16. ஓசி. 14. 5–7. லூக். 1. 79. எபே. 5. 14. 2 பே. 1. 19. வெளி. 2. 28
17 2 சாமு. 22. 43. மீகா. 7. 10. சக. 10. 5
18 யாத். 20. 3. ழ. உபா. 4. 10. சங். 147. 19
19 யோவே. 2. 31. மத். 11. 14; 17. 10–13
20 சக. 5. 3; 14. 12

பழைய ஏற்பாடு முற்றிற்று.

# THE
# NEW TESTAMENT

OF OUR

## LORD AND SAVIOUR JESUS CHRIST

TRANSLATED INTO TAMIL FROM THE ORIGINAL GREEK

---

கர்த்தரும் உலக இரட்சகருமாகிய

இயேசுகிறிஸ்துவானவர் அருளிச்செய்த

# புதிய ஏற்பாடு

இது

கிரேக்குபாஷையிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு

சென்னபட்டணத்து

சத்தியவேத சங்கத்தாரால்

௧௯௧௪ – ௵

அச்சிற் பதிப்பிக்கப்பட்டது

BRITISH AND FOREIGN BIBLE SOCIETY

MADRAS AUXILIARY

1914

109

THE GOSPEL ACCORDING TO MATTHEW

# மத்தேயு எழுதின சுவிசேஷம்

1 [1]ஆபிரகாமின் குமாரனாகிய [2]தாவீதின் குமா
ரனான[3] இயேசுகிறிஸ்துவினுடைய வம்ச வர
லாறு:
2 ஆபிரகாம் [4]ஈசாக்கைப் *பெற்றான்; ஈசாக்கு
[5]யாக்கோபைப் பெற்றான்; யாக்கோபு [6]யூதா
வையும் அவன் சகோதரரையும் பெற்றான்;
3 யூதா [7]பாரேசையும் சாராவையும் தாமாரினி
டத்தில் பெற்றான்; பாரேஸ் [8]எஸ்ரோமைப்
பெற்றான்; எஸ்ரோம் [9]ஆராமைப் பெற்றான்;
4 ஆராம் அம்மினதாபைப் பெற்றான்; அம்மி
னதாப் நகசோனைப் பெற்றான்; நகசோன்
5 சல்மோனைப் பெற்றான்; சல்மோன் போ
வாசை ராகாபினிடத்தில் பெற்றான்; போ
வாஸ் ஓபேதை ரூத்தினிடத்தில் பெற்றான்;
6 ஓபேத் ஈசாயைப் பெற்றான்; ஈசாய் [10]தாவீது
ராஜாவைப் பெற்றான்.
தாவீது ராஜா உரியாவின் மனைவியாயி
ருந்தவளிடத்தில் [11]சாலொமோனைப் பெற்
7 றான்; சாலொமோன் [12]ரெகொபெயாமைப்
பெற்றான்; ரெகொபெயாம் அபியாவைப் பெற்
8 றான்; அபியா ஆசாவைப் பெற்றான்; ஆசா
யோசபாத்தைப் பெற்றான்; யோசபாத் யோ
ராமைப் பெற்றான்; யோராம் உசியாவைப்
9 பெற்றான்; உசியா யோதாமைப் பெற்றான்;
யோதாம் ஆகாசைப் பெற்றான்; ஆகாஸ்
10 எசேக்கியாவைப் பெற்றான்; எசேக்கியா
[13]மனாசேயைப் பெற்றான்; மனாசே ஆமோ
னைப் பெற்றான்; ஆமோன் யோசியாவைப்
11 பெற்றான்; பாபிலோனுக்குச் [14]சிறைப்பட்
டுப் போகுங் காலத்தில், †யோசியா எகொனி
யாவையும் அவனுடைய சகோதரரையும் பெற்
றான்.
12 பாபிலோனுக்குச் சிறைப்பட்டுப் போன
பின்பு, எகொனியா [15]சலாத்தியேலைப் பெற்
றான்; சலாத்தியேல் [16]சொரொபாபேலைப்
13 பெற்றான்; சொரொபாபேல் அபியூதைப்
பெற்றான்; அபியூத் எலியாக்கீமைப் பெற்
றான்; எலியாக்கீம் ஆசோரைப் பெற்றான்;
14 ஆசோர் சாதோக்கைப் பெற்றான்; சாதோக்கு
ஆகீமைப் பெற்றான்; ஆகீம் எலியூதைப் பெற்
15 றான்; எலியூத் எலெயாசாரைப் பெற்றான்;
எலெயாசார் மாத்தானைப் பெற்றான்; மாத்
16 தான் யாக்கோபைப் பெற்றான்; யாக்கோபு
மரியாளுடைய புருஷனாகிய யோசேப்பைப்
பெற்றான்; அவளிடத்தில் கிறிஸ்து என்னப்
படுகிற இயேசு பிறந்தார்.
இவ்விதமாய் உண்டான தலைமுறைகளெல் 17
லாம் ஆபிரகாம் முதல் தாவீது வரைக்கும்
பதினாலு தலைமுறைகளும்; தாவீது முதல்
பாபிலோனுக்குச்சிறைப்பட்டுப்போனகாலம்
வரைக்கும் பதினாலு தலைமுறைகளும்; பாபி
லோனுக்குச் சிறைப்பட்டுப் போன காலம்
முதல் கிறிஸ்து வரைக்கும் பதினாலு தலைமு
றைகளுமாம்.
இயேசுகிறிஸ்துவினுடைய [17]ஜெநநத்தின் 18
விவரமாவது: ‡அவருடைய தாயாகிய மரி
யாள் யோசேப்புக்கு நியமிக்கப்பட்டிருக்கை
யில், அவர்கள் கூடிவருமுன்னே, [18]அவள்
பரிசுத்த ஆவியினாலே கர்ப்பவதியானாள் என்று
காணப்பட்டது. அவள் புருஷனாகிய யோ 19
சேப்பு நீதிமானாயிருந்து, [19]அவளை அவமா
னப்படுத்த மனதில்லாமல், இரகசியமாய் அவ
ளைத் தள்ளிவிட யோசனையாயிருந்தான்.
அவன் இப்படிச் சிந்தித்துக்கொண்டிருக்கை 20
யில், கர்த்தருடைய தூதன் [20]சொப்பனத்தில்
அவனுக்குக் காணப்பட்டு: தாவீதின் குமார
னாகிய யோசேப்பே, உன் மனைவியாகிய மரி
யாளைச் சேர்த்துக்கொள்ள ஐயப்படாதே;
[21]அவளிடத்தில் உற்பத்தியாயிருக்கிறது பரி
சுத்த ஆவியினால் உண்டானது. அவள் ஒரு 21
குமாரனைப் பெறுவாள், அவருக்கு §**இயேசு**
என்று பேரிடுவாயாக; ஏனெனில் [22]அவர்
தமது ஜனங்களின் பாவங்களை நீக்கி அவர்களை
இரட்சிப்பார் என்றான்.
தீர்க்கதரிசியின் மூலமாய்க் கர்த்தராலே உ 22
ரைக்கப்பட்டது நிறைவேறும்படி இதெல்லாம்
நடந்தது. அவன்: [23]இதோ, ஒரு கன்னிகை 23
கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாள்;
அவருக்கு இம்மானுவேல் என்று பேரிடுவார்
கள் என்று சொன்னான். [24]இம்மானுவேல்
என்பதற்கு தேவன் நம்மோடிருக்கிறார் என்று
அர்த்தமாம்.
யோசேப்பு நித்திரைதெளிந்து எழுந்து, கர்த் 24
தருடைய தூதன் தனக்குக் கட்டளையிட்ட
படியே தன் மனைவியைச் சேர்த்துக்கொண்டு;
அவன் தன் [25]முதற்பேறான குமாரனைப் பெறு 25

[1] ஆதி. 12. 3; 22. 18. கலா. 3. 16
[2] 22. 42, 45. சங். 132. 11. அப். 2. 30
[3] லூக். 3. 23. ஷ. இரட்சணிய ஆண்டென்னப்படும் (A.D.) காலக்கணக்கு வருஷத்துக்கு முன்
[4] ஆதி. 21. 2–5
* ஜெனிப்பித்தான்
[5] ஆதி. 25. 26
[6] ஆதி. 29. 35
[7] ஆதி. 38. 27. ஷ
[8] ஆதி. 46. 12
[9] ரூத். 4. 19
[10] 1 சாமு. 17. 12
[11] 2 சாமு. 12. 24
[12] 1 நாளா. 3. 10. ஷ
[13] 2 இரா. 20. 21
[14] 2 இரா. 24. 14–16. எரே. 27. 19, 20. தானி. 1. 2
† யோசியா யாக்கீமையும் யாக்கீம் எகொனியாவையும் பெற்றான் என்றும் பாடம்
[15] 1 நாளா. 3. 17. ஷ
[16] நெகே. 12. 1. ஆகாய். 1. 1
[17] லூக். 1. 26. ஷ; 2. 1–7
‡ கிறிஸ்து பிறந்ததென்று சொல்லப்பட்ட வழக்கமான வருஷத் தொகைக்கு முன் இரண்டு வருஷம்
[18] லூக். 1. 35
[19] உபா. 24. 1
[20] யோபு 33. 15–17
[21] லூக். 1. 35
§ இரட்சகர்
[22] அப். 4. 12; 5. 31; 13. 23, 38
[23] ஏசா. 7. 14. ஷ
[24] யோ. 1. 14
[25] யாத். 13. 2

மனவும் அவனை அறியாதிருந்து, [1]அவருக்கு
இயேசு என்று பேரிட்டான்.

2 ஏரோது ராஜாவின் நாட்களில் [2]யூதேயாவி
லுள்ள பெத்லகேமிலே இயேசு பிறந்தபொ
ழுது, [3]கிழக்கிலிருந்து சாஸ்திரிகள் எருசலே
2 முக்கு வந்து, யூதருக்கு [4]ராஜாவாகப் பிறந்
திருக்கிறவர் எங்கே? [5]கிழக்கிலே அவருடைய
நட்சத்திரத்தைக் கண்டு, [6]அவரைப் பணிந்து
3 கொள்ள வந்தோம் என்றார்கள். ஏரோது ராஜா
அதைக் கேட்டபொழுது, அவனும் அவனோ
டேகூட எருசலேம் நகரத்தார் அனைவரும்
4 கலங்கினார்கள். அவன் பிரதான ஆசாரியர்
ஜனத்தின் வேதபாரகர் எல்லாரையும் [7]கூடி
வரச்செய்து: கிறிஸ்துவானவர் எங்கே பிறப்
பாரென்று அவர்களிடத்தில் விசாரித்தான்.
5 அதற்கு அவர்கள்: யூதேயாவிலுள்ள பெத்ல
கேமிலே பிறப்பார்; அதேனென்றால்:
6 யூதேயா தேசத்திலுள்ள பெத்லகேமே, [8]யூதா
வின் பிரபுக்களில் நீ சிறியதல்ல; என் ஜனமா
கிய இஸ்ரவேலை *ஆளும் பிரபு உன்னிடத்தி
லிருந்து புறப்படுவார் என்று, தீர்க்கதரிசியி
னால் எழுதப்பட்டிருக்கிறது என்றார்கள்.
7 அப்பொழுது ஏரோது, சாஸ்திரிகளை இரக
சியமாய் அழைத்து, நட்சத்திரம் காணப்பட்ட
காலத்தைக்குறித்து அவர்களிடத்தில் திட்ட
8 மாய் விசாரித்து: நீங்கள் போய், பிள்ளை
யைக்குறித்துத் திட்டமாய் விசாரியுங்கள்; நீங்
கள் அதைக் கண்டபின்பு, [9]நானும் வந்து
அதைப் பணிந்துகொள்ளும்படி எனக்கு அறி
வியுங்கள் என்று சொல்லி, அவர்களைப் பெத்
9 லகேமுக்கு அனுப்பினான். ராஜா சொன்ன
தை அவர்கள் கேட்டுப்போகையில், இதோ,
அவர்கள் கிழக்கிலே கண்ட நட்சத்திரம்
பிள்ளை இருந்த ஸ்தலத்திற்குமேல் வந்து நிற்
கும்வரைக்கும் அவர்களுக்குமுன் சென்றது.
10 அவர்கள் அந்த நட்சத்திரத்தைக் கண்டபோது,
[10]மிகுந்த ஆனந்த சந்தோஷமடைந்தார்கள்.
11 அவர்கள் அந்த வீட்டுக்குள் பிரவேசித்து, பிள்
ளையையும் அதின் தாயாகிய மரியாளையும்
கண்டு, சாஷ்டாங்கமாய் விழுந்து அதைப்
பணிந்துகொண்டு, தங்கள் பொக்கிஷங்களைத்
திறந்து, [11]பொன்னையும் தூபவர்க்கத்தையும்
வெள்ளைப்போளத்தையும் அதற்குக் காணிக்
12 கையாக வைத்தார்கள். பின்பு, அவர்கள்
ஏரோதினிடத்திற்குத் திரும்பிப் போகவேண்
டாமென்று [12]சொப்பனத்தில் தேவனால் எச்ச
ரிக்கப்பட்டு, வேறு வழியாய்த் தங்கள் தேசத்
திற்குத் திரும்பிப்போனார்கள்.
13 அவர்கள் போனபின்பு, கர்த்தருடைய
தூதன் சொப்பனத்தில் யோசேப்புக்குக்காண
ப்பட்டு: ஏரோது பிள்ளையைக் கொலைசெய்
யத் தேடுவான்; ஆதலால் நீ எழுந்து, பிள்ளை
யையும் அதின் தாயையும் கூட்டிக்கொண்டு
எகிப்துக்கு ஓடிப்போய், நான் உனக்குச்
சொல்லும்வரைக்கும் அங்கே இரு என்றான்.
14 அவன் எழுந்து, இரவிலே பிள்ளையையும்
அதின் தாயையும் கூட்டிக்கொண்டு, எகிப்
துக்குப் புறப்பட்டுப் போய், ஏரோதின் மரண 15
பரியந்தம் அங்கே இருந்தான். [13]எகிப்திலி
ருந்து என்னுடைய குமாரனை வரவழைத்
தேன் என்று, தீர்க்கதரிசியின் மூலமாய்க் கர்த்
தரால் உரைக்கப்பட்டது நிறைவேறும்படி
இப்படி நடந்தது. அப்பொழுது ஏரோது 16
தான் சாஸ்திரிகளால் வஞ்சிக்கப்பட்டதைக்
கண்டு, மிகுந்த கோபமடைந்து, ஆட்களை
அனுப்பி, தான் சாஸ்திரிகளிடத்தில் திட்ட
மாய் விசாரித்த காலத்தின்படியே, பெத்லகே
மிலும் அதின் சகல எல்லைகளிலுமிருந்த இர
ண்டு வயதுக்குட்பட்ட எல்லா ஆண்பிள்ளை
களையும் கொலைசெய்தான். புலம்பலும் அழு 17
கையும் மிகுந்த துக்கங்கொண்டாடலுமாகிய
கூக்குரல் ராமாவிலே கேட்கப்பட்டது; [14]ரா
கேல் தன் பிள்ளைகளுக்காக அழுது, அவை
கள் இல்லாதபடியால் ஆறுதலடையாதிருக்கி
றாள் என்று, எரேமியா தீர்க்கதரிசியினால் 18
உரைக்கப்பட்டது அப்பொழுது நிறைவே
றிற்று.
ஏரோது இறந்தபின்பு, கர்த்தருடைய தூதன் 19
எகிப்திலே யோசேப்புக்குச் சொப்பனத்தில்
காணப்பட்டு: நீ எழுந்து, பிள்ளையையும் 20
அதின் தாயையும் கூட்டிக்கொண்டு, இஸ்ர
வேல் தேசத்துக்குப் போ; [15]பிள்ளையின் பிரா
ணனை வாங்கத் தேடினவர்கள் இறந்துபோ
னார்கள் என்றான். அவன் எழுந்து பிள்ளை 21
யையும் அதின் தாயையும் கூட்டிக்கொண்டு
இஸ்ரவேல் தேசத்துக்கு வந்தான். ஆகிலும், 22
அர்கெலாயு தன் தகப்பனாகிய ஏரோதின் பட்
டத்துக்கு வந்து, யூதேயாவில் அரசாளுகிறான்
என்று கேள்விப்பட்டு, அங்கே போகப் பயந்
தான். அப்பொழுது, அவன் சொப்பனத்தில்
தேவனால் எச்சரிக்கப்பட்டு, [16]கலிலேயா நாட்
டின் புறங்களிலே விலகிப்போய், நாசரேத்து 23
[17]என்னும் ஊரிலே வந்து வாசம்பண்ணினான்.
[18]நசரேயன் என்னப்படுவார் என்று, தீர்க்கதரி
சிகளால் உரைக்கப்பட்டது நிறைவேறும்படி
இப்படி நடந்தது.

அந்நாட்களில் [19]யோவான்ஸ்நானன் [20]யூதே 3
யாவின் வனாந்தரத்தில் வந்து: மனந்திரும் 2
புங்கள், [21]பரலோகராஜ்யம் சமீபித்திருக்கிறது
என்று பிரசங்கம்பண்ணினான். கர்த்தருக்கு 3
வழியை ஆயத்தப்படுத்துங்கள்; [22]அவருக்குப்
பாதைகளைச் செவ்வைபண்ணுங்கள் என்று
வனாந்தரத்திலே கூப்பிடுகிறவனுடைய சத்தம்
உண்டென்று, ஏசாயா தீர்க்கதரிசியினால் சொ
ல்லப்பட்டவன் இவனே. இந்த யோவான் 4
[23]ஒட்டகமயிர் உடையைத் தரித்து, தன் அரை
யில் வார்க்கச்சையைக் கட்டிக்கொண்டிருந்
தான்; [24]வெட்டுக்கிளியும் காட்டுத்தேனும் அவ
னுக்கு ஆகாரமாயிருந்தது. அப்பொழுது, 5
[25]எருசலேம் நகரத்தாரும், யூதேயா தேசத்தார்
அனைவரும், யோர்தானுக்கு அடுத்த சுற்றுப்
புறத்தார் யாவரும் அவனிடத்திற்குப் போய்,
தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு, [26]யோர் 6
தான் நதியில் அவனால் ஞானஸ்நானம் பெற்

1 லூ. 2. 7, 21
2 லூ. 2. 4-7
3 ஆதி. 10. 30: 25. 6. 1 இரா. 4. 30
4 சகரி. 9. 9. லூ. 2. 11
5 எண். 24. 17. ஏசா. 60. 3
6 யோ. 5. 23
7 சங். 2. 2 லூ. 2. 7
8 மீகா. 5. 2. யோ. 7. 42: வெளி. 2. 27
* மேய்க்கும். ஏசா. 40. 11
9 நீதி. 26. 24
10 சங். 67. 4
11 சங். 72. 10. ஏசா. 60. 6
12 1. 20
13 ஓசி. 11. 1
14 எரே. 31. 15
15 யாத். 4. 19
16 3. 13. லூ. 2. 39
17 யோ. 1. 45
18 நியா. 13. 5 1 சாமு. 1. 11
19 மாற். 1. 3, 4, 15. லூ. 3. 2, 3. யோ. 1. 6, 28
20 யோசு. 14. 10
21 4. 17: 10. 7. தானி. 2. 44
22 ஏசா. 40. 3. மாற். 1. 3. லூ. 1. 76: 3. 4. யோ. 1. 23
23 11. 8. 2 இரா. 1. 8. சகரி. 13. 4. மாற். 1. 6
24 லேவி. 11. 22. 1 சாமு. 14. 25, 26
25 மாற். 1. 5. லூ. 3. 7
26 அப். 19. 4, 5, 18

7 ஞர்கள். பரிசேயரிலும் சதுசேயரிலும் அநே
கர் தன்னிடத்தில் ஞானஸ்நானம் பெறும்படி
வருகிறதை அவன் கண்டு: [1]விரியன்பாம்புக்
குட்டிகளே! [2]வருங்கோபத்துக்குத் தப்பித்துக்
கொள்ள உங்களுக்கு வகைகாட்டினவன் யார்?
8 *மனந்திரும்புதலுக்கு ஏற்ற கனிகளைக் கொ
9 டுங்கள். ஆபிரகாம் எங்களுக்குத் தகப்பன்
[3]என்று உங்களுக்குள்ளே சொல்லிக்கொள்ள
நினையாதிருங்கள்: தேவன் இந்தக் கல்லுகளி
ஞலே ஆபிரகாமுக்குப் பிள்ளைகளை உண்டு
பண்ண வல்லவராயிருக்கிறூர் என்று உங்க
10 ளுக்குச் சொல்லுகிறேன். இப்பொழுதே
கோடரியானது மரங்களின் வேர் அருகே
வைத்திருக்கிறது; [4]ஆகையால், நல்ல கனிகொ
டாத மரமெல்லாம் வெட்டுண்டு அக்கினியி
11 லே போடப்படும். மனந்திரும்புதலுக்கென்று
[5]நான் ஜலத்தினுல் உங்களுக்கு ஞானஸ்நானம்
கொடுக்கிறேன்; எனக்குப் பின் வருகிறவரோ
என்னிலும் வல்லவராயிருக்கிறூர், அவரு
டைய பாதரட்சைகளைச் சுமக்கிறதற்கு நான்
பாத்திரன் அல்ல; [6]அவர் பரிசுத்த ஆவியினு
லும் அக்கினியினுலும் உங்களுக்கு ஞானஸ்
12 நானம் கொடுப்பார். தூற்றுக்கூடை [7]அவர்
கையில் இருக்கிறது; அவர் தமது களத்தை
நன்ருய் விளக்கி, தமது கோதுமையைக் களஞ்
சியத்தில் சேர்ப்பார்; [8]பதரையோ அவியாத
அக்கினியினுல் சுட்டெரிப்பார் என்ருன்.
13 அப்பொழுது யோவானுல் [9]ஞானஸ்நானம்
பெறுவதற்கு இயேசு கலிலேயாவை விட்டு
யோர்தானுக்கு அருகே அவனிடத்தில் வந்
14 தார். யோவான் அவருக்குத் தடைசெய்து:
நான் உம்மாலே ஞானஸ்நானம் பெறவேண்
டியதாயிருக்க, நீர் என்னிடத்தில் வரலாமா
15 என்ருன். இயேசு அவனுக்குப் பிரதியுத்தர
மாக: இப்பொழுது இடங்கொடு, இப்படி எல்
லா நீதியையும் நிறைவேற்றுவது நமக்கு ஏற்ற
தாயிருக்கிறது என்ருர். அப்பொழுது அவ
16 ருக்கு இடங்கொடுத்தான். இயேசு ஞானஸ்
நானம் பெற்று, [10]ஜலத்திலிருந்து கரையே
றினவுடனே, இதோ, வானம் அவருக்குத்
திறக்கப்பட்டது; [11]தேவஆவி புருவைப்போல
இறங்கி, தம்மேல் வருகிறதைக் கண்டார்.
17 அன்றியும், [12]வானத்திலிருந்து ஒரு சத்தம்
உண்டாகி: [13]இவர் என்னுடைய நேசகுமா
ரன், இவரில் பிரியமாயிருக்கிறேன் என்று
உரைத்தது.

4 அப்பொழுது இயேசு [14]பிசாசினுல் சோதிக்
கப்படுவதற்கு [15]ஆவியானவராலே வனாந்தரத்
2 திற்குக் கொண்டுபோகப்பட்டார். அவர் இர
வும் பகலும் நாற்பதுநாள் உபவாசமாயிருந்த
3 பின்பு, அவருக்குப் பசியுண்டாயிற்று. அப்
பொழுது சோதனைக்காரன் அவரிடத்தில் வந்
து: நீர் தேவனுடைய குமாரனேயானுல், இந்
தக் கல்லுகள் அப்பங்களாகும்படி சொல்லும்
4 என்ருன். அவர் பிரதியுத்தரமாக: [16]மனு
ஷன் அப்பத்தினுலே மாத்திரமல்ல, தேவனு
டைய வாயிலிருந்து புறப்படுகிற ஒவ்வொரு
வார்த்தையினுலும் பிழைப்பான் என்று எழுதி
யிருக்கிறதே என்ருர். அப்பொழுது பிசாசு 5
அவரைப் பரிசுத்த நகரத்திற்குக் கொண்டு
போய், [17]தேவாலயத்து †உப்பரிகையின்மேல்
அவரை நிறுத்தி: நீர் தேவனுடைய குமார 6
னேயானுல் தாழக்குதியும்; ஏனெனில், [18]தம்
முடைய தூதர்களுக்கு உம்மைக்குறித்துக் கட்
டளையிடுவார்; உமது பாதம் கல்லில் இடருத
படிக்கு, அவர்கள் உம்மைக் கைகளில் ஏந்திக்
கொண்டு போவார்கள் என்பதாய், எழுதியி
ருக்கிறது என்று சொன்னுன். அதற்கு 7
இயேசு: [19]உன் தேவனுகிய கர்த்தரைப் பரீட்
சை பாராதிருப்பாயாக என்றும் எழுதியிருக்
கிறதே என்ருர். மறுபடியும், பிசாசு அவ 8
ரை மிகவும் உயர்ந்த மலையின்மேல் கொண்டு
போய், உலகத்தின் சகல ராஜ்யங்களையும்
அவைகளின் மகிமையையும் அவருக்குக் காண்
பித்து: நீர் சாஷ்டாங்கமாய் விழுந்து, என் 9
னைப் பணிந்துகொண்டால், இவைகளையெல்
லாம் உமக்குத் தருவேன் என்று சொன்னுன்.
அப்பொழுது இயேசு: அப்பாலே போ சாத் 10
தானே; [20]உன் தேவனுகிய கர்த்தரைப் பணிந்து
கொண்டு, அவர் ஒருவருக்கே ஆராதனை செய்
வாயாக என்று எழுதியிருக்கிறதே என்ருர்.
அப்பொழுது பிசாசானவன் அவரைவிட்டு 11
விலகிப்போனுன். [21]உடனே தேவதூதர்கள்
வந்து, அவருக்குப் பணிவிடை செய்தார்கள்.
யோவான் காவலில் வைக்கப்பட்டான் 12
என்று இயேசு கேள்விப்பட்டு, [22]கலிலேயா
வுக்குப் போய், நாசரேத்தை விட்டு, செபு 13
லோன் நப்தலி என்னும் நாடுகளின் எல்லை
களிலிருக்கும் கடற்கரைக்கு அருகான கப்பர்
நகூமிலே வந்து வாசம்பண்ணினுர். கடற் 14
கரையருகிலும் யோர்தானுக்கு அப்புறத்திலு
முள்ள [23]செபுலோன் நாடும் நப்தலி நாடும் ஆ
கிய புறஜாதியாருடைய கலிலேயாவிலே,
இருளில் இருக்கும் ஜனங்கள் [24]பெரிய வெளி 15
ச்சத்தைக் கண்டார்கள்; மரண இருளின்
திசையிலிருக்கிறவர்களுக்கு வெளிச்சம் உதித்
தது என்று, ஏசாயா தீர்க்கதரிசியினுல் உரைக் 16
கப்பட்டது நிறைவேறும்படி இப்படி நடந்தது.
அதுமுதல் இயேசு: [25]மனந்திரும்புங்கள், 17
பரலோகராஜ்யம் சமீபித்திருக்கிறது என்று
பிரசங்கிக்கத் தொடங்கினுர்.
இயேசு கலிலேயாக் கடலோரமாய் நடந்து 18
போகையில், மீன்பிடிக்கிறவர்களாயிருந்த இர
ண்டு சகோதரராகிய பேதுரு என்னப்பட்ட
சீமோனும், [26]அவன் சகோதரன் அந்திரேயா
வும், கடலில் வலைபோட்டுக்கொண்டிருக்கிற
போது, அவர்களைக் கண்டு: என் பின்னே 19
வாருங்கள், [27]உங்களை மனுஷரைப் பிடிக்கிற
வர்களாக்குவேன் என்ருர். உடனே அவர் 20
கள் வலைகளை விட்டு, [28]அவருக்குப் பின்
சென்ருர்கள். அவர் அவ்விடம் விட்டுப் போ 21
கையில், வேறே இரண்டு சகோதரராகிய செ
பெதேயுவின் மகன் யாக்கோபும், [29]அவன்
சகோதரன் யோவானும் தங்கள் தகப்பன் செ

1 12. 34: 23. 33. லூ. 3. 7-9
2 ஏசா. 51. 6. ரோ. 1. 18: 5. 9. 1 தெச. 1. 10
* குணப்படுதலுக்கு
3 யோவா. 8. 33, 39. அப். 13. 26. ரோ. 4. 1
4 7. 19. லூ. 13. 7, 9. யோவா. 15. 6
5 லூ. 3. 16. அப். 19. 4
6 அப். 1. 4: 2. 3, 4. 1 கொ. 12. 13
7 மல். 3. 2, 3
8 சங். 1. 4. மல். 4. 1. மாற். 9. 44
9 மாற். 1. 9, லூ. 3. 19, 20
10 மாற். 1. 10
11 ஏசா. 11. 2: 42. 1: 61. 1
12 யோவா. 5. 12, 28
13 சங். 2. 7. லூ. 9. 35. எபே. 1. 6. 2 பே. 1. 17
14 மாற். 1. 12. லூ. 4. 1. லூ
15 1 இரா. 18. 12. எசே. 11. 1, 24. அப். 8. 39
16 உபா. 8. 3
17 27. 53. நெகே. 11. 1, 18
† கோபுரச்சிகரம்
18 சங். 91. 11, 12
19 உபா. 6. 16
20 உபா. 6. 13: 10. 20. யோசு. 24. 14. 1 சாமு. 7. 3
21 எபி. 1. 6, 14
22 மாற். 1. 14. லூ. 3. 20: 4. 14. 31. யோவா. 4. 43
23 ஏசா. 9. 1, 2
24 ஏசா. 42. 6, 7. லூ. 2. 30
25 3. 2: 10. 7. மாற். 1. 14, 15
26 மாற். 1. 16-18. லூ. 5. 2. யோவா. 1. 42
27 லூ. 5. 10, 11. 1 கொ. 9. 20-22. 2 கொ. 12, 16
28 மாற். 10, 28. லூ. 18. 28
29 மாற். 1. 19, 20. லூ. 5. 10

பெதேயுவுடனே படவிலிருந்து, தங்கள் வலை
களைப் பழுதுபார்த்துக்கொண்டிருக்கிறபோ
து, அவர்களைக் கண்டு, அவர்களையும் அழைத்
22 தார். உடனே அவர்கள் படவையும் தங்கள்
தகப்பனையும் விட்டு, அவருக்குப் பின்சென்
றார்கள்.
23 பின்பு, இயேசு கலிலேயா எங்கும் சுற்றி
நடந்து, [1]அவர்களுடைய ஜெபஆலயங்களில்
உபதேசித்து, [2]ராஜ்யத்தின் *சுவிசேஷத்தைப்
பிரசங்கித்து, ஜனங்களுக்கு உண்டாயிருந்த
சகல வியாதிகளையும் சகல நோய்களையும் நீக்
24 கிச் சொஸ்தமாக்கினார். அவருடைய கீர்த்தி
சீரியா எங்கும் பிரசித்தமாயிற்று. அப்பொ
ழுது பலவித வியாதிகளையும் வேதனைகளையும்
அடைந்திருந்த சகல பிணியாளிகளையும், பிசா
சுபிடித்தவர்களையும், சந்திரரோகிகளையும்,
திமிர்வாதக்காரரையும் அவரிடத்தில் கொண்டு
வந்தார்கள்; அவர்களைச் சொஸ்தமாக்கினார்.
25 கலிலேயாவிலும், †தெக்கப்போலியிலும், எரு
சலேமிலும், யூதேயாவிலும், யோர்தானுக்கு
அப்புறத்திலும் இருந்து [3]திரளான ஜனங்கள்
வந்து, அவருக்குப் பின்சென்றார்கள்.

**5** அவர் திரளான ஜனங்களைக் கண்டு [4]மலை
யின்மேல் ஏறினார்; அவர் உட்கார்ந்தபொ
ழுது, அவருடைய சீஷர்கள் அவரிடத்தில்
2 வந்தார்கள். அப்பொழுது அவர் தமது வாயைத்
திறந்து அவர்களுக்கு உபதேசித்துச் சொன்
னது என்னவென்றால்:
3 ஆவியில் எளிமையுள்ளவர்கள் பாக்கிய
வான்கள்; [5]பரலோகராஜ்யம் அவர்களுடை
யது.
4 துயரப்படுகிறவர்கள் பாக்கியவான்கள்;
[6]அவர்கள் ‡ஆறுதலடைவார்கள்.
5 சாந்தகுணமுள்ளவர்கள் [7]பாக்கியவான்கள்;
[8]அவர்கள் பூமியைச் சுதந்தரித்துக்கொள்ளு
வார்கள்.
6 நீதியின்மேல் பசிதாகமுள்ளவர்கள் பாக்கி
யவான்கள்; [9]அவர்கள் திருப்தியடைவார்கள்.
7 இரக்கமுள்ளவர்கள் பாக்கியவான்கள்;
[10]அவர்கள் இரக்கம்பெறுவார்கள்.
8 இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள் பாக்கிய
வான்கள்; [11]அவர்கள் தேவனைத் தரிசிப்பார்
கள்.
9 சமாதானம் பண்ணுகிறவர்கள் பாக்கிய
வான்கள்; [12]அவர்கள் தேவனுடைய புத்திரர்
என்னப்படுவார்கள்.
10 நீதியினிமித்தம் துன்பப்படுகிறவர்கள் பாக்
கியவான்கள்; [13]பரலோகராஜ்யம் அவர்களு
டையது.
11 என்னிமித்தம் உங்களை நிந்தித்துத் துன்பப்
படுத்தி, பலவித தீமையான மொழிகளையும்
உங்கள்பேரில் பொய்யாய்ச் சொல்வார்களா
12 னால் [14]பாக்கியவான்களாயிருப்பீர்கள்; சந்
தோஷப்பட்டு, களிகூருங்கள்; [15]பரலோகத்தில்
உங்கள் பலன் மிகுதியாயிருக்கும்; உங்களுக்கு
முன்னிருந்த தீர்க்கதரிசிகளையும் அப்படியே
துன்பப்படுத்தினார்களே.

நீங்கள் பூமிக்கு உப்பாயிருக்கிறீர்கள்; [16]உப் 13
பானது சாரமற்றுப்போனால், எதினால் சார
மாக்கப்படும்? வெளியே கொட்டப்படுவதற்
கும், மனுஷரால் மிதிக்கப்படுவதற்குமேஒழிய
வேறொன்றுக்கும் உதவாது. நீங்கள் உலகத் 14
துக்கு [17]வெளிச்சமாயிருக்கிறீர்கள்; மலையின்
மேல் இருக்கிற பட்டணம் மறைந்திருக்கமாட்
டாது. விளக்கைக் கொளுத்தி மரக்காலால் 15
மூடிவைக்காமல், [18]விளக்குத் தண்டின்மேல்
வைப்பார்கள்; அப்பொழுது அது வீட்டிலுள்ள
யாவருக்கும் வெளிச்சங் கொடுக்கும். இவ் 16
விதமாய், மனுஷர் உங்கள் நற்கிரியைகளைக்
கண்டு, பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதாவை
மகிமைப்படுத்தும்படி, [19]உங்கள் வெளிச்சம்
அவர்கள் முன்பாகப் பிரகாசிக்கக்கடவது.
நியாயப்பிரமாணத்தையாகிலும் தீர்க்கதரி 17
சனங்களையாகிலும் அழிக்கிறதற்கு வந்தேன்
என்று எண்ணிக்கொள்ளாதேயுங்கள்; [20]அழிக்
கிறதற்கு அல்ல, நிறைவேற்றுகிறதற்கே வந்
தேன். வானமும் பூமியும் §ஒழிந்துபோனா 18
லும், நியாயப் பிரமாணத்திலுள்ளதெல்லாம்
நிறைவேறுமளவும், அதில் ஒரு சிறு எழுத்தா
கிலும், ஒரு எழுத்தின் உறுப்பாகிலும், ஒழிந்
துபோகாது என்று மெய்யாகவே உங்களுக்
குச் சொல்லுகிறேன். ஆகையால், இந்தக் கற் 19
பனைகள் எல்லாவற்றிலும் சிறிதான தொன்
றையாகிலும் மீறி, அவ்விதமாய் மனுஷருக்
குப் போதிக்கிறவன் பரலோக ராஜ்யத்தில்
எல்லாரிலும் சிறியவன் என்னப்படுவான்;
இவைகளைக் கைக்கொண்டு போதிக்கிறவ
னோ, [21]பரலோக ராஜ்யத்தில் பெரியவன் என்
னப்படுவான். வேதபாரகர் பரிசேயர் என் 20
பவர்களுடைய நீதியிலும் உங்கள் நீதி அதி
கமாயிராவிட்டால், [22]பரலோக ராஜ்யத்தில்
பிரவேசிக்கமாட்டீர்கள் என்று உங்களுக்குச்
சொல்லுகிறேன்.
கொலை செய்யாதிருப்பாயாக என்பதும், 21
கொலை செய்கிறவன் நியாயத்தீர்ப்புக்கு ஏது
வாயிருப்பான் என்பதும், [23]பூர்வத்தாருக்கு
உரைக்கப்பட்டதென்று கேள்விப்பட்டிருக்கி
றீர்கள். நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; 22
[24]தன் சகோதரனை நியாயமில்லாமல் கோபித்
துக்கொள்பவன் நியாயத்தீர்ப்புக்கு ஏதுவா
யிருப்பான்; தன் சகோதரனை ‖வீணனென்று
சொல்லுகிறவன் ஆலோசனைச் சங்கத்தீர்ப்
புக்கு ஏதுவாயிருப்பான்; ¶மூடனே என்று
சொல்லுகிறவன் எரிநரகத்துக்கு ஏதுவாயிருப்
பான். ஆகையால், நீ பலிபீடத்தினிடத்தில் 23
உன் காணிக்கையைச் செலுத்தவந்து, [25]உன்
பேரில் உன் சகோதரனுக்குக் **குறை உண்
டென்று அங்கே நினைவு கூருவாயாகில், அங் 24
கேதானே பலிபீடத்தின்முன் உன் காணிக்
கையை வைத்துவிட்டுப் போய், [26]முன்பு உன்
சகோதரனோடே ஒப்புரவாகி, பின்பு வந்து
உன் காணிக்கையைச் செலுத்து. எதிராளி 25
உன்னை நியாயாதிபதியினிடத்தில் ஒப்புக்கொ
டாமலும், நியாயாதிபதி உன்னைச் சேவகனி

---

1 9. 35. மாற். 1. 21, 39. லூக். 4. 15, 44
2 24. 14. மாற். 1. 14, 34
* நற்செய்தி
† பத்துப்பட்டணம்
3 மாற். 3. 8
4 மாற். 3. 13
5 சங். 51. 17. நீதி. 16. 19. ஏசா. 57. 15: 66. 2. லூக். 6. 20. யாக். 2. 5
6 ஏசா. 61. 2, 3. எசே. 7. 16. யோ. 16. 20. 2 கொ. 1. 7
‡ தேற்றப் படுவார்கள்
7 சேர. 4. 13
8 சங். 37. 11
9 சங். 145. 19. ஏசா. 55. 1: 65. 13
10 சங். 41. 1, 2. யாக். 2. 13
11 சங். 24. 3, 4. 1 கொ. 13. 12. எபி. 12. 14. 1 யோவா. 3. 2, 3
12 சங். 34. 14
13 2 கொ. 4. 17. 2 தீமோ. 2. 12. 1 பே. 3. 14
14 லூக். 6. 22. 1 பே. 4. 14
15 லூக். 6. 23. அப். 5. 41. ரோ. 5. 3
16 மாற். 9. 50. லூக். 14. 34
17 நீதி. 4. 18. பிலி. 2. 14
18 மாற். 4. 21
19 யோவா. 15. 8. 1 கொ. 14. 25. 1 பே. 2. 12
20 3. 15. சங். 40. 6–8. ஏசா. 42. 21. ரோ. 3. 31. கலா. 3. 24
§ ஒழிந்துபோகிறவரைக்கும். லூக். 16. 17
21 1 சாமு. 2. 30. யாக். 2. 10
22 23. 23–28. ரோ. 10. 3. பிலி. 3. 9
23 யாத். 20. 13. உபா. 5. 17
24 1 யோவா. 3. 15
‖ ராக்கா அற்பன். நீசன். 2 சாமு. 6. 20. யாக். 2. 20.
¶ மோரே
25 8. 4: 28. 19
** விரோதம்
26 18. 19. யோபு 42. 8. 1 தீமோ. 2. 8. 1 பே. 3. 7

டத்தில் ஒப்புக்கொடாமலும், நீ சிறைச்சாலை
யில் வைக்கப்படாமலும் இருக்கும்படியாக,
[1]நீ உன் எதிராளியோடு வழியில் இருக்கும்
போதே சீக்கிரமாய் அவனுடனே நல்மனம்
26 பொருந்து. பொருந்தாவிட்டால், நீ ஒரு காசும்
குறைவின்றிக் கொடுத்துத் தீர்க்குமட்டும் அவ்
விடத்திலிருந்து புறப்படமாட்டாய் என்று,
மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன்.
27 விபசாரஞ் செய்யாதிருப்பாயாக என்பது
பூர்வத்தாருக்கு [2]உரைக்கப்பட்டதென்று கேள்
28 விப்பட்டிருக்கிறீர்கள். நான் உங்களுக்குச்
சொல்லுகிறேன்; [3]ஒரு ஸ்திரீயை இச்சை
யோடு பார்க்கிற எவனும் தன் இருதயத்தில்
29 அவளோடே விபசாரஞ் செய்தாயிற்று. உன்
வலதுகண் உனக்கு *இடறலுண்டாக்கினால்,
அதைப் பிடுங்கி எறிந்துபோடு; [4]உன் சரீரம்
முழுவதும் நரகத்தில் தள்ளப்படுவதைப்பார்க்
கிலும், உன் அவயவங்களில் ஒன்று கெட்டுப்
30 போவது உனக்கு நலமாயிருக்கும். உன் வல
துகை உனக்கு இடறலுண்டாக்கினால், அதைத்
தறித்து எறிந்துபோடு; உன் சரீரம் முழுவதும்
நரகத்தில் தள்ளப்படுவதைப்பார்க்கிலும், உன்
அவயவங்களில் ஒன்று கெட்டுப்போவது உன
31 க்கு நலமாயிருக்கும். தன் மனைவியைத் தள்
ளிவிடுகிற எவனும், [5]தள்ளுதற்சீட்டை அவ
ளுக்குக் கொடுக்கக்கடவன் என்று உரைக்கப்
32 பட்டது. நான் உங்களுக்குச்சொல்லுகிறேன்;
[6]வேசித்தன முகாந்தரத்தினாலொழிய தன்
மனைவியைத் தள்ளிவிடுகிறவன், அவளை விப
சாரஞ் செய்யப்பண்ணுகிறவனாயிருப்பான்;
அப்படித் தள்ளிவிடப்பட்டவளை விவாகம்
பண்ணுகிறவனும் விபசாரஞ் செய்கிறவனா
யிருப்பான்.
33 அன்றியும், பொய்யாணையிடாமல், உன்
ஆணைகளைக் கர்த்தர் முன்னிலையாய்ச் செலுத்
துவாயாக என்று [7]பூர்வத்தாருக்கு உரைக்கப்
பட்டதென்று கேள்விப்பட் டிருக்கிறீர்கள்.
34 நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; [8]பரிச்
சேதம் சத்தியம் பண்ணவேண்டாம்; வானத்
தின்பேரில் சத்தியம் பண்ணவேண்டாம்,
35 [9]அது தேவனுடைய சிங்காசனம். பூமியின்
பேரிலும் சத்தியம் பண்ணவேண்டாம், அது
அவருடைய பாதபடி; எருசலேமின்பேரிலும்
சத்தியம் பண்ணவேண்டாம், [10]அது மகாரா
36 ஜாவினுடைய நகரம். உன் சிரசின்பேரிலும்
சத்தியம் பண்ணவேண்டாம், அதின் ஒரு
மயிரையாவது வெண்மையாக்கவும் கறுப்பாக்
37 கவும் உன்னால் கூடாதே. †உள்ளதை உள்ள
தென்றும், இல்லதை இல்லதென்றும் சொல்
லுங்கள்; இதற்கு மிஞ்சினது தீமையினால்
உண்டாயிருக்கும்.
38 கண்ணுக்குக் கண், [11]பல்லுக்குப் பல்
என்று, உரைக்கப்பட்டதைக் கேள்விப்பட்
39 டிருக்கிறீர்கள்: நான் உங்களுக்குச் சொல்
லுகிறேன்; [12]தீமையோடு எதிர்த்து நிற்கவேண்
டாம்; ஒருவன் உன்னை வலது கன்னத்தில்
அறைந்தால், [13]அவனுக்கு மறு கன்னத்தையும்
‡திருப்பிக்கொடு. உன்னோடு வழக்காடி உன் 40
வஸ்திரத்தை எடுத்துக்கொள்ள வேண்டுமென்
றிருக்கிறவனுக்கு உன் அங்கியையும் விட்டு
விடு. ஒருவன் உன்னை §ஒரு மைல் தூரம் 41
வரப் பலவந்தம் பண்ணினால், அவனோடு
இரண்டுமைல் தூரம்போ. உன்னிடத்தில் 42
கேட்கிறவனுக்குக் கொடு, [14]உன்னிடத்தில்
கடன்வாங்க விரும்புகிறவனுக்கு முகங்கோ
ணாதே.
உனக்கடுத்தவனைச் சிநேகித்து, [15]உன் சத்து 43
ருவைப் பகைப்பாயாக என்று சொல்லப்பட்
டதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். நான் உங் 44
களுக்குச் சொல்லுகிறேன், [16]உங்கள் சத்து
ருக்களைச் சிநேகியுங்கள்; உங்களைச் சபிக்கிற
வர்களை ஆசீர்வதியுங்கள்; உங்களைப் பகைக்
கிறவர்களுக்கு நன்மைசெய்யுங்கள்; [17]உங்களை
நிந்திக்கிறவர்களுக்காகவும் உங்களைத் துன்பப்
படுத்துகிறவர்களுக்காகவும் ஜெபம் பண்ணு
ங்கள். இப்படிச் செய்வதினால் நீங்கள் பர 45
லோகத்திலிருக்கிற உங்கள் பிதாவுக்குப் புத்
திரராயிருப்பீர்கள்; [18]அவர் தீயோர்மேலும் நல்
லோர்மேலும் தமது சூரியனை உதிக்கப்பண்ணி,
நீதியுள்ளவர்கள் மேலும் அநீதியுள்ளவர்கள்
மேலும் மழையைப் பெய்யப்பண்ணுகிறார்.
உங்களைச் சிநேகிக்கிறவர்களையே நீங்கள் சிநே 46
கிப்பீர்களானால், [19]உங்களுக்குப் பலன் என்ன?
ஆயக்காரரும் அப்படியே செய்கிறார்கள் அல்
லவா? உங்கள் சகோதரரைமாத்திரம் ||வாழ்த் 47
துவீர்களானால், நீங்கள் விசேஷித்துச்செய்
கிறது என்ன? ஆயக்காரரும் அப்படிச் செய்
கிறார்கள் அல்லவா? ஆகையால், பரலோகத் 48
திலிருக்கிற உங்கள் பிதா பூரண சற்குணரா
யிருக்கிறதுபோல, [20]நீங்களும் பூரண சற்கு
ணராயிருக்கக் கடவீர்கள்.

மனுஷர் காணவேண்டுமென்று அவர்க 6
ளுக்கு முன்பாக உங்கள் ¶தர்மத்தைச் செய்
யாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள்; செய்
தால், பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதா
வினிடத்தில் உங்களுக்குப் பலனில்லை.
ஆகையால் நீ தர்மஞ்செய்யும்போது, மனு 2
ஷரால் புகழப்படுவதற்கு, மாயக்காரர் ஆலயங்
களிலும், வீதிகளிலும் செய்வதுபோல, [21]உன
க்கு முன்பாகத் தாரை ஊதுவியாதே; அவர்
கள் தங்கள் பலனை அடைந்து தீர்ந்ததென்று
மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.
நீயோ தர்மஞ்செய்யும்போது, உன் தர்மம் 3
அந்தரங்கமாயிருப்பதற்கு, உன் வலதுகை
செய்கிறதை உன் இடதுகை அறியாதிருக்கக்
கடவது. அப்பொழுது அந்தரங்கத்தில் பார்க் 4
கிற உன் பிதா [22]தாமே உனக்கு வெளியரங்க
மாய்ப் பலனளிப்பார்.
அன்றியும் நீ ஜெபம்பண்ணும்போது மா 5
யக்காரரைப்போலிருக்கவேண்டாம்; மனுஷர்
காணும்படியாக அவர்கள் ஜெபஆலயங்களி
லும் வீதிகளின் சந்திகளிலும் நின்று ஜெபம்
பண்ண விரும்புகிறார்கள்; [23]அவர்கள் தங்கள்
பலனை அடைந்து தீர்ந்ததென்று மெய்யாகவே

1 நீதி. 25. 8. லூ. 12. 58, 59
2 யாத். 20. 14. உபா. 5. 18
3 யோபு 31. 1. நீதி. 6. 25
* தடுக்கல்
4 ரோ. 8. 13. 1 கொ. 9. 27
5 உபா. 24. 1. எரே. 3. 1. மாற். 10. 9.
6 19. 9. 1 கொ. 7. 10, 11
7 லேவி. 19. 12. எண். 30. 2. உபா. 5. 11; 23. 23
8 23. 16, 22. யாக். 5. 12
9 ஏசா. 66. 1
10 சங். 48. 2. வெளி. 21. 2, 10
† ஆம், ஆம், அல்ல, அல்ல. கொலோ. 4. 6. யாக். 5. 12
11 யாத். 21. 24. லேவி. 24. 20. உபா. 19. 21
12 நீதி. 20. 22; 24. 29. ரோ. 12. 17, 19
13 ஏசா. 50. 6
‡ திருப்பிக்காட்டு
§ நாழிகைவழி 27. 32
14 உபா. 15. 7, 10, 11
15 லேவி. 19. 18. உபா. 23. 6
16 ரோ. 12. 14, 20
17 லூ. 23. 34. அப். 7. 60
18 யோபு, 25. 3
19 லூ. 6. 32
|| வினவு
20 ஆதி. 17. 1. உபா. 18. 13. லூ. 6. 36, 40. கொலோ. 1. 28. 1 பே. 1. 15, 16
¶ நீதி, அறம், தானம். உபா. 24. 13. சங். 112. 9. தானி. 4. 27. 2 கொ. 9. 9, 10
21 ரோ. 12. 8
22 லூ. 8. 17; 14. 14
23 நீதி. 16. 5. யாக். 4. 6

6 உங்களுக்குச் சொல்லுகிறேன். நீயோ ஜெ
பம்பண்ணும்போது, [4]உன் அறைவீட்டுக்குள்
பிரவேசித்து, உன் கதவைப் பூட்டி, அந்தரங்
கத்திலிருக்கிற உன் பிதாவை நோக்கி ஜெபம்
பண்ணு; [1]அப்பொழுது, அந்தரங்கத்தில்
பார்க்கிற உன் பிதா வெளியரங்கமாய் உனக்
7 குப் பலனளிப்பார். அன்றியும் நீங்கள் ஜெ
பம் பண்ணும்போது, [3]அஞ்ஞானிகளைப்
போல வீண் வார்த்தைகளை அலப்பாதேயுங்
கள்; அவர்கள், [4]அதிக வசனிப்பினால் தங்கள்
ஜெபம் கேட்கப்படுமென்று நினைக்கிறார்கள்.
8 அவர்களைப்போல நீங்கள் செய்யாதிருங்கள்;
உங்கள் பிதாவை நோக்கி நீங்கள் வேண்டிக்
கொள்ளுகிறதற்கு முன்னமே [5]உங்களுக்கு
இன்னது தேவை என்று அவர் அறிந்திருக்கி
9 றார். நீங்கள் ஜெபம்பண்ணவேண்டிய விதமா
வது:[6]பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதா
வே, உம்முடைய நாமம் *பரிசுத்தப்படுவதாக.
10 உம்முடைய [7]ராஜ்யம் வருவதாக; உம்முடைய
[8]சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுகிறது
போல பூமியிலேயும் செய்யப்படுவதாக.
11 †எங்களுக்கு வேண்டிய ஆகாரத்தை இன்று
12 எங்களுக்குத் தாரும். எங்கள் கடனாளிகளுக்கு
நாங்கள் மன்னிக்கிறதுபோல [9]எங்கள் கடன்
13 களை எங்களுக்கு மன்னியும். எங்களைச்
[10]சோதனைக்குட்படப்பண்ணாமல், ‡தீமையி
னின்று எங்களை இரட்சித்துக்கொள்ளும்,
[11]ராஜ்யமும், வல்லமையும், மகிமையும் என்
றென்றைக்கும் உம்முடையவைகளே, ஆமெ
14 ன், என்பதே. மனுஷருடைய தப்பிதங்களை
நீங்கள் அவர்களுக்கு மன்னித்தால்,[12]உங்கள்
15 பரமபிதா உங்களுக்கும் மன்னிப்பார். மனு
ஷருடைய தப்பிதங்களை நீங்கள் அவர்களுக்கு
மன்னியாதிருந்தால், [13]உங்கள் பிதா உங்கள்
தப்பிதங்களையும் மன்னியாதிருப்பார்.
16 நீங்கள் உபவாசிக்கும்போது, [14]மாயக்கார
ரைப்போல முகவாடலாய் இராதேயுங்கள்;
அவர்கள் உபவாசிக்கிறதை மனுஷர் காணும்
பொருட்டாக, தங்கள் முகங்களை வாடப்பண்
ணுகிறார்கள்; அவர்கள் தங்கள் பலனை அடை
ந்து தீர்ந்ததென்று, மெய்யாகவே உங்களுக்
17 குச் சொல்லுகிறேன். நீயோ உபவாசிக்கும்
போது, அந்த உபவாசம் மனுஷர்களுக்குக்
காணப்படாமல், அந்தரங்கத்தில் இருக்கிற
உன் பிதாவுக்கே காணப்படும்படியாக, [15]உன்
தலைக்கு எண்ணெய்பூசி, உன் முகத்தைக்
18 கழுவு. அப்பொழுது, அந்தரங்கத்தில் பார்க்
கிற உன் பிதா உனக்கு வெளியரங்கமாய்ப்
பலனளிப்பார்.
19 பூமியிலே உங்களுக்குப் பொக்கிஷங்களைச்
சேர்த்துவைக்கவேண்டாம்;[16]இங்கே பூச்சியும்
துருவும் அவைகளைக் கெடுக்கும்; இங்கே
20 திருடரும் கன்னமிட்டுத் திருடுவார்கள்: பர
லோகத்திலே உங்களுக்குப் பொக்கிஷங்களைச்
சேர்த்துவையுங்கள்; [17]அங்கே பூச்சியாவது
துருவாவது கெடுக்கிறதும் இல்லை; அங்கே
திருடர் கன்னமிட்டுத் திருடுகிறதும் இல்லை.

உங்கள் பொக்கிஷம் எங்கேயிருக்கிறதோ அங் 21
கே உங்கள் இருதயமும் இருக்கும். கண்ணா 22
னது சரீரத்தின் விளக்காயிருக்கிறது; உன்
கண் தெளிவாயிருந்தால், [18]உன் சரீரம் முழு
வதும் வெளிச்சமாயிருக்கும். உன் கண் 23
கெட்டதாயிருந்தால், உன் சரீரம் முழுவதும்
இருளாயிருக்கும்; இப்படி உன்னிலுள்ள
வெளிச்சம் இருளாயிருந்தால், அவ்விருள் எவ்
வளவு அதிகமாயிருக்கும்! இரண்டு எஜமான் 24
களுக்கு ஊழியஞ்செய்ய ஒருவனாலும் கூடா
து; [19]ஒருவனைப் பகைத்து, மற்றவனைச் சிநே
கிப்பான்; அல்லது ஒருவனைப் பற்றிக்
கொண்டு, மற்றவனை அசட்டைபண்ணுவான்;
தேவனுக்கும் §உலகப்பொருளுக்கும் ஊழி
யஞ்செய்ய உங்களால் கூடாது. ஆகையால், 25
என்னத்தை உண்போம், என்னத்தைக் குடிப்
போம் என்று உங்கள் ஜீவனுக்காகவும்; என்
னத்தை உடுப்போம் என்று உங்கள் சரீரத்துக்
காகவும் [20]கவலைப்படாதிருங்கள் என்று, உங்
களுக்குச் சொல்லுகிறேன்; ஆகாரத்தைப்
பார்க்கிலும் ஜீவனும், உடையைப்பார்க்கிலும்
சரீரமும் விசேஷித்தவைகள் அல்லவா? ஆகா 26
யத்துப் பட்சிகளைக் கவனித்துப் பாருங்கள்;
[21]அவைகள் விதைக்கிறதுமில்லை, அறுக்கிறது
மில்லை, களஞ்சியங்களில் சேர்த்துவைக்கிறது
மில்லை; அவைகளையும் உங்கள் பரமபிதா பிழை
ப்பூட்டுகிறார்; அவைகளைப்பார்க்கிலும் நீங்
கள் விசேஷித்தவர்கள் அல்லவா? கவலைப் 27
படுகிறதினாலே உங்களில் எவன் தன் ‖சரீர
அளவோடு ஒரு முழத்தைக் கூட்டுவான்?
உடைக்காகவும் நீங்கள் கவலைப்படுகிறதென் 28
ன? ¶காட்டுப் புஷ்பங்கள் எப்படி வளருகிற
தென்று கவனித்துப் பாருங்கள்; அவைகள்
உழைக்கிறதுமில்லை, நூற்கிறதுமில்லை; என் 29
றாலும், சாலொமோன் முதலாய் தன் சர்வ
மகிமையிலும் அவைகளில் ஒன்றைப்போலா
கிலும் உடுத்தியிருந்ததில்லை என்று, உங்களுக்
குச் சொல்லுகிறேன். அற்ப விசுவாசிகளே! 30
இன்றைக்கு இருந்து நாளைக்கு அடுப்பிலே
போடப்படும் காட்டுப் புல்லுக்கு தேவன் இவ்
விதமாக உடுத்துவித்தால், உங்களுக்கு உடுத்து
விப்பது அதிக நிச்சயமல்லவா? ஆகையால், 31
என்னத்தை உண்போம், என்னத்தைக் குடிப்
போம், என்னத்தை உடுப்போம் என்று, [22]கவ
லைப்படாதிருங்கள். இவைகளையெல்லாம்** அ 32
ஞ்ஞானிகள் நாடித் தேடுகிறார்கள்; இவைக
ளெல்லாம் உங்களுக்கு வேண்டியவைகள்
என்று உங்கள் பரமபிதா அறிந்திருக்கிறார்.
முதலாவது தேவனுடைய ராஜ்யத்தையும் 33
அவருடைய நீதியையும் தேடுங்கள்; [23]அப்
பொழுது இவைகளெல்லாம் உங்களுக்குக்கூ
டக் கொடுக்கப்படும். ஆகையால், நாளைக் 34
காகக் கவலைப்படாதிருங்கள்; [24]நாளையத்தினம்
தன்னுடையவைகளுக்காகக் கவலைப்படும்.
அந்தந்த நாளுக்கு அதினதின் பாடு போதும்.
நீங்கள் குற்றவாளிகளென்று தீர்க்கப்படா 7
தபடிக்கு[25]மற்றவர்களைக்குற்றவாளிகளென்று

1 2 இரா. 4. 33
2 சங். 34. 15. ஏசா. 65. 24
3 பிர. 5. 2
4 1 இரா. 18. 26, 29. ஷ
5 லூக். 12. 30. யோ. 16. 23-27
6 சங். 115. 3. லூக். 11. 2. ஷ. ரோ. 8. 15
* அர்ச்சிக்கப் படுவதாக. சங். 119. 109: 139, 20
7 16. 28. வெளி. 11. 15
8 26. 39, 42. சங். 103. 20, 21. அப். 21. 14
† அன்றன்றுள்ளவைகள் அப்பத்தை. யோபு 23. 12. நீதி. 30. 8. ஏசா. 33. 16
9 18. 21-35. லூக். 7. 40-48.
10 26. 41. லூக். 22. 40, 46. 1 கொரி. 10. 13. 2 பே. 2. 9. வெளி. 3. 10
‡ தீயவன். யோவா. 17. 15
11 1 நாளா. 20. 11. வெளி. 5. 12, 13
12 மாற். 11. 25, 26. எபே. 4. 31, 32
13 18. 35. யாக். 2. 13
14 ஏசா. 58. 3, 5
15 ரூத். 3. 3. தானி. 10. 3
16 நீதி. 23. 4. லூக். 18. 24, 25. எபி. 13. 5. யாக். 5. 1. ஷ
17 ஏசா. 33. 6. லூக். 12. 33, 34. 1 தீமோ. 6. 19. 1 பே. 1. 4
18 லூக். 11. 34, 36
19 லூக். 16. 13
§ மம்மோன். கலா. 1. 10. 1 தீமோ. 6. 17. 2 தீமோ. 4. 10. யாக். 4. 4. 1 யோ. 2. 15
20 சங். 55. 22. லூக். 12. 22, 23. 1 கொரி. 7. 32. பிலி. 4. 6. 1 பே. 5. 7
21 யோபு 38. 41. சங். 147. 9. லூக். 12. 24. ஷ
‖ ஆயுசு
¶ லீலி. 1 இரா. 7. 19
22 சங். 37. 3; 55. 22. 1 பே. 5.
** புறஜாதிகள்
23 சங். 37. 25. மாற். 10. 30. 1 தீமோ. 4. 8
24 உபா. 33. 25. எபி. 13. 5, 6
25 லூக். 6. 37. ஷ. ரோ. 2. 1. 1 கொரி. 4. 5. யாக். 4. 12, 13

2 தீர்க்காதிருங்கள். ஏனெனில், நீங்கள் மற்ற
வர்களைத் தீர்க்கிற தீர்ப்பின்படியே நீங்களும்
தீர்க்கப்படுவீர்கள்; [1]நீங்கள் மற்றவர்களுக்கு
அளக்கிற அளவின்படியே உங்களுக்கும்
3 அளக்கப்படும். நீ உன் கண்ணிலிருக்கிற
உத்திரத்தை உணராமல், [2]உன் சகோதரன்
கண்ணிலிருக்கிற துரும்பைப் பார்க்கிறதெ
4 ன்ன? இதோ, உன் கண்ணில் உத்திரம்
இருக்கையில் உன் சகோதரனை நோக்கி:
நான் உன் கண்ணிலிருக்கும் துரும்பை எடுத்
துப்போடட்டும் என்று நீ சொல்வதெப்படி?
5 மாயக்காரனே! முன்பு உன் கண்ணிலிருக்கிற
உத்திரத்தைஎடுத்துப்போடு;பின்புஉன் சகோ
தரன் கண்ணிலிருக்கிற துரும்பை எடுத்துப்
போட வகைபார்ப்பாய்.
6 பரிசுத்தமானதை நாய்களுக்குக் கொடாதே
யுங்கள்; [3]உங்கள் முத்துகளைப் பன்றிகள்முன்
போடாதேயுங்கள்; போட்டால் தங்கள் கால்
களால் அவைகளை மிதித்து,திரும்பிக்கொண்டு
உங்களைப் பீறிப்போடும்.
7 கேளுங்கள், [4]அப்பொழுது உங்களுக்குக்
கொடுக்கப்படும்; தேடுங்கள், அப்பொழுது
கண்டடைவீர்கள்; தட்டுங்கள், அப்பொழுது
8 உங்களுக்குத் திறக்கப்படும்; ஏனென்றால்,
[5]கேட்கிறவன் எவனும் பெற்றுக்கொள்ளு
கிறான்; தேடுகிறவன் கண்டடைகிறான்; தட்டு
9 கிறவனுக்குத் திறக்கப்படும். உங்களில் எந்த
மனுஷனானாலும் தன்னிடத்தில் [6]அப்பத்தைக்
கேட்கிற தன் மகனுக்குக் கல்லைக் கொடுப்
10 பானோ? மீனைக்கேட்டால் அவனுக்குப் பாம்
11 பைக் கொடுப்பானோ? ஆகையால், பொல்லாத
வர்களாகிய [7]நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்கு
நல்ல ஈவுகளைக் கொடுக்க அறிந்திருக்கும்
போது, [8]பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதா
தம்மிடத்தில் வேண்டிக்கொள்ளுகிறவர்களு
க்கு நன்மையானவைகளைக் கொடுப்பது அதிக
12 நிச்சயம் அல்லவா? ஆதலால், மனுஷர் உங்
களுக்கு எவைகளைச் செய்ய விரும்புகிறீர்க
ளோ, [9]அவைகளை நீங்களும் அவர்களுக்குச்
செய்யுங்கள்; [10]இதுவே நியாயப்பிரமாணமும்
தீர்க்கதரிசனங்களுமாம்.
13 இடுக்கமான வாசல்வழியாய் உட்பிரவே
சியுங்கள்; [11]கேட்டுக்குப் போகிற வாசல் விரி
வும், வழி விசாலமுமாயிருக்கிறது; அதின்
14 வழியாய்ப் பிரவேசிக்கிறவர்கள் அநேகர். ஜீவ
னுக்குப் போகிற வாசல் இடுக்கமும், வழி
நெருக்கமுமாயிருக்கிறது; [12]அதைக் கண்டு
பிடிக்கிறவர்கள் சிலர்.
15 கள்ளத் தீர்க்கதரிசிகளுக்கு எச்சரிக்கையா
யிருங்கள்; [13]அவர்கள் ஆட்டுத்தோலைப் போர்த்
துக்கொண்டு உங்களிடத்தில் வருவார்கள்;
உள்ளத்திலோ அவர்கள் பட்சிக்கிற ஓநாய்கள்.
16 அவர்களுடைய கனிகளினாலே அவர்களை
அறிவீர்கள்; [14]முட்செடிகளில் திராட்சப்பழங்
களையும், முட்பூண்டுகளில் அத்திப்பழங்களை
17 யும் பறிக்கிறார்களா? அப்படியே நல்ல மர
மெல்லாம் நல்ல கனிகளைக் கொடுக்கும்;
[15]கெட்ட மரமோ கெட்ட கனிகளைக் கொடுக்
கும். நல்ல மரம் கெட்ட கனிகளைக் கொடுக் 18
கமாட்டாது; கெட்ட மரம் நல்ல கனிகளைக்
கொடுக்கமாட்டாது. நல்ல கனிகொடாத மர 19
மெல்லாம் வெட்டுண்டு, [16]அக்கினியிலே போ
டப்படும். ஆதலால், அவர்களுடைய கனி 20
களினாலே அவர்களை அறிவீர்கள். பரலோ 21
கத்திலிருக்கிற [17]என் பிதாவின் சித்தத்தின்படி
செய்கிறவனே பரலோக ராஜ்யத்தில் பிரவே
சிப்பானேயல்லாமல், என்னை நோக்கி: [18]கர்த்
தாவே! கர்த்தாவே! என்று சொல்லுகிறவன்
அதில் பிரவேசிப்பதில்லை. அந்நாளில் அநே 22
கர் என்னை நோக்கி: கர்த்தாவே! கர்த்தாவே!
[19]உமது நாமத்தினாலே தீர்க்கதரிசனம் உரைத்
தோம் அல்லவா? உமது நாமத்தினாலே பிசாசு
களைத் துரத்தினோம் அல்லவா? உமது நாமத்
தினாலே அநேக அற்புதங்களைச் செய்தோம்
அல்லவா? என்பார்கள். அப்பொழுது, நான் 23
ஒருக்காலும் உங்களை அறியவில்லை; [20]அக்கிர
மச் செய்கைக்காரரே, என்னைவிட்டு அகன்று
போங்கள் என்று அவர்களுக்குச் சொல்லு
வேன். ஆகையால், நான் சொல்லிய இந்த 24
வார்த்தைகளைக் கேட்டு, இவைகளின்படி
செய்கிறவன் எவனோ, [21]அவனைக் கன்மலை
யின்மேல் தன் வீட்டைக் கட்டின புத்தியுள்ள
மனுஷனுக்கு ஒப்பிடுவேன். பெருமழை 25
சொரிந்து, பெருவெள்ளம் வந்து, காற்று
அடித்து, அந்த வீட்டின்மேல் மோதியும்,
அது விழவில்லை; [22]ஏனென்றால், அது கன்
மலையின்மேல் அஸ்திபாரம் போடப்பட்டிருந்
தது. நான் சொல்லிய இந்த வார்த்தைகளைக் 26
கேட்டு, இவைகளின்படி செய்யாதிருக்கிற
வன் எவனோ, [23]அவன் தன் வீட்டை மண
லின்மேல் கட்டின புத்தியில்லாத மனுஷ
னுக்கு ஒப்பிடப்படுவான். பெருமழை சொ 27
ரிந்து, பெருவெள்ளம் வந்து, காற்று அடித்து,
அந்த வீட்டின்மேல் மோதினபோது அது
விழுந்தது; [24]விழுந்து முழுவதும் அழிந்தது
என்றார்.
இயேசு இந்த வார்த்தைகளைச் சொல்லி 28
முடித்தபோது, [25]அவர் வேதபாரகரைப்போல்
போதியாமல், அதிகாரமுடையவராய் அவர்
களுக்குப் போதித்தபடியால், ஜனங்கள் அவ 29
ருடைய போதகத்தைக் குறித்து [26]ஆச்சரியப்
பட்டார்கள்.

**8** அவர் மலையிலிருந்து இறங்கினபோது,
திரளான ஜனங்கள் அவருக்குப் பின் சென்
றார்கள். அப்பொழுது [27]குஷ்டரோகி ஒரு 2
வன் வந்து அவரைப் பணிந்து: ஆண்டவரே!
உமக்குச் சித்தமானால், என்னைச் சுத்தமாக்க
உம்மால் ஆகும் என்றான். இயேசு தமது 3
கையை நீட்டி அவனைத் தொட்டு: எனக்குச்
சித்தமுண்டு, சுத்தமாகு என்றார். உடனே
குஷ்டரோகம் நீங்கி அவன் சுத்தமானான்.
இயேசு அவனை நோக்கி: [28]இதை நீ ஒருவருக் 4
கும் சொல்லாதபடி எச்சரிக்கையாயிரு; ஆயி
னும், அவர்களுக்குச் சாட்சியாக நீ போய்

1 ரோ. 1. 7, மாற். 4. 24
2 லூ. 6. 41, 42
3 நீதி. 9. 7, 8; 23. 9. அப். 13. 45, 46
4 21. 22. ஏசா. 55. 6. லூ. 11. 9-13. யோ. 14. 13. யாக். 1. 5, 6. 1 யோ. 22: 5. 14, 16
5 சங். 81. 10, 16. எரே. 29. 12, 13
6 லூ. 11. 11, 13
7 ஆதி. 6. 5; 8. 21
8 6. 9
9 லூ. 6. 31
10 லேவி. 19. 18. ரோ. 13. 8-10. கலா. 5. 14
11 லூ. 13, 24
12 20. 16; 25. 1-12. ரோ. 9. 27, 29
13 உபா. 13. 1-3. எரே. 23. 13, 16. மீகா. 3. 5. அப். 20. 29-31. 1 யோ. 4. 1
14 12. 33. லூ. 6. 43, 44
15 எரே. 11. 19
16 3. 10. லூ. 3. 9. யோ. 15. 2, 6
17 லூ. 6. 46-49
18 25. 11, 12. ஏசா. 48. 1, 2. ஓசி. 8. 2. லூ. 6. 46. அப். 19. 13. ரோ. 2. 13. யாக். 1. 22
19 எண். 24. 4. 1 இரா. 22. 11. ஒ. எரே. 23. 13. ஒ. யோ. 11. 51. அப். 19. 13-15. 1 கொ. 13. 2
20 25. 41. சங். 5. 5; 6. 8. லூ. 13. 25, 27. 2 தீமோ. 2. 19. வெளி. 22. 15
21 லூ. 6. 47. ஒ
22 சங். 92. 13-15
23 1 சாமு. 2. 30. எரே. 8. 10
24 1 கொ. 3. 13. எபி. 10. 26, 27
25 யோ. 7. 46
26 எரே. 23. 29. மாற். 6. 2. லூ. 4. 32
27 மாற். 1. 40. ஒ. லூ. 5. 12. ஒ
28 9. 30. மாற். 5. 43

ஆசாரியனுக்கு உன்னைக் காண்பித்து, [1]மோ
சே கட்டளையிட்ட காணிக்கையைச் செலுத்து
என்றார்.
5 இயேசு கப்பர்நகூமில் பிரவேசித்தபோது,
[2]நூற்றுக்கு அதிபதி ஒருவன் அவரிடத்தில்
6 வந்து: ஆண்டவரே! என் வேலைக்காரன்
வீட்டிலே திமிர்வாதமாய்க் கிடந்து கொடிய
வேதனைப்படுகிறான் என்று அவரை வேண்
7 டிக்கொண்டான். அதற்கு இயேசு: நான்
வந்து அவனைச் சொஸ்தமாக்குவேன் என்
8 றார். நூற்றுக்கு அதிபதி பிரதியுத்தரமாக:
ஆண்டவரே! நீர் என் வீட்டுக்குள் பிரவே
சிக்க நான் பாத்திரன் அல்ல; [3]ஒரு வார்த்தை
மாத்திரம் சொல்லும், [4]அப்பொழுது என்
9 வேலைக்காரன் சொஸ்தமாவான். நான் அதி
காரத்துக்குக் கீழ்ப்பட்டவனாயிருந்தும், எனக்
குக் கீழ்ப்பட்டிருக்கிற சேவகருமுண்டு; நான்
ஒருவனைப் போவென்றால் போகிறான், மற்
றொருவனை வாவென்றால் வருகிறான், என்
வேலைக்காரனை, இதைச் செய்யென்றால் செய்
10 கிறான் என்றான். இயேசு இதைக்கேட்டு
ஆச்சரியப்பட்டு, தமக்குப் பின்செல்லுகிறவர்
களை நோக்கி: இஸ்ரவேலருக்குள்ளும் நான்
இப்படிப்பட்ட விசுவாசத்தைக் [5]காணவில்லை
என்று, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லு
11 கிறேன். அநேகர் கிழக்கிலும் மேற்கிலுமி
ருந்து வந்து, [6]பரலோக ராஜ்யத்தில் ஆபிரகாம்
ஈசாக்கு யாக்கோபு என்பவர்களோடே பந்தி
12 யிருப்பார்கள். ராஜ்யத்தின் புத்திரரோ [7]புறம்
பான இருளிலே தள்ளப்படுவார்கள்; [8]அங்கே
அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்குமெ
ன்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.
13 பின்பு இயேசு நூற்றுக்கு அதிபதியை நோக்
கி: நீ போகலாம், நீ விசுவாசித்தபடியே உனக்கு
ஆகக்கடவது என்றார். அந்த நாழிகையிலே
அவன் வேலைக்காரன் சொஸ்தமானான்.
14 இயேசு பேதுருவின் வீட்டிலே வந்து, [9]அவன்
மாமி ஜுரமாய்க் கிடக்கிறதைக் கண்டார்.
15 அவர் அவள் கையைத் தொட்டவுடனே
ஜுரம் அவளை விட்டு நீங்கிற்று; அவள்
எழுந்திருந்து, அவர்களுக்குப் பணிவிடை
16 செய்தாள். அஸ்தமனமானபோது, [10]பிசாசு
பிடித்திருந்த அநேகரை அவரிடத்தில் கொண்
டுவந்தார்கள்; அவர் அந்த ஆவிகளைத் தமது
வார்த்தையினாலே துரத்தி, பிணியாளிகளெல்
17 லாரையும் சொஸ்தமாக்கினார்: அவர்தாமே
நம்முடைய பெலவீனங்களை ஏற்றுக்கொண்டு,
[11]நம்முடைய நோய்களைச் சுமந்தார் என்று,
ஏசாயா தீர்க்கதரிசியினால் உரைக்கப்பட்டது
நிறைவேறும்படி இப்படி நடந்தது.
18 பின்பு, திரளான ஜனங்கள் தம்மைச் சூழ்ந்
திருக்கிறதை இயேசு கண்டு, அக்கரைக்குப்
19 போகக் கட்டளையிட்டார். அப்பொழுது, வே
தபாரகன் ஒருவன் வந்து: [12]போதகரே! நீர்
எங்கேபோனாலும் உம்மைப் பின்பற்றி வரு
20 வேன் என்றான். அதற்கு இயேசு: நரிகளுக்
குக் குழிகளும் ஆகாயத்துப் பறவைகளுக்குக்

1 லேவி. 14. 3. ழ
2 லூ. 7. 2. ழ
3 சங். 10. 17. லூ. 15. 19, 21
4 சங். 33. 9: 107 20
5 15. 28
6 ஏசா. 2. 2, 3. லூ 13. 29. அப். 11. 18. ரோ. 15. 9. ழ. எபே. 3. 6. வெளி. 7. 9
7 7. 22. 23: 21. 43
8 13. 42, 50. லூ. 13. 28
9 மாற். 1. 30, 31. லூ. 4. 38, 39. 1 கொ. 9. 5
10 மாற். 1. 32. லூ. 4 40, 41
11 ஏசா. 53. 4. 1 பே. 2. 24
12 லூ. 9. 57. ழ
13 1 இரா. 19. 20
14 மாற். 4. 37. ழ. லூ. 8. 23. ழ
15 யோபு 38. 11. சங். 65. 7: 89. 9: 107. 29
16 மாற். 5. 1. ழ. லூ. 8. 26. ழ
17 உபா. 14. 8. யோபு 1. 10, 12: 2. 3-6. ஏசா. 65. 3, 4
18 1 இரா. 17. 18. யோபு 21. 14. லூ. 5. 8. அப். 16. 39
19 4. 13
20 மாற். 2. 3. ழ. லூ. 5. 18. ழ

கூடுகளும் உண்டு; மனுஷகுமாரனுக்கோ தலை
சாய்க்க இடமில்லை என்றார். அவருடைய 21
சீஷர்களில் வேறொருவன் அவரை நோக்கி:
ஆண்டவரே! [13]முன்பு நான் போய், என்
தகப்பனை அடக்கம்பண்ண எனக்கு உத்தரவு
கொடுக்கவேண்டும் என்றான். அதற்கு இயே 22
சு: மரித்தோர் தங்கள் மரித்தோரை அடக்கம்
பண்ணட்டும், நீ என்னைப் பின்பற்றி வா
என்றார்.
அவர் படவில் ஏறினபோது அவருடைய 23
சீஷர்கள் அவருக்குப் பின்சென்று ஏறினார்
கள். அப்பொழுது படவு அலைகளினால் 24
மூடப்படத்தக்கதாய்க் [14]கடலில் பெருங்காற்று
உண்டாயிற்று. அவரோ நித்திரையாயிருந்
தார். அப்பொழுது, அவருடைய சீஷர்கள் 25
வந்து, அவரை எழுப்பி: ஆண்டவரே! எங்
களை ரட்சியும், மடிந்துபோகிறோம் என்றார்
கள். அதற்கு அவர்: அற்ப விசுவாசிகளே! 26
ஏன் பயப்படுகிறீர்கள் என்று சொல்லி;
[15]எழுந்து, காற்றையும் கடலையும் அதட்டினார்.
உடனே, மிகுந்த அமைதல் உண்டாயிற்று.
அந்த மனுஷர்கள் ஆச்சரியப்பட்டு: இவர் 27
எப்படிப்பட்டவரோ, காற்றும் கடலும் இவ
ருக்குக் கீழ்ப்படிகிறதே என்றார்கள்.
அவர் அக்கரையிலே கெர்கெசேனர் நாட் 28
டில் வந்தபோது, [16]பிசாசுபிடித்திருந்த இரண்
டுபேர் பிரேதக் கல்லறைகளிலிருந்து புறப்
பட்டு, அவருக்கு எதிராக வந்தார்கள்; அவர்
கள் மிகவும் கொடியராயிருந்தபடியால், அந்த
வழியாக ஒருவனும் நடக்கக் கூடாதிருந்தது.
அவர்கள் அவரை நோக்கி: இயேசுவே, தேவ 29
னுடைய குமாரனே, எங்களுக்கும் உமக்கும்
என்ன? காலம் வருமுன்னே எங்களை வேத
னைப்படுத்த இங்கே வந்தீரோ என்று கூப்பிட்
டார்கள். அவர்களுக்குக் கொஞ்சதூரத்தில் 30
அநேகம் பன்றிகள் கூட்டமாக மேய்ந்துகொ
ண்டிருந்தன. அப்பொழுது, பிசாசுகள்: நீர் 31
எங்களைத் துரத்துவீரானால், [17]நாங்கள் அந்தப்
பன்றிக்கூட்டத்தில் போகும்படி உத்தரவு
கொடும் என்று அவரை வேண்டிக்கொண்
டன. அதற்கு அவர்: போங்கள் என்றார். 32
அவைகள் புறப்பட்டு, பன்றிக்கூட்டத்தில்
போயின; அப்பொழுது, பன்றிக் கூட்டமெல்
லாம் உயர்ந்த மேட்டிலிருந்து கடலிலே
பாய்ந்து, ஜலத்தில் மாண்டுபோயின. அவை 33
களை மேய்த்தவர்கள் ஓடி, பட்டணத்தில்
சென்று, இந்தச் சங்கதிகள் எல்லாவற்றையும்,
பிசாசு பிடித்திருந்தவர்களுக்குச் சம்பவித்த
வைகளையும் அறிவித்தார்கள். அப்பொழுது, 34
அந்தப் பட்டணத்தார் யாவரும் இயேசுவுக்கு
எதிர்கொண்டுவந்து, அவரைக் கண்டு, [18]தங்
கள் எல்லைகளை விட்டுப் போகும்படி அவரை
வேண்டிக்கொண்டார்கள்.
அப்பொழுது, அவர் படவில் ஏறி, இக்க 9
ரைப்பட்டு தம்முடைய [19]பட்டணத்திற்கு வந்
தார். அங்கே படுக்கையிலே கிடந்த ஒரு 2
திமிர்வாதக்காரனை [20]அவரிடத்தில் கொண்டு

வந்தார்கள். இயேசு அவர்களுடைய விசுவா
சத்தைக் கண்டு, திமிர்வாதக்காரனை நோக்கி:
[1]மகனே, திடன்கொள், உன் பாவங்கள் உன
3 க்கு மன்னிக்கப்பட்டது என்றார். அப்பொ
ழுது, வேதபாரகரில் சிலர்: இவன் தேவதூ
ஷணம் சொல்லுகிறான் என்று தங்கள் உள்
4 ளத்தில் சொல்லிக்கொண்டார்கள். இயேசு
[2]அவர்கள் நினைவுகளை அறிந்து: நீங்கள் உங்
கள் இருதயங்களில் பொல்லாதவைகளைச் சிந்
5 திக்கிறதென்ன? உன் பாவங்கள் மன்னிக்
கப்பட்டது என்று சொல்வதோ, எழுந்து நட
6 வென்று சொல்வதோ, எது எளிது? பூமி
யிலே பாவங்களை மன்னிக்க [3]மனுஷகுமார
னுக்கு அதிகாரம் உண்டென்பதை நீங்கள்
அறியவேண்டும் என்று சொல்லி, திமிர்வாதக்
காரனை நோக்கி: நீ எழுந்து, உன் படுக்கை
யை எடுத்துக்கொண்டு, உன் வீட்டுக்குப்
7 போ என்றார். உடனே அவன் எழுந்து,
தன் வீட்டுக்குப் போனான்.
8 ஜனங்கள் அதைக் கண்டு ஆச்சரியப்பட்டு,
மனுஷருக்கு இப்படிப்பட்ட அதிகாரத்தைக்
கொடுத்தவராகிய தேவனை [4]மகிமைப்படுத்தி
னார்கள்.
9 இயேசு அவ்விடம் விட்டுப் புறப்பட்டுப்
போகையில், [5]ஆயத்துறையில் உட்கார்ந்தி
ருந்த மத்தேயு என்னும் ஒரு மனுஷனைக்
கண்டு: எனக்குப் பின்சென்றுவா என்றார்;
அவன் எழுந்து, அவருக்குப் பின்சென்றான்.
10 பின்பு அவர் வீட்டிலே போஜனபந்தியிருக்
கையில், [6]அநேகம் ஆயக்காரரும் *பாவிகளும்
வந்து, இயேசுவோடும் அவர் சீஷரோடுங்கூ
11 டப் பந்தியிருந்தார்கள். பரிசேயர் அதைக்
கண்டு, அவருடைய சீஷர்களை நோக்கி: உங்
கள் போதகர் ஆயக்காரரோடும் பாவிகளோ
டும் [7]போஜனம் பண்ணுகிறதென்னவென்று
12 கேட்டார்கள். இயேசு அதைக்கேட்டு: பிணி
யாளிகளுக்கு வைத்தியன் வேண்டியதேயல்
லாமல் சுகமுள்ளவர்களுக்குவேண்டியதில்லை.
13 பலியையல்ல, [8]இரக்கத்தையே விரும்புகி
றேன் என்பதின் கருத்து இன்னதென்று
போய்க் கற்றுக்கொள்ளுங்கள்; நீதிமான்களை
யல்ல, [9]பாவிகளையே மனந்திரும்புகிறதற்கு
அழைக்கவந்தேன் என்றார்.
14 அப்பொழுது, யோவானுடைய சீஷர் அவ
ரிடத்தில் வந்து: [10]நாங்களும் பரிசேயரும்
அநேகந்தரம் உபவாசிக்கிறோமே; உம்முடைய
சீஷர் உபவாசியாமலிருக்கிறதென்னவென்று
15 கேட்டார்கள். அதற்கு இயேசு: [11]மணவா
ளன் தங்களோடிருக்கையில் மணவாளனு
டைய தோழர் துயரப்படுவார்களா? [12]மணவா
ளன் அவர்களைவிட்டு எடுபடும் நாட்கள் வரும்,
16 அப்பொழுது உபவாசிப்பார்கள். ஒருவனும்
கோடித்துண்டைப் பழைய வஸ்திரத்தோடே
இணைக்கமாட்டான்; இணைத்தால், அதினோ
டே இணைத்த துண்டு வஸ்திரத்தை அதிகமா
17 ய்க் கிழிக்கும், பீறலும் அதிகமாகும். புது
திராட்சரசத்தைப் [13]பழந்துருத்திகளில் வா

1 8. 10. மாற். 5. 34
2 சங். 139. 2. யோ. 2. 24, 25. எபி. 4. 12, 13. வெளி. 2. 23
3 மீகா. 7. 18
4 அப். 4. 21. கலா. 1. 24
5 மாற். 2. 14. லூ. 5. 27. ஃ
6 மாற். 2. 15. ஃ. லூ. 5. 29. ஃ
* அக்கிரமக்காரர். கலா. 2 15
7 11. 19. சிறி. 21. 3. லூ. 15. 2. எபி. 5. 2
8 12. 7. ஓசி. 6. 6. மீகா. 6. 6-8
9 லூ. 24. 47. அப். 5. 31. 1 தீமோ. 1. 15. 2 பே. 3. 9
10 மாற். 2. 18. ஃ. லூ. 5. 33. ஃ: 18. 12
11 25. 1, 10. யோ. 3. 29. வெளி. 21. 2
12 ஏசா. 22. 12. அப். 13. 2, 3: 14. 23. 1 கொ. 7. 5
13 யோபு 32. 19
14 மாற். 5. 22. ஃ. லூ. 8. 41. ஃ
15 மாற். 5. 25. லூ. 8. 43
16 லூ. 7. 50: 8. 48: 17. 19: 18. 42. அப். 14. 9
17 மாற். 5. 38. லூ. 8. 51
18 2 நாளா. 35. 25
19 அப். 20. 10
20 15. 22: 20. 30, 31. மாற். 10. 47, 48 லூ. 18. 37, 38
21 8. 4: 12. 16: 17. 9. ஏசா. 42. 2: 52. 13. லூ. 5. 14
22 மாற். 7. 36
23 12. 22. லூ. 11. 14

ர்த்து வைக்கிறதும் இல்லை; வார்த்து வைத்
தால், துருத்திகள் கிழிந்துபோம், இரசமும்
சிந்திப்போம், துருத்திகளும் கெட்டுப்போம்;
புது ரசத்தைப் புது துருத்திகளில் வார்த்து
வைப்பார்கள், அப்பொழுது இரண்டும் பத்
திரப்பட்டிருக்கும் என்றார்.
அவர் இவைகளை அவர்களுக்குச் சொல் 18
லிக்கொண்டிருக்கையில், தலைவன் ஒருவன்
வந்து அவரைப் பணிந்து: [14]என் மகள் இப்
பொழுதுதான் மரித்துப்போனாள்; ஆகிலும்,
நீர் வந்து அவள்மேல் உமது கையை வையும்,
அப்பொழுது பிழைப்பாள் என்றான். இயேசு 19
எழுந்து, தம்முடைய சீஷரோடேகூட அவன்
பின்னே போனார். அப்பொழுது, [15]பன்னி 20
ரண்டு வருஷமாய்ப் பெரும்பாடுள்ள ஒரு
ஸ்திரீ: நான் அவருடைய வஸ்திரத்தையா 21
கிலும் தொட்டால் சொஸ்தமாவேன் என்று
தன் உள்ளத்தில் எண்ணிக்கொண்டு, அவர்
பின்னாலே வந்து, அவருடைய வஸ்திரத்தின்
ஓரத்தைத் தொட்டாள். இயேசு திரும்பி, 22
அவளைப் பார்த்து: மகளே, திடன்கொள்,
[16]உன் விசுவாசம் உன்னை ரட்சித்தது என்
றார். அந்நேரமுதல் அந்த ஸ்திரீ சொஸ்த
மானாள். இயேசுவானவர் [17]தலைவனுடைய 23
வீட்டிலே வந்து, [18]தாரை ஊதுகிறவர்களையும்,
இரைகிற ஜனங்களையும் கண்டு: விலகுங் 24
கள், [19]இந்தச் சிறுபெண் மரிக்கவில்லை, நித்
திரையாயிருக்கிறாள் என்றார். அதற்காக அவ
ரைப் பார்த்து நகைத்தார்கள். ஜனங்கள் 25
வெளியே துரத்தப்பட்டபின்பு, அவர் உள்ளே
பிரவேசித்து, அந்தச் சிறுபெண்ணின் கை
யைப் பிடித்தார்; உடனே அவள் எழுந்திருந்
தாள். இந்தச் சங்கதி அத்தேசமெங்கும் பிர 26
சித்தமாயிற்று.
இயேசு அவ்விடம் விட்டுப் போகையில், 27
இரண்டு குருடர் அவர் பின்னே சென்று:
[20]தாவீதின் குமாரனே, எங்களுக்கு இரங்கும்
என்று கூப்பிட்டார்கள். அவர் வீட்டிற்கு 28
வந்தபின்பு, அந்தக் குருடர் அவரிடத்தில் வந்
தார்கள். இயேசு அவர்களை நோக்கி: இதைச்
செய்ய எனக்கு வல்லமை உண்டென்று விசு
வாசிக்கிறீர்களா என்று கேட்டார். அதற்கு
அவர்கள்: ஆம் விசுவாசிக்கிறோம், ஆண்ட
வரே! என்றார்கள். அப்பொழுது, அவர்க 29
ளுடைய கண்களை அவர் தொட்டு: உங்கள்
விசுவாசத்தின்படி உங்களுக்கு ஆகக்கடவது
என்றார். உடனே அவர்களுடைய கண்கள் 30
திறக்கப்பட்டது. [21]இதை ஒருவரும் அறியா
தபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள் என்று
இயேசு அவர்களுக்குக் கண்டிப்பாய்க் கட்ட
ளையிட்டார். அவர்களோ புறப்பட்டு, [22]அத் 31
தேசமெங்கும் அவருடைய கீர்த்தியைப் பிர
சித்தம்பண்ணினார்கள்.
அவர்கள் புறப்பட்டுப் போகையில், [23]பிசா 32
சுபிடித்த ஊமையான ஒரு மனுஷனை அவரி
டத்தில் கொண்டுவந்தார்கள். பிசாசு துரத் 33
தப்பட்டபின்பு ஊமையன் பேசினான். ஜனங்

கள் ஆச்சரியப்பட்டு: இஸ்ரவேலில் இப்படி
ஒருக்காலும் காணப்படவில்லை என்றார்கள்.
34 பரிசேயரோ: [1]இவன் பிசாசுகளின் தலை
வனாலே பிசாசுகளைத் துரத்துகிறான் என்
றார்கள்.
35 பின்பு, இயேசு சகல பட்டணங்களையும்
கிராமங்களையும் சுற்றி நடந்து, [2]ஜெபஆலயங்
களில் உபதேசித்து, ராஜ்யத்தின் சுவிசேஷத்
தைப் பிரசங்கித்து, ஜனங்களுக்கு உண்டாயி
ருந்த சகல வியாதிகளையும் சகல நோய்களை
யும் நீக்கி, அவர்களைச் சொஸ்தமாக்கினார்.
36 அவர் திரளான ஜனங்களைக் கண்டபொழுது,
[3]அவர்கள் மேய்ப்பனில்லாத ஆடுகளைப்போ
லத் தொய்ந்துபோனவர்களும் சிதறப்பட்டவர்
களுமாய் இருந்தபடியால், அவர்கள்மேல் மன
37 துருகி, தம்முடைய சீஷர்களை நோக்கி:
[4]அறுப்பு மிகுதி, வேலையாட்களோ கொஞ்
38 சம்; ஆதலால், அறுப்புக்கு எஜமான் தமது
அறுப்புக்கு வேலையாட்களை அனுப்பும்படி [5]அவ
ரை வேண்டிக்கொள்ளுங்கள் என்றார்.

10 அப்பொழுது, [6]அவர் தம்முடைய பன்
னிரண்டு சீஷர்களையும் தம்மிடத்தில் வரவ
ழைத்து, அசுத்த ஆவிகளைத் துரத்தவும், சகல
வியாதிகளையும் சகல நோய்களையும் *நீக்கவும்
அவர்களுக்கு அதிகாரங் கொடுத்தார்.
2 அந்தப்பன்னிரண்டு அப்போஸ்தலருடைய
[7]நாமங்களாவன: [8]முந்தினவன் பேதுரு என்
னப்பட்ட சீமோன், அவன் சகோதரன் அந்
திரேயா, செபெதேயுவின் குமாரன் யாக்
3 கோபு, அவன் சகோதரன் யோவான், பிலி
ப்பு, பற்தொலொமேயு, தோமா, ஆயக்காரனா
கிய மத்தேயு, அல்பேயுவின் குமாரன் யாக்
கோபு, ததேயு என்னும் மறுநாமமுள்ள லெ
4 பேயு, †கானானியனாகிய [9]சீமோன், அவ
ரைக் காட்டிக்கொடுத்த [10]யூதாஸ்காரியோத்து,
என்பவைகளே.
5 இந்தப் பன்னிருவரையும் இயேசு அனுப்பு
கையில், அவர்களுக்குக் கட்டளையிட்டுச் சொ
ன்னது என்னவென்றால்: [11]நீங்கள் புறஜாதி
யார் நாடுகளுக்குப் போகாமலும், [12]சமாரியர்
6 பட்டணங்களில் பிரவேசியாமலும், காணா
மற்போன ஆடுகளாகிய [13]இஸ்ரவேல் வீட்டா
7 ரிடத்திற்குப் போங்கள். போகையில், [14]பர
லோகராஜ்யம் சமீபித்திருக்கிறது என்று பிர
8 சங்கியுங்கள். வியாதியுள்ளவர்களைச் சொஸ்த
மாக்குங்கள், குஷ்டரோகிகளைச் சுத்தம்பண்
ணுங்கள், மரித்தோரை எழுப்புங்கள், பிசாசு
களைத் துரத்துங்கள்; [15]இலவசமாய்ப் பெற்றீர்
9 கள், இலவசமாய்க் கொடுங்கள். உங்கள் கச்
சைகளில் பொன்னையாவது [16]வெள்ளியையா
10 வது செம்பையாவது, வழிக்காகப் பையை
யாவது, இரண்டு அங்கிகளையாவது, [17]பாதரட்
சைகளையாவது, தடியையாவது தேடிவைக்க
வேண்டாம்; வேலையாள் தன் ஆகாரத்துக்குப்
11 பாத்திரனாயிருக்கிறான். எந்தப் பட்டணத்தி
லாவது கிராமத்திலாவது நீங்கள் பிரவேசிக்
கும்போது, [18]அதிலே பாத்திரமானவன் யாரெ
ன்று விசாரித்து, நீங்கள் புறப்படுமளவும் அவ
னிடத்தில் தங்கியிருங்கள். ஒரு வீட்டுக்குள் 12
பிரவேசிக்கும்போது அதை வாழ்த்துங்கள்.
அந்த வீடு பாத்திரமாயிருந்தால், நீங்கள் கூறி 13
ன ‡சமாதானம் அவர்கள்மேல் வரக்கடவது;
அபாத்திரமாயிருந்தால், நீங்கள் கூறின சமா
தானம் உங்களிடத்திற்குத் திரும்பக்கடவது.
எவனாகிலும் உங்களை ஏற்றுக்கொள்ளாமலும், 14
உங்கள் வார்த்தைகளைக் கேளாமலும் போனால்,
[19]அந்த வீட்டையாவது பட்டணத்தையாவது
விட்டுப் புறப்படும்போது, உங்கள் கால்க
ளில் படிந்த தூசியை உதறிப்போடுங்கள்.
நியாயத்தீர்ப்புநாளிலே அந்தப் பட்டணத்திற்கு 15
நேரிடுவதைப்பார்க்கிலும் சோதோம் கொமோ
ரா நாட்டிற்கு நேரிடுவது [20]இலகுவாயிருக்கும்
என்று, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லு
கிறேன்.
ஆடுகளை ஓநாய்களுக்குள்ளே அனுப்புகி 16
றதுபோல, [21]இதோ, நான் உங்களை அனுப்பு
கிறேன்; ஆகையால், சர்ப்பங்களைப்போல
§வினாவுள்ளவர்களும் புறாக்களைப்போலக்
[22]கபடற்றவர்களுமாய் இருங்கள். மனுஷ 17
ரைக் குறித்து எச்சரிக்கையாயிருங்கள்; [23]அவர்
கள் உங்களை ஆலோசனைச் சங்கங்களுக்கு
ஒப்புக்கொடுத்து, தங்கள் ஜெப ஆலயங்களில்
உங்களை வாரினால் அடிப்பார்கள். அவர்க 18
ளுக்கும் புறஜாதியாருக்கும் சாட்சியாக என்
னிமித்தம் அதிபதிகளுக்கு முன்பாகவும், [24]ரா
ஜாக்களுக்கு முன்பாகவும் கொண்டுபோகப்
படுவீர்கள். அவர்கள் உங்களை ஒப்புக்கொ 19
டுக்கும்போது: [25]எப்படிப் பேசுவோம் என்
றும், என்னத்தைப் பேசுவோம் என்றும் கவ
லைப்படாதிருங்கள்; [26]நீங்கள் பேசவேண்டு
வது அந்நேரத்தில் உங்களுக்கு அருளப்படும்.
பேசுகிறவர்கள் நீங்கள் அல்ல, [27]உங்கள் பிதா 20
வின் ஆவியானவரே உங்களிலிருந்து பேசு
கிறவர்.
சகோதரன் தன் சகோதரனையும், [28]தகப்பன் 21
தன் பிள்ளையையும், மரணத்துக்கு ஒப்புக்கொ
டுப்பார்கள்; பெற்றாருக்கு விரோதமாகப் பிள்
ளைகள் எழும்பி அவர்களைக் கொலைசெய்
வார்கள். என் நாமத்தினிமித்தம் நீங்கள் எல் 22
லாராலும் [29]பகைக்கப்படுவீர்கள்; [30]முடிவுபரி
யந்தம் நிலைத்திருப்பவனே இரட்சிக்கப்படு
வான். ஒரு பட்டணத்தில் உங்களைத் துன் 23
பப்படுத்தினால் மறு பட்டணத்திற்கு ஓடிப்
போங்கள்; [31]மனுஷகுமாரன் வருவதற்குள்
ளாக நீங்கள் இஸ்ரவேலருடைய பட்டணங்
களையெல்லாம் சுற்றி முடியாதென்று, மெய்
யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.
சீஷன் தன் போதகனிலும், [32]வேலைக்கா 24
ரன் தன் எஜமானிலும் மேற்பட்டவன்
அல்ல. சீஷன் தன் போதகனைப்போலவும், 25
வேலைக்காரன் தன் எஜமானைப்போலவும்
இருப்பது போதும். வீட்டெஜமானையே பெ
யெல்செபூல் என்று சொன்னார்களானால்,
[33]அவன் வீட்டாரை அப்படிச் சொல்வது

1 12. 24. மாற். 3. 22. லூா. 11. 15
2 4. 23. மாற். 6. 6. லூா. 13. 22
3 எண். 27. 17. 1 இரா. 22. 17. எசே. 34. 5. சகரி. 10. 2. மாற். 6. 34
4 லூா. 10. 2. யோ. 4. 35
5 சங். 68. 11. 2 தெச. 3. 1
6 மாற். 3. 13, 14: 6. 7. லூா. 6. 13: 9. 1
* தீர்க்கவும்
7 லூா. 6. 13
8 யோ. 1. 42
† வைராகி
9 லூா. 6. 15
10 யோ. 13. 26. அப். 1. 13
11 4. 15
12 2 இரா. 17. 24. யோ. 4. 9, 20
13 15. 24: சங். 119. 176. ஏசா. 53. 6 எரே. 50. 6, 17. எசே. 34. 5, 6, 8. அப். 13. 46. 1 பே. 2. 25
14 3. 2: 4. 17 லூா. 9. 2: 10. 9
15 அப். 8. 18, 20
16 லூா. 22. 35. 1 கொ. 9. 7. ழ
17 லூா. 10. 4. 1 தீமோ. 5. 18
18 லூா. 10. 5. ழ
‡ வாழ்த்துதல் சங். 35. 13
19 நெகே. 5. 13. மாற். 6. 11. லூா. 9. 5: 10. 10, 11. அப். 13. 51: 18. 6
20 11. 22, 24
21 லூா. 10. 3
§ புத்தி. ரோ. 16. 19. எபே. 5. 15
22 1 கொ. 14. 20. பிலி. 2. 15
23 24. 9. மாற். 13. 9. லூா. 12. 11. அப். 5. 40
24 அப். 12. 1: 24. 10: 25. 7, 23 2 தீமோ. 4. 16
25 மாற். 13. 11. லூா. 12. 11
26 யாத். 4. 12. எரே. 1. 7
27 2 சாமு. 23. 2. அப். 4. 8: 6. 10. 2 தீமோ. 4. 17
28 மீகா 7. 6. லூா. 21. 16
29 லூா. 21. 17
30 தானி. 12. 12, 13. மாற். 13. 13. வெளி. 2. 10
31 2. 13: 4. 12: 12. 15. அப். 8. 1: 9. 25: 14. 6
32 லூா. 6. 40. யோ. 13. 16: 15. 20
33 12. 24. மாற். 3. 22. லூா. 11. 15. யோ. 8. 48, 52

26 அதிக நிச்சயமல்லவா? அவர்களுக்குப் பயப்
படாதிருங்கள்; [1]வெளியாக்கப்படாத மறை
பொருளும் இல்லை; அறியப்படாத இரகசிய
27 மும் இல்லை. நான் உங்களுக்கு இருளிலே
சொல்லுகிறதை நீங்கள் வெளிச்சத்திலே சொ
ல்லுங்கள்; காதிலே கேட்கிறதை நீங்கள் வீடு
28 களின்மேல் பிரசித்தம்பண்ணுங்கள். ஆத்து
மாவைக் கொல்ல வல்லவர்களாயிராமல், [2]சரீ
ரத்தைமாத்திரம் கொல்லுகிறவர்களுக்கு நீங்
கள் பயப்படவேண்டாம்; ஆத்துமாவையும்
சரீரத்தையும் நரகத்திலே அழிக்க வல்லவருக்
29 கே பயப்படுங்கள். ஒரு காசுக்கு இரண்டு
அடைக்கலான் குருவிகளை விற்கிறார்கள் அல்
லவா? ஆயினும் உங்கள் பிதாவின் சித்தமில்லா
மல், அவைகளில் ஒன்றாகிலும் தரையிலே
30 விழாது. உங்கள் தலையிலுள்ள [3]மயிரெல்லாம்
31 எண்ணப்பட்டிருக்கிறது. ஆதலால், பயப்
படாதிருங்கள்; அநேகம் அடைக்கலான் குரு
விகளைப்பார்க்கிலும் நீங்கள் விசேஷித்தவர்
32 களாயிருக்கிறீர்கள். மனுஷர் முன்பாக என்
னை அறிக்கைபண்ணுகிறவன் எவனோ, [4]அவ
னை நானும் பரலோகத்திலிருக்கிற என் பிதா
வின் முன்பாக அறிக்கை பண்ணுவேன்.
33 மனுஷர் முன்பாக என்னை மறுதலிக்கிறவன்
எவனோ, [5]அவனை நானும் பரலோகத்திலிருக்
கிற என் பிதாவின் முன்பாக மறுதலிப்பேன்.
34 பூமியின்மேல் [6]சமாதானத்தை அனுப்ப வந்
தேன் என்று எண்ணாதிருங்கள்; சமாதானத்
தை யல்ல, பட்டயத்தையே அனுப்ப வந்
35 தேன். எப்படியெனில், [7]மகனுக்கும் தகப்ப
னுக்கும், மகளுக்கும் தாய்க்கும், மருமகளுக்
கும் மாமிக்கும் பிரிவினையுண்டாக்க வந்தேன்.
36 ஒரு மனுஷனுக்குச் [8]சத்துருக்கள் அவன் வீட்
37 டாரே. தகப்பனையாவது தாயையாவது என்
னிலும் அதிகமாய் நேசிக்கிறவன் எனக்குப்
பாத்திரன் அல்ல; [9]மகனையாவது மகளையா
வது என்னிலும் அதிகமாய் நேசிக்கிறவன்
38 எனக்குப் பாத்திரன் அல்ல. தன் சிலுவை
யை எடுத்துக்கொண்டு [10]என்னைப் பின்பற்றாத
39 வன் எனக்குப் பாத்திரன் அல்ல. தன் ஜீவ
னைக் காக்கிறவன் அதை இழந்துபோவான்;
[11]என்னிமித்தம் தன் ஜீவனை இழந்துபோகிற
வன் அதைக் காப்பான்.
40 உங்களை ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை
ஏற்றுக்கொள்ளுகிறான்; [12]என்னை ஏற்றுக்
கொள்ளுகிறவன் என்னை அனுப்பினவரை
41 ஏற்றுக்கொள்ளுகிறான். தீர்க்கதரிசி என்னும்
நாமத்தினிமித்தம் தீர்க்கதரிசியை ஏற்றுக்கொள்
ளுகிறவன் தீர்க்கதரிசிக்கேற்ற பலனை அடை
வான்; [13]நீதிமான் என்னும் நாமத்தினிமித்தம்
நீதிமானை ஏற்றுக்கொள்ளுகிறவன் நீதிமானுக்
42 கேற்ற பலனை அடைவான். சீஷன் என்னும்
நாமத்தினிமித்தம் இந்தச் சிறியரில் ஒருவனு
க்கு ஒரு கலசம் தண்ணீர்மாத்திரம் குடிக்கக்
கொடுக்கிறவனும் தன் பலனை அடையாமற்
போகான் என்று, [14]மெய்யாகவே உங்களுக்
குச் சொல்லுகிறேன் என்றார்.

11 இயேசு தம்முடைய பன்னிரண்டு சீஷர்
களுக்கும் கட்டளைகொடுத்து முடித்தபின்பு,
அவர்களுடைய பட்டணங்களில் உபதேசிக்க
வும் பிரசங்கிக்கவும் அவ்விடம் விட்டுப்
போனார்.
அத்தருணத்தில் [15]காவலிலிருந்த யோவான் 2
கிறிஸ்துவின் கிரியைகளைக் குறித்துக் கேள்
விப்பட்டு, தன் சீஷரில் இரண்டுபேரை அழை
த்து: வருகிறவர் நீர்தானா, [16]அல்லது வே 3
றொருவர் வரக் காத்திருக்கவேண்டுமோ? என்று
அவரிடத்தில் கேட்கும்படி அனுப்பினான்.
இயேசு அவர்களுக்குப் பிரதியுத்தரமாக: நீங் 4
கள் கேட்கிறதையும் காண்கிறதையும் யோவா
னிடத்தில் போய் அறிவியுங்கள்; குருடர் 5
பார்வையடைகிறார்கள், [17]சப்பாணிகள் நடக்
கிறார்கள், குஷ்டரோகிகள் சுத்தமாகிறார்கள்,
செவிடர் கேட்கிறார்கள், மரித்தோர் எழுந்தி
ருக்கிறார்கள், தரித்திரருக்குச் சுவிசேஷம் பிர
சங்கிக்கப்படுகிறது. என்னிடத்தில் இடறல 6
டையாதிருக்கிறவன் எவனோ [18]அவன் பாக்
கியவான் என்றார். அவர்கள் போனபின்பு, 7
[19]இயேசு யோவானைக்குறித்து ஜனங்களுக்குச்
சொன்னது என்னவென்றால்: எதைப் பார்க்க
வனாந்தரத்திற்குப் போனீர்கள்? [20]காற்றினால்
அசையும் நாணலையோ? அல்லவென்றால், 8
எதைப் பார்க்கப் போனீர்கள்? மெல்லிய வஸ்
திரந்தரித்த மனுஷனையோ? மெல்லிய வஸ்
திரந்தரித்திருக்கிறவர்கள் அரசர் மாளிகைக
ளில் இருக்கிறார்கள். அல்லவென்றால், 9
எதைப்பார்க்கப் போனீர்கள்? தீர்க்கதரிசியை
யோ? [21]ஆம், தீர்க்கதரிசியைப்பார்க்கிலும் மேன்
மையுள்ளவனையே என்று உங்களுக்குச் சொல்
லுகிறேன். அதெப்படியெனில்: [22]இதோ, 10
நான் என் தூதனை உமக்கு முன்பாக அனுப்பு
கிறேன்; அவன் உமக்கு முன்னே போய்,
உமது வழியை ஆயத்தம்பண்ணுவான் என்று
எழுதிய வாக்கியத்தால் குறிக்கப்பட்டவன்
இவன்தான். ஸ்திரீகளிடத்திலே பிறந்தவர் 11
களில் யோவான்ஸ்நானனைப்பார்க்கிலும் பெ
ரியவன் ஒருவனும் எழும்பினதில்லை; ஆகி
லும், [23]பரலோகராஜ்யத்தில் சிறியவனாயிருக்
கிறவன் அவனிலும் பெரியவனாயிருக்கிறா
னென்று உங்களுக்கு மெய்யாகவே
சொல்லுகிறேன். யோவான்ஸ்நானன் கால 12
முதல் இதுவரைக்கும் [24]பரலோகராஜ்யம் பல
வந்தம் பண்ணப்படுகிறது; பலவந்தம் பண்
ணுகிறவர்கள் அதைப் பிடித்துக்கொள்ளுகி
றார்கள். நியாயப்பிரமாணமும் தீர்க்கதரிசிகள் 13
யாவரும் [25]யோவான்வரைக்கும் தீர்க்கதரிசனம்
உரைத்ததுண்டு. நீங்கள் ஏற்றுக்கொள்ள மன 14
தாயிருந்தால், [26]வருகிறவனாகிய எலியா இவன்
தான். கேட்கிறதற்குக் காதுள்ளவன் [27]கேட் 15
கக்கடவன். இந்தச் சந்ததியை யாருக்கு ஒப் 16
பிடுவேன்? [28]சந்தைவெளிகளில் உட்கார்ந்து,
தங்கள் தோழரைப் பார்த்து: உங்களுக்காகக் 17
குழல் ஊதினோம், நீங்கள் கூத்தாடவில்லை;
உங்களுக்காகப் புலம்பினோம், நீங்கள் மாரடிக்

1 மாற். 4. 22. லூக். 8. 17: 12. 2, 3. 1 கொ. 4. 5
2 ஏசா. 8. 12, 13: 51. 7, 12. லூக். 12: 4. 1 பே. 3. 14
3 1 சாமு. 14. 45. 2 சாமு. 14. 11. லூக். 21. 18. அப். 27. 34
4 லூக். 12. 8. ரோ. 10. 9, 10. வெளி. 3. 5
5 மாற். 8. 38. லூக். 9. 26. 2 தீமோ. 2. 12
6 லூக். 12. 49–53
7 மீகா. 7. 5, 6
8 சங். 41. 9: 55. 13. மீகா. 7. 6. யோவா. 13. 18
9 லூக். 14. 26
10 16. 24. மாற். 8. 34. லூக். 9. 23: 14. 27
11 16. 25. லூக். 17. 33. யோவா. 12. 25
12 18. 5. லூக். 9. 48: 10. 16. யோவா. 12. 44: 13. 20. கலா. 4. 14
13 1 இரா. 17. 10: 18. 4. 2 இரா. 4. 8
14 18. 5, 6: 25. 40. மாற். 9. 41. எபி. 6. 10
15 லூக். 7. 18, மு.
16 ஆதி. 49. 10. எண். 24. 17. தானி. 9. 24. யோவா. 6. 14
17 ஏசா. 29. 18: 35. 5: 45. 7: 61. 1. லூக். 4. 18. யாக். 2. 5
18 ஏசா. 8. 14, 15. ரோ. 9. 32, 33. 1 கொ. 1. 23, 24: 2. 14. கலா. 5. 11. 1 பே. 2. 8
19 லூக். 7. 24–30
20 எபே. 4. 14. யாக். 1. 6
21 14. 5: 21. 26. லூக். 1. 76: 7. 26
22 ஏசா. 40. 3. மல். 3. 1. மாற். 1. 2
23 யோவா. 1. 15, 27: 3. 30
24 லூக். 16. 16
25 மல். 4. 6
26 17. 12. மல். 4. 5
27 13. 9. லூக். 8. 8. வெளி. 2. 7; மு.
28 லூக். 7. 31

கவில்லை, என்று குறைசொல்லுகிற பிள்ளை
18 களுக்கு ஒப்பாயிருக்கிறது. எப்படியெனில்,
யோவான் போஜனபானம் பண்ணாதவனாய்
வந்தான்; அதற்கு அவர்கள்: [1]அவன் பிசாசு
19 பிடித்திருக்கிறவன் என்றார்கள். மனுஷகுமா
ரன் போஜனபானம்பண்ணுகிறவராய்வந்தார்;
அதற்கு அவர்கள்: இதோ, போஜனப் பிரிய
னும் மதுபானப் பிரியனுமான மனுஷன்,
[2]ஆயக்காரருக்கும் பாவிகளுக்கும் சிநேகிதன்
என்றார்கள். ஆனாலும், [3]ஞானமானது அதன்
*பிள்ளைகளால்நீதியுள்ளதென்று ஒப்புக்கொள்
ளப்படும் என்றார்.
20 அப்பொழுது, [4]தமது பலத்த செய்கைக
ளில், அதிகமானவைகளைச் செய்யக்கண்ட
பட்டணங்கள் மனந்திரும்பாமற்போனபடியி
னால், அவைகளை அவர் கடிந்துகொள்ளத்
21 தொடங்கினார்: கோராசினே! உனக்கு ஐயோ,
[5]பெத்சாயிதாவே! உனக்கு ஐயோ, உங்களில்
செய்யப்பட்ட பலத்த செய்கைகள் தீருவிலும்
சீதோனிலும் செய்யப்பட்டிருந்ததானால்,
[6]அப்பொழுதே இரட்டுடுத்திச் சாம்பலில் உட்
22 கார்ந்து மனந்திரும்பியிருப்பார்கள். நியாயத்
தீர்ப்புநாளிலே உங்களுக்கு நேரிடுவதைப்பார்க்
கிலும், [7]தீருவுக்கும் சீதோனுக்கும் நேரிடுவது
இலகுவாயிருக்கும்என்று உங்களுக்குச் சொல்
23 லுகிறேன். வானபரியந்தம் உயர்த்தப்பட்ட
கப்பர்நகூமே, [8]நீ பாதாளபரியந்தம் தாழ்த்தப்
படுவாய்; உன்னில் செய்யப்பட்ட பலத்த
செய்கைகள் சோதோமிலே செய்யப்பட்டிருந்
ததானால், அது இந்நாள்வரைக்கும் நிலைத்திருக்
24 கும். நியாயத்தீர்ப்புநாளிலே உனக்கு நேரிடு
வதைப்பார்க்கிலும், சோதோம் நாட்டிற்கு
நேரிடுவது இலகுவாயிருக்கும் என்று உங்க
ளுக்குச் சொல்லுகிறேன் என்றார்.
25 அந்தச் சமயத்திலே இயேசு சொன்னது:
[9]பிதாவே! வானத்துக்கும் பூமிக்கும் ஆண்ட
வரே! இவைகளை ஞானிகளுக்கும் கல்விமான்
களுக்கும் மறைத்து, [10]பாலகருக்கு வெளிப்
படுத்தினபடியால் உம்மை ஸ்தோத்திரிக்கி
26 றேன். ஆம், பிதாவே! இப்படிச் செய்வது
உம்முடைய திருவுளத்துக்குப் பிரியமாயிருந்
27 தது. சகலமும் என் பிதாவினால் [11]எனக்கு
ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கிறது; பிதாதவிர
வேறொருவனும் குமாரனை அறியான்; குமா
ரனும், குமாரன் எவனுக்கு அவரை வெளிப்
படுத்தச் சித்தமாயிருக்கிறாரோ அவனும்தவிர,
28 [12]வேறொருவனும் பிதாவை அறியான். வருத்
தப்பட்டுப் பாரஞ்சுமக்கிறவர்களே! [13]நீங்கள்
எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள்; நான்
29 உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன். நான்
சாந்தமும் மனத்தாழ்மையுமாய் இருக்கிறேன்;
என் நுகத்தை உங்கள்மேல் ஏற்றுக்கொண்டு,
[14]என்னிடத்தில் கற்றுக்கொள்ளுங்கள்; [15]அப்
பொழுது, உங்கள் ஆத்துமாக்களுக்கு இளைப்
30 பாறுதல் கிடைக்கும். என் நுகம் †மெதுவா
யும், [16]என் சுமை இலகுவாயும் இருக்கிறது
என்றார்.

அக்காலத்திலே, [17]இயேசு ஓய்வுநாளில் 12
பயிர்வழியே போனார்; அவருடைய சீஷர்கள்
பசியாயிருந்து, கதிர்களைக் கொய்து, தின்னத்
தொடங்கினார்கள். பரிசேயர் அதைக்கண்டு, 2
அவரை நோக்கி: இதோ, [18]ஓய்வுநாளில் செய்
யத்தகாததை உம்முடைய சீஷர்கள் செய்கிறார்
களே என்றார்கள். அதற்கு அவர்: [19]தாவீதும் 3
அவனோடிருந்தவர்களும் பசியாயிருந்தபோது
செய்ததை நீங்கள் வாசிக்கவில்லையா? அவன் 4
தேவனுடைய வீட்டில் பிரவேசித்து, [20]ஆசாரி
யர்தவிர வேறொருவரும் புசிக்கத்தகாத தேவ
சமுகத்து அப்பங்களைத் தானும் தன்னோடிருந்
தவர்களும் புசித்தார்களே. அன்றியும், ஓய் 5
வுநாட்களில் ஆசாரியர்கள் தேவாலயத்தில்
ஓய்ந்திராமல், [21]ஓய்வுநாளை வேலைநாளாக்கினா
லும், குற்றமில்லாதிருக்கிறார்கள் என்று நீங்
கள் வேதத்தில் வாசிக்கவில்லையா? தேவாலயத் 6
திலும் பெரியவர் [22]இங்கே இருக்கிறார் என்று
உங்களுக்குச் சொல்லுகிறேன். பலியையல்ல 7
இரக்கத்தையே விரும்புகிறேன் [23]என்பதின்
கருத்து இன்னதென்று அறிந்தீர்களானால்,
குற்றமில்லாதவர்களை நீங்கள் குற்றப்படுத்த
மாட்டீர்கள். மனுஷகுமாரன் ஓய்வுநாளுக் 8
கும் ஆண்டவராய் இருக்கிறார் என்றார்.
அவர் அவ்விடம் விட்டுப் போய், [24]அவர் 9
களுடைய ஜெபஆலயத்தில் பிரவேசித்தார். 10
அங்கே சூம்பின கையையுடைய மனுஷன்
ஒருவன் இருந்தான். [25]அப்பொழுது, அவர்
மேல் குற்றஞ்சாட்டும்படிக்கு: ஓய்வுநாளில்
சொஸ்தமாக்குகிறது நியாயமா என்று கேட்
டார்கள். அதற்கு அவர்: உங்களில் எந்த 11
மனுஷனுக்காகிலும் ஒரு ஆடு இருந்து, அது
ஓய்வுநாளில் குழியிலே விழுந்தால், [26]அதைப்
பிடித்துத் தூக்கிவிடமாட்டானோ? ஆட்டைப் 12
பார்க்கிலும் மனுஷனானவன் எவ்வளவோ
விசேஷித்திருக்கிறான்! ஆதலால், ஓய்வுநாளி
லே நன்மை செய்வது நியாயந்தான் என்று
சொன்னார். பின்பு அந்த மனுஷனை நோக்கி: 13
உன் கையை நீட்டு என்றார். அவன் நீட்டி
னான்; அது மறுகையைப்போல் சொஸ்த
மாயிற்று. அப்பொழுது, பரிசேயர் வெளியே 14
போய், [27]அவரைக் கொலைசெய்யும்படி அவ
ருக்கு விரோதமாய் ஆலோசனைபண்ணினார்
கள். இயேசு அதை அறிந்து, [28]அவ்விடம் 15
விட்டு விலகிப்போனார். திரளான ஜனங்கள்
அவருக்குப் பின்சென்றார்கள்; [29]அவர்களெல்
லாரையும் அவர் சொஸ்தமாக்கி, தம்மைப் 16
பிரசித்தம்பண்ணாதபடி அவர்களுக்குக் கண்
டிப்பாய்க் கட்டளையிட்டார். ஏசாயா தீர்க்க 17
தரிசியால் உரைக்கப்பட்டது நிறைவேறும்படி
இப்படி நடந்தது. அவன் உரைத்ததாவது:
இதோ, [30]நான் தெரிந்துகொண்ட என்னு 18
டைய தாசன், என் ஆத்துமாவுக்குப் பிரியமா
யிருக்கிற என்னுடைய நேசன்; என் ஆவியை
அவர்மேல் அமரப்பண்ணுவேன், அவர் புற
ஜாதியாருக்கு நியாயத்தை அறிவிப்பார். வாக் 19
குவாதம் செய்யவுமாட்டார், கூக்குரலிடவு

1 10. 25. லூ. 7. 20
2 லூ. 15. 2; 19. 7
3 சங். 92. 5, 6. நீதி. 17. 24. லூ. 7. 35
* பிள்ளைகளால்
4 லூ. 10. 13. மு
5 யோ. 12. 21
6 யோனா 3. 7, 8
7 10. 15
8 ஏசா. 14. 13–15. புல. 2. 1
9 லூ. 10. 21, 22
10 சங். 8. 2. எபே. 1. 7, 8. 1கொ. 1. 19, 27. 2கொ. 3. 14
11 28. 18. லூ. 10. 22. யோ. 3. 35; 17. 2. 1கொ. 15. 27
12 யோ. 1. 18. 1யோ. 5. 20
13 ஏசா. 55. 1–4
14 சகரி. 9. 9. பிலி. 2. 5–8. 1பே. 2. 21. 1யோ. 2. 6
15 எரே. 6. 16
† இன்பமாயும்
16 1யோ. 5. 3
17 உபா. 23. 25. மாற். 2. 23. மு. லூ. 6. 1. மு
18 யாத். 31. 15
19 1சாமு. 21. 6
20 யாத். 25. 30
21 எண். 28. 9. யோ. 7. 22, 23
22 23. 17–21. 2நாளா. 6. 18. மல். 3. 1
23 ஓசி. 6. 6. மீகா. 6. 6
24 மாற். 3. 1. மு. லூ. 6. 6. மு
25 லூ. 13. 14; 14. 3. யோ. 9. 16
26 யாத். 23. 4, 5. உபா. 22. 4
27 27. 1. மாற். 3. 6. மு. லூ. 6. 11. யோ. 5. 18
28 10. 23. மாற். 3. 7
29 19. 2
30 ஏசா. 42. 1. மு

மாட்டார்; அவருடைய சத்தத்தை ஒருவனும்
20 வீதிகளில் கேட்பதுமில்லை. அவர் நியாயத்
திற்கு ஜெயங்கிடைக்கப் பண்ணுகிறவரைக்
கும், நெரிந்த நாணலை முறிக்காமலும், மங்கி
யெரிகிற திரியை அணைக்காமலும் இருப்பார்.
21 அவருடைய நாமத்தின்மேல் புறஜாதியார் நம்
பிக்கையாயிருப்பார்கள் என்பதே.
22 அப்பொழுது, [1]பிசாசு பிடித்த குருடும்
ஊமையுமான ஒருவன் அவரிடத்தில் கொண்
டுவரப்பட்டான்; குருடும் ஊமையுமானவன்
பேசவுங் காணவுந்தக்கதாக அவனைச் சொஸ்த
23 மாக்கினார். ஜனங்களெல்லாரும் ஆச்சரியப்
பட்டு: தாவீதின் குமாரன் இவர்தானோ? என்
24 றார்கள். பரிசேயர் அதைக் கேட்டு; [2]இவன்
பிசாசுகளின் தலைவனாகிய பெயெல்செபூலி
னாலே பிசாசுகளைத் துரத்துகிறானேயல்லாமல்
25 மற்றப்படியல்ல என்றார்கள். இயேசு அவர்
கள் சிந்தனைகளை அறிந்து, அவர்களை நோக்கி:
[3]தனக்குத்தானே விரோதமாய்ப் பிரிந்திருக்
கிற எந்த ராஜ்யமும் பாழாய்ப்போம்; தனக்
குத்தானே விரோதமாய்ப் பிரிந்திருக்கிற எந்
தப் பட்டணமும் எந்த வீடும் நிலைநிற்கமாட்
26 டாது. சாத்தானைச் சாத்தான் துரத்தினால்
தனக்கு விரோதமாகத் தானே பிரிவினை செய்
கிறதாயிருக்குமே; அப்படிச் செய்தால் அவன்
27 ராஜ்யம் எப்படி நிலைநிற்கும்? நான் பெயெல்
செபூலினாலே பிசாசுகளைத் துரத்தினால், உங்
கள் பிள்ளைகள் அவைகளை யாராலே துரத்
துகிறார்கள்? ஆகையால், அவர்களே உங்களை
28 நியாயந் தீர்க்கிறவர்களாயிருப்பார்கள். நான்
தேவனுடைய ஆவியினாலே பிசாசுகளைத் துரத்
துகிறபடியால், [4]தேவனுடைய ராஜ்யம் உங்
29 களிடத்தில் வந்திருக்கிறதே. அன்றியும், [5]பல
வானை முந்திக் கட்டினாலொழிய பலவானு
டைய வீட்டுக்குள் ஒருவன் புகுந்து, அவன்
உடைமைகளை எப்படிக் கொள்ளையிடக்கூடும்?
கட்டினானேயாகில், அவன் வீட்டைக் கொள்
30 ளையிடலாம். என்னோடே இராதவன் [6]என
க்கு விரோதியாயிருக்கிறான்; என்னோடே
31 சேர்க்காதவன் சிதறடிக்கிறான். ஆதலால்,
நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்: [7]எந்தப்
பாவமும் எந்தத் தூஷணமும் மனுஷருக்கு
மன்னிக்கப்படும்; ஆவியானவருக்கு விரோ
தமான தூஷணமோ மனுஷருக்கு மன்
32 னிக்கப்படுவதில்லை. எவனாகிலும் மனுஷ
குமாரனுக்கு விரோதமான *வார்த்தை சொன்
னால் அது அவனுக்கு மன்னிக்கப்படும்; எவனா
கிலும் பரிசுத்த ஆவிக்கு விரோதமாகப் பேசி
னால் அது இம்மையிலும் மறுமையிலும் அவ
33 னுக்கு மன்னிக்கப்படுவதில்லை. மரம் நல்ல
தென்றால், [8]அதின் கனியும் நல்லதென்று
சொல்லுங்கள்; மரம் கெட்டதென்றால், அ
தின் கனியும் கெட்டதென்று சொல்லுங்கள்;
மரமானது அதின் கனியினால் அறியப்படும்.
34 விரியன்பாம்புக் குட்டிகளே, [9]நீங்கள் பொல்
லாதவர்களாயிருக்க, நலமானவைகளை எப்ப
டிப் பேசுவீர்கள்? இருதயத்தின் நிறைவினால்

1 மாற். 3. 11. லூ. 11. 14. மு

2 9. 34. மாற். 3. 22. லூ. 11. 15

3 9. 4. சங். 139. 2. யோ. 2. 25. வெளி. 2. 23

4 6. 33. தானி. 2. 44. லூ. 11. 20: 17. 21

5 ஏசா. 49. 24: 53. 12. லூ. 11. 21–23. வெளி. 12. 7–10: 20. 2, 3

6 1 யோ. 2. 19

7 மாற். 3. 28. லூ. 12. 10. அப். 7. 51. எபி. 6. 4: 10. 29. 1 யோ. 5. 16

* விசேஷத்தை. 11. 19: 13. 55. யோ. 5. 12, 53. 1 தீமோ. 1. 13

8 7. 16, 17. லூ. 6. 43, 44

9 3. 7: 23. 33. லூ. 6. 45

10 பிர. 12. 14. எபே. 5. 4, 6. யூதா 15.

11 நீதி. 13. 3

12 16. 1. மாற். 8. 11. லூ. 11. 16, 29. யோ. 2. 18. 1 கொ. 1. 22

13 16. 4. ஏசா. 57. 3. மாற். 8. 38. யோ. 4. 48

14 யோனா 1. 17

15 எரே. 3. 11. எசே. 16. 51. யோனா. 3. 5. லூ. 11. 32. ரோ. 2. 27

16 1 இரா. 10. 1. 2 நாளா. 9. 1. லூ. 11. 31. மு

17 17. 24. யோபு 1. 7. லூ. 11. 24–26. 1 பே. 5. 8

18 எபி. 6. 4: 10. 26. 2 பே. 2. 20–22

19 மாற். 3. 31. மு. லூ. 8. 19, 21

20 13. 55. மாற். 6. 3. யோ. 2. 12. அப். 1. 14. 1 கொ. 9. 5. கலா. 1. 19

வாய் பேசும். நல்ல மனுஷன் இருதயமாகிய 35
நல்ல பொக்கிஷத்திலிருந்து நல்லவைகளை
எடுத்துக் காட்டுகிறான்; பொல்லாத மனுஷன்
பொல்லாத பொக்கிஷத்திலிருந்து பொல்லா
தவைகளை எடுத்துக் காட்டுகிறான். மனுஷர் 36
பேசும் வீணான வார்த்தைகள் யாவையுங்குறி
த்து [10]நியாயத்தீர்ப்புநாளிலே கணக்கொப்புவிக்
கவேண்டும் என்று உங்களுக்குச் சொல்லுகி
றேன். ஏனெனில், [11]உன் வார்த்தைகளினா 37
லே நீதிமான் என்று தீர்க்கப்படுவாய். அல்
லது உன் வார்த்தைகளினாலே குற்றவாளி
என்று தீர்க்கப்படுவாய் என்றார்.
அப்பொழுது, வேதபாரகரிலும் பரிசேயரி 38
லும் சிலர் அவரை நோக்கி: [12]போதகரே, உம்
மால் ஒரு அடையாளத்தைக் காண விரும்புகி
றோம் என்றார்கள். அவர்களுக்கு அவர் பிர 39
தியுத்தரமாக: [13]இந்தப் பொல்லாத விபசார
சந்ததியார் அடையாளத்தைத் தேடுகிறார்கள்;
ஆனாலும் யோனா தீர்க்கதரிசியின் அடையாள
மேயன்றி வேறே அடையாளம் இவர்களுக்
குக் கொடுக்கப்படுவதில்லை. யோனா இரவும் 40
பகலும் மூன்றுநாள் ஒரு பெரிய மீனின் வயிற்
றில் இருந்ததுபோல, [14]மனுஷகுமாரனும் இர
வும் பகலும் மூன்றுநாள் பூமியின் இருதயத்
தில் இருப்பார். யோனாவின் பிரசங்கத்தைக் 41
கேட்டு நினிவே பட்டணத்தார் மனந்திரும்
பினார்கள். [15]இதோ, யோனாவிலும் பெரியவர்
இங்கே இருக்கிறார். ஆதலால் நியாயத்தீர்ப்பு
நாளிலே நினிவேபட்டணத்தார் இந்தச் சந்ததி
யாரோடெழுந்து நின்று இவர்கள்மேல் குற்
றஞ் சுமத்துவார்கள். தென்தேசத்து ராஜஸ் 42
திரீ [16]பூமியின் எல்லைகளிலிருந்து சாலொ
மோனுடைய ஞானத்தைக் கேட்க வந்தாள்.
இதோ, சாலொமோனிலும் பெரியவர் இங்
கே இருக்கிறார். ஆதலால் நியாயத்தீர்ப்பு
நாளிலே அந்த ராஜஸ்திரீ இந்தச் சந்ததியா
ரோடெழுந்து நின்று இவர்கள்மேல் குற்றஞ்
சுமத்துவாள். அசுத்தஆவி ஒரு மனுஷனை 43
விட்டுப் புறப்படும்போது, [17]வறண்ட இடங்
களில் அலைந்து, இளைப்பாறுதல் தேடியும்
கண்டடையாமல்: நான் விட்டுவந்த என் 44
வீட்டுக்குத் திரும்பிப்போவேன் என்று சொல்
லி; அங்கே வந்து, அந்த வீடு வெறுமையாக
வும், பெருக்கி, ஜோடிக்கப்பட்டதாகவும்
இருக்கக் கண்டு, திரும்பிப்போய், தன்னி 45
லும் பொல்லாத வேறு ஏழு ஆவிகளைத் தன்
னோடே கூட்டிக்கொண்டுவந்து, உட்புகுந்து,
அங்கே குடியிருக்கும்; [18]அப்பொழுது, அந்த
மனுஷனுடைய முன்னிலைமையிலும் அவன்
பின்னிலைமை அதிக கேடுள்ளதாயிருக்கும்;
அப்படியே இந்தப் பொல்லாத சந்ததியாருக்
கும் சம்பவிக்கும் என்றார்.
இப்படி அவர் ஜனங்களோடே பேசுகை 46
யில், [19]அவருடைய தாயாரும் [20]சகோதரரும்
அவரிடத்தில் பேசவேண்டுமென்று வெளி
யே நின்றார்கள். அப்பொழுது, ஒருவன் 47
அவரை நோக்கி: உம்முடைய தாயாரும் உம்

முடைய சகோதாரும் உம்மோடே பேசவேண்
டுமென்று வெளியே நிற்கிருர்கள் என்ருன்.
48 தம்மிடத்தில் இப்படிச் சொன்னவனுக்கு
அவர் பிரதியுத்தரமாக: என் தாயார் யார்? என்
49 சகோதாார் யார்? என்று சொல்லி, தம்மு
டைய கையைத் தமது சீஷர்களுக்கு நேரே
நீட்டி: இதோ, என் தாயும் என் சகோதாரும்
50 இவர்களே! பரலோகத்திலிருக்கிற என் பிதா
வின் சித்தத்தின்படி செய்கிறவன் எவனே,
[1]அவனே எனக்குச் சகோதானும் சகோதரி
யும் தாயுமாய் இருக்கிருன் என்ருர்.

**13** இயேசு அன்றையதினமே வீட்டிலிருந்து
புறப்பட்டுப்போய், [2]கடலோரத்திலே உட்
2 கார்ந்தார். திரளான ஜனங்கள் அவரிடத்தில்
கூடிவந்தபடியால், [3]அவர் படவில் ஏறி உட்
கார்ந்தார்; ஜனங்களெல்லாரும் கரையிலே
3 நின்ருர்கள். அவர் அநேக விசேஷங்களை
உவமைகளாக அவர்களுக்குச் சொன்ஞர்:
கேளுங்கள், [4]விதைக்கிறவன் ஒருவன் விதைக்
4 கப் புறப்பட்டான். அவன் விதைக்கையில்,
சிலவிதை வழியருகே விழுந்தது; பறவைகள்
5 வந்து அதைப் பட்சித்துப்போட்டது. சில
விதை அதிக மண்ணில்லாத கற்பாறை இடங்
களில் விழுந்தது; மண் ஆழமாயிராததினலே
6 அது சீக்கிரமாய் முளைத்தது. வெயில் ஏறின
போதோ, தீய்ந்துபோய், வேரில்லாமையால்
7 உலர்ந்துபோயிற்று. சில விதை முள்ளுள்ள
இடங்களில் விழுந்தது; முள் வளர்ந்து அதை
8 நெருக்கிப்போட்டது. சில விதையோ நல்ல
நிலத்தில் விழுந்து, [5]சிலது நூருகவும், சிலது
அறுபதாகவும், சிலது முப்பதாகவும் பலன்
9 தந்தது. கேட்கிறதற்குக் காதுள்ளவன் [6]கேட்
கக்கடவன் என்ருர்.
10 அப்பொழுது, சீஷர்கள் அவரிடத்தில்
வந்து: ஏன் அவர்களோடே உவமைகளாகப்
11 பேசுகிறீர் என்று கேட்டார்கள். அவர்க
ளுக்கு அவர் பிரதியுத்தரமாக: [7]பரலோக ராஜ்
யத்தின் ரகசியங்களை அறியும்படி உங்களுக்கு
அருளப்பட்டது, அவர்களுக்கோ அருளப்பட
12 வில்லை. 'உள்ளவன் எவனே அவனுக்குக்
கொடுக்கப்படும், [8]பரிபூரணமும் அடைவான்;
இல்லாதவன் எவனே அவனிடத்தில் உள்ள
13 தும் எடுத்துக்கொள்ளப்படும். அவர்கள் கண்
டும் காணுதவர்களாயும், கேட்டும் கேளாதவர்க
ளாயும், உணர்ந்துகொள்ளாதவர்களாயும் இருக்
கிறபடியினுல், நான் உவமைகளாக அவர்க
14 ளோடே பேசுகிறேன். ஏசாயாவின் தீர்க்க
தரிசனம் அவர்களிடத்தில் நிறைவேறுகிறது;
அதாவது: [9]காதாரக்கேட்டும் உணராதிருப்பீர்
கள்; கண்ணாரக் கண்டும் அறியாதிருப்பீர்கள்.
15 இந்த ஜனங்கள் கண்களினுல் காணுமலும்,
[10]காதுகளினுல் கேளாமலும், இருதயத்தினுல்
உணர்ந்து மனந்திரும்பாமலும், நான் அவர்
களை ஆரோக்கியமாக்காமலும் இருக்கும்படி
யாக, அவர்கள் இருதயம் கொழுத்திருக்கி
றது; காதால் மந்தமாய்க் கேட்டு, தங்கள் கண்
16 களை மூடிக்கொண்டார்கள் என்பதே. உங்
கள் கண்கள் காண்கிறதினுலும், உங்கள் காது
கள் கேட்கிறதினுலும், [11]அவைகள் பாக்கிய
முள்ளவைகள். அநேக தீர்க்கதரிசிகளும் நீதி 17
மான்களும் நீங்கள் காண்கிறவைகளைக் காண
வும், [12]நீங்கள் கேட்கிறவைகளைக் கேட்கவும்
விரும்பியும், காணுமலும் கேளாமலும் போ
ஞர்களென்று, மெய்யாகவே உங்களுக்குச்
சொல்லுகிறேன். ஆகையால் [13]விதைக்கிற 18
வனைப்பற்றிய உவமையைக் கேளுங்கள். ஒரு 19
வன், [14]ராஜ்யத்தின் வசனத்தைக் கேட்டும்
உணராதிருக்கும்போது, [15]பொல்லாங்கன்
வந்து, அவன் இருதயத்தில் விதைக்கப்பட்ட
தைப் பறித்துக்கொள்ளுகிருன்; அவனே வழி
யருகே விதைக்கப்பட்டவன். கற்பாறை இடங் 20
களில் விதைக்கப்பட்டவன், வசனத்தைக்
கேட்டு, [16]உடனே அதைச் சந்தோஷத்தோ
டே ஏற்றுக்கொள்ளுகிறவன்; ஆகிலும் தனக் 21
குள்ளே வேரில்லாதவனுய், கொஞ்சக்கால
மாத்திரம் நிலைத்திருப்பான்; [17]வசனத்தினி
மித்தம் உபத்திரவமும் துன்பமும் உண்டா
னவுடனே இடறலடைவான். முள்ளுள்ள 22
இடங்களில் விதைக்கப்பட்டவன், [18]வசனத்
தைக் கேட்கிறவனுயிருந்தும், உலகக்கவலையும்
ஐசுவரியத்தின் மயக்கமும் வசனத்தை நெருக்
கிப்போடுகிறதினுல், அவனும் *பலனற்றுப்
போவான். நல்ல நிலத்தில் விதைக்கப்பட் 23
டவனே, வசனத்தைக் கேட்கிறவனும் உணரு
கிறவனுமாயிருந்து, [19]நூருகவும் அறுபதாகவும்
முப்பதாகவும் பலன் தருவான் என்ருர்.
வேறொரு உவமையை அவர்களுக்குச் 24
சொன்ஞர்: பரலோகராஜ்யம் தன் †நிலத்தில்
நல்ல விதையை விதைத்த மனுஷனுக்கு ஒப்
பாயிருக்கிறது. மனுஷர் நித்திரைபண்ணு 25
கையில் அவனுடைய சத்துரு வந்து, கோது
மைக்குள் களைகளை விதைத்துவிட்டுப் போ
ஞன். பயிரானது வளர்ந்து கதிர்விட்ட 26
போது, களைகளும் காணப்பட்டது. வீட் 27
டெஜமானுடைய வேலைக்காரர் அவனிடத்
தில் வந்து: ஆண்டவனே, நீர் உமது நிலத்
தில் நல்ல விதையை விதைத்தீர் அல்லவா?
பின்னை அதில் களைகள் எப்படி உண்டானது
என்ருர்கள். அதற்கு அவன்: சத்துரு அதைச் 28
செய்தான் என்ருன். அப்பொழுது வேலைக்
காரர்: நாங்கள் போய் அவைகளைப் பிடுங்கிப்
போட உமக்குச் சித்தமா? என்று கேட்டார்
கள். அதற்கு அவன்: வேண்டாம், களை 29
களைப் பிடுங்கும்போது நீங்கள் கோதுமையை
யுங்கூட வேரோடே பிடுங்காதபடிக்கு, இரண்
டையும் அறுப்புமட்டும் வளரவிடுங்கள். அறுப் 30
புக்காலத்தில் நான் அறுக்கிறவர்களை நோக்கி:
முதலாவது, களைகளைப் பிடுங்கி, அவை
களைச் சுட்டெரிக்கிறதற்குக் கட்டுகளாகக்
கட்டுங்கள்; [20]கோதுமையையோ என் களஞ்
சியத்தில்சேர்த்துவையுங்கள் என்பேன் என்று
சொன்ஞன் என்ருர்.
வேறொரு உவமையை அவர்களுக்குச் 31
சொன்ஞர்: [21]பரலோகராஜ்யம் கடுகுவிதைக்கு

1 7. 20. ரோ. 15. 14. கலா. 5. 6. எபி. 2. 11. 1 யோ. 2. 17
2 மாற். 4. 1
3 லூ. 5. 3: 8. 4
4 மாற். 4. 2. ழி. லூ. 8. 5. ழி
5 ஆதி. 26. 12
6 11. 15. மாற். 4. 9
7 11. 25: 16. 17. மாற். 4. 11. ழி. லூ. 8. 9 ழி. 1 கொ. 2. 10, 14. எபே. 1. 9, 18. 1 யோ. 2. 27
8 25. 29. லூ. 19. 26
9 ஏசா. 6. 9, 10. எசே. 12. 2. யோ. 12. 40. அப். 28. 26, 27. ரோ. 11. 8. 2 கொ. 3. 14, 15
10 எபி. 5. 11
11 16. 17. லூ. 10. 23, 24. யோ. 20. 29. 2 கொ. 4. 6
12 எபே. 3. 5, 6. எபி. 11. 13. 1 பே. 1. 10. 11
13 மாற். 4. 14. ழி. லூ. 8. 11. ழி
14 4. 23
15 1 யோ. 2. 13, 14: 3. 12
16 ஏசா. 58. 2. எசே. 33. 31, 32. யோ. 5. 35. கலா. 4. 15
17 11. 6. மாற். 7. 24. 2 தீமோ. 1. 15
18 19. 23. எரே. 4. 3. மாற். 10. 23. லூ. 18. 24. 1 தீமோ. 6. 9. 2 தீமோ. 4. 10
* கனி
19 யோ. 15. 5
† வயலில்
20 3. 12. மல். 4. 1
21 ஏசா. 2. 2, 3. மீகா. 4. 1. மாற். 4. 30. ழி. லூ. 13. 18, 19

ஒப்பாயிருக்கிறது; அதை ஒரு மனுஷன் எடுத்
32 துத் தன் நிலத்தில் விதைத்தான். அது
சகல விதைகளிலும் சிறிதாயிருந்தும், வளரும்
போது, சகல பூண்டுகளிலும் பெரிதாகி,
ஆகாயத்துப் பறவைகள் அதின் கிளைகளில்
வந்து அடையத்தக்க [1]மரமாகும் என்றார்.
33 வேறொரு உவமையை அவர்களுக்குச்
சொன்னார்: [2]பரலோகராஜ்யம் புளித்தமாவுக்கு
ஒப்பாயிருக்கிறது; அதை ஒரு ஸ்திரீ எடுத்து,
முழுவதும் புளிக்கும்வரைக்கும், மூன்றுபடி
மாவிலே அடக்கிவைத்தாள் என்றார்.
34 இவைகளையெல்லாம் இயேசு ஜனங்களோ
டே உவமைகளாகப் பேசினார்; [3]உவமைகளி
னாலேயன்றி, அவர்களோடே பேசவில்லை.
35 என் வாயை உவமைகளினால் திறப்பேன்;
[4]உலகத் தோற்றமுதல் மறைபொருளானவை
களை வெளிப்படுத்துவேன் என்று தீர்க்கதரிசி
யால் உரைக்கப்பட்டது நிறைவேறும்படி இப்
படி நடந்தது.
36 அப்பொழுது இயேசு ஜனங்களை அனுப்பி
விட்டு வீட்டுக்குப் போனார். அவருடைய
சீஷர்கள் அவரிடத்தில் வந்து: நிலத்தின்
களைகளைப்பற்றிய உவமையை எங்களுக்கு
வெளிப்படுத்தவேண்டுமென்று கேட்டார்கள்.
37 அவர் பிரதியுத்தரமாக: நல்ல விதையைவிதைக்
38 கிறவன் மனுஷகுமாரன்; [5]நிலம் உலகம்; நல்ல
விதை ராஜ்யத்தின் புத்திரர்; [6]களைகள் பொல்
39 லாங்கனுடைய புத்திரர்; அவைகளை விதைக்
கிற சத்துரு பிசாசு; [7]அறுப்பு *உலகத்தின் மு
40 டிவு; அறுக்கிறவர்கள் தேவதூதர்கள். ஆத
லால், களைகளைச் சேர்த்து அக்கினியால் சுட்
டெரிக்கிறதுபோல, இவ்வுலகத்தின் முடிவி
41 லே நடக்கும். மனுஷகுமாரன் தம்முடைய
தூதர்களை அனுப்புவார்; [8]அவர்கள் அவரு
டைய ராஜ்யத்தில் இருக்கிற சகல இடறல்
களையும் அக்கிரமஞ்செய்கிறவர்களையும் சேர்
42 த்து, அவர்களை அக்கினிச் சூளையிலே போ
டுவார்கள்; [9]அங்கே அழுகையும் பற்கடிப்பும்
43 உண்டாயிருக்கும். அப்பொழுது, [10]நீதிமான்
கள் தங்கள் பிதாவின் ராஜ்யத்திலே சூரிய
னைப்போலப் பிரகாசிப்பார்கள். கேட்கிறதற்
குக் காதுள்ளவன் கேட்கக்கடவன்.
44 அன்றியும், பரலோகராஜ்யம் [11]நிலத்தில்
புதைத்திருக்கிற பொக்கிஷத்துக்கு ஒப்பாயிரு
க்கிறது; அதை ஒரு மனுஷன் கண்டு, †மறை
த்து, அதைப்பற்றிய சந்தோஷத்தினாலே
போய், தனக்கு உண்டான எல்லாவற்றையும்
விற்று, [12]அந்த நிலத்தைக் கொள்ளுகிறான்.
45 மேலும், பரலோகராஜ்யம் நல்ல முத்துக்
களைத் தேடுகிற வியாபாரிக்கு ஒப்பாயிருக்கி
46 றது. அவன் விலையுயர்ந்த ஒரு முத்தைக்
கண்டு, [13]போய், தனக்குண்டான எல்லாவற்
றையும் விற்று, அதைக் கொள்ளுகிறான்.
47 அன்றியும், பரலோகராஜ்யம் கடலிலே
போடப்பட்டு, [14]சகலவிதமான ‡மீன்களையும்
சேர்த்து வாரிக்கொள்ளும் வலைக்கு ஒப்பா
48 யிருக்கிறது. அது நிறைந்தபோது, அதைக்
கரையில் இழுத்து, உட்கார்ந்து, நல்லவை
களைக் கூடைகளில் சேர்த்து, ஆகாதவைகளை
எறிந்துபோடுவார்கள். இப்படியே உலகத் 49
தின் முடிவிலே நடக்கும். [15]தேவதூதர்கள்
புறப்பட்டு, நீதிமான்களின் நடுவிலிருந்து
பொல்லாதவர்களைப் பிரித்து, அவர்களை அக் 50
கினிச் சூளையிலே போடுவார்கள்; [16]அங்கே
அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்கும்
என்றார்.
பின்பு, இயேசு அவர்களை நோக்கி: இவை 51
களையெல்லாம் அறிந்துகொண்டீர்களா என்று
கேட்டார். அதற்கு அவர்கள்: ஆம், அறிந்து
கொண்டோம், ஆண்டவரே, என்றார்கள்.
அப்பொழுது அவர் அவர்களை நோக்கி: இப் 52
படியிருக்கிறபடியால், பரலோகராஜ்யத்துக்
கடுத்தவைகளில் உபதேசிக்கப்பட்டுத்தேறின
வேதபாரகன் எவனும் தன் பொக்கிஷத்திலி
ருந்து [17]புதியவைகளையும் பழையவைகளையும்
எடுத்துக்கொடுக்கிற வீட்டெஜமானாகிய மனு
ஷனுக்கு ஒப்பாயிருக்கிறான் என்றார்.
இயேசு இந்த உவமைகளைச் சொல்லி 53
முடித்தபின்பு, அவ்விடம் விட்டு, தாம் 54
வளர்ந்த ஊரிலே வந்து, [18]அவர்களுடைய
ஜெப ஆலயத்திலே அவர்களுக்கு உபதேசம்
பண்ணினார். அவர்கள் ஆச்சரியப்பட்டு:
இவனுக்கு இந்த ஞானமும் பலத்த செய்
கைகளும் எப்படி வந்தது? இவன் தச்சனு 55
டைய குமாரன் அல்லவா? இவன் †தாய் மரி
யாள் என்பவள் அல்லவா? [19]யாக்கோபு யோ
சே சீமோன் யூதா என்பவர்கள் இவனுக்குச்
சகோதரர் அல்லவா? இவன் சகோதரிக 56
ளெல்லாரும் நம்மிடத்தில் இருக்கிறார்கள்
அல்லவா? இப்படியிருக்க, இதெல்லாம் இவ
னுக்கு எப்படி வந்தது? என்று சொல்லி, அவ 57
ரைக்குறித்து [20]இடறலடைந்தார்கள்.
இயேசு அவர்களை நோக்கி: [21]தீர்க்கதரிசி ஒரு
வன் தன் ஊரிலும் தன் வீட்டிலுமேயன்றி
வேறெங்கும் கனவீனமடையான் என்றார்.
அவர்களுடைய அவிசுவாசத்தினிமித்தம் [22]அ 58
வர் அங்கே அநேக அற்புதங்களைச் செய்ய
வில்லை.
அக்காலத்தில், காற்பங்கு தேசாதிபதியா 14
கிய [23]ஏரோது இயேசுவின் கீர்த்தியைக் கேள்
விப்பட்டு, தன் ஊழியக்காரரை நோக்கி: 2
இவன் யோவான்ஸ்நானன்; இவன் மரித்தோ
ரிலிருந்து எழுந்தான்; ஆகையால், இவனிடத்
தில் பலத்த செய்கைகள் விளங்குகிறது
என்றான். ஏரோது தன் சகோதரனாகிய பிலிப் 3
புவின் மனைவி ஏரோதியாளினிமித்தம் [24]யோ
வானைப் பிடித்துக் கட்டிக் காவலில் வைத்தி
ருந்தான். ஏனெனில்: [25]நீர் அவளை வைத்துக் 4
கொள்வது நியாயமல்லவென்று யோவான்
அவனுக்குச் சொல்லியிருந்தான். ஏரோது 5
அவனைக் கொலை செய்ய மனதாயிருந்தும்,
[26]ஜனங்கள் அவனைத் தீர்க்கதரிசியென்று எண்
ணினபடியால் அவர்களுக்குப் பயந்திருந்
தான். அப்படியிருக்க, ஏரோதின் ஜென்மநாள் 6

1 எசே. 17. 23
2 லூ. 13. 20, 21
3 மாற். 4. 33, 34
4 சங். 78. 2. ரோ. 16. 25, 26. 1 கொ. 2. 7. எபே. 3. 9. கொலோ. 1. 26
5 24. 14. மாற். 16. 15. லூ. 24. 47. ரோ. 10. 18. கொலோ. 1. 6
6 ஆதி. 3. 15. யோ. 8. 44. அப். 13. 10. 1 யோ. 3. 8
7 யோவே. 3. 13. வெளி. 14. 15. 19
* யுகத்தின்
8 13. 7. 2 பே. 2. 1, 2
9 8. 12: 8. 12. வெளி. 19. 20: 20. 10
10 தானி. 12. 3. 1 கொ. 15. 49
11 நீதி. 2. 4, 5
† அடக்கி
12 ஏசா. 55. 1, 3. பிலி. 3. 7, 8. வெளி. 3. 18
13 நீதி. 3. 14, 15. 1 பே. 1. 23
14 22. 10
‡ சகல ஜாதிகளையும்
15 25. 32
16 42. வச
17 நீதி. 10. 21: 15. 7: 18. 4. உன்னத. 7. 13
18 2. 23. மாற். 6. 1. ழ. லூ. 4. 16. ழ
19 மாற். 6. 3. லூ. 3. 23. யோ. 6. 42
20 11. 6. மாற். 6. 3, 4
21 ஏசா. 49. 7: 53. 3. லூ. 4. 24. யோ. 4. 44
22 மாற். 6. 5, 6
23 மாற். 6. 14. லூ. 9. 7. ழ
24 மாற். 6. 17. லூ. 3. 19, 20
25 லேவி. 18. 16: 20. 21
26 21. 26. லூ. 20. 6

கொண்டாடப்படுகிறபோது, ஏரோதியாளின்
குமாரத்தி அவர்கள் நடுவே நடனம்பண்ணி
7 ஏரோதைச் சந்தோஷப்படுத்தினாள். அதி
னிமித்தம் அவன்: நீ எதைக்கேட்டாலும் தரு
வேன் என்று அவளுக்கு ஆணையிட்டு வாக்குக்
8 கொடுத்தான். அவள் தன் தாயினால் ஏவப்
பட்டபடியே: [1]யோவான்ஸ்நானனுடைய தலை
யை இங்கே ஒரு *தாலத்திலே எனக்குத் தா
9 ரும் என்று கேட்டாள். ராஜா [2]துக்கமடைந்
தான். ஆகிலும், [3]ஆணையினிமித்தமும், பந்தி
யில் கூட இருந்தவர்களினிமித்தமும், அதைக்
10 கொடுக்கக் கட்டளையிட்டு, ஆள் அனுப்பி,
காவற்கூடத்திலே யோவானைச் சிரச்சேதம்
11 பண்ணுவித்தான். அவனுடைய சிரசை ஒரு
தாலத்திலே கொண்டுவந்து, சிறு பெண்ணுக்
குக் கொடுத்தார்கள்; அவள் அதைத் தன் தாயி
12 னிடத்தில் கொண்டுபோனாள். அவனுடைய
சீஷர்கள் வந்து உடலை எடுத்து [4]அடக்கம்பண்
ணி, பின்பு போய் அந்தச் சங்கதியை இயேசு
வுக்கு அறிவித்தார்கள்.
13 இயேசு அதைக்கேட்டு, அவ்விடம் விட்டு,
படவில் ஏறி, [5]வனாந்தரமான ஓர் இடத்துக்குத்
தனியே போனார். ஜனங்கள் அதைக் கேள்
விப்பட்டு, பட்டணங்களிலிருந்து †கால்நடை
14 யாய் அவரிடத்திற்குப் போனார்கள். இயேசு
வந்து, திரளான ஜனங்களைக் கண்டு, அவர்
கள்மேல் மனதுருகி, [6]அவர்களில் வியாதிஸ்
தர்களாயிருந்தவர்களைச் சொஸ்தமாக்கினார்.
15 சாயங்காலமானபோது, [7]அவருடைய சீஷர்
கள் அவரிடத்தில் வந்து: இது வனாந்தரமான
இடம், நேரமுமாயிற்று; ஜனங்கள் கிராமங்க
ளுக்குப் போய்த் தங்களுக்குப் போஜனபதார்
த்தங்களைக் கொள்ளும்படி அவர்களை அனுப்பி
16 விடவேண்டும் என்றார்கள். இயேசு அவர்
களை நோக்கி: அவர்கள் போகவேண்டுவதில்
லை; நீங்களே அவர்களுக்குப் போஜனங் கொ
17 டுங்கள் என்றார். அதற்கு அவர்கள்: இங்கே
எங்களிடத்தில் ஐந்து அப்பமும் இரண்டு மீன்
களுமேயல்லாமல், வேறொன்றும் இல்லை என்
18 றார்கள். அவைகளை என்னிடத்தில் கொண்
19 டுவாருங்கள் என்றார். அப்பொழுது, அவர்
ஜனங்களைப் புல்லின்மேல் பந்தியிருக்கக் கட்
டளையிட்டு, அந்த ஐந்து அப்பங்களையும், அந்த
இரண்டு மீன்களையும் எடுத்து, வானத்தை
அண்ணாந்துபார்த்து, [8]ஆசீர்வதித்து, அப்பங்
களைப் பிட்டுச் சீஷர்களிடத்தில் கொடுத்தார்;
20 சீஷர்கள் ஜனங்களுக்குக் கொடுத்தார்கள். எல்
லாரும் சாப்பிட்டுத் திருப்தியடைந்தார்கள்;
[9]மீதியான துணிக்கைகளைப் பன்னிரண்டு
21 கூடைநிறைய எடுத்தார்கள். ஸ்திரீகளும் பிள்
ளைகளும் தவிர, சாப்பிட்ட புருஷர்கள் ஏறக்
குறைய ஐயாயிரம்பேராயிருந்தார்கள்.
22 இயேசு ஜனங்களை அனுப்பிவிடுகையில்,
தம்முடைய சீஷர்கள் படவில் ஏறி, தமக்கு
முன்னே அக்கரைக்குப் போகும்படி அவர்க
23 ளைத் துரிதப்படுத்தினார். அவர் ஜனங்களை அனு
ப்பிவிட்டபின்பு, [10]தனித்து ஜெபம்பண்ண
ஒரு மலையின்மேல் ஏறி, சாயங்காலமான
போது அங்கே தனிமையாயிருந்தார். அதற் 24
குள்ளாக படவு நடுக்கடலிலே சேர்ந்து, எதிர்
க்காற்றாயிருந்தபடியால் அலைகளினால் அலை
வுபட்டது. இரவின் நாலாம் ஜாமத்திலே, 25
இயேசு கடலின்மேல் நடந்து, அவர்களிடத்
திற்கு வந்தார். அவர் கடலின்மேல் நடக்கி 26
றதைச் சீஷர்கள் கண்டு, கலக்கமடைந்து,
[11]ஆவேசம் என்று சொல்லி, பயத்தினால் அலறி
னார்கள். உடனே இயேசு அவர்களோடே 27
பேசி: [12]திடன்கொள்ளுங்கள், நான்தான், பயப்
படாதிருங்கள் என்றார். பேதுரு அவரை 28
நோக்கி: ஆண்டவரே! [13]நீரேயானால் நான்
ஜலத்தின்மேல் நடந்து உம்மிடத்தில் வரக்
கட்டளையிடும் என்றான். அதற்கு அவர்: 29
வா என்றார். அப்பொழுது, பேதுரு படவை
விட்டிறங்கி, இயேசுவினிடத்தில் போக ஜல
த்தின்மேல் நடந்தான். காற்று பலமாயிருக் 30
கிறதைக் கண்டு, பயந்து, அமிழ்ந்துபோ
கையில்: ஆண்டவரே, [14]என்னை ரட்சியும்
என்று கூப்பிட்டான். உடனே இயேசு 31
[15]கையை நீட்டி அவனைப் பிடித்து: [16]அற்பவிசு
வாசியே, ஏன் சந்தேகப்பட்டாய் என்றார்.
அவர்கள் படவில் ஏறினவுடனே [17]காற்று 32
அமர்ந்தது. அப்பொழுது, படவில் உள்ள 33
வர்கள் வந்து: [18]மெய்யாகவே நீர் தேவனு
டைய குமாரன் என்று சொல்லி, அவரைப்
பணிந்துகொண்டார்கள்.
பின்பு, அவர்கள் கடலைக் கடந்து [19]கெனே 34
சரேத்து நாட்டில் சேர்ந்தார்கள். அவ்வி 35
டத்து மனுஷர் அவரை இன்னார் என்று
அறிந்து, சுற்றுப்புறமெங்கும் செய்தி அனுப்பி,
பிணியாளிகளெல்லாரையும் அவரிடத்தில்
கொண்டுவந்து, அவருடைய வஸ்திரத்தின் 36
ஓரத்தையாகிலும் அவர்கள் தொடும்படி உத்த
ரவாகவேண்டுமென்று அவரை வேண்டிக்
கொண்டார்கள்; [20]தொட்ட யாவரும் சொஸ்த
மானார்கள்.
அப்பொழுது, [21]எருசலேமிலிருந்து வந்த **15**
வேதபாரகரும் பரிசேயரும் இயேசுவினிடத்
தில் வந்து: உம்முடைய சீஷர்கள் முன் 2
னோர்களின் பாரம்பரியத்தை ஏன் மீறி நடக்
கிறார்கள்? கைகழுவாமல் போஜனம்பண்ணு
கிறார்களே! என்றார்கள். அவர்களுக்கு அவர் 3
பிரதியுத்தரமாக: [22]நீங்கள் உங்கள் பாரம்பரி
யத்தினாலே தேவனுடைய கற்பனையை ஏன்
மீறி நடக்கிறீர்கள்? உன் தகப்பனையும் 4
[23]உன் தாயையும் கனம்பண்ணுவாயாக என்
றும், தகப்பனையாவது தாயையாவது நிந்திக்
கிறவன் கொல்லப்படவேண்டும் என்றும்,
தேவன் கற்பித்திருக்கிறாரே. நீங்களோ, எவ 5
னாகிலும் தகப்பனையாவது தாயையாவது நோ
க்கி: உனக்கு நான் செய்யத்தக்க உதவி எது
உண்டோ, [24]அதைக் காணிக்கையாகக் கொ
டுக்கிறேன் என்று சொல்லி, [25]தன் தகப்பனை
யாவது தன் தாயையாவது கனம்பண்ணாமற்
போனாலும், அவனுடைய கடமை தீர்ந்த

1 நீதி. 29. 10
* தட்டு
2 கிய. 11. 31, 35. தானி. 6. 14-16
3 கிய. 21. 1. 1 சாமு. 14. 28. பிர. 5. 2
4 அப். 8. 2
5 10. 23: 12. 15. மாற். 6. 32, மு. லூ. 9. 10, மு. யோ. 6. 1, 2, மு
† கரைவழி
6 9. 36. மாற். 6. 34
7 மாற். 6. 35. லூ. 9. 12. யோ. 6. 5
8 15. 36
9 2 இரா. 4. 1-7
10 மாற். 6. 46, மு. யோ. 6. 16, மு
11 யோபு 9. 8. லூ. 24. 37
12 அப். 23. 11
13 பிலி. 4. 13
14 சங். 69. 1, 2. புல. 3. 57
15 ஏசா. 63. 12
16 யாக். 1. 6
17 சங். 107. 20
18 சங். 2. 7. தானி. 3. 25. யோ. 1. 49: 6. 69. அப். 8. 37. ரோ. 1. 4
19 மாற். 6. 53
20 9. 20. மாற். 3. 10. லூ. 6. 19
21 மாற். 7. 1, மு
22 மாற். 7. 5. கொலோ. 2. 8, 23. தீத். 1. 14
23 யாத். 20. 12: 21. 17. லேவி. 20. 9. உபா. 5. 16. நீதி. 28. 22. எபே. 6. 2
24 மாற். 7. 11, 12
25 உபா. 27. 16

6 தென்று போதித்து, உங்கள் பாரம்பரியத்தி
னாலே தேவனுடைய கற்பனையை அவமாக்கி
7 வருகிறீர்கள். மாயக்காரரே, உங்களைக்கு
8 றித்து: இந்த ஜனங்கள் தங்கள் வாயினால்
என்னிடத்தில் சேர்ந்து, [1]தங்கள் உதடுகளி
னால் என்னைக் கனம்பண்ணுகிறார்கள்; அவர்
கள் இருதயமோ எனக்குத் தூரமாய் விலகியி
9 ருக்கிறது; மனுஷருடைய கற்பனைகளை [2]உப
தேசங்களாகப் போதித்து, வீணாய் எனக்கு
ஆராதனை செய்கிறார்கள் என்று, ஏசாயா
தீர்க்கதரிசி நன்றாய்ச் சொல்லியிருக்கிறான்
10 என்றார். பின்பு அவர் ஜனங்களை வரவ
ழைத்து, அவர்களை நோக்கி: [3]நீங்கள் கேட்டு
11 உணருங்கள். வாய்க்குள்ளே போகிறது மனு
ஷனைத் தீட்டுப்படுத்தாது, [4]வாயிலிருந்து
புறப்படுகிறதே மனுஷனைத் தீட்டுப்படுத்தும்
12 என்றார். அப்பொழுது, அவருடைய சீஷர்
கள் அவரிடத்தில் வந்து: பரிசேயர் இந்த வச
னத்தைக் கேட்டு இடறலடைந்தார்கள் என்று
13 அறிவீரா என்றார்கள். அவர் பிரதியுத்தர
மாக: [5]என் பரமபிதா நடாத நாற்றெல்லாம்
14 வேரோடே பிடுங்கப்படும். அவர்களை விட்டு
விடுங்கள், [6]அவர்கள் குருடருக்கு வழிகாட்
டுகிற குருடராயிருக்கிறார்கள்; குருடனுக்குக்
குருடன் வழிகாட்டினால் இருவரும் குழி
15 யிலே விழுவார்களே என்றார். அப்பொ
ழுது, பேதுரு அவரை நோக்கி: [7]இந்த உவ
மையை எங்களுக்கு வெளிப்படுத்தவேண்டும்
16 என்றான். அதற்கு இயேசு: [8]நீங்களும் இன்
னும் உணர்வில்லாதவர்களாயிருக்கிறீர்களா?
17 வாய்க்குள்ளே [9]போகிறதெல்லாம் வயிற்றில்
சென்று ஆசனவழியாய்க் கழிந்துபோம் என்
பதை நீங்கள் இன்னும் அறியவில்லையா?
18 வாயிலிருந்து புறப்படுகிறவைகள் இருதயத்தி
லிருந்து புறப்பட்டு வரும்; அவைகளே மனு
19 ஷனைத் தீட்டுப்படுத்தும். எப்படியெனில்,
[10]இருதயத்திலிருந்து பொல்லாத சிந்தனைக
ளும், கொலைபாதகங்களும், விபசாரங்களும்,
வேசித்தனங்களும், களவுகளும், பொய்ச்சாட்
சிகளும், தூஷணங்களும் புறப்பட்டு வரும்.
20 இவைகளே மனுஷனைத் தீட்டுப்படுத்தும்;
கைகழுவாமல் சாப்பிடுகிறது மனுஷனைத் தீட்
டுப்படுத்தாது என்றார்.
21 பின்பு, [11]இயேசு அவ்விடம் விட்டுப் புறப்
பட்டு, தீரு சீதோன் பட்டணங்களின் திசை
22 களுக்குப் போனார். அப்பொழுது, அந்தத்
திசைகளில் குடியிருக்கிற கானானிய ஸ்திரீ
ஒருத்தி அவரிடத்தில் வந்து: ஆண்டவரே,
தாவீதின் குமாரனே, எனக்கு இரங்கும்,
[12]என் மகள் பிசாசினால் கொடிய வேதனைப்ப
டுகிறாள் என்று சொல்லிக் கூப்பிட்டாள்.
23 அவளுக்குப் பிரதியுத்தரமாக [13]அவர் ஒரு வார்
த்தையும் சொல்லவில்லை. அப்பொழுது அவ
ருடைய சீஷர்கள் வந்து: இவள் நம்மைப்
பின்தொடர்ந்து கூப்பிடுகிறாளே, இவளை
அனுப்பிவிடும் என்று அவரை வேண்டிக்
24 கொண்டார்கள். அதற்கு அவர் [14]காணாமற்
போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாரி
டத்திற்கு அனுப்பப்பட்டேனேயன்றி, மற்
றப்படியல்லவென்றார். அவள் வந்து: ஆண் 25
டவரே, எனக்கு உதவிசெய்யும் என்று அவ
ரைப் பணிந்துகொண்டாள். அவர் அவளை 26
நோக்கி: பிள்ளைகளின் அப்பத்தை எடுத்து,
[15]நாய்க்குட்டிகளுக்குப்போடுகிறது நல்லதல்ல
என்றார். அதற்கு அவள்: *மெய்தான் ஆண் 27
டவரே, ஆகிலும் நாய்க்குட்டிகள் தங்கள் எஜ
மான்களின் மேஜையிலிருந்து விழும் துணிக்
கைகளைத் தின்னுமே என்றாள். இயேசு 28
[16]அவளுக்குப் பிரதியுத்தரமாக: ஸ்திரீயே,
உன் விசுவாசம் பெரிது; [17]நீ விரும்புகிறபடி
உனக்கு ஆகக்கடவது என்றார். [18]அந்நேரமே
அவள் மகள் ஆரோக்கியமானாள்.
இயேசு அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, 29
[19]கலிலேயாக் கடலருகே வந்து, ஒரு மலை
யின்மேல் ஏறி, அங்கே உட்கார்ந்தார். அப் 30
பொழுது, [20]சப்பாணிகள், குருடர், ஊமை
யர், ஊனர் முதலிய அநேகரை, திரளான
ஜனங்கள் கூட்டிக்கொண்டு இயேசுவினிடத்
தில் வந்து, அவர்களை அவர் பாதத்திலே வைத்
தார்கள்; அவர்களை அவர் சொஸ்தப்படுத்தி
னார். ஊமையர் பேசுகிறதையும், ஊனர் 31
சொஸ்தமடைகிறதையும், சப்பாணிகள் நடக்
கிறதையும், குருடர் பார்க்கிறதையும் ஜனங்
கள் கண்டு, ஆச்சரியப்பட்டு, இஸ்ரவேலின்
தேவனை மகிமைப்படுத்தினார்கள்.
பின்பு, [21]இயேசு தம்முடைய சீஷர்களை 32
அழைத்து: ஜனங்களுக்காகப் பரிதபிக்கி
றேன், இவர்கள் என்னிடத்தில் மூன்றுநாள்
தங்கியிருந்து சாப்பிட ஒன்றுமில்லாதிருக்கி
றார்கள்; இவர்களைப் பட்டினியாய் அனுப்பி
விட எனக்கு மனதில்லை, வழியில் சோர்ந்து
போவார்களே என்றார். அதற்கு அவருடைய 33
சீஷர்கள்: [22]இவ்வளவு திரளான ஜனங்களுக்
குத் திருப்தியுண்டாகும்படி வேண்டிய அப்
பங்கள் இந்த வனாந்தரத்திலே நமக்கு எப்படி
அகப்படும் என்றார்கள். அதற்கு இயேசு: 34
உங்களிடத்தில் எத்தனை அப்பங்கள் உண்டு
என்று கேட்டார். அவர்கள்: ஏழு அப்பங்க
ளும் சில சிறு மீன்களும் உண்டு என்றார்கள்.
அப்பொழுது அவர் ஜனங்களைத் [23]தரையில் 35
பந்தியிருக்கக் கட்டளையிட்டு, அந்த ஏழு 36
அப்பங்களையும் [24]அந்த மீன்களையும் எடுத்து,
ஸ்தோத்திரம்பண்ணி, பிட்டுத் தம்முடைய
சீஷர்களிடத்தில் கொடுத்தார்; சீஷர்கள் ஜனங்
களுக்குப் பரிமாறினார்கள். எல்லாரும் சாப் 37
பிட்டுத் திருப்தியடைந்தார்கள்; மீதியான
துணிக்கைகளை ஏழு கூடைநிறைய எடுத்தார்
கள். ஸ்திரீகளும் பிள்ளைகளும் தவிர, சாப் 38
பிட்ட புருஷர் நாலாயிரம்பேராயிருந்தார்கள்.
அவர் ஜனங்களை அனுப்பிவிட்டு, [25]பட 39
வில் ஏறி, மக்தலாவின் எல்லைகளில் வந்தார்.
பரிசேயரும் சதுசேயரும் [26]அவரைச் **16**
சோதிக்கும்படி அவரிடத்தில் வந்து: வானத்
திலிருந்து ஓர் அடையாளத்தைத் தங்களுக்குக்

[1] ஏசா. 29. 13. எசே. 33. 31. மாற். 7. 6
[2] கொலோ. 2. 18–22. தீத். 1. 14
[3] மாற். 7. 14. ழ
[4] அப். 10. 15. ரோ. 14. 14, 17, 20. 1 தீமோ. 4. 4. தீத். 1. 15
[5] யோ. 15. 2, 6. 1 கொ. 3. 12. ழ
[6] 23. 16. ஏசா. 9. 16. மல். 2. 8. லூ. 5. 39
[7] மாற். 7. 17
[8] 16. 9. மாற். 7. 18
[9] லூ. 6. 45. 1 கொ. 6. 13. யாக். 3. 6.
[10] ஆதி. 6. 5; 8. 21. நீதி. 6. 14; 24. 9. எரே. 17. 9. மாற். 7. 21. ரோ. 3. 10–19. கலா. 5. 19–21. எபே. 2. 3. தீத். 3. 3
[11] மாற். 7. 24. ழ
[12] லூ. 18. 38, 39
[13] சங். 28. 1. புல. 3. 8
[14] 10. 5, 6. அப். 3. 25, 26; 13. 46. ரோ. 15. 8
[15] 7. 6. பிலி. 3. 2 வெளி. 22. 15
* ஆம்
[16] யோபு 13. 15; 23. 10. புல. 3. 32
[17] சங். 145. 19
[18] யோ. 4. 50–53
[19] மாற். 7. 31
[20] சங். 103. 3. ஏசா. 35. 5, 6. லூ. 7. 22
[21] மாற். 8. 1. ழ
[22] 2 இரா. 4. 43, 44
[23] 14. 19. ழ
[24] 1 சாமு. 9. 13. லூ. 22. 19; 24. 30
[25] மாற். 8. 10
[26] 12. 38. மாற். 8. 11. ழ. லூ. 11. 16; 12. 54–56. 1 கொ. 1. 22

காண்பிக்கவேண்டும் என்று கேட்டார்கள்.
2 அவர்களுக்கு அவர் பிரதியுத்தரமாக: அஸ்த
தமனமாகிறபோது, செவ்வானமிட்டிருக்கி
றது, அதினால் வெளிவாங்கும் என்று சொல்
3 லுகிறீர்கள். உதயமாகிறபோது, செவ்வான
மும் மந்தாரமுமாயிருக்கிறது, அதினால் இன்
றைக்குக் காற்றும் மழையும் உண்டாகும்
என்று சொல்லுகிறீர்கள். மாயக்காரரே, வா
னத்தின் தோற்றத்தை நிதானிக்க உங்களுக்
குத் தெரியுமே, காலங்களின் அடையாளங்
4 களை நிதானிக்க உங்களால் கூடாதா? இந்தப்
பொல்லாத விபசார சந்ததியார் [1]அடையாளம்
தேடுகிறார்கள்; யோனா தீர்க்கதரிசியின் அடை
யாளமேயன்றி வேறே அடையாளம் இவர்க
ளுக்குக் கொடுக்கப்படுவதில்லை என்று சொல்
லி, அவர்களை விட்டுப் புறப்பட்டுப் போனார்.
5 அவருடைய சீஷர்கள் அக்கரை சேர்ந்த
போது, [2]அப்பங்களைக் கொண்டுவர மறந்து
6 போனார்கள். இயேசு அவர்களை நோக்கி: [3]பரி
சேயர் சதுசேயர் என்பவர்களின் புளித்தமா
வைக்குறித்து எச்சரிக்கையாயிருங்கள் என்
7 றார். நாம் அப்பங்களைக் கொண்டுவராதபடி
யால் இப்படிச் சொல்லுகிறார் என்று அவர்
கள் தங்களுக்குள்ளே யோசனை பண்ணிக்
8 கொண்டார்கள். இயேசு அதை அறிந்து:
[4]அற்ப விசுவாசிகளே, அப்பங்களைக் கொண்டு
வராததைக்குறித்து நீங்கள் உங்களுக்குள்ளே
9 யோசனை பண்ணுகிறதென்ன? இன்னும் நீங்
கள் உணரவில்லையா? [5]ஐந்து அப்பங்களை
ஐயாயிரம்பேருக்குப் பகிர்ந்ததையும், மீதியா
னதை எத்தனை கூடை நிறைய எடுத்தீர்கள்
10 என்பதையும்; ஏழு அப்பங்களை [6]நாலாயிரம்
பேருக்குப் பகிர்ந்ததையும், மீதியானதை எத்
தனை கூடைநிறைய எடுத்தீர்கள் என்பதையும்
11 நீங்கள் நினைவுகூராமலிருக்கிறீர்களா? பரி
சேயர் சதுசேயர் என்பவர்களின் புளித்தமா
வுக்கு எச்சரிக்கையாயிருக்கவேண்டும் என்று
நான் சொன்னது அப்பத்தைக்குறித்துச் சொ
ல்லவில்லை என்று நீங்கள் உணராதிருக்கிறது
12 எப்படி என்றார். அப்பொழுது, அவர் அப்
பத்தின் புளித்தமாவைக்குறித்து எச்சரிக்கை
யாயிருக்கவேண்டுமென்று சொல்லாமல், [7]பரி
சேயர் சதுசேயர் என்பவர்களின் உபதேசத்
தைக் குறித்தே அப்படிச் சொன்னார் என்று
அறிந்துகொண்டார்கள்.
13 பின்பு, இயேசு பிலிப்புச் செசரியாவின்
திசைகளில் வந்தபோது, தம்முடைய சீஷரை
நோக்கி: [8]மனுஷகுமாரனாகிய என்னை ஜனங்
கள் யார் என்று சொல்லுகிறார்கள் என்று
14 கேட்டார். அதற்கு அவர்கள்: [9]சிலர் உம்மை
யோவான்ஸ்நானன் என்றும், சிலர் எலியா
என்றும்; வேறு சிலர் எரேமியா, அல்லது
தீர்க்கதரிசிகளில் ஒருவர் என்றும் சொல்லுகி
15 றார்கள் என்றார்கள். அப்பொழுது அவர்:
நீங்கள் என்னை யார் என்று சொல்லுகிறீர்
16 கள் என்று கேட்டார். சீமோன் பேதுரு
பிரதியுத்தரமாக: [10]நீர் ஜீவனுள்ள தேவனு
டைய குமாரனாகிய கிறிஸ்து என்றான். இ 17
யேசு அவனை நோக்கி: [11]யோனாவின் குமார
னாகிய சீமோனே, நீ பாக்கியவான்; மாம்ச
மும் இரத்தமும் இதை உனக்கு வெளிப்படுத்
தவில்லை, பரலோகத்திலிருக்கிற என் பிதா
இதை உனக்கு வெளிப்படுத்தினார். மேலும், 18
நான் உனக்குச் சொல்லுகிறேன், [12]நீ *பேது
ருவாய் இருக்கிறாய், [13]இந்தக் கல்லின்மேல்
என் சபையைக் கட்டுவேன்; [14]பாதாளத்தின்
†வாசல்கள் அதை மேற்கொள்வதில்லை. பர 19
லோகராஜ்யத்தின் திறவுகோல்களை [15]நான்
உனக்குத் தருவேன்; பூலோகத்திலே நீ கட்டு
கிறது எதுவோ அது பரலோகத்திலும் கட்
டப்பட்டிருக்கும், பூலோகத்திலே நீ கட்ட
விழ்ப்பது எதுவோ அது பரலோகத்திலும்
கட்டவிழ்க்கப்பட்டிருக்கும் என்றார். அப் 20
பொழுது, [16]தாம் கிறிஸ்துவாகிய இயேசு
என்று ஒருவருக்கும் சொல்லாதபடிக்குத் தம்
முடைய சீஷர்களுக்குக் கட்டளையிட்டார்.
அதுமுதல் இயேசு, [17]தாம் எருசலேமுக் 21
குப் போய், மூப்பராலும் பிரதான ஆசாரிய
ராலும் வேதபாரகராலும் பலபாடுகள் பட்டு,
கொலையுண்டு, மூன்றாம் நாளில் எழுந்திருக்க
வேண்டும் என்பதைத் தம்முடைய சீஷர்க
ளுக்குச் சொல்லத்தொடங்கினார். அப்பொ 22
ழுது, பேதுரு அவரைத் தனியே அழைத்துக்
கொண்டுபோய்: ஆண்டவரே, ‡இது உமக்கு
நேரிடக்கூடாதே, இது உமக்குச் சம்பவிப்ப
தில்லை என்று அவரைக் கடிந்துகொள்ளத்தொ
டங்கினான். அவரோ திரும்பிப் பேதுருவைப் 23
பார்த்து, எனக்குப் பின்னாகப் போ, [18]சாத்தா
னே, நீ எனக்கு இடறலாயிருக்கிறாய்; தேவ
னுக்கு ஏற்றவைகளைச் சிந்தியாமல் மனுஷ
ருக்கு ஏற்றவைகளைச் சிந்திக்கிறாய் என்றார்.
அப்பொழுது, இயேசு தம்முடைய சீஷர்களை 24
நோக்கி: [19]ஒருவன் என்னைப் பின்பற்றி வர
விரும்பினால், அவன் தன்னைத்தான் வெறுத்
து, தன் சிலுவையை எடுத்துக்கொண்டு என்
னைப் பின்பற்றக்கடவன். தன் ஜீவனை ரட் 25
சிக்க விரும்புகிறவன் அதை இழந்துபோவான்;
[20]என்னிமித்தமாகத் தன் ஜீவனை இழந்துபோ
கிறவன் அதைக் கண்டடைவான். மனுஷன் 26
உலகம் முழுவதையும் ஆதாயப்படுத்திக்கொண்
டாலும், தன் §ஜீவனை நஷ்டப்படுத்தினால்
அவனுக்கு ||லாபம் என்ன? [21]மனுஷன் தன்
ஜீவனுக்கு ஈடாக என்னத்தைக் கொடுப்
பான்? மனுஷகுமாரன் [22]தம்முடைய பிதா 27
வின் மகிமை பொருந்தினவராய்த் தம்முடைய
தூதரோடுங்கூட வருவார்; அப்பொழுது,
[23]அவனவன் கிரியைக்குத் தக்கதாக அவனவ
னுக்குப் பலனளிப்பார். இங்கே நிற்கிறவர் 28
களில் சிலர் [24]மனுஷகுமாரன் தம்முடைய
ராஜ்யத்தில் வருவதைக் காணுமுன், மரணத்
தை ருசிபார்ப்பதில்லை என்று, மெய்யாகவே
உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

## 17

ஆறுநாளைக்குப் பின்பு, [25]இயேசு பேதுரு 17
வையும் யாக்கோபையும் அவனுடைய சகோ

1 12. 39. யோனா 1. 17
2 மாற். 8. 14
3 லூா. 12. 1. 1 கொ. 5. 6–8. கலா. 5. 9. 2 தீமோ. 2. 16, 17
4 6. 30: 8. 26: 14. 31
5 14. 19. ஃ. யோ. 6. 9
6 15. 34. ஃ
7 15. 1–9
8 மாற். 8. 27. ஃ. லூா. 9. 18. ஃ
9 14. 2. லூா. 7. 7–9
10 14. 33. சங். 2. 7. மாற். 8. 29. லூா. 9. 20. யோ. 1. 49: 6. 69. அப். 9. 20. எபி. 1. 2, 5. 1 யோ. 4. 15: 5. 5
11 1 கொ. 2. 10. கலா. 1. 16. எபே. 2, 8. 1 பே. 4. 15: 5. 20
12 யோ. 1. 42
* கல்
13 எபே. 2. 20. வெளி. 21. 14
14 யோபு 38. 17. சங். 9. 13. ஏசா. 38. 10: 54. 17
† அதோகதி, மரண அதிகாரங்கள்
15 18. 18. யோ. 20. 23
16 மாற். 8. 30. லூா. 9. 21
17 20. 17. மாற். 8. 30, 31. லூா. 9. 22: 18. 31: 24. 6, 7. 1 கொ. 15. 3, 4
‡ இது உமக்குத் தூரமாயிருப்பதாக
18 2 சாமு. 19. 22. ரோ. 8. 7: 14. 13
19 10. 38. மாற். 8. 34. லூா. 9. 23: 14. 27. அப். 14. 22. 1 தெச. 3. 3. 2 தீமோ. 3. 12
20 எஸ்தர் 4. 14. லூா. 17. 33. யோ. 12. 25
§ ஆத்துமாவை
|| பிரயோஜனம்
21 சங். 49. 7, 8
22 26. 64. தானி. 7. 9, 10. சக. 14. 5. மாற். 8. 38. லூா. 9. 26. யூதா 14
23 ரோ. 2. 6. 1 கொ. 3. 8. 1 பே. 1. 17. வெளி. 22. 12
24 மாற். 9. 1. லூா. 9. 27
25 மாற். 9. 2. ஃ. லூா. 9. 28. ஃ

தாளுகிய யோவானையும் கூட்டிக்கொண்டு
தனித்திருக்கும்படி உயர்ந்த மலையின்மேல்
2 போய், அவர்களுக்கு முன்பாக மறுரூபமா
ஞர்; [1]அவர் முகம் சூரியனைப்போலப் பிரகா
சித்தது, அவர் வஸ்திரம்வெளிச்சத்தைப்போல
3 வெண்மையாயிற்று. அப்பொழுது மோசே
யும் எலியாவும் அவரோடே பேசுகிறவர்களாக
4 அவர்களுக்குக் காணப்பட்டார்கள். அப்பொ
ழுது பேதுரு இயேசுவை நோக்கி: ஆண்டவ
ரே, நாம் இங்கே இருக்கிறது நல்லது; உமக்
குச் சித்தமானல், இங்கே உமக்கு ஒரு கூடார
மும், மோசேக்கு ஒரு கூடாரமும், எலியாவு
க்கு ஒரு கூடாரமுமாக, மூன்று கூடாரங்க
5 ளைப் போடுவோம் என்றான். அவன் பேசு
கையில், இதோ, ஒளியுள்ள ஒரு மேகம் அவர்
கள்மேல் நிழலிட்டது. [2]இவர் என்னுடைய
நேசகுமாரன், [3]இவரில் பிரியமாயிருக்கிறே
ன், [4]இவருக்குச் செவிகொடுங்கள் என்று
அந்த மேகத்திலிருந்து ஒரு சத்தம் உண்டா
6 யிற்று. சீஷர்கள் அதைக் கேட்டு, [5]முகங்
7 குப்புற விழுந்து, மிகவும் பயந்தார்கள். அப்
பொழுது, இயேசு வந்து, அவர்களைத் [6]தொ
ட்டு: எழுந்திருங்கள், பயப்படாதேயுங்கள்
8 என்றார். அவர்கள் தங்கள் கண்களை ஏறெ
டுத்துப் பார்க்கையில் இயேசுவைத்தவிர வே
ரொருவரையும் காணவில்லை.
9 அவர்கள் மலையிலிருந்து இறங்குகிறபோது,
இயேசு அவர்களை நோக்கி: [7]மனுஷகுமாரன்
மரித்தோரிலிருந்து எழுந்திருக்கும்வரைக்கும்
இந்தத் தரிசனத்தை ஒருவருக்கும் சொல்ல
10 வேண்டாம் என்று கட்டளையிட்டார். அப்
பொழுது, அவருடைய சீஷர்கள் அவரை
நோக்கி: [8]அப்படியானல் எலியா முந்தி வர
வேண்டும் என்று வேதபாரகர் சொல்லுகிறார்
11 களே, அதெப்படியென்று கேட்டார்கள். இ
யேசு அவர்களுக்குப் பிரதியுத்தரமாக: [9]எலி
யா முந்திவந்து எல்லாவற்றையும் சீர்ப்படுத்து
12 வது மெய்தான். ஆனலும், எலியா வந்தா
யிற்று என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்;
[10]அவனை அறியாமல் தங்கள் இஷ்டப்படி
அவனுக்குச் செய்தார்கள்; இவ்விதமாய் மனு
ஷகுமாரனும் அவர்களால் பாடுபடுவார் என்
13 றார். அவர் யோவான்ஸ்நானனைக்குறித்துத்
தங்களுக்குச் சொன்னர் என்று சீஷர்கள் அப்
பொழுது அறிந்துகொண்டார்கள்.
14 அவர்கள் ஜனங்களிடத்தில் வந்தபோது,
[11]ஒரு மனுஷன் அவரிடத்தில் வந்து, அவர்
15 முன்பாக முழங்கால்படியிட்டு: ஆண்டவ
ரே, என் மகனுக்கு இரங்கும், அவன் சந்திர
ரோகியாய்க் கொடிய வேதனைப்படுகிறான்;
அடிக்கடி தீயிலும், அடிக்கடி ஜலத்திலும் விழு
16 கிறான். அவனை உம்முடைய சீஷர்களிடத்
தில் கொண்டுவந்தேன்; அவனைச் சொஸ்த
மாக்க அவர்களால் கூடாமற்போயிற்று என்
17 றான். இயேசு பிரதியுத்தரமாக: விசுவாசமில்
லாத மாறுபாடுள்ள சந்ததியே, எதுவரைக்கும்
நான் உங்களோடு இருப்பேன்? எதுவரைக்
கும் உங்களிடத்தில் பொறுமையாய் இருப்
பேன்? அவனை என்னிடத்தில் கொண்டுவா
ருங்கள் என்றார். இயேசு பிசாசை அதட்டி 18
ஞர்; உடனே அது அவனை விட்டுப் புறப்பட்
டது; அந்நேரமே அந்த இளைஞன் சொஸ்தமா
ஞன். அப்பொழுது, சீஷர்கள் இயேசுவினி 19
டத்தில் தனித்துவந்து: அதைத் துரத்திவிட எங்
களால் ஏன் கூடாமற்போயிற்று என்று கேட்டார்
கள். அதற்கு இயேசு: [12]உங்கள் அவிசுவாசத் 20
தினலேதான்; [13]கடுகுவிதையளவு விசுவா
சம் உங்களுக்கு இருந்தால் நீங்கள் இந்த மலை
யைப் பார்த்து, இவ்விடம் விட்டு அப்புறம்
போ என்று சொல்ல அது அப்புறம் போம்;
உங்களால் கூடாதகாரியம் ஒன்றுமிராது
என்று, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லு
கிறேன். *இந்த ஜாதிப் பிசாசு ஜெபத்தின 21
லும் உபவாசத்தினலுமேயன்றி மற்றெவ்வி
தத்தினலும் புறப்பட்டுப் போகாது என்றார்.
அவர்கள் கலிலேயாவிலே சஞ்சரிக்கும் 22
போது, இயேசு அவர்களை நோக்கி: [14]மனுஷ
குமாரன் மனுஷர் கைகளில் ஒப்புக்கொடுக்
கப்படுவார். அவர்கள் அவரைக் கொலைசெய் 23
வார்கள்; ஆகிலும் மூன்றாம் நாளிலே உயிர்த்
தெழுந்திருப்பார் என்றார். அவர்கள் மிகுந்த
துக்கமடைந்தார்கள்.
அவர்கள் கப்பர்நகூமில் வந்தபோது, [15]வரிப் 24
பணம் வாங்குகிறவர்கள் பேதுருவினிடத்தில்
வந்து: [16]உங்கள் போதகர் வரிப்பணம் செலுத்
துகிறதில்லையா என்று கேட்டார்கள்; செலுத்
துகிறார் என்றான். அவன் வீட்டிற்குள் வந்த 25
போது, அவன் பேசுகிறதற்கு முன்னமே
இயேசு அவனை நோக்கி: சீமோனே, உனக்கு
எப்படித் தோன்றுகிறது? பூமியின் ராஜாக்கள்
தீர்வையையும் வரியையும் தங்கள் பிள்ளைக
ளிடத்திலோ, அந்நியரிடத்திலோ, யாரிடத்
தில் வாங்குகிறார்கள் என்று கேட்டார். அதற் 26
குப் பேதுரு: அந்நியரிடத்தில் வாங்குகிறார்
கள் என்றான். இயேசு அவனை நோக்கி: அப்
படியானல் பிள்ளைகள் அதைச் செலுத்த
வேண்டுவதில்லையே. ஆகிலும், நாம் அவர் 27
களுக்கு இடறலாயிராதபடிக்கு, நீ கடலுக்குப்
போய், தூண்டில் போட்டு, முதலாவது அகப்
படுகிற மீனைப் பிடித்து, அதின் வாயைத் திறந்
துபார்; †ஒரு வெள்ளிப்பணத்தைக் காண்பாய்;
[17]அதை எடுத்து எனக்காகவும் உனக்காகவும்
அவர்களிடத்தில் கொடு என்றார்.
அவ்வேளையிலே சீஷர்கள் இயேசுவினி 18
டத்தில் வந்து: [18]பரலோகராஜ்யத்தில் எவன்
பெரியவனயிருப்பான் என்று கேட்டார்கள்.
இயேசு ஒரு பிள்ளையைத் தம்மிடத்தில் அழை 2
த்து, அதை அவர்கள் நடுவே நிறுத்தி: நீங்கள் 3
[19]மனந்திரும்பிப் பிள்ளைகளைப்போல் ஆகாவிட்
டால், பரலோக ராஜ்யத்தில் பிரவேசிக்க
மாட்டீர்கள் என்று, மெய்யாகவே உங்களுக்
குச் சொல்லுகிறேன். ஆகையால் இந்தப் 4
பிள்ளையைப்போலத் தன்னைத் தாழ்த்துகிற
வன் எவனே, [20]அவனே பரலோகராஜ்யத்தில்

1 வெளி. 1. 16
2 3. 17. மாற். 1. 11. லூ. 3. 22. 2 பே. 1. 17
3 ஏசா. 42. 1, 21
4 உபா. 18. 15, 19. அப். 3. 22, 23. எபி. 1. 1, 2: 2. 1, 3
5 2 பே. 1. 18
6 உபா. 8, 18: 10. 10, 18. வெளி. 1. 17
7 16. 20. மாற். 8. 30: 9. 9
8 11. 14. மல். 4. 5, 6. மாற். 9. 11. மு
9 லூ. 1. 16, 17. அப். 3. 21
10 14. 3, 10: 16. 21
11 மாற். 9. 14. மு. லூ. 9. 37. மு
12 எபி. 3. 19
13 21. 21. மாற். 11. 23. லூ. 17. 6. 1 கொ. 13. 2
* இவ்வசனம் மு
14 16. 21: 20. 17. மாற். 8. 31. லூ. 9. 22, 44: 24. 6, 26, 46
15 யாத். 38. 26
16 மாற். 9. 33
† ஒன்றேகால்ரூபாய் இடை
17 ரோ. 14. 21: 15. 1-3. 2 கொ. 6. 3
18 மாற். 9. 33. மு. லூ. 9. 46. மு: 22. 24. மு
19 19. 14. சங். 51. 10-13: 131. 2. மாற். 10. 14. லூ. 18. 16. ரோ. 3. 3. 1 கொ. 14. 20. 1 பே. 2. 2
20 லூ. 14. 11. யாக். 4. 10

5 பெரியவனாயிருப்பான். இப்படிப்பட்ட ஒரு
பிள்ளையை என் நாமத்தினிமித்தம் ஏற்றுக்
கொள்ளுகிறவன் [1]என்னை ஏற்றுக்கொள்ளு
6 கிறான். என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிற
இந்தச் சிறியரில் ஒருவனுக்கு இடறல் உண்டா
க்குகிறவன் எவனோ, [2]அவனுடைய கழுத்தில்
எந்திரக்கல்லைக் கட்டி, சமுத்திரத்தின் ஆழத்
திலே அவனை அமிழ்த்துகிறது அவனுக்கு
7 நலமாயிருக்கும். இடறல்களினிமித்தம் உல
கத்துக்கு ஐயோ, [3]இடறல்கள் வருவது அவ
சியம், ஆனாலும் எந்த மனுஷனால் இடறல்
8 வருகிறதோ, அவனுக்கு ஐயோ, உன் கை
யாவது உன் காலாவது உனக்கு இடறல் உண்
டாக்கினால், [4]அதைத் தறித்து எறிந்துபோடு;
நீ இரண்டு கையுடையவனாய், அல்லது இர
ண்டு காலுடையவனாய் நித்திய அக்கினியிலே
தள்ளப்படுவதைப்பார்க்கிலும், சப்பாணியாய்,
அல்லது ஊனனாய், நித்திய ஜீவனுக்குள்
9 பிரவேசிப்பது உனக்கு நலமாயிருக்கும். உன்
கண் உனக்கு இடறல் உண்டாக்கினால்,
[5]அதைப் பிடுங்கி எறிந்துபோடு; இரண்டு
கண்ணுடையவனாய் எரிநரகத்தில் தள்ளப்
படுவதைப்பார்க்கிலும், ஒற்றைக்கண்ணனாய்
ஜீவனுக்குள் பிரவேசிப்பது உனக்கு நலமா
10 யிருக்கும். இந்தச் சிறியரில் ஒருவனையும்
அற்பமாய் எண்ணாதபடிக்கு எச்சரிக்கையா
யிருங்கள்; அவர்களுக்குரிய [6]தேவதூதர்கள்
பரலோகத்திலே என் [7]பரமபிதாவின் சமு
கத்தை எப்போதும் தரிசிக்கிறார்கள் என்று உங்
11 களுக்குச் சொல்லுகிறேன். மனுஷகுமாரன்
12 கெட்டுப்போனதை [8]ரட்சிக்க வந்தார். உங்க
ளுக்கு எப்படித் தோன்றுகிறது? [9]ஒரு மனு
ஷனுக்கு நூறு ஆடுகளிருக்க, அவைகளில்
ஒன்று *சிதறிப்போனால், அவன் மற்றத்
தொண்ணூற்றொன்பது ஆடுகளையும் மலைக
ளில் விட்டுப்போய்ச் சிதறிப்போனதைத் தே
13 டாமலிருப்பானோ? அவன் அதைக் கண்டு
பிடித்தால், சிதறிப்போகாத தொண்ணூற்
றொன்பது ஆடுகளைக்குறித்துச் சந்தோஷப்
படுகிறதைப்பார்க்கிலும், அதைக்குறித்து அதிக
மாய்ச் சந்தோஷப்படுவான் என்று, மெய்யாக
14 வே உங்களுக்குச் சொல்லுகிறேன். இவ்வித
மாக, [10]இந்தச் சிறியரில் ஒருவனாகிலும் கெ
ட்டுப்போவது பரலோகத்திலிருக்கிற உங்கள்
பிதாவின் சித்தமல்ல.
15 உன் சகோதரன் உனக்கு விரோதமாகக்
குற்றஞ்செய்தால், [11]அவனிடத்தில் போய்,
நீயும் அவனும் தனித்திருக்கையில், அவன்
குற்றத்தை அவனுக்கு உணர்த்து; [12]அவன்
உனக்குச் செவிகொடுத்தால், உன் சகோ
16 தரனை †ஆதாயப்படுத்திக்கொண்டாய். அவன்
செவிகொடாமற்போனால், இரண்டு மூன்று
சாட்சிகளுடைய வாக்கினாலே சங்கதிகளெல்
லாம் நிலைவரப்படும்படி, [13]இரண்டொருவரை
17 உன்னுடனே கூட்டிக்கொண்டுபோ. அவர்
களுக்கும் அவன் செவிகொடாமற்போனால்,
அதைச் சபைக்குத் தெரியப்படுத்து; சபைக்
கும் செவிகொடாதிருப்பானானால், [14]அவன்
உனக்கு அஞ்ஞானியைப்போலவும் ஆயக்கார
னைப்போலவும் இருப்பானாக. பூலோகத்திலே 18
நீங்கள் எவைகளைக் கட்டுவீர்களோ அவைகள்
பரலோகத்திலும் கட்டப்பட்டிருக்கும்; [15]பூ
லோகத்திலே நீங்கள் எவைகளைக் கட்டவிழ்ப்
பீர்களோ அவைகள் பரலோகத்திலும் கட்ட
விழ்க்கப்பட்டிருக்கும் என்று, மெய்யாகவே
உங்களுக்குச் சொல்லுகிறேன். அல்லாமலும், 19
உங்களில் இரண்டுபேர் தாங்கள் வேண்டிக்
கொள்ளப்போகிற எந்தக் காரியத்தைக்குறித்
தாகிலும் பூமியிலே ஒருமனப்பட்டிருந்தால்,
[16]பரலோகத்தில் இருக்கிற என் பிதாவினால்
அது அவர்களுக்கு உண்டாகும் என்று உங்
களுக்குச் சொல்லுகிறேன். ஏனெனில், இர 20
ண்டுபேராவது மூன்றுபேராவது என் நாமத்
தினாலே எங்கே கூடியிருக்கிறார்களோ, [17]அங்
கே அவர்கள் நடுவிலே இருக்கிறேன் என்றார்.
அப்பொழுது, பேதுரு அவரிடத்தில் வந்து: 21
[18]ஆண்டவரே, என் சகோதரன் எனக்கு
விரோதமாய்க் குற்றஞ்செய்துவந்தால், நான்
எத்தனைதரம் மன்னிக்கவேண்டும்? ஏழுதர
மட்டுமோ என்று கேட்டான். அதற்கு இயேசு: 22
ஏழுதரம்மாத்திரம் அல்ல, [19]ஏழெழுபதுதரமட்
டும் என்று உனக்குச் சொல்லுகிறேன். எப் 23
படியெனில், பரலோகராஜ்யம் தன் ஊழியக்
காரரிடத்தில் கணக்குப்பார்க்க வேண்டுமென்
றிருந்த [20]ஒரு ராஜாவுக்கு ஒப்பாயிருக்கிறது.
அவன் கணக்குப்பார்க்கத்தொடங்கினபோது, 24
பதினாயிரம் ‡தாலந்து கடன்பட்டவன் ஒரு
வனை அவனுக்கு முன்பாகக் கொண்டுவந்தார்
கள். கடனைத்தீர்க்க அவனுக்கு நிர்வாகம் 25
இல்லாதபடியால், [21]அவனுடைய ஆண்டவன்
அவனையும் அவன் பெண்ஜாதி பிள்ளைகளையும்,
அவனுக்கு உண்டான எல்லாவற்றையும்
விற்று, கடனைத் தீர்க்கும்படிக் கட்டளையிட்
டான். அப்பொழுது, அந்த ஊழியக்காரன் 26
தாழவிழுந்து, வணங்கி: ஆண்டவனே! என்
னிடத்தில் பொறுமையாயிரும், எல்லாவற்
றையும் உமக்குக் கொடுத்துத் தீர்க்கிறேன்
என்றான். அந்த ஊழியக்காரனுடைய ஆண்ட 27
வன் [22]மனதிரங்கி, அவனை விடுதலைபண்ணி,
கடனையும் அவனுக்கு மன்னித்துவிட்டான்.
அப்படியிருக்க, அந்த ஊழியக்காரன் புறப் 28
பட்டுப்போகையில், தன்னிடத்தில் §நூறு
வெள்ளிப்பணம் கடன் பட்டிருந்தவனாகிய
தன் உடன்வேலைக்காரரில் ஒருவனைக் கண்டு,
அவனைப் பிடித்து, தொண்டையை நெரித்து:
நீ பட்ட கடனை எனக்குக் கொடுத்துத் தீர்க்க
வேண்டும் என்றான். அப்பொழுது அவனு 29
டைய உடன்வேலைக்காரன் அவன் காலிலே
விழுந்து: என்னிடத்தில் பொறுமையாயிரும்,
எல்லாவற்றையும் உமக்குக் கொடுத்துத் தீர்க்கி
றேன் என்று, அவனை வேண்டிக்கொண்டான்.
அவனோ சம்மதியாமல், போய், அவன் பட்ட 30
கடனைக் கொடுத்துத் தீர்க்குமளவும் அவனைக்
காவலில் போடுவித்தான். நடந்ததை அவ 31

1 10. 42. லூ. 9. 48
2 மாற். 9. 42. லூ. 17. 1, 2
3 1 கொ. 11. 19. யூதா 4, 11. வச
4 5. 29, 30. மாற். 9. 43, 45
5 லூ. 9. 25. எபி. 4 11
6 அப். 12. 15
7 சங். 17. 15
8 1. 21. லூ. 9. 56; 19. 10. யோ. 3. 17; 12. 47. 1 தீமோ. 1. 15
9 லூ. 15. 4. ஞ
* வழி தப்பிப் போனால்
10 2 பே. 3. 9
11 லேவி. 19. 17. லூ. 17. 3
12 யாக். 5. 20. 1 பே. 3. 1
† சம்பாதித்துக்கொண்டாய்
13 உபா. 19. 15. 2 கொ. 13. 1
14 ரோ. 16. 17. 1 கொ. 5. 3-5. 2 தெச. 3. 6 14. 2 யோ. 10. வச
15 16. 19. யோ. 20. 23. அப். 15. 23-31. 1 கொ. 5. 4
16 மாற். 11. 24. யோ. 16. 24. 1 யோ. 5. 14
17 யோ. 20. 19. 1 கொ. 5. 4
18 மாற். 11. 25. லூ. 17. 4. கொலோ. 3. 13
19 6. 14. மாற். 11. 25. கொலோ. 3. 13
20 ரோ. 14. 12
‡ 1875 ரூபாய் ஒரு தாலந்து
21 2 இரா. 4. 1. நெகே. 5. 8
22 சங். 78. 38
§ ஒரு பணம் இச் தேசால் அறு. 20. 2

னுடைய உடன்வேலைக்காரர் கண்டு, மிகவும்
துக்கப்பட்டு, ஆண்டவனிடத்தில் வந்து, நடந்
32 ததையெல்லாம் அறிவித்தார்கள். அப்பொ
ழுது, அவனுடைய ஆண்டவன் அவனை
அழைப்பித்து: பொல்லாத ஊழியக்காரனே,
நீ என்னை வேண்டிக்கொண்டபடியினால் அந்
தக் கடன் முழுவதையும் உனக்கு மன்னித்து
33 விட்டேன். நான் உனக்கு இரங்கினதுபோல,
நீயும் உன் உடன்வேலைக்காரனுக்கு இரங்க
34 வேண்டாமோ என்று சொல்லி, அவனுடைய
ஆண்டவன் கோபமடைந்து, அவன் பட்ட
கடனையெல்லாம் தனக்குக்கொடுத்துத் தீர்க்கு
மளவும் உபாதிக்கிறவர்களிடத்தில் அவனை
35 ஒப்புக்கொடுத்தான். நீங்களும் அவனவன்
தன்தன் சகோதரன் செய்த தப்பிதங்களை
மனப்பூர்வமாய் மன்னியாமற்போனால், [1]என்
பரமபிதாவும் உங்களுக்கு இப்படியே செய்
வார் என்றார்.

19 இயேசு இந்த வசனங்களைச் சொல்லி
முடித்தபின்பு, [2]அவர் கலிலேயாவை விட்டு
யோர்தானுக்கு அக்கரையான யூதேயாவின்
2 எல்லைகளில் வந்தார். திரளான ஜனங்கள்
அவருக்குப் பின்சென்றார்கள்; [3]அவ்விடத்
தில் அவர்களைச் சொஸ்தமாக்கினார்.
3 அப்பொழுது, பரிசேயர் அவரைச் சோ
திக்கவேண்டுமென்று அவரிடத்தில் வந்து:
புருஷனானவன் தன் மனைவியை எந்த முகாந்
தரத்தினாலாகிலும் தள்ளிவிடுவது நியாயமா
4 என்று கேட்டார்கள். அவர்களுக்கு அவர்
பிரதியுத்தரமாக: [4]ஆதியிலே மனுஷரை உண்
* டாக்கினவர் அவர்களை ஆணும்பெண்ணுமாக
5 உண்டாக்கினார் என்பதையும், இதினிமித்
தம் [5]புருஷனானவன் தன் தகப்பனையும் தா
யையும் விட்டுத் தன் மனைவியோடே இசைந்
திருப்பான்; அவர்கள் இருவரும் *ஒரே மாம்
சமாயிருப்பார்கள் என்று அவர் சொன்னதை
6 யும், நீங்கள் வாசிக்கவில்லையா? இப்படி
இருக்கிறபடியினால், அவர்கள் இருவராயிரா
மல், ஒரே மாம்சமாயிருக்கிறார்கள்; [6]ஆகை
யால், தேவன் இணைத்ததை மனுஷன் பிரிக்
7 காதிருக்கக்கடவன் என்றார். அதற்கு அவர்
கள்: அப்படியானால், [7]தள்ளுதற்சீட்டைக்
கொடுத்து, அவளைத் தள்ளிவிடலாமென்று
மோசே ஏன் கட்டளையிட்டார் என்றார்கள்.
8 அதற்கு அவர்: [8]உங்கள் மனைவிகளைத் தள்ளி
விடலாமென்று உங்கள் இருதயகடினத்தினி
மித்தம் மோசே உங்களுக்கு இடங்கொடுத்
தார்; ஆதிமுதலாய் அப்படி யிருக்கவில்லை.
9 ஆதலால், எவனாகிலும் தன் மனைவி வேசித்
தனஞ் செய்ததினிமித்தமேயன்றி, அவளைத்
தள்ளிவிட்டு வேறொருத்தியை விவாகம்பண்
ணினால், அவன் விபசாரஞ்செய்கிறவனாயிரு
ப்பான்; தள்ளிவிடப்பட்டவளை விவாகம் பண்
ணுகிறவனும் விபசாரஞ் செய்கிறவனாயிருப்
பான் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்
10 என்றார். அவருடைய சீஷர்கள் அவரை
நோக்கி: [9]மனைவியைப்பற்றி புருஷனுடைய
காரியம் இப்படியிருந்தால், விவாகம்பண்ணு
கிறது நல்லதல்ல என்றார்கள். அதற்கு அவர்: 11
[10]வரம்பெற்றவர்களேதவிர மற்றவர்கள் இந்த
வசனத்தை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். தா 12
யின் வயிற்றிலிருந்து †அண்ணகர்களாய்ப்
பிறந்தவர்களும் உண்டு; மனுஷர்களால் அண்
ணகர்க ளாக்கப்பட்டவர்களும் உண்டு; பர
லோகராஜ்யத்தினிமித்தம் தங்களை அண்ண
கர்களாக்கிக்கொண்டவர்களும்உண்டு; இதை
ஏற்றுக்கொள்ள வல்லவன் ஏற்றுக்கொள்ளக்
கடவன் என்றார்.

அப்பொழுது, [11]சிறுபிள்ளைகளின்மேல் 13
அவர் கைகளை வைத்து ஜெபம் பண்ணும்
படிக்கு அவர்களை அவரிடத்தில் கொண்டு
வந்தார்கள்; கொண்டுவந்தவர்களைச் சீஷர்கள்
அதட்டினார்கள். இயேசுவோ: சிறுபிள்ளை 14
கள் என்னிடத்தில் வருகிறதற்கு இடங்கொ
டுங்கள்; [12]அவர்களைத் தடைபண்ணாதிருங்
கள்; பரலோகராஜ்யம் அப்படிப்பட்டவர்க
ளுடையது என்று சொல்லி, அவர்கள்மேல் 15
கைகளை வைத்து, பின்பு அவ்விடம்விட்டுப்
புறப்பட்டுப் போனார்.

அப்பொழுது ஒருவன் வந்து, அவரை 16
நோக்கி: [13]நல்ல போதகரே, நித்திய ஜீவனை
அடைவதற்கு நான் எந்த நன்மையைச் செய்ய
வேண்டும் என்று கேட்டான். அதற்கு அவர்: 17
நீ என்னை ‡நல்லவன் என்று சொல்வானேன்?
§தேவன் ஒருவர்தவிர நல்லவன் ஒருவனும்
இல்லையே; நீ ஜீவனில் பிரவேசிக்க விரும்பி
னால் கற்பனைகளைக் கைக்கொள் என்றார்.
அவன் அவரை நோக்கி: எவைகளை என்று 18
கேட்டான். அதற்கு இயேசு: [14]கொலை செய்
யாதிருப்பாயாக, விபசாரஞ் செய்யாதிருப்பா
யாக, களவு செய்யாதிருப்பாயாக, பொய்ச்
சாட்சி சொல்லாதிருப்பாயாக; உன் தகப் 19
பனையும் உன் தாயையும் கனம்பண்ணுவா
யாக; [15]உன்னிடத்தில் நீ அன்புகூருவதுபோ
லப் பிறனிடத்திலும் அன்புகூருவாயாக என்
பவைகளையே என்றார். அந்த வாலிபன் 20
அவரை நோக்கி: இவைகளையெல்லாம் என்
சிறுவயதுமுதல் கைக்கொண்டிருக்கிறேன்;
இன்னும் என்னிடத்தில் குறைவு என்ன
என்றான். அதற்கு இயேசு: நீ பூரண சற்கு 21
ணனாயிருக்க விரும்பினால், [16]போய், உனக்கு
உண்டானவைகளை விற்று, தரித்திரருக்குக்
கொடு, அப்பொழுது, பரலோகத்தில் உனக்
குப் பொக்கிஷம் உண்டாயிருக்கும்; பின்பு
என்னைப் பின்பற்றிவா என்றார். அந்த வா 22
லிபன் மிகுந்த ஆஸ்தியுள்ளவனாயிருந்தபடி
யால், இந்த வார்த்தையைக் கேட்டபொழுது,
துக்கமடைந்தவனாய்ப் போய்விட்டான்.

அப்பொழுது, இயேசு தம்முடைய சீஷர் 23
களை நோக்கி: [17]ஐசுவரியவான் பரலோகராஜ்
யத்தில் பிரவேசிப்பது அரிதென்று, மெய்யா
கவே உங்களுக்குச் சொல்லுகிறேன். மே 24
லும் ஐசுவரியவான் தேவனுடைய ராஜ்யத்
தில் பிரவேசிப்பதைப்பார்க்கிலும், ஒட்டகமா

1 6. 12, சங். 21. 13. மாற். 11, 26. யாக். 2. 13
2 மாற். 10. 1. யோ. 10. 40
3 12, 15
4 ஆதி. 1. 27: 5. 2. மல். 2. 15
5 ஆதி. 2. 24. எபே. 5. 31
* ஏகாங்கம். 1 கொ. 6. 16: 7. 2-4
6 மல். 2. 14, 15. ரோ. 7. 2. 1 கொ. 7. 10. 14
7 5. 31. உபா. 24. 1. ஏசா. 50. 1
8 5. 32. லூ. 16. 18. 1 கொ. 7. 10, 11
9 நீதி. 19. 13: 21. 9, 19
10 1 கொ. 7. 2, 7, 9, 17
† அலிகள். 1 கொ. 7. 32, 34: 9. 5, 15
11 மாற். 10. 13. லூ. 18. 15.
12 18. 3
13 மாற். 10. 17. லூ. 10. 25: 18. 18.
‡ நன்மையைக்குறித்து என்னிடத்தில் ஏன் கேட்கிறாய்
§ கடவுள்
14 யாத். 20. 13. உபா. 5. 17
15 லேவி. 19. 18. 22. ரோ. 13. 9. கலா. 5. 14. யாக். 2. 8
16 லூ. 12. 33: 16. 9. அப். 2. 45: 4. 34, 35. 1 தீமோ. 6. 18, 19
17 13. 22. மாற். 10. 24. 1 கொ. 1. 26. 1 தீமோ. 6. 9, 10

னது ஊசியின் காதிலே நுழைவது எளிதா
யிருக்கும் என்று உங்களுக்குச் சொல்லுகி
25 றேன் என்றார். அவருடைய சீஷர்கள்
அதைக்கேட்டு மிகவும் ஆச்சரியப்பட்டு: அப்
படியானால், யார் ரட்சிக்கப்படக்கூடும் என்
26 றார்கள். இயேசு, அவர்களைப்பார்த்து: மனு
ஷரால் இது கூடாததுதான்; [1]தேவனாலே
27 எல்லாம் கூடும் என்றார். அப்பொழுது, பே
துரு அவரை நோக்கி: [2]இதோ, நாங்கள் எல்
லாவற்றையும் விட்டு, உம்மைப் பின்பற்றி
னோமே; எங்களுக்கு என்ன கிடைக்கும்
28 என்றான். அதற்கு இயேசு: *மறுஜென்ம
காலத்திலே மனுஷகுமாரன் தம்முடைய மகி
மையுள்ள சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கும்
போது, [3]என்னைப் பின்பற்றின நீங்களும்,
இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரங்களை
யும் நியாயந்தீர்க்கிறவர்களாகப் பன்னிரண்டு
சிங்காசனங்களின்மேல் வீற்றிருப்பீர்கள்
என்று, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லு
29 கிறேன். என் நாமத்தினிமித்தம் வீட்டை
யாவது, [4]சகோதரரையாவது, சகோதரிகளை
யாவது, தகப்பனையாவது, தாயையாவது,
மனைவியையாவது, பிள்ளைகளையாவது, நிலங்
களையாவது விட்டவன் எவனோ, அவன்
நூறத்தனையாய் அடைந்து, நித்தியஜீவனையும்
30 சுதந்தரித்துக்கொள்ளுவான்; ஆகிலும், முந்
தினோர் அநேகர் பிந்தினோராயும், [5]பிந்தினோர்
அநேகர் முந்தினோராயும் இருப்பார்கள்
என்றார்.

20 பரலோகராஜ்யம் [6]வீட்டெஜமானாகிய ஒரு
மனுஷனுக்கு ஒப்பாயிருக்கிறது; அவன்
தன் திராட்சத்தோட்டத்துக்கு வேலையாட்
களை அமர்த்த அதிகாலையிலே புறப்பட்டான்.
2 வேலையாட்களுடன் நாளொன்றுக்கு [7]ஒரு
பணம் கூலிபேசி, அவர்களைத் தன் திராட்
3 சத்தோட்டத்துக்கு அனுப்பினான். மூன்றாம்
மணிவேளையிலும் அவன் புறப்பட்டுப்போய்,
கடைத்தெருவிலே சும்மா நிற்கிற வேறு சில
4 ரைக் கண்டு: நீங்களும் திராட்சத்தோட்டத்
துக்குப் போங்கள், நியாயமானபடி உங்களுக்
குக் கூலிகொடுப்பேன் என்றான்; அவர்களும்
5 போனார்கள். மறுபடியும், ஆறாம் ஒன்பதாம்
மணிவேளையிலும் அவன் போய் அப்படியே
6 செய்தான். பதினோராம் மணிவேளையிலும்
அவன் போய், சும்மா நிற்கிற வேறு சிலரைக்
கண்டு: [8]நீங்கள் பகல் முழுவதும் இங்கே
சும்மா நிற்கிறதென்ன என்று கேட்டான்.
7 அதற்கு அவர்கள்: ஒருவரும் எங்களுக்கு
வேலையிடவில்லை என்றார்கள். அவன் அவர்
களை நோக்கி: நீங்களும் திராட்சத்தோட்டத்
துக்குப் போங்கள்; நியாயமானபடி கூலி
8 பெற்றுக்கொள்வீர்கள் என்றான். சாயங்கா
லத்தில், திராட்சத்தோட்டத்துக்கு எஜமான்
தன் காரியகாரனை நோக்கி: நீ வேலையாட்
களை அழைத்து, [9]பிந்தி வந்தவர்கள் தொடங்கி
முந்தி வந்தவர்கள் வரைக்கும் அவர்களுக்குக்
9 கூலி கொடு என்றான். அப்பொழுது [10]பதி

1 ஆதி. 18. 14. சங். 3. 8: 62. 11. சகரி. 8. 6
2 மாற். 10. 28. லூ. 18. 28 பிலி. 3. 8
* சுவிசேஷப்படிப்பில்
3 20. 21. லூ. 22. 28-30. 1 கொ. 6. 2, 3. வெளி. 2. 26.
4 மாற். 10. 29, 30. லூ. 18. 29, 30. 1 கொ. 2. 9
5 20. 16; 21. 31, 32. மாற். 10. 31. லூ. 13. 30. கலா. 5. 7. எபி. 4. 1
6 உன்னத. 8. 11, 12
7 18. 28
8 நீதி. 19. 15. எசே. 16. 49. அப். 17. 21. எபி. 6. 12
9 லூ. 10. 17
10 லூ. 23. 40, 43
11 லூ. 15. 29, 30
12 22. 12
13 யோ. 17. 2
14 ரோ. 9. 15-24. யாக். 1. 18
15 19. 30; 22. 14
16 மாற். 10. 32. மு. லூ. 18. 31. மு. யோ. 12. 12. மு
17 16. 21. மு
18 27. 2. மு. மாற். 15. 1, 16. மு. லூ. 23. 1. மு. யோ. 18. 28. மு. அப். 3. 13. 1 கொ. 15. 3-7
19 4. 21. மாற். 10. 35. மு
20 19. 28
21 26. 39, 42. மாற். 14. 36. லூ. 12. 50; 22. 42. யோ. 18. 11
22 அப். 12. 2. ரோ. 8. 17. 2 கொ. 1. 7. வெளி. 1. 9

னோராம் மணிவேளையில் வேலையமர்த்தப்பட்
டவர்கள் வந்து ஆளுக்கு ஒவ்வொரு பணம்
வாங்கினார்கள். முந்தி அமர்த்தப்பட்டவர்கள் 10
வந்து, தங்களுக்கு அதிக கூலி கிடைக்கும்
என்று எண்ணினார்கள், அவர்களும் ஆளுக்கு
ஒவ்வொரு பணம் வாங்கினார்கள். வாங்கிக் 11
கொண்டு, வீட்டெஜமானை நோக்கி: பிந்தி 12
வந்தவர்களாகிய இவர்கள் ஒரு மணிநேரமாத்
திரம் வேலைசெய்தார்கள்; பகலின் கஷ்டத்
தையும் வெயிலின் உஷ்ணத்தையும் சகித்த
எங்களுக்கு இவர்களைச் சமமாக்கினீரே என்று
[11]முறுமுறுத்தார்கள். அவர்களில் ஒருவனுக்கு 13
அவன் பிரதியுத்தரமாக: [12]சிநேகிதனே, நான்
உனக்கு அநியாயஞ்செய்யவில்லை; நீ என்
னிடத்தில் ஒரு பணத்துக்குச் சம்மதிக்க
வில்லையா? உன்னுடையதை நீ வாங்கிக் 14
கொண்டுபோ, [13]உனக்குக் கொடுத்ததுபோ
லப் பிந்திவந்தவனாகிய இவனுக்கும் கொடுப்
பது என்னுடைய இஷ்டம். என்னுடைய 15
தை [14]என் இஷ்டப்படி செய்ய எனக்கு அதி
காரமில்லையா? நான் தயாளனாயிருக்கிறபடி
யால், நீ வன்கண்ணனாயிருக்கலாமா என்
றான். இவ்விதமாக, பிந்தினோர் முந்தினோ 16
ராயும், [15]முந்தினோர் பிந்தினோராயும் இருப்
பார்கள்; அழைக்கப்பட்டவர்கள் அநேகர், தெ
ரிந்துகொள்ளப்பட்டவர்களோ சிலர் என்றார்.

இயேசு எருசலேமுக்குப் போகும்போது, 17
[16]வழியிலே பன்னிரண்டு சீஷரையும் தனியே
அழைத்து: இதோ, எருசலேமுக்குப் போ 18
கிறோம்; [17]மனுஷகுமாரன் பிரதான ஆசாரி
யரிடத்திலும் வேதபாரகரிடத்திலும் ஒப்புக்
கொடுக்கப்படுவார்; அவர்கள் அவரை மரண
ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்து, அவரைப் பரி 19
யாசம்பண்ணவும், வாரினால் அடிக்கவும், [18]சிலு
வையில் அறையவும் புறஜாதியாரிடத்தில்
ஒப்புக்கொடுப்பார்கள்; ஆகிலும் மூன்றாம்
நாளிலே அவர் உயிரோடே எழுந்திருப்பார்
என்றார்.

அப்பொழுது, [19]செபெதேயுவின் குமார 20
ருடைய தாய் தன் குமாரரோடுகூட அவரி
டத்தில் வந்து, அவரைப் பணிந்துகொண்டு:
உம்மிடத்தில் ஒரு விண்ணப்பம் பண்ணவே
ண்டும் என்றாள். அவர் அவளை நோக்கி: 21
உனக்கு என்னவேண்டும் என்று கேட்டார்.
அதற்கு அவள்: உம்முடைய ராஜ்யத்திலே
என் குமாரராகிய இவ்விரண்டுபேரில் ஒரு
வன் உமது வலதுபாரிசத்திலும், [20]ஒருவன்
உமது இடதுபாரிசத்திலும் உட்கார்ந்திருக்கும்
படி அருள் செய்யவேண்டும் என்றாள்.
இயேசு பிரதியுத்தரமாக: நீங்கள் கேட்டுக் 22
கொள்ளுகிறது இன்னது என்று உங்களுக்
குத் தெரியவில்லை. [21]நான் குடிக்கும் பாத்
திரத்தில் நீங்கள் குடிக்கவும், நான் பெறும்
ஸ்நானத்தை நீங்கள் பெறவும் உங்களால் கூடு
மா என்றார். அதற்கு அவர்கள்: கூடும் என்
றார்கள். அவர் அவர்களை நோக்கி: [22]என் 23
பாத்திரத்தில் நீங்கள் குடிப்பீர்கள், நான் பெ

றும் ஸ்நானத்தையும் நீங்கள் பெறுவீர்கள்;
ஆனாலும், என் வலதுபாரிசத்திலும் என்
இடதுபாரிசத்திலும் உட்கார்ந்திருக்கும்படி
என் பிதாவினால் எவர்களுக்கு ஆயத்தம்பண்
ணப்பட்டிருக்கிறதோ அவர்களுக்கே யல்லா
மல், மற்றொருவருக்கும் அதை அருளுவது
24 என் காரியமல்ல என்றார். மற்றப் பத்துப்பே
ரும் அதைக் கேட்டு, [1]அந்த இரண்டு சகோ
25 தரர்பேரிலும்எரிச்சலானார்கள். அப்பொழுது,
இயேசு அவர்களைக் கிட்டவரச்செய்து: [2]புற
ஜாதியாருடைய அதிகாரிகள் அவர்களை இறு
மாப்பாய் ஆளுகிறார்கள் என்றும், பெரியவர்
கள் அவர்கள்மேல் கடினமாய் அதிகாரஞ் செ
லுத்துகிறார்கள் என்றும், நீங்கள் அறிந்திருக்
26 கிறீர்கள். உங்களுக்குள்ளே [3]அப்படி இருக்
கலாகாது; [4]உங்களில் எவனாகிலும் பெரியவ
னாயிருக்க விரும்பினால், அவன் உங்களுக்குப்
27 பணிவிடைக்காரனாயிருக்கக்கடவன். உங்க
ளில் எவனாகிலும் [5]முதன்மையானவனாயி
ருக்க விரும்பினால், அவன் உங்களுக்கு ஊழி
28 யக்காரனா யிருக்கக்கடவன். அப்படியே, மனு
ஷகுமாரனும் ஊழியங்கொள்ளும்படி வரா
மல் [6]ஊழியஞ்செய்யவும், [7]அநேகரை மீட்
கும்பொருளாகத் தம்முடைய ஜீவனைக் கொ
டுக்கவும் வந்தார் என்றார்.
29 அவர்கள் எரிகோவிலிருந்து புறப்பட்டுப்
போகையில், திரளான ஜனங்கள் அவருக்குப்
30 பின்சென்றார்கள். அப்பொழுது வழியருகே
உட்கார்ந்திருந்த இரண்டு குருடர், [8]இயேசு
அவ்வழியே வருகிறார் என்று கேள்விப்பட்டு:
ஆண்டவரே, தாவீதின் குமாரனே, எங்க
ளுக்கு இரங்கும் என்று கூப்பிட்டார்கள்.
31 அவர்கள் பேசாதிருக்கும்படி ஜனங்கள் அவர்
களை அதட்டினார்கள். அவர்களோ: ஆண்
டவரே, தாவீதின் குமாரனே, எங்களுக்கு
இரங்கும் என்று அதிகமாய்க் கூப்பிட்டார்
32 கள். இயேசு நின்று, அவர்களைத் தம்மிடத்தில்
அழைத்து: நான் உங்களுக்கு என்ன செய்ய
33 வேண்டும் என்றிருக்கிறீர்கள் என்றார். அத
ற்கு அவர்கள்: ஆண்டவரே, எங்கள் கண்க
34 ளைத் திறக்கவேண்டும் என்றார்கள். இயேசு
மனதுருகி, அவர்கள் கண்களைத் தொட்டார்;
உடனே அவர்கள் பார்வையடைந்து, அவருக்
குப் பின்சென்றார்கள்.

**21** அவர்கள் [9]எருசலேமுக்குச் சமீபமாய்ச்
சேர்ந்து, *ஒலிவமலைக்கு அருகான பெத்பகே
யுக்கு வந்தபோது, இயேசுவானவர் சீஷரில்
2 இரண்டுபேரை நோக்கி: உங்களுக்கு எதிரே
இருக்கிற கிராமத்துக்குப் போங்கள்; போன
வுடனே, அங்கே ஒரு †கழுதையையும் அத
னோடே ஒரு குட்டியையும் கட்டியிருக்கக்
காண்பீர்கள்; அவைகளை அவிழ்த்து என்னி
3 டத்தில் கொண்டுவாருங்கள். ஒருவன் உங்
களுக்கு ஏதாகிலும் சொன்னால்: இவைகள்
ஆண்டவருக்கு வேண்டுமென்று சொல்லுங்
கள்; உடனே அவைகளை அனுப்பிவிடுவான்
என்று சொல்லி, அவர்களை அனுப்பினார்.

இதோ, [10]உன் ராஜா சாந்தகுணமுள்ளவராய், 4
கழுதையின்மேலும் கழுதைக்குட்டியாகிய
மறியின்மேலும் ஏறிக்கொண்டு, உன்னிடத்
தில் வருகிறார் என்று சீயோன் குமாரத்திக்
குச் சொல்லுங்கள் என்று, தீர்க்கதரிசியினால் 5
உரைக்கப்பட்டது நிறைவேறும்படி இதெல்
லாம் நடந்தது. சீஷர்கள் போய், [11]இயேசு 6
தங்களுக்குக் கட்டளையிட்டபடியே செய்து,
கழுதையையும் குட்டியையும் கொண்டுவந்து, 7
[12]அவைகள்மேல் தங்கள் வஸ்திரங்களைப் போ
ட்டு, அவரை ஏற்றினார்கள். திரளான ஜனங் 8
கள் தங்கள் வஸ்திரங்களை வழியிலே விரித்
தார்கள்; [13]வேறு சிலர் மரக்கிளைகளைத் தறித்து
வழியிலே பரப்பினார்கள். முன்நடப்பாரும் 9
பின்நடப்பாருமாகிய திரளான ஜனங்கள்:
தாவீதின் குமாரனுக்கு ‡ஓசன்னா! கர்த்தரின்
நாமத்தினாலே வருகிறவர் ஸ்தோத்திரிக்கப்
பட்டவர், உன்னதத்திலே ஓசன்னா என்று
சொல்லி ஆர்ப்பரித்தார்கள். அவர் எருசலே 10
முக்குள் பிரவேசிக்கையில், நகரத்தார் யாவரும்
ஆச்சரியப்பட்டு, [14]இவர் யார்? என்று விசா
ரித்தார்கள். அதற்கு ஜனங்கள்: [15]இவர் கலி 11
லேயாவிலுள்ள நாசரேத்திலிருந்து வந்த தீர்க்
கதரிசியாகிய இயேசு என்றார்கள்.
இயேசுதேவாலயத்தில்பிரவேசித்து, [16]ஆல 12
யத்திலே விற்கிறவர்களும் கொள்ளுகிறவர்க
ளுமாகிய யாவரையும் வெளியே துரத்தி, கா
சுக்காரருடைய பலகைகளையும் புறாவிற்கிற
வர்களின் ஆசனங்களையும் கவிழ்த்து: என் 13
னுடைய வீடு ஜெபவீடு என்னப்படும் என்று
எழுதியிருக்கிறது, [17]நீங்களோ அதைக் கள்
ளர் குகையாக்கினீர்கள் என்றார். அப்பொ 14
ழுது, குருடரும் சப்பாணிகளும் தேவாலயத்
திலே அவரிடத்திற்கு வந்தார்கள், [18]அவர்க
ளைச் சொஸ்தமாக்கினார். அவர் செய்த அதி 15
சயங்களையும், தாவீதின் குமாரனுக்கு ஓசன்னா!
என்று தேவாலயத்திலே ஆர்ப்பரிக்கிற பிள்ளை
களையும், பிரதான ஆசாரியரும் வேதபாரகரும்
கண்டு, கோபமடைந்து, அவரை நோக்கி: 16
இவர்கள் சொல்லுகிறதைக் கேட்கிறீரோ
என்றார்கள். அதற்கு இயேசு: ஆம், கேட்கி
றேன். [19]குழந்தைகளுடைய வாயினாலும் பால
கருடைய வாயினாலும் துதி உண்டாகும்படி
செய்தீர் என்பதை நீங்கள் ஒருக்காலும் வாசிக்
கவில்லையா என்றார். அவர்களை விட்டு நகரத் 17
திலிருந்து புறப்பட்டு [20]பெத்தானியாவுக்குப்
போய், அங்கே இராத்தங்கினார்.
காலையிலே அவர் நகரத்துக்குத் திரும்பி 18
வருகையில், [21]அவருக்குப் பசியுண்டாயிற்று.
அப்பொழுது வழியருகே [22]ஒரு அத்திமரத் 19
தைக் கண்டு, அதினிடத்திற் போய், அதிலே
இலைகளையன்றி வேறொன்றையுங் காணாமல்:
இனி ஒருக்காலும் உன்னிடத்தில் கனி உண்
டாகா திருக்கக்கடவது என்றார்; உடனே
அத்திமரம் பட்டுப்போயிற்று. சீஷர்கள் 20
அதைக் கண்டு: [23]இந்த அத்திமரம் எத்தனை சீக்
கிரமாய்ப் பட்டுப்போயிற்று! என்று சொல்லி

1 மாற். 10. 41. லூ. 22. 24, 25
2 லூ. 22. 25, 26
3 1 பே. 5. 3
4 23. 11. மாற். 9. 35: 10. 43
5 18. 4
6 லூ. 22.27. யோ. 13. 4, 14. பிலி. 2. 7
7 ஏசா. 53. 5 8, 11. தானி. 9. 24, 26. 1தீமோ. 2.6. தீத். 2. 24. எபி. 9. 28. 1பே. 1. 18, 19. வெளி. 1. 5
8 9. 27. மாற். 10. 46. மு. லூ. 18. 35. மு.
9 மாற். 11. 1. மு. லூ. 19. 29. மு.
* இருப்பை. சகரி. 14. 4
† கோவேறுகழுதை
10 ஏசா. 62. 11. சகரி. 9. 9. யோ. 12. 15
11 மாற். 11. 4. மு.
12 2 இரா. 9. 13
13 லேவி. 23. 40. யோ. 12. 15
‡ இரட்சித்தருளும் = ஜெயமங்களம். 23. 39. சங். 118. 25. 26. லூ. 2. 14
14 மாற். 11. 15. லூ. 19. 45. யோ. 2. 13, 15
15 2. 23. லூ. 7. 16. யோ. 6. 14
16 மாற். 11. 11. மு. லூ. 19. 45. மு. யோ. 2. 15
17 ஏசா. 56. 7. எரே. 7. 11. மாற். 11. 17. லூ. 19. 46
18 ஏசா. 35. 6
19 சங். 8. 2
20 மாற். 11. 11. யோ. 11. 18
21 மாற். 11. 12
22 மாற். 11. 13
23 மாற். 11. 20

21 ஆச்சரியப்பட்டார்கள். இயேசு அவர்களை
நோக்கி: [1]நீங்கள் சந்தேகப்படாமல் விசுவாச
முள்ளவர்களாயிருந்தால், இந்த அத்திமரத்திற்
குச் செய்ததை நீங்கள் செய்வதுமல்லாமல்,
[2]இந்த மலையைப் பார்த்து: நீ பெயர்ந்து சமுத்
திரத்திலே தள்ளுண்டுபோ என்று சொன்னா
லும் அப்படியாகும் என்று, மெய்யாகவே உங்
22 களுக்குச் சொல்லுகிறேன். மேலும், நீங்கள்
விசுவாசமுள்ளவர்களாய் [3]ஜெபத்திலே எவை
களைக் கேட்பீர்களோ அவைகளையெல்லாம்
பெறுவீர்கள் என்றார்.
23 அவர் தேவாலயத்தில் வந்து, உபதேசம்
பண்ணுகையில், [4]பிரதான ஆசாரியரும் ஜன
த்தின் மூப்பரும் அவரிடத்தில் வந்து: நீர்
எந்த அதிகாரத்தினால் இவைகளைச் செய்கி
றீர்? [5]இந்த அதிகாரத்தை உமக்குக் கொடுத்த
24 வர் யார்? என்று கேட்டார்கள். இயேசு பிரதி
யுத்தரமாக: நானும் உங்களிடத்தில் ஒரு காரி
யத்தைக் கேட்கிறேன், அதை எனக்குச்
சொல்லுவீர்களானால், நானும் இன்ன அதி
காரத்தினாலே இவைகளைச் செய்கிறேனெ
25 ன்று உங்களுக்குச் சொல்லுவேன். யோ
வான் கொடுத்த ஸ்நானம் தேவனால் உண்டா
யிற்றோ? மனுஷரால் உண்டாயிற்றோ? யா
ரால் உண்டாயிற்று? என்று கேட்டார். அத
ற்கு அவர்கள்: தேவனால் உண்டாயிற்றென்று
சொல்வோமானால், பின்னை ஏன் அவனை
விசுவாசிக்கவில்லை என்று நம்மைக் கேட்பார்;
26 மனுஷரால் உண்டாயிற்றென்று சொல்வோ
மானால், ஜனங்களுக்குப் பயப்படுகிறோம்,
[6]எல்லாரும் யோவானைத் தீர்க்கதரிசியென்று
எண்ணுகிறார்களே என்று, தங்களுக்குள்ளே
27 ஆலோசனைபண்ணி, இயேசுவுக்குப் பிரதி
யுத்தரமாக: எங்களுக்குத் தெரியாது என்றார்
கள். அப்பொழுது, அவர்: நானும் இன்ன
அதிகாரத்தினால் இவைகளைச் செய்கிறே
னென்று உங்களுக்குச் சொல்லேன் என்றார்.
28 ஆயினும் உங்களுக்கு எப்படித் தோன்றுகி
றது? [7]ஒரு மனுஷனுக்கு இரண்டு குமாரர்
இருந்தார்கள்; மூத்தவனிடத்தில் அவன்
வந்து: மகனே, நீ போய் இன்றைக்கு என்
திராட்சத்தோட்டத்தில் வேலைசெய் என்றான்.
29 அதற்கு அவன்: மாட்டேன் என்றான்; ஆகி
லும், பின்பு அவன் *மனஸ்தாபப்பட்டுப்
30 போனான். இளையவனிடத்திலும் அவன்
வந்து, அப்படியே சொன்னான்; அதற்கு
அவன்: போகிறேன் ஐயா, என்று சொல்லி
31 யும், போகவில்லை. இவ்விருவரில் எவன்
தகப்பனுடைய சித்தத்தின்படி செய்தவன்
என்று கேட்டார்; அதற்கு அவர்கள்: மூத்த
வன்தான் என்றார்கள். அப்பொழுது, இயேசு
அவர்களை நோக்கி: [8]ஆயக்காரரும் வேசிகளும்
உங்களுக்கு முன்னே தேவனுடைய ராஜ்யத்
தில் பிரவேசிக்கிறார்கள் என்று, மெய்யா
32 கவே உங்களுக்குச் சொல்லுகிறேன். ஏனென்
றால், யோவான் நீதிமார்க்கமாய் உங்களிடத்
தில் வந்திருந்தும், நீங்கள் அவனை விசுவா
சிக்கவில்லை; [9]ஆயக்காரரும் வேசிகளுமோ
அவனை விசுவாசித்தார்கள்; அதை நீங்கள்
கண்டும், அவனை விசுவாசிக்கும்படியாகப் பின்
பாகிலும் மனஸ்தாபப்படவில்லை என்றார்.
வேறொரு உவமையைக் கேளுங்கள்: வீட் 33
டெஜமானாகிய ஒரு மனுஷன் இருந்தான்,
[10]அவன் ஒரு திராட்சத்தோட்டத்தை உண்
டாக்கி, அதைச் சுற்றிலும் வேலியடைத்து,
அதில் ஒரு †ஆலையை நாட்டி, கோபுரத்தை
யும் கட்டி, தோட்டக்காரருக்கு அதைக் குத்த
கையாக விட்டு, [11]புறத்தேசத்துக்குப் போயி
ருந்தான். கனிகாலம் சமீபித்தபோது, [12]அதின் 34
கனிகளை வாங்கிக்கொண்டு வரும்படி தன்
ஊழியக்காரரைத் தோட்டக்காரரிடத்தில்
அனுப்பினான். தோட்டக்காரர் அந்த ஊழி 35
யக்காரரைப் பிடித்து, [13]ஒருவனை அடித்து,
ஒருவனைக் கொலைசெய்து, ஒருவனைக் கல்
லெறிந்து கொன்றார்கள். பின்னும் அவன் 36
முந்தினவர்களிலும் அதிகமான வேறே ஊழி
யக்காரரை அனுப்பினான்; அவர்களையும் அப்
படியே செய்தார்கள். கடைசியிலே அவன்: 37
என் குமாரனுக்கு அஞ்சுவார்கள் என்று சொ
ல்லி, தன் குமாரனை அவர்களிடத்தில் அனுப்
பினான். தோட்டக்காரர் குமாரனைக் கண் 38
டபோது: [14]இவன் சுதந்தரவாளி; இவனைக்
கொன்று, இவன் சுதந்தரத்தைக் கட்டிக்
கொள்வோம் வாருங்கள் என்று ஒருவரோ
டொருவர் சொல்லிக்கொண்டு; அவனைப் 39
பிடித்துத் திராட்சத்தோட்டத்திற்குப் புறம்பே
தள்ளிக் [15]கொலை செய்தார்கள். அப்படியி 40
ருக்க, திராட்சத்தோட்டத்தின் எஜமான் வரும்
போது, அந்தத் தோட்டக்காரரை என்ன
செய்வான் என்று கேட்டார். அதற்கு அவர் 41
கள்: [16]அந்தக் கொடியரைக் கொடுமையாய்
அழித்து, ஏற்ற காலங்களில் தனக்குக் கனி
களைக் கொடுக்கத்தக்க [17]வேறே தோட்டக்கா
ரரிடத்தில் திராட்சத்தோட்டத்தைக் குத்தகை
யாகக் கொடுப்பான் என்றார்கள். இயேசு 42
அவர்களை நோக்கி: [18]வீடு கட்டுகிறவர்கள் ஆகா
தென்று தள்ளின கல்லே மூலைக்குத் தலைக்
கல்லாயிற்று, அது கர்த்தராலே ஆயிற்று,
அது நம்முடைய கண்களுக்கு ஆச்சரியமா
யிருக்கிறது என்று நீங்கள் வேதத்தில் ஒருக்
காலும் வாசிக்கவில்லையா? ஆகையால், [19]தேவ 43
னுடைய ராஜ்யம் உங்களிடத்திலிருந்து நீக்
கப்பட்டு, அதற்கேற்ற கனிகளைத் தருகிற
ஜனங்களுக்குக் கொடுக்கப்படும். இந்தக் கல் 44
லின்மேல் விழுகிறவன் நொறுங்கிப்போ
வான்; [20]இது எவன்மேல் விழுமோ அவனை
நசுக்கிப்போடும் என்று நான் உங்களுக்குச்
சொல்லுகிறேன் என்றார். பிரதான ஆசாரி 45
யரும் பரிசேயரும் அவருடைய உவமைகளைக்
கேட்டு, தங்களைக்குறித்துச் சொல்லுகிறார்
என்று அறிந்து, அவரைப் பிடிக்க வகை 46
தேடினார்கள்; [21]ஆகிலும் ஜனங்கள் அவரைத்
தீர்க்கதரிசியென்று எண்ணினபடியினால்
அவர்களுக்குப் பயந்திருந்தார்கள்.

[1] 17. 20. லூ. 17. 6. யாக். 1. 6
[2] 1 கொ. 13. 2
[3] 7. 7. மாற். 11. 24. லூ. 11. 9. யாக். 5. 16. 1 யோ. 3. 22; 5. 14
[4] மாற். 11. 27. மு. லூ. 20. 1. மு
[5] யாத். 2. 14. அப். 4. 7; 7. 27
[6] 14. 5. மாற். 6. 20. லூ. 20. 6
[7] லூ. 15. 11. மு
* மனம்மாறி. எபி. 7. 20
[8] லூ. 7. 29, 50
[9] 3. 1. மு. லூ. 7. 37
[10] சங். 80. 8-16. உன்னத. 8. 11. ஏசா. 5. 1-7. எரே. 2. 21. மாற். 12. 1. லூ. 20. 9. மு.
† இரசத்தொட்டி
[11] 25. 14, 15
[12] 2 இரா. 17. 13. உன்னத. 8. 11, 12
[13] 5. 12; 23. 34–37. 2 நாளா. 36. 16. நெகே. 9. 26. எரே. 25. 3—7. அப். 7. 52. 1 தெச. 2. 15. எபி. 11. 36, 37. வெளி. 6. 9
[14] சங். 2. 8. யோ. 11. 53. எபி. 1. 2
[15] யோ. 18. 12. அப். 2. 23; 4. 25—27
[16] சங். 2. 4, 5, 9. சகரி. 12. 2
[17] லூ. 21. 24. அப். 13. 46. ரோ. 9. 26; 11. 11
[18] சங். 118. 22, 23. ஏசா. 28. 16. 1 பே. 2. 6, 7
[19] 8. 12. ஏசா. 28. 2
[20] ஏசா. 8. 14, 15; 60. 12. தானி. 2. 44. சகரி. 12. 3. ரோ. 9. 33
[21] லூ. 7. 16. யோ. 7. 40

**22** இயேசு மறுபடியும் அவர்களோடே உவ
மைகளாய்ப் [1]பேசிச் சொன்னது என்ன
2 வென்றால்: பரலோக ராஜ்யம் தன் குமார
னுக்குக் கலியாணம் செய்த ஒரு ராஜாவுக்கு
3 ஒப்பாயிருக்கிறது. அழைக்கப்பட்டவர்க
ளைக் கலியாணத்திற்கு வரச்சொல்லும்படி
[2]அவன் தன் ஊழியக்காரரை அனுப்பினான்;
4 அவர்களோ வர மனதில்லாதிருந்தார்கள். அப்
பொழுது அவன் வேறு ஊழியக்காரரை
அழைத்து: நீங்கள் போய், இதோ, என்
விருந்தை ஆயத்தம்பண்ணினேன், என் எரு
துகளும் கொழுத்த ஜெந்துக்களும் அடிக்கப்
பட்டது. எல்லாம் ஆயத்தமாயிருக்கிறது;
கலியாணத்துக்கு வாருங்கள் என்று அழைக்
கப்பட்டவர்களுக்குச் சொல்லுங்களென்று
5 அனுப்பினான். அழைக்கப்பட்டவர்களோ
அதை அசட்டைபண்ணி, [3]ஒருவன் தன் வய
லுக்கும், ஒருவன் தன் வியாபாரத்துக்கும்
6 போய்விட்டார்கள். மற்றவர்கள் அவன் ஊழி
யக்காரரைப் பிடித்து, அவமானப்படுத்தி,
7 கொலைசெய்தார்கள். ராஜா அதைக் கேள்
விப்பட்டு, கோபமடைந்து, [4]தன் சேனைகளை
அனுப்பி, அந்தக் கொலைபாதகரை அழித்து,
அவர்கள் பட்டணத்தையும் சுட்டெரித்தான்.
8 அப்பொழுது, அவன் தன் ஊழியக்காரரை
நோக்கி: [5]கலியாணவிருந்து ஆயத்தமாயிருக்கி
றது, அழைக்கப்பட்டவர்களோ அதற்கு அபா
9 த்திரராய்ப் போனார்கள். ஆகையால், நீங்
கள் வழிச்சந்திகளிலே போய், காணப்படுகிற
யாவரையும் கலியாணத்திற்கு அழைத்துக்
10 கொண்டு வாருங்கள் என்றான். அந்த ஊழி
யக்காரர் புறப்பட்டு, வழிகளிலே போய்,
தாங்கள் கண்ட நல்லார் பொல்லார் யாவரை
யும் கூட்டிக்கொண்டு வந்தார்கள்; கலியாண
11 சாலை விருந்தாளிகளால் நிறைந்தது. விருந்
தாளிகளைப் [6]பார்க்கும்படி ராஜா உள்ளே பிர
வேசித்தபோது, [7]கலியாண வஸ்திரம் தரித்தி
12 ராத ஒரு மனுஷனை அங்கே கண்டு: சிநே
கிதனே, நீ கலியாண வஸ்திரமில்லாதவனாய்
இங்கே எப்படி வந்தாய் என்று கேட்டான்;
13 *அதற்கு அவன் [8]பேசாமலிருந்தான். அப்
பொழுது, ராஜா பணிவிடைக்காரரை நோ
க்கி: [9]இவனைக் கையுங் காலும் கட்டிக்கொண்
டுபோய், [10]அழுகையும் பற்கடிப்பும் உண்டா
யிருக்கிற புறம்பான இருளிலே போடுங்கள்
14 என்றான். அந்தப்படியே, [11]அழைக்கப்பட்
டவர்கள் அநேகர், தெரிந்துகொள்ளப்பட்ட
வர்களோ சிலர் என்றார்.
15 அப்பொழுது, [12]பரிசேயர் போய், பேச்
சிலே அவரை அகப்படுத்தும்படி யோசனை
16 பண்ணி, தங்கள் சீஷரையும் ஏரோதியரை
யும் அவரிடத்தில் அனுப்பினார்கள். அவர்கள்
வந்து: போதகரே, நீர் சத்தியமுள்ளவரென்
றும், தேவனுடைய மார்க்கத்தைச் சத்திய
மாய்ப் போதிக்கிறவரென்றும், நீர் முகதாட்சி
ணியம் இல்லாதவராகையால் எவனைக் குறித்
தும் உமக்குக் கவையில்லையென்றும் அறிந்தி
ருக்கிறோம். ஆதலால், உமக்கு எப்படித் 17
தோன்றுகிறது? இராயனுக்கு வரிகொடுக்கி
றது நியாயமோ, அல்லவோ? அதை எங்க
ளுக்குச் சொல்லும் என்று கேட்டார்கள்.
இயேசு அவர்கள் துர்க்குணத்தை அறிந்து: 18
மாயக்காரரே, நீங்கள் என்னை ஏன் சோதிக்
கிறீர்கள்? வரிக்காசை எனக்குக் காண்பியுங் 19
கள் என்றார்; [13]அவர்கள் ஒரு பணத்தை அவ
ரிடத்தில் கொண்டுவந்தார்கள். அப்பொழுது 20
அவர்: இந்தச் சுரூபமும் மேலெழுத்தும் யாரு
டையது என்று கேட்டார். இராயனுடை 21
யது என்றார்கள். அதற்கு அவர்: [14]அப்படியா
னால், இராயனுடையதை இராயனுக்கும்,
[15]தேவனுடையதை தேவனுக்கும் செலுத்துங்
கள் என்றார். அவர்கள் அதைக் கேட்டு ஆச் 22
சரியப்பட்டு அவரை விட்டுப் போய்விட்
டார்கள்.
உயிர்த்தெழுதல் இல்லை என்று சாதிக்கிற 23
சதுசேயர் [16]அன்றையதினம் அவரிடத்தில்
வந்து: போதகரே, [17]ஒருவன் சந்தானம் இல் 24
லாமல் இறந்துபோனால், அவனுடைய சகோ
தரன் அவன் மனைவியை விவாகம்பண்ணி,
தன் சகோதரனுக்குச் சந்தானம் உண்டாக்க
வேண்டும் என்று மோசே சொன்னாரே. எங் 25
களுக்குள்ளே சகோதரர் ஏழுபேர் இருந்
தார்கள்; மூத்தவன் விவாகம்பண்ணி, மரி
த்து, சந்தானமில்லாததினால் தன் மனைவி
யைத் தன் சகோதரனுக்கு விட்டுவிட்டுப்
போனான். அப்படியே இரண்டாம் மூன் 26
றாம் சகோதரன்முதல் ஏழாம் சகோதரன்
வரைக்கும் செய்தார்கள். எல்லாருக்கும்பின்பு 27
அந்த ஸ்திரீயும் இறந்துபோனாள். ஆகையால், 28
உயிர்த்தெழுதலில் அவ்வேழுபேரில் எவனு
க்கு அவள் மனைவியாயிருப்பாள்? அவர்கள்
எல்லாரும் அவளை விவாகம்பண்ணியிருந்தார்
களே என்று கேட்டார்கள். இயேசு அவர் 29
களுக்குப் பிரதியுத்தரமாக: [18]நீங்கள் வேதவாக்
கியங்களையும், தேவனுடைய வல்லமையையும்
அறியாமல் தப்பான எண்ணங்கொள்ளுகி
றீர்கள். உயிர்த்தெழுதலில் கொள்வனையும் 30
கொடுப்பனையும் இல்லை; [19]அவர்கள் பரலோ
கத்திலே தேவதூதரைப்போல் இருப்பார்கள்; 31
மேலும் மரித்தோர் உயிர்த்தெழுதலைப்பற்றி:
[20]நான் ஆபிரகாமின் தேவனும், ஈசாக்கின்
தேவனும், யாக்கோபின் தேவனுமாயிருக்கி
றேன் என்று தேவனால் உங்களுக்கு உரைக்கப்
பட்டிருக்கிறதை நீங்கள் வாசிக்கவில்லையா?
தேவன் மரித்தோருக்கு தேவனாயிராமல், ஜீவ 32
னுள்ளோருக்கு தேவனாயிருக்கிறார் என்றார்.
ஜனங்கள் இதைக் கேட்டு, [21]அவருடைய 33
போதகத்தைக்குறித்து ஆச்சரியப்பட்டார்கள்.
அவர் சதுசேயரை வாயடைத்தார் என்று 34
பரிசேயர் கேள்விப்பட்டு, [22]அவரிடத்தில்
கூடிவந்தார்கள். அவர்களில் [23]நியாயசாஸ்திரி 35
ஒருவன் அவரைச் சோதிக்கும்படி: போத 36
கரே, நியாயப்பிரமாணத்திலே எந்தக் கற்பனை
பிரதானமானது என்று கேட்டான். இயேசு 37

1 லூ. 14. 16. வெளி. 19. 7, 9
2 சங். 68. 11. ஏசா. 25. 4: 35. 15. வெளி. 22. 17
3 சங். 106. 24, 25. சகி. 1. 24, 25. அப். 24, 25. சோ. 2. 4
4 தானி. 9. 26. லூ. 19. 27
5 10. 11, 18. அப். 13. 46. வெளி. 3. 4: 22. 14
6 செப். 1. 12
7 சங். 45. 14. ஏசா. 61. 10. 2 கொ. 5. 3. எபே. 4. 24. வெளி. 16. 15: 19. 8
* அவனுக்கு வார்த்தை அற்றுப்போயிற்று
8 லூ. 1. 22
9 ஏசா. 52. 1. வெளி. 21. 27
10 8. 12
11 20. 16. லூ. 13. 23, 24
12 மாற். 12. 13. ஷ. லூ. 20. 20. ஷ
13 18. 28
14 17. 25, 27. ரோ. 13. 7
15 மல். 1. 6–8: 3. 8—10
16 மாற். 12. 18 ஷ. லூ. 20, 27. ஷ. அப். 23. 8
17 உபா. 25. 5. ரூத். 1. 11
18 யோ. 20. 9
19 18. 10. 1 யோ. 3. 2
20 யாத். 3. 6, 15, 16. மாற். 12. 26. லூ. 20. 37. அப். 7. 32. எபி. 11. 16
21 7. 28, 29. மாற். 12. 17
22 மாற். 12. 28. ஷ
23 லூ. 10. 25. ஷ

அவனை நோக்கி: [1]உன் தேவனாகிய கர்த்தரி
டத்தில் உன் முழு இருதயத்தோடும் உன்
முழு ஆத்துமாவோடும் உன் முழு மனதோ
38 டும் அன்புகூருவாயாக; இது முதலாம் பிர
39 தான கற்பனை. இதற்கு ஒப்பாயிருக்கிற
இரண்டாம் கற்பனை என்னவென்றால், [2]உன்
னிடத்தில் நீ அன்புகூருவதுபோலப் பிறனி
40 டத்திலும் அன்புகூருவாயாக என்பதே. இவ்
விரண்டு கற்பனைகளிலும் [3]நியாயப்பிரமா
ணம் முழுமையும் தீர்க்கதரிசனங்களும் அடங்
கியிருக்கிறது என்றார்.
41 பரிசேயர் கூடியிருக்கையில், [4]இயேசு
42 அவர்களை நோக்கி: கிறிஸ்துவைக்குறித்து
நீங்கள் என்ன நினைக்கிறீர்கள், அவர் யாரு
டைய குமாரன்? என்று கேட்டார். அவர் தா
43 வீதின் குமாரன் என்றார்கள். அதற்கு அவர்:
அப்படியானால், [5]தாவீது பரிசுத்த ஆவியினா
லே அவரை ஆண்டவர் என்று சொல்லியிருக்
44 கிறது எப்படி? நான் உம்முடைய சத்துருக்
களை உமக்குப் பாதபடியாக்கிப்போடும்வரைக்
கும் நீர் என்னுடைய வலது பாரிசத்தில் உட்
காரும் என்று கர்த்தர் என் ஆண்டவரோடே
சொன்னார் என்று சொல்லியிருக்கிறானே.
45 தாவீது அவரை ஆண்டவர் என்று சொல்லி
யிருக்க, அவனுக்கு அவர் குமாரனாயிருப்பது
எப்படி என்றார்.
46 அதற்கு மாறுத்தரமாக [6]ஒருவனும் அவ
ருக்கு ஒரு வார்த்தையும் சொல்லக்கூடாதிருந்
தது. [7]அன்றுமுதல் ஒருவனும் அவரிடத்தில்
கேள்விகேட்கத் துணியவில்லை.
**23** பின்பு இயேசு ஜனங்களையும் தம்முடைய
2 சீஷர்களையும் நோக்கி: வேதபாரகரும் பரி
சேயரும் [8]மோசேயினுடைய ஆசனத்தில்
3 உட்கார்ந்திருக்கிறார்கள்; ஆகையால், நீங்
கள் கைக்கொள்ளும்படி அவர்கள் உங்களுக்
குச் சொல்லுகிற யாவையும் கைக்கொண்டு
செய்யுங்கள்; அவர்கள் செய்கையின்படியோ
செய்யாதிருங்கள்; [9]ஏனெனில் அவர்கள் சொ
ல்லுகிறார்கள், சொல்லியும் செய்யாதிருக்கி
4 றார்கள், சுமப்பதற்கரிய பாரமான சுமை
களைக் கட்டி மனுஷர் தோள்களின்மேல்
சுமத்துகிறார்கள்; [10]தாங்களோ ஒரு விரலினா
5 லும் அவைகளைத் தொடமாட்டார்கள். தங்
கள் கிரியைகளையெல்லாம் [11]மனுஷர் காண
வேண்டுமென்று செய்கிறார்கள்; தங்கள் [12]கா
ப்பு நாடாக்களை அகலமாக்கி, தங்கள் வஸ்தி
6 ரங்களின் தொங்கல்களைப் பெரிதாக்கி, விருந்
துகளில் முதன்மையான இடங்களையும்,
[13]ஜெப ஆலயங்களில் முதன்மையான ஆசனங்
7 களையும், சந்தைவெளிகளில் *வந்தனங்களை
யும், மனுஷரால் †ரபீ, ரபீ, என்று அழைக்
8 கப்படுவதையும் விரும்புகிறார்கள்; நீங்களோ
[14]ரபீ என்றழைக்கப்படாதிருங்கள்; கிறிஸ்து
ஒருவரே உங்களுக்குப் போதகராயிருக்கிறார்,
நீங்கள் எல்லாரும் சகோதரராயிருக்கிறீர்கள்.
9 பூமியிலே ஒருவனையும் உங்கள் பிதா என்று
சொல்லாதிருங்கள்; [15]பரலோகத்திலிருக்கிற

ஒருவரே உங்களுக்குப் பிதாவாயிருக்கிறார்.
நீங்கள் குருக்கள் என்றும் அழைக்கப்படா 10
திருங்கள்; கிறிஸ்து ஒருவரே உங்களுக்குக்
குருவாயிருக்கிறார். உங்களில் பெரியவனா 11
யிருக்கிறவன் [16]உங்களுக்கு ஊழியக்காரனா
யிருக்கக்கடவன். தன்னை உயர்த்துகிறவன் 12
தாழ்த்தப்படுவான் [17]தன்னைத் தாழ்த்துகிறவன்
உயர்த்தப்படுவான்.
மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேய 13
ரே! [18]உங்களுக்கு ஐயோ, மனுஷர் பிரவேசி
யாதபடி பரலோகராஜ்யத்தைப் பூட்டிப்போடு
கிறீர்கள்; நீங்கள் அதில் பிரவேசிக்கிறதுமில்
லை, பிரவேசிக்கப்போகிறவர்களைப் பிரவேசி
க்க விடுகிறதுமில்லை. மாயக்காரராகிய வேத 14
பாரகரே! பரிசேயரே! உங்களுக்கு ஐயோ,
பார்வைக்காக நீண்ட ஜெபம்பண்ணி, [19]வித
வைகளின் வீடுகளைப் பட்சித்துப்போடுகிறீர்
கள்; இதினிமித்தம் அதிக ஆக்கினையை அடை
வீர்கள்.
மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேய 15
ரே! உங்களுக்கு ஐயோ, ஒருவனை உங்கள்
மார்க்கத்தானாக்கும்படி சமுத்திரத்தையும் பூமி
யையும் சுற்றித் திரிகிறீர்கள்; [20]அவன் உங்கள்
மார்க்கத்தானானபோது அவனை உங்களிலும்
இரட்டிப்பாய் நரகத்தின் மகனாக்குகிறீர்கள்.
குருடரான வழிகாட்டிகளே! [21]உங்களுக்கு 16
ஐயோ, எவனாகிலும் தேவாலயத்தின்பேரில்
சத்தியம்பண்ணினால் அதினால் ஒன்றுமில்லை
யென்றும், எவனாகிலும் தேவாலயத்தின் பொ
ன்னின்பேரில் சத்தியம்பண்ணினால் அவன்
கடனாளியென்றும் சொல்லுகிறீர்கள். மதி 17
கேடரே, குருடரே! [22]எது முக்கியம்? பொன்
னோ, பொன்னைப் பரிசுத்தமாக்குகிற தேவா
லயமோ? மேலும், எவனாகிலும் பலிபீடத் 18
தின்பேரில் சத்தியம்பண்ணினால் அதினால்
ஒன்றுமில்லையென்றும், எவனாகிலும் அதின்
மேல் இருக்கிற காணிக்கையின்பேரில் சத்தி
யம்பண்ணினால், அவன் கடனாளியென்றும்
சொல்லுகிறீர்கள். மதிகேடரே, குருடரே! 19
எது முக்கியம்? காணிக்கையோ, காணிக்கை
யைப் [23]பரிசுத்தமாக்குகிற பலிபீடமோ? ஆகை 20
யால் பலிபீடத்தின்பேரில் சத்தியம்பண்ணு
கிறவன் அதின்பேரிலும் அதின்மேலுள்ள
எல்லாவற்றின்பேரிலும் சத்தியம்பண்ணுகி
றான். தேவாலயத்தின்பேரில் சத்தியம்பண் 21
ணுகிறவன் அதின்பேரிலும் [24]அதில் வாசமாயி
ருக்கிறவர்பேரிலும் சத்தியம்பண்ணுகிறான்.
வானத்தின்பேரில் சத்தியம்பண்ணுகிறவன் 22
தேவனுடைய சிங்காசனத்தின்பேரிலும்
[25]அதில் வீற்றிருக்கிறவர்பேரிலும் சத்தியம்
பண்ணுகிறான்.
மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேய 23
ரே! உங்களுக்கு ஐயோ, நீங்கள் ஒற்தலாமி
லும் வெந்தையத்திலும் சீரகத்திலும் ‡தசமபா
கம் செலுத்தி, [26]நியாயப்பிரமாணத்தில் கற்
பித்திருக்கிற விசேஷித்தவைகளாகிய நீதியை
யும் இரக்கத்தையும் விசுவாசத்தையும் விட்டு

1 உபா. 6. 5; 10. 12. லூ. 10. 27
2 19. 19. லேவி. 19. 18
3 7. 12. ரோ. 13. 9. 1 தீமோ. 1. 5. யாக். 2. 8
4 மாற். 12. 35. லூ. 20. 41. லூ
5 சங். 110. 1. அப். 2. 34. 1 கொ. 15. 25. எபி. 1. 13; 10. 12, 13
6 லூ. 14. 6
7 மாற். 12. 34. லூ. 20. 40
8 நெகே. 8. 4, 8. மல். 2. 7. மாற். 12. 38. லூ. 20. 45. லூ
9 ரோ. 2. 19. லூ
10 லூ. 11. 46. அப். 15. 10. கலா. 6. 13
11 6. 1–16
12 எண். 15. 38. உபா. 6. 8. நீதி. 3. 3
13 மாற். 12. 38. லூ. 11. 43
* வாழ்த்துதல்
† சுவாமி
14 2 கொ. 1. 24. யாக். 3. 1. 1 பே. 5. 3
15 மல். 1. 6
16 20. 26, 27
17 நீதி. 15. 33. யாக். 4. 6. 1 பே. 5. 5
18 லூ. 11. 52
19 மாற். 12. 40. லூ. 20. 47. 2 தீமோ. 3. 6. தீத். 1. 11
20 யோ. 8. 44. அப். 13. 10. எபே. 2. 3
21 15. 14
22 யாத். 30. 29. சங். 94. 8
23 யாத். 29. 37; 30. 29
24 1 இரா. 8. 13. 2 நாளா. 6. 2. சங். 26. 8
25 சங். 11. 4. ஏசா. 66. 1. அப். 7. 49
‡ பத்திலொன்று
26 9. 13. 1 சாமு. 15. 22. எரே. 22. 15, 16. ஓசி. 6. 6. மீகா 6. 8

விட்டீர்கள், இவைகளையும் செய்யவேண்டும்,
24 அவைகளையும் விடாதிருக்கவேண்டுமே. குரு
டரான வழிகாட்டிகளே, கொசுகில்லாதபடி
வடிகட்டி, ஒட்டகத்தை விழுங்குகிறவர்களா
யிருக்கிறீர்கள்.
25 *மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேயரே!
உங்களுக்கு ஐயோ, [1]போஜனபான பாத்திரங்
களின் வெளிப்புறத்தைச் சுத்தமாக்குகிறீர்கள்;
உட்புறத்திலோ அவைகள் கொள்ளையினாலும்
26 அநீதத்தினாலும் நிறைந்திருக்கிறது. குருட
னான பரிசேயனே! போஜனபான பாத்திரங்
களின் வெளிப்புறம் சுத்தமாகும்படி அவைக
ளின் உட்புறத்தை முதலாவது சுத்தமாக்கு.
27 மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேய
ரே! உங்களுக்கு ஐயோ, [2]வெள்ளையடிக்கப்
பட்ட கல்லறைகளுக்கு ஒப்பாயிருக்கிறீர்கள்,
அவைகள் புறம்பே அலங்காரமாய்க் காணப்
படும், உள்ளேயோ மரித்தவர்களின் எலும்பு
களினாலும் சகல அசுத்தத்தினாலும் நிறைந்தி
28 ருக்கும். அப்படியே நீங்களும் மனுஷருக்கு
நீதிமான்கள் என்று புறம்பே காணப்படுகிறீர்
கள்; உள்ளத்திலோ மாயத்தினாலும் அக்கிர
மத்தினாலும் நிறைந்திருக்கிறீர்கள்.
29 மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேய
ரே! உங்களுக்கு ஐயோ, [3]நீங்கள் தீர்க்கதரிசி
களின் கல்லறைகளைக் கட்டி, நீதிமான்களின்
30 *சமாதிகளைச் சிங்காரித்து: எங்கள் பிதாக்க
ளின் நாட்களில் இருந்தோமானால், அவர்க
ளோடே நாங்கள் தீர்க்கதரிசிகளின் இரத்தப்
பழிக்கு உடன்பட் டிருக்கமாட்டோம் என்
31 கிறீர்கள். ஆகையால் [4]தீர்க்கதரிசிகளைக் கொ
லைசெய்தவர்களுக்குப் புத்திரராயிருக்கிறீர்கள்
என்று உங்களைக்குறித்து நீங்களே சாட்சிகளா
32 யிருக்கிறீர்கள். நீங்களும் உங்கள் பிதாக்களின்
33 [5]அக்கிரம அளவை நிரப்புங்கள். சர்ப்பங்க
ளே, [6]விரியன்பாம்புக் குட்டிகளே! நரகாக்கி
னைக்கு எப்படித் தப்பித்துக்கொள்வீர்கள்?
34 ஆகையால், இதோ, [7]தீர்க்கதரிசிகளையும்
ஞானிகளையும் வேதபாரகரையும் உங்களிடத்
தில் அனுப்புகிறேன்; [8]அவர்களில் சிலரைக்
கொன்று சிலுவைகளில் அறைவீர்கள், சிலரை
உங்கள் ஆலயங்களில் வாரினால் அடித்து,
35 ஊருக்கு ஊர் துன்பப்படுத்துவீர்கள்; நீதி
மானாகிய [9]ஆபேலின் இரத்தம்முதல் தேவா
லயத்துக்கும் பலிபீடத்துக்கும் நடுவே நீங்கள்
கொலைசெய்த பரகியாவின் குமாரனாகிய [10]சக
ரியாவின் இரத்தம்வரைக்கும், பூமியின்மேல்
சிந்தப்பட்ட நீதிமான்களின் இரத்தப்பழியெல்
லாம் உங்கள்மேல் வரும்படியாக இப்படிச்
36 செய்வீர்கள். இவைகளெல்லாம் இந்தச் சந்
ததியின்மேல் வருமென்று, மெய்யாகவே உங்
களுக்குச் சொல்லுகிறேன்.
37 எருசலேமே, எருசலேமே, [11]தீர்க்கதரிசிக
ளைக் கொலைசெய்து, உன்னிடத்தில் அனுப்
பப்பட்டவர்களைக் கல்லெறிகிறவளே! கோழி
தன் குஞ்சுகளைத் தன் சிறகுகளின் கீழே கூட்
டிச் சேர்த்துக்கொள்ளும் வண்ணமாக [12]நான்
எத்தனைதரமோ உன் பிள்ளைகளைக் கூட்டிச்
சேர்த்துக்கொள்ள மனதாயிருந்தேன்; உங்க
ளுக்கோ மனதில்லாமற்போயிற்று. இதோ, 38
[13]உங்கள் வீடு உங்களுக்குப் பாழாக்கிவிடப்
படும். கர்த்தருடைய நாமத்தினாலே [14]வருகிற 39
வர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர் என்று நீங்கள்
சொல்லுமளவும், இதுமுதல் என்னைக் காணா
திருப்பீர்கள் என்று உங்களுக்குச் சொல்லு
கிறேன் என்றார்.

இயேசு தேவாலயத்தைவிட்டுப் புறப்பட் **24**
டுப்போகையில், [15]அவருடைய சீஷர்கள் தே
வாலயத்தின் கட்டடங்களை அவருக்குக் காண்
பிக்க அவரிடத்தில் வந்தார்கள். இயேசு 2
அவர்களை நோக்கி: [16]இவைகளையெல்லாம்
பார்க்கிறீர்களே, இவ்விடத்தில் ஒரு கல்லின்
மேல் ஒரு கல்லிராதபடிக்கு எல்லாம் இடிக்
கப்பட்டுப்போகும் என்று மெய்யாகவே உங்க
ளுக்குச் சொல்லுகிறேன் என்றார்.
பின்பு, அவர் ஒலிவமலையின்மேல் உட் 3
கார்ந்திருக்கையில், சீஷர்கள் அவரிடத்தில்
தனித்துவந்து: [17]இவைகள் எப்பொழுது சம்
பவிக்கும்? உம்முடைய வருகைக்கும், †உல
கத்தின் முடிவுக்கும் அடையாளம் என்ன?
எங்களுக்குச் சொல்லவேண்டும் என்றார்கள்.
இயேசு அவர்களுக்குப் பிரதியுத்தரமாக: 4
[18]ஒருவனும் உங்களை வஞ்சியாதபடிக்கு எச்
சரிக்கையாயிருங்கள்; ஏனெனில், அநேகர் 5
வந்து, என் நாமத்தைத் தரித்துக்கொண்டு:
[19]நானே கிறிஸ்து என்று சொல்லி, அநே
கரை வஞ்சிப்பார்கள். யுத்தங்களையும் யுத்தங் 6
களின் செய்திகளையும் கேள்விப்படுவீர்கள்;
கலங்காதபடி எச்சரிக்கையாயிருங்கள்; இவை
களெல்லாம் சம்பவிக்கவேண்டியதே; ஆனா
லும், முடிவு உடனே வராது. ஜனத்துக்கு 7
விரோதமாய் ஜனமும், [20]ராஜ்யத்துக்கு விரோ
தமாய் ராஜ்யமும் எழும்பும்; பஞ்சங்களும்,
கொள்ளைநோய்களும், பூமியதிர்ச்சிகளும் பல
இடங்களில் உண்டாகும். இவைகளெல்லாம் 8
வேதனைகளுக்கு ஆரம்பம். அப்பொழுது, உங் 9
களை உபத்திரவங்களுக்கு ஒப்புக்கொடுத்து,
[21]உங்களைக் கொலைசெய்வார்கள்; என் நாமத்
தினிமித்தம் நீங்கள் சகல ஜனங்களாலும்
பகைக்கப்படுவீர்கள். அப்பொழுது, அநேகர் 10
இடறலடைந்து, [22]ஒருவரையொருவர் காட்
டிக்கொடுத்து, ஒருவரையொருவர் பகைப்பார்
கள். அநேகங் கள்ளத் தீர்க்கதரிசிகளும் 11
எழும்பி, [23]அநேகரை வஞ்சிப்பார்கள். அக்கிர 12
மம் மிகுதியாவதினால் அநேகருடைய [24]அன்பு
தணிந்துபோம். முடிவுபரியந்தம் [25]நிலைநிற் 13
பவனே இரட்சிக்கப்படுவான். ராஜ்யத்தினு 14
டைய இந்தச் சுவிசேஷம் [26]பூலோகமெங்கு
முள்ள சகல ஜாதிகளுக்கும் சாட்சியாகப் பிர
சங்கிக்கப்படும், அப்போது முடிவு வரும்.
மேலும், [27]பாழாக்குகிற அருவருப்பைக் 15
குறித்துத் தானியேல் தீர்க்கதரிசி சொல்லி
யிருக்கிறானே. வாசிக்கிறவன் சிந்திக்கக்கட
வன். நீங்கள் அதைப் பரிசுத்த ஸ்தலத்தில் நிற்

1 மாற். 7. 4. லூ. 11. 39. லூ
2 லூ. 11. 44. அப். 23. 3
3 லூ. 11. 47
* பிரேதக்குழிகளை
4 அப். 7. 52. 1 தெச. 2. 15
5 ஆதி. 15. 16. 1 தெச. 2. 16
6 3. 7; 12. 34
7 21. 34, 35. லூ. 11. 49
8 அப். 5. 40; 7. 59. 2 கொ. 11. 24, 25. எபி. 11. 37
9 ஆதி. 4. 8. 1 யோ. 3. 12. வெளி. 18. 24
10 2 நாளா. 24. 20, 21
11 லூ. 13. 34
12 உபா. 32. 11, 12 சங். 91. 4
13 சக. 11. 6
14 21. 9. சங். 118. 26
15 மாற். 13. 1. லூ. 21. 5. லூ
16 1 இரா. 9. 7. எரே. 26. 18 மீகா 3. 12. லூ. 19. 44
17 மாற். 13. 3. 1 தெச. 5. 1. லூ
† யுகாந்தத்துக்கும்
18 எபே. 5. 6. கொலோ. 2. 8. 2 தெச. 2. 3. 1 யோ. 4. 1
19 எரே. 14. 14. யோ. 5. 43
20 ஆகாய் 2. 21, 22. சக. 14. 13
21 லூ. 21. 12, யோ. 15. 20; 16. 2. அப். 7. 59
22 13. 21, 57. 2 தீமோ. 1. 15; 4. 16
23 அப். 20. 29. 1 தீமோ. 4. 1. 2 பே. 2. 1. 1 யோ. 4. 3
24 வெளி. 3. 15, 16
25 எபி. 3. 6, 14. வெளி. 2. 10
26 28. 19. ரோ. 10. 18. வெளி. 14. 6
27 தானி. 9. 27; 12. 11

16 கக் காணும்போது, யூதேயாவில் இருக்கிற
வர்கள் மலைகளுக்கு ஓடிப்போகக்கடவர்கள்,
17 வீட்டின்மேல் இருக்கிறவன் தன் வீட்டிலே
எதையாகிலும் எடுப்பதற்கு இறங்காதிருக்கக்
18 கடவன். வயலில் இருக்கிறவன் தன் வஸ்தி
ரங்களை எடுப்பதற்குத் திரும்பாதிருக்கக்கட
19 வன். அந்நாட்களிலே [1]கர்ப்பவதிகளுக்கும்
20 *பால்கொடுக்கிறவர்களுக்கும் ஐயோ. நீங்கள்
ஓடிப்போவது மாரிகாலத்திலாவது, ஓய்வு
நாளிலாவது, சம்பவியாதபடிக்கு வேண்டிக்
21 கொள்ளுங்கள். ஏனெனில், உலகமுண்டா
னதுமுதல் இதுவரைக்கும்சம்பவித்திராததும்,
[2]இனிமேலும்சம்பவியாததுமான மிகுந்த உபத்
22 திரவம் அப்பொழுது உண்டாயிருக்கும். அந்
நாட்கள் குறைக்கப்படாதிருந்தால், †ஒருவனா
கிலும் தப்பிப்போவதில்லை; [3]தெரிந்துகொள்
ளப்பட்டவர்களினிமித்தமோ அந்த நாட்கள்
குறைக்கப்படும்.
23 அப்பொழுது, இதோ, [4]கிறிஸ்து இங்கே
இருக்கிறார், அதோ, அங்கே இருக்கிறார்
என்று எவனாகிலும் சொன்னால் நம்பாதேயுங்
24 கள். ஏனெனில், [5]கள்ளக் கிறிஸ்துக்களும்
கள்ளத் தீர்க்கதரிசிகளும் எழும்பி, கூடுமானால்
தெரிந்துகொள்ளப்பட்டவர்களையும் வஞ்சிக்
கத்தக்கதாகப் பெரிய அடையாளங்களையும்
25 அற்புதங்களையும் செய்வார்கள். இதோ, முன்
னதாக உங்களுக்கு அறிவித்திருக்கிறேன்.
26 ஆகையால்: அதோ, வனாந்தரத்தில் இருக்கி
றார் என்று சொல்வார்களானால், புறப்படாதி
ருங்கள்; இதோ, அறைவீட்டிற்குள் இருக்கி
றார் என்று சொல்வார்களானால் நம்பாதிருங்
27 கள். மின்னல் கிழக்கிலிருந்து தோன்றி மேற்
குவரைக்கும் பிரகாசிக்கிறதுபோல, [6]மனுஷ
28 குமாரனுடைய வருகையும் இருக்கும். பிணம்
எங்கேயோ [7]அங்கே கழுகுகள் வந்து கூடும்.
29 அந்நாட்களின் உபத்திரவம் முடிந்தவுட
னே, [8]சூரியன் அந்தகாரப்படும், சந்திரன் ஒளி
யைக் கொடாதிருக்கும், நட்சத்திரங்கள் வான
த்திலிருந்து விழும், [9]வானத்தின் சத்துவங்கள்
30 அசைக்கப்படும். அப்பொழுது, [10]மனுஷகுமா
ரனுடைய அடையாளம் வானத்தில் காணப்
படும். அப்பொழுது, [11]மனுஷகுமாரன் வல்
லமையோடும் மிகுந்த மகிமையோடும் வானத்
தின் மேகங்கள்மேல் வருகிறதை பூமியிலுள்ள
சகல கோத்திரத்தாரும் கண்டு புலம்புவார்கள்.
31 வலுவாய்த் தொனிக்கும் எக்காள சத்தத்தோ
டே அவர் தமது தூதர்களை அனுப்புவார்;
[12]அவர்கள் அவரால் தெரிந்துகொள்ளப்பட்ட
வர்களை வானத்தின் ஒரு முனைமுதற்கொண்டு
மறு முனைமட்டும் நாலு திசைகளிலுமிருந்து
கூட்டிச் சேர்ப்பார்கள்.
32 அத்திமரத்தினால் ஒரு உவமையைக் கற்
றுக்கொள்ளுங்கள்; [13]அதிலே இளங்கிளை
தோன்றி, துளிர்விடும்போது, வசந்தகாலம்
33 சமீபமாயிற்று என்று அறிவீர்கள். அப்படியே
இவைகளையெல்லாம் நீங்கள் காணும்போது,
[14]அவர் சமீபமாய் வாசலருகே வந்திருக்கிறார்
என்று அறியுங்கள். இவைகளெல்லாம் சம்ப 34
விக்குமுன்னே [15]இந்தச் சந்ததி ஒழிந்துபோ
காதென்று, மெய்யாகவே உங்களுக்குச் சொல்
லுகிறேன். வானமும் பூமியும் ஒழிந்துபோம், 35
[16]என் வார்த்தைகளோ ஒழிந்துபோவதில்லை.
அந்த நாளையும் அந்த நாழிகையையும் [17]என் 36
பிதா ஒருவர்தவிர மற்றொருவனும் அறியான்;
பரலோகத்திலுள்ள தூதர்களும் அறியார்கள்.
நோவாவின் காலத்தில் எப்படி நடந்ததோ, 37
அப்படியே மனுஷகுமாரன் வரும் காலத்தி
லும் நடக்கும். எப்படியெனில், [18]ஜலப்பிர 38
ளயத்துக்கு முன்னான காலத்திலே நோவா
பேழைக்குள் பிரவேசிக்கும் நாள்வரைக்கும்,
ஜனங்கள் புசித்தும் குடித்தும், பெண்கொண்
டும் பெண்கொடுத்தும், ஜலப்பிரளயம் வந்து 39
அனைவரையும் வாரிக்கொண்டு போகுமட்டும்
உணராதிருந்தார்கள்; அப்படியே மனுஷகுமா
ரன் வரும் காலத்திலும் நடக்கும். அப்பொ 40
ழுது, [19]இரண்டுபேர் வயலில் இருப்பார்கள்;
ஒருவன் ஏற்றுக்கொள்ளப்படுவான், ஒருவன்
கைவிடப்படுவான். இரண்டு ஸ்திரீகள் ஏந்தி 41
ரம் அரைத்துக்கொண்டிருப்பார்கள்; ஒருத்தி
ஏற்றுக்கொள்ளப்படுவாள், ஒருத்தி கைவிடப்
படுவாள். உங்கள் ஆண்டவர் இன்ன நாழி 42
கையிலே வருவாரென்று நீங்கள் அறியாதிருக்
கிறபடியினால் [20]விழித்திருங்கள். திருடன் 43
இன்னஜாமத்தில் வருவானென்று வீட்டெஜ
மான் அறிந்திருந்தால், அவன் விழித்திருந்து,
[21]தன் வீட்டைக் கன்னமிடவொட்டானென்று
அறிவீர்கள். நீங்கள் நினையாத நாழிகையிலே 44
மனுஷகுமாரன் வருவார்; [22]ஆதலால், நீங்க
ளும் ஆயத்தமாயிருங்கள். ஏற்றவேளையிலே 45
[23]தன் வேலைக்காரருக்குப் போஜனங்கொடுத்து
அவர்களை விசாரிக்கும்படி எஜமான் வைத்த
உண்மையும் விவேகமுமுள்ள ஊழியக்காரன்
யாவன்? எஜமான் வரும்போது அப்படிச் 46
செய்கிறவனாகக் [24]காணப்படுகிற ஊழியக்கா
ரனே பாக்கியவான். தன் ஆஸ்திகள் எல் 47
லாவற்றின்மேலும் [25]அவனை விசாரணைக்கார
னாக வைப்பானென்று மெய்யாகவே உங்களுக்
குச் சொல்லுகிறேன். அந்த ஊழியக்கார 48
னோ பொல்லாதவனாயிருந்து: என் ஆண்ட
வன் வர நாள் செல்லும் என்று தன் உள்ளத்
திலே சொல்லிக்கொண்டு, தன் உடன் வே 49
லைக்காரரை அடிக்கத் தொடங்கி, வெறியரோ
டே புசிக்கவும் குடிக்கவும் தலைப்பட்டால்,
அந்த ஊழியக்காரன் நினையாத நாளிலும், 50
[26]அறியாத நாழிகையிலும், அவனுடைய எஜ
மான் வந்து, அவனைக் கடினமாய் தண்டித் 51
து, மாயக்காரரோடே அவனுக்குப் பங்கை
நியமிப்பான்; [27]அங்கே அழுகையும் பற்கடிப்
பும் உண்டாயிருக்கும்.

25

அப்பொழுது, பரலோகராஜ்யம் தங்கள் 1
‡தீவட்டிகளைப் பிடித்துக்கொண்டு, [28]மண
வாளனுக்கு எதிர்கொண்டுபோகப் புறப்பட்ட
பத்துக் கன்னிகைகளுக்கு ஒப்பாயிருக்கும்.
அவர்களில் [29]ஐந்துபேர் புத்தியுள்ளவர்களும், 2

1 லூ. 23. 29
* முலை கொடுக்கிற வர்கள்
2 தானி. 12. 1. யோவே. 2. 2
† மாம்சமான ஒருவ னும்
3 ஏசா. 65. 8, 9. சக. 14. 2, 3
4 மாற். 13. 21. லூ. 17. 23
5 உபா. 13. 1-3. யோ. 10. 28, 29. 2 தெச. 2. 9-11. வெளி. 13. 13
6 சக. 9. 14. லூ. 17. 24. ழ
7 யோபு. 39. 30. லூ. 17. 37
8 ஏசா. 13. 10. எசே. 32. 7. ஆமோ. 5. 20. அப். 2. 20. வெளி. 6. 12
9 2 பே. 3. 10.
10 தானி. 7. 13
11 6. 27. மாற். 13. 26. லூ. 22. 69. வெளி. 1. 7
12 1 கொ. 15. 52. 1 தெச. 4. 16
13 லூ. 21. 29
14 எபி. 3. 18, 19. யாக். 5. 9. வெளி. 22. 11, 12
15 16. 28: 23. 36
16 சங். 102. 26. ஏசா. 51. 6. எபி. 1. 11
17 சக. 14. 7. 1 தெச. 5. 2. 2 பே. 3. 10
18 ஆதி. 6. 2. 1 பே. 3. 20
19 லூ. 17. 34 ழ
20 லூ. 12. 21, 36
21 லூ. 12. 39. 1 தெச. 5. 2. 2 பே. 3. 10. வெளி. 3. 3: 16. 15
22 25. 13. 1 தெச. 5. 6
23 எபி. 3. 15. லூ. 12. 42. ஙீ. அப். 20. 28. 1 கொ. 4. 2. எபி. 3. 9
24 வெளி. 16. 15
25 25. 21, 23
26 1 தெச. 5. 3. வெளி. 3. 3
27 25. 30
‡ தீபங்களை
28 சங். 45. 14. உன்னத. 6. 8, 9. யோ. 3. 29: 2 கொ. 11. 2. எபே. 5. 29, 30. வெளி. 19. 7: 21. 2, 9
29 22. 10. எசே. 24. 2, 9

ஐந்துபேர் புத்தியில்லாதவர்களுமா யிருந்தார்
3 கள். புத்தியில்லாதவர்கள் தங்கள் தீவட்டி
களை எடுத்துக்கொண்டு போனார்கள், எண்
ணெயையோ கூடக் கொண்டுபோகவில்லை.
4 புத்தியுள்ளவர்கள் தங்கள் தீவட்டிகளோடுங்
கூடத் தங்கள் பாத்திரங்களில் [1]எண்ணெயை
5 யும் கொண்டுபோனார்கள். மணவாளன் வரத்
தாமதித்தபோது, அவர்கள் [2]எல்லாரும் நித்தி
6 ரை மயக்கமடைந்து தூங்கிவிட்டார்கள். நடு
ராத்திரியிலே: இதோ, மணவாளன் வருகி
றார், [3]அவருக்கு எதிர்கொண்டுபோகப் புறப்
7 படுங்கள் என்கிற சத்தம் உண்டாயிற்று. அப்
பொழுது, அந்தக் கன்னிகைகள் எல்லாரும்
எழுந்திருந்து, தங்கள் தீவட்டிகளை ஆயத்தப்
8 படுத்தினார்கள். புத்தியில்லாதவர்கள் புத்தி
யுள்ளவர்களை நோக்கி: உங்கள் எண்ணெயில்
எங்களுக்குக் கொஞ்சங் கொடுங்கள், [4]எங்கள்
தீவட்டிகள் அணைந்துபோகிறதே என்றார்
9 கள். புத்தியுள்ளவர்கள் பிரதியுத்தரமாக: அப்
படியல்ல, எங்களுக்கும் உங்களுக்கும் போ
தாமலிராதபடி, [5]நீங்கள் விற்கிறவர்களிடத்
திற் போய், உங்களுக்காக வாங்கிக்கொள்ளுங்
10 கள் என்றார்கள். அப்படியே [6]அவர்கள்
வாங்கப்போனபோது மணவாளன் வந்துவிட்
டார்; ஆயத்தமாயிருந்தவர்கள் அவரோடேகூ
டக் கலியாண வீட்டுக்குள் பிரவேசித்தார்கள்;
11 கதவும் அடைக்கப்பட்டது. பின்பு, மற்றக்
கன்னிகைகளும் வந்து: [7]ஆண்டவரே, ஆண்
டவரே, எங்களுக்குத் திறக்கவேண்டும் என்
12 றார்கள். அதற்கு அவர்: [8]உங்களை அறியேன்
என்று, மெய்யாகவே உங்களுக்குச் சொல்
13 லுகிறேன் என்றார். மனுஷகுமாரன் வரும்
நாளையாவது நாழிகையையாவது நீங்கள்
அறியாதிருக்கிறபடியால் [9]விழித்திருங்கள்.
14 அன்றியும், பரலோகராஜ்யம் புறத்தேசத்
துக்குப் பிரயாணமாய்ப் போகிற ஒரு மனு
ஷன், [10]தன் ஊழியக்காரரை அழைத்து, தன்
ஆஸ்திகளை அவர்கள் வசமாய் ஒப்புக்கொடுத்
15 ததுபோல் இருக்கிறது. அவனவனுடைய
திறமைக்குத்தக்கதாக, ஒருவனிடத்தில் ஐந்து
*தாலந்தும், ஒருவனிடத்தில் இரண்டு தாலந்
தும், ஒருவனிடத்தில் ஒரு தாலந்துமாகக்
கொடுத்து, [11]உடனே பிரயாணப்பட்டுப் போ
16 னான். ஐந்து தாலந்தை வாங்கினவன் போய்,
அவைகளைக்கொண்டு வியாபாரம் பண்ணி,
17 வேறு ஐந்து தாலந்தைச் சம்பாதித்தான். அப்
படியே இரண்டு தாலந்தை வாங்கினவனும்,
வேறு இரண்டு தாலந்தைச் சம்பாதித்தான்.
18 ஒரு தாலந்தை வாங்கினவனோ, போய், நிலத்
தைத் தோண்டி, தன் எஜமானுடைய பணத்
19 தைப் புதைத்துவைத்தான். வெகுகாலமான
பின்பு அந்த ஊழியக்காரருடைய எஜமான்
திரும்பிவந்து [12]அவர்களிடத்தில் கணக்குக்
20 கேட்டான். அப்பொழுது, ஐந்து தாலந்தை
வாங்கினவன், வேறு ஐந்து தாலந்தைக் கொ
ண்டுவந்து: ஆண்டவனே, ஐந்து தாலந்தை
என்னிடத்தில் ஒப்புவித்தீரே; அவைகளைக்

கொண்டு, இதோ, வேறு ஐந்து தாலந்தை
சம்பாதித்தேன் என்றான். அவனுடைய எஜ 21
மான் அவனை நோக்கி: நல்லது, உத்தமமும்
உண்மையுமுள்ள ஊழியக்காரனே, கொஞ்
சத்திலே உண்மையாயிருந்தாய், [13]அநேகத்
தின்மேல் உன்னை அதிகாரியாக வைப்பேன்,
உன் எஜமானுடைய சந்தோஷத்திற்குள் பிர
வேசி என்றான். இரண்டு தாலந்தை வாங்கி 22
னவனும் வந்து: ஆண்டவனே, இரண்டு தா
லந்தை என்னிடத்தில் ஒப்புவித்தீரே; அவை
களைக்கொண்டு, இதோ, வேறு இரண்டு தா
லந்தைச் சம்பாதித்தேன் என்றான். அவனு 23
டைய எஜமான் அவனை நோக்கி: நல்லது,
உத்தமமும் உண்மையுமுள்ள ஊழியக்கார
னே, கொஞ்சத்திலே உண்மையாயிருந்தாய்,
அநேகத்தின்மேல் உன்னை அதிகாரியாக
வைப்பேன்; உன் எஜமானுடைய சந்தோ
ஷத்திற்குள் பிரவேசி என்றான். ஒரு தா 24
லந்தை வாங்கினவன் வந்து: ஆண்டவனே,
நீர் விதைக்காத இடத்தில் அறுக்கிறவரும்,
[14]தெளிக்காத இடத்தில் சேர்க்கிறவருமான
கடினமுள்ள மனுஷன் என்று அறிவேன்.
ஆகையால், [15]நான் பயந்து, போய், உமது தா 25
லந்தை நிலத்தில் புதைத்துவைத்தேன்; இ
தோ, உம்முடையதை வாங்கிக்கொள்ளும்
என்றான். அவனுடைய எஜமான் பிரதியுத் 26
தரமாக: [16]பொல்லாதவனும் சோம்பனுமான
ஊழியக்காரனே, நான் விதைக்காத இடத்தில்
அறுக்கிறவனென்றும், தெளிக்காத இடத்தில்
சேர்க்கிறவனென்றும் அறிந்திருந்தாயே. அப் 27
படியானால், நீ என் பணத்தைக் காசுக்காரர்
வசத்தில் போட்டுவைக்க வேண்டியதாயிருந்
தது; அப்பொழுது, நான் வந்து என்னுடைய
தை வட்டியோடே வாங்கிக்கொள்வேனே,
என்று சொல்லி, அவனிடத்திலிருக்கிற தா 28
லந்தை எடுத்து, பத்துத் தாலந்துள்ளவனுக்
குக் கொடுங்கள். உள்ளவனெவனோ அவ 29
னுக்குக் கொடுக்கப்படும், பரிபூரணமும் அ
டைவான்; [17]இல்லாதவனிடத்திலிருந்து உள்
ளதும் எடுத்துக்கொள்ளப்படும். பிரயோஜ 30
னமற்ற ஊழியக்காரனாகிய இவனைப் புறம்
பான இருளிலே தள்ளிப்போடுங்கள்; [18]அங்
கே அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்
கும் என்றான்.
அன்றியும் [19]மனுஷகுமாரன் தமது மகிமை 31
பொருந்தினவராய்ச் சகல பரிசுத்த தூதரோ
டுங்கூட வரும்போது, தமது மகிமையுள்ள
சிங்காசனத்தின்மேல் வீற்றிருப்பார். அப் 32
பொழுது, [20]சகல ஜனங்களும் அவருக்கு முன்
பாகச் சேர்க்கப்படுவார்கள். [21]மேய்ப்பனானவன்
வன் செம்மறியாடுகளையும் வெள்ளாடுகளை
யும் வெவ்வேறாகப் பிரிக்கிறதுபோல அவர்
களை அவர் பிரித்து, செம்மறியாடுகளைத் 33
தமது வலதுபக்கத்திலும், வெள்ளாடுகளைத்
தமது இடதுபக்கத்திலும் நிறுத்துவார். அப் 34
பொழுது, ராஜா தமது வலதுபக்கத்தில் நிற்
பவர்களைப் பார்த்து: [22]வாருங்கள் என் பிதாவி

1 1 பேது. 2. 20
2 1 தெச. 5. 6
3 24. 31. ஆமோ. 4. 12. 1 தெச. 4. 16. வெளி. 16. 15
4 லூ. 12. 35
5 ஏசா. 55. 1, 6
6 ஆமோ. 8. 12, 13. லூ. 13. 25
7 7. 21-28. எபி. 12. 17
8 சங். 5. 5. ஆப. 1. 13. பேது. 9. 31
9 24. 42, 44. மாற். 13. 33, 35. லூ. 21. 36
10 லூ. 19. 12. மி
* 18. 24. காண்க
11 1 கொ. 12. 4. மி. எபே. 4. 11
12 18. 23, 24: 24. 48
13 24. 47. லூ. 12. 44: 22. 29. 2 தீமோ. 2. 12. எபி. 12. 2. 1 பே. 1. 8. வெளி. 3. 21
14 யோபு 21. 15. எரே. 2. 31
15 நீதி. 26. 13. வெளி. 21. 8.
16 18. 32. யோபு 15. 5, 6. லூ. 19. 22. யூதா 15. கச.
17 13. 12. மாற். 4. 25. லூ. 8. 18: 19. 26. யோ. 15. 2
18 8. 12: 24. 51
19 16. 27: 19. 28. தானி. 7. 18. சகரி. 14. 5. மாற். 8. 38. அப். 1. 11. 1 தெச. 4. 16. 2 தெச. 1. 7, 8. யூதா 14. கச. வெளி. 1. 7
20 ரோ. 14. 10. 2 கொ. 5. 10. வெளி. 20. 12
21 சங். 78. 52. எசே. 20. 38. யோ. 10. 14, 27
22 சங். 115. 15. ரோ. 8. 17. 1 பே. 1. 4

ளுல் ஆசீர்வதிக்கப்பட்டவர்களே, [1]உலகம்
உண்டானதுமுதல் உங்களுக்காக ஆயத்தம்
பண்ணப்பட்டிருக்கிற [2]ராஜ்யத்தைச் சுதந்த
35 ரித்துக் கொள்ளுங்கள். பசியாயிருந்தேன்,
[3]எனக்குப் போஜனங் கொடுத்தீர்கள்; தாக
மாயிருந்தேன், என் தாகத்தைத் தீர்த்தீர்கள்;
[4]அந்நியனுயிருந்தேன், என்னைச் சேர்த்துக்
36 கொண்டீர்கள்; வஸ்திரமில்லாதிருந்தேன்,
[5]எனக்கு வஸ்திரங் கொடுத்தீர்கள்; வியாதியா
யிருந்தேன், [6]என்னை விசாரிக்க வந்தீர்கள்;
காவலிலிருந்தேன், என்னைப் பார்க்க வந்தீர்
37 கள் என்பார். அப்பொழுது, நீதிமான்கள்
அவருக்குப் பிரதியுத்தரமாக: ஆண்டவரே,
நாங்கள் எப்பொழுது உம்மைப் பசியுள்ளவரா
கக்கண்டு உமக்குப் போஜனங்கொடுத்தோம்?
எப்பொழுது உம்மைத் தாகமுள்ளவராகக்
கண்டு உம்முடைய தாகத்தைத் தீர்த்தோம்?
38 எப்பொழுது உம்மை அந்நியராகக் கண்டு
உம்மைச் சேர்த்துக்கொண்டோம்? எப்பொ
ழுது உம்மை வஸ்திரமில்லாதவராகக் கண்டு
39 உமக்கு வஸ்திரங் கொடுத்தோம்? எப்பொ
ழுது உம்மை வியாதியுள்ளவராகவும் காவலி
லிருக்கிறவராகவும் கண்டு, உம்மிடத்தில் வந்
40 தோம் என்பார்கள். அதற்கு ராஜா பிரதியுத்
தரமாக: [7]மிகவும் சிறியவராகிய என் சகோ
தரரான இவர்களில் ஒருவனுக்கு நீங்கள்
எதைச் செய்தீர்களோ, அதை எனக்கே செய்
தீர்கள் என்று மெய்யாகவே உங்களுக்குச்
41 சொல்லுகிறேன் என்பார். அப்பொழுது,
இடதுபக்கத்தில் நிற்பவர்களைப் பார்த்து அவர்:
[8]சபிக்கப்பட்டவர்களே, என்னை விட்டு,
[9]பிசாசுக்காகவும் அவன் தூதர்களுக்காகவும்
ஆயத்தம் பண்ணப்பட்டிருக்கிற நித்திய அக்
42 கினியிலே போங்கள். பசியாயிருந்தேன்,
நீங்கள் எனக்குப் போஜனங் கொடுக்கவில்லை;
தாகமாயிருந்தேன், நீங்கள் என் தாகத்தைத்
43 தீர்க்கவில்லை; அந்நியனு யிருந்தேன், நீங்
கள் என்னைச் சேர்த்துக்கொள்ளவில்லை; வஸ்
திரமில்லாதிருந்தேன், நீங்கள் எனக்கு வஸ்தி
ரங் கொடுக்கவில்லை; வியாதி யுள்ளவனும்
காவலி லடைக்கப்பட்டவனும் இருந்தேன்,
நீங்கள் என்னை விசாரிக்க வரவில்லையென்
44 பார். அப்பொழுது, அவர்களும் அவருக்குப்
பிரதியுத்தரமாக: ஆண்டவரே, உம்மைப் பசி
யுள்ளவராகவும், தாகமுள்ளவராகவும், அந்நிய
ராகவும், வஸ்திரமில்லாதவராகவும், வியாதிப்
பட்டவராகவும், காவலிலடைக்கப்பட்டவராக
வும் நாங்கள் எப்பொழுது கண்டு, உமக்கு உதவி
45 செய்யாதிருந்தோம் என்பார்கள். அப்பொ
ழுது அவர் அவர்களுக்குப் பிரதியுத்தரமாக:
[10]மிகவும் சிறியவர்களாகிய இவர்களில் ஒருவ
னுக்கு நீங்கள் எதைச் செய்யாதிருந்தீர்களோ,
அதை எனக்கே செய்யாதிருந்தீர்கள் என்று
மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்
46 என்பார். அந்தப்படி, [11]இவர்கள் நித்திய ஆக்
கினையை அடையவும், நீதிமான்களோ நித்திய
ஜீவனை அடையவும் போவார்கள் என்றார்.

1 1 கொ. 2. 9. எபி. 11. 16
2 1 தெச. 2. 11. வெளி. 5. 10
3 ஏசா. 58. 7. எசே. 18. 7. யாக். 1. 27
4 எபி. 13. 2. 1 பே. 4. 9. 3 யோ. 5. ...
5 யாக். 2. 15, 16
6 2 தீமோ. 1. 16. யாக். 1. 27
7 நீதி. 19. 17. மாற். 9. 41. எபி. 6. 10
8 சங். 6. 8. லூக். 13. 27
9 2 பே. 2. 4. யூதா 6. வெளி. 14. 11: 20. 10
10 நீதி. 14. 31: 17. 5. சகரி. 2. 8. அப். 9. 5
11 தானி. 12. 2. யோ. 5. 29. ரோ. 2. 7. ...
12 மாற். 14. 1. ... லூக். 22. 1. ... யோ. 13. 1. ...
13 சங். 2. 2. யோ. 11. 47. அப். 4. 25. ...
14 மாற். 14. 3. ... யோ. 11. 1, 2: 12. 3
* அழிம்பு. யோ. 12. 4: 17. 12
15 உபா. 15. 11. யோ. 12. 8
16 யோ. 14. 19: 17. 11
17 10. 4. மாற். 14. 10, 11. லூக். 22. 3-6
18 27. 3. சகரி. 11. 12
† நிர்ணயப்பண்ணினார்கள்.
19 யாத். 12. 6, 18. மாற். 14. 12. ... லூக். 22. 7. ...

## 26

இயேசு இந்த வசனங்களையெல்லாம்
சொல்லி முடித்தபின்பு, அவர் தம்முடைய
சீஷரை நோக்கி: இரண்டு நாளைக்குப் பின்பு 2
பஸ்காபண்டிகை வருமென்று அறிவீர்கள்;
[12]அப்பொழுது, மனுஷகுமாரன் சிலுவையில்
அறையப்படுவதற்கு ஒப்புக் கொடுக்கப்படு
வார் என்றார். அப்பொழுது, பிரதான ஆசாரி 3
யரும் வேதபாரகரும் ஜனத்தின் மூப்பரும்,
[13]காய்பா என்னப்பட்ட பிரதான ஆசாரியனு
டைய அரமனையிலே கூடிவந்து, இயேசு 4
வைத் தந்திரமாய்ப் பிடித்துக் கொலைசெய்யும்
படி ஆலோசனைபண்ணினார்கள். ஆகிலும் 5
ஜனங்களுக்குள்ளே கலகமுண்டாகாதபடிக்
குப் பண்டிகையிலே அப்படிச் செய்யலா
காது என்றார்கள்.
இயேசு பெத்தானியாவில் குஷ்டரோகி 6
யாயிருந்த [14]சீமோன் வீட்டில் இருக்கையில்,
ஒரு ஸ்திரீ விலையேறப்பெற்ற பரிமள தைல 7
முள்ள வெள்ளைக்கல் பரணியைக் கொண்டு
வந்து, அவர் போஜன பந்தியிலிருக்கும்போ
து, அந்தத் தைலத்தை அவர் சிரசின்மேல்
ஊற்றினாள். அவருடைய சீஷர்கள் அதைக் 8
கண்டு விசனமடைந்து: இந்த *வீண்செலவு
என்னத்திற்கு? இந்தத் தைலத்தை உயர்ந்த 9
விலைக்கு விற்று, தரித்திரருக்குக் கொடுக்கலா
மே என்றார்கள். இயேசு அதை அறிந்து, 10
அவர்களை நோக்கி: நீங்கள் இந்த ஸ்திரீயை
ஏன் தொந்தரவுபடுத்துகிறீர்கள்? என்னிடத்
தில் நற்கிரியையைச் செய்திருக்கிறாள். தரி 11
த்திரர் [15]எப்போதும் உங்களிடத்தில் இருக்கி
றார்கள்; [16]நானோ எப்போதும் உங்களிடத்தில்
இரேன். இவள் இந்தத் தைலத்தை என் சரீ 12
ரத்தின்மேல் ஊற்றினது என்னை அடக்கம்
பண்ணுவதற்கு எத்தனமான செய்கையாயி
ருக்கிறது. இந்தச் சுவிசேஷம் உலகத்தில் 13
எங்கெங்கே பிரசங்கிக்கப்படுமோ அங்கங்கே
இவளை நினைப்பதற்காக இவள் செய்ததும்
சொல்லப்படும் என்று மெய்யாகவே உங்களுக்
குச் சொல்லுகிறேன் என்றார்.
அப்பொழுது, [17]பன்னிருவரில் ஒருவனு 14
கிய யூதாஸ்காரியோத்து என்பவன் பிரதான
ஆசாரியரிடத்திற்குப் போய்: நான் அவரை 15
உங்களுக்குக் காட்டிக்கொடுக்கிறேன், நீங்கள்
எனக்கு என்ன கொடுக்கிறீர்கள் என்றான்.
[18]அவர்கள் அவனுக்கு முப்பது வெள்ளிக்கா
சைக் கொடுக்க †உடன்பட்டார்கள். அது 16
முதல் அவன் அவரைக் காட்டிக்கொடுப்பதற்
குச் சமயம் பார்த்துக்கொண்டிருந்தான்.
புளிப்பில்லாத அப்பப்பண்டிகையின் மு 17
தல் நாளிலே, [19]சீஷர்கள் இயேசுவினிடத்தில்
வந்து: பஸ்காவைப் புசிப்பதற்கு நாங்கள் எங்
கே உமக்கு ஆயத்தம்பண்ணச் சித்தமாயிருக்
கிறீர் என்று கேட்டார்கள். அதற்கு அவர்: 18
நீங்கள் நகரத்திலே இன்னானிடத்திற்குப்
போய்: என் வேளை சமீபமாயிருக்கிறது, உன்
வீட்டிலே என் சீஷரோடேகூடப் பஸ்காவை
ஆசரிப்பேன் என்று போதகர் சொல்லுகிறார்

என்று அவனுக்குச் சொல்லுங்கள் என்றார்.
19 இயேசு கற்பித்தபடி சீஷர்கள் போய், பஸ்கா
20 வை ஆயத்தம்பண்ணினார்கள். சாயங்கால
மானபோது, [1]பன்னிருவரோடேகூட அவர்
21 பந்தியிருந்தார். அவர்கள் போஜனம்பண்
ணுகையில், அவர்: உங்களிலொருவன் என்
னைக் காட்டிக்கொடுப்பான் என்று மெய்யாக
வே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.
22 அப்பொழுது, அவர்கள் மிகவும் துக்கமடை
ந்து, அவரை நோக்கி: ஆண்டவரே, நானோ,
நானோ? என்று ஒவ்வொருவராய்க் கேட்கத்
23 தொடங்கினார்கள். அவர் பிரதியுத்தரமாக:
[2]என்னோடேகூடத் தாலத்தில் கையிடுகிற
24 வனே என்னைக் காட்டிக்கொடுப்பான். மனு
ஷகுமாரன் தம்மைக்குறித்து எழுதியிருக்கிற
படியே போகிறார்; [3]ஆகிலும், எந்த மனுஷ
னால் மனுஷகுமாரன் காட்டிக்கொடுக்கப்படு
கிறாரோ, அந்த மனுஷனுக்கு ஐயோ; அந்த
மனுஷன் பிறவாதிருந்தானானால் அவனுக்கு
25 நலமாயிருக்கும் என்றார். அவரைக் காட்டிக்
கொடுத்த யூதாசும் அவரை நோக்கி: ரபீ, நா
னோ? என்றான்; அதற்கு அவர்: நீ சொன்ன
26 படிதான் என்றார். அவர்கள் போஜனம்பண்
ணுகையில், [4]இயேசு அப்பத்தை எடுத்து,
ஆசீர்வதித்து, அதைப் பிட்டு, சீஷர்களுக்குக்
கொடுத்து: [5]நீங்கள் வாங்கிப் புசியுங்கள், இது
என்னுடைய சரீரமாயிருக்கிறது என்றார்.
27 பின்பு, பாத்திரத்தையும் எடுத்து, ஸ்தோத்தி
ரம்பண்ணி, அவர்களுக்குக் கொடுத்து: [6]நீங்
கள் எல்லாரும் இதிலே பானம்பண்ணுங்கள்;
28 இது பாவமன்னிப்புண்டாகும்படி அநேகருக்
காகச் சிந்தப்படுகிற புது உடன்படிக்கைக்
குரிய [7]என்னுடைய இரத்தமாயிருக்கிறது.
29 இதுமுதல் இந்தத் திராட்சப்பழரசத்தை நவ
மானதாய் உங்களோடேகூட என் பிதாவின்
ராஜ்யத்திலே நான் பானம்பண்ணும் நாள்வ
ரைக்கும் [8]இதைப் பானம்பண்ணுவதில்லை
யென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்
30 றார். அவர்கள் ஸ்தோத்திரப்பாட்டைப் பாடி
னபின்பு, [9]ஒலிவமலைக்குப் புறப்பட்டுப் போ
31 னார்கள். அப்பொழுது, இயேசு அவர்களை
நோக்கி: [10]மேய்ப்பனை வெட்டுவேன், மந்தை
யின் ஆடுகள் சிதறடிக்கப்படும் என்று எழுதி
யிருக்கிறபடி, இந்த இராத்திரியிலே நீங்கள்
எல்லாரும் என்னிமித்தம் இடறலடைவீர்
32 கள். ஆகிலும் நான் [11]உயிர்த்தெழுந்தபின்பு,
உங்களுக்குமுன்னே கலிலேயாவுக்குப் போ
33 வேன் என்றார். பேதுரு அவருக்குப் பிரதி
யுத்தரமாக: உமதுநிமித்தம் எல்லாரும் இட
றலடைந்தாலும், நான் ஒருக்காலும் இடறல
34 டையேன் என்றான். இயேசு அவனை நோ
க்கி: [12]இந்த இராத்திரியிலே சேவல் கூவுகிற
தற்கு முன்னே, நீ என்னை மூன்றுதரம் மறு
தலிப்பாய் என்று, மெய்யாகவே உனக்குச்
35 சொல்லுகிறேன் என்றார். அதற்குப் பேதுரு:
நான் உம்மோடே மரிக்கவேண்டியதாயிருந்
தாலும் உம்மை மறுதலிக்கமாட்டேன் என்

றான்; சீஷர்கள் எல்லாரும் அப்படியே
சொன்னார்கள்.

அப்பொழுது, இயேசு அவர்களோடே 36
கெத்செமனே என்னப்பட்ட இடத்திற்கு
வந்து, சீஷர்களை நோக்கி: [13]நான் அங்கே
போய் ஜெபம்பண்ணுமளவும் நீங்கள் இங்கே
உட்கார்ந்திருங்கள் என்று சொல்லி; பேதுரு 37
வையும் செபெதேயுவின் [14]குமாரர் இருவரை
யும் கூட்டிக்கொண்டுபோய், துக்கமடையவும்
வியாகுலப்படவும் தொடங்கினார். அப்பொ 38
ழுது, அவர்: [15]என் ஆத்துமா மரணத்துக் கே
துவான துக்கங்கொண்டிருக்கிறது; நீங்கள்
இங்கே தங்கி, என்னோடேகூட விழித்திருங்
கள் என்று சொல்லி, சற்று அப்புறம்போய், 39
முகங்குப்புற விழுந்து: [16]என் பிதாவே, இந்தப்
பாத்திரம் என்னைவிட்டு நீங்கக்கூடுமானால்
நீங்கும்படி செய்யும்; [17]ஆகிலும் என் சித்தத்
தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படி
யே ஆகக்கடவது என்று ஜெபம்பண்ணினார்.
பின்பு, அவர் சீஷர்களிடத்தில் வந்து, அவர் 40
கள் நித்திரைபண்ணுகிறதைக் கண்டு, பேதுரு
வை நோக்கி: நீங்கள் ஒரு மணிநேரமாவது
என்னோடேகூட விழித்திருக்கக்கூடாதா? நீங் 41
கள் சோதனைக்குட்படாதபடிக்கு [18]விழித்
திருந்து ஜெபம்பண்ணுங்கள்; [19]ஆவி உற்சாக
முள்ளதுதான், மாம்சமோ பலவீனமுள்ளது
என்றார். அவர் மறுபடியும் இரண்டாந்தரம் 42
போய்: என் பிதாவே, இந்தப் பாத்திரத்தில்
நான் பானம்பண்ணினாலொழிய இது என்னை
விட்டு நீங்கக்கூடாதாகில், உம்முடைய சித்
தத்தின்படி ஆகக்கடவது என்று ஜெபம்பண்
ணினார். அவர் திரும்ப வந்தபோது, அவர் 43
கள் மறுபடியும் நித்திரைபண்ணுகிறதைக் கண்
டார்; அவர்களுடைய கண்கள் மிகுந்த நித்தி
ரைமயக்கம் அடைந்திருந்தது. அவர் மறுபடி 44
யும் அவர்களை விட்டுப் போய், [20]மூன்றாந்தரம்
அந்த வார்த்தைகளையே சொல்லி ஜெபம்பண்
ணினார். பின்பு அவர் தம்முடைய சீஷர்க 45
ளிடத்தில் வந்து: இனி நித்திரைபண்ணி
இளைப்பாறுங்கள்; இதோ, மனுஷகுமாரன்
பாவிகளுடைய கைகளில் ஒப்புக்கொடுக்கப்
படுகிற வேளை வந்தது. என்னைக் காட்டிக் 46
கொடுக்கிறவன், இதோ, வந்துவிட்டான், எழு
ந்திருங்கள், போவோம் என்றார்.

அவர் இப்படிப் பேசுகையில், [21]பன்னிரு 47
வரில் ஒருவனாகிய யூதாஸ் வந்தான்; அவனோ
டேகூடப் பிரதான ஆசாரியரும் ஜனத்தின்
மூப்பரும் அனுப்பின திரளான ஜனங்கள்
பட்டயங்களையும் தடிகளையும் பிடித்துக்கொ
ண்டு வந்தார்கள். அவரைக் காட்டிக்கொடுக் 48
கிறவன்: நான் எவனை முத்தஞ்செய்வேனோ
அவன்தான், [22]அவனைப் பிடித்துக்கொள்ளுங்
கள் என்று அவர்களுக்கு அடையாளம் சொல்
லியிருந்தான். உடனே, அவன் இயேசுவி 49
னிடத்தில் வந்து: ரபீ, வாழ்க என்று சொல்
லி, [23]அவரை முத்தஞ்செய்தான். இயேசு 50
அவனை நோக்கி: [24]சிநேகிதனே, என்னத்திற்

1 மாற். 14. 17-21. லூக். 22. 14. ஒ. யோவா. 13. 21. ஒ.
2 சங். 41. 9; 55. 12–15. லூக். 22. 21. யோவா. 13. 18
3 சங். 22. 1. ஒ. ஏசா. 53. 3. ஒ. தானி. 9. 25. யோவா. 17. 12
4 1 கொரி. 11. 23. ஒ. மாற். 14. 22–25. லூக். 22. 19, 20
5 1 கொரி. 11. 16
6 மாற். 14. 23
7 யாத். 24. 8. லேவி. 17. 11. எரே. 31. 31. ரோம. 5. 15. எபி. 9. 22
8 ஏசா. 25. 6. மாற். 14. 25. ஒ. லூக். 22. 18. அப். 10. 41
9 மாற். 14. 26
10 சகரி. 13. 7. மாற். 14. 27. யோவா. 16. 32
11 28. 7, 10, 16
12 மாற். 14. 30. லூக். 22. 34. யோவா. 13. 38
13 மாற். 14. 32–36. லூக். 22. 39. ஒ. யோவா. 18. 1. ஒ.
14 4. 21
15 சங். 116. 3. ஏசா. 53. 3, 10. யோவா. 12. 27
16 மாற். 14. 36. லூக். 22. 42. யோவா. 12. 27. எபி. 5. 7
17 யோவா. 5. 30; 6. 38. ரோம. 15. 3. பிலி. 2. 8
18 நீதி. 4. 14, 15. மாற். 13. 33. லூக். 22. 40. எபே. 6. 18. வெளி. 16. 15
19 ஏசா. 26. 8, 9. ரோம. 7. 18–25. கலா. 5. 17. வெளி. 3. 10
20 2 கொரி. 12. 8
21 மாற். 14. 43. ஒ. லூக். 22. 47. ஒ. யோவா. 18. 3. ஒ. அப். 1. 16
22 சங். 38. 12
23 2 சாமு. 20. 9. சங். 28. 3
24 சங். 41. 9; 55. 13

காக வந்திருக்கிறாய் என்றார். அப்பொழுது,
அவர்கள் கிட்ட வந்து, இயேசுவின்மேல்
51 கைபோட்டு, அவரைப் பிடித்தார்கள். அப்
பொழுது இயேசுவோடிருந்தவர்களில் ஒரு
வன் கைநீட்டித் தன் பட்டயத்தை உருவி,
[1]பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரனைக்
52 காதற வெட்டினான். அப்பொழுது, இயேசு
அவனை நோக்கி: உன் பட்டயத்தைத் திரும்ப
அதின் உறையிலே போடு; [2]பட்டயத்தை
எடுக்கிற யாவரும் பட்டயத்தால் மடிந்துபோ
53 வார்கள். நான் இப்பொழுது என் பிதாவை
வேண்டிக்கொண்டால், [3]அவர் *பன்னிர
ண்டு லேகியோனுக்கு அதிகமான தூதரை
என்னிடத்தில் அனுப்பமாட்டாரென்று நினை
54 க்கிறாயா? அப்படிச் செய்வேனானால், [4]இவ்
விதமாய்ச் சம்பவிக்கவேண்டும் என்கிற வேத
வாக்கியங்கள் எப்படி நிறைவேறும் என்றார்.
55 அந்த வேளையிலே இயேசு ஜனங்களை நோக்கி:
கள்ளனைப் பிடிக்கப் புறப்படுகிறதுபோல,
நீங்கள் பட்டயங்களையும் தடிகளையும் எடுத்துக்
கொண்டு என்னைப் பிடிக்க வந்தீர்கள்; நான்
தினந்தோறும் உங்கள் நடுவிலே உட்கார்ந்து
தேவாலயத்தில் உபதேசம் பண்ணிக்கொண்
டிருந்தேன்; அப்பொழுது, நீங்கள் என்னைப்
56 பிடிக்கவில்லையே. ஆகிலும் தீர்க்கதரிசிகள்
எழுதியிருக்கிற [5]வசனங்கள் நிறைவேறும்படி
இவைகளெல்லாம் சம்பவிக்கிறது என்றார்.
அப்பொழுது, [6]சீஷர்களெல்லாரும் அவரை
விட்டு ஓடிப்போனார்கள்.
57 இயேசுவைப் பிடித்தவர்கள் அவரைப் பிர
தான ஆசாரியனாகிய [7]காய்பாவினிடத்திற்குக்
கொண்டுபோனார்கள்; அங்கே வேதபாரகரும்
58 மூப்பரும் கூடிவந்திருந்தார்கள். பேதுரு,
தூரத்திலே அவருக்குப் பின்சென்று, பிர
தான ஆசாரியனுடைய அரமனைவரைக்கும்
வந்து, உள்ளே பிரவேசித்து, முடிவைப் பார்க்
59 கும்படி சேவகரோடே உட்கார்ந்தான். பிர
தான ஆசாரியரும் மூப்பரும் சங்கத்தார் யாவ
ரும் இயேசுவைக் கொலைசெய்யும்படி அவ
ருக்கு விரோதமாய்ப் பொய்ச்சாட்சி தேடி
60 னார்கள்; ஒருவரும் அகப்படவில்லை; அநே
கர் வந்து பொய்ச்சாட்சி சொல்லியும் அவர்
கள் சாட்சி ஒவ்வவில்லை; [8]கடைசியிலே இர
61 ண்டு பொய்ச்சாட்சிகள் வந்து: தேவனு
டைய ஆலயத்தை இடித்துப்போடவும், மூன்
றுநாளைக்குள்ளே அதைக் கட்டவும் என்னாலே
ஆகும் என்று [9]இவன் சொன்னான் என்றார்
62 கள். அப்பொழுது, பிரதான ஆசாரியன்
எழுந்திருந்து, அவரை நோக்கி: [10]இவர்கள்
உனக்கு விரோதமாய்ச் சாட்சி சொல்லுகிற
தைக்குறித்து நீ ஒன்றும் சொல்லுகிறதில்
63 லையா என்றான். இயேசுவோ [11]பேசாமலி
ருந்தார். அப்பொழுது, பிரதான ஆசாரியன்
அவரை நோக்கி: நீ தேவனுடைய குமாரனா
கிய கிறிஸ்துதானா? [12]அதை எங்களுக்குச்
சொல்லும்படி ஜீவனுள்ள தேவன்பேரில்
உன்னை ஆணையிட்டுக் கேட்கிறேன் என்

றான். அதற்கு இயேசு: நீர் சொன்னபடி 64
தான்; அன்றியும், [13]மனுஷகுமாரன் சர்வ வல்
லவருடைய வலதுபாரிசத்தில் வீற்றிருப்ப
தையும் வானத்தின் மேகங்கள்மேல் வருவ
தையும் இதுமுதல் காண்பீர்களென்று, உங்க
ளுக்குச் சொல்லுகிறேன் என்றார். அப்பொ 65
ழுது பிரதான ஆசாரியன் [14]தன் வஸ்திரங்க
ளைக் கிழித்துக்கொண்டு: இவன் தேவதூஷ
ணம் சொன்னான். இனிச் சாட்சிகள் நமக்கு
வேண்டியதென்ன? இதோ, இவன் தூஷ
ணத்தை இப்பொழுது கேட்டீர்களே. உங் 66
களுக்கு என்னமாய்த் தோன்றுகிறது என்று
கேட்டான். [15]அதற்கு அவர்கள்: மரணத்துக்
குப் பாத்திரனாயிருக்கிறான் என்றார்கள். அப் 67
பொழுது, அவருடைய முகத்தில் துப்பி,
அவரைக் குட்டினார்கள்; [16]சிலர் அவரைக்
கன்னத்தில் அறைந்து: கிறிஸ்துவே, உம் 68
மை அடித்தவன் யார்? [17]அதை ஞானதிருஷ்
டியினால் எங்களுக்குச் சொல்லும் என்றார்கள்.
அத்தருணத்தில் பேதுரு வெளியே வந்து 69
அரமனை முற்றத்தில் உட்கார்ந்திருந்தான்.
[18]அப்பொழுது, வேலைக்காரி ஒருத்தி அவனி
டத்தில் வந்து: நீயும் கலிலேயனாகிய இயேசு
வோடே கூட இருந்தாய் என்றாள். அதற்கு 70
அவன்: நீ சொல்லுகிறது எனக்குத் தெரி
யாது என்று, எல்லாருக்கும் முன்பாக மறுதலி
த்தான். அவன், வாசல்மண்டபத்திற்குப் போ 71
னபொழுது வேறொருத்தி அவனைக் கண்டு:
இவனும் நசரேயனாகிய இயேசுவோடேகூட
இருந்தான் என்று அங்கே இருந்தவர்களுக்
குச் சொன்னாள். அவனோ: அந்த மனுஷனை 72
நான் அறியேன் என்று ஆணையிட்டு, மறுபடி
யும் மறுதலித்தான். சற்று நேரத்துக்குப் 73
பின்பு அங்கே நின்றவர்கள் பேதுருவினிடத்
தில் வந்து: மெய்யாகவே நீயும் அவர்களில்
ஒருவன்; [19]உன் பேச்சு உன்னை வெளிப்படுத்
துகிறது என்றார்கள். அப்பொழுது அவன்: 74
அந்த மனுஷனை அறியேன் என்று சொல்லி,
சபிக்கவும் சத்தியம்பண்ணவும் தொடங்கி
னான். [20]உடனே சேவல் கூவிற்று. அப்பொ 75
ழுது பேதுரு: [21]சேவல் கூவுகிறதற்கு முன்
னே நீ என்னை மூன்றுதரம் மறுதலிப்பாய்
என்று இயேசு தன்னிடத்தில் சொன்ன வச
னத்தை நினைத்துக்கொண்டு, வெளியேபோய்,
மனங்கசந்து அழுதான்.

விடியற்காலமானபோது, சகல பிரதான **27**
ஆசாரியரும் ஜனத்தின் மூப்பரும், இயேசு
வைக் கொலைசெய்யும்படி, [22]அவருக்கு விரோ
தமாக ஆலோசனைபண்ணி, அவரைக் கட்டி, 2
கொண்டுபோய், [23]தேசாதிபதியாகிய பொந்
தியு பிலாத்துவினிடத்தில் ஒப்புக்கொடுத்
தார்கள்.

அப்பொழுது, [24]அவரைக் காட்டிக்கொ 3
டுத்த யூதாஸ், அவர் மரணாக்கினைக்குள்ளா
கத் தீர்க்கப்பட்டதைக் கண்டு, மனஸ்தாபப்
பட்டு, அந்த முப்பது வெள்ளிக்காசைப் பிர
தான ஆசாரியரிடத்திற்கும் மூப்பரிடத்திற்

1 யோ. 18. 10
2 ஆதி. 9. 6. எசே. 35. 5, 6. வெளி. 13. 10
3 2 இரா. 6. 17. தானி. 7. 10
* 6000 பேர்
4 ஏசா. 53. 7. ழி லூக். 24. 25. ழி
5 ஆதி. 3. 15. சங். 22. 1. ழி; 69. 1. ழி. ஏசா. 53. 3. ழி. புல. 4. 20. தானி. 9. 24, 26. சகரி. 13. 7. அப். 1. 16
6 யோ. 18. 15
7 மாற். 14. 53. ழி. லூக். 22. 54. ழி யோ. 18. 12. ழி
8 உபா. 19. 15. சங் 27. 12; 35. 11
9 யோ. 2. 19–21
10 மாற். 14. 60
11 27. 12, 14. ஏசா. 53. 7
12 1 சாமு. 14. 26, 28. 1 இரா. 22. 16. சங். 110. 1
13 தானி. 7. 13. யோ. 1. 51. அப். 7. 55. 1 தெச. 4. 16. வெளி. 1. 7
14 2 இரா. 18. 37
15 லேவி. 24. 16. யோ. 19. 7
16 ஏசா. 50. 6. லூக். 22. 63. யோ. 19. 3
17 மாற். 14. 65. லூக். 22. 64
18 மாற். 14. 66. ழி. லூக். 22. 55. ழி
19 லூக். 22. 59
20 மாற். 14. 71
21 34. வச. மாற். 14. 30. லூக். 22. 61, 62. யோ. 13. 38
22 சங். 2. 2. மாற். 15. 1. லூக். 22. 66–71
23 20. 19. அப். 3. 13
24 26. 14, 15

4 கும் திரும்பக் கொண்டுவந்து: குற்றமில்லாத
இரத்தத்தை [1]நான் காட்டிக்கொடுத்ததினால்
பாவஞ்செய்தேன் என்றான். அதற்கு அவர்
கள்: எங்களுக்கென்ன, அது உன்பாடு என்
5 றார்கள். அப்பொழுது, அவன் அந்த வெள்
ளிக்காசை தேவாலயத்திலே எறிந்துவிட்டு,
புறப்பட்டுப் போய், [2]நான்றுகொண்டு செத்
6 தான். பிரதான ஆசாரியர் அந்த வெள்ளிக்
காசை எடுத்து: இது இரத்தக்கிரயமானதால்,
காணிக்கைப் பெட்டியிலே இதைப் போட
7 லாகாதென்று சொல்லி, ஆலோசனை பண்
ணினபின்பு, அந்நியரை அடக்கம்பண்ணுவ
தற்குக் குயவனுடைய நிலத்தை அதினாலே
8 கொண்டார்கள். இதினிமித்தம் அந்த நிலம்
[3]இந்நாள்வரைக்கும் இரத்தநிலம் என்னப்படு
9 கிறது. இஸ்ரவேல் புத்திரரால் மதிக்கப்பட்
டவருக்குக் கிரயமாகிய முப்பது வெள்ளிக்
10 காசை அவர்கள் எடுத்து, கர்த்தர் எனக்குக்
கற்பித்தபடி குயவனுடைய நிலத்திற்காக
அதைக் கொடுத்தார்கள் என்று [4]எரேமியா
தீர்க்கதரிசியால் உரைக்கப்பட்டது அப்பொ
ழுது நிறைவேறிற்று.
11 இயேசு தேசாதிபதிக்கு முன்பாக நின்றார்,
[5]தேசாதிபதி அவரை நோக்கி: நீ யூதருடைய
ராஜாவா என்றுகேட்டான். [6]அதற்கு இயேசு:
12 நீர் சொல்லுகிறபடிதான் என்றார். பிரதான
ஆசாரியரும் மூப்பரும் அவர்மேல் குற்றஞ்
சாட்டுகையில், [7]அவர் மாறுத்தரம் ஒன்றும்
13 சொல்லவில்லை. அப்பொழுது, பிலாத்து
அவரை நோக்கி: இவர்கள் உன்மேல் எத்த
னையோ குற்றங்களைச் சாட்டுகிறார்களே, [8]நீ
14 அவைகளைக் கேட்கவில்லையா என்றான். அவ
ரோ ஒரு வார்த்தையும் மாறுத்தரமாகச் சொல்
லவில்லை; அதினால் தேசாதிபதி மிகவும் ஆச்
15 சரியப்பட்டான். காவல் பண்ணப்பட்டவர்
களில் எவனை விடுதலையாக்கவேண்டுமென்று
ஜனங்கள் கேட்டுக்கொள்வார்களோ, [9]அவனை
அவர்களுக்காக விடுதலையாக்குவது பண்டி
கைதோறும் தேசாதிபதிக்கு வழக்கமாயிருந்
16 தது. அப்பொழுது காவல் பண்ணப்பட்ட
வர்களில் பரபாஸ் என்னப்பட்ட பேர்போன
17 ஒருவன் இருந்தான். பொறாமையினாலே
[10]அவரை ஒப்புக்கொடுத்தார்கள் என்று பிலா
18 த்து அறிந்து, அவர்கள் கூடியிருக்கையில்,
அவர்களை நோக்கி: எவனை நான் உங்களுக்கு
விடுதலையாக்க வேண்டுமென்றிருக்கிறீர்கள்?
பரபாசையோ? கிறிஸ்து என்னப்படுகிற
19 இயேசுவையோ? என்று கேட்டான். அவன்
நியாயாசனத்தில் உட்கார்ந்திருக்கையில், அவ
னுடைய மனைவி அவனிடத்தில் ஆளனுப்பி:
[11]நீர் அந்த நீதிமானை ஒன்றும் செய்யவேண்
டாம்; அவர் நிமித்தம் இன்றைக்குச் சொப்ப
னத்தில் வெகு பாடுபட்டேன் என்று சொல்
20 லச்சொன்னாள். பரபாசை [12]விட்டுவிடக்
கேட்டுக்கொள்ளவும், இயேசுவைக் கொலை
செய்விக்கவும் பிரதான ஆசாரியரும் மூப்ப
21 ரும் ஜனங்களை ஏவிவிட்டார்கள். தேசாதி

1 2 இரா. 24. 4
2 2 சாமு. 17. 23. சங். 55, 23. அப். 1. 18
3 அப். 1. 19
4 சகரி. 11. 12, 13
5 மாற். 15. 2. லூ. 23. 3. யோ. 18. 28. ழி
6 யோ. 18. 37. 1 தீமோ. 6. 15
7 26. 63. யோ. 19. 9
8 26. 62. யோ. 19. 10
9 மாற். 15. 6. ழி. லூ. 23. 17. ழி. யோ. 18. 39. ழி
10 நீதி. 27. 4. பிர. 4. 4
11 ஏசா. 53. 11. சகரி. 9. 9. லூ. 23. 47. 1 பே. 2. 22. 1 யோ. 2. 1
12 அப். 3. 14
13 21. 38, 39
14 உபா. 21. 6
* இனி உங்கள் பாடு என்றான்
15 21. 44. உபா. 19. 10. யோசு. 2. 19. அப். 5. 28.
16 ஏசா. 53. 5. லூ. 18. 33. யோ. 19. 1, 16
17 மாற். 15. 16–19. யோ. 19. 1–3
18 லூ. 23. 11
19 சங். 69. 19. ஏசா. 53. 3
20 ஏசா. 49. 7: 50. 6: 53. 3, 7
21 எண். 15. 35. 1 இரா. 21. 10, 13. அப். 7. 58. எபி. 13. 12
† தலைபோட்டிடம். மாற். 15. 22. லூ. 23. 33. யோ. 19. 17
22 சங். 69. 21
23 சங். 22. 16, 18. மாற். 15. 24. லூ. 23. 34. யோ. 19. 24

பதி ஜனங்களை நோக்கி: இவ்விருவரில் எவனை
நான் உங்களுக்கு விடுதலையாக்கவேண்டும்
என்று கேட்டான். அதற்கு அவர்கள்: பரபா
சை என்றார்கள். பிலாத்து அவர்களை நோக்கி: 22
அப்படியானால், கிறிஸ்து என்னப்பட்ட
இயேசுவை நான் என்ன செய்யவேண்டும்
என்று கேட்டான். அவனைச் சிலுவையில்
அறையவேண்டும் என்று எல்லாரும் சொன்
னார்கள். தேசாதிபதியோ: ஏன், என்ன 23
பொல்லாப்புச் செய்தான் என்றான். அதற்கு
அவர்கள்: [13]அவனைச் சிலுவையில் அறை
யவேண்டும் என்று அதிகமதிகமாய்க் கூக்
குரலிட்டுச் சொன்னார்கள். கலகம் அதி 24
கமாகிறதேயல்லாமல் தன் பிரயத்தனத்தி
னாலே பிரயோஜனமில்லையென்று பிலாத்து
கண்டு, [14]தண்ணீரை அள்ளி, ஜனங்களு
க்கு முன்பாகக் கைகளைக் கழுவி: இந்த
நீதிமானுடைய இரத்தப்பழிக்கு நான் குற்ற
மற்றவன், நீங்களே *பார்த்துக்கொள்ளுங்கள்
என்றான். அதற்கு ஜனங்களெல்லாரும்: 25
[15]இவனுடைய இரத்தப்பழி எங்கள்மேலும்
எங்கள் பிள்ளைகள்மேலும் இருப்பதாக என்று
சொன்னார்கள். அப்பொழுது, அவன் பர 26
பாசை அவர்களுக்கு விடுதலையாக்கி, [16]இயேசு
வையோ வாரினால் அடிப்பித்து, சிலுவையில்
அறையும்படிக்கு ஒப்புக்கொடுத்தான்.
அப்பொழுது, தேசாதிபதியின் போர்ச்சேவ 27
கர் இயேசுவைத் தேசாதிபதியின் அரமனையி
லே கொண்டுபோய், [17]போர்ச்சேவகரின் கூட்
டம் முழுவதையும் அவரிடத்தில் கூடிவரச்
செய்து, அவர் வஸ்திரங்களைக் கழற்றி, 28
[18]சிவப்பான மேலங்கியை அவருக்கு உடுத்தி,
முள்ளுகளால் ஒரு முடியைப் பின்னி, [19]அவர் 29
சிரசின்மேல் வைத்து, அவர் வலதுகையில்
ஒரு கோலைக் கொடுத்து, அவர் முன்பாக
முழங்காற்படியிட்டு: யூதருடைய ராஜாவே,
வாழ்க என்று அவரைப் பரியாசம்பண்ணி,
அவர்மேல் [20]துப்பி, அந்தக் கோலை எடுத்து, 30
அவரைச் சிரசில் அடித்தார்கள். அவரைப் 31
பரியாசம் பண்ணினபின்பு, அவருக்கு உடுத்
தின மேலங்கியைக் கழற்றி, அவருடைய வஸ்
திரங்களை அவருக்கு உடுத்தி, [21]அவரைச் சிலு
வையில் அறையும்படி கொண்டுபோனார்கள்.
போகையில், சிரேனே ஊரானாகிய சீமோ 32
ன் என்னப்பட்ட ஒரு மனுஷனை அவர்கள்
கண்டு, அவருடைய சிலுவையைச் சுமக்கும்
படி அவனைப் பலவந்தம் பண்ணினார்கள்.
†கபாலஸ்தலம் என்று அர்த்தங்கொள்ளும் 33
கொல்கொதா என்னும் இடத்துக்கு அவர்
கள் வந்தபோது, கசப்புக் கலந்த காடியை 34
அவருக்குக் குடிக்கக் கொடுத்தார்கள்; [22]அவர்
அதை ருசிபார்த்து, குடிக்க மனதில்லாதிருந்
தார். அவரைச் சிலுவையில் அறைந்தபின்பு, 35
அவர்கள் சீட்டுப்போட்டு அவருடைய வஸ்தி
ரங்களைப் பங்கிட்டுக்கொண்டார்கள். [23]என்
வஸ்திரங்களைத் தங்களுக்குள்ளே பங்கிட்டு,
என் உடையின்பேரில் சீட்டுப்போட்டார்கள்

என்று தீர்க்கதரிசியால் உரைக்கப்பட்டது
36 நிறைவேறும்படி இப்படி நடந்தது. அவர்கள்
அங்கே உட்கார்ந்து, அவரைக் காவல் காத்துக்
37 கொண்டிருந்தார்கள். அன்றியும் அவர் அ
டைந்த ஆக்கினையின் முகாந்தரத்தைக் காண்
பிக்கும்பொருட்டு, [1]**இவன் யூதருடைய ரா
ஜாவாகிய இயேசு** என்று எழுதி, அவர் சிர
38 சுக்கு மேலாக வைத்தார்கள். அப்பொழுது,
அவருடைய வலதுபக்கத்தில் ஒருவனும்
அவருடைய இடதுபக்கத்தில் ஒருவனுமாக
[2]இரண்டு கள்ளர் அவரோடேகூடச் சிலுவை
39 களில் அறையப்பட்டார்கள். அந்த வழி
யாய் நடந்துபோகிறவர்கள் [3]தங்கள் தலைகளைத்
40 துலுக்கி: தேவாலயத்தை இடித்து, மூன்று
நாளைக்குள்ளே கட்டுகிறவனே, உன்னை நீயே
ரட்சித்துக்கொள்; [4]நீ தேவனுடைய குமாரனா
னால் சிலுவையிலிருந்து இறங்கிவா என்று
41 அவரைத் தூஷித்தார்கள். அப்படியே பிர
தான ஆசாரியரும் வேதபாரகரும் மூப்பரும்
42 பரியாசம்பண்ணி: மற்றவர்களை ரட்சித்தான்;
தன்னைத்தான் ரட்சித்துக்கொள்ளத் திராணி
யில்லை; இவன் இஸ்ரவேலின் ராஜாவானால்
இப்பொழுது சிலுவையிலிருந்து இறங்கிவரட்
டும், அப்பொழுது இவனை விசுவாசிப்போம்.
43 தன்னைதேவனுடைய *குமாரனென்று சொல்
லி, தேவன்மேல் நம்பிக்கையாயிருந்தானே;
[5]அவர் இவன்மேல் பிரியமாயிருந்தால் இப்
பொழுது இவனை ரட்சிக்கட்டும் என்றார்கள்.
44 அவரோடே கூடச் சிலுவைகளில் அறையப்
பட்ட கள்ளரும் [6]அந்தப்படியே அவரை நிந்
தித்தார்கள்.
45 ஆறும்மணி நேரமுதல் ஒன்பதாம்மணி நே
ரம்வரைக்கும் [7]பூமியெங்கும் அந்தகாரம் உண்
46 டாயிற்று. ஒன்பதாம்மணிநேரத்தில் இயேசு:
[8]ஏலீ! ஏலீ! லாமா சபக்தானி, என்று மிகுந்த
சத்தமிட்டுக் கூப்பிட்டார்; அதற்கு என் தேவ
னே! என் தேவனே! ஏன் என்னைக் கைவிட்
47 டீர் என்று அர்த்தமாம். அங்கே நின்றவர்க
ளில் சிலர் அதைக் கேட்டபொழுது: இவன்
எலியாவைக் கூப்பிடுகிறான் என்றார்கள்.
48 உடனே அவர்களில் ஒருவன் ஓடி, [9]கடற்கா
ளானை எடுத்து, காடியில் தோய்த்து, அதை
ஒரு கோலில் மாட்டி, அவருக்குக் குடிக்கக்
49 கொடுத்தான். மற்றவர்களோ: பொறு, எலி
யா இவனை ரட்சிக்க வருவானோ, பார்ப்போம்
50 என்றார்கள். இயேசு, [10]மறுபடியும் மகா சத்த
51 மாய்க் கூப்பிட்டு, ஆவியை விட்டார். அப்
பொழுது, [11]தேவாலயத்தின் திரைச்சீலைமேல்
தொடங்கிக் கீழ்வரைக்கும் இரண்டாகக் கிழிந்
தது, பூமியும் அதிர்ந்தது, கன்மலைகளும் பிளந்
52 தது. கல்லறைகளும் திறந்தது, [12]நித்திரைய
டைந்திருந்த அநேக பரிசுத்தவான்களுடைய
53 சரீரங்களும் எழுந்திருந்தது. அவர் உயிர்த்
தெழுந்தபின்பு, [13]இவர்கள் கல்லறைகளைவிட்
டுப் புறப்பட்டு, பரிசுத்த நகரத்தில் பிரவே
சித்து, அநேகருக்குக் காணப்பட்டார்கள்.
54 நூற்றுக்கு அதிபதியும், [14]அவனோடேகூட

1 மாற். 15. 26. லூ. 23. 38. யோ. 19. 19
2 ஏசா. 53. 12. மாற். 15. 27. லூ. 23. 32, 33. யோ. 19. 18
3 சங். 22. 7: 109. 25
4 26. 61, 63. யோ. 2. 19
* அதன். யோ. 5. 17, 18: 10. 30, 36
5 சங். 3. 2: 22. 8
6 மாற். 15. 32. லூ. 23. 39
7 ஆமோ. 8, 9. மாற். 15. 33. லூ. 23. 44
8 சங். 22. 1. ஏசா. 53. 10. புல. 1. 12. எபி. 5. 7
9 சங். 69 21. மாற். 15. 36. லூ. 23. 36. யோ. 19. 29
10 மாற். 15. 37. லூ. 23. 46
11 யாத். 26. 31. வெளி. 16. 2, 15: 21. 28. 2 நாளா. 3. 14. மாற். 15. 38. லூ. 23. 45
12 ஏசா. 25. 8: 26. 19. தானி. 12. 2. ஓசி. 13. 14. யோ. 5. 25, 26. 1 தெச. 4. 14
13 1 கொ. 15. 20
14 மாற். 15. 39. லூ. 23. 47. மு
15 லூ. 8. 2, 3
16 மாற். 15. 40
17 மாற். 15. 42. மு. லூ. 23. 50. மு. யோ. 19. 38. மு
18 ஏசா. 53. 9
19 16. 21. லூ. 24. 6, 7. யோ. 2. 19: 7. 12, 47. 2 கொ. 6. 8
20 28. 13
21 தானி. 6. 17
22 மாற். 16. 1. மு. லூ. 24. 1. மு. யோ. 20. 1. மு
23 27. 56
24 மாற். 16. 5. லூ. 24. 4. யோ. 20. 12.
† தோற்றம்
25 தானி. 12. 2

இயேசுவைக் காவல்காத்திருந்தவர்களும், பூமி
யதிர்ச்சியையும் சம்பவித்த காரியங்களையும்
கண்டு, மிகவும் பயந்து: மெய்யாகவே இவர்
தேவனுடைய குமாரன் என்றார்கள். மே 55
லும், இயேசுவுக்கு ஊழியஞ்செய்யும்படி [15]கலி
லேயாவிலிருந்து அவரோடே வந்திருந்த அ
நேக ஸ்திரீகள் அங்கே தூரத்திலே நின்று
பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவர்களுக் 56
குள்ளே மகதலேனா மரியாளும், [16]யாக்கோபுக்
கும் யோசேக்கும் தாயாகிய மரியாளும், செ
பெதேயுவின் குமாரருடைய தாயும் இருந்
தார்கள்.
சாயங்காலமானபோது, [17]இயேசுவுக்குச் 57
சீஷனும்ஐசுவரியவானுமாயிருந்தயோசேப்பு
என்னும் பேர்கொண்ட அரிமத்தியா ஊரானா
கிய ஒரு மனுஷன் வந்து, பிலாத்துவினிடத் 58
தில் போய், இயேசுவின் சரீரத்தைக் கேட்
டான். அப்பொழுது, சரீரத்தைக்கொடுக்கும்
படி பிலாத்து கட்டளையிட்டான். யோசேப்பு 59
அந்தச் சரீரத்தை எடுத்து, துய்யதான மெல்
லிய துப்பட்டியிலே சுற்றி, தான் கன்மலை 60
யில் வெட்டியிருந்த தன்னுடைய புதிய கல்
லறையிலே அதை வைத்து, [18]கல்லறையின்
வாசலில் ஒரு பெரிய கல்லைப் புரட்டிவைத்
துப் போனான். அங்கே மகதலேனா மரியா 61
ளும் மற்ற மரியாளும் கல்லறைக்கு எதிராக
உட்கார்ந்திருந்தார்கள்.
ஆயத்தநாளுக்குப் பின்னான மறுநாளிலே 62
பிரதான ஆசாரியரும் பரிசேயரும் பிலாத்து
வினிடத்தில் கூடிவந்து: ஆண்டவனே, அந்த 63
எத்தன் உயிரோடிருக்கும்போது, [19]மூன்றுநா
ளைக்குப்பின் எழுந்திருப்பேன் என்று சொன்
னது எங்களுக்கு ஞாபகமிருக்கிறது. ஆகை 64
யால், அவனுடைய சீஷர்கள் இராத்திரியிலே
வந்து, [20]அவனைக் களவாய்க் கொண்டுபோய்,
மரித்தோரிலிருந்து எழுந்தானென்று ஜனங்க
ளுக்குச் சொல்லாதபடிக்கும், முந்தின எத்
தைப்பார்க்கிலும் பிந்தின எத்து கொடிதாகாத
படிக்கும், நீ மூன்றுநாள்வரைக்கும் கல்லறை
யைப் பத்திரப்படுத்தும்படி கட்டளையிடவே
ண்டும் என்றார்கள். அதற்குப் பிலாத்து: உங் 65
களுக்குக் காவல்சேவகர் உண்டே; போய்,
உங்களால் கூடியமட்டும் பத்திரப்படுத்திக்
கொள்ளுங்கள் என்றான். அவர்கள் போய்க் 66
[21]கல்லுக்கு முத்திரைபோட்டு, காவல்வைத்து,
கல்லறையைப் பத்திரப்படுத்தினார்கள்.
ஓய்வுநாள் முடிந்து, [22]வாரத்தின் முதலாம் **28**
நாள் விடிந்துவருகையில், [23]மகதலேனா மரியா
ளும் மற்ற மரியாளும் கல்லறையைப் பார்க்க
வந்தார்கள். அப்பொழுது, [24]பூமி மிகவும் அதி 2
ரும்படி, கர்த்தருடைய தூதன் வானத்திலிருந்
திறங்கிவந்து, வாசலிலிருந்த கல்லைப் புரட்டித்
தள்ளி, அதின்மேல் உட்கார்ந்தான். அவனு 3
டைய †ரூபம் மின்னல்போலவும், [25]அவனு
டைய வஸ்திரம் உறைந்த மழையைப்போல
வெண்மையாகவும் இருந்தது. காவலாளர் அவ 4
னுக்குப் பயந்ததினால் திடுக்கிட்டுச் செத்தவர்

5 கள்போனார்கள். தூதன் அந்த ஸ்திரீகளை
நோக்கி: [1]நீங்கள் பயப்படாதிருங்கள்; சிலுவை
யில் அறையப்பட்ட இயேசுவைத் தேடுகிறீர்
6 கள் என்று அறிவேன். அவர் இங்கே இல்லை;
[2]தாம் சொன்னபடியே உயிர்த்தெழுந்தார்; கர்த்
7 தரை வைத்த இடத்தைவந்து பாருங்கள்; சீக்கிர
மாய்ப்போய், [3]அவர் மரித்தோரிலிருந்து எழுந்
தார் என்று அவருடைய சீஷர்களுக்குச் சொல்
லுங்கள். அவர் உங்களுக்குமுன்னே கலிலேயா
வுக்குப் போகிறார்; [4]அங்கே அவரைக் காண்பீர்
கள்; இதோ, உங்களுக்குச் சொன்னேன் என்
8 றான். அவர்கள் பயத்தோடும் மகா சந்தோஷத்
தோடும் கல்லறையை விட்டுச் சீக்கிரமாய்ப்
புறப்பட்டு, அவருடைய சீஷர்களுக்கு அறி
9 விக்க ஓடினார்கள். அவர்கள் அவருடைய
சீஷர்களுக்கு அறிவிக்கப் போகிறபோது
இயேசு தாமே அவர்களுக்கு எதிர்ப்பட்டு:
[5]வாழ்க என்றார். அவர்கள் கிட்டவந்து,
அவர் பாதங்களைத் தழுவி, அவரைப் பணிந்
10 துகொண்டார்கள். அப்பொழுது இயேசு
அவர்களை நோக்கி: பயப்படாதிருங்கள்; நீங்
கள் போய், [6]என் சகோதரர் கலிலேயாவுக்
குப் போகும்படி அவர்களுக்குச் சொல்லுங்
கள்; அங்கே அவர்கள் என்னைக் காண்பார்
கள் என்றார்.
11 அவர்கள் போகையில், காவல் சேவகரில்
சிலர் நகரத்துக்குள்ளே வந்து, நடந்த யாவற்
றையும் பிரதான ஆசாரியருக்கு அறிவித்தார்
12 கள். இவர்கள் மூப்பரோடே கூடிவந்து,
ஆலோசனைபண்ணி, சேவகருக்கு வேண்டிய
பணத்தைக் கொடுத்து: நாங்கள் நித்திரை 13
பண்ணுகையில், அவனுடைய சீஷர்கள் இரா
த்திரியிலே வந்து, [7]அவனைக் களவாய்க்
கொண்டுபோய்விட்டார்கள் என்று சொல்
லுங்கள். இது தேசாதிபதிக்குக் கேள்வியா 14
னால், நாங்கள் அவரைச் சம்மதப்படுத்தி, உங்
களைத் தப்புவிப்போம் என்றார்கள். அவர் 15
கள் பணத்தை வாங்கிக்கொண்டு, தங்களுக்
குப் போதிக்கப்பட்டபடியே செய்தார்கள்.
இந்தப் பேச்சு யூதருக்குள்ளே இந்நாள்வரைக்
கும் பிரசித்தமாயிருக்கிறது.
பதினொரு சீஷர்களும், [8]கலிலேயாவிலே 16
இயேசு தங்களுக்குக் குறித்திருந்த மலைக்குப்
போனார்கள். அங்கே அவர்கள் அவரைக் 17
கண்டு, [9]பணிந்துகொண்டார்கள்; சிலரோ
சந்தேகப்பட்டார்கள். அப்பொழுது இயேசு 18
சமீபத்தில் வந்து, அவர்களை நோக்கி: [10]வா
னத்திலும் பூமியிலும் சகல அதிகாரமும்
எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகை 19
யால், [11]நீங்கள் புறப்பட்டுப்போய், [12]சகல ஜா
திகளையும் சீஷராக்கி, பிதா குமாரன் பரிசுத்த
ஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்
நானங் கொடுத்து, நான் உங்களுக்குக் கட் 20
டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்
ளும்படி [13]அவர்களுக்கு உபதேசம்பண்ணுங்
கள். [14]இதோ, உலகத்தின் முடிவுபரியந்தம்
சகல நாட்களிலும் நான் உங்களுடனேகூட
இருக்கிறேன் என்றார். ஆமென்.

1 சங். 105. 3, 4. எபி. 1. 14
2 27. 63
3 லூ. 24. 34. 1 கொ. 15. 4
4 16, 17. வச
5 மாற். 16. 9. யோ. 20. 19
6 யோ. 20. 17. ரோ. 8. 29. எபி. 2. 11
7 27. 64
8 26. 32
9 16. 28
10 11. 27. சங். 2. 6; 89. 19; 110. 1, 3. ஏசா. 9. 6, 7. தானி. 7. 14. லூ. 1. 32. யோவ17. 2. ரோ. 14. 9. எபே. 1. 20, 21. எபி. 2. 8. 1 பே. 3. 22. வெளி. 11. 15
11 மாற். 16. 15
12 ஏசா. 52. 10. ரோ. 10. 18
13 அப். 2. 42. 1 கொ. 11. 2
14 18. 20. அப். 2. 42. வெளி. 1. 18

THE GOSPEL ACCORDING TO MARK

# மாற்கு எழுதின சுவிசேஷம்

**1** தேவனுடைய [1]குமாரனாகிய இயேசுகிறி
ஸ்துவினுடைய சுவிசேஷத்தின் ஆரம்பம்.
2 இதோ நான் என் தூதனை உமக்கு முன்
பாக அனுப்புகிறேன், [2]அவன் உமக்கு முன்
னே போய், உமக்கு வழியை ஆயத்தம்பண்
3 ணுவான் என்றும்; கர்த்தருக்கு வழியை
ஆயத்தப்படுத்துங்கள், [3]அவருக்குப் பாதைக
ளைச் செவ்வை பண்ணுங்கள் என்று வனாந்
தரத்திலே கூப்பிடுகிறவனுடைய சத்தம் உண்
டாகும் என்றும், தீர்க்கதரிசன ஆகமங்களில்
4 எழுதியிருக்கிற பிரகாரமாய்; யோவான்
வனாந்தரத்தில் ஞானஸ்நானங்கொடுத்து, [4]பா
வமன்னிப்புக்கென்று மனந்திரும்புதலுக்கே
ற்ற ஞானஸ்நானத்தைக் குறித்துப் பிரசங்கம்
5 பண்ணிக்கொண்டிருந்தான். அப்பொழுது
யூதேயா தேசத்தார் அனைவரும் எருசலேம் நக
ரத்தார் யாவரும், அவனிடத்திற்குப் போய்,
[5]தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு, யோர்
தான் நதியில் அவனால் ஞானஸ்நானம் பெற்
6 றார்கள். யோவான் ஒட்டகமயிர் உடையைத்
தரித்து, தன் அரையில் வார்க்கச்சையைக்
கட்டிக்கொண்டவனாயும், [6]வெட்டுக் கிளி
யையும் காட்டுத்தேனையும் புசிக்கிறவனாயும்
7 இருந்தான். அவன்: என்னிலும் வல்லவர்
ஒருவர் எனக்குப் பின்வருகிறார், [7]அவரு
டைய பாதரட்சைகளின் வாரைக் குனிந்து
அவிழ்க்கிறதற்கும் நான் பாத்திரன் அல்ல.
8 நான் ஜலத்தினால் உங்களுக்கு ஞானஸ்நானம்
கொடுத்தேன்; [8]அவரோ பரிசுத்த ஆவியினால்
உங்களுக்கு ஞானஸ்நானங்கொடுப்பார் என்று
பிரசங்கித்தான்.
9 அந்த நாட்களில், இயேசு கலிலேயாவி
லுள்ள நாசரேத்தூரிலிருந்து வந்து, [9]யோர்
தான் நதியில் யோவானால் ஞானஸ்நானம்
10 பெற்றார். அவர் ஜலத்திலிருந்து கரையேறி
னவுடனே, [10]வானம் திறக்கப்பட்டதையும்,
ஆவியானவர் புறாவைப்போல் தம்மேல் இறங்
11 குகிறதையும் கண்டார். அன்றியும், [11]நீர்
என்னுடைய நேசகுமாரன், உம்மில் பிரியமா
யிருக்கிறேன் என்று, வானத்திலிருந்து ஒரு
சத்தம் உண்டாயிற்று.
12 உடனே ஆவியானவர் [12]அவரை வனாந்தரத்
13 திற்குப் போகும்படி ஏவினார். அவர் வனாந்
தரத்திலே நாற்பதுநாள் இருந்து, சாத்தானால்
சோதிக்கப்பட்டு, அங்கே காட்டுமிருகங்களின்
நடுவிலே சஞ்சரித்துக்கொண்டிருந்தார். [13]தே
வதூதர்கள் அவருக்கு ஊழியஞ்செய்தார்கள்.
யோவான் காவலில் வைக்கப்பட்டபின்பு, 14
இயேசு கலிலேயாவிலே வந்து, [14]தேவனு
டைய ராஜ்யத்தின் சுவிசேஷத்தைப் பிரசங்
கித்து: காலம் நிறைவேறிற்று, [15]தேவனு 15
டைய ராஜ்யம் சமீபமாயிற்று; மனந்திரும்பி,
சுவிசேஷத்தை விசுவாசியுங்கள் என்றார்.
அவர் கலிலேயாக் கடலோரமாய் நடந்து 16
போகையில், [16]மீன்பிடிக்கிறவர்களாயிருந்த
சீமோனும், அவன் சகோதரன் அந்திரே
யாவும் கடலில் வலைபோட்டுக்கொண்டிருக்
கிறபோது அவர்களைக் கண்டார். இயேசு 17
அவர்களை நோக்கி: என் பின்னே வாருங்கள்;
உங்களை மனுஷரைப் பிடிக்கிறவர்களாக்கு
வேன் என்றார். உடனே அவர்கள் தங்கள் 18
வலைகளை விட்டு, [17]அவருக்குப் பின்சென்றார்
கள். அவர் அவ்விடம்விட்டுச் சற்று அப்புறம் 19
போனபோது, [18]செபெதேயுவின் குமாரன்
யாக்கோபும் அவன் சகோதரன் யோவானும்
படவிலே வலைகளைப் பழுது பார்த்துக்கொண்
டிருக்கிறதைக் கண்டு, உடனே அவர்களையும் 20
அழைத்தார்; அப்பொழுது அவர்கள் தங்கள்
தகப்பனாகிய செபெதேயுவைக் கூலியாட்க
ளோடு படவிலே விட்டு, அவருக்குப் பின்
சென்றார்கள்.
பின்பு கப்பர்நகூமுக்குப் போனார்கள். [19]உட 21
னே அவர் ஓய்வுநாளில் ஜெப ஆலயத்திலே
பிரவேசித்து, போதகம்பண்ணினார். அவர் 22
வேதபாரகரைப்போலப் போதியாமல், [20]அதி
காரமுடையவராய் அவர்களுக்குப் போதித்த
படியினால், அவருடையபோதகத்தைக்குறித்து
ஜனங்கள் ஆச்சரியப்பட்டார்கள். அவர்களு 23
டைய ஜெப ஆலயத்திலே [21]அசுத்த ஆவியுள்ள
ஒரு மனுஷன் இருந்தான். அவன்: ஐயோ! 24
நசரேயனாகிய இயேசுவே, [22]எங்களுக்கும்
உமக்கும் என்ன? எங்களைக் கெடுக்கவாவந்தீர்?
உம்மை இன்னார் என்று அறிவேன், நீர்
தேவனுடைய பரிசுத்தர் என்று சத்தமிட்டான்.
அதற்கு இயேசு: நீ பேசாமல் இவனை விட் 25
டுப் புறப்பட்டுப்போ என்று அதை அதட்டி

1 மத். 14. 33. லூ. 1. 35. யோ. 1. 34. எபி. 1. 1, 2. மு
2 மல். 3. 1. மத். 3. 1–12. லூ. 3. 1–18
3 ஏசா. 40. 3. மத். 3. 3. லூ. 3, 4. யோ. 1. 15, 23
4 மத். 3. 1. லூ. 3. 3. யோ. 3. 23. அப். 22. 16
5 மத். 3. 5. 1 யோ. 1. 8–10
6 லேவி. 11. 22. மத். 3. 4
7 மத். 3. 11. யோ. 1. 27 அப். 13. 25.
8 யோவே. 2. 28. அப். 1. 5: 2. 4: 10. 45: 11. 15, 16. 1 கொ. 12. 13
9 மத். 3. 13–17. லூ. 3. 21, 22
10 ஏசா. 42. 1. மத். 3. 16. யோ. 1. 32
11 சங். 2. 7. மத். 3. 17
12 மத். 4. 1. மு. லூ. 4. 1. மு
13 மத். 4. 11
14 மத். 4. 12–25. லூ. 5. 1–11
15 தானி. 2. 44: 9. 25. கலா. 4. 4. எபே. 1. 10
16 மத். 4. 18. லூ. 5. 4
17 மத். 19. 27. லூ. 5. 11
18 மத். 4. 21
19 மத். 4. 13. லூ. 4. 31. மு
20 மத். 7. 28
21 லூ. 4. 33. மு
22 மத். 8. 29

26 ணார். உடனே அந்த அசுத்தஆவி அவனை
அலைக்கழித்து, [1]மிகுந்த சத்தமிட்டு, அவனை
27 விட்டுப் போய்விட்டது. எல்லாரும் ஆச்சரி
யப்பட்டு: இது என்ன? இந்தப் புதிய உபதே
சம் எப்படிப்பட்டது? இவர் அதிகாரத்தோ
டே அசுத்த ஆவிகளுக்கும் கட்டளையிடுகிறார்,
அவைகள் இவருக்குக் கீழ்ப்படிகிறதே என்று
தங்களுக்குள்ளே ஒருவரோடொருவர் சொல்
28 லிக்கொண்டார்கள். அதுமுதல் அவருடைய
கீர்த்தி கலிலேயா நாடெங்கும் பிரசித்தமா
யிற்று.
29 உடனே அவர்கள் ஜெப ஆலயத்தை விட்
டுப் புறப்பட்டு, [2]யாக்கோபோடும் யோவா
னோடுங்கூட, சீமோன் அந்திரேயா என்பவர்
30 களுடைய வீட்டில் பிரவேசித்தார்கள். அங்
கே சீமோனுடைய மாமி ஜுரமாய்க் கிடந்தாள்;
உடனே அவர்கள் அவளைக்குறித்து அவருக்
31 குச் சொன்னார்கள். அவர் கிட்டப்போய்,
அவள் கையைப் பிடித்து, அவளைத் தூக்கிவிட்
டார்; உடனே ஜுரம் அவளை விட்டுநீங்கிற்று;
அப்பொழுது அவள் அவர்களுக்குப் பணி
விடை செய்தாள்.
32 சாயங்காலமாகிச் சூரியன் அஸ்தமித்த
போது, சகல பிணியாளிகளையும், [3]பிசாசு
பிடித்தவர்களையும், அவரிடத்தில் கொண்டு
33 வந்தார்கள். பட்டணத்தார் எல்லாரும் வீட்டு
34 வாசலுக்கு முன்பாகக் கூடிவந்தார்கள். பல
விதமான வியாதிகளினால் உபத்திரவப்பட்டி
ருந்த அநேகரை அவர் சொஸ்தமாக்கி, அநே
கம் பிசாசுகளையும் துரத்திவிட்டார்; [4]அந்தப்
பிசாசுகள் தம்மை அறிந்திருந்தபடியால், அவை
கள் பேசுகிறதற்கு அவர் இடங்கொடுக்க
வில்லை.
35 அவர் அதிகாலையில், [5]இருட்டோடே
எழுந்து புறப்பட்டு, வனாந்தரமான ஓரிடத்திற்
குப் போய், அங்கே ஜெபம் பண்ணினார்.
36 சீமோனும் அவனோடே இருந்தவர்களும் அவ
37 ரைப் பின்தொடர்ந்துபோய், அவரைக் கண்
டபோது: உம்மை எல்லாரும் தேடுகிறார்கள்
38 என்று சொன்னார்கள். அவர்களை அவர்
நோக்கி: அடுத்த ஊர்களிலும் நான் பிரசங்கம்
பண்ணவேண்டுமாதலால், [6]அவ்விடங்களுக்
குப் போவோம் வாருங்கள்; இதற்காகவே புறப்
39 பட்டு வந்தேன் என்று சொல்லி; கலிலேயா
நாடெங்கும் அவர்களுடைய ஜெப ஆலயங்க
ளில் அவர் பிரசங்கம்பண்ணிக்கொண்டும்,
[7]பிசாசுகளைத் துரத்திக்கொண்டும் இருந்தார்.
40 அப்பொழுது குஷ்டரோகி ஒருவன் அவ
ரிடத்தில் வந்து, அவர் முன்பாக முழங்கால்
படியிட்டு: [8]உமக்குச் சித்தமானால் என்னைச்
சுத்தமாக்க உம்மால் ஆகும் என்று வேண்டிக்
41 கொண்டான். இயேசு மனதுருகி, கையை
நீட்டி, அவனைத் தொட்டு: எனக்குச் சித்த
42 முண்டு, சுத்தமாகு என்றார். இப்படி அவர்
சொன்னவுடனே, [9]குஷ்டரோகம் அவனை
43 விட்டு நீங்கிற்று, அவன் சுத்தமானான். அப்
பொழுது அவர் அவனை நோக்கி: நீ இதை

1 9. 20
2 மத். 8. 14. ழ. லூ. 4. 38. ழ
3 மத். 8. 16. லூ. 4. 40
4 3. 12. லூ. 4. 41. அப். 16. 17, 18
5 லூ. 4. 42-44
6 ஏசா. 61. 1, 2. யோ. 17. 8
7 மத். 4. 23. லூ. 4. 44
8 மத். 8. 2-4. லூ. 5. 12-14
9 சங். 33. 9. யோ. 15. 3
10 லேவி. 14. 2-32. ரோ. 15. 4. 1 கொ. 10. 11
11 2. 13. சங். 77. 11, 12. தீத். 1. 10
12 மத். 9. 1. ழ. லூ. 5. 18. ழ
13 சங். 40. 9
14 மத். 9. 1. ழ. லூ. 5. 18. ழ
15 அப். 14. 9. எபே. 2. 8
16 ஏசா. 43. 25. தானி. 9. 9
17 மத். 9. 4
18 யோ. 7. 31; 9. 32

ஒருவருக்கும் சொல்லாதபடிக்கு எச்சரிக்கை
யாயிரு; ஆயினும் நீ போய், ஆசாரியனுக்கு 44
உன்னைக் காண்பித்து, நீ சுத்தமானதினிமித்
தம், [10]மோசே கட்டளையிட்டிருக்கிறவைகளை
அவர்களுக்குச் சாட்சியாகச் செலுத்து என்று
கண்டிப்பாய்ச் சொல்லி, உடனே அவனை
அனுப்பிவிட்டார். அவனோ புறப்பட்டுப் 45
போய், இந்தச் சங்கதி எங்கும் விளங்கும்படி
யாகப் பிரசித்தம்பண்ணத் தொடங்கினான்.
[11]அதினால் அவர் வெளியரங்கமாய்ப் பட்ட
ணத்தில் பிரவேசிக்கக்கூடாமல், வெளியே
வனாந்தரமான இடங்களில் தங்கியிருந்தார்;
எத்திசையிலுமிருந்து ஜனங்கள் அவரிடத்
திற்கு வந்தார்கள்.

சில நாட்களுக்குப் பின்பு அவர் மறுபடி **2**
யும் கப்பர்நகூமுக்குப் போனார்; [12]அவர் வீட்டி
லிருக்கிறாரென்று ஜனங்கள் கேள்விப்பட்டு;
உடனே வாசலுக்குமுன்னும் நிற்க இடம் 2
போதாதபடிக்கு அநேகர் கூடிவந்தார்கள்;
[13]அவர்களுக்கு வசனத்தைப் போதித்தார். அப் 3
பொழுது நாலுபேர் ஒரு திமிர்வாதக்காரனைச்
சுமந்துகொண்டு [14]அவரிடத்தில் வந்தார்கள்;
ஜனக்கூட்டத்தினிமித்தம் அவருக்குச் சமீப 4
மாய்ச் சேரக்கூடாமல், அவர் இருந்த வீட்டின்
மேற்கூரையைப் பிரித்துத் திறப்பாக்கி, திமிர்
வாதக்காரன் கிடக்கிற படுக்கையை இறக்கி
னார்கள். இயேசு அவர்கள் விசுவாசத்தைக் 5
கண்டு, [15]திமிர்வாதக்காரனை நோக்கி: மகனே,
உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டது
என்றார். அங்கே உட்கார்ந்திருந்த வேதபார 6
கரில் சிலர்: இவன் [16]இப்படி தேவதூஷணம் 7
சொல்லுகிறதென்ன? [16]தேவன் ஒருவரேயன்
றி பாவங்களை மன்னிக்கத்தக்கவர் யார் என்று
தங்கள் இருதயங்களில் சிந்தித்துக்கொண்டி
ருந்தார்கள். அவர்கள் தங்களுக்குள்ளே இப் 8
படிச் சிந்திக்கிறார்களென்று இயேசு உடனே
தம்முடைய ஆவியில் அறிந்து, [17]அவர்களை
நோக்கி: நீங்கள் உங்கள் இருதயங்களில் இப்
படிச் சிந்திக்கிறதென்ன? உன் பாவங்கள் 9
உனக்கு மன்னிக்கப்பட்டதென்று சொல்
வதோ, எழுந்து உன் படுக்கையை எடுத்துக்
கொண்டு நடவென்று சொல்வதோ, எது எளி
து? பூமியிலே பாவங்களை மன்னிக்க மனுஷ 10
குமாரனுக்கு அதிகாரம் உண்டென்பதை நீங்
கள் அறியவேண்டும் என்று சொல்லி, திமிர்
வாதக்காரனை நோக்கி: நீ எழுந்து, உன் படுக் 11
கையை எடுத்துக்கொண்டு, உன் வீட்டுக்குப்
போ என்று உனக்குச் சொல்லுகிறேன் என்
றார். உடனே, அவன் எழுந்து, தன் படுக் 12
கையை எடுத்துக்கொண்டு எல்லாருக்கு முன்
பாகப் போனான். அப்பொழுது எல்லாரும்
ஆச்சரியப்பட்டு: [18]நாம் ஒருக்காலும் இப்படிக்
கண்டதில்லையென்று சொல்லி, தேவனை மகி
மைப்படுத்தினார்கள்.

அவர் மறுபடியும் புறப்பட்டுக் கடலருகே 13
போனார்; அப்பொழுது ஜனங்களெல்லாரும்
அவரிடத்தில் வந்தார்கள்; அவர்களுக்குப்

14 போதகம் பண்ணினார். அவர் நடந்துபோகை
யில், [1]அல்பேயுவின் குமாரனாகியலேவி ஆயத்
துறையில் உட்கார்ந்திருக்கிறதைக் கண்டு:
எனக்குப் பின்சென்றுவா என்றார்; அவன்
15 எழுந்து அவருக்குப் பின்சென்றான். அப்
பொழுது, [2]அவனுடைய வீட்டிலே அவர்
போஜனபந்தியிருக்கையில், அநேக ஆயக்கா
ரும் பாவிகளும் அவரோடுகூட வந்திருந்தபடி
யால், அவர்களும் இயேசுவோடும் அவர் சீஷ
16 ரோடுங்கூடப் பந்தியிருந்தார்கள். அவர் ஆயக்
காரரோடும் பாவிகளோடும் போஜனம்பண்
ணுகிறதை வேதபாரகரும் பரிசேயரும் கண்டு,
அவருடைய சீஷரை நோக்கி: அவர் ஆயக்
காரரோடும் பாவிகளோடும் போஜனபானம்
பண்ணுகிற தென்னவென்று கேட்டார்கள்.
17 இயேசு அதைக் கேட்டு: [3]பிணியாளிகளுக்கு
வைத்தியன் வேண்டியதேயல்லாமல் சுகமுள்
ளவர்களுக்கு வேண்டியதில்லை; நீதிமான்களை
யல்ல, பாவிகளையே மனந்திரும்புகிறதற்கு
அழைக்கவந்தேன் என்றார்.
18 யோவானுடைய சீஷரும் பரிசேயருடைய
சீஷரும் உபவாசம் பண்ணிவந்தார்கள். அவர்
கள் அவரிடத்தில் வந்து: யோவானுடைய
சீஷரும் பரிசேயருடைய சீஷரும் உபவா
சிக்கிறார்களே, [4]உம்முடைய சீஷர் உபவாசி
யாமலிருக்கிற தென்னவென்று கேட்டார்
19 கள். அதற்கு இயேசு: மணவாளன் தங்க
ளோடிருக்கையில் மணவாளனுடைய தோ
ழர் உபவாசிப்பார்களா? மணவாளன் தங்க
ளுடனே இருக்கும்வரைக்கும் உபவாசிக்க
20 மாட்டார்களே. மணவாளன் அவர்களை விட்டு
எடுபடும் நாட்கள் வரும், [5]அந்த நாட்களிலே
21 உபவாசிப்பார்கள். ஒருவனும் கோடித்துண்
டைப் பழைய வஸ்திரத்தோடு இணைக்கமாட்
டான், இணைத்தால், அதினோடே இணைத்த
புதிய துண்டு பழையதை அதிகமாய்க் கிழிக்
22 கும், பீறலும் அதிகமாகும். ஒருவனும் புது
திராட்சரசத்தைப் பழந்துருத்திகளில் வார்த்து
வைக்கமாட்டான்; வார்த்துவைத்தால், புது
ரசம் துருத்திகளைக் கிழித்துப்போடும், இரச
மும் சிந்திப்போம், துருத்திகளும் கெட்டுப்
போம்; [6]புது ரசத்தைப் புது துருத்திகளில்
வார்த்து வைக்கவேண்டும் என்றார்.
23 பின்பு, [7]அவர் ஓய்வுநாளில் பயிர்வழியே
போனார்; அவருடைய சீஷர்கள் கூட நடந்து
போகையில், [8]கதிர்களைக் கொய்யத் தொடங்
24 கினார்கள். பரிசேயர் அவரை நோக்கி: இ
தோ, ஓய்வுநாளில் செய்யத்தகாததை இவர்
25 கள் ஏன் செய்கிறார்கள் என்றார்கள். அதற்கு
அவர்: [9]தாவீதுக்கு உண்டான ஆபத்தில், தா
னும் தன்னோடிருந்தவர்களும் பசியாயிருந்த
26 போது, அவன் *அபியத்தார் என்னும் பிர
தான ஆசாரியன் காலத்தில் செய்ததை நீங்
கள் ஒருக்காலும் வாசிக்கவில்லையா? [10]அவன்
தேவனுடைய வீட்டில் பிரவேசித்து, ஆசாரி
யர்தவிர வேறொருவரும் புசிக்கத்தகாத தெய்
வசமுகத்து அப்பங்களைத் தானும் புசித்துத்
தன்னோடிருந்தவர்களுக்கும் கொடுத்தானே
என்றார். பின்பு அவர்களை நோக்கி: மனு 27
ஷன் ஓய்வுநாளுக்காக உண்டாக்கப்படவில்
லை, [11]ஓய்வுநாள் மனுஷனுக்காக உண்டாக்
கப்பட்டது; ஆகையால் மனுஷகுமாரன் 28
ஓய்வுநாளுக்கும் [12]ஆண்டவராய் இருக்கிறார்
என்றார்.

மறுபடியும் அவர் ஜெபஆலயத்தில் பிரவே 3
சித்தார். [13]அங்கே சூம்பின கையையுடைய
ஒரு மனுஷன் இருந்தான். அவர் ஓய்வுநா 2
ளில் அவனைச் சொஸ்தமாக்கினால் அவர்பே
ரில் குற்றஞ்சாட்டலாமென்று [14]அவர்மேல்
நோக்கமாயிருந்தார்கள். அப்பொழுது அவர் 3
சூம்பின கையையுடைய மனுஷனை நோக்கி:
எழுந்து நடுவே †நில் என்று சொல்லி; அவர் 4
களைப் பார்த்து: ஓய்வுநாட்களில் நன்மை
செய்வதோ, தீமை செய்வதோ, [15]ஜீவனைக் கா
ப்பதோ அழிப்பதோ, எது நியாயம்? என்றார்.
அதற்கு அவர்கள் பேசாமலிருந்தார்கள். அவர் 5
களுடைய இருதயகடினத்தினிமித்தம் அவர்
விசனப்பட்டு, கோபத்துடனே சுற்றிலும்
இருந்தவர்களைப் பார்த்து, அந்த மனுஷனை
நோக்கி: உன் கையை நீட்டு என்றார்; அவன்
நீட்டினான்; அவன் கை மறுகையைப்போ
லச் சொஸ்தமாயிற்று. உடனே பரிசேயர் 6
புறப்பட்டுப்போய், அவரைக் கொலைசெய்யும்
படி, [16]அவருக்கு விரோதமாய் ஏரோதியரோ
டேகூட ஆலோசனைபண்ணினார்கள்.

இயேசு தம்முடைய சீஷர்களோடே அவ் 7
விடம்விட்டு, கடலோரத்துக்குப் போனார்.
கலிலேயாவிலும், [17]யூதேயாவிலும், எருசலே 8
மிலும், ‡இதுமேயாவிலும், யோர்தானுக்கு
அக்கரையிலுமிருந்து திரளான ஜனங்கள்
வந்து, அவருக்குப் பின்சென்றார்கள். அல்
லாமலும் தீரு சீதோன் பட்டணங்களின்
திசைகளிலுமிருந்து திரளான ஜனங்கள் அவர்
செய்த அற்புதங்களைக்குறித்துக் கேள்விப்பட்
டு, அவரிடத்தில் வந்தார்கள். அவர் அநேக 9
ரைச் சொஸ்தமாக்கினார். நோயாளிகளெல்
லாரும் அதை அறிந்து [18]அவரைத் தொட
வேண்டுமென்று அவுரிடத்தில் நெருங்கிவந்
தார்கள். ஜனங்கள் திரளாயிருந்தபடியால் 10
அவர்கள் தம்மை நெருக்காதபடிக்கு, தமக்
காக ஒரு படவை ஆயத்தம் பண்ணவேண்டு
மென்று, தம்முடைய சீஷர்களுக்குச் சொன்
னார். அசுத்த ஆவிகளும் அவரைக் கண்ட 11
போது, அவர் முன்பாக விழுந்து: [19]நீர் தேவ
னுடைய குமாரன் என்று சத்தமிட்டன. தம் 12
மைப் பிரசித்தம்பண்ணாதபடி [20]அவைகளுக்
குக் கண்டிப்பாய்க் கட்டளையிட்டார்.

பின்பு அவர் ஒரு மலையின்மேல் ஏறி, 13
[21]தமக்குச் சித்தமானவர்களைத் தம்மிடத்தில்
வரவழைத்தார்; அவர்கள் அவரிடத்திற்கு வந்
தார்கள். அப்பொழுது அவர் பன்னிரண்டு 14
பேரைத் தெரிந்துகொண்டு, அவர்கள் தம்
மோடேகூட இருக்கவும், பிரசங்கம்பண்ணும்
படியாகத் தாம் அவர்களை அனுப்பவும்,

1 மத். 9. 9. மு. லூ. 5. 27. மு
2 மத். 9. 10. மு
3 மத். 9. 12, 13. லூ. 5. 31, 32. 1தீமோ. 1. 15
4 மத். 9. 14; 25. 1. லூ. 5. 33
5 அப். 13. 2
6 யோபு 32. 19
7 மத். 12. 1, மு. லூ. 6. 1, மு
8 உபா. 23. 25
9 1 சாமு. 21. 6
* அபிமெலேக். 1 சாமு. 21. 6
10 யாத். 29. 32, 33. லேவி. 24. 9
11 நெகே. 9. 14. ஏசா. 58. 13. எசே. 20. 12, 20. கொலோ. 2. 16
12 மத். 12. 8, யோ. 9. 14. எபே. 1. 22. வெளி. 1. 10
13 மத். 12. 9, மு. லூ. 6. 6. மு
14 லூ. 14. 1
† வா
15 ஓசி. 6, 6
16 மத். 12. 14; 22. 16
17 லூ. 6. 17
‡ ஏதோம் ஏசா. 34. 6. எசே. 35. 15
18 மத். 12. 15; 14. 14
19 1. 24. மத். 14. 33. லூ. 4. 41. யாக். 2. 19
20 1. 25, 34
21 மத். 10. 1. மு. லூ. 6. 12. மு. யோ. 15. 16

15 வியாதிகளைக் குணமாக்கிப் பிசாசுகளைத் துரத்
தும்படி அவர்கள் அதிகாரமுடையவர்களாயி
16 ருக்கவும், அவர்களை ஏற்படுத்தினார். அவர்
கள் யாரெனில், [1]சீமோன், இவனுக்குப் பே
17 துரு என்கிற பெயரிட்டார், செபெதேயு
வின் குமாரனாகிய யாக்கோபு, யாக்கோபின்
சகோதரனாகிய யோவான், [2]இவ்விருவருக்
கும் இடிமுழக்க மக்களென்று அர்த்தங்கொ
ள்ளும் பொவனெர்கேஸ் என்கிற பெயரிட்
18 டார், அந்திரேயா, பிலிப்பு, பற்தொலொ
மேயு, மத்தேயு, தோமா, அல்பேயுவின் குமா
ரன் யாக்கோபு, ததேயு, கானானியனாகிய
19 சீமோன், அவரைக் காட்டிக்கொடுத்த யூதாஸ்
காரியோத்து என்பவர்களே.
20 பின்பு வீட்டுக்குப் போனார்கள்; [3]அங்கே
அவர்கள் சாப்பிடுவதற்கும் சமயமில்லாதப
டிக்கு அநேக ஜனங்கள் மறுபடியும் கூடிவந்
21 தார்கள். அவருடைய இனத்தார் இதைக்
கேட்டபோது, அவர் *மதிமயங்கியிருக்கிறார்
என்று சொல்லி, அவரைப் பிடித்துக்கொள்
22 ளும்படி வந்தார்கள். எருசலேமிலிருந்து வந்த
வேதபாரகர்: [4]இவன் பெயெல்செபூலைக்
கொண்டிருக்கிறான், பிசாசுகளின் தலைவனா
லே பிசாசுகளைத் துரத்துகிறான் என்றார்கள்.
23 அவர்களை அவர் அழைத்து, உவமைகளாய்
அவர்களுக்குச் சொன்னதாவது: [5]சாத்தானைச்
24 சாத்தான் துரத்துவது எப்படி? ஒரு ராஜ்
யம் தனக்குத்தானே விரோதமாகப் பிரிந்தி
ருந்தால், அந்த ராஜ்யம் நிலைநிற்கமாட்டா
25 தே. ஒரு வீடு தனக்குத்தானே விரோதமா
கப் பிரிந்திருந்தால், அந்த வீடு நிலைநிற்கமாட்
26 டாதே. சாத்தான் தனக்குத்தானே விரோத
மாக எழும்பிப் பிரிந்திருந்தால், அவன் நிலை
27 நிற்கமாட்டாமல், அழிந்துபோவானே. பல
வானை முந்திக் கட்டினாலொழிய, [6]ஒருவனும்
பலவானுடைய வீட்டுக்குள் புகுந்து, அவன்
உடைமைகளைக் கொள்ளையிடக்கூடாது; கட்
டினானேயாகில், அவன் வீட்டைக் கொள்ளை
28 யிடுவான். மெய்யாகவே நான் உங்களுக்குச்
சொல்லுகிறேன்: [7]மனுஷர்கள் செய்யும் எல்
லாப் பாவங்களும், அவுர்கள் தூஷிக்கும் எந்
தத் தூஷணங்களும், அவர்களுக்கு மன்னிக்
29 கப்படும்; ஒருவன் [8]பரிசுத்தஆவிக்கு விரோத
மாகத் தூஷணஞ்சொல்வானாகில், அவன்
என்றென்றைக்கும் மன்னிப்படையாமல் நித்
திய ஆக்கினைக்குள்ளா யிருப்பான் என்றார்.
30 அசுத்த ஆவியைக் கொண்டிருக்கிறானென்று
அவர்கள் சொன்னபடியினாலே அவர் இப்ப
டிச் சொன்னார்.
31 அப்பொழுது அவருடைய [9]சகோதரரும்
தாயாரும் வந்து, வெளியே நின்று, அவரை
அழைக்கும்படி அவரிடத்தில் ஆள் அனுப்பி
32 னார்கள். அவரைச் சுற்றிலும் உட்கார்ந்தி
ருந்த ஜனங்கள் அவரை நோக்கி: இதோ,
உம்முடைய தாயாரும் உம்முடைய சகோதர
ரும் வெளியே நின்று உம்மைத் தேடுகிறார்
33 கள் என்றார்கள். அவர்களுக்கு அவர் பிரதி
யுத்தரமாக: என் தாயார் யார்? என் சகோத
ரர் யார்? என்று சொல்லி; தம்மைச்சூழ 34
உட்கார்ந்திருந்தவர்களைச் சுற்றிப்பார்த்து: இ
தோ, என் தாயும், என் சகோதரரும் இவர்
களே! தேவனுடைய சித்தத்தின்படி செய் 35
கிறவன் எவனோ [10]அவனே எனக்குச் சகோ
தரனும், எனக்குச் சகோதரியும், எனக்குத்
தாயுமாய் இருக்கிறான் என்றார்.
அவர் மறுபடியும் [11]கடலோரத்திலே போத 4
கம்பண்ணத் தொடங்கினார். திரளான ஜனங்
கள் அவரிடத்தில் கூடிவந்தபடியால், அவர்
கடலிலே நின்ற ஒரு படவில் ஏறி உட்கார்ந்
தார்; ஜனங்களெல்லாரும் கடற்கரையில் நின்
றார்கள். அவர் அநேக விசேஷங்களை [12]உவ 2
மைகளாக அவர்களுக்குப் போதித்தார்;
போதிக்கிறபொழுது அவர்களுக்குச் சொன்
னது: கேளுங்கள், [13]விதைக்கிறவன் ஒருவன் 3
விதைக்கப் புறப்பட்டான். அவன் விதைக் 4
கையில், சில விதை வழியருகே விழுந்தது;
[14]ஆகாயத்துப் பறவைகள் வந்து அதைப்
பட்சித்துப்போட்டது. சில விதை அதிக 5
மண்ணில்லாத [15]கற்பாறை நிலத்தில் விழுந்
தது; அதற்கு ஆழமான மண்ணில்லாததி
னாலே சீக்கிரத்தில் முளைத்தது; வெயில் 6
ஏறினபோதோ, தீய்ந்துபோய், [16]வேரில்லா
மையால் உலர்ந்துபோயிற்று. சில விதை [17]முள் 7
ளுள்ள இடங்களில் விழுந்தது; முள் வளர்
ந்து, அது பலன்கொடாதபடி, அதை நெருக்
கிப்போட்டது. சில விதை [18]நல்ல நிலத்தில் 8
விழுந்து, ஓங்கி வளருகிற பயிராகி, ஒன்று
முப்பதும், ஒன்று அறுபதும், ஒன்று நூறு
மாகப் பலன் தந்தது. கேட்கிறதற்குக் காதுள் 9
ளவன் கேட்கக்கடவன் என்று அவர்களுக்
குச் சொன்னார்.
அவர் தனித்திருக்கிறபோது, [19]பன்னிருவ 10
ரோடுங்கூட அவரைச் சூழ்ந்திருந்தவர்கள்
இந்த உவமையைக்குறித்து அவரிடத்தில்
கேட்டார்கள். அதற்கு அவர்: தேவனுடைய 11
ராஜ்யத்தின் இரகசியத்தை அறியும்படி உங்
களுக்கு அருளப்பட்டது; [20]புறம்பே இருக்
கிறவர்களுக்கோ இவைகளெல்லாம் உவமை
களாகச் சொல்லப்படுகிறது. அவர்கள் குண 12
ப்படாதபடிக்கும், [21]பாவங்கள் அவர்களுக்கு
மன்னிக்கப்படாதபடிக்கும், அவர்கள் கண்
டும் காணாதவர்களாகவும், கேட்டும் உணரா
தவர்களாகவும் இருக்கும்படி, இப்படிச் சொல்
லப்படுகிறது என்றார். பின்பு அவர் அவர் 13
களை நோக்கி: இந்த உவமையை நீங்கள் அறிய
வில்லையா? அறியாவிட்டால் மற்ற உவமைக
ளையெல்லாம் எப்படி அறிவீர்கள்? விதைக் 14
கிறவன் [22]வசனத்தை விதைக்கிறான். வச 15
னத்தைக் கேட்டவுடனே சாத்தான் வந்து,
[23]அவர்கள் இருதயங்களில் விதைக்கப்பட்ட
வசனத்தை எடுத்துப்போடுகிறான்; இவர்களே
வசனம் விதைக்கப்படுகிற வழியருகானவர்
கள். அப்படியே, வசனத்தைக் கேட்டவு 16
டனே அதைச் சந்தோஷத்தோடு ஏற்றுக்

1 யோ. 1. 42
2 ஏசா. 58. 1. எரே. 28. 39
3 6. 31
* பிரமை கொண்டிருக்கிறார். ஒ. 9. 7. யோ. 10. 20.
4 மத். 9. 34: 10. 25: 12. 24. லூ. 11. 15. யோ. 7. 20: 8. 48, 52
5 மத். 12. 25
6 ஏசா. 49. 24, 26: 61. 1. மத். 11. 29
7 மத். 12. 31. லூ. 12. 10. 1 யோ. 5. 16
8 எபி. 10. 29
9 மத். 12. 46–48. லூ. 8. 19–21
10 மாற். 1. 25. 1 யோ. 2. 17
11 மத். 13. 1. மு. லூ. 8. 4. மு
12 34. உச. சங். 78. 2
13 9, 33. உச: 7. 16.
14 ஆதி. 15. 11
15 எசே. 11. 19: 36. 26
16 சங். 1. 4. யாக். 1. 11
17 எரே. 4. 3
18 யோ. 15. 5. கொலோ. 1. 6
19 மத். 13. 10. மு. லூ. 8. 9. மு
20 1 கொ. 5. 12. எபே. 1. 9. கொலோ. 4. 5. 1 தெச. 4. 13. 1 தீமோ. 3. 7
21 ஏசா. 6. 9, 10. யோ. 12. 40. அப். 28. 26, 27. ரோ. 11. 8
22 ஏசா. 32. 20. 1 பே. 1. 25
23 எபி. 2. 1. 1 பே. 5. 8. வெளி. 12. 9

17 கொண்டும், தங்களுக்குள்ளே [1]வேர்கொள்
ளாதபடியால், கொஞ்சக்காலமாத்திரம் நிலைத்
திருக்கிறார்கள், [2]வசனத்தினிமித்தம் உபத்திர
வமும் துன்பமும் உண்டானவுடனே இடற
லடைகிறார்கள்; இவர்களே கற்பாறை நிலத்
18 தில் விதைக்கப்பட்டவர்கள். வசனத்தைக்
கேட்டும், [3]உலகக்கவலைகளும், [4]ஐசுவரியத்
தின் மயக்கமும், மற்றவைகளைப்பற்றி உண்
டாகிற இச்சைகளும் உட்பிரவேசித்து, வச
னத்தை நெருக்கிப்போட, [5]அதினால் பலனற்
19 றுப்போகிறார்கள்; இவர்களே முள்ளுள்ள
20 இடங்களில் விதைக்கப்பட்டவர்கள். வச
னத்தைக் கேட்டு, ஏற்றுக்கொண்டு, [6]ஒன்று
முப்பதும் ஒன்று அறுபதும் ஒன்று நூறுமா
கப் பலன்கொடுக்கிறார்கள்; இவர்களே நல்ல
நிலத்தில் விதைக்கப்பட்டவர்கள் என்றார்.
21 பின்னும் அவர் அவர்களை நோக்கி: [7]விளக்
கைத் தண்டின்மேல் வைக்கிறதற்கேயன்றி,
மரக்காலின் கீழாகிலும், கட்டிலின் கீழாகி
லும், வைக்கிறதற்குக் கொண்டுவருவார்களா?
22 வெளியரங்கமாகாத அந்தரங்கமுமில்லை, [8]வெ
23 ளிக்குவராத மறைபொருளுமில்லை. கேட்கி
றதற்கு ஒருவன் காதுள்ளவனாயிருந்தால் கேட்
24 கக்கடவன் என்றார். பின்னும் அவர் அவர்
களை நோக்கி: [9]நீங்கள் கேட்கிறதைக் கவனி
யுங்கள். [10]எந்த அளவினால் அளக்கிறீர்க
ளோ, அந்த அளவினால் உங்களுக்கும் அளக்
கப்படும்; கேட்கிற உங்களுக்கு அதிகம் கொ
25 டுக்கப்படும். உள்ளவனெவனோ அவனுக்
குக் கொடுக்கப்படும்; [11]இல்லாதவனெவனோ
அவனிடத்தில் உள்ளதும் எடுத்துக்கொள்ளப்
படும் என்றார்.
26 பின்னும் அவர் அவர்களை நோக்கி: [12]தேவ
னுடைய ராஜ்யமானது, ஒரு மனுஷன் நிலத்
27 தில் விதையை விதைத்து; இரவில் தூங்கி,
பகலில் விழித்திருக்க, அவனுக்குத் தெரி
யாதவிதமாய், விதை முளைத்துப் பயிராகிற
28 தற்கு ஒப்பாயிருக்கிறது. எப்படியென்றால்,
[13]நிலமானது முன்பு முளையையும், பின்பு
கதிரையும், கதிரிலே நிறைந்த தானியத்தை
29 யும் பலனாகத் தானாய்க் கொடுக்கும். பயிர்
விளைந்து அறுப்புக்காலம்வந்தவுடனே, [14]அறு
க்கிறதற்கு ஆட்களை அனுப்புகிறான் என்றார்.
30 பின்னும் அவர் அவர்களை நோக்கி: தேவ
னுடைய ராஜ்யத்தை எதற்கு ஒப்பிடுவோம்?
அல்லது எந்த உவமையினாலே அதைத் திருஷ்
31 டாந்தப்படுத்துவோம்? அது ஒரு கடுகுவி
தைக்கு ஒப்பாயிருக்கிறது; [15]அது பூமியில்
விதைக்கப்படும்போது பூமியிலுள்ள சகல
32 விதைகளிலும் சிறிதாயிருக்கிறது; விதைக்கப்
பட்டபின்போ, அது வளர்ந்து, [16]சகல பூண்டு
களிலும் பெரிதாகி, ஆகாயத்துப் பறவைகள்
அதினுடைய நிழலின்கீழ் வந்தடையத்தக்க
பெரிய கிளைகளை விடும் என்றார்.
33 அவர்கள் கேட்டறியும் திராணிக்குத் தக்க
தாக, [17]அவர் இப்படிப்பட்ட அநேக உவமை
களினாலே அவர்களுக்கு வசனத்தைச் சொன்
னார். உவமைகளினாலேயன்றி அவர்களுக்கு 34
ஒன்றும் சொல்லவில்லை; அவர் தம்முடைய
சீஷரோடே தனித்திருக்கும்போது, அவர்க
ளுக்கு எல்லாவற்றையும் விவரித்துச் சொன்
னார்.
அன்று சாயங்காலத்தில், [18]அவர் அவர்களை 35
நோக்கி: அக்கரைக்குப் போவோம் வாருங்கள்
என்றார். அவர்கள் ஜனங்களை அனுப்பி 36
விட்டு, அவர் படவிலிருந்தபடியே அவரைக்
கொண்டுபோனார்கள். வேறே படவுகளும்
அவரோடேகூட இருந்தது. அப்பொழுது 37
[19]பலத்த சுழல்காற்று உண்டாகி, படவு நிரம்
பத்தக்கதாக, அலைகள் அதின்மேல் மோதிற்று.
கப்பலின் பின்னணியத்தில் அவர் தலையணை 38
யை வைத்து நித்திரையாயிருந்தார். அவர்கள்
அவரை எழுப்பி: போதகரே, [20]நாங்கள் மடிந்
துபோகிறது உமக்குக் கவலையில்லையா என்
றார்கள். அவர் எழுந்து, காற்றை அதட்டி; 39
கடலைப்பார்த்து: இரையாதே, அமைதலாயிரு
என்றார். [21]அப்பொழுது காற்று நின்றுபோய்,
மிகுந்த அமைதல் உண்டாயிற்று. அவர் 40
அவர்களை நோக்கி: [22]ஏன் இப்படிப் பயப்பட்
டீர்கள்? ஏன் உங்களுக்கு விசுவாசம் இல்லா
மற்போயிற்று என்றார். அவர்கள் மிகவும் 41
பயந்து: *இவர் யாரோ? [23]காற்றும் கடலும்
இவருக்குக் கீழ்ப்படிகிறதே என்று, ஒருவ
ரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள்.
பின்பு அவர்கள் [24]கடலுக்கு அக்கரையி 5
லுள்ள கதரேனருடைய நாட்டில் வந்தார்கள்.
அவர் படவிலிருந்து இறங்கினவுடனே, அசு 2
த்த ஆவியுள்ள ஒரு மனுஷன் பிரேதக்கல்ல
றைகளிலிருந்து அவருக்கு எதிராக வந்தான்.
அவனுடைய குடியிருப்பு [25]கல்லறைகளிலே 3
இருந்தது; அவனைச் சங்கிலிகளினாலும் கட்ட
ஒருவனாலும் கூடாதிருந்தது. அவன் அநே 4
கந்தரம் விலங்குகளினாலும் சங்கிலிகளினாலும்
கட்டப்பட்டிருந்தும், சங்கிலிகளை முறித்து,
விலங்குகளைத் தகர்த்துப்போடுவான்; அவனை
யடக்க ஒருவனாலும் கூடாதிருந்தது. அவன் 5
எப்பொழுதும் இரவும் பகலும், மலைகளிலும்
கல்லறைகளிலும் இருந்து, கூக்குரலிட்டு,
கல்லுகளினாலே தன்னைக் காயப்படுத்திக்கொ
ண்டிருந்தான். அவன் இயேசுவைத் தூரத் 6
திலே கண்டபோது, ஓடிவந்து, [26]அவரைப்
பணிந்துகொண்டு: இயேசுவே, உன்னத 7
மான தேவனுடைய குமாரனே, எனக்கும்
உமக்கும் என்ன? என்னை வேதனைப்படுத்தா
தபடிக்கு தேவன்பேரில் உமக்கு ஆணை
யென்று மிகுந்த சத்தமிட்டுச் சொன்னான்.
ஏனெனில் அவர் அவனை நோக்கி: [27]அசுத்த 8
ஆவியே, இந்த மனுஷனை விட்டுப் புறப்பட்
டுப் போ என்று சொல்லியிருந்தார். அப் 9
பொழுது அவர் அவனை நோக்கி: உன் பேர்
என்னவென்று கேட்டார். அதற்கு அவன்:
[28]நாங்கள் அநேகராயிருக்கிறபடியால் என்
பேர் லேகியோன் என்று சொல்லி, தங்களை 10
அந்தத் திசையிலிருந்து துரத்திவிடாதபடிக்கு

[1] யோபு 19. 28
[2] 2 தீமோ. 1. 15
[3] லூ. 14. 18-20. 1 தீமோ. 6. 9, 17. 2 தீமோ. 4. 10
[4] நீதி. 23. 5
[5] ஏசா. 5. 2, 4
[6] யோ. 7. 4. கொலோ. 1. 10. 2 பே. 1. 8
[7] மத். 5. 15. லூ. 8. 16. ஓ
[8] பிர. 12. 14. மத். 10. 26. லூ. 12. 2. 1 கொ. 4. 5
[9] 1 பே. 2. 2
[10] மத். 7. 2
[11] லூ. 8. 18
[12] மத். 13. 24
[13] ஆதி. 1. 11, 12. பிர. 3. 1, 11
[14] வெளி. 14. 15
[15] மத். 13. 31, 32. லூ. 13. 18, 19
[16] நீதி. 4. 18. ஏசா. 11, 9. தானி. 2. 44. மல். 1. 11
[17] மத். 13. 34. யோ. 16. 12
[18] மத். 8. 18, 23. லூ. 8. 22. ஓ
[19] மத். 8. 24. லூ. 8. 23
[20] சங். 10. 1. ஏசா. 40. 27. புல. 3. 8
[21] சங். 89. 9. புல. 3. 31, 32
[22] சங். 46. 1, 2. ஏசா. 43. 2, 3
* இவர் எப்படிப்பட்டவரோ
[23] யோபு 38. 11. யோனா 1. 10, 16
[24] மத். 8. 28. ஓ. லூ. 8. 26. ஓ
[25] ஏசா. 65. 4
[26] சங். 72. 9
[27] அப். 16. 18. எபி. 2. 14. 1 யோ. 3. 8
[28] மத். 12. 45

11 அவரை மிகவும் வேண்டிக்கொண்டான். அப்
பொழுது, அவ்விடத்தில் மலையருகே அநே
கம் [1]பன்றிகள் கூட்டமாக மேய்ந்துகொண்டி
12 ருந்தது. அந்தப் பிசாசுகளெல்லாம் அவரை
நோக்கி: [2]பன்றிகளுக்குள்ளே போகும்படி,
அவைகளுக்குள்ளே எங்களை அனுப்பும் என்று
13 அவரை வேண்டிக்கொண்டன. இயேசு
அவைகளுக்கு உத்தரவு கொடுத்தவுடனே,
[3]அசுத்த ஆவிகள் புறப்பட்டுப் பன்றிகளுக்
குள் போயின; உடனே ஏறக்குறைய இரண்
டாயிரம் பன்றிகளுள்ள அந்தக் கூட்டம்
உயர்ந்த மேட்டிலிருந்து ஓடி, கடலிலே பாய்
14 ந்து, கடலில் அமிழ்ந்து மாண்டது. பன்றி
களை மேய்த்தவர்கள் ஓடி, இதைப் பட்டணத்தி
லும் சுற்றுப்புறங்களிலும் அறிவித்தார்கள்.
அப்பொழுது சம்பவித்ததைப் பார்க்கும்படி
15 ஜனங்கள் புறப்பட்டு; இயேசுவினிடத்தில்
வந்து, லேகியோனாகிய பிசாசுகள் பிடித்தி
ருந்தவன் வஸ்திரந்தரித்து, [4]உட்கார்ந்து, புத்தி
தெளிந்திருக்கிறதைக் கண்டு, [5]பயந்தார்கள்.
16 பிசாசுகள் பிடித்திருந்தவனுக்கும் பன்றிகளுக்
கும் சம்பவித்ததைக் கண்டவர்களும் அவர்க
17 ளுக்கு விவரமாய்ச் சொன்னார்கள். அப்பொ
ழுது [6]தங்கள் எல்லைகளை விட்டுப் போகும்
படி அவரை வேண்டிக்கொள்ளத் தொடங்கி
18 னார்கள். அப்படியே அவர் படவில் ஏறுகிற
பொழுது, பிசாசு பிடித்திருந்தவன், அவரோ
டேகூட இருக்கும்படித் தனக்கு உத்தரவு
கொடுக்க அவரை வேண்டிக்கொண்டான்.
19 இயேசு அவனுக்கு உத்தரவுகொடாமல்: [7]நீ
உன் இனத்தாரிடத்தில் உன் வீட்டிற்குப்
போய், கர்த்தர் உனக்கு இரங்கி, உனக்குச்
செய்தவைகளையெல்லாம் அவர்களுக்கு அறி
20 வியென்று சொன்னார். அந்தப்படி அவன்
போய், இயேசு தனக்குச் செய்தவைகளை
யெல்லாம் தெக்கப்போலி என்னும் நாட்டில்
பிரசித்தம்பண்ணத் தொடங்கினான்; எல்லா
ரும் ஆச்சரியப்பட்டார்கள்.
21 இயேசு படவில் ஏறி மறுபடியும் இக்க
ரைக்கு வந்து, [8]கடலோரத்திலிருந்தபோது,
திரளான ஜனங்கள் அவரிடத்தில் கூடிவந்
22 தார்கள். அப்பொழுது, [9]ஜெப ஆலயத்தலை
வரில் ஒருவனாகிய யவீரு என்பவன் வந்து,
அவரைக் கண்டவுடனே, அவர் பாதத்திலே
23 விழுந்து: என் குமாரத்தி [10]மரண அவஸ்
தைப்படுகிறாள், அவள் ஆரோக்கியம் அடை
யும்படிக்கு நீர் வந்து, அவள்மேல் உமது
கைகளை வையும், அப்பொழுது பிழைப்பாள்
என்று அவரை மிகவும் வேண்டிக்கொண்
24 டான். அவர் அவனோடேகூடப் போனார்.
திரளான ஜனங்கள் அவருக்குப் பின்சென்று,
அவரை நெருக்கினார்கள்.
25 அப்பொழுது [11]பன்னிரண்டு வருஷமாய்ப்
26 பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரீ, அநேக வைத்தி
யர்களால் மிகவும் வருத்தப்பட்டு, தனக்கு
உண்டானவைகளையெல்லாம் செலவழித்
தும், சற்றாகிலும் குணமடையாமல் அதிக
வருத்தப்படுகிறபொழுது, இயேசுவைக்குறி 27
த்துக் கேள்விப்பட்டு: நான் அவருடைய வஸ்
திரங்களையாகிலும் தொட்டால் சொஸ்தமா
வேன் என்று சொல்லி; ஜனக்கூட்டத்துக் 28
குள்ளே அவருக்குப் பின்னாக வந்து, அவரு
டைய வஸ்திரத்தைத் தொட்டாள். உடனே 29
அவளுடைய உதிரத்தின் ஊறல் நின்றுபோ
யிற்று; அந்த வேதனை நீங்கி ஆரோக்கிய
மடைந்ததை அவள் தன் சரீரத்தில் உணர்ந்
தாள். உடனே இயேசு தம்மிலிருந்து *வல் 30
லமை [12]புறப்பட்டதைத் தமக்குள் அறிந்து,
ஜனக்கூட்டத்துக்குள்ளே திரும்பி: என் வஸ்
திரங்களைத் தொட்டது யார் என்று கேட்டார்:
அவருடைய சீஷர்கள் அவரை நோக்கி: திர 31
ளான ஜனங்கள் உம்மை நெருக்கிக்கொண்டி
ருக்கிறதை நீர் கண்டும், என்னைத் தொட்டது
யார் என்று கேட்கிறீரே என்றார்கள். இதைச் 32
செய்தவளைக் காணும்படிக்கு அவர் சுற்றி
லும் பார்த்தார். தன்னிடத்திலே சம்பவித்த 33
தை அறிந்த அந்த ஸ்திரீயானவள் பயந்து, நடு
ங்கி, அவர் முன்பாக வந்து விழுந்து, [13]உண்
மையை யெல்லாம் அவருக்குச் சொன்னாள்.
அவர் அவளைப் பார்த்து: மகளே, [14]உன் விசு 34
வாசம் உன்னை ரட்சித்தது, [15]நீ சமாதானத்
தோடே போய், உன் வேதனை நீங்கி, சுகமா
யிரு என்றார்.
அவர் இப்படிப் பேசிக்கொண்டிருக்கை 35
யில், ஜெப ஆலயத்தலைவனுடைய வீட்டிலி
ருந்து சிலர் வந்து: [16]உம்முடைய குமாரத்தி
மரித்துப்போனாள், இனி ஏன் போதகரை
வருத்தப்படுத்துகிறீர் என்றார்கள். அவர்கள் 36
சொன்ன வார்த்தையை இயேசு கேட்டவுட
னே, ஜெப ஆலயத்தலைவனை நோக்கி: பயப்
படாதே, [17]விசுவாச முள்ளவனாயிரு என்று
சொல்லி; பேதுருவையும், [18]யாக்கோபை 37
யும், யாக்கோபின் சகோதரன் யோவானையும்
தவிர, வேறொருவரும் தம்மோடே வருகிற
தற்கு இடங்கொடாமல்; ஜெபஆலயத்தலைவ 38
னுடைய வீட்டிலே வந்து, சந்தடியையும் மிக
வும் அழுது புலம்புகிறவர்களையும் கண்டு,
உள்ளே பிரவேசித்து: நீங்கள் சந்தடிபண்ணி 39
அழுகிறதென்ன? பிள்ளை மரிக்கவில்லை, [19]நித்
திரையாயிருக்கிறாள் என்றார். அதற்காக 40
அவரைப் பார்த்து நகைத்தார்கள். எல்லாரை
யும் அவர் வெளியே போகப்பண்ணி, பிள்ளை
யின் தகப்பனையும் தாயையும் தம்மோடே வந்
தவர்களையும் அழைத்துக்கொண்டு, பிள்ளையி
ருந்த இடத்தில் பிரவேசித்து, பிள்ளையின் 41
கையைப் பிடித்து: தலீத்தாகூமி என்றார்; அத
ற்கு, [20]சிறுபெண்ணே எழுந்திரு என்று உனக்
குச் சொல்லுகிறேன் என்று அர்த்தமாம். உட 42
னே சிறுபெண் எழுந்து நடந்தாள்; அவள்
பன்னிரண்டுவயதுள்ளவளாயிருந்தாள். அவர்
கள் மிகுந்த ஆச்சரியப்பட்டுப் பிரமித்தார்கள்.
அதை ஒருவருக்கும் அறியாதபடி [21]அவர் 43
களுக்கு உறுதியாகக் கட்டளையிட்டு, அவளு
க்கு ஆகாரம் கொடுக்கும்படி சொன்னார்.

1 லேவி. 11. 7, 8. உபா. 14. 8
2 யோபு 1. 10, 12: 2. 5, 6
3 1 பே. 3. 22. வெளி. 18. 7
4 ஏசா. 49. 25. கொலோ. 1, 13
5 யோபு 13. 11. சங். 14. 5, 2தெச. 1. 7
6 யோபு 21. 14. லூ. 5. 8. அப். 16. 39
7 சங். 66. 16. ஏசா. 38. 19
8 மத். 9. 1. லூ. 8. 40
9 மத். 9. 18. ழ. லூ. 8. 41. ழ
10 சங். 107. 18
11 லேவி. 15. 25. ழ. மத். 9. 20
* சக்தி
12 லூ. 6. 19: 8. 46
13 சங். 30. 2
14 10. 52. அப். 14. 9
15 1 சாமு. 1. 17: 20. 42. 2 இரா. 5. 19
16 யோ. 5. 25: 11. 25
17 2 நாளா. 20. 20. யோ. 11. 40
18 9. 2: 14. 33
19 யோ. 11. 11–13
20 அப். 9. 40
21 3. 12. மத். 8. 4: 12. 16, 18. லூ. 5. 14

**6** அவர் அவ்விடம் விட்டுப் புறப்பட்டு,
[1]தாம் வளர்ந்த ஊருக்கு வந்தார்; அவருடைய
2 சீஷரும் அவரோடேகூட வந்தார்கள். ஓய்
வுநாளானபோது, ஜெப ஆலயத்தில் உபதே
சம் பண்ணத் தொடங்கினார். அநேகர் கேட்
டு, ஆச்சரியப்பட்டு, [2]இவைகள் இவனுக்கு
எங்கேயிருந்து வந்தது? இவன் கைகளினால்
இப்படிப்பட்ட பலத்த செய்கைகள் நடக்கும்
படி இவனுக்குக் கொடுக்கப்பட்ட ஞானம்
3 எப்படிப்பட்டது? இவன் தச்சன் அல்லவா?
[3]மரியாளுடைய குமாரன் அல்லவா? யாக்
கோபு யோசே யூதா சீமோன் என்பவர்களுக்
குச் சகோதரன் அல்லவா? இவன் சகோதரிக
ளும் இங்கே நம்மிடத்தில் இருக்கிறார்கள்
அல்லவா? என்று சொல்லி, [4]அவரைக் குறி
4 த்து இடறலடைந்தார்கள். இயேசு அவர்
களை நோக்கி: [5]தீர்க்கதரிசி ஒருவன் தன் ஊரி
லும் தன் இனத்திலும் தன் வீட்டிலுமேயன்றி
வேறெங்கும் கனவீனமடையான் என்றார்.
5 அங்கே அவர் சில நோயாளிகள்மேல் கைகளை
வைத்து, அவர்களைக் குணமாக்கினதேயன்றி,
[6]வேறொரு அற்புதமும் *செய்யக்கூடாமல்,
6 அவர்களுடைய அவிசுவாசத்தைக்குறித்து
ஆச்சரியப்பட்டு; [7]கிராமங்களிலே சுற்றித்
திரிந்து, உபதேசம்பண்ணினார்.
7 அவர் பன்னிருவரையும் அழைத்து, [8]அசு
த்த ஆவிகளைத் துரத்த அவர்களுக்கு அதிகா
8 ரங்கொடுத்து, வழிக்குப் பையையாகிலும்,
அப்பத்தையாகிலும், கச்சையில் காசையாகி
லும், எடுத்துக்கொண்டு போகாமல், ஒரு தடி
யைமாத்திரம் எடுத்துக்கொண்டு போகவும்;
9 பாதரட்சைகளைப் [9]போட்டுக்கொண்டுபோக
வும், இரண்டு அங்கிகளைத் தரியாதிருக்கவும்,
10 கட்டளையிட்டார். பின்பு அவர்களை நோக்கி:
நீங்கள் எங்கேயாகிலும் ஒரு வீட்டில் பிரவே
சித்தால், [10]அவ்விடத்தைவிட்டுப் புறப்படுகிற
வரைக்கும் அங்கேதானே தங்கியிருங்கள்.
11 எவர்களாகிலும் உங்களை ஏற்றுக்கொள்ளாம
லும், உங்கள் வசனங்களைக் கேளாமலும் இருந்
தால், நீங்கள் அவ்விடம் விட்டுப் புறப்படும்
போது, [11]அவர்களுக்குச் சாட்சியாக உங்கள்
கால்களின் கீழே படிந்த தூசியை உதறிப்
போடுங்கள். நியாயத்தீர்ப்புநாளிலே அந்தப்
பட்டணத்திற்கு நேரிடுவதைப்பார்க்கிலும்
சோதோம் கொமோரா பட்டணத்திற்கு நேரி
டுவது இலகுவாயிருக்கும் என்று மெய்யாக
வே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று
சொல்லி, அவர்களை இரண்டு இரண்டுபே
12 ராக அனுப்பினார். அவர்கள் புறப்பட்டுப்
போய்: [12]மனந்திரும்புங்கள் என்று பிரசங்கித்
13 து; அநேகம் பிசாசுகளைத் துரத்தி, [13]அநேகம்
நோயாளிகளை எண்ணெய் பூசிச் சொஸ்த
மாக்கினார்கள்.
14 அவருடைய பேர் பிரசித்தமானபடியினால்,
ஏரோதுராஜா அவரைக்குறித்துக் கேள்விப்
பட்டு: [14]யோவான்ஸ்நானன் மரித்தோரிலிரு
ந்து எழுந்தான், ஆகையால் அவனிடத்தில்

இந்தப் பலத்த செய்கைகள் விளங்குகிறது
என்றான். சிலர்: [15]அவர் எலியா என்றார்கள். 15
வேறு சிலர்: அவர், ஒரு தீர்க்கதரிசி, அல்லது
தீர்க்கதரிசிகளில் ஒருவனைப்போ லிருக்கிறா
ரென்று சொன்னார்கள். ஏரோது அதைக் 16
கேட்டபொழுது: அவன் நான் சிரச்சேதம்
பண்ணின யோவான்தான்; அவன் மரித்தோ
ரிலிருந்து எழுந்தான் என்றான். ஏரோது 17
தன் சகோதரனாகிய பிலிப்புவின் மனைவி
ஏரோதியாளைத் தனக்கு மனைவியாக்கிக்கொ
ண்டபோது, யோவான் ஏரோதை நோக்கி: 18
[16]நீர் உம்முடைய சகோதரன் மனைவியைவைத்
துக்கொள்வது நியாயமல்லவென்று சொன்ன
தினிமித்தம், ஏரோது சேவகரை அனுப்பி,
யோவானைப் பிடித்துக் கட்டிக் காவலில்
வைத்திருந்தான். ஏரோதியாளும் அவனுக் 19
குச் சதிநினைத்து, அவனைக் கொன்றுபோட
மனதாயிருந்தாள்; ஆகிலும் அவளால் கூடா
மற்போயிற்று. அதேனென்றால் யோவான் 20
நீதியும் பரிசுத்தமுமுள்ளவனென்று ஏரோது
அறிந்து, [17]அவனுக்குப் பயந்து, †அவனைப்
பாதுகாத்து, அவன் யோசனையின்படி அநேக
காரியங்களைச் செய்து, விருப்பத்தோடே
அவன் சொல்லைக் கேட்டுவந்தான். பின்பு 21
சமயம் வாய்த்தது; எப்படியென்றால், [18]ஏரோ
து தன் ஜென்மநாளிலே தன்னுடைய பிரபுக்
களுக்கும், சேனாதிபதிகளுக்கும், கலிலேயா
நாட்டின் பிரதான மனுஷருக்கும் ஒரு விரு
ந்து பண்ணினபோது, ஏரோதியாளின் 22
குமாரத்தி[19]சபைநடுவே வந்து நடனம்பண்ணி,
ஏரோதுவையும் அவனோடேகூடப் பந்தியி
ருந்தவர்களையும் சந்தோஷப்படுத்தினாள். அப்
பொழுது, ராஜா சிறுபெண்ணை நோக்கி: உன
க்கு வேண்டியதை என்னிடத்தில் கேள்,
அதை உனக்குத்தருவேன் என்று சொன்னது
மல்லாமல்; நீ என்னிடத்தில் எதைக் கேட்டா 23
லும், [20]அது என் ராஜ்யத்தில் பாதியானாலும்,
அதை உனக்குத் தருவேன் என்று அவளுக்கு
ஆணையும் இட்டான். அப்பொழுது, அவள் 24
வெளியே போய், நான் என்ன கேட்கவேண்
டும் என்று தன் தாயினிடத்தில் கேட்டாள்.
அதற்கு அவள்: யோவான்ஸ்நானனுடைய
தலையைக் கேள் என்றாள். உடனே அவள் 25
ராஜாவினிடத்தில் சீக்கிரமாய் வந்து: [21]நீர் இப்
பொழுதே ஒரு தாலத்தில் யோவான்ஸ்நான
னுடைய தலையை எனக்குத் தரவேண்டும்
என்றுகேட்டாள். அப்பொழுது ராஜா மிகுந்த 26
துக்கமடைந்தான்; ஆகிலும், ஆணையினிமித்த
மும், [22]கூடப் பந்தியிருந்தவர்களினிமித்தமும்,
அவளுக்கு அதை மறுக்க மனதில்லாமல்;
உடனே அவனுடைய தலையைக் கொண்டு 27
வரும்படி சேவகனுக்குக் கட்டளையிட்டு அனு
ப்பினான். அந்தப்படி அவன் போய், காவற் 28
கூடத்திலே அவனைச் சிரச்சேதம்பண்ணி,
அவன் தலையை ஒரு தாலத்திலே கொண்டு
வந்து, அதை அந்தச் சிறுபெண்ணுக்குக் கொ
டுத்தான்; அந்தச் சிறுபெண் அதைத் தன் தா

1 மத். 13. 54. ழ. லூ. 4. 16. ழ
2 யோ. 6. 42
3 மத். 12. 46. கலா. 1. 19
4 மத். 11. 6
5 மத். 13. 57. யோ. 4. 44
6 9. 23. ஆதி. 19. 22
* ஏதுவில்லாமல்
7 ஏசா. 59. 16. மத். 9. 35. லூ. 13. 22. அப். 10. 38
8 3. 13. ழ. மத். 10. 1. ழ. லூ. 9. 1. ழ: 10. 3. ழ
9 அப். 12. 8. எபே. 6. 15
10 மத். 10. 11. லூ. 9. 4
11 நெகே. 5. 13. அப். 13. 51
12 லூ. 24. 47. அப். 2. 38: 3. 19
13 யாக். 5. 14
14 மத். 14. 1. ழ. லூ. 9. 7. ழ
15 8. 28. மத். 16. 14
16 லேவி. 18. 16: 20. 21
17 மத். 11. 3. எசே. 2. 5-7
† அவனை அடக்கத்தில் வைத்து, அவன் சொன்னதைப் பற்றி மனக்கலக்க முற்று
18 ஆதி. 40. 20. மத். 14. 6
19 ஏசா. 3. 16
20 எஸ்தர் 5. 3, 6: 7. 2
21 சங். 37. 12, 14
22 மத். 14. 9

29 யினிடத்தில் கொடுத்தாள். அவனுடைய
சீஷர்கள் அதைக் கேள்விப்பட்டு வந்து,
[1]அவன் உடலை எடுத்து, ஒரு கல்லறையில்
வைத்தார்கள்.
30 அப்பொழுது, அப்போஸ்தலர் இயேசுவி
னிடத்தில் கூடிவந்து, [2]தாங்கள் செய்தவை
கள் உபதேசித்தவைகள் யாவையும் அவருக்கு
31 அறிவித்தார்கள். அவர் அவர்களை நோக்கி:
[3]வனாந்தரமான ஓரிடத்தில் தனித்து சற்றே
இளைப்பாறும்படி போவோம் வாருங்கள் என்
றார்; ஏனெனில், வருகிறவர்களும் போகிற
வர்களும் அநேகரா யிருந்தபடியினால் போஜ
னம்பண்ணுகிறதற்கும் அவர்களுக்குச் சமய
32 மில்லாதிருந்தது. அப்படியே அவர்கள் தனி
மையாய் ஒரு படவில் ஏறி வனாந்தரமான ஓர்
33 இடத்திற்குப் போனார்கள். அவர்கள் புறப்
பட்டுப்போகிறதை ஜனங்கள் கண்டார்கள்.
அவரை அறிந்த அநேகர் சகல பட்டணங்க
ளிலுமிருந்து *கால்நடையாய் அவ்விடத்திற்கு
ஓடி, அவர்களுக்கு முன்னே அங்கே சேர்ந்து,
34 அவரிடத்தில் கூடிவந்தார்கள். இயேசு கரை
யில் வந்து, அநேக ஜனங்களைக் கண்டு, [4]அவர்
கள் மேய்ப்பனில்லாத ஆடுகளைப்போலிருந்த
படியால், அவர்கள்மேல் மனதுருகி, அநேக
காரியங்களை அவர்களுக்கு உபதேசிக்கத்
35 தொடங்கினார். வெகுநேரம் சென்றபின்பு,
[5]அவருடைய சீஷர்கள் அவரிடத்தில் வந்து:
இது வனாந்தரமான இடம், வெகுநேரமுமா
36 யிற்று; புசிக்கிறதற்கும் இவர்களிடத்தில்
ஒன்றுமில்லை; ஆகையால் இவர்கள் சுற்றியி
ருக்கிற கிராமங்களுக்கும் ஊர்களுக்கும்போய்,
தங்களுக்காக அப்பங்களை வாங்கிக்கொள்ளும்
படி இவர்களை அனுப்பிவிடவேண்டும் என்
37 றார்கள். அவர் அவர்களை நோக்கி: நீங்களே
அவர்களுக்குப் போஜனங்கொடுங்கள் என்
றார். அதற்கு அவர்கள்: [6]நாங்கள் போய், இரு
நூறு †பணத்துக்கு அப்பங்களை வாங்கி இவர்
களுக்குப் புசிக்கும்படி ‡கொடுக்கக்கூடுமோ
38 என்றார்கள். அதற்கு அவர்: உங்களிடத்தில்
எத்தனை அப்பங்களுண்டு, போய்ப் பாருங்கள்
என்றார். அவர்கள் பார்த்துவந்து: ஐந்து அப்
பங்களும், இரண்டு மீன்களும் உண்டு என்றார்
39 கள். அப்பொழுது எல்லாரையும் பசும் புல்
லின்மேல் பந்திபந்தியாக உட்காரவைக்கும்
40 படி [7]அவர்களுக்குக் கட்டளையிட்டார். அப்
படியே வரிசை வரிசையாய், நூறுநூறுபேரா
கவும் ஐம்பதைம்பதுபேராகவும், உட்கார்ந்தார்
41 கள். அவர் அந்த ஐந்து அப்பங்களையும்,
அந்த இரண்டுமீன்களையும் எடுத்து, வானத்தை
அண்ணாந்துபார்த்து, [8]ஆசீர்வதித்து, அப்பங்
களைப் பிட்டு, அவர்களுக்குப் பரிமாறும்படி
தம்முடைய சீஷர்களிடத்தில் கொடுத்தார்.
அப்படியே இரண்டு மீன்களையும் எல்லாருக்
42 கும் பங்கிட்டார். எல்லாரும் சாப்பிட்டுத்
43 [9]திருப்தியடைந்தார்கள். மேலும் அப்பங்களி
லும் மீன்களிலும் மீதியான துணிக்கைகளைப்
பன்னிரண்டு கூடைநிறைய எடுத்தார்கள்.
அப்பம் சாப்பிட்ட புருஷர் ஏறக்குறைய ஐயா 44
யிரம்பேராயிருந்தார்கள்.
அவர் ஜனங்களை அனுப்பிவிடுகையில், தம் 45
முடைய சீஷர்கள் படவில் ஏறி அக்கரையில்
பெத்சாயிதாவுக்கு எதிராக, [10]தமக்குமுன்னே
போகும்படி அவர்களைத் துரிதப்படுத்தினார்.
அவர் ஜனங்களை அனுப்பிவிட்ட பின்பு, 46
[11]ஜெபம்பண்ணும்படி ஒரு மலையின்மேல் ஏறி
னார். சாயங்காலமானபோது படவு நடுக்கட 47
லிலிருந்தது; [21]அவரோ கரையிலே தனிமை
யாயிருந்தார். அப்பொழுது காற்று அவர்க 48
ளுக்கு எதிராயிருந்தபடியினால், அவர்கள் தண்
டுவலிக்கிறதில் வருத்தப்படுகிறதை அவர்
கண்டு, இராத்திரியில் நாலாம் ஜாமத்தில் கட
லின்மேல் நடந்து அவர்களிடத்தில் வந்து,
[13]அவர்களைக் கடந்துபோகிறவர்போல் காணப்
பட்டார். அவர் கடலின்மேல் நடக்கிறதை 49
அவர்கள் கண்டு, [14]ஆவேசம் என்று எண்ணி,
சத்தமிட்டு அலறினார்கள். அவர்களெல்லா 50
ரும் அவரைக் கண்டு கலக்கமடைந்தார்கள்.
உடனே அவர் அவர்களோடே பேசி: திடன்
கொள்ளுங்கள், [15]நான்தான், பயப்படாதிருங்
கள் என்று சொல்லி, அவர்கள் இருந்த பட 51
வில் ஏறினார். [16]அப்பொழுது காற்று அமர்ந்
தது; அதினால் அவர்கள் தங்களுக்குள்ளே
மிகவும் பிரமித்து ஆச்சரியப்பட்டார்கள்.
அவர்களுடைய இருதயம் [17]கடினமுள்ளதா 52
யிருந்தபடியினால் அப்பங்களைக்குறித்து அவர்
கள் உணராமற்போனார்கள்.
அவர்கள் கடலைக் கடந்து [18]கெனேசரேத் 53
தென்னும் நாட்டிற்கு வந்து, கரைபிடித்தார்
கள். அவர்கள் படவிலிருந்து இறங்கினவுட 54
னே, ஜனங்கள் அவரை அறிந்து, அந்தச் 55
சுற்றுப்புறமெங்கும் ஓடித்திரிந்து, [19]பிணி
யாளிகளைப் படுக்கைகளில் கிடத்தி, அவர்
வந்திருக்கிறாரென்று கேள்விப்பட்ட இடங்
களிலெல்லாம் சுமந்துகொண்டு வந்தார்கள்.
அல்லாமலும் அவர் பிரவேசித்த கிராமங்கள் 56
பட்டணங்கள் நாடுகள் எவைகளோ, அவை
களின் சந்தைவெளிகளிலே வியாதிக்காரரை
வைத்து, [20]அவருடையவஸ்திரத்தின் ஓரத்தை
யாகிலும் அவர்கள் தொடும்படி உத்தரவாக
வேண்டும் என்று அவரை வேண்டிக்கொண்
டார்கள்; அவரைத் தொட்ட யாவரும் சொஸ்
தமானார்கள்.
எருசலேமிலிருந்து வந்த பரிசேயரும், 7
[21]வேதபாரகரில் சிலரும் அவரிடத்தில் கூடி
வந்தார்கள். அப்பொழுது அவருடைய சீஷ 2
ரில் சிலர் கழுவாத அசுத்த கைகளாலே போஜ
னம்பண்ணுகிறதை அவர்கள் கண்டு குற்றம்
பிடித்தார்கள். ஏனெனில் பரிசேயர் முத 3
லிய யூதர் அனைவரும் முன்னோர்களின் [22]பாரம்
பரியத்தைக் கைக்கொண்டு, அடிக்கடி கைகழு
வினாலொழிய சாப்பிடமாட்டார்கள். கடை 4
யிலிருந்து வரும்போதும் [23]ஸ்நானம் பண்ணா
மல் சாப்பிடமாட்டார்கள். அப்படியே செம்
புகளையும் கிண்ணங்களையும் செப்புக்குடங்க

[1] அப். 8. 2
[2] லூ. 9. 10
[3] மத். 14. 13. மு. லூ. 9.10. மு. யோ. 6, 1. மு
* கரை வழியாய். மத். 14. 13
[4] 1 இரா. 22. 17. மத். 9. 36
[5] மத். 14. 15. மு. லூ. 9.12. மு. யோ. 6, 5. மு
[6] எண். 11. 13-22. 2 இரா. 4. 43
† மத். 18. 28. காசுக
‡ கொடுக்கவேண்டுமோ
[7] 8. 6. மத். 15. 35
[8] 1 சாமு. 9. 13. மத். 26. 26. லூ. 24. 30
[9] உபா. 8. 3
[10] மத். 14. 22. மு. யோ. 6, 17. மு
[11] 1, 35. மத். 6, 6. லூ. 6. 12
[12] மத். 14. 23
[13] லூ. 24, 28.
[14] யோபு 9. 8. லூ. 24. 37
[15] யாத். 3. 14: 6. 3. ஏசா. 43. 2
[16] சங். 93. 3, 4
[17] 8. 17, 18. ஏசா. 63. 17
[18] மத். 14. 34
[19] 2. 1-3. மத். 4. 24
[20] 5. 27, 28. மத். 9. 20. அப். 19. 12
[21] மத். 15, 1. மு
[22] கலா. 1. 14. கொலோ. 2. 8, 22, 23
[23] யோபு 9. 30, 31

ளையும் மணைகளையும் கழுவுகிறதுமல்லாமல்,
வேறு அநேக ஆசாரங்களையும் கைக்கொண்டு
5 வருவார்கள். அப்பொழுது, அந்தப் பரிசே
யரும் வேதபாரகரும் அவரை நோக்கி: [1]உம்
முடைய சீஷர்கள் முன்னோர்களின் பாரம்
பரியத்தை மீறி, ஏன் கைகழுவாமல் சாப்பிடு
6 கிறார்கள் என்று கேட்டார்கள். அவர்களுக்கு
அவர் பிரதியுத்தரமாக: [2]இந்த ஜனங்கள் தங்
கள் உதடுகளினால் என்னைக் கனம் பண்ணு
கிறார்கள்; அவர்கள் இருதயமோ எனக்குத்
7 தூரமாய் விலகியிருக்கிறது என்றும், மனு
ஷருடைய கற்பனைகளை உபதேசங்களாகப்
போதித்து, வீணாய் எனக்கு ஆராதனை செய்
கிறார்கள் என்றும், எழுதியிருக்கிறபிரகாரம்,
மாயக்காரராகிய உங்களைக்குறித்து, ஏசாயா
நன்றாய்த் தீர்க்கதரிசனம் சொல்லியிருக்கி
8 றான். நீங்கள் தேவனுடைய கட்டளையைத்
தள்ளிவிட்டு, [3]மனுஷருடைய பாரம்பரியத்
தைக் கைக்கொண்டுவருகிறவர்களாய், கிண்
ணங்களையும் செம்புகளையும் கழுவுகிறீர்கள்;
மற்றும் இப்படிப்பட்ட அநேக சடங்குகளை
யும் அனுசரித்து வருகிறீர்கள் என்றார்.
9 பின்னும் அவர் அவர்களை நோக்கி: நீங்கள்
உங்கள் பாரம்பரியத்தைக் கைக்கொள்ளும்
படிக்கு தேவனுடைய கட்டளைகளை வியர்த்த
10 மாக்கினது நன்றாயிருக்கிறது. எப்படியெ
னில், [4]உன் தகப்பனையும் உன் தாயையும்
கனம்பண்ணுவாயாக என்றும், [5]தகப்பனையா
வது தாயையாவது நிந்திக்கிறவன் கொல்லப்
படவேண்டும் என்றும், மோசே சொல்லி
11 யிருக்கிறாரே. நீங்களோ, ஒருவன் தன் தகப்
பனையாவது தாயையாவது நோக்கி: [6]உனக்கு
நான் செய்யத்தக்க உதவி எது உண்டோ,
அதைக் கொர்பான் என்னும் காணிக்கையாகக்
கொடுக்கிறேன் என்று சொல்லிவிட்டால் அவ
னுடைய கடமை தீர்ந்தது என்று சொல்லி,
12 அவனை இனி தன் தகப்பனுக்காவது தன்
தாய்க்காவது யாதொரு உதவியும் செய்யவொட்
13 டாமல்; நீங்கள் போதித்த உங்கள் பாரம்பரி
யத்தினால் தேவவசனத்தை அவமாக்குகிறீர்
கள். இதுபோலவே நீங்கள் மற்றும் அநேக
காரியங்களையும் செய்கிறீர்கள் என்று சொன்
14 னார். பின்பு அவர் ஜனங்களெல்லாரையும்
வரவழைத்து அவர்களை நோக்கி: [7]நீங்கள்
எல்லாரும் எனக்குச் செவிகொடுத்து உண
15 ருங்கள். மனுஷனுக்குப் புறம்பே இருந்து
அவனுக்குள்ளே போகிறதொன்றும் அவ
னைத் தீட்டுப்படுத்தமாட்டாது; அவன் உள்
ளத்திலிருந்து புறப்படுகிறவைகளே அவ
16 னைத் தீட்டுப்படுத்தும். கேட்கிறதற்கு ஒரு
வன் காதுள்ளவனாயிருந்தால் கேட்கக்கடவன்
17 என்றார். அவர் ஜனங்களைவிட்டு வீட்டுக்குள்
பிரவேசித்தபோது, [8]அவருடைய சீஷர்கள்
அவர் சொன்ன உவமையைக்குறித்து அவரி
18 டத்தில் விசாரித்தார்கள். அதற்கு அவர்: நீங்
களும் இவ்வளவு உணர்வில்லாதவர்களா?
புறம்பேயிருந்து மனுஷனுக்குள்ளே போகிற

1 மத். 15. 2
2 ஏசா. 29. 13. மத். 15. 8
3 எசே. 1. 12.
4 யாத். 20. 12 உபா. 5. 16
5 யாத். 21. 17. லேவி. 20. 9. நீதி. 20. 20
6 மத். 15. 5: 23. 18
7 நீதி. 8. 5. ஏசா. 6. 9: அப். 8. 30. மத். 11. 15: 15. 10
8 மத். 15. 15. ஞ
9 1 கொ. 6. 13
10 ஆதி. 6. 5. சங். 14. 1, 3: 53. 1, 3. எரே. 17. 9
11 மத். 15. 21. ஞ
12 2. 1
13 மத். 7. 6: 10. 5, 6
* ஆம்
14 ரோ. 15. 8, 9. எபே. 2. 12-14
15 ஏசா. 66. 2
16 1 யோ. 3. 8
17 மத். 15. 29. ஞ
18 மத். 9. 32. லூக். 11. 14
19 8. 23. யோ. 9. 6
20 6. 41. யோ. 11. 41: 17. 1
21 யோ. 11. 33, 38

தொன்றும், அவனைத் தீட்டுப்படுத்தமாட்டா
தென்று நீங்கள் அறிந்துகொள்ளவில்லையா?
அது அவன் இருதயத்தில் போகாமல் [9]வயிற் 19
றிலே போகிறது; அதிலிருந்து எல்லாப்
போஜனங்களின் அசுத்தங்களையும் கழிக்கிற
ஆசனவழியாய் நீங்கிப்போகும். மனுஷனுக் 20
குள்ளே இருந்து புறப்படுகிறதே மனுஷனைத்
தீட்டுப்படுத்தும். எப்படியெனில், [10]மனுஷ 21
ருடைய இருதயத்திற்குள்ளிருந்து பொல்
லாத சிந்தனைகளும், விபசாரங்களும், வேசித்
தனங்களும், கொலைபாதகங்களும், களவுக 22
ளும், பொருளாசைகளும், துஷ்டத்தனங்
களும், கபடும், காமவிகாரமும், வன்கண்
ணும் தூஷணமும், பெருமையும், மதிகேடும்
புறப்பட்டு வரும். பொல்லாங்கானவைகளா 23
கிய இவைகளெல்லாம் உள்ளத்திலிருந்து புறப்
பட்டு மனுஷனைத் தீட்டுப்படுத்தும் என்றார்.
பின்பு, [11]அவர் எழுந்து அவ்விடம் விட்டுப் 24
புறப்பட்டு, தீரு சீதோன் பட்டணங்களின்
எல்லைகளில் போய், ஒரு வீட்டுக்குள் பிரவே
சித்து, ஒருவரும் அதை அறியாதிருக்க விரும்
பியும், [12]அவர் மறைவாயிருக்கக் கூடாமற்போ
யிற்று. அசுத்தஆவி பிடித்திருந்த ஒரு சிறு 25
பெண்ணின் தாயாகிய ஒரு ஸ்திரீ அவரைக்
குறித்துக் கேள்விப்பட்டு, வந்து அவர் பாதத்
தில் விழுந்தாள். அந்த ஸ்திரீ சீரோபேனிக் 26
கியா தேசத்தாளாகிய கிரேக்க ஸ்திரீயாயிருந்
தாள்; அவள் தன் மகளைப் பிடித்திருந்த பிசா
சைத் துரத்திவிடவேண்டுமென்று அவரை
வேண்டிக்கொண்டாள். இயேசு அவளை 27
நோக்கி: முந்திப் பிள்ளைகள் திருப்தியடை
யட்டும்; [13]பிள்ளைகளின் அப்பத்தை எடுத்து
நாய்க்குட்டிகளுக்குப் போடுகிறது நல்லதல்ல
என்றார். அதற்கு அவள்: *மெய்தான், 28
ஆண்டவரே, [14]ஆகிலும், மேஜையின் கீழிருக்
கும் நாய்க்குட்டிகள் பிள்ளைகள் சிந்துகிற
துணிக்கைகளைத் தின்னுமே என்றாள். அப் 29
பொழுது, அவர்: [15]நீ சொன்ன அந்த வார்த்
தையினிமித்தம் போகலாம்; பிசாசு உன்
மகளை விட்டு நீங்கிப்போயிற்று என்றார்.
அவள் தன் வீட்டுக்கு வந்தபொழுது, [16]பிசாசு 30
போய்விட்டதையும், தன் மகள் கட்டிலில்
படுத்திருக்கிறதையும் கண்டாள்.
மறுபடியும், [17]அவர் தீரு சீதோன் பட்ட 31
ணங்களின் எல்லைகளை விட்டுப் புறப்பட்டு,
தெக்கப்போலியின் எல்லைகளின் வழியாய்க்
கலிலேயாக் கடலருகே வந்தார். அங்கே 32
கொன்னைவாயுடைய ஒரு செவிடனை அவரி
டத்தில் கொண்டுவந்து, [18]அவர் தமது கையை
அவன்மேல் வைக்கும்படி வேண்டிக்கொண்
டார்கள். அப்பொழுது, அவர் அவனை ஜனக் 33
கூட்டத்தை விட்டுத் தனியே அழைத்துக்
கொண்டுபோய், தம்முடைய விரல்களை அவன்
காதுகளில் வைத்து, [19]உமிழ்ந்து, அவனுடைய
நாவைத் தொட்டு; வானத்தை [20]அண்ணாந்து 34
பார்த்து, [21]பெருமூச்சுவிட்டு: எப்பத்தா என்
றார்; அதற்குத் திறக்கப்படுவாயாக என்று

35 அர்த்தமாம். உடனே அவனுடைய செவி
கள் திறக்கப்பட்டு, [1]அவனுடைய நாவின்
கட்டும் அவிழ்ந்து, அவன் செவ்வையாய்ப்
36 பேசினான். அதை ஒருவருக்கும் சொல்ல
வேண்டாமென்று அவர்களுக்குக் கட்டளை
யிட்டார்; ஆகிலும் எவ்வளவு அதிகமாய் அவர்
களுக்குக் கட்டளையிட்டாரோ, அவ்வளவு
அதிகமாய் அவர்கள் அதைப் பிரசித்தம்பண்
37 ணி, எல்லாவற்றையும் நன்றாய்ச் செய்தார்;
[2]செவிடர் கேட்கவும், ஊமையர் பேசவும்
பண்ணுகிறார் என்று சொல்லி, மேன்மேலும்
ஆச்சரியப்பட்டார்கள்.

8 அந்த நாட்களிலே திரளான ஜனங்கள்
கூடிவந்திருக்கையில், [3]அவர்கள் சாப்பிடுகிற
தற்கு ஒன்றுமில்லாதபோது, இயேசு தம்மு
2 டைய சீஷரை அழைத்து: ஜனங்களுக்கா
கப் [4]பரிதபிக்கிறேன், இவர்கள் இப்பொழுது
என்னிடத்தில் தங்கியிருந்த மூன்றுநாளாய்ச்
3 சாப்பிட ஒன்றுமில்லாதிருக்கிறார்கள். இவர்
களில் சிலர் தூரத்திலிருந்து வந்தவர்களானப
யால், நான் இவர்களைப் பட்டினியாய் வீட்
டிற்கு அனுப்பிவிட்டால் வழியில் சோர்ந்து
4 போவார்களே என்றார். அதற்கு அவருடைய
சீஷர்கள்: [5]இந்த வனாந்தரத்திலே ஒருவன்
எங்கேயிருந்து அப்பங்களைக் கொண்டுவந்து
இத்தனை பேர்களைத் திருப்தியாக்கக்கூடும்
5 என்றார்கள். அதற்கு அவர்: [6]உங்களிடத்
தில் எத்தனை அப்பங்கள் உண்டு என்று கேட்
டார். அவர்கள்: ஏழு அப்பங்கள் உண்டு
என்றார்கள்.
6 அப்பொழுது அவர் ஜனங்களைத் தரையிலே
பந்தியிருக்கக் கட்டளையிட்டு, அந்த ஏழு அப்
பங்களையும் எடுத்து, ஸ்தோத்திரம்பண்ணி,
பிட்டு, அவர்களுக்குப் பரிமாறும்படி சீஷர்க
ளிடத்தில் கொடுத்தார்; அவர்கள் ஜனங்களுக்
7 குப் பரிமாறினார்கள். சில சிறுமீன்களும்
அவர்களிடத்தில் இருந்தது; [7]அவர் அவைக
ளையும் ஆசீர்வதித்து அவர்களுக்குப் பரிமாறும்
8 படி சொன்னார். அவர்கள் சாப்பிட்டுத் திருப்தி
யடைந்தார்கள்; [8]மீதியான துணிக்கைகளை
9 ஏழு கூடைநிறைய எடுத்தார்கள். சாப்பிட்
டவர்கள் ஏறக்குறைய நாலாயிரம்பேராயிருந்
தார்கள். பின்பு அவர் அவர்களை அனுப்பி
10 விட்டார். உடனே அவர் தம்முடைய சீஷ
ரோடே கூடப் படவில் ஏறி, [9]தல்மனூத்தா
வின் எல்லைகளில் வந்தார்.
11 அப்பொழுது பரிசேயர் வந்து அவரோடே
தர்க்கிக்கத் தொடங்கி, [10]அவரைச் சோதிக்கும்
படி, வானத்திலிருந்து ஒரு அடையாளத்தைக்
காண்பிக்கவேண்டும் என்று கேட்டார்கள்.
12 அவர் தம்முடைய ஆவியில் பெருமூச்சுவிட்
டு: இந்தச் சந்ததியார் அடையாளம் தேடுகிற
தென்ன? இந்தச் சந்ததியாருக்கு ஒரு அடை
யாளமும் கொடுக்கப்படுவ தில்லையென்று
மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்
13 என்று சொல்லி, அவர்களை விட்டு மறுபடி
யும் படவில் ஏறி, அக்கரைக்குப் போனார்.

சீஷர்கள் அப்பங்களைக் கொண்டுவர மறந் 14
துபோனார்கள், [11]படவிலே அவர்களிடத்தில்
ஒரு அப்பமாத்திரம் இருந்தது. அவர் அவர் 15
களை நோக்கி: [12]நீங்கள் பரிசேயருடைய புளித்
தமாவைக்குறித்தும் ஏரோதின் புளித்தமாவை
க்குறித்தும் எச்சரிக்கையாயிருங்கள் என்று
கற்பித்தார். அதற்கு அவர்கள்: நம்மிடத்தில் 16
அப்பங்கள் இல்லாதபடியால் இப்படிச் சொல்
லுகிறார் என்று தங்களுக்குள்ளே யோசனை
பண்ணிக்கொண்டார்கள். இயேசு அதை அறி 17
ந்து, அவர்களை நோக்கி: [13]உங்களிடத்தில் அப்
பங்கள் இல்லாதபடியினால் நீங்கள் யோசனை
பண்ணுகிறதென்ன? இன்னும் சிந்தியாமலும்
உணராமலும் இருக்கிறீர்களா? இன்னும் உங்
கள் இருதயம் கடினமாயிருக்கிறதா? உங்க 18
ளுக்குக் கண்களிருந்தும் காணாதிருக்கிறீர்
களா? [14]காதுகளிருந்தும் கேளாதிருக்கிறீர்
களா? [15]நினைவு கூராமலுமிருக்கிறீர்களா? 19
நான் ஐந்து அப்பங்களை ஐயாயிரம்பேருக்குப்
பங்கிட்டபோது, [16]மீதியான துணிக்கைகளை
எத்தனை கூடை நிறைய எடுத்தீர்கள் என்று
கேட்டார். பன்னிரண்டு என்றார்கள். நான் 20
ஏழு அப்பங்களை நாலாயிரம்பேருக்குப் பங்
கிட்டபோது, [17]மீதியான துணிக்கைகளை எத்
தனை கூடைநிறைய எடுத்தீர்கள் என்று கேட்
டார். ஏழு என்றார்கள். அப்படியானால், நீங் 21
கள் உணராதிருக்கிறது எப்படி என்றார்.
பின்பு அவர் பெத்சாயிதா ஊருக்கு வந்தார்; 22
[18]அப்பொழுது ஒரு குருடனை அவரிடத்தில்
கொண்டுவந்து, அவனைத் தொடும்படி அவ
ரை வேண்டிக்கொண்டார்கள். அவர் குரு 23
டனுடைய கையைப் பிடித்து, [19]அவனைக்
கிராமத்துக்கு வெளியே அழைத்துக்கொண்டு
போய், அவன் கண்களில் உமிழ்ந்து, அவன்
மேல் கைகளை வைத்து: எதையாகிலும் காண்
கிறாயா என்று கேட்டார். அவன் ஏறிட்டுப் 24
பார்த்து: [20]நடக்கிற மனுஷரை மரங்களைப்
போலக் காண்கிறேன் என்றான். பின்பு 25
அவர் மறுபடியும் அவன் கண்களின்மேல்
கைகளை வைத்து, அவனை ஏறிட்டுப் பார்க்கும்
படி செய்தார்; அப்பொழுது அவன் சொஸ்த
மடைந்து, *யாவரையும் [21]தெளிவாய்க் கண்
டான். பின்பு அவர் அவனை நோக்கி: நீ 26
கிராமத்தில் பிரவேசியாமலும், கிராமத்தில்
இதை ஒருவருக்கும் சொல்லாமலும் இரு
என்று சொல்லி, அவனை வீட்டிற்கு அனுப்பி
விட்டார்.
பின்பு, இயேசுவும் அவருடைய சீஷர்க 27
ளும் புறப்பட்டு, [22]பிலிப்புச் செசரியா பட்ட
ணத்தைச் சேர்ந்த கிராமங்களுக்குப் போனார்
கள். வழியிலே அவர் தம்முடைய சீஷர்களை
நோக்கி: ஜனங்கள் என்னை யார் என்று சொல்
லுகிறார்கள் என்று கேட்டார். அதற்கு அவர் 28
கள்: [23]சிலர் உம்மை யோவான்ஸ்நானன்
என்றும், சிலர் எலியா என்றும், வேறு சிலர்
தீர்க்கதரிசிகளில் ஒருவர் என்றும் சொல்லுகி
றார்கள் என்றார்கள். அப்பொழுது அவர்: 29

1 ஏசா. 35. 5, 6. மத். 11. 5
2 யாத். 4. 10, 11. சங். 139. 14. அப். 14. 11
3 மத். 15. 32. ழ. லேவ. 6. ழ
4 சங். 145. 8, 15. எபி. 5. 3
5 6. 36, 37. ழ
6 மத். 15. 34
7 மத். 14. 19
8 1 இரா. 17. 14–16. சங். 107. 5, 6: 145. 16
9 மத். 15. 39
10 மத். 12. 38. ழ: 16. 1. ழ: யோ. 6. 30
11 மத். 16. 5. ழ
12 யாத். 12. 20. லேவி. 2. 11. நீதி. 19. 27. தூ. 12. 1. 1 கொ. 5. 6–8
13 6. 52
14 ஏசா. 44. 18
15 2 பே. 1. 12
16 6. 38, 44. மத். 14. 17–21. லூக். 9. 12–17. யோ. 6. 5–13
17 1–9. ஊ. மத். 15. 34–38
18 ஏசா. 35. 5, 6. மத். 11. 5
19 7. 33
20 நிப. 9. 36. ஏசா. 29. 18. 1 கொ. 13. 11, 12
* எல்லாவற்றையும்
21 நீதி. 4. 18. ஏசா. 32. 3. 1 பே. 2. 9
22 மத். 16. 13. ழ. லூக். 9. 18. ழ
23 மத். 14. 2

நீங்கள் என்னை யார் என்று சொல்லுகிறீர்கள்
என்று கேட்டார்; பேதுரு பிரதியுத்தரமாக:
30 [1]நீர் கிறிஸ்து என்றான். அப்பொழுது தம்
மைக்குறித்து ஒருவருக்கும் சொல்லாதபடி
க்கு அவர்களுக்கு உறுதியாய்க் கட்டளையிட்
31 டார். அல்லாமலும், [2]மனுஷகுமாரன் பல
பாடுகள்பட்டு, மூப்பராலும் பிரதான ஆசாரி
யராலும் வேதபாரகராலும் ஆகாதவனென்று
தள்ளப்பட்டு, கொல்லப்பட்டு, மூன்றுநாளைக்
குப்பின்பு உயிர்த்தெழுந்திருக்கவேண்டியதெ
ன்று அவர்களுக்குப் போதிக்கத் தொடங்கி
32 னார். இந்த வார்த்தையை அவர் தாராளமா
கச் சொன்னார். அப்பொழுது, பேதுரு அவ
ரைத் தனியே அழைத்துக்கொண்டுபோய்,
அவரைக் கடிந்துகொள்ளத் தொடங்கினான்.
33 அவர் திரும்பித்தம்முடையசீஷரைப்பார்த்து,
பேதுருவை நோக்கி: [3]எனக்குப் பின்னாகப்
போ, சாத்தானே, நீ தேவனுக்கு ஏற்றவைக
ளைச் சிந்தியாமல் மனுஷருக்கு ஏற்றவைகளைச்
சிந்திக்கிறாய் என்றுசொல்லி, அவனைக் கடிந்
34 துகொண்டார். பின்பு அவர் ஜனங்களையும் தம்
முடையசீஷர்களையும்தம்மிடத்தில்அழைத்து:
[4]ஒருவன் என் பின்னே வரவிரும்பினால், அவ
ன் தன்னைத்தான் வெறுத்து, தன் சிலுவையை
எடுத்துக்கொண்டு, என்னைப் பின்பற்றக்கட
35 வன். தன் ஜீவனை ரட்சிக்க விரும்புகிறவன்
அதை இழந்துபோவான், [5]என்னிமித்தமாக
வும்சுவிசேஷத்தினிமித்தமாகவும் தன் ஜீவனை
இழந்துபோகிறவன் அதை ரட்சித்துக்கொள்
36 ளுவான். மனுஷன் உலகம் முழுவதையும் ஆ
தாயப்படுத்திக்கொண்டாலும்,தன் ஜீவனைநஷ்
டப்படுத்தினால் அவனுக்கு லாபம் என்ன?
37 மனுஷன் தன் ஜீவனுக்கு ஈடாக என்னத்
38 தைக் கொடுப்பான்? ஆதலால் விபசாரமும்
பாவமுமுள்ள இந்தச் சந்ததியில் என்னைக்
குறித்தும் என் வார்த்தைகளைக்குறித்தும்எவன்
வெட்கப்படுவானோ, [6]அவனைக்குறித்து மனு
ஷகுமாரனும் தமது பிதாவின் மகிமை பொரு
ந்தினவராய்ப் பரிசுத்த தூதர்களோடுங்கூட
வரும்போது வெட்கப்படுவார் என்றார்.

9 அன்றியும், அவர் அவர்களை நோக்கி: [7]இங்
கே நிற்கிறவர்களில் சிலர் தேவனுடைய ராஜ்
யம் பலத்தோடே வருவதைக் காணுமுன் [8]மர
ணத்தை ருசிபார்ப்பதில்லையென்று, மெய்யா
கவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.
2 ஆறு நாளைக்குப் பின்பு, [9]இயேசு பேது
ருவையும் யாக்கோபையும் யோவானையும் அ
ழைத்து, உயர்ந்த மலையின்மேல் அவர்களைத்
தனியே கூட்டிக்கொண்டுபோய், அவர்களு
3 க்கு முன்பாக மறுரூபமானார். அவருடைய
[10]வஸ்திரம் உறைந்த மழையைப்போல் பூமி
யிலே எந்த வண்ணானும் வெளுக்கக்கூடாத
4 வெண்மையாய்ப் பிரகாசித்தது. அப்பொ
ழுது மோசேயும் எலியாவும் இயேசுவுடனே
பேசுகிறவர்களாக அவர்களுக்குக் காணப்பட்
5 டார்கள். அப்பொழுது பேதுரு இயேசுவை
நோக்கி: ரபீ, [11]நாம் இங்கே இருக்கிறது நல்
லது; உமக்கு ஒரு கூடாரமும், மோசேக்கு
ஒரு கூடாரமும், எலியாவுக்கு ஒரு கூடாரமு
மாக, மூன்று கூடாரங்களைப் போடுவோம்
என்றான். அவர்கள் மிகவும் பயந்திருந்தபடி 6
யால், [12]தான் பேசுகிறது இன்னதென்று அறி
யாமல் இப்படிச் சொன்னான். அப்பொழுது, 7
ஒருமேகம் அவர்கள்மேல் நிழலிட்டது: [13]இவர்
என்னுடைய நேசகுமாரன், [14]இவருக்குச் செ
விகொடுங்கள் என்று அந்த மேகத்திலிருந்து
ஒரு சத்தம் உண்டாயிற்று. உடனே அவர் 8
கள் சுற்றிலும் பார்த்தபோது, இயேசு ஒருவ
ரைத்தவிர வேறொருவரையும் காணவில்லை.
அவர்கள் மலையிலிருந்து இறங்குகிறபோது, 9
அவர் அவர்களை நோக்கி: மனுஷகுமாரன்
மரித்தோரிலிருந்து எழுந்திருக்கும்வரைக்கும்,
நீங்கள் கண்டவைகளை ஒருவருக்கும் சொல்ல
வேண்டாம் என்று கட்டளையிட்டார். மரித் 10
தோரிலிருந்து எழுந்திருப்பது என்னவென்று
அவர்கள் ஒருவரிடத்தில் ஒருவர் விசாரித்து,
[15]அந்த வார்த்தையைத் தங்களுக்குள்ளே அடக்
கிக்கொண்டு: எலியா [16]முந்தி வரவேண்டு 11
மென்று வேதபாரகர் சொல்லுகிறார்களே,
அதெப்படியென்று அவரிடத்தில் கேட்டார்
கள். அவர் பிரதியுத்தரமாக: எலியா முந்தி 12
வந்து எல்லாவற்றையும் சீர்ப்படுத்துவது
மெய்தான்; [17]அல்லாமலும், மனுஷகுமாரன்
பல பாடுகள் பட்டு, [18]அவமதிக்கப்படுவாரெ
ன்று, அவரைக்குறித்து எழுதியிருக்கிறதே
அது எப்படி என்றார். ஆனாலும் எலியா வந் 13
தாயிற்று, [19]அவனைக்குறித்து எழுதியிருக்கிற
பிரகாரம் தங்களுக்கு இஷ்டமானபடி அவ
னுக்குச் செய்தார்களென்று, உங்களுக்குச்
சொல்லுகிறேன் என்றார்.
பின்பு அவர் சீஷரிடத்தில் வந்தபோது, 14
அவர்களைச் சுற்றித் திரளான ஜனங்கள் நிற்
கிறதையும், அவர்களோடே வேதபாரகர் தர்க்
கிக்கிறதையும் கண்டார். ஜனங்களெல்லாரும் 15
அவரைக் கண்டவுடனே மிகவும் ஆச்சரியப்
பட்டு, ஓடிவந்து, அவருக்கு வந்தனஞ்செய்
தார்கள். அவர் வேதபாரகரை நோக்கி: நீங் 16
கள் இவர்களோடே என்னத்தைக்குறித்துத்
தர்க்கம்பண்ணுகிறீர்கள் என்று கேட்டார்.
அப்பொழுது ஜனக்கூட்டத்தில் ஒருவன் அவ 17
ரை நோக்கி: [20]போதகரே, ஊமையான
ஒரு ஆவிபிடித்த என் மகனை உம்மிடத்
தில் கொண்டுவந்தேன். அது அவனை எங்கே 18
பிடித்தாலும் அங்கே அவனை அலைக்கழிக்கி
றது; அப்பொழுது அவன் நுரைதள்ளி, பல்
லைக் கடித்து, சோர்ந்துபோகிறான். அதைத்
துரத்திவிடும்படி உம்முடைய சீஷரிடத்தில்
கேட்டேன்; அவர்களால் கூடாமற்போயிற்று
என்றான். அவர் பிரதியுத்தரமாக: [21]விசுவாச 19
மில்லாத சந்ததியே, எதுவரைக்கும் நான்
உங்களோடு இருப்பேன்? எதுவரைக்கும் உங்
களிடத்தில் பொறுமையாய் இருப்பேன்?
அவனை என்னிடத்தில் கொண்டுவாருங்கள்
என்றார். அவனை அவரிடத்தில் கொண்டு 20

1 மத். 16. 16. யோ. 1. 41-49. 6. 69: 11. 27. அப். 8. 37. 1 யோ. 5. 1
2 மத். 16. 21. லூ. 9. 22
3 1 பே. 5. 5. வெளி. 3. 19
4 மத். 10. 38: 16. 24. லூ. 9. 23: 14. 27. தீத். 2. 12
5 எஸ்தர் 4. 14. மத். 10. 39. லூ. 9. 24 யோ. 12. 25. 2 தீமோ. 2. 11. வெளி. 2. 10
6 லூ. 12. 9. 2 தீமோ. 1. 8
7 மத். 16. 28. லூ. 9. 27
8 யோ. 8. 52. எபி. 2. 9
9 மத். 17. 1. மு. லூ. 9. 28. மு
10 தானி. 7. 9. மத். 28. 3
11 சங். 63. 2: 84. 10
12 தானி. 10. 15. வெளி. 1. 17
13 சங். 2. 7. மத். 3. 17. 2 பே. 1. 17
14 உபா. 18. 15
15 அப். 17. 18
16 மல். 4. 5. மத். 17. 10. மு
17 சங். 22. 1. மு. ஏசா. 53. 3. மு. தானி. 9. 26. சக. 13. 7
18 சங். 74. 22. லூ. 23. 11. பிலி. 2. 7
19 மத். 11. 14. லூ. 1. 17
20 மத். 12. 22. லூ. 11. 14
21 உபா. 32. 20. சங். 78. 8. எபி. 3. 10

வந்தார்கள். அவரைக் கண்டவுடனே, அந்த
ஆவி அவனை அலைக்கழித்தது; அவன் தரை
யிலே விழுந்து, நுரைதள்ளிப் புரண்டான்.
21 அவர் அவனுடைய தகப்பனை நோக்கி: இது
இவனுக்கு உண்டாகி எவ்வளவு காலமாயிற்று
என்று கேட்டார். அதற்கு அவன்: [1]சிறு
வயதுமுதற்கொண்டே உண்டாயிருக்கிறது;
22 இவனைக் கொல்லும்படிக்கு அது *அநேகந்த
ரம் தீயிலும் தண்ணீரிலும் தள்ளிற்று. நீர்
ஏதாகிலும் செய்யக்கூடுமானால், எங்கள்மேல்
மனதிரங்கி, எங்களுக்கு உதவிசெய்யவேண்
23 டும் என்றான். இயேசு அவனை நோக்கி: நீ
விசுவாசிக்கக்கூடுமானால் ஆகும், [2]விசுவாசிக்
24 கிறவனுக்கு எல்லாம் கூடும் என்றார். உட
னே பிள்ளையின் தகப்பன்: [3]விசுவாசிக்கி
றேன் ஆண்டவரே, என் அவிசுவாசம் நீங்
கும்படி உதவிசெய்யும் என்று கண்ணீரோடே
25 சத்தமிட்டுச் சொன்னான். அப்பொழுது ஜன
ங்கள் கூட்டமாய் ஓடிவருகிறதை இயேசு
கண்டு, அந்த அசுத்த ஆவியை நோக்கி: ஊமை
யும் செவிடுமான ஆவியே, இவனைவிட்டுப்
புறப்பட்டுப்போ, இனி இவனுக்குள் போகா
தே என்று நான் உனக்குக் கட்டளையிடுகி
26 றேன் என்று அதை அதட்டினார். அப்பொ
ழுது அது சத்தமிட்டு, [4]அவனை மிகவும் அலைக்
கழித்துப் புறப்பட்டுப்போயிற்று. அவன்
செத்துப்போனான் என்று அநேகர் சொல்
லத்தக்கதாகச் செத்தவன்போல் கிடந்தான்.
27 இயேசு [5]அவன் கையைப் பிடித்து, அவனைத்
தூக்கினார்; உடனே அவன் எழுந்திருந்தான்.
28 வீட்டில் அவர் பிரவேசித்தபொழுது, அவரு
டைய சீஷர்கள்: [6]அதைத் துரத்திவிட எங்க
ளால் ஏன் கூடாமற்போயிற்று என்று அவரி
29 டத்தில் தனித்துக் கேட்டார்கள். அதற்கு
அவர்: [7]இவ்வகைப் பிசாசு ஜெபத்தினாலும்
உபவாசத்தினாலுமேயன்றி மற்றெவ்விதத்தி
னாலும் புறப்பட்டுப்போகாது என்றார்.
30 பின்பு அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, கலி
லேயாவைக் கடந்துபோனார்கள்; அதை ஒரு
வரும் அறியாதிருக்கவேண்டுமென்று விரும்
31 பினார். ஏனெனில், [8]மனுஷகுமாரன் மனு
ஷர் கைகளில் ஒப்புக்கொடுக்கப்படுவார் என்
றும், அவர்கள் அவரைக் கொன்றுபோடுவார்
கள் என்றும்; கொல்லப்பட்டு, மூன்றாம் நாளி
லே உயிர்த்தெழுந்திருப்பார் என்றும் அவர் தம்
முடைய சீஷர்களுக்குப் போதகம்பண்ணிச்
32 சொல்லியிருந்தார். அவர்களோ அந்த வார்த்
தையை அறிந்துகொள்ளவில்லை, [9]அதைக்கு
றித்து அவரிடத்தில் கேட்கவும் பயந்தார்கள்.
33 அவர் கப்பர்நகூமுக்கு வந்து [10]வீட்டிலே
இருக்கும்போது, அவர்களை நோக்கி: நீங்கள்
வழியிலே எதைக்குறித்து உங்களுக்குள்ளே
34 தர்க்கம்பண்ணினீர்கள் என்று கேட்டார். அத
ற்கு அவர்கள் பேசாமலிருந்தார்கள்; ஏனெ
னில் அவர்கள் தங்களுக்குள்ளே எவன் பெரி
யவன் என்று வழியில் தர்க்கம்பண்ணினார்
35 கள். அப்பொழுது அவர் உட்கார்ந்து, பன்
னிருவரையும் அழைத்து: [11]எவனாகிலும் முத
ல்வனாயிருக்க விரும்பினால் அவன் எல்லா
ருக்கும் கடையானவனும், எல்லாருக்கும்
ஊழியக்காரனுமா யிருக்கக்கடவன் என்று
சொல்லி; ஒரு சிறு பிள்ளையை எடுத்து, 36
[12]அதை அவர்கள் நடுவிலே நிறுத்தி, அதை
அணைத்துக்கொண்டு: இப்படிப்பட்ட சிறு 37
பிள்ளைகளில் ஒன்றை என் நாமத்தினாலே ஏற்
றுக்கொள்ளுகிறவன் என்னை ஏற்றுக்கொள்
ளுகிறான்; [13]என்னை ஏற்றுக்கொள்ளுகிறவன்
என்னை அல்ல, என்னை அனுப்பினவரை
ஏற்றுக்கொள்ளுகிறான் என்றார்.
அப்பொழுது யோவான் அவரை நோக்கி: 38
போதகரே, [14]நம்மைப் பின்பற்றாதவன் ஒரு
வன் உமது நாமத்தினாலே பிசாசுகளைத் துரத்
துகிறதைக் கண்டோம்; அவன் நம்மைப் பின்
பற்றாதவனானதால், அவனைத் தடுத்தோம் என்
றான். அதற்கு இயேசு: அவனைத் தடுக்க 39
வேண்டாம்; [15]என் நாமத்தினாலே அற்புதஞ்
செய்கிறவன் எளிதாய் என்னைக்குறித்துத்
தீங்கு சொல்லமாட்டான். நமக்கு விரோத 40
மாயிராதவன் [16]நமது பட்சத்திலிருக்கிறான்.
நீங்கள் கிறிஸ்துவினுடையவர்களாயிருக்கிற 41
படியினாலே, [17]என் நாமத்தினிமித்தம் உங்க
ளுக்கு ஒரு கலசம் தண்ணீர் குடிக்கக் கொடுக்
கிறவன் தன் பலனை அடையாமற்போவதி
ல்லை என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்
லுகிறேன். என்னிடத்தில் விசுவாசமாயிருக் 42
கிற இந்தச் சிறியரில் ஒருவனுக்கு இடறல்
உண்டாக்குகிறவன் எவனோ, [18]அவனுடைய
கழுத்தில் எந்திரக்கல்லைக் கட்டி, சமுத்திரத்
தில் அவனைத் தள்ளிப்போடுகிறது அவனுக்கு
நலமாயிருக்கும். உன் கை உனக்கு இடறல் 43
உண்டாக்கினால், [19]அதைத் தறித்துப்போடு;
நீ இரண்டு கையுடையவனாய் அவியாத அக்
கினியுள்ள நரகத்திலே போவதைப்பார்க்கி
லும், ஊனனாய் ஜீவனுக்குள் பிரவேசிப்பது
உனக்கு நலமாயிருக்கும். அங்கே அவர்கள் 44
[20]புழு சாவாமலும் அக்கினி அவியாமலுமி
ருக்கும். உன் கால் உனக்கு இடறல் உண் 45
டாக்கினால் அதைத் தறித்துப்போடு, நீ இர
ண்டு காலுடையவனாய் அவியாத அக்கினி
யுள்ள நரகத்திலே தள்ளப்படுவதைப்பார்க்
கிலும், சப்பாணியாய் ஜீவனுக்குள் பிரவே
சிப்பது உனக்கு நலமாயிருக்கும். அங்கே 46
அவர்கள் புழு சாவாமலும் அக்கினி அவி
யாமலுமிருக்கும். உன் கண் உனக்கு இட 47
றல் உண்டாக்கினால், அதைப் பிடுங்கிப்
போடு, நீ இரண்டு கண்ணுடையவனாய் நரக
அக்கினியிலே தள்ளப்படுவதைப்பார்க்கிலும்,
ஒற்றைக்கண்ணனாய் தேவனுடைய ராஜ்யத்
தில் பிரவேசிப்பது உனக்கு நலமாயிருக்கும்.
அங்கே அவர்கள் புழு சாவாமலும் அக்கினி 48
அவியாமலுமிருக்கும். எந்தப் [21]பலியும் உப் 49
பினால் உப்பிடப்படுவதுபோல, எந்த மனு
ஷனும் அக்கினியினால் உப்பிடப்படுவான். 50
உப்பு நல்லதுதான், [22]உப்பு சாரமற்றுப்போ

1 பேது. 5. 7. சங். 51. 5
* அடிக்கடி.
2 11. 23. 2 ராஜா. 20. 20. மத். 17. 20. லூ. 17. 6. யோ. 11. 40. எபி. 11. 6
3 சங். 126. 5. எபி. 12. 2
4 வெளி. 12. 12
5 ஏசா. 41. 13
6 மத். 17. 19
7 மத். 17. 21. 1 கொ. 9. 27. எபே. 6. 18
8 மத். 17. 22. லூ. 9. 44
9 யோ. 16. 19
10 மத். 18. 1. ஒ. லூ. 9. 46. ஒ: 22. 24. ஒ
11 10. 43. மத். 20. 26, 27
12 மத். 10. 16; 18. 2
13 மத். 10. 40. லூ. 9. 48
14 எண். 11. 26, 28. லூ. 9. 49
15 1 கொ. 12. 3
16 மத். 12. 30
17 மத். 10. 42; 25. 40
18 மத். 18. 6. லூ. 17. 1, 2
19 உபா. 13. 6. மத். 5. 19
20 ஏசா. 66. 24. வெளி. 14. 11
21 லேவி. 2. 13. எசே. 43. 24
22 மத். 5. 13. லூ. 14. 34

நீங்கள் என்னை யார் என்று சொல்லுகிறீர்கள்
என்று கேட்டார்; பேதுரு பிரதியுத்தரமாக:
30 [1]நீர் கிறிஸ்து என்றான். அப்பொழுது தம்
மைக்குறித்து ஒருவருக்கும் சொல்லாதபடி
க்கு அவர்களுக்கு உறுதியாய்க் கட்டளையிட்
31 டார். அல்லாமலும், [2]மனுஷகுமாரன் பல
பாடுகள்பட்டு, மூப்பராலும் பிரதான ஆசாரி
யராலும் வேதபாரகராலும் ஆகாதவனென்று
தள்ளப்பட்டு, கொல்லப்பட்டு, மூன்று நாளைக்
குப்பின்பு உயிர்த்தெழுந்திருக்கவேண்டியதெ
ன்று அவர்களுக்குப் போதிக்கத் தொடங்கி
32 னார். இந்த வார்த்தையை அவர் தாராளமா
கச் சொன்னார். அப்பொழுது, பேதுரு அவ
ரைத் தனியே அழைத்துக்கொண்டுபோய்,
அவரைக் கடிந்துகொள்ளத் தொடங்கினான்.
33 அவர் திரும்பித் தம்முடையசீஷரைப்பார்த்து,
பேதுருவை நோக்கி: [3]எனக்குப் பின்னாகப்
போ, சாத்தானே, நீ தேவனுக்கு ஏற்றவைக
ளைச் சிந்தியாமல் மனுஷருக்கு ஏற்றவைகளைச்
சிந்திக்கிறாய் என்றுசொல்லி, அவனைக் கடிந்
34 துகொண்டார். பின்பு அவர் ஜனங்களையும் தம்
முடையசீஷர்களையும்தம்மிடத்தில்அழைத்து:
[4]ஒருவன் என் பின்னே வரவிரும்பினால், அவ
ன் தன்னைத்தான் வெறுத்து, தன் சிலுவையை
எடுத்துக்கொண்டு, என்னைப் பின்பற்றக்கட
35 வன். தன் ஜீவனை ரட்சிக்க விரும்புகிறவன்
அதை இழந்துபோவான், [5]என்னிமித்தமாக
வும்சுவிசேஷத்தினிமித்தமாகவும் தன் ஜீவனை
இழந்துபோகிறவன் அதை ரட்சித்துக்கொள்
36 ளுவான். மனுஷன் உலகம் முழுவதையும் ஆ
தாயப்படுத்திக்கொண்டாலும்,தன் ஜீவனைநஷ்
டப்படுத்தினால் அவனுக்கு லாபம் என்ன?
37 மனுஷன் தன் ஜீவனுக்கு ஈடாக என்னத்
38 தைக் கொடுப்பான்? ஆதலால் விபசாரமும்
பாவமுமுள்ள இந்தச் சந்ததியில் என்னைக்
குறித்தும்என் வார்த்தைகளைக்குறித்தும்எவன்
வெட்கப்படுவானோ, [6]அவனைக்குறித்து மனு
ஷகுமாரனும் தமது பிதாவின் மகிமை பொரு
ந்தினவராய்ப் பரிசுத்த தூதர்களோடுங்கூட
வரும்போது வெட்கப்படுவார் என்றார்.

9 அன்றியும், அவர் அவர்களை நோக்கி: [7]இங்
கே நிற்கிறவர்களில் சிலர் தேவனுடைய ராஜ்
யம் பலத்தோடே வருவதைக் காணுமுன் [8]மர
ணத்தை ருசிபார்ப்பதில்லையென்று, மெய்யா
கவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.
2 ஆறு நாளைக்குப் பின்பு, [9]இயேசு பேது
ருவையும் யாக்கோபையும் யோவானையும் அ
ழைத்து, உயர்ந்த மலையின்மேல் அவர்களைத்
தனியே கூட்டிக்கொண்டுபோய், அவர்களு
3 க்கு முன்பாக மறுரூபமானார். அவருடைய
[10]வஸ்திரம் உறைந்த மழையைப்போல் பூமி
யிலே எந்த வண்ணானும் வெளுக்கக்கூடாத
4 வெண்மையாய்ப் பிரகாசித்தது. அப்பொ
ழுது மோசேயும் எலியாவும் இயேசுவுடனே
பேசுகிறவர்களாக அவர்களுக்குக் காணப்பட்
5 டார்கள். அப்பொழுது பேதுரு இயேசுவை
நோக்கி: ரபீ, [11]நாம் இங்கே இருக்கிறது நல்
லது; உமக்கு ஒரு கூடாரமும், மோசேக்கு
ஒரு கூடாரமும், எலியாவுக்கு ஒரு கூடாரமு
மாக, மூன்று கூடாரங்களைப் போடுவோம்
என்றான். அவர்கள் மிகவும் பயந்திருந்தபடி 6
யால், [12]தான் பேசுகிறது இன்னதென்று அறி
யாமல் இப்படிச் சொன்னான். அப்பொழுது, 7
ஒருமேகம் அவர்கள்மேல்நிழலிட்டது: [13]இவர்
என்னுடைய நேசகுமாரன், [14]இவருக்குச் செ
விகொடுங்கள் என்று அந்த மேகத்திலிருந்து
ஒரு சத்தம் உண்டாயிற்று. உடனே அவர் 8
கள் சுற்றிலும் பார்த்தபோது, இயேசு ஒருவ
ரைத்தவிர வேறொருவரையும் காணவில்லை.

அவர்கள் மலையிலிருந்து இறங்குகிறபோது, 9
அவர் அவர்களை நோக்கி: மனுஷகுமாரன்
மரித்தோரிலிருந்து எழுந்திருக்கும்வரைக்கும்,
நீங்கள் கண்டவைகளை ஒருவருக்கும் சொல்ல
வேண்டாம் என்று கட்டளையிட்டார். மரித் 10
தோரிலிருந்து எழுந்திருப்பது என்னவென்று
அவர்கள் ஒருவரிடத்தில் ஒருவர் விசாரித்து,
[15]அந்த வார்த்தையைத் தங்களுக்குள்ளே அடக்
கிக்கொண்டு: எலியா [16]முந்தி வரவேண்டு 11
மென்று வேதபாரகர் சொல்லுகிறார்களே,
அதெப்படியென்று அவரிடத்தில் கேட்டார்
கள். அவர் பிரதியுத்தரமாக: எலியா முந்தி 12
வந்து எல்லாவற்றையும் சீர்ப்படுத்துவது
மெய்தான்; [17]அல்லாமலும், மனுஷகுமாரன்
பல பாடுகள் பட்டு, [18]அவமதிக்கப்படுவாரெ
ன்று, அவரைக்குறித்து எழுதியிருக்கிறதே
அது எப்படி என்றார். ஆனாலும் எலியா வந் 13
தாயிற்று, [19]அவனைக்குறித்து எழுதியிருக்கிற
பிரகாரம் தங்களுக்கு இஷ்டமானபடி அவ
னுக்குச் செய்தார்களென்று, உங்களுக்குச்
சொல்லுகிறேன் என்றார்.

பின்பு அவர் சீஷரிடத்தில் வந்தபோது, 14
அவர்களைச் சுற்றித் திரளான ஜனங்கள் நிற்
கிறதையும், அவர்களோடே வேதபாரகர் தர்க்
கிக்கிறதையும் கண்டார். ஜனங்களெல்லாரும் 15
அவரைக் கண்டவுடனே மிகவும் ஆச்சரியப்
பட்டு, ஓடிவந்து, அவருக்கு வந்தனஞ்செய்
தார்கள். அவர் வேதபாரகரை நோக்கி: நீங் 16
கள் இவர்களோடே என்னத்தைக்குறித்துத்
தர்க்கம்பண்ணுகிறீர்கள் என்று கேட்டார்.
அப்பொழுது ஜனக்கூட்டத்தில் ஒருவன் அவ 17
ரை நோக்கி: [20]போதகரே, ஊமையான
ஒரு ஆவிபிடித்த என் மகனை உம்மிடத்
தில் கொண்டுவந்தேன். அது அவனை எங்கே 18
பிடித்தாலும் அங்கே அவனை அலைக்கழிக்கி
றது; அப்பொழுது அவன் நுரைதள்ளி, பல்
லைக் கடித்து, சோர்ந்துபோகிறான். அதைத்
துரத்திவிடும்படி உம்முடைய சீஷரிடத்தில்
கேட்டேன்; அவர்களால் கூடாமற்போயிற்று
என்றான். அவர் பிரதியுத்தரமாக: [21]விசுவாச 19
மில்லாத சந்ததியே, எதுவரைக்கும் நான்
உங்களோடு இருப்பேன்? எதுவரைக்கும் உங்
களிடத்தில் பொறுமையாய் இருப்பேன்?
அவனை என்னிடத்தில் கொண்டுவாருங்கள்
என்றார். அவனை அவரிடத்தில் கொண்டு 20

1 மத். 16. 16. யோ. 1. 41–49: 6. 69: 11. 27. அப். 8. 37. 1 யோ. 5. 1
2 மத். 16. 21. லூக். 9. 22
3 1 பேது. 5. 5. வெளி. 3. 19
4 மத். 10. 38: 16. 24. லூக். 9. 23: 14. 27. தீத். 2. 12
5 எஸ்தர் 4. 14. மத். 10. 39. லூக். 9. 24 யோ. 12. 25. 2 தீமோ. 2. 11. வெளி. 2. 10
6 லூக். 12. 9. 2 தீமோ. 1. 8
7 மத். 16. 28. லூக். 9. 27
8 யோ. 8. 52. எபி. 2. 9
9 மத். 17. 1. முத. லூக். 9. 28. முத.
10 தானி. 7. 9. மத். 28. 3
11 சங். 68. 2: 84. 10
12 தானி. 10. 15. வெளி. 1. 17
13 சங். 2. 7. மத். 3. 17. 2 பே. 1. 17
14 உபா. 18. 15
15 அப். 17. 18
16 மல். 4. 5. மத். 17. 10. முத.
17 சங். 22. 1. முத. ஏசா. 53. 3. முத. தானி. 9. 26. சக. 13. 7
18 சங். 74. 22. லூக். 23. 11. பிலி. 2. 7
19 மத். 11. 14. லூக். 1. 17
20 மத். 12. 22. லூக். 11. 14
21 உபா. 32. 20. சங். 78. 8. எபி. 3. 10

வந்தார்கள். அவனைக் கண்டவுடனே, அந்த
ஆவி அவனை அலைக்கழித்தது; அவன் தரை
யிலே விழுந்து, நுரைதள்ளிப் புரண்டான்.
21 அவர் அவனுடைய தகப்பனை நோக்கி: இது
இவனுக்கு உண்டாகி எவ்வளவு காலமாயிற்று
என்று கேட்டார். அதற்கு அவன்: [1]சிறு
வயதுமுதற்கொண்டே உண்டாயிருக்கிறது;
22 இவனைக் கொல்லும்படிக்கு அது *அநேகந்த
ரம் தீயிலும் தண்ணீரிலும் தள்ளிற்று. நீர்
ஏதாகிலும் செய்யக்கூடுமானால், எங்கள்மேல்
மனதிரங்கி, எங்களுக்கு உதவிசெய்யவேண்
23 டும் என்றான். இயேசு அவனை நோக்கி: நீ
விசுவாசிக்கக்கூடுமானால் ஆகும், [2]விசுவாசிக்
24 கிறவனுக்கு எல்லாம் கூடும் என்றார். உட
னே பிள்ளையின் தகப்பன்: [3]விசுவாசிக்கி
றேன் ஆண்டவரே, என் அவிசுவாசம் நீங்
கும்படி உதவிசெய்யும் என்று கண்ணீரோடே
25 சத்தமிட்டுச் சொன்னான். அப்பொழுது ஜன
ங்கள் கூட்டமாய் ஓடிவருகிறதை இயேசு
கண்டு, அந்த அசுத்த ஆவியை நோக்கி: ஊமை
யும் செவிடுமான ஆவியே, இவனைவிட்டுப்
புறப்பட்டுப்போ, இனி இவனுக்குள் போகா
தே என்று நான் உனக்குக் கட்டளையிடுகி
26 றேன் என்று அதை அதட்டினார். அப்பொ
ழுது அது சத்தமிட்டு, [4]அவனை மிகவும் அலைக்
கழித்துப் புறப்பட்டுப்போயிற்று. அவன்
செத்துப்போனான் என்று அநேகர் சொல்
லத்தக்கதாகச் செத்தவன்போல் கிடந்தான்.
27 இயேசு [5]அவன் கையைப் பிடித்து, அவனைத்
தூக்கினார்; உடனே அவன் எழுந்திருந்தான்.
28 வீட்டில் அவர் பிரவேசித்தபொழுது, அவரு
டைய சீஷர்கள்: [6]அதைத் துரத்திவிட எங்க
ளால் ஏன் கூடாமற்போயிற்று என்று அவரி
29 டத்தில் தனித்துக் கேட்டார்கள். அதற்கு
அவர்: [7]இவ்வகைப் பிசாசு ஜெபத்தினாலும்
உபவாசத்தினாலுமேயன்றி மற்றெவ்விதத்தி
னாலும் புறப்பட்டுப்போகாது என்றார்.
30 பின்பு அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, கலி
லேயாவைக் கடந்துபோனார்கள்; அதை ஒரு
வரும் அறியாதிருக்கவேண்டுமென்று விரும்
31 பினார். ஏனெனில், [8]மனுஷகுமாரன் மனு
ஷர் கைகளில் ஒப்புக்கொடுக்கப்படுவார் என்
றும், அவர்கள் அவரைக் கொன்றுபோடுவார்
கள் என்றும்; கொல்லப்பட்டு, மூன்றாம் நாளி
லே உயிர்த்தெழுந்திருப்பார் என்றும் அவர் தம்
முடைய சீஷர்களுக்குப் போதகம்பண்ணிச்
32 சொல்லியிருந்தார். அவர்களோ அந்த வார்த்
தையை அறிந்துகொள்ளவில்லை, [9]அதைக்கு
றித்து அவரிடத்தில் கேட்கவும் பயந்தார்கள்.
33 அவர் கப்பர்நகூமுக்கு வந்து [10]வீட்டிலே
இருக்கும்போது, அவர்களை நோக்கி: நீங்கள்
வழியிலே எதைக்குறித்து உங்களுக்குள்ளே
34 தர்க்கம்பண்ணினீர்கள் என்று கேட்டார். அத
ற்கு அவர்கள் பேசாமலிருந்தார்கள்; ஏனெ
னில் அவர்கள் தங்களுக்குள்ளே எவன் பெரி
யவன் என்று வழியில் தர்க்கம்பண்ணினார்
35 கள். அப்பொழுது அவர் உட்கார்ந்து, பன்
னிருவரையும் அழைத்து: [11]எவனாகிலும் முத
ல்வனாயிருக்க விரும்பினால் அவன் எல்லா
ருக்கும் கடையானவனும், எல்லாருக்கும்
ஊழியக்காரனுமா யிருக்கக்கடவன் என்று
சொல்லி; ஒரு சிறு பிள்ளையை எடுத்து, 36
[12]அதை அவர்கள் நடுவிலே நிறுத்தி, அதை
அணைத்துக்கொண்டு: இப்படிப்பட்ட சிறு 37
பிள்ளைகளில் ஒன்றை என் நாமத்தினாலே ஏற்
றுக்கொள்ளுகிறவன் என்னை ஏற்றுக்கொள்
ளுகிறான்; [13]என்னை ஏற்றுக்கொள்ளுகிறவன்
என்னை அல்ல, என்னை அனுப்பினவரை
ஏற்றுக்கொள்ளுகிறான் என்றார்.
அப்பொழுது யோவான் அவரை நோக்கி: 38
போதகரே, [14]நம்மைப் பின்பற்றாதவன் ஒரு
வன் உமது நாமத்தினாலே பிசாசுகளைத் துரத்
துகிறதைக் கண்டோம்; அவன் நம்மைப் பின்
பற்றாதவனானதால், அவனைத் தடுத்தோம் என்
றான். அதற்கு இயேசு: அவனைத் தடுக்க 39
வேண்டாம்; [15]என் நாமத்தினாலே அற்புதஞ்
செய்கிறவன் எளிதாய் என்னைக்குறித்துத்
தீங்கு சொல்லமாட்டான். நமக்கு விரோத 40
மாயிராதவன் [16]நமது பட்சத்திலிருக்கிறான்.
நீங்கள் கிறிஸ்துவினுடையவர்களாயிருக்கிற 41
படியினாலே, [17]என் நாமத்தினிமித்தம் உங்க
ளுக்கு ஒரு கலசம் தண்ணீர் குடிக்கக் கொடுக்
கிறவன் தன் பலனை அடையாமற்போவதி
ல்லை என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்
லுகிறேன். என்னிடத்தில் விசுவாசமாயிருக் 42
கிற இந்தச் சிறியரில் ஒருவனுக்கு இடறல்
உண்டாக்குகிறவன் எவனோ, [18]அவனுடைய
கழுத்தில் எந்திரக்கல்லைக் கட்டி, சமுத்திரத்
தில் அவனைத் தள்ளிப்போடுகிறது அவனுக்கு
நலமாயிருக்கும். உன் கை உனக்கு இடறல் 43
உண்டாக்கினால், [19]அதைத் தறித்துப்போடு;
நீ இரண்டு கையுடையவனாய் அவியாத அக்
கினியுள்ள நரகத்திலே போவதைப்பார்க்கி
லும், ஊனனாய் ஜீவனுக்குள் பிரவேசிப்பது
உனக்கு நலமாயிருக்கும். அங்கே அவர்கள் 44
[20]புழு சாவாமலும் அக்கினி அவியாமலுமி
ருக்கும். உன் கால் உனக்கு இடறல் உண் 45
டாக்கினால் அதைத் தறித்துப்போடு, நீ இர
ண்டு காலுடையவனாய் அவியாத அக்கினி
யுள்ள நரகத்திலே தள்ளப்படுவதைப்பார்க்
கிலும், சப்பாணியாய் ஜீவனுக்குள் பிரவே
சிப்பது உனக்கு நலமாயிருக்கும். அங்கே 46
அவர்கள் புழு சாவாமலும் அக்கினி அவி
யாமலுமிருக்கும். உன் கண் உனக்கு இட 47
றல் உண்டாக்கினால், அதைப் பிடுங்கிப்
போடு, நீ இரண்டு கண்ணுடையவனாய் நரக
அக்கினியிலே தள்ளப்படுவதைப்பார்க்கிலும்,
ஒற்றைக்கண்ணனாய் தேவனுடைய ராஜ்யத்
தில் பிரவேசிப்பது உனக்கு நலமாயிருக்கும்.
அங்கே அவர்கள் புழு சாவாமலும் அக்கினி 48
அவியாமலுமிருக்கும். எந்தப் [21]பலியும் உப் 49
பினால் உப்பிடப்படுவதுபோல, எந்த மனு
ஷனும் அக்கினியினால் உப்பிடப்படுவான். 50
உப்பு நல்லதுதான், [22]உப்பு சாரமற்றுப்போ

1 பேது 5. 7. சங். 51. 5
* அடிக்கடி.
2 11. 23. 2 ராஜா. 20. 20. மத். 17. 20. லூ. 17. 6. யோ. 11. 40. எபி. 11. 6
3 சங். 126. 5. எபி. 12. 2
4 வெளி. 12. 12
5 ஏசா. 41. 13
6 மத். 17. 19
7 மத். 17. 21. 1 கொ. 9. 27. எபே. 6. 18
8 மத். 17. 22. லூ. 9. 44
9 யோ. 16. 19
10 மத். 18. 1. ழ. லூ. 9. 46. ழ: 22. 24. ழ
11 10. 43. மத். 20. 26, 27
12 மத். 10. 16: 18. 2
13 மத். 10. 40. லூ. 9. 48
14 எண். 11. 26, 28. லூ. 9. 49
15 1 கொ. 12. 3
16 மத். 12. 30
17 மத். 10. 42: 25. 40
18 மத். 18. 6. லூ. 17. 1, 2
19 உபா. 13. 6. மத். 5. 19
20 ஏசா. 66. 24. வெளி. 14. 11
21 லேவி. 2. 13. எசே. 43. 24
22 மத். 5. 13. லூ. 14. 34

ஞல், அதற்கு எதினலே சாரமுண்டாக்குவீர்
கள்? [1]உங்களுக்குள்ளே உப்புடையவர்களா
யிருங்கள்; [2]ஒருவரோடொருவர் சமாதான
முள்ளவர்களாயும் இருங்கள் என்ருர்.

10 அவர் அவ்விடம் விட்டெழுந்து, யோர்
தானுக்கு அக்கரையிலுள்ள தேசத்தின் வழி
யாய் யூதேயாவின் எல்லைகளில் வந்தார்.
[3]ஜனங்கள் மறுபடியும் அவரிடத்தில் கூடிவந்
தார்கள். அவர் தம்முடைய வழக்கத்தின்படி
யே மறுபடியும் அவர்களுக்குப் போதகம்பண்
2 ணினர். அப்பொழுது பரிசேயர், அவரைச்
சோதிக்க வேண்டுமென்று, அவரிடத்தில்
வந்து: புருஷனனவன் தன் மனைவியைத்
தள்ளிவிடுவது நியாயமா என்று கேட்டார்கள்.
3 அவர் பிரதியுத்தரமாக: மோசே உங்களுக்குக்
கட்டளையிட்டிருக்கிறது என்ன என்று கேட்
4 டார். அதற்கு அவர்கள்: [4]தள்ளுதற்சீட்டை
எழுதிக்கொடுத்து, அவளைத் தள்ளிவிடலாமெ
ன்று மோசே உத்தரவு கொடுத்திருக்கிருர்
5 என்ருர்கள். இயேசு அவர்களுக்குப் பிரதி
யுத்தரமாக: உங்கள் இருதயகடினத்தினிமித்
தம் இந்தக் கட்டளையை உங்களுக்கு எழுதிக்
6 கொடுத்தான். ஆகிலும், [5]ஆதியிலே மனுஷ
ரைச் சிருஷ்டித்த தேவன் அவர்களை ஆணும்
7 பெண்ணுமாக உண்டாக்கினர். இதினிமித்
தம் [6]புருஷனனவன் தன் தகப்பனையும் தா
யையும் விட்டுத் தன் மனைவியோடே இசைந்
8 திருப்பான்; அவர்கள் இருவரும் ஒரே மாம்
சமாயிருப்பார்கள்; இவ்விதமாய் அவர்கள்
இருவராயிராமல் ஒரே மாம்சமாயிருக்கிருர்
9 கள். ஆகையால், தேவன் இணைத்ததை மனு
10 ஷன் பிரிக்காதிருக்கக்கடவன் என்ருர். பின்பு
வீட்டிலே அவருடைய சீஷர்கள் அந்தக் காரி
யத்தைக் குறித்து மறுபடியும் அவரிடத்தில்
11 விசாரித்தார்கள். அப்பொழுது அவர்: [7]எவ
னகிலும் தன் மனைவியைத் தள்ளிவிட்டு, வே
ருெருத்தியை விவாகம் பண்ணினல், அவன்
அவளுக்கு விரோதமாய் விபசாரஞ் செய்
12 கிறவனயிருப்பான். மனைவியும் தன் புருஷ
னைத் தள்ளிவிட்டு, வேருெருவனை விவாகம்
பண்ணினல், விபசாரஞ் செய்கிறவளாயிருப்
பாள் என்ருர்.

13 அப்பொழுது, [8]சிறு பிள்ளைகளை அவர்
தொடும்படிக்கு அவர்களை அவரிடத்தில் கொ
ண்டுவந்தார்கள்; கொண்டுவந்தவர்களைச் சீஷர்
14 கள் அதட்டினர்கள். இயேசு அதைக் கண்டு,
விசனமடைந்து: சிறுபிள்ளைகள் என்னிடத்
தில் வருகிறதற்கு இடங்கொடுங்கள்; அவர்க
ளைத் தடைபண்ணுதிருங்கள்; [9]தேவனுடைய
15 ராஜ்யம் அப்படிப்பட்டவர்களுடையது. எவ
னகிலும் சிறு பிள்ளையைப்போல் தேவனு
டைய ராஜ்யத்தை ஏற்றுக்கொள்ளாவிட்டால்,
அவன் அதில் பிரவேசிப்பதில்லையென்று,
மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்
16 என்று சொல்லி, அவர்களை அணைத்துக்கொ
ண்டு, அவர்கள்மேல் கைகளை வைத்து, அவர்
களை ஆசீர்வதித்தார்.

பின்பு அவர் புறப்பட்டுவழியிலே போகை 17
யில், [10]ஒருவன் ஓடிவந்து, அவருக்கு முன்
பாக முழங்கால்படியிட்டு: நல்ல போதகரே,
நித்திய ஜீவனைச் சுதந்தரித்துக்கொள்ளும்படி
நான் என்ன செய்யவேண்டும் என்று கேட்
டான். அதற்கு இயேசு: நீ என்னை நல்லவன் 18
என்று சொல்வானேன்? *தேவன் ஒருவர்தவிர
நல்லவன் ஒருவனுமில்லையே. விபசாரஞ் 19
செய்யாதிருப்பாயாக, கொலை செய்யாதிருப்
பாயாக, களவு செய்யாதிருப்பாயாக, பொய்ச்
சாட்சி சொல்லாதிருப்பாயாக, வஞ்சனை செய்
யாதிருப்பாயாக, உன் தகப்பனையும் உன் தா
யையும் கனம்பண்ணுவாயாக, [11]என்கிற கற்
பனைகளை அறிந்திருக்கிருயே என்ருர். அத 20
ற்கு அவன்: போதகரே, [12]இவைகளையெல்லாம்
என் சிறுவயதுமுதல் கைக்கொண்டிருக்கி
றேன் என்ருன். இயேசு அவனைப் பார்த்து, 21
அவனிடத்தில்அன்புகூர்ந்து: [13]உன்னிடத்தில்
ஒரு குறைவு உண்டு; நீ போய் உனக்கு உண்
டானவைகளையெல்லாம் விற்று, தரித்திரருக்
குக் கொடு; [14]அப்பொழுது பரலோகத்திலே
உனக்குப் பொக்கிஷம் உண்டாயிருக்கும்;
பின்பு சிலுவையை எடுத்துக்கொண்டு, என்
னைப் பின்பற்றிவா என்ருர். அவன் மிகுந்த 22
ஆஸ்தியுள்ளவனயிருந்தபடியால், இந்த வார்த்
தையைக்கேட்டு, மனமடிந்து, துக்கத்தோடே
போய்விட்டான்.

அப்பொழுது இயேசு சுற்றிப்பார்த்து, தம் 23
முடைய சீஷரை நோக்கி: ஐசுவரியமுள்ள
வர்கள் தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிப்
பது எவ்வளவு அரிதாயிருக்கிறது என்ருர்.
சீஷர்கள் அவருடைய வார்த்தைகளைக்குறி 24
த்து ஆச்சரியப்பட்டார்கள். இயேசு பின்னும்
அவர்களை நோக்கி: [15]பிள்ளைகளே, ஐசுவரியத்
தின்மேல் நம்பிக்கையாயிருக்கிறவர்கள் தேவ
னுடைய ராஜ்யத்தில் பிரவேசிக்கிறது எவ்வ
ளவு அரிதாயிருக்கிறது! ஐசுவரியவான் தே 25
வனுடைய ராஜ்யத்தில் பிரவேசிப்பதைப்
பார்க்கிலும், ஒட்டகமானது ஊசியின் காதி
லே நுழைவது எளிதாயிருக்கும் என்ருர்.
அவர்கள் பின்னும் அதிகமாய் ஆச்சரியப்பட் 26
டு: அப்படியானல் யார் ரட்சிக்கப்படக்கூடும்
என்று தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்
டார்கள். இயேசு அவர்களைப்பார்த்து: மனு 27
ஷரால் இது கூடாததுதான், [16]தேவனல் இது
கூடாததல்ல; தேவனலே எல்லாம் கூடும்
என்ருர். அப்பொழுது பேதுரு அவரை 28
நோக்கி: [17]இதோ, நாங்கள் எல்லாவற்றையும்
விட்டு, உம்மைப் பின்பற்றினேமே, என்று
சொல்லத் தொடங்கினன். அதற்கு இயேசு 29
பிரதியுத்தரமாக: என்னிமித்தமாகவும், சுவிசே
ஷத்தினிமித்தமாகவும், வீட்டையாவது, சகோ
தரரையாவது, சகோதரிகளையாவது, தகப்
பனையாவது, தாயையாவது, மனைவியையா
வது, பிள்ளைகளையாவது, நிலங்களையாவது
விட்டவன் எவனும், இப்பொழுது இம்மை 30
யிலே, [18]துன்பங்களோடேகூட நூறத்தனை

1 கொலோ. 4. 6
2 சங். 34. 14. 2 கொ. 13. 11. எபி. 12. 14
3 மத். 19. 1. யோ. 10. 40
4 உபா. 24. 1. மத். 5. 31
5 ஆதி. 1. 27: 5. 2. மல். 2. 15
6 ஆதி. 2. 24. 1 கொ. 6. 16. எபே. 5. 31
7 மத். 5. 32: 19. 9. லூ. 16. 18. ரோ. 7. 3. 1 கொ. 10. 11.
8 மத். 19. 13. லூ. 18. 15
9 மத். 18. 3, 10. 1 கொ. 14. 20. 1 பே. 2. 2, 3. வெளி. 14. 5
10 மத். 19. 16. லூ. 18. 18
* சங். 86. 5: 119. 68
11 யாத். 20. அதி. ரோ. 13. 9
12 ஏசா. 58. 2
13 மாற். 2. 10
14 மத். 6. 19, 20. லூ. 12. 33
15 யோபு 31. 24, சங். 52. 7: 62. 10. ஆப. 2. 9. 1 தீமோ. 6. 17. வெளி. 3. 17
16 ஆதி. 18. 14. யோபு 42. 2. எரே. 32. 17. லூ. 1. 37
17 மத். 19. 27. லூ. 18. 28
18 2 நாளா. 25. 9. லூ. 18. 30

யாக, வீடுகளையும், சகோதரரையும், சகோதரி
களையும், தாய்களையும், பிள்ளைகளையும், நிலங்
களையும், மறுமையிலே நித்திய ஜீவனையும்
அடைவான் என்று மெய்யாகவே உங்களுக்
31 குச் சொல்லுகிறேன். ஆகிலும் முந்தினோர்
அநேகர் பிந்தினோராயும், [1]பிந்தினோர் அநே
கர் முந்தினோராயும் இருப்பார்கள் என்றார்.
32 பின்பு அவர்கள் எருசலேமுக்குப் பிரயாண
மாய்ப் போகையில், [2]இயேசு அவர்களுக்கு
முன்னே நடந்துபோனார்; அவர்கள் திகைத்து,
அவருக்குப் பின்னே, பயத்தோடே போனார்
கள். அப்பொழுது அவர் பன்னிருவரையும்
அழைத்து, தமக்குச் சம்பவிக்கப்போகிறவை
களை அவர்களுக்கு மறுபடியும் சொல்லத்தொ
33 டங்கினார்: இதோ, [3]எருசலேமுக்குப் போகி
றோம்; அங்கே மனுஷகுமாரன் பிரதான
ஆசாரியரிடத்திலும் வேதபாரகரிடத்திலும்
ஒப்புக்கொடுக்கப்படுவார்; அவர்கள் அவரை
மரண ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்து, புறத்தே
34 சத்தாரிடத்தில் ஒப்புக்கொடுப்பார்கள். அவர்
கள் அவரைப் பரியாசம்பண்ணி, அவரை
வாரினால் அடித்து, அவர்மேல் துப்பி, அவ
ரைக் கொலைசெய்வார்கள்; ஆகிலும் மூன்றாம்
நாளிலே அவர் உயிரோடே எழுந்திருப்பார்
என்றார்.
35 அப்பொழுது [4]செபெதேயுவின் குமாரரா
கிய யாக்கோபும் யோவானும் அவரிடத்தில்
வந்து: போதகரே, நாங்கள் கேட்டுக்கொள்
ளப்போகிறதை நீர் எங்களுக்குச் செய்யவே
ண்டுமென்று விரும்புகிறோம் என்றார்கள்.
36 அவர் அவர்களை நோக்கி: நான் உங்களுக்கு
என்ன செய்யவேண்டுமென்று விரும்புகிறீர்
37 கள் என்று கேட்டார். அதற்கு அவர்கள்:
உமது மகிமையிலே, எங்களில் ஒருவன் உமது
வலதுபாரிசத்திலும், ஒருவன் உமது இடது
பாரிசத்திலும் உட்கார்ந்திருக்கும்படி எங்க
ளுக்கு அருள் செய்யவேண்டும் என்றார்கள்.
38 இயேசு அவர்களை நோக்கி: [5]நீங்கள் கேட்டுக்
கொள்ளுகிறது இன்னது என்று உங்களுக்கே
தெரியவில்லை. நான் குடிக்கும் பாத்திரத்தில்
நீங்கள் குடிக்கவும், [6]நான் பெறும் ஸ்நானத்
தை நீங்கள் பெறவும், உங்களால் கூடுமா
39 என்றார். அதற்கு அவர்கள்: கூடும் என்றார்
கள். இயேசு அவர்களை நோக்கி: [7]நான் குடிக்
கும் பாத்திரத்தில் நீங்கள் குடிப்பீர்கள், நான்
பெறும் ஸ்நானத்தையும் நீங்கள் பெறுவீர்கள்.
40 ஆனாலும் என் வலதுபாரிசத்திலும் என் இட
துபாரிசத்திலும் உட்கார்ந்திருக்கும்படி எவர்
களுக்கு ஆயத்தம் பண்ணப்பட்டிருக்கிறதோ
அவர்களுக்கே யல்லாமல், [8]மற்றொருவருக்
கும் அதை அருளுவது என் காரியமல்ல என்
41 றார். மற்றப் பத்துப்பேரும் அதைக்கேட்டு,
யாக்கோபின்மேலும் யோவானின்மேலும் எரி
42 ச்சலானார்கள். அப்பொழுது, இயேசு அவர்க
ளைக் கிட்டவரச்செய்து: [9]புறஜாதியாருக்கு
அதிகாரிகளாக எண்ணப்பட்டவர்கள் அவர்
களை இறுமாப்பாய் ஆளுகிறார்கள் என்றும்,

1 மத். 20. 16. லூ. 13. 30
2 மத். 20. 17. ழ. 18. 31. ழ
3 அப். 20. 22
4 மத். 20. 20. ழ
5 யாக். 4. 3
6 லூ. 12. 50
7 14. 36. மத். 10. 25. யோ. 17. 14.
8 மத். 25, 34. எபி. 11. 16
9 லூ. 22. 25
10 9. 35. மத். 20. 26, 28. லூ. 9. 48
11 யோ. 13. 14 பிலி. 2. 7
12 ஏசா. 53. 11, 12. தானி. 9. 26. 2கொ. 5. 21. கலா. 3. 13. 1தீமோ. 2. 6. தீத். 2. 14
13 மத். 20. 29. ழ. லூ. 18. 35. ழ
14 சங். 62. 12. எரே. 29. 13
15 யோ. 11. 28
16 5. 34. மத். 9. 22
17 மத். 21. 1. ழ. லூ. 19. 29. ழ. யோ. 12. 14. ழ

அவர்களில் பெரியவர்கள் அவர்கள்மேல் கடி
னமாய் அதிகாரம் செலுத்துகிறார்கள் என்றும்
நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். உங்களுக்குள் 43
ளே அப்படி இருக்கலாகாது; [10]உங்களில் எவ
னாகிலும் பெரியவனாயிருக்க விரும்பினால்,
அவன் உங்களுக்குப் பணிவிடைக்காரனா
யிருக்கக்கடவன். உங்களில் எவனாகிலும் 44
முதன்மையானவனாயிருக்க விரும்பினால்,
அவன் எல்லாருக்கும் ஊழியக்காரனாயிருக்
கக்கடவன். அப்படியே, மனுஷகுமாரனும் 45
ஊழியங்கொள்ளும்படி வராமல், [11]ஊழியஞ்
செய்யவும், [12]அநேகரை மீட்கும்பொருளாகத்
தம்முடைய ஜீவனைக் கொடுக்கவும் வந்தார்
என்றார்.
பின்பு அவர்கள் எரிகோவுக்கு வந்தார்கள். 46
[13]அவரும் அவருடைய சீஷர்களும் திரளான
ஜனங்களும் எரிகோவைவிட்டுப் புறப்படுகிற
போது, திமேயுவின் மகனாகிய பர்திமேயு என்
கிற ஒரு குருடன், வழியருகே உட்கார்ந்து
பிச்சை கேட்டுக்கொண்டிருந்தான். அவன் 47
நசரேயனாகிய இயேசு வருகிறாரென்று கேள்
விப்பட்டு: இயேசுவே, தாவீதின் குமாரனே,
எனக்கு இரங்கும் என்று கூப்பிடத் தொடங்
கினான். அவன் பேசாதிருக்கும்படி அநே 48
கர் அவனை அதட்டினார்கள். அவனோ: தாவீ
தின் குமாரனே, எனக்கு இரங்கும் என்று,
[14]முன்னிலும் அதிகமாய்க் கூப்பிட்டான்.
இயேசு நின்று, அவனை அழைத்துவரச் 49
சொன்னார். அவர்கள் அந்தக் குருடனை
அழைத்து: திடன்கொள், எழுந்திரு, [15]உன்னை
அழைக்கிறார் என்றார்கள். உடனே அவன் 50
தன் மேல்வஸ்திரத்தை எறிந்துவிட்டு, எழு
ந்து, இயேசுவினிடத்தில் வந்தான். இயேசு 51
அவனை நோக்கி: நான் உனக்கு என்ன செய்
யவேண்டும் என்றிருக்கிறாய் என்றார். அதற்கு
அந்தக் குருடன்: ஆண்டவரே, நான் பார்வை
யடையவேண்டும் என்றான். இயேசு அவனை 52
நோக்கி: நீ போகலாம், [16]உன் விசுவாசம்
உன்னை ரட்சித்தது என்றார். உடனே அவன்
பார்வையடைந்து, வழியிலே இயேசுவுக்குப்
பின்சென்றான்.
அவர்கள் எருசலேமுக்குச் சமீபமாய்ச் 11
சேர்ந்து, [17]ஒலிவமலைக்கு அருகான பெத்பகே
பெத்தானியா என்னும் ஊர்களுக்கு வந்த
போது, அவர் தம்முடைய சீஷரில் இரண்டு
பேரை நோக்கி: உங்களுக்கு எதிரேயிருக் 2
கிற கிராமத்துக்குப் போங்கள்; அதில் பிரவே
சித்தவுடனே, மனுஷர் ஒருவரும் ஒருக்கா
லும் ஏறியிராத ஒரு கழுதைக்குட்டி கட்டியி
ருக்கக் காண்பீர்கள், அதை அவிழ்த்துக்கொ
ண்டு வாருங்கள். ஏன் இப்படிச் செய்கிறீர் 3
கள் என்று ஒருவன் உங்களிடத்தில் கேட்
டால்: இது ஆண்டவருக்கு வேண்டுமென்று
சொல்லுங்கள்; உடனே அதை இவ்விடத்
திற்கு அனுப்பிவிடுவான் என்று சொல்லி,
அவர்களை அனுப்பினார். அவர்கள் போய், 4
வெளியே இருவழிச்சந்தியில் ஒரு வாசல

ருகே கட்டியிருந்த அந்தக் குட்டியைக் கண்டு,
5 அதை அவிழ்த்தார்கள். அப்பொழுது அங்
கே நின்றவர்களில் சிலர்: நீங்கள் குட்டியை
6 அவிழ்க்கிறது என்னவென்றார்கள். இயேசு
கற்பித்தபடியே அவர்களுக்கு உத்தரவு சொன்
னார்கள். அப்பொழுது, அவர்களைப் போக
7 விட்டார்கள். அவர்கள் அந்தக் குட்டியை
இயேசுவினிடத்தில் கொண்டுவந்து, அதின்
மேல் தங்கள் வஸ்திரங்களைப் போட்டார்கள்;
8 [1]அவர் அதின்மேல் ஏறிப்போனார். அநேகர்
தங்கள் வஸ்திரங்களை வழியிலே விரித்தார்
கள்; வேறு சிலர் மரக்கிளைகளைத் தறித்து வழி
9 யிலே பரப்பினார்கள். முன்நடப்பாரும் பின்
நடப்பாரும்: *ஓசன்னா! [2]கர்த்தரின் நாமத்தி
னாலே வருகிறவர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்;
10 கர்த்தரின் நாமத்தினாலே வருகிற நம்முடைய
பிதாவாகிய தாவீதின் ராஜ்யம் ஆசீர்வதிக்கப்
படுவதாக; [3]உன்னதத்திலே ஓசன்னா என்று
சொல்லி ஆர்ப்பரித்தார்கள்.
11 அப்பொழுது, இயேசு எருசலேமுக்கு
வந்து, தேவாலயத்தில் பிரவேசித்து, [4]எல்லா
வற்றையும் சுற்றிப்பார்த்து, சாயங்காலமான
போது, பன்னிருவரோடுங்கூடப் பெத்தானி
யாவுக்குப் போனார்.
12 மறுநாளிலே அவர்கள் பெத்தானியாவிலி
ருந்து புறப்பட்டு வருகையில், [5]அவருக்குப்
13 பசியுண்டாயிற்று. அப்பொழுது இலைகளுள்ள
ஒரு அத்திமரத்தைத் தூரத்திலே கண்டு, அதில்
ஏதாகிலும் அகப்படுமோ என்று பார்க்க வந்
தார். அத்திப்பழக் காலமாயிராதபடியால்,
அவர் அதினிடத்தில் வந்தபோது அதில்
இலைகளையல்லாமல், [6]வேறொன்றையும் கா
14 ணவில்லை. அப்பொழுது இயேசு அதைப்
பார்த்து: இதுமுதல் ஒருக்காலும் ஒருவனும்
உன்னிடத்தில் கனியைப் புசியாதிருக்கக்கட
வன் என்றார்; அதை அவருடைய சீஷர்கள்
கேட்டார்கள்.
15 அவர்கள் எருசலேமுக்கு வந்தார்கள்:
[7]இயேசு தேவாலயத்தில் பிரவேசித்து, ஆல
யத்தில் விற்கிறவர்களையும் கொள்ளுகிறவர்க
ளையும் துரத்திவிட்டு, காசுக்காரருடைய பல
கைகளையும், புறாவிற்கிறவர்களுடைய ஆச
16 னங்களையும் கவிழ்த்து, ஒருவனும் தேவால
யத்தின் வழியாக யாதொரு பண்டத்தையும்
17 கொண்டுபோக விடாமல்: என்னுடைய வீடு
எல்லா ஜனங்களுக்கும் ஜெபவீடு என்னப்
படும் என்று எழுதியிருக்கவில்லையா? [8]நீங்
களோ அதைக் கள்ளர் குகையாக்கினீர்கள்
என்று அவர்களுக்குச் சொல்லி உபதேசித்தார்.
18 அதை வேதபாரகரும் பிரதான ஆசாரியரும்
கேட்டு, அவரைக் கொலைசெய்ய வகைதேடி
னார்கள்; [9]ஆகிலும் ஜனங்களெல்லாரும் அவரு
டைய உபதேசத்தைக் குறித்து ஆச்சரியப்
பட்டபடியினாலே அவருக்குப் பயந்திருந்
தார்கள்.
19 சாயங்காலமானபோது அவர் நகரத்திலி
ருந்து புறப்பட்டுப் போனார்.

[1] சக. 9. 9
* மத். 21. 9. சாங்க
[2] சங். 118. 26
[3] சங். 148. 1. ஏசா. 9. 7. எரே. 33. 15
[4] எசே. 8. 9. செப். 1. 12. மத். 21. 12
[5] மத். 21. 18. முத
[6] ஏசா. 5. 7
[7] மத். 21. 12. முத. லூக். 19. 45. முத. யோவா. 2. 14. முத
[8] ஏசா. 56. 7. எரே. 7. 11
[9] 1. 22. மத். 7. 28. லூக். 4. 32
[10] மத். 21. 19
[11] மத். 17. 20. லூக். 17. 6
[12] மத். 7. 7. லூக். 11. 9. யோவா. 14. 13. யாக். 1. 5, 6
[13] மத். 6. 14. கொலோ. 3. 13
[14] மத். 18. 35
[15] மத். 21. 23. முத. லூக். 20. 1. முத
[16] எண். 16. 3
[17] 6. 20. மத். 3. 5, 6; 14. 5
[18] ஏசா. 1. 3; 29. 14. எரே. 8. 7. ஓசி. 4. 6
[19] லூக். 10. 21, 22

மறுநாள் காலையிலே அவர்கள் அவ்வழி 20
யாய்ப் போகும்போது, [10]அந்த அத்திமரம்
வேரோடே பட்டுப்போயிருக்கிறதைக் கண்
டார்கள். பேதுரு நினைவுகூர்ந்து, அவரை 21
நோக்கி: ரபீ, இதோ, நீர் சபித்த அத்தி
மரம் பட்டுப்போயிற்று என்றான். இயேசு 22
அவர்களை நோக்கி: தேவனிடத்தில் விசுவாச
முள்ளவர்களாயிருங்கள். எவனாகிலும் இந்த 23
மலையைப் பார்த்து: [11]நீ பெயர்ந்து, சமுத்திரத்
திலே தள்ளுண்டுபோ என்று சொல்லி, தான்
சொன்னபடியே நடக்கும் என்று தன் இருத
யத்தில் சந்தேகப்படாமல் விசுவாசித்தால்,
அவன் சொன்னபடியே ஆகும் என்று மெய்
யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆத 24
லால், நீங்கள் ஜெபம் பண்ணும்போது எவை
களைக் கேட்டுக்கொள்வீர்களோ, [12]அவைக
ளைப் பெற்றுக்கொள்வோம் என்று விசுவாசி
யுங்கள், அப்பொழுது அவைகள் உங்களுக்கு
உண்டாகும் என்று சொல்லுகிறேன். நீங் 25
கள் நின்று ஜெபம்பண்ணும்போது, ஒருவன்
பேரில் உங்களுக்கு யாதொரு குறை உண்
டாயிருக்குமானால், [13]பரலோகத்திலிருக்கிற
உங்கள் பிதா உங்கள் தப்பிதங்களை உங்க
ளுக்கு மன்னிக்கும்படி, அந்தக் குறையை
அவனுக்கு மன்னியுங்கள். நீங்கள் மன்னி 26
யாதிருப்பீர்களானால், [14]பரலோகத்திலிருக்
கிற உங்கள் பிதாவும் உங்கள் தப்பிதங்களை
மன்னியாதிருப்பார் என்றார்.
அவர்கள் மறுபடியும் எருசலேமுக்கு வந் 27
தார்கள். [15]அவர் தேவாலயத்திலே உலாவிக்
கொண்டிருக்கையில், பிரதான ஆசாரியரும்
வேதபாரகரும் மூப்பரும் அவரிடத்தில் வந்து:
நீர் எந்த அதிகாரத்தினால் இவைகளைச் செய்கி 28
றீர்? [16]இவைகளைச் செய்கிறதற்கு அதிகாரத்தை
உமக்குக் கொடுத்தவர் யார் என்று கேட்டார்
கள். இயேசு பிரதியுத்தரமாக: நானும் உங்க 29
ளிடத்தில் ஒரு காரியத்தைக் கேட்கிறேன்,
நீங்கள் எனக்கு உத்தரவு சொல்லுங்கள், அப்
பொழுது நானும் இன்ன அதிகாரத்தினாலே
இவைகளைச் செய்கிறேனென்று உங்களுக்
குச் சொல்லுவேன். யோவான் கொடுத்த 30
ஸ்நானம் தேவனால் உண்டாயிற்றோ, மனுஷ
ரால் உண்டாயிற்றோ, எனக்கு உத்தரவு
சொல்லுங்கள் என்றார். அதற்கு அவர்கள்: 31
தேவனால் உண்டாயிற்றென்று சொல்வோ
மானால், பின்னை ஏன் அவனை விசுவாசிக்க
வில்லையென்று கேட்பார். மனுஷரால் உண் 32
டாயிற்றென்று சொல்வோமானால், [17]ஜனங்
களுக்குப் பயப்பட வேண்டியதாயிருக்கும்;
எல்லாரும் யோவானை மெய்யாகத் தீர்க்கதரிசி
யென்று எண்ணுகிறார்களே என்று தங்க
ளுக்குள்ளே ஆலோசனைபண்ணி; இயேசு 33
வுக்குப் பிரதியுத்தரமாக: [18]எங்களுக்குத் தெரி
யாது என்றார்கள். அப்பொழுது இயேசு:
[19]நானும் இன்ன அதிகாரத்தினாலே இவைக
ளைச் செய்கிறேன் என்று உங்களுக்குச் சொல்
லேன் என்றார்.

12 பின்பு அவர் உவமைகளாய் அவர்களுக்
குச் சொல்லத்தொடங்கினதாவது: [1]ஒரு மனு
ஷன் ஒரு திராட்சத்தோட்டத்தை உண்டாக்
கி, அதைச் சுற்றிலும் வேலியடைத்து, இரசத்
தொட்டியை உண்டுபண்ணி, கோபுரத்தை
யும் கட்டி, தோட்டக்காரருக்கு அதைக் குத்த
கையாக விட்டு, புறத்தேசத்துக்குப் போயிருந்
2 தான். தோட்டக்காரரிடத்தில் திராட்சத்
தோட்டத்துக் [2]கனிகளில் தன் பாகத்தை வாங்
கிக்கொண்டுவரும்படி, பருவகாலத்திலே அவர்
களிடத்தில் ஒரு ஊழியக்காரனை அனுப்பி
3 ஞன். அவர்கள் அவனைப் பிடித்து, அடித்து,
4 வெறுமையாய் அனுப்பிவிட்டார்கள். பின்பு
வேறொரு ஊழியக்காரனை அவர்களிடத்தில்
அனுப்பினன்; அவர்கள் [3]அவன்மேல் கல்
லெறிந்து, தலையிலே காயப்படுத்தி, அவமா
5 னப்படுத்தி, அனுப்பிவிட்டார்கள். மறுபடி
யும் வேறொருவனை அனுப்பினன்; அவனை
அவர்கள் கொலைசெய்தார்கள். [4]வேறு அநே
கரையும் அனுப்பினன்; அவர்களில் சிலரை
அடித்து, [5]சிலரைக் கொன்றுபோட்டார்கள்.
6 அவனுக்குப் பிரியமான ஒரே குமாரன் இருந்
தான்: [6]என் குமாரனுக்கு அஞ்சுவார்களெ
ன்று சொல்லி, அவனையும் கடைசியிலே அவர்
7 களிடத்தில் அனுப்பினன். தோட்டக்கா
ரரோ: இவன் சுதந்தரவாளி, இவனைக் கொலை
செய்வோம் வாருங்கள்; அப்பொழுது சுதந்தரம்
நம்முடையதாகும் என்று ஒருவரோடொரு
8 வர் சொல்லிக்கொண்டு; அவனைப் பிடித்துக்
கொலைசெய்து, [7]திராட்சத்தோட்டத்துக்குப்
9 புறம்பேபோட்டுவிட்டார்கள். அப்படியிருக்க,
திராட்சத்தோட்டத்துக்கு எஜமான் என்ன
செய்வான்? அவன் வந்து அந்தத் தோட்டக்
காரரைச் சங்கரித்து, [8]திராட்சத்தோட்டத்தை
மற்றவர்களுக்கு ஒப்புக்கொடுப்பான் அல்ல
10 வா? வீடு கட்டுகிறவர்கள் ஆகாதென்று தள்
ளின கல்லே [9]மூலைக்குத் தலைக்கல்லாயிற்று;
11 அது கர்த்தாலே ஆயிற்று, அது நம்முடைய
கண்களுக்கு ஆச்சரியமாயிருக்கிறது என்று
எழுதியிருக்கிற வாக்கியத்தை நீங்கள் வாசிக்க
12 வில்லையா என்றார். இந்த உவமையைத் தங்
களைக்குறித்துச் சொன்னரென்று அவர்கள்
அறிந்து, அவரைப் பிடிக்க வகைதேடினர்
கள்; [10]ஆனலும் ஜனத்துக்குப் பயந்து, அவரை
விட்டுப் போய்விட்டார்கள்.
13 அவர்கள்; பேச்சிலே அவரை அகப்படுத்
தும்படிக்கு, [11]பரிசேயரிலும் ஏரோதியரிலும்
14 சிலரை அவரிடத்தில் அனுப்பினர்கள். அவர்
கள் வந்து: போதகரே, நீர் சத்தியமுள்ளவ
ரென்றும், எவனைக்குறித்தும் உமக்குக் கவை
யில்லையென்றும் அறிந்திருக்கிறோம், நீர் முக
தாட்சிணியம் இல்லாதவராய் தேவனுடைய
மார்க்கத்தைச் சத்தியமாய்ப் போதிக்கிறீர்,
இராயனுக்கு வரிகொடுக்கிறது நியாயமோ
அல்லவோ? நாம்கொடுக்கலாமோ, கொடுக்கக்
15 கூடாதோ? என்று கேட்டார்கள். அவர்களு
டையமாயத்தை அவர் அறிந்து: நீங்கள் என்னை
ஏன் சோதிக்கிறீர்கள்? நான் பார்க்கும்படிக்கு
ஒரு *பணத்தை என்னிடத்தில் கொண்டுவா
ருங்கள் என்றார். அவர்கள் அதைக் கொண்டு 16
வந்தார்கள். அப்பொழுது அவர்: இந்தச் சுருப
மும்மேலெழுத்தும்யாருடையது என்று கேட்
டார்; இராயனுடையது என்றார்கள். அதற்கு 17
இயேசு: [12]இராயனுடையதை இராயனுக்கும்,
[13]தேவனுடையதை தேவனுக்கும் செலுத்
துங்கள் என்றார். அவர்கள் அவரைக்குறித்து
ஆச்சரியப்பட்டார்கள்.
உயிர்த்தெழுதல் இல்லையென்று சாதிக்கிற 18
[14]சதுசேயர் அவரிடத்தில் வந்து: போதகரே, 19
ஒருவனுடைய சகோதரன் சந்தானமில்லா
மல் தன் மனைவியை விட்டு இறந்துபோனல்,
அவனுடைய சகோதரன் அவன் மனைவியை
விவாகம்பண்ணி, [15]தன் சகோதரனுக்குச் சந்
தானம் உண்டாக்கவேண்டுமென்று மோசே
எங்களுக்கு எழுதிவைத்திருக்கிறாரே. இப் 20
படியிருக்க, எழுபேர் சகோதரர் இருந்தார்
கள்; மூத்தவன் ஒரு பெண்ணை விவாகம்பண்
ணி, சந்தானமில்லாமல் இறந்துபோனன்.
இரண்டாம் சகோதரன் அவளை விவாகம் 21
பண்ணி, அவனும் சந்தானமில்லாமல் இறந்து
போனன். மூன்றாம் சகோதரனும் அப்படி
யேயானன். எழுபேரும் அவளை விவாகம் 22
பண்ணி, சந்தானமில்லாமல் இறந்துபோனர்
கள். எல்லாருக்கும்பின்பு அந்தஸ்திரீயும்இற
ந்துபோனள். ஆகையால், உயிர்த்தெழுதலில், 23
அவர்கள் எழுந்திருக்கும்போது, அவர்களில்
எவனுக்கு அவள் மனைவியாயிருப்பாள்? எழு
பேரும் அவளை மனைவியாகக் கொண்டிருந்
தார்களே என்று கேட்டார்கள். இயேசு 24
அவர்களுக்குப் பிரதியுத்தரமாக: நீங்கள் வேத
வாக்கியங்களையும், தேவனுடைய வல்லமை
யையும் அறியாததினலல்லவா தப்பான எண்
ணங்கொள்ளுகிறீர்கள்? மரித்தோர் உயிரோ 25
டெழுந்திருக்கும்போது கொள்வனையும் கொ
டுப்பனையும் இல்லை. [16]அவர்கள் பரலோகத்தில்
இருக்கிற தேவதூதரைப்போலிருப்பார்கள்.
மரித்தோர் எழுந்திருப்பதைப்பற்றி: [17]நான் 26
ஆபிரகாமின் தேவனும், ஈசாக்கின் தேவனும்,
யாக்கோபின் தேவனுமாய் இருக்கிறேன்
என்று, தேவன் முட்செடியைக் குறித்துச்
சொல்லிய இடத்தில், மோசேயின் ஆகமத்
தில் அவனுக்குச் சொன்னதை, நீங்கள் வாசிக்
கவில்லையா? அவர் மரித்தோருக்கு தேவனு 27
யிராமல், ஜீவனுள்ளோருக்கு தேவனுயிருக்
கிறார்; ஆகையால் நீங்கள் மிகவும் தப்பான
எண்ணங்கொள்ளுகிறீர்கள் என்றார்.
வேதபாரகரில் ஒருவன் அவர்கள் தர்க்கம் 28
பண்ணுகிறதைக் கேட்டு, [18]அவர்களுக்கு நன்
றாய் உத்தரவு சொன்னரென்று அறிந்து,
அவரிடத்தில் வந்து: கற்பனைகளிலெல்லாம்
பிரதான கற்பனை எதுவென்று கேட்டான்.
இயேசு அவனுக்குப்பிரதியுத்தரமாக: கற்பனை 29
களிலெல்லாம் பிரதான கற்பனை எதுவென்
றால், [19]இஸ்ரவேலே கேள், நம்முடைய தேவ

[1] மத். 21. 33. மு. லூ. 20. 9. மு.
[2] உன்னத. 8. 11. மீகா. 7. 1. லூ. 12. 48. யோ. 15. 1-8
[3] எபி. 11. 37
[4] நெகே. 9. 30. எரே. 7. 25. மு.
[5] மத். 23. 37
[6] எபி. 1. 1, 2
[7] எபி. 13. 12
[8] நீதி. 1. 24, 31. ஏசா. 5. 5, 7. எரே. 17. 3. தானி. 9. 26
[9] சங். 118. 22, 23
[10] 11. 18. யோ. 7. 30
[11] மத். 22. 15. லூ. 20. 20. மு.
* மத். 18. 28. காசு
[12] மத். 17. 25-27. ரோ. 13. 7. 1 பே. 2. 17
[13] பிர. 5. 4, 5. மல். 1. 6
[14] மத். 22. 23. லூ. 20. 27. மு.
[15] உபா. 25. 5. ரூத். 1. 11, 13
[16] 1 கொ. 15. 42-53
[17] யாத். 3. 6, 16.
[18] மத். 22. 35
[19] உபா. 6. 4, 5. லூ. 10. 27

30 னுகிய கர்த்தர் ஒருவரே கர்த்தர். உன் தேவனு
கிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோ
டும், உன் முழு ஆத்துமாவோடும், உன் முழு
மனதோடும், உன் முழுப்பலத்தோடும் அன்பு
கூருவாயாக என்பதே பிரதான கற்பனை.
31 இதற்கு ஒப்பாயிருக்கிற இரண்டாம் கற்பனை
என்னவென்றால்: [1]உன்னிடத்தில் நீ அன்பு
கூருவதுபோல் பிறனிடத்திலும் அன்பு கூரு
வாயாக என்பதே; இவைகளிலும் பெரிய
32 கற்பனை வேறொன்றுமில்லை என்றார். அதற்கு
வேதபாரகன்: சரிதான், போதகரே, நீர்
சொன்னது சத்தியம்; [2]ஒரே தேவன் உண்டு,
அவரைத்தவிர வேறொரு தேவன் இல்லை.
33 முழு இருதயத்தோடும், [3]முழு மனதோடும்,
முழு ஆத்துமாவோடும், முழுப்பலத்தோடும்
அவரிடத்தில் அன்புகூருகிறதும், தன்னிடத்
தில் அன்புகூருகிறதுபோல் பிறனிடத்தில்
அன்புகூருகிறதுமே சர்வாங்க தகனம் முத
லிய பலிகளைப்பார்க்கிலும் முக்கியமாயிருக்
34 கிறது என்றான். அவன் விவேகமாய் உத்தர
வுசொன்னதை இயேசு கண்டு: நீ தேவனு
டைய ராஜ்யத்துக்குத் தூரமானவனல்ல என்
றார். [4]அதன்பின்பு ஒருவரும் அவரிடத்தில்
யாதொரு கேள்வியுங் கேட்கத் துணியவில்லை.
35 இயேசு தேவாலயத்திலே உபதேசம் பண்
ணுகையில், அவர்: [5]கிறிஸ்து தாவீதின் குமா
ரனென்று வேதபாரகர் எப்படிச் சொல்லு
36 கிறார்கள்? நான் உம்முடைய சத்துருக்களை
உமக்குப் பாதபடியாக்கிப் போடும்வரைக்கும்
[6]நீர் என்னுடைய வலதுபாரிசத்தில் உட்கா
ரும் என்று கர்த்தர் என் ஆண்டவரோடே
சொன்னார் என்று தாவீது [7]பரிசுத்த ஆவியி
37 னாலே சொல்லியிருக்கிறானே. தாவீதுதானே
அவரை ஆண்டவரென்று சொல்லியிருக்க,
அவனுக்கு அவர் குமாரனாயிருப்பது எப்படி
என்றார். அநேக ஜனங்கள் அவருடைய உப
தேசத்தை விருப்பத்தோடே கேட்டார்கள்.
38 பின்னும் [8]அவர் உபதேசம்பண்ணுகையில்
அவர்களை நோக்கி: [9]நீண்ட அங்கிகளைத் தரித்
துக்கொண்டு திரியவும், சந்தைவெளிகளில்
39 வந்தனங்களை அடையவும், ஜெபஆலயங்க
ளில் முதன்மையான ஆசனங்களில் உட்கார
வும், [10]விருந்துகளில் முதன்மையான இடங்க
40 ளில் இருக்கவும் விரும்பி, விதவைகளின்
வீடுகளைப் பட்சித்து, [11]பார்வைக்கு நீண்ட
ஜெபம்பண்ணுகிற வேதபாரகரைக்குறித்து
எச்சரிக்கையாயிருங்கள்; அவர்கள் அதிக ஆக்
கினையை அடைவார்கள் என்றார்.
41 இயேசு காணிக்கைப்பெட்டிக்கு எதிராக
உட்கார்ந்து, [12]ஜனங்கள் காணிக்கைப்பெட்டி
யில் பணம் போடுகிறதைப் பார்த்துக்கொண்
டிருந்தார்; ஐசுவரியவான்கள் அநேகர் அதிக
42 மாய்ப் போட்டார்கள். ஏழையான ஒரு வித
வையும் வந்து, ஒரு துட்டுக்குச் சரியான
43 இரண்டு காசைப் போட்டாள். அப்பொ
ழுது அவர் தம்முடைய சீஷரை அழைத்து,
காணிக்கைப் பெட்டியில் பணம்போட்ட மற்
றெல்லாரைப்பார்க்கிலும் [13]இந்த ஏழை வித
வை அதிகமாய்ப் போட்டாள் என்று மெய்
யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்;
அவர்களெல்லாரும் தங்கள் பரிபூரணத்திலி 44
ருந் தெடுத்துப் போட்டார்கள்; [14]இவளோ
தன் வறுமையிலிருந்து தன் ஜீவனத்துக்கு
உண்டாயிருந்ததெல்லாம் போட்டுவிட்டாள்
என்றார்.

அவர் தேவாலயத்தை விட்டுப் புறப்படும் **13**
போது, [15]அவருடைய சீஷர்களில் ஒருவன்
அவரை நோக்கி: போதகரே, இதோ, இந்தக்
கல்லுகள் எப்படிப்பட்டது! இந்தக் கட்ட
டங்கள் எப்படிப்பட்டது! பாரும் என்றான்.
இயேசு அவனுக்குப் பிரதியுத்தரமாக: [16]இந் 2
தப் பெரிய கட்டடங்களைக் காண்கிறாயே,
ஒரு கல்லின்மேல் ஒரு கல்லிராதபடிக்கு
எல்லாம் இடிக்கப்பட்டுப் போகும் என்றார்.
பின்பு, அவர் தேவாலயத்துக்கு எதிராக 3
ஒலிவமலையின்மேல் உட்கார்ந்திருக்கையில்,
பேதுருவும் யாக்கோபும் யோவானும் அந்தி
ரேயாவும் அவரிடத்தில் தனித்து வந்து:
இவைகள் எப்பொழுது சம்பவிக்கும்? இவை 4
களெல்லாம் நிறைவேறுங் காலத்துக்கு அடை
யாளம் என்ன? எங்களுக்குச் சொல்லவேண்
டும் என்றார்கள். இயேசு அவர்களுக்குப் 5
பிரதியுத்தரமாக: [17]ஒருவனும் உங்களை வஞ்சி
யாதபடிக்கு எச்சரிக்கையா யிருங்கள். ஏனெ 6
னில் அநேகர் வந்து, [18]என் நாமத்தைக்கொ
ண்டு: நானே கிறிஸ்து என்று சொல்லி,
அநேகரை வஞ்சிப்பார்கள். யுத்தங்களையும் 7
யுத்தங்களின் செய்திகளையும் கேள்விப்படும்
போது கலங்காதேயுங்கள்; [19]இவைகள் சம்ப
விக்கவேண்டியதே. ஆனாலும், முடிவு உட
னே வராது. ஜனத்துக்கு விரோதமாய் ஜன 8
மும், ராஜ்யத்துக்கு விரோதமாய் ராஜ்யமும்
எழும்பும்; பூமியதிர்ச்சிகளும் பல இடங்க
ளில் உண்டாகும், பஞ்சங்களும் கலகங்க
ளும் உண்டாகும்; இவைகள் வேதனைகளுக்கு
ஆரம்பம்.

நீங்களோ எச்சரிக்கையாயிருங்கள், [20]ஏ 9
னெனில் உங்களை ஆலோசனைச் சங்கங்க
ளுக்கு ஒப்புக்கொடுப்பார்கள், நீங்கள் ஜெப
ஆலயங்களில் அடிக்கப்படுவீர்கள்; என்னி
மித்தம் தேசாதிபதிகளுக்கும் ராஜாக்களுக்கும்
சாட்சியாக அவர்களுக்கு முன்பாக நிறுத்தப்
படுவீர்கள். சகல ஜாதிகளுக்கும் [21]சுவிசே 10
ஷம் முந்திப் பிரசங்கிக்கப்படவேண்டும்.
அவர்கள் உங்களைக் கொண்டுபோய் ஒப்புக் 11
கொடுக்கும்போது, நீங்கள் என்ன பேசுவோ
மென்று முன்னதாகக் கவலைப்படாமலும் சிந்
தியாமலுமிருங்கள்; அந்நாழிகையிலே உங்க
ளுக்கு எது அருள்செய்யப்படுமோ அதையே
பேசுங்கள்; [22]ஏனெனில் பேசுகிறவர்கள் நீங்
களல்ல, பரிசுத்தஆவியே பேசுகிறவர். அன் 12
றியும் சகோதரன் சகோதரனையும், [23]தகப்பன்
பிள்ளையையும் மரணத்துக்கு ஒப்புக்கொடுப்
பார்கள்; பெற்றாருக்கு விரோதமாகப் பிள்ளை

[1] லேவி. 19. 18. மத். 22. 39. ரோ. 13. 9. கலா. 5. 14. யாக். 2. 8
[2] உபா. 4. 39. ஏசா. 45. 5, 6, 14; 46. 9
[3] 1 சாமு. 15. 22. ஓசி. 6. 6. மீகா. 6. 6-8
[4] மத். 22. 46
[5] மத். 22. 41. முதலிய. லூக். 20. 41. முதலிய
[6] சங். 110. 1
[7] 2 சாமு. 23. 2. 2 தீமோ. 3. 16
[8] 4. 2
[9] மத். 23. 1. லூக். 20. 46. முதலிய
[10] லூக். 11. 43
[11] மத். 23. 14
[12] லூக். 21. 1. முதலிய
[13] 2 கொ. 8. 2, 12
[14] உபா. 24. 6. 1 நாளா. 29. 3, 17. 2 நாளா. 24. 10. 1 பேது. 3. 17
[15] மத். 24. 1. முதலிய. லூக். 21. 5. முதலிய
[16] லூக். 19. 44
[17] லூக். 19. 44
[18] அப். 5. 36-39. 1 யோ. 4. 1
[19] சங். 27. 3; 46. 1, 2. நீதி. 3. 25
[20] மத். 10. 17. முதலிய. வெளி. 2. 10
[21] மத். 28. 19. வெளி. 14. 6
[22] அப். 2. 4; 4. 8, 31; 6. 10
[23] மீகா. 7. 6. மத். 10. 21. லூக். 21. 16

கள் எழும்பி, அவர்களைக் கொலைசெய்வார்
13 கள். என் நாமத்தினிமித்தம் [1]எல்லாராலும்
பகைக்கப்படுவீர்கள், [2]முடிவுபரியந்தம் நிலை
நிற்பவனே ரட்சிக்கப்படுவான்.
14 மேலும் [3]பாழாக்குகிற அருவருப்பைக்
குறித்துத் தானியேல் தீர்க்கதரிசி சொல்லியி
ருக்கிறுனே; வாசிக்கிறவன் சிந்திக்கக்கட
வன்; அது நிற்கத்தகாத இடத்திலே நீங்கள்
அதை நிற்கக்காணும்போது, யூதேயாவில்
இருக்கிறவர்கள் மலைகளுக்கு ஓடிப்போகக்
15 கடவர்கள். வீட்டின்மேல் இருக்கிறவன்
தன் வீட்டுக்குள் இறங்காமலும், தன் வீட்டில்
எதையாகிலும் எடுத்துக்கொள்ள உள்ளே போ
16 காமலும் இருக்கக்கடவன். வயலில் இருக்
கிறவன் தன் வஸ்திரத்தை எடுப்பதற்குப் பின்
17 னிட்டுத் திரும்பாதிருக்கக்கடவன். அந்நாட்
களிலே [4]கர்ப்பவதிகளுக்கும் பால் கொடுக்
18 கிறவர்களுக்கும் ஐயோ! நீங்கள் ஓடிப்போ
வது மாரி காலத்திலே சம்பவியாதபடிக்கு
19 வேண்டிக்கொள்ளுங்கள். ஏனெனில் தே
வன் உலகத்தைச் சிருஷ்டித்ததுமுதல் இதுவ
ரைக்கும் சம்பவித்திராததும், [5]இனிமேலும்
சம்பவியாததுமான உபத்திரவம் அந்நாட்க
20 ளில் உண்டாயிருக்கும். கர்த்தர் அந்நாட்க
ளைக் குறைத்திராவிட்டால், ஒருவனுகிலும்
தப்பிப்போவதில்லை; தாம் தெரிந்துகொண்ட
வர்களினிமித்தமோ, அவர் அந்த நாட்களைக்
21 குறைத்திருக்கிறுர். அப்பொழுது: இதோ,
[6]கிறிஸ்து இங்கே இருக்கிறுர், அதோ, அங்
கேயிருக்கிறுர் என்று எவனுகிலும் சொன்
22 னுல், நம்பாதேயுங்கள். ஏனெனில் கள்ளக்
கிறிஸ்துக்களும் கள்ளத் தீர்க்கதரிசிகளும்
எழும்பி, கூடுமானுல் தெரிந்துகொள்ளப்பட்
டவர்களையும் வஞ்சிக்கத்தக்கதாக அடையா
ளங்களையும் அற்புதங்களையும் செய்வார்கள்.
23 நீங்களோ எச்சரிக்கையாயிருங்கள்; இதோ,
[7]எல்லாவற்றையும் முன்னதாக உங்களுக்கு
அறிவித்திருக்கிறேன்.
24 அந்நாட்களிலே, அந்த உபத்திரவத்திற்குப்
பின்பு, [8]சூரியன் அந்தகாரப்படும், சந்திரன்
25 ஒளியைக் கொடாதிருக்கும்; வானத்தின்
நட்சத்திரங்கள் விழும், [9]வானங்களிலுள்ள
26 சத்துவங்களும் அசைக்கப்படும். அப்பொ
ழுது [10]மனுஷகுமாரன் மிகுந்த வல்லமையோ
டும் மகிமையோடும் மேகங்களின்மேல் வருகி
27 றதைக் காண்பார்கள். அப்பொழுது அவர்
தம்முடைய தூதரை அனுப்பி, தாம் தெரிந்து
கொண்டவர்களை பூமியின் கடைமுனை முதற்
கொண்டு, வானத்தின் கடைமுனை மட்டு
முள்ள நாலு திசைகளிலுமிருந்து கூட்டிச்
சேர்ப்பார்.
28 அத்திமரத்தினுல் ஒரு உவமையைக் கற்
றுக்கொள்ளுங்கள்; [11]அதிலே இளங்கிளை தோ
ன்றி, துளிர்விடும்போது, வசந்தகாலம் சமீப
29 மாயிற்று என்று அறிவீர்கள். அப்படியே
இவைகள் சம்பவிக்கிறதை நீங்கள் காணும்
போது, அவர் சமீபமாய் வாசலருகே வந்தி
ருக்கிறுர் என்று அறியுங்கள். இவைகளெல் 30
லாம் சம்பவிக்குமுன்னே இந்தச் சந்ததி
ஒழிந்துபோகாதென்று, மெய்யாகவே உங்க
ளுக்குச் சொல்லுகிறேன். வானமும் பூமி 31
யும் ஒழிந்துபோம், [12]என் வார்த்தைகளோ
ஒழிந்துபோவதில்லை. அந்த நாளையும் அந்த 32
நாழிகையையும் பிதா ஒருவர்தவிர மற்றொரு
வனும் அறியான், பரலோகத்திலுள்ள தூதர்க
ளும் அறியார்கள், குமாரனும் அறியார்.
அக்காலத்தை நீங்கள் அறியாதபடியால் 33
எச்சரிக்கையாயிருங்கள், [13]விழித்திருந்து ஜெ
பம்பண்ணுங்கள். ஒரு மனுஷன் தன் வீட் 34
டைவிட்டு, புறத்தேசத்துக்குப் பிரயாணம்
போக எத்தனிக்கும்போது, தன் ஊழியக்கா
ரருக்கு அதிகாரங்கொடுத்து, அவனவனுக்
குத் தன் தன் வேலையையும் நியமித்து, விழித்
திருக்கும்படிக்குக் காவல் காக்கிறவனுக்குக்
கற்பிப்பான். அப்படியே நீங்களும் விழித் 35
திருங்கள்; ஏனெனில், வீட்டெஜமான் சா
யங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்
கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொ
ழுது வருவான் என்று நீங்கள் அறியீர்கள்.
நீங்கள் நினையாதவேளையில் அவன் வந்து, 36
[14]உங்களைத் தூங்குகிறவர்களாகக் கண்டுபிடி
யாதபடிக்கு விழித்திருங்கள். நான் உங்க 37
ளுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்
லுகிறேன், விழித்திருங்கள் என்றுர்.

இரண்டு நாளைக்குப் பின்பு [15]புளிப்பில் **14**
லாத அப்பஞ்சாப்பிடுகிற பஸ்காபண்டிகை
வந்தது. அப்பொழுது பிரதான ஆசாரியரும்
வேதபாரகரும், அவரைத் தந்திரமாய்ப் பிடித்
துக் கொலைசெய்யும்படி வகைதேடினுர்கள்.
ஆகிலும் ஜனங்களுக்குள்ளே கலகம் உண்டா 2
காதபடிக்கு, பண்டிகையிலே அப்படிச் செய்
யலாகாது என்றுர்கள்.
அவர் பெத்தானியாவில் குஷ்டரோகியா 3
யிருந்த சீமோன் வீட்டிலே போஜனபந்தியி
ருக்கையில், [16]ஒரு ஸ்திரீ விலையேறப்பெற்ற
களதம் என்னும் உத்தம தைலமுள்ள வெள்
ளைக்கல் பரணியைக் கொண்டுவந்து, அதை
உடைத்து, அந்தத் தைலத்தை அவர் சிரசின்
மேல் ஊற்றினுள். அப்பொழுது சிலர் தங் 4
களுக்குள்ளே விசனமடைந்து: இந்தத் தை
லத்தை இப்படி வீணுய்ச் செலவழிப்பா
னேன்? இதை முந்நூறு *பணத்துக்கு அதி 5
கமான கிரயத்துக்கு விற்று, தரித்திருக்குக்
கொடுக்கலாமே என்றுசொல்லி, அவளைக்கு
றித்து முறுமுறுத்தார்கள். இயேசு அவர்களை 6
நோக்கி: அவளை விட்டுவிடுங்கள்; ஏன் அவ
ளைத் தொந்தரவுபடுத்துகிறீர்கள்? என்னிடத்
தில் நற்கிரியையைச் செய்திருக்கிறுள். தரி 7
த்திரர் எப்போதும் உங்களிடத்தில் இருக்கி
றுர்கள், [17]உங்களுக்கு மனதுண்டாகும்போ
தெல்லாம் நீங்கள் அவர்களுக்கு நன்மை செய்
யலாம், நானே எப்போதும் உங்களிடத்தில்
இரேன். இவள் தன்னுல் இயன்றதைச் 8
செய்தாள்; நான் அடக்கம் பண்ணப்படுவே

1 லூக். 6. 22. யோவா. 17. 14
2 தானி. 12. 12. வெளி. 2. 10
3 தானி. 9. 27. மத். 24. 15. லூக். 21. 21
4 மத். 24. 19. லூக். 21. 23; 23. 29
5 தானி. 12. 1. யோவே. 2. 2. மத். 24. 21
6 லூக். 17. 23; 21. 8
7 2 பே. 3. 17
8 தானி. 12. 1. செப். 1. 15-17
9 ஏசா. 13. 10; 24. 20, 23. எரே. 4. 28. 2 பே. 3. 10, 12. வெளி. 1. 12-14; 20. 11
10 14. 62. தானி. 7. 9-14. மத். 16. 27; 24. 30. அப். 1. 11. 1 தெச. 4. 16. 2 தெச. 1. 7, 10. வெளி. 1. 7
11 மத். 24. 32. லூக். 21. 29. மு
12 ஏசா. 40. 8
13 மத். 24. 42; 25. 13. லூக். 12. 40; 21. 34. ரோ. 13. 11, 12. 1 தெச. 5. 5. வெளி. 16. 15
14 மத். 25. 5
15 மத். 26. 2. லூக். 22. 1. யோவா. 11. 55
16 மத். 26. 6. மு. லூக். 7. 37. யோவா. 12. 1. மு
* மத். 18. 28. காண்க
17 உபா. 15. 11

தற்கு எத்தனமாக, என் சரீரத்தில் தைலம்
9 பூச முந்திக்கொண்டாள். இந்தச் சுவிசே
ஷம் உலகத்தில் எங்கெங்கே பிரசங்கிக்கப்படு
மோ அங்கங்கே இவளை நினைப்பதற்காக
இவள் செய்ததும் சொல்லப்படும் என்று மெய்
யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்
என்றார்.
10 அப்பொழுது, பன்னிருவரில் [1]ஒருவனா
கிய யூதாஸ்காரியோத்து என்பவன் அவரைப்
பிரதான ஆசாரியருக்குக் காட்டிக்கொடுக்கும்
11 படி அவர்களிடத்திற்குப் போனான். அவர்
கள் அதைக் கேட்டு, சந்தோஷப்பட்டு, [2]அவ
னுக்குப் பணங்கொடுப்போம் என்று வாக்குத்
தத்தம் பண்ணினார்கள்; அவன் அவரைக்
காட்டிக்கொடுப்பதற்குத் தகுந்த சமயம் பார்த்
துக்கொண்டிருந்தான்.
12 பஸ்காவைப் பலியிடும் நாளாகிய [3]புளிப்
பில்லாத அப்பஞ்சாப்பிடுகிற முதலாம் நாளி
லே, அவருடைய சீஷர்கள் அவரிடத்தில்
வந்து: நீர் பஸ்காவைப் புசிப்பதற்கு நாங்கள்
எங்கே போய் ஆயத்தம்பண்ணச் சித்தமாயி
13 ருக்கிறீர் என்று கேட்டார்கள். அவர் தம்மு
டைய சீஷரில் இரண்டுபேரை நோக்கி: [4]நீங்
கள் நகரத்திற்குள்ளே போங்கள், அங்கே
தண்ணீர்க்குடம் சுமந்துவருகிற ஒரு மனுஷன்
உங்களுக்கு எதிர்ப்படுவான், அவன் பின்
14 னே போங்கள்; அவன் எந்த வீட்டிற்குள்
பிரவேசிக்கிறானோ அந்த வீட்டு எஜமானை
நீங்கள் நோக்கி: [5]நான் என் சீஷரோடுகூ
டப் பஸ்காவைப் புசிக்கிறதற்குத் தகுதியான
இடம் எங்கேயென்று போதகர் கேட்கிறார்
15 என்று சொல்லுங்கள். அவன் கம்பளம் முத
லானவைகள் விரித்து ஆயத்தம் பண்ணப்பட்
டிருக்கிற விஸ்தாரமான மேல்வீட்டறையை
உங்களுக்குக் காண்பிப்பான்; அங்கே நமக்
காக ஆயத்தம் பண்ணுங்கள் என்று சொல்லி
16 அனுப்பினார். அப்படியே, அவருடைய சீஷர்
புறப்பட்டு நகரத்தில் போய், [6]தங்களுக்கு
அவர் சொன்னபடியே கண்டு, பஸ்காவை
ஆயத்தம் பண்ணினார்கள்.
17 சாயங்காலமானபோது, [7]அவர் பன்னிருவ
18 ரோடுங்கூட அவ்விடத்திற்கு வந்தார். அவர்
கள் பந்தியமர்ந்து போஜனம்பண்ணுகையில்,
இயேசு அவர்களை நோக்கி: என்னுடனே
புசிக்கிற உங்களில் ஒருவன் [8]என்னைக் காட்
டிக்கொடுப்பான் என்று, மெய்யாகவே உங்
19 களுக்குச் சொல்லுகிறேன் என்றார். அப்
பொழுது அவர்கள் துக்கமடைந்து: நானோ?
நானோ? என்று ஒவ்வொருவரும், அவரிடத்
20 தில் கேட்கத் தொடங்கினார்கள். அவர் பிரதி
யுத்தரமாக: என்னுடனேகூடத் தாலத்தில்
கையிடுகிறவனாகிய பன்னிருவரி லொருவ
21 னே அவன் என்று சொல்லி; மனுஷகுமா
ரன் தம்மைக்குறித்து எழுதியிருக்கிறபடியே
போகிறார்; [9]ஆகிலும், எந்த மனுஷனால் மனு
ஷகுமாரன் காட்டிக் கொடுக்கப்படுகிறாரோ,
அந்த மனுஷனுக்கு ஐயோ! அந்த மனுஷன்

1 மத். 26. 14. மு. லூ. 22. 3. மு
2 1 இரா. 21. 20. சதி. 1. 10-16
3 யாத். 12. 8. மு. மத். 26. 17. லூ. 22. 7
4 11. 2, 3. எபி. 4. 13
5 யோ. 11. 28: 13. 13. வெளி. 3. 20
6 யோ. 16. 4
7 மத். 26. 20. மு. லூ. 22. 21. மு. யோ. 13. 21. மு
8 சங். 41. 9: 55. 13, 14
9 மத். 18. 6, 7: 26. 24
10 மத். 26. 26. மு. லூ. 22. 19. 1 கொ. 11. 23. மு
11 யோவே. 3. 18. ஆமோ. 9. 13, 14
12 மத். 26. 30. மு. லூ. 22. 19. மு
13 சகரி. 13. 7
14 16. 7
15 மத். 26. 33, 34. லூ. 22. 33, 34. யோ. 13. 37, 38
16 மத். 26. 36. மு. லூ. 22. 39. மு. யோ. 18. 1. மு
17 யோ. 12. 27
18 எபி. 5. 7
19 ரோ. 8. 15. கலா. 4. 6
20 சங். 40. 8. யோ. 4. 34: 5. 30. பிலி. 2. 8

பிறவாதிருந்தானானால் அவனுக்கு நலமாயிருக்
கும் என்றார்.
அவர்கள் போஜனம் பண்ணுகையில், [10]இ 22
யேசு அப்பத்தை எடுத்து ஆசீர்வதித்து,
அதைப் பிட்டு, அவர்களுக்குக் கொடுத்து:
நீங்கள் வாங்கிப் புசியுங்கள், இது என்னு
டைய சரீரமாயிருக்கிறது என்றார். பின்பு, 23
பாத்திரத்தையும் எடுத்து, ஸ்தோத்திரம்பண்
ணி, அதை அவர்களுக்குக் கொடுத்தார். அவர்
களெல்லாரும் அதிலே பானம்பண்ணினார்
கள். அப்பொழுது அவர் அவர்களை நோ 24
க்கி: இது அநேகருக்காகச் சிந்தப்படுகிற புது
உடன்படிக்கைக்குரிய என்னுடைய இரத்த
மாயிருக்கிறது. நான் தேவனுடைய ராஜ்யத் 25
தில் நவமான ரசத்தைப் பானம்பண்ணும்
நாள்வரைக்கும் [11]திராட்சப்பழரசத்தை இனி
நான் பானம்பண்ணுவதில்லையென்று மெய்
யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்
என்றார்.
அவர்கள் ஸ்தோத்திரப்பாட்டைப் பாடின 26
பின்பு, [12]ஒலிவமலைக்குப் புறப்பட்டுப் போ
னார்கள்.
அப்பொழுது, இயேசு அவர்களை நோக்கி: 27
மேய்ப்பனை வெட்டுவேன், ஆடுகள் சிதறடிக்
கப்படும், [13]என்று எழுதியிருக்கிறபடி, இந்த
இராத்திரியிலே நீங்களெல்லாரும் என்னிமித்
தம் இடறலடைவீர்கள். ஆகிலும் நான் உயிர்த் 28
தெழுந்தபின்பு; [14]உங்களுக்கு முன்னே கலி
லேயாவுக்குப் போவேன் என்றார். அதற்குப் 29
பேதுரு: [15]உமதுநிமித்தம் எல்லாரும் இடறல
டைந்தாலும், நான் இடறலடையேன் என்
றான். இயேசு அவனை நோக்கி: இன்றை 30
க்கு, இந்த இராத்திரியிலே, சேவல் இரண்டு
தரம் கூவுகிறதற்குமுன்னே, நீ மூன்றுதரம்
என்னை மறுதலிப்பாய் என்று மெய்யாகவே
உனக்குச் சொல்லுகிறேன் என்றார். அதற்கு 31
அவன்: நான் உம்மோடே மரிக்கவேண்டிய
தாயிருந்தாலும் உம்மை மறுதலிக்கமாட்டேன்
என்று உறுதியாய்ச் சொன்னான்; எல்லாரும்
அப்படியே சொன்னார்கள்.
பின்பு கெத்செமனே என்னப்பட்ட இடத் 32
திற்கு வந்தார்கள். [16]அப்பொழுது அவர் தம்மு
டைய சீஷர்களை நோக்கி: நான் ஜெபம்பண்
ணுமளவும் இங்கே உட்கார்ந்திருங்கள் என்று
சொல்லி; பேதுருவையும் யாக்கோபையும் 33
யோவானையும் தம்மோடே கூட்டிக்கொண்டு
போய், திகிலடையவும், மிகவும் வியாகுலப்ப
டவும் தொடங்கினார். அப்பொழுது அவர்: 34
[17]என் ஆத்துமா மரணத்துக்கேதுவான துக்கங்
கொண்டிருக்கிறது. நீங்கள் இங்கே தங்கி,
விழித்திருங்கள் என்று சொல்லி, சற்று 35
அப்புறம் போய், தரையிலே விழுந்து, [18]அந்த
வேளை தம்மைவிட்டு நீங்கிப்போகக்கூடுமா
னால் அது நீங்கவேண்டுமென்று வேண்டிக்
கொண்டு: அப்பா பிதாவே, [19]எல்லாம் உம் 36
மாலே கூடும்; இந்தப் பாத்திரத்தை என்னி
டத்திலிருந்து எடுத்துப்போடும், [20]ஆகிலும்

என் சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்
37 தத்தின்படியே ஆகக்கடவது என்றார். பின்பு
அவர் வந்து, அவர்கள் நித்திரைபண்ணுகிற
தைக் கண்டு, பேதுருவை நோக்கி: சீமோ
னே, நித்திரைபண்ணுகிறாயா? ஒருமணிநே
38 ரம் நீ விழித்திருக்கக்கூடாதா? நீங்கள் சோ
தனைக்குட்படாதபடிக்கு விழித்திருந்து ஜெப
ம்பண்ணுங்கள். [1]ஆவி உற்சாகமுள்ளதுதான்,
39 மாம்சமோ பலவீனமுள்ளது என்றார். அவர்
மறுபடியும் போய் அந்த வார்த்தைகளையே
40 சொல்லி ஜெபம்பண்ணினார். அவர் திரும்ப
வந்தபோது, அவர்கள் மறுபடியும் நித்திரை
பண்ணுகிறதைக் கண்டார்; அவர்களுடைய
கண்கள் மிகுந்த நித்திரைமயக்கம் அடைந்தி
ருந்தபடியால், தாங்கள் மறுமொழியாக அவ
ருக்குச் சொல்வது இன்னதென்று அறியாதி
41 ருந்தார்கள். அவர் மூன்றாந்தரம் வந்து: இனி
நித்திரைபண்ணி இளைப்பாறுங்கள்; போதும்,
[2]வேளை வந்தது, இதோ, மனுஷகுமாரன் பா
விகளுடைய கைகளில் ஒப்புக்கொடுக்கப்படு
42 கிறார். என்னைக் காட்டிக்கொடுக்கிறவன்,
இதோ, வந்துவிட்டான், எழுந்திருங்கள்,
[3]போவோம் என்றார்.
43 உடனே, [4]அவர் இப்படிப் பேசுகையில்,
பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ் வந்தான்;
அவனோடேகூடப் பிரதான ஆசாரியரும் வே
தபாரகரும் மூப்பரும் அனுப்பின திரளான
ஜனங்கள், பட்டயங்களையும் தடிகளையும் பிடி
44 த்துக்கொண்டு வந்தார்கள். அவரைக் காட்டிக்
கொடுக்கிறவன்: [5]நான் எவனை முத்தஞ்செய்
வேனோ அவன்தான், அவனைப் பிடித்துப்
பத்திரமாய்க் கொண்டுபோங்கள் என்று அவர்
45 களுக்குக் குறிப்புச்சொல்லியிருந்தான். அவன்
வந்தவுடனே, அவரண்டையில் சேர்ந்து: ரபீ,
ரபீ, என்று சொல்லி, அவரை முத்தஞ்செய்
46 தான். அப்பொழுது அவர்கள் அவர்மேல்
47 கைபோட்டு, அவரைப் பிடித்தார்கள். அப்
பொழுது கூடநின்றவர்களில் ஒருவன் கத்தி
யை உருவி, பிரதான ஆசாரியனுடைய வே
48 லைக்காரனைக் காதற வெட்டினான். இயேசு
அவர்களை நோக்கி: [6]கள்ளனைப் பிடிக்கப்
புறப்படுகிறதுபோல, நீங்கள் பட்டயங்களையும்
தடிகளையும் எடுத்துக்கொண்டு என்னைப் பிடிக்
49 கவந்தீர்கள்; நான் தினந்தோறும் உங்கள்
நடுவிலே தேவாலயத்தில் உபதேசம் பண்ணிக்
கொண்டிருந்தேன்; அப்பொழுது நீங்கள்
என்னைப் பிடிக்கவில்லையே; [7]ஆனாலும் வேத
வாக்கியங்கள் நிறைவேற வேண்டியதாயிருக்
50 கிறது என்றார். அப்பொழுது [8]எல்லாரும் அவ
ரைவிட்டு ஓடிப்போனார்கள்.
51 ஒரு வாலிபன் ஒரு துப்பட்டியைமாத்திரம்
தன்மேல் போர்த்துக்கொண்டு அவர் பின்னே
52 போனான்; அவனைப் பிடித்தார்கள். அவன் தன்
துப்பட்டியைப் போட்டுவிட்டு, [9]நிர்வாண
மாய் அவர்களை விட்டு ஓடிப்போனான்.
53 இயேசுவை அவர்கள் பிரதான ஆசாரிய
னிடத்தில் கொண்டுபோனார்கள்; [10]அங்கே
ஆசாரியர் மூப்பர் வேதபாரகர் எல்லாரும்
கூடிவந்திருந்தார்கள். பேதுரு தூரத்திலே 54
அவருக்குப் பின்சென்று, பிரதான ஆசாரிய
னுடைய அரமனைக்குள் வந்து, சேவகரோ
டேகூட உட்கார்ந்து, நெருப்பண்டையிலே
குளிர் காய்ந்துகொண்டிருந்தான். அப்பொ 55
ழுது பிரதான ஆசாரியரும் [11]ஆலோசனைச்
சங்கத்தாரனைவரும் இயேசுவைக் கொலை
செய்யும்படி அவருக்கு விரோதமாகச் சாட்சி
தேடினார்கள்; அகப்படவில்லை. அநேகர் அவ 56
ருக்கு விரோதமாகப் பொய்ச்சாட்சி சொல்
லியும், [12]அந்தச் சாட்சிகள் ஒவ்வவில்லை. அப் 57
பொழுது சிலர் எழுந்து, [13]கைவேலையாகிய
இந்த தேவாலயத்தை நான் இடித்துப்போட்
டு, கைவேலையல்லாத வேறொன்றை மூன்று
நாளைக்குள்ளே கட்டுவேன் என்று இவன்
சொன்னதை நாங்கள் கேட்டோம் என்று,
அவருக்கு விரோதமாய்ப் பொய்ச்சாட்சி 58
சொன்னார்கள். அப்படிச் சொல்லியும் அவர் 59
கள் சாட்சி ஒவ்வாமற்போயிற்று. அப்பொ 60
ழுது பிரதான ஆசாரியன் எழுந்து நடுவே
நின்று, [14]இயேசுவை நோக்கி: இவர்கள் உன
க்கு விரோதமாய்ச் சொல்லுகிறதைக்குறித்து
நீ ஒன்றும் சொல்லுகிறதில்லையா என்று கே
ட்டான். அவரோ [15]ஒரு உத்தரவும் சொல் 61
லாமல் பேசாதிருந்தார். மறுபடியும் பிரதான
ஆசாரியன் அவரை நோக்கி: நீ ஸ்தோத்திரிக்
கப்பட்ட தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்
துதானா? என்று கேட்டான். அதற்கு இயேசு: 62
நான் அவர்தான்; [16]மனுஷகுமாரன் சர்வவல்ல
வரின் வலதுபாரிசத்தில் வீற்றிருப்பதையும்,
வானத்தின் மேகங்கள்மேல் வருவதையும் நீங்
கள் காண்பீர்கள் என்றார். பிரதான ஆசாரி 63
யன் இதைக் கேட்டவுடனே, [17]தன் வஸ்திரங்
களைக் கிழித்துக்கொண்டு: இனிச் சாட்சிகள்
நமக்கு வேண்டியதென்ன? தேவதூஷணத் 64
தைக் கேட்டீர்களே, உங்களுக்கு என்னமா
ய்த் தோன்றுகிறது என்றான். அதற்கு அவர்
களெல்லாரும்: இவன் மரணத்துக்குப் பாத்தி
ரனாயிருக்கிறான் என்று தீர்மானம்பண்ணி
னார்கள். அப்பொழுது சிலர் அவர்மேல் [18]துப் 65
பவும், அவருடைய முகத்தை மூடவும், அவ
ரைக் குட்டவும், ஞானதிருஷ்டியினாலே பார்
த்துச் சொல் என்று சொல்லவும் தொடங்கி
னார்கள்; வேலைக்காரரும் அவரைக் கன்னத்
தில் அறைந்தார்கள்.
அத்தருணத்திலே பேதுரு கீழே அரமனை 66
முற்றத்திலிருக்கையில் [19]பிரதான ஆசாரியனு
டைய வேலைக்காரிகளில் ஒருத்தி வந்து,
குளிர்காய்ந்துகொண்டிருக்கிற பேதுருவைக் 67
கண்டு, அவனை உற்றுப்பார்த்து: நீயும் நசரேய
னாகிய இயேசுவோடே இருந்தாய் என்றாள்.
அதற்கு அவன்: [20]நான் அறியேன்; நீ சொல் 68
லுகிறது எனக்குத் தெரியாது என்று மறுத
லித்து, வெளியே வாசல் மண்டபத்துக்குப்
போனான்; அப்பொழுது சேவல் கூவிற்று.
வேலைக்காரி அவனை மறுபடியும் கண்டு: 69

1 ரோ. 7. 18–25. கலா. 5. 17
2 யோ. 7. 30; 8. 20; 13. 1
3 மத். 26. 46. யோ. 18. 1, 2
4 மத். 26. 47. ழ. லூ. 22. 47. ழ. யோ. 18. 3. ழ
5 2 சாமு. 20. 9. சங். 55. 21. நீதி. 27. 6
6 மத். 26. 55. லூ. 22. 52
7 சங். 22. 1. ழ. ஏசா. 53. 3. ழ. லூ. 24. 44
8 27. வச. சங். 88. 8. ஏசா. 63. 3
9 13. 16
10 மத். 26. 57. ழ. லூ. 22. 54. ழ. யோ. 18. 19. ழ
11 மத். 26. 59
12 சங். 35. 11
13 15. 29. யோ. 2. 19
14 மத். 26. 62. ழ
15 சங். 39. 9. ஏசா. 53. 7. 1 பே. 2. 23
16 தானி. 7. 13. மத். 24. 30; 26. 64. லூ. 22. 69. வெளி. 1. 7
17 ஏசா. 37. 1
18 15. 19. ஏசா. 50. 6. மத். 26. 67, 68. லூ. 22. 63. ழ
19 மத். 26. 69. ழ. லூ. 22. 55. ழ. யோ. 18. 16. ழ
20 2 தீமோ. 2. 12. 13

[1]இவன் அவர்களில் ஒருவன் என்று அருகே
70 நின்றவர்களுக்குச் சொன்னாள். அவன் மறு
படியும் மறுதலித்தான். சற்றுநேரத்துக்குப்
பின்பு மறுபடியும் அருகே நிற்கிறவர்கள் பே
துருவைப் பார்த்து: மெய்யாகவே நீ அவர்
களில் ஒருவன், நீ கலிலேயன், [2]உன் பேச்சு
71 அதற்கு ஒத்திருக்கிறது என்றார்கள். அதற்கு
அவன்: நீங்கள் சொல்லுகிற மனுஷனை அறி
யேன் என்று சொல்லி, சபிக்கவும் சத்தியம்
72 பண்ணவும் தொடங்கினான். உடனே சே
வல் இரண்டாந்தரம் கூவிற்று. சேவல் இர
ண்டுதரங் கூவுகிறதற்குமுன்னே நீ என்னை
மூன்றுதரம் மறுதலிப்பாய் என்று இயேசு
தனக்குச் சொன்ன வார்த்தையைப் பேதுரு
நினைவுகூர்ந்து, [3]மிகவும் அழுதான்.

15 பொழுது விடிந்தவுடனே [4]பிரதான ஆசா
ரியரும் மூப்பரும் வேதபாரகரும் ஆலோச
னைச் சங்கத்தாரனைவரும் கூடி ஆலோசனை
பண்ணி, இயேசுவைக் கட்டிக்கொண்டுபோ
ய், பிலாத்துவினிடத்தில் ஒப்புக்கொடுத்தார்
2 கள். பிலாத்து அவரை நோக்கி: நீ யூதரு
டைய ராஜாவா என்று கேட்டான். [5]அதற்கு
3 அவர்: நீர் சொல்லுகிறபடிதான் என்றார். பிர
தான ஆசாரியர்கள் அவர்மேல் அநேகங் குற்
றங்களைச் சாட்டினார்கள். அவரோ மாறுத்த
4 ரம் ஒன்றும் சொல்லவில்லை. அப்பொழுது
பிலாத்து மறுபடியும் அவரைநோக்கி: இதோ,
[6]இவர்கள் உன்மேல் எத்தனையோ குற்றங்க
ளைச் சாட்டுகிறார்களே, அதற்கு நீ உத்தரவு
ஒன்றும் சொல்லுகிறதில்லையா என்று கேட்
5 டான். இயேசுவோ அப்பொழுதும் உத்த
ரவு ஒன்றும் சொல்லவில்லை; [7]அதினால் பிலா
த்து ஆச்சரியப்பட்டான்.
6 காவல் பண்ணப்பட்டவர்களில் எவனை
விடுதலையாக்கவேண்டுமென்று ஜனங்கள் கே
ட்டுக்கொள்வார்களோ, [8]அவனை அவர்களுக்
காக விடுதலையாக்குவது பண்டிகைதோறும்
7 பிலாத்துவுக்கு வழக்கமாயிருந்தது. கலகம்ப
ண்ணி அந்தக் கலகத்தில் கொலைசெய்து, அ
தற்காகக் காவல்பண்ணப்பட்டவர்களில் பர
பாஸ் என்னப்பட்ட ஒருவன் இருந்தான்.
8 ஜனங்கள், வழக்கத்தின்படியே தங்களுக்கு
ஒருவனை விடுதலையாக்கவேண்டுமென்று சத்த
மிட்டுக் கேட்டுக்கொள்ளத் தொடங்கினார்கள்.
9 பொறாமையினாலே [9]பிரதான ஆசாரியர்கள்
அவரை ஒப்புக்கொடுத்தார்களென்று பிலா
10 த்து அறிந்து, அவர்களைநோக்கி: நான் யூத
ருடைய ராஜாவை உங்களுக்கு விடுதலையாக்க
வேண்டுமென்றிருக்கிறீர்களா என்று கேட்
11 டான். பரபாசைத் தங்களுக்கு விடுதலையாக்
கவேண்டுமென்று [10]ஜனங்கள் கேட்டுக்கொள்
ளும்படி, பிரதான ஆசாரியர்கள் அவர்களை
12 ஏவிவிட்டார்கள். பிலாத்து மறுபடியும் அவர்
களை நோக்கி: அப்படியானால், [11]யூதருடைய
ராஜாவென்று நீங்கள் சொல்லுகிறவனை நான்
என்ன செய்யவேண்டும் என்று கேட்டான்.
13 அவனைச் சிலுவையில் அறையும் என்று மறு
படியும் சத்தமிட்டுச் சொன்னார்கள். அதற்குப் 14
பிலாத்து: [12]ஏன், என்ன பொல்லாப்புச் செய்
தான் என்றான். அவர்களோ: அவனைச் சிலு
வையில் அறையும் என்று பின்னும் அதிக
மாய்க் கூக்குரலிட்டுச் சொன்னார்கள். அப் 15
பொழுது பிலாத்து ஜனங்களைப் பிரியப்படுத்த
மனதுள்ளவனாய், பரபாசை அவர்களுக்கு
விடுதலையாக்கி, இயேசுவையோ வாரினால்
அடிப்பித்து, சிலுவையில் அறையும்படிக்கு
ஒப்புக்கொடுத்தான்.
அப்பொழுது போர்ச்சேவகர் அவரைத் 16
தேசாதிபதியின் அரமனையாகிய மாளிகையில்
கொண்டுபோய், [13]அவ்விடத்தில் போர்ச்சேவ
கருடைய கூட்டமுழுவதையும் கூடிவரச்
செய்து, சிவப்பான மேலங்கியை அவருக்கு 17
உடுத்தி, முள்முடியைப் பின்னி அவருக்குச்
சூட்டி: யூதருடைய ராஜாவே, வாழ்க என்று 18
அவரை வாழ்த்தி, அவரைச் சிரசில் கோ 19
லால் அடித்து, அவர்மேல் துப்பி, முழங்கால்
படியிட்டு அவரை வணங்கினார்கள். அவ 20
ரைப் [14]பரியாசம்பண்ணினபின்பு, சிவப்பான
அங்கியைக் கழற்றி, அவருடைய வஸ்திரங்
களை அவருக்கு உடுத்தி, அவரைச் சிலுவை
யில் அறையும்படி வெளியே கொண்டு
போனார்கள்.
சிரேனே ஊரானும், அலெக்சந்தருக்கும் 21
ரூப்புக்கும் தகப்பனுமாகிய சீமோன் என்னப்
பட்ட ஒருவன் *நாட்டிலிருந்து அவ்வழியே
வருகையில், அவருடைய சிலுவையைச் சுமக்
கும்படி அவனைப் பலவந்தம்பண்ணினார்கள்.
கபாலஸ்தலம் என்று அர்த்தங்கொள்ளும் 22
கொல்கொதா [15]என்னும் இடத்துக்கு அவ
ரைக் கொண்டுபோய், வெள்ளைப்போளம் 23
கலந்த திராட்சரசத்தை அவருக்குக் குடிக்கக்
கொடுத்தார்கள்; அவர் அதை ஏற்றுக்கொள்ள
வில்லை. அப்பொழுது அவரைச் சிலுவை 24
யில் அறைந்தார்கள். [16]அதன்பின்பு அவரு
டைய வஸ்திரங்களைப் பங்கிட்டு, ஒவ்வொரு
வன் ஒவ்வொரு பங்கை எடுத்துக்கொள்ளும்
படி அவைகளைக்குறித்துச் சீட்டுப்போட்டார்
கள். அவரைச் சிலுவையில் அறைந்தபோது 25
[17]மூன்றாம்மணி வேளையாயிருந்தது. அவர் 26
அடைந்த ஆக்கினையின் முகாந்தரத்தைக் காண்
பிக்கும்பொருட்டு, [18]**யூதருடைய ராஜா** என்று
எழுதி, சிலுவையின்மேல் கட்டினார்கள்.
அல்லாமலும், அவருடைய வலதுபக்கத்தில் 27
ஒருவனும் அவருடைய இடதுபக்கத்தில் ஒரு
வனுமாக, [19]இரண்டு கள்ளரை அவரோடே
கூடச் சிலுவைகளில் அறைந்தார்கள். அக் 28
கிரமக்காரரில் ஒருவனாக [20]எண்ணப்பட்டார்
என்கிற வேதவாக்கியம் அதனாலே நிறைவே
றிற்று. அந்தவழியாய் நடந்துபோகிறவர்கள் 29
தங்கள் [21]தலைகளைத் துலுக்கி: ஆ! ஆ! தேவா
லயத்தை இடித்து, [22]மூன்றுநாளைக்குள்ளே
கட்டுகிறவனே, உன்னை நீயே ரட்சித்துக் 30
கொள்; சிலுவையிலிருந்திறங்கிவா என்று
அவரைத் தூஷித்தார்கள். அப்படியே பிர 31

1 மத். 26. 71. லூ. 22. 58. யோ. 18. 25. லூ
2 அப். 2. 7
3 மத். 26. 75. 2 கொ. 7. 10
4 சங். 2. 2. மத். 27. 1. லூ. 23. 1. யோ. 18. 28. அப். 3. 13; 4. 26
5 மத். 27. 11
6 மத். 27. 13
7 ஏசா. 53. 7. யோ. 19. 9
8 மத். 27. 15. லூ. 23. 17. யோ. 18. 39
9 நீதி. 27. 4. பிர. 4. 4. அப். 13. 45. தீத். 3. 3
10 மத். 27. 20. அப். 3. 14
11 சங். 2. 6. எரே. 23. 5. அப். 5. 31
12 ஏசா. 53. 9
13 மத். 27. 27. யோ. 18. 28, 33; 19. 9
14 10. 34. யோபு 13. 9. சங். 35. 16. மத். 20. 19. லூ. 22. 63
* வயல்
15 மத். 27. 33. லூ. 23. 33. யோ. 19. 17. லூ
16 சங். 22. 18
17 மத். 27. 45
18 மத். 27. 37. யோ. 19. 19
19 மத். 27. 38
20 ஏசா. 53. 12. லூ. 22. 37
21 14. 58. சங். 22. 7
22 யோ. 2. 19

தான ஆசாரியரும் வேதபாரகரும் தங்களுக்
குள்ளே பரியாசம்பண்ணி: மற்றவர்களை ரட்
சித்தான், தன்னைத்தான் ரட்சித்துக்கொள்ளத்
32 திராணியில்லை. நாம் கண்டு விசுவாசிக்கத்
தக்கதாக [1]இஸ்ரவேலுக்கு ராஜாவாகிய கிறி
ஸ்து இப்பொழுது சிலுவையிலிருந்திறங்கட்
டும் என்று சொல்லிக்கொண்டார்கள். [2]அவ
ரோடேகூடச் சிலுவைகளில் அறையப்பட்ட
வர்களும் அவரை நிந்தித்தார்கள்.
33 ஆறாம்மணி [3]நேரமுதல் ஒன்பதாம் மணி
நேரம்வரைக்கும் பூமியெங்கும் அந்தகாரம்
உண்டாயிற்று.
34 ஒன்பதாம்மணி நேரத்திலே, இயேசு:
[4]எலோயீ! எலோயீ! லாமா சபக்தானி, என்று
மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிட்டார்; அதற்கு:
என் தேவனே! என் தேவனே! ஏன் என்னைக்
35 கைவிட்டீர் என்று அர்த்தமாம். அங்கே நின்
றவர்களில் சிலர் அதைக் கேட்டபொழுது:
இதோ, எலியாவைக் கூப்பிடுகிறான் என்றார்
36 கள். ஒருவன் ஓடி, [5]கடற்காளானைக் காடி
யிலே தோய்த்து, அதை ஒரு கோலில்
மாட்டி, [6]அவருக்குக் குடிக்கக் கொடுத்து:
பொறுங்கள், எலியா இவனை இறக்க வரு
37 வானோ பார்ப்போம் என்றான். இயேசு
மகா சத்தமாய்க் கூப்பிட்டு [7]ஜீவனை விட்டார்.
38 அப்பொழுது, [8]தேவாலயத்தின் திரைச்சீலை
மேல்தொடங்கிக் கீழ்வரைக்கும் இரண்டாகக்
39 கிழிந்தது. அவருக்கு எதிரே நின்ற [9]நூற்
றுக்கு அதிபதி அவர் இப்படிக் கூப்பிட்டு
ஜீவனைவிட்டதைக் கண்டபோது: மெய்யா
கவே இந்த மனுஷன் தேவனுடைய குமா
40 ரன் என்றான். சில ஸ்திரீகளும் [10]தூரத்திலி
ருந்து பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவர்
கலிலேயாவிலிருந்தபோது அவருக்குப் பின்
சென்று [11]ஊழியஞ்செய்துவந்த மகதலேனா
மரியாளும், சின்ன யாக்கோபுக்கும் யோசேக்
கும் தாயாகிய மரியாளும், சலோமே என்பவ
41 ளும், அவருடனே கூட எருசலேமுக்கு
வந்திருந்த வேறே அநேக ஸ்திரீகளும் அவர்க
ளோடே இருந்தார்கள்.
42 ஓய்வுநாளுக்கு முந்தினநாள் ஆயத்தநாளா
யிருந்தபடியால், [12]சாயங்கால மானபோது,
43 கனம்பொருந்திய ஆலோசனைக்காரனும் அரி
மத்தியா ஊரானும் [13]தேவனுடைய ராஜ்யம்
வரக் காத்திருந்தவனுமாகிய யோசேப்பு என்
பவன் வந்து, பிலாத்துவினிடத்தில் துணிந்து
போய், இயேசுவின் சரீரத்தைக் கேட்டான்.
44 அவர் இத்தனை சீக்கிரத்தில் மரித்துப்போனா
ரா என்று பிலாத்து ஆச்சரியப்பட்டு, நூற்
றுக்கு அதிபதியை அழைப்பித்து: அவர்
இதற்குள்ளே மரித்தது நிச்சயமா என்று
45 கேட்டான். நூற்றுக்கு அதிபதியினாலே
அதை அறிந்துகொண்டபின்பு, சரீரத்தை
46 யோசேப்பினிடத்தில் கொடுத்தான். அவன்
போய், மெல்லிய துப்பட்டியை வாங்கிக்
கொண்டுவந்து, [14]அவரை இறக்கி, அந்தத்
துப்பட்டியிலே சுற்றி, கல்மலையில் வெட்டி
யிருந்த கல்லறையிலே அவரை வைத்து, [15]கல்
லறையின் வாசலில் ஒரு கல்லைப் புரட்டி
வைத்தான். அவரை வைத்த இடத்தை மகத 47
லேனா மரியாளும் யோசேயின் தாயாகிய மரி
யாளும் பார்த்தார்கள்.

ஓய்வுநாளானபின்பு [16]மகதலேனா மரியா 16
ளும், யாக்கோபின் தாயாகிய மரியாளும்,
சலோமே என்பவளும், [17]அவருக்குச் சுகந்த
வர்க்கமிடும்படி அவைகளை வாங்கிக்கொண்டு,
வாரத்தின் முதலாம்நாள் அதிகாலையிலே சூரி 2
யன் உதயமாகிறபோது கல்லறையினிடத்
தில் வந்து, கல்லறையின் வாசலிலிருக்கிற 3
கல்லை நமக்காக எவன் புரட்டித் தள்ளுவான்
என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்
டார்கள். அந்தக் கல் மிகவும் பெரிதாயிருந் 4
தது; அவர்கள் ஏறிட்டுப் பார்க்கிறபோது,
அது தள்ளப்பட்டிருக்கக் கண்டார்கள்.
அவர்கள் கல்லறைக்குள் பிரவேசித்து, வெள் 5
ளையங்கி தரித்தவனாய் வலது பக்கத்தில் உட்
கார்ந்திருந்த ஒரு வாலிபனைக் கண்டு பயந்தார்
கள். அவன் அவர்களை நோக்கி: பயப்படா 6
திருங்கள், சிலுவையில் அறையப்பட்ட நசரே
யனாகிய இயேசுவைத் தேடுகிறீர்கள்; [18]அவர்
உயிர்த்தெழுந்தார்; அவர் இங்கேயில்லை;
இதோ, அவரை வைத்த இடம். நீங்கள் அவ 7
ருடைய [19]சீஷரிடத்திற்கும் பேதுருவினிடத்
திற்கும் போய்: உங்களுக்குமுன்னே கலிலே
யாவுக்குப் போகிறார், அவர் உங்களுக்குச்
சொன்னபடியே அங்கே அவரைக் காண்பீர்
கள் என்று, அவர்களுக்குச் சொல்லுங்கள்
என்றான். நடுக்கமும் திகிலும் அவர்களைப் 8
பிடித்தபடியால், அவர்கள் சீக்கிரமாய் வெளி
யே வந்து, கல்லறையை விட்டு ஓடினார்கள்;
அவர்கள் பயந்திருந்தபடியினால் [20]ஒருவருக்
கும் ஒன்றும் சொல்லாமற்போனார்கள்.

* * * * *

வாரத்தின் முதலாம்நாள் [21]அதிகாலையிலே 9
இயேசு எழுந்திருந்தபின்பு, [22]மகதலேனா மரி
யாளுக்கு முதல்முதல் தரிசனமானார். அவ 10
ளிடத்திலிருந்து அவர் ஏழு பிசாசுகளைத்
துரத்தியிருந்தார். அவள் புறப்பட்டு, அவ
ரோடே கூட இருந்தவர்கள் துக்கப்பட்டு
அழுதுகொண்டிருக்கையில், [23]அவர்களிடத்
தில் போய், அந்தச் செய்தியை அறிவித்தாள்.
அவர் உயிரோடிருக்கிறாரென்றும் அவளுக் 11
குக் காணப்பட்டார் என்றும் [24]அவர்கள் கேட்
டபொழுது நம்பவில்லை.
அதன்பின்பு அவர்களில் [25]இரண்டுபேர் 12
ஒரு கிராமத்துக்கு நடந்துபோகிறபொழுது
அவர்களுக்கு மறுரூபமாய்த் தரிசனமானார்.
அவர்களும் போய், அதை மற்றவர்களுக்கு 13
அறிவித்தார்கள்; அவர்களையும் அவர்கள் நம்ப
வில்லை.
அதன்பின்பு பதினொருவரும் போஜன 14
பந்தியிலிருக்கையில் [26]அவர்களுக்கு அவர் தரி

1 [illegible]. 3. 3.2; 2 [illegible]. 2. 12
2 மத். 27, 44. லூ. 23. 39
3 மத். 27. 45, லூ. 23. 44
4 சங்.22, 1. மத். 27. 46
5 மத். 27. 48. யோ. 19. 29
6 சங். 71. 20
7 மத். 27. 50. லூ. 23. 46. யோ. 19. 30
8 மத். 27. 51, லூ. 23. 45
9 மத். 27. 54 லூ. 23. 47
10 சங். 38. 11. மத். 27.55. லூ. 23. 49
11 லூ. 8. 2, 3
12 மத். 27. 57. லூ. 23. 50. யோ. 19. 38
13 லூ. 2. 25, 38
14 மத். 27. 59, 60. லூ. 23. 53. யோ. 19. 40
15 16. 3, 4
16 மத். 28. 1. லூ. 24. 1. யோ. 20. 1.
17 லூ. 23. 56
18 சங். 71. 20. மத். 28, 5-7
19 14. 28. மத். 26. 32
20 மத். 28. 8. லூ. 24. 9
21 யோ. 20. 14
22 லூ. 8. 2
23 லூ. 24. 10. யோ. 20. 18
24 லூ. 24. 11
25 லூ. 24. 13
26 லூ. 24. 36. 1 கொ. 15. 5

சனமாகி, உயிர்த்தெழுந்திருந்த தம்மைக் கண்
டவர்களை அவர்கள் நம்பாமற்போனதினிமித்
தம் அவர்களுடைய [1]அவிசுவாசத்தைக்குறித்
தும் இருதய கடினத்தைக்குறித்தும் அவர்க
15 ளைக் கடிந்துகொண்டார். பின்பு, அவர் அவர்
களை நோக்கி: [2]நீங்கள் உலகமெங்கும் போய்,
சர்வ சிருஷ்டிக்கும் சுவிசேஷத்தைப் பிரசங்
16 கியுங்கள். விசுவாசமுள்ளவனாகி [3]ஞானஸ்
நானம் பெற்றவன் ரட்சிக்கப்படுவான்; விசு
வாசியாதவனோ [4]ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்
17 கப்படுவான். விசுவாசிக்கிறவர்களால் நடக்
கும் அடையாளங்களாவன: [5]என் நாமத்தி
னாலே பிசாசுகளைத் துரத்துவார்கள்; [6]நவ
18 மான பாஷைகளைப் பேசுவார்கள்; சர்ப்பங்
களை [7]எடுப்பார்கள்; சாவுக்கேதுவான யா
தொன்றைக் குடித்தாலும் அது அவர்களைச்
சேதப்படுத்தாது; [8]வியாதிஸ்தர்மேல் கைகளை
வைப்பார்கள், அப்பொழுது அவர்கள் சொஸ்
தமாவார்கள் என்றார்.

இவ்விதமாய்க் கர்த்தர் அவர்களுடனே 19
பேசினபின்பு, [9]பரலோகத்துக்கு எடுத்துக்
கொள்ளப்பட்டு [10]தேவனுடைய வலதுபாரி
சத்தில் உட்கார்ந்தார். அவர்கள் புறப்பட் 20
டுப் போய், எங்கும் பிரசங்கம் பண்ணினார்
கள். [11]கர்த்தர் அவர்களுடனேகூடக் கிரி
யையை நடப்பித்து, அவர்களால் நடந்த
அடையாளங்களினாலே வசனத்தை உறுதிப்
படுத்தினார். ஆமென்.

1 லூ. 24. 25
2 மத். 28, 19. யோ. 20, 21. ரோ. 10. 18. கொலோ. 1. 23
3 யோ. 3. 18, 36. அப். 16. 31-33. ரோ. 10. 9. 1பே. 3. 21
4 யோ. 12. 48. 2 தெச. 2. 12
5 லூ. 10. 17. அப். 5. 16: 8. 7
6 அப். 2. 4: 10. 46. 1 கொ. 12. 10, 28
7 லூ. 10. 19. அப். 28. 5
8 அப். 5. 15, 16: 28. 8. யாக். 5. 14, 15
9 லூ. 24. 51. அப். 1. 2, 3
10 சங். 110. 1. அப். 7. 55. 1பே. 3. 22. வெளி. 3. 21
11 அப். 5. 12: 14. 3. 1கொ. 2. 4, 5. எபி. 2. 4

# THE GOSPEL ACCORDING TO LUKE

# லூக்கா எழுதின சுவிசேஷம்

1 *மகா கனம்பொருந்திய [1]தேயோப்பிலு
வே, நாங்கள் முழு நிச்சயமாய் நம்புகிற சங்க
2 திகளை, ஆரம்பமுதல் கண்ணாரக்கண்டு [2]வச
னத்தைப் போதித்தவர்கள் எங்களுக்கு ஒப்பு
வித்தபடியே அவைகளைக் குறித்துச் சரித்திரம்
எழுத அநேகம்பேர் ஏற்பட்டபடியினால்,
3 ஆதிமுதல் எல்லாவற்றையும் திட்டமாய் விசா
ரித்தறிந்த நானும் உமக்கு உபதேசிக்கப்பட்ட
விசேஷங்களின் நிச்சயத்தை [3]நீர் அறியவே
4 ண்டுமென்று, அவைகளை [4]ஒழுங்காய் உம
க்கு எழுதுவது எனக்கு நலமாய்த் தோன்
றிற்று.
5 யூதேயா தேசத்தின் [5]ராஜாவாகிய ஏரோ
தின் நாட்களில், [6]அபியா என்னும் ஆசாரிய
வகுப்பில் சகரியா என்னும் பேர்கொண்ட
ஆசாரியன் ஒருவன் இருந்தான். அவன்
மனைவி ஆரோனுடைய குமாரத்திகளில் ஒரு
6 த்தி, அவள் பேர் எலிசபெத்து. அவர்கள்
இருவரும் கர்த்தரிட்ட சகல கற்பனைகளின்
படியேயும் நியமங்களின்படியேயும் குற்றமற்ற
வர்களாய் நடந்து, [7]தேவனுக்கு முன்பாக நீதி
7 யுள்ளவர்களா யிருந்தார்கள். எலிசபெத்து
மலடியாயிருந்தபடியினால், அவர்களுக்குப்
பிள்ளையில்லாதிருந்தது; இருவரும் வயது
சென்றவர்களாயும் இருந்தார்கள்.
8 அப்படியிருக்க, அவன் தன் ஆசாரியவகுப்
பின் முறைப்படி தேவசந்நிதியிலே ஆசாரிய
9 ஊழியம் செய்துவருகிறகாலத்தில், ஆசாரிய
ஊழிய முறைமையின்படி அவன் தேவாலயத்
துக்குள் பிரவேசித்து [8]தூபங் காட்டுகிறதற்
10 குச் சீட்டைப் பெற்றான். தூபங்காட்டுகிற
வேளையிலே ஜனங்களெல்லாரும் [9]கூட்டமாய்
வெளியே ஜெபம் பண்ணிக்கொண்டிருந்
11 தார்கள். அப்பொழுது கர்த்தருடைய தூதன்
ஒருவன் [10]தூபபீடத்தின் வலதுபக்கத்திலே
12 நின்று அவனுக்குத் தரிசனமானான். சகரி
யா அவனைக் கண்டு கலங்கி, [11]பயமடைந்தான்.
13 தூதன் அவனை நோக்கி: சகரியாவே, பயப்ப
டாதே, உன் வேண்டுதல் கேட்கப்பட்டது;
உன் மனைவியாகிய எலிசபெத்து உனக்கு ஒரு
குமாரனைப் பெறுவாள், [12]அவனுக்கு யோ
14 வான் என்று பேரிடுவாயாக. உனக்குச் சந்
தோஷமும் மகிழ்ச்சியும் உண்டாகும், [13]அவன்
பிறப்பினிமித்தம் அநேகர் சந்தோஷப்படுவார்
கள். அவன் கர்த்தருக்கு முன்பாகப் பெரிய 15
வனாயிருப்பான், [14]திராட்சரசமும் மதுவும்
குடியான், தன் தாயின் வயிற்றிலிருக்கும்
போதே பரிசுத்த ஆவியினால் நிரப்பப்பட்டி
ருப்பான். அவன் இஸ்ரவேல் சந்ததியாரில் 16
அநேகரை [15]அவர்கள் தேவனாகிய கர்த்தரிடத்
திற்குத் திருப்புவான். பிதாக்களுடைய இரு 17
தயங்களைப் பிள்ளைகளிடத்திற்கும், [16]கீழ்ப்படி
யாதவர்களை நீதிமான்களுடைய ஞானத்திற்
கும் திருப்பி, [17]உத்தமமான ஜனத்தைக் கர்த்த
ருக்கு ஆயத்தப்படுத்தும்படியாக, அவன் எலி
யாவின் ஆவியும் பலமும் உடையவனாய் அவ
ருக்கு முன்னே நடப்பான் என்றான். அப் 18
பொழுது சகரியா தேவதூதனை நோக்கி:
இதை நான் எதினால் அறிவேன்; [18]நான் கிழ
வனாயிருக்கிறேன், என் மனைவியும் வயது
சென்றவளாயிருக்கிறாளே என்றான். தேவ 19
தூதன் அவனுக்குப் பிரதியுத்தரமாக: [19]நான்
தேவசந்நிதானத்தில் நிற்கிற காபிரியேல் என்
பவன்; உன்னுடனே பேசவும், உனக்கு இந்த
நற்செய்தியை அறிவிக்கவும் அனுப்பப்பட்டு
வந்தேன்; இதோ, தகுந்த காலத்திலே நிறை 20
வேறப்போகிற என் வார்த்தைகளை நீ விசுவா
சியாதபடியினால் இவைகள் சம்பவிக்கும் நாள்
மட்டும் நீ பேசக்கூடாமல் [20]ஊமையாயிருப்
பாய் என்றான். ஜனங்கள் சகரியாவுக்குக் 21
காத்திருந்து, அவன் தேவாலயத்தில் தாமதித்
ததினால் ஆச்சரியப்பட்டார்கள். அவன் வெ 22
ளியே வந்தபோது அவர்களிடத்தில் பேசக்
கூடாமலிருந்தான்; அதினாலே தேவாலயத்தில்
ஒரு தரிசனத்தைக் கண்டானென்று அறிந்தார்
கள். அவனும் அவர்களுக்குச் சைகை காட்டி
ஊமையாயிருந்தான். அவனுடைய ஊழியத் 23
தின் நாட்கள் நிறைவேறினவுடனே [21]தன்
வீட்டுக்குப் போனான்.
அந்நாட்களுக்குப்பின்பு, அவன் மனைவி 24
யாகிய எலிசபெத்து கர்ப்பவதியாகி: [22]ஜனங்
களுக்குள்ளே எனக்கு உண்டாயிருந்த நிந்
தையை நீக்கும்படியாகக் கர்த்தர் இந்த நாட்
களில் என்மேல் கடாட்சம் வைத்து, எனக்கு 25
இப்படிச் செய்தருளினார் என்று சொல்லி,
ஐந்துமாதம் வெளிப்படாதிருந்தாள்.

* உத்தமனாகிய
1 அப். 1. 1
2 யோ. 15. 27. யோ. 15. 16. எபே. 3. 7. எபி. 2. 3. 1 பே. 5. 1. 1 யோ. 1. 1
3 யோ. 20. 31
4 அப். 11. 4
5 மத். 2. 1
6 1 நாளா. 24. 10. நெகே. 12. 4, 17
7 ஆதி. 7. 1. 1 இரா. 9. 4. 2 இரா. 20. 3
8 யாத். 30. 7, 8
9 லேவி. 16. 17
10 யாத். 30. 1. வெளி. 8. 3, 4
11 நியா. 6. 22; 13. 22. தானி. 10. 8. அப். 10. 4. வெளி. 1. 17
12 60. 63. வச
13 58. வச
14 7. 28. எண். 6. 3. நியா. 13. 4
15 மல். 4. 5, 6. மத். 11. 14. மாற். 9. 12, 13
16 சங். 111. 10
17 1 பே. 2. 9
18 ஆதி. 17. 17
19 26. வச. தானி. 8. 16. மத். 18. 10. எபி. 1. 14
20 எசே. 3. 26
21 2 இரா. 11. 5
22 ஆதி. 30. 23. 1 சாமு. 1. 6. ஏசா. 54. 1, 4

26 ஆறாம் மாதத்திலே காபிரியேல் என்னும்
தூதன், கலிலேயாவிலுள்ள நாசரேத்தென்
27 னும் ஊரில், தாவீதின் வம்சத்தானாகிய யோ
சேப்பு என்கிற நாமமுள்ள புருஷனுக்கு நிய
மிக்கப்பட்டிருந்த ஒரு [1]கன்னிகையினிடத்
திற்கு தேவனாலே அனுப்பப்பட்டான்; அந்
28 தக் கன்னிகையின்பேர் மரியாள். அவள் இரு
ந்த வீட்டில் தேவதூதன் பிரவேசித்து: [2]கிரு
பைபெற்றவளே, வாழ்க, [3]கர்த்தர் உன்னுட
னே இருக்கிறார், ஸ்திரீகளுக்குள்ளே நீ * ஆசீர்
29 வதிக்கப்பட்டவள் என்றான். அவளோ அவ
னைக் கண்டு, அவன் வார்த்தையினால் கலங்கி,
இந்த வாழ்த்துதல் எப்படிப்பட்டதோ என்று
30 சிந்தித்துக்கொண்டிருந்தாள். தேவதூதன்
அவளை நோக்கி: மரியாளே, பயப்படாதே;
நீ தேவனிடத்தில் கிருபை பெற்றாய்.
31 இதோ, [4]நீ கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப்
பெறுவாய், அவருக்கு இயேசு என்று பேரிடு
32 வாயாக. அவர் பெரியவராயிருப்பார், [5]உன்
னதமானவருடைய குமாரன் என்னப்படுவார்;
[6]கர்த்தராகிய தேவன் அவருடைய பிதாவாகிய
தாவீதின் சிங்காசனத்தை அவருக்குக் கொடுப்
33 பார். அவர் யாக்கோபின் குடும்பத்தாரை என்
றென்றைக்கும் அரசாளுவார்; [7]அவருடைய
34 ராஜ்யத்துக்கு முடிவிராது என்றான். அதற்கு
மரியாள் தேவதூதனை நோக்கி: இது எப்படி
35 யாகும்? புருஷனை அறியேனே என்றாள். தே
வதூதன் அவளுக்குப் பிரதியுத்தரமாக: பரி
சுத்த ஆவி உன்மேல் வரும்; [8]உன்னதமான
வருடைய பலம் உன்மேல் நிழலிடும்; ஆத
லால் உன்னிடத்தில் பிறக்கும் பரிசுத்தமுள்
ளது தேவனுடைய குமாரன் என்னப்படும்.
36 இதோ, உனக்கு இனத்தாளாயிருக்கிற எலிச
பெத்தும் தன் முதிர்வயதிலே ஒரு புத்திரனைக்
கர்ப்பந்தரித்திருக்கிறாள்; மலடி யென்னப்
37 பட்ட அவளுக்கு இது ஆறாம் மாதம். தேவ
னாலே [9]கூடாதகாரியம் ஒன்றுமில்லை என்
38 றான். அதற்கு மரியாள்: இதோ, நான் ஆண்
டவருக்கு அடிமை, [10]உம்முடைய வார்த்தை
யின்படி எனக்கு ஆகக்கடவது என்றாள். அப்
பொழுது தேவதூதன் அவளிடத்திலிருந்து
போய்விட்டான்.

39 அந்நாட்களில் மரியாள் எழுந்து, [11]மலைநாட்
டிலே யூதாவிலுள்ள ஒரு பட்டணத்திற்குத்
40 தீவிரமாய்ப் போய், சகரியாவின் வீட்டுக்
குள் பிரவேசித்து, எலிசபெத்தை வாழ்த்தி
41 னாள். எலிசபெத்து மரியாளுடைய வாழ்த்து
தலைக் கேட்டபொழுது, அவளுடைய வயிற்றி
லிருந்த பிள்ளை துள்ளிற்று; எலிசபெத்து பரி
42 சுத்த ஆவியினால் நிரப்பப்பட்டு, உரத்த சத்த
மாய்: [12]ஸ்திரீகளுக்குள்ளே நீ ஆசீர்வதிக்கப்
பட்டவள், உன் கர்ப்பத்தின் கனியும் ஆசீர்
43 வதிக்கப்பட்டது. என் ஆண்டவருடைய
[13]தாயார் என்னிடத்தில் வந்தது எனக்கு எதி
44 னால் கிடைத்தது. இதோ, நீ வாழ்த்தின சத்
தம் என் காதில் விழுந்தவுடனே, என் வயிற்றி
45 லுள்ள பிள்ளை களிப்பாய்த் துள்ளிற்று. விசு
வாசித்தவளே பாக்கியவதி, கர்த்தராலே அவ
ளுக்குச் சொல்லப்பட்டவைகள் நிறைவேறும்
என்றாள்.

அப்பொழுது மரியாள்: [14]என் ஆத்துமா 46
கர்த்தரை மகிமைப்படுத்துகிறது. என் ஆவி 47
என் ரட்சகராகிய [15]தேவனில் களிகூருகிறது.
அவர் தம்முடைய [16]அடிமையின் தாழ்மையை 48
நோக்கிப்பார்த்தார்; [17]இதோ, இதுமுதல் எல்
லாச் சந்ததிகளும் என்னைப் பாக்கியவதி
என்பார்கள். வல்லமையுடையவர் மகிமை 49
யானவைகளை எனக்குச் செய்தார்; [18]அவரு
டைய நாமம் பரிசுத்தமுள்ளது. அவருடைய 50
இரக்கம் [19]அவருக்குப் பயந்திருக்கிறவர்களுக்
குத் தலைமுறை தலைமுறைக்குமுள்ளது. தம் 51
முடைய புயத்தினாலே பராக்கிரமஞ்செய்தார்;
[20]இருதயசிந்தையில் †அகந்தையுள்ளவர்களைச்
சிதறடித்தார். பலவான்களை ஆசனங்களிலி 52
ருந்து தள்ளி, [21]தாழ்மையானவர்களை உயர்த்தி
னார். பசியுள்ளவர்களை நன்மைகளினால் நிர 53
ப்பி, [22]ஐசுவரியமுள்ளவர்களை வெறுமையாய்
அனுப்பிவிட்டார். நம்முடைய பிதாக்களுக்கு 54
அவர் சொன்னபடியே, [23]ஆபிரகாமுக்கும்
அவன் சந்ததிக்கும் என்றென்றைக்கும் இரக்
கஞ்செய்ய நினைத்து, தம்முடைய தாசனா 55
கிய இஸ்ரவேலை ஆதரித்தார் என்றாள்.

மரியாள் ஏறக்குறைய மூன்றுமாதம் அவ 56
ளுடனே இருந்து, தன் வீட்டுக்குத் திரும்
பிப்போனாள்.

எலிசபெத்துக்குப் பிரசவகாலம் நிறைவே 57
றினபோது அவள் ஒரு புத்திரனைப் பெற்
றாள். கர்த்தர் அவளிடத்தில் தம்முடைய 58
இரக்கத்தை விளங்கப்பண்ணினாரென்று அவ
ளுடைய அயலகத்தாரும் பந்துஜனங்களும்
கேள்விப்பட்டு, [24]அவளுடனேகூடச் சந்தோ
ஷப்பட்டார்கள். எட்டாம் [25]நாளிலே பிள் 59
ளைக்கு விருத்தசேதனம் பண்ணும்படிக்கு
அவர்கள் வந்து, அதின் தகப்பனுடைய நாமத்
தின்படி அதற்குச் சகரியா என்று பேரிடப்
போனார்கள். அப்பொழுது அதின் தாய்: 60
அப்படியல்ல, அதற்கு யோவான் என்று பேரி
டவேண்டும் என்றாள். அதற்கு அவர்கள்: 61
உன் உறவின் முறையாரில் இந்தப்பேருள்ள
வன் ஒருவனும் இல்லையே என்று சொல்லி,
அதின் தகப்பனை நோக்கி: இதற்கு என்ன 62
பேரிட மனதாயிருக்கிறீர் என்று சைகையி
னால் கேட்டார்கள். அவன் எழுத்துப் பல 63
கையைக் கேட்டு வாங்கி, இவன்பேர் [26]யோ
வான் என்று எழுதினான்; எல்லாரும் ஆச்சரி
யப்பட்டார்கள். உடனே அவனுடைய வாய் 64
திறக்கப்பட்டு, [27]அவனுடைய நாவும் கட்ட
விழ்க்கப்பட்டு, தேவனை ஸ்தோத்திரித்துப்
பேசினான். அதினால் அவர்களைச் சுற்றி வாச 65
மாயிருந்த யாவருக்கும் பயமுண்டாயிற்று.
மேலும் யூதேயாவின் மலைநாடெங்கும் இந்த
வர்த்தமானங்களெல்லாம் சொல்லிக்கொள்
ளப்பட்டது. அவைகளைக் கேள்விப்பட்டவர் 66
களெல்லாரும் [28]தங்கள் மனதிலே அவைகளை

1 மத். 1. 18
2 தானி. 9. 23
3 நியா. 6. 12
* பாக்கியவதி
4 ஏசா. 7. 14. மத். 1. 21
5 மத். 12. 42. மாற். 5. 7. எபி. 1. 2–8
6 2 சாமு. 7. 11, 12. ஏசா. 9. 6, 7. வெளி. 3. 7
7 தானி. 7. 14, 27. மீகா. 4. 7
8 மத். 1. 20. மாற். 1. 1. யோ. 1. 34. அப். 8. 37. ரோ. 1. 4
9 ஆதி. 18. 14. மத். 19. 26. ரோ. 4. 21
10 சங். 116. 16: 119. 38
11 யோசு. 21. 9–11
12 28. வச. நியா. 5. 24
13 யோ. 13. 13
14 1 சாமு. 2. 1
15 சங். 34. 2, 3. ஆப. 3. 18
16 1 சாமு. 1. 11. சங். 136. 23
17 11–27. மல். 3. 12
18 ஆதி. 17. 1. சங். 71. 21: 111. 9. எபே. 3. 20
19 ஆதி. 17. 7. யாத். 20. 6 சங். 103. 17
20 1 சாமு. 2. 9. சங். 98. 1. ஏசா. 51. 9: 52. 10. தானி. 4. 37. 1 பே. 5. 5
† பெருமை
21 18. 24. யோபு 5. 11
22 1 சாமு. 2. 5
23 ஆதி. 17. 19. சங். 98. 3: 132. 11
24 14. வச
25 ஆதி. 17. 12. லேவி. 12. 3
26 13. வச
27 20. வச
28 2. 19, 51

வைத்துக்கொண்டு, இந்தப் பிள்ளை எப்படிப்
பட்டதாயிருக்குமோ என்றார்கள். [1]கர்த்தரு
டைய கரம் அந்தப் பிள்ளையோடே இருந்தது.
67 அவனுடைய தகப்பனாகிய சகரியா [2]பரி
சுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டு, தீர்க்கதரி
68 சனமாக: இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்த
69 ருக்கு [3]ஸ்தோத்திரம் உண்டாவதாக. அவர்
நம்முடைய பிதாக்களுக்கு வாக்குத்தத்தம்
70 பண்ணின இரக்கத்தைச் செய்வதற்கும்; தம்
முடைய [4]பரிசுத்த உடன்படிக்கையை நினைத்
71 தருளி: உங்கள் [5]சத்துருக்களின் கைகளி
னின்று நீங்கள் விடுதலையாக்கப்பட்டு, [6]உயி
ரோடிருக்கும் நாளெல்லாம் பயமில்லாமல்
எனக்கு முன்பாகப் பரிசுத்தத்தோடும் நீதியோ
டும் எனக்கு ஊழியஞ்செய்யக் கட்டளையிடு
72 வேன் என்று, அவர் நம்முடைய பிதாவாகிய
ஆபிரகாமுக்கு இட்ட [7]ஆணையை நிறை
73 வேற்றுவதற்கும்; ஆதிமுதற்கொண்டிருந்த
[8]தம்முடைய பரிசுத்த தீர்க்கதரிசிகளின் வாக்
74 கினால் தாம் சொன்னபடியே, தமது ஜனத்
தைச் சந்தித்து மீட்டுக்கொண்டு, நம்முடைய
சத்துருக்களினின்றும்; நம்மைப் பகைக்கிற
யாவருடைய கைகளினின்றும், நம்மை ரட்
75 சிக்கும்படிக்கு, தம்முடைய தாசனாகிய தாவீ
தின் வம்சத்திலே நமக்கு [9]ரட்சணிய *கொம்
76 பை ஏற்படுத்தினார். நீயோ பாலகனே, [10]உன்
னதமானவருடைய தீர்க்கதரிசி என்னப்படு
வாய்; நீ கர்த்தருக்கு முன்னே ஆயத்தம் பண்
77 ணவும், நமது தேவனுடைய உருக்கமான
இரக்கத்தினாலே [11]அவருடைய ஜனத்துக்குப்
பாவமன்னிப்பாகிய ரட்சிப்பைத் தெரியப்
படுத்தவும், அவருக்கு முன்னாக நடந்து
78 போவாய். அந்தகாரத்திலும் மரண இருளி
லும் உட்கார்ந்திருக்கிறவர்களுக்கு [12]வெளிச்
79 சம் தரவும், நம்முடைய கால்களைச் சமாதா
னத்தின் வழியிலே நடத்தவும், அவ்விரக்கத்தி
னாலே உன்னதத்திலிருந்து தோன்றிய அரு
ணோதயம் நம்மைச் சந்தித்திருக்கிறது என்றான்.
80 அந்தப் பிள்ளை வளர்ந்து, [13]ஆவியிலே பலங்
கொண்டு, இஸ்ரவேலுக்குத் தன்னைக் காண்
பிக்கும் நாள்வரைக்கும் வனாந்தரங்களிலே
இருந்தான்.

2 அந்நாட்களில் உலகமெங்கும் குடிமதிப்பு
எழுதப்பட வேண்டுமென்று அகுஸ்துராய
2 னால் கட்டளை பிறந்தது. சீரியாநாட்டிலே
[14]சிரேனியு என்பவன் தேசாதிபதியாயிருந்த
போது இந்த முதலாம் குடிமதிப்பு உண்டா
3 யிற்று. அந்தப்படி குடிமதிப்பெழுதப்படும்
படிக்கு எல்லாரும் தங்கள் தங்கள் ஊர்களுக்
4 குப் போனார்கள். அப்பொழுது யோசேப்
பும், [15]தான் தாவீதின் வம்சத்தானும் குடும்பத்
தானுமாயிருந்தபடியினாலே, தனக்கு மனைவி
யாக நியமிக்கப்பட்டுக் கர்ப்பவதியான மரியா
5 ளுடனே குடிமதிப் பெழுதப்படும்படி, கலி
லேயா நாட்டிலுள்ள நாசரேத்தூரிலிருந்து
யூதேயா நாட்டிலுள்ள பெத்லகேம் என்னும்
6 தாவீதின் ஊருக்குப் போனான். அவ்விடத்
திலே அவர்கள் இருக்கையில், அவளுக்குப்
பிரசவகாலம் நேரிட்டது. அவள் தன் முதற் 7
பேறான குமாரனைப் பெற்று, [16]சத்திரத்திலே
அவர்களுக்கு இடமில்லாதிருந்தபடியினால்,
பிள்ளையைத் துணிகளில் சுற்றி, முன்னணை
யிலே கிடத்தினாள்.
அப்பொழுது அந்த நாட்டிலே மேய்ப்பர் 8
கள் வயல் வெளியில் தங்கி, இராத்திரியிலே
தங்கள் மந்தையைக் காத்துக்கொண்டிருந்தார்
கள். அவ்வேளையில் கர்த்தருடைய தூதன் 9
அவர்களிடத்தில் வந்து நின்றான், கர்த்தரு
டைய மகிமை அவர்களைச் சுற்றிலும் பிரகா
சித்தது; அவர்கள் மிகவும் பயந்தார்கள்.
தேவதூதன் அவர்களை நோக்கி: பயப்படா 10
திருங்கள்; இதோ, [17]எல்லா ஜனத்துக்கும்
மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் †நற்
செய்தியை உங்களுக்கு அறிவிக்கிறேன்.
இன்று கர்த்தராகிய கிறிஸ்து என்னும் ரட் 11
சகர் உங்களுக்குத் தாவீதின் ஊரிலே [18]பிறந்
திருக்கிறார். பிள்ளையைத் துணிகளில் சுற்றி, 12
முன்னணையிலே கிடத்தியிருக்கக் காண்பீர்
கள்; இதுவே உங்களுக்கு அடையாளம் என்
றான். அந்தக்ஷணமே பரம‡சேனையின் [19]திரள் 13
அந்தத் தூதனுடனே தோன்றி: உன்னதத்தி 14
லிருக்கிற தேவனுக்கு மகிமையும், [20]பூமியிலே
சமாதானமும், மனுஷர்மேல் பிரியமும் §உண்
டாவதாக என்று சொல்லி, தேவனைத் துதித்
தார்கள்.
தேவதூதர்கள் அவர்களை விட்டுப் பரலோ 15
கத்துக்குப் போனபின்பு, மேய்ப்பர்கள் ஒரு
வரையொருவர் நோக்கி: நாம் பெத்லகேம்
ஊருக்குப் போய், நடந்ததாகக் கர்த்தரால்
நமக்கு அறிவிக்கப்பட்ட இந்தக் காரியத்தைப்
பார்ப்போம் வாருங்கள் என்று சொல்லி,
தீவிரமாய் வந்து, மரியாளையும், யோசேப்பை 16
யும், முன்னணையிலே கிடத்தியிருக்கிற பிள்
ளையையும் கண்டார்கள். கண்டு, அந்தப் பிள் 17
ளையைக்குறித்துத் தங்களுக்குச் சொல்லப்
பட்ட சங்கதியைப் பிரசித்தம் பண்ணினார்கள்.
மேய்ப்பராலே தங்களுக்குச் சொல்லப்பட் 18
டதைக் கேட்ட யாவரும் அவைகளைக்குறித்து
ஆச்சரியப்பட்டார்கள். மரியாளோ அந்தச் 19
சங்கதிகளையெல்லாம் தன்னிருதயத்திலே
வைத்து, [21]சிந்தனைபண்ணினாள். மேய்ப்பர் 20
களும் தங்களுக்குச் சொல்லப்பட்டதின்
படியே கேட்டு கண்ட எல்லாவற்றிற்காகவும்
தேவனை மகிமைப்படுத்தி, துதித்துக்கொண்டு
திரும்பிப் போனார்கள்.
பிள்ளைக்கு விருத்தசேதனம் பண்ணவேண் 21
டிய எட்டாம்நாளிலே, [22]அது கர்ப்பத்திலே
உற்பவிக்கிறதற்கு முன்னே தேவதூதனால்
சொல்லப்பட்டபடியே, [23]அதற்கு இயேசு
என்று பேரிட்டார்கள்.
மோசேயின் நியாயப்பிரமாணத்தின்படி 22
யே [24]அவர்களுடைய சுத்திகரிப்பின் நாட்கள்
நிறைவேறினபோது, முதற்பேறான எந்த 23
ஆண்பிள்ளையும் கர்த்தருக்குப் பரிசுத்தமான

1 சங். 80. 17. அப். 11. 21
2 யோவே. 2. 28
3 சங். 72. 18
4 லேவி. 26. 42. சங். 105. 8–10. எசே. 16. 60
5 ஏசா. 54. 7–17. எரே. 30. 10, 11
6 ரோ. 6. 22. தீத். 2. 11, 12. 1 பே. 1. 14, 15. வெளி. 2. 10
7 ஆதி. 22. 16, 17
8 எரே. 23. 5, 6. தானி. 9. 24
9 சங். 111. 9
* மகத்தான ரட்சிப்பை
10 மல். 3. 1. மத். 11. 10
11 அப். 5. 31
12 ஏசா. 9. 2; 49. 9. அப். 26. 18
13 2. 40. மத். 3. 1; 11. 7.
14 அப். 5. 37
15 1 சாமு. 16. 1, 4. மத். 1. 16, 18
16 மத். 1. 25
17 ஆதி. 12. 3. மத். 28. 19. கொலோ. 1. 23
† சுவிசேஷத்தை
18 ஏசா. 9. 6. மத். 1. 16
‡ கணங்கள்
19 சங். 103. 20, 21. 1 பே. 1. 12
20 19. 38. ஏசா. 57. 19. யோ. 3. 16. 1 யோ. 4. 9, 10. வெளி. 5. 13
§ பூமியிலே நல்மனமுள்ள மனுஷர்களுக்குச் சமாதானம் உண்டாவதாக
21 ஆதி. 37. 11
22 ஆதி. 17. 12. லேவி. 12. 3. மத். 1. 21, 25
23 மத். 1. 21–25
24 லேவி. 12. 2. ஆ

தென்னப்படும் என்று கர்த்தருடைய நியாயப்
பிரமாணத்தில் எழுதியிருக்கிறபடி [1]அவரைக்
24 கர்த்தருக்கென்று ஒப்புக்கொடுக்கவும், கர்த்
தருடைய நியாயப்பிரமாணத்தில் சொல்லி
யிருக்கிறபடி, ஒரு ஜோடு காட்டுப் புறாவை
யாவது இரண்டு புறாக் குஞ்சுகளையாவது பலி
யாகச் செலுத்தவும், அவரை எருசலேமுக்குக்
25 கொண்டுபோனார்கள். அப்பொழுது சிமி
யோன் என்னும் பேர்கொண்ட ஒரு மனுஷன்
எருசலேமில் இருந்தான்; அவன் நீதியும்
தேவபக்தியும் உள்ளவனாயும், [2]இஸ்ரவே
லின் ஆறுதல்வரக் காத்திருக்கிறவனாயும் இருந்
தான்; அவன்மேல் பரிசுத்தஆவி இருந்தார்.
26 கர்த்தருடைய கிறிஸ்துவை நீ காணுமுன்னே
[3]மரணமடையமாட்டாய் என்று பரிசுத்த ஆவி
யினாலே அவனுக்கு அறிவிக்கப்பட்டுமிருந்
27 தது. அவன் ஆவியின் ஏவுதலினால் தேவால
யத்திலே வந்திருந்தான். இயேசு என்னும் பிள்
ளைக்காக நியாயப்பிரமாண முறைமையின்படி
செய்வதற்குத் தாய் தகப்பன்மார் அவரை உள்
28 ளே கொண்டுவருகையில், அவன் அவரைத்
தன் கைகளில் ஏந்திக்கொண்டு, தேவனை
29 ஸ்தோத்திரித்து: ஆண்டவரே, [4]உமது வார்த்
தையின்படி உமது அடியேனை இப்பொழுது
30 சமாதானத்தோடே போகவிடுகிறீர்; புறஜாதி
களுக்குப் பிரகாசிக்கிற ஒளியாகவும், [5]உம்மு
டைய ஜனமாகிய இஸ்ரவேலுக்கு மகிமையா
31 கவும், தேவரீர் சகல ஜனங்களுக்கும் முன்
32 பாக ஆயத்தம்பண்ணின, உம்முடைய ரட்ச
ணியத்தை [6]என் கண்கள் கண்டது என்றான்.
33 அவரைக்குறித்துச் சொல்லப்பட்டவைகளுக்
காக யோசேப்பும் அவருடைய தாயாரும் ஆச்
34 சரியப்பட்டார்கள். பின்னும் சிமியோன் அவர்
களை ஆசீர்வதித்து, அவருடைய தாயாகிய
மரியாளை நோக்கி: இதோ, [7]அநேகருடைய
இருதய சிந்தனைகள் வெளிப்படத்தக்கதாக,
இஸ்ரவேலில் அநேகர் விழுகிறதற்கும் எழுந்
திருக்கிறதற்கும், விரோதமாகப் பேசப்படும்
அடையாளமாவதற்கும், இவர் நியமிக்கப்பட்
35 டிருக்கிறார். உன் ஆத்துமாவையும் [8]ஒரு
36 பட்டயம் உருவிப்போகும் என்றான். ஆசே
ருடைய கோத்திரத்தாளும், பானுவேலின்
குமாரத்தியுமாகிய அன்னாள் என்னும் ஒரு
தீர்க்கதரிசி இருந்தாள்; அவள் கன்னிப்பிரா
யத்தில் விவாகமானதுமுதல் ஏழுவருஷம்
புருஷனுடனே வாழ்ந்தவளும், அதிக வயது
37 சென்றவளுமாயிருந்தாள். ஏறக்குறைய
*எண்பத்துநாலு வயதுள்ள அந்த விதவை
தேவாலயத்தை விட்டு நீங்காமல், [9]இரவும்
பகலும் உபவாசித்து, ஜெபம்பண்ணி, ஆரா
38 தனை செய்துகொண்டிருந்தாள். அவளும்
அந்நேரத்திலே வந்து நின்று, கர்த்தரைப்
புகழ்ந்து, [10]எருசலேமிலே மீட்புண்டாகக்
காத்திருந்த யாவருக்கும் அவரைக் குறித்துப்
39 பேசினாள். கர்த்தருடைய நியாயப்பிரமாணத்
தின்படி சகலத்தையும் அவர்கள் செய்து
முடித்தபின்பு, கலிலேயா நாட்டிலுள்ள தங்
கள் ஊராகிய நாசரேத்துக்குத் திரும்பிப்
போனார்கள்.
பிள்ளை வளர்ந்து, ஆவியிலே பெலன்கொ 40
ண்டு, ஞானத்தினால் நிறைந்தது. [11]தேவனு
டைய கிருபையும் அவர்மேல் இருந்தது.
அவருடைய தாய்தகப்பன்மார் [12]வருஷந் 41
தோறும் பஸ்கா பண்டிகையில் எருசலேமுக்
குப் போவார்கள். அவருக்குப் பன்னிரண்டு 42
வயதானபோது, அவர்கள் அந்தப் பண்டிகை
முறைமையின்படி எருசலேமுக்குப் போய்,
பண்டிகை நாட்கள் முடிந்து, திரும்பி வரு 43
கிறபோது, பிள்ளையாகிய இயேசு எருசலே
மிலே இருந்துவிட்டார்; இது அவருடைய
தாயாருக்கும் யோசேப்புக்கும் தெரியாதிருந்
தது. அவர் பிரயாணக்காரரின் கூட்டத்தி 44
லே இருப்பாரென்று அவர்கள் நினைத்து,
ஒருநாள் பிரயாணம் வந்து, உறவின்முறை
யாரிடத்திலும் அறிமுகமானவர்களிடத்திலும்
அவரைத் தேடினார்கள். காணாததினாலே 45
அவரைத் தேடிக்கொண்டே எருசலேமுக்குத்
திரும்பிப் போனார்கள். மூன்று நாளைக்குப் 46
பின்பு, அவர் தேவாலயத்தில் போதகர் நடு
வில் உட்கார்ந்திருக்கவும், அவர்கள் பேசுகிற
தைக் கேட்கவும், அவர்களை வினாவவும் கண்
டார்கள். அவர் பேசக்கேட்ட யாவரும் அவ 47
ருடைய புத்தியையும் அவர் சொன்ன மாறுத்
தரங்களையும் குறித்துப் [13]பிரமித்தார்கள்.
தாய்தகப்பன்மாரும் அவரைக் கண்டு ஆச்சரி 48
யப்பட்டார்கள். அப்பொழுது அவருடைய
தாயார் அவரை நோக்கி: மகனே! ஏன் எங்க
ளுக்கு இப்படிச் செய்தாய்? இதோ, உன்
தகப்பனும் நானும் விசாரத்தோடே உன்னைத்
தேடினோமே என்றாள். அதற்கு அவர்: நீங் 49
கள் ஏன் என்னைத் தேடினீர்கள்? [14]என்
†பிதாவுக்கடுத்தவைகளில் நான் இருக்கவேண்
டியதென்று அறியீர்களா என்றார். தங்க 50
ளுக்கு அவர் சொன்ன வார்த்தையை அவர்
கள் உணர்ந்துகொள்ளவில்லை. பின்பு அவர் 51
அவர்களுடனே கூடப்போய், நாசரேத்தூரில்
சேர்ந்து, அவர்களுக்குக் கீழ்ப்படிந்திருந்தார்.
[15]அவருடைய தாயார் இந்தச் சங்கதிகளையெல்
லாம் தன்னிருதயத்திலே வைத்துக்கொண்
டாள்.
இயேசுவானவர் ஞானத்திலும், ‡[16]வளர்த் 52
தியிலும், தேவகிருபையிலும், மனுஷர் தயவி
லும் அதிகமதிகமாய் விருத்தியடைந்தார்.
திபேரியுராயன் ராஜ்யபாரம்பண்ணின பதி 3
னைந்தாம் வருஷத்திலே, பொந்தியுபிலாத்து
யூதேயாவுக்குத் தேசாதிபதியாயும், ஏரோது
காற்பங்கு தேசமாகிய கலிலேயாவுக்கு அதி
பதியாயும், அவன் சகோதரனாகிய பிலிப்பு
காற்பங்கு தேசமாகிய இத்துரேயாவுக்கும் திரா
கொனித்தி நாட்டிற்கும் அதிபதியாயும், லிசா
னியா காற்பங்கு தேசமாகிய அபிலேனேக்கு
அதிபதியாயும், அன்னாவும் [17]காய்பாவும் பிர 2
தான ஆசாரியராயும் இருந்தகாலத்தில் வனாந்
தரத்திலே சகரியாவின் குமாரனாகிய யோவா

1 யாத். 13. 2, 12
2 ஏசா. 40. 1. மாற். 15, 43
3 சங். 89. 48. எபி. 11. 5
4 ஆதி. 46. 30. ஏசா. 57, 2. பிலி. 1. 23. வெளி. 14. 13
5 ஏசா. 9. 2. மத். 4. 15, 16
6 ஏசா. 52. 10, அப். 4. 12.
7 ஏசா. 8. 14. ரோ. 9. 32, 33. 1 கொ. 1. 23, 24. 2 கொ. 2. 16. 1 பே. 2. 7, 8
8 சங். 42. 10. யோ. 19. 25
* எண்பத்திநாலு வருஷம் விதவையாயிருந்த
9 அப். 26. 7. 1 தீமோ. 5. 5
10 மாற். 15. 43
11 52. வச. ஏசா. 11. 2, 3
12 யாத். 23. 15. உபா. 16. 1
13 4. 22, 32. சங். 119. 99. மத். 7. 28. மாற். 1. 22. யோ. 7. 15, 46
14 யோ. 5. 17; 9. 4
† பிதாவின் வீட்டிலுள்ளவைகளில் பிரகாரங்களில்
15 19. வச. தானி. 7. 28
‡ வயதிலும்
16 40. வச. 1 சாமு. 2, 26
17 யோ. 11. 49, 51; 18. 13. அப். 4. 6

னுக்கு தேவனுடைய வார்த்தை உண்டா
3 யிற்று. அப்பொழுது: [1]கர்த்தருக்கு வழியை
ஆயத்தப்படுத்துங்கள், அவருக்குப் பாதைக
4 ளைச் செவ்வைபண்ணுங்கள் என்றும், பள்
ளங்களெல்லாம் நிரப்பப்படும், சகல மலைக
ளும் குன்றுகளும் தாழ்த்தப்படும், கோணலா
னவைகள் செவ்வையாகும், கரடானவைகள்
5 சமமாகும் என்றும், மாம்சமான [2]யாவரும்
தேவனுடைய ரட்சிப்பைக் காண்பார்கள் என்
றும், வனாந்தரத்திலே கூப்பிடுகிறவனுடைய
சத்தம் உண்டாகும் என்று ஏசாயா தீர்க்கதரி
சியின் ஆகமத்தில் எழுதியிருக்கிறபிரகாரம்,
6 அவன் யோர்தான்நதிக்கு அருகான தேச
மெங்கும் போய், [3]பாவமன்னிப்புக்கென்று
மனந்திரும்புதலுக்கேற்ற ஞானஸ்நானத்தைக்
குறித்துப் பிரசங்கித்தான்.
7 அவன், தன்னிடத்தில் ஞானஸ்நானம் பெ
றும்படிக்குப் புறப்பட்டுவந்த திரளான ஜனங்
களை நோக்கி: [4]விரியன் பாம்புக் குட்டிகளே!
வருங்கோபத்துக்குத் தப்பித்துக்கொள்ள உங்
8 களுக்கு வகைகாட்டினவன் யார்? மனந்தி
ரும்புதலுக்கு ஏற்ற கனிகளைக் கொடுங்கள்;
ஆபிரகாம் எங்களுக்குத் தகப்பன் என்று
உங்களுக்குள்ளே சொல்லத் தொடங்காதிருங்
கள்; தேவன் இந்தக் கல்லுகளினாலே ஆபிர
காமுக்குப் பிள்ளைகளை உண்டுபண்ண வல்
லவரா யிருக்கிறார் என்று உங்களுக்குச்
9 சொல்லுகிறேன். இப்பொழுதே கோடரி
யானது மரங்களின் வேர் அருகே வைத்தி
ருக்கிறது; [5]ஆகையால் நல்ல கனிகொடாத
மரமெல்லாம் வெட்டுண்டு அக்கினியிலே
10 போடப்படும் என்றான். அப்பொழுது ஜனங்
கள் அவனை நோக்கி: [6]அப்படியானால் நாங்கள்
என்னசெய்யவேண்டும் என்று கேட்டார்கள்.
11 அவர்களுக்கு அவன் பிரதியுத்தரமாக: [7]இர
ண்டு அங்கிகளையுடையவன் இல்லாதவனுக்
குக் கொடுக்கக்கடவன்; ஆகாரத்தை யுடைய
வனும் அப்படியே செய்யக்கடவன் என்றான்.
12 ஆயக்காரரும் [8]ஞானஸ்நானம் பெறவந்து;
அவனை நோக்கி: போதகரே, நாங்கள் என்ன
செய்யவேண்டும் என்று கேட்டார்கள்.
13 அதற்கு அவன்: [9]உங்களுக்குக் கட்டளையிட்
டிருக்கிறதற்கு அதிகமாய் ஒன்றும் வாங்கா
14 திருங்கள் என்றான். போர்ச்சேவகரும்
அவனை நோக்கி: நாங்கள் என்ன செய்யவே
ண்டும் என்று கேட்டார்கள். அதற்கு அவன்:
[10]நீங்கள் ஒருவருக்கும் இடுக்கண் செய்யாம
லும் பொய்யாய்க் குற்றஞ்சாட்டாமலும், [11]உங்
கள் சம்பளமே போதுமென்றும் இருங்கள்
என்றான்.
15 யோவானைக்குறித்து: இவன்தான் கிறிஸ்
துவோ என்று ஜனங்களெல்லாரும் எண்ணங்
கொண்டு, தங்கள் இருதயங்களில் யோசனை
16 யாயிருக்கையில், யோவான் எல்லாருக்கும்
பிரதியுத்தரமாக: [12]நான் ஜலத்தினால் உங்க
ளுக்கு ஞானஸ்நானங் கொடுக்கிறேன், என்
னிலும் வல்லவர் ஒருவர் வருகிறார், அவரு

1 ஏசா. 40. 3-5

2 சங். 98. 2. ஏசா. 40. 5; 49. 6; 52. 10. ரோ. 10. 12, 18

3 1. 77. மத். 3. 1. மாற். 1. 4

4 மத். 3. 7

5 13. 7, 9. மத். 7. 19

6 அப். 2. 37

7 11. 41. 2 கொ. 8. 14, 15. 1 யோ. 3. 17

8 7. 29. மத். 21. 32

9 19. 8. 1 கொ. 6. 10

10 யாத். 23. 1. லேவி. 19. 11

11 1 தீமோ. 6. 8

12 மத். 3. 11

13 எரே. 15. 7, 19

14 மீகா 4. 12. மத். 13. 3.

15 சங். 1. 4; 21. 9. மாற். 9. 44, 48

16 மத். 14. 3. மாற். 6. 17

17 மத். 3. 13. மு. மாற். 1. 9. மு. யோ. 1. 32. மு

18 1. 1-17 மத். 13. 55. யோ. 6. 42

டைய பாதரட்சைகளின் வாரை அவிழ்க்கிற
தற்கும் நான் பாத்திரன் அல்ல, அவர் பரி
சுத்த ஆவியினாலும் அக்கினியினாலும் உங்க
ளுக்கு ஞானஸ்நானங் கொடுப்பார். தூற்றுக் 17
கூடை அவர் கையில் இருக்கிறது, [13]அவர்
தமது களத்தை நன்றாய் விளக்கி, [14]கோதுமை
யைத் தமது களஞ்சியத்தில் சேர்ப்பார்; [15]பத
ரையோ அவியாத அக்கினியினால் சுட்டெரிப்
பார் என்றான்.
வேறு அநேக புத்திமதிகளையும் அவன் 18
ஜனங்களுக்குச் சொல்லிப் பிரசங்கித்தான்.
காற்பங்கு தேசாதிபதியாகிய ஏரோது தன் 19
சகோதரனை பிலிப்புவின் மனைவி ஏரோதி
யாளினிமித்தமாகவும், [16]தான் செய்த மற்றப்
பொல்லாங்குகளினிமித்தமாகவும், யோவானா
லே கடிந்துகொள்ளப்பட்டபோது, தான் 20
செய்த மற்றெல்லாப் பொல்லாங்குகளும்
தவிர, யோவானையும் காவலில் அடைத்து
வைத்தான்.
ஜனங்களெல்லாரும் ஞானஸ்நானம் பெற் 21
றபோது, [17]இயேசுவும் ஞானஸ்நானம் பெற்
று, ஜெபம்பண்ணுகையில், வானம் திறக்கப்
பட்டது; பரிசுத்த ஆவியானவர் ரூபங்கொ 22
ண்டு புறாவைப்போல அவர்மேல் இறங்கி
னார். வானத்திலிருந்து ஒரு சத்தமும் உண்
டாகி: நீர் என்னுடைய நேசகுமாரன், உம்
மில் பிரியமாயிருக்கிறேன் என்று உரைத்தது.
அப்பொழுது இயேசு ஏறக்குறைய முப் 23
பது வயதுள்ளவரானார். [18]அவர் யோசேப்
பின் குமாரனென்று எண்ணப்பட்டார். அந்த
யோசேப்பு ஏலியின் குமாரன்; ஏலி மாத்தாத் 24
தின் குமாரன்; மாத்தாத் லேவியின் குமாரன்;
லேவி மெல்கியின் குமாரன்; மெல்கி யன்னா
வின் குமாரன்; யன்னா யோசேப்பின் குமாரன்;
யோசேப்பு மத்தத்தியாவின் குமாரன்; மத்தத் 25
தியா ஆமோசின் குமாரன்; ஆமோஸ் நாகூ
மின் குமாரன்; நாகூம் எஸ்லியின் குமாரன்;
எஸ்லி நங்காயின் குமாரன். நங்காய் மாகாத் 26
தின் குமாரன்; மாகாத் மத்தத்தியாவின் குமா
ரன்; மத்தத்தியா சேமேயின் குமாரன்; சே
மேய் யோசேப்பின் குமாரன்; யோசேப்பு
யூதாவின் குமாரன்; யூதா யோவன்னாவின்
குமாரன். யோவன்னா ரேசாவின் குமாரன்; 27
ரேசா சொரொபாபேலின் குமாரன்; சொ
ரொபாபேல் சலாத்தியேலின் குமாரன்; சலா
த்தியேல் நேரியின் குமாரன். நேரி மெல்கி 28
யின் குமாரன்; மெல்கி அத்தியின் குமாரன்;
அத்தி கோசாமின் குமாரன்; கோசாம் எல்
மோதாமின் குமாரன்; எல்மோதாம் ஏரின்
குமாரன்; ஏர் யோசேயின் குமாரன். யோ 29
சே எலியேசரின் குமாரன்; எலியேசர் யோரீ
மின் குமாரன்; யோரீம் மாத்தாத்தின் குமா
ரன்; மாத்தாத் லேவியின் குமாரன். லேவி 30
சிமியோனின் குமாரன்; சிமியோன் யூதா
வின் குமாரன்; யூதா யோசேப்பின் குமாரன்;
யோசேப்பு யோனானின் குமாரன்; யோனான்
எலியாக்கீமின் குமாரன். எலியாக்கீம் மெ 31

லெயாவின் குமாரன்; மெலெயா மயினானின்
குமாரன்; மயினான் மாத்தாத்தாவின் குமாரன்;
மாத்தாத்தா நாத்தானின் குமாரன்; [1]நாத்தான்
32 தாவீதின் குமாரன். தாவீது ஈசாயின் குமா
ரன்; [2]ஈசாய் ஓபேதின் குமாரன்; ஓபேத்
போவாசின் குமாரன்; போவாஸ் சல்மோ
னின் குமாரன்; சல்மோன் நகசோனின்
33 குமாரன். நகசோன் அம்மினதாபின் குமா
ரன்; அம்மினதாப் ஆராமின் குமாரன்; ஆராம்
எஸ்ரோமின் குமாரன்; எஸ்ரோம் பாரேசின்
குமாரன்; பாரேஸ் யூதாவின் குமாரன்; யூதா
34 யாக்கோபின் குமாரன். யாக்கோபு ஈசாக்
கின் குமாரன்; ஈசாக்கு ஆபிரகாமின் குமா
ரன்; [3]ஆபிரகாம் தேராவின் குமாரன்; தேரா
35 நாகோரின் குமாரன். நாகோர் சேரூக்கின்
குமாரன்; சேரூக் ரெகூவின் குமாரன்; ரெகூ
பேலேக்கின் குமாரன்; பேலேக் ஏபேரின்
36 குமாரன்; ஏபேர் சாலாவின் குமாரன். சா
லா காயினானின் குமாரன்; காயினான் அர்ப்ப
கசாத்தின் குமாரன்; [4]அர்ப்பகசாத் சேமின்
குமாரன்; சேம் நோவாவின் குமாரன்; [5]நோ
37 வா லாமேக்கின் குமாரன். லாமேக்கு மெத்
தூசலாவின் குமாரன்; மெத்தூசலா ஏனோக்
கின் குமாரன், ஏனோக்கு யாரேதின் குமா
ரன்; யாரேத் மகலாலெயேலின் குமாரன்;
மகலாலெயேல் கேனானின் குமாரன்; கே
38 னான் ஏனோசின் குமாரன். ஏனோஸ் சேத்
தின் குமாரன்; சேத் ஆதாமின் குமாரன்;
[6]ஆதாம் தேவனால் உண்டானவன்.

4 இயேசு பரிசுத்த ஆவியினாலே நிறைந்தவ
ராய் யோர்தானை விட்டுத் திரும்பி, [7]ஆவியா
னவராலே வனாந்தரத்திற்குக் கொண்டுபோ
2 கப்பட்டு, நாற்பதுநாள் பிசாசினால் சோதிக்
கப்பட்டார். [8]அந்த நாட்களில் அவர் ஒன்றும்
புசியாதிருந்தார்; அந்த நாட்கள் முடிந்தபின்பு
3 அவருக்குப் பசியுண்டாயிற்று. அப்பொழுது
பிசாசு அவரை நோக்கி: நீர் தேவனுடைய
குமாரனேயானால், இந்தக் கல் அப்பமாகும்
4 படி சொல்லும் என்றான். அவர் பிரதியுத்த
ரமாக: மனுஷன் அப்பத்தினாலே மாத்திர
மல்ல, [9]தேவனுடைய ஒவ்வொரு வார்த்தையி
னாலும் பிழைப்பான் என்று எழுதியிருக்கிற
5 தே என்றார். பின்பு பிசாசு அவரை உயர்ந்த
மலையின்மேல் கொண்டுபோய், உலகத்தின்
சகல ராஜ்யங்களையும் ஒரு நிமிஷத்திலே அவ
6 ருக்குக் காண்பித்து: இவைகள் எல்லாவற்
றின்மேலுமுள்ள அதிகாரத்தையும் இவைக
ளின் மகிமையையும் உமக்குத் தருவேன்,
[10]இவைகள் எனக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டி
ருக்கிறது; எனக்கு இஷ்டமானவனுக்கு இவை
7 களைக் கொடுக்கிறேன். நீர் என்னைப் பணிந்
துகொண்டால் எல்லாம் உம்முடையதாகும்
8 என்று சொன்னான். இயேசு அவனுக்குப்
பிரதியுத்தரமாக: எனக்குப் பின்னாகப்போ சா
த்தானே; [11]உன் தேவனாகிய கர்த்தரைப் பணிந்
துகொண்டு, அவர் ஒருவருக்கே ஆராதனை
செய்வாயாக என்று எழுதியிருக்கிறதே என்றார்.

அப்பொழுது அவன் அவரை எருசலேமுக் 9
குக் கொண்டுபோய், தேவாலயத்து உப்பரி
கையின்மேல் அவரை நிறுத்தி: நீர் தேவனு
டைய குமாரனேயானால், இங்கேயிருந்து தா
ழக் குதியும். ஏனெனில், [12]உம்மைக் காக்கும் 10
படிக்குத் தம்முடைய தூதர்களுக்கு உம்மைக்
குறித்துக் கட்டளையிடுவார் என்றும், உமது 11
பாதம் கல்லில் இடறாதபடிக்கு, அவர்கள்
உம்மைக் கைகளில் ஏந்திக்கொண்டு போவார்
கள் என்றும், எழுதியிருக்கிறது என்று சொன்
னான். அதற்கு இயேசு: [13]உன் தேவனாகிய 12
கர்த்தரைப் பரீட்சை பாராதிருப்பாயாக என்று
சொல்லியிருக்கிறதே என்றார்.

பிசாசானவன் சோதனையெல்லாம் முடித்த 13
பின்பு, [14]சிலகாலம் அவரைவிட்டு விலகிப்
போனான்.

பின்பு இயேசு ஆவியானவருடைய பலத் 14
தினாலே [15]கலிலேயாவுக்குத் திரும்பிப்போ
னார். அவருடைய கீர்த்தி சுற்றிலும் இருக்கிற
தேசமெங்கும் பரம்பிற்று. அவர்களுடைய 15
ஜெப ஆலயங்களில் அவர் உபதேசித்து, எல்
லாராலும் புகழப்பட்டார்.

தாம் வளர்ந்த ஊராகிய நாசரேத்துக்கு 16
அவர் வந்து, [16]தம்முடைய வழக்கத்தின்படியே
ஓய்வுநாளில் ஜெப ஆலயத்திலே பிரவேசித்து,
வாசிக்க எழுந்து நின்றார். அப்பொழுது 17
ஏசாயா தீர்க்கதரிசியின் *புஸ்தகம் அவரிடத்
தில் கொடுக்கப்பட்டது. அவர் புஸ்தகத்தை
விரித்தபோது: கர்த்தருடைய ஆவியானவர் 18
என்மேலிருக்கிறார்; [17]தரித்திரருக்குச் சுவிசே
ஷத்தைப் பிரசங்கிக்கும்படி என்னை அபிஷே
கம்பண்ணினார்; [18]இருதயம் நருங்குண்டவர்க
ளைக் குணமாக்கவும், சிறைப்பட்டவர்களுக்கு
விடுதலையையும், [19]குருடருக்குப் பார்வையை
யும் பிரசித்தப்படுத்தவும், [20]நொறுங்குண்டவர்
களை விடுதலையாக்கவும், கர்த்தருடைய [21]அநு 19
க்கிரக வருஷத்தைப் பிரசித்தப்படுத்தவும்,
என்னை அனுப்பினார், என்று எழுதியிருக்கிற
இடத்தை அவர் கண்டு, வாசித்து, புஸ்தகத் 20
தைச் சுருட்டி, பணிவிடைக்காரனிடத்தில்
கொடுத்து, உட்கார்ந்தார். ஜெப ஆலயத்தி
லுள்ள எல்லாருடைய கண்களும் அவர்மேல்
நோக்கமாயிருந்தது. அப்பொழுது அவர் அவர் 21
களோடே பேசத்தொடங்கி: உங்கள் காதுகள்
கேட்க இந்த வேதவாக்கியம் இன்றையத்தி
னம் நிறைவேறிற்று என்றார். எல்லாரும் 22
அவருக்கு நற்சாட்சி கொடுத்து, [22]அவருடைய
வாயிலிருந்து புறப்பட்ட கிருபையுள்ள வார்த்
தைகளைக்குறித்து ஆச்சரியப்பட்டு: [23]இவன்
யோசேப்பின் குமாரன் அல்லவா என்றார்கள்.
அவர் அவர்களை நோக்கி: வைத்தியனே, உன் 23
னைத்தானே குணமாக்கிக்கொள் என்கிற பழ
மொழியைச் சொல்லி, நாங்கள் கேள்விப்பட்
டபடி கப்பர்நகூமூரில் உன்னால் செய்யப்
பட்ட கிரியைகள் எவைகளோ [24]அவைகளை
உன் ஊராகிய இவ்விடத்திலும் செய் என்று
நீங்கள் என்னுடன் சொல்லுவீர்கள் என்பது

1 2 சாமு. 5. 14. சகரி. 12. 12
2 ரூத். 4. 18, 22
3 ஆதி. 11. 24–26
4 ஆதி. 11. 12
5 ஆதி. 5. 25
6 ஆதி. 1. 26; 2. 7; 5. 1, 2. ஏசா. 64. 8. 1 கொரி. 15. 45, 47
7 14. மத். 4. 1. மு. மாற். 1. 12. மு
8 யாத். 34. 28. 1 இரா. 19. 8
9 உபா. 8. 3
10 யோ. 12. 31; 14. 30. எபே. 2. 2. வெளி. 13. 2, 7
11 உபா. 6. 13; 10. 20
12 சங். 91. 11, 12
13 உபா. 6. 16. மத். 4. 7
14 யோ. 14. 30. எபி. 2. 17, 18; 4. 15
15 யோ. 4. 43. அப். 10. 37
16 மத். 13. 54. மு. மாற். 6. 1. மு. யோ. 18. 20. அப். 13. 14; 17. 2
* சுருள்
17 ஏசா. 61. 1, 2
18 சங். 34. 18. ஏசா. 57. 15
19 சங். 146. 8. ஏசா. 29. 18
20 ஏசா. 42. 3. மத். 12. 20
21 ஏசா. 61. 2; 63. 4
22 2. 47. சங். 45. 2. ஏசா. 50. 4. மத். 13. 54. மாற். 6. 2
23 யோ. 6. 42
24 மத். 4. 13; 11. 23. மு

24 நிச்சயம். ஆனாலும் [1]தீர்க்கதரிசி ஒருவனும் தன்
ஊரிலே அங்கிகரிக்கப்படமாட்டான் என்று
மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.
25 அன்றியும் எலியாவின் நாட்களிலே [2]மூன்று
வருஷமும் ஆறுமாதமும் வானம் அடைபட்டு,
தேசமெங்கும் மிகுந்த பஞ்சம் உண்டாயிருந்த
போது, [3]இஸ்ரவேலருக்குள் அநேகம் வித
26 வைகள் இருந்தார்கள். ஆயினும் எலியா
சீதோன் நாட்டிலுள்ள சரெப்தா ஊரிலிருந்த
ஒரு விதவையினிடத்திற்கு அனுப்பப்பட்டா
னே யல்லாமல் மற்றொருத்தியினிடத்திற்கும்
27 அனுப்பப்படவில்லை. அல்லாமலும் எலிசா
தீர்க்கதரிசியின் காலத்திலே [4]இஸ்ரவேலருக்
குள்ளே அநேகம் குஷ்டரோகிகள் இருந்தார்
கள்; ஆயினும் சீரியாதேசத்தானாகிய நாகமா
னே யல்லாமல் அவர்களில் வேறொருவனும்
சுத்தமாக்கப்படவில்லை என்று சத்தியத்தின்
படியே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்
28 றார். ஜெபஆலயத்திலிருந்த எல்லாரும், இவை
29 களைக் கேட்டபொழுது, கோபமூண்டு, எழுந்
திருந்து, அவரை ஊருக்குப் புறம்பே தள்ளி,
தங்கள் ஊர் கட்டப்பட்டிருந்த செங்குத்தான
மலையின் சிகரத்திலிருந்து [5]அவரைத் தலைகீ
ழாய்த் தள்ளிவிடும்படிக்கு அவ்விடத்திற்குக்
30 கொண்டுபோனார்கள். அவரோ அவர்கள் நடு
வினின்று [6]கடந்துபோய்விட்டார்.
31 பின்பு அவர் கலிலேயாவிலுள்ள கப்பர்நகூம்
பட்டணத்துக்கு வந்து, ஓய்வுநாட்களில் ஜன
32 ங்களுக்குப் போதகம்பண்ணினார். அவரு
டைய வசனம் அதிகாரமுள்ளதா யிருந்தபடி
யால் [7]அவருடைய போதகத்தைக் குறித்து
33 அவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். ஜெபஆலயத்
திலே [8]அசுத்த ஆவிபிடித்திருந்த ஒரு மனுஷன்
34 இருந்தான். அவன்: ஐயோ! நசரேயனாகிய
இயேசுவே, எங்களுக்கும் உமக்கும் என்ன?
எங்களைக் கெடுக்கவா வந்தீர்? உம்மை இன்
னார் என்றறிவேன்; [9]நீர் தேவனுடைய பரி
35 சுத்தர் என்று உரத்த சத்தமிட்டான். அதற்கு
இயேசு: நீ பேசாமல் இவனை விட்டுப் புறப்
பட்டுப்போ என்று அதை அதட்டினார்; அப்
பொழுது பிசாசு அவனை ஜனங்களின் நடுவே
விழத்தள்ளி, அவனுக்கு ஒரு சேதமுஞ்செய்
36 யாமல், அவனை விட்டுப் போய்விட்டது. எல்
லாரும் ஆச்சரியப்பட்டு: இது என்னவார்த்
தையோ! அதிகாரத்தோடும் வல்லமையோ
டும் அசுத்த ஆவிகளுக்கும் கட்டளையிடுகிறார்,
[10]அவைகள் புறப்பட்டுப் போகிறதே என்று
ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள்.
37 அவருடைய கீர்த்தி சுற்றிலுமிருந்த நாடுகளி
லுள்ள இடங்களிலெல்லாம் பிரசித்தமாயிற்று.
38 பின்பு அவர் ஜெப ஆலயத்தைவிட்டுப்
புறப்பட்டு, சீமோன் வீட்டில் பிரவேசித்தார்,
சீமோனுடைய மாமி கடுஞ்ஜுரமாய்க் கிடந்
தாள். [11]அவளுக்காக அவரை வேண்டிக்கொ
39 ண்டார்கள். அவர் அவளிடத்தில் குனிந்து
நின்று, ஜுரம் நீங்கும்படி கட்டளையிட்டார்,
அது அவளை விட்டு நீங்கிற்று; உடனே

1 மத். 13. 57. யோ. 4. 44
2 யாக். 5. 17
3 1 இரா. 17. 9
4 2 இரா. 5. 14
5 சங். 37. 14, 32, 33
6 யோ. 8. 59: 10. 39
7 எரே. 23. 29. மத். 7. 28, 29. தீத். 2. 15. எபி. 4. 12
8 மாற். 1. 21. ழ
9 41 உப. சங். 16. 10. தானி. 9. 24
10 1 பே. 3. 22
11 மத். 8. 14. மாற். 1. 29
12 மத். 8. 16. மாற். 1. 32
13 மாற். 1. 34
14 மாற். 1. 35
15 மாற். 1. 39
16 மத். 4. 18. ழ: 13. 47. ழ. மாற். 1. 16. ழ
17 யோ. 21. 6
18 சங். 127. 1, 2. எசே. 37. 11, 12
* பிடிக்கவில்லை
19 பிர. 11. 6, கலா. 6. 9
20 உபா. 23. 5. நீதி. 18, 24. கலா. 6. 2
21 நியா. 13. 22, 2 சாமு. 6. 9. 1 இரா. 17. 18. ஏசா. 6. 5
22 சங். 8. 6, 8

அவள் எழுந்திருந்து அவர்களுக்குப் பணிவி
டை செய்தாள்.
சூரியன் அஸ்தமித்தபோது, [12]ஜனங்களெல் 40
லாரும் தங்களுக்குள்ளே பலபல வியாதிக
ளால் வருத்தப்பட்டவர்களை அவரிடத்தில்
கொண்டுவந்தார்கள். அவர்கள் ஒவ்வொருவர்
மேலும் அவர் தம்முடைய கைகளை வைத்து,
அவர்களைச் சொஸ்தமாக்கினார். பிசாசுகளும்: 41
[13]நீர் தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்து
என்று சத்தமிட்டு, அநேகரைவிட்டுப் புறப்
பட்டது. அவரைக் கிறிஸ்து என்று பிசாசு
கள் அறிந்திருந்தபடியால் அவர் அவைகளைப்
பேசவொட்டாமல் அதட்டினார்.
உதயமானபோது, [14]அவர் புறப்பட்டு, வனா 42
ந்தரமான ஓரிடத்திற்குப் போனார். திரளான
ஜனங்கள் அவரைத் தேடி, அவரிடத்தில் வந்
து, தங்களை விட்டுப் போகாதபடிக்கு அவ
ரை நிறுத்திக்கொண்டார்கள். அவரோ 43
அவர்களை நோக்கி: நான் மற்ற ஊர்களிலும்
தேவனுடைய ராஜ்யத்தைக்குறித்துப் பிரசங்
கிக்கவேண்டும், இதற்காகவே அனுப்பப்பட்
டேன் என்றார். அந்தப்படியே கலிலேயா 44
நாட்டிலுள்ள [15]ஜெப ஆலயங்களில் பிரசங்கம்
பண்ணிக்கொண்டுவந்தார்.
பின்பு அவர் கெனேசரேத்துக் கடலருகே 5
நின்றபோது, [16]திரளான ஜனங்கள் தேவவச
னத்தைக் கேட்கும்படி அவரிடத்தில் நெருங்
கினார்கள். அப்பொழுது கடற்கரையிலே 2
நின்ற இரண்டு படவுகளைக் கண்டார். மீன்
பிடிக்கிறவர்கள் அவைகளை விட்டிறங்கி, வலை
களை அலசிக்கொண்டிருந்தார்கள். அப்பொ 3
ழுது அந்தப் படவுகளில் ஒன்றில் ஏறினார்,
அது சீமோனுடையதாயிருந்தது; அதைக்
கரையிலிருந்து சற்றே தள்ளும்படி அவனைக்
கேட்டுக்கொண்டு, அந்தப் படவில் உட்கார்
ந்து, ஜனங்களுக்குப் போதகம் பண்ணினார்.
அவர் போதகம்பண்ணி முடித்தபின்பு, சீ 4
மோனை நோக்கி: [17]ஆழத்திலே தள்ளிக்கொண்
டுபோய், மீன்பிடிக்கும்படி உங்கள் வலைக
ளைப் போடுங்கள் என்றார். அதற்குச் சீமோன்: 5
ஐயரே, [18]இராமுழுவதும் நாங்கள் பிரயாசப்
பட்டும் ஒன்றும் *அகப்படவில்லை; ஆகிலும்
உம்முடைய வார்த்தையின்படியே வலையைப்
போடுகிறேன் என்றான். அந்தப்படியே அவர் 6
கள் செய்து, [19]தங்கள் வலை கிழிந்துபோகத்
தக்கதாக மிகுதியான மீன்களைப் பிடித்தார்
கள். அப்பொழுது மற்றப் படவிலிருந்த கூட் 7
டாளிகள் வந்து தங்களுக்கு [20]உதவிசெய்யும்
படிக்குச் சைகை காட்டினார்கள்; அவர்கள்
வந்து, இரண்டு படவுகளும் அமிழத்தக்கதாக
நிரப்பினார்கள். சீமோன் பேதுரு அதைக் 8
கண்டு, [21]இயேசுவின் பாதத்தில் விழுந்து:
ஆண்டவரே, நான் பாவியான மனுஷன், நீர்
என்னை விட்டுப் போகவேண்டும் என்றான்.
அவர்கள் திரளான [22]மீன்களைப் பிடித்ததினி 9
மித்தம், அவனுக்கும் அவனோடேகூட இரு
ந்த யாவருக்கும் பிரமிப்புண்டானபடியினால்

10 அப்படிச் சொன்னான். சீமோனுக்குக் கூட்
டாளிகளான செபெதேயுவின் குமாரராகிய
யாக்கோபும் யோவானும் அந்தப்படியே பிர
மித்தார்கள். அப்பொழுது இயேசு சீமோனை
நோக்கி: பயப்படாதே, [1]இதுமுதல் நீ மனு
ஷரைப் பிடிக்கிறவனாயிருப்பாய் என்றார்.
11 அவர்கள் படவுகளைக் கரையிலே கொண்டு
போய் நிறுத்தி, எல்லாவற்றையும் [2]விட்டு,
அவருக்குப் பின்சென்றார்கள்.
12 பின்பு அவர் ஒரு பட்டணத்தில் இருக்
கையில், [3]குஷ்டரோகம் நிறைந்த ஒரு மனு
ஷன் இயேசுவைக் கண்டு, முகங்குப்புற
விழுந்து: ஆண்டவரே, உமக்குச் சித்தமா
னால், என்னைச் சுத்தமாக்க உம்மாலே ஆகும்
என்று அவரை வேண்டிக்கொண்டான்.
13 அவர் தமது கையை நீட்டி, அவனைத் தொ
ட்டு: எனக்குச் சித்தமுண்டு, சுத்தமாகு என்
றார்; உடனே குஷ்டரோகம் அவனை விட்டு
14 நீங்கிற்று. அவர் அவனை நோக்கி: நீ இதை
ஒருவருக்கும் சொல்லாமல், போய், உன்னை
ஆசாரியனுக்குக் காண்பித்து, நீ சுத்தமானதி
னிமித்தம், [4]மோசே கட்டளையிட்டபடியே,
அவர்களுக்குச் சாட்சியாக *பலிசெலுத்து
15 என்று கட்டளையிட்டார். அப்படியிருந்தும்
அவருடைய கீர்த்தி அதிகமாகப் பரம்பிற்று.
[5]திரளான ஜனங்கள் அவருடைய உபதேசத்
தைக் கேட்பதற்கும் அவராலே தங்கள் பிணி
கள் நீங்கிச் சவுக்கியமடைவதற்கும் கூடிவந்
16 தார்கள். அவரோ வனாந்தரத்தில் தனித்துப்
போய், [6]ஜெபம் பண்ணிக்கொண்டிருந்தார்.
17 பின்பு ஒருநாள் அவர் உபதேசித்துக்கொண்
டிருக்கிறபோது, கலிலேயா யூதேயா நாடுகளி
லுள்ள சகல கிராமங்களிலும், [7]எருசலேம் நக
ரத்திலுமிருந்துவந்த பரிசேயரும் நியாயசாஸ்
திரிகளும் உட்கார்ந்திருந்தார்கள்; அப்பொ
ழுது பிணியாளிகளைக் குணமாக்கத்தக்கதா
கக் கர்த்தருடைய வல்லமை விளங்கிற்று.
18 அப்பொழுது சில மனுஷர் திமிர்வாதக்காரன்
ஒருவனைப படுக்கையோடே எடுத்துக்கொண்
டுவந்து, [8]அவனை உள்ளே கொண்டுபோகவும்
அவர் முன்பாக வைக்கவும் வகைதேடினார்
19 கள். ஜனக்கூட்டம் மிகுதியாயிருந்தபடியால்
அவனை உள்ளே கொண்டுபோகிறதற்கு வகை
காணாமல், வீட்டின்மேல் ஏறி, தட்டோடுகள்
வழியாய் ஜனங்களின் மத்தியில் இயேசுவுக்கு
முன்பாக அவனைப் படுக்கையோடே இறக்கி
20 னார்கள். அவர்களுடைய விசுவாசத்தை அவர்
கண்டு, திமிர்வாதக்காரனை நோக்கி: மனுஷ
னே, உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்
21 பட்டது என்றார். அப்பொழுது வேதபாரக
ரும் பரிசேயரும் யோசனைபண்ணி, தேவ
தூஷணம் சொல்லுகிற இவன் யார்? [9]தேவன்
ஒருவரேயன்றி பாவங்களை மன்னிக்கத்தக்க
22 வர் யார் என்றார்கள். இயேசு அவர்கள் சிந்
தனைகளை அறிந்து, அவர்களை நோக்கி: உங்
கள் இருதயங்களில் நீங்கள் சிந்திக்கிறதென்
23 ன? உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்

1 மத். 4. 19. மாற். 1. 17
2 மத். 4. 20: 19. 27. பிலி. 3. 7, 8
3 மத். 8. 2. ழ. மாற். 1. 40. ழ.
4 லேவி. 14. 4. ழ
* காணிக்கை
5 மத். 4. 25. மாற். 3. 7, 8. யோ. 6. 2
6 மத். 14. 23. மாற். 6. 46
7 யோ. 3. 21
8 மத். 9. 2. ழ. மாற். 2. 3. ழ
9 சங். 32. 5: 103. 3: 130. 4. ஏசா. 1. 18: 43. 25
10 யோ. 5. 8, 12
11 8. வச. அப். 4. 21. கலா. 1. 24
12 மத். 9. 9. ழ. மாற். 2. 14
13 15. 1. ழ. மத். 9. 10. மாற். 2. 15
14 எரே. 8. 22
15 15. 7, 10. மத். 9. 13. 1 கொ. 6. 9–11. 1 தீமோ. 1. 15, 2 பே. 3. 9
16 7. 34, 35. மத். 9. 14. மாற். 2. 18
17 ஏசா. 22. 12
† பழமொழியை
18 மத். 9. 16, 17. மாற். 2. 21, 22
19 லேவி. 19. 19. உபா. 22. 11. 2 கொ. 6. 16

பட்டது என்று சொல்வதோ, எழுந்து நட
வென்று சொல்வதோ, எது எளிது? பூமி 24
யிலே பாவங்களை மன்னிக்க மனுஷகுமார
னுக்கு அதிகாரம் உண்டென்பதை நீங்கள்
அறியவேண்டுமென்று சொல்லி, திமிர்வாதக்
காரனை நோக்கி: நீ எழுந்து, [10]உன் படுக்கை
யை எடுத்துக்கொண்டு, உன் வீட்டுக்குப் போ
என்று உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.
உடனே அவன் அவர்களுக்கு முன்பாக எழு 25
ந்து, தன் படுக்கையை எடுத்துக்கொண்டு,
தேவனை மகிமைப்படுத்தி, தன் வீட்டுக்குப்
போனான். அதினாலே எல்லாரும் ஆச்சரியப் 26
பட்டு, தேவனை மகிமைப்படுத்தினார்கள்; அல்
லாமலும், அவர்கள் பயம் நிறைந்தவர்களாகி,
[11]அதிசயமான காரியங்களை இன்று கண்டோம்
என்றார்கள்.
இவைகளுக்குப்பின்பு, அவர் புறப்பட்டு, 27
[12]ஆயத்துறையில் உட்கார்ந்திருந்த லேவி என்
னும் பேருடைய ஒரு ஆயக்காரனைக் கண்டு:
எனக்குப் பின்சென்று வா என்றார். அவன் 28
எல்லாவற்றையும் விட்டு, எழுந்து, அவருக்
குப் பின்சென்றான். அந்த லேவி என்ப 29
வன் தன் வீட்டிலே அவருக்குப் பெரிய விரு
ந்துபண்ணினான். [13]அநேக ஆயக்காரரும்
மற்றவர்களும் அவர்களோடேகூடப் பந்தி
யிருந்தார்கள். வேதபாரகரும் பரிசேயரும் 30
அவருடைய சீஷருக்கு விரோதமாக முறு
முறுத்து: நீங்கள் ஆயக்காரரோடும் பாவிக
ளோடும் போஜனபானம் பண்ணுகிறதென்ன
வென்று கேட்டார்கள். இயேசு அவர்களுக் 31
குப் பிரதியுத்தரமாக: [14]பிணியாளிகளுக்கு
வைத்தியன் வேண்டியதேயல்லாமல் சுகமுள்
ளவர்களுக்கு வேண்டியதில்லை; நீதிமான் 32
களையல்ல, [15]பாவிகளையே மனந்திரும்புகிற
தற்கு அழைக்கவந்தேன் என்றார். பின்பு 33
அவர்கள் அவரை நோக்கி: யோவானுடைய
சீஷர் அநேகந்தரம் உபவாசித்து ஜெபம்பண்
ணிக்கொண்டுவருகிறார்கள், பரிசேயருடைய
சீஷரும் அப்படியே செய்கிறார்கள், [16]உம்மு
டைய சீஷர் போஜனபானம் பண்ணுகிறார்
களே, அதெப்படியென்று கேட்டார்கள்.
அதற்கு அவர்: மணவாளன் தங்களோடிருக் 34
கையில் மணவாளனுடைய தோழர்களை நீங்
கள் உபவாசிக்கச் செய்யக்கூடுமா? மணவா 35
ளன் அவர்களை விட்டு எடுபடும் நாட்கள்
வரும், [17]அந்த நாட்களிலே உபவாசிப்பார்கள்
என்றார். அவர்களுக்கு ஒரு †உவமையை 36
யும் சொன்னார்: [18]ஒருவனும் புதிய வஸ்திரத்
துண்டைப் பழைய வஸ்திரத்தின்மேல் போ
ட்டு இணைக்கமாட்டான், இணைத்தால் புதி
யது பழையதைக் கிழிக்கும்; [19]புதிய வஸ்திரத்
துண்டு பழைய வஸ்திரத்துக்கு ஒவ்வாது.
ஒருவனும் புது திராட்சரசத்தைப் பழந்துருத் 37
திகளில் வார்த்து வைக்கமாட்டான்; வார்த்து
வைத்தால் புதுரசம் துருத்திகளைக் கிழித்துப்
போடும், இரசமும் சிந்திப்போம், துருத்திக
ளும் கெட்டுப்போம். புது ரசத்தைப் புது 38

துருத்திகளில் வார்த்து வைக்கவேண்டும், அப்
பொழுது இரண்டும் பத்திரப்பட்டிருக்கும்.
39 அன்றியும் ஒருவனும் பழைய ரசத்தைக் குடித்
தவுடனே புதுரசத்தை விரும்பமாட்டான்,
பழைய ரசமே நல்லதென்று சொல்லுவான்
என்றார்.

6 பஸ்காபண்டிகையின் இரண்டாம் நாளைக்
குப் பின்வந்த முதலாம் ஓய்வுநாளிலே, [1]அவர்
பயிர்வழியேநடந்துபோகையில், அவருடைய
சீஷர்கள் கதிர்களைக் கொய்து, கைகளினால்
2 நிமிட்டித் தின்றார்கள். பரிசேயரில் சிலர்
அவர்களை நோக்கி: [2]ஓய்வுநாளில் செய்யத்தகா
ததை நீங்கள் ஏன் செய்கிறீர்கள் என்று கேட்
3 டார்கள். இயேசு அவர்களுக்குப் பிரதியுத்
தரமாக: [3]தாவீதும் அவனோடிருந்தவர்களும்
பசியாயிருந்தபோது செய்ததை நீங்கள் வாசிக்
கவில்லையா? அவன் தேவனுடைய வீட்டில்
பிரவேசித்து, [4]ஆசாரியர் மாத்திரமேதவிர
வேறொருவரும் புசிக்கத்தகாத தேவசமுகத்து
4 அப்பங்களைக் கேட்டு வாங்கி, தான் புசித்
ததுமன்றி, தன்னுடனேகூட இருந்தவர்களுக்
கும் கொடுத்தானே என்று சொன்னார்.
5 மேலும் மனுஷகுமாரன் ஓய்வுநாளுக்கும்
ஆண்டவராய் இருக்கிறார் என்றார்.
6 வேறொரு ஓய்வுநாளிலே, [5]அவர் ஜெப
ஆலயத்தில் பிரவேசித்து உபதேசித்தார்.
அங்கே சூம்பின வலதுகையையுடைய ஒரு
7 மனுஷன் இருந்தான். அப்பொழுது வேத
பாரகரும் பரிசேயரும் அவரிடத்தில் குற்றம்
பிடிக்கும்படி, ஓய்வுநாளில் சொஸ்தமாக்குவா
ரோ என்று அவர்மேல் நோக்கமாயிருந்தார்
8 கள். அவர்களுடைய சிந்தனைகளை [6]அவர்
அறிந்து, சூம்பின கையையுடைய மனுஷனை
நோக்கி: நீ எழுந்து நடுவே நில் என்றார்.
9 அவன் எழுந்து நின்றான். அப்பொழுது
இயேசு அவர்களை நோக்கி: நான் உங்களிடத்
தில் ஒன்று கேட்கிறேன்; ஓய்வுநாட்களில்
நன்மை செய்வதோ, [7]தீமை செய்வதோ, ஜீவ
னைக் காப்பதோ, அழிப்பதோ, எது நியாயம்
10 என்று கேட்டு, அவர்களெல்லாரையும் சுற்
றிப்பார்த்து, [8]அந்த மனுஷனை நோக்கி:
உன் கையை நீட்டு என்றார். அப்படியே
அவன் தன் கையை நீட்டினான், உடனே
அவன் கை மறுகையைப்போலச் சொஸ்தமா
11 யிற்று. அவர்களோ மூர்க்கவெறிகொண்டு,
[9]இயேசுவை என்னசெய்யலாமென்று ஒருவ
ரோடொருவர் ஆலோசித்தார்கள்.
12 அந்நாட்களிலே, அவர் ஜெபம் பண்ணும்
படி ஒரு மலையின்மேல் ஏறி [10]இராமுழுவ
தும் தேவனை நோக்கி ஜெபம் பண்ணிக்
13 கொண்டிருந்தார். பொழுது விடிந்தபோது,
அவர் தம்முடைய சீஷர்களை வரவழைத்து,
அவர்களில் பன்னிரண்டுபேரைத் தெரிந்து
கொண்டு, [11]அவர்களுக்கு அப்போஸ்தலர்
14 என்று பேரிட்டார். அவர்கள் யாரெனில்,
[12]பேதுரு என்று தாம் பேரிட்ட சீமோன்,
அவன் சகோதரனாகிய அந்திரேயா, யாக்
கோபு, யோவான், பிலிப்பு, பற்தொலொ
மேயு, மத்தேயு, தோமா, அல்பேயுவின் 15
குமாரனாகிய யாக்கோபு, செலோத்தே என்
னப்பட்ட சீமோன், யாக்கோபின் சகோதர 16
னாகிய யூதா, [13]துரோகியான யூதாஸ்காரி
யோத்து என்பவர்களே. பின்பு அவர் அவர் 17
களுடனேகூட இறங்கி, சமனான ஒரு இடத்
திலே நின்றார். [14]அங்கே அவருடைய சீஷ
ரில் அநேகம்பேரும் அவருடைய உபதேசத்
தைக் கேட்கும்படிக்கும், [15]தங்கள் வியாதிக
ளினின்று குணமாக்கப்படும்படிக்கும், யூதே
யா தேசத்துத் திசைகள் யாவற்றிலிருந்தும்,
எருசலேம் நகரத்திலிருந்தும், தீரு சீதோன்
பட்டணங்கள் இருக்கிற கடலோரத்திலிருந்
தும் வந்தவர்களாகிய திரளான ஜனங்களும்
இருந்தார்கள். அசுத்த ஆவிகளால் வாதிக்கப் 18
பட்டவர்களும் வந்து, ஆரோக்கியமடைந்தார்
கள். அவரிடத்திலிருந்து *வல்லமை புறப் 19
பட்டு எல்லாரையும் குணமாக்கினபடியினா
லே, [16]ஜனங்கள் யாவரும் அவரைத் தொடும்ப
டிக்கு வகை தேடினார்கள்.

அப்பொழுது அவர் தம்முடைய சீஷர்களை 20
நோக்கிப்பார்த்து: [17]தரித்திரராகிய நீங்கள்
பாக்கியவான்கள்; தேவனுடைய ராஜ்யம்
உங்களுடையது. இப்பொழுது பசியாயிருக் 21
கிற நீங்கள் பாக்கியவான்கள்; திருப்தியடை
வீர்கள். [18]இப்பொழுது அழுகிற நீங்கள் பாக்
கியவான்கள்; இனி நகைப்பீர்கள். மனுஷ 22
குமாரன் நிமித்தமாக ஜனங்கள் உங்களைப்
பகைத்து, [19]உங்களைப் புறம்பாக்கி, உங்களை
நிந்தித்து, உங்கள் நாமத்தைப் பொல்லாததெ
ன்று தள்ளிவிடும்போது நீங்கள் பாக்கியவான்
களாயிருப்பீர்கள். அந்நாளிலே நீங்கள் [20]சந் 23
தோஷப்பட்டுக் களிகூருங்கள்; பரலோகத்
தில் உங்கள் பலன் மிகுதியாயிருக்கும்; [21]அவர்
களுடைய பிதாக்கள் தீர்க்கதரிசிகளுக்கும்
அப்படியே செய்தார்கள். ஐசுவரியவான்க 24
ளாகிய உங்களுக்கு ஐயோ; [22]உங்கள் ஆறுதலை
நீங்கள் அடைந்து தீர்ந்தது. திருப்தியுள்ள 25
வர்களாயிருக்கிற உங்களுக்கு ஐயோ; [23]பசியா
யிருப்பீர்கள். இப்பொழுது நகைக்கிற உங்க
ளுக்கு ஐயோ; [24]இனி துக்கப்பட்டு அழுவீர்
கள். எல்லா மனுஷரும் உங்களைக்குறித்துப் 26
புகழ்ச்சியாய்ப் பேசும்போது உங்களுக்கு
ஐயோ; [25]அவர்கள் பிதாக்கள் கள்ளத்தீர்க்க
தரிசிகளுக்கும் அப்படியே செய்தார்கள்.

எனக்குச் செவிகொடுக்கிற உங்களுக்கு 27
நான் சொல்லுகிறேன்: [26]உங்கள் சத்துருக்க
ளைச் சிநேகியுங்கள்; உங்களைப் பகைக்கிறவர்
களுக்கு நன்மை செய்யுங்கள். உங்களைச் சபிக் 28
கிறவர்களை ஆசீர்வதியுங்கள்; [27]உங்களை நிந்திக்
கிறவர்களுக்காக ஜெபம் பண்ணுங்கள்.
உன்னை ஒரு கன்னத்தில் அறைகிறவனுக்கு 29
மறுகன்னத்தையும் கொடு; [28]உன் அங்கியை
எடுத்துக்கொள்ளுகிறவனுக்கு உன் வஸ்திரத்
தையும் எடுத்துக்கொள்ளத் தடைபண்ணாதே.
உன்னிடத்தில் கேட்கிற எவனுக்கும் கொடு; 30

1 மத். 12. 1. மாற். 2. 23
2 யாத். 20. 10. ஏசா. 58. 13
3 1 சாமு. 21. 6
4 லேவி. 24. 9
5 13. 14: 14. 3. மத். 12. 10. முத. மாற். 3. 1. முத. யோ. 9. 16
6 யோபு 42. 2
7 14. 3. யாத். 20. 10
8 மாற். 3. 5
9 சங். 2. 1, 2
10 மத். 6. 6: 14. 23
11 மத். 10. 1. முத. மாற். 3. 13: 6. 7
12 யோ. 1. 42
13 யூதா 1. வச
14 மத். 4. 25. முத. மாற். 3. 7. மு
15 சங். 103. 3: 107. 17–20
* சக்தி.
16 8. 46. எண். 21. 8, 9. மத். 14. 36. மாற். 5. 30. யோ. 3. 14, 15
17 மத். 5. 2. முத. யாக். 2. 5
18 ஏசா. 55. 1: 61. 3. வெளி. 21. 4
19 யோ. 17. 14. 1 பே. 2. 19, 20: 3. 14: 4. 14
20 அப். 5. 41. கொலோ. 1. 24. யாக். 1. 2
21 அப். 7. 52. எபி. 11. 32–39
22 12. 21. ஆப. 2. 9. யாக். 5. 1
23 ஏசா. 28. 7: 65. 13
24 நீதி. 14. 13. எபே. 5. 4
25 யோ. 15. 19. 1 யோ. 4. 5
26 35. வச. யாத். 23. 45. நீதி. 25. 21. மத். 5. 44. ரோ. 12. 20
27 23. 34. அப். 7. 60
28 மத். 5. 39. 1 கொ. 6. 7

[1]உன்னுடையதை எடுத்துக்கொள்ளுகிறவனி
31 டத்தில் அதைத் திரும்பக் கேளாதே. மனு
ஷர் உங்களுக்கு எப்படிச் செய்யவேண்டு
மென்று விரும்புகிறீர்களோ, [2]அப்படியே
32 நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள். உங்
களைச் சிநேகிக்கிறவர்களையே நீங்கள் சிநேகித்
தால், [3]உங்களுக்குப் பலன் என்ன? பாவிக
ளும் தங்களைச் சிநேகிக்கிறவர்களைச் சிநேகிக்
33 கிறார்களே. உங்களுக்கு நன்மை செய்கிறவர்
களுக்கே நீங்கள் நன்மை செய்தால், உங்களுக்
குப் பலன் என்ன? பாவிகளும் அப்படிச்
34 செய்கிறார்களே. திரும்பக் கொடுப்பார்களெ
ன்று நம்பி நீங்கள் கடன் கொடுத்தால் உங்க
ளுக்குப் பலன் என்ன? [4]திரும்பத் தங்களுக்
குக் கொடுக்கப்படும்படியாகப் பாவிகளும்
35 பாவிகளுக்குக் கடன் கொடுக்கிறார்களே. உங்
கள் சத்துருக்களைச் சிநேகியுங்கள், நன்மை
செய்யுங்கள், [5]கைம்மாறு கருதாமல் கடன்
கொடுங்கள்; அப்பொழுது உங்கள் பலன்
மிகுதியாயிருக்கும், [6]உன்னதமானவருக்கு
நீங்கள் பிள்ளைகளாயிருப்பீர்கள்; அவர் நன்றி
யறியாதவர்களுக்கும் துரோகிகளுக்கும் நன்
36 மை செய்கிறாரே. ஆகையால் உங்கள் பிதா
இரக்கமுள்ளவரா யிருக்கிறதுபோல, [7]நீங்க
37 ளும் இரக்கமுள்ளவர்களாயிருங்கள். மற்ற
வர்களைக் குற்றவாளிகளென்று தீர்க்காதிருங்
கள்; [8]அப்பொழுது நீங்களும் குற்றவாளிக
ளென்று தீர்க்கபபடாதிருப்பீர்கள்; மற்றவர்
களை ஆக்கினைக்குள்ளாகும்படி தீர்க்காதிருங்
கள், அப்பொழுது நீங்களும் ஆக்கினைக்குள்
ளாகத் தீர்க்கப்படாதிருப்பீர்கள்; விடுதலைபண்
ணுங்கள், அப்பொழுது நீங்களும் விடுதலை
38 பண்ணப்படுவீர்கள். கொடுங்கள், [9]அப்பொ
ழுது உங்களுக்கும் கொடுக்கப்படும்; அமுக்
கிக் குலுக்கிச் சரிந்துவிழும்படி நன்றாய் அள
ந்து, உங்கள் மடியிலே போடுவார்கள்; [10]நீங்கள்
எந்த அளவினால் அளக்கிறீர்களோ அந்த அள
வினால் உங்களுக்கும் அளக்கப்படும் என்றார்.
39 பின்னும் அவர் ஒரு உவமையை அவர்க
ளுக்குச் சொன்னார்: [11]குருடனுக்குக் குரு
டன் வழிகாட்டக் கூடுமோ? இருவரும் பள்
40 ளத்தில் விழுவார்கள் அல்லவா? சீஷன்
தன் குருவுக்கு மேற்பட்டவனல்ல, [12]தேறின
வன் எவனும் தன் குருவைப்போலிருப்பான்.
41 நீ உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தை உணர
ாமல், உன் [13]சகோதரன் கண்ணிலிருக்கிற
42 துரும்பைப் பார்க்கிறதென்ன? அல்லது நீ
உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தை உணரா
மல், உன் சகோதரனை நோக்கி: சகோதரனே,
நான் உன் கண்ணிலிருக்கிற துரும்பை எடுத்
துப்போடட்டும் என்று நீ சொல்வதெப்படி?
[14]மாயக்காரனே! முன்பு உன் கண்ணிலிருக்
கிற உத்திரத்தை எடுத்துப்போடு, பின்பு உன்
சகோதரன் கண்ணிலிருக்கிற துரும்பை எடுத்
43 துப்போட வகை பார்ப்பாய். நல்ல மரமா
னது கெட்ட கனி கொடாது, [15]கெட்ட மரமா
44 னது நல்ல கனி கொடாது. அந்தந்த மரம்
அதனதன் கனியினால் அறியப்படும்; [16]முட்
செடிகளில் அத்திப்பழங்களைப் பறிக்கிறது
மில்லை, நெருஞ்சிச் செடியில் திராட்சப்பழங்
களைப் பறிக்கிறதுமில்லை. நல்ல மனுஷன் 45
[17]தன் இருதயமாகிய நல்ல பொக்கிஷத்திலி
லிருந்து நல்லதை எடுத்துக் காட்டுகிறான்;
பொல்லாத மனுஷன் தன் இருதயமாகிய
பொல்லாத பொக்கிஷத்திலிருந்து பொல்லாத
தை எடுத்துக் காட்டுகிறான்; [18]இருதயத்தின்
நிறைவினால் அவனவன் வாய் பேசும்.
என்னை ஆண்டவரே! ஆண்டவரே! [19]என்று 46
நீங்கள் சொல்லியும், நான் சொல்லுகிறபடி
நீங்கள் செய்யாமற்போகிறதென்ன? என்னி 47
டத்தில் வந்து, என் வார்த்தைகளைக் கேட்டு,
[20]அவைகளின்படி செய்கிறவன் யாருக்கு ஒப்
பாயிருக்கிறானென்று உங்களுக்குக் காண்பிப்
பேன். ஆழமாய்த் தோண்டி, கற்பாறையின் 48
மேல் அஸ்திபாரம்போட்டு, வீடுகட்டுகிற மனு
ஷனுக்கு ஒப்பாயிருக்கிறான்; பெருவெள்ளம்
வந்து, நீரோட்டம் அந்த வீட்டின்மேல் மோதி
யும், அதை அசைக்கக் கூடாமற்போயிற்று;
ஏனென்றால் அது கன்மலையின்மேல் அஸ்தி
பாரம் போடப்பட்டிருந்தது. என் வார்த்தை 49
களைக் கேட்டும் அவைகளின்படி செய்யாதவ
னோ அஸ்திபாரமில்லாமல் மண்ணின்மேல்
வீடுகட்டினவனுக்கு ஒப்பாயிருக்கிறான்; நீ
ரோட்டம் அதின்மேல் மோதினவுடனே அது
விழுந்தது; [21]விழுந்த முழுவதும் அழிந்தது
என்றார்.

அவர் தம்முடைய வார்த்தைகளையெல்லாம் 7
ஜனங்களுடைய காதுகள் கேட்கும்படி சொ
ல்லி முடித்தபின்பு, [22]கப்பர்நகூமுக்குப் போ
னார்.
அங்கே நூற்றுக்கு அதிபதியாகிய ஒருவ 2
னுக்குப் பிரியமான வேலைக்காரன் வியாதிப்
பட்டு மரண அவஸ்தையாயிருந்தான். அவன் 3
இயேசுவைக்குறித்துக்கேள்விப்பட்டபோது,
அவர் வந்து தன் வேலைக்காரனைக் குணமாக்க
வேண்டுமென்று, அவரை வேண்டிக்கொள்
ளும்படி யூதருடைய மூப்பரை அவரிடத்தில்
அனுப்பினான். அவர்கள் இயேசுவினிடத் 4
தில் வந்து, அவரைக் கருத்தாய் வேண்டிக்
கொண்டு: நீர் இந்தத் தயவுசெய்கிறதற்கு
அவன் பாத்திரனாயிருக்கிறான். அவன் நம் 5
முடைய ஜனத்தை நேசிக்கிறான், [23]நமக்கு
ஒரு ஜெப ஆலயத்தையும் கட்டினான் என்றார்
கள். அப்பொழுது இயேசு அவர்களுடனே 6
கூடப்போனார். வீட்டுக்குச்சமீபமானபோது,
நூற்றுக்கு அதிபதி தன் சிநேகிதரை நோக்கி:
நீங்கள் அவரிடத்தில் போய், ஆண்டவரே!
[24]நீர் வருத்தப்படவேண்டாம்; நீர் என் வீட்டு
வாசலுக்குள் பிரவேசிக்க நான் பாத்திரன்
அல்ல; நான் உம்மிடத்தில் வரவும் என்னைப் 7
பாத்திரனாக எண்ணவில்லை; [25]ஒரு வார்த்தை
மாத்திரம் சொல்லும், அப்பொழுது என் வே
லைக்காரன் சொஸ்தமாவான். நான் அதிகா 8
ரத்துக்குக்கீழ்ப்பட்டவனாயிருந்தும், எனக்குக்

1 உபா. 15. 7, 8, 10. நீதி. 19. 17. மத். 5. 42. ழ
2 மத். 7. 12
3 மத். 5. 46
4 மத். 5. 42
5 27. வச. சங். 37. 26: 112. 5
6 மத். 5. 45
7 மத். 5. 48
8 மத். 7. 1
9 நீதி. 19. 17. சங். 79. 12. மத். 10. 42
10 மத். 7. 2. மாற். 4. 24. யாக். 2. 13
11 மத். 15. 14
12 மத். 10. 24. யோ. 13. 16: 15. 20
13 மத். 7. 3
14 நீதி. 18. 17. ரோ. 2. 1, 21. ழ
15 மத். 7. 16, 17
16 மத். 12. 33
17 மத். 12. 35
18 மத். 12. 34
19 13. 25, மல். 1. 6. மத். 7. 21: 25. 11. கலா. 6. 7
20 மத். 7. 24–26
21 நீதி. 28. 18. ஓசி. 4. 14
22 மத். 8. 5. ழ
23 1 இரா. 5. 1. கலா. 5. 6. 1 யோ. 3. 14: 5. 1, 2
24 8. 49
25 சங். 107. 20

கீழ்ப்பட்டிருக்கிற சேவகருமுண்டு; நான் ஒரு
வனைப் போவென்றால் போகிறான், மற்றொரு
வனை வாவென்றால் வருகிறான்; என் வேலைக்
காரனை, இதைச் செய்யென்றால் செய்கிறான்
என்று நான் சொன்னதாகச் சொல்லுங்கள்
9 என்று அவர்களை அனுப்பினான். இயேசு
இவைகளைக் கேட்டு அவனைக்குறித்து ஆச்சரி
யப்பட்டு, திரும்பி, தமக்குப் பின்செல்லுகிற
திரளான ஜனங்களை நோக்கி: இஸ்ரவேலருக்
குள்ளும் நான் இப்படிப்பட்ட விசுவாசத்
தைக் காணவில்லை என்று உங்களுக்குச் சொ
10 ல்லுகிறேன் என்றார். அனுப்பப்பட்டவர்கள்
வீட்டுக்குத் திரும்பிவந்தபோது, வியாதியாய்க்
கிடந்த வேலைக்காரன் சுகமடைந்திருக்கிற
தைக் கண்டார்கள்.
11 மறுநாளிலே அவர் நாயீன் என்னும் ஊருக்
குப் போனார்; அவருடைய சீஷர் அநேகரும்
திரளான ஜனங்களும் அவருடனேகூடப்
12 போனார்கள். அவர் ஊரின் வாசலுக்குச்
சமீபித்தபோது, மரித்துப்போன ஒருவனை
அடக்கம் பண்ணும்படி கொண்டுவந்தார்கள்;
அவன் தன் தாய்க்கு ஒரே மகனாயிருந்தான்.
அவளோ கைம்பெண்ணாயிருந்தாள்; ஊராரில்
வெகு ஜனங்கள் அவளுடனேகூட வந்தார்
13 கள். கர்த்தர் அவளைப் பார்த்து, அவள்மேல்
14 மனதுருகி: அழாதே என்று சொல்லி, கிட்ட
வந்து, பாடையைத் தொட்டார்; அதைச் சுமந்
தவர்கள் நின்றார்கள்; அப்பொழுது அவர்:
வாலிபனே, [1]எழுந்திரு என்று உனக்குச் சொ
15 ல்லுகிறேன் என்றார். மரித்தவன் [2]எழுந்து
உட்கார்ந்து, பேசத்தொடங்கினான். அவனை
16 அவன் தாயினிடத்தில் ஒப்புவித்தார். எல்லா
ரும் பயமடைந்து: [3]மகா தீர்க்கதரிசியானவர்
நமக்குள்ளே தோன்றியிருக்கிறார் என்றும்,
தேவன் தமது ஜனங்களைச் சந்தித்தார் என்
றும் சொல்லி, [4]தேவனை மகிமைப்படுத்தினார்
17 கள். இந்தச் செய்தி யூதேயா தேசமுழுவதி
லும் சுற்றியிருக்கிற திசைகள் யாவற்றிலும்
பிரசித்தமாயிற்று.
18 [5]இவைகளையெல்லாம் யோவானுடைய
சீஷர்கள் அவனுக்கு அறிவித்தார்கள். அப்பொ
ழுது யோவான் தன் சீஷரில் இரண்டுபேரை
19 அழைத்து, நீங்கள் இயேசுவினிடத்திற்குப்
போய்: [6]வருகிறவர் நீர்தானா? அல்லது வே
றொருவர் வரக் காத்திருக்கவேண்டுமா? என்று
கேளுங்கள் என்று சொல்லி அனுப்பினான்.
20 அந்தப்படி அவர்கள் அவரிடத்தில் வந்து: வரு
கிறவர் நீர்தானா? அல்லது வேறொருவர் வரக்
காத்திருக்கவேண்டுமா? என்று கேட்கும்படி
யோவான்ஸ்நானன் எங்களை உம்மிடத்திற்கு
21 அனுப்பினார் என்றார்கள். அந்தச் சமயத்தி
லே நோய்களையும் கொடிய வியாதிகளையும்
பொல்லாத ஆவிகளையும் கொண்டிருந்த அநே
கரை அவர் குணமாக்கி, அநேகங் குருடருக்
22 குப் பார்வையளித்தார். இயேசு அவர்களுக்
குப் பிரதியுத்தரமாக: நீங்கள் போய், கண்ட
வைகளையும் கேட்டவைகளையும் யோவானு
க்கு அறிவியுங்கள்; [7]குருடர் பார்வையடைகி
றார்கள், சப்பாணிகள் நடக்கிறார்கள், குஷ்ட
ரோகிகள் சுத்தமாகிறார்கள், செவிடர் கேட்
கிறார்கள், மரித்தோர் எழுந்திருக்கிறார்கள்,
[8]தரித்திரருக்குச் சுவிசேஷம் பிரசங்கிக்கப்
படுகிறது. என்னிடத்தில் [9]இடறலடையா 23
திருக்கிறவன் எவனோ அவன் பாக்கியவான்
என்றார்.
யோவானுடைய தூதர்கள் போனபின்பு 24
அவர் யோவானைக்குறித்து ஜனங்களுக்குச்
சொன்னது என்னவென்றால்: [10]எதைப்பார்க்க
வனாந்தரத்திற்குப் போனீர்கள்? காற்றினால்
அசையும் நாணலையோ? அல்லவென்றால், 25
எதைப்பார்க்கப் போனீர்கள்? மெல்லிய வஸ்தி
ரந்தரித்த மனுஷனையோ? அலங்கார வஸ்திரந்
தரித்துச் செல்வமாய் வாழ்கிறவர்கள் [11]அரசர்
மாளிகைகளிலேஇருக்கிறார்கள். அல்லவென் 26
றால், எதைப்பார்க்கப் போனீர்கள்? தீர்க்கதரிசி
யையோ? [12]ஆம், தீர்க்கதரிசியைப்பார்க்கிலும்
மேன்மையுள்ளவனையே என்று உங்களுக்குச்
சொல்லுகிறேன். இதோ, [13]நான் என் தூதனை 27
உமக்கு முன்பாக அனுப்புகிறேன்; அவன்
உமக்கு முன்னே போய், உமது வழியை ஆயத்
தம்பண்ணுவான் என்று எழுதிய வாக்கியத்
தால் குறிக்கப்பட்டவன் இவன்தான். ஸ்திரீ 28
களிடத்திலே பிறந்தவர்களில் யோவான்ஸ்நா
னனைப்பார்க்கிலும் பெரிய தீர்க்கதரிசி ஒரு
வனுமில்லை; ஆகிலும், தேவனுடைய ராஜ்யத்
தில் சிறியவனாயிருக்கிறவன் அவனிலும் பெரி
யவனாயிருக்கிறானென்று உங்களுக்குச் சொல்
லுகிறேன் என்றார். யோவானுடைய உப 29
தேசத்தைக் கேட்ட ஆயக்காரர் முதலான
சகல ஜனங்களும் அவனாலே ஞானஸ்நானம்
பெற்று; [14]தேவன் நீதிபரர் என்று அறிக்கை
யிட்டார்கள். பரிசேயரும் நியாயசாஸ்திரி 30
களுமோ அவனாலே ஞானஸ்நானம் பெறாமல்
தங்களுக்குக் கேடுண்டாக [15]தேவனுடைய
ஆலோசனையைத் தள்ளிவிட்டார்கள். பின் 31
னும் கர்த்தர் சொன்னது: [16]இந்தச் சந்ததியை
யாருக்கு ஒப்பிடுவேன்? இவர்கள் யாருக்கு
ஒப்பாயிருக்கிறார்கள்? சந்தைவெளியில் உட் 32
கார்ந்து, ஒருவரையொருவர் பார்த்து: உங்க
ளுக்காகக் குழல் ஊதினோம், நீங்கள் கூத்தாட
வில்லை; உங்களுக்காகப் புலம்பினோம், நீங்
கள் அழவில்லை என்று குறைசொல்லுகிற
பிள்ளைகளுக்கு ஒப்பாயிருக்கிறார்கள். எப் 33
படியெனில், [17]யோவான்ஸ்நானன் அப்பம்
புசியாதவனும் திராட்சரசம் குடியாதவனுமாய்
வந்தான்; அதற்கு நீங்கள்: அவன் பிசாசுபிடித்
திருக்கிறவன் என்கிறீர்கள். மனுஷகுமாரன் 34
[18]போஜனபானம் பண்ணுகிறவராய் வந்தார்;
அதற்கு நீங்கள்: இதோ, போஜனப்பிரியனும்
மதுபானப் பிரியனுமான மனுஷன், ஆயக்கா
ரருக்கும் பாவிகளுக்கும் சிநேகிதன் என்கிறீர்
கள். ஆனாலும் [19]ஞானமானது அதன் பிள்ளை 35
களெல்லாராலும் நீதியுள்ளதென்று ஒப்புக்
கொள்ளப்படும் என்றார்.

[1] 8. 54. அப். 9. 40. ரோ. 4. 17
[2] 2இரா. 4. 32-37. யோ. 11. 44
[3] 24. 19
[4] 1. 68
[5] மத். 11. 2
[6] சகரி. 9. 9
[7] ஏசா. 35. 5. மத். 11. 4.
[8] 4. 18. யாக். 2. 5
[9] 2. 34. ஏசா. 8. 14, 15. மத். 11. 6; 13. 57. யோ. 6. 66. 1 கொ. 1. 21-28
[10] மத். 11. 7
[11] 2 சாமு. 19. 35. எஸ்தர் 1. 3, 11
[12] 1. 76
[13] 1. 15-17 மல். 3. 1
[14] 3. 12. சங். 51. 4. மத். 3. 5, 6. ரோ. 3. 4
[15] அப். 20. 26, 27
[16] மத். 11. 16.
[17] 1. 15. மத். 3. 4 மாற். 1. 6
[18] 36. கல. யோ. 2. 2; 12. 2
[19] நீதி. 8. 32-36; 17. 16. மத். 11. 19

36 பரிசேயரில் ஒருவன் தன்னுடனே போஜ
னம் பண்ணவேண்டுமென்று அவரை வேண்
டிக்கொண்டான்; [1]அவர் அந்தப் பரிசேய
னுடைய வீட்டில் பிரவேசித்துப் பந்தியிருந்
37 தார். அப்பொழுது அந்த ஊரிலிருந்த *பாவி
யாகிய [2]ஒரு ஸ்திரீ அவர் பரிசேயன் வீட்
டிலே பந்தியிருக்கிறதை அறிந்து, ஒரு பரா
38 ணியில் பரிமளதைலம் கொண்டுவந்து, அவ
ருடைய பாதங்களின் அருகே பின்னாக நின்று
அழுதுகொண்டு, அவருடைய பாதங்களைத்
தன் கண்ணீரினால் நனைத்து, தன் தலைமயிரி
னால் துடைத்து, அவருடைய பாதங்களை
முத்தஞ்செய்து, பரிமளதைலத்தைப் பூசினாள்.
39 அவரை அழைத்த பரிசேயன் அதைக் கண்ட
போது, [3]இவர் தீர்க்கதரிசியாயிருந்தால் தம்
மைத் தொடுகிற ஸ்திரீ இன்னாளென்றும் இப்
படிப்பட்டவளென்றும் அறிந்திருப்பார்; [4]இ
வள் பாவியாயிருக்கிறாளே என்று தனக்குள்
40 ளே சொல்லிக்கொண்டான். இயேசு அவனை
நோக்கி: சீமோனே, உனக்கு நான் ஒரு காரி
யம் சொல்லவேண்டும் என்றார். அதற்கு அ
41 வன்: போதகரே, சொல்லும் என்றான். அப்
பொழுது அவர்: ஒருவனிடத்தில் இரண்டு
பேர் கடன்பட்டிருந்தார்கள்; [5]ஒருவன் ஐந்
நூறு வெள்ளிக்காசும், மற்றவன் ஐம்பது வெ
ள்ளிக்காசும் கொடுக்கவேண்டியதாயிருந்தது.
42 கொடுக்க அவர்களுக்கு [6]நிர்வாகமில்லாத
போது, இருவருக்கும் கடனை மன்னித்துவிட்
டான். இப்படியிருக்க, அவர்களில் எவன்
அவனிடத்தில் அதிக அன்பாயிருப்பான்?
43 அதைச் சொல் என்றார். சீமோன் பிரதியுத்தர
மாக: எவனுக்கு அதிகமாய் மன்னித்துவிட்டா
னோ அவனே அதிக அன்பாயிருப்பான் என்று
நினைக்கிறேன் என்றான்; அதற்கு அவர்:
[7]சரியாய் நிதானித்தாய் என்று சொல்லி,
44 ஸ்திரீயினிடமாய்த் திரும்பி, சீமோனை நோ
க்கி: இந்த ஸ்திரீயைப் பார்க்கிறாயே; நான்
உன் வீட்டில் பிரவேசித்தேன், நீ என் கால்
களுக்குத் தண்ணீர் தரவில்லை, இவளோ,
கண்ணீரினால் என் கால்களை நனைத்து, தன்
தலைமயிரினால் அவைகளைத் துடைத்தாள்.
45 நீ என்னை முத்தஞ்செய்யவில்லை, இவளோ,
நான் உட்பிரவேசித்ததுமுதல், என் பாதங்
46 களை ஓயாமல் முத்தஞ்செய்தாள். நீ என்
[8]தலையில் எண்ணெய் பூசவில்லை, இவளோ
என் பாதங்களில் பரிமளதைலம் பூசினாள்.
47 ஆதலால் நான் உனக்குச் சொல்லுகிறேன்:
[9]இவள் செய்த அநேக பாவங்கள் மன்
னிக்கப்பட்டது; இவள் மிகவும் அன்புகூர்ந்
தாளே. எவனுக்குக் கொஞ்சம் மன்னிக்கப்
படுகிறதோ, அவன் கொஞ்சமாய் அன்புகூரு
48 வான் என்று சொல்லி; அவளை நோக்கி:
உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டது என்
49 றார். அப்பொழுது கூடப் பந்தியிருந்தவர்கள்:
[10]பாவங்களை மன்னிக்கிற இவன் யார் என்று
தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்டார்கள்.
50 அவர் ஸ்திரீயை நோக்கி: [11]உன் விசுவாசம்
உன்னை ரட்சித்தது, சமாதானத்தோடே போ
என்றார்.

8 பின்பு, அவர் பட்டணங்கள்தோறும் கிரா
மங்கள்தோறும் பிரயாணம்பண்ணி, தேவனு
டைய ராஜ்யத்திற்குரிய நற்செய்தியைக் கூறிப்
பிரசங்கித்துவந்தார். பன்னிருவரும் அவருட
னேகூட இருந்தார்கள். அவர் பொல்லாத 2
ஆவிகளையும் வியாதிகளையும் நீக்கிக் குணமாக்
கின சில ஸ்திரீகளும், [12]ஏழு பிசாசுகள் நீங்
கின மகதலேனாள் என்னப்பட்ட மரியாளும்,
ஏரோதின் காரியகாரனான கூசாவின் மனைவி 3
யாகிய யோவன்னாளும், சூசன்னாளும், [13]தங்
கள் ஆஸ்திகளால் அவருக்கு ஊழியஞ்செய்து
கொண்டுவந்த மற்ற அநேகம் ஸ்திரீகளும்
அவருடனே இருந்தார்கள்.

சகல பட்டணங்களிலுமிருந்து திரளான 4
ஜனங்கள் அவரிடத்தில் வந்து கூடினபோது,
[14]அவர் உவமையாகச் சொன்னது: [15]விதைக் 5
கிறவன் ஒருவன் விதையை விதைக்கப் புறப்
பட்டான்; அவன் விதைக்கையில் சில விதை
வழியருகே விழுந்து [16]மிதியுண்டது, ஆகாயத்
துப் பறவைகள் வந்து அதைப் பட்சித்துப்
போட்டது. சில விதை கற்பாறையின்மேல் 6
விழுந்தது; [17]அது முளைத்தபின் அதற்கு ஈர
மில்லாததினால் உலர்ந்துபோயிற்று. சில விதை 7
முள்ளுள்ள இடங்களில் விழுந்தது; [18]முள்
கூட வளர்ந்து, அதை நெருக்கிப்போட்டது.
சில விதை நல்ல நிலத்தில் விழுந்தது, அது 8
முளைத்து, ஒன்று நூறாகப் பலன் கொடுத்தது
என்றார். இவைகளைச் சொல்லி, கேட்கிற
தற்குக் காதுள்ளவன் கேட்கக்கடவன் என்று
சத்தமிட்டுக் கூறினார்.

அப்பொழுது அவருடைய சீஷர்கள், இந்த 9
உவமையின் கருத்து என்னவென்று அவரி
டத்தில் கேட்டார்கள். அதற்கு அவர்: தேவ 10
னுடைய ராஜ்யத்தின் இரகசியங்களை அறி
யும்படி உங்களுக்கு அருளப்பட்டது; மற்ற
வர்களுக்கோ, அவர்கள் கண்டும் காணாதவர்
களாகவும், கேட்டும் உணராதவர்களாகவும்
இருக்கத்தக்கதாக, அவைகள் உவமைகளாகச்
சொல்லப்படுகிறது. அந்த உவமையின் கருத் 11
தாவது: [19]விதை தேவனுடைய வசனம்.
வழியருகே விதைக்கப்பட்டவர்கள் வசனத் 12
தைக் கேட்கிறவர்களாயிருக்கிறார்கள்; அவர்
கள் விசுவாசித்து ரட்சிக்கப்படாதபடிக்குப்
பிசாசானவன் வந்து, [20]அவ்வசனத்தை அவர்
கள் இருதயத்திலிருந்தெடுத்துப்போடுகிறான்.
கற்பாறையின்மேல் விதைக்கப்பட்டவர்கள் 13
கேட்கும்போது [21]சந்தோஷத்துடனே வசனத்
தை ஏற்றுக்கொள்ளுகிறார்கள்; ஆயினும் தங்க
ளுக்குள்ளே வேர்கொள்ளாதபடியினாலே,
[22]கொஞ்சக்காலமாத்திரம் விசுவாசித்து, சோத
னைகாலத்தில் பின்வாங்கிப் போகிறார்கள்.
முள்ளுள்ள இடங்களில் விதைக்கப்பட்டவர் 14
கள் வசனத்தைக் கேட்கிறவர்களாயிருக்கிறார்
கள்; கேட்டவுடனே போய், [23]பிரபஞ்சத்திற்
குரிய கவலைகளினாலும் ஐசுவரியத்தினாலும்

1 மத். 26. 6. ழு. மாற். 14. 13. ழு. யோ. 11. 2. ழு: 12. 1-7
* பாபிஷ்டி.
2 34. வச: 5. 32. 1 தீமோ. 1, 15
3 யோ. 9. 24
4 15, 2
5 மத். 18, 28
6 சங். 49. 7, 8. ரோ. 5. 6
7 சங். 116. 16–18. 1 கொ. 15. 9. 2 கொ. 5. 14. 1 தீமோ. 1. 13–16
8 சங். 23. 5
9 1 தீமோ. 1. 14
10 மத். 9. 2, 3. மாற். 2. 7
11 8. 48: 18. 42. ஆப. 2. 4. மத். 9. 22. மாற். 5. 34: 10. 52. எபே. 2. 8
12 மத். 27. 55. மாற். 16. 9
13 2 கொ. 8. 9
14 மத். 13. 2. ழு. மாற். 4. 1. ழு
15 சங். 119. 118. மத். 5. 13
16 எரே. 5. 3
17 எரே. 4. 3
18 மத். 13. 18. மாற். 4. 14. ழு. 1 பே. 1. 23
19 நீதி. 4. 5. ஏசா. 65. 11. யாக். 1. 23, 24
20 சங். 106. 12, 13. ஏசா. 58. 2. கலா. 3. 1, 4
21 நீதி. 12, 3. ஓசி. 6. 4
22 1 தீமோ. 6. 9, 10. 2 தீமோ. 4. 10. 1 யோ. 2. 15–17

சிற்றின்பங்களினாலும் நெருக்கப்பட்டு, [1]பலன்
15 கொடாதிருக்கிறார்கள். நல்லநிலத்தில்விதைக்
கப்பட்டவர்கள் வசனத்தைக்கேட்டு, [2]அதை
உண்மையும் நன்மையுமான இருதயத்திலே
காத்துப் [3]பொறுமையுடனே பலன் கொடுக்
கிறவர்களாயிருக்கிறார்கள்.
16 ஒருவனும் விளக்கைக் கொளுத்தி, [4]அதை
ஒரு பாத்திரத்தினாலே மூடவுமாட்டான்,
கட்டிலின்கீழே வைக்கவுமாட்டான்; உள்ளே
பிரவேசிக்கிறவர்கள் அதின் வெளிச்சத்தைக்
காணும்படிக்கு அதை விளக்குத்தண்டின்மேல்
17 வைப்பான். வெளியரங்கமாகாத இரகசியமு
மில்லை, [5]அறியப்பட்டு வெளிக்குவராத மறை
18 பொருளுமில்லை. ஆதலால் நீங்கள் கேட்கிற
விதத்தைக்குறித்துக் கவனியுங்கள்; [6]உள்ளவ
னெவனோ அவனுக்குக் கொடுக்கப்படும்; இல்
லாதவனெவனோ அவன் தனக்குண்டென்று
நினைக்கிறதும் அவனிடத்திலிருந்து எடுத்துக்
கொள்ளப்படும் என்றார்.
19 அப்பொழுது அவருடைய [7]தாயாரும் சகோ
தரரும் அவரிடத்தில் வந்தார்கள்; ஜனக்கூட்
டத்தினாலே அவரண்டையில் அவர்கள் சேரக்
20 கூடாதிருந்தது. அப்பொழுது: உம்முடைய
தாயாரும் உம்முடைய சகோதரரும் உம்மைப்
பார்க்கவேண்டுமென்று வெளியே நிற்கிறார்
21 கள் என்று அவருக்கு அறிவித்தார்கள். அத
ற்கு அவர்: தேவனுடைய வசனத்தைக்கேட்டு,
அதின்படி செய்கிறவர்களே எனக்குத் தாயும்
எனக்குச் சகோதரருமாயிருக்கிறார்கள் என்
றார்.
22 பின்பு ஒருநாள் அவர் தமது சீஷரோடுங்
கூடப் படவில் ஏறி: [8]கடலின் அக்கரைக்குப்
போவோம் வாருங்கள் என்றார்; அப்படியே
23 புறப்பட்டுப் போனார்கள். படவு ஓடுகையில்
அவர் நித்திரையாயிருந்தார். அப்பொழுது
கடலிலே சுழல்காற்றுண்டானதால், அவர்
கள் மோசமடையத்தக்கதாய்ப் படவு ஜலத்தி
24 னால் நிறைந்தது. அவர்கள் அவரிடத்தில்
வந்து, ஐயரே, ஐயரே, மடிந்துபோகிறோம்
என்று அவரை எழுப்பினார்கள்; அவர் எழுந்து,
காற்றையும் ஜலத்தின் கொந்தளிப்பையும்
அதட்டினார்; உடனே அவைகள் நின்றுபோய்,
25 அமைதலுண்டாயிற்று. அவர் அவர்களை
நோக்கி: உங்கள் விசுவாசம் எங்கே என்றார்?
அவர்கள் பயந்து ஆச்சரியப்பட்டு: இவர்
யாரோ, காற்றுக்கும் ஜலத்துக்கும் கட்டளை
யிடுகிறார், அவைகளும் இவருக்குக் கீழ்ப்படி
கிறதே என்று ஒருவரோடொருவர் சொல்
லிக்கொண்டார்கள்.
26 பின்பு கலிலேயாவுக்கு எதிரான [9]கதரே
27 னருடைய நாட்டில் சேர்ந்தார்கள். அவர்
கரையிலிறங்கினபோது, நெடுநாளாய்ப் பிசா
சுகள் பிடித்தவனும், வஸ்திரந்தரியாதவனும்,
வீட்டில் தங்காமல் பிரேதக் கல்லறைகளிலே
தங்கினவனுமாயிருந்த அந்தப் பட்டணத்து
மனுஷன் ஒருவன் அவருக்கு எதிராக வந்
28 தான். அவன் இயேசுவைக் கண்டபோது

1 யோ. 15. 6
2 எசே. 22. 39
3 எபி. 10. 36. யாக். 1. 4
4 11. 33. மத். 5. 15. மாற். 4. 21
5 12. 2. பிர. 12. 14. மத். 10. 26. 1 கொ. 4. 5
6 19. 26. மத். 13. 12. மாற். 1. 21–25
7 மத். 12. 46. மு. மாற். 3. 32. மு
8 மத். 8. 23. மு. மாற். 4. 35. மு
9 மத். 8. 28. மு. மாற். 5. 1. மு
10 ஏசா. 27. 1. யாக். 2. 19. வெளி. 20. 10
11 வெளி. 20. 3
12 அப். 19. 16, 17
13 அப். 16. 39
14 உபா. 10. 20, 21. சங். 116. 12, 16
15 சங். 126. 2, 3. 1 தீமோ. 5. 8

கூக்குரலிட்டு, அவருக்கு முன்பாக விழுந்து:
இயேசுவே, உன்னதமான தேவனுடைய கு
மாரனே, எனக்கும் உமக்கும் என்ன? [10]என்
னை வேதனைப்படுத்தாதபடிக்கு உம்மை வேண்
டிக்கொள்ளுகிறேன் என்று மகா சத்தத்தோ
டே சொன்னான். அந்த அசுத்தஆவி அவனை 29
விட்டுப் போகும்படி இயேசு கட்டளையிட்ட
படியினாலே அப்படிச் சொன்னான். அந்த
அசுத்தஆவி வெகுகாலமாய் அவனைப் பிடித்
திருந்தது; அவன் சங்கிலிகளினாலும் விலங்கு
களினாலும் கட்டுண்டு காவல் பண்ணப்பட்டி
ருந்தும் கட்டுகளை முறித்துப்போட்டு பிசாசி
னால் வனாந்தரங்களுக்குத் துரத்தப்பட்டிருந்
தான். இயேசு அவனை நோக்கி: உன் பேர் 30
என்னவென்று கேட்டார்; அதற்கு அவன்:
லேகியோன் என்றான்; அநேகம் பிசாசுகள்
அவனுக்குள் புகுந்திருந்தபடியால் அந்தப் பே
ரைச் சொன்னான். தங்களைப் [11]பாதாளத்திலே 31
போகக் கட்டளையிடாதபடிக்கு அவைகள் அவ
ரை வேண்டிக்கொண்டன. அவ்விடத்தில் 32
அநேகம் பன்றிகள் கூட்டமாய் மலையிலே
மேய்ந்துகொண்டிருந்தது. அந்தப் பன்றிக
ளுக்குள் போகும்படி தங்களுக்கு உத்தரவு
கொடுக்கவேண்டும் என்று அவரை வேண்
டிக்கொண்டன; அவைகளுக்கு உத்தரவு
கொடுத்தார். அப்படியே பிசாசுகள் அந்த 33
மனுஷனை விட்டு நீங்கி, பன்றிகளுக்குள்
புகுந்தன; அப்பொழுது அந்தப் பன்றிக்கூட்
டம் உயர்ந்த மேட்டிலிருந்து கடலிலே பாய்
ந்து, அமிழ்ந்து, மாண்டது. அவைகளை 34
மேய்த்தவர்கள் சம்பவித்ததைக் கண்டு, [12]ஓடிப்
போய், பட்டணத்திலும் சுற்றுப்புறங்களிலும்
அறிவித்தார்கள். அப்பொழுது, சம்பவிப்ப 35
தைப் பார்க்கும்படி ஜனங்கள் புறப்பட்டு,
இயேசுவினிடத்தில் வந்து, பிசாசுகள் விட்
டுப்போன மனுஷன் வஸ்திரந்தரித்து இயே
சுவின் பாதத்தருகே உட்கார்ந்து புத்திதெளிந்
திருக்கிறதைக் கண்டு, பயந்தார்கள். பிசாசு 36
கள் பிடித்திருந்தவன் சொஸ்தமாக்கப்பட்ட
தைக் கண்டவர்களும் அதை அவர்களுக்கு
அறிவித்தார்கள். அப்பொழுது கதரேனரு 37
டைய சுற்றுப்புறத்திலுள்ள திரளான ஜனங்
கள் எல்லாரும் மிகவும் பயமடைந்தபடியினா
லே, [13]தங்களை விட்டுப் போகும்படி அவரை
வேண்டிக்கொண்டார்கள். அந்தப்படி அவர்
படவில் ஏறி, திரும்பிப்போனார். பிசாசுகள் 38
நீங்கின மனுஷன் [14]அவரோடேகூட இருக்
கும்படி உத்தரவுகேட்டான். இயேசு அவனை 39
நோக்கி: நீ உன் வீட்டுக்குத் திரும்பிப்போய்,
[15]தேவன் உனக்குச்செய்தவைகளையெல்லாம்
அறிவி என்று சொல்லி, அவனை அனுப்பி
விட்டார். அந்தப்படி அவன் போய், இயேசு
தனக்குச் செய்தவைகளையெல்லாம் பட்ட
ணத்தில் எங்கும் பிரசித்தப்படுத்தினான்.
இயேசு திரும்பிவந்தபோது ஜனங்களெல் 40
லாரும் அவருக்காகக் காத்திருந்தபடியால்
அவரைச் சந்தோஷமாய் ஏற்றுக்கொண்டார்

41 கள். அப்பொழுது ஜெபஆலயத்தலைவனாகிய
[1]யவீரு என்னும் பேருள்ள ஒருவன் வந்து,
இயேசுவின் பாதத்தில் விழுந்து, பன்னிர
ண்டு வயதுள்ள தன்னுடைய ஒரே குமாரத்தி
42 மரண அவஸ்தையாயிருந்தபடியால், தன்
வீட்டிற்கு வரும்படி அவரை வேண்டிக்கொ
ண்டான். அவர் போகையில் திரளான ஜனங்
கள் அவரை நெருக்கினார்கள்.
43 அப்பொழுது பன்னிரண்டு வருஷமாய்ப்
பெரும்பாடுள்ளவளாயிருந்து,[2]தன் ஆஸ்திகளை
யெல்லாம் வைத்தியர்களுக்குச் செலவழித்
தும், ஒருவனாலும் சொஸ்தமாக்கப்படாதிருந்த
44 ஒரு ஸ்திரீ, அவருக்குப் பின்னாக வந்து,
அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தைத் தொட்
டாள்; [3]உடனே அவளுடைய பெரும்பாடு
45 நின்றுபோயிற்று. அப்பொழுது இயேசு: என்
னைத் தொட்டது யார் என்று கேட்டார். எங்
களுக்குத் தெரியாதென்று எல்லாரும் சொன்
னபோது, பேதுருவும் அவனுடனேகூட இரு
ந்தவர்களும்: ஐயரே, திரளான ஜனங்கள்
உம்மைச் சூழ்ந்து நெருக்கிக்கொண்டிருக்கி
றார்களே, என்னைத் தொட்டது யார் என்று
46 எப்படிக் கேட்கிறீர் என்றார்கள். அதற்கு
இயேசு: [4]என்னிலிருந்து வல்லமை புறப்
பட்டதை அறிந்திருக்கிறேன்; ஆதலால் ஒரு
47 வர் என்னைத் தொட்டதுண்டு என்றார். அப்
பொழுது அந்த ஸ்திரீ தான் மறைந்திருக்க
வில்லையென்று கண்டு, [5]நடுங்கிவந்து, அவர்
முன்பாக விழுந்து, தான் அவரைத் தொட்ட
காரணத்தையும் உடனே தான் சொஸ்தமான
தையும் எல்லா ஜனங்களுக்கும் முன்பாக
48 அவருக்கு அறிவித்தாள். அவர் அவளைப் பார்
த்து: மகளே, திடன்கொள், உன் விசுவாசம்
உன்னை ரட்சித்தது, சமாதானத்தோடே போ
என்றார்.
49 அவர் இப்படிப் பேசிக்கொண்டிருக்கை
யில், [6]ஜெபஆலயத் தலைவனுடைய வீட்டிலி
ருந்து ஒருவன் வந்து, அவனை நோக்கி: உம்
முடைய குமாரத்தி மரித்துப்போனாள், போ
தகரை வருத்தப்படுத்தவேண்டாம் என்றான்.
50 இயேசு அதைக் கேட்டு: பயப்படாதே; [7]விசு
வாசமுள்ளவனாயிரு, அப்பொழுது அவள்
51 ரட்சிக்கப்படுவாள் என்றார். அவர் வீட்டில்
வந்தபோது, பேதுருவையும் யாக்கோபையும்
யோவானையும் பெண்ணின் தகப்பனையும்
தாயையும் தவிர வேறொருவரையும் உள்ளே
52 வரவொட்டாமல், எல்லாரும் அழுது அவளைக்
குறித்துத் துக்கங்கொண்டாடுகிறதைக்கண்டு:
அழாதேயுங்கள், அவள் மரித்துப்போகவி
ல்லை, [8]நித்திரையாயிருக்கிறாள் என்றார்.
53 அவள் மரித்துப்போனாளென்று அவர்கள்
அறிந்திருந்ததினால், [9]அவரைப் பார்த்து நகைத்தார்
54 கள். எல்லாரையும் அவர் வெளியே போகப்
பண்ணி, அவளுடைய கையைப் பிடித்து:
55 *பிள்ளையே [10]எழுந்திரு என்றார். அப்பொ
ழுது அவள் உயிர் திரும்ப வந்தது; உடனே
அவள் எழுந்திருந்தாள்; அவளுக்கு ஆகாரங்
கொடுக்கக் கட்டளையிட்டார். அவள் தாய்த 56
கப்பன்மார் ஆச்சரியப்பட்டார்கள். [11]அப்
பொழுது நடந்ததை ஒருவருக்கும் சொல்
லாமலிருக்கும்படி அவர்களுக்குக் கட்டளை
யிட்டார்.

அவர் தம்முடைய பன்னிரண்டு சீஷரை 9
யும் வரவழைத்து, [12]சகல பிசாசுகளையும் துரத்
தவும், வியாதியுள்ளவர்களைக் குணமாக்கவும்
அவர்களுக்கு வல்லமையும் அதிகாரமும் கொ
டுத்து, தேவனுடைய ராஜ்யத்தைக்குறித்துப் 2
பிரசங்கிக்கவும், பிணியாளிகளைச் சொஸ்த
மாக்கவும் அவர்களை அனுப்பினார். அப்பொ 3
ழுது அவர் அவர்களை நோக்கி: †வழிக்
குத் தடியையாவது [13]பையையாவது அப்பத்
தையாவது காசையாவது எடுத்துக்கொண்டு
போகவேண்டாம்; இரண்டு அங்கிகளைக் கொ
ண்டுபோகவும் வேண்டாம். எந்த வீட்டிலே 4
பிரவேசிக்கிறீர்களோ, அங்கே தங்கி, அங்கி
ருந்து புறப்படுங்கள். உங்களை ஏற்றுக்கொள் 5
ளாதவர்கள் எவர்களோ அவர்களுடைய ஊ
ரைவிட்டு நீங்கள் புறப்படும்போது, [14]அவர்க
ளுக்குச் சாட்சியாக உங்கள் கால்களில் படிந்த
தூசியை உதறிப்போடுங்கள் என்றார். அவர் 6
கள் புறப்பட்டுப்போய், கிராமங்கள்தோறும்
திரிந்து, எங்கும் சுவிசேஷத்தைப் பிரசங்கித்
து, [15]பிணியாளிகளைக் குணமாக்கினார்கள்
அப்பொழுது காற்பங்கு தேசாதிபதியாகிய 7
[16]ஏரோது அவரால் செய்யப்பட்ட யாவையும்
கேள்விப்பட்டதுமன்றி; சிலர் யோவான் மரித்
தோரிலிருந்து எழுந்தான் என்றும், சிலர் 8
எலியா தோன்றினான் என்றும், வேறு சிலர்
பூர்வகாலத்துத் தீர்க்கதரிசிகளில் ஒருவன்
உயிர்த்தெழுந்தான் என்றும்சொல்லிக்கொண்
டபடியால், கலக்கமடைந்து: யோவானை நான் 9
சிரச்சேதம் பண்ணினேன், இவன் இப்படிப்
பட்டவைகளைச் செய்கிறான் என்று கேள்விப்
படுகிறேனே! இவன் யார்? என்று ஏரோது
சொல்லி, [17]அவரைப் பார்க்க விரும்பினான்.
அப்போஸ்தலர் திரும்பிவந்து, தாங்கள் செ 10
ய்த யாவையும் [18]அவருக்கு விவரித்துச் சொன்
னார்கள். அப்பொழுது அவர் அவர்களைக்
கூட்டிக்கொண்டு, [19]தனித்திருக்கும்படி பெத்
சாயிதா என்னும் பட்டணத்தைச் சேர்ந்த
வனாந்தரமான ஒரு இடத்துக்குப் போனார்.
ஜனங்கள் அதை அறிந்து, அவர் பின்னே 11
போனார்கள்; அவர்களை அவர் ஏற்றுக்கொண்டு,
தேவனுடைய ராஜ்யத்தைக்குறித்து அவர்க
ளுடனே பேசி, சொஸ்தமடையவேண்டு
மென்றிருந்தவர்களைச் சொஸ்தப்படுத்தினார்.
சாயங்காலமாகிறபோது, பன்னிருவரும் சே 12
ர்ந்துவந்து, அவரை நோக்கி: [20]நாம் இருக்கிற
இடம் வனாந்தரமாயிருக்கிறது, சுற்றியிருக்கிற
ஊர்களிலும் கிராமங்களிலும் ஜனங்கள் போ
ய்த் தங்கி, போஜனபதார்த்தங்களைச் சம்பாதித்
துக்கொள்ளும்படி அவர்களை அனுப்பிவிட
வேண்டும் என்றார்கள். அவர் அவர்களை 13
நோக்கி: நீங்களே அவர்களுக்குப் போஜனங்

1 மத். 9. 18. ழ. மாற். 5. 22. ழ
2 2 இரா. 16. 12. யோபு 13. 4. எரே. 55. 2
3 13. 13. மத். 8. 3: 20. 34
4 6. 19. 1 பே. 2. 9
5 சங். 38. 9. ஏசா. 66. 2. ஓசி. 5. 3: 13. 1. அப். 16, 29
6 மத். 9. 23. ழ. மாற். 5. 35. ழ
7 யோ. 11. 25. ரோ. 4. 17
8 யோ. 11. 11, 13
9 16. 14. சங். 22. 7
* பெண்ணே
10 7. 14. யோ. 11. 43
11 மத். 8. 4: 9. 30. மாற். 5. 43
12 மத். 10. 1. ழ. மாற். 3. 13. ழ: 6. 7
† பிரயாணத்துக்கு
13 10. 4. ழ: 12. 22
14 நெகே. 5. 13. அப். 13. 51: 18. 6
15 மாற். 6. 12
16 மத். 14. 1. ழ. மாற். 6. 14. ழ
17 23. 8
18 மாற். 6. 30
19 மத். 14. 13. யோ. 6. 1. ழ
20 சங். 78. 19, 20. எசே. 34. 25. ஓசி. 13. 5. மத். 14. 15. ழ. மாற். 6. 35. ழ. யோ. 6. 5. ழ

கொடுங்கள் என்றார். அதற்கு அவர்கள்: எங்
களிடத்தில் ஐந்து அப்பங்களும் இரண்டு
மீன்களுமாத்திரமுண்டு, இந்த ஜனங்களெல்
லாருக்கும் போஜனங் கொடுக்க வேண்டிய
தானால், நாங்கள் போய் வாங்கிக்கொண்டு
14 வரவேண்டுமே என்றார்கள். ஏறக்குறைய
ஐயாயிரம் புருஷர் இருந்தார்கள். அவர்களைப்
பந்திக்கு ஐம்பது ஐம்பதுபேராக உட்காரும்
படி சொல்லுங்கள் என்று தம்முடைய சீஷர்
15 களுக்குச் சொன்னார். அவர்கள் அந்தப்படி
யே எல்லாரையும் உட்காரும்படி செய்தார்
16 கள். அப்பொழுது அவர் அந்த ஐந்து அப்
பங்களையும் அந்த இரண்டு மீன்களையும் எடு
த்து, வானத்தை அண்ணாந்துபார்த்து, அவை
களை ஆசீர்வதித்து, பிட்டு, ஜனங்கள் முன்
வைக்கும்படி சீஷர்களிடத்தில் கொடுத்தார்.
17 எல்லாரும் சாப்பிட்டுத் [1]திருப்தியடைந்தார்
கள். மீதியான துணிக்கைகள் பன்னிரண்டு
கூடைநிறைய எடுக்கப்பட்டது.
18 பின்பு அவர் தமது சீஷரோடேகூடத்
தனித்து ஜெபம்பண்ணிக்கொண்டிருக்கை
யில், [2]அவர்களை நோக்கி: ஜனங்கள் என்னை
யார் என்று சொல்லுகிறார்கள் என்று கேட்
19 டார். அதற்கு அவர்கள்: [3]சிலர் உம்மை யோ
வான்ஸ்நானன் என்றும், சிலர் எலியா என்
றும், வேறு சிலர் பூர்வகாலத்துத் தீர்க்கதரிசி
களில் ஒருவர் உயிர்த்தெழுந்தார் என்றும்
20 சொல்லுகிறார்கள் என்றார்கள். அப்பொழுது
அவர்: நீங்கள் என்னை யார் என்று சொல்லு
கிறீர்கள் என்று கேட்டார்; பேதுரு பிரதியுத்
தரமாக: [4]நீர் தேவனுடைய கிறிஸ்து என்
21 றான். அப்பொழுது அவர்கள் அதை ஒருவ
ருக்கும் சொல்லாதபடிக்கு உறுதியாய்க் கட்ட
22 ளையிட்டார். மேலும் மனுஷகுமாரன் பல
பாடுகள் படவும், [5]மூப்பராலும் பிரதான
ஆசாரியராலும் வேதபாரகராலும் ஆகாதவ
னென்று தள்ளப்படவும், கொல்லப்படவும்,
மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்திருக்கவும்
23 வேண்டும் என்று சொன்னார். பின்பு அவர்
எல்லாரையும் நோக்கி: [6]ஒருவன் என் பின்
னே வர விரும்பினால் அவன் தன்னைத்தான்
வெறுத்து, தன் சிலுவையை அநுதினமும்
எடுத்துக்கொண்டு, என்னைப் பின்பற்றக்கட
24 வன். தன் ஜீவனை ரட்சிக்க விரும்புகிறவன்
அதை இழந்துபோவான்; என்னிமித்தமாகத்
தன் ஜீவனை இழந்துபோகிறவன் அதை ரட்
25 சித்துக்கொள்ளுவான். மனுஷன் உலகமு
ழுவதையும் ஆதாயப்படுத்திக்கொண்டாலும்,
[7]தன்னைத்தான் கெடுத்து நஷ்டப்படுத்தினால்
26 அவனுக்கு லாபம் என்ன? என்னைக்குறித்
தும் என் வார்த்தைகளைக்குறித்தும் எவன்
வெட்கப்படுகிறானோ [8]அவனைக்குறித்து மனு
ஷகுமாரனும் தம்முடைய மகிமையோடும்
பிதாவின் மகிமையோடும் பரிசுத்த தூதர்க
ளின் மகிமையோடும் வரும்போது வெட்கப்
27 படுவார். இங்கே நிற்கிறவர்களில் சிலர் தே
வனுடைய ராஜ்யத்தைக் காணுமுன், [9]மரணத்
தை ருசிபார்ப்பதில்லையென்று மெய்யாகவே
உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.
இந்த வார்த்தைகளை அவர் சொல்லி ஏறக் 28
குறைய எட்டுநாளானபின்பு, [10]அவர் பேதுரு
வையும் யோவானையும் யாக்கோபையும் கூட்
டிக்கொண்டு, ஜெபம் பண்ணுகிறதற்கு ஒரு
மலையின்மேல் ஏறினார். அவர் ஜெபம் பண் 29
ணுகையில், அவருடைய முகரூபம் மாறிற்று,
அவருடைய வஸ்திரம் வெண்மையாகிப் பிர
காசித்தது. அன்றியும் மோசே எலியா என் 30
னும் இரண்டுபேரும் மகிமையோடே காணப்
பட்டு, அவருடனே சம்பாஷணைபண்ணி,
அவர் எருசலேமிலே நிறைவேற்றப்போகிற 31
அவருடைய மரணத்தைக்குறித்துப் பேசிக்
கொண்டிருந்தார்கள். பேதுருவும் அவனோடி 32
ருந்தவர்களும் [11]நித்திரை மயக்கமாயிருந்தார்
கள். ஆகிலும் அவர்கள் விழித்து அவருடைய
[12]மகிமையையும் அவரோடே நின்ற அவ்வி
ரண்டுபேரையும் கண்டார்கள். அவ்விருவரும் 33
அவரை விட்டுப் பிரிந்துபோகையில், பேதுரு
இயேசுவை நோக்கி: ஐயரே, [13]நாம் இங்கே
இருக்கிறது நல்லது, உமக்கு ஒரு கூடார
மும், மோசேக்கு ஒரு கூடாரமும், எலியா
வுக்கு ஒரு கூடாரமுமாக, மூன்று கூடாரங்க
ளைப் போடுவோம் என்று, [14]தான் சொல்லுகி
றது இன்னதென்று அறியாமல் சொன்னான்.
இப்படி அவன் பேசுகையில், ஒரு மேகம் 34
வந்து அவர்கள்மேல் நிழலிட்டது; அவர்கள்
அந்த மேகத்துக்குள் பிரவேசிக்கையில் சீஷர்
கள் பயந்தார்கள். அப்பொழுது: [15]இவர் என் 35
னுடைய நேசகுமாரன், [16]இவருக்குச் செவி
கொடுங்கள் என்று மேகத்திலிருந்து ஒரு சத்
தமுண்டாயிற்று. அந்தச் சத்தம் உண்டாகை 36
யில் இயேசு ஒருவரே காணப்பட்டார். [17]தாங்
கள் கண்டவைகளில் ஒன்றையும் அவர்கள்
அந்நாட்களில் ஒருவருக்கும் சொல்லாமல்
அடக்கிவைத்திருந்தார்கள்.
மறுநாளில் அவர்கள் மலையிலிருந்திறங்கின 37
போது, [18]திரளான ஜனங்கள் அவருக்கு எதிர்
கொண்டு வந்தார்கள். அவர்களில் ஒருவன் 38
சத்தமிட்டு: போதகரே, என் மகனைக் கடாட்
சித்தருளவேண்டுமென்று உம்மை வேண்டிக்
கொள்ளுகிறேன், [19]அவன் எனக்கு ஒரே பிள்
ளையாயிருக்கிறான். ஒரு ஆவி அவனைப் பிடி 39
க்கிறது, அப்பொழுது அலறுகிறான், அது
அவனை நுரைதள்ள அலைக்கழித்து, அவனைக்
கசக்கினபின்பும், அவனை விட்டு நீங்குவது
அரிதாயிருக்கிறது. அதைத் துரத்திவிடும்படி 40
உம்முடைய சீஷரை வேண்டிக்கொண்டேன்,
[20]அவர்களால் கூடாமற்போயிற்று என்றான்.
இயேசு பிரதியுத்தரமாக: [21]விசுவாசமில்லாத 41
மாறுபாடான சந்ததியே, எதுவரைக்கும் நான்
உங்களோடிருந்து, உங்களிடத்தில் பொறுமை
யாயிருப்பேன்? உன் மகனை இங்கே கொண்
டுவா என்றார். அவன் சமீபித்து வருகை 42
யில், பிசாசு அவனைக் கீழேதள்ளி, அலைக்க
ழித்தது. [22]இயேசு அந்த அசுத்த ஆவியை

1 சங். 107. 8
2 மத். 16. 13. மு. மாற். 8. 27
3 7. 8. மத். 14. 2
4 மத். 16. 16: யோ. 6. 69
5 மத். 16. 21: 17. 22
6 14. 27. மத். 10. 38: 16. 24. மாற். 8. 34. ரோ. 8. 13. கொலோ. 3. 5
7 மத். 14. 26. மாற். 8. 36
8 மத். 10. 33. மாற். 8. 38. 2 தீமோ. 2. 12
9 மத். 16. 28. மாற். 9. 1. யோ. 8. 52. எபி. 2. 9
10 மத். 17. 1. மு. மாற். 9. 2. மு.
11 தானி. 8. 18: 10. 9
12 யோ. 1. 14
13 சங். 27. 4: 73. 28
14 மாற். 10. 38
15 மத். 3. 17. 2 பே. 1. 17, 18
16 உபா. 18. 15. அப். 3. 22
17 பிர. 3. 7. மத். 17. 9
18 மத். 17. 14. மு. மாற். 9. 17. மு.
19 சக. 12. 10
20 அப். 19. 13–16
21 உபா. 32. 5. சங். 78. 8. யோ. 20. 27. எபி. 4. 2
22 மாற். 1. 27

அதட்டி, *இளைஞனைக் குணமாக்கி, அவன்
தகப்பனிடத்தில் அவனை ஒப்புக்கொடுத்தார்.
43 அப்பொழுது எல்லாரும் [1]தேவனுடைய மகத்
துவத்தைக்குறித்துப் பிரமித்தார்கள்.
இயேசு செய்த யாவையுங்குறித்து அனை
வரும் ஆச்சரியப்படுகையில் அவர் தம்முடைய
44 சீஷர்களை நோக்கி: நீங்கள் இந்த வார்த்தைக
ளைக் கவனமாய்க் கேளுங்கள்; [2]மனுஷகுமா
ரன் மனுஷர் கைகளில் ஒப்புக்கொடுக்கப்ப
45 டப்போகிறார் என்றார். அவர்கள் அந்த வார்
த்தையின் கருத்தை அறிந்துகொள்ளவில்லை;
அது அவர்களுக்குத் தோன்றாமல் மறைபொ
ருளாயிருந்தது; [3]அந்த வார்த்தையைக்குறித்து
அவரிடத்தில் விசாரிக்கவும் பயந்தார்கள்.
46 பின்பு தங்களில் [4]எவன் பெரியவனாயிருப்
பானென்கிற வாக்குவாதம் அவர்களுக்குள்
47 உண்டாயிற்று. இயேசு அவர்கள் இருதயத்
தின் யோசனையை அறிந்து, ஒரு சிறுபிள்ளை
யை எடுத்து, அதைத் தமதருகே நிறுத்தி,
48 அவர்களை நோக்கி: [5]இந்தச் சிறுபிள்ளையை
என் நாமத்தினிமித்தம் ஏற்றுக்கொள்ளுகிற
வன் என்னை ஏற்றுக்கொள்ளுகிறான்; என்னை
ஏற்றுக்கொள்ளுகிறவன், என்னை அனுப்பின
வரை ஏற்றுக்கொள்ளுகிறான்; உங்களெல்லா
ருக்குள்ளும் எவன் சிறியவனாயிருக்கிறானோ
அவனே பெரியவனாயிருப்பான் என்றார்.
49 அப்பொழுது யோவான் அவரை நோக்கி:
[6]ஐயரே, ஒருவன் உம்முடைய நாமத்தினாலே
பிசாசுகளைத் துரத்துகிறதை நாங்கள் கண்டு,
அவன் எங்களுடனேகூட உம்மைப் பின்பற்
றாதவனானபடியால், அவனைத் தடுத்தோம்
50 என்றான். அதற்கு இயேசு: தடுக்கவேண்
டாம்; [7]நமக்கு விரோதியாயிராதவன் நமது
பட்சத்திலிருக்கிறான் என்றார்.
51 பின்பு, அவர் [8]எடுத்துக்கொள்ளப்படும்
நாட்கள் சமீபித்தபோது, அவர் எருசலேமுக்
52 குப் போகத் தமது முகத்தைத் திருப்பி, தம
க்கு முன்னாகத் தூதர்களை அனுப்பினார். அவர்
கள் போய், அவருக்கு இடத்தை ஆயத்தம்
பண்ணும்படி [9]சமாரியருடைய ஒரு கிராமத்
53 திலே பிரவேசித்தார்கள். அவர் எருசலே
முக்குப் போக நோக்கமாயிருந்தபடியினால்
அவ்வூரார் அவரை ஏற்றுக்கொள்ளவில்லை.
54 அவருடைய சீஷராகிய யாக்கோபும் யோவா
னும் அதைக் கண்டபோது: ஆண்டவரே,
[10]எலியா செய்ததுபோல, வானத்திலிருந்து
அக்கினி இறங்கி இவர்களை அழிக்கும்படி
நாங்கள் கட்டளையிட உமக்குச் சித்தமா என்று
55 கேட்டார்கள். அவர் திரும்பிப்பார்த்து: நீங்
கள் இன்ன ஆவியுள்ளவர்களென்பதை அறி
56 யீர்கள் என்று அதட்டி, மனுஷகுமாரன்
மனுஷருடைய ஜீவனை அழிக்கிறதற்கு அல்ல,
[11]ரட்சிக்கிறதற்கே வந்தார் என்றார். அதன்
பின்பு அவர்கள் வேறொரு கிராமத்துக்குப்
போனார்கள்.
57 அவர்கள் வழியிலே போகையில் ஒருவன்
அவரை நோக்கி: [12]ஆண்டவரே, நீர் எங்கே
போனாலும் உம்மைப் பின்பற்றிவருவேன்
என்றான். அதற்கு இயேசு: நரிகளுக்குக் 58
குழிகளும் ஆகாயத்துப் பறவைகளுக்குக் கூ
டுகளும் உண்டு, மனுஷகுமாரனுக்கோ தலை
சாய்க்க இடமில்லை என்றார். வேறொருவனை 59
அவர் நோக்கி: என்னைப் பின்பற்றிவா என்
றார். அதற்கு அவன்: ஆண்டவரே, [13]முன்பு
நான் போய் என் தகப்பனை அடக்கம்பண்ண
எனக்கு உத்தரவு கொடுக்கவேண்டும் என்
றான். அதற்கு இயேசு: மரித்தோர் தங்கள் 60
மரித்தோரை அடக்கம் பண்ணட்டும்; நீ
போய், தேவனுடைய ராஜ்யத்தைக்குறித்
துப் பிரசங்கி என்றார். பின்பு வேறொருவன் 61
அவரை நோக்கி: ஆண்டவரே, உம்மைப்
பின்பற்றுவேன், ஆனாலும் முன்பு நான் போய்
வீட்டிலிருக்கிறவர்களிடத்தில் அனுப்புவித்
துக்கொண்டுவரும்படி எனக்கு உத்தரவு கொ
டுக்கவேண்டும் என்றான். அதற்கு இயேசு: 62
கலப்பையின்மேல் தன் கையை வைத்துப்
பின்னிட்டுப் பார்க்கிற எவனும் தேவனு
டைய ராஜ்யத்துக்குத் தகுதியுள்ளவன் அல்ல
என்றார்.

இவைகளுக்குப் பின்பு கர்த்தர் [14]வேறே **10**
எழுபதுபேரை நியமித்து, தாம் போகும்
சகல பட்டணங்களுக்கும் இடங்களுக்கும்
அவர்களைத் தமக்கு முன்னே இரண்டிரண்டு
பேராக அனுப்பினார். அப்பொழுது அவர் 2
அவர்களை நோக்கி: [15]அறுப்பு மிகுதி, வேலை
யாட்களோ கொஞ்சம்; ஆகையால் அறுப்பு
க்கு எஜமான் தமது அறுப்புக்கு வேலையாட்
களை அனுப்பும்படி அவரை வேண்டிக்கொள்
ளுங்கள். புறப்பட்டுப் போங்கள்; [16]ஆட்டுக்குட் 3
டிகளை ஓநாய்களுக்குள்ளே அனுப்புகிறது
போல, இதோ, நான் உங்களை அனுப்புகிறேன்.
பணப்பையையும் சாமான் பையையும் பாதரட் 4
சைகளையும் [17]கொண்டுபோக வேண்டாம்;
[18]வழியிலே ஒருவரையும் வினவவும் வேண்
டாம். ஒருவீட்டில்பிரவேசிக்கிறபோது: [19]இந்த 5
வீட்டுக்குச் சமாதானம் உண்டாவதாகவென்று
முதலாவது சொல்லுங்கள். சமாதான பாத்தி 6
ரன் அங்கே இருந்தால், நீங்கள் கூறின சமா
தானம் அவனிடத்தில் தங்கும், இல்லாதிருந்
தால் அது உங்களிடத்திற்குத் திரும்பிவரும்.
அந்த வீட்டிலேதானே நீங்கள் தங்கியிருந்து, 7
அவர்கள் கொடுக்கிறவைகளைப் புசித்துக் குடி
யுங்கள்; [20]வேலையாள் தன் கூலிக்குப் பாத்திர
னாயிருக்கிறான். வீட்டுக்கு வீடு போகாதிருங்
கள். ஒரு பட்டணத்தில் நீங்கள் பிரவேசிக்கி 8
றபொழுது, [21]ஜனங்கள் உங்களை ஏற்றுக்கொண்
டால் அவர்கள் †உங்கள் முன் வைக்கிறவை
களை நீங்கள் புசித்து, அவ்விடத்திலுள்ள பிணி 9
யாளிகளைச் சொஸ்தமாக்கி: [22]தேவனுடைய
ராஜ்யம் உங்களுக்குச் சமீபமாய்வந்திருக்கிறது
என்று அவர்களுக்குச் சொல்லுங்கள். யாதொ 10
ரு பட்டணத்தில் நீங்கள் பிரவேசிக்கிறபொ
ழுது, ஜனங்கள் உங்களை ஏற்றுக்கொள்ளாவிட்
டால் அதின் வீதிகளிலே நீங்கள் போய்: எங்க 11

* பிள்ளையை
[1] சங். 139. 14. சகரி. 8. 6
[2] 2. சாமு. 24. 14. மத். 17. 22
[3] 2. 50; 18. 34. மாற். 9. 32
[4] மத். 18. 1. மு. மாற். 9. 34. மு
[5] மத். 10. 40; 23. 11, 12. யோ. 12. 44; 13. 20
[6] எண். 11. 27–29. மாற். 9. 38
[7] 16. 13. மத். 12. 30
[8] மாற். 16. 19. அப். 1. 2
[9] யோ. 4. 4, 9
[10] 2 இரா. 1. 10, 12
[11] யோ. 3. 17; 12. 47
[12] மத். 8. 19. மு
[13] 1 இரா. 19. 20
[14] மத். 10. 1. மு. மாற். 6. 7. மு
[15] மத். 9. 37. யோ. 4. 35. 1 கொரி. 3. 9. 1 தெச. 5. 17
[16] மத். 10. 16
[17] 9. 3. மு
[18] ஆதி. 24. 33, 56. 2 இரா. 4. 29. லூக். 4. 25
[19] சா. 9. 6. 2 தெச. 3. 16. யாக். 3. 18
[20] 1 கொரி. 9. 4–14. 1 தீமோ. 5. 18, 18
[21] 1 கொரி. 10. 27
† உங்களுக்கிட்டதை
[22] மத். 3. 2

வில் ஒட்டின[1]உங்கள் பட்டணத்தின் தூசியை
யும் உங்களுக்கு விரோதமாய்த் துடைத்துப்
போடுகிறோம்; ஆயினும் தேவனுடைய ராஜ்
யம் உங்களுக்குச் சமீபமாய் வந்திருக்கிற
தென்பதை அறிந்துகொள்வீர்களாக என்று
12 சொல்லுங்கள். அந்தப் பட்டணத்திற்கு நேரிடு
வதைப்பார்க்கிலும் அந்த நாளிலே [2]சோ
தோம் நாட்டிற்கு நேரிடுவது இலகுவாயிருக்
கும் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.
13 கோராசீன் பட்டணமே, [3]உனக்கு ஐயோ,
பெத்சாயிதா பட்டணமே, உனக்கு ஐயோ,
உங்களில் செய்யப்பட்ட பலத்த செய்கைகள்
தீருவிலும் சீதோனிலும் செய்யப்பட்டிருக்
ததானால், அப்பொழுதே இரட்டுடுத்தி, சாம்
பலில் உட்கார்ந்து, மனந்திரும்பியிருப்பார்
14 கள். நியாயத்தீர்ப்புநாளில் உங்களுக்கு நேரி
டுவதைப்பார்க்கிலும், தீருவுக்கும் சீதோனுக்
15 கும் நேரிடுவது இலகுவாயிருக்கும். வான
பரியந்தம் உயர்த்தப்பட்ட கப்பர்நகூமே, [4]நீ
பாதாளபரியந்தம் தாழ்த்தப்படுவாய் என்று
16 சொல்லி, சீஷரை நோக்கி: [5]உங்களுக்குச்
செவிகொடுக்கிறவன் எனக்குச் செவிகொடுக்
கிறான், [6]உங்களை அசட்டைபண்ணுகிறவன்
என்னை அசட்டைபண்ணுகிறான், [7]என்னை
அசட்டைபண்ணுகிறவன் என்னை அனுப்
பினவரை அசட்டைபண்ணுகிறான் என்றார்.
17 பின்பு அந்த எழுபதுபேரும் சந்தோஷத்
தோடே திரும்பிவந்து: ஆண்டவரே, உம்மு
டைய நாமத்தினாலே பிசாசுகளும் எங்களுக்
18 குக் கீழ்ப்படிகிறது என்றார்கள். அவர்களை
அவர் நோக்கி: [8]சாத்தான் மின்னலைப்போல
வானத்திலிருந்து விழுகிறதைக் கண்டேன்.
19 இதோ, [9]சர்ப்பங்களையும் தேள்களையும் மிதிக்
கவும், சத்துருவினுடைய சகல வல்லமை
யையும் மேற்கொள்ளவும் உங்களுக்கு அதி
காரங் கொடுக்கிறேன்; ஒன்றும் உங்களைச்
20 சேதப்படுத்தமாட்டாது. ஆகிலும், ஆவிகள்
உங்களுக்குக் கீழ்ப்படிகிறதற்காக நீங்கள் சந்
தோஷப்படாமல், [10]உங்கள் நாமங்கள் பர
லோகத்தில் எழுதியிருக்கிறதற்காகச் சந்தோ
ஷப்படுங்கள் என்றார்.
21 அந்தவேளையில் இயேசு ஆவியிலே களி
கூர்ந்து: [11]பிதாவே! வானத்துக்கும் பூமிக்கும்
ஆண்டவரே! இவைகளை நீர் ஞானிகளுக்
கும் கல்விமான்களுக்கும் மறைத்து, பாலக
ருக்கு வெளிப்படுத்தினபடியால் உம்மை
ஸ்தோத்திரிக்கிறேன்; ஆம், பிதாவே! இப்
படிச் செய்வது உம்முடைய திருவுளத்துக்
22 குப் பிரியமாயிருந்தது. *சகலமும் என் பிதா
வினால் [12]எனக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்
கிறது; [13]பிதா தவிர வேறொருவனும் குமா
ரன் இன்னாரென்று அறியான், குமாரனும்,
குமாரன் அவரை எவனுக்கு வெளிப்படுத்தச்
சித்தமாயிருக்கிறாரோ அவனுந்தவிர, வேறொ
ருவனும் பிதா இன்னாரென்று அறியான்
23 என்றார். பின்பு தமது சீஷரிடத்தில் திரு
ம்பி, தனித்து அவர்களை நோக்கி: [14]நீங்கள்

1 9. 5. மத். 10. 14. அப். 13. 51
2 மத். 10. 15. மாற். 6. 11
3 மத். 11. 21. மு
4 ஏசா. 14. 13–15. எரே. 51. 53. எசே. 26. 20: 31. 18. ஆமோ. 9. 2, 3
5 யோ. 13. 20
6 அப். 5. 4
7 யோ. 5. 23
8 யோ. 12. 31. வெளி. 12. 8, 9
9 மாற். 16. 18. அப். 28. 5
10 யாத். 32. 32. சங். 69. 28. ஏசா. 4. 4. தானி. 12. 1. பிலி. 4. 3. எபி. 12. 23. வெளி. 13. 8: 20. 12: 21, 27
11 மத். 125
* அவர் சீஷர்களிடமாய்த் திரும்பி
12 மத். 28. 18. யோ. 3. 35
13 யோ. 1. 18: 6. 44, 46
14 மத். 13. 16
15 1 பே. 1. 10
16 மத். 19. 16: 22. 35. அப். 16. 30, 31. கலா. 3. 18.
17 உபா. 6. 5
18 லேவி. 18. 5. நெகே. 9. 29. எசே. 20. 11, 21. ரோ. 10. 5. கலா. 3. 12
19 16. 15. யோபு 32. 2. ரோ. 4. 2. கலா. 3. 11. யாக். 2. 24
20 மத். 5. 43, 44
† அடித்து
21 சங். 38. 11
22 சங். 109. 25. நீதி. 27. 10
23 யோ. 4. 9
24 யாத். 2. 6
25 சங். 147. 3. ஏசா. 1. 6
26 மத். 20. 2
27 14. 14. நீதி. 19. 17
28 நீதி. 14. 21. ஓசி. 6. 6. மீகா. 6. 8. மத். 23. 23

காண்கிறவைகளைக் காணுங் கண்கள் பாக்
கியமுள்ளவைகள். அநேக தீர்க்கதரிசிகளும் 24
ராஜாக்களும் நீங்கள் காண்கிறவைகளைக் கா
ணவும், [15]நீங்கள் கேட்கிறவைகளைக்கேட்கவும்
விரும்பியும், காணாமலும் கேளாமலும் போ
னார்கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்
என்றார்.
அப்பொழுது நியாயசாஸ்திரி ஒருவன் 25
எழுந்திருந்து, அவரைச் சோதிக்கும்படி:
போதகரே, [16]நித்திய ஜீவனைச் சுதந்தரித்துக்
கொள்ளும்படிக்கு நான் என்ன செய்யவேண்
டும் என்று கேட்டான். அதற்கு அவர்: நியா 26
யப்பிரமாணத்தில் என்ன எழுதியிருக்கிறது?
நீ வாசித்திருக்கிறது என்ன என்றார்? அவன் 27
பிரதியுத்தரமாக: [17]உன் தேவனாகிய கர்த்
தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும் உன்
முழு ஆத்துமாவோடும் உன் முழுப் பலத்
தோடும் உன் முழுச் சிந்தையோடும் அன்பு
கூர்ந்து, உன்னிடத்தில் அன்புகூருவதுபோ
லப் பிறனிடத்திலும் அன்புகூருவாயாக என்
று எழுதியிருக்கிறது என்றான். அவர் அவனை 28
நோக்கி: [18]நிதானமாய் உத்தரவு சொன்னாய்;
அப்படியே செய், அப்பொழுது பிழைப்பாய்
என்றார். அவன் தன்னை [19]நீதிமான் என்று 29
காண்பிக்க மனதாய் இயேசுவை நோக்கி:
[20]எனக்குப் பிறன் யார் என்று கேட்டான்.
இயேசு பிரதியுத்தரமாக: ஒரு மனுஷன் எரு 30
சலேமிலிருந்து எரிகோவுக்குப் போகையில்
கள்ளர் கையில் அகப்பட்டான்; அவர்கள்
அவன் வஸ்திரங்களை உரிந்துகொண்டு, அவ
னைக் †காயப்படுத்தி, குற்றுயிராக விட்டுப்
போனார்கள். அப்பொழுது தற்செயலாய் ஒரு 31
ஆசாரியன் அந்த வழியே வந்து, அவனைக்
கண்டு, [21]பக்கமாய் விலகிப்போனான். அந்தப் 32
படியே ஒரு லேவியனும் அந்த இடத்துக்கு
வந்து, அவனைக் கண்டு, [22]பக்கமாய் விலகிப்
போனான். பின்பு [23]சமாரியன் ஒருவன் பிர 33
யாணமாய் வருகையில், அவனைக் கண்டு,
[24]மனதுருகி, கிட்டவந்து, அவனுடைய காயங் 34
களில் எண்ணெயும் திராட்சரசமும் வார்த்து,
[25]காயங்களைக் கட்டி, அவனைத் தன் சுயவா
கனத்தின்மேல் ஏற்றி, சத்திரத்துக்குக் கொண்
டுபோய், அவனைப் பராமரித்தான். மறுநாளி 35
லே தான் புறப்படும்போது [26]இரண்டு பண
த்தை எடுத்து, சத்திரத்தான் கையில் கொடு
த்து: நீ இவனை விசாரித்துக்கொள், அதிகமாய்
ஏதாகிலும் இவனுக்காகச் செலவழித்தால்,
[27]நான் திரும்பிவரும்போது அதை உனக்குத்
தருவேன் என்றான். இப்படியிருக்க, கள்ளர் 36
கையில் அகப்பட்டவனுக்கு இந்த மூன்றுபே
ரில் எவன் பிறனாயிருந்தான்? உனக்கு எப்ப
டித் தோன்றுகிறது என்றார். அதற்கு அவன்: 37
[28]அவனுக்கு இரக்கஞ்செய்தவனே என்றான்.
அப்பொழுது இயேசு அவனை நோக்கி: நீயும்
போய் அந்தப்படியே செய் என்றார்.
பின்பு, அவர்கள் பிரயாணமாய்ப் போகை 38
யில், அவர் ஒரு கிராமத்தில் பிரவேசித்தார்.

[1]அங்கே மார்த்தாள் என்னும் பேர்கொண்ட
ஒரு ஸ்திரீ அவரைத் தன் வீட்டிலே ஏற்றுக்
39 கொண்டாள். அவளுக்கு மரியாள் என்னப்
பட்ட ஒரு சகோதரி இருந்தாள்;[2]அவள் இயே
சுவின் பாதத்தருகே உட்கார்ந்து, அவருடைய
40 வசனத்தைக் கேட்டுக்கொண்டிருந்தாள். மார்
த்தாளோ பற்பல வேலைகளைச் செய்வதில்
மிகவும் வருத்தமடைந்து, அவரிடத்தில் வந்
து: ஆண்டவரே, நான் தனியே வேலைசெய்
யும்படி என் சகோதரி என்னை விட்டுவந்திருக்
கிறதைக்குறித்து உமக்குக் கவையில்லையா?
எனக்கு உதவிசெய்யும்படி அவளுக்குச் சொல்
41 லும் என்றாள். இயேசு அவளுக்குப் பிரதியுத்
தரமாக: மார்த்தாளே, மார்த்தாளே, [3]நீ அநேக
காரியங்களைக்குறித்து கவலைப்பட்டுக் கலங்
42 குகிறாய். தேவையானது [4]ஒன்றே, மரியாள்
தன்னை விட்டெடுபடாத நல்ல பங்கைத் தெரி
ந்துகொண்டாள் என்றார்.

**11** அவர் ஒரு இடத்தில் ஜெபம்பண்ணி
முடித்தபின்பு, அவருடைய சீஷரில் ஒருவன்
அவரை நோக்கி: ஆண்டவரே, யோவான்
தன் சீஷருக்கு ஜெபம்பண்ணப் போதித்தது
போல, நீரும் எங்களுக்குப் போதிக்கவேண்
2 டும் என்றான். அதற்கு அவர்: [5]நீங்கள்
ஜெபம்பண்ணும்போது: பரமண்டலங்களிலி
ருக்கிற எங்கள் பிதாவே, உம்முடைய நாமம்
பரிசுத்தப்படுவதாக; உம்முடைய ராஜ்யம்
வருவதாக; உம்முடைய சித்தம் பரமண்டலத்
திலே செய்யப்படுகிறதுபோல பூமியிலேயும்
3 செய்யப்படுவதாக; எங்களுக்கு வேண்டிய
ஆகாரத்தை அன்றன்றும் எங்களுக்குத் தாரும்;
4 எங்கள் பாவங்களை எங்களுக்கு மன்னியும்;
[6]நாங்களும் எங்களிடத்தில் கடன்பட்ட எவ
னுக்கும் மன்னிக்கிறோமே; எங்களைச் சோத
னைக் குட்படப்பண்ணாமல், தீமையினின்று
எங்களை ரட்சித்துக்கொள்ளும், என்று சொல்
லுங்கள் என்றார்.
5 பின்னும் அவர் அவர்களை நோக்கி: உங்க
ளில் ஒருவன் தனக்குச் சிநேகிதனாயிருக்கிற
வனிடத்தில் பாதிராத்திரியிலே போய்: சிநே
6 கிதனே, என் சிநேகிதன் ஒருவன் வழிப்பி
ரயாணமாய் என்னிடத்தில் வந்திருக்கிறான்,
அவன் முன் வைக்கிறதற்கு என்னிடத்தில்
ஒன்றுமில்லை, நீ மூன்று அப்பங்களை எனக்
குக் கடனாகத் தரவேண்டும் என்று கேட்டுக்
7 கொண்டான். வீட்டுக்குள் இருக்கிறவன்
பிரதியுத்தரமாக: என்னைத் தொந்தரவுசெய்
யாதே, கதவு பூட்டியாயிற்று, என் பிள்ளை
கள் என்னோடேகூடப் படுத்திருக்கிறார்கள்,
நான் எழுந்திருந்து, உனக்குத் தரக்கூடாது
8 என்று சொன்னான். பின்பு, தனக்கு அவன்
சிநேகிதனாயிருக்கிறதினிமித்தம் எழுந்து அவ
னுக்குக் கொடாவிட்டாலும், [7]தன்னிடத்தில்
அவன் வருந்திக் கேட்கிறதினிமித்தமாவது
எழுந்திருந்து, அவனுக்குத் தேவையானதைக்
கொடுப்பான் என்று உங்களுக்குச் சொல்லு
கிறேன்.

1 யோ. 11. 1: 12. 2, 3
2 8. 35. அப். 22. 3
3 21. 34. மாற். 4. 19. 1கொ. 7. 32, 35
4 18. 22. சங். 27. 4: 73. 25. பிர. 12. 13. மாற். 8. 36. 1 கொ. 13. 3
5 மத். 6. 9. ஒ
6 மாற். 11. 25, 26.
7 18. 1-8
8 மத். 7. 7: 21. 22. மாற். 11. 24. யோ. 15. 7. யாக். 1. 5. 1 யோ. 3. 22
9 மத். 7. 9
10 மத். 9. 32: 12. 22. ஒ. மாற். 3. 22
11 மத். 12. 38: 16. 1
12 யோ. 2. 25
13 மத். 12. 25. மாற். 3. 24
* தெய்வச் செயலினாலே = வல்லமையினாலே. யாத். 8. 19
14 மத். 12. 29. மாற். 3. 27
15 ஏசா. 53. 12. கொலோ. 2. 15
16 மத். 12. 30
17 மத். 12. 43

மேலும் நான் உங்களுக்குச் சொல்லுகிற 9
தாவது: [8]கேளுங்கள், அப்பொழுது உங்க
ளுக்குக் கொடுக்கப்படும்; தேடுங்கள், அப்
பொழுது கண்டடைவீர்கள்; தட்டுங்கள், அப்
பொழுது உங்களுக்குத் திறக்கப்படும். ஏனெ 10
ன்றால், கேட்கிறவன் எவனும் பெற்றுக்
கொள்ளுகிறான்; தேடுகிறவன் கண்டடைகி
றான்; தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும். உங் 11
களில் தகப்பனாயிருக்கிற ஒருவனிடத்தில்
மகன் அப்பங்கேட்டால், [9]அவனுக்குக் கல்
லைக் கொடுப்பானா? மீனைக்கேட்டால் மீனுக்
குப் பதிலாய்ப் பாம்பைக் கொடுப்பானா?
அல்லது முட்டையைக்கேட்டால், அவனுக் 12
குத் தேளைக் கொடுப்பானா? பொல்லாத 13
வர்களாகிய நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்கு
நல்ல ஈவுகளைக் கொடுக்க அறிந்திருக்கும்
போது, பரமபிதாவானவர் தம்மிடத்தில் வேண்
டிக்கொள்ளுகிறவர்களுக்குப் பரிசுத்த ஆவி
யைக் கொடுப்பது அதிக நிச்சயம் அல்லவா
என்றார்.
பின்பு அவர் ஊமையாயிருந்த ஒரு பிசா 14
சைத் துரத்தினார். [10]பிசாசு புறப்பட்டுப்
போனபின்பு ஊமையன் பேசினான், ஜனங்
கள் ஆச்சரியப்பட்டார்கள். அவர்களில் சிலர்: 15
இவன் பிசாசுகளின் தலைவனாகிய பெயெல்
செபூலைக்கொண்டு பிசாசுகளைத் துரத்துகிறான்
என்றார்கள்; வேறு சிலர் அவரைச் சோதிக் 16
கும்படி [11]வானத்திலிருந்து ஒரு அடையாளத்
தைக் காட்டவேண்டுமென்று அவரிடத்தில்
கேட்டார்கள். அவர்களுடைய சிந்தனைகளை 17
[12]அவர் அறிந்து, அவர்களை நோக்கி: [13]தனக்
குத்தானே விரோதமாய்ப் பிரிந்திருக்கிற எந்த
ராஜ்யமும் பாழாய்ப்போம்; தனக்குத்தானே
விரோதமாய்ப் பிரிந்திருக்கிற எந்த வீடும்
விழுந்துபோம். சாத்தானும் தனக்குத்தானே 18
விரோதமாய்ப் பிரிந்திருந்தால் அவன் ராஜ்
யம் எப்படி நிலைநிற்கும்? இப்படியிருக்க,
பெயல்செபூலைக்கொண்டு நான் பிசாசுகளைத்
துரத்துகிறேன் என்கிறீர்களே. நான் பெ 19
யெல்செபூலினாலே பிசாசுகளைத் துரத்தினால்,
உங்கள் பிள்ளைகள் அவைகளை யாராலே து
ரத்துகிறார்கள்? ஆகையால், அவர்களே உங்களை
நியாயந்தீர்க்கிறவர்களாயிருப்பார்கள். நான் 20
தேவனுடைய *விரலினாலே பிசாசுகளைத்
துரத்துகிறபடியால், தேவனுடைய ராஜ்யம்
உங்களிடத்தில் வந்திருக்கிறதே. ஆயுதந்த 21
ரித்த பலவான் தன் அரமனையைக் காக்கிற
போது, [14]அவனுடைய பொருள் பத்திரப்பட்
டிருக்கும். அவனிலும் அதிக பலவான் 22
வந்து, [15]அவனை மேற்கொள்வானேயாகில்,
அவன் நம்பியிருந்த சகல ஆயுதவர்க்கத்தையும்
பறித்துக்கொண்டு, அவனுடைய கொள்ளைப்
பொருளைப் பங்கிடுவான். என்னோடே இரா 23
தவன் எனக்கு விரோதியாயிருக்கிறான், [16]என்
னோடே சேர்க்காதவன் சிதறடிக்கிறான். அசு 24
த்த ஆவி ஒரு மனுஷனை விட்டுப் புறப்படும்
போது, [17]வறண்ட இடங்களில் அலைந்து,

இளைப்பாறுதல் தேடியும் கண்டடையாமல்:
நான் விட்டுவந்த என் வீட்டுக்குத் திரும்பிப்
25 போவேன் என்று சொல்லி, அதில் வரும்
போது, அது பெருக்கி ஜோடிக்கப்பட்டிருக்
26 கக்கண்டு, திரும்பிப்போய், தன்னிலும்
பொல்லாத வேறு ஏழு ஆவிகளை கூட்டிக்
கொண்டுவந்து, உட்புகுந்து, அங்கே குடியி
ருக்கும்; [1]அப்பொழுது அந்த மனுஷனுடைய
முன்னிலைமையிலும் அவன் பின்னிலைமை
அதிக கேடுள்ளதாயிருக்கும் என்றார்.
27 அவர் இவைகளைச் சொல்லுகையில், ஜனக்
கூட்டத்திலிருந்த ஒரு ஸ்திரீ அவரை
நோக்கி: [2]உம்மைச் சுமந்த கர்ப்பமும் நீர்
பாலுண்ட முலைகளும் பாக்கியமுள்ளவைக
28 ளென்று சத்தமிட்டுச் சொன்னாள். அதற்கு
அவர்: அப்படியானாலும், [3]தேவனுடைய
வார்த்தையைக் கேட்டு, அதைக் காத்துக்
கொள்ளுகிறவர்களே அதிக பாக்கியவான்கள்
என்றார்.
29 ஜனங்கள் திரளாய்க் கூடிவந்திருக்கிறபொ
ழுது அவர்: இந்தச் சந்ததியார் பொல்லாதவர்
களாயிருக்கிறார்கள், அடையாளத்தைத் தேடு
கிறார்கள்; [4]ஆனாலும் யோனா தீர்க்கதரிசியின்
அடையாளமேயன்றி வேறே அடையாளம்
30 இவர்களுக்குக்கொடுக்கப்படுவதில்லை. யோனா
நினிவேபட்டணத்தாருக்கு [5]அடையாளமாயி
ருந்ததுபோல, மனுஷகுமாரனும் இந்தச் சந்த
31 திக்கு அடையாளமாயிருப்பார். தென்தே
சத்து [6]ராஜஸ்திரீ சாலொமோனுடைய ஞா
னத்தைக் கேட்க பூமியின் எல்லைகளிலிருந்து
வந்தாள்; இதோ, சாலொமோனிலும் பெரிய
வர் இங்கே இருக்கிறார்; ஆதலால் நியாயத்
தீர்ப்புநாளிலே அந்த ராஜஸ்திரீ இந்தச் சந்த
தியாரோடெழுந்துநின்று, இவர்கள்மேல் குற்
32 றஞ்சுமத்துவாள். யோனாவின் பிரசங்கத்
தைக் கேட்டு [7]நினிவேபட்டணத்தார் மனந்
திரும்பினார்கள்; இதோ, யோனாவிலும் பெரி
யவர் இங்கே இருக்கிறார்; ஆதலால் நியாயத்
தீர்ப்புநாளிலே நினிவேபட்டணத்தார் இந்
தச் சந்ததியாரோடெழுந்து நின்று, இவர்கள்
மேல் குற்றஞ்சுமத்துவார்கள்.
33 ஒருவனும் விளக்கைக் கொளுத்தி, [8]மறை
விடத்திலாவது, மரக்காலின் கீழேயாவது
வைக்காமல், உள்ளே வருகிறவர்கள் வெளிச்
சம் காணும்படி, அதை விளக்குத்தண்டின்
34 மேல் வைப்பான். கண்ணானது [9]சரீரத்தின்
விளக்காயிருக்கிறது; உன் கண் தெளிவாயி
ருந்தால், உன் சரீரமுழுவதும் வெளிச்சமாயி
ருக்கும்; உன் கண் கெட்டதாயிருந்தால் உன்
35 சரீரம் முழுவதும் இருளாயிருக்கும். ஆகை
யால் உன்னிலுள்ள வெளிச்சம் இருளாகாத
36 படிக்கு எச்சரிக்கையாயிரு. உன் சரீரம்
ஒரு புறத்திலும் இருளடைந்திராமல் முழுவ
தும் வெளிச்சமாயிருந்தால், [10]ஒரு விளக்கு
தன் பிரகாசத்தினாலே உனக்கு வெளிச்சங்
கொடுக்கிறதுபோல, உன் சரீரமுழுவதும்
வெளிச்சமாயிருக்கும் என்றார்.

அவர் இப்படிப் பேசிக்கொண்டிருக்கை 37
யில், பரிசேயன் ஒருவன் தன்னுடனேகூட
அவர் பகற்போஜனம் பண்ணவேண்டுமென்று
அவரை வேண்டிக்கொண்டான்; அவர் போ
ய்ப் பந்தியிருந்தார். அவர் போஜனம் பண் 38
ணுகிறதற்குமுன் [11]கைகழுவாமலிருந்ததைப்
பரிசேயன் கண்டு, ஆச்சரியப்பட்டான். கர்த் 39
தர் அவனை நோக்கி: [12]பரிசேயராகிய நீங்கள்
போஜனபான பாத்திரங்களின் வெளிப்புறத்
தைச் சுத்தமாக்குகிறீர்கள், உங்கள் உள்ளமோ
கொள்ளையினாலும் பொல்லாப்பினாலும் நிறை
ந்திருக்கிறது. மதிகேடரே, வெளிப்புறத்தை 40
உண்டாக்கினவர் உட்புறத்தையும் உண்டாக்
கவில்லையோ? உங்களுக்கு [13]உண்டானவை 41
களில் பிச்சை கொடுங்கள், அப்பொழுது
சகலமும் உங்களுக்குச் சுத்தமாயிருக்கும்.
பரிசேயரே, உங்களுக்கு ஐயோ, [14]நீங்கள் 42
ஒத்தலாம் மருக்கொழுந்து முதலிய சகலவித
பூண்டுகளிலும் தசமபாகம் கொடுத்து, நியா
யத்தையும் தேவ அன்பையும் விட்டுவிடுகிறீர்
கள்; இவைகளையும் செய்யவேண்டும், அவை
களையும் விடாதிருக்கவேண்டுமே. பரிசே 43
யரே, உங்களுக்கு ஐயோ, [15]ஜெபஆலயங்க
ளில் முதன்மையான ஆசனங்களையும், சந்
தைகளில் வந்தனங்களையும் விரும்புகிறீர்கள்.
மாயக்காரராகிய வேதபாரகரே, பரிசேயரே, 44
உங்களுக்கு ஐயோ, [16]மறைந்திருக்கிறபிரேதக்
குழிகளைப்போலிருக்கிறீர்கள், அவைகள்
மேல் நடக்கிற மனுஷருக்கு அவைகள் தெரி
யாதிருக்கிறது என்றார்.
அப்பொழுது நியாயசாஸ்திரிகளில் ஒரு 45
வன் அவரை நோக்கி: போதகரே, நீர் இப்ப
டிச் சொல்லுகிறதினால் எங்களையும் நிந்திக்கி
றீரே என்றான். அதற்கு அவர்: நியாயசாஸ் 46
திரிகளே, உங்களுக்கு ஐயோ, [17]சுமக்க அரி
தான சுமைகளை மனுஷர்மேல் சுமத்துகிறீர்
கள்; நீங்களோ உங்கள் விரல்களில் ஒன்றினா
லும் அந்தச் சுமைகளைத் தொடவும் மாட்டீர்
கள். உங்களுக்கு ஐயோ, [18]உங்கள் பிதாக்கள் 47
கொலைசெய்த தீர்க்கதரிசிகளுக்குக் கல்லறை
களைக் கட்டுகிறீர்கள். ஆகையால் உங்கள் 48
பிதாக்களுடைய கிரியைகளுக்கு நீங்களும்
உடன்பட்டவர்களென்று சாட்சியிடுகிறீர்கள்;
எப்படியென்றால், [19]உங்கள் பிதாக்கள் அவர்
களைக் கொலைசெய்தார்கள், நீங்களோ அவர்க
ளுக்குக் கல்லறைகளைக் கட்டுகிறீர்கள். ஆத 49
லால் தேவஞானமானது: நான் தீர்க்கதரிசிகளை
யும் அப்போஸ்தலர்களையும் அவர்களிடத்தில்
அனுப்புவேன்; அவர்களில் சிலரைக் கொலை
செய்து, சிலரைத் துன்பப்படுத்துவார்கள்;
ஆபேலின் [20]இரத்தம்முதல் பலிபீடத்துக்கும் 50
தேவாலயத்துக்கும் நடுவே கொலையுண்ட [21]சக
ரியாவின் இரத்தம்வரைக்கும், உலகத்தோற்ற
முதற்கொண்டு சிந்தப்பட்ட சகல தீர்க்கதரிசி
களுடைய இரத்தப்பழியும் இந்தச் சந்ததியி
னிடத்தில் [22]கேட்கப்படத்தக்கதாக அப்படிச்
செய்வார்கள் என்று சொல்லுகிறது. நிச்சய 51

1 பேது. 5. 14. எபி. 6. 4: 10. 26, 27. 2 பே. 2. 20, 21
2 1. 28. 48
3 8. 21. சங். 119. 1, 2. மத். 7. 21. யாக். 1. 25
4 மத். 12. 40. மா. யாற். 8. 12
5 யோனா 1. 17: 2. 10
6 1 இரா. 10. 1. மு
7 யோனா 3. 5, 10
8 8. 16. மத். 5. 15. மா. மாற். 4. 21. மு
9 மத். 6. 22. மு
10 சங். 119. 105. நீதி. 4. 18: 6. 23: 20. 27. ஏசா. 8. 20. 2 கொ. 4. 6
11 மாற். 7. 3
12 மத். 23. 25. தீத். 1. 15
13 12. 33. ஏசா. 58. 7
14 மத். 23. 23, 27
15 மத். 23. 6. மாற். 12. 38
16 சங். 5. 9. மத். 23. 27
17 ஏசா. 58. 6. மத். 23. 4
18 மத். 23. 29
19 அப். 18. 19. எபி. 11. 35, 37
20 ஆதி. 4. 8
21 2 நாளா. 24. 20
22 யாத். 20. 5. அப். 7. 28, 29: 51. 56

மாகவே இந்தச் சந்ததியினிடத்தில் அது கேட்
கப்படும் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.
52 நியாயசாஸ்திரிகளே, உங்களுக்கு ஐயோ,
[1]அறிவாகிய திறவுகோலை எடுத்துக்கொண்டீர்
கள், நீங்களும் உட்பிரவேசிக்கிறதில்லை, உட்
பிரவேசிக்கிறவர்களையும் தடை பண்ணுகிறீர்
கள் என்றார்.
53 இவைகளை அவர்களுக்கு அவர் சொல்லு
கையில், வேதபாரகரும் பரிசேயரும் அவர்
மேல் குற்றஞ்சாட்டும்பொருட்டு, [2]அவர் வாய்
மொழியில் ஏதாகிலும் பிழை கண்டுபிடிக்க
வேண்டும் என்று உபாயம்பண்ணி அவரை
54 மிகவும் நெருக்கவும், அநேக காரியங்களைக்
குறித்துப் பேசும்படி அவரை ஏவவும் தொ
டங்கினார்கள்.

12 அத்தருணத்திலே அநேகமாயிரம் ஜனங்
கள் ஒருவரையொருவர் மிதிக்கத்தக்கதாகக்
கூடிவந்திருக்கையில், அவர் முதலாவது தம்மு
டைய சீஷரை நோக்கி: [3]நீங்கள் மாயமாகிய
பரிசேயருடைய புளித்தமாவைக்குறித்து எச்
2 சரிக்கையாயிருங்கள். வெளியாக்கப்படாத
மறைபொருளுமில்லை, [4]அறியப்படாத இரக
3 சியமுமில்லை. ஆதலால், நீங்கள் இருளிலே
பேசினது எதுவோ, அது வெளிச்சத்திலே
கேட்கப்படும்; நீங்கள் அறைகளில் காதிலே
சொன்னது எதுவோ, அது வீடுகளின்மேல்
4 கூறப்படும். என் [5]சிநேகிதராகிய உங்களு
க்கு நான் சொல்லுகிறேன்: [6]சரீரத்தைக் கொ
லைசெய்து, அதன்பின்பு அதிகமாக ஒன்றும்
செய்யத் திராணியில்லாதவர்களுக்குப் பயப்
5 படாதிருங்கள். நீங்கள் இன்னாருக்குப் பயப்
படவேண்டுமென்று உங்களுக்குக் காண்பிக்கி
றேன்: கொலைசெய்தபின்பு நரகத்திலே தள்ள
வல்லமையுள்ளவருக்குப் பயப்படுங்கள், ஆம்,
அவருக்கே பயப்படுங்கள் என்று உங்களுக்குச்
6 சொல்லுகிறேன். இரண்டு காசுக்கு ஐந்து
அடைக்கலான் குருவிகளை விற்கிறார்களல்ல
வா? [7]அவைகளில் ஒன்றாகிலும் தேவனால்
7 மறக்கப்படுகிறதில்லை. உங்கள் தலையிலுள்ள
மயிரெல்லாம் எண்ணப்பட் டிருக்கிறது,
ஆகையால் பயப்படாதிருங்கள், அநேகம்
அடைக்கலான் குருவிகளைப்பார்க்கிலும் நீங்
8 கள் விசேஷித்தவர்களாயிருக்கிறீர்கள். அன்
றியும் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்:
[8]மனுஷர் முன்பாக என்னை அறிக்கைபண்
ணுகிறவன் எவனோ, [9]அவனை மனுஷகுமார
னும் தேவதூதர் முன்பாக அறிக்கைபண்ணு
9 வார். மனுஷர் முன்பாக என்னை மறுதலிக்
கிறவன் [10]தேவதூதர் முன்பாக மறுதலிக்கப்
10 படுவான். எவனாகிலும் மனுஷகுமாரனுக்கு
விரோதமான விசேஷத்தைச் சொன்னால்
அது அவனுக்கு மன்னிக்கப்படும்; [11]பரிசுத்த
ஆவிக்குவிரோதமாய்த் தூஷணஞ்சொல்லுகிற
11 வனுக்கோ மன்னிக்கப்படுவதில்லை. அன்றி
யும், ஜெபஆலயத்தலைவர்களுக்கும் துரைத்
தனத்தார்களுக்கும் அதிகாரமுள்ளவர்களுக்
கும் முன்பாக உங்களைக் கொண்டுபோய்விடும்
போது: [12]எப்படி, என்னத்தை மாறுத்தரமாகச்
சொல்லுவோம் என்றும், எதைப் பேசுவோம்
என்றும் கவலைப்படாதிருங்கள்: நீங்கள் 12
பேசவேண்டியவைகளைப் [13]பரிசுத்தஆவியான
வர் அந்நேரத்திலே உங்களுக்குப் போதிப்பார்
என்றார்.
அப்பொழுது ஜனக்கூட்டத்தில் ஒருவன் 13
அவரை நோக்கி: போதகரே, [14]ஆஸ்தியைப்
பாகம் பிரித்து என் வீதத்தை எனக்குத் தரும்
படி என் சகோதரனுக்குக் கட்டளையிடவேண்
டும் என்று கேட்டுக்கொண்டான். அதற்கு 14
அவர்: [15]மனுஷனே, என்னை உங்களுக்கு நியா
யாதிபதியாகவும் பங்கிடுகிறவனாகவும் வைத்த
வன் யார் என்றார். பின்பு அவர் அவர்களை 15
நோக்கி: பொருளாசையைக்குறித்து எச்சரிக்
கையாயிருங்கள்; [16]ஏனெனில் ஒருவனுக்கு
எவ்வளவு திரளான ஆஸ்தி இருந்தாலும் அது
அவனுக்கு ஜீவன் அல்ல என்றார். அல்லா 16
மலும், ஒரு உவமையை அவர்களுக்குச் சொன்
னார்: ஐசுவரியமுள்ள ஒருவனுடைய நிலம்
நன்றாய் விளைந்தது. அப்பொழுது அவன்: 17
நான் என்ன செய்வேன்? என் தானியங்களைச்
சேர்த்துவைக்கிறதற்கு இடமில்லையே; நான் 18
ஒன்று செய்வேன், என் களஞ்சியங்களை இடி
த்து, பெரிதாகக் கட்டி, எனக்கு விளைந்த தா
னியத்தையும் என் பொருள்களையும் அங்கே
சேர்த்துவைத்து, பின்பு: [17]ஆத்துமாவே, உனக் 19
காக அநேக வருஷங்களுக்கு அநேகம் பொ
ருள்கள் சேர்த்து வைக்கப்பட்டிருக்கிறது; நீ
இளைப்பாறி, புசித்துக் குடித்து, பூரிப்பாயிரு
என்று என் ஆத்துமாவோடே [18]சொல்லுவேன்
என்று தனக்குள்ளே சிந்தித்துச் சொல்லிக்
கொண்டான். தேவனோ அவனை நோக்கி: 20
மதிகேடனே, [19]உன் ஆத்துமா உன்னிடத்தி
லிருந்து இந்த இராத்திரியிலே எடுத்துக்கொள்
ளப்படும், [20]அப்பொழுது நீ சேகரித்தவைகள்
யாருடையதாகும் என்றார். தேவனிடத்தில் 21
ஐசுவரியவானாயிராமல், [21]தனக்காகவே பொக்
கிஷங்களைச் சேர்த்து வைக்கிறவன் இப்படி
யே இருக்கிறான் என்றார்.
பின்னும் அவர் தம்முடைய சீஷரை நோ 22
க்கி: இப்படியிருக்கிறபடியினால், [22]என்னத்
தை உண்போம் என்று உங்கள் ஜீவனுக்காக
வும், என்னத்தை உடுப்போம் என்று உங்கள்
சரீரத்துக்காகவும் கவலைப்படாதிருங்கள்என்று
உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆகாரத் 23
தைப்பார்க்கிலும் ஜீவனும், உடையைப்பார்க்
கிலும் சரீரமும் விசேஷித்தவைகளாயிருக்கி
றது. காகங்களைக் கவனித்துப் பாருங்கள், 24
[23]அவைகள் விதைக்கிறதுமில்லை அறுக்கிறது
மில்லை, அவைகளுக்குப்பண்டசாலையுமில்லை,
களஞ்சியமுமில்லை, இல்லாவிட்டாலும்அவை
களையும் தேவன் பிழைப்பூட்டுகிறார்; பறவை
களைப்பார்க்கிலும் நீங்கள் எவ்வளவோ விசே
ஷித்தவர்களாயிருக்கிறீர்கள். கவலைப்படுகிற 25
தினால் உங்களில் எவன் தன் சரீர அளவோடு
ஒரு முழத்தைக் கூட்டுவான். மிகவும் அற்ப 26

1 மல். 2. 7. மத். 23. 13
2 மாற். 12. 13. 1 கொரி. 13. 5
3 மத். 16. 6. முத. மாற். 8. 15. முத
4 8. 17. மத். 10. 26. மாற். 4. 22
5 யோவா. 15. 14
6 ஏசா. 51. 7-13. மத். 10. 28. முத
7 மத். 10. 29
8 1 சாமு. 2. 30. சங். 119. 46. 2 தீமோ. 2. 12. வெளி. 2. 10
9 [illegible] 24. [illegible]
10 மத். 25. 31. அப். 8. 13, 14. வெளி. 3. 8
11 மத். 12. 31, 32. மாற். 3. 28. 1 யோவா. 5. 16
12 21. 14. மத். 10. 19. மாற். 13. 11
13 அப். 6. 10
14 எசே. 33. 31
15 யோவா. 18. 35
16 யோபு 2. 4. மத். 7. 25. 1 தீமோ. 6. 7-10
17 சங். 49. 18. பிர. 11. 9. 1 கொரி. 15. 32. யாக். 5. 5
18 யாக். 4. 15, 16
19 யோபு 20. 20-23: 27. 8. சங். 52. 7. யாக். 4. 14
20 சங். 39. 6: 49. 16, 17. எரே. 17. 11
21 ஆப. 2. 9. 1 தீமோ. 6. 18. யாக். 2. 5
22 மத். 6. 25. முத
23 யோபு 38. 41. சங். 147. 9

மான காரியம்முதலாய் உங்களால் செய்யக்
கூடாதிருக்க, மற்றவைகளுக்காக நீங்கள் கவ
27 லைப்படுகிற தென்ன? காட்டுப்புஷ்பங்கள்
எப்படி வளருகிறதென்று கவனித்துப்பாருங்
கள்; அவைகள் உழைக்கிறதுமில்லை, நூற்கி
றதுமில்லை, என்றாலும் சாலொமோன் முத
லாய் தன் சர்வ மகிமையிலும் அவைகளில்
ஒன்றைப்போலாகிலும் உடுத்தியிருந்ததில்லை
28 என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். இப்
படியிருக்க, அற்ப விசுவாசிகளே, இன்றைக்
குக் காட்டிலிருந்து நாளைக்கு அடுப்பிலே
போடப்படுகிற புல்லுக்கு தேவன் இவ்வித
மாக உடுத்துவித்தால், உங்களுக்கு உடுத்துவிப்
29 பது அதிக நிச்சயமல்லவா? ஆகையால், என்
னத்தை உண்போம், என்னத்தைக் குடிப்
போம் என்று, நீங்கள் கேளாமலும் சந்தேகப்
30 படாமலும் இருங்கள். இவைகளையெல்லாம்
உலகத்தார் நாடித் தேடுகிறார்கள்; இவைகள்
உங்களுக்கு வேண்டியவைகளென்று உங்கள்
31 பிதாவானவர் அறிந்திருக்கிறார். தேவனு
டைய ராஜ்யத்தையே தேடுங்கள், [1]அப்பொ
ழுது இவைகளெல்லாம் உங்களுக்குக்கூடக்
32 கொடுக்கப்படும். பயப்படாதே சிறுமந்தை
யே, [2]உங்களுக்கு ராஜ்யத்தைக் கொடுக்க உங்
33 கள் பிதா பிரியமாயிருக்கிறார். உங்களுக்கு
உள்ளவைகளை விற்றுப் பிச்சைகொடுங்கள்;
[3]பழமையாய்ப் போகாத பணப்பைகளையும்
குறையாத பொக்கிஷத்தையும் பரலோகத்தி
லே உங்களுக்குச் சம்பாதித்து வையுங்கள்,
அங்கே திருடன் அணுகுகிறதுமில்லை, பூச்சி
34 கெடுக்கிறதுமில்லை. உங்கள் பொக்கிஷம் எங்
கே இருக்கிறதோ அங்கே உங்கள் இருதய
மும் இருக்கும்.
35 உங்கள் அரைகள் கட்டப்பட்டதாகவும்,
36 [4]உங்கள் விளக்குகள் எரிகிறதாகவும், தங்கள்
எஜமான் கலியாணத்திலிருந்து வந்து தட்டும்
போது, உடனே அவருக்குத் திறக்கும்படி
எப்பொழுது வருவார் என்று காத்திருக்கிற
37 மனுஷருக்கு ஒப்பாகவும் இருங்கள். எஜ
மான் வரும்போது, [5]விழித்திருக்கிறவர்களா
கக் காணப்படுகிற ஊழியக்காரரே பாக்கிய
வான்கள். அவர் அரைகட்டிக்கொண்டு,
அவர்களைப் பந்தியிருக்கச்செய்து, சமீபமாய்
வந்து, அவர்களுக்கு ஊழியஞ்செய்வார் என்று
மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.
38 அவர் இரண்டாம் ஜாமத்திலாவது மூன்றாம்
ஜாமத்திலாவது வந்து, அவர்கள் அப்படியே
இருக்கக்கண்டால், அவ்வூழியக்காரர் பாக்கி
39 யவான்கள். திருடன் இன்ன நேரத்தில் வரு
வான் என்று வீட்டெஜமானுக்குத் தெரிந்திருந்
தால், [6]அவன் விழித்திருந்து, தன் வீட்டைக்
கன்னமிட வொட்டான் என்று அறிந்திருக்
40 கிறீர்கள். அந்தப்படியே நீங்கள் நினையாத
நேரத்தில் மனுஷகுமாரன் வருவார், [7]ஆகை
யால் நீங்களும் ஆயத்தமாயிருங்கள் என்றார்.
41 அப்பொழுது பேதுரு அவரை நோக்கி:
ஆண்டவரே, இந்த உவமையை எங்களுக்கு
மாத்திரம் சொல்லுகிறீரோ, எல்லாருக்கும்
சொல்லுகிறீரோ என்று கேட்டான். அதற் 42
குக் கர்த்தர்: பணிவிடைக்காரருக்குத் தகுதி
யான காலத்திலே படிகொடுக்கும்படி எஜ
மான் அவர்கள்மேல் அதிகாரியாக வைக்கத்
தக்க உண்மையும் விவேகமுமுள்ள [8]விசார
ணைக்காரன் யாவன்? எஜமான் வரும்போது 43
அப்படியே செய்கிறவனாய்க் காணப்படுகிற
ஊழியக்காரன் பாக்கியவான். தனக்குள்ள 44
தெல்லாவற்றின்மேலும் [9]அவனை விசாரணைக்
காரனாக வைப்பான் என்று மெய்யாகவே
உங்களுக்குச் சொல்லுகிறேன். அந்த ஊழி 45
யக்காரனோ: என் எஜமான் வர நாள்செல்
லும் என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்
டு, [10]வேலைக்காரரையும் வேலைக்காரிகளையும்
அடிக்கவும், புசித்துக் குடித்து வெறிக்கவும்
தலைப்பட்டால், அவன் நினையாத நாளிலும், 46
அறியாத நேரத்திலும், அந்த ஊழியக்காரனு
டைய எஜமான் வந்து, அவனைக் கடினமாய்த்
தண்டித்து, [11]உண்மையில்லாதவர்களோடே
அவனுக்குப் பங்கை நியமிப்பான். தன் எஜ 47
மானுடைய சித்தத்தை அறிந்தும் ஆயத்தமா
யிராமலும், [12]அவனுடைய சித்தத்தின்படி
செய்யாமலும் இருந்த ஊழியக்காரன் அநேக
அடிகள் அடிக்கப்படுவான். அறியாதவனாயி 48
ருந்து, அடிகளுக்கு ஏதுவானவைகளைச் செய்
தவனோ, சில அடிகள் அடிக்கப்படுவான். [13]எவ
னிடத்தில் அதிகங்கொடுக்கப்படுகிறதோ அவ
னிடத்தில் அதிகங் கேட்கப்படும்; மனுஷர்
எவனிடத்தில் அதிகமாய் ஒப்புவிக்கிறார்களோ
அவனிடத்தில் அதிகமாய்க் கேட்பார்கள்.
பூமியின்மேல் அக்கினியைப் போடவந் 49
தேன், அது இப்பொழுதே பற்றி எரியவேண்
டுமென்று விரும்புகிறேன். ஆகிலும் நான் 50
[14]முழுகவேண்டிய ஒரு ஸ்நானமுண்டு, அது
முடியுமளவும் எவ்வளவோ நெருக்கப்படுகி
றேன். நான் பூமியிலே சமாதானத்தை உண் 51
டாக்க வந்தேன் என்று நினைக்கிறீர்களோ?
[15]சமாதானத்தையல்ல, பிரிவினையையே உண்
டாக்க வந்தேன் என்று உங்களுக்குச் சொல்லு
கிறேன். எப்படியெனில், இதுமுதல் ஒரே 52
வீட்டிலே ஐந்துபேர் பிரிந்திருப்பார்கள்,
இரண்டுபேருக்கு விரோதமாய் மூன்றுபே
ரும், மூன்றுபேருக்கு விரோதமாய் இரண்டு
பேரும் பிரிந்திருப்பார்கள். தகப்பன் மகனுக் 53
கும் மகன் தகப்பனுக்கும், தாய் மகளுக்கும்
மகள் தாய்க்கும், மாமி மருமகளுக்கும் மரும
கள் மாமிக்கும் விரோதமாய்ப் பிரிந்திருப்பார்
கள் என்றார்.
பின்பு அவர் ஜனங்களை நோக்கி: [16]மேற்கே 54
மேகம் எழும்புகிறதை நீங்கள் காணும்போது,
மழை வருமென்று சொல்லுகிறீர்கள்; அந்தப்
படியுமாகும். தென்றல் அடிக்கிறதை நீங்கள் 55
காணும்போது உஷ்ணம் உண்டாகுமென்று
சொல்லுகிறீர்கள், அந்தப்படியுமாகும். மாயக் 56
காரரே, பூமியின் தோற்றத்தையும் வானத்
தின் தோற்றத்தையும் நிதானிக்க உங்களுக்

[1] சங். 34. 10. ஏசா. 33. 16. மத். 6. 33. ரோ. 8. 31, 32
[2] ஏசா. 40. 11. யோவா. 10. 27, 28: 18. 36. எபி. 12. 28. யாக். 2. 5. 2பே. 1. 11. வெளி. 1. 6: 22. 5
[3] மத். 19. 21
[4] மத். 25. 1, 13. எபே. 6. 14. 1பே. 1. 13
[5] மத். 24. 46.
[6] மத். 24. 43. 1தெச. 5. 2. 2பே. 3. 10. வெளி. 3. 3: 10. 15
[7] 21. 34, 36. மத். 24. 44. 1தெச. 5. 6
[8] மத். 24. 45: 25. 21. 1கொ. 4. 2
[9] மத். 24. 47
[10] மத். 22. 6: 24. 48
[11] சங். 37. 9. மத். 24. 51
[12] எண். 15. 30. உபா. 25. 2. யோவா. 9. 41. அப். 17. 30. யாக். 4. 17
[13] லேவி. 5. 17. யோவா. 15. 22. 1தீமோ. 1. 13
[14] மத். 20. 22. மாற். 10. 38
[15] மீகா 7. 6. மத். 10. 34. யோவா. 7. 43
[16] மத். 16. 2.

குத் தெரியுமே, இந்தக் காலத்தையோ நிதா
57 னியாமற் போகிறதென்ன? நியாயம் இன்
னதென்று [1]நீங்களே தீர்மானியாமலிருக்கிற
58 தென்ன? உனக்கு எதிராளியானவன் உன்னை
அதிகாரியினிடத்திற்குக் கொண்டுபோகிற
போது, [2]வழியிலே தானே அவனிடத்திலி
ருந்து விடுதலையாகும்படி பிரயாசப்படு,
இல்லாவிட்டால், அவன் உன்னை நியாயாதி
பதிக்கு முன்பாகக் கொண்டுபோவான், நியா
யாதிபதி உன்னைச் சேவகனிடத்தில் ஒப்புக்
கொடுப்பான், சேவகன் உன்னைச் சிறைச்சா
59 லையில் போடுவான். நீ கடைசிக்காசைக் கொ
டுத்துத் தீர்க்குமட்டும், [3]அவ்விடத்திலிருந்து
புறப்படமாட்டாய் என்று உனக்குச் சொல்லு
கிறேன் என்றார்.

13 பிலாத்து சில கலிலேயருடைய ரத்தத்தை
அவர்களுடைய பலிகளோடே கலந்திருந்
தான்; [4]அந்த வேளையிலே அங்கே இருந்தவர்
களில் சிலர் அந்தச் செய்தியை அவருக்கு
2 அறிவித்தார்கள். இயேசு அவர்களுக்குப்
பிரதியுத்தரமாக: அந்தக் கலிலேயருக்கு அப்
படிப்பட்டவைகள் சம்பவித்ததினாலே, மற்ற
எல்லாக் கலிலேயரைப்பார்க்கிலும் அவர்கள்
பாவிகளா யிருந்தார்களென்று நினைக்கிறீர்க
3 ளோ? அப்படியல்லவென்று உங்களுக்குச்
சொல்லுகிறேன்; [5]நீங்கள் மனந்திரும்பாமற்
போனால் எல்லாரும் அப்படியே கெட்டுப்
4 போவீர்க்ள். சீலோவாமிலே கோபுரம் விழு
ந்து பதினெட்டுப்பேரைக் கொன்றதே; எரு
சலேமில் குடியிருக்கிற மனுஷரெல்லாரிலும்
அவர்கள் *குற்றவாளிகளாயிருந்தார்களென்று
5 நினைக்கிறீர்களோ? அப்படியல்லவென்று உங்
களுக்குச் சொல்லுகிறேன்; நீங்கள் மனந்
திரும்பாமற்போனால் எல்லாரும் அப்படியே
கெட்டுப்போவீர்கள் என்றார்.

6 அப்பொழுது அவர் ஒரு உவமையையும்
சொன்னார்: [6]ஒருவன் தன் திராட்சத்தோட்
டத்தில் ஒரு அத்திமரத்தை நட்டிருந்தான்;
[7]அவன் வந்து அதிலே கனியைத் தேடின
7 போது ஒன்றுங் காணவில்லை. அப்பொழுது
அவன் தோட்டக்காரனை நோக்கி: இதோ,
மூன்று வருஷமாய் இந்த அத்திமரத்திலே
கனியைத் தேடிவருகிறேன், ஒன்றையுங்
காணவில்லை, இதை வெட்டிப்போடு, [8]இது
நிலத்தையும் ஏன் கெடுக்கிறது என்றான்.
8 அதற்கு அவன்: ஐயா, இது இந்த வருஷமும்
இருக்கட்டும்; [9]நான் இதைச் சுற்றிலுங் கொ
9 த்தி எருப்போடுவேன், கனி கொடுத்தால்
சரி, [10]கொடாவிட்டால், இனிமேல் இதை
வெட்டிப்போடலாம் என்று சொன்னான்
என்றார்.

10 ஒரு ஓய்வுநாளில் அவர் ஜெப ஆலயத்தில்
11 போதகம் பண்ணிக்கொண்டிருந்தார். அப்
பொழுது [11]பதினெட்டுவருஷமாய்ப்பலவீனப்
படுத்தும் ஆவியைக்கொண்ட ஒரு ஸ்திரீ அங்
கேயிருந்தாள். அவள் எவ்வளவும் நிமிரக்
12 கூடாத கூனியாயிருந்தாள். இயேசு அவ
ளைக் கண்டு, தம்மிடத்தில் அழைத்து: ஸ்தி
ரீயே, [12]உன் பலவீனத்தினின்று விடுதலை
யாக்கப்பட்டாய் என்று சொல்லி, அவள் 13
மேல் தமது கைகளை வைத்தார்; [13]உடனே
அவள் நிமிர்ந்து, தேவனை மகிமைப்படுத்தி
னாள். இயேசு ஓய்வுநாளிலே சொஸ்தமாக் 14
கினபடியால், ஜெப ஆலயத்தலைவன் கோப
மடைந்து, ஜனங்களை நோக்கி: [14]வேலைசெய்
கிறதற்கு ஆறுநாள் உண்டே, [15]அந்த நாட்களி
லே நீங்கள் வந்து சொஸ்தமாக்கிக்கொள்ளுங்
கள், ஓய்வுநாளிலே அப்படிச் செய்யலாகாது
என்றான். கர்த்தர் அவனுக்குப் பிரதியுத்தர 15
மாக: [16]மாயக்காரனே, உங்களில் எவனும்
ஓய்வுநாளில் தன் எருதையாவது தன் கழுதை
யையாவது தொழுவத்திலிருந்து அவிழ்த்துக்
கொண்டுபோய், அதற்குத் தண்ணீர் காட்டு
கிறதில்லையா? இதோ, சாத்தான் பதினெட்டு 16
வருஷமாய்க் கட்டியிருந்த [17]ஆபிரகாமின்
குமாரத்தியாகிய இவளை ஓய்வுநாளில் இந்
தக் கட்டிலிருந்து அவிழ்த்துவிட வேண்டிய
தில்லையா என்றார். அவர் அப்படிச் சொன்ன 17
போது, அவரை விரோதித்திருந்த அனைவரும்
[18]வெட்கப்பட்டார்கள். ஜனங்களெல்லாரும்
அவரால் செய்யப்பட்ட [19]சகல மகிமையான
செய்கைகளைக் குறித்தும் சந்தோஷப்பட்
டார்கள்.

அவர் அவர்களை நோக்கி: [20]தேவனுடைய 18
ராஜ்யம் எதற்கொப்பாயிருக்கிறது; அதை
எதற்கு ஒப்பிடுவேன்? அது ஒரு கடுகுவி 19
தைக்கு ஒப்பாயிருக்கிறது; அதை ஒரு
மனுஷன் எடுத்துத் தன் தோட்டத்திலே
போட்டான்; அது வளர்ந்து, பெரிய மரமா
யிற்று; ஆகாயத்துப் பறவைகள் வந்து, அதின்
கிளைகளில் †அடைந்தது என்றார். மேலும் 20
அவர்: தேவனுடைய ராஜ்யத்தை நான் எதற்கு
ஒப்பிடுவேன்? அது புளித்தமாவுக்கு ஒப்பா 21
யிருக்கிறது; [21]அதை ஒரு ஸ்திரீ எடுத்து முழு
வதும் புளிக்கும்வரைக்கும் மூன்றுபடி மாவி
லே அடக்கிவைத்தாள் என்றார்.

அவர் எருசலேமுக்குப் பிரயாணமாய்ப் 22
போகும்போது, [22]பட்டணங்கள்தோறும் கிரா
மங்கள்தோறும் உபதேசம்பண்ணிக்கொண்டு
போனார். அப்பொழுது ஒருவன் அவரை 23
நோக்கி: ஆண்டவரே, ரட்சிக்கப்படுகிறவர்
கள் சிலபேர்தானோ என்று கேட்டான்; அத
ற்கு அவர்: இடுக்கமான வாசல்வழியாய் 24
உட்பிரவேசிக்கப் பிரயாசப்படுங்கள், [23]அநே
கர் உட்பிரவேசிக்க வகைதேடினாலும் அவர்க
ளாலே கூடாமற்போகும் என்று உங்களுக்
குச் சொல்லுகிறேன். வீட்டெஜமான் எழு 25
ந்து, [24]கதவைப் பூட்டினபின்பு, நீங்கள் வெ
ளியே நின்று: [25]ஆண்டவரே, ஆண்டவரே,
எங்களுக்குத் திறக்கவேண்டுமென்று சொல்
லிக் கதவைத் ‡தட்டும்போது, அவர் பிரதியுத்
தரமாக: நீங்கள் எவ்விடத்தாரோ, [26]உங்களை
அறியேன் என்று உங்களுக்குச் சொல்லு
வார். அப்பொழுது நீங்கள்: உம்முடைய 26

1 1 கொ. 11.14,15
2 ஏசா. 55. 6. மத். 5. 25
3 மாற். 12. 42
4 புல. 2. 20, அப். 5. 37
5 அப். 3. 19, 20. வெளி. 2. 21, 22
* கடனாளிகள். மத். 18. 24
6 ஏசா.5.1.மூ.21.19
7 யோ.15.16. கலா. 5. 22. பிலி. 4. 17
8 யாத். 32. 10
9 சங். 106. 23. 2 பே. 3. 9
10 யோ. 15. 2. எபி. 6. 8.
11 சங். 6. 2
12 யோவே. 3. 10
13 மாற். 16. 18. அப். 9. 17
14 யாத். 20. 9
15 6. 7: 14. 3. மத். 12. 10. மாற். 3. 2. யோ. 5. 16
16 12. 1: 14. 5. தீ. 11. 9. மத். 7. 5: 23. 13, 28
17 19. 9
18 ஏசா. 45. 24. 1 பே. 3. 16
19 யாத். 15. 11
20 மத். 13. 31. மாற். 4. 30. ஓ
† கூடுகட்டினது
21 மத். 13. 33
22 மத். 9. 35. மாற். 6. 6
23 மத். 7. 13. யோ. 7. 34: 8. 21. யோ. 9. 31
24 சங். 32. 6. ஏசா. 55. 6. மத். 25. 10
25 6. 46
‡ தட்டுஞல்
26 மத். 7. 23: 25. 12

சமூகத்தில் போஜனபானம் பண்ணினோமே,
நீர் எங்கள் வீதிகளில் போதகம்பண்ணினீரே
27 என்று சொல்லுவீர்கள். ஆனாலும் அவர்:
[1]நீங்கள் எவ்விடத்தாரோ, உங்களை அறியேன்,
[2]அக்கிரமக்காரராகிய நீங்களெல்லாரும் என்
னைவிட்டு அகன்றுபோங்கள் என்று சொல்லு
வார் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.
28 நீங்கள் ஆபிரகாமையும் ஈசாக்கையும் யாக்கோ
பையும் சகல தீர்க்கதரிசிகளையும் தேவனு
டைய ராஜ்யத்திலிருக்கிறவர்களாகவும், [3]உங்
களையோ புறம்பே தள்ளப்பட்டவர்களாக
வும் காணும்போது உங்களுக்கு அழுகையும்
29 பற்கடிப்பும் அங்கே உண்டாயிருக்கும். கிழக்
கிலும் [4]மேற்கிலும் வடக்கிலும் தெற்கிலும்
இருந்து ஜனங்கள் வந்து, தேவனுடைய ராஜ்
30 யத்தில் பந்தியிருப்பார்கள். அப்பொழுது
முந்தினோர் பிந்தினோராவார்கள், [5]பிந்தினோர்
முந்தினோராவார்கள் என்றார்.
31 அந்த நாளிலே சில பரிசேயர் அவரிடத்
தில் வந்து: நீர் இவ்விடத்தை விட்டுப் போய்
விடும்; ஏரோது உம்மைக் கொலைசெய்ய மன
32 தாய் இருக்கிறான் என்றார்கள். அதற்கு அவர்:
நான் இன்றைக்கும் நாளைக்கும் பிசாசுகளைத்
துரத்தி, வியாதியுள்ளவர்களைச் சொஸ்தமாக்கி,
33 [6]மூன்றாம்நாளில் நிறைவடைவேன். இன்
றைக்கும் நாளைக்கும் மறுநாளைக்கும் நான் நட
மாடவேண்டும்; எருசலேமுக்குப் புறம்பே
ஒரு தீர்க்கதரிசியும் மடிந்துபோகிறதில்லை
யென்று நான் சொன்னதாக நீங்கள் போய்
34 அந்த [7]நரிக்குச் சொல்லுங்கள். எருசலேமே,
எருசலேமே, [8]தீர்க்கதரிசிகளைக் கொலைசெ
ய்து, உன்னிடத்தில் அனுப்பப்பட்டவர்க
ளைக் கல்லெறிகிறவளே! கோழி தன் குஞ்சு
களைத் தன் சிறகுகளின் கீழே கூட்டிச் சேர்த்
துக்கொள்ளும் வண்ணமாக நான் எத்தனைதர
மோ உன் பிள்ளைகளைக் கூட்டிச் சேர்த்துக்
கொள்ள மனதாயிருந்தேன்; உங்களுக்கோ
35 மனதில்லாமற்போயிற்று. இதோ, [9]உங்கள்
வீடு உங்களுக்குப் பாழாக்கிவிடப்படும்; கர்த்
தருடைய நாமத்தினாலே வருகிறவர் ஸ்தோத்
திரிக்கப்பட்டவர் என்று நீங்கள் சொல்லுங்
காலம் வருமளவும் என்னைக் காணாதிருப்பீர்
கள் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்
லுகிறேன் என்றார்.

**14** ஒரு ஓய்வுநாளிலே பரிசேயரில் தலைவனா
கிய ஒருவனுடைய வீட்டிலே அவர் போஜ
2 னம் பண்ணும்படிக்குப் போயிருந்தார். அப்
பொழுது நீர்க்கோவை வியாதியுள்ள ஒரு மனு
ஷன் அவருக்கு முன்பாக இருந்தான். [10]என்ன
செய்வாரோவென்று ஜனங்கள் அவர்மேல்
3 நோக்கமாயிருந்தார்கள். இயேசு நியாயசாஸ்
திரிகளையும் பரிசேயரையும் பார்த்து: [11]ஓய்வு
நாளிலே சொஸ்தமாக்குகிறது நியாயமா என்று
4 கேட்டார். அதற்கு அவர்கள் பேசாமலிருந்
தார்கள். அப்பொழுது அவர் அவனை அழை
5 த்து, சொஸ்தமாக்கி, அனுப்பிவிட்டு, அவர்
களை நோக்கி: [12]உங்களில் ஒருவனுடைய கழு
தையாவது எருதாவது ஓய்வுநாளில் துரவிலே
விழுந்தால், அவன் அதை உடனே தூக்கிவி
டானோ என்றார். அதற்கு உத்தரவுசொல்ல 6
அவர்களால் கூடாமற்போயிற்று.

விருந்துக்கு அழைக்கப்பட்டவர்கள் பந்தி 7
யில் முதன்மையான இடங்களைத் தெரிந்து
கொண்டதை அவர் பார்த்து, அவர்களுக்கு
ஒரு உவமையைச் சொன்னார்: ஒருவனால் 8
கலியாணத்துக்கு நீ அழைக்கப்பட்டிருக்கும்
போது, [13]பந்தியில் முதன்மையான இடத்தில்
உட்காராதே; உன்னிலுங் கனமுள்ளவன் ஒரு
வேளை அவனால் அழைக்கப்பட்டிருப்பான்.
அப்பொழுது உன்னையும் அவனையும் அழைத் 9
தவன் உன்னிடத்தில் வந்து: இவருக்கு இடங்
கொடு என்பான்; அப்பொழுது நீ வெட்கத்
தோடே தாழ்ந்த இடத்திற்குப் போகவேண்டி
யதாயிருக்கும். நீ அழைக்கப்பட்டிருக்கும் 10
போது, போய், தாழ்ந்த இடத்தில் உட்காரு;
அப்பொழுது உன்னை அழைத்தவன் வந்து:
சிநேகிதனே, உயர்ந்த இடத்தில் வாரும் என்று
சொல்லும்போது, உன்னுடனேகூடப் பந்தி
யிருக்கிறவர்களுக்கு முன்பாக உனக்குக் கன
முண்டாகும். தன்னைத்தான் உயர்த்துகிறவ 11
னெவனும் தாழ்த்தப்படுவான், [14]தன்னைத்
தான் தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுவான்
என்றார்.

அன்றியும் அவர் தம்மை விருந்துக்கு 12
அழைத்தவனை நோக்கி: நீ பகல்விருந்தாவது
இராவிருந்தாவது பண்ணும்போது, உன்
சிநேகிதரையாகிலும் உன் சகோதரரையாகி
லும், உன் பந்துஜனங்களையாகிலும், [15]ஐசுவரி
யமுள்ள அயலகத்தாரையாகிலும் அழைக்க
வேண்டாம்; அழைத்தால் அவர்களும் உன்னை
அழைப்பார்கள், அப்பொழுது உனக்குப் பதி
லுக்குப் பதில் செய்ததாகும். நீ விருந்து 13
பண்ணும்போது [16]ஏழைகளையும் ஊனரையும்
சப்பாணிகளையும் குருடரையும் அழைப்பா
யாக. அப்பொழுது நீ பாக்கியவானாயிருப் 14
பாய்; அவர்கள் உனக்குப் பதில் செய்யமாட்
டார்கள்; நீதிமான்களின் உயிர்த்தெழுதலில்
உனக்குப் பதில் செய்யப்படும் என்றார்.

அவரோடேகூடப் பந்தியிருந்தவர்களில் 15
ஒருவன் இவைகளைக் கேட்டபொழுது, அவ
ரை நோக்கி: [17]தேவனுடைய ராஜ்யத்தில் போ
ஜனம்பண்ணுகிறவன் பாக்கியவான் என்றான்.
அதற்கு அவர்: [18]ஒரு மனுஷன் பெரிய விருந் 16
தை ஆயத்தம்பண்ணி, [19]அநேகரை அழைப்
பித்தான். விருந்துவேளையில் தன் ஊழியக் 17
காரனை நோக்கி: [20]நீ அழைக்கப்பட்டவர்களி
டத்தில் போய், எல்லாம் ஆயத்தமாயிருக்
கிறது, வாருங்கள், என்று சொல்லென்று
அவனை அனுப்பினான். அவர்களெல்லாரும் 18
போக்குச்சொல்லத் தொடங்கினார்கள். [21]ஒரு
வன்: ஒரு வயலைக் கொண்டேன், நான் அகத்
தியமாய்ப் போய், அதைப் பார்க்கவேண்டும்,
என்னை மன்னிக்கும்படி வேண்டிக்கொள்
ளுகிறேன் என்றான். வேறொருவன்: ஐந் 19

1 மத். 7. 22, 23: 25. 41
2 சங். 6. 8: 101. 8
3 மத். 8. 11, 12: 13. 42: 24. 51
4 வெளி. 7. 9, 10
5 மத். 19. 30
6 எபி. 2. 10
7 செப். 3. 3
8 மத். 23. 37
9 லேவி. 26. 31, 32. சங். 69. 25. ஏசா. 1. 7: 5. 5, 6. தானி. 9. 27. மீகா 3. 12
10 சங். 37. 32. ஏசா. 29. 20, 21
11 மத். 12. 10
12 13. 15. மத். 23. 5. உபா. 22. 4
13 நீதி. 25. 6, 7
14 18. 14. 1 சாமு. 15. 17. யோபு 22. 29. சங். 18. 27. நீதி. 15. 33: 29. 23. மத். 23. 12. யாக். 4. 6. 1 பே. 5. 5
15 நீதி. 22. 16
16 நெகே. 8. 10, 12
17 வெளி. 19. 9
18 மத். 22. 2. ழ
19 ஏசா. 25. 6, 7
20 நீதி. 9. 2, 5. உன்னத. 5. 1. ஏசா. 55. 1, 2
21 8. 14

தேர்மாடு கொண்டேன், அதைச் சோதித்துப்
பார்க்கப் போகிறேன், என்னை மன்னிக்கும்
படி வேண்டிக்கொள்ளுகிறேன் என்றான்.
20 வேறொருவன்: [1]பெண்ணை விவாகம்பண்ணி
னேன், அதினால் நான் வரக்கூடாது என்
21 றான். அந்த ஊழியக்காரன் வந்து, இவைக
ளைத் தன் எஜமானுக்கு அறிவித்தான். [2]அப்
பொழுது வீட்டெஜமான் கோபமடைந்து,
தன் ஊழியக்காரனை நோக்கி: [3]நீ பட்டணத்
தின் தெருக்களிலும் வீதிகளிலும் சீக்கிர
மாய்ப் போய், [4]ஏழைகளையும் ஊனரையும்
சப்பாணிகளையும் குருடரையும் இங்கே கூட்
22 டிக்கொண்டுவா என்றான். ஊழியக்காரன்
அப்படியே செய்து: ஆண்டவரே, நீர் கட்ட
ளையிட்டபடி செய்தாயிற்று, [5]இன்னும் இடம்
23 இருக்கிறது என்றான். அப்பொழுது எஜ
மான் ஊழியக்காரனை நோக்கி: [6]நீ பெருவழி
களிலும் வேலிகளருகிலும் போய், என் வீடு
நிறையும்படியாக ஜனங்களை உள்ளே வரும்
24 படி வருந்திக் கூட்டிக்கொண்டுவா; அழைக்
கப்பட்டிருந்த அந்த மனுஷரில் ஒருவனாகி
லும் [7]என் விருந்தை ருசிபார்ப்பதில்லை
யென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்
றான் என்று சொன்னார்.
25 பின்பு அநேக ஜனங்கள் அவரோடேகூ
டப் பிரயாணமாய்ப் போகையில், அவர்களிட
26 மாய் அவர் திரும்பிப்பார்த்து: யாதொருவன்
என்னிடத்தில் வந்து, [8]தன் தகப்பனையும்
தாயையும் மனைவியையும் பிள்ளைகளையும்
சகோதரரையும் சகோதரிகளையும், [9]தன் ஜீவ
னையும் வெறுக்காவிட்டால் எனக்குச் சீஷனா
27 யிருக்கமாட்டான். தன் [10]சிலுவையைச் சுமந்
துகொண்டு எனக்குப் பின்செல்லாதவன்
28 எனக்குச் சீஷனாயிருக்கமாட்டான். உங்களில்
ஒருவன் [11]ஒரு கோபுரத்தைக் கட்ட மனதா
29 யிருந்து, அஸ்திபாரம்போட்டபின்பு முடிக்
கத் திராணியில்லாமற்போனால், பார்க்கிறவர்க
30 ளெல்லாம்: இந்த மனுஷன் கட்டத்தொ
டங்கி, [12]முடிக்கத் திராணியில்லாமற்போனான்
என்று சொல்லித் தன்னைப் பரியாசம் பண்
ணாதபடிக்கு, அதைக் கட்டித் தீர்க்கிறதற்குத்
தனக்கு நிர்வாகமுண்டோ இல்லையோ என்று
முன்பு அவன் உட்கார்ந்து செல்லுஞ் செல
31 வைக் கணக்குப் பாராமலிருப்பானோ? அன்
றியும் ஒரு ராஜா மற்றொரு ராஜாவோடே யுத்
தஞ்செய்யப்போகிறபோது, [13]தன்மேல் இருப
தினாயிரம் சேவகரோடே வருகிற அவனைத்
தான் பதினாயிரம் சேவகரைக்கொண்டு எதிர்க்
கக்கூடுமோ கூடாதோ என்று முன்பு உட்கார்
32 ந்து ஆலோசனைபண்ணாமலிருப்பானோ? கூ
டாதென்று கண்டால், மற்றவன் இன்னும்
தூரத்திலிருக்கும்போதே, ஸ்தானாபதிகளை
அனுப்பி, சமாதானத்துக்கானவைகளைக் கே
33 ட்டுக்கொள்வானே. அப்படியே உங்களில்
எவனாகிலும் தனக்கு உண்டானவைகளை யெ
ல்லாம் வெறுத்துவிடாவிட்டால் [14]அவன்
எனக்குச் சீஷனாயிருக்கமாட்டான்.

உப்பு நல்லதுதான், [15]உப்பு சாரமற்றுப் 34
போனால் எதினால் சாரமாக்கப்படும்? அது 35
நிலத்துக்காகிலும் எருவுக்காகிலும் உதவாது,
[16]அதை வெளியே கொட்டிப்போடுவார்கள்.
கேட்கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக்கட
வன் என்றார்.

சகல [17]ஆயக்காரரும் பாவிகளும் அவரு 15
டைய வசனங்களைக் கேட்கும்படி அவரிடத்
தில் வந்து சேர்ந்தார்கள். அப்பொழுது பரி 2
சேயரும் வேதபாரகரும் முறுமுறுத்து: [18]இவர்
பாவிகளை ஏற்றுக்கொண்டு அவர்களோடே
சாப்பிடுகிறார் என்றார்கள்.
அவர்களுக்கு அவர் சொன்ன உவமையா 3
வது: உங்களில் ஒரு மனுஷன் நூறு ஆடுகளை 4
உடையவனாயிருந்து, [19]அவைகளில் ஒன்று கா
ணாமற்போனால், தொண்ணூற்றொன்பது ஆடு
களையும் வனாந்தரத்திலே விட்டு, காணாமற்
போன ஆட்டைக் கண்டுபிடிக்குமளவும் தே
டித் திரியானோ? கண்டுபிடித்த பின்பு, அவன் 5
சந்தோஷத்தோடே அதைத் தன் தோள்களின்
மேல் போட்டுக்கொண்டு, வீட்டுக்கு வந்து, 6
சிநேகிதரையும் அயலகத்தாரையும் கூட வர
வழைத்து: [20]காணாமற்போன என் ஆட்டைக்
கண்டுபிடித்தேன், என்னோடேகூட சந்தோ
ஷப்படுங்கள் என்பான் அல்லவா? அது 7
போல, [21]மனந்திரும்ப அவசியமில்லாத தொ
ண்ணூற்றொன்பது நீதிமான்களைக் குறித்துச்
சந்தோஷம் உண்டாகிறதைப் பார்க்கிலும்
மனந்திரும்புகிற ஒரே பாவியினிமித்தம் பர
லோகத்தில் மிகுந்த சந்தோஷம் உண்டாயி
ருக்கும் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.
அன்றியும், [22]ஒரு ஸ்திரீ பத்து வெள்ளிக்கா 8
சை உடையவளாயிருந்து, அதில் ஒரு வெள்
ளிக்காசு காணாமற்போனால், விளக்கைக் கொ
ளுத்தி, வீட்டைப் பெருக்கி, அதைக் கண்டு
பிடிக்கிறவரைக்கும் ஜாக்கிரதையாய்த் தேடா
மலிருப்பாளோ? கண்டுபிடித்தபின்பு, தன் 9
சிநேகிதிகளையும் அயல் வீட்டுக்காரிகளையும்
கூட வரவழைத்து: காணாமற்போன வெள்
ளிக்காசைக் கண்டுபிடித்தேன், என்னோடு
கூட சந்தோஷப்படுங்கள் என்பாள் அல்ல
வா? அதுபோல மனந்திரும்புகிற ஒரே பாவி 10
யினிமித்தம் [23]தேவனுடைய தூதருக்கு முன்
பாகச் சந்தோஷமுண்டாயிருக்கிறது என்று
உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.
பின்னும் அவர் சொன்னது: ஒரு மனுஷ 11
னுக்கு இரண்டு குமாரர் இருந்தார்கள். அவர் 12
களில் இளையவன் தகப்பனை நோக்கி: தகப்ப
னே, ஆஸ்தியில் எனக்கு வரும் பங்கை எனக்
குத் தரவேண்டும் என்றான். அந்தப்படி அ
வன் அவர்களுக்குத் தன் [24]ஆஸ்தியைப் பங்
கிட்டுக் கொடுத்தான். சிலநாளைக்குப் பின்பு, 13
இளையமகன் எல்லாவற்றையும் சேர்த்துக்
கொண்டு, தூரதேசத்துக்குப் புறப்பட்டுப்போ
ய், அங்கே துன்மார்க்கமாய் ஜீவனம்பண்ணி,
தன் ஆஸ்தியை அழித்துப்போட்டான்.
எல்லாவற்றையும் அவன் செலவழித்தபின்பு, 14

1 1 கொ. 7. 33
2 சங். 2. 12
3 வெளி. 22. 17
4 1 சாமு. 2. 8. சங். 113. 7, 8. ஏசா. 33. 23: 35. 6
5 சங். 103. 6; 130. 7
6 சங். 110. 3
7 நீதி. 1. 24. மத். 21. 43. அப். 13. 46. எபி. 12. 25
8 உபா. 13. 6: 33. 9. மத். 10. 37
9 அப். 20. 24. கொ. 9. 13. வெளி. 12. 11
10 9. 23. மத். 16. 24. மாற். 8. 34. 2 தீமோ. 3. 12
11 நீதி. 24. 27
12 எபி. 6. 11
13 நீதி. 20. 18
14 பிலி. 3. 7, 8
15 மத். 5. 13. மாற். 9. 50
16 யோ. 15. 6
17 மத். 9. 10. ஞ
18 அப். 11. 3. 1 கொ. 5. 9-11. கலா. 2. 12
19 மத். 18. 12
20 சங். 119. 176. 1 பே. 2. 25
21 5. 32
22 மத். 18. 28
23 எசே. 18. 23, 32: 33. 11. அப். 11. 18. பிலேமோன். 15, 16. உச
24 மாற். 12. 44.

1அந்த தேசத்திலே கொடிய பஞ்சமுண்டா
யிற்று. அப்பொழுது அவன் குறைவுபடத்
15 தொடங்கி, அந்த தேசத்துக் குடிகளில் ஒரு
வனிடத்தில் போய் ஒட்டிக்கொண்டான்.
அந்தக் குடியானவன் அவனைத் தன் வயல்
களில் பன்றிகளை மேய்க்கும்படி அனுப்பி
16 னான். அப்பொழுது பன்றிகள் தின்கிற தவி
ட்டினாலே தன் வயிற்றை நிரப்ப ஆசையாயி
ருந்தான், 2ஒருவனும் அதை அவனுக்குக்
17 கொடுக்கவில்லை. அவனுக்குப் புத்திதெளிந்
தபோது, அவன்: என் தகப்பனுடைய கூலிக்
காரர் எத்தனையோபேருக்குப் பூர்த்தியான
சாப்பாடு இருக்கிறது, நானோ பசியினால் சா
18 கிறேன். நான் எழுந்து, 3என் தகப்பனிடத்
திற்குப் போய்: தகப்பனே, பரத்துக்கு விரோ
தமாகவும் உமக்கு முன்பாகவும் பாவஞ்செய்
19 தேன், இனிமேல் உம்முடைய குமாரன்
என்று சொல்லப்படுவதற்கு நான் பாத்திர
னல்ல, உம்முடைய கூலிக்காரரில் ஒருவனாக
என்னை வைத்துக்கொள்ளும் என்பேன் என்
20 று சொல்லி; எழுந்து புறப்பட்டு, தன் தகப்
பனிடத்தில் வந்தான். 4அவன் தூரத்தில்
வரும்போதே, அவனுடைய தகப்பன் அவ
னைக் கண்டு, மனதுருகி, ஓடி, அவன் கழுத்
தைக் கட்டிக்கொண்டு, அவனை முத்தஞ்செய்
21 தான். குமாரன் தகப்பனை நோக்கி: தகப்ப
னே, 5பரத்துக்கு விரோதமாகவும், உமக்கு
முன்பாகவும் பாவஞ்செய்தேன், இனிமேல்
உம்முடைய குமாரன் என்று சொல்லப்படுவ
தற்கு நான் பாத்திரன் அல்ல என்று சொன்
22 னான். அப்பொழுது தகப்பன் தன் ஊழி
யக்காரரை நோக்கி: 6நீங்கள் உயர்ந்த வஸ்தி
ரத்தைக் கொண்டுவந்து, இவனுக்கு உடுத்தி,
இவன் கைக்கு மோதிரத்தையும் கால்களுக்
23 குப் பாதரட்சைகளையும் போடுங்கள். கொ
ழுத்த கன்றைக் கொண்டுவந்து அடியுங்கள்.
24 நாம் புசித்து, சந்தோஷமாயிருப்போம். என்
குமாரனாகிய இவன் மரித்தான், திரும்பவும்
உயிர்த்தான்; 7காணாமற்போனான், திரும்பவும்
காணப்பட்டான் என்றான். அப்படியே அவ
25 ர்கள் சந்தோஷப்படத் தொடங்கினார்கள். அவ
னுடைய மூத்தகுமாரன் வயலிலிருந்தான்.
அவன் திரும்பி வீட்டுக்குச் சமீபமாய் வருகிற
போது, 8கீதவாத்தியத்தையும் நடனக்களிப்
26 பையும் கேட்டு; ஊழியக்காரரில் ஒருவனை
அழைத்து: இதென்ன என்று விசாரித்தான்.
27 அதற்கு அவன்: உம்முடைய சகோதரன் வந்
தார், அவர் மறுபடியும் சுகத்துடனே உம்மு
டைய தகப்பனிடத்தில் வந்து சேர்ந்தபடியி
னாலே அவருக்காகக் கொழுத்த கன்றை அ
28 டிப்பித்தார் என்றான். அப்பொழுது 9அவன்
கோபமடைந்து, உள்ளே போக மனதில்லா
திருந்தான். தகப்பனோ வெளியே வந்து,
29 அவனை வருந்தியழைத்தான். அவன் தகப்ப
னுக்குப் பிரதியுத்தரமாக: இதோ, இத்தனை
வருஷகாலமாய் நான் உமக்கு ஊழியஞ்செய்
து, 10ஒருக்காலும் உம்முடைய கற்பனையை

1 ஆமோ. 8. 11, 12
2 சங். 73. 22. எசே. 44. 20. ஓசி. 12. 1
3 சங். 32. 5
4 அப். 2. 39. எபே. 2. 13, 17
5 சங். 51. 4
6 சகரி. 3. 3–5
7 32. வச. 19. 10. எசே. 34. 4, 16. எபே. 2. 1; 5. 14. வெளி. 3. 1
8 சங். 30. 11; 126. 1, 2
9 யோனா 4. 1–3. ரோ. 10. 19
10 18. 11. ஏசா. 65. 5. பிலி. 3. 6
11 ரோ. 9. 4; 11. 1
12 24. வச. சங். 51. 8. ஏசா. 35. 10. யோனா 4. 10, 11
13 12. 42. 1 கொ. 4. 2. 1 தீமோ. 4. 14. 1 பே. 4. 10
14 யோ. 12. 36. எபே. 5. 8. 1 தெச. 5. 5
15 பிர. 11. 1. தானி. 4. 27. 1 தீமோ. 6. 18, 19
* மம்மோனால்

மீறாதிருந்தும், என் சிநேகிதரோடே நான்
சந்தோஷமாயிருக்கும்படி நீர் ஒருக்காலும்
எனக்கு ஒரு ஆட்டுக்குட்டியையாவது கொ
டுக்கவில்லை. வேசிகளிடத்தில் உம்முடைய 30
ஆஸ்தியை அழித்துப்போட்ட உம்முடைய
குமாரனாகிய இவன் வந்தவுடனே கொழுத்த
கன்றை இவனுக்காக அடிப்பித்தீரே என்
றான். அதற்குத் தகப்பன்: மகனே, 11நீ எப் 31
போதும் என்னோடிருக்கிறாய், எனக்குள்ள
தெல்லாம் உன்னுடையதாயிருக்கிறது. உன் 32
சகோதரனாகிய இவனோ மரித்தான், திரும்ப
வும் உயிர்த்தான்; காணாமற்போனான், திரும்ப
வும் காணப்பட்டான்; 12ஆனபடியினாலே,
நாம் சந்தோஷப்பட்டு மகிழ்ச்சியாயிருக்கவே
ண்டுமே என்று சொன்னான் என்றார்.

பின்னும் அவர் தம்முடைய சீஷர்களை 16
நோக்கி: ஐசுவரியவானாகிய ஒரு மனுஷனு
க்கு ஒரு உக்கிராணக்காரன் இருந்தான்;
அவன் தன் எஜமானுடைய ஆஸ்திகளை அழித்
துப்போடுகிறதாக எஜமானுக்கு அறிவிக்கப்ப
ட்டது. அப்பொழுது எஜமான் அவனை வர 2
வழைத்து: உன்னைக்குறித்து நான் இப்படிக்
கேள்விப்படுகிறதென்ன? 13உன் உக்கிராணக்
கணக்கை யொப்புவி, இனி நீ உக்கிராணக்
காரனாயிருக்கக்கூடாது என்றான். அப்பொ 3
ழுது உக்கிராணக்காரன்: நான் என்ன செய்
வேன், என் எஜமான் உக்கிராண விசாரிப்பி
லிருந்து என்னைத் தள்ளிப்போடுகிறானே;
கொத்துகிறதற்கு எனக்குப் பெலனில்லை,
இரக்கவும் வெட்கப்படுகிறேன். உக்கிராண 4
விசாரிப்பைவிட்டு நான் தள்ளப்படும்போது,
என்னைத் தங்கள் வீடுகளில் ஏற்றுக்கொள்வார்
உண்டாகும்படி செய்யவேண்டியது இன்ன
தென்று எனக்குத் தெரியவந்தது, என்று தன
க்குள்ளே சொல்லிக்கொண்டு; தன் எஜமா 5
னிடத்தில் கடன்பட்டவர்களை ஒவ்வொருவ
னாக வரவழைத்து: முதலாவது வந்தவனை
நோக்கி: நீ என் எஜமானிடத்தில் பட்ட
கடன் எவ்வளவு என்றான். அவன்: நூறுகு 6
டம் எண்ணெய் என்றான். அப்பொழுது உக்
கிராணக்காரன் அவனை நோக்கி: நீ உன் சீட்
டை வாங்கி, உட்கார்ந்து, ஐம்பது என்று
சீக்கிரமாய் எழுது என்றான். பின்பு அவன் 7
வேறொருவனை நோக்கி: நீ பட்ட கடன் எவ்
வளவு என்றான். அவன்: நூறு கலம் கோ
துமை என்றான். அப்பொழுது அவன்: நீ
உன் சீட்டை வாங்கி, எண்பது என்று
எழுது என்றான். அநீதியுள்ள உக்கிராண 8
க்காரன் புத்தியாய்ச் செய்தான் என்று
எஜமான் கண்டு, அவனை மெச்சிக்கொண்
டான். 14இவ்விதமாய் ஒளியின் பிள்ளைகளை
ப்பார்க்கிலும் இந்தப் பிரபஞ்சத்தின் பிள்ளை
கள் தங்கள் சந்ததியில் அதிக புத்திமான்களா
யிருக்கிறார்கள். நான் உங்களுக்குச் சொல் 9
லுகிறேன், நீங்கள் மாளும்போது உங்களை
நித்தியமான வீடுகளிலே ஏற்றுக்கொள்வாரு
ண்டாகும்படி, 15அநீதியான *உலகப்பொரு

ளால் உங்களுக்குச் சிநேகிதரைச் சம்பாதியுங்
10 கள். கொஞ்சத்திலே உண்மையுள்ளவன் அ
நேகத்திலும் உண்மையுள்ளவனாயிருக்கிறான்,
[1]கொஞ்சத்திலே அநீதியுள்ளவன் அநேகத்தி
11 லும் அநீதியுள்ளவனாயிருக்கிறான். அநீதி
யான உலகப்பொருளைப்பற்றி நீங்கள் உண்
மையாயிராவிட்டால், யார் உங்களை நம்பி உங்
களிடத்தில் மெய்யான பொருளை ஒப்புவிப்
12 பார்கள்? வேறொருவனுடைய காரியத்தில்
நீங்கள் உண்மையுள்ளவர்களாயிராவிட்டால்,
உங்களுக்கு யாதொன்றைச் சொந்தமாகக்
13 கொடுப்பவர் யார்? எந்த ஊழியக்காரனும்
[2]இரண்டு எஜமான்களுக்கு ஊழியஞ்செய்யக்
கூடாது; ஒருவனைப் பகைத்து மற்றவனைச்
சிநேகிப்பான், அல்லது ஒருவனைப் பற்றிக்
கொண்டு மற்றவனை அசட்டைபண்ணுவான்.
தேவனுக்கும் உலகப்பொருளுக்கும் ஊழியஞ்
செய்ய உங்களாலே கூடாது என்றார்.
14 இவைகளையெல்லாம் பொருளாசைக்கார
ராகிய பரிசேயரும் கேட்டு, [3]அவரைப் பரியா
15 சம்பண்ணினார்கள். அவர் அவர்களை நோக்கி:
நீங்கள் மனுஷர் முன்பாக உங்களை நீதிமான்
களாகக் காட்டுகிறீர்கள், [4]தேவனோ உங்கள்
இருதயங்களை அறிந்திருக்கிறார்; [5]மனுஷருக்
குள்ளே மேன்மையாக எண்ணப்படுகிறது
தேவனுக்கு முன்பாக அருவருப்பாயிருக்கி
16 றது. நியாயப் பிரமாணமும் [6]தீர்க்கதரிசன
வாக்கியங்களும் யோவான்வரைக்கும் வழங்கி
வந்தது; அதுமுதல் தேவனுடைய ராஜ்யம்
சுவிசேஷமாய் அறிவிக்கப்பட்டு வருகிறது,
யாவரும் பலவந்தமாய் அதில் பிரவேசிக்கி
17 றார்கள். வேதத்தில் ஒரு எழுத்தின் உறுப்பு
அவமாய்ப் போவதைப்பார்க்கிலும், [7]வான
மும் பூமியும் ஒழிந்துபோவது எளிதாயிருக்
18 கும். தன் மனைவியைத் தள்ளிவிட்டு, வேறொ
ருத்தியை விவாகம்பண்ணுகிறவன் விபசாரம்
செய்கிறான், [8]புருஷனாலே தள்ளப்பட்ட
வளை விவாகம்பண்ணுகிறவனும் விபசாரம்
செய்கிறான்.
19 ஐசுவரியமுள்ள ஒரு மனுஷன் இருந்தான்;
அவன் இரத்தாம்பரமும் விலையேறப்பெற்ற
வஸ்திரமும் தரித்து, அநுதினமும் சம்பிரம
20 மாய் வாழ்ந்துகொண்டிருந்தான். லாசரு என்
னும் பேர்கொண்ட ஒரு தரித்திரனும் இருந்
தான்; அவன் பருக்கள் நிறைந்தவனாய், அந்த
ஐசுவரியவானுடைய வாசலருகே கிடந்து,
21 அவனுடைய மேஜையிலிருந்து விழுந் துணி
க்கைகளாலே தன் பசியை ஆற்ற ஆசையா
யிருந்தான்; நாய்கள் வந்து அவன் பருக்களை
22 நக்கிற்று. பின்பு அந்தத் தரித்திரன் மரித்து,
[9]தேவதூதரால் ஆபிரகாமுடைய மடியிலே
கொண்டுபோய்விடப்பட்டான்; [10]ஐசுவரியவா
னும் மரித்து அடக்கம் பண்ணப்பட்டான்.
23 பாதாளத்திலே [11]அவன் வேதனைப்படுகிற
போது, தன் கண்களை ஏறெடுத்து, தூரத்தி
லே ஆபிரகாமையும் அவன் மடியிலே லாச
24 ருவையும் கண்டான். அப்பொழுது அவன்:
தகப்பனாகிய ஆபிரகாமே, நீர் எனக்கு இரங்
கி, லாசரு தன் விரலின் நுனியைத் தண்ணீ
ரில் தோய்த்து, என் நாவைக் குளிரப்பண்
ணும்படி அவனை அனுப்பவேண்டும்; [12]இந்த
அக்கினிஜுவாலையில் வேதனைப்படுகிறேனே
என்று கூப்பிட்டான். அதற்கு ஆபிரகாம்: 25
மகனே, [13]நீ பூமியிலே உயிரோடிருக்குங்கா
லத்தில் உன் நன்மைகளை அனுபவித்தாய்,
லாசரும் அப்படியே தீமைகளை அனுபவித்
தான், அதை நினைத்துக்கொள்; இப்பொழுது
அவன் தேற்றப்படுகிறான், நீயோ வேதனைப்
படுகிறாய். அதுவுமல்லாமல், இவ்விடத்திலிரு 26
ந்து உங்களிடத்திற்குக் கடந்துபோகவும்,
[14]அவ்விடத்திலிருந்து எங்களிடத்திற்குக் கட
ந்துவரவும் மனதுள்ளவர்களுக்குக் கூடாதபடி
க்கு, எங்களுக்கும் உங்களுக்கும் நடுவே *பெ
ரும் பிளப்பு உண்டாக்கப்பட் டிருக்கிறது
என்றான். அப்பொழுது அவன்: அப்படியா 27
னால், தகப்பனே, எனக்கு ஐந்துபேர் சகோ
தருண்டு, அவர்களும் வேதனையுள்ள இந்த
இடத்துக்கு வராதபடி, அவன் போய் அவர்க
ளுக்குச் சாட்சியாக அறிவிக்கும்பொருட்டு,
நீர் அவனை என் தகப்பன் வீட்டுக்கு அனுப் 28
பும்படி உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன்
என்றான். ஆபிரகாம் அவனை நோக்கி: [15]அவர் 29
களுக்கு மோசேயும் தீர்க்கதரிசிகளும் உண்டு,
அவர்களுக்கு அவர்கள் செவிகொடுக்கட்டும்
என்றான். அதற்கு அவன்: அப்படியல்ல, 30
தகப்பனாகிய ஆபிரகாமே, மரித்தோரிலிருந்து
ஒருவன் அவர்களிடத்திற்குப் போனால் மன
ந்திரும்புவார்கள் என்றான். அதற்கு அவன்: 31
[16]அவர்கள் மோசேக்கும் தீர்க்கதரிசிகளுக்கும்
செவிகொடாவிட்டால், [17]மரித்தோரிலிருந்து
ஒருவன் எழுந்துபோனாலும், நம்பமாட்டார்
கள் என்று சொன்னான் என்றார்.

பின்பு அவர் தம்முடைய சீஷர்களை நோ 17
க்கி: [18]இடறல்கள் வராமல்போவது கூடாத
காரியம், ஆகிலும் அவைகள் எவனால் வருகி
றதோ, அவனுக்கு ஐயோ! அவன் இந்தச் 2
சிறுவரில் ஒருவனுக்கு இடறலுண்டாக்குகிற
தைப்பார்க்கிலும், அவனுடைய கழுத்தில் எந்
திரக்கல் கட்டப்பட்டு, அவன் சமுத்திரத்தில்
தள்ளுண்டுபோவது அவனுக்கு நலமாயிருக்
கும். உங்களைக்குறித்து எச்சரிக்கையாயிரு 3
ங்கள். உன் சகோதரன் உனக்கு விரோதமா
ய்க் குற்றஞ்செய்தால், அவனைக் கடிந்து
கொள்; [19]அவன் மனஸ்தாபப்பட்டால், அவ
னுக்கு மன்னிப்பாயாக. அவன் ஒருநாளில் 4
ஏழுதரம் உனக்கு விரோதமாய்க் குற்றஞ்செ
ய்து, ஏழுதரமும் உன்னிடத்தில் வந்து: நான்
மனஸ்தாபப்படுகிறேன் என்று சொன்னால்,
[20]அவனுக்கு மன்னிப்பாயாக என்றார்.

அப்பொழுது அப்போஸ்தலர் கர்த்தரை 5
நோக்கி: [21]எங்கள் விசுவாசத்தை வர்த்திக்கப்
பண்ணவேண்டும் என்றார்கள். அதற்குக் கர்த் 6
தர்: [22]கடுகுவிதையளவு விசுவாசம் உங்களுக்கு
உண்டாயிருந்தால், நீங்கள் இந்தக் காட்டத்தி

1 மத். 25. 21, 23
2 யோசு. 24. 15. மத். 6. 24
3 மத். 23. 14
4 10. 29. சங். 7. 9. எரே. 17. 10
5 நீதி. 16. 5. மல். 3. 15
6 மத். 11. 12, 13
7 சங். 102. 26. ஏசா. 40. 8: 51. 6
8 மத். 5. 32. 1 கொ. 7. 10, 11
9 மத். 8. 11
10 நீதி. 14. 32
11 வெளி. 14. 10, 11
12 ஏசா. 66. 24. சகரி. 14. 12. மாற். 9. 44.
13 6. 24. யோபு 21. 13. சங். 73. 12–19
14 எசே. 28. 24
* அகாதம்
15 ஏசா. 8. 20: 34. 16. யோ. 5. 39, 45. அப். 15. 21: 17. 11
16 2 கொ. 4. 3
17 யோ. 12. 10, 11
18 மத். 18. 6, 7. மாற். 9. 42
19 லேவி. 19. 17. நீதி. 17. 10. மத். 18. 15, 21. யாக். 5. 19
20 மத். 6. 12, 14. கொலோ. 3. 13
21 எபி. 12. 1
22 மத். 17. 20: 21. 21. மாற். 9. 23: 11. 23

மரத்தை நோக்கி: நீ வேரோடே பிடுங்கு
ண்டு கடலிலே நடப்படுவாயாக என்று சொ
7 ல்ல, அது உங்களுக்குக் கீழ்ப்படியும். உங்
களில் ஒருவனுடைய ஊழியக்காரன் உழுது
அல்லது மந்தைமேய்த்து வயலிலிருந்து வரு
ம்போது, எஜமான் அவனை நோக்கி: நீ முன்பு
போய்ச் சாப்பிட்டுவா என்று அவனுக்குச்
8 சொல்வானே? நீ எனக்குச் சாப்பாடு ஆயத்
தம்பண்ணி, அரைகட்டிக்கொண்டு, [1]நான்
போஜனபானம் பண்ணுமளவும் எனக்கு
ஊழியஞ்செய், அதற்குப்பின் நீ புசித்துக்
குடிக்கலாம் என்று அவனுக்குச் சொல்லுவா
9 னல்லவா? தான் கட்டளையிட்டவைகளை அந்த
வேலைக்காரன் செய்ததற்காக *அவனுக்கு
உபசாரஞ் செய்வானே? அப்படிச் செய்யமா
10 ட்டானே. அப்படியே நீங்களும் உங்களுக்குக்
கட்டளையிடப்பட்ட யாவற்றையும் செய்த
பின்பு: [2]நாங்கள் அப்பிரயோஜனமான ஊழி
யக்காரர், செய்யவேண்டிய கடமையைமாத்
திரம் செய்தோம் என்று சொல்லுங்கள் என்
ருர்.
11 பின்பு அவர் எருசலேமுக்குப் பிரயாணம்
பண்ணுகையில், [3]அவர் சமாரியா கலிலேயா
என்னும் நாடுகளின் வழியாக நடந்துபோ
12 ஞர். அவர் ஒரு கிராமத்தில் பிரவேசித்த
போது, குஷ்டரோகமுள்ள மனுஷர் பத்துப்
பேர் அவருக்கு எதிராக வந்து, [4]தூரத்திலே
13 நின்று: இயேசு ஐயரே, எங்களுக்கு இரங்கும்
14 என்று சத்தமிட்டார்கள். அவர்களை அவர்
பார்த்து: [5]நீங்கள் போய், ஆசாரியர்களுக்கு
உங்களைக் காண்பியுங்கள் என்ருர். அந்தப்
படி அவர்கள் போகையில் சுத்தமாஞர்கள்.
15 அவர்களில் ஒருவன் தான் ஆரோக்கியமான
தைக் கண்டு, திரும்பிவந்து, [6]உரத்த சத்தத்
16 தோடே தேவனை மகிமைப்படுத்தி, அவரு
டைய பாதத்தருகே முகங்குப்புற விழுந்து,
அவருக்கு ஸ்தோத்திரஞ் செலுத்தினுன்; [7]அ
17 வன் சமாரியனுயிருந்தான். அப்பொழுது
இயேசு: சுத்தமானவர்கள் பத்துப்பேர் அல்
18 லவா, மற்ற ஒன்பதுபேர் எங்கே? தேவனை
மகிமைப்படுத்துகிறதற்கு, [8]இந்த அந்நியனே
ஒழிய மற்றொருவனும் திரும்பிவரக் காணு
19 மே என்று சொல்லி, அவனை நோக்கி: நீ எழு
ந்துபோ, [9]உன் விசுவாசம் உன்னை ரட்சித்
தது என்ருர்.
20 தேவனுடைய ராஜ்யம் எப்பொழுது வரு
மென்று, பரிசேயர் அவரிடத்தில் கேட்ட
பொழுது, அவர்களுக்கு அவர் பிரதியுத்தர
மாக: தேவனுடைய ராஜ்யம் †பிரத்தியட்ச
21 மாய் வராது. இதோ, இங்கே என்றும், அ
தோ, அங்கே என்றும் சொல்லப்படுகிறதற்
கும் ஏதுவிராது; இதோ, [10]தேவனுடைய
ராஜ்யம் ‡உங்களுக்குள் இருக்கிறதே என்
ருர்.
22 பின்பு அவர் சீஷர்களை நோக்கி: மனுஷ
குமாரனுடைய நாட்களிலொன்றைக் காண
வேண்டுமென்று நீங்கள் ஆசைப்படுங்காலம்
வரும்; ஆனாலும் அதைக் காணமாட்டீர்கள்.
இதோ, இங்கே என்றும், [11]அதோ, அங்கே 23
என்றும், சிலர் உங்களிடத்தில் சொல்லுவா
ர்கள்; நீங்களோ போகாமலும் பின்தொடரா
மலும் இருங்கள். மின்னல் வானத்தின் ஒரு 24
திசையில் தோன்றி மறுதிசைவரைக்கும் பிர
காசிக்கிறதுபோல மனுஷகுமாரனும் தம்மு
டைய நாளிலே தோன்றுவார். அதற்கு 25
முன்பு அவர் அநேகம் பாடுபட்டு, [12]இந்தச் சந்
ததியினால் ஆகாதவனென்று தள்ளப்படவே
ண்டியதாயிருக்கிறது. நோவாவின் [13]நாட்க 26
ளில் நடந்ததுபோல மனுஷகுமாரனுடைய
நாட்களிலும் நடக்கும். நோவா பேழைக்குள் 27
பிரவேசித்த நாள்வரைக்கும் ஜனங்கள் புசித்
துக் குடித்தார்கள், பெண்கொண்டு கொடுத்
தார்கள்; ஜலப்பிரளயம் வந்து எல்லாரையும்
அழித்துப்போட்டது. லோத்தினுடைய நா 28
ட்களில் நடந்ததுபோலவும் நடக்கும்; [14]ஜன
ங்கள் புசித்தார்கள், குடித்தார்கள், கொண்
டார்கள், விற்ருர்கள், நட்டார்கள், கட்டினர்
கள். லோத்து சோதோமை விட்டுப் புறப் 29
பட்ட நாளிலே வானத்திலிருந்து அக்கினியும்
கந்தகமும் வருஷித்து, எல்லாரையும் அழித்
துப்போட்டது. மனுஷகுமாரன் வெளிப்ப 30
டும் நாளிலும் [15]அப்படியே நடக்கும். அந்த 31
நாளிலே வீட்டின்மேலிருப்பவன் வீட்டிலு
ள்ள தன் பண்டங்களை எடுத்துக்கொண்டு
போக இறங்காமல் இருக்கக்கடவன்; அப்படி
யே வயலிலிருக்கிறவன் பின்னிட்டுத் திரும்
பாமலும் இருக்கக்கடவன். லோத்தின் [16]மனை 32
வியை நினைத்துக்கொள்ளுங்கள். தன் ஜீவனை 33
ரட்சிக்க வகைதேடுகிறவன் அதை இழந்து
போவான்; [17]இழந்துபோகிறவன் அதை உயிர்
ப்பித்துக்கொள்ளுவான். அந்த இராத்திரியில் 34
ஒரே படுக்கையில் படுத்திருக்கிற இரண்டுபே
ரில் ஒருவன் ஏற்றுக்கொள்ளப்படுவான், [18]மற்
றவன் கைவிடப்படுவான். §திரிகை திரிக் 35
கிற இரண்டு ஸ்திரீகளில் ஒருத்தி ஏற்றுக்
கொள்ளப்படுவாள், மற்றவள் கைவிடப்படு
வாள். வயலிலிருக்கிற இரண்டுபேரில் ‖ஒரு 36
வன் ஏற்றுக்கொள்ளப்படுவான், மற்றவன் கை
விடப்படுவான் என்று உங்களுக்குச் சொல்லு
கிறேன் என்ருர். அவர்கள் அவருக்குப் பிரதி 37
யுத்தரமாக: எங்கே, ஆண்டவரே, என்ருர்கள்.
அதற்கு அவர்: [19]பிணம் எங்கேயோ அங்கே
கழுகுகள் வந்து கூடும் என்ருர்.

சோர்ந்துபோகாமல் [20]எப்பொழுதும் ஜெ 18
பம்பண்ணவேண்டும் என்பதைக்குறித்து அ
வர்களுக்கு அவர் ஒரு உவமையைச் சொன்
ஞர்: ஒரு பட்டணத்திலே ஒரு நியாயாதி 2
பதி இருந்தான்; அவன் தேவனுக்குப் பயப்ப
டாதவனும் மனுஷரை மதியாதவனுமாயிருந்
தான். அந்தப் பட்டணத்திலே ஒரு விதவை 3
யும் இருந்தாள்; அவள் அவனிடத்தில் போய்:
எனக்கும் என் எதிராளிக்கும் இருக்கிற காரி
யத்தில் எனக்கு நியாயஞ்செய்யவேண்டும்
என்று விண்ணப்பம் பண்ணினுள். வெகு 4

1 12. 37
* அவனை உபசரிப்பானே?
2 யோபு 22. 3; 35. 7. சங். 16. 2, 3. ஏசா. 64. 6. ரோ. 11. 35. 1 கொ. 9. 16, 17. பிலே. 11.
3 9. 51, 52. யோ. 4. 4
4 லேவி. 13. 46
5 5. 14. லேவி. 13. 2; 14. 3. மத். 8. 4
6 சங். 30. 1, 2
7 யோ. 4. 39–42
8 சங். 106. 13
9 மத். 9. 22
† கண்ணுக்குக் காண
10 ரோ. 14. 17
‡ உங்கள் நடுவே
11 21. 8. மத். 24. 23. மாற். 13. 21
12 9. 22. மாற். 8. 31
13 ஆதி. 7. அதி
14 ஆதி. 19. அதி
15 2 தெச. 1. 7
16 ஆதி. 19. 26
17 9. 24. மத். 16. 25. மாற். 8. 35. யோ. 12. 25
18 மத். 24. 40, 41
§ மாவரைக்கிற
‖ இந்த வசனம் சில மூலப்பிரதிகளில் இல்லை
19 யோபு 39. 30. மத். 24. 28
20 11. 8; 21. 36. சங். 65. 2; 102. 16. ரோ. 12. 12. எபே. 6. 18. பிலி. 4. 6. 1 தெச. 5. 17

நான்வரைக்கும் அவனுக்கு மனதில்லாதிருந்
தது. பின்பு அவன்: நான் தேவனுக்குப் பய
ப்படாமலும் மனுஷரை மதியாமலும் இருந்
5 தும், இந்த விதவை என்னை எப்பொழுதும்
தொந்தரவு செய்கிறபடியினால், இவள் அடிக்
கடி வந்து என்னை அலட்டாதபடி இவளுக்கு
நியாயஞ்செய்யவேண்டும் என்று தனக்குள்
ளே சொல்லிக்கொண்டான் என்றார்.
6 பின்னும் கர்த்தர் அவர்களை நோக்கி: அநீதி
யுள்ள அந்த நியாயாதிபதி சொன்னதைச் சிந்
7 தித்துப்பாருங்கள். அந்தப்படியே தேவன்
தம்மை நோக்கி இரவும் பகலும் கூப்பிடுகிற
வர்களாகிய தம்மால் தெரிந்துகொள்ளப்பட்ட
வர்களின் விஷயத்தில் நீடிய பொறுமையுள்
ளவராயிருந்து அவர்களுக்கு [1]நியாயஞ்செய்
8 யாமலிருப்பாரோ? சீக்கிரத்திலே அவர்களு
க்கு [2]நியாயஞ்செய்வார் என்று உங்களுக்குச்
சொல்லுகிறேன். ஆகிலும் மனுஷகுமாரன்
வரும்போது பூமியிலே விசுவாசத்தைக் கா
ண்பாரோ என்றார்.
9 அன்றியும் தங்களை நீதிமான்களென்று
நம்பி, [3]மற்றவர்களை அற்பமாயெண்ணின
சிலரைக்குறித்து, அவர் ஒரு உவமையைச்
10 சொன்னார்: இரண்டு மனுஷர் ஜெபம்பண்
ணும்படி தேவாலயத்துக்குப் போனார்கள்;
ஒருவன் பரிசேயன், மற்றவன் ஆயக்காரன்.
11 பரிசேயன் நின்று: [4]தேவனே! நான் பறி
காரர், அநியாயக்காரர், விபசாரக்காரர் ஆகிய
மற்ற மனுஷரைப்போலவும், இந்த ஆயக்கார
னைப்போலவும் இராததனால் உம்மை ஸ்தோத்
12 திரிக்கிறேன். வாரத்தில் இரண்டுதரம் உப
வாசிக்கிறேன்; என் சம்பாத்தியத்திலெல்லாம்
தசமபாகம் செலுத்திவருகிறேன் என்று, தனக்
13 குள்ளே ஜெபம் பண்ணினான். ஆயக்காரன்
தூரத்திலே நின்று, தன் கண்களையும் வானத்
துக்கு ஏறெடுக்கத் துணியாமல், [5]தன் மார்பி
லே அடித்துக்கொண்டு: தேவனே! பாவியா
கிய என்மேல் *கிருபையாயிரும் என்றான்.
14 அவனல்ல, இவனே நீதிமானாக்கப்பட்டவ
னாய்த் தன் வீட்டுக்குத் திரும்பிப்போனான்
என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்; [6]ஏனெ
னில் தன்னை உயர்த்துகிறவனெவனும் தாழ்த்
தப்படுவான், தன்னைத் தாழ்த்துகிறவன் உயர்
த்தப்படுவான் என்றார்.
15 பின்பு குழந்தைகளையும் அவர் தொடும்ப
டிக்கு [7]அவர்களை அவரிடத்தில் கொண்டுவந்
தார்கள். சீஷர்கள் அதைக் கண்டு, கொண்டு
16 வந்தவர்களை அதட்டினார்கள். இயேசுவோ
அவைகளைக் கொண்டுவரும்படி கட்டளையி
ட்டு: சிறு பிள்ளைகள் என்னிடத்தில் வருகிற
தற்கு இடங்கொடுங்கள், அவைகளைத் தடை
பண்ணாதிருங்கள்; [8]தேவனுடைய ராஜ்யம்
17 அப்படிப்பட்டவர்களுடையது. எவனாகிலும்
சிறுபிள்ளையைப்போல் தேவனுடைய ராஜ்யத்
தை ஏற்றுக்கொள்ளாவிட்டால், [9]அதில் பிர
வேசிக்கமாட்டான் என்று மெய்யாகவே உங்
களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

1 வெளி. 6. 10
2 சங். 46. 5. ஏசா. 24. 12. எபி. 10. 37. 2 பே. 3. 8, 9
3 10. 29
4 சங். 135. 2. ஏசா. 65. 5. வெளி. 3. 17
5 எரே. 31. 19
* இரங்கும்
6 யோபு 22. 29. மத். 23. 12. யாக். 4. 6. 1 பே. 5. 5, 6
7 மத். 19. 13. மாற். 10. 13. ஷ
8 1 கொ. 14. 20. 1 பே. 2. 2
9 சங். 131. 2. மாற். 10. 5. 1 பே. 1. 14
10 மத். 19. 16. ஷ. மாற். 10. 17. ஷ
11 யாத். 20. 12–16. உபா. 5. 16–20. ரோ. 13. 9
12 மத். 6. 19, 20. 1 தீமோ. 6. 19
13 நீதி. 11. 28. 1 தீமோ. 6. 9
14 1. 37. எரே. 32. 17. சகரி. 8. 6
15 மத். 19. 27
16 உபா. 33. 9
17 யோபு 42. 10. வெளி. 2. 10
18 சங். 22. ஏசா. 53. அதி.
19 23. 1. மத். 27. 2. யோ. 18. 28. அப். 3. 13
20 மாற். 9. 32. யோ. 12. 16

அப்பொழுது தலைவன் ஒருவன் அவரை 18
நோக்கி: [10]நல்ல போதகரே, நித்தியஜீவனைச்
சுதந்தரித்துக்கொள்வதற்கு நான் என்ன செய்
யவேண்டும் என்று கேட்டான். அதற்கு 19
இயேசு: நீ என்னை நல்லவன் என்று சொல்
வானேன்? தேவன் ஒருவர்தவிர நல்லவன்
ஒருவனும் இல்லையே. [11]விபசாரஞ்செய்யா 20
திருப்பாயாக, கொலை செய்யாதிருப்பாயாக,
களவு செய்யாதிருப்பாயாக, பொய்ச்சாட்சி
சொல்லாதிருப்பாயாக, உன் தகப்பனையும்
உன் தாயையும் கனம்பண்ணுவாயாக என்கிற
கற்பனைகளை நீ அறிந்திருக்கிறாயே என்றார்.
அதற்கு அவன்: இவைகளையெல்லாம் என் 21
சிறுவயதுமுதல் கைக்கொண்டிருக்கிறேன்
என்றான்.
இயேசு அதைக் கேட்டு: இன்னும் உன்னி 22
டத்தில் ஒரு குறைவு உண்டு; உனக்கு உண்
டானவைகளையெல்லாம் விற்றுத் தரித்திருக்
குக் கொடு, [12]அப்பொழுது பரலோகத்திலே
உனக்குப் பொக்கிஷம் உண்டாயிருக்கும்;
பின்பு என்னைப் பின்பற்றிவா என்றார்.
அவன் அதிக ஐசுவரியமுள்ளவனானபடியி 23
னால், இதைக் கேட்டபொழுது, மிகுந்த துக்க
மடைந்தான்.
அவன் மிகுந்த துக்கமடைந்ததை இயேசு 24
கண்டு: [13]ஐசுவரியமுள்ளவர்கள் தேவனுடைய
ராஜ்யத்தில் பிரவேசிப்பது எவ்வளவு அரிதா
யிருக்கிறது. ஐசுவரியவான் தேவனுடைய 25
ராஜ்யத்தில்பிரவேசிப்பதைப்பார்க்கிலும், ஒட்
டகமானது ஊசியின்காதிலே நுழைவது எளி
தாயிருக்கும் என்றார். அதைக் கேட்டவர் 26
கள்: அப்படியானால் யார் ரட்சிக்கப்படக்கூ
டும் என்றார்கள். அதற்கு அவர்: [14]மனுஷ 27
ரால் கூடாதவைகள் தேவனால் கூடும் என்றார்.
அப்பொழுது பேதுரு அவரை நோக்கி: 28
[15]இதோ, நாங்கள் எல்லாவற்றையும் விட்டு,
உம்மைப் பின்பற்றினோமே என்றான். அத 29
ற்கு அவர்: [16]தேவனுடைய ராஜ்யத்தினிமித்
தம் வீட்டையாவது, பெற்றாரையாவது, சகோ
தரரையாவது, மனைவியையாவது, பிள்ளை
களையாவது விட்டுவிட்ட எவனும், இம்மை 30
யிலே அதிகமானவைகளையும், [17]மறுமையிலே
நித்திய ஜீவனையும் அடையாமற்போவதில்லை
யென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லு
கிறேன் என்றார்.
பின்பு அவர் பன்னிருவரையும் தம்மிடத் 31
தில் அழைத்து: இதோ, எருசலேமுக்குப்
போகிறோம், [18]மனுஷகுமாரனைக்குறித்துத்
தீர்க்கதரிசிகளால் எழுதப்பட்டவைகளெல்
லாம் நிறைவேறும். எப்படியெனில், [19]அவர் 32
புறஜாதியாரிடத்தில் ஒப்புக்கொடுக்கப்பட்டு,
பரியாசமும் நிந்தையும் அடைந்து, துப்பப்
படுவார். அவரை வாரினால் அடித்து, கொலை 33
செய்வார்கள்; மூன்றாம் நாளிலே அவர் உயி
ரோடே எழுந்திருப்பார் என்றார். இவைக 34
ளில் ஒன்றையும் அவர்கள் உணரவில்லை;
[20]அவைகளின் பொருள் அவர்களுக்கு மறை

வாயிருந்தது, அவர் சொன்னவைகளை அவர்
கள் அறிந்துகொள்ளவில்லை.
35 பின்பு அவர் எரிகோவுக்குச் சமீபமாய்
வரும்போது, [1]ஒரு குருடன் வழியருகே உட்
கார்ந்து பிச்சை கேட்டுக்கொண்டிருந்தான்.
36 ஜனங்கள் நடக்கிற சத்தத்தை அவன் கேட்டு,
37 இதென்ன என்று விசாரித்தான். நசரேயனா
கிய இயேசு போகிறார் என்று அவனுக்கு
அறிவித்தார்கள். அப்பொழுது அவன்: இயே
சுவே, தாவீதின் குமாரனே, எனக்கு இரங்கும்
38 என்று கூப்பிட்டான். முன் நடப்பவர்கள்
அவன் பேசாமலிருக்கும்படி அவனை அதட்
டினார்கள். அவனோ: தாவீதின் குமாரனே,
[2]எனக்கு இரங்கும் என்று மிகவும் அதிகமாய்க்
39 கூப்பிட்டான். இயேசு நின்று, அவனைத் தம்
மிடத்தில் கொண்டுவரும்படி சொன்னார்.
40 அவன் கிட்ட வந்தபோது, அவர் அவனை
41 நோக்கி: நான் உனக்கு என்ன செய்யவேண்
டும் என்றிருக்கிறாய் என்று கேட்டார். அத
ற்கு அவன்: ஆண்டவரே, நான் பார்வையடை
42 யவேண்டும் என்றான். இயேசு அவனை நோ
க்கி: நீ பார்வையடைவாயாக, [3]உன் விசுவா
43 சம் உன்னை ரட்சித்தது என்றார். உடனே
அவன் பார்வையடைந்து, [4]தேவனை மகிமைப்
படுத்திக்கொண்டே, அவருக்குப் பின்சென்
றான். ஜனங்களெல்லாரும் அதைக் கண்டு,
தேவனைப் புகழ்ந்தார்கள்.

**19** அவர் [5]எரிகோவில் பிரவேசித்து, அதின்
2 வழியாக நடந்துபோகையில், ஆயக்காரருக்குத்
தலைவனும் ஐசுவரியவானுமாயிருந்த சகேயு
3 என்னப்பட்ட ஒரு மனுஷன், இயேசு எப்ப
டிப்பட்டவரோ என்று அவரைப் பார்க்க வகை
தேடினான். அவன் குள்ளனானபடியால், ஜனக்
4 கூட்டத்தில் அவரைக் காணக்கூடாமல், அவர்
போகும் வழியில் முன்னாக ஓடி, அவரைப்
பார்க்கும்படி ஒரு காட்டத்திமரத்தில் ஏறி
5 னான். இயேசு அந்த இடத்தில் வந்தபோது,
அண்ணாந்துபார்த்து [6]அவனைக் கண்டு: சகே
யுவே, நீ சீக்கிரமாய் இறங்கிவா, இன்றைக்கு
நான் உன் வீட்டிலே தங்கவேண்டும் என்றார்.
6 அவன் சீக்கிரமாய் இறங்கி, சந்தோஷத்தோ
டே அவரை அழைத்துக்கொண்டுபோனான்.
7 அதைக் கண்ட யாவரும்: [7]இவர் பாவியான
மனுஷனிடத்தில் தங்கும்படி போனார் என்று
8 முறுமுறுத்தார்கள். சகேயு நின்று, கர்த்தரை
நோக்கி: ஆண்டவரே, [8]என் ஆஸ்திகளில்
பாதியை ஏழைகளுக்குக் கொடுக்கிறேன்,
[9]நான் ஒருவனிடத்தில் எதையாகிலும் அநியா
யமாய் வாங்கினதுண்டானால், நாலத்தனையா
கத் திரும்பச் செலுத்துகிறேன் என்றான்.
9 இயேசு அவனை நோக்கி: இன்றைக்கு இந்த
வீட்டுக்கு ரட்சிப்பு வந்தது; [10]இவனும் ஆபிர
10 காமுக்குக் குமாரனாயிருக்கிறானே. இழந்து
போனதைத் தேடவும் ரட்சிக்கவுமே [11]மனுஷ
குமாரன் வந்திருக்கிறார் என்றார்.
11 அவர்கள் இவைகளைக் கேட்டுக்கொண்டி
ருக்கையில், அவர் எருசலேமுக்குச் சமீபித்
திருந்தபடியினாலும், [12]தேவனுடைய ராஜ்யம்
சீக்கிரமாய் வெளிப்படுமென்று அவர்கள்
நினைத்தபடியினாலும், அவர் ஒரு உவமை
யைச் சொன்னார்:
பிரபுவாகிய ஒருவன் [13]ஒரு ராஜ்யத்தைப் 12
பெற்றுக்கொண்டு திரும்பிவரும்படி தூரதே
சத்துக்குப் போகப் புறப்பட்டான். புறப்படும் 13
போது, அவன் தன் ஊழியக்காரரில் பத்துப்
பேரை அழைத்து, அவர்களிடத்தில் *பத்து
ராத்தல் திரவியங்கொடுத்து: நான் திரும்பிவரு
மளவும் இதைக்கொண்டு வியாபாரம்பண்ணு
ங்கள் என்று சொன்னான். அவனுடைய 14
ஊரார் [14]அவனைப் பகைத்து, இவன் எங்கள்
மேல் ராஜாவாயிருக்கிறது எங்களுக்கு மன
தில்லையென்று சொல்லும்படி அவன் பின்னே
ஸ்தானாபதிகளை அனுப்பினார்கள். அவன் ராஜ் 15
யத்தைப் பெற்றுக்கொண்டு திரும்பிவந்த
போது, தன்னிடத்தில் திரவியம் வாங்கியிரு
ந்த அந்த ஊழியக்காரரில் அவனவன் வியா
பாரம்பண்ணிச் சம்பாதித்தது இவ்வளவெ
ன்று அறியும்படி, அவர்களைத் தன்னிடத்தில்
அழைத்துவரச் சொன்னான்.
அப்பொழுது முந்தினவன் வந்து: ஆண்ட 16
வனே, உம்முடைய ராத்தலினால் பத்துராத்
தல் ஆதாயம் கிடைத்தது என்றான். எஜமான் 17
அவனை நோக்கி: [15]நல்லது உத்தம ஊழியக்
காரனே, நீ கொஞ்சத்தில் உண்மையுள்ள
வனாயிருந்தபடியால் பத்துப் பட்டணங்களு
க்கு அதிகாரியாயிரு என்றான். அப்படியே இர 18
ண்டாம் ஊழியக்காரன் வந்து: ஆண்டவனே,
உம்முடைய ராத்தலினால் ஐந்துராத்தல் ஆதா
யம் கிடைத்தது என்றான். அவனையும் அவன் 19
நோக்கி: நீயும் ஐந்து பட்டணங்களுக்கு அதி
காரியாயிரு என்றான்.
பின்பு வேறொருவன் வந்து: ஆண்டவனே, 20
இதோ, உம்முடைய ராத்தல், இதை ஒரு
சீலையிலே வைத்திருந்தேன். நீர் வைக்காததை 21
எடுக்கிறவரும், [16]விதைக்காததை அறுக்கிறவரு
மான கடினமுள்ள மனுஷனென்று அறிந்து,
உமக்குப் பயந்திருந்தேன் என்றான். அதற்கு 22
அவன்: பொல்லாத ஊழியக்காரனே, [17]உன்
வாய்ச்சொல்லைக்கொண்டே உன்னை நியாயந்
தீர்க்கிறேன். நான் வைக்காததை எடுக்கிற
வனும், விதைக்காததை அறுக்கிறவனுமான
கடினமுள்ள மனுஷனென்று அறிந்தாயே,
பின்னை ஏன் நீ என் திரவியத்தைக் [18]காசுக் 23
கடையிலே வைக்கவில்லை; வைத்திருந்தால்
நான் வரும்போது, அதை வட்டியோடே வர
ப்பற்றிக்கொள்வேனே என்று சொல்லி; சமீ 24
பமாய் நிற்கிறவர்களை நோக்கி: அந்த ராத்தலை
அவன் கையிலிருந்தெடுத்து, பத்துராத்தல்
உள்ளவனுக்குக் கொடுங்கள் என்றான். அத 25
ற்கு அவர்கள்: ஆண்டவனே, அவனுக்குப்
பத்துராத்தல் இருக்கிறதே என்றார்கள். அத 26
ற்கு அவன்: [19]உள்ளவன் எவனுக்குங் கொடுக்
கப்படும், இல்லாதவனிடத்தில் உள்ளதும்
எடுத்துக்கொள்ளப்படும் என்று உங்களுக்குச்

1 மத். 20. 29. மு. மாற். 10. 46. மு.
2 சங். 62. 12: 141. 1
3 17. 19
4 5. 26. அப். 4. 21: 11. 18. கலா. 1. 24
5 யோசு. 6. 26. 1 இரா. 16. 34
6 சங். 139. 1–3
7 5. 30. மத். 9. 11.
8 சங். 41. 1
9 3. 14. யாத். 20. 16: 22. 1. 2 சாமு. 12. 6
10 13. 16. ரோ. 4. 11, 12, 16. கலா. 3. 7
11 எசே. 34. 16. மத். 18. 11. ரோ. 5. 6
12 அப். 1. 6
13 மத். 25. 14. மு. மாற். 13. 34
* மினா=31¼ ரூபாய்
14 யோ. 1. 11: 15. 18
15 16. 10. மத். 25. 21
16 மத். 25. 24
17 2 சாமு. 1. 16. யோபு 15. 6. மத். 12. 37: 22. 12. ரோ. 3. 19
18 ரோ. 2. 4, 5
19 8. 18. மத். 13. 12: 25. 29. மாற். 4. 25

27 சொல்லுகிறேன். அன்றியும் தங்கள்மேல்
நான் ராஜாவாகிறதற்கு மனதில்லாதிருந்தவர்
களாகிய [1]என்னுடைய சத்துருக்களை இங்கே
கொண்டுவந்து, எனக்கு முன்பாக வெட்டிப்
போடுங்கள் என்று சொன்னான் என்றார்.
28 இவைகளை அவர் சொன்னபின்பு எருசலே
முக்குப் புறப்பட்டு, [2]முந்தி நடந்துபோனார்.
29 அவர் ஒலிவமலையென்னப்பட்ட மலையின்
அருகான [3]பெத்பகே பெத்தானியா என்னும்
ஊர்களுக்குச் சமீபித்தபோது, தம்முடைய
30 சீஷரில் இரண்டுபேரை நோக்கி: உங்களு
க்கு எதிரே இருக்கிற கிராமத்துக்குப் போங்
கள், அதிலே பிரவேசிக்கும்போது மனுஷரி
லொருவனும் ஒருக்காலும் ஏறியிராத கழுதை
க்குட்டியைக் கட்டியிருக்கக் காண்பீர்கள்;
31 அதை அவிழ்த்துக்கொண்டுவாருங்கள். அதை
ஏன் அவிழ்க்கிறீர்களென்று யாராவது உங்க
ளிடத்தில் கேட்டால், [4]அது ஆண்டவருக்கு
வேண்டுமென்று சொல்லுங்கள் என்றார்.
32 அனுப்பப்பட்டவர்கள் போய், தங்களுக்கு
33 அவர் சொன்னபடியே கண்டார்கள். கழுதை
க்குட்டியை அவர்கள் அவிழ்க்கும்போது,
அதற்கு உடையவர்கள்: குட்டியை ஏன் அவி
34 ழ்க்கிறீர்கள் என்று கேட்டார்கள். அதற்கு
அவர்கள்: அது ஆண்டவருக்கு வேண்டுமெ
35 ன்று சொல்லி, அதை இயேசுவினிடத்தில்
கொண்டுவந்து, தங்கள் வஸ்திரங்களை அதின்
மேல் போட்டு, [5]இயேசுவை அதின்மேல் ஏற்
36 றினார்கள். அவர் போகையில், [6]அவர்கள் தங்
கள் வஸ்திரங்களை வழியிலே விரித்தார்கள்.
37 அவர் ஒலிவமலையின் அடிவாரத்துக்குச் சமீ
பமாய் வருகையில் திரளான கூட்டமாகிய
சீஷரெல்லாரும் தாங்கள் கண்ட சகல அற்பு
38 தங்களையும் குறித்துச் சந்தோஷப்பட்டு, கர்த்
தருடைய நாமத்தினாலே வருகிற ராஜா [7]ஸ்
தோத்திரிக்கப்பட்டவர், [8]பரலோகத்திலே
சமாதானமும் உன்னதத்திலே மகிமையும்
உண்டாவதாக என்று மிகுந்த சத்தத்தோடே
தேவனைப் புகழ்ந்தார்கள்.
39 அப்பொழுது கூட்டத்திலிருந்த பரிசேய
ரில் சிலர் அவரை நோக்கி: போதகரே, உம்மு
40 டைய சீஷரை அதட்டும் என்றார்கள். அவர்
களுக்கு அவர் பிரதியுத்தரமாக: இவர்கள் பே
சாமலிருந்தால் [9]கல்லுகளே கூப்பிடும் என்று
உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.
41 அவர் சமீபமாய் வந்தபோது நகரத்தைப்
பார்த்து, [10]அதற்காகக் கண்ணீர் விட்டழுது,
42 உனக்குக் கிடைத்த இந்த நாளிலாகிலும் உன்
சமாதானத்துக் கேற்றவைகளை நீ அறிந்திருந்
தாயானால் நலமாயிருக்கும், [11]இப்பொழுதோ
அவைகள் உன் கண்களுக்கு மறைவாயிருக்
43 கிறது. உன்னைச் *சந்திக்குங் காலத்தை [12]நீ
அறியாமற்போனபடியால், [13]உன் சத்துருக்
கள் உன்னைச் சூழ மதில்போட்டு, உன்னை
வளைந்துகொண்டு, எப்பக்கத்திலும் உன்னை
44 நெருக்கி, உன்னையும் உன்னிலுள்ள உன்
பிள்ளைகளையும் [14]தரையாக்கிப்போட்டு, உன்
னிடத்தில் ஒரு கல்லின்மேல் ஒரு கல்லிராத
படிக்குச் செய்யும் நாட்கள் உனக்கு வரும்
என்றார்.
பின்பு அவர் தேவாலயத்தில் பிரவேசித்து, 45
[15]அதிலே விற்கிறவர்களையும் கொள்ளுகிறவர்
களையும் புறம்பே துரத்தத் தொடங்கி: என்னு 46
டைய வீடு ஜெபவீடாயிருக்கிறதென்று எழு
தியிருக்கிறது, [16]நீங்களோ அதைக் கள்ளர்
குகையாக்கினீர்கள் என்றார்.
அவர் நாடோறும் [17]தேவாலயத்தில் உபதே 47
சம் பண்ணிக்கொண்டிருந்தார். பிரதான
ஆசாரியரும் வேதபாரகரும் ஜனத்தின் மூப்ப
ரும் அவரைக் கொலைசெய்ய வகைதேடியும்,
ஜனங்களெல்லாரும் அவருக்குச் செவிகொ 48
டுத்து அவரை [18]அண்டிக்கொண்டிருந்தபடி
யால், அதை இன்னபடி செய்யலாமென்று
வகைகாணாதிருந்தார்கள்.

**20**

அந்நாட்களில் ஒன்றில், [19]அவர் தேவா 1
லயத்திலே ஜனங்களுக்கு உபதேசித்து, சுவி
சேஷத்தைப் பிரசங்கித்தபோது, பிரதான
ஆசாரியரும் வேதபாரகரும் மூப்பரும் அவ
ரிடத்தில் கூடிவந்து: நீர் எந்த அதிகாரத் 2
தினால் இவைகளைச் செய்கிறீர்? [20]இந்த அதி
காரத்தை உமக்குக் கொடுத்தவர் யார்? அதை
எங்களுக்குச் சொல்லும் என்றார்கள். அவர் 3
களுக்கு அவர் பிரதியுத்தரமாக: நானும் உங்க
ளிடத்தில் ஒரு காரியத்தைக் கேட்கிறேன்,
அதை எனக்குச் சொல்லுங்கள். யோவான் 4
கொடுத்த ஸ்நானம் தேவனால் உண்டாயிற்
றோ? மனுஷரால் உண்டாயிற்றோ? என்று
கேட்டார். அவர்கள் தங்களுக்குள்ளே யோ 5
சனைபண்ணி: தேவனால் உண்டாயிற்று என்று
சொல்வோமானால், பின்னை ஏன் அவனை விசு
வாசிக்கவில்லை என்று கேட்பார். மனுஷரால் 6
உண்டாயிற்று என்று சொல்வோமானால்,
[21]ஜனங்களெல்லாரும் யோவானைத் தீர்க்கதரிசி
யென்று எண்ணுகிறபடியினால் நம்மேல் கல்
லெறிவார்கள் என்று சொல்லி: அது யாரால் 7
உண்டாயிற்றோ, எங்களுக்குத் தெரியாது என்
று பிரதியுத்தரம் சொன்னார்கள். அப்பொ 8
ழுது இயேசு: நானும் இன்ன அதிகாரத்தி
னால் இவைகளைச் செய்கிறேனென்று உங்க
ளுக்குச் சொல்லேன் என்றார்.
பின்பு அவர் ஜனங்களுக்குச் சொல்லத்தொ 9
டங்கின உவமையாவது: [22]ஒரு மனுஷன் ஒரு
திராட்சத்தோட்டத்தை உண்டாக்கி, அதைத்
தோட்டக்காரருக்குக் குத்தகையாக விட்டு,
நெடுநாளாகப் புறத்தேசத்துக்குப் போயிருந்
தான். அந்தத் தோட்டக்காரர் திராட்சத்தோட் 10
டத்தின் [23]கனிகளில் தன் பாகத்தைக் கொடுத்
தனுப்பும்படி, பருவகாலத்திலே அவர்களிடத்
தில் ஒரு ஊழியக்காரனை அனுப்பினான். அந்
தத் தோட்டக்காரர் அவனை அடித்து, வெறு
மையாக அனுப்பிவிட்டார்கள். பின்பு அவன் 11
வேறொரு ஊழியக்காரனை அனுப்பினான்;
அவனையும் அவர்கள் அடித்து, அவமானப்படு
த்தி, வெறுமையாக அனுப்பிவிட்டார்கள்.

1 சங். 2. 4, 5, 9: 21. 8, 9. ஏசா. 66. 6, 14. நாகூம் 1. 2, 8. எபி. 10. 13
2 மாற். 10. 32
3 மத். 21. 1. முத. மாற். 11. 1. முத. யோ. 12. 12 முத.
4 சங். 50. 10
5 2 இரா. 9. 13. யோ. 12. 14
6 மத். 21. 8
7 13. 35. சங். 118. 26
8 2. 14. ரோ. 5. 1. எபே. 2. 14
9 ஆப. 2. 11. மத். 3. 9
10 சங். 119. 136. எரே. 9. 1: 13. 17: 17. 16. யோ. 11. 35
11 சங். 95. 7, 8. எபி. 3. 7, 13, 15
* விசாரிக்கும்
12 புல. 1. 8. 1 பே. 2. 12
13 ஏசா. 29. 2, 3. எரே. 6. 3, 6
14 13. 34, 35. 1 இரா. 9. 7, 8. மீகா. 3. 12. மத். 23. 37, 38: 24. 2. மாற். 13. 2
15 மத். 21. 12, 13. மாற். 11. 15–17. யோ. 2. 15, 17
16 ஏசா. 56. 7. எரே. 7. 11
17 யோ. 18. 20
18 அப். 16. 14
19 மத். 21. 23. முத. மாற். 11. 27. முத.
20 அப். 4. 7–10: 7. 27
21 மத். 14. 5: 21. 26
22 உன்ன. 8. 11, 12. ஏசா. 5. 1–7. மத். 21. 33. முத. மாற். 12. 1. முத.
23 யோ. 15. 16. ரோ. 7. 4

12 அவன் மூன்றாந்தரமும் ஒரு ஊழியக்காரனை
அனுப்பினான்; அவனையும் அவர்கள் காயப்படு
13 த்தி, துரத்திவிட்டார்கள். அப்பொழுது திராட்
சத்தோட்டத்தின் எஜமான்: நான் என்ன செய்
யலாம், எனக்குப் பிரியமான குமாரனை அனுப்
பினால், அவனையாகிலும் கண்டு அஞ்சுவார்
கள் என்று எண்ணி, அவனை அனுப்பினான்.
14 தோட்டக்காரர் அவனைக்கண்டபோது: [1]இவன்
சுதந்தரவாளி, சுதந்தரம் நம்முடையதாகும்படி
க்கு [2]இவனைக் கொல்லுவோம் வாருங்கள்
என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொ
15 ண்டு, அவனைத் திராட்சத்தோட்டத்திற்குப்
புறம்பே தள்ளி, கொன்றுபோட்டார்கள். இப்
படியிருக்க, திராட்சத்தோட்டத்தின் எஜமான்
16 அவர்களை என்ன செய்வான்? அவன் வந்து
அந்தத் தோட்டக்காரரைச் சங்கரித்து, [3]திராட்
சத்தோட்டத்தை வேறு தோட்டக்காரரிடத்
தில் கொடுப்பான் அல்லவா என்றார். அவர்
கள் அதைக்கேட்டு, அப்படியாகாதிருப்பதாக
17 என்றார்கள். அப்பொழுது அவர் அவர்களைப்
பார்த்து: [4]வீடு கட்டுகிறவர்கள் ஆகாதென்று
தள்ளின கல்லே, மூலைக்குத் தலைக்கல்லாயிற்று
என்று எழுதியிருக்கிற வேதவாக்கியத்தின்
18 கருத்தென்ன? அந்தக் கல்லின்மேல் விழு
கிறவன் எவனோ அவன் நொறுங்கிப்போவான்,
[5]அது எவன்மேல் விழுமோ அவனை நசுக்கிப்
போடும் என்றார்.
19 பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் தங்க
ளைக்குறித்து இந்த உவமையைச் சொன்னா
ரென்று அறிந்து, அந்நேரத்திலே அவரைப்
பிடிக்க வகைதேடியும் ஜனங்களுக்குப் பயந்தி
20 ருந்தார்கள். அவர்கள் சமயம்பார்த்து, [6]தே
சாதிபதியின் ஆளுகைக்கும் அதிகாரத்துக்கும்
அவரை ஒப்புக்கொடுக்கும்படி அவருடைய
பேச்சிலே குற்றங்கண்டு பிடிக்கலாமென்று,
தங்களை உண்மையுள்ளவர்களாய்க் காண்பிக்
கிற வேவுகாரரை அவரிடத்தில் அனுப்பினார்
21 கள். அவர்கள் வந்து: போதகரே, நீர் நிதா
னமாய்ப் பேசி உபதேசிக்கிறீரென்றும், முக
தாட்சணியமில்லாமல் தேவனுடைய மார்க்கத்
தைச் சத்தியமாய்ப் போதிக்கிறீரென்றும் அறி
22 ந்திருக்கிறோம். இராயனுக்கு வரிகொடுக்கி
றது நியாயமோ அல்லவோ, எங்களுக்குச்
23 சொல்லும் என்று கேட்டார்கள். அவர்களு
டைய தந்திரத்தை அவர் அறிந்து, நீங்கள்
24 என்னை ஏன் சோதிக்கிறீர்கள்? ஒரு [7]பணத்
தை எனக்குக் காண்பியுங்கள். இதிலிருக்கிற
சொரூபமும் மேலெழுத்தும் யாருடையது
என்று கேட்டார். அதற்கு அவர்கள்: இராய
25 னுடையது என்றார்கள். அதற்கு அவர்: அப்
படியானால், [8]இராயனுடையதை இராயனுக்
கும், தேவனுடையதை தேவனுக்கும் செலுத்
26 துங்கள் என்றார். அவர்கள் அவரை ஜனங்க
ளுக்கு முன்பாகப் பேச்சிலே குற்றம் பிடிக்
கக்கூடாமல், அவர் சொன்ன உத்தரவைக்
குறித்து ஆச்சரியப்பட்டு, மவுனமாயிருந்
தார்கள்.

உயிர்த்தெழுதல் இல்லையென்று [9]சாதிக்கிற 27
சதுசேயரில் சிலர் அவரிடத்தில் வந்து: போ 28
தகரே, ஒருவன் மனைவியையுடையவனாயிரு
ந்து பிள்ளையில்லாமல் இறந்துபோனால், அவ
னுடைய சகோதரன் அவன் மனைவியை விவா
கம்பண்ணி, தன் சகோதரனுக்குச் சந்தான
முண்டாக்கவேண்டும் என்று மோசே எங்க
ளுக்கு எழுதிவைத்திருக்கிறாரே. சகோதரர் 29
ஏழுபேரிருந்தார்கள், அவர்களில் மூத்தவன்
ஒரு பெண்ணை விவாகம்பண்ணி, பிள்ளையில்
லாமல் இறந்துபோனான். பின்பு இரண்டாஞ் 30
சகோதரன் அவளை விவாகம்பண்ணி, அவனும்
பிள்ளையில்லாமல் இறந்துபோனான். மூன் 31
றாஞ் சகோதரனும் அவளை விவாகம்பண்ணி
னான். அப்படியே ஏழுபேரும் அவளை விவா
கம்பண்ணி, பிள்ளையில்லாமல் இறந்துபோ
னார்கள். எல்லாருக்கும் பின்பு அந்த ஸ்திரீ 32
யும் இறந்துபோனாள். இவ்விதமாய் ஏழுபே 33
ரும் அவளை விவாகம்பண்ணியிருக்க, உயிர்த்
தெழுதலில் அவர்களில் எவனுக்கு அவள்
மனைவியாயிருப்பாள் என்று கேட்டார்கள்.
இயேசு அவர்களுக்குப் பிரதியுத்தரமாக: இந் 34
தப் பிரபஞ்சத்தின் பிள்ளைகள் பெண்கொண்
டும் பெண்கொடுத்தும் வருகிறார்கள். மறுமை 35
யையும் மரித்தோரிலிருந் தெழுந்திருக்குதலை
யும் அடையப் [10]பாத்திரராக எண்ணப்படுகிற
வர்களோ பெண் கொள்வதுமில்லை பெண்
கொடுப்பதுமில்லை. அவர்கள் இனி [11]மரிக்க 36
வுமாட்டார்கள்; [12]அவர்கள் உயிர்த்தெழுதலின்
பிள்ளைகளானபடியால் தேவதூதருக்கு ஒப்பா
னவர்களுமாய், [13]தேவனுக்குப் பிள்ளைகளுமா
யிருப்பார்கள். அன்றியும் மரித்தோர் எழுந் 37
திருப்பார்களென்பதை மோசேயும் [14]முட்செ
டியைப்பற்றிய வாசகத்தில் காண்பித்திருக்கி
றார். எப்படியெனில், கர்த்தரை ஆபிரகாமின்
தேவனென்றும் ஈசாக்கின் தேவனென்றும்
யாக்கோபின் தேவனென்றும் சொல்லியிருக்
கிறார். அவர் மரித்தோரின் தேவனாயிராமல், 38
ஜீவனுள்ளோரின் தேவனாயிருக்கிறார்; [15]எல்
லாரும் *அவருக்குப் பிழைத்திருக்கிறார்களே
என்றார். அப்பொழுது வேதபாரகரில் சிலர் 39
அதைக்கேட்டு: போதகரே, நன்றாய்ச் சொன்
னீர் என்றார்கள். அதன்பின்பு அவர்கள் 40
அவரிடத்தில் வேறொன்றுங் கேட்கத் துணிய
வில்லை.

அவர் அவர்களை நோக்கி: [16]கிறிஸ்து தாவீ 41
தின் குமாரனென்று எப்படிச் சொல்லுகிறார்
கள். நான் உம்முடைய சத்துருக்களை உமக் 42
குப் பாதபடியாக்கிப் போடும்வரைக்கும் நீர்
என்னுடைய வலதுபாரிசத்தில் உட்காரும்
என்று, கர்த்தர் என் ஆண்டவருடனே சொன் 43
னார் என்று தாவீது தானே [17]சங்கீத புஸ்தகத்
தில் சொல்லுகிறானே. தாவீது அவரை ஆண் 44
டவரென்று சொல்லியிருக்க, அவனுக்கு அவர்
குமாரனாயிருப்பது எப்படி என்றார்.

பின்பு ஜனங்களெல்லாரும் கேட்கையில் 45
[18]அவர் தம்முடைய சீஷரை நோக்கி: நீண்ட 46

1 சங். 2. 8. ரோ. 8. 17. எபி. 1. 2
2 மத். 27. 21-25. அப். 2. 23; 3. 15
3 செ. 9. 36, 37
4 சங். 118. 22. மத். 21. 42, 44
5 தானி. 2. 34, 35
6 மத். 22. 15. மாற். 12. 13
7 மத். 18. 28. காண்க
8 ரோ. 13. 7
9 மத். 22. 23. மாற். 12. 18. அப். 23. 6, 8
10 21. 36. வெளி. 3. 4
11 வெளி. 21. 4
12 1 கொரி. 15. 49-52. 1 யோவா. 3. 2
13 ரோ. 8. 17
14 யாத். 3. 2, 6
15 ரோ. 6. 10; 14. 8, 9
* அவருக்குள் = அவருக்காக
16 மத். 22. 42. மாற். 12. 35.
17 சங். 110. 1. அப். 2. 34
18 மத். 23. 1. மாற். 12. 38. 1 தெச. 5. 20

அங்கிகளைத் தரித்துக்கொண்டு திரியவும், [1]சந்
தை வெளிகளில் வந்தனங்களை அடையவும்,
ஜெப ஆலயங்களில் முதன்மையான ஆசனங்
களில் உட்காரவும், விருந்துகளில் முதன்மை
47 யான இடங்களில் இருக்கவும் விரும்பி, வித
வைகளின் வீடுகளைப் பட்சித்து, [2]பார்வைக்கு
நீண்ட ஜெபம் பண்ணுகிற வேதபாரகரைக்
குறித்து எச்சரிக்கையாயிருங்கள், [3]அவர்கள்
அதிக ஆக்கினையை அடைவார்கள் என்றார்.

21 அவர் கண்ணேறிட்டுப் பார்த்தபோது,
[4]ஐசுவரியவான்கள் காணிக்கைப் பெட்டியி
லே தங்கள் காணிக்கைகளைப் போடுகிறதைக்
2 கண்டார். ஒரு ஏழை விதவை அதிலே இரண்
3 டு காசைப் போடுகிறதையும் கண்டு: இந்த
ஏழை விதவை மற்றெல்லாரைப்பார்க்கிலும்
[5]அதிகமாகப் போட்டாள் என்று மெய்யாகவே
4 உங்களுக்குச் சொல்லுகிறேன், அவர்களெல்
லாரும் தங்கள் பரிபூரணத்திலிருந்தெடுத்து
தேவனுக்கென்று காணிக்கை போட்டார்கள்;
இவளோ தன் வறுமையிலிருந்து தன் ஜீவ
னத்துக்கு உண்டாயிருந்ததெல்லாம் போட்டு
விட்டாள் என்றார்.

5 பின்பு, [6]சிறந்த கற்களினாலும் காணிக்கை
களினாலும் தேவாலயம் அலங்கரிக்கப்பட்டி
ருக்கிறதைக் குறித்து சிலர் சொன்னபோது,
6 அவர்: [7]நீங்கள் பார்க்கிற இவைகளில் ஒரு
கல் மற்றொரு கல்லின்மேலிராதபடிக்கு எல்
லாம் இடிக்கப்படும் நாட்கள் வரும் என்றார்.
7 அவர்கள் அவரை நோக்கி: போதகரே, இவை
கள் எப்பொழுது சம்பவிக்கும், இவைகள் சம்
பவிக்கும் காலத்துக்கு அடையாளம் என்ன
8 என்று கேட்டார்கள். அதற்கு அவர்: [8]நீங்
கள் வஞ்சிக்கப்படாதபடிக்கு எச்சரிக்கையா
யிருங்கள்; ஏனெனில் [9]அநேகர் வந்து என்
நாமத்தைத் தரித்துக்கொண்டு: நான்தான்
கிறிஸ்து என்றும், காலம் சமீபித்தது என்
றும் சொல்லுவார்கள்; அவர்களைப் பின்பற்றா
9 திருங்கள். யுத்தங்களையும் கலகங்களையும்
குறித்து நீங்கள் கேள்விப்படும்போது, [10]பயப்
படாதிருங்கள்; இவைகள் முன்னதாகச் சம்ப
விக்கவேண்டியதே; ஆனாலும் முடிவு உடனே
வராது என்றார்.

10 அப்பொழுது அவர் அவர்களை நோக்கி:
[11]ஜனத்துக்கு விரோதமாய் ஜனமும், ராஜ்யத்
துக்கு விரோதமாய் ராஜ்யமும் எழும்பும்.
11 பல இடங்களில் மகா பூமியதிர்ச்சிகளும்,
பஞ்சங்களும், கொள்ளைநோய்களும் உண்
டாகும்; வானத்திலிருந்து பயங்கரமான தோ
ற்றங்களும் பெரிய அடையாளங்களும் உண்
12 டாகும். இவைகளெல்லாம் நடப்பதற்கு
முன்னே என் நாமத்தினிமித்தம், [12]அவர்கள்
உங்களைப் பிடித்து, ஜெபஆலயங்களுக்கும்
சிறைச்சாலைகளுக்கும் ஒப்புக்கொடுத்து, ரா
ஜாக்கள் முன்பாகவும் அதிபதிகள் முன்பாக
வும் உங்களை இழுத்துத் துன்பப்படுத்துவார்
13 கள். ஆனாலும் [13]அது உங்களுக்குச் சாட்சி
14 யாவதற்கு ஏதுவாயிருக்கும். ஆகையால்
என்ன உத்தரவு சொல்லுவோமென்று [14]கவ
லைப்படாதிருக்கும்படி உங்கள் மனதிலே நிர்
ணயம் பண்ணிக்கொள்ளுங்கள். உங்களை 15
விரோதிக்கிறவர்கள் ஒருவரும் [15]எதிர்பேச
வும் எதிர்நிற்கவும் கூடாத வாக்கையும் ஞா
னத்தையும் நான் உங்களுக்குக் கொடுப்பேன்.
பெற்றாராலும், [16]சகோதரராலும், பந்துஜனங் 16
களாலும், சிநேகிதராலும் காட்டிக்கொடுக்கப்
படுவீர்கள்; [17]உங்களில் சிலரைக் கொலைசெய்
வார்கள். என் நாமத்தினிமித்தம் [18]எல்லாரா 17
லும் பகைக்கப்படுவீர்கள். ஆனாலும் [19]உங் 18
கள் தலைமயிரில் ஒன்றாகிலும் அழியாது.
உங்கள் பொறுமையினால் [20]உங்கள் ஆத்து 19
மாக்களைக் காத்துக்கொள்ளுங்கள்.

எருசலேம் சேனைகளால் சூழப்பட்டிருப்ப 20
தை நீங்கள் காணும்போது, [21]அதின் அழிவு
சமீபமாயிற்றென்று அறியுங்கள். அப்பொ 21
ழுது யூதேயாவிலிருக்கிறவர்கள் மலைகளுக்கு
ஓடிப்போகவும், எருசலேமிலிருக்கிறவர்கள்
வெளியே புறப்படவும், நாட்டுப்புறங்களிலி
ருக்கிறவர்கள் நகரத்தில் பிரவேசியாமலிருக்
கவும் கடவர்கள். எழுதியிருக்கிற யாவும் 22
[22]நிறைவேறும்படி, நீதியைச் சரிக்கட்டும் நாட்
கள் அவைகளே. அந்நாட்களில் [23]கர்ப்பவதிக 23
ளுக்கும் பால்கொடுக்கிறவர்களுக்கும் ஐயோ,
பூமியின்மேல் மிகுந்த இடுக்கணும் இந்த
ஜனத்தின்மேல் கோபாக்கினையும் உண்டா
கும். பட்டயக்கருக்கினாலே விழுவார்கள், 24
சகல புறஜாதிகளுக்குள்ளும் சிறைப்பட்டுப்
போவார்கள்; [24]புறஜாதியாரின் காலம் நிறை
வேறும்வரைக்கும் எருசலேம் புறஜாதியாரால்
மிதிக்கப்படும். சூரியனிலும் சந்திரனிலும் 25
நட்சத்திரங்களிலும் அடையாளங்கள் தோன்
றும்; [25]பூமியின்மேலுள்ள ஜனங்களுக்குத் தத்
தளிப்பும் இடுக்கணும் உண்டாகும்; சமுத்திர
மும் அலைகளும் முழக்கமாயிருக்கும். வானத் 26
தின் சத்துவங்கள் அசைக்கப்படும்; ஆதலால்
பூமியின்மேல் வரும் ஆபத்துகளுக்குப் பயந்து
எதிர்பார்த்திருக்கிறதினால் மனுஷருடைய
இருதயம் சோர்ந்துபோம். அப்பொழுது 27
[26]மனுஷகுமாரன் மிகுந்த வல்லமையோடும்
மகிமையோடும் மேகத்தின்மேல் வருகிறதைக்
காண்பார்கள். இவைகள் சம்பவிக்கத் தொ 28
டங்கும்போது, [27]உங்கள் மீட்பு சமீபமாயி
ருப்பதால், நீங்கள் நிமிர்ந்து பார்த்து, உங்கள்
தலைகளை உயர்த்துங்கள் என்றார்.

அன்றியும் அவர்களுக்கு ஒரு உவமையைச் 29
சொன்னார்: [28]அத்திமரத்தையும் மற்றெல்லா
மரங்களையும் பாருங்கள். அவைகள் தளிர்க் 30
கிறதை நீங்கள் காணும்போது வசந்தகாலம்
சமீபமாயிற்றென்று அறிகிறீர்கள். அப்ப 31
டியே இவைகள் சம்பவிக்கிறதை நீங்கள்
காணும்போது, தேவனுடைய ராஜ்யம் சமீப
மாயிற்றென்று அறியுங்கள். இவையெல்லாம் 32
சம்பவிக்குமுன் இந்தச் சந்ததி ஒழிந்துபோ
காதென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்
லுகிறேன். வானமும் பூமியும் ஒழிந்து 33

1 11. 43. மாற். 12. 38. ழ
2 ஏசா. 10. 2. மத். 23. 14. 1 தெச. 2. 5. 2 தீமோ. 3. 6
3 யாக். 3. 1
4 மாற். 12. 41
5 2 கொ. 8. 12
6 மத். 24. 1. ழ. மாற். 13. 1. ழ
7 19. 44. ழ
8 மத். 24. 4. மாற். 13. 5. எபே. 5. 6. 2 தெச. 2. 3, 9, 10. 1 யோ. 4. 1
9 வெளி. 1. 3
10 தீத். 3. 25, 26
11 ஆகா. 2. 22. மத். 24. 7
12 மாற். 13. 9. அப். 4. 3: 5. 18: 12. 4: 16. 24: 25. 23. வெளி. 2. 10
13 பிலி. 1. 28. 2 தெச. 1. 5
14 12. 11. மத். 10. 19
15 அப். 6. 10
16 மீகா. 7. 5, 6. மாற். 13. 12
17 அப். 7: 59: 12. 2: 26. 10
18 மத். 10. 22. யோ. 17. 14
19 யோ. 17. 14
20 ரோ. 5. 3. எபி. 10. 36. யாக். 1. 4.
21 மத். 24. 15. மாற். 13. 14
22 உபா. 28. 25, 48. தானி. 9. 26, 27. சகரி. 11. 6: 14. 1, 2
23 புல. 4. 10. மத். 24. 19
24 தானி. 12. 7. ரோ. 11. 25. வெளி. 11. 2
25 தானி. 12. 1. மத். 24. 29. மாற். 13. 24. 2 பே. 3. 10, 12
26 மத். 24. 30. வெளி. 1. 7: 14. 14
27 ரோ. 8. 19, 23
28 மத். 24. 32. மாற். 13. 28

போம், [1]என் வார்த்தைகளோ ஒழிந்துபோ
வதில்லை.
34 உங்கள் இருதயங்கள் பெருந்திண்டியி
லும் வெறியினாலும் லவுகீக கவலைகளினாலும்
பாரமடையாதபடிக்கும், [2]நீங்கள் நினையாத
நேரத்தில் அந்த நாள் உங்கள்மேல் வராதபடிக்
35 கும் எச்சரிக்கையாயிருங்கள். பூமியிலெங்கும்
குடியிருக்கிற அனைவர்மேலும் அது ஒரு
36 [3]கண்ணியைப்போல வரும். ஆகையால்
இனிச் சம்பவிக்கப்போகிற இவைகளுக்கெல்
லாம் நீங்கள் தப்பி, மனுஷகுமாரனுக்கு முன்
பாக நிற்கப் பாத்திரவான்களாக எண்ணப்ப
டுவதற்கு, [4]எப்பொழுதும் ஜெபம்பண்ணி
விழித்திருங்கள் என்றார்.
37 அவர் பகற்காலங்களில் தேவாலயத்திலே
உபதேசம்பண்ணிக்கொண்டிருந்து, இராக்கா
லங்களில் வெளியேபோய், [5]ஒலிவமலை என்
38 னப்பட்ட மலையிலே தங்கிவந்தார். ஜனங்க
ளெல்லாரும் அவருடைய உபதேசத்தைக்
கேட்கும்படி அதிகாலமே தேவாலயத்தில்
அவரிடத்திற்கு வருவார்கள்.

**22** பஸ்கா என்னப்பட்ட [6]புளிப்பில்லாத
2 அப்பப்பண்டிகை சமீபமாயிற்று. அப்பொ
ழுது பிரதான ஆசாரியரும் வேதபாரகரும்
அவரைக் கொலைசெய்யும்படி யோசித்து,
[7]ஜனங்களுக்குப் பயப்பட்டபடியினால், எவ்
விதமாய் அப்படிச் செய்யலாமென்று வகை
தேடினார்கள்.
3 அப்பொழுது பன்னிருவரில் ஒருவனா
கிய ஸ்காரியோத்தென்னும் மறுபேர்கொண்ட
4 [8]யூதாசுக்குள் சாத்தான் புகுந்தான். அவன்
பிரதான ஆசாரியர்களிடத்திலும் சேனைத்தலை
வர்களிடத்திலும் போய், அவரைக் காட்டிக்
கொடுக்கும் வகையைக்குறித்து அவர்களோ
5 டே ஆலோசனை பண்ணினான். அவர்கள்
சந்தோஷப்பட்டு, [9]அவனுக்குப் பணங்கொ
6 டுக்க உடன்பட்டார்கள். அதற்கு அவன்
சம்மதித்து, ஜனக்கூட்டமில்லாத வேளையில்
அவரை அவர்களுக்குக் காட்டிக்கொடுக்கும்
படி சமயந்தேடினான்.
7 பஸ்காவைப் பலியிடவேண்டிய [10]புளிப்
8 பில்லாத அப்பப்பண்டிகைநாள் வந்தது. அப்
பொழுது அவர் பேதுருவையும் யோவானை
யும் அழைத்து: நாம் பஸ்காவைப் புசிக்கும்ப
டிக்கு நீங்கள் போய், அதை நமக்கு ஆயத்தம்
9 பண்ணுங்கள் என்றார். அதற்கு அவர்கள்:
நாங்கள் அதை எங்கே ஆயத்தம்பண்ணும்படி
10 சித்தமாயிருக்கிறீர் என்று கேட்டார்கள். அத
ற்கு அவர்: நீங்கள் நகரத்தில் பிரவேசிக்கும்
போது, தண்ணீர்க்குடம் சுமந்துவருகிற ஒரு
மனுஷன் உங்களுக்கு எதிர்ப்படுவான்; நீங்
கள் அவனுக்குப் பின்சென்று, அவன் போ
11 கும் வீட்டிற்குள் நீங்களும் போய், அந்த
வீட்டெஜமானை நோக்கி: நான் என் சீஷ
ரோடேகூடப் பஸ்காவைப் புசிக்கிறதற்குத்
தகுதியான இடம் எங்கே என்று போதகர்
உம்மிடத்தில் கேட்கச் சொன்னார் என்று
சொல்லுங்கள். அவன் கம்பள முதலானவை 12
கள் விரித்திருக்கிற மேல்வீட்டிலுள்ள ஒரு
பெரிய அறையை உங்களுக்குக் காண்பிப்
பான்; அங்கே ஆயத்தம்பண்ணுங்கள் என்று
சொல்லி அனுப்பினார். அவர்கள் போய், 13
தங்களிடத்தில் அவர் சொன்னபடியே கண்டு,
பஸ்காவை ஆயத்தம்பண்ணினார்கள்.
வேளைவந்தபோது, [11]அவரும் அவருடனே 14
கூடப் பன்னிரண்டு அப்போஸ்தலரும் பந்தி
யிருந்தார்கள். அப்பொழுது அவர் அவர் 15
களை நோக்கி: நான் பாடுபடுகிறதற்கு முன்
னே உங்களுடனேகூட இந்தப் பஸ்காவைப்
புசிக்க மிகவும் *ஆசையாயிருந்தேன். தேவ 16
னுடைய ராஜ்யத்திலே இது நிறைவேறுமள
வும் [12]நான் இனி இதைப் புசிப்பதில்
லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்
என்று சொல்லி, அவர் பாத்திரத்தை எடு 17
த்து, ஸ்தோத்திரம்பண்ணி: நீங்கள் இதை
வாங்கி, உங்களுக்குள்ளே பங்கிட்டுக்கொள்ளு
ங்கள்; தேவனுடைய ராஜ்யம் வருமளவும் 18
[13]நான் திராட்சப்பழரசத்தைப் பானம்பண்ணு
வதில்லையென்று உங்களுக்குச் சொல்லுகி
றேன் என்றார். பின்பு அவர் அப்பத்தை 19
எடுத்து, [14]ஸ்தோத்திரம்பண்ணி, அதைப்
பிட்டு, அவர்களுக்குக் கொடுத்து: இது உங்க
ளுக்காகக் கொடுக்கப்படுகிற என்னுடைய சரீ
ரமாயிருக்கிறது; என்னை †நினைவுகூரும்படி
இதைச் செய்யுங்கள் என்றார். போஜனம் 20
பண்ணினபின்பு அவர் அந்தப்படியே பாத்தி
ரத்தையும் கொடுத்து: [15]இந்தப் பாத்திரம் உங்க
ளுக்காகச் சிந்தப்படுகிற என்னுடைய இரத்
தத்தினாலாகிய புதிய உடன்படிக்கையாயிருக்
கிறது என்றார். பின்பு: இதோ, [16]என்னைக் 21
காட்டிக்கொடுக்கிறவனுடைய கை என்னு
டனேகூடப் பந்தியிலிருக்கிறது. தீர்மானிக் 22
கப்பட்டபடியே மனுஷகுமாரன் போகிறார்,
[17]ஆனாலும் அவரைக் காட்டிக்கொடுக்கிற மனு
ஷனுக்கு ஐயோ என்றார். அப்பொழுது 23
அவர்கள் நம்மில் யார் அப்படிச் செய்வான்
என்று [18]தங்களுக்குள்ளே விசாரிக்கத் தொ
டங்கினார்கள்.
அன்றியும் தங்களில் எவன் பெரியவனாயி 24
ருப்பான் என்று அவர்களுக்குள்ளே வாக்கு
வாதம் உண்டாயிற்று. அவர் அவர்களை 25
நோக்கி: [19]புறஜாதியாரின் ராஜாக்கள் அவர்
களை ஆளுகிறார்கள்; அவர்கள்மேல் அதிகாரம்
செலுத்துகிறவர்களும் உபகாரிகள் என்னப்ப
டுகிறார்கள். உங்களுக்குள்ளே அப்படியிருக் 26
கக்கூடாது; [20]உங்களில் பெரியவன் சிறியவ
னைப்போலவும், தலைவன் பணிவிடைக்கார
னைப்போலவும் இருக்கக்கடவன். பந்தியி 27
ருக்கிறவனோ, பணிவிடை செய்கிறவனோ,
எவன் பெரியவன்? பந்தியிருக்கிறவன் அல்ல
வா? அப்படியிருந்தும், [21]நான் உங்கள் நடுவி
லே பணிவிடைக்காரனைப்போல் இருக்கி
றேன். மேலும் எனக்கு நேரிட்ட [22]சோத 28
னைகளில் என்னோடேகூட நிலைத்திருந்தவர்

1 ஏசா. 40. 8; 51. 6. மத். 24. 35
2 ரோ. 28.1–3. ரோ. 13.12,13. 1தெச. 5. 6–8. 1 பே. 4. 7
3 1 தெச. 5. 2. 2 பே. 3. 10. வெளி. 16. 15
4 மத். 24. 42; 25. 13. மாற். 13. 33. எபே. 6. 18
5 யோ. 8. 1, 2
6 மத். 26. 2. மாற். 14. 1. ஞ
7 சங். 2. 2. யோ. 11. 47. அப். 4. 27, 28
8 மத். 26. 14. மாற். 14. 10. ஞ. யோ. 13. 2, 27
9 சகரி. 11. 12
10 யாத். 12. அதி. மத். 26. 17. மாற். 14. 12
11 மத். 26. 20. மாற். 14. 17
* வாஞ்சையாய் வாஞ்சித்தேன்
12 14. 15. அப். 10. 41. 1 கொ. 5. 7, 8. வெளி. 19. 9
13 மத். 26. 29. மாற். 14. 25
14 மத். 26. 26. மாற். 14. 22. 1 கொ. 10. 16; 11. 24. ஞ
† 12. 14. காண்க
15 1 கொ. 10. 16
16 சங். 41. 9. யோ. 13. 21, 26
17 மத். 26. 24. மாற். 14. 18. அப். 2. 23; 4. 28. 1 கொ. 15. 3
18 மத். 26. 22. யோ. 13. 22, 25
19 மத். 20. 25. ஞ. மாற். 10. 42
20 1 பே. 5. 3. 2 கொ. 9, 10. வச
21 யோ. 13. 13, 14. பிலி. 2. 7
22 எபி. 4. 15

29 கள் நீங்களே. ஆகையால், என் பிதா என
க்கு ஒரு ராஜ்யத்தை ஏற்படுத்தினதுபோல,
30 [1]நானும் உங்களுக்கு ஏற்படுத்துகிறேன். நீங்
கள் என் ராஜ்யத்திலே என் பந்தியில் போஜ
னபானம்பண்ணி, இஸ்ரவேலின் பன்னி
ரண்டு கோத்திரங்களையும் நியாயந்தீர்க்கிறவர்
களாய்ச் சிங்காசனங்களின்மேல் உட்காரு
31 வீர்கள் என்றார். பின்னும் கர்த்தர்: சீமோனே,
சீமோனே, இதோ, [2]கோதுமையைச் சுளகி
னால் புடைக்கிறதுபோலச் சாத்தான் உங்க
ளைப் புடைக்கிறதற்கு உத்தரவு கேட்டுக்
32 கொண்டான். நானோ உன் விசுவாசம்
ஒழிந்துபோகாதபடிக்கு [3]உனக்காக வேண்
டிக்கொண்டேன்; [4]நீ குணப்பட்டபின்பு
உன் சகோதரரை ஸ்திரப்படுத்து என்றார்.
33 அதற்கு அவன்: ஆண்டவரே, காவலிலும்
சாவிலும் உம்மைப் பின்பற்றிவர, ஆயத்தமா
34 யிருக்கிறேன் என்றான். அவர் அவனை
நோக்கி: பேதுருவே, [5]இன்றைக்குச் சேவல்
கூவுகிறதற்கு முன்னே நீ என்னை அறிந்தி
ருக்கிறதை மூன்றுதரம் மறுதலிப்பாய் என்று
உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.
35 பின்னும் அவர் அவர்களை நோக்கி: [6]நான்
உங்களைப் பணப்பையும் சாமான்பையும் பாத
ரட்சைகளும் இல்லாமல் அனுப்பினபோது,
ஏதாகிலும் உங்களுக்குக் குறைவாயிருந்ததா
என்றார். அவர்கள், ஒன்றும் குறைவாயிருந்த
36 தில்லை என்றார்கள். அதற்கு அவர்: இப்
பொழுதோ பணப்பையும் சாமான்பையும்
உடையவன் அவைகளை எடுத்துக்கொள்ளக்
கடவன்; பட்டயம் இல்லாதவன் தன் வஸ்தி
ரத்தை விற்று ஒன்றைக் கொள்ளக்கடவன்.
37 அக்கிரமக்காரரில் ஒருவனாக எண்ணப்பட்
டார் என்று [7]எழுதியிருக்கிற வாக்கியம் என்
னிடத்தில் நிறைவேற வேண்டியதென்று
உங்களுக்குச் சொல்லுகிறேன். என்னைப்பற்
றிய காரியங்கள் முடிவுபெறுங் காலம் வந்தி
38 ருக்கிறது என்றார். அதற்கு அவர்கள்: ஆண்
டவரே, இதோ, இங்கே இரண்டு பட்டயம்
இருக்கிறது என்றார்கள். அவர்: போதும்
என்றார்.
39 பின்பு அவர் புறப்பட்டு, [8]வழக்கத்தின்படி
யே ஒலிவமலைக்குப் போனார்; அவருடைய
சீஷரும் அவரோடேகூடப் போனார்கள்.
40 அவ்விடத்தில் சேர்ந்தபொழுது அவர் அவர்
களை நோக்கி: [9]நீங்கள் சோதனைக்குட்படாத
படிக்கு ஜெபம்பண்ணுங்கள் என்று சொ
41 ல்லி, அவர்களை விட்டுக் கல்லெறிதூரம்
42 அப்புறம் போய், [10]முழங்கால்படியிட்டு: பிதா
வே, உமக்குச் சித்தமானால் இந்தப் பாத்திரம்
என்னைவிட்டு நீங்கும்படி செய்யும்; [11]ஆயி
னும் என்னுடைய சித்தத்தின்படியல்ல, உம்
முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவது
43 என்று ஜெபம்பண்ணினார். அப்பொழுது
வானத்திலிருந்து [12]ஒரு தூதன் தோன்றி, அவ
44 ரைப் பலப்படுத்தினான். அவர் மிகவும் வியா
குலப்பட்டு, [13]அதிக ஊக்கத்தோடே ஜெபம்
பண்ணினார். அவருடைய வேர்வை இரத்
தத்தின் பெருந்துளிகளாய்த் தரையிலே விழு
ந்தது. அவர் ஜெபம்பண்ணி முடித்து, எழுந் 45
திருந்து, தம்முடைய சீஷரிடத்தில் வந்து,
அவர்கள் துக்கத்தினாலே நித்திரை பண்ணுகிற
தைக் கண்டு: நீங்கள் நித்திரை பண்ணுகிற 46
தென்ன? [14]சோதனைக்குட்படாதபடிக்கு, எழு
ந்திருந்து ஜெபம்பண்ணுங்கள் என்றார்.
அவர் அப்படிப் பேசுகையில் [15]ஜனங்கள் 47
கூட்டமாய்வந்தார்கள். அவர்களுக்கு முன்னே
பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ் என்பவ
னும் வந்து, இயேசுவை முத்தஞ்செய்யும்படி
அவரிடத்தில் சேர்ந்தான். இயேசு அவனை 48
நோக்கி: யூதாசே, முத்தத்தினாலேயா மனுஷ
குமாரனைக் காட்டிக்கொடுக்கிறாய் என்றார்.
அவரைச் சூழநின்றவர்கள் நடக்கப்போகிற 49
தைக் கண்டு: ஆண்டவரே, பட்டயத்தினாலே
வெட்டுவோமா என்றார்கள். அந்தப்படியே 50
அவர்களில் ஒருவன் பிரதான ஆசாரியனு
டைய வேலைக்காரனை [16]வலதுகாதற வெட்
டினான். அப்பொழுது இயேசு: இம்மட் 51
டில் நிறுத்துங்கள் என்று சொல்லி, அவனு
டைய காதைத் தொட்டு, அவனைச் சொஸ்தப்
படுத்தினார். பின்பு இயேசு தமக்கு விரோத 52
மாய் வந்த பிரதான ஆசாரியர்களையும் தேவா
லயத்துச் சேனைத்தலைவர்களையும் மூப்பர்களை
யும் நோக்கி: [17]ஒரு கள்ளனைப் பிடிக்கப் புறப்
பட்டு வருகிறதுபோல, நீங்கள் பட்டயங்களை
யும் தடிகளையும் எடுத்துப் புறப்பட்டு வந்தீர்க
ளே. நான் தினந்தோறும் தேவாலயத்தில் 53
உங்களுடனேகூட இருக்கையில் நீங்கள் என்
னைப் பிடிக்கக் கைநீட்டவில்லை; [18]இதுவோ
உங்களுடைய வேளையும் அந்தகாரத்தின் அதி
காரமுமாயிருக்கிறது என்றார்.
அவர்கள் அவரைப் பிடித்தபின்பு, [19]பிர 54
தான ஆசாரியனுடைய வீட்டில் கொண்டு
போய்விட்டார்கள். [20]பேதுருவும் தூரத்திலே
பின்சென்றான். அவர்கள் முற்றத்தின் நடுவி 55
லே நெருப்பை மூட்டி, அதைச் சுற்றி உட்
கார்ந்தபோது, [21]பேதுருவும் அவர்கள் நடுவி
லே உட்கார்ந்தான். அப்பொழுது ஒரு வே 56
லைக்காரி அவனை நெருப்பண்டையிலே உட்
கார்ந்திருக்கக் கண்டு, அவனை உற்றுப்பார்த்து:
இவனும் அவனோடிருந்தான் என்றாள். அத 57
ற்கு அவன்: ஸ்திரீயே, அவனை அறியேன்
என்று மறுதலித்தான். சற்றுநேரத்துக்குப் 58
பின்பு வேறொருவன் அவனைக் கண்டு: [22]நீயும்
அவர்களில் ஒருவன் என்றான். அதற்குப்
பேதுரு: மனுஷனே, நான் அல்ல என்றான்.
ஏறக்குறைய ஒருமணி நேரத்துக்குப் பின்பு 59
வேறொருவன் அவனைப்பார்த்து: [23]மெய்யாக
வே இவனும் அவனோடிருந்தான், இவன்
கலிலேயன்தான் என்று சாதித்தான். அதற் 60
குப் பேதுரு: மனுஷனே, நீ சொல்லுகிறதை
அறியேன் என்றான். அவன் இப்படிச் சொ
ன்னவுடனே சேவல் கூவிற்று. அப்பொ 61
ழுது கர்த்தர் திரும்பி, பேதுருவை நோக்கிப்

1 12. 32. மத். 24. 47: 25. 34. 1கொ. 9. 25. 2கொ. 1. 7. 2தீ. 2. 12. 1பே. 5. 4
2 ஆமோ. 9. 9. 1பே. 5. 8
3 யோ. 17. 9, 15. எபி. 7. 25
4 சங். 51. 13. யோ. 21. 15-17.
5 மத். 26. 34. மாற். 14. 30. யோ. 13. 38
6 9. 3. மத். 10. 9, 10
7 ஏசா. 53. 12. மாற். 15. 28
8 மத். 26. 36. மாற். 14. 32. ஒ. யோ. 18. 1, ஒ
9 மத். 6, 13: 26. 41. மாற். 14. 38
10 மத். 26. 39. மாற். 14. 35
11 யோ. 5, 30: 6. 38
12 மத். 4, 11
13 புல. 1. 12. யோ. 12. 27. எபி. 5. 7
14 40. ஒ
15 மத். 26. 47. மாற். 14. 43. யோ. 18. 3.
16 மத். 26. 51. மாற். 14. 47. யோ. 18. 10
17 மத். 26. 55. ஒ. மாற். 14. 48, 68. ஒ. யோ. 18. 13. ஒ
18 யோபு 20. 4. யோ. 12. 27
19 மத். 26. 57
20 மத். 26. 58. யோ. 18. 15
21 மத். 26. 69. மாற். 14. 66. யோ. 18. 17, 18
22 மத். 26. 71. மாற். 14. 69. யோ. 18. 25
23 மத். 26. 73. மாற். 14. 70. யோ. 18. 26

பார்த்தார். [1]சேவல் கூவுகிறதற்கு முன்னே
நீ என்னை மூன்றுதரம் மறுதலிப்பாய் என்று
கர்த்தர் தன்னிடத்தில் சொன்ன வசனத்தை
62 உடனே பேதுரு நினைவுகூர்ந்து, வெளியே
போய், [2]மனங்கசந்து அழுதான்.
63 இயேசுவைப் பிடித்துக்கொண்ட மனுஷர்
64 [3]அவரைப் பரியாசம்பண்ணி, அடித்து, அவ
ருடைய கண்களைக் கட்டி, அவருடைய முகத்
தில் அறைந்து: உன்னை அடித்தவன் யார்,
அதை ஞானதிருஷ்டியினால் சொல் என்று
65 அவரைக் கேட்டதுமன்றி, மற்றும் அநேக
தூஷணவார்த்தைகளையும் அவருக்கு விரோத
மாகச் சொன்னார்கள்.
66 விடியற்காலமானபோது [4]ஜனத்தின் மூப்
பரும் பிரதான ஆசாரியரும் வேதபாரகரும்
கூடிவந்து, தங்கள் ஆலோசனைச் சங்கத்தில்
67 அவரைக் கொண்டுவந்து நிறுத்தி: நீ கிறிஸ்
துவா? [5]அதை எங்களுக்குச் சொல் என்றார்
கள். அதற்கு அவர்: நான் உங்களுக்குச்
68 சொன்னாலும் நம்பமாட்டீர்கள். நான் உங்க
ளிடத்தில் வினவினாலும் எனக்கு மாறுத்தரம்
சொல்லமாட்டீர்கள், என்னை விடுதலைபண்ண
69 வுமாட்டீர்கள். இதுமுதல் மனுஷகுமாரன்
[6]சர்வவல்லமையுள்ள தேவனுடைய வலது
70 பாரிசத்தில் வீற்றிருப்பார் என்றார். அதற்கு
அவர்களெல்லாரும்: அப்படியானால், நீ தேவ
னுடைய குமாரனா என்று கேட்டார்கள்.
[7]அதற்கு அவர்: நீங்கள் சொல்லுகிறபடியே
71 நான் அவர்தான் என்றார். அப்பொழுது
அவர்கள்; [8]இனி வேறு சாட்சி நமக்கு வேண்
டுவதென்ன? நாமே இவனுடைய வாயினாலே
கேட்டோமே என்றார்கள்.

**23** அவர்களுடைய கூட்டத்தாரெல்லாரும்
எழுந்திருந்து, [9]அவரைப் பிலாத்துவினிடத்
2 திற்குக் கொண்டுபோய்: இவன் தன்னைக்
[10]கிறிஸ்துஎன்னப்பட்ட ராஜாவென்றும், [11]ரா
யருக்கு வரிகொடுக்க வேண்டுவதில்லையென்
றும் சொல்லி, ஜனங்களைக் [12]கலகப்படுத்தக்
கண்டோம் என்று அவர்மேல் [13]குற்றஞ்சாட்
3 டத் தொடங்கினார்கள். பிலாத்து அவரை
நோக்கி: [14]நீ யூதருடைய ராஜாவா என்று
கேட்டான். அவர் அவனுக்குப் பிரதியுத்தர
மாக: நீர் சொல்லுகிறபடிதான் என்றார்.
4 அப்பொழுது பிலாத்து பிரதான ஆசாரியர்க
ளையும் ஜனங்களையும் நோக்கி: [15]இந்த மனுஷ
னிடத்தில் நான் ஒரு குற்றத்தையும் காண
5 வில்லை என்றான். அதற்கு அவர்கள்: இவன்
கலிலேயா நாடுதொடங்கி இவ்விடம்வரைக்
கும் யூதேயா தேசமெங்கும் உபதேசம்பண்
ணி, ஜனங்களைக் கலகப்படுத்துகிறான் என்று
6 வைராக்கியத்தோடே சொன்னார்கள். கலி
லேயா என்பதைப் பிலாத்து கேட்டபொ
ழுது, இந்த மனுஷன் கலிலேயனா என்று
7 விசாரித்து, அவர் ஏரோதின் அதிகாரத்துக்
குள்ளானவர் என்றறிந்து, [16]அந்நாட்களில்
எருசலேமிலே வந்திருந்த ஏரோதுவினிடத்
திற்கு அவரை அனுப்பினான்.

ஏரோது இயேசுவைக்குறித்து அநேக 8
காரியங்களைக் [17]கேள்விப்பட்டிருந்தபடியினாலும்,
அவரால் செய்யப்படும் *அடையாளத்தைப்
[18]பார்க்கவேண்டுமென்று விரும்பியிருந்தபடியினா
லும், அவரைக் காணும்படி வெகுநாளாய்
ஆசைகொண்டிருந்தான். அந்தப்படி அவ
ரைக் கண்டபோது, மிகவும் சந்தோஷப்ப
ட்டு, அநேக காரியங்களைக்குறித்து அவரி 9
டத்தில் வினவினான். [19]அவர் மறுமொழி
யாக அவனுக்கு ஒன்றும் சொல்லவில்லை.
பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் அவர் 10
மேல் பிடிவாதமாய்க் குற்றஞ்சாட்டிக்கொண்
டே நின்றார்கள். அப்பொழுது ஏரோது தன் 11
போர்ச்சேவகரோடேகூட அவரை நிந்தித்துப்
பரியாசம்பண்ணி, [20]மினுக்கான வஸ்திரத்
தை அவருக்கு உடுத்தி, அவரைத் திரும்பப்
பிலாத்துவினிடத்திற்கு அனுப்பினான். முன் 12
னே ஒருவருக்கொருவர் பகைவராயிருந்த
பிலாத்துவும் ஏரோதும் [21]அன்றையத்தினம்
சிநேகிதரானார்கள்.

பிலாத்து பிரதான ஆசாரியர்களையும் அதி 13
காரிகளையும் ஜனங்களையும் கூடிவரச்செய்து,
அவர்களை நோக்கி: ஜனங்களைக் கலகத்துக் 14
குத் தூண்டிவிடுகிறவனாக இந்த மனுஷனை
என்னிடத்தில் கொண்டுவந்தீர்கள்; [22]நான்
உங்களுக்கு முன்பாக விசாரித்தபோது, இவ
ன்மேல் நீங்கள் சாட்டுகிற குற்றங்களில் ஒன்
றையும் நான் இவனிடத்தில் காணவில்லை.
உங்களை ஏரோதினிடத்திற்கும் அனுப்பி 15
னேன்; அவரும் இவனிடத்தில் குற்றம் கா
ணவில்லை; மரணத்துக்கேதுவாக இவன் ஒன்
றும் செய்யவில்லையே. ஆனபடியால் இவனை 16
[23]தண்டித்து, விடுதலையாக்குவேன் என்றான்.
பண்டிகைதோறும் அவர்களுக்கு ஒருவனை 17
அவன் விடுதலையாக்குவது அவசியமாயிருந்த
படியால் அப்படிச் சொன்னான். ஜனங்க 18
ளெல்லாரும் அதைக் கேட்டு: இவனை அகற்
றும்? [24]பரபாசை எங்களுக்கு விடுதலையாக்
கும் என்று சத்தமிட்டுக் கேட்டார்கள். அந் 19
தப் பரபாசென்பவன் நகரத்தில் நடந்த ஒரு
கலகத்தினிமித்தமும் கொலைபாதகத்தினிமித்
தமும் காவலிலே வைக்கப்பட்டிருந்தான்.
பிலாத்து இயேசுவை விடுதலையாக்க மனதாய், 20
மறுபடியும் அவர்களிடத்தில் பேசினான்.
அவர்களோ: அவனைச் சிலுவையில் அறை 21
யும், சிலுவையில் அறையும் என்று கூக்குர
லிட்டார்கள். அவன் மூன்றாந்தரம் அவர் 22
களை நோக்கி: ஏன் இவன் என்ன பொல்லா
ப்புச் செய்தான்? மரணத்துக்கு ஏதுவான
குற்றம் ஒன்றும் இவனிடத்தில் நான் காண
வில்லையே; ஆகையால் நான் இவனை தண்
டித்து, விடுதலையாக்குவேன் என்றான். அப் 23
படியிருந்தும் அவரைச் சிலுவையில் அறைய
வேண்டுமென்று அவர்கள் உரத்த சத்தத்தோடு
கேட்டுக்கொண்டேயிருந்தார்கள். அவர்களும்
பிரதான ஆசாரியரும் இட்ட சத்தம் மேற்
கொண்டது. அப்பொழுது அவர்கள் கேட் 24

1 மத். 26. 75. மாற். 14. 72. யோ. 13. 38.
2 சங். 130. 1-4: 143. 1-4. எரே. 31. 18 எசே. 7. 16. 1 கொ. 10. 12
3 மத். 26. 67, 68. மாற். 14. 65
4 மத். 27. 1. அப். 4. 26: 22. 5
5 மத். 26. 63. மு. மாற். 14. 61, மு.
6 எபி. 1. 3: 8. 1. வெளி. 3. 21
7 மத். 26. 64. மாற். 14. 62
8 மத். 26. 65. மாற். 14. 63
9 மத். 27. 2, 11, மு. மாற். 15. 1, மு. யோ. 18. 28. மு.
10 யோ. 18. 36: 19. 12
11 மத். 17. 27: 22. 21. மாற். 12. 17
12 அப். 17. 7
13 சகரி. 11. 8
14 மத். 27. 11 1 தீமோ. 6. 13
15 யோ. 18. 38: 19. 4. எபி. 7. 26. 1 பே. 2. 22
16 3. 1
17 9. 9. மத். 14. 1. மாற். 6. 14
* அற்புதத்தை
18 2 இரா. 5. 11
19 சங். 38. 13, 14: 39. 1, 9. ஏசா. 53. 7
20 ஏசா. 49. 7: 53. 3. யோ. 19. 5
21 அப். 4. 27, 28
22 1, 2, 4. கச
23 ஏசா. 53. 5. மத். 27. 26. யோ. 19. 1
24 அப். 3. 14

டுக்கொண்டபடியே [1]ஆகட்டும் என்று பிலாத்
25 து தீர்ப்புசெய்து, கலகத்தினிமித்தமும் கொ
லைபாதகத்தினிமித்தமும் காவலில் போடப்
பட்டிருந்தவனை அவர்கள் கேட்டுக்கொண்ட
படியே விடுதலையாக்கி, இயேசுவையோ
அவர்கள் இஷ்டத்துக்கு ஒப்புக்கொடுத்தான்.
26 அவர்கள் இயேசுவைக் கொண்டுபோகிற
போது, [2]நாட்டிலிருந்து வருகிற சிரேனே
ஊரானாகிய சீமோன் என்கிற ஒருவனைப்
பிடித்து, சிலுவையை அவர் பின்னே சுமந்
துகொண்டு வரும்படி அதை அவன்மேல்
வைத்தார்கள்.
27 திரள்கூட்டமான ஜனங்களும் அவருக்கா
கப் புலம்பி அழுகிற ஸ்திரீகளும் அவருக்குப்
28 பின்சென்றார்கள். இயேசு அவர்கள் முக
மாய்த் திரும்பி: எருசலேமின் குமாரத்திக
ளே, நீங்கள் எனக்காக அழாமல், உங்களுக்
காகவும் உங்கள் பிள்ளைகளுக்காகவும் அழுங்
29 கள். இதோ, [3]மலடிகள் பாக்கியவதிகளென்
றும், பிள்ளைபெறாத கர்ப்பங்களும் பால்கொ
டாத முலைகளும் பாக்கியமுள்ளவைகளென்
30 றும் சொல்லப்படும் நாட்கள் வரும். அப்
பொழுது மலைகளை நோக்கி: [4]எங்கள்மேல் வி
ழுங்களென்றும், குன்றுகளை நோக்கி: எங்
களை மறைத்துக்கொள்ளுங்களென்றும் சொல்
31 லத் தொடங்குவார்கள். பச்சை மரத்துக்கு
இவைகளைச் செய்தால், [5]பட்ட மரத்துக்கு
என்ன செய்யமாட்டார்கள் என்றார்.
32 குற்றவாளிகளாகிய வேறே இரண்டுபே
ரும் [6]அவரோடேகூடக் கொலைசெய்யப்படு
வதற்குக் கொண்டுபோகப்பட்டார்கள்.
33 *கபாலஸ்தலம் என்று சொல்லப்பட்ட
இடத்தில் அவர்கள் சேர்ந்தபொழுது, [7]அங்
கே அவரையும், அவருடைய வலதுபக்கத்
தில் ஒரு குற்றவாளியையும், அவருடைய
இடதுபக்கத்தில் ஒரு குற்றவாளியையும் சிலு
34 வைகளில் அறைந்தார்கள். அப்பொழுது
இயேசு: பிதாவே, [8]இவர்களுக்கு மன்னியும்,
தாங்கள் செய்கிறது இன்னதென்று அறியா
யாதிருக்கிறார்களே என்றார். [9]அவருடைய
வஸ்திரங்களை அவர்கள் பங்கிட்டுச் சீட்டுப்
35 போட்டார்கள். ஜனங்கள் நின்று பார்த்துக்
கொண்டிருந்தார்கள். [10]அவர்களுடனேகூட
அதிகாரிகளும் அவரை இகழ்ந்து: இவன் மற்
றவர்களை ரட்சித்தான், இவன் தேவனால் தெ
ரிந்துகொள்ளப்பட்ட கிறிஸ்துவானால், தன்
னைத்தானே ரட்சித்துக்கொள்ளட்டும் என்றார்
36 கள். போர்ச்சேவகரும் அவரிடத்தில் சேர்
ந்து, அவருக்குக் காடியைக் கொடுத்து:
37 நீ யூதரின் ராஜாவானால், உன்னை ரட்சித்
துக்கொள் என்று அவரைப் பரியாசம்பண்
38 ணினார்கள். **இவன் யூதருடைய ராஜா**
என்று, [11]கிரேக்கு லத்தீன் எபிரெயு எழுத்துக்
களில் எழுதி, அவருக்கு மேலாக வைக்கப்
பட்டது.
39 அன்றியும் சிலுவையில் அறையப்பட்டி
ருந்த குற்றவாளிகளில் ஒருவன்: [12]நீ கிறிஸ்து
வானால் உன்னையும் எங்களையும் ரட்சித்துக்
கொள் என்று அவரை இகழ்ந்தான். மற்ற 40
வன் அவனை நோக்கி: [13]நீ இந்த ஆக்கினைக்
குட்பட்டவனாயிருந்தும் தேவனுக்குப் பயப்
படுகிறதில்லையா? நாமோ நியாயப்படி தண் 41
டிக்கப்படுகிறோம்; நாம் நடப்பித்தவைகளுக்
குத்தக்க பலனை அடைகிறோம்; [14]இவரோ
தகாததொன்றையும் நடப்பிக்கவில்லையே என்
று அவனைக் கடிந்துகொண்டு, இயேசுவை 42
நோக்கி: ஆண்டவரே, [15]நீர் உம்முடைய ராஜ
யத்தில் வரும்போது அடியேனை நினைத்தரு
ளும் என்றான். இயேசு அவனை நோக்கி: 43
[16]இன்றைக்கு நீ என்னுடனேகூடப் பரதீசி
லிருப்பாய் என்று மெய்யாகவே உனக்குச்
சொல்லுகிறேன் என்றார்.
அப்பொழுது ஏறக்குறைய ஆறும்மணி 44
நேரமாயிருந்தது; [17]ஒன்பதாம்மணி நேரம்வ
ரைக்கும் பூமியெங்கும் அந்தகாரமுண்டாயி
ற்று. சூரியன் இருளடைந்தது, [18]தேவால 45
யத்தின் திரைச்சீலை நடுவில் இரண்டாகக்
கிழிந்தது. இயேசு: [19]பிதாவே, உம்முடைய 46
கைகளில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன்
என்று மகா சத்தமாய்க் கூப்பிட்டுச் சொன்
னார்; இப்படிச் சொல்லி, [20]ஜீவனை †விட்
டார். நூற்றுக்கு அதிபதி சம்பவித்ததைக் 47
கண்டு: [21]மெய்யாகவே இந்த மனுஷன் நீதிபா
னாயிருந்தான் என்று சொல்லி, தேவனை மகி
மைப்படுத்தினான். இந்தக் காட்சியைப் பார் 48
க்கும்படி கூடிவந்திருந்த ஜனங்களெல்லாரும்
சம்பவித்தவைகளைப் பார்த்தபொழுது, தங்
கள் மார்பில் அடித்துக்கொண்டு திரும்பிப்
போனார்கள். அவருக்கு அறிமுகமானவர்க 49
ளெல்லாரும், கலிலேயாவிலிருந்து அவருக்
குப் பின்சென்று வந்த ஸ்திரீகளும் [22]தூரத்தி
லே நின்று இவைகளைப் பார்த்துக்கொண்டி
ருந்தார்கள்.
யோசேப்பு என்னும் பேர்கொண்ட ஒரு 50
ஆலோசனைக்காரன் இருந்தான்; [23]அவன் உத்
தமனும் நீதிமானுமாயிருந்தான். அவன் யூதரு 51
டைய பட்டணங்களிலொன்றாகிய அரிமத்தி
யாவிலிருந்து வந்தவனும், [24]தேவனுடைய ராஜ்
யத்துக்குக் காத்திருந்தவனும், யூதர்களுடைய
ஆலோசனைக்கும் செய்கைக்கும் சம்மதியாத
வனுமாயிருந்தான். அவன் பிலாத்துவினிட 52
த்தில் போய், இயேசுவின் சரீரத்தைக் கேட்டு,
அதை இறக்கி, மெல்லிய துப்பட்டியிலே 53
சுற்றி, [25]கல்மலையில் வெட்டப்பட்டதுமாய்
ஒருக்காலும் ஒருவனும் வைக்கப்படாததுமா
யிருந்த ஒரு கல்லறையிலே வைத்தான். அந்த 54
நாள் [26]ஆயத்தநாளாயிருந்தது; ஓய்வுநாளும்
ஆரம்பமாயிற்று. கலிலேயாவிலிருந்து அவ 55
ருடனே கூட வந்திருந்த ஸ்திரீகளும் பின்
சென்று, [27]கல்லறையையும் அவருடைய சரீ
ரம் வைக்கப்பட்ட விதத்தையும் பார்த்து, திரு 56
ம்பிப்போய், [28]கந்தவர்க்கங்களையும் பரிமளதை
லங்களையும் ஆயத்தம்பண்ணி, கற்பனையின்
படியே ஓய்வுநாளில் ஓய்ந்திருந்தார்கள்.

1 யாத். 23. 2. மத். 27. 26. மாற். 15. 15. யோ. 19. 16
2 மத். 27. 32. மாற். 15. 21. யோ. 19. 17
3 21. 23. மத். 24. 19
4 ஏசா. 2. 19. ஓசி. 10. 8. வெளி. 6. 16: 9. 6
5 நீதி. 11. 31. எரே. 25. 29. எசே. 20. 47: 21. 4. 1பே. 4. 17
6 ஏசா. 53. 12. மத். 27. 38
* தலையோட்டிடம்
7 மத். 27. 33. மாற். 15. 22. யோ. 19. 17, 18
8 மத். 5. 44. அப். 8. 17: 7. 60. 1 கொ. 4. 12
9 மத். 27. 35. மாற். 15. 24. யோ. 19. 23
10 சங். 22. 7. மத். 27. 39. மாற். 15. 29
11 மத். 27. 37. மாற். 15. 26. யோ. 19. 19
12 17. 34-36. மத். 27. 44. மாற். 15. 32
13 சங். 36. 1. எரே. 5. 3
14 1 பே. 1. 19
15 சங். 106. 4, 5. ரோ. 10. 9, 10
16 ரோ. 5. 20, 21. 2 கொ. 12. 3. வெளி. 2. 7
17 மத். 27. 45. மாற். 15. 33
18 மத். 27. 51. மாற். 15. 38
19 சங். 31. 5. 1 பே. 2. 23
20 மத். 27. 50. மாற். 15. 37. யோ. 19. 30
† ஆவியை
21 மத். 27. 54. மாற். 15. 39
22 சங். 38. 11: 142. 4. மத். 27. 55. மாற். 15. 40. யோ. 19. 25
23 மத். 27. 57. மாற். 15. 42. யோ. 19. 38
24 2. 25, 38. மாற். 15. 43
25 ஏசா. 53. 9. மத். 27. 59. மாற். 15. 46
26 மத். 27. 62
27 49. மாற். 8. 2. மாற். 15. 47
28 மாற். 16. 1

**24** வாரத்தின் [1]முதலாம்நாள் அதிகாலையி
லே தாங்கள் ஆயத்தம்பண்ணின கந்தவர்க்கங்
களை அவர்கள் எடுத்துக்கொண்டு, வேறு சில
ஸ்திரீகளோடுங்கூடக் கல்லறையினிடத்தில்
2 வந்தார்கள். கல்லறையை அடைத்திருந்த [2]கல்
புரட்டித் தள்ளப்பட்டிருக்கிறதைக் கண்டு,
3 உள்ளே பிரவேசித்து, கர்த்தராகிய இயேசு
4 வின் சரீரத்தைக் காணமல், அதைக்குறித்து
மிகுந்த கலக்கமடைந்திருக்கையில், [3]பிரகாச
முள்ள வஸ்திரந்தரித்த இரண்டுபேர் அவர்
5 கள் அருகே நின்ருர்கள். அந்த ஸ்திரீகள் பய
ப்பட்டு தலைகவிழ்ந்து தரையை நோக்கி நிற்
கையில், அந்த இரண்டுபேரும் அவர்களை
நோக்கி: [4]உயிரோடிருக்கிறவரை நீங்கள் மரி
6 த்தோரிடத்தில் தேடுகிறதென்ன? அவர் இங்
7 கே இல்லை, [5]அவர் உயிர்த்தெழுந்தார். மனு
ஷகுமாரன் பாவிகளான மனுஷர் கைகளில்
ஒப்புக்கொடுக்கப்படவும், சிலுவையில் அறை
யப்படவும், மூன்ரும் நாளில் எழுந்திருக்க
வும் வேண்டுமென்பதாக அவர் கலிலேயாவி
லிருந்தகாலத்தில் உங்களுக்குச் சொன்னதை
8 நினைவுகூருங்கள் என்ருர்கள். அப்பொழுது
அவர்கள் [6]அவருடைய வார்த்தைகளை நினை
9 வுகூர்ந்து, கல்லறையை விட்டுத் திரும்பிப்
போய், [7]இந்தச் சங்கதிகளெல்லாவற்றையும்
பதினொருவருக்கும் மற்றெல்லாருக்கும் அறி
10 வித்தார்கள். இவைகளை அப்போஸ்தலருக்குச்
சொன்னவர்கள் [8]மகதலேனு மரியாளும்,
யோவன்னளும், யாக்கோபின் தாயாகிய மரி
யாளும், இவர்களுடனேகூட இருந்த மற்ற
11 ஸ்திரீகளுமே. இவர்களுடைய வார்த்தைகள்
அவர்களுக்கு [9]வீண்பேச்சாகத் தோன்றினதி
12 னல், அவர்கள் இவர்களை நம்பவில்லை. பேது
ருவோ எழுந்திருந்து, கல்லறையினிடத்திற்கு
ஓடி, [10]அதற்குள்ளே குனிந்து பார்க்கையில்,
சீலைகளைத் தனிப்பட வைத்திருக்கக் கண்டு,
சம்பவித்ததைக்குறித்துத் தன்னில் ஆச்சரியப்
பட்டுக்கொண்டு போனன்.

13 அன்றையத்தினமே [11]அவர்களில் இரண்டு
பேர் எருசலேமுக்கு ஏழு அல்லது எட்டு
மைல் தூரமான எம்மாவு என்னும் கிராமத்து
14 க்குப் போனர்கள். போகையில் இந்த வர்த்
தமானங்கள் யாவையுங்குறித்து அவர்கள் ஒரு
15 வரோடொருவர் பேசிக்கொண்டார்கள். இப்
படி அவர்கள் பேசி, [12]சம்பாஷித்துக்கொண்
டிருக்கையில், இயேசு தாமே சேர்ந்து அவர்
16 களுடனேகூட நடந்துபோனர். ஆனாலும்
அவரை அறியாதபடிக்கு [13]அவர்களுடைய
17 கண்கள் மறைக்கப்பட்டிருந்தது. அப்பொ
ழுது அவர் அவர்களை நோக்கி: நீங்கள் துக்க
முகமுள்ளவர்களாய் வழிநடந்து, ஒருவருக்
கொருவர் சொல்லிக்கொள்ளுகிற காரியங்கள்
18 என்னவென்று கேட்டார். அவர்களில் ஒரு
வனகிய [14]கிலெயோப்பா என்பவன் பிரதி
யுத்தரமாக: இந்நாட்களில் எருசலேமிலே
*நடந்தவைகளை அறியாதபடிக்கு நீர் அந்நிய
19 ராயிருக்கிறீரோ என்ருன். அவர்: எவைகள்
என்ருர். அதற்கு அவர்கள்: நசரேயனகிய
இயேசுவைக் குறித்தவைகளே; [15]அவர் தேவ
னுக்கு முன்பாகவும் ஜனங்களெல்லாருக்கு
முன்பாகவும் செய்கையிலும் வாக்கிலும் வல்
லமையுள்ள தீர்க்கதரிசியாயிருந்தார். நம்மு 20
டைய பிரதான ஆசாரியரும் அதிகாரிகளும்
அவரை மரண ஆக்கினைக் குட்படுத்தி, [16]சிலு
வையில் அறைந்தார்கள். அவரே [17]இஸ்ர 21
வேலை மீட்டிரட்சிப்பவர் என்று நாங்கள் நம்பி
யிருந்தோம். இவைகள் சம்பவித்து இன்று
மூன்றுநாளாகிறது. ஆனாலும் எங்கள் கூட் 22
டத்தைச்சேர்ந்த [18]சில ஸ்திரீகள் அதிகாலமே
கல்லறையினிடத்திற்குப் போய், அவருடைய 23
சரீரத்தைக் காணமல், திரும்பிவந்து, அவர்
உயிரோடிருக்கிருர் என்று சொன்ன தேவதூ
தரைத் தரிசித்தோம் என்று சொல்லி, எங்க
ளைப் பிரமிக்கப் பண்ணினர்கள். அப்பொ 24
ழுது எங்களிலே [19]சிலர் கல்லறையினிடத்திற்
குப் போய், ஸ்திரீகள் சொன்னபடியே கண்
டார்கள்; அவரையோ காணவில்லை என்ருர்
கள். அப்பொழுது அவர் அவர்களை நோக்கி, 25
[20]தீர்க்கதரிசிகள் சொன்ன யாவையும் விசுவாசி
க்கிறதற்குப் புத்தியில்லாத மந்த இருதயமுள்
ளவர்களே, கிறிஸ்து இவ்விதமாகப் பாடு 26
படவும், [21]தமது மகிமையில் பிரவேசிக்கவும்
வேண்டியதில்லையா என்று சொல்லி, மோசே 27
முதலிய [22]சகல தீர்க்கதரிசிகளும் எழுதின
வேதவாக்கியங்களெல்லாவற்றிலும் தம்மைக்
குறித்துச் சொல்லியவைகளை அவர்களுக்கு
விவரித்துக் காண்பித்தார். அத்தருணத்தில் 28
தாங்கள் போகிற கிராமத்துக்குச் சமீபமானர்
கள். [23]அப்பொழுது அவர் அப்புறம் போகி
றவர்போலக் காண்பித்தார். அவர்கள் அவரை 29
நோக்கி: நீர் எங்களுடனே தங்கியிரும், சாய
ங்காலமாயிற்று, பொழுதும் போயிற்று, [24]என்
று அவரை வருந்திக் கேட்டுக்கொண்டார்கள்.
அப்பொழுது அவர் அவர்களுடனே தங்கும்
படி உள்ளே போனர். அவர்களோடே அ 30
வர் பந்தியிருக்கையில், [25]அவர் அப்பத்தை
எடுத்து, †ஆசீர்வதித்து, அதைப் பிட்டு, அவர்
களுக்குக் கொடுத்தார். அப்பொழுது அவர் 31
களுடைய கண்கள் திறக்கப்பட்டு, அவரை
அறிந்தார்கள். [26]உடனே அவர் அவர்களுக்கு
மறைந்துபோனர். அப்பொழுது அவர்கள் 32
ஒருவரையொருவர் நோக்கி: வழியிலே அவர்
நம்முடனே பேசி, வேதவாக்கியங்களை நமக்கு
விளங்கக் காட்டினபொழுது, [27]நம்முடைய
இருதயம் நமக்குள்ளே கொழுந்துவிட்டு எரி
யவில்லையா என்று சொல்லிக்கொண்டு, அந் 33
நேரமே எழுந்திருந்து, எருசலேமுக்குத் திரும்
பிப்போய், பதினொருவரும் அவர்களோடிருந்
தவர்களும் கூடியிருக்கக் கண்டு: கர்த்தர் மெய் 34
யாகவே [28]உயிர்த்தெழுந்து சீமோனுக்குத்
தரிசனமானர் என்று அவர்கள் சொல்லக்கேட்
டு, வழியில் நடந்தவைகளையும், அவர் அப்பத் 35
தைப் பிட்கையில் தாங்கள் அவரை அறிந்து
கொண்டதையும் விவரித்துச் சொன்னர்கள்.

1 மத். 28. 1. மாற். 16. 1. யோ 20. 1
2 மத். 28. 2. மாற். 16. 4. ஷி
3 யோ. 20.12. அப். 1. 10
4 வெளி. 1. 18
5 9. 22. மத். 16. 21: 17. 28. மாற். 8. 31: 9. 31. யோ. 2. 22
6 யோ. 2. 22
7 மத். 28. 8. மாற். 16. 10
8 8. 3
9 ஆதி. 19. 14. 2 இரா. 7. 2. யோபு 9. 16. சங். 126. 1. மாற். 16. 11. அப். 12. 9, 15
10 யோ. 20. 3, 6
11 மாற். 16. 12
12 36. வச. மல். 3. 16. மத். 18. 20
13 யோ. 20. 14, 15: 21. 4
14 யோ. 19. 25
* சீர்மாத்திரம் அறியாதிருக்கிறீரோ
15 7. 16. யோ. 3. 2. அப். 2. 22: 7. 22
16 23. 1. அப். 13. 27, 28
17 1. 68. அப். 1. 6
18 9. 10. வச. மத். 28. 8. மாற். 16. 10. யோ. 20. 18
19 12. வச
20 எபி. 5. 11, 12.
21 46. வச. அப். 17. 3. எபி. 9. 22, 23
22 44. வச. அப். 3. 22: 10. 43: 26. 22
23 ஆதி. 32. 26. மாற். 6. 48
24 அப். 16. 15
25 மத். 14. 19
† ஸ்தோத்திரம் பண்ணி
26 4. 30. யோ. 8. 59
27 சங். 39. 3. எரே. 20. 9: 23. 29
28 1 கொ. 15. 5

36 இவைகளைக்குறித்து அவர்கள் பேசிக்கொ
ண்டிருக்கையில், [1]இயேசு தாமே அவர்கள்
நடுவிலே நின்று: உங்களுக்குச் சமாதானம்
37 என்றார். அவர்கள் கலங்கி, பயந்து, [2]ஒரு
38 ஆவியைக் காண்கிறதாக நினைத்தார்கள். அவர்
அவர்களை நோக்கி: நீங்கள் ஏன் கலங்குகிறீர்
கள்; உங்கள் இருதயங்களில் சந்தேகங்கள்
39 எழும்புகிறதென்ன? நான்தான் என்று அறி
யும்படி, [3]என் கைகளையும் என் கால்களையும்
பாருங்கள், என்னைத் தொட்டுப்பாருங்கள்;
நீங்கள் காண்கிறபடி, எனக்கு மாம்சமும்
எலும்புகளும் உண்டாயிருக்கிறதுபோல ஒரு
40 ஆவிக்கு இராதே என்று சொல்லி, தம்மு
டைய கைகளையும் கால்களையும் அவர்களுக்
41 குக் காண்பித்தார். ஆனாலும் சந்தோஷத்தி
னால் [4]அவர்கள் இன்னும் விசுவாசியாமல்
ஆச்சரியப்படுகையில்: [5]புசிக்கிறதற்கு ஏதா
கிலும் இங்கே உண்டா என்று அவர்களிடத்
42 தில் கேட்டார். அப்பொழுது பொரித்த மீன்
கண்டத்தையும் தேன் கூட்டுத் துணிக்கை
43 யையும் அவருக்குக் கொடுத்தார்கள். அவை
களை அவர் வாங்கி [6]அவர்களுக்கு முன்பாகப்
புசித்து,
44 அவர்களை நோக்கி: [7]மோசேயின் நியாயப்
பிரமாணத்திலும் தீர்க்கதரிசிகளின் ஆகமங்
களிலும் சங்கீதங்களிலும் என்னைக்குறித்து
எழுதியிருக்கிறவைகளெல்லாம் நிறைவேற
வேண்டியதென்று, நான் உங்களோடிருந்த

1 மாற். 16. 14. யோ. 20. 19. யோ
2 மாற். 6. 49
3 யோ. 20. 20, 27
4 ஆதி. 45. 26
5 யோ. 21. 5. யோ
6 அப். 10. 41
7 21. 22: சங். 22. 110. யோ. மத். 16. 21. அப். 3. 18: 18. 27. எபி. 9. 22, 23
8 அப். 16. 14
9 ஏசா. 53. 3, 5. அப். 4. 12: 17. 3. 1 பே. 1. 5
10 அப். 5. 31: 13. 38, 46. 1 யோ. 2. 12
11 யோ. 15. 27. அப். 1. 8: 2. 32: 3. 15
12 ஏசா. 44. 3. யோவே. 2. 28. யோ. 14. 16. அப். 1. 8: 2. 1–21
13 அப். 1. 12
14 மாற். 16. 19. யோ. 20. 17. அப். 1. 9. எபே. 4. 9. எபி. 4. 14
15 மத். 28. 9, 17
16 அப். 2. 46, 47: 5. 42

போது உங்களுக்குச் சொல்லிக்கொண்டு
வந்த விசேஷங்கள் இவைகளே என்றார். அப் 45
பொழுது வேதவாக்கியங்களை அறிந்துகொள்
ளும்படி [8]அவர்களுடைய மனதை அவர் திற
ந்து, அவர்களை நோக்கி: எழுதியிருக்கிற 46
படி, கிறிஸ்து பாடுபடவும், [9]மூன்றாம்நாளில்
மரித்தோரிலிருந்தெழுந்திருக்கவும் வேண்டிய
தாயிருந்தது; அன்றியும் [10]மனந்திரும்புதலும் 47
பாவமன்னிப்பும் எருசலேம்தொடங்கிச் சகல
தேசத்தாருக்கும் அவருடைய நாமத்தினாலே
பிரசங்கிக்கப்படவும் வேண்டியது. நீங்கள் 48
இவைகளுக்குச் [11]சாட்சிகளாயிருக்கிறீர்கள்.
என் பிதா வாக்குத்தத்தம் பண்ணினதை, 49
இதோ, [12]நான் உங்களுக்கு அனுப்புகிறேன்.
நீங்களோ உன்னதத்திலிருந்து வரும் பெல
னால் தரிப்பிக்கப்படும்வரைக்கும் எருசலேம்
நகரத்தில் இருங்கள் என்றார்.
பின்பு அவர் பெத்தானியாவரைக்கும் 50
அவர்களை அழைத்துக்கொண்டுபோய், தம்
முடைய கைகளை உயர்த்தி, [13]அவர்களை ஆசீர்
வதித்தார். அவர்களை ஆசீர்வதிக்கையில், 51
[14]அவர்களை விட்டுப் பிரிந்து, பரலோகத்துக்கு
எடுத்துக்கொள்ளப்பட்டார். அவர்கள் அவ 52
ரைப் [15]பணிந்துகொண்டு, மிகுந்த சந்தோஷத்
தோடே எருசலேமுக்குத் திரும்பி வந்து,
நாடோறும் தேவாலயத்திலே [16]தேவனைப் 53
புகழ்ந்து துதித்துக்கொண்டிருந்தார்கள்.
ஆமென்.

# THE GOSPEL ACCORDING TO JOHN

# யோவான் எழுதின சுவிசேஷம்

1 ஆதியிலே [1]வார்த்தை இருந்தது, [2]அந்த
வார்த்தை தேவனிடத்திலிருந்தது, [3]அந்த வார்
2 த்தை தேவனாயிருந்தது. அவர் ஆதியிலே
3 தேவனோடிருந்தார். சகலமும் அவர் மூல
மாய் உண்டாயிற்று; [4]உண்டானதொன்றும்
4 அவராலே யல்லாமல் உண்டாகவில்லை. அவ
ருக்குள் ஜீவன் இருந்தது, [5]அந்த ஜீவன் மனு
5 ஷருக்கு [6]ஒளியாயிருந்தது. அந்த ஒளி இரு
ளிலே பிரகாசிக்கிறது; [7]இருளானது அதைப்
6 பற்றிக்கொள்ளவில்லை. தேவனால் அனுப்பப்
பட்ட ஒரு மனுஷன் இருந்தான், [8]அவன்
7 பேர் யோவான். அவன் தன்னால் எல்லா
ரும் விசுவாசிக்கும்படி அந்த ஒளியைக்குறித்
துச் சாட்சிகொடுக்க சாட்சியாக வந்தான்.
8 அவன் அந்த ஒளியல்ல, [9]அந்த ஒளியைக்கு
றித்துச் சாட்சிகொடுக்க வந்தவனாயிருந்தான்.
9 உலகத்திலே வந்து எந்த மனுஷனையும் பிர
காசிப்பிக்கிற[10]ஒளியே அந்த மெய்யான ஒளி.
10 அவர் உலகத்தில் இருந்தார், [11]உலகம் அவர்
மூலமாய் உண்டாயிற்று, உலகமோ அவரை
11 அறியவில்லை. அவர் தமக்குச் சொந்தமான
திலே வந்தார், [12]அவருக்குச் சொந்தமானவர்
களோ அவரை ஏற்றுக்கொள்ளவில்லை.
12 அவருடைய நாமத்தின்மேல் விசுவாசமுள்
ளவர்களாய் அவரை ஏற்றுக்கொண்டவர்கள்
எத்தனைபேர்களோ, [13]அத்தனைபேர்களும் தே
வனுடைய பிள்ளைகளாகும்படி, அவர்களுக்கு
13 அதிகாரங்கொடுத்தார். அவர்கள், இரத்தத்தி
னாலாவது மாம்ச சித்தத்தினாலாவது *புருஷ
னுடைய சித்தத்தினாலாவது பிறவாமல், [14]தே
14 வனாலே பிறந்தவர்கள். அந்த வார்த்தை †[15]மா
ம்சமாகி, [16]கிருபையினாலும் சத்தியத்தினாலும்
நிறைந்தவராய், நமக்குள்ளே வாசம்பண்ணி
னார்; [17]அவருடைய மகிமையைக் கண்டோம்;
அது பிதாவுக்கு ஒரே பேறானவருடைய
மகிமைக்கு ஏற்ற மகிமையாகவே இருந்தது.
15 யோவான் அவரைக்குறித்துச் சாட்சிகொடுத்
து: [18]எனக்குப் பின் வருகிறவர் [19]எனக்கு
முன்னிருந்தவர், ஆகையால் அவர் என்னிலும்
மேன்மையுள்ளவர் என்று நான் சொல்லியிருந்
தேனே, அவர் இவர்தான் என்று சத்தமிட்டுக்
16 கூறினான். அவருடைய [20]பரிபூரணத்தினால்
நாம்எல்லாரும்கிருபையின்மேல் கிருபைபெற்
றோம். எப்படியெனில் நியாயப்பிரமாணம் 17
மோசேயின் மூலமாய்க் கொடுக்கப்பட்டது,
[21]கிருபையும் சத்தியமும் இயேசுகிறிஸ்துவின்
மூலமாய் உண்டாயின. தேவனை ஒருவனும் 18
ஒருக்காலுங் கண்டதில்லை, [22]பிதாவின் மடியி
லிருக்கிற ஒரேபேறான குமாரனே அவரை
வெளிப்படுத்தினார்.

எருசலேமிலிருந்து யூதர்கள் ஆசாரியரையும் 19
லேவியரையும் யோவானிடத்தில் அனுப்பி:
நீர் யார் என்று கேட்டபொழுது, அவன் மறு 20
தலியாமல் அறிக்கையிட்டதுமன்றி, [23]நான்
கிறிஸ்து அல்ல என்றும் அறிக்கையிட்டான்.
அப்பொழுது அவர்கள்: பின்னை யார்? [24]நீர் 21
எலியாவா என்று கேட்டார்கள். அதற்கு:
நான் அவன் அல்ல என்றான். நீர் தீர்க்கதரி
சியானவரா என்று கேட்டார்கள். அதற்கும்:
அல்ல என்றான். அவர்கள் பின்னும் அவனை 22
நோக்கி: நீர் யார்? எங்களை அனுப்பினவர்க
ளுக்கு நாங்கள் உத்தரவு சொல்லும்படிக்கு,
உம்மைக்குறித்து என்ன சொல்லுகிறீர் என்று
கேட்டார்கள். அதற்கு அவன்: [25]கர்த்தருக்கு 23
வழியைச் செவ்வைபண்ணுங்கள் என்று ஏசா
யா தீர்க்கதரிசி சொன்னபடியே, நான் வனாந்
தரத்திலே கூப்பிடுகிறவனுடைய சத்தமாயி
ருக்கிறேன் என்றான். அனுப்பப்பட்டவர் 24
கள் பரிசேயராயிருந்தார்கள். அவர்கள் அவனை 25
நோக்கி: நீர் கிறிஸ்துவுமல்ல, எலியாவுமல்ல,
தீர்க்கதரிசியானவரு மல்லவென்றால், ஏன்
ஞானஸ்நானங்கொடுக்கிறீர் என்று கேட்டார்
கள். யோவான் அவர்களுக்குப் பிரதியுத்தர 26
மாக: நான் ஜலத்தினாலே ஞானஸ்நானங்கொ
டுக்கிறேன்; [26]நீங்கள் அறியாதிருக்கிற ஒருவர்
உங்கள் நடுவிலே நிற்கிறார். அவர் எனக்குப் 27
பின்வந்தும் [27]என்னிலும் மேன்மையுள்ளவர்;
அவருடைய பாதரட்சையின் வாரை அவிழ்
ப்பதற்கும் நான் பாத்திரனல்ல என்றான்.
இவைகள் யோர்தானுக்கு அக்கரையில் யோ 28
வான் ஞானஸ்நானங்கொடுத்த ‡பெத்தாபரா
விலே [28]நடந்தன.

மறுநாளிலே யோவான் இயேசுவைத் தன் 29
னிடத்தில் வரக்கண்டு: இதோ, [29]உலகத்தின்
பாவத்தைச் சுமந்துதீர்க்கிற [30]தேவ ஆட்டுக்
குட்டி. எனக்குப் பின் ஒருவர் வருகிறார், 30

1 நீதி. 8. 22–31. கொலோ. 1. 16, 17. 1 யோ. 1. 1. வெளி. 1. 2: 19. 13
2 17. 5. 1 யோ. 1. 2
3 பிலி. 2. 6. எபி. 1. 8–13. 1 யோ. 5. 7
4 10. ஊ. சங். 33. 6 எபே. 3. 11. எபி. 1. 2. வெளி. 4. 11
5 5. 26. 1 யோ. 5. 11
6 8. 12: 9. 5: 12. 35, 46
7 3. 19. 1 கொ. 2. 14
8 மத். 3. 1. லூ. 3. 2, 3
9 அப். 19. 4
10 4. ஊ. ஏசா. 49. 6. 1 யோ. 2. 8
11. எபி. 1. 2: 11. 3
12 லூ. 19. 14. அப். 3. 26: 13. 46
13 ஏசா. 56. 4, 5. ரோ. 8, 14, 15. கலா. 3. 26. 2 பே. 1. 4. 1 யோ. 3. 1.
* மனுஷனுடைய
14 3. 5. யாக். 1. 18. 1 பே. 1. 23
† மனுஷனுகி
15 மத். 1. 16, 20. லூ. 1. 35. ரோ. 1. 3. 1 தீமோ. 3. 16.
16 சங். 45. 2. கொலோ. 2. 3, 9
17 மத். 17. 2. 2 பே. 1. 17. 1 யோ. 1. 1, 2
18 மத். 3. 11. மூ
19 8. 58
20 3. 34. எபே. 1. 6–8
21 8. 32: 14. 6. சங். 85. 10. ரோ. 3. 24: 5. 21
22 யாத். 33. 20. மத். 11. 27. 1 தீமோ. 6. 16. 1 யோ. 4. 9
23 5. 33. லூ. 3. 5. மூ. அப். 13. 25
24 மத். 17. 10

25 3. 28. ஏசா. 40. 3. மத். 3. 3. மாற். 1. 3. லூ. 3. 4, 5   26 மல். 3. 1. மத். 3. 11   27 15, 30. ஊ. அப். 19. 4   ‡ பெத்தானியா   28 10. 40. நியா. 7. 24
29 அப். 13. 39. 1 கொ. 15. 3. கலா. 1. 4. 1 பே. 2. 24. வெளி. 1. 5   30 யாத். 12. 3. ஏசா. 53. 7, 11. வெளி. 5. 6

அவர் எனக்கு முன்னிருந்தபடியால் என்னி
லும் மேன்மையுள்ளவரென்று நான் சொன்
31 னேனே, அவர் இவர்தான். நானும் இவரை
அறியாதிருந்தேன்; இவர் இஸ்ரவேலுக்கு
வெளிப்படும்பொருட்டாக, [1]நான் ஜலத்தி
னாலே ஞானஸ்நானங்கொடுக்க வந்தேன் என்
32 றான். பின்னும் யோவான் சாட்சியாகச் சொ
ன்னது: [2]ஆவியானவர் புறாவைப்போல வா
னத்திலிருந்திறங்கி, இவர்மேல் தங்கினதைக்
33 கண்டேன். நானும் இவரை அறியாதிருந்
தேன்; ஆனாலும் ஜலத்தினால் ஞானஸ்நானங்
கொடுக்கும்படி என்னை அனுப்பினவர்: [3]ஆவி
யானவர் இறங்கி யார்மேல் தங்குவதை நீ
காண்பாயோ, அவரே பரிசுத்த ஆவியினால்
ஞானஸ்நானங் கொடுக்கிறவர் என்று எனக்
34 குச் சொல்லியிருந்தார். அந்தப்படியே நான்
கண்டு, இவரே தேவனுடைய குமாரன்
என்று சாட்சிகொடுத்து வருகிறேன் என்
றான்.
35 மறுநாளிலே யோவானும் அவனுடைய
சீஷரில் இரண்டுபேரும் நிற்கும்போது,
36 இயேசு நடந்துபோகிறதை அவன் கண்டு:
இதோ, [4]தேவ ஆட்டுக்குட்டி என்றான்.
37 அவன் அப்படிச் சொன்னதை அவ்விரண்டு
சீஷருங் கேட்டு, இயேசுவுக்குப் பின்சென்
38 றார்கள். இயேசு திரும்பி, அவர்கள் பின்
செல்லுகிறதைக் கண்டு: என்ன தேடுகிறீர்
கள் என்றார். அதற்கு அவர்கள்: ரபீ, நீர்
எங்கே தங்கியிருக்கிறீர் என்று கேட்டார்கள்;
ரபீ என்பதற்குப் போதகரே என்று அர்த்த
39 மாம். அவர்: வந்து பாருங்கள் என்றார்.
அவர்கள் வந்து அவர் தங்கியிருந்த இடத்தைக்
கண்டு, அன்றையத்தினம் அவரிடத்தில் தங்கி
னார்கள். *அப்பொழுது ஏறக்குறையப் பத்து
40 மணி வேளையாயிருந்தது. யோவான் சொன்
னதைக் கேட்டு, அவருக்குப் பின்சென்ற
இரண்டுபேரில் ஒருவன் சீமோன் பேதுரு
வின் சகோதரனாகிய [5]அந்திரேயா என்பவன்.
41 அவன் முதலாவது தன் சகோதரனாகிய
சீமோனைக் கண்டு: மேசியாவைக் கண்டோம்
என்று சொன்னான்; †மேசியா என்பதற்குக்
42 கிறிஸ்து என்று அர்த்தமாம். பின்பு, அவனை
இயேசுவினிடத்தில் கூட்டிக்கொண்டு வந்
தான். இயேசு அவனைப் பார்த்து: [6]நீ யோனா
வின் மகனாகிய சீமோன், நீ கேபா என்னப்
படுவாய் என்றார்; கேபா என்பதற்குப் ‡பே
துரு என்று அர்த்தமாம்.
43 மறுநாளிலே இயேசு கலிலேயாவுக்குப்
போக மனதாயிருந்து, பிலிப்புவைக் கண்டு:
44 §நீ எனக்குப் பின்சென்று வா என்றார். பிலி
ப்பென்பவன் அந்திரேயா பேதுரு என்பவர்
களுடைய ஊராகிய [7]பெத்சாயிதா பட்டணத்
45 தான். பிலிப்பு நாத்தான்வேலைக் கண்டு:
நியாயப்பிரமாணத்திலே [8]மோசேயும் தீர்க்கத
ரிசிகளும் எழுதியிருக்கிறவரைக் கண்டோம்;
அவர் யோசேப்பின் குமாரனும் நாசரேத்தூரா
46 னுமாகிய இயேசுவே என்றான். அதற்கு நாத்
தான்வேல்: [9]நாசரேத்திலிருந்து யாதொரு நன்
மை உண்டாகக்கூடுமா என்றான். அதற்குப்
பிலிப்பு: வந்துபார் என்றான். இயேசு நாத் 47
தான்வேலைத் தம்மிடத்தில் வரக்கண்டு அவ
னைக்குறித்து: இதோ, [10]கபடற்ற உத்தமஇஸ்ர
வேலன் என்றார். அதற்கு நாத்தான்வேல்: 48
நீர் என்னை எப்படி அறிவீர் என்றான்.
இயேசு அவனை நோக்கி: பிலிப்பு உன்னை
அழைக்கிறதற்கு முன்னே, நீ அத்திமரத்தின்
கீழிருக்கும்போது [11]உன்னைக் கண்டேன்
என்றார். அதற்கு நாத்தான்வேல்: ரபீ, 49
[12]நீர் தேவனுடைய குமாரன், [13]நீர் இஸ்ரவே
லின் ராஜா என்றான். இயேசு அவனுக் 50
குப் பிரதியுத்தரமாக: அத்திமரத்தின் கீழே
உன்னைக் கண்டேன் என்று நான் உனக்குச்
சொன்னதினாலேயா விசுவாசிக்கிறாய்; இதி
லும் பெரிதானவைகளைக் காண்பாய் என்றார்.
பின்னும், அவர் அவனை நோக்கி: வானம் 51
திறந்திருக்கிறதையும், [14]தேவதூதர்கள் மனுஷ
குமாரனிடத்திலிருந்து ஏறுகிறதையும் இறங்கு
கிறதையும் நீங்கள் இதுமுதல் காண்பீர்கள்
என்று மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்
குச் சொல்லுகிறேன் என்றார்.

மூன்றாம் நாளிலே கலிலேயாவிலுள்ள **2**
[15]கானாவூரிலே ஒரு கலியாணம் நடந்தது; இ
யேசுவின் தாயும் அங்கேயிருந்தாள். இயேசுவும் 2
அவருடைய சீஷரும் [16]அந்தக் கலியாணத்து
க்கு அழைக்கப்பட்டிருந்தார்கள். திராட்சரசங் 3
குறைவுபட்டபோது, [17]இயேசுவின் தாய் அவ
ரை நோக்கி: அவர்களுக்குத் திராட்சரசம்
இல்லை என்றாள். அதற்கு இயேசு: [18]ஸ்திரீ 4
யே, எனக்கும் உனக்கும் என்ன, [19]என்வேளை
இன்னும் வரவில்லை என்றார். அவருடைய 5
தாய் வேலைக்காரரை நோக்கி: [20]அவர் உங்க
ளுக்கு என்ன சொல்லுகிறாரோ, அதின்படி
செய்யுங்கள் என்றாள். யூதர்கள் தங்களைச் 6
சுத்திகரிக்கும் [21]முறைமையின்படியே, ஒவ்
வொன்று இரண்டு மூன்று குடம் தண்ணீர்
கொள்ளத்தக்க ஆறு கற்சாடிகள் அங்கே வைத்
திருந்தது. இயேசு வேலைக்காரரை நோக்கி: 7
ஜாடிகளிலே தண்ணீர் நிரப்புங்கள் என்றார்;
அவர்கள் அவைகளை நிறைய நிரப்பினார்கள்.
அவர் அவர்களை நோக்கி: நீங்கள் இப்பொ 8
ழுது மொண்டு [22]பந்தி விசாரிப்புக்காரனிடத்
தில் கொண்டுபோங்கள் என்றார்; அவர்கள்
கொண்டுபோனார்கள். அந்தத் திராட்சரசம் 9
எங்கேயிருந்து வந்ததென்று தண்ணீரை
மொண்ட [23]வேலைக்காரருக்குத் தெரிந்ததே
யன்றி பந்திவிசாரிப்புக்காரனுக்குத் தெரியாத
தினால், அவன் திராட்சரசமாய் மாறின தண்
ணீரை ருசிபார்த்தபோது, மணவாளனை அழை
த்து: எந்த மனுஷனும் முன்பு நல்ல திராட்ச 10
ரசத்தைக் கொடுத்து, ஜனங்கள் திருப்தியடை
ந்தபின்பு, ருசி குறைந்ததைக் கொடுப்பான்,
[24]நீரோ நல்ல ரசத்தை இதுவரைக்கும் வைத்
திருந்தீரே என்றான். இவ்விதமாக இயேசு 11
இந்த முதலாம் அற்புதத்தைக் கலிலேயாவி

1 மத். 3. 6
2 5. 32. மத். 3. 16 மாற். 1. 10. லூக். 3. 22
3 3. 34. மத். 3. 11. அப். 1. 5
4 29. ஏசா
* சாயந்தரம் நாலு மணிவேளை
5 மத். 4. 18
† அபிஷேகம் பண்ணப்பட்டவர்
6 மத். 16. 18
‡ கல்லானவர்
§ என்னைப் பின்பற்றிவா
7 12. 21
8 லூக். 24. 27, 44
9 7. 41, 42, 52.
10 8. 39. சங். 32 2. ரோ. 2. 28, 29: 9. 6
11 சங். 139. 1, 2
12 20. 28, 29. மத். 14. 33
13 மத். 21. 5: 27. 11, 42
14 ஆதி. 28. 12. எபே. 1. 1. தானி. 7. 9, 10. மத். 4. 11. லூக். 2. 9, 13. அப். 1. 10, 11
15 யோசு. 19. 28
16 எபி. 13. 4
17 பிர. 10. 19. ஏசா. 24. 11
18 19. 26
19 7. 6
20 லூக். 5. 5, 6
21 மாற். 7. 3
22 பிர. 9. 7. ரோ. 13. 7
23 7. 17. சங். 119. 100
24 சங். 104. 15, சகரி. 9. 2, 5

லுள்ள கானா ஊரிலே செய்து, தம்முடைய
மகிமையை வெளிப்படுத்தினார்;[1] அவருடைய
சீஷர்கள் அவரிடத்தில் விசுவாசம் வைத்தார்
கள்.
12 அதன்பின்பு அவரும் அவருடைய தாயா
ரும் அவருடைய சகோதரரும் அவருடைய
சீஷரும் [2]கப்பர்நகூமுக்குப் போய், அங்கே
சிலநாள் தங்கினார்கள்.
13 பின்பு யூதருடைய [3]பஸ்காபண்டிகை
சமீபமாயிருந்தது; அப்பொழுது இயேசு எரு
14 சலேமுக்குப் போய், தேவாலயத்திலே [4]ஆடு
கள் மாடுகள் புறாக்களாகிய இவைகளை விற்
கிறவர்களையும், காசுக்காரர் உட்கார்ந்திருக்
15 கிறதையும் கண்டு, கயிற்றினால் ஒரு சவுக்
கை யுண்டுபண்ணி, அவர்கள் யாவரையும்
ஆடுமாடுகளையும் தேவாலயத்துக்குப் புறம்பே
துரத்திவிட்டு, காசுக்காரருடைய காசுகளைக்
கொட்டி, பலகைகளைக் கவிழ்த்துப்போட்டு,
16 புறா விற்கிறவர்களை நோக்கி: இவைகளை இவ்
விடத்திலிருந்து எடுத்துக்கொண்டு போங்கள்;
[5]என் பிதாவின் வீட்டை வியாபார வீடாக்கா
17 திருங்கள் என்றார். அப்பொழுது: [6]உம்மு
டைய வீட்டைக்குறித்து உண்டான பக்தி
வைராக்கியம் என்னைப் பட்சித்தது என்று எழு
தியிருக்கிறதை அவருடைய சீஷர்கள் நினைவு
18 கூர்ந்தார்கள். அப்பொழுது யூதர்கள் அவ
ரை நோக்கி: [7]நீர் இவைகளைச் செய்கிறீரே,
இதற்கு என்ன அடையாளத்தை எங்களுக்
குக் காண்பிக்கிறீர் என்று கேட்டார்கள்.
19 இயேசு அவர்களுக்குப் பிரதியுத்தரமாக: [8]இந்த
ஆலயத்தை இடித்துப்போடுங்கள், மூன்று
நாளைக்குள்ளே இதை எழுப்புவேன் என்றார்.
20 அப்பொழுது யூதர்கள்: இந்த ஆலயத்தைக்
கட்ட நாற்பத்தாறு வருஷம் சென்றதே, நீர்
இதை மூன்றுநாளைக்குள்ளே எழுப்புவீரோ
21 என்றார்கள். அவரோ தம்முடைய சரீரமா
22 கிய [9]ஆலயத்தைக் குறித்துப் பேசினார். அவர்
இப்படிச் சொன்னதை அவர் மரித்தோரிலி
ருந்தெழுந்தபின்பு, [10]அவருடைய சீஷர்கள்
நினைவுகூர்ந்து, வேதவாக்கியத்தையும் இயேசு
சொன்ன வசனத்தையும் விசுவாசித்தார்கள்.
23 பஸ்காபண்டிகையிலே அவர் எருசலேமி
லிருக்கையில், அவர் செய்த *அற்புதங்களை
அநேகர் கண்டு, அவருடைய நாமத்தில் விசு
24 வாசம் வைத்தார்கள். அப்படியிருந்தும்,
இயேசு எல்லாரையும் அறிந்திருந்தபடியால்,
25 அவர்களை நம்பி இணங்கவில்லை. மனுஷருள்
ளத்திலிருப்பதை [11]அவர் அறிந்திருந்தபடி
யால், மனுஷரைக்குறித்து ஒருவரும் அவருக்
குச் சாட்சிகொடுக்க வேண்டியதாயிருக்க
வில்லை.

3 யூதருக்குள்ளே [12]அதிகாரியான நிக்கொ
தேமு என்னப்பட்ட பரிசேயன் ஒருவன் இருந்
2 தான். அவன் இராக்காலத்திலே இயேசுவினி
டத்தில் வந்து: ரபீ, நீர் தேவனிடத்திலிருந்து
வந்த போதகர் என்று அறிந்திருக்கிறோம், [13]ஏ
னெனில் ஒருவனும் தன்னுடனே தேவன்
இராவிட்டால் நீர் செய்கிற இப்படிப்பட்ட
†அற்புதங்களைச் செய்யமாட்டான் என்றான்.
இயேசு அவனுக்குப் பிரதியுத்தரமாக: ஒருவன் 3
‡மறுபடியும் பிறவாவிட்டால் தேவனுடைய
ராஜ்யத்தைக் காணமாட்டான் என்று மெய்யா
கவே மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன்
என்றார். அதற்கு நிக்கொதேமு: ஒருமனுஷன் 4
முதிர்வயதாயிருக்கையில் எப்படிப் பிறப்
பான்? அவன் தன் தாயின் கர்ப்பத்தில் இரண்
டாந்தரம் பிரவேசித்துப் பிறக்கக்கூடுமோ என்
றான். இயேசு பிரதியுத்தரமாக: [14]ஒருவன் 5
ஜலத்தினாலும் ஆவியினாலும் பிறவாவிட்டால்
தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிக்கமாட்
டான் என்று மெய்யாகவே மெய்யாகவே
உனக்குச் சொல்லுகிறேன். மாம்சத்தினால் 6
பிறப்பது மாம்சமாயிருக்கும், [15]ஆவியினால்
பிறப்பது ஆவியாயிருக்கும். நீங்கள் மறுபடி 7
யும் பிறக்கவேண்டும் என்று நான் உனக்குச்
சொன்னதைக்குறித்து அதிசயப்படவேண்
டாம். காற்றானது தனக்கு இஷ்டமான இடத் 8
திலே வீசுகிறது, அதின் சத்தத்தைக் கேட்கி
றாய், ஆகிலும் அது இன்ன இடத்திலிருந்து
வருகிறதென்றும், இன்ன இடத்துக்குப் போ
கிறதென்றும் உனக்குத் தெரியாது; [16]ஆவியி
னால் பிறந்தவனெவனோ அவனும் அப்படி
யே இருக்கிறான் என்றார். அதற்கு நிக்கொ 9
தேமு: [17]இவைகள் எப்படி §ஆகும் என்றான்.
இயேசு அவனை நோக்கி: நீ இஸ்ரவேலில் 10
போதகனாயிருந்தும் இவைகளை அறியாமலிருக்
கிறாயா? மெய்யாகவே மெய்யாகவே நான் 11
உனக்குச் சொல்லுகிறேன், [18]நாங்கள் அறிந்தி
ருக்கிறதைச் சொல்லி, நாங்கள் கண்டதைக்
குறித்துச் சாட்சிகொடுக்கிறோம்; நீங்களோ எங்
கள் சாட்சியை ஏற்றுக்கொள்ளுகிறதில்லை.
பூமிக்கடுத்த காரியங்களை நான் உங்களுக்குச் 12
சொல்லியும் நீங்கள் விசுவாசிக்கவில்லையே,
பரமகாரியங்களை உங்களுக்குச் சொல்வேனா
னால் எப்படி விசுவாசிப்பீர்கள்? பரலோகத்தி 13
லிருந்திறங்கினவரும் பரலோகத்திலிருக்கிற
வருமான மனுஷ குமாரனேயல்லாமல் [19]பர
லோகத்துக்கு ஏறினவன் ஒருவனுமில்லை.
சர்ப்பமானது [20]மோசேயினால் வனாந்தரத்தி 14
லே உயர்த்தப்பட்டதுபோல மனுஷகுமார
னும், தன்னை விசுவாசிக்கிறவன் எவனோ 15
அவன் கெட்டுப்போகாமல் நித்தியஜீவனை
அடையும்படிக்கு, [21]உயர்த்தப்படவேண்டும்.
தேவன், தம்முடைய ஒரேபேறான குமா 16
ரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்
டுப்போகாமல் நித்தியஜீவனை அடையும்படி
க்கு, அவரைத் தந்தருளி, [22]இவ்வளவாய் உல
கத்தில் அன்புகூர்ந்தார். உலகத்தை ஆக்கினைக் 17
குள்ளாகத் தீர்க்கும்படி தேவன் தம்முடைய
குமாரனை உலகத்தில் அனுப்பாமல், [23]அவரா
லே உலகம் ரட்சிக்கப்படுவதற்காகவே அவரை
அனுப்பினார். அவரை விசுவாசிக்கிறவன் 18
ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படான்; [24]விசு
வாசியாதவனோ, தேவனுடைய ஒரேபேறான

1 1. 14. 1யோ. 5. 13
2 மத். 12. 46
3 5. 1: 6. 4: 11. 55. யாத். 12. 14
4 மத். 21. 12. மாற். 11. 15. லூக். 19. 45
5 லூக். 2. 49
6 சங். 69. 9
7 6. 30. மத். 12. 38. ஷ
8 மத். 26. 61: 27. 40. மாற். 14. 57, 58: 15, 29
9 எபே. 2: 21, 22. கொலோ. 2. 9. எபி. 8. 2
10 லூக். 24. 8
* அடையாளங்களை
11 16. 30. 1 சாமு. 16. 7. 1 நாளா. 28. 9: 29. 17. எரே. 17. 9, 10. மத். 9. 4. மாற். 2. 8. அப். 1. 24. வெளி. 2. 23
12 7. 50, 51: 19. 39
13 9. 16, 33. அப். 2. 22: 10. 38
† அடையாளங்களை
‡ உயரத்திலிருந்து. 1. 13. கலா. 6. 15. எபே. 2. 1. தீத். 3. 5. யாக். 1. 18. 1 பே. 1. 23. 1 யோ. 2. 29: 3. 9
14 மாற். 16. 16. அப். 2. 38
15 1 கொ. 15. 47–49. 2 கொ. 5. 17
16 1 கொ. 2. 11
17 6. 52, 60
§ சம்பவிக்கக்கூடும்
18 மத். 11. 27. 1 யோ. 1. 1–3
19 6. 33. அப். 2. 34. 1 கொ. 15. 47. எபே. 4. 9, 10
20 எண். 21. 9
21 36. உ. எபி. 7. 25
22 ரோ. 5. 8. 1 யோ. 4. 9
23 5. 45: 8. 15. லூக். 9. 56. 1 யோ. 4. 14
24 6. 40, 47

குமாரனுடைய நாமத்தில் விசுவாசமுள்ளவனு
யிராதபடினால் அவன் ஆக்கினைத்தீர்ப்புக் குட்
19 பட்டாயிற்று. ஒளியானது உலகத்திலே வந்
திருந்தும்[1]மனுஷருடைய கிரியைகள் பொல்
லாதவைகளா யிருக்கிறபடியினால் அவர்கள்
ஒளியைப்பார்க்கிலும் இருளை விரும்புகிறதே
[1]அந்த ஆக்கினைத்தீர்ப்புக்குக் காரணமாயிருக்
20 கிறது. பொல்லாங்கு செய்கிறஎவனும் ஒளி
யைப் பகைக்கிறான், [2]தன் கிரியைகள் *கண்
டிக்கப்படாதபடிக்கு, ஒளியினிடத்தில் வரா
21 திருக்கிறான். சத்தியத்தின்படி செய்கிறவ
னோ, [3]தன் கிரியைகள் தேவனுக்குள்ளாய்ச்
செய்யப்படுகிறதென்று வெளியாகும்படிக்கு,
ஒளியினிடத்தில் வருகிறான் என்றார்.
22 இவைகளுக்குப் பின்பு, இயேசுவும் அவரு
டைய சீஷரும் யூதேயா தேசத்திற்கு வந்தார்
கள்; அங்கே அவர் அவர்களோடே சஞ்சரி
23 த்து, [4]ஞானஸ்நானங் கொடுத்துவந்தார். சா
லிம் ஊருக்குச் சமீபமான அயினோன் என்
னும் இடத்திலே தண்ணீர் மிகுதியாயிருந்த
படியினால், [5]யோவானும் அங்கே ஞானஸ்நா
னங் கொடுத்துவந்தான்; ஜனங்கள் அவனிடத்
24 தில் வந்து ஞானஸ்நானம் பெற்றார்கள். அக்
காலத்தில் யோவான் [6]காவலில் வைக்கப்பட்
25 டிருக்கவில்லை. அப்பொழுது யோவானு
டைய சீஷரில் சிலருக்கும் யூதருக்கும் சுத்தி
கரிப்பைக்குறித்து வாக்குவாதமுண்டாயிற்று.
26 அவர்கள் யோவானிடத்தில் வந்து: ரபீ, உம்
முடனேகூட யோர்தானுக்கு அக்கரையில்
ஒருவர் இருந்தாரே; அவரைக்குறித்து நீரும்
சாட்சி கொடுத்தீரே, [7]இதோ, அவர் ஞானஸ்
நானங் கொடுக்கிறார், [8]எல்லாரும் அவரிடத்
27 தில் போகிறார்கள் என்றார்கள். யோவான்
பிரதியுத்தரமாக: [9]பரலோகத்திலிருந்து ஒருவ
னுக்குக் கொடுக்கப்பட்டாலொழிய, அவன்
28 ஒன்றையும்பெற்றுக்கொள்ளமாட்டான். நான்
கிறிஸ்துவல்ல [10]அவருக்கு முன்னாக அனுப்
பப்பட்டவன் என்று நான் சொன்னதற்கு
29 நீங்களே சாட்சிகள். மணவாட்டியை உடை
யவனே மணவாளன்; [11]மணவாளனுடைய
தோழனோ, அருகே நின்று, அவருடைய
சொல்லைக் கேட்கிறவனாய் மணவாளனுடைய
சத்தத்தைக் குறித்து மிகவும் சந்தோஷப்படுகி
றான்; இந்தச் சந்தோஷம் இப்பொழுது எனக்
30 குச் சம்பூரணமாயிற்று. அவர் பெருகவும்
நான் சிறுகவும் வேண்டும்.
31 உன்னதத்திலிருந்து [12]வருகிறவர் எல்லாரி
லும்மேலானவர்; பூமியிலிருந்துண்டானவன்
பூமியின் தன்மையுள்ளவனாயிருந்து, பூமிக்
கடுத்தவைகளைப் பேசுகிறான்; [13]பரலோகத்தி
லிருந்து வருகிறவர் எல்லாரிலும் மேலானவர்.
32 தாம் கண்டதையும் கேட்டதையும் சாட்சியா
கச் சொல்லுகிறார்; [14]அவருடைய சாட்சியை
33 ஒருவனும் ஏற்றுக்கொள்ளுகிறதில்லை. அவ
ருடைய சாட்சியை ஏற்றுக்கொள்ளுகிறவன்
[15]தேவன் சத்தியமுள்ளவரென்று முத்திரை
34 போட்டு நிச்சயப்படுத்துகிறான். தேவனால்
அனுப்பப்பட்டவர் தேவனுடைய வார்த்தை
களைப் பேசுகிறார்; [16]தேவன் அவருக்குத் தமது
ஆவியை அளவில்லாமல் கொடுத்திருக்கிறார்.
பிதாவானவர் குமாரனில் அன்பாயிருந்து[17]எல் 35
லாவற்றையும் அவர் கையில் ஒப்புக்கொடுத்தி
ருக்கிறார். குமாரனிடத்தில் விசுவாசமாயிருக் 36
கிறவன் நித்தியஜீவனை உடையவனாயிருக்கி
றான்; குமாரனை விசுவாசியாதவனோ ஜீவனைக்
காண்பதில்லை, தேவனுடைய கோபம் அவன்
மேல் நிலைநிற்கும் என்றான்.

யோவானைப்பார்க்கிலும் இயேசு[18]அநேகம் 4
பேரைச் சீஷராக்கி ஞானஸ்நானங் கொடுக்கி
றாரென்று பரிசேயர் கேள்விப்பட்டதாகக் கர்
த்தர் அறிந்தபோது, யூதேயாவைவிட்டு மறு 2
படியும் கலிலேயாவுக்குப் போனார். இயேசு 3
தாமே ஞானஸ்நானங் கொடுக்கவில்லை, அவரு
டைய சீஷர்கள் கொடுத்தா[illegible] அவர் சமா 4
ரியாநாட்டின் வழியாய்ப் போ[illegible]வண்டியதா
யிருந்தபடியால், யாக்கோபு தன் குமாரனா 5
கிய யோசேப்புக்குக் [19]கொடுத்த நிலத்துக்கு
அருகே இருந்த சமாரியாவிலுள்ள சீகார் என்
னப்பட்ட ஊருக்கு வந்தார். அங்கே யாக் 6
கோபுடைய கிணறு இருந்தது; இயேசு பிர
யாணத்தினால் இளைப்படைந்தவராய் அந்தக்
கிணற்றினருகே உட்கார்ந்தார்; அப்பொழுது
ஏறக்குறைய ஆறாம்மணி வேளையாயிருந்தது.
அவருடைய சீஷர்கள் போஜனபதார்த்தங்க 7
ளைக் கொள்ளும்படி ஊருக்குள்ளே போயிருந்
தார்கள். அப்பொழுது சமாரியா நாட்டாளா 8
கிய ஒரு ஸ்திரீ தண்ணீர்மொள்ள வந்தாள்.
இயேசு அவளை நோக்கி: தாகத்துக்குத் தா
என்றார். யூதர்கள் சமாரியருடனே [20]சம்பந் 9
தங் கலவாதவர்களானபடியால், சமாரியா
ஸ்திரீ அவரை நோக்கி: நீர் யூதனாயிருக்க, சமா
ரியா ஸ்திரீயாகிய என்னிடத்தில், தாகத்துக்
குத் தா என்று எப்படிக் கேட்கலாம் என்
றாள். இயேசு அவளுக்குப் பிரதியுத்தரமாக: 10
[21]நீ தேவனுடைய ஈவையும், தாகத்துக்குத் தா
என்று உன்னிடத்தில் கேட்கிறவர் இன்னார்
என்பதையும் அறிந்திருந்தாயானால், நீயே
அவரிடத்தில் கேட்டிருப்பாய், [22]அவர் உன
க்கு ஜீவத்தண்ணீரைக் கொடுத்திருப்பார்
என்றார். அதற்கு அந்த ஸ்திரீ: ஆண்டவ 11
ரே, மொண்டுகொள்ள உம்மிடத்தில் பாத்
திரமில்லையே, கிணறும் ஆழமாயிருக்கிற
தே, பின்னை எங்கேயிருந்து உமக்கு ஜீவத்
தண்ணீர் உண்டாகும். இந்தக் கிணற்றை 12
எங்களுக்குத் தந்த நம்முடைய பிதாவாகிய
யாக்கோபைப்பார்க்கிலும் நீர் பெரியவரோ?
அவரும் அவர் பிள்ளைகளும் அவர் மிருக
ஜீவன்களும் இதிலே குடித்ததுண்டே என்
றாள். இயேசு அவளுக்குப் பிரதியுத்தரமாக: 13
இந்தத் தண்ணீரைக் குடிக்கிறவனுக்கு மறுப
டியும் தாகமுண்டாகும். நான் கொடுக்கும் 14
தண்ணீரைக் குடிக்கிறவனுக்கோ ஒருக்கா
லும் தாகமுண்டாகாது; [23]நான் அவனுக்குக்
கொடுக்கும் தண்ணீர் அவனுக்குள்ளே நித்

1 1. 4, 9-11
2 யோபு 24. 13, 17. தீத். 4. 18, 19. எபே. 5. 13
* வெளிப்படுத்தப் படாதபடிக்கு
3 1 யோ. 1. 6. 3 யோ. 11. வச
4 4. 2
5 1 சாமு. 9. 4. மத். 3. 5, 6
6 மத். 14. 3
7 1. 7, 15. ழ
8 சங். 65. 2. ஏசா. 45. 23
9 1 கொ. 2. 12-14: 4. 7. எபி. 5. 4. யாக். 1. 17
10 1. 20, 27. மாற். 1. 2. லூ. 1. 17
11 உன்னத. 3. 8-12: 5. 1. எரே. 2. 2. எசே. 16. 8. ஓசி. 2. 19, 20. மத். 22. 2. 1 கொ. 11. 2. எபே. 5. 25, 27. வெளி. 21. 9
12 6. 33: 8. 23. மத். 28. 18. ரோ. 9. 5. எபே. 1. 20, 21
13 1 கொ. 15. 47
14 1. 11
15 ரோ. 3. 4. 1 யோ. 5. 10
16 1. 16: 7. 16. சங். 45. 7. ஏசா. 11. 2: 59. 21. கொலோ. 1. 19
17 மத். 11. 27: 28. 18. லூ. 10. 22. எபி. 2. 8
18 3. 22, 26
19 ஆதி. 33. 19: 48. 22. யோசு. 24. 32
20 லூ. 9. 52, 53. அப். 20. 28
21 எபே. 2. 8
22 ஏசா. 12. 3: 41. 17, 18. எரே. 2. 13. சகரி. 13. 1: 14. 8. வெளி. 22. 17
23 6. 35, 58: 7. 38: 17. 2, 3. ரோ. 6. 23. 1 யோ. 5. 20

திய ஜீவகாலமாய் ஊறுகிற நீரூற்றாயிருக்கும்
15 என்றார். அந்த ஸ்திரீ அவரை நோக்கி:
ஆண்டவரே, எனக்குத் தாகமுண்டாகாம
லும், நான் இங்கே மொண்டுகொள்ள வராம
லுமிருக்கும்படி அந்தத் தண்ணீரை எனக்குத்
16 தரவேண்டும் என்றாள். இயேசு அவளை
நோக்கி: நீபோய், உன் புருஷனை இங்கே
17 அழைத்துக்கொண்டுவா என்றார். அதற்கு
அந்த ஸ்திரீ: எனக்குப் புருஷன் இல்லை என்
றாள். இயேசு அவளை நோக்கி: எனக்குப்
புருஷன் இல்லையென்று நீ சொன்னது சரி
18 தான். எப்படியெனில், ஐந்து புருஷர் உனக்
கிருந்தார்கள், இப்பொழுது உனக்கிருக்கிற
வன் உனக்குப் புருஷனல்ல, இதை உள்ள
19 படி சொன்னாய் என்றார். அப்பொழுது
அந்த ஸ்திரீ அவரை நோக்கி: [1]ஆண்டவரே,
20 நீர் தீர்க்கதரிசி என்று காண்கிறேன். எங்
கள் பிதாக்கள் [2]இந்த மலையிலே தொழுது
கொண்டு வந்தார்கள்; [3]நீங்கள் எருசலேமிலி
ருக்கிற ஸ்தலத்திலே தொழுதுகொள்ளவேண்
21 டும் என்கிறீர்களே என்றாள். அதற்கு இயேசு:
[4]ஸ்திரீயே, நான் சொல்லுகிறதை நம்பு, நீங்கள்
இந்த மலையிலும் எருசலேமிலும் மாத்திர
மல்ல, எங்கும் பிதாவைத் தொழுதுகொள்
22 ளுங்காலம் வருகிறது. நீங்கள் அறியாததைத்
தொழுதுகொள்ளுகிறீர்கள்; [5]நாங்கள் அறிந்தி
ருக்கிறதைத் தொழுதுகொள்ளுகிறோம்;
[6]ஏனென்றால் ரட்சிப்பு யூதர்கள் வழியாய்
23 வருகிறது. உண்மையாய்த் தொழுதுகொள்
ளுகிறவர்கள் பிதாவை ஆவியோடும் உண்மை
யோடும் தொழுதுகொள்ளுங்காலம் வரும்,
[7]அது இப்பொழுதே வந்திருக்கிறது; தம்மைத்
தொழுதுகொள்ளுகிறவர்கள் இப்படிப்பட்ட
வர்களாயிருக்கும்படி பிதாவானவர் விரும்பு
24 கிறார். தேவன் ஆவியாயிருக்கிறார், [8]அவ
ரைத் தொழுதுகொள்ளுகிறவர்கள் ஆவியோ
டும் உண்மையோடும் அவரைத் தொழுதுகொ
25 ள்ளவேண்டும் என்றார். அந்த ஸ்திரீ அவ
ரை நோக்கி: கிறிஸ்து என்னப்படுகிற மேசி
யா வருகிறார் என்று அறிவேன், [9]அவர்
வரும்போது எல்லாவற்றையும் நமக்கு அறி
26 விப்பார் என்றாள். அதற்கு இயேசு: [10]உன்
னுடனே பேசுகிற நானே அவர் என்றார்.
27 அத்தருணத்தில் அவருடைய சீஷர்கள்
வந்து, அவர் ஸ்திரீயுடனே பேசுகிறதைப்
பற்றி ஆச்சரியப்பட்டார்கள். ஆகிலும் என்ன
தேடுகிறீரென்றாவது, ஏன் அவளுடனே
பேசுகிறீரென்றாவது, ஒருவனும் கேட்க
28 வில்லை. அப்பொழுது அந்த ஸ்திரீ, தன்
குடத்தை வைத்துவிட்டு, ஊருக்குள்ளே
29 போய், ஜனங்களை நோக்கி: நான் செய்த
[11]எல்லாவற்றையும் ஒரு மனுஷன் எனக்குச்
சொன்னார்; அவரை வந்து பாருங்கள்; அவர்
30 கிறிஸ்துதானோ என்றாள். அப்பொழுது அவ
ர்கள் ஊரிலிருந்து புறப்பட்டு அவரிடத்தில்
31 வந்தார்கள். இப்படி நடக்கையில் சீஷர்கள்
அவரை நோக்கி: ரபீ, போஜனம்பண்ணும்
என்று வேண்டிக்கொண்டார்கள். அதற்கு 32
அவர்: நான் புசிப்பதற்கு நீங்கள் அறியாத
ஒரு போஜனம் எனக்கு உண்டு என்றார்.
அப்பொழுது சீஷர்கள் ஒருவரையொருவர் 33
பார்த்து: யாராவது அவருக்குப் போஜனம்
கொண்டுவந்திருப்பானோ என்றார்கள்.
இயேசு அவர்களை நோக்கி: [12]நான் என்னை 34
அனுப்பினவருடைய சித்தத்தின்படி செய்து
அவருடைய கிரியையை முடிப்பதே என்னு
டைய போஜனமாயிருக்கிறது. அறுப்புக்கா 35
லம் வருகிறதற்கு இன்னும் நாலுமாதம் செல்
லும் என்று நீங்கள் சொல்லுகிறதில்லையா?
[13]இதோ, வயல் நிலங்கள் இப்பொழுதே
அறுப்புக்கு விளைந்திருக்கிறதென்று உங்கள்
கண்களை ஏறெடுத்துப் பாருங்கள் என்று
நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். விதைக் 36
கிறவனும் அறுக்கிறவனுமாகிய இருவரும்
ஒருமித்துச் சந்தோஷப்படத்தக்கதாக, [14]அறு
க்கிறவன் கூலியை வாங்கி, நித்திய ஜீவனுக்
காகப் பலனைச் சேர்த்துக்கொள்ளுகிறான்.
விதைக்கிறவன் ஒருவன் அறுக்கிறவன் ஒரு 37
வன் [15]என்கிற மெய்யான வழக்கச்சொல்
இதினாலே விளங்குகிறது. நீங்கள் பிரயாசப் 38
பட்டுப் பயிரிடாததை அறுக்க நான் உங்களை
அனுப்பினேன், [16]மற்றவர்கள் பிரயாசப்பட்
டார்கள், அவர்களுடைய பிரயாசத்தின் பல
னை நீங்கள் பெற்றீர்கள் என்றார்.
நான் செய்த எல்லாவற்றையும் எனக்குச் 39
சொன்னார் என்று சாட்சி சொன்ன அந்த
ஸ்திரீயினுடைய வார்த்தையினிமித்தம் [17]அந்த
ஊரிலுள்ள சமாரியரில் அநேகர் அவர்மேல்
விசுவாசமுள்ளவர்களானார்கள். சமாரியர் 40
அவரிடத்தில் வந்து, தங்களிடத்தில் தங்க
வேண்டுமென்று அவரை வேண்டிக்கொண்
டார்கள்; அவர் இரண்டுநாள் அங்கே தங்கி
னார். அப்பொழுது அவருடைய உபதேசத் 41
தினிமித்தம் இன்னும் அநேகம்பேர் விசுவா
சித்து, அந்த ஸ்திரீயை நோக்கி: [18]உன் 42
சொல்லினிமித்தம் அல்ல, அவருடைய உப
தேசத்தை நாங்களே கேட்டு, அவர் மெய்
யாய்க் கிறிஸ்துவாகிய உலகரட்சகர் என்று
அறிந்து விசுவாசிக்கிறோம் என்றார்கள்.
இரண்டு நாளைக்குப் பின்பு அவர் அவ்வி 43
டம் விட்டுப் புறப்பட்டு கலிலேயாவுக்குப்
போனார். ஒரு தீர்க்கதரிசிக்குத் தன் சொந்த 44
ஊரிலே கனமில்லையென்று [19]இயேசு தாமே
சொல்லியிருந்தார். அவர் கலிலேயாவில் வந் 45
தபோது, எருசலேமில் பண்டிகையிலே அவர்
செய்த எல்லாவற்றையும் பார்த்திருந்த கலி
லேயர் அவரை ஏற்றுக்கொண்டார்கள்; [20]அவர்
களும் பண்டிகைக்குப் போயிருந்தார்கள்.
பின்பு, இயேசு தாம் தண்ணீரைத் திராட்சரச 46
மாக்கின கலிலேயாவிலுள்ள கானாவூருக்கு
மறுபடியும் வந்தார்; [21]அப்பொழுது கப்பர்நகூ
மிலே ராஜாவின் மனுஷரில் ஒருவனுடைய
குமாரன் வியாதியாயிருந்தான். இயேசு யூதே
யாவிலிருந்து கலிலேயாவுக்கு வந்தாரென்று

1 1. 48, 49. லூ. 7. 16; 24. 19
2 நியா. 9. 7
3 உபா. 12. 5–11. 1 இரா. 9. 3
4 மல். 1. 11. மத். 18. 20. 1 தீமோ. 2. 8
5 2 இரா. 17. 29. லூ. 24. 47
6 ரோ. 9. 4, 5
7 1. 17. பிலி. 3. 3
8 2 கொ. 3. 17
9 29, 39. வச
10 9. 37. மத். 26. 63, 64. மாற். 14. 61, 62
11 25. வச
12 6. 38. எபி 28. 12
13 மத். 9. 37. லூ. 10. 2
14 ரோ. 6. 22. 1 கொ. 3, 5–9
15 மீகா. 6. 15
16 1 பே. 1. 12
17 29. வச
18 17. 8. 1 யோ. 4. 14
19 மத். 13. 57. மாற். 6. 4. லூ. 4. 24
20 2. 23; 3. 2
21 2. 1, 11

அந்த மனுஷன் கேள்விப்பட்டபோது, அவ
ரிடத்திற்குப் போய், தன் மகன் மரண அவ
ஸ்தையாயிருந்தபடியினாலே, அவனைக் குண
மாக்கும்படிக்கு வரவேண்டுமென்று அவரை
48 வேண்டிக்கொண்டான். அப்பொழுது இயேசு
அவனை நோக்கி: [1]நீங்கள் அடையாளங்களை
யும் அற்புதங்களையும் காணாவிட்டால் விசுவா
49 சிக்கமாட்டீர்கள் என்றார். அதற்கு ராஜா
வின் மனுஷன்: ஆண்டவரே, என் பிள்ளை
சாகிறதற்கு முன்னே வரவேண்டும் என்றான்.
50 இயேசு அவனை நோக்கி: [2]நீ போகலாம், உன்
குமாரன் பிழைத்திருக்கிறான் என்றார். அந்த
மனுஷன், இயேசு சொன்ன வார்த்தையை
51 நம்பிப் போனான். அவன் போகையில், அவ
னுடைய ஊழியக்காரர் அவனுக்கு எதிர்கொ
ண்டுவந்து, உம்முடைய குமாரன் பிழைத்தி
52 ருக்கிறான் என்று அறிவித்தார்கள். அப்பொ
ழுது: எந்த மணிநேரத்தில் அவனுக்குக் குண
முண்டாயிற்று என்று அவர்களிடத்தில் விசா
ரித்தான். அவர்கள்: நேற்று ஏழாமணிநேரத்
தில் ஜுரம் அவனை விட்டது என்றார்கள்.
53 உன் குமாரன் பிழைத்திருக்கிறான் என்று
இயேசு தன்னுடனே சொன்ன மணிநேரம்
அதுவே என்று தகப்பன் அறிந்து, [3]அவனும்
அவன் வீட்டாரனைவரும் விசுவாசித்தார்கள்.
54 இயேசு யூதேயாவிலிருந்து கலிலேயாவுக்குத்
திரும்பிவந்தபின்பு, இது அவர் செய்த இரண்
டாம் அற்புதம்.

5 இவைகளுக்குப் பின்பு [4]யூதருடைய பண்
டிகை ஒன்று வந்தது; அப்பொழுது இயேசு
எருசலேமுக்குப் போனார்.
2 எபிரெய பாஷையிலே *பெதஸ்தா என்ன
ப்பட்ட ஒரு குளம் எருசலேமில் ஆட்டுவாச
லினருகே இருக்கிறது, அதற்கு ஐந்து மண்ட
3 பங்களுண்டு. அவைகளிலே குருடர், சப்
பாணிகள், சூம்பின உறுப்புடையவர்கள் முத
லான வியாதிக்காரர் அநேகர் படுத்திருந்து,
தண்ணீர் எப்பொழுது கலங்கும் என்று காத்
4 துக்கொண்டிருப்பார்கள். ஏனெனில் சில
சமயங்களிலே தேவதூதன் ஒருவன் அந்தக்
குளத்தில் இறங்கி, [5]தண்ணீரைக் கலக்கு
வான்; தண்ணீர் கலங்கினபின்பு யார் முந்தி
அதில் இறங்குவானோ அவன் எப்பேர்ப்பட்ட
வியாதிஸ்தனாயிருந்தாலும் சொஸ்தமாவான்.
5 முப்பத்தெட்டு வருஷம் வியாதிகொண்டிரு
6 ந்த [6]ஒரு மனுஷன் அங்கே இருந்தான். படுத்
திருந்த அவனை இயேசு கண்டு, [7]அவன் வெகு
காலமாய் வியாதிஸ்தனென்று அறிந்து,
அவனை நோக்கி: சொஸ்தமாகவேண்டுமென்று
7 விரும்புகிறாயா என்று கேட்டார். அதற்கு
வியாதிஸ்தன்: [8]ஆண்டவரே, தண்ணீர் கலக்
கப்படும்போது என்னைக் குளத்தில் கொண்டு
போய் விடுகிறதற்கு ஒருவருமில்லை, நான்
போகிறதற்குள்ளே வேறொருவன் எனக்கு
8 முந்தி இறங்கிவிடுகிறான் என்றான். இயேசு
அவனை நோக்கி: [9]எழுந்திரு, உன் படுக்கை
9 யை எடுத்துக்கொண்டு நட என்றார். உட

1 1 கொ. 1. 22
2 மத். 8. 13. மாற். 7. 29, 30. லூ. 17. 14
3 சங். 107. 20. அப். 16. 34: 18. 8
4 2. 13. லேவி. 23. 2. உபா. 16. 16
* இரக்கத்தின் வீடு
5 சதி. 8. 17. பிர. 9. 10. மத். 11. 12
6 லூ. 8. 43: 13. 16
7 சங். 142. 3
8 உபா. 32. 36. சங். 72. 12: 142. 4. ரோ. 5, 6. 2கொ. 1. 9, 10
9 மத். 9. 6. மாற். 2. 11. லூ. 5. 24
10 9. 14
11 எரே. 17. 21. மத். 12. 2.
12 4. 30, 14. 9
13 8. 11. மத். 12. 45
14 9. 4: 14. 10
15 10: 30, 33. சகரி. 13. 7. பிலி. 2. 6
16 7. 19
17 30. ...
18 3. 35. மத். 3. 17. 2பே. 1. 17
19 11. 25, 43. லூ. 7. 14: 8. 54
20 மத். 11. 27. அப். 17. 31. 2கொ. 5. 10. 1பே. 4. 5

னே அந்த மனுஷன் சொஸ்தமாகி, தன்
படுக்கையை எடுத்துக்கொண்டு, நடந்துபோ
னான்.
[10]அந்த நாள் ஓய்வுநாளாயிருந்தது. ஆத 10
லால் யூதர்கள் குணமாக்கப்பட்டவனை நோ
க்கி: இது ஓய்வுநாளாயிருக்கிறதே, [11]படுக்கை
யை எடுத்துக்கொண்டுபோகிறது உனக்கு
நியாயமல்ல என்றார்கள். அவன் அவர்களுக் 11
குப் பிரதியுத்தரமாக: என்னைச் சொஸ்தமாக்
கினவர், உன் படுக்கையை எடுத்துக்கொண்டு
நடவென்று எனக்குச் சொன்னார் என்றான்.
அதற்கு அவர்கள்: உன் படுக்கையை எடுத் 12
துக்கொண்டு நடவென்று உன்னுடனே
சொன்ன மனுஷன் யார் என்று அவனிடத்
தில் கேட்டார்கள். சொஸ்தமாக்கப்பட்ட 13
வன் அவர் இன்னாரென்று அறியவில்லை;
[12]அவ்விடத்தில் ஜனங்கள் கூட்டமாயிருந்தபடி
யினால் இயேசு விலகியிருந்தார். அதற்குப் 14
பின்பு இயேசு அவனை தேவாலயத்திலே
கண்டு: இதோ, நீ சொஸ்தமானாய், [13]அதிக
கேடானதொன்றும் உனக்குவராதபடி இனிப்
பாவஞ்செய்யாதே என்றார். அந்த மனு 15
ஷன் போய், தன்னைச் சொஸ்தமாக்கினவர்
இயேசு என்று யூதர்களுக்கு அறிவித்தான்.
இயேசு இவைகளை ஓய்வுநாளில் செய்தபடி 16
யால், யூதர்கள் அவரைத் துன்பப்படுத்தி,
அவரைக் கொலைசெய்ய வகைதேடினார்கள்.
இயேசு அவர்களை நோக்கி: [14]என் பிதா இதுவ 17
ரைக்கும் கிரியை செய்துவருகிறார், நானும்
கிரியை செய்துவருகிறேன் என்றார். அவர் 18
ஓய்வுநாள் கட்டளையை மீறினதுமல்லாமல்,
[15]தேவனைத் தம்முடைய சொந்தப் பிதா என்
றுஞ் சொல்லித் தம்மை தேவனுக்குச் சம
மாக்கினபடியினாலே, [16]யூதர்கள் அவரைக்
கொலைசெய்யும்படி அதிகமாய் வகைதேடி
னார்கள்.
அப்பொழுது இயேசு அவர்களை நோக்கி: 19
மெய்யாகவே மெய்யாகவே நான் உங்களுக்
குச் சொல்லுகிறேன்: [17]பிதாவானவர் செய்
யக் குமாரன் காண்கிறதெதுவோ, அதையே
யன்றி, வேறொன்றையும் தாமாய்ச் செய்ய
மாட்டார்; அவர் எவைகளைச் செய்கிறாரோ,
அவைகளைக் குமாரனும் அந்தப்படியே செய்
கிறார். பிதாவானவர் [18]குமாரனிடத்தில் அன் 20
பாயிருந்து, தாம் செய்கிறவைகளையெல்லாம்
அவருக்குக் காண்பிக்கிறார்; நீங்கள் ஆச்சரி
யப்படத்தக்கதாக இவைகளைப்பார்க்கிலும் பெ
ரிதான கிரியைகளையும் அவருக்குக் காண்பிப்
பார். பிதாவானவர் மரித்தோரை எழுப்பி 21
உயிர்ப்பிக்கிறதுபோல, [19]குமாரனும் தமக்குச்
சித்தமானவர்களை உயிர்ப்பிக்கிறார். அன்றி 22
யும் பிதாவைக் கனம்பண்ணுகிறதுபோல எல்
லாரும் குமாரனையும் கனம்பண்ணும்படிக்கு,
பிதாவானவர் தாமே ஒருவருக்கும் நியாயத்தீர்
ப்புச் செய்யாமல், [20]நியாயத்தீர்ப்புச் செய்யும்
அதிகாரம் முழுவதையும் குமாரனுக்கு ஒப்புக்
கொடுத்திருக்கிறார். குமாரனைக் கனம்பண் 23

ணுதவன் [1]அவரை அனுப்பின பிதாவையும்
24 கனம்பண்ணுதவனுயிருக்கிருன். என் வசனத்
தைக் கேட்டு, [2]என்னை அனுப்பினவரை விசு
வாசிக்கிறவனுக்கு நித்திய ஜீவன் உண்டு;
அவன் ஆக்கினைத்தீர்ப்புக் குட்படாமல், [3]மர
ணத்தைவிட்டு நீங்கி, ஜீவனுக்குட்பட்டிருக்
கிருன் என்று மெய்யாகவே மெய்யாகவே
25 உங்களுக்குச்சொல்லுகிறேன். மரித்தோர் தே
வகுமாரனுடைய சத்தத்தைக் கேட்குங் காலம்
வரும், [4]அது இப்பொழுதே வந்திருக்கிறது;
அதைக்கேட்கிறவர்கள்பிழைப்பார்கள் என்று
மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொ
26 ல்லுகிறேன். ஏனெனில், பிதாவானவர் தம்
மில் தாமே ஜீவனுடையவரா யிருக்கிறது
போல, [5]குமாரனும் தம்மில்தாமே ஜீவனுடை
யவரா யிருக்கும்படி அருள் செய்திருக்கிருர்.
27 அவர் மனுஷகுமாரனுயிருக்கிறபடியால் நியா
யத்தீர்ப்புச் செய்யும்படிக்கு [6]அதிகாரத்தையும்
28 அவருக்குக் கொடுத்திருக்கிருர். இதைக்கு
றித்து நீங்கள் ஆச்சரியப்படவேண்டாம்;
ஏனென்ருல் பிரேதக்குழிகளிலுள்ள அனைவ
ரும அவருடைய சத்தத்தைக் கேட்குங்காலம்
29 வரும்; அப்பொழுது, [7]நன்மை செய்தவர்கள்
ஜீவனை அடையும்படி எழுந்திருக்கிறவர்களா
கவும்,தீமைசெய்தவர்கள் ஆக்கினையை அடை
யும்படி எழுந்திருக்கிறவர்களாகவும் புறப்படு
வார்கள்.
30 நான் என் சுயமாய் [8]ஒன்றும் செய்கிற
தில்லை; நான் கேட்கிறபடியே நியாயந்தீர்க்கி
றேன்; [9]எனக்குச் சித்தமானதை நான் தேடா
மல், என்னை அனுப்பின பிதாவுக்குச் சித்த
மானதையே நான் தேடுகிறபடியால் என்
31 தீர்ப்பு நீதியாயிருக்கிறது. என்னைக்குறித்து
நானே சாட்சிகொடுத்தால் [10]என் சாட்சி மெய்
32 யாயிராது. என்னைக்குறித்துச் சாட்சிகொடுக்
கிறவர் வேருெருவர் இருக்கிருர், [11]அவர் என்
னைக்குறித்துக் கொடுக்கிற சாட்சி மெய்யான
33 சாட்சியென்று அறிந்திருக்கிறேன். நீங்கள்
யோவானிடத்தில் ஆளனுப்பி விசாரித்தீர்கள்,
[12]அவன் சத்தியத்திற்கு சாட்சிகொடுத்தான்.
34 நான் ஏற்றுக்கொள்ளுகிற சாட்சி மனுஷரு
டைய சாட்சியல்ல, [13]நீங்கள் ரட்சிக்கப்படுவ
தற்காகவே இவைகளைச் சொல்லுகிறேன்.
35 அவன் எரிந்து பிரகாசிக்கிற விளக்காயிருந்
தான்; [14]நீங்களும் சிலகாலம் அவன் வெளிச்
36 சத்திலே களிகூர மனதாயிருந்தீர்கள். யோவா
னுடைய சாட்சியைப்பார்க்கிலும் மேன்மை
யான சாட்சி எனக்கு உண்டு; அதென்னவெ
னில், [15]நான் நிறைவேற்றும்படிக்குப் பிதாவா
னவர் எனக்குக் கற்பித்ததும் நான் செய்து
வருகிறதுமான கிரியைகளே பிதா என்னை
அனுப்பினுர் என்று என்னைக்குறித்துச் சாட்
37 சிகொடுக்கிறது. என்னை அனுப்பின பிதா
தாமே என்னைக்குறித்துச் சாட்சிகொடுத்திருக்
கிருர்; [16]நீங்கள் ஒருக்காலும் அவர் சத்தத்தைக்
கேட்டதுமில்லை, [17]அவர் ரூபத்தைக் கண்டது
38 மில்லை. அவர் அனுப்பினவரை நீங்கள் விசு
வாசியாதபடியால் [18]அவருடைய வசனம் உங்
களில் தரித்திருக்கிறதுமில்லை. வேதவாக்கியங் 39
களை [19]ஆராய்ந்துபாருங்கள்; அவைகளால் உங்
களுக்கு நித்தியஜீவன் உண்டென்று எண்
ணுகிறீர்களே, என்னைக்குறித்துச் சாட்சி
கொடுக்கிறவைகளும் அவைகளே. அப்படியி 40
ருந்தும் உங்களுக்கு ஜீவன் உண்டாகும்படி
[20]என்னிடத்தில் வர உங்களுக்கு மனதில்லை.
நான் மனுஷரால் [21]மகிமையை ஏற்றுக்கொள் 41
ளுகிறதில்லை. உங்களில் தேவ அன்பு இல்லை 42
யென்று உங்களை அறிந்திருக்கிறேன். நான் 43
என் பிதாவின் நாமத்தினுலே வந்திருந்தும் நீங்
கள் என்னை ஏற்றுக்கொள்ளவில்லை, வேருெ
ருவன் தன் சுயநாமத்தினுலே வந்தால் அவனை
ஏற்றுக்கொள்வீர்கள். தேவனுலேமாத்திரம் 44
வருகிற மகிமையைத் தேடாமல், *ஒருவரா
லொருவர் [22]மகிமையை ஏற்றுக்கொள்ளுகிற
நீங்கள் எப்படி விசுவாசிப்பீர்கள்? பிதாவினி 45
டத்தில் நான் உங்கள்மேல் குற்றஞ்சாட்டு
வேன் என்று நினையாதிருங்கள்; [23]நீங்கள் நம்
புகிற மோசேயே உங்கள்மேல் குற்றஞ்சாட்டு
வான். நீங்கள் மோசேயை விசுவாசித்தீர்களா 46
னுல், என்னையும் விசுவாசிப்பீர்கள்; [24]அவன்
என்னைக்குறித்து எழுதியிருக்கிருனே.
அவன் எழுதின வாக்கியங்களை நீங்கள் விசுவா 47
சியாமலிருந்தால் [25]நான் சொல்லுகிற வசனங்
களை எப்படி விசுவாசிப்பீர்கள் என்ருர்.

இவைகளுக்குப்பின்பு, [26]இயேசு திபேரி 6
யாக்கடல் என்னப்பட்ட கலிலேயாக்கடலின்
அக்கரைக்குப் போனுர். அவர் வியாதிக்கா 2
ரிடத்தில் செய்த அற்புதங்களைத் திரளான
ஜனங்கள் கண்டபடியால் அவருக்குப் பின்
சென்ருர்கள். இயேசு மலையின்மேல் ஏறி, 3
அங்கே தம்முடைய சீஷருடனேகூட உட்
கார்ந்தார். அப்பொழுது [27]யூதருடைய பண் 4
டிகையாகிய பஸ்கா சமீபமாயிருந்தது. இயேசு 5
தம்முடைய கண்களை ஏறெடுத்து, திரளான
ஜனங்கள் தம்மிடத்தில் வருகிறதைக் கண்டு,
பிலிப்புவை நோக்கி: [28]இவர்கள் சாப்பிடத்தக்
கதாக அப்பங்களை எங்கே கொள்ளலாம் என்று
கேட்டார். தாம் செய்யப்போகிறதை அறிந் 6
திருந்தும், அவனைச் சோதிக்கும்படி இப்படிக்
கேட்டார். பிலிப்பு அவருக்குப் பிரதியுத்தர 7
மாக: இவர்களில் ஒவ்வொருவன் கொஞ்சங்
கொஞ்சம் எடுத்துக்கொண்டாலும், [29]இருநூறு
பணத்து அப்பங்களும் இவர்களுக்குப் போ
தாதே என்ருன். அப்பொழுது அவருடைய 8
சீஷரிலொருவனும், சீமோன் பேதுருவின்
சகோதரனுமாகிய அந்திரேயா அவரை நோ
க்கி: இங்கே ஒரு பையன் இருக்கிருன், 9
அவன் கையில் ஐந்து வாற்கோதுமை அப்
பங்களும் இரண்டு மீன்களும் உண்டு,
ஆனுலும் அவைகள் இத்தனை ஜனங்களுக்கு
எம்மாத்திரம் என்ருன். இயேசு: ஜனங் 10
களை உட்காரவையுங்கள் என்ருர். அந்த
இடம் மிகுந்த புல்லுள்ளதாயிருந்தது. பந்தி
யிருந்த புருஷர்கள் ஏறக்குறைய ஐயாயிரம்

1 1 யோ. 2. 23
2 6. 40, 47
3 1 யோ. 3. 14
4 28. வச. எபே 2. 1, 5: 5. 14. கொலோ. 2. 13
5 1 கொ. 15. 45
6 22. வச. அப். 10. 42: 17. 31
7 தானி. 12. 2. மத். 25. 3, 33, 46. 1 கொ. 15. 52. 1 தெச. 4. 16
8 19. வச
9 4. 34: 6. 38. சங். 40. 7, 8. மத். 26. 39
10 8. 14. சீநி. 27. 2. வெளி. 3. 14
11 8. 18. மத். 3. 17: 17. 5. 1 யோ. 5. 6-9
12 1. 7, 32
13 20. 31
14 மத். 21. 26. மாற். 6. 20. 2பே. 1. 19
15 3, 2: 10. 25: 17. 4. 1 யோ. 5. 9
16 மத். 3. 17: 17. 5
17 உபா. 4. 12. 1தீமோ. 6. 16
18 1 யோ. 2. 14
19 ஏசா. 8. 20: 34. 16. லூக். 16. 29
20 3. 19
21 34. வச. 1தெச. 2. 6
* பாஷபா
22 12. 43. ரோ. 2. 10, 29
23 ரோ. 2. 12
24 ஆதி. 3. 15: 22. 18. உபா. 18. 15, 18. அப். 26. 22
25 லூக். 16. 31
26 மத். 14. 15. முதல். மாற். 6. 34. முதல். லூக். 9. 12. முதல்
27 2. 13: 5. 1
28 மத். 14. 14. மாற். 6. 35. லூக். 9. 12
29 எண். 11. 21, 22. 2 இரா. 4. 43

11 பேராயிருந்தார்கள். இயேசு அந்த அப்பங்
களை எடுத்து, ஸ்தோத்திரம்பண்ணி, சீஷர்க
ளிடத்தில் கொடுத்தார்; சீஷர்கள் பந்தியிருந்
தவர்களுக்குக் கொடுத்தார்கள்; அப்படியே
மீன்களையும் அவர் எடுத்து அவர்களுக்கு வே
12 ண்டியமட்டும் கொடுத்தார். அவர்கள் திருப்தி
யடைந்தபின்பு, அவர் தம்முடைய சீஷர்களை
நோக்கி: [1]ஒன்றும் சேதமாய்ப் போகாதப
டிக்கு மீதியான துணிக்கைகளைச் சேர்த்துவை
13 யுங்கள் என்றார். அந்தப்படியே அவர்கள்
சேர்த்து, வாற்கோதுமை அப்பங்கள் ஐந்தில்
அவர்கள் சாப்பிட்டு மீதியான துணிக்கை
களினாலே பன்னிரண்டு கூடைகளை நிரப்
14 பினார்கள். இயேசு செய்த அற்புதத்தை
அந்த மனுஷர் கண்டு: [2]மெய்யாகவே இவர்
உலகத்தில் வருகிறவரான தீர்க்கதரிசி என்
றார்கள்.
15 ஆதலால் அவர்கள் வந்து, தம்மை ராஜா
வாக்கும்படிப் பிடித்துக்கொண்டுபோக மன
தாயிருக்கிறார்களென்று இயேசு அறிந்து,
மறுபடியும் விலகி, தனியே மலையின்மேல்
ஏறினார்.
16 சாயங்காலமானபோது [3]அவருடைய சீஷர்
17 கள் கடற்கரைக்குப் போய், படவில் ஏறி,
கடலின் அக்கரையிலுள்ள கப்பர்நகூமுக்கு
நேராய்ப் போனார்கள்; அப்பொழுது இருட்
டாயிருந்தது, இயேசுவும் அவர்களிடத்தில்
18 வாராதிருந்தார். பெருங்காற்று அடித்தபடியி
19 னாலே [4]கடல் கொந்தளித்தது. அவர்கள்
ஏறக்குறைய மூன்று நாலுமைல் தூரம் தண்டு
வலித்துப் போனபொழுது, இயேசு கடலின்
மேல் நடந்து, படவுக்குச் சமீபமாய் வரு
20 கிறதைக் கண்டு பயந்தார்கள். அவர்களை
அவர் நோக்கி: [5]நான்தான், பயப்படாதிருங்
21 கள் என்றார். அப்பொழுது அவரைப் பட
வில் ஏற்றிக்கொள்ள மனதாயிருந்தார்கள்;
உடனே படவு அவர்கள் போகிற கரையைப்
பிடித்தது.
22 மறுநாளில் கடலின் அக்கரையிலே நின்ற
ஜனங்கள் அவருடைய சீஷர் ஏறின அந்த
ஒரே படவுதவிர அங்கே வேறொரு படவும்
இருந்ததில்லையென்றும், இயேசு தம்முடைய
சீஷருடனேகூடப் படவில் ஏறாமல் அவரு
டைய சீஷர்மாத்திரம் போனார்களென்றும்
23 அறிந்தார்கள். கர்த்தர் ஸ்தோத்திரஞ்செய்த
பின்பு [6]அவர்கள் அப்பம் சாப்பிட்ட இடத்
துக்குச் சமீபமாய்த் திபேரியாவிலிருந்து வே
24 றே படவுகள் வந்தது. அப்பொழுது இயே
சுவும் அவருடைய சீஷரும் அங்கே இல்லா
ததை ஜனங்கள் கண்டு, உடனே அந்தப் பட
வுகளில் ஏறி, இயேசுவைத் தேடிக்கொண்டு,
25 கப்பர்நகூமுக்கு வந்தார்கள். கடலின் அக்
கரையிலே அவர்கள் அவரைக் கண்டபோது:
ரபீ, நீர் எப்பொழுது இவ்விடம் வந்தீர்
26 என்று கேட்டார்கள். இயேசு அவர்களுக்
குப் பிரதியுத்தரமாக: நீங்கள் அற்புதங்களைக்
கண்டதினால் அல்ல, நீங்கள் அப்பம் புசித்
துத் திருப்தியானதினாலேயே என்னைத் தே
டுகிறீர்கள் என்று மெய்யாகவே மெய்யாகவே
உங்களுக்குச் சொல்லுகிறேன். அழிந்து 27
போகிற போஜனத்திற்காக அல்ல, [7]நித்திய
ஜீவன்வரைக்கும் நிலைநிற்கிற போஜனத்திற்
காகவே கிரியை நடப்பியுங்கள்; அதை மனு
ஷகுமாரன் உங்களுக்குக் கொடுப்பார்; [8]அவ
ரைப் பிதாவாகிய தேவன் முத்திரித்திருக்கி
றார் என்றார். அப்பொழுது அவர்கள் அவரை 28
நோக்கி: தேவனுக்கேற்ற கிரியைகளை நடப்பிக்
கும்படி நாங்கள் என்னசெய்யவேண்டும் என்
றார்கள். இயேசு அவர்களுக்குப் பிரதியுத்தர 29
மாக: [9]அவர் அனுப்பினவரை நீங்கள் விசுவா
சிப்பதே தேவனுக்கேற்ற கிரியையாயிருக்கி
றது என்றார். அதற்கு அவர்கள்: [10]அப்படி 30
யானால் உம்மை விசுவாசிக்கும்படிக்கு நாங்கள்
காணத்தக்கதாக நீர் என்ன அடையாளத்தைக்
காண்பிக்கிறீர்? என்னத்தை நடப்பிக்கிறீர்?
வானத்திலிருந்து அவர்களுக்கு அப்பத்தைப் 31
புசிக்கக்கொடுத்தார் என்றெழுதியிருக்கிறபடி,
[11]நம்முடைய பிதாக்கள் வனாந்தரத்தில் மன்
னாவைப் புசித்தார்களே என்றார்கள். இயேசு 32
அவர்களை நோக்கி: வானத்திலிருந்துவந்த
அப்பத்தை மோசே உங்களுக்குக் கொடுக்க
வில்லை; [12]என் பிதாவோ வானத்திலிருந்து
வந்த மெய்யான அப்பத்தை உங்களுக்குக்
கொடுக்கிறார் என்று, மெய்யாகவே மெய்யாக
வே உங்களுக்குச் சொல்லுகிறேன். வானத் 33
திலிருந்திறங்கி, [13]உலகத்துக்கு ஜீவனைக் கொ
டுக்கிற அப்பமே தேவன் அருளிய அப்பம்
என்றார். அப்பொழுது அவர்கள் அவரை 34
நோக்கி: [14]ஆண்டவரே, இந்த அப்பத்தை எப்
பொழுதும் எங்களுக்குத் தரவேண்டும் என்
றார்கள். இயேசு அவர்களை நோக்கி: ஜீவ 35
அப்பம் நானே, [15]என்னிடத்தில் வருகிறவன்
ஒருக்காலும் பசியடையான், [16]என்னிடத்தில்
விசுவாசமா யிருக்கிறவன் ஒருக்காலும் தாக
மடையான். நீங்கள் என்னைக் கண்டிருந்தும் 36
[17]விசுவாசியாமலிருக்கிறீர்கள் என்று உங்களுக்
குச் சொன்னேன். பிதாவானவர் [18]எனக்குக் 37
கொடுக்கிற யாவும் என்னிடத்தில் வரும்;
[19]என்னிடத்தில் வருகிறவனை நான் புறம்பே
தள்ளுவதில்லை. என் சித்தத்தின்படியல்ல, 38
[20]என்னை அனுப்பினவருடைய சித்தத்தின்படி
செய்யவே நான் வானத்திலிருந்திறங்கி வந்
தேன். அவர் எனக்குத் தந்தவைகளில் ஒன் 39
றையும் நான் இழந்துபோகாமல், [21]கடைசி
நாளில் அவைகளை எழுப்புவதே என்னை அனு
ப்பின பிதாவின் சித்தமாயிருக்கிறது. குமார 40
னைக் கண்டு, அவரிடத்தில் விசுவாசமாயிருக்
கிறவன் எவனோ, [22]அவன் நித்தியஜீவனை
அடைவதும்; நான் அவனைக் கடைசிநாளில்
எழுப்புவதும், என்னை அனுப்பினவருடைய
சித்தமாயிருக்கிறது என்றார்.
நான் வானத்திலிருந்துவந்த அப்பம் என்று 41
அவர் சொன்னதினிமித்தம் யூதர்கள் அவரைக்
குறித்து முறுமுறுத்து: இவன் யோசேப்பின் 42

1 நெகே. 8. 10: 9. 25
2 ஆதி. 49. 10. உபா. 18. 15-18. மத். 11. 3
3 மத். 14. 23. மாற். 6. 47. [illegible]
4 சங். 107. 25
5 சங். 35. 3. ஏசா. 43. 1, 2. வெளி. 1. 17, 18
6 11. வச
7 54, 58 வச: 4. 14. எரே. 15. 16
8 8. 18. சங். 2. 7: 40. 7. ஏசா. 42. 1. அப். 2. 22. 2 பே. 1. 17
9 1 யோ. 3. 23
10 மத். 12. 38. 1 கொ. 1. 22
11 யாத். 16. 15. எண். 11. 7. நெகே. 9. 15. சங். 78. 24, 25. 1 கொ. 10. 3
12 கலா. 4. 4
13 48, 58. வச
14 4. 15
15 வெளி. 7. 16
16 4. 14: 7. 38
17 26, 64. வச
18 45. வச: 17. 6, 8. [illegible]
19 சங். 102. 17. ஏசா. 1. 18; 55. 7. மத். 11. 28. லூக். 23. 42, 43. 1 தீமோ. 1. 15, 16. 1 யோ. 2. 19. வெளி. 22. 17
20 4. 34: 5. 30. சங். 40. 7, 8. மத். 26. 39
21 10. 28: 17. 12: 18. 9. மத். 18. 14. 2 தீமோ. 2. 19
22 47. 54: 3. 15, 16: 11. 25

குமாரனாகிய இயேசு அல்லவா, [1]இவனுடைய
தகப்பனையும் தாயையும் அறிந்திருக்கிறோமே;
அப்படியிருக்க, நான் வானத்திலிருந்திறங்கி
வந்தேன் என்று இவன் எப்படிச் சொல்லு
43 கிறான் என்றார்கள். இயேசு அவர்களுக்குப்
பிரதியுத்தரமாக: உங்களுக்குள்ளே முறுமு
44 றுக்கவேண்டாம். என்னை அனுப்பின பிதா
ஒருவனை இழுத்துக்கொள்ளாவிட்டால் [2]அ
வன் என்னிடத்தில் வரமாட்டான்; கடைசி
45 நாளில் நான் அவனை எழுப்புவேன். எல்லா
ரும் தேவனாலே போதிக்கப்பட்டிருப்பார்கள்
என்று தீர்க்கதரிசிகளின் [3]ஆகமத்தில் எழுதி
யிருக்கிறதே; ஆகையால் பிதாவினிடத்தில்
கேட்டுக் கற்றுக்கொள்ளுகிறவன் எவனும்
46 என்னிடத்தில் வருகிறான். தேவனிடத்தி
னின்று வந்தவரேதவிர வேறொருவரும் பிதா
வைக் கண்டதில்லை, [4]இவரே பிதாவைக்
47 கண்டவர். என்னிடத்தில் விசுவாசமாயிருக்கி
றவனுக்கு [5]நித்தியஜீவன் உண்டென்று மெய்
யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்லு
48,49 கிறேன். ஜீவ அப்பம் [6]நானே. உங்கள்
பிதாக்கள் வனாந்தரத்திலே [7]மன்னாவைப் புசித்
50 திருந்தும் மரித்தார்கள். இதிலே புசிக்கிறவன்
மரியாமலிருக்கும்படி [8]வானத்திலிருந் திறங்
51 கின அப்பம் இதுவே. நானே வானத்தி
லிருந்திறங்கின ஜீவ அப்பம்; இந்த அப்பத்தைப்
புசிக்கிறவன் என்றென்றைக்கும் பிழைப்
பான்; [9]நான் கொடுக்கும் அப்பம் உலகத்தின்
ஜீவனுக்காக நான் கொடுக்கும் என் மாம்சமே
என்றார்.
52 அப்பொழுது யூதர்கள்: [10]இவன் தன்னு
டைய மாம்சத்தை எப்படி நமக்குப் புசிக்கக்
கொடுப்பான் என்று தங்களுக்குள்ளே வாக்கு
53 வாதம் பண்ணினார்கள். அதற்கு, இயேசு
அவர்களை நோக்கி: [11]நீங்கள் மனுஷகுமாரனு
டைய மாம்சத்தைப் புசியாமலும், அவருடைய
இரத்தத்தைப் பானம்பண்ணாமலும் இருந்
தால் உங்களுக்குள்ளே ஜீவனில்லை என்று
மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச்
54 சொல்லுகிறேன். என் மாம்சத்தைப் புசித்து,
[12]என் இரத்தத்தைப் பானம்பண்ணுகிறவ
னுக்கு நித்தியஜீவன் உண்டு; நான் அவனைக்
55 கடைசிநாளில் எழுப்புவேன். என் மாம்சம்
மெய்யான போஜனமாயிருக்கிறது, [13]என்
56 இரத்தம் மெய்யான பானமாயிருக்கிறது. என்
மாம்சத்தைப் புசித்து, [14]என் இரத்தத்தைப்
பானம்பண்ணுகிறவன் என்னிலே நிலைத்
திருக்கிறான், நானும் அவனிலே நிலைத்திருக்
57 கிறேன். ஜீவனுள்ள பிதா என்னை அனுப்பி
னதுபோலவும், [15]நான் பிதாவினால் பிழைத்
திருக்கிறதுபோலவும், என்னைப் புசிக்கிறவ
58 னும் என்னாலே பிழைப்பான். வானத்தி
லிருந்திறங்கின அப்பம் இதுவே; இது உங்கள்
பிதாக்கள் புசித்த மன்னாவைப்போலல்ல,
[16]அவர்கள் மரித்தார்களே; இந்த அப்பத்தைப்
புசிக்கிறவனோ என்றென்றைக்கும் பிழைப்
59 பான் என்றார். கப்பர்நகூமிலுள்ள ஜெபஆல
யத்திலே அவர் உபதேசிக்கையில் இவைக
ளைச் சொன்னார்.
அவருடைய சீஷரில் அநேகர் இவைக 60
ளைக் கேட்டபொழுது, [17]இது கடினமான
உபதேசம், யார் இதைக் கேட்பார்கள் என்
றார்கள். சீஷர்கள் அதைக்குறித்து முறு 61
முறுக்கிறார்களென்று இயேசு தமக்குள்ளே
அறிந்து, அவர்களை நோக்கி: இது உங்களுக்கு
இடறலாயிருக்கிறதோ? மனுஷகுமாரன் தாம் 62
முன்னிருந்த இடத்திற்கு ஏறிப்போகிறதை
நீங்கள் காண்பீர்களானால் எப்படியிருக்கும்?
ஆவியே உயிர்ப்பிக்கிறது, மாம்சமானது ஒன் 63
றுக்கும் உதவாது; [18]நான் உங்களுக்குச் சொல்
லுகிற வசனங்கள் ஆவியாயும் ஜீவனாயும் இரு
க்கிறது. ஆகிலும் உங்களில் விசுவாசியாதவர் 64
கள் சிலர் உண்டு என்றார்; [19]விசுவாசியாதவர்
கள் இன்னாரென்றும், தம்மைக் காட்டிக்கொ
டுப்பவன் இன்னானென்றும் ஆதிமுதலாக
இயேசு அறிந்திருந்தபடியால், அவர் பின்
னும்: ஒருவன் என் பிதாவின் அருளைப் பெறா 65
விட்டால் என்னிடத்திற்கு வரமாட்டான்
என்று [20]இதினிமித்தமே உங்களுக்குச் சொன்
னேன் என்றார்.
அதுமுதல் அவருடைய சீஷரில் அநேகர் 66
[21]அவருடனேகூட நடவாமல் பின்வாங்கிப்
போனார்கள். அப்பொழுது இயேசு பன்னி 67
ருவரையும் நோக்கி: நீங்களும் போய்விட மன
தாயிருக்கிறீர்களோ என்றார். சீமோன்பே 68
துரு அவருக்குப் பிரதியுத்தரமாக: ஆண்ட
வரே, யாரிடத்தில் போவோம், [22]நித்தியஜீவ
வசனங்கள் உம்மிடத்தில் உண்டே. நீர் ஜீவ 69
னுள்ள தேவனுடைய *குமாரனாகிய கிறிஸ்து
என்று [23]நாங்கள் விசுவாசித்தும் அறிந்தும்
இருக்கிறோம் என்றான். இயேசு அவர்களை 70
நோக்கி: பன்னிருவராகிய உங்களை நான் தெ
ரிந்துகொள்ளவில்லையா? [24]உங்களுக்குள்ளும்
ஒருவன் பிசாசாயிருக்கிறான் என்றார். சீமோ 71
னின் குமாரனாகிய யூதாஸ்காரியோத்து பன்
னிருவரிலொருவனாயிருந்தும், தம்மைக் காட்
டிக்கொடுக்கப் போகிறவனாயிருந்தபடியினால்
அவனைக்குறித்து இப்படிச் சொன்னார்.
இவைகளுக்குப் பின்பு, [25]யூதர்கள் இயேசு 7
வைக் கொலைசெய்ய வகைதேடினபடியால்,
அவர் யூதேயாவிலே சஞ்சரிக்க மனதில்லா
மல் கலிலேயாவிலே சஞ்சரித்துவந்தார். யூதரு 2
டைய [26]கூடாரப்பண்டிகை சமீபமாயிருந்தது.
அப்பொழுது அவருடைய சகோதரர் அவரை 3
நோக்கி: [27]நீர் செய்கிற கிரியைகளை உம்மு
டைய சீஷர்களும் பார்க்கும்படி, இவ்விடம்
விட்டு யூதேயாவுக்குப் போம். பிரபலமாயிரு 4
க்க விரும்புகிற எவனும் அந்தரங்கத்திலே ஒன்
றையும் செய்யமாட்டான்; நீர் இப்படிப்பட்ட
வைகளைச் செய்தால் உலகத்துக்கு உம்மை
வெளிப்படுத்தும் என்றார்கள். அவருடைய 5
சகோதாரும் [28]அவரை விசுவாசியாதபடியால்
இப்படிச் சொன்னார்கள். இயேசு அவர்களை 6
நோக்கி: [29]என் வேளை இன்னும் வரவில்லை,

[1] மத். 13. 55. மாற். 6. 3. லூ. 4. 22
[2] 65. வச. உன்ன. 1. 4
[3] ஏசா. 54. 13. எரே. 31. 34. மீகா. 4. 2. மத். 11. 27
[4] 5. 37. மத். 11. 27. லூ. 10. 22
[5] 40. வச. 3. 16, 18, 36
[6] 33, 35, 57. வச
[7] 31. வச. சகரி. 1. 5
[8] 51, 58. வச
[9] 3. 13, 16. எபி. 10. 5, 10, 20
[10] 3. 9
[11] மத். 26. 26, 28
[12] 40. வச
[13] சங். 4. 7
[14] புல. 3. 24. 1 யோ. 3. 24; 4. 15, 16
[15] மத். 13. 54
[16] 49–51. வச
[17] 66. வச. மத். 11. 6
[18] 2 கொ. 3. 6
[19] யோ. 8. 29. 2 தீமோ. 2. 19
[20] 44, 45. வச
[21] 60. வச. செப். 1. 6. லூ. 9. 62. எபி. 10. 38
[22] அப். 5. 20; 7. 38
* பரிசுத்தர்
[23] 1. 29, 49; 11. 27. மத். 16. 16. மாற். 8. 29. லூ. 9. 20
[24] 13. 27. லூ. 6. 13
[25] 5. 16, 18
[26] லேவி. 23. 24
[27] மத். 12. 46. மாற். 3. 31. அப். 1. 14
[28] மாற். 3. 21
[29] 2. 4

உங்கள் வேளையோ எப்பொழுதும் ஆயத்தமா
7 யிருக்கிறது. உலகம் உங்களைப் பகைக்கமாட்
டாது; [1]அதின் கிரியைகள் பொல்லாதவை
களாயிருக்கிறதென்று நான் சாட்சிகொடுக்கிற
8 படியினாலே அது என்னைப் பகைக்கிறது. நீங்
கள் இந்தப் பண்டிகைக்குப் போங்கள்; [2]என்
வேளை இன்னும் வராதபடியால் நான் இந்தப்
பண்டிகைக்கு இப்பொழுது போகிறதில்லை
9 என்றார். இவைகளை அவர்களுடனே சொல்
லி, பின்னுங் கலிலேயாவிலே தங்கினார்.
10 அவருடைய சகோதரர்போனபின்பு, அவர்
வெளியரங்கமாய்ப் போகாமல் அந்தரங்க
11 மாய்ப் பண்டிகைக்குப் போனார். பண்டிகை
யிலே யூதர்கள் [3]அவரைத் தேடி: அவர் எங்கே
12 யிருக்கிறார் என்றார்கள். ஜனங்களுக்குள்ளே
அவரைக் குறித்து முறுமுறுப்புண்டாயிற்று.
[4]சிலர்: அவர் நல்லவர் என்றார்கள். வேறு
சிலர்: அப்படியல்ல, அவன் ஜனங்களை வஞ்
சிக்கிறவன் என்று சொல்லிக்கொண்டார்கள்.
13 ஆனாலும் யூதருக்குப் பயந்திருந்ததினாலே,
[5]ஒருவனும் அவரைக் குறித்துத் தாராளமாய்ப்
பேசவில்லை.
14 பாதிப்பண்டிகையானபோது, இயேசு தே
வாலயத்துக்குப் போய், உபதேசம் பண்ணி
15 னார். அப்பொழுது யூதர்கள்: [6]இவர் கல்லா
தவராயிருந்தும் வேத எழுத்துக்களை எப்படி
அறிந்திருக்கிறார் என்று ஆச்சரியப்பட்டார்
16 கள். இயேசு அவர்களுக்குப் பிரதியுத்தர
மாக: என் உபதேசம் என்னுடையதாயிரா
மல், [7]என்னை அனுப்பினவருடையதாயிருக்
17 கிறது. அவருடைய சித்தத்தின்படி செய்ய
மனதுள்ளவனெவனோ [8]அவன் இந்த உபதே
சம் தேவனால் உண்டாயிருக்கிறதோ, நான்
சுயமாய்ப் பேசுகிறேனோ என்று அறிந்து
18 கொள்ளுவான். சுயமாய்ப் பேசுகிறவன் தன்
சுயமகிமையைத் தேடுகிறான், [9]தன்னை அனுப்
பினவரின் மகிமையைத் தேடுகிறவனோ
உண்மையுள்ளவனாயிருக்கிறான், அவனிடத்
19 தில் அநீதியில்லை. மோசே நியாயப்பிரமாணத்
தை உங்களுக்குக் கொடுக்கவில்லையா? [10]அப்
படியிருந்தும் உங்களில் ஒருவனும் அந்த நியா
யப்பிரமாணத்தின்படி நடக்கிறதில்லை; [11]நீங்
கள் ஏன் என்னைக் கொலைசெய்யத் தேடுகி
20 றீர்கள் என்றார். ஜனங்கள் அவருக்குப் பிர
தியுத்தரமாக: [12]நீ பிசாசு பிடித்தவன்; உன்
னைக் கொலைசெய்யத் தேடுகிறவன் யார் என்
21 றார்கள். இயேசு அவர்களை நோக்கி: ஒரே
கிரியையைச் செய்தேன், அதைக்குறித்து
22 எல்லாரும் ஆச்சரியப்படுகிறீர்கள். விருத்த
சேதனம் [13]மோசேயினால் உண்டாகாமல்,
[14]பிதாக்களால் உண்டாயிற்று; பின்பு மோசே
அதை உங்களுக்கு நியமித்தான்; நீங்கள் ஓய்
வுநாளிலும் மனுஷனை விருத்தசேதனம் பண்
23 ணுகிறீர்கள். மோசேயின் நியாயப்பிரமாணம்
மீறப்படாதபடிக்கு ஓய்வுநாளில் மனுஷன்
விருத்தசேதனம் பெறலாமென்றால், [15]நான்
ஓய்வுநாளில் ஒரு மனுஷனை முழுவதும் சுக
மாக்கினதினாலே என்மேல் எரிச்சலாயிருக்
கலாமா? தோற்றத்தின்படி தீர்ப்புசெய்யாமல், 24
[16]நீதியின்படி தீர்ப்புசெய்யுங்கள் என்றார்.
அப்பொழுது எருசலேம் நகரத்தாரில் 25
சிலர்: இவனையல்லவா கொலைசெய்யத் தேடு
கிறார்கள்? இதோ, இவன் தாராளமாய்ப் பேசு 26
கிறானே, ஒருவரும் இவனுக்கு ஒன்றும்
சொல்லுகிறதில்லையே, [17]மெய்யாய் இவன்
கிறிஸ்துதான் என்று அதிகாரிகள் நிச்சய
மாக அறிந்திருக்கிறார்களோ? இவன் இன்ன 27
இடத்திலிருந்து வந்தவனென்று நாம் அறிந்
திருக்கிறோம், [18]கிறிஸ்து வரும்போதோ, அ
வர் இன்ன இடத்திலிருந்து வருகிறவரென்று
ஒருவனும் அறியமாட்டானே என்றார்கள்.
அப்பொழுது இயேசு தேவாலயத்தில் உப 28
தேசிக்கையில் சத்தமிட்டு: நீங்கள் என்னை
அறிவீர்கள், [19]நான் எங்கேயிருந்து வந்தே
னென்றும் அறிவீர்கள்; நான் என் சுயமாய் வர
வில்லை, [20]என்னை அனுப்பினவர் சத்தியமுள்
ளவர், [21]அவரை நீங்கள் அறியாதிருக்கிறீர்
கள். நான் அவரால் வந்திருக்கிறபடியினா 29
லும், அவர் என்னை அனுப்பியிருக்கிறபடியி
னாலும், [22]நானே அவரை அறிந்திருக்கிறேன்
என்றார். அப்பொழுது அவரைப் பிடிக்க 30
வகைதேடினார்கள்; [23]ஆனாலும் அவருடைய
வேளை இன்னும் வராதபடியினால் ஒருவனும்
அவர்மேல் கைபோடவில்லை. ஜனங்களில் 31
அநேகர் அவரை விசுவாசித்து: [24]கிறிஸ்து
வரும்போது: இவர் செய்கிற அற்புதங்களைப்
பார்க்கிலும் அதிகம் செய்வாரோ என்றார்கள்.
ஜனங்கள் அவரைக் குறித்து இப்படி முறுமு 32
றுக்கிறதைப் பரிசேயர் கேட்டபொழுது, அவ
ரைப் பிடித்துக்கொண்டுவரும்படிக்குப் பரி
சேயரும் பிரதான ஆசாரியரும் சேவகரை
அனுப்பினார்கள். அப்பொழுது இயேசு அவர் 33
களை நோக்கி: [25]இன்னுங் கொஞ்சக்காலம்
நான் உங்களுடனேகூட இருந்து, பின்பு
என்னை அனுப்பினவரிடத்திற்குப் போகி
றேன். நீங்கள் என்னைத் தேடுவீர்கள், [26]ஆனா 34
லும் என்னைக் காணமாட்டீர்கள்; நான் இருக்
கும் இடத்திற்கு நீங்கள் வரவுங் கூடாது என்
றார். அப்பொழுது யூதர்கள்: இவரை நாம் 35
காணாதபடிக்கு எங்கே போவார், [27]கிரேக்கருக்
குள்ளே சிதறியிருக்கிறவர்க ளிடத்திற்குப்
போய் கிரேக்கருக்கு உபதேசம்பண்ணுவா
ரோ? நீங்கள் என்னைத் தேடுவீர்கள், ஆனா 36
லும் என்னைக் காணமாட்டீர்கள் என்றும்,
நான் இருக்கும் இடத்துக்கு நீங்கள் வரக்
கூடாதென்றும், இவர் சொன்ன வார்த்தை
யின் கருத்து என்னவென்று தங்களுக்குள்
ளே சொல்லிக்கொண்டார்கள்.
பண்டிகையின் கடைசிநாளாகிய பிரதான 37
நாளிலே இயேசு நின்று, சத்தமிட்டு: [28]ஒரு
வன் தாகமாயிருந்தால் என்னிடத்தில் வந்து,
பானம் பண்ணக்கடவன். வேதவாக்கியம் 38
சொல்லுகிறபடி என்னிடத்தில் விசுவாசமாயி
ருக்கிறவன் எவனோ, [29]அவன் உள்ளத்திலி

1 3. 19: 15. 19
2 6. வச. 8. 20
3 11. 56
4 6. 14: 9. 16: 10. 19. மத். 21. 46. லூ. 7. 16
5 9. 22: 12. 42
6 மத். 13. 54. மாற். 6. 2. லூ. 4. 22. அப். 2. 7
7 3. 11: 8. 28: 12. 49
8 8. 43
9 8. 20. சங். 25. 27
10 1. 17. அப். 7. 28. கலா. 3. 19.
11 5. 16, 18. மத். 12. 14
12 8. 48, 52: 10. 20
13 லேவி. 12. 3
14 ஆதி. 17. 10
15 5. 8, 9, 16. யோ. 5. 18
16 8. 15. உபா. 1. 16, 17. யாக். 2. 1. ஓ
17 48. வச
18 மத். 13. 55. மாற். 6. 3. லூ. 4. 22.
19 5. 43: 8. 14, 42
20 ரோ. 3. 4
21 1. 18: 8. 55
22 10. 15. மத். 11. 27
23 8. 37. மாற். 11. 18. லூ. 20. 19
24 4. 39. மத். 12. 13
25 13. 33: 16. 16
26 8. 21. ஓசி. 5. 6
27 ஏசா. 11. 12. யாக். 1. 1. 1 பே. 1. 1
28 6. 35. ஏசா. 55. 1. வெளி. 22. 17
29 4. 14. நீதி. 18. 4. ஏசா. 58. 11

ருந்து ஜீவத்தண்ணீருள்ள நதிகள் ஓடும் என்
39 றார். தம்மை விசுவாசிக்கிறவர்கள் அடையப்
போகிற ஆவியைக்குறித்து இப்படிச் சொன்
னார். [1]இயேசு இன்னும் மகிமைப்படாதி
ருந்தபடியினால் பரிசுத்தஆவி இன்னும் அரு
40 ளப்படவில்லை. ஜனங்களில் அநேகர் இந்த
வசனத்தைக் கேட்டபொழுது: [2]மெய்யாகவே
41 இவர் தீர்க்கதரிசியானவர் என்றார்கள். வேறு
சிலர்: [3]இவர் கிறிஸ்து என்றார்கள். [4]வேறு
சிலர்: கிறிஸ்து கலிலேயாவிலிருந்தா வரு
42 வார்? தாவீதின் சந்ததியிலும், தாவீது இருந்த
பெத்லகேம் ஊரிலுமிருந்து கிறிஸ்து வரு
வார் என்று [5]வேதவாக்கியம் சொல்லவில்
43 லையா என்றார்கள். இவ்விதமாக அவரைக்
குறித்து ஜனங்களுக்குள்ளே பிரிவினையுண்டா
44 யிற்று. அவர்களில் சிலர் அவரைப் பிடிக்க
மனதாயிருந்தார்கள்; ஆகிலும் ஒருவனும் அவர்
மேல் கைபோடவில்லை.

45 பின்பு அந்தச் சேவகர் பிரதான ஆசாரிய
ரிடத்திற்கும் பரிசேயரிடத்திற்கும் திரும்பி
வந்தார்கள். இவர்கள் அவர்களை நோக்கி:
நீங்கள் அவனை ஏன் கொண்டுவரவில்லை என்று
46 கேட்டார்கள். சேவகர் பிரதியுத்தரமாக: [6]அந்த
மனுஷன் பேசுகிறதுபோல ஒருவனும் ஒருக்
47 காலும் பேசினதில்லை என்றார்கள். அப்பொ
ழுது பரிசேயர்: நீங்களும் வஞ்சிக்கப்பட்டீர்
48 களா? அதிகாரிகளிலாவது [7]பரிசேயரிலா
வது யாதாமொருவர் அவனை விசுவாசித்ததுண்
49 டா? வேதத்தை அறியாதவர்களாகிய இந்த
ஜனங்கள் சபிக்கப்பட்டவர்கள் என்றார்கள்.
50 இராத்திரியிலே அவரிடத்திற்கு வந்தவனும்
[8]அவர்களி லொருவனுமாகிய நிக்கொதேமு
51 என்பவன் அவர்களை நோக்கி: ஒரு மனுஷன்
சொல்வதைக் கேட்டு, அவன் செய்கைகளை
அறிகிறதற்கு முன்னே, [9]அவனை ஆக்கினைக்
குட்படுத்தலாமென்று நம்முடைய நியாயப்
52 பிரமாணம் சொல்லுகிறதா என்றான். அதற்கு
அவர்கள்: நீரும் கலிலேயனோ? [10]கலிலேயாவி
லிருந்து ஒரு தீர்க்கதரிசியும் எழும்புகிறதில்லை
என்பதை ஆராய்ந்துபாரும் என்றார்கள்.

53 [பின்பு அவரவர் தங்கள் தங்கள் வீட்டுக்குப்
போனார்கள்.

**8** 2 இயேசு ஒலிவமலைக்குப் போனார். மறு
நாள் காலையிலே அவர் திரும்பி தேவாலயத்
திற்கு வந்தபோது, ஜனங்களெல்லாரும் அவ
ரிடத்தில் வந்தார்கள். அவர் உட்கார்ந்து அவர்
3 களுக்கு உபதேசம்பண்ணினார். அப்பொ
ழுது விபசாரத்திலே கண்டுபிடிக்கப்பட்ட ஒரு
ஸ்திரீயை வேதபாரகரும் பரிசேயரும் அவரி
டத்தில் கொண்டுவந்து, அவளை நடுவே நிறு
4 த்தி: போதகரே, இந்த ஸ்திரீ விபசாரத்தில்
5 கையும் மெய்யுமாய்ப் பிடிக்கப்பட்டாள். இப்
படிப்பட்டவர்களைக் கல்லெறிந்து கொல்ல
வேண்டுமென்று மோசே நியாயப்பிரமாணத்
தில் நமக்குக் கட்டளையிட்டிருக்கிறாரே. [11]நீர்
6 என்ன சொல்லுகிறீர் என்றார்கள். அவர்
மேல் குற்றஞ்சுமத்துவதற்கான காரணம் உண்
டாகும்பொருட்டு அவரைச் சோதிக்கும்படி
இப்படிச் சொன்னார்கள். இயேசுவோ குனி
ந்து, விரலினால் தரையிலே எழுதினார். அவர் 7
கள் ஓயாமல் அவரைக் கேட்டுக்கொண்டிருக்
கையில், அவர் நிமிர்ந்துபார்த்து: [12]உங்களில்
பாவமில்லாதவன் இவள்மேல் முதலாவது
கல்லெறியக்கடவன் என்று சொல்லி, அவர் 8
மறுபடியும் குனிந்து, தரையிலே எழுதினார்.
அவர்கள் அதைக் கேட்டு, தங்கள் மனச்சாட்சி 9
யினால் கடிந்துகொள்ளப்பட்டு, பெரியோர்
முதல் சிறியோர்வரைக்கும் ஒவ்வொருவராய்ப்
போய்விட்டார்கள். இயேசு தனித்திருந்தார்,
அந்த ஸ்திரீ நடுவே நின்றாள். இயேசு நிமிர் 10
ந்து அந்த ஸ்திரீயைத்தவிர வேறொருவரையுங்
காணாமல்: ஸ்திரீயே, உன்மேல் குற்றஞ்சாட்
டினவர்கள் எங்கே? ஒருவனாகிலும் உன்னை
ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கவில்லையா என்றார்.
அதற்கு அவள்: இல்லை, ஆண்டவரே, என் 11
றாள். இயேசு அவளை நோக்கி: [13]நானும் உன்
னை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கிறதில்லை; நீ
போ, இனிப் பாவஞ்செய்யாதே என்றார்.]

மறுபடியும் இயேசு ஜனங்களை நோக்கி: 12
[14]நான் உலகத்திற்கு ஒளியாயிருக்கிறேன், என்
னைப் பின்பற்றுகிறவன் இருளிலே நடவா
மல் ஜீவ ஒளியை அடைந்திருப்பான் என்றார்.
அப்பொழுது பரிசேயர் அவரை நோக்கி: உன் 13
னைக்குறித்து நீயே சாட்சி கொடுக்கிறாய்;
[15]உன்னுடைய சாட்சி உண்மையானதல்ல
என்றார்கள். இயேசு அவர்களுக்குப் பிரதி 14
யுத்தரமாக: என்னைக்குறித்து நானே சாட்சி
கொடுத்தாலும், என் சாட்சி உண்மையாயிருக்
கிறது; ஏனெனில் நான் எங்கேயிருந்து வந்தே
னென்றும், எங்கே போகிறேனென்றும் அறிந்
திருக்கிறேன்; [16]நீங்களோ நான் எங்கேயிருந்து
வருகிறேனென்றும், எங்கே போகிறேனென்
றும் அறியீர்கள். நீங்கள் மாம்சத்துக்கேற்ற 15
படி நியாயந்தீர்க்கிறீர்கள், [17]நான் ஒருவனையும்
நியாயந்தீர்க்கிறதில்லை; நான் நியாயந்தீர்த் 16
தால், [18]என் தீர்ப்பு சத்தியத்தின்படியிருக்கும்;
[19]ஏனெனில் நான் தனித்திருக்கவில்லை, நானும்
என்னை அனுப்பின பிதாவுமாக இருக்கிறோம்.
இரண்டுபேருடைய சாட்சி உண்மையென்று 17
[20]உங்கள் நியாயப்பிரமாணத்திலும் எழுதியி
ருக்கிறதே. நான் என்னைக்குறித்துச் சாட்சி 18
கொடுக்கிறவனாயிருக்கிறேன், [21]என்னை அனுப்
பின பிதாவும் என்னைக்குறித்துச் சாட்சிகொ
டுக்கிறார் என்றார். அப்பொழுது அவர்கள்: 19
உம்முடைய பிதா எங்கே என்றார்கள். இயேசு
பிரதியுத்தரமாக: என்னையும் அறியீர்கள், என்
பிதாவையும் அறியீர்கள்; [22]நீங்கள் என்னை
அறிந்தீர்களானால் என் பிதாவையும் அறிவீர்
கள் என்றார். தேவாலயத்திலே இயேசு 20
உபதேசம் பண்ணுகிறபோது, [23]தருமப்பெட்
டியிருக்கும் இடத்தில் இந்த வசனங்களைச்
சொன்னார். [24]அவருடைய வேளை இன்னும்

1 16. 7. எசா. 44. 3. யோவே. 2. 28. அப். 2. 17, 33
2 1. 21: 6. 14
3 4. 42: 6. 69
4 52. ௳: 1. 46.
5 1 சாமு. 16. 1, 4, மீகா. 5. 2. லூ. 2. 4
6 மத். 7. 29. லூ. 4. 22
7 12. 42. எரே. 5. 4, 5. அப். 6. 7. 1கொ. 1. 20, 26: 2. 8
8 3. 2
9 உபா. 17. 8: 19. 15. சதி. 18. 13
10 ஏசா. 9. 1, 2. மத். 4. 15
11 லேவி. 20. 10. உபா. 22. 22
12 உபா. 17. 7. ரோ. 2. 1, 22
13 3. 17: 5. 14. லூ. 9. 56
14 1. 4: 9. 5: 12. 35, 46
15 5. 31
16 7. 28: 9. 29, 30
17 3. 6, 7: 12. 47
18 1 சாமு. 16. 7. சங். 45. 6, 7: 72. 2
19 29. ௳: 16. 32
20 உபா. 17. 6: 19. 15. மத். 18. 16. 2கொ. 13. 1. எபி. 10. 28
21 5. 37
22 55. ௳: 14. 7, 9: 16. 3: 17. 25
23 மாற். 12. 41
24 7. 8, 30

வாரதபடியினல் ஒருவனும் அவனைப் பிடிக்க
வில்லே.
21 இயேசு மறுபடியும் அவர்களை நோக்கி:
நான் போகிறேன், [1]நீங்கள் என்னைத் தேடி
உங்கள் பாவங்களிலே சாவீர்கள்; [2]நான் போ
கிற இடத்துக்கு வர உங்களால் கூடாது என்
22 ருர். அப்பொழுது யூதர்கள்: நான் போகிற
இடத்துக்கு வர உங்களால் கூடாது என்கிரு
னே, தன்னைத்தான் கொலேசெய்துகொள்வா
23 ஞெ என்று பேசிக்கொண்டார்கள். அவர்
அவர்களை நோக்கி: [3]நீங்கள் தாழ்விலிருந் துண்
டானவர்கள், நான் உயர்விலிருந் துண்டான
வன்; நீங்கள் இந்த உலகத்திலிருந்துண்டான
வர்கள், நான் இந்த உலகத்திலிருந்துண்டா
24 னவனல்ல. ஆகையால் நீங்கள் உங்கள்
பாவங்களில் சாவீர்கள் என்று உங்களுக்குச்
சொன்னேன்; [4]நானே *அவர் என்று நீங்கள்
விசுவாசியாவிட்டால் உங்கள் பாவங்களிலே
25 சாவீர்கள் என்ருர். அதற்கு அவர்கள்: நீர்
யார் என்ருர்கள். இயேசு அவர்களை நோக்கி:
நான் ஆதிமுதலாய் உங்களுக்குச் சொல்லியி
26 ருக்கிறவர்தான். உங்களைக்குறித்துப் பேச
வும் நியாயந்தீர்க்கவும் எனக்கு அநேக காரியங்
களுண்டு. [5]என்னை அனுப்பினவர் சத்திய
முள்ளவர்; [6]நான் அவரிடத்தில் கேட்டவை
களையே உலகத்துக்குச் சொல்லுகிறேன் என்
27 ருர். பிதாவைக்குறித்துப் பேசினரென்று
28 அவர்கள் அறியாதிருந்தார்கள். ஆதலால்
இயேசு அவர்களை நோக்கி: [7]நீங்கள் மனுஷ
குமாரனை உயர்த்தினபின்பு, நானே அவரென்
றும், நான் என் சுயமாய் ஒன்றும் செய்யாமல்,
என் பிதா எனக்குப் போதித்தபடியே இவை
களைச் சொன்னேன் என்றும் அறிவீர்கள்.
29 என்னை அனுப்பினவர் என்னுடனேகூட
இருக்கிருர், [8]பிதாவுக்குப் பிரியமானவைகளை
நான் எப்பொழுதும் செய்கிறபடியால் அவர்
என்னைத் தனியேயிருக்க விடவில்லை என்ருர்.
30 இவைகளை அவர் சொல்லுகையில், [9]அநேகர்
அவரிடத்தில் விசுவாசம் வைத்தார்கள்.
31 இயேசு தம்மை விசுவாசித்த யூதர்களை நோ
க்கி: [10]நீங்கள் என் உபதேசத்தில் நிலைத்திருந்
தால் மெய்யாகவே என் சீஷராயிருப்பீர்கள்;
32 சத்தியத்தையும் அறிவீர்கள், [11]சத்தியம் உங்
33 களை விடுதலையாக்கும் என்ருர். அவர்கள்
அவருக்குப் பிரதியுத்தரமாக: [12]நாங்கள் ஆபிர
காமின் சந்ததியாயிருக்கிருேம், நாங்கள் ஒருக்
காலும் ஒருவனுக்கும் அடிமைகளா யிருக்க
வில்லை; விடுதலையாவீர்களென்று நீர் எப்படிச்
34 சொல்லுகிறீர் என்ருர்கள். இயேசு அவர்க
ளுக்குப் பிரதியுத்தரமாக: [13]பாவஞ்செய்கிற
வன் எவனும் பாவத்துக்கு அடிமையாயிருக்கி
ருன் என்று மெய்யாகவே மெய்யாகவே உங்
35 களுக்குச் சொல்லுகிறேன். அடிமையான
வன் என்றைக்கும் வீட்டிலே நிலைத்திரான்;
[14]குமாரன் என்றைக்கும் நிலைத்திருக்கிருர்.
36 ஆகையால் குமாரன் உங்களை விடுதலையாக்கி
37 னல் [15]மெய்யாகவே விடுதலையாவீர்கள். நீங்
கள் ஆபிரகாமின் சந்ததியாரென்று அறிவேன்;
[16]ஆனலும் உங்களுக்குள்ளே என் உபதேசம்
இடம்பெருதபடியால், என்னைக் கொலைசெய்
யத் தேடுகிறீர்கள். நான் என் பிதாவினிடத் 38
தில் கண்டதைச் சொல்லுகிறேன், [17]நீங்களும்
உங்கள் பிதாவினிடத்தில் கண்டதைச் செய்
கிறீர்கள் என்ருர். அதற்கு அவர்கள்: [18]ஆபிர 39
காமே எங்கள் பிதா என்ருர்கள். இயேசு அவர்
களை நோக்கி: [19]நீங்கள் ஆபிரகாமின் பிள்ளை
களாயிருந்தால் ஆபிரகாமின் கிரியைகளைச்
செய்வீர்களே. தேவனிடத்தில் கேட்டிருக்கிற 40
சத்தியத்தை உங்களுக்குச் சொன்ன மனுஷனு
கிய என்னைக் கொல்லத் தேடுகிறீர்கள், [20]ஆபிர
காம் இப்படிச் செய்யவில்லையே. நீங்கள் 41
உங்கள் பிதாவின் கிரியைகளைச் செய்கிறீர்கள்
என்ருர். அதற்கு அவர்கள்: [21]நாங்கள் வே
சித்தனத்தினல் பிறந்தவர்களல்ல; ஒரே பிதா
எங்களுக்குண்டு, அவர் தேவன் என்ருர்கள்.
இயேசு அவர்களை நோக்கி: [22]தேவன் உங்கள் 42
பிதாவாயிருந்தால் என்னிடத்தில் அன்பாயி
ருப்பீர்கள். ஏனெனில் நான் தேவனிடத்தி
லிருந்து வந்திருக்கிறேன்; நான் சுயமாய் வர
வில்லை, [23]அவரே என்னை அனுப்பினர். என் 43
வசனத்தை நீங்கள் ஏன் அறியாமலிருக்கிறீர்
கள்? [24]என் உபதேசத்தை கேட்க மனதில்லா
திருக்கிறதினல் அல்லவா? நீங்கள் உங்கள் 44
[25]பிதாவாகிய பிசாசானவனல் உண்டானவர்
கள்; உங்கள் பிதாவினுடைய இச்சைகளின்
படி செய்ய மனதாயிருக்கிறீர்கள்; அவன்
ஆதிமுதற்கொண்டு மனுஷ கொலைபாதகனு
யிருக்கிருன்; [26]சத்தியம் அவனிடத்திலில்லாத
படியால் அவன் சத்தியத்திலே நிலைநிற்கவி
ல்லை; அவன் பொய்யனும்பொய்க்குப் பிதாவு
மாயிருக்கிறபடியால் அவன் பொய்பேசும்
போது தன் சொந்தத்தில் எடுத்துப் பேசுகி
ருன். நான் உங்களுக்குச் சத்தியத்தைச் 45
சொல்லுகிறபடியினலே [27]நீங்கள் என்னை
விசுவாசிக்கிறதில்லை. என்னிடத்தில் பாவம் 46
உண்டென்று [28]உங்களில் யார் என்னைக் குற்
றப்படுத்தக்கூடும்? நான் சத்தியத்தைச் சொல்
லியிருக்க, நீங்கள் ஏன் என்னை விசுவாசிக்கிற
தில்லை. தேவனல் உண்டானவன் தேவ 47
னுடைய வசனங்களுக்குச் செவிகொடுக்கி
ருன்; [29]நீங்கள் தேவனல் உண்டாயிராதபடி
யினல் செவிகொடாமலிருக்கிறீர்கள் என்
ருர். அப்பொழுது யூதர்கள் அவருக்குப் 48
பிரதியுத்தரமாக: உன்னைச் சமாரியனென்
றும், [30]பிசாசு பிடித்தவனென்றும் நாங்கள்
சொல்லுகிறது சரிதானே என்ருர்கள். அத 49
ற்கு இயேசு: நான் பிசாசு பிடித்தவனல்ல,
நான் என் பிதாவைக் கனம்பண்ணுகிறேன்,
நீங்கள் என்னைக் கனவீனம்பண்ணுகிறீர்கள்.
நான் எனக்கு மகிமையைத் தேடுகிறதில்லை; 50
[31]அதைத் தேடி நியாயந்தீர்க்கிறவர் ஒருவர்
இருக்கிருர். ஒருவன் என் வார்த்தையைக் 51
கைக்கொண்டால், [32]அவன் என்றென்றைக்
கும் மரணத்தைக் காண்பதில்லை என்று மெய்

1 7. 34
2 தூ. 16. 26
3 3. 31: 15. 19: 17. 16. 1 யோ. 4. 5
4 21. மாற். 16. 16
* நான்தான் அவர்
5 7. 28
6 3. 32: 15. 15
7 3. 14: 12. 32. ரோ. 1. 4
8 14. 10, 11, 34: 5. 30
9 10. 42
10 ரோ. 2. 7. கொலோ. 1. 23. எபி. 10. 38, 39
11 17. 17. சங். 119. 45. ரோ. 6. 14, 18, 22. யாக். 1. 25: 2. 12
12 30. லேவி. 25. 42. மத். 3. 9
13 ரோ. 6. 16, 20. 2 பே. 2. 19
14 கலா. 4. 30
15 ஏசா. 61. 1. ரோ. 8. 2. கலா. 5. 1
16 40. 7. 10
17 14. 10, 24
18 38. மத். 3. 9
19 ரோ. 2. 28, 29: 9. 7. கலா. 3. 7, 29
20 26, 37. ரோ. 4. 12
21 ஏசா. 63. 16: 64. 8
22 மல். 1. 6. 1 யோ. 5. 1
23 17. 8, 25
24 7. 17. ஏசா. 6. 9
25 மத். 13. 38. 1 யோ. 3. 8
26 6.
27 கலா. 4. 16. 2 தெச. 2. 10
28 எபி. 4. 15
29 10. 26, 27. 1 யோ. 4. 6
30 7. 10, 20
31 5. 41: 7. 18
32 5. 24: 11. 26

யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்
52 லுகிறேன் என்றார். அப்பொழுது யூதர்கள்
அவரை நோக்கி: நீ பிசாசு பிடித்தவனென்று
இப்பொழுது அறிந்திருக்கிறோம்; [1]ஆபிரகா
மும் தீர்க்கதரிசிகளும் மரித்தார்கள். நீயோ:
ஒருவன் என் வார்த்தையைக் கைக்கொண்
டால் என்றென்றைக்கும் மரணத்தை ருசி
53 பார்ப்பதில்லை என்கிறாய். எங்கள் பிதாவா
கிய ஆபிரகாமிலும் நீ பெரியவனோ? அவர்
மரித்தார், தீர்க்கதரிசிகளும் மரித்தார்கள்;
உன்னை நீ எப்படிப்பட்டவனாக்குகிறாய் என்
54 றார்கள். இயேசு பிரதியுத்தரமாக: [2]என்னை
நானே மகிமைப்படுத்தினால் அந்த மகிமை
வீணாயிருக்கும், என் பிதா என்னை மகிமைப்
படுத்துகிறவர், அவரை உங்கள் தேவனென்று
55 நீங்கள் சொல்லுகிறீர்கள். ஆயினும் நீங்கள்
[3]அவரை அறியவில்லை, நான் அவரை அறிந்
திருக்கிறேன்; அவரை அறியேன் என்று
சொல்வேனானால் உங்களைப்போல நானும்
பொய்யனாயிருப்பேன்; அவரை நான் அறிந்
து, அவருடைய வார்த்தையைக் கைக்கொண்
56 டிருக்கிறேன் உங்கள் பிதாவாகிய ஆபிரகாம்
என்னுடைய நாளைக் காண ஆசையாயிருந்
தான்; [4]கண்டு களிகூர்ந்தான் என்றார்.
57 அப்பொழுது யூதர்கள் அவரை நோக்கி:
உனக்கு இன்னும் ஐம்பது வயதாகவில்லையே,
நீ ஆபிரகாமைக் கண்டாயோ என்றார்கள்.
58 அதற்கு இயேசு: [5]ஆபிரகாம் உண்டாகிறதற்கு
முன்னமே நான் இருக்கிறேன் என்று மெய்
யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்
59 லுகிறேன் என்றார். அப்பொழுது அவர்
மேல் எறியும்படி கல்லுகளை எடுத்துக்கொண்
டார்கள். [6]இயேசு மறைந்து, அவர்கள் நடுவே
கடந்து, தேவாலயத்தை விட்டுப் போனார்.

9 அவர் அப்புறம் போகையில் பிறவிக்குரு
2 டனாகிய ஒரு மனுஷனைக் கண்டார். அப
பொழுது அவருடைய சீஷர்கள் அவரை
நோக்கி: ரபீ, இவன் குருடனாய்ப் பிறந்தது
யார் செய்த பாவம், [7]இவன் செய்த பாவ
மோ, இவனைப் பெற்றவர்கள் செய்த பாவமோ
3 என்று கேட்டார்கள். இயேசு பிரதியுத்தர
மாக: அது இவன் செய்த பாவமுமல்ல, இவ
னைப் பெற்றவர்கள் செய்த பாவமுமல்ல;
[8]தேவனுடைய கிரியைகள் இவனிடத்தில்
வெளிப்படும்பொருட்டு இப்படிப் பிறந்தான்.
4 பகற்காலமிருக்குமட்டும் நான் என்னை அனுப்
பினவருடைய கிரியைகளைச் செய்யவேண்
டும்; [9]ஒருவனும் கிரியை செய்யக்கூடாத
5 இராக்காலம் வருகிறது. நான் உலகத்திலிருக்
கையில் [10]உலகத்திற்கு ஒளியாயிருக்கிறேன்
6 என்றார். இவைகளைச் சொல்லி, [11]அவர்
தரையிலே துப்பி, உமிழ்நீரினால் சேறுண்டா
க்கி, அந்தச் சேற்றைக் குருடனுடைய கண்
7 களின்மேல் பூசி: நீபோய், [12]சீலோவாம்குளத்
திலே கழுவு என்றார். சீலோவாம்என்பதற்கு
அனுப்பப்பட்டவன் என்று அர்த்தமாம். [13]அப்
படியே அவன் போய்க் கழுவி; பார்வைய

1 சகரி. 1. 5. எபி. 11. 13
2 5. 31, 41: 17. 1. அப். 3. 13
3 7. 28, 29
4 ஆதி. 22. 13, 14. லூ. 10. 24. எபி. 11. 13
5 1. 1, 2. யாத். 3. 14. ஏசா. 43. 13. கொலோ. 1. 17. வெளி. 1. 8
6 லூ. 4. 30
7 34. வச
8 11. 4
9 4. 34
10 1. 5, 9: 8. 12: 12. 35, 36
11 மாற். 7. 33: 8. 23
12 நெகே. 3. 15.
13 2இரா. 5. 14
14 6, 7. வச
15 31. வச: 3. 2
16 7. 12, 43: 10. 19
17 4. 19: 6. 14
18 ஏசா. 26. 11
19 7. 13: 12. 42
20 34. வச: 16. 2

டைந்தவனாய்த் திரும்பிவந்தான். அப்பொ 8
ழுது அயலகத்தாரும், அவன் குருடனாயிருக்
கையில் அவனைக் கண்டிருந்தவர்களும்:
இவன் உட்கார்ந்து பிச்சை கேட்டுக்கொண்
டிருந்தவனல்லவா என்றார்கள். சிலர்: அவன் 9
தான் என்றார்கள். வேறு சிலர்: அவனுடைய
சாயலாயிருக்கிறான் என்றார்கள். அவனோ:
நான்தான் அவன் என்றான். அப்பொழுது 10
அவர்கள் அவனை நோக்கி: உன் கண்கள் எப்
படித் திறக்கப்பட்டது என்றார்கள். அவன் 11
பிரதியுத்தரமாக: [14]இயேசு என்னப்பட்ட ஒரு
வர் சேறுண்டாக்கி, என் கண்களின்மேல்
பூசி, நீ போய் சீலோவாம் குளத்திலே கழுவு
என்றார். அப்படியே நான் போய்க் கழுவி,
பார்வையடைந்தேன் என்றான். அப்பொ 12
ழுது அவர்கள்: அவர் எங்கே என்றார்கள்.
அவன்: எனக்குத் தெரியாது என்றான்.
குருடனாயிருந்த அவனைப் பரிசேயரிடத் 13
திற்குக் கொண்டுபோனார்கள். இயேசு சே 14
றுண்டாக்கி, அவன் கண்களைத் திறந்தநாள்
ஓய்வுநாளாயிருந்தது. ஆகையால் பரிசேயரும் 15
அவனை நோக்கி: நீ எப்படிப் பார்வையடைந்
தாய் என்று மறுபடியும் கேட்டார்கள். அத
ற்கு அவன்: அவர் என் கண்களின்மேல் சேற்
றைப் பூசினார், நான் கழுவினேன், காண்கி
றேன் என்றான். அப்பொழுது பரிசேயரில் 16
சிலர்: அந்தமனுஷன் ஓய்வுநாளைக்கைக்கொள்
ளாததினால் அவன் தேவனிடத்திலிருந்து வந்
தவனல்ல என்றார்கள். [15]வேறு சிலர்: பாவி
யாயிருக்கிற மனுஷன் இப்படிப்பட்ட அற்
புதங்களை எப்படிச் செய்வான் என்றார்கள்.
[16]இவ்விதமாய் அவர்களுக்குள்ளே பிரிவினை
யுண்டாயிற்று. மறுபடியும் அவர்கள் குரு 17
டனை நோக்கி: உன் கண்களைத் திறந்தானே,
அவனைக்குறித்து நீ என்ன சொல்லுகிறாய்
என்றார்கள். அதற்கு அவன்: [17]அவர் தீர்க்கதரிசி
என்றான். அவன் குருடனாயிருந்து [18]பார்வை 18
யடைந்ததை யூதர்கள் நம்பாமல், பார்வைய
டைந்தவனுடைய தாய் தகப்பன்மாரை அழை
ப்பித்து, அவர்களை நோக்கி: உங்கள் குமாரன் 19
குருடனாய்ப் பிறந்தான் என்று சொல்லுகிறீர்
களே, அவன் இவன்தானா? இவனானால், இப்
பொழுது இவன் எப்படிப் பார்வையடைந்
தான் என்று கேட்டார்கள். தாய் தகப்பன்மார் 20
பிரதியுத்தரமாக: இவன் எங்கள் குமாரன்
தான் என்றும், குருடனாய்ப் பிறந்தான் என்
றும் எங்களுக்குத் தெரியும். இப்பொழுது 21
இவன் பார்வையடைந்த வகை எங்களுக்குத்
தெரியாது; இவன் கண்களைத் திறந்தவன்
இன்னான் என்பதும் எங்களுக்குத் தெரியாது;
இவன் வயதுள்ளவனாயிருக்கிறான், இவனைக்
கேளுங்கள், இவனே சொல்லுவான் என்றார்
கள். அவனுடைய தாய் தகப்பன்மார் [19]யூதர் 22
களுக்குப் பயந்ததினால் இப்படிச் சொன்னார்
கள். [20]ஏனெனில் இயேசுவைக் கிறிஸ்து
என்று எவனாவது அறிக்கைபண்ணினால்
அவனை ஜெப ஆலயத்துக்குப் புறம்பாக்க

வேண்டுமென்று யூதர்கள் அதற்கு முன்னமே
23 கட்டுப்பாடுசெய்திருந்தார்கள். அதினிமித்தம்:
இவன் வயதுள்ளவனுயிருக்கிருன், இவனை
யே கேளுங்கள் என்று அவன் தாய் தகப்பன்
24 மார் சொன்னுர்கள். ஆதலால் அவர்கள் குரு
டனுயிருந்த மனுஷனை இரண்டாந்தரம் அழை
த்து: [1]நீ தேவனை மகிமைப்படுத்து; இந்த
மனுஷன் பாவியென்று நாங்கள் அறிந்திருக்
25 கிருேம் என்ருர்கள். அவன் பிரதியுத்தர
மாக: அவர் பாவியென்று எனக்குத் தெரி
யாது; நான் குருடனுயிருந்தேன், இப்பொ
ழுது காண்கிறேன்; இது ஒன்றுதான் எனக்
26 குத் தெரியும் என்ருன். அவர்கள் மறுபடியும்
அவனை நோக்கி: உனக்கு என்ன செய்தான்,
உன் கண்களை எப்படித் திறந்தான் என்ருர்
27 கள். அவன் பிரதியுத்தரமாக: முன்னமே உங்
களுக்குச் சொன்னேன், நீங்கள் கேளாமற்
போனீர்கள்; மறுபடியும் கேட்கவேண்டிய
தென்ன? அவருக்குச் சீஷராக உங்களுக்கும்
28 மனதுண்டோ என்ருன். அப்பொழுது அவர்
கள் அவனை வைது: [2]நீ அவனுடைய சீஷன்,
29 நாங்கள் மோசேயினுடைய சீஷர். மோசே
யுடனே தேவன் பேசினுரென்று அறி
வோம், [3]இவன் எங்கேயிருந்து வந்தவனெ
30 ன்று அறியோம் என்ருர்கள். அதற்கு அந்த
மனுஷன்: [4]அவர் என் கண்களைத் திறந்திருந்
தும், அவர் எங்கேயிருந்து வந்தவரென்று
நீங்கள் அறியாதிருக்கிறது ஆச்சரியமான
31 காரியம். பாவிகளுக்கு தேவன் செவிகொ
டுக்கிறதில்லையென்று அறிந்திருக்கிருேம்;
[5]ஒருவன் தேவபக்தியுள்ளவனுயிருந்து அவ
ருக்குச் சித்தமானதைச் செய்தால் அவனுக்
32 குச் செவிகொடுப்பார். பிறவிக்குருடனு
டைய கண்களை ஒருவன் திறந்தானென்று
உலகமுண்டானதுமுதல் கேள்விப்பட்டதில்
33 லையே. அவர் தேவனிடத்திலிருந்து வராதி
ருந்தால் [6]ஒன்றும் செய்யமாட்டாரே என்
34 ருன். அவர்கள் அவனுக்குப் பிரதியுத்தர
மாக: [7]முழுவதும் பாவத்தில் பிறந்த நீ எங்க
ளுக்குப் போதிக்கிருயோ என்று சொல்லி,
அவனைப் புறம்பே தள்ளிவிட்டார்கள்.
35 அவனை அவர்கள் புறம்பே தள்ளிவிட்டதை
இயேசு கேள்விப்பட்டு, அவனைக் கண்ட
போது: [8]நீ தேவனுடைய குமாரனிடத்தில்
36 விசுவாசமாயிருக்கிருயா என்ருர். அதற்கு
அவன்: ஆண்டவரே, அவரிடத்தில் நான் விசு
வாசமாயிருக்கும்படிக்கு அவர் யார் என்ருன்.
37 இயேசு அவனை நோக்கி: நீ அவரைக் கண்
டிருக்கிருய், [9]உன்னுடனே பேசுகிறவர்
38 அவர்தான் என்ருர். உடனே அவன்: ஆண்
டவரே, விசுவாசிக்கிறேன் என்று சொல்லி,
39 [10]அவரைப் பணிந்துகொண்டான். அப்பொ
ழுது இயேசு: [11]காணுதவர்கள் காணும்படியா
கவும், காண்கிறவர்கள் குருடராகும்படியாக
வும் நியாயத்தீர்ப்புக்கு நான் இந்த உலகத்தில்
40 வந்தேன் என்ருர். அவருடனேகூட இருந்த
பரிசேயரில் சிலர் இவைகளைக் கேட்டபொ
ழுது: [12]நாங்களும் குருடரோ என்ருர்கள்.
இயேசு அவர்களை நோக்கி: [13]நீங்கள் குருட 41
ராயிருந்தால் உங்களுக்குப் பாவமிராது; [14]நீங்
கள் காண்கிருேம் என்று சொல்லுகிறபடியி
ளுல் உங்கள் பாவம் நிலைநிற்கிறது என்ருர்.

மெய்யாகவே மெய்யாகவே நான் உங்க 10
ளுக்குச் சொல்லுகிறேன்; [15]ஆட்டுத்தொழு
வத்துக்குள் வாசல் வழியாய்ப் பிரவேசியா
மல், வேறு வழியாய் ஏறுகிறவன் கள்ளனும்
கொள்ளைக்காரனுமாயிருக்கிருன். வாசல்வழி 2
யாய்ப் பிரவேசிக்கிறவனே [16]ஆடுகளின் மேய்
ப்பனுயிருக்கிருன். வாசலைக் காக்கிறவன் 3
அவனுக்குத் திறக்கிருன்; ஆடுகளும் அவன்
சத்தத்துக்குச் செவிகொடுக்கிறது. [17]அவன்
தன்னுடைய ஆடுகளைப் பேர்சொல்லிக் கூப்
பிட்டு, [18]அவைகளை வெளியே நடத்திக்கொ
ண்டுபோகிருன். அவன் தன்னுடைய ஆடு 4
களை வெளியே விட்டபின்பு, அவைகளுக்கு
முன்பாக நடந்துபோகிருன், [19]ஆடுகள் அவன்
சத்தத்தை அறிந்திருக்கிறபடியினுல் அவனுக்
குப் பின்செல்லுகிறது. அந்நியருடைய சத் 5
தத்தை அறியாதபடியினுல் அவைகள் அந்நிய
னுக்குப் பின்செல்லாமல், அவனை விட்டோ
டிப்போம் என்ருர்.

இந்த உவமையை இயேசு அவர்களுடனே 6
சொன்னுர்; அவர்களோ அவர் சொன்னவை
களின் கருத்தை அறியவில்லை.

ஆதலால் இயேசு மறுபடியும் அவர்களை 7
நோக்கி: [20]நானே ஆடுகளுக்கு வாசல் என்று
மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச்
சொல்லுகிறேன். எனக்கு முன்னே வந்த 8
வர்களெல்லாரும் கள்ளரும் கொள்ளைக்காரரு
மாயிருக்கிருர்கள்; ஆடுகள் அவர்களுக்குச்
செவிகொடுக்கவில்லை. நானே வாசல், [21]என் 9
வழியாய் ஒருவன் உட்பிரவேசித்தால், அவன்
ரட்சிக்கப்படுவான், அவன் உள்ளும் புறம்பும்
சென்று, மேய்ச்சலைக் கண்டடைவான். திரு 10
டன் திருடவும் கொல்லவும் அழிக்கவும் வரு
கிருனேயன்றி வேருென்றுக்கும் வரான்
நானே அவைகளுக்கு ஜீவன் உண்டாயிருக்
கவும், அது பரிபூரணப்படவும் வந்தேன். நா 11
னே நல்ல மேய்ப்பன்; [22]நல்ல மேய்ப்பன்
ஆடுகளுக்காகத் தன் ஜீவனைக் கொடுக்கிருன்.
மேய்ப்பனுயிராதவனும், ஆடுகள் தனக்குச் 12
சொந்தமல்லாதவனுமான கூலியாள் ஓநாய்
வருகிறதைக் கண்டு [23]ஆடுகளை விட்டு ஓடிப்
போகிருன்; அப்பொழுது ஓநாய் ஆடுகளைப்
பீறி, அவைகளைச் சிதறடிக்கும். கூலியாள் 13
கூலிக்காக வேலைசெய்கிறவனுகையால் ஓடிப்
போகிருன், ஆடுகளுக்காக அவன் கவலைப்
படான். நானே நல்ல மேய்ப்பன்; [24]பிதா 14
என்னை அறிந்திருக்கிறதுபோலவும், நான்
பிதாவை அறிந்திருக்கிறதுபோலவும், நான் 15
என்னுடையவைகளை அறிந்தும் [25]என்னுடை
யவைகளால் அறியப்பட்டுமிருக்கிறேன்; [26]ஆ
டுகளுக்காக என் ஜீவனையும் கொடுக்கிறேன்.
இந்தத் தொழுவத்தி லுள்ளவைகளல்லாமல் 16

1 யோசு. 7. 19. சங். 50. 14, 15
2 1 பே. 2. 23
3 8. 14. சங். 103. 7. எபி. 3. 5
4 3. 10. சங். 119. 18. ஏசா. 29. 18, 19: 35. 5. 2 கொ. 4. 6
5 யோபு 27: 9. சங். 34. 15: 66. 18. நீதி. 15. 29: 28. 9. ஏசா. 1. 15. எரே. 11. 11. எசே. 8. 18. மீகா. 3. 4. சகரி. 7. 13
6 16. வச
7 2 வச
8 மத். 14. 33: 16. 16. 1 யோ. 1. 13
9 4. 26
10 மத். 14. 33
11 5. 22, 27: 12. 47. மத். 13. 13
12 ரோ. 2. 19. வெளி. 3. 17
13 15. 22, 24
14 ஏசா. 5. 21. தா. 18. 14. 1 யோ. 1. 8–10
15 ரோ. 10. 15. எபி. 5. 4
16 7, 9. வச
17 எசே. 34. 11. ரோ. 8. 30
18 ஏசா. 40. 11
19 உன்னத. 2. 8: 5. 2
20 எபே. 2. 18
21 14. 6
22 எபி. 13. 20. 1 பே. 2. 25: 5. 4
23 எசே. 34. 2, 6. சகரி. 11. 7
24 மத். 11. 27
25 1 யோ. 5. 20. 2 தீமோ. 2. 19
26 15. 13. ஏசா. 53. 4, 5

[1]வேறே ஆடுகளும் எனக்கு உண்டு; அவை
களையும் நான் கொண்டுவரவேண்டும், அவை
கள் என் சத்தத்துக்குச் செவிகொடுக்கும்,
[2]அப்பொழுது ஒரே மந்தையும் ஒரே மேய்ப்ப
17 னுமாகும். நான் என் ஜீவனை மறுபடியும்
அடைந்துகொள்ளும்படிக்கு [3]அதைக் கொடுக்
கிறபடியினால் பிதா என்னில் அன்பாயிருக்
18 கிறார். ஒருவனும் அதை என்னிடத்திலி
ருந்து எடுத்துக்கொள்ளமாட்டான்; [4]நானே
அதைக் கொடுக்கிறேன், அதைக் கொடுக்கவும்
எனக்கு அதிகாரம் உண்டு, [5]அதை மறு
படியும் எடுத்துக்கொள்ளவும் எனக்கு அதி
காரம் உண்டு. [6]இந்தக் கட்டளையை என்
பிதாவினிடத்தில் பெற்றுக்கொண்டேன் என்
றார்.
19 இந்த வசனங்களினிமித்தம் யூதருக்குள்ளே
20 மறுபடியும் பிரிவினையுண்டாயிற்று. அவர்க
ளில் அநேகர்: [7]இவன் பிசாசு பிடித்தவன்,
பயித்தியக்காரன்; ஏன் இவனுக்குச் செவிகொ
21 டுக்கிறீர்கள் என்றார்கள். வேறே சிலர்: இவை
கள் பிசாசு பிடித்தவனுடைய வசனங்களல்ல
வே. [8]குருடருடைய கண்களைப் பிசாசு
திறக்கக்கூடுமா என்றார்கள்.
22 பின்பு எருசலேமிலே தேவாலயப் பிரதிஷ்
டை பண்டிகை வந்தது; மாரிகாலமுமாயிருந்
23 தது. இயேசு தேவாலயத்தில் [9]சாலொமோ
னுடைய மண்டபத்திலே உலாவிக்கொண்டி
24 ருந்தார். அப்பொழுது யூதர்கள் அவரைச் சூழ்
ந்துகொண்டு: எதுவரைக்கும் எங்கள் ஆத்து
மாவுக்குச் சந்தேகம் உண்டாக்குகிறீர், நீர்
கிறிஸ்துவானால் எங்களுக்குத் தெளிவாய்ச்
25 சொல்லும் என்றார்கள். இயேசு அவர்களுக்
குப் பிரதியுத்தரமாக: அதை உங்களுக்குச்
சொன்னேன், நீங்கள் விசுவாசிக்கவில்லை;
[10]என் பிதாவின் நாமத்தினாலே நான் செய்கிற
கிரியைகளே என்னைக்குறித்துச் சாட்சிகொ
26 டுக்கிறது. ஆனாலும், நான் உங்களுக்குச்
சொன்னபடியே, [11]நீங்கள் என் மந்தையின்
ஆடுகளாயிராதபடியினால் விசுவாசியாமலிருக்
27 கிறீர்கள். என் ஆடுகள் என் சத்தத்திற்குச்
செவிகொடுக்கிறது; [12]நான் அவைகளை அறிந்
திருக்கிறேன், அவைகள் எனக்குப் பின்
28 செல்லுகிறது. நான் அவைகளுக்கு நித்திய
ஜீவனைக் கொடுக்கிறேன்; [13]அவைகள் ஒருக்
காலும் கெட்டுப்போவதில்லை, ஒருவனும்
அவைகளை என் கையிலிருந்து பறித்துக்
29 கொள்வதுமில்லை. அவைகளை எனக்குத் தந்த
[14]என் பிதா எல்லாரிலும் பெரியவராயிருக்கி
றார்; அவைகளை என் பிதாவின் கையிலிருந்து
30 பறித்துக்கொள்ள ஒருவனாலும் கூடாது. நா
னும் பிதாவும் [15]ஒன்றாயிருக்கிறோம் என்றார்.
31 அப்பொழுது யூதர்கள் மறுபடியும் அவர்மேல்
கல்லெறியும்படி, [16]கல்லுகளை எடுத்துக்கொ
32 ண்டார்கள். இயேசு அவர்களை நோக்கி: நான்
என் பிதாவினாலே அநேக நற்கிரியைகளை
உங்களுக்குக் காண்பித்தேன், அவைகளில்
எந்தக் கிரியையினிமித்தம் என்மேல் கல்லெ
றிகிறீர்கள் என்றார். யூதர்கள் அவருக்குப் 33
பிரதியுத்தரமாக: நற்கிரியையினிமித்தம் நாங்
கள் உன்மேல் கல்லெறிகிறதில்லை; நீ மனு
ஷனாயிருக்க, [17]உன்னை தேவன் என்று
சொல்லி, இவ்விதமாக தேவதூஷணஞ்
சொல்லுகிறபடியினால் உன்மேல் கல்லெறிகி
றோம் என்றார்கள். இயேசு அவர்களுக்குப் 34
பிரதியுத்தரமாக: தேவர்களாயிருக்கிறீர்கள்
என்று நான் சொன்னேன் என்பதாய் உங்கள்
வேதத்தில் எழுதியிருக்கவில்லையா? தேவவச 35
னத்தைப் பெற்றுக்கொண்டவர்களை தேவர்கள்
என்று அவர் சொல்லியிருக்க, வேதவாக்கிய
மும் தவறாததாயிருக்க, பிதாவினால் [18]பரிசு 36
த்தமாக்கப்பட்டும், உலகத்தில் அனுப்பப்பட்
டும் இருக்கிற நான் என்னை [19]தேவனுடைய
குமாரன் என்று சொன்னதினாலே தேவதூ
ஷணஞ் சொன்னாய் என்று நீங்கள் சொல்ல
லாமா? என் பிதாவின் கிரியைகளை நான் 37
செய்யாதிருந்தால், [20]நீங்கள் என்னை விசுவா
சிக்கவேண்டியதில்லை. செய்தேனேயானால், 38
நீங்கள் என்னை விசுவாசியாதிருந்தாலும், பிதா
என்னிலும் நான் அவரிலும் இருக்கிறதை நீங்
கள் அறிந்து விசுவாசிக்கும்படி [21]அந்தக் கிரி
யைகளை விசுவாசியுங்கள் என்றார். இதினி 39
மித்தம் அவர்கள் மறுபடியும் அவரைப் பிடிக்
கத் தேடினார்கள், [22]அவரோ அவர்கள் கைக்
குத் *தப்பி,
யோர்தானுக்கு அக்கரையிலே, முன்னே 40
யோவான் ஞானஸ்நானங் கொடுத்துக்கொண்
டிருந்த [23]இடத்துக்குத் திரும்பிப்போய், அங்
கே தங்கினார். அநேகர் அவரிடத்தில் வந்து: 41
யோவான் ஒரு அற்புதத்தையும் செய்யவில்
லை; [24]ஆகிலும் இவரைக்குறித்து யோவான்
சொன்னதெல்லாம் மெய்யாயிருக்கிறது என்
றார்கள். அவ்விடத்திலே [25]அநேகர் அவரி 42
டத்தில் விசுவாசமுள்ளவர்களானார்கள்.
மரியாளும் [26]அவள் சகோதரியாகிய மார்த் 11
தாளும் இருந்த பெத்தானியா கிராமத்திலுள்ள
வனாகிய லாசரு என்னும் ஒருவன் வியாதிப்
பட்டிருந்தான். கர்த்தருக்குப் பரிமளதைலம் 2
பூசி, [27]தன் தலைமயிரால் அவருடைய பாதங்
களைத் துடைத்தவள் அந்த மரியாளே; அவ
ளுடைய சகோதரனாகிய லாசரு வியாதியா
யிருந்தான். அப்பொழுது அவனுடைய சகோ 3
தரிகள்: ஆண்டவரே, [28]நீர் சிநேகிக்கிறவன்
வியாதியாயிருக்கிறான் என்று சொல்ல, அவ
ரிடத்திற்கு ஆள் அனுப்பினார்கள். இயேசு 4
அதைக் கேட்டபொழுது: [29]இந்த வியாதி
மரணத்துக்கு ஏதுவாயிராமல் தேவனுடைய
மகிமை விளங்குவதற்கு ஏதுவாயிருக்கிறது;
தேவனுடைய குமாரனும் அதினால் மகிமைப்
படுவார் என்றார். இயேசு மார்த்தாளிடத்தி 5
லும் அவளுடைய சகோதரியினிடத்திலும்
லாசருவினிடத்திலும் அன்பாயிருந்தார்.
அவன் வியாதியாயிருக்கிறதாக அவர் கேள் 6
விப்பட்டபொழுது, [30]தாம் இருந்த இடத்தி
லே பின்னும் இரண்டுநாள் தங்கினார். அதன் 7

1 ஏசா. 40. 6; 56. 8
2 எசே. 37. 22. எபே. 2. 14. 1 பே. 2. 25
3 ஏசா. 53. 7-12. எபி. 2. 9
4 பிலி. 2. 6, 8
5 2. 19
6 6. 38. அப். 2. 24, 32
7 7. 20
8 9. 6. ழ
9 அப். 3. 11; 5. 12
10 3. 2; 5. 36
11 8, 47. 1 யோ. 4. 6
12 4. வச.
13 17. 12; 18. 9. எபி. 7. 25
14 14. 28; 17. 2
15 17. 11, 22
16 8. 59
17 30. வச. 5. 18. சங். 82. 6. ரோ. 13. 1
18 6. 27. ஏசா. 11. 2, 3; 40. 1, 3
19 லூக். 1. 35. பிலி. 2. 6
20 14. 10, 11; 15. 24
21 5. 36; 14. 10, 11
22 7. 30, 44
* நீங்கி
23 1. 28
24 3. 30, 36. மத். 3. 11, 12
25 8. 30; 11. 45
26 லூக். 10. 38, 39
27 12. 3. மத். 26. 7. மாற். 14. 3
28 எபி. 12. 6. வெளி. 3. 19
29 40. வச. 9. 3
30 10. 40

வெளியே வரவழைத்து, அவனை உயிரோடே
18 எழுப்பினாரென்று சாட்சிகொடுத்தார்கள். அப்
படிப்பட்ட அற்புதத்தை அவர் செய்தார் என்
று ஜனங்கள் கேள்விப்பட்டதினால் [1]அவர்கள்
19 அவருக்கு எதிர்கொண்டுபோனார்கள். அப்பொ
ழுது பரிசேயர் ஒருவரையொருவர் நோக்கி:
நீங்கள் செய்கிறதெல்லாம் வீணென்று அறி
கிறதில்லையா? [2]இதோ, உலகமே அவனுக்
குப் பின்சென்று போயிற்றே என்றார்கள்.
20 பண்டிகையில் ஆராதனை செய்யவந்தவர்க
21 ளில் [3]சில கிரேக்கர் இருந்தார்கள். அவர்கள்
கலிலேயாநாட்டுப் பெத்சாயிதா ஊரானாகிய
[4]பிலிப்புவினிடத்தில் வந்து: ஐயா, இயேசு
வைக் காண விரும்புகிறோம் என்று அவனைக்
22 கேட்டுக்கொண்டார்கள். பிலிப்பு வந்து, அ
தை அந்திரேயாவுக்கு அறிவித்தான்; பின்பு
அந்திரேயாவும் பிலிப்புவும் அதை இயேசு
23 வுக்கு அறிவித்தார்கள். அப்பொழுது இயேசு
அவர்களை நோக்கி: [5]மனுஷகுமாரன் மகிமைப்
24 படும்படியான வேளை வந்தது. மெய்யாகவே
மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லு
கிறேன், [6]கோதுமை மணியானது நிலத்தில்
விழுந்து சாகாவிட்டால் தனித்திருக்கும், செத்
ததேயாகில் மிகுந்த பலனைக் கொடுக்கும்.
25 தன் ஜீவனைச் சிநேகிக்கிறவன் அதை இழந்து
போவான்; [7]இந்த உலகத்தில் தன் ஜீவனை
வெறுக்கிறவனோ அவன் அதை நித்திய ஜீவ
26 காலமாய்க் காத்துக்கொள்ளுவான். ஒருவன்
எனக்கு ஊழியஞ் செய்கிறவனானால் [8]என்
னைப் பின்பற்றக்கடவன், நான் எங்கே யிருக்
கிறேனோ [9]அங்கே என் ஊழியக்காரனும்
இருப்பான்; ஒருவன் எனக்கு ஊழியஞ்செய்
தால் [10]அவனைப் பிதாவானவர் கனம்பண்ணு
27 வார். இப்பொழுது [11]என் ஆத்துமா கலங்கு
கிறது, நான் என்ன சொல்லுவேன். பிதா
வே, இந்த வேளையினின்று என்னை ரட்சியும்
என்று சொல்வேனோ; [12]ஆகிலும், இதற்கா
28 கவே இந்த வேளைக்குள் வந்தேன். பிதாவே,
உமது நாமத்தை மகிமைப்படுத்தும் என்றார்.
அப்பொழுது: [13]மகிமைப்படுத்தினேன், இன்
னமும் மகிமைப்படுத்துவேன் என்கிற சத்தம்
29 வானத்திலிருந்து உண்டாயிற்று. அங்கே நின்
றுகொண்டிருந்த, அதைக் கேட்ட ஜனங்
கள்: இடிமுழக்கமுண்டாயிற்று என்றார்கள்.
வேறு சிலர்: தேவதூதன் அவருடனே பேசி
30 னான் என்றார்கள். இயேசு அவர்களை நோ
க்கி: [14]இந்தச் சத்தம் என்னிமித்தம் உண்
டாகாமல் உங்கள் நிமித்தமே உண்டாயிற்று.
31 இப்பொழுதே இந்த உலகத்துக்கு நியாயத்
தீர்ப்பு உண்டாகிறது; [15]இப்பொழுதே இந்த
உலகத்தின் அதிபதி புறம்பாகத் தள்ளப்படு
32 வான். நான் பூமியிலிருந்து [16]உயர்த்தப்பட்
டிருக்கும்போது, *எல்லாரையும் என்னி
டத்தில் இழுத்துக்கொள்ளுவேன் என்றார்.
33 தாம் இன்னவிதமான மரணமாய் மரிக்கப்
போகிறாரென்பதைக் குறிக்கும்படி [17]இப்ப
34 டிச் சொன்னார். ஜனங்கள் அவரை நோக்கி:
கிறிஸ்து என்றென்றைக்கும் இருக்கிறார்
என்று வேதத்தில் சொல்லியதை நாங்கள் கே
ட்டிருக்கிறோம், [18]அப்படியிருக்க மனுஷகு
மாரன் உயர்த்தப்படவேண்டியதென்று எப்ப
டிச் சொல்லுகிறீர்; இந்த மனுஷகுமாரன்
யார் என்றார்கள். அதற்கு இயேசு: [19]இன் 35
னும் கொஞ்சக்காலம் ஒளி உங்களிடத்தில்
இருக்கும்; [20]இருளில் நீங்கள் அகப்படாதபடி
க்கு ஒளி உங்களோடிருக்கையில் நடவுங்கள்;
[21]இருளில் நடக்கிறவன் தான் போகிற இடம்
இன்னதென்று அறியான். ஒளி உங்களோ 36
டிருக்கையில் நீங்கள் [22]ஒளியின் பிள்ளைகளா
கும்படிக்கு, ஒளியினிடத்தில் விசுவாசமாயி
ருங்கள் என்றார்.

இவைகளை இயேசு சொல்லி, [23]அவர்களை
விட்டு மறைந்தார். அவர் இத்தனை அற்புதங் 37
களை அவர்களுக்கு முன்பாகச் செய்திருந்தும்,
அவர்கள் அவரை விசுவாசிக்கவில்லை. கர்த் 38
தாவே, எங்கள் மூலமாய்க் கேள்விப்பட்டதை
விசுவாசித்தவன் யார்? கர்த்தருடைய புயம்
யாருக்கு வெளிப்பட்டது என்று [24]ஏசாயா
தீர்க்கதரிசி சொன்ன வசனம் நிறைவேறும்
படி இப்படி நடந்தது. ஆகையால் அவர்கள் 39
விசுவாசிக்கமாட்டாமல் போனார்கள். [25]ஏனெ
னில் ஏசாயா பின்னும்: அவர்கள் கண்களி 40
னால் காணாமலும், இருதயத்தினால் உணரா
மலும், குணப்படாமலும் இருக்கும்படிக்கும்,
நான் அவர்களை ஆரோக்கியமாக்காமல் இருக்
கும்படிக்கும், அவர்களுடைய கண்களை அவர்
குருடாக்கி, அவர்கள் இருதயத்தைக் கடின
மாக்கினார் என்றான். ஏசாயா அவருடைய 41
மகிமையைக் கண்டு, [26]அவரைக்குறித்துப்
பேசுகிறபோது இவைகளைச் சொன்னான்.
ஆகிலும் அதிகாரிகளிலும் அநேகர் அவரிடத் 42
தில் விசுவாசம் வைத்தார்கள். [27]அப்படியிருந்
தும் ஜெபஆலயத்துக்குப் புறம்பாக்கப்படாத
படி, பரிசேயர்நிமித்தம் அதை அறிக்கை
பண்ணாதிருந்தார்கள். அவர்கள் தேவனால் 43
வருகிற மகிமையிலும் [28]மனுஷரால் வருகிற
மகிமையை அதிகமாய் விரும்பினார்கள்.

அப்பொழுது இயேசு சத்தமிட்டு: [29]என்னி 44
டத்தில் விசுவாசமாயிருக்கிறவன் என்னிடத்
தில் அல்ல, என்னை அனுப்பினவரிடத்தில்
விசுவாசமாயிருக்கிறான். என்னைக் காண்கிற 45
வன் [30]என்னை அனுப்பினவரைக் காண்கிறான்.
என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவனெவ 46
னும் இருளில் இராதபடிக்கு, [31]நான் உலகத்
தில் †ஒளியாக வந்தேன். ஒருவன் என் 47
வார்த்தைகளைக் கேட்டும் விசுவாசியாமற்
போனால், அவனை நான் நியாயந்தீர்ப்பதில்லை;
[32]நான் உலகத்தை நியாயந்தீர்க்க வராமல், உல
கத்தை ரட்சிக்க வந்தேன். என்னைத் தள்ளி 48
என் வார்த்தைகளை ஏற்றுக்கொள்ளாதவனை
நியாயந் தீர்க்கிறதொன்றிருக்கிறது; [33]நான்
சொன்ன வசனமே அவனைக் கடைசிநாளில்
நியாயந்தீர்க்கும். நான் சுயமாய்ப் பேசவில்லை, 49
[34]நான் பேசவேண்டியது இன்னதென்றும்

1 11. 45
2 11. 47, 48
3 1 இரா. 8. 41, 42. அப். 8. 27; 17. 4. ரோ. 1. 16
4 1. 44
5 13. 32; 17. 1
6 1 கொ. 15. 36
7 மத். 10. 39; 16. 25. மாற். 8. 35. லூ. 9. 24; 17. 33
8 14. 15. லூ. 6. 46. 1 யோ. 5. 3.
9 14. 3; 17. 24. 1 தெச. 4. 17
10 1 சாமு. 2. 30. நீதி. 27. 18
11 13. 21. மத். 26. 38, 39. லூ. 12. 50
12 மத். 26. 2. லூ. 22. 53
13 மத். 3. 17
14 11. 42.
15 16. 11. லூ. 10. 18. அப். 26. 18. எபே. 2. 2
16 3. 14; 8. 28
* எல்லாவிதமானவரையும் ரோ. 5. 18. எபி. 2. 9
17 18. 32
18 சங். 72. 17–19; 89. 36, 37. ஏசா. 9. 7. ரோ. 5. 18
19 8. 12, 59
20 எரே. 13. 16
21 11. 10. 1 யோ. 2. 11
22 லூ. 16. 8. எபே. 5. 8
23 8. 59; 11. 54
24 ஏசா. 53. 1. ரோ. 10. 16
25 ஏசா. 6. 9, 10. மத். 13. 14
26 ஏசா. 6. 1
27 7. 13; 9. 22
28 5. 44. ரோ. 2. 29
29 மாற். 9. 37. 1 பே. 1. 21
30 14. 9
31 1. 5; 8. 19
† வந்த ஒளியாயிருக்கிறேன்
32 3. 17
33 உபா. 18. 19. லூ. 9. 26
34 8. 38; 14. 10

உபதேசிக்கவேண்டியது இன்னதென்றும்
என்னை அனுப்பின பிதாவே எனக்குக் [1]கட்
50 டளையிட்டார். அவருடைய கட்டளை நித்திய
ஜீவனாயிருக்கிறதென்று அறிவேன்; ஆகை
யால் நான் பேசுகிறவைகளைப் பிதா எனக்
குச் சொன்னபடியே பேசுகிறேன் என்றார்.

**13** பஸ்காபண்டிகைக்கு [2]முன்னே, இயேசு
இவ்வுலகத்தைவிட்டுப் பிதாவினிடத்திற்குப்
போகும்படியான [3]தம்முடைய வேளை வந்த
தென்று அறிந்து, தாம் இவ்வுலகத்திலிருக்
கிற தம்முடையவர்களிடத்தில் அன்பு வைத்த
படியே, [4]முடிவுபரியந்தமும் அவர்களிடத்தில்
2 அன்பு வைத்தார். சீமோனின் குமாரனாகிய
யூதாஸ்காரியோத்து அவரைக் காட்டிக்கொ
டுக்கும்படி [5]பிசாசானவன் அவன் இருதயத்
தை தூண்டினபின்பு, அவர்கள் போஜனம்
3 பண்ணிக்கொண்டிருக்கையில்; தம்முடைய
கையில் பிதா எல்லாவற்றையும் ஒப்புக்கொ
டுத்தாரென்பதையும், [6]தாம் தேவனிடத்திலி
ருந்து வந்ததையும், தேவனிடத்திற்குப் போ
4 கிறதையும் இயேசு அறிந்து; போஜனத்தை
விட்டெழுந்து, [7]வஸ்திரங்களைக் கழற்றி
வைத்து, ஒரு சீலையை எடுத்து, அரையிலே
5 கட்டிக்கொண்டு, பின்பு பாத்திரத்தில் தண்
ணீர் வார்த்து, சீஷருடைய கால்களைக் கழுவ
வும், தாம் கட்டிக்கொண்டிருந்த சீலையினால்
6 துடைக்கவும் தொடங்கினார். அவர் சீமோன்
பேதுருவினிடத்தில் வந்தபோது, அவன்
அவரை நோக்கி: [8]ஆண்டவரே, நீர் என்
7 கால்களைக் கழுவலாமா என்றான். இயேசு
அவனுக்குப் பிரதியுத்தரமாக: நான் செய்கி
றது இன்னதென்று இப்பொழுது நீ அறியாய்,
8 [9]இனிமேல் அறிவாய் என்றார். பேதுரு
அவரை நோக்கி: நீர் ஒருக்காலும் என் கால்
களைக் *கழுவப்படாது என்றான். இயேசு
அவனுக்குப் பிரதியுத்தரமாக: [10]நான் உன்
னைக் கழுவாவிட்டால் என்னிடத்தில் உனக்
9 குப் பங்கில்லை என்றார். அதற்குச் சீமோன்
பேதுரு: ஆண்டவரே, என் கால்களைமாத்திர
மல்ல, என் கைகளையும் என் தலையையும்
10 கூட கழுவவேண்டும் என்றான். இயேசு
அவனை நோக்கி: முழுகினவன் தன் கால்களை
மாத்திரம் கழுவவேண்டியதாயிருக்கும், மற்ற
ப்படி அவன் முழுவதும் சுத்தமாயிருக்கிறான்;
[11]நீங்களும் சுத்தமாயிருக்கிறீர்கள்; ஆகிலும்
11 எல்லாரும் அல்ல என்றார். தம்மைக் காட்
டிக்கொடுக்கிறவனை அவர் அறிந்திருந்தபடியி
னால் [12]நீங்களெல்லாரும் சுத்தமுள்ளவர்கள்
அல்ல என்றார்.
12 அவர்களுடைய கால்களை அவர் கழுவின
பின்பு, தம்முடைய வஸ்திரங்களைத் தரித்துக்
கொண்டு, திரும்ப உட்கார்ந்து, அவர்களை
நோக்கி: நான் உங்களுக்குச் செய்ததை அறிக்
13 திருக்கிறீர்களா? நீங்கள் என்னைப் போதக
ரென்றும், [13]ஆண்டவரென்றும் சொல்லுகிறீர்
கள், நீங்கள் சொல்லுகிறது சரியே, நான்
14 அவர்தான். ஆண்டவரும் போதகருமாகிய
நானே உங்கள் கால்களைக் கழுவினதுண்டா
னால், [14]நீங்களும் ஒருவருடைய கால்களை
ஒருவர் கழுவக்கடவீர்கள். நான் உங்களுக் 15
குச் செய்ததுபோல [15]நீங்களும் செய்யும்படி
உங்களுக்கு மாதிரியைக் காண்பித்தேன்.
மெய்யாகவே மெய்யாகவே நான் உங்களுக் 16
குச் சொல்லுகிறேன், [16]ஊழியக்காரன் தன்
எஜமானிலும் பெரியவனல்ல, அனுப்பப்பட்
டவன் தன்னை அனுப்பினவரிலும் பெரியவ
னல்ல. நீங்கள் இவைகளை †அறிந்திருக்கிற 17
படியினால், [17]இவைகளைச் செய்வீர்களானால்,
பாக்கியவான்களாயிருப்பீர்கள். உங்களெல் 18
லாரையுங்குறித்து நான் பேசவில்லை, நான்
தெரிந்துகொண்டவர்களை அறிவேன்; ஆகிலும்
வேதவாக்கியம் நிறைவேறத்தக்கதாக, [18]என்
னுடனே அப்பம் புசிக்கிறவன் என்மேல்
தன் குதிகாலைத் தூக்கினான். அது நடக்கும் 19
போது நானே அவரென்று நீங்கள் விசுவா
சிக்கும்பொருட்டு, [19]இப்பொழுது அது நடப்
பதற்கு முன்னமே அதை உங்களுக்குச்
சொல்லுகிறேன். நான் அனுப்புகிறவனை 20
ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை ஏற்றுக்கொ
ள்ளுகிறான், [20]என்னை ஏற்றுக்கொள்ளுகிற
வன் என்னை அனுப்பினவரை ஏற்றுக்கொள்
ளுகிறான் என்று, மெய்யாகவே மெய்யாகவே
உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.
இயேசு இவைகளைச் சொன்ன பின்பு, 21
[21]ஆவியிலே கலங்கி: உங்களில் ஒருவன் என்
னைக் காட்டிக்கொடுப்பான் என்று, மெய்யாக
வே மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகி
றேனென்று ‡சாட்சியாகச் சொன்னார். அப் 22
பொழுது யாரைக்குறித்துப் பேசுகிறாரோ
என்று சீஷர்கள் ஐயப்பட்டு, ஒருவரை
யொருவர் நோக்கிப் பார்த்தார்கள். அந்தச் 23
சமயத்தில் அவருடைய சீஷரில் இயேசுவுக்கு
அன்பானவனாயிருந்த ஒருவன் [22]இயேசுவின்
§மார்பிலே சாய்ந்துகொண்டிருந்தான். யா 24
ரைக்குறித்துச் சொல்லுகிறாரென்று விசாரிக்
கும்படி சீமோன் பேதுரு அவனுக்குச் சைகை
காட்டினான். அப்பொழுது அவன் இயேசு 25
வின் மார்பிலே சாய்ந்துகொண்டு: ஆண்ட
வரே, அவன் யார் என்றான். இயேசு பிரதி 26
யுத்தரமாக: நான் இந்தத் துணிக்கையைத்
தோய்த்து எவனுக்குக் கொடுப்பேனோ, அவன்
தான் என்று சொல்லி, துணிக்கையைத் தோ
ய்த்து, சீமோன் குமாரனாகிய யூதாஸ்காரி
யோத்துக்குக் கொடுத்தார். அந்தத் துணிக் 27
கையை அவன் வாங்கினபின்பு, [23]சாத்தான்
அவனுக்குள் புகுந்தான். அப்பொழுது இ
யேசு அவனை நோக்கி: நீ செய்கிறதைச் சீக்கி
ரமாய்ச் செய் என்றார். அவர் இப்படி அவ 28
னுடனே சொன்னதின் கருத்தைப் பந்தியிருக்
தவர்களில் ஒருவனும் அறியவில்லை. யூதாஸ் 29
பணப்பையை வைத்துக்கொண்டிருந்தபடியி
னால், [24]அவன் போய், பண்டிகைக்குத் தேவை
யானவைகளைக் கொள்ளும்படிக்காவது, தரித்
திருக்கு ஏதாகிலும் கொடுக்கும்படிக்காவது,

1 உபா. 18. 18. 1 யோ. 3. 23
2 மத். 26. 2 ஷ
3 17. 1, 11
4 எரே. 31. 3. எபே. 5. 2. 1 யோ. 4. 19. வெளி. 1. 5
5 6. 70. லூ. 22. 3, 53
6 மத். 28. 18. 1 கொ. 15. 27. எபி. 2. 8
7 லூ. 22. 27. பிலி. 2. 7, 8
8 மத். 3. 14
9 12. வச
* கழுவலாகாது
10 3. 5. 1 கொ. 6. 11. எபே. 5. 26. தீத். 3. 5
11 15. 3
12 6. 64
13 மத். 23. 8–10. 1 கொ. 8. 6. பிலி. 2. 11
14 லூ. 22. 27. ரோ. 12. 10. கலா. 6. 1, 2. 1 பே. 5. 5
15 மத். 11. 20. பிலி. 2. 5. 1 பே. 2. 21. 1 யோ. 2. 6
16 மத். 10. 24. லூ. 6. 40
† அறிந்திருக்கக் கொள்ள
17 யாக். 1. 25
18 சங். 41. 9. மத். 26. 23
19 14. 29: 16. 4
20 மத். 10. 40: 25. 40. லூ. 10. 16
21 மத். 26. 21. மாற். 14. 18. லூ. 22. 21. அப். 1. 17. 1 யோ. 2. 19
‡ பிரசித்தமாய்
22 10. 26: 20. 2: 21. 7, 20
§ மடியருகே லூ. 6. 38. யோ. 1. 18
23 6. 70. லூ. 22. 3
24 12. 6

இயேசு அவனுடனே சொல்லியிருப்பார் என்
30 று சிலர் நினைத்தார்கள். அவன் அந்தத் துணிக்
கையை வாங்கினவுடனே புறப்பட்டுப் போ
னான்; அப்பொழுது இராக்காலமாயிருந்தது.
31 அவன் புறப்பட்டுப் போனபின்பு இயேசு:
[1]இப்பொழுது மனுஷகுமாரன் மகிமைப்படு
கிறார், தேவனும் அவரில் மகிமைப்படுகிறார்.
32 தேவன் அவரில் மகிமைப்பட்டிருந்தால், [2]தே
வன் அவரைத் தம்மில் மகிமைப்படுத்துவார்,
சீக்கிரமாய் அவரை மகிமைப்படுத்துவார்.
33 பிள்ளைகளே, இன்னும் கொஞ்சக்காலம் நான்
உங்களுடனேகூட *இருப்பேன்; நீங்கள்
என்னைத் தேடுவீர்கள்; [3]ஆனாலும் நான் போ
கிற இடத்துக்கு நீங்கள் வரக்கூடாதென்று
நான் யூதரோடே சொன்னதுபோல இப்
பொழுது உங்களோடும் சொல்லுகிறேன்.
34 நீங்கள் ஒருவரிலொருவர் அன்பாயிருங்கள்;
[4]நான் உங்களில் அன்பாயிருந்ததுபோல நீங்
களும் ஒருவரிலொருவர் அன்பாயிருங்கள்
என்கிற புதிதான கட்டளையை உங்களுக்குக்
35 கொடுக்கிறேன். நீங்கள் ஒருவரிலொருவர்
அன்புள்ளவர்களாயிருந்தால், [5]அதினால் நீங்
கள் என்னுடைய சீஷர்களென்று எல்லாரும்
அறிந்துகொள்வார்கள் என்றார்.
36 சீமோன் பேதுரு அவரை நோக்கி: ஆண்
டவரே, நீர் எங்கே போகிறீர் என்றான். இ
யேசு அவனுக்குப் பிரதியுத்தரமாக: [6]நான்
போகிற இடத்துக்கு இப்பொழுது நீ என்
பின்னே வரக்கூடாது, பிற்பாடு என் பின்னே
37 வருவாய் என்றார். பேதுரு அவரை நோக்கி:
ஆண்டவரே, நான் இப்பொழுது உமக்குப்
பின்னே ஏன் வரக்கூடாது? [7]உமக்காக என்
38 ஜீவனையும் கொடுப்பேன் என்றான். இயேசு
அவனுக்குப் பிரதியுத்தரமாக: †எனக்காக உன்
ஜீவனைக் கொடுப்பாயோ? சேவல் கூவுகிற
தற்கு முன்னே நீ என்னை மூன்றுதரம் மறு
தலிப்பாயென்று, மெய்யாகவே மெய்யாகவே
உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.

**14** உங்கள் இருதயம் கலங்காதிருப்பதாக;
[8]தேவனிடத்தில் விசுவாசமாயிருங்கள், என்
2 னிடத்திலும் விசுவாசமாயிருங்கள். என்
பிதாவின் வீட்டில் அநேக வாசஸ்தலங்கள்
உண்டு; அப்படியில்லாதிருந்தால், நான் உங்க
ளுக்குச் சொல்லியிருப்பேன்; [9]ஒரு ‡ஸ்த
லத்தை உங்களுக்காக ஆயத்தம்பண்ணப்போ
3 கிறேன். நான் போய் உங்களுக்காக ஸ்தலத்
தை ஆயத்தம்பண்ணினபின்பு, [10]நான் இரு
க்கிற இடத்திலே நீங்களும் இருக்கும்படி,
[11]நான் மறுபடியும் வந்து உங்களை என்னி
4 டத்தில்சேர்த்துக்கொள்ளுவேன். நான் போ
கிற இடத்தை அறிந்திருக்கிறீர்கள், வழியை
5 யும் அறிந்திருக்கிறீர்கள் என்றார். தோமா
அவரை நோக்கி: ஆண்டவரே, நீர் போகிற
இடத்தை அறியோமே, வழியை நாங்கள் எப்
6 படி அறிவோம் என்றான். அதற்கு இயேசு:
[12]நானே வழியும் [13]சத்தியமும் [14]ஜீவனுமா
யிருக்கிறேன்; [15]என்னாலேயல்லாமல் ஒரு

1 12. 23: 14. 13. 1 பே. 4. 11
2 17. 1-6
* இருக்கிறேன்
3 7. 34: 8. 21
4 15. 12, 17. லேவி. 19. 18. எபே. 5. 2. 1 தெச. 4. 9. யாக். 2. 8. 1 பே. 1. 22. 1 யோ. 2. 7, 8: 3. 11, 23: 4. 20, 21
5 1 யோ. 2. 5: 4. 20
6 21. 18. 2 பே. 1. 14
7 மத். 26. 33. முதலிய. மாற். 14. 29. முதலிய. லூக். 22. 33. முதலிய
† என்னிமித்தம்
8 37 வச. ஏசா. 12. 2, 3: 43. 1, 2. எபே. 1. 12, 13. 2 தெச. 2. 2. 1 பே. 1. 21.
9 13. 33, 36. எபி. 6. 20: 9. 8, 24. வெளி. 21. 2
‡ இடத்தை
10 12. 26: 17. 24. 1 தெச. 4. 17
11 18, 28. வச. அப். 1. 11
12 10. 9. ஏசா. 35. 8, 9. எபி. 10. 19, 20
13 1. 17: 15. 1
14 1. 4: 11. 25
15 10. 9. அப். 4. 12.
16 8. 19
17 12. 45. கொலோ. 1. 15. எபி. 1. 3
18 10. 38
19 5. 36: 10. 38
20 மத். 21. 21. மாற். 16. 17. லூக். 10. 17
21 மத். 7. 7. 1 யோ. 5. 14
22 21. 23: 15. 10, 14. 1 யோ. 5. 3
23 15. 26: 16. 7. ரோ. 8. 15, 26
§ பரிசுத்தபேசுகிறவர்
24 15. 26. 1 கொ. 2. 14
25 ரோ. 8. 9. 1 யோ. 2. 27
26 3, 28. வச. மத். 28. 20
27 16. 16
28 1 கொ. 15. 20. எபி. 7. 25
29 10. 38: 17. 21
30 15. 23. 1 யோ. 2. 5
31 லூக். 6. 16

வனும் பிதாவினிடத்தில் வரான். என்னை 7
அறிந்தீர்களானால் [16]என் பிதாவையும் அறிந்தி
ருப்பீர்கள்; இதுமுதல் நீங்கள் அவரை அறிந்
தும் அவரைக் கண்டும் இருக்கிறீர்கள் என்
றார். பிலிப்பு அவரை நோக்கி: ஆண்டவரே, 8
பிதாவை எங்களுக்குக் காண்பியும், அது எங்க
ளுக்குப் போதும் என்றான். அதற்கு இயேசு: 9
பிலிப்புவே, இவ்வளவுகாலம் நான் உங்களுட
னேகூட இருந்தும் நீ என்னை அறியவில்லை
யா? [17]என்னைக் கண்டவன் பிதாவைக் கண்
டான்; அப்படியிருக்க, பிதாவை எங்களுக்
குக் காண்பியும் என்று நீ எப்படிச் சொல்லு
கிறாய்? நான் பிதாவிலும், [18]பிதா என்னிலும் 10
இருக்கிறதை நீ விசுவாசிக்கிறதில்லையா? நான்
உங்களுடனே சொல்லுகிற வசனங்களை என்
சுயமாய்ச் சொல்லவில்லை; என்னிடத்தில் வா
சமாயிருக்கிற பிதாவானவரே இந்தக் கிரியை
களைச் செய்துவருகிறார். நான் பிதாவிலும் 11
பிதா என்னிலும் இருக்கிறதை நம்புங்கள்;
[19]அப்படியில்லாவிட்டாலும் என் கிரியைகளி
னிமித்தமாவது என்னை நம்புங்கள். மெய்யா 12
கவே மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்
லுகிறேன்: [20]நான் என் பிதாவினிடத்திற்குப்
போகிறபடியினால், என்னை விசுவாசிக்கிற
வன் நான் செய்கிற கிரியைகளைத் தானும்
செய்வான், இவைகளைப்பார்க்கிலும் பெரிய
கிரியைகளையும் செய்வான். நீங்கள் என் நா 13
மத்தினாலே எதைக் கேட்பீர்களோ, [21]குமார
னில் பிதா மகிமைப்படும்படியாக, அதைச்
செய்வேன். என் நாமத்தினாலே நீங்கள் 14
எதைக் கேட்டாலும் அதை நான் செய்வேன்.
நீங்கள் என்னிடத்தில் [22]அன்பாயிருந்தால் என் 15
கற்பனைகளைக் கைக்கொள்ளுங்கள். நான் 16
பிதாவை வேண்டிக்கொள்ளுவேன், [23]அப்
பொழுது என்றென்றைக்கும் உங்களுடனே
கூட இருக்கும்படிக்குச் சத்திய ஆவியாகிய
வேறொரு §தேற்றரவாளனை அவர் உங்களுக்
குத் தந்தருளுவார். உலகம் [24]அந்தச் சத்திய 17
ஆவியானவரைக் காணாமலும் அறியாமலும்
இருக்கிறபடியால் அவரைப்பெற்றுக்கொள்ள
மாட்டாது; [25]அவர் உங்களுடனே வாசம்ப
ண்ணி உங்களுக்குள்ளே இருப்பதால், நீங்கள்
அவரை அறிவீர்கள். நான் உங்களைத் திக்கற் 18
றவர்களாக விடேன், [26]உங்களிடத்தில் வரு
வேன். இன்னும் கொஞ்சக்காலத்திலே உல 19
கம் என்னைக் காணாது, [27]நீங்களோ என்னைக்
காண்பீர்கள்; [28]நான் பிழைக்கிறபடியினால் நீங்
களும் பிழைப்பீர்கள். நான் என் பிதாவிலும், 20
[29]நீங்கள் என்னிலும், நான் உங்களிலும் இருக்
கிறதை அந்நாளிலே நீங்கள் அறிவீர்கள். என் 21
கற்பனைகளைப் பெற்றுக்கொண்டு [30]அவைக
ளைக் கைக்கொள்ளுகிறவனே என்னிடத்தில்
அன்பாயிருக்கிறான், என்னிடத்தில் அன்பா
யிருக்கிறவன் என் பிதாவுக்கு அன்பாயிருப்
பான்; நானும் அவனில் அன்பாயிருந்து, அவ
னுக்கு என்னை வெளிப்படுத்துவேன் என்றார்.
ஸ்காரியோத்தல்லாத [31]யூதா என்பவன் அவ 22

ளை நோக்கி: ஆண்டவரே, நீர் உலகத்துக்கு
உம்மை வெளிப்படுத்தாமல் எங்களுக்கு உம்
மை வெளிப்படுத்தப்போகிற காரணமென்ன
23 என்ருன். இயேசு அவனுக்குப் பிரதியுத்தர
மாக: ஒருவன் என்னில் அன்பாயிருந்தால்,
அவன் என் வசனத்தைக் கைக்கொள்ளுவான்,
அவனில் என் பிதா அன்பாயிருப்பார்; [1]நாங்
கள் அவனிடத்தில் வந்து அவனேடே வாசம்
24 பண்ணுவோம். என்னில் அன்பாயிராதவன்
என் வசனங்களைக் கைக்கொள்ளமாட்டான்.
[2]நீங்கள் கேட்கிற வசனம் என்னுடையதாயி
ராமல் என்னை அனுப்பின பிதாவினுடையதா
யிருக்கிறது.
25 நான் உங்களுடனே தங்கியிருக்கையில்
26 இவைகளை உங்களுக்குச்சொன்னேன். என்
நாமத்தினலே பிதா அனுப்பப்போகிற பரி
சுத்த ஆவியாகிய தேற்றரவாளனே எல்லாவற்
றையும் உங்களுக்குப் போதித்து, [3]நான் உங்க
ளுக்குச் சொன்ன எல்லாவற்றையும் உங்க
27 ளுக்கு நினைப்பூட்டுவார். சமாதானத்தை
உங்களுக்கு வைத்துப்போகிறேன், [4]என்னு
டைய சமாதானத்தையே உங்களுக்குக் கொ
டுக்கிறேன்; உலகம் கொடுக்கிறபிரகாரம்
நான் உங்களுக்குக் கொடுக்கிறதில்லை. உங்கள்
இருதயம் கலங்காமலும் பயப்படாமலும் இருப்
28 பதாக. நான் போவேன் என்றும், திரும்பி
உங்களிடத்தில் வருவேன் என்றும் நான் உங்
களுடனே சொன்னதைக் கேட்டீர்களே. நீங்
கள் என்னில் அன்புள்ளவர்களாயிருந்தால்
[5]பிதாவினிடத்திற்குப் போகிறேனென்று
நான் சொன்னதைக்குறித்துச் சந்தோஷப்படு
வீர்கள், [6]ஏனெனில் என் பிதா என்னிலும்
29 பெரியவராயிருக்கிருர். இது நடக்கும்போது
நீங்கள் விசுவாசிக்கும்படியாக, நடப்பதற்கு
முன்னமே இதை உங்களுக்குச் சொன்னேன்.
30 இனி நான் உங்களுடனே அதிகமாய்ப் பேசு
வதில்லை. [7]இந்த உலகத்தின் அதிபதி வருகி
ருன், அவனுக்கு என்னிடத்தில் ஒன்றுமில்
31 லை. நான் பிதாவில் அன்பாயிருக்கிறேன் என்
றும், [8]பிதா எனக்குக் கட்டளையிட்டபடியே
செய்கிறேன் என்றும், உலகம் அறியும்படி
க்கு இப்படி நடக்கும். எழுந்திருங்கள், இவ்
விடம்விட்டுப்போவோம்வாருங்கள் என்ருர்.

15 நான் மெய்யான திராட்சச்செடி, [9]என்
2 பிதா திராட்சத்தோட்டக்காரர். என்னில்
கனிகொடாதிருக்கிற கொடி எதுவோ அதை
அவர் அறுத்துப்போடுகிருர்; [10]கனிகொடுக்கிற
கொடி எதுவோ, அது அதிக கனிகளைக் கொ
டுக்கும்படி, அதைச் சுத்தம்பண்ணுகிருர்.
3 நான் உங்களுக்குச் சொன்ன *உபதேசத்தின
லே [11]நீங்கள் இப்பொழுதே சுத்தமாயிருக்கிறீர்
4 கள். என்னில் நிலைத்திருங்கள், [12]நானும் உங்
களில் நிலைத்திருப்பேன்; கொடியானது திரா
ட்சச்செடியில் நிலைத்திராவிட்டால் அது தா
னய்க் கனிகொடுக்கமாட்டாததுபோல, நீங்க
ளும் என்னில் நிலைத்திராவிட்டால், கனிகொ
5 டுக்கமாட்டீர்கள். நானே திராட்சச்செடி,
நீங்கள் கொடிகள். ஒருவன் என்னிலும், நான்
அவனிலும் நிலைத்திருந்தால், [13]அவன் மிகு
ந்த கனிகளைக் கொடுப்பான்; †என்னையல்லா
மல் [14]உங்களால் ஒன்றும் செய்யக்கூடாது.
ஒருவன் என்னில் நிலைத்திராவிட்டால், [15]வெ 6
ளியே எறியுண்ட கொடியைப்போல அவன்
எறியுண்டு உலர்ந்துபோவான்; அப்படிப்பட்
டவைகளைச் சேர்த்து, அக்கினியிலே போடு
கிருர்கள்; அவைகள் எரிந்துபோம். நீங்கள் 7
என்னிலும், என் வார்த்தைகள் உங்களிலும்
நிலைத்திருந்தால், [16]நீங்கள் கேட்டுக்கொள்வ
தெதுவோ அது உங்களுக்குச் செய்யப்படும்.
நீங்கள் மிகுந்த கனிகளைக் கொடுப்பதினல் 8
என் பிதா மகிமைப்படுவார், [17]எனக்கும் சீஷ
ராயிருப்பீர்கள். பிதா என்னில் அன்பாயி 9
ருக்கிறதுபோல நானும் உங்களில் அன்பா
யிருக்கிறேன்; என்னுடைய அன்பிலே நிலைத்
திருங்கள். நான் என் பிதாவின் கற்பனைக 10
ளைக் கைக்கொண்டு அவருடைய அன்பிலே
நிலைத்திருக்கிறதுபோல, [18]நீங்களும் என் கற்
பனைகளைக் கைக்கொண்டிருந்தால், என்னு
டைய அன்பிலே நிலைத்திருப்பீர்கள். என் 11
னுடைய சந்தோஷம் உங்களில் நிலைத்திருக்
கும்படிக்கும், [19]உங்கள் சந்தோஷம் நிறைவா
யிருக்கும்படிக்கும், இவைகளை உங்களுக்குச்
சொன்னேன். நான் உங்களில் அன்பாயி 12
ருக்கிறதுபோல [20]நீங்களும் ஒருவரிலொரு
வர் அன்பாயிருக்கவேண்டுமென்பதே என்னு
டைய கற்பனையாயிருக்கிறது. ஒருவன் தன் 13
சிநேகிதருக்காகத் தன் ஜீவனைக்கொடுக்கிற
அன்பிலும் [21]அதிகமான அன்பு ஒருவரிடத்
திலுமில்லை. நான் உங்களுக்குக் கற்பிக்கிற 14
யாவையும் நீங்கள் செய்வீர்களானல், [22]என்
சிநேகிதராயிருப்பீர்கள். இனி நான் உங் 15
களை ஊழியக்காரரென்று சொல்லுகிறதில்லை,
ஊழியக்காரன் தன் எஜமான் செய்கிறதை
அறியமாட்டான். [23]நான் உங்களைச் சிநேகிதர்
என்றேன், ஏனெனில் என் பிதாவினிடத்
தில் நான் கேள்விப்பட்ட எல்லாவற்றையும்
உங்களுக்கு அறிவித்தேன். நீங்கள் என் 16
னைத் தெரிந்துகொள்ளவில்லை, [24]நான் உங்க
ளைத் தெரிந்துகொண்டேன்; நீங்கள் என்
நாமத்தினலே பிதாவைக் கேட்டுக்கொள்வது
எதுவோ, [25]அதை அவர் உங்களுக்குக் கொ
டுக்கத்தக்கதாக நீங்கள் போய்க் கனிகொடுக்
கும்படிக்கும், உங்கள் கனி நிலைத்திருக்கும்
படிக்கும், [26]நான் உங்களை ஏற்படுத்தினேன்.
நீங்கள் ஒருவரிலொருவர் அன்பாயிருக்க 17
வேண்டுமென்றே [27]இவைகளை உங்களுக்குக்
கற்பிக்கிறேன். உலகம் உங்களைப் பகைத் 18
தால், [28]அது உங்களைப் பகைக்கிறதற்கு
முன்னே என்னைப் பகைத்ததென்று அறியுங்
கள். நீங்கள் உலகத்தாராயிருந்தால், உல 19
கம் தம்முடையதைச் சிநேகித்திருக்கும்; [29]நீங்
கள் உலகத்தாராயிராதபடியினலும், நான்
உங்களை உலகத்திலிருந்து தெரிந்துகொண்ட
படியினலும், உலகம் உங்களைப் பகைக்கிறது.

1 1 யோ. 2. 24. வெளி. 3. 20
2 5. 19, 38
3 16. வச: 16. 13. 1 யோ. 2. 20, 27
4 எபே. 2. 14, 17. பிலி. 4. 7. கொலோ. 3. 15
5 12. வச
6 1 கொ. 15. 27, 28. பிலி. 2. 6
7 16. 11. எபே. 2. 2
8 சங். 40. 8. பிலி. 2. 8
9 உன்ன. 8. 12. ஏசா. 4. 2.
10 மத். 15. 13
* வார்த்தை=வசனம்
11 17. 17. எபே. 5. 26. 1 பே. 1. 22
12 ஓசி. 14. 8. கலா. 2. 20. பிலி. 1. 11. 1 யோ. 2. 6
13 பிலி. 1. 11; 4. 13
† என்னையன்றி = என்னை விட்டுப் பிரிந்து, நீங்கள்
14 அப். 4. 12
15 மத். 3. 10; 7. 19
16 14. 13; 16. 23
17 மத். 5. 16. பிலி. 1. 10
18 14. 15, 21, 23
19 16. 24; 17. 13. 1 யோ. 1. 4
20 13. 34. 1 தெச. 4. 9. 1 பே. 4. 8. 1 யோ. 3. 11; 4. 21
21 10. 11, 15. ரோ. 5. 7, 8. எபே. 5. 2. 1 யோ. 3. 16
22 14. 15, 23. மத். 12. 50
23 17. 26. அப். 20. 27. யாக். 2. 23
24 1 யோ. 4. 10, 19
25 14. 13
26 மத். 28. 19. மாற். 16. 15. எபே. 2. 10. கொலோ. 1. 6
27 12. வச
28 1 யோ. 3. 1, 3
29 17. 14. 1 யோ. 4. 5

20 ஊழியக்காரன் தன் எஜமானிலும் பெரியவ
னல்லவென்று நான் உங்களுக்குச் சொன்ன
வார்த்தையை [1]நினைத்துக்கொள்ளுங்கள். அ
வர்கள் என்னைத் துன்பப்படுத்தினதுண்டா
னால், உங்களையும் துன்பப்படுத்துவார்கள்;
அவர்கள் என் வசனத்தைக் கைக்கொண்ட
துண்டானால், உங்கள் வசனத்தையும் கைக்
21 கொள்ளுவார்கள். அவர்கள் என்னை அனுப்
பினவரை அறியாதபடியினால் [2]என் நாமத்தி
னிமித்தமே இவைகளையெல்லாம் உங்களுக்
22 குச் செய்வார்கள். நான் வந்து அவர்களிடத்
தில் பேசாதிருந்தேனானால் [3]அவர்களுக்குப்
பாவமிராது; [4]இப்பொழுதோ தங்கள் பாவத்
தைக்குறித்துப் போக்குச்சொல்ல அவர்க
23 ளுக்கு இடமில்லை. என்னைப் பகைக்கிற
24 வன் [5]என் பிதாவையும் பகைக்கிறான். வே
றொருவரும் செய்யாத கிரியைகளை நான்
அவர்களுக்குள்ளே செய்யாதிருந்தேனானால்
[6]அவர்களுக்குப் பாவமிராது; இப்பொழுது
அவர்கள் என்னையும் என் பிதாவையும் கண்
25 டும் பகைத்துமிருக்கிறார்கள். முகாந்தரமில்
லாமல் என்னைப் பகைத்தார்கள் என்று [7]அவர்
களுடைய வேதத்தில் எழுதியிருக்கிற வாக்
கியம் நிறைவேறும்படிக்கு இப்படியா
26 யிற்று. பிதாவினிடத்திலிருந்து நான் உங்க
ளுக்கு அனுப்பப்போகிறவரும், பிதாவினி
டத்திலிருந்து புறப்படுகிறவருமாகிய சத்திய
ஆவியான தேற்றரவாளன் வரும்போது,
[8]அவர் என்னைக்குறித்துச் சாட்சிகொடுப்பார்.
27 நீங்களும் ஆதிமுதல் என்னுடனேகூட இருந்
தபடியால் [9]எனக்குச் சாட்சிகளாயிருப்பீர்கள்.

16 நீங்கள் [10]இடறலடையாதபடிக்கு இவை
2 களை உங்களுக்குச் சொன்னேன். அவர்கள்
உங்களை ஜெபஆலயங்களுக்குப் புறம்பாக்கு
வார்கள்; மேலும் உங்களைக் கொலைசெய்கிற
வன் தான் [11]தேவனுக்கு *தொண்டுசெய்கிற
3 வனென்று நினைக்குங்காலம் வரும். அவர்
கள் பிதாவையும் என்னையும் அறியாதபடியி
னால் [12]இவைகளை உங்களுக்குச் செய்வார்
4 கள். அந்தக்காலம் வரும்போது நான் இவை
களை உங்களுக்குச் சொன்னேனென்று நீங்
கள் நினைக்கும்படி இவைகளை உங்களுக்குச்
சொல்லியிருக்கிறேன்; [13]நான் உங்களுடனே
கூட இருந்தபடியினால் ஆரம்பத்திலே இவை
5 களை உங்களுக்குச் சொல்லவில்லை. இப்
பொழுது [14]நான் என்னை அனுப்பினவரிடத்
திற்குப் போகிறேன்; எங்கே போகிறீரென்று
உங்களில் ஒருவனும் என்னைக் கேட்கவில்லை.
6 ஆனாலும் நான் இவைகளை உங்களுக்குச்
சொன்னதினால் [15]உங்கள் இருதயம் துக்கத்
7 தால் நிறைந்திருக்கிறது. நான் உங்களுக்கு
உண்மையைச் சொல்லுகிறேன்; நான் போகி
றது உங்களுக்குப் பிரயோஜனமாயிருக்கும்;
[16]நான் போகாதிருந்தால், தேற்றரவாளன் உங்
களிடத்தில் வரார்; நான் போவேனேயாகில்
அவரை உங்களிடத்திற்கு அனுப்புவேன்.
8 அவர் வந்து, பாவத்தைக்குறித்தும், †நீதி
யைக்குறித்தும், நியாயத்தீர்ப்பைக்குறித்தும்,
[17]உலகத்தைக் கண்டித்து உணர்த்துவார்.
அவர்கள் என்னை விசுவாசியாதபடியினாலே 9
[18]பாவத்தைக்குறித்தும், நீங்கள் இனி என் 10
னைக் காணாதபடிக்கு நான் என் பிதாவினிடத்
திற்குப் போகிறபடியினாலே [19]நீதியைக்குறித்
தும், இந்த உலகத்தின் அதிபதி நியாயந் 11
தீர்க்கப்பட்டதினாலே [20]நியாயத்தீர்ப்பைக்கு
றித்தும், கண்டித்து உணர்த்துவார். இன்னும் 12
அநேகங் காரியங்களை நான் உங்களுக்குச்
சொல்லவேண்டியதா யிருக்கிறது, [21]அவை
களை நீங்கள் இப்பொழுது தாங்கமாட்டீர்கள்.
சத்திய ஆவியாகிய அவர் வரும்போது, [22]சகல 13
சத்தியத்திற்குள்ளும் உங்களை நடத்துவார்;
அவர் தம்முடைய சுயமாய்ப் பேசாமல், தாம்
கேள்விப்பட்டவைகள் யாவையுஞ் சொல்லி,
[23]வரப்போகிற காரியங்களை உங்களுக்கு அறி
விப்பார். அவர் என்னுடையதில் எடுத்து உங் 14
களுக்கு அறிவிப்பதினால் என்னை மகிமைப்
படுத்துவார். பிதாவினுடையவைகள் யாவும் 15
என்னுடையவைகள்; [24]அதினாலே அவர் என்
னுடையதில் எடுத்து உங்களுக்கு அறிவிப்
பார் என்றேன். நான் பிதாவினிடத்திற்குப் 16
போகிறபடியினால் கொஞ்சக்காலத்திலே என்
னைக் ‡காணாதிருப்பீர்கள், [25]மறுபடியும் கொஞ்
சக்காலத்திலே என்னைக் காண்பீர்கள் என்
றார். அப்பொழுது அவருடைய சீஷரில் 17
சிலர்: நான் பிதாவினிடத்திற்குப் போகிற
படியினால், கொஞ்சக்காலத்திலே என்னைக்
காணாதிருப்பீர்கள் என்றும், மறுபடியும்கொஞ்
சக்காலத்திலே என்னைக் காண்பீர்கள் என்
றும் அவர் நம்முடனே சொல்லுகிறதின் கருத்
தென்ன என்று தங்களுக்குள்ளே பேசிக்
கொண்டதுமன்றி: கொஞ்சக்காலம் என்கி 18
றாரே, இதென்ன? அவர் சொல்லுகிறது
இன்னதென்று நமக்கு விளங்கவில்லையே என்
றார்கள். அதைக்குறித்துத் தம்மிடத்தில் கேட் 19
கும்படி அவர்கள் விரும்புகிறதை இயேசு
அறிந்து, [26]அவர்களை நோக்கி: கொஞ்சக்காலத்
திலே என்னைக் காணாதிருப்பீர்கள், மறுபடி
யும் கொஞ்சக்காலத்திலே என்னைக் காண்பீர்
கள் என்று நான் சொன்னதைக்குறித்து நீங்
கள் உங்களுக்குள்ளே விசாரிக்கிறீர்களோ?
மெய்யாகவே மெய்யாகவே நான் உங்களுக் 20
குச் சொல்லுகிறேன்: [27]நீங்கள் அழுது புலம்
புவீர்கள், உலகமோ சந்தோஷப்படும்; நீங்கள்
துக்கப்படுவீர்கள், ஆனாலும் உங்கள் துக்கம்
சந்தோஷமாக மாறும். ஸ்திரீயானவளுக்குப் 21
பிரசவகாலம் வந்திருக்கும்போது அவள் துக்
கமடைகிறாள்; [28]பிள்ளைபெற்றவுடனே ஒரு
மனுஷன் உலகத்தில் பிறந்தானென்கிற சந்
தோஷத்தினால் அப்புறம் உபத்திரவத்தை
நினையாள். அதுபோல நீங்களும் இப்பொ 22
ழுது துக்கமடைந்திருக்கிறீர்கள். [29]நான் மறு
படியும் உங்களைக் காண்பேன், அப்பொழுது
உங்கள் இருதயம் சந்தோஷப்படும், உங்கள்
சந்தோஷத்தை ஒருவனும் உங்களிடத்திலி

1 13. 16. மத். 10. 22, 24. லூ. 6. 40
2 16. 3. மத். 10. 22; 24. 9
3 9. 41
4 ரோ. 4. 20. மாற். 4. 17
5 1 யோ. 2. 23
6 7. 31
7 சங். 35. 19; 69. 4
8 14. 17. லூ. 24. 49. அப். 2. 33. 1 யோ. 5. 6
9 லூ. 24. 48. அப். 2. 32; 4. 20, 33. 2 பே. 1. 16, 1 யோ. 1. 2
10 மத். 11. 6
11 9. 22, 34. அப். 8. 1; 26. 9–11
* ஊழியம்
12 15. 21. ரோ. 10. 2. 1 கொ. 2. 8. 1 தீமோ. 1. 13
13 13. 19. மத். 9. 15
14 7. 33
15 22. வச. 14. 1
16 7. 39. அப். 2. 33. எபே. 4. 8
† புண்ணியத்தை
17 அப். 2. 37
18 அப். 2. 22–37. ரோ. 3. 20; 7. 9
19 ஏசா. 42. 21. அப். 2. 32. ரோ. 1. 17
20 12. 31. லூ. 10. 18. அப். 17. 31; 26. 18. ரோ. 2. 2. வெளி. 20. 12, 13
21 மாற். 4. 33. 1 கொ. 3. 2. எபி. 5. 12
22 14. 17, 26. 1 யோ. 2. 20, 27
23 வெளி. 1. 1, 19
24 மத். 11. 27
‡ பாராதிருப்பீர்கள்
25 7. 33; 13. 3
26 2. 24, 25; 14. 19
27 லூ. 24. 17, 21
28 ஏசா. 26. 17
29 6. வச. லூ. 24. 41, 52. 1 பே. 1. 8

23 ருந்து எடுத்துப் போடமாட்டான். அந்த
நாளிலே நீங்கள் என்னிடத்தில் *ஒன்றுங்
கேட்கமாட்டீர்கள். [1]மெய்யாகவே மெய்யாக
வே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்,
நீங்கள் என் நாமத்தினாலே பிதாவினிடத்தில்
கேட்டுக்கொள்வதெதுவோ அதை அவர் உங்க
24 ளுக்குத் தருவார். இதுவரைக்கும் நீங்கள் என்
நாமத்தினாலே ஒன்றும் கேட்கவில்லை; கேளுங்
கள், [2]அப்பொழுது உங்கள் சந்தோஷம்
நிறைவாயிருக்கும்படி பெற்றுக்கொள்வீர்கள்.
25 இவைகளை நான் உவமைகளாய் உங்களு
டனே பேசுகிறேன்; காலம் வரும், அப்பொ
ழுது நான் உவமைகளாய் உங்களுடனே பே
சாமல், பிதாவைக்குறித்து வெளிப்படையாக
26 உங்களுக்கு அறிவிப்பேன். அந்த நாளில்
நீங்கள் என் நாமத்தினாலே வேண்டிக்கொள்
வீர்கள். [3]உங்களுக்காகப் பிதாவை நான் கேட்
டுக்கொள்வேனென்று உங்களுக்குச் சொல்ல
27 வேண்டியதில்லை. நீங்கள் என்னைச் சிநே
கித்து, [4]நான் தேவனிடத்திலிருந்து புறப்
பட்டுவந்தேனென்று விசுவாசிக்கிறபடியினால்
28 பிதா தாமே உங்களைச் சிநேகிக்கிறார். நான்
பிதாவினிடத்திலிருந்து புறப்பட்டு உலகத்
திலே வந்தேன்; [5]மறுபடியும் உலகத்தை விட்
டுப் பிதாவினிடத்திற்குப் போகிறேன் என்
29 றார். அவருடைய சீஷர்கள் அவரை நோக்கி:
இதோ, இப்பொழுது நீர் உவமையாய்ப் பேசா
30 மல், வெளிப்படையாய்ப் பேசுகிறீர். நீர்
எல்லாவற்றையும் அறிந்திருக்கிறீர் என்றும்,
ஒருவன் உம்மை வினாவவேண்டுவதில்லை
யென்றும், இப்பொழுது அறிந்திருக்கிறோம்;
[6]இதினாலே நீர் தேவனிடத்திலிருந்து வந்தீ
ரென்று விசுவாசிக்கிறோம் என்றார்கள்.
31 இயேசு அவர்களுக்குப் பிரதியுத்தரமாக: இப்
32 பொழுது நீங்கள் †விசுவாசிக்கிறீர்கள். இதோ
[7]நீங்கள் சிதறுண்டு, அவனவன் தன்தன்
இடத்துக்குப் போய், என்னைத் தனியேவிட்டு
விடுங்காலம் வரும், அது இப்பொழுது வந்தி
ருக்கிறது; [8]ஆனாலும் நான் தனித்திரேன்,
33 பிதா என்னுடனேகூட இருக்கிறார். என்
னிடத்தில் உங்களுக்குச் [9]சமாதானம் உண்டா
யிருக்கும்பொருட்டு இவைகளை உங்களுக்குச்
சொன்னேன். [10]உலகத்தில் உங்களுக்கு உபத்
திரவம் உண்டு; ஆனாலும் திடன்கொள்ளுங்
கள்; [11]நான் உலகத்தை ஜெயித்தேன் என்றார்.

**17** இயேசு இவைகளைச் சொன்ன பின்பு
தம்முடைய கண்களை வானத்துக்கு ஏறெடு
2 த்து: [12]பிதாவே, வேளை வந்தது, நீர் உம்மு
டைய குமாரனுக்குத் தந்தருளின யாவருக்
கும் [13]அவர் நித்தியஜீவனைக் கொடுக்கும்பொ
ருட்டு ‡மாம்சமான யாவர்மேலும் நீர் அவ
ருக்கு அதிகாரங் கொடுத்தபடியே, உம்மு
டைய குமாரன் உம்மை மகிமைப்படுத்தும்
படிக்கு நீர் உம்முடைய குமாரனை மகிமைப்
3 படுத்தும். ஒன்றான மெய்த்தேவனாகிய [14]உம்
மையும் நீர் அனுப்பினவராகிய இயேசுகிறிஸ்
4 துவையும் அறிவதே நித்தியஜீவன். பூமியி
லே நான் உம்மை மகிமைப்படுத்தினேன்;
[15]நான் செய்யும்படி நீர் எனக்கு நியமித்த கிரி
யையைச் செய்து முடித்தேன். பிதாவே உல 5
கம் உண்டாகிறதற்கு முன்னே உம்மிடத்தில்
எனக்கு உண்டாயிருந்த மகிமையினாலே [16]இப்
பொழுது நீர் என்னை உம்மிடத்திலே மகிமை
ப்படுத்தும். நீர் உலகத்தில் தெரிந்தெடுத்து 6
எனக்குத் தந்த மனுஷருக்கு உம்முடைய
நாமத்தை வெளிப்படுத்தினேன். [17]அவர்கள்
உம்முடையவர்களாயிருந்தார்கள், அவர்களை
எனக்குத் தந்தீர், அவர்கள் உம்முடைய வச
னத்தைக் கைக்கொண்டிருக்கிறார்கள். நீர் 7
எனக்குத் தந்தவைகளெல்லாம் உம்மாலே
உண்டாயினவென்று இப்பொழுது அறிந்தி
ருக்கிறார்கள். நீர் எனக்குக் கொடுத்த வார்த் 8
தைகளை நான் அவர்களுக்குக் கொடுத்தேன்;
[18]அவர்கள் அவைகளை ஏற்றுக்கொண்டு, நான்
உம்மிடத்திலிருந்து புறப்பட்டு வந்தேன் என்
று நிச்சயமாய் அறிந்து, நீர் என்னை அனுப்
பினீர் என்று விசுவாசித்திருக்கிறார்கள். நான் 9
அவர்களுக்காக வேண்டிக்கொள்ளுகிறேன்;
[19]உலகத்துக்காக வேண்டிக்கொள்ளாமல், நீர்
எனக்குத் தந்தவர்களுக்காக வேண்டிக்கொள்
ளுகிறேன்; அவர்கள் உம்முடையவர்களா
யிருக்கிறார்களே. என்னுடையவைகள் யா 10
வும் உம்முடையவைகள், [20]உம்முடையவை
கள் என்னுடையவைகள் [21]அவர்களில் நான்
மகிமைப்பட்டிருக்கிறேன். நான் இனி உல 11
கத்திலிரேன், இவர்கள் உலகத்திலிருக்கி
றார்கள்; நான் உம்மிடத்திற்கு வருகிறேன்.
[22]பரிசுத்த பிதாவே, நீர் எனக்குத் தந்தவர்
கள் நம்மைப்போல ஒன்றாயிருக்கும்படிக்கு,
நீர் அவர்களை உம்முடைய நாமத்தினா
லே §காத்துக்கொள்ளும். நான் அவர்களுட 12
னேகூட உலகத்திலிருக்கையில் அவர்களை
உம்முடைய நாமத்தினாலே காத்துக்கொண்
டேன்; நீர் எனக்குத் தந்தவர்களைக் காத்துக்
கொண்டு வந்தேன்; [23]வேதவாக்கியம் நிறை
வேறத்தக்கதாக, கேட்டின் மகன் கெட்டுப்
போனானேயல்லாமல், அவர்களில் ஒருவனும்
கெட்டுப்போகவில்லை. இப்பொழுது நான் 13
உம்மிடத்திற்கு வருகிறேன்; அவர்கள் என்
சந்தோஷத்தை நிறைவாய் அடையும்படி உல
கத்தில் இருக்கையில் இவைகளைச் சொல்லு
கிறேன். நான் உம்முடைய வார்த்தையை 14
அவர்களுக்குக் கொடுத்தேன்; நான் உலகத்
தானல்லாததுபோல அவர்களும் உலகத்தா
ரல்ல, [24]ஆதலால் உலகம் அவர்களைப் பகைத்
தது. நீர் அவர்களை உலகத்திலிருந்து எடுத் 15
துக்கொள்ளும்படி நான் வேண்டிக்கொள்ளா
மல், [25]நீர் அவர்களைத் தீமையினின்று காக்கும்
படி வேண்டிக்கொள்ளுகிறேன். நான் உல 16
கத்தானல்லாததுபோல, அவர்களும் உலகத்
தாரல்ல. உம்முடைய ‖சத்தியத்தினாலே [26]அ 17
வர்களைப் பரிசுத்தமாக்கும்; [27]உம்முடைய
வசனமே சத்தியம். நீர் என்னை உலகத்தில் 18
அனுப்பினதுபோல, [28]நானும் அவர்களை உல

* ஒரு கேள்வியும்.
[1] 14. 13. மத். 7. 7
[2] 15. 11
[3] 23. வச.
[4] 14. 21, 23: 17. 8
[5] 13. 3
[6] 17. 8: 21. 17
† விசுவாசிக்கிறீர்களா?
[7] மத். 26. 31. மாற். 14. 27
[8] 8. 29. ஏசா. 50. 7, 9
[9] 14. 27. ரோ. 5. 1. எபே. 2. 14
[10] 15. 19, 21
[11] ரோ. 8. 37. 1 யோ. 4. 4: 5. 4
[12] 12. 23: 13. 32
[13] 5. 27: 6. 37. மத். 11. 27. 1 கொ. 15. 25, 27. பிலி. 2. 10. எபி. 2. 8
‡ மாம்சமானவர்கள்
[14] 1 கொ. 8. 4. 1 தெச. 1. 9. 1 யோ. 5. 11
[15] 14. 13: 19. 30. 2 தீமோ. 4. 7
[16] 1. 1, 2. பிலி. 2. 6. எபி. 1. 3, 10
[17] 26. வச. சங். 22. 22. ரோ. 8. 30
[18] 6. 68: 14. 10
[19] 1 யோ. 5. 19
[20] 16. 15
[21] கலா. 1. 24. 1 பே. 2. 9
[22] தீத். 18. 10. 1 பே. 1. 5. யூதா. 1, 24. வச.
§ நாமத்திலே
[23] சங். 109. 8. அப். 1. 20
[24] 15. 18, 19. 1 யோ. 3. 13
[25] மத். 6. 13. கலா. 1. 4. 2 தெச. 3. 3. 1 யோ. 5. 18
‖ சத்தியத்திலே
[26] 15. 3. அப். 15. 9. எபே. 5. 26. 1 பே. 1. 22
[27] 8. 40. சங். 119. 151
[28] 20. 21

19 சத்தில் அனுப்புகிறேன். அவர்களும் சத்தி
யத்தினாலே பரிசுத்தமாக்கப்பட்டவர்களாகும்
படி, [1]அவர்களுக்காக நான் என்னைத்தானே
பரிசுத்தமாக்குகிறேன்.
20 நான் இவர்களுக்காக வேண்டிக்கொள்ளுகி
றதுமல்லாமல், இவர்களுடைய வார்த்தையி
னால் என்னை விசுவாசிக்கிறவர்களுக்காகவும்
21 வேண்டிக்கொள்ளுகிறேன். அவர்களெல்லா
ரும் ஒன்றாயிருக்கவும், [2]பிதாவே, நீர் என்
னை அனுப்பினதை உலகம் விசுவாசிக்கிறதற்
காக, நீர் என்னிலேயும் நான் உம்மிலேயும்
இருக்கிறதுபோல அவர்களெல்லாரும் நம்மில்
ஒன்றாயிருக்கவும் வேண்டிக்கொள்ளுகிறேன்.
22 நாம் ஒன்றாயிருக்கிறதுபோல அவர்களும்
ஒன்றாயிருக்கும்படி, [3]நீர் எனக்குத் தந்த மகி
மையை நான் அவர்களுக்குக் கொடுத்தேன்.
23 ஒருமைப்பாட்டில் அவர்கள் [4]தேறினவர்க
ளாயிருக்கும்படிக்கும், என்னை நீர் அனுப்பி
னதையும், நீர் என்னில் அன்பாயிருக்கிறது
போல அவர்களிலும் அன்பாயிருக்கிறதையும்
உலகம் அறியும்படிக்கும், நான் அவர்களிலும்
நீர் என்னிலும் இருக்கும்படி வேண்டிக்
24 கொள்ளுகிறேன். பிதாவே, உலகத்தோற்
றத்துக்குமுன் நீர் என்னில் அன்பாயிருந்த
படியினால், நீர் [5]எனக்குத் தந்த என்னு
டைய மகிமையை நீர் எனக்குத் தந்தவர்கள்
காணும்படியாக, நான் எங்கே இருக்கிறேனோ
அங்கே அவர்களும் என்னுடனேகூட இருக்க
25 விரும்புகிறேன். நீதியுள்ள பிதாவே, உலகம்
உம்மை அறியவில்லை, [6]நான் உம்மை அறிந்
திருக்கிறேன்; நீர் என்னை அனுப்பினதை
26 இவர்களும் அறிந்திருக்கிறார்கள். நீர் என்னி
டத்தில் வைத்த அன்பு அவர்களிடத்திலி
ருக்கும்படிக்கும், நானும் அவர்களி லிருக்கும்
படிக்கும், [7]உம்முடைய நாமத்தை அவர்களுக்
குத் தெரியப்படுத்தினேன்; இன்னமும் தெரி
யப்படுத்துவேன் என்றார்.

**18** இயேசு இவைகளைச் சொன்ன பின்பு,
தம்முடைய சீஷருடனேகூட [8]கெதரோன்
என்னும் ஆற்றுக்கு அப்புறம்போனார்; அங்
கே ஒரு தோட்டம் இருந்தது, அதிலே அவ
ரும் அவருடைய சீஷரும் பிரவேசித்தார்கள்.
2 இயேசு தம்முடைய சீஷருடனேகூட அடிக்
கடி அங்கே போயிருந்தபடியினால், [9]அவ
ரைக் காட்டிக்கொடுக்கிற யூதாசும் அந்த இடத்
3 தை அறிந்திருந்தான். யூதாஸ் போர்ச்சேவக
ரின் கூட்டத்தையும் பிரதான ஆசாரியர் பரி
சேயர் என்பவர்களால் அனுப்பப்பட்ட ஊழி
யக்காரரையும் கூட்டிக்கொண்டு, [10]பந்தங்க
ளோடும் தீவட்டிகளோடும் ஆயுதங்களோடும்
4 அவ்விடத்திற்கு வந்தான். இயேசு தமக்கு
நேரிடப்போகிற எல்லாவற்றையும் அறிந்து,
[11]எதிர்கொண்டுபோய், அவர்களை நோக்கி: யா
5 ரைத் தேடுகிறீர்கள் என்றார். அவருக்கு அவர்
கள் பிரதியுத்தரமாக: [12]நசரேயனாகிய இயே
சுவைத் தேடுகிறோம் என்றார்கள். அதற்கு
இயேசு: நான்தான் என்றார். அவரைக் காட்
டிக்கொடுத்த யூதாசும் அவர்களுடனேகூட
நின்றான். நான்தான் என்று அவர் அவர் 6
களிடத்தில் சொன்னவுடனே, [13]அவர்கள்
பின்னிட்டுத் தரையிலே விழுந்தார்கள். அவர் 7
மறுபடியும் அவர்களை நோக்கி: யாரைத் தேடு
கிறீர்கள் என்று கேட்டார். அவர்கள்: நசரேய
னாகிய இயேசுவைத் தேடுகிறோம் என்றார்
கள். இயேசு பிரதியுத்தரமாக: நான்தானெ 8
ன்று உங்களுக்குச் சொன்னேனே; என்னைத்
தேடுகிறதுண்டானால், [14]இவர்களைப் போக
விடுங்கள் என்றார். நீர் எனக்குத் தந்தவர்க 9
ளில் ஒருவனையும் நான் இழந்துபோகவில்லை
யென்று [15]அவர் சொல்லிய வசனம் நிறை
வேறத்தக்கதாக இப்படி நடந்தது. அப்பொ 10
ழுது சீமோன் பேதுரு, தன்னிடத்திலிருந்த
பட்டயத்தை உருவி, [16]பிரதான ஆசாரியனு
டைய வேலைக்காரனை வலதுகாதற வெட்டி
னான்; அந்த வேலைக்காரனுக்கு மல்குஸ் என்று
பெயர். அப்பொழுது இயேசு பேதுருவை 11
நோக்கி: உன் பட்டயத்தை உறையிலே
போடு; [17]பிதா எனக்குக் கொடுத்த பாத்திரத்
தில் நான் பானம்பண்ணாதிருப்பேனோ
என்றார்.
அப்பொழுது போர்ச்சேவகரும், ஆயிரம் 12
போர்ச்சேவகருக்குத் தலைவனும், யூதருடைய
ஊழியக்காரரும் இயேசுவைப் பிடித்து, அவ
ரைக் கட்டி, முதலாவது அவரை [18]அன்னா 13
என்பவனிடத்துக்குக் கொண்டுபோனார்கள்;
அவன் அந்த வருஷத்துப் பிரதான ஆசாரி
யனாகிய காய்பாவுக்கு மாமனாயிருந்தான்.
ஜனங்களுக்காக ஒரே மனுஷன் சாகிறது நல 14
மாயிருக்குமென்று யூதருக்கு [19]ஆலோசனை
சொன்னவன் இந்தக் காய்பாவே.
சீமோன்பேதுருவும் [20]வேறொரு சீஷனும் 15
இயேசுவுக்குப் பின்சென்றார்கள். அந்தச்
சீஷன் பிரதான ஆசாரியனுக்கு அறிமுகமான
வனாயிருந்ததினால், இயேசுவுடனேகூடப் பிர
தான ஆசாரியனுடைய அரமனைக்குள் பிர
வேசித்தான். பேதுரு வாசலருகே வெளி 16
யே நின்றான். [21]அப்பொழுது பிரதான ஆசா
ரியனுக்கு அறிமுகமானவனாயிருந்த மற்றச்
சீஷன் வெளியே வந்து, வாசல் காக்கிறவர்க
ளுடனே பேசி, பேதுருவை உள்ளே அழைத்
துக்கொண்டுபோனான். அப்பொழுது வாசல் 17
காக்கிற வேலைக்காரி பேதுருவை நோக்கி:
நீயும் அந்த மனுஷனுடைய சீஷரில் ஒருவ
னல்லவா என்றாள். அவன்: நான் அல்ல என்
றான். குளிர்காலமானபடியினாலே ஊழியக் 18
காரரும் சேவகரும் கரிநெருப்புண்டாக்கி,
நின்று, குளிர்காய்ந்துகொண்டிருந்தார்கள்;
அவர்களுடனேகூடப் பேதுருவும் நின்று
குளிர்காய்ந்துகொண்டிருந்தான்.
பிரதான ஆசாரியன் இயேசுவினிடத்தில் 19
அவருடைய சீஷரைக்குறித்தும் போதகத்
தைக்குறித்தும் விசாரித்தான். இயேசு அவ 20
னுக்குப் பிரதியுத்தரமாக: [22]நான் வெளியரங்க
மாய் உலகத்துடனே பேசினேன்; ஜெபஆல

[1] 1 கொ. 1. 2, 30, 31. 1 தெச. 4. 7. எபி. 10. 10
[2] 10. 36. ரோ. 12. 5. கலா. 3. 28
[3] 14. 20. 2 கொ. 3. 18. 1 யோ. 1. 3: 3. 24
[4] கொலோ. 3. 14
[5] 5. வச: 12. 26: 14. 3. 1 தெச. 4. 17
[6] 15. 21: 16. 27
[7] 15. 9, 15
[8] 2 சாமு. 15. 23. மத். 26. 36. மாற். 14. 32. லூ. 22. 39
[9] லூ. 21. 37
[10] மத். 26. 47. மாற். 14. 43. லூ. 22. 47. அப். 1. 16
[11] 10. 17, 18. அப். 2. 28
[12] 19. 19. மத். 2. 23
[13] சங். 27. 2: 40. 14
[14] ஏசா. 53. 6. எபே. 5. 25
[15] 17. 12
[16] மத். 26. 51. மாற். 14. 47. லூ. 22. 49, 50
[17] மத். 20. 22: 26. 39, 42
[18] மத். 26. 57. லூ. 3. 2
[19] 11. 49, 50
[20] மத். 26. 58. மாற். 14. 54. லூ. 22. 54
[21] மத். 26. 69. மாற். 14. 65. லூ. 22. 54
[22] 7. 14, 26. மத். 26. 65. லூ. 4. 15. அப். 26. 26

யங்களிலேயும் யூதர்களெல்லாரும் கூடிவரு
கிற தேவாலயத்திலேயும் எப்பொழுதும் உப
தேசித்தேன்; அந்தரங்கத்திலே நான் ஒன்றும்
21 பேசவில்லை. நீர் என்னிடத்தில் விசாரிக்க
வேண்டியதென்ன? நான் சொன்னவைகளைக்
கேட்டவர்களிடத்தில் விசாரியும்; நான் பே
சினவைகளை அவர்கள் அறிந்திருக்கிறார்களே
22 என்றார். இப்படி அவர் சொன்னபொழுது,
சமீபத்தில் நின்ற சேவகரில் ஒருவன்: [1]பிர
தான ஆசாரியனுக்கு இப்படியா உத்தரவு
சொல்லுகிறது என்று, இயேசுவை ஒரு அறை
23 அறைந்தான். இயேசு அவனை நோக்கி:
நான் தகாதவிதமாய்ப் பேசினதுண்டானால்,
தகாததை யொப்புவி; [2]நான் தகுதியாய்ப் பே
சினேனேயாகில், என்னை ஏன் அடிக்கிறாய்
24 என்றார். பின்பு அன்னா என்பவன் பிர
தான ஆசாரியனாகிய காய்பாவினிடத்திற்கு
[3]அவரைக் கட்டுண்டவராக அனுப்பினான்.
25 சீமோன்பேதுரு நின்று குளிர்காய்ந்துகொ
ண்டிருந்தான். [4]அப்பொழுது சிலர் அவனை
நோக்கி: நீயும் அவனுடைய சீஷரில் ஒருவ
னல்லவா என்றார்கள். அவன்: நான் அல்ல
26 என்று மறுதலித்தான். பிரதான ஆசாரிய
னுடைய வேலைக்காரரில் பேதுரு காதற
வெட்டினவனுக்கு இனத்தானாகிய ஒருவன்
அவனை நோக்கி: நான் உன்னை அவனுடனே
கூடத் தோட்டத்திலே காணவில்லையா என்
27 றான். அப்பொழுது பேதுரு மறுபடியும்
மறுதலித்தான்; [5]உடனே சேவல் கூவிற்று.
28 அவர்கள் காய்பாவினிடத்திலிருந்து [6]இயே
சுவைத் தேசாதிபதியின் அரமனைக்குக் கொ
ண்டுபோனார்கள்; அப்பொழுது விடியற்கால
மாயிருந்தது. தீட்டுப்படாமல் பஸ்காவைப்
புசிக்கத்தக்கதாக, அவர்கள் தேசாதிபதியின்
29 அரமனைக்குள் பிரவேசியாதிருந்தார்கள். ஆத
லால் பிலாத்து அவர்களிடத்தில் வெளியே
வந்து: இந்த மனுஷன்மேல் என்ன குற்றஞ்
30 சாட்டுகிறீர்கள் என்றான். அவர்கள் அவ
னுக்குப் பிரதியுத்தரமாக: இவன் குற்றவாளி
யாயிராவிட்டால், இவனை உம்மிடத்தில் ஒப்
31 புக்கொடுக்கமாட்டோம் என்றார்கள். அப்
பொழுதுபிலாத்து அவர்களை நோக்கி: இவனை
நீங்களே கொண்டுபோய், உங்கள் நியாயப்
பிரமாணத்தின்படி நியாயந்தீருங்கள் என்
றான். அதற்கு யூதர்கள்: [7]ஒருவனையும் மரண
ஆக்கினை செய்ய எங்களுக்கு அதிகாரமில்லை
32 என்றார்கள். தாம் இன்னவிதமான மரண
மாய் மரிக்கப்போகிறாரென்பதைக் குறித்து
[8]இயேசு குறிப்பாய்ச் சொல்லியிருந்த வார்த்
தை நிறைவேறத் தக்கதாக இப்படிச் சொன்
னார்கள்.
33 அப்பொழுது பிலாத்து மறுபடியும் அரம
னைக்குள் பிரவேசித்து, [9]இயேசுவை அழை
த்து: நீ யூதருடைய ராஜாவா என்று கேட்
34 டான். இயேசு அவனுக்குப் பிரதியுத்தர
மாக: நீராய் இப்படிச் சொல்லுகிறீரோ? அல்
லது மற்றவர்கள் என்னைக்குறித்து இப்படி
உமக்குச் சொன்னார்களோ என்றார். பிலாத்து 35
பிரதியுத்தரமாக: நான் யூதனா? [10]உன் ஜனங்க
ளும் பிரதான ஆசாரியரும் உன்னை என்னி
டத்தில் ஒப்புக்கொடுத்தார்கள், நீ என்ன
செய்தாய் என்றான். இயேசு [11]பிரதியுத்தர 36
மாக: [12]என் ராஜ்யம் இவ்வுலகத்திற்குரியதல்
ல, என் ராஜ்யம் இவ்வுலகத்திற்குரியதானால்
நான் யூதரிடத்தில் ஒப்புக்கொடுக்கப்படாத
படிக்கு என் ஊழியக்காரர் போராடியிருப்
பார்களே; இப்படியிருக்க என் ராஜ்யம் இவ்
விடத்திற்குரியதல்ல என்றார். அப்பொழுது 37
பிலாத்து அவரை நோக்கி: அப்படியானால் நீ
ராஜாவோ என்றான். இயேசு பிரதியுத்தர
மாக: நீர் சொல்லுகிறபடி நான் ராஜாதான்;
[13]சத்தியத்தைக்குறித்துச் சாட்சிகொடுக்க நான்
பிறந்தேன், இதற்காகவே இந்த உலகத்தில்
வந்தேன்; [14]சத்தியவான் எவனும் என் சத்தம்
கேட்கிறான் என்றார். அதற்குப் பிலாத்து: 38
சத்தியமாவது என்ன என்றான்.
மறுபடியும் அவன் யூதர்களிடத்தில் வெளி
யே வந்து: [15]நான் அவனிடத்தில் ஒரு குற்ற
மும் காணேன். பஸ்காபண்டிகையில் நான் 39
உங்களுக்கு ஒருவனை விடுதலைபண்ணுகிற
வழக்கமுண்டே; [16]ஆகையால் யூதருடைய ரா
ஜாவை நான் உங்களுக்காக விடுதலைபண்ண
உங்களுக்கு மனதுண்டா என்றான். அப் 40
பொழுது: அவர்களெல்லாரும் இவனையல்ல,
பரபாசை விடுதலைபண்ணவேண்டும் என்று
மறுபடியும் சத்தமிட்டார்கள்; [17]அந்தப் பரபா
சென்பவன் கள்ளனாயிருந்தான்.
அப்பொழுது [18]பிலாத்து இயேசுவைப் 19
பிடித்து [19]வாரினால் அடிப்பித்தான். போர்ச் 2
சேவகர் முள்ளுகளினால் ஒரு முடியைப்
பின்னி அவர் சிரசின்மேல் வைத்து, சிவப்
பான ஒரு அங்கியை அவருக்கு உடுத்தி:
யூதருடைய ராஜாவே, வாழ்க என்று சொ 3
ல்லி, அவரைக் கையினால் அடித்தார்கள்.
பிலாத்து மறுபடியும் வெளியே வந்து: [20]நான் 4
இவனிடத்தில் ஒரு குற்றமும் காணேன்
என்று நீங்கள் அறியும்படிக்கு, இதோ, உங்க
ளிடத்தில் இவனை வெளியே கொண்டுவருகி
றேன் என்றான். இயேசு, முள்முடியும் 5
சிவப்பங்கியும் தரித்தவராய், வெளியே வந்
தார். அப்பொழுது பிலாத்து அவர்களை நோ
க்கி: இதோ, இந்த மனுஷன் என்றான்.
பிரதான ஆசாரியரும் [21]சேவகரும் அவரைக் 6
கண்டபோது: சிலுவையில் அறையும் சிலு
வையில் அறையும் என்று சத்தமிட்டார்கள்.
அதற்குப் பிலாத்து: நீங்களே இவனைக் கொ
ண்டுபோய்ச் சிலுவையில் அறையுங்கள், நான்
இவனிடத்தில் ஒரு குற்றமும் காணேன்
என்றான். யூதர்கள் அவனுக்குப் பிரதியுத் 7
தரமாக: [22]எங்களுக்கு ஒரு நியாயப்பிரமாண
முண்டு, இவன் தன்னை தேவனுடைய குமா
ரனென்று சொன்னபடியினால், அந்த நியா
யப்பிரமாணத்தின்படியே, இவன் சாகவேண்
டும் என்றார்கள். பிலாத்து இந்த வார்த்தை 8

1 யோபு 16. 10. எரே. 20. 2. அப். 23. 2, 3
2 1 பே. 2. 19-23
3 மத். 26. 57
4 மத். 26. 69, 71. மாற். 14. 69. லூ. 22. 58
5 13. 38. மத். 26. 74. மாற். 14. 72. லூ. 22. 60
6 மத். 27. 2. மு. மாற். 15. 1. மு. லூ. 23. 1. மு. அப். 3. 13; 10. 28
7 ஆதி. 49. 10. எசே. 21. 27
8 மத். 20. 19. லூ. 18. 32, 33
9 மத். 27. 11
10 19. 11. அப். 3. 13
11 1 தீமோ. 6. 13, 14
12 6. 15; 8. 15. சங். 45. 3, 6. ஏசா. 9. 6, 7. தானி. 2. 44; 7. 14. சகரி. 9. 9. லூ. 12. 14. ரோ. 14. 17. கொலோ. 1. 13
13 8. 17. ஏசா. 55. 4. வெளி. 1. 5; 3. 14
14 8. 47. 1 யோ. 3. 19; 4. 6
15 மத். 27. 24. லூ. 23. 4
16 மத். 27. 15. மாற். 15. 6. லூ. 23. 17
17 லூ. 23. 19. அப். 3. 14
18 மத். 27. 26. மு. மாற். 15. 15. மு. லூ. 18. 33.
19 ஏசா. 53. 5
20 6; மேல். 18. 38
21 அப். 3. 13
22 5. 18; 10. 33. லேவி. 24. 16

யைக் கேட்டபொழுது அதிகமாய்ப் பயந்து,
9 மறுபடியும் அரமனைக்குள்ளே போய், இயே
சுவை நோக்கி: நீ எங்கேயிருந்து வந்தவன்
என்றான். [1]அதற்கு இயேசு மாறுத்தரம் ஒன்
10 றும் சொல்லவில்லை. அப்பொழுது பிலாத்து:
*நீ என்னோடே பேசுகிறதில்லையா? [2]உன்
னைச் சிலுவையில் அறைய எனக்கு அதிகார
முண்டென்றும், உன்னை விடுதலைபண்ண
எனக்கு அதிகாரமுண்டென்றும் உனக்குத்
11 தெரியாதா என்றான். இயேசு பிரதியுத்தர
மாக: பரத்திலிருந்து உமக்குக் கொடுக்கப்
படாதிருந்தால், [3]என்மேல் உமக்கு ஒரு அதி
காரமுமிராது; [4]ஆனபடியினாலே என்னை உம்
மிடத்தில் ஒப்புக்கொடுத்தவனுக்கு அதிக பாவ
12 முண்டு என்றார். அதுமுதல் பிலாத்து அவ
ரை விடுதலைபண்ண வகைதேடினான். யூதர்
கள் அவனை நோக்கி: இவனை விடுதலைபண்
ணினால் நீர் ராயனுக்குச் சிநேகிதனல்ல;
[5]தன்னை ராஜாவென்கிறவனெவனோ அவன்
ராயனுக்கு விரோதி என்று சத்தமிட்டார்கள்.
13 பிலாத்து இந்த வார்த்தையைக் கேட்டபொ
ழுது, [6]இயேசுவை வெளியே அழைத்து
வந்து, தளவரிசைப்படுத்தின மேடையென்
றும், எபிரெயு பாஷையிலே கபத்தா என்றும்
சொல்லப்பட்ட இடத்திலே, நியாயாசனத்
14 தின்மேல் †உட்கார்ந்தான். அந்த நாள் [7]பஸ்
காவுக்கு ஆயத்தநாளும் ஏறக்குறைய ஆறுமணி
நேரமுமாயிருந்தது; அப்பொழுது அவன் யூதர்
களை நோக்கி: இதோ, உங்கள் ராஜா என்
15 றான். அவர்கள்: இவனை அகற்றும் அகற்
றும், சிலுவையில் அறையும் என்று சத்தமிட்
டார்கள். அதற்குப் பிலாத்து: உங்கள் ராஜா
வை நான் சிலுவையில் அறையலாமா என்
றான். பிரதான ஆசாரியர் பிரதியுத்தரமாக:
[8]ராயனே யல்லாமல் எங்களுக்கு வேறே ராஜா
16 இல்லை என்றார்கள். அப்பொழுது [9]அவ
ரைச் சிலுவையில் அறையும்படிக்கு அவர்க
ளிடத்தில் ஒப்புக்கொடுத்தான்.
அவர்கள் இயேசுவைப் பிடித்துக்கொண்டு
17 போனார்கள். அவர் தம்முடைய சிலுவை
யைச் சுமந்துகொண்டு, [10]எபிரெயு பாஷை
யிலே கொல்கொதா என்று சொல்லப்படும்
கபாலஸ்தலம் என்கிற இடத்திற்குப் புறப்
18 பட்டுப் போனார். அங்கே அவரைச் சிலுவை
யில் அறைந்தார்கள்; அவரோடேகூட வே
றிரண்டு பேரை இரண்டு பக்கங்களிலும்
இயேசுவை நடுவிலுமாகச் சிலுவைகளில்
19 அறைந்தார்கள். பிலாத்து ஒரு மேல்விலா
சத்தை எழுதி, சிலுவையின்மேல் போடுவித்
தான். [11]அதில் **நசரேயனாகிய இயேசு யூத**
20 **ருடைய ராஜா** என்று எழுதியிருந்தது. இயேசு
சிலுவையில் அறையப்பட்ட இடம் நகரத்
திற்குச் சமீபமாயிருந்தபடியினால், யூதரில்
அநேகர் அந்த மேல்விலாசத்தை வாசித்தார்
கள்; அது எபிரெயு கிரேக்கு லத்தீன் பா
21 ஷைகளில் எழுதியிருந்தது. அப்பொழுது
யூதருடைய பிரதான ஆசாரியர் பிலாத்து

வை நோக்கி: யூதருடைய ராஜா என்று நீர்
எழுதாமல், தான் யூதருடைய ராஜா என்று
அவன் சொன்னதாக எழுதும் என்றார்கள்.
பிலாத்து பிரதியுத்தரமாக: நான் எழுதினது 22
எழுதினதே என்றான்.
போர்ச்சேவகர் இயேசுவைச் சிலுவையில் 23
அறைந்தபின்பு, [12]அவருடைய வஸ்திரங்களை
எடுத்து, ஒவ்வொரு சேவகனுக்கு ஒவ்வொரு
பங்காக நாலு பங்காக்கினார்கள்; அங்கியையும்
எடுத்தார்கள், [13]அந்த அங்கி ‡தையலில்லாமல்
மேலே தொடங்கி முழுவதும் நெய்யப்பட்ட
தாயிருந்தது. அவர்கள்: இதை நாம் கிழியா 24
மல், யாருக்கு வருமோ என்று இதைக்குறித்
துச் சீட்டுப்போடுவோம் என்று ஒருவரோ
டொருவர் பேசிக்கொண்டார்கள். [14]என் வஸ்
திரங்களைத் தங்களுக்குள்ளே பங்கிட்டு, என்
உடையின்மேல் சீட்டுப்போட்டார்கள் என்
கிற வேதவாக்கியம் நிறைவேறத்தக்கதாகப்
போர்ச்சேவகர் இப்படிச் செய்தார்கள். இயே 25
சுவின் சிலுவையினருகே அவருடைய தாயும்,
[15]அவருடைய தாயின் சகோதரி கிலெயோ
ப்பா மரியாளும், மகதலேனா மரியாளும் நின்
றுகொண்டிருந்தார்கள். அப்பொழுது இயேசு 26
தம்முடைய தாயையும் அருகே நின்ற [16]தம
க்கு அன்பாயிருந்த சீஷனையும் கண்டு, தம்மு
டைய தாயை நோக்கி: [17]ஸ்திரீயே, அதோ,
உன் மகன் என்றார். பின்பு அந்தச் சீஷனை 27
நோக்கி: அதோ, உன் தாய் என்றார். [18]அந்
நேரமுதல் அந்தச் சீஷன் அவளைத் [19]தன்னிட
மாய் ஏற்றுக்கொண்டான்.
அதன்பின்பு, எல்லாம் முடிந்தது என்று 28
இயேசு அறிந்து, [20]வேதவாக்கியம் நிறைவேற
த்தக்கதாக: தாகமா யிருக்கிறேன் என்றார்.
காடி நிறைந்த பாத்திரம் அங்கே வைக்கப்பட் 29
டிருந்தது; அவர்கள் கடற்காளானைக் காடி
யிலே தோய்த்து, ஈசோப்புத்தண்டில் மாட்டி,
அவர் வாயினிடத்தில் நீட்டிக் கொடுத்தார்கள்.
இயேசு காடியை வாங்கினபின்பு, [21]முடிந்தது 30
என்று சொல்லி, தலையைச் சாய்த்து, [22]ஆவி
யை ஒப்புக்கொடுத்தார்.
அந்தநாள் [23]பெரிய ஓய்வுநாளுக்கு ஆயத்த 31
நாளா யிருந்தபடியினால், உடல்கள் அந்த ஓய்
வுநாளிலே சிலுவைகளில் இராதபடிக்கு, யூத
ர்கள் பிலாத்துவினிடத்தில் போய், அவர்களு
டைய காலெலும்புகளை முறிக்கும்படிக்கும்,
உடல்களை எடுத்துப்போடும்படிக்கும் உத்தரவு
கேட்டுக்கொண்டார்கள். அந்தப்படி போர்ச் 32
சேவகர் வந்து, அவருடனேகூடச் சிலுவை
யில் அறையப்பட்ட முந்தினவனுடைய கா
லெலும்புகளையும் மற்றவனுடைய காலெலும்
புகளையும் முறித்தார்கள். அவர்கள் இயேசுவி 33
னிடத்தில் வந்து, அவர் மரித்திருக்கிறதைக்
கண்டு, அவருடைய காலெலும்புகளை முறிக்
கவில்லை. ஆகிலும் போர்ச்சேவகரில் ஒருவன் 34
ஈட்டியினாலே அவருடைய விலாவில் குத்தி
னான்; [24]உடனே இரத்தமும் தண்ணீரும் புற
ப்பட்டது. அதைக் கண்டவன் சாட்சிகொடுக் 35

1 சங். 38. 13. ஏசா. 53. 7. மத். 27. 12, 14. பிலி. 1. 28
* நீ எனக்குச் சொல்வாயோ?
2 தானி. 3. 14, 15
3 7. 30. சங். 39. 9. லூக். 22. 53
4 18. 3. மாற். 14. 44
5 லூக். 23. 2. அப். 17. 7
6 நீதி. 29. 25. அப். 4. 19
† உட்கார்ந்திருக்க. எபே. 1. 21: 2. 7.
7 மத். 27. 62
8 ஆதி. 49. 10
9 மத். 27. 26. மு. மாற். 15. 15. மு. லூக். 23. 24 மு.
10 எண். 15. 36. மத். 27. 31. எபி. 13. 12
11 மத். 27. 37. மாற். 15. 26. லூக். 23. 38.
12 யாத். 39. 22. மத். 27. 35. மாற். 15. 24. லூக். 23. 34
13 யாத். 38. 22
‡ இணை
14 சங். 22. 18
15 மத். 27. 55. மாற். 15. 40. லூக். 23. 49: 24. 18
16 13. 23
17 2. 4
18 1 தீமோ. 5. 2
19 16. 32
20 சங். 69. 21
21 17. 4
22 ஏசா. 53. 10, 12. எபி. 2. 14, 15
23 லேவி. 23. 7, 8. உபா. 21. 23. மாற். 15. 42
24 எபி. 9. 22, 23. 1 பே. 3. 21. 1 யோ. 5. 6, 8

கிருன், [1]அவனுடைய சாட்சி மெய்யாயிருக்
கிறது; நீங்கள் விசுவாசிக்கும்படி, தான் சொல்
லுகிறது மெய்யென்று அவன் அறிந்திருக்கி
36 ருன். அவருடைய எலும்புகளில் ஒன்றும்
முறிக்கப்படுவதில்லை என்கிற [2]வேதவாக்கி
யம் நிறைவேறும்படி இவைகள் நடந்தது.
37 அல்லாமலும் தாங்கள் குத்தினவரை நோக்கிப்
பார்ப்பார்கள் என்று [3]வேறொரு வேதவாக்கி
யம் சொல்லுகிறது.
38 இவைகளுக்குப்பின்பு அரிமத்தியா ஊரா
னும், யூதருக்குப் பயந்ததினுல் இயேசுவுக்கு
அந்தரங்க சீஷனுமாகிய [4]யோசேப்பு இயேசு
வின் சரீரத்தை எடுத்துக்கொண்டுபோகும்படி
பிலாத்துவினிடத்தில் உத்தரவு கேட்டான்;
பிலாத்து உத்தரவு கொடுத்தான். ஆகையால்
அவன் வந்து, இயேசுவின் சரீரத்தை எடுத்
39 துக்கொண்டு போனுன். ஆரம்பத்திலே ஒரு
இராத்திரியில் இயேசுவினிடத்தில் வந்திருந்த
[5]நிக்கொதேமு என்பவன் வெள்ளைப்போள
மும் கரியபோளமும் கலந்து ஏறக்குறைய
40 நூறு இராத்தல் கொண்டுவந்தான். அவர்கள்
இயேசுவின் சரீரத்தை எடுத்து, [6]யூதர்கள்
அடக்கம்பண்ணும் முறைமையின்படியே அ
தைச் சுகந்தவர்க்கங்களுடனே சீலைகளில் சுற்
41 றிக் கட்டினுர்கள். அவர் சிலுவையில் அறை
யப்பட்ட இடத்தில் ஒரு தோட்டமும், அந்
தத் தோட்டதில் ஒருக்காலும் ஒருவனும் வை
க்கப்பட்டிராத ஒரு புதிய கல்லறையும் இருந்
42 தது. யூதருடைய ஆயத்தநாளானபடியினு
லும், அந்தக் கல்லறை சமீபமாயிருந்தபடியினு
லும், [7]அவ்விடத்திலே இயேசுவை வைத்தார்
கள்.

**20** வாரத்தின் முதல்நாள் காலையில், அதிக
இருட்டோடே, [8]மகதலேனு மரியாள் கல்ல
றையினிடத்திற்கு வந்து கல்லறையை அடை
த்திருந்த கல் எடுத்துப்போட்டிருக்கக் கண்
2 டாள். உடனே அவள் ஓடி, சீமோன்பேது
ருவினிடத்திலும் [9]இயேசுவுக்கு அன்பாயிரு
ந்த மற்றச் சீஷனிடத்திலும் போய்: கர்த்த
ரைக் கல்லறையிலிருந்து எடுத்துக்கொண்டு
போய்விட்டார்கள், அவரை வைத்த இடம்
3 எங்களுக்குத் தெரியவில்லை என்றுள். அப்
பொழுது [10]பேதுருவும் மற்றச் சீஷனும் கல்ல
றையினிடத்திற்குப் போகும்படி புறப்பட்டு,
4 இருவரும் ஒருமித்து ஓடினுர்கள். பேதுரு
வைப்பார்க்கிலும் மற்றச் சீஷன் துரிதமாய்
ஓடி, முந்திக் கல்லறையினிடத்தில் வந்து,
5 அதற்குள்ளே குனிந்துபார்த்து, [11]சீலைகள் கிட
க்கிறதைக் கண்டான்; ஆனுலும் அவன் உள்
6 ளே போகவில்லை. சீமோன்பேதுரு அவ
னுக்குப் பின்னே வந்து, கல்லறைக்குள்ளே
7 பிரவேசித்து, சீலைகள் கிடக்கிறதையும், [12]அவ
ருடைய தலையில் சுற்றியிருந்த சீலை மற்றச்
சீலைகளுடனே வைத்திராமல் தனியே ஒரு
இடத்திலே சுருட்டி வைத்திருக்கிறதையும்
8 கண்டான். முந்திக் கல்லறையினிடத்திற்கு
வந்த மற்றச் சீஷனும் அப்பொழுது உள்ளே
பிரவேசித்து, கண்டு விசுவாசித்தான். அவர் 9
மரித்தோரிலிருந்து எழுந்திருக்க வேண்டும்
என்கிற [13]வேதவாக்கியத்தை அவர்கள் இன்
னும் அறியாதிருந்தார்கள். பின்பு அந்தச் 10
சீஷர்கள் தங்களுடைய இடத்திற்குத் திரும்
பிப் போனுர்கள்.
மரியாள்கல்லறையினருகேவெளியேநின்று 11
அழுதுகொண்டிருந்தாள்; [14]அப்படி அழுது
கொண்டிருக்கையில் அவள் குனிந்து கல்ல
றைக்குள்ளே பார்த்து, இயேசுவின் சரீரம் 12
வைக்கப்பட்டிருந்த இடத்திலே வெள்ளு
டை தரித்தவர்களாய் இரண்டு தூதர்கள்,
தலைமாட்டில் ஒருவனும் கால்மாட்டில் ஒரு
வனுமாக, உட்கார்ந்திருக்கிறதைக் கண்
டாள். அவர்கள் அவளை நோக்கி: ஸ்திரீயே, 13
ஏன் அழுகிருய் என்றுர்கள். அதற்கு அவள்:
என் ஆண்டவரை எடுத்துக்கொண்டு போய்
விட்டார்கள், அவரை வைத்த இடம் எனக்குத்
தெரியவில்லை என்றுள். இவைகளைச் சொ 14
ல்லிப் பின்னுகத் திரும்பி, [15]இயேசு நிற்கிற
தைக் கண்டாள்; [16]ஆனுலும் அவரை இயேசு
என்று அறியாதிருந்தாள். இயேசு அவளைப் 15
பார்த்து: ஸ்திரீயே, ஏன் அழுகிருய், யாரைத்
தேடுகிருய் என்றுர். அவள், அவரைத் தோட்
டக்காரனென்றுஎண்ணி:ஐயா,நீர் அவரை எடு
த்துக்கொண்டு போனதுண்டானுல், அவரை
வைத்த இடத்தை எனக்குச் சொல்லும், [17]நான்
போய் அவரை எடுத்துக்கொள்ளுவேன் என்
றுள். இயேசு அவளை நோக்கி: [18]மரியாளே 16
என்றுர். [19]அவள் திரும்பிப்பார்த்து: ரபூனி
என்றுள்; அதற்குப் போதகரே என்று அர்த்
தமாம். இயேசு அவளை நோக்கி: என்னைத் 17
தொடாதே, நான் இன்னும் என் பிதாவினிட
த்திற்கு *ஏறிப்போகவில்லை; [20]நீ என் சகோ
தரரிடத்திற்குப் போய், [21]நான் என் பிதாவி
னிடத்திற்கும் உங்கள் பிதாவினிடத்திற்கும்,
என் தேவனிடத்திற்கும் உங்கள் தேவனிடத்
திற்கும் ஏறிப்போகிறேன் என்று அவர்களுக்
குச் சொல்லு என்றுர். மகதலேனு மரியாள் 18
போய், [22]தான் கர்த்தரைக் கண்டதையும்,
அவர் தன்னுடனே சொன்னவைகளையும்
சீஷருக்கு அறிவித்தாள்.
வாரத்தின் முதல்நாளாகிய அன்றையத்தி 19
னம், [23]சாயங்காலவேளையிலே, சீஷர்கள் கூடி
யிருந்த இடத்தில், யூதர்களுக்குப் பயந்ததி
னுல் கதவுகள் பூட்டியிருக்கையில், இயேசு
வந்து நடுவே நின்று: உங்களுக்குச் சமாதா
னம் என்றுர். அவர் இப்படிச் சொல்லித் 20
தம்முடைய கைகளையும் விலாவையும் அவர்க
ளுக்குக் காண்பித்தார். [24]சீஷர்கள் கர்த்தரைக்
கண்டு சந்தோஷப்பட்டார்கள். இயேசு மறு 21
படியும் அவர்களை நோக்கி: உங்களுக்குச் சமா
தானமுண்டாவதாக; [25]பிதா என்னை அனுப்
பினதுபோல நானும் உங்களை அனுப்புகி
றேன் என்று சொல்லி, அவர்கள்மேல் ஊதி: 22
[26]பரிசுத்த ஆவியைப் பெற்றுக்கொள்ளுங்
கள்; எவர்களுடைய பாவங்களை மன்னிக்கி 23

1 1 யோ. 1. 1-3
2 யாத். 12. 46. எண். 9. 12. சங். 34. 20
3 சங். 22. 16. சக. 12. 10. வெளி. 1. 7
4 9. 22: 12. 42. மத். 27. 57. மாற். 15. 42, 43. லூ. 23. 50
5 3. 1, 2: 7. 50. 2 நாளா. 16. 14
6 அப். 5. 6
7 31. ஏசா. 53. 9. 1 கொ. 15. 4
8 மத். 28. 1, மு. மாற். 16. 1, மு. லூ. 24. 1, மு.
9 13. 23: 19. 26: 21. 7, 20, 24
10 லூ. 24. 12
11 19. 40
12 11. 44
13 சங். 16. 10. அப். 2. 25-31: 13. 34, 35
14 மாற். 16. 5
15 மத். 28. 9. மாற். 16. 9
16 21. 4. லூ. 24. 16, 31
17 உன்னத. 3. 2
18 10. 3. ஏசா. 43. 1
19 உன்னத. 3. 4
* எழுந்தருள
20 சங். 22. 22. மத். 28. 10. ரோ. 8. 29. எபி. 2. 11
21 16. 28. ரோ. 8. 14, 15. 2 கொ. 6. 18. கலா. 3. 26: 4. 6, 7. எபே. 1. 17
22 மத். 28. 10. லூ. 24. 10
23 மாற். 16. 14. லூ. 24. 36. 1 கொ. 15. 5
24 16. 22
25 14. 27: 17. 18. மத். 18. 19. 2 தீமோ. 2. 2. எபி. 3. 1
26 அப். 2. 4, 38

நீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்
படும், [1]எவர்களுடைய பாவங்களை மன்னி
யாதிருக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு
மன்னிக்கப்படாதிருக்கும் என்றார்.
24 இயேசு வந்திருந்தபோது பன்னிருவரில்
ஒருவனாகிய *திதிமு என்னப்பட்ட தோமா
என்பவன் அவர்களுடனேகூட இருக்கவில்லை.
25 மற்றச் சீஷர்கள்: கர்த்தரைக் கண்டோம் என்று
அவனுடனே சொன்னார்கள். அதற்கு அவன்:
[2]அவருடைய கைகளில் ஆணிகளினாலுண்டா
ன காயத்தை நான் கண்டு, அந்தக் காயத்திலே
என் விரலையிட்டு, என் கையை அவருடைய
விலாவிலே போட்டாலொழிய விசுவாசிக்க
மாட்டேன் என்றான்.
26 மறுபடியும் எட்டுநாளைக்குப்பின்பு அவரு
டைய சீஷர்கள் வீட்டுக்குள்ளே இருந்தார்
கள்; தோமாவும் அவர்களுடனேகூட இருந்
தான்; கதவுகள் பூட்டப்பட்டிருந்தது. அப்
பொழுது இயேசு வந்து நடுவே நின்று: [3]உங்
27 களுக்குச் சமாதானம் என்றார். பின்பு அவர்
தோமாவை நோக்கி: நீ உன் விரலை இங்கே
நீட்டி, என் கைகளைப் பார், [4]உன் கையை
நீட்டி, என் விலாவிலே போடு, அவிசு
வாசியாயிராமல் விசுவாசியாயிரு என்றார்.
28 தோமா அவருக்குப் பிரதியுத்தரமாக: [5]என்
ஆண்டவரே! என் தேவனே! என்றான்.
29 அதற்கு இயேசு: தோமாவே, நீ என்னைக்
கண்டதினாலே விசுவாசித்தாய், [6]காணாதிருந்
தும் விசுவாசிக்கிறவர்கள் பாக்கியவான்கள்
என்றார்.
30 இந்தப் புஸ்தகத்தில் எழுதியிராத [7]வேறு
அநேக அற்புதங்களையும் இயேசு தமது சீஷ
31 ருக்கு முன்பாகச் செய்தார். இயேசு தேவ
னுடைய குமாரனாகிய கிறிஸ்து என்று நீங்
கள் விசுவாசிக்கும்படியாகவும், [8]விசுவாசித்து
அவருடைய நாமத்தினாலே நித்திய ஜீவனை
யடையும்படியாகவும், இவைகள் எழுதப்பட்
டிருக்கிறது.

**21** இவைகளுக்குப் பின்பு இயேசு திபேரியா
கடற்கரையிலே மறுபடியும் சீஷருக்குத் தம்
மை வெளிப்படுத்தினார்; வெளிப்படுத்தின
2 விவரமாவது; சீமோன் பேதுருவும், திதிமு
என்னப்பட்ட தோமாவும், கலிலேயா நாட்
டிலுள்ள கானாவூரானாகிய [9]நாத்தான்வேலும்,
[10]செபெதேயுவின் குமாரரும், அவருடைய
சீஷரில் வேறு இரண்டுபேரும் கூடியிருக்
3 கும்போது, சீமோன் பேதுரு மற்றவர்களை
நோக்கி: மீன்பிடிக்கப்போகிறேன் என்றான்.
அதற்கு அவர்கள்: நாங்களும் உம்முடனே
கூட வருகிறோம் என்றார்கள். அவர்கள் புறப்
பட்டுப் போய், உடனே படவேறினார்கள்.
அந்த ராத்திரியிலே அவர்கள் ஒன்றும் பிடிக்
4 கவில்லை. விடியற்காலமானபோது, இயேசு
கரையிலே நின்றார்; [11]அவரை இயேசு என்று
5 சீஷர்கள் அறியாதிருந்தார்கள். இயேசு அவர்
களை நோக்கி: பிள்ளைகளே, [12]புசிக்கிறதற்கு
ஏதாகிலும் உங்களிடத்தில் உண்டா என்றார்.
அதற்கு அவர்கள்: ஒன்றுமில்லை என்றார்கள்.
அப்பொழுது அவர்: [13]நீங்கள் படவுக்கு வல 6
துபுறமாக வலையைப் போடுங்கள், அப்பொ
ழுது உங்களுக்கு அகப்படும், என்றார். அப்ப
டியே அவர்கள் போட்டு, திரளான மீன்கள்
அகப்பட்டதினால், அதை இழுக்கமாட்டாதி
ருந்தார்கள். ஆதலால் இயேசுவுக்கு [14]அன் 7
பாயிருந்த சீஷன் பேதுருவைப் பார்த்து:
அவர் கர்த்தர் என்றான். அவர் கர்த்தர் என்று
சீமோன் பேதுரு கேட்டவுடனே, தான் வஸ்
திரமில்லாதவனாயிருந்தபடியினால், தன் மேற்
சட்டையைக் கட்டிக்கொண்டு கடலிலே குதித்
தான். மற்றச் சீஷர்கள் கரைக்கு ஏறக்குறைய 8
இருநூறுமுழத் தூரத்தில் இருந்தபடியினால்
படவிலிருந்துகொண்டே மீன்களுள்ள வலை
யை இழுத்துக்கொண்டு வந்தார்கள். அவர்கள் 9
கரையிலே வந்திறங்கினபோது, கரிநெருப்புப்
போட்டிருக்கிறதையும், அதின்மேல் மீன்
வைத்திருக்கிறதையும், அப்பத்தையும் கண்
டார்கள். இயேசு அவர்களை நோக்கி: நீங்கள் 10
இப்பொழுது பிடித்த மீன்களில் சிலவற்றைக்
கொண்டுவாருங்கள் என்றார். சீமோன்பே 11
துரு படவில் ஏறி, நூற்றைம்பத்துமூன்று
பெரிய மீன்களால் நிறைந்த வலையைக் கரை
யில் இழுத்தான்; இத்தனை மீன்கள் இருந்தும்
வலை கிழியவில்லை, இயேசு அவர்களை 12
நோக்கி: [15]வாருங்கள், போஜனம் பண்ணுங்
கள் என்றார். அவரைக் கர்த்தரென்று சீஷர்
கள் அறிந்தபடியினால் அவர்களில் ஒருவனும்:
நீர் யார் என்று கேட்கத் துணியவில்லை. அப் 13
பொழுது இயேசு வந்து, [16]அப்பத்தையும்
மீனையும் எடுத்து, அவர்களுக்குக் கொடுத்தார்.
இயேசு மரித்தோரிலிருந்தெழுந்தபின்பு தம் 14
முடைய சீஷருக்கு அருளின தரிசனங்களில்
[17]இது மூன்றாவது தரிசனம்.
அவர்கள் போஜனம் பண்ணினபின்பு, 15
இயேசு சீமோன்பேதுருவை நோக்கி: யோனா
வின் குமாரனாகிய சீமோனே, [18]இவர்களிலும்
†அதிகமாய் நீ என்னிடத்தில் அன்பாயிருக்கி
றாயா என்றார். அதற்கு அவன்: ஆம் ஆண்ட
வரே, உம்மை நேசிக்கிறேன் என்பதை நீர்
அறிவீர் என்றான், அவர்: [19]என் ஆட்டுக்குட்டி
களை மேய்ப்பாயாக என்றார். இரண்டாந்தரம் 16
அவர் அவனை நோக்கி: யோனாவின் குமாரனா
கிய சீமோனே, நீ என்னிடத்தில் அன்பாயிரு
க்கிறாயா என்றார். அதற்கு அவன்: ஆம் ஆண்
டவரே, உம்மை நேசிக்கிறேன் என்பதை நீர்
அறிவீர் என்றான். அவர்: [20]என் ஆடுகளை
மேய்ப்பாயாக என்றார். மூன்றாந்தரம் அவர் 17
அவனை நோக்கி: யோனாவின் குமாரனாகிய
சீமோனே, நீ என்னை நேசிக்கிறாயா என்றார்.
என்னை நேசிக்கிறாயா என்று அவர் மூன்றாந்
தரம் தன்னைக் கேட்டபடியினாலே, [21]பேதுரு
துக்கப்பட்டு: [22]ஆண்டவரே; நீர் எல்லாவற்
றையும் அறிந்திருக்கிறீர், நான் உம்மை நேசி
க்கிறேன் என்பதையும் நீர் அறிவீர் என்றான்.
இயேசு: என் ஆடுகளை மேய்ப்பாயாக என்

1 மத். 16. 19; 18. 18
* இரட்டைப் பிள்ளை. 11. 16
2 சங். 78. 11, 32
3 ஏசா. 26. 12
4 1 தீமோ. 1. 14. 1 யோ. 1. 1
5 5. 23. சங். 118. 28. 1 தீமோ. 3. 16
6 2 கொ. 5. 6. 1 பே. 1. 8
7 21. 25
8 3. 15, 16; 5. 24. லூ. 1. 4. 1 பே. 1. 8, 9
9 1. 45
10 மத். 4. 21. லூ. 24. 16, 31
11 20. 14
12 லூ. 24. 41
13 லூ. 5. 4-7
14 13. 23; 20. 2
15 அப். 10. 41
16 அப். 10. 41
17 20. 19, 26
18 மத். 26. 33, 35
† இவர்கள் என்னிடத்தில் அன்பாயிருக்கிறதைப் பார்க்கிலும்
19 ஏசா. 40. 11. எரே. 3. 15. எசே. 34. 2-10. அப். 20. 28. 1 பே. 5. 2, 4
20 எபி. 13. 20. 1 பே. 2. 25
21 புல. 3. 33
22 16. 30

18 ஞர். நீ இளவயதுள்ளவனு யிருந்தபோது
[1]உன்னை நீயே அரைகட்டிக்கொண்டு, உனக்கு
இஷ்டமான இடங்களிலே நடந்து திரிந்தாய்;
நீ முதிர்வயதுள்ளவனாகும்போது உன் கை
களை நீட்டுவாய், [2]வேறொருவன் உன் அரை
யைக் கட்டி, உனக்கு இஷ்டமில்லாத இடத்
துக்கு உன்னைக் கொண்டுபோவான் என்று,
மெய்யாகவே மெய்யாகவே உனக்குச் சொல்
19 லுகிறேன் என்றார். இன்னவிதமான மர
ணத்தினாலே [3]அவன் தேவனை மகிமைப்படுத்
தப்போகிறானென்பதைக் குறிக்கும்படியாக
இப்படிச் சொன்னார். அவர் இதைச் சொல்
லியபின்பு, அவனை நோக்கி: [4]என்னைப் பின்
20 பற்றிவா என்றார். பேதுரு திரும்பிப்பார்
த்து, இயேசுவுக்கு அன்பாயிருந்தவனும்,
இராப்போஜனம்பண்ணுகையில் அவர் மார்
பிலே சாய்ந்து: ஆண்டவரே, உம்மைக் காட்டி
க்கொடுக்கிறவன் யார் என்று கேட்டவனுமா
கிய சீஷன் பின்னே வருகிறதைக் கண்டான்.

1 13. 36. அப். 12. 3, 4
2 அப். 21. 11
3 2 பே. 1. 14
4 12. 26. எண். 14. 24. 1 சாமு. 12. 20. மத். 19. 28
5 மத். 25. 31. வெளி. 1. 7; 22. 20
6 19. வச
7 19. 35. 3 யோ. 12. வச
8 20. 30. ஆமோ. 7. 10

அவனைக் கண்டு, பேதுரு இயேசுவை நோக்கி: 21
ஆண்டவரே, இவன் காரியம் என்ன என்
றான். அதற்கு இயேசு: [5]நான் வருமளவும் 22
இவனிருக்க எனக்குச் சித்தமானால், உனக்
கென்ன, [6]நீ என்னைப் பின்பற்றிவா என்றார்.
ஆகையால் அந்தச் சீஷன் மரிப்பதில்லையென் 23
கிற பேச்சு சகோதரருக்குள்ளே பரம்பிற்று.
ஆனாலும், அவன் மரிப்பதில்லையென்று
இயேசு சொல்லாமல், நான் வருமளவும் இவ
னிருக்க எனக்குச் சித்தமானால் உனக்கென்
னவென்று சொன்னார்.

அந்தச் சீஷனே இவைகளைக் குறித்துச் 24
சாட்சிகொடுத்து இவைகளை எழுதினவன்;
[7]அவனுடைய சாட்சி மெய்யென்று அறிந்தி
ருக்கிறோம்.

இயேசு செய்த [8]வேறு அநேக காரியங்க 25
ளுமுண்டு; அவைகளை ஒவ்வொன்றாக எழுதி
னால் எழுதப்படும் புஸ்தகங்கள் உலகம் கொள்
ளாதென்று எண்ணுகிறேன். ஆமென்.

# THE ACTS OF THE APOSTLES

# அப்போஸ்தலருடைய

## நடபடிகள்

1 தெயோப்பிலுவே, [1]இயேசுவானவர் தாம்
தெரிந்துகொண்ட [2]அப்போஸ்தலருக்குப் பரி
சுத்த ஆவியினாலே கட்டளையிட்டபின்பு,
2 அவர் எடுத்துக்கொள்ளப்பட்ட [3]நாள்வரைக்
கும் செய்யவும் உபதேசிக்கவும் தொடங்கின
எல்லாவற்றையுங் குறித்து, முதலாம் *பிரபந்
3 தத்தை உண்டுபண்ணினேன். அவர் பாடுபட்
டபின்பு, நாற்பதுநாளளவும் அப்போஸ்தல
ருக்குத் தரிசனமாகி, தேவனுடைய ராஜ்யத்
துக்குரியவைகளை அவர்களுடனே பேசி,
[4]அநேகந் தெளிவான திருஷ்டாந்தங்களினா
லே அவர்களுக்குத் தம்மை உயிரோடிருக்கிற
4 வராகக் காண்பித்தார். அன்றியும், அவர்
அவர்களுடனே கூடிவந்திருக்கும்போது, அ
வர்களை நோக்கி: [5]யோவான் ஜலத்தினாலே
ஞானஸ்நானங் கொடுத்தான்; [6]நீங்கள் சிலநா
ளுக்குள்ளே பரிசுத்தஆவியினாலே ஞானஸ்நா
5 னம் பெறுவீர்கள். ஆகையால் நீங்கள் எருச
லேமை விட்டுப் போகாமல் [7]என்னிடத்தில்
கேள்விப்பட்ட பிதாவின் வாக்குத்தத்தம் நிறை
வேறக் [8]காத்திருங்கள் என்று கட்டளை
யிட்டார்.
6 அப்பொழுது கூடிவந்திருந்தவர்கள் அவ
ரை நோக்கி: [9]ஆண்டவரே, இக்காலத்திலா
ராஜ்யத்தை இஸ்ரவேலுக்குத் திரும்பக் கொ
7 டுப்பீர் என்று கேட்டார்கள். அதற்கு அவர்:
[10]பிதாவானவர் தம்முடைய ஆதீனத்திலே
வைத்திருக்கிற காலங்களையும் வேளைகளையும்
8 அறிகிறது உங்களுக்கு அடுத்ததல்ல. பரி
சுத்தஆவி [11]உங்களிடத்தில் வரும்போது நீங்
கள் பெலனடைந்து, எருசலேமிலும், யூதே
யா முழுவதிலும், சமாரியாவிலும், பூமியின்
கடைசிபரியந்தமும், எனக்குச் சாட்சிகளாயி
9 ருப்பீர்கள் என்றார். இவைகளை அவர் சொன்
னபின்பு, அவர்கள் பார்த்துக்கொண்டிருக்
கையில், [12]உயர எடுத்துக்கொள்ளப்பட்டார்;
அவர்கள் கண்களுக்கு மறைவாக ஒரு மேகம்
10 அவரை எடுத்துக்கொண்டது. அவர் போகி
றபோது அவர்கள் வானத்தை அண்ணாந்து
பார்த்துக்கொண்டிருக்கையில், [13]இதோ, வெ
ண்மையான வஸ்திரந்தரித்தவர்கள் இரண்டு
11 பேர் அவர்களருகே நின்று: கலிலேயராகிய
மனுஷரே, [14]நீங்கள் ஏன் வானத்தை அண்
ணாந்துபார்த்து நிற்கிறீர்கள்? உங்களிடத்தினி
ன்று வானத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட
இந்த இயேசுவானவர் எப்படி உங்கள் கண்க
ளுக்குமுன்பாக வானத்துக்கு எழுந்தருளிப்
போனாரோ, [15]அப்படியே மறுபடியும் வரு
வார் என்றார்கள்.
அப்பொழுது அவர்கள் எருசலேமுக்குச் 12
சமீபமாய் [16]ஒரு ஓய்வுநாள் பிரயாண தூரத்தி
லிருக்கிற ஒலிவமலை என்னப்பட்ட மலையிலி
ருந்து எருசலேமுக்குத் திரும்பிப்போனார்கள்.
அவர்கள் அங்கே வந்தபோது [17]மேல்வீட்டில் 13
ஏறினார்கள்; [18]அதில் பேதுருவும், யாக்கோ
பும், யோவானும், அந்திரேயாவும், பிலிப்பும்,
தோமாவும், பற்தொலொமேயும், மத்தேயும்,
அல்பேயுவின் குமாரனாகிய யாக்கோபும்,
செலோத்தே என்னப்பட்ட சீமோனும், யாக்
கோபின் சகோதரனாகிய யூதாவும் தங்கியிருந்
தார்கள். அங்கே இவர்களெல்லாரும், ஸ்திரீ 14
களோடும் இயேசுவின் தாயாகிய மரியாளோ
டும், அவருடைய சகோதரரோடுங்கூட [19]ஒரு
மனப்பட்டு, ஜெபத்திலும் வேண்டுதலிலும்
தரித்திருந்தார்கள்.
அந்நாட்களிலே, [20]சீஷர்களில் ஏறக்குறைய 15
நூற்றிருபதுபேர் கூடியிருந்தபோது, அவர்கள்
நடுவிலே பேதுரு எழுந்து நின்று: சகோதர 16
ரே, [21]இயேசுவைப் பிடித்தவர்களுக்கு வழி
காட்டின யூதாசைக்குறித்துப் பரிசுத்தஆவி
தாவீதின் வாக்கினால் [22]முன்சொன்ன வேத
வாக்கியம் நிறைவேறவேண்டியதாயிருந்தது.
அவன் எங்களில் ஒருவனாக எண்ணப்பட்டு, 17
[23]இந்த ஊழியத்திலே பங்கு பெற்றவனாயிருந்
தான். அநீதத்தின் [24]கூலியினால் அவன் ஒரு 18
நிலத்தைச் சம்பாதித்து, தலைகீழாக விழுந்
தான்; அவன் வயிறு வெடித்து, குடல்களெல்
லாம் சரிந்துபோயிற்று. இது எருசலேமி 19
லுள்ள குடிகள் யாவருக்கும் தெரிந்திருக்கி
றது; அதினாலே அந்த நிலம் அவர்களுடைய
பாஷையிலே இரத்தநிலம் என்று அர்த்தங்
கொள்ளும் அக்கெல்தமா என்னப்பட்டிருக்கி
றது. சங்கீத புஸ்தகத்திலே: அவனுடைய 20
வாசஸ்தலம் பாழாகக்கடவது, ஒருவனும்
அதில் வாசம்பண்ணாதிருப்பானாக என்றும்;
[25]அவனுடைய †கண்காணிப்பை வேறொரு

1 லூ. 1. 1-4. யோ. 20. 31.
2 10. 41, 42. மத். 28. 19. மாற். 16. 15-19. யோ. 20. 21
3 லூ. 24. 51. 1 தீமோ. 3. 16
* ஆகமத்தை
4 மாற். 16. 14. லூ. 24. 36. யோ. 20, 21. அதி. 1 கொ. 15. 5
5 மத். 3. 11
6 2. 4: 10. 45: 11. 15
7 யோ. 14, 16. அதி.
8 லூ. 24. 49
9 ஏசா. 1, 26. தானி. 7. 27. மத். 24. 3, 4
10 மத். 24. 36. மாற். 13. 32. 1 தெச. 5. 1
11 2. 1, 4. மத். 28. 19. லூ. 24. 47-49. யோ. 15. 27
12 லூ. 24. 51. யோ. 6. 62
13 மத். 28. 3. யோ. 20. 12
14 2. 7: 13. 31
15 மத். 24. 30. யோ. 14. 3. 1 தெச. 1. 10: 4. 16. வெளி. 1. 7
16 லூ. 24. 52
17 9. 37, 39: 20. 8
18 லூ. 6. 13-16
19 மத். 13. 55. லூ. 23. 49, 55: 24. 10
20 வெளி. 3. 4
21 மத். 26. 47. யோ. 18. 3
22 சங். 41. 9. யோ. 13. 18
23 மத். 10. 4. லூ. 6. 16
24 மத். 27. 5-10. 2 பே. 2. 15
25 சங். 69. 25; 109. 8
† உத்தியோகத்தை

வன் பிறக்கடவன் என்றும் எழுதியிருக்கி
21 றது. ஆதலால், யோவான் [1]ஞானஸ்நானம்
கொடுத்த நாள்முதற்கொண்டு, கர்த்தராகிய
இயேசுவானவர் நம்மிடத்திலிருந்து உயர எடு
22 த்துக்கொள்ளப்பட்ட நாள்வரைக்கும், அவர்
நம்மிடத்தில் சஞ்சரித்திருந்த காலங்களிலெல்
லாம் எங்களுடனேகூட இருந்த மனுஷர்க
ளில் ஒருவன் அவர் உயிரோடெழுந்ததைக்கு
றித்து, எங்களுடனேகூடச் சாட்சியாக ஏற்
படுத்தப்படவேண்டும் என்றான்.
23 அப்பொழுது அவர்கள் யுஸ்து என்னும்
மறுநாமமுள்ள [2]பர்சபா என்னப்பட்ட யோ
சேப்பும் மத்தியாவும் ஆகிய இவ்விரண்டுபே
24 ரையும் நிறுத்தி: எல்லாருடைய இருதயங்க
ளையும் [3]அறிந்திருக்கிற கர்த்தாவே, யூதாஸ்
என்பவன் தனக்குரிய இடத்துக்குப் போகும்
படி இழந்துபோன இந்த ஊழியத்திலும் இ
ந்த அப்போஸ்தலப்பட்டத்திலும் பங்குபெறு
25 வதற்காக, இவ்விரண்டுபேரில் தேவரீர் தெ
ரிந்துகொண்டவனை எங்களுக்குக் காண்பித்த
26 ருளும் என்று ஜெபம்பண்ணி; பின்பு, அவர்
களைக்குறித்துச் சீட்டுப்போட்டார்கள்; சீட்டு
மத்தியாவின் பேருக்கு விழுந்தது; அப்பொ
ழுது அவன் பதினொரு அப்போஸ்தலருட
னே சேர்த்துக்கொள்ளப்பட்டான்.

2 பெந்தெகொஸ்தே [4]என்னும் நாள் வந்த
போது, [5]அவர்களெல்லாரும் ஒருமனப்பட்டு
2 ஓரிடத்திலே வந்திருந்தார்கள். அப்பொ
ழுது பலத்த காற்று அடிக்கிற முழக்கம்
போல, வானத்திலிருந்து சடிதியாய் ஒரு
முழக்கமுண்டாகி, [6]அவர்கள் உட்கார்ந்தி
3 ருந்த வீடுமுழுவதையும் நிரப்பிற்று. அல்லா
மலும் அக்கினிமயமான நாவுகள்போலப் பிரி
திருக்கும் நாவுகள் அவர்களுக்குக் காணப்
பட்டு, அவர்கள் ஒவ்வொருவர்மேலும் வந்து
4 அமர்ந்தது. அவர்களெல்லாரும் [7]பரிசுத்த
ஆவியினாலே நிரப்பப்பட்டு, [8]ஆவியானவர்
தங்களுக்குத் தந்தருளின வரத்தின்படியே
வெவ்வேறு பாஷைகளிலே பேசத்தொடங்கி
னார்கள்.
5 வானத்தின் கீழிருக்கிற சகல தேசத்தாரிலு
மிருந்துவந்த தேவபக்தியுள்ள யூதர்கள் அப்
பொழுது எருசலேமிலே வாசம்பண்ணினார்
6 கள். அந்தச் சத்தம் உண்டானபோது, தி
ரளான ஜனங்கள் கூடிவந்து, தங்கள் தங்கள்
பாஷையிலே அவர்கள் பேசுகிறதை அவ
ரவர்கள் கேட்டபடியினாலே கலக்கமடைந்தார்
7 கள். எல்லாரும் பிரமித்து ஆச்சரியப்பட்டு,
ஒருவரையொருவர் பார்த்து: [9]இதோ, பேசு
கிற இவர்களெல்லாரும் கலிலேயரல்லவா?
8 அப்படியிருக்க, நம்மில் அவரவர்களுடைய
ஜென்மபாஷைகளிலே இவர்கள் பேசக்கேட்
9 கிறோமே, இதெப்படி? பார்த்தரும், மேத
ரும், எலாமீத்தரும், மெசொப்பொத்தாமியா,
யூதேயா, கப்பத்தோக்கியா, பொந்து, ஆசியா,
10 பிரிகியா, பம்பிலியா, எகிப்து என்னும் தே
சத்தார்களும், சிரேனேபட்டணத்தைச் சுற்றி
யிருக்கிற லீபியாவின் திசைகளிலே குடியிருக்
கிறவர்களும், இங்கே சஞ்சரிக்கிற ரோமாபுரி
யாரும், யூதரும், யூதமார்க்கத்தமைந்தவர்களும்,
கிரேத்தரும், அரபியருமாகிய நாம் நம்முடைய 11
பாஷைகளிலே இவர்கள் தேவனுடைய மகத்
துவங்களைப் பேசக் கேட்கிறோமே என்றார்
கள். எல்லாரும் பிரமித்துச் சந்தேகப்பட்டு, 12
இதென்னமாய் முடியுமோ என்று ஒருவரோ
டொருவர் சொல்லிக்கொண்டார்கள். மற்ற 13
வர்களோ: இவர்கள் மதுபானத்தினால் நி
றைந்திருக்கிறார்களென்று பரியாசம்பண்ணி
னார்கள்.
அப்பொழுது பேதுரு பதினொருவரோடுங் 14
கூட நின்று, அவர்களை நோக்கி, உரத்தசத்த
மாய்: யூதர்களே, எருசலேமில் வாசம்பண்
ணுகிற ஜனங்களே, நீங்களெல்லாரும் அறிந்
துகொள்வீர்களாக, என் வார்த்தைகளுக்குச்
செவிகொடுங்கள். நீங்கள் நினைக்கிறபடி இவ 15
ர்கள் வெறிகொண்டவர்களல்ல, [10]பொழுது
விடிந்து மூன்றாம்மணி வேளையாயிருக்கிற
தே. தீர்க்கதரிசியாகிய [11]யோவேலினால் உ 16
ரைக்கப்பட்டபடியே இது நடந்தேறுகிறது.
கடைசிநாட்களில் நான் மாம்சமான யாவர் 17
மேலும் [12]என் ஆவியை ஊற்றுவேன், அப்
பொழுது உங்கள் குமாரரும் உங்கள் குமாரத்
திகளும் தீர்க்கதரிசனஞ் சொல்லுவார்கள்;
உங்கள் வாலிபர் தரிசனங்களை அடைவார்
கள்; உங்கள் மூப்பர் சொப்பனங்களைக் காண்
பார்கள்; என்னுடைய ஊழியக்காரர்மேலும், 18
என்னுடைய ஊழியக்காரிகள்மேலும் அந்
நாட்களில் என் ஆவியை ஊற்றுவேன், [13]அப்
பொழுது அவர்கள் தீர்க்கதரிசனஞ் சொல்லு
வார்கள். அல்லாமலும் உயர வானத்திலே 19
*அற்புதங்களையும், தாழ பூமியிலே இரத்தம்,
அக்கினி, புகைக்காடாகிய †அதிசயங்களையும்
காட்டுவேன். கர்த்தருடைய பெரிதும் *பிர 20
காசமுமான நாள் வருமுன்னே [14]சூரியன் இரு
ளாகவும், சந்திரன் இரத்தமாகவும் மாறும்.
அப்பொழுது [15]கர்த்தருடைய நாமத்தைத் தொ 21
ழுதுகொள்ளுகிறவனெவனோ அவன் ரட்சிக்
கப்படுவான் என்று தேவன் உரைத்திருக்கி
றார். இஸ்ரவேலரே, நான் சொல்லும் வார்த் 22
தைகளைக் கேளுங்கள்; நீங்கள் அறிந்திருக்கிற
படி நசரேயனாகிய இயேசுவைக்கொண்டு
தேவன் உங்களுக்குள்ளே [16]பலத்த செய்கைக
ளையும், அற்புதங்களையும், அடையாளங்களை
யும் நடப்பித்து, அவைகளினாலே அவரை
உங்களுக்கு வெளிப்படுத்தினார். அப்படியி 23
ருந்தும், [17]தேவன் நிர்ணயித்திருந்த ஆலோ
சனையின்படியேயும், அவருடைய முன்ன
றிவின்படியேயும் ஒப்புக்கொடுக்கப்பட்ட
அந்த இயேசுவை நீங்கள் பிடித்து, [18]அக்கிர
மக்காரருடைய கைகளினாலே சிலுவையில்
ஆணியடித்துக் கொலைசெய்தீர்கள். தேவன் 24
அவருடைய மரண உபாதிகளின் கட்டை
அவிழ்த்து, [19]அவரை எழுப்பினார்; அவர் மா
ணத்தினால் கட்டப்பட்டிருக்கக் கூடாதிருந்

1 மாற். 1. 1. லூ. 10. 1, 2. யோ. 15. 27
2 15. 22
3 15. 8. எரே. 17. 10. வெளி. 2. 23
4 20. 16. லேவி. 23. 15
5 1. 14
6 4. 31
7 1. 5
8 10. 46. மாற். 16. 17. 1 கொ. 12. 20, 28, 30: 13. 1
9 1. 11
10 1 தெச. 5. 7
11 யோவே. 2. 28–32
12 ஏசா. 44. 3. எசே. 36. 27. யோ. 7. 38
13 21. 4, 9, 10. 1 கொ. 12. 10, 28
* அதிசயங்களையும்
† அடையாளங்களையும்
14 மத். 24. 29. மாற். 13. 24. லூ. 21. 23. 2 பே. 3. 7, 10
15 சங். 86. 5. ரோ. 10. 13. 1 கொ. 1. 2. எபி. 4. 16.
16 10. 38. யோ. 3. 2: 14. 10, 11. எபி. 2. 4
17 3. 18: 4. 28. மத். 26. 24. லூ. 22. 22: 24. 44
18 5. 30
19 13. 30, 34. லூ. 24. 1. 1 கொ. 6. 14. எபே. 1. 20. கொலோ. 2. 12. 1 தெச. 1. 10. எபி. 13. 20. 1 பே. 1. 21

25 தது. அவனைக் குறித்துத் தாவீது: [1]கர்த்தனை
எப்பொழுதும் எனக்கு முன்பாக நிறுத்தி
நோக்கிக்கொண்டிருக்கிறேன்; நான் அசைக்
கப்படாதபடி அவர் என் வலது பாரிசத்திலே
26 இருக்கிறார்; அதினாலே என் இருதயம் மகிழ்
ந்தது, என் நாவு களிகூர்ந்தது, என் மாம்ச
27 மும் நம்பிக்கையோடே தங்கியிருக்கும்; என்
ஆத்துமாவைப் பாதாளத்தில் விடீர், உம்மு
டைய பரிசுத்தர் அழிவைக் காணவொட்டீர்;
28 ஜீவமார்க்கங்களை எனக்குத் தெரியப்படுத்தி
னீர்; உம்முடைய சந்நிதானத்திலே என்னைச்
சந்தோஷத்தினால் நிரப்புவீர் என்று சொல்லு
29 கிறான். சகோதரரே, கோத்திரத்தலைவனாகிய
தாவீதைக்குறித்து நான் உங்களுடனே தைரி
யமாய்ப் பேசுகிறதற்கு இடங்கொடுங்கள்;
அவன் மரணமடைந்து அடக்கம் பண்ணப்
பட்டான்; அவனுடைய கல்லறை இந்நாள்
30 வரைக்கும் நம்மிடத்திலிருக்கிறது. அவன்
தீர்க்கதரிசியாயிருந்து: [2]உன் சிங்காசனத்தில்
வீற்றிருக்க மாம்சத்தின்படி உன் சந்ததியிலே
கிறிஸ்துவை எழும்பப்பண்ணுவேன் என்று
தேவன் தனக்குச் [3]சத்தியம்பண்ணினதை
31 அறிந்தபடியால், அவன் கிறிஸ்துவினுடைய
ஆத்துமா பாதாளத்திலே விடப்படுவதில்லை
யென்றும், அவருடைய மாம்சம் அழிவைக்
காண்பதில்லையென்றும் முன்னறிந்து, [4]அவர்
உயிர்த்தெழுதலைக்குறித்து இப்படிச் சொன்
32 னான். இந்த இயேசுவை தேவன் எழுப்பி
னார்; [5]இதற்கு நாங்களெல்லாரும் சாட்சிகளா
33 யிருக்கிறோம். அவர் தேவனுடைய வலது
கரத்தினாலே [6]உயர்த்தப்பட்டு, [7]பிதா அரு
ளிய வாக்குத்தத்தத்தின்படி பரிசுத்த ஆவி
யைப் பெற்று, [8]நீங்கள் இப்பொழுது காண்
கிறதும் கேட்கிறதுமாகிய இதைப் பொழிந்த
34 ருளினார். தாவீது பரலோகத்திற்கு எழுந்து
போகவில்லையே. [9]நான் உம்முடைய சத்து
ருக்களை உமக்குப் பாதபடியாக்கிப் போடும்
35 வரைக்கும், நீர் என் வலதுபாரிசத்தில் உட்
காருமென்று கர்த்தர் என் ஆண்டவருடனே
சொன்னார் என்று அவனே சொல்லியிருக்கி
36 றான். ஆகையினால், [10]நீங்கள் சிலுவையில்
அறைந்த இந்த இயேசுவையே தேவன் [11]ஆண்
டவரும் கிறிஸ்துவுமாக்கினாரென்று இஸ்ர
வேல் குடும்பத்தார் யாவரும் நிச்சயமாய் அறி
யக்கடவர்கள் என்றான்.
37 இதை அவர்கள் கேட்டபொழுது, [12]இரு
தயத்திலே குத்தப்பட்டவர்களாகி, பேதுரு
வையும் மற்ற அப்போஸ்தலரையும் பார்த்து:
சகோதரரே, [13]நாங்கள் என்ன செய்யவேண்
38 டும் என்றார்கள். பேதுரு அவர்களை நோக்கி:
[14]நீங்கள் மனந்திரும்பி, ஒவ்வொருவரும் பாவ
மன்னிப்புக்கென்று இயேசுகிறிஸ்துவின் நா
மத்தினாலே ஞானஸ்நானம் பெற்றுக்கொள்
ளுங்கள், அப்பொழுது பரிசுத்த ஆவியின்
39 *வரத்தைப் பெறுவீர்கள். வாக்குத்தத்தமா
னது உங்களுக்கும், [15]உங்கள் பிள்ளைகளுக்கும்,
நம்முடைய தேவனாகிய கர்த்தர் வரவழைக்கும்
தூரத்திலுள்ள யாவருக்கும் உண்டாயிருக்கி
றது என்று சொல்லி; இன்னும் அநேக வார்த் 40
தைகளாலும் சாட்சிகூறி, மாறுபாடுள்ள இந்
தச் சந்ததியை விட்டு விலகி உங்களை ரட்சித்
துக்கொள்ளுங்கள் என்றும் புத்திசொன்னான்.
அவனுடைய வார்த்தையைச் சந்தோஷமாய் 41
ஏற்றுக்கொண்டவர்கள் ஞானஸ்நானம் பெற்
றார்கள். அன்றையத்தினம் ஏறக்குறைய மூவா
யிரம்பேர் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள்.
அவர்கள் அப்போஸ்தலருடைய உபதேசத்தி 42
லும், [16]அந்நியோந்நியத்திலும், அப்பம் பிட்கு
தலிலும், ஜெபம்பண்ணுதலிலும் உறுதியாய்த்
தரித்திருந்தார்கள்.
எல்லாருக்கும் பயமுண்டாயிற்று. அப் 43
போஸ்தலர்களாலே [17]அநேக அற்புதங்களும்
அடையாளங்களும் செய்யப்பட்டது. விசுவா 44
சிகளெல்லாரும் ஒருமித்திருந்து, [18]சகலத்தை
யும் பொதுவாய் வைத்து அநுபவித்தார்கள்.
காணியாட்சிகளையும் ஆஸ்திகளையும் விற்று, 45
[19]ஒவ்வொருவனுக்கும் தேவையானதற்குத் தக்
கதாக அவைகளில் எல்லாருக்கும் பகிர்ந்து
கொடுத்தார்கள். அவர்கள் ஒருமனப்பட்ட 46
வர்களாய் தேவாலயத்திலே அநுதினமும் தரி
த்திருந்து, [20]வீடுகள்தோறும் அப்பம் பிட்டு,
மகிழ்ச்சியோடும் கபடமில்லாத இருதயத்தோ
டும் போஜனம்பண்ணி, தேவனைத் துதித்து,
[21]ஜனங்களெல்லாரிடத்திலும் தயவுபெற்றிருந் 47
தார்கள். [22]இரட்சிக்கப்படுகிறவர்களைக் கர்த்தர்
அநுதினமும் சபையிலே சேர்த்துக்கொண்டு
வந்தார்.

ஜெபவேளையாகிய[23]ஒன்பதாம்மணிநேரத் 3
திலே பேதுருவும் யோவானும் தேவாலயத்
துக்குப் போனார்கள். அப்பொழுது தன் தா 2
யின் வயிற்றிலிருந்து சப்பாணியாய்ப் பிறந்த
ஒரு மனுஷனைச் சுமந்துகொண்டு வந்தார்கள்;
[24]தேவாலயத்திலே பிரவேசிக்கிறவர்களிடத்
தில் பிச்சைகேட்கும்படி, நாடோறும் அவனை
அலங்காரவாசல் என்னப்பட்ட தேவாலய
வாசலண்டையிலே வைப்பார்கள். தேவால 3
யத்திலே பிரவேசிக்கப்போகிற பேதுருவை
யும்யோவானையும் அவன் கண்டு பிச்சைகேட்
டான். பேதுருவும் யோவானும் அவனை 4
உற்றுப்பார்த்து: எங்களை நோக்கிப்பார் என்
றார்கள். அவன் அவர்களிடத்தில் ஏதாகிலும் 5
கிடைக்குமென்று எண்ணி, அவர்களை நோக்
கிப் பார்த்தான். அப்பொழுது பேதுரு: வெ 6
ள்ளியும்பொன்னும்என்னிடத்திலில்லை; என்
னிடத்திலுள்ளதை உனக்குத் தருகிறேன்;
[25]நசரேயனாகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தி
னாலே நீ எழுந்து நட என்று சொல்லி; வல 7
து கையினால் அவனைப் பிடித்துத் தூக்கிவிட்
டான்; உடனே அவனுடைய கால்களும் †கா
டுகளும் பெலன்கொண்டது. அவன் குதித் 8
தெழுந்து [26]நின்று நடந்தான்; நடந்து, குதித்
து, தேவனைத் துதித்துக்கொண்டு, அவர்களு
டனேகூட தேவாலயத்திற்குள் பிரவேசித்
தான். அவன் நடக்கிறதையும், [27]தேவனைத் 9

1 சங். 16. 8-11
2 2 சாமு. 23. 2. லூ. 1. 32, 69. 2 நாளா. 2. 8
3 2 சாமு. 7. 12, 13. சங். 132. 11. எபி. 6. 17
4 12. 35. 1 பே. 1. 11, 12
5 24. லூ. 24. 48
6 5. 31. பிலி. 2. 9. எபி. 10. 12
7 1. 4. யோ. 16. 7, 13
8 10. 45. எபே. 4. 8
9 சங். 110. 1. மத். 22. 44
10 5. 31. சகரி. 13. 1
11 சங். 2. 2, 6-8. யோ. 3. 35
12 எசே. 7. 16. சகரி. 12. 10. லூ. 3. 10
13 9. 6; 16. 30
14 3. 19. லூ. 24. 47
* ஈவை
15 யோவே. 2. 28. எபே. 2. 13, 17
16 1. 14. ரோ. 12. 12. 1 கொ. 11. 2. எபி. 10. 25
17 மாற். 16. 17
18 4. 32, 34
19 ஏசா. 58. 7. 2 கொ. 6. 1, 9. 1 யோ. 3. 17
20 5. 42; 20. 7. லூ. 24. 53
21 லூ. 2. 52. ரோ. 14. 18
22 5. 14; 11. 24
23 2. 46. சங். 55. 17. தானி. 6. 10
24 14. 8. யோ. 9. 8
25 4. 10
† கணுக்கால்
26 ஏசா. 35. 6
27 4. 16, 21

துதிக்கிறதையும், ஜனங்களெல்லாரும் கண்டு:
10 தேவாலயத்தின் அலங்கார வாசலண்டையி
லே [1]பிச்சை கேட்க உட்கார்ந்திருந்தவன்
இவன்தான் என்று அறிந்து, அவனுக்குச் சம்
பவித்ததைக்குறித்து மிகவும் ஆச்சரியப்பட்
டுப் பிரமித்தார்கள்.
11 குணமாக்கப்பட்ட சப்பாணி பேதுருவை
யும் யோவானையும் பற்றிக்கொண்டிருக்கை
யில், ஜனங்களெல்லாரும் பிரமித்து, [2]சாலொ
மோன் மண்டபம் என்னப்பட்ட மண்டபத்தி
12 லே அவர்களிடத்திற்கு ஓடிவந்தார்கள். பே
துரு அதைக் கண்டு ஜனங்களை நோக்கி: இஸ்
ரவேலரே, இதைக்குறித்து நீங்கள் ஆச்சரியப்
படுகிறதென்ன? நாங்கள் எங்கள் சுயசக்தி
யினாலாவது, எங்கள் சுயபக்தியினாலாவது,
இவனை நடக்கப் பண்ணினோமென்று நீங்கள்
13 எங்களை நோக்கிப் பார்க்கிறதென்ன? ஆபிர
காம் ஈசாக்கு யாக்கோபு என்பவர்களுடைய
[3]தேவனாகிய நம்முடைய பிதாக்களின் தே
வன் தம்முடைய *பிள்ளையாகிய இயேசுவை
மகிமைப்படுத்தினார்; [4]அவரை நீங்கள் ஒப்
புக்கொடுத்தீர்கள்; [5]பிலாத்து அவரை விடு
தலையாக்கத் தீர்மானித்தபோது, அவனுக்கு
14 முன்பாக அவரை மறுதலித்தீர்கள். பரிசுத்
தமும் [6]நீதியுமுள்ளவரை நீங்கள் மறுதலித்து,
கொலைபாதகனை உங்களுக்காக விடுதலைபண்
15 ணவேண்டுமென்று கேட்டு, ஜீவாதிபதியைக்
[7]கொலைசெய்தீர்கள்; [8]அவரை தேவன் மரித்
தோரிலிருந்தெழுப்பினார்; அதற்கு நாங்கள்
16 சாட்சிகளாயிருக்கிறோம். அவருடைய நாம
த்தைப் பற்றும் விசுவாசத்தினாலே [9]அவரு
டைய நாமமே நீங்கள் பார்த்து அறிந்திருக்
கிற இவனைப் பெலப்படுத்தினது; அவரால்
உண்டாகிய விசுவாசமே உங்களெல்லாருக்
கும் முன்பாக, இந்தச் சர்வாங்க சுகத்தை
17 இவனுக்குக் கொடுத்தது. சகோதரரே, நீங்க
ளும் உங்கள் அதிகாரிகளும் அறியாமையினா
லே [10]இதைச் செய்தீர்களென்று அறிந்திருக்கி
18 றேன். கிறிஸ்து பாடுபடவேண்டுமென்று
[11]தேவன் தம்முடைய தீர்க்கதரிசிகளெல்லா
ருடைய வாக்கினாலும் முன்னறிவித்தவை
19 களை இவ்விதமாய் நிறைவேற்றினார். ஆனபடி
யினாலே கர்த்தருடைய சந்நிதானத்திலிருந்து
[12]இளைப்பாறுதலின் காலங்கள் வரும்படிக்கும்,
[13]முன்னே குறிக்கப்பட்ட இயேசுகிறிஸ்து
வை அவர் உங்களிடத்தில் அனுப்பும்படிக்
20 கும், உங்கள் பாவங்கள் நிவிர்த்தி செய்யப்
படும்பொருட்டு [14]நீங்கள் மனந்திரும்பிக் குண
21 ப்படுங்கள். உலகத்தோற்றமுதல் தேவன்
தம்முடைய பரிசுத்த தீர்க்கதரிசிகளெல்லாரு
டைய வாக்கினாலும் உரைத்தவைகள் எல்
லாம் நிறைவேறித் தீருங்காலங்கள் வருமள
வும் [15]பரலோகம் அவரை ஏற்றுக்கொள்ள
22 வேண்டும். மோசே பிதாக்களை நோக்கி:
[16]உங்கள் தேவனாகிய கர்த்தர் என்னைப்போல
ஒரு தீர்க்கதரிசியை உங்களுக்காக உங்கள் சகோ
தரரிலிருந்து எழும்பப்பண்ணுவார்; அவர்
உங்களுக்குச் சொல்லும் எல்லாவற்றிலும்
அவருக்குச் செவிகொடுப்பீர்களாக. அந்தத் 23
தீர்க்கதரிசியின் சொற்கேளாதவனெவனோ,
அவன் ஜனத்திலிராதபடிக்கு நிர்மூலமாக்கப்
படுவான் என்றான். சாமுவேல் முதற்கொ 24
ண்டு, எத்தனைபேர் தீர்க்கதரிசனம் உரைத்தார்
களோ, அத்தனைபேரும் இந்த நாட்களை முன்
னறிவித்தார்கள். நீங்கள் அந்தத் தீர்க்கதரிசி 25
களுக்குப் புத்திரராயிருக்கிறீர்கள்; [17]உன் சந்
ததியினாலே பூமியிலுள்ள வம்சங்களெல்லாம்
ஆசீர்வதிக்கப்படும் என்று தேவன் ஆபிரகா
முக்குச் சொல்லி, நம்முடைய முன்னோர்க
ளோடே பண்ணின உடன்படிக்கைக்கும் புத்
திரராயிருக்கிறீர்கள். அவர் உங்களெல்லாரை 26
யும் உங்கள் பொல்லாங்குகளிலிருந்து விலக்கி,
[18]உங்களை ஆசீர்வதிக்கும்படி தேவன் தம்மு
முடைய பிள்ளையாகிய இயேசுவை எழுப்பி,
முதலாவது உங்களிடத்திற்கே அவரை அனு
ப்பினார் என்றான்.

அவர்கள் ஜனங்களுடனே பேசிக்கொண் 4
டிருக்கையில், [19]ஆசாரியர்களும் தேவாலயத்
துச் சேனைத்தலைவனும் சதுசேயரும் அவர்க
ளிடத்தில் வந்து, அவர்கள் ஜனங்களுக்கு 2
உபதேசிக்கிறதினாலும், இயேசுவை முன்னி
ட்டு, மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுதலைப்
பிரசங்கிக்கிறதினாலும், சினங்கொண்டு, அவர் 3
களைப் பிடித்து, சாயங்காலமா யிருந்தபடியி
னால், மறுநாள்வரைக்கும் காவலில் வைத்தார்
கள். வசனத்தைக் கேட்டவர்களில் [20]அநேகர் 4
விசுவாசித்தார்கள்; அவர்கள் தொகை ஏறக்
குறைய ஐயாயிரமாயிருந்தது.
மறுநாளிலே ஜனங்களுடைய அதிகாரிக 5
ளும் மூப்பரும் வேதபாரகரும், பிரதான ஆசா 6
ரியனாகிய அன்னாவும், [21]காய்பாவும், யோவா
னும், அலெக்சந்தரும், பிரதான ஆசாரியரு
டைய குடும்பத்தார் யாவரும் எருசலேமிலே
கூட்டங்கூடி, அவர்களை நடுவே நிறுத்தி: [22]நீங் 7
கள் எந்த வல்லமையினாலே, எந்த நாமத்தினா
லே, இதைச் செய்தீர்கள் என்று கேட்டார்
கள். அப்பொழுது பேதுரு [23]பரிசுத்தஆவியி 8
னாலே நிறைந்து, அவர்களை நோக்கி: ஜனத்
தின் அதிகாரிகளே, இஸ்ரவேலின் மூப்பர்
களே, பிணியாளியாயிருந்த இந்த மனுஷனு 9
க்குச் செய்யப்பட்ட †உபகாரத்தைக்குறித்து
எதினாலே இவன் ஆரோக்கியமானானென்று
நீங்கள் இன்று எங்களிடத்தில் விசாரித்துக்
கேட்டால், உங்களால் சிலுவையில் அறையப் 10
பட்டவரும், தேவனால் மரித்தோரிலிருந்து
எழுப்பப்பட்டவருமாயிருக்கிற நசரேயனாகிய
இயேசுகிறிஸ்துவின் [24]நாமத்தினாலேயே இவ
ன் உங்களுக்கு முன்பாகச் சொஸ்தமாய் நிற்
கிறானென்று உங்களெல்லாருக்கும், இஸ்ர
வேல் ஜனங்களெல்லாருக்கும் தெரிந்திருக்கக்
கடவது. வீடுகட்டுகிறவர்களாகிய உங்களால் 11
அற்பமாய் எண்ணப்பட்ட அவரே [25]மூலைக்
குத் தலைக்கல்லானவர். அவராலேயன்றி [26]வே 12
றொருவராலும் இரட்சிப்பு இல்லை; நாம் இரட்சிக்

1 யோ. 9. 8
2 5. 12. யோ. 10. 23
3 5. 30, 31. மத். 22. 32. ரோ. 17. 1, 2. எபே. 1. 20–22. பிலி. 2. 9–11. எபி. 2. 9. வெளி. 1. 5, 18
* தாசனை
4 யோ. 19. 15
5 மத். 27. 17–25. லூ. 23. 16–23
6 சங். 16. 10. மாற். 1. 24. லூ. 1. 35.
7 யோ. 1. 4. எபி. 2. 10. 1 யோ. 5. 11
8 மத். 28. 2–6. எபே. 1. 20
9 4. 10; 14. 9. மத். 9. 22
10 லூ. 23. 34. யோ. 16. 3. 1 கொ. 2. 8. 1 தீமோ. 1. 13.
11 26. 22, 23. லூ. 24. 44
12 எரே. 31. 23–25 செப். 3. 14–20. வெளி. 21. 4
13 1. 11. எபி. 9. 28
14 2. 38. ஏசா. 1. 16–20. யோவே. 2. 13
15 மத். 17. 11. லூ. 1. 70
16 உபா. 18. 15–19
17 2. 39. ஆதி. 12. 3; 22. 18. ரோ. 9. 4; 15. 8. கலா. 3. 6, 26
18 ஏசா. 59. 20. மத். 1. 21; 10. 5, 6. லூ. 24. 47. தீத். 2. 11–14
19 5. 24; 23. 8. மத். 22. 23. லூ. 22. 4
20 28. 24
21 லூ. 3. 2. யோ. 11. 49; 18. 13
22 7. 27. மத். 21. 23
23 7. 55. லூ. 12. 11, 12
† நன்மையாகச்செய்கையை
24 2. 24; 3. 6, 16
25 சங். 118. 22. ஏசா. 28. 16. மத். 21. 42
26 10. 43. சங். 45. 17. மத். 1. 21. 1 தீமோ. 2. 5, 6

கப்படும்படிக்கு வானத்தின் கீழெங்கும், மனு
ஷர்களுக்குள்ளே அவருடைய நாமமேயல்லா
மல் வேறொரு நாமம் கட்டளையிடப்படவும்
இல்லை என்றான்.
13 பேதுருவும் யோவானும் பேசுகிற தைரி
யத்தை அவர்கள் கண்டு, [1]அவர்கள் படிப்பறி
யாதவர்களென்றும் பேதைமையுள்ளவர்களெ
ன்றும் அறிந்தபடியினால் ஆச்சரியப்பட்டு,
அவர்கள் இயேசுவுடனேகூட இருந்தவர்க
14 ளென்றும் அறிந்துகொண்டார்கள். சொஸ்த
மாக்கப்பட்ட மனுஷன் அவர்கள் அருகே நிற்
கிறதைக் கண்டபடியால், [2]எதிர்பேச அவர்க
15 ளுக்கு இடமில்லாதிருந்தது. அப்பொழுது
அவர்களை ஆலோசனைச் சங்கத்தைவிட்டு வெ
ளியே போகும்படி கட்டளையிட்டு, தங்களுக்
16 குள்ளே யோசனைபண்ணிக்கொண்டு: இந்த
மனுஷரை நாம் என்ன செய்யலாம்? [3]எருச
லேமில் வாசம்பண்ணுகிற எல்லாருக்கும் தெ
ரிந்திருக்கிறபடி வெளியரங்கமான அற்புதம்
இவர்களால் செய்யப்பட்டதே, அதை நாம்
17 இல்லையென்று சொல்லக்கூடாது. ஆகிலும்
இது அதிகமாய் ஜனத்துக்குள்ளே பரம்பாத
படிக்கு, [4]இதுமுதல் ஒருவரோடும் இந்த நாமத்
தைக்குறித்துப் பேசக்கூடாதென்று, அவர்
களை உறுதியாய்ப் பயமுறுத்தவேண்டுமென்று
18 சொல்லிக்கொண்டு, அவர்களை அழைத்து:
இயேசுவின் நாமத்தைக்குறித்து எவ்வளவும்
பேசவும் போதிக்கவும் கூடாதென்று அவர்க
19 ளுக்குக் கட்டளையிட்டார்கள். பேதுருவும்
யோவானும் அவர்களுக்குப் பிரதியுத்தரமாக:
[5]தேவனுக்குச் செவிகொடுக்கிறதைப்பார்க்கி
லும் உங்களுக்குச் செவிகொடுக்கிறது தேவ
னுக்கு முன்பாக நியாயமாயிருக்குமோ என்று
20 நீங்களே நிதானித்துப்பாருங்கள். நாங்கள் கண்
டவைகளையும் கேட்டவைகளையும் [6]பேசாமலி
21 ருக்கக்கூடாதே என்றார்கள். நடந்த சங்கதி
களைக்குறித்து எல்லாரும் தேவனை மகிமைப்
படுத்தினபடியால், [7]ஜனங்களுக்குப் பயந்து
அவர்களை தண்டிக்க வகையொன்றுங் காணா
மல், அவர்களைப் பயமுறுத்தி விட்டுவிட்டார்
22 கள். அற்புதமாய்ச் சொஸ்தமாக்கப்பட்ட
மனுஷன் நாற்பது வயதுக்கு மேற்பட்டவனா
யிருந்தான்.
23 அவர்கள் விடுதலையாக்கப்பட்ட பின்பு,
[8]தங்களைச் சேர்ந்தவர்களிடத்தில் வந்து, பிர
தான ஆசாரியர்களும் மூப்பர்களும் தங்களுக்
குச் சொன்ன யாவையும் அறிவித்தார்கள்.
24 அவர்கள் அதைக் கேட்டு, ஒருமனப்பட்டு
தேவனை நோக்கிச் சத்தமிட்டு: கர்த்தாவே,
நீர் வானத்தையும் பூமியையும் சமுத்திரத்தை
யும் அவைகளிலுள்ள யாவற்றையும் உண்டா
25 க்கின தேவனாயிருக்கிறீர். புறஜாதிகள் கொ
ந்தளித்து, [9]ஜனங்கள் விருதா காரியங்களைச்
26 சிந்திப்பானேன் என்றும், கர்த்தருக்கு விரோ
தமாகவும் அவருடைய கிறிஸ்துவுக்கு விரோ
தமாகவும் பூமியின் ராஜாக்கள் எழும்பி நின்று,
அதிகாரிகள் ஏகமாய்க் கூட்டங் கூடினார்கள்
என்றும் தேவரீர் உம்முடைய தாசனாகிய தா
வீதின் வாக்கினால் உரைத்தீரே. அந்தப்படி 27
உம்முடைய கரமும் உம்முடைய ஆலோசனை
யும் முன் குறித்தவைகள் யாவையும் செய்யும்
படி, ஏரோதும் [10]பொந்தியுபிலாத்தும், புற 28
ஜாதிகளோடும் இஸ்ரவேல் ஜனங்களோடுங்
கூட, நீர் அபிஷேகம்பண்ணின உம்முடைய
பரிசுத்த பிள்ளையாகிய இயேசுவுக்கு விரோத
மாய், மெய்யாகவே கூட்டங்கூடினார்கள். இப் 29
பொழுதும், கர்த்தாவே, அவர்கள் பயமுறுத்
தல்களை தேவரீர் கவனித்து, உம்முடைய பரி 30
சுத்த பிள்ளையாகிய இயேசுவின் நாமத்தினா
லே [11]அடையாளங்களும் அற்புதங்களும் நடக்
கும்படி செய்து, பிணியாளிகளைக் குணமாக்
கும்படி உம்முடைய கரத்தை நீட்டி, உம்மு
டைய ஊழியக்காரர் உம்முடைய வசனத்தை
[12]முழு தைரியத்தோடும் சொல்லும்படி அவர்
களுக்கு அநுக்கிரகஞ் செய்தருளும் என்றார்
கள். அவர்கள்ஜெபம்பண்ணினபோது,[13]அவர் 31
கள் கூடியிருந்த இடம் அசைந்தது. அவர்களெ
ல்லாரும் பரிசுத்தஆவியினால் நிரப்பப்பட்டு,
[14]தேவவசனத்தைத் தைரியமாய்ச் சொன்னார்
கள்.
விசுவாசிகளாகிய திரளான கூட்டத்தார் 32
[15]ஒரே இருதயமும் ஒரே மனமுமுள்ளவர்க
ளாயிருந்தார்கள். ஒருவனாகிலும் தனக்குள்ள
வைகளில் ஒன்றையும் தன்னுடையதென்று
சொல்லவில்லை; [16]சகலமும் அவர்களுக்குப்
பொதுவாயிருந்தது. கர்த்தராகிய இயேசு 33
வின் உயிர்த்தெழுதலைக்குறித்து அப்போஸ்த
லர்கள் [17]மிகுந்த பலமாய்ச் சாட்சிகொடுத்தார்
கள்; [18]அவர்களெல்லார்மேலும் பூரணகிருபை
உண்டாயிருந்தது. நிலங்களையும் வீடுகளையும் 34
உடையவர்கள் அவைகளை விற்று, விற்கப்
பட்டவைகளின் கிரயத்தைக் கொண்டுவந்து,
அப்போஸ்தலருடைய பாதத்திலே வைத்தார் 35
கள். அவனவனுக்குத் தேவையானதற்குத்
தக்கதாய்ப் பகிர்ந்து கொடுக்கப்பட்டது;
அவர்களில் ஒருவனுக்கும் ஒன்றும் குறைவா
யிருந்ததில்லை.
சீப்புருதீவானும் லேவியனும் அப்போஸ் 36
தலராலே ஆறுதலின் *மகன் என்று அர்த்தங்
கொள்ளும் பர்னபா என்னும் மறுபேர் பெற்
றவனுமாகிய யோசே என்பவன், தனக்கு 37
உண்டாயிருந்த நிலத்தை விற்று, [19]அதின் கிர
யத்தைக் கொண்டுவந்து, அப்போஸ்தலரு
டைய பாதத்திலே வைத்தான்.
அனனியா என்னும் பேருள்ள ஒருவனும், 5
அவனுடைய மனைவியாகிய சப்பீராளும் தங்
கள் காணியாட்சியை விற்றார்கள். தன் 2
மனைவி அறிய அவன் கிரயத்திலே ஒரு பங்
கை வஞ்சித்துவைத்து, [20]ஒரு பங்கைக்கொண்
டுவந்து, அப்போஸ்தலருடைய பாதத்திலே
வைத்தான். பேதுரு அவனை நோக்கி: அன 3
னியாவே, நிலத்தின் கிரயத்தில் ஒரு பங்கை
வஞ்சித்துவைத்து, [21]பரிசுத்த ஆவியினிடத்
தில் பொய்சொல்லும்படி, [22]சாத்தான் உன்

1 மத். 11. 25. 1கொ. 1. 27
2 3. 11. எசா. 48. 25
3 3. 9, 10. யோ. 11. 47
4 5. 40
5 5. 29
6 22. 15. எரே. 20. 9. 1 யோ. 1. 1, 3
7 5. 26. மத். 21. 26
8 2. 44-46: 12. 12
9 சங். 2. 1, 2
10 3. 18. லூ. 23. 1-8. ஞ
11 2. 43: 5. 12
12 13. 31: 14. 3: 28. 31. எபே. 6. 19
13 2. 2, 4: 16. 26
14 29, 30. வச.
15 5. 12. ரோ. 15. 5, 6. 2 கொ. 13. 11. பிலி. 2. 2. 1 பே. 3. 8
16 2. 44
17 1. 8, 22. லூ. 11. 48, 49
18 2. 45, 47. யோ. 1. 16
* போதனை
19 5. 1, 2
20 4. 34, 37
21 9. வச.
22 லூ. 22. 3

4 இருதயத்தை நிரப்பினதென்ன? அதை விற்
குமுன்னே அது உன்னுடையதாயிருக்கவில்
லையோ? அதை விற்றபின்பும் அதின் கிரயம்
உன் வசத்திலிருக்கவில்லையோ? நீ உன் இரு
தயத்திலே இப்படிப்பட்ட எண்ணங்கொண்
டதென்ன? நீ மனுஷரிடத்தில் அல்ல, தேவ
னிடத்தில் பொய் சொன்னாய் என்றான்.
5 அனனியா இந்த வார்த்தைகளைக் கேட்கவே,
[1]விழுந்து ஜீவனை விட்டான். [2]இவைகளைக்
கேள்விப்பட்ட யாவருக்கும் மிகுந்த பயமுண்
6 டாயிற்று. வாலிபர் எழுந்து, [3]அவனைச்
சேலையில் சுற்றி, வெளியே எடுத்துக்கொண்
டுபோய், அடக்கம் பண்ணினார்கள்.
7 ஏறக்குறைய மூன்றுமணி நேரத்துக்குப்
பின்பு, அவனுடைய மனைவி நடந்ததை
8 அறியாமல், உள்ளே வந்தாள். பேதுரு
அவளை நோக்கி: நிலத்தை இவ்வளவுக்குத்
தானா விற்றீர்கள், எனக்குச் சொல் என்றான்.
அவள்: ஆம், இவ்வளவுக்குத்தான் என்றாள்.
9 பேதுரு அவளை நோக்கி: [4]கர்த்தருடைய ஆவி
யைச் சோதிக்கிறதற்கு நீங்கள் ஒருமனப்பட்ட
தென்ன? இதோ, உன் புருஷனை அடக்கம்
பண்ணினவர்களுடைய கால்கள் வாசற்படி
யிலே வந்திருக்கிறது, உன்னையும் வெளியே
10 கொண்டுபோவார்கள் என்றான். உடனே
[5]அவள் அவனுடைய பாதத்தில் விழுந்து ஜீவ
னை விட்டாள். வாலிபர் உள்ளே வந்து, அவள்
மரித்துப்போனதைக் கண்டு, அவளை வெளி
யே எடுத்துக்கொண்டுபோய், அவளுடைய
புருஷனண்டையிலே அடக்கம்பண்ணினார்
11 கள். சபையாரெல்லாருக்கும், இவைகளைக்
கேள்விப்பட்ட மற்ற யாவருக்கும், [6]மிகுந்த
பயமுண்டாயிற்று.
12 அப்போஸ்தலருடைய கைகளினாலே
[7]அநேக அடையாளங்களும் அற்புதங்களும்
ஜனங்களுக்குள்ளே செய்யப்பட்டது. எல்
லாரும் ஒருமனப்பட்டுச் சாலொமோனுடைய
13 மண்டபத்தில் இருந்தார்கள். மற்றவர்களில்
[8]ஒருவரும் அவர்களுடனே சேரத் துணிய
வில்லை. [9]ஆகிலும் ஜனங்கள் அவர்களை மேன்
14 மைப்படுத்தினார்கள். திரளான புருஷர்களும்
ஸ்திரீகளும் விசுவாசமுள்ளவர்களாகிக் கர்த்
தரிடமாக அதிகமதிகமாய்ச் சேர்க்கப்பட்டார்
15 கள். பிணியாளிகளைப் படுக்கைகளின்மேலும்
கட்டில்களின்மேலும் கிடத்தி, [10]பேதுரு நடந்
துபோகையில் அவனுடைய நிழலாகிலும்
அவர்களில் சிலர்மேல் படும்படிக்கு, அவர்
களை வெளியே வீதிகளில் கொண்டுவந்து
16 வைத்தார்கள். சுற்றுப்பட்டணங்களிலுமிரு
ந்து திரளான ஜனங்கள் [11]பிணியாளிகளையும்
அசுத்த ஆவிகளால் வாதிக்கப்பட்டவர்களையும்
எருசலேமுக்குக் கொண்டுவந்தார்கள்; அவர்க
ளெல்லாரும் குணமாக்கப்பட்டார்கள்.
17 அப்பொழுது பிரதான ஆசாரியனும் [12]அவ
னுடனேகூட இருந்த சதுசேய சமயத்தாரனை
வரும் எழும்பி, பொறாமையினால் நிறைந்து,
18 அப்போஸ்தலர்களைப் பிடித்து, [13]பொதுவான
சிறைச்சாலையிலே வைத்தார்கள். கர்த்தரு 19
டைய தூதன் [14]இராத்திரியிலே சிறைச்சாலை
யின் கதவுகளைத் திறந்து, அவர்களை வெளியே
கொண்டுவந்து: நீங்கள் போய், தேவாலயத் 20
திலே நின்று, [15]இந்த ஜீவவார்த்தைகள் எல்
லாவற்றையும் ஜனங்களுக்குச் சொல்லுங்கள்
என்றான். அவர்கள் அதைக் கேட்டு, அதிகா 21
லமே தேவாலயத்தில் பிரவேசித்துப் போத
கம்பண்ணினார்கள். [16]பிரதான ஆசாரியனும்
அவனுடனேகூட இருந்தவர்களும் வந்து,
ஆலோசனைச்சங்கத்தாரையும் இஸ்ரவேல் புத்
திரரின் மூப்பரெல்லாரையும் வரவழைத்து,
அப்போஸ்தலர்களைக் கொண்டுவரும்படி
சிறைச்சாலைக்குச் சேவகரை அனுப்பினார்கள்.
சேவகர் போய், சிறைச்சாலையிலே அவர்க 22
ளைக் காணாமல், திரும்பிவந்து: சிறைச்சாலை 23
மிகுந்த பத்திரமாய்ப் பூட்டப்பட்டிருக்கவும்,
காவற்காரர் வெளியே கதவுகளுக்குமுன் நிற்
கவும் கண்டோம்; திறந்தபொழுதோ உள்ளே
ஒருவரையும் காணோம் என்று அறிவித்தார்
கள். இந்தச் செய்தியை ஆசாரியனும் தே 24
வாலயத்தைக் காக்கிற [17]சேனைத்தலைவனும்
பிரதான ஆசாரியர்களும் கேட்டபொழுது,
இதென்னமாய் முடியுமோ என்று, அவர்க
ளைக் குறித்துக் கலக்கமடைந்தார்கள். அப் 25
பொழுது ஒருவன் வந்து: இதோ, நீங்கள்
காவலில் வைத்த மனுஷர் தேவாலயத்திலே
நின்று ஜனங்களுக்குப் போதகம்பண்ணுகிறா
ர்கள் என்று அவர்களுக்கு அறிவித்தான்.
உடனே சேனைத்தலைவன் சேவகரோடே 26
கூடப்போய், [18]ஜனங்கள் கல்லெறிவார்களெ
ன்று பயந்ததினால், பலவந்தம் பண்ணாமல்
அவர்களை அழைத்துக்கொண்டுவந்தான். அப் 27
படி அவர்களை அழைத்துக்கொண்டு வந்து,
ஆலோசனைச் சங்கத்துக்கு முன்பாக நிறுத்தி
னார்கள். அப்பொழுது பிரதான ஆசாரியன்
அவர்களை நோக்கி: நீங்கள் அந்த நாமத்தைக் 28
குறித்துப் போதகம் பண்ணக்கூடாதென்று
[19]நாங்கள் உங்களுக்கு உறுதியாய்க் கட்டளை
யிடவில்லையா? அப்படியிருந்தும், இதோ, எரு
சலேமை உங்கள் போதகத்தினாலே நிரப்பி,
[20]அந்த மனுஷனுடைய இரத்தப்பழியை எங்
கள்மேல் சுமத்தவேண்டுமென்றிருக்கிறீர்கள்
என்று சொன்னான். அதற்குப் பேதுருவும் 29
மற்ற அப்போஸ்தலரும்: [21]மனுஷருக்குக் கீழ்
ப்படிகிறதைப்பார்க்கிலும் தேவனுக்குக் கீழ்ப்
படிகிறதே அவசியமாயிருக்கிறது. நீங்கள் மர 30
த்திலே தூக்கிக் கொலைசெய்த இயேசுவை
[22]நம்முடைய பிதாக்களின் தேவன் எழுப்பி,
இஸ்ரவேலுக்கு [23]மனந்திரும்புதலையும் பாவ 31
மன்னிப்பையும் அருளுகிறதற்காக, [24]அவரை
அதிபதியாகவும் இரட்சகராகவும் [25]தமது வலது
கரத்தினாலே உயர்த்தினார். இந்தச் சங்கதிக 32
ளைக்குறித்து [26]நாங்கள் அவருக்குச் சாட்சிக
ளாயிருக்கிறோம்; தேவன் தமக்குக் கீழ்ப்படி
கிறவர்களுக்குத் தந்தருளின [27]பரிசுத்தஆவி
யும் சாட்சி என்றார்கள்.

1 10, 11. வச.
2 சங். 64. 9
3 யோ. 19. 40
4 2 கா. சங். 50. 18. மத். 4. 7
5 5. வச.
6 2. 43: 19. 17
7 4. 30, 32. ரோ. 15. 18. 2 கொ. 12. 12. எபி. 2. 4
8 யோ. 9. 22: 12. 42
9 2. 47: 4. 21
10 19. 12. மத். 9. 21: 14. 36
11 மாற். 16. 17, 18. யோ. 14. 12
12 4. 1, 2, 6
13 12. 5–7: 16. 23–27. லூ. 21. 12
14 12, 7: 16, 26
15 யாத். 24. 3. யோ. 6. 63, 68: 17. 3. 1 யோ. 5. 11
16 4. 5, 6
17 4. 1. லூ. 22. 4
18 மத். 21. 26
19 4. 18
20 2. 23, 36: 3. 15: 7. 52. மத். 23. 35: 27. 25
21 4. 19
22 கலா. 3. 13. 1 பே. 2. 24
23 லூ. 24. 47. எபே. 1. 7. கொலோ. 1. 14
24 ஏசா. 9. 6. மத். 1. 21
25 பிலி. 2. 10
26 லூ. 24. 48. யோ. 15. 26, 27
27 2. 4: 10. 44

33 அதை அவர்கள் கேட்டபொழுது, [1]மூர்க்க
மடைந்து,* அவர்களைக் கொலைசெய்யும்படிக்கு
34 யோசனைபண்ணினார்கள். அப்பொழுது சகல
ஜனங்களாலும் கனம்பெற்ற நியாயசாஸ்திரி
யாகிய [2]கமாலியேல் என்னும் பேர்கொ
ண்ட ஒரு பரிசேயன் ஆலோசனைச் சங்கத்தில்
எழுந்திருந்து, அப்போஸ்தலரைச் சற்றுநே
ரம் வெளியே கொண்டுபோகச்சொல்லி,
35 சங்கத்தாரை நோக்கி: இஸ்ரவேலரே, இந்த
மனுஷருக்கு நீங்கள் செய்யப்போகிறதைக்
36 குறித்து எச்சரிக்கையாயிருங்கள். ஏனென்
றால் இந்நாட்களுக்கு முன்னே †தெயுதாஸ்
என்பவன் எழும்பி, தன்னை ஒரு பெரியவ
னாகப் பாராட்டினான்; ஏறக்குறைய நானூறு
பேர் அவனைச் சேர்ந்தார்கள்; அவன் மடிந்து
போனான்; அவனை நம்பின அனைவரும் சிதறி,
37 அவமாய்ப்போனார்கள். அவனுக்குப் பின்பு,
குடிமதிப்பின் நாட்களிலே, கலிலேயனாகிய
யூதாஸ் என்பவன் எழும்பி, தன்னைப் பின்பற்
றும்படி அநேக ஜனங்களை இழுத்தான்; அவ
னும் அழிந்துபோனான்; அவனை நம்பியிருந்த
38 அனைவரும் சிதறடிக்கப்பட்டார்கள். இப்பொ
ழுது நான் உங்களுக்குச் சொல்லுகிறதென்
னவென்றால், இந்த மனுஷருக்கு ஒன்றுஞ்
செய்யாமல் இவர்களை விட்டுவிடுங்கள். [3]இந்த
யோசனையும் இந்தக் கிரியையும் மனுஷரால்
39 உண்டாயிருந்ததானால் ஒழிந்துபோம்; தேவ
னால் உண்டாயிருந்ததேயானால், [4]அதை ஒழித்
துவிட உங்களால் கூடாது; [5]தேவனோடே
போர்செய்கிறவர்களாய்க் காணப்படாதபடிக்
40 குப் பாருங்கள் என்றான். அப்பொழுது
அவர்கள் அவனுடைய யோசனைக்கு உடன்
பட்டு, அப்போஸ்தலரை வரவழைத்து, [6]அடி
த்து, [7]இயேசுவின் நாமத்தைக்குறித்துப் பே
சக்கூடாதென்று கட்டளையிட்டு, அவர்களை
41 விடுதலையாக்கினார்கள். அவருடைய நாமத்
துக்காகத் தாங்கள் அவமானமடைவதற்குப்
பாத்திரராக எண்ணப்பட்டபடியினால், [8]சந்
தோஷமாய் ஆலோசனைச் சங்கத்தைவிட்டுப்
42 புறப்பட்டுப் போய், தினந்தோறும் தேவா
லயத்திலேயும் வீடுகளிலேயும் இடைவிடாமல்
உபதேசம்பண்ணி, [9]இயேசுவே கிறிஸ்துவெ
ன்று பிரசங்கித்தார்கள்.

6 அந்நாட்களிலே, சீஷர்கள் பெருகினபோ
து, கிரேக்கரானவர்கள், [10]தங்கள் விதவைகள்
அன்றாட விசாரணையில் திட்டமாய் விசாரிக்
கப்படவில்லையென்று, எபிரெயருக்கு விரோ
2 தமாய் முறுமுறுத்தார்கள். அப்பொழுது பன்
னிருவரும் சீஷர் கூட்டத்தை வரவழைத்து:
[11]நாங்கள் தேவவசனத்தைப் போதியாமல், பந்
3 திவிசாரணை செய்வது தகுதியல்ல. ஆதலால்
சகோதரரே, பரிசுத்த ஆவியும் ஞானமும்
நிறைந்து, [12]நற்சாட்சி பெற்றிருக்கிற ஏழு
பேரை உங்களில் தெரிந்துகொள்ளுங்கள்;
அவர்களை இந்த வேலைக்காக ஏற்படுத்துவோம்.
4 நாங்களோ ஜெபம்பண்ணுவதிலும் தேவவச
னத்தைப் போதிக்கிற ஊழியத்திலும் [13]இடை
விடாமல் தரித்திருப்போம் என்றார்கள். இந்த 5
யோசனை சபையாரெல்லாருக்கும் பிரியமா
யிருந்தது. [14]அப்பொழுது விசுவாசமும் பரி
சுத்தஆவியும் நிறைந்தவனாகிய ஸ்தேவானை
யும், [15]பிலிப்பையும், பிரொகோரையும், நிக்
கானோரையும், தீமோனையும், பர்மேனாவை
யும், யூதமார்க்கத்தமைந்தவனான அந்தியோகி
யா பட்டணத்தானாகிய [16]நிக்கொலாவையும்
தெரிந்துகொண்டு, அவர்களை அப்போஸ்த 6
லருக்கு முன்பாக நிறுத்தினார்கள். இவர்கள்
ஜெபம்பண்ணி, [17]அவர்கள்மேல் கைகளை வை
த்தார்கள்.

தேவவசனம் [18]விருத்தியடைந்தது; சீஷரு 7
டைய தொகை எருசலேமில் மிகவும் பெரு
கிற்று; [19]ஆசாரியர்களில் அநேகரும் விசுவா
சத்துக்குக் கீழ்ப்படிந்தார்கள்.

ஸ்தேவான் விசுவாசத்தினாலும் வல்லமையி 8
னாலும் நிறைந்தவனாய் ஜனங்களுக்குள்ளே பெ
ரிய அற்புதங்களையும் அடையாளங்களையும்
செய்தான். அப்பொழுது லிபர்த்தீனர் என் 9
னப்பட்டவர்களின் ஆலயத்தைச் சேர்ந்தவர்
களிலும், சிரேனேபட்டணத்தாரிலும், அலெக்
சந்திரியா பட்டணத்தாரிலும், சிலிசியா நாட்
டாரிலும், ஆசியாதேசத்தாரிலும் சிலர் எழு
ம்பி, ஸ்தேவானுடனே தர்க்கம்பண்ணினார்
கள். அவன் பேசின ஞானத்தையும் ஆவியை 10
யும் [20]எதிர்த்துநிற்க அவர்களால் கூடாமற்போ
யிற்று. அப்பொழுது அவர்கள்: [21]மோசேக் 11
கும் தேவனுக்கும் விரோதமாக இவன் தூஷ
ண வார்த்தைகளைப்பேசக்கேட்டோம் என்று
சொல்லும்படியாக மனுஷரை ஏற்படுத்தி;
ஜனங்களையும் மூப்பரையும் வேதபாரகரையும் 12
எழுப்பிவிட்டு; அவன்மேல் பாய்ந்து, அவ
னைப் பிடித்து, ஆலோசனைச் சங்கத்தாருக்கு
முன்பாக இழுத்துக்கொண்டுபோய்; பொய்ச் 13
சாட்சிகளையும் நிறுத்தினார்கள். இவர்கள்:
இந்த மனுஷன் இந்தப் பரிசுத்த ஸ்தலத்துக்
கும் வேதப்பிரமாணத்துக்கும் விரோதமாகத்
தூஷணவார்த்தைகளை ஓயாமற் பேசுகிறான்;
எப்படியென்றால், [22]நசரேயனாகிய அந்த இ 14
யேசு இந்த ஸ்தலத்தை அழித்துப்போட்டு,
மோசே நமக்குக் கொடுத்த முறைமைகளை
மாற்றுவானென்று இவன் சொல்லக்கேட்
டோம் என்றார்கள். ஆலோசனைச் சங்கத்தில் 15
உட்கார்ந்திருந்த அனைவரும் அவன்மேல் கண்
ணோக்கமாயிருந்து, [23]அவன் முகம் தேவதூதன்
முகம்போலிருக்கக் கண்டார்கள்.

பிரதான ஆசாரியன் அவனை நோக்கி: காரி 7
யம் இப்படியா இருக்கிறது என்று கேட்டான்.
அதற்கு அவன்: சகோதரரே, பிதாக்களே, 2
கேளுங்கள். [24]நம்முடைய பிதாவாகிய ஆபிர
காம் காரானூரிலே குடியிருக்கிறதற்கு முன்
னமே மெசொப்பொத்தாமியா நாட்டிலே
இருக்கும்போது மகிமையின் தேவன் அவ
னுக்குத் தரிசனமாகி: நீ உன் தேசத்தையும் 3
உன் இனத்தையும் விட்டுப் புறப்பட்டு, நான்
உனக்குக் காண்பிக்கும் தேசத்துக்கு வா என்

[1] 2. 37: 7. 54
* அது அவர்கள் இருதயத்தை அறுத்தபடியினால்
[2] 22. 3
† கிறிஸ்து பிறந்த மூன்று வருஷத்துக்கு முன்
[3] நீதி. 21. 30. ஏசா. 8. 10. மத். 15. 13
[4] யோபு 34. 29. 1 கொ. 1. 25
[5] 9. 5: 23. 9
[6] மத். 10. 17
[7] 4. 18
[8] மத். 5. 12. 2 கொ. 12. 10. பிலி. 1. 29. யாக். 1. 23. 1 பே. 4. 13-16
[9] 2. 46: 4. 20, 29, 30. 2 தீமோ. 4. 2
[10] 4. 35: 9. 29: 11. 20
[11] யாத். 18. 17-26
[12] 16. 2. உபா. 1. 13. 1 தீமோ. 3. 7, 8, 10
[13] 2. 42. 1 தீமோ. 1. 15
[14] 11. 24
[15] 8. 5, 26: 21. 8
[16] வெளி. 2. 6, 15
[17] 8. 17. 1 தீமோ. 4. 14: 5. 22. 2 தீமோ. 1. 6
[18] 12. 24: 19. 20. ஏசா. 55. 11. கொலோ. 1. 6
[19] சங். 132. 9, 16. யோ. 12. 42
[20] 5. 39. லூ. 21. 15
[21] 1 இரா. 21. 10, 13. மத். 26. 59, 60
[22] 25. 8
[23] யாத். 34. 30, 35
[24] 22. 1

4 ரூர். அப்பொழுது [1]அவன் கல்தேயர்தேசத்
தை விட்டுப் புறப்பட்டு, காரானூரிலே வாசம்
பண்ணினான். அவனுடைய தகப்பன் மரித்த
பின்பு, அவ்விடத்தை விட்டு நீங்கள் இப்பொ
ழுது குடியிருக்கிற இத்தேசத்திற்கு அவனை
அழைத்துக்கொண்டுவந்து குடியிருக்கும்படி
5 செய்தார். இதிலே ஒரு அடி நிலத்தையாகி
லும் அவனுடைய கையாட்சிக்குக் கொடாம
லிருக்கையில், அவனுக்குப் பிள்ளையில்லாதி
ருக்கும்போது: [2]உனக்கும் உனக்குப் பின்
வரும் உன் சந்ததிக்கும் இதைச் சுதந்தரமாகத்
தருவேன் என்று அவனுக்கு வாக்குத்தத்தம்
6 பண்ணினார். அந்தப்படி தேவன் அவனை
நோக்கி: உன் சந்ததியார் அந்நியதேசத்தில்
சஞ்சரிப்பார்கள்; அத்தேசத்தார் அவர்களை
அடிமைகளாக்கி, [3]நானூறு வருஷம் துன்பப்
7 படுத்துவார்கள். அவர்களை அடிமைப்படுத்
தும் ஜனத்தையோ நான் ஆக்கினைக்குட்படுத்
துவேன். [4]அதற்குப்பின்பு அவர்கள் புறப்
பட்டுவந்து இவ்விடத்திலே எனக்கு ஆராதனை
8 செய்வார்கள் என்றார். மேலும் விருத்தசே
தன உடன்படிக்கையையும் அவனுக்கு ஏற்
படுத்தினார். [5]அந்தப்படியே அவன் ஈசாக்கைப்
பெற்றபோது, எட்டாம் நாளிலே அவனை
விருத்தசேதனம்பண்ணினான். ஈசாக்கு யாக்
கோபையும், யாக்கோபு பன்னிரண்டு கோத்
9 திரப்பிதாக்களையும்பெற்றார்கள். அந்தக் கோ
த்திரப்பிதாக்கள் பொறாமைகொண்டு யோ
சேப்பை [6]எகிப்துக்குக் கொண்டுபோகும்படி
10 யாக விற்றுப்போட்டார்கள். தேவனோ அவ
னுடனேகூட இருந்து, எல்லா உபத்திரவங்க
ளினின்றும் அவனை விடுவித்து, எகிப்தின்
ராஜாவாகிய பார்வோன் சமுகத்திலே அவனுக்
குக் கிருபையையும் ஞானத்தையும் அருளி
னார்; [7]அந்த ராஜா அவனை எகிப்துதேசத்திற்
கும் தன் வீட்டனைத்திற்கும் அதிகாரியாக ஏற்
11 படுத்தினான். பின்பு எகிப்து கானான் என்
னும் தேசங்களிலெங்கும் பஞ்சமும் மிகுந்த
வருத்தமும் உண்டாகி, [8]நம்முடைய பிதாக்க
12 ளுக்கு ஆகாரம் கிடையாமற் போயிற்று. அப்
பொழுது [9]எகிப்திலே தானியம் உண்டெ
ன்று யாக்கோபு கேள்விப்பட்டு, நம்முடைய
13 பிதாக்களை முதலாந்தரம் அனுப்பினான். இர
ண்டாந்தரம் யோசேப்பு [10]தன்னுடைய சகோ
தரருக்குத் தன்னைத் தெரியப்படுத்தினான். யோ
சேப்புடைய வம்சமும் பார்வோனுக்குத் தெ
14 ரியவந்தது. பின்பு யோசேப்பு, தன்னுடைய
தகப்பன் யாக்கோபும் தன்னுடைய இனத்தார்
யாவருமாகிய, [11]எழுபத்தைந்துபேரை அழை
15 க்க அனுப்பினான். அந்தப்படி யாக்கோபு
எகிப்துக்குப் போனான். அவனும் நம்முடைய
16 பிதாக்களும் மரித்து, அங்கேயிருந்து சீகே
முக்குக்கொண்டுவரப்பட்டு, [12]ஆபிரகாம் சீகே
மின் தகப்பனாகிய எமோருடைய சந்ததியாரி
டத்தில் ரொக்கக்கிரயத்துக்கு வாங்கியிருந்த
17 கல்லறையில் வைக்கப்பட்டார்கள். ஆபிரகா
முக்கு தேவன் ஆணையிட்டு அருளின வாக்
குத்தத்தம் நிறைவேறுங்காலம் சமீபித்தபோது,
யோசேப்பை அறியாத வேறொரு ராஜா தோ 18
ன்றின காலமளவும், [13]ஜனங்கள் எகிப்திலே
பலுகிப் பெருகினார்கள். அவன் நம்முடைய 19
ஜனங்களை வஞ்சனையாய் நடப்பித்து, [14]நம்மு
டைய பிதாக்களின் குழந்தைகள் உயிரோடி
ராதபடிக்கு அவர்கள் அவைகளை வெளியே
போட்டுவிடும்படி செய்து, அவர்களை உபத்
திரவப்படுத்தினான். அக்காலத்திலே மோசே 20
பிறந்து, [15]*திவ்விய சவுந்தரியமுள்ளவனாயிருந்
து, மூன்றுமாதமளவும் தன் தகப்பன்வீட்டி
லே வளர்க்கப்பட்டான். அவன் வெளியே 21
போட்டு விடப்பட்டபோது, [16]பார்வோனு
டைய குமாரத்தி அவனை எடுத்துத் தனக்குப்
பிள்ளையாக வளர்த்தாள். மோசே எகிப்தி 22
யருடைய சகல சாஸ்திரங்களிலும் கற்பிக்
கப்பட்டு, [17]வாக்கிலும் செய்கையிலும் வல்
லவனானான். அவனுக்கு நாற்பது வயதான 23
போது, [18]இஸ்ரவேல் புத்திரராகிய தன்னு
டைய சகோதரரைக் கண்டு சந்திக்கும்படி
அவனுடைய இருதயத்தில் எண்ணமுண்டா
யிற்று. அப்பொழுது அவர்களில் ஒருவன் 24
அநியாயமாய் நடத்தப்படுகிறதை அவன் கண்
டு, அவனுக்குத் துணைநின்று, எகிப்தியனை
வெட்டி, துன்பப்பட்டவனுக்கு நியாயஞ்
செய்தான். தன்னுடைய கையினாலே தே 25
வன் தங்களுக்கு ரட்சிப்பைத் தருவாரென்ப
தைத் தன்னுடைய சகோதரர் அறிந்துகொள்
வார்களென்று அவன் நினைத்தான்; அவர்
களோ அதை அறியவில்லை. மறுநாளிலே 26
சண்டைபண்ணிக்கொண்டிருக்கிற இரண்டு
பேருக்கு அவன் எதிர்ப்பட்டு: மனுஷரே, நீங்
கள் சகோதரராயிருக்கிறீர்கள்; ஒருவருக்கொரு
வர் அநியாயஞ்செய்கிறதென்ன என்று, அவர்
களைச் சமாதானப்படுத்தும்படி பேசினான்.
பிறனுக்கு அநியாயஞ்செய்தவன் அவனைப் 27
பிடித்துத் தள்ளி: [19]எங்கள்மேல் அதிகாரியாக
வும் நியாயாதிபதியாகவும் உன்னை ஏற்படுத்தி
னவன் யார்? நேற்று நீ அந்த எகிப்தியனைக் 28
கொன்றதுபோல என்னையும் கொன்றுபோட
மனதாயிருக்கிறாயோ என்றான். இந்த வார்த் 29
தையினிமித்தம் மோசே ஓடிப்போய், மீதி
யான் தேசத்திலே சஞ்சரித்துக்கொண்டிருந்
தான்; அங்கே யிருக்கும்போது அவனுக்கு
இரண்டு குமாரர்கள் பிறந்தார்கள்.

நாற்பது வருஷம் சென்றபின்பு, [20]சீனாய் 30
மலையின் வனாந்தரத்திலே கர்த்தருடைய தூத
னானவர் முட்செடி எரிகிற அக்கினி ஜுவா
லையிலே அவனுக்குத் தரிசனமானார். மோசே 31
அந்தத் தரிசனத்தைக் கண்டு, அதிசயப்பட்டு,
அதை உற்றுப்பார்க்கும்படி சமீபித்துவரு
கையில்: நான் ஆபிரகாமின் தேவனும் ஈசாக் 32
கின் தேவனும் யாக்கோபின் தேவனுமாகிய
உன் பிதாக்களுடைய தேவனாயிருக்கிறேன்
என்று [21]கர்த்தர் திருவுளம்பற்றின சத்தம் அவ
னுக்கு உண்டாயிற்று. அப்பொழுது மோசே
நடுக்கமடைந்து, உற்றுப்பார்க்கத் துணியாம

[1] ஆதி. 12. 5
[2] ஆதி. 13. 15
[3] யாத். 12. 40, 41. கலா. 3. 17
[4] யாத். 3. 12
[5] ஆதி. 17. 9–11: 21. 1–4: 25. 26: 29. 32. மு.
[6] ஆதி. 37. 28: 39. 2, 21. சங். 105. 17
[7] ஆதி. 41. 40
[8] ஆதி. 41. 54
[9] ஆதி. 42. 1, 2
[10] ஆதி. 45. 4, 16
[11] ஆதி. 46. 27. உபா. 10. 22
[12] யோசு. 24. 32
[13] யாத். 1. 7–9
[14] யாத். 1. 22
[15] யாத். 2. 2. எபி. 11. 23
* மிகுந்த அழகுள்ளவனாயிருந்து
[16] யாத். 2. 10
[17] லூ. 24. 19
[18] யாத். 2. 11. மு.
[19] 4. 7. லூ. 12. 14
[20] யாத். 3. 2. மு.
[21] மத். 22. 32. எபி. 11. 16

33 விருந்தான். பின்னும் கர்த்தர் அவனை நோக்கி:
[1]உன் பாதங்களிலிருக்கிற பாதரட்சைகளைக்
கழற்றிப்போடு; நீ நிற்கிற இடம் பரிசுத்த
34 பூமியாயிருக்கிறது. எகிப்திலிருக்கிற என்
ஜனத்தின் உபத்திரவத்தை நான் பார்க்கவே
பார்த்து, அவர்கள் பெருமூச்சைக் கேட்டு,
அவர்களை விடுவிக்கும்படி இறங்கினேன்;
ஆகையால், நீ வா, நான் உன்னை எகிப்திற்கு
35 அனுப்புவேன் என்றார். உன்னை அதிகாரி
யாகவும் நியாயாதிபதியாகவும் ஏற்படுத்தின
வன் யார் என்று சொல்லி அவர்கள் மறுதலித்
திருந்த இந்த மோசேயைத்தானே தேவன்,
முட்செடியில் அவனுக்குத் தரிசனமான தூத
னாலே, தலைவனாகவும் மீட்பனாகவும் அனுப்பி
36 னார். இவனே அவர்களை அங்கேயிருந்து
அழைத்துக்கொண்டுவந்து, எகிப்துதேசத்தி
லேயும் சிவந்த சமுத்திரத்திலேயும், நாற்பது
வருஷகாலமாய் வனாந்தரத்திலேயும், [2]அற்பு
தங்களையும் அடையாளங்களையும் செய்தான்.
37 இஸ்ரவேல் புத்திரரை நோக்கி: [3]உங்கள் தேவ
னாகிய கர்த்தர் உங்கள் சகோதரரிலிருந்து என்
னைப்போல ஒரு தீர்க்கதரிசியை உங்களுக்காக
எழும்பப்பண்ணுவார், அவருக்குச் செவி
கொடுப்பீர்களாக என்று சொன்னவன் இந்த
38 மோசேயே. சீனாய்மலையில் தன்னுடனே
பேசின [4]தூதனோடும் நம்முடைய பிதாக்க
ளோடுங்கூட வனாந்தரத்திலே சபைக்குள்ளி
ருந்தவனும், [5]நமக்குக் கொடுக்கும்படி ஜீவ
39 வாக்கியங்களைப் பெற்றவனும் இவனே. இவ
னுக்கு நம்முடைய பிதாக்கள் கீழ்ப்படிய மன
தாயிராமல், இவனைத் தள்ளிவிட்டு, தங்கள்
இருதயங்களில் எகிப்துக்குத் திரும்பி,
40 ஆரோனை நோக்கி: [6]எகிப்து தேசத்திலிருந்து
எங்களை அழைத்துக்கொண்டு வந்த அந்த
மோசேக்கு என்ன சம்பவித்ததோ அறியோம்;
[7]ஆதலால் எங்களுக்கு முன்செல்லும் தெய்
வங்களை எங்களுக்கு உண்டுபண்ணும் என்று
41 சொல்லி; அந்நாட்களில் ஒரு கன்றுக்குட்
டியை உண்டுபண்ணி, [8]அந்த விக்கிரகத்திற்
குப் பலியிட்டு, தங்கள் கையின் கிரியைக
42 ளில் களிகூர்ந்தார்கள். அப்பொழுது தேவன்
அவர்களை விட்டு விலகி, [9]வானசேனைக்கு
ஆராதனைசெய்ய அவர்களை ஒப்புக்கொடுத்
தார். அதைக்குறித்து: இஸ்ரவேல் வம்சத்
தாரே, நீங்கள் வனாந்தரத்திலிருந்த நாற்பது
வருஷம்வரையில் காணிக்கைகளையும் பலி
களையும் எனக்குச் செலுத்தினீர்களோ என்
43 றும், பணிந்துகொள்ளும்படி நீங்கள் உண்
டாக்கின சொரூபங்களாகிய மோளோகினு
டைய கூடாரத்தையும், உங்கள் தேவனா
கிய ரெம்பான் என்னும் நட்சத்திர சொரூ
பத்தையும் சுமந்தீர்களே; ஆகையால் உங்க
ளைப் பாபிலோனுக்கு அப்புறத்திலே குடி
போகப்பண்ணுவேன் என்றும், தீர்க்கதரிசி
44 களின் புஸ்தகத்தில் எழுதியிருக்கிறதே. மே
லும் நீ பார்த்தமாதிரியின்படியே [10]சாட்சியின்
கூடாரத்தை உண்டுபண்ணுவாயாக என்று
மோசேயுடனே பேசினவர் கட்டளையிட்ட
பிரகாரமாக, அந்தக் கூடாரம் வனாந்தரத்திலே
நம்முடைய பிதாக்களோடு இருந்தது. மே 45
லும், யோசுவாவுடனேகூட நம்முடைய பிதாக்
கள் அதைப் பெற்றுக்கொண்டு, [11]தேவன்
அவர்களுக்கு முன்பாகத் துரத்திவிட்ட புற
ஜாதிகளுடைய தேசத்தை அவர்கள் கட்டிக்
கொள்ளுகையில், அதை அந்த தேசத்தில்
கொண்டுவந்து, தாவீதின் நாள்வரைக்கும்
வைத்திருந்தார்கள். இவன் தேவனிடத்தில் 46
தயவுபெற்றபடியினால், [12]யாக்கோபின் தேவ
னுக்கு ஒரு வாசஸ்தலத்தைத் தான் கட்ட
வேண்டுமென்று விண்ணப்பம்பண்ணினான்.
சாலொமோனோ [13]அவருக்கு ஆலயத்தைக் 47
கட்டினான். ஆகிலும் உன்னதமானவர் கைக 48
ளினால் செய்யப்பட்ட [14]ஆலயங்களில் வாசமா
யிரார். வானம் எனக்குச் சிங்காசனமும் [15]பூமி 49
எனக்குப் பாதபடியுமாயிருக்கிறது; எனக்காக
நீங்கள் எப்படிப்பட்ட வீட்டைக் கட்டுவீர்
கள்; நான் தங்கியிருக்கத்தக்க ஸ்தலம் எது;
இவைகள் எல்லாவற்றையும் என்னுடைய 50
கரம் உண்டாக்கவில்லையா என்று கர்த்தர்
உரைக்கிறார் என்று தீர்க்கதரிசி சொல்லி
யிருக்கிறானே.

வணங்காக் கழுத்துள்ளவர்களே, [16]இரு 51
தயத்திலும் செவிகளிலும் விருத்தசேதனம்
பெறாதவர்களே, உங்கள் பிதாக்களைப்போல
நீங்களும் பரிசுத்த ஆவிக்கு எப்பொழுதும்
எதிர்த்து நிற்கிறீர்கள். தீர்க்கதரிசிகளில் 52
[17]யாரை உங்கள் பிதாக்கள் துன்பப்படுத்தாம
லிருந்தார்கள்? [18]நீதிபரருடைய வருகையை
முன்னறிவித்தவர்களையும் அவர்கள் கொலை
செய்தார்கள். இப்பொழுது நீங்கள் அவருக்
குத் துரோகிகளும் அவரைக் கொலைசெய்த
பாதகருமாயிருக்கிறீர்கள். தேவ தூதரைக் 53
கொண்டு [19]நீங்கள் நியாயப்பிரமாணத்தைப்
பெற்றிருந்தும், அதைக் கைக்கொள்ளாமற்
போனீர்கள் என்றான்.

இவைகளை அவர்கள் கேட்டபொழுது, 54
[20]மூர்க்கமடைந்து, அவனைப்பார்த்துப் பல்
லைக் கடித்தார்கள். அவன் பரிசுத்தஆவியி 55
னாலே நிறைந்தவனாய், [21]வானத்தை அண்
ணாந்துபார்த்து, தேவனுடைய மகிமையை
யும், தேவனுடைய வலதுபாரிசத்தில் இயேசு
வானவர் நிற்கிறதையும் கண்டு: அதோ வானங் 56
கள் திறந்திருக்கிறதையும், [22]மனுஷகுமாரன்
தேவனுடைய வலதுபாரிசத்தில் நிற்கிறதை
யும் காண்கிறேன் என்றான். அப்பொழுது 57
அவர்கள் உரத்தசத்தமாய்க் கூக்குரலிட்டுத்
தங்கள் காதுகளை அடைத்துக்கொண்டு, ஒரு
மனப்பட்டு அவன்மேல் பாய்ந்து, அவனை 58
நகரத்துக்குப் புறம்பே தள்ளி, [23]அவனைக் கல்
லெறிந்தார்கள். சாட்சிக்காரர் தங்கள் வஸ்
திரங்களைக் கழற்றி, [24]சவுல் என்னப்பட்ட
ஒரு வாலிபனுடைய பாதத்தினருகே வைத்
தார்கள். அப்பொழுது: கர்த்தராகிய இயே 59
சுவே, [25]என் ஆவியை ஏற்றுக்கொள்ளும் என்று

[1] யோசு. 5. 15. பிர. 5. 1
[2] யாத். 7–11, 14. அதி
[3] 3. 22. உபா. 18. 15, 18. மத். 17. 5
[4] யாத். 19. 3, 17. ஏசா. 63. 9. கலா. 3. 19. எபி. 2. 2
[5] உபா. 5. 27, 31. யோ. 1. 17. ரோ. 3. 2
[6] யாத். 32. 1
[7] யாத். 32. 1
[8] உபா. 9. 16. சங். 106. 19, 20
[9] உபா. 4. 19. 2 இரா. 17. 16. சங். 81. 12. எரே. 19. 13. ஆமோ. 5. 25, 26. ரோ. 1. 24. 2 தெச. 2. 11
[10] யாத். 25. 40; 26. 30. எபி. 8. 5
[11] 13. 19. நெகே. 9. 24. சங். 44. 2; 78. 55
[12] 1 நாளா. 22. 7
[13] 1 இரா. 6. 1. ௸ 8. 20
[14] 17. 24. 1 இரா. 8. 27
[15] ஏசா. 66. 1, 2. மத். 5. 34, 35; 23. 22
[16] யாத். 32. 9. லேவி. 26. 41. ஏசா. 48. 4. ரோ. 2. 28, 29
[17] 2 நாளா. 36. 16. மத். 21. 35. 1 தெச. 2. 15
[18] 3. 14
[19] கலா. 3. 19. எபி. 2. 2
[20] 5. 33
[21] 6. 5
[22] 10. 11. எபே. 1. 1. தானி. 7. 13. மத். 3. 16
[23] லூ. 4. 29. எபி. 13. 12, 13
[24] 6. 13; 8. 1; 22. 20
[25] சங். 31. 5. லூ. 23. 46

ஸ்தேவான் தொழுதுகொள்ளுகையில், அவ
60 னைக் கல்லெறிந்தார்கள். அவனோ, முழங்காற்
படியிட்டு: [1]ஆண்டவரே, இவர்கள்மேல் இந்
தப் பாவத்தைச் சுமத்தாதிரும் என்று மிகுந்த
சத்தமிட்டுச் சொன்னான். இப்படிச் சொல்
8 லி, நித்திரையடைந்தான். அவனைக் கொலை
செய்கிறதற்குச் [2]சவுலும் சம்மதித்திருந்தான்.
அக்காலத்திலே எருசலேமிலுள்ள சபைக்கு
மிகுந்த துன்பம் உண்டாயிற்று. அப்போஸ்
தலர் தவிர, [3]மற்ற யாவரும் யூதேயா சமாரியா
2 தேசங்களில் சிதறப்பட்டுப்போனார்கள். தேவ
பக்தியுள்ள மனுஷர் ஸ்தேவானை எடுத்து
அடக்கம்பண்ணி, அவனுக்காக மிகவும் துக்க
3 ங்கொண்டாடினார்கள். சவுல் வீடுகள்தோறும்
நுழைந்து, [4]புருஷரையும் ஸ்திரீகளையும் இழு
த்துக்கொண்டுபோய், காவலில் போடுவித்து,
சபையைப் பாழாக்கிக்கொண்டிருந்தான்.
4 சிதறிப்போனவர்கள் எங்குந்திரிந்து, [5]சுவி
5 சேஷ வசனத்தைப் பிரசங்கித்தார்கள். அப்
பொழுது பிலிப்பென்பவன் [6]சமாரியாவிலு
ள்ள ஒரு பட்டணத்திற்குப் போய், அங்குள்
ளவர்களுக்குக் கிறிஸ்துவைக் குறித்துப் பிர
6 சங்கித்தான். பிலிப்பு செய்த அதிசயங்களை
ஜனங்கள் கேள்விப்பட்டு கண்டு, [7]அவனால்
சொல்லப்பட்டவைகளை ஒருமனப்பட்டுக் கவ
7 னித்தார்கள். அநேகரிலிருந்த அசுத்த ஆவி
கள் மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டு அவர்
களை விட்டுப் புறப்பட்டது. அநேகந் திமிர்
வாதக்காரரும் [8]சப்பாணிகளும் குணமாக்
8 கப்பட்டார்கள். அந்தப் பட்டணத்திலே
மிகுந்த சந்தோஷம் உண்டாயிற்று.
9 சீமோன் என்று பேர்கொண்ட [9]ஒரு மனு
ஷன் அந்தப் பட்டணத்திலே மாயவித்தைக்
காரனாயிருந்து, [10]தன்னை ஒரு *பெரியவனெ
ன்று சொல்லி, சமாரியா நாட்டு ஜனங்களைப்
10 பிரமிக்கப்பண்ணிக்கொண்டிருந்தான். தேவ
னுடைய பெரிதான சக்தி இவன்தான் என்று
எண்ணி, [11]சிறியோர் பெரியோர் யாவரும்
11 அவனுக்குச் செவிகொடுத்து வந்தார்கள். அவ
ன் அநேக காலமாய்த் தன்னுடைய [12]மாயவித்
தைகளினாலே அவர்களைப் பிரமிக்கப்பண்ணி
12 னதினால் அவனை மதித்துவந்தார்கள். தேவ
னுடைய ராஜ்யத்துக்கும் இயேசுகிறிஸ்து
வினுடைய நாமத்துக்கும் ஏற்றவைகளைக்கு
றித்து, பிலிப்பு பிரசங்கித்ததை அவர்கள்
விசுவாசித்தபோது, [13]புருஷரும் ஸ்திரீகளும்
13 ஞானஸ்நானம் பெற்றார்கள். அப்பொழுது
சீமோனும் விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்
று, பிலிப்பைப் பற்றிக்கொண்டு, அவனால்
நடந்த அடையாளங்களையும் பெரிய அற்புதங்
களையும் கண்டு பிரமித்தான்.
14 சமாரியர் தேவவசனத்தை ஏற்றுக்கொண்
டதை எருசலேமிலுள்ள அப்போஸ்தலர்கள்
கேள்விப்பட்டு, பேதுருவையும் யோவானை
யும் அவர்களிடத்திற்கு அனுப்பினார்கள்.
15 இவர்கள் வந்தபொழுது அவர்களில் ஒருவ
னும் பரிசுத்தஆவியைப் பெறாமல் [14]கர்த்த
ராகிய இயேசுவின் நாமத்தினாலே ஞானஸ்
நானத்தைமாத்திரம் பெற்றிருந்தவர்களாகக்
கண்டு, அவர்கள் பரிசுத்தஆவியைப் பெற் 16
றுக்கொள்ளும்படி [15]அவர்களுக்காக ஜெபம்
பண்ணி, அவர்கள்மேல் கைகளை வைத்தார் 17
கள், [16]அப்பொழுது அவர்கள் பரிசுத்தஆவி
யைப் பெற்றார்கள். அப்போஸ்தலர் தங்கள் 18
கைகளை அவர்கள்மேல் வைத்ததினால் பரி
சுத்தஆவி தந்தருளப்படுகிறதைச் சீமோன்
கண்டபோது, [17]அவர்களிடத்தில் பணத்தைக்
கொண்டுவந்து: நான் எவன்மேல் என் கை 19
களை வைக்கிறேனோ அவன் பரிசுத்தஆவி
யைப் பெறத்தக்கதாக எனக்கும் இந்த †அதி
காரத்தைக் கொடுக்கவேண்டும் என்றான். பே 20
துரு அவனை நோக்கி: [18]தேவனுடைய ‡வரத்
தைப் பணத்தினாலே சம்பாதித்துக் கொள்ள
லாமென்று நீ நினைத்தபடியால் உன் பணம்
உன்னோடேகூட நாசமாய்ப் போகக்கடவது.
உன் இருதயம் தேவனுக்கு முன்பாகச் செம் 21
மையாயிராதபடியால், [19]இந்த விஷயத்திலே
உனக்குப் பங்குமில்லை, பாகமுமில்லை. ஆகை 22
யால் நீ உன் துர்க்குணத்தைவிட்டு மனந்தி
ரும்பி, §தேவனை நோக்கி வேண்டிக்கொள்;
[20]ஒருவேளை உன் இருதயத்தின் எண்ணம்
உனக்கு மன்னிக்கப்படலாம். நீ கசப்பான 23
பிச்சிலும் [21]பாவக்கட்டிலும் அகப்பட்டிருக்கி
றதாகக் காண்கிறேன் என்றான். அதற்குச் 24
சீமோன்: நீங்கள் சொன்ன காரியங்களில் ஒன்
றும் எனக்கு நேரிடாதபடிக்கு, [22]எனக்காகக்
கர்த்தரை வேண்டிக்கொள்ளுங்கள் என்றான்.
இவ்விதமாய் அவர்கள் கர்த்தருடைய வச 25
னத்தைச் சாட்சியாய் அறிவித்துச் சொன்ன
பின்பு, சமாரியருடைய அநேக கிராமங்க
ளில் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, எருசலே
முக்குத் திரும்பி வந்தார்கள்.
பின்பு கர்த்தருடைய தூதன் பிலிப்பை 26
நோக்கி: நீ எழுந்து, தெற்குமுகமாய் எருச
லேமிலிருந்து [23]காசாபட்டணத்துக்குப் போ
கிற வனாந்தர மார்க்கமாய்ப் போ என்றான்.
அந்தப்படி அவன் எழுந்து போனான். [24]அப் 27
பொழுது எத்தியோப்பியருடைய ராஜஸ்திரீ
யாகிய கந்தாகே என்பவளுக்கு மந்திரியும்
அவளுடைய பொக்கிஷமெல்லாவற்றிற்கும்
தலைவனுமாயிருந்த எத்தியோப்பியனாகிய ஒரு
வன் [25]பணிந்துகொள்ளும்படி எருசலேமு
க்கு வந்திருந்து; ஊருக்குத் திரும்பிப்போகும் 28
போது, தன் இரதத்திலே உட்கார்ந்து, ஏசா
யா தீர்க்கதரிசியின் ஆகமத்தை வாசித்துக்
கொண்டிருந்தான். ஆவியானவர்: [26]நீ போய், 29
அந்த இரதத்துடனே சேர்ந்துகொள் என்று
பிலிப்புடனே சொன்னார். அப்பொழுது பிலி 30
ப்பு ஓடிப்போய்ச் சேர்ந்து, அவன் ஏசாயா
தீர்க்கதரிசியின் ஆகமத்தை வாசிக்கிறதைக்
கேட்டு: [27]நீர் வாசிக்கிறவைகளின் கருத்து உம
க்குத் தெரியுமா என்றான். அதற்கு அவன்: 31
[28]ஒருவன் எனக்குத் தெரிவிக்காவிட்டால் அது
எனக்கு எப்படித் தெரியும் என்று சொல்லி;

1 மத். 5. 44. லூ. 23. 34
2 7. 58; 22. 20
3 11. 19
4 26. 10, 11. சங். 81. 12
5 11. 19. மத். 10. 23
6 6. 5
7 2 இரா. 30. 12 பே. 4. 41, 42
8 மத். 11. 5
9 13. 6
10 5. 36. 2தெச. 3. 2, 5
* மகத்தானவன்
11 2 கொ. 11. 19
12 கலா. 3. 1
13 1. 3. லூ. 21. 27
14 19. 2, 5, 6. மத். 28. 19. 1கொ. 1. 13
15 6. 6. எபி. 6. 2
16 6. 6; 19. 6. எபி. 6. 2
17 1 தீமோ. 6. 5
† வல்லமை
18 2. 38; 10. 45, 46; 11. 17. 2இரா. 5. 15, 16. மத். 10. 8
‡ ஈவை
19 யோசு. 22. 25. சங். 78. 36, 37. எசே. 14. 3
§ பிரார்த்தனை
20 தானி. 4. 27. 2தீமோ. 2. 25
21 சங். 116. 16. நீதி. 5. 22. ஏசா. 58. 22. எரே. 4. 18. எபி. 12. 15
22 யாத். 8. 8. எண். 21. 7. 1இரா. 13. 6. யோபு 42. 8. யாக். 5. 16
23 யோசு. 15. 47
24 ஏசா. 56. 3–5. செப். 3. 10
25 2 நாளா. 6. 32, 33
26 ஏசா. 65. 24. ஓசி. 6. 3
27 மத். 13. 23, 51. எபே. 5. 17
28 சங். 25. 9. கொ. 10. 14

பிலிப்பு ஏறி, தன்னோடே உட்காரும்படி
32 அவனை வேண்டிக்கொண்டான். அவன் வா
சித்த வேதவாக்கியம் என்னவென்றால்: [1]அ
வர் ஒரு ஆட்டைப்போல அடிக்கப்படுவதற்
குக் கொண்டுபோகப்பட்டார்; மயிர் கத்தரிக்
கிறவனுக்கு முன்பாகச் சத்தமிடாதிருக்கிற
ஆட்டுக்குட்டியைப்போல அவர் தமது வா
33 யைத் திறவாதிருந்தார். அவர் தம்மைத் தாழ்த்
தினபோது அவருடைய நியாயம் எடுத்துப்
போடப்பட்டது; அவருடைய ஜீவன் பூமியி
லிருந்து எடுபட்டுப்போயிற்று; அவருடைய
வம்சத்தை யாராலே சொல்லிமுடியும் என்ப
34 தே. மந்திரி பிலிப்பை நோக்கி: தீர்க்கதரிசி
யாரைக்குறித்து இதைச் சொல்லுகிறார்? தம்
மைக் குறித்தோ, வேறொருவரைக் குறித்
தோ? எனக்குச் சொல்லவேண்டும் என்று
35 கேட்டுக்கொண்டான். அப்பொழுது பிலிப்பு
பேசத்தொடங்கி, [2]இந்த வேதவாக்கியத்தை
*முன்னிட்டு இயேசுவைக்குறித்து அவனுக்
36 குப் பிரசங்கித்தான். இவ்விதமாய் அவர்கள்
வழிநடந்துபோகையில், தண்ணீருள்ள ஓரி
டத்திற்கு வந்தார்கள். அப்பொழுது மந்திரி:
இதோ தண்ணீர் இருக்கிறதே, [3]நான் ஞானஸ்
நானம் பெறுகிறதற்குத் தடையென்ன என்
37 றான். அதற்குப் பிலிப்பு: [4]நீர் முழுஇருதயத்
தோடும் விசுவாசித்தால் தடையில்லையென்
றான். அப்பொழுது அவன்: [5]இயேசுகிறிஸ்
துவை தேவனுடைய குமாரனென்று விசு
38 வாசிக்கிறேன் என்று சொல்லி; இரதத்தை
நிறுத்தச்சொன்னான். அப்பொழுது பிலிப்பும்
மந்திரியும் ஆகிய இருவரும் தண்ணீரில் இறங்
கினார்கள்; பிலிப்பு அவனுக்கு ஞானஸ்நானங்
39 கொடுத்தான். அவர்கள் தண்ணீரிலிருந்து
கரையேறினபொழுது, [6]கர்த்தருடைய ஆவியா
னவர் பிலிப்பைக் கொண்டுபோய்விட்டார்.
மந்திரி அப்புறம் அவனைக் காணாமல், [7]சந்தோ
40 ஷத்தோடே தன் வழியேபோனான். பிலிப்பு
ஆசோத்திலே காணப்பட்டு, அவ்விடத்திலிரு
ந்து பிரயாணம்பண்ணி, செசரியாவுக்கு வரு
கிறவரையில் சகல பட்டணங்களிலும் சுவி
சேஷத்தைப் பிரசங்கித்துக்கொண்டு வந்தான்.

9 சவுல் என்பவன் [8]இன்னுங் கர்த்தருடைய
சீஷரைப் பயமுறுத்திக் கொலைசெய்யும்படி
சீறிப் பிரதான ஆசாரியரிடத்திற்குப் போய்;
2 இந்த மார்க்கத்தாராகிய [9]புருஷரையாகிலும்
ஸ்திரீகளையாகிலும் தான் கண்டுபிடித்தால்,
அவர்களைக் கட்டி எருசலேமுக்குக் கொண்டு
வரும்படி, தமஸ்குவிலுள்ள ஜெபஆலயங்
களுக்கு நிருபங்களைக் கேட்டு வாங்கினான்.
3 அவன் பிரயாணமாய்ப் போய் [10]தமஸ்குவுக்
குச் சமீபித்தபோது, சடிதியிலே வானத்தி
லிருந்து ஒரு ஒளி அவனைச் சுற்றிப் பிர
4 காசித்தது; அவன் தரையிலே விழுந்தான்.
அப்பொழுது: சவுலே, சவுலே, [11]நீ என்னை
ஏன் துன்பப்படுத்துகிறாய் என்று தன்னுட
னே சொல்லுகிற ஒரு சத்தத்தைக் கேட்
5 டான். அதற்கு அவன்: ஆண்டவரே, நீர்
யார், என்றான். அதற்குக் கர்த்தர்: நீ துன்பப்
படுத்துகிற இயேசு நானே; [12]முள்ளில் உதை
க்கிறது உனக்குக் கடினமாம் என்றார். அவன் 6
நடுநடுங்கித் திகைத்து: [13]ஆண்டவரே, நான் என்
னசெய்யச் சித்தமாயிருக்கிறீர் என்றான். அத
ற்குக் கர்த்தர்: நீ எழுந்து, பட்டணத்துக்கு
ளே போ, நீ செய்யவேண்டியது அங்கே
உனக்குச் சொல்லப்படும் என்றார். அவ 7
னுடனேகூடப் பிரயாணம்பண்ணின மனு
ஷர்கள் சத்தத்தைக் கேட்டும் [14]ஒருவரையுங்
காணாமல் பிரமித்து நின்றார்கள். சவுல் தரை 8
யிலிருந்தெழுந்து, தன் கண்களைத் திறந்த
போது ஒருவரையுங் காணவில்லை. அப்பொ
ழுது கைலாகு கொடுத்து, அவனைத் தமஸ்கு
வுக்குக் கூட்டிக்கொண்டுபோனார்கள். அவன் 9
மூன்றுநாள் பார்வையில்லாதவனாய்ப் புசியா
மலும் குடியாமலும் இருந்தான்.
தமஸ்குவிலே [15]அனனியா என்னும் பே 10
ருள்ள ஒரு சீஷன் இருந்தான். அவனுக்குக்
கர்த்தர் தரிசனமாகி: அனனியாவே, என்
றார். அவன்: ஆண்டவரே, இதோ, அடியேன்
என்றான். அப்பொழுது கர்த்தர்: நீ எழுந்து 11
நேர்த்தெருவு என்னப்பட்ட தெருவுக்குப்
போய், யூதாவின் வீட்டிலே [16]தர்சுபட்டணத்
தானாகிய சவுல் என்னும் பேருள்ள ஒருவ
னைத் தேடு; அவன் இப்பொழுது ஜெபம்
பண்ணுகிறான்; அனனியா என்னும் பே 12
ருள்ள ஒரு மனுஷன் தன்னிடத்தில் வரவும்,
தான் பார்வையடையும்படி தன்மேல் கை
வைக்கவும் தரிசனங்கண்டான் என்றார். அத 13
ற்கு அனனியா: ஆண்டவரே, [17]இந்த மனு
ஷன் எருசலேமிலுள்ள உம்முடைய பரிசுத்
தவான்களுக்கு எத்தனையோ பொல்லாங்குக
ளைச் செய்தானென்று அவனைக்குறித்து அநே
கரால் கேள்விப்பட்டிருக்கிறேன். இங்கே 14
யும் [18]உம்முடைய நாமத்தைத் தொழுதுகொ
ள்ளுகிற யாவரையும் கட்டும்படி அவன் பிர
தான ஆசாரியர்களால் அதிகாரம் பெற்றிருக்
கிறானே என்றான். அதற்குக் கர்த்தர்: நீ 15
போ; [19]அவன் புறஜாதிகளுக்கும் ராஜாக்களுக்
கும் இஸ்ரவேல் புத்திரருக்கும் என்னுடைய
நாமத்தை அறிவிக்கிறதற்காக [20]நான் தெரிந்து
கொண்ட பாத்திரமாயிருக்கிறான். அவன் 16
என்னுடைய நாமத்தினிமித்தம் [21]எவ்வள
வாய்ப் பாடுபடவேண்டுமென்பதை நான் அவ
னுக்குக் காண்பிப்பேன் என்றார். அப்பொ 17
ழுது அனனியா போய், வீட்டுக்குள் பிரவே
சித்து, [22]அவன்மேல் கையை வைத்து: சகோ
தரனாகிய சவுலே, நீ வந்தவழியிலே உனக்
குத் தரிசனமான இயேசுவாகிய கர்த்தர், நீ
பார்வையடையும்படிக்கும் [23]பரிசுத்த ஆவியி
னாலே நிரப்பப்படும்படிக்கும் என்னை அனுப்
பினார் என்றான். உடனே அவன் கண்களி 18
லிருந்து மீன் †செதிள்கள் போன்றவைகள்
விழுந்தது. அவன் பார்வையடைந்து, எழுந்
திருந்து, ஞானஸ்நானம்பெற்றான். பின்பு 19
அவன் போஜனம்பண்ணிப் பலப்பட்டான்.

1 ஏசா. 53. 7, 8
2 18. 28. லூ. 24. 27
* தொடக்கி
3 10. 47
4 12. லூ. மாற். 16. 16
5 யோ. 11. 27. 1 கொ. 12. 3. 1 யோ. 4. 15
6 1 இரா. 18. 12. எசே. 3. 12, 14
7 சங். 119. 14, 111
8 8. 3. கலா. 1. 13. 1 தீமோ. 1. 13
9 19. 9, 23
10 22. 6: 26. 12. 1 கொ. 15. 8
11 மத். 25. 40, 45
12 5. 39
13 16. 30. லூ. 3. 10
14 தானி. 10. 7
15 22. 12
16 21. 39: 22. 3
17 1 கொ. 1. 2 தீமோ. 1. 13
18 7. 59. 1 கொ. 1. 2. 2 தீமோ. 2. 22
19 25. 23: 28. 17. ரோ. 11. 13. கலா. 2. 7, 8
20 13. 2. ரோ. 1. 1. 1 கொ. 15. 10. கலா. 1. 15. எபே. 3. 7, 8
21 20. 23. 2 கொ. 11. 23-27. 2 தீமோ. 1. 11, 12
22 8. 17
23 2. 4
† செதிள்கள்

[1]சவுல் தமஸ்குவிலுள்ள சீஷருடனே சில
20 நாள் இருந்து, தாமதமின்றி, *கிறிஸ்து
[2]தேவனுடைய குமாரனென்று ஆலயங்களி
21 லே பிரசங்கித்தான். கேட்டவர்களெல்லா
ரும் ஆச்சரியப்பட்டு: [3]எருசலேமில் இந்த
நாமத்தைத் தொழுதுகொள்ளுகிறவர்களை நாச
மாக்கி, இங்கேயும் அப்படிப்பட்டவர்களைக்
கட்டிப் பிரதான ஆசாரியர்களிடத்திற்குக்
கொண்டுபோகும்படி வந்தவன் இவனல்லவா
22 என்றார்கள். சவுல் அதிகமாகத் திடன்கொ
ண்டு, [4]இவரே கிறிஸ்துவென்று திருஷ்டாந்
தப்படுத்தி, தமஸ்குவில் குடியிருக்கிற யூதர்க
ளைக் கலங்கப்பண்ணினான்.
23 அநேகநாள் சென்றபின்பு, [5]யூதர்கள் அவ
னைக் கொலைசெய்யும்படி ஆலோசனைபண்
24 ணினார்கள். அவர்களுடைய யோசனை சவு
லுக்குத் தெரியவந்தது. [6]அவனைக் கொலை
செய்யும்படி அவர்கள் இரவும் பகலும் கோட்
டை வாசல்களைக் காத்துக்கொண்டிருந்தார்
25 கள். சீஷர்கள் இராத்திரியிலே அவனைக்
கூட்டிக்கொண்டுபோய் [7]ஒரு கூடையிலே
வைத்து, மதில்வழியாய் இறக்கிவிட்டார்கள்.
26 சவுல் எருசலேமுக்கு வந்து, [8]சீஷருட
னே சேர்ந்துகொள்ளப் பார்த்தான்; அவர்கள்
அவனைச் சீஷனென்று நம்பாமல் எல்லாரும்
27 அவனுக்குப் பயந்திருந்தார்கள். அப்பொ
ழுது பர்னபா [9]என்பவன் அவனைச் சேர்த்
துக்கொண்டு, அப்போஸ்தலரிடத்தில் அழை
த்துக்கொண்டுபோய், வழியிலே அவன் கர்த்
தரைக் கண்ட விதத்தையும், அவர் அவனுட
னே பேசினதையும், தமஸ்குவில் அவன்
இயேசுவின் நாமத்தினாலே [10]தைரியமாய்ப்
பிரசங்கித்ததையும் அவர்களுக்கு விவரித்துச்
28 சொன்னான். அதன்பின்பு அவன் எருசலேமி
லே [11]அவர்களிடத்தில் போக்கும் வரத்துமா
29 யிருந்து; கர்த்தராகிய இயேசுவின் நாமத்தி
னாலே தைரியமாய்ப் பிரசங்கித்து, கிரேக்கரு
டனே பேசித் தர்க்கித்தான்; [12]அவர்களோ
அவனைக் கொலைசெய்ய எத்தனம்பண்ணினார்
30 கள். சகோதரர் அதை அறிந்து, அவனைச்
செசரியாவுக்கு அழைத்துக்கொண்டுபோய்,
தர்சுவுக்கு அனுப்பிவிட்டார்கள்.
31 அப்பொழுது யூதேயா கலிலேயா சமாரியா
நாடுகளிலெங்கும் [13]சபைகள் சமாதானம்
பெற்று, பக்திவிருத்தியடைந்து, [14]கர்த்தருக்
குப் பயப்படுகிற பயத்தோடும், பரிசுத்தஆவி
யின் ஆறுதலோடும் நடந்து பெருகின.
32 பேதுரு போய் எல்லாரையும் சந்தித்துவரு
கையில், அவன் லித்தாஊரிலே குடியிருக்கிற
33 பரிசுத்தவான்களிடத்திற்கும் போனான். அங்
கே எட்டுவருஷமாய்க் கட்டிலின்மேல் திமிர்
வாதமுள்ளவனாய்க் கிடந்த ஐனேயா என்னும்
34 பேருள்ள ஒரு மனுஷனைக் கண்டான். பே
துரு அவனைப் பார்த்து: [15]ஐனேயாவே, இயே
சுகிறிஸ்து உன்னைக் குணமாக்குகிறார்; நீ
எழுந்து, உன் படுக்கையை நீயே போட்டுக்
கொள் என்றான். உடனே அவன் எழுந்தி
ருந்தான். லித்தாவிலும் சாரோனிலும் குடி 35
யிருந்தவர்களெல்லாரும் அவனைக் கண்டு,
[16]கர்த்தரிடத்தில் திரும்பினார்கள்.
யோப்பா பட்டணத்தில் கிரேக்குப் பா 36
ஷையிலே தொற்காள் என்று அர்த்தங்கொள்
ளும் †தபீத்தாள் என்னும் பேருடைய ஒரு
‡சீஷி இருந்தாள்; [17]அவள் நற்கிரியைகளையும்
தருமங்களையும் மிகுதியாய்ச் செய்துகொண்டு
வந்தாள். அந்நாட்களில் அவள் வியாதிப்பட்டு 37
மரணமடைந்தாள். அவளைக் குளிப்பாட்டி,
மேல்வீட்டிலே கிடத்திவைத்தார்கள். யோப் 38
பாபட்டணம் லித்தா ஊருக்குச் சமீபமான
படியினாலே, பேதுரு அவ்விடத்தில் இருக்
கிறானென்று சீஷர்கள் கேள்விப்பட்டு, தாம
தமில்லாமல் தங்களிடத்தில் வரவேண்டுமெ
ன்று சொல்லும்படி இரண்டு மனுஷரை அவ
னிடத்திற்கு அனுப்பினார்கள். பேதுரு எழுந் 39
து, அவர்களுடனே கூடப் போனான். அவன்
போய்ச் சேர்ந்தபொழுது, அவர்கள் அவனை
மேல்வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனார்
கள். [18]அப்பொழுது விதவைகளெல்லாரும்
அழுது, தொற்காள் தங்களுடனேகூட இருக்
கையில் செய்திருந்த அங்கிகளையும் வஸ்திரங்
களையும் காண்பித்து, அவனைச் சூழ்ந்து நின்
றார்கள். பேதுரு எல்லாரையும் வெளியே 40
போகச்செய்து, [19]முழங்காற்படியிட்டு ஜெபம்
பண்ணி, பிரேதத்தின் புறமாய்த் திரும்பி:
தபீத்தாளே, [20]எழுந்திரு என்றான். அப்பொ
ழுது அவள் தன் கண்களைத் திறந்து, பேதுரு
வைப் பார்த்து உட்கார்ந்தாள். அவன் அவ 41
ளுக்குக் கைகொடுத்து, அவளை எழுந்திருக்
கப்பண்ணி, பரிசுத்தவான்களையும் விதவைக
ளையும் அழைத்து, [21]அவளை உயிருள்ளவளாக
அவர்களுக்குமுன் நிறுத்தினான். இது யோப் 42
பாபட்டணம் எங்கும் தெரியவந்தது. [22]அப்
பொழுது அநேகர் கர்த்தரிடத்தில் விசுவாச
முள்ளவர்களானார்கள். பின்பு அவன் யோப் 43
பாபட்டணத்திலே தோல்பதனிடுகிறவனாகிய
[23]சீமோன் என்னும் ஒருவனிடத்தில் அநேக
நாள் தங்கியிருந்தான்.

10 இத்தாலியா பட்டாளம் என்னப்பட்ட
பட்டாளத்திலே நூற்றுக்கு அதிபதியாகிய
கொர்நேலியு என்னும் பேர்கொண்ட ஒரு
மனுஷன் செசரியா பட்டணத்திலே இருந்
தான். அவன் [24]தேவபக்தியுள்ளவனும் தன் 2
வீட்டாரனைவரோடும் தேவனுக்குப் பயந்தவ
னுமாயிருந்து, [25]ஜனங்களுக்கு மிகுந்த §தருமங்
களைச் செய்து, எப்பொழுதும் தேவனை
நோக்கி ஜெபம்பண்ணிக்கொண்டிருந்தான்.
பகலில் ஏறக்குறைய ஒன்பதாம்மணி நேரத் 3
திலே [26]தேவனுடைய தூதன் தன்னிடத்தில்
வரவும், கொர்நேலியுவே, என்று அழைக்கவும்
பிரத்தியட்சமாய்த் தரிசனங் கண்டு, அவனை 4
உற்றுப்பார்த்து, பயந்து: ஆண்டவரே, என்ன
என்றான். அப்பொழுது அவன்: [27]உன் ஜெ
பங்களும் உன் தருமங்களும் தேவனுக்கு
நினைப்பூட்டுதலாக அவர் சந்நிதியில் வந்தெட்

1 26. 20. கலா. 1. 17
* இயேசு
2 8. 37
3 8. 3. கலா. 1. 13, 23
4 18. 28. சங். 84. 7
5 23. 12: 25. 3. 2 கொ. 11. 26
6 2 கொ. 11. 32
7 யோசு. 2. 15
8 22. 17. கலா. 1. 17, 18
9 4. 36: 13. 2
10 20. 22. வச.
11 கலா. 1. 18
12 23. வச. 2 கொ. 11. 26
13 8. 1. சங். 94. 13. சகரி. 9. 1. கொ. 14. 19
14 சங். 86. 11. சகரி. 8. 20-22. யோ. 14. 16, 17. 2 கொ. 1. 10
15 3. 6, 16: 4. 10
16 11. 21. 2 கொ. 5. 16
† பெண்மான்
‡ அடியாள்
17 1 தீமோ. 2. 10. தீத். 2. 7, 14
18 பிர. 9. 10
19 7. 60. மத். 9. 25
20 மாற். 5. 41, 42. யோ. 11. 43
21 1 இரா. 17. 23
22 யோ. 11. 45: 12. 10
23 10. 6
24 8, 2: 22. 12. பிர. 7. 18
25 35. வச. ஆதி. 18. 19. சங். 101. 2-7
§ தானங்களை
26 எபி. 1. 14
27 ஏசா. 45. 19

5 டியிருக்கிறது. இப்பொழுது நீ யோப்பா
பட்டணத்துக்கு மனுஷரை அனுப்பி, பேதுரு
என்று மறுபேர்கொண்ட சீமோனை அழை
6 ப்பி, அவன் தோல் பதனிடுகிறவனாகிய
[1]சீமோன் என்னும் ஒருவனிடத்திலே தங்கி
யிருக்கிறான்; அவனுடைய வீடு கடலோரத்தி
லிருக்கிறது. [2]நீ செய்யவேண்டியதை அவன்
7 உனக்குச் சொல்லுவான் என்றான். கொர்நே
லியு தன்னுடனே பேசின தேவதூதன் போ
னபின்பு, தன் வீட்டு மனுஷரில் இரண்டுபே
ரையும் தன்னிடத்தில் சேவிக்கிற போர்ச்சே
வகரில் தேவபக்தியுள்ள ஒருவனையும் அழைத்
8 து, எல்லாவற்றையும் அவர்களுக்கு விவ
ரித்துச் சொல்லி, அவர்களை யோப்பா பட்ட
ணத்துக்கு அனுப்பினான்.
9 மறுநாளிலே அவர்கள் பிரயாணப்பட்டு,
அந்தப் பட்டணத்துக்குச் சமீபித்துவருகை
யில், [3]பேதுரு ஆறும்மணி நேரத்திலே ஜெபம்
10 பண்ணும்படி மேல்வீட்டில் ஏறினான்.* அவன்
மிகுந்த பசியடைந்து சாப்பிட மனதாயிருந்
தான்; அதற்கு அவர்கள் ஆயத்தம்பண்ணு
கையில், அவன் †ஞானதிருஷ்டியடைந்து,
11 வானம் திறந்திருக்கிறதாகவும், [4]நாலு முனை
களும் கட்டப்பட்ட பெரிய துப்பட்டியைப்
போல ஒருவிதமான கூடு தன்னிடத்தில் இற
ங்கித் தரையில் விடப்பட்டிருக்கிறதாகவும்,
12 அதிலே பூமியிலுள்ள சகலவிதமான நாலுகால்
ஜீவன்களும், காட்டுமிருகங்களும், ஊரும்
பிராணிகளும், ஆகாயத்துப் பறவைகளும் இரு
13 க்கிறதாகவும் கண்டான். அல்லாமலும்: பே
துருவே, எழுந்திரு, அடித்துப் புசி என்று அவ
னுக்குச் சொல்லும் ஒரு சத்தம் உண்டாயி
14 ற்று. அதற்குப் பேதுரு: அப்படியல்ல, ஆண்
டவரே, [5]தீட்டும் அசுத்தமுமாயிருக்கிற யாதொ
ன்றையும் நான் ஒருக்காலும் புசித்ததில்லை
15 என்றான். அப்பொழுது: [6]தேவன் சுத்தமாக்கி
னவைகளை நீ தீட்டாக எண்ணாதே என்று
இரண்டாந்தரமும் சத்தம் அவனுக்கு உண்
16 டாயிற்று. மூன்றுந்தரமும் அப்படியே உண்
டாயிற்று. பின்பு அந்தக் கூடு திரும்ப வானத்
துக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது.
17 அப்பொழுது பேதுரு, தான் கண்ட தரிசன
த்தைக்குறித்துத் தனக்குள்ளே சந்தேகப்படு
கையில், இதோ, கொர்நேலியுவினால் அனுப்
பப்பட்ட மனுஷர்கள் சீமோனுடைய வீட்
டை விசாரித்துக்கொண்டு வாசற்படியிலே
18 வந்து நின்று: பேதுரு என்று மறுபேர்கொ
ண்ட சீமோன் இங்கே தங்கியிருக்கிறாரா
19 என்று கேட்டார்கள். பேதுரு அந்தத் தரிச
னத்தைக்குறித்துச் சிந்தனை பண்ணிக்கொண்
டிருக்கையில், [7] ஆவியானவர்: இதோ, மூன்று
20 மனுஷர் உன்னைத் தேடுகிறார்கள். நீ எழு
ந்து, [8]இறங்கி, ஒன்றுக்குஞ் சந்தேகப்படாமல்,
அவர்களுடனே கூடப்போ; நானே அவர்
களை அனுப்பினேன் என்று அவனுக்குச் சொ
21 ன்னார். அப்பொழுது பேதுரு கொர்நேலி
யுவினால் தன்னிடத்தில் அனுப்பப்பட்ட மனு
ஷரிடத்திற்கு இறங்கிப்போய்: இதோ, நீங்
கள், தேடுகிறவன் நான்தான், நீங்கள் வந்
திருக்கிற காரியம் என்ன என்றான். அத 22
ற்கு அவர்கள்: [9]நீதிமானும், தேவனுக்குப்
பயப்படுகிறவரும், யூதஜனங்களெல்லாராலும்
நல்லவரென்று சாட்சிபெற்றவருமாகிய கொர்
நேலியு என்னும் நூற்றுக்கு அதிபதி உம்
மைத் தம்முடைய வீட்டுக்கு அழைப்பித்து,
உம்மால் சொல்லப்படும் வார்த்தைகளைக் கே
ட்கும்படிப் பரிசுத்த தூதனாலே தேவயத்தன
மாய்க் கட்டளை பெற்றார் என்றார்கள். அப் 23
பொழுது பேதுரு அவர்களை உள்ளே அழை
த்து, அவர்களுக்கு உபசாரஞ்செய்து, மறுநா
ளிலே அவர்களுடனேகூடப் புறப்பட்டான்;
[10]யோப்பா பட்டணத்தாராகிய சகோதரரில்
சிலரும் அவனுடனேகூடப் போனார்கள்.
மறுநாளிலே செசரியாபட்டணத்தில் பிர 24
வேசித்தார்கள். கொர்நேலியு தன் உறவின்
முறையாரையும் தன்னுடைய விசேஷித்த
சிநேகிதரையும் கூட வரவழைத்து, அவர்களுக்
காகக் காத்திருந்தான். பேதுரு உள்ளே பிர 25
வேசிக்கிறபொழுது, கொர்நேலியு அவனுக்கு
எதிர்கொண்டுபோய், அவன் பாதத்தில் விழு
ந்து, பணிந்துகொண்டான். பேதுரு அவ 26
னைத் தூக்கியெடுத்து: [11]எழுந்திரும், நானும்
ஒரு மனுஷன்தான் என்றான். அவனுடனே 27
பேசிக்கொண்டு, உள்ளே போய், அநேகர்
கூடி வந்திருக்கிறதைக் கண்டு, அவர்களை நோ 28
க்கி: அந்நியஜாதியானோடே கலந்து அவனி
டத்தில் ‡போக்குவரவா யிருப்பது [12]யூதனா
னவனுக்கு விலக்கப்பட் டிருக்கிறதென்று நீங்
கள் அறிந்திருக்கிறீர்கள்; அப்படியிருந்தும்,
[13]எந்த மனுஷனையும் தீட்டுள்ளவனென்றும்
அசுத்தனென்றும் நான் சொல்லாதபடிக்கு
தேவன் எனக்குக் காண்பித்திருக்கிறார். ஆகை 29
யால் நீங்கள் என்னை அழைப்பித்தபோது
நான் எதிர்பேசாமல் வந்தேன். இப்போதும்
என்னகாரியத்துக்காக என்னை அழைப்பித்தீர்
கள் என்று கேட்கிறேன் என்றான். அதற் 30
குக் கொர்நேலியு: நாலுநாளைக்குமுன்னே இந்
நேரத்திலே நான் உபவாசித்து, ஒன்பதாம்மணி
நேரத்தில் என் வீட்டிலே ஜெபம்பண்ணிக்
கொண்டிருந்தேன்; [14]அப்பொழுது பிரகாச
முள்ள வஸ்திரந்தரித்த மனுஷன் ஒருவன்
எனக்கு முன்பாக நின்று: கொர்நேலியுவே, 31
[15]உன் ஜெபம் கேட்கப்பட்டது, உன் தான
தருமங்கள் தேவசந்நிதியில் நினைத்தருளப்பட்
டது. யோப்பாபட்டணத்துக்கு ஆள் அனு 32
ப்பி, பேதுரு என்று மறுபேர்கொண்ட சீமோ
னை வரவழைப்பாயாக; அவன் கடலோரத்
திலே தோல் பதனிடுகிறவனாகிய சீமோனு
டைய வீட்டிலே தங்கியிருக்கிறான்; அவன்
வந்து உன்னிடத்தில் பேசுவான் என்றார்.
அந்தப்படியே நான் உடனே உம்மிடத்திற்கு 33
ஆள் அனுப்பினேன்; நீர் வந்தது நல்லகாரி
யம்; [16]தேவனாலே உமக்குக் கட்டளையிடப்
பட்ட யாவையும் கேட்கும்படிக்கு நாங்கள்

[1] 9. 43
[2] 11. 14
[3] 11. 5. ழ
* அகோரப் பசி யெடுத்த
† பரவசமாகி
[4] 7. 56. வெளி. 19. 11
[5] லேவி. 11. 2. ழ: 20. 25. உபா. 14. 3. ழ. எசே. 4. 14
[6] 28. வச. மத். 15. 11. ரோ. 14. 14. ழ. 1 கொ. 10. 25. 1 தீமோ. 4. 4. தீத். 1. 15
[7] 11. 12
[8] 15. 7
[9] 1, 2. ழ: 22. 12
[10] 45. வச: 11. 12
[11] 14. 14, 15. வெளி. 19. 10: 22. 9
‡ சகவாசம் பண்ணுகிறது
[12] யோ. 4. 9: 18. 28. கலா. 2. 12. 14
[13] 15, 8, 9. எபே. 3. 6
[14] 1. 10. மத். 28. 3. மாற். 16. 5. லூ. 24. 4
[15] 4. வச. தானி. 10. 12. எபி. 6. 10
[16] உபா. 5. 27

எல்லாரும் இப்பொழுது இங்கே தேவ சமு
கத்தில் கூடியிருக்கிறோம் என்றான்.
34 அப்பொழுது பேதுரு பேசத்தொடங்கி:
[1]தேவன் பட்சபாதமுள்ளவரல்ல என்றும்,
35 எந்த *ஜனத்திலாயினும் அவருக்குப் பயந்தி
ருந்து நீதியைச் செய்கிறவன் எவனோ [2]அவ
னே அவருக்கு உகந்தவன் என்றும் நிச்சயமாய்
36 அறிந்திருக்கிறேன். எல்லாருக்கும் கர்த்தராயி
ருக்கிற இயேசுகிறிஸ்துவைக்கொண்டு [3]அவர்
சமாதானத்தைச் சுவிசேஷமாய்க் கூறி, இஸ்
ரவேல் புத்திரருக்கு அனுப்பின வார்த்தையை
37 அறிந்திருக்கிறீர்களே. யோவான் ஞானஸ்
நானத்தைக்குறித்துப் பிரசங்கித்தபின்பு, கலி
லேயாநாடு முதற்கொண்டு யூதேயாதேசமெங்
38 கும் நடந்த சங்கதி இதுவே. நசரேயனாகிய
இயேசுவை தேவன் [4]பரிசுத்த ஆவியினாலும்
வல்லமையினாலும் அபிஷேகம்பண்ணினார்;
[5]தேவன் அவருடனேகூட இருந்தபடியினா
லே அவர் நன்மைசெய்கிறவராயும் பிசாசின்
வல்லமையில் அகப்பட்ட யாவரையும் குண
39 மாக்குகிறவராயும் சுற்றித்திரிந்தார். யூதரு
டைய தேசத்திலும் எருசலேமிலும் அவர் செ
ய்தவைகளெல்லாவற்றிற்கும் நாங்கள் சாட்சி
களாயிருக்கிறோம். [6]அவரை மரத்திலே தூக்
40 கிக் கொலைசெய்தார்கள். மூன்றாம்நாளிலே
தேவன் அவரை எழுப்பிப் [7]பிரத்தியட்சமாய்க்
41 காணும்படி செய்தார். ஆயினும் எல்லா ஜனங்
களுக்கும் பிரத்தியட்சமாகும்படி செய்யாமல்,
[8]அவர் மரித்தோரிலிருந்து எழுந்தபின்பு அவ
ரோடே புசித்துக் குடித்தவர்களும் தேவனால்
முன்பு நியமிக்கப்பட்ட சாட்சிகளுமாகிய எங்
களுக்கே பிரத்தியட்சமாகும்படி செய்தார்.
42 அன்றியும் அவரே உயிரோடிருக்கிறவர்களுக்
கும் மரித்தோர்களுக்கும் தேவனால் ஏற்படுத்
தப்பட்ட நியாயாதிபதியென்று ஜனங்களுக்
குப் பிரசங்கிக்கவும், [9]சாட்சியாக ஒப்புவிக்க
வும், அவர் எங்களுக்குக் கட்டளையிட்டார்.
43 அவரை விசுவாசிக்கிறவன் எவனோ அவன்
அவருடைய நாமத்தினாலே பாவமன்னிப்
பைப் பெறுவானென்று [10]தீர்க்கதரிசிகளெல்
லாரும் அவரைக்குறித்தே சாட்சி கொடுக்கி
றார்கள் என்றான்.
44 இந்த வார்த்தைகளைப் பேதுரு பேசிக்கொ
ண்டிருக்கையில் வசனத்தைக் கேட்டவர்கள்
யாவர்மேலும் [11]பரிசுத்தஆவியானவர் இறங்கி
45 னார். அவர்கள் பல பாஷைகளைப் பேசுகிற
46 தையும், [12]தேவனைப் புகழுகிறதையும், பேதுரு
வோடே கூட வந்திருந்த விருத்தசேதனமுள்ள
விசுவாசிகள் கேட்கும்போது, [13]பரிசுத்தஆவி
யின் வரம் புறஜாதிகள்மேலும் பொழிந்தரு
47 ளப்பட்டதைக்குறித்துப் பிரமித்தார்கள். அப்
பொழுது பேதுரு: [14]நம்மைப்போல பரிசுத்த
ஆவியைப் பெற்ற இவர்களும் ஞானஸ்நானம்
பெறாதபடிக்கு எவனாகிலும் தண்ணீரை வில
48 க்கலாமா என்று சொல்லி, கர்த்தருடைய நாம
த்தினாலே [15]அவர்களுக்கு ஞானஸ்நானங்கொ
டுக்கும்படி கட்டளையிட்டான். அப்பொழுது
சிலநாள் அங்கே தங்கும்படி அவனை வேண்
டிக்கொண்டார்கள்.

புறஜாதியாரும் தேவ வசனத்தை ஏற்றுக் 11
கொண்டார்களென்று யூதேயாவிலிருக்கிற
அப்போஸ்தலரும் சகோதரரும் கேள்விப்பட்
டார்கள். பேதுரு எருசலேமுக்குத் திரும்பி 2
வந்தபோது, [16]விருத்தசேதன முள்ளவர்கள்
அவனை நோக்கி: விருத்தசேதனமில்லாத மனு 3
ஷரிடத்தில் நீர் போய், அவர்களோடே போஜ
னம் பண்ணினீர் என்று, அவனோடே வாக்கு
வாதம்பண்ணினார்கள். அதற்குப் பேதுரு காரி 4
யத்தை முதலிலிருந்து வரிசையாய் அவர்களு
க்கு விவரிக்கத் தொடங்கி: நான் யோப்பாபட் 5
டணத்தில் ஜெபம் பண்ணிக்கொண்டிருந்த
போது ஞானதிருஷ்டியடைந்து, [17]ஒரு தரிச
னத்தைக் கண்டேன்; அதென்னவென்றால்,
நாலுமுனைகளும் கட்டப்பட்ட பெரிய துப்
பட்டியைப்போல ஒரு கூடு வானத்திலிருந்து
என்னிடத்தில் இறங்கிவந்தது. அதிலே நான் 6
உற்றுப்பார்த்துக் கவனிக்கிறபோது, பூமியி
லுள்ள நாலுகால் ஜீவன்களையும், காட்டு மிரு
கங்களையும், ஊரும் பிராணிகளையும், ஆகாயத்
துப் பறவைகளையும் கண்டேன். அல்லாம 7
லும்: பேதுருவே, எழுந்திரு, அடித்துப் புசி
என்று என்னுடனே சொல்லுகிற சத்தத்தை
யும் கேட்டேன். அதற்கு நான்: ஆண்டவரே, 8
அப்படியல்ல, தீட்டும் அசுத்தமுமாயிருக்கிற
யாதொன்றும் ஒருக்காலும் என் வாய்க்குள்ளே
போனதில்லை என்றேன். இரண்டாந்தரமும் 9
வானத்திலிருந்து சத்தம் உண்டாகி: தேவன்
சுத்தமாக்கினவைகளை நீ தீட்டாக எண்ணாதே
யென்று மறுமொழி சொல்லிற்று. இப்படி 10
மூன்றுதரம் சம்பவித்தபின்பு, எல்லாம் வா
னத்திற்குத் திரும்ப எடுத்துக்கொள்ளப்பட்
டது. உடனே செசரியாவிலிருந்து என்னி 11
டத்திற்கு அனுப்பப்பட்ட மூன்று மனுஷர்
நான் இருந்த வீட்டுக்குமுன்னே வந்து நின்
றார்கள். நான் ஒன்றுக்கும் சந்தேகப்படாமல் 12
அவர்களோடேகூடப்போகும்படி [18]ஆவியான
வர் எனக்குக் கட்டளையிட்டார். சகோதரரா
கிய இந்த ஆறுபேரும் என்னோடேகூட வந்
தார்கள்; அந்த மனுஷனுடைய வீட்டுக்குள்
பிரவேசித்தோம் அவனோ, தன் வீட்டிலே 13
ஒரு தேவதூதன் நிற்கிறதைக் கண்டதாக
வும், யோப்பாபட்டணத்திலிருக்கிற பேதுரு
என்று மறுபேர்கொண்ட சீமோனை அழைக்
கும்படிக்கு மனுஷரை அவ்விடத்திற்கு அனு
ப்பு; நீயும் உன் வீட்டாரனைவரும் [19]இரட்சிக் 14
கப்படுவதற்கேதுவான வார்த்தைகளை அவன்
உனக்குச்சொல்லுவான் என்று அந்தத் தூதன்
தனக்குச் சொன்னதாகவும் எங்களுக்கு அறி
வித்தான். நான் பேசத்தொடங்கினபோது, 15
[20]பரிசுத்த ஆவியானவர் ஆதியிலே நம்மேல்
இறங்கினதுபோலவே, அவர்கள்மேலும் இற
ங்கினார். யோவான் ஜலத்தினாலே ஞானஸ் 16
நானங்கொடுத்தான், [21]நீங்களோ பரிசுத்தஆவி
யினாலே ஞானஸ்நானம் பெறுவீர்கள் என்று

[1] உபா. 10. 17. 2 நாளா. 19. 7. யோபு 34. 18, 19. ரோ. 2. 11. கலா. 2. 6. எபே. 6. 9. கொலோ. 3. 25. 1 பே. 1. 17
* சகல ஜனங்களிலும்
[2] 15. 9. ரோ. 2. 13, 27: 3. 22, 29: 10. 12, 13. கலா. 3. 28. எபே. 2. 13–18
[3] சங். 24. 7–10. ஏசா. 57. 10. மத். 18. 1. ரோ. 10. 12: 14. 9. 1 கொ. 15. 27. எபே. 1. 20–22: 2. 14–17. கொலோ. 1. 20. 1 பே. 3. 22. வெளி. 17. 14: 19. 16
[4] லூ. 4. 18. எபி. 1. 9
[5] யோ. 3. 2
[6] 2. 32: 5. 30
[7] 2. 24. மத். 28. 1, 2
[8] லூ. 24. 30, 43. யோ. 14. 22: 15. 16: 21. 13
[9] மத். 28. 19, 20. யோ. 5. 22, 27. 2 கொ. 5. 10. 1 பே. 4. 5
[10] லூ. 24. 27, 44. யோ. 3. 14–17: 5. 39. ரோ. 10. 11. கலா. 3. 22
[11] 4. 31: 8. 15–17: 11. 15
[12] 2. 4: 11. 18. கலா. 3. 14
[13] 28. மச
[14] 8. 12: 11. 17. ரோ. 10. 12
[15] 2. 38: 8. 16. 1 கொ. 1. 17
[16] 10. 23, 28. கலா. 2. 12
[17] 10. 9. ழ
[18] 10. 19, 28: 15. 7. யோ. 16. 13
[19] சங். 19. 7–11. யோ. 6. 63, 68
[20] 2. 4
[21] 1. 5: 19. 4. மத். 3. 11. யோ. 1. 26, 33

கர்த்தர் சொன்ன வார்த்தையை அப்பொழுது
17 நினைவுகூர்ந்தேன். ஆதலால் கர்த்தராகிய
இயேசுகிறிஸ்துவை விசுவாசித்திருக்கிற நம
க்கு தேவன் வரத்தை அநுக்கிரகம் பண்ணி
னதுபோல [1]அவர்களுக்கும் அந்த வரத்தையே
அநுக்கிரகம் பண்ணியிருக்கும்போது [2]தேவ
னைத் தடுக்கிறதற்கு நான் எம்மாத்திரம் என்
18 றான். இவைகளை அவர்கள் கேட்டபொ
ழுது அமர்ந்திருந்து: [3]அப்படியானால் ஜீவனுக்
கேதுவான மனந்திரும்புதலை தேவன் புறஜா
தியாருக்கும் அருளிச்செய்தார் என்று சொ
ல்லி, தேவனை மகிமைப்படுத்தினார்கள்.
19 ஸ்தேவான் நிமித்தமாய் எழும்பின உபத்
திரவத்தினாலே [4]சிதறப்பட்டவர்கள் சுவிசே
ஷவசனத்தை யூதர்களுக்கேயன்றி மற்ற ஒரு
வருக்கும் அறிவியாமல், பெனிக்கேநாடு, சீப்
புருதீவு, அந்தியோகியா பட்டணம்வரைக்
20 கும் சுற்றித்திரிந்தார்கள். அவர்களில் சீப்புரு
தீவாரும் சிரேனே பட்டணத்தாருமாகிய சிலர்
அந்தியோகியா பட்டணத்துக்கு வந்து, [5]கிரேக்
கருடனே பேசிக் கர்த்தராகிய இயேசுவைக்
21 குறித்துப் பிரசங்கித்தார்கள். கர்த்தருடைய
கரம் அவர்களோடே இருந்தது; [6]அநேக ஜனங்
கள் விசுவாசிகளாகி, கர்த்தரிடத்தில் திரும்பி
22 னார்கள். எருசலேமிலுள்ள சபையார் இந்தக்
காரியங்களைக்குறித்துக் கேள்விப்பட்டபோ
து, [7]அந்தியோகியாவரைக்கும் போகும்படிக்
23 குப் பர்னபாவை அனுப்பினார்கள். அவன்
போய்ச்சேர்ந்து, தேவனுடைய கிருபையைக்
கண்டபோது, சந்தோஷப்பட்டு, [8]கர்த்தரிடத்
தில் மனநிர்ணயமாய் நிலைத்திருக்கும்படி எல்
24 லாருக்கும் புத்திசொன்னான். அவன் நல்லவ
னும், [9]பரிசுத்தஆவியினாலும் விசுவாசத்தினா
லும் நிறைந்தவனுமாயிருந்தான்; [10]அநேக ஜன
ங்கள் கர்த்தரிடமாய்ச் சேர்க்கப்பட்டார்கள்.
25 பின்பு பர்னபா சவுலைத் தேடும்படி, [11]தர்சு
வுக்குப் புறப்பட்டுப் போய் அவனைக் கண்டு,
அந்தியோகியாவுக்கு அழைத்துக்கொண்டு
26 வந்தான். அவர்கள் ஒரு வருஷகாலமாய்ச்
சபையோடே கூடியிருந்து, [12]அநேக ஜனங்
களுக்கு உபதேசம் பண்ணினார்கள். முதல்
முதல் அந்தியோகியாவிலே சீஷர்களுக்குக்
கிறிஸ்தவர்கள் என்கிற பேர் வழங்கிற்று.
27 அந்நாட்களிலே எருசலேமிலிருந்து [13]சில
தீர்க்கதரிசிகள் அந்தியோகியாவுக்குவந்தார்கள்.
28 அவர்களில் ஒருவனாகிய அகபு [14]என்பவன்
எழுந்து, உலகமெங்கும் கொடிய பஞ்சம் உண்
டாகும் என்று ஆவியானவராலே அறிவித்தா
ன்; அது அப்படியே கிலவுதியு ராயனுடைய
29 நாட்களிலே உண்டாயிற்று. அப்பொழுது
சீஷர்கள் அவரவர் தங்கள் தங்கள் திராணிக்குத்
தக்கதாக யூதேயாவில் குடியிருக்கிற சகோதர
ருக்கு [15]உதவியாகப் பணஞ்சேகரித்து அனு
ப்பவேண்டுமென்று தீர்மானம்பண்ணினார்
30 கள். அப்படியே அவர்கள் சேகரித்து, [16]பர்
னபா சவுல் என்பவர்களுடைய கையிலே கொ
டுத்து, மூப்பரிடத்திற்கு அனுப்பினார்கள்.

12 அக்காலத்திலே ஏரோது ராஜா சபையி
லே சிலரைத் துன்பப்படுத்தத் தொடங்கி;
யோவானுடைய சகோதரனாகிய யாக்கோ 2
பைப் [17]பட்டயத்தினாலே கொலைசெய்தான்.
அது யூதருக்குப் பிரியமாயிருக்கிறதென்று 3
அவன் கண்டு, [18]பேதுருவையும் பிடிக்கத்
தொடர்ந்தான். அப்பொழுது புளிப்பில்லாத
அப்பப்பண்டிகை நாட்களாயிருந்தது. அவ 4
னைப் பிடித்துச் [19]சிறைச்சாலையிலே வைத்து,
பஸ்காபண்டிகைக்குப் பின்பு ஜனங்களுக்கு
முன்பாக அவனை வெளியே கொண்டுவர
லாமென்று எண்ணி, அவனைக் காக்கும்படி
வகுப்புக்கு நான்கு போர்ச்சேவகராக ஏற்படுத்
திய நான்கு வகுப்புகளின் வசமாக ஒப்புவித்
தான். அப்படியே பேதுரு சிறைச்சாலை 5
யிலேகாக்கப்பட்டிருக்கையில் [20]சபையார் அவ
னுக்காக தேவனை நோக்கி *ஊக்கத்தோடே
ஜெபம் பண்ணினார்கள். ஏரோது அவனை 6
வெளியே கொண்டுவரும்படி குறித்திருந்த நா
ளுக்கு முந்தின நாள் இராத்திரியிலே, பேதுரு
இரண்டு சங்கிலிகளினாலே கட்டப்பட்டு, இர
ண்டு சேவகர் நடுவே நித்திரை பண்ணிக்கொ
ண்டிருந்தான்; காவற்காரரும் கதவுக்கு முன்
னிருந்து சிறைச்சாலையைக் காத்துக்கொண்
டிருந்தார்கள். அப்பொழுது [21]கர்த்தருடைய 7
தூதன் அங்கே வந்து நின்றான்; அறையிலே
வெளிச்சம் பிரகாசித்தது. அவன் பேதுருவை
விலாவிலே தட்டி, சீக்கிரமாய் எழுந்திரு
என்று அவனை எழுப்பினான். [22]உடனே சங்கி
லிகள் அவன் கைகளிலிருந்து விழுந்தது.
தூதன் அவனை நோக்கி: உன் அரையைக் 8
கட்டி, உன் பாதரட்சைகளைத் தொடுத்துக்
கொள் என்றான். அவன் அந்தப்படியே செய்
தான். தூதன் பின்னும் அவனை நோக்கி:
உன் வஸ்திரத்தைப் போர்த்துக்கொண்டு என்
பின்னே வா என்றான். அந்தப்படியே அவன் 9
புறப்பட்டு அவனுக்குப் பின்சென்று, தூத
னால் செய்யப்பட்டது மெய்யென்று அறியா
மல், [23]தான் ஒரு தரிசனங் காண்கிறதாக நினை
த்தான். அவர்கள் முதலாங் காவலையும் இரண் 10
டாங் காவலையும் கடந்து, நகரத்திற்குப்போகிற
இருப்புக்கதவண்டையிலே வந்தபோது [24]அது
தானாய் அவர்களுக்குத் திறவுண்டது; அதின்
வழியாய் அவர்கள் புறப்பட்டு ஒரு வீதி நெடுக
நடந்துபோனார்கள்; உடனே தூதன் அவனை
விட்டுப் போய்விட்டான். பேதுருவுக்குத் 11
தெளிவுவந்தபோது: ஏரோதின் கைக்கும் யூத
ஜனங்களின் எண்ணங்களுக்கும் என்னை விடு
தலையாக்கும்படிக்குக் [25]கர்த்தர் தம்முடைய
தூதனை அனுப்பினாரென்று நான் இப்பொ
ழுது மெய்யாய் அறிந்திருக்கிறேன் என்றான்.
அவன் இப்படி நிச்சயித்துக்கொண்டு, [26]மாற்கு 12
என்னும் பேர்கொண்ட யோவானுடைய
தாயாகிய மரியாள் வீட்டுக்கு வந்தான்; அங்கே
அநேகர் கூடி ஜெபம் பண்ணிக்கொண்டிருந்
தார்கள். பேதுரு வாசற்கதவைத் தட்டின 13
போது ரோதை என்னும் பேர்கொண்ட ஒரு

1 15. 8, 9
2 10. 47. ரோ. 9. 21-26
3 ரோ. 10. 12, 13: 15. 9, 16
4 8. 1. மத். 10. 6
5 6. 1: 9, 29
6 லூ. 1, 66. 1தெச. 1. 9
7 9. 27
8 13. 43: 14. 22. சங். 17. 3. நீதி. 23. 15, 26. 2கொ. 1. 17
9 6. 5
10 21. வச
11 9. 27, 30
12 மத். 18. 19
13 2. 17: 13. 1. எபே. 4. 13
14 21. 10
15 ரோ. 15. 26. 1கொ. 16. 1. 2கொ. 9. 1, 2
16 12. 25
17 மத். 4. 21: 20. 23
18 24. 27
19 யோ. 21. 18
20 2கொ. 1. 11. எபே. 6. 18. 1தெச. 5. 17. யாக். 5. 16
* இடைவிடாமல்
21 5. 19. சங். 37. 32, 33
22 16. 26
23 10. 3, 17: 11. 5. சங். 126. 1
24 16. 26
25 சங். 34. 7. தானி. 3. 28; 6. 22; 2கொ. 1. 10. எபி. 1. 14. 2பே. 2. 9
26 4. 23: 15. 37

14 பெண் ஒற்றுக்கேட்க வந்தாள். அவள் பே
துருவின் சத்தத்தை அறிந்து சந்தோஷத்தி
ஞல் கதவைத் திறவாமல், உள்ளேயோடி,
பேதுரு வாசலுக்கு முன்னே நிற்கிருர் என்று
15 அறிவித்தாள். அவர்கள்: நீ பிதற்றுகிருய்
என்ருர்கள். அவளோ அவர்தானென்று உறு
தியாய்ச் சாதித்தாள். அப்பொழுது அவர்கள்:
[1]அவருடைய தூதனுயிருக்கலாம் என்ருர்கள்.
16 பேதுரு பின்னும் தட்டிக்கொண்டிருந்தான்.
அவர்கள் திறந்தபோது அவனைக் கண்டு பிர
17 மித்தார்கள். அவர்கள் பேசாமலிருக்கும்படி
[2]அவன் கையமர்த்தி, கர்த்தர் தன்னைக் காவ
லிலிருந்து விடுதலையாக்கின விதத்தை அவர்
களுக்கு விவரித்து, இந்தச் செய்தியை யாக்
கோபுக்கும் சகோதரருக்கும் அறிவியுங்கள்
என்று சொல்லி; புறப்பட்டு, வேறொரு இட
18 த்திற்குப் போனுன். பொழுது விடிந்தபின்பு
பேதுருவைக் குறித்துச் சேவகருக்குள்ளே
19 உண்டான கலக்கம் கொஞ்சமல்ல. ஏரோது
அவனைத் தேடிக் காணுமற்போனபோது, கா
வற்காரரை விசாரணை செய்து, அவர்களைக்
கொலைசெய்யும்படி கட்டளையிட்டு, பின்பு
யூதேயா தேசத்தைவிட்டுச் செசரியா பட்டண
த்துக்குப் போய், அங்கே வாசம்பண்ணினுன்
20 அக்காலத்திலே ஏரோது தீரியர்பேரிலும்
சீதோனியர்பேரிலும் மிகவுங் கோபமாயிருந்
தான். [3]தங்கள் தேசம் ராஜாவின் தேசத்தி
ஞல் போஷிக்கப்பட்டபடியினுல், அவர்கள்
ஒருமனப்பட்டு, அவனிடத்தில் வந்து, ராஜா
வின் வீட்டு விசாரணைக்காரனுகிய பிலாஸ்து
வைத் தங்கள் வசமாக்கிச் சமாதானம் கேட்
21 டுக்கொண்டார்கள். குறித்தநாளிலே ஏரோது
ராஜவஸ்திரம் தரித்துக்கொண்டு, சிங்காசனத்
தின்மேல் உட்கார்ந்து, அவர்களுக்குப் பிரசங்
22 கம் பண்ணினுன். அப்பொழுது ஜனங்கள்
இது மனுஷ சத்தமல்ல, [4]இது தேவசத்
23 தம் என்று ஆர்ப்பரித்தார்கள். அவன் தேவ
னுக்கு மகிமையைச் செலுத்தாதபடியினுல்
உடனே கர்த்தருடைய தூதன் அவனை அடித்
தான்; அவன் புழுப்புழுத்து இறந்தான்.
24 தேவவசனம் வளர்ந்து [5]பெருகிற்று.
25 பர்னபாவும் சவுலும் தர்ம ஊழியத்தைநிறை
வேற்றின [6]பின்பு மாற்கு என்னும் மறுபேர்
கொண்ட யோவானைக் கூட்டிக்கொண்டு
எருசலேமை விட்டுத் திரும்பிவந்தார்கள்.

**13** அந்தியோகியா பட்டணத்திலுள்ள [7]சபை
யிலே பர்னபாவும், நீகர் என்னப்பட்ட சிமி
யோனும், சிரேனே ஊரானுகிய லூகியும்,
காற்பங்கு தேசாதிபதியாகிய ஏரோதுடனே
கூட வளர்க்கப்பட்ட மனாயீனும், சவுலும்,
தீர்க்கதரிசிகளாயும் போதகர்களாயும் இருந்
2 தார்கள். அவர்கள் கர்த்தருக்கு ஆராதனை
செய்து, உபவாசித்துக்கொண் டிருக்கிற
போது: [8]பர்னபாவையும் சவுலையும் நான்
அழைத்த ஊழியத்துக்காக [9]அவர்களைப் பிரித்
துவிடுங்கள் என்று பரிசுத்த ஆவியானவர்
3 திருவுளம்பற்றினுர். அப்பொழுது உபவா
சித்து ஜெபம்பண்ணி, அவர்கள்மேல் கைகளை
வைத்து, அவர்களை அனுப்பினுர்கள்.
அப்படியே அவர்கள் பரிசுத்தஆவியினுல் 4
அனுப்பப்பட்டுச் செலூக்கியா பட்டணத்
துக்கு வந்து, கப்பல் ஏறி, [10]அங்கிருந்து சீப்பு
ருதீவுக்குப் போனுர்கள். சாலமி பட்டணத் 5
தில் வந்தபோது [11]அவர்கள் யூதருடைய ஜெப
ஆலயங்களில் தேவவசனத்தைப் பிரசங்கித்
தார்கள். [12]யோவானும் அவர்களுக்கு உதவிக்
காரனுயிருந்தான். அவர்கள் பாப்போபட்ட 6
ணம்வரைக்கும் தீவைக் கடந்து வந்தபோது,
[13]பர்யேசு என்னும் பேர்கொண்ட மாயவித்
தைக்காரனும் கள்ளத் தீர்க்கதரிசியுமான ஒரு
யூதனைக் கண்டார்கள். அவன் விவேகமுள்ள 7
மனுஷனுகிய செர்கியு பவுல் என்னும் அதிப
தியுடனேகூட இருந்தான். அந்த அதிபதி பர்
னபாவையும் சவுலையும் அழைப்பித்து, அவர்
களிடத்தில் தேவவசனத்தைக் கேட்க ஆசை
யாயிருந்தான். மாயவித்தைக்காரன் என்று 8
அர்த்தங்கொள்ளும் பேரையுடைய அந்த எலி
மா என்பவன் அதிபதியை விசுவாசத்தி
னின்று திருப்பும்படி வகைதேடி, [14]அவர்க
ளோடு எதிர்த்து நின்ருன். அப்பொழுது 9
பவுல் என்று சொல்லப்பட்ட சவுல் [15]பரிசுத்த
ஆவியினுல் நிறைந்தவனுய் அவனை உற்றுப்
பார்த்து: எல்லாக் கபடமும் எல்லாப் பொல் 10
லாங்கும் நிறைந்தவனே, [16]பிசாசின் மகனே,
நீதிக்கெல்லாம் பகைஞனே, கர்த்தருடைய
செம்மையான வழிகளைப் புரட்டுவதில் ஓய
மாட்டாயோ? இதோ, இப்பொழுதே, கர்த் 11
தருடைய கை உன்மேல் வந்திருக்கிறது,
சிலகாலம் சூரியனைக் காணுமல் நீ குருடனு
யிருப்பாய் என்ருன். உடனே மந்தாரமும்
இருளும் அவன்மேல் விழுந்தது; அவன் தடு
மாறி, கைலாகு கொடுக்கிறவர்களைத் தேடி
னுன். அப்பொழுது அதிபதி சம்பவித்த 12
தைக் கண்டு, கர்த்தருடைய உபதேசத்தைக்
குறித்து அதிசயப்பட்டு, விசுவாசித்தான்.
பின்பு பவுலும் அவனைச் சேர்ந்தவர்களும் 13
பாப்போபட்டணத்தை விட்டுக் கப்பல் ஏறிப்
பம்பிலியாவிலிருக்கும் பெர்கேபட்டணத்து
க்கு வந்தார்கள். [17]யோவான் அவர்களை விட்
டுப் பிரிந்து, எருசலேமுக்குத் திரும்பிப் போ
னுன். அவர்கள் பெர்கேபட்டணத்தை விட் 14
டுப் புறப்பட்டு, பிசீதியாநாட்டிலுள்ள அந்தி
யோகியாவுக்கு வந்து, [18]ஓய்வுநாளிலே ஜெப
ஆலயத்தில் பிரவேசித்து, உட்கார்ந்தார்கள்.
நியாயப்பிரமாணமும் [19]தீர்க்கதரிசன ஆகம 15
மும் வாசித்து முடிந்தபின்பு: சகோதரரே,
[20]நீங்கள் ஜனங்களுக்குப் புத்தி சொல்ல விரும்
பினுல் சொல்லுங்கள் என்று சொல்லும்படி
ஜெபஆலயத் தலைவர்கள் அவர்களிடத்தில்
ஆள் அனுப்பினுர்கள். அப்பொழுது பவுல் 16
எழுந்திருந்து, கையமர்த்தி:
[21]இஸ்ரவேலரே, தேவனுக்குப் பயந்து நட
க்கிற சகல ஜனங்களே, கேளுங்கள். இஸ்ர 17
வேலராகிய இந்த ஜனத்திலுடைய தேவன்

1 [illegible] 18. 10
2 13. 16; 19. 33; 21. 40
3 [illegible] 27. 17
4 [illegible] 16. [illegible]
5 6. 7; 19. 20, [illegible] 1. 6
6 12. [illegible] 13. 5, 13; 15. 37
7 11. 22–27. [illegible] 16. 21
8 [illegible] 9. 38. [illegible] 10. 15. 1 [illegible] 2. 2. 7. 2 [illegible] 1. 11
9 [illegible] 1. 1. [illegible] 1. 15; 2. 9
10 4. 36
11 46. [illegible]
12 12. 25; 15. 37
13 8. 9
14 2 [illegible] 3. 8
15 4. 8
16 [illegible] 13. 38. [illegible] 8. 44. 1 [illegible] 3. 8
17 15. 38
18 16. 13; 18. 4
19 27. [illegible] 4. 16
20 [illegible] 13. 22
21 10. 35

நம்முடைய பிதாக்களைத் தெரிந்துகொண்டு,
[1]எகிப்து தேசத்தில் அவர்கள் பரதேசிகளா
ய்ச் சஞ்சரித்தபோது ஜனங்களை உயர்த்தி,
[2]தமது புயபலத்தினாலே அதிலிருந்து அவர்க
18 ளைப் புறப்படப்பண்ணி, நாற்பது வருஷ
காலமாய் [3]வனாந்தரத்தில் *அவர்களை ஆத
19 ரித்து, கானான்தேசத்தில் ஏழு ஜாதிகளை
அழித்து, [4]அவர்களுடைய தேசத்தை இவர்
களுக்குச் சுதந்தரமாகப் பங்கிட்டுக் கொடுத்து,
20 பின்பு ஏறக்குறைய நானூற்றைம்பது வருஷ
காலமாய் சாமுவேல் தீர்க்கதரிசிவரைக்கும்
அவர்களுக்கு [5]நியாயாதிபதிகளை ஏற்படுத்தி
21 வந்தார். அதுமுதல் தங்களுக்கு ஒரு ராஜா
வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள்;
[6]அப்படியே தேவன் பென்யமீன் கோத்திரத்
தானாகிய கீசுடைய குமாரனான சவுலை நாற்
பது வருஷகாலமாய் அவர்களுக்குக் கொடுத்
22 தார். பின்பு அவர் அவனைத் தள்ளி, தாவீ
தை அவர்களுக்கு ராஜாவாக ஏற்படுத்தி, [7]ஈசா
யின் குமாரனாகிய தாவீதை என் இருதயத்
துக்கு ஏற்றவனாகக் கண்டேன்; எனக்குச்
சித்தமானவைகளையெல்லாம் அவன் செய்
வான் என்று அவனைக்குறித்துச் சாட்சியுங்
23 கொடுத்தார். அவனுடைய சந்ததியிலே தே
வன் தமது வாக்குத்தத்தத்தின்படியே [8]இஸ்ர
வேலுக்கு ரட்சகராக இயேசுவை எழும்பப்
24 பண்ணினார். இவர் வெளிப்படுவதற்கு
முன்னே மனந்திரும்புதலுக்கேற்ற ஞானஸ்
நானத்தைக்குறித்து [9]யோவான் இஸ்ரவேலர்
25 யாவருக்கும் பிரசங்கித்தான். யோவான் தன்
பணிவிடை ஓட்டத்தை நிறைவேற்றுகிற
போது: [10]நீங்கள் என்னை யார் என்று நினைக்கி
றீர்கள், நான் அவர் அல்ல, இதோ, எனக்
குப்பின் ஒருவர் வருகிறார், அவருடைய பாத
ரட்சையை அவிழ்க்கிறதற்கும் நான் பாத்தி
26 ரன் அல்ல என்றான். சகோதரரே, ஆபிர
காமின் சந்ததியில் பிறந்தவர்களே, தேவனுக்
குப் பயந்து நடக்கிறவர்களே, இந்த ரட்சிப்
பின் வசனம் [11]உங்களுக்கு அனுப்பப்பட்டி
27 ருக்கிறது. எருசலேமில் குடியிருக்கிறவர்க
ளும் அவர்கள் அதிகாரிகளும் அவரை அறி
யாமலும், ஓய்வுநாள்தோறும் வாசிக்கப்படுகிற
தீர்க்கதரிசிகளின் வாக்கியங்களை அறியாம
லும், [12]அவரை ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்ததி
னால் அந்த வாக்கியங்களை நிறைவேற்றினார்
28 கள். மரணத்திற்கு ஏதுவானதொன்றும் அவ
ரிடத்தில் காணாதிருந்தும், [13]அவரைக் கொலை
செய்யும்படிக்குப் பிலாத்துவை வேண்டிக்
29 கொண்டார்கள். அவரைக்குறித்து [14]எழுதியி
ருக்கிறவைகள் யாவையும் அவர்கள் நிறை
வேற்றினபின்பு, [15]அவரை மரத்திலிருந்து இற
30 க்கி, கல்லறையிலே வைத்தார்கள். தேவனோ
அவரை [16]மரித்தோரிலிருந்து எழுப்பினார்.
31 தம்முடனேகூடக் கலிலேயாவிலிருந்து எரு
சலேமுக்குப் போனவர்களுக்கு அவர் அநேக
நாள் தரிசனமானார்; [17]அவர்களே ஜனங்க
ளுக்கு முன்பாக அவருக்குச் சாட்சிகளாயி
ருக்கிறார்கள். நீர் என்னுடைய குமாரன், 32
[18]இன்று நான் உம்மை ஜநிப்பித்தேன் என்று
இரண்டாம் சங்கீதத்தில் எழுதியிருக்கிறபடி
யே, இயேசுவை எழுப்பினதினாலே தேவன் 33
நம்முடைய பிதாக்களுக்கு அருளிச்செய்த
[19]வாக்குத்தத்தத்தை அவர்களுடைய பிள்ளைக
ளாகிய நமக்கு நிறைவேற்றினார் என்று நாங்க
ளும் உங்களுக்குச் சுவிசேஷமாய் அறிவிக்கி
றோம். இனி அவர் அழிவுக்குட்படாதப 34
டிக்கு அவரை மரித்தோரிலிருந்து எழுப்பி
னார் என்பதைக் குறித்து: [20]தாவீதுக்கு அரு
ளின நிச்சயமான கிருபைகளை உங்களுக்குக்
கட்டளையிடுவேன் என்று திருவுளம்பற்றினார்.
அன்றியும், [21]உம்முடைய பரிசுத்தர் அழிவைக் 35
காணவொட்டீர் என்று வேறொரு சங்கீதத்
தில் சொல்லியிருக்கிறது. தாவீது தன் காலத் 36
திலே தேவனுடைய சித்தத்தின்படி அவருக்கு
ஊழியஞ்செய்தபின்பு நித்திரையடைந்து,
[22]தன் பிதாக்களிடத்திலே சேர்க்கப்பட்டு,
அழிவைக் கண்டான். தேவனால் எழுப்பப் 37
பட்டவரோ [23]அழிவைக் காணவில்லை. ஆத 38
லால் சகோதரரே, [24]இவர் மூலமாய் உங்களுக்
குப் பாவமன்னிப்பு உண்டாகும் என்று அறி
விக்கப்படுகிறதென்றும், மோசேயின் நியா 39
யப்பிரமாணத்தினாலே நீங்கள் எவைகளினி
ன்று விடுதலையாகி நீதிமான்களாக்கப்படக்கூ
டாதிருந்ததோ, [25]விசுவாசிக்கிறவன் எவனும்
அவைகளினின்று இவராலே விடுதலையாகி
நீதிமானாக்கப்படுகிறான் என்றும் உங்களுக்
குத் தெரிந்திருக்கக்கடவது. அன்றியும், [26]தீர்க் 40
கதரிசிகளின் புஸ்தகத்திலே: அசட்டைக்கா 41
ரரே, பாருங்கள், பிரமித்து அழிந்துபோங்
கள்! உங்கள் நாட்களில் ஒரு கிரியையை
நான் நடப்பிப்பேன், ஒருவன் அதை உங்க
ளுக்கு விவரித்துச் சொன்னாலும் நீங்கள் விசு
வாசிக்கமாட்டீர்கள் என்று சொல்லியிருக்கிற
படி, உங்களுக்கு நேரிடாதபடிக்கு எச்சரிக்
கையாயிருங்கள் என்றான்.

அவர்கள் யூதருடைய ஜெபஆலயத்திலி 42
ருந்து புறப்படுகையில், அடுத்த ஓய்வுநாளிலே
இந்த வசனங்களைத் தங்களுக்குச் சொல்ல
வேண்டும் என்று புறஜாதியார் வேண்டிக்
கொண்டார்கள். ஜெபஆலயத்தில் கூடின 43
சபை கலைந்துபோனபின்பு யூதரிலும் யூத
மார்க்கத்தமைந்த பக்தியுள்ளவர்களிலும் அநே
கர் பவுலையும் பர்னபாவையும் பின்பற்றினார்
கள். அவர்களுடனே இவர்கள் பேசி, [27]தே
வனுடைய கிருபையிலே நிலைகொண்டிருக்
கும்படி அவர்களுக்குப் புத்திசொன்னார்கள்.

அடுத்த ஓய்வுநாளிலே கொஞ்சங்குறையப் 44
பட்டணத்தாரனைவரும் தேவவசனத்தைக் கே
ட்கும்படி கூடிவந்தார்கள். யூதர்கள் ஜனக்கூட் 45
டங்களைக் கண்டபோது பொறாமையினால்
நிறைந்து, பவுலினால் சொல்லப்பட்டவை
களுக்கு எதிரிடையாய்ப் பேசி, [28]விரோதித்
துத் தூஷித்தார்கள். அப்பொழுது பவுலும் 46
பர்னபாவும் தைரியங்கொண்டு அவர்களை

[1] 7. 17. உபா. 7. 6, 7. சங். 105. 23
[2] யாத். 13. 14, 16
[3] உபா. 1. 31
* அவர்கள் நடக்கையைப் பொறுத்திருந்து
[4] உபா. 7. 1. யோசு. 14. 1. ழி
[5] நியா. 2. 16
[6] 1 சாமு. 8. 5: 10. 1
[7] 1 சாமு. 13. 14. 2 சாமு. 5. 5
[8] சங். 132. 11. மத். 1. 21. லூக். 1. 32, 69. ரோ. 1 9: 11. 26
[9] மத். 3. 1–11. லூக். 3. 8
[10] மாற். 1. 7. லூக். 3. 16. யோ. 1. 20, 27
[11] 3. 26. மத். 10 6. லூக். 24. 47
[12] லூக். 23. 34: 24 20, 44 1 கொ. 2. 8
[13] மத். 27. 22. மாற். 15. 13, 14. லூக். 23. 21, 22. யோ. 19. 6, 15
[14] லூக். 18. 31: 24. 44. யோ. 19. 28
[15] மத். 27. 50. மாற். 15. 46. லூக். 28. 53. யோ. 19. 38
[16] மத். 28. 6
[17] 1. 3. மத். 28. 16. 1 கொ. 15. 5–7
[18] சங். 2. 7. எபி. 1. 5: 5. 5
[19] ரோ. 4 13. கலா. 3 16
[20] ஏசா. 55 3
[21] சங். 16 10
[22] 1 இரா. 2. 10
[23] 2. 24
[24] தானி. 9. 24. லூக் 24. 47. 1 யோ. 2. 12
[25] ஏசா. 53. 11. ஆப. 2 4. ரோ. 3. 28: 8 1, 3. எபி. 7. 19
[26] ஏசா. 29. 14. ஆப. 1 5
[27] 11. 23: 14. 22. தீத். 2. 11. எபி. 12. 15. 1 பே. 5. 12
[28] 18 6. 1 பே. 4. 4. யூதா. 10. ஏசா

நோக்கி: [1]முதலாவது உங்களுக்கே தேவவச
னத்தைச் சொல்லவேண்டியதாயிருந்தது; நீங்
களோ அதைத் தள்ளி, உங்களை நித்திய ஜீவ
னுக்கு அபாத்திரராகத் தீர்த்துக்கொள்ளுகிற
படியினால், [2]இதோ, நாங்கள் புறஜாதியாரி
47 டத்தில் போகிறோம். நீர் பூமியின் கடைசி
பரியந்தமும் இரட்சிப்பாயிருக்கும்படி [3]உம்
மை ஜாதிகளுக்கு ஒளியாக வைத்தேன் என்
கிற வேதவாக்கியத்தின்படி கர்த்தர் எங்களுக்
குக் கட்டளையிட்டிருக்கிறபடியினால் இப்ப
48 டிச் செய்கிறோம் என்றார்கள். புறஜாதியார்
அதைக் கேட்டுச் சந்தோஷப்பட்டு, கர்த்தரு
டைய வசனத்தை மகிமைப்படுத்தினார்கள்.
*நித்திய ஜீவனுக்கு நியமிக்கப்பட்டவர்கள்
49 எவர்களோ அவர்கள் விசுவாசித்தார்கள். கர்த்த
ருடைய வசனம் அத்தேசமெங்கும் பிரசித்த
50 மாயிற்று. யூதர்கள் பக்தியும் கனமுமுள்ள
ஸ்திரீகளையும் பட்டணத்து முதலாளிகளையும்
எடுத்துவிட்டு, [4]பவுலையும் பர்னபாவையும்
துன்பப்படுத்தும்படி செய்து, தங்கள் எல்லை
களுக்குப் புறம்பாக அவர்களைத் துரத்திவிட்
51 டார்கள். இவர்கள் தங்கள் கால்களில் படிந்த
[5]தூசியை அவர்களுக்கு எதிராக உதறிப்
போட்டு, இக்கோனியா பட்டணத்துக்குப்
52 போனார்கள். சீஷர்கள் சந்தோஷத்தினாலும்
[6]பரிசுத்த ஆவியினாலும் நிரப்பப்பட்டார்கள்.

**14** இக்கோனியா பட்டணத்திலே அவர்கள்
இருவரும் யூதருடைய ஜெபஆலயத்தில் பிர
வேசித்து, யூதரிலும் கிரேக்கரிலும் திரளான
ஜனங்கள் விசுவாசிக்கத்தக்கதாகப் பிரசங்கித்
2 தார்கள். விசுவாசியாத யூதர்கள் சகோதரருக்கு
விரோதமாகப் புறஜாதியருடைய மனதை
எழுப்பிவிட்டு, பகை யுண்டாக்கினார்கள்.
3 அவர்கள் அங்கே அநேகநாள் சஞ்சரித்துக்
கர்த்தரை முன்னிட்டுத் [7]தைரியமுள்ளவர்க
ளாய்ப் போதகம்பண்ணினார்கள்; அவர் தமது
கிருபையுள்ள வசனத்திற்குச் சாட்சியாக
அடையாளங்களும் அற்புதங்களும் அவர்கள்
கைகளால் செய்யப்படும்படி அநுக்கிரகம்
4 பண்ணினார். பட்டணத்து ஜனங்கள் பிரிந்து,
[8]சிலர் யூதரையும் சிலர் அப்போஸ்தலரையும்
5 சேர்ந்துகொண்டார்கள். இவர்களை [9]அவ
மானப்படுத்தவும் கல்லெறியவும் வேண்டு
மென்று, புறஜாதியாரும் யூதரும் அவர்கள்
6 அதிகாரிகளும் அமளிபண்ணுகையில், இவர்
கள் அதை அறிந்து, லிக்கவோனியா நாட்டி
லுள்ள பட்டணங்களாகிய லீஸ்திராவுக்கும்
தெர்பைக்கும் அவைகளின் சுற்றுப்புறங்களுக்
7 கும் [10]ஓடிப்போய்; அங்கே சுவிசேஷத்தைப்
பிரசங்கம் பண்ணினார்கள்.
8 லீஸ்திராவிலே ஒருவன் தன் தாயின்வயிற்றி
லிருந்து பிறந்ததுமுதல் [11]சப்பாணியாயிருந்து,
ஒருபோதும் நடவாமல், கால்கள் வழங்காத
9 வனாய் உட்கார்ந்து, பவுல் பேசுகிறதைக் கேட்
டுக்கொண்டிருந்தான். அவனைப் பவுல் உற்
றுப்பார்த்து, [12]இரட்சிப்புக்கேற்ற விசுவாசம்
10 †அவனுக்கு உண்டென்று கண்டு: நீ எழுந்து
காலூன்றி நிமிர்ந்துநில் என்று உரத்த சத்தத்
தோடே சொன்னான். [13]உடனே அவன்
குதித்தெழுந்து நடந்தான். பவுல் செய்ததை 11
ஜனங்கள் கண்டு, [14]தேவர்கள் மனுஷரூப
மெடுத்து நம்மிடத்தில் இறங்கி வந்திருக்கி
றார்கள் என்று லிக்கவோனியா பாஷையிலே
சத்தமிட்டுச் சொல்லி, பர்னபாவை யூப்பித் 12
தர் என்றும், பவுல் பிரசங்கத்தை நடத்தினவ
னானபடியினால் அவனை மெர்க்கூரி என்
றும் சொன்னார்கள். அல்லாமலும் பட்டணத் 13
துக்குமுன்னே இருந்த யூப்பித்தருடைய கோ
வில் பூஜாசாரி எருதுகளையும் பூமாலைகளையும்
‡வாசலண்டையிலே கொண்டுவந்து, ஜனங்க
ளோடேகூட அவர்களுக்குப் பலியிட மன
தாயிருந்தான். அப்போஸ்தலராகிய பர்னபா 14
வும் பவுலும் அதைக் கேட்டபொழுது, [15]தங்
கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு, கூட்
டத்துக்குள்ளே ஓடி, உரத்தசத்தமாய்: மனு 15
ஷரே, ஏன் இப்படிச் செய்கிறீர்கள்? [16]நாங்க
ளும் உங்களைப்போலப் பாடுள்ள மனுஷர்தா
னே; நீங்கள் இந்த §வீணான தேவர்களை விட்டு,
[17]வானத்தையும் பூமியையும் சமுத்திரத்தையும்
அவைகளிலுள்ள யாவற்றையும் உண்டாக்கின
ஜீவனுள்ள தேவனிடத்திற்குத் திரும்பவேண்
டுமென்று உங்களுக்குப் பிரசங்கிக்கிறோம்.
சென்ற காலங்களில் [18]அவர் சகல ஜனங்களை 16
யும் தங்கள் தங்கள் வழிகளிலே நடக்கவிட்டி
ருந்தும், அவர் நன்மைசெய்துவந்து, [19]வானத் 17
திலிருந்து மழைகளையும் செழிப்புள்ள காலங்
களையும் நமக்குத் தந்து, ஆகாரத்தினாலும் சந்
தோஷத்தினாலும் நம்முடைய இருதயங்களை
நிரப்பி, இவ்விதமாய் அவர் தம்மைக்குறித்துச்
[20]சாட்சிவிளங்கப் பண்ணாதிருந்ததில்லை என்
றார்கள். இப்படி அவர்கள் சொல்லியும் தங்க 18
ளுக்கு ஜனங்கள் பலியிடாதபடிக்கு அவர்
களை அமர்த்துகிறது அரிதாயிருந்தது.
பின்பு அந்தியோகியாவிலும் இக்கோனி 19
யாவிலுமிருந்து சில யூதர்கள் வந்து, ஜனங்க
ளுக்குப் போதனைசெய்து, [21]பவுலைக் கல்லெ
றிந்து, அவன் மரித்துப்போனானென்று எண்
ணி, அவனைப் பட்டணத்துக்கு வெளியிலே
இழுத்துக்கொண்டு போனார்கள். சீஷர்கள் 20
அவனைச் சூழ்ந்து நிற்கையில், அவன் எழுந்து,
பட்டணத்திற்குள் பிரவேசித்தான். மறுநாளில்
பர்னபாவுடனே கூடத் தெர்பைக்குப்புறப்பட்
டுப்போனான். அந்தப் பட்டணத்தில் அவர்கள் 21
சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, [22]அநேகரைச்
சீஷராக்கினபின்பு, லீஸ்திராவுக்கும் இக்கோ
னியாவுக்கும் அந்தியோகியாவுக்கும் திரும்பி
வந்து, சீஷருடைய மனதைத் திடப்படுத்தி, 22
[23]விசுவாசத்திலே நிலைத்திருக்கும்படி அவர்க
ளுக்குப் புத்திசொல்லி, [24]நாம் அநேக உபத்
திரவங்களின் வழியாய் தேவனுடைய ராஜ்
யத்தில் பிரவேசிக்கவேண்டுமென்று சொன்
னார்கள். அல்லாமலும் அந்தந்தச் சபைக 23
ளில் அவர்களுக்கு [25]மூப்பர்களை ஏற்படுத்தி
வைத்து, உபவாசித்து ஜெபம்பண்ணி, அவர்

1 13. 26. மத். 10. 6. லூ. 24. 27. ரோ. 1. 16
2 உபா. 32. 21. மத். 21. 43. ரோ. 10. 10
3 ஏசா. 42. 6; 49. 6. லூ. 2. 32
* நித்திய ஜீவனுடைய ஒழுங்குக்கு இணங்கினவர்கள். 2. 47. ரோ. 8. 30
4 2 தீமோ. 3. 11
5 18. 6, மத். 10. 14. மாற். 6. 11. லூ. 9. 5
6 2. 46. மத். 5. 12. யோ. 16. 22. 1 தெச 1. 6
7 மாற். 16. 20. எபி. 2. 4
8 28. 24
9 2 தீமோ. 3. 11
10 மத். 10. 23
11 3. 2
12 மத். 8. 10; 9. 28, 29
† அவனிடத்தில்
13 ஏசா. 35. 6
14 8. 10; 28. 6
‡ மண்டபம்
15 மத். 26. 65
16 10. 26. யாக். 5. 17. வெளி. 19. 10
§ மாயைகளை. 1 சாமு. 12. 21. 1 இரா. 16. 12. எரே. 14. 22. 1 கொ. 8. 4
17 ஆதி. 1. 1. சங். 33. 6; 146. 6. வெளி. 14. 7
18 17. 30. சங். 81. 12. 1 பே. 4. 3
19 யோபு 5. 10. சங். 147. 8. மத். 5. 45
20 17. 27. ரோ. 1. 20
21 13. 45. 2 கொ. 11. 25. 2 தீமோ. 3. 11
22 மத். 28. 19
23 11. 23; 13. 43
24 மத். 10. 38. ரோ. 8. 17. 2 தீமோ. 2. 11; 3. 12
25 தீத். 1. 5

கள் விசுவாசித்துப் பற்றிக்கொண்ட கர்த்த
24 ருக்கு அவர்களை ஒப்புவித்தார்கள். பின்பு
பிசீதியாநாட்டைக் கடந்து, பம்பிலியா நாட்
25 டிற்கு வந்து, பெர்கே ஊரில் வசனத்தைப்
பிரசங்கித்து, அத்தலியா பட்டணத்திற்குப்
26 போனார்கள். அங்கே கப்பல் ஏறி, [1]தாங்கள்
நிறைவேற்றின கிரியைக்காக தேவனுடைய
கிருபைக்கு ஒப்புவிக்கப்பட்டுப் புறப்பட்ட
27 அந்தியோகியாவுக்கு வந்தார்கள். அவர்கள்
அங்கே சேர்ந்தபொழுது சபையைக் கூடி
வரச்செய்து, [2]தேவன் தங்களைக்கொண்டு
செய்தவைகளையும், [3]அவர் புறஜாதிகளுக்கு
விசுவாசத்தின் கதவைத் திறந்ததையும் அறி
28 வித்து, அங்கே சீஷருடனேகூட அநேக
நாள் சஞ்சரித்திருந்தார்கள்.

15 சிலர் யூதேயாவிலிருந்து வந்து: [4]நீங்கள்
மோசேயினுடைய முறைமையின்படியே
விருத்தசேதனமடையாவிட்டால், [5]இரட்சிக்
கப்படமாட்டீர்கள் என்று சகோதரருக்குப்
2 போதகம்பண்ணினார்கள். அதினாலே அவர்
களுக்கும் பவுல் பர்னபா என்பவர்களுக்கும்
மிகுந்த வாக்குவாதமும் தர்க்கமும் உண்டான
போது, அந்த விஷயத்தினிமித்தம் [6]பவுலும்
பர்னபாவும் அவர்களைச் சேர்ந்த வேறு சில
ரும் எருசலேமிலிருக்கிற அப்போஸ்தலரிடத்
திற்கும் மூப்பரிடத்திற்கும் போகவேண்டு
3 மென்று தீர்மானித்தார்கள். அந்தப்படி அவர்
கள் சபையாரால் [7]வழிவிட்டனுப்பப்பட்டு,
பெனிக்கே சமாரியா நாடுகளின் வழியாய்ப்
போய், புறஜாதியார் மனந்திரும்பின செய்
தியை அறிவித்து, [8]சகோதரர் எல்லாருக்கும்
மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கினார்கள்.
4 அவர்கள் எருசலேமுக்கு வந்து, சபையாரா
லும் அப்போஸ்தலராலும் மூப்பராலும் ஏற்
றுக்கொள்ளப்பட்டபோது, [9]தேவன் தங்க
ளைக்கொண்டு செய்தவைகளை யெல்லாம்
5 அறிவித்தார்கள். அப்பொழுது பரிசேய சம
யத்தாரில் விசுவாசிகளான சிலர் எழுந்து,
[10]அவர்களை விருத்தசேதனம் பண்ணுகிறதும்
மோசேயின் நியாயப்பிரமாணத்தைக் கைக்
கொள்ளும்படி அவர்களுக்குக் கற்பிக்கிறதும்
அவசியம் என்றார்கள்.
6 அப்போஸ்தலரும் மூப்பரும் இந்தக் காரி
யத்தைக்குறித்து [11]ஆலோசனை பண்ணும்படி
7 கூடினார்கள். மிகுந்த தர்க்கம் உண்டான
போது, பேதுரு எழுந்து, அவர்களை நோக்கி:
[12]சகோதரரே, நீங்கள் அறிந்திருக்கிறபடி புற
ஜாதியார் என்னுடைய வாயினாலே சுவிசேஷ
வசனத்தைக் கேட்டு விசுவாசிக்கும்படி தே
வன் அநேக நாட்களுக்கு முன்னே உங்க
ளில் ஒருவனாகிய என்னைத் தெரிந்துகொண்
8 டார். இருதயங்களை அறிந்திருக்கிற தேவன்
[13]நமக்குப் பரிசுத்த ஆவியைத் தந்தருளினது
போல அவர்களுக்கும் தந்தருளி, அவர்களைக்
9 குறித்துச் சாட்சிகொடுத்தார்; விசுவாசத்தினா
லே [14]அவர்கள் இருதயங்களை அவர் சுத்தமா
க்கி, [15]நமக்கும் அவர்களுக்கும் யாதொரு வித்
தியாசமுமிராதபடி செய்தார். இப்படியிருக்க 10
[16]நம்முடைய பிதாக்களாலும் நம்மாலும் சுமக்
கக்கூடாதிருந்த நுகத்தடியைச் சீஷர் கழுத்
தின்மேல் சுமத்துவதினால், நீங்கள் தேவனைச்
சோதிப்பானேன்? கர்த்தராகிய இயேசுகிறி 11
ஸ்துவின் கிருபையினாலே அவர்கள் இரட்சிக்
கப்படுகிறது எப்படியோ, [17]அப்படியே நா
மும் இரட்சிக்கப்படுவோமென்று நம்பியிருக்
கிறோமே என்றான்.
அப்பொழுது கூடிவந்திருந்த யாவரும் அ 12
மைந்திருந்து, [18]பர்னபாவும் பவுலும் தங்களைக்
கொண்டு தேவன் புறஜாதிகளுக்குள்ளே செ
ய்த அடையாளங்கள் அற்புதங்கள் யாவையும்
விவரித்துச் சொல்லக்கேட்டார்கள். அவர்கள் 13
பேசி முடிந்தபின்பு, [19]யாக்கோபு அவர்களை
நோக்கி: சகோதரரே, எனக்குச் செவிகொடுங்
கள். தேவன் புறஜாதிகளினின்று தமது நாமத் 14
திற்காக ஒரு ஜனத்தைத் தெரிந்துகொள்ளும்
படி முதல்முதல் அவர்களுக்குக் கடாட்சித்த
ருளின விதத்தைச் *சிமியோன் [20]விவரித்துச்
சொன்னாரே. அதற்குத் தீர்க்கதரிசிகளுடைய 15
வாக்கியங்களும் ஒத்திருக்கிறது. எப்படியெ 16
னில், [21]மற்ற மனுஷரும், என்னுடைய நாமந்
தரிக்கப்படும் சகல ஜாதிகளும், கர்த்தரைத் தே
டும்படிக்கு, நான் இதற்குப்பின்பு திரும்பி 17
வந்து, விழுந்துபோன தாவீதின் கூடாரத்தை
மறுபடியும் எடுப்பித்து, அதிலே பழுதாய்ப்
போனவைகளை மறுபடியும் சீர்ப்படுத்தி, அ
தைச் செவ்வையாக நிறுத்துவேன் என்று
இவைகளையெல்லாஞ் செய்கிற கர்த்தர் சொல்
லுகிறார் என்று எழுதியிருக்கிறது. உலகத் 18
தோற்ற முதல் [22]தேவனுக்குத் தம்முடைய
கிரியைகளெல்லாம் தெரிந்திருக்கிறது. ஆத 19
லால் புறஜாதிகளில் தேவனிடத்தில் திரும்பு
கிறவர்களைக் [23]கலக்கப்பண்ணலாகாதென்று
ம், விக்கிரகங்களுக்குப் [24]படைத்த அசுசியா 20
னவைகளுக்கும், [25]வேசித்தனத்திற்கும், நெ
ருக்குண்டு செத்ததிற்கும், [26]இரத்தத்திற்கும்,
விலகியிருக்கும்படி அவர்களுக்கு நாம் எழுத
வேண்டுமென்றும் நான் தீர்மானிக்கிறேன்.
மோசேயின் [27]ஆகமங்கள் ஓய்வுநாள்தோறும் 21
ஜெபஆலயங்களில் வாசிக்கப்பட்டு வருகிற
படியால், பூர்வகாலந்தொடங்கிச் சகல பட்
டணங்களிலும் அந்த ஆகமங்களைப் பிரசங்கிக்
கிறவர்களும் உண்டே என்றான்.
அப்பொழுது தங்களில் சிலரைத் தெரிந்து 22
கொண்டு பவுலோடும் பர்னபாவோடும் அந்தி
யோகியாவுக்கு அனுப்புகிறது அப்போஸ்தல
ருக்கும் மூப்பருக்கும் சபையாரெல்லாருக்கும்
நலமாகக் கண்டது. அவர்கள் யாரென்றால்,
சகோதரரில் விசேஷித்தவர்களாகிய [28]பர்சபா
என்று மறுபேர்கொண்ட யூதாவும் சீலாவுமே.
இவர்கள் கையில் அவர்கள் எழுதிக் கொடுத் 23
தனுப்பின நிருபமாவது: அப்போஸ்தலரும்
மூப்பரும் சகோதரருமாகிய நாங்கள் அந்தி
யோகியாவிலும் சீரியாவிலும் சிலிசியாவிலும்
இருக்கும் புறஜாதியாராகிய சகோதரருக்கு

1 13. 1, 3: 15. 40.
2 15. 4, 12: 21. 19
3 1 கொ. 16. 9. 2 கொ. 2. 12. கொலோ. 4. 3, 4. வெளி. 3. 8.
4 கலா. 2. 12
5 லேவி. 12. 3. யோ. 7, 22. கலா. 5, 2. பிலி. 3. 2. கொலோ. 2. 8, 11, 16
6 கலா. 2. 1
7 ரோ. 15. 24. 1 கொ. 16. 6, 11. 3. யோ. 6. வச
8 14. 27. நூ. 15. 7, 10
9 14. 27: 21. 19
10 1 வச
11 மத். 18. 20
12 10. 20. மத். 16. 18, 19
13 1. 24: 10. 44
14 10. 15, 28, 43. 1 கொ. 1. 2, எபி. 9. 13, 14. 1 பே. 1. 22
15 ரோ. 10. 11
16 மத். 23. 4, கலா. 5. 1
17 ரோ. 3. 24. எபே. 2. 8. தீத். 2. 11: 3. 4, 5
18 14. 27
19 12. 17
* சீமோன்
20 7. ஆமோ. 9. 11, 12
21 ஆமோ. 9. 11, 12
22 எண். 23. 19. ஏசா. 46. 10
23 28. வச. 1 தெச. 1. 9
24 யாத். 20. 4, 5. 1 கொ. 8. 1. ஞ: 10, 28. வெளி. 2. 14, 20
25 1 கொ. 6. 9, 18. கொலோ. 3. 5. 1 தெச. 4. 3. 1 பே. 4. 3
26 லேவி. 17. 14. உபா. 12. 16, 23
27 13. 15, 27
28 1. 23

வாழ்த்துதல் சொல்லி எழுதிய நிருபம் என்ன
24 வென்றால்: எங்களால் கட்டளைபெருத சிலர்
எங்களிடத்திலிருந்து புறப்பட்டு, [1]நீங்கள் வி
ருத்தசேதன மடையவேண்டுமென்றும், நியா
யப்பிரமாணத்தைக் கைக்கொள்ளவேண்டு
மென்றும் சொல்லி, இப்படிப்பட்ட வார்த்தை
களால் உங்களைக் கலக்கி, உங்கள் ஆத்துமாக்
களைப் புரட்டினார்கள் என்று நாங்கள் கேள்
25 விப்பட்டபடியினாலே, நம்முடைய கர்த்தரா
கிய இயேசுகிறிஸ்துவின் நாமத்திற்காகத் [2]தங்
கள் பிராணனையும் ஒப்புக்கொடுக்கத் துணிந்
தவர்களும் எங்களுக்குப் பிரியமானவர்களு
மாயிருக்கிற பர்னபா பவுல் என்பவர்களோ
26 டேகூட, எங்களால் தெரிந்துகொள்ளப்பட்ட
சில மனுஷரை உங்களிடத்திற்கு அனுப்பு
கிறது ஒருமனப்பட்டுக் கூடின எங்களுக்கு
27 நலமாகக் கண்டது. அந்தப்படியே யூதா
வையும் சீலாவையும் அனுப்பியிருக்கிறோம்.
அவர்களும் இவைகளை வாய்மொழியாக உங்
28 களுக்கு அறிவிப்பார்கள். எவையெனில், [3]வி
க்கிரகங்களுக்குப் படைத்தவைகளுக்கும், இர
த்தத்திற்கும், நெருக்குண்டு செத்ததிற்கும்,
வேசித்தனத்திற்கும், நீங்கள் விலகியிருக்கவே
29 ண்டுமென்பதே. அவசியமான இவைகளையல்
லாமல் [4]பாரமான வேறொன்றையும் உங்கள்
மேல் சுமத்தாமலிருப்பது பரிசுத்தஆவிக்கும்
எங்களுக்கும் நலமாகக் கண்டது; [5]இவைக
ளுக்கு விலகி நீங்கள் உங்களைக் காத்துக்கொள்
வது நலமாயிருக்கும். சுகமாயிருப்பீர்களாக
என்று எழுதினார்கள்.
30 அவர்கள் அனுப்பிவிடப்பட்டு, அந்தியோ
கியாவுக்கு வந்து, சபையைக் கூடிவரச்செய்
31 து, நிருபத்தை ஒப்புவித்தார்கள். அதை அவர்
கள் வாசித்து, அதனாலுண்டாகிய *ஆறுத
32 லுக்காகச் சந்தோஷப்பட்டார்கள். யூதா சீலா
என்பவர்களும் தீர்க்கதரிசிகளாயிருந்தபடியி
னாலே அநேக வார்த்தைகளினால் சகோதரருக்
குப் புத்திசொல்லி, [6]அவர்களைத் திடப்படுத்தி;
33 சிலகாலம் அங்கேயிருந்து, [7]பின்பு சகோதர
ரால் சமாதானத்தோடே அப்போஸ்தலரிடத்
34 திற்கு அனுப்பிவிடப்பட்டார்கள். ஆகிலும்
சீலாவுக்கு அங்கே தரித்திருக்கிறது நலமாய்க்
35 கண்டது. பவுலும் பர்னபாவும் [8]அந்தியோகி
யாவிலே சஞ்சரித்து, வேறே அநேகரோடுங்
கூடக் கர்த்தருடைய வசனத்தை உபதேசித்
துப் பிரசங்கித்துக்கொண்டிருந்தார்கள்.
36 சிலநாளைக்குப்பின்பு பவுல் பர்னபாவை
நோக்கி: [9]நாம் கர்த்தருடைய வசனத்தை அறி
வித்திருக்கிற சகல பட்டணங்களிலுமுள்ள ச
கோதரர்கள் எப்படியிருக்கிறார்களென்று போ
37 ய்ப் பார்ப்போம் வாரும் என்றான். அப்பொ
ழுது பர்னபா என்பவன் [10]மாற்கு என்னும்
பேர்கொண்ட யோவானைக்கூட அழைத்துக்
38 கொண்டு போகவேண்டும் என்றான். பவு
லோ: [11]அவன் பம்பிலியாநாட்டிலே நம்மை
விட்டுப் பிரிந்து நம்மோடேகூட ஊழியத்து
க்கு வராததினாலே, அவனை அழைத்துக்கொ

1 1. கல. கலா. 2 4. 5. 4, 12. தீத். 1. 10, 11
2 13. 50: 14. 19. 1 கொ. 15. 30. 2 கொ. 11. 23, 26
3 20. வச: 21. 25. வெளி. 2. 14, 20
4 வெளி. 2. 24
5 2 கொ. 11. 9. யாக். 1. 27. 1 பே. 5. 21. யூதா. 20, 21. வச
* புத்திமதி
6 14, 22: 18. 23
7 1 கொ. 16. 11. எபி. 11. 31
8 13. 1
9 13. 4. மு: 14. 1. மு
10 12. 12, 25. கொலோ. 4. 10. 2 தீமோ. 4. 11
11 13. 13
12 14. 26: 20. 32
† கர்த்தருடைய
13 16. 5
14 14. 6
15 19. 22. ரோ. 16. 21. 1 கொ. 4. 17 பிலி. 2. 19. 1 தெச. 3. 2. 1 தீமோ. 1. 2. 2 தீமோ. 1. 2, 5
16 6. 3. 1 தீமோ. 5. 10. எபி. 11. 2
17 1 கொ. 9. 20. கலா. 2. 3: 5. 1–3
18 15. 28, 29
19 15. 41
20 ஆமோ. 8. 11, 12. 1 கொ. 12. 11
‡ இயேசுவின் ஆவி
21 2 கொ. 2. 12. 2 தீமோ. 4. 13
22 10. 30
23 2 கொ. 2. 13
24 பிலி. 1. 1

ண்டு போகக்கூடாது என்றான். இதைப்பற்றி 39
அவர்களுக்குள்ளே கடுங்கோப மூண்டபடியி
னால் அவர்கள் ஒருவரையொருவர் விட்டுப்பிரி
ந்தார்கள். பர்னபா மாற்குவைக் கூட்டிக்கொ
ண்டு கப்பல்வறிச் சீப்புருதீவுக்குப் போனான்.
பவுலோ சீலாவைத் தெரிந்துகொண்டு, 40
[12]சகோதரராலே †தேவனுடைய கிருபைக்கு
ஒப்புவிக்கப்பட்டு, புறப்பட்டு, சீரியாவிலும் 41
சிலிசியாவிலும் திரிந்து, [13]சபைகளைத் திடப்ப
டுத்தினான்.

## 16

அதன்பின்பு அவன் [14]தெர்பைக்கும் லீஸ்
திராவுக்கும் போனான். [15]அங்கே தீமோத்தேயு
என்னப்பட்ட ஒரு சீஷன் இருந்தான்; அவன்
தாய் விசுவாசமுள்ள யூதஸ்திரீ, அவன் தகப்
பன் கிரேக்கன். அவன் லீஸ்திராவிலும் இக் 2
கோனியாவிலுமுள்ள [16]சகோதரராலே நற்சா
ட்சி பெற்றவனாயிருந்தான். அவனைப் பவுல் 3
தன்னுடனே கூட்டிக்கொண்டு போகவேண்டு
மென்று விரும்பி, அவனுடைய தகப்பன் கிரே
க்கன் என்று அவ்விடங்களிலிருக்கும் யூதர்க
ளெல்லாரும் அறிந்திருந்தபடியால், [17]அவர்கள்
நிமித்தம் அவனுக்கு விருத்தசேதனம் பண்ணி
னான். அவர்கள் பட்டணங்கள்தோறும் போ 4
கையில், [18]எருசலேமிலிருக்கும் அப்போஸ்த
லராலும் மூப்பராலும் விதிக்கப்பட்ட சட்டங்க
ளைக் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு ஒப்பு
வித்தார்கள். அதினாலே சபைகள் [19]விசுவா 5
சத்தில் ஸ்திரப்பட்டு, நாளுக்குநாள் பெருகின.
அவர்கள் பிரிகியா கலாத்தியா நாடுகளைக் 6
கடந்துபோனபோது, ஆசியாவிலே வசனத்
தைச் சொல்லாதபடிக்குப் [20]பரிசுத்த ஆவியி
னாலே தடைபண்ணப்பட்டு, மீசியா தேச 7
மட்டும் வந்து, பித்தினியாநாட்டுக்குப் போகப்
பிரயத்தனம்பண்ணினார்கள்;‡ஆவியானவரோ
அவர்களைப் போகவொட்டாதிருந்தார். அப் 8
பொழுது அவர்கள் மீசியா பக்கமாய்ப்
போய், [21]துரோவாவுக்கு வந்தார்கள். அங்கே 9
இராத்திரியிலே பவுலுக்கு ஒரு தரிசனம் உண்
டாயிற்று; அதென்னவெனில், [22]மக்கெதோ
னியா தேசத்தான் ஒருவன் வந்து நின்று: நீர்
மக்கெதோனியாவுக்கு வந்து எங்களுக்கு உத
விசெய்யவேண்டுமென்று தன்னை வேண்டிக்
கொண்டதாக இருந்தது. அந்தத் தரிசனத்தை 10
அவன் கண்டபோது, அவர்களுக்குச் சுவிசே
ஷத்தை அறிவிக்கும்படி கர்த்தர் எங்களை
அழைத்தாரென்று நாங்கள் நிச்சயித்துக்கொ
ண்டு, [23]உடனே மக்கெதோனியாவுக்குப் புறப்
பட்டுப் போகப் பிரயத்தனம்பண்ணி,
துரோவாவில் கப்பல் ஏறி, சாமோத்திராக் 11
கே தீவுக்கும், மறுநாளிலே நெயாப்போலி
பட்டணத்துக்கும் நேராய் ஓடி, அங்கேயிரு 12
ந்து மக்கெதோனியா தேசத்து நாடுகளில் ஒன்
றிற்குத் தலைமையானதும் ரோமர் குடியேறி
னதுமான [24]பிலிப்பி பட்டணத்துக்கு வந்து,
அந்தப் பட்டணத்திலே சிலநாள் தங்கியிருந்
தோம். ஓய்வுநாளில் நாங்கள் பட்டணத்துக்கு 13
வெளியே போய், ஆற்றினருகே வழக்கமாய்

ஜெபம்பண்ணுகிற இடத்தில் உட்கார்ந்து,
அங்கே கூடிவந்த ஸ்திரீகளுக்கு உபதேசித்
14 தோம். அப்பொழுது தியத்தீரா ஊராளும்
இரத்தாம்பரம் விற்கிறவளும் தேவனை வணங்
குகிறவளுமாகிய லீதியாள் என்னும் பேரு
ள்ள ஒரு ஸ்திரீ கேட்டுக்கொண்டிருந்தாள்;
[1]பவுல் சொல்லியவைகளைக் கவனிக்கும்படி
கர்த்தர் அவள் இருதயத்தைத் திறந்தருளினார்.
15 அவளும் அவள் வீட்டாரும் ஞானஸ்நானம்
பெற்றபின்பு, அவள் எங்களை நோக்கி: நீங்
கள் என்னைக் கர்த்தரிடத்தில் விசுவாசமுள்ள
வளென்று எண்ணினால், [2]என் வீட்டிலே
வந்து தங்கியிருங்கள் என்று எங்களை வருந்
திக் கேட்டுக்கொண்டாள்.
16 நாங்கள் ஜெபம்பண்ணுகிற இடத்துக்குப்
போகையில் *குறிசொல்ல ஏவுகிற [3]ஆவியை
க்கொண்டிருந்து, [4]குறி சொல்லுகிறதினால்
தன் எஜமான்களுக்கு மிகுந்த ஆதாயத்தை
உண்டாக்கின ஒரு பெண் எங்களுக்கு எதிர்ப்
17 பட்டாள். அவள் பவுலையும் எங்களையும் பின்
தொடர்ந்து வந்து: [5]இந்த மனுஷர் உன்னத
மான தேவனுடைய ஊழியக்காரர், [6]இரட்
சிப்பின் வழியை நமக்கு அறிவிக்கிறவர்கள்
18 என்று சத்தமிட்டாள். இப்படி அநேகநாள்
செய்துகொண்டுவந்தாள். பவுல் சினங்கொ
ண்டு, திரும்பிப்பார்த்து: [7]நீ இவளை விட்டுப்
புறப்படும்படி இயேசுகிறிஸ்துவின் நாமத்தி
னாலே உனக்குக் கட்டளையிடுகிறேன் என்று
அந்த ஆவியுடனே சொன்னான்; அந்நேரமே
அது புறப்பட்டுப் போயிற்று.
19 அவளுடைய எஜமான்கள் தங்கள் ஆதாய
த்து நம்பிக்கை அற்றுப்போயிற்றென்று கண்
டு, [8]பவுலையும் சீலாவையும் பிடித்து, சந்தை
வெளியிலுள்ள அதிகாரிகளிடத்தில் இழுத்துக்
20 கொண்டு போனார்கள். அவர்களை அதிகாரி
களிடத்தில் ஒப்புவித்து: [9]யூதர்களாகிய இந்த
மனுஷர் நம்முடைய பட்டணத்தில் கலகம்
21 பண்ணி, ரோமராகிய நாம் ஏற்றுக்கொள்ள
வும் அநுசரிக்கவும் தகாத முறைமைகளைப்
22 போதிக்கிறார்கள் என்றார்கள். அப்பொழுது
ஜனங்கள் கூட்டங்கூடி, அவர்களுக்கு விரோ
தமாய் எழும்பினார்கள். அதிகாரிகள் அவர்
கள் வஸ்திரங்களைக் கிழித்துப்போடவும்,
23 [10]அவர்களை அடிக்கவும் சொல்லி; அவர்களை
அநேக அடி அடித்தபின்பு, சிறைச்சாலையிலே
வைத்து அவர்களைப் பத்திரமாய்க் காக்கும்
படி சிறைச்சாலைக்காரனுக்குக் கட்டளையிட்
24 டார்கள். அவன் இப்படிப்பட்ட கட்டளை
யைப் பெற்று, அவர்களை உட்காவலறையிலே
அடைத்து, அவர்கள் கால்களைத் தொழுமரத்
25 தில் மாட்டிவைத்தான். நடுராத்திரியிலே பவு
லும் சீலாவும் ஜெபம்பண்ணி, [11]தேவனைத்
துதித்துப் பாடினார்கள்; காவலில் வைக்கப்
பட்டவர்கள் அதைக் கேட்டுக்கொண்டிருந்
26 தார்கள். சடிதியிலே சிறைச்சாலையின் அஸ்
திபாரங்கள் அசையும்படியாக பூமி மிகவும்
அதிர்ந்தது; [12]உடனே கதவுகளெல்லாம் திறவு

1 லூ. 24. 45
2 லூ. 24. 29. எ 13. 2
* பித்தோ தேவன்
3 1 சாமு. 28. 7
4 19. 24
5 ஆதி. 14. 18, 28
6 18. 26. எபி. 10. 20
7 மாற். 1. 25, 34: 16. 17
8 19. 24–27. மத். 10. 18. 2 கொ. 6. 5
9 17. 6. 1 இரா. 18. 17
10 2 கொ. 6. 5: 11, 23, 25. 1 தெச. 2. 2
11 சங். 34. 1. யாக். 5. 13
12 4. 31: 5. 19: 12. 7, 10
13 நீதி. 24. 11, 12. 1 தெச. 5. 15
14 எரே. 5. 22
15 2. 37: 9. 6. லூ. 3. 10
16 13. 39. ஆப. 2. 4. யோ. 3. 16, 36: 6. 47
17 2. 39
18 ரோ. 1. 14, 16
19 லூ. 5. 29
20 ரோ. 5. 11
21 22. 25. தானி. 6. 18, 19. மத். 10. 16
22 மத். 8. 34
23 14. லூ

ண்டது; எல்லாருடைய கட்டுகளும் கழன்று
போயிற்று. சிறைச்சாலைக்காரன் நித்திரை 27
தெளிந்து, சிறைச்சாலையின் கதவுகள் திறந்
திருக்கிறதைக் கண்டு, கட்டுண்டவர்கள் ஓடிப்
போனார்களென்று எண்ணி, பட்டயத்தை
உருவித் தன்னைக் கொலை செய்துகொள்ளப்
போனான். பவுல் மிகுந்த சத்தமிட்டு: [13]நீ 28
உனக்குக் கெடுதி ஒன்றுஞ் செய்துகொள்ளா
தே; நாங்கள் எல்லாரும் இங்கேதான் இருக்கி
றோம் என்றான். அப்பொழுது அவன் தீபங் 29
களைக் கொண்டுவரச்சொல்லி, உள்ளே ஓடி,
[14]நடுநடுங்கி, பவுலுக்கும் சீலாவுக்கும் முன்
பாக விழுந்து, அவர்களை வெளியே அழைத்து 30
வந்து: ஆண்டவமாரே, [15]இரட்சிக்கப்படுவத
ற்கு நான் என்ன செய்யவேண்டும் என்றான்.
அதற்கு அவர்கள்: [16]கர்த்தராகிய இயேசுகிறி 31
ஸ்துவை விசுவாசி, [17]அப்பொழுது நீயும் உன்
வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள் என்று
சொல்லி, அவனுக்கும் [18]அவன் வீட்டிலிரு 32
ந்த யாவருக்கும் கர்த்தருடைய வசனத்தைப்
போதித்தார்கள். மேலும் இராத்திரியில் அந் 33
நேரத்திலேதானே அவன் அவர்களை அழைத்
துக்கொண்டுபோய், அவர்களுடைய காயங்க
ளைக் கழுவினான். அவனும் அவனுடையவர்
கள் அனைவரும் உடனே ஞானஸ்நானம்பெற்
றார்கள். பின்பு அவன் அவர்களைத் தன் 34
வீட்டிற்குக் கூட்டிக்கொண்டுபோய், [19]அவர்
களுக்கு போஜனங்கொடுத்து, [20]தன் வீட்டார்
அனைவரோடுங்கூட தேவனிடத்தில் விசுவாச
முள்ளவனாகி மனமகிழ்ச்சியாயிருந்தான்.
பொழுதுவிடிந்தபின்பு: அந்த மனுஷரை 35
விட்டுவிடுங்கள் என்று சொல்ல அதிகாரிகள்
சேவகர்களை அனுப்பினார்கள். சிறைச்சாலைக் 36
காரன் பவுலுக்கு இந்த வார்த்தைகளை அறி
வித்து: உங்களை விடுதலையாக்கும்படிக்கு அதி
காரிகள் கட்டளை அனுப்பினார்கள்; ஆகை
யால் நீங்கள் இப்பொழுது புறப்பட்டுச் சமா
தானத்துடனே போங்கள் என்றான். அதற் 37
குப் பவுல்: [21]ரோமராகிய எங்களை அவர்கள்
நியாயம் விசாரியாமல், வெளியரங்கமாய் அடி
த்து, சிறைச்சாலையிலே போட்டார்கள்; இப்
பொழுது இரகசியமாய் எங்களை விடுதலையா
க்குகிறார்களோ? அப்படியல்ல, அவர்களே
வந்து, எங்களை வெளியே அழைத்து அனுப்பி
விடட்டும் என்றான். சேவகர் இந்த வார்த் 38
தைகளை அதிகாரிகளுக்கு அறிவித்தார்கள்.
ரோமராயிருக்கிறார்களென்று அவர்கள் கேட்
டபொழுது பயந்துவந்து, அவர்களுடனே நய 39
வாய்ப் பேசி, அவர்களை வெளியே அழைத்
துக்கொண்டுபோய், [22]பட்டணத்தை விட்டுப்
புறப்பட்டுப் போகும்படி கேட்டுக்கொண்
டார்கள். அந்தப்படி அவர்கள் சிறைச்சாலை 40
யிலிருந்து புறப்பட்டு [23]லீதியாளிடத்திற்குப்
போய், சகோதரரைக் கண்டு, அவர்களுக்கு
ஆறுதல் சொல்லிப் போய்விட்டார்கள்.

# 17

அவர்கள் அம்பிபோலி பட்டணத்தையும்
அப்பொலோனியாபட்டணத்தையும் கடந்து,

தெசலோனிக்கேபட்டணத்துக்கு வந்தார்கள்;
அங்கே யூதருக்கு ஒரு ஜெபஆலயம் இருந்தது.
2 பவுல் தன் வழக்கத்தின்படியே அவர்களிடத்
தில் போய், [1]மூன்று ஓய்வுநாட்களில் வேத
வாக்கியங்களின் நியாயங்களை எடுத்து அவர்
3 களுடனே சம்பாஷித்து, கிறிஸ்து பாடுபட
வும் மரித்தோரிலிருந்து எழுந்திருக்கவும்
வேண்டியதென்றும், [2]நான் உங்களுக்கு அறி
விக்கிற இந்த இயேசுவே கிறிஸ்து என்றும்
4 காண்பித்து, திருஷ்டாந்தப்படுத்தினான். அவ
ர்களில் சிலரும், பக்தியுள்ள கிரேக்கரில் திர
ளான ஜனங்களும், கனம்பொருந்திய ஸ்திரீ
களில் அநேகரும் விசுவாசித்து, [3]பவுலையும்
5 சீலாவையும் சேர்ந்துகொண்டார்கள். விசுவா
சியாத யூதர்கள் வைராக்கியங்கொண்டு வீண
ராகிய சில பொல்லாதவர்களைச் சேர்த்துக்
கொண்டு, கூட்டங்கூடி, பட்டணத்தில் அம
ளியுண்டாக்கி, [4]யாசோனுடைய வீட்டை
வளைந்துகொண்டு, அவர்களைப் *பட்டணத்தா
ருக்குமுன்பாக இழுத்துக்கொண்டுவர வகை
6 தேடினார்கள். அவர்களைக் காணாமல், யாசோ
னையும் சில சகோதரரையும் பட்டணத்து அதி
காரிகளிடத்தில் இழுத்துக்கொண்டு வந்து:
[5]உலகத்தைக் கலக்குகிறவர்கள் இங்கேயும் வந்
7 திருக்கிறார்கள். இவர்களை யாசோன் ஏற்றுக்
கொண்டான். [6]இவர்களெல்லாரும் இயேசு
என்னும் வேறொருவனை ராஜா என்று சொ
ல்லி, ராயனுடைய கட்டளைகளுக்கு விரோத
மாகச் செய்கிறார்களென்று கூக்குரலிட்டு,
8 இவைகளைக் கேட்டுக்கொண்டிருந்த ஜனங்க
ளையும் பட்டணத்து அதிகாரிகளையும் [7]கலங்கப்
9 பண்ணினார்கள். பின்பு அவர்கள் யாசோனி
டத்திலும் மற்றவர்களிடத்திலும் ஜாமீன்வாங்
கிக்கொண்டு அவர்களை விட்டுவிட்டார்கள்.
10 உடனே சகோதரர் இராத்திரிகாலத்திலே
[8]பவுலையும் சீலாவையும் பெரோயாபட்டணத்
துக்கு அனுப்பிவிட்டார்கள்; அவர்கள் அங்கே
சேர்ந்து, யூதருடைய ஜெபஆலயத்திற்குப்
11 போனார்கள். அந்தப் பட்டணத்தார் மனோ
வாஞ்சையாய் வசனத்தை ஏற்றுக்கொண்டு,
[9]காரியங்கள் இப்படியிருக்கிறதா என்று தினந்
தோறும் வேதவாக்கியங்களை ஆராய்ந்துபார்த்
ததினால், தெசலோனிக்கேயில் உள்ளவர்
களைப்பார்க்கிலும் †நற்குணசாலிகளா யிருந்
12 தார்கள். அதனால் அவர்களில் அநேகம்பே
ரும் கனம்பொருந்திய கிரேக்கரில் அநேக
ஸ்திரீகளும் புருஷர்களும் விசுவாசித்தார்கள்.
13 பெரோயாவிலும் தேவவசனம் பவுலினால்
அறிவிக்கப்படுகிறதென்று தெசலோனிக்கே
யரான யூதர்கள் அறிந்தபோது, அங்கேயும்
வந்து, [10]ஜனங்களைக் ‡கிளப்பிவிட்டார்கள்.
14 உடனே சகோதரர் [11]பவுலைச் சமுத்திரவழி
யாய்ப் போக அனுப்பிவிட்டார்கள். சீலா
வும் தீமோத்தேயும் அங்கே தங்கியிருந்தார்கள்.
15 பவுலை வழிநடத்தினவர்கள் அவனை அத்தே
னே பட்டணம்வரைக்கும் அழைத்துக்கொ
ண்டுபோய்; அங்கே சீலாவும் தீமோத்தேயும்
[12]அதிசீக்கிரமாகத் தன்னிடத்திற்கு வரும்படி
அவர்களுக்குச் சொல்லக் கட்டளைபெற்றுக்
கொண்டு புறப்பட்டுப் போனார்கள்.
அத்தேனே பட்டணத்தில் பவுல் அவர்க 16
ளுக்காகக் காத்துக்கொண்டிருக்கையில், அந்
தப் பட்டணம் விக்கிரகங்களால் நிறைந்திருக்
கிறதைக் கண்டு, [13]தன் ஆவியில் மிகுந்த வை
ராக்கியமடைந்து, ஜெபஆலயத்தில் யூதரோ 17
டும், [14]பக்தியுள்ளவர்களோடும், சந்தைவெளி
யில் எதிர்ப்பட்டவர்களோடும் தினந்தோறும்
சம்பாஷணை பண்ணினான். அப்பொழுது 18
எப்பிக்கூரரும் ஸ்தோயிக்கருமான [15]ஞானிக
ளில் சிலர் அவனுடனே வாக்குவாதம் பண்ணி
னார்கள். சிலர்: இந்த வாயாடி என்ன பேசப்
போகிறான் என்றார்கள். சிலர்: இவன் அந்நிய
§தேவதைகளை அறிவிக்கிறவனாகக் காண்கி
றது என்றார்கள். அவன் இயேசுவையும் உயிர்
த்தெழுதலையும் அவர்களுக்குப் பிரசங்கித்த
படியினாலே அப்படிச் சொன்னார்கள். அவர் 19
கள் அவனை மார்ஸ் மேடைக்கு அழைத்துக்
கொண்டுபோய்: [16]நீ சொல்லுகிற புதிதான
உபதேசம் இன்னதென்று நாங்கள் அறியலா
மா? நூதனமான [17]காரியங்களை எங்கள் காது 20
கள் கேட்கப்பண்ணுகிறாய்; அவைகளின்
கருத்து இன்னதென்று அறிய மனதாயிருக்கி
றோம் என்றார்கள். அந்த அத்தேனே பட்ட 21
ணத்தாரெல்லாரும், அங்கே தங்குகிற அந்நிய
ரும், நவமானகாரியங்களைச் சொல்லுகிறதிலும்
கேட்கிறதிலுமேயொழிய வேறொன்றிலும்
பொழுதுபோக்குகிறதில்லை. அப்பொழுது 22
பவுல் மார்ஸ்மேடையின் நடுவிலே நின்று:
அத்தேனரே, [18]எந்தவிஷயத்திலும் நீங்கள்
மிகுந்த தேவதாபக்தியுள்ளவர்களென்று காண்
கிறேன். எப்படியென்றால், நான் சுற்றித்தி 23
ரிந்து, ‖உங்கள் ஆராதனைக்குரியவைகளைக்
[19]கவனித்துப் பார்த்தபொழுது, **அறியப்படாத
தேவனுக்கு** என்று எழுதியிருக்கிற ஒரு பலி
பீடத்தைக் கண்டேன்; நீங்கள் அறியாமல்
ஆராதிக்கிற அவரையே நான் உங்களுக்கு
அறிவிக்கிறேன். உலகத்தையும் அதிலுள்ள 24
யாவற்றையும் உண்டாக்கின [20]தேவனானவர்
வானத்திற்கும் பூமிக்கும் ஆண்டவராயிருக்கி
றபடியால் [21]கைகளினால் கட்டப்பட்ட கோ
வில்களில் அவர் வாசம்பண்ணுகிறதில்லை.
எல்லாருக்கும் ஜீவனையும் சுவாசத்தையும் சக 25
லத்தையும் கொடுக்கிற அவர், [22]தமக்கு யா
தொன்று தேவையானதுபோல, மனுஷர்
கைகளால் பணிவிடை கொள்ளுகிறதுமில்லை.
மனுஷஜாதியான சகல ஜனங்களையும் [23]அவர் 26
ஒரே இரத்தத்தினாலே தோன்றப்பண்ணி,
பூமியின்மீதெங்கும் குடியிருக்கச் செய்து,
[24]முன் தீர்மானிக்கப்பட்ட காலங்களையும் அவர்
கள் குடியிருப்பின் எல்லைகளையும் குறித்தி
ருக்கிறார்; ¶கர்த்தராகிய தம்மை அவர்கள் தட 27
வியாகிலும் கண்டுபிடிக்கத்தக்கதாகத் தம்மைத்
தேடும்படிக்கு அப்படிச் செய்தார்? [25]அவர் நம்
மில் ஒருவருக்கும் தூரமானவரல்லவே. ஏனெ 28

1 9. 20: 13. 5, 14. லூ. 4. 16
2 18. 28. லூ. 24. 26, 46. கலா. 3. 1
3 28. 24. 2 கொ. 8. 5. 1 தெச. 1. 5, 6
4 ரோ. 16. 21
* ஜனங்களுக்கு
5 16. 20. லூ. 23. 5
6 லூ. 23. 2. யோ. 19. 12. 1 பே. 2. 13
7 மத். 2. 3. யோ. 11. 48
8 14. அப். 9. 25.
9 ஏசா. 34. 16. லூ. 16. 29. யோ. 5. 39
† உத்தமர்கள்
10 லூ. 12. 51
‡ கலக்கி ஏவிவிட்டார்கள்
11 மத். 10. 23
12 18. 5
13 சங். 119. 136. 2 பே. 2. 8
14 8. 2
15 கொலோ. 2. 8
§ தேவர்களை
16 யோ. 18. 34. 1 கொ. 2. 7, 8
17 ஓசி. 8. 12
18 எரே. 50. 38
‖ நீங்கள் பூஜிப்பவைகளை
19 கலா. 4. 8. 2 தெச. 2. 4
20 14. 15. மத். 11. 25
21 7. 48
22 யோபு 12. 10. சங். 50. 8. சகரி. 12. 1. ரோ. 11. 36
23 மல். 2. 10
24 சங். 31. 15. ஏசா. 45. 21
¶ தேவனை
25 14. 17. ரோ. 1. 20

னில் அவருக்குள் நாம் பிழைக்கிறோம்,
[1]அசைகிறோம், இருக்கிறோம்; அப்படியே
உங்கள் புலவர்களிலும் சிலர், [2]நாம் அவரு
டைய *சந்ததியார் என்று சொல்லியிருக்கி
29 றார்கள். நாம் தேவனுடைய சந்ததியாராயி
ருக்க, [3]மனுஷருடைய சித்திரவேலையினாலும்
யுக்தியினாலும் உருவாக்கின பொன், வெள்ளி,
கல் இவைகளுக்கு தெய்வம் ஒப்பாயிருக்கு
30 மென்று நாம் நினைக்கலாகாது. அறியாமை
யுள்ள [4]காலங்களை தேவன் †காணாதவர்போலி
ருந்தார்; [5]இப்பொழுதோ மனந்திரும்பவேண்
டுமென்று எங்குமுள்ள மனுஷரெல்லாருக்
31 கும் கட்டளையிடுகிறார். மேலும் ஒருநாளைக்
குறித்திருக்கிறார்; [6]அதிலே அவர்தாம் நியமித்த
மனுஷனைக்கொண்டு, பூலோகத்தை நீதியாய்
நியாயந்தீர்ப்பார்; [7]அந்த மனுஷனை மரித்தோ
ரிலிருந்து எழுப்பினதினாலே அதின் நிச்சயத்
தை எல்லாருக்கும் விளங்கப் பண்ணினார்
என்றான்.
32 மரித்தோரின் உயிர்த்தெழுதலைக் குறித்து
அவர்கள் கேட்டபொழுது, சிலர் ‡இகழ்ந்தார்
கள். சிலர்: [8]நீ சொல்லுகிறதை இன்னொரு
33 வேளை கேட்போம் என்றார்கள். இப்படியி
ருக்க, பவுல் அவர்களைவிட்டுப் போய்விட்
34 டான். சிலர் அவனைப் பற்றிக்கொண்டு, விசு
வாசிகளானார்கள். அவர்களில் மார்ஸ்மேடை
யின் நியாயாதிபதிகளில் ஒருவனாகிய தியொ
னீசியு என்பவனும், தாமரி என்னும் பேரு
ள்ள ஒரு ஸ்திரீயும், இவர்களுடனே வேறு
சிலரும் இருந்தார்கள்.

18 அதன்பின்பு பவுல் அத்தேனேபட்டணத்
தை விட்டு, கொரிந்துபட்டணத்துக்கு வந்து;
2 யூதரெல்லாரும் ரோமாபுரியைவிட்டுப் போ
கும்படி கிலவுதியுராயன் கட்டளையிட்டபடியி
னாலே, இத்தாலியாவிலிருந்து புதிதாய் வந்தி
ருந்த பொந்து தேசத்தானாகிய [9]ஆக்கில்லா
என்னும் நாமமுள்ள ஒரு யூதனையும் அவன்
மனைவியாகிய பிரிஸ்கில்லாளையும் அங்கே
3 கண்டு, அவர்களிடத்திற்குப் போனான். அவர்
கள் கூடாரம் பண்ணுகிற தொழிலாளிகளாயி
ருந்தார்கள்; [10]தானும் அந்தத் தொழில் செய்கி
றவனானபடியினாலே அவர்களிடத்தில் தங்கி,
4 வேலைசெய்துகொண்டுவந்தான். ஓய்வுநாள்
தோறும் அவன் ஜெபஆலயத்திலே சம்பாஷ
ணைபண்ணி, [11]யூதருக்கும் கிரேக்கருக்கும்
புத்திசொன்னான்.
5 மக்கெதோனியாவிலிருந்து சீலாவும் தீமோ
த்தேயும் வந்தபோது, [12]பவுல் ஆவியில் வை
ராக்கியங்கொண்டு, இயேசுவே கிறிஸ்து
என்று யூதருக்குத் திருஷ்டாந்தப்படுத்தினான்.
6 அவர்கள் எதிர்த்துநின்று [13]தூஷித்தபோது,
[14]அவன் தன் வஸ்திரங்களை உதறி: [15]உங்கள்
இரத்தப்பழி உங்கள் தலையின்மேல் இருக்கும்;
நான் சுத்தமாயிருக்கிறேன்; [16]இதுமுதல் புற
ஜாதியாரிடத்திற்குப் போகிறேனென்று அவர்
7 களுடனே சொல்லி, அவ்விடத்தைவிட்டு,
தேவனை வணங்குகிறவனாகிய யுஸ்து என்னும்
பேருள்ள ஒருவனுடைய வீட்டிற்கு வந்தான்;
அவன் வீடு ஜெபஆலயத்திற்கு அடுத்ததாயிரு
ந்தது. ஜெபஆலயத் தலைவனாகிய [17]கிறிஸ்பு 8
என்பவன் தன் வீட்டார் அனைவரோடும் கர்த்
தரிடத்தில் விசுவாசமுள்ளவனானான். கொரிந்
தியரில் அநேகரும் சுவிசேஷத்தைக் கேட்டு,
விசுவாசித்து, ஞானஸ்நானம் பெற்றார்கள்.
இராத்திரியிலே கர்த்தர் பவுலுக்குத் தரிசனமா 9
கி: [18]நீ பயப்படாமல் பேசு, மவுனமாயிராதே;
நான் உன்னுடனேகூட இருக்கிறேன், [19]உன 10
க்குத் தீங்குசெய்யும்படி ஒருவனும் உன்மேல்
கைபோடுவதில்லை; இந்தப் பட்டணத்தில்
எனக்கு அநேக ஜனங்கள் உண்டு என்றார்
அவன் ஒரு வருஷமும் ஆறுமாதமும் அங் 11
கே தங்கி, தேவவசனத்தை அவர்களுக்குள்ளே
உபதேசம்பண்ணிக்கொண்டு வந்தான்.
கல்லியோன் என்பவன் அகாயா நாட்டிற்கு 12
அதிபதியானபோது, யூதர்கள் ஒருமனப்பட்டு,
பவுலுக்கு விரோதமாய் எழும்பி, [20]அவனை நியா
யாசனத்துக்கு முன்பாகக் கொண்டுபோய்:
இவன் வேதப்பிரமாணத்துக்கு விகற்பமாய் 13
தேவனைச் சேவிக்கும்படி மனுஷருக்குப் போ
திக்கிறான் என்றார்கள். பவுல் பேசுவதற்கு 14
எத்தனப்படுகையில், கல்லியோன் யூதரை
நோக்கி: யூதர்களே, இது ஒரு அநியாயமாய்,
அல்லது பொல்லாத நடக்கையாயிருக்குமே
யானால் [21]நான் உங்களுக்குப் பொறுமையாய்ச்
செவிகொடுப்பது நியாயமாயிருக்கும். இது 15
சொற்களுக்கும், நாமங்களுக்கும், உங்கள் வே
தத்துக்கும் அடுத்த தர்க்கமானபடியினாலே,
இப்படிப்பட்டவைகளைக் குறித்து விசாரணை
செய்ய எனக்கு மனதில்லை, நீங்களே பார்த்
துக்கொள்ளுங்கள் என்று சொல்லி, அவர்களை 16
நியாயாசனத்தினின்று துரத்திவிட்டான்.
அப்பொழுது கிரேக்கரெல்லாரும் ஜெபஆலய 17
த்தலைவனாகிய [22]சொஸ்தேனேயைப் பிடித்து,
நியாயாசனத்துக்கு முன்பாக அடித்தார்கள்.
இவைகளில் ஒன்றையுங் குறித்துக் கல்லி
யோன் §கவலைப்படவில்லை.
பவுல் அநேகநாள் அங்கே தரித்திருந்த 18
பின்பு, சகோதரரிடத்தில் உத்தரவு பெற்றுக்
கொண்டு, [23]தனக்கு ஒரு பிரார்த்தனை உண்
டாயிருந்தபடியினால் கெங்கிரேயா பட்டணத்
தில் தலைச்சவரம் பண்ணிக்கொண்டு, சீரியா
தேசத்துக்குப் போகக் கப்பல் ஏறினான். பிரி
ஸ்கில்லாளும் ஆக்கில்லாவும் அவனுடனே
கூடப் போனார்கள். அவன் எபேசுபட்ட 19
ணத்துக்கு வந்தபோது, அங்கே அவர்
களை விட்டு நீங்கி, ஜெபஆலயத்தில் பிரவே
சித்து [24]யூதருடனே சம்பாஷணை பண்ணி
னான். அவன் இன்னுஞ் சிலகாலம் தங்களுட 20
னே இருக்கவேண்டுமென்று அவர்கள் கேட்
டுக்கொண்டபோது, அவன் சம்மதியாமல்,
வருகிற பண்டிகையிலே எப்படியாயினும் 21
நான் எருசலேமில் இருக்கவேண்டும், [25]தேவ
னுக்குச் சித்தமானால் திரும்பி உங்களிடத்தி
ற்கு வருவேனென்று சொல்லி, அவர்களிடத்

1 கொலோ. 1. 17. எபி. 1. 3
2 தீத். 1. 12
* வம்சம்
3 ஏசா. 40. 18. ழ
4 14. 16. ரோ. 3. 25
† காலங்களில் கண் சாடையா யிருந் தார்
5 லூ. 24. 47. தீத். 2. 11, 12, 1 பே. 1. 14: 4. 3
6 ரோ. 2. 16: 14. 10
7 2. 24
‡ பரியாசம்பண்ணி னார்கள்
8 24. 25: 26. 8, லூ. 14. 18
9 ரோ. 16. 3. 1 கொ. 16. 19. 2 தீமோ. 4. 19
10 20. 34. 1 கொ. 4. 12. 1 தெச. 2. 9. 2 தெச. 3. 8
11 17. 2
12 17. 14, 15
13 13. 45. 2 தீமோ. 2. 25. 1 பே. 4. 4
14 நெகே. 5. 13. மத். 10. 14
15 எசே. 33. 4
16 13. 46: 28. 28
17 1 கொ. 1. 14, 15
18 23. 11
19 மத். 28. 20
20 மாற். 2. 6
21 23. 29: 25. 11, 19. யோ. 18. 31
22 1 கொ. 1. 1
§ விசாரணை பண்ணாமலிருந்தான்
23 21. 24. எண். 6. 18. ரோ. 16. 1
24 17. 2
25 19. 21: 20. 16. 1 கொ. 4. 19. யாக். 4. 15

தில் உத்தரவுபெற்றுக்கொண்டு, கப்பல் ஏறி,
22 எபேசுவை விட்டுப் புறப்பட்டு, செசரியாபட்
டணத்துக்கு வந்து, எருசலேமுக்குப் போய்,
சபையைச் *சந்தித்து, அந்தியோகியாவுக்குப்
23 போனான். அங்கே சிலகாலம் சஞ்சரித்தபின்பு,
புறப்பட்டு, கிரமமாய்க் [1]கலாத்தியா நாட்டி
லேயும் பிரிகியா நாட்டிலேயும் சுற்றித்திரி
ந்து [2]சீஷரெல்லாரையும் திடப்படுத்தினான்.
24 அப்பொழுது அலெக்சந்திரியாபட்டணத்
தில் பிறந்தவனும் சாதுரியவானும் வேதாக
மங்களில் வல்லவனுமான [3]அப்பொல்லோ
என்னும் பேர்கொண்ட ஒரு யூதன் எபேசு
25 பட்டணத்துக்கு வந்தான். அவன் கர்த்தரு
டைய மார்க்கத்திலே உபதேசிக்கப்பட்டு,
[4]யோவான் கொடுத்த ஸ்நானத்தைமாத்திரம்
அறிந்தவனாயிருந்து, [5]ஆவியில் அனலுள்ளவ
னாய்க் †கர்த்தருக்கு அடுத்தவைகளைத் திட்ட
மாய்ப் போதகம் பண்ணிக்கொண்டுவந்தான்.
26 அவன் ஜெபஆலயத்தில் தைரியமாய்ப் பே
சத் தொடங்கினபோது, ஆக்கில்லாவும் பிரிஸ்
கில்லாளும் அவன் பேசுகிறதைக் கேட்டு,
அவனைச் சேர்த்துக்கொண்டு [6]தேவனுடைய
மார்க்கத்தை அதிக திட்டமாய் அவனுக்கு
27 விவரித்துக் காண்பித்தார்கள். பின்பு அவன்
அகாயா நாட்டிற்குப் போகவேண்டுமென்றி
ருக்கையில், சீஷர்கள் அவனை ஏற்றுக்கொள்
ளும்படி சகோதரர் அவர்களுக்கு எழுதினார்
28 கள். அவன் அங்கே வந்தபின்பு வெளியரங்
கமாக யூதர்களுடனே பலமாய்த் தர்க்கம்பண்
ணி, [7]இயேசுவே கிறிஸ்து என்று வேதவாக்கி
யங்களைக்கொண்டு திருஷ்டாந்தப் படுத்தின
படியால், [8]கிருபையினாலே விசுவாசிகளான
வர்களுக்கு மிகவும் உதவியாயிருந்தான்.

19 அப்பொல்லோ [9]என்பவன் கொரிந்துபட்
டணத்திலே இருக்கையில், பவுல் ‡மேடான
தேசங்கள் வழியாய்ப் போய், எபேசுவுக்கு
வந்தான்; அங்கே சில சீஷரைக் கண்டு:
2 நீங்கள் விசுவாசிகளானபோது, பரிசுத்தஆவி
யைப் பெற்றீர்களா என்று கேட்டான். அத
ற்கு அவர்கள்: [10]பரிசுத்தஆவி உண்டென்ப
தை நாங்கள் கேள்விப்படவே இல்லை என்
3 றார்கள். அப்பொழுது அவன்: அப்படியா
னால் நீங்கள் எந்த ஞானஸ்நானம் பெற்றீர்
கள் என்றான். அதற்கு அவர்கள்: [11]யோ
வான் கொடுத்த ஞானஸ்நானம் பெற்றோம்
4 என்றார்கள். அப்பொழுது பவுல்: யோவான்
தனக்குப் பின்வருகிறவராகிய கிறிஸ்து இயே
சுவின் விசுவாசிகளாயிருக்கவேண்டும் என்று
ஜனங்களுக்குச் சொல்லி, [12]மனந்திரும்புதலு
க்கு ஏற்ற ஞானஸ்நானத்தைக் கொடுத்தானே
5 என்றான். அதைக் கேட்டபோது [13]அவர்
கள் கர்த்தராகிய இயேசுவின் §நாமத்தினாலே
6 ஞானஸ்நானம் பெற்றார்கள். அல்லாமலும்
பவுல் அவர்கள்மேல் கைகளை வைத்தபோது,
[14]பரிசுத்தஆவி அவர்கள்மேல் வந்தார்; [15]அப்
பொழுது அவர்கள் அந்நிய பாஷைகளைப்
7 பேசித் தீர்க்கதரிசனஞ் சொன்னார்கள். அந்த

* விளவி
1 கலா. 1. 2
2 14. 22: 15. 32, 41
3 1கொ. 1. 12: 3. 5, 6. தீத். 3. 13
4 19. 8
5 ரோ. 12. 11
† இயேசுவுக்கு
6 எபி. 6. 1, 2பே. 3. 18
7 யோ. 5. 39
8 1 கொ. 3. 6. எபே. 2. 8
9 1 கொ. 3. 5, 6
‡ மேற்புறமான
10 8. 16. 1 சாமு. 3. 7
11 18. 25
12 மத். 3. 11. யோ. 1. 15, 27, 30
13 8. 16
§ நாமத்திலே
14 8. 17
15 2. 4: 10. 46
16 18. 19: 28. 23
17 ரோ. 11: 7. 2தீமோ. 1. 15. 2பே. 2. 2. யூதா. 10. வச
18 20. 31
19 14. 3. மாற். 16. 20
20 5. 15
21 மாற். 9. 38. லூ. 9. 40
22 2. 43: 5. 5, 11. லூ. 1. 65
23 மத். 3. 6. ரோ. 10. 10
|| தேவனுடைய
24 12. 24
25 ரோ. 15. 25. கலா. 2. 1
26 ரோ. 15. 23–28

மனுஷரெல்லாரும் ஏறக்குறையப் பன்னி
ரண்டுபேராயிருந்தார்கள்.

பின்பு பவுல் ஜெபஆலயத்தில் பிரவே 8
சித்து, தைரியமாய்ப் பிரசங்கித்து, மூன்று
மாதமளவும் தேவனுடைய ராஜ்யத்துக்கடுத்த
வைகளைக் குறித்துச் சம்பாஷணைபண்ணி,
[16]புத்திசொல்லிக்கொண்டு வந்தான். சிலர் 9
கடினப்பட்டு அவிசுவாசிகளாகிக் கூட்டத்
திற்கு முன்பாக [17]இந்த மார்க்கத்தை நிந்தித்த
போது, அவன் அவர்களைவிட்டு விலகி, சீஷ
ரை அவர்களிலிருந்து பிரித்துக்கொண்டு,
திறன்னு என்னும் ஒருவனுடைய வித்தியா
சாலையிலே அநுதினமும் சம்பாஷித்துக்கொ
ண்டுவந்தான். இரண்டு [18]வருஷகாலம் இப் 10
படி நடந்ததினாலே ஆசியாவில் குடியிருந்த
யூதரும் கிரேக்கருமாகிய எல்லாரும் கர்த்தரா
கிய இயேசுவின் வசனத்தைக் கேட்டார்கள்.
பவுலின் கைகளினாலே [19]தேவன் விசேஷித்த 11
அற்புதங்களைச் செய்தருளினார். அவனுடைய 12
சரீரத்திலிருந்து உறுமால்களையும் கச்சைகளை
யும் கொண்டுவந்து, [20]வியாதிக்காரர்மேல்
போட வியாதிகள் அவர்களைவிட்டு நீங்கிப்
போயின; பொல்லாத ஆவிகளும் அவர்களை
விட்டுப் புறப்பட்டன. அப்பொழுது தேசாந் 13
தரிகளாய்த் திரிகிற [21]மந்திரவாதிகளாகிய யூத
ரில் சிலர் பொல்லாத ஆவிகள் பிடித்திருந்த
வர்கள்மேல் கர்த்தராகிய இயேசுவின் நாமத்
தைச் சொல்லத் துணிந்து: பவுல் பிரசங்கிக்
கிற இயேசுவின்பேரில் ஆணையிட்டு உங்க
ளுக்குக் கட்டளையிடுகிறோம் என்றார்கள்.
பிரதான ஆசாரியனாகிய ஸ்கேவா என்னும் 14
ஓர் யூதனுடைய குமாரர் எழுபேர் இப்படிச்
செய்தார்கள். பொல்லாத ஆவி அவர்களை 15
நோக்கி: இயேசுவை அறிவேன், பவுலையும்
அறிவேன், நீங்கள் யார் என்று சொல்லி,
பொல்லாத ஆவியையுடைய மனுஷன் *அவர் 16
கள்மேல் பாய்ந்து, பலாத்காரம்பண்ணி, அவர்
களை மேற்கொள்ள, அவர்கள் நிருவாணிக
ளும் காயப்பட்டவர்களுமாகி அந்த வீட்டை
விட்டு ஓடிப்போனார்கள். இது எபேசுவிலே 17
குடியிருந்த யூதர் கிரேக்கர் அனைவருக்கும்
தெரியவந்தபோது, [22]அவர்களெல்லாரும் பய
மடைந்தார்கள்; கர்த்தராகிய இயேசுவின் நா
மம் மகிமைப்பட்டது. விசுவாசித்தவர்களில் 18
அநேகர் வந்து, [23]தங்கள் செய்கைகளை வெளிப்
படுத்தி அறிக்கையிட்டார்கள். மாயவித்தைக் 19
காரராயிருந்தவர்களில் அநேகர் தங்கள் புஸ்த
கங்களைக் கொண்டுவந்து, எல்லாருக்கு முன்
பாகச் சுட்டெரித்தார்கள்; அவைகளின் கிர
யத்தைத் தொகை பார்த்து, ஐம்பதினாயிரம்
வெள்ளிக்காசாகக் கண்டார்கள். இவ்வளவு 20
பலமாய்க் ||கர்த்தருடைய [24]வசனம் விருத்திய
டைந்து மேற்கொண்டது.

இவைகள் முடிந்தபின்பு, [25]பவுல் மக்கெ 21
தோனியா அகாயா என்னும் நாடுகளில் சுற்றி
நடந்து, எருசலேமுக்குப் போகும்படி ஆவி
யில் நிருணயம் பண்ணிக்கொண்டு: [26]நான்

அங்கே போனபின்பு ரோமாபுரியையும் பார்க்
22 கவேண்டியதென்று சொல்லி, தனக்கு உதவி
செய்தவர்களில் இரண்டுபேராகிய தீமோத்
தேயுவையும் [1]எரஸ்துவையும் மக்கெதோனி
யாவுக்கு அனுப்பிவிட்டு; தான் பின்னுஞ் சில
காலம் ஆசியாவிலே தங்கினான்.
23 அக்காலத்திலே [2]இந்த மார்க்கத்தைக்குறித்
24 துப் பெரிய கலகம் உண்டாயிற்று. எப்படி
யென்றால், தெமேத்திரியு என்னும் பேர்
கொண்ட ஒரு தட்டான் தியானாளின் கோவி
லைப்போல வெள்ளியினால் சிறிய கோவில்க
ளைச் செய்து, [3]தொழிலாளிகளுக்கு மிகுந்த
25 ஆதாயம் வருவித்துக்கொண்டிருந்தான். இவர்
களையும் இப்படிப்பட்ட தொழில்செய்கிற
மற்ற வேலையாட்களையும் அவன் கூடிவரச்
செய்து: [4]மனுஷர்களே, இந்தத் தொழிலினால்
நமக்கு நல்ல பிழைப்பு உண்டாயிருக்கிறதெ
26 ன்று அறிவீர்கள். இப்படியிருக்க, [5]கைகளி
னால் செய்யப்பட்ட தேவர்கள் தேவர்களல்ல
வென்று இந்தப் பவுல் என்பவன் சொல்லி,
எபேசுவிலேமாத்திரமல்ல, கொஞ்சங்குறைய
ஆசியா எங்கும் அநேக ஜனங்களுக்குப் போ
தித்து, அவர்களை வசப்படுத்திக்கொண்டான்
என்று நீங்கள் கண்டும் கேட்டும் இருக்கிறீர்
27 கள். இதனால் நம்முடைய தொழில் அற்றுப்
போகும்படியான அபாயம் நேரிட்டிருக்கிறது
மல்லாமல், [6]மகா தேவியாகிய தியானாளு
டைய கோவில் எண்ணமற்றுப்போகிறதற்
கும், ஆசியா முழுமையும் பூச்சக்கரமும் சே
விக்கிற அவளுடைய மகத்துவம் அழிந்துபோ
கிறதற்கும் ஏதுவாயிருக்கிறது என்றான்.
28 அவர்கள் இதைக் கேட்டு, [7]கோபத்தால்
நிறைந்து: எபேசியருடைய தியானாளே பெரி
29 யவள் என்று சத்தமிட்டார்கள். பட்டணம்
முழுவதும் கலகத்தினால் நிறைந்தது. பவு
லுக்கு வழித்துணையாய் வந்த மக்கெதோனிய
ராகிய காயுவையும் [8]அரிஸ்தர்க்குவையும்
அவர்கள் இழுத்துக்கொண்டு, ஒருமனப்பட்டு
30 *அரங்கசாலைக்குப் பாய்ந்தோடினார்கள். பவுல்
கூட்டத்துக்குள்ளே போக மனதாயிருந்த
போது, சீஷர்கள் அவனைப் போகவிடவில்லை.
31 ஆசியாநாட்டுத் தலைவரில் அவனுக்குச் சிநேகி
தராயிருந்த சிலரும் அவனிடத்திற்கு ஆள்
அனுப்பி, [9]அரங்கசாலைக்குள் போகவேண்
32 டாம் என்று எச்சரித்தார்கள். கூட்டத்தில்
அமளியுண்டாகி, [10]சிலர் இப்படியும் சிலர்
அப்படியுமாகப் பேசினார்கள்; தாங்கள் கூடி
வந்த காரணம் இன்னதென்று அநேகருக்குத்
33 தெரியாதிருந்தது. அப்பொழுது யூதர்கள்
அலெக்சந்தர் என்பவனை முன்னிற்கத் தள்ளு
கையில், கூட்டத்திலே சிலர் அவனை முன்
னே இழுத்துவிட்டார்கள். [11]அலெக்சந்தர் கை
யமர்த்தி, ஜனங்களுக்கு உத்தரவு சொல்ல
34 மனதாயிருந்தான். அவன் யூதனென்று அவர்
கள் அறிந்தபோது, எபேசியருடைய தியானா
ளே பெரியவள் என்று இரண்டுமணி நேரம
ளவும் எல்லாரும் ஏகமாய்ச் சத்தமிட்டுக்

கொண்டிருந்தார்கள். பட்டணத்துச் சம்பிரதி 35
யானவன் ஜனங்களை அமர்த்தி: எபேசியரே,
[12]எபேசியருடைய பட்டணம் மகா தேவியா
கிய தியானாளுக்கும் வானத்திலிருந்து விழுந்த
சிலைக்கும் †கோவிற்பரிசாரகியாயிருக்கிறதை
அறியாதவன் உண்டோ? இது எதிர்பேசப் 36
படாத காரியமாகையால், நீங்கள் ஒன்றும் பத
றிச் செய்யாமல் அமர்ந்திருக்கவேண்டும்.
இந்த மனுஷரை இங்கே கொண்டுவந்தீர்கள்; 37
[13]இவர்கள் கோவிற் கொள்ளைக்காரருமல்ல,
உங்கள் தேவியைத் தூஷிக்கிறவர்களுமல்ல.
தெமேத்திரியுக்கும் அவனைச் சேர்ந்த தொழி 38
லாளிகளுக்கும் ஒருவன்மேல் ஒரு காரி
யம் உண்டாயிருந்தால், நியாயம் விசாரிக்
கிற நாட்களுண்டு, தேசாதிபதிகளும் இருக்
கிறார்கள்; ஒருவர்பேரிலொருவர் வழக்காடிக்
கொள்ளட்டும். நீங்கள் வேறே யாதொரு 39
காரியத்தைக்குறித்து விசாரிக்கவேண்டியதா
னால், அது நியாயசங்கத்திலே தீர்க்கப்படும்.
இன்றைக்கு உண்டான கலகத்தைக்குறித்து 40
நாம் உத்தரவு சொல்லுகிறதற்கு ஏதுவில்லாத
படியால், இந்தக் கலகத்தைக்குறித்து நாங்கள்
விசாரிக்கப்படும்போது, குற்றவாளிகளாகிற
தற்கு ஏதுவாயிருப்போமே என்று சொல்லி,
பின்பு கூட்டத்தை [14]அனுப்பிவிட்டான். 41

## 20

கலகம் அமர்ந்தபின்பு, பவுல் சீஷரைத் 20
தன்னிடத்திற்கு வரவழைத்து, [15]வினவிக்
கொண்டு, மக்கெதோனியாவுக்குப் போகப்
புறப்பட்டான். அவன் அந்தத் திசைகளிலே 2
சுற்றி நடந்து, [16]சீஷர்களுக்கு வெகுவாய்ப்
புத்திசொல்லி, கிரேக்கு தேசத்திலே சேர்ந்
தான். அங்கே மூன்றுமாதம் சஞ்சரித்த 3
பின்பு, அவன் கப்பல் ஏறி, சீரியா தேசத்துக்
குப் போக மனதாயிருந்தபோது, [17]யூதர்கள்
அவனுக்குத் தீமைசெய்யும்படி இரகசியமான
யோசனைகொண்டிருந்தபடியால், மக்கெதோ
னியா தேசத்தின் வழியாய்த் திரும்பிப்போ
கத் தீர்மானம்பண்ணினான். பெரோயா ஊரா 4
னாகிய சோபத்தரும், தெசலோனிக்கேயரில்
[18]அரிஸ்தர்க்கும், செக்குந்தும், தெர்பையானா
கிய காயுவும், [19]தீமோத்தேயும், ஆசியாநாட்டா
ராகிய [20]தீகிக்கும் [21]துரோப்பீமும், ஆசியாநாடு
வரைக்கும் அவனுக்கு வழித்துணையாய் வந்
தார்கள். இவர்கள் முன்னாகப் போய், துரோ 5
வாபட்டணத்திலே எங்களுக்காகக் காத்திருந்
தார்கள். புளிப்பில்லாத அப்பப்பண்டிகை 6
நாட்களுக்குப்பின்பு [22]நாங்கள் கப்பல் ஏறிப்
பிலிப்பி பட்டணத்தை விட்டு ஐந்துநாளைக்
குள்ளே [23]துரோவாபட்டணத்துக்கு அவர்க
ளிடத்தில் வந்து, அங்கே ஏழுநாள் தங்கியி
ருந்தோம். வாரத்தின் முதல்நாளிலே, [24]அப் 7
பம் பிட்கும்படி சீஷர்கள் கூடிவந்திருக்கை
யில், பவுல் மறுநாளிலே புறப்படவேண்டு
மென்றிருந்து, அவர்களுடனே சம்பாஷித்து,
நடுராத்திரிமட்டும் பிரசங்கித்தான். அவர்கள் 8
கூடியிருந்த [25]மேல்வீட்டிலே அநேக விளக்கு
கள் வைத்திருந்தது. அப்பொழுது ஐத்திகு 9

[1] ரோ. 16. 23. 2 தீமோ. 4. 20
[2] 2 கொ. 1. 8; 6. 9
[3] 16. 16, 19
[4] வெளி. 18. 11
[5] சங். 115. 4. ஏசா. 44. 10-20
[6] செப். 2. 11. 1 யோ. 5. 19. வெளி. 13. 8
[7] எரே. 50. 38
[8] ரோ. 16. 23. 1 கொ. 1. 15. கொலோ. 4. 10
* நாடகசாலை
[9] 21. 12
[10] 21. 34
[11] 1 தீமோ. 1. 20. 2 தீமோ. 4. 14
[12] எபே. 2. 12
† காவலாளி
[13] 25. 8
[14] 2 கொ. 1. 8-10
[15] 1 கொ. 16. 5. 1 தீமோ. 1. 3
[16] 1 தெச. 2. 3, 11
[17] 23. 12; 25. 3. 2 கொ. 11. 26
[18] 19. 29
[19] 16. 1
[20] எபே. 6. 21
[21] 21. 29. 2 தீமோ. 4. 20
[22] யாத். 23. 15
[23] 2 தீமோ. 4. 13
[24] 2. 42, 46. 1 கொ. 10. 16; 11. 10-34
[25] 1. 13

என்னும் பேர்கொண்ட ஒரு வாலிபன் *ஜன்
னலில் உட்கார்ந்திருந்து, பவுல் நெடுநேரம்
பிரசங்கம்பண்ணிக்கொண்டிருக்கையில், மிகு
ந்த தூக்கமடைந்து, நித்திரைமயக்கத்தினால்
சாய்ந்து, மூன்றாம் மெத்தையிலிருந்து கீழே
விழுந்து, மரித்தவனாய் எடுக்கப்பட்டான்.
10 உடனே பவுல் இறங்கிப்போய், அவன்மேல்
விழுந்து, அவனை அணைத்துக்கொண்டு: [1]கல
ங்காதிருங்கள், இவன் உயிர் இவனுக்குள்
11 இருக்கிறது என்றான். பின்பு ஏறிப்போய்,
அப்பம் பிட்டுப் புசித்து, விடியற்காலமளவும்
வெகுநேரம் பேசிக்கொண்டிருந்து, பின்பு
12 புறப்பட்டான். அந்த வாலிபனை அவர்கள்
உயிருள்ளவனாகக் கூட்டிக்கொண்டுவந்து,
மிகுந்த ஆறுதலடைந்தார்கள்.
13 பவுல் ஆசோபட்டணம்வரைக்கும் கரை
வழியாய்ப் போக மனதாயிருந்தபடியால்,
அவன் திட்டம்பண்ணியிருந்தபடியே, நாங்
கள் கப்பல் ஏறி, அந்தப் பட்டணத்தில் அவனை
ஏற்றிக்கொள்ளும்படி முன்னாக அங்கே போ
14 யிருந்தோம். அவன் ஆசோபட்டணத்திலே
எங்களைக் கண்டபோது, நாங்கள் அவனை ஏற்
றிக்கொண்டு, மித்திலேனே பட்டணத்துக்கு
15 வந்தோம். அவ்விடம்விட்டு, மறுநாளிலே கீயு
16 தீவுக்கு எதிராக வந்து, பவுல் கூடுமானால் பெந்
தெகொஸ்தே பண்டிகைநாளிலே [2]எருசலே
மிலிருக்கவேண்டுமென்று தீவிரப்பட்டதினி
மித்தம், தான் ஆசியாவிலே காலம்போக்காத
படிக்கு, எபேசு பட்டணத்தைக் கடந்துபோக
வேண்டுமென்று தீர்மானித்ததினால், மறுநாளி
லே சாமுதீவு பிடித்து, துரோகில்லியோன்
ஊர்த்துறையிலே தங்கி, மறுநாள் மிலேத்து
பட்டணத்துக்கு வந்தோம்.
17 மிலேத்துவிலிருந்து அவன் எபேசுவுக்கு
ஆள் அனுப்பி, சபையின் மூப்பரை வரவ
18 ழைத்தான். அவர்கள் தன்னிடத்தில் வந்து
சேர்ந்தபொழுது, அவன் அவர்களை நோக்கி:
[3]நான் ஆசியாநாட்டில் வந்த முதல்நாள்
தொடங்கி எல்லாக் காலங்களிலும் உங்களு
டனே இன்னவிதமாய் இருந்தேன் என்பதை
19 நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். வெகு மனத்
தாழ்மையோடும், [4]மிகுந்த கண்ணீரோடும்,
யூதருடைய தீமையான யோசனைகளால் என
க்கு நேரிட்ட சோதனைகளோடும், நான் கர்த்
20 தரைச் சேவித்தேன். பிரயோஜனமானவை
களில் ஒன்றையும் நான் உங்களுக்கு மறைத்
துவைக்காமல், [5]வெளியரங்கமாக வீடுகள்தோ
றும் உங்களுக்குப் பிரசங்கித்து, உபதேசம்
21 பண்ணி, தேவனிடத்திற்கு மனந்திரும்புவ
தைக்குறித்தும், [6]நம்முடைய கர்த்தராகிய
இயேசுகிறிஸ்துவை விசுவாசிப்பதைக்குறித்
தும், நான் யூதருக்கும் கிரேக்கருக்கும் சாட்சி
22 யாக அறிவித்தேன். இப்பொழுதும் நான்
ஆவியிலே கட்டுண்டவனாய் எருசலேமுக்குப்
போகிறேன்; [7]அங்கே எனக்கு நேரிடுங் காரி
23 யங்களை நான் அறியேன். கட்டுகளும் உபத்
திரவங்களும் எனக்கு வைத்திருக்கிறதென்று
[8]பரிசுத்தஆவியானவர் பட்டணந்தோறும்
தெரிவிக்கிறதை மாத்திரம் அறிந்திருக்கி
றேன். ஆகிலும் அவைகளில் ஒன்றையுங்கு 24
றித்துக் கவலைப்படேன்; [9]என் பிராணனையும்
நான் அருமையாக எண்ணேன்; [10]என் ஓட்
டத்தைச் சந்தோஷத்தோடே முடிக்கவும்,
தேவனுடைய கிருபையின் சுவிசேஷத்தைப்
பிரசங்கம் பண்ணும்படிக்கு, [11]நான் கர்த்தரா
கிய இயேசுவினிடத்தில் பெற்ற [12]ஊழியத்தை
நிறைவேற்றவுமே விரும்புகிறேன். இதோ, 25
நான் உங்களுக்குள்ளே சஞ்சரித்து, தேவனு
டைய ராஜ்யத்தைக்குறித்துப் பிரசங்கம் பண்
ணினதைக் கேட்டவர்களாகிய [13]நீங்களெல்லா
ரும் இனி என் முகத்தைப் பார்க்கமாட்டீர்க
ளென்று அறிந்திருக்கிறேன். தேவனுடைய 26
[14]ஆலோசனையில் ஒன்றையும் நான் மறைத்து
வைக்காமல், எல்லாவற்றையும் உங்களுக்கு
அறிவித்தபடியினாலே, எல்லாருடைய இரத் 27
தப்பழிக்கும் நீங்கி நான் சுத்தமாயிருக்கிறே
னென்பதற்கு [15]உங்களை இன்றையத்தினம்
சாட்சிகளாக வைக்கிறேன். ஆகையால், உங் 28
களைக் குறித்தும், †தேவன் தம்முடைய சுய
ரத்தத்தினாலே சம்பாதித்துக்கொண்ட [16]தமது
சபையை மேய்ப்பதற்குப் பரிசுத்தஆவி உங்
களைக் ‡கண்காணிகளாக [17]வைத்த மந்தை
முழுவதையுங்குறித்தும், [18]எச்சரிக்கையாயி
ருங்கள். நான் போனபின்பு மந்தையைத் 29
தப்பவிடாத [19]கொடிதான ஓநாய்கள் உங்க
ளுக்குள்ளே வரும். உங்களிலும் சிலர் எழு 30
ம்பி, [20]சீஷர்களைத் தங்களிடத்தில் இழுத்துக்
கொள்ளும்படி மாறுபாடானவைகளைப் போ
திப்பார்களென்று அறிந்திருக்கிறேன். ஆன 31
படியால், [21]நான் மூன்றுவருஷகாலமாய் இர
வும் பகலும் கண்ணீரோடே இடைவிடாமல்
அவனவனுக்குப் புத்திசொல்லிக்கொண்டுவந்
ததை நினைத்து விழித்திருங்கள். இப்பொழு 32
தும் சகோதரரே, [22]நீங்கள் பக்திவிருத்தியடை
யவும், [23]பரிசுத்தமாக்கப்பட்ட அனைவருக்குள்
ளும் உங்களுக்குச் சுதந்தரத்தைக் கொடுக்க
வும் வல்லவராயிருக்கிற [24]தேவனுக்கும் அவ
ருடைய கிருபையுள்ள வசனத்துக்கும் உங்
களை ஒப்புக்கொடுக்கிறேன். ஒருவனுடைய 33
வெள்ளியையாகிலும் பொன்னையாகிலும் வஸ்
திரத்தையாகிலும் [25]நான் இச்சிக்கவில்லை. நீங் 34
கள் அறிந்திருக்கிறபடி, [26]எனக்கும் என்னுட
னேகூட இருந்தவர்களுக்கும் வேண்டியவை
களுக்காக இந்தக் கைகளே வேலைசெய்தது.
இப்படிப் பிரயாசப்பட்டு, [27]பலவீனரைத் தாங் 35
கவும், [28]வாங்குகிறதைப்பார்க்கிலும் கொடுக்
கிறதே பாக்கியம் என்று கர்த்தராகிய இயேசு
சொன்ன வார்த்தைகளை நினைக்கவும் வேண்டு
மென்று எல்லாவிதத்திலேயும் உங்களுக்குக்
காண்பித்தேன் என்றான்.
இவைகளைச் சொன்னபின்பு, [29]அவன் 36
முழங்கால்படியிட்டு, அவர்களெல்லாரோடுங்
கூட ஜெபம்பண்ணினான். அவர்களெல்லா 37
ரும் மிகவும் அழுது, என் முகத்தை நீங்கள்

* பலகணி
1 மத். 9. 24
2 18. 21: 24. 17. 1 கொ. 16. 8
3 18. 19: 19. 1, 10
4 27. லூ. 1 கொ. 15. 9, 10. 2 கொ. 4. 8–11. பிலி. 3. 18
5 27. லூ. 2 தீமோ. 4. 2
6 2. 38: 18. 5. மாற். 1. 15. லூ. 24. 47
7 19. 21. ரோ. 4. 14
8 9. 16: 21. 4, 11. 1 தெச. 3. 3
9 21. 13. ரோ. 8. 35, 37. 2 கொ. 4. 16
10 2 தீமோ. 4. 7
11 கலா. 1. 1. தீத். 1. 3
12 1. 17. 2 கொ. 4. 1
13 38. லூ. ரோ. 15. 23
14 லூ. 7. 30. யோ. 15. 15. எபே. 1. 10
15 18. 6. 2 கொ. 7. 2
† சுத்தர். எபே. 1. 4. கொலோ. 1. 14. எபி. 9. 12, 14. 1 பே. 1. 18, 19. வெளி. 5. 9
16 யோ. 21. 15–17. 1 பே. 5. 2, 3
‡ அத்தியட்சர்கள்
17 1 கொ. 12. 28. எபி. 13. 17
18 கொலோ. 4. 17. 1 தீமோ. 4. 16
19 எசே. 13. 20. எசே. 34. 2, 3. சக. 11. 17. மத். 7. 15. 2 பே. 2. 1
20 1 தீமோ. 1. 20. 1 யோ. 2. 19. யூதா 4. ...
21 19. 10. கொலோ. 1. 28. 2 தீமோ. 4. 5
22 9. 31. யோ. 17. 17
23 26. 18. கொலோ. 1. 12. எபி. 9. 15. 1 பே. 1. 4
24 எபி. 13. 9
25 1 சாமு. 12. 3. 1 கொ. 9. 12. 2 கொ. 7. 2
26 18. 3. 1 கொ. 4. 12. 1 தெச. 2. 9. 2 தெச. 3. 8
27 ரோ. 15. 1. 1 கொ. 9. 12. எபே. 4. 28. 1 தெச. 5. 14
28 லூ. 14. 12–14
29 7. 60: 21. 5

இனிப் பார்க்கமாட்டீர்களென்று அவன் சொ
ன்ன வார்த்தையைக்குறித்து [1]அதிகமாய்த்
38 துக்கப்பட்டு, பவுலின் கழுத்தைக் கட்டிக்
கொண்டு, அவனை முத்தஞ்செய்து, கப்பல்
வரைக்கும் அவனுடனேகூடப் போனார்கள்.

**21** நாங்கள் அவர்களைவிட்டுப் பிரிந்து,
துறை பெயர்ந்தபின்பு, நேராயோடி, கோஸ்
தீவையும், மறுநாளில் ரோதுதீவையும் சேர்
ந்து, அவ்விடம்விட்டுப் பத்தாராபட்டணத்
2 துக்கு வந்து, அங்கே பெனிக்கே தேசத்
திற்குப் போகிற ஒரு கப்பலைக் கண்டு, அதி
3 லே ஏறிப்போனோம். சீப்புருதீவைக் கண்டு,
அதை இடதுபுறமாகவிட்டு, சீரியாநாட்டிற்கு
ஓடி, தீருபட்டணத்துறையில் இறங்கினோம்;
அங்கே கப்பலின் சரக்குகளை இறக்கவேண்
4 டியதாயிருந்தது. அவ்விடத்திலுள்ள சீஷரைக்
கண்டுபிடித்து, அங்கே ஏழுநாள் தங்கினோம்.
[2]அவர்கள் பவுலை நோக்கி: நீர் எருசலேமுக்குப்
போகவேண்டாம் என்று ஆவியின் ஏவுதலி
5 னாலே சொன்னார்கள். அந்த நாட்கள் நிறை
வேறினபின்பு, நாங்கள் புறப்பட்டுப் போகை
யில், அவர்களெல்லாரும் மனைவிகளோடும்
பிள்ளைகளோடுங்கூடப் பட்டணத்துக்குப்
புறம்பே எங்களை வழிவிட்டனுப்பும்படி வந்
தார்கள். [3]அப்பொழுது கடற்கரையிலே நாங்
கள் முழங்காற்படியிட்டு ஜெபம்பண்ணினோம்.
6 ஒருவரிடத்திலொருவர் உத்தரவு பெற்றுக்
கொண்டபின்பு, நாங்கள் கப்பல் ஏறினோம்;
அவர்கள் தங்கள் வீடுகளுக்குத் திரும்பிப்
போனார்கள்.
7 நாங்கள் கப்பல் யாத்திரையை முடித்து,
தீருபட்டணத்தை விட்டுப் பித்தொலோமாய்
பட்டணத்துக்கு வந்து, சகோதரரை வினவி,
8 அவர்களிடத்தில் ஒருநாள் தங்கினோம். மறு
நாளிலே பவுலைச் சேர்ந்தவர்களாகிய நாங்கள்
புறப்பட்டுச் செசரியாபட்டணத்துக்கு வந்து,
[4]ஏழுபேரில் ஒருவனாகிய பிலிப்பென்னும்
சுவிசேஷகனுடைய வீட்டிலே பிரவேசித்து,
9 அவனிடத்தில் தங்கினோம். தீர்க்கதரிசனஞ்
சொல்லுகிற [5]கன்னியாஸ்திரீகளாகிய நாலு
10 குமாரத்திகள் அவனுக்கு இருந்தார்கள். நாங்
கள் அநேகநாள் அங்கே தங்கியிருக்கையில்,
[6]அகபு என்னும் பேர்கொண்ட ஒரு தீர்க்க
11 தரிசி யூதேயாவிலிருந்து வந்தான். அவன்
எங்களிடத்தில் வந்து, பவுலினுடைய கச்சை
யை எடுத்துத் தன் கைகளையும் கால்களையும்
கட்டிக்கொண்டு: [7]இந்தக் கச்சையையுடைய
வனை எருசலேமிலுள்ள யூதர் இவ்விதமாய்க்
கட்டிப் புறஜாதியார் கைகளில் ஒப்புக்கொடுப்
பார்கள் என்று பரிசுத்தஆவியானவர் சொல்
12 லுகிறார் என்றான். இவைகளை நாங்கள் கேட்
டபொழுது, எருசலேமுக்குப்போகவேண்டா
மென்று, நாங்களும் அவ்விடத்தாரும் அவனை
13 வேண்டிக்கொண்டோம். அதற்குப் பவுல்: [8]நீங்
கள் அழுது என் இருதயத்தை ஏன் உடைந்து
போகப்பண்ணுகிறீர்கள்? எருசலேமில் நான்
கர்த்தராகிய இயேசுவின் நாமத்திற்காகக் கட்
டப்படுவதற்கு மாத்திரமல்ல, மரிப்பதற்கும்
ஆயத்தமாயிருக்கிறேன் என்றான். அவன் 14
சம்மதியாதபடியினாலே, [9]கர்த்தருடைய சித்
தம் ஆகக்கடவதென்று அமர்ந்திருந்தோம்.
அந்த நாட்களுக்குப் பின்பு நாங்கள் பிர 15
யாண சாமான்களை ஆயத்தம்பண்ணிக்கொ
ண்டு எருசலேமுக்குப் போனோம். செசரியா 16
பட்டணத்திலுள்ள சீஷரில் சிலர் எங்களுட
னேகூட வந்ததுமன்றி, சீப்புருதீவானாகிய
மினாசோன் என்னும் ஒரு பழைய சீஷனிடத்
திலே [10]நாங்கள் தங்கும்படியாக அவனையும்
தங்களோடே கூட்டிக்கொண்டு வந்தார்கள்.
நாங்கள் எருசலேமுக்கு வந்தபோது [11]சகோ 17
தரர் எங்களைச் சந்தோஷமாய் ஏற்றுக்கொண்
டார்கள். மறுநாளிலே பவுல் எங்களைக் கூட் 18
டிக்கொண்டு, [12]யாக்கோபினிடத்திற்குப் போ
னான்; மூப்பரெல்லாரும் அங்கே கூடிவந்தார்
கள். அவர்களை அவன் வினவி, [13]தன் ஊழி 19
யத்தினாலே தேவன் புறஜாதிகளிடத்தில் செய்
தவைகளை ஒவ்வொன்றாய் விவரித்துச் சொன்
னான்.
அதை அவர்கள் கேட்டுக் கர்த்தரை மகி 20
மைப்படுத்தினார்கள். பின்பு அவர்கள் அவனை
நோக்கி: சகோதரனே, யூதர்களுக்குள் அநேக
மாயிரம்பேர் விசுவாசிகளா யிருக்கிறதைப்
பார்க்கிறீரே, [14]அவர்களெல்லாரும் நியாயப்
பிரமாணத்துக்காக வைராக்கியமுள்ளவர்களா
யிருக்கிறார்கள். புறஜாதிகளிடத்திலிருக்கிற 21
யூதரெல்லாரும் தங்கள் பிள்ளைகளுக்கு விருத்
தசேதனம் பண்ணவும், முறைமைகளின்படி
நடக்கவும் வேண்டுவதில்லையென்று நீர் சொல்
லி, இவ்விதமாய் அவர்கள் மோசேயை விட்
டுப் பிரிந்துபோகும்படி போதிக்கிறீரென்று
இவர்கள் உம்மைக்குறித்துக் கேள்விப்பட்
டிருக்கிறார்கள். இப்பொழுது செய்யவேண் 22
டியது என்ன? நீர் வந்திருக்கிறீரென்று இவர்
கள் கேள்விப்பட்டு, நிச்சயமாகக் கூட்டங்
கூடுவார்கள். ஆகையால் நாங்கள் உமக்குச் 23
சொல்லுகிறபடி நீர்செய்யவேண்டும்; அதென்
னவென்றால், *பிரார்த்தனை பண்ணிக்கொண்
டவர்களாகிய நாலுபேர் எங்களிடத்தில் இருக்
கிறார்கள். அவர்களை நீர் சேர்த்துக்கொண்டு, 24
அவர்களுடனேகூடச் சுத்திகரிப்பு செய்து
கொண்டு, [15]அவர்கள் தலைச்சவரம்பண்ணிக்
கொள்வதற்குச் செல்லுமானதைச் செலவு
செய்யும்; அப்படிச் செய்தால் உம்மைக்குறித்
துக் கேள்விப்பட்ட காரியங்கள் அபத்தமென்
றும், நீரும் நியாயப்பிரமாணத்தைக் கைக்
கொண்டு நடக்கிறவரென்றும் எல்லாரும்
அறிந்துகொள்வார்கள். விசுவாசிகளான புற 25
ஜாதியார் இப்படிப்பட்டவைகளைக் கைக்கொ
ள்ளாமல், விக்கிரகங்களுக்குப் படைத்ததற்
கும், இரத்தத்திற்கும், நெருக்குண்டு செத்ததிற்
கும், வேசித்தனத்திற்கும், விலகியிருக்கவேண்
டுமென்று நாங்கள் தீர்மானம்பண்ணி, [16]அவர்
களுக்கு எழுதியனுப்பினோமே என்றார்கள்.
அப்பொழுது பவுல் அந்த மனுஷரைச் சேர்த் 26

1 25. அ. ஆதி. 46. 29
2 12. அ. 20. 28
3 20. 36
4 6. 5; 8. 26-40. எபே. 4. 11. 2 தீமோ. 4. 5
5 2. 17. யோவே. 2. 28
6 11. 28
7 33. அ. 20. 23
8 20. 24. 2 தீமோ. 4. 6
9 மத். 6. 10; 26. 42. லூ. 11. 2; 22. 42
10 ஆதி. 16. 31
11 15. 4
12 15. 13. கலா. 1. 19; 2. 9
13 15. 4, 12; 20. 24. ரோ. 15. 18, 19. 2 கொ. 12. 12
14 22. 3. ரோ. 10. 2. கலா. 1. 14
* பொருத்தனை
15 18. 18. எண். 6. 2, 13, 18
16 15. 20, 29

துக்கொண்டு, மறுநாளிலே அவர்களுடனே
கூடத் தானும் சுத்திகரிப்பு செய்துகொண்டு,
தேவாலயத்தில் பிரவேசித்து, [1]அவர்களில்
ஒவ்வொருவனுக்காக வேண்டிய பலிசெலுத்
தித் தீருமளவும் சுத்திகரிப்பு நாட்களை நிறை
வேற்றுவேனென்று அறிவித்தான்.
27 அந்த ஏழுநாட்களும் நிறைவேறிவருகை
யில், [2]ஆசியாநாட்டிலிருந்து வந்த யூதர்கள்
அவனை தேவாலயத்திலே கண்டு, ஜனங்க
ளெல்லாரையும் *எடுத்துவிட்டு, [3]அவன்மேல்
28 கைபோட்டு: இஸ்ரவேலரே, உதவிசெய்
யுங்கள். நம்முடைய ஜனத்திற்கும் வேதப்பிர
மாணத்திற்கும் இந்த ஸ்தலத்திற்கும் விரோத
மாக எங்கும் எல்லாருக்கும் [4]போதித்துவருகிற
வன் இவன்தான்; இந்த தேவாலயத்துக்குள்
ளே கிரேக்கரையும் கூட்டிக்கொண்டு வந்து,
இந்தப் பரிசுத்த ஸ்தலத்தைத் தீட்டுப்படுத்தி
29 ஞன் என்று சத்தமிட்டார்கள். எபேசியனு
கிய [5]துரோப்பீமு என்பவன் முன்னே நகரத்
தில் பவுலுடனேகூட இருக்கிறதைக் கண்டி
ருந்தபடியால், பவுல் அவனை தேவாலயத்தில்
கூட்டிக்கொண்டு வந்திருப்பானென்று
30 நினைத்தார்கள். அப்பொழுது நகரமுழுவதும்
கலக்கமுற்றது; [6]ஜனங்கள் கூட்டமாய் ஓடி
வந்து, பவுலைப் பிடித்து, அவனை தேவாலயத்
திற்குப் புறம்பே இழுத்துக்கொண்டுபோனர்
கள்; உடனே கதவுகள் பூட்டப்பட்டது.
31 அவர்கள் [7]அவனைக் கொலைசெய்ய எத்தனித்
திருக்கையில், எருசலேம் முழுவதும் கலக்க
மாயிருக்கிறதென்று போர்ச்சேவகரின் சேனு
32 பதிக்குச் செய்தி வந்தது. உடனே அவன்
போர்ச்சேவகரையும் அவர்களுடைய அதிப
திகளையும் கூட்டிக்கொண்டு, [8]அவர்களிடத்
திற்கு ஓடினன்; சேனுபதியையும் போர்ச்
சேவகரையும் அவர்கள் கண்டபோது பவுலை
33 அடிக்கிறதை விட்டு நிறுத்தினர்கள். அப்
பொழுது சேனுபதி கிட்டவந்து, அவனைப்
பிடித்து, [9]இரண்டு சங்கிலிகளினலே கட்
டும்படி சொல்லி: இவன் யார் என்றும் என்ன
34 செய்தான் என்றும் விசாரித்தான். அதற்கு
ஜனங்கள் பலவிதமாய்ச் சத்தமிட்டார்கள்;
சந்தடியினலே நிச்சயத்தை அவன் அறியக்
கூடாமல், [10]அவனைக் கோட்டைக்குள்ளே
கொண்டுபோகும்படி கட்டளையிட்டான்.
35 அவன் படிகள்மேல் ஏறினபோது ஜனக்கூட்
36 டம் திரண்டு பின்சென்று, இவனை [11]அகற்
றும் என்று உக்கிரமாய்க் கூப்பிட்டபடியி
னலே, போர்ச்சேவகர் அவனைத் தூக்கிக்
கொண்டு போகவேண்டியதாயிருந்தது.
37 அவர்கள் பவுலைக் கோட்டைக்குள்ளே
கொண்டுபோகிற சமயத்தில், அவன் சேனு
பதியை நோக்கி: நான் உம்முடனே ஒரு
வார்த்தை பேசலாமா என்றான். அதற்கு
அவன்: உனக்குக் கிரேக்குபாஷை தெரியுமா?
38 நீ இந்த நாட்களுக்குமுன்னே கலகமுண்டா
க்கி, [12]நாலாயிரங் கொலைபாதகரை வனாந்தரத்
திற்குக் கொண்டுபோன எகிப்தியன் அல்
லவா என்றான். அதற்குப் பவுல்: [13]நான் சிலி 39
சியா நாட்டிலுள்ள கீர்த்திபெற்ற தர்சுபட்ட
ணத்து யூதன்; ஜனங்களுடனே பேசும்படி
எனக்கு உத்தரவாகவேண்டுமென்று உம்மை
வேண்டிக்கொள்ளுகிறேன் என்றான். உத்த 40
ரவானபோது, பவுல் படிகளின்மேல் நின்று
ஜனங்களைப் பார்த்துக் †கையமர்த்தினன்;
[14]மிகுந்த அமைதலுண்டாயிற்று; அப்பொழுது
அவன் எபிரெயுபாஷையிலே பேசத்தொடங்
கினன்.

சகோதரரே, பிதாக்களே, [15]நான் இப் **22**
பொழுது உங்களுக்குச் சொல்லப்போகிற
நியாயங்களுக்குச் செவிகொடுப்பீர்களாக என்
றான்.
அவன்எபிரெயுபாஷையிலேதங்களுடனே 2
பேசுகிறதை அவர்கள் கேட்டபொழுது, அதிக
அமைதலாயிருந்தார்கள். அப்பொழுது அவன்:
நான் யூதன், [16]சிலிசியாநாட்டிலுள்ள தர்சு 3
பட்டணத்திலே பிறந்து, [17]அந்த நகரத்திலே
கமாலியேலின் பாதத்தருகே வளர்ந்து [18]முன்
னேர்களுடையவேதப்பிரமாணத்தின்படியே
திட்டமாய்ப் போதிக்கப்பட்டு, இன்றையத்
தினம் நீங்களெல்லாரும் தேவனைக்குறித்து
வைராக்கியமுள்ளவர்களா யிருக்கிறதுபோல
[19]நானும் வைராக்கியமுள்ளவனு யிருந்தேன்.
நான் இந்த மார்க்கத்தாராகிய புருஷரையும் 4
ஸ்திரீகளையும் கட்டி, சிறைச்சாலைகளில் ஒப்
புவித்து, [20]மரணபரியந்தம் துன்பப்படுத்தி
னேன். அதற்குப் பிரதான ஆசாரியரும் மூப் 5
பர் யாவரும் சாட்சிகொடுப்பார்கள்; அவர்கள்
கையிலே நான் சகோதரருக்கு நிருபங்களை
வாங்கிக்கொண்டு, [21]தமஸ்குவிலிருக்கிறவர்க
ளும் தண்டிக்கப்படும்படிக்கு, அவர்களைக்
கட்டி, எருசலேமுக்குக் கொண்டுவரும்படி
அவ்விடத்திற்குப் போனேன். அப்படி நான் 6
பிரயாணப்பட்டுத் தமஸ்குவுக்குச் சமீபமா
னபோது, மத்தியான வேளையிலே, சடிதி
யாய் வானத்திலிருந்து பேரொளி உண்டாகி,
என்னைச்சுற்றிப் பிரகாசித்தது. நான் தரையி 7
லே விழுந்தேன். அப்பொழுது: சவுலே, சவு
லே, நீ என்னை ஏன் துன்பப்படுத்துகிறாய்
என்று என்னுடனே சொல்லுகிற ஒரு சத்தத்
தைக் கேட்டேன். அதற்கு நான்: ஆண்டவ 8
ரே, நீர் யார் என்றேன். அவர்: நீ துன்பப்
படுத்துகிற நசரேயனுகிய இயேசு நானே
என்றார். என்னுடனேகூட இருந்தவர்கள் 9
வெளிச்சத்தைக் கண்டு, [22]பயமடைந்தார்கள்;
என்னுடனே பேசினவருடைய சத்தத்தை
யோ அவர்கள் கேட்கவில்லை. அப்பொழுது 10
நான்: ஆண்டவரே, நான் என்ன செய்யவே
ண்டும் என்றேன். அதற்குக் கர்த்தர்: நீ
எழுந்து, தமஸ்குவுக்குப் போ; நீ செய்யும்
படி நியமிக்கப்பட்டதெல்லாம் அங்கே உனக்
குச் சொல்லப்படும் என்றார். அந்த ஒளியின் 11
மகிமையினலே நா ‡பார்வையற்றுப்போன
படியினல், எ[illegible]டிருந்தவர்களால் கை
லாகு கொடுத்து [illegible]ழி நடத்தப்பட்டுத் தமஸ்கு

1 எண். 6. 13
2 24. 18
* கோபமூட்டி
3 26. 21
4 24. 5, 6
5 20. 4
6 26. 21
7 2 கொ. 11. 23. ழ
8 23. 27: 24. 7
9 11. வச: 20. 28. எபே. 6. 20
10 23. 10, 16
11 22. 22. லூ. 23. 16. யோ. 19. 15. 1 கொ. 4. 13
12 5. 36
13 9. 11: 22. 3, 25
† சமிக்கை காட்டினன்
14 12. 17
15 7. 2. 1 பே. 3. 15
16 21. 39. 2 கொ. 11. 12. பிலி. 3. 5
17 5. 24. லூ. 10. 39
18 26. 5
19 9. 2. ழ: 21. 20. ரோ. 8. 2. கலா. 1. 14
20 8. 3: 26. 9–13. பிலி. 3. 6. 1 தீமோ. 1. 13
21 9. 2. ழ: 26. 12, 13
22 9. 7
‡ பார்க்கக்கூடாமல்

12 வுக்கு வந்தேன். அப்பொழுது வேதப்பிரமா
ணத்தின்படியே பக்தியுள்ளவனும், அங்கே
குடியிருக்கிற சகல யூதராலும் நல்லவனெ
ன்று சாட்சிபெற்றவனுமாகிய [1]அனனியா
13 என்னும் ஒருவன், என்னிடத்தில் வந்து
நின்று: சகோதரனாகிய சவுலே, பார்வை
யடைவாயாக என்றான்; அந்நேரமே நான்
பார்வையடைந்து, அவனை ஏறிட்டுப் பார்த்
14 தேன். அப்பொழுது அவன்: [2]நம்முடைய
முன்னோர்களின் தேவனுடைய திருவுளத்
தை நீ அறியவும், [3]நீதிபரரைத் தரிசிக்கவும்,
[4]அவருடைய திருவாய்மொழியைக் கேட்க
வும், [5]அவர் உன்னை முன்னமே தெரிந்து
15 கொண்டார். நீ கண்டவைகளையும் கேட்ட
வைகளையும் குறித்துச் [6]சகல மனுஷருக்கு
முன்பாக அவருக்குச் சாட்சியாயிருப்பாய்.
16 இப்பொழுது நீ தாமதிக்கிறதென்ன? [7]நீ
எழுந்து கர்த்தருடைய நாமத்தைத் தொழுது
கொண்டு, ஞானஸ்நானம்பெற்று, [8]உன்
பாவங்கள் போகக் கழுவப்படு என்றான்.
17 பின்பு நான் எருசலேமுக்குத் திரும்பிவந்து,
தேவாலயத்திலே ஜெபம்பண்ணிக்கொண்டி
ருக்கையில், [9]ஞானதிருஷ்டியடைந்து, [10]அ
18 வரைத் தரிசித்தேன். அவர் என்னை நோக்கி:
• நீ என்னைக்குறித்துச் சொல்லும் சாட்சியை
இவர்கள் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள்; [11]ஆக
லால் நீ தாமதம்பண்ணாமல் சீக்கிரமாய் எருச
லேமைவிட்டுப் புறப்பட்டுப் போ என்றார்.
19 அதற்கு நான்: ஆண்டவரே, [12]உம்மிடத்தில்
விசுவாசமாயிருக்கிறவர்களை நான் காவலில்
வைத்து ஜெபஆலயங்களிலே அடித்ததையும்,
20 உம்முடைய சாட்சியாகிய ஸ்தேவானுடைய
இரத்தம் சிந்தப்படுகிறபோது, [13]நானும் அரு
கே நின்று, அவனைக் கொலைசெய்வதற்குச்
சம்மதித்து, அவனைக் கொலைசெய்தவர்களின்
வஸ்திரங்களைக் காத்துக்கொண்டிருந்ததையும்,
இவர்கள் அறிந்திருக்கிறார்களே என்றேன்.
21 அதற்கு அவர்: நீ போ, [14]நான் உன்னை தூர
மாய்ப் புறஜாதிகளிடத்திலே அனுப்புவேன்
என்று சொன்னார் என்றான்.
22 இந்த வார்த்தைவரைக்கும் அவனுக்குச்
செவிகொடுத்தார்கள். பின்பு: இப்படிப்பட்
டவனை பூமியிலிருந்து அகற்றவேண்டும்; [15]இ
வன் உயிரோடிருக்கிறது நியாயமல்லவென்று
23 மிகுந்த சத்தமிட்டுச் சொன்னார்கள். இவ்வித
மாய் அவர்கள் கூக்குரலிட்டுத் தங்கள் மேல்
வஸ்திரங்களை எறிந்துவிட்டு, ஆகாயத்திலே
புழுதியைத் தூற்றிக்கொண்டிருக்கையில்,
24 சேனாபதி அவனைக் கோட்டைக்குள்ளே
கொண்டுவரும்படி கட்டளையிட்டு, அவர்கள்
அவனுக்கு விரோதமாய் இப்படிக் கூக்
குரலிட்ட முகாந்தரத்தை அறியும்படிக்கு அவ
னைச் சவுக்கால் அடித்து விசாரிக்கச் சொன்
25 னான். அந்தப்படி அவர்கள் அவனை வாரி
னால் அழுந்தக் கட்டும்போது, பவுல் சமீ
பமாய் நின்ற நூற்றுக்கு அதிபதியை நோக்கி:
[16]ரோமனும் நியாயம் விசாரிக்கப்படாதவனு
மாயிருக்கிற மனுஷனை அடிக்கிறது உங்க
ளுக்கு நியாயமா என்றான். நூற்றுக்கு அதி 26
பதி அதைக்கேட்டு, சேனாபதியினிடத்திற்குப்
போய், அதை அறிவித்து: நீர் செய்யப்போகி
றதைக்குறித்து எச்சரிக்கையாயிரும்; இந்த
மனுஷன் ரோமன் என்றான். அப்பொழுது 27
சேனாபதி பவுலினிடத்தில் வந்து: நீ ரோ
மனா? எனக்குச் சொல் என்றான். அதற்கு
அவன்: நான் ரோமன்தான் என்றான். சேனா 28
பதி பிரதியுத்தரமாக: நான் மிகுந்த திரவியத்
தினாலே இந்தச் சிலாக்கியத்தைச் சம்பாதித்
தேன் என்றான். அதற்குப் பவுல்: நானோ
இந்தச் சிலாக்கியத்திற்குரியவனாகப் பிறந்
தேன் என்றான். அவனை அடித்து விசாரிக் 29
கும்படி எத்தனமாயிருந்தவர்கள் உடனே
அவனை விட்டுவிட்டார்கள். சேனாபதி அவன்
ரோமனென்று அறிந்து, அவனைக் கட்டுவித்த
தற்காகப் பயந்தான்.
பவுலின்மேல் யூதராலே ஏற்படுத்தப்பட்ட 30
குற்றம் இன்னதென்று நிச்சயமாய் அறிய
விரும்பி, அவன் மறுநாளிலே அவனைக் கட்
டவிழ்த்து, பிரதான ஆசாரியரையும் ஆலோச
னைச் சங்கத்தார் அனைவரையும் கூடிவரும்படி
கட்டளையிட்டு, அவனைக் கூட்டிக்கொண்டு
போய், அவர்களுக்கு முன்பாக நிறுத்தினான்.

# 23

பவுல் ஆலோசனைச் சங்கத்தாரை உற்றுப்
பார்த்து: [17]சகோதரரே, இந்நாள்வரைக்கும்
எல்லா விஷயங்களிலும் நான் நல்மனச்சாட்
சியோடே தேவனுக்குமுன்பாக நடந்துவந்
தேன் என்று சொன்னான். அப்பொழுது பிர 2
தான ஆசாரியனாகிய அனனியா அவனுக்குச்
சமீபமாய் நின்றவர்களை நோக்கி: [18]இவன் வா
யில் அடியுங்கள் என்று கட்டளையிட்டான்.
அப்பொழுது பவுல் அவனைப்பார்த்து: *வெள் 3
ளையடிக்கப்பட்ட சுவரே, தேவன் உம்மை
அடிப்பார்; [19]நியாயப்பிரமாணத்தின்படி என்
னை நியாயம் விசாரிக்கிறவராய் உட்கார்ந்திருக்
கிற நீர் நியாயப்பிரமாணத்திற்கு விரோதமாய்
என்னை அடிக்கச் சொல்லலாமா என்றான்.
சமீபத்திலே நின்றவர்கள்: தேவனுடைய பிர 4
தான ஆசாரியனை வைகிறாயா என்றார்கள்.
அதற்குப் பவுல்: சகோதரரே, இவர் பிரதான 5
ஆசாரியரென்று எனக்குத் தெரியாது; [20]உன்
ஜனத்தின் அதிபதியைத் †தீது சொல்லாயாக
என்று எழுதியிருக்கிறதே என்றான். பின்பு 6
அவர்களில், சதுசேயர் ஒரு பங்கும் பரிசேயர்
ஒருபங்குமாயிருக்கிறார்களென்று பவுல் அறி
ந்து: சகோதரரே, [21]நான் பரிசேயனும் பரிசே
யனுடைய மகனுமாயிருக்கிறேன். [22]மரித்தோ
ருடைய உயிர்த்தெழுதலைப்பற்றிய நம்பிக்கை
யைக்குறித்து நான் நியாயம் விசாரிக்கப்படுகி
றேன் என்று ஆலோசனைச் சங்கத்திலே சத்த
மிட்டுச் சொன்னான். அவன் இப்படிச் சொ 7
ன்னபோது, பரிசேயருக்கும் சதுசேயருக்கும்
வாக்குவாதமுண்டாயிற்று; கூட்டம் இரண்
டாகப் பிரிந்தது. என்னத்தினாலென்றால், 8
[23]சதுசேயர் உயிர்த்தெழுதல் இல்லையென்றும்,

[1] 9. 17: 10. 22. 1 தீமோ. 3. 7
[2] 3. 13: 5. 30
[3] 3. 14: 7. 52. 1 கொ. 9. 1: 15. 8
[4] 1 கொ. 11. 23. கலா. 1. 12
[5] 9. 15. கலா. 1. 15
[6] 4. 20: 23. 11: 26. 16. ழ
[7] 9. 14. ரோ. 10. 13. 1 கொ. 1. 2
[8] 2. 38. எபி. 10. 22. 1 பே. 3. 21
[9] 9. 26. 2 கொ. 12. 2
[10] 14. ஏச
[11] மத். 10. 14
[12] 4. ஏசா. 8. 3. மத். 10. 17
[13] 7. 58: 8. 1 லூக். 11. 48. ரோ. 1. 32
[14] 13. 2, 47. ரோ. 1. 5: 11. 13: 15. 16. கலா. 2. 7,8 எபே. 3. 7,8. 1 தீமோ. 2. 7
[15] 21. 36: 23. 24
[16] 16. 37: 25. 16
[17] 24. 16. 1 கொ. 4. 4. 2 கொ. 1. 12. 2 தீமோ. 1. 3. எபி. 13. 18
[18] யோ. 18. 22
* சாந்து பூசப்பட்ட
[19] லேவி. 19. 35, உபா. 25. 1, 2. யோ. 7. 51
[20] யாத். 22. 28. பிர. 10. 20. 2 பே. 2. 10. யூதா 8.
† தூஷிப்பாக
[21] 26. 5. பிலி. 3. 5
[22] 24. 15, 21: 26. 6: 28. 20
[23] மத். 22. 23. மாற். 12. 18. லூக். 20. 27

தேவதூதனும் ஆவியும் இல்லையென்றும் சொ
ல்லுகிறார்கள். பரிசேயரோ அவ்விரண்
டும் உண்டென்று ஒப்புக்கொள்ளுகிறார்கள்.
9 ஆகையால் மிகுந்த கூக்குரல் உண்டாயிற்று.
பரிசேயர் சமயத்தாரான வேதபாரகரில் சிலர்
எழுந்து: [1]இந்த மனுஷனிடத்தில் ஒரு பொல்
லாங்கையும் காணோம்; [2]ஒரு ஆவி அல்லது
ஒரு தேவதூதன் இவனுடனே பேசினதுண்
டானால், [3]நாம் தேவனுடனே போர்செய்வது
10 தகாது என்று வாதாடினார்கள். மிகுந்த கலகம்
உண்டானபோது, பவுல் அவர்களால் பீறுண்
டுபோவானென்று சேனாபதி பயந்து, போர்ச்
சேவகர் போய், அவனை அவர்கள் நடுவிலி
ருந்து இழுத்துக் கோட்டைக்குக் கொண்டு
போகும்படி கட்டளையிட்டான்.
11 அன்று ராத்திரியிலே கர்த்தர் பவுலின் அரு
கே நின்று: [4]பவுலே, திடன்கொள்; நீ என்
னைக்குறித்து எருசலேமிலே சாட்சிகொடுத்
ததுபோல [5]ரோமாவிலும் சாட்சிகொடுக்க
வேண்டும் என்றார்.
12 விடியற்காலமானபோது, யூதரில் சிலர் ஒரு
மித்து, [6]தாங்கள் பவுலைக் கொலைசெய்யுமள
வும் புசிப்பதுமில்லை குடிப்பதுமில்லையென்று
13 சபதம் பண்ணிக்கொண்டார்கள். இப்படிக்
கட்டுப்பாடு பண்ணிக்கொண்டவர்கள் நாற்
14 பதுபேருக்கு அதிகமாயிருந்தார்கள். அவர்கள்
[7]பிரதான ஆசாரியர்களிடத்திலும் மூப்பர்களி
டத்திலும்போய்: நாங்கள் பவுலைக் கொலைசெய்
யுமளவும் ஒன்றும் புசிப்பதில்லையென்று உறு
15 தியான சபதம் பண்ணிக்கொண்டோம். ஆன
படியினால் நீங்கள் ஆலோசனைச் சங்கத்தாரோ
டே கூடப்போய், அவனுடைய காரியத்தை
அதிக திட்டமாய் விசாரிக்க மனதுள்ளவர்
கள்போலச் சேனாபதிக்குக் காண்பித்து,
அவர் நாளைக்கு அவனை உங்களிடத்தில் கூட்
டிக்கொண்டு வரும்படி அவரிடத்தில் கேட்
பீர்களாக. [8]அவன் கிட்டவருகிறதற்குள்ளே
நாங்கள் அவனைக் கொலைசெய்ய ஆயத்தமாயி
16 ருப்போம் என்றார்கள். இந்தச் சர்ப்பனையைப்
பவுலினுடைய சகோதரியின் குமாரன் கேள்
விப்பட்டு, [9]கோட்டைக்குள்ளே போய், பவு
17 லுக்கு அறிவித்தான். அப்பொழுது பவுல்
நூற்றுக்கு அதிபதிகளில் ஒருவனை அழைத்து,
[10]இந்த வாலிபனைச் சேனாபதியினிடத்திற்குக்
கூட்டிக்கொண்டுபோம்; அவரிடத்தில் இவன்
அறிவிக்கவேண்டிய ஒரு காரியம் உண்டு என்
18 றான். அந்தப்படியே அவன் இவனைச் சே
னாபதியினிடத்திற்குக் கூட்டிக்கொண்டுபோ
ய்: [11]காவலில் வைக்கப்பட்டிருக்கிற பவுல்
என்னை அழைத்து, உமக்கொரு காரியத்தைச்
சொல்லவேண்டுமென்றிருக்கிற இந்த வாலி
பனை உம்மிடத்திற்குக் கொண்டுபோகும்படி
என்னைக் கேட்டுக்கொண்டான் என்றான்.
19 அப்பொழுது சேனாபதி அவனுடைய கை
யைப் பிடித்துத் தனியே அழைத்துக்கொண்டு
போய்: நீ என்னிடத்தில் அறிவிக்கவேண்டிய
20 காரியம் என்னவென்று கேட்டான். அதற்கு

[1] 25. 25: 26. 31
[2] 22. 17, 18
[3] 5. 39
[4] 18. 9: 27. 23, 24
[5] 28. 30, 31. ரோ. 1. 15
[6] 21, 30. உச. 25. 3. சங். 31, 13
[7] ஓசி. 4. 9
[8] சங். 21. 11: 37. 32, 33
[9] 2 சாமு. 17. 17
[10] நீதி. 22. 3. மத். 10. 16
[11] 28. 17. எபே. 3. 1: 4. 1. பிலே மோன் 9. உச
[12] 12. உச
[13] யாத். 23. 2
[14] 21. 33: 24. 7
[15] 22. 30
[16] 18. 15: 25. 19: 26. 31
[17] 20. 21. உச: 24. 8: 25. 6

அவன்: [12]யூதர்கள் பவுலின் காரியத்தை அதிக
திட்டமாய் விசாரிக்க மனதுள்ளவர்கள்போல,
நீர் நாளைக்கு அவனை ஆலோசனைச் சங்கத்தாரி
டத்தில் கொண்டுவரும்படி உம்மை வேண்
டிக்கொள்ள உடன்பட்டிருக்கிறார்கள். நீர் 21
அவர்களுக்குச் [13]சம்மதிக்கவேண்டாம்; அவர்
களில் நாற்பதுபேருக்கு அதிகமானவர்கள்
அவனைக் கொலைசெய்யுமளவும் தாங்கள் புசிப்
பதுமில்லை குடிப்பதுமில்லையென்று சபதம்
பண்ணிக்கொண்டு, அவனுக்குப் பதிவிருந்து,
உம்முடைய உத்தரவுக்காக இப்பொழுது காத்
துக்கொண்டு ஆயத்தமாயிருக்கிறார்கள் என்
றான். அப்பொழுது சேனாபதி: நீ இவை 22
களை எனக்கு அறிவித்ததாக ஒருவருக்குஞ்
சொல்லாதே என்று கட்டளையிட்டு, வாலி
பனை அனுப்பிவிட்டான். பின்பு அவன் நூற் 23
றுக்கு அதிபதிகளில் இரண்டுபேரை அழை
த்து, செசரியா பட்டணத்திற்குப் போகும்படி
இருநூறு காலாட்களையும், எழுபது குதிரை
வீரரையும், இருநூறு ஈட்டிக்காரரையும், இராத்
திரியில் மூன்றாம்மணிவேளையிலே, ஆயத்தம்
பண்ணுங்களென்றும்; பவுலை ஏற்றி, தேசா 24
திபதியாகிய பேலிக்ஸினிடத்திற்குப் பத்திர
மாய்க் கொண்டுபோகும்படிக்குக் குதிரைகளை
ஆயத்தப்படுத்துங்களென்றும் சொன்னது
மன்றி, ஒரு நிருபத்தையும் எழுதினான்; அதின் 25
விவரமாவது:
கனம்பொருந்திய தேசாதிபதியாகிய பே 26
லிக்ஸ் என்பவருக்குக் கிலவுதியு லீசியா
வாழ்த்துதல் சொல்லி அறிவிக்கிறது என்ன
வென்றால்: இந்த மனுஷனை யூதர் பிடித்துக் 27
கொலைசெய்யப்போகிற சமயத்தில், [14]நான்
போர்ச்சேவகரோடே கூடப்போய், இவன்
ரோமனென்று அறிந்து, இவனை விடுவித்
தேன். அவர்கள் இவன்மேல் சாட்டின குற் 28
றத்தை நான் அறியவேண்டுமென்று [15]இவனை
அவர்கள் ஆலோசனைச் சங்கத்துக்குமுன்
கொண்டுபோனேன். இவன் அவர்களுடைய 29
வேதத்திற்கடுத்த விஷயங்களைக்குறித்துக் குற்
றஞ் சாட்டப்பட்டவனென்று விளங்கினதே
யல்லாமல், [16]மரணத்துக்காவது விலங்குக்கா
வது ஏற்ற குற்றம் யாதொன்றும் இவனிடத்
தில் இல்லையென்று கண்டறிந்தேன். யூதர் 30
கள் இவனுக்கு விரோதமாய்ச் சர்ப்பனையான
யோசனை செய்கிறார்களென்று எனக்குத் தெ
ரியவந்தபோது, [17]உடனே இவனை உம்மிடத்
திற்கு அனுப்பினேன்; குற்றஞ்சாட்டுகிறவர்
களும் இவனுக்கு விரோதமாய்ச் சொல்லுகிற
காரியங்களை உமக்கு முன்பாக வந்து சொல்
லும்படி அவர்களுக்குக் கட்டளையிட்டேன்.
சுகமாயிருப்பீராக, என்றெழுதினான்.
போர்ச்சேவகர் தங்களுக்குக் கட்டளையிட் 31
டபடியே, பவுலைக் கூட்டிக்கொண்டு, இராத்
திரியிலே அந்திப்பத்திரி ஊருக்குப் போய்,
மறுநாளில் குதிரைவீரரை அவனுடனேகூடப் 32
போகும்படி அனுப்பிவிட்டு, தாங்கள் கோட்
டைக்குத் திரும்பினார்கள். அவர்கள் செசரி 33

யாபட்டணத்தில் சேர்ந்து, [1]நிருபத்தைத் தே
சாதிபதியினிடத்தில் கொடுத்து, பவுலையும்
34 அவன் முன்பாக நிறுத்தினார்கள். தேசாதி
பதி அதை வாசித்து: எந்த நாட்டானென்று
கேட்டு, [2]சிலிசியா நாட்டானென்று அறிந்த
35 போது: உன்மேல் குற்றஞ்சாட்டுகிறவர்களும்
[3]வந்திருக்கும்போது உன் காரியத்தைத் திட்
டமாய்க் கேட்பேனென்று சொல்லி, [4]ஏரோ
தின் அரமனையிலே அவனைக்காவல்பண்ணும்
படி கட்டளையிட்டான்.

24 ஐந்துநாளைக்குப் பின்பு [5]பிரதான ஆசாரி
யனாகிய அனனியா மூப்பர்களோடும் தெர்த்
துல்லு என்னும் *ஒரு நியாய சாதுரியனோ
டெம்கூடப் போனான், [6]அவர்கள் பவுலுக்கு
விரோதமாய்த்தேசாதிபதியினிடத்தில்பிராது
2 பண்ணினார்கள். அவன் அழைக்கப்பட்ட
போது, தெர்த்துல்லு குற்றஞ்சாட்டத் தொ
டங்கி:
3 கனம்பொருந்திய பேலிக்ஸே, உம்மாலே
நாங்கள் மிகுந்த சமாதான சவுக்கியத்தை அநுப
விக்கிறதையும், உம்முடைய பராமரிப்பினாலே
இந்த தேசத்தாருக்குச் [7]சிறந்த நன்மைகள்
நடக்கிறதையும் நாங்கள் எப்பொழுதும் எங்
கும் மிகுந்த நன்றியறிதலுடனே அங்கிகாரம்
4 பண்ணுகிறோம். உம்மை நான் அநேக வார்த்
தைகளினாலே அலட்டாதபடிக்கு, நாங்கள்
சுருக்கமாய்ச் சொல்வதை நீர் †பொறுமை
யாய்க் கேட்கவேண்டுமென்று பிரார்த்திக்கி
5 றேன். என்னவென்றால், [8]இந்த மனுஷன்
கொள்ளைநோயாகவும், பூச்சக்கரத்திலுள்ள
சகல யூதர்களுக்குள்ளும் கலகம் எழுப்புகிற
வனாகவும், நசரேயருடைய மதபேதத்துக்கு
முதலாளியாகவும் இருக்கிறானென்று கண்ட
6 றிந்தோம். இவன் [9]தேவாலயத்தையும் தீட்
டுப்படுத்தப் பார்த்தான். [10]நாங்கள் இவனைப்
பிடித்து எங்கள் வேதப்பிரமாணத்தின்படியே
7 நியாயந்தீர்க்க மனதாயிருந்தோம். அப்பொ
ழுது சேனாபதியாகிய லீசியா வந்து, [11]மிகுந்த
பலாத்காரமாய் இவனை எங்கள் கைகளிலி
8 ருந்து பறித்துக்கொண்டுபோய், இவன்மேல்
குற்றஞ்சாட்டுகிறவர்கள் [12]உம்மிடத்தில் வரும்
படி கட்டளையிட்டார். இவனிடத்தில் நீர்
விசாரித்தால் நாங்கள் இவன்மேல் சாட்டுகிற
குற்றங்கள் யாவையும் அறிந்துகொள்ளலாம்
9 என்றான். யூதர்களும் அதற்கு இசைந்து,
இவைகள் யதார்த்தந்தான் என்றார்கள்.
10 பவுல் பேசும்படி தேசாதிபதி சைகை காட்
டினபோது, அவன் உத்தரவாக:
நீர் அநேக வருஷகாலமாய் இந்த தேசத்தா
ருக்கு நியாயாதிபதியாயிருக்கிறீரென்றறிந்து,
[13]நான் என் காரியங்களைக்குறித்து அதிக தை
11 ரியத்துடன் உத்தரவு சொல்லுகிறேன். நான்
தொழுதுகொள்ளும்படியாக [14]எருசலேமுக்
குப் போனதுமுதல் இதுவரைக்கும் பன்னி
ரண்டு நாள்மாத்திரம் ஆயிற்றென்று நீர் அறிந்
12 துகொள்ளலாம். தேவாலயத்திலே [15]நான் ஒரு
வரிடத்திலாவது தர்க்கம் பண்ணினதையும்,

1 25–30. வச
2 21. 39
3 24. 1. ஞா: 25. 16
4 மத். 27. 27
5 21. 27: 23. 2, 30: 25. 2
* [illegible]
6 சங். 11. 2
7 சங். 12. 2
† சாந்தமாய்
8 6. 13: 16. 20: 17. 6: 21. 28. லூ. 23. 2. 1 பே. 2. 12, 19
9 19. 37: 21. 28
10 யோ. 18. 31
11 21. 33
12 23. 30
13 1 பே. 3. 15
14 21. 15
15 25. 8: 28. 17
16 1 பே. 3. 16
17 9. 2. மீகா. 4. 5. 2 தீமோ. 1. 3
18 13. 15: 26. 22: 28. 23. மத். 22. 40. லூ. 16. 16. யோ. 1. 45. ரோ. 3. 21
19 23. 6. ஞா: 26. 6, 7: 28. 20. ஞ. தானி. 12. 2. யோ. 5. 28, 29. 1 கொ. 15. 12, 17. வெளி. 20. 6, 13
20 23. 1
21 11. 29, 30: 20. 16. ரோ. 15. 25. 2 கொ. 8. 4. கலா. 2. 10
22 21. 26, 27
23 25. 16
24 28. 6: 28. 20
25 7. வச
26 27. 3: 28. 16.
27 நீதி. 16. 12. எரே. 22. 15–17. தானி. 4. 27. யோ. 16. 8
28 நீதி. 31. 4, 5. தானி. 5. 1–4. ஓசி. 7. 5. 1 பே. 4. 4
29 சங். 50. 3, 4. தானி. 12. 2. மத். 25. 31–46. 2 கொ. 5. 10. வெளி. 20. 12

நான் ஜெபஆலயங்களிலாகிலும் நகரத்திலாகி
லும் ஜனங்களுக்குள்ளே கலகமெழுப்பினதை
யும், இவர்கள் கண்டதில்லை. இப்பொழுது 13
என்மேல் சாட்டுகிற குற்றங்களை [16]இவர்கள்
ரூபிக்கவுமாட்டார்கள். உம்மிடத்தில் ஒன் 14
றை ஒத்துக்கொள்ளுகிறேன்; அதென்னவெ
ன்றால், இவர்கள் மதபேதம் என்று சொல்லு
கிற மார்க்கத்தின்படியே [17]எங்கள் முன்னோர்
களின் தேவனுக்கு ஆராதனைசெய்து நியாயப்
பிரமாணத்திலேயும் தீர்க்கதரிசிகள் புஸ்தகங்
களிலேயும் [18]எழுதியிருக்கிற எல்லாவற்றை
யும் நான் விசுவாசித்து, நீதிமான்களும் அநீ 15
திமான்களுமாகிய மரித்தோர் உயிர்த்தெழுந்
திருப்பது உண்டென்று இவர்கள் தேவனிடத்
தில் நம்பிக்கைகொண்டிருக்கிறதுபோல [19]நா
னும் நம்பிக்கைகொண்டிருக்கிறேன். இத 16
னால் நான் தேவனுக்கும் மனுஷருக்கும் முன்
பாக எப்பொழுதும் குற்றமற்ற மனச்சாட்சி
யை [20]உடையவனாயிருக்கப் பிரயாசப்படுகி
றேன். அநேக வருஷங்களுக்குப் பின்பு 17
நான் என் ஜனத்தாருக்குத் தர்மபணத்தை ஒப்
புவிக்கவும், [21]காணிக்கைகளைச் செலுத்தவும்
வந்தேன். அப்பொழுது கூட்டமில்லாமலும் 18
அமளியில்லாமலும் தேவாலயத்திலே சுத்திக
ரித்துக்கொண்டவனா யிருக்கையில், [22]ஆசியா
நாட்டாரான சில யூதர்கள் என்னைக் கண்டார்
கள். அவர்களுக்கு என்பேரில் விரோதமான 19
காரியம் ஏதாகிலும் உண்டாயிருந்தால், [23]அவர்
களே இங்கே வந்து, உமக்குமுன்பாகக் குற்
றஞ் சாட்டவேண்டும். நான் ஆலோசனைச் 20
சங்கத்தாருக்கு முன்பாக நின்றபோது அவர்
கள் யாதொரு அநியாயத்தை என்னிடத்தில்
கண்டதுண்டானால் இவர்களே அதைச் சொல்
லட்டும். நான் அவர்களுக்குள்ளே நின்ற 21
போது மரித்தோர் உயிர்த்தெழுந்திருப்பதைக்
குறித்து இன்று உங்களாலே நியாயந்தீர்க்கப்
படுகிறேனென்று நான் சொன்ன ஒரு சொல்
லினிமித்தமேயன்றி [24]வேறொன்றினிமித்த
மும் குற்றங் காணப்படவில்லையென்றான்.
இந்த மார்க்கத்தின் விஷயங்களை விவரமாய் 22
அறிந்திருந்த பேலிக்ஸ் இவைகளைக் கேட்ட
பொழுது: [25]சேனாபதியாகிய லீசியா வரும்
போது உங்கள் காரியங்களைத் திட்டமாய் விசா
ரிப்பேன் என்று சொல்லி; பவுலைக் காவல் 23
பண்ணவும், கண்டிப்பில்லாமல் நடத்தவும்,
[26]அவனுக்கு ஊழியஞ்செய்கிறதற்கும் அவ
னைக் கண்டுகொள்ளுகிறதற்கும் வருகிற அவ
னுடைய மனுஷர்களில் ஒருவனையும் தடை
செய்யாதிருக்கவும் நூற்றுக்கு அதிபதியான
வனுக்குக் கட்டளையிட்டு, அவர்களைக் காத்தி
ருக்கும்படி செய்தான்.
சிலநாளைக்குப் பின்பு பேலிக்ஸ் யூதஸ்திரீ 24
யாகிய தன் மனைவி துருசில்லாளுடனே கூட
வந்து, பவுலை அழைப்பித்து, கிறிஸ்துவைப்
பற்றும் விசுவாசத்தைக்குறித்து அவன் சொல்
லக் கேட்டான். அவன், [27]நீதியையும், [28]இச் 25
சையடக்கத்தையும், [29]இனிவரும் நியாயத்தீர்ப்

பையும் குறித்துப் பேசுகையில், பேலிக்ஸ்
பயமடைந்து: [1]இப்பொழுது நீ போகலாம்,
எனக்குச் சமயமானபோது உன்னை அழைப்
26 பிப்பேன் என்றான். மேலும்,[2] அவன் பவுலை
விடுதலைபண்ணும்படி தனக்கு அவன் பணங்
கொடுப்பானென்று நம்பிக்கையுள்ளவனாயிருந்
தான்; அதினிமித்தம் அவன் அநேகந்தரம்
அவனை அழைத்து, அவனுடனே பேசினான்.
27 இரண்டு வருஷம் சென்றபின்பு பேலிக்ஸ்
என்பவனுக்குப் பதிலாய்ப் பொர்க்கியு பெஸ்
து தேசாதிபதியாக வந்தான்; [3]அப்பொழுது
பேலிக்ஸ் யூதருக்குத் தயவுசெய்ய மனதாய்ப்
பவுலைக் காவலில் வைத்துவிட்டுப் போனான்.

**25** பெஸ்து என்பவன் நாட்டிற்கு அதிபதி
யாக வந்து, மூன்றுநாளானபின்பு, செசரியா
2 விலிருந்து எருசலேமுக்குப் போனான். அப்
பொழுது பிரதான ஆசாரியனும் யூதரில் முத
ன்மையானவர்களும் அவனிடத்தில் வந்து,
[4]பவுலுக்கு விரோதமாகப் பிராதுபண்ணி,
3 அவனை வழியிலே கொன்றுபோடும்படி சர்ப்
பனையான யோசனையுள்ளவர்களாய், [5]தங்கள்
மேல் தயவுசெய்து, அவனை எருசலேமுக்கு
அழைப்பிக்கவேண்டுமென்று வேண்டிக்கொ
4 ண்டார்கள். அதற்குப் பெஸ்து பிரதியுத்தர
மாக: பவுலைச் செசரியாவிலே காவல் பண்ணி
யிருக்கிறதே; நானும் சீக்கிரமாக அங்கே
5 போகிறேன். ஆகையால் உங்களில் திறமுள்
ளவர்கள் கூட வந்து, [6]அந்த மனுஷனிடத்
தில் குற்றம் ஏதாகிலும் உண்டானால், அந்தக்
குற்றத்தை அவன்மேல்சாட்டட்டும் என்றான்.
6 அவன் அவர்களிடத்திலே ஏறக்குறைய
பத்துநாள் சஞ்சரித்து, பின்பு செசரியாவுக்
குப் போய், மறுநாளிலே நியாயாசனத்தில்
உட்கார்ந்து, பவுலைக் கொண்டுவரும்படி கட்
7 டளையிட்டான். அவன் வந்தபோது, எருச
லேமிலிருந்துவந்த யூதர்கள் அவனைச் சூழ்ந்து
நின்று, [7]தங்களால் ரூபிக்கக்கூடாத அநேகங்
கொடிய குற்றங்களை அவன்மேல் சாட்டினார்
8 கள். அதற்கு அவன் உத்தரவாக: [8]நான்
யூதருடைய வேதப்பிரமாணத்துக்காகிலும்,
தேவாலயத்துக்காகிலும், இராயருக்காகிலும்,
விரோதமாக ஒரு குற்றமும் செய்யவில்லையெ
9 ன்று சொன்னான். அப்பொழுது பெஸ்து யூத
ருக்குத் தயவுசெய்ய மனதாய்,[9]பவுலை நோக்கி:
நீ எருசலேமுக்குப் போய், அவ்விடத்திலே
இந்தக் காரியங்களைக்குறித்து எனக்குமுன்
பாக நியாயம் விசாரிக்கப்பட உனக்குச் சம்ம
10 தியா என்றான். அதற்குப் பவுல்: நான் இரா
யருடைய நியாயாசனத்துக்கு முன்பாக நிற்கி
றேன்; அதற்குமுன்பாக நான் நியாயம் விசா
ரிக்கப்படவேண்டியது; யூதருக்கு நான் அநி
யாயம் ஒன்றும் செய்யவில்லை, அதை நீரும்
11 நன்றாய் அறிந்திருக்கிறீர். நான் அநியாயஞ்
செய்து, [10]மரணத்துக்குப் பாத்திரமானது
ஏதாகிலும் நடப்பித்ததுண்டானால், நான் சாகா
தபடிக்கு மனு கேட்கமாட்டேன்: இவர்கள்
என்மேல் சாட்டுகிற குற்றங்கள் முற்றிலும்

1 நீதி. 24. 32. மத். 22. 5: 25. 1-10
2 யாத். 23. 8
3 12. 3: 25. 9, 14. மாற். 15. 15
4 15. வச: 24. 1
5 23. 12, 15
6 18. வச: 18. 14
7 24. 5, 13. சங். 35. 11. மத். 5. 11, 12: 15. 3. லூ. 23. 2, 10
8 6. 13: 24. 12: 28. 17
9 20. வச: 24. 27
10 18. 14: 23. 29: 26. 31
11 26. 32: 28. 19
12 24. 27
13 2, 3. வச
14 4, 5. வச
15 6. வச
16 18. 15: 23. 29
17 9. 15

அபத்தமானால், அவர்களுக்குத் தயவுபண்ணும்
பொருட்டு ஒருவரும் என்னை அவர்களுக்கு
ஒப்புக்கொடுக்கலாகாது. [11]இராயருக்கு அப
யமிடுகிறேன் என்றான். அப்பொழுது பெ 12
ஸ்து தன் ஆலோசனைக்காரருடனே ஆலோ
சித்து: நீ இராயருக்கு அபயமிட்டாயே; இரா
யரிடத்திற்கே போகக்கடவாயென்று உத்தரவு
சொன்னான்.

சிலநாள் சென்றபின்பு, அகிரிப்பா ராஜா 13
வும் பெர்னீக்கேயாளும் பெஸ்துவைக் கண்டு
கொள்ளும்படி செசரியாவுக்கு வந்தார்கள்.
அவர்கள் அங்கே அநேகநாள் சஞ்சரித்திருக் 14
கையில், பெஸ்து பவுலின் சங்கதியை ராஜா
வுக்கு விவரித்து: [12]பேலிக்ஸ் காவலில் வைத்
துப்போன ஒரு மனுஷன் இருக்கிறான்.
நான் எருசலேமில் இருந்தபோது பிரதான 15
ஆசாரியர்களும் யூதருடைய மூப்பர்களும் அவ
னைக்குறித்து என்னிடத்தில் பிராதுபண்ணி,
[13]அவனுக்கு விரோதமாகத் தீர்ப்புசெய்யவே
ண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். அவர் 16
களுக்கு நான் பிரதியுத்தரமாக: [14]குற்றஞ்சாட்
டப்பட்ட மனுஷன் குற்றஞ்சாட்டினவர்களு
க்கு முகமுகமாய் நின்று, சாட்டின குற்றத்
துக்குத் தனக்காக எதிருத்தரவு சொல்ல அவ
னுக்கு இடங்கிடைக்கிறதற்கு முன்னே, குற்
றஞ்சாட்டினவர்கள் பட்சமாய் அவனை மரண
த்திற்கு ஒப்புக்கொடுக்கிறது ரோமருக்கு வழ
க்கமல்ல என்றேன். ஆகையால் அவர்கள் 17
இங்கே கூடிவந்தபோது, [15]நான் எவ்வளவும்
தாமதம்பண்ணாமல், மறுநாள் நியாயாசனத்தில்
உட்கார்ந்து, அந்த மனுஷனைக் கொண்டுவரும்
படி கட்டளையிட்டேன். அப்பொழுது குற்ற 18
ஞ்சாட்டினவர்கள் வந்து நின்று, நான் நினைத்
திருந்த குற்றங்களில் ஒன்றையும் அவன்மேல்
சுமத்தாமல், தங்களுடைய மார்க்கத்தைக்குறி 19
த்தும், [16]மரித்துப்போன இயேசு என்னும்
ஒருவன் உயிரோடிருக்கிறானென்று பவுல்
சாதித்ததைக்குறித்தும் சில தர்க்கவிஷயங்களை
அவன்பேரில் விரோதமாய்ச் சொன்னார்கள்.
இப்படிப்பட்ட தர்க்கவிஷயங்களைக்குறித்து 20
எனக்குச் சந்தேகமிருந்தபடியினால்: நீ எருச
லேமுக்குப் போய், அங்கே இவைகளைக்குறி
த்து நியாயம் விசாரிக்கப்பட உனக்குச் சம்ம
தியா என்று கேட்டேன். அதற்குப் பவுல், 21
தான் இராயருக்கு முன்பாக நியாயம் விசாரிக்
கப்படும்படிக்கு நிறுத்திவைக்கப்படவேண்டு
மென்று அபயமிட்டபோது, நான் அவனை
இராயனிடத்திற்கு அனுப்புமளவும் காவல்
பண்ணும்படி கட்டளையிட்டேன் என்றான்.
அப்பொழுது அகிரிப்பா பெஸ்துவை நோக்கி: 22
[17]அந்த மனுஷன் சொல்லுகிறதை நானும் கே
ட்க மனதாயிருக்கிறேன் என்றான். அதற்கு
அவன்: நாளைக்கு நீர் கேட்கலாம் என்றான்.

மறுநாளிலே அகிரிப்பாவும் பெர்னீக்கேயா 23
ளும் மிகுந்த ஆடம்பரத்துடனே வந்து சேனா
பதிகளோடும் பட்டணத்துப் பிரதான மனுஷ
ரோடுங்கூட நியாயஸ்தலத்தில் பிரவேசித்தார்

கள். உடனே பெஸ்துவினுடைய கட்டளை
யின்படி பவுல் கொண்டுவரப்பட்டான்.
24 அப்பொழுது பெஸ்து: அகிரிப்பா ராஜா
வே, எங்களோடேகூட இவ்விடத்தில் வந்தி
ருக்கிறவர்களே, நீங்கள் காண்கிற இந்த மனு
ஷனைக்குறித்து யூதஜனங்களெல்லாரும் எருச
லேமிலும் இவ்விடத்திலும் என்னை வருந்திக்
கேட்டுக்கொண்டு, [1]இவன் இனி உயிரோடிரு
க்கிறது தகாதென்று சொல்லிக் கூக்குரலிட்
25 டார்கள். இவன் [2]மரணத்துக்குப் பாத்திரமான
தொன்றையும் செய்யவில்லையென்று நான் அ
றிந்துகொண்டதினாலும், [3]இவன்தானே இரா
யனுக்கு அபயமிட்டபடியினாலும், அவரிடத்
தில் இவனை அனுப்பும்படி தீர்மானம்பண்ணி
26 னேன். இவனைக்குறித்து ஆண்டவனுக்கு
எழுதுகிறதற்கு நிச்சயப்பட்ட காரியமொன்
றும் எனக்கு விளங்கவில்லை. காவல்பண்ணப்
பட்ட ஒருவன் செய்த குற்றங்களை எடுத்துக்
காட்டாமல் அனுப்புகிறது புத்தியீனமான கா
ரியமென்று எனக்குத் தோன்றுகிறபடியினா
27 லே, இவனை விசாரித்துக் கேட்டபின்பு எழு
தத்தக்க விசேஷம் எதாகிலும் எனக்கு விளங்
கும்படி, இவனை உங்களுக்கு முன்பாகவும்,
விசேஷமாய் அகிரிப்பா ராஜாவே, உமக்கு
முன்பாகவும் கொண்டுவந்தேன் என்றான்.

**26** அகிரிப்பா பவுலை நோக்கி: நீ உனக்கா
கப் பேச உனக்கு உத்தரவாகிறது என்றான்.
அப்பொழுது பவுல் கையை நீட்டி, தனக்
காக உத்தரவு சொல்லத் தொடங்கினான்.
2 அகிரிப்பா ராஜாவே, யூதர்கள் என்மேல்
சாட்டுகிற சகல காரியங்களைக்குறித்தும் நான்
இன்றைக்கு உமக்கு முன்பாக உத்தரவு
சொல்லப் போகிறபடியினாலே என்னைப்
3 பாக்கியவான் என்றெண்ணுகிறேன். விசே
ஷமாய் நீர் யூதருடைய சகல முறைமை
களையும் தர்க்கங்களையும் [4]அறிந்தவரானதால்
அப்படி எண்ணுகிறேன்; ஆகையால் நான்
சொல்வதைப் பொறுமையோடே கேட்கும்
படி உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன்.
4 நான் என் சிறுவயதுமுதற்கொண்டு, [5]எருசலே
மிலே என் ஜனத்தாருக்குள்ளே இருந்தபடி
யால், ஆதிமுதல் நான் நடந்த நடக்கையை யூத
5 ரெல்லாரும் அறிந்திருக்கிறார்கள். நம்முடைய
மார்க்கத்திலுள்ள சமயபேதங்களில் மிகவும்
கண்டிப்பான சமயத்துக்கு இசைந்தபடி [6]பரி
சேயனாய் நடந்தேனென்று சாட்சிசொல்ல
6 அவர்களுக்கு மனதிருந்தால் சொல்லலாம். தே
வன் நம்முடைய பிதாக்களுக்கு அருளிச்செய்த
வாக்குத்தத்தம் [7]நிறைவேறுமென்கிற நம்பிக்
கைக்காகவே நான் இப்பொழுது நியாயத்தீர்ப்
7 படைகிறவனாய் நிற்கிறேன். இரவும் பகலும்
இடைவிடாமல் ஆராதனை செய்துவருகிற
[8]நம்முடைய பன்னிரண்டு கோத்திரத்தாரும்
அந்த வாக்குத்தத்தம் நிறைவேறுமென்று நம்பி
யிருக்கிறார்கள். அகிரிப்பா ராஜாவே, அந்த
நம்பிக்கைநிமித்தமே யூதர்கள் என்மேல்
8 குற்றஞ்சாட்டுகிறார்கள். தேவன் மரித்தோரை
எழுப்புகிறது நம்பப்படாத காரியமென்று
[9]நீங்கள் எண்ணுகிறதென்ன? முன்னே நா 9
னும் நசரேயனாகிய இயேசுவின் நாமத்திற்கு
விரோதமாய் [10]அநேக காரியங்களை நடப்பிக்க
வேண்டுமென்று நினைத்திருந்தேன். அப்படி 10
யே நான் எருசலேமிலும் செய்தேன். [11]நான்
பிரதான ஆசாரியர்களிடத்தில் அதிகாரம்
பெற்று, பரிசுத்தவான்களில் அநேகரைச் சி
றைச்சாலைகளில் அடைத்தேன்; அவர்கள்
கொலைசெய்யப்படுகையில் நானும் சம்மதித்
திருந்தேன். சகல ஜெபஆலயங்களிலும் நான் 11
அவர்களை அநேகந்தரம் தண்டித்து, [12]தேவதூ
ஷணஞ் சொல்லக் கட்டாயப்படுத்தினேன்;
அவர்கள்பேரில் மூர்க்கவெறிகொண்டவனாய்
அந்நிய பட்டணங்கள்வரைக்கும் அவர்களைத்
துன்பப்படுத்தினேன். இப்படிச் செய்துவரு 12
கையில், நான் பிரதான ஆசாரியர்களிடத்தில்
அதிகாரமும் உத்தரவும் பெற்று, [13]தமஸ்குவுக்
குப் போகும்போது, மத்தியானவேளையில், 13
ராஜாவே, நான் வழியிலே சூரியனுடைய
பிரகாசத்திலும் அதிகமான ஒளி வானத்தி
லிருந்து என்னையும் என்னுடனேகூடப் பி
ரயாணம்பண்ணினவர்களையும் சுற்றிப் பிரகா
சிக்கக் கண்டேன். நாங்களெல்லாரும் தரையி 14
லே விழுந்தபோது: சவுலே, சவுலே, நீ ஏன்
என்னைத் துன்பப்படுத்துகிறாய்? முள்ளில்
உதைக்கிறது உனக்குக் கடினமாமென்று எபி
ரெயு பாஷையிலே என்னுடனே சொல்லு
கிற ஒரு சத்தத்தைக் கேட்டேன். அப்பொ 15
ழுது நான்: ஆண்டவரே, நீர் யார் என்றேன்.
அதற்கு அவர்: நீ துன்பப்படுத்துகிற இயேசு
நானே. இப்பொழுது நீ எழுந்து, காலூன்றி 16
நில். [14]நீ கண்டவைகளையும் நான் உனக்குத்
தரிசனமாகிக் காண்பிக்கப்போகிறவைகளையும்
குறித்து உன்னை ஊழியக்காரனாகவும் சாட்சி
யாகவும் ஏற்படுத்துகிறதற்காக உனக்குத் தரி
சனமானேன். உன் சுய ஜனத்தாரிடத்தினின் 17
றும் அந்நிய ஜனத்தாரிடத்தினின்றும் [15]உன்
னை விடுதலையாக்கி, அவர்கள் என்னைப் பற் 18
றும் விசுவாசத்தினாலே [16]பாவமன்னிப்பை
யும் பரிசுத்தமாக்கப்பட்டவர்களுக்குரிய சுதந்
தரத்தையும் பெற்றுக்கொள்ளும்படியாக, [17]அ
வர்கள் இருளை விட்டு ஒளியினிடத்திற்கும்,
சாத்தானுடைய அதிகாரத்தைவிட்டு தேவனி
டத்திற்கும் திரும்பும்படிக்கு நீ அவர்களு
டைய கண்களைத் திறக்கும்பொருட்டு, [18]இப்
பொழுது உன்னை அவர்களிடத்திற்கு அனுப்
புகிறேன் என்றார். ஆகையால், அகிரிப்பா 19
ராஜாவே, நான் அந்தப் பரமதரிசனத்துக்குக்
கீழ்ப்படியாதவனாயிருக்கவில்லை. முன்பு தமஸ் 20
குவிலும் எருசலேமிலும் யூதேயாதேசமெங்கு
முள்ளவர்களிடத்திலும், [19]பின்பு புறஜாதியா
ரிடத்திலும் நான் போய், அவர்கள் தேவனி
டத்திற்கு மனந்திரும்பிக் குணப்படவும்,
[20]மனந்திரும்புதலுக்கேற்ற கிரியைகளைச் செய்
யவும் வேண்டுமென்று அறிவித்தேன். இந்நி 21
மித்தமே யூதர்கள் தேவாலயத்திலே [21]என்

1 22. 21, 22
2 23. 9, 20: 26. 31
3 11, 12.
4 உபா. 17. 18
5 2 தீமோ. 3. 10
6 22. 3. பிலி. 3. 5
7 13. 32: 23. 6. ஆதி. 3. 15. உபா. 18. 15. ஏசா. 9. 6, 7. எரே. 23. 5. எசே. 34. 23. தானி. 9. 24. மல். 3. 1. ரோ. 15. 8. தீத். 2. 13
8 லூ. 2. 37. 1 தெச. 3. 10. 1 தீமோ. 5. 5
9 1 கொ. 15. 12, 20
10 யோ. 16. 2. 1 தீமோ. 1. 13
11 8. 3: 9. 14. கலா. 1. 13
12 22. 19
13 9. 3: 22. 6
14 22. 15. எபே. 3. 7. கொலோ. 1. 23, 25
15 22. 21
16 லூ. 1. 77. எபே. 1. 7. கொலோ. 1. 14
17 ஏசா. 35. 5: 42. 7. லூ. 1. 79. யோ. 8. 12. 2 கொ. 4. 6. எபே. 1. 8. 1 பே. 2. 9
18 22. 21. ரோ. 11. 13
19 9. 19.
20 மத். 3. 8
21 21. 30, 31

னைப் பிடித்துக் கொலைசெய்யப் பிரயத்தனம்
22 பண்ணினார்கள். ஆனாலும் தேவ அநுக்கிரகம்
பெற்று, நான் இந்நாள்வரைக்கும் சிறியோருக்
கும் பெரியோருக்கும் சாட்சிகூறி வருகிறேன்.
23 தீர்க்கதரிசிகளும் மோசேயும் முன்னமே சொல்
லியிருந்தபடியே, [1]கிறிஸ்து பாடுபடவேண்டி
யதென்றும், மரித்தோர் உயிர்த்தெழுதலில்
அவர் முதல்வராகி, சுயஜனங்களுக்கும் அந்நிய
ஜனங்களுக்கும் ஒளியை வெளிப்படுத்துகிறவ
ரென்றும் சொல்லுகிறேனேயன்றி, வேறொன்
றையும் நான் சொல்லுகிறதில்லை என்றான்.
24 இவ்விதமாய் அவன் தனக்காக உத்தரவுசொ
ல்லுகையில், பெஸ்து உரத்தசத்தமாய்: [2]பவுலே,
நீ பிதற்றுகிறாய், அதிகக் கல்வி உனக்குப் பயித்
25 தியமுண்டாக்குகிறது என்றான். அதற்கு
அவன்: கனம்பொருந்திய பெஸ்துவே, நான்
பயித்தியக்காரனல்ல, சத்தியமும் சொஸ்த
புத்தியுமுள்ள வார்த்தைகளைப் பேசுகிறேன்.
26 இந்தச் சங்கதிகளை ராஜா அறிந்திருக்கிறார்;
ஆகையால் தைரியமாய் அவருக்கு முன்பாகப்
பேசுகிறேன்; இவைகளில் ஒன்றும் அவருக்கு
மறைவானதல்லவென்று எண்ணுகிறேன்;
இது ஒரு மூலையிலே நடந்த காரியமல்ல.
27 அகிரிப்பா ராஜாவே, தீர்க்கதரிசிகளை விசு
வாசிக்கிறீரா? விசுவாசிக்கிறீர் என்று அறி
28 வேன் என்றான். அப்பொழுது அகிரிப்பா
பவுலை நோக்கி: *நான் கிறிஸ்தவனாகிறதற்
குக் [3]கொஞ்சங்குறைய நீ என்னைச் சம்மதிக்
29 கப்பண்ணுகிறாய் என்றான். அதற்குப் பவுல்:
நீர்மாத்திரமல்ல, இன்று என் வசனத்தைக்
கேட்கிற யாவரும், கொஞ்சங்குறையமாத்திரம்
அல்ல, இந்தக் கட்டுகள்தவிர, முழுவதும்
என்னைப்போலாகும்படி [4]தேவனை வேண்டிக்
கொள்ளுகிறேன் என்றான்.
30 இவைகளை அவன் சொன்னபோது, ராஜா
வும் தேசாதிபதியும் பெர்னீக்கேயாளும் அவர்
களுடனேகூட உட்கார்ந்திருந்தவர்களும் எழு
31 ந்து, தனியே போய்: இந்த மனுஷன் [5]மர
ணத்துக்காவது கட்டுகளுக்காவது பாத்திர
மானதொன்றையும் செய்யவில்லையென்று தங்
32 களுக்குள்ளே பேசிக்கொண்டார்கள். அகி
ரிப்பா பெஸ்துவை நோக்கி: [6]இந்த மனுஷன்
இராயனுக்கு அபயமிடாதிருந்தானானால், இ
வனை விடுதலைபண்ணலாகும் என்றான்.

27 நாங்கள் இத்தாலியா தேசத்துக்குக் கப்பல்
ஏறிப் போகும்படி தீர்மானிக்கப்பட்டபோ
து, [7]பவுலையும் காவலில் வைக்கப்பட்டிருந்தவே
று சிலரையும் அகுஸ்து பட்டாளத்தைச் சேர்ந்த
யூலியு என்னும் பேர்கொண்ட நூற்றுக்கு அதி
2 பதியினிடத்தில் ஒப்புவித்தார்கள். அதிரமித்தி
யம் ஊர்க்கப்பலில் நாங்கள் ஏறி, ஆசியாநாட்
டுக் கரைபிடித்தோடவேண்டுமென்று நினைத்
துப் புறப்பட்டோம். மக்கெதோனியா தே
சத்துத் தெசலோனிக்கே பட்டணத்தானாகிய
[8]அரிஸ்தர்க்கு எங்களுடனேகூட இருந்தான்.
3 மறுநாள் சீதோன் துறைபிடித்தோம். [9]யூலியு
பவுலைப் பட்சமாய் நடப்பித்து, அவன் தன்
சிநேகிதரிடத்திலே போய்ப் †பராமரிப்படை
யும்படிக்கு உத்தரவுகொடுத்தான். அவ்விடம் 4
விட்டு நாங்கள் புறப்பட்டு, எதிர்காற்றாயிருந்த
படியினால், சீப்புருதீவின் ஒதுக்கிலே ஓடி
னோம். பின்பு சிலிசியா பம்பிலியா நாடுகளின் 5
கடல்வழியாய் ஓடி, லீசியாநாட்டு மீறாப்பட்ட
ணத்தில் சேர்ந்தோம். இத்தாலியாவுக்குப்போ 6
கிற அலெக்சந்திரியாபட்டணத்துக் கப்பலை
நூற்றுக்கு அதிபதி அங்கே கண்டு, எங்களை
அதில் ஏற்றினான். காற்று எங்களைத் தடுத்தபடி 7
யினாலே, நாங்கள் அநேகநாள் மெதுவாய்ச்
சென்று, வருத்தத்தோடே கினீது பட்டணத்
திற்கு எதிரே வந்து, சல்மோனே ஊருக்கு
எதிராய்க் கிரேத்தாதீவின் ஒதுக்கில் ஓடி
னோம். அதை வருத்தத்தோடே கடந்து, நல்ல 8
துறைமுகம் என்னப்பட்ட ஒரு இடத்திற்கு
வந்தோம்; லசேயபட்டணம் அதற்குச் சமீப
மாயிருந்தது.
வெகுகாலம் சென்று, ‡உபவாசநாளும் 9
கழிந்துபோனபடியினாலே, இனிக் கப்பல்
யாத்திரை செய்கிறது மோசத்திற்கு ஏதுவா
யிருக்குமென்று, பவுல் அவர்களை நோக்கி:
மனுஷரே, [10]இந்த யாத்திரையினாலே சரக்குக் 10
கும் கப்பலுக்கும் மாத்திரமல்ல, நம்முடைய
ஜீவனுக்கும் வருத்தமும் மிகுந்த சேதமும் உண்
டாயிருக்குமென்று காண்கிறேன் என்று சொ
ல்லி, அவர்களை எச்சரித்தான். நூற்றுக்கு அதி 11
பதி [11]பவுலினால் சொல்லப்பட்டவைகளைப்
பார்க்கிலும் மாலுமியையும் கப்பல் எஜமானை
யும் அதிகமாய் நம்பினான். அந்தத் துறைமு 12
கம் மழைகாலத்திலே தங்குதற்கு வசதியாயி
ராதபடியினால், அவ்விடத்தைவிட்டுத் தென்
மேற்கையும் வடமேற்கையும் நோக்கியிருக்கும்
கிரேத்தாதீவிலுள்ள துறைமுகமாகிய பேனி
க்ஸ் என்னும் இடத்தில் சேரக்கூடுமானால்
சேர்ந்து, மழைகாலத்தில் தங்கும்படி அநே
கம்பேர் ஆலோசனை சொன்னார்கள். தென்றல் 13
மெதுவாயடித்தபடியால், தாங்கள் கோரினது
கைகூடிவந்ததென்று எண்ணி, அவ்விடம்விட்
டுப் பெயர்ந்து கிரேத்தாதீவுக்கு அருகாக
ஓடினார்கள். கொஞ்சநேரத்துக்குள்ளே யூரோ 14
க்கிலிதோன் [12]என்னுங் கடுங்காற்று அதில்
மோதிற்று. கப்பல் அதில் அகப்பட்டுக்கொ 15
ண்டு, காற்றுக்கு எதிர்த்துப் போகக்கூடாத
படியினால் காற்றின் போக்கிலே கொண்டு
போகப்பட்டோம். அப்படிக் கிலவுதா என் 16
னப்பட்ட ஒரு சின்ன தீவின் ஒதுக்கிலே
ஓடுகையில் வெகு வருத்தத்தோடே படவை
வசப்படுத்தினோம். அதை அவர்கள் தூக்கி 17
யெடுத்தபின்பு, பல உபாயங்கள் செய்து, கப்
பலைச் சுற்றிக் கட்டி, சொரிமணலிலே விழு
வோமென்று பயந்து, பாய்களை இறக்கி,
இவ்விதமாய்க் கொண்டுபோகப்பட்டார்கள்.
மேலும் பெருங்காற்றுமழையில் நாங்கள் மிக 18
வும் [13]அடிபட்டபடியினால், மறுநாளில் சில
சரக்குகளைக் கடலில் எறிந்தார்கள். மூன் 19
றாம் நாளிலே [14]கப்பலின் தளவாடங்களை எங்

[1] லூக். 24. 27, 46. யோ. 5. 46. ரோ. 3. 21. 1 கொ. 15. 20. கொலோ. 1. 18
[2] 2 இரா. 9. 11. யோ. 10. 20. 1 கொ. 1. 23: 2. 13: 4. 10
* வெகுலேசாய் என்னைக் கிறிஸ்தவனாக்கலா மென்றிருக்கிறாய்
[3] யாக். 1. 23, 24
[4] 1 கொ. 7. 7
[5] 23. 9, 29: 25. 25
[6] 25. 11
[7] 25. 12, 25
[8] 19. 29
[9] 24. 23: 28. 16
† இளைப்பாறும்படி.
‡ அக்டோபர் மாதத்தில் நடக்கிற பாவநிவிர்த்தி நாள். லேவி. 23. 27, 29
[10] 2 இரா. 6. 9, 10. ஆமோ. 3. 7
[11] நீதி. 27. 12
[12] சங். 107. 25
[13] சங். 107. 27
[14] யோபு 2. 4. யோனா 1. 5

20 கள் கைகளினலே எடுத்து எறிந்தோம். அநே
கநாளாய்ச் சூரியனாவது நட்சத்திரங்களாவது
[1]காணப்படாமல், மிகுந்த பெருங்காற்றுமழை
யும் அடித்துக்கொண்டிருந்தபடியினல், இனி
தப்பிப் பிழைப்போமென்னும் நம்பிக்கை
21 முழுமையும் அற்றுப்போயிற்று. அநேகநாள்
அவர்கள் போஜனம் பண்ணமல் இருந்த
போது, பவுல் அவர்கள் நடுவிலே நின்று:
மனுஷரே, இந்த வருத்தமும் சேதமும் வராத
படிக்கு என் சொல்லைக் கேட்டு, கிரேத்தா
தீவைவிட்டுப் புறப்படாமல் இருக்கவேண்டி
22 யதாயிருந்தது. ஆகிலும், [2]திடமனதாயிருங்க
ளென்று இப்பொழுது உங்களுக்குத் தைரி
யஞ்சொல்லுகிறேன். கப்பற்சேதமேயல்லா
மல் உங்களில் ஒருவனுக்கும் பிராணச்சே
23 தம் வராது. ஏனென்றல் என்னை [3]ஆட்
கொண்டவரும் [4]நான் சேவிக்கிறவருமான
[5]தேவனுடைய தூதனானவன் இந்த ராத்திரி
24 யிலே என்னிடத்தில் வந்து நின்று: பவுலே,
பயப்படாதே, நீ இராயனுக்கு முன்பாக நிற்க
வேண்டும். [6]இதோ, உன்னுடனேகூட யாத்
திரைபண்ணுகிற யாவரையும் தேவன் உனக்
25 குத் தயவுபண்ணினர் என்றன். ஆனபடியி
னல் மனுஷரே, திடமனதாயிருங்கள். [7]எனக்
குச் சொல்லப்பட்ட பிரகாரமாகவே நடக்
கும் என்று தேவனிடத்தில் நம்பிக்கையாயி
26 ருக்கிறேன். ஆயினும் நாம் [8]ஒரு தீவிலே
விழவேண்டியதாயிருக்கும் என்றன்.
27 பதினலாம் இராத்திரியானபோது, நாங்
கள் ஆதிரியாக்கடலிலே அலைவுபட்டு ஓடு
கையில், நடுஜாமத்திலே கப்பலாட்களுக்கு
ஒரு கரை கிட்டிவருகிறதாகத் தோன்றிற்று.
28 உடனே அவர்கள் விழுதுவிட்டு இருபதுபாக
மென்று கண்டார்கள்; சற்றப்புறம் போன
பொழுது, மறுபடியும் விழுதுவிட்டுப் பதி
29 னைந்து பாகமென்று கண்டார்கள். பாறை
யிடங்களில் விழுவோமென்று பயந்து, பின்
னணியத்திலிருந்து நாலு நங்கூரங்களைப் போ
ட்டு, [9]பொழுது எப்போது விடியுமோ என்
30 றிருந்தார்கள். அப்பொழுது கப்பலாட்கள்
கப்பலை விட்டோடிப்போக வகைதேடி, முன்
னணியத்திலிருந்து நங்கூரங்களைப் போடப்
போகிற பாவனையாய்ப் படவைக் கடலில்
31 இறக்குகையில், பவுல் நூற்றுக்கு அதிபதி
யையும் சேவகரையும் நோக்கி: இவர்கள் கப்
பலில் இராவிட்டால் நீங்கள் தப்பிப் பிழைக்
32 கமாட்டீர்கள் என்றன். அப்பொழுது, போர்ச்
சேவகர் படவின் கயிறுகளை அறுத்து, அதைத்
33 தாழவிழவிட்டார்கள். பொழுதுவிடிகையில்
எல்லாரும் போஜனம்பண்ணும்படி பவுல்
அவர்களுக்குத் தைரியஞ்சொல்லி: நீங்கள்
இன்று பதினலுநாளாய் ஒன்றும் சாப்பிடா
34 மல் பட்டினியாயிருக்கிறீர்கள். ஆகையால்
போஜனம்பண்ணும்படி உங்களை வேண்டிக்
கொள்ளுகிறேன், [10]நீங்கள் தப்பிப் பிழைப்ப
தற்கு அது உதவியாயிருக்கும்; [11]உங்கள் தலை
யிலிருந்து ஒரு மயிரும் விழாது என்றன்.

இப்படிச் சொல்லி, அப்பத்தை எடுத்து,
[12]எல்லாருக்கு முன்பாகவும் தேவனை ஸ்தோத் 35
திரித்து, அதைப் பிட்டுப் புசிக்கத்தொடங்கி
னன். அப்பொழுது எல்லாரும் திடமனப் 36
பட்டுப் புசித்தார்கள். கப்பலில் இருநூற்றெ 37
ழுபத்தாறுபேர் இருந்தோம். திருப்தியாகப் 38
புசித்தபின்பு அவர்கள் கோதுமையைக் கட
லிலே எறிந்து, கப்பலை இலகுவாக்கினர்கள்.
பொழுது விடிந்தபின்பு, இன்ன பூமியென்று 39
அறியாதிருந்தார்கள். அப்பொழுது சமமா
னகரையுள்ள ஒரு துறைமுகம் அவர்களுக்
குத் தென்பட்டது; கூடுமானல் அதற்குள்
கப்பலையோட்ட யோசனையாயிருந்து, நங்கூ 40
ரங்களை அறுத்துக் கடலிலே விட்டுவிட்டு,
சுக்கான்களுடைய கட்டுகளைத் தளரவிட்டு,
பெரும்பாயைக் காற்றுமுகமாய் விரித்து, கரை
க்கு நேராய் ஓடி, இருபுறமும் கடல்மோதிய 41
ஒரு இடத்திலே கப்பலைத் [13]தட்டவைத்தார்
கள்; முன்னணியம் ஊன்றி அசையாமலிருந்
தது, பின்னணியம் அலைகளுடைய பலத்தி
னல் உடைந்துபோயிற்று. அப்பொழுது 42
காவல் பண்ணப்பட்டவர்களில் ஒருவனும்
நீந்தி ஓடிப்போகாதபடிக்கு அவர்களைக் கொ
ன்றுபோட வேண்டுமென்று போர்ச்சேவகர்
யோசனையாயிருந்தார்கள். நூற்றுக்கு அதி 43
பதி [14]பவுலைக் காப்பாற்ற மனதாயிருந்து, அவர்
களுடைய யோசனையைத் தடுத்து, நீந்தத்தக்
கவர்கள் முந்திக் கடலில் விழுந்து கரையேற
வும், மற்றவர்களில் சிலர் பலகைகள்மே 44
லும், சிலர் கப்பல் துண்டுகள்மேலும் போய்க்
கரையேறவும் கட்டளையிட்டான்; [15]இவ்வித
மாய் எல்லாரும் தப்பிக் கரைசேர்ந்தார்கள்.

நாங்கள் தப்பிக் கரைசேர்ந்தபின்பு, [16]அங் **28**
தத் தீவின்பேர் மெலித்தா என்று அறிந்
தோம். அந்நியராகிய [17]அந்தத் தீவார் எங்க 2
ளுக்குப் பாராட்டின *அன்பு கொஞ்சமல்ல.
அந்த வேளையிலே பிடித்திருந்த மழைக்காக
வும் குளிருக்காகவும் அவர்கள் நெருப்பை
மூட்டி, [18]எங்கள் அனைவரையும் சேர்த்துக்
கொண்டார்கள். பவுல் சில விறகுகளை வாரி 3
அந்த நெருப்பின்மேல் போடுகையில், ஒரு
விரியன்பாம்பு அனலுறைத்துப் புறப்பட்டு
அவனுடைய கையைக் கவ்விக்கொண்டது.
விஷப்பூச்சி அவன் கையிலே தொங்குகி 4
றதை அந்நியராகிய அந்தத் தீவார் கண்ட
போது: இந்த மனுஷன் கொலைபாதகன்,
[19]இதற்குச் சந்தேகமில்லை; இவன் சமுத்திரத்
துக்குத் தப்பிவந்தும், பழியானது இவனைப்
பிழைக்கவொட்டவில்லையென்று தங்களுக்
குள்ளே சொல்லிக்கொண்டார்கள். அவன் 5
அந்தப் பூச்சியைத் தீயிலே உதறிப்போட்டு,
[20]ஒரு தீங்கும் அடையாதிருந்தான். அவ 6
னுக்கு வீக்கங்கண்டு, அல்லது அவன் சடிதி
யாய் விழுந்து சாவானென்று அவர்கள் பார்த்
துக்கொண்டிருந்தார்கள்; நெடுநேரமாய்ப் பார்
த்துக்கொண்டிருந்தும், ஒரு சேதமும் அவ
னுக்கு வாராததைக் கண்டபோது, வேறு சிந்

1 சங். 105. 28
2 யோபு 22. 29. சங். 112. 7. 2 கொ. 4. 8, 9
3 23. 11. உபா. 32. 9. சங். 135. 4. ஏசா. 44. 5. மல். 3. 17. யோ. 17. 9, 10. 1 கொ. 6. 20. 1 பே. 2. 9, 10
4 சங். 116. 16. ஏசா. 44. 21. தானி. 3. 17; 6. 16. யோ. 12. 26. ரோ. 1. 9
5 எபி. 1. 14
6 ஆதி. 19. 21, 22
7 லூ. 1. 45. ரோ. 4. 20, 21. 2 தீமோ. 1. 12
8 28. 1
9 சங். 130. 6
10 மத். 15. 32. 1 தீமோ. 5. 23
11 1 இரா. 1. 52. மத். 10. 30. லூ. 12. 7; 21. 18
12 1 சாமு. 9. 13. மத். 15. 36. மாற். 8. 6. யோ. 6. 11, 23. 1 தீமோ. 4. 3, 4
13 2 கொ. 11. 25
14 2 கொ. 11. 25
15 22. வச
16 27. 26
17 ரோ. 1. 14. 1 கொ. 14. 11. கொலோ. 3. 11
* தயவு
18 மத். 10. 42. எபி. 13. 2
19 யோ. 7. 24
20 மாற். 16. 18. லூ. 10. 19

தையாகி, [1]இவன் தேவனென்று சொல்லிக்
கொண்டார்கள்.
7 தீவுக்கு முதலாளியாகிய புபிலியு என்னும்
பேர்கொண்டவனுடைய நிலங்கள் அந்த இட
த்திற்குச் சமீபமாயிருந்தது; அவன் எங்களை
ஏற்றுக்கொண்டு, மூன்றுநாள் பட்சமாய் விசா
8 ரித்தான். புபிலியுவினுடைய தகப்பன் ஜுரத்
தினாலும் இரத்தபேதியினாலும் வருத்தப்பட்
டுக் கிடந்தான்; [2]பவுல் அவனிடத்திற்குப்
போய் ஜெபம்பண்ணி, [3]அவன்மேல் கைகளை
9 வைத்து, அவனைக் குணமாக்கினான். இது நட
ந்தபின்பு, தீவிலே இருந்த மற்ற வியாதிக்கார
10 ரும் வந்து, குணமாக்கப்பட்டார்கள். அவர்
கள் *எங்களுக்கு [4]அநேக மரியாதை செய்து,
நாங்கள் கப்பல் ஏறிப்போகிறபோது [5]எங்க
ளுக்குத் தேவையானவைகளை ஏற்றினார்கள்.
11 மூன்றுமாதம் சென்றபின்பு, அந்தத் தீவி
லே மழைகாலத்திற்குத் தங்கியிருந்த மிதுனம்
என்னும் அடையாளமுடைய அலெக்சந்தி
ரியா பட்டணத்துக் கப்பலிலே நாங்கள் ஏறிப்
12 புறப்பட்டு, சீரகூசாபட்டணத்தைச் சேர்ந்து,
13 அங்கே மூன்றுநாள் தங்கினோம். அவ்விடம்
விட்டுச் சுற்றியோடி, ரேகியு துறைமுகத்
துக்கு வந்து சேர்ந்தோம். மறுநாளில் தென்றற்
காற்றெடுக்கையில் புறப்பட்டு, இரண்டாம்
14 நாள் புத்தேயோலி பட்டணத்திற்கு வந்து, அங்
கே சகோதரரைக் கண்டோம்; அவர்கள் எங்
களை ஏழுநாள் தங்களிடத்தில் இருக்கும்படி
வேண்டிக்கொண்டார்கள்; அந்தப்படி நாங்கள்
இருந்து, பின்பு ரோமாபுரிக்குப் போனோம்.
15 அவ்விடத்திலுள்ள சகோதரர்கள் நாங்கள்
வருகிற செய்தியைக் கேள்விப்பட்டு, சிலர்
அப்பியுபுரம்வரைக்கும், சிலர் மூன்று சத்திரம்
வரைக்கும், [6]எங்களுக்கு எதிர்கொண்டு வந்தார்
கள்; அவர்களைப் பவுல் கண்டு, [7]தேவனை
ஸ்தோத்திரித்துத் தைரியமடைந்தான்.
16 நாங்கள் ரோமாபுரியில் சேர்ந்தபோது,
நூற்றுக்கு அதிபதி தன் காவலிலிருந்தவர்க
ளைச் சேனாபதியினிடத்தில் ஒப்புக்கொடுத்
தான்; [8]அப்பொழுது பவுல் தன்னைக் காத்
திருக்கிற சேவகனுடனே தனித்துக் குடி
யிருக்கும்படி உத்தரவு பெற்றுக்கொண்டான்.
17 மூன்றுநாளைக்குப் பின்பு, பவுல் யூதரில்
பிரதானமானவர்களை வரவழைத்தான்; அவர்
கள் கூடிவந்திருந்தபோது, அவன் அவர்களை
நோக்கி: சகோதரரே, [9]நம்முடைய ஜனங்க
ளுக்கும் நம்முடைய முன்னோர்களின் முறை
மைகளுக்கும் விரோதமானதொன்றையும்
நான் செய்யாமலிருந்தும், [10]கட்டப்பட்டவ
னாக எருசலேமிலிருந்து ரோமர் கைகளில்
18 ஒப்புக்கொடுக்கப்பட்டேன். அவர்கள் என்னை
நியாயம் விசாரித்தபோது [11]மரணத்துக்கேது
வான குற்றம் ஒன்றும் என்னிடத்தில் காணாத
படியினால், என்னை விடுதலையாக்க மனதாயி
19 ருந்தார்கள். யூதர்கள் அதற்கு எதிர் பேசின
போது, [12]நான் இராயனுக்கு அபயமிடவேண்
டியதாயிருந்தது; ஆயினும் என் ஜனத்தார்
மேல் யாதொரு குற்றஞ்சாட்டவேண்டுமெ
ன்று நான் அப்படிச் செய்யவில்லை. இந்தக் 20
காரியத்தினிமித்தமே உங்களைக் காணவும் உங்
களுடனே பேசவும் உங்களை அழைப்பித்
தேன். [13]இஸ்ரவேலுடைய நம்பிக்கைக்காக
வே [14]இந்தச் சங்கிலியால் கட்டப்பட்டிருக்கி
றேன் என்றான். அதற்கு அவர்கள்: உன்னைக் 21
குறித்து யூதேயாவிலிருந்து எங்களுக்குக் கா
கிதம் வரவுமில்லை, வந்த சகோதரரில் ஒருவ
னும் உன்பேரில் ஒரு பொல்லாங்கை அறி
வித்ததுமில்லை, அதைப்பற்றிப் பேசினது
மில்லை. எங்கும் இந்த மதபேதத்துக்கு [15]விரோ 22
தமாய் பேசுகிறதாக நாங்கள் அறிந்திருக்கிற
படியால், இதைக்குறித்து உன்னுடைய அபிப்
பிராயம் என்னவென்று கேட்டறிய விரும்பு
கிறோம் என்றார்கள்.
அதற்காக அவர்கள் ஒரு நாளைக்குறித்து, 23
அநேகம்பேர் அவன் தங்கியிருந்த வீட்டிற்கு
அவனிடத்தில் வந்தார்கள். [16]அவன் காலமே
தொடங்கி சாயங்காலமட்டும் மோசேயின்
நியாயப்பிரமாணத்திலும் தீர்க்கதரிசிகளின் ஆ
கமங்களிலும் இருந்து இயேசுவுக்கடுத்த
விசேஷங்களை அவர்களுக்குப் போதித்து, தே
வனுடைய ராஜ்யத்தைக்குறித்துச் சாட்சி
கொடுத்து விஸ்தரித்துப் பேசினான். அவன் 24
சொன்னவைகளைச் சிலர் விசுவாசித்தார்கள்,
[17]சிலர் விசுவாசியாதிருந்தார்கள். இப்படி அவர் 25
கள் ஒருவரோடொருவர் ஒவ்வாமலிருந்து,
புறப்பட்டுப் போகையில், [18]பவுல் அவர்களுக்
குச் சொன்ன வாக்கியமாவது: நீங்கள் காதா 26
ரக்கேட்டும் உணராதிருப்பீர்கள், கண்ணாரக்
கண்டும் பாராதிருப்பீர்கள். இவர்கள் கண்க 27
ளினால் காணாமலும், காதுகளினால் கேளாம
லும், இருதயத்தினால் உணர்ந்து குணப்படா
மலும், நான் இவர்களை ஆரோக்கியமாக்காம
லும் இருக்கும்படிக்கு, இந்த ஜனத்தின் இரு
தயம் கொழுத்திருக்கிறது; காதுகளினால் மந்
தமாய்க் கேட்டுத் தங்கள் கண்களை மூடிக்கொ
ண்டார்கள், என்று இந்த ஜனத்தினிடத்தில்
போய்ச் சொல்லு என்பதைப் பரிசுத்தஆவி
ஏசாயா தீர்க்கதரிசியைக்கொண்டு நம்முடைய
பிதாக்களுடனே நன்றாய்ச் சொல்லியிருக்கி
றார். ஆதலால் தேவனுடைய ரட்சிப்பு [19]புற 28
ஜாதியாருக்கு அனுப்பப்பட்டிருக்கிறதென்
றும், அவர்கள் அதற்குச் செவிகொடுப்பார்க
ளென்றும் உங்களுக்குத் தெரிந்திருக்கக்கட
வது என்றான். இப்படி அவன் சொன்ன 29
பின்பு, யூதர்கள் தங்களுக்குள்ளே மிகவும் தர்
க்கம்பண்ணிக்கொண்டு, போய்விட்டார்கள்.
பின்பு பவுல் தனக்காக வாடகைக்கு வாங் 30
கியிருந்த வீட்டிலே இரண்டு வருஷமுழுதும்
தங்கி, தன்னிடத்தில் வந்த யாவரையும் ஏற்
றுக்கொண்டு, மிகுந்த தைரியத்துடனே தடை 31
யில்லாமல், [20]தேவனுடைய ராஜ்யத்தைக்
குறித்துப் பிரசங்கித்து, கர்த்தராகிய இயேசு
கிறிஸ்துவைப்பற்றிய விசேஷங்களை உபதே
சித்துக்கொண்டிருந்தான்.

1 14. 11
2 லூக். 5. 14, 15
3 19. 11. மத். 9. 18. மாற். 6. 5: 7. 32: 16. 18. லூக். 4. 40. 1 கொரி. 12. 9, 28
* எங்களை மிகவும் கனம்பண்ணி
4 1 தெச. 2. 6. 1 தீமோ. 5. 17
5 மத். 6. 31-34: 10. 8-10. 2 கொரி. 9. 5-11. பிலி. 4. 11, 12
6 21. 5. 3 யோ. 6-8. உச
7 யோசு. 1. 6, 7, 9. 1 சாமு. 30. 6. சங். 27. 14
8 24. 23-25: 27. 3
9 24. 12, 13: 25. 8
10 21. 33. ஷ
11 24. 10: 26. 31
12 25. 11
13 26. 6, 7
14 26. 29. எபே. 3. 1: 4. 1: 6. 19. 2 தீமோ. 1. 16: 2. 9. பிலேமோன் 10, 13. உச
15 24. 5, 14. லூக். 2. 34. 1 பே. 2. 12: 4. 14
16 17. 3: 19. 8: 26. 6. 22. லூக். 24. 27
17 14. 1: 17. 4: 19. 9. ரோ. 3. 3
18 சங். 81: 11, 12. ஏசா. 6. 9. எரே. 5. 21. எசே. 5. 6, 7: 12. 2. மத். 13. 14, 15. ரோ. 11. 8
19 13. 46, 47: 18. 6: 22. 21: 26. 17, 18. மத். 21. 41. ரோ. 11. 11
20 4. 31. எபே. 6. 19

# THE EPISTLE TO THE ROMANS

# ரோமாபுரியாருக்கு

## எழுதின நிருபம்

1 இயேசுகிறிஸ்துவின் *ஊழியக்காரனும்,
[1]அப்போஸ்தலனாகும்படி அழைக்கப்பட்டவ
னும், தேவனுடைய சுவிசேஷத்திற்காகப்
2 [2]பிரித்தெடுக்கப்பட்டவனுமாகிய பவுல், ரோ
மாபுரியிலுள்ள தேவப்பிரியரும் [3]பரிசுத்தவா
ன்களாகும்படி அழைக்கப்பட்டவர்களுமாகிய
3 அனைவருக்கும் எழுதுகிறதாவது; நம்முடைய
பிதாவாகிய தேவனாலும் கர்த்தராகிய இயேசு
கிறிஸ்துவினாலும் [4]உங்களுக்குக் கிருபையும்
4 சமாதானமும் உண்டாவதாக. இயேசுகிறிஸ்
துவைக்குறித்து தேவன் [5]தம்முடைய தீர்க்க
தரிசிகள் மூலமாய்ப் பரிசுத்த வேதாகமங்களில்
முன்னே தம்முடைய சுவிசேஷத்தைப்பற்றி
வாக்குத்தத்தம் பண்ணினபடி கர்த்தராகிய
5 இயேசுகிறிஸ்துவானவர், மாம்சத்தின்படி [6]தா
வீதின் சந்ததியில் பிறந்தவரும், †பரிசுத்த
முள்ள [7]ஆவியின்படி தேவனுடைய சுதனெ
ன்று மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்ததினா
லே பலமாய் ரூபிக்கப்பட்ட தேவகுமாரனுமா
6 யிருக்கிறார். அவர் சகல ஜாதிகளையும், அவர்
களுக்குள் இயேசுகிறிஸ்துவினால் அழைக்கப்
7 பட்டவர்களாகிய உங்களையும், தமது நாமத்தி
னிமித்தம் [8]விசுவாசத்துக்குக் கீழ்ப்படியப்
பண்ணும்பொருட்டு, [9]எங்களுக்குக் கிருபை
யையும் அப்போஸ்தல ஊழியத்தையும் அரு
ளிச்செய்திருக்கிறார்.
8 உங்கள் விசுவாசம் [10]உலகமெங்கும் பிரசித்
தமாகிறபடியினாலே, முதலாவது நான் உங்க
ளெல்லாருக்காகவும் இயேசுகிறிஸ்து மூல
மாய் என் தேவனை ஸ்தோத்திரிக்கிறேன்.
9 நான் ஜெபம்பண்ணும்போதெல்லாம் இடை
விடாமல் உங்களை நினைத்துக்கொண்டிருக்கி
றதைக்குறித்துத் [11]தமது குமாரனுடைய சுவி
சேஷத்தினாலே [12]என் ‡ஆவியோடு நான் சே
விக்கிற தேவன் எனக்குச் சாட்சியாயிருக்கி
10 றார். நீங்கள் ஸ்திரப்படுவதற்காக ஆவிக்குரிய
சில வரங்களை உங்களுக்குக் கொடுக்கும்படிக்
11 கும், உங்களிலும் என்னிலுமுள்ள விசுவா
சத்தினால் [13]உங்களோடேகூட நானும் ஆறுத
லடையும்படிக்கும், உங்களைக் காண வாஞ்
12 சையாயிருக்கிறபடியினாலே, எவ்விதத்திலா
வது நான் உங்களிடத்தில் வருகிறதற்கு [14]தே
வனுடைய சித்தத்தினாலே எனக்கு நல்ல பிர
யாணம் சீக்கிரத்தில் கிடைக்கவேண்டுமெ
ன்று வேண்டிக்கொள்ளுகிறேன். சகோதர 13
ரே, [15]புறஜாதிகளான மற்றவர்களுக்குள்
ளே நான் பலனை அடைந்ததுபோல உங்க
ளுக்குள்ளும் சில பலனை அடையும்படிக்கு,
உங்களிடத்தில் வர பலமுறை யோசனை
யாயிருந்தேன், ஆயினும் இதுவரைக்கும்
எனக்குத் தடையுண்டாயிற்று என்று நீங்கள்
அறியாதிருக்க எனக்கு மனதில்லை. கிரேக் 14
கருக்கும், மற்ற அந்நியர்களுக்கும், ஞானி
களுக்கும், மூடருக்கும் [16]நான் கடனாளியா
யிருக்கிறேன். ஆகையால் ரோமாபுரியிலிருக் 15
கிற உங்களுக்கும் என்னால் இயன்றமட்
டும் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்க விரும்புகி
றேன். கிறிஸ்துவின் சுவிசேஷத்தைக்குறி 16
த்து [17]நான் வெட்கப்படேன்; [18]முன்பு யூத
ரிலும் பின்பு கிரேக்கரிலும் விசுவாசிக்கிறவ
னெவனோ அவனுக்கு இரட்சிப்பு உண்டா
வதற்கு அது [19]தேவபெலனாயிருக்கிறது.
விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான் 17
என்று எழுதியிருக்கிறபடி, [20]விசுவாசத்தினால்
உண்டாகும் தேவநீதி விசுவாசத்திற்கென்று
அந்தச் சுவிசேஷத்தினால் வெளிப்படுத்தப்
படுகிறது.

சத்தியத்தை அநியாயத்தினாலே அடக்கி 18
வைக்கிற மனுஷனுடைய எல்லாவித அவபக்
திக்கும் அநியாயத்துக்கும் விரோதமாய், [21]தேவ
கோபம் வானத்திலிருந்து வெளிப்படுத்தப்
பட்டிருக்கிறது. §தேவனைக்குறித்து அறிய 19
ப்படுவது அவர்களுக்குள்ளே வெளிப்பட்டி
ருக்கிறது; [22]தேவனே அதை அவர்களுக்கு
வெளிப்படுத்தியிருக்கிறார். எப்படியென்றால், 20
[23]காணப்படாதவைகளாகிய அவருடைய நித்
திய வல்லமை தேவத்துவம் என்பவைகள்,
உண்டாக்கப்பட்டிருக்கிறவைகளினாலே, உல
கமுண்டானது முதற்கொண்டு, தெளிவாய்க்
காணப்படும்; ஆதலால் அவர்கள் போக்குச்
சொல்ல இடமில்லை. அவர்கள் தேவனை 21
அறிந்தும், அவரை தேவனென்று மகிமைப்ப
டுத்தாமலும், ஸ்தோத்திரியாமலுமிருந்து, [24]தங்
கள் ||சிந்தனைகளினாலே வீணரானார்கள்; உணர்
வில்லாத அவர்களுடைய இருதயம் இருள
டைந்தது. அவர்கள் தங்களை ஞானிகளென்று 22

* அடியானும்
1 அப். 9. 15; 27. 23. 1 கொ. 1. 1. கலா. 1. 1. 1 தீமோ. 1. 11; 2. 7
2 அப். 13. 2. கலா. 1. 15
3 1 கொ. 1. 2. 1 தெச. 4. 7
4 1 கொ. 1. 3. யூ. 2 பே. 1. 2
5 அப். 26. 6
6 சங். 89. 36. யோ. 1. 14. கலா. 4. 5
† பரிசுத்தமாக்குகிற
7 அப். 13. 33, 34. எபி. 9. 14; 16. 26
8 அப். 6. 7; 9. 15
9 12. 3; 15. 15. 1 கொ. 15. 10
10 16. 19. 1 தெச. 1. 8
11 அப். 27. 23. 1 தெச. 3. 10
12 யோ. 4. 23, 24. பிலி. 3. 3
‡ ஆவியில்
13 2 பே. 1. 1
14 யாக். 4. 15
15 பிலி. 4. 17
16 1 கொ. 9. 16
17 மாற். 8. 38. 2 தீமோ. 1. 8
18 மாற். 16. 16. லூ. 2. 30–32. அப். 3. 26
19 எரே. 23. 29. 1 கொ. 1. 18
20 3. 21, 25. ஆப. 2. 4. யோ. 3. 36. கலா. 3. 11. பிலி. 3. 9. எபி. 10. 38
21 அப். 17. 30. எபே. 5. 6. கொலோ. 3. 6
§ தேவன் உண்டென்கிற அறிவு
22 யோ. 1. 9. அப். 14. 17
23 சங். 19. 1. அப். 14. 17; 17. 27
24 எரே. 2. 5, 6. எபே. 4. 17, 18
|| புத்திகளினாலே

23 சொல்லியும் [1]பயித்தியக்காரராகி, அழிவில்
லாத தேவனுடைய மகிமையை [2]அழிவுள்ள
மனுஷர்கள் பறவைகள் மிருகங்கள் ஊரும்
பிராணிகள் ஆகிய இவைகளுடைய ரூபங்க
ளுக்கு ஒப்பாக மாற்றினார்கள்.
24 இதினிமித்தம் அவர்கள் தங்கள் இருதயத்
திலுள்ள இச்சைகளினாலே ஒருவரோடொரு
வர் தங்கள் சரீரங்களை அவமானப்படுத்தத்தக்க
தாக, [3]தேவன் அவர்களை அசுத்தத்திற்கு ஒப்
25 புக்கொடுத்தார். தேவனுடைய சத்தியத்தை
அவர்கள் பொய்யாக மாற்றி, [4]சிருஷ்டிகரைத்
தொழுது சேவியாமல் சிருஷ்டியைத் தொழுது
சேவித்தார்கள், அவரே என்றென்றைக்கும்
ஸ்தோத்திரிக்கப்பட்டவர். ஆமென்.
26 இதினிமித்தம் தேவன் அவர்களை இழி
வான இச்சைரோகங்களுக்கு ஒப்புக்கொடுத்
தார்; [5]அந்தப்படியே அவர்களுடைய பெண்
கள் சுபாவ அநுபோகத்தைச் சுபாவத்துக்கு
விரோதமான அநுபோகமாக மாற்றினார்கள்.
27 அப்படியே ஆண்களும் பெண்களைச் சுபாவப்
படி அநுபவியாமல், ஒருவர்மேலொருவர் விர
கதாபத்தினாலே பொங்கி, ஆணோடே ஆண்
அவலட்சணமானதை நடப்பித்து, தங்கள் தப்
பிதத்திற்குத் தகுதியான பலனைத் தங்களுக்
குள் அடைந்தார்கள்.
28 தேவனை அறியும் அறிவைப் பற்றிக்கொண்
டிருக்க அவர்களுக்கு மனதில்லாதிருந்தபடி
யால் [6]தகாதவைகளைச் செய்யும்படி, தேவன்
அவர்களைக் கேடான சிந்தைக்கு ஒப்புக்கொ
29 டுத்தார். அவர்கள் சகலவித அநியாயத்தினா
லும், வேசித்தனத்தினாலும், துரோகத்தினா
லும், பொருளாசையினாலும், குரோதத்தினா
லும் நிறையப்பட்டு; பொறாமையினாலும்,
கொலையினாலும், வாக்குவாதத்தினாலும், வஞ்
சகத்தினாலும், வன்மத்தினாலும் நிறைந்தவர்க
30 ளுமாய், புறங்கூறுகிறவர்களுமாய், அவதூ
றுபண்ணுகிறவர்களுமாய், தேவபகைஞருமா
ய், துராகிருதம்பண்ணுகிறவர்களுமாய், *அகந்
தையுள்ளவர்களுமாய், வீம்புக்காரருமாய், பொ
ல்லாதவைகளை யோசித்துப் பிணைக்கிறவர்க
ளுமாய், பெற்றாருக்குக் கீழ்ப்படியாதவர்களு
31 மாய், உணர்வில்லாதவர்களுமாய், உடன்
படிக்கைகளை மீறுகிறவர்களுமாய், சுபாவ
அன்பில்லாதவர்களுமாய், இணங்காதவர்களு
மாய், இரக்கமில்லாதவர்களுமாய் இருக்கிறார்
32 கள். இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்
கள் மரணத்திற்குப் பாத்திரராயிருக்கிறார்க
ளென்று தேவன் தீர்மானித்த நீதியான தீர்ப்
பை அவர்கள் அறிந்திருந்தும், [7]அவைகளைத்
தாங்களே செய்கிறதுமல்லாமல், அவைகளைச்
செய்கிற மற்றவர்களிடத்தில் பிரியப்படுகிற
வர்களுமாயிருக்கிறார்கள்.

**2** ஆகையால், மற்றவர்களைக் குற்றவாளியா
கத் தீர்க்கிறவனே, நீ யாரானாலும் சரி, போக்
குச்சொல்ல உனக்கு இடமில்லை; [8]நீ குற்ற
மாகத் தீர்க்கிறவைகள் எவைகளோ, அவை
களை நீயே செய்கிறபடியால், நீ மற்றவர்களைக்
குறித்துச் சொல்லுகிற தீர்ப்பினாலே உன்னைத்
தானே குற்றவாளியாகத் தீர்க்கிறாய். இப்ப 2
டிப்பட்டவைகளைச் செய்கிறவர்களுக்கு தே
வனுடைய நியாயத்தீர்ப்பு சத்தியத்தின்படி
யே இருக்கிறதென்று அறிந்திருக்கிறோம்.
இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்களைக் 3
குற்றவாளிகளென்று தீர்த்தும், அவைகளையே
செய்கிறவனே, நீ தேவனுடைய நியாயத்தீர்ப்
புக்குத் தப்பிக்கொள்ளலாமென்று நினைக்கிறா
யோ? அல்லது தேவதயவு நீ குணப்படும் 4
படி உன்னை ஏவுகிறதென்று அறியாமல்,
[9]அவருடைய தயவு பொறுமை நீடியசாந்தம்
இவைகளின் ஐசுவரியத்தை அசட்டைபண்
ணுகிறாயோ? உன்மனக்கடினத்திற்கும் குணப் 5
படாத இருதயத்திற்கும் ஏற்றபடி, [10]தேவனு
டைய நீதியுள்ள தீர்ப்பு வெளிப்படும் கோ
பாக்கினைநாளிலே உனக்காகக் கோபாக்கினை
யைக் குவித்துக்கொள்ளுகிறாயே. தேவன் 6
அவனவனுடைய கிரியைகளுக்குத் தக்கதாய்
[11]அவனவனுக்குப் பலனளிப்பார். சோர்ந்து 7
போகாமல் நற்கிரியைகளைச் செய்து, மகிமை
யையும் கனத்தையும் அழியாமையையும் தேடு
கிறவர்களுக்கு நித்திய ஜீவனை அளிப்பார்.
சண்டைக்காரராயிருந்து, [12]சத்தியத்திற்குக் 8
கீழ்ப்படியாமல், அநியாயத்திற்குக் கீழ்ப்படிந்
திருக்கிறவர்களுக்கோ உக்கிர கோபாக்கினை
வரும். முன்பு [13]யூதரிலும் பின்பு கிரேக்கரிலும் 9
பொல்லாங்குசெய்கிற எந்த மனுஷ ஆத்துமா
வுக்கும் உபத்திரவமும் வியாகுலமும் உண்டா
கும். முன்பு யூதரிலும் பின்பு கிரேக்கரிலும் 10
எவன் நன்மை செய்கிறானோ அவனுக்கு [14]மகி
மையும் கனமும் சமாதானமும் உண்டாகும்.
தேவனிடத்தில் [15]பட்சபாதமில்லை. எவர் 11, 12
கள் நியாயப்பிரமாணமில்லாமல் பாவஞ்செய்
கிறார்களோ, அவர்கள் நியாயப்பிரமாணமில்
லாமல் கெட்டுப்போவார்கள்; எவர்கள் நியாயப்
பிரமாணத்துக் குட்பட்டவர்களாய்ப் பாவஞ்
செய்கிறார்களோ, அவர்கள் நியாயப்பிரமா
ணத்தினாலே ஆக்கினைத்தீர்ப்படைவார்கள்.
நியாயப்பிரமாணத்தைக் கேட்கிறவர்கள் தே 13
வனுக்கு முன்பாக நீதிமான்களல்ல, [16]நியாயப்
பிரமாணத்தின்படி செய்கிறவர்களே நீதிமான்
களாக்கப்படுவார்கள். அன்றியும் நியாயப்பிர 14
மாணமில்லாத புறஜாதிகள் சுபாவமாய் நியா
யப்பிரமாணத்தின்படி செய்கிறபோது, [17]நியா
யப்பிரமாணமில்லாத அவர்கள் தங்களுக்குத்
தாங்களே நியாயப்பிரமாணமாயிருக்கிறார்கள்.
அவர்களுடைய மனச்சாட்சியும் கூடச் சாட் 15
சியிடுகிறதினாலும், குற்றமுண்டு குற்றமில்லை
யென்று அவர்களுடைய சிந்தனைகள் ஒன்றை
யொன்று தீர்க்கிறதினாலும், நியாயப்பிரமா
ணத்திற்கேற்ற கிரியை தங்கள் இருதயங்களில்
எழுதியிருக்கிறதென்று காண்பிக்கிறார்கள்.
என் சுவிசேஷத்தின்படியே, [18]தேவன் இயேசு 16
கிறிஸ்துவைக்கொண்டு மனுஷருடைய அந்
தரங்கங்களைக்குறித்து நியாயத்தீர்ப்புக்கொடுக்
கும் நாளிலே இது விளங்கும்.

[1] எரே. 8. 8, 9
[2] ஏசா. 40. 18, 26. எசே. 8. 10. அப். 17. 29
[3] சங். 81. 12. அப். 7. 42. 1 கொ. 6. 18. எபே. 4. 18, 19. 1 தெச. 4. 4. 2 தெச. 2. 11, 12. 1 பே. 4. 3
[4] ஆமோ. 2. 4. 1 தெச. 1. 9. 1 யோ. 5. 20
[5] எபே. 5. 12. யூதா. 10. ...
[6] எபே. 5. 4
* பெருமைக்காரர்
[7] 2. 2: 6. 21
[8] 1. 20. 2 சாமு. 12. 6, 7. மத். 7. 1, 2. யோ. 8. 9
[9] 9. 23, 25. ஏசா. 30. 18: 63. 7. யோனா 4. 2. எபே. 1. 7: 2. 4, 7. 2 பே. 3. 9, 15
[10] உபா. 32. 34. பிர. 12. 14. யாக். 5. 3
[11] நீதி. 24. 12. மத். 16. 27. 1 கொ. 3. 8. வெளி. 20. 12
[12] 1. 18. 2 தெச. 1. 8
[13] லூ. 12. 47, 48. 1 பே. 4. 17
[14] 1 பே. 1. 7
[15] உபா. 10. 17. 2 நாளா. 19. 7. அப். 10. 34. கலா. 2. 6: 6. 7, 8. 1 பே. 1. 17
[16] மத். 7. 21. யாக். 1. 22–25. 1 யோ. 3. 7
[17] 1 கொ. 11. 14
[18] 16. 25. மத். 25. 31. லூ. 8. 17. யோ. 12. 48. வெளி. 20. 12

17 நீ யூதனென்று பெயர்பெற்று, [1]நியாயப்பி
ரமாணத்தின்மேல் பற்றுதலாயிருந்து, தேவ
18 னைக்குறித்து மேன்மைபாராட்டி, நியாயப்
பிரமாணத்தினால் உபதேசிக்கப்பட்டவனாய்,
அவருடைய சித்தத்தை அறிந்து, *நன்மை
தீமை [2]இன்னதென்று வகையறுக்கிறாயே.
19 நீ உன்னைக் குருடருக்கு வழிகாட்டியாகவும்,
[3]அந்தகாரத்திலுள்ளவர்களுக்கு வெளிச்சமா
20 கவும், பேதைகளுக்குப் போதகனாகவும், குழந்
தைகளுக்கு உபாத்தியாயனாகவும், நியாயப்பி
ரமாணத்தின் அறிவையும் சத்தியத்தையும்
[4]காட்டிய சட்டமுடையவனாகவும் எண்ணு
21 கிறாயே. இப்படியிருக்க, மற்றவனுக்குப்
போதிக்கிற நீ உனக்குத்தானே போதியாமலி
ருக்கலாமா? [5]களவு செய்யக்கூடாதென்று பிர
22 சங்கிக்கிற நீ களவு செய்யலாமா? விபசாரம்
செய்யக்கூடாதென்று சொல்லுகிற நீ விபசா
ரம் செய்யலாமா? விக்கிரகங்களை அருவருக்
கிற நீ கோவில்களைக் கொள்ளையிடலாமா?
23 நியாயப்பிரமாணத்தைக்குறித்து மேன்மைபா
ராட்டுகிற நீ நியாயப்பிரமாணத்தை மீறிந
டந்து; தேவனைக் கனவீனம் பண்ணலாமா?
24 எழுதியிருக்கிறபடி, [6]தேவனுடைய நாமம்
புறஜாதிகளுக்குள்ளே உங்கள் மூலமாய்த்
25 தூஷிக்கப்படுகிறதே. நீ நியாயப்பிரமாணத்
தைக் கைக்கொண்டு நடந்தால் விருத்தசேத
னம் பிரயோஜனமுள்ளதுதான்; [7]நீ நியாயப்
பிரமாணத்தை மீறி நடந்தால் உன் விருத்த
சேதனம் விருத்தசேதனமில்லாமையாயிற்றே.
26 மேலும் விருத்தசேதனமில்லாதவன் நியாயப்
பிரமாணத்துக்கேற்ற நீதிகளைக் கைக்கொண்
டால், [8]அவனுடைய விருத்தசேதன மில்லா
மை விருத்தசேதனம் என்றெண்ணப்படுமல்
27 லவா? சுபாவத்தின்படி விருத்தசேதனமில்
லாதவனாயிருந்தும் நியாயப்பிரமாணத்தை
நிறைவேற்றுகிறவனா யிருந்தால், [9]அவன்
வேத எழுத்தும் விருத்தசேதனமும் உள்ளவ
னாயிருந்தும், நியாயப்பிரமாணத்தை மீறுகிற
28 உன்னைக் குற்றப்படுத்துவானல்லவா? ஆத
லால் புறம்பாக யூதனானவன் யூதனல்ல, [10]புற
ம்பாக மாம்சத்தில் செய்யப்படும் விருத்தசேத
29 னமும் விருத்தசேதனமல்ல. உள்ளத்திலே யூத
னானவனே யூதன்; [11]எழுத்தின்படி உண்டாகா
மல், ஆவியின்படி இருதயத்தில் உண்டாகும்
விருத்தசேதனமே விருத்தசேதனம்; [12]இப்ப
டிப்பட்டவனுக்குரிய புகழ்ச்சி மனுஷராலே
அல்ல, தேவனாலே உண்டாயிருக்கிறது.

3 இப்படியானால், யூதனுடைய மேன்மை
என்ன? விருத்தசேதனத்தினாலே பிரயோஜ
2 னம் என்ன? அது எவ்விதத்திலும் மிகுதியா
யிருக்கிறது; [13]தேவனுடைய வாக்கியங்கள்
அவர்களிடத்தில் ஒப்புவிக்கப்பட்டது விசே
3 ஷித்த மேன்மையாமே. சிலர் விசுவாசியா
மற் போனாலுமென்ன? [14]அவர்களுடைய
அவிசுவாசம் தேவனுடைய உண்மையை அவ
4 மாக்குமோ? அப்படியாக்கமாட்டாது: [15]நீர் உம்
முடைய வசனங்களில் நீதிபரராய் விளங்க
வும், உம்முடைய நியாயம் விசாரிக்கப்படும்
போது வெற்றியடையவும் இப்படியாயிற்று
என்று எழுதியிருக்கிறபடி, தேவனே சத்திய
பரர் என்றும், எந்த மனுஷனும் பொய்யன்
என்றும் சொல்வோமாக. நான் மனுஷர் 5
பேசுகிறபிரகாரமாய்ப் [16]பேசுகிறேன்; நம்மு
டைய அநீதி தேவனுடைய நீதியை விளங்
கப்பண்ணினால் என்னசொல்லுவோம்? கோ
பாக்கினையைச் செலுத்துகிற தேவன் அநீத
ராயிருக்கிறார் என்று சொல்லலாமா? அப்ப 6
டிச்சொல்லக்கூடாது; சொல்லக்கூடுமானால்,
[17]தேவன் உலகத்தை நியாயந்தீர்ப்பதெப்படி?
அன்றியும், என் பொய்யினாலே தேவனுடை 7
ய சத்தியம் அவருக்கு மகிமையுண்டாக விள
ங்கினதுண்டானால், இனி நான் பாவியெ
ன்று தீர்க்கப்படுவானேன்? நன்மை வரும்படி 8
க்குத் [18]தீமை செய்வோமாக என்றும் சொல்ல
லாமல்லவா? நாங்கள் அப்படிப் போதிக்கிற
வர்களென்றும் சிலர் எங்களைத் தூஷித்துச்
சொல்லுகிறார்களே; அப்படிப் போதிக்கிற
வர்கள்மேல் வரும் ஆக்கினை நீதியாயிருக்கும்.

ஆனாலும் என்ன? அவர்களைப்பார்க்கிலும் 9
நாங்கள் விசேஷித்தவர்களா? எவ்வளவேனும்
விசேஷித்தவர்களல்ல. [19]யூதர் கிரேக்கர் யாவ
ரும் பாவத்திற் குட்பட்டவர்களென்பதை மு
ன்பு திருஷ்டாந்தப்படுத்தினோமே. அந்தப் 10
படியே: [20]நீதிமான் ஒருவனாகிலும் இல்லை;
உணர்வுள்ளவன் இல்லை; தேவனைத் தேடுகிற 11
வன் இல்லை; எல்லாரும் வழிதப்பி, ஏகமாய்க் 12
கெட்டுப்போனார்கள்; நன்மை செய்கிறவன்
இல்லை, ஒருவனாகிலும் இல்லை. அவர்கள் தொ 13
ண்டை திறக்கப்பட்ட பிரேதக்குழி, [21]தங்கள்
நாவுகளால் வஞ்சனை செய்கிறார்கள்; அவர்க
ளுடைய உதடுகளின் கீழே பாம்பின் விஷம்
இருக்கிறது; அவர்கள் வாய் [22]சபிப்பினா 14
லும் கசப்பினாலும் நிறைந்திருக்கிறது; அவர் 15
கள் கால்கள் [23]இரத்தஞ் சிந்துகிறதற்குத் தீவி
ரிக்கிறது; நாசமும் நிர்ப்பந்தமும் அவர்கள் 16
வழிகளிலிருக்கிறது; சமாதானவழியை அவர் 17
கள் அறியாதிருக்கிறார்கள்; அவர்கள் கண்க 18
ளுக்கு முன்பாகத் [24]தெய்வபயமில்லை, என்று
எழுதியிருக்கிறதே.

மேலும், வாய்கள் யாவும் அடைக்கப்படும் 19
படிக்கும், உலகத்தார் யாவரும் தேவனுடைய
ஆக்கினைத்தீர்ப்புக்கு ஏதுவானவர்களாகும்படி
க்கும், [25]நியாயப்பிரமாணம் சொல்லுகிறதெல்
லாம் நியாயப்பிரமாணத்துக்கு உட்பட்டிருக்
கிறவர்களுக்கே சொல்லுகிறதென்று அறிந் .
திருக்கிறோம். இப்படியிருக்க, [26]பாவத்தை 20
அறிகிற அறிவு நியாயப்பிரமாணத்தினால் வரு
கிறபடியால், எந்த மனுஷனும் நியாயப்பிர
மாணத்தின் கிரியைகளினாலே தேவனுக்கு
முன்பாக நீதிமானாக்கப்படுவதில்லை. இப்படி 21
யிருக்க, [27]நியாயப்பிரமாணமில்லாமல் தேவ
நீதி வெளியாக்கப்பட்டிருக்கிறது; அதைக்கு
றித்து நியாயப்பிரமாணமும் தீர்க்கதரிசனங்
களும் சாட்சியிடுகிறது. அது இயேசுகிறிஸ் 22

1 28. ஏசா. மத். 3. 9. யோ. 8. 33, 41. 2 கொ. 11. 22
* உத்தமமான வை னை ஒப்புக்கொள் ளுகிறாயே
2 பிலி. 1. 10
3 மத். 15. 14. யோ. 9. 34, 40, 41
4 2 தீமோ. 1. 13
5 மத். 23. 3. ஷ
6 எசே. 36. 20, 23
7 கலா. 5. 3
8 அப். 10. 34, 35
9 மத். 12. 41. ஷ
10 9. 6, 7. மத். 3. 9, யோ. 8. 39 கலா. 6. 15. வெளி. 2. 9
11 உபா. 10. 16: 30. 6. எரே. 4. 4. பிலி. 3. 3. கொலோ. 2. 11. 1 பே. 3. 4
12 2 கொ. 10. 18. 1 தெச. 2. 4
13 2. 18: 9. 4. உபா. 4. 7, 8
14 10. 16. எபி. 4. 2
15 சங். 51. 4. யோ. 3. 33
16 6. 19. கலா. 3. 15
17 யோபு 8. 3
18 6. 1, 15. 1 கொ. 11. 14
19 23. ஏசா. 1. 28: 2. 1. ஷ. கலா. 3. 22
20 14, 53. சங்கீதங் கள்
21 சங். 5. 9: 140. 3
22 சங். 10. 7
23 ஏசா. 59. 7, 8
24 சங். 36. 1
25 சங். 107. 42. யோ. 10. 34: 15. 25
26 7. 7. சங். 143. 2. அப். 13. 39. கலா. 2. 16: 3. 11. எபே. 2. 8, 9. தீத். 3. 5
27 அப். 15. 11: 26. 22. பிலி. 3. 9. எபி. 11. 4. 1 பே. 1. 10

துவைப் பற்றும் விசுவாசத்தினாலே பலிக்கும்
தேவநீதியே; விசுவாசிக்கிற எவர்களுக்குள்
ளும் எவர்கள்மேலும் அது பலிக்கும், வித்தி
23 யாசமே இல்லை. எல்லாரும் பாவஞ்செய்து,
24 [1]*தேவமகிமை யற்றவர்களாகி, இலவசமாய்
அவருடைய கிருபையினாலே கிறிஸ்துஇயே
சுவிலுள்ள மீட்பைக்கொண்டு [2]நீதிமான்களா
25 க்கப்படுகிறார்கள்; தேவன் பொறுமையாயிரு
ந்த முற்காலத்தில் நடந்த பாவங்களைத் தாம்
பொறுத்துக்கொண்டதைக் குறித்துத் தம்மு
டைய நீதியைக் காண்பிக்கும்பொருட்டாக
வும், [3]தாம் நீதியுள்ளவரும், இயேசுவினிடத்
தில் விசுவாசமாயிருக்கிறவனை நீதிமானாக்கு
கிறவருமாய் விளங்கும்படி, இக்காலத்திலே
தமதுநீதியைக்காண்பிக்கும்பொருட்டாகவும்,
26 கிறிஸ்து இயேசுவினுடைய இரத்தத்தைப்
பற்றும் விசுவாசத்தினாலே பலிக்கும் †கிருபா
27 தாரபலியாக அவரையே ஏற்படுத்தினார். இப்
படியிருக்க, மேன்மைபாராட்டல் எங்கே?
[4]அது நீக்கப்பட்டதே. எந்தப் பிரமாணத்தி
னாலே? கிரியாப் பிரமாணத்தினாலேயா? அல்
28 ல; விசுவாசப் பிரமாணத்தினாலேயே. ஆத
லால், [5]மனுஷன் நியாயப்பிரமாணத்தின் கிரி
யைகளில்லாமல் விசுவாசத்தினாலேயே நீதி
29 மானாக்கப்படுகிறான் என்று தீர்க்கிறோம். தே
வன் யூதருக்குமாத்திரமா தேவன்? புறஜாதி
களுக்கும் தேவனல்லவா? ஆம் புறஜாதிகளுக்
30 கும் அவர் தேவன்தான். விருத்தசேதனமு
ள்ளவர்களை விசுவாசத்தினாலும், [6]விருத்தசேத
னமில்லாதவர்களை விசுவாசத்தின் மூலமாயும்
31 நீதிமான்களாக்குகிறதேவன் ஒருவரே. அப்ப
டியானால், விசுவாசத்தினாலே நியாயப்பிரமா
ணத்தை அவமாக்குகிறோமா? [7]அப்படியல்ல;
நியாயப்பிரமாணத்தை நிலைநிறுத்துகிறோமே.

4 அப்படியானால், [8]நம்முடைய தகப்பனாகிய
ஆபிரகாம் மாம்சத்தின்படி என்னத்தைக் கண்
2 டடைந்தான் என்று சொல்லுவோம்? ஆபிர
காம் கிரியைகளினாலே நீதிமானாக்கப்பட்டா
னாகில் மேன்மைபாராட்ட அவனுக்கு ஏதுவு
ண்டு; [9]ஆகிலும் தேவனுக்கு முன்பாக மேன்
3 மைபாராட்ட ஏதுவில்லை. வேதவாக்கியம்
என்ன சொல்லுகிறது? [10]ஆபிரகாம் தேவனை
விசுவாசித்தான், அது அவனுக்கு நீதியாக
4 எண்ணப்பட்டது என்று சொல்லுகிறது. கிரி
யை செய்கிறவனுக்கு வருகிற கூலி கிருபை
யென்றெண்ணப்படாமல், [11]கடனென்றெண்
5 ணப்படும். ஒருவன் கிரியைசெய்யாமல் பா
வியை நீதிமானாக்குகிறவரிடத்தில் விசுவாசம்
வைக்கிறவனாயிருந்தால், [12]அவனுடைய விசு
வாசமே அவனுக்கு நீதியாக எண்ணப்படும்.
6 அந்தப்படி, கிரியைகளில்லாமல் தேவனாலே
நீதிமானென் றெண்ணப்படுகிற மனுஷனு
டைய பாக்கியத்தைக் காண்பிக்கும்பொருட்டு:
7 எவர்களுடைய அக்கிரமங்கள் மன்னிக்கப்பட்
டதோ, [13]எவர்களுடைய பாவங்கள் மூடப்பட்
8 டதோ, அவர்கள் பாக்கியவான்கள். எவனு
டைய பாவத்தைக் கர்த்தர் எண்ணாதிருக்கிறா
ரோ, அவன் பாக்கியவான் என்று தாவீது
சொல்லியிருக்கிறான். இந்தப் பாக்கியம் விரு 9
த்தசேதன முள்ளவனுக்குமாத்திரம் வருமோ,
விருத்தசேதன மில்லாதவனுக்கும் வருமோ?
ஆபிரகாமுக்கு விசுவாசம் நீதியாக எண்ணப்
பட்டது என்று சொல்லுகிறோமே. அது 10
எப்பொழுது அவனுக்கு அப்படி எண்ணப்
பட்டது? அவன் விருத்தசேதனமுள்ளவனா
யிருந்தபோதோ, விருத்தசேதனமில்லாதவனா
யிருந்தபோதோ? விருத்தசேதனமுள்ளவனாயி
ருந்தபோதல்ல, விருத்தசேதன மில்லாதவனா
யிருந்தபோதே. மேலும், விருத்தசேதனமில் 11
லாதகாலத்தில் அவன் விசுவாசத்தினாலே
அடைந்த நீதிக்கு [14]முத்திரையாக விருத்தசே
தனமாகிய அடையாளத்தைப் பெற்றான்.
[15]விருத்தசேதனமில்லாதவர்களாய் விசுவாசிக்
கிற யாவருக்கும் நீதி எண்ணப்படும்பொருட்
டாக அவர்களுக்கு அவன் தகப்பனாயிருக்கும்
படிக்கும், விருத்தசேதனத்தைப் பெற்றவர்க 12
ளாய் மாத்திரமல்ல, நம்முடைய தகப்பனாகிய
ஆபிரகாம் விருத்தசேதனமில்லாத காலத்தில்
அடைந்த விசுவாசமாகிய அடிச்சுவடுகளில்
நடக்கிறவர்களாயு மிருக்கிறவர்களுக்குத் தகப்
பனாயிருக்கும்படிக்கும், அந்த அடையாளத்
தைப் பெற்றான். அன்றியும் [16]உலகத்தைச் 13
சுதந்தரிப்பான் என்கிற வாக்குத்தத்தம் ஆபிர
காமுக்காவது அவன் சந்ததிக்காவது நியாயப்
பிரமாணத்தினால் கிடையாமல் விசுவாசத்தி
னால் வருகிற நீதியினால் கிடைத்தது. நியா 14
யப்பிரமாணத்தைச் சார்ந்தவர்கள் சுதந்தரவா
ளிகளானால் [17]விசுவாசம் வீணாய்ப்போம்,
வாக்குத்தத்தமும் அவமாகும். மேலும் நியா 15
யப்பிரமாணம் [18]கோபாக்கினையை உண்டாக்
குகிறது; நியாயப்பிரமாணமில்லாவிட்டால்
[19]மீறுதலுமில்லை. ஆதலால், சுதந்தரமானது 16
கிருபையினால், உண்டாகிறதாயிருக்கும்படி
க்கு [20]அது விசுவாசத்தினாலே வருகிறது; நியா
யப்பிரமாணத்தைச் சார்ந்தவர்களாகிய சந்ததி
யாருக்குமாத்திரமல்ல, நம்மெல்லாருக்கும் தக
ப்பனாகிய ஆபிரகாமுடைய விசுவாசத்தைச்
சார்ந்தவர்களான எல்லாச் சந்ததியாருக்கும்
அந்த வாக்குத்தத்தம் நிச்சயமாயிருக்கும்படி
க்கு அப்படி வருகிறது. அநேக ஜாதிகளுக்கு 17
உன்னைத் தகப்பனாக ஏற்படுத்தினேன் என்று
எழுதியிருக்கிறபடி, [21]அவன் தான் விசுவா
சித்தவருமாய், [22]மரித்தோரை உயிர்ப்பித்து,
[23]இல்லாதவைகளை இருக்கிறவைகளைப்போல்
‡அழைக்கிறவருமாயிருக்கிறதேவனுக்கு முன்
பாக நம்மெல்லாருக்கும் தகப்பனானான். உன் 18
சந்ததி இவ்வளவாயிருக்கும் என்று சொல்லப்
பட்டபடியே, [24]தான் அநேக ஜாதிகளுக்குத்
தகப்பனாவதை நம்புகிறதற்கு ஏதுவில்லாதிருந்
தும், அதை நம்பிக்கையோடே விசுவாசித்
தான். அவன் விசுவாசத்திலே பலவீனமாயி 19
ருக்கவில்லை; அவன் ஏறக்குறைய நூறுவய
துள்ளவனா யிருக்கும்போது, தன் சரீரம் செத்
துப்போனதையும், [25]சாராளுடைய கர்ப்பம்

1 9. ஏசா. 11. 32. பிர. 7. 20. கலா. 3. 22
* தேவ மகிமைக்கு அபாத்திரராகி
2 4. 16. மத். 20. 28. எபே. 1. 7, 8. கொலோ. 1. 14. 1 தீமோ. 2. 6. எபி. 9. 12. 1 பே. 1. 18, 19
3 அப். 13. 38, 39: 17. 30. கொலோ. 1. 20. 1 தீமோ. 1. 15. எபி. 9. 15
† கிருபைக்கு = பிராயச்சித்தத்திற்கு = மூலதாரம் 1 யோவா. 2. 2: 4. 10
4 2. 17. 23: 4. 2. 1 கொ. 1. 29, 31. எபே. 2. 9
5 20, 21, 22. ஏசா: 8. 3. கலா. 2. 16
6 கலா. 3. 8, 28
7 எபி. 10. 15, 16
8 மத். 3. 9. யோவா. 8. 33, 39. 2 கொ. 11. 22
9 3. 20, 27, 28. 1 கொ. 1. 29
10 ஆதி. 15. 6. கலா. 3. 6. யாக். 2. 23
11 11. 6
12 ஆப. 2. 4
13 சங். 32. 1, 2
14 ஆதி. 17. 10, 11
15 லூக். 19. 9. யோவா. 8. 33. மூ. கலா. 3. 7, 29
16 ஆதி. 17. 4. மூ. கலா. 3. 29
17 கலா. 3. 18, 20
18 5. 20
19 1 யோவா. 3. 4
20 3. 24: 9. 8. கலா. 3. 22
21 ஆதி. 17. 5
22 எபே. 2. 1, 5
23 1 கொ. 1. 28. 1 பே. 2. 10
‡ அழைக்கிறவர்
24 ஆதி. 15. 5
25 எபி. 11. 11

செத்துப்போனதையும் *எண்ணுதிருந்தான்.
20 தேவனுடைய வாக்குத்தத்தத்தைக் குறித்து
அவன் அவிசுவாசமாய்ச் சந்தேகப்படாமல்,
21 தேவன் வாக்குத்தத்தம் பண்ணினதை நிறை
வேற்ற வல்லவராயிருக்கிறாரென்று [1]முழு நிச்
சயமாய் நம்பி, தேவனை மகிமைப்படுத்தி, விசு
22 வாசத்தில் வல்லவனானான். ஆகையால் அது
23 அவனுக்கு நீதியாக எண்ணப்பட்டது. அது
அவனுக்கு நீதியாக எண்ணப்பட்டதென்பது,
[2]அவனுக்காகமாத்திரமல்ல, நமக்காகவும் எழு
24 தப்பட்டிருக்கிறது. நம்முடைய கர்த்தராகிய
இயேசுவை மரித்தோரிலிருந்து எழுப்பின
வரை விசுவாசிக்கிற நமக்கும் [3]அப்படியே
25 எண்ணப்படும். அவர் நம்முடைய பாவங்
களுக்காக [4]ஒப்புக்கொடுக்கப்பட்டும், நாம்
நீதிமான்களாக்கப்படுவதற்காக[5] எழுப்பப்பட்
டும் இருக்கிறார்.

5 இவ்விதமாக, [6]நாம் விசுவாசத்தினாலே
நீதிமான்களாக்கப்பட்டிருக்கிறபடியால், நம்
முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துமூல
மாய் தேவனிடத்தில் சமாதானம் †பெற்றிருக்
2 கிறோம். அவர் மூலமாய் நாம் இந்தக் கிருபை
யில் பிரவேசிக்கும் சிலாக்கியத்தை விசுவாசத்
தினால் [7]பெற்று நிலைகொண்டிருந்து, தேவம
கிமையை அடைவோமென்கிற நம்பிக்கையி
3 னாலே [8]மேன்மை பாராட்டுகிறோம். அது
மாத்திரமல்ல[9]உபத்திரவம் பொறுமையையும்,
பொறுமை ‡பரீட்சையையும், பரீட்சை நம்
பிக்கையையும் உண்டாக்குகிறதென்று நாங்
4 கள் அறிந்து, உபத்திரவங்களிலேயும் மேன்
5 மைபாராட்டுகிறோம். மேலும் நமக்கு அருளப்
பட்ட [10]பரிசுத்தஆவியினாலே தேவ அன்பு
நம்முடைய இருதயங்களில் §ஊற்றப்பட்டி
ருக்கிறபடியால், அந்த நம்பிக்கை நம்மை
6 வெட்கப்படுத்தாது. அன்றியும் நாம் பெல
னற்றவர்களாயிருக்கும்போதே, [11]குறித்தகால
த்தில் கிறிஸ்து அக்கிரமக்காரருக்காக மரித்
7 தார். நீதிமானுக்காக ஒருவன் மரிக்கிறது
அரிது; நல்லவனுக்காக ஒருவேளை ஒருவன்
8 மரிக்கத் துணிவான். நாம் பாவிகளாயிருக்கை
யில் கிறிஸ்து நமக்காக மரித்ததினாலே, [12]தே
வன் நம்மேல் வைத்த தமது அன்பை விளங்
9 கப்பண்ணுகிறார். இப்படி நாம் அவருடைய
இரத்தத்தினாலே நீதிமான்களாக்கப்பட்டிருக்
க,[13]கோபாக்கினைக்கு நீங்கலாக அவராலே நாம்
10 இரட்சிக்கப்படுவது அதிக நிச்சயமாமே. நாம்
தேவனுக்குச் சத்துருக்களா யிருக்கையில்,
[14]அவருடைய குமாரனின் மரணத்தினாலே
அவருடனே ஒப்புரவாக்கப்பட்டோமானால்,
[15]ஒப்புரவாக்கப்பட்டபின் நாம் அவருடைய
ஜீவனாலே இரட்சிக்கப்படுவது அதிக நிச்சய
11 மாமே. அதுவுமல்லாமல், இப்பொழுது ஒப்
புரவாகுதலை நமக்குக் கிடைக்கப்பண்ணின
நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துமூல
மாய் [16]நாம் தேவனைப்பற்றியும் மேன்மைபா
ராட்டுகிறோம்.

* அறிந்திருந்தும்
1 ஆதி. 18. 14. லூக். 1. 37, 45. எபி. 11. 19
2 15. 4. 1 கொ. 10. 11
3 அப். 2. 24, 39: 13. 30
4 ஏசா. 53. 5, 6. 2 கொ. 5. 21. கலா. 1. 4. எபி. 9. 28. 1 பே. 2. 24. வெளி. 1. 5
5 1 கொ. 15. 17. 1 பே. 1. 21
6 3. 28, 30. ஏசா. 32. 17. யோ. 16. 33. எபே. 2. 14. கொலோ. 1. 20
† பெற்றிருப்போமாக
7 யோ. 10. 9: 14. 6. 1 கொ. 15. 1. எபே. 2. 18: 3. 12
8 எபி. 3. 6
9 மத். 5. 11, 12. அப். 5. 41. 2 கொ. 12. 10. பிலி. 2. 17. யாக். 1. 2, 12. 1 பே. 3. 14
‡ உத்தமத்தையும் = நிச்சயத்தையும்
10 எபே. 1. 13. 2 கொ. 1. 22. எபே. 1. 13, 14. பிலி. 1. 20
§ பொழிந்திருக்கிறபடியால்
11 கலா. 4. 4, 5
12 யோ. 15. 13. 1 பே. 3. 18. 1 யோ. 3. 16
13 எபே. 2. 13. எபி. 9. 14, 22. 1 தெச. 1. 10
14 8. 32. 2 கொ. 5. 18, 19
15 யோ. 14. 19. 2 கொ. 4. 10, 11
16 ஆப. 3. 18. கலா. 4. 9
17 ஆதி. 3. 6, 19. 1 கொ. 15. 21
18 4. 15. 1 யோ. 3. 4
19 எபி. 9. 27
20 1 கொ. 15. 22, 45
‖ பலரும்
¶ பலர்மேலும்
21 ஏசா. 53. 11. மத். 20. 28: 26. 28. 1 யோ. 2. 2
22 ஏசா. 1. 18
23 யோ. 10. 10
24 6. 23
25 யோ. 12. 32. எபி. 2. 9
** புண்ணியத்தினாலே
26 7. 8-13. யோ. 15. 22. கலா. 3. 10
27 லூக். 7. 47. யோ. 10. 10. 1 தீமோ. 1. 14

இப்படியாக, [17]ஒரே மனுஷனாலே பாவ 12
மும் பாவத்தினாலே மரணமும் உலகத்திலே
பிரவேசித்ததுபோலவும், எல்லா மனுஷரும்
பாவஞ்செய்தபடியால், மரணம் எல்லாருக்
கும் வந்ததுபோலவும் இதுவுமாயிற்று. நியா 13
யப்பிரமாணம் கொடுக்கப்படுவதற்கு முன்
னும் பாவம் உலகத்திலிருந்தது; [18]நியாயப்பிர
மாணம் இல்லாதிருந்தால் பாவம் எண்ணப்பட
மாட்டாது. அப்படியிருந்தும், [19]மரணமானது 14
ஆதாம்முதல் மோசேவரைக்கும், ஆதாமின்
மீறுதலுக்கொப்பாய்ப் பாவஞ் செய்யாதவர்
களையும் ஆண்டுகொண்டது; [20]அந்த ஆதாம்
பின்பு வந்தவருக்கு முன்னடையாளமான
வன். ஆனாலும் மீறுதலின் பலன் கிருபைவ 15
ரத்தின் பலனுக்கு ஒப்பானதல்ல. எப்படியெ
னில், ஒருவனுடைய மீறுதலினாலே ‖அநே
கர் மரித்திருக்க, தேவனுடைய கிருபையும்
இயேசுகிறிஸ்து என்னும் ஒரே மனுஷனு
டைய கிருபையினாலே வரும் ஈவும் ¶அநேகர்
மேல் [21]அதிகமாய்ப் பெருகியிருக்கிறது. மே 16
லும் ஒருவன் பாவஞ்செய்ததினால் உண்டான
தீர்ப்பு தேவன் அருளும் ஈவுக்கு ஒப்பான
தல்ல; அந்தத் தீர்ப்பு ஒரே குற்றத்தினிமித்தம்
ஆக்கினைக்கு ஏதுவாயிருந்தது; [22]கிருபைவர
மோ அநேக குற்றங்களை நீக்கி நீதிவிளங்கும்
தீர்ப்புக்கு ஏதுவாயிருக்கிறது. அல்லாமலும், 17
ஒருவனுடைய மீறுதலினாலே, அந்த ஒருவன்
மூலமாய், மரணம் ஆண்டுகொண்டிருக்க,
[23]கிருபையின் பரிபூரணத்தையும் நீதியாகிய
[24]ஈவின் பரிபூரணத்தையும் பெறுகிறவர்கள்
இயேசுகிறிஸ்து என்னும் ஒருவராலே ஜீவ
னை அடைந்து ஆளுவார்களென்பது அதிக
நிச்சயமாமே. ஆகையால் ஒரே மீறுதலினாலே 18
எல்லா மனுஷருக்கும் ஆக்கினைக்கு ஏதுவான
தீர்ப்பு உண்டானதுபோல, [25]ஒரே **நீதியினா
லே எல்லாமனுஷருக்கும் ஜீவனை அளிக்கும்
நீதிக்கு ஏதுவான தீர்ப்பு உண்டாயிற்று. அன் 19
றியும் ஒரே மனுஷனுடைய கீழ்ப்படியாமையி
னாலே அநேகர் பாவிகளாக்கப்பட்டதுபோல,
ஒருவனுடைய கீழ்ப்படிதலினாலே அநேகர்
நீதிமான்களாக்கப்படுவார்கள். மேலும், [26]மீறு 20
தல் பெருகும்படிக்கு நியாயப்பிரமாணம் வந்
தது; அப்படியிருந்தும், [27]பாவம் பெருகின
இடத்தில் கிருபை அதிகமாய்ப் பெருகிற்று.
ஆதலால் பாவம் மரணத்துக்கு ஏதுவாக ஆண் 21
டுகொண்டதுபோல, [28]கிருபையானது நம்மு
டைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் மூல
மாய் நீதியினாலே நித்தியஜீவனுக்கு ஏதுவாக
ஆண்டுகொண்டது.

ஆகையால் என்னசொல்லுவோம்? [29]கிரு 6
பை பெருகும்படிக்குப் பாவத்திலே நிலைநிற்க
லாம் என்று சொல்லுவோமா? கூடாதே.
[30]பாவத்துக்கு மரித்த நாம் இனி அதிலே 2
எப்படிப் பிழைப்போம்? கிறிஸ்து இயேசுவுக் 3
குள்ளாக ஞானஸ்நானம் பெற்ற நாமனைவரும்
[31]அவருடைய மரணத்துக்குள்ளாக ஞானஸ்

28 யோ. 1. 17 29 15. ஏசா. 3. 8 30 6, 11, ஏசா. 7. 4. கலா. 2. 19. கொலோ. 3. 3. 1 பே. 2. 24 31 1 கொ. 15. 29. கலா. 3. 27

நானம் பெற்றதை அறியாமலிருக்கிறீர்களா?
4 மேலும் பிதாவின் மகிமையினாலே [1]கிறிஸ்து
மரித்தோரிலிருந்து எழுப்பப்பட்டதுபோல,
[2]நாமும் புதிதான ஜீவனுள்ளவர்களாய் நடந்து
கொள்ளும்படிக்கு, அவருடைய மரணத்திற்
குள்ளாக்கும் ஞானஸ்நானத்தினாலே கிறிஸ்து
வுடனேகூட [3]அடக்கம் பண்ணப்பட்டோம்.
5 ஆதலால் அவருடைய மரணத்தின் சாயலில்
நாம் இணைக்கப்பட்டவர்களானால், [4]அவர்
உயிர்த்தெழுதலின் சாயலிலும் இணைக்கப்
6 பட்டிருப்போம். நாம் இனிப் பாவத்துக்கு
ஊழியஞ்செய்யாதபடிக்கு, [5]பாவசரீரம் ஒழிந்
துபோகும்பொருட்டாக, [6]நம்முடைய பழைய
*மனுஷன் அவரோடேகூடச் சிலுவையில்
அறையப்பட்டதென்று அறிந்திருக்கிறோம்.
7 மரித்தவன் பாவத்துக்கு நீங்கி [7]விடுதலையாக்
8 கப்பட்டிருக்கிறானே. ஆகையால் கிறிஸ்து
வுடனேகூட நாம் மரித்தோமானால், [8]அவ
ருடனேகூடப் பிழைத்தும் இருப்போம்
9 என்று நம்புகிறோம். மரித்தோரிலிருந்து எழு
ந்தகிறிஸ்து இனி மரிப்பதில்லையென்று அறிந்
திருக்கிறோம்; [9]மரணம் இனி அவரை ஆண்டு
10 கொள்வதில்லை. அவர் மரித்தது, [10]பாவத்
திற்கென்று ஒரேதரம் மரித்தார்; [11]அவர்
பிழைத்திருக்கிறது, தேவனுக்கென்று பிழைத்
11 திருக்கிறார். அப்படியே நீங்களும், உங்களைப்
பாவத்திற்கு [12]மரித்தவர்களாகவும், நம்முடைய
கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுக்குள் தேவ
னுக்கென்று [13]பிழைத்திருக்கிறவர்களாகவும்
எண்ணிக்கொள்ளுங்கள்.
12 ஆகையால், நீங்கள் சரீர இச்சைகளின்
படி பாவத்திற்குக் கீழ்ப்படியத்தக்கதாக, [14]சா
வுக்கேதுவான உங்கள் சரீரத்தில் பாவம்
13 ஆளாதிருப்பதாக. நீங்கள் உங்கள் [15]அவய
வங்களை அநீதியின் ஆயுதங்களாகப் பாவத்
திற்கு ஒப்புக்கொடாமல், [16]உங்களை மரித்தோ
ரிலிருந்து பிழைத்திருக்கிறவர்களாக தேவ
னுக்கு ஒப்புக்கொடுத்து, உங்கள் அவயவங்
களை நீதிக்குரிய ஆயுதங்களாக தேவனுக்கு
14 ஒப்புக்கொடுங்கள், நீங்கள் நியாயப்பிரமா
ணத்திற்குக் கீழ்ப்பட்டிராமல் கிருபைக்குக்
கீழ்ப்பட்டிருக்கிறபடியால், [17]பாவம் உங்களை
மேற்கொள்ளமாட்டாது.
15 இதினால் என்ன? நாம் நியாயப்பிரமாணத்
திற்குக் கீழ்ப்பட்டிராமல் கிருபைக்குக் கீழ்ப்
பட்டிருக்கிறபடியால், [18]பாவஞ்செய்யலாமா?
16 கூடாதே. மரணத்துக்கேதுவான பாவத்துக்
கானாலும், நீதிக்கேதுவான கீழ்ப்படிதலுக்கா
னாலும், [19]எதற்குக் கீழ்ப்படியும்படி உங்களை
அடிமைகளாக ஒப்புக்கொடுக்கிறீர்களோ, அத
ற்கே கீழ்ப்படிகிற அடிமைகளாயிருக்கிறீர்க
17 ளென்று அறியீர்களா? முன்னே நீங்கள்
பாவத்திற்கு அடிமைகளாயிருந்தும், [20]இப்
பொழுது உங்களுக்கு ஒப்புவிக்கப்பட்ட உப
தேச சட்டத்திற்கு நீங்கள் மனப்பூர்வமாய்க்
கீழ்ப்படிந்ததினாலே தேவனுக்கு ஸ்தோத்தி
18 ரம். பாவத்தினின்று நீங்கள் விடுதலையாக்

[1] யோ. 2. 11: 11. 40. 2 கொ. 13. 4
[2] 1 கொ. 15. 29
[3] கொலோ. 2. 12. 1 பே. 3. 21
[4] பிலி. 3. 10, 11
[5] கலா. 2. 20. எபே. 4. 22
[6] கொலோ. 2. 11
* சுபாவம்
[7] 1 பே. 4. 1
[8] 2 தீமோ. 2. 11
[9] வெளி. 1. 18
[10] எபி. 9. 27, 28
[11] லூக். 20. 38
[12] 2. ௸
[13] கலா. 2. 19
[14] சங். 19. 13: 119. 133
[15] கலா. 2. 19
[16] 12. 1. 1 பே. 2. 24: 4. 2
[17] மீகா. 7. 19. கலா. 5. 18
[18] 1 கொ. 9. 21
[19] மத். 6. 24. யோ. 8. 34. 2 பே. 2. 19
[20] 2 தீமோ. 1. 13
[21] யோ. 8. 34
[22] 7. 5
[23] 1. 32
[24] யோ. 8. 32
[25] 5. 12. ஆதி. 2. 17. யாக். 1. 15
[26] 1 பே. 1. 4
[27] 1 கொ. 7. 39
[28] மத். 5. 32
[29] கலா. 5. 22
[30] 8. 2. கலா. 5. 18. எபே. 2. 15. கொலோ. 2. 14
[31] 6. 13
[32] 6. 21. கலா. 5. 19. யாக். 1. 15
[33] 2. 29. 2 கொ. 3. 6

கப்பட்டு, நீதிக்கு அடிமைகளானீர்கள். உங் 19
கள் மாம்ச பலவீனத்தினிமித்தம் மனுஷர்
பேசுகிற பிரகாரமாய்ப் பேசுகிறேன். அக்
கிரமத்தை நடப்பிக்கும்படி முன்னே நீங்கள்
உங்கள் அவயவங்களை அசுத்தத்திற்கும் அக்கி
ரமத்திற்கும் அடிமைகளாக ஒப்புக்கொடுத்த
துபோல, இப்பொழுது பரிசுத்தமானதை
நடப்பிக்கும்படி உங்கள் அவயவங்களை நீதிக்கு
அடிமைகளாக ஒப்புக்கொடுங்கள். பாவத்தி 20
ற்கு நீங்கள் அடிமைகளாயிருந்த காலத்தில்
[21]நீதிக்கு நீங்கினவர்களாயிருந்தீர்கள். இப் 21
பொழுது உங்களுக்கு வெட்கமாகத் தோன்று
கிற காரியங்களினாலே [22]அக்காலத்தில் உங்க
ளுக்கு என்ன பலன் கிடைத்தது? [23]அவைக
ளின் முடிவு மரணமே. இப்பொழுது நீங் 22
கள் பாவத்தினின்று [24]விடுதலையாக்கப்பட்டு,
தேவனுக்கு அடிமைகளானதினால், பரிசுத்த
மாகுதல் உங்களுக்குக் கிடைக்கும் பலன்,
முடிவோ நித்திய ஜீவன்.
பாவத்தின் [25]சம்பளம் மரணம்; [26]தேவனு 23
டைய கிருபைவரமோ நம்முடைய கர்த்தரா
கிய இயேசுகிறிஸ்துவினால் உண்டான நித்தி
யஜீவன்.

நியாயப்பிரமாணத்தை அறிந்திருக்கிறவர் **7**
களுடனே பேசுகிறேன். சகோதரரே, ஒரு
மனுஷன் உயிரோடிருக்குமளவும் நியாயப்பி
ரமாணம் அவனை ஆளுகிறதென்று அறியாம
லிருக்கிறீர்களா? அதெப்படியென்றால், [27]புரு 2
ஷனையுடைய ஸ்திரீ தன் புருஷன் உயிரோ
டிருக்குமளவும் நியாயப்பிரமாணத்தின்படி
யே அவனுடைய நிபந்தனைக்கு உட்பட்டி
ருக்கிறாள்; புருஷன் மரித்தபின்பு புருஷ
னைப்பற்றிய பிரமாணத்தினின்று விடுதலை
யாயிருக்கிறாள். ஆகையால், [28]புருஷன் உயி 3
ரோடிருக்கையில் அவள் வேறொரு புருஷனை
விவாகம்பண்ணினால் விபசாரி யென்னப்படு
வாள்; புருஷன் மரித்தபின்பு அவள் அந்தப்
பிரமாணத்தினின்று விடுதலையானபடியால்,
வேறொரு புருஷனை விவாகம்பண்ணினாலும்
விபசாரியல்ல. அப்படிப்போல, என் சகோ 4
தரரே, [29]நீங்கள் மரித்தோரிலிருந்து எழுந்த
கிறிஸ்து என்னும் வேறொருவருடையவர்க
ளாகி, தேவனுக்கென்று கனிகொடுக்கும்படி
[30]கிறிஸ்துவின் சரீரத்தினாலே நியாயபிரமா
ணத்துக்கு மரித்தவர்களானீர்கள். நாம் மாம் 5
சத்திற்கு உட்பட்டிருந்தகாலத்தில் [31]நியாயப்
பிரமாணத்தினாலே தோன்றிய பாவஇச்சை
கள் மரணத்திற்கு ஏதுவான கனிகளைக் கொ
டுக்கத்தக்கதாக [32]நம்முடைய அவயவங்களிலே
பெலன் செய்தது. இப்பொழுதோ நாம் பழ 6
மையான எழுத்தின்படியல்ல, [33]புதுமையான
ஆவியின்படி ஊழியஞ்செய்யத்தக்கதாக, நம்
மைக் கட்டியிருந்த நியாயப்பிரமாணத்துக்கு
நாம் மரித்தவர்களாகி, அதினின்று விடுதலை
யாக்கப்பட்டிருக்கிறோம்.
ஆகையால் என்ன சொல்லுவோம்? நியா 7
யப்பிரமாணம் பாவமோ? அல்லவே. பாவம்

இன்னதென்று நியாயப்பிரமாணத்தினால்
நான் அறிந்தேனேயன்றி மற்றப்படி அறிய
வில்லை; [1]இச்சியாதிருப்பாயாக என்று நியா
யப்பிரமாணம் சொல்லாதிருந்தால், இச்சை
பாவம் என்று நான் அறியாமலிருப்பேனே.
8 பாவமானது கற்பனையினாலே சமயம் பெற்
றுச் [2]சகலவித இச்சைகளையும் என்னில்
நடப்பித்தது. [3]நியாயப்பிரமாணம் இல்லா
விட்டால் பாவம் செத்ததாயிருக்குமே.
9 முன்னே நியாயப்பிரமாணமில்லாதவனாயிருந்
தபோது நான் ஜீவனுள்ளவனாயிருந்தேன்; கற்
பனை வந்தபோது பாவம் உயிர்கொண்டது,
10 நான் மரித்தவனானேன். இப்படியிருக்க,
[4]ஜீவனுக்கேதுவான கற்பனையே எனக்கு மர
11 ணத்துக்கேதுவாயிருக்கக் கண்டேன். பாவ
மானது கற்பனையினாலே சமயம் பெற்று,
என்னை வஞ்சித்து, அதினாலே என்னைக்
12 கொன்றது. ஆகையால் [5]நியாயப்பிரமாணம்
பரிசுத்தமுள்ளதுதான், கற்பனையும் பரிசுத்த
மாயும் நீதியாயும் நன்மையாயும் இருக்கிறது.
13 இப்படியிருக்க, நன்மையானது எனக்கு மர
ணமாயிற்றோ? அப்படியல்ல; பாவமே என
க்கு மரணமாயிற்று; பாவம் கற்பனையினாலே
மிகுந்த பாவமுள்ளதாகும்படிக்கும், அது நன்
மையானதைக்கொண்டு எனக்கு மரணத்தை
உண்டாக்கினதினாலே, பாவமாகவே விளங்
14 கும்படிக்கும் அப்படியாயிற்று. மேலும், நமக்
குத் தெரிந்திருக்கிறபடி, நியாயப்பிரமாணம்
ஆவிக்குரியதாயிருக்கிறது, [6]நானோ பாவத்துக்
குக் கீழாக விற்கப்பட்டு, மாம்சத்துக்குரியவ
15 னாயிருக்கிறேன். எப்படியெனில், நான்
செய்கிறது எனக்கே சம்மதியில்லை; [7]நான்
விரும்புகிறதைச் செய்யாமல், நான் வெறுக்
16 கிறதையே செய்கிறேன். இப்படி நான்
விரும்பாததைச் செய்கிறவனாயிருக்க, நியா
யப்பிரமாணம் நல்லதென்று ஒத்துக்கொள்ளு
17 கிறேனே. ஆதலால் நான் அல்ல, எனக்குள்
வாசமாயிருக்கிற பாவமே அப்படிச் செய்கி
18 றது. அதெப்படியெனில், என்னிடத்தில்,
அதாவது, என் மாம்சத்தில், [8]நன்மை வாசமா
யிருக்கிறதில்லையென்று நான் அறிந்திருக்கி
றேன்; நன்மை செய்யவேண்டுமென்கிற விரு
ப்பம் என்னிடத்திலிருக்கிறது, நன்மை செய்
19 வதோ என்னிடத்திலில்லை. ஆதலால் நான்
விரும்புகிற நன்மையைச் செய்யாமல், விரும்
20 பாத தீமையையே செய்கிறேன். அந்தப்படி
நான் விரும்பாததை நான் செய்தால், நான்
அல்ல, எனக்குள்ளே வாசமாயிருக்கிற பாவ
21 மே அப்படிச் செய்கிறது. ஆனபடியால்
நன்மை செய்ய விரும்புகிற என்னிடத்தில்
[9]தீமை யுண்டென்கிற ஒரு பிரமாணத்தைக்
22 காண்கிறேன். உள்ளான மனுஷனுக்கேற்ற
படி [10]தேவனுடைய நியாயப்பிரமாணத்தின்
23 மேல் பிரியமாயிருக்கிறேன். ஆகிலும் என்
மனதின் பிரமாணத்துக்கு விரோதமாய்ப்
போராடுகிற வேறொரு பிரமாணத்தை என்
அவயவங்களில் இருக்கக் காண்கிறேன்;
அது [11]அது என் அவயவங்களில் உண்டாயி
ருக்கிறபாவப்பிரமாணத்துக்கு என்னைச்சிறை
யாக்கிக்கொள்ளுகிறது. நிர்ப்பந்தமான மனு 24
ஷன் நான்! [12]இந்த மரண சரீரத்தினின்று யார்
என்னை விடுதலையாக்குவார்? நம்முடைய கர் 25
த்தராகிய இயேசுகிறிஸ்துமூலமாய் [13]தேவனை
ஸ்தோத்திரிக்கிறேன். ஆதலால் நானே என்
மனதினாலே தேவனுடைய நியாயப்பிரமா
ணத்துக்கும், மாம்சத்தினாலேயோ பாவப்பிர
மாணத்துக்கும் ஊழியஞ்செய்கிறேன்.

ஆனபடியால், கிறிஸ்து இயேசுவுக்குட் 8
பட்டவர்களாயிருந்து, [14]மாம்சத்தின்படி நட
வாமல் ஆவியின்படியே நடக்கிறவர்களுக்கு
[15]ஆக்கினைத்தீர்ப்பில்லை. கிறிஸ்து இயேசு 2
வினாலே [16]ஜீவனுடைய ஆவியின் பிரமாணம்
என்னைப் [17]பாவம் மரணம் என்பவைகளின்
பிரமாணத்தினின்று விடுதலையாக்கிற்றே.
அதெப்படியெனில், [18]மாம்சத்தினாலே பலவீ 3
னமாயிருந்த நியாயப்பிரமாணம் செய்யக்கூ
டாததை தேவனே செய்யும்படிக்கு, [19]தம்மு
டைய குமாரனைப் பாவமாம்சத்தின் சாயலாக
வும் பாவத்தைப்போக்கும் பலியாகவும் அனு
ப்பி, மாம்சத்திலே பாவத்தை ஆக்கினைக்குள்
ளாகத் தீர்த்தார். மாம்சத்தின்படி நடவாமல் 4
[20]ஆவியின்படி நடக்கிற நம்மிடத்தில் நியாயப்
பிரமாணத்தின் நீதி நிறைவேறும்படிக்கே
அப்படிச் செய்தார். அன்றியும் [21]மாம்சத்தி 5
ன்படி நடக்கிறவர்கள் மாம்சத்துக்குரியவை
களைச் சிந்திக்கிறார்கள்; [22]ஆவியின்படி நடக்
கிறவர்கள் ஆவிக்குரியவைகளைச் சிந்திக்கிறார்
கள். மாம்சசிந்தை மரணம்; [23]ஆவியின் சிந் 6
தையோ ஜீவனும் சமாதானமுமாம். எப்படி 7
யென்றால், மாம்ச சிந்தை தேவனுக்கு விரோ
தமான பகை; [24]அது தேவனுடைய நியாயப்
பிரமாணத்துக்குக் கீழ்ப்படியாமலும், கீழ்ப்
படியக்கூடாமலும் இருக்கிறது. மாம்சத்துக் 8
குட்பட்டவர்கள் தேவனுக்குப் *பிரியமாயி
ருக்கமாட்டார்கள். தேவனுடைய ஆவி [25]உங் 9
களில் வாசமாயிருந்தால், நீங்கள் மாம்சத்துக்
குட்பட்டவர்களா யிராமல் ஆவிக்குட்பட்ட
வர்களாயிருப்பீர்கள். [26]கிறிஸ்துவின் ஆவியில்
லாதவன் அவருடையவனல்ல. மேலும் கிறி 10
ஸ்து உங்களிலிருந்தால் சரீரமானது பாவத்தி
னிமித்தம் மரித்ததாயும், ஆவியானது நீதியி
னிமித்தம் ஜீவனுள்ளதாயும் இருக்கும். அன் 11
றியும் இயேசுவை மரித்தோரிலிருந்து எழுப்
பினவருடைய ஆவி உங்களில் வாசமாயிருந்
தால், [27]கிறிஸ்துவை மரித்தோரிலிருந்துஎழுப்
பினவர் உங்களில் வாசமாயிருக்கிற தம்மு
டைய ஆவியினாலே சாவுக்கேதுவான உங்கள்
சரீரங்களையும் உயிர்ப்பிப்பார்.

ஆகையால் சகோதரரே, [28]மாம்சத்தின்படி 12
பிழைப்பதற்கு நாம் மாம்சத்துக்குக் கடனாளி
களல்ல. மாம்சத்தின்படி பிழைத்தால் சாவீர் 13
கள்; [29]ஆவியினாலே சரீரத்தின் செய்கைகளை
அழித்தால் பிழைப்பீர்கள். மேலும் எவர்கள் 14
தேவனுடைய ஆவியினாலே நடத்தப்படுகிறார்

1 3. 20. அப். 20. 33. யாத். 20. 17
2 4. 15: 5. 20
3 1 கொ. 15. 56
4 எசே. 20. 11. மு. 2 கொ. 3. 7
5 சங். 19. 7–9. 1 தீமோ. 1. 8
6 2 இரா. 17. 17
7 கலா. 5. 17
8 ஆதி. 6. 5
9 சங். 65. 3
10 சங். 1. 2. 2 கொ. 4. 16. எபே. 3. 16. 1 பே. 3. 4
11 6. 13, 19. கலா. 5. 17
12 சங். 33. 2, 10: 77. 3–9: 88. 5
13 1 கொ. 15. 57
14 கலா. 5. 16
15 யோ. 3. 18
16 யோ. 8. 36. 1 கொ. 15. 45. 2 கொ. 3. 5
17 கலா. 2. 19: 5. 1
18 அப். 13. 39. எபி. 7. 18, 19
19 2 கொ. 5. 21. கலா. 3. 13
20 1. வச
21 யோ. 3. 6 1 கொ. 2. 14: 15. 48
22 கலா. 5. 22, 23
23 கலா. 6. 8
24 1 கொ. 2. 14. யாக். 4. 4
* பிரியமாயிருக்கக் கூடாது
25 1 கொ. 6. 19. கலா. 4. 6
26 யோ. 3. 34. கலா. 4. 6. பிலி. 1. 19. 1 பே. 1. 11
27 அப். 2. 24. 2 கொ. 4. 14. எபே. 2. 5
28 சங். 116. 16
29 கலா. 6. 8. கொலோ. 3. 5

களோ, [1]அவர்கள் தேவனுடைய புத்திரராயி
15 ருக்கிறார்கள். அந்தப்படி, [2]திரும்பவும் பயப்
படுகிறதற்கு நீங்கள் அடிமைத்தனத்தின் ஆவி
யைப் பெறாமல், [3]அப்பா பிதாவே, என்று
கூப்பிடப்பண்ணுகிற புத்திர சுவிகாரத்தின்
16 ஆவியைப் பெற்றீர்கள். நாம் தேவனுடைய
பிள்ளைகளாயிருக்கிறோமென்று [4]ஆவியான
வர்தாமே நம்முடைய ஆவியுடனேகூடச் சா
17 ட்சிகொடுக்கிறார். நாம் பிள்ளைகளானால் சுதந்
தாருமாமே; தேவனுடைய சுதந்தாரும், கிறி
ஸ்துவுக்கு உடன் சுதந்தாருமாமே; [5]கிறிஸ்து
வுடனேகூட நாம் மகிமைப்படும்படிக்கு அவ
ருடனேகூடப் பாடுபட்டால் அப்படியாகும்.
18 ஆதலால் இக்காலத்துப் பாடுகள் இனி நம்
மிடத்தில் வெளிப்படும் மகிமைக்கு [6]ஒப்பி
டத்தக்கவைகள் அல்லவென்று எண்ணுகி
19 றேன். மேலும் தேவனுடைய புத்திரர் வெ
ளிப்படுவதற்குச் [7]சிருஷ்டியானது மிகுந்த ஆ
20 வலோடே காத்துக்கொண்டிருக்கிறது. அதே
னென்றால் சிருஷ்டியானது அழிவுக்குரிய
அடிமைத்தனத்தினின்று விடுதலையாக்கப்பட்
டு, [8]தேவனுடைய பிள்ளைகளுக்குரிய மகி
மையான சுயாதீனத்தைப் பெற்றுக்கொள்ளும்
21 என்கிற நம்பிக்கையோடே, அந்தச் சிருஷ்டி
யானது சுய இஷ்டத்தினாலே அல்ல, கீழ்ப்ப
டுத்தினவராலேயே மாயைக்குக் கீழ்ப்பட்டி
22 ருக்கிறது. ஆகையால் நமக்குத் தெரிந்திருக்
கிறபடி, [9]இதுவரைக்கும் சர்வ சிருஷ்டியும்
ஏகமாய்த் தவித்துப் பிரசவவேதனைப்படுகி
23 றது. அதுவுமல்லாமல், [10]ஆவியின் முதற்
பலன்களைப்பெற்ற நாமுங்கூட [11]நம்முடைய
சரீர மீட்பாகிய புத்திரசுவிகாரம் வருகிறதற்
குக் காத்திருந்து, [12]நமக்குள்ளே தவிக்கிறோம்.
24 அந்த நம்பிக்கையினாலே நாம் இரட்சிக்கப்
பட்டிருக்கிறோம். [13]காணப்படுகிறதை நம்பு
கிறது நம்பிக்கையல்ல; ஒருவன் தான் காண்
25 கிறதை நம்பவேண்டுவதென்ன? நாம் காணா
ததை நம்பினோமாகில், அது வருகிறதற்குப்
பொறுமையோடே காத்திருப்போம்.
26 அந்தப்படியே ஆவியானவரும் நமது பலவீ
னங்களில் நமக்கு உதவிசெய்கிறார். நாம் ஏற்
றபடி வேண்டிக்கொள்ளவேண்டிய தின்ன
தென்று அறியாமலிருக்கிறபடியால், [14]ஆவி
யானவர் தாமே வாக்குக்கடங்காத பெருமூச்
சுகளோடு நமக்காக வேண்டுதல் செய்கிறார்.
27 ஆவியானவர் [15]தேவனுடைய சித்தத்தின்படி
யே பரிசுத்தவான்களுக்காக வேண்டுதல் செ
ய்கிறபடியால், [16]இருதயங்களை ஆராய்ந்து
பார்க்கிறவர் ஆவியின் சிந்தை இன்னதென்று
28 அறிவார். அன்றியும், [17]அவருடைய தீர்மா
னத்தின்படி அழைக்கப்பட்டவர்களாய் தேவ
னிடத்தில் அன்புகூருகிறவர்களுக்குச் சகல
மும் நன்மைக்கு ஏதுவாக நடக்கிறதென்று
29 அறிந்திருக்கிறோம். தம்முடைய குமாரன்
அநேக சகோதரருக்குள்ளே முதற்பேறானவ
ராயிருக்கும்பொருட்டு, [18]தேவன் எவர்களை
முன்னறிந்தாரோ அவர்களைத் தமது குமார

1 கலா. 5. 18
2 1 கொ. 2. 12. 2 தீமோ. 1. 7
3 எரே. 3. 19. கலா. 4. 5, 6
4 2 கொ. 1. 22. 1 யோ. 4. 13
5 அப். 26. 18. 2 தீமோ. 2. 11, 12. 1 பே. 1. 4
6 2 கொ. 4. 17. 1 பே. 1. 6, 7: 4. 13
7 2 பே. 3. 13. 1 யோ. 3. 2
8 22. வச
9 மாற். 16. 15. கொலோ. 1. 23
10 எபே. 1. 14
11 யா. 21. 18
12 2 கொ. 5. 2, 4
13 2 கொ. 5. 7. எபி. 11. 1
14 சகரி. 12. 10. எபே. 6. 18
15 1 யோ. 5. 14
16 எரே. 17. 10. வெளி. 2. 23
17 சங். 46. 1, 2. 2 தீமோ. 1. 9. எபி. 12. 6–12
18 எபே. 1. 5, 11. கொலோ. 1. 15, 18. 1 பே. 1. 2
19 எபே. 4. 4. எபி. 9. 15
20 1 கொ. 6. 11
21 யோ. 17. 22
22 சங். 118. 6
23 5. 6–10
24 வெளி. 12. 10, 11
25 கொலோ. 3. 1. எபி. 7. 25. 1 யோ. 2. 1
26 சங். 44. 22. 1 கொ. 15. 30, 31. 2 கொ. 4. 11
27 1 கொ. 15. 57. 2 கொ. 2. 14. வெளி. 12. 11
28 யோ. 10. 28. எபே. 1. 21
29 10. 1
30 1. 9. 2 கொ. 1. 23. கலா. 1. 20. பிலி. 1. 8. 1 தீமோ. 2. 7
31 யாத். 32. 32.
* விலக்கப்பட்டவனாக
32 ஆதி. 17. 2. உபா. 7. 6: 29. 14. சங். 90. 16. ஏசா. 60. 19. எரே. 31. 33. அப். 3. 25: 13. 32. எபே. 2. 12
33 11. 28. லூக். 3. 23
34 யோ. 1. 1. அப். 20. 28. எபி. 1. 8. 1 யோ. 5. 20

னுடைய சாயலுக்கு ஒப்பாயிருப்பதற்கு முன்
குறித்திருக்கிறார்; எவர்களை முன் குறித்தா 30
ரோ [19]அவர்களை அழைத்துமிருக்கிறார்; எவர்
களை அழைத்தாரோ [20]அவர்களை நீதிமான்க
ளாக்கியுமிருக்கிறார்; எவர்களை நீதிமான்க
ளாக்கினாரோ [21]அவர்களை மகிமைப்படுத்தியு
மிருக்கிறார்.
இவைகளைக்குறித்து நாம் என்னசொல்லு 31
வோம்? [22]தேவன் நம்முடைய பட்சத்திலிருக்
தால் நமக்கு விரோதமாயிருப்பவன் யார்?
தம்முடைய சொந்தக்குமாரனென்றும் பாரா 32
மல் [23]நம்மெல்லாருக்காகவும் அவரை ஒப்புக்
கொடுத்தவர், அவரோடேகூட மற்ற எல்லா
வற்றையும் நமக்கு அருளாதிருப்பதெப்படி?
தேவன் தெரிந்துகொண்டவர்கள்மேல் குற் 33
றஞ்சாட்டுகிறவன் யார்? [24]தேவனே அவர்
களை நீதிமான்களாக்குகிறவர். ஆக்கினைக்குள் 34
ளாகத் தீர்க்கிறவன் யார்? கிறிஸ்துவே மரித்
தவர்; அவரே எழுந்துமிருக்கிறவர்; அவரே
தேவனுடைய வலதுபாரிசத்திலும் இருக்கிற
வர்; [25]நமக்காக வேண்டுதல் செய்கிறவரும்
அவரே. உமதுநிமித்தம் எந்நேரமும் கொல் 35
லப்படுகிறோம், [26]அடிக்கப்படும் ஆடுகளைப்
போல எண்ணப்படுகிறோம் என்று எழுதி
யிருக்கிறபடி நேரிட்டாலும், கிறிஸ்துவின் 36
அன்பைவிட்டு நம்மைப் பிரிப்பவன் யார்?
உபத்திரவமோ, வியாகுலமோ, துன்பமோ,
பசியோ, நிர்வாணமோ, நாசமோசமோ, பட்ட
யமோ? இவையெல்லாவற்றிலேயும் [27]நாம் 37
நம்மில் அன்புகூருகிறவராலே முற்றும் ஜெ
யங்கொள்ளுகிறவர்களாயிருக்கிறோமே. மர 38
ணமானாலும், [28]ஜீவனானாலும், தேவதூதர்களா
னாலும், அதிகாரங்களானாலும், வல்லமைகளா
னாலும், நிகழ்காரியங்களானாலும், வருங்காரி
யங்களானாலும், உயர்வானாலும், தாழ்வானா 39
லும், வேறெந்தச் சிருஷ்டியானாலும், நம்மு
டைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவிலுள்ள
தேவனுடைய அன்பை விட்டு நம்மைப் பிரிக்
கமாட்டாதென்று நிச்சயித்திருக்கிறேன்.
எனக்கு மிகுந்த துக்கமும் [29]இடைவிடாத 9
மனவேதனையும் உண்டாயிருக்கிறது; நான் 2
சொல்லுகிறது பொய்யல்ல, [30]கிறிஸ்துவுக்குள்
உண்மையைச் சொல்லுகிறேன் என்று பரி
சுத்த ஆவிக்குள் என் மனச்சாட்சியும் எனக்
குச் சாட்சியாயிருக்கிறது. மாம்சத்தின்படி 3
என் இனத்தாராகிய என் சகோதரருக்குப்
பதிலாக [31]நானே கிறிஸ்துவைவிட்டுச் *சபிக்
கப்பட்டவனாகவேண்டுமென்று விரும்புவே
னே. அவர்கள் இஸ்ரவேலரே, [32]புத்திர சுவி 4
காரமும், மகிமையும், உடன்படிக்கைகளும்,
நியாயப்பிரமாணமும், தேவாராதனையும் வாக்
குத்தத்தங்களும் அவர்களுடையவைகளே;
பிதாக்கள் அவர்களுடையவர்களே; [33]மாம்சத் 5
தின்படி கிறிஸ்துவும் அவர்களில் பிறந்தாரே,
[34]இவர் என்றென்றைக்கும் ஸ்தோத்திரிக்கப்
பட்ட சர்வத்திற்கும் மேலான தேவன்.
ஆமென். தேவவசனம் அவமாய்ப் போயிற் 6

றென்று சொல்லக்கூடாது; [1]ஏனென்றால்,
இஸ்ரவேல் வம்சத்தார் எல்லாரும் இஸ்ரவே
7 லரல்லவே. அவர்கள் ஆபிரகாமின் சந்ததியா
ரானாலும் எல்லாரும் பிள்ளைகளல்லவே; [2]ஈ
சாக்கினிடத்தில் உன் சந்ததி விளங்கும் என்று
8 சொல்லியிருக்கிறதே. அதெப்படியென்றால்,
மாம்சத்தின்படி பிள்ளைகளானவர்கள் தேவ
னுடைய பிள்ளைகளல்ல, [3]வாக்குத்தத்தத்தின்
படி பிள்ளைகளானவர்களே அந்தச் சந்ததி என்
9 றெண்ணப்படுகிறார்கள். அந்த வாக்குத்தத்த
மான வார்த்தையாவது: [4]குறித்த காலத்திலே
வருவேன், அப்பொழுது சாராள் ஒரு குமார
10 னைப் பெறுவாள் என்பதே. இதுவுமல்லாமல்,
நம்முடைய பிதாவாகிய ஈசாக்கு என்னும்
ஒருவனாலே [5]ரெபெக்காள் கர்ப்பவதியான
11 போது, பிள்ளைகள் இன்னும் பிறவாமலும்,
நல்வினை தீவினை ஒன்றும் செய்யாமலு மிருக்
கையில், [6]தேவனுடைய தெரிந்துகொள்ளுத
லின்படியிருக்கிற அவருடைய தீர்மானம்
கிரியைகளினாலே நிலைநிற்காமல் அழைக்கிற
12 வராலே நிலைநிற்கும்படிக்கு, மூத்தவன் இளை
யவனுக்கு ஊழியஞ்செய்வானென்று அவளு
13 டனே சொல்லப்பட்டது. அப்படியே, யாக்
கோபைச் சிநேகித்து, [7]ஏசாவை வெறுத்தேன்
என்றும் எழுதியிருக்கிறது.
14 ஆகையால் நாம் என்னசொல்லுவோம்?
[8]தேவனிடத்திலே அநீதி உண்டென்று சொ
15 ல்லலாமா? சொல்லக்கூடாதே. அவர் மோ
சேயை நோக்கி: [9]எவன்மேல் இரக்கமாயிருக்
கச் சித்தமாயிருப்பேனோ அவன்மேல் இரக்க
மாயிருப்பேன், எவன்மேல் உருக்கமாயிருக்
கச் சித்தமாயிருப்பேனோ அவன்மேல் உருக்க
16 மாயிருப்பேன் என்றார். ஆகையால் விரும்பு
கிறவனாலும் அல்ல, ஓடுகிறவனாலும் அல்ல,
17 இரங்குகிற தேவனாலேயாம். மேலும் என்னு
டைய வல்லமையை உன்னிடத்தில் காண்
பிக்கும்படியாகவும், என்னுடைய நாமம் பூமி
யில் எங்கும் பிரஸ்தாபமாகும்படியாகவும்,
உன்னை நிலைநிறுத்தினேன் என்று பார்வோ
னுடனே சொன்னதாக [10]வேதத்தில் சொல்லி
18 யிருக்கிறது. ஆதலால் எவன்மேல் இரக்கமா
யிருக்கச் சித்தமாயிருக்கிறாரோ அவன்மேல்
இரக்கமாயிருக்கிறார், எவனைக் கடினப்படுத்
தச் சித்தமாயிருக்கிறாரோ அவனைக் கடினப்
படுத்துகிறார்.
19 இப்படியானால், அவர் இன்னும் ஏன் குற்
றம்பிடிக்கிறார்? [11]அவர் சித்தத்திற்கு எதிர்த்து
நிற்பவன் யார்? என்று என்னுடனே சொல்
20 லுவாய். அப்படியானால், மனுஷனே, தேவ
னோடு எதிர்த்துத் தர்க்கிக்கிற நீ யார்? உருவா
க்கப்பட்ட வஸ்து உருவாக்கினவனை நோக்கி:
[12]நீ என்னை ஏன் இப்படி உண்டாக்கினாயெ
21 ன்று சொல்லலாமா? பிசைந்த ஒரே களி
மண்ணினாலே குயவன் ஒரு பாத்திரத்தைக்
கனமான காரியத்துக்கும், [13]ஒரு பாத்திரத்
தைக் கனவீனமான காரியத்துக்கும் பண்ணு
கிறதற்கு மண்ணின்மேல் அவனுக்கு அதிகா

1 2. 28, 29. ஏசா. 55. 11. யோ. 8. 39. கலா. 6. 16
2 ஆதி. 21. 12. கலா. 4. 23. எபி. 11. 18
3 கலா. 4. 28
4 ஆதி. 18. 10, 14
5 ஆதி. 25. 21, 23
6 4. 17: 8. 28
7 மல். 1. 2, 3. மத். 10. 37
8 உபா. 32. 4
9 யாத். 33. 19
10 யாத். 9. 16. கலா. 3. 8, 22
11 2 நாளா. 20. 6. தானி. 4. 35
12 ஏசா. 29. 16
13 ஏசா. 64. 8. 2 தீமோ. 2. 20
14 எபே. 1. 7. கொலோ. 1. 27. 1தெச. 5. 9. 1பே. 2. 8. யூதா 4. ஏசா
15 3. 29
16 ஓசி. 2. 23. 1பே. 2. 10
17 ஓசி. 1. 10
18 ஏசா. 10. 22, 23
19 ஏசா. 28. 22
20 ஏசா. 1. 9: 13. 19. புல. 3. 22
21 1. 17: 10. 20. பிலி. 3. 9
22 10. 2: 11. 7. கலா. 5. 4
23 லூ. 2. 34. 1 கொ. 1. 23
24 சங். 118. 22. ஏசா. 8. 14: 28. 16. மத். 21. 42. 1பே. 2. 6-8
25 10. 11
26 9. 31. அப். 21. 20. கலா. 1. 14: 4. 17
27 9. 30. பிலி. 3. 9

ரம் இல்லையோ? தேவன் தமது கோபத்தைக் 22
காண்பிக்கவும், தமது வல்லமையைத் தெரி
விக்கவும், தாம் மகிமைக்காக எத்தனமாக்கின 23
கிருபாபாத்திரங்கள்மேல் தம்முடைய மகிமை
யின் ஐசுவரியத்தைத் தெரியப்படுத்தவும் சித்த
மாய், [14]அழிவுக்கு எத்தனமாக்கப்பட்ட கோ
பாக்கினைப் பாத்திரங்கள்மேல் மிகவும் நீடிய
சாந்தத்தோடே பொறுமையாயிருந்தாரானால்
உனக்கென்ன? அவர் யூதரிலிருந்துமாத்திர 24
மல்ல, [15]புறஜாதிகளிலுமிருந்து நம்மை அழை
த்திருக்கிறாரே. அந்தப்படி: [16]எனக்கு ஜனங் 25
களல்லாதவர்களை என்னுடைய ஜனங்கள்
என்றும், சிநேகிக்கப்படாதிருந்தவளைச் சிநே
கிக்கப்பட்டவள் என்றும் சொல்லி அழைப்
பேன். நீங்கள் என்னுடைய ஜனங்க ளல்ல 26
வென்று அவர்களுக்குச் சொல்லப்பட்ட இட
த்திலே [17]அவர்கள் ஜீவனுள்ள தேவனுடைய
பிள்ளைகள் என்னப்படுவார்கள் என்று ஓசியா
வின் தீர்க்கதரிசனத்தில் சொல்லியிருக்கிறது.
அல்லாமலும் [18]இஸ்ரவேல் புத்திரருடைய 27
இலக்கம் சமுத்திரத்தின் மணலத்தனையாயிரு
ந்தாலும், மீதியாயிருப்பவர்கள்மாத்திரம் இரட்
சிக்கப்படுவார்கள் என்றும்; அவர் நீதியோடே 28
சீக்கிரமாய்த் தம்முடைய காரியத்தை நிறை
வேற்றுவார்; [19]கர்த்தர் பூமியிலே சீக்கிரமா
கவே காரியத்தை நிறைவேற்றி முடிப்பார்
என்றும் ஏசாயா இஸ்ரவேலைக் குறித்துச்
சொல்லுகிறான். அல்லாமலும் ஏசாயா முன் 29
னே சொன்னபடி: [20]சேனைகளின் கர்த்தர்
நமக்குள்ளே ஒரு சந்ததியை மீதியாக வைக்
காதிருந்தாரானால் நாம் சோதோமைப்போ
லாகி கொமோராவுக்கு ஒத்திருப்போம்.
இப்படியிருக்க நாம்என்னசொல்லுவோம்? 30
நீதியைத் தேடாத புறஜாதியார் நீதியை அடை
ந்தார்கள்; [21]அது விசுவாசத்தினாலாகும்நீதியே.
நீதிப்பிரமாணத்தைத் தேடின இஸ்ரவேல 31
ரோ [22]நீதிப்பிரமாணத்தை அடையவில்லை.
என்னத்தினாலென்றால், அவர்கள் விசுவாசத் 32
தினாலே அதைத் தேடாமல், நியாயப்பிரமா
ணத்தின் கிரியைகளினாலே தேடினபடியால்
அதை அடையவில்லை; [23]இடறுதற்கான கல்
லில் இடறினார்கள். இதோ, [24]இடறுதற்கான 33
கல்லையும், தவறுதற்கான கன்மலையையும்,
சீயோனில் வைக்கிறேன்; [25]அவரிடத்தில்
விசுவாசமாயிருப்பவன் எவனோ அவன் வெட்
கப்படுவதில்லை என்று எழுதியிருக்கிறபடி
யாயிற்று.
சகோதரரே, இஸ்ரவேலர் இரட்சிக்கப் 10
படவேண்டும் என்பதே என் இருதயத்தின்
விருப்பமும் நான் தேவனை நோக்கிச் செய்
யும் விண்ணப்பமுமாயிருக்கிறது. தேவனைப் 2
பற்றி அவர்களுக்கு வைராக்கியமுண்டென்று
அவர்களைக்குறித்துச்சாட்சிசொல்லுகிறேன்;
[26]ஆகிலும் அது அறிவுக்கேற்ற வைராக்கியம
ல்ல. எப்படியென்றால், [27]அவர்கள் தேவ 3
நீதியை அறியாமல், தங்கள் சுயநீதியை நிலை
நிறுத்தத் தேடுகிறபடியால் தேவநீதிக்குக் கீழ்

4 ப்படியாதிருக்கிறார்கள். விசுவாசிக்கிற எவ
னுக்கும் நீதி உண்டாகும்படியாகக் [1]கிறிஸ்து
நியாயப்பிரமாணத்தின் முடிவாயிருக்கிறார்.
5 மோசே நியாயப்பிரமாணத்தினாலாகும் நீதி
யைக்குறித்து: [2]இவைகளைச் செய்கிற மனு
ஷன் *இவைகளால் பிழைப்பான் என்று
6 எழுதியிருக்கிறான். விசுவாசத்தினாலாகும்
நீதியானது: [3]கிறிஸ்துவை இறங்கிவரப்பண்
ணும்படி பரலோகத்துக்கு ஏறுகிறவன் யார்?
7 அல்லது கிறிஸ்துவை மரித்தோரிலிருந்து
ஏறிவரப்பண்ணும்படி பாதாளத்துக்கு இறங்
குகிறவன் யார்? என்று உன் உள்ளத்திலே
சொல்லாதிருப்பாயாக என்று சொல்லுகிறது
8 மன்றி; இந்த வார்த்தை உனக்குச் சமீபமாய்
உன் வாயிலும் உன் இருதயத்திலும் இருக்கி
றது என்றும் சொல்லுகிறது; இந்த வார்த்தை
நாங்கள் பிரசங்கிக்கிற விசுவாசத்தின் வார்த்
9 தையே. என்னவென்றால், [4]கர்த்தராகிய இயே
சுவை நீ உன் வாயினாலே அறிக்கையிட்டு,
தேவன் அவரை மரித்தோரிலிருந்து எழுப்பி
னாரென்று உன் இருதயத்திலே விசுவாசித்
10 தால் இரட்சிக்கப்படுவாய். நீதியுண்டாக இரு
தயத்திலே விசுவாசிக்கப்படும், இரட்சிப்புண்
டாக வாயினாலே அறிக்கைபண்ணப்படும்.
11 அவரை விசுவாசிக்கிறவன் எவனோ அவன்
வெட்கப்படுவதில்லையென்று [5]வேதம் சொல்
12 லுகிறது. யூதனென்றும் [6]கிரேக்கனென்றும்
வித்தியாசமே இல்லை; [7]எல்லாருக்குங் கர்த்த
ரானவர் தம்மைத் தொழுதுகொள்ளுகிற யாவ
ருக்கும் ஐசுவரிய சம்பன்னராயிருக்கிறார்.
13 ஆதலால் கர்த்தருடைய நாமத்தைத் தொழுது
கொள்ளுகிற எவனும் [8]இரட்சிக்கப்படுவான்.
14 அவரை விசுவாசியாதவர்கள் எப்படி அவரைத்
தொழுதுகொள்ளுவார்கள்? அவரைக் குறித்
துக் கேள்விப்படாதவர்கள் எப்படி விசுவா
சிப்பார்கள்? [9]பிரசங்கிக்கிறவன் இல்லாவிட்
15 டால் எப்படிக் கேள்விப்படுவார்கள்? அனுப்
பப்படாவிட்டால் எப்படிப் பிரசங்கிப்பார்
கள்? [10]சமாதானத்தைக் கூறி, நற்காரியங்க
ளைச் சுவிசேஷமாய் அறிவிக்கிறவர்களுடைய
பாதங்கள் எவ்வளவு அழகானவைகள் என்று
எழுதியிருக்கிறதே.
16 ஆனாலும் சுவிசேஷத்துக்கு எல்லாரும் கீழ்
ப்படியவில்லை. [11]அதைக்குறித்து ஏசாயா:
[12]கர்த்தாவே, எங்கள் மூலமாய்க் கேள்விப்பட்
டதை விசுவாசித்தவன் யார் என்று சொல்லு
17 கிறான். ஆதலால் விசுவாசம் கேள்வியினா
லே வரும், கேள்வி தேவனுடைய வசனத்தி
18 னாலே வரும். இப்படியிருக்க, அவர்கள் கேள்
விப்படவில்லையா என்று கேட்கிறேன்; கேள்
விப்பட்டார்கள்; [13]அவைகளின் சத்தம் பூமி
யெங்கும் அவைகளின் வசனங்கள் பூச்சக்கர
19 த்துக் கடைசிவரைக்கும் செல்லுகிறதே. இஸ்
ரவேலர் அதை அறியவில்லையா என்று கேட்
கிறேன், அறிந்தார்கள். முதலாவது, மோசே:
[14]எனக்கு ஜனங்களல்லாதவர்களைக்கொண்டு
நான் உங்களுக்கு எரிச்சல் உண்டாக்குவேன்.
[15]புத்தியீனமுள்ள ஜனங்களாலே உங்களுக்
குக் கோபமூட்டுவேன் என்றான். அல்லா 20
மலும் ஏசாயா: [16]என்னைத் தேடாதவர்களா
லே கண்டறியப்பட்டேன், என்னை விசாரித்
துக் கேளாதவர்களுக்கு வெளியரங்கமானேன்
என்று தைரியங்கொண்டு சொல்லுகிறான்.
இஸ்ரவேலரைக்குறித்தோ: கீழ்ப்படியாதவர் 21
களும் எதிர்த்துப் பேசுகிறவர்களுமாயிருக்கிற
ஜனங்களிடத்திற்கு நாள்முழுதும் என் கை
களை நீட்டினேன் என்று அவன் சொல்லி
யிருக்கிறான்.
இப்படியிருக்க, [17]தேவன் தம்முடைய 11
ஜனங்களைத் தள்ளிவிட்டாரோ என்று கேட்
கிறேன், தள்ளிவிடவில்லையே; [18]நானும் ஆபி
ரகாமின் சந்ததியிலும் பென்யமீன் கோத்திரத்
திலும் பிறந்த இஸ்ரவேலன். தேவன் தாம் 2
முன்னறிந்துகொண்ட தம்முடைய ஜனங்க
ளைத் தள்ளிவிடவில்லை. [19]எலியாவைக்குறித்
துச் சொல்லிய இடத்தில், வேதம் சொல்லு
கிறதை அறியீர்களா? அவன் தேவனை நோக்
கி: கர்த்தாவே, உம்முடைய தீர்க்கதரிசிகளை 3
அவர்கள் கொலைசெய்து, உம்முடைய பலிபீ
டங்களை இடித்துப்போட்டார்கள்; நான் ஒரு
வன்மாத்திரம் மீதியாயிருக்கிறேன், என் பிரா
ணனையும் வாங்கத்தேடுகிறார்களே என்று இஸ்
ரவேலருக்கு விரோதமாய் விண்ணப்பம்பண்
ணினபோது, அவனுக்கு உண்டான தேவ 4
உத்தரவு என்ன? பாகாலுக்கு முன்பாக முழங்
கால்படியிடாத ஏழாயிரம்பேரை எனக்காக
மீதியாக வைத்தேன் என்பதே. அப்படிப் 5
போல இக்காலத்திலேயும் கிருபையினாலே
உண்டாகும் தெரிந்துகொள்ளுதலின்படி
[20]ஒரு பங்கு மீதியாயிருக்கிறது. அது கிருபை 6
யினாலே உண்டாயிருந்தால் [21]கிரியைகளினா
லே உண்டாயிராது; அப்படியல்லவென்றால்,
கிருபையானது கிருபையல்லவே. அன்றியும்
அது கிரியைகளினாலே உண்டாயிருந்தால்
அது கிருபையாயிராது; அப்படியல்லவென்
றால், கிரியையானது கிரியையல்லவே. அப் 7
படியானால் என்ன? [22]இஸ்ரவேலர் தேடுகிற
தைஅடையாமலிருக்கிறார்கள்;தெரிந்துகொள்
ளப்பட்டவர்களோ அதை அடைந்திருக்கிறார்
கள்; மற்றவர்கள் இன்றையத்தினமவரைக்
கும் [23]கடினப்பட்டிருக்கிறார்கள். கனநித்தி 8
ரையின் ஆவியையும், [24]காணாதிருக்கிற கண்
களையும், கேளாதிருக்கிற காதுகளையும், தே
வன் அவர்களுக்குக் கொடுத்தார் என்று எழு
தியிருக்கிறபடியாயிற்று. அன்றியும், [25]அவர் 9
களுடைய பந்தி அவர்களுக்குச் சுருக்கும் கண்
ணியும் இடறுதற்கான கல்லும் †பதிலுக்குப்
பதிலளித்தலுமாகக்கடவது; காணாதபடிக்கு 10
அவர்களுடைய கண்கள் அந்தகாரப்படக்கட
வது; அவர்களுடைய முதுகை எப்போதும்
குனியப்பண்ணும் என்று தாவீதும் சொல்லி
யிருக்கிறான். இப்படியிருக்க, விழுந்துபோ 11
கும்படிக்கா இடறினார்கள் என்று கேட்கி
றேன், அப்படியல்லவே; [26]அவர்களுக்குள்

1 மத். 5. 17. கலா. 3. 24. எபி. 10. 14
2 லேவி. 18. 5. கலா. 3. 12
* அதனால்
3 உபா. 30. 12–14
4 மத். 10. 32. லூக். 12. 8. அப். 8. 37. 1 யோ. 4. 2
5 ஏசா. 28. 16: 49. 23
6 அப். 15. 9. கலா. 3. 28
7 அப். 10. 36. 1 தீமோ. 2. 5
8 யோவேல் 2. 32. அப். 9. 14. 1 தெச. 5. 9
9 தீத். 1. 3
10 ஏசா. 52. 7. நாகூம். 1. 15
11 அப். 28. 24. எபி. 4. 2
12 ஏசா. 53. 1. யோவா. 12. 38
13 சங். 19. 4. மத். 28. 19. கொலோ. 1. 6, 23
14 உபா. 32. 21
15 தீத். 3. 3
16 ஏசா. 65. 1, 2
17 1 சாமு. 12. 22. சங். 77. 7, 8: 89. 31–37
18 2 கொ. 11. 22. பிலி. 3. 5
19 8. 29. 1 இரா. 19. 10–18
20 9. 27
21 4. 4, 5. கலா. 5. 4. எபே. 2. 8
22 9. 31: 10. 3
23 2 கொ. 3. 14
24 உபா. 29. 4. ஏசா. 6. 9: 29. 10. மத். 13. 14. யோ. 12. 40. அப். 28. 26, 27
25 சங். 69. 22, 23
† பிரதிபலன் பெறுதற்கேதுவாயிருக்கக்கடவது
26 10. 19. அப். 13. 46. 28. 24–28

ளே வைராக்கியத்தை எழுப்பத்தக்கதாக அவர்
களுடைய தவறுதலினுலே புறஜாதிகளுக்கு
12 இரட்சிப்பு கிடைத்தது. அவர்களுடைய
தவறு உலகத்திற்கு ஐசுவரியமும், அவர்களு
டைய குறைவு புறஜாதிகளுக்கு ஐசுவரியமு
மாயிருக்க, அவர்களுடைய நிறைவு எவ்வளவு
அதிகமாய் அப்படியிருக்கும்.
13 புறஜாதியாராகிய உங்களுடனே பேசுகி
றேன்; [1]புறஜாதிகளுக்கு நான் அப்போஸ்தல
னுயிருக்கிறதினுலே என் இனத்தாருக்குள்ளே
நான் வைராக்கியத்தை எழுப்பி, [2]அவர்களில்
14 சிலரை இரட்சிக்கவேண்டுமென்று, என் ஊ
15 ழியத்தை மேன்மைப்படுத்துகிறேன். அவர்
களைத் தள்ளிவிடுதல் உலகத்தை ஒப்புரவாக்கு
தலாயிருக்க, அவர்களை அங்கிகரித்துக்கொள்
ளுதல் என்னமாயிராது; மரித்தோரிலிருந்து
ஜீவன் உண்டானதுபோ லிருக்குமல்லவோ?
16 மேலும் முதற்பலனுகிய மாவானது பரிசுத்த
மாயிருந்தால், பிசைந்தமா முழுவதும் பரிசுத்த
மாயிருக்கும்; [3]வேரானது பரிசுத்தமாயிருந்
17 தால், கிளைகளும் பரிசுத்தமாயிருக்கும். சில
கிளைகள் முறித்துப்போடப்பட்டிருக்க, [4]காட்
டொலிவமரமாகிய நீ அவைகள் இருந்த இடத்
தில் ஒட்டவைக்கப்பட்டு, ஒலிவமரத்தின் வே
ருக்கும் சாரத்துக்கும் உடன் பங்காளியாயிருந்
18 தாயானுல், நீ அந்தக் கிளைகளுக்கு விரோத
மாய்ப் பெருமை பாராட்டாதே, [5]பெருமை
பாராட்டுவாயானுல், நீ வேரைச் சுமக்காமல்,
வேர் உன்னைச் சுமக்கிறதென்று நினைத்துக்
19 கொள். நான் ஒட்டவைக்கப்படுவதற்கு அந்
தக் கிளைகள் முறித்துப்போடப்பட்டதென்று
20 சொல்லுகிருயே. நல்லது, அவிசுவாசத்தினு
லே அவைகள் முறித்துப்போடப்பட்டன,
நீ விசுவாசத்தினுலே நிற்கிருய்; [6]மேட்டி
21 மைச் சிந்தையாயிராமல் பயந்திரு. சுபாவக்
கிளைகளை தேவன் தப்பவிடாதிருக்க, உன்னை
யும் தப்பவிடமாட்டார் என்று எச்சரிக்கையா
22 யிரு. ஆகையால், தேவனுடைய தயவையும்
கண்டிப்பையும் பார்; விழுந்தவர்களிடத்திலே
கண்டிப்பையும், உன்னிடத்திலே தயவையும்
காண்பித்தார்; [7]அந்தத் தயவிலே நிலைத்திருப்
பாயானுல் உனக்குத் தயவுகிடைக்கும்; [8]நிலை
த்திராவிட்டால் நீயும் வெட்டுண்டுபோவாய்.
23 அன்றியும், [9]அவர்கள் அவிசுவாசத்திலே
நிலைத்திராதிருந்தால் அவர்களும் ஒட்டவைக்
கப்படுவார்கள்; அவர்களை மறுபடியும் ஒட்ட
வைக்கிறதற்கு தேவன் வல்லவராயிருக்கிறு
24 ரே. சுபாவத்தின்படி காட்டொலிவமரத்திலி
ருந்து நீ வெட்டப்பட்டு, சுபாவத்திற்கு விரோ
தமாய் நல்ல ஒலிவமரத்திலே ஒட்டவைக்கப்
பட்டிருந்தால், சுபாவக்கிளைகளாகிய அவர்
கள் தங்கள் சுய ஒலிவமரத்திலே ஒட்டவைக்
கப்படுவது அதிக நிச்சயமல்லவா?
25 மேலும், சகோதரரே, நீங்கள் உங்களையே
புத்திமான்களென்று எண்ணுதபடிக்கு ஒரு
இரகசியத்தை நீங்கள் அறியவேண்டுமென்றி
ருக்கிறேன்; அதென்னவெனில், [10]புறஜாதி
யாருடைய நிறைவு உண்டாகும்வரைக்கும்
இஸ்ரவேலரில் ஒரு பங்குக்குக் கடினமான
துண்டாயிருக்கும். இந்தப்பிரகாரம் இஸ்ர 26
வேலரெல்லாரும் இரட்சிக்கப்படுவார்கள்.
[11]மீட்கிறவர் சீயோனிலிருந்து வந்து, அவபக்
தியை யாக்கோபைவிட்டு விலக்குவார் என்
றும்; நான் அவர்களுடைய பாவங்களை நீக் 27
கும்போது, [12]இதுவே நான் அவர்களுடனே
செய்யும் உடன்படிக்கை என்றும் எழுதியி
ருக்கிறது. சுவிசேஷத்தைக்குறித்து அவர்கள் 28
உங்கள்நிமித்தம் பகைஞரா யிருக்கிறுர்கள்;
தெரிந்துகொள்ளுதலைக் குறித்து அவர்கள்
பிதாக்களினிமித்தம் [13]அன்புகூரப்பட்டவர்க
ளா யிருக்கிறுர்கள். தேவனுடைய கிருபை 29
வரங்களும், [14]அவர்களை அழைத்த அழைப்பும்
மாறுதவைகளே. ஆதலால், [15]நீங்கள் முற் 30
காலத்திலே தேவனுக்குக் கீழ்ப்படியாதிருந்து,
இப்பொழுது அவர்களுடைய கீழ்ப்படியாமை
யினுலே இரக்கம்பெற்றிருக்கிறதுபோல, அவ 31
ர்களும் இப்பொழுது கீழ்ப்படியாமலிருந்தும்,
பின்பு உங்களுக்குக் கிடைத்த இரக்கத்தினு
லே இரக்கம் பெறுவார்கள். எல்லார்மேலும் 32
இரக்கமாயிருக்கத்தக்கதாக, [16]தேவன் எல்லா
ரையும் கீழ்ப்படியாமைக்குள்ளே அடைத்துப்
போட்டார்.
ஆ! தேவனுடைய ஐசுவரியம், ஞானம், 33
அறிவு, என்பவைகளின் ஆழம் எவ்வளவா
யிருக்கிறது! [17]அவருடைய நியாயத்தீர்ப்புகள்
அளவிடப்படாதவைகள், அவருடைய வழி
கள் ஆராயப்படாதவைகள்! கர்த்தருடைய 34
சிந்தையை அறிந்தவன் யார்? [18]அவருக்கு
ஆலோசனைக்காரனுயிருந்தவன் யார்? தனக் 35
குப் பதில் கிடைக்கும்படிக்கு [19]முந்தி அவ
ருக்கு ஒன்றைக் கொடுத்தவன் யார்? சகல 36
மும் [20]அவராலும் அவர் மூலமாயும் அவருக்கா
கவும் இருக்கிறது; [21]அவருக்கே என்றென்
றைக்கும் மகிமையுண்டாவதாக. ஆமென்.
அப்படியிருக்க, சகோதரரே, [22]நீங்கள் உங் **12**
கள் சரீரங்களைப் பரிசுத்தமும் தேவனுக்குப்
பிரியமுமான ஜீவபலியாக ஒப்புக்கொடுக்க
வேண்டுமென்று, தேவனுடைய இரக்கங்களை
முன்னிட்டு உங்களை வேண்டிக்கொள்ளுகி
றேன்; இதுவே நீங்கள் செய்யத்தக்க புத்
தியுள்ள ஆராதனை. நீங்கள் இந்தப் பிரபஞ் 2
சத்திற்கு ஒத்த வேஷந்தரியாமல், [23]தேவனு
டைய நன்மையும் பிரியமும் பரிபூரணமுமான
சித்தம் இன்னதென்று பகுத்தறியத்தக்கதாக,
[24]உங்கள் மனம் புதிதாகிறதினுலே மறுரூப
மாகுங்கள்.
அல்லாமலும், எனக்கு அருளப்பட்ட கிரு 3
பையினுலே நான் சொல்லுகிறதாவது; உங்க
ளில் எவனுனாலும் [25]தன்னைக்குறித்து எண்
ணவேண்டியதற்கு மிஞ்சி எண்ணுமல், [26]அவ
னவனுக்கு தேவன் பகிர்ந்த விசுவாச அளவின்
படியே, தெளிந்த எண்ணமுள்ளவனுய் எண்
ணவேண்டும். ஏனெனில், நமக்கு ஒரே சரீ 4
ரத்திலே அநேக அவயவங்களிருந்தும், [27]எல்

[1] அப். 9. 15. கலா. 1. 16. எபே. 3. 8.
[2] 1 கொ. 7. 16; 9. 22. 1 தீமோ. 4. 16. யாக். 5. 20
[3] லேவி. 23. 10. எண். 15. 18–21
[4] எரே. 11. 16. அப். 2. 39. எபே. 2. 12, 13
[5] 1 கொ. 10. 12
[6] 12. 16. பிலி. 2. 12
[7] 1 கொ. 15. 2. எபி. 3. 6, 14; 10. 23, 38
[8] யோ. 15. 2
[9] 2 கொ. 3. 16
[10] லூக். 21. 24. 2 கொ. 3. 14. வெளி. 7. 9
[11] ஏசா. 59. 20
[12] எரே. 31. 31. மு. எபி. 10. 16
[13] உபா. 10. 15
[14] எண். 23. 19
[15] எபே. 2. 2. கொலோ. 3. 7
[16] 3. 9. கலா. 3. 22
[17] யோபு 11. 7. சங். 92. 5; 107. 8. மு.
[18] ஏசா. 40. 13. எரே. 23. 18. 1 கொ. 2. 16
[19] யோபு 41. 11
[20] 1 கொ. 8. 6. கொலோ. 1. 16
[21] கலா. 1. 5. வெளி. 1. 6
[22] 1 கொ. 6. 15–20. எபி. 10. 20
[23] எபே. 5. 10, 17. 1 பேது. 2. 15
[24] எபே. 1. 18; 4. 23
[25] 11. 20
[26] 1 கொ. 12. 7, 11. எபே. 4. 7
[27] 1 கொ. 12. 4, 12. எபே. 4. 16

லா அவயவங்களுக்கும் ஒரே தொழில் இராத
5 துபோல, அநேகராகிய நாமும் கிறிஸ்து
வுக்குள் ஒரே சரீரமாயிருக்க, [1]ஒருவருக்கொ
6 ருவர் அவயவங்களாயிருக்கிறோம். நமக்கு அரு
ளப்பட்ட கிருபையின்படியே [2]நாம் வெவ்வே
றான வரங்களுள்ளவர்க ளானபடியினாலே,
[3]நம்மில் தீர்க்கதரிசனஞ் சொல்லுகிற வரத்தை
யுடையவன் *விசுவாசப்பிரமாணத்துக்கேற்ற
7 தாகச் சொல்லக்கடவன். ஊழியஞ்செய்கிற
வன் ஊழியத்திலும், போதிக்கிறவன் போதிக்
8 கிறதிலும், புத்திசொல்லுகிறவன் [4]புத்திசொல்
லுகிறதிலும் தரித்திருக்கக்கடவன்; பகிர்ந்து
கொடுக்கிறவன் [5]வஞ்சனையில்லாமல் கொடுக்
கக்கடவன்; †முதலாளியானவன் [6]ஜாக்கிர
தையாயிருக்கக்கடவன்; இரக்கஞ்செய்கிற
வன் [7]உற்சாகத்துடனே செய்யக்கடவன்.
9 உங்கள் அன்பு [8]மாயமற்றதாயிருப்பதாக. [9]தீ
மையை வெறுத்து, நன்மையைப் பற்றிக்
10 கொண்டிருங்கள். சகோதர சிநேகத்திலே
ஒருவர்மேலொருவர்[10]பட்சமாயிருங்கள்; கனம்
பண்ணுகிறதிலே ஒருவருக்கொருவர் [11]முந்
11 திக்கொள்ளுங்கள். அசதியாயிராமல் [12]ஜாக்
கிரதையாயிருங்கள்; [13]ஆவியிலே அனலாயி
ருங்கள்; [14]கர்த்தருக்கு ஊழியஞ்செய்யுங்கள்.
12 நம்பிக்கையிலே[15]சந்தோஷமாயிருங்கள்; உபத்
திரவத்திலே[16]பொறுமையாயிருங்கள்; ஜெபத்
13 திலே [17]உறுதியாய்த் தரித்திருங்கள். பரிசுத்
தவான்களுடைய குறைவில் அவர்களுக்கு
[18]உதவிசெய்யுங்கள்; அந்நியரை [19]உபசரிக்க
14 நாடுங்கள். உங்களைத் துன்பப்படுத்துகிறவர்
களை ஆசீர்வதியுங்கள்; [20]ஆசீர்வதிக்கவேண்டி
15 யதேயன்றி சபியாதிருங்கள். சந்தோஷப்படு
கிறவர்களுடனே [21]சந்தோஷப்படுங்கள்; அழு
16 கிறவர்களுடனே அழுங்கள். ஒருவரோடொ
ருவர்[22]ஏகசிந்தையுள்ளவர்களாயிருங்கள், மேட்
டிமையானவைகளைச் சிந்தியாமல்; [23]தாழ்மை
யானவர்களுக்கு இணங்குங்கள்; [24]உங்களையே
17 புத்திமான்களென்று எண்ணாதிருங்கள். ஒரு
வனுக்கும் [25]தீமைக்குத் தீமை செய்யாதிருங்
கள்; எல்லா மனுஷருக்குமுன்பாகவும் [26]யோக்
18 கியமானவைகளைச் செய்ய நாடுங்கள். கூடுமா
னால் உங்களாலானமட்டும் [27]எல்லா மனுஷ
19 ரோடும் சமாதானமாயிருங்கள். பிரியமானவர்
களே, பழிவாங்குதல் எனக்குரியது, நானே
பதிற்செய்வேன், என்று கர்த்தர் சொல்லுகி
றார் என்று எழுதியிருக்கிறபடியால், [28]நீங்கள்
பழிவாங்காமல், கோபாக்கினைக்கு இடங்கொ
20 டுங்கள். அன்றியும் உன் சத்துரு பசியாயிருந்
தால், [29]அவனுக்கு போஜனங்கொடு; அவன்
தாகமாயிருந்தால், அவனுக்குப் பானங்கொடு;
நீ இப்படிச் செய்வதினால் அக்கினித்தழலை
21 அவன் தலையின்மேல் குவிப்பாய். நீ தீமையி
னாலே வெல்லப்படாமல், [30]தீமையை நன்மை
யினாலே வெல்லு.

13 எந்த மனுஷனும் மேலான அதிகாரமுள்ள
வர்களுக்குக் கீழ்ப்படியக்கடவன்; [31]ஏனென்
றால், தேவனாலேயன்றி ஒரு அதிகாரமு
மில்லை; [32]உண்டாயிருக்கிற அதிகாரங்கள் தேவ
னாலே நியமிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் 2
அதிகாரத்திற்கு எதிர்த்து நிற்கிறவன் தேவ
னுடைய நியமத்திற்கு எதிர்த்து நிற்கிறான்;
[33]அப்படி எதிர்த்து நிற்கிறவர்கள் தங்களுக்குத்
தாங்களே ஆக்கினையை வருவித்துக்கொள்ளு
கிறார்கள். மேலும் அதிகாரிகள் நற்கிரியைக 3
ளுக்கல்ல துர்க்கிரியைகளுக்கே, பயங்கரமா
யிருக்கிறார்கள்; [34]ஆகையால் நீ அதிகாரத்திற்
குப் பயப்படாதிருக்கவேண்டுமானால், நன்
மைசெய், அதினால் உனக்குப் புகழ்ச்சி உண்
டாகும். உனக்கு நன்மை உண்டாகும்பொ 4
ருட்டு, அவன் தேவஊழியக்காரனாயிருக்கி
றான். நீ தீமை செய்தால் பயந்திரு; பட்டயத்
தை அவன் விருதாவாய்ப் பிடித்திருக்க
வில்லை; தீமைசெய்கிறவன்மேல் கோபாக்கினை
வரப்பண்ணும்படி, அவன் நீதியைச் செலுத்
துகிற தேவஊழியக்காரனாயிருக்கிறானே. ஆ 5
கையால், நீங்கள் கோபாக்கினையினிமித்தம்
மாத்திரமல்ல, [35]மனச்சாட்சியினிமித்தமும் கீழ்
ப்படியவேண்டும். இதற்காகவே நீங்கள் வரி 6
யையும் கொடுக்கிறீர்கள். அவர்கள் இந்த வேலை
யைப் பார்த்துவருகிற தேவஊழியக்காரராயி
ருக்கிறார்களே. ஆகையால் யாவருக்கும் செ 7
லுத்தவேண்டிய கடமைகளைச் செலுத்துங்
கள்; [36]எவனுக்கு வரியைச் செலுத்தவேண்
டியதோ அவனுக்கு வரியையும், எவனுக்குத்
தீர்வையைச் செலுத்தவேண்டியதோ அவனுக்
குத் தீர்வையையும் செலுத்துங்கள்; எவனுக்
குப் பயப்படவேண்டியதோ அவனுக்குப்
பயப்படுங்கள்; எவனைக் கனம்பண்ணவேண்
டியதோ அவனைக் கனம் பண்ணுங்கள்.

ஒருவரிடத்திலொருவர் அன்புகூருகிறகட 8
னேயல்லாமல், மற்றொன்றிலும் ஒருவனுக்
கும் கடன்படாதிருங்கள்; [37]பிறனிடத்தில்
அன்புகூருகிறவன் நியாயப்பிரமாணத்தை
நிறைவேற்றுகிறான். எப்படியென்றால், 9
[38]விபசாரம் செய்யாதிருப்பாயாக, கொலை
செய்யாதிருப்பாயாக, களவு செய்யாதிருப்
பாயாக, பொய்ச்சாட்சி சொல்லாதிருப்பா
யாக, இச்சியாதிருப்பாயாக என்கிற இந்தக்
கற்பனைகளும், [39]வேறே எந்தக் கற்பனையும்,
உன்னிடத்தில் நீ அன்புகூருகிறதுபோலப்
பிறனிடத்திலும் அன்புகூருவாயாக என்கிற
ஒரே வார்த்தையிலே தொகையாய் அடங்கியி
ருக்கிறது. அன்பானது பிறனுக்குப் பொல் 10
லாங்கு செய்யாது; [40]ஆதலால் அன்பு நியாயப்
பிரமாணத்தின் நிறைவேறுதலாயிருக்கிறது.

நித்திரையைவிட்டு எழுந்திருக்கத்தக்க வே 11
ளையாயிற்றென்று, [41]நாம் காலத்தை அறிந்த
வர்களாய், இப்படி நடக்கவேண்டும், நாம்
விசுவாசிகளானபோது இரட்சிப்பு சமீபமா
யிருந்ததைப்பார்க்கிலும் இப்பொழுது அது
நமக்கு அதிக சமீபமாயிருக்கிறது. இரவு செ 12
ன்றுபோயிற்று, பகல் சமீபமாயிற்று; [42]ஆகை
யால் அந்தகாரத்தின் கிரியைகளை நாம் தள்ளி
விட்டு, ஒளியின் ஆயுதங்களைத் தரித்துக்கொள்

1 1 கொ. 10. 17. எபே. 1. 23
2 1 பே. 4. 10, 11
3 அப். 11. 27. 1 கொ. 12. 10, 28: 13. 2
* விசுவாச அளவுக்கு
4 அப். 15. 32. 1 கொ. 14. 3
5 மத். 6. 1-3. 2 கொ. 8. 2
† அதிகாரியானவன்
6 சங். 101. 2. அப். 20. 28
7 2 கொ. 9. 7
8 1 பே. 1. 22
9 சங். 34. 14
10 எபி. 13. 1. 1 பே. 2. 17
11 பிலி. 2. 3. 1 பே. 5. 5
12 அப். 20. 34, 35
13 கொலோ. 4. 12
14 எபி. 12. 28
15 5. 2, 3
16 யாக். 1. 4
17 லூ. 18. 1
18 சங். 41. 1. எபி. 13. 16
19 எபி. 13. 2. 1 பே. 4. 9
20 மத். 5. 44
21 1 கொ. 12. 26
22 1 பே. 3. 8
23 எரே. 45. 5
24 ஏசா. 5. 21
25 மத். 5. 39. 1 பே. 3. 9
26 2 கொ. 8. 21
27 சங். 34. 14. எபி. 12. 14
28 லேவி. 19. 18. உபா. 32. 35. எபி. 10. 31
29 நீதி. 25. 21, 22. மத். 5. 44
30 நீதி. 16. 32
31 1 பே. 2. 13
32 தானி. 2. 21. யோவா. 19. 11
33 தீத். 3. 1
34 1 பே. 2. 14: 3. 13
35 பிர. 8. 2. 1 பே. 2. 19
36 மத். 22. 21
37 யாக். 2. 8
38 யாத். 20. 13. மத். 19. 18
39 லேவி. 19. 18. மத். 22. 39, 40
40 மத். 22. 40
41 எபே. 5. 14. 1 தெச. 5. 5, 8
42 எபே. 5. 11: 6. 13

13 ளக் கடவோம். *களியாட்டும் வெறியும்,
[1]வேசித்தனமும் காமவிகாரமும், [2]வாக்கு
வாதமும் பொருமையும் உள்ளவர்களாய் நட
வாமல், பகலிலே நடக்கிறவர்கள்போலச்
14 சீராய் நடக்கக்கடவோம். துர்இச்சைகளுக்கு
இடமாக †உடலைப் பேணாமலிருந்து, [3]கர்த்த
ராகிய இயேசுகிறிஸ்துவைத் தரித்துக்கொள்
ளுங்கள்.

14 விசுவாசத்தில் பலவீனமுள்ளவனைச் சேர்
த்துக்கொள்ளுங்கள்; [4]ஆனாலும் அவனுடைய
மன ஐயங்களைக் குற்றமாய் நிர்ணயிக்காமலிரு
2 ங்கள். ஒருவன் எந்தப் பதார்த்தத்தையும் புசிக்
கலாமென்று நம்புகிறான்; ‡பலவீனனோ [5]மரக்
3 கறிகளைமாத்திரம் புசிக்கிறான். புசிக்கிறவன்
புசியாதிருக்கிறவனை அற்பமாயெண்ணாதிருப்
பானாக; [6]புசியாதிருக்கிறவனும் புசிக்கிற
வனைக் குற்றவாளியாகத் தீர்க்காதிருப்பா
னாக. தேவன் அவனை ஏற்றுக்கொண்டா
4 ரே. மற்றொருவனுடைய வேலைக்காரனைக்
குற்றவாளியாகத் தீர்க்கிறதற்கு நீ யார்?
[7]அவன் நின்றாலும் விழுந்தாலும் அவனு
டைய எஜமானுக்கே அவன் உத்தரவாதி;
அவன் நிலைநிறுத்தப்படுவான்; தேவன்
அவனை நிலைநிறுத்த வல்லவராயிருக்கிறாரே.
5 அன்றியும் ஒருவன் ஒருநாளை மற்றொ
ருநாளிலும் விசேஷமாக எண்ணுகிறான்;
[8]வேறொருவன் எல்லா நாட்களையும் சரியாக
எண்ணுகிறான்; அவனவன் தன் தன் மன
திலே முழு நிச்சயத்தை உடையவனாயிருக்கக்
6 கடவன். நாட்களை §விசேஷித்துக்கொள்ளுகி
றவன் கர்த்தருக்கென்று விசேஷித்துக்கொள்
ளுகிறான்; நாட்களை விசேஷித்துக்கொள்ளாத
வனும் கர்த்தருக்கென்று விசேஷித்துக்கொள்
ளாதிருக்கிறான். புசிக்கிறவன் தேவனுக்கு
ஸ்தோத்திரம்செலுத்துகிறபடியால், கர்த்தருக்
கென்று புசிக்கிறான்; [9]புசியாதிருக்கிறவனும்
கர்த்தருக்கென்று புசியாதிருந்து, தேவனுக்கு
7 ஸ்தோத்திரஞ்செலுத்துகிறான். நம்மில் ஒருவ
னும் [10]தனக்கென்று பிழைக்கிறதுமில்லை, ஒரு
8 வனும் தனக்கென்று மரிக்கிறதுமில்லை. நாம்
பிழைத்தாலும் கர்த்தருக்கென்று பிழைக்கி
றோம், நாம் மரித்தாலும் கர்த்தருக்கென்று
மரிக்கிறோம்; ஆகையால் பிழைத்தாலும் மரித்
தாலும் நாம் கர்த்தருடையவர்களாயிருக்கி
9 றோம். கிறிஸ்துவும் மரித்தோர்மேலும் ஜீவ
னுள்ளோர்மேலும் ஆண்டவராயிருக்கும்பொ
ருட்டு, [11]மரித்தும் ||எழுந்தும்பிழைத்துமிருக்கி
10 றார். இப்படியிருக்க, நீ உன் சகோதரனைக்
குற்றவாளியென்று தீர்க்கிறதென்ன? நீ உன்
சகோதரனை அற்பமாய் எண்ணுகிறதென்ன?
[12]நாமெல்லாரும் கிறிஸ்துவினுடைய நியா
11 யாசனத்திற்கு முன்பாக நிற்போமே. அந்தப்
படி: முழங்கால் யாவும் எனக்கு முன்பாக
முடங்கும், [13]நாவு யாவும் தேவனை அறிக்கை
பண்ணும் என்று என் ஜீவனைக்கொண்டு உரை
க்கிறேன் என்பதாய்க் கர்த்தர் சொல்லுகிறார்
12 என்று எழுதியிருக்கிறது. ஆதலால் நம்மில்

* பெருந் திண்டியி லும். 1பே. 4. 3
1 1கொ. 6. 9, 10
2 யாக். 3. 14
† மாம்சத்தை. கலா. 5. 16
3 கலா. 3. 27 1பே. 2. 11
4 15. 1, 7. 1கொ. 8. 9, 11
‡ தைரியமற்றவன்
5 1கொ. 10. 25. 1தீமோ. 4. 4
6 கொலோ. 2. 16
7 யாக். 4. 12
8 கலா. 4. 10 கொலோ. 2. 16
§ நாட்பார்க்கிறவன். கலா. 4. 10
9 1கொ. 10. 31
10 1கொ. 6. 19, 20. கலா. 2. 20. 1தெச. 5. 10. 1பே. 4. 2
11 அப். 10. 36. 2கொ. 5. 15. பிலி. 2. 9–11
|| மரித்தும் உயிர்த் தும் இருக்கிறார்
12 மத். 25. 31, 32. அப். 10. 42. 2கொ. 5. 10
13 ஏசா. 45. 23. பிலி. 2. 10
14 மத். 12. 36. கலா. 6. 5. 1பே. 4. 5
15 1கொ. 8. 9, 13: 10. 32
16 அப். 10. 15. 1கொ. 10. 25. 1தீமோ. 4. 4. தீத். 1. 15
17 1கொ. 8. 11
18 12. 17
19 மத். 6. 33. 1கொ. 8. 8. பிலி. 3. 9: 4. 7
20 2கொ. 8. 21
21 1கொ. 14. 12. 1தெச. 5. 11
22 மத். 15. 11. அப். 10. 15. 1கொ. 8. 10–13. தீத். 1. 15
23 1கொ. 8. 13
¶ சஞ்சலப்படுகிற தற்காவது
24 1யோ. 3. 21
25 தீத். 1. 15. எபி. 11. 6
26 14. 1. கலா. 6. 1, 2
27 1கொ. 9. 19. பிலி. 2. 4, 5
28 மத். 26. 39. யோவா. 5. 30: 6. 38
29 சங். 69. 9
30 1கொ. 10. 11. 2தீமோ. 3. 16, 17

ஒவ்வொருவனும் [14]தன்னைக்குறித்து தேவனுக்
குக் கணக்கொப்புவிப்பான்.
இப்படியிருக்க, நாம் இனிமேல் ஒருவரை 13
யொருவர் குற்றவாளிகளென்று தீர்க்காதிருப்
போமாக. [15]ஒருவனும் தன் சகோதரனுக்கு
முன்பாகத் தடுக்கலையும் இடறலையும் போட
லாகாதென்றே தீர்மானித்துக்கொள்ளுங்கள்.
ஒரு பொருளும் தன்னிலே தீட்டுள்ளதல்ல 14
வென்று கர்த்தராகிய இயேசுவுக்குள் அறிந்து
நிச்சயித்திருக்கிறேன்; [16]ஒரு பொருளைத் தீட்
டுள்ளதென்று எண்ணிக்கொள்ளுகிறவனெவ
னோ அவனுக்கு அது தீட்டுள்ளதாயிருக்கும்.
போஜனத்தினாலே உன் சகோதரனுக்கு விச 15
னமுண்டாக்கினால், நீ அன்பாய் நடக்கிறவ
னல்ல; [17]அவனை உன் போஜனத்தினாலே
கெடுக்காதே, கிறிஸ்து அவனுக்காக மரித்
தாரே. உங்கள் நன்மை [18]தூஷிக்கப்பட இட 16
ங்கொடாதிருங்கள். தேவனுடைய ராஜ்யம் 17
புசிப்பும் குடிப்புமல்ல, [19]அது நீதியும் சமாதா
னமும் பரிசுத்த ஆவியினாலுண்டாகும் சந்
தோஷமுமாயிருக்கிறது. இவைகளிலே கிறிஸ் 18
துவுக்கு ஊழியஞ்செய்கிறவன் [20]தேவனுக்குப்
பிரியனும் மனுஷரால் அங்கிகரிக்கப்பட்டவ
னுமாயிருக்கிறான். ஆனபடியால் சமாதானத் 19
துக்கடுத்தவைகளையும், [21]அந்நியோந்நிய பக்தி
விருத்தி உண்டாக்கத்தக்கவைகளையும் நாடக்
கடவோம். போஜனத்தினிமித்தம் தேவனு 20
டைய கிரியையை அழித்துப்போடாதே. எந்
தப் பதார்த்தமும் சுத்தமுள்ளதுதான்; [22]ஆனா
லும் இடறலுண்டாகப் புசிக்கிறவனுக்கு அது
தீமையாயிருக்கும். மாம்சம் புசிக்கிறதும், மது 21
பானம் பண்ணுகிறதும், மற்றெதையாகிலும்
செய்கிறதும், [23]உன் சகோதரன் இடறுகிற
தற்காவது, தவறுகிறதற்காவது ¶பலவீனப்படு
கிறதற்காவது ஏதுவாயிருந்தால், அவைகளில்
ஒன்றையும்செய்யாமலிருப்பதே நன்மையாயி
ருக்கும். உனக்கு விசுவாசமிருந்தால் அது 22
தேவனுக்கு முன்பாக உன்மட்டும் இருக்கட்
டும். [24]நல்லதென்று நிச்சயித்த காரியத்தில்
தன்னைக் குற்றவாளியாக்காதவன் பாக்கிய
வான். ஒருவன் சமுசயப்படுகிறவனாய்ப் புசித் 23
தால், அவன் விசுவாசமில்லாமல் புசிக்கிற
படியினால், ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படு
கிறான். [25]விசுவாசத்தினாலே வராத யாவும்
பாவமே.

அன்றியும், பலமுள்ளவர்களாகிய நாம் 15
நமக்கே பிரியமாய் நடவாமல், [26]பலவீனரு
டைய பலவீனங்களைத் தாங்கவேண்டும். நம் 2
மில் ஒவ்வொருவனும் [27]பிறனுடைய பக்தி
விருத்திக்கேதுவான நன்மையுண்டாக [illegible]டி
அவனுக்குப் பிரியமாய் நடக்கக்கடவன். [illegible] 3
ஸ்துவும் தமக்கே [28]பிரியமாய் நடவாமல்:
[29]உம்மை நிந்திக்கிறவர்களுடைய நிந்தைகள்
என்மேல் விழுந்தது என்று எழுதியிருக்கிற
படியே நடந்தார். தேவவசனத்தினால் உண்டா 4
கும் பொறுமையினாலும் ஆறுதலினாலும் நாம்
நம்பிக்கையுள்ளவர்களாகும்படிக்கு, [30]முன்பு

எழுதியிருக்கிறவைகளெல்லாம் நமக்குப்
போதனையாக எழுதியிருக்கிறது.
5 நீங்கள் ஒருமனப்பட்டு நம்முடைய கர்த்த
ராகிய இயேசுகிறிஸ்துவின் பிதாவாகிய
தேவனை ஒரே வாயினால் மகிமைப்படுத்தும்
6 படிக்கு, பொறுமையையும் ஆறுதலையும்
அளிக்கும் தேவன், [1]கிறிஸ்து இயேசுவினு
டைய மாதிரியின்படியே, [2]நீங்கள் ஏகசிந்தை
யுள்ளவர்களாயிருக்கும்படி உங்களுக்கு அநுக்
7 கிரகஞ்செய்வாராக. ஆதலால் தேவனுக்கு
மகிமையுண்டாக, [3]கிறிஸ்து நம்மை ஏற்றுக்
கொண்டதுபோல, நீங்களும் ஒருவரையொரு
8 வர் ஏற்றுக்கொள்ளுங்கள். மேலும், [4]பிதாக்க
ளுக்குப் பண்ணப்பட்ட வாக்குத்தத்தங்களை
உறுதியாக்கும்படிக்கு, தேவனுடைய சத்தி
யத்தினிமித்தம் இயேசுகிறிஸ்து விருத்தசேத
னமுள்ளவர்களுக்கு ஊழியக்காரரானாரென்
9 றும்; புறஜாதியாரும் இரக்கம் பெற்றதினி
மித்தம் தேவனை மகிமைப்படுத்துகிறார்களெ
ன்றும் சொல்லுகிறேன். அந்தப்படி: [5]இதி
னிமித்தம் நான் புறஜாதிகளுக்குள்ளே உம்
மை அறிக்கைபண்ணி, உம்முடைய நாமத்
தைச் சொல்லி, சங்கீதம் பாடுவேன் என்று
10 எழுதியிருக்கிறது. மேலும், [6]புறஜாதிகளே,
அவருடைய ஜனங்களோடேகூடக் களிகூ
11 ருங்கள் என்கிறார். மேலும், [7]புறஜாதிகளே,
எல்லாரும் கர்த்தரைத் துதியுங்கள்; ஜனங்
களே, எல்லாரும் அவரைப் புகழுங்கள் என்
12 றும் சொல்லுகிறார். மேலும், [8]ஈசாயின்
வேரும் புறஜாதியாரை ஆளும்படிக்கு எழும்பு
கிறவருமாகிய ஒருவர் தோன்றுவார்; அவரி
டத்தில் புறஜாதியார் நம்பிக்கை வைப்பார்
13 கள் என்று ஏசாயா சொல்லுகிறான். பரி
சுத்தஆவியின் பலத்தினாலே உங்களுக்கு நம்
பிக்கை பெருகும்படிக்கு, [9]நம்பிக்கையின்
தேவன் விசுவாசத்தினால் உண்டாகும் எல்லா
வித சந்தோஷத்தினாலும் சமாதானத்தினாலும்
உங்களை நிரப்புவாராக.
14 என் சகோதரரே, [10]நீங்கள் நற்குணத்தி
னால் நிறைந்தவர்களும், சகல அறிவினாலும்
நிரப்பப்பட்டவர்களும், ஒருவருக்கொருவர்
புத்திசொல்ல வல்லவர்களுமாயிருக்கிறீர்களெ
ன்று நானும் [11]உங்களைக்குறித்து நிச்சயித்தி
15 ருக்கிறேன். அப்படியிருந்தும், சகோதரரே,
[12]புறஜாதியாராகிய *பலி பரிசுத்தஆவியினாலே
பரிசுத்தமாக்கப்பட்டு, தேவனுக்குப் பிரிய
மான †பலியாகும்படிக்கு, [13]நான் தேவனு
டைய சுவிசேஷ ஊழியத்தை நடத்தும் ஆசா
ரியனாயிருந்து புறஜாதிகளுக்கு இயேசுகிறிஸ்
துவினுடைய ஊழியக்காரனாகும்பொருட்டு,
16 தேவன் எனக்கு [14]அளித்த கிருபையினாலே
உங்களுக்கு ஞாபகப்படுத்தும்படிக்கு இவை
களை நான் அதிக தைரியமாய் எழுதினேன்.
17 ஆதலால் நான் தேவனுக்குரியவைகளைக்குறி
த்து [15]இயேசுகிறிஸ்துவைக்கொண்டு மேன்
18 மை பாராட்ட எனக்கு இடமுண்டு. புறஜா
தியாரை வார்த்தையினாலும் செய்கையினாலும்
கீழ்ப்படியப்பண்ணும்படிக்கு, [16]அற்புத
அடையாளங்களின் பலத்தினாலும், தேவ
ஆவியின் பலத்தினாலும், கிறிஸ்துவானவர்
என்னைக்கொண்டு நடப்பித்தவைகளைச் சொல்
வதல்லாமல் வேறொன்றையும் சொல்ல நான்
துணிவதில்லை. இப்படி எருசலேம் துவக் 19
கிச் சுற்றிலும், இல்லிரிக்கம் தேசம்வரைக்
கும், [17]கிறிஸ்துவின் சுவிசேஷத்தைப் பூரண
மாய்ப் பிரசங்கித்திருக்கிறேன். மேலும் [18]அவ 20
ருடைய செய்தியை அறியாதிருந்தவர்கள்
காண்பார்களென்றும், கேள்விப்படாதிருந்த
வர்கள் உணர்ந்துகொள்வார்களென்றும் எழு
தியிருக்கிறபடியே, நான் மற்றொருவனு 21
டைய அஸ்திபாரத்தின்மேல் கட்டாதபடிக்கு,
[19]கிறிஸ்துவினுடைய நாமம் சொல்லப்
படாத இடங்களில் சுவிசேஷத்தை அ
கும்படி நாடுகிறேன்.
உங்களிடத்தில் வருகிறதற்கு [20]இதி
அநேகந்தரம் தடைபட்டேன். இப்பொழு
இந்தத் திசைகளிலே எனக்கு இடமில்லாத
டியினாலும், [21]உங்களிடத்தில் வரும்படி அநே
வருஷமாய் எனக்கு மிகுந்த விருப்பம் உ
டாயிருக்கிறபடியினாலும், நான் ஸ்பானி
தேசத்திற்குப் பிரயாணம்பண்ணுகையில்
களிடத்தில் வந்து, உங்களைக் கண்டுகொ
ளவும், [22]உங்களிடத்தில் சற்றுத் திருப்திய
ந்தபின்பு, அவ்விடத்திற்கு உங்களால்
விட் டனுப்பப்படவும், எனக்குச் ச
கிடைக்குமென்று நம்பியிருக்கிறேன்.
பொழுதோ பரிசுத்தவான்களுக்கு உதவி
யுங்காரியமாக [23]நான் எருசலேமுக்குப் பி
ணம் பண்ண எத்தனமாயிருக்கிறேன்.
கெதோனியாவிலும் [24]அகாயாவிலுமுள்
கள் எருசலேமிலுள்ள பரிசுத்தவான்க
குள்ளே இருக்கிற தரித்திருக்காகச்
பொருள்சகாயம் செய்ய விருப்பங்கொ
ருக்கிறார்கள்; இப்படிச்செய்வது நல்லதெ
எண்ணினார்கள்; இப்படிச் செய்கிற
அவர்கள் கடனாளிகளாயும் இருக்கிறா
எப்படியென்றால், [25]புறஜாதியார் அவர்
டைய ஞானநன்மைகளில் பங்குபெற்றிரு
[26]சரீரநன்மைகளால் அவர்களுக்கு உ
செய்ய இவர்கள் கடனாளிகளாயிருக்கி
களே. இந்தக் காரியத்தைநான் நிறைவேற்
இந்தப் ‡பலனை அவர்கள் கையிலே
மாய் ஒப்புவித்தபின்பு, [27]உங்கள் ஊர்வழிய
ஸ்பானியாவுக்குப் போவேன். நான் உங்
ளிடத்தில் வரும்போது [28]கிறிஸ்துவினுடை
சுவிசேஷத்தின் சம்பூரணமான ஆசீர்வா
தோடே வருவேனென்று §அறிந்திரு
றேன்.
மேலும் சகோதரரே, [29]தேவசித்தத்தினா
நான் சந்தோஷத்துடனே உங்களிடத்தி
வந்து உங்களோடு இளைப்பாறும்படியாக
யூதேயாவிலிருக்கிற [30]அவிசுவாசிகளுக்கு
நான் தப்புவிக்கப்படும்படிக்கும், [31]நான் எரு
லேமிலுள்ள பரிசுத்தவான்களுக்குச்

1 1 கொ. 1. 10. பிலி. 3. 16
2 அப். 4. 24. 32
3 எபே. 1. 6
4 அப். 3. 25, 26. 2 கொ. 1. 20
5 சங். 18. 49. பேு. 10. 16
6 உபா. 32. 43
7 சங். 117. 1
8 ஏசா. 11. 1, 10. வெளி. 5. 5: 22. 16
9 12. 12: 14. 17
10 1 கொ. 8. 1, 7, 10
11 எபி. 6. 9. 2 பே. 1. 12. 1 யோ. 2. 21
12 ஏசா. 66. 20. அப். 20. 32. பிலி. 2. 17
* காணிக்கை
† காணிக்கையாகும் படிக்கு
13 கலா. 2. 7–9
14 கலா. 1. 15. எபே. 3. 7, 8
15 2 கொ. 12. 1. எபி. 5. 1
16 அப். 19. 11. 21. 19. 2 கொ. 12. 12. கலா. 2. 8
17 அப். 20. 1, 2, 20. 2 தீமோ. 4. 17
18 ஏசா. 52. 15
19 2 கொ. 10. 13–16
20 1 தெச. 2. 17, 18
21 அப். 19. 21
22 அப். 15. 3. 3 யோ. 6. வச
23 அப். 19. 21: 20. 22
24 1 கொ. 16. 1, 2. 2 கொ. 8. 1: 9. 2, 12
25 11. 7
26 1 கொ. 9. 11. கலா. 6. 6
‡ பொருள் சகாயத்தை
27 பிலி. 4. 17
28 1. 11, 12
§ நிச்சயித் திருக்கிறேன்
29 1. 10–12. அப். 18. 21. 1 கொ. 16. 18
30 2 தெச. 3. 2
31 2 கொ. 8. 4

போகிற *தர்மசகாயம் அவர்களால் அங்கிகரிக்
32 கப்படும்படிக்கும், நீங்கள் தேவனை நோக்
கிச் செய்யும் ஜெபங்களில், நான் போராடு
வதுபோல [1]நீங்களும் என்னோடுகூடப் போ
ராடவேண்டுமென்று நம்முடைய கர்த்தராகிய
இயேசுகிறிஸ்துவினிமித்தமும், [2]ஆவியான
வருடைய அன்பினிமித்தமும், உங்களை
33 வேண்டிக்கொள்ளுகிறேன். சமாதானத்தின்
தேவன் [3]உங்களனைவரோடுங்கூட இருப்பா
ராக. ஆமென்.

16 கெங்கிரேயா [4]ஊர்சபைக்கு ஊழியக்கா
ரியாகிய நம்முடைய சகோதரி பெபேயாளை
நீங்கள் கர்த்தருக்குள் பரிசுத்தவான்களுக்கேற்
2 றபடி ஏற்றுக்கொண்டு, எந்தக் காரியத்தில்
ர் உதவி அவளுக்குத் தேவையாயிருக்
தா அதிலே நீங்கள் அவளுக்கு உதவி
பவேண்டுமென்று [5]அவளை உங்களிடத்
ஒப்புவிக்கிறேன்; அவள் அநேகருக்கும்
க்குங்கூட ஆதரவாயிருந்தவள்.
கிறிஸ்து இயேசுவுக்குள் என் உடன்வேலை
ாட்களாகிய [6]பிரிஸ்கில்லாளையும் ஆக்கில்லா
வையும் வாழ்த்துங்கள். அவர்கள் என் பிரா
ணுக்காகத் தங்கள் கழுத்தைக் கொடுத்தவர்
அவர்களைப்பற்றி நான் மாத்திரமல்ல,
ாதியாரில் உண்டான சபையாரெல்லா
நன்றியறிதலுள்ளவர்களாயிருக்கிறார்கள்.
ர்களுடைய வீட்டிலே கூடிவருகிற
பையையும் வாழ்த்துங்கள். [8]அகாயாவிலே
ஸ்துவுக்கு முதற்பலனாகிய என் பிரிய
ன எப்பனெத்தை வாழ்த்துங்கள். எங்க
ககாக மிகவும் பிரயாசப்பட்ட மரியாளை
ழ்த்துங்கள். அப்போஸ்தலருக்குள் பெயர்
ற்றவர்களும் [9]எனக்கு முந்திக் கிறிஸ்து
குள்ளானவர்களும் என் இனத்தாரும் என்
னேகூடக் காவலில் கட்டுண்டவர்களுமா
5 க்கிற அன்றோனீக்கையும் யூனியாவை
வாழ்த்துங்கள். கர்த்தருக்குள் எனக்குப்
யமான அம்பிலியாவை வாழ்த்துங்கள்.
ஸ்துவுக்குள் நம்மோடே உடன்வேலையா
கிய உர்பானையும், என் பிரியமான ஸ்தாக்
கையும் வாழ்த்துங்கள். கிறிஸ்துவுக்குள்
தமனாகிய அப்பெல்லேயை வாழ்த்துங்கள்.
ரிஸ்தொபூலுவின் வீட்டாரை வாழ்த்துங்
. என் இனத்தானாகிய ஏரோதியோனை
ழ்த்துங்கள். நர்கீசுவின் வீட்டாரில் கர்த்த
ருட்பட்டவர்களை வாழ்த்துங்கள். கர்த்த
குள் பிரயாசப்படுகிற திரிபேனாளையும்
ரிபோசாளையும் வாழ்த்துங்கள். கர்த்தருக்
ள் மிகவும் பிரயாசப்பட்ட பிரியமான பெர்
ாளை வாழ்த்துங்கள். கர்த்தருக்குள் தெரிந்து
ள்ளப்பட்ட ரூபையும், [10]எனக்கும் தாயா
அவனுடைய தாயையும் வாழ்த்துங்கள்.
அசிங்கிரீத்துவையும், பிலெகோனையும், எர்மா
வையும், பத்திரொபாவையும், எர்மேயையும்,
அவர்களோடிருக்கிற சகோதரரையும் வாழ்த்
துங்கள். பிலொலோகையும், யூலியாளையும், 15
நேரேயையும், அவனுடைய சகோதரியை
யும், ஒலிம்பாவையும், அவர்களோடிருக்கிற
பரிசுத்தவான்களெல்லாரையும் வாழ்த்துங்கள்.
ஒருவரையொருவர் [11]பரிசுத்த முத்தத்தோடு 16
வாழ்த்துங்கள். கிறிஸ்துவின் சபையார் உங்
களை வாழ்த்துகிறார்கள்.

அன்றியும் சகோதரரே, நீங்கள் கற்றுக் 17
கொண்ட உபதேசத்திற்கு விரோதமாய்ப் [12]பிரி
வினைகளையும் இடறல்களையும் உண்டாக்கு
கிறவர்களைக்குறித்து எச்சரிக்கையாயிருந்து,
[13]அவர்களை விட்டு விலகவேண்டுமென்று உங்
களுக்குப் புத்தி சொல்லுகிறேன். அப்படிப் 18
பட்டவர்கள் நம்முடைய கர்த்தராகிய இயேசு
கிறிஸ்துவுக்கு ஊழியஞ்செய்யாமல் தங்கள்
வயிற்றுக்கே ஊழியஞ்செய்து, [14]நயவசனிப்பி
னாலும் இச்சகப் பேச்சினாலும், கபடில்லாதவர்
களுடைய இருதயங்களை வஞ்சிக்கிறவர்களா
யிருக்கிறார்கள். உங்கள் கீழ்ப்படிதல் யாவருக் 19
கும் தெரியவந்திருக்கிறது. ஆகையால் உங்க
ளைக்குறித்துச் சந்தோஷப்படுகிறேன்; [15]ஆனா
லும் நீங்கள் நன்மைக்கு ஞானிகளும் தீமைக்
குப் பேதைகளுமாயிருக்கவேண்டுமென்று வி
ரும்புகிறேன். சமாதானத்தின் [16]தேவன் சீக் 20
கிரமாய்ச் சாத்தானை உங்கள் கால்களின்கீழே
[17]நசுக்கிப்போடுவார்.

[18]நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து
வினுடைய கிருபை உங்களுடனேகூட இருப்
பதாக. ஆமென்.

என் உடன் வேலையாளாகிய [19]தீமோத்தே 21
யும், என் இனத்தாராகிய [20]லூகியும், [21]யாசோ
னும், [22]சொசிபத்தரும், உங்களை வாழ்த்துகி
றார்கள். இந்த நிருபத்தை எழுதின தெர்தியு 22
வாகிய நான் கர்த்தருக்குள் உங்களை வாழ்த்து
கிறேன். என்னையும் சபையனைத்தையும் 23
உபசரித்துவருகிற [23]காயு உங்களை வாழ்த்து
கிறான். பட்டணத்து உக்கிராணக்காரனாகிய
[24]எரஸ்தும், சகோதரனாகிய குவர்த்தும் உங்
களை வாழ்த்துகிறார்கள். நம்முடைய கர்த்த 24
ராகிய இயேசுகிறிஸ்துவினுடைய கிருபை
[25]உங்கள் அனைவரோடுங்கூட இருப்பதாக.
ஆமென்.

†ஆதிகாலமுதல் அடக்கமாயிருந்து, [26]இப் 25
பொழுது தீர்க்கதரிசன ஆகமங்களினாலே
அநாதி தேவனுடைய கட்டளையின்படி வெளி
யரங்கமாக்கப்பட்டதும், [27]சகல ஜாதிகளும்
விசுவாசத்திற்குக் கீழ்ப்படியும்படிக்கு [28]அவர்
களுக்கு அறிவிக்கப்பட்டதுமாயிருக்கிற இரக
சியத்தை வெளிப்படுத்துகிறதான, இயேசு 26
கிறிஸ்துவைப்பற்றிய பிரசங்கமாகிய [29]என்
சுவிசேஷத்தின்படியே உங்களை ஸ்திரப்படு
த்த வல்லவரும், தாம் ஒருவரே ஞானமுள்ள 27
வருமாயிருக்கிற [30]தேவனுக்கு இயேசுகிறிஸ்து
வின் மூலமாய் என்றென்றைக்கும் மகிமை
உண்டாவதாக. ஆமென்.

* தர்மசேவை
1 2 கொ. 1. 11. கொலோ. 4. 12
2 பிலி. 2. 1
3 1 கொ. 14. 33. எபி. 13. 20
4 அப். 18. 18
5 பிலி. 2. 29. 3 யோ. 5, 6. வச
6 அப். 18. 2. மு. 2 தீமோ. 4. 19
7 1 கொ. 16. 19. கொலோ. 4. 15
8 1 கொ. 16. 15
9 கலா. 1. 22
10 எபே. 1. 4. 2 யோ. 1. வச
11 1 கொ. 16. 20. 1 பே. 5. 14
12 1 தீமோ. 6. 3-5
13 மத். 18. 17. 1 கொ. 5. 11. 2 தெச. 3. 6, 14
14 பிலி. 3. 19. கொலோ. 2. 4. 2 பே. 2. 3
15 மத். 10. 16. 1 கொ. 14. 20
16 15. 33
17 ஆதி. 3. 15. வெளி. 12. 10
18 1 கொ. 16. 23. மு. வெளி. 22. 21
19 அப். 16. 1
20 அப். 13. 1
21 அப். 17. 5
22 சோபத்தர். அப். 20. 4
23 1 கொ. 1. 15. 3 யோ. 1. வச
24 அப். 19. 22
25 20. வச. 1 தெச. 5. 28
† நித்தியயுகங்கள் தோறும்
26 1 கொ. 2. 7
27 மத். 28. 19. அப். 6. 7
28 எபே. 1. 10. கொலோ. 1. 26, 27
29 2. 16
30 1 தீமோ. 1. 17: 6. 16. யூதா 25. வச

# கொரிந்தியருக்கு எழுதின

## முதலாம் நிருபம்

1 தேவனுடைய சித்தத்தினலே [1]இயேசு
கிறிஸ்துவின் அப்போஸ்தலனகும்படி
அழைக்கப்பட்டவனகிய பவுலும், [2]சகோதர
2 னகிய சொஸ்தெனேயும், கொரிந்துவிலே
[3]கிறிஸ்து இயேசுவுக்குள் [4]பரிசுத்தமாக்கப்
பட்டவர்களாயும், பரிசுத்தவான்களாகும்படி
*அழைக்கப்பட்டவர்களாயுமிருக்கிற தேவனு
டைய சபைக்கும், எங்களுக்கும் தங்களுக்கும்
ஆண்டவராயிருக்கிற நம்முடைய கர்த்தராகிய
இயேசுகிறிஸ்துவின் [5]நாமத்தை எங்கும் தொ
ழுதுகொள்ளுகிற அனைவருக்கும் எழுதுகிற
3 தாவது: நம்முடைய பிதாவாகிய தேவனலும்
கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினலும் [6]உங்
களுக்குக் கிருபையும் சமாதானமும் உண்
டாவதாக.
4 கிறிஸ்துவைப்பற்றிய சாட்சி [7]உங்களுக்
5 குள்ளே ஸ்திரப்படுத்தப்பட்டபடியே, நீங்
கள் இயேசுகிறிஸ்துவுக் குள்ளாய் எல்லா
[8]உபதேசத்திலும், எல்லா அறிவிலும், மற்
றெல்லாவற்றிலும், சம்பூரணமுள்ளவர்களாக்
6 கப்பட்டிருக்கிறபடியால், அவர் மூலமாய்
உங்களுக்கு அளிக்கப்பட்ட தேவகிருபைக்
காக, [9]நான் உங்களைக்குறித்து எப்பொழுதும்
7 என் தேவனை ஸ்தோத்திரிக்கிறேன். அப்
படியே நீங்கள் யாதொரு வரத்திலும் குறை
வில்லாதவர்களாய், [10]நம்முடைய கர்த்தராகிய
இயேசுகிறிஸ்து வெளிப்படுவதற்குக் காத்
8 திருக்கிறீர்கள். நம்முடைய கர்த்தராகிய
இயேசுகிறிஸ்துவின் நாளிலே நீங்கள் குற்றஞ்
சாட்டப்படாதவர்களாயிருக்கும்படி [11]முடிவு
பரியந்தம் அவர் உங்களை ஸ்திரப்படுத்துவார்.
9 தம்முடைய குமாரனும் நம்முடைய கர்த்தரு
மாயிருக்கிற இயேசுகிறிஸ்துவுடனே [12]ஐக்
கியமாயிருப்பதற்கு உங்களை அழைத்த [13]தே
வன் உண்மையுள்ளவர்.
10 சகோதரரே, நீங்களெல்லாரும் ஒரே காரி
யத்தைப் பேசவும், [14]பிரிவினைகளில்லாமல்
ஏகமனதும் ஏகயோசனையும் உள்ளவர்
களாய்ச் சீர்பொருந்தியிருக்கவும் வேண்டு
மென்று, நம்முடைய கர்த்தராகிய இயேசு
கிறிஸ்துவின் நாமத்தினலே உங்களுக்குப்
11 புத்தி சொல்லுகிறேன். ஏனெனில், என்
சகோதரரே, உங்களுக்குள்ளே வாக்குவாதங்
கள் உண்டென்று குலோவேயாளின் வீட்டா
ரால் உங்களைக்குறித்து எனக்கு அறிவிக்கப்
பட்டது. உங்களில் சிலர்: [15]நான் பவுலைச் 12
சேர்ந்தவனென்றும், [16]நான் அப்பொல்லோ
வைச் சேர்ந்தவனென்றும், [17]நான் கேபா
வைச் சேர்ந்தவனென்றும், நான் கிறிஸ்து
வைச் சேர்ந்தவனென்றும் சொல்லுகிறபடி
யால், நான் இப்படிச் சொல்லுகிறேன். கிறி 13
ஸ்து பிரிந்திருக்கிறாரா? [18]†பவுலா உங்களுக்
காகச் சிலுவையிலறையப்பட்டான்? பவுலின்
நாமத்தினலேயா ஞானஸ்நானம் பெற்றீர்கள்?
என் நாமத்தினலே ‡ஞானஸ்நானங் கொடுத் 14
தேனென்று ஒருவனும் சொல்லாதபடிக்கு,
நான் கிறிஸ்புவுக்கும் [19]காயுவுக்குமேயன்றி, 15
உங்களில் வேறொருவனுக்கும் ஞானஸ்நா
னங் கொடுக்கவில்லை; இதற்காக தேவனை
ஸ்தோத்திரிக்கிறேன். ஸ்தேவானுடைய வீட் 16
டாருக்கும் நான் ஞானஸ்நானங் கொடு
த்ததுண்டு. [20]இதுவுமல்லாமல் இன்னும்
யாருக்காவது நான் ஞானஸ்நானங் கொடுத்
தேனே இல்லையோ அறியேன். ஞானஸ் 17
நானத்தைக் கொடுக்கும்படி கிறிஸ்து என்னை
அனுப்பவில்லை; சுவிசேஷத்தைப் பிரசங்கிக்
கவே அனுப்பினர்; கிறிஸ்துவின் சிலுவை
வீணய்ப் போகாதபடிக்கு, [21]சாதுரிய ஞான
மில்லாமல் பிரசங்கிக்கவே அனுப்பினர்.
சிலுவையைப்பற்றிய உபதேசம் [22]கெட்டுப் 18
போகிறவர்களுக்குப் பைத்தியமாயிருக்கிறது,
[23]இரட்சிக்கப்படுகிற நமக்கோ அது தேவ
பெலனயிருக்கிறது. அந்தப்படி: ஞானிகளு 19
டைய ஞானத்தை நான் அழித்து, §புத்திசாலி
களுடைய புத்தியை அவமாக்குவேன் என்று
[24]எழுதியிருக்கிறது. ஞானி எங்கே? [25]வேத 20
பாரகன் எங்கே? இப்பிரபஞ்சத் தர்க்கசாஸ்
திரி எங்கே? [26]இவ்வுலகத்தின் ஞானத்தை
தேவன் பைத்தியமாக்கவில்லையா? எப்படி 21
யெனில், [27]தேவஞானத்துக்கேற்றபடி உலக
மானது சுயஞானத்தினலே தேவனை அறியா
திருக்கையில், பைத்தியமாகத் தோன்றுகிற
பிரசங்கத்தினலே விசுவாசிகளை இரட்சிக்க
தேவனுக்குப்பிரியமாயிற்று. யூதர்கள் [28]அடை 22
யாளத்தைக் கேட்கிறார்கள், கிரேக்கர் ஞானத்
தைத் தேடுகிறார்கள்; நாங்களோ சிலுவையில் 23

1 ரோ. 1. 1. 2 கொ. 1. 1. எபே. 1. 1 கொலோ. 1. 1
2 அப். 18. 17
3 அப். 18. 1
4 யூதா. 1. ௩
* நியமிக்கப் பட்டவர்கள். 2 தீமோ. 1. 9. 1 பே. 1. 15
5 2 தீமோ. 2. 22
6 ரோ. 1. 7. 1 பே. 1. 2
7 2 தீமோ. 1. 8. வெளி. 1. 2
8 2 கொ. 8. 7
9 ரோ. 1. 8
10 தீத். 2. 13. 2 பே. 3. 12
11 1 தெச. 3. 13: 5. 23
12 யோ. 15. 4. 1 யோ. 1. 3
13 1 தெச. 5. 24
14 ரோ. 12. 16. 2 கொ. 13. 11. 1 பே. 3. 8
15 3. 4
16 அப். 19. 1
17 யோ. 1. 42
18 2 கொ. 11. 4. எபே. 4. 5
† பவுல்... அறையப் பட்டானா... நாமத் தினலேஞானஸ்நா னம் பெற்றீர்களா
‡ ஞானஸ்நானம்பெ ற்றீர்களென்ற
19 அப். 18. 8. ரோ. 16. 23. 3 யோ. 1. [illegible]
20 16. 15, 17
21 2. 1, 4, 13. 2 பே. 1. 16
22 2 கொ. 2. 15
23 அப். 17. 18. ரோ. 1. 16
§ விவேகிகள்
24 யோபு 5. 12, 13. ஏசா. 29. 14. எரே. 8. 9
25 ஏசா. 33. 18
26 ஏசா. 44. 25. ரோ. 1. 22
27 மத். 11. 25. லூ. 10. 21. ரோ. 1. 20, 22, 28
28 மத். 12. 38. [illegible] யோ. 1 48. [illegible]

அறையப்பட்ட கிறிஸ்துவைப் பிரசங்கிக்கி
றோம்; [1]அவர் யூதருக்கு இடறலாயும் கிரேக்க
24 ருக்குப் பைத்தியமாயும் இருக்கிறார். ஆகிலும்
யூதரானாலும் கிரேக்கரானாலும் எவர்கள் அ
ழைக்கப்பட்டிருக்கிறார்களோ [2]அவர்களுக்
குக் கிறிஸ்து தேவபெலனும் தேவஞானமுமா
25 யிருக்கிறார். இந்தப்படி, தேவனுடைய பைத்
தியம் என்னப்படுவது மனுஷருடைய ஞான
த்திலும் அதிக ஞானமாயிருக்கிறது; தேவனு
டைய பலவீனம் என்னப்படுவது மனுஷரு
டைய பலத்திலும் அதிக பலமாயிருக்கிறது.
26 எப்படியெனில், சகோதரரே, நீங்கள்
அழைக்கப்பட்ட அழைப்பைப் பாருங்கள்;
[3]மாம்சத்தின்படி ஞானிகள் அநேகரில்லை,
வல்லவர்கள் அநேகரில்லை, பிரபுக்கள் அநேக
27 ரில்லை. ஞானிகளை வெட்கப்படுத்தும்படி
[4]தேவன் உலகத்தில் பைத்தியமானவைகளைத்
தெரிந்துகொண்டார்; பலமுள்ளவைகளை வெ
ட்கப்படுத்தும்படி தேவன் உலகத்தில் பலவீன
28 மானவைகளைத் தெரிந்துகொண்டார். உள்
ளவைகளை அவமாக்கும்படி, உலகத்தின் இழி
வானவைகளையும், [5]அற்பமாய் எண்ணப்பட்ட
வைகளையும், *இல்லாதவைகளையும், தேவன்
29 தெரிந்துகொண்டார். மாம்சமான எவனும்
தேவனுக்கு முன்பாகப் பெருமை பாராட்டாத
30 படிக்கு [6]அப்படிச் செய்தார். அந்தப்படி,
நீங்கள் அவராலே [7]கிறிஸ்து இயேசுவுக்
குட்பட்டிருக்கிறீர்கள். [8]எழுதியிருக்கிறபடி,
மேன்மை பாராட்டுகிறவன் கர்த்தரைக்குறித்
31 தே மேன்மை பாராட்டத்தக்கதாக, அவரே
தேவனால் நமக்கு [9]ஞானமும் [10]நீதியும் [11]பரி
சுத்தமும் [12]மீட்புமானார்.

2 சகோதரரே, நான் உங்களிடத்தில் வந்த
போது, [13]தேவனைப்பற்றிய சாட்சியைச் சிற
ந்த வசனிப்போடாவது ஞானத்தோடாவது
2 அறிவிக்கிறவனாக வரவில்லை. இயேசுகிறிஸ்
துவை, சிலுவையில் அறையப்பட்ட அவரை
யேயன்றி, [14]வேறொன்றையும் உங்களுக்கு
ள்ளே அறியாதிருக்கத் தீர்மானித்திருந்தேன்.
3 அல்லாமலும் நான் [15]பலவீனத்தோடும் பயத்
தோடும் மிகுந்த நடுக்கத்தோடும் உங்களிடத்
4 தில் இருந்தேன். உங்கள் விசுவாசம் மனுஷரு
டைய ஞானத்திலல்ல, [16]தேவனுடைய பெ
5 லத்தில் நிற்கும்படிக்கு, என் பேச்சும் என் பிர
சங்கமும் [17]மனுஷஞானத்திற்குரிய நயவசன
முள்ளதாயிராமல், [18]ஆவியினாலும் பெலத்தி
னாலும் உறுதிப்படுத்தப்பட்டதாயிருந்தது.
6 அப்படியிருந்தும், [19]தேறினவர்களுக்குள்
ளே ஞானத்தைப் பேசுகிறோம்; இப்பிரபஞ்சத்
தின் ஞானத்தையல்ல, [20]அழிந்துபோகிறவர்
களாகிய இப்பிரபஞ்சத்தின் பிரபுக்களுடைய
7 ஞானத்தையுமல்ல, உலகத்தோற்றத்திற்கு மு
ன்னே தேவன் நம்முடைய மகிமைக்காக ஏற்
படுத்தினதும், [21]மறைக்கப்பட்டதுமாயிருந்த
இரகசியமான தேவஞானத்தையே பேசுகி
8 றோம். அதை இப்பிரபஞ்சத்துப் பிரபுக்
களில் ஒருவனும் அறியவில்லை; [22]அறிந்தார்
களானால், மகிமையின் கர்த்தரை அவர்கள்
சிலுவையில் அறையமாட்டார்களே. எழுதி 9
யிருக்கிறபடி: [23]தேவன் தம்மில் அன்பு கூரு
கிறவர்களுக்கு ஆயத்தம்பண்ணினவைகளைக்
கண் காணவுமில்லை, காது கேட்கவுமில்லை,
அவைகள் மனுஷனுடைய இருதயத்தில்
தோன்றவுமில்லை; நமக்கோ தேவன் [24]அவைக 10
ளைத் தமது ஆவியினாலே வெளிப்படுத்தினார்;
அந்த ஆவியானவர் எல்லாவற்றையும், [25]தேவ
னுடைய ஆழங்களையும், ஆராய்ந்திருக்கிறார்.
மனுஷனிலுள்ள ஆவியேயன்றி [26]மனுஷரில் 11
எவன் மனுஷனுக்குரியவைகளை அறிவான்?
அப்படிப்போல, தேவனுடைய ஆவியேயன்
றி, [27]ஒருவனும் தேவனுக்குரியவைகளை அறிய
மாட்டான். நாங்களோ உலகத்தின் ஆவியைப் 12
பெறாமல், [28]தேவனால் எங்களுக்கு அருளப்
பட்டவைகளை அறியும்படிக்கு தேவனிலி
ருந்து புறப்படுகிற ஆவியையே பெற்றோம்.
அவைகளை நாங்கள் மனுஷஞானம் போதிக் 13
கிற வார்த்தைகளாலே பேசாமல், [29]பரிசுத்த
ஆவி போதிக்கிற வார்த்தைகளாலே பேசி,
†ஆவிக்குரியவைகளை ஆவிக்குரியவைகளோ
டே சம்பந்தப்படுத்திக் காண்பிக்கிறோம். ஜெந் 14
மசுபாவமான மனுஷனோ தேவனுடைய [30]ஆ
விக்குரியவைகளை ஏற்றுக்கொள்ளான்; அவை
கள் அவனுக்குப் பைத்தியமாகத் தோன்றும்;
[31]அவைகள் ஆவிக்கேற்றபிரகாரமாய் ஆராய்
ந்து நிதானிக்கப்படுகிறவைகளானதால், அவை
களை அறியவுமாட்டான். ஆவிக்குரியவன் 15
எல்லாவற்றையும் ஆராய்ந்து நிதானிக்கிறான்;
[32]ஆனாலும் அவன் மற்றொருவனாலும் ஆராய்
ந்து நிதானிக்கப்படான். கர்த்தருக்குப் போதி 16
க்கத்தக்கதாக [33]அவருடைய ‡சிந்தையை அறிந்
தவன் யார்? [34]எங்களுக்கோ கிறிஸ்துவின்
சிந்தை உண்டாயிருக்கிறது.

மேலும், சகோதரரே, நான் உங்களை ஆவிக் 3
குரியவர்களென்று எண்ணி உங்களுடனே
பேசக்கூடாமல், [35]மாம்சத்துக்குரியவர்களெ
ன்றும், [36]கிறிஸ்துவுக்குள் குழந்தைகளென்
றும் எண்ணிப் பேசவேண்டியதாயிற்று. நீங் 2
கள் பெலனில்லாதவர்களானதால், உங்களுக்
குப் போஜனங்கொடாமல், பாலைக் குடிக்கக்
கொடுத்தேன்; [37]இன்னமும் நீங்கள் மாம்சத்
துக்குரியவர்களாயிருக்கிறபடியால், இப்பொ
ழுதும் உங்களுக்குப் பெலனில்லை. பொறா 3
மையும் வாக்குவாதமும் பேதகங்களும் உங்க
ளுக்குள் இருக்கிறபடியால், [38]நீங்கள் மாம்
சத்திற்குரியவர்களா யிருந்து மனுஷமார்க்க
மாய் நடக்கிறீர்களல்லவா? ஒருவன் நான் பவு 4
லைச் சேர்ந்தவனென்றும், [39]வேறொருவன்
நான் அப்பொல்லோவைச் சேர்ந்தவனென்
றும் சொல்லுகிறபடியால் நீங்கள் மாம்சத்திற்
குரியவர்களல்லவா? பவுல் யார்? அப்பொல் 5
லோ யார்? [40]கர்த்தர் அவனவனுக்கு அருள்
அளித்தபடியே நீங்கள் விசுவாசிக்கிறதற்கு

1 ஏசா. 8. 14. மத். 11. 6. 1 பே. 2. 8
2 18. வச. ரோ. 1. 5, 16. கொலோ. 2. 3
3 செப். 3. 12. யோ. 7. 48
4 சங். 8. 2. மத். 11. 25. யாக். 2. 5
5 2. 6. ரோ. 4. 17
* இல்பொருளாக எண்ணப்பட்டவைகளையும்
6 ரோ. 3. 27. எபே. 2. 9
7 2 கொ. 5. 17. எபே. 1. 3, 10
8 எரே. 9. 23, 24. 2 கொ. 10. 17
9 எபே. 1. 17. கொலோ. 2. 3
10 ஏசா. 45. 24. எரே. 23. 5, 6. ரோ. 4. 25. 2 கொ. 5. 21
11 யோ. 17. 19
12 எபே. 1. 17
13 1. 17: 4. 13. 2 கொ. 10. 10: 11. 6
14 கலா. 6. 14. பிலி. 3. 8
15 2 கொ. 4. 7. கலா. 4. 13
16 2 கொ. 4. 7: 6. 7
17 2 பே. 1. 16
18 1 தெச. 1. 5
19 எபே. 4. 11. பிலி. 3. 15
20 சங். 33. 10. 2 கொ. 1. 12. யாக். 3. 15
21 ரோ. 16. 25, 26. எபே. 3. 5, 9. கொலோ. 1. 25. 2 தீமோ. 1. 9
22 மத். 11. 25. லூ. 23. 34. யோ. 16. 3. அப். 3. 17
23 ஏசா. 64. 4
24 மத். 13. 11. யோ. 16. 13
25 ரோ. 11. 33
26 நீதி. 14. 10
27 ரோ. 11. 33, 34
28 ரோ. 8. 15. 1 யோ. 5. 20
29 1. 17. 2 பே. 1. 16
† ஆவிக்குரியவைகளை ஆவிக்குரியவர்களிடத்தில் வியாக்கியானம் பண்ணுகிறோம்
30 மத். 13. 11: 16. 23
31 ரோ. 8. 5–7
32 நீதி. 28. 5. 1 தெச. 5. 21. 1 யோ. 4. 1
33 ஏசா. 40. 13. எரே. 23. 18. ரோ. 11. 34
‡ ஆவி = மனசு. ஏசா. 40. 13
34 யோ. 15. 15: 17. 8

35 2. 14, 15 36 எபி. 5. 12, 13. 1 பே. 2. 2, 3 37 யோ. 16. 12 38 கலா. 5. 20, 21. யாக். 3. 16 39 1, 12 40 ரோ. 12. 3, 6. 2 கொ. 3. 3. 1 பே. 4 11

6 ஏதுவாயிருந்த ஊழியக்காரர்தானே. நான்
[1]நட்டேன், அப்பொல்லோ [2]நீர்ப்பாய்ச்சி
7 ஞன், தேவனே [3]விளையச்செய்தார். அப்
படியிருக்க, [4]நடுகிறவனாலும், ஒன்றுமில்லை,
நீர்ப்பாய்ச்சுகிறவனாலும் ஒன்றுமில்லை, விளை
8 யச்செய்கிற தேவனாலே எல்லாமாகும். மே
லும் நடுகிறவனும் நீர்ப்பாய்ச்சுகிறவனும்
ஒன்றாயிருக்கிறார்கள்; [5]அவனவன் தன்தன்
வேலைக்குத்தக்கதாய்க் கூலியைப் பெறுவான்.
9 நாங்கள் தேவனுக்கு [6]உடன்வேலையாட்களா
யிருக்கிறோம்; நீங்கள் தேவனுடைய *பண்
ணையும், [7]தேவனுடைய மாளிகையுமாயிருக்
கிறீர்கள்.
10 எனக்கு அளிக்கப்பட்ட தேவகிருபையின்
படியே புத்தியுள்ள சிற்பாசாரியைப்போல
[8]அஸ்திபாரம் போட்டேன், வேறொருவன்
அதின்மேல் கட்டுகிறான். [9]அவனவன் தான்
அதின்மேல் †இன்னவிதமாய்க் கட்டுகிறானெ
11 ன்று பார்க்கக்கடவன். போடப்பட்டிருக்கிற
அஸ்திபாரமாகிய இயேசுகிறிஸ்துவை அல்
லாமல் [10]வேறே அஸ்திபாரத்தைப் போட
12 ஒருவனாலும் கூடாது. ஒருவன் அந்த அஸ்
திபாரத்தின்மேல் பொன், வெள்ளி, விலையே
றப்பெற்ற கல், மரம், புல், வைக்கோல் ஆகிய
13 இவைகளைக் கட்டினால், அவனவனுடைய
வேலைப்பாடு வெளியாகும், நாளானது அதை
விளங்கப்பண்ணும். [11]ஏனெனில் அது அக்
கினியினாலே வெளிப்படுத்தப்படும்; அவன
வனுடைய வேலைப்பாடு எத்தன்மையுள்ள
தென்று அக்கினியானது பரிசோதிக்கும்.
14 அதின்மேல் ஒருவன் கட்டினது நிலைத்தால்,
15 [12]அவன் கூலியைப் பெறுவான். ஒருவன்
கட்டினது வெந்துபோனால், அவன் நஷ்ட
மடைவான்; அவனோ இரட்சிக்கப்படுவான்;
[13]அதுவும் அக்கினியிலகப்பட்டுத் தப்பினது
போலிருக்கும்.
16 நீங்கள் தேவனுடைய ஆலயமாயிருக்கிறீர்
களென்றும், [14]தேவனுடைய ஆவி உங்களில்
வாசமாயிருக்கிறாரென்றும் அறியாதிருக்கிறீர்
17 களா? ஒருவன் தேவனுடைய ஆலயத்தைக்
கெடுத்தால், அவனை தேவன் கெடுப்பார்; தே
வனுடைய ஆலயம் பரிசுத்தமாயிருக்கிறது;
நீங்களே அந்த ஆலயம்.
18 ஒருவனும் தன்னைத்தானே வஞ்சியாதிருப்
பானாக; [15]இவ்வுலகத்திலே உங்களில் ஒருவன்
தன்னை ஞானியென்று எண்ணினால் அவன்
ஞானியாகும்படிக்குப் பைத்தியக்காரனாகக்கட
19 வன். இவ்வுலகத்தின் ஞானம் [16]தேவனுக்கு
முன்பாகப் பைத்தியமாயிருக்கிறது. அப்படி
யே, [17]ஞானிகளை அவர்களுடைய தந்திரத்தி
20 லே பிடிக்கிறாரென்றும், ஞானிகளுடைய
‡சிந்தனைகள் வீணாயிருக்கிறதென்று [18]கர்த்தர்
அறிந்திருக்கிறாரென்றும் எழுதியிருக்கிறது.
21 இப்படியிருக்க, [19]ஒருவனும் மனுஷரைக்கு
றித்துமேன்மைபாராட்டாதிருப்பானாக;[20]எல்
22 லாம் உங்களுடையதே; பவுலாகிலும், அப்
பொல்லோவாகிலும், கேபாவாகிலும், உலக
மாகிலும், ஜீவனாகிலும், மரணமாகிலும்,
நிகழ்காரியங்களாகிலும், வருங்காரியங்களாகி
லும், எல்லாம் உங்களுடையது; நீங்கள் 23
கிறிஸ்துவினுடையவர்கள்; [21]கிறிஸ்து தேவ
னுடையவர்.

இப்படியாக, எந்தமனுஷனும் எங்களைக் 4
கிறிஸ்துவின் ஊழியக்காரரென்றும், [22]தேவ
னுடைய இரகசியங்களின் உக்கிராணக்கார
ரென்றும் எண்ணிக்கொள்ளக்கடவன். மே 2
லும், [23]உக்கிராணக்காரன் உண்மையுள்ளவ
னென்று காணப்படுவது அவனுக்கு அவசிய
மாம். ஆயினும் நான் உங்களாலேயாவது 3
மனுஷருடைய நியாயநாளின் விசாரணையினா
லேயாவது தீர்ப்பைப்பெறுவது எனக்கு மிக
வும் அற்பகாரியமாயிருக்கிறது; நானும் என்
னைக்குறித்துத் தீர்ப்புச் சொல்லுகிறதில்லை.
என்னிடத்தில் நான் யாதொரு குற்றத்தையும் 4
அறியேன்; [24]ஆகிலும் அதினாலே நான் நீதி
மானாகிறதில்லை; என்னை நியாயம் விசாரிக்கிற
வர் கர்த்தரே. ஆனதால், [25]கர்த்தர் வருமள 5
வும் நீங்கள் காலத்துக்குமுன்னே யாதொன்
றைக்குறித்தும் தீர்ப்புச் சொல்லாதிருங்கள்;
[26]இருளில் மறைந்திருக்கிறவைகளை அவர்
வெளியரங்கமாக்கி, இருதயங்களின் யோசனை
களையும் வெளிப்படுத்துவார்; [27]அப்பொழுது
அவனவனுக்குரிய புகழ்ச்சி தேவனால் உண்
டாகும்.

சகோதரரே, [28]எழுதப்பட்டதற்கு மிஞ்சி 6
எண்ணவேண்டாமென்று நீங்கள் எங்களாலே
கற்றுக்கொள்ளவும், ஒருவனும் ஒருவனிமித்
தம் மற்றொருவனுக்கு விரோதமாய் இறுமாப்
படையாதிருக்கவும், நான் உங்கள்நிமித்தம்
என்னையும் அப்பொல்லோவையும் திருஷ்
டாந்தமாக வைத்து, இவைகளை எழுதினேன்.
அன்றியும் உன்னை விசேஷித்தவனாகும்படி 7
செய்கிறவர் யார்? [29]உனக்கு உண்டாயிருக்கிற
வைகளில் நீ பெற்றுக்கொள்ளாதது யாது?
நீ பெற்றுக்கொண்டவனானால் பெற்றுக்கொள்
ளாதவன்போல் ஏன் மேன்மைபாராட்டுகிறாய்.
இப்பொழுது திருப்தியடைந்திருக்கிறீர்களே, 8
[30]இப்பொழுது ஐசுவரியவான்களாயிருக்கிறீர்
களே, எங்களையல்லாமல் ஆளுகிறீர்களே;
நீங்கள் ஆளுகிறவர்களானால் நலமாயிருக்கும்,
அப்பொழுது உங்களுடனேகூட நாங்களும்
ஆளுவோமே. எங்களுக்குத் தோன்றுகிறபடி 9
தேவன் அப்போஸ்தலர்களாகிய எங்களை [31]மர
ணத்துக்குக் குறிக்கப்பட்டவர்கள்போலக்
கடைசியானவர்களாய்க் காணப்படப்பண்ணி
னார்; [32]நாங்கள் உலகத்துக்கும் தூதருக்கும் மனு
ஷருக்கும் வேடிக்கையானோம். நாங்கள் கிறி 10
ஸ்துவினிமித்தம் பைத்தியக்காரர், [33]நீங்கள்
கிறிஸ்துவில் புத்திசாலிகள்; [34]நாங்கள் பலவீ
னர், நீங்கள் பலவான்கள்; நீங்கள் கனவான்
கள், நாங்கள் கனவீனர். இந்நேரம்வரைக் 11
கும் [35]பசியுள்ளவர்களும், தாகமுள்ளவர்களும்,
[36]நிர்வாணிகளும், [37]குட்டுண்டவர்களும், தங்க
இடமில்லாதவர்களுமாயிருக்கிறோம். எங்கள் 12

1 அப். 18. 4, 8, 11
2 அப். 18. 24, 27
3 15. 10. 2 கொ. 3. 5
4 ரோ. 15. 5. 2 கொ. 12. 9–11. கலா. 6. 3
5 சங். 62. 12. ரோ. 2. 6. வெளி. 22. 12
6 அப். 15. 4. 2 கொ. 6. 1
* வயல் நிலம் = தோட்டம்
7 எபே. 2. 20. எபி. 3. 3, 6. 1 பே. 2. 5
8 ரோ. 12. 3
9 1 பே. 4, 11
† கட்டுகிற விதத்தைக் குறித்து எச்சரிக்கையாயிருக்கக்கடவன்
10 ஏசா. 28. 16. மத். 16. 18. எபே. 2. 20. 2 தீமோ. 2. 10
11 சகரி. 13. 9. லூக். 2. 35. 1 பே. 1. 7: 4. 12
12 4. 5
13 சகரி. 3. 2. யூதா. 22. 23
14 2 கொ. 6. 16. எபே. 2. 21, 22. 1 பே. 2. 5
15 நீதி. 26. 12
16 1. 20: 2. 6
17 யோபு 5. 13
‡ எண்ணங்கள் = நியாயங்கள்
18 சங். 94. 11
19 எரே. 9. 23, 24
20 2 கொ. 4. 5, 15
21 ரோ. 14. 8. 2 கொ. 10. 7. கலா. 3. 29
22 2 கொ. 6. 3, 4
23 லூ. 12. 42. தீத். 1. 7. 1 பே. 4. 10
24 சங். 143. 2. ரோ. 20: 4. 2
25 மத். 7. 1
26 ரோ. 2. 16. வெளி. 20. 12
27 ரோ. 2. 29. 2 கொ. 5. 10
28 ரோ. 12. 3
29 யோ. 3. 27. யாக். 1. 17. 1 பே. 4. 10
30 வெளி. 3. 17
31 ரோ. 8. 36. 2 கொ. 4. 11
32 எபி. 10. 33
33 அப். 17. 18
34 2 கொ. 13. 9
35 2 கொ. 4. 8
36 ரோ. 8. 36
37 அப். 23. 2

கைகளினாலே வேலைசெய்து, [1]பாடுபடுகி
றோம்; [2]வையப்பட்டு, ஆசீர்வதிக்கிறோம்;
13 துன்பப்பட்டு, சகிக்கிறோம். தூஷிக்கப்பட்டு,
வேண்டிக்கொள்ளுகிறோம்; இந்நாள்வரைக்
கும் உலகத்தின் குப்பையைப்போலவும்,
[3]எல்லாரும் துடைத்துப்போடுகிற அழுக்
கைப்போலவுமானோம்.
14 உங்களை வெட்கப்படுத்தும்படிக்கு நான்
இவைகளை எழுதவில்லை, [4]நீங்கள் எனக்குப்
பிரியமான பிள்ளைகளென்று உங்களுக்குப்
15 புத்தி சொல்லுகிறேன். கிறிஸ்துவுக்குள் பதி
னாயிரம் உபாத்தியாயர்கள் உங்களுக்கு இருந்
தாலும், தகப்பன்மார் அநேகர் உங்களுக்கு
இல்லையே; [5]கிறிஸ்து இயேசுவுக்குள் சுவிசே
16 ஷத்தினால் நான் உங்களைப் பெற்றேன். ஆகை
யால், [6]என்னைப் பின்பற்றுகிறவர்க ளாகுங்க
ளென்று உங்களுக்குப் புத்தி சொல்லுகிறேன்.
17 இதினிமித்தமாக, எனக்குப் பிரியமும், கர்த்த
ருக்குள் உண்மையுமுள்ள என் குமாரனாகிய
[7]தீமோத்தேயுவை உங்களிடத்தில் அனுப்பி
னேன்; [8]நான் எங்கும் எந்தச்சபையிலும்
போதித்துவருகிறபிரகாரம் கிறிஸ்துவுக்குள்
ளான என் நடக்கைகளை அவன் உங்களுக்கு
18 ஞாபகப்படுத்துவான். நான் உங்களிடத்திற்கு
வருகிறதில்லை என்கிறதாகச் சிலர் இறுமாப்ப
19 டைந்திருக்கிறார்கள். ஆகிலும் கர்த்தருக்குச்
சித்தமானால் [9]நான் சீக்கிரமாய் உங்களிடத்
திற்கு வந்து, [10]இறுமாப்படைந்திருக்கிறவர்
களுடைய பேச்சையல்ல, அவர்களுடைய
20 பெலத்தையே அறிந்துகொள்வேன். தேவ
னுடைய ராஜ்யம் பேச்சிலே அல்ல, [11]பெலத்
21 திலே உண்டாயிருக்கிறது. உங்களுக்கு என்
னவேண்டும்? [12]நான் பிரம்போடு உங்களிடத்
தில் வரவேண்டுமோ? அல்லது அன்போடும்
சாந்தமுள்ள ஆவியோடும் வரவேண்டுமோ?

**5** உங்களுக்குள்ளே விபசாரம் உண்டென்று
பிரசித்தமாய்ச் சொல்லப்படுகிறதே; [13]ஒரு
வன் தன் தகப்பனுடைய மனைவியை வைத்
துக்கொண்டிருக்கிறானே; அது அஞ்ஞானி
களுக்குள்ளும் சொல்லப்படாத விபசாரமா
2 யிருக்கிறதே. இப்படிப்பட்ட காரியஞ்செய்
தவனை நீங்கள் உங்களைவிட்டு [14]நீக்காமலும்
துக்கப்படாமலும், இறுமாப்படைந்திருக்கிறீர்
3 கள். நான் சரீரத்தினாலே உங்களுக்குத் தூரமா
யிருந்தும், [15]ஆவியினாலே உங்களோடேகூட
இருக்கிறவனாய், இப்படிச் செய்தவனைக்கு
4 றித்து நான் கூட இருக்கிறதுபோல, நீங்க
ளும், என்னுடைய ஆவியும், [16]நமது கர்த்தரா
கிய இயேசுகிறிஸ்துவின் அதிகாரத்தோடே
5 கூடிவந்திருக்கையில், அப்படிப்பட்டவனு
டைய [17]ஆவி கர்த்தராகிய இயேசுகிறிஸ்து
வின் நாளிலே இரட்சிக்கப்படும்படி, மாம்சத்
தின் அழிவுக்காக, நம்முடைய கர்த்தராகிய
இயேசுகிறிஸ்துவின் நாமத்தினாலே [18]அவ
னைச் சாத்தானுக்கு ஒப்புக்கொடுக்கவேண்டு
6 மென்று தீர்ப்புச்செய்கிறேன். நீங்கள் மேன்
மை பாராட்டுகிறது [19]நல்லதல்ல; [20]கொஞ்சம்
புளித்தமா பிசைந்தமா முழுவதையும் புளிப்
பாக்குமென்று அறியீர்களா? ஆகையால், நீங் 7
கள் புளிப்பில்லாதவர்களா யிருக்கிறபடியே,
புதிதாய்ப் பிசைந்தமாவா யிருக்கும்படிக்கு,
பழைய புளித்தமாவைப் புறம்பே கழித்துப்
போடுங்கள். [21]ஏனெனில் நம்முடைய பஸ்கா
வாகிய கிறிஸ்து நமக்காக பலியிடப்பட்டிருக்
கிறாரே. ஆதலால் பழைய புளித்தமாவோ 8
டே அல்ல, [22]துர்க்குணம் பொல்லாப்பு என்
னும் புளித்தமாவோடும் அல்ல, துப்புரவு
உண்மை என்னும் புளிப்பில்லாத அப்பத்தோ
டே பண்டிகையை ஆசரிக்கக்கடவோம்.
விபசாரக்காரரோடே கலந்திருக்கக்கூடா 9
தென்று [23]நிருபத்தில் உங்களுக்கு எழுதி
னேன். ஆனாலும், இவ்வுலகத்திலுள்ள விப 10
சாரக்காரர், பொருளாசைக்காரர், கொள்ளைக்
காரர், விக்கிரகாராதனைக்காரர் இவர்களோடு
எவ்வளவும் கலந்திருக்கக்கூடாதென்று நான்
எழுதவில்லை; [24]அப்படியானால் நீங்கள் உல
கத்தைவிட்டு நீங்கிப்போகவேண்டியதாயிருக்
குமே. நான் உங்களுக்கு எழுதினதென்ன 11
வென்றால், [25]சகோதரனென்னப்பட்ட ஒரு
வன் விபசாரக்காரனாயாவது, பொருளாசைக்
காரனாயாவது, விக்கிரகாராதனைக்காரனாயா
வது, உதாசினனாயாவது, வெறியனாயாவது,
கொள்ளைக்காரனாயாவது இருந்தால், அவ
னோடே கலந்திருக்கக்கூடாது; [26]அப்படிப்பட்
டவனுடனே கூடப் புசிக்கவுங்கூடாது. புறம் 12
பே இருக்கிறவர்களைக்குறித்துத் தீர்ப்புச்செய்
கிறது என் காரியமா? [27]உள்ளே இருக்கிறவர்
களைக் குறித்தல்லவோ நீங்கள் தீர்ப்புச்செய்கி
றீர்கள்? புறம்பே இருக்கிறவர்களைக்குறித்து 13
தேவனே தீர்ப்புச்செய்வார். [28]ஆகையால் அந்
தப் பொல்லாதவனை உங்களைவிட்டுத் தள்ளிப்
போடுங்கள்.

உங்களில் ஒருவனுக்கு வேறொருவனோ **6**
டே வழக்குண்டானால், வழக்காடும்படி அவன்
பரிசுத்தவான்களிடத்தில் போகாமல், அநீதக்
காரரிடத்தில் போகத் துணிகிறதென்ன? பரி 2
சுத்தவான்கள் [29]உலகத்தை நியாயந்தீர்ப்பார்க
ளென்று அறியீர்களா? உலகம் உங்களால்
நியாயந்தீர்க்கப்படுவதாயிருக்க, அற்ப வழக்கு
களைத் தீர்க்க நீங்கள் அபாத்திரரா? தேவதூ 3
தர்களையும் நியாயந்தீர்ப்போமென்று அறியீர்க
ளா? [30]அப்படியிருக்க, இந்த ஜீவனுக்கேற்ற
வைகளை நீங்கள் தீர்த்துக்கொள்ளக்கூடாதிருக்
கிறது எப்படி? இந்த ஜீவனுக்கேற்ற வழக்கு 4
கள் உங்களுக்கு இருந்தால், தீர்ப்புச்செய்கிற
தற்கு, [31]சபையில் அற்பமாய் எண்ணப்பட்ட
வர்களை நியமித்துக்கொள்ளுங்கள். உங்க 5
ளுக்கு வெட்கம் உண்டாகும்படி இதைச்
சொல்லுகிறேன். சகோதரனுக்கும் சகோதர
னுக்கும் உண்டான வழக்கைத் தீர்க்கத்தக்க
விவேகி ஒருவனாகிலும் உங்களுக்குள் இல்லை
யா? சகோதரனோடே சகோதரன் வழக்காடுகி 6
றான், அவிசுவாசிகளுக்கு முன்பாகவும் அப்ப
டிச் செய்கிறான். நீங்கள் ஒருவரோடொருவர் 7

1 அப். 20. 34
2 மத். 5. 44. அப். 7. 60
3 புல. 3. 45
4 1 தெச. 2. 11
5 அப். 18. 11. ரோ. 15. 20. கலா. 4. 19. பிலேமோன் 10. யாக். 1. 18
6 11. 1. பிலி. 3. 17. 1 தெச. 1. 6. 2 தெச. 3. 9
7 அப். 19. 22. 1 தீமோ. 1. 2
8 7. 17: 11. 2: 14. 33
9 அப். 18. 21: 19. 21. யாக். 4. 15
10 கலா. 2. 6
11 ரோ. 14. 17. 1 தெச. 1. 5
12 2 கொ. 10. 2: 13. 10
13 உபா. 27. 20. 2 கொ. 7. 12. எபே. 5. 3
14 2 கொ. 7. 7, 10
15 கொலோ. 2. 5
16 மத். 16. 19. யோ. 20. 23. 2 கொ. 2. 10
17 11. 32
18 அப். 26. 18. 1 தீமோ. 1. 20
19 யாக். 4. 16
20 நா. 13. 21. கலா. 5. 9
21 ஏசா. 53. 7. 1 பே. 1. 19. வெளி. 5. 6, 12
22 மத். 16. 6, 12
23 2 கொ. 6. 14. எபே. 5. 11. 2 தெச. 3. 14
24 10. 27. யோ. 17. 15. 1 யோ. 5. 19
25 மத். 18. 17. ரோ. 16. 17. 2 யோ. 10. வச
26 கலா. 2. 12
27 மாற். 4. 11. கொலோ. 4. 5
28 மத். 18. 17
29 தானி. 7. 22. மத். 19. 28. லூக். 14, 15. வச
30 2 பே. 2. 4. யூதா 6. வச
31 5. 12

வழக்காடுகிறது எவ்விதத்திலும் குற்றமாயிருக்
கிறது. [1]அப்படிச் செய்கிறதைவிட நீங்கள்
ஏன் அநியாயத்தைச் சகித்துக்கொள்ளுகிற
தில்லை, ஏன் நஷ்டத்தைப் பொறுத்துக்கொள்
8 கிறதில்லை? நீங்களே அநியாயஞ்செய்கிறீர்
கள், நஷ்டப்படுத்துகிறீர்கள்; [2]சகோதரருக்
9 கும் அப்படிச் செய்கிறீர்களே. அநியாயக்கா
ரர் தேவனுடைய ராஜ்யத்தைச் சுதந்தரிப்ப
தில்லையென்று அறியீர்களா? வஞ்சிக்கப்படா
திருங்கள்; [3]வேசிமார்க்கத்தாரும், விக்கிரகாரா
தனைக்காரரும், விபசாரக்காரரும், சுயபுணர்ச்
10 சிக்காரரும், ஆண்புணர்ச்சிக்காரரும், திருட
டரும், பொருளாசைக்காரரும், வெறியரும்,
உதாசினரும், கொள்ளைக்காரரும் தேவனு
11 டைய ராஜ்யத்தைச் சுதந்தரிப்பதில்லை. உங்க
ளில் [4]சிலர் இப்படிப்பட்டவர்களாயிருந்தீர்
கள்; ஆயினும் கர்த்தராகிய இயேசுவின் நாமத்
தினாலும், நமது தேவனுடைய ஆவியினாலும்
[5]கழுவப்பட்டீர்கள், [6]பரிசுத்தமாக்கப்பட்டீர்
கள், [7]நீதிமான்களாக்கப்பட்டீர்கள்.
12 எல்லாவற்றையும் அநுபவிக்க எனக்கு அதி
காரமுண்டு, [8]ஆகிலும் எல்லாம் தகுதியாயி
ராது; எல்லாவற்றையும் அநுபவிக்க எனக்கு
அதிகாரமுண்டு, ஆகிலும் நான் ஒன்றிற்கும்
13 அடிமைப்படமாட்டேன். வயிற்றுக்குப் போ
ஜனமும் [9]போஜனத்துக்கு வயிறும் ஏற்கும்;
ஆனாலும் தேவன் இதையும் அதையும் அழி
யப்பண்ணுவார். சரீரமோ வேசித்தனத்திற்
கல்ல, [10]கர்த்தருக்கே உரியது; [11]கர்த்தரும்
14 சரீரத்திற்கு உரியவர். தேவன் கர்த்தரை எழுப்
பினாரே, [12]நம்மையும் தமது வல்லமையினாலே
15 எழுப்புவார். உங்கள் சரீரங்கள் கிறிஸ்துவின்
[13]அவயவங்களென்று அறியீர்களா? அப்படி
யிருக்க, நான் கிறிஸ்துவின் அவயவங்களை
வேசியின் அவயவங்களாக்கலாமா? அப்படிச்
16 செய்யலாகாதே. வேசியோடு இசைந்திருக்
கிறவன் அவளுடனே ஒரே சரீரமாயிருக்கிறா
னென்று அறியீர்களா? [14]இருவரும் ஒரே
மாம்சமாயிருப்பார்கள் என்று சொல்லியிருக்
17 கிறதே. அப்படியே கர்த்தரோடிசைந்திருக்
கிறவனும், [15]அவருடனே ஒரே ஆவியாயிருக்
18 கிறான். வேசித்தனத்திற்கு விலகியோடுங்
கள். [16]மனுஷன் செய்கிற எந்தப் பாவமும்
சரீரத்திற்குப் புறம்பாயிருக்கும்; வேசித்தனஞ்
செய்கிறவனோ தன் சுயசரீரத்திற்கு விரோத
19 மாய்ப் பாவஞ்செய்கிறான். உங்கள் சரீரமா
னது நீங்கள் தேவனாலே பெற்றும் உங்களில்
தங்கியும் இருக்கிற [17]பரிசுத்த ஆவியினுடைய
ஆலயமாயிருக்கிறதென்றும், [18]நீங்கள் உங்களு
20 டையவர்களல்லவென்றும் அறியீர்களா? கிர
யத்துக்குக் [19]கொள்ளப்பட்டீர்களே; ஆகை
யால் தேவனுக்கு உடையவைகளாகிய உங்
கள் சரீரத்தினாலும் உங்கள் ஆவியினாலும் தே
வனை மகிமைப்படுத்துங்கள்.

**7** நீங்கள் எனக்கு எழுதின காரியங்களைக்
குறித்து நான் எழுதுகிறதென்னவென்றால்,
ஸ்திரீயைத் தொடாமலிருக்கிறது மனுஷனு
க்கு நல்லது. ஆகிலும் வேசித்தனம் இராதப 2
டிக்கு அவனவன் தன் சொந்த மனைவியையும்,
அவளவள் தன் சொந்தப் புருஷனையும் உடை
யவர்களாயிருக்கவேண்டும். புருஷன் தன் 3
மனைவிக்குச் செய்யவேண்டிய கடமையைச்
செய்யக்கடவன்; [20]அப்படியே மனைவியும் தன்
புருஷனுக்குச் செய்யக்கடவள். மனைவியான 4
வள் தன் சுயசரீரத்திற்கு அதிகாரியல்ல, புரு
ஷனே அதற்கு அதிகாரி; அப்படியே புருஷ
னும் தன் சுயசரீரத்திற்கு அதிகாரியல்ல, மனை
வியே அதற்கு அதிகாரி. உபவாசத்திற்கும் 5
ஜெபத்திற்கும்தடையிராதபடிக்கு [21]இருவரும்
சிலகாலம் பிரிந்திருக்கவேண்டுமென்று சம்ம
தித்தாலன்றி, ஒருவரைவிட்டு ஒருவர் பிரியா
திருங்கள்; உங்களுக்கு விரதத்துவம் இல்லா
மையால் [22]சாத்தான் உங்களைத் தூண்டிவிடா
தபடிக்கு, மறுபடியும் கூடி வாழுங்கள். இதை 6
நான் கட்டளையாகச் சொல்லாமல், [23]யோசனை
யாகச் சொல்லுகிறேன். எல்லா மனுஷரும் 7
[24]என்னைப்போலவே இருக்க விரும்புகிறேன்.
[25]ஆகிலும் அவனவனுக்கு தேவனால் அருளப்
பட்ட அவனவனுக்குரிய வரமுண்டு; அது
ஒருவனுக்கு ஒருவிதமாயும், மற்றொருவனுக்கு
வேறுவிதமாயும் இருக்கிறது.
விவாகமில்லாதவர்களையும், கைம்பெண்க 8
ளையுங்குறித்து நான் சொல்லுகிறது என்ன
வென்றால், அவர்கள் என்னைப்போல இருந்
துவிட்டால் அவர்களுக்கு நலமாயிருக்கும்.
ஆகிலும் அவர்கள் *விரத்தராயிருக்கக்கூடாதி 9
ருந்தால் விவாகம் பண்ணக்கடவர்கள்; [26]வேகி
றதைப்பார்க்கிலும் விவாகம் பண்ணுகிறது
நலம். விவாகம் பண்ணிக்கொண்டவர்களுக்கு 10
நானல்ல, கர்த்தரே கட்டளையிடுகிறதாவது:
[27]மனைவியானவள் தன் புருஷனை விட்டுப்
பிரிந்து போகக்கூடாது. பிரிந்துபோனால் 11
அவள் விவாகமில்லாதிருக்கக்கடவள், அல்
லது புருஷனோடே ஒப்புரவாகக்கடவள்;
புருஷனும் தன் மனைவியைத் தள்ளிவிடக்கூ
டாது. மற்றவர்களைக்குறித்துக் கர்த்தர் அல்ல, 12
[28]நானே சொல்லுகிறதாவது: சகோதரனொருவ
னுடைய மனைவி அவிசுவாசியாயிருந்தும்,
அவனுடனே வாசமாயிருக்க அவளுக்குச் சம்
மதமிருந்தால், அவன் அவளைத் †தள்ளிவிடாதி
ருக்கக்கடவன். அப்படியே ஒரு ஸ்திரீயினு 13
டைய புருஷன் அவிசுவாசியாயிருந்தும், அவ
ளுடனே வாசமாயிருக்க அவனுக்குச் சம்மத
மிருந்தால், அவள் அவனைத் தள்ளிவிடாதி
ருக்கக்கடவள். என்னத்தினாலெனில், அவிசு 14
வாசியான புருஷன் தன் மனைவியால் பரிசுத்
தமாக்கப்படுகிறான். அவிசுவாசியான மனைவி
யும் தன் புருஷனால் பரிசுத்தமாக்கப்படுகி
றாள். இல்லாவிட்டால் உங்கள் பிள்ளைகள்
அசுத்தமாயிருக்குமே; [29]இப்பொழுதோ அவை
கள் பரிசுத்தமாயிருக்கின்றன. ஆகிலும், அவி 15
சுவாசி பிரிந்துபோனால் பிரிந்துபோகட்டும்.
இப்படிப்பட்டவிஷயத்தில், சகோதரனாவது
சகோதரியாவது அடிமைப்பட்டவர்களல்ல.

1 நீதி. 20. 22. மத். 5. 39, 40. ரோ. 12. 17, 19. 1 தெச. 5. 15
2 1 தெச. 4. 6
3 கலா. 5. 19-21. எபே. 5. 4, 5. எபி. 12. 14, 18: 13. 4. வெளி. 22. 15
4 எபே. 2. 1, 2
5 எபி. 10. 22
6 எபி. 2. 11
7 ரோ. 8. 30
8 10. 23
9 மத். 15. 17, 20. ரோ. 14. 17
10 1 தெச. 4. 3. 7
11 எபே. 5. 23. தெச. 4. 3, 7
12 ரோ. 6. 5, 8. எபே. 1. 19, 20
13 ரோ. 12. 5. எபே. 4. 12: 5. 30
14 ஆதி. 2. 24. மத். 19. 5
15 யோ. 17. 21-23. எபே. 4. 4
16 நீதி. 6. 25-32: 7. 24-27. ரோ. 1. 24. 1 தெச. 4. 4
17 2 கொ. 6. 16
18 ரோ. 14. 7, 8
19 அப். 20. 28. 1 பே. 1. 18, 19: 2. 9. வெளி. 5. 9
20 யாத். 21. 10. 1 பே. 3. 7
21 யோவே. 2. 16
22 1 தெச. 3. 5
23 12, 25. 2 கொ. 8. 8: 11. 17
24 9. 5. அப். 26. 29
25 மத். 19. 11, 12
* துறவிகள்
26 1 தீமோ. 5. 14
27 12. 25, 40. மல். 2. 14-16. மத். 19. 6. 9
28 எஸ்றா. 10. 11.
† பிரிந்திராதிருக்கக்கடவன்
29 மல். 2. 15, 16

[1]சமாதானமாயிருக்கும்படிக்கே தேவன் நம்
16 மை அழைத்திருக்கிறார். மனைவியானவளே,
[2]நீ உன் புருஷனை இரட்சிப்பாயோ அல்ல
வோ உனக்கு எப்படித் தெரியும்? புருஷனே,
நீ உன் மனைவியை இரட்சிப்பாயோ அல்ல
17 வோ உனக்கு எப்படித் தெரியும்? தேவன்
அவனவனுக்குப் பகிர்ந்ததெப்படியோ, [3]கர்த்
தர் அவனவனை அழைத்ததெப்படியோ, அப்
படியே அவனவன் நடக்கக்கடவன். [4]எல்
லாச் சபைகளிலேயும் இப்படியே திட்டம்
18 பண்ணுகிறேன். ஒருவன் விருத்தசேதனம்
பெற்றவனாய் அழைக்கப்பட்டிருந்தால், விருத்
தசேதனமில்லாதவனாயிருக்கவகைதேடானாக;
ஒருவன் விருத்தசேதனமில்லாதவனாய் அழை
க்கப்பட்டிருந்தால், [5]விருத்தசேதனம் பெறாதி
19 ருப்பானாக. விருத்தசேதனமும் ஒன்றுமில்லை,
[6]விருத்தசேதனமில்லாமையும் ஒன்றுமில்லை;
[7]தேவனுடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகி
20 றதே காரியம். அவனவன் தான் *அழைக்கப்
பட்ட நிலைமையிலே [8]நிலைத்திருக்கக்கடவன்.
21 அடிமையாய் நீ அழைக்கப்பட்டிருந்தால்,
[9]கவலைப்படாதே; நீ சுயாதீனனாகக் கூடுமா
னால் அதை நலமென்று அநுசரித்துக்கொள்.
22 கர்த்தருக்குள் அழைக்கப்பட்ட அடிமையான
வன் [10]கர்த்தருடைய சுயாதீனனாயிருக்கிறான்;
[11]அப்படியே அழைக்கப்பட்ட சுயாதீனன்
கிறிஸ்துவினுடைய அடிமையாயிருக்கிறான்.
23 நீங்கள் கிரயத்துக்குக் [12]கொள்ளப்பட்டீர்கள்;
24 மனுஷருக்கு அடிமைகளாகாதிருங்கள். சகோ
தரரே, அவனவன் தான் அழைக்கப்பட்ட
நிலைமையிலே [13]தேவனுக்கு முன்பாக நிலைத்தி
ருக்கக்கடவன்.
25 அன்றியும் †கன்னிகைகளைக் குறித்து, [14]கர்
த்தரால் எனக்குக் கட்டளை இல்லை. ஆகிலும்
நான் உண்மையுள்ளவனாயிருக்கிறதற்குக் கர்த்
தரால் இரக்கம்பெற்று, [15]என் அபிப்பிராயத்
26 தைத் தெரியப்படுத்துகிறேன். அதென்னவெ
னில், இப்பொழுது உண்டாயிருக்கிற ‡துன்
பத்தினிமித்தம் [16]விவாகமில்லாமலிருக்கிறது
மனுஷனுக்கு நலமாயிருக்குமென்று எண்ணு
27 கிறேன். நீ மனைவியோடே கட்டப்பட்டிருந்
தால், அவிழ்க்கப்பட வகைதேடாதே; நீ
மனைவி யில்லாதவனாயிருந்தால், மனைவியைத்
28 தேடாதே. நீ விவாகம்பண்ணினாலும் பாவ
மல்ல; [17]கன்னிகை விவாகம்பண்ணினாலும்
பாவமல்ல. ஆகிலும் அப்படிப்பட்டவர்கள்
சரீரத்திலே உபத்திரவப்படுவார்கள்; அதற்கு
29 நீங்கள் தப்பவேண்டுமென்றிருக்கிறேன். மே
லும், சகோதரரே, நான் சொல்லுகிறதென்ன
வெனில், [18]இனிவரும் காலம் குறுகினதான
படியால், மனைவிகளுள்ளவர்கள் மனைவிக
30 ளில்லாதவர்கள்போலவும், அழுகிறவர்கள்
அழாதவர்கள்போலவும், சந்தோஷப்படுகிறவர்
கள் சந்தோஷப்படாதவர்கள்போலவும், கொ
ள்ளுகிறவர்கள் கொள்ளாதவர்கள்போலவும்,
31 இவ்வுலகத்தை அநுபவிக்கிறவர்கள் அதைத்
தகாதவிதமாய் அநுபவியாதவர்கள்போலவும்
இருக்கவேண்டும்; [19]இவ்வுலகத்தின் வேஷம்
கடந்துபோகிறதே. நீங்கள் கவலையற்றவர்க 32
ளாயிருக்க விரும்புகிறேன். [20]விவாகமில்லாத
வன் கர்த்தருக்கு எப்படிப் பிரியமாயிருக்கலா
மென்று, கர்த்தருக்குரியவைகளுக்காகக் கவ
லைப்படுகிறான். விவாகம் பண்ணினவன் தன் 33
மனைவிக்கு எப்படிப் பிரியமாயிருக்கலாமெ
ன்று, உலகத்திற்குரியவைகளுக்காகக் கவலைப்
படுகிறான். அதுபோல, மனைவியானவளுக் 34
கும் கன்னிகைக்கும் வித்தியாசமுண்டு. [21]விவா
கமில்லாதவள் சரீரத்திலும் ஆத்துமாவிலும்
பரிசுத்தமாயிருக்கும்படி, கர்த்தருக்குரியவை
களுக்காகக் கவலைப்படுகிறாள்; விவாகம்பண்
ணினவள் தன் புருஷனுக்கு எப்படிப் பிரிய
மாயிருக்கலாமென்று, உலகத்திற்குரியவைக
ளுக்காகக் கவலைப்படுகிறாள். இதை நான் உங்க 35
ளைக் கண்ணியில் அகப்படுத்தவேண்டுமென்று
சொல்லாமல், உங்களுக்குத் தகுதியாயிருக்கு
மென்றும், நீங்கள் கவலையில்லாமல் கர்த்தரைப்
பற்றிக்கொண்டிருக்கவேண்டுமென்றும், உங்
கள் சுயபிரயோஜனத்துக்காகவே சொல்லுகி
றேன். ஆகிலும் ஒருவன் தன் புத்திரியின் 36
கன்னிகைப் பருவம் கடந்துபோனதினாலே,
அவள் விவாகம் பண்ணாமலிருப்பது அவளுக்
குத் தகுதியல்லவென்றும், அவள் விவாகம்
பண்ணுவது அவசியமென்றும் நினைத்தால்,
அவன் தன் மனதின்படி செய்யக்கடவன்;
அது பாவமல்ல, விவாகம் பண்ணட்டும். ஆயி 37
னும் அதற்கு அவசியத்தைக் காணாமல், தன்
இருதயத்திலே உறுதியுள்ளவனாயும், சுயசித்
தத்தின்படி செய்ய அதிகாரமுள்ளவனாயுமிரு
ந்து, தன் புத்திரியின் கன்னிகைப்பருவத்
தைக் காக்கவேண்டுமென்று தன் இருதயத்
தில் தீர்மானிக்கிறவன் நன்மை செய்கிறான்.
இப்படியிருக்க, அவளை விவாகம்பண்ணிக் 38
கொடுக்கிறவனும் நன்மை செய்கிறான்; [22]கொ
டாமலிருக்கிறவனும் அதிக நன்மை செய்கி
றான். மனைவியானவள் [23]தன் புருஷன் உயி 39
ரோடிருக்குங் காலமளவும் பிரமாணத்தினால்
கட்டப்பட்டிருக்கிறாள்; தன் புருஷன் மரித்த
பின்பு தனக்கு இஷ்டமானவனாயும் [24]கர்த்த
ருக்குட்பட்டவனாயுமிருக்கிற எவனையாகிலும்
விவாகம் பண்ணிக்கொள்ள விடுதலையாயிருக்
கிறாள். ஆகிலும் என்னுடைய அபிப்பிராயத் 40
தின்படி [25]அவள் அப்படியே இருந்துவிட்
டால் பாக்கியவதியாயிருப்பாள். [26]என்னி
டத்திலும் தேவனுடைய ஆவி உண்டென்று
எண்ணுகிறேன்.

விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைக 8
ளைக்குறித்த விஷயத்தில், [27]நம்மெல்லாருக்
கும் அறிவு உண்டென்று நமக்குத் தெரியு
மே. அறிவு இறுமாப்பை உண்டாக்கும், [28]அன்
போ பக்திவிருத்தியை உண்டாக்கும். ஒரு 2
வன் தான் ஏதேனும் ஒன்றை அறிந்தவனெ
ன்று எண்ணிக்கொள்வானானால், [29]ஒன்றையும்
அறியவேண்டியபிரகாரமாக அவன் இன்னும்
அறியவில்லை. தேவனில் அன்புகூருகிறவ 3

1 ரோ. 12. 18; 14. 19. எபி. 12. 14
2 1 பே. 3. 1, 2
3 20–24. வச.
4 4. 17. 2 கொ. 11. 28
5 அப். 15. 1. கலா. 5. 2
6 கலா. 5. 6; 6. 15
7 யோ. 15. 14. 1 யோ. 2. 3
* நியமிக்கப்பட்ட
8 சங். 27. 8
9 எபி. 13. 5
10 யோ. 8. 36. ரோ. 6. 18, 22
11 சங். 116. 16 1 பே. 2. 16
12 6. 20. 1 பே. 1. 18, 19
13 17, 20. வச.
† விவாகமில்லாதவர்களை
14 6, 10, 40. வச. 2 கொ. 8. 8, 10
15 4. 2. 1 தீமோ. 1. 12, 16
‡ குறைபாடு
16 1. 8. வச.
17 1 எபி. 13. 4
18 ரோ. 13. 11. 1 பே. 4. 7. 2 பே. 3. 8, 9
19 சங். 39. 6. யாக். 4. 14. 1 பே. 4. 7. 1 யோ. 2. 17
20 1 தீமோ. 5. 5
21 லூக். 10. 40–42
22 28. வச. எபி. 13. 4
23 ரோ. 7. 2
24 2 கொ. 6. 14
25 25. வச.
26 1 தெச. 4. 8. 2 பே. 3. 15, 16
27 அப். 15. 10, 20, 29. ரோ. 14. 14, 22
28 ஏசா. 47. 10. ரோ. 14. 3, 10
29 ரோ. 11. 25. கலா. 6. 3. 1 தீமோ. 6. 3, 4

னெவனே, [1]அவன் தேவனால் அறியப்பட்
4 டிருக்கிறான். விக்கிரகங்களுக்குப் படைக்கப்
பட்டவைகளைப் புசிக்கிற விஷயத்தைப்பற்றி,
[2]உலகத்திலே விக்கிரகமானது ஒன்றுமில்
லையென்றும் [3]ஒருவரேயன்றி வேறொரு தே
வன் இல்லையென்றும் அறிந்திருக்கிறோம்.
5 வானத்திலேயும் பூமியிலேயும் தேவர்கள் என்
னப்படுகிறவர்கள் உண்டு; [4]இப்படி அநேக
தேவர்களும் அநேக கர்த்தாக்களும் உண்டா
6 யிருந்தாலும், பிதாவாகிய [5]ஒரே தேவன் நமக்
குண்டு, [6]அவராலே சகலமும் உண்டாயிருக்
கிறது; அவருக்கென்று நாமும் உண்டாயிருக்
கிறோம். இயேசுகிறிஸ்து என்னும் [7]ஒரே
கர்த்தரும் நமக்குண்டு; [8]அவர் மூலமாய்ச் சக
லமும் உண்டாயிருக்கிறது, அவர் மூலமாய்
7 நாமும் உண்டாயிருக்கிறோம். ஆகிலும், இந்த
அறிவு எல்லாரிடத்திலும் இல்லை. சிலர் இற்
றையவரைக்கும் விக்கிரகத்தை ஒரு பொரு
ளென்று எண்ணி, விக்கிரகத்துக்குப் படைக்
கப்பட்டதைப் புசிக்கிறார்கள்; [9]அவர்களு
டைய மனச்சாட்சி பலவீனமாயிருப்பதால்
8 அசுசிப்படுகிறது. போஜனமானது நம்மை
தேவனுக்குஉகந்தவர்களாக்கமாட்டாது;[10]என்
னத்தினாலெனில், புசிப்பதினால் நமக்கு ஒரு
மேன்மையுமில்லை, புசியாதிருப்பதினால் நம
9 க்கு ஒரு குறைவுமில்லை. ஆகிலும் இதைக்
குறித்து உங்களுக்கு உண்டாயிருக்கிற [11]அதி
காரம் எவ்விதத்திலும் பலவீனருக்குத் தடுக்க
10 லாகாதபடிக்குப் பாருங்கள். எப்படியெனில்,
அறிவுள்ளவனாகிய உன்னை விக்கிரகக்கோவி
லிலே பந்தியிருக்க ஒருவன் கண்டால், [12]பல
வீனனாயிருக்கிற அவனுடைய மனச்சாட்சி
விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைக
ளைப் புசிப்பதற்குத் துணிவுகொள்ளுமல்ல
11 வா? பலவீனமுள்ள சகோதரன் உன் அறி
வினிமித்தம் கெட்டுப்போகலாமா? [13]அவ
12 னுக்காகக் கிறிஸ்து மரித்தாரே. இப்படிச்
சகோதரருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்து,
[14]பலவீனமுள்ள அவர்களுடைய மனச்சாட்சி
யைப் புண்படுத்துகிறதினாலே, நீங்கள் கிறிஸ்
துவுக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்கிறீர்கள்.
13 ஆதலால் போஜனம் என் சகோதரனுக்கு
இடறலுண்டாக்கினால், [15]நான் என் சகோதர
னுக்கு இடறலுண்டாக்காதபடிக்கு, என்றைக்
கும் மாம்சம் புசியாதிருப்பேன்.

9 *நான் அப்போஸ்தலனல்லவா? நான் சுயா
தீனனல்லவா?[16]நம்முடைய கர்த்தராகிய இயே
சுகிறிஸ்துவை நான் தரிசிக்கவில்லையா? [17]கர்த்
தருக்குள் நீங்கள் என் கிரியையாயிருக்கிறீர்க
2 ளல்லவா? நான் மற்றவர்களுக்கு அப்போஸ்
தலனாயிராவிட்டாலும், உங்களுக்கல்லவோ
அப்போஸ்தலனா யிருக்கிறேன்; [18]கர்த்தருக்
குள் நீங்கள் என் அப்போஸ்தல ஊழியத்
3 திற்கு முத்திரையாயிருக்கிறீர்களே. என்னை
நியாயம் விசாரிக்கிறவர்களுக்கு நான் சொல்
4 லுகிற மாறுத்தரமாவது: புசிக்கவும் குடிக்கவும்
5 [19]எங்களுக்கு அதிகாரமில்லையா? மற்ற அப்
போஸ்தலரும், கர்த்தருடைய சகோதரரும்
கேபாவும் செய்கிறதுபோல, [20]மனைவியாகிய
ஒரு சகோதரியைக் கூட்டிக்கொண்டு திரிய
எங்களுக்கும் அதிகாரமில்லையா? அல்லது, 6
கைத்தொழில் செய்யாதிருக்கிறதற்கு எனக்
கும் பர்னபாவுக்கும் மாத்திரந்தானா [21]அதிகார
மில்லை? எவன் தன் சொந்தப்பணத்தைச் செ 7
லவழித்து, [22]தண்டிலே சேவகம்பண்ணு
வான்? எவன் திராட்சத்தோட்டத்தை உண்
டாக்கி, [23]அதின் கனியில் புசியாதிருப்பான்?
எவன் மந்தையை மேய்த்து, [24]அதின் பாலைச்
சாப்பிடாதிருப்பான்? இவைகளை மனுஷர் 8
வழக்கத்தின்படி சொல்லுகிறேனோ? நியாயப்
பிரமாணமும் இவைகளைச் சொல்லுகிறதில்
லையா? போரடிக்கிற மாட்டை வாய்கட்டா 9
யாக என்று மோசேயின் [25]பிரமாணத்திலே
எழுதியிருக்கிறதே. தேவன் மாடுகளுக்காக
வே கவலையாயிருக்கிறாரோ? நமக்காகத்தான் 10
இதைச் சொல்லுகிறாரோ? [26]உழுகிறவன் நம்
பிக்கையோடே உழவும், போரடிக்கிறவன்
தான் நம்புகிறதில் பங்கடைவேன் என்கிற
நம்பிக்கையோடே போரடிக்கவும் வேண்டிய
தே, ஆகையால், அது நமக்காகவே எழுதியிருக்
கிறது. நாங்கள் உங்களுக்கு ஞானநன்மை 11
களை விதைத்திருக்க, [27]உங்கள் சரீரநன்மை
களை அறுத்தால் அது பெரியகாரியமா? மற்ற 12
வர்கள் உங்களிடத்திலே இந்த அதிகாரத்தைச்
செலுத்தினால், அவர்களிலும் நாங்கள் அதிக
மாய்ச் செலுத்தலாமல்லவா? அப்படியிருந்
தும், கிறிஸ்துவின் சுவிசேஷத்திற்கு யாதொரு
தடையும் உண்டாகாதபடிக்கு, [28]நாங்கள் இந்த
அதிகாரத்தைச் செலுத்தாமல் எல்லாப்பாடும்
படுகிறோம். ஆசாரிய ஊழியஞ்செய்கிறவர் 13
கள் தேவாலயத்திற்குரியவைகளில் புசிக்கிறார்
களென்றும், [29]பலிபீடத்தை அடுத்துப் பணி
விடைசெய்கிறவர்களுக்குப் பலிபீடத்தி லுள்
ளவைகளில் பங்கு உண்டென்றும் அறியீர்
களா? அந்தப்படியே [30]சுவிசேஷத்தை அறி 14
விக்கிறவர்களுக்குச் சுவிசேஷத்தினாலே பி
ழைப்பு உண்டாகவேண்டுமென்று கர்த்தரும்
கட்டளையிட்டிருக்கிறார். அப்படியிருந்தும், 15
[31]நான் இவைகளில் ஒன்றையும் அநுபவிக்க
வில்லை; இப்படி எனக்கு நடக்கவேண்டு
மென்று இவைகளை நான் எழுதுகிறதுமில்லை.
[32]என் மேன்மைபாராட்டலை ஒருவன் அவத்
தமாக்குகிறதைப்பார்க்கிலும் சாகிறது
எனக்கு நலமாயிருக்கும். சுவிசேஷத்தை 16
நான் பிரசங்கித்துவந்தும், மேன்மைபாரா
ட்ட எனக்கு இடமில்லை; [33]அது என்மேல்
விழுந்த கடமையாயிருக்கிறது; சுவிசேஷத்
தை நான் பிரசங்கியாதிருந்தால், எனக்கு
ஐயோ. நான் உற்சாகமாய் அப்படிச் செய் 17
தால் எனக்குப் பலன் உண்டு; [34]உற்சாகமில்
லாதவனாய்ச் செய்தாலும், †உக்கிராண உத்தி
யோகம் எனக்கு ஒப்புவிக்கப்பட்டிருக்கிறதே.
ஆதலால் எனக்குப் பலன் என்ன? நான் சுவி 18
சேஷத்தைப் பிரசங்கிக்கையில் அதைப்பற்றி

1 யாத். 1.7. மத். 7.23. கலா. 4.9. 2 தீமோ. 2.19
2 ஏசா. 41.24
3 உபா. 4.39. ஏசா. 44.8, 24. மாற்.12.29. எபே. 4.6. 1 தீமோ. 2.5.
4 யோ. 10.34, 35
5 மல். 2.10. எபே. 4.6.
6 அப். 17.28. ரோ. 11.36
7 யோ. 13.13. அப். 2.36
8 யோ. 1.2, 3. எபி. 1.2
9 ரோ. 14.14, 23
10 ரோ. 14.17
11 ரோ. 14.13, 20. கலா. 5.13
12 10.28, 32
13 ரோ. 14.15, 20
14 மத். 25.40, 45
15 9.22. ரோ. 14.21. 2 கொ. 11.29
* நான் சுயாதீனனல்லவா, அப்போஸ்தலனல்லவா
16 அப். 9.3, 15, 17
17 3.6; 4.15
18 2 கொ. 3.2; 12.12
19 1 தெச. 2.6. 2 தெச. 3.9
20 மத். 8.14; 13.55. கலா. 1.19
21 2 தெச. 3.8, 9
22 1 தீமோ. 1.18
23 உபா. 20.6. நீதி. 27.18
24 1 பே. 5.2
25 உபா. 25.4. 1 தீமோ. 5.18
26 2 தீமோ. 2.6
27 ரோ. 15.27. கலா. 6.6
28 அப். 20.33. 2 கொ. 11.7-9; 12.14
29 எண். 18.8. உபா. 18.1
30 லூக். 10.7. கலா. 6.6
31 அப். 20.34. 2 தெச. 3.8
32 2 கொ. 11.10
33 எரே. 1.17; 20.9. ரோ. 1.14
34 கலா. 2.7. பிலி. 1.17. கொலோ. 1.25
† 4.2

எனக்கு உண்டாயிருக்கிற அதிகாரத்தை முற்
றிலும் செலுத்தாமல், [1]கிறிஸ்துவின் சுவிசே
ஷத்தைச் செலவில்லாமல் ஸ்தாபிப்பதே என
19 க்குப் பலன். நான் ஒருவருக்கும் அடிமைப்
படாதவனுயிருந்தும், [2]நான் அதிக ஜனங்களை
ஆதாயப்படுத்திக்கொள்ளும்படிக்கு, என்னைத்
தானே எல்லாருக்கும் அடிமையாக்கினேன்.
20 யூதரை ஆதாயப்படுத்திக்கொள்ளும்படிக்கு [3]யூ
தருக்கு யூதனைப்போலவும், நியாயப்பிரமாண
த்துக்குக் கீழ்ப்பட்டவர்களை ஆதாயப்படுத்திக்
கொள்ளும்படிக்கு நியாயப்பிரமாணத்துக்குக்
21 கீழ்ப்பட்டவனைப்போலவுமானேன். நியாயப்
பிரமாண மில்லாதவர்களை ஆதாயப்படுத்திக்
கொள்ளும்படிக்கு [4]அவர்களுக்கு நியாயப்
பிரமாணம் இல்லாதவனைப்போலவுமானேன்.
அப்படியிருந்தும், நான் தேவனுக்குமுன்பாக
நியாயப்பிரமாணமில்லாதவனுயிராமல், கிறி
ஸ்துவின் பிரமாணத்துக்குள்ளானவனுயிருக்
22 கிறேன். பலவீனரை ஆதாயப்படுத்திக்கொள்
ளும்படிக்குப் [5]பலவீனருக்குப் பலவீனனைப்
போலானேன்; [6]எப்படியாகிலும் சிலரை
இரட்சிக்கும்படிக்கு [7]நான் எல்லாருக்கும் எல்
23 லாமானேன். சுவிசேஷத்தில் நான் உடன்
பங்காளியாகும்படிக்கு, அதினிமித்தமே இப்
24 படிச் செய்கிறேன். பந்தயச்சாலையில் ஓடுகிற
வர்களெல்லாரும் ஓடுவார்கள்; ஆகிலும், ஒரு
வனே *பந்தயத்தைப் பெறுவானென்று அறி
யீர்களா? [8]நீங்கள் பெற்றுக்கொள்ளத்தக்கதாக
25 ஓடுங்கள். பந்தயத்திற்குப் போராடுகிற யாவ
ரும் எல்லாவற்றிலேயும் இச்சையடக்கமாயி
ருப்பார்கள். அவர்கள் அழிவுள்ள கிரீடத்தைப்
பெறும்படிக்கு அப்படிச் செய்கிறார்கள், [9]நா
மோ அழிவில்லாத கிரீடத்தைப்பெறும்படிக்கு
26 அப்படிச் செய்கிறோம். ஆதலால் நான் நிச்
சயமில்லாதவனாக ஓடேன்; ஆகாயத்தை
27 அடிக்கிறவனாகச் சிலம்பம் பண்ணேன். மற்
றவர்களுக்குப் பிரசங்கம்பண்ணுகிற நான்தா
னே †ஆகாதவனாய்ப் போகாதபடிக்கு, [10]என்
சரீரத்தை ஒடுக்கிக் ‡கீழ்ப்படுத்துகிறேன்.

**10** இப்படியிருக்க, சகோதரரே, நீங்கள் எவை
களை அறியவேண்டுமென்றிருக்கிறேனென்
றால், [11]நம்முடைய பிதாக்களெல்லாரும் மே
கத்துக்குக் கீழாயிருந்தார்கள், [12]எல்லாரும்
சமுத்திரத்தின் வழியாய் நடந்துவந்தார்கள்.
2 எல்லாரும் மோசேக்குள்ளாக மேகத்தினாலும்
சமுத்திரத்தினாலும் ஞானஸ்நானம்பண்ணப்
3 பட்டார்கள். எல்லாரும் [13]ஒரே ஞானபோஜ
4 னத்தைப் புசித்தார்கள். எல்லாரும் ஒரே
ஞானபானத்தைக் குடித்தார்கள். [14]எப்படியெ
னில் அவர்களோடேகூடச் சென்ற ஞானக்
கல்மலையின் தண்ணீரைக் குடித்தார்கள்; அந்
5 தக் கல்மலை கிறிஸ்துவே. அப்படியிருந்தும்,
அவர்களில் அதிகமானபேர்களிடத்தில் தே
வன் பிரியமாயிருந்ததில்லை; [15]ஆதலால் வனாந்
தரத்திலே அவர்கள் அழிக்கப்பட்டார்கள்.
6 அவர்கள் இச்சித்ததுபோல நாமும் பொல்லாங்
கானவைகளை இச்சியாதபடிக்கு, [16]இவைகள்
நமக்குத் திருஷ்டாந்தங்களாயிருக்கிறது. ஜனங் 7
கள் புசிக்கவும் குடிக்கவும் உட்கார்ந்து விளை
யாட எழுந்திருந்தார்கள் என்று [17]எழுதியிருக்
கிறபடி, அவர்களில் சிலர் விக்கிரகாராதனைக்
காரர் ஆனதுபோல நீங்களும் ஆகாதிருங்கள்.
அவர்களில் சிலர் வேசித்தனம்பண்ணி, ஒரே 8
நாளில் இருபத்து மூவாயிரம்பேர் விழுந்து
போனார்கள்; [18]அதுபோல நாமும் வேசித்தனம்
பண்ணாதிருப்போமாக. அவர்களில் சிலர் 9
§கிறிஸ்துவைப் பரீட்சைபார்த்து, [19]பாம்புக
ளால் அழிக்கப்பட்டார்கள்; அதுபோல நா
மும் கிறிஸ்துவைப் பரீட்சைபாராதிருப்போ
மாக. அவர்களில் சிலர் முறுமுறுத்து, சங் 10
காரக்காரனாலே [20]அழிக்கப்பட்டார்கள்; அது
போல் நீங்களும் முறுமுறுக்காதிருங்கள். இவை 11
களெல்லாம் திருஷ்டாந்தங்களாக அவர்களுக்
குச் சம்பவித்தது; [21]உலகத்தின் முடிவுகாலத்
திலுள்ள நமக்கு எச்சரிப்புண்டாக்கும்படி எழு
தப்பட்டும் இருக்கிறது. இப்படியிருக்க, 12
[22]தன்னை நிற்கிறவனென்று எண்ணுகிறவன்
விழாதபடிக்கு எச்சரிக்கையாயிருக்கக்கடவன்.
மனுஷருக்கு நேரிடுகிற சோதனையேயல்லா 13
மல் வேறே சோதனை உங்களுக்கு நேரிட
வில்லை. தேவன் உண்மையுள்ளவராயிருக்கி
றார்; உங்கள் திராணிக்கு மேலாக நீங்கள்
சோதிக்கப்படுகிறதற்கு அவர் இடங்கொடா
மல், [23]சோதனையைத் தாங்கத்தக்கதாக, சோ
தனையோடுகூட அதற்குத் தப்பிக்கொள்ளும்
படியான போக்கையும் உண்டாக்குவார்.
ஆகையால் எனக்குப் பிரியமானவர்களே, 14
[24]விக்கிரகாராதனைக்கு விலகி ஓடுங்கள். உங் 15
களைப் புத்திமான்களென்று எண்ணிப் பேசு
கிறேன்; [25]நான் சொல்லுகிறதை நீங்களே நிதா
னித்துப்பாருங்கள். நாம் ஆசீர்வதிக்கிற ஆசீ 16
ர்வாதத்தின் பாத்திரம் [26]கிறிஸ்துவினுடைய
இரத்தத்தின் ||ஐக்கியமா யிருக்கிறதல்லவா?
நாம் பிட்கிற அப்பம் [27]கிறிஸ்துவினுடைய சரீ
ரத்தின் ஐக்கியமாயிருக்கிறதல்லவா? அந்த 17
ஒரே அப்பத்தில் நாமெல்லாரும் பங்கு பெறு
கிறபடியால், [28]அநேகரான நாம் ஒரே அப்ப
மும் ஒரே சரீரமுமாயிருக்கிறோம். மாம்சத் 18
தின்படியான இஸ்ரவேலரைப் பாருங்கள்;
[29]பலிகளைப் புசிக்கிறவர்கள் பலிபீடத்தோடே
ஐக்கியமாயிருக்கிறார்களல்லவா? இப்படியிரு 19
க்க, விக்கிரகம் ஒரு பொருளென்றும், [30]விக்கி
ரகத்துக்குப் படைக்கப்பட்டது ஒரு பொரு
ளென்றும் நான் சொல்லுகிறேனோ? அஞ்ஞா 20
னிகள் பலியிடுகிறவைகளை தேவனுக்கு அல்ல,
[31]பேய்களுக்கே பலியிடுகிறார்களென்று சொல்
லுகிறேன்; நீங்கள் பேய்களோடே ஐக்கியமா
யிருக்க எனக்கு மனதில்லை. நீங்கள் கர்த்தரு 21
டைய பாத்திரத்திலும் பேய்களுடைய பாத்தி
ரத்திலும் பானம்பண்ணக்கூடாதே, [32]நீங்கள்
கர்த்தருடைய போஜனபந்திக்கும் பேய்களு
டைய போஜனபந்திக்கும் பங்குள்ளவர்களா
யிருக்கக்கூடாதே. நாம் கர்த்தருக்கு எரிச்சலை 22
மூட்டலாமா? [33]அவரிலும் நாம் பலவான்களா?

1 2 கொ. 4. 5: 11. 7
2 ரோ. 1. 14. கலா. 5. 13
3 அப். 16. 3: 21. 23–26
4 7. 22
5 ரோ. 15. 1. 2 கொ. 11. 29
6 ரோ. 11. 14
7 10. 33
* பந்தயப்பொருளை
8 பிலி. 2. 16: 3. 14. 1 தீமோ. 6. 12. 2 தீமோ. 2. 5
9 2 தீமோ. 4. 8. யாக். 1. 12. 1 பே. 5. 4. வெளி. 2. 10: 3. 11
† தகாதவன் = அபாத்திரன்
10 ரோ. 6. 18. 19: 8. 13. 2 கொ. 13. 5, 6 கொலோ. 3. 5
‡ வசப்படுத்துகிறேன்
11 யாத். 13. 21, 22. எண். 9. 18–22
12 யாத். 14. 19–22, 29
13 யாத். 16. 15, 35. நெகே. 9. 15, 20. சங். 78. 24, 25
14 யாத். 17. 6 எண். 20. 11
15 எண். 14. 29–35: 26. 64. 65. எபி. 3. 17. யூதா 5. வச
16 எண். 11. 4, 33, 34
17 யாத். 32. 6
18 எண். 25. 1–9. வெளி. 2. 14
§ கர்த்தரை
19 யாத். 17. 2, 7. எண். 21. 6
20 எண். 14. 2, 29. 2 சாமு. 24. 16
21 ரோ. 15. 4. பிலி. 4. 5. எபி. 10. 25, 37. 1 யோ. 2. 18
22 நீதி. 28. 14. ரோ. 11. 20
23 தானி. 3. 17. யாக். 5. 11. 2 பே. 2. 9
24 2 கொ. 6. 17. 1 யோ. 5. 21
25 8. 1
26 மத். 26. 26–28
|| சம்பந்தம் 17. வச. காண்க
27 அப். 2. 42, 46: 11. 23, 24
28 12. 27. ரோ. 12. 5
29 9. 13. ரோ. 4. 1, 12. கலா. 6. 16
30 8. 4
31 லேவி. 17. 7. உபா. 32. 17. சங். 106. 37. வெளி. 9. 20
32 உபா. 32. 38. 2 கொ. 6. 15, 16
33 உபா. 32. 21. யோபு 9. 4. எசே. 22. 14

23 எல்லாவற்றையும் அநுபவிக்க எனக்கு அதி
காரமுண்டு, [1]ஆகிலும் எல்லாம் தகுதியாயி
ராது; எல்லாவற்றையும் அநுபவிக்க எனக்கு
அதிகாரமுண்டு, ஆகிலும் எல்லாம் பக்திவி
24 ருத்தியை உண்டாக்காது. ஒவ்வொருவனும்
தன் சுயபிரயோஜனத்தைத் தேடாமல், [2]பிற
னுடைய பிரயோஜனத்தைத் தேடக்கடவன்.
25 கடையிலே விற்கப்படுகிற எதையும் வாங்கிப்
புசியுங்கள்; [3]மனச்சாட்சியினிமித்தம் நீங்கள்
26 ஒன்றையும் விசாரிக்கவேண்டியதில்லை. பூமி
27 யும் அதின் [4]நிறைவும் கர்த்தருடையது. அன்
றியும் அவிசுவாசிகளில் ஒருவன் உங்களை
விருந்துக்கு அழைக்கும்போது, போக உங்க
ளுக்கு மனதிருந்தால், [5]மனச்சாட்சியினிமித்
தம் ஒன்றையும் விசாரியாமல், உங்கள்முன்
28 வைக்கப்படுகிற எதையும் புசியுங்கள். ஆயி
னும் இது விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்
டதென்று ஒருவன் உங்களுக்குச் சொன்னால்,
[6]அப்படி அறிவித்தவனிமித்தமும் மனச்சாட்
சியினிமித்தமும் புசியாதிருங்கள்; பூமியும்
29 அதின் நிறைவும் கர்த்தருடையது. உன்னு
டைய மனச்சாட்சியைக்குறித்து நான் இப்ப
டிச் சொல்லாமல், மற்றொருவனுடைய மனச்
சாட்சியைக்குறித்தே சொல்லுகிறேன். [7]என்
சுயாதீனம் மற்றொருவனுடைய மனச்சாட்சி
யினாலே குற்றமாய் எண்ணப்படவேண்டுவ
30 தென்ன? மேலும் நான் அதை ஸ்தோத்திரிப்
புடனே அநுபவித்தால், [8]ஸ்தோத்திரித்து
அநுபவிக்கிறபொருளைக்குறித்துநான் தூஷிக்
31 கப்படுவானேன்? ஆகையால் நீங்கள் புசித்தா
லும், குடித்தாலும், எதைச் செய்தாலும், [9]எல்
லாவற்றையும் தேவனுடைய மகிமைக்கென்று
32 செய்யுங்கள். நான் என் சுயபிரயோஜனத்
தைத் தேடாமல், அநேகருடைய பிரயோ
ஜனத்தைத் தேடி, [10]அவர்கள் இரட்சிக்கப்ப
டும்படிக்கு, எவ்விதத்திலும் எல்லாருக்கும்
33 பிரியமாய் நடக்கிறதுபோல; நீங்களும் யூத
ருக்கும், கிரேக்கருக்கும், தேவனுடைய
சபைக்கும், [11]இடறலற்றவர்களாயிருங்கள்.
11 நான் கிறிஸ்துவைப் பின்பற்றுகிறதுபோல,
[12]நீங்கள் என்னைப் பின்பற்றுகிறவர்களாயி
ருங்கள்.
2 சகோதரரே, [13]நீங்கள் எல்லாவற்றிலும்
என்னை நினைத்துக்கொண்டு, நான் உங்களு
க்கு ஒப்புவித்தபடி நீங்கள் கட்டளைகளைக்
கைக்கொண்டு வருகிறதினிமித்தம் உங்களைப்
3 புகழுகிறேன். ஒவ்வொரு [14]புருஷனுக்கும்
கிறிஸ்து தலையாயிருக்கிறாரென்றும், [15]ஸ்திரீக்
குப் புருஷன் தலையாயிருக்கிறானென்றும்,
[16]கிறிஸ்துவுக்கு தேவன் தலையாயிருக்கிறா
ரென்றும், நீங்கள் அறியவேண்டுமென்று
4 விரும்புகிறேன். ஜெபம் பண்ணுகிறபோதா
வது, தீர்க்கதரிசனஞ் சொல்லுகிறபோதாவது,
[17]தன் தலையை மூடிக்கொண்டிருக்கிற எந்தப்
புருஷனும் தன் தலையைக் கனவீனப்படுத்து
5 கிறான். ஜெபம் பண்ணுகிறபோதாவது, தீர்க்
கதரிசனஞ் சொல்லுகிறபோதாவது, [18]தன்
தலையை மூடிக்கொள்ளாதிருக்கிற எந்த ஸ்திரீ
யும் தன் தலையைக் கனவீனப்படுத்துகிறாள்;
அது அவளுக்குத் தலை சிரைக்கப்பட்டதுபோ
லிருக்குமே. ஸ்திரீயானவள் முக்காடிட்டுக் 6
கொள்ளாவிட்டால் தலைமயிரையும் கத்தரித்
துப் போடக்கடவள்; [19]தலைமயிர் கத்தரிக்கப்
படுகிறதும் சிரைக்கப்படுகிறதும் ஸ்திரீக்கு
வெட்கமானால் முக்காடிட்டுக்கொண்டிருக்கக்
கடவள். புருஷனானவன் [20]தேவனுடைய 7
சாயலும் மகிமையுமாயிருக்கிறபடியால், தன்
தலையை மூடிக்கொள்ள வேண்டுவதில்லை;
ஸ்திரீயானவள் புருஷனுடைய மகிமையா
யிருக்கிறாள். புருஷன் ஸ்திரீயிலிருந்து 8
தோன்றினவனல்ல, [21]ஸ்திரீயே புருஷனிலி
ருந்து தோன்றினவள். புருஷன் ஸ்திரீக்கா 9
கச் சிருஷ்டிக்கப்பட்டவனல்ல, ஸ்திரீயே
புருஷனுக்காகச் சிருஷ்டிக்கப் பட்டவள்.
ஆகையால் தூதர்களினிமித்தம் ஸ்திரீயான 10
வள் தலையின்மேல் முக்காடிட்டுக்கொள்ள
வேண்டும். ஆகிலும் கர்த்தருக்குள் ஸ்திரீயில் 11
லாமல் புருஷனுமில்லை, [22]புருஷனில்லாமல்
ஸ்திரீயுமில்லை. ஸ்திரீயானவள் புருஷனிலி 12
ருந்து தோன்றுகிறதுபோல, புருஷனும் ஸ்தி
ரீயினால் தோன்றுகிறான்; [23]சகலமும் தேவ
னால் உண்டாயிருக்கிறது. ஸ்திரீயானவள் 13
தேவனை நோக்கி ஜெபம்பண்ணுகையில், தன்
தலையை மூடிக்கொள்ளாமலிருக்கிறது இலட்
சணமாயிருக்குமோ என்று உங்களுக்குள்
ளே நிதானித்துக்கொள்ளுங்கள். புருஷன் 14
மயிரை நீளமாய் வளர்க்கிறது அவனுக்கு கன
வீனமாயிருக்கிறதென்றும், ஸ்திரீ தன் மயி 15
ரை நீளமாய் வளர்க்கிறது அவளுக்கு மகிமை
யாயிருக்கிறதென்றும் சுபாவமே உங்களுக்
குப் போதிக்கிறதில்லையா? தலைமயிர் அவ
ளுக்கு முக்காடாகக் கொடுக்கப்பட்டிருக்கிற
தே. ஆகிலும் ஒருவன் வாக்குவாதஞ் செய்ய 16
மனதாயிருந்தால், [24]எங்களுக்கும், தேவனு
டைய சபைகளுக்கும், அப்படிப்பட்ட வழக்க
மில்லையென்று அறியக்கடவன்.
உங்களைப் புகழாமல் இதைக்குறித்து உங் 17
களுக்குக் கட்டளை கொடுக்கிறேன்; நீங்கள்
கூடிவருதல்நன்மைக்கேதுவாயிராமல்,தீமைக்
கேதுவாயிருக்கிறதே. முதலாவது, நீங் 18
கள் சபையிலே கூடிவந்திருக்கும்போது,
[25]உங்களில் பிரிவினைகள் உண்டென்று கேள்
விப்படுகிறேன்; அதில் *சிலவற்றை நம்பு
கிறேன். உங்களில் உத்தமர்கள் இன்னாரெ 19
ன்று வெளியாகும்படிக்கு [26]மார்க்கபேதகங்
களும் உங்களுக்குள்ளே உண்டாயிருக்கவே
ண்டியதே. நீங்கள் ஓரிடத்தில் கூடிவரும் 20.
போது, அவனவன் தன்தன் சொந்த போ
ஜனத்தை முந்திச் சாப்பிடுகிறான்; ஒருவன்
பசியாயிருக்கிறான், [27]ஒருவன் வெறியாயிருக்
கிறான். இப்படிச் செய்கிறது கர்த்தருடைய 21
ராப்போஜனம் பண்ணுதலல்லவே. புசிக்கிற 22
தற்கும் குடிக்கிறதற்கும் உங்களுக்கு வீடுகள்
இல்லையா? [28]தேவனுடைய சபையை அசட்

[1] 6. 12
[2] ரோ. 15. 1, 2. பிலி. 2. 4, 21
[3] 1 தீமோ. 4. 4
[4] உபா. 10. 14. சங். 24. 1: 50. 12
[5] ஐச. 10. 7
[6] 8. 10, 12
[7] ரோ. 14. 16
[8] ரோ. 14. 6
[9] கொலோ. 3. 17. 1 பே. 4. 11
[10] 9. 19, 22. ரோ. 15. 2
[11] 8. 13. ரோ. 14. 13. 2 கொ. 6. 3
[12] எபே. 5. 1. பிலி. 3. 17. 1 தெச. 1. 6. 2 தெச. 3. 9
[13] 4. 17. ஐா. 1. 6. 2 தெச. 2. 15
[14] எபே. 5. 23
[15] ஆதி. 3. 16 1. பே. 3. 1, 5, 6
[16] 15. 27, 28. பேர. 14. 28
[17] 12. 10, 28: 14 1. ஞ
[18] அப். 21. 9
[19] எண். 5. 18. உபா. 21. 12
[20] ஆதி. 5. 1
[21] ஆதி. 2. 18. 22, 23
[22] கலா. 3. 28
[23] ரோ. 11. 36
[24] 1 தீமோ. 6. 4
[25] 1. 11, 12
* பாதி
[26] மத். 18. 7. லூ. 2. 34: 17. 1. அப். 20. 30. 2 பே. 2. 1, 2
[27] 2 பே. 2. 13. யூதா 12. ...
[28] 10. 32

டைபண்ணி, [1]இல்லாதவர்களை வெட்கப்
படுத்துகிறீர்களா? உங்களுக்கு நான் என்ன
சொல்லுவேன்? இதைக்குறித்து உங்களைப்
23 புகழ்வேனோ? புகழேன். நான் உங்களுக்கு
ஒப்புவித்ததைக் [2]கர்த்தரிடத்தில் பெற்றுக்
கொண்டேன்; என்னவெனில், [3]கர்த்தராகிய
இயேசு தாம் காட்டிக்கொடுக்கப்பட்ட அன்று
24 ராத்திரியிலே அப்பத்தை எடுத்து, ஸ்தோத்
திரம்பண்ணி, அதைப் பிட்டு: நீங்கள் வாங்
கிப் புசியுங்கள், இது உங்களுக்காகப் பிட்கப்
படுகிற என்னுடைய சரீரமாயிருக்கிறது;
என்னை நினைவுகூரும்படி இதைச் செய்யுங்
25 கள் என்றார். போஜனம்பண்ணினபின்பு,
அவர் அந்தப்படியே பாத்திரத்தையும் எடு
த்து: இந்தப் பாத்திரம் என் இரத்தத்தினாலா
கிய புதிய உடன்படிக்கையாயிருக்கிறது; நீங்
கள் இதைப் பானம் பண்ணும்போதெல்லாம்
என்னை நினைவுகூரும்படி இதைச் செய்யுங்
26 கள் என்றார். ஆகையால் நீங்கள் இந்த அப்
பத்தைப் புசித்து, இந்தப் பாத்திரத்தில் பா
னம் பண்ணும்போதெல்லாம் கர்த்தர் வருமள
வும் [4]அவருடைய மரணத்தைத் *தெரிவிக்
27 கிறீர்கள். இப்படியிருக்க, எவன் அபாத்திர
மாய்க் கர்த்தருடைய அப்பத்தைப் புசித்து,
அவருடைய பாத்திரத்தில் பானம் பண்ணு
கிறானோ, [5]அவன் கர்த்தருடைய சரீரத்தை
யும் இரத்தத்தையும் குறித்துக் குற்றமுள்ள
28 வனாயிருப்பான். எந்த மனுஷனும் தன்னைத்
தானே சோதித்தறிந்து, [6]இந்த அப்பத்தில்
புசித்து, இந்தப் பாத்திரத்தில் பானம்பண்
29 ணக்கடவன். என்னத்தினாலெனில், அபாத்
திரமாய்ப் போஜனபானம் பண்ணுகிறவன்,
கர்த்தருடைய சரீரம் இன்னதென்று நிதானி
த்து அறியாததினால், [7]தனக்கு ஆக்கினைத்
தீர்ப்பு வரும்படி போஜனபானம் பண்ணுகி
30 றான். இதினிமித்தம், உங்களில் அநேகர்
பலவீனரும் வியாதியுள்ளவர்களுமா யிருக்கி
றார்கள்; அநேகர் நித்திரையும் அடைந்திருக்
31 கிறார்கள். நம்மை நாமே நிதானித்து [8]அறிந்
32 தால் நாம் நியாயந்தீர்க்கப்படோம். நாம்
நியாயந்தீர்க்கப்படும்போது உலகத்தோடே
ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படாதபடிக்கு,
33 [9]கர்த்தராலே சிட்சிக்கப்படுகிறோம். ஆகை
யால் என் சகோதரரே, நீங்கள் போஜனம்
பண்ணக் கூடிவரும்போது, ஒருவருக்காக
34 ஒருவர் காத்திருங்கள். நீங்கள் ஆக்கினைக்
கேதுவாகக் கூடிவராதபடிக்கு, ஒருவனுக்குப்
பசியிருந்தால் வீட்டிலே சாப்பிடக்கடவன்.
[10]மற்றக் காரியங்களை நான் வரும்போது திட்
டம் பண்ணுவேன்.

12 அன்றியும், சகோதரரே, †ஆவிக்குரிய
வரங்களைக்குறித்து நீங்கள் அறியாதிருக்க
2 எனக்கு மனதில்லை. நீங்கள் அஞ்ஞானிக
ளாயிருந்தபோது ஏவப்பட்டபடியே, [11]ஊமை
யான விக்கிரகங்களிடத்தில் மனதைச் செ
லுத்தினீர்களென்று உங்களுக்குத் தெரியுமே.
3 ஆதலால், தேவனுடைய ஆவியினாலே பேசு
கிற எவனும் இயேசுவைச் [12]சபிக்கப்பட்டவ
னென்று சொல்லமாட்டானென்றும், பரி
சுத்த ஆவியினாலேயன்றி இயேசுவைக் [13]கர்த்த
ரென்று, ஒருவனும் சொல்லக்கூடாதென்
றும், உங்களுக்குத் தெரிவிக்கிறேன்.
வரங்களில் வித்தியாசங்கள் உண்டு, [14]ஆவி 4
யானவர் ஒருவரே. ஊழியங்களிலேயும் வித் 5
தியாசங்கள் உண்டு, [15]கர்த்தர் ஒருவரே. கிரி 6
யைகளிலேயும் வித்தியாசங்கள் உண்டு, [16]எல்
லாருக்குள்ளும் எல்லாவற்றையும் நடப்பிக்கிற
தேவன் ஒருவரே. ஆவியினுடைய ‡அநுக் 7
கிரகம் [17]அவனவனுடைய பிரயோஜனத்திற்
கென்று அளிக்கப்பட்டிருக்கிறது. எப்படி 8
யெனில், ஒருவனுக்கு [18]ஆவியினாலே [19]ஞா
னத்தைப் போதிக்கும் வசனமும், [20]வேறொரு
வனுக்கு அந்த ஆவியினாலேயே அறிவை
உணர்த்தும் வசனமும், வேறொருவனுக்கு 9
அந்த ஆவியினாலேயே [21]விசுவாசமும், வே
றொருவனுக்கு அந்த ஆவியினாலேயே [22]குண
மாக்கும் வரங்களும், வேறொருவனுக்கு 10
[23]அற்புதங்களைச் செய்யும் சக்தியும், [24]வே
றொருவனுக்குத் தீர்க்கதரிசனம் உரைத்தலும்,
[25]வேறொருவனுக்கு ஆவிகளைப் பகுத்தறித
லும், [26]வேறொருவனுக்குப் பற்பல பாஷைக
ளைப் பேசுதலும், வேறொருவனுக்குப் பாஷை
களை வியாக்கியானம்பண்ணுதலும் அளிக்
கப்படுகிறது. இவைகளையெல்லாம் அந்த 11
ஒரே ஆவியானவர் நடப்பித்து, [27]தமது சித்
தத்தின்படியே அவனவனுக்குப் பகிர்ந்து
கொடுக்கிறார்.
எப்படியெனில், சரீரம் ஒன்று, அதற்கு 12
அவயவங்கள் அநேகம்; ஒரே சரீரத்தின்
அவயவங்களெல்லாம் அநேகமாயிருந்தும், சரீ
ரம் ஒன்றாகவேயிருக்கிறது; [28]அந்தப்பிரகார
மாகக் கிறிஸ்துவும் இருக்கிறார். நாம் யூத 13
ராயினும், கிரேக்கராயினும், அடிமைகளாயி
னும், சுயாதீனராயினும், [29]எல்லாரும் ஒரே
ஆவியினாலே ஒரே சரீரத்திற்குள்ளாக ஞான
ஸ்நானம் பண்ணப்பட்டு, [30]எல்லாரும் ஒரே
ஆவிக்குள்ளாகவே தாகந்தீர்க்கப்பட்டோம்.
சரீரமும் ஒரே அவயவமாயிராமல் அநேக 14
அவயவங்களாயிருக்கிறது. காலானது நான் 15
கையாயிராதபடியினாலே, நான் சரீரத்தின்
அவயவமல்ல வென்றால், அதினாலே அது
சரீரத்தின் அவயவமாயிராதோ? காதானது 16
நான் கண்ணாயிராதபடியினாலே, நான் சரீரத்
தின் அவயவமல்லவென்றால், அதினாலே
அது சரீரத்தின் அவயவமாயிராதோ? சரீரம் 17
முழுவதும் கண்ணானால், செவி எங்கே? அது
முழுவதும் செவியானால், மோப்பம் எங்கே?
தேவன் தமது சித்தத்தின்படி [31]அவயவங் 18
கள் ஒவ்வொன்றையும் சரீரத்திலே வைத்தார்.
அவையெல்லாம் ஒரே அவயவமாயிருந்தால், 19
சரீரம் எங்கே? அவயவங்கள் அநேகமாயி 20
ருந்தும், சரீரம் ஒன்றே. கண்ணானது கை 21
யைப் பார்த்து: நீ எனக்கு வேண்டுவதில்லை
யென்றும்; தலையானது கால்களை நோக்கி: நீங்

[1] யாக். 2. 6
[2] 15. 3. கலா. 1. 1, 11, 12
[3] மத். 26. 26. மாற். 14.22. லூக். 22.19
[4] யோ. 14. 3: 21. 22. அப். 1. 11 1 தெச. 4. 16. வெளி. 1.7: 22.20
* கூறுகிறீர்கள்
[5] 10. 21. யோ. 6. 51, 63, 64: 13. 27
[6] 2 கொ. 13. 5. கலா. 6. 4. 1 யோ. 3. 20, 21
[7] ரோ. 13. 2
[8] 1 யோ. 1. 9
[9] சங். 94. 12, 13. எபி. 12. 5–11
[10] 4. 19
† ஞானவரங்கள். 14. 1, 37
[11] எபே. 2. 11, 12. 1 தெச. 1. 9
[12] மாற். 9.30. 1 யோ. 4. 2, 3
[13] மத். 16. 17. யோ. 15. 26. 2 கொ. 3. 5
[14] ரோ. 12. 4. ஆ எபி. 2. 4. 1 பே. 4. 10
[15] ரோ. 12. 4, ஆ
[16] எபே. 1. 23
‡ விளக்கம்=வரங்கள்
[17] எபே. 4. 7. 1 பே. 4. 10, 11
[18] ஏசா. 11. 2, 3
[19] 2. 6, 7
[20] 13. 2. 2 கொ. 8. 7
[21] எபே. 2. 8.
[22] மாற். 16. 18. யாக். 5. 14
[23] மாற். 16. 17. கலா. 3. 5
[24] ரோ. 12. 6
[25] 14. 29. 1 யோ. 4. 1
[26] அப். 2. 4: 10. 46
[27] ரோ. 12. 6, எபே. 4. 7
[28] 27. ஏச. கலா. 3. 16
[29] யோ. 1. 16. எபே. 4. 5
[30] யோ. 7. 37–39
[31] 11, 28. ஏச. ரோ. 12. 3

கள் எனக்கு வேண்டுவதில்லையென்றும் சொல்
22 லக்கூடாது. சரீர அவயவங்களில் [1]பலவீன
முள்ளவைகளாய்க் காணப்படுகிறவைகளே
23 மிகவும் *வேண்டியவைகளாயிருக்கிறது. மே
லும், சரீர அவயவங்களில் கனவீனமாய்க் காண
ப்படுகிறவைகளுக்கே அதிக கனத்தைக் கொ
டுக்கிறோம்; நம்மில் இலட்சணமில்லாதவை
24 களே அதிக அலங்காரம் பெறும்; நம்மில் இல
ட்சணமுள்ளவைகளுக்கு அலங்கரிப்பு வேண்
25 டியதில்லை. சரீரத்திலே பிரிவினையுண்டாயி
ராமல், அவயவங்கள் ஒன்றைக்குறித்து ஒன்று
கவலையாயிருக்கும்படிக்கு, தேவன் கனத்தில்
குறைவுள்ளதற்கு அதிக கனத்தைக் கொடுத்து,
26 இப்படிச் சரீரத்தை அமைத்திருக்கிறார். ஆத
லால் ஒரு அவயவம் பாடுபட்டால் எல்லா
அவயவங்களும் கூடப் பாடுபடும்; ஒரு அவய
வம் மகிமைப்பட்டால் எல்லா அவயவங்க
27 ளும் கூடச் சந்தோஷப்படும். நீங்களே கிறி
ஸ்துவின் சரீரமாயும், [2]தனித்தனியே அவய
28 வங்களாயுமிருக்கிறீர்கள். தேவனானவர் சபை
யிலே முதலாவது [3]அப்போஸ்தலரையும், இர
ண்டாவது [4]தீர்க்கதரிசிகளையும், மூன்றாவது
[5]போதகர்களையும், பின்பு [6]அற்புதங்களையும்,
பின்பு [7]குணமாக்கும் வரங்களையும், [8]ஊழி
யங்களையும், [9]ஆளுகைகளையும், [10]பலவித
29 பாஷைகளையும் ஏற்படுத்தினார். எல்லாரும்
அப்போஸ்தலர்களா? எல்லாரும் தீர்க்கதரிசி
களா? எல்லாரும் போதகர்களா? எல்லாரும்
30 அற்புதங்களைச் செய்கிறவர்களா? எல்லாரும்
குணமாக்கும் வரங்களுடையவர்களா? எல்லா
ரும் அந்நியபாஷைகளைப் பேசுகிறார்களா?
எல்லாரும் வியாக்கியானம்பண்ணுகிறார்களா?
31 இப்படியிருக்க, [11]முக்கியமான வரங்களை நாடு
ங்கள்; [12]இன்னும் அதிக மேன்மையான வழி
யையும் உங்களுக்குக் காண்பிக்கிறேன்.

13 நான் மனுஷர் பாஷைகளையும் [13]தூதர்பா
ஷைகளையும் பேசினாலும், [14]அன்பு எனக்
கிராவிட்டால், சத்தமிடுகிற வெண்கலம்போல
வும், ஓசையிடுகிற கைத்தாளம்போலவும் இரு
2 ப்பேன். நான் தீர்க்கதரிசன [15]வரத்தை உடை
யவனாயிருந்து, சகல ரகசியங்களையும், சகல
அறிவையும் அறிந்தாலும்; [16]மலைகளைப் பேர்க்
கத்தக்கதாக சகல விசுவாசமுமுள்ளவனாயிருந்
தாலும், அன்பு எனக்கிராவிட்டால் நான்
3 ஒன்றுமில்லை. எனக்கு உண்டான யாவற்
றையும் நான் [17]அன்னதானம்பண்ணினாலும்,
[18]என் சரீரத்தைச் சுட்டெரிக்கப்படுவதற்குக்
கொடுத்தாலும், அன்பு எனக்கிராவிட்டால்
4 எனக்குப் பிரயோஜனம் ஒன்றுமில்லை. அன்பு
நீடிய [19]சாந்தமும் தயவுமுள்ளது; [20]அன்புக்
குப் பொறாமையில்லை; அன்பு தன்னைப் புக
5 ழாது, [21]இறுமாப்பாயிராது, அயோக்கியமா
னதைச் செய்யாது, [22]தற்பொழிவை நாடாது,
6 [23]சினமடையாது, தீங்கு நினையாது, அநியா
யத்தில் [24]சந்தோஷப்படாமல், சத்தியத்தில்
7 [25]சந்தோஷப்படும். சகலத்தையும் [26]தாங்கும்,
சகலத்தையும் [27]விசுவாசிக்கும், சகலத்தையும்
[28]நம்பும், சகலத்தையும் [29]சகிக்கும். அன்பு 8
ஒருக்காலும் ஒழியாது. தீர்க்கதரிசனங்களா
னாலும் ஒழிந்துபோம், அந்நிய பாஷைகளா
னாலும் ஓய்ந்துபோம், அறிவானாலும் ஒழிந்து
போம். நம்முடைய அறிவு குறைவுள்ளது, 9
[30]நாம் தீர்க்கதரிசனஞ் சொல்லுதலும் குறை
வுள்ளது. நிறைவானது வரும்போது [31]குறை 10
வானது ஒழிந்துபோம். நான் குழந்தையா 11
யிருந்தபோது குழந்தையைப்போலப் பேசி
னேன், குழந்தையைப்போலச் சிந்தித்தேன்,
குழந்தையைப்போல யோசித்தேன்; நான்
புருஷனானபோதோ குழந்தைக் கேற்றவை
களை ஒழித்துவிட்டேன். இப்பொழுது †கண் 12
ணாடியிலே [32]நிழலாட்டமாய்ப் பார்க்கிறோம்,
அப்பொழுது முகமுகமாய்ப் பார்ப்போம்;
இப்பொழுது நான் குறைந்த அறிவுள்ளவன்,
அப்பொழுது நான் அறியப்பட்டிருக்கிறபடி
யே அறிந்துகொள்ளுவேன். இப்பொழுது 13
விசுவாசம், [33]நம்பிக்கை, அன்பு இம்மூன்றும்
நிலைத்திருக்கிறது; இவைகளில் அன்பே
பெரியது.

அன்பை நாடுங்கள்; [34]ஞானவரங்களை 14
யும் விரும்புங்கள்; விசேஷமாய்த் ‡தீர்க்கதரி
சன வரத்தை விரும்புங்கள். ஏனெனில், 2
[35]அந்நிய பாஷையில் பேசுகிறவன், ஆவியி
னாலே இரகசியங்களைப் பேசினாலும், அவன்
பேசுகிறதை ஒருவனும் அறியாதிருக்கிறபடி
யினாலே, அவன் மனுஷரிடத்தில் பேசா
மல், தேவனிடத்தில் பேசுகிறான். தீர்க்கதரி 3
சனஞ் சொல்லுகிறவனோ மனுஷருக்கு பக்தி
விருத்தியும், புத்தியும், ஆறுதலும் உண்டாகத்
தக்கதாகப் பேசுகிறான். அந்நிய பாஷையில் 4
பேசுகிறவன் தனக்கே பக்திவிருத்தி உண்டா
கப் பேசுகிறான்; தீர்க்கதரிசனஞ் சொல்லுகிற
வனோ சபைக்கு பக்திவிருத்தி உண்டாகப்
பேசுகிறான். நீங்களெல்லாரும் அந்நியபாஷை 5
களைப் பேசும்படி விரும்புகிறேன்; ஆகிலும்,
[36]அந்நிய பாஷைகளில் பேசுகிறவன் சபை
க்கு பக்திவிருத்தி உண்டாகும்படிக்கு அர்த்
தத்தையும் சொல்லாவிட்டால், தீர்க்கதரிச
னஞ் சொல்லுகிறவன் அவனிலும் மேன்மை
யுள்ளவன்; ஆதலால் நீங்கள் தீர்க்கதரிசனஞ்
சொல்லுகிறவர்களாகவேண்டுமென்று அதிக
மாய் விரும்புகிறேன். மேலும், சகோதரரே, 6
நான் உங்களிடத்தில் வந்து உங்களுக்கு [37]இர
கசியங்களை வெளிப்படுத்துவதற்காவது, அறி
வுண்டாக்குவதற்காவது, தீர்க்கதரிசனத்தை
அறிவிக்கிறதற்காவது போதகத்தைப் போதிக்
கிறதற்காவது ஏதுவானதைச் சொல்லாமல்,
அந்நிய பாஷைகளில் பேசினால் என்னாலே
உங்களுக்குப் பிரயோஜனம் என்ன? அப்படி 7
யே புல்லாங்குழல், சுரமண்டலம் முதலாகிய
சத்தமிடுகிற உயிரில்லாத வாத்தியங்கள் தொ
னிகளில் வித்தியாசம் காட்டாவிட்டால், குழ
லாலே ஊதப்படுகிறதும், சுரமண்டலத்தாலே
வாசிக்கப்படுகிறதும் இன்னதென்று எப்படித்
தெரியும்? அந்தப்படி எக்காளமும் [38]விளங்காத 8

1 பிர. 4. 9-12: 9. 14, 15
* அவசியமானவைகள்
2 ரோ. 12. 5. எபே. 5. 30
3 லூ. 6. 13. எபே. 2. 20: 3. 5
4 அப். 13. 1. ரோ. 12. 6
5 எபே. 4. 11
6 10. வச
7 9. வச
8 எண். 11. 17
9 எபி. 13. 17, 24
10 அப். 2. 8-11
11 14. 1, 39
12 மத். 5. 6. லூ. 10. 42
13 2 கொ. 12. 4
14 1 பே. 4. 8
15 14. 1. மு
16 மத். 7. 22: 17. 20
17 மத். 6. 1, 2
18 மத். 7. 22, 23. யாக். 2. 14
19 நீதி. 10. 12. 1 பே. 4. 8
20 யாக். 3. 16
21 கொலோ. 2. 17
22 10. 24. பிலி. 2. 4
23 நீதி. 14. 17
24 ரோ. 1. 32
25 2 யோ. 4. வச
26 ரோ. 15. 1
27 சங். 119. 66
28 ரோ. 8. 24
29 யோபு 13. 15
30 8. 2
31 1 யோ. 3. 2
† தர்ப்பணத்திலே
32 2 கொ. 3. 18
33 எபி. 10. 35, 39. 1 பே. 1. 21
34 12. 31. எபே. 1. 8
‡ போதிக்கிற
35 அப். 10. 46: 22. 9
36 26. வச
37 26. வச
38 எண். 10. 9

சத்தமிட்டால் எவன் யுத்தத்திற்கு ஆயத்தம்
9 பண்ணுவான்? அதுபோல, நீங்களும் தெளி
வான பேச்சை நாவினால் வசனியாவிட்டால்
பேசப்பட்டது இன்னதென்று எப்படித் தெரி
யும்? ஆகாயத்தில் பேசுகிறவர்களாயிருப்பீர்
10 களே. உலகத்திலே எத்தனையோவிதமான
*பாஷைகள் உண்டாயிருக்கிறது, அவைக
11 ளில் ஒன்றும் அர்த்தமில்லாததல்ல. ஆயி
னும், பாஷையின் கருத்தை நான் அறியாம
லிருந்தால், பேசுகிறவனுக்கு அந்நியனாயிருப்
பேன், [1]பேசுகிறவனும் எனக்கு அந்நியனா
12 யிருப்பான். நீங்களும் ஆவிக்குரிய வரங்களை
நாடுகிறவர்களானபடியால், சபைக்கு பக்தி
விருத்தி உண்டாக்கத்தக்கதாக அவைகளில்
13 தேறும்படி நாடுங்கள். அந்தப்படி அந்நிய
பாஷையில் பேசுகிறவன் அதின் அர்த்தத்தை
யும் சொல்லத்தக்கதாக விண்ணப்பம் பண்
14 ணக்கடவன். என்னத்தினாலெனில், நான்
அந்நியபாஷையிலே விண்ணப்பம் பண்ணி
னால், என் ஆவி விண்ணப்பம் பண்ணுமே
யன்றி, என் கருத்து பயனற்றதாயிருக்கும்.
15 இப்படியிருக்க: செய்யவேண்டுவ தென்ன?
[2]நான் ஆவியோடும் விண்ணப்பம் பண்ணு
வேன், கருத்தோடும் விண்ணப்பம் பண்ணு
வேன்; [3]நான் ஆவியோடும் பாடுவேன், [4]கருத்
16 தோடும் பாடுவேன். இல்லாவிட்டால், நீ
ஆவியோடு ஸ்தோத்திரம் பண்ணும்போது,
கல்லாதவன் உன் ஸ்தோத்திரத்திற்கு [5]ஆமென்
என்று எப்படிச் சொல்லுவான்? நீ பேசுகிறது
17 இன்னதென்று அவன் அறியானே. நீ நன்
றாய் ஸ்தோத்திரம் பண்ணுகிறாய், ஆகிலும்
மற்றவன் பக்திவிருத்தி யடையமாட்டானே.
18 உங்களெல்லாரிலும் நான் அதிகமாய்ப் பாஷை
களைப் பேசுகிறேன், இதற்காக என் தேவனை
19 ஸ்தோத்திரிக்கிறேன். அப்படியிருந்தும்,
நான் சபையிலே அந்நியபாஷையில் பதினா
யிரம் வார்த்தைகளைப் பேசுகிறதிலும், மற்ற
வர்களை உணர்த்தும்படி என் கருத்தோடே
ஐந்து வார்த்தைகளைப் பேசுகிறதே எனக்கு
அதிக விருப்பமாயிருக்கும்.
20 சகோதரரே, [6]நீங்கள் புத்தியிலே குழந்தை
களாயிராதேயுங்கள்; [7]துர்க்குணத்திலே குழந்
தைகளாயும், [8]புத்தியிலோ †தேறினவர்களா
21 யுமிருங்கள். மறுபாஷைக்காரராலும், மறு
உதடுகளாலும் இந்த ஜனங்களிடத்தில் பேசு
வேன்; ஆகிலும் அவர்கள் எனக்குச் செவி
கொடுப்பதில்லையென்று கர்த்தர் சொல்லுகி
றார் என்று [9]வேதத்தில் எழுதியிருக்கிறதே.
22 அப்படியிருக்க, அந்நிய பாஷைகள் விசுவாசி
களுக்கு அடையாளமாயிராமல், [10]அவிசுவாசி
களுக்கு அடையாளமாயிருக்கிறது; தீர்க்கதரி
சனமோ அவிசுவாசிகளுக்கு அடையாளமாயி
ராமல், விசுவாசிகளுக்கு அடையாளமாயிருக்
23 கிறது. ஆகையால், சபையாரெல்லாரும்
ஏகமாய்க் கூடிவந்து, எல்லாரும் அந்நிய
பாஷைகளிலே பேசிக்கொள்ளும்போது, கல்
லாதவர்களாவது, அவிசுவாசிகளாவது உள்
ளே பிரவேசித்தால், [11]அவர்கள் உங்களைப்
பைத்தியம் பிடித்தவர்களென்பார்களல்லவா?
எல்லாரும் தீர்க்கதரிசனஞ் சொல்லுகையில், 24
அவிசுவாசியொருவன், அல்லது கல்லாதவ
னொருவன், உள்ளே பிரவேசித்தால், அவன்
எல்லாராலும் உணர்த்துவிக்கப்பட்டும், எல்
லாராலும் நிதானிக்கப்பட்டும் இருப்பான்.
அவனுடைய இருதயத்தின் அந்தரங்கங்களும் 25
வெளியரங்கமாகும்; அவன் முகங்குப்புற
விழுந்து, தேவனைப் பணிந்துகொண்டு, [12]தே
வன் மெய்யாய் உங்களுக்குள்ளே இருக்கிறா
ரென்று அறிக்கையிடுவான்.

நீங்கள் கூடிவந்திருக்கிறபோது, உங்களில் 26
ஒருவன் சங்கீதம் பாடுகிறான், [13]ஒருவன் போ
தகம் பண்ணுகிறான், ஒருவன் அந்நியபாஷை
யைப் பேசுகிறான், ஒருவன் இரகசியத்தை
வெளிப்படுத்துகிறான், ஒருவன் வியாக்கி
யானம் பண்ணுகிறான். சகோதரரே, இது
என்ன? [14]சகலமும் பக்திவிருத்திக்கேதுவாகச்
செய்யப்படக்கடவது. யாராவது அந்நிய 27
பாஷையிலே பேசுகிறதுண்டானால், அது இர
ண்டுபேர்மட்டில், அல்லது மிஞ்சினால் மூன்
றுபேர்மட்டில் அடங்கவும், அவர்கள் ஒவ்வொ
ருவராய்ப் பேசவும், ஒருவன் அர்த்தத்தைச்
சொல்லவும் வேண்டும். அர்த்தஞ் சொல்லு 28
கிறவனில்லாவிட்டால், சபையிலே பேசா
மல், தனக்கும் தேவனுக்கும் தெரியப் பேசக்
கடவன். தீர்க்கதரிசிகள் [15]இரண்டுபேராவது 29
மூன்றுபேராவது பேசலாம், மற்றவர்கள் நிதா
னிக்கக்கடவர்கள். அங்கே உட்கார்ந்திருக்கிற 30
மற்றொருவனுக்கு ஏதாகிலும் வெளிப்படுத்தப்
பட்டால், [16]முந்திப் பேசினவன் பேசாம
லிருக்கக்கடவன். எல்லாரும் கற்கிறதற்கும் 31
எல்லாரும் சேருகிறதற்கும், நீங்கள் அனைவ
ரும் ஒவ்வொருவராகத் தீர்க்கதரிசனஞ் சொல்
லலாம். தீர்க்கதரிசிகளுடைய ஆவிகள் [17]தீர்க்க 32
தரிசிகளுக்கு அடங்கியிருக்கிறதே. தேவன் 33
கலகத்திற்கு தேவனாயிராமல் சமாதானத்திற்கு
தேவனாயிருக்கிறார்; [18]பரிசுத்தவான்களுடைய
சபைகளெல்லாவற்றிலேயும் அப்படியே
இருக்கிறது.

சபைகளில் உங்கள் ஸ்திரீகள் பேசாமலிரு 34
க்கக்கடவர்கள்; [19]பேசும்படிக்கு அவர்களுக்கு
உத்தரவில்லை; [20]அவர்கள் அமர்ந்திருக்கவேண்
டும்; [21]வேதமும் அப்படியே சொல்லுகிறது.
அவர்கள் ஒரு காரியத்தைக் கற்றுக்கொள்ள 35
விரும்பினால், வீட்டிலே தங்கள் புருஷரிடத்
தில் விசாரிக்கக்கடவர்கள்; ஸ்திரீகள் சபையி
லே பேசுகிறது அயோக்கியமாயிருக்குமே.
தேவவசனம் உங்களிடத்தி லிருந்தா புறப் 36
பட்டது? [22]அது உங்களிடத்துக்கு மாத்திரமா
வந்தது?

ஒருவன் தன்னைத் தீர்க்கதரிசியென்றாவது, 37
[23]ஆவியைப் பெற்றவனென்றாவது எண்ணி
னால், நான் உங்களுக்கு எழுதுகிறவைகள்
கர்த்தருடைய கற்பனைகளென்று அவன் ஒத்
துக்கொள்ளக்கடவன். ஒருவன் அறியாதவ 38

---

* சப்தங்கள்
1 ரோ. 1. 14
2 யோ. 4. 24
3 எபே. 5. 19. கொலோ. 3. 16
4 சங். 47. 7
5 11. 24
6 எபே. 4. 14, 15. எபி. 6. 1, 3. 2 பே. 3. 18
7 சங். 131. 2. மத். 18. 3. ரோ. 16. 19. 1 பே. 2. 2, 3
8 சங். 119. 99
† புருஷர்கள்
9 ஏசா. 28. 11, 12. யோ. 10. 34
10 மாற். 16. 17. அப். 2. 6. ஷ. 1 தீமோ. 1. 9
11 அப். 2. 13
12 ஏசா. 45. 14. சகரி. 8. 23
13 6. வச.
14 40. வச. 12. 7–10. 2 கொ. 12. 19. எபே. 4. 12
15 39. வச. 1 தெச. 5. 19, 20
16 யோபு 32. 11. 1 தெச. 5. 19, 20
17 1 யோ. 4. 1
18 11. 16
19 1 தீமோ. 2. 11, 12
20 எபே. 5. 22. தீத். 2. 5. 1 பே. 3. 1
21 ஆதி. 3. 16. எண். 30. 3–12. எஸ்தர் 1. 20
22 4. 7
23 2 கொ. 10. 7. 1 யோ. 4. 6

னையிருந்தால், அவன் அறியாதவனையிருக்
கட்டும்.
39 இப்படியிருக்க, சகோதரரே [1]தீர்க்கதரிச
னஞ்சொல்ல நாடுங்கள், அந்நிய பாஷைக
ளைப் பேசுகிறதற்கும் தடைபண்ணாதிருங்கள்.
40 சகலமும் [2]நல்லொழுக்கமாயும் கிரமமாயும்
செய்யப்படக்கடவது.
15 அன்றியும், சகோதரரே, [3]நான் உங்களுக்
குப் பிரசங்கித்த சுவிசேஷத்தை மறுபடியும்
உங்களுக்குத் தெரியப்படுத்துகிறேன்; [4]நீங்க
ளும் அதை ஏற்றுக்கொண்டு, அதிலே நிலைத்
2 திருக்கிறீர்கள். நான் உங்களுக்குப் பிரசங்
கித்தபிரகாரமாய், [5]நீங்கள் அதைக் கைக்கொ
ண்டிருந்தால், அதினாலே நீங்கள் இரட்சிக்
கப்படுவீர்கள்; [6]மற்றப்படி உங்கள் விசுவாசம்
3 விருதாவாயிருக்குமே. நான் அடைந்ததும்
உங்களுக்குப் பிரதானமாக ஒப்புவித்ததும்
என்னவென்றால், [7]கிறிஸ்துவானவர் வேத
வாக்கியங்களின்படி நமது பாவங்களுக்காக
4 மரித்து, அடக்கம்பண்ணப்பட்டு, [8]வேதவாக்
கியங்களின்படி மூன்றாம்நாளில் உயிர்த்தெ
5 ழுந்து, கேபாவுக்கும், பின்பு பன்னிருவருக்
6 கும், தரிசனமானார். அதன்பின்பு அவர் ஐந்
நூறுபேருக்கு அதிகமான சகோதரருக்கும்
ஒரேவேளையில் தரிசனமானார்; அவர்களில்
அநேகர் இந்நாள்வரைக்கும் இருக்கிறார்கள்,
7 சிலர்மாத்திரம்நித்திரை அடைந்தார்கள். பின்பு
யாக்கோபுக்கும், [9]அதன்பின்பு அப்போஸ்தல
8 ரெல்லாருக்கும் தரிசனமானார். எல்லாருக்கும்
பின்பு [10]அகாலப்பிறவிபோன்ற எனக்கும் தரி
9 சனமானார். நான் அப்பேஸ்தலரெல்லாரிலும்
[11]சிறியவனையிருக்கிறேன்; [12]தேவனுடைய
சபையைத் துன்பப்படுத்தினதினாலே, நான்
அப்போஸ்தலனென்று பேர்பெறுவதற்கும்
10 பாத்திரன் அல்ல. ஆகிலும் நான் இருக்கிறது
தேவகிருபையினாலே இருக்கிறேன்; அவர்
எனக்கு அருளிய கிருபை விருதாவா யிருக்க
வில்லை; அவர்களெல்லாரிலும் நான் அதிக
மாய்ப் பிரயாசப்பட்டேன்; [13]ஆகிலும் நான்
அல்ல, என்னுடனே இருக்கிற *தேவகிரு
11 பையே அப்படிச் செய்தது. ஆகையால்
நானாகிலும் அவர்களாகிலும் இப்படியே பிர
சங்கித்துவருகிறோம், நீங்களும் இப்படியே
விசுவாசித்திருக்கிறீர்கள்.
12 கிறிஸ்து மரித்தோரிலிருந்து எழுந்தாரெ
ன்று பிரசங்கிக்கப்பட்டிருக்க, [14]மரித்தோரின்
உயிர்த்தெழுதலில்லையென்று உங்களில் சிலர்
13 எப்படிச் சொல்லலாம்? மரித்தோரின் உயிர்த்
தெழுதலில்லாவிட்டால், [15]கிறிஸ்துவும் எழுந்
14 திருக்கவில்லையே. கிறிஸ்து எழுந்திருக்க
வில்லையென்றால், [16]எங்கள் பிரசங்கமும் விரு
15 தா, உங்கள் விசுவாசமும் விருதா. மரித்தோர்
உயிர்த்தெழாவிட்டால், தேவன் எழுப்பாத
கிறிஸ்துவை அவர் எழுப்பினாரென்று நாங்
கள் தேவனைக்குறித்துச் சாட்சி சொன்னதி
னாலே, [17]தேவனுக்காகப் பொய்ச்சாட்சி சொல்
16 லுகிறவர்களாகவும் காணப்படுவோமே. மரித்

தோர் உயிர்த்தெழாவிட்டால், கிறிஸ்துவும்
†எழுந்திருக்கவில்லை. கிறிஸ்து எழுந்திராவிட் 17
டால், [18]உங்கள் விசுவாசம் வீணாயிருக்கும்;
நீங்கள் இன்னும் உங்கள் பாவங்களில் இருப்
பீர்கள். கிறிஸ்துவுக்குள் நித்திரையடைந்த 18
வர்களும் கெட்டிருப்பார்களே. இம்மைக்காக 19
மாத்திரம் நாம் கிறிஸ்துவின்மேல் நம்பிக்கை
யுள்ளவர்களாயிருந்தால், [19]எல்லா மனுஷரைப்
பார்க்கிலும் பரிதபிக்கப்படத் தக்கவர்களா
யிருப்போம்.
கிறிஸ்துவோ [20]மரித்தோரிலிருந்தெழுந்து, 20
[21]நித்திரையடைந்தவர்களில் முதற்பலனானார்.
மனுஷனால் [22]மரணம் உண்டானபடியால், 21
[23]மனுஷனால் மரித்தோரின் உயிர்த்தெழுத
லும் உண்டாயிற்று. ஆதாமுக்குள் எல்லாரும் 22
மரிக்கிறதுபோல, கிறிஸ்துவுக்குள் எல்லாரும்
உயிர்ப்பிக்கப்படுவார்கள். அவனவன் [24]தன் 23
தன் வரிசையிலே உயிர்ப்பிக்கப்படுவான்,
முதற்பலனானவர் கிறிஸ்து; பின்பு அவர் வரு
கையில் அவருடையவர்கள் உயிர்ப்பிக்கப்படு
வார்கள். அதன்பின்பு முடிவு உண்டாகும்; 24
அப்பொழுது அவர் சகல துரைத்தனத்தை
யும் சகல அதிகாரத்தையும் வல்லமையையும்
பரிகரித்து, தேவனும் பிதாவுமாயிருக்கிறவ
ருக்கு [25]ராஜ்யத்தை ஒப்புக்கொடுப்பார். எல் 25
லாச் சத்துருக்களையும் தமது பாதத்திற்குக்
கீழாக்கிப்போடும்வரைக்கும், [26]அவர் ஆளுகை
செய்யவேண்டியது. பரிகரிக்கப்படுங் கடை 26
சிச் சத்துரு [27]மரணம். சகலத்தையும் அவ 27
ருடைய [28]பாதத்திற்குக் கீழ்ப்படுத்தினாரே;
ஆகிலும் சகலமும் அவருக்குக் கீழ்ப்படுத்தப்
பட்டதென்று சொல்லியிருக்கும்போது, சக
லத்தையும் அவருக்குக் கீழ்ப்படுத்தினவர் கீழ்ப்
படுத்தப்படவில்லையென்பது வெளியரங்கமா
யிருக்கிறது. சகலமும் அவருக்குக் கீழ்ப்பட் 28
டிருக்கும்போது, [29]தேவனே சகலத்திலும்
சகலமுமாயிருப்பதற்கு, [30]குமாரன் தாமும்
தமக்குச் சகலத்தையும் கீழ்ப்படுத்தினவருக்குக்
கீழ்ப்பட்டிருப்பார்.
மேலும் மரித்தோர் உயிர்த்தெழாவிட்டால், 29
[31]மரித்தவர்களுக்காக ஞானஸ்நானம் பெறு
கிறவர்கள் என்னசெய்வார்கள்? மரித்தவர்க
ளுக்காக ஏன் ஞானஸ்நானம் பெறுகிறார்கள்?
நாங்களும் ஏன் எந்நேரமும் [32]நாசமோசத் 30
திற்கு ஏதுவாயிருக்கிறோம்? நான் அநுதின 31
மும் [33]சாகிறேன்; அதை நம்முடைய கர்த்த
ராகிய கிறிஸ்து இயேசுவினால் உங்களைக்
குறித்து, [34]நான் பாராட்டுகிற மேன்மையைக்
கொண்டு சத்தியமாய்ச் சொல்லுகிறேன்.
நான் எபேசுவிலே [35]துஷ்டமிருகங்களுடனே 32
போராடினேனென்று மனுஷர் வழக்கமாய்ச்
சொல்லுகிறேன்; அப்படிப் போராடினதி
னாலே எனக்குப் பிரயோஜனமென்ன? மரித்
தோர் உயிர்த்தெழாவிட்டால், [36]புசிப்போம்
குடிப்போம், நாளைக்குச் சாவோம் என்று
சொல்லலாமே? மோசம்போகாதிருங்கள்; 33
[37]ஆகாத‡சம்பாஷணைகள்நல்லொழுக்கங்களைக்

1 12. 31. 1 தெச. 5. 20
2 26, 33. வச
3 கலா. 1. 11
4 ரோ. 5. 2. 1 பே. 5. 12
5 ரோ. 1. 16. எபி. 3. 6
6 கலா. 3. 4
7 ஆதி. 3. 15. சங். 22. 1. ஏசா. 53. 1. தானி. 9. 20. சகரி. 13. 7. லூக். 24. 26, 46
8 சங். 16. 10. ஓசி. 6. 2
9 லூக். 24. 34. அப். 1. 3, 4
10 அப். 9: 17
11 எபே. 3. 7, 8
12 அப். 8. 3: 9. 1
13 மத். 10. 20. ரோ. 15. 18, 19
* தேவகிருபையினால் அப்படிச்செய்தேன்
14 அப். 26. 8
15 1 தெச. 4. 14
16 அப். 17. 31
17 அப். 2. 24, 32
† எழுந்திருக்கவில்லை.
18. ரோ. 4. 25
19 4. 13. கொ. 16. 2. 2 தீமோ. 3. 12
20 1. பே. 1. 4
21 அப். 26. 23. கொலோ. 1. 18. வெளி. 1. 5
22 ரோ. 5. 12, 17
23 கொ. 11. 25. ரோ. 6. 23.
24 1 தெச. 4. 15–17
25 தானி. 7. 14, 27
26 சங். 2. 6–10: 45. 3–6: 110. 1. எபே. 1. 22. எபி. 1. 13: 10. 13
27 ஓசி. 13. 14. 2 தீமோ. 1. 10. வெளி. 20. 14
28 சங். 8. 6. மத். 28. 18. எபி. 2. 8. 1 பே. 3. 22
29 பிலி. 3. 21
30 3. 21: 11. 3
31 ரோ. 6. 3, 4
32 2 கொ. 11. 26. கலா. 5. 11
33 ரோ. 8. 36. 2 கொ. 4. 10
34 பிலி. 3. 3. 1 தெச. 2. 19
35 2 கொ. 1. 8
36 பிர. 2. 24. ஏசா. 22. 13. லூக். 12. 19
37 5. 6
‡ கெட்ட சகவாசங்கள்

34 கெடுக்கும். நீங்கள் பாவஞ்செய்யாமல் நீதிக்
கேற்க [1]விழித்துக்கொண்டு, தெளிந்தவர்களா
யிருங்கள்; சிலர் தேவனைப்பற்றி அறிவில்லா
திருக்கிறார்களே; [2]உங்களுக்கு வெட்கமுண்
டாக இதைச் சொல்லுகிறேன்.
35 ஆகிலும், மரித்தோர் எப்படி எழுந்திருப்
பார்கள், எப்படிப்பட்ட சரீரத்தோடே வரு
36 வார்களென்று ஒருவன் சொல்வானாகில், புத்
தியீனனே, [3]நீ விதைக்கிற விதை செத்தாலொ
37 ழிய உயிர்க்கமாட்டாதே. நீ விதைக்கிறபோ
து, இனி உண்டாகும் மேனியை விதையா
மல், கோதுமை, அல்லது மற்றொரு தானியத்
தினுடைய வெறும் விதையையே விதைக்கி
38 றாய். அதற்கு தேவன் தமது சித்தத்தின்படி
யே மேனியைக் கொடுக்கிறார்; [4]விதை வகை
கள் ஒவ்வொன்றிற்கும் அததற்கேற்ற மேனி
39 யையே கொடுக்கிறார். எல்லா *மாம்சமும்
ஒரேவிதமான மாம்சமல்ல; மனுஷருடைய
மாம்சம் வேறே, மிருகங்களுடைய மாம்சம்
வேறே, மச்சங்களுடைய மாம்சம் வேறே, பற
40 வைகளுடைய மாம்சம் வேறே. வானத்துக்
குரிய [5]மேனிகளுமுண்டு, பூமிக்குரிய மே
னிகளுமுண்டு; வானத்துக்குரிய மேனிகளு
டைய மகிமையும் வேறே, பூமிக்குரிய மேனி
41 களுடைய மகிமையும் வேறே; சூரியனு
டைய [6]மகிமையும் வேறே, சந்திரனுடைய
மகிமையும் வேறே, நட்சத்திரங்களுடைய மகி
மையும் வேறே; மகிமையிலே நட்சத்திரத்துக்கு
42 நட்சத்திரம் விசேஷித்திருக்கிறது. மரித்தோ
ரின் உயிர்த்தெழுதலும் அப்படியே இருக்கும்.
அழிவுள்ளதாய் விதைக்கப்படும், அழிவில்லா
43 ததாய் எழுந்திருக்கும்; கனவீனமுள்ளதாய்
விதைக்கப்படும், [7]மகிமையுள்ளதாய் எழுந்தி
ருக்கும்; பலவீனமுள்ளதாய் விதைக்கப்படும்,
44 பலமுள்ளதாய் எழுந்திருக்கும். ஜென்மசரீரம்
விதைக்கப்படும், ஆவிக்குரிய சரீரம் எழுந்தி
ருக்கும்; ஜென்மசரீரமுமுண்டு, [8]ஆவிக்குரிய
45 சரீரமுமுண்டு. அந்தப்படியே [9]முந்தின மனு
ஷனாகிய ஆதாம் ஜீவாத்துமாவானான் என்றெ
ழுதியிருக்கிறது; [10]பிந்தின ஆதாம் உயிர்ப்பிக்
46 கிற ஆவியானார். ஆகிலும் ஆவிக்குரிய சரீரம்
முந்தினதல்ல, ஜென்மசரீரமே முந்தினது; ஆவி
47 க்குரிய சரீரம் பிந்தினது. முந்தின மனுஷன்
பூமியிலிருந்துண்டான மண்ணானவன்; [11]இர
ண்டாம் மனுஷன் வானத்திலிருந்து வந்த கர்த்
48 தர். மண்ணானவன் எப்படிப்பட்டவனோ
மண்ணானவர்களும் அப்படிப்பட்டவர்களே;
[12]வானத்துக்குரியவர் எப்படிப்பட்டவரோ,
வானத்துக்குரியவர்களும் அப்படிப்பட்டவர்
49 களே. மேலும் மண்ணானவனுடைய சாயலை
நாம் அணிந்திருக்கிறதுபோல, [13]வானவரு
டைய சாயலையும் அணிந்துகொள்வோம்.
50 சகோதரரே, நான் சொல்லுகிறதென்ன
வெனில், [14]மாம்சமும் இரத்தமும் தேவனு
டைய ராஜ்யத்தைச் சுதந்தரிக்கமாட்டாது;
அழிவுள்ளது அழியாமையைச் சுதந்தரிப்பது
51 மில்லை. இதோ, ஒரு இரகசியத்தை உங்க
ளுக்கு அறிவிக்கிறேன்; [15]நாமெல்லாரும் நித்
திரையடைவதில்லை; ஆகிலும் கடைசி எக்கா
ளம் தொனிக்கும்போது, ஒரு நிமிஷத்திலே,
ஒரு இமைப்பொழுதிலே, [16]நாமெல்லாரும்
மறுரூபமாக்கப்படுவோம். எக்காளம் தொ 52
னிக்கும், [17]அப்பொழுது மரித்தோர் அழிவில்
லாதவர்களாய் எழுந்திருப்பார்கள்; நாமும் மறு
ரூபமாக்கப்படுவோம். அழிவுள்ளதாகிய இது 53
அழியாமையையும், [18]சாவுக்கேதுவாகிய இது
சாவாமையையும் தரித்துக்கொள்ளவேண்டும்.
அழிவுள்ளதாகிய இது அழியாமையையும், 54
சாவுக்கேதுவாகிய இது சாவாமையையும் தரித்
துக்கொள்ளும்போது, [19]மரணம் ஜெயமாக
விழுங்கப்பட்டது என்று எழுதியிருக்கிற வார்த்
தை நிறைவேறும். மரணமே! உன் கூர் எங் 55
கே? [20]பாதாளமே! உன் ஜெயம் எங்கே? மர 56
ணத்தின் [21]கூர் பாவம், [22]பாவத்தின் பெலன்
நியாயப்பிரமாணம். நம்முடைய கர்த்தராகிய 57
இயேசுகிறிஸ்துவினாலே [23]நமக்கு ஜெயங்கொ
டுக்கிற தேவனுக்கு ஸ்தோத்திரம். ஆகை 58
யால், எனக்குப் பிரியமான சகோதரரே, கர்த்
தருக்குள் நீங்கள் படுகிற பிரயாசம் விருதாவா
யிராதென்று அறிந்து, நீங்கள் உறுதிப்பட்ட
வர்களாயும், அசையாதவர்களாயும், [24]கர்த்தரு
டைய கிரியையிலே எப்பொழுதும் பெருகுகி
றவர்களாயும் இருப்பீர்களாக.

பரிசுத்தவான்களுக்காகச் சேர்க்கப்படும் 16
தர்மப்பணத்தைக்குறித்து [25]நான் கலாத்தியா
நாட்டுச் சபைகளுக்குப் பண்ணின திட்டத்
தின்படியே நீங்களும் செய்யுங்கள். நான் வந் 2
திருக்கும்போது பணஞ்சேர்க்குதல் இராதப
டிக்கு, [26]உங்களில் அவனவன் வாரத்தின்
முதல்நாள்தோறும், தன்தன் வரவுக்குத்தக்க
தாக எதையாகிலும் தன்னிடத்திலே சேர்த்து
வைக்கக்கடவன். நான் வரும்போது உங்கள் 3
உபகாரத்தை எருசலேமுக்குக் கொண்டுபோ
கும்படிக்கு, [27]நீங்கள் தகுதியுள்ளவர்களாகக்
குறிக்கிறவர்கள் எவர்களோ, அவர்களிடத்தில்
நிருபங்களைக் கொடுத்து, அவர்களை அனுப்பு
வேன். நானும் †போகத்தக்கதானால், [28]அவர் 4
கள் என்னுடனேகூட வரலாம். நான் மக் 5
கெதோனியா நாட்டின்வழியாய்ப் போகிற
படியால், [29]மக்கெதோனியா நாட்டைக் கடந்த
பின்பு உங்களிடத்திற்கு வருவேன். நான் 6
எங்கே போனாலும் நீங்கள் என்னை வழிவிட்
டனுப்பும்படிக்கு, [30]நான் உங்களிடத்தில் சில
காலம் தங்கவேண்டியதாயிருக்கும்; ஒருவேளை
மழைகாலம் முடியும்வரையும் இருப்பேன்.
இப்பொழுது வழிப்பிரயாணத்திலே உங்க 7
ளைக் கண்டுகொள்ளமாட்டேன்; [31]கர்த்தர் உத்
தரவு கொடுத்தால் உங்களிடத்தில் வந்து சில
காலம் தங்கியிருக்கலாமென்று நம்புகிறேன்.
ஆகிலும் பெந்தெகொஸ்தே பண்டிகை வரைக் 8
கும் எபேசு பட்டணத்தில் இருப்பேன். ஏனெ 9
னில் இங்கே பெரிதும் அநுகூலமுமான [32]கதவு
எனக்குத் திறக்கப்பட்டிருக்கிறது; [33]விரோ
தஞ்செய்கிறவர்களும் அநேகர் இருக்கிறார்கள்.

1 ரோ. 13. 11. எபே. 5. 14
2 6. 5
3 யோ. 12. 24
4 ஆதி. 1. 11, 12
* சரீரம்
5 ஆதி. 1. 16
6 சங். 19. 4, 5
7 தானி. 12. 3. மத். 13. 43. பிலி. 3. 21
8 லூ. 24. 31. யோ. 20. 19, 20
9 ஆதி. 2. 7
10 யோ. 5. 21: 6. 33, 40. ரோ. 5. 14. கொலோ. 3. 4
11 யோ. 3. 31
12 பிலி. 3. 20, 21
13 ரோ. 8. 29. 2 கொ. 3. 18. 1 யோ. 3. 2
14 மத். 16. 17. யோ. 3. 3, 5
15 1 தெச. 4. 15–17–2 பே. 3. 10
16 பிலி. 3. 21
17 சகரி. 9. 14. மத். 24. 31. யோ. 5. 25
18 2 கொ. 5. 4. 1 யோ. 3. 2
19 ஏசா. 25. 8. எபி. 2. 14, 15. வெளி. 20. 14
20 ஓசி. 13. 14
21 ரோ. 6. 23
22 ரோ. 4. 15
23 ரோ. 7. 25: 8. 37. 1 யோ. 5. 4, 5
24 3. 1. 2 பே. 3. 14
25 அப். 11. 29. ரோ. 15. 26. 2 கொ. 8. 4. கலா. 2. 10
26 அப். 20. 7. வெளி. 1. 10
27 2 கொ. 8. 19
† வரவேண்டியதானால்
28 2 கொ. 8. 4. 19
29 அப். 19. 21. 2 கொ. 1. 15, 16
30 அப். 15. 3. 2 கொ. 1. 16
31 அப். 18. 21. யாக். 4. 15
32 அப். 14. 27. 2 கொ. 2. 12. வெளி. 3. 8
33 பிலி. 3. 18

10 தீமோத்தேயு [1]உங்களிடத்திற்கு வந்தானே
யாகில், அவன் உங்களிடத்தில் பயமில்லாம
லிருக்கப் பாருங்கள்; என்னைப்போல அவ
னும் [2]கர்த்தருடைய கிரியையை நடப்பிக்கிறு
11 னே. ஆனபடியினால் ஒருவனும் [3]அவனை
அற்பமாய் எண்ணுதிருப்பானுக; சகோதரரோ
டேகூட அவன் வருகிறதற்கு நான் காத்திருக்
கிறபடியால், [4]என்னிடத்தில் வரும்படிக்கு
அவனைச் சமாதானத்தோடே வழிவிட்டனுப்
12 புங்கள். சகோதரனுகிய [5]அப்பொல்லோ
வைக் குறித்தோவெனில், சகோதரரோடே
கூட உங்களிடத்தில் வரும்படிக்கு அவனை
மிகவும் வேண்டிக்கொண்டேன்; ஆகிலும்
இப்பொழுது வர அவனுக்கு மனதில்லை;
அவனுக்கு நற்சமயம் உண்டாயிருக்கும்போது
வருவான்.
13 விழித்திருங்கள், [6]விசுவாசத்திலே [7]நிலைத்
திருங்கள், [8]புருஷராயிருங்கள், [9]திடன்கொள்
14 ளுங்கள். உங்கள் காரியங்களெல்லாம் [10]அன்
போடே செய்யப்படக்கடவது.
15 சகோதரரே, ஸ்தேவானுடைய வீட்டார்
[11]அகாயாநாட்டிலே முதற்பலனானவர்களென்
றும், பரிசுத்தவான்களுக்கு ஊழியஞ்செய்யும்
படிக்குத் தங்களை ஒப்புவித்திருக்கிறார்களென்
16 றும் அறிந்திருக்கிறீர்களே. இப்படிப்பட்ட
வர்களுக்கும், [12]உடன்வேலையாட்களாய்ப் பிர
யாசப்படுகிற மற்ற யாவருக்கும் நீங்கள் கீழ்ப்
படிந்திருக்க வேண்டுமென்று உங்களுக்குப்
புத்திசொல்லுகிறேன். ஸ்தேவான், பொர்த் 17
துனாத்து, அகாயுக்கு என்பவர்கள் வந்ததற்கா
கச் சந்தோஷமாயிருக்கிறேன், [13]நீங்கள் எனக்
குச் செய்யவேண்டியதாயிருந்ததை அவர்கள்
செய்திருக்கிறார்கள். அவர்கள் என் ஆவிக் 18
கும் உங்கள் ஆவிக்கும் ஆறுதல் செய்தார்கள்;
[14]இப்படிப்பட்டவர்களை அங்கிகாரம் பண்
ணுங்கள்.
ஆசியா நாட்டிலுள்ள சபையார் உங்களை 19
வாழ்த்துகிறார்கள். [15]ஆக்கில்லாவும் பிரிஸ்கில்
லாளும் தங்கள் வீட்டிலே கூடுகிற சபையோ
டுங்கூடக் கர்த்தருக்குள் உங்களை மிகவும் வாழ்
த்துகிறார்கள். சகோதரரெல்லாரும் உங்களை 20
வாழ்த்துகிறார்கள். [16]ஒருவரையொருவர் பரி
சுத்த முத்தத்தோடே வாழ்த்துங்கள்.
பவுலாகிய நான் என் கையெழுத்தாலே 21
[17]உங்களை வாழ்த்துகிறேன். ஒருவன் கர்த்தரா 22
கிய இயேசுகிறிஸ்துவினிடத்தில் [18]அன்புகூ
ராமற்போனால், [19]அவன் *சபிக்கப்பட்டவனா
யிருக்கக்கடவன், [20]கர்த்தர் வருகிறார். கர்த்த 23
ராகிய இயேசுகிறிஸ்துவினுடைய கிருபை
உங்களுடனேகூட இருப்பதாக. கிறிஸ்து இ 24
யேசுவுக்குள்ளான என்னுடைய அன்பு உங்க
ளெல்லாரோடுங்கூட இருப்பதாக. ஆமென்.

1 அப். 19. 22
2 பிலி. 2. 19-22
3 1 தீமோ. 4. 12
4 அப். 15. 33. 3 யோ. 6, வச
5 1. 12: 3. 5
6 1 பே. 5. 8
7 2 தெச. 2. 15
8 14. 20
9 எபே. 6. 10
10 1 பே. 4. 8
11 ரோ. 16. 5. 2 கொ. 8. 4: 9. 1
12 எபி. 6. 10: 13. 17
13 2 கொ. 11. 9. பிலி. 2. 30. பிலேமோன் 13. வச
14 பிலி. 2. 19. கொலோ. 4. 8. 1 தெச. 5. 12
15 அப். 18. 26. ரோ. 16. 5, 15
16 ரோ. 16. 16
17 கொலோ. 4. 18. 2 தெச. 3. 17
18 எபே. 6. 24
19 கலா. 1. 8, 9
* அநாதிமா, மாரநாதா
20 யூதா. 14, 15. வச

# THE SECOND EPISTLE TO THE CORINTHIANS

# கொரிந்தியருக்கு எழுதின

## இரண்டாம் நிருபம்

1 தேவனுடைய சித்தத்தினாலே இயேசுகிறி
ஸ்துவின் [1]அப்போஸ்தலனாகிய பவுலும்,
சகோதரனாகிய தீமோத்தேயும், கொரிந்துபட்
டணத்திலுள்ள தேவனுடைய சபைக்கும்,
[2]அகாயா நாடெங்குமுள்ள எல்லாப் பரிசுத்த
2 வான்களுக்கும் எழுதுகிறதாவது: நம்முடைய
பிதாவாகிய தேவனாலும், கர்த்தராகிய இயேசு
கிறிஸ்துவினாலும், [3]உங்களுக்குக் கிருபையும்
சமாதானமும் உண்டாவதாக.
3 நமது கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின்
பிதாவாகிய தேவனும், இரக்கங்களின் பிதா
வும், சகலவிதமான ஆறுதலின் தேவனுமா
4 யிருக்கிறவருக்கு [4]ஸ்தோத்திரம். தேவனால்
எங்களுக்கு அருளப்படுகிற ஆறுதலினாலே,
எந்த உபத்திரவத்திலாகிலும் அகப்படுகிறவர்
களுக்கு நாங்கள் ஆறுதல் செய்யத்திராணியுள்
ளவர்களாகும்படி, எங்களுக்கு வரும் சகல
உபத்திரவங்களிலேயும் அவரே எங்களுக்கு
5 ஆறுதல் செய்கிறவர். எப்படியெனில், கிறி
ஸ்துவினுடைய பாடுகள் எங்களிடத்தில் பெ
ருகுகிறதுபோல, [5]கிறிஸ்துவினாலே எங்க
6 ளுக்கு ஆறுதலும் பெருகுகிறது. ஆதலால்,
நாங்கள் உபத்திரவப்பட்டாலும் அது உங்கள்
[6]ஆறுதலுக்கும் இரட்சிப்புக்கும் ஏதுவாகும்;
நாங்கள் ஆறுதலடைந்தாலும் அதுவும் உங்கள்
ஆறுதலுக்கும் இரட்சிப்புக்கும் ஏதுவாகும்;
நாங்கள் பாடுபடுகிறதுபோல நீங்களும் பாடு
பட்டுச் சகிக்கிறதினாலே அந்த இரட்சிப்பு
7 பலன்செய்கிறது. நீங்கள் எங்களோடேகூடப்
பாடுபடுகிறதுபோல, [7]எங்களோடேகூட ஆறு
தலும் அடைகிறீர்களென்று நாங்கள் அறிந்து,
உங்களைக்குறித்து உறுதியான நம்பிக்கையுள்
8 ளவர்களாயிருக்கிறோம். ஆகையால் சகோதர
ரே, [8]ஆசியாவில் எங்களுக்கு நேரிட்ட உபத்
திரவத்தை நீங்கள் அறியாதிருக்க எங்களுக்கு
மனதில்லை. என்னவெனில், பிழைப்போம்
என்கிற நம்பிக்கை அற்றுப்போகத்தக்கதாக,
எங்கள் பலத்திற்கு மிஞ்சின அதிக பாரமான
9 வருத்தம் எங்களுக்கு உண்டாயிற்று. நாங்கள்
எங்கள்மேல் நம்பிக்கையாயிராமல், [9]மரித்தோ
ரை எழுப்புகிற தேவன்மேல் நம்பிக்கையா
யிருக்கத்தக்கதாக, மரணம் வருமென்று நாங்
கள் எங்களுக்குள்ளே நிச்சயித்திருந்தோம்.

1 1 கொ. 1. 1. 1 தீமோ. 1. 1
2 பிலி. 1. 1. கொலோ. 1. 2
3 ரோ. 1. 7
4 எபே. 1. 3. 1 பே. 1. 3
5 அப். 9. 4. கொலோ. 1. 24
6 4. 15
7 ரோ. 8. 17. 2 தீமோ. 2. 12
8 அப். 19. 23. 1 கொ. 15. 32: 16. 9
9 எரே. 17. 5, 7
10 2 பே. 2. 9
* முகாந்தரம்
11 ரோ. 15. 30. பிலி. 1. 19. யாக். 5. 16–18
12 1 கொ. 2. 4, 13: 15. 10
13 பிலி. 4. 1. 1 தெச. 2. 19, 20
14 ரோ. 1. 11. 1 கொ. 4. 19
15 அப். 21. 5. 1 கொ. 16. 5, 6
16 10. 2
17 மத். 5. 37

அப்படிப்பட்ட மரணத்தினின்றும் அவர் எங் 10
களைத் தப்புவித்தார், [10]இப்பொழுதும் தப்பு
விக்கிறார், இன்னும் தப்புவிப்பார் என்று
அவரை நம்பியிருக்கிறோம். *அநேகர் மூல 11
மாய் எங்களுக்கு உண்டான தயவுக்காக
அநேகரால் எங்கள்நிமித்தம் ஸ்தோத்திரங்
கள் செலுத்தப்படும்பொருட்டு, [11]நீங்களும்
விண்ணப்பத்தினால் எங்களுக்கு உதவிசெய்
யுங்கள்.
மாம்சத்திற்கேற்ற ஞானத்தோடே நடவா 12
மல், [12]தேவனுடைய கிருபையினால் நாங்கள்
உலகத்திலேயும், விசேஷமாக உங்களிடத்தி
லேயும், கபடமில்லாமல் திவ்விய உண்மை
யோடே நடந்தோமென்று, எங்கள் மனது எங்
களுக்குச் சொல்லுஞ்சாட்சியே எங்கள் புகழ்ச்
சியாயிருக்கிறது. ஏனென்றால், நீங்கள் வா 13
சித்தும் ஒத்துக்கொண்டுமிருக்கிற காரியங்
களையேயன்றி, வேறொன்றையும் நாங்கள்
உங்களுக்கு எழுதவில்லை; முடிவுபரியந்த
மும் அப்படியே ஒத்துக்கொள்வீர்களென்று
நம்பியிருக்கிறேன். கர்த்தராகிய இயேசுவினு 14
டைய நாளிலே நீங்கள் எங்களுக்குப் புகழ்ச்சி
யாயிருப்பதுபோல, [13]நாங்களும் உங்களுக்குப்
புகழ்ச்சியாயிருக்கிறதை ஒருவாறு ஒத்துக்கொ
ண்டிருக்கிறீர்களே.
நான் இப்படிப்பட்ட நம்பிக்கையைக் கொ 15
ண்டிருக்கிறபடியினால், [14]உங்களுக்கு இரண்
டாந்தரமும் பிரயோஜன முண்டாகும்படி,
முதலாவது உங்களிடத்தில் வரவும், பின்பு 16
உங்கள் ஊர்வழியாய் மக்கெதோனியா நாட்
டுக்குப் போகவும், [15]மக்கெதோனியாவை
விட்டு மறுபடியும் உங்களிடத்திற்கு வரவும்,
உங்களால் யூதேயாதேசத்துக்கு வழிவிட்ட
னுப்பப்படவும் யோசனையாயிருந்தேன். இப் 17
படி நான் யோசித்தது வீணாக யோசித்தே
னோ? அல்லது ஆம் ஆம் என்கிறதும், அல்ல
அல்ல என்கிறதும், என்னிடத்திலே இருக்
கத்தக்கதாக, [16]நான் யோசிக்கிறவைகளை மாம்
சத்தின்படி யோசிக்கிறேனோ? நாங்கள் உங் 18
களுக்குச் சொன்ன வார்த்தை [17]ஆம் அல்ல
என்று இருக்கவில்லை; அதற்கு உண்மையுள்ள
தேவனே சாட்சி. என்னாலும், சில்வானுவி 19
னாலும், தீமோத்தேயுவினாலும், உங்களுக்குள்

ளே பிரசங்கிக்கப்பட்ட [1]தேவகுமாரனுகிய
இயேசுகிறிஸ்துவும் ஆம் என்றும் அல்ல என்
20 றும் இராமல், ஆம் என்றே இருக்கிறார். எங்
களால் தேவனுக்கு மகிமையுண்டாகும்படி,
[2]தேவனுடைய வாக்குத்தத்தங்களெல்லாம்
இயேசுகிறிஸ்துவுக்குள் ஆம் என்றும், அவ
21 ருக்குள் ஆமென் என்றும் இருக்கிறதே. உங்
களோடேகூட எங்களையும் கிறிஸ்துவுக்குள்
ஸ்திரப்படுத்தி, [3]நம்மை அபிஷேகம்பண்ணி
22 னவர் தேவனே. அவர் நம்மை [4]முத்திரித்து,
நம்முடைய இருதயங்களில் [5]ஆவியென்னும்
அச்சாரத்தையும் கொடுத்திருக்கிறார்.
23 மேலும் நான் உங்களைத் தப்பவிடும்படிக்
கே இதுவரைக்கும் கொரிந்துபட்டணத்திற்கு
வாராதிருக்கிறேனென்று, [6]என் ஆத்துமாவின்
பேரில் தேவனையே சாட்சியாகக் கோருகி
24 றேன். உங்கள் விசுவாசத்திற்கு நாங்கள் அதி
காரிகளாயிராமல், [7]உங்கள் சந்தோஷத்திற்
குச் சகாயராயிருக்கிறோம்; விசுவாசத்தின
௨ லே நிலைநிற்கிறீர்களே. நான் துக்கத்துட
னே [8]உங்களிடத்தில் மறுபடியும் வராதபடி
க்கு எனக்குள்ளே தீர்மானித்துக்கொண்டே
2 ன். நான் உங்களைத் துக்கப்படுத்தினால், என்
னாலே துக்கமடைந்தவனேயல்லாமல், எவன்
3 என்னைச் சந்தோஷப்படுத்துவான்? என்னு
டைய சந்தோஷம் உங்களெல்லாருக்கும் சந்
தோஷமாயிருக்குமென்று, நான் உங்களெல்
லாரையும்பற்றி நம்பிக்கையுள்ளவனாயிருந்து,
நான் வரும்போது, [9]என்னைச் சந்தோஷப்
படுத்த வேண்டியவர்களால் நான் துக்கமடை
யாதபடிக்கு, அதை உங்களுக்கு எழுதினேன்.
4 அன்றியும், நீங்கள் துக்கப்படும்படிக்கு எழு
தாமல், [10]உங்கள்மேல் நான் வைத்த அன்பின்
மிகுதியை நீங்கள் அறியும்படிக்கே, மிகுந்த
வியாகுலமும் மனஇடுக்கமும் அடைந்தவ
னாய் அதிகக் கண்ணீரோடே உங்களுக்கு எழு
தினேன்.
5 துக்கமுண்டாக்கினவன் எனக்கு மாத்திர
மல்ல, [11]ஒருவாறு உங்களெல்லாருக்கும் துக்க
முண்டாக்கினான்; நான் உங்கள் எல்லார்மே
லும் அதிக பாரஞ்சுமத்தாதபடிக்கு இதைச்
6 சொல்லுகிறேன். அப்படிப்பட்டவனுக்கு
[12]அநேகரால் உண்டான இந்த தண்டனையே
7 போதும். ஆதலால் அவன் அதிக துக்கத்தில்
அமிழ்ந்திப்போகாதபடிக்கு, [13]நீங்கள் அவனு
க்கு மன்னித்து ஆறுதல் செய்யவேண்டும்.
8 அந்தப்படி, உங்கள் அன்பை அவனுக்குக்
காண்பிக்கும்படி உங்களை வேண்டிக்கொள்ளு
9 கிறேன். நீங்கள் எல்லாவற்றிலேயும் [14]கீழ்ப்
படிந்திருக்கிறீர்களோ என்று உங்களைச் சோ
10 தித்தறியும்படி இப்படி எழுதினேன். எவனு
க்கு நீங்கள் மன்னிக்கிறீர்களோ, அவனுக்கு
நானும் மன்னிக்கிறேன்; மேலும் எதை நான்
மன்னித்திருக்கிறேனோ, அதை உங்கள்நிமித்
தம் கிறிஸ்துவினுடைய *சந்நிதானத்திலே
11 மன்னித்திருக்கிறேன். சாத்தானாலே நாம்
மோசம்போகாதபடிக்கு அப்படிச் செய்தேன்;
அவனுடைய தந்திரங்கள் நமக்குத் தெரியாத
வைகள் அல்லவே.
மேலும் நான் கிறிஸ்துவின் சுவிசேஷத் 12
தைப் பிரசங்கிக்கும்படி [15]துரோவாபட்டணத்
தில்வந்தபோது, [16]கர்த்தராலே எனக்குக் கதவு
திறக்கப்பட்டிருக்கையில், நான் என் சகோ 13
தரனாகிய தீத்துவைக் காணாததினாலே, [17]என்
ஆவிக்கு அமைதலில்லாதிருந்தது. ஆதலால்
நான் அவர்களிடத்தில் அனுப்புவித்துக்கொ
ண்டு, மக்கெதோனியா நாட்டுக்குப் புறப்
பட்டுப் போனேன். கிறிஸ்துவுக்குள் எப் 14
பொழுதும் எங்களை †வெற்றிசிறக்கப்பண்ணி,
எல்லா இடங்களிலேயும் எங்களைக்கொண்டு
அவரை அறிகிற அறிவின் [18]வாசனையை
வெளிப்படுத்துகிற தேவனுக்கு [19]ஸ்தோத்
திரம். இரட்சிக்கப்படுகிறவர்களுக் குள்ளே 15
யும், கெட்டுப்போகிறவர்களுக் குள்ளேயும்,
[20]நாங்கள் தேவனுக்குக் கிறிஸ்துவின் நற்கந்த
மாயிருக்கிறோம். கெட்டுப்போகிறவர்களுக் 16
குள்ளே மரணத்திற்கேதுவான மரணவாசனை
யாகவும், [21]இரட்சிக்கப்படுகிறவர்களுக் குள்
ளே ஜீவனுக்கேதுவான ஜீவவாசனையாகவும்
இருக்கிறோம். [22]இவைகளை நடப்பிக்கிறதற்கு
எவன் தகுதியானவன்? அநேகரைப்போல், 17
[23]நாங்கள் தேவவசனத்தைக் கலப்பாய்ப் பே
சாமல், துப்புரவாகவும், தேவனால் அருளப்
பட்டபிரகாரமாகவும், [24]கிறிஸ்துவுக்குள் தேவ
சந்நிதியில் பேசுகிறோம்.
எங்களை நாங்களே [25]மறுபடியும் மெச்சிக் 3
கொள்ளத் தொடங்குகிறோமோ? அல்லது சில
ருக்கு வேண்டியதாயிருக்கிறதுபோல, [26]உங்
களுக்கு உபசார நிருபங்களை அனுப்பவும்,
உங்களிடத்தில் உபசார நிருபங்களைப் பெற்
றுக்கொள்ளவும் எங்களுக்கு வேண்டியதோ?
எங்கள் இருதயங்களில் எழுதப்பட்டும், [27]சக 2
ல மனுஷராலும் அறிந்து வாசிக்கப்பட்டும்
இருக்கிற எங்கள் நிருபம் நீங்கள்தானே. ஏனெ 3
னில் நீங்கள் எங்கள் ஊழியத்தினால் உண்
டாகிய கிறிஸ்துவின் நிருபமாயிருக்கிறீர்களெ
ன்று வெளியரங்கமாயிருக்கிறது; [28]அது மையி
னாலல்ல, ஜீவனுள்ள தேவனுடைய ஆவியி
னாலும்; கற்பலகைகளிலல்ல, [29]இருதயங்களா
கிய சதையான பலகைகளிலேயும் எழுதப்
பட்டிருக்கிறது. நாங்கள் தேவனுக்கு முன் 4
பாகக் கிறிஸ்துவின் மூலமாய் இப்படிப்பட்ட
நம்பிக்கையைக் கொண்டிருக்கிறோம். எங் 5
களால் ஏதாகிலும் ஆகும் என்பதுபோல ஒன்
றை யோசிக்கிறதற்கு நாங்கள் எங்களாலே
தகுதியானவர்கள் அல்ல; [30]எங்களுடைய
தகுதி தேவனால் உண்டாயிருக்கிறது. புது 6
உடன்படிக்கையின் ஊழியக்காரராயிருக்கும்
படி, [31]அவரே எங்களைத் தகுதியுள்ளவர்களா
க்கினார்; அந்த உடன்படிக்கை எழுத்திற்குரி
யதாயிராமல், [32]ஆவிக்குரியதா யிருக்கிறது;
[33]எழுத்து கொல்லுகிறது, [34]ஆவியோ உயிர்ப்
பிக்கிறது. எழுத்துக்களினால் எழுதப்பட்டுக் 7
கற்களில் பதிந்திருந்த [35]மரணத்துக்கேதுவான

1 மத். 1. 1. அப். 9. 20. ரோ. 1. 5
2 ரோ. 15. 8, 9 எபி. 13. 8
3 2 தெச. 2. 17. 1 பே. 5. 10. 1 யோ. 2. 20, 27
4 எபே. 1. 13, 14: 4. 30. 2 தீமோ. 2. 19
5 ரோ. 8. 9, 14–16
6 ரோ. 1. 9. 1 கொ. 4. 21
7 1 கொ. 3. 5. 1 பே. 5. 3
8 1. 23: 13. 10
9 12. 21. கலா. 5. 10
10 7. 8–12: 11. 2
11 1 கொ. 5. 1. கலா. 4. 12: 5. 10
12 1 கொ. 5. 4, 5. 1 தீமோ. 5. 20
13 கலா. 6. 1
14 7. 15: 10. 6
* சமுகத்திலே
15 அப். 16. 8
16 1 கொ. 16. 9
17 7. 5, 6
† ஜெயகோலமாக்கி
18 உன்னத. 1. 3
19 ரோ. 8. 37
20 1 கொ. 1. 18
21 யோ. 9. 39. 1 பே. 2. 7, 8
22 3. 5, 6. 1 கொ. 15. 10
23 4. 2: 11. 13. 2 பே. 2. 3
24 எபி. 11. 27
25 5. 12
26 அப். 18. 27
27 1 கொ. 9. 2
28 1 கொ. 3. 5
29 யாத். 24. 12. எரே. 31. 33. எசே. 11. 19. எபி. 8. 10
30 யோ. 15. 5 1 கொ. 15. 10. பிலி. 2. 13
31 எபே. 3. 7. 1 தீமோ. 1. 12
32 ரோ. 2. 28, 29
33 ரோ. 4. 15: 7. 9, 10
34 யோ. 6. 63. ரோ. 8. 2
35 யாத். 34. 1, 29–35. ரோ. 7. 10

ஊழியத்தைச் செய்த மோசேயினுடைய முக
த்திலே மகிமைப்பிரகாசம் உண்டானபடி
யால், இஸ்ரவேல் புத்திரர் அவன் முகத்தை
8 நோக்கிப் பார்க்கக்கூடாதிருந்தார்களே. ஒழி
ந்துபோகிற மகிமையையுடைய அந்த ஊழி
யம் அப்படிப்பட்ட மகிமையுள்ளதாயிருந்
தால், [1]ஆவிக்குரிய ஊழியம் எவ்வளவு அதிக
9 மகிமையுள்ளதாயிருக்கும்? ஆக்கினைத்தீர்ப்
புக்கொடுக்கும் ஊழியம்மகிமையுள்ளதாயிருந்
தால், [2]நீதியைக் கொடுக்கும் ஊழியம் அதிக
10 மகிமையுள்ளதாயிருக்குமே. இப்படியாக,
மகிமைப்பட்டிருந்த அந்த ஊழியம் இந்த ஊழி
யத்திற்கு உண்டாயிருக்கிற சிறந்த மகிமை
11 க்கு முன்பாக மகிமைப்பட்டதல்ல. அன்
றியும் ஒழிந்துபோவதே மகிமையுள்ளதா யிருந்
ததானால், [3]நிலைத்திருப்பது அதிக மகிமையுள்
ளதாயிருக்குமே.
12 நாங்கள் இப்படிப்பட்ட நம்பிக்கையை
உடையவர்களாதலால்; [4]மிகவும் தாராள
13 மாய்ப் பேசுகிறோம். மேலும் ஒழிந்துபோ
வதின் முடிவை இஸ்ரவேல் புத்திரர் நோக்
கிப் பாராதபடிக்கு, [5]மோசே தன் முகத்தின்
மேல் முக்காடு போட்டுக்கொண்டதுபோல
14 நாங்கள் போடுகிறதில்லை. அவர்களுடைய
மனது கடினப்பட்டது; [6]இந்நாள்வரைக்கும்
பழைய ஏற்பாடு வாசிக்கப்படுகையில், அந்த
முக்காடு நீங்காமலிருக்கிறது; அது கிறிஸ்து
15 வினாலே *நீக்கப்படுகிறது. மோசேயின் ஆக
மங்கள் வாசிக்கப்படும்போது, இந்நாள்வரை
க்கும் முக்காடு அவர்கள் இருதயத்தின்மேல்
16 இருக்கிறதே. அவர்கள் கர்த்தரிடத்தில் மனந்
திரும்பும்போது, [7]அந்த முக்காடு எடுபட்டுப்
17 போம். கர்த்தரே ஆவியானவர்; [8]கர்த்தரு
டைய ஆவி எங்கேயோ [9]அங்கே விடுதலையு
18 முண்டு. நாமெல்லாரும் திறந்த முகமாய்க்
[10]கர்த்தருடைய மகிமையைக் கண்ணாடியிலே
காண்கிறதுபோலக் கண்டு, ஆவியாயிருக்கிற
கர்த்தரால் அந்தச் சாயலாகத்தானே மகிமை
யின்மேல் மகிமையடைந்து [11]மறுரூபப்படுகி
றோம்.

4 இப்படிப்பட்ட ஊழியத்தை உடையவர்
களாகிய நாங்கள் [12]இரக்கம்பெற்றிருப்பதால்
2 சோர்ந்துபோகிறதில்லை. வெட்கமான அந்
தரங்க காரியங்களை நாங்கள் வெறுத்து, தந்திர
மாய் நடவாமலும், தேவவசனத்தைப் புரட்
டாமலும், [13]சத்தியத்தை வெளிப்படுத்துகிறதி
னாலே தேவனுக்குமுன்பாக எல்லாமனுஷ
ருடைய மனச்சாட்சிக்கும் எங்களை உத்தம
3 ரென்று விளங்கப்பண்ணுகிறோம். எங்கள்
சுவிசேஷம் மறைபொருளாயிருந்தால், [14]கெட்
டுப்போகிறவர்களுக்கே அது மறைபொருளா
4 யிருக்கும். தேவனுடைய [15]சாயலாயிருக்கிற
கிறிஸ்துவின் மகிமையான சுவிசேஷத்தின்
ஒளி, அவிசுவாசிகளாகிய அவர்களுக்குப் பிர
காசமா யிராதபடிக்கு, [16]இப்பிரபஞ்சத்தின்
†தேவனானவன் அவர்களுடைய மனதைக்
5 குருடாக்கினான். நாங்கள் எங்களையே பிரசங்
கியாமல், [17]கிறிஸ்துஇயேசுவைக் கர்த்தரென்
றும், எங்களையோ இயேசுவினிமித்தம் உங்
கள் ஊழியக்காரரென்றும் பிரசங்கிக்கிறோம்.
இருளிலிருந்து [18]வெளிச்சத்தைப் பிரகாசிக்கச் 6
சொன்ன தேவன் இயேசுகிறிஸ்துவின் முகத்
திலுள்ள தமது மகிமையின் அறிவாகிய ஒளி
யைத் [19]தோன்றப்பண்ணும் பொருட்டாக,
எங்கள் இருதயங்களிலே பிரகாசித்தார்.
இந்த மகத்துவமுள்ள வல்லமை எங்களால் 7
உண்டாயிராமல், தேவனால் உண்டாயிருக்
கிறதென்று விளங்கும்படி, [20]இந்தப் பொக்கி
ஷத்தை மண்பாண்டங்களில் பெற்றிருக்கி
றோம். நாங்கள் எப்பக்கத்திலும்நெருக்கப்பட் 8
டும் ஒடுங்கிப்போகிறதில்லை; [21]கலக்கமடைந்
தும் மனமுறிவடைகிறதில்லை; துன்பப்படுத் 9
தப்பட்டும் கைவிடப்படுகிறதில்லை; கீழே தள்
ளப்பட்டும்மடிந்துபோகிறதில்லை. கர்த்தராகிய 10
இயேசுவினுடைய ஜீவனும் [22]எங்கள் சரீரத்
திலே விளங்கும்படிக்கு, இயேசுவின் ‡மர
ணத்தை எப்பொழுதும் [23]எங்கள் சரீரத்தில்
சுமந்து திரிகிறோம். எப்படியெனில், சாவுக் 11
கினமான எங்கள் மாம்சத்திலே இயேசுவினு
டைய ஜீவனும் விளங்கும்படிக்கு உயிரோடி
ருக்கிற நாங்கள் எப்பொழுதும் இயேசுவினி
மித்தம் [24]மரணத்திற்கு ஒப்புக்கொடுக்கப்படு
கிறோம். இப்படி மரணமானது எங்களி 12
டத்திலும், [25]ஜீவனானது உங்களிடத்திலும்
பெலன்செய்கிறது. விசுவாசித்தேன், [26]ஆகை 13
யால் பேசினேன் என்று எழுதியிருக்கிறபடி,
[27]நாங்களும் அந்த விசுவாசத்தின் ஆவியை
உடையவர்களா யிருந்து, விசுவாசிக்கிறபடி
யால் பேசுகிறோம். கர்த்தராகிய இயேசுவை 14
எழுப்பினவர் எங்களையும் §இயேசுவைக்கொ
ண்டு எழுப்பி, [28]உங்களுடனேகூடத் தமக்கு
முன்பாக நிறுத்துவாரென்று அறிந்திருக்கி
றோம். தேவனுடைய மகிமை விளங்குவதற் 15
கேதுவாகக் கிருபையானது [29]அநேகருடைய
ஸ்தோத்திரத்தினாலே பெருகும்படிக்கு,
[30]இவையெல்லாம் உங்கள்நிமித்தம் உண்டா
யிருக்கிறது.
ஆனபடியினாலே [31]நாங்கள் சோர்ந்துபோ 16
கிறதில்லை; எங்கள் புறம்பான மனுஷனானது
அழிந்தும், [32]உள்ளான மனுஷனானது நாளு
க்கு நாள் ||புதிதாக்கப்படுகிறது. மேலும் 17
காணப்படுகிறவைகளையல்ல, [33]காணப்படாத
வைகளை நோக்கியிருக்கிற நமக்கு, அதிசீக்கி
ரத்தில் நீங்கும் இலேசான [34]நம்முடைய
உபத்திரவம் மிகவும் அதிகமான நித்திய கன
மகிமையை உண்டாக்குகிறது. ஏனெனில், 18
காணப்படுகிறவைகள் அநித்தியமானவைகள்,
காணப்படாதவைகளோ நித்தியமானவைகள்.
பூமிக்குரிய கூடாரமாகிய [35]நம்முடைய 5
வீடு அழிந்துபோனாலும், தேவனால் கட்டப்
பட்ட கைவேலையல்லாத நித்திய வீடு பரலோ
கத்திலே நமக்கு உண்டென்று அறிந்திருக்கி
றோம். ஏனெனில், இந்தக் கூடாரத்திலே 2
நாம் தவித்து, [36]நம்முடைய பரம வாசஸ்தலத்

1 கலா. 3. 5
2 ரோ. 1. 17; 3. 21
3 ரோ. 5. 20, 21
4 7. 4. எபே. 6. 19
5 ரோ. 10. 4. கலா. 3. 23
6 ரோ. 11. 7, 8, 25
* ஒழிந்துபோம்
7 ஏசா. 25. 7. ரோ. 11. 23, 26
8 1 கொ. 15. 45
9 ரோ. 8. 2
10 1 கொ. 13. 12. 1 தீமோ. 1. 11
11 சங். 84. 7. ரோ. 8. 29. 1 கொ. 15. 49
12 1 கொ. 7. 25. 1 தீமோ. 1. 13
13 2. 17
14 1 கொ. 1. 18. 2 தெச. 2. 10
15 யோ. 1. 14, 18
16 யோ. 12. 31, 40
† தம்பிரான்
17 1 கொ. 1. 13, 23. 9. 19
18 ஆதி. 1. 3
19 1 பே. 2. 9. 2 பே. 1. 19
20 5. 1. 1 கொ. 2. 5
21 7. 5
22 ரோ. 8. 17. 2 தீமோ. 2. 11, 12
‡ வதையை
23 கலா. 6. 17
24 ரோ. 8. 36. 1 கொ. 15. 31, 49
25 13. 9
26 சங். 116. 10
27 ரோ. 1. 12. 2 பே. 1. 1
§ இயேசுவோடு
28 5. 1-4. ரோ. 8. 11. 1 கொ. 6. 14
29 8. 19
30 1 கொ. 3. 21, 22
31 1 கொ. 15. 58
32 ரோ. 7. 22
|| மனுஷன் புதிதாக்கப்படுகிறான்
33 எபி. 11. 1
34 ரோ. 8. 18, 34. 1 பே. 1. 6; 5. 10.
35 யோபு 4. 19. 2 பே. 1. 13, 14
36 ரோ. 8. 23

னைத் தரித்துக்கொள்ள மிகவும் வாஞ்சையுள்ள
3 வர்களாயிருக்கிறோம்; தரித்துக்கொண்டவர்
களானால், [1]நிர்வாணிகளாய்க் காணப்படமாட்
4 டோம். இந்தக் கூடாரத்திலிருக்கிற நாம் பா
ரஞ்சுமந்து தவிக்கிறோம்; இந்தப் போர்வை
யைக் களைந்துபோடவேண்டுமென்று விரும்
பாமல், [2]மரணமானது ஜீவனாலே விழுங்கப்
படுவதற்காகப் போர்வை தரித்தவர்களாயிருக்க
5 வேண்டுமென்று விரும்புகிறோம். இதற்கு நம்
மை [3]ஆயத்தப்படுத்துகிறவர் தேவனே; [4]ஆவி
யென்னும் அச்சாரத்தை நமக்குத் தந்தவரும்
6 அவரே. நாம் தரிசித்து நடவாமல், [5]விசுவா
7 சித்து நடக்கிறோம். இந்த தேகத்தில் குடி
யிருக்கையில் கர்த்தரிடத்தில் குடியிராதவர்
களாயிருக்கிறோமென்று அறிந்தும், எப்பொ
8 ழுதும் தைரியமாயிருக்கிறோம். நாம் தைரிய
மாகவேயிருந்து, இந்த தேகத்தை விட்டுக் குடி
போகவும், [6]கர்த்தரிடத்தில் குடியிருக்கவும்
9 அதிகமாய் விரும்புகிறோம். அதினிமித்தமே
நாம் சரீரத்தில் குடியிருந்தாலும் குடியிராமற்
போனாலும் அவருக்குப் பிரியமானவர்களா
10 யிருக்க நாடுகிறோம். ஏனென்றால், [7]சரீரத்
தில் அவனவன் செய்த நன்மைக்காவது தீமை
க்காவது தக்க பலனை அடையும்படிக்கு, நா
மெல்லாரும் கிறிஸ்துவின் நியாயாசனத்திற்கு
முன்பாக வெளிப்படவேண்டும்.
11 ஆகையால், கர்த்தருக்கு பயப்படத்தக்க
தென்று அறிந்து, [9]மனுஷருக்குப் புத்திசொல்
லுகிறோம்; தேவனுக்குமுன்பாக வெளியரங்க
மாயிருக்கிறோம், [10]உங்கள் மனச்சாட்சிக்கும்
வெளியரங்கமாயிருக்கிறோம் என்று நம்புகி
12 றேன். இதனாலே நாங்கள் உங்களுக்கு முன்
பாக எங்களை மறுபடியும் மெச்சிக்கொள்ளா
மல், [11]இருதயத்திலல்ல, வெளிவேஷத்தில்
மேன்மை பாராட்டுகிறவர்களுக்கு எதிரே எங்
களைக்குறித்து நீங்கள் மேன்மை பாராட்டும்
13 படிக்கு ஏதுவுண்டாக்குகிறோம். நாங்கள் பை
த்தியங்கொண்டவர்களென்றால் தேவனுக்காக
அப்படியிருக்கும்; [12]தெளிந்த புத்தியுள்ளவர்
களென்றால் உங்களுக்காக அப்படியிருக்கும்.
14 கிறிஸ்துவினுடைய [13]அன்பு எங்களை நெருக்கி
ஏவுகிறது; ஏனென்றால், எல்லாருக்காகவும்
ஒருவரே மரித்திருக்க, [14]எல்லாரும் மரித்தார்
15 கள் என்றும்; பிழைத்திருக்கிறவர்கள் இனித்
தங்களுக்கென்று பிழைத்திராமல், [15]தங்களுக்
காக மரித்து எழுந்தவருக்கென்று பிழைத்தி
ருக்கும்படி, அவர் எல்லாருக்காகவும் மரித்தா
16 ரென்றும் நிதானிக்கிறோம். ஆகையால், இது
முதற்கொண்டு, [16]நாங்கள் ஒருவனையும் மாம்
சத்தின்படி அறியோம்; நாங்கள் கிறிஸ்துவை
யும் மாம்சத்தின்படி அறிந்திருந்தாலும், இனி
ஒருபோதும் அவரை மாம்சத்தின்படி அறி
17 யோம். இப்படியிருக்க, ஒருவன் கிறிஸ்துவுக்
குள்ளிருந்தால் [17]புதுச் சிருஷ்டியாயிருக்கிறா
ன்; [18]பழையவைகள் ஒழிந்துபோயின, எல்லாம்
18 புதிதாயின. இவையெல்லாம் தேவனாலே
உண்டாயிருக்கிறது; [19]அவர் இயேசுகிறிஸ்து

வைக்கொண்டு நம்மைத் தம்மோடே ஒப்புர
வாக்கி, ஒப்புரவாக்குதலின் ஊழியத்தை எங்
களுக்கு ஒப்புக்கொடுத்தார். அதென்னவெ 19
னில், [20]தேவன் *உலகத்தாருடைய பாவங்
களை எண்ணாமல், கிறிஸ்துவுக்குள் அவர்க
ளைத் தமக்கு ஒப்புரவாக்கி, ஒப்புரவாக்குதலின்
உபதேசத்தை எங்களிடத்தில் ஒப்புவித்தார்.
ஆனபடியினாலே, தேவனானவர் எங்களைக் 20
கொண்டு புத்திசொல்லுகிறதுபோல, நாங்கள்
கிறிஸ்துவுக்காக ஸ்தானாபதிகளாயிருந்து, [21]தே
வனோடே ஒப்புரவாகுங்கள் என்று, கிறிஸ்து
வினிமித்தம் உங்களை வேண்டிக்கொள்ளுகி
றோம். நாம் அவருக்குள் [22]தேவனுடைய நீதி 21
யாகும்படிக்கு, [23]பாவம் அறியாத அவரை நமக்
காகப் பாவமாக்கினார். தேவனுடைய கிரு 6
பையை நீங்கள் விருதாவாய்ப் பெறாதபடிக்கு,
[24]உடன் வேலையாட்களாகிய நாங்கள் உங்க
ளுக்குப் புத்தி சொல்லுகிறோம். அநுக்கிரக 2
காலத்திலே நான் உனக்குச் செவிகொடுத்து,
[25]இரட்சணியநாளிலே உனக்கு உதவி செய்
தேன் என்று சொல்லியிருக்கிறாரே; இதோ,
இப்பொழுதே அநுக்கிரககாலம், இப்பொழு
தே இரட்சணியநாள். இந்த ஊழியம் குற் 3
றப்படாதபடிக்கு, [26]நாங்கள் யாதொன்றிலும்
இடறல் உண்டாக்காமல், எவ்விதத்தினாலே
யும், [27]எங்களை தேவஊழியக்காரராக விளங்கப்
பண்ணுகிறோம். மிகுந்த பொறுமையிலும், 4
உபத்திரவங்களிலும், நெருக்கங்களிலும், இடுக்
கண்களிலும், அடிகளிலும், [28]காவல்களிலும், 5
கலகங்களிலும், பிரயாசங்களிலும், கண்விழிப்
புகளிலும், உபவாசங்களிலும், கற்பிலும், 6
அறிவிலும், நீடிய சாந்தத்திலும், தயவிலும்,
பரிசுத்த ஆவியிலும், மாயமற்ற அன்பிலும்,
சத்தியவசனத்திலும், [29]திவ்விய பலத்திலும்; 7
[30]நீதியாகிய வலதிடதுபக்கத்து ஆயுதங்களைத்
தரித்திருக்கிறதிலும், கனத்திலும், கனவீனத் 8
திலும், துர்க்கீர்த்தியிலும், நற்கீர்த்தியிலும்;
[31]எத்தரென்னப்பட்டாலும் நிஜஸ்தராகவும்,
அறியப்படாதவர்களென்னப்பட்டாலும் [32]நன் 9
றாய் அறியப்பட்டவர்களாகவும், சாகிறவர்கள்
என்னப்பட்டாலும் உயிரோடிருக்கிறவர்களா
கவும், [33]தண்டிக்கப்படுகிறவர்கள் என்னப்பட்
டாலும் கொல்லப்படாதவர்களாகவும், துக்கப் 10
படுகிறவர்கள் என்னப்பட்டாலும் எப்பொ
ழுதும் சந்தோஷப்படுகிறவர்களாகவும், தரித்
திரர் என்னப்பட்டாலும் அநேகரை ஐசுவரிய
வான்க ளாக்குகிறவர்களாகவும், [34]ஒன்றுமில்
லாதவர்களென்னப்பட்டாலும் சகலத்தையு
முடையவர்களாகவும் எங்களை விளங்கப்பண்
ணுகிறோம்.
கொரிந்தியரே, எங்கள் வாய் உங்களோ 11
டே பேசத் திறந்திருக்கிறது, [35]எங்கள் இரு
தயம் பூரித்திருக்கிறது. எங்கள் உள்ளம் உங் 12
களைக்குறித்து நெருக்கமடையவில்லை, [36]உங்
கள் உள்ளமே எங்களைக்குறித்து நெருக்க
மடைந்திருக்கிறது. ஆதலால் அதற்குப் பதி 13
லீடாக நீங்களும் பூரிப்பாகுங்களென்று, பிள்

1 வெளி. 3. 18; 16. 15
2 1 கொ. 15. 53, 54
3 ஏசா. 29. 23. எபே. 2. 10
4 எபே. 1. 14
5 ரோ. 8. 24, 25. 1 கொ. 13. 12. எபி. 11. 1
6 பிலி. 1. 23
7 எபே. 6. 8. வெளி. 22. 12
8 மத். 25. 31, 32. ரோ. 14. 10
9 எபி. 10. 31. யூதா. 23. ஈச
10 4. 2
11 1. 14; 3. 1
12 11. 1, 16, 17
13 உன்னத. 8. 6
14 ரோ. 5. 15
15 ரோ. 14. 7–9. 1 கொ. 6. 19, 20
16 மத். 12. 50. யோ. 15. 14. கலா. 5. 6
17 யோ. 3. 3. கலா. 6. 15
18 ஏசா. 65. 17. எபே. 2. 15. வெளி. 21. 5
19 கொலோ. 1. 20
20 ரோ. 3. 24, 25
* தேவன் கிறிஸ்துவுக்குள் இருந்து லோகத்தாரின் பாவங்களை அவர்கள்மேல் சுமத்தாமல், லோகத்தைத் தமக்கு, ஒப்புரவாக்கிக்கொண்டு, ஒப்புரவாக்குதலின் வசனத்தை எங்களுக்குள்ளே வைத்தார்
21 யோபு 33. 23. மல். 2. 7. எபே. 6. 20
22 ரோ. 1. 17; 5. 19
23 ஏசா. 53. 6, 9, 12. கலா. 3. 13. 1 பே. 2. 22, 24. 1 யோ. 3. 5
24 5. 20. 1 கொ. 3. 9. எபி. 12. 13
25 ஏசா. 49. 8
26 1 கொ. 9. 12; 10. 32
27 1 கொ. 4. 1
28 11. 23. ஷ
29 4. 2. 1 கொ. 2. 4
30 எபே. 6. 11. ஷ. 2 தீமோ. 4. 7
31 லூ. 7. 12, 47
32 1 கொ. 4. 9
33 சங். 118. 18
34 சங். 84. 11
35 7. 3
36 12. 15

ளைகளுக்குச் சொல்லுகிறதுபோல, உங்களுக்
குச் சொல்லுகிறேன்.
14 அந்நிய நுகத்திலே அவிசுவாசிகளுடன்
பிணைக்கப்படா திருப்பீர்களாக; [1]நீதிக்கும்
அநீதிக்கும் சம்பந்தமேது? ஒளிக்கும் இருளுக்
15 கும் ஐக்கியமேது? கிறிஸ்துவுக்கும் பேலியா
ளுக்கும் இசைவேது? அவிசுவாசியுடனே
16 விசுவாசிக்குப் பங்கேது? தேவனுடைய ஆல
யத்துக்கும் விக்கிரகங்களுக்கும் சம்பந்தமேது?
[2]நான் அவர்களுக்குள்ளே வாசம்பண்ணி,
அவர்களுக்குள்ளே உலாவி, அவர்கள் தேவ
னாயிருப்பேன், அவர்கள் என் ஜனங்களா
யிருப்பார்கள் என்று, தேவன் சொன்னபடி,
[3]நீங்கள் ஜீவனுள்ள தேவனுடைய ஆலயமா
17 யிருக்கிறீர்களே. ஆனபடியால், நீங்கள் அவர்
கள் நடுவிலிருந்து புறப்பட்டுப் பிரிந்துபோய்,
[4]அசுத்தமானதைத் தொடாதிருங்கள் என்று
18 கர்த்தர் சொல்லுகிறார். அப்பொழுது, நான்
உங்களை ஏற்றுக்கொண்டு, [5]உங்களுக்குப்
பிதாவாயிருப்பேன், நீங்கள் எனக்குக் குமார
ரும் குமாரத்திகளுமாயிருப்பீர்களென்று சர்வ
7 வல்லமையுள்ள கர்த்தர் சொல்லுகிறார். இப்
படிப்பட்ட வாக்குத்தத்தங்கள் நமக்கு உண்டா
யிருக்கிறபடியினால், [6]பிரிய மானவர்களே,
மாம்சத்திலும் ஆவியிலும் உண்டான எல்லா
அசுசியும் நீங்க, நம்மைச் சுத்திகரித்துக்கொ
ண்டு, பரிசுத்தமாகுதலை தேவபயத்தோடே
பூரணப்படுத்தக்கடவோம்.
2 எங்களுக்கு இடங்கொடுங்கள்; நாங்கள் ஒரு
வனுக்கும் அநியாயஞ்செய்யவில்லை, ஒருவனை
யும் கெடுக்கவில்லை, [7]ஒருவனையும் வஞ்சிக்க
3 வில்லை. உங்களைக் குற்றவாளிகளாக்கும்பொ
ருட்டாக இப்படி நான் சொல்லுகிறதில்லை;
[8]முன்னே நான் சொல்லியபடி, உங்களுட
னேகூடச் சாகவும் கூடப் பிழைக்கவும் தக்க
தாக எங்களிருதயங்களில் நீங்கள் இருக்கிறீர்
4 களே. மிகுந்த தைரியத்தோடே உங்களுடன்
பேசுகிறேன்; [9]உங்களைக்குறித்து மிகவும் மே
ன்மை பாராட்டுகிறேன், ஆறுதலால் நிறைந்தி
ருக்கிறேன், [10]எங்களுக்கு உண்டான சகல
உபத்திரவத்திலேயும் பரிபூரண சந்தோஷமா
யிருக்கிறேன்.
5 எப்படியென்றால், நாங்கள் மக்கெதோனி
யா நாட்டிலே வந்தபோது, எங்கள் சரீரத்திற்கு
இளைப்பாறுதல் ஒன்றுமில்லாமல், எப்பக்கத்
திலேயும் உபத்திரவப்பட்டோம்; [11]புறம்பே
போராட்டங்களும், உள்ளே பயங்களும் இருந்
6 தன. ஆகிலும், சிறுமைப்பட்டவர்களுக்கு
ஆறுதல்செய்கிற தேவன் [12]தீத்து வந்ததினாலே
7 எங்களுக்கு ஆறுதல்செய்தார். அவன் வந்ததி
னாலேமாத்திரமல்ல, உங்கள் வாஞ்சையையும்,
உங்கள் துக்கிப்பையும், என்னைப்பற்றி உங்
களுக்கு உண்டான பக்திவைராக்கியத்தையும்
அவன் கண்டு, உங்களால் அடைந்த ஆறு
தலைத் தெரியப்படுத்தினதினாலும், நானும்
ஆறுதலடைந்து அதிகமாய்ச் சந்தோஷப்பட்
8 டேன். ஆதலால் நான் நிருபத்தினாலே உங்

1 உபா. 7. 2, 3. 1 கொ. 5. 9: 7. 39: 10. 21. எபே. 5. 7, 11
2 யாத். 29. 45. லேவி. 26. 12. எரே. 31. 1, 33 எசே. 11. 20. சகரி. 8. 8
3 1 கொ. 3. 16, 17: 6. 19. எபே. 2. 21, 22. எபி. 3. 6
4 7. 1. ஏசா. 52. 11. வெளி. 18. 4
5 எரே. 31. 9. வெளி. 21. 7
6 6. 17, 18. சங். 51. 10. எசே. 36. 25, 26. 1 யோ. 1. 7, 9: 3. 3
7 12. 17. 1 சாமு. 12. 3, 4. அப். 20. 33
8 6. 11, 12
9 1. 14. 1 கொ. 1. 4
10 பிலி. 2. 17. கொலோ. 1. 24
11 2. 13: 4. 8. உபா. 32. 25
12 2. 13
13 2. 4
14 எரே. 31 9. எசே. 7. 16. மத். 26. 75
15 நீதி. 17. 22
16 ஏசா. 66. 2. தீத். 3. 8
17 எபே. 5. 11
18 எபே. 4. 26
19 எபி. 4. 1
20 சங். 42. 1: 130. 6
21 வெளி. 3. 19
22 மத். 5. 29, 30
23 ரோ. 14. 18
24 2. 4
* எங்களைக்குறித்து உங்களுக்கு
† நாங்கள் ஆறுதல் அடைந்தோம், எங்கள் ஆறுதலிலே ...சந்தோஷப்பட்டோம்
25 ரோ. 15. 30
26 பிலி. 2. 12
27 2 தெச. 3. 4. பிலேமோன் 8, 21. வச
28 9. 2, 4
29 மாற். 12. 44

களைத் துக்கப்படுத்தியிருந்தும், [13]அந்த நிருபம்
கொஞ்சப்பொழுதாகிலும் உங்களைத் துக்கப்
படுத்தினதென்று கண்டு நான் மனஸ்தாபப்
பட்டிருந்தும், இப்பொழுது மனஸ்தாபப்படு
கிறதில்லை. இப்பொழுது சந்தோஷப்படுகி 9
றேன்; நீங்கள் துக்கப்பட்டதற்காக அல்ல,
மனந்திரும்புகிறதற்கேதுவாகத் துக்கப்பட்ட
தற்காகவே சந்தோஷப்படுகிறேன்; நீங்கள்
ஒன்றிலும் எங்களால் நஷ்டப்படாதபடிக்கு,
தேவனுக்கேற்ற துக்கம் அடைந்தீர்களே. தே 10
வனுக்கேற்ற துக்கம் [14]பின்பு மனஸ்தாபப்படு
கிறதற்கு இடமில்லாமல் இரட்சிப்புக்கேது
வான மனந்திரும்புதலை உண்டாக்குகிறது;
[15]லௌகிக துக்கமோ மரணத்தை உண்டாக்கு
கிறது. பாருங்கள், நீங்கள் தேவனுக்கேற்ற 11
துக்கமடைந்ததுண்டே; [16]அது உங்களிடத்
தில் எவ்வளவு ஜாக்கிரதையையும் [17]குற்றந்
தீர எவ்வளவு நியாயஞ்சொல்லுதலையும்,
[18]எவ்வளவு வெறுப்பையும், [19]எவ்வளவு பயத்
தையும், [20]எவ்வளவு ஆவலையும், [21]எவ்வளவு
பக்திவைராக்கியத்தையும், [22]எவ்வளவு கண்
டிப்பையும் உண்டாகிற்று. [23]இந்தக் காரியத்
திலே நீங்கள் எல்லாவிதத்திலும் உங்களைச்
சுத்தவான்களென்று விளங்கப்பண்ணினீர்கள்.
ஆதலால் நான் உங்களுக்கு அப்படி எழுதி 12
யிருந்தும், அநியாயஞ் செய்தவனிமித்தமு
மல்ல, அநியாயஞ் செய்யப்பட்டவனிமித்தமு
மல்ல, [24]தேவனுக்குமுன்பாக *உங்களைக்குறி
த்து எங்களுக்கு உண்டாயிருக்கிற ஜாக்கிர
தை உங்களுக்கு வெளிப்படும்பொருட்டே
அப்படி எழுதினேன். இதினிமித்தம் †நீங் 13
கள் ஆறுதலடைந்ததினாலே நாங்களும் ஆறு
தலடைந்தோம்; விசேஷமாகத் தீத்துவினு
டைய ஆவி உங்கள் அனைவராலும் ஆறுதல
டைந்ததினாலே, [25]அவனுக்கு உண்டான சந்
தோஷத்தினால் அதிக சந்தோஷப்பட்டோம்.
இப்படியிருக்க, உங்களுக்குப் புகழ்ச்சியாய் 14
நான் அவனுடனே சொன்ன யாதொன்றைக்
குறித்தும் வெட்கப்படமாட்டேன்; நாங்கள்
சகலத்தையும் உங்களுக்குச் சத்தியமாய்ச்சொ
ன்னதுபோல, தீத்துவுடனே நாங்கள் உங்
களுக்குப் புகழ்ச்சியாய்ச் சொன்னதும் சத்தி
யமாக விளங்கிற்றே. மேலும் நீங்களெல்லா 15
ரும் கட்டளைக்கு அமைந்து, [26]பயத்தோடும்
நடுக்கத்தோடும் தன்னை ஏற்றுக்கொண்டதை
அவன் நினைக்கையில், அவனுடைய உள்ளம்
உங்களைப்பற்றி அதிக அன்பாயிருக்கிறது.
ஆகையால் எல்லாவிதத்திலும் உங்களைக்குறி 16
த்து எனக்குத் [27]திடநம்பிக்கை உண்டாயிருக்
கிறதென்று சந்தோஷப்படுகிறேன்.
அன்றியும் சகோதரரே, [28]மக்கெதோனி 8
யா நாட்டுச் சபைகளுக்குத் தேவன் அளித்த
கிருபையை உங்களுக்கு அறிவிக்கிறோம்.
அவர்கள் மிகுந்த உபத்திரவத்தினாலே சோ 2
திக்கப்படுகையில், [29]கொடியதரித்திரமுடைய
வர்களாயிருந்தும், தங்கள் பரிபூரண சந்தோ
ஷத்தினாலே மிகுந்த உதாரத்துவமாய்க் கொ

3 டுத்தார்கள். மேலும் அவர்கள் தங்கள் திரா
ணிக்குத் தக்கதாகவும், தங்கள் திராணிக்கு
மிஞ்சியும் கொடுக்க, தாங்களே மனதுள்ளவர்
களாயிருந்தார்களென்பதற்கு, நான் சாட்சி
4 யாயிருக்கிறேன். தங்கள் உபகாரத்தையும்,
[1]பரிசுத்தவான்களுக்குச் செய்யப்படும் தர்ம
ஊழியத்தின் பங்கையும் நாங்கள் ஏற்றுக்
கொள்ளும்படி அவர்கள் எங்களை மிகவும் வே
5 ண்டிக்கொண்டார்கள். மேலும் நாங்கள்
நினைத்தபடிமாத்திரம் கொடாமல், தேவனு
டைய சித்தத்தினாலே முன்பு தங்களைத்தாமே
கர்த்தருக்கும், பின்பு எங்களுக்கும் ஒப்புக்
6 கொடுத்தார்கள். ஆதலால் தீத்து இந்தத் தர்ம
காரியத்தை உங்களிடத்தில் தொடங்கினபடி
யே அதை முடிக்கவும் வேண்டுமென்று அவ
7 னைக் கேட்டுக்கொண்டோம். அல்லாமலும்,
விசுவாசத்திலும், போதிப்பிலும், அறிவிலும்,
எல்லாவித ஜாக்கிரதையிலும், எங்கள்மே
லுள்ள உங்கள் அன்பிலும், மற்றெல்லாக் காரி
யங்களிலும், [2]நீங்கள் பெருகியிருக்கிறது
போல, இந்தத் தர்மகாரியத்திலும் பெருகவே
8 ண்டும். இதை நான் கட்டளையாகச் சொல்
லாமல், [3]மற்றவர்களுடைய ஜாக்கிரதையைக்
கொண்டு, உங்கள் அன்பின் உண்மையைச்
சோதிக்கும்பொருட்டே சொல்லுகிறேன்.
9 நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின்
கிருபையை அறிந்திருக்கிறீர்களே; [4]அவர்
ஐசுவரியமுள்ளவராயிருந்தும், [5]நீங்கள் அவ
ருடைய தரித்திரத்தினாலே ஐசுவரியவான்
களாகும்படிக்கு, [6]உங்கள்நிமித்தம் தரித்திரரா
10 னாரே. இதைக்குறித்து என் யோசனையை
உங்களுக்கு அறிவிக்கிறேன்; இதைச் செய்
கிறதற்கு மாத்திரமல்ல, [7]செய்யவேண்டுமெ
ன்று உற்சாகப்படுகிறதற்கும் ஒரு வருஷமாய்
ஆரம்பம்பண்ணின உங்களுக்கு இது தகுதி
11 யாயிருக்கும். ஆகையால் [8]அதை இப்பொ
ழுது செய்து நிறைவேற்றுங்கள்; கொடுக்க
வேண்டும் என்கிற விருப்பமுண்டாயிருந்தது
போல, உங்களுக்கு உள்ளவைகளில் எடுத்து
அதை நிறைவேற்றுதலும் உண்டாவதாக.
12 ஒருவனுக்கு [9]மனவிருப்பமிருந்தால், அவனு
க்கு இல்லாததின்படியல்ல, அவனுக்கு உள்
13 ளதின்படியே அங்கிகரிக்கப்படும். மற்றவர்
களுக்குச் சகாயமும் உங்களுக்கு வருத்தமும்
உண்டாகும்படியல்ல, சமநிலையிருக்கும்படி
14 யாகவே சொல்லுகிறேன். எப்படியெனில்,
[10]மிகுதியாய்ச் சேர்த்தவனுக்கு அதிகமானது
மில்லை, கொஞ்சமாய்ச் சேர்த்தவனுக்குக்
குறைவானதுமில்லை என்று எழுதியிருக்கிற
15 பிரகாரம், சமநிலைப்பிரமாணத்தின்படியே,
அவர்களுடைய செல்வம் உங்கள் வறுமைக்கு
உதவும்படிக்கு இக்காலத்திலே உங்களுடைய
செல்வம் அவர்களுடைய வறுமைக்கு உதவு
வதாக.
16 அன்றியும் உங்களுக்காக இப்படிப்பட்ட
ஜாக்கிரதை உண்டாயிருக்கும்படி தீத்துவின்
இருதயத்தில் அருளின தேவனுக்கு ஸ்தோத்
திரம். நாங்கள் கேட்டுக்கொண்டதை அவன் 17
அங்கிகரித்ததுமல்லாமல், [11]அவன் அதிக ஜாக்
கிரதையாயிருந்து, தன் மனவிருப்பத்தின்படி
யே உங்களிடத்திற்கு வரப் புறப்பட்டான்.
சுவிசேஷ ஊழியத்தில் எல்லாச் சபைகளி 18
லும் புகழ்ச்சிபெற்ற [12]ஒரு சகோதரனை அவ
னோடேகூட அனுப்பியிருக்கிறோம். அது 19
மாத்திரமல்ல, கர்த்தருக்கு மகிமையுண்டாக
வும், *உங்கள் மனவிருப்பம் விளங்கவும், எங்
கள் ஊழியத்தினாலே சேர்க்கப்படும் தர்மப்
பணத்தைக் கொண்டுபோகையில், எங்களு
க்கு வழித்துணையாயிருக்கும்படி, [13]அவன்
சபைகளால் தெரிந்து ஏற்படுத்தப்பட்டவனுயு
மிருக்கிறான். எங்கள் ஊழியத்தினாலே சேர்க் 20
கப்படும் இந்த மிகுதியான தர்மப்பணத்தைக்
குறித்து ஒருவனும் எங்களைக் குற்றப்படுத்தா
தபடிக்கு நாங்கள் எச்சரிக்கையாயிருந்து,
கர்த்தருக்கு முன்பாகமாத்திரமல்ல, மனுஷ 21
ருக்கு முன்பாகவும் [14]யோக்கியமானவைகளைச்
செய்ய நாடுகிறோம். மேலும், அநேக காரி 22
யங்களில் ஜாக்கிரதையுள்ளவனென்று நாங்
கள் பலமுறை கண்டறிந்தவனும், இப்பொ
ழுது உங்கள்மேலுள்ள மிகுந்த நம்பிக்கையி
னாலே அதிக ஜாக்கிரதையுள்ளவனுமாகிய
நம்முடைய சகோதரனையும் இவர்களோடே
கூட அனுப்பியிருக்கிறோம். தீத்துவைக்குறி 23
த்து ஒருவன் விசாரித்தால், அவன் எனக்குக்
கூட்டாளியும், உங்களுக்காக என் உடன்
வேலையாளுமாயிருக்கிறானென்றும்; எங்கள்
சகோதரரைக்குறித்து ஒருவன் விசாரித்தால்,
[15]அவர்கள் சபைகளுடைய †ஸ்தானபதி
களும், கிறிஸ்துவுக்கு மகிமையுமாயிருக்கிறார்
களென்றும் அறியக்கடவன். ஆதலால் உங் 24
கள் அன்பையும், [16]நாங்கள் உங்களைக்குறித்துச்
சொன்ன புகழ்ச்சியையும், சபைகளுக்கு
முன்பாக அவர்களுக்குத் திருஷ்டாந்தப்படுத்
துங்கள்.

பரிசுத்தவான்களுக்குச் செய்யவேண்டிய 9
தர்மசகாயத்தைக்குறித்து, [17]நான் அதிகமாக
உங்களுக்கு எழுதவேண்டுவதில்லை. உங்கள் 2
மனவிருப்பத்தை அறிந்திருக்கிறேன்; அகாயா
விலுள்ளவர்கள் ஒருவருஷமாக ஆயத்தமாயிரு
க்கிறார்களென்று, நான் மக்கெதோனியருட
னே சொல்லி, உங்களைப் புகழ்ந்தேனே; உங்
கள் ஜாக்கிரதை அநேகரை எழுப்பிவிட்டது
முண்டு. அப்படியிருந்தும், உங்களைக்குறித்து 3
நாங்கள் சொன்ன புகழ்ச்சி இந்தக் காரியத்
தில் வீணாய்ப்போகாமல், நான் சொன்ன
படி நீங்கள் ஆயத்தப்பட்டவர்களாயிருப்ப
தற்கு, இந்தச் சகோதரரை அனுப்பினேன்.
மக்கெதோனியர் என்னுடனேகூட வந்து, 4
உங்களை ஆயத்தப்படாதவர்களாகக் கண்டால்,
[18]இவ்வளவு நிச்சயமாய் உங்களைப் புகழ்ந்த
தற்காக, நீங்கள் வெட்கப்படுவீர்களென்று
நாங்கள் சொல்லாமல், நாங்களே வெட்கப்
படவேண்டியதாயிருக்கும். ஆகையால், வாக் 5
குத்தத்தம் பண்ணப்பட்டிருக்கிற உங்கள்

[1] அப். 11. 29. ரோ. 15. 25, 26. 1 கொ. 16. 1–4
[2] 1 கொ. 1. 5; 12. 13
[3] 1 கொ. 7. 6
[4] பே. 1. 1
[5] வெளி. 3. 18
[6] மத். 8. 20. லூ. 9. 58. பிலி. 2. 6, 7
[7] 9. 2
[8] 1 தீமோ. 6. 19. எபி. 13. 16. யாக். 2. 15, 16
[9] லூ. 21. 3
[10] யாத். 16. 18
[11] 6. வச
[12] 12. 18
* எங்கள்
[13] 1 கொ. 16. 3, 4
[14] ரோ. 12. 17. பிலி. 4. 8. 1 பே. 2. 12
[15] பிலி. 2. 25
† அப்போஸ்தலர்களும்
[16] 7. 14; 9. 2
[17] 8. 4. மூ. அப். 11. 29. ரோ. 15. 26. 1 கொ. 16. 1. கலா. 2. 10
[18] 8. 24

தானதர்மமானது லோபத்தனமாய்க் கொடுக்
கப்பட்டதாயிராமல், உதாரத்துவமாய்க்கொடு
க்கப்பட்டதாயிருக்கும்படியாக அதை ஆயத்
தப்படுத்துகிறதற்குச் சகோதாரை எவி, உங்
களிடத்தில் முன்னதாக அனுப்புவது எனக்கு
அவசியம் என்று காணப்பட்டது.
6 பின்னும் நான் சொல்லுகிறதென்னவெ
னில், [1]சிறுக விதைக்கிறவன் சிறுக அறுப்
பான், பெருக விதைக்கிறவன் பெருக அறுப்
7 பான். அவனவன் விசனமாயுமல்ல, [2]கட்
டாயமாயுமல்ல, தன் மனதில் நியமித்தபடியே
கொடுக்கக்கடவன்; [3]உற்சாகமாய்க் கொடுக்
கிறவனிடத்தில் தேவன் பிரியமாயிருக்கிறார்.
8 மேலும், [4]நீங்கள் எல்லாவற்றிலும் எப்பொழு
தும் சம்பூரணமுடையவர்களாயும், சகலவித
நற்கிரியைகளிலும் பெருகுகிறவர்களாயுமிருக்
கும்படியாக, தேவன் உங்களிடத்தில் சகல
வித கிருபையையும் பெருகச்செய்ய வல்லவ
9 ராயிருக்கிறார். வாரியிறைத்தான், [5]ஏழைக
ளுக்குக் கொடுத்தான், அவனுடைய நீதி என்
றென்றைக்கும் நிற்கும் என்று எழுதியிருக்
10 கிறபடியாகும். விதைக்கிறவனுக்கு விதை
யையும், [6]புசிக்கிறதற்கு ஆகாரத்தையும் அளிக்
கிறவர் உங்களுக்கு விதையை அளித்து, அதைப்
பெருகப்பண்ணி, [7]உங்கள் நீதியின் விளைச்
11 சலை வர்த்திக்கச்செய்வார். தேவனுக்கு எங்
களால் ஸ்தோத்திரமுண்டாவதற்கு [8]ஏதுவாயி
ருக்கும் மிகுந்த உதாரகுணத்திலே நீங்கள் எவ்
விதத்திலும் சம்பூரணமுள்ளவர்களாவீர்கள்.
12 இந்தத் தர்மசகாயமாகிய பணிவிடை பரிசுத்த
வான்களுடைய குறைவுகளை நீக்குகிறதுமல்
லாமல், [9]அநேகர் தேவனை ஸ்தோத்திரிப்பதி
னாலே சம்பூரண பலனுள்ளதாயும் இருக்கும்.
13 அவர்கள் இந்தத் தர்மசகாயத்தினாலாகிய நன்
மையை அனுபவித்து, நீங்கள் கிறிஸ்துவின்
சுவிசேஷத்தைக் கீழ்ப்படிதலோடே அறிக்
கையிட்டிருக்கிறதினிமித்தமும், தங்களுக்கும்
மற்ற அனைவருக்கும் நீங்கள் உதாரத்துவமாய்த்
தர்மஞ்செய்கிறதினிமித்தமும், [10]அவர்கள் தே
14 வனை மகிமைப்படுத்தி; உங்களுக்காக வேண்டு
தல்செய்து, [11]தேவன் உங்களுக்கு அளித்த
மிகவும் விசேஷித்த கிருபையினிமித்தம் உங்
15 கள்மேல் வாஞ்சையாயிருக்கிறார்கள். தேவன்
அருளிய சொல்லிமுடியாத ஈவுக்காக [12]அவ
ருக்கு ஸ்தோத்திரம்.

10 உங்களுக்கு முன்பாக இருக்கும்போது
தாழ்மையாயும், [13]தூரத்திலே இருக்கும்போது
உங்கள்மேல் கண்டிப்பாயும் இருக்கிற பவுலா
கிய நான் கிறிஸ்துவின் சாந்தத்தையும் *தய
வையும் முன்னிட்டு [14]உங்களுக்குப் புத்தி
2 சொல்லுகிறேன். எங்களை மாம்சத்தின்படி
நடக்கிறவர்கள் என்று எண்ணுகிற சிலரைக்
குறித்து நான் கண்டிப்பாயிருக்கவேண்டுமெ
ன்று நினைத்திருக்கிற தைரியத்தோடே, [15]உங்
கள் முன்பாக இருக்கும்போது, நான் கண்டிப்
புள்ளவனாயிராதபடிக்கு நீங்கள் எச்சரிக்கை
யாயிருக்க உங்களை வேண்டிக்கொள்ளுகி
றேன். நாங்கள் மாம்சத்தில் நடக்கிறவர்களா 3
யிருந்தும், [16]மாம்சத்தின்படி போர்செய்கிறவர்
களல்ல. எங்களுடைய போராயுதங்கள் [17]மாம் 4
சத்துக்கேற்றவைகளாயிராமல், [18]அரண்களை
நிர்மூலமாக்குகிறதற்கு தேவபலமுள்ளவைக
ளாயிருக்கிறது. அவைகளால் நாங்கள் தர்க் 5
கங்களையும், [19]தேவனை அறிகிற அறிவுக்கு
விரோதமாய் எழும்புகிற எல்லா மேட்டிமை
யையும் நிர்மூலமாக்கி, [20]எந்த எண்ணத்தை
யும் கிறிஸ்துவுக்குக் கீழ்ப்படியச் சிறைப்படுத்
துகிறவர்களாயிருக்கிறோம். உங்கள் கீழ்ப் 6
படிதல் நிறைவேறும்போது, [21]எல்லாக் கீழ்ப்
படியாமைக்குந்தக்க நீதியுள்ள தண்டனையைச்
செலுத்த ஆயத்தமாயுமிருக்கிறோம். வெளித் 7
தோற்றத்தின்படி [22]பார்க்கிறீர்களா? ஒருவன்
தன்னைக் கிறிஸ்துவுக் குரியவனென்று நம்பி
னால், [23]தான் கிறிஸ்துவுக்குரியவனாயிருக்கி
றதுபோல நாங்களும் கிறிஸ்துவுக்குரியவர்க
ளென்று அவன் தன்னிலேதானே சிந்திக்கக்
கடவன். மேலும், உங்களை நிர்மூலமாக்கு 8
கிறதற்கல்ல, உங்களை ஊன்றக் கட்டுகிறதற்
குக் கர்த்தர் எங்களுக்குக் கொடுத்த அதிகாரத்
தைக்குறித்து, [24]நான் இன்னும் சற்றே அதிக
மாய் மேன்மைபாராட்டினாலும் நான் வெட்
கப்படுவதில்லை. நான் நிருபங்களாலே உங்க 9
ளைப் பயமுறுத்துகிறவனாய்த் தோன்றாதபடி
க்கு இதைச் சொல்லுகிறேன். அவனுடைய 10
நிருபங்கள் பாரயோசனையும் பலமுமுள்ள
வைகள்; [25]சரீரத்தின் தோற்றமோ பலவீன
மும், வசனம் அற்பமுமாயிருக்கிறதென்கிறார்
களே. அப்படிச் சொல்லுகிறவன், நாங்கள் 11
தூரத்திலிருக்கும்போது எழுதுகிற நிருபங்க
ளால் வசனத்தில் எப்படிப்பட்டவர்களாயிருக்
கிறோமோ, அப்படிப்பட்டவர்களாகவே சமீ
பத்திலிருக்கும்போதும் கிரியையிலும் இருப்
போம் என்று சிந்திக்கக்கடவன். ஆகிலும் 12
தங்களைத்தாங்களே மெச்சிக்கொள்ளுகிற சில
ருக்கு [26]நாங்கள் எங்களைச் சரியாக்கவும் ஒப்
பிடவும்துணியமாட்டோம்; தங்களைக்கொண்டு
தங்களை அளந்துகொண்டு, [27]தங்களுக்கே தங்
களை ஒப்பிட்டுக்கொள்ளுகிற அவர்கள் புத்தி
மான்களல்ல. நாங்கள் அளவுக்கு மிஞ்சி 13
மேன்மைபாராட்டாமல், [28]உங்களிடம்வரைக்
கும் வந்தெட்டத்தக்கதாக, தேவன் எங்களுக்கு
அளந்து பகிர்ந்த அளவுப் பிரமாணத்தின்
படியே மேன்மை பாராட்டுகிறோம். உங்களி 14
டத்தில் வந்தெட்டாதவர்களாய் நாங்கள் அள
வுக்கு மிஞ்சிப்போகிறதில்லை; [29]நாங்கள் கிறிஸ்
துவின் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து உங்களி
டம்வரைக்கும் வந்தோமே. எங்கள் அளவைக் 15
கடந்து [30]மற்றவர்களுடைய வேலைக்குட்பட்டு
மேன்மை பாராட்டமாட்டோம். ஆகிலும் உங் 16
கள் விசுவாசம் விருத்தியாகும்போது, மற்ற
வர்களுடைய எல்லைகளுக்குள்ளே செய்யப்
பட்டவைகளை நாங்கள் செய்ததாக மேன்மை
பாராட்டாமல், உங்களுக்கு அப்புறமான
இடங்களில் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கத்

1 சங். 41.1-3. நீதி. 11.24,25: 19.17: 22.9. கலா. 6.7,9:
2 உபா. 15. 7, 8
3 யாத். 35. 5. ரோ. 12. 8
4 பிலி. 4. 19
5 சங். 112. 9
6 ஏசா. 55 10, 11
7 ஓசி. 10.12. மத். 6.1
8 1. 11: 4. 15
9 8, 14
10 மத். 5. 16. எபி. 13. 16
11 8. 1
12 யோ. 3. 16. யாக். 1. 17
13 10. வச
*காருணியத்தையும்
14 ரோ. 12. 1
15 13. 2, 10. 1 கொ. 4. 21
16 ரோ. 8. 13
17 எபே. 6. 13. 1 தெச. 5. 8. 1 தீமோ. 1. 18
18 எரே. 1. 10. அப். 7.22. 1 கொ. 2. 5
19 சங். 18.27. எசே. 17.24. 1 கொ. 1.19
20 ஆதி. 8. 21. மத். 11. 29. 30: 15. 19. எபி. 4. 12
21 7. 15
22 யோ. 7. 24
23 1 கொ. 3. 23: 14. 27
24 13. 2, 3, 8
25 1 கொ. 1. 17: 2. 1-4
26 3. 1: 5. 12
27 நீதி. 26. 12
28 15. வச
29 1 கொ. 3. 5, 10.
30 ரோ. 15. 20

தக்கதாக, எங்கள் அளவின்படி உங்களால்
மிகவும் பெருகி விருத்தியடைவோமென்று
17 நம்பிக்கையாயிருக்கிறோம். மேன்மை பாரா
ட்டுகிறவன் [1]கர்த்தரைக் குறித்தே மேன்மை
18 பாராட்டக்கடவன். தன்னைத்தான் புகழு
கிறவன் உத்தமனல்ல, [2]கர்த்தரால் புகழப்படு
கிறவனே உத்தமன்.

11 என் புத்தியீனத்தை நீங்கள் சற்றே சகித்
தால் நலமாயிருக்கும்; [3]என்னைச் சகித்துமிருக்
2 கிறீர்களே. நான் உங்களைக் கற்புள்ள *கன்
னிகையாகக் கிறிஸ்து என்னும் ஒரே புருஷ
னுக்கு ஒப்புக்கொடுக்க நியமித்தபடியால்,
[4]உங்களுக்காக தேவ வைராக்கியமான வை
3 ராக்கியங் கொண்டிருக்கிறேன். ஆகிலும்,
சர்ப்பமானது தன்னுடைய தந்திரத்தினாலே
[5]ஏவாளை வஞ்சித்ததுபோல, உங்கள் மனதும்
கிறிஸ்துவைப்பற்றிய உண்மையினின்று வில
கும்படி கெடுக்கப்படுமோவென்று பயந்திருக்
4 கிறேன். எப்படியெனில், உங்களிடத்தில்வரு
கிறவன் நாங்கள் பிரசங்கியாத வேறொரு இயே
சுவைப் பிரசங்கித்தானானால், [6]அல்லது நீங்கள்
பெற்றிராத வேறொரு ஆவியையும், நீங்கள்
ஏற்றுக்கொள்ளாத வேறொரு சுவிசேஷத்தை
யும் பெற்றீர்களானால், நன்றாய்ச் சகித்திருப்
5 பீர்களே. மகா பிரதான அப்போஸ்தலரிலும்,
[7]நான் ஒன்றிலும் குறைவுள்ளவனல்லவெ
6 ன்று எண்ணுகிறேன். நான் பேச்சிலே கல்
லாதவனாயிருந்தாலும் [8]அறிவிலே கல்லாதவ
னல்ல; [9]எந்த விஷயத்திலும் எல்லாருக்கு
முன்பாகவும் உங்களுக்குள்ளே நாங்கள்
7 வெளிப்பட்டிருக்கிறோமே. நீங்கள் உயர்த்
தப்படும்படி நான் என்னைத்தானே தாழ்த்தி,
[10]தேவனுடைய சுவிசேஷத்தை இலவசமாய்
உங்களுக்குப் பிரசங்கித்ததினாலே குற்றஞ்
8 செய்தேனோ? உங்களுக்கு ஊழியஞ்செய்
யும்படிக்கு, மற்றச் சபைகளிடத்தில் சம்பளத்
தைப்பெற்று, அவர்களைக் கொள்ளையிட்டேன்.
9 நான் உங்களோடிருந்து குறைவுபட்டபோ
தும், [11]ஒருவரையும் நான் வருத்தப்படுத்
தவில்லை; [12]மக்கெதோனியாவிலிருந்து வந்த
சகோதரர் என் குறைவை நிறைவாக்கினார்
கள்; எவ்விதத்திலேயும் உங்களுக்குப் பாரமா
யிராதபடிக்கு ஜாக்கிரதையாயிருந்தேன், இனி
10 மேலும் ஜாக்கிரதையாயிருப்பேன். அகாயா
நாட்டின் திசைகளிலே இந்தப் புகழ்ச்சி என்
னைவிட்டு நீங்குவதில்லையென்று [13]என்னி
லுள்ள கிறிஸ்துவினுடைய சத்தியத்தைக்
11 கொண்டு சொல்லுகிறேன். இப்படிச் சொல்
லவேண்டியதென்ன? [14]நான் உங்களைச் சிநே
கியாதபடியினாலேயோ? தேவன் அறிவார்.
12 மேலும், எங்களை விரோதிக்கச் சமயந்தேடு
கிறவர்களுக்குச் சமயம் கிடையாதபடிக்கு,
[15]தங்களைக்குறித்து மேன்மை பாராட்டுகிற கா
ரியத்தில் அவர்கள் எங்களைப்போலக் காணப்
படும்படி, நான் செய்வதையே இன்னும் செய்
13 வேன். அப்படிப்பட்டவர்கள் [16]கள்ள அப்
போஸ்தலர்கள், [17]கபடமுள்ள வேலையாட்கள்,

கிறிஸ்துவினுடைய அப்போஸ்தலரின் வே
ஷத்தைத் தரித்துக்கொண்டவர்களா யிருக்கி
றார்கள். அது ஆச்சரியமல்ல, [18]சாத்தானும் 14
ஒளியின் தூதனுடைய வேஷத்தைத் தரித்துக்
கொள்வானே. ஆகையால் அவனுடைய ஊழி 15
யக்காரரும் நீதியின் ஊழியக்காரருடைய வே
ஷத்தைத் தரித்துக்கொண்டால் அது ஆச்சரிய
மல்லவே; [19]அவர்கள் முடிவு அவர்கள் கிரியை
களுக்குத் தக்கதாயிருக்கும்.

பின்னும் நான் சொல்லுகிறேன்; ஒருவ 16
னும் என்னைப் புத்தியீனனென்று எண்ண
வேண்டாம்; [20]அப்படி எண்ணினால், நானும்
சற்றே மேன்மை பாராட்டும்படி, என்னைப்
புத்தியீனனைப்போலாகிலும் ஏற்றுக்கொள்
ளுங்கள். இப்படி நான் சொல்லுகிறது கர்த் 17
தருக்கேற்றபடி சொல்லாமல், [21]மேன்மை பா
ராட்டும் தைரியத்தினாலே புத்தியீனனைப்போ
லச் சொல்லுகிறேன். அநேகர் மாம்சத்திற் 18
கேற்றபடி மேன்மை பாராட்டிக்கொள்ளுகை
யில், [22]நானும் மேன்மை பாராட்டுவேன். நீங் 19
கள் புத்தியுள்ளவர்களாயிருந்து [23]புத்தியில்லா
தவர்களைச் சந்தோஷமாய்ச் சகித்திருக்கிறீர்க
ளே. ஒருவன் உங்களைச் சிறையாக்கினாலும், 20
[24]ஒருவன் உங்களைப் பட்சித்தாலும், ஒருவன்
உங்களைக் கைவசப்படுத்தினாலும், ஒருவன்
தன்னை உயர்த்தினாலும், ஒருவன் உங்களை
முகத்தில் அறைந்தாலும் சகித்திருக்கிறீர்களே.
நாங்கள் பலவீனரானதுபோல, எங்களுக்கு 21
வந்த கனவீனத்தைக் குறித்துப் பேசுகிறேன்;
[25]ஒருவன் எதிலே துணிவுள்ளவனா யிருக்கி
றானோ அதிலே நானும் துணிவுள்ளவனாயிருக்
கிறேன்; இப்படிப் புத்தியீனமாய்ப் பேசுகி
றேன். அவர்கள் எபிரெயரா? நானும் எபிரெ 22
யன்; அவர்கள் இஸ்ரவேலரா? நானும் இஸ்
ரவேலன்; அவர்கள் ஆபிரகாமின் சந்ததியா
ரா? [26]நானும் ஆபிரகாமின் சந்ததியான். அவர் 23
கள் கிறிஸ்துவின் ஊழியக்காரரா? நான் அதி
கம்; புத்தியீனமாய்ப் பேசுகிறேன்; [27]நான்
அதிகமாய்ப் பிரயாசப்பட்டவன், [28]அதிகமாய்
அடிபட்டவன், அதிகமாய்க் காவல்களில் வை
க்கப்பட்டவன், [29]அநேகந்தரம் மரண அவதி
யில் அகப்பட்டவன். யூதர்களால் ஒன்று 24
குறைய [30]நாற்பதடியாக ஐந்துதரம் அடிபட்
டேன்; மூன்றுதரம் [31]மிலாறுகளால் அடி 25
பட்டேன், [32]ஒருதரம் கல்லெறியுண்டேன்.
[33]மூன்றுதரம் கப்பற்சேதத்தில் இருந்தேன்,
கடலிலே ஒரு இராப்பகல் முழுவதும் போக்
கினேன். அநேகந்தரம் பிரயாணம்பண்ணி 26
னேன், ஆறுகளால் வந்த மோசங்களிலும்,
கள்ளரால் வந்த மோசங்களிலும், [34]என் சுய
ஜனங்களால் வந்த மோசங்களிலும், அந்நிய
ஜனங்களால் வந்த மோசங்களிலும், பட்ட
ணங்களில் உண்டான மோசங்களிலும், வனாந்
தரத்தில் உண்டான மோசங்களிலும், சமுத்தி
ரத்தில் உண்டான மோசங்களிலும், கள்ளச்
சகோதரரிடத்தில் உண்டான மோசங்களி
லும்; பிரயாசத்திலும், வருத்தத்திலும், [35]அநே 27

1 எரே. 9. 24. 1 கொ. 1. 30, 31
2 ரோ. 2. 29. 1 கொ. 4. 5
3 16. வச: 5. 13
* கன்னி பாவனையா [illegible]
4 லேவி. 21. 13. ஓசி. 2. 19, 20. கலா. 4. 17, 18. 1 கொ. 4. 15. கொலோ. 1. 28
5 ஆதி. 3. 1. யோ. 8. 44
6 கலா. 1. 7, 8
7 12. 11. 1 கொ. 15. 10. கலா. 2. 6
8 1 கொ. 1. 17
9 12. 12
10 அப். 18. 3. 1 கொ. 9. 6, 12
11 அப். 20. 33. 1 தெச. 2. 9
12 பிலி. 4. 10, 15
13 ரோ. 9. 2. 1 கொ. 9. 15
14 6. 11: 7. 3
15 1 கொ. 9. 12. கலா. 1. 7. பிலி. 1. 15. மு
16 கலா. 2. 4. 2 பே. 2. 1. 1 யோ. 4. 1. வெளி. 2. 2
17 பிலி. 3. 2. தீத். 1. 10, 11
18 ஆதி. 3. 1, 5. கலா. 1. 8. வெளி. 12. 9
19 3. 9. பிலி. 3. 19
20 12. 6, 11
21 1 கொ. 7. 6, 12
22 பிலி. 3. 3, 4
23 1 கொ. 4. 10
24 கலா. 2. 4: 4. 9
25 10. 10. பிலி. 3. 4
26 அப். 22. 3. ரோ. 11. 1. பிலி. 3. 5
27 1 கொ. 15. 10
28 1 கொ. 9. 16
29 1 கொ. 15. 30–32
30 உபா. 25. 3
31 அப். 16. 22
32 அப். 14. 19
33 அப். 27. அதி
34 அப். 9. 23: 14. 5
35 அப். 20. 31

கமுறை கண் விழிப்புகளிலும், [1]பசியிலும்,
தாகத்திலும், அநேகமுறை உபவாசங்களிலும்,
குளிரிலும், நிர்வாணத்திலும் இருந்தேன்.
28 இவை முதலானவைகளையல்லாமல், [2]எல்லாச்
சபைகளைக்குறித்தும் உண்டாயிருக்கிற கவலை
29 என்னை நாள்தோறும் நெருக்குகிறது. ஒரு
வன் பலவீனனானால் [3]நானும் பலவீனனாகிற
தில்லையோ? ஒருவன் இடறினால் என் மனம்
30 எரியாதிருக்குமோ? நான் மேன்மைபாராட்ட
வேண்டுமானால், [4]என் பலவீனத்திற்கடுத்த
வைகளைக் குறித்து மேன்மைபாராட்டுவேன்.
31 என்றென்றைக்கும் ஸ்தோத்திரிக்கப்பட்டதே
வனும், [5]நம்முடைய கர்த்தராகிய இயேசு
கிறிஸ்துவின் பிதாவுமானவர் நான் பொய்
32 சொல்லுகிறதில்லையென்று அறிவார். தம
ஸ்கு பட்டணத்து அரேத்தா ராஜாவினுடைய
சேனைத்தலைவன் என்னைப் பிடிக்கவேண்டு
மென்று [6]தமஸ்கருடைய பட்டணத்தைக்
33 காவல்வைத்துக் காத்தான்; அப்பொழுது
நான் கூடையிலே வைக்கப்பட்டு, ஜன்னலி
லிருந்து மதில்வழியாய் இறக்கிவிடப்பட்டு,
அவனுடைய கைக்குத் தப்பினேன்.

12 மேன்மைபாராட்டுகிறது எனக்குத் தகுதி
யல்லவே; ஆகிலும், கர்த்தர் அருளிய தரிச
னங்களையும் வெளிப்படுத்தல்களையும் *சொல்
2 லுகிறேன். கிறிஸ்துவுக்குள்ளான ஒரு மனு
ஷனை அறிவேன்; [7]அவன் பதினாலு வருஷத்
திற்கு முன்னே மூன்றாம் வானம்வரைக்கும்
எடுக்கப்பட்டான்; அவன் சரீரத்திலிருந்தா
னோ, சரீரத்திற்குப் புறம்பேயிருந்தானோ,
3 அதை அறியேன்; தேவன் அறிவார், அந்த
மனுஷன் பரதீசுக்குள் எடுக்கப்பட்டு, [8]மனு
ஷர் பேசப்படாததும் வாக்குக் கெட்டாததுமா
கிய வார்த்தைகளைக் கேட்டானென்று அறிந்தி
4 ருக்கிறேன். அவன் சரீரத்திலிருந்தானோ, சரீ
ரத்திற்குப் புறம்பேயிருந்தானோ, அதை அறி
5 யேன்; தேவன் அறிவார். இப்படிப்பட்டவ
னைக்குறித்து மேன்மைபாராட்டுவேன்; [9]ஆனா
லும் என்னைக்குறித்து என் பலவீனங்களிலே
யன்றி, வேறொன்றிலும் மேன்மைபாராட்ட
6 மாட்டேன். சத்தியமானதை நான் பேசுகிறே
ன்; நான் மேன்மைபாராட்ட மனதாயிருந்தா
லும், நான் புத்தியீனனல்ல, ஆனாலும் ஒருவ
னும் என்னிடத்தில் காண்கிறதற்கும், என்னா
லே கேட்கிறதற்கும் மேலாக என்னை எண்ணா
7 தபடிக்கு அப்படிச்செய்யாதிருப்பேன். அன்
றியும், எனக்கு வெளிப்படுத்தப்பட்டவைகளு
க்குரிய மேன்மையினிமித்தம் நான் என்னை
உயர்த்தாதபடிக்கு, என் மாம்சத்திலே [10]ஒரு
முள் கொடுக்கப்பட்டிருக்கிறது; என்னை நான்
உயர்த்தாதபடிக்கு, [11]அது என்னைக்குட்டும் சா
8 த்தானுடைய தூதனாயிருக்கிறது. அது என்னை
விட்டு நீங்கும்படிக்கு, [12]நான் மூன்றுதரம் கர்த்
9 தரிடத்தில் வேண்டிக்கொண்டேன். அதற்கு
அவர்: என் கிருபை உனக்குப் போதும்; பல
வீனத்திலே என் பலம் பூரணமாய் விளங்கும்
என்றார். ஆகையால், [13]கிறிஸ்துவின் வல்ல
மை என்மேல் தங்கும்படி, [14]என் பலவீனங்க
ளைக்குறித்து நான் மிகவும் சந்தோஷமாய்
மேன்மைபாராட்டுவேன். அந்தப்படி [15]நான் 10
பலவீனமாயிருக்கும்போதே பலமுள்ளவனாயி
ருக்கிறேன்; ஆகையால் கிறிஸ்துவினிமித்தம்
எனக்கு வரும் பலவீனங்களிலும், நிந்தைகளி
லும், நெருக்கங்களிலும், துன்பங்களிலும்,
இடுக்கண்களிலும், நான் பிரியப்படுகிறேன்.

மேன்மைபாராட்டி, புத்தியீனனாயினேன்; 11
நீங்களே இதற்கு என்னைப் பலவந்தப்படுத்தி
னீர்கள். [16]நான் ஒன்றுமில்லையென்றாலும்,
[17]மகா பிரதான அப்போஸ்தலருக்கும் நான்
எவ்வளவும் குறைந்தவனாயிராதபடியால், உங்
களாலே மெச்சிக்கொள்ளப்பட வேண்டியதா
யிருந்ததே. அப்போஸ்தலனுக்குரிய [18]அடை 12
யாளங்கள் எல்லாவிதமான பொறுமையோ
டும், அதிசயங்களோடும், அற்புதங்களோடும்,
வல்லமைகளோடும், உங்களுக்குள்ளே நடப்
பிக்கப்பட்டதே. எதிலே மற்றச் சபைகளுக் 13
குக் குறைவாயிருந்தீர்கள்? [19]நான் உங்களை
வருத்தப்படுத்தாதிருந்ததே உங்களுக்குக் கு
றைவு; இந்த அநியாயத்தை எனக்கு மன்னி
யுங்கள்.

இதோ, உங்களிடத்திற்கு மூன்றாந்தரம் 14
வர ஆயத்தமாயிருக்கிறேன்; நான் உங்களை
வருத்தப்படுத்துவதில்லை; [20]நான் உங்களுடை
யதையல்ல, உங்களையே தேடுகிறேன்; பெற்
றாருக்குப் பிள்ளைகளல்ல, [21]பிள்ளைகளுக்குப்
பெற்றார்களே பொக்கிஷங்களைச் சேர்த்து
வைக்கவேண்டும். ஆதலால், நான் உங்களில் 15
எவ்வளவு அதிகமாய் அன்பு கூருகிறேனோ
அவ்வளவு குறைவாய் உங்களால் அன்புகூரப்
பட்டிருந்தாலும், [22]மிகவும் சந்தோஷமாய் நான்
உங்கள் ஆத்துமாக்களுக்காகச் செலவு பண்ண
வும் செலவுபண்ணப்படவும் விரும்புகிறேன்.
அப்படியாகட்டும்; [23]நான் உங்களுக்குப் பார 16
மாயிருக்கவில்லை; ஆனாலும், உபாயமுள்ள
வனாயிருந்து, தந்திரத்தினாலே உங்களைப் †பிடி
த்தேனாம். நான் உங்களிடத்திற்கு அனுப்பி 17
னவர்களில் எவன் மூலமாயாவது [24]உங்களி
டத்தில் பொழிவைத் தேடினதுண்டா? தீத்து 18
உங்களிடத்தில் வரும்படி நான் அவனைக் கேட்
டுக்கொண்டு, [25]அவனுடனேகூட ஒரு சகோ
தரனை அனுப்பினேன்; தீத்து உங்களிடத்தில்
எதாவது பொழிவைத் தேடினானா? நாங்கள்
ஒரே ஆவியை யுடையவர்களாய், ஒரே அடிச்
சுவடுகளில் நடந்தோமல்லவா?

நாங்கள் யோக்கியரகளென்று விளங்கும்படி 19
[26]உங்களிடத்தில் பேசுகிறோமென்று எண்
ணுகிறீர்களோ? தேவனுக்குமுன்பாகக் கிறிஸ்
துவுக்குள் பேசுகிறோம். [27]பிரியமானவர்க
ளே, சகலத்தையும் உங்கள் பக்திவிருத்திக்கா
கச் செய்கிறோம். ஆகிலும் நான் வந்து, [28]உங் 20
களைஎன்மனதின்படியிருக்கிறவர்களாகக்காணா
மலும், நானும் உங்கள் மனதின்படியிருக்கிற
வனாகக் காணப்படாமலுமிருப்பேனோவென்
றும்; விரோதங்கள், வைராக்கியங்கள், கோபங்

[1] 1 கொ. 4. 11
[2] அப். 15. 36-40: 20. 18. ஆ. ரோ. 1, 14
[3] 1 கொ. 9. 22
[4] 12. 5, 9, 10
[5] ரோ. 9. 5. கலா. 1. 3. 1 தெச. 2. 5
[6] அப். 9. 24, 25
* சொல்லவருகிறேன
[7] ரோ. 16. 7. கலா. 1. 22
[8] லூ. 23. 43. வெளி. 2. 7
[9] 9, 10. எசே: 11. 30
[10] எசே. 28. 24. கலா. 4. 14
[11] யோபு 2. 7. லூ. 13. 16
[12] உபா. 3. 23–27. சங். 77. 2–11. புல. 3. 8. மத். 26. 44
[13] 1 பே. 4. 14
[14] 11. 30
[15] 7. 4: 13. 4. ரோ. 5. 3
[16] லூ. 17. 10. 1 கொ. 3. 7. எபே. 3. 8
[17] 11. 5. கலா. 2. 6–8
[18] ரோ. 15. 18, 19. 1 கொ. 9. 2
[19] 11. 9. 1 கொ. 9. 12
[20] அப். 20. 33. 1 கொ. 10. 33. 1 தெச. 2. 8
[21] 1 கொ. 4. 14, 15
[22] யோ. 10. 11. பிலி. 2. 17
[23] 11. 9
† பிடித்தேனோ?
[24] 7. 2
[25] 8. 6, 16, 22, 18
[26] 5. 12
[27] 1 கொ. 10. 33
[28] 13. 2, 10. 1 கொ. 4. 21

கள், வாக்குவாதங்கள், புறங்கூறுதல், கோட்
சொல்லுதல், இறுமாப்பு, கலகங்கள் ஆகிய
இவைகள் உங்களுக்குள்ளே உண்டாயிருக்கு
21 மோவென்றும், மறுபடியும் நான் வருகிறபோ
து, [1]என் தேவன் உங்களிடத்தில் என்னைத்
தாழ்த்தும்படிக்கு முன் பாவஞ்செய்தவர்களா
கிய அநேகர் தாங்கள் நடப்பித்த [2]அசுத்தத்தை
யும் வேசித்தனத்தையும் காமவிகாரத்தையும்
விட்டு மனந்திரும்பாமலிருக்கிறதைக்குறித்து,
நான் துக்கப்படவேண்டியதாயிருக்குமோவெ
ன்றும் பயந்திருக்கிறேன்.

13 இந்த மூன்றாந்தரம் நான் உங்களிடத்
திற்கு வருகிறேன்; [3]சகல காரியங்களும் இர
ண்டு மூன்று சாட்சிகளுடைய வாக்கினால்
2 நிலைவரப்படும். நான் இரண்டாந்தரம் உங்க
ளிடத்தி லிருந்தபோது சொன்னதுபோல,
இப்பொழுது தூரமாயிருந்தும் உங்களிடத்தி
லிருக்கிறவனாக, [4]நான் மறுபடியும் வந்தால்
தப்பவிடமாட்டேனென்று முன்பு பாவஞ்செ
ய்தவர்களுக்கும் மற்ற எல்லாருக்கும் முன்
3 னறிவித்து எழுதுகிறேன். கிறிஸ்து எனக்
குள்ளே பேசுகிறாரென்பதற்கு அத்தாட்சி
தேடுகிறீர்களே; அவர் உங்களிடமாய்ப் பலவீ
னரல்ல, [5]உங்களிடத்தில் வல்லவராயிருக்கி
4 றார். ஏனெனில் அவர் [6]பலவீனத்தால் சிலு
வையில் அறையப்பட்டிருந்தும், [7]தேவனு
டைய வல்லமையினால் பிழைத்திருக்கிறார்;
அப்படி நாங்களும் அவருக்குள் பலவீனரா
யிருந்தும், உங்களிடமாய் விளங்கிய தேவனு
டைய வல்லமையினால் அவருடனேகூடப்
5 பிழைத்திருப்போம். நீங்கள் விசுவாசமுள்ள
வர்களோவென்று உங்களை [8]நீங்களே சோ
தித்து அறியுங்கள்; உங்களை நீங்களே பரீட்
சித்துப்பாருங்கள். [9]இயேசுகிறிஸ்து உங்க
ளுக்குள் இருக்கிறாரென்று உங்களை நீங்களே
அறியீர்களா? [10]நீங்கள் பரீட்சைக்கு நில்லாத
தவர்களாயிருந்தால் அறியீர்கள். நாங்களோ 6
பரீட்சைக்கு நில்லாதவர்களல்ல வென்பதை
அறிவீர்களென்று நம்புகிறேன். மேலும் நீங் 7
கள் ஒரு பொல்லாங்கும் செய்யாதிருக்கும்
படியாக, தேவனை நோக்கி விண்ணப்பம்பண்
ணுகிறேன். நாங்கள் பரீட்சைக்கு நின்றவர்
களென்று காணப்படும்பொருட்டல்ல, [11]நாங்
கள் பரீட்சைக்கு நில்லாதவர்கள்போலிருந்தா
லும், நீங்கள் நலமானதைச் செய்யும்பொருட்
டே விண்ணப்பம் பண்ணுகிறேன். சத்தியத் 8
திற்கு விரோதமாக நாங்கள் ஒன்றுஞ்செய்யக்
கூடாமல், [12]சத்தியத்திற்கு அநுகூலமாகவே
செய்யக்கூடும். நாங்கள் பலவீனரும் நீங்கள் 9
பலமுள்ளவர்களுமாயிருக்கையில், [13]சந்தோ
ஷப்படுகிறோம்; [14]நீங்கள் நற்சீர் பொருந்தும்
படிக்கும் விண்ணப்பம் பண்ணுகிறோம்.
ஆனதால் இடித்துப்போடவல்ல, [15]ஊன்றக் 10
கட்டவேகர்த்தர் எனக்குக்கொடுத்த அதிகாரத்
தின்படி, நான் உங்களிடத்தில் வந்திருக்கும்
போது, [16]கண்டிதம் பண்ணாதபடிக்கு, நான்
தூரமாயிருந்து இவைகளை எழுதுகிறேன்.

கடைசியாக, சகோதரரே, சந்தோஷமாயி 11
ருங்கள், நற்சீர் பொருந்துங்கள், ஆறுதலடை
யுங்கள்; [17]ஏகசிந்தையாயிருங்கள், சமாதானமா
யிருங்கள், [18]அப்பொழுது அன்புக்கும் சமா
தானத்துக்கும் காரணராகிய தேவன் உங்க
ளோடேகூட இருப்பார். ஒருவரையொரு 12
வர் [19]பரிசுத்த முத்தத்தோடு வாழ்த்துங்கள்.

பரிசுத்தவான்க ளெல்லாரும் உங்களுக்கு 13
வாழ்த்துதல் சொல்லுகிறார்கள்.

கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய 14
[20]கிருபையும், தேவனுடைய அன்பும், [21]பரி
சுத்த ஆவியினுடைய ஐக்கியமும், உங்கள்
அனைவரோடுங்கூட இருப்பதாக. ஆமென்.

1 2. 1, 4: 13. 2
2 1 கொ. 5. 1
3 12. 14. உபா. 19. 15. மத். 18. 16 எபி. 10. 28, 29
4 1. 23: 10. 2: 12. 21
5 2. 10. மத். 10. 20 1 கொ. 5. 4: 9. 2
6 பிலி. 2. 7, 8. 1 பே. 3. 18
7 ரோ. 6. 4
8 1 கொ. 11. 28 1 யோ. 3. 20, 21
9 ரோ. 8. 10. கலா. 4. 19
10 1 கொ. 9. 27. 2 தீமோ. 3. 8
11 6. 9
12 நீதி. 21. 30
13 1 கொ. 4. 10.
14 1 தெச. 3. 10. எபி. 6. 1, 2
15 10. 8
16 தீத். 1. 14
17 ரோ. 12. 16: 15. 5. எபே. 4. 3. பிலி. 2. 2. 1 பே. 3. 8
18 ரோ. 15. 33
19 ரோ. 16. 16
20 ரோ. 16. 24
21 பிலி. 2. 1

THE EPISTLE TO THE GALATIANS

# கலாத்தியருக்கு எழுதின நிருபம்

1 மனுஷராலுமல்ல, [1]மனுஷன்மூலமாயுமல்
ல, [2]இயேசுகிறிஸ்துவினாலும், [3]அவரை மரித்
தோரிலிருந்தெழுப்பின பிதாவாகிய தேவனா
லும், அப்போஸ்தலனாயிருக்கிற பவுலாகிய
2 நானும், என்னுடனேகூட இருக்கிற சகோ
தரரெல்லாரும், [4]கலாத்தியா நாட்டிலுள்ள
3 சபைகளுக்கு எழுதுகிறதாவது: பிதாவாகிய
தேவனாலும், நம்முடைய கர்த்தராகிய இயேசு
கிறிஸ்துவினாலும் [5]உங்களுக்குக் கிருபையும்
4 சமாதானமும் உண்டாவதாக; அவர் நம்மை
[6]இப்பொழுதிருக்கிற பொல்லாத பிரபஞ்சத்
தினின்று விடுவிக்கும்படி [7]நம்முடைய பிதா
வாகிய தேவனுடைய சித்தத்தின்படியே நம்மு
டைய பாவங்களுக்காகத் [8]தம்மைத்தாமே ஒப்
5 புக்கொடுத்தார்; அவருக்கு *என்றென்றைக்
குமுள்ள சதாகாலங்களிலும் மகிமை உண்டா
வதாக. ஆமென்.
6 உங்களைக் கிறிஸ்துவின் கிருபையினாலே
அழைத்தவரை நீங்கள் இவ்வளவு சீக்கிரமாய்
விட்டு, [9]வேறொரு சுவிசேஷத்திற்குத் திரும்
புகிறதைப்பற்றி நான் ஆச்சரியப்படுகிறேன்;
7 வேறொரு [10]சுவிசேஷம் இல்லையே; சிலர்
உங்களைக் கலகப்படுத்தி, [11]கிறிஸ்துவினுடைய
சுவிசேஷத்தைப் புரட்ட மனதாயிருக்கிறார்
8 களே யல்லாமல் வேறல்ல. நாங்கள் உங்க
ளுக்குப் பிரசங்கித்த சுவிசேஷத்தை யல்
லாமல், [12]நாங்களாவது, வானத்திலிருந்து வரு
கிற ஒரு தூதனாவது, வேறொரு சுவிசேஷத்தை
உங்களுக்குப் பிரசங்கித்தால், அவன் சபிக்கப்
9 பட்டவனா யிருக்கக்கடவன். முன்சொன்
னதுபோல மறுபடியும் சொல்லுகிறேன்; நீங்
கள் ஏற்றுக்கொண்ட சுவிசேஷத்தை யல்லா
மல் வேறொரு சுவிசேஷத்தை ஒருவன் உங்
களுக்குப் பிரசங்கித்தால் [13]அவன் சபிக்கப்
10 பட்டவனா யிருக்கக்கடவன். இப்பொழுது
நான் மனுஷரையா, தேவனையா, யாரை நா
டிப் போதிக்கிறேன்? [14]மனுஷரையா பிரியப்
படுத்தப் பார்க்கிறேன்? [15]நான் இன்னும் மனு
ஷரைப் பிரியப்படுத்துகிறவனா யிருந்தால்
நான் கிறிஸ்துவின் ஊழியக்காரனல்லவே.
11 மேலும், சகோதரரே, என்னால் பிரசங்கிக்
கப்பட்ட சுவிசேஷம் மனுஷருடைய யோ
சனையின்படியானதல்லவென்று உங்களுக்குத்
தெரிவிக்கிறேன். நான் அதை ஒரு மனுஷ 12
னால் பெற்றதுமில்லை, [16]மனுஷனால் கற்றது
மில்லை, இயேசுகிறிஸ்துவே [17]அதை எனக்கு
வெளிப்படுத்தினார். நான் யூதமார்க்கத்திலிருந் 13
தபோது என்னுடைய நடக்கையைக்குறித்
துக் கேள்விப்பட்டிருப்பீர்கள், [18]தேவனு
டைய சபையை நான் மிகவும் துன்பப்படு
த்தி, அதைப் பாழாக்கி; என் ஜனத்தாரில் 14
என் வயதுள்ள அநேகரைப்பார்க்கிலும் யூத
மார்க்கத்திலே தேறினவனாய், [19]என் பிதாக்க
ளுடைய பாரம்பரிய நியாயங்களுக்காக [20]மிக
வும் பக்திவைராக்கியமுள்ளவனா யிருந்தேன்.
அப்படியிருந்தும், நான் என் தாயின் வயிற்றி 15
லிருந்ததுமுதல், [21]என்னைப் பிரித்தெடுத்து,
தம்முடைய கிருபையினால் அழைத்த தேவன்,
தம்முடைய குமாரனை நான் புறஜாதிகளிடத் 16
தில் சுவிசேஷமாய் அறிவிக்கும் பொருட்
டாக, [22]அவரை எனக்குள் வெளிப்படுத்தப்
பிரியமாயிருந்தபோது, [23]உடனே நான் மாம்
சத்தோடும் இரத்தத்தோடும் யோசனைபண்ணா
மலும்; எனக்கு முன்னே அப்போஸ்தலரான 17
வர்களிடத்திலே எருசலேமுக்குப் போகாம
லும்; அரபிதேசத்திற்குப் புறப்பட்டுப்போய்,
மறுபடியும் தமஸ்கு ஊருக்குத் திரும்பி வந்
தேன்.
மூன்று வருஷம் சென்றபின்பு, பேதுரு 18
வைக் கண்டுகொள்ளும்படி நான் எருசலே
முக்குப் போய், [24]அவனிடத்தில் பதினைந்து
நாள் தங்கியிருந்தேன். கர்த்தருடைய சகோ 19
தரனாகிய [25]யாக்கோபைத்தவிர, அப்போஸ்
தலரில் வேறொருவரையும் நான் காணவில்லை.
நான் உங்களுக்கு எழுதுகிற இவைகள் பொய் 20
யல்லவென்று [26]தேவனுக்கு முன்பாக நிச்சய
மாய்ச் சொல்லுகிறேன். பின்பு, [27]சீரியா சிலி 21
சியா நாடுகளின் புறங்களில் வந்தேன்.
மேலும் [28]யூதேயாதேசத்திலே கிறிஸ்துவுக் 22
குள்ளான சபைகளுக்கு முகமறியாதவனா
யிருந்தேன். முன்னே நம்மைத் துன்பப்படுத் 23
தினவனே, தான் அழிக்கத்தேடின விசுவாசத்
தை இப்பொழுது பிரசங்கிக்கிறான் [29]என்ப
தைமாத்திரம் அவர்கள் கேள்விப்பட்டிருந்து,

1 11, 12. வச
2 அப். 9. 6, 18–26
3 அப். 2. 24
4 அப். 16. 6: 18. 23
5 ரோ. 1. 7. ழ
6 யோ. 17. 15
7 ரோ. 8. 27
8 யோ. 10. 17, 18. தீத். 2. 14
* யுகாயுகங்களுக்கு நேராம்
9 5. 4–8
10 2 கொ. 11. 4
11 அப். 15. 1, 24. 2 கொ. 2. 17
12 1 கொ. 16. 22
13 உபா. 4. 2. வெளி. 22. 18
14 2 கொ. 12. 19. 1 தெச. 2. 4
15 மாக். 4. 4
16 1 கொ. 15. 1–3
17 எபே. 3. 3
18 அப். 8. 1, 3: 9. 1, 2: 26. 9
19 மாற். 7. 5–13
20 அப். 22. 3. பிலி. 3. 6
21 ஏசா. 49. 1 எரே. 1. 5 அப். 13. 2: 22. 14, 15. ரோ. 1. 1
22 அப். 9. 15. 2 கொ. 4. 6
23 மத். 16. 17. 2 கொ. 5. 16
24 அப். 9. 26
25 மாற். 6. 3
26 ரோ. 9. 1, 2
27 அப். 9. 30
28 1 தெச. 2. 14
29 அப். 9. 13. 26. 1 தீமோ. 1. 13–16

24 என்னைப்பற்றி [1]தேவனை மகிமைப்படுத்தி
னார்கள்.

**2** பதினாலு வருஷம் சென்றபின்பு [2]நான்
தீத்துவைக் கூட்டிக்கொண்டு பர்னபாவுடனே
கூட மறுபடியும் எருசலேமுக்குப் போனேன்.
2 நான் தேவ அறிவிப்பினாலே போய், புறஜாதி
களிடத்தில் நான் பிரசங்கிக்கிற சுவிசேஷத்
தை அவர்களுக்கு விவரித்துக் காண்பித்தேன்;
ஆயினும் நான் ஓடுகிறதும், [3]ஓடினதும் வீணா
காதபடிக்கு எண்ணிக்கையுள்ளவர்களுக்கே
தனிமையாய் விவரித்துக் காண்பித்தேன்.
3 ஆனாலும் என்னுடனேகூட இருந்த தீத்து
கிரேக்கனாயிருந்தும் விருத்தசேதனம் பண்
ணிக்கொள்ளும்படிக்குக் கட்டாயம் பண்ணப்
4 படவில்லை. கிறிஸ்து இயேசுவுக்குள் நமக்கு
உண்டான [4]சுயாதீனத்தை உளவு பார்த்து
நம்மை நியாயப்பிரமாணத்திற்கு [5]அடிமைக
ளாக்கும்பொருட்டாகப் பக்கவழியாய் நுழை
ந்த [6]கள்ளச் சகோதரர்நிமித்தம் அப்படியா
5 யிற்று. சுவிசேஷத்தின் சத்தியம் உங்களிடத்
திலே நிலைத்திருக்கும்படி, [7]நாங்கள் ஒரு
நாழிகையாகிலும் அவர்களுக்குக் கீழ்ப்படிந்து
6 இணங்கவில்லை. அல்லாமலும் எண்ணிக்கை
யுள்ளவர்களாயிருந்தவர்கள் [8]எனக்கு ஒன்றும்
போதிக்கவில்லை; அவர்கள் எப்படிப்பட்ட
வர்களாயிருந்தாலும் எனக்குக் கவையில்லை,
[9]தேவன் மனுஷரிடத்தில் பட்சபாதமுள்ளவ
7 ரல்லவே. அதுவுமல்லாமல், விருத்தசேதன
முள்ளவர்களுக்கு அப்போஸ்தலனாயிருக்கும்
படி பேதுருவைப்பலப்படுத்தினவர் [10]புறஜாதி
களுக்கு அப்போஸ்தலனாயிருக்கும்படி என்னை
8 யும் பலப்படுத்தினபடியால், விருத்தசேதன
முள்ளவர்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்
கிக்கும்படி பேதுருவுக்குக் கையளிக்கப்பட்
டதுபோல, [11]விருத்தசேதனம் இல்லாதவர்க
ளுக்குப் பிரசங்கிக்கும்படி அது எனக்கும் கை
9 யளிக்கப்பட்டதென்று அவர்கள் கண்டு; என
க்கு அளிக்கப்பட்ட [12]கிருபையை அறிந்த
போது, [13]தூண்களாக எண்ணப்பட்ட யாக்
கோபும், கேபாவும், யோவானும், தாங்கள்
விருத்தசேதன முள்ளவர்களுக்கும், நாங்கள்
புறஜாதிகளுக்கும் பிரசங்கிக்கும்படி, அந்நி
யோந்நிய ஐக்கியத்திற்கு அடையாளமாக
எனக்கும்பர்னபாவுக்கும்வலதுகைகொடுத்து,
10 தரித்திரரை நினைத்துக்கொள்ளும்படிக்குமாத்
திரம் சொன்னார்கள்; அப்படிச் செய்யும்படி
அதற்கு முன்னமே நானும் கருத்துள்ளவனா
யிருந்தேன்.
11 மேலும், பேதுரு அந்தியோகியாவுக்கு வந்த
போது, [14]அவன்மேல் குற்றஞ் சுமந்ததினால்,
நான் முகமுகமாய் அவனோடே எதிர்த்தேன்.
12 எப்படியெனில், யாக்கோபினிடத்திலிருந்து
சிலர் வருகிறதற்குமுன்னே [15]அவன் புறஜாதி
யாருடனே சாப்பிட்டான்; அவர்கள் வந்த
போதோ, விருத்தசேதனமுள்ளவர்களுக்குப்
13 பயந்து, விலகிப் பிரிந்தான். மற்ற யூதரும்
அவனுடனேகூட மாயம்பண்ணினார்கள்;
அவர்களுடைய மாயத்தினாலே பர்னபாவும்
இழுப்புண்டான். இப்படி அவர்கள் சுவி 14
சேஷத்தின் சத்தியத்திற்கேற்றபடி சரியாய்
நடவாததை நான் கண்டபோது, [16]எல்லாருக்
கும் முன்பாக நான் பேதுருவை நோக்கிச்
சொன்னது என்னவென்றால்: யூதனாயிருக்
கிற நீர் யூதர் முறைமையாக நடவாமல், புறஜா
தியார் முறைமையாக நடந்துகொண்டிருக்க,
புறஜாதியாரை யூதர் முறைமையாக நடக்கும்
படி நீர் எப்படிக் கட்டாயம் பண்ணலாம்?
புறஜாதியாரில் பிறந்த *பாவிகளாயிராமல், 15
[17]சுபாவத்தின்படி யூதராயிருக்கிற நாமும் இயே
சுகிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினாலே
யன்றி, [18]நியாயப்பிரமாணத்தின் கிரியைகளி
னாலே மனுஷன் நீதிமானாக்கப்படுவதில்லை
யென்று அறிந்து, நியாயப்பிரமாணத்தின் கிரி
யைகளினாலல்ல, [19]கிறிஸ்துவைப் பற்றும் விசு
வாசத்தினாலே நீதிமான்களாக்கப்படும்படிக்
குக் கிறிஸ்து இயேசுவின்மேல் விசுவாசிக
ளானோம். நியாயப்பிரமாணத்தின் கிரியை 16
களினாலே [20]எந்த மனுஷனும் நீதிமானாக்கப்
படுவதில்லையே. கிறிஸ்துவுக்குள் நீதிமான்க 17
ளாக்கப்படும்படி நாடுகிற நாமும் பாவிகளா
கக் காணப்படுவோமானால், [21]கிறிஸ்து பா
வத்திற்குக் காரணரோ? அல்லவே. நான் 18
இடித்துப்போட்டவைகளையே நான் மறுபடி
யும் கட்டினால், பிரமாணத்தை மீறுகிறவ
வனென்று காணப்படுவேன். தேவனுக்கெ 19
ன்று [22]பிழைக்கும்படி நான் நியாயப்பிரமா
ணத்தினாலே [23]நியாயப்பிரமாணத்திற்கு மரித்
தேனே. கிறிஸ்துவுடனே [24]கூடச் சிலுவை 20
யிலறையப்பட்டேன்; ஆயினும், பிழைத்தி
ருக்கிறேன்; இனி நான் அல்ல, [25]கிறிஸ்துவே
எனக்குள் பிழைத்திருக்கிறார்; நான் இப்பொ
ழுது மாம்சத்தில் பிழைத்திருக்கிறதோ, [26]என்
னில் அன்புகூர்ந்து எனக்காகத் தம்மைத்
தாமே ஒப்புக்கொடுத்த தேவனுடைய குமா
ரனைப்பற்றும் விசுவாசத்தினாலே பிழைத்தி
ருக்கிறேன். நான் தேவனுடைய கிருபையை 21
விருதாவாக்குகிறதில்லை; [27]நீதியானது நியா
யப்பிரமாணத்தினாலே வருமானால், கிறிஸ்து
மரித்தது †வீணாயிருக்குமே.

புத்தியில்லாத [28]கலாத்தியரே, [29]நீங்கள் சத் **3**
தியத்திற்குக் கீழ்ப்படியாமற் போகத்தக்கதாக
உங்களை மயக்கினவன் யார்? இயேசுகிறிஸ்து
சிலுவையிலறையப்பட்டவராக உங்கள் கண்
களுக்குமுன் பிரத்தியட்சமாய் உங்களுக்குள்
ளே வெளிப்படுத்தப்பட்டிருந்தாரே. ஒன்றை 2
மாத்திரம் உங்களிடத்தில் அறிய விரும்புகி
றேன்; [30]நியாயப்பிரமாணத்தின் கிரியைகளி
னாலேயோ, [31]விசுவாசக் கேள்வியினாலேயோ,
எதினாலே ஆவியைப் பெற்றீர்கள்? ‡ஆவியி 3
னாலே [32]ஆரம்பம்பண்ணின நீங்கள் இப்பொ
ழுது ‡மாம்சத்தினாலே [33]முடிவுபெறப்போகி
றீர்களோ? நீங்கள் இத்தனை புத்தியீனரா?
இத்தனை பாடுகளையும் வீணாய்ப்பட்டீர்களோ? 4
[34]அவைகள் வீணாய்ப் போயிற்றே. அன்றியும் 5

1 அப். 21. 19, 20
2 அப். 15. 2. ழ
3 1 தெச. 3. 5
4 5. 1, 13
5 4. 3, 9. 2 கொ. 11. 20.
6 அப். 15. 1, 24
7 14. வச: 3. 1: 4. 16
8 6. 3. 2 கொ. 12. 11
9 அப். 10. 34. ரோ. 2. 11
10 அப். 13. 46 1 தெச. 2. 4
11 அப் 9. 15. 1 கொ. 15. 10
12 ரோ. 1. 7: 12: 3, 6
13 மத். 16. 18. எபே. 2. 20
14 அப். 15. 35
15 அப். 11. 3
16 5. வச. அப். 10. 28; 11. 3. 1 யோ. 5. 20
* அஞ்ஞானிகள். மத். 9. 11. எபே. 2. 3, 12
17 அப். 15. 10, 11
18 அப். 13. 38, 39. ரோ. 3. 20
19 3. 11, 24. ரோ. 5. 1
20 சங். 143. 2. ரோ. 3. 20. எபி. 7. 18, 19
21 1 யோ. 3. 8, 9.
22 ரோ. 6. 11, 14. 2 கொ. 5. 15
23 ரோ. 7. 4, 10. 8. 2
24 5. 24: 6. 14. ரோ. 6. 6
25 1 தெச. 5. 10. 1 பே. 4. 2
26 யோ. 10. 11. எபே. 5. 2
27 ரோ. 11. 6. எபி. 7. 11
† விருதாவாயிருக்குமே
28 மத். 7. 26
29 5. 7
30 எபே. 1. 13
31 ரோ. 10. 17
‡ ஆவியிலே, மாம்சத்திலே
32 4. 9
33 எபி. 9. 10
34 எபி. 10. 35, 36 2 யோ. 8. வச

உங்களுக்கு ஆவியை அளித்து, [1]உங்களுக்
குள்ளே அற்புதங்களை நடப்பிக்கிறவர் அதை
நியாயப் பிரமாணத்தின் கிரியைகளினாலே
யோ, விசுவாசக் கேள்வியினாலேயோ, எதினா
6 லே செய்கிறார்? அப்படியே ஆபிரகாம் தே
வனை விசுவாசித்தான், [2]அது அவனுக்கு நீதி
7 யாக எண்ணப்பட்டது. ஆகையால் விசுவாச
மார்க்கத்தார்கள் எவர்களோ [3]அவர்களே ஆபி
ரகாமின் பிள்ளைகளென்று அறிவீர்களாக.
8 மேலும் தேவன் விசுவாசத்தினாலே புறஜாதி
களை [4]நீதிமான்களாக்குகிறாரென்று வேதம்
முன்னாகக் கண்டு: [5]உனக்குள் சகல ஜாதிக
ளும் ஆசீர்வதிக்கப்படும் என்று ஆபிரகாமுக்
9 குச் சுவிசேஷமாய் முன்னறிவித்தது. அந்
தப்படி விசுவாசமார்க்கத்தார் [6]விசுவாசமுள்ள
ஆபிரகாமுடனே ஆசீர்வதிக்கப்படுகிறார்கள்.
10 நியாயப் பிரமாணத்தின் கிரியைக்காரராகிய
யாவரும் சாபத்திற் குட்பட்டிருக்கிறார்கள்;
[7]நியாயப்பிரமாண புஸ்தகத்தில் எழுதப்பட்
டவைகளையெல்லாம் செய்யத்தக்கதாக அவை
களில் நிலைத்திராதவன் எவனோ அவன் சபிக்
11 கப்பட்டவன் என்று எழுதியிருக்கிறதே. நியா
யப்பிரமாணத்தினாலே ஒருவனும் தேவனிடத்
தில் நீதிமானாகிறதில்லையென்பது வெளியரங்
கமாயிருக்கிறது. ஏனெனில், [8]விசுவாசத்தி
னாலே நீதிமான் பிழைப்பான் என்று எழுதி
12 யிருக்கிறதே. நியாயப்பிரமாணமோ [9]விசு
வாசத்திற்குரியதல்ல; [10]அவைகளைச் செய்கிற
13 மனுஷனே அவைகளால் பிழைப்பான். மரத்
திலே தூக்கப்பட்ட எவனும் சபிக்கப்பட்ட
வன் என்று எழுதியிருக்கிறபடி, [11]கிறிஸ்து
நமக்காகச் சாபமாகி, நியாயப்பிரமாணத்தின்
சாபத்திற்கு நம்மை நீங்கலாக்கி மீட்டுக்கொண்
14 டார். ஆபிரகாமுக்கு உண்டான ஆசீர்வாதம்
கிறிஸ்து இயேசுவினால் புறஜாதிகளுக்கு வரும்
படியாகவும், [12]ஆவியைக்குறித்துச் சொல்லப்
பட்ட வாக்குத்தத்தத்தை நாம் விசுவாசத்தி
னாலே பெறும்படியாகவும் இப்படியாயிற்று.
15 சகோதரரே, மனுஷர் முறைமையின்படி
சொல்லுகிறேன்; [13]மனுஷர்களுக்குள்ளே உறு
திபண்ணப்பட்ட உடன்படிக்கையை ஒரு
வனும் தள்ளுகிறதுமில்லை, அதினோடே
16 ஒன்றையும் கூட்டுகிறதுமில்லை. ஆபிரகா
முக்கும் அவனுடைய சந்ததிக்கும் வாக்குத்தத்
தங்கள் பண்ணப்பட்டன; [14]சந்ததிகளுக்கு
என்று அநேகரைக்குறித்துச் சொல்லாமல்,
உன் சந்ததிக்கு என்று ஒருவனைக்குறித்துச்
சொல்லியிருக்கிறார், அந்தச் சந்ததி கிறிஸ்து
17 வே. ஆதலால் நான் சொல்லுகிறதென்ன
வெனில், கிறிஸ்துவை முன்னிட்டு தேவ
னால் முன் உறுதிபண்ணப்பட்ட உடன்படிக்
கையை [15]நானூற்று முப்பது வருஷத்திற்குப்
பின்பு உண்டான நியாயப்பிரமாணமானது
தள்ளி, வாக்குத்தத்தத்தை வியர்த்தமாக்கமாட்
18 டாது. அன்றியும், சுதந்தரமானது நியாயப்
பிரமாணத்தினாலே உண்டானால் அது வாக்
குத்தத்தத்தினாலே உண்டாயிராது; [16]தேவன்
அதை ஆபிரகாமுக்கு வாக்குத்தத்தத்தினாலே
அருளிச்செய்தாரே. அப்படியானால், நியா 19
யப்பிரமாணத்தின் நோக்கமென்ன? [17]வாக்
குத்தத்தத்தைப்பெற்ற சந்ததி வருமளவும் அது
*அக்கிரமங்களினிமித்தமாகக் கூட்டப்பட்டு,
[18]தேவதூதரைக்கொண்டு [19]மத்தியஸ்தன் கையி
லே கட்டளையிடப்பட்டது. மத்தியஸ்தன் 20
ஒருவனுக்குரியவனல்ல, [20]தேவனோ ஒருவர்.
அப்படியானால், [21]நியாயப்பிரமாணம் தேவ 21
னுடைய வாக்குத்தத்தங்களுக்கு விரோதமா?
அல்லவே; [22]உயிரைக் கொடுக்கத்தக்க நியா
யப்பிரமாணம் அருளப்பட் டிருந்ததானால்,
நீதியானது நியாயப்பிரமாணத்தினால் உண்
டாயிருக்குமே. அப்படியிராதபடியால், [23]இ 22
யேசுகிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினா
லே பலிக்கிற வாக்குத்தத்தம் விசுவாசமுள்ள
வர்களுக்கு அளிக்கப்படும்படி [24]வேதம் எல்
லாரையும் ஏகமாய்ப் பாவத்தின்கீழ் அடைத்
துப்போட்டது.

ஆதலால் விசுவாசம் வருகிறதற்கு முன் 23
னே, வெளிப்படப்போகிற விசுவாசத்திற்கு
ஏதுவாக நாம் அடைக்கப்பட்டவர்களாய் நியா
யப்பிரமாணத்தின் கீழ் காவல் பண்ணப்பட்டி
ருந்தோம். இவ்விதமாக, நாம் விசுவாசத் 24
தினாலே நீதிமான்களாக்கப்படுவதற்கு நியா
யபபிரமாணம் நம்மைக் கிறிஸ்துவினிடத்தில்
வழிநடத்துகிற [25]உபாத்தியாய் இருந்தது. விசு 25
வாசம் வந்தபின்பு நாம் உபாத்திக்குக் கீழான
வர்களல்லவே. நீங்களெல்லாரும் கிறிஸ்து 26
இயேசுவைப்பற்றும் விசுவாசத்தினால் [26]தேவ
னுடைய புத்திரராயிருக்கிறீர்களே. ஏனெ 27
னில் உங்களில் கிறிஸ்துவுக்குள்ளாக ஞா
னஸ்நானம் பெற்றவர்கள் எத்தனைபேரோ,
[27]அத்தனைபேரும் கிறிஸ்துவைத் தரித்துக்கொ
ண்டவர்களே. யூதனென்றும் கிரேக்கனென்று 28
மில்லை, [28]அடிமையென்றும் சுயாதீனனெ
ன்றுமில்லை, ஆணென்றும் பெண்ணென்று
மில்லை, [29]நீங்களெல்லாரும் கிறிஸ்து இயேசு
வுக்குள் ஒன்றாயிருக்கிறீர்கள். நீங்கள் கிறி 29
ஸ்துவினுடையவர்களானால், [30]ஆபிரகாமின்
சந்ததியாராயும், வாக்குத்தத்தத்தின்படியே,
[31]சுதந்தரராயும் இருக்கிறீர்கள்.

பின்னும் நான் சொல்லுகிறதென்னவெ 4
னில், சுதந்தரவாளியானவன் எல்லாவற்றிற்
கும் எஜமானாயிருந்தும், அவன் சிறுபிள்ளை
யாயிருக்குங் காலமளவும், அவனுக்கும் அடி
மையானவனுக்கும் வித்தியாசமில்லை. தகப் 2
பன் குறித்த காலம்வரைக்கும் அவன் காரிய
காரருக்கும் வீட்டு விசாரணைக்காரருக்கும்
கீழ்ப்பட்டிருக்கிறான். அப்படியே நாமும் 3
சிறுபிள்ளைகளாயிருந்தகாலத்தில் இவ்வுலகத்
தின் [32]வழிபாடுகளுக்கு அடிமைப்பட்டவர்
களாயிருந்தோம். நாம் புத்திரசுவிகாரத்தை 4
யடையும்படி [33]நியாயப் பிரமாணத்திற்குக்
கீழ்ப்பட்டவர்களை மீட்டுக்கொள்ளத்தக்கதாக,
காலம் நிறைவேறினபோது, [34]ஸ்திரீயினிடத் 5
திற் பிறந்தவரும் நியாயப்பிரமாணத்துக்குக்

1 2 கொ. 3. 8
2 ஆதி. 15. 6. ரோ. 4. 3, 9. யாக். 2. 23
3 யோ. 8. 39. ரோ. 4. 11–16
4 22. வச. ரோ. 9. 17
5 ஆதி. 12. 3: 22. 18. அப். 3. 25
6 4. 28
7 உபா. 27. 26
8 ஆப. 2. 4. ரோ. 1. 17. எபி. 10. 38
9 ரோ. 10. 5, 6
10 லேவி. 18. 5. எசே. 20. 11
11 உபா. 21. 23. 2 கொ. 5. 21
12 ஏசா. 44. 3. எசே. 36. 27. யோவே. 2. 28, 29. ரோ. 4. 9, 16
13 எபி. 9. 17
14 ஆதி. 12. 3, 7: 17. 7. 1 கொ. 12. 12
15 யாத். 12. 40, 41. ரோ. 4. 13, 14
16 ரோ. 4. 14: 8. 17
17 16. வச
* மீறுதல்களின். ரோ. 5. 20
18 அப். 7. 53. எபி 2. 2
19 யாத். 20. 19–22. உபா. 5. 22–31 யோ. 1. 17. அப். 7 38. 1 தீமோ. 2. 5
20 உபா. 6. 4. ரோ. 3. 29, 30
21 மத். 5. 17
22 2. 21
23 ரோ. 4. 11, 12, 16
24 ரோ. 3. 9, 19, 23
25 கொலோ. 2. 17. எபி. 9. 9, 10
26 யோ. 1. 12. 1 யோ. 3. 1, 2
27 ரோ. 6. 3: 13. 14
28 ரோ. 10. 12. கொலோ. 3. 11
29 யோ. 10. 16: 17. 20, 21
30 ரோ. 9. 7. எபி. 11. 18
31 ரோ. 8. 17. எபே. 3. 6
32 கொலோ. 2. 8, 20
33 மத். 20. 28. யோ. 1. 12. எபே. 1. 5, 6, 7
34 மத். 1. 23. மாற். 1. 15. யோ. 1. 14

கீழானவருமாகிய தம்முடைய குமாரனை தே
6 வன் அனுப்பினார். மேலும் நீங்கள் புத்திர
ராயிருக்கிறபடியினால், [1]அப்பா, பிதாவே!
என்று கூப்பிடத்தக்கதாக தேவன் தமது குமா
ரனுடைய ஆவியை உங்கள் இருதயங்களில்
7 அனுப்பினார். ஆகையால் இனி நீ அடிமை
யாயிராமல் புத்திரனாயிருக்கிறாய்; [2]நீ புத்திர
னேயானால், கிறிஸ்துமூலமாய் *தேவனு
டைய சுதந்தரனுமிருக்கிறாய்.
8 நீங்கள் தேவனை அறியாமலிருந்தபோது,
[3]சுபாவத்தின்படி தேவர்களல்லாதவர்களுக்கு
9 [4]அடிமைகளாயிருந்தீர்கள். இப்பொழுதோ,
நீங்கள் தேவனை அறிந்திருக்க, [5]அல்லது தே
வனாலே அறியப்பட்டிருக்க, [6]பெலனற்றதும்
வெறுமையானதுமான அவ்வழிபாடுகளுக்கு
நீங்கள் மறுபடியும் திரும்பி, மறுபடியும் அவை
களுக்கு அடிமைப்படும்படி விரும்புகிறதெப்
10 படி? நாட்களையும், [7]மாதங்களையும், காலங்
களையும், வருஷங்களையும் பார்க்கிறீர்களே.
11 நான் உங்களுக்காகப் பிரயாசப்பட்டது வீணா
ய்ப்போயிற்றோ என்று [8]உங்களைக்குறித்துப்
பயந்திருக்கிறேன்.
12 சகோதரரே, என்னைப்போலாகுங்கள் என்
று உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன்; நான்
உங்களைப்போலுமானேனே. [9]எனக்கு நீங்
13 கள் அநியாயம் ஒன்றும் செய்யவில்லை. உங்
களுக்குத் தெரிந்திருக்கிறபடி, [10]நான் சரீர
பலவீனத்தோடு முதலாந்தரம் உங்களுக்குச்
14 சுவிசேஷத்தைப் பிரசங்கித்தேன். அப்படி
யிருந்தும், என் சரீரத்தில் உண்டாயிருக்கிற
சோதனையை நீங்கள் அசட்டைபண்ணாமலும்,
அரோசியாமலும், [11]தேவதூதனைப்போலவும்,
[12]கிறிஸ்து இயேசுவைப்போலவும், என்னை
15 ஏற்றுக்கொண்டீர்கள். அப்பொழுது நீங்கள்
கொண்டிருந்த ஆனந்தபாக்கியம் எங்கே? உங்
கள் கண்களைப் பிடுங்கி எனக்குக் கொடுக்கக்
கூடுமானால், அப்படியும் செய்திருப்பீர்கள்
என்று உங்களுக்குச் சாட்சியாயிருக்கிறேன்.
16 நான் உங்களுக்குச் சத்தியத்தைச் சொன்ன
தினாலே [13]உங்களுக்குச் சத்துருவானேனோ?
17 அவர்கள் உங்களை நாடி வைராக்கியம் பா
ராட்டுகிறார்கள்; [14]ஆகிலும் நல்மனதோடே
அப்படிச் செய்யாமல், நீங்கள் அவர்களை
நாடி வைராக்கியம் பாராட்டும்பொருட்டு உங்
18 களைப் புறம்பாக்க விரும்புகிறார்கள். நல்வி
ஷயத்தில் வைராக்கியம் பாராட்டுவது [15]நல்
லதுதான்; அதை நான் உங்களிடத்தில் இருக்
கும்பொழுது மாத்திரமல்ல, எப்பொழுதும்
19 பாராட்டவேண்டும். என் சிறு பிள்ளைகளே,
[16]கிறிஸ்து உங்களிடத்தில் உருவாகுமளவும்
உங்களுக்காக மறுபடியும் கர்ப்பவேதனைப்படு
20 கிறேன்; உங்களைக்குறித்து நான் சந்தேகப்
படுகிறபடியால், நான் இப்பொழுது உங்களி
டத்தில் வந்திருந்து, வேறு வகையாகப்
பேச விரும்புகிறேன்.
21 நியாயப்பிரமாணத்திற்குக் கீழ்ப்பட்டிருக்க
விரும்புகிற நீங்கள் நியாயப்பிரமாணம் சொல்

1 ரோ. 8. 15, 17
2 3. 29
* தேவனுக்குரிய
3 எபே. 2. 12
4 ரோ. 1. 25. 1 கொ. 12. 2
5 1 கொ. 8. 3: 13. 12
6 ரோ. 8. 3. எபி. 7. 18
7 ரோ. 14. 5. கொலோ. 2. 16
8 1 தெச. 3. 5
9 2 கொ. 2. 5
10 1 கொ. 2. 3
11 2 சாமு. 19. 27. மல். 2. 7
12 மத். 10. 40
13 2. 5, 14
14 ரோ. 10. 2. 2 கொ. 11. 2
15 1 கொ. 15. 58
16 1 கொ. 4. 15. யாக். 1. 18
17 ஆதி. 16. 15: 21. 1, 2
18 ரோ. 9. 7. 8. எபி. 11. 11
† ஞானார்த்தங்கொண்டும்
19 1 கொ. 10. 11
20 எபி. 12. 22. வெளி. 21. 2, 10
21 ஏசா. 54. 1
22 3. 29. அப். 3. 25.
23 ஆதி. 21 9. யோ. 15. 19
24 ஆதி. 21. 10, 12. யோ. 8. 35
25 யோ. 8. 36
26 யோ. 8. 32, 36. அப். 15. 10. ரோ. 6. 18. எபே. 6. 14
27 அப். 15. 1: 16. 3
28 3. 10
29 ரோ. 9. 31, 32. எபி. 12. 15
30 ரோ. 8. 24, 25. 2 தீமோ. 4, 8

லுகிறதைக் கேட்கவில்லையா? இதை எனக்
குச் சொல்லுங்கள். ஆபிரகாமுக்கு இரண்டு 22
குமாரர் இருந்தார்கள் என்று எழுதியிருக்கி
றது; [17]ஒருவன் அடிமையானவளிடத்தில்
பிறந்தவன், ஒருவன் சுயாதீனமுள்ளவளிடத்
தில் பிறந்தவன். அடிமையானவளிடத்தில் 23
பிறந்தவன் மாம்சத்தின்படி பிறந்தான், [18]சுயா
தீனமுள்ளவளிடத்தில் பிறந்தவன் வாக்குத்
தத்தத்தின்படி பிறந்தான். இவைகள் †ஞான 24
அர்த்தமுள்ளவைகள்; [19]அந்த ஸ்திரீகள் இர
ண்டு ஏற்பாடுகளாம்; ஒன்று சீனாய்மலையிலு
ண்டான ஏற்பாடு, அது அடிமைத்தனத்திற்
குள்ளாகப் பிள்ளைபெறுகிறது, அது ஆகார்
என்பவள்தானே. ஆகார் என்பது அரபிதே 25
சத்திலுள்ள சீனாய்மலை; அந்த ஆகார் இப்
பொழுதிருக்கிற எருசலேமுக்குச் சரி; இவள்
தன் பிள்ளைகளோடேகூட அடிமைப்பட்டி
ருக்கிறாளே. மேலான எருசலேமோ சுயா 26
தீனமுள்ளவள், [20]அவளே நம்மெல்லாருக்கும்
தாயானவள். அந்தப்படி [21]பிள்ளைபெறாத 27
மலடியே, மகிழ்ந்திரு; கர்ப்பவேதனைப்படா
தவளே, களிப்பாய் எழும்பி ஆர்ப்பரி; புரு
ஷனுள்ளவளைப்பார்க்கிலும் அநாத ஸ்திரீக்
கே அதிக பிள்ளைகளுண்டு என்று எழுதியி
ருக்கிறது. சகோதரரே, [22]நாம் ஈசாக்கைப் 28
போல வாக்குத்தத்தத்துப் பிள்ளைகளாயிருக்கி
றோம். ஆகிலும் மாம்சத்தின்படி பிறந்தவன் 29
ஆவியின்படி பிறந்தவனை அப்பொழுது துன்
பப்படுத்தினதுபோல, [23]இப்பொழுதும் நடந்
துவருகிறது. அதைக்குறித்து வேதம் என்ன 30
சொல்லுகிறது: [24]அடிமையானவளின் மகன்
சுயாதீனமுள்ளவளுடைய குமாரனோடே சுதந்
தரவாளியாயிருப்பதில்லை; ஆகையால் அடி
மையானவளையும், அவளுடைய மகனையும்
புறம்பே தள்ளு என்று சொல்லுகிறது. இப் 31
படியிருக்க, சகோதரரே, [25]நாம் அடிமையா
னவளுக்குப் பிள்ளைகளாயிராமல், சுயாதீன
முள்ளவளுக்கே பிள்ளைகளா யிருக்கிறோம்.
ஆனபடியினாலே, நீங்கள் மறுபடியும் அடி 5
மைத்தனத்தின் நுகத்துக் குட்படாமல், [26]கிறி
ஸ்து நமக்கு உண்டாக்கின சுயாதீன நிலைமை
யிலே நிலைகொண்டிருங்கள்.
இதோ, [27]நீங்கள் விருத்தசேதனம் பண் 2
ணிக்கொண்டால் கிறிஸ்துவினால் உங்களுக்கு
ஒரு பிரயோசனமுமிராது என்று பவுலாகிய
நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். மேலும், 3
விருத்தசேதனம் பண்ணிக்கொள்ளுகிற எந்த
மனுஷனும் [28]நியாயப்பிரமாணம் முழுவதை
யும் நிறைவேற்றக் கடனாளியாயிருக்கிறான்
என்று மறுபடியும் அப்படிப்பட்டவனுக்குச்
சாட்சியாகச் சொல்லுகிறேன். நியாயப்பிர 4
மாணத்தினால் நீதிமான்களாக விரும்புகிற நீங்
கள் யாவரும் கிறிஸ்துவை விட்டுப் பிரிந்து
[29]கிருபையினின்று விழுந்தீர்கள். நாங்களோ 5
நீதி கிடைக்குமென்று [30]ஆவியைக்கொண்டு
விசுவாசத்தினால் நம்பிக்கையோடே காத்தி
ருக்கிறோம். கிறிஸ்து இயேசுவினிடத்தில் 6

விருத்தசேதனமும் விருத்தசேதன மில்லாமை
யும் ஒன்றுக்கும் உதவாது, [1]அன்பினால் கிரி
7 யைசெய்கிற விசுவாசமே உதவும். நீங்கள்
நன்றாய் ஓடினீர்களே; [2]சத்தியத்திற்குக் கீழ்ப்
படியாமற்போக உங்களுக்குத் தடைசெய்த
8 வன் யார்? இந்தப் போதனை உங்களை அழைத்
9 தவரால் உண்டானதல்ல. புளிப்புள்ள கொ
ஞ்சமாவானது [3]பிசைந்தமாவனைத்தையும் உப்
10 பப்பண்ணும். நீங்கள் வேறுவிதமாய்ச் சிந்
திக்கமாட்டீர்களென்று நான் கர்த்தருக்குள்
உங்களைக்குறித்து நம்பிக்கையாயிருக்கிறேன்;
[4]உங்களைக் கலக்குகிறவன் எப்படிப்பட்டவனா
யிருந்தாலும் தனக்கேற்ற ஆக்கினையை அடை
11 வான். சகோதரரே, இதுவரைக்கும் நான்
விருத்தசேதனத்தைப்பிரசங்கிக்கிறவனாயிருந்
தால், [5]இதுவரைக்கும் என்னத்திற்குத் துன்
பப்படுகிறேன்? [6]அப்படியானால் சிலுவை
யைப் பற்றிவரும் இடறல் ஒழிந்திருக்குமே.
12 உங்களைக் கலக்குகிறவர்கள் [7]தறிப்புண்டு
போனால் நலமாயிருக்கும்.
13 சகோதரரே, நீங்கள் சுயாதீனத்திற்கு
அழைக்கப்பட்டீர்கள், [8]இந்தச் சுயாதீனத்தை
நீங்கள் மாம்சத்திற்கேதுவாக அநுசரியாமல்,
[9]அன்பினாலே ஒருவருக்கொருவர் ஊழியஞ்
14 செய்யுங்கள். உன்னிடத்தில் நீ அன்புகூரு
வதுபோலப் பிறனிடத்திலும் அன்புகூருவா
யாக, [10]என்கிற இந்த ஒரே வார்த்தையிலே
நியாயப்பிரமாணம் முழுவதும் நிறைவேறும்.
15 நீங்கள் ஒருவரையொருவர் கடித்துப் பட்சித்
தீர்களானால் அழிவீர்கள், அப்படி ஒருவரா
லொருவர் அழிக்கப்படாதபடிக்கு எச்சரிக்
கையாயிருங்கள்.
16 பின்னும் நான் சொல்லுகிறதென்ன
வென்றால், [11]ஆவிக்கேற்றபடி நடந்துகொள்
ளுங்கள், அப்பொழுது மாம்ச இச்சையை
17 நிறைவேற்றாதிருப்பீர்கள். மாம்சம் ஆவிக்கு
விரோதமாகவும், [12]ஆவி மாம்சத்துக்கு விரோத
மாகவும் இச்சிக்கிறது; [13]நீங்கள் செய்யவேண்
டுமென்றிருக்கிறவைகளைச் செய்யாதபடிக்கு,
[14]இவைகள் ஒன்றுக்கொன்று விரோதமாயி
18 ருக்கிறது. ஆவியினால் நடத்தப்படுவீர்களா
னால், [15]நீங்கள் நியாயப்பிரமாணத்திற்குக் கீழ்
19 ப்பட்டவர்களல்ல. மாம்சத்தின் கிரியைகள்
வெளியரங்கமாயிருக்கின்றன, [16]அவையா
வன, விபசாரம், வேசித்தனம், அசுத்தம், காம
20 விகாரம், விக்கிரகாராதனை, பில்லிசூனியம்,
பகைகள், விரோதங்கள், வைராக்கியங்கள்,
கோபங்கள், சண்டைகள், பிரிவினைகள், மார்க்
21 கபேதங்கள். பொறாமைகள், கொலைகள்,
வெறிகள், *களியாட்டுகள், முதலானவை
களே; [17]இப்படிப்பட்டவைகளைச் செய்கிற
வர்கள் தேவனுடைய ராஜ்யத்தைச் சுதந்தரிப்
பதில்லையென்று முன்னே நான் சொன்னது
போல இப்பொழுதும் உங்களுக்குச் சொல்லு
22 கிறேன். ஆவியின் கனியோ, [18]அன்பு, சந்
தோஷம், சமாதானம், நீடியபொறுமை, தயவு,
23 நற்குணம், விசுவாசம், சாந்தம், இச்சையடக்
கம்; [19]இப்படிப்பட்டவைகளுக்கு விரோத
மான பிரமாணம் ஒன்றுமில்லை. கிறிஸ்து 24
வினுடையவர்கள் [20]தங்கள் மாம்சத்தையும்
அதின் ஆசை இச்சைகளையும் சிலுவையில்
அறைந்திருக்கிறார்கள்.
நாம் ஆவியினாலே பிழைத்திருந்தால், [21]ஆவி 25
க்கேற்றபடி நடக்கவும் கடவோம். வீண்பு 26
கழ்ச்சியை விரும்பாமலும், [22]ஒருவரையொரு
வர் கோபமூட்டாமலும், ஒருவர்மேல் ஒருவர்
பொறாமை கொள்ளாமலும் இருக்கக்கட
வோம்.

**6** சகோதரரே, [23]ஒருவன் யாதொரு குற்றத்
தில் அகப்பட்டால், ஆவிக்குரியவர்களாகிய
நீங்கள் சாந்தமுள்ள ஆவியோடே அப்படிப்
பட்டவனைச் சீர்பொருந்தப் பண்ணுங்கள்;
நீயும் சோதிக்கப்படாதபடிக்கு உன்னைக்
குறித்து எச்சரிக்கையாயிரு. ஒருவர் பாரத் 2
தை ஒருவர் சுமந்து, [24]இப்படியே கிறிஸ்து
வினுடைய பிரமாணத்தை நிறைவேற்றுங்கள்.
ஒருவன், தான் ஒன்றுமில்லாதிருந்தும், [25]தன் 3
னை ஒரு பொருட்டென்று எண்ணினால், தன்
னைத்தானே வஞ்சிக்கிறவனாவான். அவனவ 4
வன் தன்தன் சுயகிரியையைச் சோதித்துப்
பார்க்கக்கடவன்; [26]அப்பொழுது மற்றவனைப்
பார்க்கும்போதல்ல, [27]தன்னையே பார்க்கும்
போது மேன்மை பாராட்ட அவனுக்கு இட
முண்டாகும். அவனவன் [28]தன்தன் பாரத் 5
தைச் சுமப்பானே.
மேலும், திருவசனத்தில் உபதேசிக்கப்படு 6
கிறவன் [29]உபதேசிக்கிறவனுக்குச்சகலநன்மை
களிலும் பகிர்ந்துகொடுக்கக்கடவன். மோசம் 7
போகாதிருங்கள், தேவன் தம்மைப் பரியாசம்
பண்ணவொட்டார்; [30]மனுஷன் எதை விதைக்
கிறானோ அதையே அறுப்பான். தன் மாம் 8
சத்திற்கென்று [31]விதைக்கிறவன்மாம்சத்தினால்
அழிவை அறுப்பான்; [32]ஆவிக்கென்று விதைக்
கிறவன் ஆவியினாலே நித்தியஜீவனை அறுப்
பான். நன்மை செய்கிறதில் சோர்ந்துபோ 9
காமல் இருப்போமாக; [33]நாம் தளர்ந்துபோகா
திருந்தால் ஏற்ற காலத்தில் அறுப்போம்.
ஆகையால் நமக்குக் கிடைக்கும் [34]சமயத்திற் 10
குத் தக்கதாக யாவருக்கும், [35]விசேஷமாக
விசுவாச குடும்பத்தார்களுக்கும், [36]நன்மை
செய்யக்கடவோம்.
என் கையெழுத்தாய் எவ்வளவு எழுதினே 11
னென்று பாருங்கள். மாம்சத்தின்படி நல் 12
வேஷமாய்க் காணப்பட விரும்புகிறவர்கள்
எவர்களோ, [37]அவர்கள் தாங்கள் கிறிஸ்துவி
னுடைய சிலுவையினிமித்தம் துன்பப்படாத
படிக்கே உங்களை விருத்தசேதனம் பண்ணிக்
கொள்ளக் கட்டாயம்பண்ணுகிறார்கள். விரு 13
த்தசேதனம் அடைந்திருக்கிற அவர்களும் நியா
யப்பிரமாணத்தைக் கைக்கொள்ளாமலிருக்கி
றார்கள்; அப்படியிருந்தும், அவர்கள் உங்கள்
மாம்சத்தைக்குறித்து மேன்மை பாராட்டும்
படிக்கு நீங்கள் விருத்தசேதனம் பண்ணிக்
கொள்ளவேண்டுமென்று விரும்புகிறார்கள்.

1 1 கொ. 7. 19. யாக். 2. 18, 22
2 1 கொ. 9. 24
3 மத். 13. 33. 1 கொ. 5. 6
4 2 கொ. 2. 3: 8. 22: 10. 6
5 1 கொ. 15. 30
6 6. 12. 1 கொ. 1. 23
7 அப். 15. 1, 2, 24. 1 கொ. 5. 13
8 1 கொ. 8. 9. 1 பே. 2. 16
9 1 யோ. 3. 18
10 லேவி. 19. 18. மத். 22. 39, 40. யாக். 2. 8
11 ரோ. 8. 1, 4, 13
12 ரோ. 7. 21–23
13 ரோ. 7. 15–19
14 ரோ. 8. 6, 7
15 ரோ. 6. 14: 8. 2
16 மத். 15. 19. 1 கொ. 3. 3. எபே. 5. 3–6. கொலோ. 3. 5, 6. வெளி. 22. 15
* பெருந்திண்டி.
17 1 கொ. 6. 9
18 யோ. 15. 5. எபே. 5. 9
19 1 தீமோ. 1. 9
20 ரோ. 6. 6: 13. 14. 1 பே. 2. 11
21 ரோ. 8. 4, 5
22 பிலி. 2. 3.
23 ரோ. 14. 1. யாக். 5. 19, 20
24 ரோ. 15. 1
25 ரோ. 12. 3. 1 கொ. 8. 2. 2 கொ. 3. 5: 12. 11
26 2 கொ. 13. 5
27 நீதி. 14. 14. லூக். 18. 11
28 ரோ. 2. 6. 1 கொ. 3. 8
29 ரோ. 15. 27. 1 கொ. 9. 11, 14
30 லூக். 16. 25. ரோ. 2. 6. 2 கொ. 9. 6
31 யோபு 4. 8. நீதி. 22. 8. ஓசி. 8. 7. ரோ. 8. 13
32 நீதி. 11. 18. யாக். 3. 18
33 1 கொ. 15. 58. எபி. 10. 36. வெளி. 2. 10
34 பிர. 9. 10. யோ. 9. 4
35 எபே. 2. 19. எபி. 3. 6. 1 யோ. 3. 14
36 மத். 5. 43. தீத். 3. 8
37 2. 3, 14: 5. 11. பிலி. 3. 18

14 நானோ நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறி
ஸ்துவின் [1]சிலுவையைக்குறித்தேயல்லாமல்
வேறொன்றையுங்குறித்து மேன்மை பாராட்
டாதிருப்பேனாக; *அவரால் [2]உலகம் எனக்
குச் சிலுவையிலறையுண்டிருக்கிறது, நானும்
உலகத்திற்குச் சிலுவையிலறையுண்டிருக்கி
15 றேன். கிறிஸ்து இயேசுவுக்குள் [3]விருத்த
சேதனமும் ஒன்றுமில்லை, விருத்தசேதனமில்
லாமையும் ஒன்றுமில்லை; [4]புது சிருஷ்டியே
16 காரியம். இந்தப் பிரமாணத்தின்படி நடந்து
வருகிறவர்கள் எவர்களோ, அவர்களுக்கும்,
தேவனுடைய இஸ்ரவேலருக்கும், [5]சமாதா
னமும் இரக்கமும் உண்டாயிருப்பதாக.
இனிமேல் ஒருவனும் எனக்கு வருத்தம் 17
உண்டாக்காதிருப்பானாக; [6]கர்த்தராகிய இயே
சுவினுடைய அச்சடையாளங்களை நான் என்
சரீரத்திலே தரித்துக்கொண்டிருக்கிறேன்.
சகோதரரே, [7]நம்முடைய கர்த்தராகிய 18
இயேசுகிறிஸ்துவின் கிருபை உங்கள் ஆவியு
டனேகூட இருப்பதாக. ஆமென்.

1 பிலி. 3. 3, 7, 8
* அதனால்
2 2. 20. ரோ. 6. 6
3 5. 6. 1 கொ. 7. 19
4 2 கொ. 5. 17
5 சங். 125. 5. பிலி. 3. 3, 16
6 2 கொ. 1. 5: 4. 10. கொலோ. 1. 24
7 2 தீமோ. 4. 22. பிலேமோன் 25.



# THE EPISTLE TO THE EPHESIANS

# எபேசியருக்கு எழுதின நிருபம்

1 தேவனுடைய சித்தத்தினாலே [1]இயேசு
கிறிஸ்துவினுடைய அப்போஸ்தலனாகிய
பவுல், [2]எபேசுவிலே கிறிஸ்து இயேசுவுக்
குள் விசுவாசிகளாயிருக்கிற [3]பரிசுத்தவான்க
2 ளுக்கு எழுதுகிறதாவது: நம்முடைய பிதா
வாகிய தேவனாலும், கர்த்தராகிய இயேசுகிறி
ஸ்துவினாலும், [4]உங்களுக்குக் கிருபையும்
சமாதானமும் உண்டாவதாக.
3 நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து
வின் பிதாவாகிய தேவனுக்கு [5]ஸ்தோத்திரம்;
அவர் கிறிஸ்துவுக்குள் *உன்னதங்களிலே
[6]ஆவிக்குரிய சகல ஆசீர்வாதத்தினாலும் நம்மை
4 ஆசீர்வதித்திருக்கிறார். தமக்கு முன்பாக நாம்
அன்பில் பரிசுத்தமுள்ளவர்களும் குற்றமில்
லாதவர்களுமாயிருப்பதற்கு, [7]அவர் உலகத்
தோற்றத்துக்கு முன்னே கிறிஸ்துவுக்குள் நம்
5 மைத் தெரிந்துகொண்டபடியே, பிரியமா
னவருக்குள் தாம் நமக்குத் தந்தருளின
[8]தம்முடைய கிருபையின் மகிமைக்குப் புகழ்
6 ச்சியாக, தம்முடைய தயவுள்ள சித்தத்தின்
படியே, [9]நம்மை இயேசுகிறிஸ்து மூலமாய்த்
தமக்குச் [10]சுவிகார புத்திரராகும்படி [11]முன்
7 குறித்திருக்கிறார். அவருடைய கிருபையின்
ஐசுவரியத்தின்படியே இவருடைய இரத்தத்
தினாலே [12]பாவமன்னிப்பாகிய மீட்பு இவ
8 ருக்குள் நமக்கு உண்டாயிருக்கிறது. அந்தக்
கிருபையை அவர் சகல ஞானத்தோடும் புத்
தியோடும் எங்களிடத்தில் பெருகப்பண்ணி
9 னார். காலங்கள் நிறைவேறும்போது விளங்
கும் †நியமத்தின்படி பரலோகத்திலிருக்கிற
வைகளும் பூலோகத்திலிருக்கிறவைகளுமா
கிய சகலமும் கிறிஸ்துவுக்குள்ளே கூட்டப்
10 படவேண்டுமென்று, தமக்குள்ளே தீர்மா
னித்திருந்த [13]தம்முடைய தயவுள்ள சித்தத்
தின் இரகசியத்தை எங்களுக்கு அறிவித்தார்.
11 மேலும் கிறிஸ்துவின்மேல் முன்னே நம்பிக்
கையாயிருந்த நாங்கள் [14]அவருடைய மகிமைக்
12 குப் புகழ்ச்சியா யிருக்கும்படிக்கு, தமது
சித்தத்தின் ஆலோசனைக்குத் தக்கதாக எல்லா
வற்றையும் நடப்பிக்கிற அவருடைய தீர்மா
னத்தின்படியே, [15]நாங்கள் முன்குறிக்கப்
பட்டு, கிறிஸ்துவுக்குள் அவருடைய சுதந்தர
13 மாகும்படி தெரிந்துகொள்ளப்பட்டோம். நீங்

1 2 கொ. 1. 1
2 அப். 19, 20. அதி
3 ரோ. 1. 7. கொலோ. 1. 2
4 கலா. 1. 3. தீத். 1. 4
5 2 கொ. 1. 3. 1 பே. 1. 3
* பரம ஸ்தலங்களில்
6 6. 12. எபி. 9. 28
7 லூ. 1. 75. கொலோ. 1 22. 1 பே. 1. 2, 20
8 1 பே. 2. 5, 9
9 லூ. 12. 32
10 யோ. 1. 12
11 ரோ. 8. 29, 30
12 ரோ. 2. 4; 3. 24. எபி. 9. 12. 1 பே. 1. 18, 19
† உக்கிராண விசாரிப்பிலே. கலா. 4. 4. கொலோ. 1. 20
13 ரோ. 16. 25. 2 தீமோ. 1. 9
14 2 தெச. 2. 13
15 அப். 20. 32. ரோ. 8. 17
16 ரோ. 10. 17
17 2 கொ. 1. 22
18 ரோ. 8. 23
19 2 கொ. 5. 5
20 கொலோ. 1. 3
21 ரோ. 1. 9. பிலி. 1. 3, 4
22 யோ. 20. 17
23 கொலோ. 1. 9
24 4. 4
25 3. 19. அப். 26. 18
26 அப். 2. 24, 33
27 சங். 110. 3
28 ஏசா. 42. 7. கொலோ. 1. 9
29 பிலி. 2. 9. கொலோ. 2. 10
30 கொலோ. 3. 1. எபி. 1. 3; 10. 12
31 சங். 8. 6. மத். 28. 18

களும் உங்கள் இரட்சிப்பின் சுவிசேஷமா
கிய சத்திய வசனத்தைக் கேட்டு, [16]விசுவாசி
களானபோது, வாக்குத்தத்தம்பண்ணப்பட்ட
பரிசுத்த ஆவியால் அவருக்குள் [17]முத்திரை
போடப்பட்டீர்கள். அவருக்குச் சொந்தமா 14
னவர்கள் அவருடைய மகிமைக்குப் புகழ்ச்சி
யாக [18]மீட்கப்படுவார்கள் என்பதற்கு ஆவியா
னவர் நம்முடைய சுதந்தரத்தின் [19]அச்சாரமா
யிருக்கிறார்.
ஆனபடியினாலே, கர்த்தராகிய இயேசு 15
வின்மேலுள்ள உங்கள் விசுவாசத்தையும்,
[20]பரிசுத்தவான்க ளெல்லார்மேலுமுள்ள உங்
கள் அன்பையுங்குறித்து நான் கேள்விப்பட்டு,
இடைவிடாமல் உங்களுக்காக ஸ்தோத்திரம் 16
பண்ணி, [21]என் ஜெபங்களில் உங்களை நினை
த்து, நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறி 17
ஸ்துவின் தேவனும் [22]மகிமையின் பிதாவுமா
னவர் தம்மை நீங்கள் அறிந்துகொள்வதற்கான
[23]ஞானத்தையும் தெளிவையும் அளிக்கிற ஆவி
யை உங்களுக்குத் தந்தருள வேண்டுமென்
றும், தாம் நம்மை அழைத்ததினாலே நமக்கு 18
உண்டாயிருக்கிற நம்பிக்கை இன்னதென்
றும், [24]பரிசுத்தவான்களிடத்தில் தமக்கு உண்
டாயிருக்கிற சுதந்தரத்தினுடைய மகிமையின்
[25]ஐசுவரியம் இன்னதென்றும்; தாம் கிறிஸ் 19
துவை மரித்தோரிலிருந்து எழுப்பி, [26]அவரி
டத்தில் நடப்பித்த தமது பலத்த சத்துவத்
தின் வல்லமைப்படியே விசுவாசிக்கிறவர்க
ளாகிய நம்மிடத்திலே காண்பிக்கும் தம்மு
டைய வல்லமையின் மகா மேன்மையான
மகத்துவம் இன்னதென்றும், [27]நீங்கள் அறி
யும்படிக்கு, அவர் உங்களுக்குப் [28]பிரகாச
முள்ள மனக்கண்களைக் கொடுக்கவேண்டு
மென்றும் வேண்டிக்கொள்ளுகிறேன். எல் 20
லாத் துரைத்தனத்துக்கும், அதிகாரத்துக்கும்,
வல்லமைக்கும், கர்த்தத்துவத்துக்கும், இம்
மையில் மாத்திரமல்ல மறுமையிலும் பேர்
பெற்றிருக்கும் எல்லா நாமத்துக்கும் மேலாய்
[29]அவர் உயர்ந்திருக்கத்தக்கதாக, அவரை [30]உன் 21
னதங்களில் தம்முடைய வலது பாரிசத்தில்
உட்காரும்படி செய்து, எல்லாவற்றையும் 22
அவருடைய [31]பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தி,
எல்லாவற்றையும் எல்லாவற்றாலும் நிரப்புகி 23

றவருடைய நிறைவாகிய [1]சரீரமான சபைக்கு
அவரை எல்லாவற்றிற்கும் மேலான [2]தலையா
கத் தந்தருளினார்.

2 அக்கிரமங்களினாலும் பாவங்களினாலும்
[3]மரித்தவர்களாயிருந்த உங்களை உயிர்ப்பித்
2 தார். அவைகளில் நீங்கள் முற்காலத்திலே
[4]இவ்வுலக வழக்கத்திற் கேற்றபடியாகவும்,
[5]கீழ்ப்படியாமையின் பிள்ளைகளிடத்தில் இப்
பொழுது கிரியைசெய்கிற [6]ஆகாயத்து அதி
காரப் பிரபுவாகிய ஆவிக்கேற்றபடியாகவும்
3 நடந்துகொண்டீர்கள். அவர்களுக்குள்ளே [7]நா
மெல்லாரும் முற்காலத்திலே நமது மாம்ச
இச்சையின்படியே நடந்து, [8]நமது மாம்ச
மும் மனசும் விரும்பினவைகளைச் செய்து,
[9]சுபாவத்தினாலே மற்றவர்களைப்போலக் கோ
4 பாக்கினையின் பிள்ளைகளாயிருந்தோம். தேவ
னோ [10]இரக்கத்தில் ஐசுவரியமுள்ளவராய்
நம்மில் அன்புகூர்ந்த தம்முடைய மிகுந்த
5 அன்பினாலே, அக்கிரமங்களில் மரித்தவர்க
ளாயிருந்த நம்மைக் [11]கிறிஸ்துவுடனேகூட
உயிர்ப்பித்தார்; [12]கிருபையினாலே இரட்சிக்
6 கப்பட்டீர்கள். கிறிஸ்து இயேசுவுக்குள் அவர்
நம்மிடத்தில் வைத்த தயவினாலே, [13]தம்மு
டைய கிருபையின் மகா மேன்மையான ஐசுவ
ரியத்தை வருங்காலங்களில் விளங்கச்செய்வ
7 தற்காக, கிறிஸ்து இயேசுவுக்குள் நம்மை
அவரோடேகூட எழுப்பி, [14]உன்னதங்களிலே
அவரோடேகூட உட்காரவும் செய்தார்.
8 கிருபையினாலே [15]விசுவாசத்தைக்கொண்டு
[16]இரட்சிக்கப்பட்டீர்கள்; இது உங்களால்
உண்டானதல்ல, [17]இது தேவனுடைய ஈவு;
9 ஒருவரும் பெருமைபாராட்டாதபடிக்கு [18]இது
10 கிரியைகளினால் உண்டானதல்ல; ஏனெ
னில், நற்கிரியைகளைச் செய்கிறதற்கு நாம்
கிறிஸ்து இயேசுவுக்குள் சிருஷ்டிக்கப்பட்டு,
[19]தேவனுடைய செய்கையாயிருக்கிறோம்;
அவைகளில் நாம் நடக்கும்படி அவர் முன்ன
தாக அவைகளை ஆயத்தம்பண்ணியிருக்கிறார்.
11 ஆனபடியினால் முன்னே மாம்சத்தின்படி
புறஜாதியாராயிருந்து, [20]மாம்சத்தில் கையி
னாலே செய்யப்படுகிற விருத்தசேதனமுடை
யவர்களால் விருத்தசேதனமில்லாதவர்களெ
12 ன்னப்பட்ட நீங்கள், அக்காலத்திலே [21]கிறி
ஸ்துவைச் *சேராதவர்களும், [22]இஸ்ரவேலு
டைய காணியாட்சிக்குப் புறம்பானவர்களும்,
[23]வாக்குத்தத்தத்தின் உடன்படிக்கைகளுக்கு
அந்நியரும் [24]நம்பிக்கையில்லாதவர்களும், [25]இவ்
வுலகத்தில் தேவனற்றவர்களுமா யிருந்தீர்க
13 ளென்று நினைத்துக்கொள்ளுங்கள். முன்னே
தூரமாயிருந்த நீங்கள் இப்பொழுது கிறிஸ்து
இயேசுவுக்குள் [26]கிறிஸ்துவின் இரத்தத்தி
14 னாலே சமீபமானீர்கள். எப்படியெனில்,
அவரே நம்முடைய †சமாதான காரணராகி,
[27]இருதிறத்தாரையும் ஒன்றாக்கி, [28]பகையாக
நின்ற பிரிவினையாகிய நடுச்சுவரைத் தகர்
15 த்து, சட்டதிட்டங்களாகிய நியாயப்பிரமா
ணத்தைத் தம்முடைய மாம்சத்தினாலே ஒழி
த்து, [29]இருதிறத்தாரையும் தமக்குள்ளாக ஒரே
புதிய மனுஷனாகச் சிருஷ்டித்து, [30]இப்படிச்
சமாதானம் பண்ணி, பகையைச் சிலுவை 16
யினால் கொன்று, [31]அதினாலே இருதிறத்தா
ரையும் ஒரே சரீரமாக தேவனுக்கு ஒப்புரவாக்
கினார். அல்லாமலும் அவர் வந்து, தூர 17
மாயிருந்த உங்களுக்கும், [32]சமீபமாயிருந்த
அவர்களுக்கும், சமாதானத்தைச் சுவிசேஷ
மாக அறிவித்தார். அந்தப்படியே நாம் இரு 18
திறத்தாரும் ஒரே ஆவியினாலே [33]பிதாவி
னிடத்தில் சேரும் சிலாக்கியத்தை அவர் மூல
மாய்ப் பெற்றிருக்கிறோம். ஆகையால், நீங் 19
கள் இனி அந்நியரும் பரதேசிகளுமாயிராமல்,
பரிசுத்தவான்களோடே ஒரே நகரத்தாரும்
[34]தேவனுடைய [35]வீட்டாருமாயிருந்து, அப் 20
போஸ்தலர் தீர்க்கதரிசிகள் என்பவர்களுடைய
[36]அஸ்திபாரத்தின்மேல் கட்டப்பட்டவர்களு
மாயிருக்கிறீர்கள்; [37]அதற்கு இயேசுகிறிஸ்து
தாமே மூலைக்கல்லாயிருக்கிறார்; அவர்மேல் 21
மாளிகை முழுவதும் இசைவாய் இணைக்கப்
பட்டு, [38]கர்த்தருக்குள் பரிசுத்த ஆலயமாக
எழும்புகிறது; அவர்மேல் நீங்களும் ஆவியினா 22
லே தேவனுடைய வாசஸ்தலமாகக் [39]கூட்டிக்
கட்டப்பட்டு வருகிறீர்கள்.

இதினிமித்தம், [40]பவுலாகிய நான் புறஜாதி 3
யாராயிருக்கிற உங்கள்பொருட்டுக் கிறிஸ்து
இயேசுவினிமித்தம் கட்டுண்டவனா யிருக்கி
றேன். உங்களுக்காக எனக்கு அளிக்கப்பட் 2
டிருக்கிற [41]தெய்வகிருபைக்குரிய நியமமும்
இன்னதென்று கேட்டிருப்பீர்களே; அதென் 3
னவெனில் புறஜாதிகள் சுவிசேஷத்தினாலே
உடன் சுதந்தரருமாய், [42]ஒரே சரீரத்திற் குள்
ளானவர்களுமாய், கிறிஸ்துவுக்குள் அவர்
பண்ணின வாக்குத்தத்தத்துக்கு உடன்பங்கா
ளிகளுமாயிருக்கிறார்களென்கிற இந்த இரகசி
யத்தை அவர் எனக்கு வெளிப்படுத்தி அறி
வித்தார். இதைக்குறித்து நான் முன்னமே 4
சுருக்கமாய் எழுதியிருக்கிறேன். அதை நீங் 5
கள் வாசிக்கையில் கிறிஸ்துவின் [43]இரகசியத்
தைக்குறித்து எனக்கு உண்டாயிருக்கிற அறி
வை அறிந்துகொள்ளலாம்; இந்த இரகசியம் 6
இப்பொழுது அவருடைய பரிசுத்த அப்போ
ஸ்தலருக்கும் தீர்க்கதரிசிகளுக்கும் ஆவியானவ
ராலே வெளிப்படுத்தப்பட்டிருக்கிறதுபோல,
[44]முற்காலங்களில் மனுபுத்திரருக்கு அறிவிக்
கப்படவில்லை. தேவனுடைய பலத்த சத்துவத் 7
தால் எனக்கு அளிக்கப்பட்ட வரமாகிய அவ
ருடைய கிருபையினாலே [45]இந்தச் சுவிசேஷத்
துக்கு ஊழியக்காரனானேன். பரிசுத்தவான்க 8
ளெல்லாரிலும் சிறியவனாகிய [46]நான் கிறிஸ்து
வினுடைய அளவற்ற ஐசுவரியத்தைப் [47]புற
ஜாதிகளிடத்தில் சுவிசேஷமாய் அறிவிக்கிற
தற்காக [48]இந்தக் கிருபை எனக்கு அளிக்கப்
பட்டிருக்கிறது. தேவன் நம்முடைய கர்த்தரா 9
கிய கிறிஸ்து இயேசுவுக்குள் கொண்டிருந்த

1 1 கொ. 12. 12. கொலோ. 1. 18, 24
2 4. 15, 16. எபி. 2. 7
3 யோ. 5. 24. கொலோ. 2. 13
4 அப். 19. 35. 1 கொ. 6. 11
5 கொலோ. 3. 6
6 6. 12
7 1 பே. 4. 3
8 கலா. 5. 16
9 சங். 51. 5. ரோ. 5. 12, 14
10 ரோ. 10. 12
11 ரோ. 5. 5, 6, 8, 10
12 ரோ. 3. 24
13 தீத். 3. 4
14 கொலோ. 2. 12
15 2 தீமோ. 1. 9
16 ரோ. 4. 16. யோ. 6. 44, 65
17 மத். 16. 17. ரோ. 10. 14-17. பிலி. 1. 29
18 ரோ. 3. 20, 27, 28. 1 கொ. 1. 29-31
19 1. 4; 4. 24. யோ. 3. 3, 5. 1 கொ. 3. 9
20 ரோ. 2. 28, 29
21 4. 18. கொலோ. 1. 21
* அல்லாதவர்கள்
22 யோ. 10. 16
23 1 தெச. 4. 13
24 1 தெச. 4. 13
25 கலா. 4. 8. 1 தெச. 4. 4
26 அப். 2. 39. கலா. 3. 28. எபி. 9. 12
† சமாதானமாகி
27 மீகா 5. 5. யோ. 16. 33. ரோ. 5. 1
28 யோ. 10. 16. கலா. 3. 28
29 கொலோ. 2. 14, 20
30 2 கொ 5. 17
31 ரோ. 6. 6. கொலோ. 1. 20-22
32 அப். 2. 39
33 யோ. 14. 6. 1 பே. 3. 18
34 எபி. 12. 22, 23
35 3. 14, 15. கலா. 6. 10
36 மத். 16. 18. 1 கொ. 3. 9, 10. வெளி. 21. 14
37 ஏசா. 28. 16. மத். 21. 42
38 1 கொ. 3. 17. 2 கொ. 6. 16
39 1 பே. 2. 4, 5
40 அப். 21. 33
41 ரோ. 12. 3. கொலோ. 1. 25
42 கலா. 3. 28, 29
43 1. 9; 6. 19. 1 கொ. 4. 1

44 2. 20. மத். 13. 17. அப். 10. 28. ரோ. 16. 25 45 1. 19. ஏசா. 43. 13. ரோ. 15. 16, 18 46 1 கொ. 15. 9 47 கொலோ. 1. 27 48 கலா. 1. 16

10 அநாதி தீர்மானத்தின்படியே, உன்னதங்களி
லுள்ள துரைத்தனங்களுக்கும் அதிகாரங்களுக்
கும் அவருடைய [1]அநந்த ஞானமானது சபை
யின் மூலமாய் இப்பொழுது தெரியவரும்பொ
11 ருட்டாக, இயேசுகிறிஸ்துவைக்கொண்டு[2]எல்
லாவற்றையும் சிருஷ்டித்த தேவனுக்குள்ளே
ஆதிகாலங்கள்முதல் மறைந்திருந்த [3]இரகசி
யத்தினுடைய ஐக்கியம் இன்னதென்று, எல்
லாருக்கும் வெளிப்படையாகக் காண்பிக்கிற
தற்கு, இந்தக் கிருபை எனக்கு அளிக்கப்பட்
12 டிருக்கிறது. அவரைப் பற்றும் விசுவாசத்
தால் அவருக்குள் நமக்குத் தைரியமும் திட
நம்பிக்கையோடே [4]தேவனிடத்தில் சேரும்
13 சிலாக்கியமும் உண்டாயிருக்கிறது. ஆகை
யால் உங்கள்நிமித்தம் நான் அநுபவிக்கிற
உபத்திரவங்களினால் நீங்கள் சோர்ந்துபோகா
திருக்க வேண்டிக்கொள்ளுகிறேன்; [5]அவை
கள் உங்களுக்கு மகிமையாயிருக்கிறதே.
14 இதினிமித்தம் நான் பரலோகத்திலும் பூ
லோகத்திலுமுள்ள [6]முழுக் குடும்பத்துக்கும்
15 நாமகாரணராகிய, நம்முடைய கர்த்தராயிருக்
கிற இயேசுகிறிஸ்துவினுடைய பிதாவை
16 நோக்கி முழங்கால்படியிட்டு, நீங்கள் அவரு
டைய ஆவியினாலே [7]உள்ளான மனுஷனில்
17 வல்லமையாய்ப் பலப்படவும், விசுவாசத்தி
னாலே [8]கிறிஸ்து உங்கள் இருதயங்களில் வா
சமாயிருக்கவும், [9]நீங்கள் அன்பிலே வேரூன்
18 றி, நிலைபெற்றவர்களாகி, சகல பரிசுத்தவான்
களோடுங்கூடக் [10]கிறிஸ்துவினுடைய அன்
பின் அகலமும், நீளமும், ஆழமும், உயரமும்
19 இன்னதென்று உணர்ந்து; அறிவுக்கெட்டாத
அந்த அன்பை அறிந்துகொள்ள வல்லவர்களா
கவும், [11]தேவனுடைய சகல பரிபூரணத்தா
லும் நிறையப்படவும், [12]அவர் தமது மகிமையி
னுடைய ஐசுவரியத்தின்படியே, உங்களுக்கு
அநுக்கிரகம் பண்ணவேண்டுமென்று வேண்
டிக்கொள்ளுகிறேன்.
20 நாம் வேண்டிக்கொள்ளுகிறதற்கும் நினைக்
கிறதற்கும் மிகவும் அதிகமாய் நமக்குள்ளே
கிரியைசெய்கிற வல்லமையின்படியே, [13]நமக்
21 குச் செய்ய வல்லவராகிய அவருக்கு, சபை
யிலே கிறிஸ்து இயேசுவின் மூலமாய்த் தலை
முறை தலைமுறைக்கும் சதாகாலங்களிலும்
[14]மகிமை உண்டாவதாக. ஆமென்.

4 ஆதலால், கர்த்தர்நிமித்தம் கட்டுண்டவனா
கிய நான் உங்களுக்குச் சொல்லுகிற புத்தி
யென்னவெனில், [15]நீங்கள் அழைக்கப்பட்ட
அழைப்புக்குப் பாத்திரவான்களாய் நடந்து,
2 மிகுந்த மனத்தாழ்மையும் [16]சாந்தமும் நீடிய
பொறுமையும் உடையவர்களாய், அன்பினால்
3 ஒருவரையொருவர் தாங்கி, சமாதானக்கட்டி
னால் ஆவியின் ஒருமையைக் [17]காத்துக்கொள்
4 வதற்கு ஜாக்கிரதையாயிருங்கள். உங்களுக்கு
உண்டான அழைப்பினாலே நீங்கள் ஒரே நம
பிக்கைக்கு அழைக்கப்பட்டதுபோல, [18]ஒரே
5 சரீரமும், ஒரே ஆவியும் உண்டு; ஒரே கர்த்த
ரும், [19]ஒரே விசுவாசமும், ஒரே ஞானஸ்நான
மும், எல்லாருக்கும் ஒரே தேவனும் பிதாவும் 6
உண்டு, [20]அவர் எல்லார்மேலும், எல்லாரோ
டும், உங்கள் எல்லாருக்குள்ளும் இருக்கிற
வர். கிறிஸ்துவினுடைய ஈவின் [21]அளவுக்குத் 7
தக்கதாக நம்மில் அவனவனுக்குக் கிருபை
அளிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால், [22]அவர் 8
உன்னதத்திற்கு ஏறி, சிறைப்பட்டவர்களைச்
சிறையாக்கி, மனுஷர்களுக்கு வரங்களை அளி
த்தார் என்று சொல்லியிருக்கிறார். ஏறினார் 9
என்பதினாலே அவர் அதற்குமுன்னே [23]பூமி
யின் தாழ்விடங்களில் இறங்கினார் என்று
விளங்குகிறதல்லவா? இறங்கினவரே எல்லா 10
வற்றையும் நிரப்பத்தக்கதாக, [24]எல்லா வானங்
களுக்கும் மேலாக உன்னதத்திற்கு ஏறினவ
ருமாயிருக்கிறார். மேலும் நாம் அனைவரும் 11
தேவனுடைய குமாரனைப்பற்றும் விசுவாசத்
திலும் அறிவிலும் ஒருமைப்பட்டவர்களாகி,
[25]கிறிஸ்துவினுடைய நிறைவான வளர்ச்சி
யின் [26]அளவுக்குத்தக்க *பூரண புருஷராகும்
வரைக்கும், பரிசுத்தவான்கள் சீர்பொருந்தும் 12
பொருட்டு, [27]சுவிசேஷ ஊழியத்தின் வேலைக்
காகவும், கிறிஸ்துவின் சரீரமாகிய சபையா
னது பக்திவிருத்தி அடைவதற்காகவும், அவர், 13
[28]சிலரை அப்போஸ்தலராகவும் சிலரைத் தீர்க்
கதரிசிகளாகவும், சிலரைச் சுவிசேஷகராகவும்,
சிலரை மேய்ப்பராகவும் போதகராகவும் ஏற்
படுத்தினார். நாம் இனிக் குழந்தைகளாயிரா 14
மல், [29]மனுஷருடைய சூதும் வஞ்சிக்கிறதற்
கேதுவான தந்திரமுமுள்ள போதகமாகிய
பலவித காற்றினாலே அலைகளைப்போல அடி
பட்டு அலைகிறவர்களாயிராமல், அன்புடன் 15
சத்தியத்தைக் கைக்கொண்டு, [30]தலையாகிய
கிறிஸ்துவுக்குள் எல்லாவற்றிலேயும், நாம் வள
ருகிறவர்களாயிருக்கும்படியாக அப்படிச் செ
ய்தார். அவராலே சரீரம் முழுதும், [31]அதற்கு 16
உதவியாயிருக்கிற சகல கணுக்களினாலும்
இசைவாய்க்கூட்டி இணைக்கப்பட்டு, ஒவ்
வொரு அவயவமும் தன்தன் அளவுக்குத்தக்க
தாய்க் கிரியைசெய்கிறபடியே, அது அன்பி
னாலே தனக்கு பக்திவிருத்தி உண்டாக்குகிற
தற் கேதுவாகச் சரீரவளர்ச்சியை உண்டாக்கு
கிறது.
ஆதலால், கர்த்தருக்குள் நான் உங்களுக் 17
குச் சாட்சியாகச் சொல்லி எச்சரிக்கிறது என்
னவெனில், [32]மற்றப் புறஜாதிகள் தங்கள் வீணா
ன சிந்தையிலே நடக்கிறதுபோல நீங்கள்
இனி நடவாமலிருங்கள். அவர்கள் புத்தியில் 18
அந்தகாரப்பட்டு, [33]தங்கள் இருதய கடினத்தி
னால் தங்களில் இருக்கும் அறியாமையினாலே
தேவனுடைய ஜீவனுக்கு அந்நியராயிருந்து;
உணர்வில்லாதவர்களாய், [34]சகலவித அசுத்தங் 19
களையும் ஆவலோடே நடப்பிக்கும்படி, தங்க
ளைக் காமவிகாரத்திற்கு ஒப்புக்கொடுத்திருக்கி
றார்கள். நீங்களோ இவ்விதமாய்க் கிறிஸ்து 20
வைக் கற்றுக்கொள்ளவில்லை. இயேசுவினிடத் 21
திலுள்ள சத்தியத்தின்படியே, [35]நீங்கள் அவரி
டத்தில் கேட்டறிந்து, அவரால் போதிக்கப்

1 ரோ. 11. 33. 1 கொ. 2. 7
2 சங். 33. 6. யோ. 1. 3. கொலோ. 1. 16. எபி. 1. 2
3 1 தீமோ. 3. 16
4 எபி. 4. 16
5 அப். 14. 22. 2 கொ. 1. 6
6 1. 10. பிலி. 2. 9–11
7 6. 10. கொலோ. 1. 11
8 2. 22. யோ. 14. 23
9 கொலோ. 2. 7
10 ரோ. 10. 8, 11, 12
11 யோ. 1. 16. கொலோ. 2. 9, 10
12 பிலி. 4. 19
13 ரோ. 16. 25 எபி. 13. 20, 21
14 ரோ. 11. 36: 16. 27
15 பிலி. 1. 27. கொலோ. 1. 10 1 தெச. 2. 12
16 மத். 11. 29. அப். 20. 19. கலா. 5. 22, 23
17 கொலோ. 3. 14
18 1. 18. ரோ. 12. 5. 1 கொ. 12. 4, 11–13
19 1 கொ. 1. 13. கலா. 3. 27, 28. யூதா. 3. கச
20 மல். 2. 10. 1 கொ. 8. 6
21 ரோ. 12. 3, 6. 1 கொ. 12. 11
22 சங். 68. 18. கொலோ. 2. 15
23 யோ. 3. 13: 6. 33, 62
24 அப். 1. 9, 11: 2. 33
25 கொலோ. 2. 2
26 1 கொ. 14. 20
* ஒரு புருஷனுக்கு
27 1 கொ. 12. 7: 14. 26. கொலோ. 1. 24
28 1 கொ. 12. 28
29 மத். 11. 7. 1 கொ. 14. 20. எபி. 13. 9. யாக். 1. 6
30 2 கொ. 4. 2. கொலோ. 1. 18, 19
31 யோ. 15. 5. கொலோ. 2. 19
32 ரோ. 1. 21. கொலோ. 3. 7. 1 பே. 4. 3
33 அப். 26. 18. ரோ. 1. 21. கலா. 4. 8
34 ரோ. 1. 24, 26
35 1. 13

22 பட்டீர்களே. அந்தப்படி, முந்தின நடக்கைக்
குரியமோசம்போக்கும் இச்சைகளாலே கெட்
டுப்போகிற [1]பழைய மனுஷனை நீங்கள் களைந்
23 துபோட்டு, உங்கள் உள்ளத்திலே [2]புதிதான
24 ஆவியுள்ளவர்களாகி, மெய்யான நீதியிலும்
பரிசுத்தத்திலும் தேவனுடைய சாயலாக சிரு
ஷ்டிக்கப்பட்ட [3]புதிய மனுஷனைத் தரித்துக்
கொள்ளுங்கள்.
25 அன்றியும், நாம் ஒருவருக்கொருவர் அவய
வங்களாயிருக்கிறபடியால், [4]பொய்யைக் களை
ந்து, [5]அவனவன் பிறனுடனே மெய்யைப்
26 பேசக்கடவன். நீங்கள் கோபங்கொண்டாலும்
பாவஞ் செய்யாதிருங்கள்; சூரியன் அஸ்தமிக்
கிறதற்கு முன்னுக உங்கள் எரிச்சல் தணியக்
27 கடவது; பிசாசுக்கு [6]இடங்கொடாமலும் இரு
28 ங்கள். திருடுகிறவன் இனித் திருடாமல்,
[7]குறைச்சலுள்ளவனுக்குக் கொடுக்கத்தக்கதா
கத் தனக்கு உண்டாயிருக்கும்படி, தன் கைக
ளினுல் நலமான வேலைசெய்து, பிரயாசப்
29 படக்கடவன். கெட்டவார்த்தை [8]ஒன்றும் உங்
கள் வாயிலிருந்து புறப்படவேண்டாம்; பக்தி
விருத்திக்கு ஏதுவான நல்ல வார்த்தை உண்
டானுல் அதையே [9]கேட்கிறவர்களுக்குப் பிர
30 யோஜனமுண்டாகும்படி பேசுங்கள். அன்றி
யும், நீங்கள் மீட்கப்படும் நாளுக்கென்று முத்
திரையாகப் பெற்ற தேவனுடைய பரிசுத்த
31 ஆவியைத் [10]துக்கப்படுத்தாதிருங்கள். சகலவித
மான [11]கசப்பும், கோபமும், மூர்க்கமும், கூக்
குரலும், [12]தூஷணமும், மற்ற எந்தத் துர்க்கு
32 ணமும் உங்களைவிட்டு நீங்கக்கடவது. ஒருவரு
க்கொருவர் *தயவாயும் [13]மனஉருக்கமாயும் இரு
ந்து, கிறிஸ்துவுக்குள் தேவன் உங்களுக்கு மன்
னித்ததுபோல, [14]நீங்களும் ஒருவருக்கொருவர்
மன்னியுங்கள்.

5 ஆதலால், [15]நீங்கள் பிரியமான பிள்ளை
களைப்போல தேவனைப் பின்பற்றுகிறவர்க
2 ளாகி, கிறிஸ்து நமக்காகத் தம்மை தேவனுக்
குச் [16]சுகந்த வாசனையான காணிக்கையாக
வும் பலியாகவும் ஒப்புக்கொடுத்து நம்மில்
அன்புகூர்ந்ததுபோல, [17]நீங்களும் அன்பிலே
3 நடந்துகொள்ளுங்கள். மேலும், பரிசுத்தவான்
களுக்கு ஏற்றபடி, [18]வேசித்தனமும், மற்றெ
ந்த அசுத்தமும், பொருளாசையும் ஆகிய இவை
களின் பேர்முதலாய் உங்களுக்குள்ளே சொல்
4 லப்படவுங்கூடாது. அப்படியே வம்பும், புத்
தியீனமான பேச்சும், பரியாசமும் [19]தகாதவை
5 கள்; ஸ்தோத்திரஞ்செய்தலே தகும். விபசா
ரக்காரனுவது, [20]அசுத்தனுவது, விக்கிரகாரா
தனைக்காரனுகிய [21]பொருளாசைக்காரனுவது
தேவனுடைய ராஜ்யமாகிய கிறிஸ்துவின் ராஜ்
யத்திலே சுதந்தரமடைவதில்லையென்று அறிந்
6 திருக்கிறீர்களே. இப்படிப்பட்டவைகளினி
மித்தமாகக் கீழ்ப்படியாமையின் பிள்ளைகள்
மேல் தேவகோபாக்கினை வருவதால், [22]ஒருவ
னும் உங்களை வீண்வார்த்தைகளினுலே மோ
சம்போக்காதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள்;
அவர்களுக்குப் பங்காளிக ளாகாதிருங்கள். 7
முற்காலத்தில் நீங்கள் அந்தகாரமாயிருந்தீர் 8
கள், [23]இப்பொழுதோ கர்த்தருக்குள் வெளிச்
சமாயிருக்கிறீர்கள்; [24]வெளிச்சத்தின் பிள்ளை
களாய் நடந்துகொள்ளுங்கள். †ஆவியின் 9
கனி, [25]சகல நற்குணத்திலும் நீதியிலும் உண்
மையிலும் விளங்கும். கர்த்தருக்குப் பிரிய 10
மானது இன்னதென்று [26]நீங்கள் சோதித்
துப் பாருங்கள். கனியற்ற அந்தகாரக் கிரி 11
யைகளுக்கு உடன்படாமல், [27]அவைகளைக்
கடிந்துகொள்ளுங்கள். அவர்களால் ஒளிப்பி 12
டத்தில் செய்யப்படும் கிரியைகளைச் [28]சொல்
லுகிறதும் அவலட்சணமாயிருக்கிறதே. அவை 13
களெல்லாம் கடிந்துகொள்ளப்பட்டு வெளிச்
சத்தினுல் வெளியரங்கமாகும். [29]வெளியரங்
கமாக்குகிறதெல்லாம் வெளிச்சமாயிருக்கிறது.
ஆதலால், [30]தூங்குகிற நீ விழித்து, மரித்தோ 14
ரை விட்டு எழுந்திரு, அப்பொழுது கிறிஸ்து
உன்னைப் பிரகாசிப்பிப்பாரென்று சொல்லி
யிருக்கிறுர்.
ஆனபடியினுலே, நீங்கள் ஞானமற்றவர் 15
களைப்போல நடவாமல், [31]ஞானமுள்ளவர்
களைப்போலக் கவனமாய் நடந்துகொள்ளப்
பார்த்து, நாட்கள் பொல்லாதவைகளானதால் 16
[32]காலத்தைப் பிரயோஜனப்படுத்திக் கொள்
ளுங்கள். ஆகையால், நீங்கள் மதியற்றவர் 17
களாயிராமல், [33]கர்த்தருடைய சித்தம் இன்ன
தென்று உணர்ந்துகொள்ளுங்கள். துன்மார்க் 18
கத்திற்கு ஏதுவான மதுபான வெறிகொள்
ளாமல், [34]ஆவியினுல் நிறைந்து; சங்கீதங்களி 19
னுலும் கீர்த்தனைகளினுலும் ஞானப்பாட்டு
களினுலும் [35]ஒருவருக்கொருவர் புத்தி சொல்
லிக்கொண்டு, உங்கள் இருதயத்தில் கர்த்த
ரைப் பாடிக் கீர்த்தனம்பண்ணி, நம்முடைய 20
கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தினு
லே எப்பொழுதும் எல்லாவற்றிற்காகவும்
[36]பிதாவாகிய தேவனை ஸ்தோத்திரித்து, ‡தெய் 21
வபயத்தோடே [37]ஒருவருக்கொருவர் கீழ்ப்
படிந்திருங்கள்.
மனைவிகளே, கர்த்தருக்குக் கீழ்ப்படிகிறது 22
போல, [38]உங்கள் சொந்தப் புருஷருக்குங் கீழ்ப்
படியுங்கள். கிறிஸ்து சபைக்குத் தலையாயி 23
ருக்கிறதுபோல, [39]புருஷனும் மனைவிக்குத்
தலையாயிருக்கிறுன்; அவரே சரீரத்திற்கும்
இரட்சகராயிருக்கிறுர். ஆகையால், சபையா 24
னது கிறிஸ்துவுக்குக் கீழ்ப்படிகிறதுபோல
மனைவிகளும் தங்கள் சொந்தப் புருஷர்களுக்கு
[40]எந்தக் காரியத்திலேயும் கீழ்ப்படிந்திருக்க
வேண்டும். புருஷர்களே, [41]உங்கள் மனைவிக 25
ளில் அன்புகூருங்கள்; அப்படியே கிறிஸ்து
வும் சபையில் அன்புகூர்ந்து, தாம் அதைத் திரு 26
வசனத்தைக்கொண்டு [42]தண்ணீர் முழுக்கினுல்
சுத்திகரித்து, பரிசுத்தமாக்குகிறதற்கும், கறை 27
திரை முதலானவைகள் ஒன்றும் இல்லாமல்
பரிசுத்தமும் பிழையற்றதுமான மகிமையுள்ள
[43]சபையாக அதைத் தமக்குமுன் நிறுத்திக்கொ

1 ரோ. 6. 6. கொலோ. 3. 8, 9
2 ரோ. 12. 2. கொலோ. 3. 10
3 2. 10. கலா. 6. 15
4 ரோ. 12. 5
5 சக. 8. 16
6 2 கொ. 2. 11. யாக். 4. 7. 1 பே. 5. 9
7 லூ. 3. 11. அப். 20. 35. 1 தெச. 4. 11
8 மத். 12. 36. கொலோ. 4. 6
9 கொலோ. 3. 16
10 1. 13, 14. ஏசா. 63. 10. லூ. 21. 28. 1 தெச. 5. 19
11 கொலோ. 3. 8, 19
12 தீத். 3. 2, 3
* அன்பாயும்
13 2 கொ. 2. 10
14 மத். 6. 14. மாற். 11. 25, 26
15 மத். 5. 45, 48
16 வெளி. 1. 9. 2 கொ. 2. 15
17 யோ. 13. 34
18 1 கொ. 6. 18. 1 தெச. 4. 3
19 மத். 12. 35. ரோ. 1. 28
20 எபி. 13. 4. வெளி. 22. 15
21 கொலோ. 3. 5
22 எரே. 29. 8, 9. மத். 24. 4
23 2. 11, 12. மத். 4. 15, 16. 1 தெச. 5. 5
24 யோ. 12. 36
† வெளிச்சத்தின்
25 கலா. 5. 22. ஏ
26 ரோ. 12. 2
27 1 கொ. 5. 9, 11. 1 தீமோ. 5. 20
28 ரோ. 1. 24, 26
29 யோ. 3. 20, 21. எபி. 4. 13
30 ஏசா. 60. 1. ரோ. 13. 11, 12
31 கொலோ. 4. 5
32 சங். 37. 19. யோ. 12. 35. கலா. 6. 10
33 யோ. 7. 17
34 லூ. 21. 34
35 அப். 16. 25. 1 கொ. 14. 26. கொலோ. 3. 16. யாக். 5. 13
36 ஏசா. 63. 7. கொலோ. 3. 17
‡ கிறிஸ்துவைப் பற்றும் பயத்தோடே
37 பிலி. 2. 3. 1 பே. 5. 5
38 கொலோ. 3. 18. 1 பே. 3. 1. ஏ
39 1 கொ. 11. 3. கொலோ. 1. 18
40 கொலோ. 3. 20, 22. தீத். 2. 9

41 கொலோ. 3. 19. 1 பே. 3. 7   42 தீத். 3. 5   43 உன்னத. 4. 7. 2 கொ. 11. 2. கொலோ. 1. 22

ள்வதற்கும் [1]தம்மைத்தாமே அதற்காக ஒப்புக்
28 கொடுத்தார். அப்படியே, புருஷர்களும் தங்கள்
மனைவிகளைத் தங்கள் சொந்தச் சரீரங்களாகப்
பாவித்து, அவர்களில் அன்புகூரவேண்டும்;
தன் மனைவியில் அன்புகூருகிறவன் தன்னில்
29 தான் அன்புகூருகிறான். தன் சொந்த மாம்
சத்தைப் பகைத்தவன் ஒருவனுமில்லையே;
*கர்த்தர் சபையைப் போஷித்துக் காப்பாற்று
கிறதுபோல ஒவ்வொருவனும் தன் மாம்சத்
30 தைப் போஷித்துக் காப்பாற்றுகிறான். நாம்
அவருடைய சரீரத்தின் [2]அவயவங்களாயும்,
அவருடைய மாம்சத்திற்கும் அவருடைய
எலும்புகளுக்கும் உரியவர்களாயும் இருக்கி
31 றோம். இதினிமித்தம் மனுஷன் தன் தகப்
பனையும் தன் தாயையும் விட்டு, [3]தன் மனைவி
யுடன் இசைந்து, இருவரும் ஒரே மாம்சமாயி
32 ருப்பார்கள். இந்த இரகசியம் பெரியது; நான்
கிறிஸ்துவைப்பற்றியும் சபையைப்பற்றியும்
33 சொல்லுகிறேன். எப்படியும், உங்களிலும்
அவனவன் தன்னிடத்தில் அன்புகூருவது
போல, [4]தன் மனைவியினிடத்திலும் அன்பு
கூரக்கடவன்; [5]மனைவியும் †புருஷனிடத்தில்
பயபக்தியாயிருக்கக்கடவள்.

6 பிள்ளைகளே, [6]உங்கள் பெற்றாருக்குக்
கர்த்தருக்குள் கீழ்ப்படியுங்கள், இது நியாயம்.
2 உனக்கு நன்மை உண்டாயிருப்பதற்கும், பூமி
யிலே உன் வாழ்நாள் நீடித்திருப்பதற்கும்,
3 உன் தகப்பனையும் உன் தாயையும் கனம்பண்
ணுவாயாக என்பதே [7]வாக்குத்தத்தமுள்ள
4 முதலாங் கற்பனையாயிருக்கிறது. பிதாக்களே,
[8]நீங்களும் உங்கள் பிள்ளைகளைக் கோபப்படுத்
தாமல், கர்த்தருக்கேற்ற சிட்சையிலும் போத
னையிலும் அவர்களை வளர்ப்பீர்களாக.
5 வேலைக்காரரே, [9]நீங்கள் கிறிஸ்துவுக்குக்
கீழ்ப்படிகிறதுபோல, சரீரத்தின்படி உங்கள்
எஜமான்களாயிருக்கிறவர்களுக்கும் பயத்தோ
டும் நடுக்கத்தோடும் கபடற்ற மனதோடும் கீழ்
6 ப்படிந்து; மனுஷருக்குப் பிரியமாயிருக்க
விரும்புகிறவர்களாகப் பார்வைக்கு ஊழியஞ்
செய்யாமல், கிறிஸ்துவின் ஊழியக்காரராக,
மனப்பூர்வமாய் தேவனுடைய சித்தத்தின்படி
7 செய்யுங்கள். அடிமையானவனானாலும், சுயா
தீனமுள்ளவனானாலும், [10]அவனவன் செய்கிற
நன்மையின்படியே கர்த்தரிடத்தில் பலனை
8 அடைவானென்று அறிந்து, மனுஷருக்கெ
ன்று ஊழியஞ்செய்யாமல், கர்த்தருக்கென்றே
9 நல்மனதோடே ஊழியஞ்செய்யுங்கள். எஜ
மான்களே, [11]அப்படியே நீங்களும், வேலைக்
காரருக்குச் செய்யவேண்டியவைகளைச் செய்
து, [12]அவர்களுக்கும் உங்களுக்கும் எஜமானா
னவர் பரலோகத்தில் இருக்கிறாரென்றும்,
[13]அவரிடத்தில் பட்சபாதம் இல்லையென்றும்
அறிந்து, கடுஞ்சொல்லை விட்டுவிடுங்கள்.
10 கடைசியாக, என் சகோதரரே, [14]கர்த்தரி
லும் அவருடைய சத்துவத்தின் வல்லமையி

1 அப். 20. 28. கலா. 1. 4; 2. 20
* நேசித்து
2 ரோ. 12. 5. 1 கொ. 12. 27
3 ஆதி. 2. 24. மத். 19. 5. 1 கொ. 6. 16
4 கொலோ. 3. 19
5 1 பே. 3. 6
† புருஷனுக்குப் பயந்திருக்கக்கடவள்
6 நீதி. 23. 22. கொலோ. 3. 20
7 யாத். 20. 12. மத். 15. 4
8 கொலோ. 3. 21
9 கொலோ. 3. 22. தீத். 2. 9. 1 பேது 2. 18. ழ
10 ரோ. 2. 6. 2 கொ. 5. 10
11 கொலோ. 4. 1 ழ
12 யோ. 13. 12. 1 கொ. 7. 22
13 ரோ. 2. 11. கொலோ. 3. 25
14 கொலோ. 1. 11
15 ரோ. 13. 12. 2 கொ. 6. 7. 1 தெச. 5. 8
16 மத். 16. 17. ரோ. 8. 38
17 2 கொ. 10. 4
18 ஏசா. 11. 5. லூக். 12. 35. 1 பே. 1. 13
19 2 கொ. 6. 7. 1 தெச. 5. 8
20 உன்னத. 7. 1. ரோ. 10. 15
21 1 யோ. 5. 4
22 ஏசா. 59. 17. 1 தெச. 5. 8
23 எபி. 4. 12. வெளி. 1. 16; 2. 16; 19. 15
24 லூக். 18. 1. ரோ. 12. 12
25 மத். 26. 41
26 ஏசா. 58. 1
27 2 தெச. 3. 1
28 அப். 20. 4
29 கொலோ. 4. 7, 8
30 1 பே. 5. 14
‡ மாறாத

லும் பலப்படுங்கள். நீங்கள் பிசாசின் தந்தி 11
ரங்களோடு எதிர்த்து நிற்கத்திராணியுள்ளவர்
களாகும்படி, [15]தேவனுடைய சர்வாயுத வர்க்
கத்தையும் தரித்துக்கொள்ளுங்கள். ஏனெ 12
னில், மாம்சத்தோடும் இரத்தத்தோடுமல்ல,
[16]துரைத்தனங்களோடும், அதிகாரங்களோடும்,
இப்பிரபஞ்சத்தின் அந்தகார லோகாதிபதிக
ளோடும், வானமண்டலங்களிலுள்ள பொல்
லாத ஆவிகளின் சேனைகளோடும் நமக்குப்
போராட்டம் உண்டு; ஆகையால், தீங்குநாளி 13
லே அவைகளை நீங்கள் எதிர்க்கவும், சகலத்
தையும் செய்துமுடித்தவர்களாய் நிற்கவும்
திராணியுள்ளவர்களாகும்படிக்கு, [17]தேவனு
டைய சர்வாயுதவர்க்கத்தையும் எடுத்துக்கொள்
ளுங்கள். சத்தியம் என்னும் [18]கச்சையை உங் 14
கள் அரையில் கட்டினவர்களாயும், நீதியென்
னும்[19]மார்க்கவசத்தைத் தரித்தவர்களாயும்;சமா 15
தானத்தின்சுவிசேஷத்திற்குரிய ஆயத்தம்என்
னும் [20]பாதரட்சையைக் கால்களிலேதொடுத்த
வர்களாயும்; பொல்லாங்கன் எய்யும் அக்கினி 16
யாஸ்திரங்களையெல்லாம் அவித்துப்போடத்
தக்கதாய், எல்லாவற்றிற்கும்மேலாக விசுவாச
மென்னும்[21]கேடகத்தைப் பிடித்துக்கொண்ட
வர்களாயும் நில்லுங்கள். இரட்சணியமென் 17
னும் [22]தலைச்சீராவையும், தேவ வசனமாகிய
[23]ஆவியின் பட்டயத்தையும் எடுத்துக்கொள்
ளுங்கள். எந்தச் சமயத்திலும் [24]சகலவிதமான 18
வேண்டுதலோடும் விண்ணப்பத்தோடும் ஆவி
யினாலே ஜெபம்பண்ணி, அதன்பொருட்டு
மிகுந்த மன உறுதியோடும் சகல பரிசுத்த
வான்களுக்காகவும் பண்ணும் வேண்டுதலோ
டும் [25]விழித்துக்கொண்டிருங்கள். சுவிசேஷத் 19
திற்காகச் சங்கிலியால் கட்டப்பட்டிருக்கிற
ஸ்தானாபதியாகிய[26]நான் அதைப்பற்றிப் பேச
வேண்டியபடி தைரியமாய்ப் பேசத்தக்கதாக,
நான் தைரியமாய் என் வாயைத் திறந்து சுவி 20
சேஷத்தின் இரகசியத்தை அறிவிக்கிறதற்கு
[27]வாக்கு எனக்குக் கொடுக்கப்படும்படி எனக்
காகவும் விண்ணப்பம் பண்ணுங்கள்.

அன்றியும், எனக்கடுத்த காரியங்களும், என் 21
சுகசெய்திகளும், உங்களுக்குத் தெரியவரும்
படிக்கு, அவைகளையெல்லாம் நமக்குப் பிரிய
மான சகோதரனும் கர்த்தருக்குள் உண்மை
யுள்ள ஊழியக்காரனுமாயிருக்கிற [28]தீகிக்கு
உங்களுக்கு அறிவிப்பான். நீங்கள் எங்கள் 22
செய்திகளை அறியவும், அவன் உங்கள் இரு
தயங்களுக்கு ஆறுதல்செய்யவும், [29]அவனை
உங்களிடத்தில் அனுப்பினேன்.

பிதாவாகிய தேவனாலும் கர்த்தராகிய இயே 23
சுகிறிஸ்துவினாலும், சகோதரருக்குச் [30]சமாதா
னமும் விசுவாசத்தோடுகூடிய அன்பும் உண்
டாவதாக. நம்முடைய கர்த்தராகிய இயேசு 24
கிறிஸ்துவினிடத்தில் ‡அழியாத அன்புடனே
அன்புகூருகிற யாவரோடும்கிருபை உண்டா
யிருப்பதாக. ஆமென்.

# THE EPISTLE TO THE PHILIPPIANS

# பிலிப்பியருக்கு எழுதின நிருபம்

1 இயேசுகிறிஸ்துவின் ஊழியக்காரராகிய
பவுலும் தீமோத்தேயும், [1]பிலிப்பிபட்டணத்
தில் கிறிஸ்து இயேசுவுக்குள்ளான பரிசுத்த
வான்கள் அனைவருக்கும், கண்காணிகளுக்
கும், உதவிக்காரருக்கும் எழுதுகிறதாவது:
2 நம்முடைய பிதாவாகிய தேவனாலும் கர்த்தரா
கிய இயேசுகிறிஸ்துவினாலும் உங்களுக்குக்
[2]கிருபையும் சமாதானமும் உண்டாவதாக.
3 சுவிசேஷம் உங்களுக்கு அறிவிக்கப்பட்ட
[3]நாள்முதல் இதுவரைக்கும் நீங்கள் அதற்கு
4 உடன்பட்டவர்களானபடியால், நான் பண்
ணுகிற ஒவ்வொரு விண்ணப்பத்திலும் [4]உங்
கள் அனைவருக்காகவும் எப்போதும் சந்தோ
5 ஷத்தோடே விண்ணப்பம்பண்ணி, உங்க
ளில் நற்கிரியையைத் தொடங்கினவர் [5]அதை
இயேசுகிறிஸ்துவின் நாள்பரியந்தம் முடிய
6 நடத்திவருவாரென்று நம்பி, நான் உங்களை
நினைக்கிறபொழுதெல்லாம் [6]என் தேவனை
7 ஸ்தோத்திரிக்கிறேன். என் கட்டுகளிலும்,
நான் சுவிசேஷத்திற்காக உத்தரவுசொல்லி
அதைத் திடப்படுத்தி வருகிறதிலும், நீங்கள்
அனைவரும் எனக்கு அளிக்கப்பட்ட கிருபை
யில் பங்குள்ளவர்களானதால், *உங்களை [7]என்
இருதயத்தில் தரித்துக்கொண்டிருக்கிறபடியி
னாலே, உங்களெல்லாரையுங்குறித்து நான் இப்
படி நினைக்கிறது எனக்குத் தகுதியாயிருக்கி
8 றது. இயேசுகிறிஸ்துவின் உருக்கமான †அன்
பிலே [8]உங்களெல்லார்மேலும் எவ்வளவோ
வாஞ்சையாயிருக்கிறேன் என்பதற்கு தேவ
9 னே எனக்குச் சாட்சி. மேலும், உத்தமமான
வைகளை நீங்கள் ஒப்புக்கொள்ளத்தக்கதாக
[9]உங்கள் அன்பானது அறிவிலும் எல்லா உணர்
விலும் இன்னும் அதிகமதிகமாய்ப் பெருகவும்,
10 தேவனுக்கு மகிமையும் துதியும் உண்டாகும்
படி [10]இயேசுகிறிஸ்துவினால் வருகிற நீதியின்
11 கனிகளால் நிறைந்தவர்களாகி, நீங்கள் கிறி
ஸ்துவின் நாளுக்கென்று [11]துப்புரவானவர்க
ளும் இடறலற்றவர்களுமாயிருக்கவும் வேண்
டுதல் செய்கிறேன்.
12 சகோதரரே, எனக்குச் சம்பவித்தவைகள்
சுவிசேஷம் பிரபலமாகும்படிக்கு ஏதுவாயிற்
றென்று நீங்கள் அறிய மனதாயிருக்கிறேன்.
13 அரமனையெங்கு முள்ளவர்களுக்கும் மற்ற யா
வருக்கும் என் கட்டுகள் கிறிஸ்துவுக்குள்ளான
கட்டுகளென்று வெளியரங்கமாகி, சகோதர 14
ரில் அநேகர் என் கட்டுகளாலே கர்த்தருக்குள்
திடன்கொண்டு பயமில்லாமல் ‡திருவசனத்
தைச் சொல்லும்படி அதிகமாய்த் துணிந்திருக்
கிறார்கள். சிலர் பொறாமையினாலும் [12]விரோ 15
தத்தினாலும், சிலர் நல்மனதினாலும் கிறிஸ்து
வைப் பிரசங்கிக்கிறார்கள். சிலர் என் கட்டுக 16
ளோடே உபத்திரவத்தையுங்கூட்ட நினைத்து,
சுத்தமனதோடே கிறிஸ்துவை அறிவியாமல்,
விரோதத்தினாலே அறிவிக்கிறார்கள். சுவிசே 17
ஷத்திற்காக நான் உத்தரவு சொல்ல [13]ஏற்படுத்
தப்பட்டவனென்று அறிந்து, சிலர் அன்பினா
லே அறிவிக்கிறார்கள். இதனாலென்ன? வஞ் 18
சகத்தினாலாவது, உண்மையினாலாவது, எப்
படியாவது, கிறிஸ்து அறிவிக்கப்படுகிறார்;
அதனால் சந்தோஷப்படுகிறேன், இன்னமும்
சந்தோஷப்படுவேன். அது உங்கள் வேண் 19
டுதலினாலும் இயேசுகிறிஸ்துவினுடைய ஆவி
யின் உதவியினாலும் [14]எனக்கு இரட்சிப்பாக
முடியுமென்று அறிவேன். நான் ஒன்றிலும் 20
வெட்கப்பட்டுப்போகாமல், [15]எப்பொழுதும்
போல இப்பொழுதும், [16]மிகுந்த தைரியத்தோ
டே ஜீவனாலாகிலும், சாவினாலாகிலும், கிறி
ஸ்து என் சரீரத்தினாலே மகிமைப்படுவாரெ
ன்று எனக்கு உண்டாயிருக்கிற வாஞ்சைக்கும்
நம்பிக்கைக்கும் தக்கதாய், அப்படி முடியும்.
§கிறிஸ்து எனக்கு ஜீவன், [17]சாவு எனக்கு ஆதா 21
யம். ஆகிலும் சரீரத்தில் பிழைத்திருக்கிறதினா 22
லே என் கிரியைக்குப் பலனுண்டாயிருப்ப
தால், நான் தெரிந்துகொள்ளவேண்டியது இன்
னதென்று அறியேன். ஏனெனில் இவ்விரண் 23
டினாலும் [18]நான் நெருக்கப்படுகிறேன்; தேகத்
தைவிட்டுப் பிரிந்து, [19]கிறிஸ்துவுடனே கூட
இருக்க எனக்கு ஆசையுண்டு, அது அதிக நன்
மையாயிருக்கும்; அப்படியிருந்தும், நான் சரீ 24
ரத்தில் தரித்திருப்பது உங்களுக்கு அதிக அவ
சியம். இந்த நிச்சயத்தைக் கொண்டிருந்து, 25
[20]நான் மறுபடியும் உங்களிடத்தில் வருகிறதி
னால் என்னைக்குறித்து உங்களுடைய மகிழ்ச்சி
கிறிஸ்து இயேசுவுக்குள் பெருகும்படிக்கு,
உங்கள் விசுவாசத்தின் வர்த்தனைக்காகவும் சந் 26
தோஷத்துக்காகவும் நான் பிழைத்து, [21]உங்கள்

1 அப். 16. 12. மு. 1 கொ. 1. 2
2 ரோ. 1. 7
3 2 கொ. 8. 1
4 எபே. 1. 16. மு. 1 தெச. 1. 2
5 சங். 138. 8. யோ. 6. 20. எபி. 10. 35. 2. பே. 3. 10
6 ரோ. 1. 8, 9
* நீங்கள் என்னை உங்கள்
7 2 கொ. 3. 2: 7. 3. எபே. 3. 1
† இரக்கத்தினாலே
8 2. 26: 4. 1
9 எபே. 5. 10. 1 தெச. 3. 12
10 யோ. 15. 4, 5, 8.
11 அப். 24. 16. எபே. 5. 27
‡ தேவவசனத்தை
12 2. 3
13 7. வச
14 ரோ. 8. 9. 2 கொ. 1. 11
15 ரோ. 5. 5: 8. 19: 14. 7, 8
16 எபே. 6. 19, 20
§ நான் பிழைக்கிறது கிறிஸ்து, நான் சாகிறது ஆதாயம்
17 வெளி. 14. 13
18 2 கொ. 5. 8
19 சங். 16. 11. 2 தீமோ. 4. 6
20 2. 24
21 2 கொ. 1. 14: 5. 12

அனைவரோடுங்கூட இருப்பேனென்று அறிந்
27 திருக்கிறேன். நான் வந்து உங்களைக் கண்டா
லும், நான் வராமலிருந்தாலும், [1]நீங்கள் ஒரே
ஆவியிலே உறுதியாய் நின்று, ஒரே ஆத்துமா
வினாலே [2]சுவிசேஷத்தின் விசுவாசத்திற்கா
கக் கூடப் போராடி, எதிர்க்கிறவர்களால் ஒன்
றிலும் மருளாதிருக்கிறீர்களென்று உங்களைக்
குறித்து நான் கேள்விப்படும்படி, [3]எவ்விதத்
திலும் நீங்கள் கிறிஸ்துவின் சுவிசேஷத்திற்
குப் பாத்திரராகமாத்திரம் நடந்துகொள்ளுங்
28 கள். நீங்கள் மருளாதிருக்கிறது [4]அவர்கள்
கெட்டுப்போகிறதற்கும், [5]நீங்கள் இரட்சிக்
கப்படுகிறதற்கும் அத்தாட்சியாயிருக்கிறது;
29 இதுவும் தேவனுடைய செயலே. ஏனெ
னில் கிறிஸ்துவினிடத்தில் விசுவாசிக்கிறதற்
குமாத்திரமல்ல, [6]அவர் நிமித்தமாகப் பாடுபடு
கிறதற்கும் உங்களுக்கு அருளப்பட்டிருக்கி
30 றது. நீங்கள் என்னிடத்திலே கண்டதும்
எனக்கு உண்டென்று இப்பொழுது கேள்
விப்படுகிறதுமான போராட்டமே [7]உங்களுக்
கும் உண்டு.

**2** ஆதலால் கிறிஸ்துவுக்குள் யாதொரு ஆறு
தலும், அன்பினாலே யாதொரு தேறுதலும்,
ஆவியின் யாதொரு ஐக்கியமும், [8]யாதொரு
உருக்கமான பட்சமும் இரக்கங்களும் உண்டா
2 னால், நீங்கள் ஏகசிந்தையும் ஏக அன்புமுள்
ளவர்களாயிருந்து, [9]இசைந்த ஆத்துமாக்களாய்
ஒன்றையே சிந்தித்து, [10]என் சந்தோஷத்தை
3 நிறைவாக்குங்கள். ஒன்றையும் வாதினாலா
வது [11]வீண்பெருமையினாலாவது செய்யாமல்,
[12]மனத்தாழ்மையினாலே ஒருவனையொருவர்
தங்களிலும் மேன்மையானவர்களாக எண்ண
4 க்கடவீர்கள். அவனவன் தனக்கானவைகளை
யல்ல, பிறருக்கானவைகளையும் நோக்குவா
5 னாக. கிறிஸ்து இயேசுவிலிருந்த சிந்தையே
6 [13]உங்களிலும் இருக்கக்கடவது; அவர் தேவ
னுடைய ரூபமாயிருந்தும், [14]தேவனுக்குச் சம
மாயிருப்பதைக் [15]கொள்ளையாடின பொரு
7 ளாக எண்ணாமல், தம்மைத்தாமே [16]வெறு
மையாக்கி, [17]அடிமையின் ரூபமெடுத்து,
8 [18]மனுஷர் சாயலானார். அவர் மனுஷரூப
மாய்க் காணப்பட்டு, [19]மரணபரியந்தம், அதா
வது சிலுவையின் மரணபரியந்தமும் கீழ்ப்படி
9 ந்தவராகி, தம்மைத்தாமே தாழ்த்தினார். ஆத
லால் தேவன் எல்லாவற்றிற்கும் மேலாக [20]அவ
10 ரை உயர்த்தி, இயேசுவின் *நாமத்தில்
வானோர் பூதலத்தோர் பூமியின் கீழானோரு
டைய [21]முழங்கால் யாவும் முடங்கும்படிக்கும்,
11 பிதாவாகிய தேவனுக்கு மகிமையாக [22]இயே
சுகிறிஸ்து கர்த்தரென்று நாவுகள் யாவும்
அறிக்கை பண்ணும்படிக்கும், [23]எல்லா நாமத்
திற்கும் மேலான நாமத்தை அவருக்குத் தந்த
ருளினார்.
12 ஆதலால், எனக்குப் பிரியமானவர்களே,
நீங்கள் எப்பொழுதும் கீழ்ப்படிகிறபடியே,
நான் உங்களுக்குச் சமீபமா யிருக்கும்பொ
ழுது மாத்திரமல்ல, நான் தூரமாயிருக்கிற

1 4. 1
2 1 கொ. 1. 10. யூதா. 3. ஊ
3 3. 20. எபே. 4. 1
4 ஏசா. 51. 7, 12. மத். 10. 28. 2 தெச. 1. 5
5 ரோ. 8. 17. 2 தீமோ. 2. 11
6 அப். 5. 41. ரோ. 5. 3
7 அப். 16. 19. ழ. 1 தெச. 2. 2
8 2 கொ. 13. 14. கொலோ. 3. 12
9 2 கொ. 13. 11. 1 பே. 3. 8
10 யோ. 3. 29
11 கலா. 5. 26. யாக். 3. 14
12 1 பே. 5. 5
13 மத். 11. 29. யோ. 13. 14, 15. 1 பே. 2. 21. 1 யோ. 2. 6
14 யோ. 1. 1, 2; 17. 5. கொலோ. 1. 15
15 யோ. 5. 18; 10. 33
16 சங். 22. 6. மாற். 9. 12
17 லூ. 22. 27
18 யோ. 1. 14
19 மத். 26. 39, 42. எபி. 12. 2
20 எபி. 2. 9. வெளி. 3. 21
* நாமத்துக்கு
21 ஏசா. 45. 23. வெளி. 5. 13
22 யோ. 13. 13. ரோ. 14. 9
23 எபே. 1. 20, 21. எபி. 1. 4
24 நீதி. 10. 16. யோ. 6. 27–29. எபே. 6. 5. எபி. 4. 11. 2 பே. 1. 5–10
25 2 கொ. 3. 5. எபி. 13. 21
26 1 கொ. 9. 26. 2 கொ. 1. 14
27 மத். 5. 14, 16
28 உபா. 32. 5. 1 பே. 2. 12
29 மத். 5. 45. எபே. 5. 1
30 1 கொ. 10. 10
31 ரோ. 14. 1
† பானபலியாக 2 தீமோ. 4. 6. ரோ. 15. 15
32 ரோ. 16. 21. 1 தெச. 3. 2
33 2 தீமோ. 3. 2
34 1 கொ. 4. 17
35 1. 25
36 4. 18. பிலேமோன் 2. ஊ
37 2 கொ. 8. 23

இப்பொழுதும், [24]அதிக பயத்தோடும் நடுக்கத்
தோடும் உங்கள் இரட்சிப்பு நிறைவேறப் பி
யாசப்படுங்கள். ஏனெனில் தேவனே தம் 13
முடைய தயவுள்ள சித்தத்தின்படி [25]விருப்பத்
தையும் செய்கையையும் உங்களில் உண்டாக்
குகிறவராயிருக்கிறார். நான் வீணாக ஓடினதும் 14
[26]வீணாகப் பிரயாசப்பட்டதுமில்லையென்கிற
மகிழ்ச்சி கிறிஸ்துவின் நாளில் எனக்கு உண்
டாயிருப்பதற்கு, ஜீவவசனத்தைப் பிடித்துக்
கொண்டு, [27]உலகத்திலே சுடர்களைப்போலப்
பிரகாசிக்கிற நீங்கள், கோணலும் [28]மாறுபாடு 15
மான சந்ததியின் நடுவிலே குற்றமற்றவர்க
ளும் கபடற்றவர்களும், [29]தேவனுடைய மா
சற்ற பிள்ளைகளுமா யிருக்கும்படிக்கு, எல் 16
லாவற்றையும் [30]முறுமுறுப்பில்லாமலும் [31]தர்க்
கிப்பில்லாமலும் செய்யுங்கள். மேலும், உங் 17
கள் விசுவாசமாகிய பலியின்மேலும் ஊழியத்
தின்மேலும் நான் †வார்க்கப்பட்டுப்போனா
லும், நான் மகிழ்ந்து, உங்களனைவரோடுங்
கூடச் சந்தோஷப்படுவேன். இதினிமித்தம் 18
நீங்களும் மகிழ்ந்து, என்னோடேகூடச் சந்
தோஷப்படுங்கள்.

அன்றியும், நானும் உங்கள் செய்திகளை 19
அறிந்து மனத்தேறுதல் அடையும்படிக்குச்
சீக்கிரமாய்த் [32]தீமோத்தேயுவை உங்களிடத்
தில் அனுப்பலாமென்று கர்த்தராகிய இயேசு
வுக்குள் நம்பியிருக்கிறேன். அதேனென்றால், 20
உங்கள் காரியங்களை உண்மையாய் விசா
ரிக்கிறதற்கு என்னைப்போல மனதுள்ளவன்
அவனையன்றி வேறொருவனும் என்னிடத்தி
லில்லை. மற்றவர்களெல்லாரும் கிறிஸ்து 21
இயேசுவுக்குரியவைகளைத் தேடாமல், [33]தங்க
ளுக்குரியவைகளையே தேடுகிறார்கள். தகப் 22
பனுக்குப் பிள்ளை ஊழியஞ்செய்வதுபோல,
[34]அவன் என்னுடனேகூட சுவிசேஷத்தினி
மித்தம் ஊழியஞ்செய்தானென்று அவனு
டைய உத்தமகுணத்தை அறிந்திருக்கிறீர்கள்.
ஆகையால் என் காரியங்கள் இன்னபடி 23
நடக்கும் என்று நான் அறிந்தவுடனே அவனை
அனுப்பலாமென்று நினைத்திருக்கிறேன். அன் 24
றியும் [35]நானே சீக்கிரத்தில் வருவேனென்று
கர்த்தருக்குள் நம்பிக்கையாயிருக்கிறேன். மே 25
லும், என் சகோதரனும், உடன்வேலையாளும்,
[36]உடன்சேவகனும், உங்கள் ஸ்தானாபதியும்,
என் குறைச்சலுக்கு உதவிசெய்தவனுமான
[37]எப்பாப்பிரோதீத்துவை உங்களிடத்தில் அனு
ப்பவேண்டுமென்று எண்ணினேன். அவன் 26
உங்கள் எல்லார்மேலும் வாஞ்சையுள்ளவனும்,
தான் வியாதிப்பட்டதை நீங்கள் கேள்விப்பட்
டதினாலே மிகவும் வியாகுலப்படுகிறவனுமா
யிருந்தான். அவன் வியாதிப்பட்டு மரணத் 27
திற்குச் சமீபமாயிருந்தது மெய்தான். ஆகி
லும், தேவன் அவனுக்கு இரங்கினார்; அவ
னுக்கு இரங்கினதுமல்லாமல், துக்கத்தின்
மேல் துக்கம் எனக்கு உண்டாகாதபடிக்கு,
எனக்கும் இரங்கினார். ஆகையால் நீங்கள் 28
அவனை மறுபடியுங் கண்டு சந்தோஷப்படவும்,

என் துக்கங் குறையவும், அவனை அநிசீக்கிர
29 மாய் அனுப்பினேன். ஆனபடியினாலே நீங்
கள் கர்த்தருக்குள் மிகுந்த சந்தோஷத்தோடே
அவனை ஏற்றுக்கொண்டு, [1]இப்படிப்பட்ட
30 வர்களைக் கனமாய் எண்ணுங்கள். ஏனெ
னில் நீங்கள் எனக்குச் செய்யவேண்டிய ஊ
ழியத்திலே உங்கள் குறைவை நிறைவாக்கும்
படிக்கு, [2]அவன் தன் பிராணனையும் எண்
ணாமல், கிறிஸ்துவின் ஊழியத்தினிமித்தம்
மரணத்திற்குச் சமீபமாயிருந்தான்.
3 மேலும், என் சகோதரரே, [3]கர்த்தருக்
குள் சந்தோஷப்படுங்கள். [4]எழுதினவைகளை
யே எழுதுவது எனக்கு வருத்தமல்ல, அது உங்
2 களுக்கு நலமாயிருக்கும். நாய்களுக்கு [5]எச்
சரிக்கையாயிருங்கள், [6]பொல்லாத வேலையாட்
களுக்கு எச்சரிக்கையாயிருங்கள், [7]சுன்னத்
3 துக்காரருக்கு எச்சரிக்கையாயிருங்கள். ஏனெ
னில், மாம்சத்தின்மேல் நம்பிக்கையாயிராமல்,
ஆவியினாலே தேவனுக்கு ஆராதனைசெய்து,
[8]கிறிஸ்து இயேசுவுக்குள் மேன்மை பாராட்
டுகிற [9]நாமே விருத்தசேதனமுள்ளவர்கள்.
4 மாம்சத்தின்மேல் நம்பிக்கை வைக்கவேண்டு
மானால் நானும் வைக்கலாம்; [10]வேறொருவன்
மாம்சத்தின்மேல் நம்பிக்கையாயிருக்க நினைத்
தால் நான் அதிகமாய் அப்படிச் செய்யலாம்.
5 நான் எட்டாம்நாளில் விருத்தசேதனம் அடைந்
தவன், இஸ்ரவேல் வம்சத்தான், பென்யமீன்
கோத்திரத்தான், எபிரெயரில் பிறந்த எபி
ரெயன், [11]நியாயப்பிரமாணத்தின்படி பரிசே
6 யன், பக்திவைராக்கியத்தின்படி [12]சபையைத்
துன்பப்படுத்தினவன், நியாயப்பிரமாணத்திற்
குரிய நீதியின்படி [13]குற்றஞ்சாட்டப்படாத
7 வன். ஆகிலும், எனக்கு லாபமாயிருந்தவைக
ளெவைகளோ [14]அவைகளைக் கிறிஸ்துவுக்
8 காக நஷ்டமென்று எண்ணினேன். அது
மாத்திரமல்ல, என் கர்த்தராகிய கிறிஸ்து
இயேசுவை அறிகிற அறிவின் மேன்மைக்
காக [15]எல்லாவற்றையும் நஷ்டமென்று எண்
9 ணிக்கொண்டிருக்கிறேன். நான் கிறிஸ்துவை
ஆதாயப்படுத்திக்கொள்ளும்படிக்கும், நியாயப்
பிரமாணத்தினால் வருகிற சுயநீதியை உடைய
வனாயிராமல், [16]கிறிஸ்துவைப் பற்றும் விசுவா
சத்தினால் வருகிறதும் விசுவாசமூலமாய் தேவ
னால் உண்டாயிருக்கிறதுமான நீதியை உடை
யவனாயிருந்து, [17]கிறிஸ்துவுக்குள் இருக்கிறவ
10 னென்று காணப்படும்படிக்கும், இப்படி
நான் அவரையும் அவருடைய உயிர்த்தெழுத
லின் வல்லமையையும், [18]அவருடைய பாடுக
ளின் ஐக்கியத்தையும் அறிகிறதற்கும், அவ
ருடைய மரணத்திற்கொப்பான மரணத்திற்
குள்ளாகி, [19]எப்படியாயினும் நான் மரித்தோரி
லிருந்து உயிரோடெழுந்திருப்பதற்குத் தகுதி
11 யாகும்படிக்கும், அவருக்காக எல்லாவற்றை
யும் நஷ்டமென்று விட்டேன்; [20]குப்பையுமாக
12 எண்ணுகிறேன். நான் அடைந்தாயிற்று, [21]அல்
லது முற்றும் தேறினவனானேன் என்று எண்
ணாமல், கிறிஸ்து இயேசுவினால் நான் எதற்
காகப் பிடிக்கப்பட்டேனோ அதை நான் பிடித்
துக்கொள்ளும்படி ஆசையாய்த் தொடருகி
றேன். சகோதரரே, அதைப் பிடித்துக்கொ 13
ண்டேனென்று நான் எண்ணுகிறதில்லை;
ஒன்று செய்கிறேன், [22]பின்னானவைகளை மற
ந்து, முன்னானவைகளை நாடி, கிறிஸ்து இயே 14
சுவுக்குள் தேவன் அழைத்த பரம அழைப்பின்
[23]பந்தயப்பொருளுக்காக இலக்கை நோக்கித்
[24]தொடருகிறேன். ஆகையால், [25]நம்மில் தேறி 15
னவர்கள் யாவரும் இந்தச் சிந்தையாயிருக்கக்
கடவோம்; எந்தக் காரியத்திலாவது நீங்கள்
வேறே சிந்தையாயிருந்தால், அதையும்
தேவன் உங்களுக்கு வெளிப்படுத்துவார். ஆகி 16
லும் நாம் எதுவரையில் தேறியிருக்கிறோமோ,
அதுமுதல் ஒரே ஒழுங்காய் நடந்துகொண்டு,
[26]ஒரே சிந்தையாயிருப்போமாக.
சகோதரரே, [27]நீங்கள் என்னோடே கூடப் 17
பின்பற்றுகிறவர்களாகி, [28]நாங்கள் உங்களுக்கு
வழிகாட்டுகிறபடி நடக்கிறவர்களை மாதிரியாக
நோக்குங்கள். ஏனெனில், அநேகர் வேறு 18
விதமாய் நடக்கிறார்கள்; [29]அவர்கள் கிறிஸ்து
வின் சிலுவைக்குப் பகைஞரென்று உங்க
ளுக்கு அநேகந்தரம் சொன்னேன், இப்பொ
ழுது *கண்ணீரோடும் சொல்லுகிறேன்.
அவர்களுடைய [30]முடிவு அழிவு, அவர்களு 19
டைய தேவன் [31]வயிறு, அவர்களுடைய மகி
மை அவர்களுடைய [32]இலச்சையே, [33]அவர்
கள் பூமிக்கடுத்தவைகளைச் சிந்திக்கிறார்கள்.
நம்முடைய †குடியிருப்போ பரலோகத்திலி 20
ருக்கிறது, [34]அங்கேயிருந்து கர்த்தராயிருக்கிற
இயேசுகிறிஸ்து என்னும் இரட்சகர் வர எதிர்
பார்த்துக் கொண்டிருக்கிறோம். அவர் எல் 21
லாவற்றையும் [35]தமக்குக் கீழ்ப்படுத்திக்கொள்
ளத்தக்க தம்முடைய வல்லமையான செய
லின்படியே, [36]நம்முடைய ‡அற்பமான சரீ
ரத்தைத் தம்முடைய மகிமையான சரீரத்திற்கு
ஒப்பாக மறுரூபப்படுத்துவார்.
ஆதலால் எனக்குப் பிரியமும் வாஞ்சையு 4
மான சகோதரரே, எனக்குச் சந்தோஷமும்
[37]கிரீடமுமானவர்களே, பிரியமானவர்களே,
இந்தப்படியே கர்த்தருக்குள் நிலைத்திருங்கள்.
கர்த்தருக்குள் ஒரே சிந்தையாயிருக்க எயோ 2
தியாளுக்கும் சிந்திகேயாளுக்கும் புத்திசொல்
லுகிறேன். அன்றியும், என் உத்தம கூட்டா 3
ளியே, அவர்களுக்கு உதவியாயிருக்கும்படி
உன்னையும் வேண்டிக்கொள்ளுகிறேன்;
அவர்கள் கிலேமெந்தோடும் மற்ற என் உடன்
வேலையாட்களோடுங்கூடச் சுவிசேஷ விஷ
யத்தில் என்னோடேகூட மிகவும் பிரயாசப்
பட்டார்கள், [38]அவர்களுடைய நாமங்கள் ஜீவ
புஸ்தகத்தில் இருக்கிறது.
கர்த்தருக்குள் எப்பொழுதும் சந்தோஷமா 4
யிருங்கள்; [39]சந்தோஷமாயிருங்கள் என்று
மறுபடியும் சொல்லுகிறேன். உங்கள் சாந்த 5
குணம் [40]எல்லா மனுஷருக்கும் தெரிந்திருப்ப
தாக. [41]கர்த்தர் சமீபமாயிருக்கிறார். நீங்கள் 6
ஒன்றுக்குங் கவலைப்படாமல், [42]எல்லாவற்றை

1 1 கொ. 16. 18. 1 தெச 5. 12. 1 தீமோ 5. 17
2 1 கொ. 16 17
3 2 கொ. 13. 11. 1 தெச. 5 16
4 2 பே. 1. 12–15
5 ஏசா. 56. 10, 11. வெளி. 22. 15
6 சங். 119. 115. 2 கொ. 11. 13
7 கலா. 5. 1–3
8 யோ. 4 23, 24 கலா. 6. 14
9 ரோ. 2. 28, 29
10 2 கொ. 11. 18, 21, 22
11 அப். 23. 6
12 அப். 22. 3, 4. கலா. 1 13, 14
13 லூ. 1. 6. ரோ 10. 5
14 மத். 13. 44
15 ஏசா. 53 11. எரே. 9. 23, 24 யோ. 17. 3. 1 யோ. 2. 2
16 ரோ. 10. 3, 5
17 ரோ. 1. 17: 3. 21, 22
18 1 பே. 4. 13
19 அப். 26. 7, 8
20 2 கொ. 11. 25–27
21 1 தீமோ. 6. 12. எபி. 12. 23
22 சங். 45. 10. லூ. 9. 62. எபி. 6. 1
23 எபி. 3. 1
24 1 கொ. 9. 24. எபி. 6. 1
25 1 கொ. 2. 6. கலா. 5. 10
26 ரோ. 12. 16: 15. 5. கலா. 6. 16
27 1 தெச. 1. 6
28 1 பே. 5. 3
29 கலா. 1. 7: 6. 12
* அழுகையோடும்
30 2 கொ. 11. 15. 2 பே. 2. 1
31 1 தீமோ. 6. 5
32 ஓசி. 4. 7. 2 கொ. 11. 12
33 ரோ. 8. 5
† சஞ்சரிப்பு. எபே. 2. 6, 19
34 அப். 1. 11. எபி. 9. 28
35 1 கொ. 15. 26, 27. எபே. 1. 19
36 1 கொ. 15. 43. மு
‡ தாழ்மையான
37 2 கொ. 1. 14
38 லூ 10 20. வெளி. 3 5: 13. 8: 20. 12: 21. 27
39 3. 1. ரோ. 12. 12. 1 தெச. 5. 16 1 பே. 4. 13
40 1 கொ. 9. 25
41 எபி. 10. 25. யாக். 5. 8, 9. 2 பே. 3. 8–10. வெளி. 22. 7, 20
42 மத். 6. 25. 1 பே. 5. 7

யுங்குறித்து உங்கள் விண்ணப்பங்களை ஸ்தோத்
திரத்தோடே கூடிய ஜெபத்தினாலும் வேண்டு
தலினாலும் தேவனுக்குத் தெரியப்படுத்துங்
7 கள். அப்பொழுது, எல்லாப் புத்திக்கும்
மேலான தேவசமாதானம் [1]உங்கள் இருதயங்
களையும் உங்கள் சிந்தைகளையும் கிறிஸ்து
இயேசுவுக்குள்ளாகக் காத்துக்கொள்ளும்.
8 கடைசியாக, சகோதரரே, [2]உண்மையுள்
ளவைகளெவைகளோ, ஒழுக்க முள்ளவைக
ளெவைகளோ, [3]நீதியுள்ளவைக ளெவைக
ளோ, [4]கற்புள்ளவைக ளெவைகளோ, [5]அன்
புள்ளவைக ளெவைகளோ, [6]நற்கீர்த்தியுள்ள
வைக ளெவைகளோ, [7]புண்ணியம் எதுவோ,
[8]புகழ் எதுவோ அவைகளையே சிந்தித்துக்
9 கொண்டிருங்கள். நீங்கள் என்னிடத்தில்
கற்றும் அடைந்தும் கேட்டும் கண்டும் இருக்
கிறவைகளெவைகளோ, [9]அவைகளையேசெய்
யுங்கள்; [10]அப்பொழுது சமாதானத்தின் தே
வன் உங்களோடிருப்பார்.
10 என்னை விசாரிப்பதற்கு நீங்கள் இப்பொ
ழுது மறுபடியும் மனமலர்ந்தபடியினாலே கர்த்த
ருக்குள் மிகவும் சந்தோஷப்பட்டேன்; [11]இப்
படிச் செய்ய எண்ணங்கொண்டிருந்தீர்கள்,
சமயம்மாத்திரம் உங்களுக்கு நேரிடவில்லை.
11 என் குறைச்சலினால் நான் இப்படிச் சொல்
லுகிறதில்லை; [12]ஏனெனில், நான் எந்த நிலை
மையிலிருந்தாலும் மனரம்மியமாயிருக்கக் கற்
12 றுக்கொண்டேன். *தாழ்ந்திருக்கவும் எனக்குத்
தெரியும், †வாழ்ந்திருக்கவும் எனக்குத் தெரியும்;
[13]எவ்விடத்திலும் எல்லாவற்றிலும் திருப்தியா
யிருக்கவும் பட்டினியாயிருக்கவும், பரிபூரண
மடையவும் குறைவுபடவும் போதிக்கப்பட்
13 டேன். என்னைப் பெலப்படுத்துகிற கிறிஸ்து
வினாலே எல்லாவற்றையுஞ் செய்ய [14]எனக்
14 குப் பெலனுண்டு, ஆகிலும் நீங்கள் என்

உபத்திரவத்தில் என்னோடே உடன்பட்டது
[15]நலமாயிருக்கிறது. மேலும், பிலிப்பியரே, 15
சுவிசேஷத்தின் ஆரம்பத்திலே நான் மக்கெ
தோனியாவிலிருந்து புறப்பட்டபோது,
கொடுக்கல் வாங்கல் காரியத்தில் நீங்கள்
மாத்திரம் எனக்கு உடன்பட்டதேயல்லாமல்,
[16]வேறொரு சபையும் உடன்படவில்லை என்று
நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். நான் தெச 16
லோனிக்கேயி லிருந்தபோதும், என் குறைச்
சலை நீக்கும்படி நீங்கள் இரண்டொருதரம்
அனுப்பினீர்கள். உபகாரத்தை நான் நாடா 17
மல், [17]உங்கள் கணக்குக்குப் பலன் பெருகும்
படியே நாடுகிறேன். எல்லாம் எனக்குக் 18
கிடைத்தது, பரிபூரணமும் உண்டாயிருக்
கிறது; உங்களால் அனுப்பப்பட்டவைகளைச்
[18]சுகந்தவாசனையும் தேவனுக்குப் பிரியமான
[19]உகந்தபலியுமாக [20]எப்பாப்பிரோதீத்துவின்
கையில் வாப்பற்றிக்கொண்டபடியால் நான்
திருப்தி யடைந்திருக்கிறேன். என் தேவன் 19
[21]தம்முடைய ஐசுவரியத்தின்படி உங்கள்
குறைவையெல்லாங் [22]கிறிஸ்து இயேசுவுக்
குள் மகிமையிலே நிறைவாக்குவார். நம்மு 20
டைய பிதாவாகிய தேவனானவருக்கு [23]என்
றென்றைக்கும் மகிமை உண்டாவதாக.
ஆமென்.
கிறிஸ்து இயேசுவுக்குள்ளான பரிசுத்த 21
வான்கள் யாவருக்கும் வாழ்த்துதல் சொல்லுங்
கள். [24]என்னோடிருக்கிற சகோதரர்கள் உங்க
ளுக்கு வாழ்த்துதல் சொல்லுகிறார்கள். பரி 22
சுத்தவான்கள் அனைவரும், [25]விசேஷமாக
இராயனுடைய அரமனையிலுள்ளவர்களும்
உங்களுக்கு வாழ்த்துதல் சொல்லுகிறார்கள்.
நமது கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினு 23
டைய கிருபை [26]உங்களனைவரோடுங்கூட
இருப்பதாக. ஆமென்.

1 ஏசா. 26. 3. யோ. 14. 27. ரோ. 5. 1
2 எபே. 4. 25
3 உபா. 16. 20. ஏசா. 26. 7
4 யாக். 3. 17. 1. பேது. 3. 3
5 1 கொ. 13. அதி
6 கொலோ. 4. 5. 1 தெச. 5. 22
7 2 பே. 1. 3, 4
8 ரோ. 13. 3
9 3. 17
10 எபி. 13. 20
11 2 கொ. 11. 9.
12 1. தீமோ. 6. 6–8. எபி. 13. 5
* குறைவுபடவும்
† நிறைவுபடவும்
13 1 கொ. 4. 11. 2 கொ. 6. 10: 11. 27
14 யோ. 15. 5. 2 கொ. 12. 9
15 1. 7
16 2 கொ. 11. 8, 9
17 ரோ. 15. 28. தீத். 3. 14
18 எபி. 13. 16
19 2 கொ. 9. 12
20 2. 25
21 எபே. 3. 16
22 சங். 23. 1. 2 கொ. 9. 8
23 ரோ. 16. 27
24 கலா. 1. 2
25 1. 13
26 ரோ. 16. 24

# THE EPISTLE TO THE COLOSSIANS

# கொலோசெயருக்கு எழுதின

## நிருபம்

1 தேவனுடைய சித்தத்தினாலே இயேசு
கிறிஸ்துவின் அப்போஸ்தலனாகிய பவுலும்,
2 [1]சகோதரனாகிய தீமோத்தேயும், கொலோசெ
பட்டணத்தில் [2]கிறிஸ்துவுக்குள் பரிசுத்தவான்
களும் [3]விசுவாசிகளுமாயிருக்கிற சகோதரர்க
ளுக்கு எழுதுகிறதாவது: நம்முடைய பிதாவா
கிய தேவனாலும் கர்த்தராகிய இயேசுகிறிஸ்து
வினாலும் உங்களுக்குக் கிருபையும் சமாதான
மும் உண்டாவதாக.
3 கிறிஸ்து இயேசுவின்மேலுள்ள உங்கள்
விசுவாசத்தையும், [4]பரிசுத்தவான்களெல்லார்
மேலுமுள்ள உங்கள் அன்பையுங்குறித்து நாங்
4 கள் கேள்விப்பட்டு, பரலோகத்தில் உங்க
ளுக்காக வைத்திருக்கிற [5]நம்பிக்கையினிமித்
5 தம், நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்
துவின் பிதாவாகிய தேவனுக்கு ஸ்தோத்திரஞ்
செலுத்தி, [6]எப்பொழுதும் உங்களுக்காக வே
6 ண்டுதல் செய்கிறோம். அந்த நம்பிக்கையைக்
குறித்து, நீங்கள் முன்னமே சத்தியவசனமா
கிய [7]சுவிசேஷத்தினாலே கேள்விப்பட்டீர்கள்;
[8]அந்தச் சுவிசேஷம் உலகமெங்கும் பரம்பிப்
பலன் தருகிறதுபோல, உங்களிடத்திலும்
வந்து, நீங்கள் அதைக் கேட்டு, [9]தேவ கிருபை
யைச் சத்தியத்தின்படி அறிந்துகொண்ட
நாள்முதல், அது உங்களுக்குள்ளும் பலன்
7 தருகிறதாயிருக்கிறது; அதை எங்களுக்குப்
பிரியமான உடன்வேலையாளும், உங்களுக்கா
கக் கிறிஸ்துவின் உண்மையான ஊழியக்கார
னுமாயிருக்கிற [10]எப்பாப்பிராவினிடத்தில் நீங்
8 கள் கற்றறிந்திருக்கிறீர்கள்; ஆவிக்குள்ளான
உங்கள் அன்பையும் [11]அவனே எங்களுக்குத்
தெரியப்படுத்தினான்.
9 இதினிமித்தம், நாங்கள் அதைக்கேட்ட
நாள் முதல் உங்களுக்காக இடைவிடாமல் ஜெ
பம்பண்ணுகிறோம்; [12]நீங்கள் எல்லா ஞானத்
தோடும், [13]ஆவிக்குரிய விவேகத்தோடும் [14]அவ
ருடைய சித்தத்தை அறிகிற அறிவினாலே நிர
10 ப்பப்படவும், சகலவித நற்கிரியைகளுமாகிய
[15]கனிகளைத் தந்து, தேவனை அறிகிற அறிவில்
[16]விருத்தியடைந்து, கர்த்தருக்குப் பிரியமுண்
டாக [17]அவருக்குப் பாத்திரராய் நடந்துகொள்
11 ளவும், சந்தோஷத்தோடே கூடிய எல்லாப்
பொறுமையும்நீடியசாந்தமும்உண்டாவதற்கு,
[18]மகிமையான அவருடையவல்லமையின்படி,
[19]எல்லா வல்லமையாலும் பலப்படுத்தப்பட
வும், உங்களுக்காக வேண்டுதல் செய்கிறோம். 12
ஒளியிலுள்ள பரிசுத்தவான்களுடைய சுதந்தரத்
தில் பங்கடைவதற்கு, [20]நம்மைத் தகுதியுள்ள
வர்களாக்கினவரும், இருளின் அதிகாரத்தினி 13
ன்று நம்மை விடுதலையாக்கி, [21]தமது அன்பின்
குமாரனுடைய ராஜ்யத்திற்கு உட்படுத்தின
வருமாயிருக்கிற பிதாவை ஸ்தோத்திரிக்கி
றோம். [குமாரனாகிய] அவருக்குள், அவரு 14
டைய இரத்தத்தினாலே, [22]பாவமன்னிப்பா
கிய மீட்பு நமக்கு உண்டாயிருக்கிறது. அவர் 15
அதரிசனமான தேவனுடைய தற்சுரூபமும்,
[23]சர்வ சிருஷ்டிக்கும் முந்தின பேறுமானவர்.
ஏனென்றால் அவருக்குள் சகலமும் சிருஷ் 16
டிக்கப்பட்டது; [24]பரலோகத்திலுள்ளவைக
ளும் பூலோகத்திலுள்ளவைகளுமாகிய காணப்
படுகிறவைகளும் காணப்படாதவைகளுமான
சகல வஸ்துக்களும், சிங்காசனங்களானாலும்,
[25]கர்த்தத்துவங்களானாலும், துரைத்தனங்களா
னாலும், அதிகாரங்களானாலும், [26]சகலமும்
அவரைக்கொண்டும் அவருக்கென்றும் சிருஷ்
டிக்கப்பட்டது. அவர் எல்லாவற்றிற்கும் 17
முந்தினவர், [27]எல்லாம் அவருக்குள் நிலைநிற்கி
றது. அவரே சபையாகிய சரீரத்துக்குத் தலை 18
யானவர்; [28]எல்லாவற்றிலும் முதல்வராயிருக்
கும்படி, [29]அவரே ஆதியும் மரித்தோரிலிருந்து
எழுந்த முதற்பேறுமானவர். சகல பரிபூரண 19
மும் [30]அவருக்குள்ளே வாசமாயிருக்கவும்,
அவர் சிலுவையில் சிந்தின இரத்தத்தினாலே 20
சமாதானத்தை உண்டாக்கி, [31]பூலோகத்திலுள்
ளவைகள் பரலோகத்திலுள்ளவைகள் யாவை
யும் அவர் மூலமாய்த் தமக்கு [32]ஒப்புரவாக்கிக்
கொள்ளவும் அவருக்குப் பிரியமாயிற்று.
முன்னே அந்நியராயும் துர்க்கிரியைகளினால் 21
மனதிலே சத்துருக்களாயும் இருந்த உங்களை
யும் [33]பரிசுத்தராகவும் குற்றமற்றவர்களாகவும்
கண்டிக்கப்படாதவர்களாகவும் தமக்கு முன்
நிறுத்தும்படியாக அவருடைய மாம்சசரீரத்
தில் அடைந்த மரணத்தினாலே இப்பொழுது
ஒப்புரவாக்கினார். நீங்கள் கேட்ட சுவிசே 22
ஷத்தினால் உண்டாகும் நம்பிக்கையை விட்டு
அசையாமல், [34]ஸ்திரமாயும் உறுதியாயும் விசு

1 எபே. 1. 1
2 கலா. 1. 3
3 சங். 16. 3. 1 கொ. 4. 17
4 எபே. 1. 15, 16. எபி. 6. 10
5 2 தீமோ. 4. 8. 1 பே. 1. 4
6 1 கொ. 1. 4. பிலி. 1. 3: 4. 6
7 ரோ. 10. 17
8 23. வச. மத். 24. 14
9 யோ. 4. 23. தீத். 2. 11, 12
10 4. 12. பிலேமோன். 23. வச
11 ரோ. 15. 32
12 சங். 119. 99
13 1 யோ. 5. 20
14 ரோ. 12. 2 எபே. 5. 10, 17
15 யோ. 15. 8, 16
16 1 தெச. 4. 1
17 2 பே. 3. 18
18 ரோ. 5. 3. யாக். 1. 4
19 ஏசா. 45. 24
20 அப். 20. 32. வெளி. 22. 14
21 1 பே. 2. 9
22 எபே. 1. 7
23 எபி. 1. 3. வெளி. 3. 14
24 யோ. 1. 3
25 எபே. 1. 20
26 ரோ. 11. 36. எபி. 2. 10
27 யோ. 1. 1, 3: 17. 5. 1 கொ. 8. 6
28 எபே. 5. 23
29 அப். 26. 23. 1 கொ. 15. 20, 23
30 யோ. 1. 16: 3. 34
31 எபே. 2. 14-16
32 2 கொ. 5. 18. எபே. 1. 19
33 எபே. 2. 1. லூக். 24. வச
34 எபே. 3. 17. எபி. 10. 38

வாசத்திலே நிலைத்திருப்பீர்களானால் அப்படி
23 யாகும். அந்தச் சுவிசேஷம் வானத்தின் கீழி
ருக்கிற [1]சகல சிருஷ்டிகளுக்கும் பிரசங்கிக்
கப்பட்டு வருகிறது; [2]அதற்கென்றே பவுலா
கிய நான் ஊழியக்காரனானேன்.
24 இப்பொழுது நான் உங்கள்நிமித்தம் அநு
பவிக்கிற பாடுகளில் சந்தோஷமடைந்து,
[3]கிறிஸ்துவினுடைய உபத்திரவங்களில் குறை
வானதை அவருடைய சரீரமாகிய சபைக்காக,
25 என் மாம்சத்திலே நிறைவேற்றுகிறேன். ஆதி
காலங்களுக்கும் தலைமுறை தலைமுறைகளுக்
கும் மறைவாயிருந்து, [4]இப்பொழுது அவரு
டைய பரிசுத்தவான்களுக்கு வெளியாக்கப்
பட்ட இரகசியமாகிய தேவவசனத்தைப் பூர
26 ணமாய்த் தெரியப்படுத்துகிறதற்கு, உங்கள்
பொருட்டு தேவனால் எனக்கு அளிக்கப்பட்ட
*உத்தியோகத்தின்படியே [5]நான் அந்தச் சபை
27 க்கு ஊழியக்காரனானேன். புறஜாதிகளுக்
குள்ளே விளங்கிய இந்த இரகசியத்திலுள்ள
மகிமையின் ஐசுவரியம் இன்னதென்று, தே
வன் தம்முடைய பரிசுத்தவான்களுக்குத் தெ
ரியப்படுத்தச் சித்தமானார்; [6]கிறிஸ்துவானவர்
மகிமையின் நம்பிக்கையாக உங்களுக்குள் இரு
28 ப்பதே அந்த இரகசியம். எந்த மனுஷனை
யும் [7]கிறிஸ்து இயேசுவுக்குள் தேறினவனாக
நிறுத்தும்படிக்கு, அவரையே நாங்கள் அறி
வித்து, [8]எந்த மனுஷனுக்கும் புத்திசொல்லி,
[9]எந்த மனுஷனுக்கும் எல்லா ஞானத்தோடும்
29 உபதேசம் பண்ணுகிறோம். அதற்காக நான்
எனக்குள்ளே வல்லமையாய்க் கிரியை நடப்
பிக்கிற [10]அவருடைய பலத்தின்படி போரா
டிப் பிரயாசப்படுகிறேன்.

2 உங்களுக்காகவும் [11]லவோதிக்கேயாவிலி
ருக்கிறவர்களுக்காகவும், சரீரத்தில் என் முகத்
தைக் காணாதிருக்கிற மற்றெல்லாருக்காகவும்
மிகுந்த †போராட்டம் எனக்கு உண்டென்று
2 நீங்கள் அறிய விரும்புகிறேன். அவர்களு
டைய இருதயங்கள் தேற்றப்பட்டு, [12]அவர்கள்
அன்பினால் இணைக்கப்பட்டு, ‡பிதாவாகிய
தேவனுக்கும் கிறிஸ்துவுக்கும் உரிய [13]இரகசி
யத்தை அறிந்துகொள்ளுகிற உணர்வின் பூர
ண நிச்சயத்தினுடைய எல்லா ஐசுவரியத்திற்
கும் உரியவர்களாகவேண்டுமென்றே இப்படி
3 விரும்புகிறேன். அவருக்குள் ஞானம் அறிவு
என்பவைகளாகிய பொக்கிஷங்களெல்லாம்
4 [14]அடங்கியிருக்கிறது. ஒருவனும் நயவசனிப்
பினாலே [15]உங்களை வஞ்சியாதபடிக்கு இதைச்
5 சொல்லுகிறேன். சரீரத்தின்படி நான் தூர
மாயிருந்தும், ஆவியின்படி உங்களுடனேகூட
இருந்து, [16]உங்கள் ஒழுங்கையும், கிறிஸ்து
வின்மேலுள்ள உங்கள் விசுவாசத்தின் உறுதி
யையும் பார்த்துச் சந்தோஷப்படுகிறேன்.
6 ஆகையால், [17]நீங்கள் கர்த்தராகிய கிறிஸ்து
இயேசுவை ஏற்றுக்கொண்டபடியே, [18]அவ
ருக்குள் வேர்கொண்டவர்களாகவும், [19]அவர்
மேல் கட்டப்பட்டவர்களாகவும், [20]அவருக்
7 குள் நடந்துகொண்டு, நீங்கள் போதிக்கப்
பட்டபடியே, விசுவாசத்தில் உறுதிப்பட்டு,
ஸ்தோத்திரத்தோடே அதிலே பெருகுவீர்
களாக.
லௌகிக ஞானத்தினாலும், [21]மாயமான 8
தந்திரத்தினாலும், ஒருவனும் உங்களைக் கொள்
ளைகொண்டு போகாதபடிக்கு எச்சரிக்கையா
யிருங்கள்; [22]அது மனுஷர்களின் பாரம்பரிய
நியாயத்தையும் உலக வழிபாடுகளையும் பற்
றினதேயல்லாமல் கிறிஸ்துவைப் பற்றின
தல்ல. ஏனென்றால், தேவத்துவத்தின் பரிபூ 9
ரணமெல்லாம் §சரீரப்பிரகாரமாக [23]அவருக்
குள் வாசமாயிருக்கிறது. மேலும் சகல துரை 10
த்தனங்களுக்கும் அதிகாரத்துக்கும் தலைவரா
யிருக்கிற [24]அவருக்குள் நீங்கள் பரிபூரணமுள்
ளவர்களாயிருக்கிறீர்கள். அல்லாமலும், நீங் 11
கள் கிறிஸ்துவைப்பற்றும் விருத்தசேதனத்தி
னாலே மாம்சத்துக்குரிய பாவ சரீரத்தைக்
களைந்துவிட்டதினால், [25]கையால் செய்யப்ப
டாத விருத்தசேதனத்தை அவருக்குள் பெற்
றீர்கள். ஞானஸ்நானத்திலே அவரோடே 12
கூட அடக்கம் பண்ணப்பட்டவர்களாகவும்,
[26]அதிலே அவரைமரித்தோரிலிருந்தெழுப்பின
தேவனுடைய செயலின்மேலுள்ள விசுவாசத்
தினாலே அவரோடேகூட எழுந்தவர்களாக
வும் இருக்கிறீர்கள். உங்கள் பாவங்களினாலே 13
யும், உங்கள் மாம்ச விருத்தசேதனமில்லாமை
யினாலேயும் மரித்தவர்களாயிருந்த உங்களையும்
அவரோடேகூட உயிர்ப்பித்து, [27]அக்கிரமங்க
ளெல்லாவற்றையும் உங்களுக்கு மன்னித்து;
நமக்கு எதிரிடையாகவும் கட்டளைகளால் நம 14
க்கு விரோதமாகவும் இருந்த கையெழுத்தைக்
குலைத்து, [28]அதை நடுவிலிராதபடிக்கு எடுத்து,
சிலுவையின்மேல் ஆணியடித்து; துரைத்த 15
னங்களையும் அதிகாரங்களையும் ||உரிந்துகொ
ண்டு, வெளியரங்கமான கோலமாக்கி, அவை
களின்மேல் சிலுவையிலே வெற்றிசிறந்தார்.
ஆகையால், போஜனத்தையும் பானத்தை 16
யும் குறித்தாவது, பண்டிகைநாளையும் மாதப்
பிறப்பையும் ஓய்வுநாட்களையுங் குறித்தாவது,
[29]ஒருவனும் உங்களைக் குற்றப்படுத்தாதிருப்பா
னாக. அவைகள் வருங்காரியங்களுக்கு நிழலா 17
யிருக்கிறது; [30]அவைகளின் பொருள் கிறிஸ்
துவைப்பற்றினது. கணுக்களாலும் கட்டுக 18
ளாலும் உதவிபெற்று இணைக்கப்பட்டு, [31]தேவ
வளர்ச்சியாய் வளர்ந்தேறுகிற சரீரமுழுவதை
யும் ஆதரிக்கிற தலையைப் பற்றிக்கொள்ளா
மல், மாயமான தாழ்மையிலும், தேவதூதர் 19
களுக்குச் செய்யும் ஆராதனையிலும் விருப்ப
முற்று, காணாதவைகளிலே துணிவாய் நுழை
ந்து, [32]தன் மாம்சசிந்தையினாலே வீணாய் இறு
மாப்புக்கொண்டிருக்கிற எவனும் உங்கள் பந்
தயப்பொருளை நீங்கள் இழந்துபோகும்படி
உங்களை வஞ்சியாதிருக்கப் பாருங்கள்.
நீங்கள் கிறிஸ்துவுடனேகூட உலகத்தின் 20
வழிபாடுகளுக்கு மரித்ததுண்டானால், [33]இன்
னும் உலக வழக்கத்தின்படி பிழைக்கிறவர்கள்
போல, மனுஷருடைய கற்பனைகளின்படி 21

1 மத். 24. 14. மாற். 16. 15
2 எபே. 3. 7
3 எபே. 1. 13. பிலி. 3. 10
4 எபே. 3. 9. மத். 13. 11. 2 தீமோ. 1. 10
* உக்கிராணம், நியமம்
5 எபே. 3. 2
6 எபே. 1. 7: 3. 8. 1 தீமோ. 1. 1
7 2 கொ. 11. 2 எபே. 5. 27
8 அப். 20. 28, 31
9 2 தீமோ. 2. 24, 25
10 1 கொ. 15. 10. எபே. 1. 19: 3. 7, 20
11 வெளி. 3. 14. ழ
† சுவிசே. பிலி. 1. 30
12 3. 14
‡ தேவனுடைய கிறிஸ்துவுக்குரிய
13 1 பேது. 5. 7
14 1 கொ. 1. 24. 2. 6, 7. எபே. 1. 8
15 மாற். 13. 22. எபே. 4. 14
16 1 கொ. 5. 3: 14. 40. 1 பே. 5. 9
17 1 தெச. 4. 1
18 எபே. 3. 17
19 யோ. 15. 4, 5
20 1 பேது. 2. 6
21 ரோ. 16. 17. எபே. 5. 6. எபி. 13. 9
22 மத். 15. 2. கலா. 1. 14: 4. 3, 9
§ மெய்யாய்
23 1. 19
24 எபே. 1. 20, 23. எபி. 5. 9. 1 பே. 3. 22
25 எரே. 4. 4. பிலி. 3. 3
26 ரோ. 6. 4, 5. எபே. 1. 19
27 எபே. 2. 1, 5, 11
28 எபே. 2. 15, 16
|| நீக்கிவிட்டுமெலெ ன்றுவிட்டு. சங். 68. 18. ஏசா. 53. 12. லூ. 10. 18. 11. 22. யோ. 12. 31. எபி. 2. 14
29 ரோ. 14. 2, 3, 5, 10, 13, 17
30 எபி. 8. 5
31 எபே. 4. 15, 16
32 வெளி. 3. 11
33 கலா. 2. 19: 4. 3, 9. எபே. 2. 15

யும் போதனைகளின்படியும் நடந்து: [1]தொடா
தே, ருசிபாராதே, தீண்டாதே என்கிற கட்
22 டளைகளுக்கு உட்படுகிறதென்ன? இவை
யெல்லாம் அநுபவிக்கிறதினால் அழிந்துபோ
23 குமே. இப்படிப்பட்ட போதனைகள் சுய
இஷ்டமான ஆராதனையையும், மாயமான
தாழ்மையையும், சரீர ஒடுக்கத்தையும்பற்றி ஞா
னமென்கிற *பேர்கொண்டிருந்தாலும், [2]இ
வைகள் மாம்சத்தைப் பேணுகிறதற்கே ஒழிய
மற்றொன்றிற்கும் பிரயோஜனப்படாது.

3 நீங்கள் கிறிஸ்துவுடன்கூட எழுந்ததுண்
டானால், [3]கிறிஸ்து தேவனுடைய வலது
பாரிசத்தில் வீற்றிருக்கும் இடத்திலுள்ள மே
2 லானவைகளைத் தேடுங்கள். பூமியிலுள்ள
வைகளையல்ல, [4]மேலானவைகளையே நாடுங்
3 கள். ஏனென்றால், நீங்கள் மரித்தீர்கள்,
[5]உங்கள் ஜீவன் கிறிஸ்துவுடனே தேவனுக்
4 குள் மறைந்திருக்கிறது. நம்முடைய ஜீவனா
கிய கிறிஸ்து வெளிப்படும்போது, [6]நீங்களும்
அவரோடேகூட [7]மகிமையிலே வெளிப்படு
வீர்கள்.

5 ஆகையால், விபசாரம், அசுத்தம், மோகம்,
துர்இச்சை, விக்கிரகாராதனையான பொரு
ளாசை ஆகிய இவைகளைப் பூமியில் உண்டு
பண்ணுகிற [8]உங்கள் அவயவங்களை அழித்
6 துப்போடுங்கள். இவைகளின்பொருட்டே
கீழ்ப்படியாமையின் பிள்ளைகள்மேல் [9]தேவ
7 கோபாக்கினை வரும். நீங்களும் முற்காலத்
தில் அவர்களுக்குள்ளே சஞ்சரித்தபோது,
[10]அவைகளைச் செய்துகொண்டு வந்தீர்கள்.
8 இப்பொழுதோ கோபமும் மூர்க்கமும் பொ
றாமையும், உங்கள் வாயில் பிறக்கலாகாத
தூஷணமும் வம்புவார்த்தைகளுமாகிய [11]இ
9 வைகளையெல்லாம் விட்டுவிடுங்கள். ஒருவ
ருக்கொருவர் பொய் சொல்லாதிருங்கள்;
[12]பழைய மனுஷனையும் †அவன் செய்கை
10 களையும் களைந்துபோட்டு, தன்னைச் சிருஷ்
டித்தவருடைய [13]சாயலுக்கொப்பாய்ப் பூரண
அறிவடையும்படி புதிதாக்கப்பட்ட புதிய
மனுஷனைத் தரித்துக்கொண்டிருக்கிறீர்களே.
11 அதிலே கிரேக்கனென்றும் யூதனென்று
மில்லை, விருத்தசேதன முள்ளவனென்றும்
விருத்தசேதன மில்லாதவனென்று மில்லை,
புறஜாதியானென்றும் புறதேசத்தானென்று
மில்லை, அடிமையென்றும் சுயாதீனனென்று
மில்லை; [14]கிறிஸ்துவே எல்லாரிலும் எல்லாமு
மாயிருக்கிறார்.

12 ஆகையால், [15]நீங்கள் தேவனால் தெரிந்து
கொள்ளப்பட்ட பரிசுத்தரும் பிரியருமாய்,
உருக்கமான இரக்கத்தையும், தயவையும்,
மனத்தாழ்மையையும், சாந்தத்தையும், நீடிய
13 பொறுமையையும் தரித்துக்கொண்டு; ஒரு
வரையொருவர் தாங்கி, [16]ஒருவர்பேரில் ஒரு
வருக்குக் குறைபாடு உண்டானால், கிறிஸ்து
உங்களுக்கு மன்னித்ததுபோல, ஒருவருக்
14 கொருவர் மன்னியுங்கள். இவை எல்லா
வற்றின்மேலும், [17]பூரண சற்குணத்தின் கட்

1 மத். 15. 9. 1 தீமோ. 4. 3. தீத். 1. 14
* வேஷம்
2 18. சங். 1 தீமோ. 4. 8
3 2. 12. சங். 6 5; 8. 34. எபே. 2. 6, 7
4 1 யோ. 2. 15
5 சங். 6. 2
6 யோ. 11. 25; 14. 6. 1 யோ. 3. 2
7 1 கொ. 15. 43. பிலி. 3. 21
8 ரோ. 8. 13. கலா. 5. 24. எபே. 5. 3–6
9 எபே. 2. 2; 5. 6
10 தீத். 3. 3
11 எபே. 4. 22
12 எபே. 4. 22, 25
† அதன்
13 எபே. 2. 10
14 ரோ. 10. 12. எபே. 1. 23
15 எபே. 4. 24
16 மாற். 11. 25. எபே. 4. 2, 32
17 1 கொ. 13. 2, 8, 13. 1 பே. 4. 8
18 பிலி. 4. 7
19 சங். 119. 11. 1 கொ. 14. 26. எபே. 5. 19
20 1 கொ. 10. 31. எபே. 5. 20
21 எபே. 5. 22. ஆதி. 3. 16. தீத். 2. 4, 5. 1 பே. 3. 1. ஆ
22 எபே. 5. 25. ஆ. 1 பே. 3. 7
23 எபே. 6. 1. ஆ. தீத். 2. 9
24 எபே. 6. 4
25 எபே. 6. 5. 1 பே. 2. 18
26 1 கொ. 7. 22
27 எபே. 6. 6–8. 1 கொ. 7. 22
28 ரோ. 2. 11. எபே. 6. 9. 1 பே. 1. 17
29 எபே. 6. 9. ஆ
30 லூக். 18. 33. லூ. 18. 1
31 எபே. 6. 19. 2 தெச. 3. 1
32 சங். 90. 12. எபே. 5. 15, 16. 1 தெச. 4. 2
‡ மீட்டுக்கொள்ளுங்கள்
33 3. 16. மாற். 9. 50. 1 பே. 3. 15

டாகிய அன்பைத் தரித்துக்கொள்ளுங்கள்.
தேவசமாதானம் உங்கள் இருதயங்களில் 15
ஆளக்கடவது; [18]இதற்கென்றே நீங்கள் ஒரே
சரீரமாக அழைக்கப்பட்டீர்கள்; நன்றியறித
லுள்ளவர்களாயுமிருங்கள். கிறிஸ்துவின் வச 16
னம் உங்களுக்குள்ளே சகல ஞானத்தோடும்
பரிபூரணமாக வாசமாயிருப்பதாக; [19]சங்கீதங்
களினாலும் கீர்த்தனைகளினாலும் ஞானப்பாட்
டுகளினாலும் ஒருவருக்கொருவர் போதித்து
புத்திசொல்லிக்கொண்டு, உங்கள் இருதயத்
திலே கர்த்தரைப் பக்தியுடன் பாடி; வார்த் 17
தையினாலாவது கிரியையினாலாவது, நீங்கள்
எதைச் செய்தாலும், [20]அதையெல்லாம் கர்த்த
ராகிய இயேசுவின் நாமத்தினாலே செய்து,
அவர் முன்னிலையாகப் பிதாவாகிய தேவனை
ஸ்தோத்திரியுங்கள்.

மனைவிகளே, கர்த்தருக்கேற்கும்படி, [21]உங் 18
கள் புருஷருக்குக் கீழ்ப்படியுங்கள். புருஷர் 19
களே, [22]உங்கள் மனைவிகளில் அன்புகூருங்
கள், அவர்கள்மேல் கசந்துகொள்ளாதிருங்கள்.
பிள்ளைகளே, [23]உங்களைப் பெற்றாருக்கு எல் 20
லாக் காரியத்திலேயும் கீழ்ப்படியுங்கள்; இது
கர்த்தருக்குப் பிரியமானது. பிதாக்களே, 21
[24]உங்கள் பிள்ளைகள் திடனற்றுப் போகாத
படி, அவர்களுக்குக் கோபமூட்டாதிருங்கள்.
வேலைக்காரரே, [25]சரீரத்தின்படி உங்கள் எஜ 22
மான்களா யிருக்கிறவர்களுக்கு எல்லாக் காரி
யத்திலேயும் கீழ்ப்படிந்து, நீங்கள் மனுஷ
ருக்குப் பிரியமாயிருக்க விரும்புகிறவர்களா
கப் பார்வைக்கு ஊழியஞ்செய்யாமல், தேவ
னுக்குப்பயப்படுகிறவர்களாகக் கபடமில்லாத
இருதயத்தோடே ஊழியஞ்செய்யுங்கள். நீங் 23
கள் கர்த்தராகிய கிறிஸ்துவைச் சேவிக்கிறதி
னாலே, [26]சுதந்தரமாகிய பலனைக் கர்த்தராலே
பெறுவீர்களென்று அறிந்து, எதைச் செய் 24
தாலும், [27]அதை மனுஷர்களுக்கென்று செய்
யாமல், கர்த்தருக்கென்றே மனப்பூர்வமாய்ச்
செய்யுங்கள். அநியாயஞ்செய்கிறவன் தான் 25
செய்த அநியாயத்துக்கேற்ற பலனை அடை
வான்; [28]பட்சபாதமே இல்லை. எஜமான் 4
களே, [29]உங்களுக்கும் பரலோகத்தில் எஜ
மான் இருக்கிறாரென்று அறிந்து, வேலைக்கா
ரருக்கு நீதியும் செவ்வையுமானதைச் செய்
யுங்கள்.

இடைவிடாமல் ஜெபம்பண்ணுங்கள், [30]ஸ் 2
தோத்திரத்துடன் ஜெபத்தில் விழித்திருங்கள்.
கிறிஸ்துவினுடைய இரகசியத்தினிமித்தம் 3
கட்டப்பட்டிருக்கிற நான் அந்த இரகசியத்
தைக்குறித்துப் பேசவேண்டியபிரகாரமாய்ப்
பேசி, அதை வெளிப்படுத்துவதற்கு, திரு 4
வசனம் செல்லும்படியான [31]வாசலை தேவன்
திறந்தருளும்படி எங்களுக்காகவும் வேண்டிக்
கொள்ளுங்கள். புறம்பேயிருக்கிறவர்களுக்கு 5
முன்பாக ஞானமாய் நடந்து, [32]காலத்தைப்
‡பிரயோஜனப்படுத்திக்கொள்ளுங்கள். அவ 6
னவனுக்கு இன்னின்னபடி உத்தரவுசொல்ல
வேண்டுமென்று நீங்கள் அறியும்படிக்கு, [33]உங்

கள் வசனம் எப்பொழுதும் கிருபை பொருந்
தினதாயும் உப்பால் சாரமேறினதாயுமிருப்ப
தாக.
7 பிரியமான சகோதரனும், உண்மையுள்ள
ஊழியக்காரனும், கர்த்தருக்குள் எனக்கு
உடன்வேலையாளுமாயிருக்கிற [1]தீகிக்கு என்
பவன் என் செய்திகளையெல்லாம் உங்களு
8 க்கு அறிவிப்பான். உங்கள் செய்திகளை
அறியவும் உங்கள் இருதயங்களைத் தேற்ற
9 வும், அவனையும், உங்களிலொருவனுயிருக்கிற
உண்மையும் பிரியமுமுள்ள சகோதரனாகிய
[2]ஒநேசிமு என்பவனையும், உங்களிடத்தில்
அனுப்பியிருக்கிறேன்; அவர்கள் இவ்விடத்
துச் செய்திகளை யெல்லாம் உங்களுக்கு அறி
விப்பார்கள்.
10 என்னோடேகூடக் காவலிலிருக்கிற [3]அரி
ஸ்தர்க்கு உங்களுக்கு வாழ்த்துதல் சொல்லுகி
றான்; பர்னபாவுக்கு இனத்தானாகிய [4]மாற்கும்
வாழ்த்துதல் சொல்லுகிறான், இவனைக்குறித்
துக் கட்டளைபெற்றீர்களே; இவன் உங்களி
டத்தில் வந்தால் இவனை அங்கிகரித்துக்கொ
11 ள்ளுங்கள். யுஸ்து என்னப்பட்ட இயேசு
வும் வாழ்த்துதல் சொல்லுகிறான். விருத்தசேத
னமுள்ளவர்களில் இவர்கள்மாத்திரம் தேவனு
டைய ராஜ்யத்தின்பொருட்டு என் உடன்வே
லையாட்களாயிருந்து, எனக்கு ஆறுதல் செய்
12 துவந்தவர்கள். எப்பாப்பிராவும் [5]உங்களுக்கு
வாழ்த்துதல் சொல்லுகிறான்; உங்களைச் சேர்ந்
தவனும் கிறிஸ்துவின் ஊழியக்காரனுமாகிய
இவன், [6]நீங்கள் தேவனுக்குச் சித்தமானவைக
ளெல்லாவற்றிலும் தேறினவர்களாயும் பூரண
நிச்சயமுள்ளவர்களாயும் நிலைநிற்கவேண்டு
மென்று, [7]தன் ஜெபங்களில் உங்களுக்காக
எப்பொழுதும் போராடுகிறான். இவன் உங் 13
களுக்காகவும், லவோதிக்கேயருக்காகவும், எரா
ப்போலியருக்காகவும், மிகுந்த ஜாக்கிரதை
யுள்ளவனுயிருக்கிறானென்பதற்கு நான் சாட்
சியாயிருக்கிறேன். பிரியமான வைத்தியனா 14
கிய லூக்காவும், தேமாவும், [8]உங்களுக்கு வாழ்த்
துதல் சொல்லுகிறார்கள்.
லவோதிக்கேயாவிலிருக்கிற சகோதரரை 15
யும், நிம்பாவையும், [9]அவன் வீட்டில் கூடுகிற
சபையையும் வாழ்த்துங்கள். இந்த நிருபம் 16
உங்களிடத்தில் வாசிக்கப்பட்டபின்பு [10]இது
லவோதிக்கேயா சபையிலும் வாசிக்கப்படும்
படி செய்யுங்கள்; லவோதிக்கேயாவிலிருந்து
வரும் நிருபத்தை நீங்களும் வாசியுங்கள். அர்க் 17
கிப்பைக் கண்டு: [11]நீ கர்த்தரிடத்தில் பெற்ற
ஊழியத்தை நிறைவேற்றும்படி [12]கவனமா
யிருப்பாயாகவென்று சொல்லுங்கள்.
பவுலாகிய நான் என் கையினால் எழுதி, 18
[13]உங்களை வாழ்த்துகிறேன். [14]நான் கட்டப்பட்
டிருக்கிறதை நினைத்துக்கொள்ளுங்கள். கிரு
பை உங்களோடிருப்பதாக. ஆமென்.

1 எபே. 6. 21, 22
2 பிலேமோன் 10. வச
3 அப். 27. 2
4 அப். 15. 37
5 1. 7. பிலேமோன் 23. வச
6 மத். 5.48. எபி.6.1
7 யாக். 5. 16
8 2 தீமோ. 4. 10,11
9 ரோ. 16. 5. 1 கொ 16. 19
10 1 தெச. 5. 27
11 பிலேமோன் 2. வச
12 1 தீமோ 4. 6, 14
13 1 கொ. 16. 21, 2 தெச. 3. 17
14 எபி. 13. 3, 25

# THE FIRST EPISTLE TO THE THESSALONIANS

# தெசலோனிக்கேயருக்கு எழுதின

## முதலாம் நிருபம்

1 பவுலும், சில்வானும், [1]தீமோத்தேயும்,
பிதாவாகிய தேவனுக்குள்ளும் கர்த்தராகிய
இயேசுகிறிஸ்துவுக்குள்ளும் இருக்கிற [2]தெச
லோனிக்கேயர் சபைக்கு எழுதுகிறதாவது:
[3]நம்முடைய பிதாவாகிய தேவனாலும் கர்த்த
ராகிய இயேசுகிறிஸ்துவினாலும் உங்களுக்குக்
கிருபையும் சமாதானமும் உண்டாவதாக.
2 தேவனுக்குப் பிரியமான சகோதரரே, [4]உங்
கள் விசுவாசத்தின் கிரியையையும், [5]உங்கள்
அன்பின் பிரயாசத்தையும், நம்முடைய கர்த்
தராகிய இயேசுகிறிஸ்துவின்மேலுள்ள [6]உங்
கள் நம்பிக்கையின் பொறுமையையும், நம்மு
டைய பிதாவாகிய தேவனுக்கு முன்பாக நாங்
3 கள் இடைவிடாமல் நினைவுகூர்ந்து, நீங்கள்
தெரிந்துகொள்ளப்பட்டவர்களென்று [7]நாங்
4 கள் அறிந்து, எங்கள் ஜெபங்களில் இடை
விடாமல் உங்களைக்குறித்து விண்ணப்பம்ப
ண்ணி, [8]உங்களெல்லாருக்காகவும் எப்பொழு
5 தும் தேவனை ஸ்தோத்திரிக்கிறோம். எங்கள்
சுவிசேஷம் உங்களிடத்தில் [9]வசனத்தோடே
மாத்திரமல்ல, [10]வல்லமையோடும், [11]பரிசுத்த
ஆவியோடும்; [12]முழுநிச்சயத்தோடும் வந்தது;
[13]நாங்களும் உங்களுக்குள்ளே இருந்தபோது
உங்கள்நிமித்தம் எப்படிப்பட்டவர்களாயிருந்
6 தோமென்று அறிந்திருக்கிறீர்களே. நீங்கள்
மிகுந்த உபத்திரவத்திலே, [14]பரிசுத்தஆவியின்
சந்தோஷத்தோடே, திருவசனத்தை ஏற்றுக்
கொண்டு, [15]எங்களையும் கர்த்தரையும் பின்ப
7 ற்றுகிறவர்களாகி, இவ்விதமாய் மக்கெதோனி
யாவிலும் அகாயாவிலுமுள்ள விசுவாசிகள் யா
8 வருக்கும் மாதிரிகளானீர்கள். எப்படியெ
னில், உங்களிடத்திலிருந்து கர்த்தருடைய வச
னம் மக்கெதோனியாவிலும் அகாயாவிலும்
தொனித்ததுமல்லாமல், [16]நாங்கள் அதைக்கு
றித்து ஒன்றும் சொல்லவேண்டியதாயிராதப
டிக்கு, தேவனைப்பற்றின உங்கள் விசுவாசம்
9 [17]எங்கும் பிரசித்தமாயிற்று. ஏனெனில், அவர்
கள் தாமே எங்களைக்குறித்து, உங்களிடத்தில்
நாங்கள் அடைந்த பிரவேசம் இன்னதென்ப
தையும், [18]ஜீவனுள்ள மெய்யான தேவனுக்கு
ஊழியஞ்செய்வதற்கு, நீங்கள் விக்கிரகங்களை
விட்டு தேவனிடத்திற்கு மனந்திரும்பினதை
10 யும், அவர் மரித்தோரிலிருந் தெழுப்பினவ
ரும், [19]இனிவரும் கோபாக்கினையினின்று நம்
மை நீங்கலாக்கி இரட்சிக்கிறவருமாயிருக்கிற
அவருடைய குமாரனாகிய இயேசு பரலோகத்
திலிருந்து வருவதை நீங்கள் [20]எதிர்பார்த்துக்
கொண்டிருக்கிறதையும், அறிவிக்கிறார்களே.
சகோதரரே, நாங்கள் உங்களிடத்தில் பிர 2
வேசித்தது வீணாயிருக்கவில்லையென்று நீங்க
ளே அறிந்திருக்கிறீர்கள். உங்களுக்குத் தெ 2
ரிந்திருக்கிறபடி, [21]முன்னே பிலிப்பிபட்ட
ணத்திலே நாங்கள் பாடுபட்டு நிந்தையடைந்
திருந்தும், [22]வெகு போராட்டத்தோடே தே
வனுடையசுவிசேஷத்தைஉங்களுக்குச்சொல்
லும்படி, [23]நம்முடைய தேவனுக்குள் தைரியங்
கொண்டிருந்தோம். எங்கள் போதகம் வஞ்ச 3
கத்தினாலும் துராசையினாலும் உண்டாகவில்
லை, [24]அது கபடமுள்ளதாயுமிருக்கவில்லை. சுவி 4
சேஷத்தை எங்களிடத்தில் ஒப்புவிக்கத்தக்க
தாய், [25]தேவன் எங்களை உத்தமரென்றெண்ணி
னபடியே, நாங்கள், மனுஷருக்கு அல்ல,
[26]எங்கள் இருதயங்களைச் சோதித்தறிகிறதேவ
னுக்கே பிரியமுண்டாகப் பேசுகிறோம். உங் 5
களுக்குத்தெரிந்திருக்கிறபடி, [27]நாங்கள் ஒருக்
காலும் இச்சகமான வசனங்களைச் சொல்லவு
மில்லை, பொருளாசையுள்ளவர்களாய் மாயம்
பண்ணவுமில்லை; [28]தேவனே சாட்சி. நாங்கள் 6
கிறிஸ்துவின் அப்போஸ்தலராக உங்களுக்குப்
[29]பாரமாயிருக்கக் கூடியவர்களாலும், உங்க
ளிடத்திலாவது, மற்றவர்களிடத்திலாவது, [30]ம
னுஷரால் வரும் மகிமையை நாங்கள் தேட
வில்லை. உங்களிடத்தில் பட்சமாய் நடந்து 7
கொண்டோம்; [31]பால்கொடுக்கிற தாயானவள்
தன் பிள்ளைகளைக் காப்பாற்றுகிறதுபோல,
நாங்கள் உங்கள்மேல் வாஞ்சையாயிருந்து, தே 8
வனுடைய சுவிசேஷத்தை உங்களுக்குக் கொ
டுத்ததுமல்லாமல், [32]நீங்கள் எங்களுக்குப் பிரிய
மானவர்களானபடியினாலே, எங்கள் ஜீவனை
யும் உங்களுக்குக் கொடுக்க மனதாயிருந்தோம்.
சகோதரரே நாங்கள் பட்ட பிரயாசமும் வருத் 9
தமும் உங்களுக்கு ஞாபகமாயிருக்கும்; [33]உங்க
ளில் ஒருவனுக்கும் பாரமாயிராதபடிக்கு இர
வும் பகலும் நாங்கள் வேலைசெய்து, தேவனு
டைய சுவிசேஷத்தை உங்களிடத்தில் பிரசங்
கித்தோம். விசுவாசிகளாகிய உங்களுக்குள் 10

1 2 கொ. 1. 19. 1 பே. 5. 12
2 அப். 17. 1. ழ
3 எபே. 1. 2
4 யோ. 6. 29. 2 தெச. 1. 11
5 எபி. 6. 10
6 ரோ. 12. 12
7 கொலோ. 3. 12
8 ரோ. 1. 8. எபே. 1. 16
9 ஏசா. 55. 11. மாற். 16. 20
10 1 கொ. 2. 4
11 2 கொ. 6. 6
12 எபி. 2. 3
13 2 தெச. 3. 7
14 அப். 13. 52
15 2 கொ. 8. 5
16 ரோ. 10. 18
17 ரோ. 1. 8. 2 தெச. 1. 4
18 1 கொ. 12. 2. கலா. 4. 8
19 மத். 3. 7. ரோ. 5. 9
20 பிலி. 3. 20
21 அப். 16. 12. ழ
22 பிலி. 1. 30. யூதா. 3. வச
23 அப். 17. 2, 3
24 2 கொ. 7. 2. 2 பே. 1. 16
25 1 கொ. 7. 25 1 தீமோ. 1. 11, 12
26 ரோ. 8. 27. கலா. 1. 10
27 அப். 20. 33. 2 கொ. 2. 17
28 ரோ. 1. 9
29 2 கொ. 12. 13–15
30 யோ. 5. 41, 44. கலா. 1. 10
31 கலா. 4. 19. 2 தீமோ. 2. 24
32 ரோ. 1. 11: 15. 29. 2 கொ. 12. 15
33 அப். 20. 34, 35. 1 கொ. 4. 12. 2 தெச. 3. 7, 8.

ளே நாங்கள் எவ்வளவு பரிசுத்தமும் நீதியும்
பிழையின்மையுமாய் நடந்தோமென்பதற்கு
11 நீங்களும் சாட்சி, [1]தேவனும் சாட்சி. மேலும்,
[2]தம்முடைய ராஜ்யத்திற்கும் மகிமைக்கும்
உங்களை அழைத்த தேவனுக்கு நீங்கள் பாத்
12 திரராய் நடக்கவேண்டுமென்று, தகப்பன்
தன் பிள்ளைகளுக்குச் சொல்லுகிறதுபோல,
நாங்கள் உங்களில் ஒவ்வொருவனுக்கும் புத்தி
யும் தேறுதலும் எச்சரிப்பும் சொன்னதை
அறிந்திருக்கிறீர்கள்.
13 ஆகையால், நீங்கள் தேவவசனத்தை எங்க
ளாலேகேள்விப்பட்டுஏற்றுக்கொண்டபோது,
[3]அதை மனுஷர் வசனமாக ஏற்றுக்கொள்ளா
மல், தேவவசனமாகவே ஏற்றுக்கொண்டதி
னாலே நாங்கள் இடைவிடாமல் தேவனுக்கு
ஸ்தோத்திரஞ் செலுத்துகிறோம்; [4]அது மெய்
யாகவே தேவவசனந்தான், விசுவாசிக்கிற உங்
களுக்குள்ளே அது பெலனும் செய்கிறது.
14 எப்படியெனில், சகோதரரே, யூதேயாதேசத்
திலே கிறிஸ்து இயேசுவுக்குள்ளான தேவனு
டைய சபைகளை நீங்கள் பின்பற்றினவர்க
ளாகி, [5]அவர்கள் யூதராலே எப்படிப் பாடு
பட்டார்களோ, அப்படியே நீங்களும் உங்கள்
15 சுயஜனங்களாலே பாடுபட்டீர்கள். அந்த யூதர்
கள் கர்த்தராகிய இயேசுவையும், [6]தங்கள்
தீர்க்கதரிசிகளையும் கொலை* செய்தவர்களும்,
எங்களைத் துன்பப்படுத்தினவர்களும், தேவ
னுக்கேற்காதவர்களும், மனுஷர் யாவருக்கும்
16 விரோதிகளுமாயிருந்து, புறஜாதியார் இரட்
சிக்கப்படுவதற்கு நாங்கள் அவர்களோடே
[7]பேசாதபடிக்குத் தடை பண்ணுகிறார்கள்;
இவ்விதமாய் எக்காலத்திலும் [8]தங்கள் பாவங்
களை நிறைவாக்குகிறார்கள்; [9]அவர்கள்மேல்
கோபாக்கினை பூரணமாய் வந்திருக்கிறது.
17 சகோதரரே, நாங்கள் இருதயத்தின்படி உங்
களோடிருந்து, *சரீரத்தின்படி கொஞ்சக்கா
லம் உங்களைவிட்டுப் பிரிந்திருந்தபடியினாலே,
[10]உங்கள் முகத்தைப் பார்க்கவேண்டுமென்று
மிகுந்த ஆசையோடே அதிகமாய்ப் பிரயத்த
18 னம் பண்ணினோம். ஆகையால், நாங்கள்
உங்களிடத்தில் வர இரண்டொருதரம் மன
தாயிருந்தோம், பவுலாகிய நானே வர மனதா
யிருந்தேன்; [11]சாத்தானோ எங்களைத் தடை
19 பண்ணினான். எங்களுக்கு நம்பிக்கையும் சந்
தோஷமும் மகிழ்ச்சியின் கிரீடமுமாயிருப்ப
வர்கள் யார்? [12]நம்முடைய கர்த்தராகிய இயேசு
கிறிஸ்து [13]வரும்போது அவருடைய சந்நிதா
னத்திலே நீங்களல்லவா அப்படியிருப்பீர்கள்;
20 நீங்களே எங்களுக்கு மகிமையும் சந்தோஷ
முமாயிருக்கிறீர்கள்.

3 ஆகையால், நாங்கள் இனிப் பொறுத்திருக்
கக்கூடாமல், [14]அத்தேனேபட்டணத்தில் தனி
த்துவிடப்படுகிறது நன்மையென்று நினைத்து,
2 இந்த உபத்திரவங்களினாலே ஒருவனும்
அசைக்கப்படாதபடிக்கு உங்களைத் திடப்ப
டுத்தவும், உங்கள் விசுவாசத்தைப்பற்றி உங்க
ளுக்குப் புத்திசொல்லவும், நம்முடைய சகோ
தரனும் தேவ ஊழியக்காரனும் கிறிஸ்து
வின் சுவிசேஷத்தில் எங்கள் உடன்வேலையா
ளுமாகிய [15]தீமோத்தேயுவை அனுப்பினோம்.
இப்படிப்பட்ட உபத்திரவங்களைச் சகிக்க 3
[16]நாம் நியமிக்கப்பட்டிருக்கிறோமென்று நீங்
கள் அறிந்திருக்கிறீர்களே. நமக்கு உபத்திர 4
வம் வருமென்று நாங்கள் உங்களிடத்திலிருந்த
போது, உங்களுக்கு முன்னறிவித்தோம்; [17]அப்
படியே வந்து நேரிட்டதென்றும் அறிந்திருக்
கிறீர்கள். ஆகையால், நான் இனிப் பொறுத் 5
திருக்கக் கூடாமல், [18]எங்கள் வேலை வீணாய்ப்
போகத்தக்கதாகச் சோதனைக்காரன் உங்களைச்
சோதனைக் குட்படுத்தினதுண்டோவென்று,
[19]உங்கள்விசுவாசத்தை அறியும்படிக்கு, அவனை
அனுப்பினேன். இப்பொழுது தீமோத்தேயு 6
உங்களிடத்திலிருந்து எங்களிடத்தில் வந்து,
உங்கள் விசுவாசத்தையும் அன்பையும் குறித்
தும், நீங்கள் எப்பொழுதும் எங்களைப் பட்ச
மாய் நினைத்துக்கொண்டு, நாங்கள் உங்களைக்
காண வாஞ்சையாயிருக்கிறதுபோல நீங்களும்
எங்களைக்காண வாஞ்சையாயிருக்கிறீர்களென்
பதைக் குறித்தும், [20]எங்களுக்கு நற்செய்தி
சொன்னதினாலே, சகோதரரே, [21]எங்களுக்கு 7
நேரிட்ட எல்லா இக்கட்டிலும் உபத்திரவத்தி
லும் உங்கள் விசுவாசத்தினாலே உங்களைக்
குறித்து ஆறுதலடைந்தோம். நீங்கள் கர்த்த 8
ருக்குள் நிலைத்திருந்தால் [22]நாங்கள் பிழைத்தி
ருப்போம். மேலும், நம்முடைய தேவனுக்கு 9
முன்பாக நாங்கள் உங்களைக்குறித்து அடைந்
திருக்கிற மிகுந்த சந்தோஷத்திற்காக, [23]நாங்கள்
தேவனுக்கு எவ்விதமாய் ஸ்தோத்திரம் செலுத்
துவோம்? உங்கள் முகத்தைக் கண்டு, [24]உங் 10
கள் விசுவாசத்தின் குறைவுகளை நிறைவாக்
கும்பொருட்டு, [25]இரவும் பகலும் மிகவும்
வேண்டிக்கொள்ளுகிறோமே.
நம்முடைய பிதாவாகிய தேவனும் நம்மு 11
டைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவும் உங்க
ளிடத்திற்கு எங்களை நேராக வழிநடத்துவா
ராக. நாங்கள் உங்களிடத்தில் வைத்திருக்கிற 12
அன்புக்கொப்பாய், [26]நீங்களும் ஒருவரிடத்
தில் ஒருவர் வைக்கும் அன்பிலும் மற்றெல்லா
மனுஷரிடத்தில் வைக்கும் அன்பிலும் கர்த்
தர் உங்களைப் பெருகவும் நிலைத்தோங்கவும்
செய்து, இவ்விதமாய் நம்முடைய கர்த்தரா 13
கிய இயேசுகிறிஸ்து [27]தமது பரிசுத்தவான்கள்
அனைவரோடுங்கூட வரும்போது, [28]நீங்கள்
நம்முடைய பிதாவாகிய தேவனுக்குமுன்பா
கப் பிழையற்ற பரிசுத்தமுள்ளவர்களாயிருக்
கும்படி உங்கள் இருதயங்களை ஸ்திரப்படுத்து
வாராக.

அன்றியும், சகோதரரே, நீங்கள் இன் 4
னின்னபிரகாரமாய் நடக்கவும், தேவனுக்குப்
பிரியமாயிருக்கவும் வேண்டுமென்று, [29]நீங்கள்
எங்களால் கேட்டு ஏற்றுக்கொண்டபடியே,
அதிகமதிகமாய்த் தேறும்படிக்கு, கர்த்தரா
கிய இயேசுவுக்குள் உங்களை வேண்டிக்கொ
ண்டு புத்திசொல்லுகிறோம். கர்த்தராகிய 2

1 1. 5. 2 கொ. 7. 2
2 1 கொ. 1. 9. எபே. 4. 1
3 மத். 10. 40. கலா. 4. 14. 2 பே. 3. 2
4 யாக். 1. 18. 1 பே. 1. 23
5 அப். 17. 5, 13. கலா. 1. 22. எபி. 10. 33, 34
6 அப். 2. 23: 7. 52
7 அப். 17. 5, 13: 18. 12
8 ஆதி. 15. 16. மத். 23. 32
9 மத். 24. 6, 14. வெளி. 22. 11, 12
* முகமுகமாய்
10 3. 10. 1 கொ. 5. 3. கொலோ. 2. 5
11 ரோ. 1. 13: 15. 22
12 2 கொ. 1. 14 பிலி. 4. 1
13 1 கொ. 15. 23 வெளி. 1. 7
14 அப். 17. 15
15 ரோ. 16. 21. 1 கொ. 16. 10. 2 கொ. 1. 19
16 ரோ. 16. 2. 1 கொ. 4. 9. எபே. 3. 13
17 அப். 20. 24
18 கலா. 4. 11
19 2 கொ. 11. 2, 3
20 அப். 18. 1, 5. பிலி. 1. 8
21 2 கொ. 7. 6, 7
22 எபே. 6. 13, 14. பிலி. 4. 1
23 1. 2. ஓ
24 2 கொ. 13. 9, 11. கொலோ. 4. 12
25 அப். 26. 7. ரோ. 1. 10–12
26 1 யோ. 4. 7–12
27 சக. 14. 5. யூதா 14. வச
28 2 தெச. 2. 17. 1 யோ. 3. 20, 21
29 பிலி. 1. 27. கொலோ. 1. 10

இயேசுவினாலே நாங்கள் உங்களுக்குக் கொ
3 டுத்த கட்டளைகளை அறிந்திருக்கிறீர்களே. நீங்
கள் பரிசுத்தமுள்ளவர்களாகவேண்டுமென்ப
தே [1]தேவனுடைய சித்தமாயிருக்கிறது. [2]அந்
தப்படி, நீங்கள் வேசிமார்க்கத்துக்கு விலகி
4 யிருந்து, தேவனை அறியாத அஞ்ஞானிகளைப்
5 போல [3]மோக இச்சைக்குட்படாமல், உங்க
ளில் அவனவன் தன்தன் *சரீரபாண்டத்
தைப் [4]பரிசுத்தமாயும் கனமாயும் ஆண்டு
6 கொள்ளும்படி அறிந்து: இந்தவிஷயத்தில்
ஒருவனும் மீறாமலும் தன் சகோதரனை வஞ்சி
யாமலும் இருக்கவேண்டும்; [5]முன்னமே நாங்
கள் உங்களுக்குச் சொல்லி, சாட்சியாக எச்
சரித்தபடியே இப்படிப்பட்ட விஷயங்களெல்
லாவற்றையுங் குறித்தக் [6]கர்த்தர் நீதியைச்
7 சரிக்கட்டுகிறவராயிருக்கிறார். தேவன் நம்மை
அசுத்தத்திற்கல்ல [7]பரிசுத்தத்திற்கே அழைத்
8 திருக்கிறார். ஆகையால் அசட்டைபண்ணு
கிறவன் மனுஷனை அல்ல, [8]தமது பரிசுத்த
ஆவியை நமக்குத் தந்தருளின தேவனையே
அசட்டைபண்ணுகிறான்.
9 சகோதர சிநேகத்தைக்குறித்து நான் உங்க
ளுக்கு எழுதவேண்டுவதில்லை; [9]நீங்கள் ஒரு
வரிலொருவர் அன்பாயிருக்கும்படிக்கு தேவ
னால் போதிக்கப்பட்டவர்களா யிருக்கிறீர்க
10 ளே. அந்தப்படி நீங்கள் மக்கெதோனியா
நாடெங்குமுள்ள சகோதர ரெல்லாருக்கும்
செய்துவருகிறீர்கள். சகோதரரே, அன்
பிலே நீங்கள் இன்னும் அதிகமாய்ப் பெரு
11 கவும்; புறம்பே யிருக்கிறவர்களைப்பற்றி யோக்
கியமாய் நடந்து, [10]ஒன்றிலும் உங்களுக்குக்
12 குறைவில்லாதிருக்கும்படிக்கு, நாங்கள் உங்
களுக்குக் கட்டளையிட்டபடியே அமைத
லுள்ளவர்களா யிருக்கும்படி நாடவும், [11]உங்
கள் சொந்த அலுவல்களைப் பார்க்கவும், [12]உங்
கள் சொந்தக் கைகளினாலே வேலைசெய்யவும்
வேண்டுமென்று உங்களுக்குப் புத்திசொல்
லுகிறோம்.
13 அன்றியும், சகோதரரே, [13]நித்திரையடைந்
தவர்களினிமித்தம் நீங்கள் நம்பிக்கையற்றவர்
களான மற்றவர்களைப்போலத் துக்கித்து, அறி
14 வில்லாதிருக்க எனக்கு மனதில்லை. இயே
சுவானவர் மரித்து பின்புஎழுந்திருந்தாரென்று
விசுவாசிக்கிறோமே; [14]அப்படியே இயேசுவுக்
குள் நித்திரை யடைந்தவர்களையும் தேவன்
15 அவரோடேகூடக் கொண்டுவருவார். கர்த்த
ருடைய வார்த்தையை முன்னிட்டு நாங்கள்
உங்களுக்குச் சொல்லுகிறதாவது: [15]கர்த்தரு
டைய வருகைமட்டும் உயிரோடிருக்கும் நாம்
நித்திரை யடைந்தவர்களுக்கு முந்திக்கொள்
16 வதில்லை. ஏனெனில், [16]கர்த்தர் தாமே ஆர
வாரத்தோடும், பிரதான தூதனுடைய சத்தத்
தோடும், தேவ எக்காளத்தோடும் வானத்திலி
ருந்து இறங்கிவருவார்; [17]அப்பொழுது கிறிஸ்
துவுக்குள் மரித்தவர்கள் முதலாவது எழுந்தி
17 ருப்பார்கள். பின்பு, உயிரோடிருக்கும் நாமும்
கர்த்தருக்கு எதிர்கொண்டுபோக, [18]மேகங்கள்
மேல் அவர்களோடேகூட ஆகாயத்தில் எடுத்
துக்கொள்ளப்பட்டு, [19]இவ்விதமாய் எப்பொழு
தும் கர்த்தருடனேகூட இருப்போம். ஆகை 18
யால், இந்த வார்த்தைகளினாலே [20]நீங்கள் ஒரு
வரையொருவர் தேற்றுங்கள்.

சகோதரரே, [21]இவைகள் நடக்குங் காலங் 5
களையும் சமயங்களையுங்குறித்து உங்களுக்கு
எழுதவேண்டுவதில்லை. இரவிலே திருடன் 2
வருகிறவிதமாய்க் கர்த்தருடைய நாள் வரு
மென்று [22]நீங்களே நன்றாய் அறிந்திருக்கிறீர்
கள். சமாதானமும் சவுக்கியமும் உண்டெ 3
ன்று அவர்கள் சொல்லும்போது; [23]கர்ப்பவதி
யானவளுக்கு வேதனை வருகிறதுபோல, அழி
வு சடிதியாய் அவர்கள்மேல் வரும்; அவர்கள்
தப்பிப்போவதில்லை. சகோதரரே, [24]அந்த 4
நாள் திருடனைப்போல உங்களைப் பிடித்துக்
கொள்ளத்தக்கதாக, நீங்கள் அந்தகாரத்திலிருக்
கிறவர்களல்லவே. நீங்களெல்லாரும் வெளிச் 5
சத்தின் பிள்ளைகளும், பகலின் பிள்ளைகளுமா
யிருக்கிறீர்கள்; நாம் இரவுக்கும் இருளுக்கும்
உள்ளானவர்களல்லவே. ஆகையால், [25]மற் 6
றவர்கள் தூங்குகிறதுபோல நாம் தூங்காமல்,
விழித்துக்கொண்டு தெளிந்தவர்களா யிருக்கக்
கடவோம். தூங்குகிறவர்கள் இராத்திரியிலே 7
தூங்குவார்கள்; [26]வெறிகொள்ளுகிறவர்கள்
இராத்திரியிலே வெறிகொள்ளுவார்கள். பக 8
லுக்குரியவர்களாகிய நாமோ தெளிந்தவர்களா
யிருந்து, [27]விசுவாசம் அன்பு என்னும் மார்க்க
வசத்தையும், இரட்சிப்பின் நம்பிக்கையென்
னும் தலைச்சீராவையும் தரித்துக்கொண்டிருக்
கக்கடவோம். தேவன் நம்மைக் கோபாக்கி 9
னைக்கென்று நியமிக்காமல், [28]நம்முடைய கர்த்
தராகிய இயேசுகிறிஸ்து மூலமாய் இரட்
சிப்படைவதற்கென்று நியமித்தார். நாம் 10
விழித்திருப்பவர்களானாலும், நித்திரையடைந்
தவர்களானாலும், [29]தம்முடனேகூட நாம் ஏக
மாய்ப் பிழைத்திருக்கும்படி அவர் நமக்காக
மரித்தாரே. ஆகையால் நீங்கள் செய்துவருகிற 11
படியே, ஒருவரை யொருவர் தேற்றி, [30]ஒருவ
ருக்கொருவர் பக்திவிருத்தி உண்டாகும்படி
செய்யுங்கள்.

அன்றியும், சகோதரரே, [31]உங்களுக்குள் 12
ளே பிரயாசப்பட்டு, கர்த்தருக்குள் உங்களை
விசாரணை செய்கிறவர்களாயிருந்து, உங்களுக்
குப் புத்திசொல்லுகிறவர்களை நீங்கள் †மதித்து,
அவர்களுடைய கிரியையினிமித்தம் அவர் 13
களை மிகவும் அன்பாய் எண்ணிக்கொள்ளும்
படி உங்களை வேண்டிக்கொள்ளுகிறோம்.
[32]உங்களுக்குள்ளே சமாதானமாயிருங்கள். மே 14
லும், சகோதரரே, நாங்கள் உங்களுக்குப்
போதிக்கிறதென்னவென்றால், [33]ஒழுங்கில்
லாதவர்களுக்குப் புத்திசொல்லுங்கள், [34]திட
னற்றவர்களைத் தேற்றுங்கள், [35]பலவீனரைத்
தாங்குங்கள், [36]எல்லாரிடத்திலும் நீடிய சாந்த
மாயிருங்கள். ஒருவனும் மற்றொருவன் செய் 15
யும் தீமைக்குத் [37]தீமை செய்யாதபடி பாருங்
கள்; [38]உங்களுக்குள்ளும் மற்ற யாவருக்குள்

1 ரோ. 12. 2. எபே. 5. 17, 27
2 1 கொ. 6. 15, 18
3 எபே. 4. 17, 18
* பாத்திரத்தை 1 பே. 3. 7 [illegible]
4 ரோ. 6. 19. 1 கொ. 6. 15, 18
5 1 கொ. 6. 8
6 2 தெச. 1. 8
7 லேவி. 11. 44. ஓசி 12. 14. 1 பே. 1. 14–16
8 லூ. 10. 16. 1 கொ. 2. 10. 1 யோ. 3. 24
9 யோ. 15. 12, 17
10 ரோ. 13. 13. 2 கொ. 8. 21
11 2 தெச. 3. 11. 1 பே. 4. 15
12 அப். 20. 35 எபே. 4. 28. 2 தெச. 3. 7, 8, 12
13 எபே. 2. 12
14 1 கொ. 15. 20. ஷ
15 1 கொ. 15. 51
16 மத். 24. 30, 31. அப். 1. 11. 2 தெச. 1. 7, 8
17 வெளி. 20. 5, 6
18 வெளி. 11. 12
19 யோ. 14. 3
20 5. 11
21 மத். 24. 3, 36. அப். 1. 7
22 லூ. 12. 39, 40. 2 பே. 3. 10. வெளி. 16. 15
23 எரே. 13. 21. லூ. 17. 27. ஷ: 21. 34, 35. 2 தெச. 1. 9
24 ரோ. 13. 12, 13 எபே. 5. 8. 1 யோ. 2. 8
25 மத். 25. 5. ரோ. 13. 12, 13. 1 பே. 5. 8
26 லூ. 21. 34, 36
27 ஏசா. 59. 17. எபே. 6. 14–17
28 ரோ. 9. 22. 1 பே. 2. 8
29 ரோ. 14. 8, 9. 2 கொ. 5. 15
30 4. 18
31 1 கொ. 16. 18. பிலி. 2. 29. 1 தீமோ. 5. 17. எபி. 13. 7, 17
† அறிந்து
32 மாற். 9. 50
33 2 தெச. 3. 11, 12
34 எபி. 12. 12
35 ரோ. 14. 1; 15. 1
36 எபே. 4. 2
37 நீதி. 20. 22; 24. 29. மத். 5. 39, 44. 1 பே. 3. 9
38 கலா. 6. 10

ளும் எப்பொழுதும் நன்மை செய்ய நாடுங்
16 கள். எப்பொழுதும் [1]சந்தோஷமாயிருங்கள்.
17 இடைவிடாமல் [2]ஜெபம் பண்ணுங்கள்.
18 எல்லாவற்றிலேயும் ஸ்தோத்திரஞ் செய்யுங்
கள்; [3]அப்படிச் செய்வதே கிறிஸ்து இயேசு
வுக்குள் உங்களைக்குறித்து தேவனுடைய
19 சித்தமாயிருக்கிறது. ஆவியை [4]அவித்துப்
20 போடாதிருங்கள். *தீர்க்கதரிசனங்களை [5]அற்
21 பமா யெண்ணாதிருங்கள். எல்லாவற்றையும்
[6]சோதித்துப் பார்த்து, நலமானதைப் [7]பிடித்
22 துக் கொள்ளுங்கள். பொல்லாங்காய்த்
தோன்றுகிற [8]எல்லாவற்றையும் விட்டு வில
குங்கள்.
23 சமாதானத்தின் தேவன் தாமே உங்களை
முற்றிலும் பரிசுத்தமாக்குவாராக. [9]உங்கள்
ஆவி ஆத்துமா சரீரம்முழுவதும், [10]நம்முடைய
கர்த்தராகிய இயேசுகிறிஸ்து வரும்போது
குற்றமற்றதா யிருக்கும்படி காக்கப்படுவதாக.
உங்களை அழைக்கிறவர் உண்மையுள்ளவர், 24
[11]அவர் அப்படியே செய்வார்.
சகோதரரே, [12]எங்களுக்காக வேண்டிக் 25
கொள்ளுங்கள்.
சகோதரரெல்லாரையும் பரிசுத்த முத்தத் 26
தோடே [13]வாழ்த்துங்கள். இந்த நிருபம் பரி 27
சுத்தமான சகோதரர் யாவருக்கும் [14]வாசிக்கப்ப
டும்படி செய்யவேண்டுமென்று கர்த்தர்பேரில்
ஆணையிட்டு உங்களுக்குச் சொல்லுகிறேன்.
நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து 28
வினுடைய கிருபை [15]உங்களுடனேகூட
இருப்பதாக. ஆமென்.

1 பிலி. 4. 4
2 ரோ. 12. 12
3 எபே. 5. 20
4 எபே. 4. 30.
* போதனையை. ரோ. 12. 6
5 1 கொ. 14. 1, 39
6 1 யோ. 4. 1
7 பிலி. 4. 8
8 ஏசா. 33. 15
9 பிலி. 4. 9
10 1 கொ. 1. 8, 9
11 1 கொ. 10. 13. 2 தெச. 3. 3
12 கொலோ. 4. 3 2 தெச. 3. 1
13 ரோ. 16. 16
14 கொலோ. 4. 16. 2 தெச. 3. 14
15 ரோ. 16. 20, 24. 2 தெச. 3. 18

# THE SECOND EPISTLE TO THE THESSALONIANS

# தெசலோனிக்கேயருக்கு எழுதின

## இரண்டாம் நிருபம்

**1** பவுலும், சில்வானும், தீமோத்தேயும், [1]நம்
முடைய பிதாவாகிய தேவனுக்குள்ளும், கர்த்த
ராகிய இயேசுகிறிஸ்துவுக்குள்ளும் இருக்கிற
தெசலோனிக்கேயர் சபைக்கு எழுதுகிறதா
2 வது: நம்முடைய பிதாவாகிய தேவனாலும்
கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினாலும் [2]உங்க
ளுக்குக் கிருபையும் சமாதானமும் உண்டா
வதாக.
3 சகோதரரே, நாங்கள் எப்பொழுதும் உங்க
ளுக்காக தேவனை ஸ்தோத்திரிக்கக் கடனாளி
களாயிருக்கிறோம்; [3]உங்கள் விசுவாசம் மிக
வும் பெருகுகிறபடியினாலும், நீங்களெல்லா
ரும் ஒருவரிலொருவர் வைத்திருக்கிற அன்பு
அதிகரிக்கிறபடியினாலும், அப்படிச் செய்கி
4 றது தகுதியாயிருக்கிறது. நீங்கள் சகிக்கிற
சகல துன்பங்களிலும் உபத்திரவங்களிலும்
பொறுமையையும் விசுவாசத்தையும் காண்பிக்
கிறதினிமித்தம் [4]உங்களைக்குறித்து நாங்கள்
தேவனுடைய சபைகளில் மேன்மைபாராட்டு
5 கிறோம். நீங்கள் தேவனுடைய ராஜ்யத்தி
னிமித்தம் பாடு அநுபவிக்கிறவர்களாயிருக்க,
[5]அந்த ராஜ்யத்திற்கு நீங்கள் பாத்திரரென்
றெண்ணப்படும்படிக்கு, தேவன் நியாயமான
தீர்ப்புச் செய்கிறவரென்பதற்கு, [6]அதுவே
6 அத்தாட்சியாயிருக்கிறது. உங்களை உபத்திர
வப்படுத்துகிறவர்களுக்கு உபத்திரவத்தையும்,
[7]உபத்திரவப்படுகிற உங்களுக்கு எங்களோ
டேகூட இளைப்பாறுதலையும் பிரதி பலனாகக்
கொடுப்பது தேவனுக்கு நீதியாயிருக்கிறதே.
7 தேவனை [8]அறியாதவர்களுக்கும், [9]நம்முடைய
கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் சுவிசே
ஷத்திற்குக் கீழ்ப்படியாதவர்களுக்கும் [10]நீதி
யுள்ள ஆக்கினையைச் செலுத்தும்படிக்கு,
8 கர்த்தராகிய இயேசு தமது வல்லமையின்
தூதரோடும், ஜுவாலித்து எரிகிற அக்கினி
யோடும், வானத்திலிருந்துவெளிப்படும்போது
9 அப்படியாகும். அந்நாளிலே தம்முடைய [11]பரி
சுத்தவான்களில் மகிமைப்படத்தக்கவராயும்,
[12]நீங்கள் எங்களுடைய சாட்சியை விசுவாசித்
தபடியினாலே உங்களிடத்திலும், விசுவாசிக்கி
றவர்க ளெல்லாரிடத்திலும் ஆச்சரியப்படத்
10 தக்கவராயும், அவர் வரும்போது, அவர்கள்
[13]கர்த்தருடைய சந்நிதானத்திலிருந்தும், அவ
ருடைய வல்லமைபொருந்திய மகிமையிலி
ருந்தும் நீங்கலாகி, [14]நித்திய அழிவாகிய தண்
டனையை அடைவார்கள். ஆகையால், நம்மு 11
டைய தேவனும் கர்த்தராகிய இயேசுகிறிஸ்
துவும் அளிக்கும் கிருபையின்படியே, [15]நம்
முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின்
நாமம் உங்களிடத்திலும், நீங்கள் அவரிடத்தி
லும் மகிமைப்படும்பொருட்டாக; நம்முடைய 12
தேவன் உங்களைத் தமது அழைப்புக்குப் பாத்
திரராக்கவும், [16]தமது தயையுள்ள சித்தம் முழு
வதையும் விசுவாசத்தின் கிரியையையும் பல
மாய் உங்களிடத்தில் நிறைவேற்றவும் வேண்
டுமென்று, எப்பொழுதும் உங்களுக்காக
வேண்டிக்கொள்ளுகிறோம்.

அன்றியும், சகோதரரே, [17]நம்முடைய **2**
கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் வருகை
யையும், [18]நாம் அவரிடத்திலே சேர்க்கப்படுவ
தையுங்குறித்து, நாங்கள் உங்களை வேண்டிக்
கொள்ளுகிறது என்னவென்றால், ஒரு ஆவி 2
யினாலாவது, வார்த்தையினாலாவது, எங்களி
டத்திலிருந்து வந்ததாய்த் தோன்றுகிற ஒரு
நிருபத்தினாலாவது, கிறிஸ்துவினுடைய
நாள் சமீபமாயிருக்கிறதாகச் சொல்லப்பட்
டால், [19]உடனே சஞ்சலப்படாமலும் கலங்
காமலும் இருங்கள். எவ்விதத்தினாலும் ஒரு 3
வனும் உங்களை மோசம் போக்காதபடிக்கு
எச்சரிக்கையாயிருங்கள்; [20]ஏனெனில் விசு
வாசதுரோகம் முந்தி நேரிட்டு, [21]கேட்டின்
மகனாகிய [22]பாவ மனுஷன் வெளிப்பட்டா
லொழிய, அந்த நாள் வராது. அவன் 4
எதிர்த்து நிற்கிறவனாயும், தேவனென்னப்ப
டுவ தெதுவோ, ஆராதிக்கப்படுவ தெதுவோ,
[23]அவை யெல்லாவற்றிற்கும் மேலாகத் தன்னை
உயர்த்துகிறவனாயும், தேவனுடைய ஆலயத்
தில் தேவன்போல உட்கார்ந்து, தன்னைத்
தான் தேவனென்று காண்பிக்கிறவனாயும்
இருப்பான். நான் உங்களிடத்திலிருந்தபோது 5
இவைகளைச் சொன்னது உங்களுக்கு ஞாபக
மில்லையா? அவன் தன் காலத்திலே வெளிப் 6
படும்படிக்கு, இப்பொழுது அவனைத் தடை
செய்கிறது இன்னதென்றும் அறிந்திருக்கிறீர்
களே. அக்கிரமத்தின் ரகசியம் [24]இப்பொ 7
ழுதே கிரியை செய்கிறது; ஆனாலும் தடை

[1] 1 தெச. 1. 1
[2] 1 கொ. 1. 3
[3] 1 தெச. 1. 2, 3, 4
[4] 2 கொ. 9. 2. 1 தெச. 2. 3: 2. 14, 19, 20
[5] 1 தெச. 2. 14. எபி. 10. 32, 33
[6] பிலி. 1. 28
[7] வெளி. 6. 10
[8] சங். 79. 6. செப். 1. 6
[9] உபா. 32. 41, 43
[10] ரோ. 2. 8. எபி. 10. 27. 2 பே. 3. 7
[11] மத். 25. 31
[12] சங். 68. 35
[13] 2. 8. ஏசா. 2. 19
[14] பிலி. 3. 19. 2 பே. 3. 7
[15] 1 பே. 1. 7: 4. 14
[16] கொலோ. 1. 12. வெளி. 3. 4
[17] 1 தெச. 4. 16, 17
[18] மத். 24. 31
[19] மத். 24. 4-6. எபே. 5. 6. 1 யோ. 4. 1
[20] 1 தீமோ. 4. 1
[21] தானி. 7. 25. 1 யோ. 2. 18. வெளி. 13. 11, ழ
[22] யோ. 17. 12
[23] ஏசா. 14. 13. 1 கொ. 8. 5. வெளி. 13. 6
[24] 1 யோ. 2. 18: 4. 3

செய்கிறவன் நடுவிலிருந்து நீக்கப்படுமுன்
8 னே அது வெளிப்படாது. நீக்கப்படும்
போது, அந்த அக்கிரமக்காரன் வெளிப்படு
வான்; [1]அவனைக் கர்த்தர் தம்முடைய வாயின்
சுவாசத்தினாலே அழித்து, [2]தம்முடைய வரு
கையின் பிரசன்னத்தினாலே நாசம்பண்ணு
9 வார். அந்த அக்கிரமக்காரனுடைய வருகை
சாத்தானுடைய செயலின்படி [3]சகல வல்ல
மையோடும் அடையாளங்களோடும் பொய்
10 யான அற்புதங்களோடும், கெட்டுப்போகிற
வர்களுக்குள்ளே அநீதியினால் உண்டாகும்
சகலவித வஞ்சகத்தோடும் இருக்கும். [4]இர
ட்சிக்கப்படத்தக்கதாய்ச் சத்தியத்தின்மேலு
ள்ள அன்பை அவர்கள் அங்கிகரியாமல் போ
11 னபடியால் அப்படி நடக்கும். ஆகையால்
சத்தியத்தை விசுவாசியாமல் அநீதியில் பிரி
யப்படுகிற யாவரும் [5]ஆக்கினைக்குள்ளாக்கப்ப
12 டும்படிக்கு, அவர்கள் பொய்யை விசுவாசிக்
கத்தக்கதாகக் [6]கொடிய வஞ்சகத்தை தேவன்
அவர்களுக்கு அனுப்புவார்.
13 கர்த்தருக்குப் பிரியமான சகோதரரே, நீங்
கள் ஆவியினாலே பரிசுத்தமாக்கப்படுகிறதினா
லும், சத்தியத்தைவிசுவாசிக்கிறதினாலும் இரட்
சிப்படையும்படிக்கு, [7]ஆதிமுதல் தேவன் உங்
களைத் தெரிந்துகொண்டபடியினாலே, நாங்
கள் உங்களைக்குறித்து எப்பொழுதும் தேவனை
ஸ்தோத்திரிக்கக் கடனாளிகளாயிருக்கிறோம்.
14 நீங்கள் நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்
துவின் மகிமையை அடையும்பொருட்டாக
எங்கள் சுவிசேஷத்தினாலே [8]அந்த இரட்
15 சிப்புக்கு அவர் உங்களை அழைத்தார். ஆகை
யால், சகோதரரே, நீங்கள் நிலைகொண்டு,
[9]வார்த்தையினாலாவது நிருபத்தினாலாவது நாங்
கள் உங்களுக்கு உபதேசித்த முறைமைகளைக்
கைக்கொள்ளுங்கள்.
16 நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து
வும், [10]நம்மிடத்தில் அன்புகூர்ந்து நித்திய
ஆறுதலையும் [11]நல்நம்பிக்கையையும் கிரு
பையாய் நமக்குக் கொடுத்திருக்கிற நம்மு
17 டைய பிதாவாகிய தேவனும், உங்கள் இரு
தயங்களைத் தேற்றி, [12]எல்லா நல்வசனத்தி
லும் நற்கிரியையிலும் உங்களை ஸ்திரப்படுத்து
வாராக.

**3** கடைசியாக, சகோதரரே, உங்களிடத்
தில் கர்த்தருடைய வசனம் பரம்பி மகிமைப்
படுகிறதுபோல, எவ்விடத்திலும் பரம்பி மகி
2 மைப்படும்படிக்கும், துர்க்குணராகிய [13]பொல்
லாத மனுஷர் கையினின்று நாங்கள் விடுவிக்
கப்படும்படிக்கும், [14]எங்களுக்காக வேண்டிக்
கொள்ளுங்கள்; [15]விசுவாசம் எல்லாரிடத்திலு
3 மில்லையே. கர்த்தரோ உண்மையுள்ளவர்,
[16]அவர் உங்களை ஸ்திரப்படுத்தி, [17]தீமையி
4 னின்று விலக்கிக் காத்துக்கொள்ளுவார். மே
லும், நாங்கள் கட்டளையிடுகிறவைகளை நீங்
கள் செய்துவருகிறீர்களென்றும், இனிமே
லும் செய்வீர்களென்றும், [18]உங்களைக்குறித்
துக் கர்த்தருக்குள் நம்பிக்கையாயிருக்கிறோம்.
கர்த்தர் உங்கள் இருதயங்களை தேவனைப்பற் 5
றும் அன்புக்கும் கிறிஸ்துவின் பொறுமைக்
கும் நேராய் [19]நடத்துவாராக.
மேலும், சகோதரரே, எங்களிடத்தில் ஏற் 6
றுக்கொண்ட முறைமையின்படி நடவாமல்,
[20]ஒழுங்கற்று நடக்கிற எந்தச் சகோதரனையும்
நீங்கள் விட்டு விலகவேண்டுமென்று, நம்மு
டைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நா
மத்தினாலே, உங்களுக்குக் கட்டளையிடுகி
றோம். இன்னவிதமாய் எங்களைப் பின்பற்ற 7
வேண்டுமென்று நீங்கள் அறிந்திருக்கிறீர்களே;
[21]நாங்கள் உங்களுக்குள்ளே ஒழுங்கற்று நடவா
மலும், ஒருவனிடத்திலும் இலவசமாய்ச் சாப் 8
பிடாமலும், [22]உங்களில் ஒருவனுக்கும் பாரமா
யிராதபடிக்கு இரவும் பகலும் பிரயாசத்தோ
டும் வருத்தத்தோடும் வேலைசெய்து சாப்பிட்
டோம். உங்கள்மேல் பாரத்தை வைப்பதற் 9
கான அதிகாரம் எங்களுக்கு இல்லை யென்
பதினாலே அப்படிச்செய்யாமல், [23]நீங்கள் எங்
களைப் பின்பற்றும்படிக்கு நாங்கள் உங்களுக்கு
மாதிரியாயிருக்கவேண்டுமென்றே அப்படிச்
செய்தோம். ஒருவன் வேலைசெய்ய மனதில் 10
லாதிருந்தால் அவன் சாப்பிடவும் கூடாதெ
ன்று [24]நாங்கள் உங்களிடத்தில் இருந்தபோது
உங்களுக்குக் கட்டளையிட்டோமே. உங்க 11
ளில் சிலர் யாதொரு வேலையும் செய்யாமல்,
[25]வீண் அலுவற்காரராய், ஒழுங்கற்றுத் திரிகி
றார்களென்று கேள்விப்படுகிறோம். இப்ப 12
டிப்பட்டவர்கள் அமைதலோடே வேலைசெ
ய்து, [26]தங்கள் சொந்தச் சாப்பாட்டைச் சாப்
பிடவேண்டுமென்று, நம்முடைய கர்த்தராகிய
இயேசுகிறிஸ்துவினாலே அவர்களுக்குக் கட்
டளையிட்டுப் புத்திசொல்லுகிறோம். சகோ 13
தரரே, [27]நீங்கள் நன்மைசெய்வதிலே சோர்ந்து
போகாமலிருங்கள். மேலும், இந்த நிருபத்தில் 14
சொல்லிய எங்கள் வசனத்துக்கு ஒருவன் கீழ்ப்
படியாமற்போனால், [28]அவனைக் குறித்துக்கொ
ண்டு, அவன் வெட்கப்படும்படிக்கு அவனுட
னே கலவாதிருங்கள். ஆனாலும் அவனைச் 15
சத்துருவாக எண்ணாமல், [29]சகோதரனாக எண்
ணி, அவனுக்குப் புத்திசொல்லுங்கள்.
சமாதானத்தின் கர்த்தர்தாமே [30]எப்பொழு 16
தும் சகலவிதத்திலும் உங்களுக்குச் சமாதானத்
தைத் தந்தருளுவாராக. கர்த்தர் உங்களனைவ
ரோடுங்கூட இருப்பாராக.
பவுலாகிய நான் என் கையெழுத்தாலே 17
உங்களை வாழ்த்துகிறேன், [31]நிருபங்கள்தோ
றும் இதுவே அடையாளம்; இப்படியே எழு
துகிறேன். நம்முடைய கர்த்தராகிய இயேசு 18
கிறிஸ்துவின் கிருபை [32]உங்களனைவரோடுங்
கூட இருப்பதாக. ஆமென்.

1 ஏசா. 11. 4. தானி. 7. 10, 11. வெளி. 19. 15, 21
2 எபி. 10, 27
3 மத். 24. 24. யோ. 8. 41. எபே. 2. 2. வெளி. 13. 13; 19. 20
4 2 கொ. 2. 15; 4. 3
5 உபா. 32. 35. ரோ. 1. 32.
6 ஏசே. 14. 9. மத். 24. 5, 11. ரோ. 1. 24. 1 தீமோ. 4. 1
7 எபே. 1. 4. 1 தெச. 1. 4. 1 பே. 1. 2
8 யோ. 17. 22. 1 தெச. 2. 12. 1 பே. 5. 10
9 1 கொ. 11. 2; 16. 13. பிலி. 4. 1
10 யோ. 13. 1. 1 யோ. 4. 10. வெளி. 1. 5
11 1 பே. 1. 3
12 1 கொ. 1. 8 1 தெச. 3. 13. 1 பே. 5. 10
13 ரோ. 15. 31
14 எபே. 6. 19, 20. 1 தெச. 5. 25
15 அப். 28. 24. ரோ. 10. 16
16 1 கொ. 1. 9 1 தெச. 5. 24.
17 யோ. 17. 15. 2 பே. 2. 9
18 2 கொ. 7. 16
19 1 நாளா. 29. 18
20 ரோ. 16. 17. 1 கொ. 5. 11, 13. 1 தெச. 4. 11; 5. 14. 1 தீமோ. 6. 5
21 1 கொ. 4. 16 1 தெச. 1. 6, 7; 2. 10
22 அப். 18. 3; 20. 34. 2 கொ. 11. 9. 1 தெச. 2. 9
23 1 கொ. 9. 6 1 தெச. 2. 6
24 ஆதி. 3. 19. 1 தெச. 4. 11
25 1 தெச. 4. 11 1 தீமோ. 5. 13. 1 பே. 4. 15
26 எபே. 4. 28. 1 தெச. 4. 11
27 1 கொ. 15. 58. கலா. 6. 9
28 மத். 18. 17. 1 கொ. 5. 9. 11
29 லேவி. 19. 17. 1 தெச. 5. 14. தீத். 3. 10
30 ரோ. 16. 20. 1 தெச. 5. 23
31 1 கொ. 16. 21. கொலோ. 4. 18
32 ரோ. 16. 24

# THE FIRST EPISTLE TO TIMOTHY

# தீமோத்தேயுவுக்கு எழுதின

## முதலாம் நிருபம்

1 நம்முடையஇரட்சகராயிருக்கிறதேவனும்,
[1]நம்முடைய நம்பிக்கையாயிருக்கிற கர்த்தரா
கிய இயேசுகிறிஸ்துவும் கட்டளையிட்டபடி
யே, [2]இயேசுகிறிஸ்துவின் அப்போஸ்தலனு
2 யிருக்கிற பவுல், விசுவாசத்தில் உத்தம [3]குமா
ரனுகிய தீமோத்தேயுவுக்கு எழுதுகிறதாவது:
[4]நம்முடைய பிதாவாகிய தேவனாலும் நம்மு
டைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவினாலும்
கிருபையும் இரக்கமும் சமாதானமும் உண்
டாவதாக.
3 வேற்றுமையான உபதேசங்களைப் போதி
யாதபடிக்கும், [5]விசுவாசத்தினால் விளங்கும்
*தெய்வீக பக்திவிருத்திக்கு ஏதுவாயிராமல்,
[6]தர்க்கங்களுக்கு ஏதுவாயிருக்கிற கட்டுக்கதை
களையும் முடிவில்லாத வம்சவரலாறுகளையும்
கவனியாதபடிக்கும், நீ சிலருக்குக் கட்டளை
4 யிடும்பொருட்டாக, நான் மக்கெதோனியா
வுக்குப் போகும்போது [7]உன்னை எபேசு பட்
டணத்திலிருக்க வேண்டிக்கொண்டபடியே
5 செய்வாயாக. கற்பனையின் பொருள் என்ன
வெனில், [8]சுத்தமான இருதயத்திலும் நல்ம
னச்சாட்சியிலும் மாயமற்ற விசுவாசத்திலும்
பிறக்கும் அன்பே. இவைகளைச் சிலர் நோக்
காமல் [9]வீண்பேச்சுக்கு இடங்கொடுத்து வில
7 கிப்போனார்கள். தாங்கள் சொல்லுகிறது
இன்னதென்றும், தாங்கள் சாதிக்கிறது இன்
னதென்றும் அறியாதிருந்தும், [10]நியாயப்பிர
மாண போதகராயிருக்க விரும்புகிறார்கள்.
8 ஒருவன் நியாயப்பிரமாணத்தை நியாயப்படி
அநுசரித்தால், [11]நியாயப்பிரமாணம் நல்ல
9 தென்று அறிந்திருக்கிறோம். எங்களுக்குத்
தெரிந்திருக்கிறபடி, [12]நியாயப்பிரமாணம் நீதி
மானுக்கு விதிக்கப்படாமல், அக்கிரமக்கார
ருக்கும், அடங்காதவர்களுக்கும், பக்தியில்லா
தவர்களுக்கும், பாவிகளுக்கும், அசுத்தருக்கும்,
சீர்கெட்டவர்களுக்கும், தாய்தகப்பன்மாரை
அடிக்கிறவர்களுக்கும், கொலைபாதகருக்கும்,
10 வேசிக்கள்ளருக்கும், ஆண்புணர்ச்சிக்காரருக்
கும், மனுஷரைத் திருடுகிறவர்களுக்கும், பொ
ய்யருக்கும்,பொய்யாணை இடுகிறவர்களுக்கும்,
1 நித்தியானந்த தேவனுடைய மகிமையான
சுவிசேஷத்தின்படி [13]எனக்கு ஒப்புவிக்கப்பட்
டிருக்கிற ஆரோக்கியமான உபதேசத்திற்கு
எதிரிடையாயிருக்கிற [14]மற்றெந்தச் செய்கை
க்கும் விரோதமாய் விதிக்கப்பட்டிருக்கிறது.
12 என்னைப் பலப்படுத்துகிற நம்முடைய கர்த்
தராகிய இயேசுகிறிஸ்து என்னை உண்மை
யுள்ளவனென் றெண்ணி, [15]இந்த ஊழியத்
திற்கு ஏற்படுத்தினபடியால், அவரை ஸ்தோத்
திரிக்கிறேன். முன்னே நான் தூஷிக்கிறவ 13
னும், [16]துன்பப்படுத்துகிறவனும், கொடுமை
செய்கிறவனுமா யிருந்தேன்; அப்படி யிருந்
தும், [17]நான் அறியாமல் அவிசுவாசத்தினாலே
அப்படிச் செய்தபடியினால் இரக்கம் பெற்
றேன். நம்முடைய கர்த்தரின் கிருபை கிறிஸ்து 14
இயேசுவின்மேலுள்ள விசுவாசத்தோடும் அன்
போடுங்கூட என்னிடத்தில் பரிபூரணமாய்ப்
பெருகிற்று. பாவிகளை ரட்சிக்க கிறிஸ்து 15
இயேசு உலகத்தில் வந்தார் என்கிற வார்த்தை
[18]உண்மையும் எல்லா அங்கிகரிப்புக்கும் பாத்
திரமுமானது; அவர்களில் பிரதான பாவி நான்.
அப்படியிருந்தும், நித்திய ஜீவனை அடையும் 16
படி இனிமேல் இயேசுகிறிஸ்துவினிடத்தில்
விசுவாசமாயிருப்பவர்களுக்குத் [19]திருஷ்டாந்
தம் உண்டாகும்பொருட்டுப் பிரதான பாவி
யாகிய என்னிடத்தில் அவர் எல்லா நீடிய
பொறுமையையும் காண்பிக்கும்படிக்கு [20]இரக்
கம்பெற்றேன். நித்தியமும் [21]அழிவில்லாமை 17
யும் [22]அதரிசனமுமுள்ள [23]ராஜனுமாய், [24]தாம்
ஒருவரே ஞானமுள்ள தேவனுமாயிருக்கிறவ
ருக்கு, [25]கனமும் மகிமையும் சதாகாலங்களி
லும் உண்டாயிருப்பதாக. ஆமென்.
குமாரனுகிய தீமோத்தேயுவே, [26]உன்னைக் 18
குறித்து முன் உண்டான தீர்க்கதரிசனங்க
ளின்படியே, நீ அவைகளை முன்னிட்டு நல்ல
போராட்டம் பண்ணும்படி, இந்தக் கட்டளை
யை உனக்கு ஒப்புவிக்கிறேன்; [27]நீ விசுவாச
மும் நல்மனச்சாட்சியும் உடையவனாயிரு.
இந்த நல்மனச்சாட்சியைச் சிலர் தள்ளிவிட்டு, 19
[28]விசுவாசமாகிய கப்பலைச் சேதப்படுத்தினார்
கள். இமெனேயும் அலெக்சந்தரும் அப்ப 20
டிப்பட்டவர்கள், [29]அவர்கள் தூஷியாதபடி
சிட்சிக்கப்பட அவர்களைச் [30]சாத்தானிடத்தில்
ஒப்புக்கொடுத்தேன்.
நான் பிரதானமாய்ச் சொல்லுகிற புத்தி **2**
யென்னவெனில், எல்லா மனுஷருக்காகவும்
விண்ணப்பங்களையும் ஜெபங்களையும் வேண்
டுதல்களையும் ஸ்தோத்திரங்களையும் பண்ண
வேண்டும்; நாம் எல்லாப் பக்தியோடும் நல் 2
லொழுக்கத்தோடும் கலகமில்லாமல் அமைத
லுள்ள ஜீவனம் பண்ணும்படிக்கு, [31]ராஜாக்
களுக்காகவும், அதிகாரமுள்ள யாவருக்காக
வும் அப்படியே செய்யவேண்டும். நம்மு 3
டைய இரட்சகராகிய தேவனுக்கு முன்பாக

1 அப். 9. 15. தீத். 1. 3
2 கொலோ. 1. 27
3 அப். 16. 1. தீத. 1. 1
4 கலா. 1. 3. 1 பே. 1. 2
5 கலா. 1. 6, 7
* தேவ நியமத்துக்கு
6 6. 3, 4, 10, 20. 2 தீமோ. 2. 14, 16, 23
7 அப். 20. 1, 3
8 ரோ. 13. 8, 10. கலா. 5. 14. 2 தீமோ. 2. 22
9 2 தீமோ. 4. 10
10 ரோ. 1. 22
11 ரோ. 7. 12
12 கலா. 5. 23
13 6. 15. 1 கொ. 9. 17
14 2 தீமோ. 4. 3. தீத். 1. 9
15 1 கொ. 7. 25: 15. 10. கொலோ. 1. 25
16 அப். 8. 3. 1 கொ. 15. 9
17 லூ. 23. 34. அப். 26. 9
18 மத். 9. 13. லூ. 19. 10. ரோ. 5. 8 2 தீமோ. 2. 11. தீத். 3. 8
19 அப். 13. 39. ரோ. 15. 4
20 2 கொ. 4. 1
21 சங். 10. 16
22 ரோ. 1. 23
23 யோ. 1. 18
24 ரோ. 16. 27
25 1 நாளா. 29. 11
26 4. 14. 2 தீமோ. 2. 2
27 3. 9
28 6. 9
29 2 தீமோ. 2. 17: 4. 14
30 அப். 13. 45. 1 கொ. 5. 5
31 ரோ. 13. 1. ஞ

[1]அது நன்மையும் பிரியமுமாயிருக்கிறது.
4 எல்லா மனுஷரும் இரட்சிக்கப்படவும், [2]சத்
தியத்தை அறிகிற அறிவை அடையவும்,
5 அவர் சித்தமுள்ளவராயிருக்கிறார். தேவன்
ஒருவரே, [3]தேவனுக்கும் மனுஷருக்கும் மத்
6 தியஸ்தரும் [4]ஒருவரே. எல்லாரையும் மீட்
கும்பொருளாகத் தம்மை ஒப்புக்கொடுத்த மனு
ஷனாகிய [5]கிறிஸ்து இயேசு அவரே; இதற்
குரிய சாட்சி ஏற்றகாலங்களில் விளங்கிவரு
7 கிறது. இதற்காகவே நான் பிரசங்கியாகவும்,
அப்போஸ்தலனாகவும், புறஜாதிகளுக்கு விசு
வாசத்தையும் சத்தியத்தையும் விளக்கப்பண்
ணுகிற போதகனாகவும் [6]நியமிக்கப்பட்டிருக்
கிறேன்; [7]நான் பொய் சொல்லாமல் கிறிஸ்து
வுக்குள் உண்மையைச் சொல்லுகிறேன்.
8 அன்றியும், புருஷர்கள் கோபமும் *தர்க்க
முமில்லாமல் பரிசுத்தமான கைகளை உயர்த்தி,
[8]எல்லா இடங்களிலேயும் ஜெபம் பண்ண
9 வேண்டுமென்று விரும்புகிறேன். ஸ்திரீக
ளும் மயிரைப் பின்னுதலினாலாவது, பொன்
னினாலாவது, முத்துக்களினாலாவது, விலை
யேறப்பெற்ற வஸ்திரத்தினாலாவது தங்களை
10 அலங்கரியாமல், தகுதியான வஸ்திரத்தினா
லும், நாணத்தினாலும், தெளிந்த புத்தியினா
லும், [9]தேவபக்தியுள்ளவர்களென்று சொல்
லிக்கொள்ளுகிற ஸ்திரீகளுக்கு ஏற்றபடியே
நற்கிரியைகளினாலும், தங்களை அலங்கரிக்க
11 வேண்டும். ஸ்திரீயானவள் எல்லாவற்றிலும்
அடக்கமுடையவளாயிருந்து, [10]அமைதலோடு
12 கற்றுக்கொள்ளக்கடவள். உபதேசம் பண்
ணவும், புருஷன்மேல் அதிகாரஞ் செலுத்த
வும், ஸ்திரீயானவளுக்கு நான் உத்தரவுகொடு
க்கிறதில்லை; [11]அவள் அமைதலாயிருக்கவேண்
13 டும். என்னத்தினாலெனில் [12]முதலாவது
ஆதாம் உருவாக்கப்பட்டான், பின்பு ஏவாள்
14 உருவாக்கப்பட்டாள். மேலும், ஆதாம் வஞ்
சிக்கப்படவில்லை, [13]ஸ்திரீயானவளே வஞ்சிக்
15 கப்பட்டு மீறுதலுக்கு உட்பட்டாள். அப்ப
டியிருந்தும், தெளிந்த புத்தியோடு விசுவாசத்
திலும் அன்பிலும் பரிசுத்தத்திலும் நிலைகொ
ண்டிருந்தால், [14]பிள்ளைப்பேற்றினாலே இரட்
சிக்கப்படுவாள்.

3 கண்காணிப்பை விரும்புகிறவன் நல்லவே
லையை விரும்புகிறான், இது [15]உண்மையான
2 வார்த்தை. ஆகையால் கண்காணியானவன்
குற்றஞ்சாட்டப்படாதவனும், [16]ஒரே மனை
வியை உடைய புருஷனும், ஜாக்கிரதையுள்ள
வனும், தெளிந்த புத்தியுள்ளவனும், யோக்கிய
தையுள்ளவனும், அந்நியரை உபசரிக்கிறவ
னும், [17]போதக சமர்த்தனுமாய் இருக்கவேண்
3 டும், அவன் மதுபானப்பிரியனும், [18]அடிக்
கிறவனும், இழிவான ஆதாயத்தை இச்சிக்
கிறவனுமாயிராமல், [19]பொறுமையுள்ளவனும்,
சண்டைபண்ணாதவனும், பண ஆசையில்லா
4 தவனுமாயிருந்து, தன் சொந்தக் குடும்பத்தை
நன்றாய் நடத்துகிறவனும், [20]தன் பிள்ளைக
ளைச் சகல நல்லொழுக்க முள்ளவர்களாகக்

1 ரோ. 12. 2. 2 தீமோ. 1. 9
2 யோ. 3. 15, 16; 17. 3. 2 பே. 3. 9
3 ரோ. 3. 30
4 எபி. 9. 15
5 மத். 20. 28
6 எபே. 3. 7, 8
7 ரோ. 11. 13
* சந்தேகமில்லாமல்
8 யோ. 4. 21. எபி. 10. 22
9 1 பே. 3. 3, 4
10 1 கொ. 14. 34
11 எபே. 5. 24
12 1 கொ. 11. 8, 9
13 ஆதி. 3. 6. 2 கொ. 11. 3
14 ஆதி. 3. 16. மத். 1. 21
15 அப். 20. 28. எபே. 4. 12. பிலி. 1. 1
16 தீத். 1. 6.
17 2 தீமோ. 2. 24
18 தீத். 1. 7
19 2 தீமோ. 2. 24. 1 பே. 5. 2
20 சங். 101. 2. தீத். 1. 6
21 லூக். 10. 18. ஏசா. 14. 12. யூதா 6.
22 அப். 22. 12. 1 தெச. 4. 12. 2 தீமோ. 2. 26
23 அப். 6. 3
24 லேவி. 10. 9. எசே. 44. 21
25 3. 9. யோ. 1. 19. எபே. 1. 10
26 தீத். 2. 3
27 4. வச.
28 மத். 25. 21
† அந்தஸ்தையும்
29 2 தீமோ. 2. 1
30 எபே. 2. 21, 22. 2 தீமோ. 2. 20
31 1 கொ. 2. 7
‡ அவர்
32 யோ. 1. 14. 1 யோ. 1. 2
33 மத். 3. 16. யோ. 16. 8, 9. ரோ. 1. 5. 1 பே. 3. 18. 1 யோ. 5. 6
34 மத். 4. 11. லூ. 2. 13. எபே. 3. 10. 1 பே. 1. 12
35 அப். 13. 46, 48. ரோ. 10. 12, 18
36 கொலோ. 1. 6, 23
37 லூ. 24. 51. அப். 1. 9. 1 பே. 3. 22
38 தானி. 11. 35. மத். 24. 5-12. 2 பே. 2. 1, 3
39 வெளி. 16. 14
40 1 கொ. 7. 28, 36, 38
41 பிர. 5. 18. ரோ. 14. 6. 1 கொ. 10. 30

கீழ்ப்படியப்பண்ணுகிறவனுமாயிருக்கவேண்
டும். ஒருவன் தன் சொந்தக்குடும்பத்தை 5
நடத்த அறியாதிருந்தால், தேவனுடைய சபை
யை எப்படி விசாரிப்பான்? அவன் இறு 6
மாப்படைந்து, [21]பிசாசு அடைந்த ஆக்கினை
யிலே விழாதபடிக்கு, நூதன சீஷனாயிருக்கக்
கூடாது. அவன் நிந்தனையிலும், பிசாசின் 7
கண்ணியிலும் விழாதபடிக்கு, [22]புறம்பானவர்
களால் நற்சாட்சி பெற்றவனாயுமிருக்கவேண்
டும். அந்தப்படியே, [23]உதவிக்காரரும் இருநாக் 8
குள்ளவர்களாயும், [24]மதுபானப்பிரியராயும்,
இழிவான ஆதாயத்தை இச்சிக்கிறவர்களா
யும் இராமல், நல்லொழுக்க முள்ளவர்களா
யும், விசுவாசத்தின் இரகசியத்தைச் [25]சுத்த மன 9
ச்சாட்சியிலே காத்துக்கொள்ளுகிறவர்களாயும்
இருக்கவேண்டும். மேலும், இவர்கள் முன் 10
னதாகச் சோதிக்கப்படவேண்டும்; குற்றஞ்
சாட்டப்படாதவர்களானால் உதவிக்காரராக
ஊழியஞ்செய்யலாம். அந்தப்படியே [26]ஸ்தி 11
ரீகளும் நல்லொழுக்க முள்ளவர்களும், அவ
தூறு பண்ணாதவர்களும், தெளிந்த புத்தியுள்ள
வர்களும், எல்லாவற்றிலேயும் உண்மையுள்ள
வர்களுமாயிருக்கவேண்டும். மேலும், உதவிக் 12
காரரானவர்கள் ஒரே மனைவியையுடைய புரு
ஷருமாய், [27]தங்கள் பிள்ளைகளையும் சொந்தக்
குடும்பங்களையும் நன்றாய் நடத்துகிறவர்களு
மாயிருக்கவேண்டும். இப்படி உதவிக்காரரு 13
டைய ஊழியத்தை நன்றாய்ச் செய்கிறவர்கள்
[28]தங்களுக்கு நல்ல †நிலையையும், [29]கிறிஸ்து
இயேசுவைப்பற்றும் விசுவாசத்தில் மிகுந்த
தைரியத்தையும் அடைவார்கள்.
நான் உன்னிடத்திற்குச் சீக்கிரமாய் வரு 14
வேனென்று நம்பியிருக்கிறேன். தாமதிப்பே 15
னாகில், தேவனுடைய வீட்டிலே நடக்க
வேண்டிய வகையை நீ அறியும்படி இவை
களை உனக்கு எழுதுகிறேன்; [30]அந்த வீடு
ஜீவனுள்ள தேவனுடைய சபையாய்ச் சத்தி
யத்துக்குத் தூணும் ஆதாரமுமாயிருக்கிறது.
அன்றியும், [31]தேவபக்திக்குரிய இரகசியமா 16
னது யாவரும் ஒப்புக்கொள்ளுகிறபடியே
மகா மேன்மையுள்ளது. ‡தேவன் [32]மாம்சத்
திலே வெளிப்பட்டார், [33]ஆவியிலே நீதியுள்
ளவரென்று விளங்கப்பட்டார், [34]தேவதூதர்க
ளால் காணப்பட்டார், [35]புறஜாதிகளிடத்தில்
பிரசங்கிக்கப்பட்டார், [36]உலகத்திலே விசுவா
சிக்கப்பட்டார், [37]மகிமையிலே ஏறெடுத்துக்
கொள்ளப்பட்டார்.

ஆகிலும், ஆவியானவர் வெளிப்படை 4
யாய்ச் சொல்லுகிறபடி, [38]பிற்காலங்களிலே
மனச்சாட்சியில் சூடுண்ட பொய்யருடைய
மாயத்தினாலே சிலர் வஞ்சிக்கிற ஆவிகளுக்கும்
[39]பிசாசுகளின் உபதேசங்களுக்கும் செவிகொ
டுத்து, விசுவாசத்தைவிட்டு விலகிப்போவார்
கள். விவாகம்பண்ணாதிருக்கவும், [40]விசுவா 2,3
சிகளும் சத்தியத்தை அறிந்தவர்களும் ஸ்தோத்
திரத்தோடே அநுபவிக்கும்படி [41]தேவன்
படைத்த போஜன பதார்த்தங்களை விலக்கவும்

வேண்டுமென்று அந்தப் பொய்யர் கட்டளையி
4 டுவார்கள். தேவன் படைத்ததெல்லாம் நல்ல
தாயிருக்கிறது; [1]ஸ்தோத்திரத்தோடே ஏற்
றுக்கொள்ளப்படுமாகில் ஒன்றும் தள்ளப்படத்
5 தக்கதல்ல. அது தேவவசனத்தினாலும் ஜெபத்
தினாலும் பரிசுத்தமாக்கப்படும்.
6 இவைகளை நீ சகோதரருக்குப் போதித்து
வந்தால், விசுவாசத்திற்குரிய வார்த்தைகளி
லும் [2]நீ அநுசரித்த நற்போதகத்திலும் தேறின
வனாகி, இயேசுகிறிஸ்துவுக்கு நல்ல ஊழி
7 யக்காரனாயிருப்பாய். சீர்கேடும் கிழவிகள் பே
ச்சுமாயிருக்கிற [3]கட்டுக்கதைகளுக்கு விலகி,
8 தேவபக்திக்கேதுவாக முயற்சிபண்ணு. சரீர
முயற்சி அற்பபிரயோஜனமுள்ளது; [4]தேவ
பக்தியானது [5]இந்த ஜீவனுக்கும் இதற்குப்
பின்வரும் ஜீவனுக்கும் வாக்குத்தத்தமுள்ளதா
கையால் [6]எல்லாவற்றிலும் பிரயோஜன முள்
9 ளது. இந்த வார்த்தை உண்மையும் எல்லா அங்
10 கிகரிப்புக்கும் பாத்திரமுமாயிருக்கிறது. இதி
னிமித்தம் பிரயாசப்படுகிறோம், நிந்தையும் அ
டைகிறோம்; ஏனெனில் எல்லா மனுஷருக்
கும், விசேஷமாக விசுவாசிகளுக்கும் இரட்ச
கராகிய [7]ஜீவனுள்ள தேவன்மேல் நம்பிக்கை
11 வைத்திருக்கிறோம். இவைகளை நீ கட்டளை
12 யிட்டுப் போதித்துக்கொண்டிரு. உன் இள
மையைக்குறித்து ஒருவனும் உன்னை அசட்
டை பண்ணாதபடிக்கு, [8]நீ வார்த்தையிலும்,
நடக்கையிலும், அன்பிலும், ஆவியிலும், விசு
வாசத்திலும், கற்பிலும், விசுவாசிகளுக்கு
13 மாதிரியாயிரு. நான் வருமளவும் வாசிக்கிற
திலும் புத்திசொல்லுகிறதிலும் உபதேசிக்கிற
14 திலும் ஜாக்கிரதையாயிரு. மூப்பராகிய சங்
கத்தார் உன்மேல் கைகளை வைத்தபோது
[9]தீர்க்கதரிசனத்தினால் [10]உனக்கு அளிக்கப்
15 பட்ட [11]வரத்தைப்பற்றி அசதியாயிராதே. நீ
தேறுகிறது யாவருக்கும் விளங்கும்படி இவை
களையே சிந்தித்துக்கொண்டு, இவைகளிலே
16 நிலைத்திரு. உன்னைக்குறித்தும் உபதேசத்
தைக்குறித்தும் எச்சரிக்கையாயிரு, இவைக
ளில் நிலைகொண்டிரு, [12]இப்படிச் செய்வாயா
னால், உன்னையும் உன் உபதேசத்தைக் கேட்
பவர்களையும் இரட்சித்துக்கொள்ளுவாய்.

5 முதிர்வயதுள்ளவனைக் கடிந்துகொள்ளா
மல், அவனைத் தகப்பனைப்போலவும், பாலிய
2 புருஷரைச் சகோதரரைப்போலவும், முதிர்
வயதுள்ள ஸ்திரீகளைத் தாய்களைப்போலவும்,
பாலிய ஸ்திரீகளை எல்லாக் கற்புடன் சகோத
ரிகளைப்போலவும் பாவித்து, புத்திசொல்லு.
3 உத்தம விதவைகளாகிய [13]விதவைகளைக் கனம்
4 பண்ணு. விதவையானவளுக்குப் பிள்ளைக
ளாவது, பேரன் பேர்த்திகளாவது இருந்தால்,
இவர்கள் முதலாவது தங்கள் சொந்தக் குடும்
பத்தைத் தேவபக்தியாய் விசாரித்து, [14]பெற்
றோர் செய்த நன்மைகளுக்குப் பதில் நன்மை
களைச் செய்யக் கற்றுக்கொள்ளக்கடவர்கள்;
அது நன்மையும் தேவனுக்கு முன்பாகப் பிரி
5 யமுமாயிருக்கிறது. உத்தம விதவையாயிருந்து
தனிமையாயிருக்கிறவள் தேவனிடத்தில் நம்
பிக்கையுள்ளவளாய், [15]இரவும் பகலும் வேண்டு
தல்களிலும் ஜெபங்களிலும் நிலைத்திருப்பாள்.
சுகபோகமாய் வாழ்கிறவள் [16]உயிரோடே 6
செத்தவள். அவர்கள் குற்றஞ்சாட்டப்படா 7
தவர்களாயிருக்கும்படி இவைகளைக் கட்டளை
யிடு. ஒருவன் தன் சொந்த ஜனங்களையும், 8
விசேஷமாகத் தன் வீட்டாரையும், விசாரியா
மற்போனால், [17]அவன் விசுவாசத்தை மறுத
லித்தவனும், அவிசுவாசியிலும் கெட்டவனு
மாயிருப்பான். அறுபது வயதுக்குக் குறை 9
யாதவளும், [18]ஒரே புருஷனுக்கு மனைவியா
யிருந்தவளுமாகி, பிள்ளைகளை வளர்த்து, [19]அந் 10
நியரை உபசரித்து, [20]பரிசுத்தவான்களுடைய
கால்களைக் கழுவி, உபத்திரவப்படுகிறவர்களு
க்கு உதவிசெய்து, சகலவித நற்கிரியைகளை
யும் ஜாக்கிரதையாய் நடப்பித்து, இவ்வித
மாய் நற்கிரியைகளைக்குறித்து நற்சாட்சிபெற்
றவளுமாயிருந்தால், அப்படிப்பட்ட விதவை
யையே விதவைகள் கூட்டத்தில் சேர்த்துக்
கொள்ளவேண்டும். இளயவயதுள்ள வித 11
வைகளை அதிலே சேர்த்துக்கொள்ளாதே;
ஏனெனில், அவர்கள் கிறிஸ்துவுக்கு விரோத
மாய்க் காமவிகாரங் கொள்ளும்போது விவா
கம்பண்ண மனதாகி, முதலில் கொண்டி 12
ருந்த விசுவாசத்தை விடுவதினாலே, ஆக்கி
னைக்குட்படுவார்கள். அதுவுமல்லாமல், அவர் 13
கள் சோம்பலுள்ளவர்களாய், வீடுவீடாய்த்
திரியப் பழகுவார்கள்; [21]சோம்பலுள்ளவர்க
ளாய் மாத்திரமல்ல, அலப்புகிறவர்களாயும்
வீணலுவற்காரிகளாயும் தகாத காரியங்களைப்
பேசுகிறவர்களாயுமிருப்பார்கள். ஆகையால் 14
இளயவயதுள்ள விதவைகள் விவாகம்பண்ண
வும், பிள்ளைகளைப் பெறவும், வீட்டை *நடத்
தவும், [22]விரோதியானவன் நிந்திக்கிறதற்கு
இடமுண்டாக்காமலிருக்கவும் வேண்டுமென்
றிருக்கிறேன். ஏனெனில் இதற்குமுன்னே 15
சிலர் சாத்தானைப் பின்பற்றி விலகிப்போனார்
கள். விசுவாசியாகிய ஒருவனிடத்திலாவது 16
ஒருத்தியிடத்திலாவது விதவைகளிருந்தால்,
அவர்கள் இவர்களுக்கு உதவிசெய்யக்கடவர்
கள்; சபையானது உத்தம விதவைகளானவர்க
ளுக்கு உதவிசெய்யவேண்டியதாகையால் அந்
தப் பாரத்தை அதின்மேல் வைக்கக்கூடாது.
நன்றாய் விசாரணை செய்கிற மூப்பர்களை, 17
விசேஷமாகத் திருவசனத்திலும் உபதேசத்
திலும் பிரயாசப்படுகிறவர்களை, [23]இரட்டிப்
பான †கனத்திற்குப் பாத்திரராக எண்ண
வேண்டும். போரடிக்கிற மாட்டை வாய்கட் 18
டாயாக என்றும், [24]வேலையாள் தன் கூலிக்
குப் பாத்திரனாயிருக்கிறான் என்றும், வேத
வாக்கியம் சொல்லுகிறதே. மூப்பனானவனு 19
க்கு விரோதமாக ஒருவன் ‡செய்யும் பிராதை
[25]இரண்டு மூன்று சாட்சிகள் இல்லாமல் நீ
ஏற்றுக்கொள்ளக்கூடாது. மற்றவர்களுக்குப் 20
பயமுண்டாகும்படி, [26]பாவஞ்செய்தவர்களை
எல்லாருக்கும் முன்பாகக் கடிந்துகொள். நீ 21

[1] ரோ. 14. 14, 20. 1 கொ. 10. 25. தீத். 1. 15
[2] ரோ. 15. 16. 2 தெச. 3. 14, 15. 1 பே. 2. 2
[3] தீத். 1. 14
[4] 1 கொ. 8. 8.
[5] 6. 6. சங். 84. 11. மத். 6. 33: 19. 29. ரோ. 8. 28
[6] 1. 15
[7] 2 கொ. 5. 12
[8] 1 கொ. 16. 11. தீத். 2. 7, 15. 1 பே. 5. 3
[9] அப். 13. 3
[10] 1. 18 *
[11] 2 தீமோ. 1. 6
[12] அப். 20. 28. ரோ. 11. 14. 1 கொ. 9. 22. யாக். 5. 20
[13] 5, 16. வச
[14] மத். 15. 4. எபே. 6. 1, 2
[15] லூ. 2. 37: 18. 1. அப். 26. 7. 1 கொ. 7. 32
[16] யாக். 5. 5
[17] ஏசா. 58. 7. மத். 18. 17. கலா. 6. 10. 2 தீமோ. 3. 5
[18] லூ. 2. 36
[19] அப். 16. 15. எபி. 13. 2. 1 பே. 4. 9
[20] லூ. 7. 38, 44. யோ. 13. 5, 14
[21] 2 தெச. 3. 11
* விசாரிக்கவும்
[22] 1 கொ. 7. 9. தீத். 2. 8
[23] ரோ. 12. 8. 1 கொ. 9. 10, 14. 1 தெச. 5. 12, 13. எபி. 13. 7, 17
† சம்பளத்துக்கு
[24] உபா. 25. 4. லூ. 10. 7. 1 கொ. 9. 9
‡ சாற்றுங்குற்றத்தை
[25] உபா. 19. 15
[26] உபா. 13. 11. லேவி. 19. 17. கலா. 2. 11, 14. தீத். 1. 13

பட்சபாதத்தோடே ஒன்றும் செய்யாமலும்,
[1]விசாரிக்குமுன் நிருணயம்பண்ணாமலும், இ
வைகளைக் காத்து நடக்கும்படி, தேவனுக்கும்,
கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுக்கும், [2]தெரிந்து
கொள்ளப்பட்ட தூதருக்கும் முன்பாக, [3]உறு
22 தியாய்க் கட்டளையிடுகிறேன். ஒருவன்மே
லும் சீக்கிரமாய்க் [4]கைகளை வையாதே; [5]மற்
றவர்கள் செய்யும் பாவங்களுக்கும் உடன்
படாதே; உன்னைச் *சுத்தவானாகக் காத்துக்
23 கொள். நீ இனிமேல் தண்ணீர்மாத்திரம்
குடியாமல், உன் வயிற்றிற்காகவும், உனக்கு
அடிக்கடி நேரிடுகிற பலவீனங்களுக்காகவும்,
[6]கொஞ்சம் திராட்சரசமும் கூட்டிக்கொள்.
24 சிலருடைய பாவங்கள் வெளியரங்கமாயிருந்து
நியாயத்தீர்ப்புக்கு முந்திக்கொள்ளும்; [7]சிலரு
டைய பாவங்கள் அவர்களைப் பின்தொடரும்.
25 அப்படியே சிலருடைய நற்கிரியைகளும் வெ
ளியரங்கமாயிருக்கும்; அப்படி இராதவைக
ளும் மறைந்திருக்கமாட்டாது.

6 தேவனுடைய நாமமும் உபதேசமும் தூ
ஷிக்கப்படாதபடிக்கு, அடிமைத்தன நுகத்
திற்குட்பட்டிருக்கிற வேலைக்காரர் யாவரும்
[8]தங்கள் எஜமான்களை எல்லாக் கனத்திற்கும்
பாத்திரரென்று எண்ணிக்கொள்ளக்கடவர்
2 கள். விசுவாசிகளாகிய எஜமான்களை உடை
யவர்கள், [9]தங்கள் எஜமான்கள் சகோதரரா
யிருக்கிறதினாலே அவர்களை அசட்டைபண்
ணாமல், நல்வேலையின் பலனைப் பெற்றுக்
கொள்ளுகிற அவர்கள் விசுவாசிகளும் பிரிய
ருமா யிருக்கிறபடியால், அவர்களுக்கு அதிக
மாய் ஊழியஞ்செய்யக்கடவர்கள்; இந்தப்படி
யே போதித்துப் புத்திசொல்லு.
3 ஒருவன் நம்முடைய கர்த்தராகிய இயேசு
கிறிஸ்துவின் [10]ஆரோக்கியமான வசனங்களை
யும், [11]தேவபக்திக்கேற்ற உபதேசங்களையும்
ஒப்புக்கொள்ளாமல், வேற்றுமையான உப
4 தேசங்களைப் போதிக்கிறவனானால், அவன்
இறுமாப்புள்ளவனும், [12]ஒன்றும் அறியாத
வனும், தர்க்கங்களையும் வாக்குவாதங்களையும்
பற்றி நோய்கொண்டவனுமா யிருக்கிறான்.
அவைகளாலே பொறாமையும், சண்டையும்,
தூஷணங்களும், பொல்லாத சம்சயங்களு
5 முண்டாகி, கெட்ட சிந்தையுள்ளவர்களும்
சத்திய மில்லாதவர்களும் [13]தேவபக்தியை
ஆதாயத்தொழிலென்று எண்ணுகிறவர்களுமா
யிருக்கிற மனுஷர்களால் உண்டாகும் மாறு
பாடான தர்க்கங்களும் பிறக்கும்; [14]இப்படிப்
6 பட்டவர்களை விட்டு விலகு. போதுமென்கிற
மனதுடனேகூடிய தேவபக்தியே [15]மிகுந்த
7 ஆதாயம். உலகத்திலே நாம் ஒன்றும் கொண்
டுவந்ததுமில்லை, [16]இதிலிருந்து நாம் ஒன்றும்
கொண்டுபோவதுமில்லை என்பது நிச்சயம்.
8 உண்ணவும் உடுக்கவும் நமக்கு உண்டாயிருந்
தால் [17]அது போதுமென்றிருக்கக்கடவோம்.
9 ஐசுவரியவான்களாக விரும்புகிறவர்கள் சோத
னையிலும் கண்ணியிலும், [18]மனுஷரைக் கேட்
டிலும் அழிவிலும் அமிழ்த்துகிற மதிகேடும்
சேதமுமான பலவித இச்சைகளிலும் விழு
கிறார்கள். பணஆசை [19]எல்லாத் தீமைக்கும் 10
வேராயிருக்கிறது; சிலர் அதை இச்சித்து, விசு
வாசத்தை விட்டு வழுவி, அநேக வேதனை
களாலே தங்களை உருவக் குத்திக்கொண்டி
ருக்கிறார்கள்.
நீயோ, தேவனுடைய மனுஷனே, [20]இ 11
வைகளை விட்டோடி, நீதியையும் தேவபக்தி
யையும் விசுவாசத்தையும் அன்பையும் பொ
றுமையையும் சாந்தகுணத்தையும் அடையும்
படி †நாடு. விசுவாசத்தின் நல்ல போராட் 12
டத்தைப் போராடு, [21]நித்தியஜீவனைப் பற்றிக்
கொள், அதற்காகவே நீ அழைக்கப்பட்டாய்;
அநேக சாட்சிகளுக்கு முன்பாக நல்ல அறிக்
கை பண்ணினவனுமாயிருக்கிறாய். நம்மு 13
டைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து பிரசன்ன
மாகும்வரைக்கும், [22]நீ இந்தக் கற்பனையை
மாசில்லாமலும் குற்றமில்லாமலும் கைக்கொ
ள்ளும்படிக்கு, எல்லாவற்றையும் உயிரோ 14
டிருக்கச் செய்கிற தேவனுடைய சந்நிதானத்
திலேயும், [23]பொந்தியுபிலாத்துவின் முன்னி
ன்று நல்ல அறிக்கையைச் சாட்சியாக விளங்
கப்பண்ணின கிறிஸ்து இயேசுவினுடைய சந்
நிதானத்திலேயும் உனக்குக் கட்டளையிடுகி
றேன். அந்தப் பிரசன்னமாகுதலை தேவன் 15
தம்முடைய காலங்களில் வெளிப்படுத்துவார்.
[24]அவரே நித்தியானந்தமுள்ள ஏகசக்கராதிபதி
யும், [25]ராஜாதி ராஜாவும், கர்த்தாதி கர்த்தாவும்,
ஒருவராய், [26]சாவாமையுள்ளவரும், [27]சேரக் 16
கூடாத ஒளியில் வாசம் பண்ணுகிறவரும்,
மனுஷரில் ஒருவரும் கண்டிராதவரும், [28]கா
ணக் கூடாதவருமாயிருக்கிறவர்; [29]அவருக்கே
கனமும் நித்திய வல்லமையும் உண்டாயிருப்
பதாக. ஆமென்.
இவ்வுலகத்திலே ஐசுவரிய முள்ளவர்கள் 17
இறுமாப்பான சிந்தையுள்ளவர்களா யிராம
லும், நிலையற்ற ஐசுவரியத்தின்மேல் நம்பிக்
கைவையாமலும், [30]நாம் அநுபவிக்கிறதற்குச்
சகலவித நன்மைகளையும் நமக்குச் சம்பூரண
மாய்க் கொடுக்கிற ஜீவனுள்ள தேவன்மேல்
நம்பிக்கை வைக்கவும், நன்மை செய்யவும், 18
நற்கிரியைகளில் ஐசுவரியவான்களாகவும்,
[31]தாராளமாய்க் கொடுக்கிறவர்களும், உதார
குணமுள்ளவர்களுமா யிருக்கவும், நித்திய 19
ஜீவனைப் பற்றிக்கொள்ளும்படி [32]வருங்காலத்
திற்காகத் தங்களுக்கு நல்ல ஆதாரத்தைப்
பொக்கிஷமாக வைக்கவும் அவர்களுக்குக்
கட்டளையிடு.
ஓ தீமோத்தேயுவே, உன்னிடத்தில் ஒப்பு 20
விக்கப்பட்டதை நீ காத்துக்கொண்டு, [33]சீர்
கேடான வீண்பேச்சுகளுக்கும், ஞானமென்று
பொய்யாய்ப் பேர்பெற்றிருக்கிற கொள்கை
யின் விபரீதங்களுக்கும் விலகு. சிலர் அதைப் 21
பாராட்டி, விசுவாசத்தைவிட்டு வழுவிப்போ
னார்கள்.
[34]கிருபையானது உன்னோடேகூட இருப்
பதாக. ஆமென்.

1 உபா. 1. 17
2 வெளி. 12. 7-9
3 2 தீமோ. 4. 1
4 அப். 13. 3. 2 தீமோ. 1. 6
5 2 யோ. 11. வச
* கற்புள்ளவனாக
6 நீதி. 31. 6
7 கலா. 5. 19
8 எபே. 6. 5. 1 பே. 2. 18
9 கொலோ. 4. 1
10 2 தீமோ. 1. 13
11 தீத். 1. 1
12 1 கொ. 8. 2
13 1 கொ. 11. 16 தீத். 1. 11. 2 பே. 2. 3
14 ரோ. 16. 17. 2 தீமோ. 3. 5
15 நீதி. 15. 16. எபி. 13. 5
16 சங். 49. 17
17 ஆதி. 28. 20. எபி. 13. 5
18 நீதி. 28. 20. மத். 13. 22. யாக். 5. 1
19 யாத். 23. 8
20 உபா. 33. 1. 2 தீமோ. 2. 22: 3. 17
† தொடரு
21 1 கொ. 9. 25, 26. 2 தீமோ. 4. 7
22 5. 21. பிலி. 2. 15. 1 தெச. 5. 23
23 யோ. 18. 36, 37
24 1. 17
25 வெளி. 17. 14
26 1. 17
27 வெளி. 1. 16, 17
28 யாத். 33. 20
29 யூதா 25. வச. வெளி. 1. 6
30 சங். 62. 10. பிர. 5. 18, 19. மத். 10. 24. 1 தெச. 1. 9
31 லூக். 12. 21. ரோ. 12. 13. கலா. 6. 6
32 மத். 6. 20. பிலி. 3. 14
33 தீத். 1. 14
34 2 தீமோ. 2. 18

THE SECOND EPISTLE TO TIMOTHY

# தீமோத்தேயுவுக்கு எழுதின

## இரண்டாம் நிருபம்

**1** கிறிஸ்து இயேசுவினால் உண்டாயிருக்கிற
ஜீவனைப்பற்றிய [1]வாக்குத்தத்தத்தின்படி, தேவ
னுடைய சித்தத்தினாலே, இயேசுகிறிஸ்து
2 வின் [2]அப்போஸ்தலனாயிருக்கிற பவுல், பிரி
யமுள்ள குமாரனாகிய [3]தீமோத்தேயுவுக்கு
எழுதுகிறதாவது: பிதாவாகிய தேவனாலும்
நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவி
னாலும் கிருபையும் இரக்கமும் சமாதானமும்
உண்டாவதாக.
3 நான் இரவும் பகலும் இடைவிடாமல் என்
ஜெபங்களில் உன்னை நினைத்து, உன் கண்
ணீரை ஞாபகம்பண்ணி, சந்தோஷத்தால்
நிறையப்படும்படிக்கு [4]உன்னைக் காண வாஞ்
4 சையாயிருந்து, உன்னிலுள்ள மாயமற்ற [5]விசு
வாசத்தை நினைவுகூருகிறதினால், என் முன்
னோர்கள் முதற்கொண்டு [6]சுத்த மனச்சாட்
சியோடே [7]ஆராதித்துவரும் தேவனை நான்
5 ஸ்தோத்திரிக்கிறேன். அந்த விசுவாசம் முந்தி
உன் பாட்டியாகிய லோவிசாளுக்குள்ளும்
உன் தாயாகிய [8]ஐனிக்கேயாளுக்குள்ளும்
நிலைத்திருந்தது; அது உனக்குள்ளும் நிலைத்
6 திருக்கிறதென்று நிச்சயித்திருக்கிறேன். இதி
னிமித்தமாக, நான் உன்மேல் என் கைகளை
வைத்ததினால் [9]உனக்கு உண்டான தேவவ
ரத்தை நீ அனல்மூட்டி எழுப்பிவிடும்படி உன
7 க்கு நினைப்பூட்டுகிறேன். தேவன் நமக்குப்
[10]பயமுள்ள ஆவியைக் கொடாமல், [11]பலமும்
அன்பும் தெளிந்த புத்தியுமுள்ள ஆவியையே
8 கொடுத்திருக்கிறார். ஆகையால் நம்முடைய
கர்த்தரைப்பற்றிய சாட்சியைக் குறித்தாவது
[12]அவர்நிமித்தம் கட்டப்பட்டிருக்கிற என்னைக்
குறித்தாவது, நீ வெட்கப்படாமல், தேவவல்
லமைக்கேற்றபடி சுவிசேஷத்திற்காக என்னோ
9 டேகூடத் [13]தீங்கநுபவி. அவர் நம்முடைய
கிரியைகளின்படி நம்மை இரட்சிக்காமல்,
[14]தம்முடைய தீர்மானத்தின்படியும், [15]ஆதிகால
முதல் கிறிஸ்து இயேசுவுக்குள் நமக்கு [16]அரு
ளப்பட்ட கிருபையின்படியும், [17]நம்மை இரட்
சித்து, [18]பரிசுத்த அழைப்பினாலே அழைத்தார்.
10 நம்முடைய இரட்சகராகிய இயேசுகிறிஸ்து
பிரசன்னமானதினாலே [19]அந்தக் கிருபை இப்
பொழுது வெளிப்படுத்தப்பட்டது; [20]அவர்
மரணத்தைப் பரிகரித்து, [21]ஜீவனையும் அழி

1 எபே. 3. 6.
2 கொ. 1. 1
3 1 தீமோ. 1. 18
4 4. 9. 21
5 1 தீமோ. 4. 6
6 எபி. 13. 18
7 அப். 23. 1
8 அப். 16. 1
9 1 தெச. 5. 19. 1 தீமோ. 4. 14
10 ரோ. 8. 15 1 யோ. 4. 18
11 லூ. 24. 49. அப். 1. 8
12 ரோ. 1. 16. 1 தீமோ. 2. 6. எபே. 3. 1. பிலி. 1. 7
13 கொலோ. 1. 24
14 தீத். 3. 5
15 எபே. 1. 4. 1 பே. 1. 20
16 உபா. 7. 7, 8. எபே. 1. 9, 11
17 மத். 1. 21 1 தீமோ. 1. 1
18 ரோ. 8. 28, 30
19 1 பே. 1. 20
20 1 கொ. 15. 54. எபி. 2. 14
21 யோ. 5. 24–29
22 அப். 9. 15. எபே. 3. 7, 8. 1 தீமோ. 2. 7
23 ரோ. 1. 16
24 1 பே. 4. 19
* அவர் என்னிடத்தில்
25 1 தீமோ. 6. 20
26 ரோ. 6. 17. 1 தீமோ. 6. 3
27 வெளி. 2. 25
28 ரோ. 8. 11. 1 தீமோ. 6. 20
29 4. 10, 16. அப். 19. 10
30 4. 19. மத். 5. 7
† தேற்றினான்
31 அப். 28. 20. எபே. 6. 20
32 மத். 22. 34-40
33 எபி. 6. 10
34 யோசு. 1. 7. எபே. 6 10. 1 தீமோ. 1 2
35 1 தீமோ. 1. 18. தீத். 1. 9

யாமையையும் சுவிசேஷத்தினாலே வெளியரங்
கமாக்கினார். அதற்கு நான் பிரசங்கியாகவும், 11
அப்போஸ்தலனாகவும், புறஜாதியாருக்குப்
போதகனாகவும் [22]நியமிக்கப்பட்டேன். அதி 12
னிமித்தம் நான் இந்தப் பாடுகளையும் அநு
பவிக்கிறேன்; [23]ஆயினும், நான் வெட்கப்
படுகிறதில்லை; ஏனென்றால், [24]நான் விசுவா
சித்திருக்கிறவர் இன்னார் என்று அறிவேன்,
*நான் [25]அவரிடத்தில் ஒப்புக்கொடுத்ததை அவர்
அந்நாள்வரைக்கும் காத்துக்கொள்ள வல்லவரா
யிருக்கிறாரென்று நிச்சயித்துமிருக்கிறேன்.
நீ கிறிஸ்து இயேசுவைப்பற்றும் விசுவாசத் 13
தோடும் அன்போடும் என்னிடத்தில் கேட்
டிருக்கிற [26]ஆரோக்கியமான வசனங்களின்
[27]சட்டத்தைக் கைக்கொண்டிரு. உன்னிடத் 14
தில் ஒப்புவிக்கப்பட்ட அந்த நற்பொருளை
[28]நமக்குள்ளே வாசம்பண்ணுகிற பரிசுத்த ஆவி
யினாலே காத்துக்கொள்.
ஆசியாநாட்டிலிருக்கிற யாவரும், [29]அவர் 15
களில் பிகெல்லு எர்மொகெனே முதலாய்
என்னைவிட்டு விலகினார்களென்று அறிந்தி
ருக்கிறாய். ஒநேசிப்போருவின் [30]வீட்டாருக் 16
குக் கர்த்தர் இரக்கங் கட்டளையிடுவாராக;
அவன் அநேகந்தரம் என்னை †இளைப்பாற்றி
னான்; [31]என் விலங்கைக்குறித்து அவன் வெட்
கப்படவுமில்லை; அவன் ரோமாவில் வந்திருந் 17
தபோது அதிக ஜாக்கிரதையாய் என்னைத் தே
டிக் கண்டுபிடித்தான். அந்நாளிலே [32]அவன் 18
கர்த்தரிடத்தில் இரக்கத்தைக் கண்டடையும்
படி, கர்த்தர் அவனுக்கு அநுக்கிரகஞ்செய்வா
ராக; [33]அவன் எபேசுவிலே செய்த பற்பல
உதவிகளையும் நீ நன்றாய் அறிந்திருக்கிறாயே.
ஆதலால், என் குமாரனே, [34]நீ கிறிஸ்து **2**
இயேசுவிலுள்ள கிருபையில் பலப்படு. அநேக 2
சாட்சிகளுக்கு முன்பாக நீ என்னிடத்தில்
கேட்டவைகளை [35]மற்றவர்களுக்குப் போதிக்
கத்தக்க உண்மையுள்ள மனுஷர்களிடத்தில்
ஒப்புவி. நீயும் இயேசுகிறிஸ்துவுக்கு நல்ல 3
போர்ச்சேவகனாய்த் [36]‡தீங்கநுபவி. தண்டில் 4
சேவகம் பண்ணுகிற எவனும், தன்னைச் சேவ
கமெழுதிக் கொண்டவனுக்கு ஏற்றவனாயிருக்
கும்படி, [37]பிழைப்புக்கடுத்த அலுவல்களில் சிக்
கிக்கொள்ளமாட்டான். மேலும் ஒருவன் மல் 5

36 4. 5 ‡ வருத்தப்படு 37 1 கொ. 9. 25, 26

லயுத்தம்பண்ணினாலும், சட்டத்தின்படி பண்
6 ணுவிட்டால் முடிசூட்டப்படான். பிரயாசப்
பட்டுப் பயிரிடுகிறவன் பலனில் முந்திப் பங்
7 கடையவேண்டும். நான் சொல்லுகிறவை
களைச் [1]சிந்தித்துக்கொள்; கர்த்தர் எல்லாக் கா
ரியங்களிலும் [2]உனக்குப் புத்தியைத் தந்தரு
8 ளுவார். தாவீதின் சந்ததியில் பிறந்த இயேசு
கிறிஸ்து, [3]என் சுவிசேஷத்தின்படியே, மரித்
தோரிலிருந் தெழுப்பப்பட்டவரென்று நினை
9 த்துக்கொள். இந்தச் சுவிசேஷத்தினிமித்தம்
நான் பாதகன்போலக் கட்டப்பட்டு, துன்பத்
தை அநுபவிக்கிறேன்; [4]தேவவசனமோ கட்
10 டப்பட்டிருக்கவில்லை. ஆகையால், [5]தெரிந்
துகொள்ளப்பட்டவர்கள் கிறிஸ்து இயேசுவி
னால் உண்டான இரட்சிப்பை நித்திய மகிமை
யோடே பெற்றுக்கொள்ளும்படி, சகலத்தை
11 யும் அவர்கள்நிமித்தமாகச் சகிக்கிறேன். இந்த
வார்த்தை உண்மையுள்ளது; என்னவெனில்,
[6]நாம் அவரோடேகூட மரித்தோமானால், அவ
12 ரோடேகூடப் பிழைத்துமிருப்போம்; அவ
ரோடேகூடப் பாடுகளைச் சகித்தோமானால்
[7]அவரோடேகூட ஆளுகையும் செய்வோம்;
நாம் அவரை மறுதலித்தால், [8]அவரும் நம்மை
13 மறுதலிப்பார்; நாம் உண்மையில்லாதவர்க
ளா யிருந்தாலும், [9]அவர் உண்மையுள்ளவரா
யிருக்கிறார்; [10]அவர் தம்மைத்தாம் மறுதலிக்க
மாட்டார்.
14 இவைகளை அவர்களுக்கு நினைப்பூட்டி, [11]ஒ
ன்றுக்கும் பிரயோஜனமில்லாமல், கேட்கிற
வர்களைக் கவிழ்த்துப்போடுகிறதற்கேதுவான
வாக்குவாதம் செய்யாதபடிக்கு, [12]கர்த்தருக்கு
முன்பாக அவர்களுக்கு எச்சரித்துப் புத்தி
15 சொல்லு. நீ வெட்கப்படாத ஊழியக்காரனு
யும் [13]சத்தியவசனத்தை நிதானமாய்ப் பகுத்
துப், போதிக்கிறவனுயும் உன்னை தேவனுக்கு
முன்பாக உத்தமனாக நிறுத்தும்படி ஜாக்கிர
16 தையாயிரு. சீர்கேடான வீண்பேச்சுகளுக்கு
விலகியிரு; [14]அவைகளால் (கள்ளப்போதகர்
களான) அவர்கள் அதிக அவபக்தியுள்ளவர்
17 களாவார்கள்; அவர்களுடைய வார்த்தை அரி
பிளவையைப்போலப் படரும்; [15]இமெநேயும்
18 பிலேத்தும் அப்படிப்பட்டவர்கள்; அவர்கள்
சத்தியத்தை விட்டு விலகி, [16]உயிர்த்தெழுதல்
நடந்தாயிற்றென்று சொல்லி, சிலருடைய விசு
19 வாசத்தைக் கவிழ்த்துப்போடுகிறார்கள். ஆகி
லும் தேவனுடைய உறுதியான [17]அஸ்திபாரம்
நிலைத்திருக்கிறது; [18]கர்த்தர் தம்முடையவர்
களை அறிவாரென்பதும், [19]கிறிஸ்துவின் நாமத்
தைச் சொல்லுகிற எவனும் அநியாயத்தை வி
ட்டு விலகக்கடவனென்பதும், அதற்கு முத்தி
20 ரையாயிருக்கிறது. ஒரு பெரிய வீட்டிலே
பொன்னும் வெள்ளியுமான பாத்திரங்களுமல்
லாமல், [20]மரமும் மண்ணுமான பாத்திரங்களு
முண்டு; அவைகளில் சில கனத்திற்கும் சில
21 கனவீனத்திற்குமானவைகள். ஆகையால் ஒரு
வன் இவைகளை விட்டு, [21]தன்னைச் சுத்திகரித்
துக்கொண்டால், அவன் பரிசுத்தமாக்கப்பட்ட
தும், எஜமானுக்கு உபயோகமானதும், [22]எந்த
நற்கிரியைக்கும் ஆயத்தமாக்கப்பட்டதுமான
கனத்துக்குரிய பாத்திரமாயிருப்பான். அன் 22
றியும், [23]பாலியத்துக்குரிய இச்சைகளுக்கு நீ
விலகியோடி, [24]சுத்த இருதயத்தோடே கர்த்த
ரைத் தொழுதுகொள்ளுகிறவர்களுடனே, நீதி
யையும் விசுவாசத்தையும் அன்பையும் சமா
தானத்தையும் அடையும்படி நாடு. புத்தியீ 23
னமும் அயுக்தமுமான தர்க்கங்கள் சண்டை
களைப் பிறப்பிக்குமென்று அறிந்து, [25]அவை
களுக்கு விலகியிரு. கர்த்தருடைய ஊழியக் 24
காரன் சண்டைபண்ணுகிறவனாயிராமல், [26]எல்
லாரிடத்திலும் சாந்தமுள்ளவனும், போதகச
மர்த்தனும், தீமையைச் சகிக்கிறவனுமா யிருக்
கவேண்டும். எதிர்பேசுகிறவர்கள் [27]சத்தியத் 25
தை அறியும்படி தேவன் அவர்களுக்கு மனந்
திரும்புதலை அருளத்தக்கதாகவும், பிசாசான 26
வனுடைய இச்சையின்படி செய்ய அவனால்
பிடிபட்டிருக்கிற அவர்கள் மறுபடியும் [28]மயக்
கந்தெளிந்து அவன் கண்ணிக்கு நீங்கத்தக்க
தாகவும், சாந்தமாய் அவர்களுக்கு உபதேசிக்க
வேண்டும்.

மேலும், கடைசிநாட்களில் [29]கொடிய கா 3
லங்கள் வருமென்று அறிவாயாக. எப்படி 2
யெனில், [30]மனுஷர்கள் தற்பிரியராயும், பணப்
பிரியராயும், வீம்புக்காரராயும், அகந்தையுள்
ளவர்களாயும், தூஷிக்கிறவர்களாயும், தாய்த
கப்பன்மாருக்குக் கீழ்ப்படியாதவர்களாயும்,
நன்றியறியாதவர்களாயும், பரிசுத்தமில்லாத
வர்களாயும், சுபாவ அன்பில்லாதவர்களாயும், 3
[31]இணங்காதவர்களாயும், அவதூறுசெய்கிறவர்
களாயும், இச்சையடக்கமில்லாதவர்களாயும்,
கொடுமையுள்ளவர்களாயும், நல்லோரைப்
பகைக்கிறவர்களாயும், துரோகிகளாயும், [32]து 4
ணிகரமுள்ளவர்களாயும், இறுமாப்புள்ளவர்க
ளாயும், [33]தேவப்பிரியராயிராமல் சுகபோகப்
பிரியராயும், தேவபக்தியின் வேஷத்தைத் 5
தரித்து [34]அதின் பெலனை மறுதலிக்கிறவர்க
ளாயும் இருப்பார்கள்; இப்படிப்பட்டவர்களை
நீ விட்டு விலகு. பாவங்களால் நிறைந்து, 6
[35]பற்பல இச்சைகளால் இழுப்புண்டு, எப்போ 7
தும் கற்றாலும் [36]ஒருபோதும் சத்தியத்தை
அறிந்து உணராதவர்களாயிருக்கிற *பெண்
பிள்ளைகளுடைய வீடுகளில் இப்படிப்பட்ட
வர்கள் நுழைந்து, அவர்களை வசப்படுத்திக்
கொள்ளுகிறார்கள். யந்நேயும் யம்பிரேயும் 8
[37]மோசேக்கு எதிர்த்து நின்றதுபோல இவர்
களும் சத்தியத்துக்கு எதிர்த்து நிற்கிறார்கள்;
[38]இவர்கள் துர்ப்புத்தியுள்ள மனுஷர்கள், [39]விசு
வாசவிஷயத்தில் பரீட்சைக்கு நில்லாதவர்கள்.
ஆனாலும், இவர்கள் அதிகமாய்ப் பலப்படுவ 9
தில்லை; அவ்விருவருடைய மதிகேடு எல்லா
ருக்கும் வெளிப்பட்டதுபோல, இவர்களு
டைய மதிகேடும் வெளிப்படும். நீயோ [40]என் 10
போதகத்தையும் நடக்கையையும் நோக்கத்தை
யும் விசுவாசத்தையும் நீடிய சாந்தத்தையும்
அன்பையும் பொறுமையையும், அந்தியோ 11

1 1 தீமோ. 4. 15
2 நீதி. 2. 6
3 ரோ. 1. 5
4 எபே. 6. 20
5 2 கொ. 1. 6. எபே. 3. 13
6 ரோ. 6. 5, 8. 2 கொ. 4. 10
7 ரோ. 8. 17. 1 பே. 4. 13
8 மத். 10. 33
9 ரோ. 3. 3
10 எண். 23. 19
11 2 பே. 1. 13, 14
12 தீத். 3. 9–11
13 மத். 13. 52. 2 பே. 1. 10
14 1 தீமோ. 4. 7; 6. 20
15 1 தீமோ. 1. 20
16 அப். 19. 10. 1 கொ. 15. 12
17 நீதி. 10. 25
18 நாகூம் 1. 7. யோ. 10. 14, 27
19 சங். 97. 10
20 ரோ. 9. 21. 1 தீமோ. 3. 15
21 எரே. 15. 19
22 தீத். 3. 1
23 பிர. 11. 9. 10
24 1 கொ. 1. 2. எபி. 12. 14
25 1 தீமோ. 1. 3
26 தீத். 3. 2, 3
27 அப். 8. 22. தீத். 1. 1
28 1 தீமோ. 3. 7
29 1 தீமோ. 4. 1. 2 பே. 3. 3. 1 யோ. 2. 18. யூதா 17, 18
30 ரோ. 1. 29–31. பிலி. 2. 21
31 தீத். 2. 3. 2 பே. 3. 3
32 2 பே. 2. 10
33 பிலி. 3. 19
34 1 தீமோ. 5. 8. தீத். 1. 16
35 மத். 23. 14. தீத். 1. 11
36 1 தீமோ. 2. 4
* மதியீன ஸ்திரீகளுடைய
37 யாத். 7. 11
38 1 தீமோ. 6. 5
39 2 கொ. 13. 5
40 பிலி. 2. 22. 1 தீமோ. 4. 6

கியா, [1]இக்கோனியா, [2]லீஸ்திரா என்னும்
பட்டணங்களில் எனக்கு உண்டான துன்பங்
களையும் பாடுகளையும் நன்ருய் அறிந்திருக்கி
ருய்; எவ்வளவோ துன்பங்களைச் சகித்தேன்;
[3]இவையெல்லாவற்றினின்றும் கர்த்தர் என்னை
12 நீங்கலாக்கிவிட்டார். அன்றியும் கிறிஸ்து
இயேசுவுக்குள் தேவபக்தியாய் நடக்க மனதா
13 யிருக்கிற யாவரும்[4]துன்பப்படுவார்கள். பொல்
லாதவர்களும் எத்தர்களுமானவர்கள் மோசம்
போக்குகிறவர்களாகவும், [5]மோசம்போகிறவர்
களாகவுமிருந்து மேன்மேலும் கேடுள்ளவர்க
14 ளாவார்கள். நீ கற்று நிச்சயித்துக்கொண்ட
வைகளில் நிலைத்திரு; [6]அவைகளை இன்னு
ரிடத்தில் கற்ருய் என்று நீ அறிந்திருக்கிறது
15 மல்லாமல், கிறிஸ்து இயேசுவைப்பற்றும் விசு
வாசத்தினலே உன்னை இரட்சிப்புக்கேற்ற ஞா
னமுள்ளவனுக்கத்தக்க பரிசுத்த வேத எழுத்
துக்களை, [7]நீ சிறுவயதுமுதல் அறிந்தவனென்
16 றும் உனக்குத் தெரியும். வேதவாக்கியங்க
ளெல்லாம் [8]தேவ ஆவியினல் *அருளப்பட்
டிருக்கிறது; தேவனுடைய மனுஷன் தேறின
வனுகவும், [9]எந்த நற்கிரியையுஞ் செய்யத் தகு
17 தியுள்ளவனுகவும் இருக்கும்படியாக, அவை
கள் உபதேசத்துக்கும், [10]கடிந்துகொள்ளுத
லுக்கும், சீர்திருத்தலுக்கும், நீதியைப் படிப்
பிக்குதலுக்கும் பிரயோஜனமுள்ளவைகளாயி
ருக்கிறது.

4 நான் தேவனுக்கு முன்பாகவும், [11]உயி
ரோடிருக்கிறவர்களையும் மரித்தவர்களையும்
நியாயந்தீர்க்கப்போகிற கர்த்தராகிய இயேசு
கிறிஸ்துவுக்கு முன்பாகவும், [12]அவருடைய
பிரசன்னமாகுதலையும் அவருடைய ராஜ்யத்
தையும் சாட்சியாகவைத்துக் கட்டளையிடுகிற
2 தாவது: சமயம் வாய்த்தாலும் வாய்க்காவிட்
டாலும் ஜாக்கிரதையாய்த் திருவசனத்தைப்
பிரசங்கம்பண்ணு; எல்லா நீடிய சாந்தத்தோ
டும் உபதேசத்தோடும் கண்டனம்பண்ணி,
3 [13]கடிந்துகொண்டு, புத்திசொல்லு. ஏனென்
ருல், அவர்கள் ஆரோக்கியமான உபதேசத்
தைப் பொறுக்க மனதில்லாமல், [14]செவித்
தினவுள்ளவர்களாகி, தங்கள் சுய இச்சை
களுக்கேற்ற போதகர்களைத் தங்களுக்குத் திர
4 ளாகச் சேர்த்துக்கொண்டு, சத்தியத்துக்குச்
செவியை விலக்கி, [15]கட்டுக்கதைகளுக்குச்
5 சாய்ந்துபோகுங் காலம் வரும். நீயோ எல்
லாவற்றிலும் மனத்தெளிவுள்ளவனுயிரு, [16]தீங்
கநுபவி, [17]சுவிசேஷகனுடைய வேலையைச்
செய், [18]உன் ஊழியத்தை நிறைவேற்று.
6 ஏனென்ருல், நான் இப்பொழுதே பானபலி
யாக வார்க்கப்பட்டுப்போகிறேன்; [19]நான் தே
7 கத்தைவிட்டுப் பிரியும் காலம் வந்தது. நல்ல
போராட்டத்தைப் [20]போராடினேன், [21]ஓட்
டத்தை முடித்தேன், [22]விசுவாசத்தைக் காத்
8 துக்கொண்டேன். இதுமுதல் நீதியின் கிரீ
டம் எனக்காக வைக்கப்பட்டிருக்கிறது, [23]நீதி
யுள்ள நியாயாதிபதியாகிய கர்த்தர் அந்நாளி
லே அதை எனக்குத் தந்தருளுவார்; எனக்கு
மாத்திரமல்ல, [24]அவர் பிரசன்னமாகுதலை
விரும்பும் யாவருக்கும் அதைத் தந்தருளு
வார்.

நீ சீக்கிரமாய் என்னிடத்தில் வரும்படி 9
ஜாக்கிரதைப்படு. ஏனென்ருல், தேமா இப் 10
பிரபஞ்சத்தின்மேல் ஆசைவைத்து, [25]என்னை
விட்டுப் பிரிந்து, தெசலோனிக்கே பட்டணத்
துக்குப் போய்விட்டான்; கிரெஸ்கே கலாத்தி
யா நாட்டிற்கும், தீத்து தல்மாத்தியா நாட்டிற்
கும், போய்விட்டார்கள். லூக்காமாத்திரம் 11
[26]என்னேடே இருக்கிருன். [27]மாற்குவை உன்
னேடே கூட்டிக்கொண்டு வா; ஊழியத்தில்
அவன் எனக்குப் பிரயோஜனமுள்ளவன்.
தீகிக்குவை [28]நான் எபேசுவுக்கு அனுப் 12
பினேன். துரோவா பட்டணத்திலிருக்கிற 13
கார்ப்பு என்பவன் வசத்தில் நான் வைத்து
வந்த மேலங்கியையும், புஸ்தகங்களையும்,
விசேஷமாய்த் தோற்சுருள்களையும், நீ வரு
கிறபோது எடுத்துக்கொண்டுவா. கன்னு 14
கிய அலெக்சந்தர் எனக்கு வெகு தீமை செய்
தான்; [29]அவனுடைய செய்கைக்குத்தக்கதாகக்
கர்த்தர் அவனுக்குப் பதிலளிப்பாராக. நீயும் 15
அவனைக்குறித்து எச்சரிக்கையாயிரு; அவன்
நம்முடைய வார்த்தைகளுக்கு மிகவும் எதிர்
த்து நின்றவன். நான் முதல்விசை உத்தரவு 16
சொல்ல நிற்கையில் ஒருவனும் என்னேடே
கூட இருக்கவில்லை, [30]எல்லாரும் என்னைக்
கைவிட்டார்கள்; [31]அந்தக் குற்றம் அவர்கள்
மேல் சுமராதிருப்பதாக. கர்த்தரோ [32]எனக் 17
குத் துணையாக நின்று, என்னலே பிரசங்கம்
நிறைவேறுகிறதற்காகவும், புறஜாதியாரெல்
லாரும் கேட்கிறதற்காகவும், என்னைப் பலப்
படுத்தினர்; [33]சிங்கத்தின் வாயிலிருந்தும் நான்
இரட்சிக்கப்பட்டேன். கர்த்தர் எல்லாத் தீமை 18
யினின்றும் என்னை இரட்சித்து, [34]தம்மு
டைய பரம ராஜ்யத்தை அடையும்படி காப்
பாற்றுவார்; அவருக்குச் சதாகாலங்களிலும்
மகிமை உண்டாவதாக. ஆமென்.

பிரிஸ்காளுக்கும் ஆக்கில்லாவுக்கும், [35]ஒநே 19
சிப்போருவின் வீட்டாருக்கும் என் வாழ்த்து
தலைச் சொல்லு. எரஸ்து [36]கொரிந்துபட்ட 20
ணத்தில் இருந்துவிட்டான்; [37]துரோப்பீமு
வை மிலேத்துவில் வியாதிப்பட்டவனுகவிட்டு
வந்தேன். மாரிகாலத்துக்கு முன் நீ வந்து 21
சேரும்படி ஜாக்கிரதைப்படு.

ஐபூலுவும், புதேஞ்சும், லீனுவும், கலவுதி
யாளும், மற்றெல்லாச் சகோதரரும் உனக்கு
வாழ்த்துதல் சொல்லுகிருர்கள்.

கர்த்தராகிய இயேசுகிறிஸ்து [38]உன் ஆவி 22
யுடனேகூட இருப்பாராக. கிருபை உங்க
ளோடிருப்பதாக. ஆமென்.

1 அப். 13. 45, 50
2 அப். 14. 5, 6, 19
3 சங். 34. 19. 2 கொ. 1. 10
4 மத். 16. 24. அப். 14. 22. 1 தெச. 15. 19
5 சங். 22. 21 2 தெச. 2. 11
6 1. 13
7 யோ. 5. 39
8 2 பே. 1. 21
* மூல. அருளினல் உண்டாயிருக்கிற வேத வாக்கியங்களெல்லாம்
9 சங். 119. 98–100. 1 தீமோ. 6. 11
10 ரோ. 15. 4
11 அப். 10. 42. வெளி. 20. 12, 13
12 1 தீமோ. 5. 21
13 1 தீமோ. 5. 20. தீத். 2. 15
14 3. 1; 3. 6. 1 தீமோ. 1. 10
15 1 தீமோ. 1. 3, 4: 4. 7
16 2. 3
17 அப். 21. 8. எபே. 4. 11
18 1 தீமோ. 4. 12, 15
19 பிலி. 1. 23: 2. 17. 2 பே. 1. 14
20 1 தீமோ. 6. 12
21 அப். 20. 24
22 நீதி. 23. 23. வெளி. 3. 10
23 1 கொ. 9. 25. 1 பே. 5. 4. வெளி. 2. 10
24 1 கொ. 2. 9
25 கொலோ. 4. 14. பிலேமோன். 24. வச. 1 யோ. 2. 15
26 கொலோ. 4. 14
27 அப். 12. 25: 15. 37
28 அப். 20. 4. தீத். 3. 12
29 அப். 19. 33. 1 தீமோ. 1. 20. வெளி. 18. 6
30 1. 15
31 அப். 7. 60
32 மத். 10. 19. அப். 23. 11. எபே. 3. 8
33 சங். 22. 21. 2 பே. 2. 9
34 சங். 121. 7
35 அப். 18. 2. ரோ. 16. 3
36 அப். 19. 22. ரோ. 16. 23
37 அப். 20. 4: 21. 29
38 கலா. 6. 18

# THE EPISTLE TO TITUS

# தீத்துவுக்கு எழுதின நிருபம்

1 தேவனுடைய ஊழியக்காரனும், இயேசு
கிறிஸ்துவினுடைய அப்போஸ்தலனுமாகிய
பவுல், [1]பொதுவான விசுவாசத்தின்படி உத்தம
குமாரனாகிய தீத்துவுக்கு எழுதுகிறதாவது:
2 பிதாவாகிய தேவனாலும், நம்முடைய இரட்
சகராயிருக்கிற கர்த்தராகிய இயேசுகிறிஸ்து
வினாலும், [2]கிருபையும் இரக்கமும் சமாதான
3 மும் உண்டாவதாக. பொய்யுரையாத [3]தே
வன் ஆதிகாலமுதல் நித்திய ஜீவனைக் குறி
த்து [4]வாக்குத்தத்தம்பண்ணி, அதைக்குறித்த
நம்பிக்கையைப்பற்றி தேவபக்திக்கேதுவான
சத்தியத்தை அறிகிற அறிவும் விசுவாசமும்
தேவனால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களுக்கு
4 உண்டாகும்படி, ஏற்ற காலங்களிலே [5]நம்மு
டைய இரட்சகராகிய தேவனுடைய கட்
டளையின்படி எனக்கு ஒப்புவிக்கப்பட்ட
[6]பிரசங்கத்தினாலே தமது வார்த்தையை வெ
ளிப்படுத்தினார்.
5 நீ குறைவாயிருக்கிறவைகளை [7]ஒழுங்குபடுத்
தும்படிக்கும், நான் உனக்குக் கட்டளையிட்ட
படியே, [8]பட்டணங்கள்தோறும் மூப்பரை
ஏற்படுத்தும்படிக்கும், உன்னைக் கிரேத்தாதீ
6 விலே விட்டு வந்தேனே. குற்றஞ்சாட்டப்
படாதவனும், [9]ஒரே மனைவியையுடைய புரு
ஷனும், துன்மார்க்கரென்றும் அடங்காதவர்க
ளென்றும் பேரெடுக்காத விசுவாசமுள்ள பிள்
ளைகளை உடையவனுமாகிய ஒருவனிருந்தால்
7 அவனையே ஏற்படுத்தலாம். ஏனெனில்,
கண்காணியானவன் தேவனுடைய [10]உக்கிரா
ணக்காரனுக்கேற்றவிதமாய், குற்றஞ்சாட்டப்
படாதவனும், தன் இஷ்டப்படி செய்யாதவ
னும், முற்கோபமில்லாதவனும், மதுபானப்
பிரியமில்லாதவனும், அடியாதவனும், இழி
8 வான ஆதாயத்தை இச்சியாதவனும், அந்நி
யரை உபசரிக்கிறவனும், நல்லோர்மேல்
பிரியமுள்ளவனும், தெளிந்த புத்தியுள்ள
வனும், நீதிமானும், பரிசுத்தவானும், இச்சை
9 யடக்கமுள்ளவனும், ஆரோக்கியமான உப
தேசத்தினாலே புத்திசொல்லவும், [11]எதிர்பேசு
கிறவர்களைக் கண்டனம்பண்ணவும்வல்லவனு
மாயிருக்கும்படி, தான் போதிக்கப்பட்டதற்
கேற்ற உண்மையான வசனத்தை நன்றாய்ப்
பற்றிக்கொள்ளுகிறவனுமா யிருக்கவேண்டும்.

அநேகர், விசேஷமாய் விருத்தசேதன 10
முள்ளவர்கள், அடங்காதவர்களும், [12]வீண்
பேச்சுக்காரரும், மனதை மயக்குகிறவர்களு
மாயிருக்கிறார்கள். அவர்களுடைய வாயை 11
அடக்கவேண்டும்; அவர்கள் இழிவான ஆதா
யத்துக்காகத் தகாதவைகளை உபதேசித்து,
[13]முழுக்குடும்பங்களையும் கவிழ்த்துப்போடுகி
றார்கள். கிரேத்தாதீவார் ஓயாப் பொய்யர், 12
துஷ்டமிருகங்கள், பெருவயிற்றுச் சோம்
பேறிகள் [14]என்று அவர்களிலொருவனாகிய
அவர்கள் *தீர்க்கதரிசியானவனே சொல்லி
யிருக்கிறான். இந்தச் சாட்சி உண்மையா 13
யிருக்கிறது; இது முகாந்தரமாக, [15]அவர்கள்
யூதருடைய கட்டுக்கதைகளுக்கும், சத்திய
த்தை விட்டு விலகுகிற மனுஷருடைய கற்ப
னைகளுக்கும் செவிகொடாமல், விசுவாசத் 14
திலே ஆரோக்கியமுள்ளவர்களா யிருக்கும்
படி, [16]நீ அவர்களைக் கண்டிப்பாய்க் கடிந்து
கொள். சுத்தமுள்ளவர்களுக்குச் சகலமும் 15
சுத்தமாயிருக்கும்; [17]அசுத்த முள்ளவர்களுக்
கும் அவிசுவாசமுள்ளவர்களுக்கும் ஒன்றும்
சுத்தமாயிராது; அவர்களுடைய புத்தியும்
மனச்சாட்சியும் அசுத்தமாயிருக்கும். அவர் 16
கள் தேவனை அறிந்திருக்கிறோமென்று அறிக்
கைபண்ணுகிறார்கள், [18]கிரியைகளினாலோ
அவரை மறுதலிக்கிறார்கள்; அவர்கள் அரு
வருக்கப்படத்தக்கவர்களும், கீழ்ப்படியாதவர்
களும், எந்த நற்கிரியையுஞ் செய்ய ஆகாதவர்
களுமாயிருக்கிறார்கள்.

நீயோ [19]ஆரோக்கியமான உபதேசத்துக் 2
கேற்றவைகளைப் பேசு. முதிர்வயதுள்ள புரு 2
ஷர்கள் ஜாக்கிரதையுள்ளவர்களும், [20]நல்லொ
ழுக்கமுள்ளவர்களும், தெளிந்த புத்தியுள்ள
வர்களும், விசுவாசத்திலும் அன்பிலும் பொறு
மையிலும் ஆரோக்கியமுள்ளவர்களுமா யிருக்
கும்படி புத்திசொல்லு. முதிர்வயதுள்ள ஸ்தி 3
ரீகளும், [21]அப்படியே பரிசுத்தத்துக்கேற்றவித
மாய் நடக்கிறவர்களும், அவதூறு பண்ணாத
வர்களும், மதுபானத்துக்கு அடிமைப்படாத
வர்களுமா யிருக்கவும், தேவவசனம் தூஷிக் 4
கப்படாதபடிக்கு பாலிய ஸ்திரீகள் [22]தங்கள்
புருஷரிடத்திலும், தங்கள் பிள்ளைகளிடத்தி
லும் அன்புள்ளவர்களும், தெளிந்த புத்தி 5

1 2 கொ. 2. 13. 1 தீமோ. 1 1, 2
2 எபே. 1. 2
3 1 சாமு. 15. 29. எபி. 6. 18
4 மத். 25. 34. ரோ. 16. 25
5 2 தீமோ. 1. 10
6 ரோ. 10. 14, 15
7 1 கொ. 11. 34
8 அப். 14. 23. 2 தீமோ. 2. 2
9 1 தீமோ. 3. 2, 12
10 மத். 24. 45. 1 கொ. 4. 1, 2. 1 தீமோ. 3. 2. ழ
11 2 தெச. 2. 15 2 தீமோ. 1. 13
12 அப். 15. 1. ரோ. 16. 18. 1 தீமோ. 1. 6. யாக். 1. 26
13 மத். 23. 14. 1 தீமோ. 6. 5. 2 தீமோ. 3. 6
14 அப். 17. 28
* புலவன்
15 1 தீமோ. 1. 3
16 ரோ. 3. 24. 2 கொ. 13. 10. 2 தீமோ. 4. 2
17 லூ. 11. 39–41. ரோ. 14. 14, 20, 23. 1 தீமோ. 4. 3, 4
18 1 தீமோ. 3. 5, 7. 2 தீமோ. 3. 8
19 1 தீமோ. 1. 11: 6. 3
20 நீதி. 16. 31
21 1 தீமோ. 2. 9, 10: 3. 11
22 1 தீமோ. 5. 14

யுள்ளவர்களும், கற்புள்ளவர்களும், வீட்டில்
தரித்திருக்கிறவர்களும், நல்லவர்களும், [1]தங்
கள் புருஷருக்குக்கீழ்ப்படிகிறவர்களுமாயிருக்
கும்படி, அவர்களுக்குப் படிப்பிக்கத்தக்க நற்
காரியங்களைப் போதிக்கிறவர்களுமா யிருக்க
வும் முதிர்வயதுள்ள ஸ்திரீகளுக்குப் புத்தி
6 சொல்லு. அப்படியே, பாலிய புருஷரும் தெ
ளிந்த புத்தியுள்ளவர்களாயிருக்கவும் நீ புத்தி
7 சொல்லி, நீயே எல்லாவற்றிலும் உன்னை
நற்கிரியைகளுக்கு [2]மாதிரியாகக் காண்பித்து,
8 எதிரியானவன் உங்களைக் குறித்துப் பொல்
லாங்கு சொல்லுகிறதற்கு ஒன்றுமில்லாமல்
வெட்கப்படத்தக்கதாக, உபதேசத்திலே விக
ற்பமில்லாதவனும், நல்லொழுக்கமுள்ளவனு
ம், குற்றம்பிடிக்கப்படாத [3]ஆரோக்கியமான
வசனத்தைப் பேசுகிறவனுமாயிருப்பாயாக.
9 வேலைக்காரர் நம்முடைய இரட்சகராகிய தே
வனுடைய உபதேசத்தை [4]எல்லாவற்றிலும்
10 அலங்கரிக்கத்தக்கதாக, தங்கள் எஜமான்க
ளுக்குக் கீழ்ப்படிந்திருந்து [5]எதிர்த்துப்பேசா
மல், எல்லாவற்றிலும் பிரியமுண்டாக நடந்து
கொள்ளவும், திருடாமலிருந்து, சகலவிதத்தி
லும் நல்லுண்மையைக் காண்பிக்கவும் புத்தி
11 சொல்லு. ஏனெனில் எல்லா மனுஷருக்கும்
[6]இரட்சிப்பை அளிக்கத்தக்க தேவகிருபை
12 யானது பிரசன்னமாகி, நாம் அவபக்தியை
யும் லௌகிக இச்சைகளையும் வெறுத்து, [7]தெ
ளிந்த புத்தியும் நீதியும் தேவபக்தியும் உள்ள
வர்களாய் இவ்வுலகத்திலே ஜீவனம்பண்ணி,
13 நாம் நம்பியிருக்கிற [8]ஆனந்தபாக்கியத்துக்கும்,
மகாதேவனும்நமது இரட்சகருமாகிய [9]இயேசு
கிறிஸ்துவினுடைய மகிமையின் பிரசன்ன
மாகுதலுக்கும் எதிர்பார்த்துக்கொண்டிருக்கும்
14 படி நமக்குப் போதிக்கிறது. அவர் நம்மைச்
சகல அக்கிரமங்களினின்று மீட்டுக்கொண்டு,
[10]தமக்குரிய சொந்த ஜனங்களாகவும், [11]நற்கிரி
யைகளைச் செய்ய பக்தி வைராக்கிய முள்ள
வர்களாகவும் நம்மைச் சுத்திகரிக்கும்படி, [12]நம
க்காகத் தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்தார்.
15 இவைகளை நீ பேசி, போதித்து, சகல அதி
காரத்தோடும் கடிந்துகொள். [13]ஒருவனும்
உன்னை அசட்டைபண்ண இடங்கொடாதி
ருப்பாயாக.

3 துரைத்தனங்களுக்கும் அதிகாரங்களுக்கும்
கீழ்ப்படிந்து அடங்கியிருக்கவும், [14]சகலவித
மான நற்கிரியைகளையும் செய்ய ஆயத்தமாயி
2 ருக்கவும், ஒருவனையும் தூஷியாமலும், [15]சண்
டைபண்ணாமலும், பொறுமையுள்ளவர்களாய்
எல்லாமனுஷருக்கும் சாந்தகுணத்தைக் கா
3 ண்பிக்கவும் அவர்களுக்கு நினைப்பூட்டு. ஏனெ
னில், முற்காலத்திலே நாமும் புத்தியீனரும்,

1 கொ. 2. 24. 1 கொ. 14. 34. 1 தீமோ. 2. 11
2 1 தீமோ. 4. 12. 1 பே. 5. 3
3 1 தீமோ. 5. 14: 6. 3
4 மத். 5. 16. பிலி. 2. 15
5 எபே. 6. 5. ஷ
6 கொ. 5. 15. 1 தீமோ. 2. 4. 1 பே. 5. 12
7 எபே. 1. 4. 1 பே. 2. 11, 12: 4. 2
8 2 பே. 3. 12
9 1 பே. 1. 7. வெளி. 1. 7
10 சங். 130. 8. கலா. 1. 4
11 உபா. 7. 6. எபி. 9. 14
12 எபே. 5. 2
13 1 தீமோ. 4. 2, 12
14 ரோ. 13. 1. கொலோ. 1. 10. 2 தீமோ. 2. 21. 2 பே. 2. 13
15 எபே. 4. 2, 31. 2 தீமோ. 2. 24, 25
16 1 கொ. 6. 11. 1 பே. 4. 3
17 1 தீமோ. 2. 3
18 ரோ. 3. 20. எபே. 2. 4, 8, 9
19 யோ. 3. 3, 5. எபே. 5. 26. 1 பே. 3. 21
20 ரோ. 3. 24: 8. 23, 24
21 யோ. 1. 16. அப். 2. 33
22 11, 14. வச. 1 தீமோ. 1. 15
23 2 தீமோ. 2. 23
24 மத். 18. 17. ரோ. 16. 17. 2 கொ. 13. 2. 2 தீமோ. 3. 5
25 அப். 13. 46
26 அப். 20. 4. 2 தீமோ. 4. 12
27 அப். 18. 24
* நல்லவேலைகளை. எபே. 4. 28

[16]கீழ்ப்படியாதவர்களும், வழிதப்பி நடக்கிற
வர்களும், பலவித இச்சைகளுக்கும் இன்பங்
களுக்கும் அடிமைப்பட்டவர்களும், துர்க்கு
ணத்தோடும் பொறாமையோடும் ஜீவனம்ப
ண்ணுகிறவர்களும், பகைக்கப்படத்தக்கவர்
களும், ஒருவரையொருவர் பகைக்கிறவர்களு
மாயிருந்தோம். நம்முடைய இரட்சகராகிய 4
தேவனுடைய தயையும் [17]மனுஷர்மேலுள்ள அ
ன்பும் பிரசன்னமானபோது, நாம் செய்த 5
நீதியின் கிரியைகளினிமித்தம் அவர் நம்மை
இரட்சியாமல், [18]தமது இரக்கத்தின்படியே,
மறுஜென்ம முழுக்கினாலும், [19]பரிசுத்தஆவியி
னுடைய புதிதாக்குதலினாலும் நம்மை இரட்
சித்தார். தமது கிருபையினாலே நாம் நீதிமான் 6
களாக்கப்பட்டு, [20]நித்தியஜீவனுண்டாகும் என்
கிற நம்பிக்கையின்படி சுதந்தரராகத்தக்கதாக,
அவர் நமது இரட்சகராகிய இயேசுகிறிஸ்து 7
மூலமாய், [21]அந்தப் பரிசுத்தஆவியை நம்மேல்
சம்பூரணமாய்ப் பொழிந்தருளினார். இந்த 8
வார்த்தை உண்மையுள்ளது; [22]தேவனிடத்தில்
விசுவாசமானவர்கள் நற்கிரியைகளைச் செய்ய
ஜாக்கிரதையாயிருக்கும்படி நீ இவைகளைக்கு
றித்துத் திட்டமாய்ப் போதிக்கவேண்டுமென்
று விரும்புகிறேன்; இவைகளே நன்மையும்
மனுஷருக்குப் பிரயோஜனமுமானவைகள்.
புத்தியீனமான தர்க்கங்களையும், [23]வம்சவரலா 9
றுகளையும், சண்டைகளையும், நியாயப்பிரமா
ணத்தைக்குறித்து உண்டாகிற வாக்குவாதங்
களையும் விட்டு விலகு; அவைகள் அப்பிர
யோஜனமும் வீணுமாயிருக்கும். வேதப்புரட் 10
டனாயிருக்கிற ஒருவனுக்கு நீ இரண்டொரு
தரம் புத்திசொன்னபின்பு [24]அவனை விட்டு வி
லகு. அப்படிப்பட்டவன் நிலைதவறி, [25]தன்னி 11
லேதானே ஆக்கினைத் தீர்ப்புடையவனாய்ப் பா
வஞ்செய்கிறவனென்று அறிந்திருக்கிறாயே.
நான் அர்த்தெமாவையாவது [26]தீகிக்குவை 12
யாவது உன்னிடத்தில் அனுப்பும்போது நீ
நிக்கொப்போலிக்கு என்னிடத்தில் வர ஜாக்
கிரதைப்படு; மாரிகாலத்திலே அங்கே தங்கும்
படி தீர்மானித்திருக்கிறேன். நியாயசாஸ்திரி 13
யாகிய சேனாவுக்கும் [27]அப்பொல்லோவுக்கும்
ஒரு குறைவுமில்லாதபடிக்கு அவர்களை ஜாக்
கிரதையாய் விசாரித்து வழிவிட்டனுப்பு. நம் 14
முடையவர்களும் கனியற்றவர்களாயிராதபடி
குறைவுகளை நீக்குகிறதற் கேதுவாக *நற்கிரி
யைகளைச் செய்யப் பழகட்டும்.
என்னோடிருக்கிற யாவரும் உனக்கு வாழ்த் 15
துதல் சொல்லுகிறார்கள். விசுவாசத்திலே நம்
மைச் சிநேகிக்கிறவர்களுக்கு வாழ்த்துதல்
சொல்லு. கிருபையானது உங்களனைவரோ
டுங்கூட இருப்பதாக. ஆமென்.

# THE EPISTLE TO PHILEMON

# பிலேமோனுக்கு எழுதின நிருபம்

1 கிறிஸ்து இயேசுவினிமித்தம் [1]கட்டப்பட்
டவனுயிருக்கிற பவுலும், சகோதரனுகிய தீ
மோத்தேயும், எங்களுக்குப் பிரியமுள்ளவ
னும் [2]உடன்வேலையாளுமாயிருக்கிற பிலே
2 மோனுக்கும், பிரியமுள்ள அப்பியாளுக்கும்,
[3]எங்கள் உடன் போர்ச்சேவகனுகிய அர்க்கிப்
புவுக்கும், [4]உம்முடைய வீட்டிலே கூடிவரு
3 கிற சபைக்கும் எழுதுகிறதாவது: நம்முடைய
பிதாவாகிய தேவனுலும், [5]கர்த்தராகிய இயேசு
கிறிஸ்துவினுலும், உங்களுக்குக் கிருபையும்
சமாதானமும் உண்டாவதாக.
4 கர்த்தராகிய இயேசுவினிடத்திலும், எல்
லாப் பரிசுத்தவான்களிடத்திலுமுள்ள உம்மு
டைய அன்பையும் உம்முடைய விசுவாசத்தை
5 யும் நான் கேள்விப்பட்டு, என் ஜெபங்களில்
உம்மை நினைத்து, [6]எப்பொழுதும் என் தேவ
6 னுக்கு ஸ்தோத்திரஞ்செய்து, உங்களிலுள்ள
சகல நன்மைகளும் தெரியப்படுகிறதினுலே
[7]உம்முடைய விசுவாசத்தின் அந்நியோந்நியம்
கிறிஸ்து இயேசுவுக்காகப் பயன்படவேண்டு
7 மென்று வேண்டுதல்செய்கிறேன். சகோதர
னே, பரிசுத்தவான்களுடைய உள்ளங்கள் உம்
மாலே [8]இளைப்பாறினபடியால், உம்முடைய
அன்பினுலே மிகுந்த சந்தோஷமும் ஆறுத
லும் அடைந்திருக்கிறோம்.
8 ஆகையால், பவுலாகிய நான் முதிர்வயதுள்
ளவனுகவும், இயேசுகிறிஸ்துவினிமித்தம் இப்
பொழுது [9]கட்டப்பட்டவனுகவும் இருக்கிறப
9 டியால், நீர் செய்யத்தக்கதை உமக்குக் கட்ட
ளையிடும்படிக்குக் கிறிஸ்துவுக்குள் நான் துணி
யத்தக்கவனுயிருந்தாலும், அப்படிச் செய்யா
10 மல், அன்பினிமித்தம் மன்றுடுகிறேன். என்
னவென்றுல், [10]கட்டப்பட்டிருக்கையில் நான்
பெற்ற என் மகனுகிய ஒநேசிமுக்காக உம்மை
11 மன்றுடுகிறேன். முன்னே அவன் உமக்
குப் பிரயோஜனமில்லாதவன், [11]இப்பொழு
தோ உமக்கும் எனக்கும் பிரயோஜனமுள்ள
12 வன். அவனை நான் உம்மிடத்திற்கு அனுப்பு
கிறேன்; என் உள்ளம்போலிருக்கிற அவனை
13 நீர் ஏற்றுக்கொள்ளும். சுவிசேஷத்தினிமித்
தம் கட்டப்பட்டிருக்கிற எனக்கு ஊழியஞ்
செய்யும்படி [12]உமக்குப் பதிலாக அவனை என்
னிடத்தில் வைத்துக்கொள்ள வேண்டுமென்
றிருந்தேன். ஆனாலும் நீர் செய்யும் நன்மை 14
யைக் கட்டாயத்தினுலல்ல, மனப்பூர்வமாய்ச்
செய்யதக்கதாக, [13]நான் உம்முடைய சம்
மதியில்லாமல் ஒன்றும் செய்ய எனக்கு மன
தில்லை. அவன் என்றென்றைக்கும் உம்மு 15
டையவனுயிருக்கும்படிக்கும், இனிமேல்
அவன் அடிமையானவனுகவல்ல, [14]அடிமை
யானவனுக்கு மேலானவனுகவும் பிரியமுள்ள
சகோதரனுகவுமிருக்கும்படிக்கும் [15]கொஞ்சக்
காலம் உம்மைவிட்டுப் பிரிந்துபோனுனுக்கும்.
எனக்கு அவன் பிரியமான சகோதரனுனுல், 16
[16]உமக்கு சரீரத்தின்படியேயும் கர்த்தருக்குள்
ளும் எவ்வளவு பிரியமுள்ளவனுயிருக்கவேண்
டும்? ஆதலால், நீர் என்னை உம்மோடே 17
ஐக்கியமானவனென்று எண்ணினுல், [17]என்
னை ஏற்றுக்கொள்வதுபோல அவனையும் ஏற்
றுக்கொள்ளும். அவன் உமக்கு யாதொரு 18
அநியாயஞ்செய்ததும், உம்மிடத்தில் கடன்
பட்டதும் உண்டானுல், அதை என் கணக்
கிலே வைத்துக்கொள்ளும். பவுலாகிய நான் 19
இதை என் சொந்தக் கையாலே எழுதினேன்,
நான் அதைச் செலுத்தித் தீர்ப்பேன். நீர் உம்
மைத்தாமே எனக்குக் கடனுகச் செலுத்த
வேண்டுமென்று நான் உமக்குச் சொல்ல
வேண்டியதில்லையே. ஆம், சகோதரனே, 20
கர்த்தருக்குள் உம்மாலே எனக்குப் பிரயோ
ஜனமுண்டாகட்டும்; [18]கர்த்தருக்குள் என் உள்
ளத்தை இளைப்பாறப்பண்ணும். நான் சொல் 21
லுகிறதிலும் அதிகமாய்ச் செய்வீரென்று அறி
ந்து, [19]இதற்கு நீர் இணங்குவீரென்று நிச்சயி
த்து, உமக்கு எழுதியிருக்கிறேன். மேலும், 22
[20]உங்கள் விண்ணப்பங்களினுலே நான் உங்
களுக்கு அநுக்கிரகிக்கப்படுவேனென்று நம்
பியிருக்கிறபடியால், நான் இருக்கும்படிக்கு
ஓரிடத்தை எனக்காக ஆயத்தம்பண்ணும்.
கிறிஸ்து இயேசுவினிமித்தம் என்னோடே 23
கூடக் காவலில் வைக்கப்பட்டிருக்கிற [21]எப்
பாப்பிராவும், என் உடன் வேலையாட்களாகிய 24
[22]மாற்குவும், [23]அரிஸ்தர்க்கும், [24]தேமாவும், [25]லூ
க்காவும் உமக்குவாழ்த்துதல்சொல்லுகிறுர்கள்.
நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து 25
வின் கிருபை [26]உங்கள் ஆவியுடனேகூட
இருப்பதாக. ஆமென்.

1 எபே. 3. 1
2 பிலி. 2. 25
3 கொலோ. 4. 17
4 ரோ. 16. 5
5 எபே. 1. 2
6 எபே. 1. 15, 16. கொலோ. 1. 4
7 பிலி. 1. 9–11. யாக். 2. 14, 17. 2 பே. 1. 5–8
8 2 கொ. 7. 13. 2 தீமோ. 1. 16
9 2 தீமோ. 1. 8
10 1 கொ. 4. 15. கொலோ. 4. 9
11 1 பே. 2. 10
12 1 கொ. 16. 17. பிலி. 2. 30
13 2 கொ. 9. 7
14 மத். 23. 8. 1 தீமோ. 6. 2
15 ஆதி. 45. 5–8
16 கொலோ. 3. 22
17 2 கொ. 8. 23
18 7. வச
19 2 கொ. 7. 16
20 2 கொ. 1. 11. பிலி. 2. 24
21 கொலோ. 1. 7
22 அப். 12. 12, 25
23 அப். 19. 29
24 கொலோ. 4. 14
25 தீமோ. 4. 11
26 2 தீமோ. 4. 22

THE EPISTLE TO THE HEBREWS

# எபிரெயருக்கு எழுதின நிருபம்

1 பூர்வகாலங்களில் [1]பங்குபங்காகவும் வகை
வகையாகவும், தீர்க்கதரிசிகள் மூலமாய்ப் பிதா
2 க்களுக்குத் திருவுளம்பற்றின தேவன், இந்
தக் கடைசிநாட்களில் [2]குமாரன்மூலமாய்
நமக்குத் திருவுளம்பற்றினார்; [3]இவரைச் சர்
வத்துக்கும் சுதந்தரவாளியாக நியமித்தார்,
[4]இவரைக்கொண்டு உலகங்களையும் உண்டாக்
3 கினார். இவர் அவருடைய மகிமையின் பிர
காசமும், [5]அவருடைய தன்மையின் சொரூப
முமாயிருந்து, சர்வத்தையும் தம்முடைய வல்
லமையுள்ள வசனத்தினாலே தாங்குகிறவராய்,
[6]தம்மாலேதாமே நம்முடைய பாவங்களை நீக்
கும் சுத்திகரிப்பை உண்டுபண்ணி, [7]உன்ன
தத்திலுள்ள மகத்துவமானவருடைய வலது
4 பாரிசத்திலே உட்கார்ந்தார். இவர் தேவதூ
தரைப் பார்க்கிலும் எவ்வளவு விசேஷித்த
நாமத்தைச் சுதந்தரித்துக்கொண்டாரோ, [8]அவ்
வளவு அதிகமாய் அவர்களிலும் மேன்மையுள்
5 ளவரானார். எப்படியெனில், [9]நீர் என்னு
டைய குமாரன், இன்று நான் உம்மை ஜநிப்
பித்தேன் என்றும்; [10]நான் அவருக்குப் பிதா
வாயிருப்பேன், அவர் எனக்குக் குமாரனாயி
ருப்பார் என்றும், அவர் தூதர்களில் யாருக்கா
வது எப்போதாகிலும் சொன்னதுண்டா?
6 மேலும், தமது முதற்பேறானவரை உலகத்
தில் பிரவேசிக்கச் செய்தபோது: [11]தேவதூதர்
யாவரும் அவரைத் தொழுதுகொள்ளக் கட
7 வர்கள் என்றார். தேவதூதரைக் குறித்தோ:
[12]தம்முடைய தூதர்களைக் காற்றுகளாகவும்,
தம்முடைய ஊழியக்காரரை அக்கினி ஜுவா
லைகளாகவும் செய்கிறார் என்று சொல்லியி
8 ருக்கிறது. குமாரனை நோக்கி: [13]தேவனே,
உம்முடைய சிங்காசனம் என்றென்றைக்கு
முள்ளது, உம்முடைய ராஜ்யத்தின் செங்
கோல் நீதியுள்ள செங்கோலாயிருக்கிறது.
9 நீர் நீதியை விரும்பி, அக்கிரமத்தை வெறுத்
திருக்கிறீர்; ஆதலால், தேவனே, [14]உம்மு
டைய தேவன் உமது தோழரைப்பார்க்கிலும்
உம்மை ஆனந்த தைலத்தினால் அபிஷேகம்
10 பண்ணினார் என்றும்; கர்த்தாவே, [15]நீர் ஆதி
யிலே பூமியை அஸ்திபாரப்படுத்தினீர்; வான
ங்கள் உம்முடைய கரத்தின் கிரியைகளாயி
11 ருக்கிறது; அவைகள் அழிந்துபோம்; [16]நீரோ

1 எண். 12. 6, 8
2 உபா. 18 15. யோ. 1. 17: 15 15. கலா. 4. 4, 5. எபே. 1. 10
3 சங். 2. 8
4 யோ. 1. 3
5 யோ. 1. 14: 14 9. 2 கொ. 4. 4 கொலோ. 1. 15
6 7. 27: 9. 12–14
7 சங். 110. 1. எபே 1. 20, 21
8 பிலி. 2. 9, 10
9 சங். 2. 7. அப். 13. 32
10 2 சாமு. 7. 14
11 சங். 97. 7. 1 பே. 3. 22
12 சங். 104. 4
13 சங். 45. 6, 7
14 அப். 4. 27, 28: 10. 38
15 சங். 102. 25
16 மத். 24. 35. 2 பே. 3. 7, 10. வெளி. 21. 1
17 சங். 110. 1. மத். 22. 44
18 ஆதி. 19. 15, 16. சங். 34. 21. தானி. 7. 10. மத். 18. 10. யோ. 8. 17
19 அப். 7. 53. கலா. 3. 19.
20 எண். 15. 31
21 மாற். 1. 14. லூ. 1. 2
22 மாற். 16. 20. அப். 14. 3. 1 கொ. 12. 4, 7, 11
23 4. 1, 11
* புறத்தை
24 6. 5. 2 பே. 3 13
25 சங். 8. 4. ழ

நிலைத்திருப்பீர்; அவைகளெல்லாம் வஸ்தி
ரம்போலப் பழைமையாய்ப் போம்; ஒரு 12
சால்வையைப்போல அவைகளைச் சுருட்டு
வீர், அப்பொழுது மாறிப்போம்; நீரோ மாறா
தவராயிருக்கிறீர்; உம்முடைய ஆண்டுகள்
முடிந்துபோவதில்லை என்றும் சொல்லியிருக்
கிறது. மேலும், [17]நான் உம்முடைய சத்து 13
ருக்களை உமக்குப் பாதபடியாக்கிப் போடும்
வரைக்கும் நீர் என்னுடைய வலதுபாரிசத்
தில் உட்காரும் என்று தூதர்களில் யாருக்கா
வது எப்போதாகிலும் அவர் சொன்னதுண்
டா? இரட்சிப்பைச் சுதந்தரிக்கப்போகிறவர் 14
களினிமித்தமாக [18]ஊழியஞ்செய்யும்படிக்கு
அவர்களெல்லாரும் அனுப்பப்படும் பணி
விடை ஆவிகளா யிருக்கிறார்கள் அல்லவா?
ஆகையால், நாம் கேட்டவைகளை விட்டு 2
விலகாதபடிக்கு, அவைகளை மிகுந்த ஜாக்கிர
தையாய்க் கவனிக்கவேண்டும். ஏனெனில், 2
[19]தேவதூதர் மூலமாய்ச் சொல்லப்பட்ட வச
னத்திற்கு விரோதமான எந்தச் செய்கைக்கும்
[20]கீழ்ப்படியாமைக்கும் நீதியான தண்டனை
வரத்தக்கதாக அவர்களுடைய வசனம் உறு
திப்படுத்தப்பட்டிருக்க, முதலாவது கர்த்தர் 3
மூலமாய் அறிவிக்கப்பட்டு, [21]பின்பு அவரிடத்
தில் கேட்டவர்களாலே நமக்கு உறுதியாக்கப்
பட்டதும், அடையாளங்களினாலும் அற்பு 4
தங்களினாலும் பலவிதமான பலத்த செய்கை
களினாலும், தம்முடைய சித்தத்தின்படி பகிர்
ந்துகொடுத்த பரிசுத்த ஆவியின் வரங்களினா
லும், [22]தேவன் தாமே சாட்சி கொடுத்ததுமாயி
ருக்கிற இவ்வளவு பெரிதான இரட்சிப்பைக்
குறித்து [23]நாம் கவலையற்றிருப்போமானால்
தண்டனைக்கு எப்படித் தப்பித்துக்கொள்ளு
வோம்.
இனிவரும் *உலகத்தைக்குறித்துப் [24]பேசு 5
கிறோமே, அதை அவர் தூதர்களுக்குக் கீழ்ப்
படுத்தவில்லை. ஒரு இடத்திலே ஒருவன் 6
சாட்சியாக: [25]மனுஷனை நீர் நினைக்கிறதற்கும்,
மனுஷனுடைய குமாரனை நீர் விசாரிக்கிற
தற்கும் அவன் எம்மாத்திரம்? அவனை தேவ 7
தூதரிலும் சற்றுச் சிறியவனாக்கினீர்; மகிமை
யினாலும் கனத்தினாலும் அவனுக்கு முடி
சூட்டி, உம்முடைய கரத்தின் கிரியைகளின்

மேல் அவனை அதிகாரியாக வைத்து, சகலத்
தையும் அவனுடைய பாதங்களுக்குக் கீழ்ப்ப
8 டுத்தினீர் என்று சொன்னான். சகலத்தை
யும் அவனுக்குக் கீழ்ப்படுத்தினார் என்கிற
விஷயத்தில், [1]அவர் அவனுக்குக் கீழ்ப்படுத்
தாத பொருள் ஒன்றுமில்லை; அப்படியிருந்
தும், [2]இன்னும் அவனுக்குச் சகலமும் கீழ்ப்
9 பட்டிருக்கக் காணோம். என்றாலும், தேவ
னுடைய கிருபையினால் ஒவ்வொருவருக்காக
வும், [3]மரணத்தை ருசிபார்க்கும்படிக்கு தேவ
தூதரிலும் [4]சற்றுச் சிறியவராக்கப்பட்டிருந்த
இயேசு மரணத்தை *உத்தரித்ததினிமித்தம்
[5]மகிமையினாலும் கனத்தினாலும் முடிசூட்டப்
10 பட்டதைக் காண்கிறோம். ஏனென்றால் தமக்
காகவும் தம்மாலேயும் சகலத்தையும் உண்டாக்
கினவர், [6]அநேகம் பிள்ளைகளை மகிமையில்
கொண்டுவந்து சேர்க்கையில் அவர்களுடைய
இரட்சிப்பின் †அதிபதியை [7]உபத்திரவங்க
ளினாலே [8]பூரணப்படுத்துகிறது அவருக்கு
11 ஏற்றதாயிருந்தது. எப்படியெனில், [9]பரிசுத்
தஞ்செய்கிறவரும் பரிசுத்தஞ்செய்யப்படுகிற
வர்களுமாகிய யாவரும் ஒருவராலே உண்டா
யிருக்கிறார்கள்; [10]இதினிமித்தம் அவர்களைச்
சகோதரரென்று சொல்ல அவர் வெட்கப்ப
12 டாமல்: உம்முடைய நாமத்தை என் சகோ
தரருக்கு அறிவித்து, [11]சபைநடுவில் உம்மைத்
13 துதித்துப் பாடுவேன் என்றும்; நான் அவ
ரிடத்தில்[12]நம்பிக்கையா யிருப்பேன் என்றும்;
இதோ, [13]நானும், தேவன் எனக்குக் கொடுத்த
பிள்ளைகளும் என்றும் சொல்லியிருக்கிறார்.
14 ஆதலால், பிள்ளைகள் மாம்சத்தையும் இரத்தத்
தையும் உடையவர்களாயிருக்க, [14]அவரும்
அவர்களைப்போல மாம்சத்தையும் இரத்தத்தை
யும் உடையவரானார்; மரணத்துக்கு அதிகாரி
யாகிய பிசாசானவனைத் [15]தமது மரணத்தி
15 னாலே அழிக்கும்படிக்கும், ஜீவகாலமெல்
லாம் [16]மரணபயத்தினாலே அடிமைத்தனத்திற்
குள்ளானவர்கள் யாவரையும் விடுதலைபண்
16 ணும்படிக்கும் அப்படியானார். ஆதலால், அவர்
தேவதூதருக்கு உதவியாகக் கைகொடாமல்,
ஆபிரகாமின் சந்ததிக்கு உதவியாகக் கைகொ
17 டுத்தார். அன்றியும், அவர் ஜனத்தின் பாவங்
களை நிவிர்த்திசெய்வதற் கேதுவாக, [17]தேவகா
ரியங்களைக்குறித்து இரக்கமும் உண்மையு
முள்ள பிரதான ஆசாரியராயிருக்கும்படிக்கு
[18]எவ்விதத்திலும் தம்முடைய சகோதரருக்கு
18 ஒப்பாகவேண்டியதாயிருந்தது. ஆதலால்,
அவர்தாமே சோதிக்கப்பட்டுப் பாடுபட்டதி
னாலே, [19]அவர் சோதிக்கப்படுகிறவர்களுக்கு
உதவிசெய்ய வல்லவராயிருக்கிறார்.

3 இப்படியிருக்க, [20]பரம அழைப்புக்குப் பங்
குள்ளவர்களாகிய பரிசுத்த சகோதரரே, [21]நாம்
அறிக்கைபண்ணுகிற ‡அப்போஸ்தலரும் பிர
தான ஆசாரியருமாயிருக்கிற கிறிஸ்து இயே
2 சுவைக் கவனித்துப் பாருங்கள்; மோசே
தேவனுடைய வீட்டில் எங்கும் உண்மையுள்
ளவனா யிருந்ததுபோல, [22]இவரும் தம்மை

1 மத். 28. 18
2 1 கொரி. 15. 24–27
3 யோ. 3. 16. வெளி. 5. 9
4 பிலி. 2. 7–9
* சகித்ததின்
5 அப். 2. 33
6 ரோ. 11. 36
† காரணரை. 12. 2
7 ஏசா. 55. 4. அப். 3. 15
8 5. 8, 9. லூக். 13. 32
9 யோ. 17. 21: 20. 17
10 மத். 28. 10, 19. அப். 17. 26. ரோ. 8. 29
11 சங். 22. 22
12 சங். 18. 2. ஏசா. 12. 2
13 ஏசா. 8. 18. யோ. 10. 29: 17. 6–12
14 யோ. 1. 14
15 1 கொரி. 15. 54, 55
16 லூக். 1. 71. ரோ. 8. 15. 2 தீமோ. 1. 7
17 4. 15, 16: 5. 1, 2
18 பிலி. 2. 7
19 4. 15, 16: 7. 25
20 ரோ. 1. 7. 2 பே. 1. 10
21 4. 14. ரோ. 15. 8
‡ அனுப்பப்பட்டவர். யோ. 20. 21
22 எண். 12. 7
23 சகரி. 6. 12, 13. மத். 16. 18
24 எபே. 2. 10: 3. 11
25 எண். 12. 7. யோசு. 1. 2
26 சங். 2. 7, 12
27 10. 38, 39. மத். 10. 22
28 1 கொரி. 3. 16. 1 பே. 2. 5
29 சங். 95. 7. ஞ. அப். 1. 16
30 எரே. 2. 13. மாற். 7. 21–23
§ மோசத்தினாலே
31 10. 24
32 6. வச
33 7. வச
34 எண். 14. 2. ஞ
35 எண். 26. 64, 65. 1 கொரி. 10. 5. யூதா 5. வச
36 உபா. 1. 34, 35

ஏற்படுத்தினவருக்கு உண்மையுள்ளவரா யிரு
க்கிறார். வீட்டை உண்டுபண்ணினவன் வீட் 3
டைப்பார்க்கிலும் அதிக கனத்திற்கு உரியவனா
யிருக்கிறான்; [23]அதுபோல மோசேயைப்பார்க்
கிலும் இவர் அதிக மகிமைக்குப் பாத்திரராயி
ருக்கிறார். ஏனெனில், எந்த வீடும் ஒருவனால் 4
உண்டாக்கப்படும்; [24]எல்லாவற்றையும் உண்
டுபண்ணினவர் தேவன். சொல்லப்படப் 5
போகிற காரியங்களுக்குச் சாட்சியாக, [25]மோ
சே பணிவிடைக்காரனாய், அவருடைய வீட்
டில் எங்கும் உண்மையுள்ளவனாயிருந்தான்.
கிறிஸ்துவோ அவருடைய வீட்டிற்கு மேற் 6
பட்டவரான குமாரனாக [26]உண்மையுள்ளவரா
யிருக்கிறார்; [27]நம்பிக்கையினாலே உண்டாகும்
தைரியத்தையும் மேன்மை பாராட்டலையும்
முடிவுபரியந்தம் உறுதியாய்ப் பற்றிக்கொண்
டிருப்போமாகில், [28]நாமே அவருடைய வீடா
யிருப்போம். ஆகையால், பரிசுத்த ஆவியா 7
னவர் சொல்லுகிறபடியே: [29]இன்று அவரு
டைய சத்தத்தைக் கேட்பீர்களாகில், வனாந் 8
தரத்திலே கோபமூட்டினபோதும், சோதனை
நாளிலும் நடந்ததுபோல, உங்கள் இருதயங்க
ளைக் கடினப்படுத்தாதிருங்கள். அங்கே உங் 9
கள் பிதாக்கள் என்னைச் சோதித்து என்னைப்
பரீட்சைபார்த்து, நாற்பது வருஷகாலம் என்
கிரியைகளைக் கண்டார்கள். ஆதலால், நான் 10
அந்தச் சந்ததியை அரோசித்து, அவர்கள் எப்
பொழுதும் வழுவிப்போகிற இருதயமுள்ள
ஜனமென்றும், என்னுடைய வழிகளை அறி
யாதவர்களென்றும் சொல்லி; என்னுடைய 11
இளைப்பாறுதலில் அவர்கள் பிரவேசிப்பதில்
லையென்று என்னுடைய கோபத்திலே ஆணை
யிட்டேன் என்றார். சகோதரரே, ஜீவனு 12
ள்ள தேவனைவிட்டு விலகுவதற்கேதுவான
[30]அவிசுவாசமுள்ள பொல்லாத இருதயம் உங்க
ளில் ஒருவனுக்குள்ளும் இராதபடிக்கு நீங்கள்
எச்சரிக்கையா யிருங்கள். உங்களில் ஒருவ 13
னாகிலும் பாவத்தின் §வஞ்சனையினாலே கடி
னப்பட்டுப்போகாதபடிக்கு, [31]இன்று என்னப்
படுமளவும் நாடோறும் ஒருவருக்கொருவர் புத்
திசொல்லுங்கள். நாம் ஆரம்பத்திலே கொ 14
ண்ட நம்பிக்கையை முடிவுபரியந்தம் உறுதி
யாய்ப் பற்றிக்கொண்டிருப்போமாகில், [32]கிறி
ஸ்துவினிடத்தில் பங்குள்ளவர்களா யிருப்
போம். இன்று அவருடைய சத்தத்தைக் 15
கேட்பீர்களாகில், கோபமூட்டுதலில் நடந்தது
போல உங்கள் இருதயங்களைக் கடினப்படுத்
தாதிருங்கள் [33]என்று சொல்லியிருக்கிறதே:
கேட்டவர்களில் கோபமூட்டினவர்கள் யார்? 16
[34]மோசேயினால் எகிப்திலிருந்து புறப்பட்ட
யாவரும் அப்படிச் செய்தார்களல்லவா? மே 17
லும், அவர் நாற்பது வருஷமாய் யாரை அரோ
சித்தார்? பாவஞ்செய்தவர்களையல்லவா? [35]அவர்
களுடைய சவங்கள் வனாந்தரத்தில் விழுந்து
போயிற்றே. பின்னும், [36]என்னுடைய இளைப் 18
பாறுதலில் பிரவேசிப்பதில்லையென்று அவர்
யாரைக்குறித்து ஆணையிட்டார்? கீழ்ப்படியா

19 தவர்களைக் குறித்தல்லவா? ஆதலால், [1]அவி
சுவாசத்தினாலே அவர்கள் அதில் பிரவேசிக்
கக் கூடாமற்போனார்கள் என்று பார்க்கிறோம்.

4 ஆனபடியினாலே, அவருடைய இளைப்பா
றுதலில்பிரவேசிப்பதற்கேதுவானவாக்குத்தத்
தம் நமக்கு உண்டாயிருக்க, [2]உங்களில் ஒருவ
னும் அதை அடையாமல்பின்வாங்கிப் போன
வனாகக் காணப்படாதபடிக்குப் பயந்திருக்கக்
2 கடவோம். எனெனில், சுவிசேஷம் அவர்க
ளுக்கு அறிவிக்கப்பட்டதுபோல, நமக்கும்
அறிவிக்கப்பட்டது; கேட்டவர்கள் விசுவாச
மில்லாமல் கேட்டபடியினால், அவர்கள் கே
ட்ட வசனம் அவர்களுக்குப் பிரயோஜனப்
3 படவில்லை. விசுவாசித்தவர்களாகிய நாமோ
அந்த இளைப்பாறுதலில் பிரவேசிக்கிறோம்;
அவருடைய கிரியைகள் உலகத்தோற்றமுதல்
முடிந்திருந்தும்: [3]இவர்கள் என்னுடைய இளை
ப்பாறுதலில் பிரவேசிப்பதில்லையென்று என்
னுடைய கோபத்திலே ஆணையிட்டேன் என்
4 றார். மேலும், [4]தேவன் தம்முடைய கிரியை
களையெல்லாம் முடித்து ஏழாம்நாளிலே ஓய்ந்
திருந்தார் என்று ஏழாம்நாளைக்குறித்து ஓரிடத்
5 தில் சொல்லியிருக்கிறார். அன்றியும், அவர்
கள் என்னுடைய இளைப்பாறுதலில் பிரவே
சிப்பதில்லை என்றும் அந்த இடத்திலேதானே
6 சொல்லியிருக்கிறார். ஆகையால், சிலர் அதில்
பிரவேசிப்பது இன்னும் வரப்போகிற காரிய
மாயிருக்கிறபடியினாலும், [5]சுவிசேஷத்தை
முதலாவது கேட்டவர்கள் கீழ்ப்படியாமையி
னாலே அதில் பிரவேசியாமற்போனபடியினா
7 லும், இன்று அவருடைய சத்தத்தைக் கேட்
பீர்களாகில் உங்கள் இருதயங்களைக் கடினப்
படுத்தாதிருங்கள் என்று வெகுகாலத்திற்குப்
பின்பு [6]தாவீதின் சங்கீதத்திலே சொல்லியி
ருக்கிறபடி, இன்று என்று சொல்வதினாலே
8 பின்னும் ஒரு நாளைக் குறித்திருக்கிறார். யோ
சுவா அவர்களை இளைப்பாறுதலுக்கு உட்படுத்
தியிருந்தால், பின்பு அவர் வேறொரு நாளைக்
9 குறித்துச் சொல்லியிருக்கமாட்டாரே. ஆகை
யால், தேவனுடைய ஜனங்களுக்கு இளைப்பா
றுகிற காலம் இனி வருகிறதாயிருக்கிறது.
10 எனெனில், அவருடைய இளைப்பாறுதலில்
பிரவேசித்தவன், தேவன் தம்முடைய கிரியை
களை முடித்து ஓய்ந்ததுபோல, தானும் தன் கிரி
11 யைகளை முடித்து ஓய்ந்திருப்பான். ஆகையா
ல், அந்தத் திருஷ்டாந்தத்தின்படி [7]ஒருவனாகி
லும் கீழ்ப்படியாமையினாலே விழுந்துபோகாத
படிக்கு, நாம் இந்த இளைப்பாறுதலில் பிரவேசி
12 க்க ஜாக்கிரதையா யிருக்கக்கடவோம். தேவ
னுடைய வார்த்தையானது [8]ஜீவனும் வல்லமை
யும் உள்ளதாயும், [9]இருபுறமும் கருக்குள்ள
எந்தப் பட்டயத்திலும் கருக்கானதாயும், ஆத்
துமாவையும் ஆவியையும், கணுக்களையும் ஊ
னையும் [10]பிரிக்கத்தக்கதாக உருவக் குத்துகிற
தாயும், இருதயத்தின் நினைவுகளையும் யோசனை
களையும் வகையறுக்கிறதாயும் இருக்கிறது.
13 அவருடைய பார்வைக்கு மறைவான சிருஷ்டி
ஒன்றுமில்லை; [11]சகலமும் அவருடைய கண்க
ளுக்கு முன்பாக நிர்வாணமாயும் வெளியரங்க
மாயுமிருக்கிறது, அவருக்கே நாம் கணக்கு
ஒப்புவிக்கவேண்டும்.

வானங்களின் வழியாய்ப் பரலோகத்திற் 14
குப் போன தேவகுமாரனாகிய இயேசு என்
னும் [12]மகா பிரதான ஆசாரியர் நமக்கு இருக்
கிறபடியினால், நாம் பண்ணின அறிக்கையை
உறுதியாய்ப் [13]பற்றிக்கொண்டிருக்கக் கட
வோம். நம்முடைய பலவீனங்களைக் குறித் 15
துப் பரிதபிக்கக்கூடாத பிரதான ஆசாரியர்
நமக்கிராமல், [14]எல்லாவிதத்திலும் நம்மைப்
போல் சோதிக்கப்பட்டும், [15]பாவமில்லாதவரா
யிருக்கிற பிரதான ஆசாரியரே நமக்கிருக்கி
றார். ஆதலால், நாம் இரக்கத்தைப் பெறவும், 16
ஏற்றசமயத்தில் சகாயஞ்செய்யுங் கிருபையை
அடையவும், [16]தைரியமாய்க் கிருபாசனத்தண்
டையிலே சேரக்கடவோம்.

அன்றியும், மனுஷரில் தெரிந்துகொள்ளப் 5
பட்ட எந்தப் பிரதான ஆசாரியனும் பாவங்க
ளுக்காகக் காணிக்கைகளையும் பலிகளையும்
செலுத்தும்படி, [17]மனுஷருக்காக தேவகாரியங்
களைப்பற்றி நியமிக்கப்படுகிறான். தானும் 2
பலவீனமுள்ளவனானபடியினாலே, [18]அறியா
தவர்களுக்கும் நெறிதப்பிப் போனவர்களுக்
கும் இரங்கத்தக்கவனாயிருக்கிறான். அதினி 3
மித்தம் அவன் ஜனங்களுடைய பாவங்களுக்
காகப் பலியிடவேண்டியதுபோல, [19]தன்னு
டைய பாவங்களுக்காகவும் பலியிடவேண்டிய
தாயிருக்கிறது. மேலும், [20]ஆரோனைப்போல 4
தேவனால் *அழைக்கப்பட்டாலொழிய, [21]ஒரு
வனும் இந்தக் கனமான ஊழியத்துக்குத் தா
னாய் ஏற்படுகிறதில்லை. அந்தப்படியே கிறி 5
ஸ்துவும் [22]பிரதான ஆசாரியராகிறதற்குத் தம்
மைத்தாமே உயர்த்தவில்லை; [23]நீர் என்னுடைய
குமாரன், இன்று நான் உம்மை ஜநிப்பித்தேன்
என்று அவரோடே சொன்னவரே அவரை
உயர்த்தினார். அப்படியே வேறொரு இடத்தி 6
லும்: [24]நீர் மெல்கிசேதேக்கின் முறைமையின்
படி என்றென்றைக்கும் ஆசாரியராயிருக்கி
றீர் என்று சொல்லியிருக்கிறார். அவர் மாம் 7
சத்திலிருந்த நாட்களில், [25]தம்மை மரணத்தி
னின்று இரட்சிக்க வல்லமையுள்ளவரை நோ
க்கி, [26]பலத்த சத்தத்தோடும் கண்ணீரோடும்
விண்ணப்பம்பண்ணி, வேண்டுதல்செய்து,
தமக்கு உண்டான பயபக்தியினிமித்தம் கேட்
கப்பட்டு, அவர் குமாரனாயிருந்தும் [27]பட்ட 8
பாடுகளினாலே கீழ்ப்படிதலைக் கற்றுக்கொண்
டு, தாம் பூரணரானபின்பு, [28]தமக்குக் கீழ்ப் 9
படிகிற யாவரும் நித்திய இரட்சிப்பை அடை
வதற்குக் காரணராகி, மெல்கிசேதேக்கின் 10
முறைமையின்படியான [29]பிரதான ஆசாரியர்
என்று தேவனாலே †நாமம் தரிக்கப்பட்டார்.

இந்த மெல்கிசேதேக்கைப்பற்றி நாம் விஸ் 11
தாரமாய்ப் பேசலாம்; [30]நீங்கள் கேள்வியில்
மந்தமுள்ளவர்களானபடியால், அதை விள
ங்கப்பண்ணுகிறது அரிதாயிருக்கும். காலத் 12

1 4. 6
2 12. 15
3 3. 14. சங். 95. 11
4 ஆதி. 2. 2
5 3. 19
6 சங். 95. 8
7 3. 12, 18, 19. 2 பே. 1. 10
8 ஏசா. 49. 2. 2 கொ. 10. 4, 5. 1 பே. 1. 23
9 வெளி. 1. 16
10 சங். 139. 2. எரே. 17. 10. வெளி. 2. 23
11 நீதி. 15. 11
12 9. 12, 24
13 10. 23
14 ஓசி. 11. 8
15 ஓசா. 22. 28. 1 பே. 2. 22. 1 யோ. 3. 5
16 10. 19–22. எபே. 3. 12
17 8. 3
18 7. 28
19 லேவி. 9. 7
20 யாத். 28. 1. எண். 16. 40
* நியமிக்கப் பட்டா லொழிய
21 2 நாளா. 26. 18. யோ. 3. 27
22 யோ. 8. 54
23 சங். 2. 7
24 7. 17, 21. சங். 110. 4
25 மத். 26. 53
26 மத். 26. 37–44
27 பிலி. 2. 8
28 சங். 95. 11
29 6. வச
† நியமிக்கப்பட்டார்
30 மத். 13. 15. யோ. 16. 12. 2 பே. 3. 16

தைப் பார்த்தால், போதகராயிருக்கவேண்டிய
உங்களுக்கு தேவனுடைய வாக்கியங்களின்
[1]மூல உபதேசங்களை மறுபடியும் உபதேசிக்க
வேண்டியதா யிருக்கிறது; நீங்கள் பலமான
ஆகாரத்தையல்ல, [2]பாலை உண்ணத்தக்கவர்க
13 ளானீர்கள். பாலுண்கிறவன் குழந்தையாயி
ருக்கிறபடியினாலே [3]நீதியின் வசனத்தில்
14 பழக்கமில்லாதவனா யிருக்கிறான். பலமான
ஆகாரமானது [4]நன்மை தீமை இன்னதென்று
பயிற்சியினால் பகுத்தறியத்தக்கதாக முயற்சி
செய்யும் ஞானேந்திரியங்களை உடையவர்களா
கிய [5]பூரண வயதுள்ளவர்களுக்கே தகும்.
6 ஆகையால், [6]கிறிஸ்துவைப்பற்றிச் சொல்
லிய மூல உபதேச வசனங்களை நாம் விட்டு,
[7]செத்த கிரியைகளுக்கு நீங்கலாகும் மனந்
திரும்புதல், [8]தேவன்பேரில் வைக்கும் விசு
2 வாசம், ஸ்நானங்களுக்கடுத்த [9]உபதேசம்,
[10]கைகளை வைக்குதல், [11]மரித்தோரின் உயிர்த்
தெழுதல், [12]நித்திய நியாயத்தீர்ப்பு, என்பவை
களாகிய அஸ்திபாரத்தை மறுபடியும் போடா
மல், பூரணராகும்படி கடந்துபோவோமாக.
3 தேவனுக்குச் [13]சித்தமானால் இப்படியே செய்
4 வோம். ஏனெனில், [14]ஒருதரம் பிரகாசிப்பிக்க
ப்பட்டும், பரம ஈவை ருசிபார்த்தும், *பரிசுத்த
5 ஆவியைப்பெற்றும், தேவனுடைய நல்வார்த்
தையையும் [15]இனிவரும் உலகத்தின் பெலன்
6 களையும் ருசிபார்த்தும், மறுதலித்துப்போன
வர்கள், [16]தேவனுடைய குமாரனைத் தாங்களே
[17]மறுபடியும் சிலுவையில் அறைந்து அவமா
னப்படுத்துகிறபடியால், மனந்திரும்புதற்கே
துவாய் அவர்களை மறுபடியும் புதுப்பிக்கிறது
7 கூடாதகாரியம். எப்படியெனில், தன்மேல்
அடிக்கடி பெய்கிற மழையைக் குடித்து, தன்
னிடத்தில் பயிரிடுகிறவர்களுக்கேற்ற பயிரை
முளைப்பிக்கும் நிலமானது [18]தேவனால் ஆசீர்
8 வாதம் பெறும். முள்செடிகளையும் [19]முள்பூண்
டுகளையும் முளைப்பிக்கிற நிலமோ தகாததாயும்
சபிக்கப்படுகிறதற்கேற்றதாயும் இருக்கிறது;
சுட்டெரிக்கப்படுவதே அதின் முடிவு.
9 பிரியமானவர்களே, நாங்கள் இப்படிச்
சொன்னாலும், நன்மையானவைகளும் இரட்
சிப்புக்குரியவைகளுமான காரியங்கள் உங்க
ளிடத்தில் உண்டாயிருக்கிறதென்று நம்பி
10 யிருக்கிறோம். ஏனென்றால், [20]உங்கள் கிரி
யையையும், நீங்கள் பரிசுத்தவான்களுக்கு
ஊழியஞ்செய்ததினாலும் செய்துவருகிறதினா
லும் தமது நாமத்திற்காகக் காண்பித்த அன்
புள்ள பிரயாசத்தையும் மறந்துவிடுகிறதற்கு
11 தேவன் அநீதியுள்ளவர் அல்லவே. நீங்கள்
அசதியாயிராமல், [21]வாக்குத்தத்தமான ஆசீர்
வாதங்களை விசுவாசத்தினாலும் நீடிய பொறு
மையினாலும் சுதந்தரித்துக்கொள்ளுகிறவர்க
12 ளைப் பின்பற்றுகிறவர்களா யிருந்து, உங்க
ளுக்கு நம்பிக்கையின் பூரண நிச்சயம் உண்
டாகும்படி நீங்கள் யாவரும் முடிவுபரியந்தம்
[22]அப்படியே ஜாக்கிரதையைக் காண்பிக்க
வேண்டுமென்று ஆசையாயிருக்கிறோம்.

ஆபிரகாமுக்கு தேவன் வாக்குத்தத்தம்பண் 13
ணினபோது, ஆணையிடும்படி தம்மிலும் பெரி
யவர் ஒருவரும் இல்லாதபடியினாலே தமது
பேரிலேதானே ஆணையிட்டு: நிச்சயமாக நான் 14
உன்னை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்து, [23]உன்
னைப் பெருகவே பெருகப்பண்ணுவேன் என்
றார். அந்தப்படியே, அவன் பொறுமை 15
யாய்க் காத்திருந்து, வாக்குத்தத்தம் பண்ணப்
பட்டதைப் பெற்றான். மனுஷர் தங்களிலும் 16
பெரியவர்பேரில் ஆணையிடுவார்கள்; [24]உறுதி
பண்ணும்படிக்கு ஆணையிடுதலே சகல விவா
தத்திற்கும் முடிவு. அந்தப்படி, தேவனும் 17
[25]வாக்குத்தத்தம்பண்ணப்பட்டவைகளைச்சுதந்
தரித்துக்கொள்ளுகிறவர்களுக்குத் தமது [26]ஆ
லோசனையின் மாறாத நிச்சயத்தைப் பரிபூரண
மாய்க் காண்பிக்கும்படி சித்தமுள்ளவராய்,
ஓர் ஆணையினாலே அதை ஸ்திரப்படுத்தினார்.
நமக்கு முன் வைக்கப்பட்ட நம்பிக்கையைப் 18
[27]பற்றிக்கொள்ளும்படி அடைக்கலமாய் ஓடி
வந்த நமக்கு இரண்டு மாறாத விசேஷங்களி
னால் நிறைந்த ஆறுதல் உண்டாகும்படிக்கு
எவ்வளவேனும் [28]பொய்யுரையாத தேவன்
அப்படிச் செய்தார். அந்த நம்பிக்கை நமக்கு 19
நிலையும் உறுதியும் [29]திரைக்குள்ளாகப் போகி
றதுமான ஆத்தும நங்கூரமா யிருக்கிறது.
நமக்கு [30]முன்னோடினவராகிய இயேசு [31]மெல் 20
கிசேதேக்கின் முறைமையின்படி நித்திய பிர
தான ஆசாரியராய் நமக்காக அந்தத் திரைக்
குள் பிரவேசித்திருக்கிறார்.

இந்த மெல்கிசேதேக்கு [32]சாலேமின் ராஜா 7
வும், உன்னதமான தேவனுடைய ஆசாரி
யனுமாயிருந்தான்; ராஜாக்களை முறியடித்து
வந்த ஆபிரகாமுக்கு இவன் எதிர்கொண்டு
போய், அவனை ஆசீர்வதித்தான். இவனுக்கு 2
ஆபிரகாம் எல்லாவற்றிலும் தசமபாகம் கொ
டுத்தான்; இவனுடைய முதற்பேராகிய மெல்
கிசேதேக்கு என்பதற்கு நீதியின் ராஜா என்
றும், பின்பு சாலேமின் ராஜா என்பதற்குச்
சமாதானத்தின் ராஜா என்றும் அருத்தமாம்.
இவன் தகப்பனும் தாயும் வம்சவரலாறும் இல் 3
லாதவன்; இவன் நாட்களின் துவக்கமும்
ஜீவனின் முடிவும் உடையவனாயிராமல், தேவ
னுடைய குமாரனுக்கு ஒப்பானவனாய் என்
றென்றைக்கும் ஆசாரியனாக நிலைத்திருக்கி
றான்.

இவன் எவ்வளவு பெரியவனாயிருக்கிறான் 4
பாருங்கள்; கோத்திரத்தலைவனாகிய ஆபிரகாம்
முதலாய் கொள்ளையிடப்பட்ட பொருள்களில்
இவனுக்குத் தசமபாகம் கொடுத்தான். லேவி 5
யின் புத்திரரில் [33]ஆசாரியத்துவத்தை அடை
கிறவர்களும், ஆபிரகாமின் அரையிலிருந்து
வந்த தங்கள் சகோதரரான ஜனங்களின்
கையிலே நியாயப்பிரமாணத்தின்படி தசம
பாகம் வாங்குகிறதற்குக் கட்டளைபெற்றிருக்
கிறார்கள். ஆகிலும், [34]அவர்களுடைய வம்ச 6
வரிசையில் வராதவனாகிய இவன் ஆபிரகா
மின் கையில் தசமபாகம் வாங்கி, [35]வாக்குத்தத்

[1] 6. 1
[2] 1 கொ. 3. 1–3
[3] 1 கொ. 13. 11. எபே. 4. 14. 1 பே. 2. 2, 3
[4] 1 கொ. 2. 14, 15
[5] 1 கொ. 2. 6. எபே. 4. 13. பிலி. 3. 15
[6] பிலி. 3. 12–14
[7] 9. 14
[8] 11. 6
[9] அப். 19. 4, 5
[10] அப். 8. 17
[11] அப். 17. 31, 32
[12] அப். 24. 25. ரோ. 2. 16
[13] மாற். 4. 15
[14] 10. 26. மத். 5. 13; 12. 31, 32. யோ. 15. 6. 2 பே. 1. 4; 2. 20, 21. 1 யோ. 5. 16
* 2 பே. 1. 4. காண்க.
[15] 2. 5
[16] ஏசா. 1. 28
[17] 10. 29
[18] சங். 65. 10
[19] ஏசா. 5. 6
[20] மத். 25. 40. ரோ. 3. 4; 15. 25. 2 கொ. 8. 4
[21] நீதி. 15. 19. 2 பே. 1. 10.
[22] 3. 6, 14. கொலோ. 2. 2
[23] ஆதி. 22. 16, 17
[24] யாத். 22. 11
[25] 11. 9. ரோ. 8. 17
[26] ரோ. 11. 29
[27] 1 தீமோ. 6. 12
[28] தீத். 1. 2
[29] 9. 7. லேவி. 16. 15
[30] 4. 14
[31] 7. 17
[32] ஆதி. 14. 18.
[33] எண். 18. 21–26
[34] ஆதி. 14. 20
[35] ரோ. 4. 13; 9. 4

7 தங்களைப்பெற்றவனை ஆசீர்வதித்தான். சிறிய
வன் பெரியவனாலே ஆசீர்வதிக்கப்படுவான்,
8 அதற்குச் சந்தேகமில்லை. அன்றியும், இங்கே,
மரிக்கிற மனுஷர்கள் தசமபாகம் வாங்குகிறார்
கள்; அங்கேயோ, [1]பிழைத்திருக்கிறான் என்று
9 சாட்சிபெற்றவன் வாங்கினான். அன்றியும்,
மெல்கிசேதேக்கு ஆபிரகாமுக்கு எதிர்கொண்டு
போனபோது, லேவியானவன் தன் தகப்ப
10 னுடைய அரையிலிருந்தபடியால், தசமபா
கம் வாங்குகிற அவனும் ஆபிரகாமின் மூல
மாய்த் தசமபாகம் கொடுத்தான் என்று சொல்
லலாம்.
11 அல்லாமலும், இஸ்ரவேல் ஜனங்கள் லேவி
கோத்திர ஆசாரிய முறைமைக்கு உட்பட்டி
ருந்தல்லவோ நியாயப்பிரமாணத்தைப் பெற்
றார்கள்;[2] அந்த ஆசாரிய முறைமையினாலே பூர
ணப்படுதல் உண்டாயிருக்குமானால், ஆரோ
னுடைய முறைமையின்படி அழைக்கப்படா
மல், மெல்கிசேதேக்கினுடைய முறைமை
யின்படி அழைக்கப்பட்ட வேறொரு ஆசா
12 ரியர் எழும்பவேண்டுவதென்ன? ஆசாரியத்து
வம் மாற்றப்பட்டிருக்குமேயானால், நியாயப்
பிரமாணமும் மாற்றப்பட வேண்டியதாகும்.
13 இவைகள் எவரைக்குறித்துச் சொல்லப்பட்டி
ருக்கிறதோ, அவர் வேறொரு கோத்திரத்துக்
குள்ளானவரா யிருக்கிறாரே; அந்தக் கோத்
திரத்தில் ஒருவனாகிலும் பலிபீடத்து ஊழி
14 யம் செய்ததில்லையே. நம்முடைய கர்த்தர்
[3]யூதாகோத்திரத்தில் தோன்றினாரென்பது பிர
சித்தமாயிருக்கிறது; அந்தக் கோத்திரத்தா
ரைக்குறித்து மோசே ஆசாரியத்துவத்தைப்
15 பற்றி ஒன்றும் சொல்லவில்லையே. அல்லா
மலும், மெல்கிசேதேக்குக்கு ஒப்பாய் வே
றொரு ஆசாரியர் எழும்புகிறார் என்று சொல்
லியிருப்பதினால், மேற்சொல்லியது மிகவும்
16 பிரசித்தமாய் விளங்குகிறது. அவர் மாம்ச
சம்பந்தமான கட்டளையாகிய நியாயப்பிரமா
17 ணத்தின்படி ஆசாரியராகாமல், நீர் மெல்கி
சேதேக்கின் முறைமையின்படி [4]என்றென்
றைக்கும் ஆசாரியராயிருக்கிறீர் என்று சொல்
லிய சாட்சிக்குத்தக்கதாக அழியாத ஜீவனுக்
குரிய வல்லமையின்படியே ஆசாரியரானார்.
18 முந்தின கட்டளை பெலவீனமுள்ளதும் [5]பயன
ற்றதுமாயிருந்ததினிமித்தம் மாற்றப்பட்டது.
19 நியாயப்பிரமாணமானது [6]ஒன்றையும்பூரணப்
படுத்தவில்லை, [7]அதிக நன்மையான நம்பிக்
கையை வருவிப்பதோ பூரணப்படுத்துகிறது;
அந்த நம்பிக்கையினாலே தேவனிடத்தில்
20 சேருகிறோம். அன்றியும், அவர்கள் ஆணை
யில்லாமல் ஆசாரியராக்கப்படுகிறார்கள்; இவ
ரோ; [8]நீர் மெல்கிசேதேக்கின் முறைமை
யின்படி என்றென்றைக்கும் ஆசாரியராயி
ருக்கிறீர் என்று கர்த்தர் ஆணையிட்டார்,
மனம்மாறாமலும் இருப்பார் என்று தம்மு
டனே சொன்னவராலே ஆணையோடே ஆசா
21 ரியரானார். ஆனதால், இயேசுவானவர் ஆணை
யின்படியே ஆசாரியராக்கப்பட்டது எவ்வ
ளவு விசேஷித்த காரியமோ, அவ்வளவு 22
[9]விசேஷித்த உடன்படிக்கைக்குப் *பிணையா
ளியானார். அன்றியும், அவர்கள் மரணத்தி 23
னிமித்தம் நிலைத்திருக்கக் கூடாதவர்களான
படியால், ஆசாரியராக்கப்படுகிறவர்கள் அநே
கராயிருக்கிறார்கள். இவரோ என்றென்றைக் 24
கும் நிலைத்திருக்கிறபடியினாலே, [10]மாறிப்போ
காத ஆசாரியத்துவ முள்ளவராயிருக்கிறார்.
மேலும், தமது மூலமாய் தேவனிடத்தில் 25
சேருகிறவர்களுக்காக [11]வேண்டுதல் செய்யும்
படிக்கு அவர் எப்பொழுதும் உயிரோடிருக்
கிறவராகையால் [12]அவர்களை முற்ற முடிய
இரட்சிக்க வல்லவராயும் இருக்கிறார்.
பரிசுத்தரும், [13]குற்றமற்றவரும், மாசில்லாத 26
வரும், பாவிகளுக்கு விலகினவரும், [14]வானங்
களிலும் உயர்ந்தவருமாயிருக்கிற இவ்விதமான
பிரதான ஆசாரியரே நமக்கு ஏற்றவராயிருக்
கிறார். அவர் பிரதான ஆசாரியர்களைப்போல 27
[15]முன்பு சொந்தப் பாவங்களுக்காகவும், பின்பு
ஜனங்களுடைய பாவங்களுக்காகவும் நாடோ
றும் பலியிடவேண்டுவதில்லை; [16]ஏனெனில்
தம்மைத்தாமே பலியிட்டதினாலே இதை
ஒரேதரம் செய்து முடித்தார். நியாயப்பிரமா 28
ணமானது [17]பெலவீனமுள்ள மனுஷர்களைப்
பிரதான ஆசாரியராக ஏற்படுத்துகிறது;
[18]நியாயப்பிரமாணத்திற்குப் பின்பு உண்டான
ஆணையோடே விளங்கிய வசனமோ என்
றென்றைக்கும் பூரணரான குமாரனை ஏற்
படுத்துகிறது.

மேற்சொல்லியவைகளின் முக்கியமான **8**
பொருளென்னவெனில்; [19]பரலோகத்திலு
ள்ள மகத்துவ ஆசனத்தின் வலது பாரிசத்தி
லே உட்கார்ந்திருக்கிறவருமாய், பரிசுத்த ஸ்த 2
லத்திலும், [20]மனுஷரால் அல்ல, கர்த்தரால்
ஸ்தாபிக்கப்பட்ட மெய்யான கூடாரத்திலும்
ஆசாரிய ஊழியஞ் செய்கிறவருமாயிருக்கிற
பிரதான ஆசாரியர் நமக்கு உண்டு. ஒவ் 3
வொரு பிரதான ஆசாரியனும் காணிக்கை
களையும் பலிகளையும் செலுத்தும்படி நியமிக்
கப்படுகிறான்; [21]ஆதலால் செலுத்தும்படிக்கு
ஏதோ ஒன்று இவருக்கும் அவசியம் வேண்டி
யதாயிருக்கிறது. பூமியிலே அவர் இருப்பா 4
ரானால் ஆசாரியரா யிருக்கமாட்டார்; ஏனெ
னில், நியாயப்பிரமாணத்தின்படி காணிக்கை
களைச் செலுத்துகிற ஆசாரியர்கள் இருக்கி
றார்களே; இவர்கள் செய்யும் ஆராதனை பர 5
லோகத்திலுள்ளவைகளின் சாயலுக்கும், [22]நிழ
லுக்கும் ஒத்திருக்கிறது; அப்படியே, மோசே
கூடாரத்தை உண்டுபண்ணப் போகையில்:
[23]மலையிலே உனக்குக் காண்பிக்கப்பட்ட மா
திரியின்படியே நீ எல்லாவற்றையும் செய்ய
எச்சரிக்கையாயிரு என்று தேவன் அவனுக்
குக் கட்டளையிட்டார். இவரோ விசேஷித்த 6
வாக்குத்தத்தங்களின்பேரில் ஸ்தாபிக்கப்பட்ட
விசேஷித்த உடன்படிக்கைக்கு எப்படி மத்தி
யஸ்தராயிருக்கிறாரோ, [24]அப்படியே முக்கிய
மான ஆசாரிய ஊழியத்தையும் பெற்றிருக்

1 5. 6. வெளி. 1. 18
2 5-10, 18, 19. வச: 8. 7. கலா. 2. 21
3 ஏசா. 11. 1. மத். 1. 3. வெளி. 3. 5
4 சங். 110. 4
5 அப். 13. 39. ரோ. 8. 3
6 ரோ. 3. 20
7 6. 18: 8. 6. ரோ. 5. 2
8 சங். 110. 4
9 8. 6
* மத்தியஸ்தர்
10 1 சாமு. 2. 35
11 ரோ. 8. 34. 1 யோ. 2. 1
12 யூதா. 24. வச
13 4. 15. 1 பே. 2. 22
14 எபே. 1. 20: 4. 10
15 லேவி. 9. 7
16 ரோ. 6. 10
17 5. 1, 2
18 2. 10: 5. 9
19 9. 8: 12, 24. எபே. 1. 20
20 9. 8, 11, 12, 24
21 5. 1: 9. 14. எபே. 5. 2
22 10. 1. கொலோ. 2. 17
23 யாத். 25. 40: 26. 30. அப். 7. 44
24 7. 22. 2 கொ. 3. 6-9

7 கிறார். அந்த முதலாம் உடன்படிக்கை பிழை
யில்லாதிருந்ததானால், [1]இரண்டாம் உடன்
படிக்கைக்கு இடம்தேடவேண்டுவதில்லையே.
8 அவர்களைக் குற்றப்படுத்தி, அவர்களை நோ
க்கி: இதோ, கர்த்தர் சொல்லுகிறதென்னவெ
னில்; [2]இஸ்ரவேல் குடும்பத்தோடும் யூதா
குடும்பத்தோடும் நான் புது உடன்படிக்கை
9 யை ஏற்படுத்துங் காலம் வருகிறது. அவர்
களுடைய பிதாக்களை எகிப்துதேசத்திலி
ருந்து கொண்டுவரும்படிக்கு நான் அவர்களு
டைய கையைப் பிடித்த நாளிலே அவர்க
ளோடேபண்ணின உடன்படிக்கையைப்போல
இது இருப்பதில்லை; அந்த உடன்படிக்கை
யிலே அவர்கள் நிலைநிற்கவில்லையே, நானும்
அவர்களைப் புறக்கணித்தேன் என்று கர்த்தர்
10 சொல்லுகிறார். அந்த நாட்களுக்குப் பின்பு
நான் இஸ்ரவேல் குடும்பத்தாரோடே பண்
ணும் உடன்படிக்கையாவது: என்னுடைய
பிரமாணங்களை அவர்களுடைய மனதிலே
வைத்து, அவர்களுடைய இருதயங்களில்
அவைகளை எழுதுவேன்; [3]நான் அவர்கள்
தேவனாயிருப்பேன், அவர்கள் என் ஜனமா
11 யிருப்பார்கள். அப்பொழுது சிறியவன் முதற்
கொண்டு பெரியவன்வரைக்கும் எல்லாரும்
என்னை அறிவார்கள்; [4]ஆகையால், கர்த்தரை
அறிந்துகொள் என்று ஒருவன் தன் அயலா
னுக்கும், ஒருவன் தன் சகோதரனுக்கும்
12 போதிக்கவேண்டுவதில்லை ஏனெனில் நான்
அவர்கள் அநியாயங்களைக் கிருபையாய் மன்
னித்து, [5]அவர்கள் பாவங்களையும் அக்கிரமங்
களையும் இனி நினையாமலிருப்பேன் என்று
13 கர்த்தர் சொல்லுகிறார். புது உடன்படிக்கை
என்று அவர் சொல்லுகிறதினாலே [6]முந்தின
தைப் பழமையாக்கினார்; பழமையானதும்
நாள்பட்டதுமாயிருக்கிறது உருவழிந்து போ
கக் காலம் சமீபித்திருக்கிறது.

9 அன்றியும், முதலாம் உடன்படிக்கையா
னது ஆராதனைக்கேற்ற முறைமைகளும்
[7]பூமிக்குரிய பரிசுத்த ஸ்தலமும் உடையதா
2 யிருந்தது. எப்படியெனில், [8]ஒரு கூடாரம்
உண்டாக்கப்பட்டிருந்தது; அதின் முந்தின
பாகத்தில் குத்துவிளக்கும், [9]மேஜையும்,
[10]தேவசமுகத்தப்பங்களும் இருந்தன; அது
3 பரிசுத்த ஸ்தலமென்னப்படும். இரண்டாந்
திரைக்குள்ளே [11]மகா பரிசுத்த ஸ்தலமென்
4 னப்பட்ட கூடாரம் இருந்தது. அதிலே
[12]பொன்னாற்செய்த தூபகலசமும், [13]முழுவ
தும் பொற்றகடு பொதிந்திருக்கப்பட்ட உடன்
படிக்கைப் பெட்டியும் இருந்தன; [14]அந்தப்
பெட்டியிலே மன்னா வைக்கப்பட்ட பொற்
பாத்திரமும், [15]ஆரோனுடைய தளிர்த்த கோ
லும், [16]உடன்படிக்கையின் கற்பலகைகளும்
5 இருந்தன. அதற்கு மேலே [17]மகிமையுள்ள
கேருபீன்கள் வைக்கப்பட்டுக் கிருபாசனத்
தை நிழலிட்டிருந்தன; இவைகளைக்குறித்து
விவரமாய்ப் பேச இப்பொழுது சமயமில்லை.
6 இவைகள் இவ்விதமாய் ஆயத்தமாக்கப்பட்டி
ருக்க, [18]ஆசாரியர்கள் ஆராதனை முறைமை
களை நிறைவேற்றும்படிக்கு முதலாங் கூடா
ரத்திலே நித்தமும் பிரவேசிப்பார்கள். இரண் 7
டாங் கூடாரத்திலே பிரதான ஆசாரியன்
மாத்திரம் [19]வருஷத்திற்கு ஒருதரம் இரத்தத்
தோடே பிரவேசித்து, [20]அந்த இரத்தத்தைத்
தனக்காகவும் ஜனங்களுடைய *தப்பிதங்க
ளுக்காகவும் செலுத்துவான். அதினாலே, 8
முதலாங்கூடாரம் நிற்குமளவும் பரிசுத்த ஸ்த
லத்திற்குப் போகிற [21]மார்க்கம் இன்னும்
வெளிப்படவில்லையென்று பரிசுத்த ஆவியா
னவர் தெரியப்படுத்தி யிருக்கிறார். அந்தக் 9
கூடாரம் இக்காலத்திற்கு உதவுகிற ஒப்பனை
யாயிருக்கிறது; அதற்கேற்றபடியே செலுத்
தப்பட்டுவருகிற காணிக்கைகளும் பலிகளும்
ஆராதனை செய்கிறவனுடைய [22]மனச்சாட்சி
யைப் பூரணப்படுத்தக் கூடாதவைகளாம்.
இவைகள் சீர்திருத்தல் உண்டாகும் காலம் 10
வரைக்கும் நடந்தேறும்படி கட்டளையிடப்
பட்ட [23]போஜன பானங்களும், [24]பலவித
ஸ்நானங்களும், [25]சரீரத்திற்கேற்ற சடங்கு
களுமேயல்லாமல் வேறல்ல.

கிறிஸ்துவானவர் [26]வரப்போகிற நன்மை 11
களுக்குரிய பிரதான ஆசாரியராய் வெளிப்ப
ட்டு, கையினால் செய்யப்பட்டதாகிய இந்தச்
சிருஷ்டி சம்பந்தமான கூடாரத்தின் வழியாக
அல்ல, [27]பெரிதும் உத்தமுமான கூடாரத்
தின் வழியாகவும், வெள்ளாட்டுக்கடா, இளங் 12
காளை இவைகளுடைய இரத்தத்தினாலே
அல்ல, [28]தம்முடைய சொந்த இரத்தத்தினா
லும் ஒரேதரம் [29]மகா பரிசுத்த ஸ்தலத்திலே
பிரவேசித்து, நித்திய மீட்பை உண்டுபண்ணி
னார். அதெப்படியெனில், காளை வெள்ளாட் 13
டுக்கடா இவைகளின் இரத்தமும், தீட்டுப்
பட்டவர்கள்மேல் தெளிக்கப்பட்ட [30]கடாரி
யின் சாம்பலும், சரீரசுத்தியுண்டாகும்படி பரி
சுத்தப்படுத்துமானால், நித்திய ஆவியினாலே 14
[31]தம்மைத்தாமே பழுதற்ற பலியாக தேவனு
க்கு [32]ஒப்புக்கொடுத்த கிறிஸ்துவினுடைய
இரத்தம் [33]ஜீவனுள்ள தேவனுக்கு ஊழியஞ்
செய்வதற்கு [34]உங்கள் மனச்சாட்சியைச் செ
த்த கிரியைகளறச் சுத்திகரிப்பது எவ்வளவு
நிச்சயம்! ஆகையால் முதலாம் உடன்படிக் 15
கையின் காலத்திலே நடந்த அக்கிரமங்களை
நிவிர்த்திசெய்யும்பொருட்டு அவர் மரணமடை
ந்து, [35]அழைக்கப்பட்டவர்கள் வாக்குத்தத்தம்
பண்ணப்பட்ட நித்திய சுதந்தரத்தை அடை
ந்துகொள்வதற்காக, புது உடன்படிக்கையின்
மத்தியஸ்தராயிருக்கிறார். ஏனென்றால், எங் 16
கே மரணசாதனம் உண்டோ, அங்கே அந்
தச் சாதனத்தை எழுதினவனுடைய மரண
மும் உண்டாகவேண்டும். எப்படியெனில், 17
மரணமுண்டான பின்பே மரணசாதனம்
உறுதிப்படும்; [36]அதை எழுதினவன் உயிரோ
டிருக்கையில் அதற்குப் பெலன் இல்லையே.
அந்தப்படி, முதலாம் உடன்படிக்கையும் இ 18
ரத்தமில்லாமல் பிரதிஷ்டை பண்ணப்பட

1 7. 11, 18
2 எரே. 31. 31-34
3 10. 16. ஓசி. 2. 23. சக. 8. 8
4 ஏசா. 54. 13. யோ. 6. 45. 1 யோ. 2. 27
5 10. 17. ரோ. 11. 27
6 2 கொ. 5. 17
7 யாத். 25. 8
8 யாத். 26. 1, 35
9 யாத். 40. 4
10 யாத். 25. 30
11 யாத். 26. 31, 33
12 லேவி. 16. 12
13 யாத். 25. 10. மு
14 யாத். 16. 33
15 எண். 17. 10
16 யாத். 34. 29; 40. 20. உபா. 10. 2, 5
17 யாத். 25. 18, 22
18 எண். 28. 3
19 யாத். 30. 10. லேவி. 16. 2. மு
20 5. 3; 7. 27
* பாவங்களுக்காகவும்
21 10. 19, 20. யோ. 14. 6
22 10. 1, 11. சங். 40. 6, 7; 51. 16-19. கலா. 3. 21
23 லேவி. 11. 2. மு. கொலோ. 2. 16
24 எண். 19. 7. மு
25 எபே. 2. 15
26 3. 1; 10. 1. கொலோ. 2. 17
27 8. 2
28 10. 4. அப். 20. 28. 1 பே. 1. 18, 19. வெளி. 1. 5
29 10. 19
30 எண். 19. 2-17
31 1 பே. 3. 19
32 எபே. 5. 2. 1 பே. 1. 19
33 1 பே. 4. 2
34 10. 22
35 7. 22. ரோ. 3. 25, 26. 1 பே. 3. 18
36 கலா. 3. 15

19 வில்லை. எப்படியெனில், மோசே, [1]நியாயப்
பிரமாணத்தின்படி, சகல ஜனங்களுக்கும்
எல்லாக் கட்டளைகளையும் சொன்னபின்பு,
இளங்காளை வெள்ளாட்டுக்கடா இவைகளின்
இரத்தத்தைத் தண்ணீரோடும், சிவப்பான
ஆட்டுமயிரோடும், ஈசோப்போடுங்கூட எடு
த்து, புஸ்தகத்தின்மேலும் ஜனங்களெல்லார்
20 மேலும் தெளித்து: ,தேவன் உங்களுக்குக்
கட்டளையிட்ட [2]உடன்படிக்கையின் இரத்
21 தம் இதுவே என்று சொன்னான். இவ்வித
மாக, [3]கூடாரத்தின்மேலும் ஆராதனைக்குரிய
சகல பணிமுட்டுகளின்மேலும் இரத்தத்தைத்
22 தெளித்தான். நியாயப் பிரமாணத்தின்படி
கொஞ்சங்குறைய எல்லாம் இரத்தத்தினாலே
சுத்திகரிக்கப்படும்; [4]இரத்தஞ் சிந்துதலில்லா
மல் மன்னிப்பு உண்டாகாது.
23 ஆதலால், பரலோகத்தி லுள்ளவைகளுக்
குச் [5]சாயலானவைகள் இப்படிபபட்ட பலி
களினாலே சுத்திகரிக்கப்படவேண்டியதாயிரு
ந்தது; பரலோகத்திலுள்ளவைகளோ இவை
களிலும் விசேஷித்த பலிகளாலே சுத்திகரிக்
24 கப்பட வேண்டியதாமே. அந்தப்படி, மெய்
யான பரிசுத்த ஸ்தலத்துக்கு அடையாளமான
கையினால் செய்யப்பட்டதாயிருக்கிற பரிசுத்த
ஸ்தலத்திலே கிறிஸ்துவானவர் பிரவேசியா
மல், [6]பரலோகத்திலேதானே இப்பொழுது
நமக்காக தேவனுடைய சமுகத்தில் பிரத்தியட்
25 சமாகும்படி பிரவேசித்திருக்கிறார். பிரதான
ஆசாரியன் அந்நிய இரத்தத்தோடே வருஷந்
தோறும் பரிசுத்த ஸ்தலத்துச்குள் பிரவேசிக்
கிறதுபோல, [7]அவர் அநேகந்தரம் தம்மைப்
26 பலியிடும்படிக்குப் பிரவேசிக்கவில்லை. அப்
படியிருந்ததானால், உலகமுண்டானது முதற்
கொண்டு அவர் அநேகந்தரம் பாடுபடவேண்
டியதாயிருக்குமே; அப்படியல்ல, அவர் தம்
மைத்தாமே பலியிடுகிறதினாலே பாவங்களை
நீக்கும்பொருட்டாக [8]இந்தக் கடைசிக்காலத்
27 தில் ஒரேதரம வெளிப்பட்டார். அன்றியும்,
ஒரேதரம் மரிப்பதும், [9]பின்பு நியாயத்தீர்ப்
படைவதும், மனுஷருக்கு நியமிக்கப்பட்டி
28 ருக்கிறபடியே, கிறிஸ்துவும் அநேகருடைய
பாவங்களைச்சுமந்துதீர்க்கும்படிக்கு[10]ஒரேதரம்
பலியிடப்பட்டு, [11]தமக்காகக் காத்துக்கொண்
டிருக்கிறவர்களுக்கு இரட்சிப்பை அருளும்
படி இரண்டாந்தரம் பாவமில்லாமல் தரிசன
மாவார்.

10 இப்படியிருக்க, [12]நியாயப்பிரமாணமா
னது வரப்போகிற நன்மைகளின் பொருளா
யிராமல், அவைகளின் நிழலாய்மாத்திரம் இரு
க்கிறபடியால், வருஷந்தோறும் இடைவிடா
மல் செலுத்தப்பட்டுவருகிற ஒரேவிதமான
பலிகளினாலே அவைகளைச் செலுத்த வருகிற
வர்களை ஒருக்காலும் பூரணப்படுத்தமாட்டாது
2 பூரணப்படுத்துமானால், ஆராதனைசெய்கிறவர்
கள் ஒருதரம் சுத்தமாக்கப்பட்டபின்பு, இன்
னும் பாவங்கள் உண்டென்று உணர்த்தும்
மனச்சாட்சி அவர்களுக்கு இல்லாதிருப்பதி
னால், அந்தப் பலிகளைச் செலுத்துகிறது நிறுத்
தப்படுமல்லவா? அப்படி நிறுத்தப்படாதபடி 3
யால், [13]பாவங்கள் உண்டென்று அவைகளினா
லே வருஷந்தோறும் நினைவுகூருதல் உண்டா
யிருக்கிறது. அல்லாமலும், காளை வெள்ளாட் 4
டுக்கடா இவைகளுடைய இரத்தம் [14]பாவங்
களை நிவிர்த்தி செய்யமாட்டாதே. ஆகை 5
யால் அவர் உலகத்தில் பிரவேசிக்கும்போது:
[15]பலியையும் காணிக்கையையும் நீர் விரும்ப
வில்லை, ஒரு சரீரத்தை எனக்கு ஆயத்தம்பண்
ணினீர்; சர்வாங்க தகனபலிகளும், பாவ 6
நிவாரண பலிகளும் உமக்குப் பிரியமானதல்ல
என்றீர். அப்பொழுது நான்: தேவனே, உம் 7
முடைய சித்தத்தின்படி செய்ய, இதோ, வரு
கிறேன், புஸ்தகச்சுருளில் என்னைக்குறித்து
எழுதியிருக்கிறது என்று சொன்னேன் என்
றார். நியாயபபிரமாணத்தின்படி செலுத்தப் 8
பட்டுவருகிற பலிகளைக்குறித்து மேற்சொல்
லியபடி: பலியையும், காணிக்கையையும், சர்
வாங்க தகனபலிகளையும், பாவநிவாரணபலி
களையும் நீர் விரும்பவில்லை, அவைகள் உமக்
குப் பிரியமானதல்ல என்று சொன்னபின்பு:
தேவனே, உம்முடைய சித்தத்தின்படி செ 9
ய்ய, இதோ, வருகிறேன் என்று சொன்னார்.
இரண்டாவதை நிலைநிறுத்துவதற்கு முதலா
வதை நீக்கிடபோடுகிறார். இயேசுகிறிஸ்து 10
வினுடைய சரீரம் ஒரேதரம் பலியிடபபட்ட
தினாலே, [16]அந்தச் சித்தத்தின்படி நாம் பரிசுத்
தமாக்கப்பட்டிருக்கிறோம். அன்றியும், எந்த 11
ஆசாரியனும் நாடோறும் ஆராதனை செய்கிற
வனாயும், [17]பாவங்களை ஒருக்காலும் நிவிர்த்தி
செய்யக்கூடாத ஒரேவித பலிகளை அநேகந்
தரம் செலுத்தி வருகிறவனாயும் நிற்பான்.
இவரோ, பாவங்களுக்காக ஒரே பலியைச் 12
செலுத்தி, [18]என்றென்றைக்கும் தேவனுடைய
வலதுபாரிசத்தில் உட்கார்ந்து, இனித் தம் 13
முடைய சத்துருக்களைத் [19]தமது பாதபடியாக்
கிப் போடும்வரைக்கும் காத்துக்கொண்டிருக்
கிறார். ஏனெனில் பரிசுத்தமாக்கப்படுகிறவர் 14
களை [20]ஒரே பலியினாலே இவர் என்றென்
றைக்கும் பூரணப்படுத்தியிருக்கிறார். இதைக் 15
குறித்துப் பரிசுத்த ஆவியானவரும் நமக்குச்
சாட்சி சொல்லுகிறார்; எப்படியெனில்: அந்த 16
நாட்களுக்குப்பின்பு நான் அவர்களோடே
பண்ணும் உடன்படிக்கையாவது: [21]நான் என்
னுடைய பிரமாணங்களை அவர்களுடைய இரு
தயங்களில் வைத்து, அவைகளை அவர்களு
டைய மனதில் எழுதுவேன் என்று கர்த்தர்
சொல்லுகிறார் என்பதை உரைத்தபின்பு,
அவர்களுடைய பாவங்களையும் அவர்களு 17
டைய அக்கிரமங்களையும் நான் இனி நினைபப
தில்லை என்டதைச் சொல்லுகிறார். இவை 18
கள் மன்னிக்கப்பட்டதுண்டானால், இனிப்
பாவத்தினிமித்தம் பலி செலுத்தப்படுவதில்
லையே.
ஆகையால், சகோதரரே, [22]நாம் பரிசுத்த 19
ஸ்தலத்தில் பிரவேசிப்பதற்கு இயேசுவான

1 யாத். 24. 6 ழ லேவி. 14, 16. அதி
2 மத். 26. 28
3 யாத். 29. 12, 36
4 லேவி. 17. 11
5 8. 5
6 6. 20; 8. 2. ரோ. 8. 34. 1 யோ. 2. 1
7 7. வச
8 12. வச. 1 கொ 10. 11. 1 பே. 3. 18
9 ஆதி. 3. 19. பிர. 12. 14. 2 கொ. 5. 10. வெளி. 20. 12, 13
10 ஏசா. 53. 12. மத். 26. 28. 1 பே 2. 24. 1 யோ. 3. 5
11 ஏசா. 25. 9. அப். 1. 11. தீத். 2. 13. 2 பே. 3. 12. வெளி. 1. 7
12 கொலோ. 2. 17
13 9. 7. லேவி. 16. 34
14 மீகா. 6. 6–8
15 சங். 40. 6–8
16 9. 12. யோ. 17. 19
17 எண். 28. 3. சங். 50. 8–13. ஏசா. 1. 11
18 கொலோ. 3. 1
19 சங். 110. 1. அப். 2. 35. 1 கொ. 15. 25
20 1. வச
21 எரே. 31. 33, 34
22 9. 8, 12. ரோ. 5. 2. எபே. 2. 18

வர் தமது மாம்சமாகிய திரையின் வழியாய்ப்
[1]புதிதும் ஜீவனுமான மார்க்கத்தை நமக்கு
20 உண்டுபண்ணினபடியால், அந்த மார்க்கத்
தின் வழியாய்ப் பிரவேசிப்பதற்கு அவரு
டைய இரத்தத்தினாலே நமக்குத் தைரியம்
21 உண்டாயிருக்கிறபடியினாலும், தேவனுடைய
வீட்டின்மேல் அதிகாரியான [2]மகா ஆசாரியர்
22 நமக்கு ஒருவர் இருக்கிறபடியினாலும், துர்
மனச்சாட்சி நீங்கத் தெளிக்கப்பட்ட இருதய
முள்ளவர்களாயும், [3]சுத்த ஜலத்தால் கழுவப்
பட்ட சரீரமுள்ளவர்களாயும், உண்மையுள்ள
இருதயத்தோடும் [4]விசுவாசத்தின் பூரண நிச்
23 சயத்தோடும் சேரக்கடவோம். அல்லாமலும்,
நம்முடைய நம்பிக்கையை அறிக்கையிடுகிற
தில் அசைவில்லாமல் உறுதியாயிருக்கக்கட
வோம்; [5]வாக்குத்தத்தம்பண்ணினவர் உண்
24 மையுள்ளவரா யிருக்கிறாரே. மேலும், அன்
புக்கும் நற்கிரியைகளுக்கும் நாம் ஏவப்படும்
25 படி ஒருவரையொருவர் கவனித்து; சபைகூடி
வருதலைச் சிலர் விட்டுவிடுகிறதுபோல நாமும்
விட்டுவிடாமல், [6]ஒருவருக்கொருவர் புத்தி
சொல்லக்கடவோம்; [7]நாளானது சமீபித்து
வருகிறதை எவ்வளவாய்ப் பார்க்கிறீர்களோ
அவ்வளவாய்ப் புத்தி சொல்லவேண்டும்.
26 சத்தியத்தை அறியும் அறிவை அடைந்த
பின்பு நாம் மனப்பூர்வமாய்ப் பாவஞ்செய்கிற
வர்களா யிருந்தால், [8]பாவங்களினிமித்தம் செ
லுத்தத்தக்க வேறொரு பலி இனியிராமல்,
27 நியாயத்தீர்ப்பு வருமென்று பயத்தோடே எதிர்
பார்க்குதலும், [9]விரோதிகளைப் பட்சிக்கும் கோ
28 பாக்கினியுமே இருக்கும். மோசேயினுடைய
பிரமாணத்தைத் தள்ளுகிறவன் இரக்கம்பெறா
மல் [10]இரண்டு மூன்று சாட்சிகளின் வாக்கி
29 னாலே சாகிறானே; தேவனுடைய குமார
னைக் காலின்கீழ் மிதித்து, தன்னைப் பரிசுத்
தஞ்செய்த உடன்படிக்கையின் இரத்தத்தை
அசுத்தமென்றெண்ணி, [11]கிருபையின் ஆவி
யை நிந்திக்கிறவன் எவ்வளவு கொடிதான
ஆக்கினைக்குப் பாத்திரவானாயிருப்பான் என்
30 பதை யோசித்துப் பாருங்கள். பழிவாங்குதல்
எனக்குரியது, [12]நானே பதிற்செய்வேன்
என்று கர்த்தர் சொல்லுகிறார் என்றும், கர்த்தர்
தம்முடைய ஜனங்களை நியாயந்தீர்ப்பார் என்
றும் சொன்னவர் இன்னாரென்று அறிவோம்.
31 ஜீவனுள்ள தேவனுடைய கைகளில் [13]விழு
கிறது பயங்கரமாயிருக்குமே.
32 முந்தின நாட்களை நினைத்துக்கொள்ளுங்
கள்; [14]நீங்கள் பிரகாசமாக்கப்பட்டிருந்த அந்த
நாட்களில், [15]உபத்திரவங்களாகிய மிகுந்த
33 போராட்டத்தைச் சகித்தீர்களே. நிந்தைகளா
லும் உபத்திரவங்களாலும் நீங்கள் வேடிக்கை
யாக்கப்பட்டதுமல்லாமல், [16]அப்படி நடத்தப்
பட்டவர்களுக்குப் பங்காளிகளுமானீர்கள்.
34 நான் கட்டப்பட்டிருக்கையில் நீங்கள் என்
னைக்குறித்துப் பரிதபித்ததுமன்றி, [17]பரலோ
கத்தில் அதிக மேன்மையும் நிலையுள்ளதுமான
சுதந்தரம் உங்களுக்கு உண்டென்று அறிந்து,
உங்கள் ஆஸ்திகளையும் சந்தோஷமாய்க் கொள்
ளையிடக் கொடுத்தீர்கள். ஆகையால், [18]மிகுந்த 35
பலனுக்கேதுவான உங்கள் தைரியத்தைவிட்டு
விடாதிருங்கள். நீங்கள் தேவனுடைய சித் 36
தத்தின்படி செய்து, [19]வாக்குத்தத்தம் பண்
ணப்பட்டதைப் பெறும்படிக்குப் பொறுமை
உங்களுக்கு வேண்டியதாயிருக்கிறது. வரு 37
கிறவர் இன்னுங்கொஞ்சக்காலத்தில் வருவார்,
[20]தாமதம்பண்ணார். விசுவாசத்தினாலே நீதி 38
மான் பிழைப்பான். [21]பின்வாங்கிப்போவானா
னால் அவன்மேல் என் ஆத்துமா பிரியமா
யிராது என்கிறார். நாமோ கெட்டுப்போகப் 39
[22]பின்வாங்குகிறவர்களாயிராமல், [23]ஆத்துமா
ஈடேற விசுவாசிக்கிறவர்களாயிருக்கிறோம்.

விசுவாசமானது நம்பப்படுகிறவைகளின் 11
உறுதியும், [24]காணப்படாதவைகளின் நிச்சய
முமாயிருக்கிறது. அதினாலே முன்னோர்கள் 2
நற்சாட்சி பெற்றார்கள். விசுவாசத்தினாலே 3
நாம் உலகங்கள் தேவனுடைய வார்த்தையி
னால் உண்டாக்கப்பட்டதென்றும் [25]இவ்வித
மாய், காணப்படுகிறவைகள் தோன்றப்படுகிற
வைகளால் உண்டாகவில்லையென்றும் அறிந்
திருக்கிறோம். விசுவாசத்தினாலே [26]ஆபேல் 4
காயீனுடைய பலியிலும் மேன்மையான பலி
யை தேவனுக்குச் செலுத்தினான்; அதினாலே
அவன் நீதிமானென்று சாட்சி பெற்றான்;
அவனுடைய காணிக்கைகளைக்குறித்து தேவ
னே சாட்சிகொடுத்தார்; [27]அவன் மரித்தும்
இன்னும் பேசுகிறான். விசுவாசத்தினாலே 5
[28]ஏனோக்கு மரணத்தைக் காணாதபடிக்கு எடுத்
துக்கொள்ளப்பட்டான்; தேவன் அவனை எடுத்
துக்கொண்டபடியினாலே, அவன் காணப்
படாமற்போனான்; அவன் தேவனுக்குப் பிரி
யமானவனென்று அவன் எடுத்துக்கொள்ளப்
படுவதற்கு முன்னமே சாட்சிபெற்றான். விசு 6
வாசமில்லாமல் தேவனுக்குப் பிரியமாயிருப்
பது [29]கூடாதகாரியம்; ஏனென்றால், தேவனி
டத்தில் சேருகிறவன் அவர் உண்டென்றும்,
அவர் தம்மைத் தேடுகிறவர்களுக்குப் பலன்
அளிக்கிறவரென்றும் விசுவாசிக்கவேண்டும்.
விசுவாசத்தினாலே [30]நோவா தற்காலத்திலே 7
காணாதவைகளைக் குறித்து தேவ எச்சரிப்புப்
பெற்று, பயபக்தியுள்ளவனாகி, தன் குடும்பத்
தை இரட்சிப்பதற்குப் பேழையை உண்டுபண்
ணினான்; அதினாலே அவன் உலகம் ஆக்கி
னைக்குள்ளானதென்று தீர்த்து, விசுவாசத்தி
னால் உண்டாகும் நீதிக்குச் சுதந்தரவாளி
யானான். விசுவாசத்தினாலே [31]ஆபிரகாம் 8
தான் சுதந்தரமாகப் பெறப்போகிற இடத்திற்
குப் போகும்படி அழைக்கப்பட்டபோது,
கீழ்ப்படிந்து, தான் போகும் இடம் இன்ன
தென்று அறியாமல் புறப்பட்டுப் போனான்.
விசுவாசத்தினாலே அவன் வாக்குத்தத்தம் 9
பண்ணப்பட்ட தேசத்திலே பரதேசியைப்
போலச் சஞ்சரித்து, [32]அந்த வாக்குத்
தத்தத்திற்கு உடன் சுதந்தரராகிய ஈசாக்
கோடும் யாக்கோபோடும் கூடாரங்களிலே

1 யோ. 10. 9; 14. 6
2 4. 14–16
3 எசே. 36. 25
4 எபே. 3. 12
5 4. 14. 1 கொ. 1. 9. 1 தெச. 5. 24
6 அப். 2. 42
7 ரோ. 13. 14. 1 பே. 3. 9, 11, 14
8 6. 4. ஷி. எண். 15. 30. 2 பே. 2. 20, 21
9 செப். 1. 18; 3. 8. 2 தெச. 1. 8
10 உபா. 17. 2–13. மத். 18. 16. 2 கொ. 13. 1
11 2. 3, 4; 12. 25. மத். 12. 31, 32. 1 கொ. 11. 29. எபே. 4. 30
12 உபா. 32. 35, 36. ரோ. 12. 19
13 லூ. 12. 5
14 கலா. 3. 4
15 6. 4. பிலி. 1. 29, 30. கொலோ. 2. 1
16 1 கொ. 4. 9. 1 தெச. 2. 14
17 லூ. 12. 33. பிலி. 1. 7. 1 தீமோ. 6. 19
18 மத். 5. 12; 10. 32
19 லூ. 21. 19
20 ஆப. 2. 3, 4. லூ. 18. 8. 2 பே. 3. 9
21 ரோ. 1. 17
22 26. வச.
23 அப். 16. 30, 31. 1 தெச. 5. 9. 2 தெச. 2. 14
24 ரோ. 8. 24, 25. 2 கொ. 4. 18; 5. 7
25 ஆதி. 1. 1. சங். 33. 6. யோ. 1. 3. 2 பே. 3. 5
26 ஆதி. 4. 4, 5. 1 யோ. 3. 12
27 12. 24. மத். 23. 35
28 ஆதி. 5. 22, 24
29 சங். 106. 21, 22
30 ஆதி. 6. 14–22. 1 பே. 3. 20
31 ஆதி. 12. 1, 4. ஷி. அப். 7. 2–4
32 ஆதி. 13. 3, 18; 18. 1, 9

10 குடியிருந்தான்; ஏனெனில், தேவன் தாமே
கட்டி உண்டாக்கின [1]அஸ்திபாரங்களுள்ள
11 நகரத்துக்கு அவன் காத்திருந்தான். விசுவா
சத்தினாலே [2]சாராளும் வாக்குத்தத்தம் பண்
ணினவர் உண்மையுள்ளவரென் றெண்ணி,
கர்ப்பந்தரிக்கப் பெலனடைந்து, வயதுசென்
12 றவளா யிருந்தும் பிள்ளை பெற்றாள். ஆன
படியால் சரீரஞ்செத்தவனென்று எண்ணத்
தகும் ஒருவனாலே, [3]வானத்திலுள்ள பெருக்க
மான நட்சத்திரங்களைப்போலவும் கடற்கரை
யிலுள்ள எண்ணிறந்த மணலைப்போலவும்,
மிகுந்த ஜனங்கள் பிறந்தார்கள்.
13 இவர்களெல்லாரும் வாக்குத்தத்தம் பண்
ணப்பட்டவைகளை அடையாமல், [4]தூரத்திலே
அவைகளைக் கண்டு, நம்பி *அணைத்துக்கொ
ண்டு, [5]பூமியின்மேல் தங்களை அந்நியரும் பர
தேசிகளும் என்று அறிக்கையிட்டு, விசுவா
14 சத்தோடே மரித்தார்கள். இப்படி அறிக்கை
யிடுகிறவர்கள் சுயதேசத்தை நாடிப்போகி
15 றோம் என்று தெரியப்படுத்துகிறார்கள். தாங்
கள் விட்டுவந்த தேசத்தை நினைத்தார்களானால்,
அதற்குத் திரும்பிப்போவதற்கு அவர்களுக்குச்
16 சமயங் கிடைத்திருக்குமே. அதையல்ல, அதி
லும் மேன்மையான பரம தேசத்தையே விரும்
பினார்கள்; [6]ஆகையால் தேவன் அவர்களு
டைய தேவனென்னப்பட வெட்கப்படுகிற
தில்லை; [7]அவர்களுக்கு ஒரு நகரத்தை ஆயத்
தம்பண்ணினாரே.
17 மேலும் விசுவாசத்தினாலே ஆபிரகாம் [8]தான்
சோதிக்கப்பட்டபோது ஈசாக்கைப் பலியாக
18 ஒப்புக்கொடுத்தான். ஈசாக்கினிடத்தில் உன்
சந்ததி விளங்கும் என்று [9]அவனோடே சொல்
லப்பட்டிருந்ததே; இப்படிப்பட்ட வாக்குத்
தத்தங்களைப் பெற்றவன், [10]மரித்தோரிலிருந்து
மெழுப்ப தேவன் வல்லவராயிருக்கிறாரென்
19 றெண்ணி, தனக்கு ஒரேபேறானவனையே
பலியாக ஒப்புக்கொடுத்தான்; மரித்தோரி
லிருந்து அவனை பாவனையாகத் திரும்பவும்
20 பெற்றுக்கொண்டான். விசுவாசத்தினாலே
[11]ஈசாக்கு வருங்காரியங்களைக்குறித்து யாக்
21 கோபையும் ஏசாவையும் ஆசீர்வதித்தான். விசு
வாசத்தினாலே யாக்கோபு தன் மரணகாலத்
தில் யோசேப்பினுடைய [12]குமாரர் இருவரை
யும் ஆசீர்வதித்து, [13]தன் கோலின் முனையிலே
22 சாய்ந்து தொழுதுகொண்டான். விசுவாசத்
தினாலே [14]யோசேப்பு இஸ்ரவேல் புத்திரர்
எகிப்து தேசத்தை விட்டுப் புறப்படுவார்க
ளென்பதைப்பற்றித் தன் அந்தியகாலத்தில்
பேசி, தன் எலும்புகளைக்குறித்துக் கட்டளை
23 கொடுத்தான். மோசே பிறந்தபோது அவனு
டைய தாய்தகப்பன்மார் அவனை அழகுள்ள
பிள்ளையென்று கண்டு, விசுவாசத்தினாலே,
[15]ராஜாவினுடைய கட்டளைக்குப் பயப்படா
மல் அவனை மூன்றுமாதம் ஒளித்துவைத்தார்
24 கள். விசுவாசத்தினாலே மோசே தான் பெரி
யவனானபோது [16]பார்வோனுடைய குமாரத்தி
யின் மகன் என்னப்படுவதை வெறுத்து,
அநித்தியமான பாவசந்தோஷங்களை அநுப 25
விப்பதைப்பார்க்கிலும் [17]தேவனுடைய ஜனங்
களோடே துன்பத்தை அநுபவிப்பதையே
தெரிந்துகொண்டு, இனிவரும் பலன்மேல் 26
நோக்கமாயிருந்து, [18]எகிப்திலுள்ள பொக்கி
ஷங்களிலும் கிறிஸ்துவினிமித்தம் வரும் நிந்
தையை அதிக பாக்கியமென்று எண்ணினான்.
விசுவாசத்தினாலே அவன் [19]அதரிசியமான 27
வரைத் தரிசிக்கிறதுபோல உறுதியாயிருந்து,
[20]ராஜாவின் கோபத்துக்குப் பயப்படாமல்
எகிப்தைவிட்டுப் போனான். விசுவாசத்தி 28
னாலே, முதற்பேறானவைகளைச் சங்கரிக்கிற
வன் இஸ்ரவேலரைத்தொடாதபடிக்கு [21]அவன்
பஸ்காவையும் இரத்தம் பூசுதலாகிய நியமத்
தையும் ஆசரித்தான். விசுவாசத்தினாலே 29
அவர்கள் சிவந்த சமுத்திரத்தை உலர்ந்த தரை
யைக் கடந்துபோவதுபோலக் கடந்துபோ
னார்கள்; [22]எகிப்தியர் அப்படிச் செய்யத்
துணிந்து அமிழ்ந்துபோனார்கள். விசுவாசத் 30
தினாலே [23]எரிகோபட்டணத்தின் மதில்கள்
ஏழுநாள் சுற்றிவரப்பட்டு விழுந்தது. விசு 31
வாசத்தினாலே [24]ராகாப் என்னும் வேசி வேவு
காரரைச் சமாதானத்தோடே ஏற்றுக்கொண்டு,
கீழ்ப்படியாதவர்களோடேகூடச் சேதமாகா
திருந்தாள். பின்னும் நான் என்ன சொல்லு 32
வேன்? [25]கிதியோன், [26]பாராக், [27]சிம்சோன்,
[28]யெப்தா, [29]தாவீது, [30]சாமுவேல் என்பவர்
களையும், தீர்க்கதரிசிகளையுங் குறித்து நான்
விவரஞ்சொல்லவேண்டுமானால் காலம் போ
தாது. விசுவாசத்தினாலே அவர்கள் ராஜ்யங் 33
களை ஜெயித்தார்கள், நீதியை நடப்பித்தார்கள்,
[31]வாக்குத்தத்தங்களைப் பெற்றார்கள், [32]சிங்கங்
களின் வாய்களை அடைத்தார்கள், அக்கினி 34
யின் உக்கிரத்தை [33]அவித்தார்கள், [34]பட்டயக்
கருக்குக்குத் தப்பினார்கள், பலவீனத்தில் பலன்
கொண்டார்கள்; யுத்தத்தில் வல்லவர்களானார்
கள், அந்நியருடைய சேனைகளை முறியடித்
தார்கள். ஸ்திரீகள் சாகக்கொடுத்த தங்களு 35
டையவர்களை [35]உயிரோடெழுந்திருக்கப்பெற்
றார்கள்; வேறு சிலர் மேன்மையான உயிர்த்
தெழுதலை அடையும்படிக்கு, விடுதலைபெறச்
சம்மதியாமல், [36]வாதிக்கப்பட்டார்கள்; வேறு 36
சிலர் நிந்தைகளையும் அடிகளையும் [37]கட்டுகளை
யும் [38]காவலையும் அநுபவித்தார்கள்; கல்லெ 37
றியுண்டார்கள், [39]வாளால் அறுப்புண்டார்
கள், பரீட்சை பார்க்கப்பட்டார்கள், பட்டயத்
தினாலே வெட்டப்பட்டு மரித்தார்கள், செம்
மறியாட்டுத் தோல்களையும் வெள்ளாட்டுத்
தோல்களையும் போர்த்துக்கொண்டு திரிந்து,
குறைவையும் உபத்திரவத்தையும் துன்பத்தை
யும் அனுபவித்தார்கள்; உலகம் அவர்களுக்குப் 38
பாத்திரமாயிருக்கவில்லை; அவர்கள் வனாந்தரங்
களிலேயும் மலைகளிலேயும் குகைகளிலேயும்
பூமியின்வெடிப்புகளிலேயும்சிதறுண்டு அலைந்
தார்கள். இவர்களெல்லாரும் விசுவாசத்தி 39
னாலே நற்சாட்சிபெற்றும், [40]வாக்குத்தத்தம்
பண்ணப்பட்டதை அடையாமற்போனார்கள்.

1 12. 22: 13. 14 வெளி. 21. 2, 10
2 ஆதி. 21. 1, 2. லூ. 1. 36. ரோ. 4. 21
3 ஆதி. 22. 17. ரோ. 4. 17
4 யோ. 8. 56
* தழுவி
5 ஆதி. 39. 20. 1 பே. 1. 17: 2. 11
6 யாத். 3. 6, 15. மத். 22. 32
7 10. வச. பிலி. 3. 20
8 ஆதி. 22. 1. ழ. யாக். 2. 21
9 ஆதி. 21. 12. ரோ. 9. 7
10 ரோ. 4. 17, 19, 21
11 ஆதி. 27. 27–40
12 ஆதி. 48. 5–20
13 ஆதி. 47. 31
14 ஆதி. 50. 24, 25
15 யாத். 1. 16, 22: 2. 2. அப். 7. 20
16 யாத். 2. 10, 11
17 சங். 84. 10
18 13. 13. யாத். 10. 28, 29: 12. 31
19 1 தீமோ. 1. 17
20 யாத். 10. 28, 29: 12. 31
21 யாத். 12. 21. ழ
22 யாத். 14. 22, 29
23 யோசு. 6. 12–20
24 யோசு. 2. 4. ழ: 6. 23. யாக். 2. 25
25 நியா. 6, 7. அதி
26 நியா. 4. 6. ழ
27 நியா. 15, 16. அதி
28 நியா. 11. 32. ழ
29 1 சாமு. 17. 45 ழ
30 1 சாமு. 7. 9. ழ
31 கலா. 3. 16
32 தானி. 6. 22
33 தானி. 3. 25
34 1 இரா. 19. 3
35 1 இரா. 17. 22
36 அப். 4. 19: 22. 25
37 ஆதி. 39. 20
38 எரே. 20. 2
39 அப். 7. 59
40 2, 13. வச

40 அவர்கள் நம்மையல்லாமல் பூரணராகாதபடி
க்கு [1]விசேஷித்த நன்மையானதொன்றை
தேவன் நமக்கென்று முன்னதாக நியமித்
திருந்தார்.

**12** ஆகையால், மேகம்போன்ற இத்தனை திர
ளான சாட்சிகள் நம்மைச் சூழ்ந்துகொண்டி
ருக்க, [2]பாரமான யாவற்றையும், நம்மைச்
சுற்றி நெருங்கி நிற்கிற பாவத்தையும் தள்ளி
விட்டு, *விசுவாசத்தைத் துவக்குகிறவரும்
முடிக்கிறவருமாயிருக்கிற இயேசுவை நோக்கி,
[3]நமக்கு நியமித்திருக்கிற ஓட்டத்தில் பொறு
2 மையோடே ஓடக்கடவோம்; அவர் தமக்கு
முன் வைத்திருந்த சந்தோஷத்தின்பொருட்டு,
[4]அவமானத்தை எண்ணாமல், சிலுவையைச்
சகித்து, தேவனுடைய சிங்காசனத்தின்
3 வலதுபாரிசத்தில் வீற்றிருக்கிறார். ஆகையால்
நீங்கள் இளைப்புள்ளவர்களாய் உங்கள் ஆத்து
மாக்களில் சோர்ந்துபோகாதபடிக்கு, [5]தமக்கு
விரோதமாய்ப் பாவிகளால் செய்யப்பட்ட
இவ்விதமான விபரீதங்களைச் சகித்த அவரை
4 யே நினைத்துக்கொள்ளுங்கள். பாவத்திற்கு
விரோதமாய்ப் போராடுகிறதில் இரத்தஞ்சிந்
தப்படத்தக்கதாக நீங்கள் இன்னும் எதிர்த்து
5 நிற்கவில்லையே. அன்றியும்: [6]என் மகனே,
கர்த்தருடைய சிட்சையை அற்பமாக எண்
ணாதே, அவரால்கடிந்துகொள்ளப்படும்போது
6 சோர்ந்துபோகாதே. கர்த்தர் எவனிடத்தில்
அன்புகூருகிறாரோ அவனை அவர் சிட்சித்து,
[7]தாம் சேர்த்துக்கொள்ளுகிற எந்த மகனையும்
தண்டிக்கிறார் என்று பிள்ளைகளுக்குச் சொல்
லுகிறதுபோல உங்களுக்குச் சொல்லி
7 யிருக்கிற புத்திமதியை மறந்தீர்கள். நீங்
கள் சிட்சையைச் சகிக்கிறவர்களாயிருந்தால்
தேவன் உங்களைப் புத்திரராக எண்ணி நடத்
துகிறார்; [8]தகப்பன் சிட்சியாத புத்திரனுண்
8 டோ? எல்லாருக்கும் கிடைக்கும் சிட்சை உங்
களுக்குக் கிடையாதிருந்தால் [9]நீங்கள் புத்திர
ராயிராமல் வேசிப்பிள்ளைகளாயிருப்பீர்களே.
9 அன்றியும், நம்முடைய சரீரத்தின் தகப்பன்
மார்கள் நம்மைச் சிட்சிக்கும்போது, அவர்
களுக்கு நாம் அஞ்சி நடந்திருக்க, [10]நாம் பிழைக்
கத்தக்கதாக ஆவிகளின் பிதாவுக்கு வெகு அதி
10 கமாய் அடங்கி நடக்கவேண்டுமல்லவா? அவர்
கள் தங்களுக்கு நலமென்று தோன்றினபடி
கொஞ்சக்காலம் சிட்சித்தார்கள்; [11]இவரோ தம்
முடைய பரிசுத்தத்துக்கு நாம் பங்குள்ளவர்
களாகும்பொருட்டு நம்முடைய பிரயோஜனத்
11 துக்காகவே நம்மைச் சிட்சிக்கிறார். எந்தச்
சிட்சையும் தற்காலத்தில் சந்தோஷமாய்க் கா
ணாமல் துக்கமாய்க் காணும்; ஆகிலும் பிற்கா
லத்தில் அதில் பழகினவர்களுக்கு அது [12]நீதி
12 யாகிய சமாதான பலனைத் தரும். ஆகையினால்,
நெகிழ்ந்த கைகளையும் தளர்ந்த முழங்கால்களை
13 யும் நீங்கள் திரும்ப †நிமிர்த்தி, முடமாயிருக்
கிறது பிசகிப்போகாமல் [13]சொஸ்தமாகும்படி
க்கு, [14]உங்கள் பாதங்களுக்கு வழிகளைச் செவ்
வைப்படுத்துங்கள்.

யாவரோடும் [15]சமாதானமாயிருக்கவும், பரி 14
சுத்தமுள்ளவர்களாயிருக்கவும் நாடுங்கள், [16]பரி
சுத்தமில்லாமல் ஒருவனும் கர்த்தரைத் தரிசிப்
பதில்லையே. ஒருவனும் தேவனுடைய கிரு 15
பையை [17]இழந்துபோகாதபடிக்கும் [18]யாதொ
ரு ‡கசப்பான வேர் முளைத்தெழும்பிக் கலக்க
முண்டாக்குகிறதினால் அநேகர் தீட்டுப்படாத
படிக்கும், ஒருவனும் வேசிக்கள்ளனாகவும், 16
[19]ஒருவேளைப் போஜனத்துக்காகத் தன் ஜேஷ்
டபுத்திரபாகத்தை விற்றுப்போட்ட [20]ஏசா
வைப்போலச் சீர்கெட்டவனாகவும் இராதப
டிக்கும் எச்சரிக்கையாயிருங்கள். ஏனென் 17
றால், பிற்பாடு அவன் ஆசீர்வாதத்தைச் சுதந்
தரித்துக்கொள்ள விரும்பியும் ஆகாதவனெ
ன்று தள்ளப்பட்டதை அறிவீர்கள்; [21]அவன்
கண்ணீர்விட்டு, கவலையோடே தேடியும் மனம்
மாறுதலைக் காணாமற்போனான்.

அன்றியும், தொடக்கூடியதும், அக்கினி 18
பற்றி யெரிகிறதுமான மலையினிடத்திற்கும்,
[22]மந்தாரம் இருள் பெருங்காற்று ஆகிய இவை
களினிடத்திற்கும், எக்காள முழக்கத்தினிடத் 19
திற்கும், [23]வார்த்தைகளுடைய சத்தத்தினிடத்
திற்கும், நீங்கள் வந்து சேரவில்லை; அந்தச்
சத்தத்தைக் கேட்டவர்கள் பின்னும் தங்களுக்கு
வார்த்தை சொல்லப்படாதபடிக்கு வேண்டிக்
கொண்டார்கள். ஏனெனில் ஒரு மிருகமாகி 20
லும் மலையைத் தொட்டால், [24]அது கல்லெறியு
ண்டு, அல்லது அம்பினால் எய்யுண்டு சாக
வேண்டுமென்று சொல்லப்பட்ட கட்டளை
யைச் சகிக்கமாட்டாதிருந்தார்கள். மோசே 21
யும்: நான் மிகவும் பயந்து நடுங்குகிறேன் என்று
சொல்லத்தக்கதாக அந்தக் காட்சி அவ்வளவு
பயங்கரமாயிருந்தது. நீங்களோ சீயோன் மலை 22
யினிடத்திற்கும், [25]ஜீவனுள்ள தேவனுடைய
நகரமாகிய பரம எருசலேமினிடத்திற்கும்,
[26]ஆயிரம் பதினாயிரமான தேவதூதர்களிடத்
திற்கும், பரலோகத்தில் பேரெழுதி யிருக் 23
கிற [27]முதற்பேறானவர்களின் சர்வசங்கமாகிய
சபையினிடத்திற்கும், [28]யாவருக்கும் நியாயா
திபதியாகிய தேவனிடத்திற்கும், [29]பூரணராக்
கப்பட்ட நீதிமான்களுடைய ஆவிகளினிடத்
திற்கும், புது உடன்படிக்கையின் [30]மத்தி 24
யஸ்தராகிய இயேசுவினிடத்திற்கும், ஆபே
லினுடைய இரத்தம் [31]பேசினதைப்பார்க்கி
லும் நன்மையானவைகளைப் பேசுகிற இரத்த
மாகிய [32]தெளிக்கப்படும் இரத்தத்தினிடத்திற்
கும் வந்து சேர்ந்தீர்கள். பேசுகிறவருக்கு நீங் 25
கள் செவிகொடுக்கமாட்டோமென்று விலகாத
படி எச்சரிக்கையாயிருங்கள்; ஏனெனில்,
[33]பூமியிலே பேசினவருக்குச் செவிகொடுக்க
மாட்டோமென்று விலகினவர்கள் தப்பிப்
போகாமலிருக்க, பரலோகத்திலிருந்து பேசு
கிறவரை நாம் விட்டு விலகினால் எப்படித் தப்
பிப்போவோம்? அவருடைய சத்தம் அப் 26
பொழுது பூமியை அசையப்பண்ணிற்று;
[34]இன்னும் ஒருதரம் நான் பூமியை மாத்திர
மல்ல, வானத்தையும் அசையப்பண்ணுவேன்

1 வெளி. 6. 11
2 2 கொ. 7. 1
* விசுவாசத்துக்குக் காரணரும் பூரணப்படுத்துகிறவரும்
3 1 கொ. 9. 24
4 லூ 24. 26. பிலி. 2. 8. [illegible] 1 பே. 3. 22
5 1 கொ. 10. 13
6 யோபு 5. 17. நீதி. 3. 11, 12
7 யாக். 1. 12. வெளி. 3. 19
8 நீதி. 13. 24
9 1 பே. 5. 9
10 எண். 16. 22; 27. 16, 17
11 1 பே. 1. 15, 16
12 ஏசா. 32. 17. யாக். 3. 18
† பலப்படுத்தி
13 கலா. 6. 1
14 நீதி. 4. 26, 27
15 சங். 34. 14. ரோ. 12. 18
16 மத். 5. 8. எபே. 5. 5
17 2 பே. 1. 10
18 உபா. 29. 18
‡ விஷப்பூண்டு. ஓசி. 10. 4
19 1 கொ. 6. 13, 18
20 ஆதி. 25. 33
21 ஆதி. 27. 34-38
22 யாத். 19. 12-19. ரோ. 6. 14; 8. 15
23 யாத். 20. 18, 19
24 யாத். 19. 13, 16
25 வெளி. 3. 12
26 சங். 68. 17. யூதா 15. [illegible]
27 வெளி. 14. 4
28 லூ. 10. 20
29 1 கொ. 15. 49, 54. பிலி. 3. 12
30 8. 6; 9. 15
31 ஆதி. 4. 10
32 யாத். 24. 8
33 10. 28, 29
34 ஆகா. 2. 6

என்று இப்பொழுது வாக்குத்தத்தஞ் செய்
27 திருக்கிறார். இன்னும் ஒருதரம் என்கிற
சொல்லானது அசையாதவைகள் நிலைத்திருக்
கத்தக்கதாக, [1]அசைவுள்ளவைகள் உண்டாக்
கப்பட்டவைகள்போல மாறிப்போம் என்ப
28 தைக் குறிக்கிறது. ஆதலால், அசைவில்லாத
ராஜ்யத்தைப் பெறுகிறவர்களாகிய நாம் பயத்
தோடும் பக்தியோடும் தேவனுக்குப் பிரியமாய்
ஆராதனை செய்யும்படி கிருபையைப் பற்றிக்
29 கொள்ளக்கடவோம். நம்முடைய தேவன்
[2]பட்சிக்கிற அக்கினியாயிருக்கிறாரே.
**13** சகோதர சிநேகம் [3]நிலைத்திருக்கக்கடவது.
2 அந்நியரை உபசரிக்க மறவாதிருங்கள்; [4]அதி
னாலே சிலர் அறியாமல் தேவதூதரையும் உப
3 சரித்ததுண்டு. கட்டப்பட்டிருக்கிறவர்களோ
டே நீங்களும் கட்டப்பட்டவர்கள்போல அவர்
களை நினைத்துக்கொள்ளுங்கள்; [5]நீங்களும் சரீ
ரத்தோடிருக்கிறவர்களென்று அறிந்து, தீங்
கநுபவிக்கிறவர்களை நினைத்துக்கொள்ளுங்கள்.
4 விவாகம் யாவருக்குள்ளும் கனமுள்ளதாயும்,
[6]விவாக மஞ்சம் அசுசிப்படாததாயுமிருப்ப
தாக; [7]வேசிக்கள்ளரையும் விபசாரக்காரரை
5 யும் தேவன் நியாயந்தீர்ப்பார். நீங்கள் பண
ஆசையில்லாதவர்களாய் நடந்து, [8]உங்களுக்கு
இருக்கிறவைகள் போதுமென்று எண்ணுங
கள்; [9]நான் உன்னைவிட்டு விலகுவதுமில்லை,
உன்னைக் கைவிடுவதுமில்லை என்று அவர்
6 சொல்லியிருக்கிறாரே. அதினாலே நாம் தை
ரியங்கொண்டு: கர்த்தர் எனக்குச் சகாயர்,
[10]நான் பயப்படேன், மனுஷன் எனக்கு என்
னசெய்வான் என்று சொல்லலாமே.
7 தேவவசனத்தை உங்களுக்குப் போதித்து
உங்களை நடத்தினவர்களை நீங்கள் நினைத்து,
[11]அவர்களுடைய நடக்கையின் முடிவை நன்
றாய்ச் சிந்தித்து, அவர்களுடைய விசுவாசத்
8 தைப் பின்பற்றுங்கள். இயேசுகிறிஸ்து [12]நேற்
றும் இன்றும் என்றும் மாறாதவராயிருக்கிறார்.
9 பலவிதமான அந்நிய போதனைகளால் [13]அ
லைப்புண்டு திரியாதிருங்கள். போஜனபதார்த்
தங்களினாலல்ல, கிருபையினாலே இருதயம்
ஸ்திரப்படுகிறது நல்லது; [14]போஜனபதார்த்
தங்களில் முயற்சிசெய்கிறவர்கள் பலனடைய
10 வில்லையே. நமக்கு ஒரு பலிபீடமுண்டு, [15]அதற்
குரியவைகளைப் புசிக்கிறதற்குக் கூடாரத்தில்
ஆராதனை செய்கிறவர்களுக்கு அதிகாரமில்லை.
11 ஏனென்றால், எந்த மிருகங்களுடைய இரத்தம்
பாவங்களினிமித்தமாகப் பரிசுத்த ஸ்தலத்துக்
குள் பிரதான ஆசாரியனாலே கொண்டுவரப்
படுகிறதோ, [16]அந்த மிருகங்களின் உடல்கள்
பாளயத்துக்குப் புறம்பே சுட்டெரிக்கப்படும்.
12 அந்தப்படியே, இயேசுவும் தம்முடைய சொந்த
இரத்தத்தினாலே ஜனத்தைப் பரிசுத்தஞ்செய்

யும்படியாக நகரவாசலுக்குப் [17]புறம்பே பாடு
பட்டார். ஆகையால், நாம் அவருடைய நிந் 13
தையைச் சுமந்து, [18]பாளயத்துக்குப் புறம்பே
அவரிடத்திற்குப் புறப்பட்டுப் போகக்கட
வோம். நிலையான நகரம் நமக்கு இங்கே 14
இல்லை; [19]வரப்போகிறதையே நாடித் தேடுகி
றோம். ஆகையால், அவருடைய நாமத்தைத் 15
துதிக்கும் உதடுகளின் கனியாகிய ஸ்தோத்
திர பலியை [20]அவர் மூலமாய் எப்போதும்
தேவனுக்குச் செலுத்தக்கடவோம். அன்றி 16
யும் நன்மைசெய்யவும், தானதர்மம் பண்ணவும்
மறவாதிருங்கள்; [21]இப்படிப்பட்ட பலிகளின்
மேல் தேவன் பிரியமாயிருக்கிறார். உங்களை 17
நடத்துகிறவர்கள், உங்கள் ஆத்துமாக்களுக்
காக உத்தரவாதம் பண்ணுகிறவர்களாய் விழித்
திருக்கிறவர்களானபடியால், அவர்கள் துக்கத்
தோடே அல்ல, சந்தோஷத்தோடே அதைச்
செய்யும்படி, [22]அவர்களுக்குக் கீழ்ப்படிந்து
அடங்குங்கள்; அவர்கள் துக்கத்தோடே அப்
படிச் செய்தால் அது உங்களுக்குப் பிரயோ
ஜனமாயிருக்கமாட்டாதே.
எங்களுக்காக வேண்டிக்கொள்ளுங்கள்; 18
[23]நாங்கள் நன்மனச்சாட்சியுள்ளவர்களாய்[24]எல்
லாவற்றிலும் யோக்கியமாய் நடக்க விரும்புகி
றோமென்று நிச்சயித்திருக்கிறோம். நான் 19
அதிசீக்கிரமாய் உங்களிடத்தில் வரும்படிக்கு
நீங்கள் இப்படி வேண்டிக்கொள்ளும்படி அதி
கமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன்.
நித்திய உடன்படிக்கையின் இரத்தத்தினா 20
லே [25]ஆடுகளுடைய பெரிய மேய்ப்பரான நம்
முடைய கர்த்தராகிய இயேசுவை மரித்தோரி
லிருந்து எழுப்பப்பண்ணின சமாதானத்தின்
தேவன், இயேசுகிறிஸ்துவைக்கொண்டு தமக்கு 21
முன்பாகப் பிரியமானதை உங்களில் நடப்பித்
து, [26]நீங்கள் தம்முடைய சித்தத்தின்படிசெய்ய
உங்களைச் சகலவித நற்கிரியையிலும் சீர்பொரு
ந்தினவர்களாக்குவாராக; அவருக்கு என்றென்
றைக்கும் மகிமை உண்டாவதாக. ஆமென்.
சகோதரரே, [27]நான் சுருக்கமாய் உங்களுக்கு 22
எழுதின இந்தப் புத்திமதியான வார்த்தைகளை
நீங்கள் பொறுமையாய் ஏற்றுக்கொள்ளும்படி
வேண்டிக்கொள்ளுகிறேன். சகோதரனாகிய 23
தீமோத்தேயு விடுதலையாக்கப்பட்டானென்று
அறிவீர்களாக; [28]அவன் சீக்கிரமாய் வந்தால்,
அவனுடனேகூட நான் வந்து, உங்களைக்
காண்பேன்.
உங்களை நடத்துகிறவர்களையும், [29]பரிசுத்த 24
வான்கள் யாவரையும் வாழ்த்துங்கள். இத்தா
லியா தேசத்தார் யாவரும் உங்களுக்கு வாழ்த்
துதல் சொல்லுகிறார்கள்.
கிருபையானது [30]உங்களனைவரோடுங்கூட 25
இருப்பதாக. ஆமென்.

1 மத். 24. 35. 2 பே. 3. 10. வெளி. 21. 1
2 10. 27. உபா. 4 24. 2 தெச. 1. 8
3 1 பே. 1. 22. 1 யோ. 4. 7, 20
4 ஆதி. 18. 3; 19. 2. மத். 25. 35. ரோ. 12. 13
5 மத். 25. 36. ரோ. 12. 15
6 நீதி. 5. 15-23
7 1 கொ. 6. 9. வெளி. 22. 15
8 மத். 6. 25, 34
9 ஆதி. 28. 15. உபா. 31. 6, 8. 1 நாளா. 28. 20
10 சங். 27. 1
11 17. வச. 6. 12
12 1. 12. யோ. 8. 58. வெளி. 1. 4
13 1 யோ. 4. 1
14 ரோ. 14. 17
15 1 கொ. 9. 13; 10. 18
16 லேவி. 16. 27
17 யோ. 19. 17, 18. அப். 7. 58
18 அப். 5. 41. 1 பே. 4. 14
19 மீகா. 2. 10. பிலி. 3. 20
20 ஓசி. 14. 2. எபே. 5. 20. 1 பே. 2. 5
21 ரோ. 12. 13. பிலி. 4. 18
22 அப். 20. 26, 28. 1 தெச. 5. 12, 13
23 ரோ. 15. 32
24 அப். 23. 1; 24. 16. 2 கொ. 1. 12
25 எசே. 34. 23. சகரி. 9. 11. 1 தெச. 5. 23. 1 பே. 1. 21
26 பிலி. 2. 13. 1 பே. 5. 10
27 1 பே. 5. 12
28 1 தெச. 3. 2. 1 தீமோ. 6. 12
29 7, 17. வச
30 தீத். 3. 15

# THE GENERAL EPISTLE OF JAMES

அப்போஸ்தலனாகிய

# யாக்கோபு எழுதின பொதுவான

## நிருபம்

1 தேவனுக்கும் கர்த்தராகிய இயேசுகிறிஸ்
துவுக்கும் [1]ஊழியக்காரனாகிய யாக்கோபு,
[2]சிதறியிருக்கிற பன்னிரண்டு கோத்திரங்
களுக்கும் வாழ்த்துதல் சொல்லி எழுதுகிற
தாவது:
2 என் சகோதரரே, [3]நீங்கள் பலவிதமான
3 சோதனைகளில் அகப்படும்போது, உங்கள்
விசுவாசத்தின் பரீட்சையானது [4]பொறுமை
யை உண்டாக்குமென்று அறிந்து, அதை
4 மிகுந்த சந்தோஷமாக எண்ணுங்கள். நீங்
கள் ஒன்றிலும் குறைவுள்ளவர்களாயிராமல்,
பூரணராயும் நிறைவுள்ளவர்களாயும் இருக்
கும்படி, பொறுமையானது பூரணகிரியை
செய்யக்கடவது.
5 உங்களில் ஒருவன் ஞானத்தில் குறைவுள்
ளவனாயிருந்தால், [5]யாவருக்கும் சம்பூரண
மாய்க் கொடுக்கிறவரும் ஒருவரையும் கடிந்து
கொள்ளாதவருமாகிய தேவனிடத்தில் கேட்
கக்கடவன், [6]அப்பொழுது அவனுக்குக் கொ
6 டுக்கப்படும். ஆனாலும் அவன் எவ்வளவா
கிலும் சந்தேகப்படாமல் விசுவாசத்தோடே
கேட்கக்கடவன்; [7]சந்தேகப்படுகிறவன் காற்
றினால் அடிபட்டு அலைகிற கடலின் அலைக்கு
7 ஒப்பாயிருக்கிறான். அப்படிப்பட்ட மனு
ஷன் தான் கர்த்தரிடத்தில் எதையாகிலும்
8 பெறலாமென்று நினையாதிருப்பானாக. இரு
மனமுள்ளவன் [8]தன் வழிகளிலெல்லாம்
நிலையற்றவனாயிருக்கிறான்.
9 தாழ்ந்த சகோதரன் தான் உயர்த்தப்பட்ட
தைக் குறித்து மேன்மைபாராட்டக்கடவன்.
10 ஐசுவரியவான் தான் தாழ்த்தப்பட்டதைக்
குறித்து மேன்மைபாராட்டக்கடவன்; [9]ஏனெ
னில் அவன் புல்லின் பூவைப்போல் ஒழிந்து
11 போவான். சூரியன் கடும் வெய்யிலுடன்
உதித்து, புல்லை உலர்த்தும்போது, அதின்
பூ உதிர்ந்து, அதின் அழகான வடிவு அழிந்து
போம்; ஐசுவரியவானும் அப்படியே தன்
வழிகளில் வாடிப்போவான்.
12 சோதனையைச் சகிக்கிற மனுஷன் பாக்கிய
வான்; [10]அவன் உத்தமனென்று விளங்கின
பின்பு கர்த்தர் தம்மிடத்தில் [11]அன்புகூருகிற
வர்களுக்கு வாக்குத்தத்தம் பண்ணின ஜீவ
13 கிரீடத்தைப் பெறுவான். சோதிக்கப்படுகிற
எவனும், நான் தேவனால் சோதிக்கப்படுகி
றேன் என்று சொல்லாதிருப்பானாக; தேவன்
பொல்லாங்கினால் சோதிக்கப்படுகிறவரல்ல,
ஒருவனையும் அவர் சோதிக்கிறவருமல்ல.
அவனவன் தன் தன் சுய இச்சையினாலே 14
இழுக்கப்பட்டு, [12]சிக்குண்டு, சோதிக்கப்படு
கிறான். பின்பு இச்சையானது கர்ப்பந்தரி 15
த்து, பாவத்தைப் பிறப்பிக்கும், [13]பாவம் பூர
ணமாகும்போது, மரணத்தைப் பிறப்பிக்கும்.
என் பிரியமான சகோதரரே, மோசம்போ 16
காதிருங்கள். நன்மையான எந்த ஈவும் பூர 17
ணமான எந்த வரமும் பரத்திலிருந்துண்டாகி,
[14]சோதிகளின் பிதாவினிடத்திலிருந்து இறங்
கிவருகிறது; [15]அவரிடத்தில் யாதொரு மாறு
தலும் யாதொரு வேற்றுமையின் நிழலுமில்லை.
அவர் சித்தங்கொண்டு தம்முடைய சிருஷ்டி 18
களில் நாம் [16]முதற்பலன்களாவதற்கு [17]நம்
மைச் சத்திய வசனத்தினாலே ஜெனிப்பித்தார்.
ஆகையால், என் பிரியமான சகோதரரே, 19
யாவரும் கேட்கிறதற்குத் தீவிரமாயும் [18]பேசு
கிறதற்குப் பொறுமையாயும், [19]கோபிக்கிறதற்
குத் தாமதமாயும் இருக்கக்கடவர்கள்; மனு 20
ஷருடைய கோபம் தேவனுடைய நீதியை
நடப்பிக்கமாட்டாதே. ஆகையால், நீங்கள் 21
எல்லாவித அழுக்கையும் கொடிய துர்க்குணத்
தையும் ஒழித்துவிட்டு, [20]உங்கள் உள்ளத்தில்
நாட்டப்பட்டதாயும் உங்கள் ஆத்துமாக்களை
இரட்சிக்க வல்லமையுள்ளதாயுமிருக்கிற வச
னத்தைச் சாந்தமாய் ஏற்றுக்கொள்ளுங்கள்.
அல்லாமலும், நீங்கள் உங்களை வஞ்சியாத 22
படிக்குத் திருவசனத்தைக் கேட்கிறவர்களாய்
மாத்திரமல்ல, [21]அதின்படி செய்கிறவர்களா
யும் இருங்கள். என்னத்தினாலெனில், [22]ஒரு 23
வன் திருவசனத்தைக் கேட்டும் அதின்படி
செய்யாதவனானால், *கண்ணாடியிலே தன்
சுபாவ முகத்தைப் பார்க்கிற மனுஷனுக்கு
ஒப்பாயிருப்பான்; அவன் தன்னைத்தானே 24
பார்த்து, அவ்விடம் விட்டுப் போனவுடனே,
தன் சாயல் இன்னதென்பதை மறந்துவிடு
வான். சுயாதீனப்பிரமாணமாகிய பூரணப் 25
பிரமாணத்தை உற்றுப்பார்த்து, [23]அதிலே
நிலைத்திருக்கிறவனே கேட்கிறதை மறக்கிற
வனாயிராமல், அதற்கேற்ற கிரியைசெய்கிற

1 அப். 12. 17: 15. 13. யூதா 1. கல
2 அப். 8. 1: 26. 7
3 மத். 5. 12. 1 பே. 4. 13-16
4 ரோ. 5. 3
5 நீதி. 2. 3-6. மத். 7. 7: 21. 22
6 எரே. 29. 12. 1 யோ. 5. 14, 15
7 மாற். 11. 24. 1 தீமோ. 2. 8
8 4. 8
9 ஏசா. 40. 6. 1 கொ. 7. 31. 1 பே. 1. 24
10 எபி. 12. 5. வெளி. 3. 19
11 ஏசா. 64. 4. 2 தீமோ. 4. 8. வெளி. 2. 10
12 ஓசி. 13. 9
13 யோபு 15. 35. ரோ. 6. 21-23
14 யோ. 3. 27. 1 கொ. 4. 7
15 1 சாமு. 15. 29. மல். 3. 6. ரோ. 11. 29
16 எரே. 2. 3. எபே. 1. 12. வெளி. 14. 4
17 யோ. 1. 13: 3. 3. 1 கொ. 4. 15. 1 பே. 1. 23
18 பிர. 5. 2
19 நீதி. 16. 32
20 கொலோ. 3. 5, 8. எபி. 12. 1. 1 பே. 2. 1, 2
21 மத். 7. 21. 1 யோ. 3. 7
22 லூ. 6. 47. மு
* தர்ப்பணத்திலே
23 2. 12. சங். 119. 45. யோ. 13. 17. 2 கொ. 3. 18

வானாயிருந்து, தன் செய்கையில் பாக்கியவானா
26 யிருப்பான். உங்களில் ஒருவன் தன் நாவை
அடக்காமல், [1]தன் இருதயத்தை வஞ்சித்து,
தன்னை தேவபக்தியுள்ளவனென்று எண்ணி
னால் அவனுடைய தேவபக்தி வீணாயிருக்
27 கும். திக்கற்ற பிள்ளைகளும் விதவைகளும்
படுகிற உபத்திரவத்திலே அவர்களை விசாரிக்
கிறதும், [2]உலகத்தால் கறைபடாதபடிக்குத்
தன்னைக் காத்துக்கொள்ளுகிறதுமே பிதாவா
கிய தேவனுக்கு முன்பாக மாசில்லாத சுத்த
மான பக்தியாயிருக்கிறது.

**2** என் சகோதரரே, மகிமையுள்ள நம்மு
டைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின்மே
லுள்ள விசுவாசத்தைப் [3]பட்சபாதத்தோடே
2 பற்றிக்கொள்ளாதிருப்பீர்களாக. எனெனில்,
பொன்மோதிரமும் மினுக்குள்ள வஸ்திரமும்
தரித்திருக்கிற ஒரு மனுஷனும், கந்தையான
வஸ்திரம் தரித்திருக்கிற ஒரு தரித்திரனும்
3 உங்கள் *ஆலயத்தில் வரும்போது, மினுக்
குள்ள வஸ்திரந் தரித்தவனைக் கண்ணோக்கி:
நீர் இந்த நல்ல இடத்தில் உட்காரும் என்
றும்; தரித்திரனைப் பார்த்து: நீ அங்கே நில்லு,
அல்லது இங்கே என் பாதபடியண்டையிலே
4 உட்காரு என்றும் நீங்கள் சொன்னால், உங்
களுக்குள்ளே பேதகம்பண்ணி, தகாத சிந்
தனைகளோடே நிதானிக்கிறவர்களாயிருப்பீர்
5 களல்லவா? என் பிரியமான சகோதரரே,
கேளுங்கள்; [4]தேவன் இவ்வுலகத்தின் தரித்
திரரை விசுவாசத்தில் ஐசுவரியவான்களாக
வும், [5]தம்மிடத்தில் அன்புகூருகிறவர்களுக்குத்
தாம் வாக்குத்தத்தம்பண்ணின ராஜ்யத்தைச்
சுதந்தரிக்கிறவர்களாகவும் தெரிந்து கொள்
6 ளவில்லையா? நீங்களோ தரித்திரரைக் [6]கன
வீனம்பண்ணுகிறீர்கள். [7]ஐசுவரியவான்களல்
லவோ உங்களை ஒடுக்குகிறார்கள்? அவர்க
ளல்லவோ உங்களைநியாயாசனங்களுக்குமுன்
7 பாக இழுக்கிறார்கள்? உங்களுக்குத் தரிக்கப்
பட்ட நல்ல நாமத்தை [8]அவர்களல்லவோ
8 தூஷிக்கிறார்கள். உன்னிடத்தில் நீ அன்பு
கூருகிறதுபோலப் பிறனிடத்திலும் அன்பு
கூருவாயாக என்று வேதவாக்கியம் சொல்லு
கிற [9]ராஜரிக பிரமாணத்தை நீங்கள் நிறை
9 வேற்றினால் நன்மைசெய்வீர்கள். பட்சபாத
முள்ளவர்களா யிருப்பீர்களானால் [10]பாவஞ்
செய்து, மீறினவர்களென்று நியாயப்பிரமா
10 ணத்தால் தீர்க்கப்படுவீர்கள். எப்படியெனில்,
ஒருவன் நியாயப்பிரமாணம் முழுவதையும்
கைக்கொண்டிருந்தும், [11]ஒன்றிலே தவறினால்
எல்லாவற்றிலும் குற்றவாளியா யிருப்பான்.
11 ஏனென்றால் [12]விபசாரஞ் செய்யாதிருப்பா
யாக என்று சொன்னவர் கொலைசெய்யா
திருப்பாயாக என்றும் சொன்னார்; ஆதலால்,
நீ விபசாரஞ்செய்யாமலிருந்தும் கொலைசெய்
தாயானால் நியாயப்பிரமாணத்தை மீறினவனா
12 வாய். சுயாதீனப்பிரமாணத்தினால் [13]நியா
யத்தீர்ப் படையப்போகிறவர்களாய் அதற்
கேற்றபடி பேசி, அதற்கேற்றபடி செய்யுங்
கள். ஏனென்றால், [14]இரக்கஞ்செய்யாதவ 13
னுக்கு இரக்கமில்லாதநியாயத்தீர்ப்புக்கிடைக்
கும்; [15]நியாயத்தீர்ப்புக்கு முன்பாக இரக்கம்
மேன்மை பாராட்டும்.
என் சகோதரரே, [16]ஒருவன் தனக்கு விசு 14
வாசமுண்டென்று சொல்லியும், கிரியைக
ளில்லாதவனானால் அவனுக்குப் பிரயோஜன
மென்ன? அந்த விசுவாசம் அவனை இரட்
சிக்குமா? ஒரு சகோதரனாவது சகோதரியா 15
வது [17]வஸ்திரமில்லாமலும் அநுதின ஆகார
மில்லாமலும் இருக்கும்போது, உங்களில் 16
ஒருவன் அவர்களை நோக்கி: [18]நீங்கள் சமாதா
னத்தோடே போங்கள், குளிர்காய்ந்து பசியா
றுங்கள் என்று சொல்லியும், சரீரத்திற்கு
வேண்டியவைகளை அவர்களுக்குக் கொடா
விட்டால் பிரயோஜனமென்ன? அப்படியே 17
விசுவாசமும் கிரியைகளில்லாதிருந்தால் தன்
னிலேதானே செத்ததாயிருக்கும். ஒருவன்: 18
உனக்கு விசுவாசமுண்டு, எனக்குக் கிரியை
களுண்டு; கிரியைகளில்லாமல் உன் விசுவா
சத்தை எனக்குக் காண்பி, [19]நான் என் விசு
வாசத்தை என் கிரியைகளினாலே உனக்குக்
காண்பிப்பேன் என்பானே. தேவன் ஒருவர் 19
உண்டென்று விசுவாசிக்கிறாய், அப்படிச்
செய்கிறது நல்லதுதான்; [20]பிசாசுகளும் விசு
வாசித்து, நடுங்குகின்றன. வீணான மனுஷ 20
னே, கிரியைகளில்லாத விசுவாசம் செத்த
தென்று நீ அறியவேண்டுமோ? நம்முடைய 21
பிதாவாகிய ஆபிரகாம் தன் குமாரன் ஈசாக்
கைப் பலிபீடத்தின்மேல் செலுத்தினபோது,
[21]கிரியைகளினாலே அல்லவோ நீதிமானாக்கப்
பட்டான்? விசுவாசம் அவனுடைய கிரியை 22
களோடேகூட முயற்சிசெய்து, [22]கிரியைகளி
னாலே விசுவாசம் பூரணப்பட்டதென்று காண்
கிறாயே. அப்படியே [23]ஆபிரகாம் தேவனை 23
விசுவாசித்தான், அது அவனுக்கு நீதியாக
எண்ணப்பட்டது என்கிற வேதவாக்கியம்
நிறைவேறிற்று; [24]அவன் தேவனுடைய சிநே
கிதனென்னப்பட்டான். ஆதலால், மனு 24
ஷன் விசுவாசத்தினாலேமாத்திரமல்ல, [25]கிரி
யைகளினாலேயும் நீதிமானாக்கப்படுகிறானெ
ன்று நீங்கள் காண்கிறீர்களே. அந்தப்படி 25
[26]ராகாப் என்னும் வேசியும் தூதர்களை ஏற்றுக்
கொண்டு வேறு வழியாய் அனுப்பிவிட்ட
போது, கிரியைகளினாலே அல்லவோ நீதியுள்
ளவளாக்கப்பட்டாள்? அப்படியே, ஆவியில் 26
லாத சரீரம் செத்ததா யிருக்கிறதுபோல,
கிரியைகளில்லாத விசுவாசமும் செத்ததா
யிருக்கிறது.

என் சகோதரரே, அதிக ஆக்கினையை **3**
அடைவோம் என்று அறிந்து, [27]உங்களில்
அநேகர் போதகராகாதிருப்பீர்களாக. நாம் 2
எல்லாரும் அநேக விஷயங்களில் [28]தவறுகி
றோம்; [29]ஒருவன் சொல் தவறாதவனானால்
அவன் பூரண புருஷனும், தன் சரீரமுழுவ
தையும் கடிவாளத்தினாலே அடக்கிக்கொள்
ளக் கூடியவனுமாயிருக்கிறான். பாருங்கள், 3

1 சங். 34. 13. 1 பே. 3. 10
2 ஏசா. 1. 16, 17: 58. 6, 7. மத். 25. 36. ரோ. 12. 2. 1 யோ. 5. 18
3 நீதி. 28. 21. மத். 22. 16. யூதா. 16 வச
* சபைகூட்டம்
4 லூக். 12. 21. 1 கொ. 1. 26-28. வெளி. 2. 9
5 மத். 5. 3. லூக். 12. 32
6 1 கொ. 11. 22
7 அப். 13. 50
8 சங். 111. 9
9 லேவி. 19. 18. மத். 22. 39. ரோ. 13. 8, 9
10 1. வச
11 உபா. 27. 26. மத். 5. 19. கலா. 3. 10
12 யாத். 20. 13, 14
13 1. 25
14 நீதி. 21. 13. மத். 6. 15
15 சங். 85. 10. 1 யோ. 4. 17, 18
16 1. 23. மத். 7. 26
17 லூக். 3. 11
18 1 யோ. 3. 18
19 3. 13
20 மாற். 1. 24; 5. 7. அப். 16. 17; 19. 15
21 ஆதி. 22. 9, 12
22 எபி. 11. 17
23 ஆதி. 15. 6. ரோ. 4. 3
24 2 நாளா. 20. 7. ஏசா. 41. 8
25 வெளி. 20. 12
26 யோசு. 2. 1. மத். 21. 31. எபி. 11. 31
27 மத். 23. 8, 14. 1 பே. 5. 3
28 1 இரா. 8. 46. நீதி. 20. 9. 1 யோ. 1. 8
29 நீதி. 13. 3. 1 பே. 3. 10

குதிரைகள் நமக்குக் கீழ்ப்படியும்படிக்கு
அவைகளின் வாய்களில் கடிவாளம்போட்டு,
[1]அவைகளுடைய முழுச் சரீரத்தையும் திரு
4 ப்பி நடத்துகிறோம். கப்பல்களையும் பாருங்
கள், அவைகள் மகா பெரியவைகளாயிருந்
தாலும், கடுங்காற்றுகளால் அடிபட்டாலும்,
அவைகளை நடத்துகிறவன் போகும்படி யோ
சிக்கும் இடம் எதுவோ அவ்விடத்திற்கு
நேராக மிகவும் சிறிதான சுக்கானாலே திருப
5 ப்பப்படும். அப்படியே, [2]நாவானதும் சிறிய
அவயவமாயிருந்தும்பெருமையானவைகளைப்
பேசும். பாருங்கள், சிறிய நெருப்பு எவ்வ
ளவு பெரிய காட்டைக் கொளுத்திவிடுகிறது!
6 நாவும் நெருப்புத்தான், [3]அது அநீதி நிறை
ந்த உலகம்; நம்முடைய அவயவங்களில் நாவா
னது முழுச்சரீரத்தையும் கறைபடுத்தி, *ஆயு
ள் சக்கரத்தைக் கொளுத்திவிடுகிறதாயும்,
†நரக அக்கினியினால் கொளுத்தப்படுகிறதா
7 யும் இருக்கிறது! சகலவிதமான மிருகங்கள்,
பறவைகள், ஊரும்பிராணிகள், நீர்வாழும்
ஜெந்துக்கள் ஆகிய இவைகளின் சுபாவம்
மனுஷ சுபாவத்தால் அடக்கப்படும், அடக்
8 கப்பட்டதுமுண்டு. நாவை அடக்க ஒரு மனு
ஷனாலும் கூடாது; அது அடங்காத பொல்
லாங்குள்ளதும் [4]சாவுக்கேதுவான விஷம்
9 நிறைந்ததுமாயிருக்கிறது.. அதினாலே நாம்
‡பிதாவாகிய தேவனைத் துதிக்கிறோம்; தேவ
னுடைய சாயலின்படி உண்டாக்கப்பட்ட
10 மனுஷரை அதினாலேயே சபிக்கிறோம். துதித்
தலும் சபித்தலும் ஒரே வாயிலிருந்து புறப்படு
கிறது. என் சகோதரரே, இப்படியிருக்கலா
11 காது. ஒரே ஊற்றுக்கண்ணிலிருந்து தித்
திப்பும் கசப்புமான தண்ணீர் சுரக்குமா?
12 என் சகோதரரே, [5]அத்திமரம் ஒலிவப்பழங்
களையும், திராட்சச்செடி அத்திப்பழங்களையும்
கொடுக்குமா? அப்படியே உவர்ப்பான நீரூற்
றுத் §தித்திப்பான ஜலத்தைக் கொடுக்க
மாட்டாது.
13 உங்களில் ஞானியும் விவேகியுமாயிருக்கிற
வன் எவனோ, [6]அவன் ஞானத்திற்குரிய சாந்
தத்தோடே தன் கிரியைகளை நல்ல நடக்கை
14 யினாலே காண்பிக்கக்கடவன். உங்கள் இரு
தயத்திலே கசப்பான வைராக்கியத்தையும்
விரோதத்தையும் வைத்தீர்களானால், [7]நீங்கள்
பெருமை பாராட்டாதிருங்கள்; சத்தியத்திற்கு
விரோதமாய்ப் பொய்சொல்லாமலுமிருங்கள்.
15 இப்படிப்பட்ட ஞானம் பரத்திலிருந்து இற
ங்கிவருகிற ஞானமாயிராமல், [8]லௌகிக சம்
பந்தமானதும், ஜென்மசுபாவத்துக்குரியதும்,
16 பேய்த்தனத்துக் கடுத்ததுமாயிருக்கிறது. வை
ராக்கியமும் விரோதமும் எங்கே உண்டோ,
[9]அங்கே கலகமும் சகல துர்ச்செய்கைகளு
17 முண்டு. பரத்திலிருந்துவருகிற ஞானமோ
[10]முதலாவது சுத்தமுள்ளதாயும், [11]பின்பு சமா
தானமும் [12]சாந்தமும் இணக்கமுமுள்ளதாயும்,
இரக்கத்தாலும் நற்கனிகளாலும் நிறைந்தா
யும், பட்சபாதமில்லாததாயும், [13]மாயமற்றதாயு
மிருக்கிறது. நீதியாகிய கனியானது சமாதா
னத்தை நடப்பிக்கிறவர்களாலே [14]சமாதானத் 18
திலே விதைக்கப்படுகிறது.
உங்களுக்குள்ளே யுத்தங்களும் சண்டை 4
களும் எதினாலே வருகிறது; [15]உங்கள் அவய
வங்களில் போர்செய்கிற இச்சைகளினாலல்
லவா? நீங்கள் இச்சித்தும் உங்களுக்குக் 2
கிடைக்கவில்லை; நீங்கள் கொலைசெய்தும்,
பொறாமையுள்ளவர்களா யிருந்தும், அடை
யக்கூடாமற்போகிறீர்கள்; நீங்கள் சண்டை
யும் யுத்தமும் பண்ணியும், நீங்கள் விண்ணப்
பம் பண்ணாமலிருக்கிறதினாலே, உங்களுக்
குச் சித்திக்கிறதில்லை. நீங்கள் விண்ணப் 3
பம்பண்ணியும், உங்கள் இச்சைகளை நிறை
வேற்றும்படி செலவழிக்க வேண்டுமென்று
தகாதவிதமாய் விண்ணப்பம் பண்ணுகிறபடி
யினால், [16]பெற்றுக்கொள்ளாமலிருக்கிறீர்கள்.
விபசாரரே, விபசாரிகளே, [17]உலகசிநேகம் 4
தேவனுக்கு விரோதமான பகையென்று அறி
யீர்களா? [18]ஆகையால் உலகத்துக்குச் சிநேகித
னாயிருக்க விரும்புகிறவன் தேவனுக்குப்
பகைஞனாகிறான். நம்மில் வாசமாயிருக்கிற 5
ஆவியானவர் நம்மிடத்தில் வைராக்கிய வாஞ்
சையாயிருக்கிறாரென்று [19]வேதவாக்கியம்
வீணாய்ச் சொல்லுகிறதென்று நினைக்கிறீர்
களா? அவர் அதிகமான கிருபையை அளிக் 6
கிறாரே. [20]ஆதலால் தேவன் பெருமையுள்ள
வர்களுக்கு எதிர்த்து நிற்கிறார், தாழ்மையுள்ள
வர்களுக்கோ கிருபை அளிக்கிறாரென்று
சொல்லியிருக்கிறது. ஆகையால், தேவனுக் 7
குக் கீழ்ப்படிந்திருங்கள், [21]பிசாசுக்கு எதிர்த்து
நில்லுங்கள், அப்பொழுது அவன் உங்களை
விட்டு ஓடிப்போவான். தேவனிடத்தில் 8
சேருங்கள், [22]அப்பொழுது அவர் உங்களிடத்
தில் சேருவார். [23]பாவிகளே, உங்கள் கைக
ளைச் சுத்திகரியுங்கள்; இருமனமுள்ளவர்க
ளே, உங்கள் இருதயங்களைப் பரிசுத்த மாக்
குங்கள். நீங்கள் துயரப்பட்டுத் துக்கித்து 9
[24]அழுங்கள்; உங்கள் நகைப்பு துக்கிப்பாக
வும், உங்கள் சந்தோஷம் சஞ்சலமாகவும் மாறக்
கடவது. கர்த்தருக்கு முன்பாகத் தாழ்மைப் 10
படுங்கள், [25]அப்பொழுது அவர் உங்களை உயர்
த்துவார்.
சகோதரரே, [26]ஒருவருக்கொருவர் விரோத 11
மாய்ப் பேசாதிருங்கள்; [27]சகோதரனுக்கு
விரோதமாய்ப் பேசி, தன் சகோதரனைக் குற்
றப்படுத்துகிறவன் நியாயப்பிரமாணத்திற்கு
விரோதமாய்ப் பேசி நியாயப்பிரமாணத்தைக்
குற்றப்படுத்துகிறான்; நியாயப்பிரமாணத்
தைக் குற்றப்படுத்துவாயானால், நீ நியாயப்பிர
மாணத்தின்படி செய்கிறவனாயிராமல், அதற்
கு நியாயாதிபதியாயிருப்பாய். நியாயப்பிரமா 12
ணத்தைக் ||கட்டளையிடுகிறவர் ஒருவரே, [28]அவ
ரே, இரட்சிக்கவும் அழிக்கவும் வல்லவர்; [29]மற்
றவனைக் குற்றப்படுத்துகிறதற்கு நீ யார்?
மேலும், நாங்கள் இன்றைக்கு அல்லது 13
நாளைக்கு இன்ன பட்டணத்திற்குப் போய்,

1 சங். 32. 9
2 சங். 12. 3. நீதி. 12. 13
3 நீதி. 16. 27. மத். 15. 11-20
* ஜெனன=பிறப்பு, சக்கரத்தை
† கெஹென்னா
4 சங். 140. 3. ரோ. 3. 13
‡ கர்த்தரையும், பிதாவையும்
5 மத். 7. 16
§ நல்ல=இனிய
6 சங். 107. 43. கலா. 6. 4
7 ரோ. 13. 13
8 பிலி. 3. 19. யூதா. 19.
9 1 கொ. 3. 3. கலா. 5. 20
10 1 கொ. 2. 6, 7. பிலி. 4. 8
11 எபி. 12. 14
12 ஆதி. 5. 22
13 ரோ. 12. 9. 1 பே. 1. 22
14 மத். 5. 9. எபி. 12. 11
15 ரோ. 7. 23. கலா. 5. 17. 1 பே. 2. 11
16 யோ. 3. 22; 5. 14
17 1 யோ. 2. 15
18 யோ. 15. 19. கலா. 1. 10
19 பிர. 4. 4
20 நீதி. 29. 23. மத். 23. 12. 1 பே. 5. 5
21 எபே. 4. 27. 1 பே. 5. 9
22 2 நாளா. 15. 2.
23 ஏசா. 1. 16. 1 பே. 1. 22. 1 யோ. 3. 3
24 மத். 5. 4
25 மத். 23. 12. 1 பே. 5. 6
26 எபே. 4. 31. 1 பே. 2. 1
27 மத். 7. 1. 1 கொ. 4. 6
|| கட்டளையிடுகிறவரும் நியாயாதிபதியும்
28 மத். 10. 28
29 ரோ. 14. 4, 13

[1]அங்கே ஒருவருஷம் தங்கி, வியாபாரஞ்செய்
து, சம்பாத்தியம் பண்ணுவோமென்கிறவர்
14 களே, கேளுங்கள். நாளைக்கு நடப்பது உங்
களுக்குத் தெரியாதே. [2]உங்கள் ஜீவன் எப்
படிப்பட்டது? கொஞ்சக்காலந் தோன்றிப்
பின்பு தோன்றாமற்போகிற புகையைப்
15 போலிருக்கிறதே. ஆதலால்: [3]ஆண்டவருக்
குச் சித்தமானால், நாங்களும் உயிரோடிருந்
தால், இன்னின்னதைச் செய்வோம் என்று
16 சொல்லவேண்டும். இப்பொழுது உங்கள்
வீம்புகளில் மேன்மைபாராட்டுகிறீர்கள்; [4]இப்
படிப்பட்ட மேன்மைபாராட்டல் யாவும்
17 பொல்லாங்காயிருக்கிறது. ஆதலால், ஒருவன்
நன்மைசெய்ய அறிந்தவனாயிருந்தும், [5]அதைச்
செய்யாமற்போனால், அது அவனுக்குப் பாவ
மாயிருக்கும்.

**5** ஐசுவரியவான்களே, கேளுங்கள், [6]உங்கள்
மேல் வரும் நிர்ப்பந்தங்களினிமித்தம் அலறி
2 அழுங்கள். உங்கள் ஐசுவரியம் அழிந்து,
[7]உங்கள் வஸ்திரங்கள் [8]பொட்டரித்துப்போ
3 யின. உங்கள் பொன்னும் வெள்ளியும் துருப்
பிடித்தது; அவைகளிலுள்ள துரு உங்களுக்கு
விரோதமாகச் சாட்சியாயிருந்து, அக்கினி
யைப்போல உங்கள் மாம்சத்தைத் தின்னும்.
[9]கடைசிநாட்களிலே பொக்கிஷத்தைச் சேர்த்
4 தீர்கள். இதோ, [10]உங்கள் வயல்களை அறுத்த
வேலைக்காரருடைய கூலி உங்களால் அநியா
யமாய்ப் பிடிக்கப்பட்டுக் கூக்குரலிடுகிறது;
[11]அறுத்தவர்களுடைய கூக்குரல் சேனைகளு
5 டைய கர்த்தரின் செவிகளில் பட்டது. பூமி
யிலே நீங்கள் சம்பிரமமாய் வாழ்ந்து, சுக
போகத்தில் உழன்றீர்கள்; [12]கொழுத்தவைகளை
அடிக்கும் நாளில் நடக்கிறதுபோல உங்கள்
6 இருதயங்களைப் போஷித்தீர்கள். நீதிமானை
நீங்கள் ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்துக் கொலை
செய்தீர்கள்; [13]அவன் உங்களோடே எதிர்த்து
நிற்கவில்லை.

7 இப்படியிருக்க, சகோதரரே, கர்த்தர் வரு
மளவும் நீடிய பொறுமையாயிருங்கள். இதோ,
பயிரிடுகிறவன் பூமியின் நற்பலனை அடைய
வேண்டுமென்று, [14]முன்மாரியும் பின்மாரியும்
வருமளவும், நீடிய பொறுமையோடே காத்
8 திருக்கிறான். நீங்களும் நீடிய பொறுமை
யோடிருந்து, உங்கள் இருதயங்களை ஸ்திரப்
படுத்துங்கள்; [15]கர்த்தரின் வருகை சமீபமா
9 யிருக்கிறதே. சகோதரரே, [16]நீங்கள் நியாயத்
தீர்க்கப் படாதபடிக்கு ஒருவருக்கொருவர்
விரோதமாய் முறையிடாதிருங்கள்; [17]இதோ,
நியாயாதிபதி வாசற்படியில் நிற்கிறார். என் 10
சகோதரரே, [18]கர்த்தருடைய நாமத்தினாலே
பேசின தீர்க்கதரிசிகளைத் துன்பப்படுதலுக்
கும் நீடிய பொறுமைக்கும் திருஷ்டாந்தமாக
வைத்துக்கொள்ளுங்கள். இதோ, [19]பொறு 11
மையாயிருக்கிறவர்களைப் பாக்கியவான்களெ
ன்கிறோமே! யோபின் பொறுமையைக்குறி
த்துக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள்; [20]கர்த்தரு
டைய செயலின் முடிவையும் கண்டிருக்கிறீர்
கள்; கர்த்தர் மிகுந்த உருக்கமும் இரக்கமு
முள்ளவராயிருக்கிறாரே.

விசேஷமாய், என் சகோதரரே, [21]வானத் 12
தின்பேரிலாவது, பூமியின்பேரிலாவது, வே
றெந்த ஆணையினாலாவது சத்தியம்பண்ணாதிரு
ங்கள்; நீங்கள் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்ப
டாதபடிக்கு உள்ளதை உள்ளதென்றும், இல்
லதை இல்லதென்றும் சொல்லக்கடவீர்கள்.

உங்களில் ஒருவன் துன்பப்பட்டால் ஜெ 13
பம் பண்ணக்கடவன்; [22]ஒருவன் மகிழ்ச்சி
யாயிருந்தால் சங்கீதம் பாடக்கடவன். உங்க 14
ளில் ஒருவன் வியாதிப்பட்டால், அவன்
சபையின் மூப்பர்களை வரவழைப்பானாக;
[23]அவர்கள் கர்த்தருடைய நாமத்தினாலே அவ
னுக்கு எண்ணெய் பூசி, அவனுக்காக ஜெ
பம் பண்ணக்கடவர்கள். அப்பொழுது விசு 15
வாசமுள்ள ஜெபம் பிணியாளியை இரட்சிக்
கும்; [24]கர்த்தர் அவனை எழுப்புவார்; [25]அவன்
பாவஞ்செய்தவனானால் அது அவனுக்கு மன்
னிக்கப்படும். நீங்கள் சொஸ்தமடையும்படி 16
க்கு, [26]உங்கள் குற்றங்களை ஒருவருக்கொருவர்
அறிக்கையிட்டு, ஒருவருக்காக ஒருவர் ஜெ
பம் பண்ணுங்கள். [27]நீதிமான் செய்யும் ஊக்
கமான வேண்டுதல் மிகவும் பெலனுள்ளதாயி
ருக்கிறது. எலியா என்பவன் நம்மைப்போ 17
லப் பாடுள்ள மனுஷனாயிருந்தும், மழை
பெய்யாதபடிக்குக் கருத்தாய் ஜெபம்பண்ணி
னான், [28]அப்பொழுது மூன்று வருஷமும்
ஆறு மாதமும் பூமியின்மேல் மழை பெய்ய
வில்லை. மறுபடியும் ஜெபம் பண்ணினான், 18
[29]அப்பொழுது வானம் மழையைப் பொழி
ந்தது, பூமி தன் பலனைத் தந்தது.

சகோதரரே, உங்களில் ஒருவன் சத்தியத் 19
தை விட்டு விலகி மோசம்போகும்போது,
[30]மற்றொருவன் அவனைத் *திருப்பினால், தப் 20
பிப்போன மார்க்கத்தினின்று பாவியைத்
திருப்புகிறவன் [31]ஒரு ஆத்துமாவை மரணத்
தினின்று இரட்சித்து, [32]திரளான பாவங்
களை மூடுவானென்று அறியக்கடவன்.

1 லூ. 12. 18.
2 யோபு 7. 7. 1 பே. 1. 24. 1 யோ. 2. 17
3 அப். 18. 21. 1 கொ. 4. 19
4 1 கொ. 5. 6
5 லூ. 12. 47. யோ. 9. 41. ரோ. 1. 20, 21, 32
6 நீதி. 11. 28. லூ. 6. 24. 1 தீமோ. 6. 9
7 எரே. 17. 11. மத். 6. 20
8 யோபு 13. 28
9 ரோ. 2. 5
10 எரே. 22. 14. மல். 3. 5
11 யாத். 22. 27
12 லூ. 16. 19, 25. 1 தீமோ. 5. 6
13 2. 6. மத். 5. 39
14 உபா. 11. 14
15 பிலி. 4. 5. எபி. 10. 25, 37. 1 பே. 4. 7. வெளி. 22. 20
16 4. 11
17 மத். 24. 33. 1 கொ. 4. 5
18 மத். 5. 12. எபி. 11. 35–38.
19 சங். 94. 12. மத். 5. 10, 11
20 யோபு 1. 21. 42. 10.
21 மத். 5. 34.
22 எபே. 5. 19. கொலோ. 3. 16
23 மாற். 6. 13; 16. 18
24 மத். 9. 2
25 ஏசா. 33. 24
26 அப். 19. 18
27 சங். 145. 19. யோ. 9. 31. 1 யோ. 3. 22
28 1 இரா. 17. 1. லூ. 4. 25
29 1 இரா. 18. 42, 45
30 மத். 18. 15
* குணப்படுத்தினால்
31 ரோ. 11. 14. 1 கொ. 9. 22. 1 தீமோ. 4. 16
32 நீதி. 10. 12. 1 பே. 4. 8

# THE FIRST EPISTLE GENERAL OF PETER

அப்போஸ்தலனாகிய

# பேதுரு எழுதின பொதுவான

## முதலாம் நிருபம்

**1** இயேசுகிறிஸ்துவின் அப்போஸ்தலனா
கிய பேதுரு, [1]பொந்து, கலாத்தியா, கப்பத்
தோக்கியா, ஆசியா, பித்தினியா தேசங்களி
2 லே சிதறியிருக்கிறவர்களில், பிதாவாகிய
தேவனுடைய [2]முன்னறிவின்படியே, [3]ஆவி
யானவரின் பரிசுத்தமாக்குதலினாலே, [4]கீழ்ப்
படிதலுக்கும் இயேசு கிறிஸ்துவினுடைய
[5]இரத்தந் தெளிக்கப்படுதலுக்கும் [6]தெரிந்து
கொள்ளப்பட்ட பரதேசிகளுக்கு எழுதுகிற
தாவது: [7]கிருபையும் சமாதானமும் உங்களுக்
குப் பெருகக்கடவது.
3 நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து
வின் பிதாவாகிய தேவனுக்கு [8]ஸ்தோத்திரம்
4 உண்டாவதாக; அவர், [9]இயேசுகிறிஸ்து மரித்
தோரிலிருந்து எழுந்ததினாலே, [10]அழியாத
தும் மாசற்றதும் வாடாததுமாகிய சுதந்தரத்
திற்கேதுவாக, [11]ஜீவனுள்ள நம்பிக்கை உண்
டாகும்படி, [12]தமது மிகுந்த இரக்கத்தின்படி
5 யே நம்மை மறுபடியும் ஜெநிப்பித்தார். கடை
சிக்காலத்திலே வெளிப்பட ஆயத்தமாக்கப்
பட்டிருக்கிற இரட்சிப்புக்கு ஏதுவாக விசுவா
சத்தைக்கொண்டு தேவனுடைய பலத்தினா
லே காக்கப்பட்டிருக்கிற [13]உங்களுக்கு அந்தச்
சுதந்தரம் பரலோகத்தில் வைக்கப்பட்டிருக்
கிறது. இதிலே நீங்கள் மிகவும் சந்தோஷப்
6 படுகிறீர்கள்; என்றாலும், [14]துன்பப்படவேண்
டியது அவசியமானதால், இப்பொழுது கொ
ஞ்சக்காலம் பலவிதமான சோதனைகளினாலே
7 துக்கப்படுகிறீர்கள். அழிந்துபோகிற பொன்
[15]அக்கினியினாலே சோதிக்கப்படும்; [16]அதைப்
பார்க்கிலும் அதிக விலையேறப்பெற்றதாயிருக்
கிற உங்கள் விசுவாசம் சோதிக்கப்பட்டு,
[17]இயேசுகிறிஸ்து வெளிப்படும்போது [18]உங்க
ளுக்குப் புகழ்ச்சியும் கனமும் மகிமையுமுண்
8 டாகக் *காணப்படும். அவரை நீங்கள் காணா
மலிருந்தும் [19]அவரிடத்தில் அன்புகூருகிறீர்
கள்; [20]இப்பொழுது அவரைத் தரிசியாமலிருந்
தும் அவரிடத்தில் விசுவாசம் வைத்து, சொல்
லிமுடியாததும் மகிமையால் நிறைந்ததுமா
யிருக்கிற சந்தோஷமுள்ளவர்களாய்க் களிகூ
ர்ந்து, உங்கள் விசுவாசத்தின் பலனாகிய [21]ஆத் 9
தும ரட்சிப்பை அடைகிறீர்கள். உங்களுக்கு 10
உண்டான கிருபையைக்குறித்துத் தீர்க்கதரி
சனஞ்சொன்ன தீர்க்கதரிசிகள் [22]இந்த இரட்
சிப்பைக்குறித்துக் கருத்தாய் ஆராய்ந்து பரி
சோதனைபண்ணினார்கள்; தங்களிலுள்ள கிறி 11
ஸ்துவின் ஆவியானவர் கிறிஸ்துவுக்கு உண்
டாகும் பாடுகளையும், [23]அவைகளுக்குப் பின்
வரும் மகிமைகளையும் முன்னறிவித்தபோது,
இன்னகாலத்தைக் குறித்தாரென்பதையும்,
அந்தக்காலத்தின் விசேஷம் இன்னதென்ப
தையும் ஆராய்ந்தார்கள். தங்கள் நிமித்தமல்ல, 12
[24]நமது நிமித்தமே இவைகளைத் தெரிவித்தார்
களென்று அவர்களுக்கு வெளியாக்கப்பட்
டது; [25]பரலோகத்திலிருந்து அனுப்பப்பட்ட
பரிசுத்த ஆவியினாலே உங்களுக்குச் சுவிசே
ஷத்தைப் பிரசங்கித்தவர்களைக் கொண்டு
இவைகள் இப்பொழுது உங்களுக்கு அறிவிக்
கப்பட்டு வருகிறது; [26]இவைகளை உற்றுப்பா
ர்க்க தேவதூதரும் ஆசையாயிருக்கிறார்கள்.
ஆகையால், [27]நீங்கள் உங்கள் மனதின் அரை 13
யைக் கட்டிக்கொண்டு, [28]தெளிந்த புத்தியுள்ள
வர்களாயிருந்து; [29]இயேசுகிறிஸ்து வெளிப்ப
டும்போது உங்களுக்கு அளிக்கப்படுங் கிருபை
யின்மேல் பூரண நம்பிக்கையுள்ளவர்களாயி
ருங்கள். நீங்கள் முன்னே உங்கள் அறியா 14
மையினாலே கொண்டிருந்த இச்சைகளின்படி
இனி நடவாமல், [30]கீழ்ப்படிகிற பிள்ளைகளா
யிருந்து, உங்களை அழைத்தவர் பரிசுத்தராயி 15
ருக்கிறதுபோல, [31]நீங்களும் உங்கள் நடக்கைக
ளெல்லாவற்றிலேயும் பரிசுத்தராயிருங்கள்:
நான் பரிசுத்தர், [32]ஆகையால் நீங்களும் †பரி 16
சுத்தராயிருங்கள் என்று எழுதியிருக்கிறதே.
அன்றியும், [33]பட்சபாதமில்லாமல் அவனவனு 17
டைய கிரியைகளின்படி நியாயந்தீர்க்கிறவரை
நீங்கள் பிதாவாகத் தொழுதுகொண்டுவருகிற
படியால், [34]இங்கே பரதேசிகளாய்ச் சஞ்சரிக்கு
மளவும் பயத்துடனே நடந்துகொள்ளுங்கள்.
உங்கள் முன்னோர்களால் பாரம்பரியமாய் நீங் 18
கள் அநுசரித்துவந்த வீணான நடத்தையினி

1 யோ. 7. 35. அப். 2. 5, 9, 10: 8. 4. யாக். 1. 1
2 ரோ. 8. 29
3 2 தெச. 2. 13
4 ரோ. 16. 16
5 எபி. 12. 24
6 எபே. 1. 4
7 யூதா 2. வச
8 2 கொ. 1. 3
9 1 கொ. 15. 20
10 எபி. 9. 15
11 யோ. 3. 3, 5
12 எபே. 2. 4. யாக். 1. 18
13 எபே. 2. 8. யூதா 1, 24. வச
14 எபி. 12. 7–11
15 1 கொ. 3. 13
16 யாக். 1. 3, 12
17 வெளி. 1. 7
18 ரோ. 2. 7, 10. 1 கொ. 4. 5
* காணப்படும்படி (அர்த்தத் தம்பங்க ளெச்சமிக்கிறீர்கள்.)
19 1 யோ. 4. 20
20 யோ. 16. 22. 2 கொ. 5. 7. எபி. 11. 1, 27
21 ரோ. 6. 22
22 தானி. 9. 3. மத். 13. 17. 2 பே. 1. 19–21
23 லூ. 24. 25, 26, 44, 46. 2 பே. 1. 21
24 எபி. 11. 38–40
25 அப். 2. 4. 2 கொ. 1. 22
26 எபே. 3. 10
27 லூ. 12. 35
28 லூ. 21. 34
29 எபி. 10. 35
30 அப். 17. 30. ரோ. 12. 2
31 2 கொ. 7. 1. 2 பே. 3. 11
32 லேவி. 11. 44
† பரிசுத்தரா யிருப் பீர்கள்
33 அப். 10. 34. ரோ. 2. 11
34 எபி. 2. 12. 2 கொ. 5. 6

ன்று [1]அழிவுள்ள வஸ்துக்களாகிய வெள்ளியி
னாலும் பொன்னினாலும் மீட்கப்படாமல்,
19 குற்றமில்லாத மாசற்ற ஆட்டுக்குட்டியாகிய
கிறிஸ்துவின் [2]விலையேறப்பெற்ற இரத்தத்தி
னாலே மீட்கப்பட்டீர்களென்று அறிந்திருக்கி
20 றீர்களே. அவர் உலகத்தோற்றத்திற்கு முன்
னே குறிக்கப்பட்டவராயிருந்து, [3]தமது மூல
மாய் தேவன்மேல் விசுவாசமாயிருக்கிற உங்க
ளுக்காக இந்தக் கடைசிக் காலங்களில் வெ
21 ளிப்பட்டார். உங்கள் விசுவாசமும் நம்பிக்
கையும் தேவன்மேலிருக்கும்படி, [4]அவரை
மரித்தோரிலிருந்து எழுப்பி, அவருக்கு மகி
22 மையைக் கொடுத்தார். ஆகையால் நீங்கள்
மாயமற்ற சகோதர சிநேகமுள்ளவர்களாகும்
படி, [5]ஆவியினாலே சத்தியத்திற்குக் கீழ்ப்ப
டிந்து, [6]உங்கள் ஆத்துமாக்களைச் சுத்தமாக்
கிக்கொண்டவர்களா யிருக்கிறபடியால், சுத்த
இருதயத்தோடே ஒருவரிலொருவர் ஊக்க
23 மாய் அன்புகூருங்கள்; அழிவுள்ள வித்தினா
லே அல்ல, [7]என்றென்றைக்கும் நிற்கிறதும
ஜீவனுள்ளதுமான தேவவசனமாகிய அழி
வில்லாத வித்தினாலே [8]மறுபடியும் ஜெநிப்
24 பிக்கப்பட்டிருக்கிறீர்களே. மாம்சமெல்லாம்
புல்லைப்போலவும், [9]மனுஷருடைய மகிமை
யெல்லாம் புல்லின் பூவைப்போலவுமிருக்கி
றது; புல் *உலர்ந்தது, அதின் பூவும் உதிர்ந்
25 தது. கர்த்தருடைய வசனமோ என்றென்
றைக்கும் நிலைத்திருக்கும்; [10]உங்களுக்குச் சுவி
சேஷமாய் அறிவிக்கப்பட்டுவருகிற வசனம்
இதுவே.

**2** இப்படியிருக்க, [11]கர்த்தர் தயையுள்ளவ
ரென்பதை நீங்கள் ருசிபார்த்ததுண்டானால்,
2 சகல துர்க்குணத்தையும், [12]சகலவித கபடத்
தையும், வஞ்சகங்களையும், பொறாமைகளையும்
சகலவித புறங்கூறுதலையும் ஒழித்துவிட்டு,
3 நீங்கள் †வளரும்படி, புதிதாய்ப் பிறந்த குழந்
தைகளைப்போல, [13]திருவசனமாகிய களங்க
மில்லாத ஞானப்பாலின்மேல் வாஞ்சையா
4 யிருங்கள். மனுஷரால் தள்ளப்பட்டதாயி
னும், [14]தேவனால் தெரிந்துகொள்ளப்பட்ட
தும் விலையேறப்பெற்றதுமாயிருக்கிற ஜீவ
னுள்ள கல்லாகிய அவரிடத்தில் சேர்ந்தவர்
5 களாகிய நீங்களும், ஜீவனுள்ள [15]கற்களைப்
போல [16]ஆவிக்கேற்ற மாளிகையாகவும், இயே
சுகிறிஸ்து மூலமாய் தேவனுக்குப் பிரியமான
[17]ஆவிக்கேற்ற பலிகளைச்செலுத்தும்படிக்குப்
[18]பரிசுத்த ஆசாரியக்கூட்டமாகவும் கட்டப்
6 பட்டுவருகிறீர்கள். அந்தப்படியே: [19]இதோ,
தெரிந்துகொள்ளப்பட்டதும் விலையேறப்பெ
ற்றதுமாயிருக்கிற மூலைக்கல்லைச் சீயோனில்
வைக்கிறேன்; அதின்மேல் விசுவாசமாயிருக்
கிறவன் வெட்கப்படுவதில்லை என்று வேதத்
7 திலே சொல்லியிருக்கிறது. ஆகையால் விசு
வாசிக்கிற உங்களுக்கு ‡அது விலையேறப்
பெற்றது; [20]கீழ்ப்படியாமலிருக்கிறவர்களுக்
கோ வீட்டைக் கட்டுகிறவர்களால் தள்ளப்
பட்ட பிரதான மூலைக்கல்லாகிய அந்தக் கல்

1 4. 3. 1 கொ. 6. 20; 7. 23
2 யோ. 1. 29, 36. அப். 20. 28. வெளி. 7. 14
3 ரோ. 3. 25, 26. வெளி. 13. 8
4 மத். 28. 18. அப். 2. 24, 33. பிலி. 2. 9
5 1 யோ. 3. 14, 18
6 யோ. 17. 17, 19. அப். 15. 9. ரோ. 12. 9, 10.
7 யாக். 1. 18
8 யோ. 1. 13; 3. 5
9 ஏசா. 40. 6–8. யாக். 1. 10.
* உலரும்—உதிரும்
10 லூ. 16. 17. யோ. 1. 1, 14. 2 பே. 1. 19
11 சங். 34. 8. எபி. 6. 5
12 எபே. 4. 22, 31
† இரட்சிப்புக்கேதுவாக
13 மத். 18. 3. 1 கொ. 3. 2
14 சங். 118. 22. மத். 21. 42. அப். 4. 11
15 எபே. 2. 21, 22
16 எபி. 3. 6
17 மல். 1. 11. ரோ. 12. 1
18 ஏசா. 61. 6. வெளி. 1. 6
19 ஏசா. 28. 16. ரோ. 9. 33
‡ அவர் அருமையானவர்
20 மத். 21. 42. அப். 4. 11
21 லூ. 2. 34. ரோ. 9. 33. [illegible]
22 அப். 26. 18
23 1. 2
24 வெளி. 1. 6
25 யோ. 17. 19
26 உபா. 4. 20. அப். 20. 28
27 ரோ. 9. 25
28 சங். 119. 19. எபி. 11. 13
29 ரோ. 8. 13. கலா. 5. 16–21. யாக். 4. 1
30 மத். 5. 16
31 லூ. 19. 44
§ விசாரணையின்
32 ரோ. 12. 17. 2 கொ. 8. 21
33 மத். 22. 21. ரோ. 13. 1–7
34 தீத். 2. 8
35 கலா. 5. 1, 13
36 1 கொ. 7. 22
|| அடியார்கள்
37 ரோ. 12. 10. பிலி. 2. 3
38 யோ. 13. 35
39 சங். 111. 10. மத். 22. 21
40 நீதி. 24. 21
41 எபே. 6. 5. ஏ
42 மத். 5. 10–12. ரோ. 13. 5

இடறுதற்கேதுவான கல்லும் விழுதற்கேது
வான கன்மலையுமாயிற்று; அவர்கள் திருவச 8
னத்திற்குக் கீழ்ப்படியாதவர்களாயிருந்து இட
றுகிறார்கள்; [21]அதற்கென்றே நியமிக்கப்பட்ட
வர்களாயும் இருக்கிறார்கள். நீங்களோ, உங் 9
களை [22]அந்தகாரத்தினின்று தம்முடைய ஆச்
சரியமான ஒளியினிடத்திற்கு வரவழைத்தவ
ருடைய புண்ணியங்களை அறிவிக்கும்படிக்
குத் [23]தெரிந்துகொள்ளப்பட்ட சந்ததியாயும்,
[24]ராஜரிகமான ஆசாரியக்கூட்டமாயும், [25]பரிசு
த்த ஜாதியாயும், [26]அவருக்குச் சொந்தமான
ஜனமாயும் இருக்கிறீர்கள். முன்னே நீங்கள் 10
தேவனுடையஜனங்களாயிருக்கவில்லை, [27]இப்
பொழுதோ அவருடைய ஜனங்களாயிருக்கி
றீர்கள்; முன்னே நீங்கள் இரக்கம் பெறாதவர்
களாயிருந்தீர்கள், இப்பொழுதோ இரக்கம்
பெற்றவர்களாயிருக்கிறீர்கள்.
பிரியமானவர்களே, [28]அந்நியர்களும் பரதே 11
சிகளுமாயிருக்கிற நீங்கள் [29]ஆத்துமாவுக்கு
விரோதமாய்ப் போர்செய்கிற மாம்ச இச்சை
களை விட்டு விலகி, புறஜாதிகள் உங்களை அக் 12
கிரமக்காரரென்று விரோதமாய்ப் பேசும்விஷ
யத்தில், [30]அவர்கள் உங்கள் நற்கிரியைகளைக்
கண்டு அவற்றினிமித்தம் [31]§சந்திப்பின் நாளி
லே தேவனை மகிமைப்படுத்தும்படி [32]நீங்கள்
அவர்களுக்குள்ளே நல் நடக்கையுள்ளவர்க
ளாய் நடந்துகொள்ளுங்கள் என்று உங்களுக்
குப் புத்தி சொல்லுகிறேன்.
நீங்கள் மனுஷருடைய கட்டளைகள் யாவற் 13
றிற்கும் [33]கர்த்தர் நிமித்தம் கீழ்ப்படியுங்கள்.
மேலான அதிகாரமுள்ள ராஜாவுக்கானாலுஞ் 14
சரி, தீமை செய்கிறவர்களுக்கு ஆக்கினையும்
நன்மை செய்கிறவர்களுக்குப் புகழ்ச்சியும்
உண்டாகும்படி அவனால் அனுப்பப்பட்ட
அதிகாரிகளுக்கானாலுஞ்சரி, கீழ்ப்படியுங்கள்.
நீங்கள் நன்மை செய்கிறதினாலே [34]புத்தியீன 15
மனுஷருடைய அறியாமையை அடக்குவது
தேவனுடைய சித்தமாயிருக்கிறது. சுயாதீன 16
முள்ளவர்களாயிருந்தும் [35]உங்கள் சுயாதீனத்
தைத் துர்க்குணத்திற்கு மூடலாகக் கொண்டி
ராமல், [36]தேவனுக்கு ||அடிமைகளாயிருங்கள்.
எல்லாரையும்[37]கனம்பண்ணுங்கள்; [38]சகோதர 17
ரிடத்தில் அன்புகூருங்கள்; [39]தேவனுக்குப் பய
ந்திருங்கள்; [40]ராஜாவைக் கனம்பண்ணுங்கள்.
வேலைக்காரரே, [41]அதிக பயத்துடனே உங் 18
கள் எஜமான்களுக்கு கீழ்ப்படிந்திருங்கள்; நல்
லவர்களுக்கும் சாந்தகுணமுள்ளவர்களுக்கும்
மாத்திரம் அல்ல, முரட்டுக் குணமுள்ளவர்
களுக்கும் கீழ்ப்படிந்திருங்கள். ஏனெனில், 19
தேவன்மேல் பற்றுதலாயிருக்கிற மனச்சாட்சி
யினிமித்தம் ஒருவன் அநியாயமாய்ப் பாடு
பட்டு உபத்திரவங்களைப் பொறுமையாய்ச்
சகித்தால் [42]அதுவே பிரீதியாயிருக்கும். நீங் 20
கள் குற்றஞ்செய்து அடிக்கப்படும்போது பொ
றுமையோடே சகித்தால், அதினால் என்ன
கீர்த்தியுண்டு? நீங்கள் நன்மைசெய்து பாடு
படும்போது பொறுமையோடே சகித்தால்

அதுவே தேவனுக்கு முன்பாகப் பிரீதியாயி
21 ருக்கும். இதற்காக நீங்கள் அழைக்கப்பட்டு
மிருக்கிறீர்கள், [1]ஏனெனில், கிறிஸ்துவும்
உங்களுக்காகப் பாடுபட்டு, [2]நீங்கள் தம்மு
டைய அடிச்சுவடுகளைத் தொடர்ந்துவரும்படி
உங்களுக்கு மாதிரியைப் பின்வைத்துப்போ
22 னார். அவர் பாவஞ்செய்யவில்லை, [3]அவரு
டைய வாயிலே வஞ்சனை காணப்படவுமில்
23 லை; அவர் வையப்படும்போது பதில் வை
யாமலும், [4]பாடுபடும்போது பயமுறுத்தாம
லும், [5]நியாயமாய்த் தீர்ப்புச்செய்கிறவருக்குத்
24 தம்மை ஒப்புவித்தார். நாம் பாவங்களுக்குச்
செத்து, நீதிக்குப் பிழைத்திருக்கும்படிக்கு,
[6]அவர்தாமே தமது சரீரத்திலே நம்முடைய
பாவங்களைச் சிலுவையின்மேல் சுமந்தார்;[7] அவ
25 ருடைய தழும்புகளால் குணமானீர்கள். சித
றுண்ட ஆடுகளைப்போலிருந்தீர்கள்; [8]இப்பொ
ழுதோ உங்கள் ஆத்துமாக்களுக்கு மேய்ப்ப
ரும் கண்காணியுமானவரிடத்தில் திருப்பப்
பட்டிருக்கிறீர்கள்.

3 அந்தப்படி மனைவிகளே, [9]உங்கள் சொந்
தப் புருஷர்களுக்குக் கீழ்ப்படிந்திருங்கள்;
[10]அப்பொழுது அவர்களில் யாராவது திருவ
சனத்திற்குக் கீழ்ப்படியாதவர்களாயிருந்தால்,
பயபக்தியோடு கூடிய உங்கள் கற்புள்ள நடக்
2 கையை அவர்கள் பார்த்து, போதனையின்றி,
மனைவிகளின் நடக்கையினலேயே ஆதாயப்
3 படுத்திக் கொள்ளப்படுவார்கள். மயிரைப்
பின்னி, பொன்னாபரணங்களை அணிந்து,
[11]உயர்ந்த வஸ்திரங்களை உடுத்திக்கொள்ளுத
லாகிய புறம்பான அலங்கரிப்பு உங்களுக்கு
4 அலங்காரமாயிராமல், அழியாத அலங்கரிப்
பாயிருக்கிற[12]சாந்தமும் அமைதலுமுள்ள ஆவி
யாகிய இருதயத்தில் *மறைந்திருக்கிறகுணமே
உங்களுக்கு அலங்காரமா யிருக்கக்கடவது;
அதுவே தேவனுடைய பார்வையில் விலையே
5 றப்பெற்றது. இப்படியே பூர்வத்தில் தேவனி
டத்தில் நம்பிக்கையாயிருந்த பரிசுத்த ஸ்திரீக
ளும் தங்களுடைய புருஷர்களுக்குக் கீழ்ப்ப
6 டிந்து தங்களை அலங்கரித்தார்கள். அந்தப்
படியே சாராள் ஆபிரகாமை †ஆண்டவன்
என்று சொல்லி, [13]அவனுக்குக் கீழ்ப்படிந்தி
ருந்தாள்; நீங்கள் நன்மைசெய்து ஒரு ஆபத்
துக்கும் பயப்படாதிருந்தீர்களானால் அவளுக்
குப் பிள்ளைகளாயிருப்பீர்கள்.

7 அந்தப்படி புருஷர்களே, [14]மனைவியான
வள் பெலவீன பாண்டமாயிருக்கிறபடியினால்,
உங்கள் ஜெபங்களுக்குத் தடைவராதபடிக்கு,
நீங்கள் விவேகத்தோடு அவர்களுடனே வாழ்
ந்து, உங்களுடனேகூட அவர்களும் நித்திய
ஜீவனாகிய கிருபையைச் சுதந்தரித்துக்கொள்
ளுகிறவர்களானபடியினால், [15]அவர்களுக்குச்
செய்யவேண்டிய கனத்தைச் செய்யுங்கள்.

8 மேலும், [16]நீங்களெல்லாரும் ஒருமனப்பட்
டவர்களும், இரக்கமுள்ளவர்களும், [17]சகோ
தர சிநேகமுள்ளவர்களும், [18]மன உருக்கமுள்
ளவர்களும், இணக்கமுள்ளவர்களுமாயிருந்து,
தீமைக்குத் தீமையையும், [19]உதாசனத்துக்கு 9
உதாசனத்தையும் சரிக்கட்டாமல், அதற்குப்ப
திலாக, நீங்கள் ஆசீர்வாதத்தைச் சுதந்தரித்துக்
கொள்ளும்படி அழைக்கப்பட்டிருக்கிறவர்க
ளென்று அறிந்து, ஆசீர்வதியுங்கள். ஜீவனை 10
விரும்பி, [20]நல்ல நாட்களைக் காணவேண்டு
மென்றிருக்கிறவன் பொல்லாப்புக்குத் தன்
நாவையும், கபடத்துக்குத் தன் உதடுகளையும்
விலக்கிக் காத்து, பொல்லாப்பைவிட்டு நீங்கி, 11
நன்மைசெய்து, [21]சமாதானத்தைத் தேடி,
அதைப் ‡பின்தொடரக்கடவன். கர்த்தரு 12
டைய கண்கள் நீதிமான்கள்மேல் நோக்கமா
யிருக்கிறது, [22]அவருடைய செவிகள் அவர்
கள் வேண்டுதலுக்குக் கவனமாயிருக்கிறது;
தீமை செய்கிறவர்களுக்கோ கர்த்தருடைய
முகம் விரோதமாயிருக்கிறது.

நீங்கள் நன்மையைப் §பின்பற்றுகிறவர்க 13
ளானால், [23]உங்களுக்குத் தீமைசெய்கிறவன்
யார்? நீதியினிமித்தமாக நீங்கள் பாடுபட் 14
டால்[24]பாக்கியவான்களாயிருப்பீர்கள்;[25]அவர்
களுடைய பயமுறுத்தலுக்கு நீங்கள் பயப்ப
டாமலும் கலங்காமலும் இருந்து; கர்த்தரா 15
கிய ||தேவனை உங்கள் இருதயங்களில் பரி
சுத்தம் பண்ணுங்கள்; [26]உங்களிலிருக்கிற நம்
பிக்கையைக்குறித்து உங்களிடத்தில் விசா
ரித்துக் கேட்கிற யாவருக்கும் சாந்தத்தோடும்
வணக்கத்தோடும் உத்தரவுசொல்ல எப்பொ
ழுதும் ஆயத்தமாயிருங்கள். கிறிஸ்துவுக்கேற்ற 16
உங்கள் நல்ல நடக்கையைத் தூஷிக்கிறவர்
கள் [27]உங்களை அக்கிரமக்காரரென்று உங்க
ளுக்கு விரோதமாய்ச் சொல்லுகிறவிஷயத்
தில் வெட்கப்படும்படிக்கு [28]நல்மனச்சாட்சி
யுடையவர்களாயிருங்கள். தீமைசெய்து பாட 17
நுபவிப்பதிலும், தேவனுக்குச் சித்தமானால்,
நன்மைசெய்து பாடநுபவிப்பதே மேன்மை
யாயிருக்கும். ஏனெனில், கிறிஸ்துவும் நம் 18
மை தேவனிடத்தில் சேர்க்கும்படி [29]அநீதி
யுள்ளவர்களுக்குப் பதிலாக நீதியுள்ளவராய்ப்
பாவங்களினிமித்தம் ஒருதரம் பாடுபட்டார்;
[30]அவர் மாம்சத்திலே கொலையுண்டு, ஆவி
யிலே உயிர்ப்பிக்கப்பட்டார். அந்த ஆவியி 19
லே அவர் போய்க் [31]காவலிலுள்ள ஆவிகளுக்
குப் பிரசங்கித்தார். அந்த ஆவிகள், பூர்வத் 20
திலே நோவா பேழையை ஆயத்தம்பண்ணும்
நாட்களிலே, தேவன் நீடிய பொறுமையோ
டே காத்திருந்தபோது, கீழ்ப்படியாமற்போ
னவைகள்; [32]அந்தப் பேழையிலே சிலராகிய
எட்டுப்பேர்மாத்திரம் பிரவேசித்து ஜலத்தி
னாலே காக்கப்பட்டார்கள். அதற்கு ஒப்பனை 21
யான ஞானஸ்நானமானது, மாம்ச அழுக்கை
நீக்குதலாயிராமல், [33]தேவனைப் பற்றும் நல்
மனச்சாட்சியின் ¶உடன்படிக்கையாயிருந்து,
[34]இப்பொழுது நம்மையும் இயேசுகிறிஸ்து
வினுடைய உயிர்த்தெழுதலினால் இரட்சிக்
கிறது; அவர் பரலோகத்திற்குப் போய், 22
[35]தேவனுடைய வலதுபாரிசத்தில் இருக்கி
றார்; [36]தேவதூதர்களும் அதிகாரங்களும்

1 மத். 16. 24. 1 தெச. 3. 3, 4
2 1 யோ. 2. 6. வெளி. 12. 11
3 ஏசா. 53. 9. 2 கொ. 5. 21. எபி. 4. 15
4 மத். 27. 39
5 லூ. 23. 46
6 ஏசா. 53. 4. ழ. மத். 8. 17
7 ஏசா. 53. 5, 6
8 சங். 119. 176. எசே. 34. 23. யோ. 10. 11-16. எபி. 13. 20
9 எபே. 5. 22. தீத். 2. 4-6
10 மத். 18. 15. 1 கொ. 9. 19-22
11 1 தீமோ. 2. 9, 10
12 சங். 25. 9. மத். 5. 5
* அந்தரங்கமனுஷன். சங். 45. 13. ரோ. 2. 29. 1 கொ. 4. 16
† நாயகன்
13 ஆதி. 18. 12
14 கொலோ. 3. 19
15 1 கொ. 12. 23. எபே. 5. 25. 1 தெச. 4. 4, 5
16 ரோ. 12. 16
17 1 யோ. 3. 18
18 எபே. 4. 32
19 மத். 5. 44. எபே. 4. 32
20 சங். 34. 12. ழ. யாக். 1. 26. வெளி. 14. 5
21 ரோ. 12. 18; 14. 19. எபி. 12. 14
‡ நாட
22 யோ. 9. 31. யாக். 5. 16
§ பற்றி வைராக்கியமுள்ளவர்களானால்
23 நீதி. 16. 7. ரோ. 8. 28
24 மத். 5. 10-12. யாக். 1. 12
25 ஏசா. 8. 12, 13: 51. 12. யோ. 14. 1, 27
|| கிறிஸ்துவை
26 சங். 119. 46. அப். 4. 8. கொலோ. 4. 6
27 தீத். 2. 8
28 எபி. 13. 18
29 ரோ. 5. 6. 2 கொ. 5. 21
30 ரோ. 4. 25
31 4. 6. ஏசா. 42. 7
32 ஆதி. 6. அதி. எபி. 11. 7. 2 பே. 2. 5
33 அப். 8. 37. ரோ. 10. 10
¶ நல்லமனச்சாட்சிக்கேற்ற கேள்வி முபற்றி
34 எபே. 5. 26
35 ரோ. 8. 34
36 எபே. 1. 21

வல்லமைகளும் அவருக்குக் கீழ்ப்பட்டிருக்
கிறது.
4 இப்படியிருக்க, கிறிஸ்து நமக்காக மாம்
சத்திலே பாடுபட்டபடியால், [1]நீங்களும் அப்
படிப்பட்ட சிந்தையை ஆயுதமாகத் தரித்துக்
2 கொள்ளுங்கள். ஏனென்றால் மாம்சத்தில்
பாடுபடுகிறவன் இனி மாம்சத்திலிருக்கும்
காலம்வரைக்கும் மனுஷருடைய இச்சைக
ளின்படி பிழைக்காமல் [2]தேவனுடைய சித்
தத்தின்படியே பிழைக்கத்தக்கதாகப் பாவங்
3 களை விட்டோய்ந்திருப்பான். சென்றவாழ்
நாட் காலத்திலே [3]நாம் புறஜாதிகளுடைய
இஷ்டத்தின்படி நடந்துகொண்டது போதும்;
அப்பொழுது நாம் காமவிகாரத்தையும் துர்
இச்சைகளையும் நடப்பித்து, மதுபானம்பண்
ணி, களியாட்டுச்செய்து, வெறிகொண்டு,
அருவருப்பான விக்கிரகாராதனையைச் செய்
4 துவந்தோம். அந்தத் துன்மார்க்க உளையிலே
அவர்களோடேகூட நீங்கள் விழாமலிருக்கிற
தினாலே அவர்கள் ஆச்சரியப்பட்டு, [4]உங்களைத்
5 தூஷிக்கிறார்கள். உயிரோடிருக்கிறவர்களுக்
கும் மரித்தோர்களுக்கும் நியாயத்தீர்ப்புக்
கொடுக்க ஆயத்தமாயிருக்கிறவருக்கு [5]அவர்
6 கள் கணக்கொப்புவிப்பார்கள். இதற்காக
மரித்தோரானவர்கள், மனுஷர்முன்பாக மாம்
சத்திலே ஆக்கினைக்குள்ளாக்கப்பட்டிருந்தும்,
தேவன் முன்பாக ஆவியிலே பிழைக்கும்
படியாக, [6]அவர்களுக்கும் சுவிசேஷம் அறி
விக்கப்பட்டது.
7 எல்லாவற்றிற்கும் [7]முடிவு சமீபமாயிற்று;
[8]ஆகையால் தெளிந்த புத்தியுள்ளவர்களாயிருந்
து, ஜெபம்பண்ணுவதற்கு ஜாக்கிரதையுள்ள
8 வர்களா யிருங்கள். எல்லாவற்றிற்கும் மே
லாக ஒருவரிலொருவர் ஊக்கமான அன்புள்ள
வர்களாயிருங்கள்; [9]அன்பு திரளானபாவங்களை
9 மூடும். முறுமுறுப்பில்லாமல் [10]ஒருவரையொ
10 ருவர் உபசரியுங்கள். அவனவன் பெற்ற
வரத்தின்படியே [11]நீங்கள் தேவனுடைய பற்
பல கிருபையுள்ள ஈவுகளைப் பகிர்ந்துகொடுக்
கும் [12]நல்ல உக்கிராணக்காரர்போல, ஒரு
11 வருக்கொருவர் உதவிசெய்யுங்கள். ஒருவன்
போதித்தால் தேவனுடைய வாக்கியங்களின்
படி போதிக்கக்கடவன்; [13]ஒருவன் உதவிசெய்
தால் தேவன் தந்தருளும் பெலத்தின்படி செய்
யக்கடவன், [14]எல்லாவற்றிலேயும் இயேசு
கிறிஸ்துமூலமாய் தேவன் மகிமைப்படும்
படியே செய்வீர்களாக; [15]அவருக்கே மகிமை
யும் வல்லமையும் சதாகாலங்களிலும் உண்டா
யிருப்பதாக. ஆமென்.
12 பிரியமானவர்களே, [16]உங்களைச் சோதிக்
கும்படி உங்கள் நடுவில் பற்றியெரிகிற அக்
கினியைக்குறித்து ஏதோ புதுமையென்று
13 திகையாமல், கிறிஸ்துவின் மகிமை வெளிப்
படும்போது நீங்கள் களிகூர்ந்து மகிழும்படி
யாக [17]அவருடைய பாடுகளுக்கு நீங்கள் பங்
14 காளிகளானதால் சந்தோஷப்படுங்கள். நீங்
கள் கிறிஸ்துவின் நாமத்தினிமித்தம் நிந்திக்கப்

1 பிலி. 2. 5
2 ரோ. 6. 2, 7. 2 கொ. 5. 15
3 1 கொ. 6. 11. தீத். 3. 3
4 அப். 13. 45
5 அப். 10. 42; 17 31
6 3. 19. மத். 24. 9. வெளி. 14. 13
7 யாக். 5. 8, 9
8 லூ. 21. 36
9 1 கொ. 13. 7
10 எபி. 13. 2, 16
11 ரோ. 12. 6-8
12 லூ. 12. 42
13 ரோ. 12. 6-8. 1 கொ. 3. 10
14 1 கொ. 10. 31
15 வெளி. 1. 6
16 1 கொ. 3. 13
17 2 தீமோ. 2. 12. யாக். 1. 2, 3
18 மத். 5. 11. 2 கொ. 12. 10
19 1 தெச. 4. 12. 1 தீமோ. 5. 13
20 அப். 5. 41, 42
21 எசா. 10. 12. எரே. 49. 12. எசே. 9. 6. லூ. 10. 12, 14; 21. 31
22 எரே. 25. 29. லூ. 23. 31
23 சங். 37. 5. லூ. 23. 46. 2 தீமோ. 1. 12
24 லூ. 24. 48. அப். 1. 8, 22
25 ரோ. 8. 17, 18. வெளி. 1. 9
26 யோவா. 21. 15-17. அப். 20. 28
27 1 கொ. 9. 17
28 1 தீமோ. 3. 3, 8
29 மத். 20, 25, 26. 1 தீமோ. 4. 12
30 எபி. 13. 20
31 2 தீமோ. 4. 8
32 எபே. 5. 21
33 யாக். 4. 6
34 ஏசா. 57. 15. யாக். 4. 10
35 சங். 55. 22. மத். 6. 25. எபி. 13. 5
* அவரிடத்தில்
36 லூ. 21. 34, 36. 1 தெச. 5. 6
37 லூ. 22. 31. வெளி. 12. 12
38 யாக். 4. 7
39 அப். 14. 22. 1 தெச. 3. 3.

பட்டால் பாக்கியவான்கள்; [18]ஏனென்றால்
தேவனுடைய ஆவியாகிய மகிமையுள்ள ஆவி
யானவர் உங்கள்மேல் தங்கியிருக்கிறார்; அவர்
களாலே தூஷிக்கப்படுகிறார், உங்களாலே
மகிமைப்படுகிறார். ஆதலால் உங்களில் ஒரு 15
வனும் கொலைபாதகனாயாவது, [19]திருடனாயா
வது, பொல்லாங்கு செய்தவனாயாவது, அந்
நிய காரியங்களில் தலையிட்டுக்கொண்டவனா
யாவது பாடுபடுகிறவனாயிருக்கக்கூடாது. ஒரு 16
வன் கிறிஸ்தவனாயிருப்பதினால் பாடுபட்டால்
வெட்கப்படாமலிருந்து, [20]அதினிமித்தம் தே
வனை மகிமைப்படுத்தக்கடவன். நியாயத் 17
தீர்ப்பு தேவனுடைய வீட்டிலே துவக்குங்
காலமாயிருக்கிறது; [21]முந்தி நம்மிடத்திலே
அது துவக்கினால் தேவனுடைய சுவிசே
ஷத்திற்குக் கீழ்ப்படியாதவர்களின் முடிவு
என்னமாயிருக்கும்? நீதிமானே இரட்சிக்கப் 18
படுவது அரிதானால், [22]பக்தியில்லாதவனும்
பாவியும் எங்கே நிற்பான்? ஆகையால் தேவ 19
னுடைய சித்தத்தின்படி பாடனுபவிக்கிற
வர்கள் [23]நன்மை செய்கிறவர்களாய்த் தங்கள்
ஆத்துமாக்களை உண்மையுள்ள சிருஷ்டி
கர்த்தாவாகிய அவருக்கு ஒப்புக்கொடுக்கக்
கடவர்கள்.
உங்களிலுள்ள மூப்பருக்கு உடன் மூப்ப 5
னும், [24]கிறிஸ்துவின் பாடுகளுக்குச் சாட்சி
யும், [25]இனி வெளிப்படும் மகிமைக்குப் பங்கா
ளியுமாயிருக்கிற நான் புத்திசொல்லுகிறதெ
ன்னவென்றால்: உங்களிடத்திலுள்ள தேவ 2
னுடைய மந்தையை நீங்கள் மேய்த்து, [26]கட்
டாயமாய் அல்ல, [27]மனப்பூர்வமாயும், [28]அவ
லட்சணமான ஆதாயத்திற்காக அல்ல, உற்சாக
மனதோடும், சுதந்தரத்தை இறுமாப்பாய் 3
ஆளுகிறவர்களாக அல்ல, [29]மந்தைக்கு மாதிரி
களாகவும், கண்காணிப்பு செய்யுங்கள். அப் 4
படிச் செய்தால் பிரதான மேய்ப்பர் [30]வெளிப்
படும்போது [31]மகிமையுள்ள வாடாத கிரீடத்
தைப் பெறுவீர்கள். அந்தப்படி, இளைஞரே, 5
மூப்பருக்குக் கீழ்ப்படியுங்கள். [32]நீங்களெல்
லாரும் ஒருவருக்கொருவர் கீழ்ப்படிந்து, மன
த்தாழ்மையை அணிந்துகொள்ளுங்கள்; [33]பெ
ருமையுள்ளவர்களுக்கு தேவன் எதிர்த்து நிற்
கிறார், தாழ்மையுள்ளவர்களுக்கோ கிருபை
அளிக்கிறார். ஆகையால், ஏற்றகாலத்திலே 6
தேவன் உங்களை உயர்த்தும்படிக்கு, [34]அவரு
டைய பலத்த கைக்குள் அடங்கியிருங்கள்.
அவர் உங்களை விசாரிக்கிறவரானபடியால், 7
[35]உங்கள் கவலைகளையெல்லாம் *அவர்மேல்
வைத்துவிடுங்கள். தெளிந்த புத்தியுள்ளவர்க 8
ளாயிருங்கள், [36]விழித்திருங்கள்; ஏனெனில்
[37]உங்கள் எதிராளியாகிய பிசாசானவன் கெர்ச்
சிக்கிற சிங்கம்போல் எவனை விழுங்கலாமோ
என்று வகைதேடிச் சுற்றித்திரிகிறான். விசு 9
வாசத்தில் உறுதியாயிருந்து, [38]அவனுக்கு எதி
ர்த்து நில்லுங்கள்; [39]உலகத்திலுள்ள உங்கள்
சகோதரரிடத்திலே அப்படிப்பட்ட பாடுகள்
நிறைவேறிவருகிறதென்று அறிந்திருக்கிறீர்க

10 ளே. கிறிஸ்து இயேசுவுக்குள்[1]நம்மைத் தமது
நித்திய மகிமைக்கு அழைத்தவராயிருக்கிற
சகல கிருபையும் பொருந்திய தேவன்தாமே
[2]கொஞ்சக்காலம் பாடநுபவிக்கிற உங்களைச்
[3]சீர்ப்படுத்தி, [4]ஸ்திரப்படுத்தி, [5]பலப்படுத்தி,
11 [6*]நிலைநிறுத்துவாராக; அவருக்கு மகிமையும்
வல்லமையும் [7]சதாகாலங்களிலும் உண்டா
யிருப்பதாக. ஆமென்.
12 உங்களுக்குப் புத்திசொல்லும்படிக்கும், நீங்
கள் நிலைகொண்டு நிற்கிற கிருபை தேவனு
டைய மெய்யான கிருபைதானென்று சாட்சி
யிடும்படிக்கும், [8]நான் சுருக்கமாய் உங்களுக்கு
எழுதி, எனக்குத் தோன்றுகிறபடி உண்மை
யுள்ள சகோதரனாகிய [9]சில்வானுவின் கையி
லே கொடுத்து அனுப்பியிருக்கிறேன். உங்க 13
ளுடனேகூடத் தெரிந்துகொள்ளப்பட்டிருக்
கிற பாபிலோனிலுள்ள சபையும், என் குமா
ரனாகிய [10]மாற்கும் உங்களுக்கு வாழ்த்துதல்
சொல்லுகிறார்கள். ஒருவரையொருவர் [11]அன் 14
பின் முத்தத்தோடே வாழ்த்துதல் செய்யுங்கள்.
கிறிஸ்து இயேசுவுக்குள்ளான உங்கள் அனை
வருக்கும் [12]சமாதானமுண்டாவதாக. ஆமென்.

1 1 யோ. 1. 9
2 2 கொ. 4. 16, 17
3 எபி. 13. 21
4 2 தெச. 3. 3
5 சகரி. 10. 6, 12
6 சங். 138. 7, 8.
* நிலைநிறுத்துவார்
7 4. 11. வெளி. 1. 6
8 1 கொ. 15. 1. 2 பே. 1. 12
9 2 கொ. 1. 19
10 அப். 12. 12, 25
11 ரோ. 16. 16
12 எபே. 6. 23

# THE SECOND EPISTLE GENERAL OF PETER

அப்போஸ்தலனாகிய

# பேதுரு எழுதின பொதுவான

## இரண்டாம் நிருபம்

1 நம்முடைய தேவனும் இரட்சகருமாயிருக்
கிற இயேசுகிறிஸ்துவினுடைய நீதியால் எங்
களைப்போல [1]அருமையான விசுவாசத்தைப்
பெற்றவர்களுக்கு, இயேசுகிறிஸ்துவின் ஊழி
யக்காரனும் அப்போஸ்தலனுமாகிய [2]சீமோன்
2 பேதுரு எழுதுகிறதாவது: தேவனையும் நம்
முடைய கர்த்தராகிய இயேசுவையும் அறிகிற
அறிவினால் உங்களுக்குக் [3]கிருபையும் சமாதா
3 னமும் பெருகக்கடவது. தம்முடைய மகிமை
யினாலும் காருணியத்தினாலும் நம்மை அழைத்
தவரை அறிகிற அறிவினாலே [4]ஜீவனுக்கும்
தேவபக்திக்கும் வேண்டிய யாவற்றையும்,
அவருடைய திவ்விய வல்லமையானது நமக்
4 குத் தந்தருளினதுமன்றி, இச்சையினால்
[5]உலகத்திலுண்டான கேட்டுக்குத் தப்பி, [6]திவ்
விய சுபாவத்துக்குப் பங்குள்ளவர்களாகும்
பொருட்டு, [7]மகாமேன்மையும் அருமையுமான
வாக்குத்தத்தங்களும் அவைகளினாலே நமக்கு
5 அளிக்கப்பட்டிருக்கிறது. இப்படியிருக்க,
நீங்கள் அதிக ஜாக்கிரதையுள்ளவர்களாய் உங்
கள் விசுவாசத்தோடே [8]தைரியத்தையும், தை
6 ரியத்தோடே [9]ஞானத்தையும், ஞானத்தோ
டே [10]இச்சையடக்கத்தையும், இச்சையடக்
கத்தோடே [11]பொறுமையையும், பொறுமை
7 யோடே [12]தேவபக்தியையும், தேவபக்தியோ
டே [13]சகோதர சிநேகத்தையும், சகோதர சிநே
கத்தோடே [14]அன்பையும் கூட்டி வழங்குங்
8 கள். இவைகள் உங்களுக்கு உண்டாயிருந்து
பெருகினால் உங்களை நம்முடைய கர்த்தராகிய
இயேசுகிறிஸ்துவை அறிகிற அறிவிலே வீண
ரும் [15]கனியற்றவர்களுமாயிருக்கவொட்டாது.
9 இவைகள் இல்லாதவன் எவனோ, அவன்
முன்செய்த பாவங்களறத் தான் சுத்திகரிக்கப்
பட்டதை மறந்து கண்சொருகிப்போன [16]குரு
10 டனாயிருக்கிறான். ஆகையால், சகோதரரே,
[17]உங்கள் அழைப்பையும் தெரிந்துகொள்ளு
தலையும் உறுதியாக்கும்படி ஜாக்கிரதையாயி
ருங்கள்; [18]இவைகளைச் செய்தால் நீங்கள்
11 ஒருக்காலும் இடறி விழுவதில்லை. இவ்வித
மாய், நம்முடைய கர்த்தரும் இரட்சகருமாகிய
இயேசுகிறிஸ்துவினுடைய நித்திய ராஜ்யத்
துக்குட்படும் பிரவேசம் உங்களுக்குப் பரிபூர
ணமாய் அளிக்கப்படும்.

1 எபே. 4. 5
2 அப். 15. 14
3 தானி. 4. 1: 6. 25. 1 பே. 1. 2
4 சங். 84. 11. 1 தீமோ. 4. 8
5 2. 18, 20
6 எபி. 6. 4: 12. 10
7 2 கொ. 7. 1
8 பிலி. 4. 8
9 பிலி. 1. 9. 1 பே. 3. 7
10 1 கொ. 9. 25
11 லூக். 1. 4
12 1 தீமோ. 4. 7
13 யோ. 13. 34, 35
14 1 கொ. 13. 1–3
15 யோ. 15. 2, 6
16 1 யோ. 2. 9–11
17 3. 17
18 1 யோ. 3. 19
19 ரோ. 15. 14, 15. 1 பே. 5. 12
20 யோ. 21. 18, 19. 2 கொ. 5. 1, 4
21 3. 1
22 2 கொ. 4. 2
23 மத். 17. 1–5. யோ. 1. 14
24 மத். 3. 17: 17. 5, 6
25 வெளி. 2. 28; 22. 16
26 சங். 119. 105. நீதி. 6. 23. யோ. 5. 35
* சுயவிளக்கமான = சுயவியாக்கியான
27 ரோ. 12. 6
28 லூ. 1. 78. அப். 3. 18. 2 கொ. 7. 1. 2 தீமோ. 3. 16. 1 பே. 1. 10, 11
29 உபா. 13. 1. மத். 24. 5, 24. அப். 20. 29, 30. 1 தீமோ. 4. 1
30 யூதா 4.
† சபைபேதங்களை

இதினிமித்தம், இவைகளை நீங்கள் அறிந் 12
தும், நீங்கள் இப்பொழுது அறிந்திருக்கிற சத்
தியத்தில் உறுதிப்பட்டிருந்தும், [19]உங்களுக்கு
இவைகளை எப்பொழுதும் நினைப்பூட்ட நான்
அசதியாயிரேன். நம்முடைய கர்த்தராகிய 13
இயேசுகிறிஸ்து எனக்கு அறிவித்தபடி நான்
[20]என் கூடாரத்தை விட்டுப் போவது சீக்கிரத்
தில் நேரிடுமென்று அறிந்து, இந்தக் கூடா 14
ரத்தில் நான் இருக்குமளவும் [21]உங்களை நினைப்
பூட்டி எழுப்பிவிடுவது நியாயமென்று எண்ணு
கிறேன். மேலும், நான் சென்றுபோனபின்பு 15
இவைகளை நீங்கள் எப்பொழுதும் நினைத்துக்
கொள்ள ஏதுவுண்டாயிருக்கும்படி பிரயத்த
னம்பண்ணுவேன். நாங்கள் தந்திரமான கட் 16
டுக்கதைகளைப் [22]பின்பற்றினவர்களாக அல்ல,
[23]அவருடைய மகத்துவத்தைக் கண்ணாரக் கண்
டவர்களாகவே நம்முடைய கர்த்தராகிய இயே
சுகிறிஸ்துவின் வல்லமையையும் வருகையை
யும் உங்களுக்கு அறிவித்தோம். இவர் என்னு 17
டைய நேசகுமாரன், [24]இவரிடத்தில் பிரியமா
யிருக்கிறேன் என்று சொல்லுகிற சத்தம் உன்
னதமான மகிமையிலிருந்து அவருக்கு உண்
டாகி, பிதாவாகிய தேவனால் அவர் கனத்தையும்
மகிமையையும் பெற்றபோது, அவரோடே 18
கூட நாங்கள் பரிசுத்த பருவதத்திலிருக்கை
யில், வானத்திலிருந்து பிறந்த அந்தச் சத்தத்
தைக் கேட்டோம். அதிக உறுதியான தீர்க்க 19
தரிசன வசனமும் நமக்கு உண்டு; [25]பொழுது
விடிந்து விடிவெள்ளி உங்கள் இருதயங்க
ளில் உதிக்குமளவும் இருளுள்ள ஸ்தலத்தில்
பிரகாசிக்கிற [26]விளக்கைப்போன்ற அவ்வச
னத்தைக் கவனித்திருப்பது நலமாயிருக்கும்.
வேதத்திலுள்ள எந்தத் தீர்க்கதரிசனமும் *சுய 20
தோற்றமான [27]பொருளையுடையதாயிராதெ
ன்று நீங்கள் முந்தி அறியவேண்டியது. தீர்க் 21
கதரிசனமானது ஒருகாலத்திலும் மனுஷரு
டைய சித்தத்தினாலே உண்டாகவில்லை;
[28]தேவனுடைய பரிசுத்த மனுஷர்கள் பரிசுத்த
ஆவியினாலே ஏவப்பட்டுப் பேசினார்கள்.

கள்ளத் தீர்க்கதரிசிகளும் ஜனங்களுக்குள் 2
ளே இருந்தார்கள், [29]அப்படியே உங்களுக்குள்
ளும் கள்ளப்போதகர்கள் இருப்பார்கள்; [30]அவர்
கள் கேட்டுக்கேதுவான †வேதப்புரட்டுகளைத்

தந்திரமாய் நுழையப்பண்ணி, [1]தங்களைக்
கிரயத்துக்குக்கொண்ட ஆண்டவரை மறுதலி
த்து, [2]தங்களுக்குத் தீவிரமான அழிவை வரு
2 வித்துக் கொள்ளுவார்கள். அவர்களுடைய
கெட்ட நடக்கைகளை அநேகர் பின்பற்றுவார்
கள்; அவர்கள்நிமித்தம் சத்தியமார்க்கம் தூஷிக்
3 கப்படும். பொருளாசை யுடையவர்களாய்,
[3]தந்திரமான வார்த்தைகளால் உங்களைத் தங்
களுக்கு ஆதாயமாக வசப்படுத்திக்கொள்ளு
வார்கள்; [4]பூர்வகாலமுதல் அவர்களுக்கு
விதிக்கப்பட்ட ஆக்கினை அயர்ந்திராது, அவர்
4 களுடைய அழிவு உறங்காது. பாவஞ்செய்த
தூதர்களை தேவன் தப்பவிடாமல், [5]அந்தகா
ரச் சங்கிலிகளினாலே கட்டி *நரகத்திலே
[6]தள்ளி நியாயத்தீர்ப்புக்கு வைக்கப்பட்டவர்
5 களாக ஒப்புக்கொடுத்து; பூர்வ உலகத்தை
யும் தப்பவிடாமல், [7]நீதியைப் பிரசங்கித்தவ
னாகிய நோவாமுதலான எட்டுப்பேரைக் காப்
பாற்றி, அவபக்தியுள்ளவர்கள் நிறைந்த உல
கத்தின்மேல் ஜலப்பிரளயத்தை வரப்பண்
6 ணி; சோதோம் கொமோரா என்னும் பட்ட
ணங்களையும் சாம்பலாக்கிக் கவிழ்த்துப்போ
ட்டு, [8]ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்து, பிற்கால
த்திலே அவபக்தியாய் நடப்பவர்களுக்கு
7 அவைகளைத் திருஷ்டாந்தமாக வைத்து; அக்
கிரமக்காரருக்குள் வாசமாயிருக்கையில் அவர்
களுடைய காமவிகார நடக்கையால் வருத்தப்
8 பட்டு; நாள்தோறும் அவர்களுடைய அக்
கிரமக்கிரியைகளைக் கண்டு கேட்டு நீதியுள்ள
தன்னுடைய இருதயத்தில் வாதிக்கப்பட்ட
நீதிமானாகிய [9]லோத்தை அவர் இரட்சித்
9 திருக்க; கர்த்தர் தேவபக்தியுள்ளவர்களைச்
சோதனையினின்று இரட்சிக்கவும், [10]அக்கிர
மக்காரரை ஆக்கினைக்குள்ளானவர்களாக நியா
யத்தீர்ப்பு நாளுக்கு வைக்கவும் அறிந்திருக்கி
10 றார். விசேஷமாக அசுத்த இச்சையோடே
மாம்சத்திற்கேற்றபடி நடந்து, [11]கர்த்தத்துவத்
தை அசட்டைபண்ணுகிறவர்களை அப்படிச்
செய்வார். இவர்கள் துணிகரக்காரர், அகந்
காரிகள், [12]மகத்துவங்களைத் தூஷிக்க அஞ்சா
11 தவர்கள். அதிக பெலனையும் வல்லமையை
யுமுடைய தேவதூதர்கள் முதலாய்க் கர்த்த
ருக்கு முன்பாக [13]அவர்களைத் தூஷணமாய்க்
12 குற்றப்படுத்த மாட்டார்களே. இவர்களோ
பிடிபட்டழிக்கப்படுவதற்கு உண்டான புத்தி
யற்ற [14]மிருகஜீவன்களைப்போலத் தங்களுக்
குத் தெரியாதவைகளைத் தூஷித்து, தங்கள்
கேட்டிலே கெட்டழிந்து, அநீதத்தின் பலனை
13 அடைவார்கள். இவர்கள் ஒருநாள் வாழ்வை
இன்பமென்றெண்ணி, [15]கறைகளும் இலச்
சைகளுமாயிருந்து: [16]உங்களோடே விருந்
துண்கையில் தங்கள் வஞ்சனைகளில் உல்லாச
14 மாய் வாழ்கிறவர்கள்; விபசாரமயக்கத்தால்
நிறைந்தவைகளும், பாவத்தை விட்டோயாத
வைகளுமாயிருக்கிற கண்களையுடையவர்கள்;
உறுதியில்லாத ஆத்துமாக்களைத் தந்திரமாய்ப்
பிடித்து, [17]பொருளாசைகளில் பழகின இரு
தயத்தையுடைய சாபத்தின் பிள்ளைகள். செம் 15
மையான வழியைவிட்டுத் தப்பிநடந்து, [18]பே
யோரின் குமாரனாகிய பிலேயாமின் வழி
யைப் பின்பற்றிப்போனவர்கள்; அவன் அநீ
தத்தின் கூலியை விரும்பி, தன்னுடைய 16
அக்கிரமத்தினிமித்தம் கடிந்துகொள்ளப்பட்
டான்; பேசாத மிருகம் மனுஷர்பேச்சைப்
பேசித் தீர்க்கதரிசியினுடைய மதிகேட்டைத்
தடுத்தது. இவர்கள் தண்ணீரில்லாத கிணறு 17
களும், [19]சுழல்காற்றினால் அடியுண்டோடுகிற
மேகங்களுமாயிருக்கிறார்கள்; என்றென்றைக்
குமுள்ள காரிருளே இவர்களுக்கு வைக்கப்
பட்டிருக்கிறது. வஞ்சகமாய் நடக்கிறவர்க 18
ளிடத்தி விருந்து அரிதாய்த் தப்பினவர்களி
டத்தில் இவர்கள் [20]அகந்தையான வீண்வார்த்
தைகளைப் பேசி, மாம்ச இச்சைகளினாலும்
காமவிகாரங்களினாலும் அவர்களைத் தந்திர
மாய்ப் பிடிக்கிறார்கள். தாங்களே கேட்டு 19
க்கு அடிமைகளாயிருந்தும், அவர்களுக்குச்
சுயாதீனத்தை வாக்குத்தத்தம் பண்ணுகிறார்
கள்; [21]எதினால் ஒருவன் ஜெயிக்கப்பட்டிருக்
கிறானோ அதற்கு அவன் அடிமைப்பட்டிருக்
கிறானே. கர்த்தரும் இரட்சகருமாயிருக்கிற 20
இயேசுகிறிஸ்துவை அறிகிற அறிவினாலே
உலகத்தின் அசுத்தங்களுக்குத் தப்பினவர்கள்
மறுபடியும் அவைகளில் சிக்கிக்கொண்டு ஜெ
யிக்கப்பட்டால், [22]அவர்களுடைய பின்னிலை
மை முன்னிலைமையிலும் கேடுள்ளதாயிருக்
கும். அவர்கள் நீதியின் மார்க்கத்தை அறிந் 21
தபின்பு தங்களுக்கு ஒப்புவிக்கப்பட்ட பரிசுத்த
கற்பனையை விட்டு விலகுவதைப்பார்க்கிலும்
[23]அதை அறியாதிருந்தார்களானால் அவர்களு
க்கு நலமாயிருக்கும். நாய் தான் கக்கினதைத் 22
தின்னவும், [24]கழுவப்பட்ட பன்றி சேற்றிலே
புரளவும் திரும்பினது என்று சொல்லப்பட்ட
மெய்யான பழமொழியின்படியே அவர்களுக்
குச் சம்பவித்தது.

பிரியமானவர்களே, [25]இந்த இரண்டாம் **3**
நிருபத்தை இப்பொழுது உங்களுக்கு எழுது
கிறேன். பரிசுத்த தீர்க்கதரிசிகளால் முன் 2
சொல்லப்பட்ட வார்த்தைகளையும், [26]இரட்ச
கராயிருக்கிற கர்த்தருடைய அப்போஸ்தல
ராகிய எங்களுடைய கட்டளைகளையும் நீங்கள்
நினைவுகூரும்படி இந்த நிருபங்களினால் உங்
கள் உண்மையான மனதை நினைப்பூட்டி
எழுப்புகிறேன். முதலாவது நீங்கள் அறிய 3
வேண்டியது என்னவெனில்: [27]கடைசிநாட்
களில் பரியாசக்காரர் வந்து, தங்கள் சுய இச்
சைகளின்படியே நடந்து, அவர் வருவார் 4
[28]என்று சொல்லுகிற வாக்குத்தத்தம் எங்கே?
பிதாக்கள் நித்திரையடைந்தபின்பு சகலமும்
சிருஷ்டிப்பின் தோற்றமுதல் இருந்தவிதமா
யிருக்கிறதே என்று சொல்லுவார்கள். பூர்வ 5
காலத்திலே தேவனுடைய வார்த்தையினாலே
வானங்களும், [29]ஜலத்தினின்று தோன்றி
ஜலத்தினாலே நிலைகொண்டிருக்கிற பூமியும்
உண்டாயின வென்பதையும், அப்பொழுது 6

1 1 பே. 1. 18
2 பிலி. 3. 19
3 ரோ. 16. 18
4 யூதா. 4–7 வச.
5 யோ. 8. 44. யூதா 6. வச.
* பாதாளத்திலே
6 லூ. 8. 31 வெளி. 20. 2, 3
7 ஆதி. 7. அதி. எபி. 11. 7. 1 பே. 3. 19, 20
8 ஆதி. 19. 24, 25. உபா. 29. 23. யூதா 7. வச.
9 ஆதி. 19. 16
10 சங். 34. 15–18. 1 கொ. 10. 13. யூதா 14, 15. வச.
11 எபி. 13. 4. யூதா 4, 7, 16. வச.
12 யூதா 8, 10. வச.
13 யூதா 9. வச.
14 எரே. 12. 3. யூதா 10. வச.
15 பிலி. 3. 19. யூதா 12. வச.
16 1 கொ. 11. 20, 21
17 யூதா 11. வச.
18 எண். 22. 5. யூதா 11. வச.
19 எபே. 4. 14. யூதா 12, 13. வச.
20 சங். 73. 8. யூதா 16. வச.
21 யோ. 8. 34. ரோ. 6. 16. கலா. 5. 13. 1 பே. 2. 16
22 லூ. 11. 26. எபி. 6. 4. எபி. 10. 26, 27
23 நீதி. 12. 28. லூ. 12. 47, 48. வெளி. 21. 1, 27
24 நீதி. 26. 11
25 1. 13, 14
26 1 தீமோ. 4. 1. யூதா 17, 18. வச.
27 ஏசா. 5. 19. 1 தீமோ. 4. 1 யூதா. 18. வச.
28 எரே. 17. 15. எசே. 12. 22–27. மத். 24. 48
29 ஆதி. 1. 6, 9. சங். 24. 2. கொலோ. 1. 17. எபி. 11. 3

இருந்த உலகம் [1]ஜலப்பிரளயத்தினாலே அழி
ந்த தென்பதையும் மனதார அறியாமலிருக்
7 கிறார்கள். இப்பொழுது இருக்கிற வானங்
களும் பூமியும் அந்த வார்த்தையினாலேயே
அக்கினிக்கு இரையாக வைக்கப்பட்டு, [2]தே
வபக்தியில்லாதவர்கள் நியாயந்தீர்க்கப்பட்டு
அழிந்துபோகும் நாள்வரைக்கும் காக்கப்பட்
டிருக்கிறது.
8 பிரியமானவர்களே, கர்த்தருக்கு ஒருநாள்
ஆயிரம் வருஷம்போலவும், [3]ஆயிரம் வருஷம்
ஒருநாள்போலவும் இருக்கிறதென்கிற இந்த
ஒரு காரியத்தை நீங்கள் அறியாதிருக்கவேண்
9 டாம். தாமதிக்கிறார் என்று சிலர் எண்ணு
கிறபடி, [4]கர்த்தர் தமது வாக்குத்தத்தத்தைக்
குறித்துத் தாமதமாயிராமல்; [5]ஒருவரும் கெட்
டுப்போகாமல் எல்லாரும் மனந்திரும்பவே
ண்டுமென்று விரும்பி, [6]நம்மேல் நீடிய பொ
10 றுமையுள்ளவரா யிருக்கிறார். கர்த்தருடைய
நாள் [7]இரவிலே திருடன் வருகிறவிதமாய்
வரும்; [8]அப்பொழுது வானங்கள் மடமட
என்று அகன்றுபோம், பூதங்கள் வெந்து
உருகிப்போம், பூமியும் அதிலுள்ள கிரியை
11 களும் எரிந்து அழிந்துபோம். இப்படி இவை
களெல்லாம் அழிந்துபோகிறதாயிருக்கிறபடி
யால் [9]நீங்கள் எப்படிப்பட்ட பரிசுத்த நடக்
கையும் தேவபக்தியும் உள்ளவர்களா யிருக்க
12 வேண்டும்! தேவனுடைய நாள் சீக்கிரமாய்
வரும்படிக்கு [10]மிகுந்த ஆவலோடே காத்திருங்
கள்; [11]அந்த நாளில் வானங்கள் வெந்து அழி
13 ந்து, பூதங்கள் எரிந்து உருகிப்போம். அவ

1 ஆதி. 7. 11. ஓ
2 சங். 50. 3 செப். 3. 8. மத். 25. 41. 2 தெச. 1. 8
3 சங். 90. 4
4 ஆப. 2. 3. எபி. 10. 37
5 எசே. 33. 11. ரோ. 2. 4. 1தீமோ. 2. 4
6 சங். 86. 15. ஏசா. 30. 18. 1 பே. 3. 20
7 மத். 24. 42, 43. 1 தெச. 5. 2. வெளி. 16. 15
8 சங். 102. 26. ஏசா. 51. 6. வெளி. 20. 11
9 1 பே. 1. 15
10 1 கொ. 1. 7. தீத். 2. 13
11 ஏசா. 34. 4. மீகா. 1. 14
12 வெளி. 21. 1, 27
13 நீதி. 12. 28. 1 தெச. 3. 13
14 ரோ. 2. 4. 1 பே. 3. 20
15 ரோ. 8. 19. 1 கொ. 15. 58. 1 தெச. 4, 5. அதி. 2 தெச. 1. 5–10
16 மாற். 13. 23. எபே. 5. 14
17 கொலோ. 1. 10. 1 பே. 2. 2, 3
18 2 தீமோ. 4. 18. வெளி. 1. 6

ருடைய வாக்குத்தத்தத்தின்படியே நீதி வா
சமாயிருக்கும். [12]புதிய வானங்களும் புதிய
பூமியும் உண்டாகுமென்று காத்திருக்கிறோம்.
ஆகையால், பிரியமானவர்களே, இவை 14
கள் வரக் காத்திருக்கிற நீங்கள் கறையற்ற
வர்களும் பிழையில்லாதவர்களுமாய்ச் சமாதா
னத்தோடே அவர் சந்நிதியில் காணப்படும்படி
[13]ஜாக்கிரதையாயிருங்கள். மேலும்நம்முடைய 15
கர்த்தரின் நீடிய பொறுமையை [14]இரட்சிப்
பென்று எண்ணுங்கள்; நமக்குப் பிரியமான
சகோதரனாகிய பவுலும் தனக்கு அருளப்ப
ட்ட ஞானத்தினாலே இப்படியே உங்களுக்கு
எழுதியிருக்கிறான்; எல்லா நிருபங்களிலும் 16
இவைகளைக்குறித்துப் பேசியிருக்கிறான்; [15]அ
வன் சொன்னவைகளில் சில காரியங்கள்
அறிகிறதற்கு அரிதாயிருக்கிறது; கல்லாதவர்
களும் உறுதியில்லாதவர்களும் மற்ற வேத
வாக்கியங்களைப் புரட்டுகிறதுபோலத் தங்க
ளுக்குக் கேடுவரத்தக்கதாக இவைகளையும்
புரட்டுகிறார்கள். ஆதலால் பிரியமானவர்க 17
ளே, இவைகளை முன்னமே நீங்கள் அறிந்
திருக்கிறபடியால், [16]அக்கிரமக்காரருடைய
வஞ்சகத்திலே நீங்கள் இழுப்புண்டு உங்கள்
உறுதியிலிருந்து விலகி விழுந்துபோகாதபடி
க்கு எச்சரிக்கையாயிருந்து, நம்முடைய கர்த் 18
தரும் இரட்சகருமாகிய இயேசுகிறிஸ்துவின்
[17]கிருபையிலும் அவரை அறிகிற அறிவிலும்
வளருங்கள். [18]அவருக்கு இப்பொழுதும் என்
றென்றைக்கும் மகிமையுண்டாவதாக.
ஆமென்.

# THE FIRST EPISTLE GENERAL OF JOHN

அப்போஸ்தலனாகிய

# யோவான் எழுதின

## முதலாம் நிருபம்

**1** ஆதிமுதல் [1]இருந்ததும், நாங்கள் கேட்ட
தும், [2]எங்கள் கண்களினாலே கண்டதும், நா
ங்கள் நோக்கிப் பார்த்ததும், [3]எங்கள் கைகளி
னாலே தொட்டதுமாயிருக்கிற ஜீவவார்த்தை
யைக்குறித்து உங்களுக்கு அறிவிக்கிறோம்.
2 அந்த ஜீவன் வெளிப்பட்டது; [4]பிதாவினிடத்
திலிருந்ததும், எங்களுக்கு வெளிப்பட்டது
மான நித்தியமாயிருக்கிற அந்த ஜீவனை நாங்
கள் கண்டு, அதைக்குறித்துச் சாட்சிகொடு
டுத்து, அதை உங்களுக்கு அறிவிக்கிறோம்.
3 நீங்களும் எங்களோடே ஐக்கியமுள்ளவர்க
ளாகும்படி, [5]நாங்கள் கண்டும் கேட்டும் இருக்
கிறதை உங்களுக்கும் அறிவிக்கிறோம்; [6]எங்
களுடைய ஐக்கியம் பிதாவோடும் அவருடைய
குமாரனாகிய இயேசுகிறிஸ்துவோடும் இருக்
4 கிறது. உங்கள் சந்தோஷம் நிறைவாயிருக்கும்
படி [7]இவைகளை உங்களுக்கு எழுதுகிறோம்.
5 தேவன் [8]ஒளியாயிருக்கிறார், அவரில் எவ்
வளவேனும் இருளில்லை; இது நாங்கள் அவ
ரிடத்தில் கேட்டு உங்களுக்கு அறிவிக்கிற
6 விசேஷமாயிருக்கிறது. நாம் அவரோடே
ஐக்கியப்பட்டவர்களென்று சொல்லியும், இ
ருளிலே நடக்கிறவர்களாயிருந்தால், [9]சத்தியத்
தின்படி நடவாமல் பொய் சொல்லுகிறவர்க
7 ளாயிருப்போம். அவர் ஒளியிலிருக்கிறது
போல நாமும் ஒளியிலே நடந்தால் [10]ஒருவ
ரோடொருவர் ஐக்கியப்பட்டிருப்போம், அவ
ருடைய குமாரனாகிய இயேசுகிறிஸ்துவின்
இரத்தம் [11]சகல பாவங்களையும் நீக்கி, நம்மைச்
8 சுத்திகரிக்கும். நமக்குப் பாவமில்லையென்
போமானால், [12]நம்மை நாமே வஞ்சிக்கிறவர்க
ளாயிருப்போம், சத்தியம் நமக்குள் இராது.
9 நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்
டால், [13]பாவங்களை நமக்கு மன்னித்து எல்
லா அநியாயத்தையும் நீக்கி நம்மைச் சுத்தி
கரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியும் உள்
10 ளவராயிருக்கிறார். நாம் பாவஞ்செய்யவில்லை
யென்போமானால், நாம் அவரைப் பொய்ய
ராக்குகிறவர்களா யிருப்போம், அவருடைய
வார்த்தை நமக்குள் இராது.

**2** என் பிள்ளைகளே, நீங்கள் பாவஞ்செய்யா
தபடிக்கு இவைகளை உங்களுக்கு எழுதுகி
றேன்; ஒருவன் *பாவஞ்செய்வானானால் நீதி
பரராயிருக்கிற இயேசுகிறிஸ்து நமக்காகப்
பிதாவினிடத்தில் [14]பரிந்து பேசுகிறவராயிரு
க்கிறார். நம்முடைய பாவங்களை நிவிர்த்தி 2
செய்கிற [15]கிருபாதாரபலி அவரே; [16]நம்மு
டைய பாவங்களை மாத்திரமல்ல, சர்வலோகத்
தின் பாவங்களையும் நிவிர்த்தி செய்கிற பலி
யாயிருக்கிறார். அவருடைய கற்பனைகளை 3
நாம் கைக்கொள்ளுகிறவர்களானால், [17]அவரை
அறிந்திருக்கிறோமென்பதை அதினால் அறி
வோம். அவரை அறிந்திருக்கிறேனென்று 4
சொல்லியும், அவருடைய கற்பனைகளைக்
கைக்கொள்ளாதவன் பொய்யனாயிருக்கிறான்,
அவனுக்குள் சத்தியமில்லை. அவருடைய வச 5
னத்தைக் கைக்கொள்ளுகிறவனிடத்தில் தேவ
அன்பு மெய்யாகப் பூரணப்பட்டிருக்கும்;
நாம் அவருக்குள் இருக்கிறோமென்பதை அதி
னாலே அறிந்திருக்கிறோம். அவருக்குள் 6
[18]நிலைத்திருக்கிறேனென்று சொல்லுகிறவன்,
[19]அவர் நடந்தபடியே தானும் நடக்கவேண்டும்.
†சகோதரரே, நான் உங்களுக்குப் புதிய 7
கற்பனையை அல்ல, [20]ஆதிமுதல் நீங்கள் பெற்
றிருக்கிற பழைய கற்பனையையே எழுதுகி
றேன்; அந்தப் பழைய கற்பனை நீங்கள் ஆதி
முதல் கேட்டிருக்கிற வசனந்தானே. மேலும், 8
[21]நான் புதிய கற்பனையையும் உங்களுக்கு எழு
துகிறேன், இது அவருக்குள்ளும் உங்களுக்
குள்ளும் மெய்யாயிருக்கிறது; ஏனென்றால்,
[22]இருள் நீங்கிப்போகிறது, மெய்யான ஒளி
இப்பொழுது பிரகாசிக்கிறது. ஒளியிலே 9
இருக்கிறேன் என்று சொல்லியும் [23]தன் சகோ
தரனைப் பகைக்கிறவன் இதுவரைக்கும் இரு
ளிலே இருக்கிறான். தன் சகோதரனிடத் 10
தில் அன்புகூருகிறவன் ஒளியிலே நிலை
கொண்டிருக்கிறான்; [24]அவனிடத்தில் இடறல்
ஒன்றுமில்லை. தன் சகோதரனைப் பகைக்கிற 11
வன் இருளிலே இருந்து இருளிலே நடக்கி
றான்; [25]இருளானது அவன் கண்களைக் குரு
டாக்கினபடியால் தான் போகும் இடம் இன்
னதென்று அறியாதிருக்கிறான்.
பிள்ளைகளே, [26]அவருடைய நாமத்தினிமித் 12
தம் உங்கள் பாவங்கள் மன்னிக்கப்பட்டிருக்
கிறதினால் உங்களுக்கு எழுதுகிறேன். பிதாக் 13
களே, [27]ஆதிமுதலிருக்கிறவரை நீங்கள் அறிக்

1 யோ. 1. 1.
2 2 பே. 1. 16
3 லூ. 24. 39
4 யோ. 17. 3: 21. 24
5 அப். 4. 20
6 யோ. 17. 21. 1 கொ. 1. 9
7 யோ. 15. 11
8 யோ. 1. 4, 9. 1 தீமோ. 6. 16
9 2 கொ. 6. 14
10 யோ. 12. 35
11 எபே. 1. 7. எபி. 9. 14. 1 பே. 1. 19. வெளி. 1. 5
12 1 இரா. 8. 46. யோபு 25. 4. பிர. 7. 20. யாக். 3. 2
13 யோபு 33. 27, 28. சங். 32. 5. நீதி. 28. 13
* பாவஞ்செய்தானே யாகில்
14 ரோ. 8. 34. எபி. 7. 25
15 ரோ. 3. 25. 2 கொ. 5. 18
16 யோ. 1. 29: 4. 42: 11. 51, 52
17 லூ. 6. 46. யோ. 14. 15, 23
18 யோ. 15. 4, 5
19 யோ. 13. 15. 1 பே. 2. 21
† பிரியமானவர்களே
20 2 யோ. 5. கச
21 யோ. 13. 34
22 ரோ. 13. 12
23 2 பே. 1. 9
24 2 பே. 1. 10
25 நீதி. 4. 25. யோ. 12. 35
26 சங். 25. 11. லூ. 24. 47. அப். 10. 43
27 1. 1

திருக்கிறதினால் உங்களுக்கு எழுதுகிறேன்.
வாலிபரே, பொல்லாங்கனை நீங்கள் ஜெயித்த
தினால் உங்களுக்கு எழுதுகிறேன். பிள்ளை
களே, [1]நீங்கள் பிதாவை அறிந்திருக்கிறதி
14 னால் உங்களுக்கு எழுதுகிறேன். பிதாக்
களே, ஆதிமுத லிருக்கிறவரை நீங்கள் அறிந்
திருக்கிறதினால் உங்களுக்கு எழுதியிருக்கி
றேன். வாலிபரே, [2]நீங்கள் பலவான்களா
யிருக்கிறதினாலும், [3]தேவவசனம் உங்களில்
நிலைத்திருக்கிறதினாலும், [4]நீங்கள் பொல்லாங்
கனை ஜெயித்ததினாலும், உங்களுக்கு எழுதியி
15 ருக்கிறேன். உலகத்திலும் [5]உலகத்திலுள்ள
வைகளிலும் அன்புகூராதிருங்கள்; [6]ஒருவன்
உலகத்தில் அன்புகூர்ந்தால் அவனிடத்தில்
16 பிதாவின் அன்பில்லை. ஏனெனில், [7]மாம்
சத்தின் இச்சையும், [8]கண்களின் இச்சையும்
[9]ஜீவனத்தின் பெருமையுமாகிய உலகத்தி
லுள்ளவைகளெல்லாம் பிதாவினா லுண்டான
வைகளல்ல, அவைகள் உலகத்தினாலுண்டா
17 னவைகள். உலகமும் [10]அதின் இச்சையும்
ஒழிந்துபோம்; தேவனுடைய சித்தத்தின்படி
செய்கிறவனோ என்றென்றைக்கும் நிலைத்தி
ருப்பான்.
18 பிள்ளைகளே, [11]இது கடைசிக்காலமாயிருக்
கிறது; [12]அந்திக்கிறிஸ்து வருகிறானென்று
நீங்கள் கேள்விப்பட்டபடி இப்பொழுதும்
அநேக அந்திக்கிறிஸ்துகள் இருக்கிறார்கள்;
அதினாலே இது கடைசிக்காலமென்று அறிகி
19 றோம். அவர்கள் நம்மைவிட்டுப் [13]பிரிந்து
போனார்கள், ஆகிலும் அவர்கள் நம்முடைய
வர்களா யிருக்கவில்லை; [14]நம்முடையவர்களா
யிருந்தார்களானால் நம்முடனே நிலைத்திருப்
பார்களே; [15]எல்லாரும் நம்முடையவர்களல்ல
வென்று வெளியாகும்படிக்கே பிரிந்துபோ
20 னார்கள். நீங்கள் பரிசுத்தராலே [16]அபிஷே
கம்பெற்றுச் [17]சகலத்தையும் அறிந்திருக்கிறீர்
21 கள். சத்தியத்தை நீங்கள் அறியாததினால
ல்ல, நீங்கள் சத்தியத்தை அறிந்திருக்கிறதினா
லும், சத்தியத்தினால் ஒரு பொய்யு முண்டா
யிராதென்பதை நீங்கள் அறிந்திருக்கிறதினா
22 லும், உங்களுக்கு எழுதியிருக்கிறேன். இயே
சுவைக் கிறிஸ்து அல்ல என்று மறுதலிக்கிற
வனேயல்லாமல் [18]வேறே யார் பொய்யன்?
பிதாவையும் குமாரனையும் மறுதலிக்கிறவனே
23 அந்திக்கிறிஸ்து. குமாரனை மறுதலிக்கிறவன்
[19]பிதாவை யுடையவனல்ல, குமாரனை அறிக்
கையிடுகிறவன் பிதாவையும் உடையவனா
24 யிருக்கிறான். ஆகையால் ஆதிமுதல் நீங்கள்
கேள்விப்பட்டது [20]உங்களில் நிலைத்திருக்கக்
கடவது; ஆதிமுதல் நீங்கள் கேள்விப்பட்டது
உங்களில் நிலைத்திருந்தால், நீங்களும் குமார
25 னிலும் பிதாவிலும் நிலைத்திருப்பீர்கள். நித்
திய ஜீவனை அளிப்பேன் என்பதே [21]அவர்
26 நமக்குச் செய்த வாக்குத்தத்தம். உங்களை
வஞ்சிக்கிறவர்களைக்குறித்து [22]இவைகளை உங்
27 களுக்கு எழுதியிருக்கிறேன். நீங்கள் அவ
ராலே பெற்ற அபிஷேகம் உங்களில் நிலைத்தி
ருக்கிறது, ஒருவரும் உங்களுக்குப் போதிக்க
வேண்டுவதில்லை; [23]அந்த அபிஷேகம் சகலத்
தையுங்குறித்து உங்களுக்குப் போதிக்கிறது;
அது சத்தியமாயிருக்கிறது, பொய்யல்ல, அது
உங்களுக்குப் போதித்தபடியே அவரில் நிலைத்
திருப்பீர்களாக. இப்படியிருக்க, பிள்ளைக 28
ளே, அவர் வெளிப்படும்போது நாம் அவர்
வருகையில் அவருக்கு முன்பாக வெட்கப்பட்
டுப்போகாமல் தைரியமுள்ளவர்களா யிருக்
கும்படிக்கு அவரில் நிலைத்திருங்கள். அவர் 29
நீதியுள்ளவராயிருக்கிறாரென்று உங்களுக்குத்
தெரிந்திருப்பதினால், நீதியைச் செய்கிறவ
னெவனும் [24]அவரில் பிறந்தவனென்று அறிந்
திருக்கிறீர்கள்.

நாம் தேவனுடைய பிள்ளைகளென்று **3**
அழைக்கப்படுவதினாலே [25]பிதாவானவர் நமக்
குப் பாராட்டின [26]அன்பு எவ்வளவு பெரி
தென்று பாருங்கள்; [27]உலகம் அவரை அறியா
தபடியினாலே நம்மையும் அறியவில்லை. பிரி 2
யமானவர்களே, இப்பொழுது தேவனுடைய
பிள்ளைகளாயிருக்கிறோம், [28]இனி எவ்விதமா
யிருப்போமென்று இன்னும் வெளிப்பட
வில்லை; ஆகிலும் அவர் வெளிப்படும்போது
அவர் இருக்கிற வண்ணமாகவே [29]நாம் அவ
ரைத்தரிசிப்பதினால், அவருக்கு [30]ஒப்பாயிருப்
போமென்று அறிந்திருக்கிறோம். அவர்மேல் 3
இப்படிப்பட்ட நம்பிக்கை வைத்திருக்கிறவ
னெவனும், அவர் சுத்தமுள்ளவராயிருக்கிறது
போல, [31]தன்னையும் சுத்திகரித்துக்கொள்ளுகி
றான். பாவஞ்செய்கிற எவனும் நியாயப்பிர 4
மாணத்தை மீறுகிறான்; [32]நியாயப்பிரமாணத்
தை மீறுகிறதே பாவம். அவர் நம்முடைய 5
பாவங்களைச் சுமந்துதீர்க்க வெளிப்பட்டா
ரென்று அறிவீர்கள்; [33]அவரிடத்தில் பாவ
மில்லை, அவரில் நிலைத்திருக்கிற எவனும் 6
பாவஞ்செய்கிறதில்லை; [34]பாவஞ்செய்கிற எவ
னும் அவரைக் காணவுமில்லை, அவரை அறி
யவுமில்லை. பிள்ளைகளே, நீங்கள் ஒருவரா 7
லும் வஞ்சிக்கப்படாதிருங்கள்; [35]நீதியைச்
செய்கிறவன் அவர் நீதியுள்ளவராயிருக்கிறது
போலத் தானும் நீதியுள்ளவனாயிருக்கிறான்.
பாவஞ்செய்கிறவன் பிசாசினாலுண்டாயிருக் 8
கிறான்; [36]ஏனெனில் பிசாசானவன் ஆதிமு
தல் பாவஞ்செய்கிறான்; [37]பிசாசினுடைய
கிரியைகளை அழிக்கும்படிக்கே தேவனுடைய
குமாரன் வெளிப்பட்டார். தேவனால் பிறந்த 9
எவனும் [38]பாவஞ்செய்யான், [39]ஏனெனில்
அவருடைய வித்து அவனுக்குள் தரித்திருக்
கிறது; அவன் தேவனால் பிறந்தபடியினால்
பாவஞ்செய்யமாட்டான். இதினாலே தேவ 10
னுடைய பிள்ளைகள் இன்னாரென்றும் பிசா
சின் பிள்ளைகள் இன்னாரென்றும் வெளிப்
படும்; [40]நீதியைச்செய்யாமலும் தன் சகோதர
னில் அன்புகூராமலும் இருக்கிற எவனும்
தேவனால் உண்டானவனல்ல. நாம் ஒருவரி 11
லொருவர் அன்புகூரவேண்டுமென்பதே [41]நீங்
கள் ஆதிமுதல் கேள்விப்பட்ட விசேஷமா

1 யோ. 14. 7, 9
2 எபே. 6. 10
3 யோ. 15. 7
4 வெளி. 2. 7. மு
5 ரோ. 12. 2
6 மத். 6. 24. கலா. 1. 10
7 2 பே. 2. 10
8 சங். 119. 37
9 சங். 73. 6
10 சங். 39. 6. 1 கொ. 7. 31. யாக். 1. 10. 1 பே. 1. 24
11 எபி. 1. 2
12 மத். 24. 24. 1 தீமோ. 4. 1. 2 யோ. 7. வச
13 அப். 20. 30
14 மத். 24. 24. 2 தீமோ. 2. 19
15 2 தீமோ. 3. 9.
16 2 கொ. 1. 21. எபி. 1. 9
17 1 கொ. 2. 15
18 4. 3. 2 யோ. 7. வச
19 யோ. 15. 23
20 2 யோ. 6. வச
21 யோ. 17. 3
22 2 யோ. 7. வச
23 20. வச. யோ. 14. 26. எபி. 8. 10, 11
24 எரே. 13. 23. மத். 7. 16–18. அப். 22. 14
25 யோ. 1. 12. வெளி. 21. 7
26 எபே. 2. 4, 5
27 யோ. 17. 25
28 ரோ. 8. 14, 15, 18
29 யோபு 19. 26. சங். 17. 15. மத். 5. 8. 1 கொ. 13 12
30 1 கொ. 15. 49. பிலி. 3. 21. 2 பே. 1. 3
31 4. 17
32 ரோ. 4. 15
33 எபி. 9. 26, 28. 2 கொ. 5. 21
34 2. 4; 4. 8. 3 யோ. 11. வச
35 எசே. 18. 5–9. ரோ. 2. 13
36 யோ. 8. 44
37 எபி. 2. 14
38 5. 18
39 1 பே. 1. 23
40 2. 29; 4. 8
41 யோ. 13. 34; 15. 12

12 யிருக்கிறது. பொல்லாங்கனால் உண்டாயி
ருந்து தன் சகோதரனைக் கொலைசெய்த
காயீனைப்போ லிருக்கவேண்டாம்; [1]அவன்
எதினிமித்தம் அவனைக் கொலைசெய்தான்?
தன் கிரியைகள் பொல்லாதவைகளும், தன்
சகோதரனுடைய கிரியைகள் நீதியுள்ளவை
களுமா யிருந்ததினிமித்தந்தானே.
13 என் சகோதரரே, [2]உலகம் உங்களைப்
14 பகைத்தால் ஆச்சரியப்படாதிருங்கள். நாம்
சகோதரரிடத்தில் அன்புகூருகிறபடியால்,
மரணத்தைவிட்டு நீங்கி ஜீவனுக் குட்பட்டி
ருக்கிறோமென்று அறிந்திருக்கிறோம்; [3]சகோ
தரனிடத்தில் அன்புகூராதவன் மரணத்திலே
15 நிலைகொண்டிருக்கிறான். தன் சகோதரனைப்
பகைக்கிற எவனும் மனுஷ கொலைபாதகனா
யிருக்கிறான்; [4]மனுஷகொலைபாதகனெவனோ
அவனுக்குள் நித்தியஜீவன் நிலைத்திராதென்று
16 அறிவீர்கள். அவர் தம்முடைய ஜீவனை நமக்
காகக் கொடுத்ததினாலே [5]அன்பு இன்னதெ
ன்று அறிந்திருக்கிறோம்; நாமும் சகோதரருக்
காக ஜீவனைக் கொடுக்கக் கடனாளிகளாயிருக்
17 கிறோம். ஒருவன் இவ்வுலக ஆஸ்தி உடை
யவனாயிருந்து; தன் சகோதரனுக்குக் குறைச்
சலுண்டென்று கண்டு, தன் இருதயத்தை
அவனுக்கு அடைத்துக்கொண்டால், [6]அவ
னுக்குள் தேவ அன்பு நிலைகொள்ளுகிறதெப்
18 படி? என் பிள்ளைகளே, வசனத்தினாலும்
நாவினாலுமல்ல, [7]கிரியையினாலும் உண்மை
19 யினாலும் அன்புகூரக்கடவோம். இதினாலே
நாம் நம்மைச் சத்தியத்திற்குரியவர்களென்று
அறிந்து, [8]நம்முடைய இருதயத்தை அவரு
க்கு முன்பாக நிச்சயப்படுத்திக்கொள்ளலாம்.
20 நம்முடைய இருதயமே நம்மைக் குற்றவாளி
களாகத் தீர்க்குமானால், [9]தேவன் நம்முடைய
இருதயத்திலும் பெரியவராயிருந்து சகலத்தை
21 யும் அறிந்திருக்கிறார். பிரியமானவர்களே, நம்
முடைய இருதயம் நம்மைக் குற்றவாளிகளெ
ன்று தீர்க்காதிருந்தால், [10]நாம் தேவனிடத்தில்
22 தைரியங்கொண்டிருந்து, அவருடைய கற்ப
னைகளை நாம் கைக்கொண்டு அவருக்கு முன்
பாகப் பிரியமானவைகளைச் செய்கிறபடியி
னால் [11]நாம் வேண்டிக்கொள்ளுகிறதெதுவோ
அதை அவராலே பெற்றுக்கொள்ளுகிறோம்.
23 நாம் அவருடைய குமாரனாகிய இயேசுகிறி
ஸ்துவின் நாமத்தின்மேல் விசுவாசமாயிருந்து,
[12]அவர் நமக்குக் கட்டளையிட்டபடி ஒருவரி
லொருவர் அன்பாயிருக்கவேண்டுமென்பதே
24 அவருடைய கற்பனையாயிருக்கிறது. அவரு
டைய கட்டளைகளைக் கைக்கொள்ளுகிறவன்
அவரில் நிலைத்திருக்கிறான், [13]அவரும் அவ
னில் நிலைத்திருக்கிறார்; [14]அவர் நம்மில் நிலைத்
திருக்கிறதை அவர் நமக்குத் தந்தருளின ஆவி
யினாலே அறிந்திருக்கிறோம்.

4 பிரியமானவர்களே, [15]உலகத்தில் அநேகங்
கள்ளத்தீர்க்கதரிசிகள் தோன்றியிருப்பதினால்,
[16]நீங்கள் எல்லா ஆவிகளையும் நம்பாமல், அந்த
ஆவிகள் தேவனால் உண்டானவைகளோ
என்று சோதித்தறியுங்கள். தேவ ஆவியை நீங் 2
கள் எதினாலே அறியலாமென்றால்: [17]மாம்சத்
தில் வந்த இயேசுகிறிஸ்துவை அறிக்கைபண்
ணுகிற எந்த ஆவியும் தேவனால் உண்டாயிருக்
கிறது. மாம்சத்தில் வந்த இயேசுகிறிஸ்துவை 3
அறிக்கைபண்ணாத எந்த ஆவியும் தேவனால்
உண்டானதல்ல; வருமென்று நீங்கள் கேள்
விப்பட்ட அந்திக்கிறிஸ்துவினுடைய ஆவி
அதுவே, [18]அது இப்பொழுதும் உலகத்தில்
இருக்கிறது. பிள்ளைகளே, நீங்கள் தேவனால் 4
உண்டாயிருந்து, அவர்களை ஜெயித்தீர்கள்;
[19]ஏனெனில் உலகத்திலிருக்கிறவனிலும் உங்
களி லிருக்கிறவர் பெரியவர். அவர்கள் உல 5
கத்துக்குரியவர்கள், [20]ஆகையால் உலகத்துக்
குரியவைகளைப் பேசுகிறார்கள், உலகமும்
அவர்களுக்குச் செவிகொடுக்கும். நாங்கள் 6
தேவனால் உண்டானவர்கள்; [21]தேவனை
அறிந்தவன் எங்களுக்குச்செவிகொடுக்கிறான்;
தேவனால் உண்டாயிராதவன் எங்களுக்குச்
செவிகொடுக்கிறதில்லை; இதினாலே சத்திய
ஆவி இன்னதென்றும், வஞ்சகஆவி இன்ன
தென்றும் அறிந்திருக்கிறோம.

பிரியமானவர்களே, [22]ஒருவரிலொருவர் அ 7
ன்பாயிருக்கக்கடவோம்; ஏனெனில் அன்பு
தேவனால் உண்டாயிருக்கிறது; அன்புள்ள எவ
னும் தேவனால் பிறந்து, அவரை அறிந்திருக்
கிறான். அன்பில்லாதவன் தேவனை அறி 8
யான்; [23]தேவன் அன்பாகவே இருக்கிறார்.
தம்முடைய ஒரேபேறான குமாரனாலே நாம் 9
பிழைக்கும்படிக்கு தேவன் அவரை இவ்வுல
கத்திலே அனுப்பினதினால் [24]தேவன் நம்
மேல் வைத்த அன்பு வெளிப்பட்டது. நாம் 10
தேவனிடத்தில் அன்புகூர்ந்ததினால் அல்ல,
அவர் நம்மிடத்தில் அன்புகூர்ந்து, [25]நம்மு
டைய பாவங்களை நிவிர்த்திசெய்கிற கிருபா
தாரபலியாகத் தம்முடைய குமாரனை அனுப்
பினதினாலே அன்பு உண்டாயிருக்கிறது. பிரி 11
யமானவர்களே, தேவன் இவ்விதமாய் நம்மி
டத்தில் அன்புகூர்ந்திருக்க, [26]நாமும் ஒருவரி
டத்தில் ஒருவர் அன்புகூரக் கடனாளிகளா
யிருக்கிறோம். தேவனை [27]ஒருவரும் ஒருபோ 12
தும் கண்டதில்லை; நாம் ஒருவரிடத்தில் ஒரு
வர் அன்புகூர்ந்தால் தேவன் நமக்குள் நிலைத்
திருக்கிறார்; [28]அவருடைய அன்பும் நமக்குள்
பூரணப்படும். அவர் தம்முடைய ஆவியில் 13
நமக்குத் தந்தருளினதினாலே [29]நாம் அவரிலும்
அவர் நம்மிலும் நிலைத்திருக்கிறதை அறிந்தி
ருக்கிறோம். பிதாவானவர் குமாரனை உலக 14
ரட்சகராக அனுப்பினாரென்று [30]நாங்கள்
கண்டு சாட்சியிடுகிறோம். இயேசுவானவர் 15
தேவனுடைய குமாரனென்று அறிக்கைபண்
ணுகிறவன் எவனோ [31]அவனில் தேவன்
நிலைத்திருக்கிறார், அவனும் தேவனில் நிலைத்
திருக்கிறான். தேவன் நம்மேல் வைத்திருக் 16
கிற அன்பை நாம் அறிந்து விசுவாசித்திருக்
கிறோம். [32]தேவன் அன்பாகவே இருக்கி
றார்; அன்பில் நிலைத்திருக்கிறவன் தேவனில்

1 ஆதி. 4. 4, 8. எபி. 11. 4
2 யோ. 15. 18, 19
3 2. 9–11
4 மத். 5. 21, 22
5 யோ. 15. 13. ரோ. 5. 8
6 உபா. 15. 7. லூ. 3. 11
7 எசே. 33. 31. ரோ. 12. 9. யாக். 2. 15, 16. 1 பே. 1. 22
8 யோ. 18. 35, 37
9 1 கொ. 4. 4
10 யோபு 27. 6. சங். 101. 2. எபி. 10. 22
11 சங். 145. 18, 19. நீதி. 15. 29. மாற். 11. 24
12 உபா. 18. 15–19. யோ. 14. 1
13 யோ. 14. 23: 15 10
14 ரோ. 8. 9, 14
15 மத். 24. 4. 2 பே. 2. 18
16 சங். 119. 45. மத். 24. 4. 1 தெச. 5. 21. வெளி. 2. 2
17 1 கொ. 12. 3
18 2 தெச. 2. 7
19 யோ. 12. 31. ரோ. 8. 37
20 யோ. 3. 31: 15. 19
21 ஏசா. 8. 20. யோ. 8. 47: 14. 17
22 3. 11, 23
23 16. வச. 2 கொ. 13. 11
24 யோ. 3. 16: 6. 51. ரோ. 5. 8
25 2. 2
26 மத். 18. 33. யோ. 15. 12, 13
27 யோ. 1. 18. 1 தீமோ. 6. 16
28 1 கொ. 13. 13
29 3. 24. யோ. 14. 20
30 யோ. 1. 14: 3. 17
31 ரோ. 10. 9
32 8. வச.

நிலைத்திருக்கிறான், தேவனும் அவனில் நிலைத்
17 திருக்கிறார். நியாயத்தீர்ப்புநாளிலே நமக்
குத் தைரியமுண்டா யிருக்கத்தக்கதாக [1]அ
ன்பு நம்மிடத்தில் பூரணப்படுகிறது; ஏனென்
றால், அவர் இருக்கிற பிரகாரமாக நாமும்
18 இவ்வுலகத்தில் இருக்கிறோம். அன்பிலே பய
மில்லை; பூரண அன்பு பயத்தைப் புறம்பே தள்
ளும்; பயமானது வேதனையுள்ளது, பயப்படு
கிறவன் அன்பில் பூரணப்பட்டவன் அல்ல.
19 அவர் முந்தி நம்மிடத்தில் அன்புகூர்ந்தபடி
யால் [2]நாமும் அவரிடத்தில் அன்புகூருகி
20 றோம். தேவனிடத்தில் அன்புகூருகிறேனெ
ன்று ஒருவன் சொல்லியும், [3]தன் சகோதர
னைப் பகைத்தால், அவன் பொய்யன்; தான்
கண்ட சகோதரனிடத்தில் அன்புகூராமலி
ருக்கிறவன், தான் காணாத தேவனிடத்தில்
21 எப்படி அன்புகூருவான்? தேவனிடத்தில்
அன்புகூருகிறவன் தன் சகோதரனிடத்திலும்
அன்புகூரவேண்டுமென்கிற [4]இந்தக் கற்பனை
யை அவராலே பெற்றிருக்கிறோம்.

**5** இயேசுவானவரே கிறிஸ்து என்று விசுவா
சிக்கிற எவனும் [5]தேவனால் பிறந்திருக்கிறான்;
பிறப்பித்தவரிடத்தில் அன்புகூருகிற எவனும்
[6]அவரால் பிறப்பிக்கப்பட்டவனிடத்திலும்
2 அன்புகூருகிறான். நாம்தேவனிடத்தில் அன்
புகூர்ந்து அவருடைய கற்பனைகளைக் கைக்
கொள்ளும்போது, தேவனுடைய பிள்ளைக
ளிடத்தில் அன்புகூருகிறோமென்று அறிந்து
3 கொள்ளுகிறோம். நாம் தேவனுடைய கற்ப
னைகளை கைக்கொள்வதே [7]அவரிடத்தில்
அன்புகூருவதாம்; [8]அவருடைய கற்பனைகள்
4 பாரமானவைகளுமல்ல. தேவனால் பிறப்ப
தெல்லாம் உலகத்தை ஜெயிக்கும்; [9]நம்மு
டைய விசுவாசமே உலகத்தை ஜெயிக்கிற
5 ஜெயம். இயேசுவானவர் தேவனுடைய குமா
ரனென்று விசுவாசிக்கிறவனேயன்றி [10]உல
6 கத்தை ஜெயிக்கிறவன் யார்? இயேசுகிறிஸ்
துவாகிய இவரே [11]ஜலத்தினாலும் இரத்தத்தி
னாலும் வந்தவர்; ஜலத்தினாலே மாத்திரமல்ல,
ஜலத்தினாலும் இரத்தத்தினாலும் வந்தவர்.
[12]ஆவியானவர் சத்தியமாகையால், ஆவியான
7 வரே சாட்சிகொடுக்கிறவர். [பரலோகத்தி
லே சாட்சியிடுகிறவர்கள் மூவர், பிதா, [13]வார்த்
தை, [14]பரிசுத்தஆவி என்பவர்களே, [15]இம்மூ
8 வரும் ஒன்றாயிருக்கிறார்கள்; பூலோகத்திலே]
சாட்சியிடுகிறவைகள் மூன்று, [16]ஆவி, [17]ஜலம்,
[18]இரத்தம் என்பவைகளே, இம்மூன்றும் ஒரு
9 மைப்பட்டிருக்கிறது. நாம் மனுஷருடைய
சாட்சியை ஏற்றுக்கொண்டால், [19]அதைப் பா
ர்க்கிலும் தேவனுடைய சாட்சி அதிகமாயிருக்
கிறது; [20]தேவன் தமது குமாரனைக்குறித்துக்
கொடுத்த சாட்சி இதுவே. தேவனுடைய 10
குமாரனிடத்தில் விசுவாசமா யிருக்கிறவன்
[21]அந்தச் சாட்சியைத் தனக்குள்ளே கொண்
டிருக்கிறான், தேவனை விசுவாசியாதவனோ,
தேவன் தம்முடைய குமாரனைக்குறித்துக்
கொடுத்த சாட்சியை விசுவாசியாததினால், அவ
ரைப் பொய்யராக்குகிறான். தேவன் நமக்கு 11
நித்தியஜீவனைத் தந்திருக்கிறார், [22]அந்த ஜீவன்
அவருடைய குமாரனில் இருக்கிறதென்பதே
அந்தச் சாட்சியாம். குமாரனை உடையவன் 12
ஜீவனை உடையவன், [23]தேவனுடைய குமா
ரன் இல்லாதவன் ஜீவன் இல்லாதவன்.

உங்களுக்கு நித்தியஜீவன் உண்டென்று 13
நீங்கள் அறியவும், [24]தேவகுமாரனுடைய நா
மத்தின்மேல் நீங்கள் விசுவாசமாயிருக்கவும்,
தேவகுமாரனுடைய நாமத்தின்மேல் விசுவாச
மாயிருக்கிற உங்களுக்கு இவைகளை எழுதி
யிருக்கிறேன். நாம் எதையாகிலும் அவரு 14
டைய சித்தத்தின்படி கேட்டால், [25]அவர்
நமக்குச் செவிகொடுக்கிறாரென்பதே அவ
ரைப்பற்றி நாம் கொண்டிருக்கிற தைரியம்.
நாம் எதைக் கேட்டாலும், அவர் நமக்குச் செ 15
விகொடுக்கிறாரென்று நாம் அறிந்திருந்தோமா
னால், [26]அவரிடத்தில் நாம் கேட்டவைகளைப்
பெற்றுக்கொண்டோமென்றும் அறிந்திருக்கி
றோம். மரணத்துக்கு ஏதுவல்லாத பாவத் 16
தைத் தன் சகோதரன் செய்ய ஒருவன் கண்
டால், அவன் வேண்டுதல் செய்யக்கடவன்,
[27]அப்பொழுது அவனுக்கு ஜீவனைக்கொடுப்
பார்; யாருக்கென்றால், மரணத்துக்கு ஏதுவல்
லாத பாவத்தைச் செய்தவர்களுக்கே; [28]மரண
த்துக்கு ஏதுவான பாவமுண்டு, [29]அதைக்குறி
த்து வேண்டுதல்செய்ய நான் சொல்லேன்.
அநீதியெல்லாம் [30]பாவந்தான்; என்றாலும் 17
[31]மரணத்துக்கு ஏதுவல்லாத பாவமுமுண்டு.

தேவனால் பிறந்த எவனும் [32]பாவஞ்செய் 18
யானென்று அறிந்திருக்கிறோம்; தேவனால்
பிறந்தவன் தன்னைக் காக்கிறான், [33]பொல்லாங்
கன் அவனைத் தொடான். நாம் தேவனால் 19
உண்டாயிருக்கிறோமென்றும், [34]உலகமுழுவ
தும் பொல்லாங்கனுக்குள் கிடக்கிறதென்றும்
அறிந்திருக்கிறோம். அன்றியும், நாம் சத்திய 20
முள்ளவரை அறிந்துகொள்வதற்கு [35]தேவனு
டைய குமாரன் வந்து நமக்குப் புத்தியைத்
தந்திருக்கிறாரென்றும் அறிவோம்; அவரு
டைய குமாரனாகிய இயேசுகிறிஸ்து என்னப்
பட்ட சத்தியமுள்ளவருக்குள்ளும் இருக்கி
றோம்; [36]இவரே மெய்யான தேவனும் நித்திய
ஜீவனுமாயிருக்கிறார். பிள்ளைகளே, நீங்கள் 21
விக்கிரகங்களுக்கு விலகி, [37]உங்களைக் காத்துக்
கொள்வீர்களாக. ஆமென்.

1 யாக். 2. 13
2 யோ. 15. 16
3 3. 17
4 மத். 22. 37, 39. யோ. 13. 34
5 யோ. 1. 12, 13
6 யோ. 14. 23; 15. 10
7 யோ. 14. 15, 21
8 சங். 119. 45. மத். 11. 30
9 யோ. 16. 33. 1 கொ. 15. 37
10 4. 15
11 யோ. 19. 34
12 யோ. 14. 17. 1 தீ. 3. 16
13 யோ. 1. 1; 8. 18
14 எபி. 4. 12, 13. வெளி. 19. 13
15 யோ. 10. 30
16 யோ. 15. 26. அப். 2. 2, 4. 2 கொ. 1. 22
17 1 பே. 3. 21
18 எபி. 13. 12
19 யோ. 8. 17, 18
20 மத். 3. 16, 17
21 ரோ. 8. 16. கலா. 4. 6
22 2. 25; 4. 9. யோ. 1. 4
23 யோ. 5. 24
24 யோ. 20. 31
25 3. 22
26 நீதி. 15. 29. எரே. 29. 12, 13
27 யாக். 5. 14, 15
28 மத். 12. 31, 32
29 எரே. 7. 16. யோ. 17. 9
30 3. 4
31 ரோ. 5. 20, 21
32 1 பே. 1. 23
33 யாக். 1. 27
34 கலா. 1. 4
35 லூக். 24. 45. யோ. 17. 3
36 ஏசா. 9. 6. யோ. 20. 28. ரோ. 9. 5. 1 தீ. 3. 16
37 1 கொ. 10. 14

# THE SECOND EPISTLE OF JOHN

அப்போஸ்தலனாகிய

# யோவான் எழுதின

## இரண்டாம் நிருபம்

1 நமக்குள் நிலைநிற்கிறதும் என்றென்றைக்
கும் நம்மோடிருப்பதுமாகிய சத்தியத்தினிமித்
தம், நான்மாத்திரமல்ல, [1]சத்தியத்தை அறிந்
திருக்கிற யாவரும் சத்தியத்தின்படி நேசித்தி
2 ருக்கிறவளும், தெரிந்துகொள்ளப்பட்டவளு
மாகிய அம்மாளுக்கும், அவளுடைய பிள்ளை
களுக்கும், மூப்பனாகிய நான் எழுதுகிறதா
3 வது: பிதாவாகிய தேவனாலும் பிதாவின்
குமாரனாயிருக்கிற கர்த்தராகிய இயேசுகிறிஸ்
துவினாலும், [2]கிருபையும் இரக்கமும் சமாதா
னமும், சத்தியத்தோடும் அன்போடும்கூட,
உங்களோடிருப்பதாக.
4 பிதாவினால் நாம் பெற்ற கற்பனையின்படி
யே உம்முடைய பிள்ளைகளில் சிலர் சத்தியத்
திலே நடக்கிறதை நான் கண்டு மிகவும் சந்
5 தோஷப்பட்டேன். இப்பொழுதும் அம்மா
ளே, நாம் ஒருவரிலொருவர் அன்புகூரவேண்
டுமென்று, [3]உமக்குப் புதிய கற்பனையாக எழு
தாமல், ஆதிமுதல் நமக்கு உண்டாயிருக்கிற
கற்பனையாக எழுதி, உம்மை வேண்டிக்கொள்
6 ளுகிறேன். நாம் அவருடைய கற்பனைகளின்
படி நடப்பதே [4]அன்பு; [5]நீங்கள் ஆதிமுதல்
கேட்டிருக்கிறபடி நடந்துகொள்ளவேண்டிய
7 கற்பனை இதுவே. மாம்சத்தில்வந்த இயேசு
கிறிஸ்துவை அறிக்கைபண்ணாத அநேக வஞ்
சகர் உலகத்திலே தோன்றியிருக்கிறார்கள்;
[6]இப்படிப்பட்டவனே வஞ்சகனும் அந்திக்
கிறிஸ்துவுமாயிருக்கிறான். உங்கள் செய்கை 8
களின் பலனை இழந்துபோகாமல், [7]பூரண
பலனைப் பெறும்படிக்கு எச்சரிக்கையாயிருங்
கள். கிறிஸ்துவின் உபதேசத்திலே நிலைத் 9
திராமல் மீறிநடக்கிற எவனும் [8]தேவனை
உடையவனல்ல; கிறிஸ்துவின் உபதேசத்தில்
நிலைத்திருக்கிறவனோ பிதாவையும் குமாரனை
யும் உடையவன். ஒருவன் உங்களிடத்தில் 10
வந்து இந்த உபதேசத்தைக் கொண்டுவராம
லிருந்தால், [9]அவனை உங்கள் வீட்டிலே ஏற்
றுக்கொள்ளாமலும், அவனுக்கு வாழ்த்துதல்
சொல்லாமலும் இருங்கள். அவனுக்கு வாழ்த் 11
துதல் சொல்லுகிறவன் [10]அவனுடைய துர்க்
கிரியைகளுக்கும் பங்குள்ளவனாகிறான்.
உங்களுக்கு எழுதவேண்டிய காரியங்கள் 12
அநேகமுண்டு; [11]காகிதத்தினாலும் மையினா
லும் அவைகளை எழுத எனக்கு மனதில்லை.
[12]உங்களுடைய சந்தோஷம் நிறைவா யிருக்
கும்படிக்கு உங்களிடத்தில் வந்து, முகமுக
மாய்ப் பேசலாமென்று நம்பியிருக்கிறேன்.
தெரிந்துகொள்ளப்பட்ட உம்முடைய சகோ 13
தரியின் பிள்ளைகள் [13]உமக்கு வாழ்த்துதல்
சொல்லுகிறார்கள். ஆமென்.

1 யோ. 3. 32. 1 யோ. 3. 18
2 1 தீமோ. 1. 2
3 1 யோ. 2. 7; 3. 23
4 யோ. 14. 15, 21
5 1 யோ. 2. 24
6 1 யோ. 4. 1–3
7 மாற். 13. 9. வெளி. 3. 11
8 யோ. 15 6
9 கலா. 1. 8, 9
10 1 தீமோ. 5. 22
11 3 யோ. 13. [illegible]
12 1 யோ. 1. 4
13 1 பே. 5. 13

# THE THIRD EPISTLE OF JOHN

அப்போஸ்தலனாகிய

# யோவான் எழுதின

## மூன்றாம் நிருபம்

1 மூப்பனாகிய நான் [1]சத்தியத்தின்படி நேசிக்
கிற பிரியமான காயுவுக்கு எழுதுகிறதாவது:
2 பிரியமானவனே, உன் ஆத்துமா வாழ்கிறது
போல நீ எல்லாவற்றிலும் வாழ்ந்து சுகமா
3 யிருக்கும்படி வேண்டுகிறேன். சகோதரர்
வந்து [2]நீ சத்தியத்தில் நடந்துகொள்ளுகிறாய்
என்று உன்னுடைய உண்மையைக்குறித்துச்
சாட்சிகொடுத்தபோது மிகவும் சந்தோஷப்
4 பட்டேன். என் பிள்ளைகள் சத்தியத்திலே
நடக்கிறார்கள் என்று நான் கேள்விப்படுகிற
சந்தோஷத்திலும் [3]அதிகமான சந்தோஷம்
எனக்கு இல்லை.
5 பிரியமானவனே, [4]நீ சகோதரருக்கும் அந்
நியருக்கும் செய்கிற யாவற்றையும் உண்மை
6 யாய்ச் செய்கிறாய். அவர்கள் உன்னுடைய
அன்பைக் குறித்துச் சபைக்கு முன்பாகச்
சாட்சி சொன்னார்கள்; [5]தேவனுக்கு முன்பா
கப் பாத்திரமானபடி அவர்களை நீ வழிவிட்ட
7 னுப்பினால் நலமாயிருக்கும். ஏனெனில் அவர்
கள் புறஜாதியாரிடத்தில் [6]ஒன்றும் வாங்கா
மல் அவருடைய நாமத்தினிமித்தம் புறப்பட்
8 டுப்போனார்கள். ஆகையால் நாம் சத்தியத்
திற்கு உடன்வேலையாட்களா யிருக்கும்படி
[7]அப்படிப்பட்டவர்களைச் சேர்த்துக்கொள்ளக்
கடனாளிகளாயிருக்கிறோம்.
9 நான் சபைக்கு எழுதினேன்; [8]ஆனாலும்
அவர்களில் முதன்மையாயிருக்க விரும்புகிற
தியோத்திரேப்பு எங்களை ஏற்றுக்கொள்ள
வில்லை. ஆனபடியால், நான் வந்தால், [9]அவன் 10
எங்களுக்கு விரோதமாய்ப் பொல்லாத வார்த்
தைகளை அலப்பி, செய்துவருகிற கிரியை
களை நினைத்துக்கொள்வேன். அவன் இப்
படிச் செய்துவருவதும் போதாமல், தான்
சகோதரரை ஏற்றுக்கொள்ளாமலிருக்கிறது
மன்றி, ஏற்றுக்கொள்ள மனதாயிருக்கிறவர்க
ளையும் தடைசெய்து, [10]சபைக்குப் புறம்பே
தள்ளுகிறான். பிரியமானவனே, [11]நீ தீமையா 11
னதைப் பின்பற்றாமல், நன்மையானதைப்
பின்பற்று, [12]நன்மைசெய்கிறவன் தேவனால்
உண்டாயிருக்கிறான்; தீமைசெய்கிறவன் தே
வனைக் காணவில்லை தேமேத்திரியு எல்லா 12
ராலும் நற்சாட்சிபெற்றது மல்லாமல், [13]சத்தி
யத்தாலும் நற்சாட்சிபெற்றவன்; நாங்களும்
சாட்சிகொடுக்கிறோம், [14]எங்கள் சாட்சி மெய்
யென்று அறிவீர்கள்.
எழுதவேண்டியகாரியங்கள் அநேகமுண்டு; 13
[15]ஆனாலும் மையினாலும் இறகினாலும் எழுத
எனக்கு மனதில்லை. சீக்கிரமாய் உன்னைக் 14
காணலாமென்று நம்பியிருக்கிறேன், அப்
பொழுது முகமுகமாய்ப் பேசிக்கொள்ளு
வோம். உனக்குச் சமாதானம் உண்டாவதாக.
சிநேகிதர் உனக்கு வாழ்த்துதல் சொல்லுகி
றார்கள். சிநேகிதரைப் பேர்பேராக வாழ்த்து
வாயாக.

1 2 யோ. 1. ௧
2 2 யோ. 4. ௧
3 நீதி. 23. 24. 1 கொ. 15
4 1 பே. 4. 10
5 அப். 15. 3
6 1 கொ. 9. 15, 18
7 மத். 10. 40
8 மத். 28. 4–8 1 தீமோ. 6. 3, 4
9 நீதி. 10. 8, 10
10 ஏசா. 66. 5
11 சங். 37. 27. 1 பே. 3. 11
12 1 யோ. 3. 6–9
13 1 தீமோ. 3. 7
14 யோ. 21. 24
15 2 யோ. 12. ௧.

# THE GENERAL EPISTLE OF JUDE

அப்போஸ்தலனாகிய

# யூதா எழுதின பொதுவான

## நிருபம்

1 இயேசுகிறிஸ்துவினுடைய ஊழியக்കார
னும், [1]யாக்கோபினுடைய சகோதரனுமா
யிருக்கிற யூதா, [2]பிதாவாகிய தேவனாலே பரி
சுத்தமாக்கபபட்டவர்களும், [3]இயேசுகிறிஸ்து
வினாலே காக்கப்பட்டவர்களுமாகிய [4]அழைக்
2 கப்பட்டவர்களுக்கு எழுதுகிறதாவது: உங்க
ளுக்கு இரக்கமும் [5]சமாதானமும் அன்பும்
பெருகக்கடவது.
3 பிரியமானவர்களே, [6]பொதுவான இரட்சிப்
பைக் குறித்து உங்களுக்கு எழுதும்படி நான்
மிகவும் கருத்துள்ளவனாயிருக்கையில், [7]பரி
சுத்தவான்களுக்கு ஒருவிசை ஒப்புக்கொடுக்
கப்பட்ட விசுவாசத்திற்காக நீங்கள் தைரிய
மாய்ப் போராடவேண்டுமென்று உங்களுக்கு
எழுதி உணர்த்துவது எனக்கு அவசியமாய்க்
4 கண்டது. ஏனெனில், நமது தேவனுடைய
கிருபையைக் காமவிகாரத்துக் கேதுவாகப்
[8]புரட்டி, [9]ஒன்றான ஆண்டவராகிய தேவனை
யும் நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்
துவையும் மறுதலிக்கிற பக்தியற்றவர்களாகிய
சிலர் [10]பக்கவழியாய் நுழைந்திருக்கிறார்கள்;
[11]அவர்கள் இந்த ஆக்கினைக்குள்ளாவார்களெ
ன்று பூர்வத்திலே எழுதியிருக்கிறது.
5 நீங்கள் முன்னமே அறிந்திருந்தாலும், நான்
உங்களுக்கு நினைப்பூட்ட விரும்புகிறதென்ன
வெனில், [12]கர்த்தர் தமது ஜனத்தை எகிப்து
தேசத்திலிருந்து வரப்பண்ணி இரட்சித்து,
6 [13]பின்பு விசுவாசியாதவர்களை அழித்தார். தங்
களுடைய ஆதிமேன்மையைக் காத்துக்கொள்
ளாமல், தங்களுக்குரிய வாசஸ்தலத்தை விட்டு
விட்ட [14]தூதர்களையும், [15]மகாநாளின் நியாயத்
தீர்ப்புக்கென்று [16]நித்திய சங்கிலிகளினாலே
கட்டி, அந்தகாரத்தில் அடைத்துவைத்திருக்கி
7 றார். அப்படியே சோதோம் கொமோரா பட்ட
ணத்தார்களும், [17]அவைகளைச் சூழ்ந்த பட்ட
ணத்தார்களும், அவர்களைப்போல் விபசாரம்
பண்ணி, அந்நிய மாம்சத்தைத் தொடர்ந்து,
நித்திய அக்கினியின் ஆக்கினையை அடைந்து,
திருஷ்டாந்தமாக வைக்கப்பட்டிருக்கிறார்கள்.
8 அப்படிப்போலவே, சொப்பனக்காரராகிய
இவர்களும் [18]மாம்சத்தை அசுசிப்படுத்திக்
கொண்டு கர்த்தத்துவத்தை அசட்டைபண்ணி,
9 மகத்துவங்களைத் தூஷிக்கிறார்கள், பிரதான
தூதனாகிய [19]மிகாவேல் மோசேயினுடைய
சரீரத்தைக் குறித்துப் [20]பிசாசுடனே தர்க்கித்
துப் பேசினபோது, அவனைத் தூஷணமாய்க்
குற்றப்படுத்தத் துணியாமல்: [21]கர்த்தர் உன்
னைக் கடிந்துகொள்வாராக என்று சொன்
னான். இவர்கள் தங்களுக்குத் தெரியாதவை 10
களைத் [22]தூஷிக்கிறார்கள்; புத்தியில்லாத மிரு
கங்களைப்போல சுபாவப்படி தங்களுக்குத்
தெரிந்திருக்கிறவைகளாலே தங்களைக் கெடுத்
துக்கொள்ளுகிறார்கள், இவர்களுக்கு ஐயோ! 11
இவர்கள் [23]காயீனுடைய வழியில் நடந்து,
[24]பிலேயாம் கூலிக்காகச்செய்த வஞ்சகத்திலே
விரைந்தோடி [25]கோரா எதிர்த்துப்பேசின பாவ
த்திற்குள்ளாகி, கெட்டுப்போனார்கள். இவர் 12
கள் உங்கள் அன்பின் விருந்துகளில் [26]கறைக
ளாயிருந்து, [27]பயமின்றிக் கூட விருந்துண்டு,
தங்களைத் தாங்களே மேய்த்துக்கொள்ளுகிறார்
கள்; [28]இவர்கள் காற்றுகளால் அடியுண்டோடு
கிற தண்ணீரற்ற மேகங்களும், [29]இலையுதிர்ந்து
கனியற்று இரண்டுதரஞ் செத்து வேரற்றுப்
போன மரங்களும், தங்கள் அவமானங்களை 13
நுரைதள்ளுகிற [30]அமளியான கடலலைகளும்,
[31]மார்க்கந்தப்பி அலைகிற நட்சத்திரங்களுமா
யிருக்கிறார்கள்; [32]இவர்களுக்காக என்றென்
றைக்கும் காரிருளே வைக்கப்பட்டிருக்கிறது.
ஆதாமுக்கு ஏழாந்தலைமுறையான ஏனோக் 14
கும் இவர்களைக்குறித்து: [33]இதோ எல்லாருக்
கும் நியாயத்தீர்ப்புக் கொடுக்கிறதற்கும், அவர்
களில் அவபக்தியுள்ளவர்கள் யாவரும் அவ
பக்தியாய்ச் செய்துவந்த சகல அவபக்தியான
கிரியைகளினிமித்தமும், தமக்கு விரோத 15
மாய் அவபக்தியுள்ள பாவிகள் பேசின [34]கடின
வார்த்தைக ளெல்லாவற்றினிமித்தமும், அவர்
களைக் கண்டிக்கிறதற்கும், ஆயிரமாயிரமான
தமது பரிசுத்தவான்களோடுங்கூட கர்த்தர்
வருகிறார் என்று முன்னறிவித்தான். இவர் 16
கள் முறுமுறுக்கிறவர்களும், முறையிடுகிறவர்
களும், தங்கள் இச்சைகளின்படி நடக்கிறவர்
களுமாயிருக்கிறார்கள்; [35]இவர்களுடைய வாய்
இறுமாப்பானவைகளைப் பேசும்; [36]தற்பொழி
வுக்காக முகஸ்துதி செய்வார்கள்.
நீங்களோ பிரியமானவர்களே [37]நம்முடைய 17
கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் அப்போஸ்

1 ஓசி. 6. 16. அப். 1. 13
2 அப். 20. 32
3 யோ. 17. 11, 12, 15. 1 பே. 1. 5
4 ரோ. 1. 7: 8. 30
5 1 பே. 1. 2. 2 பே. 1. 2
6 தீத். 1. 3
7 கலா. 2. 4. பிலி. 1. 27. 1 தீமோ. 1. 18
8 தீத். 1. 15, 16. 2 பே. 2. 10
9 தீத். 1. 16. 1 யோ. 2. 22
10 கலா. 2. 4. 2 பே. 2. 1
11 ரோ. 9. 21, 22
12 1 கொ. 10. 5–12
13 எண். 14. 29, 37. எபி. 3. 16–19
14 யோ. 8. 44
15 வெளி. 20. 10
16 2 பே. 2. 4
17 ஆதி. 19. 24. 2 பே. 2. 6
18 2 பே. 2. 10, 11
19 தானி. 12. 1. வெளி. 12. 7
20 உபா. 34. 6
21 யாத். 22. 28. சக. 3. 2
22 2 பே. 2. 12
23 ஆதி. 4. 5. 1 யோ. 3. 12
24 எண். 22. 7, 21. 2 பே. 2. 15
25 எண். 16. 1. ழ
26 பாறைகள். 2 பே. 2. 13
27 பிலி. 3. 18
28 நீதி. 25. 4. எபே. 4. 14. 2 பே. 2. 17
29 மத். 15. 13. யோ. 15. 4–6. எபி. 6. 4–6
30 ஏசா. 57. 20. பிலி. 3. 19
31 வெளி. 8. 10, 11
32 2 பே. 2. 17
33 சக. 14. 5. மத். 25. 31. 2 தெச. 1. 7

34 சங். 73. 9 35 2 பே. 2. 18 36 மாற். 2. 1, 9 37 2 பே. 3. 2

தலரால் முன் சொல்லப்பட்ட வார்த்தைகளை
18 நினைவுகூருங்கள். கடைசிக்காலத்திலே தங்
கள் துன்மார்க்கமான இச்சைகளின்படி நடக்
கிற பரியாசக்காரர் தோன்றுவார்கள் என்று
19 [1]உங்களுக்குச் சொன்னார்களே. இவர்கள்
[2]பிரிந்துபோகிறவர்களும், [3]ஜென்ம சுபாவத்
20 தாரும், ஆவியில்லாதவர்களுமாமே. நீங்களோ
பிரியமானவர்களே, [4]உங்கள் மகா பரிசுத்த
மான விசுவாசத்தின்மேல் உங்களை உறுதிப்
படுத்திக்கொண்டு, [5]பரிசுத்தஆவிக்குள் ஜெபம்
21 பண்ணி, தேவனுடைய அன்பிலே உங்க
ளைக் காத்துக்கொண்டு, [6]நித்திய ஜீவனுக்கே
துவாக நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்
துவினுடைய இரக்கத்தைப் பெறக் காத்திருங்
கள். அல்லாமலும், நீங்கள் பகுத்தறிவுள்ள 22
வர்களாயிருந்து, சிலருக்கு இரக்கம்பாராட்டி,
[7]சிலரை அக்கினியிலிருந்து இழுத்துவிட்டு,
பயத்தோடே இரட்சித்து, மாம்சத்தால் கறை 23
பட்டிருக்கிற வஸ்திரத்தையும் [8]வெறுத்துத்
தள்ளுங்கள்.

வழுவாதபடி உங்களைக் காக்கவும், [9]தமது 24
மகிமையுள்ள சந்நிதானத்திலே மிகுந்த மகிழ்ச்
சியோடே உங்களை மாசற்றவர்களாய் நிறுத்த
வும் வல்லமையுள்ளவரும், தாம் ஒருவரே 25
ஞானமுள்ளவருமாகிய [10]நம்முடைய இரட்ச
கரான தேவனுக்குக் [11]கனமும் மகத்துவமும்
வல்லமையும் அதிகாரமும் இப்பொழுதும்
எப்பொழுதும் உண்டாவதாக. ஆமென்.

1 1 தீமோ. 4. 1. 2 பே. 2. 1; 3. 3
2 எபி. 10. 25
3 1 கொ. 2. 14. யாக். 3. 15
4 கொலோ. 2. 7
5 ரோ. 8. 26. எபே. 6. 18
6 யோ. 15. 4, 10. தீத். 2. 13
7 சகரி. 3. 2, 5. 1 தீமோ. 4. 10
8 வெளி. 3. 4, 18
9 ரோ. 16. 25. எபே. 3. 20
10 1 தீமோ. 2. 3
11 ரோ. 16. 27. 1 தீமோ. 1. 17; 2. 3

THE REVELATION OF JOHN

# யோவானுக்கு வெளிப்படுத்தின

## விசேஷம்

1 சீக்கிரத்தில் சம்பவிக்க வேண்டியவைக
ளைத் [1]தம்முடைய ஊழியக்காரருக்குக் காண்
பிக்கும்பொருட்டு, தேவன் இயேசுகிறிஸ்து
வுக்கு ஒப்புவித்ததும், [2]இவர் தம்முடைய
தூதனை அனுப்பி, தம்முடைய ஊழியக்கார
னாகிய யோவானுக்கு வெளிப்படுத்தினது
2 மான விசேஷம். இவன் தேவனுடைய வச
னத்தைக் குறித்தும், இயேசுகிறிஸ்துவைப்
பற்றிய சாட்சியைக் குறித்தும், [3]தான் கண்ட
யாவற்றையும் சாட்சியாக அறிவித்திருக்கி
3 றான். இந்தத் தீர்க்கதரிசன வசனங்களை
[4]வாசிக்கிறவனும், கேட்கிறவர்களும், இதில்
எழுதியிருக்கிறவைகளைக் கைக்கொள்ளுகிற
வர்களும் பாக்கியவான்கள், [5]காலம் சமீபமா
யிருக்கிறது.
4 யோவான் [6]ஆசியாவிலுள்ள ஏழு சபைக
ளுக்கும் எழுதுகிறதாவது: [7]இருக்கிறவரும்
இருந்தவரும் வருகிறவருமானவராலும், [8]அவ
ருடைய சிங்காசனத்திற்குமுன்பாக இருக்கிற
5 ஏழு ஆவிகளாலும், உண்மையுள்ள [9]சாட்
சியும், [10]மரித்தோரிலிருந்து முதற்பிறந்தவ
ரும், [11]பூமியின் ராஜாக்களுக்கு அதிபதியுமா
கிய இயேசுகிறிஸ்துவினாலும் உங்களுக்குக்
6 கிருபையும் சமாதானமும் உண்டாவதாக. நம்
மிடத்தில் அன்புகூர்ந்து, [12]தமது இரத்தத்
தினாலே நம்முடைய பாவங்களற நம்மைக்
கழுவி, தம்முடைய பிதாவாகிய தேவனுக்கு
முன்பாக நம்மை ராஜாக்களும் [13]ஆசாரியர்க
ளுமாக்கின அவருக்கு [14]மகிமையும் வல்லமை
யும் என்றென்றைக்கும் உண்டாயிருப்பதாக.
7 ஆமென். இதோ, மேகங்களுடனே வருகி
றார்; [15]கண்கள் யாவும் அவரைக் காணும்,
[16]அவரைக் குத்தினவர்களும் அவரைக் காண்
பார்கள்; பூமியின் கோத்திரத்தாரெல்லாரும்
[17]அவரைப் பார்த்துப் புலம்புவார்கள். அப்ப
டியே ஆகும், ஆமென்.
8 இருக்கிறவரும்இருந்தவரும்வருகிறவருமா
கிய சர்வ வல்லமையுள்ள கர்த்தர்: [18]நான் அல்
பாவும் ஓமெகாவும், ஆதியும் அந்தமுமாயிருக்
கிறேன் என்று திருவுளம் பற்றுகிறார்.
9 உங்கள்சகோதரனும்,இயேசுகிறிஸ்துவினி
மித்தம் வருகிற [19]உபத்திரவத்திற்கும் அவரு
டைய [20]ராஜ்யத்திற்கும் அவருடைய பொறு
மைக்கும் உங்கள் உடன் பங்காளனுமாயிருக்
கிற யோவானாகிய நான் தேவவசனத்தினி
மித்தமும், இயேசுகிறிஸ்துவைப்பற்றிய சாட்
சியினிமித்தமும், பத்மு என்னும் தீவிலே
இருந்தேன். கர்த்தருடைய [21]நாளில் [22]ஆவிக் 10
குள்ளானேன்; அப்பொழுது எனக்குப் பின்
னாலே எக்காள சத்தம்போன்ற பெரிதான
ஒரு சத்தத்தைக் கேட்டேன். அது: நான் 11
அல்பாவும் ஓமெகாவும், முந்தினவரும் பிந்
தினவருமாயிருக்கிறேன். நீ காண்கிறதை
ஒரு புஸ்தகத்தில் எழுதி, ஆசியாவிலிருக்கிற
[23]எபேசு, [24]சிமிர்னா, [25]பெர்கமு, [26]தியத்தீரா,
[27]சர்தை, [28]பிலதெல்பியா, [29]லவோதிக்கேயா
என்னும் பட்டணங்களிலுள்ள ஏழு சபை
களுக்கும் அனுப்பு என்று விளம்பினது. அப் 12
பொழுது என்னுடனே பேசின சத்தத்தைப்
*பார்க்கத் திரும்பினேன்; திரும்பினபோது,
[30]ஏழு பொன் குத்துவிளக்குகளையும், அந்த 13
ஏழுகுத்துவிளக்குகளின்மத்தியிலே,நிலையங்கி
தரித்து, மார்பருகே பொற்கச்சை கட்டியிருந்த
[31]மனுஷகுமாரனுக்கொப்பானவரையும் கண்
டேன். அவருடைய சிரசும் மயிரும் வெண் 14
பஞ்சைப் போலவும் உறைந்த மழையைப்
போலவும் வெண்மையாயிருந்தது; [32]அவரு
டைய கண்கள் அக்கினி ஜுவாலையைப்போ
லிருந்தது; அவருடைய [33]பாதங்கள் உலைக் 15
களத்தில் காய்ந்த பிரகாசமான வெண்கலம்
போலிருந்தது, அவருடைய [34]சத்தம் பெரு
வெள்ளத்து இரைச்சலைப்போலிருந்தது.
தமது வலதுகரத்திலே ஏழு நட்சத்திரங்களை 16
ஏந்திக்கொண்டிருந்தார்; [35]அவர் வாயிலிருந்து
இருபுறமும் கருக்குள்ள பட்டயம் புறப்பட்
டது; [36]அவருடைய முகம் வல்லமையாய்ப்
பிரகாசிக்கிற சூரியனைப்போலிருந்தது. நான் 17
அவரைக் கண்டபோது செத்தவனைப்போல
அவருடைய பாதத்தில் விழுந்தேன்; அப்பொ
ழுது அவர் தம்முடைய வலதுகரத்தை என்
மேல் வைத்து, என்னை நோக்கி: பயப்படா
தே, [37]நான் முந்தினவரும் பிந்தினவரும், உயி
ருள்ளவருமாயிருக்கிறேன்; மரித்தேன், ஆனா 18
லும், இதோ, [38]சதாகாலங்களிலும் உயிரோ
டிருக்கிறேன், ஆமென்; [39]நான் மரணத்திற்
கும் †பாதாளத்திற்குமுரிய திறவுகோல்களை

1 யோ. 3. 32: 8. 26
2 22. 16
3 1 கொ. 1. 6. 1 யோ. 1. 1
4 தா. 11. 28
5 ரோ. 13. 11. யாக். 5. 8, 9. 1 பே. 4. 7
6 11. வச
7 8. வச
8 3. 1: 4. 5
9 யோ. 8. 14
10 கொலோ. 1. 18
11 எபே. 1. 20
12 யோ. 13. 34. எபி. 9. 14. 1 யோ. 1. 7
13 யாத். 19. 6. 1 பே. 2. 5-9
14 எபி. 13. 21
15 தானி. 7. 13. மத். 26. 64
16 சகரி. 12. 10. யோ. 19. 37
17 மத். 24. 30
18 ஏசா. 9. 6: 41. 4
19 பிலி. 1. 7. 2 தீமோ. 1. 8
20 ரோ. 8. 17
21 யோ. 20. 26. அப். 20. 7. 1 கொ. 16. 2
22 2 கொ. 12. 2
23 2. 1
24 2. 8
25 2. 12
26 2. 18
27 3. 1
28 3. 7.
29 3. 14
* பற்றி
30 யாத். 25. 37. சகரி. 4. 2
31 எசே. 1. 26-28. தானி. 7. 9, 13: 10. 5, 6
32 2. 18: 19. 12
33 எசே. 1. 7
34 எசே. 43. 2
35 ஏசா. 49. 2. எபி. 4. 12
36 10. 1. அப். 26. 13
37 2. 8: 22. 13. ரோ. 6. 9
38 4. 9: 5. 14
39 20. 1, 2. சங். 68. 20
† மரித்தோர் ஸ்தலம்

19 உடையவரா யிருக்கிறேன். நீ கண்டவை
களையும், [1]இருக்கிறவைகளையும், இவைகளுக்
குப் பின்பு சம்பவிப்பவைகளையும் எழுது;
20 என் வலதுகரத்தில் நீ கண்ட [2]ஏழு நட்சத்
திரங்களின் இரகசியத்தையும், [3]ஏழு பொன்
குத்துவிளக்குகளின் இரகசியத்தையும் எழுது;
[4]அந்த ஏழு நட்சத்திரங்களும் ஏழு சபை
களின் தூதர்களாம்; [5]நீ கண்ட ஏழு குத்து
விளக்குகளும் ஏழு சபைகளாம்.

**2** எபேசு சபையின் தூதனுக்கு நீ எழுத
வேண்டியது என்னவெனில்:
[6]ஏழு நட்சத்திரங்களைத் தம்முடைய வலது
கரத்தில் ஏந்திக்கொண்டு, ஏழு பொன்குத்து
விளக்குகளின் மத்தியிலே உலாவிக்கொண்டி
2 ருக்கிறவர் சொல்லுகிறதாவது; உன் கிரியை
களையும், [7]உன் பிரயாசத்தையும், உன் பொ
றுமையையும், நீ பொல்லாதவர்களைச் சகிக்
கக் கூடாமலிருக்கிறதையும், அப்போஸ்தல
ரல்லாதவர்கள் தங்களை [8]அப்போஸ்தலரெ
ன்று சொல்லுகிறதை நீ சோதித்து [9]அவர்
களைப் பொய்யரென்று கண்டறிந்ததையும்;
3 நீ சகித்துக்கொண்டிருக்கிறதையும், பொறு
மையாயிருக்கிறதையும், என் நாமத்தினிமித்
தம் [10]இளைப்படையாமல் பிரயாசப்பட்டதை
4 யும் அறிந்திருக்கிறேன். ஆனாலும், நீ ஆதி
யில் கொண்டிருந்த அன்பை விட்டாய் என்று
5 உன்பேரில் எனக்குக் குறை உண்டு. ஆகை
யால், நீ இன்ன நிலைமையிலிருந்து விழுந்தா
யென்பதை நினைத்து, மனந்திரும்பி, ஆதி
யில் செய்த கிரியைகளைச் செய்வாயாக;[11]இல்
லாவிட்டால் நான் சீக்கிரமாய் உன்னிடத்
தில் வந்து, நீ மனந்திரும்பாத பட்சத்தில்,
உன் விளக்குத்தண்டை அதனிடத்தினின்று
6 நீக்கிவிடுவேன். நான் வெறுக்கிற [12]நிக்கொ
லாய் மதஸ்தரின் கிரியைகளை நீயும் வெறுக்
7 கிறாய், இது உன்னிடத்திலுண்டு. ஆவியா
னவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் [13]கா
துள்ளவன் கேட்கக்கடவன்; [14]ஜெயங்கொள்
ளுகிறவனெவனோ அவனுக்கு தேவனுடைய
*பரதீசின் மத்தியிலிருக்கிற ஜீவவிருட்சத்தின்
கனியைப் புசிக்கக் கொடுப்பேன் என்
றெழுது.
8 சிமிர்னா சபையின் தூதனுக்கு நீ எழுத
வேண்டியது என்னவெனில்:
[15]முந்தினவரும் பிந்தினவரும், மரித்திரு
ந்து பிழைத்தவருமானவர் சொல்லுகிறதா
9 வது; உன் கிரியைகளையும், உன் உபத்திர
வத்தையும், [16]நீ ஐசுவரியமுள்ளவனாயிருந்தும்
உனக்கிருக்கிற தரித்திரத்தையும், [17]தங்களை
யூதரென்று சொல்லியும் யூதராயிராமல் [18]சாத்
தானுடைய †கூட்டமாயிருக்கிறவர்கள் செய்
யும் தூஷணத்தையும் அறிந்திருக்கிறேன்.
10 நீ படப்போகிற பாடுகளைக்குறித்து [19]எவ்வள
வும் பயப்படாதே; இதோ, நீங்கள் சோதிக்
கப்படும் பொருட்டாகப் பிசாசானவன் உங்
களில் சிலரைக் காவலில் போடுவான், பத்து
நாள் உபத்திரவப்படுவீர்கள். [20]ஆகிலும் நீ
மரணபரியந்தம் உண்மையாயிரு, [21]அப்பொ
ழுது ஜீவகிரீடத்தை உனக்குத் தருவேன்.
ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிற 11
தைக் காதுள்ளவன் கேட்கக்கடவன்; ஜெயங்
கொள்ளுகிறவன் [22]இரண்டாம் மரணத்தினால்
சேதப்படுவதில்லை என்றெழுது.
பெர்கமு சபையின் தூதனுக்கு நீ எழுத 12
வேண்டியது என்னவெனில்:
[23]இருபுறமுங் கருக்குள்ள பட்டயத்தை
உடையவர் சொல்லுகிறதாவது; உன் கிரி 13
யைகளையும், [24]சாத்தானுடைய சிங்காசனமிருக்
கிற இடத்தில் நீ குடியிருக்கிறதையும், நீ என்
நாமத்தைப் பற்றிக்கொண்டிருக்கிறதையும்,
சாத்தான் குடிகொண்டிருக்கிற இடத்திலே
உங்களுக்குள்ளே எனக்கு உண்மையுள்ள
சாட்சியான அந்திப்பா என்பவன் கொல்லப்
பட்ட நாட்களிலும் [25]என்னைப் பற்றும் விசு
வாசத்தை நீ மறுதலியாமலிருந்ததையும் அறி
ந்திருக்கிறேன். ஆகிலும், சில காரியங்களைக் 14
குறித்து உன் பேரில் எனக்குக் குறை உண்டு;
[26]விக்கிரகங்களுக்குப்படைத்தவைகளைப்புசிப்
பதற்கும் [27]வேசித்தனம் பண்ணுவதற்கும் ஏது
வான இடறலை இஸ்ரவேல் புத்திரர் முன்
பாகப் போடும்படி [28]பாலாக் என்பவனுக்குப்
போதனை செய்த பிலேயாமுடைய போதகத்
தைக் கைக்கொள்ளுகிறவர்கள் உன்னிடத்தி
லுண்டு. அப்படியே நிக்கொலாய் மதஸ்த 15
ருடைய போதகத்தைக் கைக்கொள்ளுகிறவர்
களும் உன்னிடத்திலுண்டு; அதை நான் வெ
றுக்கிறேன். நீ மனந்திரும்பு, இல்லாவிட் 16
டால் நான் சீக்கிரமாய் உன்னிடத்தில்வந்து,
[29]என் வாயின் பட்டயத்தால் அவர்களோடே
யுத்தம்பண்ணுவேன். ஆவியானவர் சபை 17
களுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன்
கேட்கக்கடவன்; ஜெயங்கொள்ளுகிறவனுக்கு
நான் மறைவான [30]மன்னாவைப் புசிக்கக்கொடு
த்து, அவனுக்கு வெண்மையான குறிக்கல்லை
யும், [31]அந்தக் கல்லின்மேல் எழுதப்பட்டதும்
அதைப் பெறுகிறவனேயன்றி வேறொருவ
னும் அறியக்கூடாததுமாகிய [32]புதிய நாமத்
தையும் கொடுப்பேன் என்றெழுது.
தியத்தீரா சபையின் தூதனுக்கு நீ எழுத 18
வேண்டியது என்னவெனில்:
[33]அக்கினி ஜுவாலைபோன்ற கண்களும்,
பிரகாசமான வெண்கலம்போன்ற பாதங்களு
முள்ள தேவகுமாரன் சொல்லுகிறதாவது;
உன் கிரியைகளையும், [34]உன் அன்பையும், 19
உன் ஊழியத்தையும், உன் விசுவாசத்தையும்,
உன் பொறுமையையும், நீ முன்பு செய்த
கிரியைகளிலும் பின்பு செய்த கிரியைகள்
அதிகமாயிருக்கிறதையும் அறிந்திருக்கிறேன்.
ஆகிலும், உன்பேரில் எனக்குக் குறை உண்டு; 20
என்னவெனில், தன்னைத் தீர்க்கதரிசியென்று
சொல்லுகிற [35]யேசபேல் என்னும் ஸ்திரீயான
வள் என்னுடைய ஊழியக்காரர் வேசித்
தனம்பண்ணவும் [36]விக்கிரகங்களுக்குப் படை
த்தவைகளைப் புசிக்கவும் அவர்களுக்குப் போ

1 2. 1. ஏழு: 4. 1. ஏழு
2 16. வச
3 12. வச
4 மல். 2. 7. ஏழு
5 மத். 5. 15, 16
6 1. 16, 20
7 9, 13, 19. வச: 8. 1, 8, 15
8 1 யோ. 4. 1
9 2 கொ. 11. 13
10 கலா. 6. 9. எபி. 12. 3, 5
11 எரே. 2. 2, 3. மத். 21. 41, 43
12 15. வச
13 11, 17, 29. வச. மத். 11. 15
14 22. 2, 14. ஆதி. 2. 9
* பூங்காவனத்தில்
15 1. 8, 17
16 லூக். 12. 21. 1 தீமோ. 6. 18
17 ரோ. 2. 28, 29
18 3. 9
† ஆலயம்
19 மத். 10. 22
20 மத். 24. 13
21 யாக். 1. 12
22 20. 14
23 1. 16
24 2, 9. வச
25 2 தீமோ. 2. 12
26 அப். 15. 29
27 1 கொ. 6. 13, 18
28 எண். 31. 16. 2 பே. 2. 15
29 19. 15, 21. ஏசா. 11. 4. 2 தெச. 2. 8
30 சங். 25. 14
31 1 கொ. 2. 14
32 3. 12: 19. 12. ஏசா. 56. 4, 5: 65. 15
33 1. 14, 15
34 2. வச
35 1 இரா. 16. 31
36 யாத். 34. 15. அப். 15. 20, 29. 1. கொ. 10. 20, 28

தித்து, அவர்களை வஞ்சிக்கும்படி நீ அவளு
21 க்கு இடங்கொடுக்கிறாய். அவள் மனந்தி
ரும்பும்படியாய் [1]அவளுக்குத் தவணை கொடுத்
தேன். [2]தன் வேசிமார்க்கத்தைவிட்டு மனந்
22 திரும்ப அவளுக்கு விருப்பமில்லை. இதோ
நான் அவளைக் கட்டில் கிடையாக்கி, [3]அவ
ளுடனே விபசாரஞ்செய்தவர்கள் தங்களு
டைய கிரியைகளை விட்டு மனந்திரும்பாவிட்
டால் அவர்களையும் மிகுந்த உபத்திரவத்திலே
23 தள்ளி, அவளுடைய பிள்ளைகளையும் [4]கொ
ல்லவே கொல்லுவேன்; [5]அப்பொழுது நா
னே உள்ளிந்திரியங்களையும் இருதயங்களையும்
ஆராய்கிறவரென்று எல்லாச் சபைகளும் அறி
ந்துகொள்ளும்; [6]அன்றியும் உங்களில் ஒவ்வொ
ருவனுக்கும் உங்கள் கிரியைகளின்படியே பல
24 னளிப்பேன். தியத்தீராவிலே இந்தப் போத
கத்தைப் பற்றிக்கொள்ளாமலும், [7]சாத்தானு
டைய ஆழங்கள் என்று அவர்கள் சொல்லு
கிறார்களே, அந்த ஆழங்களை அறிந்துகொள்
ளாமலுமிருக்கிற மற்றவர்களாகிய உங்களுக்கு
நான் சொல்லுகிறதாவது; [8]உங்கள்மேல் வே
25 றொரு பாரத்தையும் சுமத்தமாட்டேன். உங்
களுக்குள்ளதை [9]நான் வருமளவும் பற்றிக்
26 கொண்டிருங்கள். ஜெயங்கொண்டு [10]முடிவு
பரியந்தம் என் கிரியைகளைக் கைக்கொள்ளு
கிறவனெவனோ அவனுக்கு, நான் என் பிதா
வினிடத்தில் அதிகாரம் பெற்றதுபோல,
[11]ஜாதிகள்மேல் அதிகாரம் கொடுப்பேன்.
27 அவன் இருப்புக்கோலால் [12]அவர்களை ஆளு
வான்; [13]அவர்கள் மண்பாண்டங்களைப்போல
28 நொறுக்கப்படுவார்கள். விடிவெள்ளி நட்சத்
29 திரத்தையும் [14]அவனுக்குக் கொடுப்பேன். ஆவி
யானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக்
காதுள்ளவன் கேட்கக்கடவன் என்றெழுது.

3 சர்தை சபையின் தூதனுக்கு நீ எழுதவே
ண்டியது என்னவெனில்:
[15]தேவனுடைய ஏழு ஆவிகளையும் ஏழு நட்
சத்திரங்களையும் உடையவர் சொல்லுகிறதா
வது; உன் கிரியைகளை அறிந்திருக்கிறேன், [16]நீ
உயிருள்ளவனென்று பெயர்கொண்டிருந்தும்
2 செத்தவனாயிருக்கிறாய். நீ விழித்துக்கொண்டு,
[17]சாகிறதற்கேதுவாயிருக்கிறவைகளை ஸ்திரப்
படுத்து; [18]உன் கிரியைகள் தேவனுக்குமுன்
நிறைவுள்ளவைகளாக நான் காணவில்லை.
3 ஆகையால் [19]நீ கேட்டுப் பெற்றுக்கொண்ட
வகையை நினைவுகூர்ந்து, அதைக் கைக்கொ
ண்டு [20]மனந்திரும்பு. நீ விழித்திராவிட்டால்,
[21]திருடனைப்போல் உன்மேல் வருவேன்; நான்
உன்மேல் வரும் வேளையை அறியாதிருப்பாய்.
4 ஆனாலும் தங்கள் வஸ்திரங்களை அசுசிப்படுத்
தாத சிலபேர் சர்தையிலும் உனக்குண்டு; [22]அ
வர்கள் பாத்திரவான்களானபடியால் வெண்
வஸ்திரந்தரித்து என்னோடேகூட நடப்பார்
5 கள். ஜெயங்கொள்ளுகிறவனெவனோ அவ
னுக்கு வெண்வஸ்திரம் தரிப்பிக்கப்படும்; [23]ஜீவ
புஸ்தகத்திலிருந்து அவனுடைய நாமத்தை
நான் கிறுக்கிப்போடாமல், என் பிதா முன்
பாகவும் அவருடைய தூதர் முன்பாகவும்
[24]அவன் நாமத்தை அறிக்கையிடுவேன். ஆவி 6
யானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் கா
துள்ளவன் கேட்கக்கடவன் என்றெழுது.
பிலதெல்பியா சபையின் தூதனுக்கு நீ எழு 7
தவேண்டியது என்னவெனில்:
[25]பரிசுத்தமுள்ளவரும் [26]சத்தியமுள்ளவரும்,
[27]தாவீதின் திறவுகோலை உடையவரும், ஒரு
வரும் பூட்டக்கூடாதபடிக்குத் திறக்கிறவரும்,
[28]ஒருவரும் திறக்கக்கூடாதபடிக்குப் பூட்டுகிற
வருமாயிருக்கிறவர் சொல்லுகிறதாவது; உன் 8
கிரியைகளை அறிந்திருக்கிறேன்; உனக்குக்
கொஞ்சம் பெலன் இருந்தும், நீ என் நாமத்
தை மறுதலியாமல், என் வசனத்தைக் கைக்
கொண்டபடியினாலே, இதோ, [29]திறந்த வா
சலை உனக்கு முன்பாக வைத்திருக்கிறேன்,
அதை ஒருவனும் பூட்டமாட்டான். இதோ, 9
[30]யூதரல்லாதிருந்தும் தங்களை யூதரென்று
பொய்சொல்லுகிறவர்களாகிய சாத்தானுடைய
*கூட்டத்தாரில் சிலரை உனக்குக் கொடுப்
பேன்; இதோ, [31]அவர்கள் உன் பாதங்களுக்கு
முன்பாக வந்து பணிந்து, நான் உன்மேல்
அன்பாயிருக்கிறதை அறிந்துகொள்ளும்படி
செய்வேன். என் பொறுமையைக்குறித்துச் 10
சொல்லிய வசனத்தை நீ காத்துக்கொண்ட
படியினால், [32]பூமியில் குடியிருக்கிறவர்களைச்
சோதிக்கும்படியாகப் பூச்சக்கரத்தின்மேலெங்
கும் வரப்போகிற சோதனை காலத்திற்குத் தப்
பும்படி நானும் உன்னைக் காப்பேன். இதோ, 11
[33]சீக்கிரமாய் வருகிறேன்; ஒருவனும் உன்
கிரீடத்தைஎடுத்துக்கொள்ளாதபடிக்கு [34]உனக்
குள்ளதைப்பற்றிக்கொண்டிரு. ஜெயங்கொள் 12
ளுகிறவனெவனோ அவனை என் தேவனு
டைய ஆலயத்திலே [35]தூணாக்குவேன், அதி
னின்று அவன் ஒருக்காலும் நீங்குவதில்லை;
என் தேவனுடைய நாமத்தையும் என் தேவ
னால் பரலோகத்திலிருந்திறங்கிவருகிற [36]புதிய
எருசலேமாகிய என் தேவனுடைய நகரத்தின்
நாமத்தையும், என் புதிய நாமத்தையும் அவன்
மேல் எழுதுவேன். ஆவியானவர் சபைக 13
ளுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்
கக்கடவன் என்றெழுது.
லவோதிக்கேயா சபையின் தூதனுக்கு நீ 14
எழுதவேண்டியது என்னவெனில்:
உண்மையும் †சத்தியமுமுள்ள சாட்சியும்,
[37]தேவனுடைய சிருஷ்டிக்கு ஆதியுமாயிருக்
கிற [38]ஆமென் என்பவர் சொல்லுகிறதாவது;
உன் கிரியைகளை அறிந்திருக்கிறேன்; [39]நீ 15
குளிருமல்ல அனலுமல்ல; நீ குளிராயாவது
அனலாயாவது இருந்தால் நலமாயிருக்கும்.
இப்படி நீ குளிருமின்றி அனலுமின்றி வெது 16
வெதுப்பாயிருக்கிறபடியினால் உன்னை என்
வாயினின்று வாந்திபண்ணிப் போடுவேன்.
நீ நிர்ப்பாக்கியமுள்ளவனும், பரிதபிக்கப்படத் 17
தக்கவனும், தரித்திரனும், குருடனும், நிர்வா
ணியுமாயிருக்கிறதை அறியாமல், [40]நான் ஐசு
வரியவானென்றும், திரவியசம்பன்னனென்

1 ரோ. 2. 4. 2 பே. 3. 9
2 9. 20
3 எசே. 16. 37: 23. 29
4 6. 8
5 1 நாளா. 28. 9. 2 நாளா. 6. 30, 31. சங். 7. 9. எரே 17. 10. செப் 1. 11 அப். 1. 24
6 சங். 62. 12. மத். 16. 27
7 2 தெச. 2. 9–12.
8 அப். 15. 29
9 3. 11
10 யோ. 6. 29. யாக். 2. 20
11 மத். 19. 28
12 சங். 49. 14 149. 5–9
13 சங். 2. 9
14 22. 16. 2 பே. 1. 19
15 5. 6
16 1 தெச. 5. 6
17 2. 5
18 தானி. 5. 27
19 எபே. 2. 1
20 19. வச
21 16. 15. மத். 24. 42, 43
22 7. 9: 19. 8
23 17. 8. பிலி. 4. 3
24 லூ. 12. 8
25 அப். 3. 14
26 யோ. 5. 20
27 ஏசா. 22. 22. லூ. 1. 32
28 யோபு 12. 14. மத். 16. 19
29 1 கொ. 16. 9. 2 கொ. 2. 12
30 2. 9
* ஆலயம்
31 ஏசா. 60. 14
32 2 பே. 2. 9
33 செப். 1. 14
34 பிலி. 4. 5
35 கலா. 2. 9
36 21. 2, 10
† விசுவாசமும் யோ. 20. 27
37 கொலோ. 1. 15
38 ஏசா. 65. 16
39 1 ரா. 1 இரா. 18. 21
40 ஓசி. 12. 8. 1 கொ. 4. 8

றும், எனக்கு ஒரு குறைவுமில்லையென்றும்
18 சொல்லுகிறபடியால்; நான்: [1]நீ ஐசுவரிய
வானாகும்படிக்கு நெருப்பிலே புடமிடப்பட்ட
பொன்னையும், உன் நிர்வாணமாகிய அவலட்
சணம் தோன்றாதபடிக்கு நீ உடுத்திக்கொள்வ
தற்கு வெண்வஸ்திரங்களையும் என்னிடத்தி
லே [2]வாங்கிக்கொள்ளவும், நீ பார்வையடை
யும்படிக்கு உன் கண்களுக்குக் கலிக்கம்போ
டவும் வேண்டுமென்று உனக்கு ஆலோசனை
19 சொல்லுகிறேன். நான் [3]நேசிக்கிறவர்களெ
வர்களோ அவர்களைக் கடிந்துகொண்டு சிட்சிக்
கிறேன்; ஆகையால் நீ *ஜாக்கிரதையாயிரு
20 ந்து, மனந்திரும்பு. இதோ, [4]வாசற்படியி
லே நின்று தட்டுகிறேன், [5]ஒருவன் என் சத்
தத்தைக் கேட்டு, கதவைத் திறந்தால், அவனி
டத்தில் நான் பிரவேசித்து, அவனோடே போ
ஜனம்பண்ணுவேன், அவனும் என்னோடே
21 போஜனம்பண்ணுவான். நான் ஜெயங்கொ
ண்டு என் பிதாவினுடைய சிங்காசனத்திலே
அவரோடேகூட உட்கார்ந்ததுபோல, [6]ஜெயங்
கொள்ளுகிறவனெவனோ அவனும் என்னு
டைய சிங்காசனத்தில் என்னோடேகூட உட்
22 காரும்படிக்கு அருள்செய்வேன். ஆவியான
வர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் [7]காதுள்
ளவன் கேட்கக்கடவன் என்றெழுது என்றார்.

**4** இவைகளுக்குப் பின்பு, இதோ, பரலோ
கத்தில் திறக்கப்பட்டிருந்த ஒரு வாசலைக் கண்
டேன். [8]முன்னே எக்காள சத்தம்போல என்
னுடனே பேச நான் கேட்டிருந்த சத்தமா
னது: [9]இங்கே ஏறிவா, [10]இவைகளுக்குப்பின்பு
சம்பவிக்கவேண்டியவைகளை உனக்குக் காண்
2 பிப்பேன் என்று விளம்பினது. உடனே
[11]ஆவிக்குள்ளானேன்; அப்பொழுது, இதோ,
[12]வானத்தில் ஒரு சிங்காசனம் வைக்கப்பட்டி
ருந்தது; [13]அந்தச் சிங்காசனத்தின்மேல் ஒரு
3 வர் வீற்றிருந்தார். வீற்றிருந்தவர், பார்வைக்கு
வச்சிரக்கல்லுக்கும் பதுமராகத்துக்கும் ஒப்பா
யிருந்தார்; அந்தச் சிங்காசனத்தைச் சுற்றி ஒரு
வானவில்லிருந்தது, அது பார்வைக்கு மரகதம்
4 போல் தோன்றிற்று. அந்தச் சிங்காசனத்தைச்
சூழ இருபத்துநான்கு சிங்காசனங்களிருந்தன;
[14]இருபத்துநான்கு மூப்பர்கள் வெண் வஸ்தி
ரந்தரித்து, [15]தங்கள் சிரசுகளில் பொன்முடி
சூடி, அந்தச் சிங்காசனங்களின்மேல் உட்கார்ந்
5 திருக்கக் கண்டேன். அந்தச் சிங்காசனத்திலி
ருந்து [16]மின்னல்களும் இடிமுழக்கங்களும்
சத்தங்களும் புறப்பட்டன; தேவனுடைய ஏழு
ஆவிகளாகிய [17]ஏழு அக்கினிதீபங்கள் சிங்காச
னத்திற்கு முன்பாக எரிந்துகொண்டிருந்தன.
6 அந்தச் சிங்காசனத்திற்கு முன்பாகப் பளிங்குக்
கொப்பான [18]கண்ணாடிக் கடலிருந்தது; அந்
தச் சிங்காசனத்தின் மத்தியிலும் அந்தச் சிங்காச
னத்தைச் சுற்றிலும் [19]நான்கு ஜீவன்களிருந்த
ன, அவைகள் முன்புறத்திலும் பின்புறத்திலும்
7 கண்களால் நிறைந்திருந்தன. முதலாம் ஜீவன்
சிங்கத்திற்கொப்பாகவும், இரண்டாம் ஜீவன்
காளைக்கொப்பாகவும், மூன்றாம் ஜீவன் மனுஷ
முகம்போன்ற முகமுள்ளதாகவும், நான்காம்
ஜீவன் பறக்கிற கழுகுக்கு ஒப்பாகவுமிருந்தன.
அந்த நான்கு ஜீவன்களிலும் ஒவ்வொன்று 8
[20]அவ்வாறு சிறகுகளுள்ளவைகளும், சுற்றி
லும் உள்ளேயும் கண்களால் நிறைந்தவைகளு
மாயிருந்தன. அவைகள்: இருந்தவரும் இருக்
கிறவரும் வருகிறவருமாகிய சர்வவல்லமை
யுள்ள தேவனாகிய கர்த்தர் பரிசுத்தர் பரிசுத்தர்
பரிசுத்தர் என்று இரவும் பகலும் ஓய்வில்லா
மல் சொல்லிக்கொண்டிருந்தன. மேலும், 9
சிங்காசனத்தின்மேல் வீற்றிருந்து, [21]சதாகா
லங்களிலும் உயிரோடிருக்கிறவருக்கு அந்த
ஜீவன்கள், மகிமையையும் கனத்தையும்
ஸ்தோத்திரத்தையும் செலுத்தும்போது, இரு 10
பத்துநான்கு மூப்பர்களும் சிங்காசனத்தின்
மேல் வீற்றிருக்கிறவருக்கு முன்பாக வணக்க
மாய் விழுந்து, [22]சதாகாலங்களிலும் உயிரோ
டிருக்கிறவரைத் தொழுதுகொண்டு, [23]தங்கள்
கிரீடங்களைச் சிங்காசனத்திற்கு முன்பாக
வைத்து: கர்த்தாவே, தேவரீர், [24]மகிமையை 11
யும் கனத்தையும் வல்லமையையும் பெற்றுக்
கொள்ளுகிறதற்குப் பாத்திரராயிருக்கிறீர்; [25]நீ
ரே சகலத்தையும் சிருஷ்டித்தீர், உம்முடைய
சித்தத்தினாலே அவைகள் உண்டாயிருக்கிற
வைகளும் சிருஷ்டிக்கப் பட்டவைகளுமாயி
ருக்கிறது என்றார்கள்.

அன்றியும், உள்ளும் புறம்பும் எழுதப்பட்டு **5**
ஏழு முத்திரைகளால் முத்திரிக்கப்பட்டிருந்த
ஒரு [26]புஸ்தகத்தைச் சிங்காசனத்தின்மேல் வீற்
றிருக்கிறவருடைய வலதுகரத்திலே கண்
டேன். புஸ்தகத்தைத் திறக்கவும் அதின் முத் 2
திரைகளை உடைக்கவும் பாத்திரவான் யார்
என்று மிகுந்த சத்தமிட்டுக் கூறுகிற பலமுள்ள
ஒரு தூதனையுங் கண்டேன். வானத்திலா 3
வது, பூமியிலாவது, பூமியின்கீழாவது, ஒரு
வனும் அந்தப் புஸ்தகத்தைத் திறக்கவும்,
அதைப் பார்க்கவும் கூடாதிருந்தது. ஒருவ 4
னும் அந்தப் புஸ்தகத்தைத் திறந்து வாசிக்க
வும் அதைப் பார்க்கவும் பாத்திரவானாகக் கா
ணப்படாததினால் நான் மிகவும் அழுதேன்.
அப்பொழுது மூப்பர்களில் ஒருவன் என்னை 5
நோக்கி: நீ அழவேண்டாம்; இதோ, [27]யூதா
கோத்திரத்துச்சிங்கமும் [28]தாவீதின் வேருமான
வர் புஸ்தகத்தைத் திறக்கவும் அதின் ஏழு
முத்திரைகளையும் உடைக்கவும் ஜெயங்கொண்
டிருக்கிறார் என்றான். அப்பொழுது, இதோ, 6
[29]அடிக்கப்பட்ட வண்ணமாயிருக்கிற ஒரு ஆட்
டுக்குட்டி சிங்காசனத்திற்கும், நான்கு ஜீவன்
களுக்கும், மூப்பர்களுக்கும் மத்தியிலே நிற்கக்
கண்டேன்; அது ஏழு கொம்புகளையும் ஏழு
கண்களையும் உடையதாயிருந்தது; அந்தக் கண்
கள் பூமியெங்கும் அனுப்பப்படுகிற தேவனு
டைய [30]ஏழு ஆவிகளேயாம். அந்த ஆட்டுக் 7
குட்டியானவர் வந்து, சிங்காசனத்தின்மேல்
உட்கார்ந்தவருடைய வலதுகரத்திலிருந்த புஸ்
தகத்தை வாங்கினார். அந்தப் புஸ்தகத்தை 8
அவர் வாங்கினபோது, [31]அந்த நான்கு ஜீவன்

1 16. 15. 2 கொ. 5. 3
2 ஏசா. 55. 1. மத். 13. 44: 25. 9
3 எபி. 12. 5, 6. யாக். 1. 12
* வைராக்கியம் = பக்தி
4 உன்னத. 5. 2. லூ. 12. 36
5 யோ. 14. 23
6 லூ. 22. 30. 1 கொ. 6. 2
7 2. 7
8 1. 10
9 11. 12
10 1. 19: 22. 6
11 17. 3: 21. 10. எசே. 3. 12–14
12 ஏசா. 6. 1. எரே. 17. 12. எசே. 1. 26, 28
13 தானி. 7. 9. எபி. 8. 1
14 11. 16
15 10. வச
16 8. 5: 16. 18
17 1. 4: ஆதி. 15. 17. யாத். 37. 23. சகரி. 4. 2
18 15. 2
19 எசே. 1. 5. ழ: 10. 14
20 ஏசா. 6. 2. ழ
21 5. 14
22 5. 8, 14
23 4. வச
24 5. 12
25 கொலோ. 1. 16
26 ஏசா. 29. 11. எசே. 2. 9, 10
27 ஆதி. 49. 9, 10. எண். 24. 9. எபி. 7. 14
28 22. 16. ஏசா. 11. 1, 10. ரோ. 15. 12
29 ஏசா. 53. 7. யோ. 1. 29, 36. 1 பே. 1. 19
30 சகரி. 4. 10
31 4. 4, 8, 10

களும், இருபத்துநான்கு மூப்பர்களும் தங்கள்
தங்கள் [1]சுரமண்டலங்களையும், [2]பரிசுத்தவான்
களுடைய ஜெபங்களாகிய தூபவர்க்கத்தால்
நிறைந்த பொற்கலசங்களையும் பிடித்துக்கொ
ண்டு, ஆட்டுக்குட்டியானவருக்கு முன்பாக
9 வணக்கமாய் விழுந்து: தேவரீர் புஸ்தகத்தை
வாங்கவும் அதின் முத்திரைகளை உடைக்கவும்
பாத்திரராயிருக்கிறீர்; ஏனெனில் நீர் அடிக்
கப்பட்டு, [3]சகல கோத்திரங்களிலும் பாஷைக்
காரரிலும் ஜனங்களிலும் ஜாதிகளிலுமிருந்து
எங்களை தேவனுக்கென்று உம்முடைய இரத்
10 தத்தினாலே மீட்டுக்கொண்டு, எங்கள் தேவ
னுக்கு முன்பாக [4]எங்களை ராஜாக்களும் ஆசா
ரியர்களுமாக்கினீர்; நாங்கள் பூமியிலே அர
சாளுவோம் என்று [5]புதியபாட்டைப் பாடி
11 னார்கள். பின்னும் நான் பார்த்தபோது, சிங்
காசனத்தையும் ஜீவன்களையும் மூப்பர்களையும்
சூழ்ந்திருந்த அநேக தூதர்களுடைய சத்தத்
தைக் கேட்டேன்; [6]அவர்களுடைய இலக்கம்
பதினாயிரம் பதினாயிரமாகவும், ஆயிரமாயிரமா
12 கவுமிருந்தது. அவர்களும் மகா சத்தமிட்டு:
[7]அடிக்கப்பட்ட ஆட்டுக்குட்டியானவர் வல்ல
மையையும் ஐசுவரியத்தையும் ஞானத்தையும்
பெலத்தையும் கனத்தையும் மகிமையையும்
ஸ்தோத்திரத்தையும் பெற்றுக்கொள்ளப் பாத்
13 திரராயிருக்கிறார் என்று சொன்னார்கள். அப்
பொழுது, [8]வானத்திலும் பூமியிலும் பூமியின்
கீழுமிருக்கிற சிருஷ்டிகள் யாவும் சமுத்திரத்
திலுள்ளவைகளும், அவற்றுளடங்கிய வஸ்
துக்கள் யாவும்: [9]சிங்காசனத்தின்மேல் வீற்றி
ருக்கிறவருக்கும் ஆட்டுக்குட்டியானவருக்கும்
ஸ்தோத்திரமும் கனமும் மகிமையும் வல்ல
மையும் சதாகாலங்களிலும் உண்டாவதாக
14 என்றுசொல்லக்கேட்டேன். அதற்கு நான்கு
ஜீவன்களும்: [10]ஆமென் என்று சொல்லின.
இருபத்துநான்கு மூப்பர்களும் வணக்கமாய்
விழுந்து சதாகாலங்களிலும் உயிரோடிருக்கிற
வரைத் தொழுதுகொண்டார்கள்.

6 ஆட்டுக்குட்டியானவர் முத்திரைகளில் ஒன்
றை உடைக்கக் கண்டேன். [11]அப்பொழுது
நான்கு ஜீவன்களில் ஒன்று என்னை நோக்கி:
நீ வந்துபார் என்று இடிமுழக்கம்போன்ற
2 சத்தமாய்ச் சொல்லக்கேட்டேன். நான் பார்
த்தபோது, இதோ, [12]ஒரு வெள்ளைக் குதிரை
யைக் கண்டேன்; அதின்மேல் ஏறியிருந்தவன்
வில்லைப் பிடித்திருந்தான்; அவனுக்கு ஒரு
கிரீடங் கொடுக்கப்பட்டது; [13]அவன் ஜெயிக்
கிறவனாகவும் ஜெயிப்பவனாகவும் புறப்பட்
டான்.
3 அவர் இரண்டாம் முத்திரையை உடைத்த
போது, இரண்டாம் ஜீவனானது: நீ வந்துபார்
4 என்று சொல்லக்கேட்டேன். அப்பொழுது
சிவப்பான வேறொரு குதிரை புறப்பட்டது;
அதின்மேல் ஏறியிருந்தவனுக்கு, பூமியிலுள்ள
வர்கள் ஒருவரையொருவர் கொலைசெய்யத்
தக்கதாகச் சமாதானத்தைப் பூமியிலிருந்தெ
டுத்துப்போடும்படியான அதிகாரம் கொடுக்
கப்பட்டது; ஒரு பெரிய பட்டயமும் அவனுக்
குக் கொடுக்கப்பட்டது.
அவர் மூன்றாம் முத்திரையை உடைத்த 5
போது, மூன்றாம் ஜீவனானது: நீ வந்துபார்
என்று சொல்லக் கேட்டேன். நான் பார்த்த
போது, இதோ, ஒரு கறுப்புக் குதிரையைக்
கண்டேன்; அதின்மேல் ஏறியிருந்தவன் ஒரு
தராசைத் தன் கையிலே பிடித்திருந்தான்.
அப்பொழுது, ஒரு பணத்துக்கு ஒரு படி கோ 6
துமையென்றும், ஒரு பணத்துக்கு மூன்று படி
வாற்கோதுமையென்றும், [14]எண்ணெயையும்
திராட்சரசத்தையும் சேதப்படுத்தாதே என்
றும், நான்கு ஜீவன்களின் மத்தியிலிருந்து
உண்டான சத்தத்தைக் கேட்டேன்.
அவர் நாலாம் முத்திரையை உடைத்தபோ 7
து, நாலாம் ஜீவனானது: நீ வந்துபார் என்று
சொல்லுஞ் சத்தத்தைக் கேட்டேன். நான் 8
பார்த்தபோது, இதோ, மங்கின நிறமுள்ள
ஒரு குதிரையைக் கண்டேன்; அதின்மேல்
ஏறியிருந்தவனுக்கு மரணம் என்று பெயர்;
பாதாளம் அவன் பின்சென்றது. பட்டயத்தி
னாலும், பஞ்சத்தினாலும், சாவினாலும், [15]பூமி
யின் துஷ்டமிருகங்களினாலும், பூமியின் கால்
பங்கிலுள்ளவர்களைக் கொலைசெய்யும்படியான
அதிகாரம் அவைகளுக்குக் கொடுக்கப்பட்டது.
அவர் ஐந்தாம் முத்திரையை உடைத்தபோ 9
து, [16]தேவவசனத்தினிமித்தமும் தாங்கள் கொ
டுத்த சாட்சியினிமித்தமும் [17]கொல்லப்பட்ட
வர்களுடைய ஆத்துமாக்களைப் [18]பலிபீடத்தின்
கீழே கண்டேன். அவர்கள்: பரிசுத்தமும் 10
சத்தியமுமுள்ள ஆண்டவரே, தேவரீர் பூமி
யின்மேல் குடியிருக்கிறவர்களிடத்தில் எங்கள்
இரத்தத்தைக்குறித்து [19]எதுவரைக்கும் நியாயத்
தீர்ப்புச் செய்யாமலும் பழிவாங்காமலும் இருப்
பீர் என்று மகா சத்தமிட்டுக் கூப்பிட்டார்கள்.
அப்பொழுது அவர்கள் ஒவ்வொருவருக்கும் 11
[20]வெள்ளை அங்கிகள் கொடுக்கப்பட்டது; அன்
றியும், அவர்கள் தங்களைப்போலக் கொலை
செய்யப்படப் போகிறவர்களாகிய தங்கள்
உடன்பணிவிடைக்காரரும் தங்கள் சகோதர
ருமானவர்களின் தொகை நிறைவாகுமளவும்
[21]இன்னுங் கொஞ்சக்காலம் இளைப்பாறவேண்
டும் என்று அவர்களுக்குச் சொல்லப்பட்டது.
அவர் ஆறாம் முத்திரையை உடைக்கக் கண் 12
டேன்; இதோ, [22]பூமி மிகவும் அதிர்ந்தது; [23]சூரி
யன் கறுப்புக் கம்பளியைப்போலக் கறுத்தது;
சந்திரன் இரத்தம்போலாயிற்று. அத்திமர 13
மானது பெருங்காற்றினால் அசைக்கப்படும்
போது அதின் காய்கள் உதிருகிறதுபோல,
[24]வானத்தின் நட்சத்திரங்களும் பூமியிலே
விழுந்தது. வானமும் சுருட்டப்பட்ட [25]புஸ் 14
தகம்போலாகி விலகிப்போயிற்று; [26]மலைகள்
தீவுகள் யாவும் தங்கள் இடங்களை விட்டு அகன்
றுபோயின. பூமியின் ராஜாக்களும், பெரி 15
யோர்களும், ஐசுவரியவான்களும், சேனைத்
தலைவர்களும், பலவான்களும், அடிமைகள்
யாவரும், சுயாதீனர் யாவரும், [27]பர்வதங்களின்

1 15. 2
2 8. 3, 4 சங். 141. 2
3 அப். 20. 28. எபே. 1. 7. எபி. 9. 12. 1 பே. 1. 18, 19
4 1. 6: 22. 5. 1 பே. 2. 5, 9
5 14. 3
6 தானி. 7. 10. எபி. 12. 22
7 4. 11
8 பிலி. 2. 10
9 1 நாளா. 29. 11. 1 தீமோ. 6. 16. 1 பே. 4. 11
10 19. 4
11 5. 5
12 சகரி. 6. 3. ஜீ
13 சங். 45. 3-5
14 9. 4
15 எசே. 14. 21
16 1. 9: 12. 17
17 20. 4
18 8. 3
19 11. 18. உபா. 32. 41-43. சகரி. 1. 12
20 7. 9, 14
21 14. 13. எபி. 11. 40
22 16. 18
23 யோவேல் 2. 10, 31: 3. 15
24 8. 10
25 சங். 102. 26. ஏசா. 34. 4
26 16. 20. எரே. 4. 23, 24. ஆப. 3. 6, 10
27 ஏசா. 2. 19

குகைகளிலும் கல்மலைகளிலும் ஒளித்துக்கொ
16 ண்டு, பர்வதங்களையும் கல்மலைகளையும் நோ
க்கி: [1]நீங்கள் எங்கள்மேல் விழுந்து, சிங்கா
சனத்தின்மேல் வீற்றிருக்கிறவருடைய முகத்
திற்கும், ஆட்டுக்குட்டியானவருடையகோபத்
திற்கும் எங்களை மறைத்துக்கொள்ளுங்கள்;
17 அவருடைய கோபாக்கினையின் மகா நாள்
[2]வந்துவிட்டது, [3]யார் நிலைநிற்கக் கூடும் என்
றார்கள்.

7 இவைகளுக்குப்பின்பு, பூமியின் நான்கு
திசைகளிலும் நான்கு தூதர்கள் நின்று, பூமி
யின்மேலாவது, சமுத்திரத்தின்மேலாவது,
ஒரு மரத்தின்மேலாவது, காற்று அடியாதபடி
க்கு, [4]பூமியின் நான்கு காற்றுகளையும் பிடித்
2 திருக்கக் கண்டேன். ஜீவனுள்ள தேவனு
டைய [5]முத்திரைக்கோலையுடைய வேறொரு
தூதன் சூரியன் உதிக்குந் திசையிலிருந்து
ஏறிவரக்கண்டேன்; அவன், பூமியையும்சமுத்
திரத்தையும் சேதப்படுத்துகிறதற்கு அதிகாரம்
பெற்ற அந்த நான்கு தூதரையும் நோக்கி:
3 நாம் நமது தேவனுடைய ஊழியக்காரரின்
நெற்றிகளில் முத்திரைபோட்டுத் தீருமளவும்
[6]பூமியையும் சமுத்திரத்தையும் மரங்களையும்
சேதப்படுத்தாதிருங்கள் என்று மகா சத்தமிட்
4 டுக் கூப்பிட்டான். முத்திரை போடப்பட்ட
வர்களின் தொகையைச் சொல்லக் கேட்
டேன்; இஸ்ரவேல் புத்திரருடைய சகலகோத்
திரங்களிலும் முத்திரை போடப்பட்டவர்கள்
5 [7]இலட்சத்து நாற்பத்து நாலாயிரம்பேர். யூதா
கோத்திரத்தில் முத்திரை போடப்பட்டவர்கள்
பன்னீராயிரம். ரூபன் கோத்திரத்தில் முத்தி
ரைபோடப்பட்டவர்கள் பன்னீராயிரம். காத்
கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள்
6 பன்னீராயிரம். ஆசேர் கோத்திரத்தில் முத்தி
ரை போடப்பட்டவர்கள் பன்னீராயிரம். நப்
தலி கோத்திரத்தில் முத்திரை போடப்பட்ட
வர்கள் பன்னீராயிரம். மனாசே கோத்திரத்தில்
முத்திரை போடப்பட்டவர்கள் பன்னீராயிரம்.
7 சிமியோன் கோத்திரத்தில் முத்திரை போடப்
பட்டவர்கள் பன்னீராயிரம். லேவி கோத்திரத்
தில் முத்திரை போடப்பட்டவர்கள் பன்னீ
ராயிரம். இசக்கார் கோத்திரத்தில் முத்திரை
8 போடப்பட்டவர்கள் பன்னீராயிரம். செபு
லோன் கோத்திரத்தில் முத்திரை போடப்
பட்டவர்கள் பன்னீராயிரம். யோசேப்பு
கோத்திரத்தில் முத்திரை போடப்பட்டவர்
கள் பன்னீராயிரம். பென்யமீன் கோத்தி
ரத்தில் முத்திரை போடப்பட்டவர்கள் பன்னீ
ராயிரம்.

9 இவைகளுக்குப் பின்பு, நான் பார்த்தபோ
து, இதோ, [8]சகல ஜாதிகளிலும் கோத்திரங்
களிலும் ஜனங்களிலும் பாஷைக்காரரிலு
மிருந்து வந்ததும், ஒருவனும் எண்ணக்கூடா
ததுமான திரளான கூட்டமாகிய ஜனங்கள்,
[9]வெள்ளை அங்கிகளைத் தரித்து, [10]தங்கள் கைக
ளில் குருத்தோலைகளைப் பிடித்து, சிங்காசன
த்திற்கு முன்பாகவும் ஆட்டுக்குட்டியானவ
ருக்கு முன்பாகவும் நிற்கக் கண்டேன்.
அவர்கள் மகா சத்தமிட்டு: [11]இரட்சிப்பின் 10
*மகிமை சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கிற
எங்கள் தேவனுக்கும் ஆட்டுக்குட்டியானவ
ருக்கும் உண்டாவதாக என்று [12]ஆர்ப்பரித்தார்
கள். தூதர்கள் யாவரும் [13]சிங்காசனத்தையும் 11
மூப்பர்களையும் நான்கு ஜீவன்களையும் சூழ
நின்று, சிங்காசனத்திற்கு முன்பாக முகங்குப்
புற விழுந்து, தேவனைத் தொழுதுகொண்டு:
ஆமென், [14]எங்கள்தேவனுக்குத்துதியும்மகிமை 12
யும் ஞானமும் ஸ்தோத்திரமும் கனமும் வல்ல
மையும் பெலனும் சதாகாலங்களிலும் உண்டா
வதாக; ஆமென், என்றார்கள். அப்பொழுது, 13
மூப்பர்களில் ஒருவன் என்னைநோக்கி: [15]வெள்
ளை அங்கிகளைத் தரித்திருக்கிற இவர்கள் யார்?
எங்கேயிருந்து வந்தார்கள்? என்று கேட்டான்.
அதற்கு நான்: ஆண்டவனே, அது உமக்கே 14
தெரியும் என்றேன். அப்பொழுது அவன்:
[16]இவர்கள் மிகுந்த உபத்திரவத்திலிருந்து வந்த
வர்கள்; [17]இவர்கள் தங்கள் அங்கிகளை ஆட்
டுக்குட்டியானவருடைய இரத்தத்திலே தோ
ய்த்து [18]வெளுத்தவர்கள். ஆனபடியால், இவர் 15
கள் தேவனுடைய சிங்காசனத்திற்கு முன்பாக
இருந்து, இரவும் பகலும் அவருடைய ஆலயத்
திலே அவரைச் சேவிக்கிறார்கள்; [19]சிங்காசனத்
தின்மேல் வீற்றிருக்கிறவர் இவர்களுக்குள்ளே
வாசமாயிருப்பார். இவர்கள் இனி [20]பசியடை 16
வதுமில்லை, இனி தாகமடைவதுமில்லை; வெயி
லாவது உஷ்ணமாவது இவர்கள்மேல் படுவது
மில்லை. சிங்காசனத்தின் மத்தியிலிருக்கிற 17
[21]ஆட்டுக்குட்டியானவரே இவர்களை மேய்த்து,
இவர்களை ஜீவத்தண்ணீருள்ள ஊற்றுக
ளண்டைக்கு நடத்துவார்; [22]தேவன்தாமே
இவர்களுடைய கண்ணீர் யாவையும் துடைப்
பார் என்றான்.

அவர் ஏழாம் முத்திரையை [23]உடைத்த 8
போது, பரலோகத்தில் ஏறக்குறைய அரை
மணி நேரமளவும் அமைதல் உண்டாயிற்று.
பின்பு, தேவனுக்கு முன்பாக நிற்கிற [24]ஏழு 2
தூதர்களையுங் கண்டேன்; [25]அவர்களுக்கு ஏழு
எக்காளங்கள் கொடுக்கப்பட்டது.

வேறொரு தூதனும் வந்து, தூபங்காட்டும் 3
பொற்கலசத்தைப் பிடித்துப் பலிபீடத்தின்
படியிலே நின்றான்; [26]சிங்காசனத்திற்கு முன்
பாக இருந்த பொற்பீடத்தின்மேல் சகல பரி
சுத்தவான்களுடைய ஜெபங்களோடும் செலுத்
தும்படி மிகுந்த தூபவர்க்கம் அவனுக்குக்
கொடுக்கப்பட்டது. அப்படியே பரிசுத்த 4
வான்களுடைய ஜெபங்களோடும் செலுத்தப்
பட்ட தூபவர்க்கத்தின் [27]புகையானது தூத
னுடைய கையிலிருந்து தேவனுக்கு முன்
பாக எழும்பிற்று. பின்பு, அந்தத் தூதன் 5
தூபகலசத்தை எடுத்து, அதைப் பலிபீடத்து
நெருப்பினால் நிரப்பி, பூமியிலே கொட்டி
னான்; உடனே [28]சத்தங்களும் இடிமுழக்கங்
களும், மின்னல்களும், [29]பூமியதிர்ச்சியும்
உண்டாயின.

[1] 9. 6 ஓசி. 10. 8. லூ. 23. 30
[2] 16. 14 செப். 1. 14. 6. யோ. செப். 1. 14. யூ.
[3] சங். 76. 7
[4] 9. 4 தானி. 7. 2
[5] 2 தீமோ. 2. 19
[6] 6. 6: 9. 4: 14. 1; 22. 4. விசே. 9. 4
[7] 9. 16: 14. 1
[8] 5. 9. ரோ. 11. 25
[9] 6. 11
[10] 8. 3
[11] 19. 1 ஏசா. 43. 11
* இரட்சிப்பின்பொருட்டு மகிமை உண்டாவதாக
[12] சகரி. 4. 7
[13] 4. 6
[14] 5. 13, 14. யூதா 25. வச
[15] 9. வச
[16] 6. 9. ரோ. 16. 33
[17] 1 யோ. 6. 11. எபி. 9. 14
[18] 1. 6. 1 யோ. 1. 7
[19] 21. 3, 4
[20] 21. 3, 4. ஏசா. 49. 10
[21] சங். 23. 1–6: 36. 8. ஏசா. 40. 11. யோ. 10. 11, 14
[22] 21. 4. ஏசா. 25. 8
[23] 5. 1
[24] லூ. 1. 19
[25] 2 நாளா. 29. 25–28
[26] 5. 8: 6. 9
[27] யாத். 30. 1. லூ. 1. 10
[28] 16. 18
[29] 2 சாமு. 22. 8. அப். 4. 31

6 அப்பொழுது, ஏழு எக்காளங்களை உடைய
ஏழு தூதர்கள் எக்காளமூதுகிறதற்குத் தங்களை
ஆயத்தப்படுத்தினார்கள்.
7 முதலாம் தூதன் எக்காளமூதினான்; அப்
பொழுது இரத்தங்கலந்த [1]கல்மழையும் அக்
கினியும் உண்டாகி, பூமியிலே கொட்டப்
பட்டது; அதினால் [2]மரங்களில் மூன்றிலொரு
பங்கு வெந்துபோயிற்று, பசும்புல்லெல்லாம்
எரிந்துபோயிற்று.
8 இரண்டாம் தூதன் எக்காள மூதினான்;
அப்பொழுது அக்கினியால் எரிகிற பெரிய
[3]மலைபோன்றதொன்று சமுத்திரத்திலே போ
டப்பட்டது; [4]அதினால் சமுத்திரத்தில் மூன்
9 றிலொருபங்கு இரத்தமாயிற்று. சமுத்திரத்
திலிருந்த ஜீவனுள்ள சிருஷ்டிகளில் [5]மூன்றி
லொருபங்கு செத்துப்போயிற்று; கப்பல்
களில் மூன்றிலொருபங்கு சேதமாயிற்று.
10 மூன்றாம் தூதன் எக்காளமூதினான்; [6]அப்
பொழுது ஒரு பெரிய நட்சத்திரம் தீவட்டி
யைப்போல எரிந்து, வானத்திலிருந்து விழுந்
தது; அது ஆறுகளில் மூன்றிலொருபங்கின்
மேலும், நீரூற்றுகளின்மேலும் விழுந்தது.
11 அந்த நட்சத்திரத்திற்கு [7]எட்டியென்று பெ
யர்; [8]அதினால் தண்ணீரில் மூன்றிலொரு
பங்கு எட்டியைப்போலக் கசப்பாயிற்று; இப்
படிக் கசப்பான தண்ணீரினால் மனுஷரில்
அநேகர் செத்தார்கள்.
12 நான்காம் தூதன் எக்காளமூதினான்; [9]அப்
பொழுது சூரியனில் மூன்றிலொரு பங்கும்
சந்திரனில் மூன்றிலொரு பங்கும், நட்சத்
திரங்களில் மூன்றிலொரு பங்கும் சேதப்பட்
டது, அவற்றவற்றில் மூன்றிலொரு பங்கு
இருளடைந்தது; பகலிலும் மூன்றிலொரு
பங்கு பிரகாசமில்லாமற் போயிற்று, இரவி
லும் அப்படியேயாயிற்று.
13 பின்பு, ஒரு தூதன் வானத்தின் மத்தியிலே
பறந்துவரக் கண்டேன்; அவன் மகா சத்த
மிட்டு: [10]இனி எக்காளமூதப்போகிற மற்ற
மூன்று தூதருடைய எக்காள சத்தங்களினால்
பூமியில் குடியிருக்கிறவர்களுக்கு ஐயோ,
ஐயோ, ஐயோ, (ஆபத்து வரும்) என்று சொல்
லக்கேட்டேன்.

9 ஐந்தாம் தூதன் எக்காளமூதினான்; [11]அப்
பொழுது வானத்திலிருந்து பூமியின்மேல்
விழுந்த ஒரு நட்சத்திரத்தைக் கண்டேன்;
[12]அவனுக்குப் பாதாளக்குழியின் திறவுகோல்
2 கொடுக்கப்பட்டது. அவன் பாதாளக்குழி
யைத் திறந்தான்; உடனே பெருஞ்சூளையின்
புகையைப்போல அந்தக் குழியிலிருந்து புகை
எழும்பிற்று; [13]அந்தக் குழியின் புகையினால்
சூரியனும் ஆகாயமும் அந்தகாரப்பட்டது.
3 அந்தப் புகையிலிருந்து [14]வெட்டுக்கிளிகள்
புறப்பட்டுப் பூமியின்மேல் வந்தது; அவைக
ளுக்குப்பூமியிலுள்ள[15]தேள்களின்வல்லமைக்
கொப்பான வல்லமை கொடுக்கப்பட்டது.
4 பூமியின் புல்லையும் பசுமையான எந்தப் பூண்
டையும் எந்த மரத்தையும் சேதப்படுத்தாமல்,
[16]தங்கள் நெற்றிகளில் தேவனுடைய முத்தி
ரையைத் தரித்திராத மனுஷரைமாத்திரம்
சேதப்படுத்த அவைகளுக்கு உத்தரவு கொடுக்
கப்பட்டது. மேலும் அவர்களைக் கொலை 5
செய்யும்படிக்கு அவைகளுக்கு உத்தரவு கொ
டுக்கப்படாமல், [17]ஐந்துமாதமளவும் அவர்களை
வேதனைப்படுத்தும்படிக்கு உத்தரவு கொடுக்
கப்பட்டது; அவைகள் செய்யும் வேதனை
தேளானது மனுஷரைக்கொட்டும்போது உண்
டாகும் வேதனையைப்போலிருக்கும். அந் 6
நாட்களில் மனுஷர்கள் சாவைத் தேடியும்
அதைக் காணாதிருப்பார்கள், [18]சாகவேண்டு
மென்று ஆசைப்படுவார்கள், சாவோ அவர்க
ளுக்கு விலகி ஓடிப்போம். அந்த வெட்டுக் 7
கிளிகளின் உருவம் யுத்தத்திற்கு ஆயத்தம்
பண்ணப்பட்ட [19]குதிரைகளுக்கு ஒப்பாயிருந்
தது; அவைகளுடைய தலைகளின்மேல் பொன்
மயமான கிரீடம்போன்றவைக ளிருந்தன;
அவைகளின் முகங்கள் [20]மனுஷருடைய முகங்
கள்போலிருந்தன. அவைகளுடைய கூந்தல் 8
ஸ்திரீகளுடைய கூந்தல்போலிருந்தது, [21]அ
வைகளின் பற்கள் சிங்கங்களின் பற்கள்போலி
ருந்தன. இருப்புக் கவசங்களைப்போல மார்க் 9
கவசங்கள் அவைகளுக்கு இருந்தன; அவை
களுடைய சிறகுகளின் இரைச்சல் யுத்தத்
திற்கு ஓடுகிற அநேகங் குதிரைகள் பூண்ட
[22]இரதங்களின் இரைச்சலுக்கு ஒப்பாயிருந்
தன. அவைகள் தேள்களின் வால்களுக்கு 10
ஒப்பான வால்களையும், அந்த வால்களில்
கொடுக்குகளையும் உடையவைகளா யிருந்
தன, அவைகள் ஐந்து மாதமளவும் மனுஷ
ரைச் சேதப்படுத்துவதற்கு அதிகாரம் உடை
யவைகளா யிருந்தன. அவைகளுக்கு ஒரு 11
ராஜன் உண்டு, [23]அவன் பாதாளத்தின் தூதன்;
எபிரெயு பாஷையிலே *அபெத்தோன் என்
றும், கிரேக்கு பாஷையிலே †அப்பொல்லி
யோன் என்றும் அவனுக்குப் பெயர்.
முதலாம் ஆபத்து ‡கடந்து போயிற்று; 12
இவைகளுக்குப் பின்பு இன்னும் இரண்டு
ஆபத்துகள், இதோ, வருகிறது.
ஆறாம் தூதன் எக்காளமூதினான்; அப்பொ 13
ழுது தேவனுக்கு முன்பாக இருந்த பொ
ற்பீடத்தின் நான்கு கொம்புகளிலுமிருந்து
ஒரு சத்தந்தோன்றி, எக்காளத்தைப் பிடித் 14
திருந்த ஆறாம் தூதனை நோக்கி: [24]ஐபிராத்
தென்னும் பெரிய நதியண்டையிலே கட்டப்
பட்டிருக்கிற நான்கு தூதர்களையும் அவிழ்த்து
விடு என்று சொல்லக்கேட்டேன். அப்பொ 15
ழுது மனுஷரில் [25]மூன்றிலொருபங்கைக்
கொல்லும்படிக்கு ஒருமணி நேரத்திற்கும்,
ஒரு நாளுக்கும், ஒரு மாதத்திற்கும், ஒரு வரு
ஷத்திற்கும் ஆயத்தமாக்கப்பட்டிருந்த அந்த
நான்கு தூதர்களும் அவிழ்த்து விடப்பட்டார்
கள். குதிரைச் சேனைகளாகிய ராணுவங்க 16
ளின் தொகை [26]இருபதுகோடியாயிருந்தது;
அவைகளின் தொகையைச் சொல்லக்கேட்
டேன். குதிரைகளையும் அவைகளின்மேல் 17

1 எசே. 38. 22
2 ஏசா. 2. 13
3 எரே. 51. 25. ஆமோ. 7. 4
4 16. 3. யாத். 7. 19-21
5 16. 3
6 9. 1. ஏசா. 14. 12
7 உபா. 29. 18. ஆமோ. 5. 7. எபி. 12. 15
8 யாத். 15. 23. எரே. 9. 15; 23. 15
9 ஏசா. 13. 10. எரே. 4. 23. எசே. 32. 7, 8. யோவே. 2. 10, ஆமோ. 8. 9
10 14. 6; 19. 17
11 8. 10. லூ. 10. 18
12 17. 8; 20. 1
13 யோவே. 2. 2
14 யாத். 10. 4. [illegible]
15 10. [illegible]
16 6. 6
17 10. [illegible] 11. 7
18 யோபு 3. 21. எரே. 8. 3
19 யோவே. 2. 4
20 தானி. 7. 4, 8
21 சங். 57. 4. யோவே. 1. 6
22 நாகூ. 2. 4
23 எபே. 2. 2
* சங்காரன்
† சங்காரக்காரன்
‡ ஐயோ.
24 16. 12. ஆதி. 2. 14. எரே. 51. 63
25 8. 7 9
26 7. 4. சங். 68. 17. எசே. 38. 4. தானி. 11. 40

எறியிருந்தவர்களையும் நான் தரிசனத்தில் கண்
டவிதமாவது; அவர்கள் அக்கினிநிறமும் நீல
நிறமும் கந்தகநிறமுமான மார்க்கவசங்களை
யுடையவர்களா யிருந்தார்கள்; [1]குதிரைகளு
டைய தலைகள் சிங்கங்களின் தலைகளைப்போ
லிருந்தன; அவைகளுடைய வாய்களிலிருந்து
அக்கினியும் புகையும் கந்தகமும் புறப்பட்
18 டன. அவைகளுடைய வாய்களிலிருந்து
புறப்பட்ட அக்கினி புகை கந்தகம் என்னும்
இம்மூன்றினாலும் மனுஷரில் மூன்றிலொரு
19 பங்கு கொல்லப்பட்டார்கள். அந்தக்குதிரை
களின் வல்லமை அவைகளுடைய வாயிலே
யும் வால்களிலேயும் இருக்கிறது; [2]அவைகளு
டைய வால்கள் பாம்புகளுக்கு ஒப்பானவைக
ளாயும், தலைகளுள்ளவைகளாயு மிருக்கிறது,
20 அவைகளாலே சேதப்படுத்துகிறது. அப்படி
யிருந்தும், அந்த வாதைகளால் கொல்லப்
படாத மற்ற மனுஷர்கள் [3]பேய்களையும், பொ
ன் வெள்ளி செம்பு கல் மரம் என்பவைகளால்
செய்யப்பட்டவைகளாயும் காணவும் கேட்க
வும் நடக்கவுமாட்டாதவைகளாயு மிருக்கிற
[4]விக்கிரகங்களையும் வணங்காதபடிக்குத் தங்
கள் கைகளின் கிரியைகளை விட்டு[5]மனந்திரும்
21 பவுமில்லை; தங்கள் கொலைபாதகங்களையும்,
தங்கள் [6]சூனியங்களையும், தங்கள் வேசித்தனங்
களையும், தங்கள் களவுகளையும் விட்டு மனந்
திரும்பவுமில்லை.

10 பின்பு, பலமுள்ள வேறொரு தூதன் வா
னத்திலிருந்து இறங்கிவரக் கண்டேன்; மே
கம் அவனைச் சூழ்ந்திருந்தது, [7]அவனுடைய
சிரசின்மேல் வானவில் இருந்தது, அவனு
டைய முகம் சூரியனைப்போலவும், [8]அவனு
டைய கால்கள் அக்கினி ஸ்தம்பங்களைப்போ
2 லவும் இருந்தது. திறக்கப்பட்ட ஒரு சிறு
புஸ்தகம் அவன் கையில் இருந்தது; [9]தன்
வலது பாதத்தைச் சமுத்திரத்தின்மேலும்,
தன் இடது பாதத்தைப் பூமியின்மேலும்
3 வைத்து, சிங்கம் கெர்ச்சிக்கிறதுபோல மகா
சத்தமாய் ஆர்ப்பரித்தான்; அவன் ஆர்ப்பரித்த
போது [10]ஏழு இடிகளும் சத்தமிட்டு முழங்
4 கின. அவ்வேழு இடிகளும் தங்கள் சத்தங்
களை முழங்கினபோது, நான் எழுதவேண்டு
மென் றிருந்தேன். அப்பொழுது: [11]ஏழு
இடிமுழக்கங்கள் சொன்னவைகளை நீ எழு
தாமல் முத்திரைபோடு என்று வானத்திலிரு
ந்து ஒரு சத்தம் உண்டாகக் கேட்டேன்.
5 சமுத்திரத்தின்மேலும் பூமியின்மேலும் நிற்
கிறதாக நான் கண்ட தூதன், தன் கையை வா
6 னத்திற்கு நேராக உயர்த்தி: இனி [12]காலம்
செல்லாது; ஆனாலும் தேவன் தம்முடைய
ஊழியக்காரராகிய தீர்க்கதரிசிகளுக்குச் சுவி
சேஷமாய் அறிவித்தபடி, [13]ஏழாம் தூதனு
டைய சத்தத்தின் நாட்களிலே அவன் எக்கா
ளம் ஊதப்போகிறபோது [14]தேவ ரகசியம்
7 நிறைவேறும் என்று, வானத்தையும் அதி
லுள்ளவைகளையும், பூமியையும் அதிலுள்ள
வைகளையும், சமுத்திரத்தையும் அதிலுள்ள
வைகளையும் சிருஷ்டித்தவரும், [15]சதாகாலங்
களிலும் உயிரோடிருக்கிறவருமானவர்மேல்
ஆணையிட்டுச் சொன்னான். நான் வானத்தி 8
லிருந்து பிறக்கக்கேட்ட [16]சத்தம் மறுபடியும்
என்னுடனே பேசி: சமுத்திரத்தின்மேலும்
பூமியின்மேலும் நிற்கிற தூதனுடைய கையி
லிருக்கும் திறக்கப்பட்ட சிறு புஸ்தகத்தை
நீ போய் வாங்கிக்கொள் என்று சொல்ல,
நான் தூதனிடத்தில் போய்: அந்தச் சிறு புஸ் 9
தகத்தை எனக்குத் தாரும் என்றேன். அத
ற்கு அவன்: [17]நீ இதை வாங்கிப் புசி; இது
உன் வயிற்றுக்குக் கசப்பாயிருக்கும், ஆகிலும்
உன் வாய்க்கு இது தேனைப்போல மதுரமா
யிருக்கும் என்றான். நான் அந்தச் சிறு புஸ்த 10
கத்தைத் தூதனுடைய கையிலிருந்து வாங்கி,
அதைப் புசித்தேன்; என் வாய்க்கு அது தே
னைப்போல மதுரமாயிருந்தது; நான் அதைப்
புசித்தவுடனே என் வயிறு கசப்பாயிற்று.

அப்பொழுது அவன் என்னை நோக்கி: நீ 11
மறுபடியும் அநேக ஜனங்களையும், ஜாதிகளை
யும், பாஷைக்காரரையும், ராஜாக்களையுங்
குறித்துத் தீர்க்கதரிசனம் சொல்லவேண்டும்
என்றான்.

பின்பு கைக்கோலுக்கு ஒப்பான ஒரு 11
[18]அளவுகோல் என்னிடத்தில் கொடுக்கப்பட்
டது. அப்பொழுதுதேவதூதன் நின்று,என்னை
நோக்கி: நீ எழுந்து, தேவனுடைய ஆலயத்
தையும், பலிபீடத்தையும், அதில் தொழுது
கொள்ளுகிறவர்களையும் அளந்துபார். ஆல 2
யத்திற்குப் புறம்பே இருக்கிற [19]பிராகாரம்
புறஜாதியாருக்குக் கொடுக்கப்பட்டபடியால்
அதை அளவாமல் புறம்பாக்கிப்போடு; [20]பரி
சுத்த நகரத்தை அவர்கள் நாற்பத்திரண்டு மாத
மளவும் மிதிப்பார்கள். என்னுடைய இர 3
ண்டு சாட்சிகளும் [21]இரட்டுவஸ்திரம் உடுத்திக்
கொண்டிருக்கிறவர்களாய், [22]ஆயிரத்திருநூற்
றுபதுநாளளவும் தீர்க்கதரிசனஞ்சொல்லும்படி
[23]அவர்களுக்கு அதிகாரம் கொடுப்பேன்.
பூலோகத்தின் ஆண்டவருக்கு முன்பாக நிற் 4
கிற இரண்டு [24]ஒலிவமரங்களும் இரண்டு
விளக்குத்தண்டுகளும் இவர்களே. ஒருவன் 5
அவர்களைச் சேதப்படுத்த மனதாயிருந்தால்,
[25]அவர்களுடைய வாயிலிருந்து அக்கினி புறப்
பட்டு, அவர்களுடைய சத்துருக்களைப் பட்
சிக்கும்; அவர்களைச் சேதப்படுத்த மனதாயிரு
க்கிறவன் எவனோ [26]அவன் அப்படியே கொல்
லப்படவேண்டும். அவர்கள் தீர்க்கதரிசனஞ் 6
சொல்லிவருகிற நாட்களிலே மழை பெய்யா
தபடிக்கு வானத்தை அடைக்க [27]அவர்களுக்கு
அதிகாரமுண்டு; அவர்கள் தண்ணீர்களை இரத்
தமாக மாற்றவும், தங்களுக்கு வேண்டும்போ
தெல்லாம் பூமியைச் சகலவித வாதைகளா
லும் வாதிக்கவும் [28]அவர்களுக்கு அதிகாரமு
ண்டு. அவர்கள் தங்கள் சாட்சியைச் சொல்லி 7
முடித்திருக்கும்போது, [29]பாதாளத்திலிருந்தே
றுகிற மிருகம் அவர்களோடே [30]யுத்தம்பண்
ணி, அவர்களை ஜெயித்து, அவர்களைக் கொன்

1 1 நாளா. 12. 8. ஏசா. 5. 28, 29
2 ஏசா. 9. 15. எபே. 4. 14
3 லேவி. 17. 7. 1 கொ. 10. 20
4 சங். 135. 15. ஏசா. 40. 19, 20
5 எரே. 5. 3: 8. 6
6 22. 15
7 எசே. 1. 28
8 1. 15, 16. மத். 17. 2
9 மத். 28. 18
10 8. 5: 14. 2
11 யாத். 6. 8 உபா. 32. 40
12 16. 17. தானி. 12. 7
13 11. 15
14 ரோ. 11. 25. எபே. 3. 5-9
15 14. 7. நெகே. 9. 6
16 4. க
17 எசே. 3. 1-3, 14
18 21. 15. சகரி. 2. 1
19 எசே. 40. 17-20. லூ. 21. 24
20 13. 5. தானி. 7. 25
21 ஏசா. 22. 12
22 19. 10: 20. 4
23 மத். 18. 16
24 எரே. 11. 16. சகரி. 4. 3, 11, 14
25 சங். 18. 8
26 எண். 16. 35. ஓசி. 6. 5
27 1 இரா. 17. 1. யாக். 5. 16, 17.
28 யாத். 7. 19
29 17. 8. [illegible] 13. 32
30 தானி. 7. 21. சகரி. 14. 2. ஷ

8 றுபோடும். அவர்களுடைய உடல்கள் [1]மகா
நகரத்தின் விசாலமான வீதியிலே கிடக்கும்.
அந்த நகரம் [2]சோதோம் என்றும் [3]எகிப்து
என்றும் ஞானார்த்தமாய்ச் சொல்லப்படும்;
அதிலே நம்முடைய கர்த்தரும் சிலுவையிலே
9 அறையப்பட்டார். ஜனங்களிலும், கோத்தி
ரங்களிலும், பாஷைக்காரரிலும், ஜாதிகளிலு
முள்ளவர்கள் அவர்களுடைய உடல்களை மூன்
றரைநாள் வரைக்கும் பார்ப்பார்கள், [4]அவர்க
ளுடைய உடல்களைக் கல்லறைகளில் வைக்க
10 வொட்டார்கள். அவ்விரண்டு தீர்க்கதரிசிக
ளும் பூமியின் குடிகளை வேதனைப்படுத்தின
படியால் [5]அவர்கள்நிமித்தம் பூமியில் குடி
யிருக்கிறவர்கள் சந்தோஷப்பட்டுக் களிகூர்
ந்து, ஒருவருக்கொருவர் வெகுமதிகளை அனுப்
11 புவார்கள். மூன்றரைநாளைக்குப்பின்பு தேவ
னிடத்திலிருந்து [6]ஜீவஆவி அவர்களுக்குள்
பிரவேசித்தது, அப்பொழுது அவர்கள் கா
லூன்றி நின்றார்கள்; அவர்களைப் பார்த்தவர்க
12 ளுக்கு மிகுந்த பயமுண்டாயிற்று. இங்கே
ஏறிவாருங்கள் என்று வானத்திலிருந்து தங்
களுக்கு உண்டான பெரிய சத்தத்தை அவர்
கள் கேட்டு, [7]மேகத்தில் ஏறி வானத்திற்குப்
போனார்கள்; [8]அவர்களுடைய சத்துருக்கள்
13 அவர்களைப் பார்த்தார்கள். அந்நேரத்திலே
பூமி மிகவும் அதிர்ந்தது, [9]உடனே அந்த நகரத்
தில் பத்திலொருபங்கு இடிந்து விழுந்தது;
மனுஷரில் ஏழாயிரம்பேர் பூமியதிர்ச்சியினால்
அழிந்தார்கள்; மீதியானவர்கள் பயமடைந்து
[10]பரலோகத்தின் தேவனை மகிமைப்படுத்தி
னார்கள்.
14 இரண்டாம் ஆபத்து கடந்துபோயிற்று;
[11]இதோ, மூன்றாம் ஆபத்து சீக்கிரமாய் வரு
கிறது.
15 ஏழாம் தூதன் எக்காளமூதினான்; [12]அப்
பொழுது உலகத்தின் ராஜ்யங்கள் நம்முடைய
கர்த்தருக்கும், அவருடைய கிறிஸ்துவுக்குமு
ரிய ராஜ்யங்களாயின; அவர் சதாகாலங்களி
லும் ராஜ்யபாரம் பண்ணுவார் என்னும் கெம்
16 பீர சத்தங்கள் வானத்தில் உண்டாயின. அப்
பொழுது தேவனுக்குமுன்பாகத் தங்கள் சிங்
காசனங்கள்மேல் உட்கார்ந்திருந்த [13]இருபத்து
நான்கு மூப்பர்களும் முகங்குப்புற விழுந்து:
17 இருக்கிறவரும் இருந்தவரும் வருகிறவருமா
கிய சர்வ வல்லமையுள்ள கர்த்தராகிய தேவ
னே, உம்மை ஸ்தோத்திரிக்கிறோம்; [14]தேவரீர்
உமது மகா வல்லமையைக்கொண்டு ராஜ்யபா
18 ரம் பண்ணுகிறீர். ஜாதிகள் கோபித்தார்கள்,
[15]அப்பொழுது உம்முடைய கோபம் மூண்
டது; [16]மரித்தோர் நியாயத்தீர்ப்படைகிறதற்
கும், தீர்க்கதரிசிகளாகிய உம்முடைய ஊழி
யக்காரருக்கும் பரிசுத்தவான்களுக்கும் உமது
நாமத்தின்மேல் பயபக்தியாயிருந்த சிறியோர்
பெரியோருக்கும் [17]பலனளிக்கிறதற்கும், பூமி
யைக் கெடுத்தவர்களைக் கெடுக்கிறதற்கும்,
காலம் வந்தது என்று சொல்லி, தேவனைத்
தொழுதுகொண்டார்கள்.

அப்பொழுது பரலோகத்தில் [18]தேவனு 19
டைய ஆலயம் திறக்கப்பட்டது, அவருடைய
ஆலயத்திலே அவருடைய உடன்படிக்கை
யின் பெட்டி காணப்பட்டது; [19]அப்பொழுது
மின்னல்களும், சத்தங்களும், இடிமுழக்கங்
களும், பூமியதிர்ச்சியும், பெருங் கல்மழையும்
உண்டாயின.

அன்றியும் ஒரு பெரிய அடையாளம் **12**
வானத்திலே காணப்பட்டது; [20]ஒரு ஸ்திரீ
சூரியனை அணிந்திருந்தாள், அவள் பாதங்க
ளின் கீழே சந்திரனும், அவள் சிரசின்மேல்
பன்னிரண்டு நட்சத்திரங்களுள்ள கிரீடமும்
இருந்தன. அவள் கர்ப்பவதியாயிருந்து, பிர 2
சவவேதனையடைந்து, பிள்ளைபெறும்படி
வருத்தப்பட்டு அலறினாள். அப்பொழுது 3
வேறொரு அடையாளம் வானத்திலே காணப்
பட்டது; ஏழு தலைகளையும், பத்துக் கொம்பு
களையும், தன் தலைகளின்மேல் ஏழு முடிகளை
யுமுடைய சிவப்பான பெரிய [21]வலுசர்ப்ப
மிருந்தது. அதின் வால் வானத்தின் நட்சத் 4
திரங்களில் [22]மூன்றிலொரு பங்கை இழுத்து,
அவைகளைப் பூமியில் விழத்தள்ளிற்று; பிர
சவவேதனைப்படுகிற அந்த ஸ்திரீ பிள்ளை
பெற்றவுடனே, அவளுடைய பிள்ளையைப்
பட்சித்துப்போடும்படிக்கு அந்த வலுசர்ப்
பம் அவளுக்கு முன்பாக நின்றது. சகல 5
ஜாதிகளையும் இருப்புக்கோலால் ஆளுகை
செய்யும் [23]ஆண்பிள்ளையை அவள் பெற்றாள்;
அவளுடைய பிள்ளை தேவனிடத்திற்கும்
அவருடைய சிங்காசனத்தினிடத்திற்கும்
எடுத்துக்கொள்ளப்பட்டது. ஸ்திரீயானவள் 6
வனாந்தரத்திற்கு ஓடிப்போனாள்; [24]அங்கே
ஆயிரத்திருநூற்றறுபது நாளளவும் அவளைப்
போஷிப்பதற்காக தேவனால் ஆயத்தமாக்கப்
பட்ட இடம் அவளுக்கு உண்டாயிருந்தது.
வானத்திலே யுத்தமுண்டாயிற்று; மிகாவே 7
லும் அவனைச் சேர்ந்த தூதர்களும் [25]வலுசர்ப்
பத்தோடே யுத்தம்பண்ணினார்கள்; வலுசர்ப்
பமும் அதைச் சேர்ந்த தூதரும் யுத்தம்பண்
ணியும் ஜெயங்கொள்ளவில்லை. வானத்தில் 8
அவர்கள் இருந்த இடமும் காணப்படாமற்
போயிற்று. உலகமனைத்தையும் மோசம்போக் 9
குகிற [26]பிசாசு என்றும் [27]சாத்தான் என்றும்
சொல்லப்பட்ட [28]பழைய பாம்பாகிய பெரிய
வலுசர்ப்பம் தள்ளப்பட்டது; அது பூமியிலே
விழத் தள்ளப்பட்டது, அதனோடேகூட
அதைச்சேர்ந்த தூதரும் தள்ளப்பட்டார்கள்.
அப்பொழுது வானத்திலே ஒரு பெரிய சத்த 10
முண்டாகி: [29]இப்பொழுது இரட்சிப்பும் வல்
லமையும் நமது தேவனுடைய ராஜ்யமும், அவ
ருடைய கிறிஸ்துவின் அதிகாரமும் உண்டா
யிருக்கிறது; இரவும் பகலும் நம்முடைய தே
வனுக்கு முன்பாக நம்முடைய சகோதரர்
மேல் குற்றஞ் சுமத்தும்பொருட்டு அவர்கள்
மேல் குற்றஞ் சாட்டுகிறவன் தாழத் தள்ளப்
பட்டுப்போனான். மரணம் நேரிடுகிறதாயிருந் 11
தாலும் [30]அதற்குத் தப்பும்படி தங்கள் ஜீவனை

1 எபி. 13. 12
2 ஏசா. 1. 10
3 யாத். 20. 2
4 17. 15. சங். 79. 3
5 12. 12: 13. 13
6 எசே. 37. 5-14
7 12. 5. 1 தெச. 4. 17
8 சங். 96. 11. ஏசா. 49. 13. அப். 1. 9
9 16. 19
10 14. 7. ஏசா. 26. 15, 16
11 8. 13
12 10. 7. தானி. 2. 44: 7. 14, 18, 27
13 4. 4
14 16. 5: 19. 6
15 2. 9. ஏசா. 6. 10
16 எபி. 9. 27
17 22. 12
18 15. 5, 8
19 8. 5: 16. 21
20 சங். 84. 11. ஏசா. 54. 6. மல். 4. 2
21 9. ஏசா. 17. 3, 9, 10
22 ஏசா. 9. 15
23 சங். 2. 9. ஏசா. 7. 14
24 11. 3
25 20. 2
26 யோ. 8. 44: 12. 31
27 யூ. 10. 18
28 ஆதி. 3. 1, 4
29 11. 15
30 லூ. 14. 26

யும் பாராமல், ஆட்டுக்குட்டியின் இரத்தத்தி
ஞலும் தங்கள் சாட்சியின் வசனத்திஞலும்
12 அவனை [1]ஜெயித்தார்கள். ஆகையால் பரலோ
கங்களே! அவைகளில் வாசமாயிருக்கிறவர்
களே! [2]களிகூருங்கள். பூமியிலும் சமுத்தி
ரத்திலும் குடியிருக்கிறவர்களே! ஐயோ, [3]பி
சாசானவன் தனக்குக் கொஞ்சக்காலமாத்தி
ரம் உண்டென்று அறிந்து, மிகுந்த கோபங்
கொண்டு, உங்களிடத்தில்இறங்கினபடியால்,
உங்களுக்கு ஆபத்து வரும் என்று சொல்லக்
கேட்டேன்.
13 வலுசர்ப்பமானது தான் பூமியிலே தள்ளப்
பட்டதை அறிந்து, அந்த ஆண்பிள்ளையைப்
14 பெற்ற ஸ்திரீயைத் துன்பப்படுத்தினது. ஸ்தி
ரீயானவள் அந்தப் பாம்பின் முகத்திற்கு
விலகி, ஒரு காலமும், காலங்களும், அரைக்
காலமுமாகப் போஷிக்கப்படத் தக்கதாய்
வனாந்தரத்திலுள்ள தன் இடத்திற்குப் பறந்து
போகும்படி [4]பெருங்கழுகின் இரண்டு சிறகு
15 கள் அவளுக்குக் கொடுக்கப்பட்டது. அப்
பொழுது அந்த ஸ்திரீயை வெள்ளங்கொண்டு
போகும்படிக்குப் பாம்பானது தன் வாயிலிரு
ந்து [5]ஒரு நதிபோன்ற வெள்ளத்தை அவளுக்
16 குப் பின்ஞக ஊற்றிவிட்டது. பூமியானது
ஸ்திரீக்கு உதவியாகத் தன் வாயைத் திறந்து,
வலுசர்ப்பம் தன் வாயிலிருந்து ஊற்றின
17 வெள்ளத்தை விழுங்கினது. அப்பொழுது
வலுசர்ப்பமானது [6]ஸ்திரீயின்மேல் கோபங்
கொண்டு, தேவனுடைய கற்பனைகளைக் கைக்
கொள்ளுகிறவர்களும், இயேசுகிறிஸ்துவைக்
குறித்துச் சாட்சியை உடையவர்களுமாகிய
அவளுடைய சந்ததியான மற்றவர்களுடனே
யுத்தம்பண்ணப்போயிற்று.

13 பின்பு நான் கடற்கரை மணலின்மேல்
நின்றேன். அப்பொழுது சமுத்திரத்திலி
ருந்து ஒரு [7]மிருகம் எழும்பிவரக் கண்டேன்;
அதற்கு ஏழு தலைகளும் பத்துக் கொம்புகளும்
இருந்தன; அதின் கொம்புகளின்மேல் பத்து
முடிகளும், அதின் தலைகளின்மேல் தூஷண
2 மான நாமமும் இருந்தன. நான் கண்ட மிரு
கம் [8]சிறுத்தையைப்போலிருந்தது; அதின்
கால்கள் கரடியின் கால்களைப்போலவும்,
அதின் வாய் சிங்கத்தின் வாயைப்போலவும்
இருந்தன; [9]வலுசர்ப்பமானது தன் பலத்தை
யும் தன் சிங்காசனத்தையும் மிகுந்த அதிகா
3 ரத்தையும் அதற்குக் கொடுத்தது. அதின்
தலைகளிலொன்று சாவுக்கேதுவாய்க் காயப்
பட்டிருக்கக் கண்டேன்; [10]ஆனாலும் சாவுக்கே
துவான அந்தக்காயம் சொஸ்தமாக்கப்பட்டது.
பூமியிலுள்ள யாவரும் ஆச்சரியத்தோடே
4 அந்த மிருகத்தைப் பின்பற்றி, அந்த மிருகத்
திற்கு அப்படிப்பட்ட அதிகாரங்கொடுத்த
வலுசர்ப்பத்தை வணங்கினார்கள். அல்லாம
லும்: மிருகத்திற்கு ஒப்பானவன் யார்? [11]அதி
னேடே யுத்தம்பண்ணத்தக்கவன் யார்? என்று
சொல்லி, மிருகத்தையும் வணங்கினார்கள்.
5 பெருமையானவைகளையும் [12]தூஷணங்களை
யும் பேசும் வாய் அதற்குக் கொடுக்கப்பட்
டது; அல்லாமலும், [13]நாற்பத்திரண்டு மாதம்
யுத்தம்பண்ண அதற்கு அதிகாரங் கொடுக்கப்
பட்டது. அது தேவனைத் தூஷிக்கும்படி 6
தன் வாயைத் திறந்து, அவருடைய நாமத்தை
யும், [14]அவருடைய வாசஸ்தலத்தையும்; [15]பர
லோகத்தில் வாசமாயிருக்கிறவர்களையும் தூஷி
த்தது. மேலும், பரிசுத்தவான்களோடே [16]யுத் 7
தம் பண்ணி அவர்களை ஜெயிக்கும்படிக்கு
அதற்கு அதிகாரங் கொடுக்கப்பட்டதுமல்லா
மல், ஒவ்வொரு கோத்திரத்தின்மேலும் பா
ஷைக்காரர்மேலும் ஜாதிகள்மேலும் அதற்கு
[17]அதிகாரங் கொடுக்கப்பட்டது. உலகத்தோற் 8
றமுதல் [18]அடிக்கப்பட்ட ஆட்டுக்குட்டியினு
டைய [19]ஜீவபுஸ்தகத்தில் பேரெழுதப்பட்டி
ராத பூமியின் குடிகள் யாவரும் அதை வணங்
குவார்கள். காதுள்ளவனெவனே அவன் 9
கேட்கக்கடவன். சிறைப்படுத்திக் கொண்டு 10
போகிறவன் [20]சிறைப்பட்டுப் போவான்; பட்
டயத்தினாலே கொல்லுகிறவன் [21]பட்டயத்தி
னாலே கொல்லப்படவேண்டும். [22]பரிசுத்த
வான்களுடைய பொறுமையும் விசுவாசமும்
இதிலே விளங்கும்.
பின்பு, [23]வேறொரு மிருகம் பூமியிலிருந்து 11
எழும்பக் கண்டேன்; அது ஒரு ஆட்டுக்குட்
டிக்கு ஒப்பாக இரண்டு கொம்புகளை யுடைய
தாயிருந்து, வலுசர்ப்பத்தைப்போலப் பேசி
னது. அது முந்தின மிருகத்தின் அதிகாரம் 12
முழுவதையும் அதின் முன்பாக நடப்பித்து,
[24]சாவுக்கேதுவான காயம் ஆறச் சொஸ்த
மடைந்த முந்தின மிருகத்தைப் பூமியும் அதி
ன் குடிகளும் வணங்கும்படி செய்தது. அன் 13
றியும், அது மனுஷருக்குமுன்பாக வானத்தி
லிருந்து பூமியின்மேல் அக்கினியை இறங்
கப்பண்ணத் தக்கதாகப் [25]பெரிய அற்புதங்
களை நடப்பித்து, மிருகத்தின் முன்பாக அந்த 14
அற்புதங்களைச் செய்யும்படி தனக்குக் கொடுக்
கப்பட்ட சத்துவத்தினாலே [26]பூமியின் குடி
களை மோசம்போக்கி, பட்டயத்தினாலே காய
ப்பட்டுப் பிழைத்த மிருகத்திற்கு ஒரு சொரூ
பம் பண்ணவேண்டுமென்று பூமியின் குடி
களுக்குச் சொல்லிற்று. மேலும் அம்மிரு 15
கத்தின் சொரூபம் பேசத்தக்கதாகவும், [27]மிரு
கத்தின் சொரூபத்தை வணங்காத யாவரை
யும் கொலைசெய்யத் தக்கதாகவும், மிருகத்தின்
சொரூபத்திற்கு ஆவியைக் கொடுக்கும்படி
அதற்குச் சத்துவங் கொடுக்கப்பட்டது. அது 16
சிறியோர், பெரியோர், ஐசுவரியவான்கள்,
தரித்திரர், சுயாதீனர், அடிமைகள், இவர்கள்
யாவரும் தங்கள் தங்கள் வலதுகைகளிலாவது
[28]நெற்றிகளிலாவது ஒரு முத்திரையைப்
பெறும்படிக்கும், அந்த மிருகத்தின் முத்தி 17
ரையையாவது அதின் நாமத்தையாவது அதின்
நாமத்தின் இலக்கத்தையாவது [29]தரித்துக்கொள்
ளுகிறவன் தவிர வேறொருவனும் கொள்ள
வும் விற்கவும் கூடாதபடிக்கும் செய்தது. இதி 18
லே ஞானம் விளங்கும்; [30]அந்த மிருகத்தின்

1 பிர. 8. 33, 37
2 சங். 96. 11. ஏசா. 49. 13
3 10. 6
4 ஏசா. 40. 31
5 ஏசா. 59. 19
6 11. 7: 13. 7: 14. 12. ஆதி. 3. 15
7 12. 3: 17. 3, 9, 12. தானி. 7. 2. ழ
8 தானி. 7. 4–7
9 12. 9: 16. 10
10 12. 14: 17. 8
11 17. 14: 18. 18
12 தானி. 7. 8, 11, 25: 11 36
13 11. 2, 3: 12. 6
14 கொலோ. 2. 9. எபி. 9. 11, 24
15 எபி. 12. 22, 23.
16 11. 7: 12. 17. தானி. 7. 21
17 லூக். 4. 6
18 17. 8
19 21. 27. தானி. 12. 1
20 ஏசா. 33. 1
21 ஆதி. 9. 6. மத். 26. 52
22 14. 12. எபி. 6. 12
23 11. 7
24 3. வச
25 16. 14. மத். 24. 24. 2 தெச. 2. 9
26 12. 9: 19. 2
27 16. 2
28 14. 9: 19. 20
29 14. 11: 15. 2
30 15. 2: 17. 9: 21. 17

இலக்கத்தைப் புத்தியுடையவன் கணக்குப்
பார்க்கக்கடவன்; அது மனுஷனுடைய இலக்
கமாயிருக்கிறது; அதினுடைய இலக்கம் அறு
நூற்றறுபத்தாறு.

14 பின்பு நான் பார்த்தபோது, இதோ,
[1]சீயோன் மலையின்மேல் ஆட்டுக்குட்டியான
வரையும், [2]அவரோடேகூட அவருடைய பிதா
வின் நாமம் தங்கள் நெற்றிகளில் எழுதப்பட்
டிருந்த இலட்சத்து நாற்பத்துநாலாயிரம்பே
2 ரையும் நிற்கக் கண்டேன். அல்லாமலும், [3]பெ
ருவெள்ள இரைச்சல்போலவும், பலத்த இடி
முழக்கம்போலவும், ஒரு சத்தம் வானத்திலிரு
ந்து உண்டாகக் கேட்டேன்; [4]நான் கேட்ட
சத்தம் சுரமண்டலக்காரர் தங்கள் சுரமண்ட
லங்களை வாசிக்கிற ஓசையைப்போலிருந்தது.
3 அவர்கள் சிங்காசனத்திற்கு முன்பாகவும்,
நான்கு ஜீவன்களுக்கு முன்பாகவும், மூப்பர்
களுக்கு முன்பாகவும் [5]புதுப்பாட்டைப் பாடி
ஞர்கள்; [6]அந்தப் பாட்டு பூமியிலிருந்து மீட்
டுக்கொள்ளப்பட்ட இலட்சத்து நாற்பத்துநா
லாயிரம் பேரேயல்லாமல் வேறொருவரும்
4 கற்றுக்கொள்ளக்கூடாதிருந்தது. ஸ்திரீகளால்
தங்களைக் கறைப்படுத்தாதவர்கள் இவர்களே;
[7]கற்புள்ளவர்கள் இவர்களே, [8]ஆட்டுக்குட்டி
யானவர் எங்கேபோனாலும் அவரைப் பின்பற்
றுகிறவர்கள் இவர்களே; இவர்கள் மனுஷரி
லிருந்து தேவனுக்கும் ஆட்டுக்குட்டியான
வருக்கும் [9]முதற்பலனாக மீட்டுக்கொள்ளப்
5 பட்டவர்கள். இவர்களுடைய வாயிலே கப
டம் காணப்படவில்லை; [10]இவர்கள் தேவனு
டைய சிங்காசனத்திற்கு முன்பாக மாசில்லாத
வர்களாயிருக்கிறார்கள்.
6 பின்பு, [11]வேறொரு தூதன் வானத்தின்
மத்தியிலே பறக்கக் கண்டேன்; [12]அவன் பூமி
யில் வாசம்பண்ணுகிற சகல ஜாதிகளுக்கும்,
கோத்திரத்தாருக்கும், பாஷைக்காரருக்கும்,
ஜனக்கூட்டத்தாருக்கும் அறிவிக்கத்தக்கதாக
[13]நித்திய சுவிசேஷத்தை உடையவனாயிருந்து,
7 மிகுந்த சத்தமிட்டு: [14]தேவனுக்குப் பயந்து,
அவரை மகிமைப்படுத்துங்கள்; அவர் நியாயத்
தீர்ப்புக் கொடுக்கும் வேளை வந்தது; [15]வானத்
தையும் பூமியையும் சமுத்திரத்தையும் நீரூற்
றுக்களையும் உண்டாக்கினவரையே தொழுது
கொள்ளுங்கள் என்று கூறினான்.
8 வேறொரு தூதன் பின்சென்று: [16]பாபி
லோன் மகா நகரம் விழுந்தது! விழுந்தது!
தன் வேசித்தனமாகிய உக்கிரமான மதுவைச்
சகல ஜாதிகளுக்கும் குடிக்கக் கொடுத்தாளே!
என்றான்.
9 அவர்களுக்குப் பின்னே மூன்றாம் தூதன்
வந்து, மிகுந்த சத்தமிட்டு: [17]மிருகத்தையும்
அதின் சொரூபத்தையும் வணங்கித் தன் நெற்
றியிலாவது தன் கையிலாவது அதின் முத்தி
ரையைத் தரித்துக்கொள்ளுகிறவ னெவனோ,
10 அவன் தேவனுடைய [18]கோபாக்கினையாகிய
பாத்திரத்திலே கலப்பில்லாமல் வார்க்கப்பட்ட
அவருடைய உக்கிரமாகிய மதுவைக் குடித்து,

1 5. 6, 12
2 7. 4: 13. 16
3 19. 6
4 5. 8, 9
5 15. 3
6 1. வச
7 உன்னத 1. 3: 6. 8. 2 கொ. 11. 2
8 யோ. 10. 27
9 யாக். 1. 18
10 சங். 32. 2. எபே. 5. 27 யூதா 24வச
11 8. 13
12 எபே. 3. 9. ஓ
13 2 சாமு. 23. 5. ஏசா. 40. 8
14 15. 4
15 அப். 14. 15: 17. 24
16 18. 2, 3. ஏசா. 21. 9. எரே. 51. 7, 8
17 13. 14-16
18 சங். 75. 8
19 19. 20
20 ஏசா. 34. 10
21 ஏசா. 57. 20, 21
22 12. 7: 13. 10
23 20. 6. 1 கொ. 15. 18. 1 தெச. 4. 14, 16
24 2 தெச. 1. 7. எபி. 4. 9, 10
25 எசே. 1. 26. தானி. 7. 13
26 எரே. 51. 33. மத். 13. 39
27 யோவே. 3. 13
28 15. வச
29 19. 15
30 ஏசா. 63. 3. எபி. 13. 11, 12
31 19. 14
32 12. 1, 3: 16. 1: 21. 9

பரிசுத்த தூதர்களுக்கு முன்பாகவும், ஆட்டுக்
குட்டியானவருக்கு முன்பாகவும் [19]அக்கினி
யினாலும் கந்தகத்தினாலும் வாதிக்கப்படுவான்.
அவர்களுடைய வாதையின் [20]புகை சதாகா 11
லங்களிலும் எழும்பும்; மிருகத்தையும் அதின்
சொரூபத்தையும் வணங்குகிறவர்களுக்கும்,
அதினுடைய நாமத்தின் முத்திரையைத் தரித்
துக்கொள்ளுகிற எவனுக்கும் [21]இரவும் பக
லும் இளைப்பாறுதலிராது. தேவனுடைய கற் 12
பனைகளையும் இயேசுவின்மேலுள்ள விசுவாசத்
தையும் காத்துக்கொள்ளுகிறவர்களாகிய [22]பரி
சுத்தவான்களுடைய பொறுமை இதிலே
விளங்கும் என்று கூறினான்.
பின்பு, பரலோகத்திலிருந்து ஒரு சத்தம் 13
உண்டாகக் கேட்டேன்; அது: [23]கர்த்தருக்குள்
மரிக்கிறவர்கள் இதுமுதல் பாக்கியவான்கள்
என்றெழுது; [24]அவர்கள் தங்கள் பிரயாசங்களை
விட்டொழிந்து இளைப்பாறுவார்கள்; அவர்
களுடைய கிரியைகள் அவர்களோடேகூடப்
போம்; ஆவியானவரும் ஆம் என்று திருவுளம்
பற்றுகிறார்; என்று சொல்லிற்று.
பின்பு நான் பார்த்தபோது, இதோ, வெண் 14
மையான மேகத்தையும், [25]அந்த மேகத்தின்
மேல் மனுஷகுமாரனுக் கொப்பானவராய்த்
தமது சிரசின்மேல் பொற்கிரீடத்தையும் தமது
கையிலே கருக்குள்ள அரிவாளையுமுடைய
ஒருவர் உட்கார்ந்திருக்கிறதையும் கண்டேன்.
அப்பொழுது வேறொரு தூதன் தேவாலயத் 15
திலிருந்து புறப்பட்டு, மேகத்தின்மேல் உட்
கார்ந்திருக்கிறவரை நோக்கி: [26]பூமியின் பயிர்
முதிர்ந்தது, அறுக்கிறதற்குக் காலம் வந்தது,
[27]ஆகையால் உம்முடைய அரிவாளை நீட்டி
அறுத்துவிடும் என்று மிகுந்த சத்தமிட்டுச்
சொன்னான். அப்பொழுது மேகத்தின்மேல் 16
உட்கார்ந்தவர் தமது அரிவாளைப் பூமியின்மேல்
நீட்டினார், பூமியின் விளைவு அறுப்புண்டது.
பின்பு வேறொரு தூதனும் கருக்குள்ள 17
அரிவாளைப் பிடித்துக்கொண்டு பரலோகத்தி
லுள்ள தேவாலயத்திலிருந்து புறப்பட்டு வந்
தான். அக்கினியின்மேல் அதிகாரமுள்ள வே 18
றொரு தூதனும் பலிபீடத்திலிருந்து புறப்பட்
டுவந்து, கருக்குள்ள அரிவாளைப் பிடித்திருக்
கிறவனை நோக்கி: பூமியின் திராட்சப்பழங்
கள் பழுத்திருக்கிறது, [28]கருக்குள்ள உமது
அரிவாளை நீட்டி, அதின் குலைகளை அறுத்து
விடும் என்று மிகுந்த சத்தத்தோடே சொன்
னான். அப்பொழுது அந்தத் தூதன் தன் அரி 19
வாளைப் பூமியின்மேலே நீட்டி, பூமியின்
திராட்சப்பழங்களை அறுத்து, [29]தேவனுடைய
கோபாக்கினையென்னும் பெரிய ஆலையிலே
போட்டான். நகரத்திற்குப் புறம்பேயுள்ள 20
[30]அந்த ஆலையிலே அது மிதிக்கப்பட்டது;
அந்த ஆலையிலிருந்து ஆயிரத்தறுநூறு ஸ்தாதி
தூரத்திற்கு இரத்தம் புறப்பட்டுக் [31]குதிரை
களின் கடிவாளங்கள்மட்டும் பெருகிவந்தது.
பின்பு, [32]வானத்திலே பெரிதும் ஆச்சரிய 15
முமான வேறொரு அடையாளமாகிய கடை

சியான ஏழு வாதைகளையுடைய ஏழு தூத
ரைக்கண்டேன், [1]அவைகளால்தேவனுடைய
கோபம் முடிகிறது.
2 அன்றியும், அக்கினி கலந்த கண்ணாடிக்
[2]கடல்போன்ற ஒரு கடலையும், மிருகத்திற்
கும் அதின் சொரூபத்திற்கும் அதின் முத்தி
ரைக்கும் அதின் நாமத்தின் இலக்கத்திற்கும்
உள்ளாகாமல் [3]ஜெயங்கொண்டவர்கள் தேவ
சுரமண்டலங்களைப் *பிடித்துக்கொண்டு அந்
தக் கண்ணாடிக் கடலருகே நிற்கிறதையும்
3 கண்டேன். அவர்கள் தேவனுடைய ஊழி
யக்காரனாகிய [4]மோசேயின் பாட்டையும்
[5]ஆட்டுக்குட்டியானவருடைய பாட்டையும்
பாடி: சர்வவல்லமையுள்ள தேவனாகிய கர்த்
தாவே, தேவரீருடைய கிரியைகள் மகத்துவ
மும் ஆச்சரியமுமானவைகள்; *பரிசுத்தவான்
களின் ராஜாவே, [6]தேவரீருடைய வழிகள்
4 நீதியும் சத்தியமுமானவைகள். கர்த்தாவே,
[7]யார் உமக்குப் பயப்படாமலும், உமது நாமத்
தை மகிமைப்படுத்தாமலும் இருக்கலாம்? [8]தே
வரீர் ஒருவரே பரிசுத்தர், [9]எல்லா ஜாதிகளும்
வந்து உமக்கு முன்பாகத் தொழுதுகொள்வார்
கள்; உம்முடைய நீதியான செயல்கள் வெ
ளியரங்கமாயின என்றார்கள்.
5 இவைகளுக்குப்பின்பு, நான் பார்த்தபோது,
இதோ, [10]பரலோகத்திலே சாட்சியின் கூடார
6 மாகிய ஆலயம் திறக்கப்பட்டது; அந்த ஆல
யத்திலிருந்து ஏழு வாதைகளையுடைய அவ்
வேழு தூதர்களும் சுத்தமும் பிரகாசமுமான
மெல்லிய வஸ்திரந் தரித்து, மார்பருகே பொற்
கச்சைகளைக் கட்டிக்கொண்டு புறப்பட்டார்
7 கள். அப்பொழுது அந்த நான்கு ஜீவன்களில்
ஒன்று, [11]சதாகாலங்களிலும் உயிரோடிருக்கிற
தேவனுடைய கோபாக்கினையால் நிறைந்த
பொற்கலசங்கள் ஏழையும் அந்த ஏழு தூதர்
8 களுக்குங் கொடுத்தது. அப்பொழுது, தேவ
னுடைய மகிமையினாலும் [12]அவருடைய வல்ல
மையினாலும் உண்டான புகையினாலே தேவா
லயம் நிறைந்தது, ஏழு தூதர்களுடைய ஏழு
வாதைகளும் முடியும்வரைக்கும் ஒருவரும் தே
வாலயத்திற்குள் பிரவேசிக்கக்கூடாதிருந்தது.

**16** அப்பொழுது தேவாலயத்திலிருந்து உண்
டான ஒரு பெருஞ்சத்தம் [13]அந்த ஏழு தூத
ருடனே: நீங்கள் போய் தேவனுடைய கோப
கலசங்களைப்பூமியின்மேல் ஊற்றுங்கள் என்று
சொல்லக்கேட்டேன்.
2 முதலாம் தூதன் போய், [14]தன் கலசத்தி
லுள்ளதைப் பூமியின்மேல் ஊற்றினான்;
[15]உடனே மிருகத்தின் முத்திரையைத் தரித்
தவர்களும் அதின் சொரூபத்தை வணங்குகிற
வர்களுமாகிய மனுஷர்களுக்குப் பொல்லாத
கொடிய புண் உண்டாயிற்று.
3 இரண்டாம் தூதன் தன் கலசத்திலுள்ள
தைச [16]சமுத்திரத்திலே ஊற்றினான்; உடனே
அது செத்தவனுடைய இரத்தம்போலாயிற்று;
[17]சமுத்திரத்திலுள்ள பிராணிகள் யாவும்
மாண்டுபோயின.

மூன்றாம் தூதன் தன் கலசத்திலுள்ளதை 4
ஆறுகளிலும், நீரூற்றுக்களிலும் ஊற்றினான்;
[18]உடனே அவைகள் இரத்தமாயின. அப்பொ 5
ழுது தண்ணீர்களின் தூதன்: இருக்கிறவரும்
இருந்தவரும் பரிசுத்தருமாகிய தேவரீர் இப்
படி நியாயந்தீர்க்க [19]நீதியுள்ளவராயிருக்கிறீர்.
அவர்கள் [20]பரிசுத்தவான்களுடைய இரத்தத் 6
தையும் தீர்க்கதரிசிகளுடைய இரத்தத்தையும்
சிந்தினபடியினால், இரத்தத்தையே அவர்களு
க்குக் குடிக்கக் கொடுத்தீர்; அதற்குப் பாத்திர
ராயிருக்கிறார்கள் என்று சொல்லக்கேட்
டேன். பலிபீடத்திலிருந்து வேறொருவன்: 7
ஆம், சர்வவல்லமையுள்ள தேவனாகிய கர்த்தா
வே, [21]உம்முடைய நியாயத்தீர்ப்புகள் சத்திய
மும் நீதியுமானவைகள் என்று சொல்லக்
கேட்டேன்.
நான்காம் தூதன் தன் கலசத்திலுள்ளதைச் 8
[22]சூரியன்மேல் ஊற்றினான்; [23]தீயினால் மனுஷ
ரைத் தகிக்கும்படி அதற்கு அதிகாரங் கொடுக்
கப்பட்டது. அப்பொழுது மனுஷர்கள் மிகு 9
ந்த உஷ்ணத்தினாலே தகிக்கப்பட்டு, இந்த
வாதைகளைச் செய்ய அதிகாரமுள்ள தேவ
னுடைய நாமத்தைத் தூஷித்தார்களே
யல்லாமல், [24]அவரை மகிமைப்படுத்த மனந்
திரும்பவில்லை.
ஐந்தாம் தூதன் தன் கலசத்திலுள்ளதை மிரு 10
கத்தினுடைய [25]சிங்காசனத்தின்மேல் ஊற்றி
னான்; அப்பொழுது அதின் ராஜ்யம் [26]இருள
டைந்தது; அவர்கள் வருத்தத்தினாலே தங்கள்
நாவுகளைக் கடித்துக்கொண்டு, தங்கள் வருத் 11
தங்களாலும், தங்கள் புண்களாலும், பரலோகத்
தின்தேவனைத் தூஷித்தார்களேயல்லாமல், தங்
கள் கிரியைகளைவிட்டு மனந்திரும்பவில்லை.
ஆறாம் தூதன் தன் கலசத்திலுள்ளதை 12
[27]ஐபிராத் என்னும் பெரிய நதியின்மேல்
ஊற்றினான்; அப்பொழுது சூரியன் உதிக்குந்
திசையிலிருந்து வரும் ராஜாக்களுக்கு வழி
[28]ஆயத்தமாகும்படி அந்த நதியின் தண்ணீர்
வற்றிப்போயிற்று. அப்பொழுது, [29]வலுசர்ப் 13
பத்தின் வாயிலும் மிருகத்தின் வாயிலும் கள்
ளத் தீர்க்கதரிசியின் வாயிலுமிருந்து தவளை
களுக்கு ஒப்பான மூன்று அசுத்த ஆவிகள்
புறப்பட்டு வரக்கண்டேன். அவைகள் அற் 14
புதங்களைச் செய்கிற [30]பிசாசுகளின் ஆவிகள்;
அவைகள்பூலோகமெங்குமுள்ள ராஜாக்களைச்
சர்வவல்லமையுள்ள தேவனுடைய மகாநாளில்
நடக்கும் [31]யுத்தத்திற்குக் கூட்டிச் சேர்க்கும்
படிக்குப் புறப்பட்டுப்போகிறது. இதோ, [32]தி 15
ருடனைப்போல் வருகிறேன். [33]தன்மானம் கா
ணப்படத்தக்கதாக நிர்வாணமாய் நடவாதபடி
க்கு விழித்துக்கொண்டு, தன் வஸ்திரங்களைக்
காத்துக்கொள்ளுகிறவன் பாக்கியவான். அப் 16
பொழுது எபிரெயு பாஷையிலே அர்மகெ
தோன் என்னப்பட்ட இடத்திலே [34]அவர்களைக்
கூட்டிச் சேர்த்தான்.
ஏழாம் தூதன் தன் கலசத்திலுள்ளதை 17
ஆகாயத்தில் ஊற்றினான்; அப்பொழுது பர

1 14. 10
2 4. 6. ஏசா. 4. 4, 6. மத். 3. 11
3 13. 15-17: 14. 2
4 யாத். 15. 1-19. உபா. 32. 1-43
5 19. 19
* ஜாதிகளின். 17. 14
6 ஓசி. 14. 9
7 எரே. 10. 7
8 1 சாமு. 2. 2
9 ஏசா. 45. 23
10 11. 19
11 4. 6. 1 தெச. 1. 9
12 சங். 29. 9. ஏசா. 6. 4
13 15. 1, 7
14 8. 7
15 19. 2. யாத். 9. 8-11. சக. 8. 4
16 8. 8, 9
17 யாத். 7. 17-20
18 8. 10
19 15. 3
20 உபா. 32. 42, 43. ஏசா. 49. 26. மத். 23. 34, 35
21 15. 3: 19. 2
22 8. 12
23 9. 17
24 11, 21. வச. 9. 20. தானி. 5. 22, 23
25 13. 2, 4
26 9. 2
27 9. 14
28 ஏசா. 42. 15. எரே. 50. 38: 51. 36
29 12. 3, 9: 19. 20: 20. 10. 1 யோ. 4. 1-3
30 2 தெச. 2. 8. 1 தீமோ. 4. 1
31 19. 19
32 மத். 24. 43. 2 பே. 3. 10
33 3. 4, 18. 2 கொ. 5. 3
34 19. 19

லோகத்தின் ஆலயத்திலுள்ள சிங்காசனத்திலி
ருந்து: [1]ஆயிற்று என்று சொல்லிய பெருஞ்
18 சத்தம் பிறந்தது. சத்தங்களும் இடிமுழக்கங்
களும் மின்னல்களும் உண்டாயின; [2]பூமி
மிகவும் அதிர்ந்தது, பூமியின்மேல் மனுஷர்
கள் உண்டான நாள்முதற்கொண்டு அப்படிப்
பட்ட பெரிய அதிர்ச்சி யுண்டானதில்லை.
19 அப்பொழுது [3]மகா நகரம் மூன்று பங்காகப்
பிரிக்கப்பட்டது, புறஜாதிகளுடைய பட்ட
ணங்கள் விழுந்தன. மகா பாபிலோனுக்கு தே
வனுடைய உக்கிரமான கோபாக்கினையாகிய
மதுவுள்ள [4]பாத்திரத்தைக் கொடுக்கும்படி
அது அவருக்கு முன்பாக நினைப்பூட்டப்பட்
20 டது. தீவுகள் யாவும் அகன்றுபோயின; [5]பர்
21 வதங்கள் காணப்படாமற்போயின. தாலந்து
நிறையான பெரிய கல்மழையும் வானத்திலி
ருந்து மனுஷர்மேல் விழுந்தது; [6]அந்தக் கல்
மழையினால் உண்டான வாதையினிமித்தம்
மனுஷர்கள் தேவனைத் தூஷித்தார்கள்; அந்த
வாதை மகா கொடிதாயிருந்தது.

17 ஏழு கலசங்களையுடைய அந்த ஏழு தூத
ரில் ஒருவன் வந்து என்னோடே பேசி: நீ
வா, [7]திரளான தண்ணீர்கள்மேல் உட்கார்ந்
திருக்கிற மகா வேசியோடே [8]பூமியின் ராஜா
க்கள் வேசித்தனம் பண்ணினார்களே, அவளு
டைய வேசித்தனமாகிய மதுவால் பூமியின்
2 குடிகளும் வெறிகொண்டிருந்தார்களே, அவ
ளுக்கு வருகிற ஆக்கினையை உனக்குக் காண்
3 பிப்பேன் என்று சொல்லி; ஆவிக்குள் என்னை
வனாந்தரத்திற்குக் கொண்டுபோனான். [9]அப்
பொழுது ஏழு தலைகளையும் பத்துக் கொம்பு
களையும் உடையதும் தூஷணமான நாமங்க
ளால் நிறைந்ததுமான சிவப்பு நிறமுள்ள மிரு
கத்தின்மேல் ஒரு ஸ்திரீ ஏறியிருக்கக் கண்
4 டேன். அந்த ஸ்திரீ இரத்தாம்பரமும் சிவப்
பான ஆடையுந்தரித்து, பொன்னினாலும்
இரத்தினங்களினாலும் முத்துக்களினாலும் சிங்
காரிக்கப்பட்டு, தன் வேசித்தனமாகிய [10]அரு
வருப்புகளாலும் அசுத்தத்தாலும் நிறைந்த
பொற்பாத்திரத்தைத் தன் கையிலே பிடித்தி
5 ருந்தாள். மேலும், [11]**இரகசியம்,** [12]**மகா பாபி**
**லோன்,** [13]**வேசிகளுக்கும் பூமியிலுள்ள அரு**
**வருப்புகளுக்கும் தாய்** என்னும் நாமம் அவள்
6 நெற்றியில் எழுதியிருந்தது. அந்த ஸ்திரீ பரி
சுத்தவான்களின் இரத்தத்தினாலும், [14]இயேசு
வினுடைய சாட்சிகளின் இரத்தத்தினாலும்
வெறிகொண்டிருக்கிறதைக் கண்டேன்; அவ
ளைக் கண்டு நான் மிகவும் ஆச்சரியப்பட்
7 டேன். அப்பொழுது, தூதனானவன் என்னை
நோக்கி: ஏன் ஆச்சரியப்படுகிறாய்? [15]இந்த
ஸ்திரீயினுடைய ரகசியத்தையும், ஏழு தலை
களையும் பத்துக் கொம்புகளையுமுடையதாய்
இவளைச் சுமக்கிற மிருகத்தினுடைய ரகசியத்
8 தையும் உனக்குச் சொல்லுகிறேன். நீ கண்ட
மிருகம் முன்னே இருந்தது, இப்பொழுது
இல்லை; [16]அது பாதாளத்திலிருந்து ஏறிவந்து,
[17]நாசமடையப் போகிறது. [18]உலகத்தோற்ற
முதல் ஜீவபுஸ்தகத்தில் பேரெழுதப்பட்டிராத
பூமியின் குடிகள், இருந்ததும், இராமற்போ
னதும், இனி இருப்பதுமாயிருக்கிற மிருகத்
தைப் பார்த்து ஆச்சரியப்படுவார்கள். ஞான 9
முள்ள மனம் இதிலே விளங்கும். [19]அந்த ஏழு
தலைகளும் அந்த ஸ்திரீ உட்கார்ந்திருக்கிற ஏழு
மலைகளாம். அவைகள் ஏழு ராஜாக்களாம்; 10
இவர்களில் ஐந்துபேர் விழுந்தார்கள், ஒருவன்
இருக்கிறான், மற்றவன் இன்னும் வரவில்லை;
வரும்போது அவன் கொஞ்சக்காலம் தரித்தி
ருக்கவேண்டும். இருந்ததும் இராததுமாகிய 11
மிருகமே எட்டாவதானவனும், அவ்வேழிலி
ருந்து தோன்றுகிறவனும், நாசமடையப் போ
கிறவனுமாயிருக்கிறான். நீ கண்ட பத்துக் 12
கொம்புகளும் [20]பத்து ராஜாக்களாம்; இவர்கள்
இன்னும் ராஜ்யம் பெறவில்லை; இவர்கள்
மிருகத்துடனேகூட ஒருமணிநேரமளவும் ரா
ஜாக்கள்போல அதிகாரம் பெற்றுக்கொள்ளு
கிறார்கள். இவர்கள் ஒரே யோசனையுள்ள 13
வர்கள்; இவர்கள் தங்கள் வல்லமையையும் அதி
காரத்தையும் மிருகத்திற்குக் கொடுப்பார்கள்.
இவர்கள் [21]ஆட்டுக்குட்டியானவருடனே யுத் 14
தம் பண்ணுவார்கள்; ஆட்டுக்குட்டியானவர்
[22]கர்த்தாதி கர்த்தரும் ராஜாதி ராஜாவுமாயிருக்
கிறபடியால் அவர்களை [23]ஜெயிப்பார்; அவ
ரோடுகூட இருக்கிறவர்கள் [24]அழைக்கப்பட்
டவர்களும் [25]தெரிந்துகொள்ளப்பட்டவர்க
ளும் [26]உண்மையுள்ளவர்களுமா யிருக்கிறார்
கள் என்றான். பின்னும் அவன் என்னை 15
நோக்கி: [27]அந்த வேசி உட்கார்ந்திருக்கிற தண்
ணீர்களைக் கண்டாயே; [28]அவைகள் ஜனங்க
ளும் கூட்டங்களும் ஜாதிகளும் பாஷைக்கா
ருமாம். நீ மிருகத்தின்மேல் கண்ட பத்துக் 16
கொம்புகளானவர்கள் [29]அந்த வேசியைப்
பகைத்து, அவளைப் பாழும் [30]நிர்வாணமு
மாக்கி, அவளுடைய மாம்சத்தைப் பட்சித்து,
[31]அவளை நெருப்பினால் சுட்டெரித்துப் போ
டுவார்கள். தேவன் தம்முடைய வார்த்தை 17
கள் நிறைவேறுமளவும், [32]அவர்கள் தமது யோ
சனையை நிறைவேற்றுகிறதற்கும், ஒரே யோ
சனையுள்ளவர்களாயிருந்து, தங்கள் ராஜ்யத்தை
மிருகத்திற்குக் கொடுக்கிறதற்கும் அவர்களு
டைய இருதயங்களை ஏவினார். நீ கண்ட ஸ்திரீ 18
யானவள் [33]பூமியின் ராஜாக்கள்மேல் ராஜ்ய
பாரம் பண்ணுகிற மகா நகரமேயாம் என்றான்.

இவைகளுக்குப் பின்பு, வேறொரு 18
தூதன் மிகுந்த அதிகாரமுடையவனாய், வான
த்திலிருந்து இறங்கிவரக் கண்டேன்; [34]அவ
னுடைய மகிமையினால் பூமி பிரகாசமாயிற்று.
அவன் பலத்த சத்தமிட்டு: [35]மகா பாபிலோன் 2
விழுந்தது! விழுந்தது! [36]அது பேய்களுடைய
குடியிருப்பும், சகலவித அசுத்த ஆவிகளு
டைய காவல்வீடும், [37]அசுத்தமும் அருவருப்பு
முள்ள சகலவித பறவைகளுடைய கூடுமா
யிற்று. அவளுடைய வேசித்தனத்தின் உக் 3
கிரமான மதுவை [38]எல்லா ஜாதிகளும் குடித்
தார்கள்; பூமியின் ராஜாக்கள் அவளோடே

1 21. 6
2 11. 13. தானி. 12. 1
3 14. 8
4 ஏசா. 51. 17, 23. எரே. 25. 15, 16
5 6. 14
6 11. 19
7 19. 2. எரே. 51. 13. நாகூ. 3. 4
8 18. 3
9 12. 3: 13. 1
10 14. 8. எரே. 51. 7
11 2 தெச. 2. 7
12 11. 18: 14. 8
13 18. 9: 19. 2
14 16. 6
15 1, 8. வச
16 11. 7
17 11. வச
18 13. 3, 8
19 13. 1, 18
20 13. 1. தானி. 7. 20. சக. 1. 18–21
21 19. 19
22 19. 16. உபா. 10. 17. 1 தீமோ. 6. 15
23 எரே. 50. 44
24 மீகா 5. 8, 9. ரோ. 8. 30, 37
25 யோ. 15. 16
26 2. 10
27 1. வ. ஏசா. 8. 7
28 13. 7
29 எரே. 50. 41, 42
30 எசே. 16. 37–44
31 18. 8, 18
32 10. 7. அப். 4. 27, 28. 2 தெச. 2. 11
33 12. 4: 16. 19
34 17. 1. எசே. 43. 2
35 14. 8. ஏசா. 13. 19: 21. 9. எரே. 51. 8
36 17. 2. ஏசா. 34. 11, 14. எரே. 50. 39: 51. 37
37 மாற். 5. 2, 3
38 ஏசா. 47. 15

வேசித்தனம் பண்ணினார்கள்; [1]பூமியின் வர்த்
தகர் அவளுடைய செல்வச்செருக்கின் மிகுதி
யினால் ஐசுவரியவான்க ளானார்கள் என்று
விளம்பினான்.
4 பின்பு, வேறொரு சத்தம் வானத்திலிருந்து
உண்டாகக் கேட்டேன். அது: [2]என் ஜனங்க
ளே, நீங்கள் அவளுடைய பாவங்களுக்குஉடன்
படாமலும், அவளுக்கு நேரிடும் வாதைகளில்
அகப்படாமலும் இருக்கும்படிக்கு அவளை
5 விட்டு வெளியே வாருங்கள். அவளுடைய
பாவம் வானபரியந்தம் எட்டினது, [3]அவளு
டைய அநியாயங்களைத் தேவன் நினைவுகூர்ந்
6 தார். அவள் உங்களுக்குப் பலனளித்தது
போல நீங்களும் அவளுக்குப் பலனளியுங்
கள்; [4]அவளுடைய கிரியைகளுக்குத் தக்கதாக
அவளுக்கு இரட்டிப்பாகக் கொடுத்துத் தீருங்
கள்; அவள் உங்களுக்குக் கலந்து கொடுத்த
பாத்திரத்திலே இரட்டிப்பாக அவளுக்குக்
7 கலந்து கொடுங்கள். அவள் தன்னை மகிமைப்
படுத்தி, செல்வச்செருக்காய் வாழ்ந்ததெவ்வள
வோ, அவ்வளவாய் வாதையையும் துக்கத்தை
யும் அவளுக்குக் கொடுங்கள். [5]நான் ராஜஸ்திரீ
யாய் வீற்றிருக்கிறேன்; நான் கைம்பெண்
ணல்ல, நான் துக்கத்தைக் காண்பதில்லையெ
ன்று அவள் தன் இருதயத்திலே எண்ணினாள்.
8 ஆகையால் அவளுக்கு வரும் வாதைகளாகிய
[6]சாவும் துக்கமும் பஞ்சமும் ஒரே நாளிலே
வரும்; அவள் அக்கினியினாலே சுட்டெரிக்
கப்படுவாள்; [7]அவளுக்கு நியாயத்தீர்ப்புக்கொ
டுக்கும் தேவனாகிய கர்த்தர் வல்லமையுள்ளவர்.
9 அவளுடனே வேசித்தனஞ் செய்து செல்வச்
செருக்காய் வாழ்ந்த பூமியின் ராஜாக்களும்
[8]அவள் வேகிறதினால் உண்டான புகையைக்
காணும்போது அவளுக்காக அழுது புலம்பி,
10 அவளுக்கு உண்டான வாதையினால் பயந்து,
தூரத்திலே நின்று: [9]ஐயையோ! பாபிலோன்,
மகா நகரமே! பலமான பட்டணமே! ஒரே
நாழிகையில் உனக்கு ஆக்கினை வந்ததே! என்
பார்கள்.
11 பூமியின் வர்த்தகர்களும் தங்கள் தங்கள்
சரக்குகளாகிய [10]பொன்னையும், வெள்ளியை
யும், இரத்தினங்களையும், முத்துக்களையும், சல்
லாவையும், இரத்தாம்பரத்தையும், பட்டாடை
12 களையும், சிவப்பாடைகளையும், சகலவித வா
சனைக் கட்டைகளையும், தந்தத்தினால் செய்தி
ருக்கிற சகலவித வஸ்துக்களையும், விலையுயர்ந்த
மரத்தினாலும் வெண்கலத்தினாலும் இரும்பினா
லும் வெள்ளைக் கல்லினாலும் செய்திருக்கிற
13 சகலவித வஸ்துக்களையும், இலவங்கப் பட்
டையையும், தூபவர்க்கங்களையும், தைலங்களை
யும், சாம்பிராணியையும், திராட்சரசத்தையும்,
எண்ணெயையும், மெல்லிய மாவையும், கோ
துமையையும், மாடுகளையும், ஆடுகளையும், குதி
ரைகளையும், இரதங்களையும், *அடிமைகளை
யும், [11]மனுஷருடைய ஆத்துமாக்களையும்
இனிக் கொள்வாரில்லாதபடியால், [12]அவளுக்
14 காக அழுது புலம்புவார்கள். உன் ஆத்துமா

1 11, 15. ஊச
2 எசா. 48. 20: 52. 11. எரே. 50. 8: 51. 6, 45. 2 யகா. 6. 17
3 16. 19. எரே. 51. 9
4 சங். 137. 8. எரே. 50. 15, 29. 2தீமோ. 4. 14
5 எசா. 47. 7-11
6 10. ஊச: 17. 16
7 சங். 62. 11. எரே. 50. 34
8 எசே. 26. 16, 17
9 14. 8: 17, 19. ஊச
10 17. 4
* மனுஷருடைய உடல்களையும்
11 எசே. 27. 13
12 எசே. 27. 27-36
13 தா. 16. 19. ழ
14 எசா. 23. 14
15 13. 4. எரே. 51. 37
16 யோசு. 7. 6. யோபு 2. 12. எசே. 27. 30
17 எரே. 51. 48
18 19. 2. உபா. 32. 43. லூ. 18. 7, 8
19 எரே. 51. 54
20 எரே. 25. 10
21 எரே. 7. 34: 16. 9: 33. 11
22 எசா. 23. 8
23 17. 6. 2இரா. 9. 22. நாகூம் 3. 4
24 எரே. 51. 49
25 11. 15
26 3, 4, 6. ஊச

இச்சித்த பழவர்க்கங்கள் உன்னைவிட்டு நீங்கிப்
போயின; கொழுமையானவைகளும் சம்பிரம
மானவைகளும் உன்னைவிட்டு நீங்கிப்போ
யின; நீ அவைகளை இனிக் காண்பதில்லை.
இப்படிப்பட்டவைகளைக் கொண்டு வர்த்தகம் 15
பண்ணி, அவளால் ஐசுவரியவான்களானவர்
கள் அவளுக்கு உண்டான வாதையினால் பயந்
து, தூரத்திலே நின்று; ஐயையோ! [13]சல்லா 16
வும் இரத்தாம்பரமும் சிவப்பாடையும் தரித்து,
பொன்னினாலும் இரத்தினங்களினாலும் முத்
துக்களினாலும் சிங்காரிக்கப்பட்டிருந்த மகா
நகரமே! ஒரு நாழிகையிலே இவ்வளவு ஐசு
வரியமும் அழிந்துபோயிற்றே! என்று சொ
ல்லி, அழுது துக்கிப்பார்கள். மாலுமிகள் 17
யாவரும், [14]கப்பல்களில் யாத்திரைபண்ணுகிற
வர்கள் யாவரும், கப்பலாட்களும், சமுத்திரத்
திலே தொழில்செய்கிற யாவரும் தூரத்திலே
நின்று, அவள் வேகிறதினால் உண்டான 18
புகையைப் பார்த்து: [15]இந்த மகா நகரத்திற்
கொப்பான நகரம் உண்டோ என்று சத்த
மிட்டு, தங்கள் தலைகள்மேல் [16]புழுதியைப் 19
போட்டுக்கொண்டு: ஐயையோ, மகா நகரமே!
சமுத்திரத்திலே கப்பல்களையுடைய அனைவ
ரும் இவளுடைய உச்சிதமான சம்பூரணத்தி
னால் ஐசுவரியவான்களானார்களே! ஒரு நாழி
கையிலே இவள் பாழாய்ப்போனாளே! என்று
அழுது துக்கித்து ஓலமிடுவார்கள். பரலோக 20
மே! பரிசுத்தவான்களாகிய அப்போஸ்தலர்
களே! தீர்க்கதரிசிகளே! [17]அவளைக் குறித்துக்
களிகூருங்கள். [18]உங்கள் நிமித்தம் தேவன்
அவளை நியாயந்தீர்த்தாரே! என்று தூதன்
சொன்னான்.
அப்பொழுது, பலமுள்ள தூதனொருவன் 21
பெரிய எந்திரக்கல்லையொத்த ஒரு கல்லை எடுத்
துச் சமுத்திரத்திலே எறிந்து: [19]இப்படியே பா
பிலோன் மகா நகரம் வேகமாய்த் தள்ளுண்டு,
இனி ஒருபோதும் காணப்படாமற் போகும்.
சுரமண்டலக்காரரும், கீதவாத்தியக்காரரும், 22
நாகசுரக்காரரும், எக்காளக்காரருமானவர்களு
டைய சத்தம் இனி உன்னிடத்தில் கேட்கப்
படுவதுமில்லை; எந்தத் தொழிலாளியும் இனி
உன்னிடத்தில் காணப்படுவதுமில்லை; [20]எந்தி
ரசத்தம் இனி உன்னிடத்தில் கேட்கப்படுவது
மில்லை. விளக்கு வெளிச்சம் இனி உன்னி 23
டத்தில் பிரகாசிப்பதுமில்லை; [21]மணவாளனும்
மணவாட்டியுமானவர்களுடைய சத்தம் இனி
உன்னிடத்தில் கேட்கப்படுவதுமில்லை. [22]உன்
வர்த்தகர் பூமியில் பெரியோர்களாயிருந்தார்
களே; [23]உன் சூனியத்தால் எல்லா ஜாதிகளும்
மோசம்போனார்களே. தீர்க்கதரிசிகளுடைய 24
இரத்தமும் பரிசுத்தவான்களுடைய இரத்த
மும் [24]பூமியில்கொல்லப்பட்ட அனைவருடைய
இரத்தமும் அவளிடத்தில் காணப்பட்டது
என்று விளம்பினான்.
இவைகளுக்குப் பின்பு, [25]பரலோகத்தில் 19
திரளான ஜனக்கூட்டம் இடுகிற ஆரவாரத்
தைக் கேட்டேன். அவர்கள்: [26]அல்லேலூயா,

[1]இரட்சணியமும் மகிமையும் கனமும் வல்ல
மையும் நம்முடைய தேவனுகிய கர்த்தருக்கே
உரியது; [2]அவருடைய நியாயத்தீர்ப்புகள் சத்
2 தியமும் நீதியுமானவைகள். தன் வேசித்தனத்
தினல் பூமியைக் கெடுத்த மகாவேசிக்கு அவர்
நியாயத்தீர்ப்புக் கொடுத்து, [3]தம்முடைய ஊழி
யக்காரரின் இரத்தத்திற்காக அவளிடத்தில்
3 பழிவாங்கினரே என்றார்கள். மறுபடியும்
அவர்கள்: அல்லேலூயா என்று சொல்லி ஆர்ப்
பரித்தார்கள். [4]அவளுடைய புகை என்றென்
4 றைக்கும் எழும்புகிறது என்றார்கள். இரு
பத்து நான்கு மூப்பர்களும், [5]நான்கு ஜீவன்
களும் வணக்கமாய் விழுந்து: ஆமென், அல்
லேலூயா, என்று சொல்லி, சிங்காசனத்தின்
மேல் வீற்றிருக்கும் தேவனைத் தொழுதுகொ
5 ண்டார்கள். மேலும், நமது தேவனுடைய
ஊழியக்காரரே, அவருக்குப் பயப்படுகிற சிறி
யோரும் பெரியோருமானவர்களே, [6]நீங்கள்
யாவரும் அவரைத் துதியுங்கள், என்று ஒரு
6 சத்தம் சிங்காசனத்திலிருந்து பிறந்தது. அப்
பொழுது திரளான ஜனங்கள் இடும் ஆரவா
ரம்போலவும், பெருவெள்ள இரைச்சல்போல
வும், பலத்த இடிமுழக்கம்போலவும், ஒரு சத்த
முண்டாகி: அல்லேலூயா, [7]சர்வவல்லமை
யுள்ள தேவனுகிய கர்த்தர் ராஜ்யபாரம் பண்
7 ணுகிறார். நாம் சந்தோஷப்பட்டுக் களிகூர்
ந்து அவருக்குத் துதி செலுத்தக்கடவோம்.
[8]ஆட்டுக்குட்டியானவருடைய கலியாணம்
வந்தது, [9]அவருடைய மனைவி தன்னை ஆயத்
தம்பண்ணினுள் என்று சொல்லக்கேட்டேன்.
8 சுத்தமும் பிரகாசமுமான மெல்லிய [10]வஸ்திரம்
தரித்துக்கொள்ளும்படி அவளுக்கு அளிக்கப்
பட்டது; [11]அந்த மெல்லிய வஸ்திரம் பரிசுத்த
9 வான்களுடைய நீதிகளே. பின்னும், அவன்
என்னை நோக்கி: [12]ஆட்டுக்குட்டியானவரின்
கலியாணவிருந்துக்கு அழைக்கப்பட்டவர்கள்
பாக்கியவான்கள் என்றெழுது என்றான். மே
லும், [13]இவைகள் தேவனுடைய சத்தியமான
வசனங்கள் என்று என்னுடனே சொன்னன்.
10 அப்பொழுது [14]அவனை வணங்கும்படி அவ
னுடைய பாதத்தில் விழுந்தேன். அவன்
என்னை நோக்கி: [15]இப்படிச் செய்யாதபடிக்
குப் பார்; [16]உன்னோடும் இயேசுவைக்குறித்
துச் சாட்சியிட்ட உன் சகோதரரோடுங்கூட
நானும் ஒரு ஊழியக்காரன்; தேவனைத் தொ
ழுதுகொள். [17]இயேசுவைப்பற்றின சாட்சி
தீர்க்கதரிசனத்தின் ஆவியாயிருக்கிறது என்
றான்.
11 பின்பு, பரலோகம் திறந்திருக்கக் கண்
டேன்; இதோ, [18]ஒரு வெள்ளைக் குதிரை
காணப்பட்டது, அதின்மேல் ஏறியிருந்தவர்
[19]உண்மையும் சத்தியமுமுள்ளவரென்னப்ப
ட்டவர்; [20]அவர் நீதியாய் நியாயந்தீர்த்து யுத்
12 தம் பண்ணுகிறார். அவருடைய கண்கள்
[21]அக்கினி ஜுவாலையைப் போலிருந்தன,
[22]அவருடைய சிரசின்மேல் அநேக கிரீடங்கள்
இருந்தன; அவருக்கேயன்றி வேறொருவருக்
குந் தெரியாத [23]ஒரு நாமமும் எழுதியிருந்தது.
இரத்தத்தில் தோய்க்கப்பட்ட வஸ்திரத்தைத் 13
தரித்திருந்தார்; [24]அவருடைய நாமம் **தேவனு
டைய வார்த்தை** என்பதே. பரலோகத்திலு 14
ள்ள சேனைகள் வெண்மையும் [25]சுத்தமுமான
மெல்லிய வஸ்திரந் தரித்தவர்களாய், வெள்
ளைக் குதிரைகளின்மேல் ஏறி, அவருக்குப்
பின் சென்றார்கள். புறஜாதிகளை வெட்டும் 15
படிக்கு அவருடைய [26]வாயிலிருந்து கூர்மை
யான பட்டயம் புறப்படுகிறது; [27]இருப்புக்
கோலால் அவர்களை அரசாளுவார்; [28]அவர் சர்
வவல்லமையுள்ள தேவனுடைய உக்கிரகோ
பமாகிய மதுவுள்ள ஆலையை மிதிக்கிறார்.
**ராஜாதிராஜா, கர்த்தாதி கர்த்தா** என்னும் 16
நாமம் [29]அவருடைய வஸ்திரத்தின்மேலும்
அவருடைய தொடையின்மேலும் எழுதப்பட்
டிருந்தது.
பின்பு ஒரு தூதன் சூரியனில் நிற்கக்கண் 17
டேன்; அவன் வானத்தின் மத்தியில் பறக்
கிற சகல பறவைகளையும் பார்த்து: நீங்கள் 18
ராஜாக்களின் மாம்சத்தையும், சேனைத்தலைவர்
களின் மாம்சத்தையும், பலவான்களின் மாம்
சத்தையும், குதிரைகளின் மாம்சத்தையும், அ
வைகளின்மேல் ஏறியிருக்கிறவர்களின் மாம்
சத்தையும், சுயாதீனர் அடிமைகள், சிறியோர்
பெரியோர், இவர்களெல்லாருடைய மாம்சத்
தையும் பட்சிக்கும்படிக்கு, [30]மகா தேவன்
கொடுக்கும் விருந்துக்குக் கூடிவாருங்கள்
என்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டான்.
பின்பு, [31]மிருகமும் பூமியின் ராஜாக்களும் 19
அவர்களுடைய சேனைகளும், குதிரையின்
மேல் ஏறியிருக்கிறவரோடும் அவருடைய
சேனையோடும் யுத்தம்பண்ணும்படிக்குக் கூடி
வரக் கண்டேன். அப்பொழுது மிருகம் [32]பிடி 20
க்கப்பட்டது; மிருகத்தின் முன்பாகச் செய்த
அற்புதங்களால் அதின் முத்திரையைத் தரித்
தவர்களையும் [33]அதின் சொரூபத்தை வணங்கி
னவர்களையும் மோசம்போக்கின கள்ளத்தீர்க்
கதரிசியுங்கூடப் பிடிக்கப்பட்டான், [34]இரு
வரும் கந்தகம் எரிகிற அக்கினிக்கடலிலே
உயிரோடே தள்ளப்பட்டார்கள். மற்றவர்கள் 21
குதிரையின்மேல் ஏறினவருடைய வாயிலிரு
ந்து புறப்படுகிற பட்டயத்தால் [35]கொல்லப்
பட்டார்கள்; [36]அவர்களுடைய மாம்சத்தினல்
பறவைகள் யாவும் திருப்தியடைந்தன.
ஒரு தூதன் [37]பாதாளத்தின் திறவுகோ **20**
லையும் பெரிய சங்கிலியையும் தன் கையிலே
பிடித்துக்கொண்டு வானத்திலிருந்திறங்கிவரக்
கண்டேன். பிசாசென்றும் சாத்தானென்றும் 2
சொல்லப்பட்ட பழைய பாம்பாகிய வலுசர்ப்
பத்தை அவன் பிடித்து, [38]அதை ஆயிரம் வருஷ
மளவும் கட்டிவைத்து, அந்த ஆயிரம் வருஷம்
நிறைவேறும்வரைக்கும் அது ஜனங்களை
மோசம்போக்காதபடிக்கு அதைப் பாதாளத்
திலே தள்ளி யடைத்து, [39]அதின்மேல் முத்
திரைபோட்டான். அதற்குப் பின்பு அது 3
கொஞ்சக்காலம் விடுதலையாகவேண்டும்.

[1] 7, 10, 12. வச
[2] 20. 10. தானி. 7. 11
[3] 18. 20
[4] 18. 9, 18. ஏசா. 34. 10
[5] 4. 4, 6, 10: 5. 14
[6] 14. 2. சங். 135. 1
[7] சங். 97, 1, 12
[8] மத். 26. 10
[9] ஏசா. 52. 1
[10] 3. 4. ஏசா. 61. 10
[11] சங். 132. 9
[12] 3. 20. லூ. 14. 15, 16
[13] 22. 6
[14] 22. 8, 9
[15] அப். 10. 26: 14. 14, 15
[16] 12. 17. 1 பேது. 5. 10
[17] அப். 10. 43. 1 பே. 1. 10, 11
[18] 6. 2
[19] 3. 14
[20] சங். 45. 3, 4 ஏசா. 11. 4
[21] 1. 14: 2. 18
[22] 6. 2. உன்ன. 3. 11. ஏசா. 62. 3 சக. 9. 16. எபி. 2. 9
[23] 3. 12
[24] யோ. 1. 1. 1 யோ. 5. 7
[25] மத். 28. 3
[26] 1. 16. 2 தெச. 2. 8
[27] சங். 2. 9
[28] ஏசா. 63. 3
[29] 17. 14. 1 தீமோ. 6. 15
[30] எசே. 39. 17-20
[31] 16. 14, 16
[32] 16. 13, 14
[33] 13. 12, 15
[34] 20. 10. தானி. 7. 11
[35] 15. வச: 1. 16
[36] 17, 18. வச
[37] 1. 18: 9. 1
[38] 12. 9. 2 பே. 2. 4 யூதா 6. வச
[39] தானி. 6. 17

4 அன்றியும், [1]நான் சிங்காசனங்களைக் கண்
டேன்; அவைகளின்மேல் உட்கார்ந்தார்கள்;
[2]நியாயத்தீர்ப்புக் கொடுக்கும்படி அவர்களு
க்கு அதிகாரம் அளிக்கப்பட்டது. இயேசு
வைப்பற்றிய சாட்சியினிமித்தமும் தேவனு
டைய வசனத்தினிமித்தமும் சிரச்சேதம் பண்
ணப்பட்டவர்களுடைய [3]ஆத்துமாக்களையும்,
மிருகத்தையாவது அதின் சொரூபத்தையா
வது வணங்காமலும் தங்கள் நெற்றியிலும் தங்
கள் கையிலும் அதின் முத்திரையைத் தரித்
துக்கொள்ளாமலும் இருந்தவர்களையும் கண்
டேன். [4]அவர்கள் உயிர்த்து கிறிஸ்துவுடனே
5 கூட ஆயிரம் வருஷம் அரசாண்டார்கள். மர
ணமடைந்த மற்றவர்கள் அந்த ஆயிரம் வருஷம்
முடியுமளவும் உயிரடையவில்லை. இதுவே
6 முதலாம் உயிர்த்தெழுதல். முதலாம் உயிர்
த்தெழுதலுக்குப் பங்குள்ளவன் பாக்கியவா
னும் பரிசுத்தவானுமாயிருக்கிறான்; [5]இவர்
கள்மேல் இரண்டாம் மரணத்திற்கு அதிகார
மில்லை; [6]இவர்கள் தேவனுக்கும் கிறிஸ்துவுக்
கும் முன்பாக ஆசாரியராயிருந்து, அவரோ
டேகூட ஆயிரம் வருஷம் அரசாளுவார்கள்.
7 அந்த ஆயிரம் வருஷம் முடியும்போது
[7]சாத்தான் தன் காவலிலிருந்து விடுதலையாகி,
8 பூமியின் நான்கு திசைகளிலுமுள்ள ஜாதிக
ளாகிய [8]கோகையும் மாகோகையும் மோசம்
போக்கும்படிக்கும், அவர்களை யுத்தத்திற்குக்
கூட்டிக்கொள்ளும்படிக்கும் புறப்படுவான்;
அவர்களுடைய தொகை கடற்கரை மணலத்
9 தனையாயிருக்கும். அவர்கள் பூமியெங்கும்
பரம்பி, [9]பரிசுத்தவான்களுடைய பாளையத்
தையும், பிரியமான நகரத்தையும் வளைந்து
கொண்டார்கள்; அப்பொழுது தேவனால் வா
னத்திலிருந்து அக்கினி இறங்கி அவர்களைப்
10 பட்சித்துப்போட்டது. மேலும் அவர்களை
மோசம்போக்கின பிசாசானவன், மிருகமும்
கள்ளத்தீர்க்கதரிசியும் இருக்கிற இடமாகிய
அக்கினியும் கந்தகமுமான [10]கடலிலே தள்ளப்
பட்டான்: அவர்கள் இரவும் பகலும் சதாகா
லங்களிலும் வாதிக்கப்படுவார்கள்.
11 பின்பு, நான் பெரிய வெள்ளைச் சிங்கா
சனத்தையும் அதின்மேல் வீற்றிருக்கிறவரை
யும் கண்டேன்; [11]அவருடைய சமுகத்திலி
ருந்து பூமியும் வானமும் அகன்றுபோயின;
12 அவைகளுக்கு இடங்காணப்படவில்லை. மரித்
தோராகிய சிறியோரையும் பெரியோரையும்
தேவனுக்கு முன்பாக நிற்கக்கண்டேன்; [12]அப்
பொழுது புஸ்தகங்கள் திறக்கப்பட்டன; [13]ஜீவ
புஸ்தகம் என்னும் வேறொரு புஸ்தகமும் திறக்
கப்பட்டது; அப்பொழுது அந்தப் புஸ்தகங்
களில் எழுதப்பட்டவைகளின்படியே மரித்
தோர் [14]தங்கள் தங்கள் கிரியைகளுக்குத் தக்க
13 தாக நியாயத்தீர்ப்படைந்தார்கள். சமுத்திரம்
தன்னிலுள்ள மரித்தோரை ஒப்புவித்தது; [15]மர
ணமும் பாதாளமும் தங்களிலுள்ள மரித்தோ
ரை ஒப்புவித்தன. யாவரும் தங்கள் தங்கள்
கிரியைகளின்படியே நியாயத் தீர்ப்படைந்
தார்கள். அப்பொழுது மரணமும் [16]பாதாள 14
மும் அக்கினிக்கடலிலே தள்ளப்பட்டன.
இது இரண்டாம் மரணம். ஜீவபுஸ்தகத்தி 15
லே எழுதப்பட்டவனாகக் காணப்படாதவனெ
வனோ அவன் [17]அக்கினிக்கடலிலே தள்ளப்
பட்டான்.

## 21

பின்பு, [18]நான் புதிய வானத்தையும் புதிய
பூமியையும் கண்டேன்; முந்தின வானமும்
முந்தின பூமியும் ஒழிந்துபோயின; சமுத்திர
மும் இல்லாமற்போயிற்று. யோவானாகிய 2
நான், [19]புதிய எருசலேமாகிய பரிசுத்த நகரத்
தைதேவனிடத்தினின்றுபரலோகத்தைவிட்டு
இறங்கிவரக் கண்டேன், [20]அது தன் புருஷ
னுக்காக அலங்கரிக்கப்பட்டமணவாட்டியைப்
போல ஆயத்தமாக்கப்பட்டிருந்தது. மேலும், 3
பரலோகத்திலிருந்து உண்டான ஒரு பெருஞ்
சத்தத்தைக் கேட்டேன்; அது: இதோ, [21]மனு
ஷர்களிடத்திலே தேவனுடைய வாசஸ்தலமி
ருக்கிறது, அவர்களிடத்திலே அவர் வாசமா
யிருப்பார்; [22]அவர்களும் அவருடைய ஜனங்க
ளாயிருப்பார்கள், தேவன்தாமே அவர்களோ
டேகூட இருந்து அவர்களுடைய தேவனா
யிருப்பார். அவர்களுடைய [23]கண்ணீர் யாவை 4
யும் தேவன் துடைப்பார்; [24]இனி மரணமு
மில்லை, [25]துக்கமுமில்லை, அலறுதலுமில்லை,
வருத்தமுமில்லை; முந்தினவைகள் ஒழிந்து
போயின என்று விளம்பினது. சிங்காசனத் 5
தின்மேல் வீற்றிருந்தவர்: [26]இதோ, நான் சக
லத்தையும் புதிதாக்குகிறேன் என்றார். பின்
னும், அவர்: இந்த வசனங்கள் சத்தியமும்
உண்மையுமானவைகள், இவைகளை எழுது
என்றார். அன்றியும், அவர் என்னை நோக்கி: 6
[27]ஆயிற்று, [28]நான் அல்பாவும் ஓமெகாவும்,
ஆதியும் அந்தமுமாயிருக்கிறேன். தாகமாயி
ருக்கிறவனுக்கு நான் [29]ஜீவத்தண்ணீரூற்றில்
இலவசமாய்க் கொடுப்பேன். ஜெயங்கொள் 7
ளுகிறவன் எல்லாவற்றையும் சுதந்தரித்துக்
கொள்ளுவான்; [30]நான் அவன் தேவனாயிருப்
பேன், அவன் என் குமாரனாயிருப்பான்.
பயப்படுகிறவர்களும், அவிசுவாசிகளும், அரு 8
வருப்பானவர்களும், கொலைபாதகரும், விப
சாரக்காரரும், சூனியக்காரரும், விக்கிரகாரா
தனைக்காரரும், பொய்யர் [31]அனைவரும் இர
ண்டாம் மரணமாகிய அக்கினியும் கந்தகமும்
எரிகிற கடலிலே பங்கடைவார்கள் என்றார்.
பின்பு, கடைசியான ஏழு வாதைகளால் 9
நிறைந்த ஏழு கலசங்களையுடைய அந்த ஏழு
தூதரில் ஒருவன் என்னிடத்தில் வந்து: [32]நீ
இங்கே வா, ஆட்டுக்குட்டியானவருடைய
மனைவியாகிய மணவாட்டியை [33]உனக்குக்
காண்பிக்கிறேன் என்று சொல்லி, பெரிதும் 10
உயரமுமான ஒரு பர்வதத்தின்மேல் என்னை
ஆவியில் கொண்டுபோய், [34]தேவனுடைய
மகிமையை அடைந்த எருசலேமாகிய பரி
சுத்த நகரம் பரலோகத்தைவிட்டு தேவனி
டத்திலிருந்து இறங்கி வருகிறதை எனக்குக்
காண்பித்தான். அதின் பிரகாசம் மிகவும் 11

[1] தானி. 7. 9, 22, 27. லூ. 22. 30
[2] 1 கொ. 6. 2, 3
[3] 6. 9
[4] 5. 10. ரோ. 8. 17. 2 தீமோ. 2. 21
[5] 2. 11: 21. 8
[6] 1. 6. ஏசா. 61. 6. 1 பே. 2. 9
[7] 2. வச
[8] 3. 10: 16. 14. எசே 38. 2: 39. 1
[9] ஏசா. 8. 8. எசே. 38. 9, 16
[10] 19. 20
[11] 21. 1, 2 பே. 3. 7, 10, 11
[12] தானி. 7. 10
[13] 21. 27 தானி. 12. 1. பிலி. 4. 3
[14] எரே. 32. 19. மத். 16. 27
[15] 6. 8
[16] ஓசி. 13. 14 1 கொ. 15. 26, 54, 55
[17] மத். 25. 41
[18] 20. 11. ஏசா. 65. 17–19: 66. 22. 2 பே. 3. 13
[19] ஏசா. 52. 1. எபி. 11. 10: 12. 22
[20] சங். 45. 9, 14. ஏசா. 54. 5. 2 கொ. 11. 2
[21] 2 கொ. 6. 16
[22] சகரி. 8. 8
[23] 7. 17. ஏசா. 25. 8
[24] 1 கொ. 15. 26, 54
[25] ஏசா. 35. 10
[26] 2 கொ. 5. 17
[27] 16. 17
[28] 1. 8: 22. 13
[29] 22. 17. ஏசா. 55. 1. யோ. 4. 10, 14: 7. 37
[30] எபி. 8. 10
[31] நீதி. 19. 5, 9. மல். 3. 5. லூ. 12. 4–9. 1 கொ. 6. 9, 10: 10. 20, 21. எபி. 13. 14. 1 யோ. 3. 15: 5. 4, 10
[32] 15. 1. 6, 7
[33] 19. 7
[34] எசே. 40, 48. அதி.

விலையுயர்ந்த இரத்தினக் கல்லைப்போலவும்,
[1]பளிங்கினொளியுள்ள வச்சிரக் கல்லைப்போல
12 வும் இருந்தது. அதற்குப் பெரிதும் உயரமு
மான மதிலும்; கிழக்கே மூன்று வாசல்கள்,
வடக்கே மூன்று வாசல்கள், தெற்கே மூன்று
வாசல்கள், மேற்கே மூன்று வாசல்கள் ஆகப்
13 [2]பன்னிரண்டு வாசல்களும் இருந்தன. வாசல்
களின் அருகே பன்னிரண்டு தூதர்களிருந்
தார்கள்; அந்த வாசல்களின்மேல் இஸ்ரவேல்
சந்ததியாராகிய பன்னிரண்டு கோத்திரத்தாரு
14 டைய நாமங்களும் எழுதப்பட்டிருந்தன. நக
ரத்தின் மதிலுக்குப் பன்னிரண்டு அஸ்திபா
ரக் கற்களிருந்தன; [3]அவைகள்மேல் ஆட்டுக்
குட்டியானவருடைய பன்னிரண்டு அப்
போஸ்தலரின் பன்னிரண்டு நாமங்களும் பதிந்
15 திருந்தன. என்னுடனே பேசினவன், நக
ரத்தையும் அதின் வாசல்களையும் அதின் மதி
லையும் அளக்கிறதற்கு [4]ஒரு பொற்கோலைப்
16 பிடித்திருந்தான். அந்த நகரம் சதுரமாயிருந்
தது, அதின் அகலமும் நீளமும் சமமாயிருந்
தது. அவன் அந்தக் கோலினால் நகரத்தை
அளந்தான்; அது பன்னீராயிரம் ஸ்தாதி அள
வாயிருந்தது; அதின் நீளமும் அகலமும் உயர
17 மும் சமமாயிருந்தது. அவன் அதின் மதிலை
அளந்தபோது, அது தூதனுடைய அளவாகிய
மனுஷ அளவின்படியே நூற்று நாற்பத்து
18 நான்கு முழமாயிருந்தது: அதின் மதில் வச்சி
ரக்கல்லால் கட்டப்பட்டிருந்தது; நகரம் தெ
ளிந்த பளிங்குக்கு ஒப்பான சுத்தப் பொன்னா
19 யிருந்தது. நகரத்து மதில்களின் [5]அஸ்திபா
ரங்கள் சகலவித இரத்தினங்களினாலும் அலங்
கரிக்கப்பட்டிருந்தன. முதலாம் அஸ்திபாரம்
வச்சிரக்கல், இரண்டாவது இந்திரநீலம், மூன்
றாவது சந்திரகாந்தம், நான்காவது மரகதம்,
20 ஐந்தாவது கோமேதகம், ஆறாவது பதுமரா
கம், ஏழாவது சுவர்ணரத்தினம், எட்டாவது
படிகப்பச்சை, ஒன்பதாவது புஷ்பராகம், பத்
தாவது வைடூரியம், பதினோராவது சுநீரம்,
21 பன்னிரண்டாவது சுகந்தி இவைகளே. பன்
னிரண்டு வாசல்களும் பன்னிரண்டு முத்துக்
களாயிருந்தன; ஒவ்வொரு வாசலும் ஒவ்வொரு
முத்தாயிருந்தது. [6]நகரத்தின் வீதி தெளிவுள்ள
பளிங்குபோலச் சுத்தப் பொன்னாயிருந்தது.
22 அதிலே தேவாலயத்தை நான் காணவில்லை;
[7]சர்வவல்லமையுள்ள தேவனாகிய கர்த்தரும்
ஆட்டுக்குட்டியானவருமே அதற்கு ஆலயம்.
23 நகரத்திற்கு வெளிச்சங் கொடுக்கச் [8]சூரியனும்
சந்திரனும் அதற்கு வேண்டுவதில்லை; தேவ
னுடைய மகிமையே அதைப் பிரகாசிப்பித்
தது, [9]ஆட்டுக்குட்டியானவரே அதற்கு விள
24 க்கு. இரட்சிக்கப்படுகிற [10]ஜனங்கள் அதின்
வெளிச்சத்திலே நடப்பார்கள். [11]பூமியின் ரா
ஜாக்கள் தங்கள் மகிமையையும் கனத்தையும்
25 அதற்குள்ளே கொண்டுவருவார்கள். அங்கே
இராக்காலம் இல்லாதபடியால், [12]அதின் வாச
ல்கள் பகலில் அடைக்கப்படுவதே இல்லை.
26 உலகத்தாருடைய மகிமையையும் கனத்தை
யும் அதற்குள்ளே கொண்டுவருவார்கள். தீட் 27
டுள்ளதும் [13]அருவருப்பையும் பொய்யையும்
நடப்பிக்கிறதுமாகிய ஒன்றும் அதில் பிரவே
சிப்பதில்லை; ஆட்டுக்குட்டியானவரின் ஜீவ
புஸ்தகத்தில் எழுதப்பட்டவர்கள் மாத்திரம்
அதில் பிரவேசிப்பார்கள்.

பின்பு, பளிங்கைப்போல் தெளிவான 22
ஜீவத்தண்ணீருள்ள சுத்தமான நதி தேவனும்
ஆட்டுக்குட்டியானவரும் இருக்கிற சிங்காச
னத்திலிருந்து புறப்பட்டு வருகிறதை எனக்
குக் காண்பித்தான். நகரத்து வீதியின் மத்தி 2
யிலும், [14]நதியின் இருகரையிலும், பன்னி
ரண்டுவிதமான கனிகளைத் தரும் [15]ஜீவவிருட்
சம் இருந்தது, அது மாதந்தோறும் தன் கனி
யைக் கொடுக்கும்; [16]அந்த விருட்சத்தின் இலை
கள் ஜனங்கள் ஆரோக்கியமடைகிறதற்கு ஏது
வானவைகள். இனி ஒரு [17]சாபமுமிராது. 3
[18]தேவனும் ஆட்டுக்குட்டியானவரும் இருக்
கிற சிங்காசனம் அதிலிருக்கும். அவருடைய 4
ஊழியக்காரர் [19]அவரைச் சேவித்து, [20]அவரு
டைய சமுகத்தைத் தரிசிப்பார்கள்; [21]அவரு
டைய நாமம் அவர்களுடைய நெற்றிகளில்
இருக்கும். அங்கே இராக்காலமிராது; [22]விளக் 5
கும் சூரியனுடைய வெளிச்சமும் அவர்க
ளுக்கு வேண்டுவதில்லை; [23]தேவனாகிய கர்த்
தரே அவர்கள்மேல் பிரகாசிப்பார். [24]அவர்கள்
சதாகாலங்களிலும் அரசாளுவார்கள்.

பின்பு, அவர் என்னை நோக்கி: [25]இந்த வச 6
னங்கள் உண்மையும் சத்தியமுமானவைகள்.
சீக்கிரமாய்ச் சம்பவிக்கவேண்டியவைகளைத்
தம்முடைய ஊழியக்காரருக்குக் காண்பிக்
கும்பொருட்டு, [26]பரிசுத்த *தீர்க்கதரிசிகளின்
கர்த்தராகிய தேவனானவர் தம்முடைய தூதனை
அனுப்பினார். இதோ, [27]சீக்கிரமாய் வருகி 7
றேன்; இந்தப் புஸ்தகத்திலுள்ள தீர்க்கதரிசன
வசனங்களைக் கைக்கொள்ளுகிறவன் பாக்கிய
வான் என்றார்.

யோவானாகிய நானே இவைகளைக் கண்டும் 8
கேட்டும் இருந்தேன். [28]நான் கேட்டுக் கண்ட
போது, இவைகளை எனக்குக் காண்பித்த
தூதனை வணங்கும்படி அவன் பாதத்தில்
விழுந்தேன் அதற்கு அவன்: நீ இப்படிச் 9
செய்யாதபடிக்குப் பார்; உன்னோடும் உன்
சகோதரரோடும் தீர்க்கதரிசிகளோடும், இந்தப்
புஸ்தகத்தின் வசனங்களைக் கைக்கொள்ளுகிற
வர்களோடுங்கூட நானும் ஒரு ஊழியக்காரன்;
தேவனைத் தொழுதுகொள் என்றான்.

பின்னும், அவர் என்னை நோக்கி: [29]இந்தப் 10
புஸ்தகத்திலுள்ள தீர்க்கதரிசன வசனங்களை
முத்திரை போடவேண்டாம்; காலம் சமீபமா
யிருக்கிறது. அநியாயஞ்செய்கிறவன் [30]இன் 11
னும் அநியாயஞ்செய்யட்டும்; அசுத்தமாயிரு
க்கிறவன் இன்னும் அசுத்தமாயிருக்கட்டும்;
நீதியுள்ளவன் [31]இன்னும் நீதிசெய்யட்டும்; பரி
சுத்தமுள்ளவன் இன்னும் பரிசுத்தமாகட்டும்.
இதோ, சீக்கிரமாய் வருகிறேன்; [32]அவனவ 12
னுடைய கிரியைகளின்படி அவனவனுக்கு

1 ஏசா. 60. 1, 2
2 எசே. 48. 31-34
3 மத். 16. 18. எபே. 2. 20
4 11. 1. எசே. 40. 3. சக. 2. 1
5 ஏசா. 54. 11
6 22. 2
7 யோ. 4. 23
8 22. 5. ஏசா. 60. 19, 20
9 யோ. 1. 4
10 ஏசா. 60. 3-11: 66. 10-12
11 சங். 72. 11
12 22. 5. சக. 14. 7
13 ஏசா. 35. 8: 52. 1: 60. 21. யோவே. 3. 17. மத். 13. 41. 1 கொ. 6. 9, 10. கலா. 5. 19-21. எபே. 5. 5. எபி. 12. 14
14 21. 21. எசே. 47. 1, 12
15 2. 7
16 21. 21
17 சக. 14. 11
18 எசே. 48. 35
19 7. 15
20 மத். 5. 8. யோ. 12. 26: 17. 24. 1 கொ. 13. 12. 1 யோ. 3. 2
21 3. 12
22 21. 23, 25
23 சங். 36. 9
24 ரோ. 5. 17
25 19. 9: 21. 5
26 1. 1
*தீர்க்கதரிசிகளுடைய ஆவிகளின் [illegible] 16. 22
27 10, 12, 20. [illegible]
28 19. 10
29 10. 4. தானி. 8. 26
30 நீதி. 1. 24-33. பிர. 11. 8. மத். 25. 10. 2 தீமோ. 3. 13
31 நீதி. 4. 18. மத். 5. 6
32 செப். 1. 14. ரோ. 2. 6: 14. 12

நான் அளிக்கும் பலன் என்னோடேகூட வரு
13 கிறது. நான் அல்பாவும் ஓமெகாவும், [1]ஆதி
யும் அந்தமும், முந்தினவரும் பிந்தினவருமாயி
14 ருக்கிறேன். ஜீவவிருட்சத்தின்மேல் அதிகார
முள்ளவர்க ளாவதற்கும், [2]வாசல்கள் வழி
யாய் நகரத்திற்குள் பிரவேசிப்பதற்கும் அவரு
டைய கற்பனைகளின்படி செய்கிறவர்கள் பாக்
15 கியவான்கள். நாய்களும், [3]சூனியக்காரரும்,
விபசாரக்காரரும், கொலைபாதகரும், விக்கிர
காராதனைக்காரரும், பொய்யை விரும்பி அதி
ன்படி செய்கிற யாவரும் புறம்பே இருப்
பார்கள்.
16 சபைகளில் இவைகளை உங்களுக்குச் சாட்
சியாக அறிவிக்கும்படிக்கு [4]இயேசுவாகிய
நான் என் தூதனை அனுப்பினேன். [5]நான்
தாவீதின் வேரும் சந்ததியும், [6]பிரகாசமுள்ள
விடிவெள்ளி நட்சத்திரமுமா யிருக்கிறேன்
என்றார்.
17 ஆவியும் [7]மணவாட்டியும் வா என்கிறார்கள்,
கேட்கிறவனும் வா என்பானாக; [8]தாகமாயிருக்
கிறவன் வரக்கடவன்; விருப்பமுள்ளவன்
ஜீவத்தண்ணீரை இலவசமாய் வாங்கிக்கொள்
ளக்கடவன்.
இந்தப் புஸ்தகத்திலுள்ள தீர்க்கதரிசன வச 18
னங்களைக் கேட்கிற யாவருக்கும் நான் சாட்சி
யாக எச்சரிக்கிறதாவது: [9]ஒருவன் இவைக
ளோடே எதையாகிலும் கூட்டினால், இந்தப்
புஸ்தகத்தில் எழுதியிருக்கிற வாதைகளை தே
வன் அவன்மேல் கூட்டுவார். ஒருவன் இ
தத் தீர்க்கதரிசன புஸ்தகத்தின் வசன
விருந்து எதையாகிலும் எடுத்
[10]ஜீவபுஸ்தகத்திலிருந்தும், ப
விருந்தும், இந்தப் புஸ்தகத்தி
வைகளிலிருந்தும், அவனுடை
வன் எடுத்துப்போடுவார்.
இவைகளைச் சாட்சியாக
[11]மெய்யாகவே நான் சீக்கிர
என்கிறார். [12]ஆமென், கர்
சுவே, [13]வாரும்.
நம்முடைய கர்த்தராகிய
வின் கிருபை [14]உங்கள் அ
இருப்பதாக. ஆமென்.

1 1. 8, 11: 21. 6. ஏசா. 44. 6
2 லூ. 12. 37, 38. 1 யோ. 3. 24
3 21. 8, 27. பிலி. 3. 2
4 1. 1
5 5. 5
6 2 பே. 1. 19
7 21. 2, 9. ஏசா. 2. 5
8 21. 6. யோ. 7. 37
9 நீதி. 30. 6
10 ஜீவ விருட்சத்தி லு. 3. 5: 13. 8
11 1, 12. வச
12 யோ. 21. 25
13 ஏசா. 25. 9. 2 தீமோ. 4. 8. எபி. 9. 28
14 ரோ. 16. 20, 24. 2 தெச. 3. 18

புதிய ஏற்பாடு முற்றிற்று.

PRINTED AT THE S. P. C. K. PRESS, VEPERY, MADRAS—1914.


PALESTINE.
நமது இரக்ஷகரின் காலத்திலிருந்த
பலஸ்தீனதேசம்.
மெத்தித்தரேனியாக்கடல்
சமாரியா
அம்மோனித்தியா
மோவாப்
இதுமேயா
சவக்கடல்
காற்பங்குதேசபிரிவுகளின் படம்
LITHO: BY P. NATHAMOONEY NAIDOO, PURASAWALKAM, MADRAS.

